# பழைய புதிய உடன்படிக்கைகள்

அடங்கிய

# வேதபுத்தகம்.

இஃது

இங்கிலாந்துமுதலியசருவதேசவேதசங்கத்தாரின்

உத்தரவின்படி

மூலபாஷைகளிலிருந்துமொழிபெயர்த்து முந்தினமொழிபெயர்ப்புகளைக்

கொண்டு பரிசோதிக்கப்பட்டிருக்கின்றது.

Tamil Bible Version by Rev. Dr. Peter Percival

சென்னநகரம் :

அமெரிகன் மிஷன் அச்சுக்கூடத்திற் பதிக்கப்பட்டது.

௲௮௱௫௰௯.

THE

# HOLY BIBLE,

CONTAINING THE

# OLD AND NEW TESTAMENTS:

TRANSLATED OUT OF

## THE ORIGINAL TONGUES:

AND WITH

THE FORMER TRANSLATIONS DILIGENTLY COMPARED AND REVISED,

UNDER THE AUSPICES OF

The British and Foreign Bible Society.

Tamil Bible Version by Rev. Dr. Peter Percival

MADRAS:

PRINTED FOR THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY,

AT THE AMERICAN MISSION PRESS.

MDCCCL.

# பழைய புதிய உடன்படிக்கைகளென்னும் வேதபுத்தகத்தில் அடங்கிய ஆகமங்களின் பெயர், முறை, அதிகாரங்களின் தொகை.

---

## பழைய உடன்படிக்கையின் ஆகமங்கள்.

| | அதி. |
|---|---|
| ஆதியாகமம் | ௫௰ |
| யாத்திராகமம் | ௪௰ |
| லேவியராகமம் | ௨௭ |
| எண்ணாகமம் | ௩௬ |
| உபாகமம் | ௩௪ |
| யோசுவா | ௨௪ |
| நியாயாதிபதிகள் | ௨௧ |
| ரூத் | ௪ |
| ௧. சாமுவேல் | ௩௧ |
| ௨. சாமுவேல் | ௨௪ |
| ௧. இராசாக்கள் | ௨௨ |
| ௨. இராசாக்கள் | ௨௫ |
| ௧. நாளாகமம் | ௨௯ |
| ௨. நாளாகமம் | ௩௬ |
| எஸ்று | ௰ |
| நிகிமியா | ௰௩ |
| எஸ்தர் | ௰ |
| யோபு | ௪௨ |
| சங்கீதம் | ௱௫௰ |
| நீதிமொழிகள் | ௩௧ |
| பிரசங்கி | ௰௨ |
| உன்னதகீதம் | ௮ |
| ஏசாயா | ௬௬ |
| எரேமியா | ௫௨ |
| புலம்பல் | ௫ |
| எசேக்கியேல் | ௪௮ |
| தானியேல் | ௰௨ |
| ஓசியா | ௰௪ |
| யோவேல் | ௩ |
| ஆமோஸ் | ௯ |
| ஒபதியா | ௧ |
| யோனா | ௪ |
| மீகா | ௭ |
| நாகூம் | ௩ |
| அபகூக் | ௩ |
| செப்பனியா | ௩ |
| ஆகாய் | ௨ |
| சகரியா | ௰௪ |
| மல்கியா | ௪ |

---

## புதிய உடன்படிக்கையின் ஆகமங்கள்.

| | அதி. |
|---|---|
| மத்தேயு | ௨௮ |
| மாற்கு | ௰௬ |
| லூக்கா | ௨௪ |
| யோவான் | ௨௧ |
| அப்போஸ்தலரின் கிரியைகள் | ௨௮ |
| உரோமர் | ௰௬ |
| ௧. கொரிந்தியர் | ௰௬ |
| ௨. கொரிந்தியர் | ௰௩ |
| கலாத்தியர் | ௬ |
| எபேசியர் | ௬ |
| பிலிப்பியர் | ௪ |
| கொலோசர் | ௪ |
| ௧. தெசலோனிக்கேயர் | ௫ |
| ௨. தெசலோனிக்கேயர் | ௩ |
| ௧. தீமோத்தேயு | ௬ |
| ௨. தீமோத்தேயு | ௪ |
| தீத்து | ௩ |
| பிலேமோன் | ௧ |
| எபிரேயர் | ௰௩ |
| யாக்கோபு | ௫ |
| ௧. பேதுரு | ௫ |
| ௨. பேதுரு | ௩ |
| ௧. யோவான் | ௫ |
| ௨. யோவான் | ௧ |
| ௩. யோவான் | ௧ |
| யூதா | ௧ |
| வெளிப்படுத்தப்பட்டவாக்கியம் | ௨௨ |

மோசே எழுதின முதலாம் புத்தகமாகிய

# ஆதியாகமம்.

## ௧. அதிகாரம்.

௧. கடவுள் வானத்தையும்பூமியையும்சிருஷ்டித்தல்: ௩. ஒளியைச்சிருஷ்டித்தல்: ௬. ஆகாய விரிவைச் சிருஷ்டித்தல்: ௯. நிலத்தையும் நீரையும் வேறாக்கல்: ௰௧. பூண்டுமுதலானவைகளை முளைப்பித்தல்: ௰௪. சந்திரசூரியாதிகளைச்சிருஷ்டித்தல்: ௨௰. மச்சபட்சிகளைச் சிருஷ்டித்தல்: ௨௰௪. நாடுகாடுகளின் மிருகங்களைச் சிருஷ்டித்தல்: ௨௰௬. தமது சாயலாக மனிதனைச்சிருஷ்டித்தல்: ௨௰௯. உணவுப்பொருளை நியமித்தல்.

ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியை
௨ யுஞ்சிருஷ்டித்தார்.—பூமியானது ஒழுங்கின்மை
யும் வெறுமையுமாயிருந்தது; ஆழமான சலமுகத்
தின்மேல் இருள் இருந்தது. தேவ ஆவி சலமு
கத்தின்மேல் உலாவிக்கொண்டிருந்தது.
௩ தேவன் ஒளி உண்டாகக்கடவதென்று சொல்
௪ ல ஒளி உண்டாயிற்று.—ஒளி நல்லதென்று தே
வன் கண்டார். தேவன் ஒளிக்கும் இருளுக்
௫ கும் வேற்றுமையுண்டாக்கினார்.-தேவன் ஒளிக்
குப் பகலென்றும் இருளுக்கு இரவென்றும் பெ
யரிட்டார். சாயங்காலமும் விடியற்காலமுமாகி
முதலாம் நாளாயிற்று.
௬ தேவன் சலத்தின்மத்தியில் ஆகாயவிரிவுஉண்
டாகக்கடவதென்றும்,அது சலத்தையுஞ்சலத்தை
௭ யும் பிரிக்கக்கடவதென்றுஞ்சொல்லி,—ஆகாயவி
ரிவையுண்டாக்கி ஆகாயவிரிவின்கீழ்ச் சலத்திற்
கும்,ஆகாயவிரிவின்மேற் சலத்திற்கும், பிரிவுண்
௮ டாக்கினார். அப்படியே ஆயிற்று.-தேவன் ஆகா
யவிரிவுக்கு வானமென்று பெயரிட்டார். சாயங்
காலமும் விடியற்காலமுமாகி இரண்டாம் நாளா
யிற்று.
௯ தேவன் வானத்தின்கீழுள்ள சலம் ஓரிடத்தில்
சேரவும், உலர்ந்ததரை தோன்றவும், கடவன
௰ வென்றார். அப்படியே ஆயிற்று.—உலர்ந்த தரைக்
குப் பூமியென்றும், சேர்ந்த சலத்திற்குச் சமுத்
திரமென்றும், தேவன் பெயரிட்டார். அவை
நல்லனவென்று தேவன் கண்டார்.
௰௧ பூமியின்மேல் புல்லையும், விதைகொடுக்கிற
பூண்டுகளையும், தங்களிலே தங்கள் விதையையு
டைய கனிகளை, தங்கள் தங்கள் சாதிப்படி,கொ
டுக்கிறவிருட்சங்களையும்,பூமி முளைப்பிக்கக்கட
வதென்று தேவன் சொன்னார். அப்படியே ஆ
௰௨ யிற்று.—புல்லையும், தங்கள் தங்கள் சாதிப்படி
விதை கொடுக்கிற பூண்டுகளையும், தங்கள் தங்
கள் சாதிப்படி, தங்களிலே தங்கள் விதையை
யுடைய கனிகளைக் கொடுக்கிற விருட்சங்களை
யும், பூமி முளைப்பித்தது. அவை நல்லனவென்
று தேவன் கண்டார்.—சாயங்காலமும் விடியற் ௰௩
காலமுமாகி மூன்றாம்நாளாயிற்று.
பகலுக்கும் இரவுக்கும் வேற்றுமையுண்டாக் ௰௪
குகிறதற்கு, வானவிரிவிலே சுடர்கள் உண்டா
கக்கடவனவென்றும்; அவையே அடையாளங்
களையும், பருவகாலங்களையும், தினங்களையும்,
வருஷங்களையுங் குறிக்கும்பொருட்டாக,—பூமி ௰௫
யின்மேல் பிரகாசிக்கும்படிக்கு வானவிரிவிலே
சுடர்களாகக்கடவனவென்றும்,தேவன் சொன்
னார். அப்படியே ஆயிற்று.—பகலை ஆளுவதற்கு ௰௬
ஒரு பெரிய சுடரும், இரவை ஆளுவதற்கு அதில்
சிறிய ஒரு சுடருமாக, இரண்டு பெரிய சுடர்க
ளையும், நட்சத்திரங்களையும், உண்டாக்கினார்.— ௰௭
அவைகள் பூமியின்மேல் பிரகாசிக்கவும்,—பகலை ௰௮
யும் இரவையும் ஆளவும், ஒளிக்கும் இருளுக்கும்
வேற்றுமைஉண்டாக்கவும்,தேவன் அவைகளை
வானவிரிவிலே வைத்தார். அவை நல்லனவென்
று தேவன் கண்டார்.—சாயங்காலமும் விடியற் ௰௯
காலமுமாகி நாலாம்நாளாயிற்று.
தேவன், நீந்துகிற சீவசெந்துக்களை, சல ௨௰
மானது திரளாகச் சனிப்பிக்கக்கடவதென்றும்,
பூமிக்கு மேலாக ஆகாயவிரிவிலே பறவைகள்
பறக்கக்கடவனவென்றும், சொன்னார்.—சலத்தி ௨௰௧
னாலே தங்கள் தங்கள் சாதிப்படி திரளாய்ச்
சனிப்பிக்கப்பட்ட மகா மச்சங்களையும், சஞ்ச
ரிக்கிற மற்றச்சகல செந்துக்களையுமன்றி, சிறகு
களுள்ள சாதி சாதியான எல்லாப் பறவைகளை
யும், தேவன் சிருஷ்டித்தார். அவை நல்லன
வென்று தேவன் கண்டார்.-அவைகள் பல்கிப் ௨௰௨
பெருகி, சமுத்திரசலத்தில் நிறையவும், பறவை
கள் பூமியில் பெருகவுங் கடவனவென்று, தே
வன் அவைகளை ஆசீர்வதித்தார்.—சாயங்காலமும் ௨௰௩
விடியற்காலமுமாகி ஐந்தாம்நாளாயிற்று.
தேவன், பூமி நாலு சாதி செந்துக்களாகிய ௨௰௪
நாட்டு மிருகங்களையும், ஊர்வனவற்றையும்,
காட்டுமிருகங்களையும், இனமினமாக, சனிப்
பிக்கக்கடவதென்றார். அப்படியே ஆயிற்று.—
அவ்வவற்றின் இனப்படி காட்டுமிருகங்களை ௨௰௫
யும், நாட்டுமிருகங்களையும், பூமியின்மேல் ஊரு
கிற சகல ஊர்வனவற்றையும், தேவன் உண்

(௧. அதி. ௧.) யோவா.௧.௧,௨. எசா.௪௪.௨௪. எபி.௰௧.௩. (௩) சங்.௩௩.௯. ௨.கொரி.௪.௬. (௫) சங்.௭௪.௰௬. (௬) யோபு.௩௭.௰௮. (௭) நீதி.௮.௨௮. சங்.௱௪௮.௪. (௯) யோபு.௨௬.௰. ௨.பேது.௩.௫. (௰௧) எபி.௬.௭. லூக். ௬.௪௪. (௰௪) உபா.௪.௰௯. சங்.௭௪.௰௭. (௰௬) சங்.௮.௩. யோபு.௩௮.௭. (௰௮) எரே.௩௧.௩௫. (௨௧) அதி.௬.௨௰. (௨௨) அதி.௮.௰௭.

டாக்கினூர். அவை நல்லனவென்று தேவன்
கண்டார்.
உசு தேவன், நமது சாயலாக, நம்முடைய உரு
வத்தின்படி, மனிதனை உண்டாக்குவோமாக. அ
வன் சமுத்திர மச்சங்களேயும், ஆகாயப்பறவை
களேயும், மிருகசெந்துக்களேயும், பூமண்டலம்
அனைத்தையும், பூமண்டலத்தின்மேல் ஊருகிற
சகலவித ஊர்வனவற்றையும், ஆளுவானாகவென்
உஎ ருர்.—தேவன் தமது சாயலாக மனிதரைச் சிருஷ்
டித்தார். அவர்களைத் தேவச்சாயலாகவே சிருஷ்
டித்தார். அவர்களைப் புருஷனும் ஸ்திரியுமாகச்
உஅ சிருஷ்டித்தார்.—பின்பு தேவன் அவர்களை
நோக்கி, நீங்கள் பல்கிப் பெருகி, பூமியை நி
றைத்து, அதை வசப்படுத்தி, சமுத்திர மச்சங்க
ளேயும், ஆகாயப்பறவைகளேயும், பூமியில் சஞ்ச
ரிக்கிறசகல செந்துக்களேயும், ஆண்டுகொள்ளுங்
களென்று சொல்லி, அவர்களை ஆசீர்வதித்தார்.
உகூ தேவன், பூமியெங்குமுள்ள வித்துக்களேயு
டைய சகலவிதப் பூண்டுகளேயும், வித்துக்களை
யுடைய கனிகளுள்ள சகலவித விருட்சங்களே
யும், உங்களுக்குத் தந்தேன். அவை உங்களுக்கு
ஙய ஆகாரமாயிருக்கக்கடவன.—பூமியில் சீவனுள்ள
சகல மிருகங்களுக்கும், ஆகாயத்தில் எல்லாப்
பறவைகளுக்கும், பூமியின்மேல் ஊர்வன எல்
லாவற்றிற்கும், பசுமையான எல்லாப் பூண்டுக
ளேயும், ஆகாரமாகக் கொடுத்தேனென்ருர். அது
ஙக அப்படியே ஆயிற்று.—தேவன், தாம் உண்
டாக்கின யாவையும்பார்த்து அவை மிக நல்லன
வென்று கண்டார். சாயங்காலமும் விடியற்கால
முமாகி ஆரும்நாளாயிற்று.

## உ. அதிகாரம்.

க. ஓய்வுநாளை நியமித்தல்: ச. சிருஷ்டியின்விவரம்: அ. ஏதேனின்தோட்டமுண்டாக்கல். யரு: அதிலே மனிதனை இருக்கச்செய்தல்: யஎ. நன்மை தீமைகளைத்தெரிவிக்கும் விருட்சத்திலுள்ளதை விலக்கல்: உய. ஆதாம் சீவசெந்துக்களுக்குப்பெயரிடல்: உக. ஸ்திரியின் சிருஷ்டிவிருத்தாந்தம்: உச. விவாகமுறையேற்படுத்தல்.

இவ்விதமாக வானமும் பூமியும் அவைகளிலுள்
ள சகல சேனைகளுமாகிய இவைகளின் சிருஷ்டி
உ நிறைவேறலாயிற்று.-தேவன் தமதுகிரியையை
முடித்தபின்பு, ஏழாம்நாளிலே எந்தக்காரியங்க
ளேயும் செய்வதையொழிந்து, அந்த ஏழாம்நாளி
ங லே ஓய்ந்திருந்தார்.-அதில் தேவன் தாம் சிருஷ்
டிப்பதும், செய்வதுமாகிய யாவையும்விட்டு
ஓய்ந்திருந்ததினூல், அந்த ஏழாம் நாளை ஆசீர்வ
தித்துப்பரிசுத்தமாக்கினூர்.
தேவனூகிய யெகோவா பூமியையும், ச
வானத்தையும், தம்மால் பூமியின்மேல் பெய்விக்
கப்படும் மழையும் பயிர்செய்ய மனிதனும் இல்
லாதிருக்கவும், முன், நிலத்தில் இல்லாதசகலவித
மான செடிகளேயும்,—முன், முளைத்திராத சகல ரு
விதமான பூண்டுகளேயும், சிருஷ்டித்த காலத்தில்
தேவனூகிய யெகோவா பூமி வானங்களைச்
சிருஷ்டித்த விவரங்கள் இவையே.—பனி பூமியி சு
லிருந்தெழும்பி, பூமியின் முகமுழுவதையும் ந
னைத்தது.—தேவனூகிய யெகோவா மனித எ
னைப் பூமியின் மண்ணினூலே உருவாக்கி, சீவ
சுவாசத்தை அவன் நாசியில் ஊதினூர். அதினூல்
மனிதன் சீவாத்துமாவானூன்.
தேவனூகிய யெகோவா கீழ்த்திசையி அ
லுள்ள ஏதேனில் ஒரு தோட்டத்தை உண்டாக்
கி, தாம் உருவாக்கின மனிதனை அதிலே வைத்
தார்.—தேவனூகிய யெகோவா காட்சிக்கி கூ
னிமையும், புசிப்புக்குச் சுவையுமான சகலவித
விருட்சங்களேயுமன்றி, தோட்டத்தின் மத்தியி
லே சீவவிருட்சத்தையும், நன்மை தீமைகளைத்
தெரிவிக்கும் விருட்சத்தையும், பூமியில்நின்றுந்
தோற்றுவித்தார்.—ஏதேனில் ஒரு நதி தோட்டத் ய
துக்குப்பாயும்படி தோன்றி, அதில் நின்று பிரிந்
து நான்குமுகமாயிற்று.—முதலாம் ஆற்றுக்குப் யக
பீஷோன் என்றுபேர். அது பொன்விளையும் அ
விலாதேசம் முழுவதையுஞ் சுற்றி ஓடுகின்றது.—
அத்தேசத்தின்பொன் சிரேஷ்டம். அவ்விடத் யஉ
தில் முத்துக்களும் கோமேதகக்கல்லுமுண்டு.—
இரண்டாம் ஆற்றுக்குக் கீயோன் என்றுபேர். யங
அது கூஷ்தேசம் முழுவதையுஞ் சுற்றி ஓடுகின்
றது.—மூன்ரும் ஆற்றுக்கு இதெக்கேல் என்று யச
பேர். அது அசீரியாவுக்குக்கிழக்கே ஓடுகின்றது.
நாலாம் ஆற்றுக்கு பிருத்தென்றுபேர்.
ஏதேனிலுள்ள தோட்டத்தில் செய்கைசெய் யரு
வதற்கும், அதைக் காப்பதற்கும், தேவனூகிய
யெகோவா ஆதாமை அதில் வைத்தார்.—தே யசு
வனூகிய யெகோவா, தோட்டத்திலிருக்கிற
எந்த விருட்சத்திலுள்ளதையும் நீ இஷ்டப்படி
புசிக்கலாம்.—நன்மை தீமைகளைத் தெரிவிக்கும் யஎ
விருட்சத்திலுள்ளதையோ புசிக்கப்படாதென்
று மனிதனுக்குச்சொல்லி விலக்கி, நீ அதைப்
புசித்தால் அந்நாளிலே நிச்சயமாய் மரிப்பா
யென்ருர்.

(உசு) அதி.ரு. க.அதி.கூ.சு. சங்.ா.ங. பிர.எ.உக. நட.யஎ.உசு,உஅ,உகூ. க.கொரி.யக.எ. எபே.ச.உச. கொலோ. ங.ய. அதி.கூ.உ. சங்.அ.சு. (உஎ) க.கொரி.யக.எ. அதி.ரு.உ. மல்.உ.யரு. மத்.யகூ.ச. (உஅ) அதி.கூ.க,எ. லேவி.உசு.கூ. சங்.ாஉஎ.ங. (உகூ) அதி.கூ.ங. நட.யச.யஎ. (ஙய) சங்.ாசரு.யரு,யசு. யோபு.ஙஅ.சக. (ஙக) சங்.ாச.உச. க.தீமோ.ச.ச. (உ.அதி.க.) சங்.ஙங.சு. யாத்.உய.யக. உபா.ரு.யச. எபி.ச.ச. (ங) நெகே.கூ.யச. ஏசா.ருஅ.யங. (ச) அதி.க.க. சங்.கூய.க,உ. (ரு) அதி.க.யஉ. யோபு.ஙஅ.உசு. அதி.ங.உங. (எ) அதி.ங.யகூ,உங. சங்.ாங.யச. பிர.யஉ.எ. க.கொரி.யரு.சஎ. யோபு.ஙங.ச. நட.யஎ.உரு. அதி.எ.உஉ. ஏசா.உ.உஉ. க.கொரி.யரு. சரு. அதி.யங.ய. ஏசா.ருக.ங. எசேக்.உஅ.யங. அதி.ங.உச. அதி.ச.யசு. உ.இரா.யகூ.யஉ. எசேக்.உஎ.உங.வச. யரு. (கூ) எசேக்.ஙக.அ. நீதி.ங.யஅ. அறி.உ.எ. அதி.உஉ.உ,யச. வச.யஎ. (யக) அதி.உரு.யஅ. (யஉ)கண.யக.எ (யரு) தானி.ய.ச. (யரு) வச.அ. (யஎ) வச.கூ. அதி.ங.க,ங,யக,யஎ. அதி.ங.ங.யகூ. ரோ.சு.உங. க.கொரி.யரு.ருசு. யாக்.க.யரு. க.யோவா.ரு.யசு.

௰௮ தேவனாகிய யெகோவா மனிதன் தனி
யேயிருப்பதுஉத்தமமல்ல. அவனுக்கேற்றதுணை
௰௯ யை அவனுக்கு உண்டாக்குவேனென்றார்.-தே
வனாகிய யெகோவா தாம் மண்ணினாலே
உருவாக்கினவெளியின் சகலவித மிருகங்களுக்
கும், ஆகாயப் பறவைகளுக்கும், ஆதாம் இடும்
பேர் இன்னதென்றுகாணும்படி; அவைகளை அவ
னிடத்திற் சேரப்பண்ணினார். அந்தச் சீவசெந்
துக்களுக்கு ஆதாம்கொடுத்தபேரே,பேராயிற்று.-
௨௰ ஆதாம் சகலவித மிருகங்களுக்கும், ஆகாயப்பற
வைகளுக்கும், வெளியிலுள்ள சகலவிதசெந்துக்
களுக்கும், பேரிட்டான். ஆதாமுக்கோ ஏற்றது
௨௧ ணை, இது வரைக்குங்காணப்படவில்லை.-தேவ
னாகிய யெகோவா ஆதாமுக்கு அயர்ந்தநித்தி
ரைவரப்பண்ண, அவன்நித்திரை அடைந்தான்.
அப்பொழுது அவர் அவனுடையவிலா எலும்புக
ளில் ஒன்றை எடுத்து, அவ்விடத்தில் தசையைப்
௨௨ பொருத்தினார்.-தேவனாகியயெகோவா ம
னிதனிலெடுத்த விலாஎலும்பை ஸ்திரியாக உரு
வாக்கி, அவளை ஆதாமிடத்தில் வரப்பண்ணி
௨௩ னார்.-ஆதாம் இவள் என் எலும்பிலெலும்புமாய்,
என்மாமிசத்தில்மாமிசமுமாயிருக்கிறாள். இவள்
மனுஷனிலெடுக்கப்பட்டதினால் மனுஷி என்
௨௪ னப்படுவாளென்றான்.—அதினால் ஒருவன் தன்
பிதாமாதாவைப்பிரிந்து தன்மனைவியைப்பற்றிக்
கொள்வான்.இருவரும்ஏகாங்கமாயிருப்பார்கள்.
௨௫ ஆதாமும் அவன் மனைவியுமாகிய இருவரும் நி
ருவாணிகளாயிருந்தும், வெட்கமில்லாதிருந்தார்
கள்.

## ௩. அதிகாரம்.

௧. சருப்பம் ஏவாளை வஞ்சித்தல்: ௮. மனிதர் பாவஞ்செய்தல்: ௰௪. தேவன் சருப்பத்தைச்சபித்தல்: ௰௫. இரட்சகரை வாக்குத்தத்தஞ்செய்தல்: ௰௬. ஸ்திரிபுருஷர்களைச்சபித்தல்: ௨௧. தேவன் வஸ்திரந்தரிப்பித்து, தோட்டத்தில்நின்று அகற்றல்.

தேவனாகியயெகோவா சிருஷ்டித்தவெளி
யின் சகல செந்துக்களிலும் சருப்பமே, அதிகசூ
துள்ளதாயிருந்தது. அது ஸ்திரியை நோக்கி, நீங்
கள்தோட்டத்திலிருக்கிற எந்தவிருட்சத்திலுள்ள
தையும்புசிக்கப்படாதென்று தேவன் சொன்ன
௨ துமெய்யோ? என்றது.-சருப்பத்துடனே ஸ்திரி,
தோட்டத்திலுள்ள விருட்சக்கனிகளை நாங்கள்
௩ புசிக்கலாம்.-தோட்டத்தின் மத்தியிலிருக்கிற வி
ருட்சத்தைச்சுட்டி, நீங்கள் மரியாதிருக்கவேண்
டில், அதின் கனியைப் புசிக்கவும்படாது. தொ
டவும்படாதென்று தேவன் விலக்கினாரென்று
௪ சொல்ல;—சருப்பம் ஸ்திரியைநோக்கி, நீங்கள்
மரிக்கவேமாட்டீர்கள்.—நீங்கள் அதைப் புசிக் ௫
கும்நாளில்உங்கள்கண்கள்திறக்கப்பட்டு,நீங்கள்
நன்மைதீமைகளைஉணர்ந்து,தேவனுக்கொப்பா
வீர்களென்று தேவன் அறிவாரென்றது.—அவ் ௬
விருட்சத்திலுள்ளது புசிப்புக்குச்சுவையும்,காட்
சிக்கு இனிமையும்,புத்தியைத்தெளிவிக்குமென்
று, இச்சிக்கப்படத்தக்கதுமாயிருப்பதை ஸ்திரி
பார்த்து, அதின் கனியைப்பறித்து, புசித்து, தன்
னோடேயிருந்தபுருஷனுக்குங்கொடுத்தாள்: அவ
னும் புசித்தான்.—அவர்கள் இருவருடைய கண் ௭
களுந்திறக்கப்பட்டன. அப்பொழுது அவர்கள்
தாங்கள் நிருவாணிகளென்றறிந்து, அத்தி இலைக
ளைத் தைத்து, தங்களுக்கு அரைக்கச்சைகளாகத்
தரித்துக்கொண்டார்கள்.
பகலில் குளிர்காற்று வீசுகையில், தோட்டத் ௮
தில் உலாவிவரும் தேவனாகியயெகோவா
வின்சத்தத்தைக்கேட்டார்கள். ஆதாமும், அவன்
மனைவியும், தேவனாகியயெகோவாவின்
சந்நிதானத்துக்கு விலகி, தோட்டத்தின் விருட்
சங்களுக்குள்ளே ஒளித்துக்கொண்டார்கள்.—
தேவனாகிய யெகோவா, ஆதாமே, என்று ௯
கூப்பிட்டு, நீ எங்கேயிருக்கிறாய் என்றுசொல்
ல,—அவன் தோட்டத்தில் உமது சத்தத்தைக் ௰
கேட்டு, நான் நிருவாணியாயிருக்கிறதினால், ப
யந்து ஒளித்துக்கொண்டேனென்றான்.—நீ நிரு ௰௧
வாணியென்று உனக்கு அறிவித்தவரார். புசிக்
கப்படாதென்று நான் விலக்கின விருட்சத்தி
லுள்ளதைப் புசித்தாயா என்றுசொல்ல;-ஆதாம், ௰௨
என்னுடனேயிருக்கும்படி நீர்தந்த ஸ்திரி அவ்
விருட்சத்திலுள்ளதை எனக்குத்தந்தாள். நான் ௰௩
புசித்தேனென்றான்.-தேவனாகிய யெகோ
வா ஸ்திரியை நோக்கி, நீ இப்படிச்செய்ததென்
னவென்றார். அதற்கு ஸ்திரி, சருப்பம் என்னை
வஞ்சித்ததினால் நான் புசித்தேனென்றாள்.
தேவனாகியயெகோவாசருப்பத்துடனே, நீ ௰௪
இதைச்செய்தபடியால் நாட்டு மிருகங்கள் எவற்
றிலும், வெளியிலுள்ள சகலசெந்துக்களிலுஞ்
சபிக்கப்பட்டு, நீ சீவிக்கும் நாளெல்லாம் வயிற்
றினால் ஊர்ந்துமண்ணைத்தின்பாய்.—உனக்கும், ௰௫
இந்த ஸ்திரிக்கும் உன் சந்ததிக்கும், இவள் சந்த
திக்கும்,பகையுண்டாக்குவேன். அவர் உன் தலை
யை நருக்குவார். நீ அவருடைய குதிங்காலைக்
கொத்துவாய் என்று சொன்னார்.
அவர் ஸ்திரியைநோக்கி, நீ கருப்பவதியாகும் ௰௬
பொழுது உன்வருத்தம்மிகவும் அதிகரிக்கப்பண்
ணுவேன். வேதனையோடேபிள்ளைபெறுவாய். நீ
உன்புருஷனுக்குஆதீனப்பட்டிருப்பாய்; அவன்
உன்னைஆண்டுகொள்ளுவானென்றுசொன்னார்.-

(௰௮) அதி.௩.௰௨. ௧.கொரி.௰௧.௯. ௧.தீமோ ௨.௰௩. (௰௯) அதி.௧.௨௰,௨௪. சங்.௮.௬. அதி. ௬.௨௰. (௨௨) நீதி.௰௮. ௨௨. எபி.௰௩.௪. (௨௩) அதி.௨௯.௰௪. எபே.௫.௩௰. ௧.கொரி.௰௧.௮. (௨௪) அதி.௩௧.௰௫. சங்.௪௫.௰. மத். ௰௯.௫. (௨௫) ௧.கொரி.௬.௰௬. எபே.௫.௩௧. அதி.௩.௭,௰,௰௧. ஏசா.௪௭.௩. (௩. அதி.௧) அறி.௰௨.௯. அறி.௨௰. ௨. மத்.௰.௰௬. ௨.கொரி.௰௧.௩. (௩) அதி.௨.௰௭. (௪) வச.௰௩. ௨.கொரி.௰௧.௩. ௧.தீமோ.௨.௰௪. (௫) வச.௭. ௧௨.௨௯.௰௮. (௬) ௧.தீமோ.௨.௰௪. வச.௰௨,௰௭. (௭) வச.௫. அதி.௨.௨௫. (௮) யோபு.௩.௮. ௧.யோபு.௩௧.௩௩. எரே.௨௩.௨௪. (௰) அதி.௨.௨௫. யாத்.௩.௬. ௧.யோவா.௩.௨௰. (௰௨) அதி.௨.௰௮.யோபு.௩௧.௩௩. நீதி.௨௮.௰௩. (௰௩) வச.௪. ௨.கொரி.௰௧.௩. (௰௪) ஏசா.௬௫.௨௫. (௰௫) மத்.௩.௭. அதி.௰௩.௩௮. அதி.௨௩.௩௩. கலா.௪.௪. ரோ.௰௬.௨௰. எபி.௨.௰௪. அறி.௰௨.௭,௰௭. (௰௬) ௧.தீமோ.௨.௰௫. அதி.௪.௭. ௧.கொரி.௰௧.௩. எபே.௫.௨௨,௨௩,௨௪.

௰௭ பின்பு அவர் ஆதாமைநோக்கி, நீ உன் மனைவி
யின் வாக்குக்குச் செவிகொடுத்து, புசிக்கப்ப
டாதென்று நான் விலக்கின விருட்சத்திலுள்ள
தைப் புசித்ததினாலே, பூமி உன் நிமித்தம் சபிக்
கப்பட்டது. நீ சீவிக்கும் நாளெல்லாம் கிலே
சத்துடனே அதிலுள்ளவையைப் புசிப்பாய்.—
௰௮ அது உனக்கு முட்செடிகளையும், முட்பூண்டுக
ளையும்,முளைப்பிக்கும்: நிலத்திலுள்ள பயிர்வகை
௰௯ களைப்புசிப்பாய்.—பூமியில் எடுக்கப்பட்டமண்
ணாகிய நீ மண்ணோடே சேர்ந்துபோவாய். அதில்
சேருமட்டும் முக வேர்வையோடே ஆகாரம்
௨௰ புசிப்பாய் என்று சொன்னார்.—ஆதாம் தன் மனை
வி சீவனுள்ள யாவருக்கும் மாதாவானதினால்
௨௧ அவளுக்கு ஏவாளென்று பேரிட்டான்.—தேவ
னாகிய யெகோவா ஆதாமுக்கும், அவன் மனை
விக்கும், தோல் அங்கிகளைச்செய்து அவர்களைத்
தரிப்பித்தார்.
௨௨ தேவனாகிய யெகோவா மனிதன் நன்மைதீ
மைகளை உணரப்பெற்று, நம்மிலொருவரைப்
போலானானே,பாருங்களென்றார். இனி அவன்
தன்கையைநீட்டி,சீவவிருட்சக் கனியைப்பறித்
துப் புசித்து, சீவனுடனே நித்தியமாயிராதபடிக்
௨௩ கு,—அவன்தோன்றிய பூமியைச் செய்கைபண்
ணுகிறதற்கு,தேவனாகிய யெகோவா அவனை
ஏதேனின் தோட்டத்தில் நின்றும் அகற்றிவிட்
௨௪ டார்.—அவர் மனிதனை அகற்றி, சீவவிருட்சத்
திற்குப்போம் வழியைக் காவல்செய்ய, ஏதே
னின் தோட்டத்துக்குக் கிழக்கே சுலாவிச்சொ
லிக்கிற அக்கினிக் கட்கத்தையும், கெருபிகளை
யும், வைத்தார்.

## ௪. அதிகாரம்.

௧. காயீன் ஆபேல் என்பவர்களின் விருத்தாந்தம்: ௮. ஆபேலைக்கொன்றதினிமித்தம் காயீனுக்கு வந்த தேவதண்டனை: ௰௬. காயீனுடைய வமிச வரலாறு: ௨௫. சேத்து, ஏனோஸ்என்பவர்களின் செனனம்.

ஆதாம்தன்மனைவியாகியஏவாளை அறிந்தான்.அ
வள் கருப்பவதியாகிக்காயீனைப்பிரசவித்து, யெ
கோவாவினால் ஒரு புத்திரனைப் பெற்றேனென்
௨ றாள்.—பின்பு அவனுக்குச்சகோதரனாகிய ஆபே
லையும்பெற்றாள். ஆபேல் ஆடுகளை மேய்க்கிறவ
௩ னானான்.காயீன்நிலச்செய்கைக்காரனானான்.-சில
நாள் சென்றபின்பு, காயீன் யெகோவாவி
டத்தில்பூமிப்பலன்களில்நைவேத்தியமாகச்சில
௪ கொண்டுபோனான்.—ஆபேலும் தன்ஆட்டுக்கூட்
டத்தின் தலையீற்றுக்களிலும்,அவைகளின்நிணத்
திலும்,சிலகொண்டுபோனான். ஆபேலையும்,அவ
னுடையநைவேத்தியத்தையும்,யெகோவா அங்
௫ கிகரித்துக்கொண்டு,—காயீனையும், அவன் நை
வேத்தியத்தையும், அங்கிகரியாதிருந்தார். அதி
னால் காயீன் மிகவும் குரோதித்து முகம் வேறு
பட்டான்.-யெகோவா காயீனிடத்தில்,எதற்கா ௬
கக்குரோதங்கொண்டாய் எதற்காக உன் முகம்
வேறுபட்டது.—நீ முறைப்படிசெய்தால் மேன் ௭
மைபெறமாட்டாயா நீ முறைப்படி செய்யா
திருந்தால் பாவம் வாசற்படியிற்கிடக்கும். அன்
றியும் அவன் உனக்கு ஆதீனமாயிருப்பான். நீ அ
வனை ஆண்டுகொள்வாயென்று சொன்னார்.—
காயீன் தன் சகோதரனாகிய ஆபேலுடனே பே ௮
சினான். அவர்கள் வயல்வெளியில்இருந்த சமயத்
தில், காயீன் தன் சகோதரனாகிய ஆபேலுக்கு வி
ரோதமாயெழும்பி, அவனைக் கொலைசெய்தான்.
யெகோவா காயீன்இடத்தில், உன் சகோதர ௯
னாகிய ஆபேல் எங்கேயென்று சொல்ல, அவன்
நான் அறியேன். என் சகோதரனுக்கு நான் காவ
லாளனா என்றான்.—அதற்கு அவர் என்னசெய் ௰
தாய். உன் சகோதரனுடைய இரத்தம் பூமியில்
இருந்து என்னைநோக்கி ஓலமிடுகின்றது.-கேள், ௰௧
உன் சகோதரனுடைய இரத்தத்தை உன்கையி
னால் வாங்கிக்கொள்ளும்படி தன்வாயைத்திறந்த
இந்தநிலத்தினாலேதான்,நீசாபத்தையடைவாய்.-
நீ நிலத்தில் செய்கைசெய்தாலும் இனி அது தன் ௰௨
பலனை உனக்குத் தராது. பூமியில் நிலையற்றலை
கிறவனாயிருப்பாயென்றார்.—காயீன் யெகோ ௰௩
வாவுடனே, இன்று என்னை இத்தேசத்தை விட்
டுத் துரத்திவிடுகிறீர். உமது சந்நிதானத்துக்குவில
கி மறைந்து, பூமியில் நிலையற்றலைகிறவனாயிருப்
பேன். என்னைக்காண்பவனெவனும் என்னைக்
கொலைசெய்வான்.—எனக்கிட்ட தண்டனை என் ௰௪
னால்சகிக்கமுடியாதென்றான்.-அதற்கு யெகோ ௰௫
வா காயீனாகிய உன்னைக் கொலைசெய்கிறவனெ
வனோ அவன்மேல் ஏழுபழிதங்குமென்றுசொல்
லி, காயீனைக் காண்கிறவனெவனும் அவனைக்
கொல்லாதபடிக்கு யெகோவா அவனுக்கு ஒரு
அடையாளத்தைக் கற்பித்தார்.
காயீன் யெகோவாவினது சந்நிதானத்தை ௰௬
விட்டுப் புறப்பட்டுப்போய், ஏதேனுக்குக் கிழக்
கேயுள்ள நோத் என்னும் தேசத்தில் குடியிருந்
தான்.—காயீன் தன் மனைவியையறிந்தான். அ ௰௭
வள் கருப்பவதியாகி ஏனோக்கைப்பெற்றாள். கா
யீன் ஒரு நகரத்தையுண்டாக்கி அந்த நகரத்துக்
குத் தன்புத்திரன் ஏனோக்கினுடைய பெயரிட்
டான்.—ஏனோக்குக்கு ஈராத்துப்பிறந்தான். ஈராத் ௰௮
து மெகுயவேலைப்பெற்றான். மெகுயவேல் மெத்
தூஷவேலைப்பெற்றான். மெத்தூஷவேல் லாமே
கைப் பெற்றான்.—லாமேகு இரண்டு ஸ்திரிகளை ௰௯
விவாகம்பண்ணினான். ஒருத்திக்கு ஆதாள் என்
றுபேர். மற்றொருத்திக்குச்சில்லாள்என்றுபேர்.—

(௰௭) வச.௬. அதி.௨.௰௭. பிர.௧.௨,௩. எசா.௨௪.௫,௬. ரோ.௮.௨௰. யோபு.௫.௭. பிர.௨.௨௩.(௰௮) யோபு.௩௧.௪௰. சங்.௱௪.௰௪ (௰௯) பிர.௧.௰௩. ௨.தெச.௩.௰. அதி.௨.௭. யோபு.௨௧.௨௬. சங்.௱௪.௨௯. பிர.௩.௨௰. அதி.௰௨.௭. ரோ. ௫.௰௨. எபி.௯.௨௭. (௨௨) வச.௫. எசா.௰௯.௰௨. எரோ.௨௨.௨௩. அதி.௨.௯. (௨௩) அதி.௪.௨. அதி.௯.௨௰. (௨௪) அதி.௨.௮. சங்.௱௪.௪. எபி.௧.௭. (௪. அதி. ௨.) அதி.௩ ௨௩. அதி.௯.௨௰. (௩) கண.௰௮.௰௨. (௪) கண. ௰௮.௰௭. நீதி.௩.௯. எபி.௰௧.௪. (௫) அதி.௩௧.௨. எபி.௰௧.௪. அதி.௩.௰௬. (௭) எபி.௰௧.௪. அதி.௩.௰௬. (௮) மத். ௨௩.௩௫. ௧.யோவா.௩.௰௨. (௯) சங்.௯.௰௨. (௰) எபி.௰௨ ௨௪. அறி.௬.௰. (௰௪) யோபு.௰௫.௨௰—௨௪. சங். ௫௧ ௰௧ அதி.௯.௬. கண.௩௫.௰௯,௨௧,௨௭. (௰௫) சங்.௭௯.௰௨. எசேக்.௯.௪.௬. (௰௭) சங் ௪௯.௰௧.

௨௰ ஆதாள் யாபாலைப்பெற்ருள். அவன் கூடாரங்க
ளில் வாசம்பண்ணுகிற இடையருக்கு ஆதிபிதா
௨௧ வாயிருந்தான்.—அவன் சகோதரனுக்கு யூபால்
என்று பேர். அவன் கின்னரக்காரர்,நாகசுரக்கா
௨௨ ரர் யாவருக்கும் ஆதிபிதாவாயிருந்தான்.—சில்
லாளும் தூபாள் காயீனைப்பெற்ருள். அவன் பித்
தளை இரும்புகளின் நானாவித வேலைகளைச் செய்
வதில் நிபுணனாயிருந்தான். தூபாள் காயீனுடை
௨௩ யசகோதரி நாமாள்.—லாமேகு தன் ஸ்திரிகளா
கிய ஆதாளையுஞ்சில்லாளையும்நோக்கி,ஆதாளே,
சில்லாளே, நீங்கள் நான் சொல்வதைக் கேளுங்
கள். லாமேகுவின்மனைவிகளே என் வசனத்துக்
குச்செவிகொடுங்கள். எனக்குக் காயமுண்டாக
வும் ஒரு மனிதனை, எனக்குத்தழும்புண்டாகவும்
௨௪ ஒரு வாலிபனை, கொலைசெய்தேனே.—காயீனுக்
காக ஏழு பழி தங்குமேயாகில், லாமேகுக்காக
எழுபத்தேழுபழி தங்குமேயென்றான்.
௨௫ ஆதாம் பின்னும் தன் மனைவியை அறிந்தான்.
அவள் ஒரு புத்திரனைப்பெற்று, காயீனாற்கொலை
யுண்ட ஆபேலுக்குப் பிரதியாக ஒரு சந்ததியை
யெகோவா எனக்கு அருளினாரென்றுசொல்லி,
௨௬ அவனுக்குச் சேத்து என்றுபெயரிட்டாள்.-சேத்
துவுக்கும் ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு
ஏனோஷ் என்று பெயரிட்டான். அப்பொழுது
மனுஷர் யெகோவாவுடையநாமந்தரிக்கப்பட
ஆரம்பமாயிற்று.

## ௫. அதிகாரம்.

௧. ஆதாம் முதல் நோவாவரைக்குமுள்ள ஆதி
பிதாக்களின் வமிச வரலாறு: ௨௪. தேவபத்தி
யுள்ளவனாகிய ஏனோகு வானத்துக்கு ஏற்றப்ப
டல்.

ஆதாமின்சந்ததிகளின்வரலாறு: தேவன் மனி
தனைச் சிருஷ்டித்தநாளிலே அவனைத்தேவச்சாய
௨ லாகச் சிருஷ்டித்தார்.—ஸ்திரி புருஷராகச்சிருஷ்
டித்து அவர்களை ஆசீர்வதித்தார். அவர்களைச் சி
ருஷ்டித்தநாளிலே ஆதாம் என்றுபெயரிட்டார்.-
௩ ஆதாம் நூற்றுமுப்பதாம் வயதிலே தன் சாயலா
க, தனது உருவத்தின்படி ஒரு புத்திரனைப்பெற்
று, அவனுக்குச் சேத்து என்று பெயரிட்டான்.—
௪ ஆதாம் சேத்தைப்பெற்றபின்பும் எண்ணூறுவரு
ஷமிருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளை
௫ யும்பெற்றான்.—ஆதாம் ஆகத்தொளாயிரத்துமுப்
பதுவருஷம் சீவித்திருந்து மரித்தான்.
௬ சேத்து நூற்றைந்தாம் வயதில் ஏனோஷைப்
௭ பெற்றான்.—சேத்து ஏனோஷைப் பெற்றபின்பும்
எண்ணூற்றேழுவருஷமிருந்தான். அவன்புத்திர
௮ ரையும் புத்திரிகளையும்பெற்றான்.—சேத்து ஆகத்
தொளாயிரத்துப் பன்னிரண்டு வருஷஞ் சீவித்
திருந்து மரித்தான்.
௯ ஏனோஷ் தொண்ணூறாம்வயதிலே கேனானைப்
பெற்றான்.—ஏனோஷ்கேனானைப்பெற்றபின்பும் ௰
எண்ணூற்றுப் பதினைந்து வருஷம் இருந்தான்.
அவன் புத்திரரையும் புத்திரிகளையும்பெற்றான்.—
ஏனோஷ் ஆகத் தொளாயிரத்தைந்து வருஷஞ்சீ ௰௧
வித்திருந்து மரித்தான்.
கேனான் எழுபதாம் வயதிலே மகலாலேயே ௰௨
லைப்பெற்றான்.-கேனான் மகலாலேயேலைப்பெற் ௰௩
றபின்பும் எண்ணூற்று நாற்பதுவருஷம் இருந்
தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்
றான்.—கேனான் ஆகத்தொளாயிரத்துப்பத்துவரு ௰௪
ஷஞ் சீவித்திருந்து மரித்தான்.
மகலாலேயேல் அறுபத்தைந்தாம்வயதிலே யா ௰௫
ரேத்தைப் பெற்றான்.—மகலாலேயேல் யாரேத் ௰௬
தைப் பெற்றபின்பும் எண்ணூற்றுமுப்பது வரு
ஷமிருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளை
யும் பெற்றான்.—மகலாலேயேல் ஆக எண்ணூற் ௰௭
றுத் தொண்ணூற்றைந்து வருஷஞ் சீவித்திருந்து
மரித்தான்.
யாரேத்து நூற்றறுபத்திரண்டாம் வயதிலே ஏ ௰௮
னோகைப் பெற்றான்.—யாரேத்து ஏனோகைப் ௰௯
பெற்றபின்பும் எண்ணூறு வருஷமிருந்தான்.
அவன் புத்திரரையும் புத்திரிகளையும்பெற்றான்.-
யாரேத்து ஆகத் தொளாயிரத்தறுபத்திரண்டு வரு ௨௰
ஷஞ் சீவித்திருந்து மரித்தான்.
ஏனோகு அறுபத்தைந்தாம் வயதிலே மெத்தூ ௨௧
ஷலாகைப் பெற்றான்.—ஏனோகு மெத்தூஷலா ௨௨
கைப் பெற்றபின்பும் முந்நூறுவருஷம் தேவனு
டன் நடந்துகொண்டவனாகி, புத்திரரையும்புத்
திரிகளையும் பெற்றான்.—ஏனோகு ஆகமுந்நூற் ௨௩
றறுபத்தைந்து வருஷஞ் சீவித்திருந்தான்.—ஏ ௨௪
னோகு தேவனுடன் நடந்துவந்தான். அவன்
ஒழிந்தான். தேவன் அவனைத் தம்மிடத்திற்
சேர்த்துக்கொண்டார்.
மெத்தூஷலாகு நூற்றெண்பத்தேழாம் வயதி ௨௫
லே லாமேகைப்பெற்றான்.—மெத்தூஷலாகு லா ௨௬
மேகைப்பெற்றபின்பும்எழுநூற்றெண்பத்திரண்
டு வருஷமிருந்தான். அவன் புத்திரரையும் புத்
திரிகளையும் பெற்றான்.—மெத்தூஷலாகு ஆகத் ௨௭
தொளாயிரத்தறுபத்தொன்பது வருஷம் சீவித்தி
ருந்து மரித்தான்.
லாமேகு நூற்றெண்பத்திரண்டாம் வயதிலே ௨௮
ஒருபுத்திரனைப்பெற்று,—யெகோவா பூமியைச் ௨௯
சபித்ததினிமித்தம்நமக்குண்டானதொழிலிலும்,
கைப்பிரயாசத்திலும்,இவன்நமக்குஆறுதல்செய்
வானென்று சொல்லி, அவனுக்கு நோவாஎன்று
பெயரிட்டான்.—லாமேகு நோவாவைப்பெற்ற ௩௰
பின்பும் ஐந்நூற்றுத்தொண்ணூற்றைந்து வருஷ
மிருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும்
பெற்றான்.—லாமேகு ஆக எழுநூற்றெழுபத்தே ௩௧
ழுவருஷம் சீவித்துமரித்தான்.—நோவா ஐந்நூறு ௩௨

---

(௨௧) ரோ.௪.௰௧,௰௨ (௨௪) வச.௰௫. (௨௫) அதி.௫.௩.(௨௬)அதி.௫.௬. ௧.இரா.௰௮.௨௪. சங்.௱௰௬.௰௭. யோவே. ௨.௩௨. செப்.௩.௯. ௧.கொரி.௧.௨. (௫. அதி. ௧.) ௧.நாளா.௧.௧. லூக்.௩.௩௮. அதி.௧ ௨௬. (௨) அதி.௧.௨௭. (௩) அதி.௪.௨௫. (௪) ௧.நாளா.௧.௧. அதி.௧.௨௮. அதி.௩.௰௯. எபி.௯.௨௭. (௬) அதி.௪.௨௬. (௰௮) யூதா.௰௪.௰௫. (௨௨) அதி.௬.௯. அதி.௰௭.௧. அதி.௨௪.௪௰. ௨.இரா.௨௰.௩. சங்.௰௬.௮. மீகா.௬.௮. மல்.௨.௬. (௨௪) ௨.இரா.௨.௰௧. எபி.௰௧. ௫. (௨௯) எபி.௰௧.௭. ௧.பேதுரு.௩.௨௰. அதி.௩.௰௭. அதி.௪.௰௧. (௩௨) அதி.௬.௰. அதி.௰.௨௧.

வயதுசென்றதின்மேல் சேம், காம், யாப்பேத்து
என்பவர்களைப்பெற்றான்.

## ௬. அதிகாரம்.

௧. உலகத்தாருடைய துன்மார்க்கத்தினிமித்தம் தேவன் கோபித்துச்சலப்பிரளயத்தைவருவிக்கத் தீர்மானித்தல்: ௮. தேவன்நோவாவைக்கடாட்சித்தல்: ௰௪. பேழை செய்யும்படி கட்டளையிடல்.

இப்படியே பூமியிலே மனிதர் விருத்தியடைந்
௨ துபுத்திரிகளைப் பெற்றிருக்குங்காலத்தில்,-நரபுத்
திரிகள்அதிகசௌந்தரியராயிருக்கக்கண்டு யாவ
ருக்குள்ளும், தேவ புத்திரர் தங்கள் இஷ்டப்ப
டி ஸ்திரிகளைத்தெரிந்து விவாகஞ்செய்துவந்தார்
௩ கள்.-யெகோவா, மனிதன்மாமிசம்; என்ஆவி
எப்பொழுதும் அவனோடே போராடாது. ஆயி
னும் நூற்றிருபதுவருஷ காலம் அவனுக்கிருக்கி
௪ ன்றதென்றார்.—அக்காலத்திலே துஷ்டவீரர்கள்
பூமியில் இருந்தார்கள். அன்றியும் தேவபுத்திரர்
நரபுத்திரிகளுடன்கூடிப்பெற்ற புத்திரரும்பூர்வ
காலத்திற் பேர்பெற்ற வீரர்களாயிருந்தார்கள்.
௫ பூமியில்மனிதரின்தீங்கு, மிகுந்திருக்கிறதென்
பதையும்; அவர்கள் உள்ளத்தில் தோன்றுஞ்சிந்த
னைகளெல்லாம் எப்பொழுதுங் கேடாயிருக்கின்
௬ றனவென்பதையும்,யெகோவா கண்டு,—தாம்பூ
மியிலேமனிதரைச்சிருஷ்டித்ததினிமித்தம் அனு
தாபப்பட்டார். அது அவருடைய இருதயத்தில்
௭ விசனமுண்டாக்கிற்று.—யெகோவா,நான் மனி
தரைச் சிருஷ்டித்ததினிமித்தம் அனுதாபப்படுகி
றேன். ஆதலால் சிருஷ்டித்த மனிதரையும், அ
வர்களுடனே மிருகங்களையும், ஊர்வனவற்றை
யும், ஆகாயப்பறவைகளையும், பூமியின்முகத்தில்
௮ நின்றுந் துடைப்பேனென்றார்.—நோவாவுக்கோ
யெகோவாவின்கடாட்சம் கிடைத்தது.
௯ நோவாவின் வமிசவரலாறு: அக்காலத்திலுள்
ளவர்களுக்குள்ளே நோவா நீதிமானும் சற்குண
னுமாயிருந்தான். நோவா தேவனுடன் நடந்
௰ தான்.—நோவா,சேம், காம்,யாப்பேத்தென்னும்
௰௧ மூன்றுபுத்திரரைப்பெற்றான்.—பூலோகம் தேவ
னுக்கு முன்பாகக்கேடுள்ளதாயிருந்தது. பூலோ
௰௨ கம்கொடுமையினால் நிறைந்திருந்தது.—பூமியின்
மேற் சகல மனிதருந் தங்கள் நெறியைக்கெடுத்
துக்கொண்டார்கள். தேவன் பூலோகத்தைப்
பார்த்து,அதுகேடுள்ளதாயிருப்பதைக்கண்டார்.-
௰௩ தேவன்நோவாவைநோக்கி, மனிதருடையகொ
டுமையினால் பூமி நிறைந்திருப்பதினிமித்தம் மா
மிசமுள்ளசகலருக்கும் முடிவு எனக்குமுன் சமீ
பித்துவந்தது. அவர்களைப் பூமியோடும் அழிப்
பேன்.
௰௪ நீ உனக்குக்கொப்பேர்மரத்தினால் ஒருபேழை
யைச்செய்து,அப்பேழையில்அறைகளைவகுத்து,
அதற்குள்ளும் புறம்பும் கிசில் பூசுவாய்.—அப் ௰௫
பேழை முந்நூறுமுழநீளமும், ஐம்பது முழ அக
லமும், முப்பதுமுழ உயரமுமாகச்செய்வாய்.—
பேழையின் மேற்புறத்திலே ஒரு முழத்திற்குக்கீ ௰௬
ழாக, ஒரு பலகணியைச்செய்து முடித்து, பே
ழையின்கதவைப்பக்கத்திலிட்டு,முதலாம்இரண்
டாம், மூன்றும் நிலைகளையும்வகுப்பாய்.—நானே ௰௭
வானத்தின்கீழ்ச் சீவசுவாசத்தையுடைய மாமிச
முள்ளயாவையுஞ் சங்கரிக்கும்படி பூமியின்
மேற் சலப்பிரளயம் வரப்பண்ணுவேன்.—பூமி ௰௮
யிலுள்ள யாவும் மாய்ந்துபோம். உன்னுடனே
என் உடன்படிக்கையை நிலைப்படுத்துவேன். நீ
யும், உன்னோடிருக்கிற உன் புத்திரரும், உன் ம
னைவியும்,உன்புத்திரருடைய மனைவிகளும், பே
ழையிற் பிரவேசியுங்கள்.—சீவரட்சையின்பொ ௰௯
ருட்டுச் சகலவித மாமிச சீவசெந்துக்களிலும்
ஆணும் பெண்ணுமாக வகையொவ்வொன்றுக்
கு ஒவ்வொருசோடு உன்னுடனே பேழைக்குட்
படுத்திக்கொள்.-அந்தப்படி சீவரட்சையின்பொ ௨௰
ருட்டு வகைவகையான பறவைகளிலும், வகை
வகையான மிருகங்களிலும், பூமியிலே வகை
வகையான ஊர்வனவெல்லாவற்றிலும், வகை
யொவ்வொன்றுக்கு ஒவ்வொரு சோடு உன்னி
டத்தில்வரும்.—உனக்கும்,அவைகளுக்கும்,ஆகா ௨௧
ரமாகச் சகலவித போசன பதார்த்தங்களையுஞ்
சேர்த்து, உன்னிடத்தில் வைத்துக்கொள்ளென்
று சொன்னார்.—நோவா அப்படியே செய்தான். ௨௨
தனக்குத் தேவன் விதித்தபடிசகலத்தையும்நிறை
வேற்றினான்.

## ௭. அதிகாரம்.

௧. பேழையிற்பிரவேசிக்க நோவாபெற்ற கட்டளை: ௭. நோவாவும் அவன் குடும்பத்தாரும் சீவசெந்துக்களோடே பேழையிற் பிரவேசித்தல்: ௰௭. சலப்பிரளயமுண்டாதல்.

யெகோவா நோவாவைநோக்கி, இந்தச்சந்ததி ௧
யில் என்முன்னே உன்னை நீதிமானென்றுகண்
டேன். ஆகையால் நீயும், உன்குடும்பத்தாரனைவ
ரும், பேழையிற்பிரவேசியுங்கள்.—பூமியின்மே ௨
லெங்கும் வித்தைக்காக்கும்பொருட்டு, சுசியான
எல்லாவித மிருகங்களிலும், ஆணும் பெண்ணு
மாக எவ்வேழு சோடும், அசுசியான மிருகங்க
ளில், ஆணும் பெண்ணுமாக ஒவ்வொருசோடும்,-
ஆகாயப்பறவைகளில், சேவலும் பேடுமாக எவ் ௩
வேழுசோடும்உன்னிடத்திற்சேர்த்துக்கொள்.-எ ௪
ழுநாட்சென்றபின்,நாற்பதுநாள்இரவும்பகலும்,
பூமியின்மேல் மழை வருஷிக்கப்பண்ணி,நான்
சிருஷ்டித்த செந்துக்களனைத்தையும்,பூமியின்மு
கத்தில் நின்றுந்துடைப்பேனென்றார்.—நோவா ௫

(௬. அதி. ௧.) அதி.௧.௨௮. (௨) உபா.௭.௩,௪. (௩) கலா.௫.௰௬,௰௭. ௧.பேதுரு.௩.௰௯,௨௰. சங்.௭௮.௩௯. (௫) அதி.௮.௨௧. உபா.௨௯.௰௯. நீதி.௬.௰௮. மத்.௰௫.௰௯. (௬) கண.௨௩.௰௯. ௧.சாமு.௰௫.௰௧,௨௯. ௭௪ா.௬௩.௰. எபே.௪.௩௰. (௮) அதி.௰௯.௰௯. யாத்.௩௩.௰௨. லூக்.௧.௩௰. (௯) அதி.௭.௧. எசேக்.௰௪.௰௪,௨௰. ரோ.௧.௰௭. எபி.௰௧.௭. ௨.பேதுரு.௨.௫. அதி.௫.௨௨. (௰.) அதி.௫.௩௨. (௰௧) அதி.௭.௧. அதி.௰.௯. அதி.௰௩.௰௩. ரோ.௨.௰௩. ரோ.௩.௰௯. எசேக்.௮.௰௭. (௰௨) அதி.௰௮.௨௧. சங்.௰௪.௨. (௰௩) எரோ.௫௧.௰௩ ௧.பேதுரு.௪.௭. வச.௰௭. (௰௭) ௨.பேதுரு.௨.௫. (௰௮) ௧.பேதுரு.௩.௨௰. (௨௨) எபி.௰௧.௭. (௭. அதி. ௧.) வச.௭,௰௩ மத்.௨௪.௩௮. எபி. ௰௧.௭. ௨ பேதுரு.௨ ௫ (௨) லேவி.அதி.௰௧. லேவி.௰.௰. (௪) வச.௰௨,௰௭ (௫) அதி.௬.௨௨.

தனக்குயெகோவாவிதித்தபடிசகலத்தையுஞ்
சு செய்தான்.-சலப்பிரளயம் பூமியின்மேல் உண்
டானகாலத்தில் நோவாவுக்கு வயது அறுநூறு.
எ சலப்பிரளயத்தினிமித்தம் நோவாவும், அவன்
புத்திரரும், அவன் மனைவியும், அவன் புத்திரரு
டைய மனைவிகளும் பேழையிற் பிரவேசித்தார்
அ கள்.—நோவாவுக்குத் தேவன் விதித்தபடி சுசி
யான மிருகங்களிலும், அசுசியான மிருகங்களி
லும்,பறவைகளிலும், பூமியின்மேல்ஊருகிறஎல்
கூ லாவற்றிலும்,—ஆணும் பெண்ணுஞ் சோடுசோ
டாக நோவாவிடத்தில் பேழையிற் புகுந்தன.—
ய ஏழுநாட்சென்றபின்பு பூமியிலே சலப்பிரளயம்
யக ஆரம்பித்தது.-நோவாவுக்குஅறுநூறும்வயதாகும்
வருஷத்தின் இரண்டாம்மாதம்பதினேழாந்தினத்
தில் கடலின் ஊற்றுக்கண்ணெல்லாம் பிளக்கப்
பட்டன. மேகத்துவாரங்கள் திறக்கப்பட்டன.-
யஉ நாற்பதுநாள் இரவும்பகலும் பூமியின்மேற் பெரு
யங மழை உண்டாயிற்று.—அன்றைத்தினமே நோ
வாவும்,நோவாவின்புத்திரராகியசேமும்,காமும்,
யாப்பேத்தும், நோவாவின் மனைவியும், அவன்
புத்திரருடையமனைவிகள்மூன்றுபேரும்,பேழை
யச யிற் பிரவேசித்தார்கள்.—வகைவகையான சகல
விதக் காட்டுமிருகங்களும்,வகைவகையான சக
லவித நாட்டுமிருகங்களும்,பூமியின்மேலூருகிற
வகைவகையான சகலவித ஊர்வனவும், வகை
வகையான சகலவிதப் பறவைகளும், பலவித
மான சிறகுகளுள்ள சகலவித பட்சிகளும் பிர
யரு வேசித்தன.-இப்படிச் சீவசுவாசமாமிசசெந்துக்
களெல்லாவற்றிலேயுஞ் சோடுசோடாகநோவா
யசு விடத்திற் பேழையிற்பிரவேசித்தன.—தேவன்
அவனுக்கு விதித்தபடி ஆணும் பெண்ணுமாகி
ய சகலவித மாமிசசெந்துக்களும் பிரவேசித்த
ன. பின்பு யெகோவா கதவை அடைத்தார்.
யஎ பூமியின்மேல்நாற்பதுநாளும்பிரவாகித்தசலப்
பிரளயத்தினாற் சலம்பெருகிப் பேழையைமிதக்
கச்செய்ய,அதுபூமியைவிட்டு மேலேமிதந்தது.-
யஅ சலம் பெருவெள்ளமாகிப் பூமியின்மேல் மிக
வும்பெருகிற்று. பேழை சலமுகத்தின்மேல்மிதந்
யகூ துகொண்டிருந்தது.—சலம் பூமியின்மேல் மிக
வும் அதிகமாய்ப் பெருகினதினாலே வானத்தின்
கீழ் எங்குமுள்ள உயர்ந்த மலைகளெல்லாம் மூ
உய டப்பட்டன.—மூடப்பட்ட மலைகளுக்கு மே
லாய்ப் பதினைந்துமுழ உயரத்திற்குச் சலம் பெ
உக ருகிற்று.—அதினாலே மாமிச செந்துக்களாகிய
பறவைகளும், நாட்டுமிருகங்களும், காட்டுமிரு
கங்களும்,பூமியின்மேல் ஊர்வனயாவும், மனுஷ
சாதியாவும், பூமியின்மேற் சஞ்சரித்தவையெல்
உஉ லாம், மாய்ந்துபோயின.-தரையிலுண்டான எல்
லாவற்றிலும் நாசியிற்சீவசுவாசமுள்ளவையெல்
உங லாம் மரித்தன.—பூமியின்மேலே மனிதன்முதல்
மிருகங்கள் ஊர்வன ஆகாயப்பறவைகளீறாக,இ
ருந்த உயிருள்ளயாவும் அழிந்துபோயின. அவை
கள் பூமியில்நின்றுந் துடைக்கப்பட்டன. நோ
வாவும் அவனோடே பேழையிலிருந்தவைகளு
மாத்திரஞ் சீவித்திருந்தன.—சலம் பூமியின்மேல் உச
நூற்றைம்பது நாளளவும் மிகவும் பிரவாகித்துக்
கொண்டிருந்தது.

## அ. அதிகாரம்.

க. சலப்பிரளயத்தினொடுக்கம்: ச. பேழைஅரராத்
மலையிலே தங்கல்: எ. காகமும் புறாவும் புறப்
படல்: ய. திரும்பவும் புறா, புறப்படல்: யரு.
நோவா பேழையில் நின்றும் புறப்படும்படி
தேவன் கட்டளையிடல்: உய. நோவா பலியி
டல் அதற்குத் தேவன் வாக்குத்தத்தம் செய்
தல்.

தேவன் நோவாவையும், அவனுடனே பேழை க
யிலிருந்த காட்டு மிருகங்களெல்லாவற்றையும்,
நாட்டுமிருகங்களெல்லாவற்றையும், நினைந்தரு
ளினார். தேவன் பூமியின்மேற் காற்றுவீசப்பண்
ண, சலம்வடிந்தது.-கடலின்ஊற்றுக்கண்களும் உ
மேகத்துவாரங்களும் அடைபட்டன. வானத்து
மழையும் நின்றது.—கிரமங்கிரமமாகச்சலம் வற் ங
றிப்பூமியைவிட்டு நூற்றைம்பது நாளளவிற் கு
றைந்தது.—ஏழாம்மாதம் பதினேழாந்தேதியிற் ச
பேழை அரராத் என்னும் மலைகளின்மேலே தங்
கிற்று.—பத்தாம்மாதம்வரைக்கும் சலம் குறைந் ரு
துகுறைந்துவந்தது. அந்தப்பத்தாம்மாதம் முதல்
தினத்திலே மலைச்சிகரங்கள்தோன்றின.
நாற்பதுநாள்சென்றபின்பு, நோவாதான்செய் சு
த பேழையின்பலகணியைத்திறந்து ஒருகாகத்தை
வெளியேவிட்டான்.-அதுபுறப்பட்டுப்பூமியின் எ
மேலிருந்த சலம் வற்றுமளவும் அங்குமிங்குமா
கத்திரிந்தது.—பூமியின்மேற் சலம் வற்றிப்போ அ
யிற்றோவென்று அறியும்பொருட்டு, ஒருபுறாவை
யுந் தன்னிடத்திலிருந்துவெளியேவிட்டான்.—
பூமியெங்கும் சலம் நின்றதினால் புறா, தன் உள் கூ
ளங்காலைவைத்து இளைப்பாறுமிடத்தைக்காணா
மல் திரும்பிப் பேழையிலே அவனிடத்திற்சேர்ந்
தது. அவன் தன் கையைநீட்டி அதைப்பிடித்
துத் தன்னிடமாகப் பேழையிற்சேர்த்துக்கொண்
டான்.
பின்னும் ஏழுநாட்பொறுத்து மறுபடியும் அப் ய
புறாவைப் பேழையிலிருந்து வெளியே விட்
டான்.—சாயங்காலத்திற்புறா அவனிடத்தில்வந்து யக
சேர்ந்தது. சீதவிருட்சத்திற்கொய்யப்பட்ட ஒரு
இலை அதின்வாயிலிருந்தது. அதனாலே நோவா
பூமியின்மேற் சலங்குறைந்துபோயிற்றென்று அ
றிந்தான்.—அவன் பின்னும் ஏழுநாட்பொறுத்து யஉ
அப்புறாவைவெளியேவிட்டான். அது அவனி
டத்திற்குத்திரும்பிவரவில்லை.—தனக்குஅறுநூற் யங
றொருவயதாகும்வருஷத்தில் முதல்மாதம், முதல்
தினத்தில், பூமியின்மேல் இருந்த சலம் வற்றிப்

(எ) வச.க. (யக) அதி.அ.உ. நீதி.அ.உஅ. எசேக்.உசு.யகூ. அதி.க.எ. அதி.அ.உ. சங்.எஅ.உங. (யஉ) வச.ச,யஎ. (யஅ) சங்.௱ச.உசு. (யகூ) சங்.௱ச.சு. எரே.ங.உங. (உக) யோபு.உஉ.யசு. மத்.உச.ஙகூ. உ.பேது.ங.சு. (உஉ) அதி.உ.எ.(உங) க.பேது.ங.உய.(அ. அதி. க.) அதி.யகூ.உகூ. யாத்.உ.உச. க.சாமு.க.யகூ. யாத்.யச.உக. (உ) யோபு.ஙஅ.ஙஎ. (ங) அதி.எ.உச. (சு) அதி.சு.யசு.

போயிற்று: நோவா பேழையின் மேல் தட்டை எ
டுத்துப்பார்த்து, பூமி உலர்ந்திருக்கிறதைக் கண்
௰௪ டான்.—இரண்டாம்மாதம் இருபத்தேழாந்தினத்
திற் பூமி உலர்ந்துபோயிற்று
௰௫ தேவன் நோவாவைநோக்கி,—நீயும்உன்மனை
௰௬ வியும், உன் புத்திரரும், உன் புத்திரர்களுடை
யமனைவிகளும், பேழையைவிட்டுப் புறப்படுங்
௰௭ கள்.—உன்னிடத்திலிருக்கிற சகலவித மாமிச
செந்துக்களாகிய பறவைகளையும், மிருகங்களை
யும், பூமியின்மேல் ஊருகிற ஊர்வனவற்றையும்,
உன்னுடனே வெளியே புறப்படுத்து. அவைகள்
பூமியிலே திரளாய்ச் சனிப்பிக்கவும், பூமியின்
மேல் மிகுதியாக விருத்தியடையவுங் கடவன
௰௮ வென்றார்.—நோவாவும், அவன்புத்திரரும், அவன்
மனைவியும், அவன்புத்திரருடையமனைவிகளும்,
௰௯ புறப்பட்டுவந்தார்கள்.—பூமியின்மேற் சஞ்சரிக்
கும்சகலமிருகங்களும், சகலஊர்வனவும், சகலப்
பறவைகளும், இனமினமாய், பேழையைவிட்
டுப் புறப்பட்டன.
௨௰ நோவா யெகோவாவுக்கு ஒரு வேதிகை
யுண்டாக்கி, சுசியான சகல மிருகங்களிலும், சுசி
யான சகலப்பறவைகளிலும், சிலவற்றைத்தெரிந்
து, அவைகளை வேதிகையின்மேல் பலிகளாகத்
௨௧ தகனித்தான்.—யெகோவா சுகந்தத்தைமோந்
து, சிறுபிராயந்தொடங்கி மனிதருடைய உள்ளத்
தில்தோன்றும் சிந்தனைகேடாயிருந்தாலும், மனி
தர்நிமித்தம் இனி நான் பூமியைச் சபிக்கமாட்
டேன். நான்முன் செய்ததுபோலச் சகல பிரா
௨௨ ணிகளையுஞ் சங்கரிக்கமாட்டேன்.—பூமி நிலைத்
திருக்குமளவும், விதைப்பும், அறுப்பும், சீதளமும்
உஷ்டணமும், குளிர்காலமும், கோடைக்கால
மும், பகலும், இரவும், ஒழிவதில்லையென்று தம
துள்ளத்திற் சொன்னார்.

## ௯. அதிகாரம்.

௧. தேவன்நோவாவைஆசீர்வதித்தல்: ௪. இரத்தத்தையுங் கொலையையும் விலக்கல்: ௮. தேவன் உடன்படிக்கையைத் திடப்படுத்தி அதற்கு மழைவில்லை அடையாளமாகவேற்படுத்தல்: ௨௰. நோவா திராட்சத்தோட்டத்தை நாட்டி வெறிகொள்ளல்: ௨௫. கானானைச் சபித்துச் சேமை ஆசீர்வதித்து யாப்பேத்துக்காகப் பிரார்த்தனை பண்ணி மரித்தல்.

தேவன் நோவாவையும், அவன் புத்திரரையும்,
ஆசீர்வதித்து, நீங்கள் சந்தானவிர்த்தியுடையவர்க
௨ ளாய்ப் பெருகிப் பூமியை நிரப்புங்கள்.—பூமியி
லுள்ள சகலமிருகங்களும், ஆகாயத்திலுள்ளசக
லப்பறவைகளும், பூமியிற் சஞ்சரிக்கிறயாவும், ச
முத்திரமச்சங்கள்யாவும், உங்களுக்கு அஞ்சி உங்
களுக்குப் பயந்திருக்கும்: அவை உங்கள் கைக்
கு ஒப்பிக்கப்பட்டன.—சஞ்சரிக்குஞ் சீவ செந் ௩
துக்கள் யாவையும், நீங்கள் ஆகாரமாய்க்கொள்ள
லாம். பசும்பூண்டுகளைப்போலவே அவைகளெல்
லாவற்றையும் உங்களுக்குத்தந்தேன்.—மாமிசத் ௪
தை அதன் சீவனாகிய இரத்தத்தோடே புசியாதி
ருப்பீர்களாக.—சீவனாகிய உங்கள் இரத்தத்தினி ௫
மித்தம்பழிவாங்குவேன். சகல சீவசெந்துக்களி
டத்திலும்பழிவாங்குவேன். மனிதனுடைய சீவ
னிமித்தம் எந்த மனிதனிடத்திலுமன்றி, அவ
னவன் சகோதரனிடத்திலும் பழிவாங்குவேன்.—
தேவன் தமதுசாயலாகமனிதனை உண்டாக்கின ௬
தினாலே, மனிதனுடைய இரத்தத்தைச் சிந்துகிற
வனெவனோ அவனுடைய இரத்தம் மனிதனாலே
சிந்தப்படக்கடவது.—நீங்கள் சந்தானவிர்த்தியு ௭
டையவர்களாய்ப்பெருகி, பூமியிலே திரளாய்த்
தழைத்து மிகுத்திருங்களென்று அவர்களுக்குச்
சொன்னார்.
பின்னும் தேவன், நோவாவையும் அவன் புத் ௮
திரரையும் நோக்கி,—நான் உங்களுக்கும், உங்க ௯
ளுக்குப் பின்வரும் உங்கள்சந்ததிக்கும்,—உங்க ௰
ளோடே பேழையிலிருந்துபுறப்படும் சகலசெந்
துக்களுக்குமன்றி, இனிப்பூமியிலுண்டாகுஞ்சக
ல சீவசெந்துக்களுமாகியபறவைகளுக்கும், நாட்
டுமிருகங்களுக்கும், காட்டுமிருகங்கள்சகலத்திற்
கும், என் உடன்படிக்கையை நிலைப்படுத்துகி
றேன்.—இனி மாமிசமுள்ளவைகளெல்லாம் ச ௰௧
லப்பிரளயத்தால் சிதைக்கப்படுதலில்லை யென்
றும் பூமியை அழிக்குஞ் சலப்பிரளயம் உண்டா
காதென்றுமே உங்களுக்கு எனது உடன்படிக்
கையை ஏற்படுத்துகிறேன் என்றார்.—அன்றியும் ௰௨
தேவன் எனக்கும், உங்களுக்கும், உங்களிடத்
திலுள்ள எல்லாச் சீவசெந்துக்களுக்கும், நித்திய
தலைமுறையாக் நான் பண்ணுகிற உடன்படிக்
கைக்கு அடையாளமாக,—நான் என்வில்லை மே ௰௩
கத்தில்ஸ்தாபித்திருக்கிறேன். அதுவேஎனக்கும்,
பூலோகத்துக்குமுண்டான உடன்படிக்கைக்கு
அடையாளம்.—பூமிக்குமேலாய்மேகத்தைநான் ௰௪
வருவிக்கும்பொழுது அந்தவில்லு மேகத்திலே
தோன்றும். நான், எனக்கும், உங்களுக்கும், மா
மிச செந்துக்களெல்லாவற்றிற்கும், உண்டான
உடன்படிக்கையை நினைப்பேன்.—சலப்பிரள ௰௫
யமுண்டாகி மாமிசமுள்ள எல்லாவற்றையும் இ
னி அழிக்காது.—தேவனுக்கும், பூமியின்மே ௰௬
லுள்ள சீவசெந்துக்களெல்லாவற்றிற்குமுண்டா
ன நித்திய உடன்படிக்கையை நினைப்பதற்கு,
மேகத்திலே தோன்றும்வில்லைநோக்குவேனென்
றார்.—தேவன், நோவாவைநோக்கி, எனக்கும், ௰௭

(௨௰) லேவி.அதி.௰௧. (௨௧) லேவி.௧ ௯. எசே.௨௰.௪௧. ௨.கொரி.௨.௰௫. எபே.௫.௨. அதி.௩.௰௭. அதி.௬ ௰௭. அதி.௬.௫. யோபு.௰௪.௪. சங்.௫௧.௫. எரே.௰௭.௯. மத்.௰௫.௰௯ ரோ.௧.௨௧. ரோ.௩.௨௩. அதி.௯.௰௧,௰௫. (௨௨) எசா.௫௪.௯. எரே.௩௩.௨௰,௨௫. (௯. அதி. ௧.) அதி.௧ ௨௮. (௨) அதி.௧.௨௮. ஓசே.௨.௰௮. (௩) உபா.௰௨ ௰௫. நட.௰.௰௨,௰௩. அதி.௧.௨௯. ரோ.௰௪.௰௪,௨௰. ௧.தீமோ.௪.௩,௪. (௪) லேவி.௰௭.௰,௰௧,௰௪. நட.௰௫.௨௰,௨௯. (௫) யாத். ௨௧.௨௮. அதி ௪.௯,௰. சங்.௯.௰௨. நட.௰௭.௨௬. (௬) யாத் ௨௧.௰௨,௰௪. மத்.௨௬.௫௨. அறி.௰௩.௰. அதி.௧.௨௭. வச. ௧.௰௯. அதி.௧.௨௮. (௯) அதி.௬.௰௮. எசா.௫௪ ௯. (௰) சங்.௱௪௫ ௯. (௰௧) எசா.௫௪.௯. (௰௨) அதி.௰௭.௰௧. (௰௩) அறி. ௪.௩. (௰௫) யாத்.௨௮.௰௨. (௰௬) அதி.௰௭.௰௩,௰௯.

பூமியின்மேலிருக்கிற மாமிசமுள்ளயாவுக்கும், நான் ஏற்படுத்தின உடன்படிக்கைக்கு அடையாளம் இதுவேயென்றார்.
௰௮ பேழையிலிருந்து புறப்பட்ட நோவாவின்புத்திரர் சேம், காம், யாப்பேத்தென்பவர்களே. காம்
௰௯ கானானுக்குப்பிதா.-இம்மூவரும் நோவாவின்புத்திரர், பூலோகமெங்கும் வியாபித்திருக்கிறவர்கள்
௨௰ இவர்கள் சந்ததியார்.—நோவா பயிர்செய்கிறவனாகித் திராட்சத்தோட்டத்தை நாட்டினான்.—
௨௧ அவன் திராட்சரசத்தைக்குடித்து வெறிகொண்டு,தன்கூடாரத்தில் நிருவாணமாய்க்கிடந்தான்.—
௨௨ கானானுக்குப்பிதாவாகிய காம், தன் பிதாவின் நிருவாணத்தைக் கண்டு, வெளியிலிருந்த தன் ச
௨௩ கோதரர் இருவருக்கும் அறிவித்தான்.—சேமும், யாப்பேத்தும், ஒரு வஸ்திரத்தை யெடுத்து, தங்கள் இருவருடைய தோள்மேலும் போட்டுக்கொண்டு, தங்கள் பிதாவுக்குப் புறங்காட்டிவந்து, அவன்நிருவாணத்தை மூடினார்கள்: அவர்கள் எதிர்முகமாகப் போகாததினாலே பிதாவின்
௨௪ நிருவாணத்தைக் காணவில்லை.—நோவா, திராட்சரசத்தின் மயக்கம் நீங்கி விழித்தபொழுது, தன் இளையகுமாரன் தனக்குச்செய்ததை அறிந்
௨௫ து,—கானான் சாபமேற்று, தன்சகோதரருக்கு அடிமைகளின் அடிமையாயிருப்பானென்றான்.—
௨௬ சேமுடைய தேவனாகிய யெகோவாவுக்கு ஸ்தோத்திரம். கானான், அவர்களுக்கு அடி
௨௭ மையா யிருப்பான்.—யாப்பேத்தை, தேவன் விர்த்தியாக்குவார்: அவன் சேமுடைய கூடாரங்களில் வசிப்பான். கானான், அவர்களுக்கு அடிமையாயிருப்பான் என்றான்.
௨௮ நோவா சலப்பிரளயத்துக்குப்பின்னும், முந்
௨௯ நூற்றைம்பது வருஷமிருந்தான்.-ஆகத்தொளாயிரத்தைம்பதுவருஷம், நோவா சீவித்திருந்து மரித்தான்.

## ௰. அதிகாரம்.

௧. நோவாவுடைய சேஷ்ட புத்திரனாகிய யாப்பேத்தின்வமிசவரலாறு: ௬. கனிஷ்டபுத்திரனாகிய காமின்வமிசவரலாறு: ௨௧. மத்திமபுத்திரனாகிய சேமுடைய வமிசவரலாறு.

நோவாவின் புத்திரராகிய சேம்,காம்,யாப்பேத்தென்பவர்களுடைய வமிசவரலாறு: சலப்பிரளயத்துக்குப்பின்பு அவர்களுக்குப் புத்திரர் பிறந்
௨ தார்கள்.—யாப்பேத்தின் புத்திரர் கோமர், மாகோக், மாதாய், யாவான், தூபால், மேசேக்,
௩ தீராஸ் என்பவர்கள்.—கோமரின் புத்திரர் அஸ்
௪ கினஸ், ரீபாத்து, தொகற்மா என்பவர்கள்.—யாவானுடைய புத்திரர், எலீஷா, தர்ஷிஸ், கித்
௫ தீம், தோதானிம் என்பவர்கள்.—இவர்கள் வழியாய்த்தோன்றிய அன்னியதேசத்தாரின் தீவுகள், அவனவன்பாஷை, அவரவர்கள் கோத்திரம், சாதி, என்பவைகளின்படி வேறு வேறு தேசங்களாய்ப் பகுக்கப்பட்டன.
. காமுடையபுத்திரர், கூஷ்,மிஸ்ராயிம், பூற்று, ௬
கானான் என்பவர்கள்.—கூஷினுடைய புத்திரர் ௭
சேபா, அவிலா, சப்தா, ராமா, சப்தேகா என்பவர்கள். ராமாவின்புத்திரர், ஷேபா, தேதான், என்பவர்கள்.—கூஷ், நிம்ரோத்தைப்பெற்றான்; ௮
அவன் பூமியிலே பராக்கிரமசாலியாகி,—யெ ௯
கோவாவின் பார்வைக்கு வலியவேடனாயிருந்தான்; அதினால், "யெகோவாவின் பார்வைக்கு வலியவேடனாகிய நிம்ரோத்தைப்போல," என்னும் மொழி வழக்கமாயிற்று.—ஷினி ௰
யார் தேசத்திலுள்ள பாபேல், எரேக், அக்காத், கல்னே என்னுமிவைகள், அவன் ஆண்ட அரசாட்சியின் ஆதிஸ்தலங்கள்.-அத்தேசத்திலிருந் ௰௧
து அஷூர் புறப்பட்டுப்போய் நினிவேயையும் ரெகோபோத் பட்டணத்தையும், காலாகையும்,—
நினிவேக்கும், காலாகுக்கும் இடையே, மகா ௰௨
நகரமாகிய ரேசேனையும் உண்டாக்கினான்.—மி ௰௩
ஸ்ராயிம், லூதீமையும், அனாமீமையும், லிகாபீமையும், நப்துகீமையும்,—பத்துருசீமையும், ௰௪
பெலிஸ்தருக்கு ஆதிபிதாவாகிய கஸ்லூகீமையும், கப்தோரிமையும் பெற்றான்.—கானான்,தன் ௰௫
சேஷ்ட புத்திரனாகிய சீதோனையும், கேத்தையும்,—எபூசியையும், எமோரியையும், கிரகாசி ௰௬
யையும்,—ஈவியையும், அரகீயையும், சீனியை ௰௭
யும்,—அரவாதியையும், சேமாரியையும், காமாத் ௰௮
தியையும் பெற்றான். பின்பு கானானியர் என்னுஞ் சந்ததியார் பிரிந்து பரந்திருந்தார்கள்.—
கானானியருடைய எல்லை, சீதோன்முதல் கே ௰௯
ரார்மார்க்கமாய், காசாமட்டும்; அது முதல் சோதோம், கொமோரா, அத்மா, சேபோயிம், மார்க்கமாய், லாசாபரியந்தமும், போயிருக்கும்.—இ ௨௰
வர்கள் காமுடைய சந்ததியார்; இவர்கள் தங்களுக்குண்டான குடும்பம், பாஷை, தேசம், சாதியென்பவைகளால் பிரிக்கப்பட்டார்கள்.
சேமுக்கும் பிள்ளைகள் பிறந்தார்கள். அவன் ௨௧
ஏபேருடைய சந்ததியாரெல்லாருக்கும் ஆதிபிதாவும், மூத்தவனாகிய யாப்பேத்துக்குச் சகோதரனுமாயிருந்தான்.—சேமுடைய புத்திரர், எலாம், ௨௨
அஷூர்,அர்பக்சாத்,லூத்து,அராம்,என்பவர்கள்.—
அராமுடைய புத்திரர், ஊத்சு, கூல், கேத்தேர், ௨௩
மாஷ் என்பவர்கள்.—அர்பக்சாத், சாலாகைப் ௨௪
பெற்றான்; சாலாக், ஏபேரைப்பெற்றான்.—ஏபே ௨௫
ருக்கு இரண்டுபுத்திரர் பிறந்தார்கள். ஒருவனுக்குப் பேலேக்கென்றுபேர். அவனுடைய நாள்களில் பூமி பகுக்கப்பட்டது. அவனுடைய சகோதரனுக்கு யோக்தானென்றுபேர்.—யோக் ௨௬
தான் அல்மோதாதையும், சலேப்பையும், ஆசர்மாவேத்தையும், யாராகையும்,—ஆதோராமை ௨௭

(௰௮) அதி.௫.௩௨. அதி.௰.௩௨. (௨௰) அதி.௩.௰௯,௨௩. நீதி.௰௨.௰௧. (௨௧) நீதி.௨௰.௧. (௨௩) யாத்.௨௰.௰௨. (௨௫) உபா.௨௭.௰௬. யோசு.௯.௨௩. (௨௬) சங்.௱௪௪.௰௫. (௨௭) எபே.௨.௰௩,௰௪. (௰. அதி. ௧.) அதி.௯.௧,௭,௰௯. ௧.நாளா.௧.௫. சங்.௭௨.௰. செப்.௨.௰௧. (௬) ௧.நாளா.௧.௮. (௯) எரே.௰௬.௰௬. (௰) மீகா.௫.௬. (௰௪)௧.நாளா.௧.௰௨. (௰௫) அதி.௰௩.௰௨,௰௪,௰௫,௰௭. யோசு.௰௨.௭,௮. (௨௨) ௧.நாளா.௧.௰௭. (௨௪) அதி.௰௧.௰௨. (௨௫) ௧.நாளா.௧.௰௯.

உஅ யும், ஊசாலேயும், திக்லாவையும்,—ஒபாலேயும்,
உக அபிமாவேலேயும், ஷேபாவையும்,—ஒப்பீரை
யும், அவிலாவையும், யோபாபையும் பெற்
றான். இவர்கள் அனைவரும் யோக்கேத்தானுடை
௩௰ ய புத்திரர்.—இவர்களுடைய வாசஸ்தானம், மே
ஷாமுதல் கிழக்கேயுள்ள மலையாகிய ஷேப்
௩க பார்பரியந்தமிருந்தது.—தங்கள் தங்கள் தேசம்,
சனம், குடும்பம், பாஷை என்பவைகளால் வே
௩உ றுபட்ட சேமின்சந்ததியார் இவர்களே.—இவர்
கள், தங்கள் தங்கள் சாதிகளிலுள்ள வமிசவர
லாற்றின்படி வேறுபட்ட, நோவாவின் புத்திர
ருடைய சந்ததியார். சலப்பிரளயத்துக்குப்பின்,
பூமியிற் பகுக்கப்பட்ட எத்தேசத்தாரும், இவர்
கள் வழியாய்த் தோன்றினவர்கள்.

## ௰க. அதிகாரம்.

க. பாபேலை யுண்டாக்கினதினிமித்தம் பாஷை
யை வேறாக்கல்: ௰. சேமின் வமிசவரலாறு:
உஎ. தேராவின் வமிசவரலாறு: ௩௰. தேராகு,
ஆபிராம், லோத்து என்பவர்கள் காரானுக்குப்
புறப்படல்.

பூமியிலுள்ள சகலருக்கும் பாஷையும், மொழி
உ யும், ஒரேவிதமாயிருந்தன.—அக்காலத்திலே ச
னங்கள், கீழ்த்திசையில்நின்று பிரயாணமாய்ப்
போய், ஷினியார்தேசத்தில் ஒரு சமபூமியைச்
௩ சேர்ந்து, அங்கே வாசம்பண்ணுகையில்,—நாம்
செங்கல்லறுத்து, அதைச் செவ்வையாய்ச் சூளை
யிடுவோம் வாருங்களென்று, ஒருவரோடொரு
வர் பேசிக்கொண்டார்கள். அவர்கள், கருங்கல்
லுக்குச் செங்கல்லும், சுண்ணச்சாந்துக்கு நிலக்
௪ கீலும், எடுத்துக்கொண்டார்கள்.—பின்னும் அ
வர்கள், நாம் பூமியின்மேலெங்குஞ் சிதறுதபடிக்
கு, நமக்கொரு நகரத்தையும், வானத்தையளாவுஞ்
சிகரமுள்ள ஒரு கோபுரத்தையும், உண்டாக்கு
வோம்; அதினால் நமக்கொரு பேருமுண்டாகும்,
௫ வாருங்களென்றுசொல்லிக்கொண்டார்கள்.-இப்
படியே நரபுத்திரர் உண்டாக்குகிற நகரத்தையும்,
கோபுரத்தையும், பார்க்கிறதற்கு யெகோவா
௬ இறங்கினார்.—யெகோவா, பாருங்கள், சனங்
கள் ஒன்று. அவர்களனைவருக்கும் பாஷையும்
ஒன்று. இப்படிச்செய்யத்தொடங்கினார்கள். இ
னி அவர்கள் செய்யநினைத்த யாதொன்றையும்
எ செய்வதில் தடைபடார்கள்.—நாம் இறங்கி, ஒ
ருவர்பேசுவதை மற்றொருவர் அறியாதபடிக்கு,
அங்கே அவர்கள் பாஷையை, வெவ்வேறாக்கு
அ வோமென்று, சொன்னார்.—அப்படியே யெ
கோவா, அவர்களை அவ்விடத்தில்நின்று பூமி
யின்மேலெங்கும் போகும்படி சிதற அடித்தார்.
அவர்கள் நகரமுண்டாக்குதலை விட்டார்கள்.—
௯ பூமியெங்கும் வழங்கிய பாஷையை யெகோ
வா அங்கே வெவ்வேறாக்கினதினால், அவ்வி
டத்துக்கு, பாபேல் என்னும் பேராயிற்று. யெ
கோவா, அவர்களை அவ்விடம் விட்டு, பூ
மியின்மேலெங்கும் சிதறவும் பண்ணினார்.

சேமின் சந்ததியின் வரலாறு: சலப்பிரளயம் ௰
ஒழிந்த இரண்டு வருஷத்தின்பின், சேம் நூறும்
வயதில், அர்பக்சாத்தைப்பெற்றான்.—சேம், அர் ௰க
பக்சாத்தைப்பெற்றபின், ஐந்நூறுவருஷஞ்சீவித்
திருந்தான், அவன்புத்திரரையும், புத்திரிகளையும்
பெற்றான்.—அர்பக்சாத்து, முப்பத்தைந்தாம் வய ௰உ
தில், சாலாகைப்பெறறான்.-அர்பக்சாத்து, சாலா ௰௩
கைப் பெற்றபின், நானூற்றுமூன்றுவருஷஞ் சீ
வித்திருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிக
ளையும் பெற்றான்.—சாலாகு, முப்பதாம்வயதில், ௰௪
ஏபேரைப்பெற்றான்.—சாலாகு ஏபேரைப்பெற்ற ௰௫
பின், நானூற்றுமூன்றுவருஷஞ்சீவித்திருந்தான்.
அவன் புத்திரரையும், புத்திரிகளையும்பெற்றான்.-
ஏபேர் முப்பத்துநாலாம்வயதில், பேலேகைப் ௰௬
பெற்றான்.—ஏபேர் பேலேகைப் பெற்றபின், நா ௰எ
னூற்றுமுப்பதுவருஷஞ்சீவித்திருந்தான். அவன்
புத்திரரையும் புத்திரிகளையும் பெற்றான்.—பே ௰அ
லேக்முப்பதாம்வயதிலேரேகூவைப்பெற்றான்.-
பேலேக், ரேகூவைப்பெற்றபின், இருநூற்றொன் ௰௯
பதுவருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திர
ரையும் புத்திரிகளையும் பெற்றான்.—ரேகூ முப் உ௰
பத்திரண்டாம்வயதிலே சேரூகைப்பெற்றான்.—
ரேகூ சேரூகைப்பெற்றபின், இருநூற்றேழுவ உக
ருஷஞ் சீவித்திருந்தான். அவன் புத்திரரையும்
புத்திரிகளையும்பெற்றான்.—சேரூக் முப்பதாம் உஉ
வயதில் நாகோரைப்பெற்றான்.—சேரூக் நாகோ உ௩
ரைப்பெற்றபின், இருநூறுவருஷஞ் சீவித்திருந்
தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும்பெற்
றான்.—நாகோர் இருபத்தொன்பதாம்வயதில் தே உ௪
ராகைப்பெற்றான்.—நாகோர் தேராகைப்பெற்ற உ௫
பின், நூற்றுப்பத்தொன்பதுவருஷஞ் சீவித்தி
ருந்தான். அவன் புத்திரரையும் புத்திரிகளையும்
பெற்றான்.—தேராக் எழுபதுவயதின்மேல் ஆபி உ௬
ராம், நாகோர், ஆரான் என்பவர்களைப்பெற்
றான்.

தேராகின் சந்ததியின் வரலாறு: தேராக் ஆபி உஎ
ராம், நாகோர், ஆரான் என்பவர்களைப்பெற்றான்.
ஆரான் லோத்தைப்பெற்றான்.—ஆரான், தான் பி உஅ
றந்த கல்தேயரின் தேசத்திலுள்ள ஊர் என்னும்
நகரத்திலே, தன் பிதாவாகிய தேராகுக்கு முன்
னமே மரித்தான்.—ஆபிராமும், நாகோரும், விவா உ௯
கம் பண்ணினார்கள். ஆபிராமுடைய மனைவிக்
குச்சாராயென்றுபேர். நாகோருடைய மனைவிக்
கு மில்க்காளென்றுபேர். இவள் ஆரானுடைய
குமாரத்தி. அந்த ஆரான் மில்க்காளுக்கும் இஸ்
காளுக்கும் பிதா.

சாராய்க்குச்சந்ததியில்லை: அவள் மலடி.—தே ௩௰
ராகு, தன் புத்திரனாகிய ஆபிராமையும், ஆரானு ௩க
டைய புத்திரனும் தன் பேரனுமாயிருந்த லோத்
தையும், தன் புத்திரன் ஆபிராமுடைய மனைவி
யாகிய தன் மருமகள் சாராயையும் அழைத்துக்

(௰க. அதி. ௪.) உபா.க.உஅ. (௫) அதி.௰அ.உக. (௬) சங்.உ.க. (எ) அதி க.உ௬. சங்.உ.௪. அப்.உ.௪,௫,௬.(அ) லூக்.க.௫க. (௯) க.கொரி.௰௪.உ௩. (௰உ) லூக்.௩.௩௬. (௰௬) க.நாளா.க.௰௯. (உ௪) லூக்.௩.௩௪. (உ௬) யோசு. உ௪.உ. (உ௯) அதி.௰எ.௰௫. அதி.உஉ.உ௰. (௩௰) அதி.௰௬.க,உ. (௩க) அதி.௰உ.க. நெகி.௯.எ. அதி.௰.௰௯.

கொண்டு, அவர்களுடனே கல்தேயர் வசிக்கும்
ஊர் என்னும் நகரத்தைவிட்டு, கானான்தேசத்
திற்குப் போகப்புறப்பட்டான். அவர்கள் கா
௩௨ ரான்மட்டுஞ்சென்று அங்கே தங்கினார்கள்.—தே
ராகு இருநூற்றைந்து வருஷஞ் சீவித்திருந்து,
காரானிலே இறந்தான்.

## ௰௨. அதிகாரம்.

௧. தேவன் ஆபிராமை அழைத்து ஆசீர்வதித்தல்: ௪. ஆபிராம்லோத்துடன்காரானைவிட்டுப்புறப்படல்: ௬.கானான்தேசத்திலே சஞ்சரித்தல்: ௰. பஞ்சத்தினிமித்தம் எகிப்துதேசத்திற்குப்புறப்படல்:௰௪.அங்குள்ள இராசாஆபிராமின்ஸ்திரியைக்கவர்ந்து வாதைகளினிமித்தந்திரும்பவும் அவளை ஒப்பித்தல்.

யெகோவா ஆபிராமைநோக்கி, நீ உன் பிதா
வின்வீட்டையும், உன் இனத்தாரையும், உன்
தேசத்தையும் விட்டுப்புறப்பட்டு, நான் உனக்
௨ குக் காண்பிக்கும் தேசத்திற்குப்போ;-நான் உன்
னிலே மகத்தான ஒரு சாதியைத்தோற்றுவித்து,
உன்னைஆசீர்வதித்து, உன் நாமத்தை மகிமைப்
௩ படுத்துவேன்; நீ ஆசீர்வாதமாயிருப்பாய்.—உன்
னை ஆசீர்வதிப்பவர்களை ஆசீர்வதிப்பேன்; உன்
னைச்சபிப்பவனைச் சபிப்பேன்; பூமியிலுள்ள
சகல சந்ததிகளும் உன்னால் ஆசீர்வதிக்கப்படு
மென்றுசொல்லியிருந்தார்.
௪ ஆபிராம், தனக்கு யெகோவா சொல்லியி
ருந்தபடியே புறப்பட்டுப்போனான். லோத்தும்
அவனுடனே போனான். ஆபிராம் காரானைவிட்
டுப் புறப்பட்டபொழுது, அவனுக்கு எழுபத்
௫ தைந்துவயது.—ஆபிராம் தன் மனைவியாகிய சா
ராயையும், தன் சகோதரனுடைய புத்திரனாகிய
லோத்தையும், தாங்கள் காரானிலே சம்பாதித்த
பொருள்கள் எல்லாவற்றையும், தங்கள் வசத்தி
லிருந்தவர்களையுஞ் சேர்த்துக்கொண்டான். அ
வர்கள்கானான்தேசத்திற்குப்புறப்பட்டுப்போய்,
அந்தக்கானான்தேசத்திற் சேர்ந்தார்கள்.
௬ மேலும், ஆபிராம் அந்தத்தேசத்திலே சுற்றித்தி
ரிந்து, சீகேம் என்னுமிடத்துக்குச் சமீபமான
மோரே என்னுஞ் சமபூமியை அடைந்தான்.
அக்காலத்திலே கானானியர் அத்தேசத்திலிருந்
௭ தார்கள்.—யெகோவா ஆபிராமுக்குத் தரிச
னையாகி, உன் சந்ததிக்கு இந்தத்தேசத்தைக்கொ
டுப்பேனென்றார். அவன் தனக்குத்தரிசனையா
ன யெகோவாவுக்கு, அங்கே ஒரு வேதி
௮ கையை உண்டாக்கினான்.—அவன் அவ்விடம்
விட்டுப்பேர்ந்து, பெத்தேலுக்குக்கிழக்கேயுள்ள
ஒரு மலைக்குப்போய், பேத்தேலுக்குக்கிழக்காக
வும், ஆயிக்கு மேற்காகவுமிருக்கும் இடத்தில்
கூடாரம்போட்டு, அங்கேயும் யெகோவா
வுக்கு ஒரு வேதிகையுண்டாக்கி, யெகோ
வாவின் நாமத்தைச்சொல்லிப்பிரார்த்தித்தான்.—
ஆபிராம் பின்னும் பிரயாணமாய்ப்புறப்பட்டுத் ௯
தெற்கேநாடிபோனான்.
அந்தத்தேசத்திலே பஞ்சமுண்டாயிற்று. பஞ் ௰
சம், தேசத்திலே கொடிதாயிருந்ததினால், ஆபி
ராம் எகிப்துதேசத்திலே தங்கும்படி அவ்விடத்
துக்குப்போனான்.—எகிப்துக்குச் சமீபித்தமாத்தி ௰௧
ரத்தில், அவன் தன் மனைவியாகிய சாராயை
நோக்கி, நீ கண்ணுக்கு அழகான ஸ்திரியென்று
அறிவேன்,—எகிப்தியர் உன்னைக் காணுமிடத் ௰௨
தில், இவள் அவனுடைய மனைவியென்று சொல்
லி, என்னைக்கொலைசெய்து, உன்னை உயிரோ
டே விடுவார்கள்.—ஆகையால் உன் நிமித்தமாய், ௰௩
எனக்கு நன்மையுண்டாகும்படிக்கும், உன்னா
லே நான் உயிரோடிருக்கும்படிக்கும், நான் இ
வனுடைய சகோதரியென்று சொல்லென்றான்.
ஆபிராம் எகிப்திலே சேர்ந்திருந்தபொழுது, ௰௪
எகிப்தியர் அந்த ஸ்திரி மிகவும் அழகுள்ளவளா
யிருக்கக் கண்டார்கள்.—பார்வோனிடத்திலிருந் ௰௫
த பிரபுகளும் அவளைக்கண்டு, பார்வோனுக்கு
முன்பாக அவளைப்புகழ்ந்தார்கள். அந்த ஸ்திரி
பார்வோனுடைய வீட்டிலே கொண்டுபோகப்
பட்டாள்.—அவள் நிமித்தம் அவன் ஆபிராமை ௰௬
உபசரித்தான். இவன் வேலைக்காரரையும், வே
லைக்காரிகளையும், ஆடுமாடுகளையும், கழுதைகளை
யும், பெட்டைக்கழுதைகளையும், ஒட்டகங்களை
யுமுடையவனாயிருந்தான்.—ஆபிராமுடைய ம ௰௭
னைவியாகிய சாராயின் நிமித்தம், யெகோவா,
பார்வோனையும், அவன் குடும்பத்தாரையும், மகா
வாதைகளால் வாதித்தார்.—பார்வோன் ஆபிரா ௰௮
மை அழைத்து, நீ எனக்கு இப்படிச்செய்ததென்
ன. இவள் உன் மனைவியென்று நீ எனக்கு அ
றிவியாமற்போனதென்ன.—இவள் உன் சகோ ௰௯
தரியென்று சொன்னதென்ன. அதினால் நான்
இவளை எனக்கு மனைவியாக்கிக்கொள்ளக்கூடு
ம். இவள் உன் மனைவி. இவளை அழைத்துப்
போவென்று சொன்னான்.—அவனைக்குறித்துப் ௨௰
பார்வோனாற் கட்டளையிடப்பட்ட ஆள்கள்,
அவனையும், அவன் மனைவியையும், அவனுக்
குண்டான எல்லாவற்றையு மனுப்பிவிட்டார்
கள்.

## ௰௩. அதிகாரம்.

௧.ஆபிராமும், லோத்தும், எகிப்து தேசத்தைவிட்டுப்புறப்படல். அவர்களுடைய மேய்ப்பருக்குள் விரோதமுண்டாதல்: ௰. லோத்து, சோதோமுக்குப்போதல்: ௰௪. ஆபிராமுக்குத் தேவன் வாக்குத்தத்தம் அருளிச்செய்தல்: ௰௮. ஆபிராம் எபிரோனுக்குப்போய் அங்கே ஒரு வேதிகையையுண்டாக்கல்.

ஆபிராமும், அவன் மனைவியும், அவனுக்குண் ௧

(௰௨ அதி. ௧.) அதி.௰௫.௭. அப். ௭.௩. எபி.௰௧.௮. (௨) அதி.௰௭.௬. உபா.௨௬.௫. அதி.௨௮.௪. கலா.௩.௰௩. (௩) அதி.௨௭.௨௯. அதி.௰௮.௰௮. சங்.௭௨.௰௭. அப்.௩.௨௫. கலா.௩.௮. (௬) எபி.௰௧.௯. அதி.௰.௰௮,௰௯. (௭) அதி. ௰௭.௧. அதி.௰௩.௰௫. சங்.௱௫.௯,௰௧. (௮) அதி.௰௩.௪. (௰) சங்.௱௫.௰௩. அதி.௪௩.௧. (௰௧) வச.௰௪. அதி.௨௬.௭. (௰௨) அதி.௨௰.௰௧. அதி.௨௬.௭. (௰௩) அதி.௨௰.௫, ௰௩. (௰௪) அதி.௩௯.௭. மத்.௫.௨௮. (௰௫) அதி.௨௰.௨. (௰௬) அதி.௨௰.௰௪. (௰௭) அதி.௨௰.௰௮. ௧.நாளா.௰௬.௨௧. சங்.௱௫.௰௪. எபி.௰௩.௪. (௰௮) அதி.௨௰.௯. அதி.௨௬.௰. (௨௰) நீதி.௨௧.௧. (௰௩ அதி. ௧.) அதி.௰௨.௯.

டான எல்லாவற்றோடும்,லோத்துவோடும்,எகிப்
௨ தைவிட்டுத் தென்றிசையில் வந்தார்கள்.—ஆபி
ராம் ஆடுமாடுகளிலும், வெள்ளியிலும், பொன்
௩ னிலும், மிகச் செல்வனாயிருந்தான்.—ஆபிராம்,
தென்றிசையிலிருந்து பிரயாணம்பண்ணிப்பெத்
தேலைச்சேர்ந்து, பெத்தேலுக்கும், ஆயீக்கும், இ
டையிலே, தான் முன்பு கூடாரம்போட்டது
௪ மன்றி,—முதல் முதல் வேதிகையையுமுண்டாக்
கின ஸ்தலத்திலே, யெகோவாவின் நாமத்
௫ தைச் சொல்லிப் பிரார்த்தித்தான்.—ஆபிராமுட
னே வந்த லோத்துக்கும் ஆடுமாடுகளுங் கூடா
௬ ரங்களுமிருந்தன.—அவர்கள் சகவாசம்பண்ண,
அவ்விடம் போதாமலிருந்தது. அவர்களுக்குண்
டானபொருள் மிகுதியாயிருந்ததினால்தான், அ
வர்கள் சகவாசம்பண்ணக்கூடாமற்போயிற்று.-
௭ ஆபிராமுடைய மேய்ப்பருக்கும், லோத்துவினு
டைய மேய்ப்பருக்கும், விரோதமுண்டாயிற்று.
அத்தேசத்திற் கானானியரும், பெரிசியரும், அக்
௮ காலத்திலே வாசம்பண்ணினார்கள்.—ஆபிராம்,
லோத்துவிடத்தில், எனக்கும், உனக்கும், என்
மேய்ப்பருக்கும், உன்மேய்ப்பருக்கும், விரோ
௯ தம்வேண்டாம்; நாம் சகோதரர்.—இத்தேசமெல்
லாம் உனக்கு முன்னிருக்கிறதல்லவா; என்னை
விட்டுப்பிரிந்திருக்கலாம். நீ இடப்புறத்திற்போ
னால், நான் வலப்புறத்திற்போவேன், நீ வலப்
புறத்திற்போனால், நான் இடப்புறத்திற் போ
வேன் என்றான்.
௰ லோத்து, கண்ணேறிட்டுப்பார்த்து, யோர்தா
னைச்சேர்ந்த சமபூமி முழுவதும், எங்கும் நீர்ப்
பாய்ச்சலுள்ளதாயிருக்கக்கண்டான். யெகோ
வா சோதோமையும், கொமோராவையும், அழிக்
குமுன், அதுசோவார்வரைக்கும் யெகோவா
வுடைய தோட்டத்திற்குச்சமானமாகவும், எகிப்
௰௧ து தேசத்திற்குச் சமானமாகவு மிருந்தது.—ஆ
கையால் லோத்து, யோர்தானைச்சேர்ந்த சமபூமி
முழுவதையும் தெரிந்துகொண்டு, கிழக்கே பிர
யாணப் பட்டுப்போனான்; இப்படி அவர்கள்
௰௨ ஒருவரையொருவர் விட்டுப்பிரிந்தார்கள்.—ஆ
பிராம் கானான் தேசத்தில் வாசம்பண்ணினான்.
லோத்தோ அந்தச்சமபூமியின் நகரங்களில்வா
சம்பண்ணி, சோதோமுக்கு நேரே கூடாரம்
௰௩ போட்டுக்கொண்டான்.—சோதோமின் சனங்
கள் யெகோவா வுக்குமுன்பாக, மிகவும்
துன்மார்க்கரும், பாவிகளுமாயிருந்தார்கள்.
௰௪ லோத்து ஆபிராமை விட்டுப்பிரிந்தபின்பு,
யெகோவா, ஆபிராமைநோக்கி, நீ கண்
ணேறிட்டு, நீ இருக்கிற இடத்துக்கு வடதிசை
யையும், தென்றிசையையும், கீழ்த்திசையையும்,
மேற்றிசையையும்பார்.—நீ பார்க்கிற இந்தப் பூமி ௰௫
முழுவதையும், என்றைக்கும், உனக்கும் உன்
சந்ததிக்கும் ஆகும்படி நான் தருவேன்.—உன் ௰௬
சந்ததியை, பூமியின் தூளைப்போலப் பெருகப்
பண்ணுவேன்: ஒருவன் பூமியின்தூளை எண்ணக்
கூடுமேயாகில், உன்சந்ததியும் எண்ணப்படும்.—
இத்தேசத்தை உனக்குத்தருவேன், ஆகையால் நீ ௰௭
எழுந்து தேசத்தின் நீளமும், அகலமும், எம்மட்
டோ,அம்மட்டும்நடந்துதிரியென்றார்.-அப்பொ ௰௮
ழுது ஆபிராம் கூடாரத்தைப்பேர்த்துக்கொண்டு
போய், எப்பிரோனிலுள்ள மம்ரேயின் சமபூமி
யிற்சேர்ந்து வாசம்பண்ணி, அங்கே யெகோ
வாவுக்கு ஒரு வேதிகையையுண்டாக்கினான்.

## ௰௪. அதிகாரம்.

௧. அமராப்பேல் முதலான இராசாக்கள் பேரா முதலான இராசாக்களோடே செய்த யுத்தம்: ௰௩. லோத்துஅவர்கள்வசத்திலகப்பட்டுஆபிராமால்மீட்கப்படல்: ௰௭.மெல்கிசெதேக் ஆபிராமை ஆசீர்வதித்தல். ஆபிராம் அவருக்குப்பத்திலொரு பாகத்தைக்கொடுத்தல்: ௨௨. எஞ்சிய பொருளைச் சோதோம் இராசாவிடத்தில் ஒப்பித்தல்.

சீனியாருக்கு இராசனாகிய அமராபேலும், எ ௧
லாசாருக்கு இராசனாகிய அரியோகும், எலா
முக்கு இராசனாகிய கேதர்லாகோமேரும், கோ
யீமுக்கு இராசனாகியதிதாலும், தங்கள்காலத்தி
லே,-சோதோமுக்குஇராசனாகியபேராவோடும், ௨
கொமோராவுக்கு இராசனாகிய பிரசாவோடும்,
ஆத்மாவுக்கு இராசனாகியசினேயாவோடும், சே
போயீமுக்கு இராசனாகிய சேமேபரோடும், சோ
வார்என்னும்பேலாவின் இராசனோடும் யுத்தம்
பண்ணினார்கள்.—இவர்கள் எல்லாரும் கேதர்லா ௩
கோமேருக்குப்பன்னிரண்டுவருஷம் வசப்பட்
டிருந்து, பதின்மூன்றாம் வருஷத்திலே விரோத
மாயெழும்பி,—உவர்க்கடலாய்ப்போன சித்தீம் ௪
என்னுந் தாழ்ந்த பூமியிலேகூடினார்கள்.—பதினா ௫
லாம்வருஷத்திலே, கேதர்லாகோமேரும், அவ
னுடனே கூடியிருந்த இராசாக்களும் போய்,
அஸ்தேரோத் கர்னாயீமிலேயிருந்த ரெப்பாவரை
யும், காமிலேயிருந்தசூசியரையும், சாவேகீரியத்
தாயீமிலேயிருந்த எமியரையும்,—சேயீர் மலைக ௬
ளிலிருந்த ஓரியரையும், வனத்துக்கருகான எல்
பாரான்மட்டும் முறிய அடித்து;—திரும்பிக் கா ௭
தேஸ் என்னும் என்மிஸபாத்திற்சென்று, ஆம
லேக்கியருடைய நாடனைத்தையும், அத்சத்
சோன் தாமாரில் வசித்த எமோரியரையுங்கூட
அழித்தார்கள்.—அப்பொழுது சோதோமின் இரா ௮
சனும், கொமோராவின் இராசனும், ஆத்மாவின்

(௨) அதி.௨௪.௩௫. சங்.௱௰௨.௩. நீதி.௰.௨௨. (௩) அதி.௰௨.௮,௯. (௪) அதி.௰௨.௭,௮. சங்.௱௰௬.௰௭. (௬)அதி.௩௬.௬. (௭) அதி.௨௬.௨௰. அதி.௰௨.௬. (௮) ௧.கொரி.௬.௭. அப்.௭.௨௬. (௯) அதி.௨௰.௰௫. அதி.௩௪.௰. ரோ.௰௨.௰௮. (௰) அதி.௰௯.௰௭. உபா.௩௪.௩. அதி.௰௯.௨௪,௨௫. (௰௨) அதி.௰௯.௨௩. அதி.௰௪.௰௨. ௨.பேது.௨.௭,௮. (௰௩) எசேக்.௰௬.௪௯. (௰௪) அதி.௨௮.௰௪. (௰௫) அதி.௰௨.௭. எண்.௩௪.௰௨. உபா.௩௪.௪. அப்.௭.௫. (௰௬) அதி.௰௫.௫. உபா.௧.௰. எசா.௪௮.௰௯. எபி.௰௧.௰௨. (௰௮) அதி.௰௪.௰௩. அதி.௩௫.௨௭. அதி.௩௭.௰௪. (௰௪. அதி. ௧.) அதி.௰.௰. அதி.௰௧.௨. எசா.௰௧.௰௧. (௨) உபா.௨௯.௨௩. அதி.௰௯.௨௨. (௪) அதி.௯.௨௬. (௫) அதி.௰௫.௨௰. யோசு.௰௨.௪. உபா.௨.௨௰. (௬) உபா.௨.௰௨,௨௨. எண்.௰௨.௰௬. (௭) ௨.நாளா.௨௰.௨.

இராசனும், செபோயீமின் இராசனும், சோவா
ரென்னும்பேலாவின் இராசனுமாகிய இவ்வைந்
௯ து இராசாக்களும்புறப்பட்டு,—சித்தீம் என்னுந்
தாழ்ந்தபூமியில் எலாமின் இராசனாகிய கேதர்
லாகோமேர், கோயிமின் இராசனாகிய திதியால்,
ஷினியாரின் இராசனாகிய அமராப்பேல், எலா
சாரின் இராசனாகிய ஆரியோக், என்னும் இந்
நான்கு இராசாக்களோடும் யுத்தம் பண்ணினார்
௰ கள்.—அந்தச்சித்தீம் என்னுந்தாழ்ந்தபூமி,நிலக்கீ
லுண்டாகும் அநேககேணிகளுள்ளதாயிருந்தது.
சோதோமின் இராசனும், கொமோராவின் இரா
சனும், முறிந்தோடி அங்கேவிழுந்தார்கள். மற்ற
௰௧ வர்கள், மலைகளுக்கு ஓடிப்போனார்கள்.—சோ
தோமிலுங் கொமோராவிலுமுள்ள பொருள்கள்
எல்லாவற்றையும், சகல போசனபதார்த்தங்களை
௰௨ யுங் கவர்ந்துகொண்டு போனார்கள்.—ஆபிராமின்
சகோதரனுடைய புத்திரனும், சோதோமில் வ
சித்தவனுமாகிய லோத்தையும், அவன் பொருள்
களையுங் கவர்ந்துகொண்டுபோனார்கள்.
௰௩ தப்பியோடின ஒருவன், எபிரேயனாகிய ஆபி
ராமிடத்தில்வந்து, அதையறிவித்தான். அப்பொ
ழுது ஆபிராம், தன்னோடே உடன்படிக்கை
செய்திருந்த மனிதராகிய எஸ்கோலுக்கும், ஆ
னேருக்குஞ் சகோதரனும், அமோரியனுமான
௰௪ மம்ரேயின் சமபூமியிலே வசித்தான்.—தன்சகோ
தரன் அகப்பட்டுப்போனதை ஆபிராம் கேட்டு,
தன் வீட்டிற்பிறந்தவர்களும், கைபடிந்தவர்களு
மான முந்நூற்றுப்பதினெட்டு ஆள்களுக்கும் ஆ
யுதங்களைக்கொடுத்து, தாண் என்னும் ஊர்மட்
௰௫ டுந்தொடர்ந்து,—இரவிலே தானும், தன்பணிவி
டைக்காரரும், பகுதிபகுதியாக எதிர்த்து, அவர்
களை முறிய அடித்து, தமஸ்குவூருக்கு இடப்புற
௰௬ மான கோபாமட்டுந் துரத்தி,—சகல பொருள்க
ளையும் மீட்டுக்கொண்டுவந்ததுமன்றி, தன்சகோ
தரனாகிய லோத்தையும், அவனுடைய பொருள்
களையும், ஸ்திரிகளையும், சனங்களையுங்கூட மீட்
டுக்கொண்டுவந்தான்.
௰௭ அவன் கேதர்லாகோமேரையும், அவனோடி
ருந்த இராசாக்களையும் முறிய அடித்து, திரும்பி
வருகிறபொழுது, சோதோமின் இராசா, அவ
னைச்சந்திக்கும்படி, இராசபள்ளமாகிய சாவே
௰௮ என்னுந் தாழ்ந்தபூமிக்குப்போனான்.—அன்றியும்
சாலேமின் இராசனும், சருவத்திற்குமேலான
தேவனை வழிபடும் ஆசாரியனுமாகிய மெல்கீ
செதேக்கு, அப்பமும் திராட்சரசமுங்கொண்டு
௰௯ வந்து,—அவனை ஆசீர்வதித்து, வானத்தையும் பூமி
யையுமுடையவராயிருக்கிற சருவத்திற்குமேலா
ன தேவனாலே, ஆபிராம்ஆசீர்வதிக்கப்படக்க
டவனென்றும்,—உன் சத்துருக்களை உன்கையி ௨௰
லொப்பித்த சருவத்திற்குமேலான தேவன்,
தோத்திரிக்கப்படக்கடவரென்றுஞ் சொன்னான்
ஆபிராம் எல்லாவற்றிலும் பத்திலொரு பாகத்
தை அவனுக்குக்கொடுத்தான்.—சோதோமின் இ ௨௧
ராசா ஆபிராமிடத்தில், பொருளை, நீர் தாம் எடுத்
துக்கொள்ளும்; சனங்களை எனக்குத்தாருமென்
றான்.—அதற்கு ஆபிராம் சோதோமின் இராசனை ௨௨
நோக்கி, வாலிபர் உண்ட செலவையும், என்னு
டனேவந்த ஆனேர், எஸ்கோல், மம்ரேஎன்னும்
ஆள்களுடைய பங்கையும் நீக்கிக்கொள்ளலாம்;
இவர்கள் தங்கள் தங்கள் பங்கை எடுத்துக்கொள்
வார்களாகவென்றும்,—ஆபிராமை ஐசுவரியவா ௨௩
னாக்கினேனென்று நீர் சொல்லும்படி நான் ஒரு
சரட்டையாகிலும், பாதரட்சையின் வாரையாகி
லும், உம்முடையபொருள் எதையாகிலும்,எடுத்
துக்கொள்ளேனென்றும்,—வானத்தையும் பூமி ௨௪
யையுமுடையவராயிருக்கிற சருவத்திற்குமே
லான தேவனாகிய யெகோவாவுக்கு நே
ராக என்கையை உயர்த்துகிறேனென்றுஞ்சொன்
னான்.

## ௰௫. அதிகாரம்.

௧. ஆபிராமுக்குப்புத்திரன் உற்பவித்தல். அப்புத்
திரனுக்குக் கானான்தேசத்தைத் தருவேனென்
று தேவன் வாக்குத்தத்தமருளிச்செய்தல். தே
வகட்டளைப்படி ஆபிராம் பலியிடல்.

இந்தக்காரியங்கள் நடந்தபின்பு, தரிசனையில் ௧
ஆபிராமே, நீ பயப்படாதிரு, நானே உன்கேடக
மும் உன் பரிபூரணபலனுமாயிருக்கிறேனென்
னும் யெகோவாவின்வாக்கு ஆபிராமுக்குக்
கிடைத்தது.—அதற்கு ஆபிராம், தேவனாகிய ௨
யெகோவாவே, அடியேனுக்கு எதையருள்
வீர். பிள்ளையில்லாமற்போனேன; தமஸ்கு ஊ
ரானாகிய இந்த எலியேசர் அல்லவா என்குடும்
பத்திற்கு அதிகாரியாயிருக்கிறான்.—எனக்கோ, ௩
சந்ததியை நீர் அருளவில்லை; என்வீட்டிற்பிறந்த
அன்னியனே என்பொருளுக்குச் சுதந்தரனாயி
ருப்பானென்று ஆபிராம் சொல்ல;—இவன் உ ௪
னக்குச்சுதந்தரனாகான்; உன்னுதரத்தில்தோன்றி
னவனே உனக்குப்பின் சுதந்தரனாவானென்
று யெகோவாவின் வாக்கு அவனுக்குக்கி
டைத்தது.—அவர் அவனை வெளியிலே யழைத் ௫
து, நீ வானத்தை யண்ணாந்துபார். நட்சத்திரங்
களை உன்னாலே எண்ணக்கூடுமேயாகில், அவை
களை எண்ணென்றும், இப்படியே உன் சந்ததி
யிருக்குமென்றுஞ் சொன்னார்.—அப்பொழுது ௬
அவன் யெகோவாவில் விசுவாசம்வைத்
தான்; அதை அவர் அவனுக்கு நீதியென்று எண்

(௰) அதி.௰௧.௩ அதி.௰௯.௰௭,௩௰. (௰௧) வச.௰௬,௨௧. (௰௨) அதி.௰௨.௫. அதி.௰௩.௰௨. (௰௩) அதி.௰௩.௰௮. வச. ௨௪. (௰௪) அதி.௰௩.௮. அதி.௰௫.௩. பிர.௨.௭. உபா.௩௪.௧. (௰௫) எசா.௪௧.௨,௩. (௰௬) வச.௰௧,௰௨. (௰௭) நியா.௰௧.௩௪. எபி.௭.௧. ௨.சாமு.௰௮.௰௮. (௰௮) எபி.௭.௧. சங்.௱௰.௪. எபி.௫.௬. மீகா.௬.௬. அப் ௰௬.௰௭. (௰௯) மத்.௰௧.௨௫. அதி.௨௪.௨௭. எபி.௭.௪. (௨௨) யாத்.௬.௮. தானி.௰௨.௭. அறி.௰.௫,௬. வச.௰௯. அதி.௨௧. ௩௩. வச.௰௯. (௰௫. அதி. ௧.) தானி.௰.௧. அப்.௰.௰,௰௧. அதி.௨௬.௨௪. லூக்.௧.௰௩,௩௰. சங்.௰௬.௫. சங்.௫௮. ௰௧. நீதி.௰௧.௰௮. (௨) அப்.௭.௫. (௩) அதி.௰௪.௰௪. (௪) ௨.சாமு.௭.௰௨. (௫) சங்.௱௪௭.௪. எரே.௩௩.௨௨. (௬) ரோ.௪.௩,௧,௨௨. சங்.௱௬.௩௧.

௭ ணினார்.—அவர் அவனைநோக்கி, இத்தேசத்தை
உனக்குச் சுதந்தரமாகத் தரும்பொருட்டு உன்
னைக் கல்தேயருடைய ஊர்நகரத்திலிருந்து அ
ழைத்துவந்த யெகோவா நானே என்றார்.—
௮ அதற்கு அவன், தேவனாகிய யெகோவா
வே, நான் அதைச்சுதந்தரித்துக்கொள்வேனென்
௯ று எதைக்கொண்டு அறிவேனென்றான்.-அதற்கு
அவர், மூன்றுவயதுள்ள கடாரியையும், மூன்று
வருஷத்து வெள்ளாட்டையும், மூன்றுவருஷத்
துச் செம்மறிக்கடாவையும், ஒரு காட்டுப்புறு
வையும், ஒரு புறாக்குஞ்சையும், என்னிடத்திற்
குக்கொண்டுவர வேண்டுமென்று சொல்ல;—
௰ அவன் அவைகளெல்லாவற்றையும் அவரிடத்
திற்குக்கொண்டுபோய், அவைகளை நடுவாகப்பி
ளந்து, துண்டங்களை ஒன்றுக்கொன்று எதிராக
வைத்தான். பட்சிகளை அவன்பிளக்கவில்லை.—
௰௧ காட்டுப்பறவைகள் அந்த உடல்களின்மேல் வி
௰௨ ழுந்தன; அவைகளை ஆபிராம் துரத்தினான்.—சூரி
யன் அஸ்தமிக்க ஆபிராமுக்கு, கடுநித்திரைவந்த
து; பயங்கரமான காரிருள் அவனைமூடிற்று.—
௰௩ அவர் ஆபிராமைநோக்கி, உன்சந்ததியார் புறத்
தேசத்தாருக்கு, அவர்கள்தேசத்தில், நானூறுவரு
ஷமட்டும்ஊழியஞ்செய்து, அவர்களால் துயரப்
படுவார்களென்று அறிந்து நிச்சயித்துக்கொள்.—
௰௪ அவர்களை அடிமைப்படுத்தும் அத்தேசத்தாரை
நான் தண்டிப்பேன்; அதன்பின்பு மிகுந்தபொ
௰௫ ருள்களுடனேபுறப்பட்டுவருவார்கள்.-நீசாந்தத்
துடனே உன் முன்னோர்களிடத்திற்சேருவாய்,
பூரணஆயுள்பெற்றிருந்து அடக்கம்பண்ணப்படு
௰௬ வாய்.-நாலாந்தலைமுறையாரேஇவ்விடத்துக்குத்
திரும்பிவருவார்கள். எமோரியருடைய தீங்கு
௰௭ இன்னும்நிறைவாகவில்லையென்றார்.—அஸ்தமித்
திருண்டபின் சூளையின்புகையும், அக்கினிச்சு
வாலையுமுண்டாகி, அந்தத்துண்டங்களுக்கு இ
௰௮ டையேசென்றன.—அந்நாளிலே யெகோவா
ஆபிராமோடே உடன்படிக்கைபண்ணி, எகிப்
து நதிமுதல் பிருத் என்னும் பெரிய நதிமட்
௰௯ டும்,—கேனியரும், கேனிசியரும், கத்மோனிய
௨௰ ரும்,—எத்தியரும், பெரிசியரும் ரெப்பாவ
௨௧ ரும்,—எமோரியரும், கானானியரும், கிரகாசிய
ரும், எபூசியரும் இருக்கிற இந்தத்தேசத்தை உன்
சந்ததிக்குக்கொடுத்தேன் என்றார்.

## ௰௬. அதிகாரம்.

௧. ஆபிராம் சாராயின்சொற்படிஆகாரைவிவாகம் பண்ணல்: ௪. அவள்தன் நாயகியால் இடைஞ்சற்பட்டுத் தப்பியோடல்.தேவ கட்டளையினாலேதிரும்பிவருதல்: ௰௫. இஷ்மவேல்பிறத்தல்.

ஆபிராமுடைய மனைவியாகிய சாராய்க்குப்
பிள்ளையில்லை. எகிப்து தேசத்தாளாகிய ஆகார்
என்னும்பேருள்ள ஒருத்தி அவளுக்கு அடிமை
யாயிருந்தாள்.-சாராய் ஆபிராமை நோக்கி, யெ ௨
கோவா எனக்குச் சந்ததியருளவில்லையே;
என் அடிமையோடேசேரும்; அவள் வழியாய்
என் குடும்பம் விர்த்தி அடையவுங் கூடுமென்
றாள். சாராயின்சொல்லுக்கு ஆபிராம் இசைந்
தான்.—ஆபிராம் கானான் தேசத்திற் பத்துவரு ௩
ஷம் வசித்தபின், ஆபிராமின் மனைவியாகிய சா
ராய் எகிப்துதேசத்தாளும் தன் அடிமையுமான
ஆகாரை அழைத்து, அவளைத் தன் கணவனான
ஆபிராமுக்குப்பாரியாக அளித்தாள்.

அவன் ஆகாரைச்சேர்ந்ததினால் அவள்கருப்ப ௪
வதியானாள். அவள்தான்கருப்பவதியானதைக்கு
றித்து, அவள்தலைவி அவள்பார்வைக்கு அற்பமா
கஎண்ணப்பட்டாள்.—ஆனபடியால்சாராய் ஆபி ௫
ராமைநோக்கி, நான் அனுபவிக்கிற தீமை உன்
மேலும்வரும். என் அடிமையை உன்னுடைய
மார்போடேஅணைவித்தேன்;அவள்தான் கருப்ப
வதியானதைப்பற்றி என்னை அலட்சியமாகஎண்
ணுகிறாள்; யெகோவா எனக்கும் உனக்கும்
நியாயந்தீர்ப்பாராக என்றாள்.—அதற்கு ஆபிராம் ௬
சாராயைநோக்கி, உன் அடிமை உன்கைக்கீழி
ருக்கிறாள்; அவளுக்கு உன் இஷ்டப்படிசெய்
யலாம் என்றான். பின்பு சாராய் இவளைவருத்
த; இவள் அவளைவிட்டோடிப்போனாள்.—வனத் ௭
திலே சூருக்குப்போகிற வழியருகில் நீரூற்றுள்
ளகிணற்றருகே யெகோவாவின் தூதன் அ
வளைக்கண்டு,—சாராயின் அடிமையாகிய ஆகா ௮
ரே, எங்கேயிருந்துவருகிறாய், எங்கே போகிறா
யென்றுகேட்க; அவள் என் தலைவியாகிய சாரா
யின் பார்வைக்குத்தப்பிவருகிறேனென்றாள்.—
அதற்கு யெகோவாவின் தூதன் அவளை ௯
நோக்கி, நீ உன் தலைவியிடத்திற்குத்திரும்பிப்
போய் அவளுக்கு அடங்கியிருவென்றுசொன்
னான்.—அன்றியும், யெகோவாவின் தூதன் ௰
அவளைநோக்கி, உன்சந்ததியைமிகவும்பெருகப்
பண்ணுவேன்; அதுபெருகி அளவிறந்ததாயிருக்
குமென்றான்.—பின்னும், யெகோவாவின் ௰௧
தூதன் அவளைநோக்கி,யெகோவா உன் துக்
கப்பிரலாபத்தைக் கேட்டதினாலே, கருப்பவதி
யாகிய நீபெறும் புத்திரனுக்கு இஷ்மவேல் என்
று பேரிடுவாயாக.—அவன் துஷ்டமனிதனாயி ௰௨
ருப்பான்; அவனுடையகை எல்லாருக்கும் வி
ரோதமாகவும், எல்லாருடைய கையும், அவ
னுக்கு விரோதமாகவுமிருக்கும்; தன் சகோதரர்
யாவருக்கும் எதிர்ப்புறமாக வாசம்பண்ணுவா
னென்றான்.—அவள் இவ்விடத்தில் என் ௰௩

(௭) ஆதி.௰௨.௧. ஆதி.௰௧.௨௮,௩௧. (௮) ஆதி.௨௪.௰௩.௰௪. (௰) எரே.௩௪.௰௮,௰௯. லேவி.௧.௰௭. (௰௨) ஆதி.௨.௨௧. யோபு.௪.௰௨. (௰௩) யாத்.௰௨.௪௰. யாத்.௧.௰௧. சங்.௱௫.௨௫. (௰௪) யாத்.௬.௬. யாத்.௰௨.௩௬. (௰௫) யோபு.௫.௨௬. அப்.௰௩.௩௬. (௰௬) யாத்.௰௨.௪௰. ௧.இரா.௨௧.௨௬. தானி.௮.௨௩. மத்.௨௩ ௩௨. (௰௭) எரே.௩௪.௰௮,௰௯. (௰௮) ஆதி.௨௪.௭. ஆதி.௰௨.௭. யாத்.௨௩.௩௧. எண்.௩௪.௩. யோசு.௧.௪. (௰௬. ஆதி. ௧.) ஆதி.௰௫.௨,௩. ஆதி.௨௧.௯. கலா.௪.௨௪. (௨) ஆதி.௩௰.௩. ஆதி.௨௰.௰௭. ௧.சாமு.௧.௫,௬. ஆதி.௩.௰௭. (௩) ஆதி.௰௨.௫. (௪) ௨.சாமு.௬.௰௬. (௬) நீதி.௰௫.௧. யோபு.௨.௬. எரே.௩௮.௫. யாத்.௨.௰௫. (௭) ஆதி.௨௫.௰௮. யாத்.௰௫.௨௨. (௯) தீத்.௨.௰. (௰) ஆதி.௰௭.௨௰. (௰௧) ஆதி.௰௭.௰௯. மத்.௧.௨௧. (௰௨) ஆதி.௨௧.௨௰. ஆதி.௨௫.௰௮. (௰௩) ஆதி ௩௧.௪௨.

ளைக்கண்டவரை நானும் பின்னே கண்டேனல்
லவா என்றுசொல்லி, தன்னுடனே பேசின யெ
கோவாவுக்கு, நீர் என்னைக்கண்ட தேவன்
௰௪ என்னும்நாமஞ்சூட்டினாள்.-இக்காரியத்தினாலே
அந்தக்கிணறு, சுயசீவியும், என்னைக்காண்கிறவ
ருமானவரின் கிணறு, என்றருத்தங்கொள்ளும்
பேயெர்லாகாய்ரோயீ என்னப்பட்டது; அது,
காதேசுக்கும், பேரேத்துக்கும் நடுவேயிருக்கின்
௰௫ றது.—ஆகார் ஆபிராமுக்கு ஒரு புத்திரனைப்
பெற்றாள். ஆபிராம் ஆகார்பெற்ற புத்திரனுக்கு
௰௬ இஷ்மவேலென்று பெயரிட்டான்.–ஆகார் ஆபி
ராமுக்கு இஷ்மவேலைப்பெற்றகாலத்தில், ஆபி
ராமுக்கு வயது எண்பத்தாறு.

## ௰௭. அதிகாரம்.

*௧. ஆபிராமுக்குத்தேவன் தமதுடன்படிக்கையை நிலைப்படுத்தல். அவ்வுடன்படிக்கைக்குஒரடையாளமாகிய விருத்தசேதனத்தைக் கற்பித்தல்: ௰௫. சாராயின்நாமத்தைமாற்றுதல்: அவளுக்குப் பிள்ளைப் பேற்றைக்குறித்து வாக்குத்தத்தமருளிச்செய்தல்: ௨௩. ஆபிரகாம், இஷ்மவேல், முதலானவர்கள் விருத்தசேதனம் செய்யப்படல்.*

ஆபிராமுக்குத் தொண்ணூற்றொன்பது வயதா
னபொழுது, யெகோவா ஆபிராமுக்குத்தரிச
னையாகி அவனைநோக்கிநான்சருவவல்லமையுள்
ள தேவன்; நீ என்முன்னிலையில்திடங்கொண்
௨ டுநடந்து, சற்குணனாயிரு.-நான்என்உடன்படிக்
கையை எனக்கும் உனக்கும் ஏற்படுத்தி, மிகவுந்
திரளாய் உன்னைப் பெருகப்பண்ணுவேனென்
௩ றார்.—ஆபிராம் வணக்கமாய்விழுந்தான். தே
வன் அவனோடேசம்பாஷித்து.-நீஅநேகசாதியா
௪ ருக்குப் பிதாவாயிருப்பாயென்னும் என் உடன்
௫ படிக்கை உனக்குண்டே,-நானுன்னை மிகவுமதி
கமானசாதிகளுக்குப்பிதாவாக ஏற்படுத்தினபடி
யால், உன்நாமம் ஆபிராம் என்றுவழங்காமல், இ
௬ னிஆபிரகாம் என்றுவழங்கும்.-உன்னைமிகவுமதி
கமாய்விர்த்தி அடையச்செய்து, சாதிகளை உன்
னிடத்திலே தோற்றுவிப்பேன்; இராசாக்களும்
௭ உன்வழியாய்த் தோன்றுவார்கள்.—நான் உனக்
கும், உன்பின்வரும்உன்சந்ததிக்குந் தேவனா
வேனென்கிற என் உடன்படிக்கையை எனக்
கும், உனக்கும், உனக்குப்பின் தலைமுறைதோ
றும் வரும் உன் சந்ததியாருக்கும், நித்திய உடன்
௮ படிக்கையாகத்திடப்படுத்துவேன்.—நீ, பரதேசி
யாய்த்தங்கிவருகிற கானான்தேசமுழுவதையும்உ
னக்கும், உன்பின்சந்ததிக்கும், நித்தியஆட்சியாக
அளிப்பேன்: நானே அவர்களுக்குத் தேவனா
௯ வேன் என்றார்.–பின்னும் தேவன் ஆபிரகாமை
நோக்கி, நீயும் உனக்குப்பின்தலைமுறைதோறும்
வரும் உன் சந்ததியாரும், என் உடன்படிக்கை

யைக் கைக்கொள்வீர்களாக.—எனக்கும், உங் ௰
களுக்கும், உன் பின்சந்ததிக்கும் ஏற்க நீங்கள்
கைக்கொள்ளவேண்டியதாய் ஏற்படுத்துகிற என்
னுடன்படிக்கையாவது, உங்களிற் சகல ஆண்
பிள்ளைகளும் விருத்தசேதனம் பண்ணப்பட
வேண்டும்.—உங்கள் அக்கிரசரும மாமிசத்தை ௰௧
விருத்தசேதனம்பண்ணக்கடவீர்கள். அதுவே, எ
னக்கும், உங்களுக்கும், இருக்கும் உடன்படிக்
கைக்கடையாளம்.–உங்கள் தலைமுறைதோறும், ௰௨
வீட்டுப்பிள்ளையும், உன் சந்ததியல்லாத எந்த
அன்னியனிடத்திலும் பணத்திற்குக் கொள்ளப்
பட்ட பிள்ளையுமாகிய ஒவ்வொரு பாலகனும்,
பிறந்த எட்டாம்நாளிலே விருத்தசேதனம் பண்
ணப்படவேண்டும்.—என்னுடன்படிக்கை உங் ௰௩
கள் மாமிசத்தில் நித்திய உடன்படிக்கையாயி
ருக்கும்படி, உன் வீட்டிற் பிள்ளையும், உன் ப
ணத்திற்குக் கொள்ளப்பட்டவனும், அவசிய
மாய் விருத்தசேதனம் பண்ணப்படவேண்டும்.—
அக்கிரசருமஞ்சேதிக்கப்படாமல், அந்த அக்கிர ௰௪
சருமத்தோடிருக்கும் எந்தப் பாலகனும், என்னு
டன்படிக்கையை மீறினதினால் தன்சனங்களில்
நின்றுஞ் சேதிக்கப்படுவானென்றார்.

பின்னும் தேவன் ஆபிரகாமைநோக்கி, உன் ௰௫
மனைவியைச் சாராய் என்னும்பேரால் அழையா
திருப்பாயாக. சாராள்என்பது அவளுக்குப்பேர்.-
நான் அவளை ஆசீர்வதித்து, அவள்வழியாகவும் உ ௰௬
னக்கொரு புத்திரனைத்தருவேன்; அவள் சாதிக
ளுக்கு மாதாவாகவும், தேசத்தாரின் இராசாக்
கள் அவளிடத்தில் தோன்றவும், அவளை ஆசீர்வ
திப்பேனென்றுசொன்னார்.–ஆபிரகாம் வணக்க ௰௭
மாய்விழுந்து, நகைத்து, நூறுவயதானவனுக்குப்
பிள்ளை பிறக்குமா. தொண்ணூறுவயதான சா
ராள் புத்திரனைப் பெறுவாளாவென்று, தன்னுள்
ளத்திலெண்ணினான்.—மேலும், ஆபிரகாம் தே ௰௮
வனை நோக்கி, இஷ்மவேல் உமக்குமுன்பாகச்
சீவித்திருக்கவேண்டுமேயென்றான்.—தேவன் ௰௯
நிச்சயமாக உன்மனைவியாகிய சாராள்உனக்கொ
ருபுத்திரனைப்பெறுவாள்; அவனுக்கு ஈசாக்கென்
று பேரிடுவாயாக; என்னுடன்படிக்கையை அவ
னுக்கும், அவன்பின்சந்ததிக்கும், எக்காலமும் நி
லையான உடன்படிக்கையாக ஏற்படுத்துவேன்.-
இஷ்மவேலைக்குறித்து நீசெய்த பிரார்த்தனையை ௨௰
யுங்கேட்டேன். கேள், நான் அவனை ஆசீர்வதித்
து, அவனை மிகவுமதிகமாய்த்தழைத்துப் பெரு
கப் பண்ணுவேன்; பன்னிரண்டு பிரபுகளைப்
பெறுவான்; அவன் வழியாய் ஒரு பெரிய சாதி
யைத் தோன்றச்செய்வேன்.—என் உடன்படிக் ௨௧
கையை வருகிறவருஷத்திலே இப்படியொருகா
லத்தில் சாராள் உனக்குப்பெறும் ஈசாக்குக்கு

(௰௪) அதி.௨௪.௬௨. அதி.௨௫.௰௧. எண் ௰௩.௨௬. (௰௫) கலா.௪.௨௨. (௰௭. அதி. ௧.) அதி.௫.௨௨. அதி.௪௮.௰.
௫. ௧ இரா.௮.௨௫. ௨ இரா.௨௰.௩. அதி.௬.௯. உபா.௰௮.௰௩. யோபு.௧.௧. மத்.௫.௪௮ (௨) அதி.௰௨.௨. (௩) வச.
௰௭. (௪) ரோ.௪.௰௧,௰௨,௰௬. கலா.௩.௨௯. (௫) நிகி.௯.௭. ரோ.௪.௰௭. (௬) அதி.௩௫.௰௧. (௭) கலா.௩.௰௭.
அதி.௨௬.௨௪. எபி.௰௧.௰௬. ரோ ௯.௮. (௮) அதி.௰௨.௭. அதி ௰௩.௰௫. சங்.௱௫.௯,௰௧. அதி.௨௩.௫. யாத்.௬.௭.
லேவி.௨௬.௰௨. (௰) அப்.௭.௮. (௰௧) ரோ.௪.௰௧. (௰௨) யோவா.௭.௨௨. பிலே.௩.௫. (௰௪) யாத்.௪.௨௪. (௰௬)
அதி.௰௮.௰. அதி.௩௫.௰௧. கலா.௪.௩௧. ௧ பேதுரு.௩.௬. (௰௭) அதி.௰௮.௰௨. அதி.௨௧.௬. (௰௯) அதி.௰௮.௰. அதி.
௨௧.௨. கலா.௪.௨௮. (௨௰) அதி.௰௬.௰. அதி.௨௫.௰௨,௰௬. அதி.௨௧.௰௮. (௨௧) அதி.௨௧.௨.

௨௨ ஏற்படுத்துவேனென்ருர்.—சம்பாஷணை முடிந்தபின் தேவன் ஆபிரகாமைவிட்டெழுந்தருளினார்.
௨௩ அப்பொழுது ஆபிரகாம் தன்புத்திரன் இஷ்மவேலும், தன்வீட்டிற்பிறந்த சகலரும், தான் பணத்திற்குக்கொண்ட அனைவரும் உட்பட, தன் வீட்டிலுள்ளவர்களில் ஆண்மக்கள் யாவரையுஞ் சேர்த்து, ஆபிரகாம் தனக்குத் தேவன் சொல்லியபிரகாரம், அவர்களுடைய அக்கிரசருமமாமிசத்தை, அந்நாளிலே விருத்தசேதனம் பண்ணி
௨௪ னான்.—ஆபிரகாமுடைய அக்கிரசருமமாமிசம் விருத்தசேதனம் பண்ணப்பட்டபொழுது, அவ
௨௫ னுக்குத்தொண்ணூற்றொன்பது வயது.—அவனுடைய புத்திரனாகிய இஷ்மவேலினுடைய அக்கிரசருமமாமிசம் விருத்தசேதனம்பண்ணப்பட்ட
௨௬ பொழுது அவனுக்குப் பதின்மூன்றுவயது.—ஒரு தினத்திலேதானே ஆபிரகாமும், அவன்புத்திரனாகிய இஷ்மவேலும், விருத்தசேதனம் பண்ணப்
௨௭ பட்டார்கள்.—வீட்டிற்பிறந்தவர்களும் அன்னியரிடத்திற் பணத்திற்குக் கொள்ளப்பட்டவர்களுமாகிய அவன்வீட்டுமனிதர்களெல்லாரும், அவனோடே விருத்தசேதனம் பண்ணப்பட்டார்கள்.

## ௰௮. அதிகாரம்.

௧. ஆபிரகாம் தேவதூதர்மூவரை உபசரித்தல். அவர்கள் அவனோடு சம்பாஷித்தல்: ௰௭. சோதோமின் சங்காரம் ஆபிரகாமுக்கு அறிவிக்கப்படல்: ௨௨. சோதோமின் இரட்சிப்புக்காக ஆபிரகாம் விண்ணப்பஞ்செய்தல்.

யெகோவா, மம்ரேயின் சமபூமியிலே அவனுக்குத்தரிசனையானார். ஒருநாள் அவன் உஷ்டணவேளையில் கூடாரவாசலிலேயிருந்துகொண்
௨ டு,—ஏறிட்டுப்பார்த்தான்; அப்பொழுது மூன்று புருஷர் அவனுக்கெதிரே நின்ருர்கள்; கண்டமாத்திரத்தில் அவன் கூடாரவாசலைவிட்டு அவர்களுக்கெதிர்கொண்டோடிப் பூமிக்கு நேராய்த்
௩ தாழ்ந்துவணங்கி,—ஆண்டவரே எனக்கு அனுக்கிரகஞ்செய்யச் சித்தமானால் அடியேனைவிட்டு
௪ நீங்காதிருப்பீராக.—கொஞ்சந் தண்ணீர்கொண்டு வரட்டும்; உங்கள் பாதங்களைச்சுத்திபண்ணி
௫ மரத்தின்கீழிருந்து இளைப்பாறுங்கள்.—நீங்கள் உங்களிருதயங்களைக்குளிரப்பண்ண, ஒரு துண்டு அப்பங் கொண்டுவருகிறேன்; அதற்குப்பின்பு நீங்கள் போகலாம்; இதற்காகவே அடியேனிடத்திற்கு நடந்துவந்தீர்களென்ருன். அதற்கவர்
௬ கள், நீ சொன்னபடி செய்யென்ருர்கள்.—ஆபிரகாம் தீவிரமாய்க் கூடாரத்தில்போய்ச் சாராளை நோக்கி, நீ விரைந்து மூன்றுபடி மெல்லியமாவெடுத்துப் பிசைந்து, அப்பங்களைச் சுடென்
ருன்.—ஆபிரகாம் மாட்டுமந்தைக்கோடி ஒரு நல் ௭
ல இளங்கன்றைப்பிடித்து, பணிவிடைக்காரன் கையிலே கொடுத்தான்: அவனும் அதை விரைவில் சமைத்தான்.—அவன் வெண்ணெயையும், ௮
பாலையும், தான் சமைப்பித்த கன்றையுமெடுத்து, அவர்கள் முன்பாகவைத்தான்: தானும் மரத்தின் கீழே அவர்களருகே நின்ருன். அவர்கள் புசித்தார்கள்.—அவர்கள் அவனிடத்தில், உன் ௯
மனைவியாகிய சாராள் எங்கேயென்றுகேட்க; கூடாரத்திலேயிருக்கிருளென்ருன்.—அவர், ஒரு ௰
உற்பவகாலத்தளவில் நிச்சயமாகவே உன்னிடத்துக்குத் திரும்பிவருவேன்; உன் மனைவியாகிய சாராள் ஒரு புத்திரனைப்பெறுவாளென்ருர். சாராள் அவருக்குப் பின்புறமாய்க் கூடாரவாசலில் கேட்டுக்கொண்டிருந்தாள்.—அக்காலத்தில் ௰௧
ஆபிரகாமும், சாராளும், மிகவும் வயதுசென்ற விருத்தாப்பியர். சாராளுக்கு இல்விலக்கம் ஒழிந்துபோயிற்று.—அதனால் சாராள் தன்னுள் ௰௨
ளேநகைத்து, நான் விருத்தையாயிருக்க எனக்கு மகிழ்ச்சியாகுமா. என்நாயகனும் விருத்தனேயென்ருள்.—யெகோவா ஆபிரகாமை நோக் ௰௩
கி, சாராள், விருத்தையாகிய நான் பிள்ளைபெறுவது மெய்யோவென்று நகைப்பானேன்.—யெ ௰௪
கோவாவுக்கு அரிய காரியமுண்டா. ஒரு உற்பவகாலத்தளவில் உன்னிடத்திற்கு நியமித்தபடி திரும்பிவருவேன், அப்பொழுது சாராள் ஒருபுத்திரனைப் பெறுவாள் என்ருர்.—சாராள் ௰௫
பயந்து, நான் நகைக்கவில்லையென்று மறுத்தாள். அவர், இல்லை, நீ நகைத்தாய் என்ருர்.
பின்பு அந்தப்புருஷர்கள் எழுந்து அவ்விடம் ௰௬
விட்டுச் சோதோமை நோக்கிப்போனார்கள்; ஆபிரகாமும் அவர்களுடனேபோய் வழிவிட்டனுப்பினான்.—அப்பொழுது யெகோவா, நான் ௰௭
செய்வதை ஆபிரகாமுக்கு மறைக்கலாமா—அவ ௰௮
னில்மேன்மையும் பராக்கிரமமுமுள்ள ஒருசாதி தோன்றும்; அவன்மூலமாய்ப் பூமியிலுள்ள சகல சாதிகளும் ஆசீர்வதிக்கப்படும்.—அவனுக்கு ௰௯
அருளியவாக்கை யெகோவா நிறைவேற்றும்படி, ஆபிரகாம் தனக்குப்பின்வரும் தன் சந்ததிகளுக்கும், தன் வீட்டாருக்குங்கட்டளையிட; அவர்களும் நீதியையும், நியாயத்தையுஞ்செய்பவர்களாகி, யெகோவாவின்மார்க்கத்தைக் காத்து நடந்துகொள்வார்களென்பதை அறிவேன் என்ருர்.—பின்பு, யெகோவா சோதோம் கொமோ ௨௰
ராவின் ஓலம் பெரிதாயிருப்பதினாலும், அவைகளின் பாவம் மிகவுங்கொடிதாயிருப்பதினாலும்,—
நான் இறங்கி என்னிடத்தில் வந்து சார்ந்த ஓ ௨௧
லத்தின்படி அவர்கள் செய்தார்களோ, இல்லை

(௨௭) அதி.௰௮.௰௮. (௰௮. அதி. ௧.) அதி.௰௩.௰௮. அதி.௰௪.௰௩. (௨) எபி.௰௩.௨. அதி.௰௯.௧. ௧.பேதுரு.௪.௯. (௪) அதி.௰௯ ௨. அதி.௪௩.௨௪. (௫) நியா.௬.௰௮. நியா.௰௯ ௫ அதி.௰௯.௮. (௮) அதி.௰௯.௩. (௯) அதி.௨௪.௬௭. (௰) வச.௰௪. ௨.இரா.௪.௰௬. ரோ.௯.௯. (௰௧) அதி.௰௭.௰௭. ரோ.௪.௰௯. எபி.௰௧.௰௧. அதி.௩௧ ௩௫. (௰௨) லூக்.௧.௰௮. ௧.பேதுரு.௩.௬. (௰௪) எரே.௩௨.௰௭. சக.௮.௬. மத்.௩.௯ மத்.௰௯.௨௬. லூக்.௧.௩௭. (௰௬) ரோ.௰௫.௨௪. (௰௭) சங்.௨௫.௰௪. ஆமோ.௩.௭. யோவா.௰௫.௰௫. (௰௮) அதி.௰௨.௩. அப்.௩.௨௫. கலா.௩.௮. (௰௯) யோசு.௨௪.௰௫. எபே.௬.௪. (௨௰) அதி.௪.௰. அதி.௰௯.௰௩. யாக்.௫.௪. (௨௧) அதி.௰௧.௫. யாத்.௩.௮. யோசு.௨௨.௨௨. லூக்.௰௬. ௰௫. ௨.கொரி.௰௧.௰௧.

யோவென்று, பார்த்தறிவேனென்று சொன்னார்.
௨௨ அந்தப்புருஷர்கள் அவ்விடம்விட்டுச் சோதோமை நோக்கிப்போனார்கள். ஆபிரகாமோ, பின்னும் யெகோவாவுக்கு முன்பாக நின்
௨௩ றான்.—ஆபிரகாம் சமீபமாய்ச்சேர்ந்து, துன்மார்க்
௨௪ கரோடே சன்மார்க்கரையுஞ் சங்கரிப்பீரா—அந்த நகரத்திற் சன்மார்க்கராய் ஐம்பதுபேர் இருப்பார்களானால், அங்குள்ள சன்மார்க்கர் ஐம்பது பேர்நிமித்தம் அந்தத் தலத்தை யழியாமல் விடக்
௨௫ கூடாதா—துன்மார்க்கரோடே சன்மார்க்கரையுஞ் சங்கரிப்பது உமக்குத் தூரமாகவேயிருக்கும்; சன்மார்க்கரையும், துன்மார்க்கரையும், சமமாய் நடப்பிப்பது உமக்குத்தூரமாகவேயிருக்கும்: பூமிமுழுமைக்கும் நியாயாதிபதி, நியாயத்
௨௬ தைச்செய்யாமல் விடுவாரோ என்றான்.—அதற்கு யெகோவா, சோதோம்நகரத்தில்சன்மார்க்கர் ஐம்பதுபேரைக்கண்டால், நான் அவர்களின் நிமித்தம் அத்தலத்தார்யாவரையுஞ்சங்கரியாமல்வி
௨௭ டுவேனென்றார்.—ஆபிரகாம், நான் தூளுஞ் சாம்பலுமாயிருந்தும், என் ஆண்டவருடனே பேசத்
௨௮ துணிந்தேன்.-சன்மார்க்கர் ஐம்பதுபேருக்கு ஐந்துபேர் குறைந்தாலோ, ஐந்துபேர் குறைவென்று அந்த நகரத்தார்யாவரையுஞ் சங்கரிப்பீரா என்றான். அதற்கு அவர், சன்மார்க்கர் நாற்பத்தைந்து பேரை அங்கே கண்டால், சங்கரிக்கமாட்டே
௨௯ னென்றார்.—பின்னும் அவன் அவருடனே பேசி, நாற்பதுபேர் அங்கே காணப்பட்டாலோ வென்றான். அதற்கு அவர், நாற்பதுபேரிருந்தால்
௩௰ செய்யேனென்றார்.—அவன், நான் மேலும் பேசினாலும் என் ஆண்டவர் கோபிக்கவேண்டாம்; முப்பதுபேர் அங்கே காணப்பட்டாலோவென்றான். அதற்கு அவர், முப்பதுபேரை அங்கே
௩௧ கண்டால் செய்யேனென்றார்.—அவன், என் ஆண்டவருடனே இன்னும் நான் பேசத் துணிகிறேன். இருபதுபேர் அங்கே காணப்பட்டாலோவென்று சொல்ல; அவர், இருபது
௩௨ பேரிருந்தால் அழிக்கமாட்டேனென்றார்.-பின்னும் அவன், ஆண்டவருக்குக் கோபம்வராதிருப்பதாக; நான் இன்னும் ஒருதரமாத்திரம் பேசுகிறேன்; பத்துப்பேர் அங்கே காணப்பட்டாலோவென்று சொல்ல; அவர், பத்துப்பேரி
௩௩ ருந்தாலும் அழிக்கமாட்டேனென்றார்.—யெகோவா ஆபிரகாமுடனேசம்பாஷித்து முடித்தமாத்திரத்திலே புறப்பட்டுப்போனார். ஆபிரகாமும் தன்னுடைய இடத்திற்குத்திரும்பினான்.

## ௰௯. அதிகாரம்.

௧. தூதர் இருவர் லோத்துவினிடத்திற்சேர்தல்: ௪. சோதோம்நகரத்தார் அவர்களுக்குத் தீமைசெய்யத்துணிதல்: ௰௨. லோத்தும் அவன் புத்திரிகளிருவரும் இரட்சிக்கப்படல்: ௨௪. சோதோம் நகரத்தாரும் லோத்தின்மனைவியுஞ் சங்கரிக்கப்படல்: ௩௰. லோத்துவும், அவனுடைய இரண்டுகுமாரத்திகளும், முறைகேடாய் நடந்து மோவாபியர் அம்மோனியர் என்னும் இரண்டுசாதிகளின் பூர்வ பிதாக்களைப்பெறுதல்.

சாயங்காலத்தில் தேவதூதரிருவர் சோதோமிற் ௧
சேர்ந்தார்கள். லோத்து சோதோமின்வாசலிலிருந்தான் அவர்களைக் கண்டு லோத்து எழுந்து எதிர்கொண்டு, பூமிக்குநேராய்த் தாழ்ந்து வ
ணங்கி,—என்பிரபுகளே அடியேனுடைய வீட்டி ௨
லே நீங்கள் பிரவேசித்து உங்கள் பாதங்களைச் சுத்திபண்ணி, இராத்தங்கிக் காலையில் எழுந்து பிரயாணஞ் செய்யலாமென்றான். அதற்கு அவர்கள், இல்லை, இராமுழுவதும் வீதியிலே தங்கு
வோமென்றார்கள்.—அவன் அவர்களை மிகவும் ௩
நெருக்கிக் கேட்டதினால் அவனிடத்துக்குத் திரும்பி, அவன் வீட்டிற் பிரவேசித்தார்கள்; அவன் புளிப்பில்லாத அப்பங்களைச்சுட்டு, அவர்களுக்கு விருந்துபண்ணினான்: அவர்கள் புசித்
தார்கள்.—அவர்கள்படுக்குமுன், சோதோம் நக ௪
ரத்தில் வாலிபர்முதல், கிழவர்வரைக்குமுள்ள சனங்களனைவரும், நான்கு திசைகளிலுமிருந்து
வந்து, வீட்டைச்சூழ்ந்துகொண்டு,—லோத்தைக் ௫
கூப்பிட்டு, இன்றிரவிலே உன்னிடத்தில் வந்திருக்கிற மனிதர் எங்கே. நாங்கள் அவர்களையறியும்படிக்கு, அவர்களை எங்களிடத்துக்கு வெளி
யே கொண்டுவாவென்றார்கள்.—அப்பொழுது ௬
லோத்து வாசலுக்கு வெளியே அவர்களிடத்திற்
போய், கதவைப்பூட்டிக்கொண்டு,—என் சகோ ௭
தரரே, ஆ! அவ்வளவு துர்க்கிரியையைச்செய்யா
திருங்கள்.—கேளுங்கள், புருஷரையறியாத என் ௮
குமாரத்திகள் இரண்டுபேரிருக்கிறார்கள்; அவர்களை உங்களிடத்துக்கு வெளியேகொண்டுவருகிறேன், அவர்களுக்கு உங்கள் இஷ்டப்படிசெய்யுங்கள்; இந்தப்புருஷர்என்னுடையதாழ்வாரநிழலிலேவந்தபடியால், இவர்களுக்குமாத்திரம்ஒன்
றுஞ் செய்யாதிருப்பீர்களாகவென்றான்.—அதற் ௯
கு அவர்கள், அப்பாற்போவென்றதுமல்லாமல், வந்தேறுகுடியாயிருக்கிற இவன் நமக்கு நியாயாதிபதியாயிருக்கப்பார்க்கிறானென்றும், இப்பொழுது அவர்களிலும் உனக்கு அதிகதீங்கைச்செய்வோமென்றுஞ்சொல்லி, லோத்தை மிகவும் நெ
ருக்கி, கதவை உடைக்கவுங்கிட்டினார்கள்.—அப் ௰
பொழுது அந்தப்புருஷர்கள், தங்கள்கைகளைவெளியேநீட்டி, லோத்தைத்தங்களருகே வீட்டுக்குள்
இழுத்துக்கொண்டு, கதவைப்பூட்டி;—வீட்டுவா ௰௧
சலிலுள்ள சிறியோரும்பெரியோருமாகிய சனங்களைக் குருடாக்கினார்கள்: அதனால் அவர்கள்வா

(௨௨) அதி.௰௯.௧. வச.௧. (௨௩) எபி.௰.௨௨. எண்.௰௬.௨௨. ௨.சாமு.௨௪.௰௭. (௨௪) எரே.௫.௧. (௨௫) யோபு.௮.௨௰. எசா.௩.௰,௰௧. யோபு.௮.௩. யோபு.௩௪.௰௭. சங்.௫௮.௰௧. ரோ.௩.௬. (௨௬) எரே.௫.௧. எசே.௨௨.௩௰. (௨௭) லூக்.௰௮.௧. அதி.௩.௰௯. யோபு.௪.௰௯. பிர.௰௨.௭. ௧.கொரி.௰௫.௪௭,௪௮. ௨.கொரி.௫.௧. (௩௨) நியா.௬.௩௯. யாக்.௫.௰௬. (௰௯. அதி. ௧.) அதி.௰௮.௨௨. அதி.௰௮.௧. (௨) எபி.௰௩.௨. அதி.௰௮.௪. லூக்.௨௪.௨௮. (௩) அதி.௰௮.௮. (௫) எசா.௩.௯. நியா.௰௯.௨௨. அதி.௪.௧. ரோ.௧.௨௪,௨௭. யூதா.௬. (௬) நியா.௰௯.௨௩. (௮) நியா.௰௯.௨௪. அதி.௰௮.௫. (௯) ௨.பேதுரு.௨.௭,௮. யாத்.௨.௰௪. (௰௧) ௨.இரா.௬.௰௮. அப்.௰௩.௰௧.

௰௨ சலைத்தேடித்தேடி இளைப்படைந்தார்கள்.—பின்பு
அந்தப்புருஷர் லோத்தைநோக்கி, இவ்விடத்தில்
உனக்கு வேறே யாராகிலுமிருக்கிறார்களோ.—
௰௩ இந்தஸ்தலத்தின் ஓலம் யெகோவாவின் சந்நி
தியிற்பெரிதாயிருக்கிறபடியால், நாங்கள் இந்தத்
தலத்தை அழிப்போம்; இதையழிக்கும்படி யெ
கோவா எங்களையனுப்பினார்; ஆதலால் உன் ம
ருமகனையும், உன் புத்திரபுத்திரிகளையும், நகரத்
தில் உனக்குள்ளயாவையும்,இவ்விடத்தைவிட்டு
வெளியே புறப்படுத்திக்கொண்டு போவென்றார்
௰௪ கள்.—அப்பொழுதுலோத்து, புறப்பட்டு,தன் கு
மாரத்திகளை விவாகம்பண்ணின தன் மருமக்கள்
மாருடனேபேசிக்கொண்டு,இந்தநகரத்தை யெ
கோவா அழிப்பார்,ஆகையால்நீங்கள் எழுந்து
இந்தத்தலத்தைவிட்டுப் புறப்படுங்களென்றான்.
அவனுடைய மருமக்கள்மாருக்கு அவன் பரிகா
௰௫ சக்காரனைப்போலக் காணப்பட்டான்.—விடியற்
காலமாகத் தூதர்கள் லோத்தைநோக்கி, நீ நகரத்
துக்குவருந்தண்டனையினால் அழியாதபடிக்கு எ
ழுந்து, உன் மனைவியையும், இங்கேயிருக்கிற
உன்புத்திரிகளிருவரையும் அழைத்துக்கொண்டு
போவென்று சொல்லி, அவனைத்துரிதப்படுத்தி
௰௬ னார்கள்.—அவன் தாமதித்துக்கொண் டிருக்கிற
பொழுது, யெகோவா அவன்மேல்வைத்த இ
ரக்கத்தினாலே, அந்த மனிதர் அவன் கையையும்,
அவன் மனைவியின் கையையும், அவன்குமாரத்
திகளிருவருடைய கையையும், பிடித்து நடத்தி,
அவர்களை நகரத்துக்கு வெளியேகொண்டுபோய்
௰௭ விட்டார்கள்.—அவர்களை வெளியே கொண்டு
போய்விட்டு,அவர்,உன்பிராணரட்சிப்பின்பொ
ருட்டுத்தப்பி ஓடு; பின்னிட்டுப்பாராதே;இந்தச்
சமபூமியில் எங்கேயாகிலுந்தரியாதே;மலைக்கு ஓ
டிப்போ,இல்லாவிட்டால் நீநாசமடைவாயென்
௰௮ றுசொன்னார்.—அதற்குலோத்து ஆ!அப்படியல்ல,
௰௯ என் ஆண்டவரே,—அடியேனுக்கு உமதுகடாட்
சங்கிடைத்ததே;என்சீவனையிரட்சித்ததினால் நீர்
உம்முடைய மகாகிருபை விளங்கக்காட்டினீர்;
மலைக்கு ஓட என்னால்முடியாது, எதாகிலும் ஒ
ருதீமை நேரிடவுங்கூடும், நான் மரிக்கவுங்கூ
௨௰ டும்.—சிறிதாயிருக்கிறஇந்தஊர், நான்ஓடிப்போ
கத்தக்கசமீபமாயிருக்கின்றது; நான் சீவித்திருக்
கும்படி அங்கே ஓடிப்போக, உத்தரவுகொடும்.
அது சிறிதல்லவாவென்று அவர்களை நோக்கிச்
௨௧ சொன்னான்.-அதற்கு அவர்,நீகுறித்தஊரைக்கவி
ழாமல், இக்காரியத்திலும் உன்முகத்தைப்பார்த்
௨௨ தேன்.—நீஅங்கேபோய்ச்சேருமளவும் நான் ஒன்
றுஞ்செய்யேன்; சீக்கிரமாய் அங்கேஓடித்தப்பித்
துக்கொள்ளென்றுசொன்னார்: அதனால்அந்தஊர்
சோவார்என்னப்பட்டது.—லோத்து, சோவாரிற் ௨௩
பிரவேசித்தபொழுது பூமியின்மேற்சூரியன் உத
யமாயிற்று.-சோதோம்கொமோராவின்மேல்யெ ௨௪
கோவாவினால் வானத்திலிருந்து,கந்தகத்தை
யும், அக்கினியையும், யெகோவா வருஷிப்
பித்து,—அந்தநகரங்களையும், சமபூமிகளனைத்தை ௨௫
யும், நகரத்தார்யாவரையும், பூமியிற் பயிரையுங்
கவிழ்த்தார்.—லோத்துக்குப்பின்பு அவன் மனைவி ௨௬
திரும்பிப்பார்த்து, உப்புத்தூணானாள்.
விடியற்காலத்தில் ஆபிரகாம் எழுந்து, தான் ௨௭
யெகோவாவுக்குமுன்பாக நின்ற இடத்துக்
குப்போய்,—சோதோம் கொமோராவின் திசை ௨௮
யையும், சமபூமியாகிய தேசமுழுவதையும்,பார்த்
தபொழுது, அந்தப்பூமியிலே சூளையின் புகை
யைப்போலப் புகை எழும்புவதைக் கண்டான்.-
தேவன் அந்தச் சமபூமியிலுள்ள நகரங்களை ய ௨௯
ழிக்கையிலும், லோத்து வாசம்பண்ணின நகரங்
களை தாம் கவிழ்த்துவிடுகையிலும், அவர் ஆபிர
காமை நினைத்து, லோத்தை அக்கவிழ்ப்பின் மத்
தியில்நின்றுந் தப்பவைத்து அனுப்பினார்.
லோத்து சோவாரில் வாசம்பண்ணப்பயந்து, ௩௰
சோவாரை விட்டுத் தன் குமாரத்திகளிருவருட
னேயும் மலையிலேபோய்வசித்தான். அங்கேஅவ
னும்,அவன் குமாரத்திகளிருவரும், ஒரு குகையி
லேதங்கினார்கள்.—மூத்தவள் இளையவளிடத்தில், ௩௧
நம்முடைய பிதாவும் விருத்தனாயிருக்கிறான்;
பூமியெங்கும் நடக்கிற முறைமையின்படி, நம்
முடனே சேருகிறதற்குப் பூமியில் ஒருபுருஷ
னுமில்லை.—நம்முடைய பிதாவினால் சந்ததியுண் ௩௨
டாகும்படி, அவனுக்குத்திராட்சரசத்தைக்குடிக்
கக்கொடுத்து, அவனோடே சயனிப்போம் வா
வென்று சொன்னாள்.—அன்றிரவில் அவர்கள் ௩௩
தங்கள் பிதாவுக்குத் திராட்சரசத்தைக் குடிக்கக்
கொடுத்தார்கள். மூத்தவள்,போய்த்தன்பிதாவோ
டே சயனித்தாள். அவள் சயனித்ததையும், எழுந்
திருந்ததையும், அவன் அறியவில்லை.—மற்றநா ௩௪
ளில் மூத்தவள் இளையவளிடத்தில், கேள், நேற்
றிரவு நான் என்பிதாவுடன் சயனித்தேன்; இன்
றிரவும் அவனுக்குத் திராட்சரசத்தைக் குடிக்கக்
கொடுப்போம். நம்முடைய பிதாவினாலேசந்ததி
யுண்டாகும்படி, நீயும்போய், அவனுடன் சய
னியென்று சொன்னாள்.—அன்றிரவும் தங்கள் ௩௫
பிதாவுக்குத் திராட்சரசத்தைக் குடிக்கக்கொடுத்
தார்கள். இளையவள் எழுந்துபோய் அவனுடனே
சயனித்தாள். அவள்சயனித்ததையும்,எழுந்திருந்
ததையும் அவன் அறியவில்லை.—இவ்விதமாய் ௩௬
லோத்தின் குமாரத்திகளிருவருந் தங்கள் பிதா
வினால் கருப்பவதியானார்கள்.—மூத்தவள் ஒரு ௩௭

---

(௰௨) அதி.௭.௧. ௨.பேதுரு.௨.௭,௯. (௰௩) அதி.௰௮.௨௰.௧. நாளா.௨௧.௰௫. (௰௪) மத்.௧.௰௮. எண்.௰௬.௨௧,௪௫. யாத்.௯.௨௧. லூக்.௰௭.௨௮. (௰௫) எண்.௰௬.௨௪,௨௬. வெளி.௰௮.௪. (௰௬) லூக்.௰௮.௰௩. ரோ.௯.௰௫,௰௮. சங்.௩௪.௨௨. (௰௭) ௧.இரா.௰௯.௩. வச.௨௬. மத்.௨௪.௰௬,௰௭,௰௮. லூக்.௯.௬௨. பிலி.௩.௰௩,௰௪. (௰௮) அப்.௰.௰௪. (௨௧) யோபு ௪௨.௮,௯. சங்.௱௪௫.௰௯. (௨௨) அதி.௩௨.௨௫,௨௬. மாற்.௬.௫. அதி.௰௩.௰. அதி.௰௪.௨. வச.௨௰. (௨௪) எசா.௰௩.௰௯. எரே.௨௰.௰௬. எரே.௫௰.௪௰. ஓசே.௰௧.௮. லூக்.௰௭.௨௯. ௨.பேதுரு.௨.௬. (௨௫) அதி.௰௪.௩. சங்.௱௭.௩௪. (௨௬) லூக்.௰௭.௩௨. (௨௭) அதி.௰௮.௨௨. (௨௮) வெளி.௰௮.௯. (௨௯) அதி.௮.௧. அதி.௰௮.௨௩. (௩௰) வச.௰௭,௰௯. (௩௧) அதி.௰௬.௨,௪. அதி.௩௮.௮,௯. உபா.௨௫.௫. (௩௨) மாற்.௰௨.௰௯. (௩௭) உபா.௨.௯.

புத்திரனைப்பெற்று, அவனுக்கு மோவாபென்று
பேரிட்டாள். அவன் மோவாபியருக்குப் பிதா:
௩௮ அவர்கள்இந்நாள்வரைக்குமிருக்கிறார்கள்.-இளை
யவளும் ஒரு புத்திரனைப்பெற்று, அவனுக்குப்
பென்னம்மியென்று பேரிட்டாள். அவன் அம்
மோனியருக்குப்பிதா: அவர்களும் இந்நாள்வ
ரைக்கும் இருக்கிறார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. ஆபிரகாம்தன்மனைவியைத்தன்சகோதரியென்றமையால் அபிமேலேக்கு அவளைத்தன்மனைவியாய்க்கொள்ளல்: அவன்சொப்பனத்தில்தேவனால் உணர்த்தப்பட்டு அவளை ஒப்பித்தல்.

ஆபிரகாம் அவ்விடம்விட்டுத்தென்தேசத்துக்
குப்பிரயாணமாய்ப்போய், காதேசுக்கும், சூ
ருக்கும், இடையிலேவாசம்பண்ணினதுமன்றிக்
௨ கேராரிலேயுந் தங்கிவந்தான்.—அங்கே ஆபிர
காம் தன் மனைவியாகிய சாராளைத்தன்சகோதரி
யென்று சொன்னதினால், கேராரின் இராசனாகி
ய அபிமேலேக்கு, ஆளனுப்பிச் சாராளை அழைப்
௩ பித்தான்.—தேவன், இரவிலே அபிமேலேக்குக்
குச்சொப்பனத்தில் தோன்றி, அவனை நோக்கி,
கேள், நீ அழைப்பித்த ஸ்திரியே உன்மரணத்துக்
கேதுவாவாள்: அவள் ஒருவனுடைய மனைவி
௪ யென்றுசொன்னார்.—அபிமேலேக்கு அவளுடன்
சேரவில்லை. அவன், ஆ! ஆண்டவரோ நீதி
௫ யுள்ள சாதியாரையும் அழிப்பீரா.—இவள் தன்
சகோதரியென்று அவன் என்னுடனேசொல்ல
வில்லையா. அவன் தன் சகோதரனென்று இவ
ளுஞ்சொல்லவில்லையா. நேர்மையான இருதயத்
தோடும், சுத்தமானகைகளோடும், இதைச்செய்
௬ தேன் என்றுசொன்னான்.—அதற்குத் தேவன் அ
வனைநோக்கி, நேர்மையான இருதயத்தோடு நீ இ
தைச்செய்தாயென்பதை நானுமறிந்து, நீ எனக்
கு விரோதமாய்ப் பாவஞ்செய்யாதபடிக்கு உன்
னைத்தடுத்தேன்; அவளைத்தொட, நான்உன்னைவி
௭ டவில்லை.—அந்தமனிதனுடையமனைவியைவிட்
டுவிடு. அவன் ஒரு தீர்க்கதரிசி. உனக்காகப்பி
ரார்த்தனைபண்ணுவான். நீயுஞ் சீவிப்பாய். வி
டாயேயாகில், நீயும், உன்னைச்சேர்ந்தயாவரும்,
நிச்சயமாக மரிப்பீர்களென்பதை அறியென்று,
௮ சொப்பனத்திலேசொன்னார்.—அபிமேலேக்கு அ
திகாலையிலெழுந்து தன் பணிவிடைக்காரரெல்
லாரையும் அழைப்பித்து, நடந்தவைகளெல்லா
வற்றையும்அவர்கள்செவிக்கேறத்தெரிவித்தான்.
௯ அந்தமனிதர்கள் மிகவும் பயந்தார்கள்.—அபிமே
லேக்கு ஆபிரகாமைஅழைப்பித்து, அவனிடத்
தில், நீ எங்களுக்கு என்னசெய்தாய். நீ எனக்
கும், என் இராச்சியத்துக்கும், கொடியபாவம்
வரப்பண்ணுகிறதற்கு உனக்கென்ன குற்றஞ்
செய்தேன். செய்யத்தகாத காரியங்களை என்
னிடத்திற்செய்தாயே என்று சொன்னான்.—பின் ௰
னும் அபிமேலேக்கு ஆபிரகாமிடத்தில், எதைக்
கண்டு நீ இந்தக்காரியத்தைச் செய்தாயென்று
கேட்க;—ஆபிரகாம், இவ்விடத்தில் தேவபய ௰௧
மேயில்லை; என் மனைவியினிமித்தம் என்னைக்
கொலைசெய்வார்களென்று நான் நினைத்தேன்.—
அன்றியும், அவள் என் சகோதரியென்பது மெய் ௰௨
தான். அவள் என் பிதாவுக்குப் புத்திரி; என்மா
தாவுக்கோ புத்திரியல்ல.—அவள் எனக்கு மனை ௰௩
வியானாள். என் பிதாவின் வீட்டைவிட்டு, அங்
குமிங்குந்திரியத் தேவன் என்னை ஏவினகா
லத்திலே, நான் போகுமிடமெங்கும் இவன் என்
சகோதரனென்று சொல்லு, இந்தத்தயையை நீ
எனக்குச்செய்யவேண்டுமென்பதாக, நான் அ
வளிடத்திற் சொல்லி யிருந்தேனென்று சொன்
னான்.—அபிமேலேக்கு ஆடுமாடுகளையும், பணிவி ௰௪
டைக்காரரையும், பணிவிடைக்காரிகளையும், ஆ
பிரகாமுக்குக் கொடுத்து, அவன் மனைவியாகிய
சாராளையும், அவனுக்கு ஒப்பித்தான்.—அபிமே ௰௫
லேக்கு, என்தேசம் உனக்கு முன்பாக இருக்
கின்றது; உன் இஷ்டப்படி வாசம்பண்ணென்
றுசொல்லிய பின்பு,—சாராளை நோக்கி, உன்ச ௰௬
கோதரனுக்கு ஆயிரம் வெள்ளிக்காசு கொடுத்
தேன்; உன்னுடனே யிருக்கிற யாவருக்கும்,
மற்றெல்லாருக்கும் முன்பாக இவனே உன்கண்
களுக்கு முக்காடாயிருப்பானாக என்றான்: இப்
படி அவள் கண்டிக்கப்பட்டாள்.—யெகோ ௰௭
வா, ஆபிரகாமுடைய மனைவி யாகிய சாரா
ளின்நிமித்தம், அபிமேலேக்கின் வீட்டிலுள்ள
சகலருக்குங் கருப்பத்தடை செய்திருந்தார்.—
ஆபிரகாம் தேவனை நோக்கிப் பிரார்த்தித்ததினா ௰௮
லே, தேவன், அபிமேலேக்கையும், அவன்ம
னைவியையும், அவன் பணிவிடைக் காரிகளை
யுஞ் சீர்ப்படுத்த, அவர்களும் பிள்ளைப் பேற
டைந்தார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧. ஈசாக்கு உற்பவித்தலும்: முலைப்பால் மறுத்தலும்: ௯. ஆகாரைத்துரத்திவிடுதல்: ௰௭. தேவதூதனாற்சாந்தமடைதல்: ௨௨. ஆபிரகாமும்அபிமேலேக்கும் பேர்ஷேபாவில் உடன் படிக்கை செய்தல்.

யெகோவா தாஞ் சொன்னபடி சாராளைக்க ௧
டாட்சித்தார். யெகோவா தாம்சொல்லியபிரகா
ரஞ் சாராளுக்கு அருள்செய்தார்.—ஆபிரகாம் ௨

(௩௮) உபா.௨.௰௯. (௨௰. அதி. ௧.) அதி.௰௮.௧. அதி.௰௬.௭,௰௪. அதி.௨௬.௬. (௨) அதி.௰௨.௰௩. அதி.௨௬.௭. அதி.௰௨.௰௫. (௩) சங்.௱௫.௰௪. யோபு.௩௩.௰௫. வச.௭. (௪) அதி.௰௮.௨௩. வச.௰௮. (௫) ௨.இரா.௨௰.௩. ௨.கொரி.௧.௰௨. (௬) அதி.௩௧.௭. அதி.௩௫.௫. யாத்.௩௪.௨௪. ௧.சாமு.௨௫.௨௬,௩௪. அதி.௩௯.௯. சங்.௫௧.௪. (௭) ௧.சாமு.௭.௫. யோபு.௪௨.௮. யாக்.௫.௰௪,௰௫. அதி.௨.௰௭. எண்.௰௬.௩௨,௩௩. (௯) அதி.௨௬.௰.யோசு.௭.௨௫. அதி.௩௪.௭. (௰௧) அதி.௪௨.௰௮. சங்.௩௬.௧. அதி.௰௨.௰௨. (௰௨) அதி.௰௧.௨௯. (௰௩) அதி.௰௨.௧,௯,௰௧. எபி.௰௧.௮. அதி.௰௨.௰௩. (௰௪) அதி.௰௨.௰௬. (௰௫) அதி.௰௩.௯. (௰௬) வச.௫. அதி.௨௬.௰௧. அதி.௨௪.௬௫. (௰௭) யோபு.௪௨.௯,௰. (௰௮) அதி.௰௨.௰௭. (௨௧. அதி. ௧.) ௧.சாமு.௨.௨௧. அதி.௰௭.௰௯. கலா.௪.௨௩,௨௮. (௨) அப்.௭.௮. எபி.௰௧.௰௧.

முதிர்ந்தவயதாயிருக்கையில், சாராள் கருப்பந்
தரித்து, தேவன் குறித்தகாலத்தில், அவனுக்
௩ கொருபுத்திரனைப்பெற்றாள்.-ஆபிரகாம்தனக்குச்
சாராள் பெற்றபுத்திரனுக்கு ஈசாக்கென்று பே
௪ ரிட்டான்.—தன் புத்திரனாகிய ஈசாக்கு பிறந்த
எட்டாந்தினத்தில், ஆபிரகாம் தனக்குத் தே
வன் விதித்தபடி, அவனுக்கு விருத்தசேதனம்
௫ பண்ணினான்.—ஈசாக்கு என்னும் புத்திரன் பி
றந்தகாலத்தில் ஆபிரகாமுக்கு நூறுவயது.
௬ ஆபிரகாம் முதிர்ந்தவயதாயிருக்கையில், நான்
அவனுக்கொரு புத்திரனைப்பெற்றேனே; இப்ப
டித் தேவன், நான்நகைக்கும்படி,செய்தார். இ
தைக்கேட்கும்யாவரும் என்னோடே நகைசெய்
௭ வார்கள்.—ஆபிரகாமைநோக்கி, சாராள் பிள்ளை
களுக்கு முலைகொடுப்பாளென்று, முன்னமே
சொல்பவர்யாவரென்று, சாராள் சொன்னாள்.—
௮ பிள்ளை வளர்ந்துமுலைமறந்தது. ஈசாக்குமுலைம
றுத்ததினத்தில் ஆபிரகாம் பெருவிருந்து பண்ணி
௯ னான்.—எகிப்துதேசத்தாளாகிய ஆகார் ஆபிரகா
முக்குப்பெற்ற புத்திரன் பரிகாசஞ்செய்வதைச்
௰ சாராள்கண்டு,—ஆபிரகாமைநோக்கி; இந்த அடி
மையாகிய இவளையும், இவள் மகனையும், புறம்
பேவிடும். இந்த அடிமையின்மகன்என் புத்திரனா
கிய ஈசாக்கோடேஉடன்சுதந்தரனாயிருக்கலாகா
௰௧ தென்றுசொன்னாள்.—ஆபிரகாம் தன்மகனைக்க
டாட்சித்ததினால், இக்காரியம் அவன் பார்வைக்
௰௨ குமிகவுங்கொடிதாயிருந்தது.-தேவன் ஆபிரகா
மைநோக்கி,அந்தப்புத்திரனையும்,உன்னடிமைப்
பெண்ணையுங்குறித்துநீ துக்கிக்க வேண்டுவதில்
லை. உன் சந்ததி ஈசாக்கின்வழியாய் விளங்கும்,
ஆகையால் சாராள் உன்னுடன்சொன்ன எல்லா
௰௩ வற்றையுங்கேள்.—அடிமையானவளின் புத்திர
னும் உன்சந்ததியாயிருக்கிறதினால், அவனில்
நின்றும்ஒருசாதியைத் தோன்றச்செய்வேனென்
௰௪ று சொன்னார்.—ஆபிரகாம் அதிகாலையிலெழுந்
து, உணவுப்பொருளையும், ஒரு துருத்தி நீரையு
மெடுத்து, ஆகாரினுடைய தோளின்மேல் வைத்
து, பிள்ளையையும் ஒப்பித்து அவளையனுப்பிவி
ட்டான். அவள் புறப்பட்டுப்போய்ப் பேர்ஷே
பாவின் வனத்திலே அங்குமிங்குமாக அலைந்து
௰௫ திரிந்தாள்.—துருத்தியிலிருந்த தண்ணிர் ஒழிந்த
பின், அவள் பிள்ளையை ஒருசெடியின்கீழ் விட்
௰௬ டு,—பிள்ளைமரிப்பதை நான் பார்க்கமாட்டே
னென்று, எதிராக, அம்புபாயுந் தூரமளவிற்குப்
போயிருந்துகொண்டு, சத்தமிட் டழுதாள்.—
௰௭ தேவன் பிள்ளையின் சத்தத்தைக் கேட்டார்.
தேவதூதன் வானத்தினின்று ஆகாரைக்கூப்பிட்
டு, ஆகாரே,துயரமென்ன. நீபயப்படவேண்
டாம். தேவன் அவ்விடத்திலிருக்கிறபிள்ளை
யின் சத்தத்தைக்கேட்டார்.—நீயெழுந்து பிள் ௰௮
ளையைத் தூக்கி உன்கையில் ஏந்து. அவனில்
நின்றும் ஒரு பெரியசாதியைத் தோன்றச்செய்
வேனென்றார்.—தேவன் அவளுடைய கண்க ௰௯
ளைத் தெளிவித்தார். அப்பொழுது அவள் ஒரு
கிணற்றைக் கண்டுபோய்த் துருத்தியில் தண்ணீ
ரை நிறைத்துப் பிள்ளைக்குக்குடிக்கக் கொடுத்
தாள்.—தேவனும் பிள்ளையுடனேயிருந்தார். ௨௰
அவன் வளர்ந்து வனத்தில் வசித்து,வில் வல்லவ
னானான்.-அவன் பாரான் வனத்தில் வாசம்பண் ௨௧
ணுகையில், அவனுடைய மாதா அவனுக்கு
எகிப்து தேசத்தாளை, மனைவியாகக் கொடுப்பித்
தாள்.
அக்காலத்தில் அபிமேலேக்கு தன்சேனாபதி ௨௨
யாகிய பீகோலை நோக்கி, ஆபிரகாமிடத்துக்குப்
போய்.அவனிடத்தில்,நீசெய்கிறகாரியங்களெல்
லாம் வாய்க்கத்தக்கதாகத் தேவன் உன்பட்சமா
யிருக்கிறார்.-ஆகையால் நீ, என்னையாகிலும்,என் ௨௩
புத்திரபௌத்திரரையாகிலும்வஞ்சியாமல், நான்
உனக்குச் செய்தபடி எனக்கும், நீ தங்குகிற இத்
தேசத்துக்கும், தயைசெய்வேனென்று, இங்கே
தேவன் மேல் எனக்கு ஆணையிட்டுத்தாவென்
று சொல்ல;—ஆபிரகாம், நான் ஆணையிடுகிறே ௨௪
னென்றுசொன்னான்.-மேலும் அபிமேலேக்கினு ௨௫
டைய பணிவிடைக்காரர், கிணற்றை அபகரித்
துக்கொண்டதினிமித்தம், ஆபிரகாம் அபிமேலே
கைக் கடிந்துகொண்டான்.—அதற்கு அபிமே ௨௬
லேக்கு,இந்தக்காரியத்தைச்செய்தவனை நான் அ
றியேன், நீயும் எனக்கு அறிவிக்கவில்லை, இதை
நான் இன்றுகேட்டதேயன்றி இதற்குமுன் கேட்
கவேயில்லையென்றான்.—ஆபிரகாம் ஆடுமாடுக ௨௭
ளைக் கொண்டுவந்து அபிமேலேக்குக்குக் கொ
டுத்தான்.அவர்களிருவரும்உடன்படிக்கை பண்
ணிக்கொண்டார்கள்.—ஆபிரகாம்ஏழுபெண்ஆட் ௨௮
டுக்குட்டிகளை ஒருபக்கத்தில்விட்டுவைத்தான்.—
அபிமேலேக்குஆபிரகாமைநோக்கி,நீ ஒருபக்கத் ௨௯
தில்விட்டுவைத்தஇவ்வேழுஆட்டின்பெண்குட்
டிகளும் எதற்கென்று கேட்டான்.—அதற்கவன், ௩௰
நான் இந்தக்கிணறுதோண்டினதைக்குறித்து நீர்
எனக்குச்சாட்சியாக இவ்வேழு ஆட்டின்பெண்
குட்டிகளையும் என்கையினால் வாங்கிக்கொள்ள
வேண்டுமென்றான்.—அவர்களிருவரும் அவ்வி ௩௧
டத்தில் ஆணையிட்டுக்கொண்டபடியால், அந்த
இடம் பேர்ஷேபா என்னப்பட்டது.—அவர் ௩௨
கள் பேர்ஷேபாவிலே உடன்படிக்கை பண்
ணிக்கொண்ட பின்பு, அபிமேலேக்கும் அவ
னுடைய சேனாபதியாகிய பீகோலும், எழுந்து
பெலிஸ்தியருடைய தேசத்திற்குத் திரும்பினார்
கள்.

(௩) ஆதி.௰௭.௰௯. (௪) அப்.௭.௮. ஆதி.௰௭.௰,௰௨. (௫) ஆதி.௰௭,௧,௰௭. (௬) சங்.௱௨௬.௨. ஏசா.௫௪.௧. லூக்.௧.௫௮. (௭) ஆதி.௰௮.௰௧,௰௨. (௯) ஆதி.௰௬.௧. ஆதி.௰௬.௰௫. கலா௪.௨௰. (௰) கலா.௪.௩௰. (௰௧) ஆதி.௰௭.௰௮. (௰௨) ரோ.௯.௭,௮. எபி.௰௧.௰௮. (௰௩) வச.௰௮. ஆதி.௰௬.௰ ஆதி.௰௭.௨௰. (௰௪) யோவா.௮.௩௫. (௰௭) யாத்.௩.௭. (௰௮) வச.௰௩. (௰௯) எண்.௨௨.௩௧. லூக்.௨௪.௰௬,௩௧. (௨௰) ஆதி.௨௮.௰௫. ஆதி.௰௬.௰௨. (௨௧) ஆதி.௨௪.௪. (௨௨) ஆதி.௨௰.௨. ஆதி.௨௬.௨௬. ஆதி.௨௬.௨௮. (௨௩) யோசு.௨.௰௨. ௧.சாமு.௨௪.௨௧. (௨௫) ஆதி.௨௬.௰௫,௰௮,௨௰,௨௧,௨௨. (௨௭) ஆதி.௨௬.௩௧. (௨௯) ஆதி.௩௩.௮. (௩௰) ஆதி.௩௧.௪௪,௫௨. (௩௧) ஆதி.௨௬.௩௩.

௩௩ ஆபிரகாம் பேர்ஷேபாவிலே ஒருதோப்பை
உண்டாக்கி,நித்தியதேவனாகிய யெகோவா
வுடைய நாமத்தை அவ்விடத்திலே சொல்லி,
௩௪ பிரார்த்தித்துக் கொண்டான்.—ஆபிரகாம் நெடு
நாளாகப் பெலிஸ்தியருடைய தேசத்தில் தங்கி
னான்.

## ௨௨. அதிகாரம்.

*௧. ஆபிரகாம் தன்புத்திரனாகிய ஈசாக்கைப்பலியி டக்கற்பிக்கப்படல்: அதன்படிசெய்யத்துணிந் தபொழுது தேவதூதனால்விலக்கப்படல்: ௰௫. அத்துணிவினிமித்தம் தேவனால் ஆசீர்வதிக் கப்படல்: ௨௰. ஆபிரகாமின் சகோதரனாகிய நாகோரின் வமிசவரலாறு.*

இந்தக்காரியங்கள்நடந்தபின்பு,தேவன், ஆபி
ரகாமே, என்றுசொல்ல; அவன் அடியேன் என்
௨ றான்.-அவர்,உனக்கன்பானவனும் ஏகசுதனுமா
கிய ஈசாக்கைநீ அழைத்துக்கொண்டு,மோரியதே
சத்துக்குப்போய், அங்கே நான் உனக்குக்காட்
டும் மலைகளில் ஒன்றின்மேல் அவனைச்சருவாங்
கதகனபலியாக இடுவென்றுசொல்லி, ஆபிரகா
௩ மைப் பரிசோதித்தார்.—அதிகாலையில் ஆபிரகாம்
எழுந்து தன் கழுதையிற் சேணங்கட்டி, தன்
வாலிபரிலிருவரையும், தன் புத்திரனாகிய ஈசாக்
கையும், அழைத்து, தகனபலிக்குக் கட்டைக
ளையும் பிளந்துகொண்டு, தனக்குத் தேவன்
குறித்த இடத்துக்குப் புறப்பட்டுப்போனான்.—
௪ மூன்றாம்நாளில் ஆபிரகாம் கண்ணேறிட்டுப்
பார்த்து அந்த இடத்தைத் தூரத்தில்கண்டான்.—
௫ ஆபிரகாம் தன் வாலிபரைநோக்கி, நீங்களிங்
கே கழுதையைநிறுத்தி நில்லுங்கள்; நானும்
பிள்ளையும் அவ்விடம்மட்டும்போய்த் தேவாராத
னைசெய்து, உங்களிடத்துக்குத்திரும்பி வருவோ
௬ மென்று சொல்லி;—ஆபிரகாம் தகனபலிக்குக்
கட்டைகளையெடுத்துத் தன் புத்திரன் ஈசாக்கின்
மேற்சுமத்தி, தன்கையிலே நெருப்பையும், கத்தி
யையுமெடுத்துக்கொண்டான்; பின்பு இருவருங்
௭ கூடிப்போனார்கள்.—ஈசாக்கு தன் பிதாவாகிய ஆ
பிரகாமைநோக்கி,என்பிதாவேயென்றுசொல்ல;
அவன் இருக்கிறேன், என்மகனே, என்றான். இ
வன், பாரும், நெருப்பும், கட்டையுமிருக்கின்ற
ன;தகனபலிக்குஆட்டுக்குட்டிஎங்கேஎன்றான்-
௮ அதற்கு ஆபிரகாம் என்மகனே, தேவன் தமக்
குத் தகனபலிக்கு ஆட்டுக்குட்டியைத் தாமே
தெரிந்துகொள்வாரென்றான். பின்பு இருவருங்
௯ கூடிப்போய்,—தேவன் குறித்த இடத்தைச்
சேர்ந்தார்கள். அங்கே ஆபிரகாம் ஒருவேதிகை
யையுண்டாக்கி, கட்டைகளையடுக்கி, தன் புத்
திரன் ஈசாக்கைக்கட்டி, வேதிகையிலிட்ட அக்
௰ கட்டைகளின்மேல்அவனைக்கிடத்தினான்.-பின்
பு,ஆபிரகாம்தன் புத்திரனைச்சேதிக்கும்படி தன்
கையைநீட்டிக்கத்தியையெடுக்க,-யெகோவா ௰௧
வுடைய தூதனவர் வானத்தில்நின்று ஆபிரகா
மே, ஆபிரகாமே, என்றுகூப்பிட்டார். அவன்,
இங்கே நிற்கிறேனென்றான்.—அவர், இந்தப்பிள் ௰௨
ளையின்மேற் கையை வைக்கவேண்டாம், இவ
னை ஒன்றுஞ்செய்யாதிரு; நீ தேவனுக்குப்
பயப்படுகிறவனென்று இப்பொழுது அறிந்
தேன். என்னிமித்தம் உன் சுதனை, உன் ஏக
சுதனையும் பார்க்கவில்லையென்றுசொன்னார்.-
பின்பு ஆபிரகாம் பார்வைசெலுத்திப் பார்க்கிற ௰௩
பொழுது, பின்னாக ஒரு ஆட்டுக்கடா செடிக்
குள்ளே தன் கொம்புகள் சிக்குண்டிருக்கக்கண்
டான். ஆபிரகாம்போய்க் கடாவைப்பிடித்து,
அதைத் தன் புத்திரனுக்கு ஈடாகத்தகன பலியிட்
டான்.—ஆபிரகாம் அந்த ஸ்தலத்துக்கு யெகோ ௰௪
வாயீரேயென்று பேரிட்டான். அதனால் மலை
யில் யெகோவா பார்த்துக்கொள்வாரென்ப
து, இந்நாள்வரைக்குஞ்சொல்லப்பட்டிருக்கின்
றது.
யெகோவாவுடைய தூதன் இரண்டாந்த ௰௫
ரம்வானத்தில்நின்று ஆபிரகாமைக்கூப்பிட்டு,-நீ ௰௬
உன்சுதனை, உன் ஏக சுதனையும் பாராமல் இந்
தக்காரியத்தைச்செய்தபடியால்,—நான் உன்னை ௰௭
மிகவும் ஆசீர்வதித்து, உன் சந்ததியை வானத்
தின் நட்சத்திரங்களைப்போலவும், கடற்கரை ம
ணலைப்போலவும், மிகுதியாய்ப் பெருகப்பண்
ணுவேன்; உன் சந்ததியார் தங்கள் சத்துருக்க
ளின் வாசல்களைச் சுதந்தரித்துக்கொள்வார்கள்.—
உன் சந்ததியினாலே பூமண்டலத்திலுள்ள சகல ௰௮
சாதியாரும்ஆசீர்வதிக்கப்படுவார்களென்று,என்
னைக்கொண்டே ஆணையிட்டிருக்கிறேனென்று,
யெகோவா சொல்லுகிறாரென்றான்.—பின்பு ௰௯
ஆபிரகாம் தன் வாலிபரிடத்துக்குத்திரும்ப, அ
வர்களும் எழுந்து புறப்பட்டு ஏகமாய்ப்பேர்
ஷேபாவுக்குப்போனார்கள்: ஆபிரகாம் பேர்ஷே
பாவிலே வாசம்பண்ணினான்.
இந்தக்காரியங்கள்நடந்தபின்பு,ஒருவன் ஆபி ௨௰
ரகாமிடத்தில்வந்து,மில்காளும்,உன்சகோதரனா
கிய நாகோருக்கு,—அவனுடைய மூதற்பேறான ௨௧
ஊத்சு இவன்சகோதரனாகிய பூசு அராமுக்குப்பி
தாவாகிய கேமுவேல்,—கேசேது, அசோவு,பில் ௨௨
தாஷ்,இத்லாப்பு,பெத்துவேல்என்னும் பிள்ளைக
ளைப்பெற்றாளென்று அறிவித்தான்.—அவ்வெட் ௨௩
டுப்பேரையும் மில்காள் ஆபிரகாமுடையசகோத
ரனாகியநாகோருக்குப்பெற்றாள். பெத்துவேலும்
ரிபெக்காளைப்பெற்றாள்.—ரேயுமாள் என்றுபேர் ௨௪
கொண்ட அவனுடைய மறுமனையாட்டியும் தே
பாகையும், காகாமையும், தாகாஷையும், மாகா
வையும்பெற்றாள்.

(௩௩) அதி.௪.௨௬. எசா.௪௰.௨௮. ௧.தீமோ.௧.௰௭. (௨௨. அதி. ௧.) ௧.கொரி.௰.௰௩. எபி.௰௧.௰௭. யாக்.௧.௰௨. (௨) எபி.௰௧.௰௭. ௨நாளா.௩.௧. (௬) யோவா.௰௯.௰௭. (௯) எபி.௰௧.௰௭. யாக்.௨.௨௧. (௰௨) ௧.சாமு.௰௫.௨௨. மீகா.௬.௭,௮. அதி.௨௬.௪. யாக்.௨.௨௨. (௰௬) சங்.௱௫.௯. எபி.௬.௰௩,௰௪. (௰௭) அதி.௰௫.௫. எரே.௩௩.௨௨. அதி.௰௩.௰௬. அதி.௨௪.௬௰. மீகா.௧.௨௰. (௰௮) அதி.௰௨.௩. அப்.௩.௨௫. வச.௩,௰. அதி.௨௬.௪. (௰௯) அதி.௨௧.௩௧. (௨௰) அதி.௰௧.௨௯. (௨௧) யோபு.௧.௧. யோபு.௩௨.௨. (௨௩) அதி.௨௪.௰௫. ரோ.௯.௰.

## ௨௩. அதிகாரம்.

௧. சாராள் மரணமடைதல் மக்பேலா என்னும் பிரேதவறையில் அடக்கம்பண்ணப்படல்.

சாராள் நூற்றிருபத்தேழுவருஷஞ் சீவித்திருந்
௨ தாள். இவ்வளவே சாராளுடையஆயுள்.-கானான்
தேசத்திலுள்ள எபிரோன் என்னுங் கீரியாத் அர்
௩ பாவிலே சாராள் மரணமடைந்தாள்.—ஆபிரகாம்
வந்து சாராள் நிமித்தந்துக்கித்துப்புலம்பினான்.—
௪ பின்பு ஆபிரகாம் பிரேதத்தைவிட்டெழுந்து, எத்
௫ தின்புத்திரருடனே சம்பாஷித்து,—நான் உங்க
ளுக்குள்ளே பரதேசியும், புறவாசியுமாயிருக்கி
றேன். என்னிடத்திலிருக்கிறசவத்தை நான் அ
டக்கம்பண்ணுகிறதற்கு உங்களுக்குள்ளே எனக்
குச் சொந்தமாக ஒரு மயானஸ்தானத்தைத் தர
௬ வேண்டுமென்றான்.-அதற்கு எத்தின்புத்திரர் ஆ
௭ பிரகாமைநோக்கி,-ஆண்டவரே கேளும், எங்க
ளுக்குள்ளே நீர் மகாபிரபு. எங்கள்பிரேதவறை
களில் முக்கியமானதிலே பிரேதத்தை அடக்கம்
பண்ணும்; எங்களிலொருவனாகிலும் தன் பிரே
தவறையில் அந்தப் பிரேதத்தை அடக்கம் பண்
ணுவதற்குத் தடைசெய்யானென்றுசொல்ல;—
௮ ஆபிரகாம் எழுந்து எத்தின் புத்திரராகிய தேசத்
தாருக்குத் தலைகுனிந்து, அவர்களுடனே சம்பா
ஷித்து, என்னிடத்தி லிருக்கிற பிரேதத்தைக்
காணாதபடி, நான் அடக்கம்பண்ண நீங்கள் சம்
மதித்தால், நீங்கள் எனக்குச் செவிகொடுத்து,
சோகாருடைய புத்திரனாகிய எப்பிரோன்,—
௯ தனது நிலத்தின் எல்லையிலுள்ள மக்பேலா என்
னுங்குகையை நான் சொந்த மயானஸ்தானமாக்
கிக்கொள்ள, அது பெறும்பூரணவிலைக்குத் தரச்
சொல்லி, என் நிமித்தம் அவரிடத்தில்வேண்டிக்
௰ கொள்வீர்களாகவென்று சொன்னான்.—எப்பி
ரோன், எத்தின்புத்திரரோடேகூட இருந்தான்.
எத்தியனாகிய எப்பிரோன் தன் ஊர்வாசலிற் பிர
வேசிக்கும் எத்தின்புத்திரரனைவருங் கேட்கத்
௰௧ தக்கதாக, ஆபிரகாமுக்கு உத்தரமாய்,—அல்ல,
என் ஆண்டவரே கேளும், அந்த நிலத்தையும்,
உமக்குத் தருகிறேன்; அதிலிருக்கிற குகையை
யுந் தருகிறேன்; என் சனபுத்திரர் சாட்சியாக
அதையுமக்குத் தருகிறேன்; உம்மிடத்திலிருக்கி
றபிரேதத்தை அடக்கம்பண்ணும் என்றுசொன்
௰௨ னான்.—ஆபிரகாம் அத்தேசத்தாரை வணங்கி,—
௰௩ தேசத்துச்சனங்கள் கேட்கத்தக்கதாக எப்பிரோ
னை நோக்கி, அப்படியானால் என்னைக்கேள்,
நிலத்தின் விலையைத் தருகிறேன்; என்னிடத்
தில் வாங்கிக்கொள்: அவ்விடத்தில் அந்தப்பிரே
தத்தை அடக்கம் பண்ணுவேனென்று சொன்
௰௪ னான்.—அதற்கு எப்பிரோன் ஆபிரகாமைநோக்
௰௫ கி,—என்னாண்டவனே கேளும், அந்த நிலம் நா
னூறு வெள்ளிக்காசு பெறும்; அது எனக்கும் உ
மக்கும் எவ்வளவு. நீர் அந்தச்சவத்தை அடக்கம்
பண்ணுமென்று சொன்னான்.—ஆபிரகாம் எப் ௰௬
பிரோனுடைய சொல்லைக்கேட்டு, எத்தின்புத்தி
ரர்களுக்குமுன்பாக எப்பிரோன் சொன்னபடி,
வியாபாரிகள் கொள்ளுகிற விலைப்படி, நானூறு
வெள்ளிக்காசை அவனுக்கு நிறுத்துக் கொடுத்
தான்.—இந்தப்பிரகாரமாக மம்ரேக்குக்கெதிரே ௰௭
மக்பேலாவிலுள்ள எப்பிரோனுடைய அந்த நில
மும்,அதிலுள்ளகுகையும்,நிலத்தின் எல்லையெல்
லாஞ்சூழ்ந்த மரங்கள் யாவும்,—அவனூரின் வா ௰௮
சலிற் பிரவேசிக்கும் எத்தினபுத்திரர் எல்லாரும்
அறியத்தக்கதாய்,ஆபிரகாமுக்குச்சொந்தமாக உ
றுதிப்படுத்தப்பட்டன.—அதற்குப்பின், ஆபிர ௰௯
காம் தன் மனைவியாகிய சாராளை மம்ரேக்கு எதி
ரேயிருக்கிற மக்பேலாவென்னும் நிலத்தின் கு
கையில் அடக்கம்பண்ணினான்;இதுவே கானான்
தேசத்திலுள்ள எப்பிரோன்.—இப்படி எத்தின் ௨௰
புத்திரர்களால் அந்த நிலமும், அதிலுள்ள குகை
யும், ஆபிரகாமுக்குச்சொந்த மயானஸ்தானமாக
உறுதிப்படுத்தப்பட்டன.

## ௨௪. அதிகாரம்.

௧. ஆபிரகாம் தன் பணிவிடைக்காரனை ஆணையிடுவித்தல்: ௰. அப்பணிவிடைக்காரன் பிரயாணம் பண்ணுகையிற் பிரார்த்தித்தல்: ௰௫. ரிபெக்காளைக்கண்டு தேவனைத்துதித்தல்: ௨௮. அவன் லாபானால் உபசரிக்கப்படல்: ௩௰. ரிபெக்காளைப் பணிவிடைக்காரன் மணம்பேசல்: லாபானும் பெத்துவேலும் உடன்படல்: ௫௫. ரிபெக்காள் பணிவிடைக்காரனுடன் புறப்படல்: ௬௨. ஈசாக்குவினிடத்திற் சேர்தல்.

ஆபிரகாம் விருத்தனாய் நீடிய ஆயுசு பெற்றி ௧
ருந்தான். யெகோவா ஆபிரகாமைச் சகலகா
ரியங்களிலேயும் ஆசீர் வதித்துவந்தார்.—ஆபிர ௨
காம் தன்வீட்டிலுள்ளவர்களுக்குள் வயதிலேமு
திர்ந்தவனும்,தனக்குண்டான எல்லாவற்றிற்கும்
அதிகாரியுமாகிய தன்பணிவிடைக்காரனைநோக்
கி,-நான் சஞ்சரித்துவருகிற கானான்தேசத்திலுள் ௩
ளவர்களின் குமாரத்திகளில், நீ என் குமாரனுக்
குப் பெண்கொள்ளாமல்,-என் தேசத்திலிருக் ௪
கிற என் உறவின்முறையாரிடத்துக்குப்போய்,
என் குமாரனாகிய ஈசாக்குக்கு ஒருபெண்கொள்
ளு. அதற்கு உன்கையை என்தொடையின்கீழ்
வைத்து, வானத்துக்குத் தேவனும், பூமிக்குத்
தேவனுமாகிய யெகோவாவைக்கொண்டு,
நீ ஆணையிடுவாயாகவென்று சொன்னான்.—அந் ௫
தப் பணிவிடைக்காரன், அவ்விடத்துப் பெண்
என்பின்னாகஇந்தத்தேசத்துக்குவரமனதில்லாதி
ருந்தால்,நீர்விட்டுவந்தஅந்தத்தேசத்துக்கு உம்மு

(௨௩. அதி.) (௨) யோசு.௰௪.௰௫. நியா.௧.௰. அதி.௰௩.௰௮. வச.௰௯. (௪) அதி.௰௭.௮. ௧.நாளா.௨௯.௰௫. அப். ௭.௫. (௬) அதி.௰௩.௨. (௰) அதி.௩௪.௨௰,௨௪. ரூத்.௪.௪. (௰௧) ௨.சாமு.௨௪.௨௧-௨௪. (௰௫) யாத்.௩௰.௰௩ எசேக். ௪௫.௰௨. (௰௬) எரே.௩௨.௯. (௰௭) அதி.௨௫.௯. அப்.௭.௰௬. (௨௰) ரூத்.௪.௭,௮,௯,௰. எரே.௩௨.௰,௰௧. (௨௪. அதி. ௧.) அதி.௰௮.௰௧. அதி.௨௧.௫. அதி.௰௩.௨. வச.௩௫. சங்.௱௰௨.௩. நீதி.௰.௨௨. (௨) அதி.௰௫.௨. வச.௰. அதி.௩௯.௪, ௫,௬. அதி.௪௭.௨௯. ௧.நாளா.௨௯.௨௪. புலம்.௫.௬. (௩) அதி.௰௪.௨௪. உபா.௬.௰௩. யோசு.௨.௰௨. அதி.௨௬.௩௫. அதி.௨௭.௪௬. அதி.௨௮.௨. யாத்.௩௪.௰௬. உபா.௭.௩. (௪) அதி.௨௮.௨. அதி.௰௨.௧.

டையகுமாரனைமீண்டும்அழைத்துப்போகலாமா
௬ வென்று அவனிடத்தில்கேட்க;—ஆபிரகாம் அவ
னைநோக்கி, நீ மீண்டும் என்குமாரனை அங்கேய
௭ ழைத்துப்போகாதபடி எச்சரிக்கையாயிரு.—என்
னை என்பிதாவின்வீட்டிலும், என்சுற்றத்தாரிருக்
கிறதேசத்திலுமிருந்து அழைத்துவந்தவரும்,உன்
சந்ததிக்கு இத்தேசத்தைத் தருவேனென்று என்
னோடேசம்பாஷித்து ஆணையிட்டவரும்,வானத்
துக்குத் தேவனுமாகிய யெகோவா, நீ அங்
கேயிருந்து என்குமாரனுக்கு ஒருபெண் கொண்
டுவரும்படிக்குத் தமது தூதனை உனக்குமுன்பா
௮ க அனுப்புவார்.—பெண், உனக்குப் பின்செல்
ல மனதில்லாதிருந்தாளேயாகில்,இவ்வாணைக்கு
நீங்கலாயிருப்பாய்; ஆதலால் மீண்டும் என்கு
மாரனைமாத்திரம் அழைத்துப்போகப்படாதென்
௯ று சொன்னான்.-அந்தப்பணிவிடைக்காரன் தன்
கையைத் தன் எசமானனாகிய ஆபிரகாமுடைய
தொடையின்கீழ்வைத்து, அந்தக்காரியத்தைக்கு
றித்து அவனுக்கு ஆணையிட்டுக்கொடுத்தான்.
௰ பின்பு அந்தப்பணிவிடைக்காரன் தன் எச
மானனுடைய ஒட்டகங்களிற் பத்து ஒட்டகங்
களோடே, தன் எசமானனுடையவைகளாய்த்
தன்வசத்திலிருந்தபொருள்களில்வேண்டியவை
களைக் கைப்பற்றி எழுந்து புறப்பட்டுப்போய்,
அரமநகரீம் என்னுந் தேசத்தில் நாகோருடைய
௰௧ ஊரிற் சேர்ந்து,—சாயங்காலம் ஸ்திரிகள் தண்
ணீர் மொள்ளப் புறப்படும்வேளையிலே, ஊருக்
குப் புறம்பாய் நீருள்ள ஒருகிணற்றருகிலே ஒட்
௰௨ டகங்களை நிறுத்தி,—என் எசமானன் ஆபிரகா
மின் தேவனாகிய யெகோவாவே, இன்
றைத்தினம் எனக்குக் காரியஞ் சித்திக்கப்பண்
ணி, என் எசமானனாகிய ஆபிரகாமின்மேல்
௰௩ தயை செய்தருளும்.—நான் இந்த நீருள்ள கி
ணற்றருகிலே நிற்கிறேன்; அந்த ஊராருடைய
பெண்கள் தண்ணீர்மொள்ளப் புறப்பட்டு வரு
௰௪ கிறார்கள்.—நான் பானம்பண்ண, உன் குடத்
தைச்சாயென்று சொல்லும்பொழுது, நீர் உம்
முடைய தாசனாகிய ஈசாக்குக்கு, நியமித்த கன்
னிகையே, பானம்பண்ணென்றும், உன் ஒட்
டகங்கள் குடிக்கமொண்டு வார்ப்பேனென்றுஞ்
சொல்லும்படி அருள்செய்யும். அதனால் என்
எசமானனுக்கு அனுக்கிரகஞ் செய்தீரென்பது
எனக்கு விளங்குமென்றான்.
௰௫ அவன் இப்படிச்சொல்லி முடிக்குமுன்னே
ஆபிரகாமுடைய சகோதரனான நாகோருக்கும்,
அவன் மனைவி மில்க்காளுக்கும், குமாரனான
பெத்துவேலுக்குப் பிறந்த ரிபெக்காள், தன் கு
டத்தைத் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டு
௰௬ புறப்பட்டுவந்தாள்.—அந்தஸ்திரி மிகுந்த அழ
குள்ளவளும் புருஷனையறியாத கன்னிகையுமா
யிருந்தாள். அவள் கிணற்றிலிறங்கித் தன்குடத்
தை நிறைத்துக்கொண்டு ஏறிவர,-அந்தப்பணிவி ௰௭
டைக்காரன் ஓடி அவளை எதிர்கொண்டு, உன் கு
டத்திலிருக்கிற தண்ணீரிற் கொஞ்சம் நான் பா
னம்பண்ணத்தரவேண்டுமென்றான்.-அதற்கவள் ௰௮
என் ஆண்டவனே பானம்பண்ணுமென்று, தீவி
ரமாய்க் குடத்தைத் தன்கையிலிறக்கிக்கொண்டு,
அவனுக்குப் பானம்பண்ணக் கொடுத்தாள்.—
கொடுத்துமுடிந்தபின், உம்முடைய ஒட்டகங்க ௰௯
ளுங் குடித்துத்தீருமட்டும் அவைகளுக்குமொண்
டுவார்ப்பேனென்றுசொல்லி,—தீவிரமாய்த் தன் ௨௰
குடத்துத்தண்ணீரைத் தொட்டியில் ஊற்றிவிட்
டு, பின்னு மொண்டுகொள்ளக் கிணற்றுக்கோ
டி, அவனுடைய ஒட்டகங்களெல்லாவற்றிற்கு
மொண்டுவார்த்தாள்.—அந்த மனிதன் அவளைக் ௨௧
குறித்து ஆச்சரியப்பட்டுத் தன் பிரயாணத்தை
யெகோவா அனுகூலப்படுத்தினாரோ, இல்
லையோவென்று அறியும் வண்ணம் மௌனமா
யிருந்தான்.—ஒட்டகங்கள் குடித்தொழிந்தபின், ௨௨
அந்தமனிதன் அரைஷேக்கல் எடைகொண்ட
பொற்றொங்கணியையும், அவள்கைக்குப் பத்து
ஷேக்கல் எடைகொண்ட இரண்டுபொற்சரி
களையுமெடுத்து,—நீ யாருடையமகள், அதை யெ ௨௩
னக்குச்சொல்லு; நாங்கள் உன் பிதாவின்வீட்
டில் இராத்தங்குவதற்கு இடமுண்டாஎன்றான்.-
அதற்கு அவள்,நான் நாகோருக்கும் மில்க்காளுக் ௨௪
கும் புத்திரனாகிய பெத்துவேலின் மகளென்று
சொன்னதுமன்றி,—எங்களிடத்திலே வைக்கோ ௨௫
லும்,உணவும்,வேண்டியஅளவும்இருக்கின்றன;
இராத்தங்குவதற்கு இடமும் உண்டென்றாள்.—
அந்த மனிதன் தலைவணக்கி யெகோவா ௨௬
வைத் தொழுதுகொண்டு,—எனது பிரயாணத் ௨௭
திலே யெகோவா என்னை என் எசமானனு
டையவீட்டிற்சேர்வித்தார். அவர் என் எசமான
னுக்குத் தயையுஞ் சத்தியமுங்காட்டுவதிலொழி
யவில்லை, என் எசமானன் ஆபிரகாமின் தேவ
னாகிய யெகோவா ஸ்தோத்திரிக்கப்படக்
கடவரென்றான்.
அந்தக்கன்னிகை ஓடித் தன்மாதாவின் வீட்டி ௨௮
லுள்ளவர்களுக்கு நடந்த காரியங்களை யறிவித்
தாள்.—ரிபெக்காளுக்கு ஒரு சகோதரனிருந் ௨௯
தான்; அவனுக்கு லாபான் என்றுபேர். அந்தலா
பான் கிணற்றினருகேயிருந்த அந்தமனிதனிடத்
திற்கு ஓடினான்.—அவன் தன் சகோதரி தரித் ௩௰
திருந்த அந்தத்தொங்கணியையும், அவள் கைக
ளிலிருந்த சரிகளையும் பார்த்து, அந்த மனிதன்
என்னுடனே இப்படிப் பேசினானென்று தன்
சகோதரி ரிபெக்காள்சொன்ன வார்த்தைகளைக்

(௭) அதி.௰௨.௧. அதி.௰௨.௭. யாத்.௩௨.௰௩. அப் ௭.௫. யாத்.௨௩.௨௰,௨௩. எபி.௧ ௰௪. (௮) யோசு.௨.௰௮,௨௰. (௰) வச.௨. அதி.௨௭.௪௩. (௰௧) யாத்.௨.௰௬. ௧.சாமு.௯.௰௧. (௰௨) வச.௨௭. அதி.௨௬.௨௪. யாத்.௩.௬,௰௫. நிகி.௧. ௰௧. சங்.௩௭.௫. (௰௩) வச.௪௩. அதி.௨௯.௯. யாத்.௨.௰௬. (௰௪) நியா.௬.௰௭,௩௭. ௧.சாமு.௬.௭. ௧.சாமு.௰௪.௰. ௧.சாமு.௨௰.௭. (௰௫) அதி.௰௧.௨௯. (௰௬) அதி.௨௬.௭. (௰௮) ௧.பேதுரு.௩.௮. ௧.பேதுரு.௪.௯. (௨௧) வச.௰௨, ௫௬. (௨௨) யாத்.௩௨.௨,௩. எசா.௩.௰௯,௨௰,௨௧. ௧.பேதுரு.௩.௩. (௨௪) அதி.௨௨.௨௩. (௨௬) வச.௫௨. யாத்.௪.௩௧. (௨௭) யாத்.௰௮ ௰. ௧.சாமு.௨௫.௩௨,௩௯. லூக்.௧.௬௮. (௨௭) அதி.௩௨.௰. சங்.௯௮.௩. வச.௪௮. (௨௯) அதி.௨௯.௫.

கேள்விப்பட்டமாத்திரத்தில், கிணற்றினருகே
ஒட்டகங்களுக்குப் பக்கத்தில் நின்ற அந்த மனி
௩௰௧ தனிடத்திற் போய்ச்சேர்ந்து,—யெகோவா
வினால் ஆசீர்வதிக்கப்பட்டவனே, உள்ளேவா
நீ வெளியே நிற்கிறதென்ன. உனக்கு வீடும்,
ஒட்டகங்களுக்கு இடமும், நான் ஆயத்தம்பண்
௩௰௨ ணியிருக்கிறேனென்று சொல்ல,—அந்த மனிதன்
அவன் வீட்டிற்போனான். அவன் ஒட்டகங்க
ளின் கட்டவிழ்த்து, ஒட்டகங்களுக்குவைக்கோ
லையும், உணவையுமிட்டு, இவனுடைய பாதங்
களையும், இவனோடிருந்த மனிதரின் பாதங்களை
யுஞ் சுத்திசெய்வதற்குத் தண்ணீரைக் கொடுத்
௩௰௩ தான்.—பின்பு தனக்குமுன்பாகப் போசனம்
வைக்கப்பட்டபொழுது, இவன், நான் நினைத்து
வந்த காரியத்தைச் சொல்லுமுன்னே புசிக்க
மாட்டேனென்றான். அதற்கு அவன், சொல்லு
௩௰௪ மென்றான்.-இவன், நான் ஆபிரகாமுடைய பணி
விடைக்காரன். யெகோவா என் எசமான
னை மிகவும் ஆசீர்வதித்தார்; அவன் பெரியவனா
௩௰௫ னான்.—யெகோவா அவனுக்கு ஆடுமாடுகளை
யும், வெள்ளியையும், பொன்னையும், பணிவி
டைக்காரரையும், பணிவிடைக்காரிகளையும்,
ஒட்டகங்களையும், கழுதைகளையுங்கொடுத்திருக்
௩௰௬ கிறார்.-அல்லாமலும் என் எசமானனுடைய மனை
வியாகிய சாராள் முதிர்ந்தவயதானபொழுது,
என் எசமானனுக்கு ஒரு புத்திரனைப்பெற்றாள்.
அவர் தமக்குண்டான யாவையும் அவனுக்குக்
௩௰௭ கொடுத்திருக்கிறார்.—மேலும் அவர் என்னை
நோக்கி, நான் சஞ்சரித்துவருகிற கானான்தேசத்
திலுள்ளவர்களின் குமாரத்திகளில், நீ என்குமா
௩௰௮ ரனுக்குப் பெண்கொள்ளாமல்,—என் பிதாவின்
வீட்டிற்கும், என் உறவின்முறையாரிடத்திற்
கும், நீபோய், என்குமாரனுக்குப் பெண்கொள்
வாயாகவென்றுசொல்லி, என் எசமானன் என்
னிடத்திற்சத்தியம்பண்ணுவித்துக்கொண்டார்.-
௩௰௯ அந்தக்கன்னிகை என் பின் வராதே போனாலோ
வென்று, என் எசமானனுடனே நான்சொன்ன
௪௰ தற்கு,-அவர்என்னைநோக்கி, நான்வழிபடும்யெ
கோவா, தம்முடைய தூதனை உன்னுடனே
யனுப்பி, உன்பிரயாணத்தை அனுகூலப்படுத்து
வார். என் உறவின்முறையாரிடத்திலும், என்
பிதாவின் வீட்டிலும், நீ என்குமாரனுக்கு ஒரு
௪௰௧ பெண்கொள்ளு.—அவர்கள் உனக்குக் கொடா
மலிருந்தாலும் ஆணைக்கு நீங்கலாயிருப்பாய். நீ
என் உறவின்முறையாரிடத்திற்குப்போனதுண்
டானால், இவ்வாணைக்கு நீங்கலாயிருப்பாயென்
௪௰௨ று சொன்னார்.—நான் இன்று கிணற்றினருகில்
வந்து, என் எசமானனாகிய ஆபிரகாமுடைய தே
வனான யெகோவாவே, என் பிரயாணத்
தை நீர் இப்பொழுது அனுகூலப்படுத்தச்சித்தமா
னால்,—என் எசமானனுடையகுமாரனுக்கு யெ ௪௰௩
கோவா நியமித்தஸ்திரி, நான்கிணற்றினருகே
நிற்கையில், தண்ணீர்மொண்டுகொள்ள வரவும்,
நான் பானம்பண்ண, உன்குடத்திலிருக்கிற தண்
ணீரிற்கொஞ்சம் எனக்குத்தாவென்றுகேட்க;—
நீ பானம்பண்ணென்றும், உன் ஒட்டகங்களுக் ௪௰௪
கும் மொண்டுவார்ப்பேனென்றும், என்னுடன்
சொல்லும்படி அருள்செய்யுமென்றேன்.—இப் ௪௰௫
படி நான் சிந்தித்துக்கொண்டிருக்கையில், ரி
பெக்காள் தன் குடத்தைத் தன் தோளின்மேல்
வைத்துக்கொண்டவளாய்ப்புறப்பட்டுக் கிணற்
றிலேவந்து மொண்டாள்: நான் பானம்பண்ணத்
தாவென்றிவளுடனே சொன்னேன்.-இவள் தீவி ௪௰௬
ரமாய்த்தன்குடத்தையிறக்கிப் பானம்பண்ணும்;
உமதுஒட்டகங்களுங் குடிக்க மொண்டுவார்ப்
பேனென்று சொன்னாள். நான் பானம்பண்
ணினேன். ஒட்டகங்களுங் குடிக்கவார்த்தாள்.-
நீ ஆருடைய குமாரத்தியென்று அவளிடத்திற் ௪௰௭
கேட்க; அவள் மில்க்காளுக்கும் நாகோருக்
கும் புத்திரனான பெத்துவேலினுடைய மகள்
என்றாள். நான் அவளுடைய முகத்தில் தொங்
கணியையும், அவள் கைகளிற் சரிகைளையும் இட்
டு;—தலைவணக்கி யெகோவாவைத் தொ ௪௰௮
ழுது, என் எசமானனுடைய குமாரனுக்கு அவ
னுடைய சகோதரனின் குமாரத்தியைச் சேர்க்
கும்படி என்னைச் செவ்வையான வழியில் நடத்
தினவரும், என் எசமானன் ஆபிரகாமின் தேவ
னுமாகிய யெகோவாவைத் துதித்தேன்.—
நீங்களும் என் எசமானனுக்குத்தயையும் உண் ௪௰௯
மையுமுடையவர்களாய் நடக்க மனதுள்ளவர்க
ளானால் எனக்குச் சொல்லுங்கள்; இல்லையென்
றால், அதையுஞ்சொல்லுங்கள். நான் வலப்பு
றத்தையாவது, இடப்புறத்தையாவது, நோக்கிப்
போவேனென்றான்.—அதற்கு லாபானும், பெத் ௫௰
துவேலும், உத்தரமாக, நடந்தகாரியம் யெகோ
வாவினாலாயிற்று, ஆதலால் நாங்கள் உம்முட
னே இதற்கு மாறாக நன்மைதீமையொன்றுஞ்
சொல்லக்கூடாது;—ரிபெக்காள் உனக்கு முன் ௫௰௧
பாக இருக்கிறாள்; அழைத்துக்கொண்டுபோ:
யெகோவாசொன்னபடி இவள்உன்னுடைய
எசமானனின் குமாரனுக்கு மனைவியாகக்கடவ
ளென்றார்கள்.—ஆபிரகாமுடைய பணிவிடைக் ௫௰௨
காரன் அவர்கள் வாக்குகளைக் கேட்டபொழுது,
பூமிக்குநேராய்த் தாழ்ந்து, யெகோவாவைத்
தொழுதுகொண்டான்.—பணிவிடைக்காரன் ௫௰௩
வெள்ளியுடைமைகளையும், பொன்னுடைமைக
ளையும், வஸ்திரங்களையும் எடுத்து, ரிபெக்காளுக்
குக்கொடுத்தபின்பு, அவளுடைய சகோதரனுக்
கும், மாதாவுக்கும், சில விசேஷித்த பொருள்
களைக்கொடுத்தான்.—அவனும் அவனோடிருந்த ௫௰௪

(௩௰௧) அதி.௨௬.௨௮. ரூத்.௩.௰. (௩௰௨) அதி.௪௩.௨௪. நியா.௰௯.௨௧. (௩௰௩) யோபு.௨௩.௰௨. யோவா.௪.௩௪. (௩௰௫) வச.௧. அதி.௰௩.௨. (௩௰௬) அதி.௨௧.௨. அதி.௨௧.௰. அதி.௨௫.௫. (௩௰௭) வச.௩. (௩௰௮) வச.௪. (௩௰௯) வச.௫. (௪௰) வச.௭. அதி.௰௭.௧. (௪௰௧) வச.௮. (௪௰௨) வச.௰௨. (௪௰௩) வச.௰௩. (௪௰௫) வச.௰௫. ௧.சாமு.௧.௰௩. (௪௰௭) எசேக். ௰௬.௰௧,௰௨. (௪௰௮) வச.௨௬. அதி.௨௨.௨௩. (௪௰௯) அதி.௪௭.௨௯. யோசு.௨.௰௪. (௫௰) சங்.௱௰௮.௨௩. மத்.௨௧.௪௨. அதி.௩௧.௨௪. (௫௰௧) அதி.௨௰.௰௫. (௫௰௨) வச.௨௬. (௫௰௩) யாத்.௩.௨௨. ௨.நாளா.௨௧.௩. எஸ்றா.௧.௬. (௫௰௪) வச.௫௬,௫௯.

மனிதரும் போசனபானம்பண்ணி, இராத்தங்கி
ஞர்கள். காலையிலெழுந்தபின், அவன் என் எச
மானனிடத்துக்கு என்னையனுப்பிவிடுங்களென்
ருன்.
௫௫ அவளுடையசகோதரனும், மாதாவும், பெண்,
இன்னும் பத்துநாளாகிலும் எங்களுடனேயிருக்
௫௬ கட்டும்; பின்பு போகலாமென்ருர்கள்.—அதற்
கவன் அவர்களிடத்தில், யெகோவா என்பிர
யாணத்தை அனுகூலப்படுத்தினபடியால் எனக்
குத் தடைசெய்யாதிருப்பீர்களாக; என் எசமான
னிடத்துக்குப் போம்படி என்னையனுப்பிவிட
௫௭ வேண்டுமென்றுசொன்னான்.—அவர்கள் பெண்
ணைக்கூப்பிட்டு, அவளிடத்திற் கேட்போமென்
௫௮ று சொல்லி,—ரிபெக்காளை அழைத்து நீயிந்தமனி
தனுடனே போகிருயா என்றதற்கு, அவள் போ
௫௯ கிறேனென்ருள்.—அவர்கள் தங்கள் சகோதரி
௬௰ யாகிய ரிபெக்காளைநோக்கி,—எங்கள் சகோத
ரியே, நீ ஆயிரம் பதிணுயிரம்பேருக்கு மாதாவா
யிருக்கக்கடவாய். உன் சந்ததியார் தங்கள் பகை
ஞருடைய வாசல்களைச் சுதந்தரித்துக்கொள்ளக்
கடவர்களென்று வாழ்த்தி, ரிபெக்காளையும்,
அவள் தாதியையும், ஆபிரகாமின் பணிவிடைக்
காரனையும், அவன் மனிதரையும் அனுப்பிவிட்
௬௧ டார்கள்.—ரிபெக்காளும், அவளுடைய பணி
விடைக்காரிகளும் எழுந்து, ஒட்டகங்கள்மே
லேறி, அந்த மனிதனைப்பின்சென்ருர்கள்: அப்
பணிவிடைக்காரன் ரிபெக்காளைக் கூட்டிக்
கொண்டுபோனான்.
௬௨ ஈசாக்கு, தென்தேசத்திற் சஞ்சரித்திருக்கிறப
டியால், இலகாய்ரோய் என்னுங் கிணற்றின் வ
௬௩ ழியாய் நடந்துவந்தான்.—சாயங்காலத்தில் ஈசாக்
கு, தியானம்பண்ணும்படிக்கு வெளியிலேபுறப்
பட்டுவந்து, கண்களையேறிட்டுப்பார்த்தபொழுது,
௬௪ ஒட்டகங்கள் வரக்கண்டான்.—ரிபெக்காளும்
பார்வை செலுத்திப்பார்த்து ஈசாக்கைக் கண்ட
௬௫ பொழுது,-அங்கே வெளியிலே நமக்கெதிரே ந
டந்துவருகிறவர்யாரென்று பணிவிடைக்காரனி
டத்திற் கேட்க; அவர்தாம் என் எசமானனென்
று பணிவிடைக்காரன் சொன்னபொழுது, அ
வள் ஒட்டகத்தைவிட்டிறங்கி, முக்காடிட்டுக்
௬௬ கொண்டாள்.—பணிவிடைக்காரன் தான்செய்
த சகலகாரியங்களையும் ஈசாக்குக்கு விவரித்துச்
௬௭ சொன்னான்.—ஈசாக்கு ரிபெக்காளைத் தன்மாதா
வாகிய சாராளுடையகூடாரத்துக்கு அழைத்துப்
போனான்; அவன் அவளைத்தனக்குமனைவியாகக்
கொண்டு, அவள்மேல் அன்பாயிருந்தான். ஈசாக்
கு, தன்மாதாவின்மேற்கொண்ட துக்கம் நீங்கி
ஆறுதலடைந்தான்.

## ௨௫. அதிகாரம்.

*௧. கேத்தூராளென்பவள் வழியாய்வந்த ஆபிரகாமின் வமிசவரலாறு: அவன் மரித்து அடக்கம் பண்ணப்படல: ௰௧. ஈசாக்கைத் தேவன் ஆசீர்வதித்தல்: ௰௨. இஷ்மாவேலின் வமிசவரலாறும் அவன் மரணமும்: ௰௯. ஈசாக்குக்கு இரட்டைப்பிள்ளை பிறத்தல் ௨௭. ஏசாவு யாக்கோபென்னுமிவர்களுடைய தொழில்: ௨௯. ஏசாவு தன் சேட்ட புத்திரவதிகாரத்தைத் தன்தம்பிக்கு விற்றல்.*

மேலும் ஆபிரகாம் கேத்தூராள் எனனும் பேர் ௧
கொண்ட ஸ்திரியையும் விவாகம் பண்ணியிருந்
தான.—அவள் அவனுக்குச் சிம்ரானையும், யக் ௨
ஷானையும், மேதானையும், மீதியானையும், இஸ்
பாக்கையும், ஷூகாவையும் பெற்ருள்.—யக் ௩
ஷான் ஷேபாவையும், தேதானையும் பெற்
ருன். தேதானுடையபுத்திரர்கள் அஷூரிம், லெத்
தூஷிம், லெயூமிம், என்பவர்கள்.—மீதியானு ௪
டைய புத்திரர்கள் எப்பா, எப்பேர், ஆனோக்,
ஆபிதா, எல்தா, என்பவர்கள்; இவர்களெல்லா
ரும் கேத்தூராளின் சந்ததியார்.—ஆபிரகாம் த ௫
னக்குண்டான யாவையும் ஈசாக்குக்குக் கொ
டுத்தான்.—வைப்பாட்டிகள் ஆபிரகாமுக்குப் ௬
பெற்ற பிள்ளைகளுக்கோ, ஆபிரகாம் தான் உயி
ரோடிருக்கையில், நன்கொடைகள் கொடுத்து
அவர்களைத் தன் புத்திரனாகிய ஈசாக்கை விட்
டகல, கிழக்கே கீழ்த்தேசத்துக்கு அனுப்பிவிட்
டான்.—ஆபிரகாமின் ஆயுசுநாள்கள் நூற்றெழு ௭
பத்தைந்து வருஷம்.—இப்படி ஆபிரகாம் வய ௮
துமுதிர்ந்த விருத்தனும், பூரண ஆயுசுள்ளவனு
மாய்ப் பிராணனைவிட்டு, மரித்துத் தன் சனங்க
ளுடனே சேர்க்கப்பட்டான்.—அவன் புத்திர ௯
ராகிய ஈசாக்கும், இஷ்மாவேலும், ஏத்தியனாகிய
சோகாரின் புத்திரன் எப்பிரோனுடைய நிலமா
கிய மக்பேலாவிலுள்ள குகையில், அவனை அ
டக்கம் பண்ணினார்கள்.—மம்ரேக்கு எதிரேயுள் ௰
ள அந்த நிலத்தை ஏத்தின புத்திரரிடத்தில் ஆபிர
காம் வாங்கியிருந்தான்; அவ்விடத்தில் ஆபிரகா
மும், அவன் மனைவி சாராளும், அடக்கம் பண்
ணப்பட்டார்கள்.
ஆபிரகாம் மரணமடைந்தபின் தேவன் அ ௰௧
வன் புத்திரனாகிய ஈசாக்கை ஆசீர்வதித்தார். லா
காயரோய் என்ற கிணற்றுக்குச் சமீபமாய் ஈ
சாக்கு வசித்தான்.
சாராளுக்கு அடிமையும் எகிப்தியாளுமாகிய ௰௨
ஆகார் ஆபிரகாமுக்குப்பெற்ற புத்திரன் இஷ்மா
வேலின் வமிசவரலாறும்,—அவ்வமிச வரலாற் ௰௩
றின்படி இஷ்மாவேலின் புத்திரருடைய நாமங்
களுமாவன; இஷ்மாவேலின் மூத்தமகன் நெபா
யோத்; பின்பு கேதார், அத்பியேல், மிப்சாம்,—
மிஷ்மா, தூமா, மாசா, ஆதாத், தேமா, எத்தூர், ௰௪
நாபிஷ், கேத்மா;—இவர்கள் இஷ்மாவேலின் ௰௫
புத்திரர்.—தங்கள் தங்கள் கிராமங்களிலும், அர ௰௬
ணங்களிலும், வழங்கிவரும் நாமங்கள் இவை
யே. இப்பன்னிருவருந் தங்கள் தங்கள் சாதிக

(௫௫) நியா.௰௪.௮. (௫௯) அதி.௩௫ ௮. (௬௰) அதி.௰௭.௰௬. அதி.௨௨.௰௭. (௬௨) அதி.௰௬.௰௪. அதி.௨௫.௰௧. (௬௩) யோசு.௧.௮. சங்.௧.௨. (௬௪) யோசு ௰௫.௰௮. (௬௭) அதி.௩௮.௰௨. (௨௫. அதி. ௨.) ௧.நாளா.௧.௩௨. (௫) அதி.௨௪.௩௬. (௬) அதி.௨௧.௰௪. நியா.௬.௩. (௮) அதி.௩௫ ௨௯. (௯) அதி.௩௫.௨௯. (௰) அதி.௨௩.௰௬. (௰௧) அதி.௰௬.௰௪. (௰௨) அதி.௰௬.௰௫. (௰௩) ௧.நாளா.௧ ௨௯. (௰௫) ௧.நாளா.௧.௩௰. அதி.௰௭.௨௰.

௰௭ ளுக்கு பிரபுகள்.—இஷ்மாவேல் நூற்று முப்
பத்தேழுவயதில் பிராணனைவிட்டு மரித்துத் தன்
௰௮ சனங்களுடனே சேர்க்கப்பட்டான்.—அவன்
தன் சகோதரரெல்லாருக்கும் முன்பாக இறந்
தான். அவர்கள் அபிலா என்னுந்தேசமுதல்,
எகிப்துக்கு எதிராக அசீரருக்குப்போகிறவழியி
லுள்ளசூர்மட்டும், வாசம்பண்ணினார்கள்.

௰௯ ஆபிரகாமின் புத்திரனாகிய ஈசாக்கினுடையவ
மிசவரலாறு; ஆபிரகாம் ஈசாக்கைப்பெற்றான்.—
௨௰ பாதானாராம் என்னுந் தேசத்திலிருந்த ஸீரியா
வின் பெத்துவேலுக்குப்புத்திரியும்,ஸீரியாவின்
லாபானுக்குச் சகோதரியுமாயிருந்த ரிபெக்கா
ளை ஈசாக்கு விவாகம்பண்ணினபொழுது, அவ
௨௧ னுக்கு நாற்பதுவயது.—தன்மனைவி மலடியான
படியால் ஈசாக்கு அவளைக்குறித்து யெகோ
வாவை நோக்கிப் பிரார்த்தனை பண்ணினான்.
அவன் பண்ணின பிரார்த்தனையை யெகோ
வா கேட்டு அருள்செய்தார்; பின்பு அவன் ம
னைவியாகிய ரிபெக்காள் கருப்பவதியானாள்.—
௨௨ சிசுக்கள் தன்வயிற்றில் ஒன்றோடொன்று நெ
ருக்குண்ணும்பொழுது, அவள் அப்படியானால்,
எனக்கிப்படியிருப்பானேனென்று சொன்னாள்.
மேலும் யெகோவாவினிடத்திற்போய் உசா
௨௩ வினாள்.—யெகோவா அவளைநோக்கி, இரண்
டுசாதி உன் கருப்பத்திலிருக்கின்றன; இருவ
கைச்சனம் உன்னுதரத்திலிருந்துவரும்; அவற்
றில் ஒருவகைச்சனம்மற்றவகைச் சனத்திலும் ப
லங்கொண்டிருக்கும்: மூத்தவன் இளையவனிடத்
௨௪ தில்சேவிப்பானென்றுசொன்னார்.-பிரசவகாலம்
பூரணமானபொழுது அவளுடைய கருப்பத்தில்
நின்றும் இரட்டைப்பிள்ளைகள் தோன்றின.—
௨௫ மூத்தவன் செந்நிறமுள்ளவனும், சருவாங்கமும்
மயிருள்ள ஆடையைப்போலிருப்பவனுமாய்ப்
பிறந்தான்; அதினால் அவனுக்கு ஏசாவென்று
௨௬ பேரிட்டார்கள்.—பின்பு அவன் சகோதரன் தன்
கையினாலே ஏசாவின் குதிங்காலைப் பிடித்துக்
கொண்டு பிறந்ததினால், அவனுக்கு யாக்கோ
பென்று பேரிட்டார்கள். இவர்களை அவள்
பெற்றபொழுது ஈசாக்குக்கு அறுபதுவயது.

௨௭ பாலகராகிய அவர்கள் பெரியவர்களானபின்
பு, ஏசா வேட்டையில் நிபுணனும் வனவாசியு
மாயிருந்தான்; யாக்கோபு சாதுள்ளவனும் கூடா
௨௮ ரவாசியுமானான்.-ஈசாக்கு,தன்னுடையவாய்க்கு
உருசியானதை ஏசாவு வேட்டையாடிக்கொண்
டு வருவதினாலே அவன்மேற் பட்சமாயிருந்
தான். ரிபெக்காள் யாக்கோபின்மேற் பட்சமா
௨௯ யிருந்தாள்.—ஏசாவு வெளியிலிருந்து இளைப்
பாய் வந்தபொழுது, யாக்கோபு கூழைச்சமைத்
துக்கொண்டிருந்தான்.—அதைக்கண்டு ஏசாவு ௩௰
யாக்கோபைநோக்கி, எனக்கிளைப்புண்டாயிருக்
கிறது; இந்தச்சிவந்த உணவிலேநான் புசிக்கக்
கொஞ்சந்தாவென்றுசொன்னான்; இதனாலே அ
வனுக்கு ஏதோம் என்றும் பேராயிற்று.—யாக் ௩௧
கோபு உன்சேஷ்டபுத்திர அதிகாரத்தை இன்று
விலையாகத் தாவென்று சொன்னான்.—அதற்கு ௩௨
ஏசாவு நான் மரிக்கிறேன்; இந்தச்சேஷ்டபுத்திர
அதிகாரத்தினால் எனக்கு என்ன லாபமென்று
சொன்னான்.—அப்பொழுது யாக்கோபு, இன் ௩௩
று எனக்கு ஆணையிட்டுக்கொடுவென்றான். அ
வன் இவனுக்காணையிட்டுத் தன்சேஷ்டபுத்திர
அதிகாரத்தை யாக்கோபுக்கு விற்றான்.—யாக் ௩௪
கோபு ஏசாவுக்கு அப்பத்தையும் பயற்றங்கூழை
யுங் கொடுத்தான்; அவன் போசனபானம்பண்
ணி எழுந்துபோனான். இப்படி ஏசாவு தன்சே
ஷ்டபுத்திர அதிகாரத்தை அலட்சியம் பண்ணி
னான்.

## ௨௬. அதிகாரம்.

௧. பஞ்சத்தினிமித்தம் ஈசாக்குக்கேராரிலேபோயிருக்கையில் தன்மனைவியைத் தன் சகோதரியெனல்: ௰௨. செல்வத்தைமிகப்பெறல்: ௰௭. கிணற்றின்நிமித்தம் பணிவிடைக்காரருக்கு விவாதமுண்டாதல். பேர்ஷேபாவில் வசித்தல்: ௨௬. ஈசாக்குடன் அபிமேலேக்கு உடன்படிக்கைசெய்தல்: ௩௨. ஆணைக்கிணறுதோண்டல்: ௩௪. ஏசாவின்விவாகத்தினிமித்தம் அவன்பிதா மாதா விசனமடைதல்.

முன்னே ஆபிரகாமின் நாள்களிலே உண்டா ௧
ன பஞ்சமேயன்றிப் பின்னும் ஒரு பஞ்சம் தே
சத்திலுண்டானபொழுது, ஈசாக்கு, பெலிஸ்த
ருக்கு இராசனாகிய அபிமேலேக்கினிடத்தில்
கேராருக்குச்சென்றான்.—யெகோவா அவ ௨
னுக்குத் தரிசனையாகி அவனைநோக்கி, நீ எகிப்
துக்குப் போகாதே; நான் உனக்குச்சொல்லுந்
தேசத்திலே வாசம்பண்ணு.—இந்தத் தேசங்கள் ௩
யாவையும், உனக்கும், உன்சந்ததிக்கும் நான்
தந்து, உன்பிதாவாகிய ஆபிரகாமுக்கு நான் இட்
ட ஆணையைநிறைவேற்றுவேன்; ஆதலால் இத்
தேசத்திலேதங்கியிரு; நான் உன்பட்சமாயிருந்
து உன்னை ஆசீர்வதிப்பேன்.—ஆபிரகாம் என் ௪
வாக்குக்கமைந்து, என்கட்டளைகளையும், நியா
யப்பிரமாணங்களையும், நியமங்களையும், வேதப்
பிரமாணங்களையும் கைக்கொண்டு நடந்தபடி
யால்,—நான் உன்சந்ததியை வானத்தின் நட் ௫
சத்திரங்களைப்போலப் பெருகப்பண்ணி, உன்
சந்ததிக்கு இத்தேசங்கள் யாவையுங் கொடுப்
பேன்; உன் சந்ததியினாலே பூமண்டலத்திலுள்
ள சமஸ்த சாதியாரும் ஆசீர்வதிக்கப் படுவார்க

(௰௭) வச.௮. (௰௮) ௧.சாமு.௰௫.௭. சங்.௭௮.௬௪. அதி.௰௬.௰௨. (௰௯) மத்.௧.௨. (௨௰) அதி.௨௨.௨௩. அதி.௨௪.௨௯. (௨௧) ௧.நாளா.௫.௨௰. ரோ.௯.௰. (௨௨) ௧.சாமு.௯.௯. (௨௩) அதி ௰௭.௰௬. அதி.௨௪.௬௰. ௨.சாமு.௮.௰௪. அதி.௨௭.௨௯. மல்.௧.௩. ரோ.௯.௰௨. (௨௫) அதி.௨௭.௰௧,௰௬,௨௩. (௨௬) ஓசே ௰௨.௩. அதி.௨௭.௩௬. (௨௭) அதி.௨௭.௩௫. யோபு.௧.௧,௮. சங்.௩௭.௩௭. எபி.௰௧.௯. (௨௮) அதி.௨௭.௰௯,௨௫,௩௧. அதி.௨௭.௬. (௩௩) எபி.௰௨.௰௬. (௩௪) பிர.௮.௰௫. (௨௬. அதி. ௧.) அதி.௰௨.௰. அதி.௨௰.௨. (௨) அதி.௰௨.௧. (௩) அதி.௨௰.௧. சங்.௩௯.௰௨. எபி.௰௧.௯. அதி.௨௮.௰௫. அதி.௰௨.௨. அதி.௰௩.௰௫. அதி.௰௫ ௨௧. அதி.௨௨ ௰௮. (௪) அதி.௰௫.௫. அதி.௰௨.௩. (௫) அதி.௨௨.௰௬,௰௮.

௬ ளென்று சொன்னர்.—ஈசாக்கும் கேராரில் வா
௭ சம்பண்ணினன்.—அவ்விடத்து மனிதர்கள் அவ
னுடைய மனைவியைக்குறித்து விசாரித்தார்கள்.
ரிபெக்காள் கண்ணுக்கு அழகுள்ளவளானபடி
யால் அவ்விடத்து மனிதர் அவள்நிமித்தம், தன்
னைக் கொல்லுவார்களென்றெண்ணி, அவளைத்
தன்மனைவியென்று ஈசாக்கு, சொல்லப்பயந்து,
அவள் என் சகோதரியென்று சொன்னன்.—
௮ அவன் அங்கே நெடுநாளாகத்தங்கி வருகையில்,
பெலிஸ்தருக்கு இராசனகிய அபிமேலேக்கு, ப
லகணிவழியாய் ஈசாக்குத்தன் மனைவியாகிய ரி
பெக்காளுடனே சரசஞ்செய்யக் கண்டான்.—
௯ அபிமேலேகு ஈசாக்கை அழைத்து, நிச்சயமாக
அவள் உன்மனைவி; அப்படியிருக்க, அவள் உன்
சகோதரியென்று சொன்னதென்னவென்றான்.
அதற்கு ஈசாக்கு அவள் நிமித்தம் எனக்கு மர
ணம் வராதபடிக்கு இப்படிச்சொன்னேனென்
௰ றான்.—அபிமேலேகு எங்களிடத்தில் எதைக்
கண்டு நீ இதைச்செய்தாய். சனங்களுக்குள் ஆ
ராகிலும் எளிதாய் உன் மனைவியுடனே சயனிக்
கவும், உன் மூலமாக எங்களுக்குக் குற்றம் வர
வும், கூடியதாயிருந்ததேயென்று சொன்னன்.—
௰௧ அபிமேலேகு இந்தப் புருஷனையாகிலும் இவன்
மனைவியையாகிலுந் தொடுகிறவனெவனே, அ
வன் நிச்சயமாய்க் கொலைசெய்யப்படுவானென்
று எல்லாச்சனங்களுக்குங் கட்டளையிட்டான்.
௰௨ ஈசாக்கு அந்தத்தேசத்தில் விதைத்து, அவ்வரு
ஷத்தில் நூறுமடங்குபலனை யடைந்தான்; யெ
கோவா அவனை ஆசீர்வதித்து வந்ததனல் அந்
௰௩ தமனிதன் மேன்மைபெற்று,—மிகவும் ஐசுவரி
யவானகி, வரவர மிகவும் பெரியவனனன்.—
௰௪ ஆட்டுக்கூட்டங்களும், மாட்டுக்கூட்டங்களும்,
அநேகம் பணிவிடைக்காரருமுடையவனயி
ருக்கக்கண்டு, பெலிஸ்தர் அவன் மேற் பொறா
௰௫ மைகொண்டார்கள்.—அதினல் அவனுடைய பி
தாவாகிய ஆபிரகாமின் நாள்களில் அவனுடை
ய பணிவிடைக்காரர் தோண்டின கிணறுகள்
யாவையும் மண்ணினலே நிறைத்துத் தூர்த்து
௰௬ விட்டார்கள்.—அபிமேலேக் ஈசாக்கினிடத்தில்,
எங்களிலும் நீ அதிக பலவானயிருக்கிறாய்; ஆ
கையால் எங்களைவிட்டுப் போய்விடு என்று
சொன்னன்.
௰௭ ஈசாக்கு அவ்விடம் விட்டுப்புறப்பட்டு, கே
ராரின் தாழ்ந்தபூமியிலே கூடாரம்போட்டு, அங்
௰௮ கேவாசம் பண்ணி,—தன் பிதாவாகிய ஆபிரகா
முடைய நாள்களில் தோண்டப்பட்டவைக
ளும் ஆபிரகாம் மரணமடைந்தபின் பெலிஸ்தி
யரால் தூர்க்கப்பட்டவைகளுமான நீருள்ள கி
ணறுகளைத் திரும்பவுந் தோண்டி, தன்பிதா அ
வைகளுக்கிட்டிருந்த பேர்களையே அவைகளுக்
குத் தானுமிட்டான்.—ஈசாக்கின் பணிவிடைக் ௰௯
காரர் பின்னும் தாழ்ந்தபூமியில் தோண்டி அங்
கே நீர்சுரக்கும் ஊற்றுக்கண்ணைக் கண்டார்
கள்.—கேராரின் மேய்ப்பர் இந்த நீரூற்று எங்க ௨௰
ளுடையதென்றுசொல்லி ஈசாக்கின் மேய்ப்பரு
டனே வாக்குவாதம் பண்ணினர்கள். தன்னுட
னே அவர்கள் வாக்குவாதம்பண்ணினபடியால்
அந்தக்கிணற்றுக்கு ஏசேக் என்றுபேரிட்டான்.—
வேறுமொரு கிணற்றைத் தோண்டினர்கள். அ ௨௧
தற்காகவும் வாக்குவாதம்பண்ணினர்கள், ஆகை
யால் அதற்குச் சித்னவென்று பேரிட்டான்.—
பின்பு அவ்விடத்தைவிட்டுப் பெயர்ந்துபோய், ௨௨
வேறுமொருகிணற்றைத்தோண்டினன்; அதற்கு
அவர்கள் வாக்குவாதம் பண்ணமலிருந்தார்கள்.
அவன், இப்பொழுது யெகோவா நமக்கு இ
டம்அருளினர்; இத்தேசத்தில் நாம் பல்கியிருப்
போமென்று சொல்லி, அதற்கு ரேகோபோத்
தென்று பேரிட்டான்.—அங்கேயிருந்து பேர் ௨௩
ஷேபாவுக்குப் போனன்.—அன்றிரவிலே யெ ௨௪
கோவா அவனுக்குத்தரிசனையாகி, நான் உன்
பிதாவாகிய ஆபிரகாமுடைய தேவன்: பயப்
படாதே; நான் உன் பட்சமாயிருந்து, என்தாச
னகிய ஆபிரகாமின் நிமித்தம் உன்னை யாசீர்வ
தித்து, உன் சந்ததியைப் பெருகப்பண்ணுவே
னென்றார்.—அங்கே அவன் வேதிகையையுண் ௨௫
டாக்கி, யெகோவாவுடைய நாமத்தைச்
சொல்லிப் பிரார்த்தனைபண்ணினன். அவ்விடத்
திலேயுந் தன் கூடாரத்தைப்போட்டான். ஈசாக்
கின் பணிவிடைக்காரர் அங்கே ஒரு கிணற்
றைத்தோண்டினர்கள்.
அபிமேலேக்கும் அவன் சிநேகிதரிலொருவ ௨௬
னகிய அகூசாத்தும் அவன் சேனதிபதியாகிய
பீகோலும் கேராரிலிருந்து அவ்விடத்துக்கு வந்
தார்கள்.—அவர்களைநோக்கி, ஈசாக்கு எதற்காக ௨௭
என்னிடத்தில் வந்தீர்கள். நீங்கள் என்னைப்ப
கைத்து உங்களைவிட்டுநீங்க என்னையனுப்பினீர்
களேயென்றுசொன்னன்.—யெகோவா உம ௨௮
துபட்சமாயிருக்கிறாரென்று கண்டோம்; நீர்
யெகோவாவினல் ஆசீர்வதிக்கப்பட்டவர்.—
நாங்கள் உம்மைத்தொடாமல், நன்மையையே ௨௯
உமக்குச்செய்து உம்மைச் சமாதானத்துடனே
யனுப்பிவிட்டபிரகாரம், நீரும் எங்களுக்குத்தீங்
குசெய்யேனென்பதற்கு, இருதிறத்தாராகியநாம்
ஓராணையிட்டுக்கொள்ளவும், உம்மோடே நாங்க
ள் ஒரு உடன்படிக்கையைச் செய்யவும், கருதி
வந்தோமென்று சொன்னர்கள்.—அவன் அவர் ௩௰
களுக்கு விருந்துசெய்தான். அவர்கள் போசன
பானம்பண்ணினர்கள்.—அதிகாலையிலெழுந்து ௩௧
ஒருவருக் கொருவர் ஆணையிட்டுக் கொண்டார்
கள்; பின்பு ஈசாக்கு அவர்களை யனுப்பிவிட்

---

(௭) அதி.௰௨.௰௩. நீதி.௨௧.௨௫. அதி.௨௪.௰௬. (௰) அதி.௨௰.௯. (௰௧) சங்.௱௫.௰௫. (௰௨) மத்.௰௩.௮. வச.௩.
அதி.௨௪.௧,௩௫. யோபு.௪௨.௰௨. (௰௩) அதி.௨௪.௩௫. (௰௪) அதி.௩௭.௰௧. பிர.௪.௪. (௰௬) யாத்.௧.௯. (௰௮)
அதி.௨௧.௩௧. (௨௰) அதி.௨௧.௨௫. (௨௨) அதி ௰௭.௬. யாத்.௧.௭. (௨௪) அதி.௰௭.௭. யாத்.௩.௬. அப்.௭.௩௨.
அதி.௰௫.௧. வச.௩,௫. (௨௫) அதி.௰௨.௭. சங்.௱௰௬.௰௭. (௨௬) அதி.௨௧.௨௨. (௨௭) நியா.௰௧.௭. வச.௰௬.
(௨௮) அதி.௨௧.௨௨,௨௩. (௨௯) அதி.௨௪.௩௧. (௩௰) அதி.௰௯.௩. (௩௧) அதி.௨௧.௩௧.

டான். அவர்கள் சமாதானத்துடனே அவனை
விட்டுப்போனார்கள்.
ஙஉ அந்நாளிலே ஈசாக்கின்பணிவிடைக்காரர்வந்
து தாங்கள் தோண்டின கிணற்றின் செய்தியை
அவனுக்கறிவித்துச் சலத்தைக் கண்டோமென்
ஙங றார்கள்.—அதற்கு ஷேபாவென்றுபேரிட்டான்;
ஆகையால் இந்நாள்வரைக்கும் அவ்வூர் பேர்ஷே
பாவென்றுபெயர்சொல்லப்பட்டுவருகின்றது.—
ஙச ஏசா நாற்பதாம் வயதிலேஏத்தியனான பேயெரி
னுடைய குமாரத்தியாகிய யுத்தீத்தையும், ஏத்திய
னான ஏலோனுடைய குமாரத்தியாகிய பஸ்மாத்
ஙரு தையும் விவாகம்பண்ணினான.—அவர்களாலே
ஈசாக்கு ரிபெக்காள் என்பவர்களுக்கு மனக்க
சப்புண்டாயிற்று.

## உஎ. அதிகாரம்.

க. மான் இறைச்சிக்காக ஈசாக்கு ஏசாவையனுப்பல்: ரு. ரிபெக்காள் யாக்கோபுக்குத் துர்ப்புத்திசொல்லல்: யச. யாக்கோபு தனக்கு ரிபெக்காள் சொன்ன துர்ப்புத்தியினால் தன் பிதாவாகிய ஈசாக்கினிடத்திற் சூதாக ஆசீர்வாதம் பெறல்: ஙய. மானிறைச்சியோடே வந்து ஏசாவு தன் பிதாவிடத்தில் ஆசீர்வாதம்வேண்டி, அது பெறாமையால் வருந்தல்: சக. ஏசாவு கோபங்கொண்டு யாக்கோபைக் கொலைசெய்ய எண்ணல்.

ஈசாக்கு விருத்தனாகிக் கண்களிருளடைந்ததி
னால் பார்வையற்றவனானன், அவன் தன்மூத்தகு
மாரனாகிய ஏசாவை என்மகனே, என்றழைத்
உ தான்; அதற்கவன் என்னவென்று கேட்க,—அ
வன் நான்விருத்தனானேன்; என்மரணநாளையறி
ங யேன்.—ஆதலால் நீ உன் ஆயுதங்களையும், அம்
புக்கூட்டையும், வில்லையுமெடுத்துக்கொண்டு,
வெளிக்குப்போய், எனக்காக வேட்டையாடி
ச வந்து;—எனக்குப் பிரியமானசுவையுள்ள போச
னத்தைச்சமைத்து; நான் புசிக்கவும்; நான் மரண
மடையுமுன்னே, என் ஆத்துமம் உன்னை ஆசீர்வ
திக்கவும்;என்னிடத்திற்கொண்டுவாவென்றான்.
ரு ஈசாக்குத் தன்புத்திரனாகிய ஏசாவுக்குச்சொன்
னதை ரிபெக்காள் கேட்டிருந்தாள். ஏசாவு
வேட்டையாடிக்கொண்டு வரும்படி வயல்வெ
சா ளிக்குப் போனான்.—ரிபெக்காள் தன் புத்திர
னாகிய யாக்கோபை நோக்கி, உன்பிதா உன்ச
எ கோதரனாகிய ஏசாவுடனே,—நான் புசிக்கும்ப
டி நீ வேட்டையாடிச் சுவையுள்ள போசனத்
தைச்சமைத்துக் கொண்டுவாவென்றும், எனக்கு
மரணம்வருமுன்னே யெகோவாவின் சந்நி
தியில் உன்னை ஆசீர்வதிப்பேனென்றும் சொல்
அ லக்கேட்டேன்.—ஆதலால் என் மகனே, என்
சொல்லைக்கேட்டு நானிடுங்கட்டளைப்பிரகாரஞ்
கூ செய்வாயாக.—நீ ஆட்டுமந்தைக்குப்போய் நல்
லவெள்ளாட்டுக் குட்டிகளிரண்டைக்கொண்டு
வா;நான்அவைகளை உன்பிதாவுக்குப்பிரியமான
படி, சுவையுள்ளபோசனமாகச்சமைப்பேன்.—
நீ அதை உன் பிதாவிடத்திற்குப் புசிக்கும்படி ய
கொண்டு போனால்; அவர்,தமக்கு மரணம் வரு
முன்னே, உன்னை ஆசீர்வதிப்பாரென்று சொன்
னாள்.—அதற்கு யாக்கோபு தன் மாதாவாகிய ரி யக
பெக்காளைநோக்கி, என்சகோதரனாகியஏசாவு உ
ரோமமுள்ளவன்; நான் உரோமமில்லாதவன்.—
என்பிதாஎன்னைத்தடவிப்பார்க்கவுங்கூடும்; அப் யஉ
பொழுது அவருக்கு நான்வஞ்சகனாய்த்தோன்றி
ஆசீர்வாதத்தையல்ல, சாபத்தையே என்மேல் வ
ருவிப்பேனென்று சொன்னான்.—அவனுடைய யங
மாதா என்மகனே, அந்தச்சாபம் என்மேல்வருவ
தாக; என் சொல்லைமாத்திரங் கேட்டு, நீபோய்,
என்னிடத்துக்குக் கொண்டுவாவென்று சொன்
னாள்.
அவன்போய்ப் பிடித்துத் தன் மாதாவிடத்திற் யச
கொண்டுவந்தான். அவன் மாதா அவன்பிதாவுக்
குப்பிரியமானபடி சுவையுள்ள போசனமாகச்ச
மைத்து,-பின்பு ரிபெக்காள்வீட்டிலேதன்னிடத் யரு
திலிருந்த தன்மூத்தமகனாகிய ஏசாவின்நல்லவஸ்
திரங்களையெடுத்துத் தன் இளையமகனாகிய யாக்
கோபுக்குடுத்தி,—வெள்ளாட்டுக் குட்டிகளின் யசா
தோல்களைஅவன்கைகளிலேயும்,உரோமமில்லா
தஅவன்கழுத்திலேயுமிட்டு,-தான்சமைத்தசுவை யஎ
யுள்ள போசனத்தையும், அப்பத்தையும், தன்புத்
திரனாகிய யாக்கோபின் கையிலே கொடுத்தாள்.-
அவன் தன் பிதாவிடத்திற் சேர்ந்து, பிதாவே, யஅ
என்று சொல்ல; இருக்கிறேன்; என் மகனே,
நீயாரென்றான்.—யாக்கோபு தன் பிதாவை நோக் யகூ
கி, நான் உமது மூத்தமகனான ஏசாவு. நீர் எனக்
குச் சொன்னபடியே செய்தேன்; உம்முடைய
ஆத்துமம் என்னை ஆசீர்வதிக்கும்பொருட்டு நீர்
எழுந்திருந்து, நான் வேட்டையாடிக் கொண்டு
வந்ததைப் புசியுமென்று சொன்னான்.—ஈசாக் உய
கு, தன் புத்திரனுடனே, என்மகனே, இது உனக்
கு இத்தனை சீக்கிரமாய் எப்படியகப்பட்டதென்
றுகேட்க; அவன், உம்முடைய தேவனாகிய
யெகோவா எனக்குநேரிடப்பண்ணினாரென்
றான்.—ஈசாக்கு யாக்கோபுடனே, என் மகனே, உக
நீ என் புத்திரனாகிய ஏசாவுதானோ அல்லவோ
வென்று நான் உன்னைத் தடவிப்பார்க்கும்படி,
சமீபித்து வாவென்று சொன்னான்.—யாக்கோபு உஉ
தன் பிதாவாகிய ஈசாக்கைச்சமீபித்தான். அவன்
இவனைத் தடவிப்பார்த்து, குரல், யாக்கோபினு
டைய குரல்; கைகள், ஏசாவினுடைய கைக
ளென்று சொல்லியும்;—இவனுடைய கைகள், இ உங
வன் சகோதரனாகிய ஏசாவின் கைகளைப்போல்,
உரோமமுள்ளவைகளாயிருந்தபடியால், இவனை
அறியாமல் ஆசீர்வதித்தான்.—அவன், நீ என் புத் உச
திரனாகிய ஏசாவுதானோ என்றான்; இவன், நான்

(ஙங) அதி.உக.ஙக. (ஙச) அதி ஙகூ.உ. (ஙரு) அதி.உஎ.சகூ. (உஎ. அதி. க.) அதி.சஅ.ய. க.சாமு.ஙஉ. (உ) நீதி.உஎ.க. யாக்.ச.யச. (ங) அதி.உரு.உஎ,உஅ. (ச) வச.உஎ. உபா.ஙங.க. (அ) வச.யங. (கூ) வச.ச. (ய) வச.ச. (யக) அதி.உரு.உரு. (யஉ) வச.உஉ. அதி.க.உரு. உபா.உஎ.யஅ. (யங) அதி.சங.கூ. க.சாமு.உரு.உச. மத்.உஎ.உரு. (யச) வச.ச,கூ. (யரு) வச.உஎ. (யகூ) வச.ச. (உக) வச.யஉ. (உங) வச.யகூ.

௨௫ தானென்றான்.-அவன், என் குமாரனே, நீ வேட்
டையாடிக் கொண்டுவந்ததை நான்புசித்து, என்
ஆத்துமம்உன்னை ஆசீர்வதிக்கும்படி, அதை என்
கிட்டக்கொண்டுவாவென்றான். இவன் கிட்டக்
கொண்டுபோக, அவன் புசித்தான். பின்னும் அ
வனுக்குத் திராட்சரசத்தைக் கொண்டுவந்துகொ
௨௬ டுக்க, அவன் குடித்தான்.—இவன் பிதாவாகிய ஈ
சாக்கு இவனுடனே, என் மகனே, நீ கிட்டவந்
து என்னை முத்தஞ் செய்யென்று சொன்னான்.—
௨௭ இவன்கிட்டப்போய் அவனைமுத்தஞ்செய்தான்.
அவன், இவனுடைய வஸ்திரங்களின் வாசனை
யை மோந்து, ஆ! என் புத்திரனுடைய வாசனை,
யெகோவாவின் ஆசீர்வாதம்பொருந்திய வ
யல்நிலத்தின் வாசனையைப்போலிருக்கின்றது.—
௨௮ தேவன் வானத்திற் பனியோடே கொழுத்த பூ
மியையும், மிகுதியான தானியத்தையும், திராட்
சரசத்தையும், உனக்கு அருளிச்செய்வாராக.—
௨௯ பலவகைச்சனங்கள்உன்னிடத்திற்சேவிக்கவும்,
நானாசாதிகளும் உன்னைவணங்கவுங்கடவர்கள்.
உன் சகோதரருக்குத்தலைவனாயிருக்கக்கடவாய்.
உன் மாதாவின்புத்திரரும் உன்னைவணங்கக்கட
வர்கள். உன்னைச் சபிக்கிறவன் ஒவ்வொருவ
னுஞ் சபிக்கப்படவும்; உன்னை ஆசீர்வதிக்கிற
வன் ஆசீர்வதிக்கப்படவுங் கடவர்களென்று
சொல்லி, அவனை ஆசீர்வதித்தான்.

௩௰ ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்து முடிந்
தமாத்திரத்திலே, யாக்கோபு தன் பிதாவாகிய ஈ
சாக்கின் சமுகத்தைவிட்டுப் புறப்படுகையில்,
அவன்சகோதரனாகிய ஏசாவு வேட்டையாடிவந்
௩௧ தான்.—அவனும் சுவையுள்ள போசனத்தைச் ச
மைத்து, தன் பிதாவினிடத்திற் கொண்டுவந்து,
உம்முடைய ஆத்துமம் என்னை ஆசீர்வதிக்கும்
படி என்பிதா எழுந்து உம்முடைய புத்திரனாகி
ய நான் வேட்டையாடிக் கொண்டுவந்ததைப் பு
சிப்பாராகவென்று தன் பிதாவைநோக்கிச்சொல்
௩௨ ல;-அவன் பிதாவாகிய ஈசாக்கு,நீ யாரென்றான்.
நான் உமது மூத்தமகனாகிய ஏசாவு என்றான்.—
௩௩ ஈசாக்கு அதிக நடுக்கத்துடனே பதைபதைத்து,
வேட்டையாடி ஒருவன் என்னிடத்திற் கொண்
டுவந்த எல்லாவற்றிலும் நீ வருமுன்னே நான்
புசித்தேன்: அவனெங்கே; அவன்யார்; அவனை
ஆசீர்வதித்தேன்: அவனே ஆசீர்வதிக்கப்பட்ட
௩௪ வனாயிருப்பானென்றான்.—ஏசாவு தன் பிதா
வின் வாக்குகளைக்கேட்டவுடனே மிகுந்த துக்
கமாய் உரத்தசத்தத்தோடே அலறி, தன் பிதா
வைநோக்கி, என்பிதாவே, என்னையும் ஆசீர்வ
௩௫ திக்க வேண்டுமென்றுசொன்னான்.—அதற்கவன்,
உன் சகோதரன் சூதாய்வந்து, உனக்குரிய ஆசீர்
வாதத்தைப் பெற்றுக்கொண்டான் என்றான்.—
௩௬ அப்பொழுது அவன், இதனுடனே இரண்டுதரம்
என்னை வஞ்சித்தான்; என் சேஷ்டபுத்திர அதி
காரத்தையும் அபகரித்தான்; இப்பொழுது எனக்
குரிய ஆசீர்வாதத்தையும் பெற்றுக்கொண்டான்.
யாக்கோபுஎன்னும் நாமம் அவனுக்குத்தகும்அல்
லவா, என்றுசொன்னதுமன்றி, என்னையும் ஆசீர்
வதிப்பதற்கு இடமில்லையாவென்றுஞ் சொன்
னான்.—ஈசாக்கு ஏசாவுக்கு உத்தரமாக, நான் அ ௩௭
வனை உனக்குத்தலைவனாகவைத்தேன்; அவன் ச
கோதரரெல்லாரும் அவனிடத்தில் சேவிக்க நி
யமித்து, தானியத்தையும், திராட்சரசத்தையுங்
கொடுத்து, அவனை ஆதரித்தேன். என்மகனே!
இனி நான் உனக்கு என்னசெய்வேனென்று
சொன்னான்.—ஏசாவு தன்பிதாவைநோக்கி, என் ௩௮
பிதாவே, இந்தஒரே ஆசீர்வாதமாத்திரமோ உம்மி
டத்திலுள்ளது. என் பிதாவே, என்னையும் ஆ
சீர்வதியுமென்றான்: ஏசாவு, சத்தமிட்டு அழு
தான்.—அவன் பிதாவாகிய ஈசாக்கு, அவனுக் ௩௯
கு உத்தரமாக, கேள், உன்வாசஸ்தலம் கொழுத்
த பூமியோடும், உயர்ந்த வானத்துப் பனியோடு
மிருக்கும்.—உன் கத்தியைக்கொண்டு நீ சீவ ௪௰
னம்பண்ணி, உன் சகோதரனிடத்தில் சேவிப்
பாய்; நீ மேற்கொள்ளுங்காலத்தில், உன் கழுத்
திலிருக்கும் அவனுடைய நுகத்தை ஒடித்துப்
போடுவாயென்று சொன்னான்.

யாக்கோபுக்குத் தன்பிதாஅளித்த ஆசீர்வாதத் ௪௧
தினிமித்தம் ஏசாவு யாக்கோபைப் பகைத்து;
என் பிதாவுக்காகத் துக்கிக்கும் நாள்கள் சமீபிக்
கின்றன; அப்பொழுது நான் என்சகோதரனாகிய
யாக்கோபைக் கொலைசெய்வேனென்று அபிப்
பிராயங்கொண்டான்.—ரிபெக்காளுக்கு மூத்த ௪௨
மகனாகிய ஏசாவின் வார்த்தைகள் அறிவிக்கப்
பட்டன. அப்பொழுது அவள் தன் இளையமகனா
கிய யாக்கோபை அழைத்து, உன் சகோதரனா
கிய ஏசாவு உன்னைக்கொலைசெய்ய நினைத்துத்
தன்னைத் தேற்றுகிறான்.—ஆகையால் என்மக ௪௩
னே நான்சொல்வதைக்கேட்டு எழுந்து ஆரானி
லிருக்கிற என்சகோதரனாகிய லாபானிடத்திற்
போய்,—உன் சகோதரனுடைய கோபந்தணி ௪௪
கிறவரைக்கும், சிலநாள் அவனிடத்திலே இரு;-
உன் சகோதரன் உன்மேல்வைத்த கோபம் நீங்கி, ௪௫
நீ அவனுக்குச்செய்ததை அவன் மறந்தபின்பு,
நான் ஆள் அனுப்பி,அவ்விடத்திலிருந்து உன்னை
வரவழைப்பேன்: ஒரேநாளில் உங்களிருவரை
யும் இழந்துபோகவேண்டுவதென்னவென்றாள்.-
ரிபெக்காள் ஈசாக்கைநோக்கி, ஏத்தின் சந்ததி ௪௬
யின் ஸ்திரிகள் நிமித்தம் என் ஆத்துமம் வியா
குலப்படுகின்றது. ஏத்தின் சந்ததியிலுள்ள குமா
ரத்திகளாகிய இத்தேசத்தின் குமாரத்திகளில்
யாக்கோபு ஒரு பெண்கொண்டால், என் சீவ
னிருந்தென்னவென்று சொன்னாள்.

---

(௨௫) வச.௪. (௨௭) ஓசே.௰௪.௬. (௨௮) எபி.௰௧.௨௰. உபா.௩௩.௰௩,௨௮. உபா.௩௩.௨௮. (௨௯) அதி.௯.௨௫. அதி ௪௯.௮. அதி.௰௨.௩. எண்.௨௪.௯. (௩௧) வச.௪. (௩௩) அதி.௨௮.௩,௪. ரோ.௰௧.௨௯. (௩௪) எபி.௰௨.௰௭. (௩௬) அதி.௨௫.௨௬. அதி.௨௫.௩௩. (௩௭) ௨.சாமு.௮.௰௪. வச.௨௯. வச.௨௮. (௩௮) எபி.௰௨.௰௭. (௩௯) வச.௨௮. எபி.௰௧.௨௰. (௪௰) அதி.௨௫.௨௩. ௨.சாமு.௮.௰௪. ஒப.௰௮.௰௯,௨௰. ௨.இரா.௮.௨௰. (௪௧) அதி.௩௭.௪,௮. அதி.௫௰.௩,௪,௰. ஒப.௰. (௪௨) சங்.௬௪.௫. (௪௩) அதி.௰௧.௩௧. (௪௬) அதி.௨௬.௩௫. அதி.௨௮.௮. அதி.௨௪.௩.

## உஅ. அதிகாரம்.

க. யாக்கோபு பதானாராமூருக்கு அனுப்பப்படல்: சூ. ஏசாவு இஷ்மவேலின் புத்திரியை விவாகஞ்செய்தல்: ம. யாக்கோபு பிரயாணஞ் செய்தலும், சொப்பனங்காணலும்: மஅ. சொப்பனதரிசனமடைந்த ஸ்தலத்துக்குப் பெத்தேல் என்று பேரிடலும், சங்கற்பம்பண்ணலும்.

ஈசாக்கு யாக்கோபை அழைத்து, அவனை ஆசீர்
வதித்து,கானானியர்குமாரத்திகளிற்பெண்கொள்
உ ளாமல்,–புறப்பட்டுப்பதானாராமிலிருக்கிற உன்
மாதாவின் பிதாவாகிய பேத்துவேல் வீட்டாரி
டத்திற்போய், அவ்விடத்தில் உன் மாதாவின்
சகோதரனாகிய லாபானுடைய குமாரத்திகளில்,
ஒருபெண்ணைவிவாகம்பண்ணிக்கொள்ளென்று
ங கட்டளை யிட்டதுமன்றி,-சருவ வல்லமையுள்ள
தேவன் உன்னையாசீர்வதித்து, பற்பலசனசங்
கமாகும்படி உன்னைப் பல்கிப்பெருகப் பண்
ச ணுவாராக.—ஆபிரகாமுக்குத் தேவன் அளித்
ததும், நீ பரதேசியாய்த்தங்கிவருகிறதுமான இத்
தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்பொருட்டு,
அவர் ஆபிரகாமுக்கு அருளிய ஆசீர்வாதத்தை
உனக்கும், உன்சந்ததிக்கும் அருளிச்செய்யக்
ரு கடவரென்றும்சொல்லி,-ஈசாக்கு யாக்கோபை
அனுப்பிவிட்டான். அவன் பதானாராமிலிருந்த
அராமியனாகிய பேத்துவேலுக்குப் புத்திரனும்,
தனக்கும் ஏசாவுக்கும் மாதாவாகிய ரிபெக்கா
ளின் சகோதரனுமாயிருந்த லாபானிடத்திற்குப்
புறப்பட்டான்.
சு ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்து ஒருபெண்
கொள்ளும்படிஅவனைப்பதானாராமுக்கு அனுப்
பினதையும், அவனை ஆசீர்வதிக்கையில், நீ கானா
னியர் குமாரத்திகளில் பெண்கொள்ளலாகா
தென்று அவனுக்குக் கட்டளையிட்டதையும்,—
எ யாக்கோபு தன் பிதாவுக்கும், தன் மாதாவுக்கும்,
அமைந்து,பதானாராமுக்குப்புறப்பட்டுப்போன
அ தையும், ஏசாவு கண்டதினாலும்,-தன்பிதாவாகிய
ஈசாக்கு, கானானியர் குமாரத்திகளிற் பிரியவீன
கூ மாயிருப்பதையறிந்ததினாலும்,—ஏசாவு இஷ்மா
வேலிடத்துக்குப்போய்த் தனக்குமுன்னிருந்த
மனைவிகளையன்றி, ஆபிரகாமுடைய புத்திரனாகி
ய இஷ்மாவேலின் புத்திரியும் நெபாயோத்தின்
சகோதரியுமான மகலாத்தையும் விவாகம்பண்
ணினான்.
ம யாக்கோபு பேர்ஷேபாவைவிட்டு, ஆரானுக்
மக குநேராய்ப் பிரயாணம் பண்ணினான்.-சூரியன்
அஸ்தமித்ததினால் தான்சேர்ந்த ஒரு இடத்தில் இ
ராத்தங்கி, அங்குள்ள கற்களிலொன்றையெடுத்
து, தன்தலையின்கீழ்வைத்து, அங்கே உறங்கும்
படி படுத்துக்கொண்டான்.-பின்பு சொப்பனத் மஉ
தில், ஒரு ஏணி, பூமியில் நிறுத்தப்பட்டிருக்
கிறதாகவும்; அதின் தலை வானத்தை அளாவி
யிருக்கிறதாகவும்; அதின்வழியாகத் தேவதூதர்
கள் ஏறுகிறவர்களும், இறங்குகிறவர்களுமாயி
ருக்கிறதாகவும்;—அதற்கு மேலாய் யெகோ மங
வா நின்றுகொண்டு, யெகோவாவாகிய
நான் உன்பிதாவாகிய ஆபிரகாமுடைய தேவ
னும், ஈசாக்கின் தேவனுமாயிருக்கிறேன்.
நீ படுத்திருக்கிற பூமியை உனக்கும், உன்சந்த
திக்கும் அளிப்பேன்.—உன்சந்ததி பூமியின் மச
மணலைப்போல விருத்தியாகும். நீ கிழக்கும்,
மேற்கும், வடக்கும், தெற்குமாகிய நான்குதிசை
யிலும் பரம்புவாய்; உன்னாலும், உன் சந்ததியா
லும், பூமியிலுள்ள வமிசங்களெல்லாம் ஆசீர்வ
திக்கப்படும்.—நான் உன் பட்சமாயிருந்து, நீ மரு
போகுமிடமெங்கும் உன்னைக்காப்பாற்றி, உன்
னை இந்தத்தேசத்திற்குத் திரும்பிவரப் பண்ணு
வேன். நான் உனக்குச்சொல்லியிருக்கிறதெது
வோ அதையெல்லாஞ்செய்வேன். உன்னைக்கை
விடேன்என்றுசொல்லுகிறதாகவும்;கண்டான்.-
யாக்கோபு நித்திரைதெளிந்து விழித்தபொழுது, மசு
மெய்யாகவே யெகோவா இந்தஸ்தலத்திலி
ருக்கிறார்; அதை நான் அறியாதிருந்தேன் என்
றுசொல்லிப் பயந்து,—இந்தஸ்தலம் எவ்வளவு மஎ
பயங்கரமானது. இது தேவனுடைய வாசஸ்
தலமேயன்றி வேறல்ல. இதுவே வானத்தின்
வாசலென்றான்.
அதிகாலையில் யாக்கோபு எழுந்து, தன் தலை மஅ
யின்கீழ்த் தான்வைத்திருந்தகல்லை எடுத்து, அ
தைத்தூணாகநிறுத்தி, அதின்மேல் எண்ணெயைச்
சொரிந்தான்.—அந்த ஸ்தலத்திற்குப் பெத்தேல் மகூ
என்றுபேரிட்டான். முற்காலத்தில் அவ்வூருக்கு
லூஸ் என்றுபேர்.—பின்னும் யாக்கோபு, தேவ உம
னானவர் என்னோடேயிருந்து, நான் நடக்கிற
இந்தவழியில் என்னைக்காப்பாற்றுகிறதும்; உண்
ண ஆகாரமும், உடுக்க வஸ்திரமும் எனக்குத்
தருகிறதுமன்றி,—என்னை என்பிதாவின் வீட்டுக் உக
குச் சமாதானத்தோடே திரும்பி வரவும் செய்
வாராகில்; யெகோவா வாகிய அவர், எனக்
குத் தேவனென்றும்;—நான் தூணாகநிறுத்தி உஉ
ன இந்தக்கல், தேவாலயமாமென்றும்; நீர் எனக்
குத்தரும் எல்லாவற்றிலும் பத்திலொன்றை உமக்
குச் செலுத்துவேனென்றுஞ் சொல்லி, சங்கற்
பம் பண்ணிக்கொண்டான்.

## உகூ. அதிகாரம்.

க. யாக்கோபு காரானிலுள்ள ஓர் வயல்வெளியைச்சேர்தல்: கூ. ராகேலைக்கண்டபின் லாபா

---

(உஅ. அதி. க.) அதி.உஎ.ஙங. அதி.உச.ங. (உ) ஓசே.மஉ.மஉ. அதி.உரு.உம. அதி.உஉ.உங. அதி.உச.உகூ. (ங) அதி.மஎ க,சு. (ச) அதி.மஉ.உ. அதி.மஎ.அ. (அ) அதி.உச.ங. அதி.உசு.ஙரு. (கூ) அதி.ஙசு.ங. அதி.உரு.மங. (ம) ஓசே.மஉ.மஉ. அப்.எ.உ. (மஉ) அதி.சக.ச. யோபு.ஙங.மச. யோவா.க.ருக. எபி.க.மச. (மங) அதி.ஙரு.க. அதி. சஅ.ங அதி.உசு.உச. அதி.மங.மரு. அதி.ஙரு.மஉ. (மச) அதி.மங.மரு. அதி.மங.மச. உபா.மஉ.உம. உபா.மஉ.ங. (மரு) வச.உம,உக. அதி.சஅ.மரு சங்.ாஉக.ரு,எ,அ. அதி.ஙரு.சு. உபா.ஙக.சு,அ. யோசு.க.ரு. எபி.மங.ரு. எண். உங.மகூ. (மசு) யாத்.ங.ரு. யோசு.ரு.மரு. (மஅ) அதி.ஙக.மங. லேவி.அ.ம,மக,மஉ. எண்.எ.க. (மகூ) நியா.க.உங, உசு. ஓசே.ச.மரு. (உம) அதி.ஙக.மங. நியா.மக.ஙக. வச.மரு. க.தீமோ.சு.அ. (உக) நியா.மக.ஙக. உபா.உசு. மஎ. (உஉ) அதி.ஙரு.எ,மரு. லேவி.உஎ.ஙம.

ஞல் உபசரிக்கப்படல்: ராகேலை மணஞ்செய்
ய ஏழுவருஷம் ஏவல் செய்தல்: ௨௧. கபட
மாய் ராகேலுக்குப் பிரதியாக லேயாளை மணஞ்
செய்வித்தமையால் ராகேலைப் பெற மேலும்
ஏழுவருஷம் ஏவல்செய்தல்: ௩௧. லேயாளின்
மகப்பேறு.

யாக்கோபு துரிதமாய்ப் பிரயாணஞ்செய்து,
கிழ்த்திசையாரின் தேசத்திற்குப்போய்ச் சேர்ந்
௨ தான்.—அவன்பார்க்கையில், அங்கே வயல்வெ
ளியில் ஒருகிணற்றையும், அதினருகே மூன்று
மந்தை ஆடுகள் படுத்திருக்கிறதையுங் கண்டான்.
அந்தக்கிணற்றில் ஆடுகளுக்குத் தண்ணீர் காட்
டுவார்கள். அந்தக்கிணறு ஒருபெரிய கல்லினா
௩ லே மூடப்பட்டிருக்கும்.—அவ்விடத்தில் ஆடு
களெல்லாஞ் சேர்ந்தபின், கிணற்றின் வாயிற்
கல்லை, மேய்ப்பர் புரட்டி, ஆடுகளுக்குத் தண்
ணீர்காட்டி, திரும்பவும், முன்னிருந்தபிரகாரம்,
௪ கிணற்றின் வாயிலே கல்லை வைப்பார்கள்.-யாக்
கோபு அவர்களைநோக்கி, என்சகோதரரே, நீங்
கள் எவ்விடத்தாரென்றான். நாங்கள் காரான்
௫ ஊரார் என்றுசொன்னார்கள்.—அதற்கு அவன்
நாகோரின் புத்திரனாகிய லாபானை அறிவீர்க
ளாவென்றுகேட்க; அறிவோம் என்றார்கள்.—
௬ அவன் சுகமாயிருக்கிறானாவென்று இவன் விசா
ரித்ததற்கு, சுகமாயிருக்கிறான்; அவன் குமாரத்
தியாகிய ராகேல் ஆடுகளை ஓட்டிக்கொண்டு வரு
௭ கிறாள், பார் என்றார்கள்.-அப்பொழுது அவன்,
இன்னும் வெகுபொழுதிருக்கின்றது. இது ஆ
டுகளைச்சேர்க்கிற வேளையல்ல. ஆடுகளுக்குத்
தண்ணீர் காட்டி, பின்னும் மேய விடலாமென்
௮ றான்.-அதற்கவர்கள் ஆட்டுமந்தைகளெல்லாஞ்
சேருமுன்னே கூடாது; சேர்ந்தபின், கிணற்
றின் வாயிலிருக்கிற கல்லைப் புரட்டுவார்கள்;
அப்பொழுது ஆடுகளுக்குத்தண்ணீர்காட்டுவோ
மென்றார்கள்.

௯ அவர்களுடனே அவன்சம்பாஷித்துக்கொண்
டிருக்கையில், ஆடுகளை மேய்க்கிறவளாகிய ரா
கேல், தன் பிதாவின் ஆடுகளை ஓட்டிக்கொண்டு
௰ வந்தாள்.—யாக்கோபு தன் மாதாவுக்குச் சகோ
தரனான லாபானுடைய புத்திரியாகிய ராகேலை
யும், அவனுடைய ஆடுகளையுங்கண்டபொழுது,
யாக்கோபுபோய்க் கிணற்றின்வாயிலிருந்த கல்
லைப்புரட்டி, தன் மாதாவுக்குச் சகோதரனாகிய
லாபானுடைய ஆடுகளுக்குத் தண்ணீர்காட்டி
௰௧ ஞன்.-பின்பு யாக்கோபு ராகேலை முத்தஞ்செய்
௰௨ து சத்தமிட்டழுதான்,—நான் உன்னுடைய பி
தாவுக்கு மருமகனென்றும், நான் ரிபெக்கா
ளின் புத்திரனென்றும், யாக்கோபு ராகேலுக்குச்
சொல்ல; அவள் ஓடிப்போய்த் தன் பிதாவுக்கு
௰௩ அறிவித்தாள்.-லாபான் தன் சகோதரியினுடைய
புத்திரனாகிய யாக்கோபின் வரவைக்கேள்விப்
பட்டவுடனே, அவனுக்கெதிர்கொண்டோடி,
அவனைத்தழுவி முத்தஞ்செய்து, தன் வீட்டுக்க
ழைத்துக்கொண்டுபோனான். அவன் லாபானுக்
கு உள்ளகாரியங்கள் யாவற்றையும் விவரமாய்ச்
சொன்னான்.—லாபான், மெய்யாய் நீ என் எலும் ௰௪
பும், என் மாமிசமுமானவன் என்றான். யாக்
கோபு ஒருமாதகாலம் அவன் வீட்டிலேயிருந்
தான்.

பின்பு லாபான் அவனைநோக்கி, நீ எனக்கு ௰௫
மருமகனாயிருப்பதினால், சும்மா எனக்கு வேலை
செய்யலாமா. சம்பளம் எவ்வளவுகேட்கிறாய்;
அதை எனக்குச் சொல்லென்று சொன்னான்.—
லாபானுக்கு இரண்டு புத்திரிகளிருந்தார்கள். ௰௬
மூத்தவளுக்கு லேயாள் என்றுபெயர்; இளையவ
ளுக்கு ராகேலென்று பெயர்.—லேயாள் கூசின ௰௭
பார்வையுள்ளவள்; ராகேல் ரூபவதியும், சௌந்
தரியுமாயிருந்தாள்.—யாக்கோபு ராகேல்மேல் ௰௮
அன்புவைத்திருந்தான். அதினால் உம்முடைய
இளையமகளாகிய ராகேலின் நிமித்தம், உம்மிடத்
தில் ஏழுவருஷஞ் சேவிப்பேன் என்றான்.—அ ௰௯
தற்கு லாபான், நான் அவளை அந்நியனுக்குக்
கொடுக்கிறதிலும், உனக்குத்தருகிறது உத்தமம்;
என்னுடனே தரித்திருவென்றான்.—அந்தப்படி ௨௰
யாக்கோபு ராகேலினிமித்தம் ஏழுவருஷஞ் சே
வித்தான். அவள்மேல் அவன் வைத்த அன்பி
னிமித்தம் அவை அவனுக்குக்கொஞ்சநாள்போ
லத் தோன்றின.

பின்பு யாக்கோபு லாபானைநோக்கி, எனக்கு ௨௧
நியமித்த நாள்கள் நிறைந்தன. என் மனைவியோ
டே சேரும்படி அவளை எனக்கு ஒப்பிக்கவேண்
டுமென்று சொன்னான்.—அப்பொழுது லாபா ௨௨
ன் அவ்விடத்து மனிதரெல்லாரையுங்கூடிவரச்
செய்து, விருந்துபண்ணினான்.—அன்றிரவு அ ௨௩
வன் தன் குமாரத்தியாகிய லேயாளை அழைத்
துக்கொண்டுபோய்விட, அவளை அவன் சேர்ந்
தான்.—மேலும் லாபான் தன் பணிவிடைக்கா ௨௪
ரியாகிய சில்பாளைத் தன் குமாரத்தியாகிய லே
யாளுக்குப் பணிவிடைக்காரியாகக் கொடுத்
தான்.-காலமே யாக்கோபு அவள் லேயாளென்று ௨௫
கண்டு, லாபானைநோக்கி, ஏன் இதை எனக்குச்
செய்தீர், ராகேலின் நிமித்தமல்லவோ, உம்மி
டத்துச் சேவித்தேன். என்னை வஞ்சித்ததென்
னவென்றுகேட்க,—லாபான் மூத்தவளிருக்க இ ௨௬
ளையவளைக்கொடுக்கிறது, எங்கள் ஊரிலே வ
ழக்கமில்லை.—நீ இவளுடைய வாரத்தை நிறை ௨௭
வேற்று. இன்னும் ஏழுவருஷம் என்னிடத்தில்
சேவித்தால், அவளையும் உனக்குத்தருவேனென்
றான்.—அந்தப்பிரகாரம் யாக்கோபு இவளுடை ௨௮
ய வாரத்தைநிறைவேற்றினான். அப்பொழுது அ
வன் தன்குமாரத்தியாகிய ராகேலையும் அவனுக்
கு மனைவியாகக்கொடுத்தான்.-மேலும் லாபான் ௨௯
தன் பணிவிடைக்காரியாகிய பில்க்காளைத்தன்
குமாரத்தியாகிய ராகேலுக்குப் பணிவிடைக்கா

(௨௯. அதி. ௧.) எண். ௨௩.௭. ஓசே.௰௨.௰௨. (௬) அதி.௪௩.௨௭. (௯) யாத்.௨.௰௬. (௰) யாத்.௨.௰௭. (௰௧) அதி. ௩௩.௪. (௰௨) அதி.௰௩.௮. அதி ௨௪.௨௮. (௰௩) அதி.௨௪.௨௯. (௰௪) நியா.௯.௨. ௨.சாமு.௫.௧. (௰௮) அதி.௩௧.௪௧. ௨சாமு.௩.௰௪. (௨௰) அதி.௩௰.௨௬. (௨௧) நியா.௰௫.௧. (௨௨) நியா.௰௪.௰. யோவா.௨.௧,௨. (௨௭) நியா.௰௪.௰௨.

௩௰ ரியாகக் கொடுத்தான்.—யாக்கோபு ராகேலையுஞ்
சேர்ந்தான். லேயாளிலும் ராகேலின்மேல் அதி
க அன்புவைத்தான். பின்னும் ஏழுவருஷம் அ
வனிடத்திற் சேவித்தான்.
௩௧ லேயாள் அலட்சியமாக எண்ணப்பட்டா
ளென்று யெகோவா கண்டு, அவள்கருப்பந்த
ரிக்க அருள்செய்தார். ராகேலோ மலடியாயிருந்
௩௨ தாள்.—லேயாள்கருப்பவதியாகி, ஒருபுத்திரனைப்
பெற்று, இப்பொழுது என்புருஷன் என்மேல்
அன்பு வைக்கும்படி யெகோவா என் சிறு
மையைப் பார்த்தருளினாரென்று சொல்லி, அவ
௩௩ னுக்கு ரூபேன்* என்று பேரிட்டாள்.-மீண்டும் அ
வள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப் பெற்று,
நான் அற்பமாயெண்ணப்பட்டவளென்று யெ
கோவா என்னைக் கேட்டருளி, இவனையும்
எனக்குத் தந்தாரென்று சொல்லி, அவனுக்கு
௩௪ ஷிமியோன் † என்று பேரிட்டாள்.—மேலும் அ
வள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப்பெற்று,
இப்பொழுது என் புருஷனுக்கு மூன்றுபுத்திர
ரைப்பெற்றபடியால், அவர் இனி என்னுடனே
சேர்த்திக்கையாயிருப்பாரென்று சொல்லி, அவ
௩௫ னுக்கு லேவி ‡ என்று பேரிட்டாள்.—பின்னும்
அவள் கருப்பவதியாகி ஒரு புத்திரனைப்பெற்று,
இப்பொழுது யெகோவாவைத் துதிப்பே
னென்று சொல்லி, அவனுக்கு யூதா ‖ என்று பே
ரிட்டாள். அவளுடைய மக்கட்பேறு நின்றது.

## ௩௰. அதிகாரம்.

௧. லேயாள்மேல் ராகேல் பொறாமைகொள்ளல்: ௰௪. ராகேல் தூதாயீம் கனி சம்பாதித்தல்: ௰௭. லேயாள் ஈஷகாரையும், செபுலோனையும், தீனாளையும்பெறல்: ௰௯. லேயாள் மீண்டும் மகப்பெறல்: ௨௨. ராகேல் யோசேப்பைப்பெறல்: ௨௫. யாக்கோபு தன்பிதாவின்வீட்டிற்குப்போக அபேட்சைகொண்டதினால் லாபான் அவனோடே உடன்படிக்கைசெய்தல்: ௩௭. யாக்கோபு பொருளீட்ட உபாயந்தேடல்.

ராகேல் யாக்கோபினால்தான்பிள்ளைப்பேறடை
யாததைக் கண்டு, தன் சகோதரியின்மேலேபொ
றாமைகொண்டு; யாக்கோபை நோக்கி, எனக்
கும் பிள்ளை தரவேண்டும். இல்லாவிட்டால்,
௨ நான் மரிக்கிறேனென்றாள்.—அதினால் ராகே
லின்மேல் தனக்குக்கோபம் பற்றியெரிய, யாக்
கோபு, உனக்குக் கருப்பக்கனியை அருளாத
யெகோவாவுக்கு நான் பிரதியானவனா என்
௩ று சொல்ல;—அவள், என்பணிவிடைக்காரியா
கிய பில்க்காள் இருக்கிறாள். அவள்என்மடியின்
மேலிருக்கப் பிள்ளைகளைப்பெறவும், அவள்வழி
யாய் நான் சந்தானவிருத்தி அடையவுந்தக்கதா
௪ க, நீர் அவளைச் சேருமென்றுசொல்லி,—அவ
னுக்குத் தன் பணிவிடைக்காரியாகிய பில்க்கா
ளை மறுமனையாட்டியாகக் கொடுத்தாள். யாக்
கோபு அவளைச்சேர்ந்தான்.—பில்க்காள் கருப்ப ௫
வதியாகி யாக்கோபுக்கு ஒரு புத்திரனைப் பெற்
றாள்.—ராகேல், தேவன் என் விண்ணப்பத்தை ௬
யுங் கேட்டு, எனக்கொரு புத்திரனையும் அளித்
து, எனக்கு நியாயஞ்செய்தாரென்றுசொல்லி,
அவனுக்குத் தாண் § என்றுபேரிட்டாள்.—பின் ௭
பு ராகேலுடைய பணிவிடைக்காரியாகிய பில்க்
காள் கருப்பவதியாகி யாக்கோபுக்கு வேறொரு
புத்திரனைப் பெற்றாள்.—அப்பொழுது ராகேல், ௮
நான் மிகுந்த வலிமையாய் என் சகோதரியுட
னே போராடி மேற்கொண்டேனென்று சொல்
லி, அவனுக்கு நப்தாலி ** என்றுபேரிட்டாள்.—
லேயாளும், மக்கட்பேறு தனக்கு நின்றுபோன ௯
தைக்கண்டு, தன்பணிவிடைக்காரியாகிய சில்ப்
பாளை அழைத்து, அவளை யாக்கோபுக்கு மறும
னையாட்டியாக அளித்தாள்.—லேயாளின் பணி ௰
விடைக்காரியாகிய சில்ப்பாள் யாக்கோபுக்கு
ஒரு புத்திரனைப் பெற்றாள்.—அதினால் லேயாள் ௰௧
ஒரு தண்டு வருகின்றதென்றுசொல்லி, அவனுக்
குக் காத் †† என்று பேரிட்டாள்.—பின்னும் லே ௰௨
யாளின் பணிவிடைக்காரியாகிய சில்ப்பாள்
யாக்கோபுக்கு வேறொரு புத்திரனைப்பெற்றாள்.-
அப்பொழுது லேயாள், ஸ்திரிகள் என்னை வாழ் ௰௩
வுடையவளென்று சொல்வார்கள்: நான் வாழ்வு
டையவளேயென்றுசொல்லி, அவனுக்குஆஷேர்
‡‡ என்று பேரிட்டாள்.
கோதுமை அறுப்புநாள்களில் ரூபேன், வயல் ௰௪
வெளியிலேபோய்த் தூதாயீம் கனிகளைக்கண்
டெடுத்து, அவைகளைத் தன் மாதாவாகிய லேயா
ளிடத்துக்குக்கொண்டுவந்து கொடுத்தான். அப்
பொழுது ராகேல் லேயாளைநோக்கி, உன் புத்தி
ரன்கொண்டுவந்த தூதாயீம் கனிகளில் எனக்குக்
கொஞ்சந் தாவென்றுகேட்க;—அவள், நீ என்பு ௰௫
ருஷனைக் கைவசப்படுத்திக்கொண்டது அற்ப
காரியமா. என் புத்திரனுடைய தூதாயீம் கனிக
ளையுங் கவரவேண்டுமாவென்றாள். அதற்கு ரா
கேல் உன்புத்திரனுடைய தூதாயீம் கனிகளின்
நிமித்தம் அவன் இன்றிரவு உன்னுடனே சய
னிப்பான் என்றாள்.-சாயங்காலத்தில் யாக்கோபு ௰௬
வயல் வெளியிலிருந்து வருகையில், லேயாள்
புறப்பட்டு அவனுக்கு எதிர்கொண்டுபோய், என்
புத்திரனுடைய தூதாயீம் கனிகளால் உம்மைப்
பெற்றுக்கொண்டேன். ஆதலால் நீர் என்னைச்
சேரவேண்டுமென்றுசொல்ல; அவன் அன்றிரவு
அவளுடனே சயனித்தான்.—தேவன் லேயா ௰௭
ளுக்கு அருள்செய்ய, அவள் கருப்பவதியாகி
யாக்கோபுக்கு ஐந்தாம் புத்திரனைப்பெற்றான்.—
லேயாள், நான் என் பணிவிடைக்காரியை என் ௰௮
புருஷனுக்குஅளித்ததினால் தேவன் எனக்குப்

---

(௩௰) உபா.௨௧.௰௫. அதி.௩௰.௨௬. (௩௧) சங்.௱௨௭.௩. (௩௨) யாத்.௩.௭. உபா.௨௬.௭. சங்.௨௫.௰௮. (௩௫) மத். ௧.௨. (௩௰. அதி. ௧.) அதி.௨௯.௩௧. அதி.௩௭.௰௧. யோபு.௫.௨. (௨) ௧.சாமு.௧.௫. (௩) அதி.௰௬.௨. அதி.௫௰. ௨௩. யோபு.௩.௰௨. அதி.௰௬.௨. (௪) அதி.௰௬.௩. (௬) சங்.௩௫.௨௪. புல.௩.௫௯. அதி.௨௩.௬. (௮) மத்.௪.௰௩. (௯) வச.௪. ஏசா.௬௫.௰௧. (௰௩) நீதி ௩௧.௨௮. லூக்.௧.௪௮. (௰௪) அதி.௨௫.௩௰. (௰௫) எண்.௰௬.௯,௰௩.

* மகனைப்பார். † கேட்குதல். ‡ சேருதல். ‖ துதி. § நியாயம். ** மல்லயுத்தம். †† தண்டு. ‡‡ வாழ்வு.

பலன் அருளினானென்றுசொல்லி, அவனுக்கு ஈ
ஷகார * என்று பெயரிட்டாள்.
யகூ பின்னும் லேயாள் கருப்பவதியாகி யாக்கோ
உய புக்கு ஆறாம்புத்திரனைப் பெற்றாள்.—லேயாள்,
தேவன் எனக்கு நல்லசீதனத்தை யருளினார்.
என்புருஷனுக்கு நான் ஆறு புத்திரரைப் பெற்ற
படியால், இனி அவர் என்னுடனே சகவாசமா
யிருப்பாரென்று சொல்லி, அவனுக்குச் செபு
உக லோன் † என்று பெயரிட்டாள்.—பின்பு அவள்
ஒரு புத்திரியையும் பெற்று, அவளுக்குத் தீனா
ளென்று பெயரிட்டாள்.
உஉ தேவன் ராகேலையும் நினைந்தருளினார். அவ
ளுக்குத் தேவன் செவிகொடுத்து, அவள் கருப்
உங பந்தரிக்க அருள் செய்தார்.—அவள் கருப்பவதி
யாகி ஒரு புத்திரனைப்பெற்று, தேவன் என் அ
உச வமானத்தை நீக்கினாரென்றும்,—இன்னும் யெ
கோவா எனக்கொருபுத்திரனைஅருள்வாரென்
றுஞ்சொல்லி, அவனுக்கு யோசேப்பு ‡ என்று
பெயரிட்டாள்.
உரு ராகேல் யோசேப்பைப் பெற்றபின்பு யாக்
கோபு லாபானைநோக்கி, நான் உமக்குப்பண்
ணின சேவகத்தையறிவீர்; என்னைப்போகவி
டும். நான் உம்மிடத்துச்சேவித்துப்பெற்ற என்
மனைவிகளையும், பிள்ளைகளையுந் தந்து, நான் என்
ஸ்தானத்திற்கும், தேசத்திற்கும்போக என்னை அ
னுப்பிவிடவேண்டும். நான் போகிறேனென்று
உசா சொன்னான்.—அதற்கு லாபான், என்மேல் உனக்
உஎ குத் தயையுண்டானால், இன்னும் இரு.—உன்
நிமித்தம் யெகோவா என்னை ஆசீர்வதித்தா
ரென்பதை நான் அநுபவத்தால் அறிந்தேன்.—
உஅ உனக்குச்சம்பளம் இவ்வளவு வேண்டுமென்றுஎ
னக்குச்சொன்னால்,நான் தருவேனென்றுசொல்
உகூ ல;—இவன், நான் உம்மிடத்துசேவித்தவிதமும்,
உமது ஆட்டுக்கூட்டம் என்னிடத்திலிருந்தவித
ஙய மும், நீர் அறிவீர்.—நான் வருமுன்னே உமக்கி
ருந்தது கொஞ்சம்; நான்வந்தபின் யெகோவா
உம்மை ஆசீர்வதித்ததினால், அது மிகவும் பெரு
கியிருக்கின்றது. இனி நான் என் குடும்பத்திற்
கு எப்பொழுது சம்பாதித்துக்கொள்வேனென்
ஙக றான்.—அதற்கவன் நான் உனக்கு என்ன தர
வேண்டுமென்றுசொல்ல; யாக்கோபு, நீர் எனக்
கு ஒன்றுந் தரவேண்டுவதில்லை. இன்றைக்கு
நான்போய் உமது ஆடுகளுக்குள்ளே உலாவி,
அவைகளில் புள்ளியும், வரியும், கறுப்புமுள்
ள செம்மறி ஆடுகள்யாவையும், வரியும், புள்ளி
யுமுள்ள வெள்ளாடுகளையும் பிரித்தெடுப்பேன்:
ஙஉ அவையே எனக்குச்சம்பளம்.—என் சம்பளமாகி
ய இவற்றை நீர் பார்வையிடும்பொழுது, புள்ளி
யும், வரியுமில்லாத வெள்ளாடுகளும், கறுப்பான
செம்மறி ஆடுகளும், என் வசத்திலிருந்தால், அ
வையெல்லாம் என்னால் திருடிக்கொள்ளப்பட்
டனவாயிருக்கும். இனிமேல் என் நீதி இவ்வி
தமாய் விளங்கும்.—நான் சொல்லுகிறபடி நீர் ஙங
எனக்குச் செய்தால்தான், உமது ஆட்டுக்கூட்
டத்தை இன்னுமேய்த்துக் காப்பாற்றுவேனென்
றான்.—அதற்கு லாபான், நீ சொல்லியபிரகாரம் ஙச
ஆகக்கடவதென்றுசொல்லி,—அந்நாளிற் பொ ஙரு
துநிறமும் வரிகளுமுள்ள வெள்ளாட்டுக்கடாக்
களையும், புள்ளியும் வரியுமுள்ள வெள்ளாடுகள்
யாவையும், சற்று வெண்மையும், கருமையுமுள்
ள செம்மறி ஆடுகள் யாவையும்பிரித்து, தன்னு
டைய புத்திரரிடத்தில் ஒப்பித்து, தனக்கும்,
யாக்கொபுக்கும், இடையிலே மூன்றுநாள் பிர
யாணதூரமிருக்க நியமித்தான்.—லாபானுடைய ஙசா
மற்ற ஆடுகளை யாக்கோபு மேய்த்தான்.
பின்பு யாக்கோபு பசிய புன்னைமரத்திலும், ஙஎ
உலூசென்னுமரத்திலும், அர்மோன் என்னுமரத்
திலும், கொப்புக்களைவெட்டி, இடையிடையே
வெண்மைதோன்றும்படி, பட்டையை உரித்து,-
ஆடுகள் தண்ணீர் குடிக்கவரும்பொழுது பொலி ஙஅ
வதற்கு, தான் உரித்தகொம்புகளை ஆடுகள் தண்
ணீர்குடிக்க வருங் கால்வாய்களிலும், தொட்டி
களிலும், ஆடுகளுக்கு முன்பாகவைத்தான்.—ஆடு ஙகூ
கள் அந்தக்கொம்புகளுக்கு முன்பாகப்பொலிந்
தபடியால், அவை பொதுநிறமும், புள்ளியும்,
வரியுமுள்ள குட்டிகளை ஈன்றன.—அந்த ஆட்டுக் சய
குட்டிகளை யாக்கோபு பிரித்துக்கொண்டான்.
மேலும் லாபானுடைய ஆடுகளின் முகத்தைப்
பொதுநிறமும், கறுப்புமுள்ளவைகளுக்கு எதி
ராக நிறுத்துவதுமன்றித் தன் ஆடுகளை லாபானு
டைய ஆடுகளோடே சேர்த்துக்கொள்ளாமல்,
வேறாகவும் வைத்தான்.—அல்லாமலும் பலத்த ஆ சக
டுகள்மாத்திரம்பொலியும்பொழுது,அந்தக்கொப்
புக்களுக்கு எதிரே கருத்தரிக்கும்படி,யாக்கோபு
அவைகளை அந்த ஆடுகளின் கண்களுக்குமுன்
பாகக் கால்வாய்களில் வைப்பான்.—பலமற்ற சஉ
ஆடுகள் பொலியும்பொழுது அவைகளைப்போ
டாமலிருப்பான்: இதனாற் பலமற்றவைகள் லா
பானையும், பலமுள்ளவைகள் யாக்கோபையுஞ்
சேர்ந்தன.—இப்படியே அந்த மனிதன் விருத் சங
தியடைந்து, திரளான ஆடுகளும் பணிவிடைக்
காரிகளும், பணிவிடைக்காரரும், ஒட்டகங்க
ளும், கழுதைகளும், உடையவனானான்.

## ஙக. அதிகாரம்.

க. யாக்கோபு லாபானைவிட்டுத் தப்பியோடல்:
யஎ. ராகேல் லாபானின் விக்கிரகங்களைத்திரு
டல்: உஉ. யாக்கோபு தப்பியோடினதை லா
பான் அறிதல்: உரு. லாபான் அவனைத்தொ
டர்தல்: ஙய. கூடாரத்தில் விக்கிரகங்களைத்தே
டுதல்: ஙசா. லாபானை யாக்கோபு கோபித்தல்:

(உய) மத்.ச.யங. (உஉ) அதி.அ.க. க.சாமு.க.யக. அதி.உக.ஙக. க.சாமு.க.கூ. எசா.ச.க. லூக்.க.உரு. (உச) அதி. ஙரு.யஎ. (உரு) அதி.உச.ருச,ருகூ. அதி.யஅ.ஙங. அதி.ஙக.ருரு. (உசா) அதி.உக உய,ஙய. (உஎ) அதி.ஙக ங,ரு. அதி. உகூ.உச. (உஅ) அதி.உக.யரு. (உகூ) அதி.ஙக.கூ,ஙஅ,ஙக,சய. மத்.உச.சரு. தீத் உ.ய. (ஙய) வச.சாங. க.தீமோ.ரு.அ. (ஙஉ) அதி.ஙக.அ. (ஙங) சங்.ஙஎ.கூ. யாத்.யங யச. (ஙஎ) அதி.ஙக.க-யஉ. (சங) வச.ஙய. அதி.யங.உ. (ஙக. அதி.)
* பலன். † வாசம். ‡ விருத்தி.

௪௩. யாக்கோபுடனே லாபான் ஓர் உடன்படிக்கைசெய்தல்.

பின்பு, எங்கள் பிதாவுக்குண்டான யாவையும்
யாக்கோபு தன்வசமாக்கிக்கொண்டு, எங்கள் பி
தாவின்பொருளினாலே இந்தச்செல்வமெல்லாம்
பெற்றிருக்கிறானென்று லாபானுடைய புத்திரர்
௨ சொன்னதைக் கேட்டதுமன்றி,—லாபானுடை
ய முகமுந் தன்னுடனே முன்னிருந்ததற்கு வே
றுபட்டிருப்பதையும், யாக்கோபு கண்டான்.—
௩ யெகோவா யாக்கோபை நோக்கி, உன் பி
தாக்களுடைய தேசத்திற்கும், உன் சுற்றத்தாரி
டத்திற்கும், நீ திரும்பிப்போ; நான் உன் பட்ச
௪ மாயிருப்பேனென்று சொல்ல;—யாக்கோபு ரா
கேலையும், லேயாளையும், வெளியிலே தன் மந்
௫ தையிடத்தில் அழைப்பித்து,-அவர்களை நோக்கி,
உங்கள் பிதாவின்முகம் என்மேல் முன்னிருந்த
துபோல இருக்கவில்லையென்று எனக்குத்தோன்
றுகின்றது. ஆனாலும் என் பிதாவுடைய தே
௬ வன் என் பட்சமாயிருக்கிறார்.—நான் என்னா
லியன்றமாத்திரம் உங்கள் பிதாவிடத்தில் சேவித்
௭ தேனென்பது உங்களுக்குத்தெரியும்.—அப்படி
யிருந்தும், உங்கள்பிதா என்னை வஞ்சித்து, என்
சம்பளத்தைப்பத்துமுறைமாற்றினான். ஆகிலும்
அவன் எனக்குத் தீமைசெய்யத் தேவன் விட
௮ வில்லை.-அவன், புள்ளியுள்ளவைகள் உனக்குச்
சம்பளமென்று சொன்னால், ஆடுகளெல்லாம்
புள்ளியுள்ள குட்டிகளை ஈனும். பொதுநிறமுள்
ளவைகள் உனக்குச்சம்பளமென்று சொன்னால்,
ஆடுகளெல்லாம் பொதுநிறமுள்ள குட்டிகளை
௯ ஈனும்.—இவ்விதமாய்த் தேவன் உங்கள் பிதா
வுடைய ஆடுகளையெடுத்து, எனக்குத்தந்தார்.—
௰ ஆடுகள் பொலியுங்காலத்தில், நான்கண்ட சொப்
பனத்தில் கண்ணேறிட்டுப்பார்த்து ஆடுகளோ
டேபொலியுங் கடாக்கள் பொதுநிறமும், புள்ளி
யும், வரியுமுள்ளவைகளாயிருக்கக்கண்டேன்.-
௰௧ அன்றியும் தேவதூதனொருவர் சொப்பனத்தில்
யாக்கோபே, என்றுசொல்ல, இங்கேயிருக்கிறே
௰௨ னென்றேன்.—அப்பொழுது அவர், லாபான் உ
னக்குச்செய்கிற யாவையுங்கண்டேன். நீ கண்
ணேறிட்டுப்பார். ஆடுகளோடே பொலியுங்க
டாக்களெல்லாம் கறுப்புநிறமும், புள்ளியும்,
௰௩ வரியுமுள்ளவைகளாயிருக்கின்றன.—நீ தூணுக்
கு அபிஷேகஞ்செய்து, எனக்கொரு சங்கற்பத்
தைப்பண்ணின பெத்தேலிலே உனக்குத்தரிச
னமான தேவன் நானே. இப்பொழுது நீ எ
ழுந்து இந்தத்தேசத்தைவிட்டுப்புறப்பட்டு, உன்
சுற்றத்தாரிருக்கிற தேசத்திற்குத் திரும்பிப்போ
௰௪ வென்று சொன்னாரென்றான்.—அதற்கு உத்தர
மாய் ராகேலும் லேயாளும், எங்கள் பிதாவின்
வீட்டிலே இனி எங்களுக்குப்பங்குஞ் சுதந்தர
முமுண்டா.—அவரால் நாங்கள் அந்நியராய் எண் ௰௫
ணப்படவில்லையா. அவர் எங்களைவிற்று எங்
கள் பணம்யாவையும் பட்சித்தார்.—தேவன் ௰௬
எங்கள் பிதாவினிடத்திலிருந்து எடுத்த ஐசுவரி
யமெல்லாம், நமக்கும், நம்முடையபிள்ளைகளுக்
கும் உரியன. ஆதலால் தேவன் உமக்குச்
சொல்லியபிரகாரம்செய்யக்கடவீரென்றுசொன்
னார்கள்.

அப்பொழுது யாக்கோபு எழுந்து தன்பிள்ளை ௰௭
களையும், தன்மனைவிகளையும் ஒட்டகங்கள்மே
லேற்றி,—தான் பதானாராமிலே சம்பாதித்த ஆட் ௰௮
டுக்கூட்டங்கள்அனைத்தையும், தன் பொருள்யா
வையுஞ் சேர்த்துக்கொண்டு கானான்தேசத்திலி
ருக்கிற தன் பிதாவாகிய ஈசாக்கினிடத்துக்குப்
போகப்புறப்பட்டான்.-அக்காலத்தில் லாபான் ௰௯
தன் ஆடுகளுக்கு மயிர் கத்தரிக்கப் போயிருந்
தான். ராகேல் தன் பிதாவினுடைய தேராபீன்
களைத் திருடிக்கொண்டாள்.—இப்படியே யாக் ௨௰
கோபு தனக்குண்டான யாவையுங் கொண்டு,
தான்ஓடிப்போகிறதைஅராமியனாகியலாபானுக்
கு அறிவியாமல்,—ஒளித்துப் புறப்பட்டு ஆற் ௨௧
றைக்கடந்து கிலியாத்து மலையைநோக்கி ஓடிப்
போனான்.

யாக்கோபு ஓடிப்போனது மூன்றாம் நாளிலே ௨௨
லாபானுக்கு அறிவிக்கப்பட்டது.—அவன் தன் ௨௩
சகோதரரைக் கூட்டிக்கொண்டு, ஏழுநாட்பிர
யாணபரியந்தம் அவனைத்தொடர்ந்து, கிலியாத்
துமலையில் அவனைக் கண்டுபிடித்தான்.—அப் ௨௪
பொழுது தேவன் இரவில் அராமியனாகிய லா
பானுக்குச்சொப்பனத்தில்தோன்றி, நீ யாக்கோ
புடனே நன்மையேயன்றித் தீமைபேசாதபடிக்
கு எச்சரிக்கையாயிருவென்றார்.

லாபான் யாக்கோபினிடத்திற் சேர்ந்தான். ௨௫
யாக்கோபு மலையினருகே தன் கூடாரத்தைப்
போட்டிருந்தான். லாபானுந் தன் சகோதரருட
னே கிலியாத்து மலையினருகே கூடாரம்போட்
டான்.—பின்பு லாபான் யாக்கோபைநோக்கி, ௨௬
நீ என்னை வஞ்சித்துக் கட்கங்கொண்டு சிறைப்
பிடிக்கிறபிரகாரம் என் குமாரத்திகளைக்கொண்
டுவந்தது என்னசெய்கை. எதினாலே நீ எனக்கு
ஒன்றுஞ் சொல்லாமல்,—ஒளித்து இரகசியமாய் ௨௭
ஓடிவந்தாய். நான் உன்னைச் சந்தோஷமாய்ச்
சங்கீத மேள தாள கின்னரமுழக்கத்துடனே அ
னுப்புவேனே.—என் புத்திர புத்திரிகளை முத் ௨௮
தஞ்செய்ய விடாததென்ன. இந்தச்செய்கை
யைப் பேதைமையாய்ச்செய்தாய்.—உங்களை வ ௨௯
ருத்த எனக்குவல்லமையுண்டு: ஆகிலும் உங்
கள் பிதாவினுடைய தேவன், நீ யாக்கோபுக்

(௧) சங்.௪௯.௰௬. (௨) அதி.௪.௫. உபா.௨௮.௫௫. ௧.சாமு.௰௯.௭. (௫) வச.௨. வச.௩. (௬) வச.௩௮,௩௯. (௭) வச.௪௧. எண்.௰௪.௨௨. ௪௧.௮.௨௩. சங்.௱௫.௰௪. (௮) அதி.௩௰.௩௨ (௯) வச.௧,௰௬. (௰௧) அதி.௪௮.௰௫. (௰௨) யாத்.௩.௭. (௰௩) அதி.௨௮.௰௮,௰௯,௨௰. வச.௩. அதி.௩௨.௯. (௰௪) அதி.௨.௨௪. (௰௫) அதி.௨௯.௰௫,௨௭. (௰௯) நியா.௰௭.௫. ஓசே.௩.௪. அதி.௩௫.௨. (௨௧) அதி.௪௬.௨௮. ௨.இரா.௰௨.௰௭. லூக்.௯.௫௧,௫௩. (௨௩) அதி.௰௩.௮. (௨௪) அதி.௨௰.௩. யோபு.௩௩.௰௪. மத்.௧.௨௰. அதி.௨௪.௫௰. (௨௬) ௧.சாமு.௩௰.௨. (௨௮) ரூத்.௧.௯,௰௪. அப் ௨௰.௩௮. ௧.சாமு.௰௩.௰௩. ௨.நாளா.௰௬.௯. (௨௯) வச.௫௩. அதி.௨௮.௰௯. வச.௨௪.

கு நன்மையேயன்றித்தீமைசெய்யாதபடிக்கு எச்
சரிக்கையாயிருவென்று இராத்திரி என்னுடனே
சொன்னார்.
௩௰ மேலும், உன் பிதாவின் வீட்டார்மேல் நீ
கொண்ட வாஞ்சையினால் நீ புறப்பட்டு வருகிற
பொழுது என் தெய்வங்களைத் திருடிக்கொண்ட
௩௧ தென்னவென்று கேட்டான்.—அதற்கு யாக்கோ
பு உம்முடையபுத்திரிகளை என்னிடத்திலிருந்து
௩௨ பறித்துக்கொள்வீரென்று அஞ்சினேன்.—உம்
முடைய தெய்வங்களை வைத்திருக்கிறவனெவ
னோஅவன்சீவித்திருக்கத்தகான். உமதுபொருள்
என்வசத்திலுண்டானால், அதை நீர் நம்முடைய
சகோதரருக்கு முன்பாகப்பார்த்தறிந்து, அதை
எடுத்துக்கொள்ளுமென்றான். ராகேல் அவைக
௩௩ ளைத்திருடினதை யாக்கோபு அறியவில்லை.—அப்
பொழுது லாபான் யாக்கோபின்கூடாரத்திலும்,
லேயாளின் கூடாரத்திலும், இரண்டு பணிவி
டைக்காரிகளின் கூடாரத்திலும்போய் அவைக
ளைக்கண்டுபிடிக்கவில்லை. பின்பு லேயாளின்கூ
டாரத்திலிருந்துபுறப்பட்டு, ராகேலின் கூடாரத்
௩௪ திற்குப்போனான்.-ராகேல் அந்தத்தேராபீன்களை
யெடுத்து ஒட்டகச் சேணத்தின்கீழ்வைத்து, அ
தின்மேலிருந்தாள். லாபான் கூடாரமெங்குந்த
டவிப்பார்த்தும் அவைகளைக்கண்டுபிடிக்கவில்
௩௫ லை.-அவளுந் தன்பிதாவைநோக்கி, நான் இல்வி
லக்கமானவள். என் ஆண்டவனாகியஉமக்குமுன்
பாகஎழுந்திராததைக்குறித்துக்கோபங்கொள்ளா
திருப்பீராகவென்றுசொன்னாள். இப்படி அவன்
அந்தத் தேராபீன்களைத் தேடியுங்காணவில்லை.
௩௬ அப்பொழுது யாக்கோபு கோபங்கொண்டு
லாபானுடனே வாக்குவாதம்பண்ணினான். யாக்
கோபு லாபானிடத்தில், நீர் அதிக உக்கிரமாய்
என்னைத்தொடர்ந்து வரும்படிக்கு, நான் செய்த
௩௭ குற்றமும் பாவமும் என்ன.—என்பொருள்யா
வையும் பரிசோதித்தீரே. உமதுவீட்டின் தட்டு
முட்டுக்களில் எதைக்கண்டீர். அதை என்னு
டையசகோதரருக்கும், உம்முடைய சகோதர
ருக்கும்முன்பாக இங்கே வைக்கவேண்டும். அ
வர்கள் எனக்கும் உமக்கும் நடுத்தீர்க்கக்கடவர்
௩௮ கள்.—இருபது வருஷம் நான் உம்மிடத்திலிருந்
தேன். உம்முடைய செம்மறியாடுகளும், வெள்
ளாடுகளுஞ் சினையழியவில்லை. உமது மந்தை
௩௯ யிலுள்ள கடாக்களை நான் தின்னவில்லை.—பீ
றுண்டதை உம்மிடத்திற்குக் கொண்டுவராமல்,
அதை நானே ஏற்றுக்கொண்டேன். பகலில் கள
வுபோனதையும், இரவில் களவுபோனதையும்,
௪௰ நீயே கொடுக்கவேண்டுமென்று கேட்டீர்.—பக
லிலே வெயிலும், இரவிலே பனியும், என்னைப்
பட்சித்தன. நித்திரை என்கண்களுக்குத் தூரமா
௪௧ யிற்று.-இப்படியாக இருபதுவருஷம் உம்முடை
ய வீட்டிலிருந்தேன். பதினாலுவருஷம் உம்மு
டைய இரண்டு குமாரத்திகள்நிமித்தமும், ஆறுவ
ருஷம் உமது ஆடுகளுக்காகவும், உம்மிடத்திற்
சேவித்தேன். பத்துமுறை என் சம்பளத்தைமாற்
றினீர்.-என்பிதாவின் தேவனும், ஈசாக்கின்பய ௪௨
பத்திக்கிடமானவரும், ஆபிரகாமின் தேவனு
மாயிருக்கிற தேவன், என்பட்சத்திலிராவிட்
டால், நீர் இப்பொழுதும் என்னை வெறுமையா
யனுப்பிவிடுவீர். தேவன் என்சிறுமையையும்
என்கைப்பிரயாசத்தையும் பார்த்துஇராத்திரி உம்
மைக்கடிந்துகொண்டாரென்று சொன்னான்.
லாபான் யாக்கோபை நோக்கி, இந்தக்குமா ௪௩
ரத்திகள் என்னுடைய குமாரத்திகள். இந்தப்
பிள்ளைகள் என்னுடையபிள்ளைகள். இந்த ஆடு
கள் என்னுடைய ஆடுகள். நீ காண்கிறயாவும்
என்னுடையவைகள். என்னுடைய குமாரத்தி
களாகிய இவர்களையும், இவர்கள்பெற்ற பிள்ளை
களையும், இப்பொழுது நான் என்னசெய்ய
லாம்.—இனி எனக்கும், உனக்கும், ஒரு திருஷ் ௪௪
டாந்தமாயிருக்கும்பொருட்டு, நானும், நீயும்,
ஒரு உடன்படிக்கை பண்ணிக்கொள்ளக் கட
வோமென்று சொன்னான்.—அதனால் யாக்கோபு ௪௫
ஒரு கல்லையெடுத்து, அதைத்தூணாக நிறுத்தி
னான்.—பின்னும் யாக்கோபு கல்லுக்களைச்சேர்த் ௪௬
துக்கொண்டு வாருங்களென்று தன் சகோதரருக்
குச்சொல்ல, அவர்கள் கல்லுக்களை எடுத்துவந்து
குவித்து, அந்தக் கற்குவியலின்மேல் போசனம்
பண்ணினார்கள்.—அதற்கு லாபான், ஏகார்சக் ௪௭
தூத்தா என்று பேரிட்டான். யாக்கோபு, அதற்
குக் கலெயேத்தென்று பேரிட்டான்.—நாம் ஒரு ௪௮
வரை ஒருவர்விட்டு மறைந்தபின்பு, நீ என் கு
மாரத்திகளைத் துயரப்படுத்தி, அவர்களையன்றி
வேறே ஸ்திரிகளை விவாகம்பண்ணினால், யெ
கோவா எனக்கும், உனக்கும், நடுநின்று வி
சாரிப்பாராக.—நம்முடனே ஒருவருமில்லை. ௪௯
தேவனே, உனக்கும், எனக்கும், சாட்சி, பா
ரென்று லாபான் சொன்னபடியால், அவ்விடத்
துக்கு மிஸ்பாவென்னும்பேரும்,—இந்தக்கற்கு ௫௰
வியலே எனக்கும் உனக்கும் சாட்சியென்று இ
வன் சொன்னபடியால் கலெயேத்தென்னும்
பேரும், அவற்றிற்கிடப்பட்டன.—மேலும், லா ௫௧
பான் யாக்கோபைநோக்கி, இந்தக் கற்குவிய
லையும், எனக்குமுனக்கும் நடுவாக நிறுத்தின
கல்லையும்பார்;—உனக்குத் தீமைசெய்ய நான் ௫௨
இந்தக்கற்குவியலைக்கடந்து வராமலும், எனக்
குத் தீமைசெய்ய நீ இந்தக்கற்குவியலையும், இந்
தத்தூணையுங்கடந்து வராமலுமிருப்போமென்ப
தற்கு, இந்தக்கற்குவியலுஞ்சாட்சி; நிறுத்தின
இந்தத்தூணுஞ்சாட்சி.—ஆபிரகாமுடைய தே ௫௩
வனும் நாகோருடைய தேவனும் அவர்கள்
பிதாக்களுடைய தேவனுமாயிருக்கிறவர், ந
மக்குள்ளே மத்தியஸ்தராயிருக்கக்கடவரென்று

(௩௰) வச.௰௧. நியா.௰௮.௨௪. (௩௨) அதி.௪௪.௯. (௩௫) யாத்.௨௰.௰௨. லேவி.௰௯.௩௨. (௩௯) யாத்.௨௨.௰. யாத்.௨௨.௰௨. (௪௧) அதி.௨௯.௨௭,௨௮. (௪௨) சங்.௱௨௪.௧,௨. ஏசா.௮.௰௩. அதி.௨௯.௩௨. யாத்.௩.௭. ௧.நாளா.௰௨.௰௭. யூதா.௯. (௪௪) அதி.௨௬.௨௮. யோசு.௨௪.௨௭. (௪௫) அதி.௨௮.௰௮. (௪௮) யோசு.௨௪.௨௭. (௪௯) நியா.௰௧.௨௯. ௧.சாமு.௭.௫. (௫௩) அதி.௰௬.௫.

சொன்னான். அப்பொழுது யாக்கோபு, தன்
பிதாவாகிய ஈசாக்கின் பயபத்திக்கிடமானவ
௫௪ ரைக்கொண்டு ஆணையிட்டான்.—பின்பு யாக்
கோபு மலையின்மேற்பலியிட்டு, போசனம்பண்
ணும்படி தன் சகோதரரையழைத்தான்: அவர்
கள் போசனஞ்செய்து, மலையில் இராத்தங்கி
௫௫ னார்கள்.—லாபான் அதிகாலையிலெழுந்து தன்
புத்திர புத்திரிகளை முத்தமிட்டு, அவர்களை ஆ
சீர்வதித்தான்: பின்பு லாபான் புறப்பட்டு, தன
து இடத்துக்குத் திரும்பினான்.

## ௩௨. அதிகாரம்.

௧ யாக்கோபு தரிசனை பெறல்: ஏசாவுக்குநயமொ
ழிகூறியனுப்பல்: ௬. தூதர்திரும்பிவரல். யாக்
கோபு பிரார்த்தித்தல்:காணிக்கையை ஆயத்தப்
படுத்தல்: ௰௬. அதைஅனுப்பல்: ௨௪. யாக்கோ
பு தேவதூதரோடும் மல்லயுத்தஞ்செய்தல்: ௩௧.
பெனியேலைக் கடத்தல்.

பின்பு யாககோபு பிரயாணம்பண்ணுகையில்
௨ தேவதூதர்கள் அவனைச் சந்தித்தார்கள்.—யாக்
கோபு அவர்களைக்கண்டபொழுது, இது தேவ
னுடைய சேனையென்றுசொல்லி, அந்தஸ்தானத்
௩ துக்கு மகனாயீம் என்று பேரிட்டான்.—யாக்
கோபு தூதர்களை அழைத்து, நீங்கள் என் ஆண்ட
வனாகிய ஏசாவினிடத்துக்குப்போய், நான் இது
வரைக்கும் லாபானிடத்தில் தங்கியிருந்தே
௪ னென்றும்,—எனக்கு எருதுகளும், கழுதைக
ளும், ஆடுகளுமன்றிப் பணிவிடைக்காரரும், ப
ணிவிடைக்காரிகளும், உண்டென்றும்; உமது
தயவு எனக்குக்கிடைக்கத்தக்கதாக, என் ஆண்
டவனாகிய உமக்கு அறிவிக்கும்படி செய்தி அ
னுப்பினேனென்றும்; உம்முடைய தாசனாகிய
யாக்கோபு சொல்லச்சொன்னானென்கிறதாய்ச்
௫ சொல்லும்படி, கட்டளையிட்டு;—ஏதோம் நாட்
டிலுள்ள சேயீர் என்னும் ஊரிலிருக்கிற தன்
சகோதரனாகிய ஏசாவினிடத்திற்கு அவர்களைத்
தனக்குமுன்னே அனுப்பினான்.
௬ அந்தத்தூதர்கள் யாக்கோபினிடத்திற்குத்தி
ரும்பிவந்து, நாங்கள் உம்முடைய சகோதரனா
கிய ஏசாவினிடத்திற்குப் போய்வந்தோம்; அவ
ரும் நானூறுபேருடனே உம்மை எதிர்கொள்ள
௭ வருகிறார் என்றார்கள்.—அப்பொழுது யாக்கோ
புமிகவும் பயந்து வியாகுலப்பட்டு, ஏசாவு ஒரு
பகுதியை முறிய அடித்தாலும், மற்றப் பகுதி
௮ தப்பும்படி,—தன்னிடத்திலிருந்த சனங்களை
யும், ஆடுமாடுகளையும், ஒட்டகங்களையும், இரண்
௯ டு பகுதியாகப் பிரித்தான்.—பின்பு யாக்கோ
பு என்பிதாவாகிய ஆபிரகாமின் தேவனும்
என் பிதாவாகிய ஈசாக்கின் தேவனுமாயிருக்
கிறவரே; உன்தேசத்திற்கும், உன்சுற்றத்தாரிடத்
திற்கும், நீதிரும்பிப்போ; உனக்கு நன்மைசெய்
வேனென்று, என்னுடனே சொல்லியிருக்கிற
யெகோவாவே,—அடியேனுக்கு நீர்காட்டிய ௰
எந்தத்தயைக்கும், சத்தியத்திற்கும், நான் பாத்
திரனல்ல, நான் என்கோலோடே இந்த யோர்
தான்நதியைக் கடந்துபோனேன்; இப்பொழு
து இவ்விருபகுதிப்பரிவாரங்களையுமுடையவனா
னேன்.—என் சகோதரனாகிய ஏசாவு வந்து என் ௰௧
னையும், பிள்ளைகளையும், தாய்மார்களையும், முறிய
அடிப்பானென்று அஞ்சுகிறேன். ஆதலால் அவ
னுடைய கையில்நின்றும் என்னை இரட்சித்துக்
கொள்ளும்.—நான் உனக்கு மெய்யாகவே நன் ௰௨
மைசெய்து, மிகுதியினால் எண்ணிறந்த கடற்
கரை மணலைப்போல உன்சந்ததியைப்பெருகப்
பண்ணுவேனென்று, சொன்னீரே யென்றான்.—
அன்றிரவில் அவன் அங்கே தங்கி, தன் சகோதர ௰௩
னாகிய ஏசாவுக்கு வெகுமதியாக, தன் கைவசத்
திலுள்ளவற்றில்,—இருநூறுவெள்ளாடுகளையும், ௰௪
இருபது வெள்ளாட்டுக்கடாக்களையும், இருநூறு
செம்மறியாடுகளையும், இருபது ஆட்டுக்கடாக்க
ளையும்,-பால்கொடுக்கும் முப்பது ஒட்டகங்களை ௰௫
யும், அவைகளின்கன்றுகளையும், நாற்பது கடா
ரிகளையும், பத்துக்காளைகளையும், இருபது பெட்
டைக்கழுதைகளையும், பத்துக்கழுதைக்குட்டிக
ளையும், பிரித்து,-தன்பணிவிடைக்காரர் ஒவ்வொ ௰௬
ருவரிடத்தில் ஒவ்வொருகூட்டத்தை ஒப்பித்து,
நீங்கள் கூட்டத்துக்கும் கூட்டத்துக்கும், இ
டைவெளிவிட்டு, என்முன்னோட்டிக்கொண்டு
போங்களென்று அவர்களுடனே சொன்னான்.—
அன்றியும் முன்னே போகிறவனைநோக்கி, என் ௰௭
சகோதரனாகிய ஏசாவு உனக்கெதிர்ப்பட்டு, நீ
யாருடையவன். எங்கேபோகிறாய். உனக்கு
முன்போகிறவை யாருடையவையென்று, உன்
னிடத்திற் கேட்டால்;—நீ, இவை உமதடியா ௰௮
னாகிய யாக்கோபினுடையவை; இவை என்
ஆண்டவன் ஏசாவுக்கு அனுப்பப்பட்டிருக்கிற
வெகுமதி; பாரும், அவனும் எங்கள்பின்னே
வருகிறானென்று சொல்லும்படி கட்டளை யிட்
டான்.—பின்பு இரண்டாம் பகுதியில் போகி ௰௯
றவனையும், மூன்றாம் பகுதியில் போகிறவனை
யும், கூட்டங்களின் பின்னேபோகும் அனைவ
ரையும் நோக்கி, நீங்களும் ஏசாவைக்காணும்
பொழுது,—உமதடியானாகிய யாக்கோபு எங் ௨௰
கள்பின்னே வருகிறான் பாருமென்றுசொல்லி,
முன்குறித்த அந்தப்பிரகாரமுஞ் சொல்லுங்க
ளென்று கட்டளையிட்டான். முன்னே வெகும
தியை அனுப்பி, அவனைச்சாந்தப்படுத்திப்பின்பு
அவனுடையமுகத்தைக்காண்பேன். அப்பொ
ழுது அவன் என்னை அங்கிகரிக்கவுங் கூடு
மென்றுசொன்னான்.—அந்தப்படி வெகுமதி அ ௨௧
வனுக்குமுன் போயிற்று. அவனோ அன்றிரவு

(௫௫) அதி.௨௮.௧. அதி.௰௮.௩௩. அதி.௩௰.௨௫. (௩௨. அதி. ௧.) சங்.௯௧ ௰௧. எபி.௧ ௰௪. (௨) யோசு.௫.௰௪. சங்.௱௩.௨௧. லூக்.௨.௰௩. (௩) அதி.௩௩.௰௪,௰௬. யோசு.௨௪.௪. (௪) நீதி ௰௫.௧. (௫) அதி.௩௰.௪௩. அதி.௩௩. ௮,௰௫. (௬) அதி.௩௩.௧. (௭) அதி.௩௫ ௩. (௯) சங்.௫௰.௰௫. அதி.௨௮.௰௩. அதி.௩௧.௩,௰௩. (௰) அதி.௨௪.௨௭. யோபு.௮.௭. (௰௧) சங்.௫௯.௧,௨. ஓசே.௰.௰௪. (௰௨) அதி.௨௮.௰௩,௰௪,௰௫. (௰௩) அதி.௪௩.௰௧. நீதி.௰௮.௰௬. (௨௰) நீதி.௨௧.௰௪. யோபு.௪௨.௮,௯.

௨௨ பாளயத்தில் தங்கினான்.—பின்பு அன்றிரவி
லே தானே எழுந்து, தன் இரண்டு மனைவிகளை
யும், தன்னிரண்டு பணிவிடைக்காரிகளையும்,
தன்னுடைய பதினொருபுத்திரரையுங் கூட்டிக்
கொண்டு, யாப்போக்கு ஆற்றின் துறையைக்
௨௩ கடந்தான்.—அவர்களையுஞ்சேர்த்து ஆற்றுக்கப்
புறப்படுத்தினதுமன்றி, தனக்குண்டானவற்றை
யும் அக்கரைப்படுத்தினான்.
௨௪ யாக்கோபு தனியேயிருந்தான். ஒருவர்,பொ
ழுது விடியுமளவும், அவனுடனே மல்லயுத்தஞ்
செய்து, அவனைச்செயிக்கக் கூடாதென்று கண்
டு, அவனுடைய இடுப்புச்சந்தைத்தட்டினார்.—
௨௫ இவ்வண்ணம், அவருடனே போராடுகையில்,
௨௬ யாக்கோபின் இடுப்புச்சந்து சுளுக்கிற்று.—பின்
பு அவர், என்னைப் போகவிடு; பொழுதுவிடி
கின்றதென்றுசொல்ல; இவன், நீர்என்னை ஆசீர்
வதித்தாலொழிய, உம்மைப் போகவிடேனென்
௨௭ றான்.-அவர், உன்பெயர் என்னவென்றுகேட்க;
௨௮ இவன் யாக்கோபு என்றான்.—அவர், நீ ஒரு பிர
புவைப்போல, தேவனைச் செயித்ததுமன்றி,
மனிதனையுஞ் செயிப்பாய்;ஆதலால் உன்பெயர்
இனி யாக்கோபென்றுவழங்கப்படாமல், இஸர
௨௯ வேல் என்று வழங்கப்படுமென்றார்.—யாக்கோ
பு, உமது நாமத்தை எனக்கு அறிவிக்கவேண்டு
மென்றுகேட்க; அவர், நீ என் நாமத்தைக்கேட்
பானேன் என்று சொல்லி, அங்கே அவனை ஆசீர்
௩௰ வதித்தார்.—யாக்கோபு, நான் முகம்முகமாய்த்
தேவனைத் தரிசித்தேன். என்சீவன் இரட்சிக்
கப்பட்டதென்று சொல்லி, அந்தஸ்தானத்துக்
குப்பெனியேல்என்று பேரிட்டான்.
௩௧ பெனியேலை அவன்கடந்துபோகையில், சூரி
யன் உதயமாயிற்று. அவன் இடுப்புச்சந்துவாங்
௩௨ கலாயிருந்தான்.—அவர் யாக்கோபினுடைய இ
டுப்பின்சந்து நரம்பைத்தொட்டபடியால், இஸர
வேல்சந்ததியார், இந்நாள்வரைக்கும், இடுப்பின்
சந்திலிருக்கிறநரம்பைப்புசியாதிருக்கிறார்கள்.

## ௩௩. அதிகாரம்.

௧. யாக்கோபு ஏசாவைச்சந்தித்தல்: ௰௬.யாக்கோபு சுக்கோத்திற்சேர்தல்:௰௮.யாக்கோபு ஷிகேம் ஊரில் ஓர்நிலம்வாங்கி அங்கே வேதிகையுண்டாக்கல்.

யாக்கோபு கண்ணேறிட்டுப்பார்த்து, ஏசாவு
நானூறுபேருடனே வருவதைக்கண்டான். அப்
பொழுதுஅவன்பிள்ளைகளை,லேயாளிடத்திலும்,
ராகேலிடத்திலும், இரண்டு பணிவிடைக்காரிக
௨ ளிடத்திலும் பிரித்துவைத்து;-பணிவிடைக்கா
ரிகளையும், அவர்கள்பிள்ளைகளையும், முதலிலும்;
லேயாளையும், அவள்பிள்ளைகளையும், இடையி
லும்; ராகேலையும், யோசேப்பையும், கடைசியி
லும் நிறுத்தி;—தான் அவர்களுக்கு முன்பாக ந ௩
டந்துபோய், பூமிக்குநேராக ஏழுதரந்தாழ்ந்து
வணங்கி, தன் சகோதரனைச் சமீபித்தான்.—
ஏசாவு எதிர்கொண்டோடிவந்து, அவனைத்தழு ௪
வி, அவனுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு
முத்தஞ்செய்தான்; இருவரும் அழுதார்கள்.—
அவன் பார்வை செலுத்திப்பார்த்து, ஸ்திரிகளை ௫
யும், பிள்ளைகளையுங்கண்டு, உன்னுடனேவந்த
இவர்கள்ஆரென்றான். அதற்கு இவன் தேவன்
உமதடியானுக்கருளிய பிள்ளைகளென்றான்.—
பின்பு பணிவிடைக்காரிகளும், அவர்கள் பிள் ௬
ளைகளுஞ்சேர்ந்து வணங்கினார்கள்.-லேயாளும் ௭
அவள் பிள்ளைகளுஞ்சேர்ந்து வணங்கினார்கள்.
பின்பு யோசேப்பும் ராகேலும்சேர்ந்து வணங்கி
னார்கள்.—அப்பொழுது அவன், எனக்கெதிரே ௮
வந்த கூட்டமெல்லாங்கணடேன். இது என்
னவென்றான். அதற்கு இவன், என் ஆண்டவனா
கிய உமதுதயை பெறும்படியாகவென்றான்.—
ஏசாவு என் சகோதரனே, எனக்குள்ளது எனக் ௯
குப்போதும். உன்னுடையது உன்னிடத்திலி
ருக்கட்டும், என்றான்.—அதற்கு யாக்கோபு அப் ௰
படியல்ல; உமதுதயை என்மேலுண்டானால்,
என் வெகுமதியை என் கையிலிருந்து ஏற்றுக்
கொள்ளும். நீர் என்மேல் அன்பாயிருக்கிறீர்.
நான் உமது முகத்தைத் தரிசித்தது, தேவனு
டைய முகத்தைத் தரிசித்ததுபோலாயிற்று.—
உமக்குக்கொண்டுவரப்பட்ட என் வெகுமானத் ௰௧
தை ஏற்றுக்கொள்ளும். தேவன் எனக்கு அருள்
செய்திருக்கிறாரே. சம்பூரணமாய் எனக்கிருக்
கிறதேயென்றுசொல்லி மிகவும் அவனை வருந்
திக் கேட்டுக்கொண்டான். அதனால் அவன்
அதை ஏற்றுக்கொண்டான்.—பின்பு அவன், ௰௨
புறப்பட்டுப்போவோம். நான் உனக்குமுன்
நடப்பேனென்றான்.—அதற்கு இவன் பிள்ளை ௰௩
கள் சிறுவரென்றும், கறவையான ஆடுமாடுகள்
என்னிடத்திலுண்டென்றும், என் ஆண்டவ
னாகிய நீர் அறிந்திருக்கிறீர்; அவைகளை ஒருதின
மாத்திரத்தில் வேகமாய் ஓட்டினால், ஆடுமாடுக
ளெல்லாஞ் செத்துப்போம்.—என் ஆண்டவ ௰௪
னாகிய நீர், உமதடியானுக்குமுன்னேதான் போ
வீராக. நான் சேயீருக்கு என் ஆண்டவனாகிய
உம்மிடத்தில் வருமளவும், எனக்குமுன்போகிற
கூட்டங்களுடைய நடைக்கும், பிள்ளைகளு
டைய நடைக்குந்தக்கதாக, மெள்ள அவைகளை
நடத்திக்கொண்டு வருகிறேனென்று சொன்
னான்.—ஏசாவு என்னிடத்திலிருக்கிற சனங்க ௰௫
ளிற் சிலரை நான் உன்னிடத்தில் விடுகிறே
னென்று சொல்ல; அவன் அப்படிச்செய்ய
வேண்டியதென்ன; என் ஆண்டவனாகிய உமது

(௨௨) உபா.௩.௰௬. (௨௪) ஓசே.௰௨.௩,௪. எபே.௬.௰௨. (௨௫) மத்.௨௬.௪௧. ௨.கொரி.௰௨.௭. (௨௬) லூக்.௨௪.௨௮. ஓசே.௰௨.௪. (௨௮) ௨.இரா.௰௭.௩௪. ஓசே.௰௨ ௩,௪. (௨௯) நியா.௰௩.௰௮. (௩௰) அதி.௰௬.௰௩. யாத்.௨௪.௰௧. உபா.௫.௨௪. நியா.௬.௨௨. ஏசா.௬.௫. (௩௩. அதி. ௧.) அதி.௩௨.௬. (௩) அதி.௰௮.௨ அதி.௪௨.௬. அதி.௪௩.௨௬. (௪) அதி.௩௨.௨௮. அதி.௪௫.௰௪,௰௫. (௫) சங்.௱௨௭.௩. ஏசா.௮.௰௮. (௮) அதி.௩௨.௰௬. அதி.௩௨.௫. (௰) ௨.சாமு.௩.௰௩. மத்.௰௮ ௰. (௰௧) நியா.௧.௰௫. ௧.சாமு.௨௫.௨௭. ௨.இரா.௫.௰௫. பிலி.௪.௰௮. ௨.இரா.௫.௨௩. (௰௪) அதி.௩௨.௩. (௰௫) அதி.௩௪.௰௧. ரூத்.௨.௰௩.

தயை என்மேலுண்டானாற் போதுமென்றான்.
௰௬ ஏசாவு அந்தத்தினத்தில் திரும்பித்தான்வந்த
௰௭ வழியே சேயீருக்குப்போனான்.–யாக்கோபு சுக்
கோத்தென்னும் ஸ்தலத்திற்போய், தனக்கொரு
வீடுகட்டினதுமன்றி, தன் ஆடுமாடுகளுக்குக்
குடிசைகளையும் உண்டுபண்ணினான்; அதினால்
அந்த ஸ்தலத்துக்குச் சுக்கோத்தென்று பேரிடப்
பட்டது.

௰௮ யாக்கோபு, பதானாராமைவிட்டு வந்தபின் கா
னான் தேசத்திலுள்ள ஷாலெம் என்னுஞ் ஷிகே
மினுடைய பட்டணத்திற்கருகேசென்று, அதற்
௰௯ கெதிரே கூடாரத்தைப்போட்டான்.—தான் கூ
டாரம்போட்ட வெளியிலே,ஷிகேமின்பிதாவா
கிய காமோர் புத்திரரிடத்திலே நூறு வெள்ளிக்
௨௰ காசுக்கு ஒரு நிலத்தை வாங்கினான்.–அவ்விடத்
தில் ஒரு வேதிகையையுண்டாக்கி, அதற்கு எல்
எலோகேஇஸரவேலென்று பேரிட்டான்.

## ௩௪. அதிகாரம்.

௧. ஷிகேம் என்பவனோடே தீனாள் நெறிகேடா யொழுகல்: விருத்தசேதனத்துக்குடன்படும் படிபேசல்: ௨௰. காமோரும் ஷிகேமும், சனங்களிடத்தில் பேசினமையால் அவர்கள் விருத்தசேதனத்துக்குடன்படல்: ௨௫. சனங்கள் விருத்தசேதனத்தினால் வாதையாயிருக்கையில் யாக்கோபின் புத்திரர் இருவரும் அவர்கள் மேல் விழுந்துகொல்லலும் கொள்ளை ஆடலும்: ௩௰. யாக்கோபு ஷிமியோனையும் லேவியையுங் கண்டித்தல்.

யாக்கோபுக்கும், லேயாளுக்கும், புத்திரியாகிய
தீனாள் அந்தத்தேசத்துக் கன்னிகைகளைக்காணப்
௨ புறப்பட்டாள்.—அவளை ஈவியனான காமோர்
என்னும் அந்தத்தேசத்து அதிபதியின் புத்திரனா
கிய ஷிகேம்கண்டு, அபகரித்து, அவளுடனேச
௩ யனித்து, அவளை மானபங்கப்படுத்தினான்.—அ
வனுடையமனம் யாக்கோபின் புத்திரி தீனாளின்
மேல்பதிந்திருந்தது. அவன் அந்தப்பெண்ணை
நேசித்து அவள்மனதுக்கு இங்கிதமாகப்பேசிக்
௪ கொண்டுவந்தான்.—மேலும் ஷிகேம் தன் பிதா
வாகிய காமோரைநோக்கி, இந்தப்பெண் எனக்
குமனைவியாயிருக்கும்படி செய்யவேண்டும் என்
௫ றுசொன்னான்.—யாக்கோபு தன் புத்திரியாகிய
தீனாளை அவன் அசுசிப்படுத்தினதைக் கேள்விப்
பட்டான். அப்பொழுது அவன்புத்திரர் வயல்
வெளியில் அவனுடைய மந்தையினிடத்திலி
ருந்தார்கள்: அவர்கள் வருமளவும் யாக்கோபு
௬ பேசாமலிருந்தான்.–அத்தருணத்தில் ஷிகேமின்
பிதாவாகிய காமோர் புறப்பட்டு யாக்கோபோ
௭ டே பேசும்படி அவனிடத்தில்வந்தான்.—யாக்
கோபின் புத்திரரும் நடந்ததைக்கேள்விப்பட்ட
மாத்திரத்தில், வயல்வெளியைவிட்டுவந்தார்கள்.
அவன் யாக்கோபின் புத்திரியோடே இஸரவே
லுக்குவிரோதமாய்ப் பலாற்காரமாகச்சயனித்து,
செய்யத்தகாத துர்ச்செய்கையைச் செய்ததைக்
குறித்து அந்தமனிதர் மனம்நொந்து மிகவுங்கோ
பங்கொண்டார்கள்.—காமோர் அவர்களோடே ௮
சம்பாஷித்துக்கொண்டு, என்புத்திரனாகியஷிகே
மினுடைய மனது உங்கள் புத்திரியைப் பற்றிக்
கொண்டிருக்கின்றது. ஆகையால் அவளை அவ
னுக்கு மனைவியாகக்கொடுக்கும்படி வேண்டிக்
கொள்ளுகிறேன்.—உங்கள்குமாரத்திகளை எங்க ௯
ளுக்குள்ளே கொடுத்தும், எங்கள் குமாரத்திகளை
உங்களுக்குள்ளே கொண்டும், இப்படி எங்களு
டனேசம்பந்தமாயிருங்கள்.—எங்களுடனேவா ௰
சம்பண்ணுங்கள். இந்தத்தேசம் உங்கள்முன்பா
க இருக்கின்றது இதில்வாசம்பண்ணி வியாபா
ரஞ்செய்து, பொருளைச் சேர்த்துக்கொள்ளுங்க
ளென்றுசொன்னான்.–ஷிகேமும், அவளுடைய ௰௧
பிதாவையும், அவள்சகோதரரையும்நோக்கி, உங்
கள் தயை எனக்குக்கிடைக்கவேண்டும்; நீங்கள்
என்னிடத்தில் எதைக்கேட்டாலுந் தருவேன்.-
பரிசமும், நன்கொடையும், நீங்கள் என்னிடத் ௰௨
தில் எவ்வளவுகேட்டாலும், உங்கள்சொற்படி
தருவேன்: அந்தப்பெண்ணை எனக்குமனைவியா
கக்கொடுக்கவேண்டுமென்று சொன்னான்.-யாக் ௰௩
கோபின் புத்திரர் தங்கள் சகோதரியாகிய தீனா
ளை, ஷிகேம் அசுசிப்படுத்தினதினிமித்தம், அவ
னுக்கும், அவன்பிதாவாகிய காமோருக்கும் சூ
தான மறுமொழியாக,—விருத்தசேதனமில்லாத ௰௪
மனிதனுக்கு எங்கள்சகோதரியை நாங்கள்கொ
டுக்கிறது எங்களாலாகாது: அது எங்களுக்கு நிந்
தையாயிருக்கும்.—நீங்களும், உங்களுக்குள்ளி ௰௫
ருக்கிற ஆண்மக்களனைவரும், விருத்தசேதனம்
பண்ணப்பட்டு, எங்களைப்போலாவீர்களாகில்,
நாங்கள் சம்மதித்து,—உங்களுக்கு எங்கள் குமா ௰௬
ரத்திகளைக் கொடுத்தும், உங்கள் குமாரத்திகளை
நாங்கள்கொண்டும், ஒரேகூட்டமாகவாசம்பண்
ணுவோம்.—விருத்தசேதனம் பண்ணிக்கொள் ௰௭
வதற்கு எங்கள் சொற்கேளாமல், போவீர்களா
கில், நாங்கள் எங்கள் குமாரத்தியை அழைத்துக்
கொண்டுபோய்விடுவோமென்று சொன்னார்கள்.
அவர்களுடைய வாக்கினாலே காமோரும், கா ௰௮
மோரின் புத்திரனாகிய ஷிகேமும், சந்தோஷப்
பட்டார்கள்.—அந்த வாலிபன் யாக்கோபினு ௰௯
டைய குமாரத்தியை மிகவும்விரும்பினதினால்,
அவன் அதைச்செய்வதில் தாமதப்படவில்லை.
அவன் தன் பிதாவின் குடும்பத்தாரனைவருக்குள்
ளும் அதிகமேன்மை யுள்ளவன்.
காமோரும் அவன்புத்திரன் ஷிகேமும், தங் ௨௰
கள் பட்டணவாசலிற்சென்று, தங்கள் பட்ட
ணத்துமனிதருடனே சம்பாஷித்துக்கொண்டு,–

(௰௭) யோசு.௰௩.௨௭. (௰௮) யோவா.௩.௨௩. அப்.௭.௰௬. யோசு.௨௪.௧. (௰௯) யோசு.௨௪.௩௨. யோவா.௪.௫. அப்.௭.௰௬. (௨௰) அதி.௩௫.௭. (௩௪. அதி. ௧.) தீத்.௨.௫. (௨) நியா.௰௪.௧. அதி.௨௰.௨. உபா.௨௨.௨௯. எசா. ௪௰.௨. (௪) நியா.௰௪.௨. (௫) ௧.சாமு.௰.௨௭. ௨.சாமு.௰௩.௨௨. (௭) அதி.௪௯.௭. ௨.சாமு.௰௩.௨௧. யோசு.௭. ௰௫. நியா.௨௰.௬. உபா.௨௩.௰௭. ௨.சாமு.௰௩.௰௨. (௰) அதி.௰௩.௯. அதி.௪௨.௩௪. அதி.௪௭.௨௭. (௰௨) யாத். ௨௨.௰௬,௰௭. (௰௩) ௨.சாமு.௰௩.௨௪. (௰௪) யோசு.௫.௯. (௰௯) ௧.நளா.௪.௯.

உக அந்தமனிதர் நம்முடனே சமாதானமா யிருக்கி
றார்கள், ஆகையால் அவர்கள் இந்தத்தேசத்தில்
வாசம்பண்ணி இதிலே வியாபாரஞ் செய்வார்க
ளாக. இந்தத்தேசம் அவர்களும் வசித்திருக்க
விஸ்தாரம்போதுமே. அவர்களுடைய குமாரத்
திகளை நமக்குமனைவிகளாக்கிக்கொள்ளவும், நம்
முடைய குமாரத்திகளை அவர்களுக்குக் கொடுக்
உஉ கவுங்கடவோம்.—விருத்தசேதனத்தை யுடைய
அந்தமனிதரைப்போல, நம்மிலுள்ள ஆண்மக்க
ளனைவரும், விருத்த சேதனம் பண்ணப்பட்
டால், அவர்கள் நம்முடனே ஒரே சனமாக
உங வாசம் பண்ணுவதற்குச் சம்மதிப்பார்கள்.—அ
வர்களுடைய பொருள்கள் ஆடுமாடுகள் மிருக
சீவன்கள்யாவும், நமக்குங் கிடைக்குமல்லவா.
அவர்களுக்குச்சம்மதித்தோமாகில், நம்முடனே
உச வாசம் பண்ணுவார்களென்றார்கள்.—அப்பொ
ழுது காமோரின் பட்டணவாசலிற் புறப்பட்டு
வரும் அனைவரும், அவனுடைய சொல்லையும்,
அவன் புத்திரனாகிய ஷிகேமின் சொல்லையுங்
கேட்டு, ஆண்மக்கள் யாவரும் விருத்தசேதனம்
பண்ணப்பட்டார்கள்.
உரு மூன்றாம் நாளில் யாக்கோபின் புத்திரரும் தீ
னாளின் சகோதரருமான ஷிமியோன், லேவி,
என்னுமிவ்விருவரும், தன் தன் கத்தியையெடுத்
துக்கொண்டு,துணிகரமாய்அந்தப்பட்டணத்துக்
குள்ளேபுகுந்து, அந்தப்புருஷர் வருத்தமாயிருக்
கையில், அவர்கள் யாவரையுங்கொன்றார்கள்.—
உசு காமோரையும், அவன்குமாரன் ஷிகேமையும்,
கத்திவாயினாலே கொலைசெய்து, ஷிகேமின்வீட்
டிலிருந்த தீனாளை அழைத்துக்கொண்டு போனார்
உஎ கள்.—மேலும் யாக்கோபின் புத்திரர் தங்கள்ச
கோதரியை அசுசிப்படுத்தினதின் நிமித்தம்,—
உஅ வெட்டுண்டவர்களிடத்திற்சேர்ந்து, பட்டணத்
உகூ தைக் கொள்ளையிட்டார்கள்.—அவர்களுடைய
பட்டணத்திலும் வயல்வெளியிலுமுள்ள ஆடு
மாடுகளையும், கழுதைகளையுங்கவர்ந்து, அவர்க
ளுடைய குழந்தைகளையும்,ஸ்திரிகளையுஞ்சிறை
பிடித்து, பொருள்முழுவதையும், வீட்டிலுள்ள
ஙய சகலத்தையுங்கொள்ளையிட்டார்கள்.—அப்பொ
ழுது யாக்கோபு ஷிமியோனையும், லேவியை
யும்நோக்கி, இந்தத்தேசத்திலுள்ள கானானியருக்
குள்ளும், பெரீசியருக்குள்ளும், நீங்கள் என்னை
ஓர் துர்க்கந்தம்போலாக்கினதினால் என்னைக் க
லங்கப்பண்ணினீர்கள். என்னைச்சேர்ந்த சனங்
கள் சிலரென்று, எனக்கு விரோதமாயெழும்பிக்
கூட்டங்கூடி, நானும் என்குடும்பமும் அழியும்
படி, என்னைச் சேதிப்பார்களென்று சொன்
ஙக னான்.—அதற்கு அவர்கள் எங்கள்சகோதரியை,
அவர்களொரு வேசையைப்போல, நடத்தலாமா
என்றார்கள்.

## ஙரு. அதிகாரம்.

க. தேவன் யாக்கோபைப்பெத்தேலுக்கு அனுப்
பல்: உ. அவன் தன் குடும்பத்திலுள்ள விக்கிர
கங்களையகற்றல்: சு. அங்கே ஓர்வேதிகையை
யுண்டாக்கல்: தெபோராளின்மரணம்: கூ. தே
வன் பெத்தேலிலே யாக்கோபை ஆசீர்வதித்
தல்: யசு. மிகவும் பிரசவவேதனைப்பட்டு ரா
கேல் மரித்தல்: உக. யாக்கோபின் வமிசவர
லாறு: உஎ. ஈசாக்கு மரித்து அடக்கம்பண்ணப்
படல்.

தேவன்யாக்கோபை நோக்கி, நீ எழுந்து பெத் க
தேலுக்குப்போய் தங்கி, முன்னே நீ உன்சகோ
தரனாகிய ஏசாவின் முகத்துக்குத்தப்பி ஓடின
காலத்தில், உனக்குத்தரிசனமான தேவனுக்கு
அங்கே ஒருவேதிகையை உண்டுபண்ணென்று
சொன்னார்.—அப்பொழுது யாக்கோபு தன்கு உ
டும்பத்தாரையும், தன்னிடத்திலுள்ள மற்றயாவ
ரையும் நோக்கி, உங்களுக்குள்ளிருக்கிற அந்நி
ய தெய்வங்களையகற்றி, உங்கள் வஸ்திரங்களை
மாற்றி, உங்களைச்சுத்திசெய்யுங்கள்.—நாம் எழுந் ங
து பெத்தேலுக்குப்போவோம்வாருங்கள். எனக்
கு ஆபத்துநேரிட்டநாளில், என் பிரார்த்தனை
யைக்கேட்டு, நான் நடந்தவழியில் என்பட்ச
மாயிருந்த தேவனுக்கு ஒருவேதிகையையுண்
டுபண்ணுவேனென்று சொன்னான்.—அவர்கள் ச
தங்கள் கைவசத்திலுள்ள அந்நிய தெய்வங்கள்
யாவையும், தங்கள் காதுகளின் அணியாகிய கு
ழைகளையும் யாக்கோபின் வசம் ஒப்பித்தார்கள்.
அவைகளை யாக்கோபு ஷிகேமின்பட்டணத்தரு
கே நின்ற ஒரு அல்லோன் மரத்தின்கீழே புதைத்
தான்.—பின்பு அவர்கள் பிரயாணமாய்ப் புறப் ரு
பட்டார்கள். நான்கு திசையிலிருக்கிற பட்ட
ணங்களிலுள்ளவர்கள் தேவனால் பயமடைந்
ததின் நிமித்தம், யாக்கோபின் புத்திரரைத் தொ
டராதிருந்தார்கள்.

யாக்கோபு தன்னுடனிருந்த சனங்கள்யாவ சு
ரோடும், கானான் தேசத்திலுள்ள பெத்தேலாகிய
லூசூரிலே சேர்ந்தான்.—அங்கே அவன் ஒருவே எ
திகையையுண்டாக்கி, தான், தன் சகோதரன்மு
கத்திற்குத் தப்பி யோடினபொழுது, அங்கேத
னக்குத் தேவன் தரிசனமானபடியால், அத்த
லத்துக்கு எல்பெத்தேல் என்றுபேரிட்டான்.—
ரிபெக்காளின் தாதியாகிய தெபோராள்மரித்து, அ
பெத்தேலுக்குச் சமீபமான ஒரு அல்லோன்மரத்
தின்கீழ் அடக்கம்பண்ணப்பட்டாள் அதினால்
அதற்குஅல்லோன்பாகுத்தென்னும்பேராயிற்று.
யாக்கோபு பதானாராமிலிருந்து வருகையில், கூ
தேவன் திரும்பவும்தரிசனமாகி, அவனைஆசீர்
வதித்தார்.—அன்றியுந் தேவன் அவனைநோக் ய
கி, இப்பொழுது உன்பேர் யாக்கோபு. இனி

(உச) அதி.உகூ.ய. (உரு) அதி.சகூ.ரு. (ஙய) யோசு.எ.உரு. யாத்.ரு.உக. உபா.ச.உஎ. சங்.ாரு.யஉ. (ஙரு. அதி.க.) அதி.உஅ.யங. அதி.உஅ.யகூ. அதி.உஎ.சங. (உ) அதி.யஅ.யகூ. யோசு.உச.யரு. யோசு.உச.உ,உங. க.சாமு.எ.ங. யாத்.யகூ.யக. (ங) சங்.ாஎ.சு. அதி.உஅ.உய. (ச) ஓசே.உ.யங. யோசு.உச.உசு. நியா.கூ.சு. (ரு) யாத்.யரு.யஎ. யோசு.உ.கூ. யோசு.ரு.க. க.சாமு.யச.யரு. (சு) அதி.உஅ.யக,உஉ. (எ) பிர.ரு.ச.அதி.உஅ யங. (அ) அதி.உச.ருகூ. (கூ) ஓசே.யஉ.ச. (ய) அதி.யஎ.ரு. அதி.ஙஉ.உஅ.

உன்பேர் யாக்கோபென்று வழங்காமல், இஸர
வேலென்று வழங்குமென்று சொல்லி, அவ
னுக்கு இஸரவேலென்னும் நாமஞ்சூட்டினார்.—
௰௧ பின்பு தேவன் அவனை நோக்கி, நான் சருவ
வல்லமையுள்ள தேவன். நீ பல்கிப் பெருகு
வாயாக. ஒருசாதியார் மாத்திரமல்ல, பலசாதி
யாரும் உன்னிலிருந்து தோன்றுவார்கள். இரா
௰௨ சாக்களும் உன்வழியாய்ப் பிறப்பார்கள்.—நான்
ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், அளித்த தேசத்
தை உனக்கும் அளிப்பேன். உன்பின் சந்ததிக்
கும் இத்தேசத்தை அளிப்பேனென்று சொன்
௰௩ னார்.—தேவன் அவனுடனே சம்பாஷித்தஸ்த
லத்தில் நின்று அவனைவிட்டெழுந்தருளினார்.—
௰௪ அப்பொழுது யாக்கோபு தன்னுடனே அவர் சம்
பாஷித்த ஸ்தலத்தில், ஒரு கற்றூணை நிறுத்தி,
அதின்மேற் பானபலியைச் சொரிந்ததுமன்றி,
௰௫ எண்ணெயையுமூற்றினான்.-யாக்கோபு தேவன்
தன்னுடனே சம்பாஷித்த அந்த ஸ்தலத்துக்குப்
பெத்தேலென்று பேரிட்டான்.
௰௬ பின்பு அவர்கள் பெத்தேலைவிட்டுப் பிரயா
ணமாய்ப் போனார்கள். எப்ருத்தாவுக்குச் சற்
றுத்தூரமாகிய ஒரு இடத்தில், ராகேல் பிரசவித்
௰௭ தபொழுது, மிகவும் வேதனைப்பட்டாள்.—பிர
சவகாலத்தில், அவளுக்கு மிகுந்த வேதனையுண்
டாயிருக்கையில், மருத்துவிச்சி அவளுடனே,
நீ பயப்படவேண்டாம். இந்தமுறையும் புத்தி
௰௮ ரனைப் பெறுவாயென்று சொன்னாள்.—மரண
காலத்தில், அவள் ஆத்துமம் பிரியுமளவில், அ
வள் அவனுக்குப் பெனோனியென்று பேரிட்
டாள். அவனுடைய பிதாவோ, அவனுக்குப்
௰௯ பேன்யாமீன் என்று பேரிட்டான்.—ராகேல்
மரித்துப் பேத்லகேம் என்ற எப்ருத்தூருக்குப்
போகிறவழியில் அடக்கம் பண்ணப்பட்டாள்.-
௨௰ யாக்கோபு அவள் பிரேதக்குழியில் ஒரு தூணை
நிறுத்தினான் அதற்கு இந்நாள்வரைக்கும் ராகே
லின் பிரேதக்குழித்தூண் என்னும்பேர் வழங்கி
வருகின்றது.
௨௧ இஸரவேல் பிரயாணமாய்ப்போய், ஏதெர்
என்னுங்கோபுரத்துக்கு அப்புறத்தே, தன்கூடா
௨௨ ரத்தைப் போட்டான்.—இஸரவேல் அந்தத்தே
சத்திலே தங்கியிருக்கையில், ரூபேன் தன் பிதா
வின் மறுமனையாட்டியாகிய பில்க்காளுடனே
சயனித்தான். அதை இஸரவேல் கேள்விப்பட்
௨௩ டான்.-யாக்கோபின்புத்திரர் பன்னிருவர். யாக்
கோபுக்குச் சேஷ்டபுத்திரனானரூபேனும்,ஷிம்
யோனும், லேவியும், யூதாவும், ஈஷகாரும், செ
புலோனுமாகிய இவர்கள், லேயாள் பெற்ற புத்
௨௪ திரர்.—யோசேப்பு, பேன்யாமீன் என்னுமிவர்
௨௫ கள் ராகேல் பெற்றபுத்திரர்.—தாண், நப்தாலி,
என்னுமிவர்கள் ராகேலுடைய பணிவிடைக்கா
ரியாகிய பில்க்காள் பெற்றபுத்திரர்.—காத்து, ஆ ௨௬
ஷேர் என்னுமிவர்கள் லேயாளின் பணிவி
டைக்காரியாகிய சில்ப்பாள் பெற்றபுத்திரர். ப
தானாராமில் யாக்கோபுக்குப் பிறந்தபுத்திரர் இ
வர்களே.
பின்பு யாக்கோபு, ஆபிரகாமும், ஈசாக்குந் ௨௭
தங்கிவந்த எபிரோன் என்னும் அர்பாவினுடைய
ஊராகிய மம்ரேயிலிருந்த தன் பிதாவான ஈசாக்
கினிடத்திற் சேர்ந்தான்.—ஈசாக்கு விருத்தாப் ௨௮
பியமும், பூரணாயுசுமுள்ளவனாகி, நூற்றெண்ப
துவருஷஞ் சீவித்திருந்து,—பிராணனை விட்டு ௨௯
மரித்துத் தன் சனங்களுடனே சேர்க்கப்பட்
டான். அவனுடையபுத்திரராகிய ஏசாவும், யாக்
கோபும், அவனையடக்கம் பண்ணினார்கள்.

## ௩௬. அதிகாரம்.

௧. ஏசாவினாற்றோன்றிய கானானியர் வமிசவரலாறு: ௬. சேயீர் மலைக்குப்போய்த்தங்கல்: ௯. சேயீர் மலையிலுள்ள அவன் வமிசவரலாறு: ௰௫ அவன் புத்திரர் வழியாய்த்தோன்றிய இராசாக்களின் நாமங்கள்: ௨௰. சேயீர் என்பவனுடைய வமிசவரலாறு: ௩௧. ஏதோமி இராசாக்களின் நாமங்கள்: ஏசாவினாற் றோன்றிய இராசாக்களின் நாமங்கள்.

ஏதோம் என்னும் ஏசாவின் வமிசவரலாறு;— ௧
ஏசாவு கானானியர் குமாரத்திகளில் ஏத்தியனான ௨
ஏலோனுக்குப் புத்திரியாகிய ஆதாளையும், எவி
யனாகிய சிபியோனுக்குப் பாட்டியும், ஆனாகின்
புத்திரியுமான அகோலிபாமாளையும்,—இஷ்மா ௩
வேலின் புத்திரியும் நெபாயோத்தின் சகோதரியு
மான பஸ்மாத்தையும், விவாகம்பண்ணியிருந்
தான்.-ஆதாள், ஏசாவுக்கு எலீபாசைப்பெற்றாள். ௪
பஸ்மாத்து, ரேகுவேலைப்பெற்றாள்.—அகோலி ௫
பாமாள், எயூஷையும், யாலாமையும், கோராகை
யும், பெற்றாள்: இவர்களே கானான்தேசத்திலே
ஏசாவுக்குப்பிறந்த புத்திரர்.
அவர்களுக்குண்டான பொருள் மிகுதியாயி ௬
ருந்ததினால் சேர்ந்து குடியிருக்கக்கூடாமற்போ
யிற்று. ஆடுமாடுகளினிமித்தமும், அவர்கள் சஞ்
சரித்த பூமி அவர்களைத்தாங்கக்கூடாததாயிருந்த
து.—ஆதலால் ஏசாவு தன் மனைவிகளையும், தன் ௭
புத்திரரையும், தன் புத்திரிகளையும், தன் வீட்டி
லுள்ளயாவரையும், தன் ஆடுமாடுகளையும், மற்
றச் சீவசெந்துக்கள் யாவையும், தான் கானான்
தேசத்திற்சம்பாதித்த பொருள்களெல்லாவற்றை
யுஞ் சேர்த்துக்கொண்டு, தன் சகோதரனாகிய
யாக்கோபின் முகத்துக்கு விலகி, அந்நிய தேசத்
திற்குப்புறப்பட்டான்.—இப்படியே ஏசாவு, சே ௮
யீர் மலையில் வாசம்பண்ணுகிறவனானான்.

(௰௧) அதி.௰௭.௧. அதி.௪௮.௩,௪. யாத்.௬.௩. அதி.௰௭.௫,௬,௰௬. அதி.௨௮.௩. அதி.௪௮.௪. (௰௨) அதி.௰௨.௭. (௰௩) அதி.௰௭.௨௨. (௰௪) அதி.௨௮.௰௮. (௰௫) அதி.௨௮.௰௯. (௰௬) ௨.இரா.௫.௰௯. (௰௭) அதி.௩௰.௨௪. ௧.சாமு.௪.௨௰. (௰௯) அதி.௪௮.௭. ரூத்.௧.௨. மீகா.௫.௨. மத்.௨.௬. (௨௰) ௧.சாமு.௰.௨. (௨௧) மீகா.௪.௮. (௨௨) ௧.நாளா.௫.௧. ௧.கொரி.௫.௧. (௨௩) அதி.௪௬.௮. யாத்.௧.௨. (௨௭) யோசு.௰௪.௰௫. (௨௯) அதி.௰௫.௰௫. அதி.௨௫.௯. (௩௬. அதி. ௧.) அதி.௨௫.௩௰. (௨) அதி.௨௬.௩௪. வச.௨௫. (௩) அதி.௨௮.௯. (௪) ௧.நாளா.௧.௩௫. (௭) அதி.௰௩.௬,௰௧. அதி.௰௭.௮. (௮) அதி.௩௨.௫. யோசு.௨௪.௪. வச.௧.

௯ ஏசாவுக்கு ஏதோம் என்றும்பேர். சேயீர் மலை
யில் வசிக்கும் ஏதோமியருடைய பிதாவாகிய
ஏசாவின் வமிச வரலாறும்: ஏசாவின் புத்திரரு
௰ டைய நாமங்களுமாவன:—ஏசாவின் மனைவியா
கிய ஆதாளுடைய புத்திரனுக்கு எலீபாசென்
றுபேர். ஏசாவின் மனைவியாகிய பஸ்மாத்தின்
௰௧ புத்திரனுக்கு ரேகுவேல் என்றுபேர்.—எலீபா
சின் புத்திரர் தேமான், ஓமார், செப்போ, காத்
௰௨ தாம், கேனாஸ், என்பவர்கள்.—திம்னாள், ஏசா
வின் புத்திரனாகிய எலீபாசுக்கு வைப்பாட்
டியாயிருந்து, அவள் எலீபாசுக்கு அமலேக்
கைப் பெற்றாள்: இவர்களே ஏசாவின் மனைவி
௰௩ யாகிய ஆதாளின்பௌத்திரர்.—ரேகுவேலுடை
யபுத்திரர் நாகாத்து, சேராக், ஷம்மா, மீசா. என்
பவர்கள். இவர்களே ஏசாவின் மனைவியாகிய
௰௪ பஸ்மாத்தின் பௌத்திரர்.—சிபியோனுடைய
பாட்டியும், ஆனாகினுடைய புத்திரியுமானஅ
கோலிபாமாள்என்னும் ஏசாவின்மனைவி எயூஷ்,
யாலாம், கோராகு என்னும் புத்திரரை ஏசாவுக்
குப்பெற்றாள்.
௰௫ ஏசாவின் புத்திரரில்தோன்றிய பிரபுகள் இ
வர்களே. ஏசாவுக்குச் சேஷ்டபுத்திரனாகிய எலீ
பாசினுடையபுத்திரர் தேமான் பிரபு, ஓமார் பிர
௰௬ பு, செப்போ பிரபு, கேனாஸ் பிரபு,—கோராகு
பிரபு, காத்தாம்பிரபு, அமலேக்கு பிரபு, என்ப
வர்கள். இந்தப்பிரபுகள் ஏதோம்தேசத்தில் எலீ
பாசின் சந்ததியும், ஆதாளின் பௌத்திரருமாயி
௰௭ ருந்தார்கள்.—ஏசாவின் புத்திரனாகிய ரேகுவே
லின்புத்திரர், நாகாத்து பிரபு, சேராகுபிரபு, ஷம்
மாபிரபு, மீசாபிரபு என்பவர்கள். இந்தப்பிரபு
கள் ஏதோம்தேசத்தில் ரேகுவேலின்சந்ததியும் ஏ
சாவின் மனைவியாகிய பஸ்மாத்தின் பௌத்திர
௰௮ ருமாயிருந்தார்கள்.—ஏசாவின் மனைவியாகிய
அகோலிபாமாளின் புத்திரர், எயூஷ்பிரபு, யா
லாம்பிரபு, கோராகுபிரபு, என்பவர்கள். இந்தப்
பிரபுகள் ஆனாகினுடைய புத்திரியும் ஏசாவின்
மனைவியுமான அகோலிபாமாளின் புத்திரர்.—
௰௯ இவர்களே ஏதோம் என்னும் ஏசாவின்சந்ததி.
அவர்களின் பிரபுகளும் இவர்களே.
௨௰ அத்தேசத்தாராகிய ஓரியரில் சேயீரின் புத்தி
ரர், லோத்தான், ஷோபால், சிபியோன், ஆனாகு,-
௨௧ திஷோன், எட்சர், தீஷான் என்பவர்கள். இவர்க
ளே ஏதோம்தேசத்தில் ஓரியருடைய சந்ததியும்
௨௨ சேயீரின் புத்திரருமான பிரபுகள்.—ஓரி, எமாம்
என்பவர்கள். லோத்தானுடைய புத்திரர். திம்
௨௩ னாள் லோத்தானுடைய சகோதரி.—அல்வான்,
மானகாத்து, எபால், ஷெப்போ, ஓனாம் என்ப
௨௪ வர்கள் சேபாவின் புத்திரர்.—ஆயா, ஆனா என்
பவர்கள் சிபியோனுடைய புத்திரர். ஆனா என்
னும் இவன் தன்பிதாவாகிய சிபியோனுடைய
கழுதைகளை மேய்க்கையில் வனாந்தரத்திலே நீ
௨௫ ரூற்றுக்களைக்கண்டடைந்தான்.—திஷோனும், அ

கோலிபாமாளும், ஆனாவினுடைய பிள்ளைகள்.
அந்த அகோலிபாமாள், ஆனாவின்புத்திரி.—எம் ௨௬
தான், எஸ்பான் ஈத்தரான், கிரான் என்பவர்
கள் திஷோனுடைய புத்திரர்.—பில்க்கான், ௨௭
வான், ஆக்கான் என்பவர்கள் எத்சேருடையபுத்
திரர்.—ஊத்ஸ், ஆரான் என்பவர்கள் திஷோனு ௨௮
டையபுத்திரர்.—ஓரியருடைய சந்ததியில் தோன் ௨௯
றிய பிரபுகள், சேயீர் தேசத்துப்பிரபுகளுக்குள்
பிரபுகளா யிருந்தார்கள். ஓரியருடைய சந்ததி
யில் தோன்றிய பிரபுகள் இவர்கள். லோத்தான்
பிரபு, சேபால் பிரபு, சிபியோன் பிரபு, ஆனா
பிரபு;—திஷோன் பிரபு, எத்சேர் பிரபு, திஷான் ௩௰
பிரபு என்பவர்கள்.
இஸரவேல்சந்ததியார்மேல் இராசாக்கள் அர ௩௧
சாளுவதற்கு முன்னே ஏதோந்தேசத்தை ஆண்ட
இராசாக்கள் இவர்களே.—பேயோருடைய புத் ௩௨
திரனாகிய பேலா ஏதோமில் அரசாண்டான்; அ
வனுடைய நகரத்திற்கு, தின்காபாஎன்றுபேர்.—
பேலா மரித்தபின் பொதஸ்றா நகரத்தானும் சே ௩௩
ராகின் புத்திரனுமான யோவாப் அவனுடைய
பட்டத்திற்கு வந்தான்.—யோவாப்மரித்தபின் ௩௪
தேமானின் தேசத்தானாகிய ஊஷாம் அவனுடை
ய பட்டத்திற்குவந்தான்.—ஊஷாம் மரித்தபின் ௩௫
மோவாபின்நாட்டிலே மீதியானியரை முறிய
அடித்துப் பேதாத்தின் புத்திரனாகிய ஆதாத் அவ
னுடைய பட்டத்திற்கு வந்தான். அவனுடைய
நகரத்திற்கு ஆவீத் என்றுபேர்.—ஆதாத் மரித்த ௩௬
பின் மஸ்ரேக்கா என்னும் பட்டணத்தானாகிய
சம்லா அவனுடை யபட்டத்திற்குவந்தான்.—சம் ௩௭
லா மரித்தபின் அங்கேயிருக்கிற நதிக்குச் சமீப
மான ரேகோபோத் என்னும் நகரத்தானாகிய ச
வுல் அவனுடைய பட்டத்திற்குவந்தான்.-சவுல் ௩௮
மரித்தபின் அக்போருடைய புத்திரனாகிய பா
கால்ஆனான் அவனுடைய பட்டத்திற்குவந்
தான்.—அக்போருடைய புத்திரனாகிய பாகால் ௩௯
ஆனான் மரித்தபின் ஆதார் அவனுடைய பட்டத்
திற்கு வந்தான். அவனுடையநகரத்திற்குப் பாகு
வென்றுபேர். மதரேத்தினுடைய புத்திரியும்,
மேசகாவினுடைய பௌத்திரியுமான மெகேதா
பேல் அவனுடையமனைவி.
வமிசமும், ஸ்தானமும், நாமமும், வெவ்வே ௪௰
றாயுள்ள ஏசாவின் சந்ததியில் பிரபுகளின் நா
மங்களாவன திம்னாபிரபு, அல்வாபிரபு, எத்தேத்
பிரபு,—அகோலிபாமாபிரபு, ஏலாபிரபு,—பீ ௪௧
னோன்பிரபு, கேனாஸ் பிரபு, தேமான் பிரபு, ௪௨
மிப்சார்பிரபு,—மக்தியேல் பிரபு, ஈராம் பிரபு, ௪௩
என்பனவே. இவர்களே தாங்கள் ஆண்டுவரும்
தேசத்து இராசதானியில் வசிக்கும் ஏதோம்சந்
ததியின் பிரபுகள். ஏசாவே ஏதோமியரின் பிதா.

## ௩௭. அதிகாரம்.

௧. யோசேப்பின்மேல் அவன் சகோதரர் பொ
றாமைகொள்ளல்: ௫. யோசேப்பு கனவுகாண்

(௰) ௧.நாளா.௧.௩௫. (௰௨) யாத்.௰௭.௮,௰௪. எண்.௨௪.௨௰. (௨௰) ௧.நாளா.௧.௩௮. அதி.௰௪.௬. உபா.௨.௰௨, ௨௨. (௨௨) ௧.நாளா.௧.௩௯. (௨௩) ௧.நாளா.௧.௪௰. (௨௪) லேவி.௰௯.௰௯. (௨௬) ௧.நாளா.௧.௪௧. (௨௭) ௧.நாளா.௧.௪௨. (௩௧) ௧.நாளா.௧.௪௩. (௩௯) ௧.நாளா.௧.௫௰. யாத்.௰௫.௰௫. (௪௰) ௧.நாளா.௧.௫௧.—(௩௭. அதி.)

டல்: ௯. யாக்கோபு யோசேப்பை அவன் ச
கோதரரிடத்திலனுப்பல்: ௰௨. ஷிகேமிலே அ
வர்களை அவன் தேடல்: ௰௫. அவர்களை அவன்
காணல்: ௰௮. யோசேப்பைக் கொல்லத் துரா
லோசனைசெய்தல்: ௨௩. இஷ்மாவேலரிடத்தில்
அவனை விற்றல்: ௨௯. யோசேப்பின் வஸ்திர
த்தை இரத்தத்திற் றோய்த்து யாக்கோபுக்குக்
காட்டி அவனைத் துக்கத்திலமிழ்த்தல்: ௩௬. எ
கிப்திலுள்ள போத்திபாரிடத்தில் விற்கப்ப
டல்.

யாக்கோபு தன்பிதாதங்கிவந்த கானான் தேசத்
௨ தில் வாசம்பண்ணினான்.—யாக்கோபின் வமிச
வரலாறு; யோசேப்பு, பதினேழுவயதளவிலே
தன் சகோதரருடனே ஆடுகளை மேய்த்து வரு
வான். அந்த வாலிபன் தன் பிதாவுடைய மனை
விகளாகிய பில்க்காள் சில்ப்பாள் என்பவர்க
ளின் புத்திரருடனேயிருந்து, தான் அவர்களு
டைய தீமையைத் தன் பிதாவுக்குத் தெரிவித்து
௩ வருவான்.—தன் முதிர்ந்தவயதில் யோசேப்பு
பிறந்ததினால் இஸ்ரவேல், தன் புத்திரர் எல்லாரி
லும், அவனை யதிகமாய் நேசித்து, பலவர்ண
வஸ்திரத்தை அவனுக்குச் செய்துகொடுத்தான்.—
௪ அவன் சகோதரர் தங்களிலும், பிதா அவனை
நேசித்திருப்பதைக்கண்டு, அவனைப் பகைத்து,
பட்சமாய் அவனோடேபேசாதிருந்தார்கள்.
௫ யோசேப்பு ஒரு சொப்பனங்கண்டு அதைத்
௬ தன் சகோதரருக்குத் தெரிவித்தான்.—அதினால்
௭ அவர்கள் அவனையதிகமாய்வெறுத்தார்கள்.—அ
வன் அவர்களைநோக்கி, நான்கண்டசொப்பனத்
தைக்கேளுங்கள். நாம் வயலில் அறுத்த அரிக
ளைக் கட்டிக்கொண்டிருக்கையில், என் அரிக்
கட்டுநிமிர்ந்ததாகவும், உங்கள் அரிக்கட்டுக்கள்
என் அரிக்கட்டைச் சுற்றிவணங்கினவாகவுங்
௮ கண்டேனென்றான்.—அதற்கு அவன்சகோதரர்
கள் அவனைநோக்கி, நீ நிச்சயமாய் எங்களை ஆ
ளுவாயா; நீ நிச்சயமாய் எங்கள்மேல் அரசாட்
சி செலுத்துவாயா, என்று சொன்னார்கள்: இப்
படியே அவன் சொப்பனத்தின் நிமித்தமும்,
சொற்களின் நிமித்தமும், மேலும் அதிகமாய் அ
வனைவெறுத்தார்கள்.
௯ பின்னும் அவன்வேறொரு சொப்பனத்தைக்
கண்டு, தன் சகோதரரைநோக்கி, கேளுங்கள்,
சூரியனுஞ் சந்திரனும் பதினொரு நட்சத்திரங்
களும் என்னை வணங்கிக் கொண்டனவாக, ஒ
ரு சொப்பனத்தைக் கண்டேனென்று தெரிவித்
௰ தான்.—இதை அவன் தன்பிதாவுக்கும், சகோத
ரருக்குஞ்சொல்லுகையில், அவனுடையபிதா, நீ
கண்ட இந்தச்சொப்பனமென்ன; நானும் உன்
மாதாவும் உன்சகோதரரும் பூமிக்குநேரே தாழ்ந்
து வணங்கவருவோமாவென்று அவனைக்கடிந்
௰௧ தான்.—அவனுடையசகோதரர் அவன்மேற்பொ
றாமைகொண்டார்கள். அவன்சொன்னதை பிதா
வோ சிந்தையில்வைத்தான்.

பின்பு அவன் சகோதரர் தங்கள் பிதாவினு ௰௨
டைய ஆடுகளைமேய்க்க ஷிகேமுக்குப்போனார்
கள்.—அப்பொழுது இஸ்ரவேல் யோசேப்பை ௰௩
நோக்கி, உன் சகோதரர் ஷிகேமில் அல்லவோ
மேய்க்கிறார்கள். உன்னை அவர்களிடத்துக்கு
அனுப்பப்போகிறேன் வாவென்றதற்கு, அவன்
அடியேனென்றான்.-அவன், நீ போய் உன்சகோ ௰௪
தரருடைய சுகச்செய்தியையும், ஆடுகளுடைய
செழிப்பையும்பார்த்து, எனக்கு அறிவியென்று
சொல்லி, தாழ்ந்தபூமியாகிய எபிரோனிலிருந்து
அனுப்பினான்: அவனும் ஷிகேமில் சேர்ந்தான்.
அவன் வெளியிலேதிரிகிறதை ஒருமனிதன் ௰௫
கண்டு, என்ன தேடுகிறாயென்று அவனிடத்திற்
கேட்க;-அவன் என் சகோதரரைத்தேடுகிறேன். ௰௬
அவர்கள் எங்கே ஆடு மேய்க்கிறார்கள். அதை எ
னக்கு அறிவிக்கவேண்டுமென்றான்.—அந்த மனி ௰௭
தன், அவர்கள் இவ்விடத்தில்நின்றும்போய்விட்
டார்கள். தோத்தானுக்குப்போவோமென்று, அ
வர்கள் சொல்லக்கேட்டேன் என்றான். யோ
சேப்பு, தன்சகோதரரைத்தோடர்ந்துபோய் அவர்
களைத் தோத்தானில்கண்டான்.

அவர்கள் அவனைத் தூரத்தில்வரக்கண்டு, அ ௰௮
வன் தங்களுக்குச் சமீபமாய்ச் சேருமுன்னமே,
அவனைக் கொலைசெய்யத் துராலோசனை சேய்
தார்கள்.—ஒருவரை யொருவர் நோக்கி, சொப் ௰௯
பனக்காரன் வருகிறான், பாருங்கள்;—நாம் அ ௨௰
வனைக்கொன்று அந்தக் குழிகளிலொன்றில்
போட்டு; ஒருதுஷ்டமிருகம் அவனைப்பட்சித்த
தென்றுசோல்லுவோம் வாருங்கள்; அவனுடை
ய சொப்பனங்கள் எப்படியாகும்என்று பார்ப்
போமென்றார்கள். ரூபேன் அதைக்கேட்டு,-அவ ௨௧
னை அவர்கள்கைக்குத்தப்புவித்து; பிதாவிடத்திற்
குத் திரும்பவுங் கொண்டுபோக மனதுள்ளவ
னாய்,—அவர்களைநோக்கி, அவனைக்கொலைசெய் ௨௨
யப்படாது. நீங்கள் இரத்தஞ்சிந்தவேண்டாம்,
நீங்கள் அவன்மேற் கைவையாமல், இவ்வனத்தி
லுள்ள அந்தக் குழியில் போடுங்களென்றுசொன்
னான்: இப்படி ரூபேன் அவர்கள்கையில்நின்று
அவனைத்தப்புவித்தான்.
யோசேப்பு, தன் சகோதரரிடத்திற் சேர்ந்த ௨௩
பொழுது, யோசேப்புத்தரித்திருந்த பலவர்ண
வஸ்திரத்தை அவர்கள்கழற்றி,—அவனைப் பிடித் ௨௪
து, ஒருகுழியில் இறக்கினார்கள். அது வெறுங்
குழியாயிருந்தது; அதில் சலமில்லை.—பின்பு அ ௨௫
வர்கள் போசனஞ் செய்யும்படியிருக்கையில்,
கண்ணேறிட்டுப்பார்த்து, அங்கே கிலியாத்திலி
ருந்து இஷ்மாவேலரின்கூட்டம் எகிப்துதேசத்
திற்குப்போகும்படி, பலசுகந்ததிரவியத்தையும்,

(௧.) அதி.௰௭.௰௮. எபி.௰௧.௯. (௨) ௧.சாமு.௨.௨௨,௨௩,௨௪. (௩) அதி.௪௪.௨௰. நியா.௫.௩௰. ௨.சாமு.௰௩.௰௮. (௪) அதி.௨௭.௪௧. (௭) அதி.௪௨.௬,௯. (௯) அதி.௪௬.௨௯. (௰) அதி.௨௭.௨௯. (௰௧) அப்.௭.௯. தானி.௭.௨௮. லூக்.௨.௰௯,௫௧. (௰௪) அதி.௨௯.௬. அதி.௩௫.௨௭. (௰௬) உன்.௧.௭. (௰௭) ௨.இரா.௬.௰௩. (௰௮) ௧.சாமு.௰௯.௧. சங்.௩௧.௰௩. மத்.௨௭.௧. மாற்.௰௪.௧. அப்.௨௩.௰௨. (௨௰) நீதி.௧.௰௧. (௨௧) அதி.௪௨.௨௨. (௨௫) நீதி.௩௰.௨௰. ஆமோ.௬.௬. வச.௨௮,௩௬. எரே.௮.௨௨.

குங்கிலியத்தையும், வெள்ளைப் போளத்தையும்,
சுமந்தஒட்டகங்களுடனே வரக்கண்டார்கள்.—
௨௬ யூதா,தன்சகோதரரைநோக்கி,நம்முடையசகோ
தரனைக்கொன்று, அவனுடைய இரத்தத்தை ம
௨௭ றைப்பதினால் இலாபமென்ன.—அவனை இந்த
இஷ்மாவேலருக்கு விற்போம். நமது கையால்
அவனைத் தொடப்படாது. அவன் நம்முடைய
சகோதரன், நம்முடைய மாமிசமுள்ளவன் என்
றுசொன்னான். அதற்கு அவனுடைய சகோதரர்
௨௮ சம்மதித்தார்கள்.–அப்பொழுது அந்த வர்த்தகரா
ன மீதியானியர் கடந்துபோகையில், இவர் அந்
தக்குழியிலிருந்த யோசேப்பைத் தூக்கியெடுத்
து, அவனை இஷ்மாவேலர்கையில்இருபதுவெள்
ளிக்காசுக்கு விற்றார்கள். அவர்கள் யோசேப்
பை எகிப்துதேசத்திற்குக்கொண்டுபோனார்கள்.
௨௯ பின்பு ரூபேன் அந்தக்குழியினிடத்திற்குத்
திரும்பிப்போனபொழுது, யோசேப்பு அதிலே
இல்லையென்றுகண்டு, தன்வஸ்திரங்களைக்கிழித்
௩௰ துக்கொண்டு,—தன் சகோதரரிடத்திற்குத்திரும்
பிப்போய், பிள்ளையில்லையே. ஐயோ! நான்எங்
௩௧ கேபோவேன் என்று புலமபினான்.—அவர்கள்
யோசேப்பினுடைய அங்கியையெடுத்து, ஒரு
வெள்ளாட்டுக்கடாவைஅடித்து, அவ்வங்கியை
௩௨ இரத்தத்திலே தோய்த்து,—பலவர்ணமான அவ்
வங்கியைத் தங்கள் பிதாவினிடத்திற்கு அனுப்
பினார்கள். கொண்டுபோனவர்கள், இதை நாங்
கள் கண்டெடுத்தோம். இது உம்முடைய புத்தி
ரன் அங்கியோ, அல்லவோ,பாருமென்றுசொன்
௩௩ னார்கள்,–அவன் அதைக்கண்டறிந்து, இது என்
புத்திரனுடைய அங்கிதான், ஒரு துஷ்டமிரு
கம், அவனைப்பட்சித்தது. யோசேப்பு நிச்சய
௩௪ மாய்ப் பீறுண்டுபோனானென்றுபுலம்பி,—தன்
வஸ்திரங்களைக்கிழித்து, தன் அரையில் இரட்
டைக்கட்டிக்கொண்டு, தன் புத்திரன் நிமித்தம்
௩௫ அநேகநாள் துக்கித்துக் கொண்டிருந்தான்.—அ
வனுடையகுமாரர் குமாரத்திகளெல்லாரும் வந்
துநின்று, அவனுக்கு ஆறுதல்சொல்லியும், ஆறு
தலடையாமல், துக்கத்தால் நானும் என் புத்திர
னிடத்தில் மரித்தோர் ஸ்தலத்திற்குப் போகிறே
னென்றான், இப்படி அவன்பிதா அவன் நிமித்
௩௬ தம் அழுதுகொண்டிருந்தான்.–அந்த மீதியானி
யர் யோசேப்பை எகிப்திலே பார்வோனு
டைய பிரதானியும் மெய்க்காவலருக்குத்தலைவ
னுமான போத்திபாருக்கு விற்றார்கள்.

## ௩௮. அதிகாரம்.

௧. யூதாவின்புத்திரராகிய ஏர், ஓனான்,ஷேலாஎன்னும் இம்மூவரின் விருத்தாந்தம்: ௰௨. தன் ஸ்திரிமரித்தபின் யூதா திம்னா ஊரிற்செல்லல்: ௰௫. அவன் தன்புத்திரனுக்கு நியமித்த ஸ்திரியிடத்திற்சேர்தல்: ௨௪. அவன்குற்றம்வெளிப்படல்: ௨௭. அந்தஸ்திரி பேரேஸ் சேரா என்பவர்களைப்பெறல்.

அக்காலத்திலே யூதா, தன்சகோதரரை விட்டு, ௧
அதுல்லாமியனாகிய ஈராவென்னும் ஒருவனி
டத்திற்குப் போய்ச்சேர்ந்தான்.—யூதா அவ்வி ௨
டத்திலே சூவா என்னும் பேர்கொண்ட கான
னியன் ஒருவனுடைய கன்னிகையைக்கண்டு
அவளைச்சேர்த்துக்கொண்டு,அவளோடே சேர்ந்
தான்.—அவள் கருப்பவதியாகி, ஒருபுத்திரனைப் ௩
பெற்றாள், அவனுக்கு ஏர் என்று பேரிட்டான்.-
திரும்பவும், அவள்கருப்பவதியாகி ஒருபுத்திர ௪
னைப்பெற்று, அவனுக்கு ஓனான் என்றுபேரிட்
டாள்.—பின்னும் அவள் கருப்பவதியாகி ஒரு ௫
புத்திரனைப்பெற்று, அவனுக்கு ஷேலா என்று
பேரிட்டாள். அவள் இவனைப்பெற்றபொழுது,
அவன் கெசீபிலேயிருந்தான்.—பின்பு யூதா தா ௬
மார் என்னும்பேர்கொண்ட ஒரு கன்னிகையை,
தன்மூத்த மகனாகிய ஏர் என்பவனுக்கு விவாகம்
பண்ணுவித்தான்.–யூதாவின் மூத்தமகனாகிய ஏர் ௭
யெகோவாவின் பார்வைக்குத்துட்டனாயி
ருந்ததினால், யெகோவா அவனைச்சங்கரித்
தார்.–அப்பொழுது யூதா, ஓனானைநோக்கி, உன் ௮
தமையனுடைய மனைவியைச் சேர்ந்து, உன்த
மையனுக்குச் சந்ததி யுண்டாகச் செய்யென்று
சொன்னான்.—ஓனான் அந்தச்சந்ததி, தன்சந்ததி ௯
யாயிராதென்பதையெண்ணி, அவன்தன் தமை
யனுடைய மனைவியைச் சேரும்பொழுது, தன்
தமையனுக்குத் தன்னாலேசந்ததி யுண்டாகாதப
டி, அதைத்தரையில் விழவிட்டுக்கெடுத்தான்.—
அவன் செய்த அந்தக்காரியம், யெகோவா ௰
வின் பார்வைக்குத் தீங்காயிருந்ததினால், அவர்
அவனையுஞ்சங்கரித்தார்.–யூதா,தன்புத்திரனாகிய ௰௧
ஷேலாவும்அவன்சகோதரர் மரித்தபிரகாரம்மரிக்
கக்கூடுமென்றஞ்சி, தன்மருமகளாகிய தாமாரை
நோக்கி, என்புத்திரனாகிய ஷேலா பிராயமுள்ள
வனாகும் வரைக்கும், உன்பிதாவின் வீட்டிலே
விதவையாய்த் தங்கியிரு என்று சொன்னான்:
அந்தப்பிரகாரம் தாமார்போய்த் தன் பிதாவின்வீ
ட்டிலேதங்கினாள்.
அநேகநாட்சென்றபின் சூவாவின் புத்திரியா ௰௨
கிய யூதாவின் மனைவி மரித்தாள், தான் ஆறுதல
டைந்தபின், யூதா அதுல்லாமியனாகிய தன் சிநே
கிதன் ஈராவுடனே திம்னாவில், தன் ஆடுகளின்
மயிரைக் கத்தரிக்கிறவர்களிடத்திற்குப் போ
னான்.—உன் மாமன், தன் ஆடுகளின் மயிரைக் ௰௩
கத்தரிக்கத் திம்னாவுக்குப்போகிறானென்றுதாமா
ருக்கு அறிவிக்கப்பட்டது.—ஷேலா பருவம ௰௪
டைந்துந் தான் அவனுக்கு மனைவியாக அளிக்

(௨௬) ஆதி.௪௰. யோபு.௰௬.௰௮. (௨௭) ௧.சாமு.௰௮.௰௭. ஆதி.௪௨.௨௧. ஆதி.௨௯.௰௪. (௨௮) நியா.௬.௩. அப்.௭.௯. மத்.௨௭.௯. (௨௯) யோபு.௧.௨௰. (௩௰) ஆதி.௪௨.௰௩.௩௬. எரே.௩௧.௰௫. (௩௧) வச.௨௩. (௩௩) வச.௨௰. ஆதி.௪௪.௨௮. (௩௪) வச.௨௯. ௨.சாமு.௩.௩௧. (௩௫) ௨.சாமு.௰௨.௰௭. ஆதி.௪௨.௩௮. ஆதி.௪௪.௨௯,௩௧. (௩௬) ஆதி.௩௯.௧. எஸ்த.௧.௰.—(௩௮. அதி. ௨.) ௧.நாளா.௨.௩. (௩) எண்.௨௬.௰௯. (௪) எண்.௨௬.௰௯. (௫) எண்.௨௬.௨௰.(௭) எண்.௨௬.௰௯. ௧.நாளா.௨.௩. (௮) உபா.௨௫.௫. மத்.௨௨.௨௪. (௯) உபா.௨௫.௬. (௰) ஆதி.௪௬.௰௨. எண்.௨௬.௰௯. (௰௧) ரூத்.௧.௰௩. லேவி.௨௨.௰௩. (௰௨) ௨.சாமு.௰௩.௩௯. (௰௩) யோசு.௰௫.௰,௫௭. நியா.௰௪.௧.(௰௪) நீதி.௭.௰௨. வச.௰௧,௨௬.

கப்படவில்லையென்று அவள் கண்டதினால், வி
தவைக்குரிய தன் வஸ்திரங்களைக் களைந்து, முக்
காடிட்டுத் தன்னை மூடிக்கொண்டு, திம்னாவுக்
குப்போகிறவழியிலிருக்கிற ஏனாயிமின்வாசலில்
யிருந்தாள்.
௰௫ யூதா அவளைக்கண்டு, அவள்முகத்தை மூடியி
ருந்ததினால், அவளைத்தன் மருமகளென்றறியா
௰௬ மல், அவளை ஒரு வேசையென்றெண்ணி,—வழி
யிலிருந்த அவளிடத்துக்குப்போய் அவளைநோக்
கி, நான் உன்னைச்சேர வாவென்று சொல்ல; அ
வள், நீர் என்னைச்சேர எனக்கென்ன தருவீரென்
௰௭ றாள்.—அவன் ஒரு வெள்ளாட்டுக்குட்டியை மந்
தையிலிருந்து அனுப்புவேனென்றான். அதற்கு
அவள், நீர் அதை அனுப்புமளவும், ஒரு ஈடுதந்
௰௮ தால் ஆகுமென்றாள்.—அப்பொழுது அவன்
உனக்கு ஈடாகநான் என்னதரவேண்டுமென்று
கேட்க; அவள் உமதுமோதிரத்தையும், உமது
ஆரங்களையும், உமதுகைக்கோலையுந் தரவேண்டு
மென்றாள். அவன் அவைகளை அவளுக்குக்கொ
டுத்து, அவளைச்சேர்ந்தான். அவள் அவனாலே
௰௯ கருப்பவதியானாள்.—அவள் எழுந்துபோய்த் தன்
முக்காட்டைக்களைந்து, விதவைக்குரிய தன்வஸ்
௨௰ திரங்களைத் தரித்துக்கொண்டாள்.—யூதா அந்த
ஸ்திரியினிடத்திலிருந்த ஈட்டை மீட்டுக்கொள்
ளும்படி, அதுல்லாமியனாகிய தன் சிநேகிதனி
டத்தில் ஒரு வெள்ளாட்டுக் குட்டியைக்கொடுத்
௨௧ தனுப்பினான்:—இவன் அவளைக்காணாமல், ஏனா
யிம் என்னுமிடத்திலிருந்த வேசை எங்கேயென்
று அங்குள்ள மனிதரிடத்திற்கேட்க; அவர்கள்,
௨௨ இங்கே வேசையில்லையென்றார்கள்.—அவன் யூ
தாவினிடத்தில் திரும்பிப்போய் அவளைக் கா
ணேன். அங்கே வேசையில்லையென்று, அவ்வி
௨௩ டத்து மனிதர் சொன்னார்கள் என்றான்.—யூதா
நான் இந்த ஆட்டுக்குட்டியை யனுப்பினேன்.
நீயும் அவளைக்காணாமற்போனாய். நமக்கு இலச்
சைவராதபடிக்கு, அவள் அவைகளை எடுத்துக்
கொண்டுபோனால், போகட்டுமென்றான்.
௨௪ ஏறக்குறைய மூன்றுமாதஞ்சென்றபின்பு ஒரு
வன் யூதாவை நோக்கி, உன் மருமகளாகிய தா
மார் விபசாரஞ்செய்து, அந்த விபசாரத்தினால்,
கருப்பவதி யானாளென்று அறிவித்தான். யூதா
அவளை வெளியிலே கொண்டுவாருங்கள். அ
வள் சுட்டெரிக்கப்பட வேண்டுமென்றான்.—
௨௫ வெளியிலே கொண்டுவரப் பட்டபொழுது, அ
வள் இந்தப்பொருள்களை யுடையவனெவனோ,
அவனாலே நான் கருப்பவதியானேன்; ஆகை
யால் மோதிரமும், காப்பும், கோலுமாகிய இவை
கள் ஆருடைய பொருள்கள்; பாருங்களென்று
சொல்லி, தனது மாமனிடத்துக்கு அனுப்பி
௨௬ னாள்.—யூதா அவைகளைப்பார்த்தறிந்து, அவளை
என் புத்திரனாகிய ஷேலாவுக்கு அளியாததினால்
என்னிலும் அவள் நீதியுள்ளவளென்றான்: பின்
பு அவன் அவளைச்சேரவில்லை.
அவளுக்குப்பிரசவகால மானபொழுது, அவ ௨௭
ளுடைய கருப்பத்தில் இரட்டைப் பிள்ளைகளி
ருந்தன.—அவளுடைய பிரசவகாலத்தில், ஒன் ௨௮
று கைநீட்ட, மருத்துவிச்சி அந்தக்கையைப்பி
டித்து, அதில் சிவப்புநூலைக்கட்டி, இது முதலா
வது வெளிப்பட்டதென்றாள்.—அது தன் கை ௨௯
யைத்திரும்ப உள்ளேவாங்கிக்கொண்டபொழு
து, அதின் சகோதரன் வெளிப்பட, அவள், நீ
மீறிவந்ததென்ன. இந்தமீறுதல் உன்மேல் நிற்கு
மென்றாள். அதினாலே அவனுக்குப்பேரேசென்
று பேரிடப்பட்டது.—பின்பு கையில்சிவப்பு ௩௰
நூல்கட்டியிருந்த அவனுடையதம்பி வெளிப்
பட்டான். அவனுக்குச் சேராவென்று பேரி
டப்பட்டது.

## ௩௯. அதிகாரம்.

௧. யோசேப்புப் போத்திபாரின்வீட்டில் மேன்மைபெறல்: ௭. போத்திபாரின் மனைவி தான் யோசேப்பின்மேல்வைத்த ஆசை சித்தியாகாததினால் பொய்சொல்லி அவனைச்சிறைச்சாலையில்வைப்பித்தல்: ௨௧. தேவன் அவனோடிருத்தல்.

யோசேப்பு எகிப்துக்குக்கொண்டுபோகப்பட் ௧
டான். பார்வோனுடைய பிரதானியும், மெய்க்
காவலருக்குத் தலைவனும், எகிப்து தேசத்தா
னுமான போத்திபார், அவனை அவ்விடத்திற்
கொண்டுபோன இஷ்மாவேலரிடத்திலேவிலைக்
குக் கொண்டான்.—யெகோவா யோசேப் ௨
பின் பட்சமாயிருந்ததினால், அவன் வாழ்வுடை
யவனாய் எகிப்தியனாகிய தன் எசமானனுடைய
வீட்டிலே வாசம்பண்ணினான்.—யெகோவா ௩
அவனுடைய பட்சமாயிருக்கிறாரென்பதையும்,
அவன்செய்யும் யாவையும் யெகோவா சித்
தியாக்குகிறாரென்பதையும், அவன் எசமானன்
கண்டு,—யோசேப்பின்மேற் கடாட்சம்வைத்து, ௪
அவனைத்தனக்குப் பணிவிடைக்காரனும், தன்
குடும்பத்திற்கு அதிகாரியுமாக்கித்தனக்குண்டா
னயாவையும், அவனிடத்தில் ஒப்பித்தான்.—அ ௫
வனை, அவன் தன்வீட்டுக்குந் தனக்குண்டான
எல்லாவற்றிற்கும் அதிகாரியாக்கினபின், இந்த
யோசேப்பின் நிமித்தம் யெகோவா அந்த
எகிப்தியனுடைய குடும்பத்தை ஆசீர்வதித்தார்:
வீட்டிலும், வெளியிலும், அவனுக்குள்ள எல்லா
வற்றின்மேலும், யெகோவாவினுடைய ஆசீர்
வாதம் தங்கிற்று.—ஆகையால் அவன் தான் புசிக் ௬
கும் பதார்த்தத்தையன்றி, தனக்குள்ள ஒன்றை
யும் விசாரியாமல், தனக்குண்டான எல்லாவற்
றையும் யோசேப்புவசம் ஒப்பித்தான்.

(௰௭) எசேக்.௰௬.௩௩. வச.௨௰. (௰௮) வச.௨௫. (௰௯) வச.௰௪. (௨௪) நியா.௰௯.௨. லேவி.௨௧.௯. உபா.௨௨.௨௧. (௨௫) அதி.௩௭.௩௨. வச.௰௮. (௨௬) அதி.௩௭.௩௩. ௧. சாமு.௨௪.௰௭. வச.௰௪. யோபு.௩௪.௩௧,௩௨. (௨௯) அதி.௪௬.௰௨. எண்.௨௬.௨௰. ௧.நாளா.௨.௪. மத்.௧.௩.—(௩௯. அதி. ௧.)அதி.௩௭ ௩௬. சங்.௱௫.௰௭. அதி.௩௭.௨௮. (௨) வச.௨௧. அதி.௨௧.௨௨. அதி.௨௬.௨௪,௨௮. அதி.௨௮.௰௫. ௧.சாமு.௰௬.௰௮. ௧.சாமு.௰௮.௰௪,௨௮. அப். ௭.௯. (௩) சங்.௧.௩. (௪) அதி.௰௮.௩ அதி ௰௯ ௰௯. வச.௨௧. அதி.௨௪.௨ (௫) அதி.௩௰.௨௭. (௭) ௧.சாமு.௰௬.௰௨.

௭ யோசேப்போ சுரூபியும், காட்சிக்குச்சௌந்
தரியமுள்ளவனுமாயிருந்தான். அதினால் அவன்
எசமானனுடைய மனைவி யோசேப்பின்மேற்
கண்போட்டு, என்னுடனே சயனியென்றாள்.—
௮ அதற்கு அவன் எசமானனுடைய மனைவியை
நோக்கி, வீட்டில் என்னிடத்திலிருக்கிற யா
தொன்றையும் என் ஆண்டவன் விசாரியாமல்,
தமக்குண்டான எல்லாவற்றையும்என்கையில் ஒ
௯ ப்பித்தாரே.-இந்த வீட்டில் என்னிலும் மேலான
வனில்லை. நீர் அவருடைய மனைவியானபடி
யால், உம்மைமாத்திரம்தவிர்த்திருப்பதன்றி,வே
றொன்றையும், அவர் எனக்கு விலக்கிவைக்க
வில்லை; நான் இத்தனை பெரிதான தீங்குக்குடன்
பட்டு, தேவனுக்கு விரோதமாய்ப்பாவஞ்செய்
வதெப்படியென்று, அவளுடையசொல்லைமறுத்
௰ தான்.—அவள் தினந்தினம், யோசேப்புடனே
பேசிவந்தும்,அவன் அவளுடனே சயனிக்கவும்,
அவளுடனே இருக்கவும், சம்மதிக்கவில்லை.—
௰௧ ஒருநாள்,யோசேப்புத்தன் பணிவிடையை நடத்
துவதற்கு வீட்டுக்குள்போனான். அப்பொழுது
௰௨ வீட்டுமனிதர் ஒருவரும்வீட்டில் இல்லை.—அவள்
அவன்வஸ்திரததைப்பற்றி அவனைஇழுத்து என்
னுடனேசயனியென்றாள். அதினால்அவன்வஸ்
திரத்தை அவள்கையில்விட்டு, வெளியேபுறப்
௰௩ பட்டு ஓடிப்போனான்.—அவன் தன்வஸ்திரத்
தைத் தன்கையில் விட்டுவிட்டு, வெளியே ஓ
௰௪ டிப்போனதை அவள்கண்டு,—தன்வீட்டுமனித
ரைக்கூப்பிட்டு, அவர்களுடனே, பாருங்கள்,
எபிரேயமனிதன் நம்முடனேசரசம்பண்ணும்ப
டி, அவர் அவனை நமக்குள்கொண்டுவந்துவைத்
தார். அவன் என்னுடனே சயனிக்கும்படிக்கு
என்னிடத்தில் வந்தான். நான்மிகவும் சத்தமிட்
௰௫ டேன்,—நான் சத்தமிட்டதை அவன் கேட்டுத்
தன்வஸ்திரத்தை என்னிடத்தில் விட்டு, வெளி
யே புறப்பட்டு ஓடிப்போனானென்று சொன்
௰௬ னாள்.—அவள் அவனுடைய எசமானன் வீட்
டுக்கு வருமளவும் அவனுடைய வஸ்திரத்தை
௰௭ வைத்திருந்து அவனைநோக்கி,-நீர் எங்களுக்குள்
கொண்டு வந்துவைத்த அந்த எபிரேயப்பணிவி
டைக்காரன் என்னுடனே சரசம்பண்ணும்ப
௰௮ டிக்கு என்னிடத்தில் வந்தான்.—அந்நேரம் நான்
சத்தமிட அவன் தன் வஸ்திரத்தை என்னிடத்
தில்விட்டு, வெளியே ஓடிப்போனானென்று அ
௰௯ வனுக்குச் சொன்னாள்.—உம்முடைய பணிவி
டைக்காரன் என்னை இப்படிச்செய்தானென்று,
தன் மனைவி தன்னுடனே சொன்னவாக்குகளை,
அவனுடைய எசமானன் கேட்டபொழுது, அ
௨௰ வனுக்கு மிகவும்கோபம்மூண்டது.—யோசேப்
பின் எசமானன்அவனைப்பிடித்து, இராசாவினா
லே காவலில் வைக்கப்பட்டவர்களிருக்குஞ்
சிறைச்சாலையில் அவனை வைத்தான். அந்தச்
சிறைச்சாலையில் அவனிருந்தான்.—அங்கேயும் ௨௧
யெகோவா யோசேப்பின் பட்சமாயிருந்து,
அவன்மேற் கடாட்சம்வைத்து, சிறைச்சாலைத்
தலைவனுடைய தயை அவனுக்குக் கிடைக்கப்
பண்ணினார்.—சிறைச்சாலைத்தலைவன் சிறைச் ௨௨
சாலையில் வைக்கப்பட்டயாவரையும் யோசேப்
பின் வசம் ஒப்பித்தான். அங்கே அவர்கள்செய்
பவைகளெல்லாவற்றையும் யோசேப்பு நடப்
பிப்பான்.—யெகோவா அவன் பட்சத்திலி ௨௩
ருந்தபடியினாலும், அவன் செய்ததெதுவோ அ
தை யெகோவா சித்தியாக்கினபடியினாலும்,
அவன் கைவசமாயிருந்த யாதொன்றையும் சி
றைச்சாலைத்தலைவன் விசாரிக்கவில்லை.

## ௪௰. அதிகாரம்.

௧. பார்வோனுடைய பானபாத்திரமேந்துவோ
னும் சுயம்பாகிகளின் தலைவனும் யோசேப்பி
னுடன் காவலில் வைக்கப்படல்: ௫. அவ்விரு
வருங்கண்ட சொப்பனத்தின் தாற்பரியம்யோ
சேப்பினால்தெரிவிக்கப்படல்: ௨௰. யோசேப்
பின் சொற்படி சொப்பனஞ் சித்தியாதல். பா
னபாத்திரமேந்துவோன் செய்ந்நன்றிமறத்தல்.

இக்காரியங்கள் நடந்தபின்பு, எகிப்து இராசா ௧
வின் பானபாத்திரக்காரனும், சுயம்பாகியும், தங்
கள் ஆண்டவனாகிய எகிப்து இராசாவுக்குக் குற்
றஞ்செய்தார்கள்.—பார்வோன் தன் தலைவரில் ௨
பானபாத்திரக்காரரின் தலைவனும், சுயம்பாகி
களின் தலைவனுமாகிய இருவர்மேலும் உக்கிர
கோபங்கொண்டு,—யோசேப்பு, கட்டுண்டிருந் ௩
த இடமுஞ் சேனாபதியின்வீடுமாகிய சிறைச்சா
லையில் அவர்களைக்காவல் பண்ணுவித்தான்.—
அவர்களை விசாரணைபண்ணும்படி, மெய்க்காவ ௪
லருக்குத்தலைவன், யோசேப்புக்குக் கட்டளை
யிட்டான். அவன் அவர்களுக்குப் பணிவிடை
செய்துவந்தான். அவர்கள் சிலநாள் காவலிலி
ருந்தார்கள்.
பின்பு சிறைச்சாலையிற் காவல்பண்ணப்பட் ௫
ட எகிப்து இராசனுடைய பானபாத்திரக்கார
னும், சுயம்பாகியுமான அவ்விருவரும் ஒரே இர
விலே, வெவ்வேறுபொருள்கொண்ட சொப்ப
னங்களைக் கண்டார்கள்.-விடியற்காலத்தில் யோ ௬
சேப்பு அவர்களிடத்திற் போனபோழுது, அவர்
கள் துக்கங்கொண்டிருக்கிறதைக்கண்டான்.—
அதினால் அவன் தன் ஆண்டவனுடைய வீட் ௭
டிலே தன்னோடே காவல்பண்ணப்பட்டிருந்த
பார்வோனுடைய காரியத் தலைவரை நோக்கி,
உங்கள்முகங்கள் இன்று வாடியிருக்கிறதென்ன
வென்றுகேட்டான்.-அதற்கவர்கள்,சொப்பனங் ௮
கண்டோம்; அதின் தாற்பரியத்தைத்தெரிவிக்
கிறவர் ஒருவருமில்லையென்றார்கள். யோசேப்பு

௨ சாமு.௰௩.௰௧. (௯) நீதி.௬.௨௯,௩௧ அதி.௨௰.௬. லேவி.௬.௨. ௨.சாமு.௰௨.௰௩. சங்.௫௧.௪. (௰௨) நீதி.௭.௰௩. (௰௭) யாத்.௨௩.௧. சங்.௱௨௰.௩. (௰௯) நீதி.௬.௩௪,௩௫. (௨௰) சங்.௱௫.௰௮. ௧.பேதுரு.௨.௰௯. அதி.௪௰.௩, ௰௫. அதி.௪௧.௰௪. (௨௧) யாத்.௩.௨௧. யாத்.௰௧.௩. யாத்.௰௨.௩௬. சங்.௱௬.௪௬. நீதி.௰௬.௭.தானி.௧.௯. அப்.௭. ௯,௰. (௨௨) அதி.௪௰.௩,௪. (௨௩) வச.௨,௩.—(௪௰. அதி. ௧.) நெகி.௧.௰௧. (௨) நீதி.௰௬.௰௪. (௩) அதி.௩௯.௨௰, ௨௩. (௭) நெகி.௨.௨. (௮) அதி.௪௧.௰௫. அதி.௪௧.௰௬. தானி.௨.௰௧,௨௮,௪௭.

அவர்களுடனே தாற்பரியத்தைத் தெரிவிப்பது
தேவனுக்காதீனமல்லவா; அவைகளை எனக்
௯ குவிவரித்துச்சொல்லுங்களென்ருன்.—அதற்குப்
பானபாத்திரத்தலைவன் யோசேப்பைநோக்கி, ஒ
ருதிராட்சக்கொடி என் முன்பாக இருக்கவும்;—
௰ அந்தத் திராட்சக்கொடியில் மூன்றுகிளைகளிருக்
கவும், அது தளிர்த்ததாயிருக்கவும், அதிலே பூக்
கள் மலர்ந்திருக்கவும், அதின்குலைகள் நன்ருய்ப்
௰௧ பழுத்திருக்கவும்;—பார்வோனுடைய பாத்திரம்
என்கையிலேயிருக்கவும், நானந்தப்பழங்களைப்
பறித்து, அவைகளைப் பார்வோனுடைய பாத்தி
ரத்திலேபிழிந்து, அந்தப் பாத்திரத்தைப்பார்வோ
னுடையகையிற்கொடுக்கவும், சொப்பனங்கண்
டேனென்று, தன் சொப்பனத்தைச் சொன்
௰௨ ஞன்.—அதற்கு யோசேப்பு அந்த மூன்றுகிளை
௰௩ கள் மூன்றுநாளேயாம்.—மூன்று நாளுக்குள்ளே
பார்வோன் உன்நியாயத்தைவிசாரித்து, உன் உத்
தியோகத்தில் மீண்டும் உன்னை ஏற்படுத்துவார்.
நீ முன்னே அவருக்குப் பானங்கொடுத்து வந்த
முறைமையின்படி, பார்வோனுடைய பாத்திரத்
தை அவர்கையிற்கொடுப்பாய்: இதுதான் தாற்ப
௰௪ ரியமென்று சொன்னதுமன்றி,—நீ வாழ்வடைந்
திருக்கும்பொழுது என்னை நினைத்து, என்மேல்
தயைவைத்து, என்காரியத்தைப் பார்வோனுக்கு
அறிவித்து இந்தவீட்டிலிருந்து என்னை விடுதலை
௰௫ யாக்கவேண்டும்.—நான் எபிரேயருடையதேசத்
திலிருந்து களவாய்க்கொண்டு வரப்பட்டேன்.
என்னை இந்தச் சிறைச்சாலையில் வைக்கும்படி
நான் இவ்விடத்தில் ஒன்றுஞ் செய்யவில்லை
௰௬ யென்றுஞ் சொன்ஞன்.—தாற்பரியம் நல்லதென்
று சுயம்பாகிகளின் தலைவன்கண்டு யோசேப்
பை நோக்கி, மூன்று வெண்மையான கூடை
௰௭ கள் என் தலைமேலிருக்கவும்,—பார்வோனுக்குச்
சுயம்பாகி பாகம்பண்ணின சகலவித போசன
பதார்த்தங்களிலுஞ் சில மேற்கூடையிலிருக்க
வும், என் தலையின்மேற்கூடையிலிருந்தவைக
ளைப் பறவைகளெடுத்துப்பட்சிக்கவும், நானும்
சொப்பனங் கண்டேனென்று சொன்ஞன்.—
௰௮ யோசேப்பு அந்த மூன்றுகூடைகள், மூன்றுநா
௰௯ ளேயாம்.—இனி மூன்றுநாளைக்குள்ளே, பார்
வோன் நியாயம் விசாரித்து, உன் தலைமையை
நீக்கி, மரத்திலே உன்னைத்தூக்குவிப்பார். அப்
பொழுது பறவைகள் உன்மேலிருந்து உன்மாமி
சத்தைத்தின்னும்: இதுதான் அதின் தாற்பரிய
மென்று உத்தரஞ்சொன்ஞன்.

௨௰ அதற்குமூன்ரும்நாள் பார்வோனுடையசென்
மதினமானதிஞல், அவன் தன் பணிவிடைக்
காரர் யாவருக்கும் விருந்துபண்ணி, பானபாத்
திரக்காரரின் தலைவனும், சுயம்பாகிகளின் தலை
வனுமாகிய இருவருடைய நியாயத்தையும், தன்
பணிவிடைக்காரரின் முன்பாக விசாரித்தான்.
பின்பு யோசேப்பு அவர்களுக்குச்சொல்லிய
தாற்பரியத்தின்படி,-பானபாத்திரக்காரரின் தலை ௨௧
வனை மீண்டும் பானங்கொடுக்கிற உத்தியோகத்
தில் ஏற்படுத்திஞன்: அவனும் பார்வோனுடை
யகையிற் பாத்திரத்தைக் கொடுத்தான்.—சுயம் ௨௨
பாகிகளின் தலைவனைத்தூக்குவித்தான்.—பான ௨௩
பாத்திரக்காரரின் தலைவனே, யோசேப்பை நி
னைத்ததில்லை: அவனை மறந்துவிட்டான்.

## ௪௧. அதிகாரம்.

௧. பார்வோன் கனவுகாண்டல்: ௨௫. யோசேப்பு இராசாவினுடைய சொப்பனத்தின் தாற்பரியத்தைத்தெரிவித்துப்புத்திசொல்லல்: ௩௭. யோசேப்பு மேன்மைபெறல்: ௫௰. யோசேப்புக்குப் புத்திரர் இருவர் உற்பவித்தல்: ௫௩. பஞ்சம் ஆரம்பித்தல்.

இரண்டு வருஷஞ்சென்றபின் பார்வோனும் ௧
தான் நதியோரத்திலே நிற்கவும்,—அழகும் புஷ் ௨
டியுமுள்ள ஏழுபசுக்கள், அந்த நதியில் நின்றும்
ஏறி, மைதானத்தில் புல்லைமேயவும்,—அவைக ௩
ளின் பின்அழகும் புஷ்டியுமில்லாது வேறேழு
பசுக்கள் நதியில் நின்றும் ஏறி, நதியோரத்திலே
அந்தப்பசுக்களருகே நிற்கவும்,—அழகும் புஷ் ௪
டியுமில்லாத பசுக்கள், அழகும் புஷ்டியுமுள்ள
அவ்வேழுபசுக்களையும் பட்சிக்கவும், ஒருசொப்
பனங்கண்டுவிழித்தான்.-திரும்பவும், அவன் நித் ௫
திரை யடைந்து, ஒரேதாளிலே நல்லசெழுமை
யான ஏழுகதிர்கள் ஈனப்படவும், பின்பு கீழ்
காற்றிஞலே தீயப்பட்டவைகளுஞ் சாவியுமாய்,
ஏழுகதிர்கள் ஈனப்படவும், சாவியான கதிர்கள்,
செழுமையும் பூரணமுமான ஏழுகதிர்களையும் வி
ழுங்கவும், இரண்டாந்தரஞ் சொப்பனங் கண்
டான்.—பார்வோன் நித்திரை தெளிந்து எழுந் ௬
தான். இவையோ சொப்பனமென் றறிந்தான்.—
விடியற்காலத்தில் அவனுடைய மனம் மிகவுங் ௭
கலங்கிற்று.

அப்பொழுது அவன் எகிப்திலுள்ள சகல மாந் ௮
திரிகரையும், சகல வித்துவான்களையும் அழைத்
து அவர்களுக்குத் தன் சொப்பனங்களையும் விவ
ரித்தான். அவைகளின் தாற்பரியத்தைப் பார்
வோனுக்கு ஒருவராலுஞ் சொல்லக்கூடாமற்
போயிற்று.—அப்பொழுது பானபாத்திரக்கார ௯
ரின் தலைவன் பார்வோனிடத்திலே, இன்று என்
குற்றமும் என் நினைவில் வருகின்றது.—பார் ௰
வோன் அவருடைய பணிவிடைக்காரர்மேல்
உக்கிரகோபங்கொண்டு, என்னையும், சுயம்பாகி
களின் தலைவனையும், மெய்க்காவலருக்குத் தலை
வனுடைய வீடாகிய சிறைச்சாலையில் வைத்தி
ருந்த காலத்தில்,—நானும் அவனும் ஒரு இரவிலே ௰௧
வெவ்வேறு பொருள்கொண்ட சொப்பனங்க

(௰௨) அதி.௪௧.௨௬. (௰௩) ௨.இரா.௨௫.௨௭. சங்.௩.௩. எரே ௫௨.௩௧. வச.௰௯. அதி.௪௧.௰௨,௨௫. நியா.௭.௰௪. தானி.௨.௩௬. தானி.௪.௰௯. (௰௪) லூக்.௨௩.௪௨. யோசு ௨.௰௨. ௧.சாமு.௨௰.௰௪,௰௫ ௨.சாமு.௯.௧. ௧.இரா.௨.௭. (௰௫) அதி.௩௯.௨௰. (௰௮) வச ௰௨ (௰௯) வச.௰௩. (௨௰) மத்.௰௪.௬. மாற்.௬.௨௧. மத்.௨௫.௰௯. (௨௧) வச.௰௩.நிகி. ௨.௧.(௨௨)வச.௰௯.(௨௩)யோபு.௰௯.௰௪. சங்.௩௧.௰௨. பிர.௯.௰௫,௰௬.ஆமோ.௬.௬.—(௪௧. அதி.)(௭)தானி.௨.௧. (௮) யாத்.௭.௰௧,௨௨. ஏசா.௨௯.௰௪. தானி.௧.௨௰. மத்.௨.௧. (௰) அதி ௪௰.௨,௩. அதி.௩௯.௨௰. (௰௧) அதி.௪௰.௫.

௰௨ ளைக் கண்டோம்.—மெய்க்காவலருக்குத் தலைவ
னுடைய பணிவிடைக்காரனாகிய எபிரேய வா
லிபனொருவனும், அங்கே எங்களுடனே யிருந்
தான். அவனுக்கவைகளைச்சொல்ல; அவன் எங்
களிருவருடைய வெவ்வேறு சொப்பனத்தின்
௰௩ தாற்பரியங்களையுந்தெரிவித்தான்.—அவன் எங்க
ளுக்குச்சொல்லிய தாற்பரியத்தின்படி நடந்தது:
என்னைத்திரும்பவும்,என் உத்தியோகத்தில்வைத்
து; அவனைத்தூக்குவித்தாரென்று சொன்னான்.
௰௪ பார்வோன் ஆளனுப்பி,யோசேப்பை அழைப்
பித்தான். அவனைவிரைவாய்ச் சிறைச்சாலையில்
நின்றுங் கொண்டுவந்தார்கள். அவன் சௌரம்
பண்ணிக்கொண்டு வேறுவஸ்திரங்களுந்தரித்து,
௰௫ பார்வோனிடத்தில் வந்தான்.—பார்வோன், யோ
சேப்பைநோக்கி, ஒரு சொப்பனங்கண்டேன்;
அதின் தாற்பரியத்தைத்தெரிவிக்க ஒருவருமில்
லை. நீயே சொப்பனதாற்பரியத்தைத்தெரிவிக்க
அறிவாயென்று சொல்லக் கேள்விப்பட்டே
௰௬ னென்றுசொன்னான்.—அதற்கு யோசேப்பு,நான்
அல்ல, தேவனே பார்வோனுக்கு மங்கள உத்
௰௭ தரம் அருளிச்செய்வாரென்று சொல்ல;—பார்
வோன், யோசேப்பைநோக்கி, நான் நதியோரத்
௰௮ திலே நிற்கவும்,—புஷ்டியும் அழகுமுள்ள ஏழு
பசுக்கள் நதியில் நின்றும் ஏறி, மைதானத்திற்
௰௯ புல்லை மேயவும்,—அவைகளின்பின்பு, எகிப்து
தேசத்தில் எங்கும் என்றும் நான் காணாத அவ
லட்சணமுள்ளவைகளாய், புஷ்டியுஞ் சற்றாகி
லும் அழகுமில்லாத வறட்சியான வேறேழுபசுக்
௨௰ கள் ஏறிவரவும்,—புஷ்டியும் அழகுமில்லாத பசுக்
கள் புஷ்டியான முந்தின ஏழுபசுக்களையும் பட்
சிக்கவும், இவைகள் அவைகளின் வயிற்றுக்குட்
௨௧ பட்டும்,—வயிற்றுக்குட்பட்டதென்பது தெரியா
மல் முன்போலவே அவலட்சணமுள்ளவைக
ளாயிருக்கவும், ஒரு சொப்பனங்கண்டு விழித்
௨௨ தேன்.—பின்னும் நான் ஒரேதாளில், நல்ல செழு
௨௩ மையான ஏழுகதிர்கள் ஈனப்படவும்,—அவை
களின்பின் கீழ்காற்றினாலே தீந்தனவும், சாவி
௨௪ யும் பதருமான கதிர்கள், ஈனப்படவும்,—பதரா
ன கதிர்கள், நல்ல விளைவான அந்த ஏழு கதிர்க
ளையும் விழுங்கவுங்கண்டேன்: இதை மாந்திரிக
ரிடத்திற்சொன்னேன். இதின் தாற்பரியத்தை
எனக்குத் தெரிவிப்பார் ஒருவருமில்லையென்று
சொன்னான்.
௨௫ யோசேப்பு, பார்வோனைநோக்கி, பார்வோ
னுடைய சொப்பனம் ஒன்றுதான். தேவன்
தாம் செய்வதின்னதென்று பார்வோனுக்கு அறி
௨௬ வித்திருக்கிறார்.—ஏழு நல்ல பசுக்களும் ஏழுவரு
ஷமாம்,நல்லவிளைவான ஏழுகதிர்களும் ஏழுவரு
௨௭ ஷமேயாம்: சொப்பனம்ஒன்றே.—அவைகளின்
பின் ஏறிவந்த அவலட்சணமான வறண்ட ஏழு
பசுக்களும் ஏழுவருஷம். கீழ்காற்றினாலே தீந்
துசாவியான ஏழுகதிர்களும் பஞ்சகாலமாயிருக்
கும் ஏழுவருஷமேயாம்.—பார்வோனுக்குத் தெ ௨௮
ரிவித்தகாரியம் இதுவே. தேவன் தாம்செய்
வதைப் பார்வோனுக்குக்காட்டுகிறார்.—எகிப்து ௨௯
தேசமெங்கும் ஏழுவருஷம் பூரண விளைவுண்
டாம்.—அதன்பின் ஏழுவருஷத்துக்குப் பஞ்ச ௩௰
முண்டாகும். அப்பொழுது எகிப்து தேசத்தில்
அந்தப்பூரணமெல்லாம்மறந்துபோகப்படும். அந்
தப் பஞ்சம்தேசத்தை யழிக்கும்.—வரப்போகிற ௩௧
பஞ்சத்தின் கொடுமை மிகுதியினால் தேசத்தில்
முன்னிருந்தபூரணம் ஒழிந்துபோம்,—இந்தக்கா ௩௨
ரியந் தேவனால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்ற
தென்பதையும், தேவன் இதைச்சீக்கிரத்தில் நி
றைவேற்றுவாரென்பதையுங்குறித்துப் பார்வோ
னுக்குச்சொப்பனமிரட்டையாயிற்று.—ஆதலால் ௩௩
விவேகமும், ஞானமுமுள்ள ஒருமனிதனைத்தே
டி, பார்வோன் எகிப்து தேசத்திற்கு அதிகாரி
யாய் ஏற்படுத்துவாராக.—பூரண விளைவுண்டா ௩௪
கும் ஏழுவருஷபரியந்தம் எகிப்து தேசத்தின்
விளைவுகளில் ஐந்திலொருபங்கு வாங்கும்படிக்
குத் தேசத்திற்கு மேல்விசாரணைக்காரரையும்,
பார்வோன் வைக்கக்கடவர்.—மேலும், அவர் ௩௫
கள் வரப்போகிற நல்ல வருஷங்களிலுள்ள உ
ணவுப்பொருள்கள் யாவையுஞ் சேகரிக்கக்கட
வர்கள். பார்வோனுடைய அதிகாரத்தின்கீழே,
தானியத்தைச்சேர்த்து, நகரங்களிற் போசனப
தார்த்தங்களைக்காத்து வைத்துக் கொள்ளக்கடவர்
கள்.—அந்த உணவுப்பொருள் இனி எகிப்து தே ௩௬
சத்திலுண்டாகும் பஞ்சத்தின்வருஷங்கள்ஏழள
வுந்தேசத்திற்குஒருவைப்பாயிருக்கும். அதினால்
அந்தப்பஞ்சத்தாலே தேசம் அழியாதென்றான்.
இந்தவாக்குப் பார்வோனுக்கும், அவன் பணி ௩௭
விடைக்காரர் யாவருக்கும், நல்லதென்றுதோன்
றிற்று.—பார்வோன் தன் பணிவிடைக்காரரை ௩௮
நோக்கி, தேவ ஆவியைப்பெற்ற இவனைப்போ
லவேறாரைக் காண்போ மென்றான்,—பின்னும் ௩௯
பார்வோன் யோசேப்பைநோக்கி, தேவன் இ
வை யெல்லாவற்றையும் உனக்கு வெளிப்படுத்
தினதினாலே, விவேகமும் ஞானமுமுள்ள உன்
னைப்போல வேறொருவனுமில்லை.—நீ என்வீட ௪௰
டிற்கு அதிகாரியாயிருப்பாய். என்சனங்களெல்
லாரும் உன் வாக்கின்படி ஆளப்படுவார்கள்.
சிங்காசனத்தைக் குறித்துமாத்திரம் உன்னிலும்
நான் பெரியவனா வேனென்றான்.—பின்னும், ௪௧
பார்வோன் யோசேப்பைநோக்கி, இந்த எகிப்
துதேச முழுமைக்கும் உன்னை அதிகாரியாக்கி
னேனென்பதை அறியென்றுசொல்லி,—தன்கை ௪௨
யிலிருந்த முத்திரை மோதிரத்தைக்கழற்றி, அதை
யோசேப்பின்கையிலிட்டு, மெல்லியசணல்நூல்

(௰௨) அதி.௩௭.௩௬. அதி.௪௰.௰௨. (௰௩) அதி.௪௰.௨௨. (௰௪) சங்.௱௫.௨௰ தானி.௨.௨௫. ˊக,சாமு.௨.௮. (௰௫) ௯௪.௰௨. சங்.௨௫.௰௪. தானி.௫.௰௬. (௰௬) தானி.௨.௩௰. அதி.௪௰.௮. தானி.௨.௨௨. (௰௭) வச.௧. (௨௪) வச. ௮. தானி.௪.௭. (௨௫) தானி.௨.௨௮,௨௯,௪௫. வெளி.௪.௧. (௨௭) ௨.இரா.௮.௧. (௩௰) அதி.௪௭.௰௩. (௩௨) எண். ௨௩.௰௯. ஏசா.௪௬.௰,௰௧. (௩௪) நீதி.௬.௬,௭.௮. (௩௫) வச.௪௮.(௩௬) அதி.௪௭.௰௫,௰௯. (௩௮) எண்.௨௭. ௰௮.யோபு. ௩௨.௮. நீதி.௨.௬. தானி.௪.௮. (௪௰) அப்.௭.௰. (௪௧) தானி.௬.௩. (௪௨)எஸ்த.௩.௰.எஸ்த.௮.௰௫.தானி.௫.௭,௨௯.

வஸ்திரங்களை அவனுக்குத்தரிப்பித்து, பொற்ச
ரப்பணியை அவனுடைய கழுத்திற்போட்டு,-
௪௩ தன்னுடைய இரண்டாம் இரதத்தின்மேல் அவ
னை ஏற்றி, முழங்காற்படியிடுங்களென்று அவ
னுக்கு முன்பாகக் கூறிக்கொண்டுபோகும்படி
செய்து; எகிப்துதேசமுழுவதிற்கும் அவனை அ
௪௪ திகாரியாக்கினன்.—பின்னும்பார்வோன் யோ
சேப்பைநோக்கி, பார்வோனாகிய நானேயன்றி,
எகிப்து தேசத்திலுள்ளவர்களில் ஒருவனும் உன்
உத்தரவில்லாமல் தன்கையையாகிலும், காலையா
கிலும் அசைக்கவுங்கூடாதென்று சொன்னன்.-
௪௫ பார்வோன் யோசேப்புக்குச் சாபிநத்பானேயா
கென்று பேரிட்டு, ஓன் நகரத்திலுள்ள ஆசாரிய
னாகியபொத்திப்பேராவின் குமாரத்தி ஆஸ்நாத்
தை அவனுக்கு மனைவியாகக் கொடுப்பித்தான்.
௪௬ யோசேப்பு எகிப்துதேசத்தைச் சுற்றிப்பார்க்
கும்படி புறப்பட்டான். யோசேப்பு எகிப்தின்
இராசனாகிய பார்வோனுக்கு முறபட்டபொழு
துஅவனுக்கு முப்பதுவயது. யோசேப்பு பார்
வோனின் சமுகத்தைவிட்டு எகிப்துதேசம்முழு
௪௭ வதையுஞ் சுற்றிப்பார்த்தான்.—செழிப்புள்ள ஏ
ழுவருஷங்களிலும் பூமிமிகுந்தபலனைக்கொடுத்
௪௮ தது.—அவ்வேழு வருஷங்களில் எகிப்துதேசத்
திலுண்டான தானியங்கள்யாவையும், அவன்
சேர்த்து, அந்தத்தானியங்களை நகரங்களிற்சேக
ரித்துவைத்தான். அந்தந்த நகரங்களில் அதின
தின் சுற்றுப்புறத்துத் தானியங்களைச் சேகரித்து
௪௯ வைத்தான்.—இப்படி யோசேப்பு அளவிறந்த
தாய், கடற்கரைமணலைப்போல மிகுதியாகத்தா
னியத்தைச் சேகரித்துவைத்தான். அது அளவுக்
கு அடங்காததாயிருந்தது.
௫௰ ஓன் நகரத்திலிருந்த ஆசாரியனாகிய போத்தி
பேராவின் குமாரத்தி அஸ்நாத்து யோசேப்புக்
கு இரண்டுபுத்திரரைப்பெற்றாள். அவர்கள் பஞ்
சமுண்டாகும் வருஷங்கள் வருவதற்கு முன்
௫௧ னே பிறந்தார்கள்.—யோசேப்பு, தேவன் என்
கிலேசம் யாவையும், என் பிதாவின் குடும்பம்
அனைத்தையும் நான் மறக்கும்படி செய்தாரென்
றுசொல்லி, மூத்தவனுக்கு மனாசேயென்று பே
௫௨ ரிட்டான்.—நான் சிறுமைப்பட்டிருந்த தேசத்
தில், தேவன் என்னைப்பலுகப்பண்ணினாரென்
று சொலலி, இளையவனுக்கு எப்பிராயீமென்று
பேரிட்டான்.
௫௩ எகிப்து தேசத்திலே செழிப்புள்ள அவ்வே
௫௪ ழு வருஷங்களுஞ் சென்றபின்பு,—யோசேப்பு
சொல்லியபடி ஏழுவருஷபஞ்சந் தொடங்கிற்
று. சகல தேசங்களிலும் பஞ்சமுண்டாயிற்று.
எகிப்து தேசத்தில் எங்கும் ஆகாரமிருந்தது.—
௫௫ எகிப்து தேசமெங்கும் பஞ்சமுண்டானபடி
யால், சனங்கள் உணவுக்காகப் பார்வோனை
நோக்கி ஓலமிட்டார்கள். பார்வோன், நீங்கள்
யோசேப்பினிடத்துக்குப்போய் அவன் உங்க
ளுக்குச் சொல்லுகிறபடி செய்யுங்களென்று
எகிப்தியரெல்லாருக்குஞ் சொன்னன்.—தேச ௫௬
மெங்கும் பஞ்சமுண்டானபொழுது யோசேப்
பு எல்லாக்களஞ்சியங்களையுந்திறந்து, எகிப்திய
ருக்கு விற்றான். பஞ்சம் எகிப்து தேசத்தில்
வரவரக் கொடிதாயிற்று.—சகல தேசங்களிலும் ௫௭
பஞ்சங் கொடிதாயிருந்தபடியால், சகல தேசத்
தாரும் யோசேப்பினிடத்திலே கொள்ளும்படி
எகிப்துக்கு வந்தார்கள்.

## ௪௨. அதிகாரம்.

௧. யாக்கோபின் புத்திரர் தானியங்கொள்ள எகிப்துக்குப்போதல்: ௫. அவர்கள் யோசேப்பினிடத்தில்சேர்தல்: யோசேப்பு ஷிமியோனைக் கட்டினதுமன்றிப் பேன்யாமீனைக்கொண்டுவரக் கட்டளையுமிடல்: ௨௧. அவர்கள் தாங்கள் யோசேப்புக்குச்செய்த தீமையை நினைத்தல்: ௨௫. யோசேப்பு பொதிக்குட் பணத்தைவைத்து அவர்களை யனுப்பிவிடல்: ௨௯. அவர்கள் பிதாவின் வீட்டிற்சேர்ந்து சமாசாரந்தெரிவித்தல்: ௩௫. யாக்கோபு பேன்யாமீனை அனுப்பப் பயந்து மறுத்தல்.

யாக்கோபு எகிப்திலே தானியம் உண்டென்ப ௧
தையறிந்து, தன் புத்திரரைநோக்கி, நீங்கள் ஒரு
வரையொருவர் பார்த்துக்கொண்டிருக்கிறதென்
ன.—எகிப்து தேசத்தில் தானியம் உண்டென் ௨
று கேள்விப்பட்டேன். நாம் சாவாமல், உயி
ரோடிருக்கும்படி அவ்விடத்திற்குப்போய்த் தா
னியத்தை வாங்கிக்கொண்டு வாருங்களென்று
சொல்ல;-யோசேப்பின் சகோதரர் பத்துப்பேர் ௩
தானியங்கொள்ள எகிப்து தேசத்திற்குப்போ
னார்கள்.—யோசேப்பின் சகோதரனாகிய பேன் ௪
யாமீனுக்குத்தீங்குநேரிடவுங்கூடுமென்றுசொல்
லி யாக்கோபு அவனை அவர்களுடனே யனுப்ப
வில்லை.
கானான்தேசத்திற் பஞ்சமுண்டானபடியால், ௫
தானியங்கொள்ளப்போயிருந்தவர்களுடனே இ
ஸரவேலின் புத்திரரும் போய்ச்சேர்ந்தார்கள்.—
அத்தேசத்திற்கு அதிகாரியாயிருந்தயோசேப்பே ௬
அத்தேசத்தின் சனங்கள் யாவருக்கும் விற்றான்.
யோசேப்பின் சகோதரர்சேர்ந்து, அவனைப்பூ
மிக்குநேரேதாழ்ந்துவணங்கினார்கள். யோசேப்
பு அவர்களைக்கண்டு, தன் சகோதரரென்று அறிந்
தான்.—அறிந்துமறியாதவன்போலக் கடுமையாய் ௭
அவர்களுடன்பேசி, நீங்கள் எங்கேயிருந்து வந்
தீர்களென்று கேட்டான். அதற்கு அவர்கள், கா
னான் தேசத்திலிருந்து தானியங்கொள்ளவந்தோ
மென்று சொன்னார்கள்.—யோசேப்பு அவர்களைத் ௮
தன் சகோதரரென்றறிந்தும் அவர்கள் அவனை
யறியவில்லை.—யோசேப்பு, தான் அவர்களைக்கு ௯
றித்துக்கண்ட சொப்பனங்களை நினைத்து, அவர்
களைநோக்கி, நீங்கள் வேவுகாரர். இத்தேசத்தின்

(௪௩)எஸ்த.௬.௯. அதி.௪௫ ௮. அதி.௪௨.௬.(௪௫)யாத்.௨.௰௬. ௨.சாமு.௮.௰௮. (௪௬) ௧.சாமு.௰௬.௨௧. ௧.இரா.௰௨. ௬,௮. தானி.௧.௰௯.(௪௯) அதி.௨௨.௰௭. நியா.௭ ௰௨ (௫௰) அதி.௪௬.௨௰. வச.௪௫. ௨ சாமு.௮.௰௮. (௫௨) அதி. ௪௯.௨௨. (௫௪) சங்.௱௫.௰௬. (௫௭) உபா.௯.௨௭.—(௪௨. அதி. ௧.)அப்.௭.௰௨. (௨) எசா.௩௮ ௧. (௫) அப்.௭.௰௧. (௬) அதி ௪௧.௪௧. அதி.௩௭.௭.(௯) அதி.௩௭.௫,௯.

திறவுகளைப்பார்க்க வந்தீர்களென்றுசொல்ல;—
௰ அவர்கள், ஆண்டவனே, அதற்காகவல்ல, உம
தடியாராகிய நாங்கள் தானியங் கொள்ள வந்
௰௧ தோம்.—நாங்களெல்லாரும் ஒருவனுடைய புத்
திரர். உம்முடைய அடியாராகிய நாங்கள் நேர்
மையுள்ளவர்கள்; வேவுகாரரல்லவென்றார்கள்.—
௰௨ அதற்குஅவன்,அப்படியல்ல. இத்தேசத்தின் திற
௰௩ வுகளைப் பார்க்கவே வந்தீர்களென்றான்.—அப்
பொழுதவர்கள், உம்முடைய அடியாராகிய நாங்
கள் பன்னிரண்டு சகோதரர். கானான்தேசத்
திலிருக்கிற ஒருவனுடைய புத்திரர். இளையவன்
இப்பொழுது பிதாவினிடத்திலிருக்கிறான். ஒ
௰௪ ருவன் இல்லையென்றார்கள்.—யோசேப்பு அவர்க
ளைநோக்கி நீங்கள்வேவுகாரரென்று நான்சொன்
னதற்குச் சந்தேகமில்லை. நீங்கள் சோதிக்கப்
௰௫ படுவீர்கள்.-உங்கள்இளையசகோதரன்இங்கேவந்
தாலொழிய நீங்களிங்கேயிருந்து புறப்படுவதில்
லையென்று, பார்வோனுடைய சீவனைக்கொண்
௰௬ டு, ஆணையிட்டுச்சொல்லுகிறேன்.—உங்கள் ச
கோதரனை அழைத்துவரும்படி, உங்களிலொரு
வனையனுப்புங்கள். உங்களில் நேர்மையுண்
டோ, இல்லையோஎன்பதற்கு உங்கள்வாக்குக
ளைப்பரிசோதிக்குமளவும், நீங்கள் சிறைச்சாலை
யிலிருக்கவேண்டும். இல்லையென்றுகண்டால்,
நீங்கள் வேவுகாரர்தாமென்று பார்வோனுடை
ய சீவனைக்கொண்டு, ஆணையிட்டுச் சொல்லுகி
௰௭ றேனென்றுசொல்லி,—அவர்களை ஏகமாய் மூன்
௰௮ றுநாள் சிறைச்சாலையில் வைப்பித்தான்.—மூன்
றாம்நாளிலே யோசேப்பு அவர்களுடனே நான்
தேவனுக்குப் பயப்படுகிறேன் ஆதலால் ஒன்
௰௯ றுசெய்யுங்கள், அப்பொழுது சீவிப்பீர்கள்.—நீங்
கள் நேர்மையுள்ளவர்களானால், உங்களிலொரு
வன் நீங்களிருக்குமிடமானசிறைச்சாலையிற்கட்
டுண்டிருக்கப் பஞ்சத்தினால்வருந்துகிற உங்கள்
குடும்பத்தாருக்குத் தானியத்தைக்கொண்டுபோ
௨௰ கப்புறப்படுங்கள்.—உங்கள் இளையசகோதரனை
என்னிடத்திற்கு அழைத்துக்கொண்டு வாருங்
கள். அதினால் உங்கள்வாக்குகள் உண்மைப்
படும். நீங்களும் மரிக்கமாட்டீர்களென்றுசொன்
னான்: அவர்கள் அதற்கமைந்தார்கள்.
௨௧ நம்முடையசகோதரன் நம்மைநோக்கிக்கெஞ்
சிவேண்டிக்கொண்டபொழுது, அவனுடையம
ன வியாகுலத்தை நாம்கண்டும், அவனுக்குச்செ
விகொடாமற் போனதைக்குறித்து நாம்குற்றவா
ளிகளே. அதின் நிமித்தம் இந்தஆபத்து நம்மேல்
வந்ததென்று, இப்படி ஒருவரோடொருவர்பே
௨௨ சிக்கொண்டார்கள்.—அப்பொழுது ரூபேன் அ
வர்களைநோக்கி மறுமொழியாக, அந்தப்பிள்ளை
யை விரோதித்துப் பாவஞ்செய்யாதிருங்களென்
று நான் உங்களுக்குச் சொல்லவில்லையா. நீங்
கள்கேளாமற் போனீர்கள். அதினால் அவனுடை
ய இரத்தப்பழி வாங்கப்படுகின்றதென்றான்.—
யோசேப்புதுபாஷிவழியாய்ப்பேசினபடியால், ௨௩
தாங்கள் சொன்னது, அவனுக்குத் தெரியுமென்
று அவர்கள் அறியவில்லை.—யோசேப்பு அவர் ௨௪
களைவிட்டு நீங்கி அழுதான். திரும்பவும் வந்து,
அவர்களுடனேசம்பாஷித்து, அவர்களிற் ஷிமி
யோனைப்பிரித்து, அவர்கள் கண்களுக்குமுன்
னே கட்டுவித்தான்.

பின்பு அவர்கள் கொண்டுவந்த பொதிகளைத் ௨௫
தானியத்தால்நிறைத்து, அவர்கள்கொடுத்தபணத்
தை அவரவர்பொதியிலே திரும்பப்போட்டுப்பி
ரயாணத்துக்குவேண்டிய ஆகாரத்தையும், அவர்
களுக்குக்கொடுக்கும்படி, யோசேப்பு கட்டளை
யிட்டான். இப்படியே அவர்களுக்கு அவன்
செய்தான்.—அவர்கள் அந்தத்தானியத்தைக் கழு ௨௬
தையின்மேலேற்றிக்கொண்டு அவ்விடம் விட்
டுப் புறப்பட்டுப்போனார்கள்.—சத்திரத்தில் அ ௨௭
வர்களிலொருவன் தன்கழுதைக்கு உணவுகொ
டுப்பதற்குத் தன்பொதியை அவிழ்த்தபொழுது,
அதின்வாயிலிருந்த பணத்தைக்கண்டு,—தன்ச ௨௮
கோதரருடனே, என்பணம் திரும்பக்கிடைத்த
து; பாருங்கள், அது என் பொதியிலிருக்கிறதென்
றான். அவர்களிருதயம் சோர்ந்துபோயிற்று. அ
வர்கள் பயமடைந்து, தேவன் நமக்கு இப்ப
டிச்செய்ததென்னவென்று, ஒருவரோடொருவர்
பேசிக்கொண்டார்கள்.

பின்பு அவர்கள் கானான் தேசத்திலுள்ள தங் ௨௯
கள் பிதாவாகிய யாக்கோபினிடத்தில்வந்து,—
எகிப்து தேசத்துக்கு அதிகாரியா யிருக்கிறவர், ௩௰
தேசத்தைப்பார்க்கவந்த வேவுகாரரென்று, எங்க
ளையெண்ணி, எங்களுடனே கடுமையாய்ப்பே
சினார்.—நாங்கள் அவருடனே, நாங்கள்நேர்மை ௩௧
யுள்ளவர்கள்; வேவுகாரரல்ல.—நாங்கள் பன் ௩௨
னிரண்டுசகோதரர். ஒருபிதாவின்புத்திரர். ஒரு
வன்இல்லை. இளையவன்இப்பொழுதுகானான்தே
சத்தில் எங்கள் பிதாவினிடத்திலிருக்கிறானென்
றோம்.—அப்பொழுது அத்தேசத்து அதிகாரியான ௩௩
வர், எங்களைநோக்கி, நீங்கள் நேர்மையுள்ளவர்க
ளென்பதை நான் அறியும்படி, உங்களிலொருவ
னை என்னிடத்தில்விட்டு, பஞ்சத்தினால் வருந்து
கிற உங்கள்குடும்பத்தாருக்கு, நீங்கள் தானியம்
வாங்கிக்கொண்டுபுறப்படுங்கள்.-உங்கள்இளைய ௩௪
சகோதரனை என்னிடத்திற்கு அழைத்துக்கொண்
டுவாருங்கள்; அதினால் நீங்கள் வேவுகாரரல்ல,
நேர்மையுள்ளவர்களென்பதை நான்கண்டு, உங்
கள்சகோதரனை உங்களுடனே விடுவேன்; நீங்
கள் இத்தேசத்தில்வியாபாரமும்பண்ணலாமென்
றானென்று, இப்படித் தங்களுக்குச் சம்பவித்த
வைகள் யாவையும், அவனுக்கு விவரித்தார்கள்.

பின்பு அவர்கள் தங்கள்பொதிகளிலுள்ள தா ௩௫
னியத்தைக் கொட்டுகையில், அவரவர் பொதி
யில், அவரவர்பணமுடிப்பு இருந்தது. அந்தப்
பணமுடிப்புக்களை அவர்களும் அவர்கள் பிதா

(௰௩) ஆதி.௩௭.௩௰. புல.௫.௭. (௰௮) நெகி.௫.௰௫. (௨௧) யோபு.௩௬.௮,௯. ஓசே.௫.௰௫. நீதி.௨௧.௰௩. மத்.௭.௨. (௨௨) ஆதி.௩௭.௨௧. ஆதி.௯.௫. ௧ இரா.௨.௩௭. சங்.௯.௰௨. லூக்.௰௧.௫௰,௫௧. (௨௫) மத்.௫.௪௪. ரோ.௰௨.௰௭. (௩௰) வச.௭.

௩௬ வுங்கண்டபொழுது, பயமடைந்தார்கள்.—அவர்
கள்பிதாவாகிய யாக்கோபு அவர்களைநோக்கி,
என்னைப்புத்திரவீனனாக்குகிறீர்கள். யோசேப்
பும் இல்லை. ஷிமியோனும் இல்லை. பேன்யா
மீனையும் அழைத்துக்கொண்டுபோகப்பார்க்கிறீர்
கள். இவையெல்லாம் எனக்கு நேரிட்டனவே
௩௭ என்றுசொன்னான்.—அப்பொழுது ரூபேன், தன்
பிதாவைநோக்கி, அவனை என்கையிலொப்பித்
தால், நான் அவனை உம்மிடத்தில்திரும்ப அழைத்
துக்கொண்டுவருவேன். அவனை அழைத்துக்
கொண்டுவராமற் போவேனேயானால், என்னி
ரண்டுபுத்திரரையுங் கொல்வீராகவென்று சொன்
௩௮ னான்.—அதற்கு அவன் இந்தப்பிள்ளையின் தமை
யன் இறந்துபோனான். இவனொருவன்இருக்கி
றான். நீங்கள்போகும்வழியில்இவனுக்கு ஒருதீங்
கு நேரிட்டால், நரைதிரையுள்ளவனாகிய என்
னைத்துக்கத்தோடேமரித்தோர் ஸ்தலத்திற்குக்
கொண்டுபோகப்பண்ணினீர்கள்: இவனை உங்க
ளோடேபோகவிடேனென்றான்.

## ௪௩. அதிகாரம்.

௧. யாக்கோபு பேன்யாமீனைஅவர்களோடேபோ
கவிடல்: ௰௫. யோசேப்பு தன்சகோதரரை உ
பசரித்தல்: ௩௧. அவன் விருந்துபண்ணல்.

தேசத்திலே பஞ்சம் கொடிதாயிருந்தது,—எகி
௨ ப்திலிருந்து அவர்கள் கொண்டுவந்த தானியஞ்
செலவழிந்ததினால், அவர்கள் பிதா அவர்களை
நோக்கி, நீங்கள் மீண்டும்போய்நமக்குக் கொஞ்
சந்தானியத்தைவாங்கிக்கொண்டுவாருங்களென்
௩ றுசொன்னான்.-அப்பொழுது யூதா அவனுடனே
அந்தமனிதன் எங்களைநோக்கி, உங்கள் இளையச
கோதரன் உங்களோடே வராவிட்டால், நீங்கள்
என்முகத்தைக் காணமாட்டீர்களென்று உறுதி
௪ யாய்ச்சொன்னான்.-எங்கள்சகோதரனை நீர் எங்க
ளுடனே அனுப்பினால், நாங்கள்போய் உமக்குத்
தானியத்தை வாங்கிக்கொண்டு வருவோம்.—
௫ அனுப்பாதிருப்பீராகில், நாங்கள் போகமாட்
டோம். உங்கள் சகோதரன் உங்களுடனேவரா
விட்டால் நீங்கள் என்முகத்தைக் காணமாட்
டீர்களென்று, அந்த மனிதன் எங்களுடனே
௬ சொல்லியிருக்கிறானே யென்றுசொல்ல:—இஸ
ரவேல், உங்களுக்கு இன்னுமொரு சகோதரன்
உண்டென்று நீங்கள் அந்தமனிதனுக்குச்சொல்
லி, இப்படியெனக்கு இந்தத் துன்பத்தை வரு
௭ வித்ததென்னவென்றான்.-அதற்கு அவர்கள், அந்
தமனிதன், உங்கள்பிதாஇன்னுமிருக்கிறாரா; உங்
களுக்கு இன்னுமொரு சகோதரன் உண்டா
வென்று எங்களையும், எங்கள்வமிசத்தையுங்கு
றித்து, நுட்பமாய் விசாரித்தான். அந்தவாக்குக்
கேற்கமறுமொழிகொடுத்தோம். உங்கள்சகோத
ரனை உங்களுடனே இங்கே அழைத்துவாருங்க
ளென்பதை, அவன்சொல்லுவானென்றுமுன் அ
௮ றிந்தோமா என்றார்கள்.-பின்னும் யூதா தன்பிதா
வாகிய இஸரவேலை நோக்கி, நீரும், நாங்களும்,
எங்கள்குழந்தைகளும், சாவாமல் உயிரோடிருக்
கும்பொருட்டாக, நாங்கள்புறப்பட்டுப்போகும்
படி, இந்தவாலிபனை என்னுடனேயனுப்பும்.—
இவனைக் குறித்துநான் உத்தரவாதஞ்செய்வேன். ௯
இவனை என்னிடத்திலேகேளும். நான் இவனை
உம்மிடத்திற் கொண்டுவந்து, உமக்குமுன்பாக
விடாதேபோனால், அந்தக்குற்றம் எப்பொழு
தும் என்மேலிருப்பதாக.—நாங்கள் தாமதியாமலி ௰
ருந்தால், இதற்குள் இரண்டாந்தரமும் போய்த்
திரும்புவோமே யென்று சொல்ல;—அவர்களு ௰௧
டையபிதாவாகிய இஸரவேல் அவர்களைநோக்
கி, அப்படியானால், ஒன்று செய்யுங்கள்; இத்
தேசத்தின் உத்தமப் பொருள்களிற் கொஞ்சம்
குங்குலியமும், தேனும், சுகந்த திரவியமும்,
வெள்ளைப்போளமும், தேரேபிந்துக்கொட்டை
யும், வாதுமைக்கொட்டையும், உங்கள்பாத்திரங்
களிலிட்டு, அந்தமனிதனுக்குக்கொண்டுபோய்க்
கொடுங்கள்.—பணத்தை இரட்டிப்பாக உங்கள் ௰௨
கைகளிற் கொண்டுபோங்கள். உங்கள் பொதி
யின் வாய்களில் வைக்கப்பட்டுத் திரும்பக்
கொண்டுவந்தபணத்தையுங் கொண்டுபோங்கள்.
அதுபிசகாயிருக்கவுங்கூடும்,—உங்கள் சகோதர ௰௩
னையுங் கூட்டிக்கொண்டு அந்தமனிதனிடத்திற்
குத்திரும்பவும் போய்வாருங்கள்.—அந்த மனி ௰௪
தன் அங்கிருக்கிற உங்கள் மற்றைச்சகோதரனை
யும், பேன்யாமீனையும், உங்களுடனே அனுப்பி
விடும்படிக்கு, சருவவல்லமையுள்ள தேவன்
அவன்முகத்தின் இரக்கம் உங்களுக்குக்கிடைக்
கப்பண்ணுவாராக: புத்திரவீனனாவேனாகில் புத்
திரவீனனாவேனென்றான்.

அப்பொழுதுஅந்தமனிதர்காணிக்கையையும், ௰௫
இரட்டிப்பாய்ப்பணத்தையுமெடுத்துக்கொண்ட
துமன்றிப் பேன்யாமீனையும் கூட்டிக்கொண்டு,
பிரயாணம் புறப்பட்டு, எகிப்திற்சேர்ந்து, யோ
சேப்பின்சமுகத்தில் நின்றார்கள்.—யோசேப்பு, ௰௬
பேன்யாமீன் அவர்களோடே நிற்பதைக்கண்டு,
தன் வீட்டுவிசாரணைக்காரனைநோக்கி, மத்தியா
னத்திற்கு இந்தமனிதர் என்னோடேபோசனஞ்
செய்யவேண்டும்; நீயிந்த மனிதரை வீட்டுக்கு
அழைத்துக்கொண்டுபோய்ப் போசனத்துக்கு
வேண்டியவைகளைஅடித்து ஆயத்தம்பண்ணென்
று சொன்னான்.—அவன் தனக்கு யோசேப்பு ௰௭
சொல்லியபடி, அந்த மனிதரை யோசேப்பின்
வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோனான்.-தாங் ௰௮
கள் யோசேப்பின்வீட்டுக்குக்கொண்டுபோகப்
பட்டபடியால், அவர்கள் பயமடைந்து, முன்
னே நம்முடைய பொதிகளிலிருந்த பணத்தி
னிமித்தம் நம்மேற் குற்றஞ்சுமத்தி, நம்மைப்
பிடித்து அடிமைகளாக்கிக்கொண்டு, நம்முடை
ய கழுதைகளையுங்கைக்கொள்ளும்படிக்கே நாம்
கொண்டுபோகப்படுகிறோமென்று சொல்லிக்

(௩௮) அதி.௩௭.௩௩. அதி.௪௪.௨௮. அதி.௩௭.௩௫. அதி.௪௪.௩௧.—(௪௩. அதி. ௧.) அதி.௪௧.௫௪,௫௭. (௩) அதி.௪௨.௨௰. அதி.௪௪.௨௩. (௯) பிலே.௰௮,௰௯. (௰௧) நீதி.௰௮.௰௬. எரே.௮.௨௨. (௰௨) அதி.௪௨.௨௫,௩௫. (௰௪) எஸ்த.௪.௰௫. (௰௬) ௧.சாமு.௨௫.௰௧. (௰௮) யோபு.௩௰.௰௪.

௰௯ கொண்டு;—யோசேப்பின் வீட்டுவிசாரணைக்
காரனை அணுகி, வீட்டு வாசற்படியிலே அவ
௨௰ னோடே சம்பாஷித்து,—நாயனே நாங்கள் தா
னியங் கொள்ளும்படி முன்னேவந்துபோனோ
௨௧ மே.—நாங்கள்போய்த் தங்கின சத்திரத்திலே,
எங்கள் பொதிகளை யவிழ்த்து நாங்கள் நிறுத்துக்
கொடுத்த நிறையின்படியே எங்கள்பணம் எங்
கள்பொதியிலிருக்கக்கண்டோம்; அதைநாங்கள்
௨௨ திரும்பவுங் கையிற் கொண்டுவந்தோம்.—மே
லும் தானியங் கொள்ளும்படி வேறுபணமுங்
கொண்டுவந்தோம்;நாங்கள்முன்கொடுத்தபணத்
தை எங்கள் பொதிகளிற்போட்டவன் இன்னா
௨௩ னென்றறியோமென்றார்கள்.—அதற்கு அவன்,
சாந்தமாயிருங்கள். பயப்படவேண்டாம். உங்
கள்பணம் என்னிடத்தில்வந்துவிட்டது. உங்
கள் தேவனும், உங்கள் பிதாவின் தேவனு
மாயிருக்கிறவரே, உங்களுக்கு மறைபொருளை
உங்கள் பொதிகளிலருளினாரென்று சொல்லி,
ஷிமியோனை வெளியே அழைத்துவந்து அவர்க
௨௪ ளிடத்தில் விட்டான்.—மேலும் அந்த மனிதன்
அவர்களை யோசேப்பின் வீட்டுக்குள்ளே கூட்
டிக்கொண்டுபோய், அவர்கள்தங்கள் கால்களைக்
கழுவும்படி தண்ணீர்கொடுத்து, அவர்களுடைய
கழுதைகளுக்கு உணவைக்கொடுத்தான்.
௨௫ அவர்கள் தாங்கள் அங்கேபோசனஞ்செய்யப்
போகிறதைக் கேள்விப்பட்டபடியால், மத்தியா
னமட்டில் யோசேப்பு வருவாரென்று காணிக்
௨௬ கையை ஆயத்தப்படுத்திவைத்திருந்தார்கள்.-யோ
சேப்புவீட்டுக்குவந்தபொழுது அவர்கள் தங்கள்
வசமிருந்த காணிக்கையை அவனிடத்திற்கொ
ண்டுபோய், பூமிக்குநேராய்த் தாழ்ந்துவணங்கி
௨௭ னார்கள்.-அவன் அவர்கள்சுகச்செய்தியைக்கேட்
டு, நீங்கள்சொன்னவிருத்தனாகிய உங்கள்பிதா,
சுகமாயிருக்கிறானா. இன்னும் இருக்கிறானா என்
௨௮ று அவர்களிடத்தில்விசாரித்தான்.-அதற்குஅவர்
கள் எங்கள்பிதாவாகிய உமதடியான் சுகமாயிருக்
கிறார். இன்னு மிருக்கிறாரென்று சொல்லித்
௨௯ தாழ்ந்து வணங்கினார்கள்.—பின்பு அவன்கண்
ணேறிட்டுப்பார்த்து, தன்மாதாபெற்ற புத்திரனா
கிய தன் சகோதரன் பேன்யாமீனைக்கண்டு, நீங்
கள் எனக்குச்சொன்ன சகோதரன் இவன்தானா
என்றுகேட்டு; என்மகனே, தேவன் உன்னைக்
௩௰ கடாட்சிக்கக்கடவரென்றுசொல்லி;-தன்சகோ
தரனைப்பற்றித் தன்வயிறு எரிந்தபடியால், அழு
கிறதற்கு இடந்தேடித்துரிதமாய் அறைக்குள்ளே
௩௧ போய், அங்கே அழுதான்.—பின்பு அவன் தன்
முகத்தைக்கழுவிப் புறப்பட்டுத் தன்னை யடக்
கிக்கொண்டு போசனம் வைக்கச்சொன்னான்.—
௩௨ எபிரேயருடனே போசனம்பண்ணுகிறது எகிப்
தியருக்கு வெறுப்பானதினால், எகிப்தியர் அவர்
களுடனேபுசிக்கப்படாதென்று,அவனுக்கு வே
றே,அவர்களுக்குவேறே,அவனுடனேபுசிக்கும்
எகிப்தியருக்குவேறே, பரிமாறினார்கள்.—அவர் ௩௩
கள் அவனுக்குமுன்பாக மூத்தவன் தன்சேஷ்ட
புத்திர அதிகாரத்தின்படிமுதலிலும், இளையவன்
தன்பிராயத்தின்படி கடைசியிலுமாக இருத்தப்
பட்டார்கள். அதற்கு அவர்கள் ஒருவரோடொ
ருவர் ஆச்சரியப்பட்டார்கள்.—அவன் தனக்கு ௩௪
வைக்கப்பட்டபோசனத்தில் அவர்களுக்குப்ப
கிர்ந்தான்.பேன்யாமீனுடையபங்கு,அவர்களுக்
குப்பகிர்ந்ததிலும் ஐந்துமடங்கதிகமாயிருந்தது.
அவனுடன் அவர்கள் திருத்தியாய்ப் பானம்பண்
ணிக்களிகூர்ந்திருந்தார்கள்.

## ௪௪. அதிகாரம்.

௧. யோசேப்புத் தன் சகோதரனைத்தடுக்க உபா
யஞ்செய்தல்: ௰௪. யூதா யோசேப்பைத்தாழ்ந்
துவேண்டிக்கொள்ளல்.

அவன் வீட்டுவிசாரணைக்காரனைநோக்கி,நீ இந் ௧
தமனிதருடைய பொதிகளில், இவர்கள் ஏற்றிக்
கொண்டுபோகத்தக்க தானியத்தைநிறைத்து, அ
வரவர்பணத்தை, அவரவர்பொதியின்வாயிலே
போடுவதன்றி,—இளையவனுடைய பொதியின் ௨
வாயிலே வெள்ளிப்பாத்திரமாகிய என்பானபாத்
திரத்தையும், தானியத்துக்கு அவன்கொடுத்தப
ணத்தையும், போடென்றுங்கட்டளையிட்டான்.
யோசேப்பு,தனக்குச்சொல்லியவாக்கின்படி அ
வன்செய்தான்.—அதிகாலையில் அந்தமனிதர்கள் ௩
தங்கள் கழுதைகளோடும் அனுப்பிவிடப்பட்
டார்கள்.—அவர்கள் நகரத்தைவிட்டுப்புறப்பட் ௪
டு நெடுந்தூரம்போவதற்குமுன்னே, யோசேப்
பு தன்வீட்டுவிசாரணைக்காரனைநோக்கி, நீ எழுந்
துபோய், அந்தமனிதரைத்தொடர்ந்து, அவர்க
ளையணுகி, அவர்களுடனே நீங்கள்நன்மைக்குத்
தீமைசெய்ததென்ன.—அது என் ஆண்டவன் ௫
பானம்பண்ணுவதற்கும், குறிபார்ப்பதற்குமுரி
யதல்லவா. நீங்கள் இப்படிச்செய்தது தீமை
யென்று, சொல்லென்றான்.
அவன் அவர்களைத்தொடர்ந்துபிடித்து, அவ் ௬
வாக்குகளையேசொன்னான்.-அதற்குஅவர்கள் அ ௭
வனைநோக்கி, என்ஆண்டவன், இப்படிப்பட்ட
வாக்குகளைச் சொல்லுகிறதென்ன. இப்படிப்
பட்டகாரியத்திற்கும், உம்முடைய அடியாராகி
ய எங்களுக்கும், வெகுதூரம்.—கேளும், முன் ௮
னே நாங்கள் எங்கள் பொதிவாயிலே கண்டப
ணத்தைக் கானான்தேசத்திலிருந்து, திரும்ப உம்
மிடத்திற்குக்கொண்டுவந்தோமே; உம்முடைய
எசமானன் வீட்டிலிருந்து பொன்வெள்ளிகளைத்
திருடிக்கொண்டுபோவோமா.-உம்முடைய அடி ௯
யாராகிய எங்களுக்குள்ளே அதைவைத்திருக்கிற
வனெவனோ அவன் கொலையுண்ணக்கடவன்;
நாங்களும் ஆண்டவனுக்கு அடிமைகளாவோ
மென்றார்கள்.-அதற்கவன் உங்கள்சொற்படியே ௰
அதைவைத்திருக்கிறவனெவனோ, அவன் எனக்
கு அடிமையாவான்; நீங்கள் குற்றமற்றவர்களா

(௨௰) அதி.௪௨.௩,௰. (௨௧) அதி ௪௨.௨௭,௩௫. (௨௬) அதி.௩௭.௭,௰. (௨௭) அதி.௩௭.௰௪. அதி.௪௨.௰௧,௰௩. (௨௮) அதி ௩௭.௭,௰. (௨௯) அதி.௩௫.௰௭,௰௮. அதி.௪௨.௰௩. (௩௰) ௧.இரா.௩ ௨௬. (௩௨) அதி. ௪௬.௩௪. யாத்.௮.௨௬. (௩௪) அதி.௪௫.௨௨. ஆகா.௧.௬. யோவா.௨.௰.—(௪௪. அதி. ௮.) அதி.௪௩.௨௧. (௯) அதி.௩௧.௩௨.

௰௧ வீர்களென்றான்.—அப்பொழுது அவர்கள் துரி
தமாய்த் தங்கள் பொதிகளைத்தரையிலிறக்கி, தங்
கள் தங்கள் பொதியை அவிழ்த்துவிட்டார்கள்.-
௰௨ மூத்தவன் பொதிமுதல், இளையவன் பொதிமட்
டும், சோதித்தபொழுது, அந்தப்பாத்திரம் பென்
௰௩ யாமீனுடைய பொதியிற்காணப்பட்டது.—அப்
பொழுது அவர்கள் தங்கள்தங்கள்வஸ்திரங்களைக்
கிழித்துக்கொண்டு, தங்கள்தங்கள்கழுதைகளின்
மேற்சுமையேற்றி நகரத்திற்குத் திரும்பினார்கள்.
௰௪ யோசேப்பு அதுவரைக்கும் வீட்டிலேயிருந்த
படியால், யூதாவும், அவன் சகோதரரும், அங்கே
போய்,அவனுக்குமுன்பாகத்தரையில்விழுந்தார்
௰௫ கள்.—யோசேப்பு அவர்களைநோக்கி, நீங்கள் என்
னசெய்கை செய்தீர்கள். என்னைப்போன்றவன்
நிச்சயமாய்க் குறிபார்க்கக்கூடுமென்பதை அறி
௰௬ யீர்களா, என்றான்.—அதற்கு யூதா, என் ஆண்ட
வனாகிய உம்முடனே நாங்கள் எதைச்சொல்
லுவோம். எதைப்பேசுவோம். எப்படி நாங்கள்
சுத்தராவோம். உம்முடைய அடியாரின் பாவத்
தைத் தேவன் விளங்கப்பண்ணினார். பாத்தி
ரத்தை வைத்திருக்கிறவனும், நாங்களும், ஆண்
௰௭ டவனுக்கு அடிமைகளேயென்றான்.—அதற்க
வன் இப்படிப்பட்டசெய்கை எனக்குத்தகாது;
பாத்திரத்தை வைத்திருக்கிறவனெவனோ அவ
னே எனக்கு அடிமையாயிருப்பான். நீங்களோ
சமாதானத்துடன் உங்கள் பிதாவிடத்திற்குப்
போங்களென்றான்.
௰௮ அப்பொழுது யூதா அவனைச்சமீபித்து,ஆ!என்
ஆண்டவனே, அடியேன்சொல்லும் வாக்கைச்
செவிசாய்த்துக் கேளும். அடியேன்மேல் உம
துகோபம் மூளாதிருப்பதாக. நீர் பார்வோனுக்
௰௯ கு ஒப்பாயிருக்கிறீரே,—உங்கள் பிதா இருக்கிறா
ரா; சகோதரருமுண்டாவென்று, என் ஆண்ட
வன் உம்முடைய அடியாரிடத்திற்கேட்டீர்,—
௨௰ அதற்கு நாங்கள் விருத்தராய்ப் பிதா இருக்கிறா
ரென்றும், அவருக்கு விருத்தாப்பியகாலத்திற் பி
றந்த ஒருசிறுவன் உண்டென்றும், அவன்தமைய
னிறந்துபோனானென்றும், அவனொருவன் மாத்
திரமே அவனைப்பெற்ற மாதாவுக்கு இருப்பதி
னாற் பிதா அவன்மேலே நேசமாயிருக்கிறாரென்
௨௧ றுஞ்சொல்ல;—நீர் உமதடியாரைநோக்கி, அவ
னை என்னிடத்திற்கு அழைத்துவாருங்கள். என்
கண்ணினால்அவனைப்பார்க்கவேண்டுமென்றீர்.-
௨௨ அப்பொழுது ஆண்டவனைநோக்கி, நாங்கள் அச்
சிறுவன் பிதாவைவிட்டுப்பிரியக்கூடாது. பிரிந்
௨௩ தால் பிதா இறந்துபோவாரென்றோம்.—அதற்கு
நீர் உமதடியாரைநோக்கி, உங்கள் இளைய சகோ
தரனை அழைத்துவராவிட்டால், நீங்களினி என்
௨௪ முகத்தைக்காணமாட்டீர்களென்றீர்.-பின்பு நாங்
கள் உமதடியாராகிய எங்கள் பிதாவினிடத்திற்
குப்போய்ச்சேர்ந்து, எங்கள் ஆண்டவனுடைய
வாக்கை அவருக்கு அறிவித்தோம்.-எங்கள் பிதா ௨௫
எங்களைநோக்கி,நீங்கள் திரும்பிப்போய்நமக்குக்
கொஞ்சம் தானியம் வாங்கிக்கொண்டு வாருங்க
ளென்றுசொல்ல;—நாங்கள் போகக்கூடாது. எங் ௨௬
கள் இளைய சகோதரன் எங்களுடனே வந்தால்,
போவோம்; எங்கள்இளையசகோதரன்எங்களுட
னேவராவிட்டால், நாங்கள்அந்தமனிதனுடைய
முகத்தைக் காணக்கூடாதேயென்றோம்.—அப் ௨௭
பொழுது உமதடியாராகிய எங்கள்பிதா எங்களை
நோக்கி, என்மனைவி எனக்கு இருவரைப்பெற்றா
ளென்பதை அறிந்திருக்கிறீர்கள்.—அவர்களிலொ ௨௮
ருவன் என்னிடத்திலிருந்து புறப்பட்டுப்போய்
விட்டான். மெய்யாக அவன் பீறுண்டுபோனா
னென்றேன். அதுமுதல்இதுவரைக்கும்அவனைக்
காணவில்லை.—நீங்கள் இவனையும், என்னைவிட் ௨௯
டுப்பிரித்து,அழைத்துப்போகுமிடத்தில்இவனுக்
கொரு தீங்குநேரிட்டால், நரைதிரையுள்ளவனா
கியஎன்னைத்துக்கத்தோடேமரித்தோர்ஸ்தலத்திற்
குப்போகப்பண்ணினீர்களென்றார்.—இளையவ ௩௰
னைவிட்டு அடியேன் என்பிதாவினிடத்துக்குப்
போனால், அவருடைய சீவன் இவனுடையசீவ
னுடனே கட்டுண்டிருக்கிறதினால்,—இளையவன் ௩௧
வரவில்லையென்று, அவர் அறிந்தமாத்திரத்தில் இ
றந்துபோவார்; உம்முடைய அடியாராகிய நாங்
கள், உமதடியாராகிய நரைதிரையுள்ள எங்கள்
பிதாவைத் துக்கத்தோடே மரித்தோர்ஸ்தலத்திற்
குப்போகப் பண்ணினவர்களாவோம்.—அதுவு ௩௨
மன்றி, இச்சிறுவனைக்குறித்து அடியேன் என்பி
தாவுக்கு உத்தரவாதி; நான் உம்மிடத்திற்கு இவ
னைஅழைத்துவராவிட்டால்,எப்பொழுதும்உமக்
குமுன்பாகக் குற்றவாளியாயிருப்பேனென்றும்
சொல்லியிருக்கிறேன்.—ஆதலால் இச்சிறுவனைத் ௩௩
தன் சகோதரருடனே போகவிடும்படி கெஞ்சிக்
கேட்கிறேன்: இவனுக்கீடாக அடியேன் என்
ஆண்டவனுக்கு அடிமையாயிருப்பேன்.—இச் ௩௪
சிறுவனைவிட்டு, எப்படி என் பிதாவினிடத்துக்
குப்போவேன். போனால், என் பிதாவுக்கு நேரி
டுந்தீங்கை நான் காண்பேனேயென்றான்.

## ௪௫. அதிகாரம்.

௧. யோசேப்பு தன்சகோதரருக்குத் தன்னை அறிவித்தல் தேவானுக்கிரகத்தைப்புகழ்ந்து தன் பிதாவுக்குமங்கலசமாசாரமனுப்பல்: ௰௬. யோசேப்பின் சகோதரர் வந்தமையைக் குறித்துப் பார்வோன்மகிழ்தல்: ௨௧. யோசேப்பு. பிரயாணத்திற்குவேண்டியவற்றைக் கொடுத்துச்சமாதானமாயிருக்கச்சொல்லல்: ௨௫. யோசேப்புசீவனோடிருப்பதைக்கேட்டுயாக்கோபுபூரித்தல்.

அப்பொழுது யோசேப்பு, தன்னருகே நின்ற ௧
யாவருக்கும்முன்பாகத்தன்னை அடக்கிக்கொள்
ளமாட்டாமல், யாவரும் என்னைவிட்டு வெளி
யேபோகப் பண்ணுங்களென்று கட்டளையிட்

(௰௩) அதி.௩௭.௨௯,௩௪. எண்.௰௪.௬. ௨.சாமு.௧.௰௧. (௰௪) அதி.௩௭.௭. (௰௫) வச.௫. (௰௬) வச.௯. (௰௭) நீதி.௰௭.௰௫. (௰௮) அதி.௰௮.௩௰,௩௨. யாத்.௩௨.௨௨. (௨௰) அதி.௩௭.௩. (௨௧) அதி.௪௨.௰௫,௨௰. (௨௩) அதி.௪௩.௩,௫. (௨௫) அதி.௪௩.௨ (௨௭) அதி.௪௬.௰௯. (௨௮) அதி.௩௭.௩௩. (௨௯) அதி.௪௨.௩௬,௩௮. (௩௰) ௧.சாமு.௰௮.௧. (௩௨) அதி.௪௩.௯. (௩௩) யாத்.௩௨.௩௨. (௩௪) யாத்.௰௮.௮. யோபு.௩௧.௨௯.—(௪௫. அதி. ௧.)

டான்; யோசேப்பு, தன்சகோதரருக்குத்தன்னை
அறிவிக்கையில் அவனருகேஒருவரும்நிற்கவில்
௨ லை.—எகிப்தியரும், பார்வோனுடையகுடும்பத்
௩ தாருங்கேட்க, அவன்குரலிட்டழுதான்.—யோ
சேப்பு தன்சகோதரரைநோக்கி, நானே யோ
சேப்பு. என்பிதா இன்னுஞ் சீவித்திருக்கிறாரா
வென்றான். அவனுடைய சகோதரர் அவனுக்
கு முன்பாகக் கலங்கினபடியால், அவனுக்கு
௪ உத்தரஞ் சொலலக்கூடாமற் போயிற்று.—யோ
சேப்பு தன் சகோதரரைநோக்கி, என்னருகே
வாருங்களென்றுசொல்ல, அவர்களுஞ் சமீபத்
தில்வந்தார்கள். அப்பொழுது அவன் எகிப்திய
ரிடத்தில், நீங்கள்விற்ற உங்கள் சகோதரனாகிய
௫ யோசேப்பு, நானே.–என்னை இவ்விடத்தில்விற்
றதின்நிமித்தம் நீங்கள் விசனப்படவும் வேண்
டாம். உங்களை வெறுத்துக்கொள்ளவும்வேண்
டாம். பிராணரட்சிப்பினிமித்தம் தேவன் என்
௬ னை உங்களுக்கு முன்னமே அனுப்பினார்.—தே
சத்தில் இப்பொழுது இரண்டுவருஷமாகப் பஞ்
சமுண்டாயிருக்கின்றது. உழவும், அறுப்புமில்
லாமல் இன்னும் ஐந்துவருஷமளவும் பஞ்சமி
௭ ருக்கும்.–பூமியிலே உங்கள்வமிசம் ஒழியாதபடி
காப்பதற்காகவும், ஒரு பெரியரட்சிப்பினால்உங்
கள்சீவனைச் சீவிப்பிப்பதற்காகவுந், தேவன்
௮ என்னை உங்களுக்குமுன்னமேயனுப்பினார்.-நீங்
களல்ல, தேவனே இவ்விடத்திற்கு என்னைய
னுப்பி, என்னைப்பார்வோனுக்குப்பிதாவாகவும்,
அவருடைய குடும்பமெல்லாவற்றிற்கும் அதி
பதியாகவும், எகிப்துதேசம் முழுவதற்கும் அதி
௯ காரியாகவும் பண்ணினார்.–நீங்கள் என் பிதாவி
னிடத்தில் விரைந்துசென்று, தேவன் என்னை
எகிப்துதேசம்முழுவதிற்கும் அதிகாரியாகவைத்
தார். என்னிடத்தில்வாரும். தாமதிக்கவேண்
௰ டாம்,—நீரும் உம்முடைய பிள்ளைகளும், அவர்
களுடைய பிள்ளைகளும், உம்முடைய ஆடுமாடு
களோடும், உமக்குண்டாயிருக்கிறயாவற்றோடும்
கோஷேன் நாட்டிலேஎனக்குச்சமீபமாகவேவா
சஞ்செய்யலாம். இன்னும் ஐந்துவருஷமளவும்
௰௧ பஞ்சமிருக்கும். ஆதலால்,-உமக்கும்,உம்முடை
ய குடும்பத்தாருக்கும்,உமக்குள்ளயாவற்றிற்கும்,
தரித்திரம் வராதபடிக்கு, அங்கே உம்மைக்காப்
பாற்றிக்கொள்ளுவேனென்று, உம்முடைய புத்
திரனாகிய யோசேப்பு சொல்லச்சொன்னானென்
௰௨ று சொல்லுங்கள்.—பாருங்கள், உங்களுடனே
பேசுகிறது என் வாய்தானென்பதை நீங்களும்,
என் தம்பியாகிய பேன்யாமீனும், கண்ணினாற்
௰௩ காண்கிறீர்களே.—எகிப்திலுள்ள எனது சகல ம
கிமையையும் நீங்கள் கண்டயாவையும் என்பிதா
வுக்குத்தெரிவித்து, அவர் சீக்கிரமாய் இவ்விடத்
துக்குவரும்படி செய்யுங்களென்றுசொல்லி;—
௰௪ தன் தம்பியாகிய பேன்யாமீனின் கழுத்தைக்கட்
டிக்கொண்டழுதான். பேன்யாமீனும் அவன் க
ழுத்தைக்கட்டிக்கொண்டழுதான்.—பின்பு தன் ௰௫
சகோதரர் யாவரையும் முத்தஞ்செய்து, அவர்க
ளைக் கட்டிக்கொண்டழுதான். அப்பால் அவன்
சகோதரர் அவனுடனே சம்பாஷித்தார்கள்.

யோசேப்பின் சகோதரர் வந்தார்களென்ற ச ௰௬
மாசாரம் பார்வோன்வீட்டிற் பிரசித்தமானபொ
ழுது, பார்வோனும், அவனுடையபணிவிடைக்
காரருஞ் சந்தோஷப்பட்டார்கள்.—பார்வோன் ௰௭
யோசேப்பைநோக்கி, நீ உன்சகோதரருடனே,
உங்கள் கழுதைகளின்மேற்பொதிகளை ஏற்றிக்
கொண்டு புறப்பட்டு, கானான் தேசத்துக்குப்
போய்,—உங்கள்பிதாவையும், உங்கள் உங்கள் ௰௮
குடும்பத்தாரையுங்கூட்டிக்கொண்டு,என்னிடத்
தில்வாருங்கள். நான் உங்களுக்கு எகிப்துதேசத்
தின்நன்மையையளிப்பேன். இத்தேசத்தின்புஷ்
டியானதைப்புசிப்பீர்கள்.—நீங்கள் உங்கள் கு ௰௯
ழந்தைகளுக்காகவும்,மனைவிகளுக்காகவும்,பண்
டிகளை எகிப்து தேசத்திலிருந்து கொண்டு
போய், உங்கள்பிதாவுடனே ஏற்றிக்கொண்டு
வாருங்கள்.—நீங்கள் உங்கள் பண்டங்களைப் ௨௰
பார்க்கவேண்டாம். எகிப்துதேசமெங்குமுள்ள
நன்மை உங்களுடையதாயிருக்குமென்றுசொல்
லச்சொல்லி, உனக்குநான் இட்டகட்டளைப்ப
டியேசெய்யென்றான்.—இஸரவேலின் புத்திரர் ௨௧
அப்படியேசெய்ய விரைந்தார்கள். யோசேப்
பும் பார்வோனுடைய கட்டளையின்படி, அவர்க
ளுக்குப்பண்டிகளைக் கொடுத்ததுமன்றி,–வழிக் ௨௨
கு ஆகாரத்தையும், ஒவ்வொருவருக்கும் மாற்று
வஸ்திரங்களையுங்கொடுத்தான். பேன்யாமீனுக்
கோ முந்நூறு வெள்ளிக்காசையும், ஐந்துமாற்று
வஸ்திரங்களையுங்கொடுத்தான்.–தன் பிதாவுக்கு ௨௩
பத்து ஆண்கழுதைகளின்மேல்எகிப்துதேசத்தின்
சிரேஷ்ட பதார்த்தங்களும், பத்துப்பெண்கழு
தைகளில் வழிக்குத்தானியமும், அப்பமும், மற்
றை உணவுகளும், ஏற்றியனுப்பினான்.–மேலும், ௨௪
நீங்கள் போகும்வழியிலே கலகம்பண்ணாதிருங்
களென்று, தன்சகோதரருக்குச் சொல்லியனுப்
பிவிட, அவர்கள் புறப்பட்டுப்போனார்கள்.

அவர்கள் எகிப்தைவிட்டுப்போய்க் கானான் ௨௫
தேசத்திலே தங்கள் பிதாவாகிய யாக்கொபினி
டத்திற்சேர்ந்து,–யோசேப்பு உயிரோடிருக்கிறா ௨௬
னென்றும், அவன் எகிப்துதேசம்யாவையும் ஆ
ளுகிறானென்றும், அறிவித்தார்கள். அப்பொழு
து அவன்மனம் சோர்ந்தது. அவன் அவர்களை
நம்பவில்லை.—பின்னும் அவர்கள் தங்களுட ௨௭
னே யோசேப்பு சொன்ன வாக்குகள் யாவை
யும், அவனுக்குச்சொன்னார்கள். தன்னைஏற்றிக்
கொண்டுபோகும்படி யோசேப்பு அனுப்பின
பண்டிகளைக்கண்டமாத்திரத்தில், அவர்கள்பிதா
வாகிய யாக்கோபினுடைய இருதயம் பூரித்தது.-
போதும், என்புத்திரனாகிய யோசேப்பு உயிரோ ௨௮
டிருக்கிறான். நான் மரிக்குமுன்னேபோய் அவ

(௨) எண்.௰௪.௧. (௩) அப்.௭.௰௩. யோபு ௪.௫. மத்.௰௪.௨௬. (௪) அதி.௩௭.௨௮. (௫) ஏசா.௪௰.௨ அதி.௫௰.௨௰. ௨.சாமு.௰௬.௰,௰௧. (௮) அதி.௪௧.௪௩. நியா.௰௭.௰. (௰) அதி.௪௭.௧. (௰௨) அதி.௪௨.௨௩. (௰௩) அப்.௭.௰௪. (௰௬) அதி.௪௧.௩௭. (௰௮) எண்.௰௮.௰௨,௨௯. (௨௧) எண்.௩.௰௬. (௨௨) அதி.௪௩.௩௪. (௨௬) யோபு.௨௯.௨௪.

னைக்காண்பேனென்று இஸரவேல்சொன்னான்.

## ௪௬. அதிகாரம்.

௧. யாக்கோபு பிரயாணம்பண்ணிப் பேர்ஷேபாவிலே தேவனைத் தரிசித்தல்: ௫. எகிப்திற்குப் போய்ச்சேர்தல்: ௮. அவனுடையவமிசவரலாறு: ௨௮. யோசேப்பை அவன்சந்தித்தல்: ௩௧. யோசேப்பு தன் சகோதரருக்குப் புத்திசொல்லல்.

பின்பு இஸரவேல் தனக்குண்டான யாவையுஞ்
சேர்த்துக்கொண்டு, புறப்பட்டுப் பேர்ஷேபா
வுக்குப்போய், தன் பிதாவாகிய ஈசாக்கின் தே
௨ வனுக்குப் பலியிட்டான்.—அன்றிரவில் தே
வன் இஸரவேலுக்குத்தரிசனையாய், யாக்கோ
பே,யாக்கோபேயென்றழைக்க, அவன் அடியே
௩ னென்றான்.—அவர், நான் தேவன். உன்பிதா
வின் தேவன். நீ எகிப்து தேசத்திற்குப்போ
௪ கப்பயப்படவேண்டாம்.—நான் அங்கே உன்
னில் ஒரு பெரியசாதியைத் தோற்றுவிப்பேன்.
நானும் உன்னோடேஎகிப்துக்குவருகிறேன். தி
ரும்பவும் உன்னைக்கூட்டிக்கொண்டுவருவேன்.
யோசேப்பு தன்கையால், உன்கண்களை மூடுவா
னென்றார்.
௫ பின்பு யாக்கோபு பேர்ஷேபாவில் நின்றும் பு
றப்பட்டான். இஸரவேலின்புத்திரர் தங்கள்பிதா
வாகிய யாக்கோபை ஏற்றிவரும்படி பார்வோன்
அனுப்பினபண்டிகளின்மேலே தங்கள்குழந்தை
களையும்,மனைவிகளையும்,யாக்கோபையும்ஏற்றிக்
௬ கொண்டும்,—தங்கள் ஆட்டுக்கூட்டங்களையும்,
தாங்கள் கானான்தேசத்திற்சம்பாதித்தபொருள்க
ளையுஞ்சேர்த்துக்கொண்டும் யாக்கோபும் அவன்
சந்ததியார் யாவரும் எகிப்திற்குப்போனார்கள்.—
௭ இப்படி அவன், தன்புத்திரரும், அவர்கள் புத்தி
ரரும், தன்புத்திரிகளும், அவர்கள் புத்திரிகளு
மாகிய தன்சந்ததியாரெல்லாரையும், எகிப்திற்
குத் தன்னோடேஅழைத்துக்கொண்டுபோனான்.
௮ எகிப்தில்சேர்ந்த இஸரவேல் சந்ததியாருடை
ய நாமங்களாவன யாக்கோபும், அவனுடையபுத்
௯ திரரும்,—யாக்கோபினுடைய சேஷ்டபுத்திரன்
ரூபேன்,ரூபேனுடையபுத்திரர்ஆனோகு,பல்லூ,
௰ எத்சரோன், காமி என்பவர்கள்.—ஷிமியோனு
டையபுத்திரர் யெமூவேல், யாமின், ஓகாத், யா
கின், சோகார, கானானிய ஸ்திரியின்புத்திரனாகி
௰௧ ய ஷவுல் என்பவர்கள்.—லேவியினுடையபுத்தி
ரர் கெர்ஷோன், கோகாத், மிராரி என்பவர்கள்.-
௰௨ யூதாவினுடைய புத்திரர் ஏர், ஓனான், ஷேலா,
பேரேஸ், சேரக்என்பவர்கள். அவர்களில்ஏரும்,
ஓனானும், கானான்தேசத்தில் இறந்துபோனார்கள்.
பேரேசுவின்புத்திரர் எத்சரோன் ஆமூல் என்ப
வர்கள்.-ஈஷகாரின்புத்திரர்தோலா,பூவா,யோபு, ௰௩
ஷிம்ரோன் என்பவர்கள்.—செபுலோனுடைய ௰௪
புத்திரர் சேரேத், ஏலோன், யகலேல் என்பவர்
கள்.—இவர்களே லேயாளின் சந்ததியார். அ ௰௫
வள் இவர்களையும் தீனாள்என்னுமோர்புத்திரியை
யும் பதனாராமிலே யாக்கோபுக்குப்பெற்றாள். அ
வனுடைய புத்திரரும் புத்திரிகளும் ஆக முப்பத்
து மூன்றுபேர்.—காத்தினுடையபுத்திரர் சிப்பி ௰௬
யோன், அகி, ஊனி, எத்ஸ்போன், ஏரி, அரோதி,
அரேலி என்பவர்கள்.—ஆஷேருடைய புத்திரர் ௰௭
இம்னா, இஷ்பா, இஷ்வி, பேரீ என்பவர்கள் இ
வர்களுடைய சகோதரி செராக் பேரீயினுடை
ய புத்திரர் ஏபெர், மலகியேல் என்பவர்கள்.—
இவர்களே இலாபான் தன்புத்திரியாகிய லேயா ௰௮
ளுக்குக்கொடுத்த சில்ப்பாளுடையபுத்திரர்; அவ
ளிந்தப்பதினாறுபேரையும் யாக்கோபுக்குப்பெற்
றாள்.—யாக்கோபின்மனைவியாகிய ராகேலின் ௰௯
புத்திரர்யோசேப்பு,பேன்யாமீன் என்பவர்கள்.-
ஓன் நகரத்திலிருந்த ஆசாரியனாகிய போத்திப் ௨௰
பேராவின்புத்திரி அஸ்நாத்து யோசேப்புக்குப்
பெற்ற மனாசே, எப்ராயீம் என்பவர்கள் எகிப்
துதேசத்திலே பிறந்தார்கள்.—பேன்யாமீனுடைய ௨௧
புத்திரர் பேலா, பேகேர், அஷ்பேல், கேரா, நா
மான், ஏகி, ரோஷ், முப்பீம், உப்பீம், ஆராத்து
என்பவர்கள்.—ராகேல், யாக்கோபுக்குப்பெற ௨௨
றபுத்திரராகிய இவர்கள் ஆகப் பதினாலுபேர்.—
தாணுடைய புத்திரன் ஊஷிம்.—நப்தாலியின் ௨௩
புத்திரர் யாக்சேல், கூனீ, யேத்சேர், ஷில்லேம் ௨௪
என்பவர்கள்.—இவர்களே லாபான் தன்புத்திரி ௨௫
யாகிய ராகேலுக்குக்கொடுத்த பில்க்காள், யாக்
கோபுக்குப்பெற்றபுத்திரர்: இவர்கள் எழுபேர்.—
யாக்கோபின் புத்திரருடைய மனைவிகள்தவிர, ௨௬
அவனுடையசந்ததியாய் அவனுடனே எகிப்திற்
குப்போனவர்கள், ஆக அறுபத்தாறுபேர்.—யோ ௨௭
சேப்புக்கு எகிப்திற்பிறந்தபுத்திரர் இரண்டுபேர்
ஆக எகிப்துக்குப்போன யாக்கோபின்குடும்பத்
தார் எழுபதுபேர்.
யாக்கோபு கோஷேன்நாட்டிலேதன்னையோ ௨௮
சேப்பு சந்திக்கவரும்படிசொல்ல, யூதாவைத்த
னக்குமுன்னாகஅவனிடத்திலனுப்பினான்: தாங்
களும் கோஷேன் நாட்டிற்சேர்ந்தார்கள்.—யோ ௨௯
சேப்பு தன் இரதத்தை, ஆயத்தப்படுத்தி அதன்
மேலேறிக்கோஷேனிலேதன்பிதாவாகிய இஸர
வேலைச்சந்திக்கும்படிகோஷேன்நாட்டிற்சேர்ந்
து, அவனுக்கு முற்பட்டுக் கழுத்தைக்கட்டிக்
கொண்டு, வெகுநேரம் அவன்கழுத்தைவிடாம
லழுதான்.—அப்பொழுது இஸரவேல்யோசேப் ௩௰
பைநோக்கி, ஆ! உயிரோடிருக்கிறாய். உன்முகத்

---

(௪௬. அதி. ௧.) அதி.௨௧.௩௧. அதி.௩௧.௪௨. (௨) அதி.௰௫.௧. யோபு.௩௩.௰௪,௰௫. (௩) அதி.௨௮.௰௩. உபா.௨௬.௫. (௪) அதி.௨௮.௰௫. அதி.௰௫.௰௬. அதி.௫௰.௧. (௫) அப்.௭.௰௫. அதி.௪௫.௰௯,௨௧. (௬) உபா.௨௬.௫. (௮) யாத்.௧.௧. யாத்.௬.௰௪. (௯) எண்.௨௬.௫ (௰) யாத்.௬.௰௫. ௧.நாளா.௪.௨௪. (௰௨) அதி.௩௮.௩. (௰௮) அதி.௩௰.௰. அதி.௨௯.௨௪. (௰௯) அதி.௪௪.௨௭. (௨௰) அதி ௪௧.௫௰. (௨௧) ௧.நாளா.௭.௬. ௧.நாளா.௮.௧. எண்.௨௬.௩௮. எண்.௨௬.௩௯. ௧ நாளா.௭.௰௨. எண்.௨௬.௩௯. (௨௩) ௧.நாளா.௭.௰௨. எண்.௨௬.௪௨. (௨௪) ௧.நாளா.௭.௰௩. (௨௫) அதி.௩௰.௫,௭. அதி.௨௯.௨௯. (௨௬) யாத்.௧.௫. அதி.௩௫.௰௧. (௨௭) உபா.௰.௨௨. (௨௮) அதி.௪௭.௧. (௨௯) அதி.௪௫.௰௪. (௩௰) லூக்.௨.௨௯,௩௰.

தையுங்கண்டேன். இனி நான் மரித்தாலுமென்
௩௧ னவென்றான்—யோசேப்பு தன் சகோதரரையும்,
தன் பிதாவின் குடும்பத்தையும்நோக்கி, நான்
பார்வோனிடத்துக்குப்போய்க் கானான்தேசத்தி
லிருந்து, என்னுடையசகோதரரும், என் பிதா
வின்குடும்பத்தாரும், என்னிடத்தில்வந்திருக்கி
௩௨ றார்கள்.-அவர்கள்மேய்ப்பர். ஆடுமாடுகள்மேய்க்
கிறவர்களாயிருக்கிறார்கள், அவர்கள்தங்கள்ஆடு
மாடுகளையும்,தங்களுக்குண்டானஎல்லாவற்றை
யுங்கொண்டுவந்தார்களென்று அவருக்குச்சொல்
௩௩ லுவேன்.—மேய்ப்பர்யாவரும், எகிப்தியருக்கு
வெறுப்பாயிருக்கிறார்கள். ஆதலால்பார்வோன்
உங்களை அழைத்துஉங்கள்தொழிலென்னவென்
௩௪ றுகேட்குமிடத்தில்,—அவனைநோக்கி, உமதடி
யாராகியநாங்கள் எங்கள்சிறுவயதுமுதல் இதுவ
ரைக்கும் எங்கள்பிதாக்களைப்போல, மேய்ப்பரா
யிருக்கிறோமென்று சொல்லுங்கள். அப்பொழு
துநீங்கள் கோஷேன்நாட்டிலேவாசம்பண்ணப்
பெற்றுக்கொள்வீர்களென்றான்.

## ௪௭. அதிகாரம்.

௧. யோசேப்பு தன்பிதாவையுஞ் சகோதரரில்ஐவ
ரையும் பார்வோனைச் சந்திக்கச்செய்தல்: ௰௩.
தேசத்தார்தானியத்துக்கு வெள்ளிநாணயம் மி
ருகசீவன் முதலியவற்றை மாற்றல்: ௨௩. விளை
வில் ஐந்திலொருபங்குக்குவிதைத்த தானியங்
கொடுத்தல்: ௨௮. யாக்கோபுயோசேப்பினிடத்
தில் ஆணைவாங்கல்.

பின்பு யோசேப்பு பார்வோன்சமுகத்திற்சேர்ந்
து, என்பிதாவும், என்சகோதரரும், தங்கள் ஆடு
மாடுகளையும், தங்களுக்குண்டான யாவையுங்
கொண்டு, கானான்தேசத்திலிருந்துவந்து, கோ
ஷேன்நாட்டிலே இருக்கிறார்களென்று சொல்
௨ லி,—தான் அழைத்துவந்த ஐந்து சகோதரரையும்
௩ பார்வோன்முன் விட்டான்.—பார்வோன் அவ
னுடைய சகோதரரைநோக்கி, உங்கள் தொழி
லென்னவென்றான். அதற்கு அவர்கள் பார்வோ
னிடத்தில், உமதடியாராகிய நாங்களும் எங்கள்
பிதாக்கள்போல் மேய்ப்பராயிருக்கிறோமென்றா
௪ ர்கள்.—கானான் தேசத்திலே பஞ்சங்கொடிதா
யிருக்கின்றது. உமதடியாரின்ஆடுகளுக்குமேய்ச்
சலில்லாமையால், இத்தேசத்தில்தங்கவந்தோம்.
உமதடியாராகிய நாங்கள் கோஷேன்நாட்டிலே
வசிக்கும்படி தயைசெய்யுமென்று சொல்லிப்
பார்வோனிடத்தில் வேண்டிக்கொண்டார்கள்.-
௫ பார்வோன்யோசேப்பைநோக்கி, உன் பிதாவும்,
சகோதரரும், உன்னிடத்தில் வந்துவிட்டார்க
௬ ளே.—எகிப்துதேசம் உனக்கு முன்பாக இருக்
கின்றது. தேசத்தில் வளமான இடத்தில் உன்
பிதாவும், சகோதரரும் வசிக்கக்கடவர்கள். கோ
ஷேன் நாட்டிலும் வாசம்பண்ணலாம். அவர்க
ளுக்குள்ளே,சாமர்த்தியருண்டென்றுகண்டால்,
அவர்களை என்னுடைய ஆடுமாடுகளைவிசாரிக்கி
றதற்குத் தலைவராகவைக்கலாமென்றான்.—பின் ௭
பு யோசேப்பு தன்பிதாவாகிய யாக்கோபை அ
ழைத்துவந்து, பார்வோன்முன்விட்டான். யாக்
கோபு பார்வோனை ஆசீர்வதித்தான்.-பார்வோன் ௮
யாக்கோபைநோக்கி, உமக்கு எத்தனைவயதென்
று கேட்க;—யாக்கோபு நான் உழன்றுதிரிந்தகா ௯
லம் நூற்றுமுப்பதுவருஷம். என்னுயுள்காலம்,
அற்பமும், கிலேசமுமுள்ளது. உழன்று திரிந்த
என்பிதாக்களுடையஆயுள்நாள்போலல்லவென்
றான்.—பின்னும் யாக்கோபு பார்வோனை ஆசீர் ௰
வதித்து, அவனை விட்டுப்புறப்பட்டான்.—பார் ௰௧
வோன் இட்டகட்டளைப்படி யோசேப்பு, தன்
பிதாவுக்கும், சகோதரருக்கும் எகிப்துதேசத்தில்
வளமான நாடாகிய ராமேசேஸ் என்னும் ஸ்தா
னத்தில் சுதந்தரங்கொடுத்து, அவர்களையிருக்கச்
செய்தான்.-யோசேப்பு தன் பிதாவையும், சகோ ௰௨
தரரையும், தன் பிதாவுடைய குடும்பத்தாரனைவ
ரையும், அவரவர் குடும்பத்திற்குத்தக்க, ஆகாரங்
கொடுத்து, ஆதரித்துவந்தான்.

பஞ்சம்மிகவுங் கொடிதாயிருந்தது. தேசத்தி ௰௩
லெங்கும்ஆகாரங்கிடையாமற்போயிற்று. எகிப்
துதேசமும், கானான்தேசமும், பஞ்சத்தினால்
இளைத்துப்போயின.—எகிப்துதேசத்திலும், கா ௰௪
னான்தேசத்திலுமுள்ள பணமெல்லாம் தானியத்
தைக்கொண்டவர்களிடத்தில் யோசேப்பு வாங்
கி, பார்வோன்வீட்டிற் சேர்ப்பித்தான்.—எகிப் ௰௫
துதேசத்திலும், கானான்தேசத்திலுமுள்ள பணம்
ஒழிந்தபின், எகிப்தியரெல்லாரும் யோசேப்பி
னிடத்தில்வந்து, எங்களுக்கு ஆகாரந்தாரும் ப
ணமோ ஒழிந்தது. உமது சமுகத்திற் சாவா
னேன் என்றார்கள்.—அதற்கு யோசேப்பு, உங் ௰௬
களிடத்திற் பணமில்லாவிட்டால், உங்கள் ஆடு
மாடுகளைக்கொடுங்கள் அவைகளைக்கொடுத்தால்,
உங்களுக்குத் தருவேனென்றுசொல்ல;—அவர் ௰௭
கள் ஆடுமாடுகள் முதலானவைகளை யோசேப்பி
னிடத்துக்குக்கொண்டுவந்தார்கள். யோசேப்பு
அப்படியே குதிரைகளையும், ஆடுகளையும், மாடு
களையும், கழுதைகளையும் வாங்கிக்கொண்டு, அ
வர்களுக்கு ஆகாரங்கொடுத்து, அந்தவருஷம் அ
வர்களுடைய ஆடுமாடுமுதலான எல்லாவற்றிற்
கும்பிரதியாக, அவர்களை ஆதரித்தான்.-அந்தவரு ௰௮
ஷஞ்சென்றபின், மறுவருஷம்,அவர்கள் அவனி
டத்தில்வந்து அவனைநோக்கி, பணமுஞ்செலவ
ழிந்துபோயிற்று.எங்கள்ஆடுமாடுமுதலானவைக
ளும், எங்கள் ஆண்டவன்வசமாயின. எங்கள்சரீ
ரங்களும், எங்கள்நிலங்களுமேயொழிய எங்கள்
ஆண்டவனுக்குமுன்பாகச்சேஷம் ஒன்றும் இல்
லை. இது எங்கள் ஆண்டவனுக்கு மறைந்திருக்
கவில்லை.—நாங்களும், எங்கள் நிலங்களும், உம் ௰௯
முடைய கண்களுக்குமுன்பாக அழிந்துபோக

(௩௧) அதி.௪௭.௧. (௩௩) அதி.௪௭.௨,௩. (௩௪) வச.௩௨. அதி.௩௰.௩௫. அதி.௪௩.௩௨.யாத்.௮.௨௬.—(௪௭. அதி. ௧.) அதி.௪௬ ௩௧. அதி.௪௬ ௨௮. (௨) அப்.௭.௰௩. (௩) அதி.௪௬.௩௩. அதி.௪௬.௩௪. (௪) அதி.௰௫.௰௩. உபா.௨௬.௫. அதி. ௪௩.௧. அப்.௭.௰௧. அதி.௪௬.௩௪. (௬) அதி.௨௰.௰௫. வச.௪. (௯) எபி.௰௧.௯,௰௩. சங்.௩௯.௰௨. யோபு.௰௪.௧. அதி. ௨௫.௭. அதி.௩௫.௨௮. (௰௧) யாத் ௧.௰௧. யாத்.௰௨.௩௭. (௰௩) அதி.௪௧.௩௰. (௰௪) அதி.௪௧.௫௬. (௰௫) வச.௰௯.

லாமா ஆகாரத்திற்குமாருக எங்களையும், எங்கள்
நிலங்களையும் ஏற்றுக்கொள்ளும்: நாங்களும்,
எங்கள் நிலங்களோடே பார்வோனுக்கு அடி
மைப்பட்டிருப்போம். நாங்கள் சாவாமல் சீவித்
திருக்கவும், நிலங்கள் பாழாய்ப்போகாமலிருக்க
வும் எங்களுக்கு விதைத்தானியத்தைத் தாரு
௨௰ மென்றார்கள்.—எகிப்தியர் தங்களுக்குள் பஞ்சம்
மேலிட்டபடியால், அவரவர், தங்கள் தங்கள்,
வயல்நிலங்களை விற்றார்கள். யோசேப்பு எகிப்
தின்நிலங்கள்யாவையும், பார்வோனுக்காகவாங்
கினன். இப்படியே நிலமுழுதும் பார்வோனு
௨௧ டையதாயிற்று.—மேலும், அவன் எகிப்தின் ஒரு
எல்லைமுதல் மற்ற எல்லைவரைக்குமுள்ள சனங்
களை, அந்தந்தநகரங்களில் வரப்பண்ணினன்.—
௨௨ ஆசாரியருடையநிலத்தைமாத்திரம்அவன்கொள்
ளவில்லை. அது பார்வோனால் ஆசாரியருக்கு
மானியமாய்க் கொடுக்கப்பட்டிருந்ததினாலும்,
பார்வோன் தங்களுக்குக்கொடுத்தமானியத்தினா
லே அவர்கள் சீவனஞ்செய்துவந்ததினாலும், அ
வர்கள் நிலத்தை விற்கவில்லை.
௨௩ பின்னும் யோசேப்பு, சனங்களுக்கு, இன்று
உங்களையும், உங்கள் நிலங்களையும், பார்வோ
னுக்காக வாங்கினேன், பாருங்கள். இங்கேஉங்
களுக்கிருக்கிற விதைத்தானியத்தையெடுத்து, நி
௨௪ லங்களில் விதைக்கலாம்.-விளைவில்ஐந்திலொன்
றைப் பார்வோனுக்குக் கொடுக்கவேண்டும், மற்
ற நாலுபங்கு, வயல்விதைப்பதற்காகவும், உங்
களுக்கும், உங்கள் குடும்பத்தாருக்கும், குழந்தை
களுக்கும், ஆகாரத்துக்காகவும், உங்களுடைய
௨௫ வைகளாயிருக்குமென்றான்.—அப்பொழுதவர்
கள், நீர் எங்கள் சீவனையிரட்சித்தீர்; எங்கள்
ஆண்டவனுடைய கடாட்சம் எங்கள்மேலிருப்
பதாக; நாங்கள் பார்வோனுக்கு அடிமைகளா
௨௬ வோமென்றார்கள்.—யோசேப்பு இட்ட கட்ட
ளைப்படி எகிப்து தேசத்தில் ஐந்திலொன்றாகப்
பார்வோனுக்குக் கொடுக்கும் வாரம் இந்நாள்வ
ரைக்கும் நடந்துவருகின்றது. ஆசாரியரின் நில
மோ, பார்வோனைச்சேராமல் நீங்கலாயிற்று.—
௨௭ இஸரவேலர் எகிப்துதேசத்திலுள்ள கோஷேன்
நாட்டில் வாசம்பண்ணினார்கள். அங்கே அவர்
கள் சுதந்தரங்களைப்பெற்று, வரவர மிகவும்வர்த்
தித்துப் பெருகினார்கள்.
௨௮ யாக்கோபு எகிப்து தேசத்திலே பதினேழுவ
ருஷம் வசித்தான். யாக்கோபின் பூரண ஆயுள்
௨௯ காலம் நூற்று நாற்பத்தேழுவருஷம்.-இஸரவேல்
மரணமடையுங்காலம் சமீபித்தது. அப்பொழு
து அவன், தன் குமாரனாகிய யோசேப்பை
வர அழைத்து, அவனைநோக்கி, நான் என் பி
தாக்களோடே அடக்கம்பண்ணப்பட விரும்
புகிறேன். என்மேலுனக்குக் கருணையுண்டா
னால், என்னை எகிப்தில் அடக்கம்பண்ணாமல்,—
என்னைஎகிப்திலிருந்துஎடுத்துக்கொண்டுபோய், ௩௰
அவர்களை அடக்கம்பண்ணியிருக்கிற மயானஸ்
தானத்திலென்னையும்அடக்கம்பண்ணுவாயென்
பதைக்குறித்து, எனக்குத்தயையுஞ் சத்தியமுங்
காட்டும்பொருட்டு, உன்கையை என் தொடை
யின்கீழ்வைக்கவேண்டுமென்றான். அதற்கவன்
நீர் சொன்னபடி செய்வேனென்றான்.—அவன் ௩௧
எனக்கு ஆணையிடு, என்றான். இவன்அவனுக்கு
ஆணையிட்டான். பின்பு கட்டிலின்தலைமாட்டி
லே இஸரவேல் சாய்ந்தான்.

## ௪௮. அதிகாரம்.

௧. வியாதியாய்க்கிடந்த யாக்கோபை யோசேப்பும் அவன்புத்திரரிருவரும் சந்தித்தல்: ௮. அவன் எப்ராயீமையும், மனஷேயையும் ஆசீர்வதித்தல். இளையவனைப் பிரதானியாக்கல்: ௰௫. யோசேப்புடன்சம்பாஷித்தல்: ௨௧. இஸரவேல்சந்ததியார் கானானுக்குத் திரும்பிப்போவதைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்.

இக்காரியங்கள் நடந்தபின் யோசேப்புக்கு ஒரு ௧
வன் உம்முடையபிதா வருத்தமாயிருக்கிறாரென்
றான். அவன் மனஷே, எப்ராயீம் என்னுந்
தன் புத்திரரிருவரையும், தன்னுடனே அழைத்
துக்கொண்டுபோனான்.—ஒருவன் யாக்கோபை ௨
நோக்கி, உம்முடைய குமாரனாகிய யோசேப்
பு வந்திருக்கிறாரென்று அறிவித்தான். அப்பொ
ழுது, இஸரவேல் உச்சாகங்கொண்டெழுந்து
கட்டிலின்மேலிருந்தான்.—யாக்கோபு யோசேப் ௩
பைநோக்கி, சர்வவல்லமையுள்ள தேவன் கா
னான் தேசத்திலேலூசில் எனக்குத்தரிசனையாகி,
என்னை ஆசீர்வதித்து,—நான் உன்னில் அநேக ௪
சனங்களைத்தோற்றுவித்து, உன்னைப் பல்கிப்பெ
ருகச்செய்து, உன் பின்சந்ததிக்கு நித்தியசுதந்தர
மாயிருக்கும்படி இத்தேசத்தை அளிப்பேனென்
று அருளினார்.—நான் எகிப்தில் உன்னிடத்திலே ௫
வருமுன்னே, உனக்கு இத்தேசத்திற்பிறந்த இ
ரண்டுபுத்திரரும்என்னுடையவர்கள், ரூபேனும்,
ஷிமியோனும்போல, எப்ராயீமும், மனஷே
யும், என்னுடையவர்கள்.—இவர்களுக்குப்பின் ௬
நீ பெறும்பிள்ளைகள் உன்னுடையவர்கள், அவர்
கள், தங்கள் தங்கள் சகோதரருடைய சுதந்தரத்
தில், அவரவர்பேரைப்பெற்றிருப்பார்கள்.-நான் ௭
பதானைவிட்டுவருகையில் கானான்தேசத்தில் எப்
ராத்தாவுக்குச் சற்றே தூரமாயிருக்கும்பொழுது
வழியிலே ராகேல் என்சமீபத்தில் மரணமடைந்
தாள். அவளை அங்கே பேத்லகேம் என்னும்
எப்ருத்தா ஊருக்குப்போகிற வழியிலே, அடக்
கம்பண்ணினேனென்றான்.
பின்பு இஸரவேல் யோசேப்பினுடைய புத் ௮
திரரைக்கண்டு, இவர்கள் ஆரென்றுகேட்க;—
யோசேப்பு இவர்களே இவ்விடத்தில் தேவன் ௯
எனக்கருளிய புத்திரரென்றான். அவன் நான்

(௨௨) எஸ்றா.௭.௨௪. (௨௫) அதி.௩௩.௰௫. (௨௬) வச.௨௨. (௨௭) வச.௰௧. அதி.௪௬.௩. (௨௮) வச.௯. (௨௯) உபா.௩௧.௰௪. ௧.இரா.௨.௧. அதி.௫௰.௨௫. (௩௰) ௨.சாமு ௰௯.௩௭. அதி.௪௯ ௨௯ அதி.௫௰.௫,௰௩. அதி.௨௪.௨. அதி.௨௪.௪௯. (௩௧) அதி.௪௮.௨. ௧.இரா.௧.௪௭. எபி.௰௧.௨௧.—(௪௮. அதி. ௩.) அதி.௨௮.௰௩,௰௯. (௪) அதி.௰௭.௮. (௫) அதி.௪௧.௫௰. (௭) அதி.௩௫.௯,௰௬,௰௯. (௯) அதி.௩௩.௫. அதி.௨௭.௪.

இவர்களை ஆசீர்வதிக்கும்படி, என்னிடத்திற்
௰ கொண்டுவாவென்றான்.—முதிர்ந்த பிராயத்தி
ஞல் இஸரவேல் கண்ணொளி மழுங்கிப்பார்வை
குறைந்தவனாயிருந்தான்.-அதினால் அவர்களை அ
வன் சமீபத்திற் கொண்டுபோய்விட்டான். அ
௰௧ வன் அவர்களை முத்தமிட்டுத்தழுவினான்.—இஸ
ரவேல் யோசேப்புடன், உன் முகத்தையுங்
காண்பேனென்று நான் நினைத்திருக்கவில்லை.
உன் சந்ததியையுங்காணும்படி தேவன் எனக்
௰௨ கு அருள்செய்தாரென்றான்.—அப்பொழுது அவ
னுடைய முழந்தாளின் மத்தியில்நின்ற புத்திர
ரை, யோசேப்புப் பின்னிடப்பண்ணி, அவன்
முகத்துக்கு முன்பாகப் பூமிக்குநேராய்த் தாழ்ந்
௰௩ து வணங்கினான்.—யோசேப்பு அவ்விருவரை
யும்பிடித்து, எப்பிராயீமைத் தன் வலக்கையினா
லே இஸரவேலின் இடக்கைக்கு நேராகவும்,
மனாசேயைத் தன் இடக்கையினாலே இஸரவே
௰௪ லின் வலக்கைக்கு நேராகவும், விட்டான்.-அப்
பொழுது இஸரவேல் புத்திபூர்வமாய்த் தன் வ
லக்கையை நீட்டி, இளையவனாகிய எப்பிராயீமு
டைய தலையின்மேலும், மனாசே மூத்தவனாயி
ருந்தும், தன் இடக்கையை மனாசேயுடைய
தலையின்மேலும் வைத்தான்.
௰௫ பின்பு அவன் யோசேப்பை ஆசீர்வதித்து,
என் பிதாக்களாகிய ஆபிரகாமும் ஈசாக்கும்
சார்ந்துநடந்த தேவனும், நான் பிறந்தநாள்
முதல் இந்நாள்வரைக்கும் என்னை ஆதரித்துவந்
த தேவனும், சகல தீங்குகளில்நின்றும் என்
னை மீட்ட தூதனுமாயிருக்கிறவர், இந்தப்பால
௰௬ கரை ஆசீர்வதிக்கக்கடவர்;—என்பேரும், என்
பிதாக்களாகிய ஆபிரகாம் ஈசாக்கு என்பவர்களு
டையபேரும், இவர்களுக்கு இடப்படக்கட
வன. பூமியில் இவர்கள் மிகுதியாய்ப்பெருகக்
௰௭ கடவர்களென்றான்.-பிதா தன்வலக்கையை எப்
ராயீமுடைய தலையின்மேல் வைத்ததை யோ
சேப்புக்கண்டு, அது தனக்குப் பிரியவீனமாயி
ருந்தபடியால், எப்ராயீமுடைய தலையின்மேலி
ருந்த தன் பிதாவின்கையை மனாசேயினுடைய
௰௮ தலையின்மேல்வைக்கும்படி தூக்கி,—என் பிதா
வே, அப்படியல்ல, இவனேமூத்தவன்; இவனு
டைய தலையின்மேல் உம்முடைய வலக்கையை
௰௯ வைக்கவேண்டுமென்றான்.—அவனுடைய பிதா
அதைமறுத்து, அது எனக்குத்தெரியும், என்மக
னே, அது எனக்குத்தெரியும்; இவனும் ஒருசாதி
யாருக்கு முதன்மையாவான். இவனும்பெருகு
வான். ஆகிலும் இவனுடையதம்பி, இவனிலும்
அதிகமாய்ப்பெருகுவான்; அவனுடைய சந்ததி
௨௰ யார் திரளானசாதிகளாவார்களென்றான்.—இவ்
விதமாக அவன் அத்தினத்தில், அவர்களை ஆசீர்
வதித்து, இஸரவேலர் ஒருவரையொருவர்நோக்
கி, "தேவன் உன்னை எப்ராயீமைப்போலவும்,
மனாசேயைப்போலவு மாக்கக்கடவர்' என்று
சொல்லி உன்னைக்குறித்து, வாழ்த்துவார்களென்
றான். அவன் எப்ராயீமை மனாசேக்குத்தலைமை
யாகவைத்தான்.—பின்பு இஸரவேல் யோசேப் ௨௰௧
பைநோக்கி, எனக்கு மரணகாலஞ்சமீபித்தது.
தேவன் உங்கள்பட்சமாயிருந்து,உங்கள்பிதாக்
களின் தேசத்திற்கு உங்களைத்திரும்பவும் சேரப்
பண்ணுவாரென்றும்,-உன் சகோதரரிலும் அதிக ௨௰௨
மாக, நான் என்கத்தியினாலும், வில்லினாலும், எ
மோரியர்கையிலிருந்துபற்றிக்கொண்டபங்கை,
உனக்கு அளித்தேனென்றும், சொன்னான்.

## ௪௰௯. அதிகாரம்.

௧. யாக்கோபு தன்புத்திரரனைவரையும் ஒருங்குவரச்செய்தல்: ௩ அவரவருக்குப் பின்னடப்பனவுரைத்தல்: ௨௯ தன்னை இன்னபிரகாரம் அடக்கம்பண்ணவேண்டுமெனல்: ௩௩ அவன் மரணமடைதல்.

பின்பு யாக்கோபு தன்புத்திரரை அழைத்து, நீங் ௧
கள் கூடிவாருங்கள்; பிற்காலத்தில் உங்களுக்கு
நேரிடுங்காரியங்களை அறிவிப்பேன்.—யாக்கோ ௨
பின் புத்திரரே, கூடிவந்துகேளுங்கள்; உங்கள்
பிதாவாகிய இஸரவேலுக்குச்செவிகொடுங்கள்.
ரூபேனே, நீஎன் சேஷ்டபுத்திரன்; என் சக் ௩
தி, என் முதற்பலம்; மகிமையின் பிரதானமும்,
பராக்கிரமத்தின் பிரதானமுமானவன்,—நீ உன் ௪
பிதாவின்மஞ்சத்தில் ஏறினாய்; என்சயனத்திலே
றி,அதை அசுசிப்படுத்தினாய்; சலனமான நீரைப்
போலிருக்கிறாய்; நீ மேன்மைபெறாய்.—ஷிமி ௫
யோனும், லேவியுமே சகோதரர். அவர்கள் கட்
கங்கள் கொடுமையின் கருவிகள். என்மனமே
அவர்களுடைய இரகசிய ஆலோசனைக்குடன்
படாதே. என் மேன்மையே அவர்களுடைய
கூட்டத்தில் நீ சேராதே.—அவர்கள் தங்கள் ௬
குரோதத்தினால் ஒரு மனிதனைக் கொன்று, தங்
கள் அகங்காரத்தினால் மதிலை இடித்தார்கள்.—
உக்கிரமான அவர்கள்கோபமும், கொடுமையா ௭
ன அவர்கள் மூர்க்கமும்,சபிக்கப்படக்கடவன:
யாக்கோபின் தேசத்தில் அவர்களைப் பிரிப்
பேன். இஸரவேலருக்குள்ளே அவர்களைச்சித
றஅடிப்பேன்.-யூதாவே,உன்சகோதரர்உன்னைப் ௮
போற்றுவார்கள். உன்கை உன்சத்துருக்களினு
டைய பிடரியின்மேலிருக்கும். உன்பிதாவின்
சந்ததியார், உனக்கு முன்தாழ்ந்துவணங்குவார்
கள். யூதா, ஒரு சிங்கக்குட்டி.—என்மகனே, நீ ௯
இரைகவர்ந்துகொண்டு, மேலிட்டுவந்தாய். அ

(௰) அதி.௨௭.௧. ஏசா ௬.௰. ஏசா.௫௯.௧. அதி.௨௭.௨௭. (௰௧) அதி.௪௫.௨௬. (௰௪) ஏச.௰௯. (௰௫) எபி.௰௧.௨௧. அதி.௰௭.௧. அதி.௨௮.௰௫. சங்.௩௪.௨௨. (௰௬) ஆமோ.௯.௰௨. எண்.௨௬.௩௪,௩௭. (௰௭) ஏச.௰௪. அதி.௨௮.௮. (௰௯) ஏச.௰௪. எண்.௧.௩௩.௩௫. உபா.௩௩.௰௭. வெளி ௭.௬,௮. (௨௰) ரூத்.௪.௰௧.௰௨. (௨௧) அதி.௫௰.௨௪. (௨௨) யோசு.௨௪.௩௨. யோவா.௪.௫. அதி.௰௫.௰௬. அதி.௩௪.௨௮.—(௪௯. அதி. ௧.) ஆமோ.௩.௭. எஸ்.௨௪.௰௪. ஏசா. ௨௨ எரே.௨௩.௨௰. அப்.௨.௰௭. எபி.௧.௨ (௨) சங்.௩௪.௰௧. (௩) அதி.௨௯,௩௨. உபா.௨௧.௰௭. (௪) ௧.நாளா.௫.௧. அதி.௩௫.௨௨. (௫) அதி.௨௯.௩௩,௩௪. நீதி.௰௮.௯. அதி.௩௪.௨௫. நீதி.௧.௰௫,௰௬. சங்.௨௬.௯. (௬) அதி.௩௪.௨௬. (௭) யோசு.௰௯.௧. (௮) அதி.௨௯.௩௫. உபா.௩௩.௭. அதி.௨௭.௨௯. ஓசே.௫.௰௪. வெளி.௫.௫. (௯) எண்.௨௩.௨௪.

வன்சிங்கம்போலவும், கிழச்சிங்கம்போலவும்,
பதுங்கிக்கிடந்தான். அவனை எழுப்புவார்யா
௰ வர்.-ஷிலோ வருமளவும், செங்கோல் யூதாவை
விட்டுநீங்குவதும்; நியாயாதிபதி அவனுடைய
பாதங்களைவிட்டொழிவதுமில்லை. சனங்கள்
௰௧ அவனிடத்திற்சேருவார்கள்.—அவன் திராட்சக்
கொடியினிடத்திற் பெட்டைக்கழுதையையும்,
செழுமையான திராட்சக்கொடியினிடத்திற் க
ழுதைக்குட்டியையுங் கட்டுவான். திராட்சரசத்
திலே தன் வஸ்திரத்தையும், திராட்சச்செந்நீரி
௰௨ லே, தன் அங்கியையுந்தோய்ப்பான்.—அவன்
கண்கள் திராட்சரசத்தினாற் சிவந்தும், அவன்
௰௩ பற்கள் பாலினால் வெளுத்துமிருக்கும்.—செபு
லோன் சமுத்திரதீரத்தில்வசிப்பான். அவன் கப்
பல் துறைமுகமாய் இருப்பான். அவனுடைய
௰௪ எல்லை சீதோன்வரைக்குமிருக்கும்.—ஈஷகார், இ
ருபொதிக்கிடையே படுத்துக்கிடக்கிற பலத்த
௰௫ கழுதையைப்போலிருப்பான்.-இளைப்பாறுதலே
நலமென்றும், நாடே ரம்மியமென்றும், அவன்
கண்டு, சுமக்கிறதற்குத் தன்தோளைச்சாய்த்து, ஊ
௰௬ ழியக்காரனாகி, வரிகொடுத்தான்.—தாண், இஸ்ர
வேலின்கோத்திரத்தானாகி, தன்சனங்களுக்குள்நி
௰௭ யாயவிசாரணைசெய்வான்.—தாண், குதிரையின்
மேலிருக்கிறவன், மல்காந்து விழும்படியாய்,
அதின்குளம்பைக் கடிக்கிறதற்கு, வழியிற்கிடக்
கிற சருப்பத்தைப்போலவும், பாதையிற்கிடக்கி
௰௮ றவிரியனைப் போலவுமிருப்பான்.—யெகோ
வாவே நீர்செய்யும் இரட்சிப்புக்கு நான்காத்தி
௰௯ ருந்தேன்.—படைக்கூட்டம்வந்து, காத்தென்ப
வனைச்செயிக்கும்: முடிவிலே, அவனும்அதைச்
௨௰ செயிப்பான்.—ஆஷேரின் ஆகாரம்புஷ்டியாகும்.
இராசாக்களுக்கு இஷ்டமான பதார்த்தங்களை
௨௧ யும், அவன் விளைவிப்பான்.—நப்தாலி விடுதலை
பெற்றபெண்மான். மாதுரியவசனங்களை வச
௨௨ னிப்பான்.—யோசேப்பு, செழித்துக் காய்க்குங்
கோடு. கிணற்றருகேசாய்ந்துகாய்க்குங்கொம்பு.
௨௩ அதின்கிளைகள் சுவரின்மேற்படரும்.—வில்வீரர்
அவனைப்பகைத்து, எய்து, மிகவும் வருத்தினார்
௨௪ கள்.—ஆனாலும் யாக்கோபின் வல்லமையுள்ள
தேவனுடைய கையினாலும், உனக்குச்சகா
யஞ்செய்த உன்பிதாவின் தேவனாலும்,—
௨௫ உயர்ந்த வானத்திலிருந்துண்டாகிற நன்மைக
ளையும், தாழ்ந்த சமுத்திரத்தின் நன்மைகளை
யும், ஸ்தனகர்ப்பங்களின் நன்மைகளையும், அ
ருளி உன்னை ஆசீர்வதிக்கும் சர்வவல்லமையுள்
ளவராலும், அவனுடைய கையில் உறுதியாய்
நின்றது.அவனுடையகைப்புயம்ஸ்திரப்படுத்தப்
பட்டது. அங்கிருந்து இஸ்ரவேலுக்குமேய்ப்ப
னும்தோன்றினான். கல்மலையுந்தோன்றிற்று.—
உன்பிதாவின்ஆசீர்வாதங்கள், அவனுடையமுற் ௨௬
பிதாக்களின் ஆசீர்வாதங்களைப் பார்க்கிலும், மி
கச்சிரேஷ்டம். நித்தியபருவதங்களின் கடை
யெல்லையில் நின்றுந்தோன்றிவருகின்றன. அ
வைகளே யோசேப்பினுடைய சிரசின்மேலும்,
தன்சகோதரனைப் பிரிந்தவனுடைய உச்சியின்
மேலும்நிலைநிற்கும்.—பென்யாமீன்கோனாயைப் ௨௭
போல்பீறுவான். காலையில் தன் இரையைப்பட்
சிப்பான். மாலையில் கொள்ளையிடுவதைப் பங்
கிடுவானென்றான்.—இவர்கள் எல்லாரும் இஸ்ர ௨௮
வேலின் பன்னிரண்டுகோத்திரத்தார். அவர்களு
டைய பிதா அவர்களை ஆசீர்வதிக்கும்பொழுது,
எல்லாரையும் அவனவனுக்குரிய ஆசீர்வாதத்துக்
குத்தக்கதாக, இப்படிச்சொல்லி ஆசீர்வதித்தான்.
பின்னும் அவர்களைநோக்கி, நான் என் சனங் ௨௯
களுடன் சேர்க்கப்படப்போகிறேன்.—ஆபிர ௩௰
காம் தனக்குச்சொந்த மயானஸ்தானமாகக் கா
னான்தேசத்தில் மம்ரேக்கு எதிரான மக்பேலா
என்னும் நிலத்திலே, ஏத்தியனாகிய எப்பிரோ
னிடத்தில் நிலத்துடனே ஒரு குகையை விலைக்
குவாங்கினான்.—அதில் ஆபிரகாமையும், அவன் ௩௧
மனைவியாகிய சாராளையும், அடக்கம்பண்ணி
னார்கள். அங்கே ஈசாக்கையும் அவனுடைய ம
னைவியாகிய ரிபெக்காளையும் அடக்கம்பண்ணி
னார்கள். அங்கே லேயாளையும் அடக்கம்பண்
ணினேன்.—அந்த நிலமும், அதிலிருக்கிற குகை ௩௨
யும், ஏத்தின் புத்திரர்கையிற்கொள்ளப்பட்டன.
ஏத்தியனான எப்பிரோனுடைய நிலத்திலுள்ள
அந்தக்குகையில், என் பிதாக்களுடனே என்னை
யும் அடக்கம்பண்ணுங்களென்றுசொல்லிக் கட்
டளையிட்டான்.—யாக்கோபு, தன் புத்திரருக்குக் ௩௩
கட்டளையிட்டுமுடித்தபின் கட்டிலின்மேல் தன்
கால்களைச் சேர்த்துக்கொண்டு, உயிரைவிட்டுத்
தன் முன்னோர்களோடே சேர்க்கப்பட்டான்.

## ௫௰. அதிகாரம்.

௧. யாக்கோபுக்காகப் புலம்பல்: ௭. யோசேப்பு யாக்கோபை அடக்கம்பண்ணப்போதல்: ௰௫. யோசேப்புத் தன்சகோதரரைத் தேற்றல்: ௨௰. யோசேப்புத்தன்புத்திரரைக்காணல்: ௨௪. அவன்கானான்தேசத்திற்குத் திரும்பிப்போவதைக் குறித்துத் தீர்க்கதரிசனஞ் சொல்லல்: ௨௫. அவன் கட்டளையிடல்: ௨௬. அவன் மரித்தல்.

அப்பொழுது யோசேப்பு, தன்பிதாவின்முகத் ௧
தின்மேல்விழுந்து, அழுதுமுத்தஞ்செய்தான்.—
பின்பு தன்பிதாவுக்குச்சுகந்தவருக்கங்களையிடும் ௨

(௰) எண்.௨௪.௰௭. எரே.௩௰.௨௧. சக.௰.௰௧. சங்.௬௰.௭. உபா.௨௮.௫௭. ஏசா.௰௧.௧. எசேக் ௨௧.௨௭. தானி.௯.
௨௫. ஏசா.௨.௨. ஏசா.௪௨.௧,௪. ஏசா.௫௫.௪,௫. ஆகா.௨.௭. (௰௧) ௨.இரா.௰௮.௩௨. (௰௨) நீதி.௨௩.௨௯. (௰௩)
உபா.௩௩.௰௮,௰௯. யோசு.௰௯.௰,௰௧. (௰௫) ௧.சாமு.௰.௯. (௰௬) உபா.௩௩.௨௨. நியா.௰௮.௧,௨. (௰௭) நியா.௰௮.
௨௭. (௰௮) சங்.௨௫.௫. ஏசா.௨௫.௯. (௰௯) உபா.௩௩.௨௰. (௨௰) உபா.௩௩.௨௪. யோசு.௰௯.௨௪. (௨௧) உபா.௩௩.
௨௩. (௨௩) அதி.௩௭.௪,௨௪,௨௮. (௨௫) அதி.௨௮.௰௩,௨௧. அதி.௰௭.௧. உபா.௩௩.௰௩. அதி.௪௫.௰௧. சங்.௮௰ ௧.
ஏசா ௨௮ ௰௬. (௨௬) உபா.௩௩.௰௫. ஆப௧.௩.௯. உபா.௩௩.௰௬. (௨௭) நியா.௨௰.௨௧,௨௫. எண்.௨௩.௨௪. (௨௯)
அதி.௰௫.௰௫. அதி.௨௫.௮ (௩௰) அதி.௨௩.௰௬. (௩௧) அதி.௨௩.௰௯. அதி.௨௫.௯. அதி.௩௫.௨௯. (௩௨) அதி.௪௭.
௩௰. அதி.௫௰.௰௩. (௩௩) வச.௨௯.—(௫௰ அதி ௧.) அதி.௪௬.௪. ௨.இரா.௰௩.௰௪. (௨) வச.௨௬. மத் ௨௬.௰௨.

படி, தன்பணிவிடைக்காரரில், வைத்தியருக்கு
யோசேப்புக்கட்டளையிட, அப்படியே வைத்தி
யர் இஸ்ரவேலுக்குச் சுகந்தவருக்கங்களையிட்
௩ டார்கள்.—சுகந்தவருக்கங்களைஇடுகிறநாள் நாற்
பது. அப்படியே அவனிமித்தம், அவ்வளவுநாள்
செல்லவிட்டார்கள். எகிப்தியர் அவன்நிமித்தம்
௪ எழுபதுநாள் துக்கங்கொண்டாடினார்கள்.—துக்
கங்கொண்டாடும்நாள்கழிந்தபின்,யோசேப்புப்
௫ பார்வோன் குடும்பத்தாருடனே,—என்பிதா என்
னைநோக்கி, நான் மரணமடையப்போகிறேன்.
கானான்தேசத்தில் நான் எனக்காகவெட்டுவித்தி
ருக்கிற பிரேதவறையில் என்னை அடக்கம்பண்
ணுவாயாகவென்று, என்னிடத்திற்சொல்லி ஆ
ணையிடுவித்துக்கொண்டார். ஆகையால் என்
மேல் தயையுண்டானால், நான் அங்கேபோய்,
என் பிதாவை அடக்கம்பண்ணிவருகிறதற்கு
வேண்டிக்கொள்ளுகிறேனென்றுசொல்லி, நீங்
கள்பார்வோனுடையசெவிக்கு அறிவிக்கவேண்
௬ டுமென்றான்.—அதற்குப்பார்வோன், உன்பிதா
உன்னிடத்தில் ஆணையிடுவித்தபடியே, நீபோய்
அவரை அடக்கம்பண்ணிவாவென்றான்.

௭ அப்படியே யோசேப்புத் தன் பிதாவையடக்
கம்பண்ணப்போனான். பார்வோனுடைய வீட்
டிலுள்ளமுதியோராகிய பணிவிடைக்காரரனை
வரும், எகிப்துதேசத்திலுள்ள முதியோர் யாவ
௮ ரும்,-யோசேப்பின் குடும்பத்தாரெல்லாரும், அ
வன் சகோதரரும், அவன் பிதாவின் குடும்பத்
தாரும், அவனுடனே போனார்கள். தங்கள் கு
ழந்தைகளையும், ஆடுமாடுகளையுமாத்திரம் கோ
௯ ஷேன்நாட்டில் விட்டுப்போனார்கள்.—இரதங்
களும, குதிரைவீரரும், அவனுடனேபோனதி
௰ னால்,கூட்டமிகவுமதிகமாயிருந்தது.—அவர்கள்
யோர்தானுக்கக்கரையிலிருக்கும் ஆத்தாத்தின்
போர்க்களத்தில் சேர்ந்து, அவ்விடத்திலே பெ
ரும்புலம்பலாகப் புலம்பினார்கள். அங்குந் தன்
பிதாவினிமித்தம் எழுநாள் துக்கங்கொண்டா
௰௧ டினான்.—ஆத்தாத்தின் போர்க்களத்தில் துக்
கங்கொண்டாடினதை அத்தேசத்தாராகிய கானா
னியர்கண்டு, எகிப்தியருக்குள் இதுபெரியபுலம்
பலென்றார்கள். அதினால் யோர்தானுக்கப்பாலி
ருக்கிற அந்தஸ்தானத்துக்கு ஆபேல் மிஸ்ராயீ
௰௨ மென்று பேருண்டாயிற்று.—அவனைக் கானான்
தேசத்திற்குக் கொண்டுபோய், ஆபிரகாம், மம்
ரேக்கு எதிரே மக்பேலாவென்னும் நிலத்திலே,
௰௩ தனக்குச் சொந்த மயானஸ்தானமாக,—எத்தியனா
கிய எப்பிரோனிடத்திலே, நிலத்துடனே வாங்
கின குகையில், அவனை அடக்கம்பண்ணினார்
௰௪ கள்.—அவன்புத்திரர் தங்களுக்கு அவன் கட்
டளையிட்டபடியே செய்தார்கள். யோசேப்புத்
தன் பிதாவை அடக்கம்பண்ணினபின்பு, அவ
னும், அவன் சகோதரரும், அவனுடைய பிதா
வை அடக்கம்பண்ணுவதற்கு அவனுடனேபோ
னவர்கள்யாவரும், எகிப்துக்குத்திரும்பினார்கள்.

தங்கள்பிதா மரணமடைந்தபின்பு, யோசேப் ௰௫
பின்சகோதரர், யோசேப்புக்கு நாம்செய்த சகல
தீங்குகளுக்காகவும் அவன் நம்மைப்பகைத்து,
நிச்சயமாய்ப் பிரதிபலன்செய்வானென்றுசொல்
லி,—உன்சகோதரர் உனக்குத்தீங்குசெய்தார்கள். ௰௬
அவர்கள்செய்த துரோகத்தையும், பாவத்தையும்,
நீ மன்னிக்கும்படி, நான்சொன்னேனென்பதா
க யோசேப்புக்குச் சொல்லுங்களென்று உம்மு
டையபிதா மரணமடையுமுன்னமே, கட்டளை
யிட்டார்.-ஆதலால் உன்பிதாவின் தேவனுக்கு ௰௭
அடியாராகிய நாங்கள்செய்த துரோகத்தை மன்
னிக்கவேண்டுமென்று, யோசேப்புக்குச் சொல்
லியனுப்பினார்கள். அவர்கள் அதை யோசேப்
புக்குச்சொல்ல, அவன் அழுதான்.—பின்பு அவ ௰௮
னுடையசகோதரரும்போய்அவனுக்குமுன்பாக
விழுந்து, நாங்கள் உனக்கு அடிமைகளாயிருக்கி
றோமென்றார்கள்.—யோசேப்பு அவர்களைநோக் ௰௯
கி, பயப்படாதிருங்கள். நான்தேவனுக்குப்பிரதி
யானவனோ.—எனக்குவிரோதமாய் நீங்கள்நினைத் ௨௰
துச்செய்ததீமையே: தேவனோ இப்பொழுது
நடந்துவருகிறபடியே, வெருசனங்களைக்காத்து
இரட்சிக்கவேண்டுமென்னும் நன்மையையேநி
னைந்து செய்தார்.—நீங்கள்பயப்படாதிருங்கள், ௨௧
உங்களையும், உங்கள்குழந்தைகளையுங் காத்துக்
கொள்ளுவேன். என்றுசொல்லி, அவர்களுக்கு
ஆறுதல்செய்து,அவர்கள்மனமுருகப்பேசினான்.

யோசேப்பும், அவன் பிதாவின் குடும்பத்தா ௨௨
ரும், எகிப்து தேசத்தில் வாசம் பண்ணினார்கள்.
யோசேப்பு நூற்றுப்பத்துவருஷஞ் சீவித்திருந்
தான்.—அவன் எப்ராயீமின்மூன்றாந்தலைமுறைப் ௨௩
பிள்ளைகளையுங்கண்டான். மனாசேயின் புத்திர
னாகியமாகீருடையபிள்ளைகளும், யோசேப்பின்
மடியில் வளர்க்கப்பட்டன.-யோசேப்புத் தன்ச ௨௪
கோதரரைநோக்கி. நான் மரணமடையப்போகி
றேன். எப்படியும், தேவன் உங்களுக்கருள்
செய்து,நீங்கள்இத்தேசத்தைவிட்டு,தாம்ஆபிரகா
முக்கும், ஈசாக்குக்கும், யாக்கோபுக்கும், ஆணை
யிட்டுக்கொடுத்திருக்கிற தேசத்துக்குப் போகப்
பண்ணுவாரென்றான்.-பின்னும்யோசேப்பு,நிச் ௨௫
சயமாகத்தேவன் உங்கள்மேல்கடாட்சம்வைப்
பார்.அப்பொழுதுநீங்கள்என்னெலும்புகளைஇவ்
விடத்திலிருந்து கொண்டுபோவீர்களாகவென்று
சொல்லி,இஸ்ரவேலின்புத்திரரிடத்தில் ஆணையி
டுவித்துக்கொண்டான்-யோசேப்புநூற்றுப்பத்து ௨௬
வயதில்மரணமடைந்தான்.அவர்கள்அவனுக்குச்
சுகந்தவருக்கங்களையிட்டு, எகிப்திலே அவனைப்
பிரேதப்பெட்டியிலே அடக்கிவைத்தார்கள்.

---

(௩) எண்.௨௰.௨௯. (௪) எஸ்த.௪.௨. (௫) அதி.௪௭.௨௯. ஏசா.௨௨.௰௬. மத்.௨௭.௬௰. (௰) ௨.சாமு.௧.௰௭. அப்.
௮.௨. ௧.சாமு.௩௧.௰௩. யோபு.௨.௰,௩. (௰௨) அதி.௪௯.௨௯,௩௰. அப்.௭.௰௬. (௰௩) அதி.௨௩.௰௬. (௰௫) யோபு.
௰௫.௨௧,௨௨. (௰௭) நீதி.௨௮.௰௩. அதி ௪௯.௨௪. (௰௮) அதி.௩௭.௭,௰. (௰௯) அதி.௪௫.௫. உபா.௩௨.௩௫. (௨௰)
சங்.௫௬.௫. அதி.௪௫.௫,௭. (௨௧) அதி.௪௭.௰௨. மத்.௫.௪௪. அதி.௩௪.௩. (௨௩) யோபு.௪௨.௰௬. எண் ௩௨.௩௯.
அதி.௩௰.௩. (௨௪) யாத்.௩௰௬,௰௭. அதி.௰௫.௰௮. (௨௫) யாத்.௰௩.௰௯. யோசு.௨௪.௩௨. (௨௬) வச.௨.

மோசே எழுதின இரண்டாம் புத்தகமாகிய

# யாத்திராகமம்.

---

## ௧. அதிகாரம்.

௧. யோசேப்பும் அவன்சகோதரரும்மரணமடைந்தபின் அவர்கள்வமிசத்தார் விருத்தியடைதல்: ௮. பார்வோனால் அவர்கள் துயரப்படல்: ௰௫. அவர்களுக்கு மருத்துவிச்சிமார் தயைசெய்தல்: ௨௨. புத்திரரை நதியிற்போட பார்வோன் கட்டளையிடல்

இஸரவேலின் சந்ததியாராகிய ரூபேன், ஷிமி
௨ யோன், லேவி, யூதா,—ஈஷகார், செபுலோன்,
௩ பேன்யாமீன்,—தாண், நப்தாலி, காத், ஆஷேர்
என்னும் பேரையுடைய ஒவ்வொருவரும், தங்
கள் தங்கள் குடும்பத்தோடும் யாக்கோபோடும்
௪ எகிப்துக்குப்போய்ச் சேர்ந்தார்கள்.—யோசேப்
போ முன்னமே எகிப்தில் போயிருந்தான்.—
௫ யாக்கோபினால் தோன்றியசந்ததியார் ஆக எழுப
௬ துபேர்.—யோசேப்பும், அவன்சகோதரர் சகல
ரும், அக்காலத்திலுள்ள சந்ததியார்யாவரும், மர
எ ணமடைந்தார்கள்.-இஸரவேல்சந்ததியார்தழைத்
து, மிகவுமதிகமாய் விருத்தியடைந்து பெருகி,
வரவர அதிக பிரபலமுள்ளவர்களானார்கள்: தே
சம் அவர்களால் நிறைந்தது.
௮ யோசேப்பை அறியாத புதிய இராசனொரு
வன் எகிப்திலே தோன்றினான். அவன் தன் பிர
௯ சைகளைநோக்கி,—இஸரவேல்சந்ததியாராகிய ச
னங்கள் நம்மிலும் பெருக்கமும், பிரபலமுமா
௰ னவர்களாயிருக்கிறார்களே,—ஒருயுத்தம் வருங்
காலத்தில் அவர்களும், நம்முடைய பகைஞரு
டன்கூடி. நமக்கு விரோதமாய் யுத்தம்பண்ணி,
இத்தேசத்தைவிட்டுப் புறப்பட்டுப்போகவுங்கூ
டும். ஆதலால் அவர்களைப்பெருகாதபடி உபா
௰௧ யமாக நடத்துவோம் வாருங்களென்றான்.—இப்
படித் தாங்களேற்றும் பாரமான சுமையினால் அ
வர்களைவருத்த, விசாரணைக்காரரை யேற்படுத்தி
னார்கள். அப்பொழுது அவர்கள் பார்வோனநி
மித்தம் பீத்தோம், ராமேசேசு என்னும் பண்ட
௰௨ சாலை பட்டணங்களைக் கட்டினார்கள்.—அவர்
கள் அவர்களை எவ்வளவுவருத்தினார்களோ, அவ்
வளவு அவர்கள் விருத்தியடைந்து பெருகினார்
௰௩ கள்.—அவர்கள் இஸரவேல்சந்ததியைக்குறித்து
௰௪ விசனப்பட்டார்கள்.—மேலும் எகிப்தியர், இஸ
ரவேலரைக்கடினமாக ஊழியஞ்செய்யப்பண்
ணினார்கள்.
௰௫ சாந்துஞ் செங்கல்லுங்கொண்டு செய்யுங்கடி
னமான ஊழியத்தினாலும், வயல்வெளியிலே
செய்யுஞ் சகலவிதத்தொழில்களினாலும், அவர்
கள் தங்கள் சீவனையும் வெறுக்கப்பண்ணினார்
கள். அவர்கள் எந்த ஊழியங்களையும், அவர்க
ளைக்கொண்டு, கொடூரமாக நடப்பித்தார்கள்.—
அதுவுமன்றி, எகிப்தின் இராசா சிப்பிராள் என் ௰௬
னும் நாமத்தையும், பூகாள் என்னும் நாமத்தையு
முடைய எபிரேயமருத்துவிச்சிகளைநோக்கி, நீங்
கள் எபிரேயஸ்திரிகளுக்குமருத்துவஞ்செய்யுஞ்
சமயங்களில், ஆசனங்களிலிருக்கையில் பார்த்
து, ஆண்பிள்ளையென்றால், கொலைசெய்யுங்கள்;
பெண்பிள்ளையென்றால், உயிரோடே விடுங்க
ளென்றான்.—மருத்துவிச்சிகளோதேவனுக்குப் ௰எ
பயந்து எகிப்தின் இராசா தங்களுக்கிட்டகட்ட
ளைப்படிசெய்யாமல், ஆண்பிள்ளைகளையும் உயி
ரோடேவிட்டார்கள்.—அதினால் எகிப்தின் இரா ௰௮
சா மருத்துவிச்சிகளையழைப்பித்து, நீங்கள் ஆண்
பிள்ளைகளையும் உயிரோடே விட்டதென்னவெ
ன்று அவர்களிடத்திற்கேட்க;—மருத்துவிச்சிகள் ௰௯
பார்வோனைநோக்கி, எபிரேயஸ்திரிகள் எகிப்தி
யஸ்திரிகளைப்போலல்ல; அவர்கள்பலமுள்ளவர்
கள்.மருத்துவிச்சிகள்அவர்களிடத்திற்சேருமுன்
னமே, அவர்கள் பிரசவிக்கிறார்களென்றார்கள்.—
தேவன் மருத்துவிச்சிகளுக்குநன்மைசெய்தார். ௨௰
சனங்கள்பெருகி மிகவும் பிரபலமானார்கள்.—
மேலும் மருத்துவிச்சிகள் தேவனுக்குப் பயந் ௨௧
ததினால் அவர்களுடைய குடும்பங்கள் தழைக்
கும்படிசெய்தார்.
பார்வோன் தன்பிரசைகளுக்கு, பிறக்கும் ஒவ் ௨௨
வொரு புத்திரனையும் நதியிலே போடுங்கள்; புத்
திரிகளை உயிரோடிருக்கவிடுங்களென்று கட்ட
ளையிட்டான்.

## ௨. அதிகாரம்.

௧. மோசேயைப் பேழையில்வைத்து நதியோரத்தில் சேமித்தல்: ௫. பார்வோன்குமாரத்தி அவனைக்கண்டெடுத்தல்: ௰௧. மோசே எகிப்தியனொருவனைக்கொல்லல்: ௰௫. மோசேபார்வோனுக்கஞ்சி மீதியான் தேசத்துக்குத் தப்பியோடல்: ௨௩ தேவன் இஸரவேல்சந்ததியாரைக் கடாட்சித்தல்.

லேவியின் குடும்பத்தாரிலொருமனிதன், லே ௧
வியின் குடும்பத்தாருள், ஒருகன்னிகையை வி
வாகம் பண்ணியிருந்தான்.—அந்தஸ்திரி கருப் ௨
பவதியாகி ஒரு ஆண்பிள்ளையைப்பெற்றாள். அ
தை அழகுள்ளதென்றுகண்டு, மூன்றுமாதம் ஒ

---

(௧. அதி. ௧.) ஆதி.௪௬.௮. அதி.௬.௰௪. (௫) ஆதி.௪௬.௨௬,௨எ. உபா.௰.௨௨. (௬) ஆதி.௫௰.௨௬. (எ) ஆதி. ௪௬.௩. உபா.௨௬.௫. (௰௧) ஆதி.௰௫.௰௩. அதி.௩.எ. அதி.௨.௰௧. ஆதி.௪எ.௰௧. (௰௫) அதி.௨.௨௩. அதி.௬.௯. எண்.௨௰.௰௫. (௰எ) நீதி.௰௬.௬. தானி.௩.௰௬. (௨௰) நீதி.௰௧.௰௮. பிர.௮.௰௨. (௨௧) ௧ சாமு.௨.௩௫. ௧.இரா. ௨.௨௪. சங்.௱௨எ.௧.—(௨. அதி. ௧.) அதி.௬.௨௰. (௨) எபி.௰௧.௨௩.

௩ ளித்துவைத்தாள்.—பின்பு அதை ஒளித்துவைக்
கக்கூடாதென்று, அவளொரு நாணற் பெட்டி
யையெடுத்து அதற்குப்பிசினையும், நிலக்கீலையும்,
பூசி, அதிலே குழந்தையைவளர்த்திநதியோரத்தி
௪ லுள்ள நாணலுக்குள்வைத்தாள்.—அதற்கு என்
ன சம்பவிக்குமென்பதை அறியும்படி அதின்
சகோதரி தூரத்தில்நின்றாள்.
௫ பார்வோனுடைய குமாரத்தி நதியில் ஸ்நானம்
செய்யவந்தாள். அவளுடைய தாதிமார்கள் ஆற்
றங்கரையில் உலாவினார்கள். அப்பொழுது நா
ணலுக்குள்ளேயிருக்கிறபெட்டியை அவள்கண்
டு தாதியொருத்தியையனுப்பி, அதையெடுப்பித்
௬ தாள்.—அதைத்திறந்தபொழுது பிள்ளையைக்கண்
டாள்: பிள்ளையோ அழுதது. அவள் அதின்
மேலிரங்கி, இது எபிரேயரின் குழந்தையென்
௭ றாள்.—அதின்சகோதரி பார்வோனுடையகுமாரத்
தியைநோக்கி, உமக்கு இந்தப்பிள்ளையைவளர்க்
கும்படி எபிரேயஸ்திரிகளில் ஒருகைத்தாயைநா
னும்மிடத்தில் அழைத்துவரலாமாவென்றுசொல்
௮ ல;—பார்வோனுடைய குமாரத்தி, அழைத்துவா
வென்றாள். அந்தப்பெண் போய், பிள்ளையின்
௯ மாதாவையே அழைத்துவந்துவிட்டாள்.—பார்
வோனுடையகுமாரத்தி அவளைநோக்கி, நீ இந்தப்
பிள்ளையை எடுத்துப்போய், எனக்குவளர்த்துத்
தா; நான் உனக்குச் சம்பளங்கொடுப்பேனென்
றாள்: அந்தஸ்திரி பிள்ளையையெடுத்துக்கொண்
௰ டுபோய் அதை வளர்த்தாள்.—பிள்ளைவளர்ந்தபின்
பு, அவள் அதைப் பார்வோன்குமாரத்தியிடத்
தில்கொண்டுபோய்விட்டாள். அவளுக்கு அ
வன் புத்திரனானான். அவள் அவனைச்சலத்தில்
நின்றும் எடுத்தேனென்றுசொல்லி, அவனுக்கு
மோசேஎன்று பெயரிட்டாள்.
௰௧ மோசே பெரியவனானகாலத்தில் தன் சகோ
தரரிடத்திற்போய், அவர்கள் சுமக்கும் பாரச்சு
மைகளைப்பார்த்தான். தன் சகோதரராகிய எபி
ரேயரில் ஒருவனை எகிப்தியனொருவனடிப்ப
௰௨ தைக்கண்டு,-அங்குமிங்கும்பார்த்து ஒருவருமில்
லையென்றுகண்டு எகிப்தியனை வெட்டி அவ
௰௩ னை மணலிலேபுதைத்துவிட்டான்.—மற்றைநாள்
போனபொழுதும், எபிரேயமனிதர் இருவர்சண்
டைபண்ணுவதைக்கண்டு, அநியாயஞ்செய்தவ
னைநோக்கி, நீ உன்தோழனை என் அடிக்கிறா
௰௪ யென்றுகேட்க;—அவன், எங்களுக்கு இராசா
வாகவும், நியாயாதிபதியாகவும், உன்னையேற்ப
டுத்தினவன் யாவன்; எகிப்தியனைக்கொன்றபிர
காரம் என்னையுங் கொல்லப்பார்க்கிறாயாவென்
றான். மோசே நிச்சயமாகக்காரியம் வெளிப்
பட்டதென்று பயந்தான்.
௰௫ பார்வோன் அந்தக்காரியத்தைக்கேள்விப்பட்
டபொழுது, மோசேயைக்கொலைசெய்ய வகை
தேடினான். மோசே பார்வோனுடைய முகத்
துக்குத்தப்பியோடி, மீதியான்தேசத்திற்போய்த்
தங்கினான்.—அவனொரு கிணற்றருகேயிருக்கை ௰௬
யில், மீதியான்தேசத்து ஆசாரியனுடைய புத்தி
ரிகள் ஏழுபேர் வந்து, தங்கள் பிதாவின் ஆடு
களுக்குத்தண்ணீர் காட்டும்படி, நீரைமொண்
டு தொட்டியை நிறைத்தார்கள்.—அப்பொழுது ௰௭
மேய்ப்பர்கள்வந்து அவர்களைத்துரத்திவிட, மோ
சே அவர்களுக்குத்துணைநின்று, அவர்களுடை
ய ஆடுகளுக்குத்தண்ணீர் காட்டினான்.—அவர் ௰௮
கள் தங்கள் பிதாவாகியரேகுவேலினிடத்திற்
சேர்ந்தபொழுது, அவன், நீங்களின்றைக்குஇத்
தனைசீக்கிரமாய் வந்ததேதென்றுகேட்க;—அவர் ௰௯
கள், எகிப்தியனொருவன் மேய்ப்பருடையகை
களுக்கு எங்களைத்தப்புவித்து, எங்களுக்காக
மொண்டுமொண்டு, ஆடுகளுக்குத்தண்ணீர்காட்
டினானென்றார்கள்.-அப்பொழுது அவன் தன்கு ௨௰
மாரத்திகளைநோக்கி, அவனெங்கே; அந்தமனி
தனை நீங்கள் விட்டுவந்ததென்ன; போசனபா
னம்பண்ண அவனையழைத்துக்கொண்டுவாருங்
களென்றான்.—மோசே அவனுடன்தங்கச்சம்ம ௨௧
தித்தான். அவன் சிப்போராள் என்னுந்தன்குமா
ரத்தியை மோசேக்குவிவாகம் பண்ணிக்கொடுத்
தான்.—அவளொருபுத்திரனைப்பெற்றாள். மோ ௨௨
சே, நான் அந்நியதேசத்தில் பரதேசியாயிருக்கி
றேனென்றுசொல்லி, அவனுக்குக்கெர்ஷோம்
என்றுபேரிட்டான்.
சிலகாலஞ்சென்றபின்பு, எகிப்தின்இராசா ம ௨௩
ரித்தான். இஸ்ரவேல்சந்ததியார் கடினமான ஊ
ழியத்தின்நிமித்தம் தபித்து ஓலமிட்டார்கள். அ
வர்கள் கடினமான ஊழியத்தின்நிமித்தம் இட்ட
ஓலம் தேவனிடத்திற்சேர்ந்தது.—தேவன் அ ௨௪
வர்களிட்ட ஓலத்தைக்கேட்டு, ஆபிரகாம், ஈசாக்
கு, யாக்கோபு என்னும் இவர்களோடுசெய்த உ
டன்படிக்கையைநினைத்தார்.—தேவன் இஸ்ர ௨௫
வேல்சந்ததியார்மேற்கண்ணோக்கினார். தேவன்
அவர்களைக்கடாட்சித்தார்.

## ௩. அதிகாரம்.

௧. அக்கினிஎரியும்செடிமத்தியில் தேவன் மோசேக்குத்தரிசனமாதல்: ௭. தேவன் மோசேயுடன்பேசல்: ௰௧. மோசே தேவனுடன் சம்பாஷித்தல்: ௰௪. தேவனுடைய நாமம்: ௰௫. அவர் இஸ்ரவேலரிடத்திற்கு வாக்கனுப்பல்.

மோசே மீதியான்தேசத்து ஆசாரியனும், தன் ௧
மாமனுமாகிய எத்திரோவின் ஆடுகளைமேய்த்து
வந்தான். அவன் வனத்தின்கடையெல்லையில்
மந்தையையோட்டி, ஓரேப் என்னுந்தேவமலை
யைச்சேர்ந்தான்.—யெகோவாவின் தூதனான ௨
வர் அக்கினிச்சுவாலையினிடமாய் ஒரு முட்செ
டிமத்தியில் நின்று, அவனுக்குத்தரிசனையானார்.

(௪) அதி.௰௫.௨௰. (௫) அப்.௭.௨௧. (௰௧) எபி.௰௧.௨௪,௨௫,௨௬. அதி.௧.௰௧. (௰௪) அப்.௭.௨௭,௨௮. ஆதி.௰௩.௮. (௰௫) எபி.௰௧.௨௭. ஆதி.௨௪.௰௧. (௰௬) அதி.௩.௧. ஆதி.௪௧.௪௫. ஆதி.௨௯.௰. (௰௮) எண்.௰.௨௯. அதி.௩.௧. அதி.௰௮.௧. (௨௰) ஆதி.௩௧.௫௪. (௨௧) அதி.௪.௨௫. (௨௨) அதி.௰௮.௩. எபி.௰௧.௰௩,௰௪. (௨௩) அதி.௭.௭. எண்.௨௰.௰௬. உபா.௨௬.௭. ஆதி.௰௮.௨௰. அதி.௩.௯. யாக்.௫.௪. (௨௪) அதி.௬.௫. ஆதி.௰௫.௰௪. (௨௫) அதி.௪.௩௧. ௧.சாமு.௧.௰௧. அதி.௩.௭.—(௩. அதி. ௧.) அதி.௨.௰௬. அதி.௰௮.௫. (௨) உபா.௩௩.௰௬. ஏசா.௬௩.௯.

அப்பொழுதுஅவன்உற்றுப்பார்த்தான். அக்கினி
சுவாலித்துஎரிந்தும் செடி வேகாமல்நின்றது.—
௩ மோசே இந்தச்செடி வேகாதிருக்கிறதென்ன;
நான் ஒருபுறத்திற்சாய்ந்து சமீபித்து இந்த அற்
௪ புதக்காட்சியைப் பார்ப்பேனென்முன்.—அவன்
பார்க்கும்படி சாய்ந்துவருவதை யெகோவா
கண்டார். செடியின்மத்தியில் நின்று மோசே,
மோசே,என்று தேவன் அழைக்க; அவன் அடி
௫ யேன்என்முன்.—அவர், நீ இந்தஸ்தானத்திற்குச்
சமீபித்துவராதே; நீ நிற்குமிடம் பரிசுத்தமுள்ள
பூமி. உன் பாதரட்சையைக்காலில்நின்றுகழற்றி
௬ விடுஎன்ருர்.-மேலும்,நான் உன்பிதாவுக்குந் தே
வன், ஆபிரகாமுக்குந் தேவன், ஈசாக்குக்குந்
தேவன், யாக்கோபுக்குந் தேவன் என்ருர்.
மோசே தேவனை நோக்கிப் பார்ப்பதற்குப் ப
யந்ததினுல் முகத்தை மூடிக்கொண்டான்.

௭ பின்பு யெகோவா, எகிப்திலிருக்கிற என்
சனங்களின்வருத்தத்தை நான் உற்றுப்பார்த்தும்,
அவர்களுடைய ஆளோட்டிகளைக்குறித்து அவர்
களிடுகிற ஓலத்தைக்கேட்டும், அவர்கள் படுகிற
௮ வேதனைகளை அறிந்துமிருக்கிறேன்.—அவர்களை
எகிப்தியருடைய கைக்குத்தப்புவிக்கவும், அவர்
களைஅந்தத்தேசத்திலிருந்துநீக்கிக்கானனியரும்,
எத்தியரும், எமோரியரும், பெரீசியரும், ஈவிய
ரும், எபூசியரும் இருக்கிற இடமும், பாலுந்
தேனும் பெருகுகிற நிலமுமாகிய, விசாலமுள்ள
உத்தமதேசத்திற் சேர்க்கவும், இறங்கினேன்.—
௯ கேள், இஸரவேல் சந்ததியாரிடுகிற ஓலம் என்
சந்நிதி அடைந்தது; எகிப்தியர் அவர்களை வருத்
௰ தும் வருத்தத்தைக்கண்டேன்.—நீ இஸரவேல்சந்
ததியாகிய என்சனங்களை எகிப்திலிருந்து அழைத்
துவரும்படி, உன்னைப்பார்வோனிடத்துக்கனுப்
புவேன் வாவென்ருர்.

௰௧ அப்பொழுதுமோசே, தேவனைநோக்கி,பார்
வோனிடத்துக்குப்போகவும், இஸரவேல்சந்ததி
யாரைஎகிப்திலிருந்து அழைத்துவரவும்,நான்எம்
௰௨ மாத்திரமென்முன்.—அதற்கவர், நான் உன்னோ
டேயிருப்பேன். நீ அந்தச்சனங்களை எகிப்திலி
ருந்து அழைத்துவந்தபின்பு,நீங்களிந்த மலையின்
மேல் தேவாராதனைசெய்வீர்கள். நானே உன்னை
யனுப்பினேனென்பதற்கு இதுவே அடையாள
௰௩ மென்ருர்.—மோசே தேவனை நோக்கி, நான்
இஸரவேல்சந்ததியாரிடத்தில் சேர்ந்து, உங்கள்
பிதாக்களுடைய தேவன், உங்களிடத்திலென்
னை அனுப்பினுரென்று, அவர்களுக்குச் சொல்
லும்பொழுது, அவருடைய நாமமென்னவென்
று என்னிடத்தில்கேட்டால்,நான் அவர்களுக்கு
என்ன சொல்லலாமென்றுசொல்ல;—தேவன் ௰௪
மோசேயினிடத்தில், நானே தானுயிருப்பவர்.
நீ இஸரவேல் சந்ததியாரைநோக்கி, தானுயிருப்
பவர், என்னை உங்களிடத்துக்கு அனுப்பினு
ரென்றுசொல்லென்ருர்.—மேலுந் தேவன் மோ ௰௫
சேயைநோக்கி, ஆபிரகாமின் தேவனும், ஈ
சாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனு
மாயிருக்கிற உங்கள்பிதாக்களின் தேவனுகிய
யெகோவா, என்னையுங்களிடத்துக்கனுப்பி
னுரென்று நீ இஸரவேல்சந்ததியாருக்குச்சொல்
லு. சதாகாலமும் இதுவே என் நாமம்; இதுவேத
லைமுறைதோறும் என்னையறிகிற அறிகுறியா
கும்.—நீபோய் இஸரவேலரின் முதியோரைக் ௰௬
கூடிவரச்செய்துஅவர்களுடனே, உங்கள்பிதாக்
களின் தேவனும், ஆபிரகாம், ஈசாக்கு, யாக்
கோபுஎன்னுமிவர்களுடைய தேவனுமாகிய
யெகோவா, எனக்குத் தரிசனையாகி, நான்
உங்களைக்கடாட்சித்து, எகிப்திலேயுங்களுக்குச்
செய்யப்பட்டதைக் கண்டேனென்றும்,—நான் ௰௭
உங்களை எகிப்தியர்செய்கிறவருத்தத்தில்நின்றும்
நீக்கி, கானனியர், எத்தியர், எமோரியர், பெரீசி
யர், ஈவியர்,எபூசியர் என்பவர்களுடைய இட
மும், பாலுந்தேனும் பெருகுகிறதுமான தேசத்
தில் சேரப்பண்ணுவேனென்றுசொல்லச்சொன்
னேனென்றும்,சொல்லு.-அவர்கள் உன்வாக்குக் ௰௮
குச்செவிகொடுப்பார்கள். நீயும், இஸரவேலரின்
முதியோரும், எகிப்தின் இராசனிடத்துக்குப்
போய், அவனைநோக்கி, எபிரேயருடைய தேவ
னுகிய யெகோவா, எங்களுக்குத் தரிசனமா
னுர்.இப்பொழுது நாங்கள் எங்கள் தேவனுகி
ய யெகோவாவுக்குப் பலியிடும்படி, வனுந்த
ரத்தில் மூன்றுநாள் பிரயாணம்பண்ண உம்மை
வேண்டுகிருேமென்றுசொல்லுங்கள்.-எகிப்தின் ௰௯
இராசன் கைவல்லபங்கண்டாலொழிய உங்க
ளைப் போகவிடானென்பது எனக்கு நிச்சயமா
ய்த்தெரியும்.—நான் என்கையைநீட்டி, எகிப் ௨௰
தின்மத்தியில் சகலவித அற்புதங்களையுஞ்செய்து
அதைத்தண்டிப்பேன்; அதற்குப்பின்புஅவனுங்
களைப்போகவிடுவான்.—இந்தச்சனங்கள் எகிப் ௨௧
தியரிடத்தில் தயைபெறும்படிசெய்வேன். நீங்
கள் போகுங்காலத்தில்வெறுங்கையோடேபோ
கமாட்டீர்கள்.—ஸ்திரிகள் தங்கள் தங்கள் அய ௨௨
லவர்களிடத்திலும், தங்கள்தங்கள் வீடுகளில்தங்
குகிறவளிடத்திலுங் கேட்டுவாங்கும் வெள்ளி
யுடைமைகளையும், பொன்னுடைமைகளையும்,
வஸ்திரங்களையும், உங்கள்புத்திரருக்கும் புத்திரி
களுக்குந் தரிப்பீர்களாக. இப்படியே எகிப்திய
ரிடத்திற்கொள்ளையிடுவீர்களென்ருர்.

(௪) உபா.௩௩.௰௬. (௫) யோசு.௫.௰௫. (௬) ஆதி.௨௮.௰௩. மத்.௨௨.௩௨. ௧.இரா.௰௯.௰௩. எசா.௬.௧,௫. (௭) அதி.௨.௨௩. நிகி.௯.௯. அதி.௧.௰௧. ஆதி.௰௮.௨௧. அதி.௨.௨௫. (௮) ஆதி.௰௧.௫,௭. அதி.௰௨.௫௧. உபா.௧.௨௫. வச.௰௭. அதி.௩௩.௧. உபா.௨௬.௯,௰௫. எரே.௰௧.௩. எசேக்.௨௰.௬. ஆதி.௰௫.௰௯. (௯) அதி.௨.௨௩. அதி.௧.௰௧,௰௪. (௰௧) எசா.௬.௫,௮. எரே.௧.௬ (௰௨) ஆதி.௩௧.௩. யோசு.௧.௫. ரோ.௮.௩௧. (௰௪) அதி.௬.௩. யோவா.௮.௫௮. எபி.௰௩.௮. வெளி.௧.௪. (௰௬) அதி.௪.௨௯. ஆதி.௫௰.௨௪. (௰௭) ஆதி.௰௫.௰௪,௰௬. (௰௮) அதி.௪.௩௧. அதி.௫.௧,௩. (௰௯) அதி.௫.௨.(௨௰) அதி.௯.௰௫. அதி.௭.௩. அதி.௰௧.௯. அதி.௰௨.௩௧. (௨௧) அதி.௰௨.௩௬. (௨௨) அதி.௰௨.௩௫,௩௬. எசேக்.௩௯.௰.

## ௪. அதிகாரம்.

௧. மோசேயின் கோல் சருப்பமாதல்: ௬. அவன் கையிற்குட்டம்வரல்: ௰. மோசே தனியேபோகப்பயந்தபடியால் ஆரோனையுங்கூடப்போக நியமித்தல்: ௰௮. மோசே மீதியான்தேசத்தில் நின்றும்புறப்படல்: ௨௰. பார்வோனிடத்தில் இன்னது சொல்லவேண்டுமென்ற கட்டளை பெறல்: ௨௪. மோசேயின்புத்திரனுக்குவிருத்த சேதனஞ்செய்தல்:௨௭. ஆரோன் மோசேயைச் சந்தித்தல்: ௨௯. மோசே இஸரவேலரிடத்தில் போய்த் தேவனுடைய வாக்கையறிவித்தல்.

அப்பொழுது மோசே, அவர்களென்னை நம்
பார்கள். என் வாக்குக்குச் செவிகொடார்கள்.
யெகோவா உனக்குத் தரிசனமாகவில்லை,
௨ என்பார்களென்றுசொல்ல;-யெகோவா அவ
னைநோக்கி, உன்கையிலிருக்கிறதென்னவென்
௩ றார். அவன், ஒருகோல் என்றான்.—அவர் அ
தைத்தரையிற்போடென்றார். அவனதைத் தரை
யிற்போட, அது சருப்பமாயிற்று. மோசே அ
௪ தற்கு விலகியோடினான்.—யெகோவா,மோ
சேயைநோக்கி, உன் கையைநீட்டி அதின் வா
லைப்பிடியென்றார். அவன் தன் கையை நீட்டி
அதைப்பிடிக்க, அது அவன்கையில் கோலாயிற்
௫ று.—இதனால் தங்கள் பிதாக்களின் தேவனும்,
ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவ
னும், யாக்கோபின் தேவனுமாகிய யெகோ
வா உனக்குத்தரிசனமானாரென்று நம்புவார்கள்.
௬ மேலும் யெகோவா அவனைநோக்கி, உன்
கையை மார்பில் வையென்றுசொல்ல; அவன்
கையைத்தன் மார்பில் வைத்தான். அதை அவன்
வெளியேயெடுக்க, அவன் கை உறைந்த தூறல்
௭ போல் வெண்குஷ்டம் பிடித்திருந்தது.—அவர்
திரும்பவும், உன்கையை மார்பில் வையென்று
சொல்ல; அவன் தன்கையைத் தன்மார்பில்வைத்
து, தன்மார்பைவிட்டெடுக்க, அது அவனுடை
௮ ய மற்றத்தசையைப்போலாயிற்று.—அவர்களுன்
னை நம்பாமலும், முதலாம் அடையாளத்தில் வி
சுவாசம் வையாமலுமிருந்தாலும், இரண்டாம்
௯ அடையாளத்தினால் விசுவாசிப்பார்கள்.—இவ்
வடையாளங்களிரண்டிலும், அவர்கள் விசுவா
சம் வையாமலும், நீ சொல்வதைக்கேளாமலுமி
ருப்பார்களாகில், நீ ஆற்றின் நீரை மொண்டு
உலர்ந்த தரையிலூற்றுவாயாக.ஆற்றில்மொண்
ட நீர் உலர்ந்த தரையில் இரத்தமாகுமென்றார்.
௰ அபொழுது மோசேயெகோவாவைநோக்
கி, என் ஆண்டவரே முன்னும்,நீர்அடியேனு
டன்பேசினதற்குப்பின்னும், நான் வாக்குவல்
லவனல்ல; என்வாக்கும் மந்தம்; என்நாக்கும்
௰௧ மந்தமென்றான்.-யெகோவா அவனைநோக்கி,
மனிதனுக்கு வாயைச் சிருஷ்டித்தவர் ஆர். ஊ
மையையும், செவிடனையும், பார்வையுள்ளவ
னையும், குருடனையும் சிருஷ்டித்தவர் ஆர். யெ
கோவாவாகிய நானல்லவா.—ஆதலால் நீ ௰௨
போ. நான் உன்வாயிலிருந்து நீ பேசவேண்டு
வதின்னதென்று, உனக்குணர்த்துவேனென்று
சொல்ல;-அவன் என் ஆண்டவரே,நீர்அனுப் ௰௩
பத்தக்கவனையனுப்பும்படி கெஞ்சுகிறேனென்
றான்.—அப்பொழுது யெகோவா தமதுகோ ௰௪
பம் மோசேயின்மேல் மூள, லேவியனாகிய ஆ
ரோன் உன் சகோதரனல்லவா. அவன் வாக்கு
வல்லவனென்றறிவேன்.பார்,அவனும்உன்னைச்
சந்திக்கப் புறப்பட்டுவருகிறான். உன்னைக்கா
ணும்பொழுது அவனிருதயம் மகிழும்.–நீ அவ ௰௫
னுடனேபேசு. அவனுடைய வாயில் வாக்கைக்
கொடு. நான் உன் வாயிலும், அவன் வாயிலும்,
இருந்து, நீங்கள் செய்யவேண்டுவதின்னதென்
று உங்களுக்கு உணர்த்துவேன்.—அவன் உன் ௰௬
வாக்கைச் சனங்களுக்குச்சொல்லுவான். அவ
னே யுனக்குவாய். நீயேயவனுக்குத்தேவன்.—
இந்தக்கோலையும் உன்கையிலேகொண்டுபோ.இ ௰௭
தனால்நீ அடையாளங்களைக் காட்டுவாயென்றார்.
பின்பு மோசே தன் மாமனாகிய எத்திரோவி ௰௮
னிடத்துக்குத்திரும்பிப்போய், அவனைநோக்கி,
எகிப்திலிருக்கும் என் சகோதரர்கள் இன்னும்
உயிரோடிருக்கிறார்களாவென்று பார்க்கும்படி,
நான் அவர்களிடத்திற்குப்போக உத்தரவுதாரு
மென்றான். அப்பொழுது எத்திரோ மோசேயை
நோக்கிச் சமாதானத்தோடே போய்வாவென்
றான்.-யெகோவா மீதியானிலும்மோசேயை ௰௯
நோக்கி, உன்பிராணனைவாங்கத்தொடர்ந்தமனி
தரெல்லாரும் இறந்துபோனார்கள்; நீ எகிப்துதே
சத்துக்குத் திரும்பிப்போவென்றார்.–அப்பொழு ௨௰
து மோசே தன்மனைவியையும், புத்திரர்களையும்,
ஓர்கழுதையின்மேலேற்றிக்கொண்டு, எகிப்துதே
சத்துக்குத்திரும்பினான். தேவனுடைய கோலை
யும்மோசே தன்கையிற்கொண்டுபோனான்.
பின்னும் யெகோவா மோசேயைநோக்கி, ௨௧
நீ எகிப்தில் திரும்பிப்போய்ச் சேர்ந்தபின்பு,
நான் உனக்கு உன் கையினாற்செய்யும்படி, அ
னுக்கிரகித்த அற்புதங்கள் யாவையும் பார்வோ
னுக்குமுன் செய்யும்பொருட்டு எச்சரிக்கையா
யிரு. ஆகிலும் நான் அவனுடைய இருதயத்
தைக்கடினப்படுத்துவேன். அவன் சனங்களைப்
போகவிடான்.—அப்பொழுது நீ பார்வோனை ௨௨
நோக்கி, இஸரவேல் என்புத்திரன்; என் சேஷ்
டபுத்திரன்:—என்னைச்சேவிக்கும்படி என் புத் ௨௩
திரனை அனுப்பிவிட, உனக்குக் கட்டளையிடுகி
றேன். அவனை விடமாட்டேனென்று மறுப்பா
யாகில், நான் உன் புத்திரனை, உன் சேஷ்டபுத்
திரனையே, சங்கரிப்பேன், பாரென்பதாக, யெ
கோவா சொன்னாரென்று சொல்லென்றார்.

(௪. அதி. ௨.) வச.௰௭,௨௩. (௫) அதி.௰௯.௯. அதி.௩.௰௫. (௬) எண்.௰௨.௰. (௭) ௨.இரா.௫.௰௪. மத்.௮.௩ (௮) அதி ௭.௰௯. (௰) எரே.௧.௬. (௰௧) சங்.௯௪.௯. (௰௨) ஏசா.௫௰.௪. எரே.௧.௯. மத்.௰.௰௯. (௰௩) யோனா. ௧.௩. (௰௫) அதி.௭.௧,௨. எண்.௨௨.௩௮ உபா.௫.௩௧. (௰௬) அதி.௭.௧. அதி ௰௮.௰௯. (௰௭) வச.௨. (௰௯) அதி. ௨௰௫,௨௩. (௨௰) அதி.௰௭.௯. எண்.௨௰.௮,௯. (௨௧) அதி.௩.௨௰. அதி.௭.௩,௰௩. அதி.௯.௰௨,௩௫. அதி.௰.௨. அதி.௰௪.௮. ரோ.௯.௰௮. (௨௨) ஓசி.௰௧.௧. ரோ.௯.௪. எரே.௩௧.௯. (௨௩) அதி.௰௨.௨௯.

௨௪ வழியிலிருக்கும் ஒரு சத்திரத்தில், யெகோ
வா அவனுக்கு முற்பட்டு, அவனைக்கொல்லப்
௨௫ பார்த்தார்.—அப்பொழுது சிப்போருள் கூரான
ஒருகல்லையெடுத்துத் தன்புத்திரனுடைய அக்கிர
சருமத்தைச்சேதித்து, அவனுடைய காலில் வீ
சி, நீர் எனக்கு இரத்தஞ்சிந்துங்கணவனேயென்
௨௬ றாள்.—பின்பு அவரவனைவிட்டுவிட்டார். அப்
பொழுது அவள் விருத்தசேதனநிமித்தத்தினால் நீர்
எனக்கு இரத்தஞ்சிந்துங்கணவனானீரென்றாள்.
௨௭ யெகோவா ஆரோனைநோக்கி, நீ வனாந்த
ரத்தில் மோசேயைச் சந்திக்கப்போவென்றார்:
அவன்போய்த் தேவமலையில் அவனைச்சந்தித்து
௨௮ முத்தஞ்செய்தான்.—மோசே தன்னையனுப்பின
யெகோவாவின் சகலவாக்குகளையும், தனக்
கு அவர் கட்டளையிட்ட சகல அடையாளங்க
ளையும், ஆரோனுக்குத் தெரிவித்தான்.
௨௯ மோசேயும் ஆரோனும்போய் இஸரவேல் சந்
ததியாரின் முதியோரெல்லாரையுங் கூடிவரச்
௩௰ செய்தார்கள்.—ஆரோன் யெகோவா மோசேக்
குச்சொல்லிய சகல வாக்குகளையுந் தெரிவித்து,
சனங்களுக்குப் பிரத்தியட்சமாக அடையாளங்
௩௧ களையுங்காட்டினான்.—சனங்கள் விசுவாசித்தார்
கள். யெகோவா இஸரவேல் சந்ததியார்மேற்
கடாட்சம் வைத்தாரென்றும், அவர்கள் படும் உ
பத்திரவங்களைக்கண்ணோக்கினாரென்றும், அவர்
கள் கேட்டபொழுது தலைவணக்கித் தொழுது
கொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. மோசேயும் ஆரோனும் பார்வோனிடத்திற் போதல்; அவனவர்களைக்கண்டித்தல: ௬. சனங்களுக்கு அதிகவேலைகளைக் கற்பித்தல்: ௰௫. விசாரணைக்காரர் பார்வோனிடத்தில் முறையிடல்: ௨௰. சனங்கள் மோசே ஆரோன் என்பவர்களிடத்தில் முறையிடல்; மோசே தேவனைப்பிரார்த்தித்தல்.

பின்பு மோசேயும், ஆரோனும் பார்வோனிடத்
திற்போய், இஸரவேலின் தேவனாகிய யெ
கோவா, வனாந்தரத்தில் எனக்கு உற்சவம்செய்
யும்படி, என் சனங்களை அனுப்பிவிடவேண்டு
௨ மென்று சொல்லுகிறாரென்றார்கள்.—அதற்குப்
பார்வோன் நான் இஸரவேலரைப்போகவிட,
யெகோவாவின்வாக்குக்கு நான் கீழ்ப்படிகி
றதற்குஅவர்யார். யெகோவாவை அறியேன்
நான்இஸரவேலரைப்போகவிடேனென்றான்.—
௩ அவர்கள அவனைநோக்கி, எபிரேயருடைய தே
வன் எங்களுக்குத்தரிசனமானார். நாங்கள் வ
னாந்தரத்தில்மூன்றுநாள்பிரயாணமளவும்போய்,
எங்கள் தேவனாகிய யெகோவாவுக்குப்
பலியிடும்படி, போகவிடவேண்டுமென்று உம்
மைவேண்டிக்கொள்ளுகிறோம். போகாதிருந்
தால், அவர் பெருவாரிக்காய்ச்சலும், கட்கமும்,
௪ எங்கள்மேல் வரப்பண்ணுவாரென்றார்கள்.—எ
கிப்தின் இராசா அவர்களைநோக்கி மோசேயே,
ஆரோனே, நீங்கள் சனங்கள் வேலைகளைவிட்டு
விலகும்படிசெய்கிறதென்ன. நீங்களும்போய்ச்
சுமையெடுங்களென்றான்.-பின்னும்பார்வோன், ௫
பாருங்கள், தேசத்திலே சனங்கள்மிகுத்திருக்கி
றார்கள். அவர்கள் தங்கள் தங்கள் சுமைகளைவிட்
டு ஓய்ந்திருக்கும்படி செய்கிறீர்களேயென்றான்.
அன்றியும், அந்நாளிலே அவன் சனங்களின் ௬
ஆளோட்டிகளையும், அதிபதிகளையும்நோக்கி,—
முன்போல இனி நீங்கள் அந்தச்சனங்களுக்குச் ௭
செங்கல்வேலைக்கு வைக்கோல்கொடுக்கவேண்
டாம். அவர்கள் தாங்களேபோய், தங்களுக்கு
வைக்கோல் தேடிக்கொண்டுவரவேண்டும்.—அ ௮
வர்கள் முன்தந்த வீதப்படி செங்கல்தரவேண்
டுமென்று அவர்களுக்குக் கட்டளையிடுங்கள்.
கொஞ்சமுங் குறையவிடாதிருங்கள். அவர்கள்
சோம்பற்காரர்;ஆதலால் நாங்கள்போய், எங்கள்
தேவனுக்குப் பலியிடவிடவேண்டுமென்று ஓல
மிடுகிறார்கள்.—அந்த மனிதர்மேல் அதிக ஊழி ௯
யத்தைச்சுமத்தவேண்டும். அவர்களதைச்செய்
யக்கடவர்கள். வீண்வசனங்களுக்குச்செவிகொ
டுக்கவிடாதிருங்களென்று கட்டளையிட்டான்.
சனங்களின்ஆளோட்டிகளும்,அதிபதிகளும், ௰
புறப்பட்டுப்போய்ச் சனங்களைநோக்கி, பார்
வோன், நான் உங்களுக்கு வைக்கோல்தரேன்;—
நீங்கள்போய், உங்களுக்கு அகப்படுகிறவிடங் ௰௧
களில் வைக்கோலைச்சேகரித்துக்கொள்ளுங்கள்:
எப்படியும், உங்கள்வேலையிற்கொஞ்சமாகிலுங்
குறையப்படாதென்று சொல்லுகிறா ரென்றார்
கள்.—வைக்கோலுக்காக அரிதாள்சேர்க்க, சனங் ௰௨
கள் சிதறுண்டு எகிப்துதேசமெங்குந் திரிந்தார்
கள்.—ஆளோட்டிகளும் அவர்களைநோக்கி, வைக் ௰௩
கோலிருந்தநாளில் நீங்கள் செய்தபடி, உங்கள்
வேலைகளை எந்நாளுஞ்செய்து முடியுங்களென்
றுசொல்லி, அவர்களைத் துரிதப்படுத்தினார்கள்.—
பார்வோனுடைய ஆளோட்டிகள் இஸரவேலரு ௰௪
டைய தலைவர்களைநோக்கி, உங்களுக்குக்குறித்
தவீதப்படி, நேற்றுமின்றுங் கல்வேலையை முன்
போலமுடியாமற்போனதென்னவென்று சொல்
லி, அவர்களையடித்தார்கள்.
அப்பொழுது இஸரவேல்சந்ததியாரின் தலை ௰௫
வர்பார்வோனிடத்திற்போய் ஓலமிட்டு, உமதடி
யாருக்கு நீர் இப்படிச்செய்கிறதென்ன.—உமதடி ௰௬
யாருக்கு வைக்கோலைத் தராதிருந்துஞ் செங்கல்
லைச் செய்யுங்களென்கிறார்கள். உம்முடைய
சனங்களிடத்தில் குற்றமிருக்க உமதடியாராகிய
நாங்கள் அடிபடுகிறோமென்றுசொல்ல;-அவன், ௰௭
நீங்கள்சோம்பற்காரர்கள்சோம்பற்காரர்களே ஆ
கையால் யெகோவாவுக்குப் பலியிடப்போ
வோமென்கிறீர்கள்.—போங்கள். வேலையைச் ௰௮
செய்யுங்கள். வைக்கோல் உங்களுக்குத்தரப்ப
டுவதில்லை. எப்படியும், உங்களுக்கிட்ட வீதப்

(௨௫) யோசு.௫.௨,௩. (௨௭) வச.௰௪. அதி.௩.௧. (௨௯) அதி.௩.௰௬ (௩௧) அதி.௩.௰௮. அதி.௩.௰௬. அதி ௨.௨௫. அதி.௩.௭. ௧ நாளா.௨௯.௨௰.—(௫. அதி. ௧.) அதி.௰.௯. (௨) ௨ இரா.௰௮ ௩௫. யோபு.௨௧.௰௫. அதி.௩.௰௯. (௩) அதி.௩.௰௮. (௪) அதி.௧.௰௧. (௫) அதி.௧.௭,௯. (௬) அதி.௧.௰௧.

படிசெங்கல்லையொப்பிக்கவேண்டுமென்றான்.-
௰௯ நீங்கள் நாள்வீதம் குறையாமற்செங்கற்களைச்
செய்யுங்களென்றுசொன்னபின்பு, இஸரவேல்
சந்ததியாரின் தலைவர்கள் தங்களுக்கு இடுக்கண்
வந்ததென்பதைக்கண்டார்கள்.
௨௰ பார்வோனுடைய சமுகத்தைவிட்டுப் புறப்ப
டுகையில், வழியில்நின்ற மோசேக்கும், ஆரோ
௨௧ னுக்கும் முற்பட்டு,—அவர்களைநோக்கி, நீங்கள்
பார்வோனுடையகண்களுக்குமுன்பாகவும், அ
வர் ஊழியக்காரரின்கண்களுக்கு முன்பாகவும்,
எங்கள்வாசனையைக்கெடுத்து, எங்களைக்கொலை
செய்யுங்கட்கத்தை அவர்கள்கையிலேகொடுத்த
தினிமித்தம், யெகோவா உங்களைநோக்கி,
௨௨ நியாயந்தீர்க்கக் கடவரென்றார்கள்.—அப்பொ
ழுது மோசே, யெகோவாவிடத்தில் திரும்பி
ஆண்டவரே, நீர் இந்தச்சனங்களைத்துக்கப்படுத்
துகிறதென்ன. எதற்காக என்னையனுப்பினீர்.—
௨௩ நான் உமது நாமத்தைக்கொண்டுபேசும்படி பார்
வோனிடதநிற் பிரவேசித்ததுமுதல், இந்தச்ச
னங்களை உபத்திரவப்படுத்திவருகிறான்: நீர் உம்
முடைய சனங்களை விடுதலையாக்கவே இல்லை
யென்றான்.

## ௬. அதிகாரம்.

*௧. தேவன்மோசேக்குத்திரும்பவும்வாக்குத்தத்தஞ்செய்தல்: ௰௪. ரூபேன் ஷிமியோன் என்பவர்களின் வமிசவரலாறு: ௰௬. லேவியின் வமிசவரலாறு.*

அப்பொழுது யெகோவா மோசேயைநோக்
கி, நான்பார்வோனுக்கு இன்னது செய்வேன்
என்பதைச் சீக்கிரமாகக்காண்பாய், கைவல்ல
மையினால் அவன் அவர்களைப் போகவிடுவான்.
கைவல்லமையினால் அவனவர்களைத் தன் தேசத்
௨ தில்நின்றுந் துரத்திவிடுவானென்றார்.—மேலும்
தேவன் மோசேயைநோக்கி,நானே யெகோ
௩ வா.—ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், யாக்கோ
புக்கும்,சருவவல்லமையுள்ள தேவன்என்னும்
நாமத்தினால் தரிசனமானதேயன்றி யெகோ
வா என்னும் என்னாமத்தினால் நானவர்களுக்கு
௪ அறியப்படவில்லை.—அவர்கள் பரதேசிகளாய்த்
தங்கினதேசமாகியகானான்தேசத்தை அவர்களுக்
குக்கொடுப்பேனென்று நான் அவர்களுடனே
என் உடன்படிக்கையை ஏற்படுத்தியுமிருக்கி
௫ றேன்.-எகிப்தியர்சிறைப்படுத்திக்கொண்டஇஸ
ரவேல்சந்ததியாருடைய புலம்பலையுங்கேட்டு,
௬ என் உடன்படிக்கையைநினைத்தேன்.—ஆதலால்
நீ இஸரவேல் சந்ததியாரைநோக்கி, நானே யெ
கோவா. உங்களுக்குஎகிப்தியர்ஏற்றுஞ்சுமை
களில்நின்றும்நான்உங்களைவிடுவித்து,அடிமைத்
தனத்தைத்தவிர்த்து, ஓங்கிய கரத்தினாலும், மகா
௭ தண்டனைகளினாலும், உங்களைமீட்டு,—உங்களை
என்சனங்களாக்குவேன்; நான் உங்களுக்குத்
தேவனாவேன்; யெகோவாவாகியநானே,
உங்களுக்கு எகிப்தியர் ஏற்றும்சுமைகளில் நின்
றும் உங்களைவிடுவிக்கும் உங்கள் தேவனென்
று அறிவீர்கள்.—ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், ௮
யாக்கோபுக்குந் தருவேனென்று நான் ஆணை
யிட்டதேசத்தில், உங்களைச் சேர்த்துக்கொண்டு,
அதையுங்களுக்குச்சுதந்தரமாகஅளிப்பேன். நா
னே யெகோவாவென்று அவர்களுக்குச்சொ
ல்லென்றார்.—இந்தப்பிரகாரமாகமோசே இஸர ௯
வேல்சந்ததியாருக்குச்சொன்னான். அவர்களோ,
ஆவியின் மெலிவினாலும் குரூரமான ஊழியத்தி
னாலும் மோசேக்குச் செவிகொடுக்கவில்லை.
பின்பு யெகோவா மோசேயை நோக்கி,— ௰
நீ எகிப்தின் இராசனாகிய பார்வோனிடத்திற் ௰௧
போய், அவன் தன் தேசத்தில்நின்றும் இஸர
வேல்சந்ததியாரைப் போகவிடும்படி, அவனுக்
குச்சொல்லென்றார்.—மோசே யெகோவா ௰௨
வின் சந்நிதானத்தில் நின்று, இஸரவேல் சந்ததி
யார் எனக்குச்செவிகொடுக்கவில்லை. வாய்ச்சா
லகனல்லாத எனக்குப்பார்வோன் எப்படிச்செ
வி கொடுப்பானென்றான்;-இஸரவேல்சந்ததியா ௰௩
ரை எகிப்துதேசத்தில்நின்றும் புறப்படும்படி
செய்வதற்கு யெகோவா மோசேயுடனும், ஆ
ரோனுடனும்பேசினதுமன்றி, இஸரவேல்சந்ததி
யாருக்கும், எகிப்தின் இராசனாகியபார்வோனுக்
குங் கட்டளையுங்கொடுத்தனுப்பினார்.
இவர்கள் தங்கள் தங்கள் பிதாக்களின் வமி ௰௪
சத்தலைவரானார்: இஸரவேலின் சேஷ்டபுத்திர
னாகிய ரூபேனுடையபுத்திரர்கள் அனோகு, பல்
லூ, எத்ஸ்ரோன், கார்மி இவர்களேரூபேனுடை
யவமிசத்தார்.—ஷிமியோனின் புத்திரர் யெமு ௰௫
வேல்,யாமின், ஓகாத், யாகின், சோகார், கானா
னியஸ்திரியின் புத்திரனாகிய ஷவுல், இவர்களே
ஷிமியோனுடைய வமிசத்தார்.
உற்பத்திக்கிரமப்படி லேவியின்புத்திரருடை ௰௬
ய நாமங்களாவன, கெர்ஷோன், கோகாத், மே
ராரி. லேவி நூற்றுமுப்பத்தேழு வருஷமிருந்
தான்.—அவரவர் வமிசங்களின்படி கெர்ஷோ ௰௭
னின்புத்திரர்கள் லிப்னீ, ஷிமேயி.—கோகாத்தி ௰௮
னின்புத்திரர் அம்ராம், இத்சார்,எப்ரோன், ஊசி
யேல். கோகாத் நூற்றுமுப்பத்துமூன்றுவருஷமி
ருந்தான்.—மேராரியினுடைய புத்திரர் மகேலி, ௰௯
மூஷி, இவர்கள் அவரவர் உற்பத்திக்கிரமப்படி
லேவியின் வமிசத்தார்.—அம்ராம் என்பவன் தன் ௨௰
பிதாவின் சகோதரியாகிய யோகெபேத்தை வி
வாகம்பண்ணினான்: அவள் ஆரோனையும், மோ
சேயையும் பெற்றாள் அம்ராம் நூற்று முப்பத்
தேழு வருஷமிருந்தான்.—இத்சாருடைய புத் ௨௧
திரர் கோராக், நெப்பேக், சித்ரீ.-ஊசியேலுடை ௨௨
யபுத்திரர் மீஷாயேல், எலீத்சாபான், சித்ரீ.—

(௨௧) அதி.௬.௯. ஆதி.௩௪.௩௰. ௧.சாமு.௰௩.௪.—(௬. அதி. ௧.) அதி.௩.௰௯. அதி.௰௧.௧. அதி.௰௨.௩௧. (௩) அதி.௰௭.௧. அதி.௩.௰௪. யோவா.௮.௫௮. வெளி.௧.௪. (௪) ஆதி.௰௫.௰௮. ஆதி.௰௭.௮. (௫) அதி.௨.௨௪. (௬) அதி.௩.௰௭. அதி.௰௫.௰௩. நிகி.௧.௰. (௭) உபா.௪.௨௰. உ.சாமு.௭.௨௪. உபா.௨௯.௰௩. வெளி.௨௧.௭. (௮) உபா.௩௨.௪௰. ஆதி.௰௫.௰௮. (௯) அதி.௫.௨௧. (௰௨) அதி.௪.௰. எரே.௧.௬.

உங ஆரோன்,அம்மினதாபின்புத்திரி நகசோனின்ச
கோதரியுமாயிருந்த எலீசேபாளை விவாகம்பண்
ணினான்: அவள் நாதாபையும், அபியூவையும்,
உச எலியேசரையும், இதாமாரையும்பெற்றாள்.—கோ
ராகின்புத்திரர் அச்சீர், எல்க்கானா, அபியாசாப்
உரு இவர்களே கோராகின் வமிசத்தார்.—ஆரோ
னுடையபுத்திரனாகிய எலீயேசார், பூத்தியேலு
டையபுத்திரிகளில்ஒருத்தியை விவாகம்பண்ணி
னான். அவள் பீனிகாசைப்பெற்றாள். இவர்களே
அவரவர் வமிசங்களின்படி லேவியருடைய பி
உசா தாக்களின் வமிசத்தார்.—இஸரவேல் சந்ததியா
ரை அணியணியாய்எகிப்துதேசத்திலிருந்துநடத்
திப்போவதற்கு யெகோவாவினாற் கட்டளை
பெற்ற ஆரோனும், மோசேயும், இவர்களே.—
உஎ இஸரவேல் சந்ததியாரை எகிப்திலிருந்து நடத்
திப்போவதற்கு எகிப்தின் இராசனாகிய பார்
வோனுடனே பேசினவர்களாகிய மோசேயும்,
ஆரோனும், இவர்களே.
உஅ யெகோவா எகிப்துதேசத்தில் மோசேயு
உகூ டனே பேசினகாலத்தில்,—நானே யெகோ
வா. நான் உன்னுடனே சொல்லுகிறயாவை
யும் நீ எகிப்தின் இராசனாகிய பார்வோனுக்குச்
சொல்லென்று யெகோவா மோசேயுடன்
ஙய சொல்ல;—மோசே நான் வாக்குவல்லவனல்ல.
பார்வோன் எனக்கு எப்படிச்செவிகொடுப்பா
னென்று யெகோவாவின் சந்நிதானத்தில்
சொன்னான்.

## எ. அதிகாரம்.

க. பார்வோனிடத்தில்போகும்படி தேவன் மோ
சேக்குக்கட்டளையிடல்: அ. கோல் சர்ப்பமா
தல்: யச. மோசே மீளவும் பார்வோனிடத்தில
னுப்பப்படல்: யகூ. சலம் உதிரமாதல்.

யெகோவா மோசேயை நோக்கி, நானுன்
னைப் பார்வோனுக்குத் தேவனாக்கினேன். உன்
சகோதரனாகிய ஆரோன் உனக்குத்தீர்க்கதரிசியா
உ வான்.—நான் உனக்குக்கட்டளையிடும் யாவை
யும் நீசொல்லவேண்டும். பார்வோன் தன் தே
சத்திலிருந்து இஸரவேல் சந்ததியாரையனுப்பி
விடும்படி, உன் சகோதரனாகிய ஆரோன் அவ
ங னுக்குச் சொல்லவேண்டும்.—நான் பார்வோ
னுடைய இருதயத்தைக்கடினப்படுத்தி, எகிப்து
தேசத்தில் மிகுதியாய் என் அடையாளங்களை
ச யும், அற்புதங்களையுங்காட்டுவேன்.-பார்வோன்
உங்களுக்குச்செவிகொடுக்கமாட்டான். எகிப்
தின்மேல் நான் என்கையையோங்கி மகா தண்
டனையினால், என் சேனைகளும் என் சனங்களு
மாகிய இஸரவேல் சந்ததியாரை எகிப்துதேசத்
ரு தில்நின்றும் புறப்படச்செய்வேன்.—நான் எகிப்
தின்மேல் என் கையையோங்கி இஸரவேல் சந்
ததியாரை அவர்களில்நின்றும் புறப்படச்செய்
யும்பொழுது, நானே யெகோவாவென்று எ
கிப்தியர் அறிவார்களென்றார்.—மோசேயும், ஆ சா
ரோனும், யெகோவா தங்களுக்குக்கட்டளை
யிட்டபடிசெய்தார்கள் அப்படியேசெய்தார்
கள்.—அவர்கள் பார்வோனுடனே பேசினகா எ
லத்தில் மோசேக்கு எண்பதுவயது ஆரோனுக்கு
எண்பத்துமூன்றுவயது.
யெகோவா மோசேயையும், ஆரோனையும் அ
நோக்கி,—நீங்கள் உங்கள்பட்சத்துக்கு ஒரு அற் கூ
புதங்காட்டுங்களென்று பார்வோன் உங்களுட
னேசொன்னால், நீ ஆரோனைநோக்கி, உன்கோ
லையெடுத்து, அதைப் பார்வோனுக்குமுன் போ
டென்பாயாக: அது சருப்பமாகுமென்றார்.—மோ ய
சேயும் ஆரோனும் பார்வோனிடத்திற்சென்று,
யெகோவா இட்ட கட்டளைப்படி செய்தார்
கள். ஆரோன் தன்கோலைப் பார்வோனுக்கும்,
அவன் பணிவிடைக்காரருக்கும், முன்பாகப்
போட்டான்: அது சருப்பமாயிற்று.—அப்பொ யக
ழுது பார்வோன் வித்துவான்களையும், மந்திரவா
திகளையுமழைப்பித்தான். எகிப்தின் மாயாவித்
தைக்காரர்களும், தங்கள்சாலவித்தையினால்,அப்
படிச்செய்தார்கள்.-அவர்களொவ்வொருவனுகத் யஉ
தன் தன் கோலைப்போட, அவைகள்சருப்பங்
களாயின. ஆரோனுடையகோலோ, அவர்கள்
கோல்களைவிழுங்கிற்று.—யெகோவா, தாம் யங
சொல்லியபடி,பார்வோனுடைய இருதயத்தைக்
கடினப்படுத்தினார். அவனவர்களுக்குச் செவி
கொடுக்கவில்லை.
யெகோவா மோசேயைநோக்கிப்பார்வோ யச
னுடைய இருதயங்கடினமாயிற்று. சனங்களைப்
போகவிடாமல் மறுக்கிறான்.—பார்வோன் விடி யரு
யற்காலத்தில் நதிக்குப்புறப்பட்டுவருவான். நீ
போய் நதியோரத்தில்நின்று, அவன்வருமளவில்
சருப்பமாகமாறினகோலை உன்கையிற்பிடித்துக்
கொண்டு,—அவனைநோக்கி, எபிரேயரின் தே யசா
வனாகிய யெகோவா, வனாந்தரத்தில் எனக்
காராதனைசெய்ய என் சனங்களை அனுப்பிவிட
வேண்டுமென்று சொல்லச்சொல்லி,என்னை உம்
மிடத்திலனுப்பினார். நீரிதுவரைக்குங் கேட்க
வேயில்லை.—என் கையிலிருக்கிற கோலினால் யஎ
ஆற்றின் நீர்களை அடிப்பேன்; அவை இரத்த
மாகும்.—ஆற்றின்மீன்கள் செத்துப்போம், ஆறு யஅ
நாற்றமெடுக்கும். எகிப்தியர் ஆற்றின்நீரைக்கு
டிக்க அரோசிப்பார்கள். இதினால் நானே யெ
கோவாவென்பதையறிந்துகொள்வாயென்று,
யெகோவா உரைத்தாரென்பதாகச் சொல்
லென்றார்.
மேலும் யெகோவா மோசேயைநோக்கி, யகூ

(உங) ரூத்.ச.யகூ,உய. க.நாளா.உ.ய. மத்.க.ச. லேவி.ய.க. எண்.ஙஉ. எண்.உசா.ஙய. க.நாளா.சா.ங. க.நாளா. உச.க. (உச) எண்.உசா.யக. (உரு) எண்.உரு.எ,யக. யோசு.உச.ஙங. (உசா) வச.யங. அதி எ.ச. (உஎ) வச.யங. அதி.ஙஉ.எ. (ஙய) அதி.ச.ய.—(எ. அதி. க.) அதி.ச.யசா. எரே.க.ய. (உ) அதி.ச யரு. (ங) அதி.ச.உக. அதி. யக.கூ. அதி.ச.எ. (ச) அதி.ய.க. அதி.யக.கூ. அதி.சா.சா. (ரு) அதி.யச.ச,யஅ. (சா) வச.உ. (எ) உபா.உகூ.ரு. (கூ) ஏசா.எ.யக. யோவா.உ.யஅ. யோவா.சா.ஙய. (ய) அதி.ச.ங. (யக) ஆதி.சக.அ. உ.தீமோ.ங.அ. (யங) அதி.ச.உக. வச.ச. (யச) அதி.அ.யரு. அதி.ய.க. (யசா) அதி.ங.யஅ. (யஎ) வெளி.யசா.ச,சா. (யஅ) வச.உச. (யகூ) அதி.அ.ரு,சா.

நீ ஆரோனுடனே உன்கோலையெடுத்துக்கொண்
டு, எகிப்தின் நீர்நிலைகளாகிய ஓடைகள்மேலும்,
நதிகள்மேலும், குளங்கள்மேலும், சலம்நிற்கும்
எல்லா இடங்கள்மேலும், உன்கையையோங்கு;
அதினால் அவைகளிரத்தமாகும். எகிப்துதேச
மெங்கும் மரப்பாத்திரங்களிலும், கற்பாத்திரங்க
ளிலும், இரத்தமேயிருக்குமென்று சொல்லென்
௨௰ றார்.—யெகோவா கட்டளையிட்டபடி, மோ
சேயும், ஆரோனும், செய்தார்கள். பார்வோ
னுக்கும், அவனுடைய பணிவிடைக்காரருக்
கும், முன்பாகக் கோலையோங்கி, ஆற்றின்நீரில
டிக்க, ஆற்றின்நீர் எல்லாம் இரத்தமாயிற்று.—
௨௧ ஆற்றின் மீன்கள் செத்துப்போயின; ஆறுநாற்
றமெடுத்தது; எகிப்தியருக்கு ஆற்றின்நீர்குடிக்
க உதவாமற்போயிற்று. எகிப்துதேசமெங்கும்
௨௨ இரத்தமுண்டாயிற்று.—எகிப்தின் மாயாவித்தைக்
காரர்களுந் தங்கள்சாலவித்தையினால் அப்படிச்
செய்தார்கள். யெகோவா சொல்லியபடி பார்
வோனுடைய இருதயங் கடினமாக்கப்பட்டது:
அவன் அவர்களுக்குச் செவிகொடுக்கவில்லை.—
௨௩ பார்வோன் தன்வீட்டுக்குத்திரும்பிப்போய்விட்
டான். அவன் இவைகளையுஞ்சிந்திக்கவில்லை.—
௨௪ ஆற்றின்நீர்குடிக்க உதவாதபடியால் குடிக்கத்
தண்ணீருக்கு எகிப்தியரெல்லாரும் நதியோரத்
௨௫ தில்வெட்டினார்கள்.—யெகோவா ஆற்றைய
டித்தபின்பு ஏழுநாட்சென்றது.

## ௮. அதிகாரம்.

௧. தவளைகளைத்தோன்றச்செய்தல்: ௮ பார்வோன் மோசேயை வேண்டிக்கொள்ளல்: ௰௪. தூளிகளைப்பேனாக்கல் அதிலே மாயாவிகள் தோல்வியடைதல்: ௨௰. வண்டுகளைத்தோன்றச்செய்தல், பார்வோனிருதயங்கடினமாதல்.

அப்பொழுது யெகோவா மோசேயைநோக்
கி, நீ பார்வோனிடத்திற்போய், எனக்காராதனை
௨ செய்ய, என்சனங்களை அனுப்பிவிடு;—அனுப்
பிவிடாயேயாகில், உன்னெல்லையடங்கலையுந்
௩ தவளைகளால் வாதிப்பேன்.—நதி, தவளைகளைத்
திரளாகத்தோற்றுவிக்கும். அவைகள் உன்வீட்
டிலும், உன் படுக்கையறையிலும், உன் மஞ்சத்
தின்மேலும், உன் பணிவிடைக்காரர் வீடுகளி
லும், உன் சனங்களிடத்திலும், உன் அடுப்புக்க
ளிலும், மாப்பிசைகிற உன் தொட்டிகளிலும்,
௪ ஏறிவரும்.—அந்தத்தவளைகள் உன்மேலும், உன்
சனங்கள்மேலும், உன் பணிவிடைக்காரரெல்
லார்மேலும், ஏறுமென்பதாக யெகோவா
சொல்லுகிறாரென்று, அவனுக்குச் சொல்ல
௫ வேண்டுமென்றார்.-பின்னும் யெகோவா மோ
சேயைநோக்கி, நீ ஆரோனிடத்தில் உன்கோலு
டன் உன்கையை ஓடைகளின்மேலும், நதிக
ளின்மேலும், குளங்களின்மேலும் ஓங்கி, எகிப்
துதேசத்தின்மேலேதவளைகளேறிவரும்படிசெய்
யென்றுசொல்லென்றார்.—ஆரோன் தன்கையை ௬
எகிப்திலுள்ள நீர் நிலைகளின்மேல் ஓங்கினான்.
தவளைகள் ஏறிவந்து எகிப்துதேசத்தை மூடிக்
கொண்டன.—மாயாவித்தைக்காரர்களுந் தங்கள் ௭
தங்கள் சாலவித்தையினால் எகிப்துதேசத்தின்
மேலே தவளைகள் ஏறிவரப்பண்ணினார்கள்.
பார்வோன், மோசேயையும் ஆரோனையும் அ ௮
ழைப்பித்து, யெகோவா தவளைகளை என்னி
லும், என்சனங்களிடத்திலும்நின்று நீக்கும்பொ
ருட்டு அவரைவேண்டிக்கொள்ளுங்கள். யெ
கோவாவுக்குப்பலியிடும்படி சனங்களையனுப்
பிவிடுவேனென்றான்.—மோசே பார்வோனை ௯
நோக்கி,நீர் என்னிலும்,மேன்மைபெறக்கடவீர்.
தவளைகள் நதியில்மாத்திரமிருப்பதன்றி, உம்மி
லும் உம்முடைய வீடுகளிலும் இல்லாதொழிந்
துபோம்படிசெய்ய, உமக்காகவும் உம்முடைய
பணிவிடைக்காரருக்காகவும், உம்முடைய ச
னங்களுக்காகவும், நான் எப்பொழுதுபிரார்த்திக்
கவேண்டுமென்றுகேட்க; அவன் நாளைக்கென்
றான்.—மோசே எங்கள் தேவனாகிய யெகோ ௰
வாவுக்கு ஒப்பானவரொருவருமில்லையென்ப
தை நீரறிந்துகொள்ளும்பொருட்டு உமது வாக்
கின்படியாகக்கடவது.-தவளைகள் ஆற்றிலேமாத் ௰௧
திரமிருப்பதன்றி, உம்மிலும், உம்முடைய வீடு
களிலும், உம்முடைய பணிவிடைக்காரரிலும்,
உம்முடைய சனங்களிலும், இராமல் நீங்கிப்
போமென்றான்.—பின்பு மோசேயும் ஆரோனும் ௰௨
பார்வோனைவிட்டுப் புறப்பட்டார்கள். பார்
வோனுக்கு விரோதமாகவருவித்த தவளைகளினி
மித்தம், யெகோவாவை நோக்கி, மோசே
பிரார்த்தித்தான்.—யெகோவாவும் மோசே ௰௩
யின் சொல்லுக்கிசையச்செய்தார். வீடுகளிலும்,
கிராமங்களிலும், வயல்நிலங்களிலுமிருந்த தவ
ளைகள்செத்துப்போயின.
அவைகளைக் குவியல் குவியலாகச்சேர்த்தார் ௰௪
கள். தேசத்தில் நாற்றமுண்டாயிற்று.—பார் ௰௫
வோன், இலகுவாயிற்றென்று கண்டபொழுது,
தன்னிருதயத்தைக் கடினப்படுத்தி அவர்களுக்
குச் செவிகொடாதிருந்தான்: யெகோவா
சொல்லியபிரகாரம்ஆயிற்று.-யெகோவா மோ ௰௬
சேயைநோக்கி, நீ ஆரோனிடத்தில் உன்கோலை
யோங்கிப் பூமியின் தூளின்மேல் அடி அப்பொ
ழுது அது எகிப்து தேசமெங்கும் பேனாகுமென்
று சொல்லென்றார்.—அப்படியே செய்தார்கள். ௰௭
ஆரோன் தன் கையிலிருந்த கோலையோங்கிப்
பூமியின் தூளின்மேலடிக்க, அது பேன்களாகி
மனிதரிலும், மிருகசெந்துக்களிலும், நெருங்கி
ன பூமியின்தூளெல்லாம் எகிப்து தேசமெங்கும்
பேன்களாயின.—மாயாவித்தைக்காரர்களுந் தங் ௰௮
கள் தங்கள் சாலவித்தையினால் பேன்களைத்தோற்
றுவிக்கப் பிரயத்தனஞ்செய்தும், அவர்களால் கூ

(௨௰) அதி.௰௭.௫. சங்.௭௮.௪௪. சங்.௱௫.௨௯. (௨௧) வச.௰௮. (௨௨) வச.௰௧. வச.௩.—(௮. அதி. ௧.) அதி. ௩.௰௨,௰௮. (௨) அதி.௭.௰௪. வெளி.௰௬.௰௩. (௫) அதி.௭.௰௯. (௭) அதி.௭.௰௧. (௮) அதி.௰.௰௭. அப்.௮.௨௪. (௰) உபா.௩௩.௨௬. ஏசா.௪௬.௯. எரே.௰.௬,௭. (௰௨) யாக்.௫.௰௬,௰௭,௰௮. (௰௫) பிர.௮.௰௧. (௰௮) அதி. ௭.௰௧. லூக்.௰.௰௮.

டாமற்போயிற்று. பேன்கள் மனிதரிலும், மிரு
௰௯ கசெந்துக்களிலும், நெருங்கினபொழுது,—மா
யாவித்தைக்காரர்கள் பார்வோனைநோக்கி, இது
தேவனுடைய விரல் என்றார்கள். யெகோ
வா சொல்லியபடி பார்வோனுடைய இருதயம்
கடினமாக்கப்பட்டது. அவனவர்களுக்குச்செ
விகொடுக்கவில்லை.
௨௰ பின்பு யெகோவா மோசேயைநோக்கி,நா
ளை அதிகாலையில் நீ எழுந்துபோய், பார்வோன்
நதிக்குப்புறப்பட்டு வரும்பொழுது, அவனுக்கு
முற்பட்டு, எனக்காராதனைசெய்ய என்சனங்
௨௧ களை அனுப்பிவிடு;—என் சனங்களை அனுப்பி
விடாயேயாகில், நான் உன்மேலும், உன்பணி
விடைக்காரர்மேலும், உன் சனங்கள்மேலும்,
உன் வீடுகளின்மேலும், வண்டுகளை வருவிப்
பேன். எகிப்தியருடைய வீடுகளேயன்றி, அவர்
களிருக்கிறதேசமும், வண்டுகளினாலே நிறைக்
௨௨ கப்படும்.—பூலோகமத்தியில் நானே யெகோ
வாவென்று நீ அறியும்பொருட்டு, அத்தினத்தில்
என்சனங்களிருக்கிற கோஷேன்நாட்டை வண்
௨௩ டுகள் பிரவேசியாதபடி விசேஷப்படுத்தி,—என்
சனங்களுக்கும், உன் சனங்களுக்கும் வேற்று
மையுண்டாகும்படிசெய்வேன். இந்த அடை
யாளம் நாளைக்குண்டாகுமென்று யெகோவா
சொன்னாரென்பதாக அவனிடத்திற் சொல்
௨௪ லென்றார்.—யெகோவா அப்படியேசெய்தார்.
குரூரமான வண்டுத்திரள், பார்வோன்வீட்டி
லும், அவன் பணிவிடைக்காரர் வீடுகளிலும், எ
கிப்து தேசமுழுவதிலும் பிரவேசித்தது. வண்டு
௨௫ களினாலே தேசத்துக்குக்கேடுண்டாயிற்று.—பார்
வோன் மோசேயையும், ஆரோனையும் அழைப்
பித்து, நீங்கள்போய் உங்கள் தேவனுக்குஇத்
௨௬ தேசத்திற் பலியிடுங்களென்றுசொல்ல,-மோசே,
எங்கள் தேவனாகிய யெகோவாவுக்கு நாங்க
ளிடும்பலி எகிப்தியருக்கு வெறுப்பாயிருப்பதி
னால் அப்படிச்செய்வது தகாது. எகிப்தியர்வெ
றுக்கும்பலியை அவர்கள்கண்கள்முன்பாக நாங்
களிட்டால் எங்கள்மேற் கல்லெறிவார்களல்ல
௨௭ வா.-எங்கள் தேவனாகிய யெகோவா எங்
களுக்கு விதிக்கும்பிரகாரம், நாங்கள் மூன்று
நாள்பிரயாணமளவுபோய், வனத்தில் அவருக்
௨௮ குப் பலியிடுவோமென்றுசொல்ல;—பார்வோன்,
நீங்கள் உங்கள் தேவனாகிய யெகோவாவுக்
கு வனத்தில் பலியிடும்படிக்கு நான் உங்களைய
னுப்பிவிடுவேன்; எப்படியுந் தூரத்திற்போகலா
காது; எனக்காகப்பிரார்த்தனைபண்ணுங்களென்
௨௯ றான்.—அதற்கு மோசே நானும்மைவிட்டுப்புறப்
பட்டபின் பார்வோனாகிய உம்மிடத்திலும்,உம்
முடைய பணிவிடைக்காரரிடத்திலும், உம்மு
டைய சனங்களிடத்திலுமிருந்து வண்டுத்திரள்
நாளைக்கு நீங்கும்படிக்கு யெகோவாவைப்
பிரார்த்திப்பேன். யெகோவாவுக்குப்பலியிடு
கிறதற்குச் சனங்களையனுப்பிவிடப் பார்வோ
னாகிய நீர் இன்னும் வஞ்சனைசெய்யாதிருப்பீரா
கவென்றான்.—மோசே பார்வோனை விட்டுப்பு ௩௰
றப்பட்டு யெகோவாவைப் பிரார்த்தித்தான்.-
யெகோவா மோசேயின்சொற்படி பார்வோ ௩௧
னிடத்திலும், அவன் பணிவிடைக்காரரிடத்தி
லும், அவன் சனங்களிடத்திலுமிருந்து, வண்
டுத்திரளை நீக்கினார். ஒன்றும் நிற்கவில்லை.—பார் ௩௨
வோன் இத்தருணத்திலும்தன்னிருதயத்தைக்கடி
னப்படுத்தி,சனங்களைப் போகவிடாதிருந்தான்.

## ௯. அதிகாரம்.

௧. மிருகசெந்துக்களுக்கு நோயுண்டாதல்: ௮. ம
னிதருக்குள்ளும் மிருகசெந்துக்களுக்குள்ளும்
எரிகொப்புளமுண்டாதல்: ௰௩. கல்மழைபெய்
தல்: ௨௭. பார்வோன் மோசேயை வேண்டுதல்
செய்தல்: அவன் மனங்கடினமாதல்.

யெகோவா மோசேயைநோக்கி,நீபார்வோ ௧
னிடத்திற்போய் எனக்காராதனைசெய்ய என் ச
னங்களை அனுப்பிவிடு;—விடாமல் இன்னுந்த ௨
டைப்படுத்தினாயாகில்,—யெகோவாவின் க ௩
ரம் குதிரைகள்,கழுதைகள், ஒட்டகங்கள், ஆடு
மாடுகளாகியவெளியிலுள்ள உன்மிருகங்கள்மே
லிருக்கும்: அவைகளுக்குமிகவுங் கொடியநோ
யுண்டாகும்.—அன்றியும், யெகோவா இ ௪
ஸரவேலருடைய மிருகங்களுக்கும் எகிப்திய
ருடைய மிருகங்களுக்கும் வேற்றுமையுண்டா
கச்செய்வார். இஸரவேல் சந்ததியாருடைய
வைகளெல்லாவற்றிலும்ஒன்றுஞ்சாவாது.—மே ௫
லும் நாளையே இக்காரியத்தைத் தேசத்தில் யெ
கோவா ச்செய்வாரென்று, யெகோவாகா
லங்குறித்தாரென்றும், எபிரேயரின் தேவனா
கிய யெகோவா சொன்னாரென்றும், அவ
னிடத்திற்சொல்லென்றார்.—மற்றைநாள் யெ ௬
கோவா அக்காரியத்தைச்செய்தார். எகிப்திய
ருடைய மிருகங்களெல்லாம் இறந்துபோயின.
இஸரவேல்சந்ததியாருடையமிருகங்களில் ஒன்
றுஞ்சாவவில்லை.—பார்வோன் ஆளனுப்பி இஸ ௭
ரவேல் சந்ததியாருடைய மிருகங்களிலொன்
றுஞ் சாவவில்லையென்றுகண்டான். பார்வோ
னுடைய இருதயங்கடினமாக்கப்பட்டது. அ
வன் சனங்களைப்போகவிடவில்லை.
யெகோவா, மோசேயையும் ஆரோனையும் ௮
நோக்கி,நீங்கள் இரு கைநிறையச்சூளையின்சாம்
பலை அள்ளுங்கள். மோசே அதைப்பார்வோன்
சமுகத்தில், வானத்துக்குநேரே இறைக்கக்கட
வன்.—அதுஎகிப்துதேசமெங்கும்தூசியாகி,எகிப் ௯
துதேசமெங்கும் மனிதரிலும், மிருகங்களிலும்,
வீக்கங்கொண்ட எரிகொப்புளத்தைத் தோற்று
விக்குமென்றார்.—அவர்கள் சூளையின்சாம்பலை ௰
அள்ளிவைத்துக்கொண்டு, பார்வோனுக்குமுன்
னேஇறைத்தார்கள். மோசே அதைவானத்துக்கு
நேரேஇறைத்தான். அதுமனிதரிலும்மிருகங்களி
லும்வீக்கமான எரிகொப்புளங்களைத்தோற்றுவித்
தது.—அந்த எரிகொப்புளம் மாயாவித்தைக்காரர் ௰௧

(௰௯) ௧.சாமு.௬.௩,௯. மத் ௰௨.௨௮. (௨௨) அதி.௰௨.௰௩. (௨௬) உபா.௭.௨௫. (௨௮) ௧.இரா.௰௩.௬. (௩௨) அதி. ௪.௨௰.—(௯. அதி. ௪.) அதி.௮.௨௨. (௯) வெளி.௰௬.௨. (௰) உபா.௨௮.௨௭. (௰௧) ௨.தீமோ.௩.௯.

களிலும், எகிப்தியரெல்லாரிலும், உண்டானதி
னால் எரிகொப்புளங்களினிமித்தம் மாயாவிகள்
மோசேயின் முன் நிற்கக்கூடாதிருந்தார்கள்.—
௰௨ யெகோவா பார்வோனுடைய இருதயத்தைக்
கடினப்படுத்தினார். யெகோவா மோசேக்குச்
சொல்லியபிரகாரம், அவன் அவர்களுக்குச்செ
விகொடுக்கவில்லை.
௰௩ யெகோவா மோசேயை நோக்கி, நீ அதி
காலையிலெழுந்துபோய்ப் பார்வோன்முன் நின்
று, அவனைநோக்கி, எனக்காராதனைசெய்ய என்
௰௪ சனங்களை அனுப்பிவிடு;—விடாதிருந்தால்
இத்தருணத்தில் நான் உன்மேலும், உன் பணி
விடைக்காரர்மேலும், உன் சனங்கள்மேலும்,
சகலவித வாதைகளையுமனுப்புவேன். அதினால்
பூமியெங்கும் எனக்கொப்பானவரில்லையென்று
௰௫ நீயறிந்துகொள்வாய்.—நீ பூமியிலில்லாமல் நாச
மாய்ப்போகும்படி நான் என் கையை ஓங்கி,
உன்னையும், உன் சனங்களையுங் கொள்ளைநோ
௰௬ யினால் வாதிப்பேன்.—என் வல்லமையையுனக்
குக்காண்பிக்கவும், என் நாமம் பூமியெங்கும்
௰௭ பிரகாசிக்கவும், உன்னைநிறுத்தினேன்.—நீ என்
சனங்களைவிரோதித்து, அவர்களைப்போகவிடா
மல், இன்னும் உன்னகங்காரத்தைக் காட்டுகி
௰௮ றாய்.—எகிப்துத்தோன்றிய நாள்முதல் இந்நாள்
வரைக்கும் அதிலேபெய்யாத மிகவுங்கொடிய
கல்மழையை நாளை இந்நேரம் பெய்விப்பேன்.—
௰௯ வீட்டிலேசேர்க்கப்படாமல் வெளியிலிருக்கும்
மனிதரும்,மிருகங்கள்யாவும்,பெய்யுங்கல்மழை
யினாலிறந்துபோக,அது அவர்கள்மேல்வரும், ஆ
தலால் வெளியிலுள்ள உன் ஆடுமாடுமுதலிய யா
வையுஞ்சேர்க்க, இப்பொழுதே ஆளனுப்பு என்
று எபிரேயரின் தேவனாகிய யெகோவா
சொன்னாரென்பதாக, அவனிடத்தில் சொல்
௨௰ லென்றார்.—பார்வோனுடைய பணிவிடைக்கா
ரரில் யெகோவாவின்வாக்குக்குப் பயந்தவ
னெவனோ, அவன் தன்பணிவிடைக்காரரையும்,
தன்மிருகங்களையும், வீடுகளுக்கு ஓடிவரப்பண்
௨௧ ணினான்.—யெகோவாவின்வாக்கிலே சிந்தை
வையாதவனெவனோ, அவன் தன்பணிவிடைக்
காரரையும், தன் மிருகங்களையும், வெளியிலே
௨௨ விட்டுவிட்டான்.—யெகோவா மோசேயை
நோக்கி, எகிப்துதேசமெங்கும் மனிதர்மேலும்,
மிருகங்கள்மேலும், எகிப்துதேசத்திலுள்ள சகல
பயிர்வகைகள்மேலும், கல்மழைபெய்ய, வானத்
௨௩ துக்குநேரே உன்கையையோங்கென்றார்.—மோ
சேதன்கோலை வானத்துக்குநேரேயோங்க, யெ
கோவா இடிமுழக்கத்தையும், கல்மழையை
யும்,பெய்வித்தார். அக்கினிபூமியின்மேலேவேக
மாய்ப்பரந்தது. யெகோவா எகிப்துதேசத்தில்
௨௪ கல்மழையை வருஷிக்கப்பண்ணினார்.—கல்ம
ழையுங் கல்மழையோடே கலந்ததீத்திரளும் மிக
வுங் கொடியவைகளாயிருந்தன. எகிப்துதேசத்
தார் தோன்றினதுமுதலாக அதிலிப்படியொரு
பொழுது மிருக்கவில்லை.—எகிப்துதேசமெங்கும் ௨௫
வெளியிலிருந்த மனிதரையும், மிருகங்களையுங்
கல்மழையழித்தது: அந்தக் கல்மழை வயல்வெ
ளியிலுள்ள பயிர்வகைகள்யாவையும் அழித்தது.
வெளியிலுள்ள மரங்கள்யாவையும் முறித்தது.—
இஸரவேல் சந்ததியாரிருந்த கோஷென்நாட்டி ௨௬
லேமாத்திரங் கல்மழையில்லை.
பார்வோன்மோசேயையும்,ஆரோனையும்,வர ௨௭
அழைத்து,நான் இப்பொழுது பாவஞ்செய்தேன்.
யெகோவா நீதியுள்ளவர். நானும் என்சனங்
களுந் துன்மார்க்கர்.-போதும். தேவ இடிமுழக் ௨௮
கமுங் கல்மழையும் ஒழியும்படி, யெகோவா
வைநோக்கிப் பிரார்த்தனைசெய்யுங்கள். நானுங்
களைப் போகவிடுவேன். இனியுங்களுக்குத்த
டையில்லையென்றுசொல்ல;—மோசே அவனை ௨௯
நோக்கி, நான் நகரத்திலிருந்து புறப்பட்டவுட
னே. என்கைகளை யெகோவாவுக்குநேரே
விரிப்பேன். இடிமுழக்கம் நின்றுபோம். கல்
மழை இனிப்பெய்யாது. அதனால்பூமி யெகோ
வாவுடையதென்பதை நீரறிந்துகொள்வீர்.—ஆ ௩௰
கிலும்நீரும், உம்முடைய பணிவிடைக்காரரும்,
தேவனாகிய யெகோவாவுக்கு அப்பொ
ழுதும் பயப்படமாட்டீர்களென்றறிவேனென்
றான்.—அக்காலத்தில் வாற்கோதுமைகதிர்விட் ௩௧
டும், சணல்பூத்துப் பொகுட்டாயுமிருந்தபடி
யால்,—சணலும் வாற்கோதுமைப்பயிரும் அ ௩௨
ழிக்கப்பட்டன. கோதுமையுங் கம்பும் முளையா
திருந்ததால் அவைகள் அழிக்கப்படவில்லை.—
மோசே பார்வோனைவிட்டு நகரத்திலிருந்து பு ௩௩
றப்பட்டுத்தன்கைகளை யெகோவாவுக்குநே
ரேவிரிக்க, இடிமுழக்கமுங் கல்மழையும் நின்
றன. மழையும் பூமியிலே பெய்யாமற்போயிற்
று.—இப்படி மழையுங் கல்மழையும் இடிமுழக் ௩௪
கமும் நின்றுபோனதைப் பார்வோன் கண்ட
பொழுது, அவனும் அவன் பணிவிடைக்கார
ரும் பின்னும் பாவஞ்செய்து, தங்கள் இருதயத்
தைக்கடினப்படுத்தினார்கள்.-யெகோவா மோ ௩௫
சேயைக்கொண்டு சொல்லியபடி, பார்வோனு
டைய இருதயங் கடினமாக்கப்பட்டது. அவன்
இஸரவேல் சந்ததியாரைப் போகவிடவில்லை.

## ௰. அதிகாரம்.

௧. மோசே விட்டில்களைக்குறித்து எச்சரித்தல்: ௭. பார்வோனுடைய பணிவிடைக்காரர் அவனுக்குப் புத்திசொல்லல்: ௰௨. விட்டில்கள் தோன்றுதல்: ௰௬. பார்வோன் மோசேயைவேண்டிக்கொள்ளல்: ௨௧. அந்தகாரமூடல்: ௨௪. பார்வோன் மோசேயுடன் கடைசியாய்ச் சம்பாஷித்தல்.

யெகோவா மோசேயைநோக்கி, பார்வோ ௧

(௰௨) அதி.௪.௨௰. (௰௬) ரோ.௯.௰௭. ௧.பேதுரு.௨.௯. (௨௧) அதி.௭.௨௩. (௨௨) வெளி.௰௬.௨௧. (௨௩)யோசு.௰.௰௧. ஏசா.௩௰.௩௰. எசேக்.௩௮.௨௨. வெளி.௮.௭. (௨௫) சங்.௱௫.௩௩. (௨௬) அதி.௮.௨௨. ஏசா.௩௨.௰௮, ௰௯. (௨௭) அதி ௰.௰௬. புல.௧.௰௮. தானி.௯.௰௪. (௨௮) அப்.௮.௨௪. (௨௯) ௧.இரா.௮.௨௨,௩௮. சங்.௱௪௩.௬. ஏசா.௧.௰௫. சங்.௨௪.௧. ௧.கொரி.௰.௨௬,௨௮. (௩௰) ஏசா ௨௬.௰.—(௰. அதி.௧.) அதி.௭.௪.

னுடைய சமுகத்தில் இந்த அடையாளங்களை
நான் காட்டும்படிக்கும்; நானே யெகோவா
வென்பதை, நீங்களும் அறிந்துகொள்ளும்படிக்
௨ கும்;—எகிப்திலே நான்நடப்பித்தவைகளையும்,
அவர்கள் மத்தியிலே நான்செய்த அற்புதங்களை
யும், நீஉன்புத்திரபௌத்திரருடையசெவியில்வ
றவிவரித்துச்சொல்லும்படிக்கும்; அவனுடைய
இருதயத்தையும்,அவன்பணிவிடைக்காரருடை
ய இருதயத்தையுங்கடினப்படுத்தினேன்; ஆனா
௩ லும் அவனிடத்திற்போவென்றார்.-மோசேயும்
ஆரோனும் பார்வோனிடத்திற்சென்று, அவனை
நோக்கி, என்சமுகத்தில் உன்னை நீதாழ்த்த எது
வரைக்கும் மறுப்பாய். எனக்காராதனைசெய்ய
௪ என்சனங்களையனுப்பிவிடு.—என் சனங்களைய
னுப்பிவிடாமல், மறுப்பாயாகில், நான் நாளை
உன்னெல்லையில்விட்டிலைவரப்பண்ணுவேன்.-
௫ உன்பிதாக்களும், உன்பிதாக்களுடைய பிதாக்க
ளும், பூமியின் தோற்றமுதல் இந்நாள்வரைக்
கும், அப்படிப்பட்டவைகளைக் கண்டிருக்க
௬ மாட்டார்கள்.—பூமியைக் காணக்கூடாதபடிக்
கு அவைகள் அதின்முகத்தைமூடி, கல்மழைக்
குத்தப்பி, உங்களிடத்திலே மிஞ்சியிருந்தவைக
ளைப்பட்சிப்பதுமன்றி, வெளியிலே தளிர்க்கும்
உங்கள் சகலவிருட்சங்களையுந் தின்றுவிடும்.
உன்வீடுகளும், உன் பணிவிடைக்காரருடைய
வீடுகளும், எகிப்தியருடைய வீடுகள்யாவும், அ
வைகளால்நிறையுமென்று, எபிரேயரின் தேவ
னாகிய யெகோவா சொன்னாரென்பதாகச்
சொல்லி, அவன்திரும்பிப் பார்வோனைவிட்டுப்
புறப்பட்டான்.
௭ பார்வோனுடைய பணிவிடைக்காரர் அவனை
நோக்கி, எதுவரைக்கும் இந்தமனுஷன்நமக்கொ
ரு கண்ணியாயிருப்பான். தங்கள் தேவனாகிய
யெகோவாவுக்கு ஆராதனைசெய்ய அந்த மனி
தரையனுப்பிவிடும். எகிப்து அழிந்துபோயிற்
றென்பதை நீர் இன்னும் அறியவில்லையா என்
௮ றார்கள்.-பின்பு மோசேயும் ஆரோனும் பார்வோ
னிடத்திற்குத்திரும்ப அழைக்கப்பட்டார்கள்.
அப்பொழுது அவன் அவர்களைநோக்கி, நீங்கள்
உங்கள் தேவனாகிய யெகோவாவுக்கு ஆராத
னைசெய்யப்போங்கள். ஆரார்போகிறவர்களென்
௯ றுகேட்க;—மோசே, யெகோவாவுக்கு உற்ச
வங்கொண்டாட வேண்டியிருப்பதினால், நாங்
கள் எங்களாடுமாடுகளைச் சேர்த்துக்கொண்டு,
எங்களிளைஞரோடும், முதியோரோடும், எங்கள்
புத்திரர்களோடும், புத்திரிகளோடும், போகவே
௰ ண்டுமென்று சொல்ல;—அவன் அவர்களுட
னே, எச்சரிக்கையாயிருங்கள். உங்களுக்குத்
தீங்குநேரிடும். நான் உங்களையும், உங்கள்குழந்
தைகளையும், எப்படிவிடுவேனோ, அப்படியே
யெகோவாவும், உங்களோடிருப்பாராக. அப்
படியோ அல்ல.—புருஷராகிய நீங்களேபோய், ௰௧
யெகோவாவுக்காராதனைசெய்யுங்கள். இதை
யே நீங்கள்விரும்பிக் கேட்டீர்களென்றுசொன்
னான்: அவர்கள் பார்வோனுடைய சமுகத்தில்
நின்றுந்துரத்திவிடப்பட்டார்கள்.
யெகோவா மோசேயைநோக்கி, விட்டில் ௰௨
கள் எகிப்து தேசத்தின்மேல்வந்து அத்தேசத்தி
லே கல்மழைக்கு அழியாதிருக்கிற பயிர்வகை
கள்யாவையும் பட்சிக்கும்படி, எகிப்துதேசத்
தின்மேல் உன்கையை ஓங்கென்றார்.—மோசே ௰௩
எகிப்து தேசத்தின்மேலே தன் கோலையோங்கி
னான். பின்பு யெகோவா அன்றுபகல்முழுவ
தும், அன்றிராமுழுவதுங் கீழ்க்காற்று அத்தேசத்
தின்மேல்வீசப்பண்ணினார். விடியற்காலத்தில்
கீழ்க்காற்று விட்டில்களைக் கொண்டுவந்தது.—
விட்டில்கள் எகிப்துதேசம்முழுதும்பரந்து எகிப் ௰௪
தின் எல்லைகளெங்கும் நெருங்கின. இத்தனை
கொடுமையாய் விட்டில்கள் இதற்குமுன்னுமில்
லைப்பின்னுமில்லை.—தேசம் இருளடையத்தக்க ௰௫
தாய் அவைகள்பூமியின்முகம் முழுவதையும்மூ
டி, கல்மழையினால் அழியாதிருந்தநிலப்பயிர்வ
கைகள்யாவையும், மரங்களின் கனிகள்யாவை
யும், பட்சித்தன. எகிப்து தேசமெங்குமுள்ள
மரங்களிலும், வயல்வெளியிலுள்ளபயிர்வகைக
ளிலும், பசுமையானதொன்றும் மிஞ்சியிருக்க
வில்லை.
பார்வோன் விரைவாய், மோசேயையும் ஆ ௰௬
ரோனையும் அழைப்பித்து, நான் உங்கள் தேவ
னாகிய யெகோவாவுக்கும், உங்களுக்கும்வி
ரோதமாய்ப் பாவஞ்செய்தேன்.—இந்த ஒருமு ௰௭
றைமாத்திரம் என்பாவத்தைமன்னித்து, உங்கள்
தேவனாகிய யெகோவா, இந்தமரணத்தை
மாத்திரம் எனக்குவிலக்கும்படி, அவரைநோக்
கிப்பிரார்த்திக்கும்பொருட்டு, உங்களை இரந்து
நிற்கிறேன் என்றான்.-அவன் பார்வோனைவிட் ௰௮
டுப்புறப்பட்டு யெகோவாவைப் பிரார்த்தித்
தான்.—அப்பொழுது யெகோவா மிகவும் ௰௯
உரத்த மேல்காற்று வீசும்படிசெய்ய, அது விட்
டில்களைச்செங்கடலில் வீசிற்று. எகிப்தின் எல்
லையெங்கும் ஒருவிட்டிலாகிலும் மீந்திருக்கவில்
லை.—யெகோவா பார்வோனின் இருதயத் ௨௰
தைக்கடினப்படுத்தினார்; அவன் இஸரவேல்சந்
ததியாரைவிடவில்லை.
அப்பொழுது யெகோவா மோசேயை ௨௧
நோக்கி, வானத்துக்குநேரே உன்கையையோங்
கு. எகிப்துதேசத்தில் இருளுண்டாகும். அந்
த இருள் பரிசிக்கத்தக்கதாயிருக்குமென்றார்.—
மோசே வானத்துக்குநேரே தன் கையையோங் ௨௨
கினான். எகிப்து தேசமெங்கும் மூன்றுநாளள
வும் கனத்த இருளுண்டாயிருந்தது.—மூன்றுநா ௨௩
ளளவும் ஒருவரையொருவர்காணவும், ஒருவன்

(௨) உபா.௪.௰. யோவே.௧.௩. (௩) ௧.இரா.௨௧.௨௮. யோபு.௪௨.௬. யாக்.௪.௰. ௧.பேதுரு.௫.௬. (௪) வெளி. ௯.௩. (௬) வச.௰௫. அதி.௯.௩௨. யோவே.௧.௪. அதி ௮.௩,௨௧ (௭) அதி.௨௩.௩௩. (௰௨) அதி.௭.௰௯. (௰௪) யோவே.௨.௨ (௰௫) வச.௬. (௰௬) அதி.௯.௨௭. (௰௭) அதி.௯.௨௮. ௧.இரா.௰௩.௬. (௰௯) யோவே.௨. ௨௰. (௨௰) அதி.௪.௨௰. அதி.௰௧.௰. (௨௧) அதி.௯.௨௨. (௨௨) சங்.௱௫.௨௮. (௨௩) அதி.௮.௨௨.

தன்னிடத்தைவிட்டு எழும்பவுமில்லை. இஸர
வேல் சந்ததியார்சகலருக்கும், அவரவர்வாசஸ்
தலங்களில் வெளிச்சமிருந்தது.
௨௪ அப்பொழுதுபார்வோன்மோசேயை அழைப்
பித்து,நீங்கள்போய் யெகோவாவுக்காராதனை
செய்யுங்கள். உங்கள் குழந்தைகளும் உங்களு
டனேபோகலாம். உங்கள் ஆடுமாடுகள்மாத்தி
ரம் நிறுத்தப்படவேண்டுமென்று சொல்ல;—
௨௫ மோசே,எங்கள் தேவனாகிய யெகோவாவுக்
குப் பலிகளையும் தகனபலிகளையுமிடும்படி, நீர்
அவைகளையும் எங்கள்கையிலேதரவேண்டும்.—
௨௬ நாங்கள்போய்ச் சேருமிடத்தில் இன்னதினால்
யெகோவாவுக்காராதனைசெய்யவேண்டுமென்
பதை அறியாததினால், எங்கள் மிருகசெந்துக்க
ளும் எங்களுடனே வரவேண்டும். எங்கள் தே
வனாகிய யெகோவாவுக்காராதனை செய்யும்
படி, அவைகளிலெடுக்கவேண்டும். ஒரு குளம்
௨௭ பையும் பின்வைக்கலாகாதென்றான்.—யெகோ
வா பார்வோனின் இருதயத்தைக் கடினப்படுத்
௨௮ தினார். அவனவர்களைப் போகவிடவில்லை.-பார்
வோன் இவனைநோக்கி என்னைவிட்டகன்று
போ. நீ இனி என் முகத்தைக்காணாதபடி எச்ச
ரிக்கையாயிரு. நீதிரும்ப என்முகத்தைக்காணுந்
௨௯ தினத்திற்சாவாயென்றுசொல்ல;—மோசே, நன்
றாய்ச்சொன்னீர். இனியொருபொழுதும், உம்
முடையமுகத்தைக் காணமாட்டேனென்றான்.

## ௰௧. அதிகாரம்.

௧. இஸரவேலர் எகிப்தியரிடத்தில் திரவியங்
கேட்டுவாங்கும்படி தேவன் கட்டளையிடல்:
௪. தலைப்பிள்ளைகளைக்கொல்வேனென்றுமுன்
னறிவித்தல்.

யெகோவா மோசேயைநோக்கி,இன்னுமொ
ரு வாதையைப் பார்வோன்மேலும், எகிப்தின்
மேலும்வரப்பண்ணுவேன். அதற்குப்பின் அவ
னுங்களை இவ்விடத்தினின்றும்போகவிடுவான்.
போகவிடும்பொழுது இவ்விடத்தினின்று உங்
௨ களை முழுமையுந்துரத்திவிடுவான்.—ஒவ்வொரு
வனும் அவனவன்அயலானிடத்திலும்,ஒவ்வொ
ருத்தியும் அவளவள் அயலாளிடத்திலும், வெள்
ளியுடைமைகளையும்,பொன்னுடைமைகளையுங்
கேட்கும்படி சனங்களுக்குச்சொல்லென்றார்.—
௩ யெகோவா, சனங்கள்மேல் எகிப்தியருக்குத்
தயையுண்டாகும்படி செய்தார். மேலும்மோசே
யென்பவன் எகிப்துதேசத்திலேபார்வோனுடை
ய பணிவிடைக்காரரின் பார்வைக்கும், சனங்
களின்பார்வைக்கும், மிகவும்பெரியவனாய்க்கா
ணப்பட்டான்.
௪ மோசே, யெகோவாவானவர், அத்தராத்
திரியில் நான் எகிப்தின்மத்தியில் புறப்பட்டுப்
௫ போக,—சிங்காசனத்தில் வீற்றிருக்கும் பார்
வோன் தலைப்பிள்ளைமுதல், திரிகையினருகிலி
ருக்கும் பணிவிடைக்காரியின் தலைப்பிள்ளைவ
ரைக்கும்,எகிப்துதேசத்திலுள்ள முதற்பேறனைத்
தும், மிருகங்களில் தலையீற்றனைத்தும், இறந்
துபோமென்று சொல்லியிருக்கிறாரென்றதுமன்
றி,—எகிப்துதேசமெங்கும் முன்னும் பின்னும் ௬
ஒருகாலத்திலுமில்லாத பெரிய புலம்பலுண்டா
கும்.—இஸரவேல்சந்ததியார் எவர்களுக்குள்ளும் ௭
மனிதருக்காகிலும், மிருகங்களுக்காகிலும், வி
ரோதமாக ஒருநாயுந் தன் நாவை அசைக்காது.
அதினால் எகிப்தியருக்கும், இஸரவேலருக்கும்,
யெகோவா வேற்றுமை உண்டுபண்ணுகிறா
ரென்பதை,நீங்களறிந்துகொள்வீர்கள்.-அப்பொ ௮
ழுது உம்முடைய பணிவிடைக்காரராகிய, இ
வர்களெல்லாரும் என்னிடத்தில்வந்துபணிந்து,
நீர் உம்முடைய அடியாராகிய சனங்கள் யாவ
ரையுங்கொண்டு புறப்படுமென்று சொல்லுவார்
கள். அதன்பின் புறப்படுவேனென்றுஞ்சொல்
லி உக்கிரகோபத்துடனே பார்வோனை விட்டுப்
புறப்பட்டான்.
யெகோவா மோசேயைநோக்கி, எகிப்து ௯
தேசத்தில் என்னால்மிகுதியாய் அற்புதங்கள்நடத்
தப்படும்படி, பார்வோன் உங்களுக்குச்செவி
கொடுக்கமாட்டானென்றுசொல்லியிருந்தார்.—
மோசேயும், ஆரோனும், இந்த அற்புதங்கள் யா ௰
வையும் பார்வோன் சமுகத்திற் செய்தார்கள்.
யெகோவா பார்வோனின் இருதயத்தைக்கடி
னப்படுத்தினார்; அதினால் அவன் தன் தேசத்தி
னின்றும் இஸரவேல் சந்ததியாரைப் போகவிட
வில்லை.

## ௰௨. அதிகாரம்.

௧. வருஷத்தின்முதல்மாதநியமம்: ௩. பஷ்கா உற்
சவம் ஏற்படுத்தல்: ௰௧. அதின் முறையுரைத்
தல்: ௰௮. புளிப்பில்லாத அப்பம்புசித்தல்: ௨௧.
முதியோருக்கு மோசே கட்டளையிடல்: ௨௯.
எகிப்தியரின் தலைப்பிள்ளைகளையும் மிருகங்க
ளின்தலையீற்றுக்களையுங்கொல்லல்: ௩௧. இஸர
வேலர் புறப்படுதல்: ௩௭. அவர்களின்தொகை:
௪௰. அவர்கள் எகிப்தில் வசித்த காலவளவு:
௪௩. பஷ்கா உற்சவத்தின் போசனவிதி.

யெகோவா எகிப்துதேசத்தில் மோசேயை ௧
யும் ஆரோனையும்நோக்கி,—இந்தமாதம் உங்களுக் ௨
குப் பிரதானமாதம்; வருஷத்தின் முதல்மாதம்.
நீங்கள் இஸரவேல் சபையார் யாவரையும் ௩
நோக்கி, இந்தமாதம் பத்தாந்தினத்தில் வீட்டுத்
தலைவர், வீடொன்றுக்கு ஆட்டுக்குட்டியொன்
றாக, ஒவ்வொருவரும், ஒவ்வொரு ஆட்டுக்குட்
டியைத் தெரிந்தெடுத்துக்கொள்ளக்கடவர்.—ஒரு ௪
வீட்டில் ஆட்டுக்குட்டியைப்புசிப்பதற்கு ஆள்
குறையுமிடத்தில்,அவனும்,அவன்அயல்வீட்டுக்
காரனும், ஒன்றை எடுத்துக்கொள்ளக்கடவர்கள்.
ஆள்களின்தொகைக்கும், அவரவர் போசனத்தி

(௨௭) அதி.௰௪.௪,௮. (௨௯) எபி.௰௧.௨௭.—(௰௧. அதி. ௧.) அதி.௰௨.௩௧,௩௩,௩௯. (௨) அதி.௰௨.௩௫. (௩) அதி.௰௨.௩௬. சங்.௱௬.௪௬. (௪) அதி.௰௨.௰௨,௨௩,௨௯. ஆமோ.௫.௰௭. (௫) ஆமோ.௪.௰. (௬) அதி.௰௨.௩௰. ஆமோ.௫.௰௭. (௭) அதி.௮.௨௨. (௮) அதி.௰௨.௩௩. ௧.இரா.௨௰.௰. (௯) அதி.௩.௰௯. அதி.௰.௧. அதி.௭.௩. (௰) அதி.௰.௨௰,௨௭. ரோ.௨.௫. ரோ.௯.௨௨.—(௰௨. அதி. ௨.) அதி.௰௩.௪. உபா.௰௬.௧.

ணளவுக்குந்தக்கதாய்,ஆட்டுக்குட்டியின்தொகை
ரு யைப் பார்த்துக்கொள்ளவேண்டும்.—அந்த ஆட்
டுக்குட்டி, குற்றமற்ற ஒருவருஷத்துக்கடாவாயி
ருக்கவேண்டும். செம்மறியாடுகளிலாவது,வெள்
சு ளாடுகளிலாவது, தெரிந்துகொள்ளலாம்.—அதை
இந்தமாதம் பதினாலாந்தினம்வரைக்குங் கட்டி
வைத்து, இஸரவேலரிலுள்ள ஒவ்வொரு சபை
எ யாருஞ் சாயங்காலத்தில் அதைச்சேதித்து,—அதி
னிரத்தத்திலெடுத்து, தாங்கள்புசிக்கும் வீட்டுவா
சல் நிலைக்காலிரண்டிலும், மேற்படியிலுந் தெ
அ ளிக்கக்கடவர்கள்.—அவ்விரவில் அதன் மாமிசத்
தை நெருப்பில்வாட்டி, புளிப்பில்லாத அப்பத்
தோடும், கசப்பான இலைக்கறியோடும், அதைப்
கூ புசிக்கக்கடவர்கள்.—பச்சையாயும், சலத்தில் அ
விக்கப்பட்டதாயுமல்ல, அதின்தலையையும் தொ
டைகளையும் அதிலுள்ளமற்றவைகளையும் நெருப்
ய பில்வாட்டிப் புசிப்பீர்களாக.—அதிலொன்றை
யும் விடியற்காலமளவும், சேஷமாகவைக்கப்ப
டாது. விடியற்காலத்தில் சேஷமாயிருந்தால்,
அக்கினியில் தகிக்கவேண்டும்.
யக அன்றியும், நீங்கள் உங்களிடைக்கச்சைக்கட்
டிக்கொண்டும், உங்கள் செருப்புக்களைத்தொடுத்
துக்கொண்டும், உங்கள் கைகளிலே கோல்க
ளைப்பிடித்துக்கொண்டுமிருந்து, அதைப்புசிக்கக்
கடவீர்கள். தீவிரமாய் அதைப்புசிக்கவேண்டும்
யஉ இது யெகோவாவினது பஷ்கா.—அவ்விர
விலே நான் எகிப்துதேசமெங்குஞ்சென்று, அதி
லுள்ள மனிதரின் தலைப்பிள்ளைகளையும், மிரு
கங்களின் தலையீற்றுக்களையும் வதைத்து எகிப்
தின்பிரபுகள்சகலரையுந்தண்டிப்பேன். நானே
யங யெகோவா.—நீங்களிருக்கிற வீடுகளில் அந்த
இரத்தம் உங்களுக்கு ஒரு அடையாளம். நான்
அந்த இரத்தத்தைக்கண்டு, உங்களைக்கடந்துபோ
வேன். எகிப்து தேசத்தை அடிக்கும்பொழுது
யச உங்கள்மேல் சங்கார வாதைவராது.—இந்தத்தி
னம் உங்களுக்குஞாபகக்குறியாகும். இதில் உங்
கள்தலைமுறைதோறும், யெகோவாவுக்கு உற்
சவமொன்றை ஆசரிப்பீர்களாக. நித்திய நியம
யரு மாக அதை ஆசரிப்பீர்களாக.—புளிப்பில்லாத
அப்பத்தை, எழுநாளளவும், புசிக்கக்கடவீர்கள்.
முதலாம் நாளிலும், புளித்தமாவை யுங்கள்வீடுக
ளில் நின்றும் நீக்கவேண்டும். முதல்நாள்தொ
டங்கி ஏழாம் நாள்வரைக்கும் புளித்த அப்பம்பு
சிக்கும் எவனும் இஸரவேலரிலிருந்து சேதிக்கப்
யசு படுவான்.—அன்றியும், முதலாம் நாளில் திருச்
சபை கூடவேண்டும். ஏழாம்நாளிலுந் திருச்ச
பைகூடவேண்டும். அவைகளில் எவரும்போச
னத்துக்கேற்றதைச்செய்வதன்றி, வேறொன்றை
யஎ யுஞ் செய்யக்கூடாது.—இந்நாளிலேயே நான்
உங்கள் சேனைகளை எகிப்துதேசத்தினின்றும் பு
றப்படச்செய்தபடியால், புளிப்பில்லாத அப்பத்
தைப்புசிக்கும் உற்சவத்தை ஆசரிக்கக்கடவீர்
கள். உங்கள்தலைமுறைதோறும் நித்திய நியமமா
க இந்தநாளை ஆசரிப்பீர்களாக.
முதலாம்மாதம், பதினாலாந்தினத்தில், சாயங் யஅ
காலந்தொடங்கி, அந்தமாதம் இருபத்தோராந்தி
னத்தின் சாயங்காலம்வரைக்கும், புளிப்பில்லாத
அப்பத்தைப் புசிக்கக்கடவீர்கள்.—ஏழுநாளளவும் யகூ
உங்கள்வீடுகளிற் புளித்தமாக்காணப்படலாகா
து. புளித்த எதையும் புசிக்குமெவனும், பரதேசி
யானாலும், சுதேசியானாலும், இஸரவேல் சபையி
லிருந்து சேதிக்கப்படுவான்.—புளித்தயாதொன் உய
றையும் நீங்கள் புசிக்கப்படாது. உங்கள் சகலவா
சஸ்தலங்களிலும் புளிப்பில்லாத அப்பத்தைப் பு
சிக்கக்கடவீர்களென்பதாகச் சொல்லுங்களென்
று சொல்லியிருந்தார்.
மோசே இஸரவேலரின் மூதியோர் யாவரையு உக
ம் அழைப்பித்து, உங்கள்குடும்பப்படி, ஆட்டுக்
குட்டிகளைத் தெரிந்தெடுத்துக்கொண்டு, பஷ்கா
வைச்சேதித்து,—ஈசோப்புக்கிளைகளின் கட்டை உஉ
வாங்கிக் கிண்ணத்திலுள்ள இரத்தத்தில் தோய்த்
துக் கிண்ணத்திலுள்ள இரத்தத்தை வாசல் நிலை
யின்மேல் விட்டத்திலும், நிலைக்காலிரண்டிலுந்
தெளியுங்கள். விடியற்காலம்வரைக்கும் உங்க
ளிலொருவரும் வீட்டுவாசலைவிட்டுப்புறப்பட
வேண்டாம்.—யெகோவா சென்று சென்று உங
எகிப்தியரை அடிப்பார். வாசல்நிலைக்காலிரண்
டிலும், நிலையின்மேல்விட்டத்திலும், இரத்தத்
தைக்காணுமிடத்தில், யெகோவா, வதைப்
பவர், அடிக்கும்படி உங்கள்வீடுகளில் வரவிடா
மல், வாசற்படியைவிட்டுக் கடந்துபோவார்.—
உங்களுக்கும், உங்கள்சந்ததியாருக்கும், நித்திய உச
நியமமாக நீங்கள் இதையே ஆசரிக்கக்கடவீர்
கள்.—யெகோவா, தாம்வாக்குத்தத்தம்செய்த உரு
படி, உங்களுக்கு அளிக்குந்தேசத்திலே நீங்கள்
போய்ச்சேர்ந்து, இந்த ஆராதனையைச்செய்து வ
ருவீர்களாக.—அக்காலத்தில் இந்த ஆராதனை உங்க உசு
ளுக்கேதென்று, உங்கள்பிள்ளைகள் உங்களிடத்
தில்கேட்டால்,—யெகோவா எகிப்தியரை அ உஎ
டிக்கையில், எகிப்திலிருந்து இஸரவேல் சந்ததி
யாராகிய நம்முடைய வீடுகளைக்கடந்து நம்மை
இரட்சித்தார். இது யெகோவாவினது பஷ்கா
வென்னும் பலியென்று, நீங்கள் சொல்லவேண்
டுமென்பதாகச்சொன்னான். அப்பொழுது சனங்
கள் தலைவணக்கித் தொழுதுகொண்டார்கள்.—
பின்பு இஸரவேல்சந்ததியார் போய், யெகோ உஅ
வா மோசேக்கும், ஆரோனுக்குங்கட்டளையிட்
டபடிசெய்தார்கள்: அப்படியேசெய்தார்கள்.

(ரு) லேவி.உஉ.யகூ. மல்.க.அ,யச. எபி.கூ.யச. க.பேதுரு.க.யகூ. (சு) லேவி.உங.ரு. அதி.யசு.யஉ. (அ) அதி.கூச. உரு. உபா.யசு.ங. க.கொரி.ரு.அ. (ய) அதி.உங யஅ. (யக) உபா.யசு.ரு. (யஉ) அதி.யக.ச,ரு. எண்.கூங.ச. அதி. சு.உ. (யச) அதி.யங.கூ. லேவி.உங.ச,ரு. (யரு) அதி.யங.சு,எ. லேவி.உங.ரு,சு. உபா.யசு.ங,அ. க.கொரி.ரு.எ. ஆதி.யஎ யச. (யசு) லேவி.உங.எ,அ. (யஎ) அதி.யங.ங. (யஅ) லேவி.உங.ரு. (யகூ) உபா.யசு.ங. க.கொரி.ரு.எ,அ. எண்.கூ யங. (உக) எண்.கூ.ச. எஸ்ரா.சு.உய. மத்.உசு.யஅ,யகூ. (உஉ) எபி.யக.உஅ. (உங) வச.யஉ,யங. எசேக். கூ.சு. வெளி.எ.ங. வெளி.கூ.ச. க.கொரி.ய.ய. எபி.யக.உஅ. (உசு) அதி.யங.அ,யச. யோசு.ச.சு. (உஅ) எபி.யக.உஅ.

௨௯ அர்த்தராத்திரியில் யெகோவா சிங்காசனத்
தின்மேல்வீற்றிருக்கும்பார்வோனின்தலைப்பிள்
ளைமுதல், சிறைச்சாலையிலிருக்குஞ்சிறைப்பட்
டோரின் தலைப்பிள்ளைவரைக்கும், எகிப்துதே
சத்திலிருந்த முதற்பேறனைத்தையும், மிருகங்க
௩௰ ளின் தலையீற்றனைத்தையும் அடித்தார்.-பார்வோ
னும், அவன் சகலபணிவிடைக்காரரும், எகிப்
தியர் யாவரும், இரவிலே எழுந்திருந்தார்கள்.
பிரேதமில்லாத வீடொன்றுமில்லை. அதினால் எ
கிப்திலே பெரிய புலம்பலுண்டாயிற்று.
௩௧ இரவிலே அவன் மோசேயையும், ஆரோனை
யும் அழைப்பித்து, நீங்களும், இஸ்ரவேல்சந்த
தியாரும் எழுந்து, என் சனங்களைவிட்டுப்புறப்
பட்டுப்போய், நீங்கள் சொன்னபடி, யெகோ
௩௨ வாவுக்காராதனைசெய்யுங்கள்.—உங்களாடுமாடு
களையும், நீங்கள் சொன்னபடி, ஓட்டிக்கொண்
டுபோங்கள். என்னையும் ஆசீர்வதியுங்களென்
௩௩ றான்.—எகிப்தியர், நாங்களெல்லாரும் இறந்து
போனோமேயென்றுசொல்லித்தீவிரமாய் அந்தச்
சனங்களைத்தேசத்திலிருந்து அனுப்பிவிட அவர்
௩௪ களை மிகவுந் துரிதப்படுத்தினார்கள்.—சனங்கள்
தாங்கள் பிசைந்தமாப்புளிக்குமுன் பாத்திரத்து
டனே தங்கள் புடைவைகளிற்கட்டித்தோளில்
௩௫ போட்டுக்கொண்டுபோனார்கள்.-மோசேசொல்
லியிருந்தபடி, இஸ்ரவேல்சனங்கள் எகிப்தியரி
டத்தில் வெள்ளியுடைமைகளையும், பொன்னு
டைமைகளையும், வஸ்திரங்களையுங் கேட்டிருந்
௩௬ தார்கள்.—யெகோவாவும், சனங்கள்மேல்
எகிப்தியருக்குத் தயையுண்டாகும்படி செய்ததி
னால், அவர்கள் இவர்களுக்குக்கொடுத்தார்கள்:
இப்படி எகிப்தியரைக்கொள்ளையிட்டார்கள்.
௩௭ குழந்தைகளைத்தவிர,இஸ்ரவேல்சந்ததியார்ஆ
றிலட்சம்புருஷர்கள் ராமேசேசை விட்டுப்புறப்
பட்டு, கால்நடையாய்ச் சுக்கோத்திற்சேர்ந்தார்
௩௮ கள்.—அவர்களுடனே அந்நியசனங்களனேகரு
மன்றி மிகுதியான ஆடுமாடுமுதலான மிருகங்க
௩௯ ளும்போயின.-எகிப்திலிருந்து அவர்கள்கொண்
டுவந்த பிசைந்த மாப்புளியாதிருந்தபடியால், அ
வர்கள் புளிப்பில்லாத அப்பம் சுட்டார்கள். அ
வர்கள் எகிப்தினின்றும் தரிக்கவிடப்படாமல்
புறப்பட்டதினால், தங்கள் வழிக்கு வேறேதும்,
ஆகாரம் ஆய்த்தம்பண்ணிக்கொள்ளவில்லை.
௪௰ இஸ்ரவேல்சந்ததியார் எகிப்திலே நானூற்று
௪௧ முப்பதுவருஷம் வாசம்பண்ணினார்கள்.—நா
னூற்றுமுப்பதாம் வருஷாந்தத்தில், யெகோ
வாவின் சேனைகளெல்லாம், எகிப்துதேசத்தை
௪௨ விட்டுப்புறப்பட்டன.—யெகோவா அவர்
களை எகிப்துதேசத்தினின்றும் புறப்படச்செய்
ததினால், இது அவருக்கென்று ஆசரிக்கத்தக்க
இராத்திரியாயிற்று. இஸ்ரவேல் சந்ததியாரெல்
லாருந்தங்கள்தலைமுறைதோறும் ஆசரிக்கவேண்
டிய யெகோவாவின் இராத்திரியிதுவே.
யெகோவா மோசேயையும், ஆரோனையும் ௪௩
நோக்கி,பஷ்காவின்விதிப்பிரமாணமாவது, அந்
நியனொருவனும் அதைப் புசிக்கப்படாது.—ப ௪௪
ணத்துக்குக்கொண்ட எவனெவனுடைய அடி
மைக்கும் நீ விருத்தசேதனம் பண்ணினபின்பு,
அவனதைப்புசிக்கலாம்.—எந்தப்பரதேசியும், கூ ௪௫
லியாளும் அதைப் புசிக்கப்படாது.—ஒருவீட் ௪௬
டில்வைத்துப்புசிக்கிறதேயன்றி அந்த மாமிசத்
தில் கொஞ்சமும் வீட்டினின்றும் வெளியே
கொண்டுபோகப்படாது. அதில் ஒரு எலும்பை
யும்முறிக்கப்படாது.—இஸ்ரவேல் சபையாரெல் ௪௭
லாரும் அதை ஆசரிக்கவேண்டும்.—அந்நியனொ ௪௮
ருவன் உன்னிடத்தில்தங்கி, யெகோவாவுக்
குப் பஷ்காவை ஆசரிக்கவேண்டுமென்று இருந்
தால் அவனும், அவன் புத்திரர்யாவரும், விருத்
தசேதனம்பண்ணப்படவேண்டும். பின்பு அவ
னதை ஆசரிப்பதற்குச் சமீபித்துச் சுதேசியைப்
போலிருப்பான். விருத்தசேதனமில்லாத ஒரு
வனும்அதில்புசிக்கலாகாது.—சுதேசிக்கும், உங் ௪௯
களிடத்திலேதங்கும்பரதேசிக்கும், விதிப்பிரமா
ணமொன்றாயிருக்கவேண்டும் என்பதே யென்
றார். இப்படி இஸ்ரவேல்சந்ததியாரெல்லாருஞ்
செய்தார்கள்.—யெகோவா மோசேக்கும், ஆ ௫௰
ரோனுக்கும் கட்டளையிட்டபடியே செய்தார்
கள்.—அத்தினமே யெகோவா இஸ்ரவேல்சந் ௫௧
ததியாரைச் சேனைகளாய் எகிப்துதேசத்தினின்
றும் புறப்படச்செய்தார்.

## ௰௩. அதிகாரம்.

௧. முதற்பேறனைத்தையுந்தேவனுக்குப்பரிசுத்தப்படுத்தல்: ௩. எகிப்துதேசத்தினின்றும் விடுதலைபெற்றதற்கு ஓர்ஞாபகக்குறி கற்பித்தல்: ௰௧. முதற்பேறுகளைத் தேவனுக்குப் பரிசுத்தப்படுத்தின விவரம்: ௰௭. எகிப்திலிருந்து புறப்படுகையில் யோசேப்பினெலும்பையெடுத்தல்: ௨௰. பகலில் மேகஸ்தம்பத்தைக்கொண்டும் இரவில் அக்கினி ஸ்தம்பத்தைக்கொண்டும் தேவனவர்களுக்கு வழிகாட்டல்.

யெகோவா மோசேயைநோக்கி,-இஸ்ரவேல் ௧
சந்ததியாருக்குள்ளும், மிருகங்களுக்குள்ளும், ௨
கருப்பத்தில் தோன்றும் முதற்பேறனைத்தையும்
எனக்குப்பிரதிஷ்டைபண்ணவேண்டும்: அவை
களென்னுடையவைகளென்றார்.
மோசேசனங்களைநோக்கி,நீங்கள் அடிமைத்த ௩
னத்திலிருந்தவாசஸ்தானமாகியஎகிப்தினின்றும்
யெகோவா உங்களைக்கைவல்லமையினால் பு
றப்படச்செய்தபடியால், அவ்விடத்தினின்றும்

(௨௯) அதி.௰௧.௪. அதி.௰௧.௫. (௩௰) அதி.௰௧.௬. (௩௧) அதி.௰.௯. (௩௨) அதி.௰.௨௬. (௩௩) அதி.௰௧.௮. ஆதி.௨௰.௩. (௩௪) அதி.௮.௩. (௩௫) அதி.௩.௨௨. (௩௬) அதி.௩.௨௧. ஆதி.௰௫.௰௪. அதி.௩.௨௨. (௩௭) ஆதி.௪௭.௰௧. ஆதி.௰௨.௨. ஆதி.௪௬.௩. (௩௮) எண்.௰௧.௪. (௩௯) அதி.௬.௧. அதி.௰௧.௧. (௪௰) ஆதி.௰௫.௩. (௪௨) உபா.௰௬.௬. (௪௪) ஆதி.௰௭.௰௨,௰௩. (௪௫) லேவி.௨௨.௰. (௪௬) யோவா.௰௯.௩௩,௩௬. (௪௭) எண் ௯.௩. (௪௮) எண்.௯.௰௪. (௫௧) அதி.௬.௨௬.—(௰௩. அதி. ௨.) வச.௰௨,௰௩,௰௫. லேவி.௨௭.௨௬. லூக்.௨.௨௩. (௩) அதி.௰௨.௪௨. உபா. ௰௬.௩. அதி.௬.௧. அதி.௰௨.௮.

நீங்கிய இத்தினத்தைச் சிந்தையில்வைத்துக்
கொள்ளுங்கள். புளிப்புள்ள அப்பத்தை நீங்கள்
௪ புசிக்கப்படாது.—ஆபீப்மாதத்தின் இத்தினத்தில்
௫ நீங்கள் புறப்பட்டீர்கள்.—பாலுந்தேனும் பெரு
குகிற தேசத்தை யெகோவா உனக்களிப்பே
னென்று உன் பிதாக்களுக்கு ஆணையிட்டுக்கொ
டுத்ததும், கானானியர், எத்தியர், எமோரியர், ஈவி
யர், எபூசியரென்பவர்களுடைய வாசஸ்தானமு
மாகியிருக்கிற தேசத்திற்கு உன்னை வரப்பண்
ணுங்காலத்தில், நீ அந்தமாதத்தில் இந்தஆராதனை
௬ யைச்செய்வாயாக.—புளிப்பில்லாத அப்பத்தை
ஏழுநாளளவும் புசிக்கவேண்டும். ஏழாம்நாளி
லே யெகோவாவுக்கென்று ஒரு உற்சவமுண்
௭ டாகும்.—அவ்வேழுநாளும் புளிப்பில்லாத அப்
பத்தைப்புசிக்கவேண்டும். புளிப்புள்ள அப்ப
முன்னிடத்திற்காணப்படலாகாது. உன்னெல்
லையெங்கும் புளித்தமாவும் உன்னிடத்திற் கா
௮ ணப்படலாகாது.—அந்நாளில் நீ உன்புத்திரனை
நோக்கி, நான் எகிப்தினின்றும் புறப்படுகை
யில், யெகோவா எனக்குச்செய்திருக்கிற கா
ரியத்தினிமித்தம், இப்படி நடப்பிக்கப்படுகின்
௯ றதென்று சொல்லு.—யெகோவா அருளிய
விதிப்பிரமாணம் உன் வாயிலிருக்கும்பொருட்
டு, இது உன்கையிலே ஒரு அடையாளமாகவும்,
உன்கண்களுக்கிடையில்ஒருஞாபகக்குறியாகவு
மிருக்கக்கடவது. கைவல்லபத்தினால்,யெகோ
வா உன்னை எகிப்தில்நின்றும் புறப்படச்செய்
௰ தாரே.—ஆகையால் நீ வருஷந்தோறும் காலக்கிர
மப்படி, இந்நியமத்தை ஆசரித்துவரவேண்டும்.
௰௧ யெகோவா தாம் உனக்கும், உன்பிதாக்க
ளுக்கும், ஆணையிட்டபிரகாரம், உன்னைக்கானா
னியருடையதேசத்தில் சேரப்பண்ணி அதை உ
௰௨ னக்களித்தபின்பு,—கருப்பத்தில் தோன்றும் மு
தற்பேறனைத்தையும், உன்னிடத்திலிருக்கிறமிரு
கங்களின் தலையீற்றனைத்தையும் யெகோவா
வுக்குப்பிரதிஷ்டைபண்ணு.அவைகளிலுள்ளஆ
ணெல்லாம் யெகோவாவினுடையவைகள்.—
௰௩ கழுதையின் தலையீற்றுக்கள் ஒவ்வொன்றையும்
ஒவ்வொரு ஆட்டுக்குட்டியைக்கொண்டு மீட்
டுக்கொள்ளவேண்டும். மீட்காவிட்டால்,அதின்
கழுத்தை முறித்துவிடவேண்டும். மானிடனா
கிய உன் பிள்ளைகளுக்குள் முதற்பேறனைத்தை
௰௪ யும் மீட்டுக்கொளள்வேண்டும்.—பிற்காலத்தில்
உன்புத்திரன்,இதென்னவென்று உன்னிடத்திற்
கேட்டால்,நாங்கள் அடிமைத்தனத்திலிருந்த வா
சஸ்தானமாகிய எகிப்தினின்றும், எங்களை யெ
கோவா கைவல்லபத்தினாலேபுறப்படச்செய்
௰௫ தார்.—எங்களையனுப்பிவிடுவதற்குப் பார்வோன்
உடன்படாததினால், யெகோவர் எகிப்துதே
சத்தில் மனிதருடையசேஷ்டபுத்திரர்முதல், மி
ருகங்களின் தலையீற்றுக்கள் வரைக்கும், முதற்

பேறுகள்யாவையுஞ்சங்கரித்தார். ஆதலால்கருப்
பத்தில் தோன்றும் முதற்பேறான ஆணெல்லாம்
நான் யெகோவாவுக்குப்பலியிடுகிறேன்; என்
பிள்ளைகளில் முதற்பேறனைத்தையும் மீட்டுக்
கொள்ளுகிறேன்.—யெகோவா கைவல்லபத் ௰௬
தினால் எங்களை எகிப்தினின்றும் புறப்படச்
செய்ததற்கு இது உன்கையிலடையாளமாகவும்,
உன்கண்களுக்கிடையிலே நெற்றிக்குறியாகவு
மிருப்பதாகவென்று, அவனிடத்திற் சொல்ல
வேண்டுமென்றான்.

பார்வோன், சனங்களை அனுப்பிவிட்டபின், ௰௭
சனங்கள் யுத்தத்திலெதிர்த்தால், சஞ்சலப்பட்டு
எகிப்துக்குத்திரும்பவும் கூடுமென்று தேவன்
பெலிஸ்தியர்தேசஞ்சமீபமாயிருந்தும் அதின்வ
ழியாலே தேவன் அவர்களை நடத்தாமல், செங்
கடலோரத்தில் வனத்தின்வழியாய்ச்சுற்றி நடக்
கச்செய்தார்.—இஸரவேல் சந்ததியார் எகிப்து ௰௮
தேசத்தினின்றும் அணியணியாய்ப்புறப்பட்டுப்
போனார்கள்.—யோசேப்பு இஸரவேல் சந்ததி ௰௯
யாரைநோக்கி, தேவன் உங்களைக்கடாட்சிப்
பார். அப்பொழுது என்னெலும்புகளை இங்கி
ருந்து கொண்டுபோங்களென்றுசொல்லி, அதற்
கு அவர்களைக்கொண்டு ஆணை இடுவித்திருந்தப
டியால், மோசே யோசேப்பினுடைய எலும்பு
களையெடுத்துக்கொண்டுபோனான்.

அவர்கள் சுக்கோத்தினின்றும்பிரயாணப்பட் ௨௰
டு, வனத்தினெல்லையிலுள்ள ஏதாமிலே பாளய
மிறங்கினார்கள்.—யெகோவா அவர்களை இர ௨௧
வும்பகலும் நடத்தும்பொருட்டு, பகலில் அவர்
களைவழிநடத்தமேகத்தூணிலும் இரவில் அவர்க
ளுக்குவெளிச்சங்காட்ட அக்கினித் தூணிலுமி
ருந்து அவர்களுக்குமுன்சென்றார்.—அவர், பக ௨௨
லில்மேகத்தூணையும், இரவில் அக்கினித்தூணை
யும்,சனங்களுக்குமுன்னின்றும் அகற்றவில்லை.

## ௰௪. அதிகாரம்.

௧. தேவன் இஸரவேலருக்கு வழிகாட்டடல்: ௫. பார்வோன் அவர்களைத்தொடர்தல்: ௰. இஸரவேலர்புலம்பல்: ௰௩. மோசே அவர்களைத்தேற்றல்: ௰௫. தேவன் மோசேக்குப் போதித்தல: ௰௯. தூதனும் மேகஸ்தம்பமும் இஸரவேலருக்குப்பின்னாதல்: ௨௧. மோசேசமுத்திரத்தைப்பிரித்தல்: ௨௩. முன்னேபோன இஸரவேலரை எகிப்தியர் தொடர்தல்: ௨௬. எகிப்தியர்சமுத்திரத்திலமிழ்ந்தியழிதல்.

யெகோவா மோசேயைநோக்கி,—நீங்கள் தி ௧
ரும்பி மிக்தோலுக்குஞ் சமுத்திரத்திற்கும் இடை ௨
யிலே பாகால்சிபோனுக் கெதிரேயிருக்கிற பீய
கீரோத்துக்குமுன்பாக இறங்கவும், அதற்கெதி
ராகச் சமுத்திரக்கரையிலே பாளயமிறங்கவும்
வேண்டுமென்று இஸரவேல் சந்ததியாருக்குச்
சொல்லு.—பார்வோன் இஸரவேலரைக் குறித் ௩

(௪) அதி.௨௩.௰௫. உபா.௰௬.௧. (௫) அதி.௩.௮. அதி.௰௨.௨௫,௨௬. (௭) அதி.௰௨.௰௯. (௯) உபா.௬.௮. உபா.௰௧. ௰௮. நீதி.௧.௯. ஏசா.௪௯.௰௬. மத்.௨௩.௫. (௰௨) லேவி.௨௭.௨௬. உபா.௰௫.௰௯ (௰௩) அதி.௩௪.௨௰. (௰௪) உபா. ௬.௨௰. யோசு.௪.௬,௨௧. (௰௬) வச.௯. (௰௭) அதி.௰௪.௰௧,௰௨. உபா.௰௭.௰௬. அதி.௰௪ ௨. (௰௯) ஆதி.௫௰.௨௫. (௨௰) எண்.௩௩.௬. (௨௧) அதி.௰௪.௰௯,௨௪. அதி.௪௰.௩௮.—(௰௪. அதி. ௨.) அதி.௰௩.௰௮.

து, அவர்கள் தேசத்துக்குள்ளே அகப்பட்டிருக்கிறார்கள். வனம் அவர்களையடைத்துக்கொண்
௪ டதென்று சொல்லுவான்.—அப்பொழுது பார்
வோன் அவர்களைத்தொடரும்படி, நான் அவன் இருதயத்தைக்கடினப்படுத்தி, நானே யெகோவா என்பதை எகிப்தியர் அறியும்பொருட்டு, பார்வோனாலும், அவனுடையசமஸ்தசேனைகளினாலும், என்மகத்துவம் விளங்கும்படி செய்வேனென்றுசொன்னார். அவர்கள் அப்படியே செய்தார்கள்.
௫ சனங்களோடிப்போய்விட்டார்களென்று எ
கிப்தின் இராசனுக்குத்தெரிவிக்கப்பட; அவர்களுக்குமாறாகப் பார்வோனும்,அவனுடையபணிவிடைக்காரரும், மனம்பேதித்து, நமக்கூழியஞ் செய்யாமல், இஸரவேலர்போகும்படி நாம்விட்
௬ டதேதென்றார்கள்.–அவன் தன்னிரதத்தை ஆயத்
தப்படுத்தி, தன்சனங்களைச் சேர்த்துக்கொண்டு
௭ போனான்.—அவன் தெரிந்தெடுத்த அறுநூறிரதங்
களையன்றி, எகிப்திலுள்ள இரதங்கள்யாவும், அவைகளெவற்றினுஞ்சாரதிகளும்,வரப்பண்ணிக்
௮ கொண்டுபோனான்.–யெகோவா, எகிப்தின்
இராசனாகிய பார்வோனுடைய இருதயத்தைக்கடினப்படுத்தினார். அவன் இஸரவேல்சந்ததியாரைப்பின்தொடர்ந்தான். இஸரவேல்சந்ததியார் மிகுந்த வல்லமையுடன் புறப்பட்டுப்போனார்
௯ கள்.—எகிப்தியர் பார்வோனுடைய சகல குதி
ரைகளோடும், இரதங்களோடும், குதிரைவீரரோடும், சேனைகளோடும், அவர்களைத்தொடர்ந்து போய், சமுத்திரத்தினருகே பாகால்சிபோனுக்கெதிரேயிருக்கிற பீய்கீரோத்துக்குச்சமீபமாய்ப் பாளயமிறங்கியிருக்கையில், அணுகினார்கள்.
௰ பார்வோன் சமீபித்தபொழுது இஸரவேல்சந்
ததியார் கண்களையேறிட்டுப்பார்த்து எகிப்தியர் தங்களுக்குப்பின் வருகிறதைக்கண்டு மிகவும்பயந்தார்கள். இஸரவேல் சந்ததியார் யெகோ
௰௧ வாவைநோக்கி ஓலமிட்டார்கள்.—அன்றியும்
அவர்கள்மோசேயுடனே எகிப்திலே பிரேதக்குழிகளில்லையென்றோ, வனத்தில்மரணமடைய, எங்களை அழைத்துவந்தீர். நீரெங்களை எகிப்தினின்றும்புறப்படப்பண்ணி எங்களுக்கிப்படிச்
௰௨ செய்ததென்ன.—வனத்தில்சாவதிலும், எகிப்தி
யருக்கு ஊழியஞ்செய்வது எங்களுக்குநலம். நாங்கள் எகிப்தியருக்கு ஊழியஞ் செய்யவிடுமென்றிப்படி எகிப்திலே நாங்களும்மிடத்திற் சொல்லவில்லையா என்றார்கள்.
௰௩ அப்பொழுது மோசே சனங்களைநோக்கி, ப
யப்படாதிருங்கள்; இன்றைக்கு யெகோவா உங்களுக்குச்செய்யுமிரட்சிப்பை நின்றுபாருங்கள். இன்றைக்கு நீங்கள் காண்கிற எகிப்தியரை இனியொருக்காலும் காணமாட்டீர்கள்.—
௰௪ யெகோவா உங்களுக்காகயுத்தம்பண்ணுவார்.
நீங்கள் அமைதியாயிருங்களென்றான்.

யெகோவா மோசேயுடனே,நீ யென்னை ௰௫
நோக்கி ஓலமிடுகிறதென்ன. முன்செல்லுங்களென்று இஸரவேல் சந்ததியாருக்குச்சொல்லு.-
நீ உன்கோலையோங்கி, உன்கையைச்சமுத்திரத் ௰௬
தின்மேல்நீட்டிச் சமுத்திரத்தைப் பிரித்துவிடு. அப்பொழுது இஸரவேல்சந்ததியார் சமுத்திரத்தின்மத்தியில்உலர்ந்ததரையிலேநடந்துபோவார்
கள்.—எகிப்தியர் உங்களைத் தொடரத்தக்கதாக ௰௭
நானவர்களிருதயங்களை கடினப்படுத்தி, பார்வோனிடத்திலும், அவனிரதங்கள், குதிரைவீரர் முதலாகிய அவனுடைய சகல சேனைகளிடத்திலும், என்மகத்துவம்விளங்கும்படிசெய்வேன்.–
இப்படிப் பார்வோனிடத்திலும், அவனிரதங்க ௰௮
ளிடத்திலும், குதிரைவீரரிடத்திலும் என் மகத்துவம்விளங்கும்பொழுது,நானே யெகோவாவென்பதை எகிப்தியர் உணருவார்களென்று சொன்னார்.
இஸரவேலரின் சேனைகளுக்கு முன்னடந்த ௰௯
தேவதூதரானவர்,விலகி அவர்களுக்குப் பின்னாகநடந்தார்.மேகத்தூண் அவர்கள்சமுகத்திற்குவி
லகிப்போய்ப் பின்னேநின்றது.–அது எகிப்திய ௨௰
ரின்சேனையும் இஸரவேலரின்சேனையும் இராமுழுதும் ஒன்றோடொன்று சேராதபடி அவைகளின்மத்தியில்வந்தது. அதற்கு மேகமும் அந்தகாரமுமாயிருந்தது,இதற்கோ இரவிலும் வெளிச்சமாயிருந்தது.
மோசே தன்கையைச்சமுத்திரத்தின்மேல்நீட் ௨௧
டினான். யெகோவா இராமுழுவதும் உரத்த கீழ்க்காற்றினாலே சமுத்திரம் விலகும்படிசெய்து,அதை உலர்ந்ததரையாக்கினார்,சலம்பிரிவுபட்
டது.—இஸரவேல்சந்ததியார் சமுத்திரமத்தியிற் ௨௨
பிரவேசித்து உலர்ந்ததரைவழியாக நடந்துபோனார்கள். சலம் வலப்புறமும் இடப்புறமும் அவர்களுக்குமதிலாய் நின்றது.
அப்பொழுது எகிப்தியர் அவர்களைத்தொடர்ந் ௨௩
து, பார்வோனுடைய சகலகுதிரைகளோடும், இரதங்களோடும், குதிரைவீரரோடும், சமுத்திரமத்
தியில் பிரவேசித்தார்கள்.-விடியற்காலத்தில் யெ ௨௪
கோவா மேகாக்கினித்தூணின்வழியாய் எகிப்தியரின்சேனையைப்பார்த்தார். எகிப்தியரின்சே
னையைக்கலங்கச்செய்தார்.—உருளைகள் அவர்க ௨௫
ளிரதங்களைவிட்டுக்கழலவும், அவர்கள் அவைகளைவருத்தத்தோடே செலுத்தவும்பண்ணினார். அதனால் எகிப்தியர், இஸரவேலரை விட்டோடிப் போவோம். யெகோவா அவர்களுக்காக, எகிப்தியராகிய எங்களுக்குவிரோதமாக யுத்தம் பண்ணுகிறார் என்றுசொன்னார்கள்.
யெகோவா, மோசேயைநோக்கி, சலம் தி ௨௬
ரும்பி எகிப்தியரையும்,அவர்களிரதங்களையும்,குதிரைவீரரையும் மூடும்படிக்கு, உன்கையைச் சமுத்திரத்தின்மேல் நீட்டென்றுசொல்ல;—மோ ௨௭
சே, தன்கையைச் சமுத்திரத்தின்மேல் நீட்டி

(௪) அதி.௯.௰௬. ரோ.௯.௰௭,௨௨,௨௩. (௭) அதி.௰௫.௪. (௮) வச.௪. அதி.௰௩.௯. (௯) அதி.௰௫.௰. (௰௨) அதி.௫.௨௧. (௰௬) வச.௨௧.௨௬. (௰௯) அதி ௰௩ ௨௧. ஏசா.௬௩.௯. (௨௰) ஏசா.௮.௰௪. ௨.கொரி.௪.௩. (௨௧) அதி.௰௫.௯. யோசு.௩.௰௬. ஏசா.௬௩.௰௨. (௨௨) ௧.கொரி.௰.௧. அபகூ.௩.௰. (௨௭) யோசு.௪.௰௮. அதி.௰௫.௧,௭.

னுன். விடியற்காலத்தில், சமுத்திரந்திரும்பத்தன்
தத்துவத்தைக்கொண்டது. எகிப்தியர் அதற்கஞ்சி
யோட, யெகோவா அவர்களைச் சமுத்திரமத்
௨௮ தியிலமிழ்த்தினுர்.—சலந்திரும்பிவந்து இரதங்க
ளையும், குதிரைவீரரையும், அவர்கள்பின்னுகச்ச
முத்திரத்துட்பிரவேசித்திருந்தபார்வோனுடைய
சேனைகள் யாவையும் மூடிக்கொண்டது. அவை
௨௯ களிலொன்ருகிலுந்தப்பவில்லை.-இஸரவேல் சந்
ததியாரோ சமுத்திரமத்தியில் உலர்ந்ததரையின்
வழியாய்நடந்துபோனுர்கள். அவர்களுடையவ
லப்புறத்திலும், இடப்புறத்திலும், சலம் அவர்க
௩௰ ளுக்குமதிலாய்நின்றது.—இப்படியே யெகோ
வா அந்நாளில் இஸரவேலரை எகிப்தியர் கை
யினின்றுமிரட்சித்தார். கடற்கரையில் எகிப்தி
யர் செத்துக்கிடக்கிறதை இஸரவேலர் கண்டார்
௩௧ கள்.—யெகோவா எகிப்தியர்மேல்வைத்தப
யங்கரமானகரத்தை இஸரவேலர் கண்டார்கள்.
சனங்கள் யெகோவாவுக்குப் பயந்தார்கள்.
யெகோவாவினிடத்திலும், அவருடையதாச
னுகிய மோசேயினிடத்திலும், விசுவாசம் வைத்
தார்கள்.

## ௰௫. அதிகாரம்.

௧. மோசே கீதக்கவிசெய்தல்: ௨௰. அதைப்பாடுதல்: ௨௨. சலங்கிடையாமை: ௨௩. மாராஎன்னும்ஸ்தானத்திலகப்பட்ட கசப்பானசலம் மரத்தழையினுலினிமையாதல்: ௨௭. எலீம்ஸ்தானத்திற்பாளயமிறங்கல்.

பார்வோனுடைய குதிரைகளும், அவனுடைய
இரதங்களும், குதிரைவீரரும், சமுத்திரத்திற்பிர
வேசித்தபொழுது, யெகோவா சமுத்திரத்தின்
சலத்தை அவர்கள்மேல்திருப்பினுர். இஸரவேல்
சந்ததியாரோ சமுத்திரத்தின் நடுவே, உலர்ந்த
௨ தரைவழியாகநடந்துபோனுர்கள்.—அப்பொழு
து, இஸரவேல் சந்ததியாரும், மோசேயும், யெ
கோவாவின்மேல் பாடியகவி வருமாறு: யெ
கோவா மகிமையோடுஞ் சயங்கொண்டார். ஆ
தலாலவரைப்பாடுவேன். குதிரையையும், குதி
ரைவீரரையும், சமுத்திரத்திலேதள்ளிவிட்டார்.—
௩ யெகோவாவே என்பலம், என்கீதம். அவரே
என் இரட்சகர்;-அவரே என் தேவன்; அவருக்
கு ஒரு ஆலயமுண்டாக்குவேன்: என் பிதாவின்
தேவனும் அவரே, ஆதலால் அவரை வாழ்த்து
௪ வேன்.—யெகோவா ஒருயுத்தவீரர். யெகோ
௫ வாவே அவர்நாமம்.—பார்வோனின் இரதங்களை
யும், அவன் சேனைகளையும், சமுத்திரத்தில்தள்ளி
விட்டார். அவனுடைய பிரதான சேனுபதிக
ளுஞ்செங்கடலிலே மாண்டுபோனுர்கள்.—ஆழி ௬
அவர்களைமூடிக்கொண்டது. கல்லைப்போல ஆ
ழத்தில் தாழ்ந்து அமிழ்ந்துபோனுர்கள்.—யெ ௭
கோவாவே உமதுவலக்கரம், பலத்தினுல்மகத்து
வஞ்சிறந்திருக்கின்றது. யெகோவாவே, உம
துவலக்கரம், சத்துருவைச் சின்னபின்னப்படுத்
திற்று.-உமக்குமாருக எழுந்தவர்களை, மேன்மை ௮
பொருந்திய உமது மகத்துவத்தினுல் கவிழ்த்தீர்.
நீர் பிரயோகித்தகோபாக்கினி, அரிதாளைப்போ
ல அவர்களைப்பட்சித்தது.—உமது நாசியின்சுவா ௯
சத்தினுல் சலம் குவிந்து நின்றது; வெள்ளம்,
குவியல்போல, நிமிர்ந்து நின்றது: சமுத்திரமத்
தியில் அலைகிறசலம் உறைந்துபோயிற்று.—தொ ௰
டருவேன்; பிடிப்பேன்; கொள்ளையிட்டதைப்
பங்கிடுவேன். அவைகளினுல் என்மனுவாஞ்
சைதிர்த்தியடையும். என்கட்கத்தையுருவுவேன்;
என்கை அவர்களைச்சங்கரிக்குமென்று சத்துரு
சொல்ல;—நீர் உமது காற்றை வீசப்பண்ணி ௰௧
னீர். கடல் அவர்களைமூடிக்கொண்டது. உர
மான சமுத்திரத்தில் ஈயத்தைப்போலத்தாழ்ந்து
போனுர்கள்.-யெகோவாவே, பராக்கிரமசாலி ௰௨
களுக்குள்ளே உமக்கொப்பானவர்யாவர். மாட்
சிமைபொருந்திய பரிசுத்தமுள்ளவரும், பயபத்
தியுடன்துதிக்கப்படத்தக்கவரும் அற்புதங்களைச்
செய்பவருமாகிய உமக்கொப்பானவர்யாவர்.—
நீர் உமதுவலக்கையைநீட்டப் பூமி அவர்களைவி ௰௩
ழுங்கிற்று.—நீர் மீட்டுக்கொண்ட இந்தச்சனங் ௰௪
களை நீர் உமது தயையினுலே நடத்தினீர். நீர்
இவர்களுக்கு வழிகாட்டி, உமதுவல்லபத்தினுல்
உமது பரிசுத்த வாசஸ்தலத்திற்கு நடத்தினீர்.—
சனங்கள் அதைக்கேட்கும்பொழுது நடுங்குவார் ௰௫
கள். பெலிஸ்தியதேசத்தாரைத் திகில்பிடிக்கும்.-
ஏதோமினிராசாக்கள் கலங்குவார்கள். மோவா ௰௬
பின் பராக்கிரமசாலிகளை நடுக்கம்பிடிக்கும். கா
னுன் குடிகள் யாவருங் கரைந்துபோவார்கள்.—
பயமும், திகிலும், அவர்கள்மேல்விழும். யெ ௰௭
கோவாவே, உம்முடைய சனங்கள் கடந்து
போகும்வரைக்கும், நீர் மீட்டசனங்களே, கடந்
துபோகும்வரைக்கும் உமது புயபலத்தினுல், அ
வர்கள் கல்லைப்போல அசைவற்றிருப்பார்கள்.—
யெகோவாவாகிய நீர் உம்முடைய சனங்க ௰௮
ளைக் கொண்டுபோய், வாசம்பண்ணுகிறதற்குநீர்
நியமித்த இடமும், ஆண்டவராயிருக்கிற உமது
கரம் ஸ்தாபித்த பரிசுத்தஸ்தலமுமாகிய, உமது
சுதந்தரமான மலையில்நாட்டுவீர்.—யெகோவா ௰௯
வானவர் என்றைக்கும் அரசாளுகிருர்.

---

(௩௧) யோவா.௨.௰௧.—(௰௫. அதி. ௧.) அதி ௰௪.௨௮,௨௯. (௨) நியா.௫.௧. (௩) உபா.௰.௨௧. சங்.௰௮.௨. சங்.௨௨.௩. ஏசா.௰௨.௨. அபகூ.௩.௰௮,௰௯. ஆதி.௨௮.௨௧,௨௨. சங்.௱௩௨.௫. அதி.௩.௰௫,௰௬. ௨.சாமு.௨௨.௪௭. ஏசா.௨௫.௧. (௪) சங்.௨௪.௮. வெளி.௰௯.௰௧. சங்.௮௩.௰௮. (௫) அதி.௰௪.௨௮. அதி.௰௪.௭. (௬) அதி.௰௪.௨௮. (௭) சங்.௱௰௮.௰௫,௰௬. (௮) உபா.௩௩.௨௬. சங்.௫௯.௰௩. ஏசா.௫.௨௪. (௯) அதி.௰௪.௨௧. யோபு.௪.௯. ௨.தெச.௨.௮. அபகூ.௩.௰. (௰) நியா.௫.௩௰. ஆதி.௪௯.௨௭. ஏசா.௫௩.௰௨. லூக்.௰௧.௨௨. (௰௧) அதி.௰௪.௨௮. (௰௨) ௨.சாமு.௭.௨௨. ௧.இரா.௮.௨௩. எரே.௰.௬. ஏசா.௬.௩. சங்.௭௭.௰௪. (௰௪) ஏசா.௬௩.௰௨,௰௩. சங்.௭௮.௫௪. (௰௫) எண்.௰௪.௰௪. உபா.௨.௨௫. யோசு.௨.௯,௰. (௰௬) ஆதி.௩௬.௪௰. உபா.௨.௪. எண்.௨௨.௩. அபகூ.௩.௭. யோசு.௫.௧. (௰௭) உபா.௨ ௨௫. யோசு.௨.௯. ௧.சாமு.௨௫.௩௭. அதி.௰௯.௫. உபா.௩௨.௯. தீத்.௨.௰௪. ௧.பேதுரு.௨.௯. (௰௮) சங்.௭௮.௫௪. (௰௯) சங்.௰.௰௬. ஏசா.௫௭.௰௫.

௨௰ ஆரோனுடைய சகோதரியும், தீர்க்கதரிசியுமா
கிய மிரியம்தன்கையிலே மிர்தங்கத்தையெடுக்க,
மற்றஸ்திரிகளெல்லாரும், மிர்தங்கங்களையெடுத்
துக்கொண்டு, அவளுக்குப்பின்னேபுறப்பட்டு
௨௧ நடனம்பண்ணிவர;-மிரியம்அவர்களுக்கு, யெ
கோவாவைப்பாடுங்கள். அவர் மகிமையோ
டுஞ் சயங்கொண்டார் குதிரையையும், குதிரை
வீரனையும், சமுத்திரத்தில் தள்ளிவிட்டாரென்று
சொன்னாள்.
௨௨ மோசே,இஸரவேலரோடும்,செங்கடலினின்
றும்புறப்பட்டு ஊர்வனத்திற்குப் பிரயாணஞ்
செய்தான். அவர்கள் மூன்றுநாளளவும் வனத்தி
லேநடந்து, தண்ணீர் அகப்படாமல், மாரா என்
னுமிடத்திற்சேர்ந்தார்கள்.
௨௩ மாராவிலுள்ள நீர் கசப்பாயிருந்ததினால்,அது
குடிக்கக்கூடாமற் போயிற்று; அதனால் அவ்வி
௨௪ டத்திற்கு மாராவென்று பேராயிற்று.-சனங்கள்
மோசேக்கு விரோதமாய் மொறுமொறுத்து, எ
௨௫ தைப் பானம்பண்ணுவோமென்றார்கள்.—மோ
சே, யெகோவாவை நோக்கி, ஓலமிட, யெ
கோவா மோசேக்கு ஒரு மரத்தைக்காண்பித்
தார். அதை அவன் நீரிற்போட்டவுடனே நீர்
மதுரமாயிற்று. அங்கே அவர் அவர்களுக்குப்
பிரமாணத்தையும், நியமத்தையும் விதித்து; அங்
௨௬ கே அவர்களைச்சோதித்து;-நீங்கள் உங்கள் தே
வனாகிய யெகோவாவின் வாக்கை யுற்றுக்
கேட்டு, அவருடைய பார்வைக்குச்செப்பமான
வைகளைச்செய்து, அவருடைய கட்டளைகளுக்
குச் செவிகொடுத்து, அவருடைய நியமங்கள்
யாவையுங் கைக்கொண்டால், நான் எகிப்திய
ருக்குவரப்பண்ணினஉபாதிகளிலொன்றையும்,
உங்களுக்கு வரப்பண்ணேன்: நானேயுங்களைச்
சொஸ்தப்படுத்தும் யெகோவா என்றார்.
௨௭ அவர்கள், பன்னிரண்டு நீரூற்றுக்கண்களும்,
எழுபதுபேரீந்துமரங்களுமிருந்த எலீமிற்சேர்ந்
து, அங்கே நீரருகே பாளயமிறங்கினார்கள்.

## ௰௬. அதிகாரம்.

௧. ஆகாரமில்லாமையால்இஸரவேலர்மொறுமொறுத்தல்: ௪. ஆகாரம் வருஷிப்பேனென்று தேவன் வாக்குத்தத்தஞ்செய்தல்: ௯.மோசே சனங்களுக்குக்கட்டளையிடல்,தேவன் அவர்களுக்குப்பிரசன்னமாதல்: ௰௧. அவர் காடையைவிடுத்தல், மன்னாவருஷிக்கப்படல்: ௰௬. ஆகாரத்துக்களவுகுறித்தல்: ௨௨. ஆறாந்தினத்தில் இருமடங்குசேர்க்கும்படி கட்டளையிடல்: ௨௭. ஏழாந்தினத்தில் ஆகாரம் வருஷியாதொழிதல்: ௩௨. பாத்திரத்தில் மன்னாவையிட்டுப்பேணிக்கொள்ளல்.

பின்பு இஸரவேல்சந்ததியாராகிய சபையாரெல்
லாரும் எலீமைவிட்டுப்பிரயாணம்பண்ணி,தாங்
கள் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட இரண்
டாம்மாதம் பதினைந்தாந்தினத்தில், எலீமுக்கும்,
சீனாயுக்குமிடையேசீன்வனத்திற்சேர்ந்தார்கள்.-
அந்தவனத்தில் இஸரவேல் சந்ததியாராகியசபை ௨
யாரெல்லாரும் மோசேக்கும் ஆரோனுக்கும் வி
ரோதமாக மொறுமொறுத்தார்கள்.-இஸரவேல்சந் ௩
ததியார், நாங்கள் மாமிசபாத்திரங்களுக்கருகேயி
ருந்து, ஆகாரத்தைத் திருத்தியாகப்புசித்துவந்த எ
கிப்துதேசத்திலே, யெகோவாவின் கையால்
இறந்தோமானால் நலம். இந்தக்கூட்டம்முழுவ
தையும் பட்டினியினால் கொல்லத்தக்கதாக, நீங்
களெங்களைப்புறப்படுத்தி, இந்தவனத்திற்கு அ
ழைத்துவந்தீர்களேயென்று சொன்னார்கள்.
அப்பொழுது யெகோவாமோசேயைநோக் ௪
கி, நான் உங்களுக்கு ஆகாரம் வானத்தினின்றும்
வருஷிக்கப்பண்ணுவேன். சனங்கள் புறப்பட்
டு, நாள்வீதம்,சேர்த்துக்கொள்ளவேண்டும். அதி
னால் அவர்கள் என் நியாயப்பிரமாணத்தின்படி
நடப்பார்களோ, மாட்டார்களோவென்று அவர்
களைச் சோதிப்பேன்.—ஆறும்நாளில் அவர்கள் ௫
நாள்தோறுஞ்சேர்த்துக்கொள்வதிலும் இருமடங்
காய்க்கொண்டுவந்து, அதை ஆயத்தம் பண்ணி
வைக்கக் கடவர்களென்றார்.—மோசேயும், ஆ ௬
ரோனும், இஸரவேல் சந்ததியாரெல்லாரையும்
நோக்கி, உங்களை, எகிப்துதேசத்தினின்றும் யெ
கோவா புறப்படச்செய்தாரென்று சாயங்கா
லமே அறிவீர்கள்.-விடியற்காலம் யெகோவா ௭
வின்மகிமையையுங்காண்பீர்கள். யெகோவா
தமக்குவிரோதமாக நீங்கள் குறைகூறினதைக்
கேட்டாரே. நீங்கள்எங்கள்மேல் மொறுமொறுக்
க நாங்கள் எம்மாத்திரமென்றார்கள்.—அன்றியும் ௮
மோசே, புசிப்பதற்குச்சாயங்காலத்தில் இறைச்
சியையும், திருத்தியடைவதற்கு விடியற்காலத்
தில் அப்பத்தையும் யெகோவா உங்களுக்குத்
தரும்பொழுது, இதுவிளங்கும். யெகோவா
வுக்கு விரோதமாய் நீங்கள் மொறுமொறுத்ததை
அவர்கேட்டிருக்கிறார். நாங்களார். உங்கள் மொ
றுமொறுப்புக்கள்எங்களுக்கல்ல, யெகோவா
வுக்கே விரோதமாயிருக்கின்றனவென்றான்.
மோசே ஆரோனிடத்தில், நீ இஸரவேலராகி ௯
ய சபையார் யாவரையும்நோக்கி, யெகோ
வாவின்சந்நிதியிற்சேருங்கள். அவர் உங்கள்மு
றுமுறுப்புக்களைக் கேட்டிருக்கிறாரென்றுசொல்
லென்றான்.—ஆரோன் இஸரவேலராகிய சபை ௰
யாரெல்லாருக்குஞ் சொன்னமாத்திரத்தில்,அவர்
கள் திரும்பிவனத்திற்குநேராய்ப்பார்க்க,அங்கே
யெகோவாவின் மகிமைப் பிரகாசம் மேகத்தி
லே காணப்பட்டது.
யெகோவா மோசேயைநோக்கி, இஸர ௰௧
வேல்சந்ததியாருடைய மொறுமொறுப்புக்களைக்
கேட்டேன்.-சாயங்காலம் நீங்கள் மாமிசத்தைப் ௰௨

(௨௰) நியா.௪.௪. ௧.சாமு.௰௮.௬. நியா.௰௧.௩௪. (௨௪) அதி.௰௬.௩. (௨௫) அதி.௰௪ ௰. சங்.௫௰.௰௫. ௨.இரா.௨. ௨௧. யோசு.௨௪.௨௫. அதி.௰௬.௪. உபா.௮.௨,௰௬. (௨௬) உபா.௭.௰௨,௰௫. உபா.௨௮.௨௭,௬௰. அதி.௨௩.௨௫. சங்.௪௧.௯௪. சங்.௱௩.௩.—(௰௬. அதி. ௨.) சங்.௱௬.௨௫. ௧.கொரி.௰.௰. (௩) புல.௪.௯. (௪) சங்.௭௮.௨௨,௨௩. யோவா.௬.௩௧,௩௨. ௧.கொரி.௰.௩. நீதி.௩௰.௮. மத்.௬.௰௧. உபா.௮.௨,௰௬. (௬) எண்.௰௬.௨௮,௨௯,௩௰. (௭). ஏசா.௩௫.௨. யோவா.௰௧.௪,௪௰. (௮) லூக்.௰.௰௫. ரோ.௰௩.௨. (௰) ௧.இரா.௮.௰.௰௧.

புசித்து, விடியற்காலம் அப்பத்தினால் திருத்தி
யடைவீர்கள். நானே உங்கள் தேவனாகிய யெ
கோவாவென்பதை அறிந்துகொள்வீர்களென்
௰௩ று, நீ அவர்களுக்குச் சொல்லென்றார்.—சாயங்
காலம் காடைகள் வந்து பாளயத்தை மூடிக்
கொண்டன. விடியற்காலத்தில் பாளயமெங்
கும் பனிபெய்திருந்தது. பெய்திருந்தபனிநீங்
கினபின் வனமெங்கும் உறைந்த பனிக்கட்டிக
ளைப்போன்ற சிறு உண்டைகள் தரையிலே கி
௰௪ டந்தன.—இஸ்ரவேல் சந்ததியார் அதைக்கண்
௰௫ டு,—அதை இன்னதென்றறியாதபடியால், ஒரு
வரை ஒருவர், இதென்னவென்றுகேட்க; மோ
சே அவர்களைநோக்கி, இதுதான் யெகோவா
உங்களுக்குப்புசிக்கத்தந்த அப்பம்.
௰௬ யெகோவா விதித்தபடி, நீங்கள் உங்களுங்
கள் கூடாரத்திலுள்ள ஆள்களின் தொகைக்கும்,
அவரவர் புசிக்குமளவுக்கும் ஏற்கத் தலைக்கொரு
ஓமராக, அதிலெடுத்துச் சேர்த்துக்கொள்ளக்கட
௰௭ வீர்களென்றான்.—இஸ்ரவேல் சந்ததியார், அப்
படியேசெய்தார்கள். சிலர்அதிகமாயும், சிலர் கு
௰௮ றைவாயுஞ்சேர்த்தார்கள்.—அதிகமாகச் சேர்த்துக்
கொண்டவர்களுக்கு அதிகமும், குறைவாகச்
சேர்த்துக்கொண்டவர்களுக்குக் குறைவும் ஆகா
தபடி ஓமரினால் அளந்தார்கள். அவரவர் புசிக்
௰௯ குமளவாகச் சேர்க்கப்பட்டது.—மோசே ஒரு
வனும்விடியற்காலமட்டும் அதிலொன்றும்வைக்
கப்படாதென்று அவர்களுக்குச்சொல்லியும்,—
௨௰ சிலர் மோசேயின் சொற்படிசெய்யாமல், விடி
யற்காலமட்டும், அதில் சிறிது சேஷம்வைத்தார்
கள். அதில் கிருமியுண்டாய் நாற்றமெடுத்தது.
அவர்கள்மேல் மோசே கோபங்கொண்டான்.—
௨௧ அதை விடியற்காலந்தோறும் அவரவர் புசிக்கும
ளவுக்குத்தக்கதாகச்சேர்த்தார்கள். வெயில் ஏற
ஏற அது உருகிப்போம்.
௨௨ அவர்கள் ஆறாம்நாளில் ஒவ்வொருவருக்கு
இரண்டு ஓமர்வீதமாய், இருமடங்காக, ஆகாரத்
தைச்சேர்த்தார்கள். சபையிலுள்ள தலைவரெல்
லாரும்போய் அதை மோசேக்கு அறிவிக்க;—
௨௩ அவன் அவர்களைநோக்கி, நாளைக்கு யெகோ
வாவுக்குரிய பரிசுத்த ஓய்வுநாள்; ஆதலால் இன்
றைக்கு நீங்கள் சுடவேண்டுவதைச்சுட்டு, ச
மைக்கவேண்டுவதைச்சமைத்து, சேஷமானயா
வையும் மறுநாளைக்கு உங்களுக்காக வைத்துக்
கொள்ளுங்கள். யெகோவா சொல்லிய கா
௨௪ ரிய மிதுவேயென்றான்.—மோசே இட்டகட்ட
ளைப்படி, அதை மறுநாளைக்குவைத்தார்கள். அ
து நாறவுமில்லை; அதில் கிருமியுண்டாகவுமில்
௨௫ லை.—அப்பொழுது மோசே இன்றைக்கு யெ
கோவாவுக்குரிய ஓய்வுநாள். இன்றுநீங்கள்அ
தைவெளியிலேகாணீர்கள். இன்றைக்கு இதை
௨௬ யேபுசியுங்கள்.—ஆறுநாளும் அதைச் சேர்த்துக்
கொள்ளவேண்டும். ஓய்வுநாளாகிய ஏழாம்நா
ளில் அது அகப்படாதென்றான்.
ஏழாம்நாளில் சனங்களில் சிலர் அதைச்சேர்க் ௨௭
கப்புறப்பட்டார்கள். அவர்கள் கண்டடைய
வில்லை.—யெகோவா மோசேயைநோக்கி, ௨௮
என் கட்டளைகளையும், நியாயப்பிரமாணங்களை
யும் அநுசரித்துக்கொள்ளாமல் எதுவரைக்கும்
மறுப்பீர்கள்.—பாருங்கள், யெகோவா உங் ௨௯
களுக்கு ஓய்வுநாளை அருளினபடியால் அவர் ஆ
றாம் நாளில் உங்களுக்கு இரண்டுநாளுக்கும்
வேண்டிய ஆகாரத்தைத்தருகிறாரே. ஏழாம்நா
ளில் நீங்கள் ஒவ்வொருவரும் உங்களுங்களு
டையஸ்தானத்தைநீங்காமலிருக்கவேண்டுமென்
றார்.—அப்படியே சனங்கள் ஏழாம்நாளில் ஓய்ந் ௩௰
திருந்தார்கள்.—இஸ்ரவேல் வமிசத்தார் அதற்கு ௩௧
மன்னாவென்று பேரிட்டார்கள். அதுகொத்து
மல்லியளவும் வெண்மையுமுள்ளதா யிருந்தது;
அதின் உருசி தேன்கூடிய பணிகாரத்திற்கொப்
பாயிருந்தது.
யெகோவா நான் உங்களைஎகிப்துதேசத்தி ௩௨
னின்றும்புறப்படச்செயது வனத்தில் உங்களுக்
குப்புசிக்கத்தந்தஆகாரத்தைஉங்கள்சந்ததியார்கா
ணும்படிகாத்துக்கொள்ளும்பொருட்டு அவர்கள்
நிமித்தம் அதிலொரு ஓமர்நிரம்ப எடுத்துவைக்க
வேண்டுமென்றுவிதித்திருக்கிறாரென்று மோசே
சொன்னான்.—மேலும் மோசே ஆரோனைநோக் ௩௩
கி, நீஒருபாத்திரத்தையெடுத்து, அதிலொருஓமர்
மன்னாவையிட்டு அதை உங்கள்சந்ததியார்நிமித்
தம் காத்துக்கொள்ளும்படிக்கு யெகோவா
வின்சந்நிதானத்தில் வையென்றான்.—யெகோ ௩௪
வா மோசேக்குவிதித்தபிரகாரம் காத்துக்கொள்
ளும்படிக்கு ஆரோன் அதைச்சாட்சிப்பெட்டிக்
குமுன்வைத்தான்.—இஸ்ரவேல்சந்ததியாரும் தங் ௩௫
கள் வாசஸ்தானமாகியதேசத்திற்கு வரும்வரைக்
கும், நாற்பதுவருஷமளவும், மன்னாவைப்புசித்
தார்கள். அவர்கள் கானான்தேசத்தின்எல்லையில்
சேரும்வரைக்கும், மன்னாவைப்புசித்தார்கள்.—
ஒருஓமரானது, ஏபாவிற்பத்திலொருபங்கு. ௩௬

## ௰௭. அதிகாரம்.

௧. இரிவீதீமிலே நீரில்லாமையால்மொறுமொறுத்தல்: ௫. ஓரேபின்கன்மலைக்குத் தேவன் நீருக்காக மோசேயையனுப்பல்: ௮. அம்லேக்கியரைச்செயித்தல்: ௰௪. மோசே யெகோவாவுக்கு வேதிகையுண்டாக்கல்.

பின்புஇஸ்ரவேலராகியசபையாரெல்லாரும்தங் ௧
களுக்குயெகோவாஅருளியவாக்கின்படி,பிர
யாணம்பண்ணி,சீன்வனத்தைவிட்டுப்புறப்பட்
டு, இரிவீதீமிற்சென்று பாளயமிறங்கினார்கள்.
அங்கேசனங்கள்குடிக்கத்தண்ணீர் இல்லை.-ஆத ௨
லால்மோசேயுடனே சனங்கள்வாதாடி,நாங்கள்
குடிக்க எங்களுக்குத்தண்ணீர் வேண்டுமென்று

(௰௫) யோவா.௬.௩௧,௪௯,௫௮. ௧.கொரி.௰.௩. (௰௬) வச.௩௬. (௰௮) ௨.கொரி.௮.௰௫. (௨௩) ஆதி.௨.௩. அதி. ௨௰.௮. (௨௮) ௨ இரா.௰௭.௰௪. (௩௩) எபி.௯.௪. (௩௪) அதி.௨௫.௰௬,௨௧. ௧.இரா.௮.௯. (௩௫) எண்.௩௩.௩௮. யோவா.௬.௩௧,௪௯. யோசு.௫.௰௨.—(௰௭. அதி. ௧.) அதி.௰௬.௧. (௨) உபா.௬.௰௬. சங்.௭௮.௰௮,௪௧. மத்.௪.௭. ௧.கொரி.௰.௯.

சொல்ல; மோசே ஏன் நீங்கள் என்னோடே வா
துபண்ணுகிறீர்கள்; ஏன் யெகோவாவைச்
௩ சோதிக்கிறீர்க ளென்றான்.—சனங்கள் அவ்வி
டத்தில்தண்ணீர்த்தாகமாயிருந்ததினால்,அவர்கள்
மோசேக்கு விரோதமாய் முறுமுறுத்து, நீர்
எங்களையும், எங்கள் பிள்ளைகளையும், ஆடுமாடுக
ளையுந் தண்ணீர்த்தாகத்தினால், கொல்லத்தக்கதா
க எகிப்தினின்றும்புறப்படுத்தினதென்னவென்
௪ றார்கள்.—மோசே யெகோவாவை நோக்கி,
ஓலமிட்டு, இந்தச்சனங்களுக்கென்ன செய்வே
ன். இவர்கள் என்மேற் கல்லெறியப்பார்க்கிறார்
௫ கள் யென்றான்.—யெகோவா மோசேயை
நோக்கி, இஸரவேலரின் முதியோரில் சிலரை
உன்னுடன் கூட்டிக்கொண்டு, அந்த நதியை
யடித்த உன்கோலைக்கையில்பிடித்து சனங்களுக்
௬ கு முன்னே நடந்துபோ;—அங்கே ஓரேபுமலை
யில் நான் உனக்குமுன்பாகக் கல்லின்மேல் நிற்
பேன். அந்தக்கன்மலையில் அடி; அப்பொழுதுச
னங்கள் குடிக்கும்படிக்கு, அதிலிருந்துதண்ணீர்
புறப்படுமென்றார். அப்படியேமோசே இஸரவே
௭ லரின்முதியோர்முன்னிலையில்செய்தான்-இஸர
வேல்சந்ததியார்வாதுபண்ணினதின்நிமித்தமும்,
யெகோவாஎங்களுக்குள்ளிருக்கிறாராஇல்லை
யாவென்று, அவர்கள் யெகோவாவைச்சோ
தித்ததினிமித்தமும், அவனந்தஸ்தானத்திற்குமா
சாவென்றும்மேரிபாவென்றும்பேரிட்டான்.
௮ அம்லேக்கியர்இரிவீதீமிலேஇஸரவேலருடன்
௯ யுத்தம்பண்ணவந்தார்கள்.-மோசேயோசுவாவை
நோக்கி, நீ நமக்காகமனிதரைத் தெரிந்தெடுத்துப்
புறப்பட்டு, அமலேக்கருக்குவிரோதமாக யுத்தம்
பண்ணு. நாளைக்கு நான் மலையுச்சியில் தேவ
னுடைய கோலை என்கையில் பிடித்துக்கொண்
௰ டுநிற்பேனென்றுசொன்னான்.-யோசுவாதனக்கு
மோசே சொன்னபடிசெய்து, அமலேக்கருடன்
யுத்தம்பண்ண; மோசேயும்,ஆரோனும், ஊரென்
௰௧ பவனும், மலையுச்சியிலேறினார்கள்.—மோசே
தன்கையை உயர்த்துகையில், இஸரவேலர் மேற்
கொண்டார்கள். அவன் தன்கையைத் தாழ்த்து
கையில், அமலேக்கர் மேற்கொண்டார்கள்.—
௰௨ மோசேயினுடைய கைகள் திமிர்கொண்டபடி
யால் அவர்கள் ஒருகல்லைக்கொண்டுவந்துஅவன்
கீழ்வைக்க, அதின்மேலிருந்தான். ஆரோனும்,
ஊரும், ஒருவன் வலப்பக்கத்திலும், ஒருவனி
டப்பக்கத்திலுமாயிருந்து, அவனுடைய கைக
ளைத்தாங்கினார்கள். இவ்விதமாய் அவனுடைய
கைகள் சூரியன் அஸ்தமனபரியந்தம் அசையா
௰௩ திருந்தன.—யோசுவா, அமலேக்கையும், அவன்
சனங்களையும், கட்கத்தின்வாயினாலே முறிய அ
டித்தான்.
௰௪ யெகோவாமோசேயைநோக்கி,அமலேக்க
ரென்னும்பேரும் வானத்தின்கீழெங்குமிராமல்,
நான் நிச்சயமாய் அவர்களை நிருமூலமாக்குவே
னென்பதை நினைக்கும்படிக்கு, நீ ஒருபுத்தகத்
தில்எழுதி,யோசுவாவின் செவியிலேறவுஞ்செய்
யென்றார்.—மோசேயொருவேதிகையைக்கட்டி, ௰௫
அமலேக்கின்கை யெகோவாவின் ஆசனத்
துக்கு விரோதமானபடியால்,—தலைமுறைதோ ௰௬
றும் அவர்களுக்கு விரோதமாக, யெகோவா
யுத்தஞ்செய்வாரென்றுசொல்லி,அதற்கு யெகோ
வாநிசியென்றுபேரிட்டான்.

## ௰௮. அதிகாரம்.

௧. மோசேயை அவன்மனைவியும் புத்திரரும் மாம
னுங்காணவருதல்: ௭. மோசே அவர்களையெ
திர்கொண்டு உபசரித்தல்: ௰௩. எத்திரோ மோ
சேக்குப் புத்திசொல்லல்: ௨௭. எத்திரோ தன்
தேசத்துக்குத் திரும்பிப்போதல்.

மீதியானில் ஆசாரியனும், மோசேயின் மாமனு ௧
மாகிய எத்திரோ, தேவன் மோசேக்கும், தம்மு
டைய சனங்களாகிய இஸரவேலருக்குஞ்செய்த
யாவையும்,இஸரவேலர் எகிப்தினின்றும்புறப்ப
டச்செய்ததையுங் கேள்விப்பட்டான்.-அப்பொ ௨
ழுது மோசேயின்மாமனாகியஎத்திரோ, மோசே
யினாலேதிரும்ப அனுப்பிவிடப்பட்ட அவன்ம
னைவியாகிய சிப்போராளையும்,—அவன் அந்நிய ௩
தேசத்தில் பரதேசியானேனென்று சொன்னபடி
யினாலே கேர்ஷோமென்றும்,-என் பிதாவின் தே ௪
வ ன் எனக்குத்துணையாகி என்னைப் பார்வோனு
டைய கட்கத்துக்குத்தப்புவித்தாரென்று சொன்
னபடியினாலே, எலீயேசரென்றும் பெயர்பெற்
ற அவன் புத்திரரிருவரையுங் கூட்டிக்கொண்டு
புறப்பட்டான்.—மோசேக்கு மாமனாகிய எத்தி ௫
ரோ மோசேயின் புத்திரரோடும், அவன்மனைவி
யோடும், அவன்பாளயமிறங்கியிருந்தவனத்தில்,
தேவமலையைச் சமீபித்து,—எத்திரோ என்னும் ௬
உன்மாமனாகியநானும், உன்மனைவியும், அவள்
குமாரரிருவரும், உன்னிடத்தில்வருகிறோமென்
று மோசேயிடத்தில் சொல்லியனுப்ப;
மோசே தன் மாமனை யெதிர்கொண்டுபோய், ௭
அவனைவணங்கி முத்தஞ்செய்தான். அவர்கள்அ
வரவர் சுகச்செய்திகளைவிசாரித்துக்கொண்டு கூ
டாரத்தில் பிரவேசித்தார்கள்.—இஸரவேலர்நிமித் ௮
தம் யெகோவா பார்வோனுக்கும், எகிப்திய
ருக்குஞ் செய்தயாவையும், வழியிலேதாங்கள்
பட்டபாடுகளையும், தங்களை யெகோவா இ
ரட்சித்ததையும், மோசே தன் மாமனுக்குவிவர
மாய்ச்சொன்னான்.-யெகோவா இஸரவேல ௯
ரை எகிப்தியருடைய கைக்குத்தப்புவித்து, அ
வர்களுக்குச்செய்த சகல நன்மைகளையுங்குறித்
து, எத்திரோ சந்தோஷப்பட்டான்.—அன்றியும் ௰
எத்திரோ எகிப்தியருடைய கைக்கும், பார்வோ
னுடைய கைக்கும் உங்களைத்தப்புவித்து,எகிப்தி
யருடைய கைக்குட்பட்டிருந்த இந்தச்சனங்க

(௪) ஆதி.௰௪.௰௫. ௧.சாமு.௩௰.௬. யோவா.௮.௫௯. (௫) எசேக் ௨.௬. அதி.௭.௨௰. (௬) ௧.கொரி.௰.௪. (௭) எபி.
௩.௯. (௮) ஆதி.௩௬.௰௨. ௧.சாமு.௰௫.௨. (௯) எபி.௪.௮. (௰௧) யாக்.௫.௰௬. (௰௪) அதி.௩௪.௨௭. ௧.சாமு.௰௫.
௩.௭ (௰௫) நியா.௬.௨௪.—(௰௮. அதி. ௧.) அதி.௨.௰௬. அதி.௩.௧. (௨) அதி.௪.௨௬. (௩) அதி.௨.௨௨. (௫) அதி.
௩.௧,௰௨. (௭) ஆதி.௨௯.௰௩. ஆதி.௪௩.௨௭. (௮) ஆதி.௪௪.௩௪. (௰) ஆதி.௰௪.௨௰. லூக்.௧.௬௮.

ளைவிடுவித்த யெகோவா துதிக்கப்படக்கட
௰௧ வர்.—அவர்கள் அகந்தையாய்ச்செய்தகாரியங்க
ளில்அவர்களைமேற்கொண்டபடியால், யெகோ
வா எல்லாத்தேவர்களிலும்,பெரியவரென்பதை
இப்பொழுது அறிந்துகொண்டேனென்றான்.—
௰௨ பின்புமோசேயின்மாமனாகிய எத்திரோசருவாங்
க தகனபலியையும், மற்றைப்பலிகளையும், தேவ
னுக்குக்கொண்டுவந்தான்.
௰௩ ஆரோனும், இஸரவேலரின் முதியோரனைவ
ருஞ்சேர்ந்து, மோசேயின்மாமனுடனே, தேவ
னுடைய சமூகத்தில், போசனஞ்செய்தார்கள்.
மற்றைநாள் மோசே சனங்களுக்கு நியாயந்தீர்க்
கும்படிவீற்றிருந்தான்.சனங்கள் காலைமுதல் மா
௰௪ லைமட்டும், மோசே அருகேநின்றார்கள்.—சனங்க
ளுக்கு அவன்செய்தயாவையும், மோசேயின்மா
மன்கண்டு, நீ சனங்களுக்கு இப்படிச்செய்கிற
தென்ன; நீ யொருவன்மாத்திரம் வீற்றிருக்கிற
தேது; சனங்களெல்லாங் காலைமுதல் மாலைமட்
டும், உன் அருகே நிற்கவேண்டியதென்னவென்
௰௫ றுகேட்க;—மோசே தன் மாமனைநோக்கி, தேவ
னிடத்தில் நியாயம் விசாரிப்பிக்கச் சனங்கள்
௰௬ என்னிடத்தில் வருகிறார்கள்.—அவர்களுக்குயா
தொருகாரியமுண்டானால் என்னிடத்தில் வரு
வார்கள். நான்அவனவனுக்குத்தக்க நியாயந்தீர்த்
து, யெகோவாவுடையகட்டளைகளையும், வி
திப் பிரமாணங்களையுந் தெரிவிக்கிறேனென்
௰௭ றான்.—அதற்கு மோசேயின்மாமன்,நீ இப்படிச்
௰௮ செய்கிறது நல்லதல்ல.—இது உனக்குமிகவும்
பாரமானகாரியம். ஆகையால் நீயும், உன்னோ
டிருக்கிற இந்தச்சனங்களும், மெலிந்துபோவீர்
கள். நீ தனியே அதை நடப்பிக்கமாட்டாய்.—
௰௯ என்சொல்லைக்கேள்: உனக்குப்புத்திசொல்லுகி
றேன். தேவனும், உன் பட்சத்திலிருப்பார்.
சனங்கள்நிமித்தம் நீ தேவன் பட்சத்திலிருந்து
அவர்களுடைய காரியங்களைத் தேவனுக்கு
௨௰ முற்படுத்தி,-கட்டளைகளையும்,விதிப்பிரமாணங்
களையும், அவர்களுக்குணர்த்தி, அவர்கள் நடக்க
வேண்டிய வழியையும், அவர்கள் செய்யவேண்
டிய கிரியையையும், அவர்களுக்குத்தெரிவி.—
௨௧ மேலும் சகல சனங்களுக்குள்ளும் தேவனுக்
குப் பயப்படுகிறவர்களும், உண்மையுள்ளவர்க
ளும், பொருளாசையை வெறுப்பவர்களும், சா
மர்த்தியருமாகியபுருஷரை நீ தெரிந்து; அவர்க
ளை ஆயிரம்பேய்ருக்கதிபதிகளாகவும், நூறுபேய்
ருக்கதிபதிகளாகவும், ஐம்பதுபேய்ருக்கதிபதி
களாகவும், பத்துபேய்ருக்கதிபதிகளாகவும், ச
௨௨ னங்கள்மேலே ஏற்படுத்து.—அவர்களே, எப்
பொழுதுஞ் சனங்களுக்கு நியாயந்தீர்க்கக்கட
வர்கள். பெரியகாரியங்கள்யாவையும் உன்னி
டத்திற் கொண்டுவரவும், அற்பகாரியங்கள் யா
வையும், தாங்களே தீர்க்கவுங்கடவர்கள். அவர்
கள் உன்னுடைய பாரத்தைக்கூடச்சுமந்தால்,
உனக்கு இலகுவாயிருக்கும்.—இந்தப்பிரகாரமாக ௨௩
நீ செய்வதும், இப்படித் தேவனுனக்குக்கட்ட
ளையிடுவதுமுண்டானால், உன்னாலே தாங்கிக்
கொள்ளக்கூடும். இந்தச்சனங்கள்யாவருஞ்சமா
தானத்துடன், தாங்கள் போகுமிடத்திற்சேர்வார்
களென்றான்.—மோசே தன் மாமன் சொன்ன ௨௪
தைக்கேட்டு, அவன் சொன்னபடி யெல்லாஞ்
செய்தான்.—இஸரவேலரெல்லாரிலுஞ் சாமர்த் ௨௫
திய புருஷரை, மோசேதெரிந்து, சனங்களுக்
குத்தலைவர்களாயிருக்கும்படி, அவர்களை ஆயிரம்
பேய்ருக்கதிபதிகளாகவும், நூறுபேய்ருக்கதிபதி
களாகவும்.ஐம்பதுபேய்ருக்கதிபதிகளாகவும்,பத்
துபேய்ருக்கதிபதிகளாகவும் ஏற்படுத்தினான்.—
அவர்கள் எப்பொழுதுஞ்சனங்களுக்கு நியாயந் ௨௬
தீர்த்துவந்தார்கள்;பெருங்காரியங்களைமாத்திரம்,
மோசேயினிடத்தில் கொண்டுவந்தார்கள்;அற்ப
காரியங்கள்யாவையுந் தாங்களே தீர்த்தார்கள்.
பின்பு மோசே தன்மாமனை அனுப்பிவிட, அ ௨௭
வன் திரும்பத்தன்தேசத்துக்குப்போனான்.

## ௰௯. அதிகாரம்.

௧. சனங்கள் சீனாய்மலையிற்சேர்ந்து அங்கே தேவ வாக்குப்பெறுதல்: ௭. சனங்கள் சொல்லும் உத்தரத்தைத் தேவசமூகத்தேறச்செய்தல்: ௰. சனங்கள் தங்களைச்சுத்திசெய்யும்படிக்கும் சீனாய்மலைக்குச் சமீபத்தில் வராதபடிக்குங் கட்டளையிடல்: ௰௪. தேவன் சனங்களுக்குப் பிரத்தியட்சமாய்ச் சீனாய்மலையின்மேல் வெளிப்படல்.

இஸரவேல்சந்ததியார் எகிப்துதேசத்தினின்றும் ௧
புறப்பட்ட மூன்றாம்மாதத்தில், முதலாம்நாளி
லே, சீனாய் வனத்திற்சேர்ந்தார்கள்.—அவர்கள் ௨
இரிவீதீமைவிட்டுப்புறப்பட்டு, சீனாய் வனத்திற்
போய் அந்தவனத்திலிறங்கினார்கள். இஸரவே
லர் அங்கே மலைக்கெதிராகப் பாளயமிறங்கிய
பின்பு, மோசே தேவசந்நிதியிலேறினான்.—யெ ௩
கோவா மலையிலிருந்து அவனை அழைத்து,
நீ யாக்கோபின் வமிசத்தாராகிய இஸரவேல்சந்
ததியாரைநோக்கி,—நான் எகிப்தியருக்குச்செய் ௪
ததையும், கழுகுகள், தங்கள் சிறகுகளின்மேல்
சுமப்பதுபோல, நானுங்களைத்தாங்கிவந்து, என்
னிடத்தில் சேர்த்துக்கொண்டதையும், நீங்கள்
கண்டிருக்கிறீர்கள்.—இனி நீங்கள் என் வாக் ௫
குக்கு உள்ளபடியமைந்து என் உடன்படிக்கை
யைக்காத்துக்கொள்வீர்களாகில், சகலசனங்களி

(௰௧) அதி.௧.௰. அதி.௫.௨. அதி.௰௪.௮,௰௮. ௧.சாமு.௨.௩. லூக்.௧.௫௧. (௰௩) உபா.௰௨.௭. (௰௬) அதி.௨௩.௭. உபா.௰௭.௮. ௨.சாமு.௰௫.௩. அப்.௰௮.௰௫. ௧.கொரி.௬.௧. (௰௯) அதி.௩.௰௨. அதி.௪.௰௬. உபா.௫.௫. எண். ௨௭.௫. (௨௰) உபா.௪.௧. சங்.௱௪௩.௮. உபா.௧.௰௮. (௨௧) வச.௨௫. உபா.௧.௰௫,௰௬. உபா.௰௬.௰௮. ௨.நாளா. ௰௯.௫—௰. அப்.௬.௩. ஆதி.௪௨.௰௮. எசேக்.௰௮.௮. உபா.௰௬.௰௯ (௨௨) எண்.௰௧.௰௭. (௨௩) ௨.சாமு.௰௯.௯. (௨௭) எண்.௰.௨௯,௩௰.—(௰௯. அதி. ௨.) அதி.௰௭.௧,௮. அதி.௩.௧,௰௨. (௩) அதி.௨௰.௨௧. அதி.௩.௪. (௪) உபா. ௩௨.௰௧. எசா.௬௩.௯. (௫) உபா.௫.௨. உபா.௪.௨௰. உபா.௩௨.௮,௯. எசா.௪௧.௮. மல்.௩.௰௭. தீத்.௨.௰௪.

லும் நீங்களே எனக்கு அருமையான பொக்கிஷ
௬ மாவீர்கள்.—பூமிமுழுவதும் என்னுடையதாயி
ருந்தும், நீங்களே என் ஆசாரிய ராச்சியமும், ப
ரிசுத்தசாதியுமாயிருப்பீர்களென்று, அவர்களுக்
கு அறிவி. நீ இஸரவேல்சந்ததியாருக்குச்சொல்
லவேண்டிய வாக்குகளிவையே என்றார்.
௭ மோசேபோய்ச் சனங்களின் முதியோரை அ
ழைப்பித்து, தன்னிடத்தில் யெகோவா கற்
பித்தவாக்குகள் யாவையும், அவர்கள்முன்னிற்
௮ கப்பிரஸ்தாபம்பண்ணினான்.—அதற்கு உத்தர
மாகச்சகலசனங்களும் ஏகமாய், யெகோவா
சொல்லியயாவையும் செய்வோமென்று சொன்
னார்கள். மோசே சனங்கள்சொன்ன வாக்குகளை
யெகோவாவின் சமுகத்தில்தெரிவித்தான்.—
௯ யெகோவா மோசேயைநோக்கி,நான்உன்னு
டனே சம்பாஷிக்கும்பொழுது, சனங்கள்கேட்
டு, உன்னையெப்பொழுதும் விசுவாசிக்கும்பொ
ருட்டு நான் கார்மேகத்தில் உனக்கு வெளிப்படு
வேனென்றுசொன்னார். சனங்கள்சொன்னவாக்
குகளைமோசேயெகோவாவுக்குச்சொன்னான்.
௰ யெகோவா மோசேயைநோக்கி, மூன்றாம்
நாளில் யெகோவா சகலசனங்களுக்கும் பிரத்
தியட்சமாகச்சீனாய்மலையின்மேல் இறங்குவார்.-
௰௧ ஆதலால் நீ சனங்களிடத்தில்போய், இன்றைக்
கும், நாளைக்கும், அவர்கள் தங்கள் தங்கள் வஸ்
திரங்களைத் தோய்க்கும்படிசெய்து, அவர்களைப்
பரிசுத்தப்படுத்தி மூன்றாம்நாளுக்கு ஆயத்தமாயி
௰௨ ருக்கும்படிசெய்வாயாக.—நீ சனங்களைநோக்கி,
நீங்கள் மலையில் ஏறாதபடிக்கும், அதினடிவா
ரத்தைத்தொடாதபடிக்கும்,எச்சரிக்கையாயிருங்
கள் என்று சொல்லி, அதின்சுற்றிலும் ஒரு எல்
லையைக்குறித்துவிடு. மலையைத்தொடுகிறவனெ
வனும் நிச்சயமாகக்கொலைசெய்யப்படுவான்.—
௰௩ ஒரு கையுந் தீண்டலாகாது. தீண்டினால், அ
வன் நிச்சயமாய்க் கல்லெறியப்படவேண்டும்;
அல்லது ஊடுருவ எய்யப்படவேண்டும். மிருக
மானாலும் மனுஷனானாலும் உயிரோடிருக்கவி
டப்படாது. எக்காளம் நெடுந்தொனிசெய்யும்
பொழுது, அவர்கள் மலைக்குச்சமீபத்தில் வரக்க
டவர்களென்றார்.
௰௪ மோசே மலையினின்றுமிறங்கிச்சனங்களிடத்
தில்போய்,அவர்களைப்பரிசுத்தப்படுத்தினான்: அ
வர்கள்தங்கள் வஸ்திரங்களைத்தோய்த்தார்கள்.—
௰௫ அவன்சனங்களைநோக்கி, மூன்றாம்நாளுக்கு ஆ
யத்தமாயிருங்கள். ஸ்திரிகளிடத்திற்சேராதிருங்
௰௬ களென்றான்.—மூன்றாம்நாள் விடியற்காலத்தில்
பாளயத்திலிருந்தசனங்களெல்லாம் நடுங்க,இடி
முழக்கமும், மின்னலும், மலையின்மேல்கார்மே
கமும், உரத்த எக்காளசத்தமும், தோன்றின.—
சனங்கள் தேவனுக்குமுற்படும்படி,மோசேஅ ௰௭
வர்களைப் பாளயத்தினின்றும் புறப்படச் செய்
தான். அவர்கள்மலையடிவாரத்தில்நின்றார்கள்.—
யெகோவா சீனாய்மலையின்மேல் அக்கினியுடன் ௰௮
இறங்கினபடியினாலே, அதுமுழுவதும்புகைமய
மாயிருந்தது. அந்தப்புகை சூளையின்புகையைப்
போலெழும்பிற்று.—மலைமுழுவதும் மிகவும் அ ௰௯
திர்நதது. எக்காளசத்தம் வரவர உரங்கொண்டு
தொனித்தது. மோசேபேசினான். தேவன் அ
வனுக்குவாக்கினால் உத்தரங்கொடுத்தார்.—யெ ௨௰
கோவா சீனாய்மலையுச்சியில்இறங்கினார். யெ
கோவா மலையுச்சியில் மோசேயைவர அழைத்
தார். மோசேயேறிப்போனான்.—யெகோவா ௨௧
மோசேயைநோக்கி, இறங்கிப்போய்ச்சனங்கள்
பார்க்கிறதற்காக எல்லையைக்கடந்து,யெகோ
வாவினிடத்தில்வராதபடிக்கும், அவர்களில் அ
நேகர் விழாதபடிக்கும்,அவர்களுக்குக் கட்டளை
யிடு.—யெகோவாவின் சமுகத்தில் வருகிற ௨௨
ஆசாரியர்களும், தங்களைப் பரிசுத்தப்படுத்திக்
கொள்ளவேண்டும். இல்லாவிட்டால்,யெகோ
வா அவர்கள்மேற்பாய்ந்துவிழுவார்.—மோசே ௨௩
யெகோவாவைநோக்கி, மலையைச்சூழ எல்
லைகுறித்துவிட்டு, அதைச்சுத்திகரியுங்களென்று
நீர் எங்களுக்குக்கட்டளையிட்டிருக்கிறீர்; ஆகை
யால் சனங்கள் மலையின்மேலேறிவரமாட்டார்
களென்றுசொன்னான்.—யெகோவா அவனை ௨௪
நோக்கி, நீயிறங்கிப்போ. பின்பு நீயும், ஆரோ
னுங், கூடிஏறிவாருங்கள். ஆசாரியரும், சனங்
களும், எல்லையைக்கடந்து, யெகோவாவி
டத்தில்வராதிருக்கக்கடவர்கள்; வந்தால், அவர்
அவர்கள்மேல் பாய்ந்துவிழுவாரென்றார்.—மோ ௨௫
சே இறங்கிச் சனங்களிடத்திற்போய், அப்படி
யே அவர்களுக்குச்சொன்னான்.

## ௨௰. அதிகாரம்.

௧. பத்துக்கட்டளையின் முதற்பகுதி: ௰௨. பத்துக்கட்டளையின் இரண்டாம்பகுதி: ௰௮. சனங்கள் பயப்படுகையில் மோசே அவர்களைத்தேற்றல்: ௨௨. விக்கிரகாராதனையை விலக்கல்: ௨௪. தேவவேதிகைவகுக்கும்விதி.

பின்பு தேவன், ௧
நீ அடிமையாயிருந்த இடமாகிய எகிப்துதே ௨
சத்தினின்றும், உன்னைப்புறப்படச்செய்த யெ
கோவாவாகியநானேஉன் தேவன்.—என்னை ௩
யன்றி, நீ வேறு தேவர்களைப்பற்றிக்கொள்ள
வேண்டாம்.
தொழிற்படுத்தியஎந்தவிக்கிரகத்தையாகிலும்; ௪
மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமிக்

(௬) சங்.௨௪.௧. ௧.பேது.௨.௫,௯. லேவி.௨௰.௨௪,௨௬. ஏசா.௬௨.௰௨. ௧.கொரி.௩.௰௭. (௯) அதி.௨௰.௨௧. மத். ௰௭.௫. உபா.௪.௰௨,௩௬. யோவா.௰௨.௨௯,௩௰. (௰) வச.௰௬,௰௮. உபா.௩௩.௨. (௰௧) லேவி.௰௧.௪௪,௪௫. எபி.௰. ௨௨. வச.௰௪. (௰௨) எபி.௰௨.௨௰. (௰௩) வச.௰௬.௰௧. (௰௪) வச.௰. (௰௫) வச.௰௧. ௧.சாமு.௨௧.௪,௫. ௧.கொரி. ௭.௫. (௰௬) எபி.௰௨.௰௮,௰௯. வெளி.௪.௫. ௨.நாளா.௫.௰௪. எபி.௰௨.௨௧. (௰௭) உபா.௪.௰. (௰௮) உபா.௪.௰௧. ௬௪.௧,௨. அதி.௩.௨. ஆதி.௰௫.௰௭. வெளி.௰௫.௮. (௰௯) எரே.௪.௨௪. எபி.௰௨.௨௬. எபி.௰௨.௨௧. (௨௧) அதி.௩. ௫. ௧.சாமு.௬.௰௯. (௨௨) லேவி.௰.௩. ௨.சாமு.௬.௭,௮. (௨௩) வச.௰௨. யோசு.௩.௪.—(௨௰. அதி. ௨.) லேவி. ௨௬.௧,௰௩. ஓசி.௰௩.௪. அதி.௰௩.௩. (௩) ௨.இரா.௰௭.௩௫. எரே.௨௫.௬. (௪) லேவி.௨௬.௧. உபா.௪.௰௬. சங்.௯௭.௭.

குக்கீழே, சலத்திலுமுள்ள எந்த வஸ்து வின்பி
ரதிரூபத்தையாகிலும்,நீஉனக்குண்டாக்கவேண்
டாம். நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்க
௫ வும்வேண்டாம்.-உன்தேவனும்யெகோவா
வுமாகிய நான், பிதாக்கள்செய்தஅதிக்கிரமத்தை,
என்னைப்பகைக்கிற பிள்ளைகளிடத்தில், மூன்று
நாலு தலைமுறைவரைக்கும், விசாரிக்கிற எரிச்ச
௬ லுள்ள தேவனாயிருக்கிறேன்.—என்னிடத்தில்
அன்புவைத்து, என்கட்டளைகளைக் காத்துக்கொ
ள்ளுகிறவர்களுக்கு, ஆயிரந் தலைமுறைவரைக்
கும், தயைசெய்கிறவராயிருக்கிறேன்.

௭ உன் தேவனாகிய யெகோவாவின் நா
மத்தைவிணாய்வழங்காயாக. யெகோவா தம
து நாமத்தைவீணாய் வழங்குகிறவனைத்தண்டியா
மல்விடார்.

௮ ஓய்வுநாளைப்பரிசுத்தமாய் ஆசரிக்க நினைப்பா
௯ யாக.-ஆறுநாளும்,நீவேலைசெய்து,உன் சகலகிரி
௰ யைகளையும் நடத்துவாயாக.—ஏழாம்நாள், உன்
தேவனாகிய யெகோவாவின் ஓய்வுநாள்: நீ
யானாலும், உன்புத்திரனானாலும், உன்புத்திரியா
னாலும், உன் பணிவிடைக்காரனானாலும், உன்ப
ணிவிடைக்காரியானாலும், உன் மிருகஜீவனானா
லும், உன் வாசல்களிலுள்ள பரதேசியானாலும்,
அதிலே யாதொரு வேலையையுஞ்செய்யவேண்
௰௧ டாம்.—யெகோவா வானத்தையும், பூமியை
யும், சமுத்திரத்தையும், அவைகளிலுள்ளயாவை
யும்,ஆறுநாளில் உண்டாக்கி, ஏழாம்நாளில் ஓய்ந்
திருந்தார்: அதினால் யெகோவா ஓய்வுநாளை
ஆசீர்வதித்து, அதைப்பரிசுத்தப்படுத்தினார்.

௰௨ உன்தேவனாகிய யெகோவா உனக்குஅ
ளிக்குந்தேசத்தில் உன்னாயுசுநீடித்திருப்பதற்கு,
உன் பிதாவையும், மாதாவையும், கனம்பண்ணு
வாயாக.

௰௩ கொலை செய்யாயாக.

௰௪ விபசாரஞ்செய்யாயாக.

௰௫ களவு செய்யாயாக.

௰௬ பிறனுக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சிசொ
ல்லாயாக.

௰௭ பிறனுடைய வீட்டையிச்சியாயாக; பிறனு
டைய மனைவியையும், அவன் பணிவிடைக்கா
ரனையும், அவன் பணிவிடைக்காரியையும், அவ
னுடைய எருதையும், அவனுடைய கழுதையை
யும், பிறனுடைய மற்றெந்தப்பொருளையும், இச்
சியாயாக என்னும் இவ்வாக்குகள்யாவையும் அ
ருளிச்செய்தார்.

௰௮ சனங்களெல்லாரும்,இடிமுழக்கத்தையும்,எக்
காள சத்தத்தையும், மின்னலையும், மலை புகை
கிறதையுங்கண்டார்கள். அதைக்கண்டு, சனங்
கள் பயத்தோடேபின்வாங்கித்தூரத்தில்நின்று,—
மோசேயைநோக்கி, நீரே எங்களோடே பேசும். ௰௯
நாங்கள்கேட்போம். தேவன் எங்களுடனே
பேசாதபடிபண்ணும். நாங்கள் இறந்துபோவோ
மென்றார்கள்.-அதற்கு மோசே,பயப்படாதிருங் ௨௰
கள்; உங்களைச்சோதிக்கும்பொருட்டும், பாவஞ்
செய்யாமல், தம்மைப்பற்றும் பயம் உங்களுக்கு
ளிருக்கும்பொருட்டும், தேவனிப்படித்தோன்
றினாரென்றான்.—சனங்கள் தூரத்தில் நிற்க, மோ ௨௧
சே, தேவனிருந்த கார்மேகத்தைச்சமீபித்தான்.

அப்பொழுதுயெகோவாமோசேயைநோக் ௨௨
கி, நீங்கள் இஸரவேல்சந்ததியாரிடத்தில், நான்
வானத்திலிருந்து உங்களுடனே பேசினதைக்
கண்டீர்கள்.—நீங்கள் என்முன்னிலையில், வெள் ௨௩
ளியினாலே தெய்வங்களையும், பொன்னினாலே
தெய்வங்களையும் உங்களுக்குண்டாக்கலாகாது.

நீங்கள் எனக்கு மண்ணினால் ஒருவேதிகை ௨௪
செய்து, அதின்மேல் உங்கள் ஆடுமாடுகளை, தக
னபலியாகவும், ஸ்தோத்திரபலியாகவுஞ்செலுத்
துவீர்களாக. நான் என்னாமத்தை நினைவுகூரப்
பண்ணும் எந்தஸ்தானத்திலும், உங்களிடத்தில்
சேர்ந்து உங்களை ஆசீர்வதிப்பேன்.—எனக்குக் ௨௫
கல்லினால் வேதிகையை உண்டாக்கவேண்டுமா
கில், உளியிட்டகற்களால் அதை உண்டாக்க
லாகாது. நீங்கள் அதில் உளியிட்டால், அதை
அசுசிப்படுத்தினீர்கள்.—உங்கள் நிருவாணங்கா ௨௬
ணப்படவுங்கூடும்; ஆதலால் என்வேதிகையின்
மேல், படிவழியாய், ஏறலாகாது, என்று சொல்
லென்றார்.

## ௨௧. அதிகாரம்.

௧. பணிவிடைக்காரர்: ௭. பணிவிடைக்காரிகள்: ௰௨. ஆள்கொலை செய்பவர்கள்: ௰௬. நரசோரர்: ௰௭. பிதாமாதாவை வைகிறவர்கள்: ௰௮. அடிப்பவர்கள்: ௨௰.பணிவிடை செய்பவர்களைக் கோலினாலடிப்போர்: ௨௨. கருப்பவதியையடிப்பவர்கள்: ௨௬. பணிவிடைக்காரரையடிப்பவர்கள்: ௨௮. மனிதரைமுட்டுமாடு: ௩௩. குழி வெட்டி விடுதல்: ௩௫. மறுமாட்டையும் முட்டுமாடு.

மேலும்நீஅவர்களுக்கு அறிவிக்கவேண்டிய நி ௧
யாயப்பிரமாணங்களாவன:—எபிரேயரில் ஒருஅ ௨
டிமையைக்கொண்டீர்களானால்,அவன்ஆறுவரு
ஷம் ஊழியஞ்செய்து, ஏழாம்வருஷத்திலே சும்
மா விடுதலைபெற்றுப்போகக்கடவன்.—ஒன்றி ௩

(௫) ஏசா.௪௪.௰௫,௰௯. அதி.௩௪.௰௪. யோசு.௨௪.௰௯. லேவி.௨௰.௫. எண்.௰௪.௰௭,௩௩. யோபு.௫.௪. எரே.௨.௯. (௬) சங்.௮௯.௩௪. ரோ.௰௧.௨௮. (௭) அதி.௨௩.௨. லேவி.௰௯.௰௨. சங்.௰௫.௪. மத்.௫.௩௩. மீகா.௬.௰௧. (௮) அதி.௩௧.௰௩,௰௪. லேவி.௰௯.௩,௩௰. (௯) எசேக்.௨௰.௰௨. லூக்.௰௩.௰௪. (௰) ஆதி.௨.௨,௩. நெகி.௰௩.௰௬,௰௭,௰௮,௰௯. (௰௧) ஆதி.௨.௨. (௰௨) லேவி.௰௯.௩. எரே.௩௫.௭. மத்.௰௫.௪. லூக்.௰௮.௨௰. எபே.௬.௩. (௰௩) மத்.௫.௨௧. (௰௪) மத்.௫.௨௭. (௰௫) லேவி.௰௯.௰௧. மத்.௰௯.௰௮. ௧.தெச.௪.௬. (௰௬) அதி.௨௩.௨. மத்.௰௯.௰௮. (௰௭) மீகா.௨.௨. அபகூ.௨.௯. லூக்.௰௨.௰௫. அப்.௨௰.௩௩. எபே.௫.௩,௫. எபி.௰௩.௫. யோபு.௩௧.௯. மத்.௫.௨௮. (௰௮) அதி.௰௯.௰௮. (௰௯) கலா.௩.௰௯,௨௰. எபி.௰௨.௰௯. உபா.௫.௨௫. (௨௰) ௧.சாமு.௰௨.௨௰. ஆதி.௨௨.௧. உபா.௪.௰ நீதி.௩.௭. ஏசா.௮.௰௩. (௨௧) ௧.இரா.௮.௰௨. (௨௨) உபா ௪.௩௬. (௨௩) அதி.௩௨.௧. ௨.இரா.௰௭.௩௩. தானி.௫ ௪,௨௩. ௧.கொரி.௬.௰௪,௰௫,௰௬. (௨௪) லேவி.௧.௨. உபா.௰௨.௫,௰௧. ௧.இரா.௮.௪௩. எஸ்று.௬.௰௨. ஆதி.௰௨.௨. (௨௫) யோசு.௮.௩௰.—(௨௧. அதி. ௨.) லேவி.௨௫.௩௯. எரே.௩௪.௰௪.

யாய்வந்திருந்தால்,ஒன்றியாய்ப்போகக்கடவன்.
விவாகம்பண்ணினவனாய் வந்தானாகில், அவன்
ச மனைவியும் அவனுடன் போகக்கடவள்.—அ
வனுடைய எசமானன், அவனுக்கொருபெண்
ணைவிவாகஞ்செய்துகொடுத்தும், அவள் புத்திர
புத்திரிகளைப் பெற்றுமிருந்தால், அந்தப் பெண்
ணும், அவள் பிள்ளைகளும், அவளுடைய எச
மானன் வசத்திலிருக்கக்கடவர்கள்: அவன் ஒன்
ரு றியாய்ப்போகக்கடவன்.—அந்த அடியான், என்
எசமானனிலும், என் மனைவியிலும், என் பிள்ளை
களிலும்பற்றாயிருக்கிறேன். நான் விடுதலைபெற்
றுப்போகேனென்று, மனப்பூரணமாய்ச்சொன்
சா ஞல்,—அவனுடைய எசமானன், அவனை நியா
யாதிபதிகளிடத்தில்அழைத்துக்கொண்டுபோய்,
அவனைக்கதவினருகேயாவது, கதவுநிலையினரு
கேயாவது, சேரப்பண்ணி, அவனுடைய எசமா
னன் அவன் காதை, கம்பியினாலே குத்தக்கட
வன். பின்பு அவன் எப்பொழுதும் அவனிடத்
தில் சேவித்துக்கொண்டிருக்கக்கடவன்.
எ ஒருவன் தன் புத்திரியை அடியாளாக விற்றி
ருந்தால், அடியான், போவதுபோல, அவளும்
அ போகப்படாது.—அவளைத் தான் விவாகம்பண்
ணிக்கொள்வேனென்றுவாக்குத்தத்தம்பண்ணிய
எசமானன் பிரியவீனனாயிருந்தால், அவள் மீட்
கப்படலாம்; அவன் அவளுக்கு வஞ்சனைசெய்
தபடியால், அவளை அந்நியருக்குவிற்கும் அதிகா
கூ ரம் அவனுக்கில்லை.—அவன் அவளைத்தன் புத்திர
னுக்கு விவாகஞ்செய்யவாக்குத்தத்தம்பண்ணியி
ருந்தால், தன் புத்திரிகளை நடத்துவதுபோல, அ
ய வளையும் நடத்தக்கடவன்.—அவன் வேறொரு
பெண்கொண்டானாகில், இவளுக்குரிய அன்ன
வஸ்திரங்களையும்,இல்வாழ்க்கையையும்,குறைக்
யக கலாகாது.—இந்த மூன்றையும், அவன் அவளுக்
கு நிர்வாகம்பண்ணமல்விட்டால், அவள்பணங்
கொடாமல் விடுதலைபெற்றுப்போகக்கடவள்.
யஉ ஒருவன் ஒருமனுஷனைச் சாவ அடித்தால், அ
யங வன் கொல்லப்படவேவேண்டும்.—ஒருவன் அ
பிப்பிராயமின்றித் தேவச்செயலாய்த் தன்கைக்
குநேரிட்டவனைக்கொன்றால்,அவனடைக்கலம்
புகவேண்டிய ஸ்தலத்தை உங்களுக்கு நியமிப்
யச பேன்.—ஒருவன் துணிகரத்துடனே பிறனைக்
கொல்லும்படி,கபடமாய்வந்தால், என்வேதிகை
யினின்றும் அவனைப்பிடித்துக்கொண்டுபோய்க்
யரு கொலைசெய்யவேண்டும்.—தன் பிதாவையாவது,
மாதாவையாவது, அடிக்கிறவன், கொல்லப்பட
வே வேண்டும்.
யசா ஒருவன் மற்றொருவனைத் திருடிவிற்றாலும்,
இவன் அவன் கையிலிருக்கக் கண்டுபிடிக்கப்
பட்டாலும், அவன் நிச்சயமாய்க்கொல்லப்பட
வேண்டும்.

தன்பிதாவையாவது, மாதாவையாவது, நிந்திக் யஎ
கிறவன் நிச்சயமாய்க்கொல்லப்படவேண்டும்.
சண்டைபண்ணும் மனிதரில் ஒருவன், மற் யஅ
றொருவனைக் கல்லினாலாவது, முட்டித்தொழிலி
னாலாவது, தாக்கியவிடத்து, அவன் சாவாமற்கி
டந்து,—எழுந்து வெளியிலே தன் ஊன்றுகோ யகூ
லைப் பிடித்துக்கொண்டு நடந்தால், அடித்தவன்
தண்டனைபெறான். ஆனாலும் அவன் வேலைகெட்
டநஷ்டமிறுத்தும், அவனை நன்றாய்ச் சொஸ்தப்
படுத்தியும், விடக்கடவன்.
ஒருவன் தன் அடியானையாகிலும், அடியாளை உய
யாகிலும், கோலினாலடிக்க, அவன்கையாலிறந்
தால், அவன் நிச்சயமாய்த்தண்டிக்கப்படவேண்
டும்.—இரண்டொருநாள் உயிரோடிருந்தால், அ உக
வர்களவன் உடைமையாதலால், அவன்தண்டிக்
கப்படவேண்டியதில்லை.
சிலமனிதர் சண்டைபண்ணிக் கருப்பவதியா உஉ
ன ஒருஸ்திரியையடிக்க, அவளுக்குச்சேதமில்
லாமல்,கருப்பக்கனிவிழுந்தால், அடிபட்டஸ்தி
ரியின் புருஷன் சுமத்தினதை, நியாயாதிபதிகள்
சமுகத்திலிறுக்கவேண்டும்.—சேதமுண்டானால், உங
சீவனுக்குச்சீவனையும்,—கண்ணுக்குக் கண்ணை உச
யும், பல்லுக்குப்பல்லையும், கைக்குக்கையை
யும்,—காலுக்குக்காலையுங்கொடுக்கவும்; தகனத் உரு
துக்குத்தகனமும், காயத்துக்குக்காயமும், தழும்
புக்குத்தழும்பும், பெறவும் வேண்டும்.
ஒருவன் தன் அடியான்கண்ணையாகிலும்,தன் உசா
னடியாள் கண்ணையாகிலுங் கெடும்படி அடித்
தால், அவன் கண்ணின்சேதத்தினிமித்தம் அவ
னை விடுதலைபண்ணி விடவேண்டும்.—அவன் உஎ
தன்னடியான்பல்லையாகிலும், தன்னடியாள்பல்
லையாகிலும், உடைத்தால், அவன் பல்லின்சே
தத்தினிமித்தம் அவனை விடுதலைபண்ணி விட
வேண்டும்.
ஒருமாடு, புருஷனையாகிலும், ஸ்திரியையாகி உஅ
லும், முட்ட அவர்கள் இறந்துபோனால், அந்த
மாடு கல்லெறியப்படவேண்டும். அதின்மாமிசத்
தைப்புசிக்கப்படாது: மாட்டையுடையவனோ
தண்டிக்கப்படான்.—தன்மாடு வழக்கமாய்முட் உகூ
டுகிறதென்று தெரிவிக்கப்பட்டும், அதற்குடைய
வன், அதைக்கட்டிவையாதிருந்தவிடத்து, ஒருபு
ருஷனையாகிலும், ஸ்திரியையாகிலும், கொன்
றால் மாடுங்கல்லெறியப்படவேண்டும்; அதையு
டையவனுங்கொல்லப்படக்கடவன்.—அபராதம் ஙய
இறுக்கும்படி தீர்க்கப்பட்டால், தன்சீவனைமீட்
கும்பொருட்டு, அதையிறுக்கவேண்டும்.—புத்திர ஙக
னையாகிலும்,புத்திரியையாகிலும், அதுமுட்டினா
லும், மேற்சொல்லிய தீர்ப்பின்படியே, அவனுக்
குச்செய்யவேண்டும்.—அடியானையாவது, அடி ஙஉ
யாளையாவது, ஒருமாடுமுட்டினால், அந்தமாட்

(ரு) உபா.யரு.யசா,யஎ. (சா) அதி.உஉ.அ,உஅ, சங்.சய.சா. (எ) நிகி.ரு.ரு. வச.உ,ங. (ய) க.கொரி.எ.ரு. (யஉ) ஆதி.கூ.சா. மத்.உசா.ருஉ. (யங) க.சாமு.உச.ச,ய,யஅ. எண்.ஙரு.யக. யோசு.உய.உ. (யச) எண்.யரு.ஙய. எபி.ய.உசா. க.இரா.உ.உஅ—ஙச. (யசா) உபா.உச.எ. ஆதி.ஙஎ.உஅ. அதி.உஉ.ச. (யஎ) நீதி.உய.உய. மத்.யரு.ச. (யகூ) உசாமு.ங.உங. (உய) ஆதி.ச.யரு,உச. ரோ.யங.ச. (உக) லேவி.உரு.சரு,சசா. (உஉ) உபா.உஉ.யஅ,யகூ. (உச) மத்.ரு.ஙஅ. (உஅ) ஆதி.க.ரு. (ஙய) எண்.ஙரு.ஙக. (ஙஉ) சக.யக.யஉ,யங. மத்.உசா.யரு.

டையுடையவன் அவர்களுடைய எசமானனுக்
கு முப்பதுஷேக்கல்வெள்ளியைக் கொடுக்கக்க
டவன்: மாடோ கல்லெறியப்படவேண்டும்.
௩௩ ஒருவன் ஒருகுழியைத்தோண்டியாகிலும், ஒ
ருகுழியைவெட்டியாகிலும், பின்பு அதைமூடா
மல் விட்டிருக்கையில், அதிலேமாடாவது, கழு
௩௪ தையாவது, விழுந்தால்,—குழிவெட்டினவன் அ
வைகளை உடையவனுக்கு நஷ்டமிறுக்கவேண்
டும்: செத்தமிருகம் அவனுக்கேயுரியது.
௩௫ ஒருவனுடைய மாடு பிறனுடைய மாட்டை
முட்ட, அது செத்தால் உயிரோடிருக்கிறமாட்
டை அவர்கள்விற்று, அதின்கிரயத்தைப்பங்கிட்
டு, செத்ததையும் பங்கிட்டுக்கொள்ளக்கடவர்
௩௬ கள்.-அந்தமாட்டையுடையவன் அதுமுன்னமே
முட்டுகிறமாடென்றுஅறிந்திருந்தும்,அதைக்கட்
டிவையாதிருந்தால்,அவன்மாட்டுக்குமாட்டைக்
கொடுக்கவேண்டும். செத்தது அவனுடையது.

## ௨௨. அதிகாரம்.

௧. களவு: ௫. சாதாரணசேதங்கள்: ௭. அடைக்கலம்வைத்தபொருளின்சேதம்: ௰. ஒருவர்வசத்தில் விட்டிருந்த மிருகத்தின் சேதம்: ௰௪. இரவற்பொருள்: ௰௬. விபசாரம்: ௰௮. சூனியம்: ௰௯. மிருகசங்கம்: ௨௰. தேவபூசை: ௨௧. பரதேசி விதவை அநாதபிள்ளைகள்: ௨௫. அநியாயவட்டியும் ஈடும்: ௨௮. நியாயாதிபதி நிந்தனை: ௨௯. முதற்பேறுகள்.

ஒருவன் ஒருமாட்டையாவது, ஆட்டையாவ
து, திருடி அதையடித்தால், அல்லது அதைவிற்
றால், அவன் அந்தமாட்டுக்கு ஐந்துமாடுகளையும்,
ஆட்டுக்குநாலு ஆடுகளையும், பிரதியாகக்கொடுக்
௨ கவேண்டும்.—திருடன்கன்னமிடுகையில், ஒரு
வன்கண்டுபிடித்து அவனை அடித்துக்கொன்றால்,
௩ அதினிமித்தம்இவனுக்குஇரத்தப்பழியில்லை.—சூ
ரியன் உதித்துவிட்டால்,இவனிரத்தம்சிந்தப்பட
வேண்டும். அவன்பிரதிகொடுப்பதுகடமை; அ
வன்கையிலொன்றுமில்லாதிருந்தால்,தான்செய்
௪ த களவினிமித்தம் விலைப்படக்கடவன்.-அவன்
திருடினமாடாவது, கழுதையாவது, ஆடாவது,
உயிருடனே அவன்கையில் காணப்பட்டால்,இ
ருமடங்குகொடுக்கவேண்டும்.
௫ ஒருவன் பிறனுடையவயல்வெளியிலாவது,தி
ராட்சத்தோட்டத்திலாவது,தன்மிருகத்தைமேய
விட்டால், அவன் தன்சுயவயல்வெளியிலும், தி
ராட்சத்தோட்டத்திலுமுள்ள உத்தமபலத்தில் பி
௬ ரதிகொடுக்கவேண்டும்.—அக்கினிமூண்டு, முள்
ளுக்களிற்பற்றி, கதிர்ப்போரையாவது,அரியாம
லிருக்கிற பயிரையாவது, வயல்வெளியிலுள்ள
வேறெதையாவதுபட்சித்தால், அக்கினிகொளுத்
தினவன், உத்தரவாதம்பண்ணவேண்டும்.
௭ ஒருவன்பிறனிடத்தில் பணத்தையாவது,பண்
டத்தையாவது, அடைக்கலம்வைக்க; அவனு
டையவீட்டிலிருந்து அவைதிருடப்பட்டவிடத்
து,திருடன் அகப்பட்டால், அவன் அதற்கு இரு
மடங்குகொடுக்கவேண்டும். திருடன் அகப்ப
டாதேபோனால்,—அந்தவீட்டுக்காரன்தானே பிற ௮
ருடையபொருளை அபகரித்தானோ இல்லையோ
வென்றறியும்படி, அவனை நியாயாதிபதிகளிடத்
தில் கொண்டுபோகவேண்டும்.-காணாமற்போன ௯
மாடு,கழுதை,ஆடு,வஸ்திரமுதலியவைகளில் யா
தொன்றைப்பிறனொருவன் தன்னுடையதென்று
சொல்லிக்குற்றஞ்சாற்றினால்,இருதிறத்தாருடை
யவழக்கும், நியாயாதிபதிகளிடத்தில் சேரக்கட
வன. நியாயாதிபதிகளாற் குற்றவாளியென்று
தீர்க்கப்படுபவனெவனோ, அவன் மற்றவனுக்கு
இருமடங்குகொடுக்கக்கடவன்.
ஒருவன் தன்கழுதையையாவது, மாட்டையா ௰
வது, ஆட்டையாவது, வேறொருமிருகத்தையா
வது, பிறன்வசத்தில்விட, அது செத்தாலும், சே
தப்பட்டாலும், ஒருவருங்காணாதபடி, ஓட்டிக்
கொண்டுபோயிருந்தாலும்,—அவன் தான்பிறனு ௰௧
டையபொருளை அபகரிக்கவில்லையென்றுசொல்
லி, யெகோவாவின்மேல் ஆணையிட்டால்,
உடையவன் அதையங்கிகரிக்கவேண்டும்: இவ
னோ பிரதியளிக்கவேண்டுவதில்லை.-அது அவனி ௰௨
டத்திலிருந்து களவுபோய்விட்டால், அவன் அ
தையுடையவனுக்குப் பிரதியளிக்கவேண்டும்.—
அது பீறுண்டுபோயிற்றானால், அதற்குச்சாட்சி ௰௩
கொடுப்பதேயன்றிப் பீறுண்டதற்காகப் பிரதிய
ளிக்கவேண்டுவதில்லை.
ஒருவன்பிறனிடத்தில் எதையாகிலும், இரவ ௰௪
லாகவாங்கினவிடத்தில், அதையுடையவன்கூ
டஇராதபொழுது அதுசேதப்பட்டாலும், செத்
தாலும், அவன் அதற்கு உத்தரவாதம் பண்ண
வேண்டும்.—அதையுடையவன்கூட இருந்தானா ௰௫
கில்,உத்தரவாதம்பண்ணவேண்டுவதில்லை. அது
வாடைக்குவாங்கப்பட்டிருந்தால், அதுவாடை
யினிமித்தம்வந்தது.
வாக்குத்தத்தம்செய்யப்படாத ஒருகன்னியை ௰௬
ஒருவன் வசியம்பண்ணி, அவளுடன் சயனித்
தால்,அவன் அவளுக்குப்பரிசங்கொடுத்து, அவ
ளைவிவாகம் பண்ணவேண்டும்.—அவளுடைய ௰௭
பிதா அவளையவனுக்குக்கொடாமல் மறுத்தால்,
கன்னியருக்குக்கொடுக்குஞ் சீதனமுறைப்படி,
அவன்பணம் நிறுத்துக்கொடுக்கவேண்டும்.
சூனியக்காரியை உயிரோடேவிடக்கூடாது. ௰௮
மிருகத்துடன் சயனிக்கிறவனெவனும் நிச்ச ௰௯
யமாய்க் கொல்லப்படவேண்டும்.
யெகோவாவுக்கேயன்றி வேறு தேவர்க ௨௰
ளுக்குப் பலியிடுகிறவன் நிருமூலமாக்கப்பட
வேண்டும்.
பரதேசியைத்துயரப்படுத்தவும்வேண்டாம்,உ ௨௧
பத்திரவப்படுத்தவும் வேண்டாம். நீங்களும், எ

(௨௨. அதி. ௧.) ௨ சாமு.௰௨.௬. லூக்.௰௯.௮. (௨) மத்.௨௪.௪௩. எண்.௩௫.௨௭. (௩) அதி.௨௧.௨. (௪) அதி.௨௧.௰௬. நீதி.௬.௩௧. (௮) அதி.௨௧.௬. (௯) உபா.௨௫.௧. (௰௧) எபி.௬.௰௬. (௰௨) ஆதி.௩௧.௩௯. (௰௬) உபா.௨௨.௨௮,௨௯ (௰௭) ஆதி.௨௩.௰௬. ஆதி.௩௪.௰௨. ௧.சாமு.௰௮.௨௫. (௰௮) உபா.௰௮.௰,௰௧. ௧.சாமு.௨௮.௩,௯. (௰௯) லேவி.௰௮.௨௩. லேவி.௨௰.௰௫. (௨௰) உபா.௰௩.௨. (௨௧) உபா.௰.௰௯. எரே.௭.௬. மல்.௩.௫.

எகிப்துதேசத்தில் பரதேசிகளாயிருந்தீர்கள்.—விதவையையாகிலும், அநாதபிள்ளையையாகிலும்,
௨௨
௨௩ உபத்திரவப்படுத்தாதிருங்கள்.—நீங்கள் அற்பத்திலாகிலும் அவர்களைஉபத்திரவப்படுத்த,அவர்களென்னைநோக்கி ஓலமிட்டால், அவர்களிடும்
௨௪ ஓலத்தை நிச்சயமாய் நான்கேட்டு,—கோபங்கொண்டு,உங்களைக்கட்கத்தினாலேகொலைசெய்வேன். அதினால் உங்கள்மனைவிகள் விதவைகளும், உங்கள் பிள்ளைகள் அநாதபிள்ளைகளுமாவார்கள்.

௨௫ என்சனங்களுக்குள்ளே உங்கள் அயலவனாகிய ஒருதரித்திரனுக்கு நீங்கள் பணம்கடனாகக்கொடுத்திருந்தால், வட்டிவாங்குகிறவன்போல,
௨௬ அவனிடத்தில் வட்டிவாங்கவேண்டாம்.—பிறனுடையவஸ்திரத்தைநீங்கள் ஈடாகவாங்கினால், சூரியன் அஸ்தமிக்குமுன், அதையவனுக்குக்
௨௭ கொடுத்துவிடுங்கள்.—அதல்லவா அவன்போர்வை. அது அவன்தேகத்துக்குப் போர்வையாயிருக்கின்றதே. வேறெதினால்போர்த்துப்படுத்துக்கொள்வான்: அவன் என்னைநோக்கி ஓலமிடும்பொழுது, நான், இரக்கமுள்ளவரானபடியால், அவனுக்குச் செவிகொடுப்பேன்.
௨௮ நியாயாதிபதிகளை நிந்திக்கவும், உன்சனங்களினதிபதியைத்தூஷணிக்கவும்வேண்டாம்.
௨௯ முதல்முதல்முற்றியஉன்பலனையும்,உன்திராட்சரசத்தையும், நைவேத்தியம்பண்ணத் தாமதியாதிரு. உன்முதற்பேறானபுத்திரரைஎனக்குக்கொ
௩௰ டு.—உன் ஆடுமாடுகளிலும் அப்படியேசெய்வாயாக. அவைகள் ஏழுநாளளவும்தங்கள்தாயுடனிருக்கட்டும்; எட்டாம்நாளில் எனக்குக்கொடு.
௩௧ நீங்கள் எனக்குப்பரிசுத்தராயிருக்கக்கடவீர்கள்.வெளியிலே மிருகங்களால்பீறுண்டமாமிசத்தைப்புசியாமல்அதைநாய்களுக்குப்போடுங்கள்.

## ௨௩. அதிகாரம்.

௧. அபவாதம்: ௨. பொய்ச்சாட்சி: ௪. உபகாரம்: ௬. நியாயம்செய்தல்: ௮. உபத்திரவப்படுத்தல்: ௯. பரதேசி: ௰. பயிர்செய்கை: ௰௨. ஓய்வுநாள்: ௰௩. தேவபூசை: ௰௪. வருஷத்தின் மூன்றுற்சவம்: ௰௮. பலிதானம்: ௨௰. முற்றூதன்: ௨௬. ஆசீர்வாதம்.

நீவீண்பழிச்சொல்லை அங்கிகரிக்கவேண்டாம்.
௨ தீயருடன்கூடிப்பொய்ச்சாட்சிக்காரனாகவேண்டாம்.தீமைசெய்யும்படி,மிகுதியானகூட்டத்தாரைப்பின்செல்லவேண்டாம். வழக்கிலேநியாயத்தைப்புரட்டும்படி, மிகுதியானவர்கள் பட்சத்திற்சாய்ந்து,உத்தரங்கொடுக்கவேண்டாம்.—
வழக்கிலே தரித்திரர் முகத்தையும்பார்க்கவேண் ௩
டாம்.

உன் சத்துருவின் மாடானாலும், கழுதையா ௪
னாலும் தப்பிப்போகக்கண்டால், அதைத்திரும்ப அவனிடத்தில் கொண்டுபோய்விடு.—உன் ௫
பகைஞனுடைய கழுதை தன்சுமையோடே விழுந்துகிடக்கக்கண்டால், அதற்கு உதவிசெய்யாமல் விடுவாயா; அவசியமாய் அதற்கு உதவிசெய்யவேண்டும்.

உன்னிடத்திலிருக்கிற தரித்திரனுடைய வி ௬
யாச்சியத்தில், அவன் நியாயத்தைப்புரட்டவே
ண்டாம்.—பொய்யான காரியத்துக்குத் தூரமா ௭
யிரு. குற்றமில்லாதவனையும், நீதிமானையுங்கொலைசெய்யாதிரு. நான் துன்மார்க்கனை நீதிமானென்று தீர்க்கமாட்டேன்.

பரிதானம்ஞானிகளைக்குருடாக்கி,நீதிமான்க ௮
ளுடைய வாக்குகளைப்புரட்டுகின்றது; ஆதலால் பரிதானம் வாங்கவேண்டாம்.

பரதேசியை உபத்திரவப்படுத்தாதிரு: நீங்க ௯
ளும் எகிப்துதேசத்தில் பரதேசிகளாயிருந்தபடியால், பரதேசிகளினிருதயம் இன்னவிதமென்றறிந்திருக்கிறீர்கள்.

ஆறுவருஷம் நீ உன் நிலத்தில் பயிரிட்டு, அ ௰
வைகளின் பலனைச்சேர்த்துக்கொள்.—ஏழாம்வ ௰௧
ருஷத்தில் உன் சனங்களுக்குள்ளே தரித்திரர் புசிக்கவும், சேஷமானதை வெளியிலுள்ள செந்துக்கள் தின்னவும், அந்நிலங்களைச்சும்மாவிட்டுவிடு. உன்திராட்சத்தோட்டத்தையும், உன் சீதவிருட்சத் தோப்பையும், அப்படியே செய்வாயாக.

ஆறுநாள் உன் கிரியைகளைச்செய்து, ஏழாம் ௰௨
நாளில் உன்மாடும் கழுதையும் இளைப்பாறவும், உன் பணிவிடைக்காரியின் புத்திரனும், பரதேசியும் இளைப்பாறவும், ஓய்ந்திரு.

நானுங்களுக்குச் சொன்னவைகள் யாவற்றி ௰௩
லும், சாவதானமாயிருங்கள். அந்நியதேவர்களுடையபேரைச் சிந்தையில்வைக்கவும் வேண்டாம். அதை உன் வாயினாலே உச்சரிக்கவும் வேண்டாம்.

வருஷத்தில் எனக்கு மூன்று உற்சவஞ்செய் ௰௪
வாய்.—ஆபீப்மாதத்தில், நீ எகிப்து தேசத்தை ௰௫
விட்டுப் புறப்பட்டபடியால், நானுனக்குவிதித்தபடி, அந்தமாதத்திலே குறித்தகாலத்தில், ஏழுநாள் புளிப்பில்லாத அப்பத்தைப்புசித்து, புளிப்

(௨௨) உபா.௰.௰௮. உபா.௨௪.௰௭. ஏசா.௧.௰௭,௨௩. சக.௭.௰. யாக்.௧.௨௭. (௨௩) உபா.௰௫.௯. யோபு.௩௫.௯. லூக்.௰௮.௭. யாக். ௫.௪. (௨௪) யோபு.௩௧.௨௩. புல.௫.௩. (௨௫) லேவி ௨௫.௩௫. எசேக்.௰௮.௮,௰௭. (௨௬) உபா. ௨௪.௬. யோபு.௨௨.௬. நீதி.௨௰.௰௬. எசேக்.௰௮.௭,௰௬. ஆமோ.௨.௮. (௨௭) அதி.௩௪.௬. ௨.நாளா.௩௰.௯. (௨௮) பிர.௰.௨௰. அப் ௨௩.௫. (௨௯) அதி.௨௩.௰௬,௰௯. அதி.௰௩.௨,௰௨. (௩௰) உபா.௰௫.௰௯. லேவி.௨௨.௨௭. (௩௧) அதி.௰௯.௬ எசேக்.௪.௰௪.—(௨௩. அதி. ௧.) லேவி.௰௯.௰௬. சங்.௰௫ ௩. நீதி.௰.௰௮. உபா.௰௯.௰௬,௰௭,௰௮. சங். ௩௫.௰௧. அப்.௬.௰௧,௰௩. (௨) ஆதி.௭.௧. அதி.௩௨.௧,௨. யோசு.௨௪.௰௫ உபா.௧.௰௭. (௪) உபா.௨௨.௧. மத்.௫.௪௪. (௫) உபா ௨௨.௪. (௬) உபா.௨௭.௰௯. ஆமோ.௫.௰௨. மல்.௩.௫. (௭) வச.௧. எபே.௪.௨௫. உபா.௨௭.௨௫. எரே. ௭.௯. அதி.௩௪.௭. ரோ.௧.௰௮. (௮) உபா.௰௬.௰௯ ஏசா.௧,௨௩. எசேக்.௨௨.௰௨. அப்.௨௪.௨௬. (௯) உபா.௰.௰௯. எசேக் ௨௨.௭. மல் ௩.௫. (௰) லேவி.௨௫ ௩௪. (௰௨) அதி.௨௰.௮,௯. லூக்.௰௩.௰௪. (௰௩) உபா.௪.௰. சங்.௩௯.௧. எபே.௫.௰௫. எண்.௩௨.௩௮. யோசு.௨௩.௭.(௰௪)அதி.௩௪.௨௩. உபா.௰௬.௰௬ (௰௫)அதி.௰௨.௰௫. உபா.௰௬.௰௬.

௰௬ பில்லாத அப்பத்தின் உற்சவத்தையும்,—நீ பிர
யாசப்பட்டு, வயலில் விதைத்து, உன் பயிரின்
முதற்பலத்தை யெடுக்கிற அரி அரியுங்காலத்
தின் உற்சவத்தையும், வருஷமுடிவிலே வய
லில் உன் பிரயாசத்தினுல் கிடைத்த பலத்தை நீ
சேர்த்தபின் சேர்ப்பின் உற்சவத்தையும், ஆசரிக்
கக்கடவாய். வெறுங்கையோடே ஒருவனும்
௰௭ என்சந்நிதியில் வரவேண்டாம்.—உனக்குள்ளே
ஆண்மக்கள் சகலரும் வருஷத்தில் மூன்றுதரம்
தேவனுகிய யெகோவாவின் சந்நிதியில்
வரவேண்டும்.
௰௮ புளிப்புள்ள அப்பத்துடன் எனக்குரிய பலி
யினிரத்தத்தை நைவேத்தியம்பண்ணவும் வேண்
டாம்; என் பலியின்நிணத்தை விடியற்காலம்வ
௰௯ ரைக்கும்வைக்கவும் வேண்டாம்.—உன் நிலத்தில்
முதல்முதல்விளைந்ததில்முதற்பலத்தை,உன் தே
வனுகிய யெகோவாவின் ஆலயத்துக்குக்
கொண்டுவருவாய். வெள்ளாட்டுக்குட்டியை அ
தினுடையதாயின் பாலிலேபாகம்பண்ணவேண்
டாம்.
௨௰ வழியில்உன்னைக்காப்பாற்றும்படிக்கும்,நான்
ஆயத்தப்படுத்திய ஸ்தானத்துக்கு உன்னை நடத்
திக்கொண்டுபோகும்படிக்கும், ஒரு தூதனுனவ
ரை உனக்குமுன்னே அனுப்புகிறேன், பார்.—
௨௧ அவர்சமுகத்தில் எச்சரிக்கையாயிரு. அவர்வாக்
குக்குச்செவிகொடு. என் நாமம் அவரிலிருப்ப
தினுல் உங்கள்பாவங்களை அவர் மன்னிக்கமாட்
டார்; ஆதலால் அவர்கோபிக்கும்படி நடவாதி
௨௨ ரு.—நீ உண்மையாய் அவர் வாக்குக்கமைந்து,
நான்சொல்லும்யாவையுஞ்செய்வாயாகில், நான்
உன் சத்துருக்களுக்குச்சத்துருவாகி உன் விரோ
௨௩ திகளை உபத்திரவப்படுத்துவேன்.—என் தூதனு
னவரே உனக்குமுன்னடந்து எமோரியரும், இத்
தியரும், பெரீசியரும், கானுனியரும், ஈவியரும்,
எபூசியருமிருக்கிற இடத்துக்கு உன்னை நடத்திக்
கொண்டுபோவார். அவர்களை நான் சேதித்து
௨௪ விடுவேன்.-நீ அவர்களுடைய தேவர்களை நமஸ்
கரியாமலும், சேவியாமலும், அவர்கள் செய்
யுங்கிரியைகளைப்பின்பற்றி நடவாமலும், அவர்
களைச்சங்கரித்து அவர்களுடைய சிலைகளைச்சின்
௨௫ னபின்னப்படுத்து.—உங்கள் தேவனுகிய யெ
கோவாவையே சேவிக்கக்கடவீர்கள். அவர்
உங்கள் போசன பானங்களை ஆசீர் வதிப்பார்.
நோய் உங்களுக்குள்ளிராமலகற்றுவேன்.
௨௬ அழிகருக்களும் மலடுகளும் உன் தேசத்திலி
ருப்பதில்லை. உன் ஆயுள்நாள்களைப் பூரணப்
படுத்துவேன்.—என்னுலுண்டாகும் பயங்கரம் ௨௭
உனக்குமுன் செல்லும்படி பண்ணுவேன். நீ
செல்லுமிடந்தோறு முள்ள சனங்களெல்லாரை
யுங்கலக்கி, உன் சத்துருக்களெல்லாரும் உனக்
குப் புறங்காட்டும்படி செய்வேன்.—ஈவியரை ௨௮
யும், கானுனியரையும், எத்தியரையும் உன்முன்
னின்றும் ஓட்டிவிடும்படி குளவிகளை உனக்கு
முன் அனுப்புவேன்.—தேசம் பாழாய்ப்போ ௨௯
மென்பதினுலும், காட்டுமிருகங்கள் உனக்குவி
ரோதமாய்ப்பெருகிவிடுமென்பதினுலும்,நானஅ
வர்களை உன்முன்னின்றும் ஒருவருஷத்துக்குள்
ளே ஓட்டிவிடாமல்;—நீ பெருகித் தேசத்தைச் ௩௰
சுதந்தரித்துக்கொள்ளும்வரைக்கும், அவர்களைக்
கொஞ்சங்கொஞ்சமாய் உன்முன்னின்றும் ஓட்
டிவிடுவேன்.—செங்கடல் தொடங்கி, பெலிஸ் ௩௧
தியருடைய சமுத்திரம்வரைக்கும், வனந்தரந்
தொடங்கி, நதிவரைக்கும், உன்னெல்லையாயி
ருக்கும்படிசெய்வேன். நான் அந்தத்தேசத்துச்
சனங்களை உன்கையிலொப்பிப்பேன். நீ அவர்
களை உன்முன்னின்றும் ஓட்டிவிடு.—அவர்க ௩௨
ளோடும் அவர்கள் தேவர்களோடும் ஒரு உடன்
படிக்கையும் பண்ணுதிரு.—அவர்கள் உன்னை ௩௩
எனக்குவிரோதமாய்ப் பாவஞ்செய்யும்படி பண்
ணவுங்கூடும், ஆதலால் உன்தேசத்தில் அவர்கள்
வசிக்கலாகாது. நீ அவர்களுடைய தேவர்களைச்
சேவித்தால், நிச்சயமாய் அது உனக்கு ஒருகண்
ணியாகுமென்று சொல்லச்சொன்னுர்.

## ௨௪. அதிகாரம்.

௧. மோசே மலையிலேறும்படி கட்டளைபெறல்: ௩. சனங்கள் கட்டளைகளை யங்கிகரித்தல் மோசே ஓர் வேதிகையும் பன்னிரணடு ஸ்தம்பங்களும் நிருமாணித்தல்: ௯. தெய்வமகிமை விளங்குதல்: ௰௨. மோசே ஆரோனையும் ஊரையும் காவலாளிகளாக வைத்துவிட்டுப் பருவதத்திலேறி இராப்பகல் நாற்பதுநாளளவும் தங்கல்.

பின்னும் அவர் மோசேயைநோக்கி, நீயும் ஆ ௧
ரோனும், நாதாபும், அபியூவும், இஸரவேலரின்
முதியோரில் எழுபதுபேரும், ஏறி, யெகோ
வாவின் சந்நிதியை அடைந்து, தூரத்தில்நின்று
ஆராதனை செய்யுங்கள்.—மோசேமாத்திரம் யெ ௨
கோவாவின் சமீபத்தில்வரலாம்: அவர்கள் ச
மீபித்து வரக்கூடாது. சனங்களோ, அவனுட
னே ஏறவும்படாதென்றுர்.
மோசேபோய், யெகோவாவின் வாக்கு ௩
கள் யாவையும், நியாயப்பிரமாணங்கள் யாவை
யும், சனங்களுக்கறிவித்தான். அப்பொழுது ச

(௰௬) லேவி.௨௩.௰. உபா.௰௬.௰௩. (௰௮) அதி.௰௨.௮. உபா.௰௬.௪. (௰௯) லேவி.௨௩.௰,௰௭. உபா.௨௬.௰. உபா.௰௪.௨௧. (௨௰) அதி.௰௪.௰௯. எண்.௨௰.௰௬. யோசு.௫.௰௩. சங்.௯௧.௰௧. (௨௧) எண்.௰௪.௰௧. எபே.௪ ௩௰. எபி.௩.௰,௰௬. எண்.௰௪.௩௫. யோசு.௨௪.௰௯. எரே.௫.௭. எசா.௯.௬. எரே.௨௩.௬. யோவா ௰.௩௰,௩௮.(௨௨) ஆதி.௰௨.௩. எரே.௩௰.௨௰. (௨௩) வச.௨௰.யோசு.௨௪.௮,௰௧. (௨௪) அதி.௨௰.௬. லேவி.௰௮.௩. உபா.௰௨.௩௰,௩௧. அதி.௩௪.௰௩. எண்.௩௩.௫௨. உபா. ௭.௫,௨௫. (௨௫) உபா.௬.௰௩. யோசு.௨௨.௫. யோசு. ௨௪. ௰௪,௰௫.௧.சாமு.௭.௩. மத்.௪.௰. உபா ௨௮.௫,௮. அதி.௰௫.௨௬. உபா.௭.௰௫. (௨௬) உபா.௨௮.௪. யோபு.௨௧.௰. மல்.௩௰.௰௧. ஆதி.௨௫.௮. யோபு.௫.௨௬. சங் ௫௫ ௨௩. சங்.௯௰.௰. (௨௭) ஆதி.௩௫.௫. யோசு.௨.௯,௰௧. உபா.௭.௨௩.சங்.௰௮.௪௰. (௨௮) உபா.௭.௨௰. யோசு.௨௪.௰௨. (௨௯)உபா.௭. ௨௨.(௩௧)ஆதி.௰௫.௰௮. எண் ௩௪.௩.யோசு.௧.௪. ௧.இரா.௪.௨௧,௨௪. யோசு.௨௧.௪௪. நியா.௧.௪. (௩௨) அதி.௩௪.௰௨,௰௫. உபா.௭.௨. (௩௩) அதி.௩௪.௰௨. யோசு.௨௩.௰௩. நியா.௨.௩ ௧.சாமு.௰௮ ௨௧.—(௨௪ அதி.௧ ) லேவி.௰.௧,௨. (௩)அதி.௰௯.௮. உபா.௫.௨௭. கலா.௩.௰௯,௨௰.

னங்கள் எல்லாரும் ஏகசத்தமாய், யெகோவா
அருளிய சகல வாக்குகளையுங் கைக்கொள்வோ
ச மென்றார்கள்.-மோசே யெகோவாவின் வாக்
குகள் எல்லாவற்றையும் எழுதிவைத்து, அதிகா
லையிலெழுந்து, மலையின் அடியில், ஒரு வேதி
கையையும், இஸரவேலருடைய பன்னிரண்டு
கோத்திரத்தின்படி, பன்னிரண்டு தூண்களையும்
ரு உண்டாக்கி,—இஸரவேல் சந்ததியாரில் வாலி
பரை அனுப்ப, அவர்கள் யெகோவாவுக்குத்
தகனபலிகளையும் நிவேதித்ததன்றி, எருதுகளை
சு யும்,ஸ்தோத்திரப்பலிகளையுமிட்டார்கள்.-பின்பு
மோசே பாதி இரத்தத்தை எடுத்துப் பாத்திரங்க
ளில்வார்த்து,பாதி இரத்தத்தை வேதிகையின்மே
எ லேதெளித்து,-உடன்படிக்கையின் புஸ்தகத்தை
எடுத்து, சனங்களுடைய செவிக்கேறும்படி வா
சித்தான். அவர்கள் யெகோவா அருளிய
எல்லாவற்றிற்கும் அமைந்து நடப்போமென்றார்
அ கள்.—மோசே இரத்தத்தையெடுத்துச் சனங்க
ளின்மேலேதெளித்து, இவ்வாக்குகள்யாவையுங்
குறித்து, யெகோவா உங்களுடனே பண்ணி
னஉடன்படிக்கையின் இரத்தமிதுவே என்றான்.
கூ பின்பு மோசேயும், ஆரோனும், நாதாபும், அ
பீயூவும், இஸரவேலரின் மூதியோரில் எழுபது
ய பேரும் ஏறிப்போய்,—இஸரவேலருடைய தே
வனைக்கண்டார்கள். அவருடைய பாதத்தின்
கீழே, நீலரத்தினமழுத்திய தளத்திற்கொப்பாக
வும், தெளிந்த வானத்தைப்போல, ஒளியுள்ளதா
யக கவுமிருந்தது.—அவர் இஸரவேல் சந்ததியாரின்
அதிபதிகள்மேல் தமது கையை நீட்டவில்லை.
அவர்களும் தேவனைத்தரிசித்து, பின்பு போச
னபானஞ்செய்தார்கள்.
யஉ யெகோவா மோசேயைநோக்கி, நீ மலை
யின்மேலேறி, என் சமீபத்தில்வா; அங்கேயிரு:
நானெழுதியிருக்கிற வேதநூலோடும், கட்டளை
களோடும், கற்பலகைகளை உனக்குத்தருகிறேன்.
நீ அவைகளைச் சனங்களுக்குப் போதியென்
யங றுசொல்ல,—மோசேயும், அவன் பரிசாரகனாகி
ய யோசுவாவும்எழுந்தார்கள். மோசே தேவனு
யச டைய மலையின்மேலேறினான்.—அவன் மூதி
யோரைநோக்கி, நாங்கள் உங்களிடத்தில் திரும்
பிவருமளவும், நீங்களிங்கே எங்களைக்காத்திருங்
கள். ஆரோனும், ஊரும், உங்களோடேயிருக்
கிறார்களே. ஒருவனுக்கு யாதொரு விவகார
முண்டானால், அவர்களிடத்தில் போகலாமென்
யரு றான்.—மோசே மலையின்மேலேற, ஒரு மேகம்
மலையைமூடிற்று. யெகோவாவின் மகிமைப்
யசு பிரகாசம் சீனாய் மலையின்மேலே தங்கிற்று.—மே
கம் ஆறுநாள் அதை மூடியிருந்தது. ஏழாம்நா
ளில் அவர் மேகமத்தியில்நின்று மோசேயை அ
ழைத்தார்.—மலை யுச்சியில் தோற்றிய யெகோ யஎ
வாவின் மகிமைப்பிரகாசம் இஸரவேல்சந்ததி
யாருடைய பார்வைக்குச்சுவாலிக்கிற அக்கினி
போலப் பிரகாசித்தது.—மோசே மேகமத்தியிற் யஅ
பிரவேசித்து மலையின்மேலேறினான். மோசே
இரவும்பகலும் நாற்பதுநாள் மலையிலிருந்தான்.

## உரு. அதிகாரம்.

க. ஆவாசம் நிருமாணிக்கும்படி தேவன் கட்ட ளையிடல்: ய. வேதப்பெட்டிலட்சணம்: யஎ. கிருபாசயத்தினிலட்சணம்: உங. பீடமுந்தெய் வசமுக அப்பமும்: ஙக. செடிவிளக்கினிலட் சணம்.

யெகோவா மோசேயை நோக்கி,—இஸர க
வேல் சந்ததியார் எனக்குக் காணிக்கையைக் உ
கொண்டுவந்து செலுத்தும்படிக்கு, அவர்களுட
னேபேசுவாயாக. இஷ்டத்துடன் மனப்பூர்வ
மாய்க்கொடுப்பவன் எவனோ, அவனிடத்தில் எ
னக்குக்காணிக்கையை வாங்குவீர்களாக.—நீங் ங
களவர்களிடத்தில் வாங்கவேண்டியகாணிக்கை
யாவன,—பொன், வெள்ளி,பித்தளை, நீலம், தூமி ச
ரம்,சிவப்பு என்னும்நிறங்களையுடைய மெல்லிய
பஞ்சினூல்,வெள்ளாட்டுமயிர்,-சிவப்புவன்னங் ரு
கொடுத்தஆட்டுக்கடாத்தோல்,தகசின்தோல், சீத்
தீம்மரம்,—விளக்கெண்ணெய், அபிஷேக தைலத் சு
துக்குப்பரிமளதிரவியங்கள், தூபத்துக்குச் சுக
ந்தவருக்கங்கள்,—கோமேதக இரத்தினம்,ஏபோத் எ
துவஸ்திரத்திலும், மார்புப்பதக்கத்திலும்,பதிக்கு
மிரத்தினங்கள், என்னுமிவைகளாம்.—அவர்கள் அ
எனக்கு ஒருபரிசுத்தஸ்தானத்தை உண்டாக்கக்
கடவர்கள்: நான் அவர்களுக்குள்வாசம்பண்ணு
வேன்.—நான் உனக்குக்காட்டுகிறஆவாசத்தின் கூ
சாயலின்படிக்கும், அதிலுள்ளசகல பாத்திரத்
தின்சாயலின்படிக்கும், நீங்கள்முழுவதுஞ்செய்
வீர்களாக.
சீத்தீம் மரத்தினால், இரண்டரைமுழ நீளமும் ய
ஒன்றரை முழ அகலமும், ஒன்றரைமுழ உயர
மூமாக ஒரு பெட்டிசெய்யவேண்டும். அதைச்
செம்பொற்றகட்டால் மூடவேண்டும்.—அதற்கு யக
ள்ளும்புறம்பும் மூடி அதின் நான்குபக்கத்திலும்
பொன்னினாலே திரணைவகுத்து,—அதற்கு நாலு யஉ
பொன்வளையங்களை வார்ப்பித்து, அவைகளை அ
தின் நாலுமூலைகளிலுஞ்சேர்த்து, ஒருபக்கத்தில்
இரண்டுவளையங்களும், மற்றப்பக்கத்தில் இரண்
டுவளையங்களும் இருக்கும்படிசெய்து,—சீத்தீம் யங
மரத்தால் தண்டுகளையும் செய்து, அவற்றையும்

(ச) உபா.ஙக.கூ. ஆதி.உஅ.யஅ. (சு) எபி.கூ.யஅ. (எ) எபி.கூ.யகூ. (அ) எபி.கூ.உய. எபி யங.உய. க.பேதுரு.க.க. (ய) ஆதி.கஉ.ஙய. அதி.ஙக. நியா.யங.உஉ. ஏசா.சுக,ரு. யோவா.க.யஅ. க.திமோ.சு.யசு. எசேக்.க.உசு. வெளி. சகூ. மத்.யஎ.உ. (யக) ஆதி.யகூ.உக. ஆதி.யசு.யங. நியா.யங.உஉ. ஆதி.ஙக.ருச. க.கொரி.ய.யஅ. (யஉ) அதி. ஙக.யஅ. உபா.ஞ.உஉ.(யங)அதி.கஉ.யஎ. வச.உ. (யரு) அதி.யகூ.கூ,யசு. மத்.யஎ.ரு.(யசு)எண்.யச.ய. (யஎ) அதி. கூஉ. அதி.யகூ.யஅ. எபி.யஉ.யஅ,உகூ. (யஅ) அதி.ஙச.உஅ. உபா.கூ.கூ.—(உரு. ஆதி.உ.) அதி.ஙரு.ரு,உக. க. நாளா.உகூ.ங,ஞ,கூ,யச. எஸ்ரு.உ.சுஅ. நெகி.யக.உ. உ.கொரி.அ.யஉ. உ.கொரி.கூ.எ. (ச) ஆதி.சக.சஉ. (சு) அதி. உஎ.உய. அதி.ஙய.உங. அதி.ஙய.ஙச. (எ) அதி.உஅ ச,சு. அதி.உஅ.யரு. (அ) அதி.ஙசு.க,ஙச. எபி.கூ.க,உ. க.இரா. சு.யஉ. உ.கொரி.சு.யசு. எபி.ங.சு. வெளி.உக.ங. (கூ)வச.சய. (ய) எபி.கூ.ச.

௰௪ பொற்றகட்டால்மூடி,—அந்தத் தண்டுகள்பெட்
டியைச் சுமக்கும்படி அவைகளைப் பெட்டியின்
பக்கங்களிலுள்ள வளையங்களில் பாய்ச்சக்கட
௰௫ வாய்.—அந்தத்தண்டுகள் பெட்டியினின்றுங் க
ழற்றப்படாமல், அதின்வளையங்களோடேயிருக்
௰௬ கவேண்டும்.—அந்தப்பெட்டிக்குள் நான் உனக்
குத்தருஞ் சாட்சிப்பத்திரத்தை வைப்பாயாக.
௰௭ மேலும் இரண்டரை முழநீளத்திலும், ஒன்ற
ரைமுழ அகலத்திலும், செம்பொன்னினால் ஒரு
௰௮ கிருபாசயம்பண்ணு.—அந்தக் கிருபாசயத்தின்
இரண்டோரத்திற்கும், பொன்னினால் வைரவே
லையாக இரண்டு கெருபிகளையுண்டாக்கு; கிரு
பாசயத்தின் இரண்டோரத்திற்கும் இரண்டுகெ
௰௯ ருபிகளை உண்டாக்கு.–ஒருவிளிம்புக்கு ஒருகெ
ருபியையும், மற்றவிளிம்புக்கு ஒருகெருபியை
௨௰ யுமுண்டாக்கு.—அந்தக் கெருபிகள், கிருபாச
யத்தைத்தங்கள்சிறகுகள்மூடத்தக்கதாக, ஒன்றுக்
கொன்றெதிர்முகமாய்த் தங்கள் சிறகுகளை உயர
விரித்தபடிஇருக்கவேண்டும்: கெருபிகளுடைய
முகமோ, கிருபாசயத்தை நோக்கினபடியிருக்க
௨௧ வேண்டும்.—அந்தக் கிருபாசயத்தை நீ பெட்டி
யின்மேல்வைத்து, அந்தப்பெட்டிக்குள்ளேநான்
உனக்குத்தரும் சாட்சிப் பத்திரத்தை வைக்க
வேண்டும்.
௨௨ சாட்சிப்பெட்டியின்மேலிருக்கிற இரண்டு
கெருபிகளின்மத்தியினின்றும், கிருபாசயத்துக்
குமேலாய் நான் உனக்குத்தரிசனமாகி இஸ்ர
வேல்சந்ததியாருக்கு நான்கட்டளையிடும்யாவை
௨௩ யும் உன்னிடத்தில் சொல்லுவேன்.–சீத்தீம்மரத்
தால் இரண்டுமுழநீளத்திலும் ஒருமுழவகலத்தி
லும்ஒன்றரைமுழவுயரத்திலும் ஒருபீடத்தையுஞ்
௨௪ செய்வாயாக.–அதைச் செம்பொற்றகட்டால்மூ
டி, அதின் நான்குபக்கத்திலும், பொன்னினால்
௨௫ விளிம்புசெய்வாயாக.—அதின் நான்குபக்கங்க
ளிலும் நாலுவிரற்கடையகலச் சட்டத்தையும்,
அதின் நாலுபக்கங்களிலும் பொன் விளிம்பை
௨௬ யுஞ்செய்வாயாக.–அதற்கு நாலுபொன்வளையங்
களைப்பண்ணி, அவைகளையதின் நான்குமூலைக
ளிலுமுள்ளநான்குகால்களிலும்இடவேண்டும்.-
௨௭ பீடத்தைச்சுமக்கும்படி தண்டுகளை மாட்டத்தக்
கதாக அந்த வளையங்கள் சட்டத்தினருகோடே
௨௮ யிருக்கவேண்டும்.-பீடத்தைச்சுமக்கும்படி தண்
டுகளைச் சீத்தீம் மரத்தினால்செய்து அவைகளைப்
௨௯ பொற்றகட்டால்மூடுவாயாக.–அதற்குரிய கலங்
களையும், கரண்டிகளையும், கிண்ணங்களையும், பா
னபலியை வார்ப்பதற்குரியகரகங்களையுஞ்செம்
௩௰ பொன்னினால் செய்யவேண்டும்.—என் சந்நிதி
யில், பீடத்தின்மேல் நித்தமுஞ் சமுகத்தப்பம்
வைக்கவேண்டும்.
௩௧ செம்பொன்னினால் ஒரு கிளைவிளக்கையுஞ்
செய்வாயாக. அந்த விளக்கைக் கொட்டுவேலை
யாகச்செய்யவேண்டும். அதின் தண்டும், கிளை
களும், அரும்புகளும், காய்களும், பூக்களும்,
அப்படியே செய்யப்படவேண்டும்.—அந்தக்கி ௩௨
ளைவிளக்கின் ஒருபக்கத்தில் மூன்று கிளைகளும்,
மற்றப்பக்கத்தில் மூன்றுகிளைகளுமாக ஆறுகிளை
கள் அந்தக்கிளைவிளக்கின் பக்கங்களில் விட
வேண்டும்.–ஒரு கிளையில் வாதுமக்கொட்டைக் ௩௩
கொப்பானமூன்றுஅரும்புகளும், ஒருகாயும், ஒரு
பூவும், மற்றக்கிளையிலும் வாதுமக்கொட்டைக்
கொப்பான மூன்று அரும்புகளும், ஒருகாயும்,
ஒரு பூவுமிருக்கவேண்டும்: கிளைவிளக்கினின்
றும்புறப்படும் ஆறு கிளைகளிலும் இப்படியே இ
ருக்கவேண்டும்.—கிளைவிளக்கின் தண்டிலும் ௩௪
வாதுமக்கொட்டைக்கொப்பான நாலு அரும்பு
களும் அதின் காய்களும், பூக்களுமிருக்கவேண்
டும்.–கிளைவிளக்கினின்றும் புறப்படும் ஆறுகிளை ௩௫
களுள்ளும் முதற்சோட்டின்கீழ் ஒரு காயும், இ
ரண்டாம்சோட்டின்கீழ் ஒரு காயும், மூன்றாம்
சோட்டின்கீழ் ஒரு காயுமிருக்கவேண்டும்.—அ ௩௬
வைகளின் காய்களும், அவைகளின் கிளைகளும்,
பொருத்தில்லாதிருக்கவேண்டும்; முழுவதும்செ
ம்பொன்னினால் செய்யப்பட்ட கொட்டுவேலை
யாயிருக்கவேண்டும்.—அதில் ஏழு அகல்களைச் ௩௭
செய்வாயாக. அவைகள் அதற்குநேரே வெளிச்
சங் கொடுக்கும்படிவிளக்குக்கொளுத்தக்கடவர்
கள்.—அதற்கேற்ற திரிவெட்டிகளையும், திரிப் ௩௮
பாத்திரங்களையும், செம்பொன்னினால் செய்ய
வேண்டும்.—அதையும், அதற்குரியபாத்திரங்கள் ௩௯
யாவையும், ஒரு கிக்கார்செம்பொன்னினால்பண்
ணவேண்டும்.—மலையில் நீ கண்டசாயலாகவே ௪௰
அவைகளைச்செய்யும்படி, சாவதானமாயிரு.

## ௨௬. அதிகாரம்.

௧. ஆவாசத்திலிடுந்திரை: ௭. ஆவாசத்தை மூடுதற்குரிய வெள்ளாட்டு ரோமப்போர்வை ஆட்டுக்கடாத்தோற்போர்வை தகசுத்தோற்போர்வை: ௰௫. ஆவாசத்தின் அடைபலகை: ௨௬. திரைச்சீலை: ௩௧. ஆவாசவாயிற்றிரைச்சீலை.

மேலும், நீலம் தூமிரம் சிவப்பு என்னும் நிறங் ௧
கள் கொடுக்கப்பட்ட திரித்தமெல்லியபஞ்சினூ
லினாலாக்கப்பட்டும், விசித்திரிக்கப்பட்டகெரு
பிகள் பொருந்தியுமிருக்கும் பத்து மேல் மூடிச்
சீலைகளினால், ஒரு ஆவாசத்தைச்செய்வாயாக.—
ஒவ்வொரு மேல் மூடிச் சீலை, இருபத்தெட்டு ௨
முழநீளமும், நாலுமுழஅகலமுமாயிருக்கவேண்
டும். மேல்மூடிச்சீலைகளெல்லாம் ஒரேயளவாக
வேயிருக்கவேண்டும்.—ஐந்து மேல்மூடிச் சீலை ௩
கள் ஒன்றோடொன்று தொடுக்கப்பட்டிருக்க
வேண்டும்; மற்றைந்து மேல்மூடிச் சீலைகளும்,
அப்படியே ஒன்றோடொன்று தொடுக்கப்பட்

(௰௫)௧.இரா.௮.௮. (௰௬) அதி.௩௧.௰௮. உபா.௰.௨,௫. ௧.இரா.௮.௯. ௨.இரா.௰௧.௰௨. எபி.௯.௪. (௰௭) ரோ.௩.௨௫. எபி.௯.௫. (௨௰) ௧.இரா.௮.௭. எபி.௯.௫. (௨௧) அதி.௨௬.௩௪. (௨௨) அதி.௨௯.௪௨,௪௩. எண்.௰௭.௪. எண்.௭.௮௯. ௧.சாமு.௪.௪. ௨.சாமு.௬.௨. ௨.இரா.௰௯.௰௫. சங்.௮௰.௧. சங்.௯௰.௧. ஏசா.௩௭.௰௬ (௨௩)௧.இரா ௭.௪௮. எபி.௯.௨. (௩௰) லேவி.௨௪.௫,௬. (௩௧) ௧.இரா.௭.௪௯. சக.௪.௨. எபி.௯.௨. வெளி.௧.௰௨. வெளி ௪.௫. (௩௭) அதி.௩௰.௭. லேவி.௨௪.௩,௪. ௨.நாளா.௰௩.௰௧. எண்.௮.௨.(௪௰)௧.நாளா.௨௮.௰௧,௰௯. எபி.௮.௫.—(௨௬.அதி.௧.) அதி.௩௬.௮.

௪ டிருக்கவேண்டும்.—ஒரு மேல் மூடிச் சீலையின் கடை ஓரத்தில், நீல நூலால் வளையங்களிடுவாயாக. மற்ற மேல்மூடிச்சீலையின் கடை ஓரத்தி
௫ லும் அப்படியே செய்யவேண்டும்.—ஒன்றோடொன்று இணையும்படி ஒருமேல்மூடிச்சீலையில் ஐம்பது வளையங்களையும் தொடுக்கப்படும். மற்ற மேல்மூடிச்சீலையின் கரையிலே ஐம்பது வளை
௬ யங்களையுஞ்செய்வாயாக.—ஐம்பது பொற்கொளுவிகளையும்பண்ணி, ஒரு ஆவாசமாகும்படிக்கு, அந்தக்கொளுவிகளால் மேல்மூடிச்சீலைகளை ஒன்றோடொன்று தொடுத்துவிடுவாயாக.
௭ ஆவாசத்தின்மேலே மூடும்படி, வெள்ளாட்டுரோமத்தினாலே பதினொரு மேல்மூடிச்சீலையை
௮ யுண்டாக்குவாய்.—ஒவ்வொரு மேல்மூடிச்சீலை முப்பதுமுழ நீளமும், நாலுமுழ அகலமுமாயிருக்கவேண்டும்: பதினொரு மேல்மூடிச் சீலைக
௯ ளும் ஒரு அளவாயிருக்கவேண்டும்.-ஐந்துமேல் மூடிச் சீலைகளை ஒன்றாய் இசைக்கவேண்டும், மற்றை ஆறுமேல்மூடிச்சீலைகளையும், அப்படி
௰ யே ஒன்றாயிசைக்கவேண்டும்.—ஆறாம் மேல் மூடிச்சீலையை மடித்து, ஆவாசத்தின் முற்பக்கத்தில்விடுவாயாக. ஒருமேல்மூடிச்சீலையின் கடை ஓரத்தில் ஐம்பது வளையங்களையிடவேண்டும். அவைகளிசைந்திருக்கும்படி, மற்ற மேல்மூடிச் சீலையின் கரைக்கும் ஐம்பதுவளையங்களையிட
௰௧ வேண்டும்.—ஐம்பது பித்தளைக்கொளுவிகளைச் செய்து, கொளுவிகளை வளையங்களில்மாட்டி, ஒரே கூடாரமாகும்படி அவைகளைத்தொடுத்து
௰௨ விடுவாயாக.—கூடாரத்தின் மேல் மூடிச்சீலைகளில் மிஞ்சினபாதிச்சீலை ஆவாசத்தின் பிற்புறத்
௰௩ தில் தொங்கவேண்டும்.—கூடாரத்தின் மேல்மூடிச்சீலைகளின் நீளத்திலே மிஞ்சியிந்தப்பக்கத்திலிருக்கும்முழமும், அந்தப்பக்கத்திலிருக்கும் முழமும், கூடாரத்தை மூடும்படி அதின்பக்கங்
௰௪ களிலே தொங்கவேண்டும்.—சிவப்பு வன்னங்கொடுத்த ஆட்டுக்கடாத்தோலினால் கூடாரத்திற்கு ஒருமேற்போர்வையையும், அதின்மேலே தகசுத்தோலினால் வேறொருபோர்வையையும் உண்டுபண்ணுவாயாக.
௰௫ நிமிர்ந்துநிற்கும்படி, ஆவாசத்துக்குச் சீத்தீம்
௰௬ மரத்தாற் பலகைகளாக்கு.—ஒவ்வொரு பலகை பத்துமுழநீளமும், ஒன்றரைமுழ அகலமுமாயி
௰௭ ருக்கவேண்டும்.—ஒவ்வொரு பலகைக்கு ஒன்றோடொன்று ஒத்த இரண்டு கழுந்துகளிருக்கவேண்டும். ஆவாசத்தின் பலகைகளெல்லாவற்
௰௮ றிற்கும் இப்படியேசெய்வாயாக.—ஆவாசத்திற்கு நீயாக்கும் பலகைகளிலிருபதுபலகைகள் தென்
௰௯ றிசையிலே தென்புறத்திலிருக்கவேண்டும்.—அந்த இருபது பலகைகளின்கீழே நாற்பது வெள்ளிப்பாதங்களை உண்டுபண்ணுவாயாக. ஒருபலகையின்கீழ் அதினிரண்டுகழுந்துக்கும் இரண்டு பாதங்களும், வேறு பலகையின்கீழ் அதினிரண்டு கழுந்துக்கும் இரண்டுபாதங்களுமிருக்கவேண்டும்.—ஆவாசத்தின் மறுபக்கமாகிய வடபுறத் ௨௰
திலும் இருபது பலகைகளையும், அவைகளுக்கு நாற்பதுவெள்ளிப்பாதங்களையுஞ்செய்வாயாக.-ஒரு பலகையின் கீழிரண்டுபாதங்களும், மற்றப் ௨௧
பலகையின் கீழிரண்டு பாதங்களுமிருக்கவேண்டும்.—ஆவாசத்தின்பின்னாக,மேற்புறத்தில்,ஆறுப ௨௨
லகைகளையும்;—ஆவாசத்தின்இருபக்கத்துமுள்ள ௨௩
மூலைகளுக்கு, இரண்டுபலகைகளையுஞ்செய்வாயாக.—அவைகள் கீழே இசைக்கப்பட்டிருக்க ௨௪
வேண்டும். மேலேயும் ஒருவளையத்தினாலிசைக்கப்பட்டிருக்கவேண்டும்: இரண்டும் அப்படியேயிருக்கவேண்டும். அவைகளிரண்டு மூலைகளுக்குமாகும்.-அந்தப்படி எட்டுப்பலகைகளும், ஒவ் ௨௫
வொரு பலகையின்கீழே இவ்விரண்டு பாதங்களாகப் பதினாறு வெள்ளிப்பாதங்களுமிருக்கும்.
சீத்தீம் மரத்தினால், ஆவாசத்தின் ஒருபக்கத் ௨௬
துப்பலகைகளுக்கு ஐந்து தாழ்களையும்,—ஆவா ௨௭
சத்தின் மற்றைப்பக்கத்துப்பலகைகளுக்குஐந்து தாழ்களையும், ஆவாசத்தின் பின்புறமாகிய மேற்றிசையிலுள்ள பலகைகளுக்கு ஐந்து தாழ்களையுமுண்டாக்குவாய்.—நடுத்தாழ், ஒரு முனைதொ ௨௮
டங்கி, மறுமுனைமட்டும், பலகைகளினுடைய மையத்தில், உருவப்பாய்ச்சப்பட்டிருக்கவேண்டும்.—பலகைகளைப்பொற்றகட்டால் மூடுவதும், ௨௯
தாழ்கள்பாய்ச்சப்படும்வளையங்களைப்பொன்னினாற் செய்வதுமன்றி, தாழ்களையும் பொற்றகட்டால் மூடவேண்டும்.—இவ்விதமாகவே, மலை ௩௰
யில் உனக்குக்காண்பிக்கப்பட்ட சாயலின்படி, ஆவாசத்தை நிறுத்துவாயாக.
நீலம் தூமிரம் சிவப்பென்னும் நிறங்களையு ௩௧
டைய திரித்த மெல்லியபஞ்சினூலினால், ஒருதிரைச்சீலையாக்கு. அதில் விசித்திரவேலையான கெருபிகளும் வைக்கப்படவேண்டும்.—சீத்தீம் ௩௨
மரத்தினாற்செய்து பொற்றகட்டால், மூடப்பட்ட நாலு தூண்களிலே அதைத்தூக்கிவிடு. நாலு வெள்ளிப்பாதங்களின்மேல் நிற்கும். அவைகளின் கொளுவிகள் பொன்னினாற் செய்யப்படவேண்டும்.—கடைப்பூட்டின்கீழே, அந்தத்தி ௩௩
ரைச்சீலையைத்தூக்கிச்சாட்சிப்பெட்டியை அங்கே திரைக்குள்ளாக வைக்கக்கடவாய். அந்தத் திரைச்சீலை பரிசுத்த ஸ்தானத்திற்கும்மிகவும்பரிசுத்த ஸ்தானத்திற்கும் பிரிவைஉண்டாக்கும்.—பரிசுத்தஸ்தானத்திலுள்ள சாட்சிப்பெட்டியின் ௩௪
மேல் கிருபாசயத்தை வைப்பாயாக.—திரைச்சீ ௩௫
லைக்குவெளியே, பீடத்தையும், பீடத்துக்கெதிரே ஆவாசத்தின் தென்புறத்தே கிளைவிளக்கையும், வைப்பாயாக. பீடத்தை வடபுறமாகவைக்கவேண்டும்.—கூடாரத்தின் வாசலுக்கு, நீலம் ௩௬
தூமிரம் சிவப்பென்னும் நிறங்களுள்ள திரித்த மெல்லிய பஞ்சினூலினால், விசித்திரமான தையல்வேலையோடே, ஒரு தொங்குதிரையையுண்

(௭) அதி.௩௬.௰௪. (௰௪) அதி.௩௬.௰௯. (௩௰) அதி.௨௫.௯,௪௰. எபி.௮.௫. (௩௧) ௨.நாளா.௩.௰௪. மத்.௨௭.௫௧. எபி.௯.௩. (௩௩) அதி.௨௫.௰௬. அதி.௪௰.௨௧. லேவி.௰௬.௨. எபி.௯.௨,௩. (௩௪) அதி.௨௫.௨௧. எபி.௯.௫. (௩௫) அதி.௪௰.௨௨. எபி.௯.௨. அதி.௪௰.௨௪. (௩௬) அதி.௩௬.௩௭.

௩௭ டாக்கி,—அந்தத் தொங்குதிரைக்குப் பொற்கொ
ளுவியுடன் சீத்தீம்மரத்தால், ஐந்து தூண்களைச்
செப்பமிட்டு, அவைகளைப்பொற்றகட்டால் மூ
டி,அவைகளுக்கு ஐந்துபித்தளைப்பாதங்களைவார்
ப்பிக்கக்கடவாய்.

## ௨௭. அதிகாரம்.

௧. வேதிகையினிலட்சணம்: ௯. ஆவாசத்தின்பிராகாரம்: ௰௮. அதினளவு: ௨௰. தைலவிதி.

ஐந்துமுழ நீளமும், ஐந்துமுழ அகலமும், மூன்
றுமுழ உயரமுமாகச் சீத்தீம்மரத்தால், சதுரமாய்
௨ ஒரு வேதிகை உண்டுபண்ணுவாயாக.—அதின்
நாலுமூலைகளிலும், நாலுகொம்புகளை உண்டாக்
குவாய். அதின்கொம்புகள் அதற்கு அபின்னமா
யிருக்கவேண்டும்: அதைப்பித்தளைத் தகட்டால்
௩ மூடவேண்டும்.—அதின் சாம்பலைவைக்கத்தக்க
சாம்பற் பாத்திரங்களும், கரண்டிகளும், கிண்
ணங்களும், முட்கருவிகளும், அக்கினிப் பாத்
திரங்களுமாகிய சகல பாத்திரங்களையும், பித்த
௪ ளையினாற் செய்வாயாக.—கண்ணறைகளோடுங்
கூடிய ஒருபித்தளைச்சல்லடையைச்செய்து அச்
சல்லடையின் நாலுமூலைகளிலும் நாலு பித்தளை
௫ வளையங்களை உண்டாக்கி,—அந்தச் சல்லடை
வேதிகைக்குள்ளே பாதியுயரத்திலிருக்கும்படி,
அதை அந்தவேதிகைச்சுற்றடைப்புக்குக் கீழாக
௬ வைக்கவேண்டும்.—வேதிகைக்குச் சீத்தீம்மரத்தா
லே தண்டுகளையுஞ்செய்து, அவைகளைப் பித்த
௭ ளைத்தகட்டால் மூடுவாயாக.—வேதிகையைச்சு
மக்கத்தக்கதாக அந்தத்தண்டுகள், அதினிரண்டு
பக்கங்களிலும் வளையங்களிலே பாய்ச்சப்பட்
௮ டிருக்கவேண்டும்.—உள் வெளி விட்டு, பலகை
களினால் அதைச்செய்யவேண்டும்; மலையில் உ
னக்குக்காண்பிக்கப்பட்டபடியே அதைச்செய்
யக்கடவர்கள்.
௯ ஆவாசத்துக்குப்பிராகாரத்தையும் உண்டுபண்
ணு. தென்திசையில் தென்புறத்தின் பிராகாரத்
துக்குத்திரித்தமெல்லியபஞ்சினூலினாற்செய்யப்
பட்ட நூறுமுழநீளமுள்ள தொங்குதிரைகள் இ
ருக்கவேண்டும். அவைகளுக்கு இருபது தூண்
௰ களும்,-அவைகளுக்கு இருபதுபாதங்களும்,பித்
தளையினால் இருக்கவேண்டும். தூண்களின்கொ
ளுவிகளும், பூண்களுமோ, வெள்ளியினால் இ
௰௧ ருக்கவேண்டும்.—அப்படியே வடபுறத்தின்நீளத்
துக்கும், நூறுமுழநீளமுள்ள தொங்குதிரைகள்
இருக்கவேண்டும். அவைகளுக்கு இருபது தூண்
களும், அவைகளின் இருபதுபாதங்களும், பித்த
ளையால் இருக்கவேண்டும். தூண்களின் கொளு
விகளும், பூண்களுமோ, வெள்ளியினால் இருக்
௰௨ கவேண்டும்.-மேற்குப்பிராகாரத்தின் அகலத்துக்
கு ஐம்பது முழ நீளமுள்ளதொங்குதிரைகள் இ
ருக்கவேண்டும். அவைகளுக்குத்தூண்கள்பத்து;
௰௩ பாதங்கள்பத்து.—சூரியனுதிக்கிற கிழக்குப்பக்
கத்தின்பிராகாரம் ஐம்பதுமுழ அகலமாயிருக்க
வேண்டும்.—ஒருபுறத்துக்குப் பதினைந்துமுழ நீள ௰௪
முள்ளதொங்குதிரைகளும், அவைகளுக்கு மூன்
று தூண்களும், அவைகளுக்கு மூன்று பாதங்க
ளும் இருக்கவேண்டும்.—மற்றப்புறத்துக்குப் பதி ௰௫
னைந்து முழ நீளமுள்ள தொங்குதிரைகளும், அ
வைகளுக்குமூன்று தூண்களும், அவைகளுக்கு
மூன்று பாதங்களும் இருக்கவேண்டும்.—பிராகா ௰௬
ரத்தின் வாசலுக்கு, நீலம் தூமிரம் சிவப்பென்
னும்நிறங்களையுடைய திரித்தமெல்லியபஞ்சினூ
லினால், விசித்திரமான தையல்வேலையோடே
செய்யப்பட்ட இருபதுமுழநீளமுள்ள ஒருதொங்
குதிரையும், அதற்கு நாலு தூண்களும், அவைக
ளுக்கு நாலுபாதங்களும் இருக்கவேண்டும்.—
சுற்றுப்பிராகாரத்தின் தூண்கள்யாவும், ஒன்றோ ௰௭
டொன்று வெள்ளியினால் இசைக்கப்படவேண்
டும். அவைகளின் கொளுவிகள் வெள்ளியினா
லும், அவைகளின் பாதங்கள் பித்தளையினாலும்
இருக்கவேண்டும்.
திரித்தமெல்லிய பஞ்சினூலையும், பித்தளைப் ௰௮
பாதங்களையுமுடைய பிராகாரத்தின் நீளம்,நூறு
முழமும்,ஒவ்வொருபுறத்தின்அகலம்ஐம்பதுஐம்
பதுமுழமும், உயரம் ஐந்துமுழமுமாயிருக்கவே
ண்டும்.—ஆவாசத்தில் செய்யுமாராதனைக்கேற்ற ௰௯
பாத்திரங்கள்யாவும், அதின் முனையாணிகள்யா
வும், பிராகாரத்தின் முனையாணிகள்யாவும், பித்
தளையாயிருக்கவேண்டும்.
விளக்கு எப்பொழுதும் எரிந்துகொண்டிருக் ௨௰
கும்படி செய்யும்பொருட்டு, இடித்துப்பிழிந்த
சீதவிருட்சத்தின் எண்ணெயை உன்னிடத்திற்
கொண்டுவரும்படி, இஸ்ரவேல்சந்ததியாருக்குக்
கட்டளையிடு.—சபையின் ஆவாசத்தில், சாட்சிப் ௨௧
பெட்டிக்கு முன்னிட்ட திரைச்சீலைக்குவெளி
யே, ஆரோனும், அவன்புத்திரரும், சாயங்காலந்
தொடங்கி, விடியற்காலம்வரைக்கும், யெகோ
வாவின் சந்நிதானத்தில் அதை ஒழுங்குபடுத்
தக்கடவர்கள்: இதுவே தலைமுறைதோறும்,இஸ
ரவேல் சந்ததியாருக்கு நித்திய நியமம்.

## ௨௮. அதிகாரம்.

௧. ஆரோனும் அவன்புத்திரரும் ஆசாரியராக நியமிக்கப்படல்: ௨. அவர்களுக்குப்பரிசுத்தவஸ்திரந்தரிக்கக்கட்டளையிடல்: ௫. எபோத்வஸ்திரம்: ௰௫. பன்னிரண்டு இரத்தினங்கள் பதிந்த மார்புப்பதக்கம்: ௩௰. ஊரிம் தூமிமினிலட்சணம்: ௩௧. எபோத்தையுடைத்தான நீலவஸ்திரம்: ௩௬. பாகையின்பட்டம்: ௩௯. தையல்விசித்திரித்த சட்டை, கச்சு, குல்லாக்களினிலட்சணம்: ௪௰. ஆரோனும் அவன் புத்திரருமானவர்களின் வஸ்திரம்.

உன்சகோதரனாகிய ஆரோன் எனக்கு ஆசாரியத் ௧
தொண்டுசெய்யும்படி நீ ஆரோனையும், அவனுட
னே ஆரோனின்புத்திரராகிய நாதாபு, அபியூ, எ
லீயேசார்,ஈதாமார்என்னுங்குமாரரையுங்கூட இ
ஸரவேலரினின்றுந்தெரிந்துநியமிக்கக்கடவாய்.

(௩௭) அதி.௩௬.௩௮.—(௨௭. அதி. ௧.) எசேக்.௪௩.௰௩. (௨) எண்.௰௬.௩௮. (௮) அதி.௨௬.௩௰. (௯) அதி.௩௮.௯. (௨௰) லேவி.௨௪.௨. (௨௧) அதி.௨௬.௩௧,௩௩. ௧.சாமு.௩.௩. ௨.நாளா.௰௩.௰௧. லேவி.௩.௰௭. லேவி.௨௪.௯. எண். ௰௮.௨௩. ௧.சாமு.௩௰.௨௫.—(௨௮. அதி. ௧.) எண்.௰௮.௭. எபி.௫.௧,௪.

௨ மகிமையின் பொருட்டும், அலங்காரத்தின்
பொருட்டும், உன்சகோதரனாகிய ஆரோனுக்குப்
௩ பரிசுத்தவஸ்திரங்களை உண்டாக்கக்கடவாய்.—ஆ
ரோனை எனக்கு ஆசாரியத் தொண்டுசெய்யத்தக்
கதாகப் பரிசுத்தப்படுத்தும்படி, அவனுக்குவஸ்
திரங்களை உண்டாக்கும்பொருட்டு, ஞான ஆவி
யால் நான் பூர்த்திசெய்த சகல விவேகிகளுக்
௪ குங்கற்பிக்கக்கடவாய்.—மார்புப்பதக்கமும், எ
போத்தும், அங்கியும், விசித்திராங்கியும், பாகை
யும், இடைக்கச்சும் என்னும்வஸ்திரங்களை உண்
டாக்கவேண்டும். எனக்கு ஆசாரியத்தொண்டு
செய்யும்படி, உன் சகோதரனாகிய ஆரோனுக்
கும், அவன் புத்திரருக்கும், பரிசுத்த வஸ்திரங்க
ளை உண்டாக்கவேண்டும்.
௫ அவர்கள்பொன்னையும், நீலம், தூமிரம், சிவப்
பென்னும் நிறங்களையுடைய மெல்லியபஞ்சினூ
௬ லையுமெடுத்து,-பொன்னினாலும், நீலம், தூமிரம்,
சிவப்பென்னும் நிறங்களுள்ள திரித்த மெல்லிய
பஞ்சினூலினாலும், விசித்திரவேலையாக ஒரு எ
௭ போத்தைச்செய்யக்கடவர்கள்.—அது ஒன்றாக இ
ணைக்கப்படும்பொருட்டு, இரண்டுதோளின்மே
லும், அதினருகிலிரண்டு துண்டுகளிருக்கவேண்
௮ டும்.—அந்த எபோத்தின்மேலிருக்கும் விசித்திர
மானகச்சு, அந்த வேலைக்கொப்பாகவே பொன்
னினாலும், நீலம் தூமிரம் சிவப்பென்னும் நிறங்
களுள்ள திரித்தமெல்லிய பஞ்சினூலினாலுஞ்
செய்யப்பட்டு, அதனோடே ஒன்றாயிருக்கவேண்
௯ டும்.-நீ இரண்டுகோமேதகஇரத்தினங்களைஎடுத்து
இஸரவேல் புத்திரருடைய நாமங்களை அவைக
௰ ளில்வரைவாயாக.-அவர்களுற்பத்திக் கிரமப்படி
யே அவர்களுடைய நாமங்களில் ஆறுநாமங்கள்
ஒரு இரத்தினத்திலேயும், மற்றஆறுநாமங்கள் மற்
௰௧ றை இரத்தினத்திலேயு மிருக்கவேண்டும்.—கல்
வெட்டுவேலையாக முத்திரையைப்போல, அந்த
இரண்டு இரத்தினங்களிலும் இஸரவேல் புத்திர
ருடைய நாமங்களை வரைவாயாக; அவைகளைப்
௰௨ பொற்குவளையிற்பதிப்பாயாக.—இஸரவேல்புத்
திரரைப்பற்றி ஞாபகச்சிலையாக, அவ்விரண்டு
இரத்தினங்களையும் எபோத் வஸ்திரத்தோளின்
௰௩ மேலிடுவாயாக.-யெகோவாவின் சந்நிதானத்
தில் ஆரோன்அவர்கள் நாமங்களை ஞாபகக்குறி
யாகத்தன்னிரண்டுதோள்களிலுந் தரிப்பானாக.—
௰௪ பொன்னினாலே குவளைகள்செய்து அதினருகில்
தொடுக்கப்படும் இரண்டு சங்கிலிகளைச் செம்
பொன்னினா லுண்டாக்கி, அந்தச்சங்கிலித்தொ
டர்பை அந்தக்குவளைகளிற் பூட்டிவிடு.
௰௫ நியாயத்தீர்ப்பின்மார்புப்பதக்கத்தை விசித்திர
வேலையாய்ச்செய்வாயாக; அதை எபோத்தின்
வேலைக்கொப்பாகப் பொன்னினாலும் நீலம் தூ
மிரம் சிவப்பென்னும் நிறங்களையுடைய திரித்த
மெல்லியபஞ்சினூலினாலுஞ் செய்யவேண்டும்.—
௰௬ அதுசதுரமும், இரட்டையும், ஒருசாண்நீளமும்,
ஒருசாண்அகலமுமாயிருக்கவேண்டும்.—அதிலே ௰௭
நாலுநிரையா யிரத்தினங்களை நிறையப்பதிப்பா
யாக. முதல்நிரைகெம்பும், புஷ்பராகமும், மரகத
மும், இவைமுதல்நிரை.-இரண்டாம்நிரை மாணி ௰௮
க்கமும். நீலமும், வச்சிரமும்.—மூன்றாம்நிரை ௰௯
பதுமராகமும், வைடூரியமும், செவ்வந்திக்கல்
லும்:-நாலாம்நிரை தர்சீஷ்இரத்தினமும், கோமே ௨௰
தகமும், இயஷ்பியும். இவைகள் அந்தந்தநிரையி
லே பொன்னினால் பதிக்கப்பட்டிருக்க வேண்
டும்.—முத்திரையைப்போல் இஸரவேல் புத்திரரு ௨௧
டைய நாமங்களைக்கொண்டிருக்கும் இவ்விரத்தி
னங்கள், அவர்கள்நாமக்கிரமப்படி, பன்னிரண்டு
கோத்திரங்களில், ஒவ்வொரு கோத்திரத்தின் நா
மம், ஒவ்வொன்றிலேயிருக்கவேண்டும்.-மார்புப் ௨௨
பதக்கத்தின் அருகில் தொடுக்கப்படுஞ் சங்கிலிக
ளைச் செம்பொன்னினாலுண்டாக்குவாயாக.—அ ௨௩
ந்தமார்புப்பதக்கத்துக்குஇரண்டுபொன்வளையங்
களைச்செய்து அவ்விரண்டுவளையங்களையும் மார்
புப் பதக்கத்தினிரண்டருகிலுமிட்டு,—பொற்சங் ௨௪
கிலித்தொடர்களிரண்டையும், மார்புப்பதக்கத்தி
னருகிலிருக்கும் இரண்டுவளையங்களிலும், மாட்
டிவிடு.—அவ்விரண்டு சங்கிலித்தொடர்புகளின் ௨௫
இரண்டுதலைகளையும், இரண்டுகுவளையிலும்மாட்
டி, எபோத் வஸ்திரத்தோளின்மேல்போடு.—நீ ௨௬
யிரண்டு பொன்வளையங்களைப்பண்ணி, அவைக
ளை எபோத்தின்கீழ்ப்புறத்துக்கெதிரான மார்புப்
பதக்கத்தினருகில், இரண்டு மூலைகளிலும்வைத்
து,—வேறிரண்டு பொன்வளையங்களைப்பண்ணி ௨௭
அவைகளை எபோத்தின் முன்புறத்தின் இரண்டு
கீழ்ப்பக்கங்களில் அதினிசைவுக்கெதிராகவும்,
எபோத்தின்கச்சுக்கு மேலாகவும், வைக்கக்கட
வாய்.—மார்புப்பதக்கம் எபோத்தின் விசித்திர ௨௮
மானகச்சுக்குமேலாயிருக்கும்படிக்கும், அது எ
போத்தைவிட்டு நீங்காதபடிக்கும், அதை அதின்
வளையங்களிலும், எபோத்தின்வளையங்களிலும்,
நீலநாடாவினால் கட்டவேண்டும்.—ஆரோன்பரி ௨௯
சுத்தஸ்தானத்தில் பிரவேசிக்கும்பொழுது இஸர
வேல் புத்திரரின் நாமங்களைத் தன்னெஞ்சிலிரு
க்கும் நியாயத்தீர்ப்பின்பதக்கத்திலே, யெகோ
வாவின் சந்நிதானத்தில் ஒருஞாபகக்குறியாக
நித்தமும் தரித்துக்கொள்ளவேண்டும்.
நியாயத்தீர்ப்பின் மார்புப்பதக்கத்திலே, ஊரீ ௩௰
மையும், தூமீமையுமிடுவாயாக. ஆரோன் யெ
கோவாவின் சந்நிதானத்தில் பிரவேசிக்கும்
பொழுது, அவைகள் அவனுடையநெஞ்சின்மே
லிருக்கவேண்டும். ஆரோன் தன்னெஞ்சின்மே
லே இஸரவேல் சந்ததியாருடைய நியாயத்தீர்ப்
பை யெகோவாவின் சந்நிதானத்தில் நித்தமுந்
தரித்துக்கொள்ளவேண்டும்.
எபோத்தினங்கியைத் தனிநீலவன்னமாயுண் ௩௰௧
டாக்கு.—அதின்மேலே நடுவிலொரு துவாரமி ௩௰௨
ருக்கவும், அந்தத்துவாரத்தைச்சுற்றி நெய்யப்பட்

(௨) அதி.௨௯.௫.௨௯. லேவி.௮.௭,௩௰. எண்.௨௰.௨௬.௨௮. (௩) அதி.௩௧.௰௧. அதி.௩௧.௩. (௪) வச.௰௫. வச.௬. வச.௩௧. வச.௩௯. (௬) அதி.௩௯.௨. (௰௨) அதி.௩௯.௭. யோசு.௪.௭. சக.௬.௰௪. (௰௫) அதி.௩௯.௮. (௰௭) அதி.௩௯.௰. (௨௧) வச.௰௨. (௩௰) லேவி.௮.௮. எண்.௨௭.௨௧. உபா.௩௩.௰. ௧.சாமு.௨௮.௬. எஸ்ரா.௨.௬௩. நெகே.௭.௬௫.

ட ஒரு நாடா இருக்கவும்வேண்டும். கிழியாத
படிக்கு அது மார்பின் கவசத்தினுடைய துவா
௩௩ ரத்துக்கொத்ததாக இருக்கவேண்டும்.—அதின் கீ
ழோரங்களைச்சுற்றி, நீலம் தூமிரம் சிவப்பென்
னும் நிறங்களுள்ள மாதுளம்பழங்களையும், அ
வைகளுக்கிடையிடையே சுற்றிலும் பொன்ம
௩௪ ணிகளையுஞ்செய்யவேண்டும்.-அங்கியினுடைய
ஓரங்களின்சுற்றிலும்ஒருபொன்மணியும்,ஒருமா
துளம் பழமும், ஒரு பொன்மணியும், ஒருமாது
௩௫ ளம்பழமுமாயிருக்கவேண்டும்.—ஆராதனைசெய்
யும்பொழுது ஆரோன் அதைத்தரித்துக்கொள்ள
வேண்டும். அவன் யெகோவாவின் சந்நிதா
னத்திலே பரிசுத்தஸ்தானத்தில் பிரவேசிக்கும்
பொழுதும், வெளியே வரும்பொழுதும், அவனு
டையசத்தங் கேட்கப்படவேண்டும்: அல்லாதி
ருந்தால் சாவான்.

௩௬ செம்பொன்னினால் ஒருபட்டத்தைச்செய்து,
முத்திரையைப்போல் "யெகோவாவுக்குப்ப
௩௭ ரிசுத்தம"என்று, அதில்வரைந்து.–அது பாகையி
லிருக்கும்படி, அதை நீலநாடாவினாலே பாகை
௩௮ யின்முற்புறத்தில் கட்டிவிடு.—இஸரவேல் சந்த
தியார், பரிசுத்தகாணிக்கைகளாகப் படைக்கும்
பரிசுத்த பதார்த்தங்களின்தோஷத்தை ஆரோன்
சுமக்க, அது ஆரோனுடைய நெற்றியின்மேலி
ருக்கவேண்டும். யெகோவாவின் சந்நிதானத்
தில் அவர்களங்கிகரிக்கப்படும்பொருட்டு, அது
எப்பொழுதும் அவன் நெற்றியின்மேலிருக்க
வேண்டும்.

௩௯ மெல்லிய பஞ்சினூலினாலே உள்ளங்கியைச்
செய்து, மெல்லியபஞ்சினூலினாலே பாகையை
யுண்டாக்குவாயாக; கச்சையோ, சித்திரத்தை
யல்வேலையாய்ச்செய்வாயாக.

௪௰ ஆரோனின் புத்திரருக்கும், மகிமையின்பொ
ருட்டும், அலங்காரத்தின்பொருட்டும், அங்கிக
ளையும்கச்சுக்களையும், குல்லாக்களையும், உண்டு
௪௧ பண்ணவேண்டும்.—அவைகளை உன் சகோதர
னாகிய ஆரோனுக்கும், அவன் குமாரர்களுக்கும்
உடுத்தி; அவர்களெனக்கு ஆசாரியத் தொண்டு
செய்யும்படி, அவர்களுக்குஅபிஷேகஞ்செய்து;
அவர்களைப் பரிசுத்தப்படுத்தி, அவர்களைப் பிர
௪௨ திஷ்டைபண்ணுவாயாக.–அவர்களுடைய நிரு
வாணத்தைமூடும்படிக்கு, இடுப்புமுதல் முழங்
காலளவும்மெல்லியபஞ்சினூலினாலே சல்லடங்
௪௩ களைச் செய்யவேண்டும்.—ஆரோனும், அவனு
டையபுத்திரர்களும், பரிசுத்தஸ்தானத்தில் ஆரா
தனைசெய்வதற்குச்சபையின் ஆவாசத்திற்பிரவே
சிக்கும்பொழுது, அவர்கள்பாவத்தைச் சுமந்து
சாவாதபடிக்கு, அவைகளைத்தரித்திருக்க வேண்
டும்: இது அவனுக்கும், அவன்பின்சந்ததிக்கும்,
நித்தியநியமம்.

## ௨௯. அதிகாரம்.

௧. ஆசாரியரபிஷேகத்துக்குரியபலி: ௩௮. நித்திய
தகனபலி: ௪௩. இஸரவேல் சந்ததியாருடன்வ
சிக்க தேவன் வாக்குத்தத்தம்செய்தல்.

அவர்களெனக்கு ஆசாரியத்தொண்டு செய்யும் ௧
படி, அவர்களைப்பரிசுத்தப்படுத்தும் பொருட்டு,
நீ அவர்களுக்குச்செய்யவேண்டுவது, ஒருகாளை
யையும், குற்றமற்ற இரண்டு ஆட்டுக்கடாக்களை
யுந் தெரிந்தெடுப்பாயாக.—மெல்லிய கோதுமை ௨
மாவினாலே புளிப்பில்லாத அப்பத்தையும், எண்
ணெயிற்பிசைந்த புளிப்பில்லாத அதிரசங்களை
யும், எண்ணெய்பூசப்பட்ட புளிப்பில்லாத அ
டைகளையும்பண்ணி,—அவைகளை ஒருபெட்டி ௩
யிலிட்டு, பெட்டியுடனே அவைகளையும், காளை
யையும், இரண்டு ஆட்டுக்கடாக்களையுங்கொண்
டுவருவாயாக.—ஆரோனையும், அவனுடையபுத் ௪
திரர்களையும் சபையின் ஆவாசவாசலிற் சேரப்
பண்ணி, அவர்களைச் சலத்திலே ஸ்நானம் பண்
ணுவித்து,–பின்பு அந்தவஸ்திரங்களை எடுத்து, ஆ ௫
ரோனுக்கு உள்ளங்கியையும், எபோத்தின் அங்
கியையும், எபோத்தையும், மார்புப்பதக்கத்தை
யுந்தரித்து, எபோத்திற்கேற்ற விசித்திரமான
கச்சையவனுக்குக்கட்டி,—அவன் சிரசிலே பா ௬
கையைவைத்து, பரிசுத்தகிரீடத்தைப்பாகையின்
மேற்கவித்து,—பின்பு அபிஷேகதைலத்தை எ ௭
டுத்து, அவனுடைய தலையின்மேற் சொரிந்து அ
பிஷேகஞ் செய்வாயாக.—பின்பு அவனுடைய ௮
புத்திரரை வருவித்து, அவர்களுக்கும் அங்கிக
ளைத்தரிப்பாயாக.—ஆரோனுக்கும், அவன் புத் ௯
திரருக்கும், இடைக்கச்சுக்கட்டி, அவர்களுக்குக்
குல்லாக்களையுந் தரிப்பாயாக: ஆசாரியத்தொண்
டு அவர்களுக்கு நித்திய நியமமாயிருக்கும். இப்
படியே ஆரோனையும், அவன் புத்திரரையுமேற்
படுத்தி,—பின்பு காளையைச் சபையின் ஆவாசத் ௰
துக்குமுன்பாகக்கொண்டுவரப்பண்ணு. ஆரோ
னும், அவன்புத்திரரும், தங்கள்கைகளை அந்தக்
காளையினுடைய தலையின்மேல் வைக்கக்கடவர்
கள்.—பின்பு சபையின் ஆவாச வாசலுக்குச் ௰௧
சமீபத்தில் யெகோவாவின் சந்நிதானத்திலே
அந்தக்காளையை வெட்டி,—அதின் இரத்தத்தி ௰௨
லெடுத்து, உன்விரலினால் வேதிகையின் கொம்
புகள் மேலேயிட்டு, மீந்த இரத்த முழுவதை
யும் வேதிகையினடியிலே ஊற்றி,—குடல்களை ௰௩
மூடிய கொழுப்பு யாவையும், கல்லீரலின்மே
லுள்ள சவ்வையும், இரண்டு குண்டிக்காய்களை
யும, அவைகளின்மேலுள்ளசவ்வையும், எடுத்து,

---

(௩௬) அதி.௩௯.௩௰. சக.௰௪.௨௰. (௩௮) லேவி.௨௨.௯. எண்.௰௮.௧. ஏசா.௫௩.௰௧. எசேக்.௪.௪,௫,௬. யோவா.௧.
௨௯. எபி.௯.௨௮. ௧.பேதுரு.௨.௨௪. லேவி.௨௩.௰௧. ஏசா.௫௬.௭. (௪௰) எசேக்.௪௪.௰௭,௰௮. (௪௧) அதி.௨௯.௭.
அதி ௪௰.௰௫. லேவி.௰.௭. லேவி.அதி.௮. எபி.௭.௨௮. (௪௨) லேவி.௰௬.௪. எசேக்.௪௪.௰௮. (௪௩) அதி.௨௰.௨௬.
லேவி.௨௰.௰௯,௨௰. எண்.௯.௰௩. எண்.௰௮.௨௨. அதி.௨௭.௨௧.—(௨௯ அதி. ௧.) லேவி.௮.௨. (௨) லேவி.௨.௪.
(௪) அதி.௪௰.௰௨. எபி.௰.௨௨. (௫) லேவி.௮.௭. அதி.௨௮.௮. (௬) லேவி.௮.௯ (௭) அதி.௩௰.௨௫. எண்.௩௫.
௨௫. (௮) லேவி.௮.௰௩. (௯) எண்.௰௮.௭. அதி.௨௮.௪௧. எபி.௭.௨௮. (௰) லேவி.௮.௰௪. (௰௨) லேவி.௮.௰௫.
அதி.௨௭.௨. (௰௩) லேவி.௩.௩.

௰௪ வேதிகையிலே தகிப்பாயாக.—காளையின் மாமி
சத்தையும், அதின்தோலையும், அதின்சாணியை
யும், பாளயத்துக்குப் புறம்பே, அக்கினியால்
எரிக்கக்கடவாய்: இதுவே பிராயச்சித்தப்பலி.–
௰௫ பின்பு அந்த ஆட்டுக்கடாக்களில் ஒன்றைப்பி
டித்து, அதினுடையதலையின்மேல் ஆரோனும்,
அவன்புத்திரரும், தங்கள்கைகளை வைக்கக்கட
௰௬ வர்கள்.–பின்பு அந்தக்கடாவைவெட்டி, அதின்
இரத்தத்தை எடுத்து, வேதிகையைச் சுற்றித்தெ
௰௭ ளித்து;—ஆட்டுக்கடாவைத்துண்டித்து, அதின்
குடல்களையும், அதின்தொடைகளையுங் கழுவி
அவைகளையந்தத்துண்டங்களோடும் தலையோ
௰௮ டும்வைத்து,–சகலத்தையும் வேதிகையிலேதகித்
துவிடுவாயாக: இதுவே யெகோவாவுக்குத்
தகனபலி. யெகோவாவுக்கிடப்படும் இந்தத்
௰௯ தகனபலி, சுகந்தம்.—பின்பு மற்ற ஆட்டுக்கடா
வையும்பிடி, அதினுடைய தலையின்மேல் ஆரோ
னும், அவன் புத்திரரும், தங்கள் கைகளைவைக்
௨௰ கக்கடவர்கள்.—அப்பொழுது அந்தக்கடாவை
வெட்டி அதின் இரத்தத்திலெடுத்து ஆரோனு
டைய வலதுகாதின் மடலிலும், அவன் புத்திர
ரின் வலதுகாதுகளின் மடல்களிலும், அவர்க
ளுடையவலதுகையின்பெருவிரலிலும், அவர்க
ளுடைய வலதுகாலின்பெருவிரலிலும், இட்டு,
மீந்த இரத்தத்தை வேதிகையைச்சுற்றித்தெளித்
௨௧ து,—வேதிகையின்மேலிருக்கும் இரத்தத்திலும்,
அபிஷேக தைலத்திலும் எடுத்து ஆரோனும், அ
வனுடைய வஸ்திரங்களும், அவனுடைய புத்தி
ரரும், அவர்களுடைய வஸ்திரங்களும்பரிசுத்த
மாகும்படி, அவன்மேலும், அவனுடைய வஸ்தி
ரங்கள்மேலும், அவனுடையபுத்திரர்மேலும், அ
வர்களுடையவஸ்திரங்கள்மேலுந்தெளிப்பாய்.-
௨௨ அந்தஆட்டுக்கடா,பிரதிஷ்டையின்ஆட்டுக்கடா
ஆதலால், அதிலுள்ள கொழுப்பையும், வாலை
யும், குடல்களைமூடிய கொழுப்பையும், கல்லீர
லின்மேலுள்ள சவ்வையும், இரண்டு குண்டிக்
காய்களையும், அவைகளின்மேலுள்ள கொழுப்
௨௩ பையும், வலதுமுன்னந்தொடையையும்,—யெ
கோவாவுக்குமுன்பாக வைத்திருக்கிற புளிப்
பில்லாத அப்பங்களுள்ளபெட்டியில் ஒரு அப்
பத்தையும், எண்ணெயில்வெந்த அப்பமாகிய
ஒரு அதிரசத்தையும், ஒரு அடையையுமெடுத்
௨௪ து,-அவைகளெல்லாவற்றையும், ஆரோனுடைய
உள்ளங்கைகளிலும், அவன் புத்திரருடைய உள்
ளங்கைகளிலும்வைத்து, அவைகளை யெகோ
வாவுடைய சந்நிதானத்தில் அசைவாட்டப்ப
௨௫ டும் நைவேத்தியமாக அசைவாட்டி,—பின்பு
அவைகளை அவர்கள் கைகளிலிருந்தெடுத்து வே
திகையின்மேல் தகனபலியாய் யெகோவா
வுக்குச்சுகந்தமாகத் தகிக்கக்கடவாய்: இதுவே
யெகோவாவுக்கு அக்கினியிலிடப்படும் நை
வேத்தியம்.—ஆரோனுடைய பிரதிஷ்டையின் ௨௬
ஆட்டுக்கடாவிலே மார்புக்கண்டத்தையெடுத்து,
அதை யெகோவாவுடைய சந்நிதியில் அசை
வாட்டப்படும்நைவேத்தியமாக அசைவாட்டக்
கடவாய்.—அது உன் பங்காயிருக்கும். அல்லா ௨௭
மலும், ஆரோனுடைய பிரதிஷ்டைக்கும் அவன்
புத்திரருடைய பிரதிஷ்டைக்குமேற்ற ஆட்டுக்க
டாவில் அசைவாட்டப்படுகிற மார்புக்கண்டத்
தையும், உயர்த்திப்பிடிக்கும் முன்னந்தொடை
யையும் பரிசுத்தப்படுத்துவாயாக.–அவையுயர்த் ௨௮
திப்பிடிக்கிறபடியால், இஸரவேல் சந்ததியார்ப
லியிடுகிறவைகளில் அவைகளே, நித்தியநியமமா
க,ஆரோனையும்அவன்புத்திரரையுஞ்சேரவேண்
டும். இஸரவேல்சந்ததியார் யெகோவாவுக்கு
முன்பாக உயர்த்திப்பிடிக்கிற ஸ்தோத்திரபலிக
ளில் அவைகளே உயர்த்திப்பிடிக்கப்பட்டவை
களாயிருக்கவேண்டும்.-ஆரோனின் பரிசுத்தவஸ் ௨௯
திரங்கள், அவனுக்குப்பின்பு, அவனுடையபுத்தி
ரரைச்சேரும். அவர்கள் அவைகளைத்தரித்துக்
கொண்டு, அபிஷேகம்பெற்றுப்பிரதிஷ்டையாக்
கப்படுவார்கள்.—பரிசுத்தஸ்தானத்தில்ஆராதனை ௩௰
செய்வதற்குச் சபையின் ஆவாசத்தில் பிரவேசிக்
கத்தக்கதாக அவனுடையபுத்திரர்களில் அவனுக்
குப்பின் ஆசாரியனானவன் அவைகளை ஏழுநாள்
மட்டுந்தரித்துக்கொள்ளக்கடவன்.-அன்றியும், பி ௩௧
ரதிஷ்டையின்ஆட்டுக்கடாவைநீபிடித்து,அதின்
மாமிசத்தைப் பரிசுத்தஸ்தானத்தில் பாகம்பண்
ணுவாயாக.—அந்த ஆட்டுக்கடாவின் இறைச்சி ௩௨
யையும், பெட்டியிலிருக்கிற அப்பத்தையும், ஆ
ரோனும் அவன்புத்திரரும் சபையின் ஆவாசவா
சலில் புசிக்கக்கடவர்கள்.—அவர்கள் தங்களைப் ௩௩
பிரதிஷ்டைபண்ணிப் பரிசுத்தப்படுத்துவதற்கே
துவான பிராயச்சித்தப்பொருளைப் புசிக்கக்கட
வர்கள். அவைகள் பரிசுத்தமானவைகளாகை
யால் அந்நியனானவன் அவைகளைப்புசிக்கலாகா
து.—விடியற்காலம்வரைக்கும் பிரதிஷ்டையின் ௩௪
இறைச்சியிலும், அப்பத்திலும் எதாகிலுஞ்சேஷ
மாயிருந்தால், அது பரிசுத்தமானபடியால், அ
தைப்புசியாமல் அக்கினியில் தகிக்கவேண்டும்.-
இந்தப்பிரகாரமாக நான் உனக்கு விதித்தபடி ௩௫
எல்லாவற்றையும்நீஆரோனுக்கும், அவன்புத்திர
ருக்குஞ்செய்வாயாக: ஏழுநாளும் நீ அவர்களைப்
பிரதிஷ்டைபண்ணி,-பிராயச்சித்தத்துப் பாவப ௩௬
லியாக நாளொன்றுக்கு ஒருகாளையைநைவேத்தி
யம் பண்ணவேண்டும். வேதிகையின்மேற் பி
ராயச்சித்தம் பண்ணியபின் அதைச்சுத்திசெய்ய
வேண்டும். அதைப்பரிசுத்தப்படுத்தும்படி அதற்

(௰௪) லேவி.௪.௰௧,௰௨,௨௧. எபி.௰௩.௰௧. (௰௫) லேவி.௮.௰௮. லேவி.௧.௪—௯. (௰௮) ஆதி.௮.௨௧ (௰௯) லேவி.௮.௨௨. (௨௧) லேவி.௮.௩௰. வச.௧. எபி.௯.௨௨. (௨௩) லேவி.௮.௨௬. (௨௪) லேவி.௭.௩௰. (௨௫) லேவி.௮.௨௮. (௨௬) லேவி.௮.௨௯. (௨௭) லேவி.௭.௩௧,௩௪. உபா.௰௮.௪. (௨௮) லேவி.௰.௰௫. லேவி.௭.௩௪. (௨௯) எண்.௨௰.௨௬,௨௮. எண்.௰௮.௮. (௩௰) எண்.௨௰.௨௮. லேவி.௮.௩௫. (௩௧) லேவி.௮.௩௧. (௩௨) மத்.௰௨.௪. (௩௩) லேவி.௰.௰௪,௰௫,௰௭. லேவி.௨௨.௰. (௩௪) லேவி.௮.௩௨. (௩௫) யாத்.௪௰.௰௨. (௩௬) எபி.௰.௰௧. அதி.௪௰.௰.

௩௭ கு அபிஷேகம் பண்ணக்கடவாய்.—ஏழு நாள
ளவும் வேதிகையின்பொருட்டுப் பிராயச்சித்தம்
பண்ணி, அதைப்பரிசுத்தமாக்கக்கடவாய். அந்
தவேதிகை மகாபரிசுத்தமாயிருக்கும்: வேதிகை
யைப்பரிசிக்கிறயாவும் பரிசுத்தமாகும்.
௩௮ வேதிகையின்மேல் நீயிடைவிடாமல் அனுதி
னமும், ஒருவயதுள்ள இரண்டு ஆட்டுக்குட்டி
௩௯ களைப்பலியிடவேண்டும்.—ஒரு ஆட்டுக்குட்டி
யைக்காலையிலும், மற்ற ஆட்டுக்குட்டியைமாலை
௪௰ யிலும், பலியிடுவாயாக.-சோலாத்து அளவிற் பத்
திலொருபங்கானதுமாய், இடித்துப்பிழிந்த காற்
படிஎண்ணெயிலேபிசைந்ததுமாயிருக்கிற மெல்
லியமாவையும், பானபலியாகக்காற்படிதிராட்ச
ரசத்தையும், ஒருஆட்டுக்குட்டியுடனேநிவேதிப்
௪௧ பாயாக.—காலையில்நிவேதித்த நைவேத்தியத்துக்
கும், அதின்பானபலிக்கும் ஒத்தபிரகாரமாக மா
லையில் பலியிடுகிறபொழுதும், மற்றஆட்டுக்குட்
டியை யெகோவாவுக்குச் சுகந்தமாகத்தகனப
௪௨ லியிடக்கடவாய்.—உங்களுடனே பேசும்படி நா
னுங்களைச்சந்திக்குமிடமாகிய சபையின் ஆவாச
வாசலில் யெகோவாவின் சந்நிதியில் உங்க
ள்தலைமுறைதலைமுறையாக, எப்பொழுதும்நீங்
கள்செலுத்தவேண்டிய தகனபலிகளிவைகளே.
௪௩ அங்கே இஸரவேல் சந்ததியாரைச் சந்திப்
பேன். அந்த ஆவாசம் என்னுடைய மகிமை
௪௪ யினலே பரிசுத்தமாக்கப்படும்.—சபையின் ஆ
வாசத்தையும், வேதிகையையும் பரிசுத்தமாக்கு
வேன். ஆரோனும், அவன்புத்திரரும், எனக்காசா
ரியத்தொண்டுசெய்யும்படிக்கு அவர்களையும்பரி
௪௫ சுத்தமாக்கி,—இஸரவேல் சந்ததியாருக்குத் தே
௪௬ வனகி அவர்களுக்குள்வாசம்பண்ணுவேன்.—அ
வர்களும், தங்களுக்குள்ளே வாசம்பண்ணும்ப
டிக்குத்தங்களை எகிப்துதேசத்தினின்றும் புறப்ப
டச்செய்த நான் தங்கள் தேவனாகிய யெ
கோவாவென்பதை அறிவார்கள்: நானேஅவர்
களுடைய தேவனாகிய யெகோவா.

## ௩௰. அதிகாரம்.

௧. தூபவேதிகையினிலட்சணம்: ௰௧. சனங்கள் மீட்பின் இறையிறுத்தல்; ௰௭. பித்தளைத்தொட்டியினிலட்சணம்: ௨௨. சுத்ததைலவிதி: ௩௪. சுகந்தத்திரவியவிதி.

தூபமிடும்படி ஒருவேதிகையையும், சீத்தீம்மரத்
௨ தினல்செய்வாயாக.—அதுஒருமுழநீளமும், ஒரு
முழ அகலமும், இரண்டுமுழ உயரமும், சதுர
வடிவுமாயிருக்கவேண்டும். அதின்கொம்புகள் அ
௩ தற்குஅபின்னமாயிருக்கவேண்டும்.-அதின்மேல்
புறத்தையும், சுற்றுப்புறத்தையும், அதின்கொம்
புகளையும், செம்பொற்றகட்டால்மூடி, பொன்
னல் திரணையைச்செய்து;—அதைச்சுமக்குந்தண் ௪
டுகள் பாய்ச்சப்படும்படி அந்தத்திரணைக்குக்கீ
ழே, அதினிரண்டுபக்கத்து இரண்டுமூலைகளி
லும், இரண்டுபொன்வளையங்களைச்செய்.—அந் ௫
தத்தண்டுகளையும், சீத்தீம்மரத்தால்பண்ணி, அ
வைகளையும், பொற்றகட்டால் மூடுவாயாக.—
சாட்சிப் பெட்டிக்கு முன்னிருக்கும் திரைச் ௬
சீலைக்கும், நான் உன்னைச் சந்திக்குமிடமாகிய
சாட்சிப்பத்திரத்துக்குமேலுள்ள கிருபாசயத்துக்
குமுன்பாக அதைவைக்கக்கடவாய்.—ஆரோன், ௭
காலைதோறும் விளக்குகளைச்சோடிக்கும்பொழு
து அதின்மேலேசுகந்ததூபமிடக்கடவன்: மாலை
யில் விளக்கேற்றும்பொழுதும் அதின்மேலே சு
கந்ததூபமிடக்கடவன்.—இதுவே உங்கள் தலை ௮
முறைதோறும் யெகோவாவின்சந்நிதியிலிட
வேண்டிய நித்தியதூபம்.—அதின்மேல்வேறுதூ ௯
பத்தையாகிலும், தகனபலியையாகிலும், போச
னநைவேத்தியத்தையாகிலு மிடவேண்டாம். அ
தின்மேற் பானபலியை ஊற்றவும்வேண்டாம்.—
வருஷத்திலொருதரம் ஆரோன் பிராயச்சித்தங்க ௰
ளைப்பண்ணும் பிராயச்சித்தபலியின் இரத்தத்தி
னல் அதின் கொம்புகளின்மேல் பிராயச்சித்தம்
பண்ணக்கடவன்; உங்கள் தலைமுறைதோறும்வ
ருஷத்திலொருதரம் அதின்மேல் பிராயச்சித்தம்
செய்யவேண்டும்: அது யெகோவாவின்பார்
வைக்கு மிகவும்பரிசுத்தமானதென்றார்.
பின்னும் யெகோவா மோசேயைநோக் ௰௧
கி,—எண்ணப்படவேண்டிய இஸரவேல்சந்ததி ௰௨
யாரின் தொகையைக்காணும்படி நீ அவர்களை
யெண்ணும்பொழுது, அவர்களுக்குள்ளே ஒரு
வாதைவராதபடிக்கு, அவர்களில் ஒவ்வொருவ
னும் தன்தன் ஆத்துமத்தின்பொருட்டு, எண்
ணுஞ்சமயத்தில் யெகோவாவுக்குமீட்பின்,
இறை யிறுக்கக்கடவர்கள்.—எண்ணப்படுகிறவர் ௰௩
களுக்குள்ளேசேருகிறஒவ்வொருவனும்பரிசுத்த
ஸ்தானத்துச்சேக்கலாக அரைச்சேக்கல் கொடுக்
கவேண்டும்: சேக்கலாவது இருபதுகேரா. அ
ரைச்சேக்கல்யெகோவாவுக்குக்காணிக்கை.-
எண்ணப்படுகிறவர்களுக்குள்ளேசேருகிற இரு ௰௪
பதுவயதுக்குமேற்பட்ட ஒவ்வொருவனும், யெ
கோவாவுக்குக்காணிக்கைகொண்டுவரவேண்
டும்.—உங்கள் ஆத்துமங்களின்பொருட்டுப் பி ௰௫
ராயச்சித்தம்பண்ணும்படிநீங்கள் யெகோவா
வுக்குக் காணிக்கைகொடுக்கும்பொழுது செல்
வர், அரைச்சேக்கலுக்கேறக்கொடுக்கவும்வேண்
டாம்; தரித்திரர், அதற்குக் குறையக்கொடுக்க

(௩௭) அதி.௪௰.௰. அதி.௩௰.௨௯. மத்.௨௩.௰௯. (௩௮) எண்.௨௮.௩. ௧.நாளா.௰௬.௪௰. எஸ்ற.௩.௩. தானி.௯.௨௭. (௩௯) ௨.இரா.௰௬.௰௫. (௪௧) ௧.இரா.௰௮.௨௯,௩௬. ௨.இரா.௰௬.௰௫. எஸ்ற.௯.௪,௫. சங்.௱௪௧.௨. தானி.௯.௨௧. (௪௨) வச.௩௮. தானி.௮.௰௧,௰௨,௰௩. அதி.௨௫.௨௨. எண்.௰௭.௪. (௪௩) அதி.௪௰.௩௪. ௧.இரா.௮.௰௧. ஆகா.௨.௭,௯. மல்.௩.௧. (௪௪) லேவி.௨௧.௰௫. (௪௫) லேவி.௨௬.௰௨. சக.௨.௰. யோவா.௰௪.௰௭,௨௩. ௨.கொரி.௬.௰௬. வெளி.௨௧.௩. (௪௬) அதி.௨௰.௨.—(௩௰. அதி. ௧.) அதி.௩௭.௨௫. லேவி.௪.௭,௰௮. வெளி.௮.௩. (௬) அதி.௨௫.௨௧,௨௨. (௭) ௧.நாளா.௨௩.௰௩. லூக்.௧.௯. அதி.௨௭.௨௧. (௮) அதி.௰௨.௬. (௯) லேவி.௰.௧. (௰) லேவி.௰௬.௰௮. (௰௨) எண்.௧.௨,௫. ௨.சாமு.௨௪.௨. எண்.௩௧.௫௰. மத்.௨௰.௨௮. ௧.தீமோ.௨.௬. ௧.பேதுரு.௧.௰௮,௰௯. ௨.சாமு.௨௪.௰௫. (௰௩) மத்.௰௭.௨௪. எசேக்.௪௫.௰௨. (௰௫) யோபு.௩௪.௰௯. நீதி.௨௨.௨. எபே.௬.௯. கொலோ.௩.௨௫.

௰௬ வும் வேண்டாம்.—பிராயச்சித்தப்பணத்தை நீ இ
ஸரவேல்சந்ததியாரிடத்தில்வாங்கி அதைச்சபை
யின் ஆவாசத்திருப்பணிக்கு ஏற்படுத்துவாயாக:
அது யெகோவாவின்சந்நிதியில் பிராணபிரா
யச்சித்தத்தின்பொருட்டு இஸரவேல் சந்ததியா
ருக்கு ஞாபகக்குறியாயிருக்குமென்றார்.
௰௭ பின்னும் யெகோவா மோசேயை நோக்
௰௮ கி,—கழுவுகிறதற்குப்பித்தளையினாலே ஒருதொட்
டியை உண்டுபண்ணு. அதின்பாதமும்பித்தளை
யாயிருக்கவேண்டும். அதைச்சபையின் ஆவா
சத்துக்கும், வேதிகைக்கும், இடையில்வைத்து,
௰௯ அதிலேசலம்வார்க்க வேண்டும்.—அதில் ஆரோ
னும், அவன்புத்திரரும், தங்கள்கைகால்களைக்க
௨௰ ழுவக்கடவர்கள்.—அவர்கள்சபையின் ஆவாசத்
தில் பிரவேசிக்கும் பொழுதும், யெகோவா
வுக்குத்தகனபலி செலுத்தும்படி தொண்டுசெய்
யவேதிகைக்குச் சமீபிக்கும்பொழுதும், சாவாத
படி சலத்தினால் தங்களைக்கழுவக்கடவர்கள்.—
௨௧ இப்படியே அவர்கள் சாவாதபடி தங்கள் கை
கால்களைக்கழுவக்கடவர்கள். இது தலைமுறை
தலைமுறையாக அவனுக்கும், அவன் சந்ததியா
ருக்கும், நித்திய நியமமாயிருக்குமென்றார்.
௨௨ மேலும் யெகோவாமோசேயைநோக்கி,—
௨௩ அதியுத்தமசுகந்த திரவியங்களாகிய சுத்தமான
வெள்ளைப்போளத்தில்பரிசுத்தஸ்தானத்துச்சேக்
கலின்படி, ஐஞ்ஞூறு சேக்கலும், கருவாப்பட்
டையிலே அதிற் பாதியாகிய இருநூற்றைம்பது
சேக்கலும், சுகந்தவசம்பு இருநூற்றைம்பதுசேக்
௨௪ கலும்,—இலவங்கப்பட்டையில் ஐஞ்ஞூறுசேக்
கலும், சிதவிருட்சத்தெண்ணெயில் ஒரு கின்
௨௫ னும், எடுத்து,—பரிமளதைலக்காரனுடையசெய்
கையாய்ச் செய்யப்பட்ட பரிமளதைலத்தைப்
போல, அவைகளினால் சுத்த அபிஷேக தைலத்
தைச்செய்வாயாக: அதுவேஅபிஷேகதைலமாயி
௨௬ ருக்கவேண்டும்.-அதினாலே சபையின் ஆவாசத்
துக்கும், சாட்சிப்பெட்டிக்கும், பீடத்துக்கும்,—
௨௭ அதின் பாத்திரங்களெல்லாவற்றிற்கும், கிளைவி
ளக்குக்கும், அதின் கருவிகளுக்கும், தூபவேதி
௨௮ கைக்கும்,—தகனபலிவேதிகைக்கும், அதின்பாத்
திரங்கள் எவற்றிற்கும்,தொட்டிக்கும், அதின்பா
தத்துக்கும், அபிஷேகம்பண்ணக்கடவாய்.—
௨௯ அவைகள் பரிசுத்தமாகும்பொருட்டு, அவைக
ளைப்பரிசுத்தப்படுத்துவாயாக: அவைகளைப்பரி
௩௰ சிக்கிறயாவும்பரிசுத்தமாகும்.-ஆரோனும்,அவன்
புத்திரரும், எனக்கு ஆசாரியத்தொண்டு செய்யும்
படி, நீ அவர்களுக்குஅபிஷேகம்பண்ணி, அவர்
௩௧ களைப்பரிசுததப்படுத்துவாயாக.—நீ இஸரவேல்
சந்ததியாரைநோக்கி, உங்கள்தலைமுறைதோறும்
இதுவே எனக்குரியபரிசுத்த அபிஷேகதைலமா
௩௨ யிருக்கவேண்டும்.-இது மனிதருடையசரீரத்தில்
வார்க்கப்படாது. இதற்கொப்பாக நீங்கள் வே
றேசெய்யவும்படாது: இதுபரிசுத்தமானது. இது
உங்களிடத்தில் பரிசுத்தமாயிருக்கவேண்டும்.—
இதற்கொப்பாகத் தைலமுண்டாக்குகிறவனும், ௩௩
இதிலெடுத்து அந்நியன்மேல் வார்க்கிறவனும்,
தன் சனங்களினின்றுஞ் சேதிக்கப்படுவானென்
றுசொல்லென்றார்.
பின்னும் யெகோவா மோசேயைநோக்கி ௩௪
வடிந்த வெள்ளைப்போளமும், குங்கிலியமும்,
சாம்பிராணியுமாகியசுகந்ததிரவியங்களையும்,பரி
சுத்தமானகுந்துருவையுஞ்சமநிறையாகஎடுத்து,-
பரிமளதைலக்காரன் செய்கிறதுபோல, அவைக ௩௫
ளைக்கலந்து நிர்மலபரிசுதத சுகந்ததூபமாக்குவா
யாக.—அதில் ஒருபங்கையிடித்துப் பொடியாக் ௩௬
கி, நான் உன்னைச் சந்திக்குஞ்சபையின் ஆவா
சத்திலிருக்குஞ் சாட்சிப்பெட்டிக்கு முன்னே
வைக்கவேண்டும்: அது உங்களுக்குமிகவும் பரி
சுத்தமாயிருக்கவேண்டும்.—நீ ஆக்கும் சுகந்ததூ ௩௭
பத்தைச் செய்யும் விதிப்படி, உங்கள் நிமித்தம்
செய்யலாகாது: அது யெகோவாவின் பொ
ருட்டு உன்னிடத்தில் பரிசுத்தமாயிருக்கவேண்
டும்.—அதற்கொப்பானதை மோந்து பார்க்கிறதற் ௩௮
காகச்செய்கிறவன், தன்சனங்களினின்றுஞ்சே
திக்கப்படுவானென்றார்.

## ௩௧. அதிகாரம்.

௧. பெத்சலேலையும் அகோலியாபையும் ஆவாசத்
திருப்பணிசெயயும்படி நியமித்து அவர்களுக்
கு வரங்கொடுத்தல்: ௰௨. ஓயவுநாளையாசரிக்க
வேணடுமென்று திரும்பவுங் கற்பித்தல்: ௰௮.
மோசே இரணடுகற்பலகைகளைப்பெறல்.

பின்னும் யெகொவா மொசேயை நோக்கி,— ௧
பார் சபையின்ஆவாசமும், சாட்சிப்பெட்டியும், ௨
அதின்மேலுள்ள கிருபாசயமும் ஆவாசத்திலுள்
ள சகலபாத்திரங்களும்;—வேதிகையும், அதின் ௩
பாத்திரங்களும்,பரிசுத்தமானகிளைவிளக்கும், அ
தின்சகலகருவிகளும், தூபவேதிகையும்;—தகன ௪
பலி வேதிகையும், அதின் சகலபாத்திரங்களும்,
தொட்டியும், அதின் பாதமும்;—ஆராதனையின் ௫
வஸ்திரங்களும், ஆசாரியத்தொண்டுசெய்வதற்
கான ஆசாரியனாகிய ஆரோனுடைய பரிசுத்தவ
ஸ்திரங்களும், அவன்புத்திரருடைய வஸ்திரங்க
ளும்;—அபிஷேக தைலமும், பரிசுத்தஸ்தானத் ௬
துக்குச்சுகந்ததூபமுமாகியயாவையும், நான்கற்
பித்தபடிசெய்யும்பொருட்டு,—யூதாவின் கோத் ௭
திரத்தில் ஊரின்பௌத்திரனும், ஊரியின் புத்தி
ரனுமாகிய பெத்சலேல் என்பவன்;—சிற்பத் ௮
தொழில்களைக்கற்பிப்பதில் நிபுணனாகி, பொன்
வெள்ளி பித்தளை வேலைகளைச்செய்வதற்கும்;—
இரத்தினங்களைச் செப்பமிட்டுப்பதிப்பதற்கும், ௯
மரத்தில் கொத்துவேலைசெய்வதற்கும், சகலவித

(௰௬) அதி.௩௮.௨௫. எண்.௰௬.௪௰. (௰௮) ௧.இரா.௭.௩௮. அதி.௪௰.௭,௩௰. (௰௯) சங்.௨௬.௭. ஏசா.௫௨.௰௧. யோவா.௰௩.௰. எபி.௰.௨௨. (௨௧) அதி.௨௮.௪௩. (௨௩) உன்.௪.௰௪. எசேக்.௨௭.௨௨. சங்.௪௫.௮. நீதி.௭.௰௭. எரே.௬.௨௰. (௨௪) சங்.௪௫.௮. (௨௫) எண்.௩௫.௨௫. சங்.௮௯.௨௰. (௨௬) எண்.௭.௧. (௨௯) அதி.௨௯.௩௭. (௩௰) லேவி.௮.௰௨,௩௰. (௩௨) வச.௨௫,௩௭. (௩௩) ஆதி.௰௭.௰௪. (௩௪) அதி.௨௫.௬. (௩௫) லேவி.௨.௰௩. (௩௬) அதி. ௨௯.௪௨. லேவி.௰௬.௨. லேவி.௨.௩. (௩௭) வச.௩௨. (௩௮) வச.௩௩.—(௩௧. அதி. ௫.) எண்.௪.௫,௬.

௰ வேலைகளையும் பண்ணுவதற்கும்;—அவனை நா
ன் பேர்சொல்லியழைத்து, சகலவேலைகளையுஞ்
செய்யும்படிபுத்தியையும், வித்தையையும், அறி
வையும், அளிக்குந்தேவஆவியினால் அவனைப்பூ
௰௧ ரணப்படுத்தி;—தாண்கோத்திரத்திலுள்ள அகிசா
மாகின்புத்திரனாகிய அகோலியாபையும், அவனு
டனே கூட்டினதுமன்றி, விவேகிகள் யாவரு
டைய இருதயத்திலும், அறிவைக்கொடுத்தேன்:
நானுனக்குக்கட்டளையிட்டபடியே அவர்கள்
செய்யவேண்டுமென்றார்.
௰௨ மேலும் யெகோவா மோசேயைநோக்கி,-
௰௩ நீ இஸரவேல் சந்ததியாரிடத்தில், என்ஒய்வுநாள்
களை நீங்களாசரிக்கவேவேண்டும். உங்களைப்ப
ரிசுத்தப்படுத்துகிற யெகோவா நானென்ப
தை, நீங்கள்அறியும்பொருட்டு, இது உங்கள்தலை
முறைதோறும் எனக்கும் உங்களுக்கும் ஒரு அ
௰௪ டையாளமாயிருக்கின்றது.—ஆதலால் ஒய்வுநாளை
யாசரிக்கக்கடவீர்கள். அது உங்களுக்குப்பரிசுத்
தமுள்ளது. அதில்யாதொருவேலையைச்செய்யும்
ஆத்துமா, தன் சனங்களினின்றுஞ் சேதிக்கப்படு
மே: அதை அசுசிப்படுத்துகிறவன் எவனுங்கொ
௰௫ லைசெய்யப்படுவான்.—ஆறுநாளுங் கிரியைசெய்
யலாம்; ஏழாம்நாளோ யெகோவாவுக்குப்
பரிசுத்தமான ஒய்வுநாள்: ஒய்வுநாளில் கிரியை
செய்பவன் எவனோ அவன்கொலைசெய்யப்பட
௰௬ வேண்டும்.—இஸரவேல்சந்ததியார் தங்கள் தலை
முறைதோறும் ஒய்வுநாளை, நித்திய உடன்படிக்
கையாக ஆசரிக்கும்படி, அதை ஆசரிக்கக்கட
௰௭ வர்கள்.—யெகோவாவும் ஆறுநாளைக்குள்ளே
வானத்தையும் பூமியையுஞ்சிருஷ்டித்து, ஏழாம்
நாளிலே ஒய்ந்திருந்துபூரித்தாரே: ஆதலால் அது
வே என்றைக்கும் எனக்கும்இஸரவேல்சந்ததியா
ருக்கும்ஒரு அடையாளமென்றுசொல்லென்றார்.
௰௮ சீனாய்மலையில் அவர் மோசேயுடனே பேசி
முடிந்தபின்பு தேவனாகிய அவர் தமது விரலால்
எழுதப்பட்ட சாட்சிப்பலகையாகிய இரண்டு
கற்பலகைகளை அவனுக்குக்கொடுத்தார்.

## ௩௨. அதிகாரம்.

௧. மோசேயில்லாதகாலத்தில் சனங்கள் விக்கிர கஞ்செய்யஆரோனைஏவுதல்: ௭. தேவன்கோபிக்க மோசே அவரைப்பிரார்த்தித்தல்: ௰௫. இரண்டு கற் பலகைகளையுங் கையிலெடுத்துக் கொணடு மலையினின்றும் மோசே இறங்கல்: ௰௯. இரணடு பலகைகளையுமுடைத்துப்பிரதிமையைத்தகித்தல்: ௨௧. ஆரோன் உத்தரம்சொல்லல்: ௨௫. விக்கிரகாராதனைக்காரரைக்கொலைசெய்தல்: ௩௰. மோசே தேவனைப்பிரார்த்திக்க அவர் உத்தரமருளல்.

சனங்கள், மோசே மலையினின்றும் இறங்கிவ
ரத்தாமதப்பட்டதைக்கண்டு, சனங்கள் ஆரோ
னிடத்தில் கூட்டங்கூடி அவனைநோக்கி, எகிப்
துதேசத்தினின்றும், எங்களை அழைத்துக்கொண்
டுவந்த அந்த மோசேக்கு என்னசம்பவித்ததோ
அறியோம்; நீரெழுந்து எங்களுக்குமுன்செல்ல,
எங்கள்நிமித்தம் தெய்வங்களையுண்டாக்கவேண்
டுமென்றார்கள்.—அதற்கு ஆரோன் உங்கள்மனை ௨
விகள் புத்திரர் புத்திரிகளுடைய காதுகளிலிருக்
கிற பொற்காதணிகளைக்கழற்றி, என்னிடத்திற்
கொண்டுவாருங்களென்று சொல்ல;—சனங்க ௩
ளெல்லாருந் தங்கள் காதுகளிலிருந்த பொற்காத
ணிகளைக்கழற்றி, ஆரோனிடத்தில் கொண்டுவந்
தார்கள்.—அவர்களுடைய கையினின்றும் அவ ௪
னவைகளைவாங்கி ஒரு பசுவின்கன்றை வார்ப்
பித்து, சிற்பக்கருவியினால் உருபப்படுத்தினான்:
அப்பொழுது அவர்கள் இஸரவேலரே உங்களை
எகிப்துதேசத்தினின்றும் அழைத்துக் கொண்டு
வந்த தெய்வங்களிவைகளே யென்றார்கள்.—ஆ ௫
ரோன் அதைக்கண்டு அதற்குமுன்பாக ஒருவே
திகையை உண்டாக்கி நாளைக்கு யெகோவா
வுக்கு ஒரு உற்சவமென்றுகூறினான்.—மறுநாள் ௬
அவர்கள் அதிகாலையில் எழுந்து தகனபலிகளிட்
டதுமன்றி ஸ்தோத்திரபலிகளையுங்கொண்டுவந்
தார்கள்; சனங்கள் போசனபானஞ் செய்யும்ப
டியிருந்தார்கள்; பின்பு கொண்டாடும்படி யெ
ழுந்தார்கள்.

யெகோவா மோசேயைநோக்கி, இறங்கிப் ௭
போ. நீஎகிப்துதேசத்தினின்றும்நடத்திக்கொண்
டுவந்த உன்சனங்கள்தங்களைக்கெடுத்துக்கொண்
டார்கள்.-தங்களுக்கு நான்விதித்தநெறியைஅவர் ௮
கள் சீக்கிரம்விட்டுவிலகினார்கள். அவர்கள்தங்
களுக்கொரு கன்றைவார்ப்பித்து, அதற்குப் பூ
சைபண்ணிப்பலியிட்டு இஸரவேலரே உங்களை
எகிப்துதேசத்திலிருந்து புறப்படுத்திய உங்கள்
தெய்வங்களிவைகளென்று சொன்னார்களென்
றார்.—பின்னும்யெகோவாமோசேயைநோக் ௯
கி, இந்தச்சனங்களைக்கண்டுகொண்டேன். கேள்,
இவர்கள் வணங்காத கழுத்துள்ள சனங்கள்.—
ஆகையால் என் கோபமிவர்கள்மேல் மூளவும், ௰
நான் இவர்களை நிருமூலப்படுத்தவும், என்னை
விட்டுவிடு. நான் உன்னில் ஒரு பெரிய சாதியா
ரைத் தோற்றுவிப்பேனென்று சொல்ல;—மோ ௰௧
சே தன் தேவனாகிய யெகோவாவைநோக்
கி, யெகோவாவே, மகாபராக்கிரமத்தினாலும்,
கைவல்லபத்தினாலும், எகிப்துதேசத்தினின்றும்
நீர்புறப்படச்செய்தஉம்முடைய சனங்கள்மேல்
உமதுகோபம் மூள்வதென்ன.—மலைகளில் அவர் ௰௨
களைக்கொல்லவும், பூமியின்முகத்தினின்றும் அ
வர்களை நிருமூலமாக்கவும், இப்படித்தீங்குசெய்
யும்பொருட்டே, அவர்களைப் புறப்படுத்தினா

(௰) ௧.இரா.௭.௰௪. (௰௩) லேவி.௰௯.௩,௩௰. எசேக்.௨௰.௰௨,௨௰. (௰௪) அதி.௨௰.௮. உபா.௫.௰௨. எசேக்.௨௰.௰௨. எண்.௰௫.௩௫. (௰௫) அதி.௨௰.௯. ஆதி.௨.௨. அதி.௨௰.௰. (௰௭) ஆதி.௧.௩௧. (௰௮) அதி.௨௪.௰௨. உபா.௪.௰௩. ௨.கொரி.௩.௩.—(௩௨. அதி. ௧.) அதி.௨௪.௰௮. (௨) நியா.௮.௨௪,௨௫,௨௬,௨௭. (௪) அதி.௨௰.௨௩. நியா.௰௭,௩,௪. ௧.இரா.௰௨.௨௮. எசா.௪௬.௬. ரோ.௧.௨௩. (௫) ௨.இரா.௰.௨௰. (௬) ௧.கொரி.௰.௭. (௭) ஆதி.௬.௰௧,௰௨. உபா.௪.௰௮. நியா.௨.௰௯. ஓசி.௯.௯. (௮) அதி.௨௰.௩௬,௨௩. ௧.இரா.௰௨.௨௮. (௯) எசா.௪௮.௪. (௰) உபா.௯.௰௪,௰௯. அதி.௨௨.௨௪. எண்.௰௪.௰௨. (௰௧) உபா.௯.௰௮. சங்.௭௪.௧,௨. (௰௨) எண்.௰௪.௰௩.

ரென்று எகிப்தியர்பேசவேண்டியதென்ன. உம
து உக்கிரகோபத்தைவிட்டு உமது சனங்களுக்
௰௩ குத் தீமைசெய்யாதிரங்கும்.—உமது தாசராகிய
ஆபிரகாமையும், ஈசாக்கையும், இஸரவேலையும்
நினைந்தருளும். நீர் அவர்களுக்கு, நான் உங்கள்
சந்தியாரைவானத்துநட்சத்திரங்களைப்போலப்
பெருகப்பண்ணி, நான் சொல்லியிருக்கிற இந்த
த்தேசமுழுவதையும் உங்கள் சந்ததியார், சதாகா
லமுஞ் சுதந்தரித்துக்கொள்ளும்படி அவர்களுக்
கு அளிப்பேனென்று உம்மைக்கொண்டே ஆ
ணையிட்டுக்கொடுத்திருக்கிறீரென்று சொல்லிப்
௰௪ பிரார்த்தித்தான்.—அப்பொழுது யெகோவா
தமதுசனங்களுக்குச்செய்ய நினைத்த தீமையைச்
செய்யாதிரங்கினர்.
௰௫ பின்பு மோசே மலையைவிட்டிறங்கினன்.
சாட்சிப்பலகைகள் இரண்டும் அவன்கையிலி
ருந்தன. அப்பலகைகள் இருபக்கத்திலும எழு
தப்பட்டிருந்தன. அந்தப்பக்கமும் இந்தப்பக்க
௰௬ மும் எழுதப்பட்டிருந்தன.—அந்தப்பலகைகள்
தேவனுற்செய்யப்பட்டன. அந்தப்பலகைக
ளில் வரைந்த எழுத்து, தேவன் வரைந்த எழுத்
௰௭ து.—சனங்கள் ஆரவாரம்பண்ணுகிறதை யோ
சுவாகேட்டு மோசேயைநோக்கி, பாளயத்தில்
யுத்த ஆரவாரமுண்டாயிருக்கின்றதென்றுசொல்
௰௮ ல;—அவன், அது சயத்தொனியாகிய சத்தமு
மல்ல; அபசயத்தொனியாகிய சத்தமுமல்ல; பா
டலின்சத்தமே எனக்குக்கேட்கின்றதென்ருன்.
௰௯ அவன்பாளயத்துக்குச் சமீபித்து, அந்தக்கன்
றையும், நடனத்தையுங்கண்டமாத்திரத்தில்மோ
சே கோபமூளத்தன்கையினின்று அப்பலகைக
௨௰ ளைமலையின் அடியிலெறிந்து உடைத்தான்.—அ
வர்கள் செய்த கன்றைப்பிடித்து, அக்கினியில்
எரித்து, அதைப்பொடிப்படுத்திச் சலத்தில் தூ
வி, இஸரவேல் சந்ததியாருக்குக்குடிக்கக் கொ
டுத்தான்.
௨௧ பின்பு மோசே ஆரோனைநோக்கி, இத்தனை
பெரிய பாவத்தை நீ இந்தச்சனங்கள்மேல் வரு
விக்க இவர்கள் உனக்கென்ன செய்தார்களென்
௨௨ ருன்.—அதற்கு ஆரோன் என்னுண்டவனுடை
யகோபம் மூளாதிருப்பதாக. இந்தச்சனங்கள்
தீமையுள்ளவர்கள், அது உமக்குத்தெரியுமே.—
௨௩ அவர்கள் என்னைநோக்கி, எகிப்தினின்றும் எங்
களை அழைத்துக்கொண்டுவந்த அந்தமோசேக்கு
என்னசம்பவித்ததோ அறியோம். எங்களுக்கு
முன்செல்ல எங்கள்நிமித்தம் தெய்வங்களைஉண்
௨௪ டாக்க வேண்டுமென்ருர்கள்.—அதற்கு நான்
பொன்னுடைமையுடையவர்கள் எவர்களோ அ
வர்கள் அதைக்கழற்றித்தரக்கடவர்களென்றேன்:
அவர்கள் அப்படியேதந்தார்கள். நான் அதை
அக்கினியிலிட அதிலிருந்து இந்தப்பசுவின்கன்
று புறப்பட்டதென்ருன்.
சனங்கள் தங்கள்பகைவராலே பரிகாசம்பண் ௨௫
ணப்படத்தக்கதாக ஆரோன் அவர்களை நிருவா
ணப்படுத்தினதினுலே அவர்கள் நிருவாணிகளா
யிருந்ததை மோசே கண்டான்.—அப்பொழுது ௨௬
மோசே பாளயத்தின்வாசலில் நின்றுகொண்டு
யெகோவாவின் பட்சத்தார்யாவர். அவர்
கள் என்னிடத்தில் வரக்கடவர்களென்றுசொல்
ல; லேவியின் சந்ததியாரெல்லாரும் அவனிடத்
தில் கூடிவந்தார்கள்.—அவன் அவர்களைநோக்கி, ௨௭
ஒவ்வொருவனுந் தன் தன் கட்கத்தைத் தன் தன்
அரையிற் கட்டிக்கொண்டு, பாளயமெங்கும்
உள்ளும்புறம்பும்வாசலுக்குவாசல்போய்த் தன்
தன் சகோதரனையும் தன் தன் சிநேகிதனையும்,
தன் தன் இனத்தானையுங்கொலைசெய்யவேண்டு
மென்றுஇஸரவேலருடைய தேவனுகிய யெ
கோவாசொல்லுகிருரென்ருன்.—லேவியின் ௨௮
சந்ததியார் மோசேயின் சொற்படியே செய்தார்
கள்: அந்நாளிலே சனங்களில்சற்றேறக்குறைய
மூவாயிரம்பேர்விழுந்தார்கள்.—மோசே உங்களி ௨௯
லொவ்வொருவனும் தன் தன் புத்திரனுக்கும், ச
கோதரனுக்கும் விரோதமாயிருந்தபடியால், யெ
கோவா இன்றைக்கு உங்களுக்கு ஆசீர்வாதம
ளிக்கும்படி இன்றைக்குஉங்களை யெகோவா
வுக்கு ஒப்புக்கொடுங்கள் என்ருன்.
மற்றநாள்மோசே சனங்களை நோக்கி, நீங்கள் ௩௰
பெரியபாவஞ்செய்தீர்கள். இப்பொழுதுநானே
றி, யெகோவாவினிடத்தில்போகிறேன். உங்
கள் பாவத்துக்குப்பிராயச்சித்தம் பண்ணவுங்கூ
டுமென்ருன்.—அப்படியே மோசே யெகோ ௩௧
வாவினிடத்துக்குத்திரும்பிப்போய், ஐயோ! இந்
தச்சனங்கள் பொன்னினுல் தங்களுக்குத்தெய்
வத்தை உண்டாக்கிப்பெரியபாவஞ்செய்தார்க
ளே.—ஆகிலும் உமக்குச் சித்தமானுல் அவர்களு ௩௨
டையபாவத்தை மன்னித்தருளும். இல்லாவிட்
டால், நீரெழுதின புத்தகத்தில் என்னைக்கிறுக்கி
விடும்படி வேண்டுகிறேனென்ருன்.—அப்பொ ௩௩
ழுது யெகோவா மோசேயைநோக்கி, எனக்
குவிரோதமாய்ப்பாவஞ்செய்தவன் எவனே அ
வனையே என் புத்தகத்தில் கிறுக்கிவிடுவேன்.—
இப்பொழுது நீ போய் நானுனக்குச்சொன்ன, ௩௪
இடத்துக்குச்சனங்களை நடத்திக்கொண்டுபோ.
பார், என் தூதனுனவர் உனக்குமுன்செல்லுவார்.
ஆகிலும் நான்தண்டிக்குந்தினத்தில் அவர்கள்பா
வத்தினிமித்தம் அவர்களைத்தண்டிப்பேன் என்
ருர்.—ஆரோன் செய்த பசுவின்கன்றைச்சனங் ௩௫

(௰௩) ஆதி.௨௨.௰௬. எபி.௬.௰௩. ஆதி.௰௨.௭. ஆதி.௰௫.௭,௰௮. (௰௪) உபா.௩௨.௨௮. ௨.சாமு.௨௪.௰௬. சங்.௱௬.
௪௫. யோவே.௨.௰௩. யோனா.௩.௰. (௨௨) அதி.௰௪.௰௧. (௨௫) அதி.௩௩.௪,௫. ௨.நாளா.௨௮.௰௯. (௨௭) எண்.
௨௫.௫. (௨௯) எண்.௨௫.௰௧,௰௨,௰௩. ௧.சாமு.௰௫.௰௮.௨௨. நீதி.௨௧.௩. சக.௰௩.௩. மத்.௰.௩௭. (௩௰) ௧.சாமு.
௰௨.௨௰,௨௩. லூக்.௰௫.௰௮. ௨.சாமு.௰௬.௰௨. ஆமோ.௫.௰௫. எண்.௨௫.௰௩. (௩௧) உபா.௯.௰௮. அதி.௨௰.
௨௩. (௩௨) சங்.௬௯.௨௮. ரோ.௯.௩. சங்.௫௬.௮. சங்.௱௩௯.௰௬. தானி.௰௨.௧. வெளி.௩.௫. வெளி.௨௧.௨௭.
வெளி.௨௨.௰௯. (௩௩) லேவி.௨௩.௩௰. எசேக்.௰௮.௪. (௩௪) அதி.௩௩.௨,௰௪. உபா.௩௨.௩௫. ஆமோ.௩.௰௪.
ரோ.௨.௫,௬. (௩௫) ௨.சாமு.௰௨.௯. அப்.௭.௪௧.

கள் செய்வித்ததினிமித்தம்,யெகோவா அவர்
களை வாதைப்படுத்தினார்.

## ௩௩. அதிகாரம்.

௧. யெகோவாசனங்களுடன்போகலாகாதென
மறுத்தல்: ௪. சனங்கள் துக்கித்தல்: ௭. பாளயத்
துக்குப் புறம்பே ஆவாசத்தைக்கொண்டுபோ
தல்:௯.அதிலே தேவன் வெளிப்பட்டுமோசே
யுடன்சம்பாஷித்தல்: ௰௨.மோசே தேவனைப்
பிரார்த்தித்தல்:௰௮. தேவன் தன்பிற்புறத்தைத்
தரிசிப்பித்தல்.

பின்பு யெகோவாமோசேயைநோக்கி,நீயும்
நீ எகிப்துதேசத்தினின்றும் அழைத்துக்கொண்
டுவந்த சனங்களும், இவ்விடத்தைவிட்டுப்புறப்
பட்டு,நான் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்
கோபுக்கும் உன் சந்ததியாருக்கும் அளிப்பே
னென்று ஆணையிட்டுக் கொடுத்ததும், பாலுந்தே
னும் பெருகுகிறதுமான தேசத்துக்குப் போங்
௨ கள்.—நான் ஒரு தூதனை உனக்கு முன்பாக
அனுப்பிக் கானானியரையும், எமோரியரையும்,
எத்தியரையும், பெரீசியரையும், ஈவியரையும், எ
௩ பூசியரையுந் துரத்திவிடுவேன்.—நீங்கள் வணங்
காதகழுத்துள்ள சனங்கள். வழியில் உங்களை
நிருமூலப்படுத்தவுங் கூடும். ஆதலால் நானுங்க
ளுக்குள்ளேசெல்லமாட்டேனென்றார்.
௪ பின்னும்யெகோவாமோசேயைநோக்கி,நீ
இஸ்ரவேல்சந்ததியாரிடத்தில்நீங்கள்வணங்காத
கழுத்துள்ளசனங்கள். நான்சடிதியில்உங்கள்மத்
தியிலெழுந்து உங்களை நிருமூலபப்டுத்துவேன்:
ஆகையால் நீங்கள் தரித்திருக்கிற உங்கள் ஆபர
ணங்களைக்கழற்றிப்போடுங்கள். அப்பொழுது
நானுங்களுக்குச்செய்யவேண்டியதை அறிந்து
௫ கொள்வேனென்று சொல்லென்றார்.—இந்த அ
மங்களவாக்கைச் சனங்கள் கேட்டபொழுது,
துக்கமடைந்தார்கள். ஒருவருந்தங்கள்ஆபரணங்
௬ களைத்தரித்துக்கொள்ளவில்லை.—இஸ்ரவேல் சந்
ததியார் ஓரேப் மலையினிடத்தில் தங்கள் ஆபர
ணங்களைக்கழற்றினார்கள்.
௭ பின்பு மோசேகூடாரத்தைப்பேர்த்து அதைப்
பாளயத்துக்குப் புறம்பே தூரமாகப்போட்டுக்
கொண்டு, அதற்குச்சபையின் ஆவாசமென்று
பேரிட்டான். யெகோவாவைநாடும்யாவரும்
பாளயத்திற்குப்புறம்பான சபையின் ஆவாசத்
௮ துக்குப்போனார்கள்.—மோசே ஆவாசத்துக்குப்
போகிறபொழுது சனங்களெல்லாரும் எழுந்
திருந்து, தங்கள்தங்கள் கூடாரவாசலில் நின்று
கொண்டுஅவன்ஆவாசத்தில்பிரவேசிக்குமளவும்
அவன் பின்னே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.
மோசே ஆவாசத்திற் பிரவேசிக்கையில், மே ௯
கத்தூண் இறங்கி ஆவாசவாசலில்நின்றது; யெ
கோவா மோசேயுடன் சம்பாஷித்தார்.—சனங் ௰
களெல்லாரும் மேகத்தூண் ஆவாசவாசலில்நிற்
கக்கண்டார்கள். சனங்களெல்லாருந் தங்கள்தங்
கள் கூடாரவாசல்களில் நின்று வணங்கினார்
கள்.—ஒருவன் தன் சிநேகிதனுடன் பேசுவது ௰௧
போல, யெகோவா மோசேயுடனே முகம்
முகமாய்ப்பேசினார். பின்பு அவன்பாளயத்திற்
குத்திரும்பிவந்தான். அவனுடையபணிவிடைக்
காரனும் நூனின் புத்திரனுமாகியவாலிபனான
யோசுவாஆவாசத்தைநீங்காதிருந்தான்.
மோசே யெகோவாவைநோக்கி, பாரும், ௰௨
உன் நாமத்தையுமறிவேனென்றும், என் கடாட்
சம் உனக்குக் கிடைத்ததென்றும், சொன்னது
மன்றி, இந்தச் சனத்தை அழைத்துக்கொண்டு
போவென்றும், நீரெனக்குச்சொல்லியிருக்கிறீர்.
ஆகிலும் என்னோடே இன்னாரை அனுப்புவே
னென்பதை எனக்கு நீர் தெரிவிக்கவில்லை.—உம ௰௩
து தயை எனக்குக்கிடைத்ததுண்டானால் நானும்
மையறிவதற்கும், உமது கிருபாகடாட்சத்தைப்
பெறுவதற்கும், இப்பொழுதுஉமதுவழியைத்தெ
ரிவித்தருளும். இந்தச்சாதியார் உம்முடைய ச
னங்களென்றுநினைந்தருளுமென்றான்.-அப்பொ ௰௪
ழுது அவர்,நானேஉன்னோடேவருவேன். நான்
உனக்கிளைப்பாறுதலைத் தருவேனென்று சொல்
ல;—இவன் அவரைநோக்கி, நீர் பிரசன்னமாய் ௰௫
வராதிருந்தால், இவ்விடத்தைவிட்டு எங்களைக்
கொண்டுபோகாதிரும்.—எனக்கும், உம்முடை ௰௬
ய சனங்களுக்கும்,உம்முடைய கிருபைகிடைத்
ததென்பது, எதினாலேயறியப்படும். நீர் எங்க
ளோடேவருவதினாலல்லவா. இப்படியே பூமி
யின்மேலுள்ளசனங்களெல்லாரிலும்நானும் உம்
முடைய சனங்களும் விசேஷித்தவர்களென்று
விளங்குமென்றான்.
அப்பொழுது யெகோவா மோசேயை ௰௭
நோக்கி, என் கடாட்சம் உனக்குக்கிடைத்தது.
உன் நாமத்தை நான் அறிவேன், ஆகையால் நீ
சொன்னதையுஞ் செய்வேனென்றுசொல்ல;—
இவன், உமது மகிமையை எனக்குக்காண்பித்த ௰௮
ருளும்படி உம்மைவேண்டுகிறேனென்றான்.—
அதற்கு அவர் நான் என்னுடைய நன்மையை ௰௯
எல்லாம் உனக்குமுன்பாகச்செல்லும்படிசெய்
து, யெகோவாவுடைய நாமத்தை உனக்கு
முன்பாகக்கூறி, எவனுக்கு அநுக்கிரகஞ்செய்
யத்திருவுளங்கொள்வேனோ அவனுக்கு அநுக்

(௩௩. அதி. ௧.) ஆதி.௰௨.௭. அதி.௩.௮. (௨) அதி.௩௨.௩௪. உபா.௭.௨௨. யோசு.௨௪.௰௧. (௩) வச.௰௫,௰௭. அதி.௩௨.௯. அதி.௩௨.௰. எண்.௰௬.௨௧,௪௫. (௪) எண்.௰௯.௪௫,௪௬. உபா.௮.௨. சங்.௱௯௯.௨௩. (௫) எண்.௰௪.௧,௩௯. ௨.சாமு.௰௯.௨௪. ௧ இரா.௨௧.௨௭: எஸ்று.௯.௩. எஸ்த.௪.௧,௪. யோபு.௧.௨௰. ஏசா.௩௨.௰௧. (௭) அதி.௨௯.௪௨,௪௩. உபா.௪.௨௯. ௨.சாமு.௨௧.௧. (௮) எண்.௰௬.௨௭. (௯) அதி.௨௫.௨௨. சங்.௯௯.௭. (௰௧) ஆதி.௩௨.௩௰. உபா.௩௪.௰. (௰௨) அதி.௩௨.௩௪. ஆதி.௰௮.௰௯. சங்.௧.௬. எரே.௧.௫. யோவா.௰.௰௪,௰௫. ௨.தீமோ.௨.௰௯. (௰௩) அதி.௩௪.௯. சங்.௨௫.௪. சங்.௨௭.௰௧. யோவே.௨.௰௭. (௰௪) அதி.௰௩.௨௧. அதி.௪௰.௩௪.—௩௮. ஏசா.௬௩.௯. யோசு.௨௧.௪௪. (௰௬) எண்.௰௪.௰௪. அதி.௩௪.௰. உபா.௪.௭,௩௪. ௨.சாமு.௭.௨௩. ௧.இரா.௮.௫௨. சங்.௱௪௭.௨௰. (௰௭) ஆதி.௰௯.௨௧. யாக்.௫.௰௬. (௰௮) ௧.தீமோ.௬.௰௫. (௰௯) அதி.௩௪.௫,௬,௭. எரே.௩௧.௰௪. ரோ.௯.௰௫,௰௬,௰௮. ரோ.௪.௪,௰௬.

கிரகத்தையும், எவனுக்குத் தயைசெய்யத் திருவு
ளங்கொள்வேனோ அவனுக்குத் தயையையுஞ்
௨௰ செய்வேனென்றுசொன்னதுமன்றி,—யாவனாகி
லும் என்னைக்கண்டால், சீவிக்கமாட்டான்:
ஆதலால் என் முகத்தைக்காணப்பெறாயென்று
௨௧ சொன்னார்.-பின்னும் யெகோவா, பார்,என்ச
மீபத்தில் ஒருஸ்தானமுண்டு; நீஅந்தக்கன்மலையி
௨௨ லேநில்லு.—என்னுடையமகிமை அதனாலேசெல்
லுகையில், நான் அந்தக்கன்மலையின் வெடிப்
பில் உன்னைவைத்து, நான் செல்லுமளவும் என்
௨௩ கையினால் உன்னைமூடுவேன்.—பின்பு என்கை
யை எடுப்பேன். அப்பொழுது என் பிற்புறத்
தைக்காணப்பெறுவாய்: என் முகமோகாணப்ப
டாதென்றார்.

## ௩௪. அதிகாரம்.

*௧. மோசேஇரண்டுபலகைகளையெடுத்துக்கொண்டு திரும்பவும் மலைக்கேறல்: ௪. தேவன் தமது நாமத்தைப்பிரஸ்தாபம்பண்ணல்: ௮. மோசே பிரார்த்தித்தல்:௰. தேவன் உத்தரஞ்சொல்லல்: ௰௮. நாலுவிதகட்டளைகளையிடல்: ௨௯. மலையினின்றுமிறங்குகையில் மோசேயின் முகம் பிரகாசித்தல்.*

பின்புயெகோவாமோசேயைநோக்கி,முந்தி
னபிரகாரம் இரண்டுகற்பலகைகளை வெட்டியெ
டு. நீயுடைத்த முந்தினபலகைகளிலிருந்த வாக்
குகளை, அந்தப்பலகைகளிலும் எழுதுவேன்.—
௨ விடியற்காலத்தில் நீ ஆயத்தமாகிச்சீனாய் மலையி
லேறிஅங்கே மலையுச்சியில் காலமே என்சமீபத்
௩ தில்வா.—உன்னுடனொருவனும் ஏறவும்படாது
மலையிலெங்குமொருவனுங்காணவும்படாது. இந்
தமலைக்குச் சமீபத்தில் ஆடுமாடுகள்மேயவுங்கூ
டாதென்றார்.
௪ மோசே முந்தினபிரகாரம் இரண்டுகற்பலகை
களைவெட்டி எடுத்துக்கொண்டு, அதிகாலையிலெ
ழுந்து, தனக்கு யெகோவா விதித்தபடி அவ்
விரண்டுகற்பலகைகளையும் தன்கையிற்கொண்டு
௫ சீனாய்மலையிலேறினான்.-அப்பொழுதுயெகோ
வா ஒருமேகத்திலிறங்கி, அங்கே அவனருகே
நின்றுகொண்டு யெகோவாவின் நாமத்தைப்
௬ பிரஸ்தாபப்படுத்தினார்.—யெகோவா, அவன்
முன்பாகச்செல்லுகையில், யெகோவாவே,
தேவனாகிய யெகோவாவே, இரக்கமும்,
கிருபையும், நீடியபொறுமையுமுள்ளவர்; தயை
௭ யிலுஞ்சத்தியத்திலும் பரிபூரணர்.—அவர் ஆயிரந்
தலைமுறைவரைக்குந்தயைசெய்பவர். தீமையை
யும், அதிக்கிரமத்தையும், பாவத்தையும், மன்னிக்
கிறவர். குற்றவாளிகளைச்சுத்தராகவிடாமல், பிதா
க்கள்செய்த பாவத்தைப் புத்திரர்பௌத்திரரிடத்
திலும், மூன்றாம் நான்காந்தலைமுறைவரைக்கும்
விசாரிக்கிறவரென்று, பிரஸ்தாபம்பண்ணினார்.
அப்பொழுது மோசேவிரைந்து பூமிக்குநேரே ௮
தாழ்ந்துநமஸ்காரஞ்செய்து, ஆண்டவரே,-உம ௯
து கிருபாகடாட்சம் எனக்குக்கிடைத்ததுண்டா
னால், எங்களுக்குள் எழுந்தருளும்படி என் ஆண்
டவரை வேண்டுகிறேன். இந்தச்சனங்கள் வ
ணங்காதகழுத்துள்ளவர்கள். எங்கள்தீமையையும்
பாவத்தையும் மன்னித்து, எங்களையுமக்குச் சுதந்
தரமாக ஏற்றுக்கொள்ளுமென்றான்.
அதற்கவர், நான் ஒரு உடன்படிக்கைபண்ணு ௰
கிறேன்: பூமியெங்குமெந்தச்சாதியாரிடத்திலும்,
செய்யப்படாத அற்புதங்களை உன் சமஸ்தசனங்
களுக்கு முன்பாகவுஞ்செய்வேன். உன்னோடே
கூடிய சனங்களெல்லாரும், யெகோவாவின்
கிரியையைக் காண்பார்கள். உன்னுடன் கூடி
நான் செய்யுங்காரியம் பயங்கரமுள்ளதாகும்.—
நானின்றைக்கு உனக்குக்கட்டளையிடுகிறதைம ௰௧
னதில் அவதானித்துக்கொள். பார்; எமோரியரை
யும், கானானியரையும், எத்தியரையும், பெரீசிய
ரையும், ஈவியரையும், எபூசியரையும் உங்கள்
முன்னின்றுந்துரத்திவிடுவேன்.—நீங்கள்போய்ச் ௰௨
சேரும் தேசத்தாரோடும், எந்த உடன்படிக்கை
யையுஞ்செய்யாதெச்சரிக்கையாயிரு. செய்தால்,
அதுஉங்களுக்குள்ளே ஒருகண்ணியாகும்.-அவர் ௰௩
களுடையவேதிகைகளை இடித்துவிடுங்கள். சிலை
களைத்தகர்த்துவிடுங்கள். அவர்களுடைய அஷேரீ
விருட்சங்களை வெட்டியெறியுங்கள்.-யெகோ ௰௪
வா எரிச்சலுள்ளவரென்றுபெயர்பெற்றவர்: அவ
ரேரிச்சலுள்ள தேவன், ஆதலால் அந்நியதே
வர்களை நீங்கள்வணங்கலாகாது.—அத்தேசத்தார் ௰௫
களோடும் உடன்படிக்கை செய்வீர்களாகில் அ
வர்கள் தங்கள்தேவர்களை விபசாரமார்க்கமாய்ப்
பின்பற்றி அவர்களுக்குப்பலியிடுங்காலத்தில் அ
வர்கள்உங்களையழைக்க,-நீங்கள்பிரசாதங்களைப் ௰௬
புசிக்கவும் அவர்கள்புத்திரிகளில் நீங்கள் உங்கள்
புத்திரருக்குப்பெண்கொள்ள, அப்புத்திரிகள்தங்
கள் தேவர்களை விபசாரமார்க்கமாய்ப்பின்பற்று
வதுமன்றி, உங்கள் புத்திரரையுந் தங்கள் தேவர்
களைவிபசாரமார்க்கமாய்ப்பின்பற்றச்செய்யவுங்
கூடும்: ஆதலால் அப்படிச்செய்யாதிருங்கள்.-உ ௰௭
ங்களுக்காகத்தெய்வங்களைவார்ப்பிக்கப்படாது.

---

(௨௰) ஆதி.௩௨.௩௰. நியா.௬.௨௨. ஏசா.௬.௫. வெளி.௧.௰௬,௰௭. (௨௨) ஏசா.௨.௨௧. சங்.௯௧.௧,௪. (௨௩) யோவா.௧.௰௮.—(௩௪. அதி. ௧.) அதி.௩௨.௰௬.௰௯. உபா.௰.௨,௪. (௨) அதி.௰௯.௨௰. (௩) அதி.௰௯.௰௨,௰௩,௨௧. (௫) அதி.௩௩.௰௯. (௬) எண்.௰௪.௰௮. ௨.நாளா.௩௰.௯. நெகே.௯.௰௭. சங்.௮௬.௰௫ சங்.௱௩.௮. சங்.௱௪௫.௮. யோவே.௨.௰௩. சங்.௩௧.௰௯. ரோ.௨.௪. சங்.௫௭.௰. (௭) உபா.௫.௰. சங்.௮௬.௰௫. எரே.௩௨.௰௮. தானி.௯.௪. சங்.௱௩.௩. தானி.௯.௯. எபே.௪.௩௨. ௧.யோவா.௧.௯. யோசு.௨௪.௰௯. யோபு.௰.௰௪. மீகா.௬.௰௧. நாகூ.௧.௩. (௮) அதி.௪.௩௧. (௯) அதி.௩௩.௰௫,௰௬. அதி.௩௩.௩. உபா.௩௨.௯. சங்.௨௮.௯. எரே.௰.௰௬. சக.௨.௰௨. (௰) உபா.௫.௨. உபா.௪.௩௨. ௨.சாமு.௭.௨௩. உபா.௰.௨௧. சங்.௱௪௫.௬. ஏசா.௬௪.௩. (௰௧) உபா.௫.௩௨. (௰௨) அதி.௨௩.௩௨. உபா.௭.௨. நியா.௨.௨. அதி.௨௩.௩௩. (௰௩) உபா.௰௨.௩. நியா.௨.௨. உபா.௭.௫. நியா.௬.௨௫. ௨.இரா.௰௮.௪. ௨.நாளா.௩௧.௧. (௰௪) அதி.௨௰.௩,௬. ஏசா.௯.௬. ஏசா.௫௭.௰௫. அதி.௨௰.௬. (௰௫) உபா.௩௧.௰௬. நியா.௨.௰௭. எரே.௩.௯. எசேக்.௬.௯. எண்.௨௫.௨. ௧.கொரி.௰.௨௭. (௰௬) சங்.௱௬.௨௮. ௧.கொரி.௮.௪,௭,௰. உபா.௭.௩. ௧.இரா.௰௧.௨. எஸ்றா.௯.௨. நெகே.௰௩.௨௫. எண்.௨௫.௧,௨. ௧.இரா.௰௧.௪.

௰௮ ஆபீப்மாதத்தில் நீங்கள் எகிப்தினின்றும் பு
றப்பட்டபடியால் புளிப்பில்லாத அப்பத்தின்
உற்சவத்தை நீங்களாசரித்து நான் உங்களுக்குக்
கட்டளையிட்டபிரகாரம் அந்த ஆபீப்மாதத்தில்
ஏழுநாள் புளிப்பில்லாத அப்பத்தைப்புசிக்கக்க
௰௯ டவீர்கள்.—கருப்பத்தில் தோன்றும் முதற்பேறு
யாவும், உங்கள் ஆடுமாடுகளிற்றலையீற்று யாவும்
௨௰ எனனுடையவைகள்.—கழுதையின்தலையீற்றை
ஒரு ஆட்டுக்குட்டிதந்து மீட்டுக்கொள்ளவேண்
டும். அதைமீட்டுக்கொள்ளாதிருந்தால், அதின்க
ழுத்தைமுறித்து விடுங்கள். உங்கள்புத்திரரில்மு
தற்பேறான யாவையும் மீட்டுக்கொள்ளவேண்
டும். என்சந்நிதியில் ஒருவனும் வெறுங்கையோ
௨௧ டேவரப்படாது.—நீங்கள் ஆறுநாள்கிரியையைச்
செய்து, ஏழாம்நாளில் ஓய்ந்திருங்கள். விதைப்
புக்காலத்திலும், அறுப்புக்காலத்திலும், நீங்கள்
௨௨ ஓய்ந்திருங்கள்.—கோதுமை விளைவின் முதற்ப
லத்தைச்செலுத்தும் வார உற்சவத்தையும், வரு
ஷாந்தத்தில்சேர்ப்பின் உற்சவத்தையும், ஆசரிக்
௨௩ கக்கடவீர்கள்.—உங்கள் ஆண்மக்களெல்லாரும்
வருஷத்தில் மூன்றுதரம் இஸரவேலின் தேவ
னும் கர்த்தருமாகிய யெகோவாவின் சந்நிதி
யில்வரவேண்டும்: நான் அந்தச்சாதியாரை உங்
கள்முன்னின்றுந்துரத்தி உங்களெல்லைகளைவிஸ்
௨௪ தாரமாக்குவேன்.—ஆனபடியால் நீங்கள்வருஷத்
தில்மூன்றுதரம் உங்கள் தேவனாகிய யெகோ
வாவின் சந்நிதியில்வந்து வெளிப்படும்பொழு
து, ஒருவரும் உங்கள்தேசத்தை இச்சிக்கமாட்
௨௫ டார்கள்.—புளித்தமாவுடன் என்பலியின் இரத்
தத்தை நைவேத்தியம் பண்ணவேண்டாம்; பஸ்
காஉற்சவத்தின் பலியை விடியற்காலம் வரைக்
௨௬ கும்வைக்கவும் வேண்டாம்.—உங்கள் நிலத்தில்
முதல்முதல்விளைந்தமுதற்பலத்தைஉங்கள்தேவ
னாகியயெகோவாவின்ஆலயத்துக்குக்கொண்
டுவாருங்கள். வெள்ளாட்டுக்குட்டியை அதினு
டைய தாயின் பாலில்பாகம் பண்ணவேண்டா
௨௭ மென்றார்.—பின்னும்யெகோவாமோசேயை
நோக்கி, இந்த வாக்குகளுக்கேற்க உன்னோடும்,
இஸரவேலரோடும், உடன்படிக்கை பண்ணி
னேன்; ஆதலால் நீ இந்தவாக்குகளைஎழுதென்
௨௮ றார்.—அங்கே அவன் யெகோவாவுடன் இர
வும்பகலும் நாற்பதுநாள் தங்கினான்: அவன் அப்
பம்புசிக்கவுமில்லை,சலபானம்பண்ணவுமில்லை.
அவர்உடன்படிக்கையின்வாக்குகளாகியபத்துக்
கட்டளைகளையும் கற்பலகைகளிலெழுதினார்.
௨௯ சாட்சிப்பலகைகள் இரண்டையும், கையிற்
கொண்டு, மோசே சீனாய்மலையினின்றுமிறங்கி
னான். மலையினின்றுமிறங்கும்பொழுது தன்னு
டன் அவர்பேசினதினால் தன்முகம் பிரகாசித்தி
ருந்ததைமோசே அறியவில்லை.—ஆரோனும்இஸர ௩௰
வேல் சந்ததியார்யாவரும் மோசேயைப்பார்த்த
பொழுது அவன்முகம்பிரகாசித்திருந்ததைக்கண்
டு அவன் சமீபத்திற்சேரப் பயந்தார்கள்.—மோ ௩௧
சே அவர்களை அழைக்க, ஆரோனும், சபைக்கதி
பதிகளெல்லாரும், அவனிடத்தில் திரும்பினார்
கள்: மோசே அவர்களுடனேசம்பாஷித்தான்.—
பின்பு இஸரவேல் சந்ததியாரெல்லாரும் அவன் ௩௨
சமீபத்தில்சேர,அவன்சீனாய்மலையில் யெகோ
வா தனக்குச்சொல்லியயாவையும் அவர்களுக்
குக்கட்டளையிட்டான்.—மோசே அவர்களுட ௩௩
னே பேசிமுடிக்குமளவுந் தன் முகத்தின்மேல்
முக்காடுபோட்டிருந்தான்.—மோசே யெகோ ௩௪
வாவுடனேபேசும்படிக்கு, அவருடையசந்நிதி
யில் பிரவேசித்ததுமுதல் வெளியேபுறப்படுமள
வும் முக்காட்டைநீக்கியிருந்தான். இப்படி அ
வன் புறப்பட்டுவந்து தனக்குக்கட்டளையிடப்
பட்டதை இஸரவேல் சந்ததியாருடன்சொன்ன
பொழுது,—இஸரவேல்சந்ததியார் அவனுடைய ௩௫
முகம் பிரகாசித்திருந்ததைக் கண்டார்கள். மோ
சேஅவருடனேபேசும்படிபிரவேசிக்கும்வரைக்
கும் முக்காடுபோட்டிருந்தான்.

## ௩௫. அதிகாரம்.

௧. ஓய்வுநாளின்விதி: ௪. ஆவாசத்திற்குக்காணிக்கைகொண்டுவருதல்: ௨௰. சனங்கள் காணிக்கைசெலுத்தவிரைதல்: ௩௰. பெத்சலேலையும்அகோலியாபையும்திருப்பணிசெய்ய நியமித்தல்.

பின்பு மோசே இஸரவேல் சந்ததியாராகிய ச ௧
பையார் எல்லாரையும் கூடிவரச்செய்து, அவர்
களைநோக்கி,—ஆறுநாள் கிரியை செய்யவேண் ௨
டும்; ஏழாம்நாளோ உங்களுக்குப்பரிசுத்த நாளா
யிருப்பதாக: அது யெகோவாவுக்கு ஓய்வு
நாள்,அதிலேகிரியைசெய்பவன்எவனுங்கொலை
செய்யப்படவேண்டும்.—ஓய்வுநாளில் உங்கள்வா ௩
சஸ்தலங்களிலெங்கும் நெருப்புமூட்டாதிருப்
பீர்களாக என்னும் இவ்வாக்குகளை, நீங்கள்காத்
துக்கொள்ளும்படி யெகோவா கட்டளையிட்
டாரென்றான்.

பின்னும் மோசே இஸரவேல் சந்ததியாராகி ௪
ய சபையார் எல்லாரையும் நோக்கி,—உங்களி ௫
டத்திலிருந்து யெகோவாவுக்கு ஒருகாணிக்
கைகொண்டுவர வேண்டுமென்று இப்படி யெ
கோவாகட்டளையிட்டிருக்கிறார்,ஆதலால்அதற்
கு மனமிஷ்டமானவனெவனோ அவன் பொன்
னும், வெள்ளியும், பித்தளையும்,—நீலவன்ன ௬
மும், தூமிரவன்னமும், சிவப்புவன்னமும், மெ
லலியபஞ்சும்,வெள்ளாட்டுஉரோமமும்,—சிவப் ௭
புநிறங்கொடுத்த ஆட்டுக்கடாத்தோலும், தகசுத்
தோலும்,—சீத்தீம்மரமும், விளக்கெண்ணெயும் ௮

(௰௮) அதி.௰௨.௰௫. அதி.௰௩.௪. (௰௯) எசேக்.௪௪.௩௰. லூக்.௨.௨௩. (௨௰) எண்.௰௮.௰௫. அதி.௨௩.௰௫. உபா.௰௬.௰௭. ௧.சாமு.௯.௭,௮. (௨௧) அதி.௨௰.௯. லூக்.௰௩.௰௪. (௨௨) உபா.௰௬.௰,௰௩. (௨௩) உபா.௰௬.௰௬. அதி.௩௩.௨. உபா.௰௯.௮. (௨௪) ஆதி.௩௫.௫. அப்.௰௮.௰. (௨௬) உபா.௨௬.௨,௰. உபா.௰௪.௨௧. (௨௭) உபா.௪.௰௩. (௨௮) அதி.௨௪.௰௮. வச.௧. அதி.௩௧.௰௮. உபா.௰.௨.௪. (௨௯) அதி.௩௨.௰௫. மத்.௰௭.௨. ௨.கொரி.௩.௭,௰௩. (௩௩) ௨.கொரி.௩.௰௩. (௩௪) ௨.கொரி.௩.௰௬.—(௩௫. அதி. ௨.) அதி.௨௰.௯. எண்.௰௫.௩௨. உபா.௫.௰௨. லூக்.௰௩.௰௪. (௩) அதி.௰௬.௨௩. அதி.௩௪.௩௨. (௫) அதி.௨௫.௧,௨. அதி.௨௫.௨. (௮) அதி.௨௫.௬.

அபிஷேகதைலத்துக்குப்பரிமளதிரவியங்களும்,
௯ தூபசுகந்தவர்க்கங்களும்,—எபோத்திலும், மார்
புப்பதக்கத்திலும் பதிக்கும் கோமேதகமுதலிய
இரத்தினங்களுமாகிய இவைகளை, யெகோ
வாவுக்குக்காணிக்கையாகக் கொண்டுவரக்கட
௰ வன்.—உங்களுக்குள்ளிருக்கிற விவேகிகள் யா
வரும்வந்து, யெகோவாகற்பித்த ஆவாசமும்,
௰௧ அதின்கூடாரமும்,—போர்வையும்,கடைப்பூட்
டுக்களும், அதின்பலகைகளும்,தாழ்களும்,தூண்
௰௨ களும்,—பாதங்களும், கிருபாசயத்தோடும், மூடு
திரையோடும், பெட்டியும்,அதின்தண்டுகளும்,—
௰௩ பீடமும் அதின் தண்டுகளும், அதின்சகலபாத்தி
௰௪ ரங்களும்,—சமுகத்தப்பமும்,வெளிச்சங்கொடுக்
கிளைவிளக்கும், அதின் சகலகருவிகளும், வி
௰௫ ளக்கெண்ணெயுடன் அகல்களும்,—தூபவேதி
கையும், அதின் தண்டுகளும், அபிஷேகதைல
மும், சுகந்ததூபவர்க்கமும், ஆவாசவாசலுக்குத்
௰௬ தொங்குதிரையும்,—பித்தளைச்சல்லடை தண்டு
கள்முதலிய சகலபாத்திரங்களுடன், தகனபலி
வேதிகையும், தொட்டியும், அதின்பாதமும்,—
௰௭ பிராகாரத்தின்தொங்குதிரைகளும்,அதின் தூண்
களும், அவைகளின்பாதங்களும், பிராகாரவாச
௰௮ லின் தொங்குதிரையும்,—ஆவாசத்தின் முளைக
ளும், பிராகாரத்தின்முளைகளும், அவைகளின்க
௰௯ யிறுகளும்,—பரிசுத்தஸ்தானத்தில் ஆராதனைசெய்
வதற்குரிய வஸ்திரங்களும், ஆசாரியத்தொண்டு
செய்யும்படி ஆசாரியனாகிய ஆரோனுக்குப் பரி
சுத்தவஸ்திரங்களும்,அவன்புத்திரரின் வஸ்திரங்
களுமாகிய எல்லாவற்றையுஞ் செய்யக்கடவர்க
ளென்றான்.
௨௰ இஸரவேல் சந்ததியாராகிய சபையாரெல்லா
ரும் மோசேயின் சமுகத்தைவிட்டுப் புறப்பட்
௨௧ டார்கள்.—பின்புமனஎழுச்சியையும்,மனோவாஞ்
சையையுமுடையவர்கள் யாவரும் சபையின்
ஆவாசத்திருப்பணிக்கும், அதின் நானாவித ஆரா
தனைக்கும், பரிசுத்தவஸ்திரங்களுக்குமேற்றவை
களை யெகோவாவுக்குக் காணிக்கையாகக்
௨௨ கொண்டுவந்தார்கள்.—மனப்பூர்வமுள்ள ஸ்திரி
புருஷர்கள்யாவரும் அஸ்தகடகங்களும்,காதணி
களும், மோதிரங்களும், ஆரங்களுமாகியசகலவி
தப் பொன்னாபரணங்களையுங் கொண்டுவந்தார்
௨௩ கள்.—யெகோவாவுக்குக் காணிக்கைகொடுத்
தவர்களெல்லாரும் ஒரு பொற்காணிக்கையைக்
கொடுத்தார்கள். நீலம், தூமிரம், சிவப்பென்
னும் நிறங்களுள்ள மெல்லிய பஞ்சினூலையும்,
வெள்ளாட்டு உரோமத்தையும், சிவப்புநிறங்கொ
டுத்த ஆட்டுக்கடாத் தோலையும், தகசுத்தோலை
யும், வைத்திருந்தவர்கள் யாவரும் அவைகளைக்
௨௪ கொண்டுவந்தார்கள்.—வெள்ளியையும், பித்தளை
யையுங்கொடுக்கத்தக்கயாவரும், அவற்றை யெ
கோவாவுக்குக்காணிக்கையாகக் கொண்டுவந்
தார்கள். எந்தத்திருப்பணிவேலைக்குமேற்ற சீத்
தீம்மரத்தைவைத்திருந்தயாவரும்.அதைக்கொண்
டுவந்தார்கள்.—விவேகமுள்ள ஸ்திரிகளெல்லா ௨௫
ருந் தங்கள் கைகளினாலேநூற்று, தாங்கள்நூற்ற
நீலம், தூமிரம், சிவப்பென்னும் நிறங்களுள்ள
மெல்லிய பஞ்சினூலைக்கொண்டுவந்தார்கள்.—
விவேகத்தில் மன எழுச்சியுள்ள ஸ்திரிகளெல் ௨௬
லாரும், வெள்ளாட்டுமயிரை நூற்றார்கள்.—அதி ௨௭
பதிகள் எபோத்திலும், மார்புப்பதக்கத்திலும்
பதிக்கும் கோமேதக முதலிய இரத்தினங்களை
யும்,—பரிமளதிரவியங்களையும்,விளக்கெண்ணெ ௨௮
யையும், அபிஷேக தைலத்துக்கும் சுகந்ததூபத்
துக்குமேற்றவைகளையுங்கொண்டுவநதார்கள்.—
மோசேயினாற்செய்யப்படும்படி யெகோவா ௨௯
கற்பித்த திருப்பணிக்குரியயாவையுங் கொண்டு
வரும்படி இஸரவேல்சந்ததியாருக்குள்ளே மன
எழுச்சியுள்ள ஸ்திரி புருஷர்கள்யாவரும், யெ
கோவாவுக்குக் காணிக்கையை மனப்பூரண
மாய்க்கொண்டுவந்தார்கள்.
பின்பு மோசே இஸரவேல்சந்ததியாரைநோக் ௩௰
கி, கேளுங்கள், யெகோவா யூதாவின்கோத்
திரத்தில் ஊரின் பௌத்திரனும் யூரியின் புத்
திரனுமாகிய பெத்சலேலேசிற்பத்தொழில்கள்கற்
பிப்பதிலே நிபுணனாக்கி,—பொன், வெள்ளி, ௩௧
பித்தளைவேலைகள் செய்வதற்கும்;—இரத்தினங்க ௩௨
ளைச் செப்பமிட்டுப் பதிப்பதற்கும்; மரத்தில்
கொத்துவேலை செய்வதற்கும், சகலவிதவேலைக
ளையும்பண்ணுவதற்கும்;—பேர்சொல்லி அழைத் ௩௩
து, சகலவிதவேலைகளையுஞ்செய்யும்படி, புத்தி
யையும் வித்தையையும் அறிவையும் ஈந்தருளுந்
தேவ ஆவியினாலே அவனைப் பூரணப்படுத்தி
னார்.—அவன் தாண்கோத்திரத்திலுள்ள அகிசா ௩௪
மாகின்புத்திரனாகிய அகோலியாபோடும்போதிக்
கும்படி அவன் இருதயத்தை ஏவினார்.—கொத்து ௩௫
வேலையும், சிற்பவேலையும், நீலம்,தூமிரம்,சிவப்
பென்னும் நிறங்களுள்ள மெல்லிய பஞ்சினூலி
னால் தைத்தலும், நெய்தலுமாகியசகலவிதவேலை
களையும், சிற்பத்தொழில் கற்பிப்பவர்கள் செய்
யும் எந்தவேலைகளையுஞ்செய்யும்படிக்கு,அவர்க
ளுடைய இருதயத்தைவிவேகத்தினாலேபூரணப்
படுத்தினார்.

## ௩௬. அதிகாரம்.

௧. பொருள்களை வேலையாளரிடம்ஒப்பித்தல்: ௪. காணிக்கை கொண்டுவராமற்றடுத்தல்: ௮. கெரூபிகளைச்சித்திரித்ததிரைகள்: ௰௪. வெள்ளாட்டு ரோமத்திரைகள்: ௨௰. பலகைகள்: ௩௧. தாழ்கள்: ௩௫. திரை: ௩௭. தொங்குதிரை.

(௰) அதி.௩௧.௰௧. (௰௧) அதி.௨௬.௧,௨. (௰௨) அதி.௨௫.௰. (௰௩) அதி.௨௫.௨௩. (௰௪) அதி.௨௫.௩௰. அதி.௨௫.௩௧. (௰௫) அதி.௩௰.௧. அதி.௩௰.௨௫. அதி.௩௰.௩௪. (௰௬) அதி.௨௭.௧. (௰௭) அதி.௨௭.௯. (௰௯) அதி.௩௯.௧,௪௧. எண்.௪.௪,௫. (௨௧) அதி.௩௬.௨. ௧.நாளா.௨௯.௯. எஸ்றா.௭.௨௭. ௨.கொரி.௮.௰௨. ௨.கொரி.௯.௭. (௨௩) ௧.நாளா.௨௯.௮. (௨௫) அதி.௨௮.௩. ௨.இரா.௨௩.௭. நீதி.௩௧.௰௯,௨௨,௨௪. (௨௭) ௧.நாளா.௨௯.௬. எஸ்றா.௨.௬௮. (௨௮) அதி.௩௰.௨௩. (௨௯) வச.௨௧. ௧.நாளா.௨௯.௯. (௩௰) அதி.௩௧.௭. (௩௪) அதி.௩௧.௰௧. (௩௫) ௧.இரா.௭.௰௪. ௨.நாளா.௨.௰௪. ஏசா.௨௮.௨௬.—(௩௬.அதி.)

அப்பொழுதுபரிசுத்தஸ்தானத்துத்திருப்பணிக
ளைச்செய்யும் பிரகாரம் இன்னதென்றறியும்படி,
யெகோவாவினாலே புத்தியையும் வித்தை
யையும் பெற்றபெத்சலேல் அகோலியாபுமுதலி
யவிவேகிகள் யாவரும் யெகோவா கற்பித்
தபடி எல்லாருஞ்செய்யத் தொடங்கினார்கள்.—
௨ பெத்சலேலையும் அகோலியாபையும் யெகோ
வாவினால் வித்தையைப்பெற்ற இருதயத்தையு
டைய சகல விவேகிகளையும், திருப்பணிசெய்
ய வரும்படி மனவெழுச்சியுள்ள யாவரையும்,
௩ மோசே வரவழைத்தான்.—இஸரவேல் சந்ததி
யார் பரிசுத்தஸ்தானத்துத்திருப்பணி செய்யும்
படி கொண்டுவந்த பொருள்கள் அனைத்தையும்
மோசேயினிடத்தில் வாங்கிக்கொண்டார்கள்.
பின்னும் அவர்கள் விடியற்காலந்தோறும் இஷ்
டமானகாணிக்கைகளை அவனிடத்திற்கொண்டு
வந்தார்கள்.
௪ அப்பொழுதுபரிசுத்தஸ்தானத்துத் திருப்பணி
செய்துகொண்டிருந்த விவேகிகள்சகலரும் அவ
ரவர்கள் செய்துவந்த தங்கள் தங்கள் வேலையை
௫ விட்டுவந்து,—மோசேயை நோக்கி, சனங்கள்
யெகோவாசெய்யும்படிகற்பித்ததிருப்பணிக்
கு வேண்டியதற்கு அதிகமான பொருள்களைக்
கொண்டு வருகிறார்களென்று சொல்ல; மோசே
ஸ்திரிபுருஷர்களுக்குள் ஒருவரும் பரிசுத்தஸ்தா
னத்துக்குரியகாணிக்கையினிமித்தம் ஒருவேலை
யுஞ் செய்யவேண்டாமென்று கட்டளை யிட்
௬ டான்.—அதை அவர்கள் பாளயமெங்கும் பிர
சித்தம் பண்ணுவித்தார்கள். பின்பு சனங்கள்
௭ கொண்டுவராதபடி நிறுத்தப்பட்டார்கள்.—செய்
யவேண்டியவேலைகள் யாவற்றிற்குமேற்றபொ
ருள் அளவுக்குமிஞ்சியிருந்தது.
௮ ஆவாசத்தின்திருப்பணிசெய்பவர்களாகிய வி
வேகிகள்யாவரும்நீலம், தூமிரம், சிவப்பென்னு
ம்நிறங்களுள்ளமெல்லிய பஞ்சினூலினால் விசித்
திரவேலையானகெருபிகளுடன், பத்துத்திரைக
௯ ளையுண்டாக்கினார்கள்.-ஒவ்வொருதிரையினீளம்
இருபத்தெட்டுமுழம், அகலம் நான்குமுழம்; தி
௰ ரைகள் எல்லாம் ஒரேயளவு.-அவன் ஐந்துதிரை
களை ஒன்றோடொன்றாகவும், மற்றைந்துதிரைக
௰௧ ளை ஒன்றோடொன்றாகவுந் தொடுத்தான்.—ஒரு
திரையின் கரைக்குத்தொடுக்கும் விளிம்பில் நீ
லநூலால் வளையங்களிட்டார்கள். மற்றத்திரை
யின்கரை தொடுக்குமிடத்தில், ஒன்றோடொன்
௰௨ றுசந்திக்கத் தக்கதாக,—ஒருதிரையில் ஐம்பதுவ
ளையங்களையும் தொடுக்கப்படும் மற்றத்திரையின்
கரையில், ஐம்பதுவளையங்களையுஞ் செய்தான்.—
௰௩ ஐம்பதுபொற்கொளுவிகளையும் பண்ணி ஒரு ஆ
வாசமாகும் படிக்கு, அந்தக்கொளுவிகளால் தி
ரைகளை ஒன்றோடொன்று தொடுத்துவிட்டான்.
௰௪ ஆவாசத்தின்மேல் கூடாரமாக வெள்ளாட்டு
உரோமத்தினால் பதினொரு மேன்மூடிச் சீலைக
௰௫ ளைப்பண்ணினான்.—ஒரு மேன்மூடிச்சீலை முப்
பதுமுழநீளமும், நாலுமுழ அகலமுமாயிருந்தது.
பதினொருமேன்மூடிச்சீலைகளும், ஒரே அளவா
யிருந்தன.—ஐந்துமேன்மூடிச்சீலையை ஒன்றாக ௰௬
வும், மற்ற ஆறுமேன்மூடிச்சீலைகளை ஒன்றாகவும்
இசைத்தான்.—ஒருமேன்மூடிச்சீலையின் கரைக் ௰௭
குத்தொடுக்குமிடத்தில் ஐம்பது வளையங்களை
யிட்டான்.-அவைகள் இசைந்திருக்கும்படி, மற் ௰௮
றமேன்மூடிச்சீலையின்கரைக்கும், ஐம்பதுவளை
யங்களையிட்டான்.—ஒரே கூடாரமாகத்தொடுக் ௰௯
கும்படி ஐம்பது பித்தளைக்கொளுவிகளைச்செய்
தார்கள். சிவப்புவன்னங்கொடுத்த ஆட்டுக்கடாத்
தோலினாலே கூடாரத்துக்கு ஒரு மேற்போர்வை
யையுமுண்டுபண்ணினான். அதற்குமேலேதகசுத்
தோலினால் ஒருமேற்போர்வையைச்செய்தான்.
நிமிர்ந்து நிற்கும்படி ஆவாசத்துக்குச்சீத்தீம் ௨௰
மரத்தாற் பலகைகளையாக்கினான்.—ஒவ்வொருப ௨௧
லகை பத்துமுழநீளமும், ஒன்றரைமுழ அகலமு
மாயிருந்தது.—ஒவ்வொருபலகைக்கும் ஒன்றுக் ௨௨
கொன்று சமதூரமான இரண்டு கழுந்துகளிருந்த
ன: ஆவாசத்தின்பலகைகள்யாவுக்குமிப்படியே
செய்தான்.—ஆவாசத்தின்தென்றிசையில் தென்பு ௨௩
றத்திற்கு இருபதுபலகைகளையாக்கினான்.—அந் ௨௪
த இருபதுபலகைகளின்கீழே நாற்பதுவெள்ளிப்
பாதங்களை உண்டுபண்ணினான். ஒருபலகையின்
கீழ் அதினிரண்டுகழுந்துக்கும் இரண்டுபாதங்க
ளையும், மற்றப்பலகையின்கீழ் அதினிரண்டுக
ழுந்துக்கும் இரண்டுபாதங்களையுஞ்செய்தான்.—
ஆவாசத்தின்மறுபக்கமாகிய வடபுறத்திலும், இ ௨௫
ருபதுபலகைகளையும், அவைகளுக்கு நாற்பது
வெள்ளிப்பாதங்களையுஞ்செய்தான்.-ஒருபலகை ௨௬
யின்கீழ் இரண்டுபாதங்களும், மற்றைப்பலகை
யின்கீழ் இரண்டுபாதங்களுமிருந்தன.—ஆவாசத் ௨௭
தின்பின்னாகமேற்குப்புறத்தில் ஆறுபலகைகளை
யும், ஆவாசத்தின் இருபக்கத்திலுமுள்ளமூலைக
ளுக்கு இரண்டுபலகைகளையுஞ்செய்தான்.—அ ௨௮
வைகள் கீழே இசைக்கப்பட்டிருந்தன. மேலே
யும்ஒருவளையத்தினால்இசைக்கப்பட்டிருந்தன.-
இரண்டுமூலைகளிலுமுள்ள அவ்விரண்டிற்கும் ௨௯
அப்படியேசெய்தான்.—அப்படியே எட்டுப்பல ௩௰
கைகளும் ஒவ்வொருபலகைகளுக்குக்கீழ் இவ்
விரண்டுபாதங்களாகப் பதினாறுவெள்ளிப்பாதங்
களுமிருந்தன.
சீத்தீம்மரத்தினால் ஆவாசத்தின் ஒருபக்கத்துப் ௩௧
பலகைகளுக்கு ஐந்துதாழ்களையும்,-ஆவாசத்தின் ௩௨
மற்றைப்பக்கத்துப்பலகைகளுக்கு ஐந்துதாழ்க
ளையும், ஆவாசத்தின்பிற்புறமாகிய மேற்றிசையி
லுள்ளபலகைகளுக்கு ஐந்துதாழ்களையும் உண்டு
பண்ணினான்.—நடுத்தாழ், ஒருமுனைதொடங்கி ம ௩௩
றுமுனைமட்டும்பலகைகளின்மையத்தில்உருவப்
பாய்ச்சப்பட்டிருந்தது.—அந்தப் பலகைகளைப் ௩௪
பொற்றகட்டால் மூடினான். தாழ்கள்பாய்ச்சப்ப
டும் வளையங்களைப்பொன்னாற்செய்ததுமன்றித்
தாழ்களையும் பொற்றகட்டால் மூடினான்.

---

(௧) அதி.௨௮.௩. அதி.௨௫.௮.(௨)௧.நாளா.௨௯.௫. (௩) அதி.௩௫.௨௭.(௫)௨.கொரி.௮.௨,௩. (௮) அதி.௨௬.௧.(௰௨) அதி.௨௬.௫. (௰௪) அதி.௨௬.௭. (௰௯) அதி.௨௬.௰௪.(௨௰)அதி.௨௬.௰௫. (௩௧) அதி.௨௬.௨௬.

௩௫ நீலம், தூமிரம், சிவப்பென்னும் நிறங்களையு
டைய திரித்தமெல்லிய பஞ்சினூலிஞல் ஒருதி
ரைச்சீலையை உண்டாக்கிஞன்: அதிலேவிசித்தி
௩௬ ர வேலையாகக்கெரூபிகளுஞ்செய்தான்.—அதற்
குச்சீத்தீம்மரத்திஞல் நாலுதூண்களைச்செய்துஅ
வைகளைப்பொற்றகட்டால் மூடிஞன்: அவைக
ளின் கொளுவிகளும்பொன்; அவைகளுக்கு நா
லுவெள்ளிப்பாதங்களை வார்ப்பித்தான்.
௩௭ ஆவாசவாசலுக்கு நீலம், தூமிரம், சிவப்பென்
னும் நிறங்களுள்ள திரித்த மெல்லியபஞ்சினூ
லிஞல் தையல்வேலையாக ஒருதொங்குதிரையை
௩௮ யும்,—கொளுவிகளுடன் அதற்கைந்து தூண்க
ளையுஞ்செய்தான். குமிழ்களையும்பூண்களையும்
பொற்றகட்டால்மூடிஞன். அவைகளின் ஐந்து
பாதங்களும் பித்தளையாயிருந்தன.

## ௩௭. அதிகாரம்.

௧. சாட்சிப்பெட்டி: ௬. கெரூபிகளுடன் கிருபா
சயம்: ௰. பீடமும் அதின் பாத்திரங்களும்:௰௭.
கிளைவிளக்கும் அதற்ககல்களும்:௨௫. தூபவே
திகை: ௨௯. பரிசுத்ததைலம்.

பெத்சலேல், சீத்தீம்மரத்திஞல் இரண்டரைமு
ழநீளமும், ஒன்றரைமுழ அகலமும்,ஒன்றரைமு
ழ உயரமுமாக ஒருபெட்டியைச் செய்தான்.—
௨ அதற்குள்ளும் புறம்பும் செம்பொற்றகட்டால்மூ
டி அதின்நான்குபக்கத்திலும்பொன்னிஞலேவி
௩ ளிம்புவகுத்தான்.—அதற்கு நாலுபொன்வளையங்
களை வார்ப்பித்து, அவைகளை அதின்நாலுமூலை
களிலுஞ்சேர்த்து, ஒருபக்கத்தில் இரண்டு வளை
யங்களும், மற்ருருபக்கத்தில் இரண்டுவளையங்
௪ களும் இருக்கும்படிசெய்து,—சீத்தீம் மரத்தால்
தண்டுகளையுஞ்செய்து, அவைகளையும் பொற்ற
௫ கட்டால்மூடி,—அந்தத் தண்டுகளிஞலேபெட்டி
யைச்சுமக்கும்படி அவைகளைப்பெட்டியின்பக்
கங்களிலுள்ள வளையங்களில்பாய்ச்சிஞன்.
௬ இரண்டரைமுழநீளத்திலும், ஒன்றரைமுழஅ
கலத்திலும் செம்பொன்ஞலே ஒரு கிருபாசயத்
௭ தைச்செய்தான்.-அந்தக்கிருபாசயத்தின் இரண்டு
விளிம்புக்கும் ஒரு துண்டுபொன்னிஞல் வைர
வேலையாக இரண்டு கெரூபிகளை உண்டாக்கி
௮ ஞன். கிருபாசயத்தின் இருவிளிம்புக்கும்,—ஒ
ருவிளிம்புக்குஒருகெரூபியும், மற்றைவிளிம்புக்
கு ஒருகெரூபியுமாகக் கெரூபிகளை உண்டாக்கி
௯ ஞன்.—அந்தக்கெரூபிகள் கிருபாசயத்தைத் தங்
கள் சிறகுகள் மூடத்தக்கதாக, ஒன்றுக்கொன்
றெதிர்முகமாய்த்தங்கள் சிறகுகளை உயரவிரித்த
படியிருந்தன: கெரூபிகளின் முகங்கள் கிருபா
சயத்தைநோக்கினபடி யிருந்தன.
௰ சீத்தீம்மரத்திஞல்இரண்டுமுழநீளத்திலும்,ஒரு
முழஅகலத்திலும்,ஒன்றரைமுழ உயரத்திலும்,ஒ
௰௧ ருபீடத்தையுஞ்செய்தான்.-அதைச்செம்பொற்ற
கட்டால்மூடி அதின்நான்குபக்கத்திலும்,பொன்
௰௨ னிஞல்விளிம்புவகுத்தான்.—நான்குபக்கங்களி
லும், நாலுவிரற்கடை அகலச்சட்டத்தையும், அந்
தச்சட்டத்தின்நான்குபக்கத்திலும்பொன்விளிம்
பையும்வகுத்தான்.—அதற்கு நாலு பொன்வளை ௰௩
யங்களைவார்ப்பித்து,அவைகளை அதின் நான்குமூ
லைகளிலுமுள்ளநான்குகால்களிலுந்தைத்தான்.—
பீடத்தைச்சுமக்கும்படி தண்டுகளைமாட்டத்தக்க ௰௪
தாகஅந்தவளையங்கள்சட்டத்தின்அருகோடேயி
ருந்தன.-பீடத்தைச்சுமக்கும்படிதண்டுகளைச்சீத் ௰௫
தீம்மரத்திஞல்செய்து,அவைகளைச் செம்பொற்ற
கட்டால்மூடிஞன்.—பீடத்தின்மேல்வைக்கத்தக் ௰௬
ககலங்களும், கரண்டிகளும், கிண்ணங்களும்,
பானபலியை வார்ப்பதற்குரிய கரகங்களுமா
கியபாத்திரங்களைச்செம்பொன்ஞற்செய்தான்.
செம்பொன்ஞல் ஒருகிளைவிளக்கையுஞ்செய் ௰௭
தான். அந்தவிளக்கை வைரவேலையாகவேசெய்
தான். அதின்தண்டும், கொம்பும், அரும்புகளும்,
காய்களும், பூக்களும், அப்படியே செய்யப்பட்
டன.—அந்தக்கிளைவிளக்கின் ஒருபக்கத்தில்மூன் ௰௮
றுகிளைகளும், மற்றைப்பக்கத்தில் மூன்றுகிளைக
ளுமாக ஆறுகிளைகளை அந்தக்கிளை விளக்கின்பக்
கத்தில்விட்டான்.—ஒரு கிளையில் வாதுமைக் ௰௯
கொட்டைக்கொப்பான மூன்று அரும்புகளும்,
ஒருகாயும், ஒருபூவும், மற்றைக்கிளையிலும், வாது
மைக்கொட்டைக்கொப்பான மூன்று அரும்புக
ளும்,ஒருகாயும்,ஒருபூவுமிருந்தன. கிளைவிளக்கி
னின்றுபுறப்படும் ஆறுகிளைகளிலும் இப்படியே
யிருந்தன.—கிளைவிளக்கிலும், வாதுமைக்கொட் ௨௰
டைக்கொப்பானநாலு அரும்புகளும்,காய்களும்,
பூக்களுமிருந்தன.—கிளைவிளக்கினின்றுபுறப்ப ௨௧
டும்ஆறுகிளைகளுள்ளும்முதற்சோட்டின்கீழ் ஒரு
காயும், இரண்டாம் சோட்டின்கீழ் ஒருகாயும்,
மூன்ருஞ்சோட்டின்கீழ்ஒருகாயுமிருந்தன.—அ ௨௨
வைகளின்காய்களும், கிளைகளும், பொருத்தில்
லாதிருந்தன. முழுவதும்செம்பொன்ஞலேசெய்
யப்பட்டவைரவேலையாயிருந்தது.—அதின்எழு ௨௩
அகல்களையும், அதற்கேற்ற திரிவெட்டிகளையும்,
திரிப்பாத்திரங்களையும் செம்பொன்ஞற் செய்
தான்.—அதையும்அதின்பாத்திரங்கள்யாவையும் ௨௪
ஒருகிக்கோர்செம்பொன்ஞற்செய்தான்.
தூபவேதிகையைச் சீத்தீம்மரத்திஞற் செய்தா ௨௫
ன். அது ஒருமுழநீளமும், ஒருமுழ அகலமும்,
இரண்டுமுழ உயரமும், சதுரவடிவுமாயிருந்தது.
அதின்கொம்புகள், அதற்கு அபின்னமாயிருந்த
ன.-அதின்மேற்புறத்தையுஞ்சுற்றுப்புறத்தையும், ௨௬
அதின்கொம்புகளையுஞ்செம்பொற்றகட்டால்மூ
டி, அதின் நான்குபக்கங்களிலும் பொன்ஞல்
விளிம்புவகுத்தான்.—அதைச்சுமக்குந்தண்டுகள் ௨௭
பாய்ச்சப்படும்படி, அதின் விளிம்புக்குக்கீழே
அதினிரண்டுபக்கத்து இரண்டுமூலைகளிலும், இ
ரண்டுபொன்வளையங்களைச்செய்தான்.—அந்தத் ௨௮
தண்டுகளைச் சீத்தீம்மரத்திஞல்செய்து, அவைக
ளையும் பொற்றகட்டால்மூடிஞன்.
பரிமளதைலக்காரனுடையசெய்கையாய்ப்பரி ௨௯

(௩௫) அதி.௨௬.௩௧. (௩௭) அதி.௨௬.௩௬.—(௩௭. அதி. ௧.) அதி.௨௫.௰. (௬) அதி.௨௫.௰௭. (௰) அதி.௨௫.௨௩.
(௰௬) அதி.௨௫.௨௧. (௰௭) அதி.௨௫.௩௧. (௨௫) அதி.௩௰.௧. (௨௯) அதி.௩௰.௨௩.௩௪.

சுத்த அபிஷேகதைலத்தையும், சுகந்ததிரவியங்க
ளினாலேபரிசுத்ததூபத்தையுஞ்செய்தான்.

## ௩௮. அதிகாரம்.

௧. தகனபலிவேதிகை: ௮. பித்தளைத்தொட்டி: ௯. பிராகாரம்: ௨௧. கொடுக்கப்பட்டகாணிக்கைகளின்தொகை.

ஐந்துமுழநீளமும் ஐந்துமுழ அகலமும் மூன்று
முழ உயரமுமாகச்சீத்தீம்மரத்தினால் சதுரமாய் ஒ
ருதகனபலிவேதிகையை உண்டுபண்ணினான்.-
௨ அதின்நாலுமூலைகளிலும்நாலுகொம்புகளை உண்
டாக்கினான்; அந்தக்கொம்புகள் அதற்கு அபின்
னமாயிருந்தன; அதைப்பித்தளைத்தகட்டால் மூ
௩ டினான்.—அதின் சாம்பற்பாத்திரங்களும், கரண்
டிகளும், கிண்ணங்களும், முட்கருவிகளும், அக்
கினிப்பாத்திரங்களுமாகிய சகலபாத்திரங்களை
யுஞ்செய்தான்: அந்தப்பாத்திரங்கள் எல்லாவற்
௪ றையும் பித்தளையினாற்செய்தான்.—அந்த வேதி
கைக்குள்ளேபாதி உயரத்திலிருக்கத்தக்கதாக அ
தின் சுற்றுக்குக்கீழே கண்ணறைகளோடுங்கூ
௫ டிய ஒருபித்தளைச்சல்லடையைச்செய்தான்.—
அப்பித்தளைச்சல்லடையின் நாலுமூலைகளிலும்,
தண்டுகளைப்பாய்ச்சுகிறதற்கு நாலுவளையங்களை
௬ வார்ப்பித்தான்.—சீத்தீம்மரத்தாற் தண்டுகளையுஞ்
செய்து, அவைகளைப் பித்தளைத்தகட்டால்மூடி
௭ னான்.—வேதிகையைச்சுமக்கத்தக்கதாக அந்தத்
தண்டுகளை அதின்பக்கங்களிலுள்ள வளையங்க
ளில் பாய்ச்சினான்: உள்வெளிவிட்டுப் பலகை
களினால் வேதிகையைச்செய்தான்.
௮ சபையின் ஆவாசவாசலில் கூட்டங்கூட்ட
மாய்வந்த ஸ்திரிகளின் கண்ணாடிகளாற் பித்த
ளைத்தொட்டியையும், அதின்பித்தளைக்கலவடை
யையும் பண்ணினான்.
௯ பிராகாரத்தையுஞ்செய்தான். அதின் தென்தி
சையில் தென்புறத்திற் பிராகாரத்துக்குத் திரித்த
மெல்லிய பஞ்சினூலினால் நூறுமுழ நீளமுள்ள
௰ தொங்குதிரைகளையுஞ் செய்தான்.—அவைகளின்
தூண்களிருபது; அவைகளின் பித்தளைப் பாதங்
களிருபது; தூண்களின் கொளுவிகளும் பூண்
௰௧ களும்வெள்ளி.—வடபுறத்துத் தொங்குதிரைக
ளும்நூறுமுழம்; அவைகளின் தூண்களிருபது;
அவைகளின்பித்தளைப்பாதங்களுமிருபது; தூண்
களின் கொளுவிகளும் பூண்களும் வெள்ளி.—
௰௨ மேற்குப்புறத்துத் தொங்குதிரைகள் ஐம்பதுமு
ழம், அவைகளின் தூண்கள் பத்து; பாதங்களும்
பத்து; தூண்களின்கொளுவிகளும் பூண்களும்
௰௩ வெள்ளி.—சூரியனுதிக்கிற கிழக்குப்புறத்துக்கும்
ஐம்பதுமுழம் பிராகாரவாசலின் இருபுறத்துள்
௰௪ ளும்,—ஒருபுறத்துத் தொங்குதிரைகள் பதினைந்து
முழம்; அவைகளின் தூண்கள்மூன்று, பாதங்க
௰௫ ளும்மூன்று.—மற்றைப்புறத்துத் தொங்குதிரை
களும், பதினைந்துமுழம்; அவைகளின்தூண்கள்
௰௬ மூன்று; பாதங்களும் மூன்று.—சுற்றுப்பிராகா
ரத்துத்திரைகள் எல்லாம் திரித்தமெல்லிய பஞ்சி
னூலாற்செய்யப்பட்டன.—தூண்களின் பாதங் ௰௭
கள் பித்தளை; தூண்களின்கொளுவிகளும் பூண்
களும் வெள்ளி; அவைகளின்குமிழ்கள் வெள்
ளித்தகட்டால் மூடப்பட்டன; பிராகாரத்தூண்
கள் எல்லாவற்றிற்கும் வெள்ளிப்பூண்களிடப்
பட்டன.—பிராகாரவாசலின் தொங்குதிரை நீ ௰௮
லம், தூமிரம், சிவப்பென்னும் நிறங்களுள்ள தி
ரித்த மெல்லிய பஞ்சினூலினாற் செய்யப்பட்ட
தையல்வேலையாயிருந்தது; அதின் நீளம் இருபது
முழம்; அதினகலமுயரம் பிராகாரத்தின் தொங்
குதிரைகளைப்போல் ஐந்துமுழம்.—அவைகளின் ௰௯
தூண்கள் நாலு; பித்தளைப் பாதங்களும் நாலு;
அவைகளின் கொளுவிகள் வெள்ளி; குமிழ்களை
மூடிய தகடும் அவைகளின் பூண்களும் வெள்
ளி.—ஆவாசத்துக்குஞ்சுற்றுப்பிராகாரத்துக்குமு ௨௰
ரிய முளைகளெல்லாம்பித்தளை.
யூதா கோத்திரத்திலுள்ள ஊரின் பௌத்திர ௨௧
னும் ஊரியின் புத்திரனுமாகிய பெத்சலேல்,
நீலம், தூமிரம், சிவப்பென்னும் நிறங்களுள்ள
மெல்லியபஞ்சினூலினால் தையல்வேலைசெய்ப
வனும், கொத்துவேலைக்காரனும், விசித்திரவே
லைசெய்பவனும்,—தாண் கோத்திரத்தின் அகிசா ௨௨
மாகின் புத்திரனுமாகிய அகோலியாபுடன்கூட
மோசேக்கு யெகோவா கற்பித்தபடி எல்
லாஞ்செய்தான்.—மோசேயின் கட்டளைப்படி ௨௩
ஆசாரியனான ஆரோனின் புத்திரனாகிய இதா
மாரின் கையினாலே கணிக்கப்பட்ட லேவியர்
தொண்டுசெய்வதற்கான சாட்சியாவாசமாகிய ஆ
வாசத்துப்பொருள்களின் தொகையாவது.—பரி ௨௪
சுத்தஸ்தானத்திற் திருப்பணிவேலைகள்யாவற்றிற்
குங்காணிக்கையாகக்கொடுக்கப்பட்ட பொன்
னெல்லாம் பரிசுத்தஸ்தானத்துச் சேக்கலின்படி
இருபத்தொன்பதுகிக்கேரும் எழுநூற்றுமுப்பது
சேக்கலும்.—எண்ணப்பட்ட தொகையிற்சேர்ந் ௨௫
த இருபதுவயது தொடங்கி அதற்குமேற்பட்ட
வயதுள்ள ஆறு இலட்சத்துமூவாயிரத்தைஞ்ஞூற்
றைம்பதுபுருஷரில் ஒவ்வொருவருக்கு, பரிசுத்த
ஸ்தானத்துச்சேக்கலின்படி அரைச்சேக்கல்வீதம்
சேர்ந்தது.—சபையில் எண்ணப்பட்டவர்களு ௨௬
டைய வெள்ளி பரிசுத்தஸ்தானத்துச்சேக்கலின்
படி நூறு கிக்கேரும் ஆயிரத்தெழுநூற்றெழுபத்
தைந்து சேக்கலுமாயிருந்தது.—நூறுகிக்கேர்வெ ௨௭
ள்ளியில் பரிசுத்தஸ்தானத்தின் பாதங்களும், தி
ரைக்குச்சேர்ந்த பாதங்களும் வார்க்கப்பட்டன.
ஒருபாதத்துக்கு ஒருகிக்கேர் வீதமாய் நூறுபாதங்
களுக்கு நூறுகிக்கேர்களாம்.—அந்த ஆயிரத்தெ ௨௮
ழுநூற்று எழுபத்தைந்துசேக்கலால் தூண்களுக்
குக் கொளுவிகளைச்செய்து குமிழ்களைத் தகடுக
ளால்மூடி, அவைகளுக்குப் பூண்களையுஞ் செய்
தான்.—பித்தளைக்காணிக்கை, எழுபதுகிக்கேரும் ௨௯
இரண்டாயிரத்து நானூறுசேக்கலுமாயிற்று.—அ ௩௰
தினால் சபையின்ஆவாசவாசலுக்குச்சேர்ந்த பா
தங்களையும், பித்தளை வேதிகையையும், அதின்

(௩௮.அதி.௧.) அதி.௨௭.௧.(௮)அதி.௩௰.௰௮.௧.சாமு.௨.௨௨.(௯)அதி.௨௭.௯.(௨௰)அதி.௨௭.௰௯.(௨௩)எண்.௪.௨௮, ௩௩.எண்.௧.௫௰,௫௩.(௨௪) அதி.௩௰.௰௩.எண்.௩.௪௭.(௨௫)எண்.௧.௪௬. அதி.௩௰.௰௩,௰௫. (௨௭) அதி.௨௬.௰௯,௨௧.

பித்தளைச்சல்லடையையும், வேதிகையின் சகல
௩௧ பாத்திரங்களையும்,—சுற்றுப்பிராகாரத்தின் பாதங்
களையும், பிராகாரவாசலின்பாதங்களையும், ஆவா
சத்தின்சகலமுளைகளையும்,சுற்றுப்பிராகாரத்தின்
சகல முளைகளையுஞ்செய்தான்.

## ௩௯. அதிகாரம்.

௧. பரிசுத்த வஸ்திரங்களும் எபோத்தும்: ௮. மார்புப்பதக்கம்: ௨௨. எபோத்து அங்கி: ௨௭. மெல்லிய பஞ்சிநூலினால் அங்கிகளுங் குல்லாவுங் கச்சும்: ௩௰. குல்லாவின் பட்டம்: ௩௨. ஆவாசத்திருப்பணிமுடிவுபெறல்.

யெகோவா மோசேக்குக் கற்பித்தபிரகாரம்
பரிசுத்த ஸ்தானத்தில் ஆராதனைசெய்யும் ப
டிநீலம், தூமிரம், சிவப்பென்னும் நிறங்களுள்ள
ஆராதனைக்குரிய வஸ்திரங்களையும், ஆரோனுக்
கும் பரிசுத்தவஸ்திரங்களையுஞ் செய்தார்கள்.—
௨ பொன்னினாலும் நீலம்,தூமிரம்,சிவப்பென்னும்
நிறங்களுள்ளதிரித்தமெல்லியபஞ்சிநூலினாலும்
௩ எபோத்தைச்செய்தான்.—அந்தப் பொன்னை நீ
லம், தூமிரம், சிவப்பென்னும் நிறங்களுள்ள,தி
ரித்தமெல்லியபஞ்சிநூலினுடன்சேர்த்து, விசித்
திரவேலையாகச்செய்யும்பொருட்டுமெல்லியதக
டுகளாய் அடித்துக்கம்பிகளாய் வெட்டினார்கள்.-
௪ அது ஒன்றாயிணைக்கப் படும்பொருட்டு, அதற்
குத்தோள்துண்டுகளையுஞ் செய்தார்கள்: அது இ
ரண்டருகுகளினாலும், ஒன்றாயிணைக்கப்பட்ட
௫ து.—யெகோவா மோசேக்குக்கற்பித்தபிரகா
ரம், அந்த எபோத்தின்மேலிருக்கும் விசித்திரமா
னகச்சு, அந்தவேலைக்கொப்பாகவே பொன்னி
னாலும், நீலம், தூமிரம், சிவப்பென்னும் நிறங்க
ளுள்ளதிரித்த மெல்லியபஞ்சிநூலினாலுஞ் செய்
௬ யப்பட்டு, அதனோடே ஒன்றாயிருந்தது.—அவர்
கள் கோமேதக இரத்தினங்களை முத்திரைவெட்
டப்படுதல்போல இஸ்ரவேலின் புத்திரருடைய
நாமங்களை அவைகளில்வரைந்து அவைகளைப்
௭ பொன் குவளைகளிற் பதித்தார்கள்.—யெகோ
வா மோசேக்குக் கற்பித்தபிரகாரம் இஸ்ரவேல்
புத்திரரைக்குறித்து ஞாபகக்கற்களாக இருக்கும்
படி, அவைகளை எபோத்வஸ்திரத்தோளின் மே
லிட்டார்கள்.

௮ மார்புப்பதக்கத்தைஎபோத்தின்வேலைக்கொப்
பாகப் பொன்னாலும், நீலம், தூமிரம், சிவப்
பென்னும் நிறங்களுள்ள திரித்தமெல்லியபஞ்
சிநூலாலும்விசித்திரவேலையாய்ச்செய்தார்கள்.—
௯ அந்தமார்புப்பதக்கத்தைச் சதுரமும், இரட்டை
யுமாய்ச் செய்தார்கள். அது இரட்டையாய் ஒரு
சாண் நீளமும், ஒருசாணகலமுமா யிருந்தது.—
௰ அதில்நாலுநிரையாய் இரத்தினங்களை பதித்தார்
கள். முதல்நிரை செம்மணியும், புஷ்பராகமும்,
௰௧ மரகதமும்: இவை முதனிரை.—இரண்டாம்நி
௰௨ ரை,மாணிக்கமும், நீலமும், வச்சிரமும்.—மூன்
றாம்நிரை, பதுமராகமும், வைடூரியமும், செவ்
வந்திக்கல்லும்.—நாலாம்நிரை,தர்சீஷ்இரத்தின ௰௩
மும்,கோமேதகமும்,இயஷ்பியும்,இவைகள் அந்
தந்த நிரையில் தங்கக்கேவணங்களிற்பதிக்கப்
பட்டிருந்தன.—முத்திரையைப் போல இஸ்ர ௰௪
வேல்புத்திரருடைய நாமங்களைக் கொண்டிருக்
கும் இவ்விரத்தினங்கள் அவர்கள்நாமப்படி,பன்
னிரண்டுகோத்திரங்களில் ஒவ்வொருகோத்திரத்
தின் நாமம், ஒவ்வொன்றிலேயிருந்தது.—மார்புப் ௰௫
பதக்கத்தின் அருகில்தொடுக்கப்படுஞ் சங்கிலிக
ளைச்செம்பொன்னாலுண்டாக்கினார்கள்.—இரண் ௰௬
டுபொற்கேவணங்களையும், இரண்டுபொன்வளை
யங்களையுஞ்செய்து; அவ்விரண்டு வளையங்களை
யும் மார்புப்பதக்கத்தின்இரண்டருகிலுமிட்டார்
கள்.—பொற்சங்கிலித் தொடர்களிரண்டையும் ௰௭
மார்புப்பதக்கத்தினருகிலிருக்கும் இரண்டுவளை
யங்களிலும் மாட்டிவிட்டார்கள்.—அவ்விரண் ௰௮
டுசங்கிலித்தொடர்களின் இரண்டு தலைப்புக்க
ளையும், இரண்டுகேவணத்திலுமாட்டி முற்புறத்
தில்எபோத்வஸ்திரத் தோளின்மேற் போட்டார்
கள்.—பின்னும் இரண்டு பொன்வளையங்களைப் ௰௯
பண்ணி, அவைகளை எபோத்தின்கீழ்ப்புறத்துக்
கெதிரானபதக்கத்தின் அருகின் இரண்டு மூலைக
ளிலும்வைத்து,—வேறுமிரண்டுபொன்வளையங் ௨௰
களைப்பண்ணி, அவைகளை எபோத்தின் முன்பு
றத்தின்இரண்டுகீழ்ப்பக்கங்களில்அதினிசைவுக்
கெதிராகவும், எபோத்தின் விசித்திரமான கச்சுக்
குமேலாகவும், வைத்தார்கள்.—யெகோவா ௨௧
மோசேக்குக்கற்பித்தபிரகாரம்மார்புப்பதக்கம் எ
போத்தின் விசித்திரமானகச்சுக்குமேலாயிருக்கு
ம்படிக்கும்,அது எபோத்தைவிட்டு நீங்காதபடிக்
கும், அதை அதின்வளையங்களிலும்,எபோத்தின்
வளையங்களிலும்,நீலநாடாவினாற்கட்டினார்கள்.
தனிநீலவன்னமாய்நெய்தல்வேலையாக எபோ ௨௨
த்தின் அங்கியைச்செய்தான்.—அதின் நடுவில் ௨௩
மார்புக்கவசத்துவாரத்துக்கொப்பாக, ஒருதுவார
மும், அது கிழியாதபடி அந்தத்துவாரத்தைச்சுற்
றி ஒருநாடாவுமிருந்தன.—அவ்வங்கியின்கீழோ ௨௪
ரங்களில் நீலம், தூமிரம், சிவப்பென்னும் நிறங்
களுள்ள திரித்தமெல்லியபஞ்சிநூலினாலும், மா
துளம்பழங்களைச்செய்தார்கள்.-செம்பொன்னால் ௨௫
மணிகளைச்செய்து அங்கியின்ஓரங்களில்மாதுளம்
பழங்களுக்கிடையிடையேவைத்தார்கள். அவை
கள் சுற்றிவர மாதுளம்பழங்களுக்கிடையிடை
யேயிருந்தன.—யெகோவா மோசேக்குக்கற் ௨௬
பித்தபிரகாரம் ஆராதனைக்குரிய அவ்வங்கியின் ஓ
ரத்தைச்சுற்றி ஒருமணியும் ஒருமாதுளம்பழமு
ம், ஒருமணியும்,ஒருமாதுளம்பழமுமாயிருந்தன.
ஆரோனுக்கும் அவன்புத்திரர்களுக்கும் மெல் ௨௭
லியபஞ்சிநூலால் நெய்தல்வேலையான அங்கிக
ளையும்,—மெல்லியபஞ்சிநூலினால் ஒரு பாகை ௨௮
யையும், மெல்லியபஞ்சிநூலினால் அலங்காரமா
னகுல்லாக்களையும், திரித்தமெல்லியபஞ்சிநூலி

(௩௯. அதி. ௧.) அதி. ௨௮. ௪. அதி. ௩௫. ௨௩. அதி. ௩௫. ௰௧. (௨) அதி. ௨௮. ௬. (௬) அதி. ௨௮. ௯. (௭) அதி. ௨௮. ௰௨. (௮) அதி. ௨௮. ௰௫. (௰) அதி. ௨௮. ௰௭. (௨௨) அதி. ௨௮. ௩௧. (௨௫) அதி. ௨௮. ௩௩. (௨௭) அதி. ௨௮. ௩௯, ௪௰. (௨௮) லேவி. ௪. ௰௮. அதி. ௨௮. ௪௨.

௨௯ நூற் சல்லடைகளையும்,—நீலம், தூமிரம், சிவப்
பென்னும் நிறங்களையுடைய திரித்தமெல்லிய
பஞ்சினூலினாலே தையல்வேலையாகக் கச்சை
யும், யெகோவா மோசேக்குக் கற்பித்தபிரகா
ரம்செய்தார்கள்.

௩௰ செம்பொன்னால் பரிசுத்தகிரீடத்தின்பட்டத்
தையுஞ்செய்து, முத்திரையைப்போல் "யெ
கோவாவுக்குப்பரிசுத்தம்" என்று அதில் எழுத்
௩௧ தால்வரைந்து,—அதைப்பாகையின்மேலே கட்
டும்படி யெகோவா மோசேக்குக்கற்பித்தபி
ரகாரம் அதை நீலநாடாவினாலே கட்டினார்கள்.
௩௨ இப்படியே சபையின்கூடாரமாகிய ஆவாசத்
திருப்பணிமுழுவதும் நிறைவேறலாயிற்று: இஸ
ரவேல்சந்ததியார் யெகோவா மோசேக்குக்
கற்பித்தபடி எல்லாஞ்செய்தார்கள்; அப்படியே
௩௩ செய்தார்கள்.—பின்பு அவர்கள்கூடாரமும், அ
திலுள்ளபாத்திரங்களும், கடைப்பூட்டுக்களும்,
பலகைகளும், தாழ்களும், தூண்களும், பாதங்
௩௪ களும்,—சிவப்புநிறங்கொடுத்த ஆட்டுக்கடாத்
௩௫ தோற்போர்வையும்;-தகசுத்தோற்போர்வையும்,
மூடுதிரையும், சாட்சிப்பெட்டியும், அதின்தண்
௩௬ டுகளும், கிருபாசயமும்;-பீடமும், அதின்சகல
௩௭ பாத்திரங்களும்;-சமுகத்தப்பமும், ஒழுங்குபடுத்
தத்தக்க அகல்களோடு பரிசுத்த கிளைவிளக்கும்,
அதின் சகல பாத்திரங்களும், விளக்கெண்ணெ
யும், பொன்வேதிகையும், அபிஷேகதைலமும்;—
௩௮ சுகந்ததிரவியதூபமும், ஆவாசவாசலின்தொங்கு
௩௯ திரையும்;—பித்தளை வேதிகையும், அதின்பித்த
ளைச்சல்லடையும், தண்டுகளும், அதின்சகலபாத்
௪௰ திரங்களும், தொட்டியும்;-அதின்கலவடையும்,
பிராகாரத்தின்தொங்குதிரைகளும், அதின்தூண்
களும், பாதங்களும், பிராகாரவாசலின்தொங்குதி
ரையும், அதின்கயிறுகளும், அதின் முளைகளும்,
சபையின்கூடாரமாகிய ஆவாசத்தின்ஆராதனைக்
௪௧ குரிய சகலபாத்திரங்களும்;—பரிசுத்த ஸ்தானத்
தில் ஆராதனைசெய்வதற்குரியவஸ்திரங்களும், ஆ
சாரியனாகியஆரோனின்பரிசுத்தவஸ்திரங்களும்,
ஆராதனைசெய்வதற்குரிய அவன் புத்திரர்களின்
வஸ்திரங்களும்பொருந்திய ஆவாசத்தைமோசே
௪௨ யிடத்திற் கொண்டுவந்தார்கள்.—யெகோவா
மோசேக்குக்கற்பித்தபடி எல்லாம்இஸரவேல்சந்
௪௩ ததியார் சகலவேலைகளையுஞ்செய்தார்கள்.-மோ
சே சகலகிரியைகளையும்பார்த்து, அவர்கள் யெ
கோவாவால் கற்பித்தபிரகாரஞ்செய்திருந்ததை
க்கண்டான்: மோசே அவர்களை ஆசீர்வதித்தான்.

## ௪௰. அதிகாரம்.

௧. ஆவாசம்ஸ்தாபித்து அபிஷேகஞ்செய்தல்: ௰௨. ஆரோனும் அவன் புத்திரர்களும் ஆசாரியாபிஷேகம்பெறல்: ௰௭. தேவனிட்டகட்டளைப்படி மோசேஎல்லாவேலைகளையுஞ்செய்து முடித்தல்: ௩௮. மேகம் ஆவாசத்தைமூடல்.

பின்பு யெகோவா மோசேயைநோக்கி,— ௧
நீ முதல்மாதம் முதல்தினத்தில் சபையின் ஆவா ௨
சமாகிய கூடாரத்தை ஸ்தாபனம்பண்ணு.—அ ௩
தற்குள்ளே சாட்சிப்பெட்டியைவைத்து, திரை
யைத்தூக்கிவிட்டுப் பெட்டியைமறைப்பாய்.—
பீடத்தைக்கொண்டுவந்து, அதில்கிரமமாய்வைக் ௪
கவேண்டியவைகளைக் கிரமமாக அதின்மேல்
வைத்து, கிளைவிளக்கையும் உள்ளேகொண்டுவந்
து, அதில் விளக்கேற்றுவாயாக.—செம்பொற்றூ ௫
பவேதிகையைச் சாட்சிப்பெட்டிக்கு முன்னே
வைத்து, ஆவாசவாசலுக்குத்தொங்குதிரையைப்
போடுவாய்.-தகனபலி வேதிகையைச்சபையின் ௬
ஆவாசமாகிய கூடாரவாசலுக்குமுன் வைப்பா
யாக.-தொட்டியைச் சபையின்கூடாரத்துக்கும், ௭
வேதிகைக்கும் மத்தியில்வைத்து, அதிலே தண்
ணீர்வார்ப்பாயாக.—சுற்றுப்பிராகாரத்தையும்ஸ் ௮
தாபித்து, பிராகாரவாசலில் தொங்குதிரையைத்
தூக்கிவிடுவாயாக.—அபிஷேகதைலத்தை எடுத் ௯
து ஆவாசத்துக்கும், அதிலுள்ள யாவற்றிற்கும்,
அபிஷேகம்பண்ணி, அதையும் அதிலுள்ள சகல
பாத்திரங்களையும் பரிசுத்தப்படுத்துவாயாக; அப்
பொழுது பரிசுத்தமாயிருக்கும்.—தகனபலி வே ௰
திகைக்கும், அதிலுள்ளசகலபாத்திரங்களுக்கும்,
அபிஷேகம்பண்ணி அதையும், பரிசுத்தப்படுத்து
வாயாக; அப்பொழுது மகாபரிசுத்தமுள்ளவேதி
கையாகும்.—தொட்டிக்கும், அதின் கலவடைக் ௰௧
கும், அபிஷேகம்பண்ணி அதைப்பரிசுத்தப்படுத்
துவாயாக.

பின்பு நீ ஆரோனையும், அவன் புத்திரரையும், ௰௨
சபையின் ஆவாசவாசலில் வரச்செய்து, அவர்க
ளைச்சலத்தினால் ஸ்நானம்பண்ணுவித்து,-ஆரோ ௰௩
னுக்குப்பரிசுத்தவஸ்திரங்களைத்தரிப்பித்துஎனக்
காசாரியத்தொண்டுசெய்யும்படி அவனுக்கு அபி
ஷேகம்பண்ணி, அவனைப்பரிசுத்தப்படுத்துவா
யாக.—அவன் புத்திரரையும்வரப்பண்ணி, அங் ௰௪
கிகளைத்தரித்து,—அவர்கள் எனக்கு ஆசாரியத் ௰௫
தொண்டுசெய்யும்படி அவர்களுக்கும், அவர்க
ளுடைய பிதாவுக்கு அபிஷேகம்பண்ணினபி
ரகாரம் அபிஷேகம்பண்ணுவாயாக: அவர்கள்
பெறும் அந்த அபிஷேகம் தலைமுறைதோறும்
நித்தியஆசாரியத்துவத்துக்கேதுவாயிருக்குமென்
றூர்.—அப்படியே மோசேசெய்தான், யெகோ ௰௬
வா தனக்குக்கட்டளையிட்டபடி எல்லாம்செய்
தான்.

இரண்டாம்வருஷம் முதல்மாதம் முதல்தினத் ௰௭
தில்ஆவாசம்ஸ்தாபிக்கப்பட்டது.—மோசே யெ ௰௮
கோவா தனக்குக்கட்டளையிட்டபிரகாரம் ஆ
வாசத்தை ஸ்தாபிக்க அதின்பாதங்களை நிலைப்ப
டுத்தி, பலகைகளை நிறுத்தி, அவைகளில் தாழ்க
ளைப்பாய்ச்சி, அதின்ஸ்தம்பங்களை நாட்டி,—ஆ ௰௯
வாசத்தின்மேல் கூடாரத்தைவிரித்து, கூடாரத்

(௨௯) அதி.௨௮.௩௯. (௩௰) அதி.௨௮.௩௬,௩௭. (௩௨) அதி.௨௫.௪௰. (௪௨) அதி.௩௫.௰௧. (௪௩) லேவி.௯.௨௨,௨௩. எண்.௬.௨௩. யோசு.௨௨.௬. ௨.சாமு.௬.௰௮. ௧.இரா.௮.௰௪. ௨.நாளா.௩௰.௨௭.—(௪௰. அதி. ௨.) அதி.௰௨.௨. அதி.௨௬.௧,௩௰. (௩) அதி.௨௬.௩௩. எண்.௪.௫. (௪) அதி.௨௬.௩௫. அதி.௨௫.௩௰. வச.௨௪,௨௫. (௭) அதி.௩௰.௰௮. (௯) அதி.௩௰.௨௬. (௰) அதி.௨௯.௩௬,௩௭. (௰௨) லேவி.௮.௧—௰௩. (௰௩) அதி.௨௮.௪௧. (௰௫) எண்.௨௫.௰௩. (௰௭) எண்.௭.௧.

௨௰ தின்மேல்போர்வையையிட்டான்.—பின்புமோ
சேயெகோவா தனக்குக்கட்டளையிட்டபிர
காரம், சாட்சிப்பத்திரத்தைஎடுத்துப்பெட்டியில்
வைத்து,பெட்டியில்தண்டுகளைப்பாய்ச்சி,பெட்
௨௧ டியின்மேற் கிருபாசயத்தைவைத்து;—பெட்டி
யை ஆவாசத்துக்குள்ளே கொண்டுபோய், ம
றைவுதிரையைத்தூக்கிச் சாட்சிப்பெட்டியைம
௨௨ றைத்துவிட்டான்.—சபையின் கூடாரத்தில், ஆ
வாசத்துக்கு வடபுறத்தில், திரைக்குவெளியேபீ
௨௩ டத்தைவைத்து,-மோசேதனக்கு யெகோவா
கட்டளையிட்டபடி யெகோவாவின் சமுகத்
தில் அப்பத்தை அதின்மேல் ஒழுங்குபடவைத்
௨௪ தான்.—சபையின்கூடாரத்தில், ஆவாசத்துக்குத்
தென்புறத்தில்,பீடத்துக்குநேரே,கிளைவிளக்கை
௨௫ வைத்து;—தனக்கு யெகோவா கட்டளையிட்
டபடி யெகோவாவின் சந்நிதியில்மோசேவி
௨௬ ளக்கேற்றினான்.-சபையின்கூடாரத்தில், திரைச்
சீலைக்கு முன்பாகப் பொன்வேதிகையைவைத்
௨௭ து;—தனக்கு யெகோவா கட்டளையிட்டபிர
காரம் அதின்மேலேமோசேசுகந்த தூபங்காட்டி
௨௮ னான்.—ஆவாசவாசலின்தொங்குதிரையைத் தூக்
௨௯ கிவிட்டான்.—தகனபலி வேதிகையைச் சபை
யின்கூடாரமாகியஆவாசவாசலில்வைத்து, மோ
சேதனக்கு யெகோவா கட்டளையிட்டபிரகா
ரம், அதின்மேல் தகனபலியையும், நைவேத்தி
௩௰ யத்தையுஞ்செலுத்தினான்.—சபையின் கூடாரத்
துக்கும், வேதிகைக்கும் மத்தியிலேதொட்டியை

வைத்து, கழுவுகிறதற்கு அதில் தண்ணீரைவார்த்
தான்.—அவ்விடத்திலே மோசேயும், ஆரோனும், ௩௧
அவனுடைய புத்திரருந் தங்கள்கைகளையுங்கால்
களையுங்கழுவினார்கள்.—யெகோவா மோசேக் ௩௨
குக்கட்டளையிட்டபடி அவர்கள் சபையின் கூ
டாரத்திற் பிரவேசிக்கிறபொழுதும், வேதிகை
யைச்சமீபிக்கிறபொழுதும் கழுவுவார்கள்.—அவ ௩௩
ன் ஆவாசத்தையும், வேதிகையையுஞ்சூழ்ந்திருக்
கப் பிராகாரத்தை ஸ்தாபித்து, பிராகாரவாசலில்
தொங்கு திரையைத்தூக்கிவிட்டான். இப்படி
யே மோசே கிரியையைநிறைவேற்றினான்.—அப் ௩௪
பொழுது ஒருமேகம் சபையின்கூடாரத்தை மூ
டிற்று. யெகொவாவின் மகிமைப்பிரகாசம்
ஆவாசத்தைப் பூரணப்படுத்திற்று.—மேகம் அதன் ௩௫
மேல் தங்கினதினாலும், யெகோவாவின் மகி
மைப்பிரகாசம் ஆவாசத்தைப் பூரணப்படுத்தின
தினாலும் மோசே சபையின்கூடாரத்திற் பிரவே
சிக்கக் கூடாமற்போயிற்று.—ஆவாசத்தின்மேல் ௩௬
நின்றும்மேகம் உயரக்கிளம்பும்பொழுது இஸர
வேல்சந்ததியார் தங்கள ஒவ்வொருயாத்திரைக்
கும், புறப்படுவார்கள்.—மேகம் உயரக்கிளம்பா ௩௭
திருந்தால், அதுகிளம்புந்நாள்வரைக்கும், அவர்
கள் பிரயாணம்பண்ணுதிருப்பார்கள்.

இஸரவேல் வமிசத்தார் செய்யும் பிரயாணந் ௩௮
தோறும்அவர்கள்யாவருக்குப்பிரத்தியட்சமாகப்
பகலில் யெகோவாவின் மேகமும், இரவில்
அக்கினியும் ஆவாசத்தின்மேல் தங்கியிருந்தன.

(௨௰) அதி.௨௫.௰௬. (௨௧) அதி.௩௫.௰௨. (௨௨) அதி.௨௬.௩௫. (௨௪) அதி.௨௬.௩௫. (௨௫) அதி.௨௫.௩௭. (௨௬) அதி.௩௰.௬. (௨௭) அதி.௩௰.௭. (௨௮) அதி.௨௬.௩௬. (௨௯) அதி.௨௯.௩௮. (௩௰) அதி.௩௰.௰௮. (௩௨) அதி.௩௰.௰௯,௨௰. (௩௩) அதி.௨௭.௯,௰௬. (௩௪) அதி.௨௯.௪௩. எண்.௯.௰௫. ௧.இரா.௮.௰,௰௧. ௨.நாளா.௫.௰௩. ஏசா.௬.௪. ஆகா.௨.௭,௯. வெளி.௰௫.௮. (௩௫) ௧.இரா.௮.௰௧. ௨.நாளா.௫.௰௪. (௩௬) எண்.௯.௰௭. நிகி.௯.௰௯. (௩௭) எண்.௯.௰௯—௨௨. (௩௮) அதி.௰௩.௨௧. எண்.௯.௰௫.

மோசே எழுதின மூன்றும் புத்தகமாகிய

# லேவியராகமம்.

---

## ௧. அதிகாரம்.

*௧. தகனபலியிடும்விதி: ௩. மாட்டுப்பலி: ௰. ஆட்டுப்பலி: ௰௪. பட்சிப்பலி.*

யெகோவா சபையின் ஆவாசத்தில் நின்று
௨ மோசேயை அழைத்து அவனைநோக்கி,—நீ இஸர
வேல்சந்ததியாரிடத்தில், உங்களில் எவனாகிலும்
யெகோவாவுக்கு ஒருபலி கொண்டுவந்தால்,
மாட்டுமந்தையிலாவது, ஆட்டுமந்தையிலாவது,
ஒரு மிருகத்தைத்தெரிந்தெடுத்துக்கொண்டு வர
வேண்டும்.
௩ அவன் இடும்பலி தகனபலியாகில், மாட்டுமந்
தையில் தெரிந்தெடுத்த ஒருகுற்றமற்றகாளையைக்
கொண்டுவரவேண்டும். சபையின் ஆவாசவாச
லில் யெகோவாவின் சந்நிதியில்அதை மனப்
௪ பூர்வமாகக்கொண்டுவந்து,-அந்தத்தகனபலியின்
தலைமேல்தன்கையைவைக்கக்கடவன்;அப்பொ
ழுது அது அவனுக்குப்பிராயச்சித்தமாக அங்கிக
௫ ரிக்கப்படும்.—அவன் யெகோவாவின் சந்நிதி
யில் அந்தக்காளையைக் கொல்லக்கடவன்; அப்
பொழுது ஆரோனுடைய புத்திரராகிய ஆசாரியர்
கள் அதின் இரத்தத்தை எடுத்துச் சபையின் ஆவா
சவாசலுக்குச் சமீபத்திலிருக்கும் வேதிகையின்
மேலேசுற்றி அந்த இரத்தத்தைத்தெளிக்கக்கடவர்
௬ கள்.—பின்பு தகனபலியைத்தோல் உரித்துக்கண்
௭ டதுண்டமாகத் துணிக்கக்கடவன்.—அப்பொழு
து ஆசாரியனாகிய ஆரோனின்புத்திரர் வேதிகை
யின்மேல் அக்கினியையிட்டு, அவ்வக்கினியி
௮ லே கட்டைகளை அடுக்கக்கடவர்கள்.—பின்பு
ஆரோனின்புத்திரராகிய ஆசாரியர்கள் துண்டங்
களையும், தலையையும், நிணத்தையும், வேதிகை
யிலுள்ள அக்கினியிலிருக்குங் கட்டைகளின்
௯ மேலே அடுக்கிவைக்கக்கடவர்கள்.—அதின்கு
டல்களையுந்தொடைகளையுமோ,சலத்தில் ஆசாரி
யன் கழுவக்கடவன். அக்கினியிலே யெகோ
வாவுக்கிடப்படும் சுகந்ததகனபலியாயிருக்கும்
பொருட்டு, அவன் அவைகள் எல்லாவற்றையும்
வேதிகையில் தகனிக்கக்கடவன்.
௰ அவன் இடும்பலி செம்மறியாட்டுமந்தையிலா
வது வெள்ளாட்டுமந்தையிலாவது தகனபலியா
க எடுக்கப்பட்டால், குற்றமற்ற ஒருகடாவைக்
௰௧ கொண்டுவந்து,—யெகோவாவின் சந்நிதி
யில் வேதிகைக்கு வடபுறமாக அதைக்கொல்
லக்கடவன். அப்பொழுது ஆரோனின் புத்திரரா
கிய ஆசாரியர்கள் அதின் இரத்தத்தை வேதிகை
யின்மேலே சுற்றித்தெளிக்கக்கடவர்கள்.—பின் ௰௨
பு ஆசாரியன் அதைத்தலையோடும் நிணத்தோ
டுங்கண்டங்கண்டமாகத்துணிக்க, அவைகளை அ
வன் வேதிகையிலுள்ள அக்கினியிலிருக்குங்கட்
டைகளின்மேலே அடுக்கி வைக்கக்கடவன்.—
அவன்குடல்களையுந் தொடைகளையுமோ, சலத் ௰௩
திற்கழுவக்கடவன். அக்கினியிலே யெகோ
வாவுக்கிடப்படுஞ் சுகந்ததகனபலியாயிருக்கும்
பொருட்டு ஆசாரியன் அவைகள் எல்லாவற்றை
யும் எடுத்து வேதிகையிலே தகனிக்கக்கடவன்.
அவன் யெகோவாவுக்கிடுந்தகனபலி பட் ௰௪
சிப்பலியாகில், காட்டுப்புறாக்களிலாவது மாடப்
புறாக்களிலாவது தெரிந்துகொண்டு வரவேண்
டும்.—அதை ஆசாரியன் வேதிகைக்குச்சமீபத் ௰௫
திலேகொண்டுவந்து அதின்தலையைக்கிள்ளி,வே
திகையில் தகனித்து, அதின் இரத்தத்தை வேதி
கையின்பக்கத்தில் ஒழுகவிட்டு.—அதின் இரைப் ௰௬
பையைஅதின் அழுக்கோடும் கூடவாங்கி அதை
வேதிகைக்குக் கிழக்குப்புறமாய்ச் சாம்பலிருக்
கும் இடத்திலெறியக்கடவன்.-பின்பு அவன் அ ௰௭
தை அதின்சிறகுகளோடும் பிளக்கக்கடவன்; அ
தைத்துண்டமாக்கப்படாது. அக்கினியில் யெ
கோவாவுக்கிடப்படும்சுகந்ததகனபலியாயிருக்
கும்பொருட்டு ஆசாரியன் அதைவேதிகையிலுள்
ள அக்கினியிலிருக்குங் கட்டையிலிட்டுத்தக
னிக்கக்கடவன்.

## ௨. அதிகாரம்.

*௧. எணணெய்கலந்தமாவின்நைவேத்தியம்: ௪. அடுப்பில்பாகஞ்செய்யும்நைவேத்தியம்: ௫. பாத்திரத்தில்வைக்கும் நைவேத்தியம்: ௭. சட்டியில்வைக்கும் நைவேத்தியம்: ௰௨. முதற்பலத்தின்நைவேத்தியம்: ௰௩. நைவேத்தியத்துக்காயத்தம்.*

ஒருவன் யெகோவாவுக்கு நைவேத்தியங் ௧
கொண்டுவந்தால், அந்தநைவேத்தியம் மெல்லிய
மாவாயிருக்கவேண்டும். அவன் அதில்எண்ணெ
யைவார்த்து, அதின்மேலே குந்துருவைப்போட்
டு,-அதை ஆரோனின்புத்திரராகிய ஆசாரியர்களி ௨
டத்திற் கொண்டுவரக்கடவன். அப்பொழுது
ஆசாரியன் அந்த எண்ணெயுடனேயிருக்

---

(௧. அதி. ௧.) யாத்.௰௯.௩. யாத்.௪௰.௩௪,௩௫. (௩) யாத்.௰௨.௫. உபா.௰௫.௨௧. மல்.௧.௰௪. எபே.௫.௨௬. எபி.௯.௰௪. ௧.பேதுரு.௧.௰௯. (௪) அதி.௩.௨,௮,௰௩. அதி.௨௨.௨௧,௨௭. ஏசா.௫௬.௭. ரோ.௰௨.௧. பிலி.௪.௰௮. அதி.௪.௨௰,௨௬,௩௧,௩௫. ௨.நாளா.௨௯.௨௩,௨௪. ரோ.௫.௰௧. (௫) மீகா.௬.௬. ௨.நாளா.௩௫.௰௧. எபி.௰.௰௧. எபி.௰௨.௨௪. ௧.பேதுரு.௧.௧. (௭) ஆதி.௨௨.௯. (௯) ஆதி.௮.௨௧. ௨.கோரி.௨.௰௫. எபே.௫.௨. பிலி.௪.௰௮. (௰௪) லூக்.௨.௨௪. (௰௬) அதி.௬.௰.(௰௭) ஆதி.௰௫.௰.—(௨. அதி. ௧.) எண்.௰௫.௪.(௨) அதி.௬.௰௪. அதி.௨௪.௭. ஏசா.௬௬.௩. அப்.௰.௪.

கிற மாவில் ஒருகைப்பிடிநிறையக்குந்துரு எல்
லாவற்றுடனேயுங்கூட எடுத்து, அது அக்கினி
யில் யெகோவாவுக்கிடப்படும் சுகந்தபலி
யாகும்படி அதை வேதிகையின்மேல் ஞாபகக்
௩ குறியாகத் தகனிக்கக் கடவன்.—இந்தநைவேத்
தியத்தின் சேஷம் ஆரோனுக்கும் அவன் புத்தி
ரருக்குமுரித்தாகும். யெகோவாவுக்கு அக்
கினியிலிடப்படும் நைவேத்தியங்களுக்குள்ளே
இதுவே மிகவும் பரிசுத்தம்.
௪ அடுப்பிலே சமைக்கப்பட்ட நைவேத்தியங்
கொண்டுவந்தால், அது எண்ணெயிற் பிசைந்த
மெல்லியமாவினால்செய்த புளிப்பில்லாத அதிர
சங்களாயாவது, எண்ணெய்பூசப்பட்ட புளிப்
பில்லாத அடைகளாயாவது இருக்கவேண்டும்.
௫ நீ தோசைக்கல்லில் சுட்ட நைவேத்தியத்தைக்
கொண்டு வந்தால், அதுஎண்ணெயிற்பிசைந்தபு
ளிப்பில்லாதமெல்லியமாவாயிருக்கவேண்டும்.—
௬ அதைத்துண்டுகளாகப்பிட்டு, அதில் எண்ணெ
யைவார்க்கக்கடவாய்: இதுநைவேத்தியம்.
௭ சட்டியில்சமைத்த நைவேத்தியத்தைக்கொண்
டுவந்தால், அது எண்ணெயில் பிசைந்தமெல்லி
௮ யமாவினாற் செய்யப்படவேண்டும்.—இப்படிச்
செய்யப்பட்டநைவேத்தியத்தை யெகோவா
வின் சந்நிதியிற்கோண்டுவரக்கடவாய். அது ஆ
சாரியனிடத்திற்சேர்ந்தபோது அதை அவன்வே
திகையின்சமீபத்திற் கொண்டுவரக்கடவன்.—
௯ பின்பு ஆசாரியன், ஞாபகக்குறியாக அந்த நை
வேத்தியத்திலெடுத்து, வேதிகையிலே தகனிக்
கக்கடவன்: அது யெகோவாவுக்கு அக்கினி
௰ யிலிடப்படுஞ்சுகந்தபலி.—இந்த நைவேத்தியத்
திற் சேஷமானது ஆரோனுக்கும் அவன் புத்தி
ரருக்குமுரித்தாகும்: யெகோவாவுக்கு அக்கி
னியிலிடப்படும் நைவேத்தியங்களுக்குள்ளே இ
௰௧ துவேமிகவும் பரிசுத்தம்.—நீங்கள் யெகோவா
வுக்குக்கொண்டுவரும்எந்தநைவேத்தியத்தையும்
புளித்தமாவினாற்செய்யலாகாது. நீங்கள் யெ
கோவாவுக்கு அக்கினியிலிடும் எந்த நைவேத்
தியத்திலும், புளித்தமாவையுந்தேனையுந்தகனிக்
கவேண்டாம்.
௰௨ முதற்பலத்தின் நைவேத்தியத்தை நீங்கள் யெ
கோவாவுக்குக் கொண்டுவரலாம். அவைகள்
சுகந்தத்தின்பொருட்டு வேதிகையில் தகனிக்கப்
படாது.
௰௩ நீங்கள்நிவேதிக்கும்நைவேத்தியத்தையும் உப்
புப்போட்டுச்சாரமாக்கவேண்டும்; நீ உன் தே
வனுடைய உடன்படிக்கையின் உப்பு உன்நை
வேத்தியத்திலே குறையவிடாதே: உன்சகலநை
வேத்தியங்களோடும் உப்பையும்நிவேதிப்பாயா
௰௪ க.—நீமுதற்பலன்களின் நைவேத்தியத்தை யெ
கோவாவின் சந்நிதியிற்கொண்டுவந்தால், மு
தற்பலனின் நைவேத்தியத்துக்கு நெருப்பிலே
வாட்டினவிளைந்துமுற்றியகதிரில்உதிர்த்ததானி
யத்தைக் கொண்டுவரவேண்டும்.—அதின்மேல் ௰௫
எண்ணெயைவார்த்து, அதிலே குந்துருவைப்
போடுவாயாக: இதுநைவேத்தியம்.—பின்புஞாப ௰௬
கக்குறியாக, ஆசாரியன் உதிர்த்ததானியத்திலும்
எண்ணெயிலுமெடுத்து, அதின்சமஸ்த குந்துரு
வோடுந்தகனிக்கக்கடவன்: அது யெகோவா
வுக்கு அக்கினியிலிடப்படும் நைவேத்தியம்.

## ௩. அதிகாரம்.

௧. மாட்டுமந்தையினின்றும் வரும் ஸ்தோத்திரப
லி: ௬. ஆட்டுமந்தையினின்றும்வரும் ஸ்தோத்தி
ரபலி: ௰௨. கடாவின் ஸ்தோத்திரபலி.

ஒருவன் மாட்டுமந்தையினின்று ஸ்தோத்திரப ௧
லிகொண்டுவந்தால், குற்றமற்ற ஒரு எருதையா
வது பசுவையாவது யெகோவாவின் சந்நிதி
யில் பலியிடக்கடவன்.—அவன்தன்பலியின்த ௨
லைமேல் தன்கையைவைத்துச் சபையின்ஆவாச
வாசலில் அதைக்கொல்லவேண்டும், அப்பொழு
து ஆரோனின் புத்திரராகிய ஆசாரியர் அதின்
இரத்தத்தை வேதிகையின்மேற்சுற்றித் தெளிக்
கக்கடவர்கள்.—பின்பு ஸ்தோத்திரபலியில் கு ௩
டல்களைமூடியநிணத்தையும்,குடல்களிலுள்ளநி
ணமுழுவதையும்;—இரண்டு குண்டிக்காய்களை ௪
யும், அவைகளின்மேல் இடுப்புநரம்புகளின் இ
டத்திலுள்ள நிணத்தையும், குண்டிக்காய்களினி
டத்திற் கல்லீரலின்மேலுள்ள சவ்வையும் எடுத்
து, யெகோவாவுக்கு அக்கினியிலே பலியா
க இடவேண்டும்.—ஆரோனின் புத்திரர் அதை ௫
வேதிகையிலுள்ள அக்கினியிலிருக்குங்கட்டை
களின்மேல்வைத்திருக்கிற தகனபலியிலிட்டுத்த
கனிக்கக்கடவர்கள்: அது யெகோவாவுக்கு
அக்கினியிலிடப்படும் சுகந்தபலி.
ஒருவன் யெகோவாவுக்குநைவேத்தியமா ௬
க ஆட்டுமந்தையிலிருந்துஸ்தோத்திரபலிகொண்
டுவந்தால், குற்றமற்ற ஒரு ஆணையாவது, பெண்
ணையாவது கொண்டுவரக்கடவன்.—அவன் ஆட் ௭
டுக்குட்டியைப்பலியாகக் கொண்டுவந்தால், அ
தை யெகோவாவின் சந்நிதியிற்கொண்டு
வந்து,—தன்பலியின் தலைமேல் தன்கையை ௮
வைத்துச் சபையின் ஆவாசத்துக்குமுன்பாக அ
தைக் கொல்லக்கடவன், அப்பொழுது ஆரோ
னின்புத்திரர் அதின் இரத்தத்தை எடுத்து வே
திகையின்மேற் சுற்றித் தெளிக்கக்கடவர்கள்.—
பின்பு அவன் ஸ்தோத்திரபலியில் அதின்நிணத் ௯
தையும், நடுவெலும்பிலிருந்து அறுத்த முழுவா
லையும், குடல்களையும் மூடியநிணத்தையும், அ
வைகளினிடத்திலுள்ள நிணம்யாவற்றையும்;—
இரண்டுகுண்டிக்காய்களையும், அவைகளின்மே ௰
லுள்ள இடுப்பு நரம்புகளிலிருக்கிற நிணத்தை
யும், குண்டிக்காய்களிடத்தில் கல்லீரலின்மேல்
இருக்கிற சவ்வையுமெடுத்து, யெகோவா
வுக்கு அக்கினியிலே பலியாக இடவேண்டும்.—
ஆசாரியன் அதை வேதிகையின்மேலே தகனிக் ௰௧

(௩) யாத். ௨௯.௩௭. (௪) யாத். ௨௯.௨. (௰௧) மத். ௰௬.௰௨. மாற். ௮.௰௫. லூக். ௰௨.௧. ௧.கொரி. ௫.௮. (௰௨) யாத். ௨௨.௨௯. (௰௩) மாற். ௯.௪௯. கொலோ. ௪.௬. எண். ௰௮.௰௯. எசேக். ௪௩.௨௪. (௰௪) ௨.இரா. ௪.௪௨.—(௩. அதி. ௧.) அதி. ௭.௨. ௨௯. (௨) யாத். ௨௯.௰. (௩) யாத். ௨௯.௰௩,௨௨. (௫) யாத். ௨௯.௰௩. (௰௧) அதி. ௨௨.௨௫. எசேக். ௪௪.௭. மல். ௧.௭,௰௨.

கக்கடவன்: அது யெகோவாவுக்கு அக்கினி
யிலிடப்படும் ஆகார நைவேத்தியம்.
௰௨ அவன் இடும்பலிவெள்ளாடானல், அதை யெ
௰௩ கோவாவின் சந்நிதியிற்கொண்டுவந்து,—அ
தின் தலைமேல் தன்கையைவைத்துச் சபையின்
ஆவாசத்துக்கு முன்பாக அதைக்கொல்லக்கட
வன். அப்பொழுது ஆரோனின்புத்திரர் அதின்
இரத்தத்தை வேதிகையின்மேற்சுற்றித் தெளிக்
௰௪ கக்கடவர்கள்.—அவன் அதிலே குடல்களை மூ
டிய நிணத்தையும், அவைகளினிடத்திலுள்ள
௰௫ நிணம்யாவையும்,—இரண்டு குண்டிக்காய்களை
யும், அவைகளின்மேல் இடுப்புநரம்புகள் இடத்
திலுள்ளநிணத்தையும், குண்டிக்காய்கள் இடத்
திற் கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையுமெடுத்து,
யெகோவாவுக்கு அக்கினியிலேபலியாக இ
௰௬ டவேண்டும்.—ஆசாரியன் அவைகளைவேதிகை
யின்மேலே தகனிக்கக்கடவன்: அது சுகந்தத்
தின்பொருட்டு அக்கினியிலிடப்பட்ட ஆகார
நைவேத்தியம். நிணமெல்லாம் யெகோவா
௰௭ வுடையது.—நிணத்தையாகிலும், இரத்தத்தையா
கிலும், நீங்கள்புசிக்கவேண்டாம், இது உங்கள்
வாசஸ்தலங்கள் எங்குமுள்ள உங்கள்தலைமுறை
தோறும் நித்தியநியமமென்று, சொல்லென்றார்.

## ௪. அதிகாரம்.

௧. அபுத்திபூருவமானபாவத்துக்குப் பிராயச்சித்த பலி: ௰௩. சபையார் அபுத்திபூருவமாய்ச் செய்யும்பாவத்துக்குப்பிராயச்சித்தபலி: ௨௨. அதிபதி அபுத்திபூருவமாகச் செய்யும் பாவத்துக்குப் பிராயச்சித்தபலி: ௨௭. சாதாரணசனம் அபுத்திபூருவமாகச் செய்யும் பாவத்துக்குப் பிராயச்சித்தபலி.

௨ பின்பு யெகோவா மோசேயைநோக்கி,—நீ
இஸரவேல் சந்ததியாரிடத்தில் ஒருவன் யெ
கோவாவின்கட்டளை ஒன்றிற்குவிரோதமாய்ச்
செய்யத்தகாததைச்செய்து, அபுத்திபூருவமாகப்
௩ பாவத்திற்கு உட்பட்டாலும்,—விசேஷமாக
அபிஷேகம்பெற்ற ஆசாரியன் சனங்கள்பாவஞ்
செய்கிறதுபோலப் பாவஞ்செய்தாலும், அவன
வன், தான்தான்செய்த பாவத்தினிமித்தம் குற்ற
மற்ற ஒருகாளையைப்பிராயச்சித்த பலியாக யெ
கோவாவின் சந்நிதியிற் கொண்டுவரக்கட
௪ வன்.—அதை அவன் சபையின் ஆவாசவாசலில்
யெகோவாவின் சந்நிதியிற்கொண்டுவந்து,
அந்தக்காளையின் தலைமேல் தன்கையைவைத்து,
யெகோவாவின்சமுகத்தில்அந்தக்காளையைக்
௫ கொல்லக்கடவன்.—அப்பொழுது அபிஷேகம்
பெற்ற ஆசாரியன் அந்தக்காளையின் இரத்தத்தில்
கொஞ்சமெடுத்து, அதைச்சபையின் ஆவாசத்தில்
௬ கொண்டுவரக்கடவன்.—ஆசாரியன்தன்விரலை இ
ரத்தத்தில்தோய்த்துப்பரிசுத்தஸ்தானத்தின்திரைக்
குமுற்பக்கத்தில் யெகோவாவின் சந்நிதியில்
அவ்விரத்தத்தை ஏழுதரம் தெளிக்கக்கடவன்.—
பின்பு ஆசாரியன் அந்த இரத்தத்தில்கொஞ்சத் ௭
தைச் சபையின் ஆவாசத்திலே யெகோவா
வின்சந்நிதியிலிருக்கும்சுகந்ததூபவேதிகையின்
கொம்புகளின்மேல்இட்டு, காளையினுடையமற்
ற இரத்தமுழுவதையும் சபையின் ஆவாச வாச
லில் இருக்கிற தகனபலிவேதிகையின் அடியி
லே ஊற்றிவிட்டு,—ஸ்தோத்திரபலியின் மாட்டி ௮
லிருந்து எடுக்கிறதுபோலப் பிராயச்சித்தபலியா
னகாளையினுடைய நிணத்தில் குடல்களைமூடிய
நிணத்தையும், அவைகளிடத்திலுள்ள நிணம்யா
வையும்,—இரண்டு குண்டிக்காய்களையும், அவை ௯
களின்மேல் இடுப்புநரம்புகளிடத்திலுள்ள நி
ணத்தையும், குண்டிக்காய்களிடத்திலுள்ள கல்
லீரலின்மேலிருக்கிற சவ்வையும், அதிலிருந்தெ
டுத்து,—அவைகளைத் தகனவேதிகையின்மேலே ௰
தகனிக்கக்கடவன்.—காளையின் தோலும், அதின் ௰௧
சமஸ்தமாமிசமும், அதின்தலையும், தொடையும்,
குடல்களும், சாணியுமாகிய காளைமுழுவதை
யும்,—பாளயத்துக்குப்புறம்பே சாம்பலைக்கொட் ௰௨
டுகிற சுத்தமான இடத்தில்கொண்டுபோய்க்கட்
டைகளின்மேற்போட்டு, அக்கினியால் எரிக்
கக்கடவன்: சாம்பல்கொட்டியிருக்கிற இடத்தி
லே அதையெரிக்கவேண்டும்.
இஸரவேலின் சமஸ்தசபையாரும், சபையா ௰௩
ராகிய தங்கள் கண்களுக்கு மறைவாயும், யெ
கோவாவின்கட்டளைகளில் யாதொன்றுக்குவி
ரோதமாயும், செய்யத்தகாததை அபுத்திபூருவமா
கச்செய்து பாவத்திற்கு உட்பட்ட குற்றவாளி
களானல்,—அவர்கள்செய்த பாவந் தெரியவந்த ௰௪
பொழுது, சபையார் அப்பாவத்தினிமித்தம் ஒரு
இளங்காளையைச்சபையின் ஆவாசத்துக்கு முன்
பாகப்பலியிடக்கொண்டுவரவேண்டும்.—சபை ௰௫
யின்முதியோர் யெகோவாவின் சந்நிதியில்
காளையின்தலைமேல் தங்கள் கைகளை வைக்கக்க
டவர்கள். அந்தக்காளை யெகோவாவின் சந்
நிதியிற் கொல்லப்படவேண்டும்.—அப்பொழுது ௰௬
அபிஷேகம்பெற்ற ஆசாரியன் அந்தக்காளையின்
இரத்தத்தில் கொஞ்சம் எடுத்துச் சபையின் ஆ
வாசத்தில் கொண்டுவரவேண்டும்.—ஆசாரியன் ௰௭
தன்விரலை இரத்தத்தில் தோய்த்துத்திரைக்குமுற்
பக்கத்தில், யெகோவாவின்சந்நிதியில், ஏழு
தரம் தெளிக்கக்கடவன்.—பின்பு அவன் அவ்வி ௰௮
ரத்தத்தில் கொஞ்சம்சபையின் ஆவாசத்தில் யெ
கோவாவின்சந்நிதியிலிருக்கும்வேதிகையின்
கொம்புகளின்மேல் இட்டு, மற்றை இரத்தமு
ழுவதையும், சபையின் ஆவாசவாசலிலிருக்கிற
தகனபலி வேதிகையின் அடியிலே ஊற்றிவிட்
டு,—அதின்நிணமுழுவதையும்அதிலிருந்தெடுத்து ௰௯

(௰௬) ௧.சாமு.௨.௰௫. ௨.நாளா.௭.௭. (௰௭) அதி.௨௯.௰௪. உபா.௩௨.௰௪. நிகி.௮.௰. ஆதி.௯.௪. உபா.௰௨.௰௬. ௧.சாமு.௰௪.௩௩. எசேக்.௪௪.௭,௰௫.—(௪. அதி. ௨.) எண்.௰௫.௨௩. ௧.சாமு.௰௪.௨௭. சங்.௰௯.௰௨. (௩) அதி. ௮.௰௨. அதி.௯.௨. (௪) அதி.௧.௩,௪. (௫) எண்.௰௯.௪. (௭) அதி.௰௬.௰௮. அதி.௫.௯. (௰௧) யாத்.௨௯.௰௪. எண். ௰௯.௫. (௰௨) அதி.௬.௰௧. எபி.௰௩.௰௧. (௰௩) எண்.௰௫.௨௪. யோசு.௭.௰௧. (௰௬) எபி.௯.௰௨,௰௩,௰௪.

௨௰ வேதிகையின்மேலே கனித்து,—பிராயச்சித்த
பலியான காளையைச்செய்தபிரகாரம், இந்தக்கா
ளையையுஞ் செய்யவேண்டும். இவ்வண்ணமே
ஆசாரியன் அவர்களுக்குப் பிராயச்சித்தம்பண்
ணக்கடவன், அப்பொழுது அவர்களுக்குப் பா
௨௧ வ மன்னிப்புக்கிடைக்கும்.–பின்பு காளையைப்
பாளயத்துக்குப் புறம்பேகொண்டுபோய், முந்தி
னகாளையை எரித்ததுபோல எரிக்கக்கடவன்:
இதுவேசபையாருக்குப்பிராயச்சித்தபலி.
௨௨ ஒரு அதிபதி தன் தேவனாகிய யெகோ
வாவின் கட்டளைகளில் யாதொன்றுக்கு விரோ
தமாகச் செய்யத்தகாததை அபுத்தி பூருவமாகச்
செய்து, பாவத்திற்கு உட்பட்ட குற்றவாளியா
௨௩ னால்,—தான் செய்தது பாவமென்று தனக்குத்
தெரிந்தபொழுது, அவன் வெள்ளாடுகளிற்குற்ற
மற்ற ஒரு இளங்கடாவைப்பலியாகக் கொண்டு
௨௪ வந்து;—அந்தக்கடாவின்தலைமேல் தன்கையை
வைத்து, யெகோவாவின் சந்நிதியில்தகனப
லிகொல்லுமிடத்தில் அதைக்கொல்லக்கடவன்:
௨௫ இதுவே பிராயச்சித்தபலி.—அப்பொழுது ஆசா
ரியன் அதின் இரத்தத்தில் கொஞ்சந்தன்விரலால்
எடுத்துத் தகனபலிவேதிகையின் கொம்புகளின்
மேல் இட்டு, மற்றை இரத்தத்தைத்தகனபலிவே
௨௬ திகையின் அடியிலேயூற்றிவிட்டு,—அதின்நிண
முழுவதையும் ஸ்தோத்திரபலி நிணத்தைப்போ
லவேதிகையின்மேலேதகனிக்கவேண்டும்: இவ்
விதமாய் ஆசாரியன், அவன்செய்த பாவத்தைக்
குறித்து அவனுக்குப் பிராயச்சித்தம் பண்ணக்
கடவன், அப்பொழுது அவனுக்குப் பாவமன்
னிப்புக்கிடைக்கும்.
௨௭ சாதாரண சனங்களில் ஒருவன் யெகோ
வாவின் கட்டளைகளில் யாதொன்றுக்கு விரோ
தமாய்ச் செய்யத்தகாததை அபுத்திபூருவமாய்ச்
செய்து பாவத்திற்கு உட்பட்ட குற்றவாளியா
௨௮ னால்,—தான்செய்தது பாவமென்று தனக்குத்
தெரிந்தபொழுது, அவன்தான்செய்தபாவத்தினி
மித்தம் வெள்ளாடுகளிற் குற்றமற்ற ஒருபெண்
௨௯ குட்டியைப் பலியாகக்கொண்டுவந்து,–பிராயச்
சித்தபலியின்மேலே தன்கையைவைத்து, தகன
பலிசெய்யுமிடத்தில் அந்தப்பிராயச்சித்த பலி
௩௰ யைக்கொல்லக்கடவன்.—அப்பொழுது ஆசாரி
யன் அதின் இரத்தத்தில் கொஞ்சந் தன்விரலால்
எடுத்துத் தகனபலிவேதிகையின் கொம்புகளின்
மேல் இட்டு மற்றை இரத்தமெல்லாம் வேதி
௩௧ கையினடியிலூற்றி,—ஸ்தோத்திரபலியிலிருந்து
நிணமெடுக்கிறதுபோல அதின் நிணமுழுவதை
யுமெடுத்து வேதிகையின்மேலே யெகோவா
வுக்குச்சுகந்தமாகத் தகனிக்கவேண்டும்;இவ்வித
மாய் ஆசாரியன் அவனுக்குப்பிராயச்சித்தம்பண்
ணக்கடவன், அப்பொழுதீ அவனுக்குப்பாவ
௩௨ மன்னிப்புக்கிடைக்கும்.–பிராயச்சித்த பலியாக
ஆட்டுக்குட்டியைக்கொண்டுவந்தால்,குற்றமற்ற
பெண்குட்டியைக் கொண்டுவந்து,–அந்தப்பிரா ௩௩
யச்சித்தபலியின் தலைமேல் தன்கையைவைத்து,
தகனபலிகொல்லுமிடத்தில் அந்தப்பிராயச்சித்த
பலியைக்கொல்லக்கடவன்.—அப்பொழுது ஆ ௩௪
சாரியன்அந்தப்பிராயச்சித்தபலியின்இரத்தத்தில்
கொஞ்சந் தன்விரலால் எடுத்துத்தகனபலிவேதி
கையின் கொம்புகளின்மேல் இட்டு, மற்றை இ
ரத்தம் முழுவதையும் வேதிகையினடியிலூற்றி
விட்டு,–ஸ்தோத்திரபலியானஆட்டுக்குட்டியின் ௩௫
நிணத்தை எடுக்கிறதுபோல அதின் நிணமுழுவ
தையுமெடுத்து, யெகோவாவுக்கு அக்கினி
யிலிடப்படும் பலிகள்போல வேதிகையின்மேல்
தகனிக்க வேண்டும்: இவ்விதமாய் ஆசாரியன்
அவன்செய்த பாவத்துக்குப்பிராயச்சித்தம் பண்
ணக்கடவன், அப்பொழுது அவனுக்குப் பாவ
மன்னிப்புக்கிடைக்கும்.

## ௫. அதிகாரம்.

௧. அறிந்ததைமறைத்த குற்றமுதலியவற்றிற்குப் பலியிடல்: ௭. பறவைப்பலி: ௰௧. மாவின் நைவேத்தியம்: ௰௪. பரிசுத்தவஸ்துக்களைக்குறித்துச்செய்யப்படும் பாவத்துக்குப்பலி: ௰௭. அபுத்திபூருவமாய்ச் செய்யப்பட்ட சாதாரணபாவத்துக்குப்பலி.

சாட்சியாகிய ஒருவன் இடப்பட்ட ஆணையின் ௧
சத்தத்தைக்கேட்டும் தான் கண்டதையும், அறிந்
ததையுந்தெரிவியாதிருந்து பாவஞ்செய்தால், அ
வன் தன் பாவதண்டனையையனுபவிக்க வேண்
டும்.—அசுசியான காட்டுமிருகத்தின்பிணமும், ௨
அசுசியான நாட்டுமிருகத்தின்பிணமும், அசுசி
யான ஊர்வனவற்றின் பிணமுமாகிய இப்படிப்
பட்ட அசுசியானவைகளிலொன்றை ஒருவன்
அபுத்திபூருவமாகத்தொட்டால்,அவன்அசுசியுங்
குற்றமுமுள்ளவன்.-அவன் ஒரு மனிதனிலுண் ௩
டாகும் அசுசியையும், மனிதனை அசுசிப்படுத்
தும் அசுசியான எந்தப்பொருளையும்,அபுத்திபூரு
வமாகத் தொட்டிருந்தால், அதுதெரிந்தபின் அ
வன் குற்றமுள்ளவனாவான்.—ஒருவன் நன்மை ௪
யையாவது தீமையையாவது செய்வதற்கு உதடு
பதறி,அபுத்திபூருவமாய் ஆணையிட்டிருந்தால்,அ
துதனக்குத்தெரிந்தபின்அவைகள் ஏதாவதொன்
றிலுங் குற்றமுள்ளவனாவான்.–இப்படிப்பட்ட ௫
வைகளுளொன்றில் ஒருவன்குற்றமுள்ளவனான
பொழுது, அவன் தான் பாவஞ்செய்தேனென்று
ணர்ந்து சொல்லித்,—தான்செய்தபாவத்துக்குப் ௬
பிராயச்சித்தமாக ஆடுகளிலாவதுவெள்ளாடுகளி
லாவது ஒருபெண்குட்டியைக் குற்றநிவிர்த்திப்
பலியாக யெகோவாவின் சந்நிதியில்கொண்
டுவரவேண்டும்; அப்பொழுது ஆசாரியன் அவ
னுடையபாவத்துக்குப்பிராயச்சித்தம் செய்யக்க
டவன்.

(௨௰) எண்.௰௫.௨௫. தானி.௯.௨௪. ரோ.௫.௰௧. எபி.௨.௰௭. எபி.௰.௰,௰௧,௰௨. ௧.யோவா.௧.௭. ௧.யோவா.௨.௨. (௨௬) எண்.௰௫.௨௮. (௨௭) எண்.௰௫.௨௭. (௩௧) யாத்.௨௯.௰௮.—(௫. அதி. ௧.) ௧.இரா.௮.௩௧. மத்.௨௬.௬௩. அதி.௨௰.௰௭. எண்.௯.௰௩. எண்.௰௯.௰௧,௰௩,௰௬. (௪) ௧.சாமு.௨௫.௨௨. அப்.௨௩.௰௨. (௫) எண். ௫.௭. எஸ்ற.௰.௰௧,௰௨.

௭ ஆட்டுக்குட்டிகொண்டுவரமுடியாதிருந்தால்,
அவன் தான் செய்தபாவத்தினிமித்தம் இரண்டு
மணிப்புறாக்களையாவது, இரண்டு மாடப்புறாக்
குஞ்சுகளையாவது,ஒன்றைப்பிராயச்சித்தபலியா
கவும் மற்றதைத்தகனபலியாகவும் யெகோவா
௮ வின்சந்நிதியில் கொண்டுவரக்கடவன்.–அவை
களை ஆசாரியனிடத்தில்கொண்டுவர, அவன்
பிராயச்சித்தத்துக்கானதை முன்னே எடுத்து,
அதின்தலையைக்கழுத்திலிருந்து கிள்ளிப் பலியி
௯ டக்கடவன், அதை வேறுபடுத்தலாகாது.-அவன்
அந்தப்பிராயச்சித்தபலியின் இரத்தத்தில் கொஞ்
சம் எடுத்து வேதிகையின்பக்கத்தில்தெளித்துச்
சேஷமான இரத்தத்தை வேதிகையினடியிலே
௰ யூற்றக்கடவன்: இதுவேபிராயச்சித்தபலி.—அ
வன் மற்றதைநியமத்தின்படி தகனபலியாயிடக்
கடவன்; இவ்விதமாக ஆசாரியன் அவன்செய்த
பாவத்துக்குப் பிராயச்சித்தம்பண்ணக்கடவன்,
அப்பொழுது அவனுக்குப்பாவமன்னிப்புக்கி
டைக்கும்.
௰௧ இரண்டுமணிப்புறாக்களையாவது, இரண்டு மா
டப்புறாக்குஞ்சுகளையாவது கொண்டுவரமுடியா
திருந்தால், பாவஞ்செய்தவன் பிராயச்சித்தத்துக்
காக, ஒரு எபாமெல்லியமாவில்பத்திலொருபங்
கை நைவேத்தியமாகக்கொண்டுவரவேண்டும்.
அது பிராயச்சித்தபலியாயிருப்பதினால் அதின்
மேல் எண்ணெய் வார்க்கவும்படாது குந்துரு
௰௨ இடவும்படாது.—அவன் அதை ஆசாரியனி
டத்துக்குக்கொண்டுவர, ஆசாரியன் ஞாபகக்கு
றிக்கு, அதில் ஒருகைப்பிடிநிறையஎடுத்து, யெ
கோவாவுக்கு அக்கினியிலிடும் நைவேத்தியத்
தைப்போல், வேதிகையின்மேல் தகனிக்கக்க
௰௩ டவன்: இது பிராயச்சித்தபலி.—இவ்விதமாக
ஆசாரியன் இவைகளில் ஒன்றினால் அவனுக்குப்
பிராயச்சித்தம்பண்ணக்கடவன், அப்பொழுது
அவனுக்குப் பாவமன்னிப்புக்கிடைக்கும். இதி
லேசேஷம் நைவேத்தியத்தைப்போல் ஆசாரிய
னுக்கு உரித்தாகுமென்றுசொல்லென்றார்.
௰௪ பின்னும்யெகோவாமோசேயைநோக்கி,-
௰௫ யெகோவாவின்கட்டளையைமீறிப் பரிசுத்த
வஸ்துக்களைக்குறித்து ஒருவன்பாவஞ்செய்தால்,
அவன் தன்பாவத்தினிமித்தம் பரிசுத்தஸ்தானத்
துச்சேக்கலின்படி, நீ தீர்மானிப்பது எவ்வள
வோ, அவ்வளவு வெள்ளிச்சேக்கல்பெறும் குற்
றமற்ற ஒரு ஆட்டுக்கடாவை மந்தையிலிருந்து
குற்றநிவிர்த்திப்பலியாக யெகோவாவின்சந்
௰௬ நிதியில் கொண்டுவரக்கடவன்.—தான் பரிசுத்
தவஸ்துவைக்குறித்துச்செய்தகுற்றத்துக்கு ஈடா
னதின் ஐந்திலொருபங்கை அதிகமாகக்கூட்டி,
ஆசாரியனுக்குக்கொடுக்கக்கடவன்; ஆசாரியன்
குற்றநிவிர்த்திப் பலியாகிய ஆட்டுக்கடாவினால்
அவனுக்குப் பிராயச்சித்தம்பண்ணக்கடவன்,
அப்பொழுது அவனுக்குப் பாவமன்னிப்புக்கி
டைக்கும்.
ஒருவன் யெகோவாவின் கட்டளைகளி ௰௭
னால்செய்யப்படாதென்றுவிலக்கப்பட்ட இவை
களிலொன்றைச்செய்து பாவத்திலுட்பட்டால்,
அது அவனுக்குத்தெரியாதிருந்தாலும், அவன்
குற்றவாளி: அவன்தன் பாவதண்டனையை அனு
பவிப்பான்.–அதினிமித்தம் அவன் குற்றநிவிர்த் ௰௮
திப்பலியாகஉன்னுடையதீர்மானத்தின்படி, மந்
தையிலிருந்து குற்றமற்ற ஒரு ஆட்டுக்கடாவை
ஆசாரியனிடத்துக்குக் கொண்டுவரவேண்டும்;
அவன் தானறியாமல் அபுத்திபூருவமாய்ச்செய்த
குற்றத்துக்கு ஆசாரியன் பிராயச்சித்தம்பண்ணக்
கடவன், அப்பொழுது அவனுக்குப் பாவமன்
னிப்புக்கிடைக்கும்.—யெகோவாவுக்கு வி ௰௯
ரோதமாக நிச்சயமாய்க் குற்றஞ்செய்தவனுக்கு
இதுவே குற்றநிவிர்த்திப்பலியென்றார்.

## ௬. அதிகாரம்.

௧. அயலவனுக்கு விரோதமாய்ச்செய்தபாவத்துக்குப்பலி: ௮. ஆசாரியர்நிமித்தம் தெரிவிக்கப்பட்ட பலிதானவிதி: ௰௪. நைவேத்தியவிதி: ௨௪. பிராயச்சித்தவிதி.

பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,– ௧
ஒருவன் அடைக்கலப்பொருளிலாவது, கொ ௨
டுக்கல்வாங்கல்களிலாவது, பலாற்காரமாய் அப
கரித்த வஸ்துவிலாவது, தன் அயலானை வஞ்சித்
தலிலாவது,—இழந்த பொருளைக் கண்டடைந் ௩
து அதைத்தொட்டுப் பொய்சொல்லிப்பொய் ஆ
ணை யிடுவதிலாவது, மனுஷர்செய்கிற இவை
கள் எல்லாவற்றிலும் ஒன்றிலாகிலும் யெகோ
வாவின் கட்டளையைமீறிப்பாவஞ்செய்தால்,–
அவன் தான் பாவஞ்செய்து குற்றவாளியானப ௪
டியினாலே, தான் பலாற்காரமாய் அபகரித்தபொ
ருளையும், வஞ்சித்துப்பெற்றதையும், தன்னிடத்
தில் அடைக்கலமாக வைக்கப்பட்டதையும், இ
ழக்கப்பட்டுத் தான்கண்டு அடைந்தபொருளை
யும், பொய் ஆணையிட்டுச்சுட்டியபொருளையும்,
திரும்பக்கொடுக்கவேண்டும்.—அவன் தான்குற் ௫
றவாளியென்று தீர்க்கப்படும்நாளில், முதலோ
டே ஐந்திலொருபங்கையும் அதிகமாகக்கூட்டி
அதினுரிமைக்காரனுக்குக்கொடுத்து,—தன் குற் ௬
றத்துக்குப்பலியாக உன்மதிப்பின்படி மந்தையி
லிருந்துகுற்ற நிவிர்த்திப்பலியாகிய குற்றமற்ற
ஒரு ஆட்டுக்கடாவை யெகோவாவின் சந்நி
தியில் ஆசாரியனிடத்துக்குக்கொண்டுவரவேண்
டும்.–ஆசாரியன் யெகோவாவின் சந்நிதியில் ௭
அவனுக்குப் பிராயச்சித்தம் பண்ணக்கடவன்,
அப்பொழுது அவன்செய்த எந்தக்குற்றமும் அ
வனுக்கு மன்னிக்கப்படுமென்றார்.
மேலும் யெகோவா மோசேயினிடத்தில்,- ௮
நீ ஆரோனுக்கும் அவன்புத்திரருக்கும் கட்டளை ௯

(௭) அதி.௰௨.௮. (௰) அதி.௧.௰௪. அதி.௪.௨௬. (௰௧) எண்.௫.௰௫. (௰௫) அதி.௨௨.௰௪. எஸ்றா.௰.௰௯. யாத்.௩௰. ௰௩. (௰௬) எண்.௫.௭. அதி.௪.௨௬. (௰௭) சங்.௰௯.௰௨. லூக்.௰௨.௪௮. (௰௯) எஸ்றா.௰.௨.—(௬. அதி. ௨.) அதி. ௰௯.௰௧. அப்.௫.௪. யாத்.௨௨.௭,௰. நீதி.௨௪.௮. (௩) உபா.௨௨.௧,௨,௩. யாத்.௨௨.௰௧. எரே.௭.௯. சக.௫.௪. (௫) எண்.௫.௭. ௨.சாமு.௰௨.௬. லூக்.௰௯.௮.

௰ விடவேண்டும்; இதுதகனபலியின்விதி:-தகனப
லி இராமுழுவதும் விடியற்காலம்வரைக்கும் வே
திகையின்மேலெரியவேண்டும், வேதிகையின்
மேலுள்ள அக்கினி யெரிந்துகொண்டேயிருக்க
௰௧ வேண்டும்.—ஆசாரியன் சணல்நூலாலான தன்
அங்கியைத்தரித்துச்சணல்நூலாலான தன் சல்
லடத்தை அரையிலிட்டுக்கொண்டுவேதிகையின்
மேல் அக்கினியில் எரிந்த தகனபலியின் சாம்ப
லையெடுத்து வேதிகைக்குப்பக்கத்திற்கொட்டி,—
௰௨ பின்பு தன் வஸ்திரங்களைக்கழற்றிவேறுவஸ்திரங்
களை உடுத்து, அந்தச்சாம்பலைப்பாளயத்துக்குப்பு
றம்பேசுத்தமான ஒருஇடத்தில்கொண்டுபோய்க்
௰௩ கொட்டக்கடவன்.—வேதிகையின்மேலிருக்கிற
அக்கினிஅவியாமலிருக்கவேண்டும்: ஆசாரியன்
காலைதோறும் அதிலெரியும்படி கட்டைகளைப்
போட்டு அதின்மேல் தகனபலியைவரிசையாக
வைத்து, அதின்மேலே பலிகளின் நிணத்தை
௰௪ யிட்டுத் தகனிக்கக்கடவன்.—வேதிகையின்மே
லுள்ள அக்கினி எப்பொழுதும் எரிந்துகொண்டி
ருக்கவேண்டும்: அது ஒருபொழுதும் அவியப்ப
டாது என்றும்;—

௰௫ இது நைவேத்தியத்தின்விதி: ஆரோனின்புத்தி
ரரில் ஒருவன் யெகோவாவின் சந்நிதியில்
வேதிகைக்குமுன் அதைச் செலுத்தவேண்டும்.
நைவேத்தியத்தின் மாவிலும் அதின் எண்ணெ
யிலுந்தன்கைநிறைய அள்ளி,அந்தநைவேத்தியத்
தின்மேலிருக்கும் சமஸ்தகுந்துருவோடும் ஞாப
கக்குறியாக யெகோவாவுக்குச் சுகந்தமாய்
௰௬ வேதிகையின்மேலேதகனிக்கக்கடவன்.—அதில்
சேஷமானதைஆரோனும்அவன்புத்திரரும்புசிப்
பார்கள். அதுபுளிப்பில்லாத அப்பத்துடன் பரி
சுத்தஸ்தானத்தில்புசிக்கப்படும்;சபையின் ஆவா
சத்தின் பிராகாரமத்தியில் அதைப்புசிக்கவேண்
௰௭ டும்.—அதைப்புளித்தமாவினாலே சுடப்படாது.
அது பிராயச்சித்தபலியையும் குற்றநிவிர்த்திப்ப
லியையும்போல, மிகவும்பரிசுத்தமுள்ளது; ஆத
லால் அக்கினியிலிடப்படும் என் நைவேத்தியங்
களில் இந்தப்பங்கை நான் அவர்களுக்குக்கொ
௰௮ டுத்துவிட்டேன்.—ஆரோனுடைய பிள்ளைகளில்
ஆண்மக்களெல்லாரும் அதைப் புசிக்கக்கடவர்
கள். யெகோவாவுக்கு அக்கினியிலிடப்ப
டும் இந்த நைவேத்தியநியமம் உங்கள் தலைமுறை
தோறும் இருக்கக்கடவது. இதைப் பரிசிப்பவ
னெவனும் பரிசுத்தமாயிருப்பானென்றுஞ்சொல்
லென்றார்.

௰௯ பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,-
௨௰ ஆரோனும் அவன் புத்திரரும் அவரவர் அபிஷே
கம்பெறுந்தினத்தில் நித்தியநைவேத்தியத்துக்கா
க ஒரு எபாமெல்லியமாவிற் பத்திலொருபங்கை
எடுத்துக்காலையிற்பாதியையும், மாலையிற் பாதி
யையும் யெகோவாவுக்கு நைவேத்தியம்பண்
௨௧ ணக்கடவர்கள்.—அது சட்டியிலே எண்ணெய்
விட்டுச்சுடப்பட்டபின்பு நீ அதைக்கொண்டு
வந்து அந்த நைவேத்தியத்தின் சுட்டதுண்டுக
ளை யெகோவாவுக்குச் சுகந்தத்தினிமித்தம்
நைவேத்தியம்பண்ணக்கடவாய்.—அவனுடைய ௨௨
சந்ததியில் அவனுக்குப்பின்பு அபிஷேகம்பெ
றும் ஆசாரியனும் அப்படியேசெய்யக்கடவன்:
இது யெகோவா விதித்த நித்தியநியமம்.—ஆ ௨௩
சாரியனிமித்தமிடப்படும்எந்தநைவேத்தியத்தை
யும், முழுவதுந்தகனிக்கவேண்டும்: அது புசிக்
கப்படாது, ஆகையால் அது முழுவதையுந்தகிக்
கவேண்டுமென்றார்.

பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,- ௨௪
நீ ஆரோனிடத்திலும் அவன் புத்திரரிடத்திலும், ௨௫
இது பிராயச்சித்தபலியின்விதி: யெகோவா
வின் சந்நிதியில் தகனபலி கொல்லப்படுமிடத்
தில் பிராயச்சித்தபலியுங் கொல்லப்படவேண்
டும்: அது மிகவும் பரிசுத்தமுள்ளது.—பாவத்தி ௨௬
னிமித்தம் அதைப்பலியிடுகிற ஆசாரியனே அ
தைப்புசிக்கக்கடவன். சபையின் ஆவாசத்தின்
பிராகாரமாகிய பரிசுத்தஸ்தானத்தில் அது புசிக்
கப்படவேண்டும். அதின் மாமிசத்தைப்பரிசிக்
கிறவன்எவனோ அவன்பரிசுத்தமாயிருப்பான்.—
அதின் இரத்தம் ஒரு வஸ்திரத்தில் தெறித்தால், ௨௭
அது தெறித்த இடத்தைப்பரிசுத்தஸ்தானத்திற் க
ழுவவேண்டும். அது சமைக்கப்பட்டமட்பாண்
டம் உடைக்கப்படவேண்டும்.—பித்தளைப்பாத் ௨௮
திரத்தில் சமைக்கப்பட்டால் அது விளக்கிச்ச
லத்தில் கழுவப்படவேண்டும். ஆசாரியரின் புத்
திரர் எவராகிலும் அதைப்புசிக்கலாம்.—அது மிக ௨௯
வும் பரிசுத்தமானது. பரிசுத்தஸ்தானத்தில் பிரா
யச்சித்தம் செய்யும்பொருட்டு,—சபையின் ஆ ௩௰
வாசத்துக்குள்ளே எந்தப்பிராயச்சித்த பலியினி
ரத்தம் கொண்டுவரப்பட்டதோ அந்தப்பலி பு
சிக்கப்படலாகாது: அது அக்கினியிலே தகிக்கப்
படவேண்டும்.

## எ. அதிகாரம்.

௧. குற்றநிவிர்த்திபலியின்விதி: ௰௧. ஸ்தோத்திர
பலியின்விதி நிணவிலக்கு, இரத்தவிலக்கு:
௨௮. ஆசாரியருக்குக்கிடைக்கும் பலிப்பங்கு.

இது குற்றநிவிர்த்தி பலியின்விதி: அது மிக ௧
வும் பரிசுத்தமுள்ளது.—தகனபலியைக்கொல்லு ௨
மிடத்தில் குற்றநிவிர்த்திபலியையுங் கொல்ல
வேண்டும். அதின் இரத்தத்தை வேதிகையின்
மேலே சுற்றித்தெளித்து,—அதின் நிணம் முழு ௩
வதையும், அதின் வால்மூட்டையும், குடல்க
ளையும், மொய்த்தநிணத்தையும்,—இரண்டு குண் ௪
டிக்காய்களையும், அவைகளின்மேலே இடுப்பு
நரம்புகளினிடத்திலுள்ள நிணத்தையும், குண்
டிக்காய்களினிடத்திலுள்ளகல்லீரலின்மேல் சவ்
வையுமெடுத்துப் பலியிடக்கடவன்.—அவைகளை ௫
ஆசாரியன் யெகோவாவுக்கு அக்கினியிலி
டப்படும் நைவேத்தியமாக வேதிகையின்மேல்

(௰௫)எண்.௰௫.௪.அதி.௨.௨,௧.(௰௬)எசேக்.௪௪.௨௯.அதி.௰.௰௨,௰௩.எண்.௰௮.௰.(௰௭)எண்.௰௮.௯,௰.யாத்.௨௯.௩௭.
(௰௮)எண்.௰௮.௰.யாத்.௨௯.௩௭.(௨௰)யாத்.௨௯.௨.யாத்.௰௬.௩௬.(௨௩)யாத்.௨௯.௨௫.(௨௫)அதி.௨௧.௨௨.(௨௬)எண்
௰௮.௯,௰. யாத்.௨௯.௩௭. (௨௮) எண்.௰௮.௰. (௩௰)எபி.௰௩.௰௧.—(எ.அதி.௨.)யாத்.௨௯.௰௩.(௫)அதி.௬.௰௬,௰௭,௰௮.

தகனிக்கக்கடவன். அதுவேகுற்றநிவிர்த்திபலி.-
௬ ஆசாரியரின் புத்திரர் எவராகிலும் அதைப்புசிக்
கலாம். அதுபரிசுத்த ஸ்தானத்தில் புசிக்கப்பட
௭ வேண்டும்: அது மிகவும்பரிசுத்தமுள்ளது.—பிரா
யச்சித்தப்பலிக்குங், குற்றநிவிர்த்தி பலிக்கும்வி
தியொன்றே. அதினாலே பிராயச்சித்தஞ்செய்த
௮ ஆசாரியனுக்கு உரித்தாகும்.—ஒருவனுடைய த
கனபலியைச் செலுத்தின ஆசாரியனெவனோ
அந்தஆசாரியன், தான்செலுத்தினதகனபலியின்
தோலைப்பெறலாம்.
௯ அடுப்பிலே சமைக்கப்பட்டதும், இருப்புச்
சட்டியிலுந் தோசைக்கல்லிலும் சமைக்கப்பட்
டதுமாகிய நைவேத்தியம்யாவும்,அதைநைவேத்
தியம்பண்ணின ஆசாரியனுக்கு உரித்தாகும்.—
௰ எண்ணெயிற் பிசைந்ததும் அதல்லாததுமாகிய
சகல நைவேத்தியமுஞ் சரிப்பங்காக ஆரோனு
டைய புத்திரர் சகலரிடத்திலுஞ் சேரவேண்
௰௧ டும்.-யெகோவாவுக்குச்செலுத்துகிறஸ்தோத்
௰௨ திரபலியின்விதி இது:—ஒருவன் நன்றி அறிவிக்
கும்பலிகொண்டுவந்தால், அந்தநன்றி அறிவிக்
கும் பலியோடுங்கூட எண்ணெயிற் பிசைந்தபு
ளிப்பில்லாத அதிரசங்களையும், எண்ணெய்பூசப்
பட்டபுளிப்பில்லாத அடைகளையும், எண்ணெ
யிற்பிசைந்துவறுக்கப்பட்ட மெல்லியமாவினாற்
செய்தஅதிரசங்களையும்,நைவேத்தியம்பண்ணக்
௰௩ கடவன்.—அந்தஅதிரசங்களை அல்லாமற் புளித்
தமாவினாற்செய்த அப்பத்தையும், தன்னுடைய
பலிகளில் நன்றியறிவிக்கும் பலியோடும் நை
௰௪ வேத்தியஞ்செய்யவேண்டும்.—அந்த நைவேத்தி
ய முழுவதிலும் வகைக்கு ஒவ்வொன்றெடுத்து
யெகோவாவுக்கு உயர்த்தும் நைவேத்திய
மாக இடக்கடவன். அது ஸ்தோத்திரபலியின்
இரத்தத்தைத் தெளித்த ஆசாரியனுக்கு உரித்தா
௰௫ கும்.—நன்றி அறிவிக்கும்பொருட்டும் ஸ்தோத்
திரபலியின்மாமிசம் அதற்கிடப்பட்ட நாளிலே
தான் புசிக்கவேண்டும். அதில் ஒன்றையும்
௰௬ விடியற்காலமட்டும் வைக்கப்படாது.—அவன்
இடும்பலி சங்கற்பத்தாலாகிலும், இஷ்டத்தினா
லாகிலும் இடப்பட்டதானால் பலியிடப்பட்
டநாளிலே புசிக்கப்பட வேண்டும் அதின்சே
௰௭ ஷம் மற்றைநாளிலும் புசிக்கப்படலாம்.—அந்
தப்பலியின்மாமிசசேஷத்தை மூன்றாம்நாளிலே
௰௮ அக்கினியில் எரித்துவிடவேண்டும்.—ஸ்தோத்
திரபலியின் மாமிசசேஷம் மூன்றாம்நாளில் பு
சிக்கப்படுமானால் அது அங்கிகரிக்கப்படாது;
அது அரோசிகமாயிருக்கும். அதைப்புசித்தவன்
௰௯ தன்பாவத்தண்டனையை அனுபவிப்பான்.—மாமி
சமானது அசுசியான எந்த வஸ்துவினாலாகிலுந்
தொடப்பட்டதானால், அது புசிக்கப்படாமல்
அக்கினியாலெரிக்கப்படவேண்டும். அசுசியாயி
ருக்கிறவர்களெல்லாரும் மற்றை மாமிசத்தைப்
புசிக்கலாம்.-ஒருவன் அசுசியுள்ளவனாயிருக்கை ௨௰
யில் யெகோவாவின் பலியின்மாமிசத்தைப்
புசித்தால், அவன்தன் சனத்திலிருந்தும் சேதிக்
கப்படுவான்.—அசுசியான மனிதனையாகிலும், ௨௧
அசுசியான மிருகத்தையாகிலும், அரோசிக்கப்ப
டத்தக்கவேறே அசுசியான வஸ்துவையாகிலும்,
பரிசித்தஒருவன் யெகோவாவுக்கேற்றஸ்தோ
த்திரபலியின்மாமிசத்தைப்புசித்தால், அவன்தன்
சனத்தினின்றும் சேதிக்கப்படுவானென்றார்.
பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,- ௨௨
நீ இஸரவேல் சந்ததியாரிடத்தில், மாடு, ஆடு, ௨௩
வெள்ளாடு என்பவைகளின் எந்த நிணத்தையும்
நீங்கள் புசிக்கப்படாது.—வலிய இறந்த மிருகத் ௨௪
தினிணத்தையும், மிருகங்களாற் பீறுண்டதின்
நிணத்தையும், சாதாரணவேலைகளுக்குஞ் செல
வழிக்கலாம்: அதை நீங்கள் ஒருபொழுதும் பு
சிக்கவேண்டாம்.-யெகோவாவுக்கு அக்கினி ௨௫
யிலிடப்படும் நைவேத்திய மிருக நிணத்தைப்பு
சிக்கிறயாவனுந் தன் சனங்களினின்றுஞ் சே
திக்கப்படுவான்.—மேலும் உங்கள் வாசஸ்தலங் ௨௬
கள் எவைகளிலேயும் ஒரு பறவையின் இரத்தத்
தையாகிலும், ஒரு மிருகத்தின் இரத்தத்தையாகி
லும், நீங்கள்புசிக்கவேண்டாம்.—எவ்வித இரத் ௨௭
தத்தையாகிலும் புசிப்பவனெவனுந் தன் சனங்
களினின்றுஞ் சேதிக்கப்படுவானென்று சொல்
லென்றார்.
பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,- ௨௮
நீ இஸரவேல் சந்ததியாரிடத்தில் யெகோவா ௨௯
வுக்கு ஸ்தோத்திரபலியிடுகிறவன், தன்ஸ்தோத்
திரபலியின் நைவேத்தியத்தைத் தானே கொண்
டுவரக்கடவன்.—யெகோவாவுக்கு அக்கினி ௩௰
யிலிடப்படும் நைவேத்தியங்களை அவன் கைக
ளே கொண்டுவரவேண்டும். மார்பின்கண்டம்
யெகோவாவின் சந்நிதியில் அசைவாட்டப்
படும் நைவேத்தியமாய் அசைவாட்டப்படும்
பொருட்டு மார்பின் கண்டத்துடன் நிணத்தைக்
கொண்டுவரக்கடவன்.—அப்பொழுது ஆசாரி ௩௧
யன் அந்த நிணத்தை வேதிகையின்மேலே தகிக்
கவேண்டும். மார்பின்கண்டமே ஆரோனுக்கும்,
அவன் புத்திரருக்குமுரித்தாகும்.—உங்கள் ஸ் ௩௨
தோத்திரபலிகளில் வலதுமுன்னந்தொடையை
அசைவாட்டும் நைவேத்தியமாக, ஆசாரியனுக்
குக்கொடுக்கவேண்டும்.—இஸரவேல் சந்ததியார் ௩௩
செலுத்தும்பலிகளில், அசைவாட்டும் மார்பின்
கண்டத்தையும், உயர்த்தும் முன்னந்தொடை
யையும், நான் அவர்கள் கையில்வாங்கி, அவை
களை ஆசாரியனாகிய ஆரோனுக்கும் அவன் புத்
திரருக்கும் இஸரவேல் சந்ததியாருக்குள்ளே நித்
திய நியமமாய்க் கொடுத்தேன்.—ஆதலால் ஆரோ ௩௪
னுடைய புத்திரரில் ஸ்தோத்திரபலியின் இரத்
தத்தையும், நிணத்தையும், நைவேத்தியம்பண்ணு

(௬) அதி.௬.௨௫,௨௬. (௮) எண்.௰௮.௯. (௰௨) எண்.௬.௰௫. (௰௩) ஆமோ.௪.௫. (௰௪)எண்.௰௮.௮,௰௧,௰௯.(௰௬) அதி.௰௯.௬,௭,௮. (௰௮) எண்.௰௮.௨௭. (௨௰) அதி.௰௫.௩. ஆதி.௰௭.௰௪. (௨௧) அதி.௰௨. அதி.௰௩. அதி.௰௫. (௨௫) உபா.௰௪.௨௧. எசேக்.௪௪.௩௧. (௨௬) ஆதி.௯.௪. (௩௰) அதி.௩.௩,௪,௯,௰௪. யாத்.௨௯.௨௪,௨௭. (௩௧) அதி.௩.௫,௰௧,௰௬. (௩௨) எண்.௬.௨௰. (௩௩) யாத்.௨௯.௨௮. உபா.௰௮.௩.

கிறவனெவனோ அவனுக்குப் பங்காக வலது
முன்னந்தொடை சேரவேண்டுமென்று சொல்
௩௫ லென்றார்.—யெகோவா ஆரோனுக்கும் அ
வன் புத்திரருக்கும் அபிஷேகஞ் செய்ததினத்
தில் இஸரவேல் சந்ததியார் தங்கள் தலைமுறை
தோறும் நித்திய நியமமாக அவர்களுக்குக்கொ
டுக்கவேண்டுமென்று கட்டளையிட்டபிரகாரம்,-
௩௬ அவர்கள் தாங்கள் யெகோவாவுக்கு ஆசாரி
யத்தொண்டுசெய்யும்படி,ஏற்படுத்தப்பட்டநாள்
முதல் யெகோவாவுக்கு அக்கினியிலிடப்ப
டும் நைவேத்தியங்களில் இந்தப்பங்கைத்தங்கள்
௩௭ அபிஷேகத்தின்பொருட்டுப்பெறலாம்.—இஸர
வேல் சந்ததியார் யெகோவாவுக்குத் தங்கள்
காணிக்கைகளைக்கொடுக்கவேண்டுமென்று யெ
கோவா சீனாய்வனத்திலிருக்கிறசீனாய்மலையில்
௩௮ மோசேக்குக் கட்டளையிட்டதினத்தில்,—அவர்
விதித்த தகனபலிக்கும், நைவேத்தியத்துக்கும்,
பிராயச்சித்த பலிக்கும், குற்றநிவிர்த்திபலிக்கும்,
பரிசுத்தப்படுத்தும் பலிக்கும், ஸ்தோத்திரபலிக்
கும் விதி இதுவே.

## ௮. அதிகாரம்.

௧. ஆரோனுக்கும் அவன்புத்திரருக்கும் அபிஷேகஞ்செய்தல்: ௰௪. அவர்கள் பிராயச்சித்தஞ் செய்தல்: ௰௮. தகனபலியிடல்: ௨௨. அபிஷேகஞ்செய்வதற்கேற்ற ஆட்டுப்பலிதானம்: ௩௧. அபிஷேகஞ் செய்வதற்குக் காலமுமிடமும் நியமித்தல்.

௨ யெகோவா மோசேயை நோக்கி,—நீ ஆரோ
னையும் அவன்புத்திரரையும், வஸ்திரங்களோடும்
அபிஷேகதைலத்தோடும் பிராயச்சித்தபலிக்கு ஒ
ரு காளையோடும் இரண்டு ஆட்டுக்கடாக்களோ
டும் புளிப்பில்லாத அப்பக்கூடையோடும் வரப்
௩ பண்ணி,—சபையின்ஆவாசவாசலில் சபையார்
௪ எல்லாரையுங்கூடிவரும்படிசெய்யென்றார்.—த
னக்குயெகோவாகட்டளையிட்டபடியேமோ
சேசெய்தான். சபையின் ஆவாசவாசலில் சபை
௫ யார்கூடினபொழுது,-மோசேசபையாரைநோக்
கி, செய்யும்படி யெகோவா கட்டளையிட்ட
து இதுவேயென்றுசொல்லித்தனக்கு யெகோ
௬ வாவிதித்தபிரகாரம்,—மோசே ஆரோனை அவன்
புத்திரருடன் அழைத்து, அவர்களைச் சலத்தினால்
௭ ஸ்நானம்பண்ணுவித்து,—அவனுக்கு உள்ளங்கி
யைப்போட்டு, இடைக்கச்சைக் கட்டி, மேலங்
கியைத் தரித்து, எபோத்வஸ்திரத்தை அவனுக்
கிட்டு, அதின்மேல் எபோத்தின் விசித்திரமான
௮ கச்சைக்கட்டி,—அவனுக்கு மார்புப்பதக்கத்தைத்
தரித்து, அந்தமார்புப் பதக்கத்திலே ஊரீம் தூமி
௯ மென்பவைகளைச்சேர்த்து,—அவன்சிரசில் பா
கைதரித்து, அந்தப்பாகையில் அவன்நெற்றிக்கு
மேலே சுத்தகிரீடமென்னும் பட்டத்தைக் கட்
௰ டினான்.—பின்பு மோசே அபிஷேகதைலத்தை
எடுத்து ஆவாசத்திற்கும் அதிலுள்ள யாவற்றிற்
கும்அபிஷேகம்பண்ணி, அவைகளைப்பரிசுத்தப்
படுத்தி;—அதிற்கொஞ்சம் எடுத்து வேதிகையின் ௰௧
மேல் ஏழுதரந்தெளித்து, வேதிகையையும், அ
தின்சகல பாத்திரங்களையும், கலவடையுடனே
தொட்டியையும், பரிசுத்தப்படுத்தும்படி அவை
களுக்கு அபிஷேகம்பண்ணி;—அபிஷேக தை ௰௨
லத்திற்கொஞ்சம் ஆரோனுடைய சிரசின்மேல்
வார்த்து, அவனைப்பரிசுத்தப்படுத்தும்படி அவ
னுக்கு அபிஷேகம்பண்ணினான்.—பின்பு மோ ௰௩
சே தனக்கு யெகோவா விதித்தபிரகாரம்
ஆரோனுடைய புத்திரரையும் அழைத்து, அவர்
களுக்கு அங்கிகளைப்போட்டு, இடைக்கச்சுக
ளைக்கட்டி, குல்லாக்களைத்தரித்தான்.—பிராயச் ௰௪
சித்தத்துக்கான காளையைக் கொண்டுவந்தபொ
ழுது ஆரோனும் அவன்புத்திரரும் பிராயச்சித்த
பலியாகிய அந்தக்காளையின் தலைமேல் தங்கள்
கைகளை வைத்தார்கள்.—அப்பொழுது மோசே ௰௫
அதைக்கொன்று அதினிரத்தத்தை எடுத்துத்தன்
விரலால் வேதிகையின்கொம்புகளின்மேல் சுற்
றிலுமிட்டு வேதிகையைப் பரிசுத்தப்படுத்தி,
மற்றை இரத்தத்தைவேதிகையின் அடியில் ஊற்
றிவிட்டு, அதின்மேற் பிராயச்சித்தம் பண்ணும்
பொருட்டு அதைப் பரிசுத்தப்படுத்தினான்.—
பின்பு மோசே தனக்கு யெகோவா கட்ட ௰௬
ளையிட்டபிரகாரம், குடல்கள்மேலிருந்த நிணம்
முழுவதையும், கல்லீரலின்மேலிருந்த சவ்வை
யும், இரண்டுகுண்டிக்காய்களையும், அவைகளின்
நிணத்தையுமெடுத்து,—வேதிகையின்மேலேதகித் ௰௭
துக்காளையையும், அதின்தோலையும், மாமிசத்
தையும், சாணியையும், பாளயத்துக்குப்புறம்பே
அக்கினியிலெரித்துவிட்டான்.
பின்பு அவன்தகனபலிக்கேற்ற ஆட்டுக்கடா ௰௮
வைக்கொண்டுவர, ஆரோனும் அவன்புத்திரரும்
அந்த ஆட்டுக்கடாவின் தலைமேல் தங்கள்கைக
ளைவைத்தார்கள்.—மோசே அதைக்கொன்று அதி ௰௯
னிரத்தத்தை வேதிகையின்மேற் சுற்றித்தெளித்
தான்.—மோசேஆட்டுக்கடாவைத் துண்டுதுண் ௨௰
டாகத்துணித்து, அதின்தலையையும், துண்டங்க
ளையும், நிணத்தையும் எரித்து,—குடல்களையும் ௨௧
தொடைகளையும், சலத்தில்கழுவிவேதிகையின்
மேல் கடாமுழுவதையுந்தகித்தான்: யெகோ
வா மோசேக்குவிதித்தபிரகாரம் அது யெகோ
வாவுக்கு அக்கினியிலிடப்பட்ட சுகந்த தகன
பலியாயிருந்தது.
பின்பு அவன் பரிசுத்தப்படுத்துவதற்கேற்றகடா ௨௨
டாவாகிய மற்றை ஆட்டைக் கொண்டுவர, ஆ
ரோனும் அவன்புத்திரரும் அந்தக்கடாவின்தலை
மேலே தங்கள்கைகளை வைத்தார்கள்.—மோசே ௨௩
அதைக்கொன்று அதினிரத்தத்தில் கொஞ்சமெ
டுத்து, ஆரோனுடைய வலதுகாதின் மடலிலும்,

(௩௫)யாத்.௪௰.௰௩,௰௫.(௩௭)அதி.௧.௨. (௩௮) அதி.௬.௯. அதி.௬.௰௪. அதி.௬.௨௫. வச.௧. யாத்.௨௯.௧. வச.௰௧.—(௮. அதி. ௨.) யாத்.௨௯.௧,௨,௩. யாத்.௨௮.௨,௪. யாத்.௩௰.௨௪,௨௫. (௫) யாத்.௨௯.௪. யாத்.௨௮.௩௭. (௰௨) யாத்.௨௯.௭. யாத்.௩௰.௩௰. சங்.௱௩௩.௨. (௰௩) யாத்.௨௯.௮,௯.(௰௪)யாத்.௨௯.௰. அதி.௪.௪. (௰௫) யாத்.௨௯.௰௨,௩௬. எபி.௯.௨௨. (௰௬) யாத்.௨௯.௰௩. யாத்.௨௯.௰௪. (௰௮) யாத்.௨௯.௰௫. (௨௧) யாத்.௨௯.௰௮. (௨௨) யாத்.௨௯.௰௯,௩௧.

வலதுகைப் பெருவிரலிலும், வலதுகால்பெருவி
உச ரலிலுமிட்டான்.-பின்புமோசேஆரோனுடைய
புத்திரரையும்அழைத்து,அந்த இரத்தத்தில்கொஞ்
சம்அவர்கள்வலதுகாதின்மடலிலும்,வலதுகைப்
பெருவிரலிலும், வலதுகால் பெருவிரலிலுமிட்
டான்; பின்புமோசே மற்றை இரத்தத்தைவேதி
உரு கையின்மேற் சுற்றித்தெளித்து,—நிணத்தையும்,
வாலையும், குடல்கள்மேலிருந்த நிணமுழுவதை
யும், கல்லீரலின்மேலிருந்தசவ்வையும், இரண்டு
குண்டிக்காய்களையும், அவைகளின் நிணத்தை
உசு யும்வலதுமுன்னந்தொடையையுமெடுத்து,—யெ
கோவாவின் சந்நிதியிலிருந்த புளிப்பில்லாத
அப்பக்கூடையிலுள்ள புளிப்பில்லாத அதிரசத்
தில்ஒன்றையும்,எண்ணெயிட்ட அப்பத்தில் ஒன்
றையும், ஒரு அடையையுமெடுத்து, அந்தநிணத்
தின்மேலும்முன்னந்தொடையின்மேலுமிட்டு;-
உஎ அவையெல்லாவற்றையும் ஆரோனுடைய உள்
ளங்கைகளிலும், அவனுடைய புத்திரரின் உள்
ளங்கைகளிலும் வைத்து, அசைவாட்டப்படும்
நைவேத்தியமாய் யெகோவாவின் சந்நிதியில்
உஅ அசைவாட்டினுன்.—பின்புமோசே அவைகளை
அவர்கள் உள்ளங்கைகளிலிருந்தெடுத்து வேதி
கையிலிருக்கிற தகனபலியின்மேலேதகித்தான்:
அவைகள் பரிசுத்தப்படுத்துவதற்குச் சுகந்தம்.
இதுவே யெகோவாவுக்கு அக்கினியிலிடப்
உகூ பட்டநைவேத்தியம்.—யெகோவாமோசேக்
குவிதித்தபடி பரிசுத்தப்படுத்துங் கடாவிலுள்ள
இந்தப்பங்குமோசேக்குரியது, ஆதலால்மோசே
மார்பின்கண்டத்தையெடுத்து, அசைவாட்டப்ப
டும் நைவேத்தியமாகஅதை யெகோவாவின்
ஈய சந்நிதியில்அசைவாட்டினுன்.-பின்புமோசேஅ
பிஷேகதைலத்திலும், வேதிகையின் மேலிருந்த
இரத்தத்திலுங்கொஞ்சமெடுத்து ஆரோன்மேலும்
அவனுடையவஸ்திரங்கள்மேலும் அவனுடைய
புத்திரர்மேலும்அவர்கள்வஸ்திரங்கள் மேலுந்தெ
ளித்து, இப்படிஆரோனையும், அவன்வஸ்திரங்க
ளையும்,அவன்புத்திரரையும்,அவன்புத்திரருடை
ய வஸ்திரங்களையும் பரிசுத்தப்படுத்தினுன்.
ஈக அதன்மேல் மோசே ஆரோனையும் அவன்புத்
திரரையும் நோக்கி, நீங்கள்சபையின் ஆவாசவா
சலில் அந்தமாமிசத்தை அவித்து ஆரோனும் அ
வன்புத்திரரும் புசிக்கலாமென்றுசொல்லி நான்
கட்டளையிட்டபிரகாரம் கூடையிலிருக்கிறபரி
சுத்தப்படுத்துவதற்கேதுவான அப்பத்துடன் அ
ஈஉ தைப்புசியுங்கள்.-மாமிசத்திலும், அப்பத்திலுஞ்
சேஷமானதை அக்கினியிலெரித்து விடுங்கள்.-
ஈஈ எழுநாளளவும் அவர் உங்களைப்பரிசுத்தப்படுத்
துவார்; ஆதலால் உங்களைப்பரிசுத்தப்படுத்தும்
நாள்கள்முடிவுபெறும்வரைக்கும்எழுநாளளவும்
சபையின் ஆவாசவாசலுக்கு வெளியேபோகப்
ஈச படாது.-உங்களுக்குப் பிராயச்சித்தம்பண்ணும்
பொருட்டு, இன்றுசெய்ததுபோலச் செய்யும்ப
டி யெகோவா கட்டளையிட்டார்.-ஆதலால் ஈரு
நீங்கள் எழுநாள் இரவும்பகலும் சபையின் ஆவா
சவாசலிலிருந்து யெகோவாவின்காவல்காத்
துக்கொள்ளுங்கள், இல்லாவிட்டால் சாவீர்கள்.
இப்படியேநான்கட்டளைபெற்றிருக்கிறேனென்
றுன்.—யெகோவா மோசேயைக் கொண்டு ஈசு
கட்டளையிட்டயாவையும் ஆரோனும் அவன்புத்
திரருஞ்செய்தார்கள்.

## கூ. அதிகாரம்.

க. ஆரோன் தனக்காகப் பலியிடல்:யரு. சனங்க
ளுக்காகப் பலியிடல்:உஈ.மோசேயும் ஆரோ
னும் சனங்களையாசீர்வதிக்கையில் யெகோ
வாவின்மகிமை பிரகாசித்தல்: உச.அக்கினிவா
னத்திலிருநதுவேதிகையின்மேலிறங்கல்.

பின்பு எட்டாம்நாளில் மோசே ஆரோனையும் க
அவன் புத்திரரையும், இஸரவேலின் முதியோ
ரையும், அழைத்து ஆரோனைநோக்கி,—நீபிரா உ
யச்சித்தபலிக்கு ஒருகுற்றமற்ற இளங்கன்றை
யும், தகனபலிக்கு ஒருகுற்றமற்ற ஆட்டுக்கடா
வையுந் தெரிந்து யெகோவாவின் சந்நிதி
யிற்பலியிடக்கடவாய்.—மேலும் நீ இஸரவேல் ஈ
சந்ததியாரைநோக்கி, இன்றைக்கு யெகோ
வா உங்களுக்குத்தரிசனமாவார்; ஆதலால் யெ
கோவாவின் சந்நிதியிற் பலியிடும் பொருட்
டு, நீங்கள் பிராயச்சித்தபலிக்குக் குற்றமற்ற ஒ
ரு வருஷத்துக்கன்றையும், ஆட்டுக்குட்டியை
யும்,—ஸ்தோத்திரபலிக்கு ஒருகாளையையும், ஒ ச
ரு ஆட்டுக்கடாவையும், எண்ணெயிற்பிசைந்த
நைவேத்தியத்தையுங் கொண்டுவாருங்களென்
று சொல்லென்றுன்.—அவர்கள் மோசேகட்ட ரு
ளை யிட்டவைகளைச்சபையின் ஆவாசத்துக்கு
முன்பாகக்கொண்டுவந்தார்கள். சபையார்யாவ
ருஞ்சேர்ந்து, யெகோவாவின் சந்நிதியில்
நின்றுர்கள்.-அப்பொழுது மோசே நீங்கள்செய் சு
யும்படி யெகோவா கட்டளையிட்டது இது
வே; யெகோவாவின் மகிமை உங்களுக்
குத் தோன்றுமென்றுன்;—மோசே ஆரோனை எ
நோக்கி,நீவேதிகையைச்சேர்ந்து யெகோவா
விதித்தபிரகாரம் உன் பிராயச்சித்தபலியையும்,
உன் தகனபலியையுஞ் செலுத்தி உனக்குஞ்
சனங்களுக்கும் பிராயச்சித்தஞ் செய்து, சனங்க
ளுடைய பலியையுஞ் செலுத்தி,அவர்களுக்கும்
பிராயச்சித்தஞ் செய்யக்கடவாயென்றுன்.-அப் அ
பொழுதுஆரோன் வேதிகையைச்சேர்ந்து, தனக்
குப்பிராயச்சித்த பலியாகிய கன்றைக் கொன்
றுன்.—அவன் புத்திரர் அதினிரத்தத்தை ஆரோ கூ
னிடத்திற் கொண்டுவர, அவன் தன்விரலைஅந்த
இரத்தத்தில்தோய்த்து, வேதிகையின் கொம்புக
ளின்மேல் இட்டு, மற்றை இரத்தத்தை வேதிகை
யினடியில்ஊற்றி,—பிராயச்சித்தபலியின்நிணத் ய

(உரு) யாத்.உகூ.உஉ. (உசு) யாத்.உகூ.உஈ. (உஎ) யாத்.உகூ.உச. (உஅ) யாத்.உகூ.உரு. (உகூ) யாத்.உகூ.உசு. (ஈய) யாத்.உகூ.உக. எண்.ஈ.ஈ. (ஈக) யாத்.உகூ.ஈக,ஈஉ. (ஈஉ) யாத்.உகூ.ஈச. (ஈஈ) யாத்.உகூ.ஈய,ஈரு. (ஈச) எபி.எ.யசு. (ஈரு) எண்.ஈ.எ. க இரா.உ.ஈ.—(கூ. அதி. உ.) யாத்.உகூ.க. அதி.அ.யஅ. (ஈ) யாத்.உகூ.சஈ. எஸ்றா.சு.யஎ. (சு) யாத்.உச.யசு. (எ) க.சாமு.ஈ.யச. எபி.ரு.ஈ. எபி.எ.உஎ. எபி.ரு.க. (கூ) அதி.அ.யரு. (ய) அதி.ச.அ.

தையும், குண்டிக்காய்களையும், கல்லீரலில் எடுத்
தசவ்வையும், யெகோவா மோசேக்குக்கட்ட
ளையிட்டபிரகாரம் வேதிகையின்மேல் தகித்து,—
௰௧ மாமிசத்தையும், தோலையும், பாளயத்துக்குப்பு
௰௨ றம்பே அக்கினியிலெரித்துவிட்டான்.—பின்பு
அவன் தகனபலியையுங்கொன்றான் ஆரோனின்
புத்திரர் அதினிரத்தத்தை அவனிடத்திற்கொண்
டுவர, அதை அவன் வேதிகையின்மேற்சுற்றித்தெ
௰௩ ளித்தான்.—தகனபலியின் துண்டங்களையும், த
லையையும் அவனிடத்திற் கொண்டுவந்தார்கள்.
அவன் அவைகளை வேதிகையின்மேல்தகித்தான்,-
௰௪ குடல்களையும், தொடைகளையும், கழுவி வேதி
கையிலிருந்த தகனபலியின்மேலே தகித்தான்.
௰௫ பின்பு அவன் சனங்களுடைய பலியைக்
கொண்டுவந்து, சனங்களின் பிராயச்சித்தத்துக்
கேற்ற வெள்ளாட்டுக்கடாவைக்கொன்று, முந்
௰௬ தினதைப்போல் அதைப்பலியிட்டு,—தகனபலி
யையுங்கொண்டுவந்து நியமத்தின்படி அதை
௰௭ யும் பலியிட்டு;—நைவேத்தியத்தையுங்கொண்டு
வந்து, அதில்தன்கைநிறைய அள்ளி அதைக்கா
லையில்செலுத்துந் தகனபலியுடனேகூட வேதி
௰௮ கையின்மேலேதகித்தான்.-பின்புசனங்களின் ஸ்
தோத்திரபலியாகிய காளையையும் ஆட்டுக்கடா
வையுங்கொன்றான்; ஆரோனின்புத்திரர் அதினி
ரத்தத்தை அவனிடத்திற்கொண்டுவர அவன் அ
௰௯ தைவேதிகையின்மேற் சுற்றித்தெளித்து,—காளை
யிலும், ஆட்டுக்கடாவிலும், எடுத்தநிணத்தையும்,
வால்மூட்டையையும், குடல்களைமூடியதையும்,
குண்டிக்காய்களையும், கல்லீரலின்மேலிருந்தசவ்
௨௰ வையுங் கொண்டுவந்து;—அந்தநிணத்தை மார்
புக்கண்டங்களின்மேல்வைத்தார்கள், அவன் அந்
தநிணத்தை வேதிகையின்மேலே தகித்தான்.—
௨௧ மார்புக் கண்டங்களையும், வலது முன்னந்தொ
டையையும், மோசே கட்டளையிட்டபடியே ஆ
ரோன் யெகோவாவின் சந்நிதியில் அசை
வாட்டப்படும் நைவேத்தியமாக அசைவாட்டி
௨௨ னான்.—பின்பு ஆரோன் சனங்களுக்குநேரே தன்
கையையுயர்த்தி அவர்களை ஆசீர்வதித்தான். இ
ப்படி அவன் பிராயச்சித்தபலியையும், தகனப
லியையும், ஸ்தோத்திரபலியையுஞ் செலுத்தின
பின் இறங்கினான்.
௨௩ பின்பு மோசேயும் ஆரோனும் சபையின் ஆவா
சத்திற்பிரவேசித்து, வெளியேவந்து சனங்களை
ஆசீர்வதித்தார்கள். அப்பொழுது யெகோவா
வின் மகிமைப்பிரகாசம் எல்லாச்சனங்களுக்குந்
தோன்றிற்று.
௨௪ அன்றியும் யெகோவாவின் சந்நிதியில்
நின்றும் அக்கினிதோன்றிவந்து வேதிகையின்
மேலிருந்த தகனபலியையும், நிணத்தையும்பட்
சித்தது: சனங்களெல்லாரும் அதைக்கண்டமாத்
திரத்திற் சத்தமிட்டுமுகங்குப்புற விழுந்தார்கள்.

## ௰. அதிகாரம்.

௧. விலக்கப்பட்ட அக்கினியினாலே தூபங்காட்டின நாதாபும் அபியூவும் தகனிக்கப்படல்: ௮. மதுபானவிலக்கு: ௰௨. பரிசுத்தபோசனவிதி: ௰௬. அந்தவிதியைவிலகினதினிமித்தம் ஆரோன் உத்தரம்சொல்லல்.

பின்பு ஆரோனின்புத்திரராகிய நாதாபும் அபியூ ௧
வும் தன் தன் தூபகலசங்களையெடுத்து, அவைக
ளில் அக்கினியையும், அதின்மேலே தூபவருக்
கத்தையும்போட்டு, இப்படித்தங்களுக்கு யெ
கோவா கட்டளையிடாத சாதாரண அக்கினி
யை அவர் சந்நிதியிற்கொண்டுவந்தார்கள்.—அப் ௨
பொழுது அக்கினி யெகோவாவின் சந்நிதி
யினின்றுந் தோன்றிவந்து அவர்களைப்பட்சிக்க,
அவர்கள் யெகோவாவின் சந்நிதியில் மரண
மடைந்தார்கள்.-அப்பொழுது மோசே ஆரோனை ௩
நோக்கி, யெகோவா என்னிடத்தில் வருகிற
வர்கள் மத்தியில் நான் பரிசுத்தமுள்ளவரென்று
மதிக்கப்படவும், சகலசனங்களுக்குமுன்பாக
நான் மகத்துவமுள்ளவரென்று காணப்படவும்,
வேண்டுமென்னும் இவ்வாக்கைச்சொல்லியிருக்
கிறாரென்றான். ஆரோன் பேசாமலிருந்தான்.—
பின்பு மோசே ஆரோனுடைய சிறியபிதா ஊசி ௪
யேலின் புத்திரராகிய மீஷாயேலையும் எலீத்சா
பானையும் வரவழைத்து நீங்கள்சமீபித்து வந்து,
உங்கள் சகோதரரைப் பரிசுத்த ஸ்தானத்துக்கு
முன்னின்றும்பாளயத்துக்குப்புறம்பேகொண்டு
போங்களென்றான்.—மோசேசொல்லியபடி அ ௫
வர்கள்சமீபித்துவந்து அவர்கள்தரித்திருந்த அங்
கிகளோடும் அவர்களை யெடுத்துப் பாளயத்துக்
குப்புறம்பே கொண்டுபோனார்கள்.-பின்பு மோ ௬
சே ஆரோனையும் அவன்புத்திரராகிய எலீயேசார்
இதாமார் என்பவர்களையும்நோக்கி, உங்களுக்கு
மரணம்வராமலும், சமஸ்தசபையார்மேலுங் கோ
பமூளாமலும் இருக்கவேண்டுமாகில், உங்கள்த
லைகளைத் திறந்துகொண்டு வரவும்படாது; உங்
கள்வஸ்திரங்களைக் கிழிக்கவும்படாது: உங்கள்
சகோதரராகிய இஸரவேல்குடும்பத்தார்யாவரும்
யெகோவா எரியப்பண்ணின இந்தத்தகனிப்
பினிமித்தம்புலம்புவார்களாக.—நீங்கள்சாவாதி ௭
ருக்கவேண்டுமாகில், சபையின் ஆவாசவாசலை
விட்டுப்புறப்படாதிருங்கள்: யெகோவாவின்
அபிஷேக தைலம் உங்கள்மேலிருக்கின்றதென்
றான். அவர்கள் மோசேயின்சொற்படியேசெய்
தார்கள்.

---

(௰௩) அதி.௪.௰௧. (௰௨) அதி.௮.௰௯. (௰௫) ஏசா.௫௩.௰. எபி.௨.௰௭. (௰௬) அதி.௧.௩,௰. (௰௭) யாத்.௨௯.௩௮. (௰௮) அதி.௩. (௨௰) அதி.௩.௫,௰௬. (௨௧) யாத்.௨௯.௨௪,௨௬. (௨௨) எண்.௬.௨௩. உபா.௨௧.௫. லூக்.௨௪.௫௰. (௨௩) எண்.௰௪.௰. (௨௪) ஆதி.௪.௪. நியா.௬.௨௧. ௧.இரா.௰௮.௩௮. ௨.நாளா.௭.௧. ௧.இரா.௰௮.௩௯. ௨.நாளா.௭.௩. எஸ்றா.௩.௰௧.—(௰. அதி. ௧.) அதி.௰௬.௧. எண்.௩.௩,௪. ௧.நாளா.௨௪.௨. எண்.௰௬.௰௮. யாத்.௩௰.௯. (௨) எண். ௰௬.௩௫. ௨.சாமு.௬.௭. (௩) யாத்.௰௯.௨௨. ஏசா.௫௨.௰௧. ஏசா.௪௯.௩. யோவா.௰௩.௩௧,௩௨. ௨.தெச.௧.௰. சங். ௯௯.௧. (௪) லூக்.௭.௰௨. அப்.௫.௬,௯,௰. (௬) யாத்.௩௩.௫. எண்.௬.௬,௭. உபா.௩௩.௯. எண்.௰௬.௨௨,௪௬. யோசு. ௭.௧. (௭) அதி.௨௧.௰௨. யாத்.௨௮.௪௧.

௮ பின்பு யெகோவா ஆரோனை நோக்கி,—
௯ பரிசுத்தத்துக்கும் அபரிசுத்தத்துக்கும் சுசிக்கும்
௰ அசுசிக்கும் வேற்றுமைகாட்டவும்,—யெகோ
வா மோசேயைக்கொண்டு இஸரவேல் சந்ததி
யாருக்குச்சொன்ன விதிகள் யாவையும் அவர்
களுக்குப் போதிக்கவும் வேண்டுமாதலால்,—
௰௧ நீயும் உன்னுடனேகூட உன் புத்திரருஞ்சாவா
திருக்கவேண்டுமாகில், சபையின் ஆவாசத்திற்
பிரவேசிக்கும்பொழுது, திராட்ச ரசத்தையும்
எந்தமதுவையுங் குடிக்கவேண்டாம்: இது உங்
கள் தலைமுறைதோறும் நித்திய நியமமாயிருக்
கக்கடவதென்றார்.
௰௨ மோசே ஆரோனையும் உயிரோடிருந்த அவன்
புத்திரராகிய எலீயேசார் இதாமார் என்பவர்களை
யும் நோக்கி, நீங்கள் யெகோவாவுக்கு அக்
கினியிலிடப்பட்ட நைவேத்தியங்களிற் சேஷ
மான நைவேத்தியத்தையெடுத்து, புளிப்பில்லா
தமாவுடன் வேதிகையின்சமீபத்திற் புசியுங்கள்:
௰௩ அதுமிகவும் பரிசுத்தமுள்ளது.—யெகோவா
வுக்கு அக்கினியிலிடப்படும் பலிகளுக்குள்ளே
இது உனக்கும் உன் புத்திரருக்கும் ஏற்படுத்தப்
பட்டபடியால் நீங்கள் பரிசுத்த ஸ்தானத்திலி
ருந்து புசியுங்கள்: இப்படிக் கட்டளைபெற்றி
௰௪ ருக்கிறேன்.—இஸரவேல் சந்ததியாரிடும் ஸ்தோத்
திர பலிகளில் அசைவாட்டின மார்புக்கண்ட
மும், உயர்த்தின முன்னந்தொடையும், உனக்
கும் உன்புத்திரருக்கும் ஏற்படுத்தப்பட்டபடி
யால் நீயும் உன்னுடனே உன்புத்திரரும்புத்திரி
களும் அவைகளைப் பரிசுத்தஸ்தானத்திற் புசிக்க
௰௫ வேண்டும்.—மேலும் நிணமாகிய தகனபலியுட
னேகூட அவர்கள் யெகோவாவின் சந்நிதி
யில் அசைவாட்டும் நைவேத்தியமாக உயர்த்தும்
முன்னந்தொடையையும், அசைவாட்டும் மார்
புக்கண்டத்தையுங் கொண்டுவருவார்களே: அ
வைகள் யெகோவாவிதித்தபிரகாரம் நித்திய
நியமப்படி உனக்கும் உன் புத்திரருக்கும் ஏற்ப
டுத்தப்பட்டனவென்றான்.
௰௬ பின்புபிராயச்சித்த பலியாகிய வெள்ளாட்டுக்
கடாவை மோசே குறிப்பாய்த்தேடினான்; அ
தோ தகிக்கப்பட்டிருந்தது, ஆனபடியால் உயி
ரோடிருந்த ஆரோனின் புத்திரராகிய எலீயே
சார் இதாமார் என்பவர்கள்மேல் அவன்கோபங்
௰௭ கொண்டு,—பிராயச்சித்தபலியை நீங்கள் பரிசுத்
தஸ்தானத்திலே புசியாதிருந்ததென்ன; அதுமிக
வும் பரிசுத்தமே; சபையின்பாவத்தைச் சுமந்து
தீர்ப்பதற்கு யெகோவாவின் சந்நிதியிற்பிரா
யச்சித்தம் செய்யும்பொருட்டு அது உங்களுக்
௰௮ குக்கொடுக்கப்பட்டதே, பாருங்கள்.—அதினி
ரத்தம் பரிசுத்த ஸ்தானத்துக்குள்ளே கொண்டு
வரப்படவில்லையே; நான் கட்டளையிட்டபடி
நீங்கள் அதைப்பரிசுத்தஸ்தானத்தில் எப்படியும்
புசிக்க வேண்டுமென்றான்.—அப்பொழுது ஆ ௰௯
ரோன் மோசேயைநோக்கி, கேளும், அவர்கள்தங்
கள் பிராயச்சித்தபலியையுந் தகனபலியையும்
யெகோவாவின்சந்நிதியில்செலுத்தினார்கள்;
இன்று எனக்கிப்படிநேரிட்டதே: இன்றுநான்
பிராயச்சித்தபலியைப் புசித்ததுண்டானால் அது
யெகோவாவின் பார்வையில் அங்கிகரிக்கப்
படுமா என்றான்.—மோசே அதைக்கேட்டபொ ௨௰
ழுது அமைதலாயிருந்தான்.

## ௰௧. அதிகாரம்.

க. போசனத்துக்குவிதிக்கப்பட்டதும், விலக்கப்பட்டதுமாகிய மிருகசீவன்கள்: ௯, நீர்வாழ்வன: ௰௩, பட்சிகள்: ௨௯, ஊர்வன.

யெகோவா மோசேயையும் ஆரோனையும் ௧
நோக்கி,—நீங்கள் இஸரவேல் சந்ததியாரிடத்தில் ௨
பூமியிலிருக்கிற சகலசெந்துக்களிலும் நீங்கள்
புசிக்கத்தக்க மிருகங்களுக்குள்ளே,—இரைமீட் ௩
கிறவைகளும் இருபிளவான குளம்புள்ளவைக
ளுமாகிய மிருகங்களில் கவையடிமிருகங்கள்
யாவையும்நீங்கள்புசிக்கலாம்.—இரைமீட்கிறவை ௪
களும் கவையடியுள்ளவைகளுமாகிய அவைக
ளில் ஒட்டகமானதுஇரைமீட்டாலும், அதற்கு
இரண்டுபிளவாயிருக்கிறகுளம்பில்லாதபடியால்
அது உங்களுக்கு அசுசியாயிருக்கக்கடவது.—
குழிமுயலானது இரைமீட்டாலும், அதற்கு இ ௫
ரண்டுபிளவான குளம்பில்லாதபடியால் அது
உங்களுக்கு அசுசியாயிருக்கக்கடவது.—முயலா ௬
னது இரைமீட்டாலும் அதற்கு இரண்டுபிளவா
னகுளம்பில்லாதபடியால் அது உங்களுக்கு அசு
சியாயிருக்கக்கடவது.—பன்றியினுடையகுளம் ௭
பு இருபிளவுங் கவையடியுமாயிருந்தாலும், இ
ரைமீட்காதபடியால் அது உங்களுக்கு அசுசியா
யிருக்கக்கடவது: இவைகளை நீங்கள் புசிக்க
வேண்டாம்.—இவற்றின் மாமிசத்தைப்புசியாம ௮
லும், இவற்றின் பிணங்களைத்தொடாமலுமிருப்
பீர்களாக: இவைகள் உங்களுக்குஅசுசியாயிருக்
கக்கடவன.
கடல்களும் நதிகளுமாகிய நீர்நிலைகளிலுஞ் ௯
சிறகுஞ்சிதளுமுள்ளவைகள்யாவையும் நீங்கள்
புசிக்கலாம்: நீர்வாழ்வனவாகிய இவைகளைப்பு
சிக்கலாமே.—கடல்களும் நதிகளுமாகிய நீர்நிலை ௰
களில் நீந்துகிறவைகளும் நீந்தாதவைகளுமா
யிருக்கிற பிராணிகளிற் சிறகுஞ் சிதளுமில்லா
திருக்கிறவைகளெவைகளோ அவைகள் உங்க
ளுக்கு அரோசிகமாயிருக்கக்கடவன.—உங்களுக் ௰௧
கு அரோசிகமாகவேயிருக்கவேண்டும்; அவை
களுடைய மாமிசத்தைப் புசிக்கவேண்டாம்.—
அவைகளின் பிணங்களும் அரோசிகமாயிருக்க ௰௨
வேண்டும். நீர்நிலைகளிலே சிறகுஞ் சிதளுமில்

(௯) அதி.௰௧.௪௭. எரே.௰௫.௰௯. (௰) உபா.௨௪.௮. நெகே.௮.௨,௮. மல்.௨.௭. (௰௧) எசேக்.௪௪.௨௧. லூக்.௧.௰௫. ௧.தீமோ.௩.௨. தீத்.௧.௭. (௰௨) யாத்.௨௯.௨. எண்.௰௮.௯,௰. அதி.௨௧.௨௨. (௰௪) அதி.௭.௩௧,௩௪. எண்.௰௮.௰௧. (௰௫) அதி.௭.௨௯,௩௰,௩௪. (௰௬) அதி.௯.௩,௰௫. (௰௮) அதி.௬.௩௰. அதி.௬.௨௬. (௰௯) அதி.௯.௮,௰௨. எரே.௬.௨௰. ஓசே.௯.௪. மல்.௧.௰,௰௩.—(௰௧. அதி. ௨.) உபா.௰௪.௪. அப்.௰.௰௨,௰௪. (௭) ஏசா.௬௫.௪. (௮) ஏசா.௫௨.௰௧. மத்.௰௫.௰௧,௨௰. அப்.௰.௰௪,௰௫. ரோ.௰௪.௰௪,௰௭. ௧.கொரி.௮.௮. கொலோ.௨.௰௬,௨௧. எபி.௯.௰.

லாதயாவும் உங்களுக்கு அரோசிகமாயிருக்க
வேண்டும்.
௰௩ பறவைகளில் அரோசிக்கப்படத்தக்கவைகள்
௰௪ இவைகளே,—கழுகும், கருடனும், கடலுராஞ்
௰௫ சியும்,—பருந்தும், வல்லூற்றின்இனங்களும்,—
௰௬ காகத்தின் இனங்களும், கூகையும், வலியானும்,
௰௭ செம்போத்தும்,-ஆள்காட்டியினங்களும்,ஆந்தை
௰௮ யும், சகோரப்பட்சியும், கோட்டானும்,—நீர்க்
கோழியும், நாரையும், பெரும்புள்ளும், கொக்
௰௯ கும், இராசாளியினங்களும்,-புழுக்குற்றியும்,து
ரிஞ்சிலுமாகிய இவைகளைப்புசிக்கவேண்டாம்:
௨௰ இவைகள் அரோசிகமானவைகள்.—நாலுகாலா
லே நடக்கிறவைகளும் ஊர்கிறவைகளுமாயிருக்
கிற பறவைகள்யாவும், உங்களுக்கு அரோசிகமா
யிருக்கவேண்டும்:பறவைகளில்இவைகள்அரோ
௨௧ சிக்கப்படத்தக்கவைகள்.—தரையில் தத்துகிறதற்
கு முழங்தாளின்மேலே தொடைகளுள்ளவைக
௨௨ ளிலே,—வெட்டுக்கிளியினங்களையுஞ் சேலையா
மென்னுங் கிளியினங்களையும், அர்கோலென்
னுங்கிளியினங்களையும், ஆகாபு என்னுங்கிளியி
னங்களையும், நீங்கள்புசிக்கலாம். நாலுகாலால்ந
டக்கிற பறவைகளாகிய இவைகளைநீங்கள் புசிக்
௨௩ கலாம்.-பறக்கிறவைகளில் நாலுகாலால்நடக்கிற
மற்றையாவையும்உங்களுக்கு அரோசிகமாயிருக்
௨௪ கவேண்டும்.-அவைகளாலே அசுசிப்படுவீர்கள்:
அவைகளின் பிணங்களைப் பரிசிக்கிறவனெவ
னோ,அவன்சாயங்காலபரியந்தம்அசுசிப்பட்டிரு
௨௫ ப்பான்.-அவைகளின்பிணத்தைஎடுத்துக்கொண்
டுபோனவனெவனோ அவன் தன்வஸ்திரங்களைத்
தோய்க்கக்கடவன்: அவன்சாயங்காலபரியந்தம்
௨௬ அசுசிப்பட்டிருப்பான்.—விரிதல் நகங்களுள்ள
வைகளாயிருந்தாலும், இருபிளவான குளம்பில்
லாமலும், இரைமீட்காமலுமிருக்கிறமிருகங்கள்
யாவும், உங்களுக்கு அசுசியாயிருக்கவேண்டும்:
அவைகளைப்பரிசிக்கிறவனெவனோ, அவன் அசு
௨௭ சியாவான்.—நாலுகாலால் நடக்கிற செந்துக்
கள் யாவற்றிலும் பாதமுழுவதும் பதியநடக்கிற
செந்துக்களெல்லாம்,உங்களுக்கு அசுசியாயிருக்
கவேண்டும்: அவைகளின்பிணங்களைப்பரிசிக்கி
றவனெவனோ, அவன்சாயங்காலபரியந்தம் அசு
௨௮ சிப்பட்டிருப்பான்.-அவைகளின் பிணத்தைச்சு
மந்தவன்தன்வஸ்திரங்களைத்தோய்க்கவேண்டும்;
சாயங்காலபரியந்தம் அசுசிப்பட்டிருப்பான்: இ
வைகளே உங்களுக்கு அசுசியாயிருப்பவைகள்.
௨௯ தரையில் ஊருகிற செந்துக்களில் பெருச்சா
௩௰ ளியும், எலியும்,—அரணையினங்களும், உடும்பும்,
ஓணானும், பல்லியும், நத்தையும், பச்சோந்தியுமா
கிய இவைகளே உங்களுக்கு அசுசியாயிருக்க
௩௧ வேண்டும்.—சகல ஊர்வனவற்றிலும் இவைக
ளே உங்களுக்கு அசுசியாயிருக்கவேண்டும்: அ
வைகளிற்செத்ததைப் பரிசிக்கிறவனெவனோ அ
வன் சாயங்காலபரியந்தம் அசுசியாயிருப்பான்.-
௩௨ அவைகளிலொன்றுசெத்து மற்றொன்றின்மேல்
விழுந்தால்அதுஅசுசியாயிருக்கும். அதுமரத்தாற்
செய்த எந்தப்பாத்திரமானாலும் வஸ்திரமானாலுந்
தோலானாலும் பையானாலும் வேலைசெய்கிறதற்
கேற்ற எந்த ஆயுதமானாலுஞ் சாயங்காலபரியந்
தம் அசுசியாயிருக்கும்: அது தண்ணீரிற்போட
ப்படவேண்டும், பின்பு சுத்தமாகும்.-அவைகளி ௩௩
லொன்று ஒரு மட்பாண்டத்துக்குள்ளே விழுந்
தால், அதற்குள்ளிருக்கிறயாவும் அசுசிப்படும். அ
தையும் உடைப்பீர்களாக.-புசிக்கத்தக்கபோசன ௩௪
பதார்த்தத்தின்மேல் அந்தத்தண்ணீர்பட்டால், அ
துவும்அசுசியாயிருக்கும். குடிக்கத்தக்கஎந்தப்பா
னமும் அப்படிப்பட்டபாத்திரத்திலே அசுசி
யாகும்.—அவைகளின் பிணத்திலொன்று மற் ௩௫
றொன்றின்மேல்விழுந்தால் அதுவும் அசுசியாயி
ருக்கும்; அடுப்பானாலும், மட்பானையானாலும்,
தகர்க்கப்படவேண்டும்: அவைகள் அசுசிப்பட்
டனவே; ஆகையால் அவைகள் உங்களுக்கு
அசுசியாயிருக்கக்கடவன.—மிகுந்தசலம் பொ ௩௬
ருந்தியநீரூற்றுக்கண்ணும் நீர்நிலைகளுமாத்திரஞ்
சுத்தமாயிருக்கும்:அவைகளிலுள்ளபிணங்களைப்
பரிசிக்கிறவன், அசுசியாவான்.—அவைகளின் ௩௭
பிணத்திலொன்றுவிதைக்கிறதற்கேற்ற தானியத்
தின்மேல்விழுந்தால், அது அசுசியாயிருக்கும்.—
தண்ணீர்வார்க்கப்பட்டிருக்கிற விதையின்மேல் ௩௮
விழுந்தால், அப்பொழுது அதுவுமுங்களுக்கு
அசுசியாயிருப்பதாக.—உங்களுக்கு ஆகாரத்துக் ௩௯
கான மிருகஞ்செத்தால் அதின்பிணத்தைப்பரி
சிக்கிறவன், சாயங்காலபரியந்தம் அசுசிப்பட்
டிருப்பானாக.—அதினுடலைப் புசித்தவன் தன் ௪௰
வஸ்திரங்களைத் தோய்க்கவேண்டும்; அவன்சா
யங்காலபரியந்தம் அசுசிப்பட்டிருப்பானாக. அ
தினுடலையெடுத்துக்கொண்டுபோகிறவனுந்தன்
வஸ்திரங்களைத்தோய்க்கக்கடவன்; அவனுஞ்சா
யங்காலபரியந்தம் அசுசிப்பட்டிருப்பானாக.—
தரையில் ஊருகிற எதுவும், உங்களுக்கு அரோ ௪௧
சிகமாயிருக்கவேண்டும்; அதைப்புசிக்கவேண்
டாம்.—தரையில்ஊருகிற சகலத்திலும் வயிற்றால் ௪௨
ஊருகிறயாவையும், நாலுகாலாலேநடக்கிறயா
வையும், அநேகங்கால்களுள்ளயாவையும், நீங்
கள்புசிக்கவேண்டாம்:அவைகள்அரோசிகமான
வைகள்.—அசுசியாகும்படி ஊருகிற எந்தச்செந் ௪௩
துக்களினாலும், உங்களை அரோசிகமாக்காமலும்,
அவைகளால் அசுசிப்படாமலுமிருப்பீர்களாக.-
நானேயுங்கள் தேவனாகிய யெகோவா; நா ௪௪
னே பரிசுத்தர். ஆகையால்தரையில் ஊருகிற எந்
தச் செந்துக்களினாலும், நீங்களுங்களை யசுசிப்
படுத்தாமல் உங்களைப் பரிசுத்தமாக்கிக்கொண்டு
பரிசுத்தராயிருப்பீர்களாக: நான் உங்களுக்கே
தேவனாகும்படி உங்களை எகிப்துதேசத்தினின்
றும்புறப்படச்செய்த யெகோவா.-நானேபரி ௪௫
சுத்தர்; ஆகையால் நீங்களும்பரிசுத்தராயிருப்பீர்
களாக.—சுசிக்கும், அசுசிக்கும், புசிக்கப்படத் ௪௬
தக்கசெந்துக்களுக்கும், புசிக்கப்படத்தகாதசெந்

(௨௨) மத்.௩.௪. (௩௩) அதி.௬.௨௮. (௪௰) அதி.௰௭.௰௫. (௪௪) யாத்.௰௯.௬. ௧.தெச.௪.௭. ௧.பேதுரு.௧.௰௫,௰௬. யாத்.௬.௭.

துக்களுக்கும், வேற்றுமையைக்காட்டும்படி,—
௪௭ மிருகத்துக்கும், பறவைகளுக்கும், சலத்தில் நீந்
துகிற சகலசீவசெந்துக்களுக்கும்,பூமியின்மேல்
ஊருகிற எந்தச்சீவனுக்குமேற்ற விதிஇதுவே
யென்றுசொல்லென்றார்.

## ௰௨. அதிகாரம்.

*பிரசவத்தின்பின்சுசிசெய்தலும்அக்காலத்திற்பலி
யிடுதலும்.*

பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,—
௨ நீ இஸ்ரவேல்சந்ததியாரிடத்தில் ஒருஸ்திரிகருப்
பவதியாகி ஆண்பிள்ளைபெற்றால்,அசுசியினிமித்
தம் ருதுவதியைப்போல் ஏழுநாள் அசுசியாயி
௩ ருக்கக்கடவள்.—எட்டாந்தினத்தில் அந்தப்பிள்
ளைதன் அககிரசருமத்தில் விருத்தசேதனம்பண்
௪ ணப்படவேண்டும்.—பின்பு அவள் முப்பத்து
மூன்றுநாள்வரைக்கும் உதிரசுசியினிலைமையிலி
ருப்பாளாக. சுசிக்கேற்றதினங்கள் நிறைவே
றுமளவும், எந்தப்பரிசுத்தவஸ்துவையும்பரிசிக்க
வும், பரிசுத்தஸ்தானத்திற் பிரவேசிக்கவும்வேண்
௫ டாம்.—பெண்பிள்ளையைப் பிரசவித்தால் ருது
வதியைப்போல் இரண்டுவாரம் அசுசியாயிருந்
து, பின்பு தன்னுதிரசுசியினிலைமைக்கேற்க அ
௬ றுபத்தாறு நாளிருக்கக்கடவள்.—புத்திரன்பொ
ருட்டாவது, புத்திரியின்பொருட்டாவது, அவ
ளுடைய சுசிக்கேற்றதினங்கள் நிறைந்தபின்பு
அவள் தகனபலிக்காக ஒருவருஷத்தாட்டுக்குட்
டியையும், பிராயச்சித்தபலிக்காக மாடப்புறாக்
குஞ்சுகளிலாவது, மணிப்புறாக்களிலாவது ஒன்
றையுஞ் சபையின் ஆவாசவாசலில் ஆசாரிய
௭ னிடத்துக்குக்கொண்டுவரக்கடவள்.—அதை அ
வன் யெகோவாவின் சந்நிதியில் பலியிட்டு
அவளுக்குப் பிராயச்சித்தஞ்செய்வானாக; அப்
பொழுது தன்னுதிர ஊறலின் அசுசிநீங்கிச் சுசி
யாவாள்: இதுவே புத்திரனையாகிலும் புத்திரி
யையாகிலும் பிரசவித்தவளைக்குறித்துச் சொல்
௮ லியகட்டளை.—ஆட்டுக்குட்டி கொண்டுவரமு
டியாதிருந்தால், அவளிரண்டு மணிப்புறாக்களை
யாவது இரண்டு மாடப்புறாக்குஞ்சுகளையாவது
ஒன்றைத்தகனபலியாகவும் மற்றொன்றைப் பிரா
யச்சித்தபலியாகவுங்கொண்டுவரக்கடவள்: ஆசா
ரியன் அவளுக்குப்பிராயச்சித்தம் பண்ணக்கட
வன், அப்பொழுது அவள் சுசியாவாளென்று
சொல்லென்றார்.

## ௰௩. அதிகாரம்.

*குஷ்டரோகத்தை நிர்ணயிப்பதற்குஅதன்குணங்
குறியும் அதன் விதியுங்கூறல்.*

பின்னும் யெகோவா மோசேயையும் ஆரோ
௨ னையும்நோக்கி,—ஒரு மனிதனுடைய சரீரத்தின்
மேல் குஷ்டரோகம்போலிருக்கிற ஒரு தடிப்பா
வது அசறாவது வெள்ளைப்படலமாவது உண்
டானால், அவன் ஆசாரியனாகிய ஆரோனிடத்தி
லாகிலும் ஆசாரியராகிய அவன் புத்திரரிலொ
ருவனிடத்திலாகிலுங் கொண்டுவரப்படக்கட
வன்.—அப்பொழுது ஆசாரியன் அவன் சரீரத் ௩
தின்மேலிருக்கிற வியாதியைப் பார்க்கவேண்
டும். வியாதியிருக்குமிடத்தில் மயிர்வெளுத்தி
ருந்தாலும், வியாதியாயிருக்கிற இடம் அவனு
டைய மற்றைச்சரீரத்தோலிலும் அதிக பள்ள
மாய்க் காணப்பட்டாலும், அது குஷ்டரோக
மென்றறிந்து அவனைப்பார்த்தஆசாரியன் அவன்
அசுசியுள்ளவனென்று தீர்க்கக்கடவன்.—அவ ௪
னுடைய சரீரத்தின்மேல் வெள்ளைப்படலமிருந்
தாலும்,அவ்விடம் அவனுடைய மற்றைத்தோலி
லும்அதிகபள்ளமாயிராமலும், அதின்மயிர்வெள்
ளையாகாமலுமிருந்தால், ஆசாரியனவனைஏழுநா
ளடைத்துவைப்பானாக,—ஏழாம்நாளிலே அவ ௫
னைப்பார்த்து, தன்பார்வைக்குத்தோலிலே வியா
தி அதிகப்படாமல் நிற்கக்கண்டால்,ஆசாரியன்
அவனை இரண்டாந்தரமும் ஏழுநாளடைத்து
வைக்கவேண்டும்:—இரண்டாந்தரம் ஏழாம்நா ௬
ளில்அவனைப்பார்த்து, தோலில் வியாதி அதிகப்
படாமல்சுருங்கியிருக்கக்கண்டால்,அவனைச்சுத்
தமுள்ளவனென்று ஆசாரியன் தீர்க்கக்கடவன்:
அது அசறு: அவன்தன்வஸ்திரங்களைத்தோய்த்துச்
சுசியாயிருப்பானாக.—தன்னைச்சுசியுள்ளவனென் ௭
றுதீர்மானம்பண்ணுகிறதற்குஅவன்தன்னை ஆசா
ரியனுக்குக் காண்பித்தபின்பு அசறு தோலிலே
மேன்மேலும் அதிகப்பட்டிருந்தால், அவன் தி
ரும்பவும் ஆசாரியனுக்குத் தன்னைக்காண்பிக்க
வேண்டும்.—அப்பொழுது அசறு தோலிலே அ ௮
திகரித்ததென்று ஆசாரியன்கண்டால், அவனை
அசுசியுள்ளவனென்று தீர்க்கக்கடவன்: அது
குஷ்டரோகம்.—குஷ்டரோகம் ஒரு மனிதனுக் ௯
கிருந்தால், ஆசாரியனிடத்திற்குக்கொண்டுவரப்
படவேண்டும்.—அப்பொழுது ஆசாரியன் அவ ௰
னைப்பார்த்துத் தோலிலே வெண்மையான தடிப்
பிருக்கவும் அது மயிரை வெண்மையாக மாறப்
பண்ணவும், அந்தத்தடிப்புள்ள இடத்தில் தசை
வெளிப்பட்டிருக்கவுங்கண்டால், அது அவனு
டைய சரீரத்திலுள்ள நெடுநாளைக்குஷ்டம்.—
அவன் அசுசியுள்ளவன்; ஆதலால் ஆசாரியன் அ ௰௧
வனையடைத்துவையாமல், அசுசியுள்ளவனென்
று தீர்க்கக்கடவன்.—ஆசாரியன்பார்க்கிற இடங் ௰௨
களெங்கும் தோலிலே குஷ்டந்தோன்றி அவ்வி
யாதியுள்ளவனுடைய தலைதொடங்கிக் கால்மட்
டும் முழுத்தோலையும்மூடிக்கொண்டிருக்கக்கண்
டால்,—குஷ்டம் அவனுடைய சரீரமுழுவதை ௰௩
யும் மூடிக்கொண்டிருக்கிறபடியினால், ஆசாரி
யன் அவனைச்சுத்தமுள்ளவனென்று தீர்க்கக்கட
வன்: அவனுடம்பெல்லாம் வெண்மையாய் மா
றிப்போனபடியால் அவன் சுத்தமுள்ளவன்.—
மாமிசமும் வெளிப்பட்டதாக அவனிற்காணப் ௰௪
பட்டால் அவன் அசுசியுள்ளவன்.—ஆதலால் ௰௫

(௪௭) அதி.௰.௯.—(௰௨. அதி. ௨.) லூக்.௨.௨௨. (௩) ஆதி.௰௭.௰௨. லூக்.௧.௫௯. லூக்.௨.௨௧. யோவா.௭.௨௨,௨௩. (௬) லூக்.௨.௨௨.(௮) அதி.௫.௭. லூக்.௨.௨௪. அதி.௪.௨௬.—(௰௩. அதி. ௨.) உபா.௰௭.௮,௯. லூக்.௰௭.௰௪.(௰) ௨.இரா.௫.௨௭. ௨.நாளா.௨௬.௨௰.

வெளிப்பட்ட அந்த மாமிசத்தை ஆசாரியன் கா
ணும்பொழுது, அவனை அசுசியுள்ளவனென்று
தீர்க்கக்கடவன்: வெளிப்பட்டமாமிசம் அசுசி
௰௬ யுள்ளது: அது குஷ்டம்.—அல்லது வெளிப்பட்
டமாமிசம் மாறி வெண்மையாய்ப்போனால், அ
௰௭ வன் ஆசாரியனிடத்துக்குவரவேண்டும்.—ஆசா
ரியன் அவனைப்பார்த்து வியாதியுள்ள இடம்
வெண்மையாக மாறினதென்று கண்டால், அவ
னைச் சுசியுள்ளவனென்று தீர்க்கக்கடவன்: அ
௰௮ வன் சுசியுள்ளவன்.—அன்றியுஞ்சரீரத்தில் பரு
௰௯ உண்டாகிச்சொஸ்தமாய்ப்போனபின்பு,—அவ்
விடத்தில் ஒரு வெள்ளைத்தடிப்பாவது, சிவப்புக்
கலந்த வெள்ளைப்படலமாவது உண்டானால், ஆ
௨௰ சாரியனுக்குக்காண்பிக்கவேண்டும்.—ஆசாரியன்
அதைப்பார்த்து, அவ்விடம் மற்றைத்தோலிலுந்
தாழ்ந்திருக்கவும் அதினுடையமயிர் வெண்மை
யாய் மாறியிருக்கவுங்கண்டால், ஆசாரியன் அவ
னை அசுசியுள்ளவனென்றுதீர்க்கவேண்டும்: அது
௨௧ பருவிலெழும்பினகுஷ்டம்.—ஆசாரியன் அதைப்
பார்த்து அதிலேமயிர்வெள்ளையாகாமலும் அவ்வி
டம் மற்றைத்தோலிலுங்குழிந்திராமலுஞ் சுருங்
கியிருக்கின்றதென்று கண்டானேயாகில், அவ
௨௨ னை ஏழுநாளடைத்து வைக்கவேண்டும்:—அது
தோலில் மேன்மேலும் பெருகியிருக்கக் கண்
டால், அவனை அசுசியுள்ளவனென்று தீர்க்கக்
௨௩ கடவன்: அது குஷ்டரோகம்.—அந்த வெள்
ளைப்படலம் அதிகப்படாமல், அது அவ்வளவில்
நின்றதாகில் அது பருவின் தழும்பாயிருக்கும்;
ஆகையால் ஆசாரியன் அவனைச் சுசியுள்ளவ
௨௪ னென்று தீர்க்கக்கடவன்.—ஒருவனுடைய சரீ
ரத்தின்மேலே நெருப்புப்பட்டதினாலே வெந்
து அந்தவேக்காடு ஆறிப்போனவிடத்தில் சிவப்
பான அல்லது வெண்மையான படலமுண்டா
௨௫ னால்,—ஆசாரியன் அதைப் பார்க்கக்கடவன்;
அந்தப்படலத்தில் மயிர்நிறம் மாறி வெண்மை
யாயிருக்கவும் அவ்விடத்துத்தோல் மற்றைத்தோ
லிலுங் குழிந்திருக்கவுங்கண்டால், அது சூட்
டினாலெழும்பினகுஷ்டம், ஆகையால் ஆசாரியன்
அவனை அசுசியுள்ளவனென்று தீர்க்கக்கடவன்:
௨௬ அதுகுஷ்டரோகம்.-ஆசாரியன்அதைப்பார்க்கிற
பொழுது, படலத்தில் வெள்ளைமயிரில்லையென்
றும் அது மற்றைத்தோலிலுங்குழிந்திராமற்சுருங்
கியிருக்கிறதென்றுங்கண்டானேயாகில், அவனை
௨௭ ஏழுநாளடைத்துவைக்கவேண்டும்.—ஏழாம் நா
ளில் அவனைப்பார்த்து அது தோலிலே மேன்மே
லும் பெருகியிருக்கக்கண்டால், ஆசாரியன் அவ
னை அசுசியுள்ளவனென்று தீர்க்கக்கடவன்: அது
௨௮ குஷ்டரோகம்.—படலமானது தோலிலேபெரு
காமல் அவ்வளவில்நின்று சற்றே கருமைகொண்
டிருக்கக்கண்டால், அது சூட்டினாலுண்டான
தழும்பு. ஆதலால் ஆசாரியன் அவனைச்சுசியுள்
ளவனென்று தீர்க்கக்கடவன்: அது சூட்டினால்
௨௯ வந்த வேக்காடு.—ஒரு புருஷனுக்காகிலும் ஸ்தி
ரிக்காகிலுந்தலையிலாவது, தாடியிலாவது ஒருவி
௩௰ யாதியுண்டானால்,—ஆசாரியன் அதைப்பார்த்து

அவ்விடம் மற்றைத்தோலிலும் பள்ளமாயிருக்க
வும் அதில்மயிர் பொன்னிறமும் மென்மையுமா
யிருக்கவுங்கண்டால், ஆசாரியன் அவர்களையசு
சியுள்ளவர்களென்று தீர்க்கக்கடவன்: அது தலை
யிலுந் தாடியிலுமுண்டாகிற சொறிக்குஷ்டம்.—
ஆசாரியன் அந்தச்சொறிக்குஷ்டத்தைப்பார்க்கி ௩௧
றபொழுது, அவ்விடம் மற்றைத்தோலிலும்பள்ள
மாய்த்தோன்றாமலும் அதிலேகறுத்தமயிரில்லாம
லுமிருக்கக்கண்டால், ஆசாரியன் அவனை ஏழு
நாள் அடைத்துவைக்கவேண்டும்;—ஏழாம்நாளில் ௩௨
ஆசாரியன் அந்த வியாதியைப்பார்க்கக்கடவன்;
அந்தச்சொறியதிகரியாமலும், அதில் பொன்னிற
மயிரில்லாமலும் அவ்விடம் மற்றைத்தோலிலும்
அதிகபள்ளமில்லாமலுமிருக்கக் கண்டால்,—அந் ௩௩
தச் சொறியுள்ளஇடந்தவிர மற்றையாவையும் அ
வன்சிரைத்துக்கொள்ளக்கடவன்; பின்பு ஆசாரி
யனிரண்டாந்தரம் அவனை ஏழுநாளடைத்துவை
த்து;—ஏழாம்நாளில் ஆசாரியன் அதைப்பார்க்கிற ௩௪
பொழுதுசொறிதோலில்அதிகரியாமலும் அவ்வி
டம் மற்றைத்தோலிலும் பள்ளமில்லாமலுமிருக்
கக்கண்டால், ஆசாரியன் அவனைச்சுசியுள்ளவ
னென்றுதீர்க்கக்கடவன்: அவன் தன்வஸ்திரங்க
ளைத்தோய்த்தபின்பு சுசியுள்ளவனாயிருப்பான்.—
இப்படி அவன் சுசியுள்ளவனானபின்பு அந்தச் ௩௫
சொறிதோலிலே மேன்மேலும் பெருகினால்,—
ஆசாரியன் அவனைப்பார்க்கக்கடவன்; சொறி ௩௬
தோலில் அதிகப்பட்டிருக்கக்கண்டால், அப்
பொழுது மயிர் பொன்னிறமா அல்லவாவென்
று ஆசாரியன்விசாரியாமல் அவன் அசுசியுள்
ளவனென்று தீர்ப்பானாக.—அவனுடைய பார் ௩௭
வைக்கு அந்தச்சொறிநீங்கியிருக்கவும் அதில் க
றுத்தமயிர் முளைத்திருக்கவுங்கண்டால், சொறி
சொஸ்தமாயிற்றென்றும், அவன் சுசியுள்ளவ
னென்றும், ஆசாரியன் அறிந்து அவனைச்சுசியுள்
ளவனென்று தீர்க்கக்கடவன்.—ஒரு புருஷனுக் ௩௮
காகிலும் ஸ்திரிக்காகிலும் சரீரத்தின்மேல்வெண்
மையான புள்ளிகளுண்டாயிருந்தால்,—ஆசாரி ௩௯
யன்பார்க்கக்கடவன்; அவர்களுடைய சரீரத்
தின்மேலே சற்றேவெண்மைகுன்றிய புள்ளிக
ளிருந்தால், அவைதோலிலெழும்புகிறவெள்ளைத்
தேமல்: அவர்கள் சுசியுள்ளவர்கள்.—ஒருவனு ௪௰
டைய தலைமயிர் அற்றால், அவன் மொட்டை
யன்: அவன் சுத்தமுள்ளவன்.—அவனுடைய ௪௧
முன்னந்தலைமயிர் அற்றால் அவன் அரைமொட்
டையன்: அவனுஞ் சுத்தமுள்ளவன்.—மொட் ௪௨
டைத்தலையிலாவது அரைமொட்டைத்தலையிலா
வதுசிவப்புக்கலந்த வெண்மையானபடலமுண்
டானால்அது அவற்றிலேயெழும்புகிறகுஷ்டம்.—
ஆசாரியன் அவனைப்பார்க்கிறபொழுது அவனு ௪௩
டைய மொட்டைத்தலையிலாவது அரைமொட்
டைத்தலையிலாவதுமற்ற அங்கங்களின்மேலுண்
டாகுங் குஷ்டத்தைப்போலச் சிவப்புக் கலந்த
வெண்மையான வீக்கமிருக்கக்கண்டால்,—அவ ௪௪
ன் குஷ்டரோகி அவன்அசுசியுள்ளவன். ஆசாரி
யன் அவனை அசுசியுள்ளவனென்றேதீர்க்கக்கட

வன்: அந்தவியாதி அவனுடையதலையிலுள்ளது.-
சரு அந்தக் குஷ்டரோகத்தையடைந்தவனுடையவ
ஸ்திரங்கள் கிழித்துப்போடப்படவும்; அவனு
டையதலைதிறந்திருக்கவும்; அவன் தன்தாடியை
மூடிக்கொண்டிருக்கவும் "அசுசி அசுசி" என்று
சசு சத்தமிடவும்வேண்டும்.—அந்த வியாதி அவனி
டத்திலிருக்கும் நாள்வரைக்கும் அசுசியுள்ளவ
னக எண்ணப்படக்கடவன்: அவன் அசுசியுள்
ளவன்; ஆகையால் தனியே குடியிருக்கக்கட
வன், அவனுடைய வாசஸ்தானம் பாளயத்துக்
சஎ குப்புறம்பேயிருக்கவேண்டும்.—ஆட்டு மயிராலா
ன வஸ்திரத்திலாவது, சணல்நூலினலான வஸ்
சஅ திரத்திலாவது,—சணல்நூலும் ஆட்டு மயிருஞ்
சேர்ந்தபாவிலாவது, உண்டைநூலிலாவது, ஒரு
தோலிலாவது, தோலினற்செய்த பதார்த்தத்தி
லாவது, குஷ்டமாசு உண்டாகுங் காலத்தில்,—
சகூ வஸ்திரத்திலாவது, தோலிலாவது, பாவிலாவது,
உண்டைநூலிலாவது, தோலினற்செய்த பதார்த்
தத்திலாவது, மாசுகொஞ்சம் பச்சையாய், அல்ல
துசிவப்பாய்த்தோன்றினல்,அதுகுஷ்டம்: அதை
ரு௰ ஆசாரியனுக்குக் காண்பிக்கவேண்டும்.—ஆசாரி
யன் அதைப்பார்த்து ஏழுநாளடைத்துவைக்க
ருக வேண்டும்,—ஏழாம்நாளிலே அதைப்பார்க்கும்
பொழுது வஸ்திரத்திலாவது, பாவிலாவது, உண்
டைநூலிலாவது, தோலிலாவது,தோலினற்செய்
த பதார்த்தத்திலாவது, அது அதிகப்பட்டிருக்கக்
கண்டால், அது அரிகுஷ்டம்: அது அசுசியுள்ள
ருஉ து.—அந்தமாசு இருக்கிற ஆட்டு மயிரையாவது,
சணல்நூலாற்செய்த வஸ்திரத்தையாவது பாவை
யாவது, உண்டைநூலையாவது, தோலினற்செய்
த பதார்த்தத்தையாவது, எரிக்கக்கடவன்: அது
அரிக்கிற குஷ்டம் ஆகையால் அக்கினியினற்
ருங சுட்டெரிக்கப்படவேண்டும்.—வஸ்திரத்திலாவ
து, பாவிலாவது, உண்டைநூலிலாவது, தோலி
னற்செய்த பதார்த்தத்திலாவது, அந்தமாசு அதி
கப்படவில்லையென்று ஆசாரியன் கண்டால்,—
ருச அப்பொழுது ஆசாரியன் வியாதியையுடைய
பொருளைக்கழுவச்சொல்லிஇரண்டாந்தரம் ஏழு
ருரு நாளடைத்துவைப்பானக;—அது கழுவப்பட்ட
பின்பு அதைப்பார்க்கக்கடவன். அந்தமாசுமாரு
மலும் அதிகப்படாமலுமிருக்கக்கண்டால், அது
அசுசியுள்ளது; அக்கினியினல் அதைச் சுட்டெ
ரிக்கவேண்டும்; அது அவ்வஸ்திரத்தினுடைய
உட்புறத்திலும்,வெளிப்புறத்திலும் உருவ அரிக்
ருசு கும்.—கழுவப்பட்டபின்பு அதுகுறுகிற்றென்
று ஆசாரியன்கண்டானேயாகில், அதை வஸ்தி
ரத்திலாவது,தோலிலாவது, பாவிலாவது, உண்
டை நூலிலாவது, இராதபடிக்கு எடுத்துப்போ
ருஎ டவேண்டும்.—அதன் பின்னும் வஸ்திரத்திலா
வது, பாவிலாவது, உண்டைநூலிலாவது, தோ
லினற் செய்தபதார்த்தத்திலாவது, காணப்பட்
டால், அதுபெருகுகிறது: அது அக்கினியினற்
சுட்டெரிக்கப்படவேண்டும்.—வஸ்திரமாவது, ருஅ
பாவாவது,உண்டைநூலாவது,தோற்பதார்த்தமா
வது, கழுவப்பட்டபின்பு அந்தமாசு அதைவிட்
டுப்போனதானல் இரண்டாந்தரங் கழுவப்பட
வேண்டும்; அப்பொழுது சுத்தமாயிருக்கும்.—
ஆட்டுமயிராலாகிலும் சணல்நூலாலாகிலும் நெய் ருகூ
தவஸ்திரத்தையாவது, பாவையாவது, உண்டை
நூலையாவது, தோற்பதார்த்தத்தையாவது, சுசியா
கவாகிலும், அசுசியாகவாகிலுந்தீர்க்கிறதற்கு,அ
தினுடைய குஷ்டவியாதிக்கேற்ற விதியிதுவே
யென்றார்.

## ௰ச. அதிகாரம்.

க. குஷ்டத்தைச்சுசிசெய்வதற்கு விதியும் பிராயச்
சித்தமும்: ஙங. வீட்டுக்குஷ்டத்தின் குறி நிண
ணயம்: சஅ. வீட்டுக்குஷ்டத்தைச் சுசிசெய்வ
தற்கு விதியும் பிராயச்சித்தமும்.

பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,— க
குஷ்டரோகியின் விதியாவது: அவன் சுசியா உ
கும்படி ஆசாரியனிடத்திற்கொண்டுவரப்படுந்தி
னத்தில்,—ஆசாரியன் பாளயத்திற்குப்புறம்பே ங
போய்க்குஷ்டரோகியுடையகுஷ்டவியாதிசொ
ஸ்தமாயிற்றென்று கண்டால்,—சுசியாகும்படி ச
வந்த அவனுக்காக உயிரோடிருக்குஞ் சுசியான
இரண்டு குருவிகளையும், ஏரஸ் கட்டையையும்,
சிவப்புநூலையும், ஈசோப்பையும் வாங்கிவரக்
கட்டளையிடக்கடவன்.—பின்பு ஆசாரியன் அந் ரு
தக்குருவிகளிலொன்றை ஒரு மட்பாண்டத்தி
லுள்ள ஊற்றுநீரின்மேலே கொல்லச்சொல்லி,—
உயிருள்ளகுருவியையும்,ஏரஸ் கட்டையையும், சு
சிவப்புநூலையும்,ஈசோப்பையுமெடுத்துக்கொண்
டு, அவைகளையும் உயிருள்ள குருவியையும்ஊற்
று நீரின்மேலேகொல்லப்பட்ட குருவியினிரத்
தத்தில்தொய்த்து,—குஷ்டம் நீங்கச்சுசிசெய்யப் எ
படுபவன்மேல் ஏழுதரந்தெளித்து, இப்படி அ
வனைச் சுசிசெய்துபின்பு உயிருள்ள குருவியை
வெளியிலே விட்டுவிடக் கடவன்.—சுசிசெய் அ
யப்படுகிறவன் தன் வஸ்திரங்களைத்தோய்த்துத்
தன் மயிர்முழுவதையுஞ்சிரைத்துத் தான்சுசியா
கும்படி, சலத்தில் ஸ்நானம்பண்ணிப் பின்பு பா
ளயத்திற்பிரவேசித்துத்தன் கூடாரத்துக்குப்புறம்
பே ஏழுநாள்தங்கி,—ஏழாம்நாளிலே தன்தலை கூ
யையுந்தாடியையும் புருவங்களையுந் தன்னுடை
யமற்ற மயிர்யாவையுஞ்சிரைத்து,தன்வஸ்திரங்க
ளைத்தோய்த்து சலத்தில் ஸ்நானம்பண்ணவேண்
டும்: அப்பொழுது சுசியாவான்.—எட்டாம் நா ௰
ளில் அவன் குற்றமற்ற இரண்டு ஆட்டுக்குட்
டிகளையுங், குற்றமற்ற ஒருவருஷத்துப் பெண்
ணாட்டுக் குட்டியையும், நைவேத்தியத்திற்கு எ
ண்ணெயிற்பிசைந்த ஒரு ஏபாவில்பத்தில்மூன்று
பங்குமாவையும், ஒருலோக் கெண்ணெயையுங்
கொண்டுவரக்கடவன்.—சுத்திசெய்கிற ஆசாரி ௰க
யன் சுத்திகரிக்கப்படும் மனிதனை அவைகளு

(சரு) எசேக்.உச.௰எ,உஉ. மீகா.ங.எ. புல.ச.௰ரு. (சசு) உ.இரா எ.ங. உ.இரா.௰ரு.ரு. லூக்.௰எ.௰உ. (ருக) அதி.௰ச.சச.—(௰ச. அதி. உ.) லூக்.ரு.௰உ,௰ச. லூக்.௰எ.௰ச. (ச) எபி.கூ.௰கூ. சங்.ருக.எ. (எ) எபி.கூ.௰ங. உ.இரா.ரு.௰,௰ச. (௰) மத்.அ.ச. மாற்.க.சச.

டன் சபையின் ஆவாசவாசலில் யெகோவா
௰௨ வின் சந்நிதியில்விட்டு,-பின்பு ஆசாரியன் ஒரு
ஆட்டுக்குட்டியைப்பிடித்து அதையும், அந்த ஒரு
லோக்கெண்ணெயையும், குற்றநிவிர்த்திக்காகக்
கொண்டுவந்து யெகோவாவின்சந்நிதியில் அ
சைவாட்டப்படும் நைவேத்தியமாக அசைவாட்
௰௩ டி,—பரிசுத்தஸ்தானத்தில்பிராயச்சித்தபலிக்கும்
தகனபலிக்கும் ஏற்றவைகளைக் கொல்லுமிடத்
தில் அந்த ஆட்டுக்குட்டியைக்கொல்லக்கடவன்;
குற்ற நிவிர்த்திபலி பிராயச்சித்தபலியைப்போல்
ஆசாரியனுக்குரித்தாகும்: அது மிகவும் பரிசுத்
௰௪ தமுள்ளது.—அன்றியும் அந்தக் குற்றநிவிர்த்திப
லியினிரத்தத்தில் கொஞ்சத்தை ஆசாரியனெடுத்
துச் சுசிசெய்யப்படுகிறவனுடைய வலதுகாதின்
மடலிலும், அவனுடைய வலதுகையின்பெருவி
ரலின்மேலும், வலதுகாலின்பெருவிரலின்மேலு
௰௫ மிட்டு,—பின்பு அந்த ஒருலோக்கெண்ணெயில்
கொஞ்சந் தன்னிடது உள்ளங்கையில்வார்த்து,-
௰௬ தன்னிடதுகையிலுள்ள அந்த எண்ணெயில் தன்
வலதுகையின்விரலைத்தோய்த்துத் தன்விரலினால்
ஏழுதரம் அந்த எண்ணெயிலெடுத்து யெகோ
௰௭ வாவின் சந்நிதியிலேதெளித்து,—தன்னுள்ளங்
கையிலிருக்கிற எண்ணெயிற் சேஷத்தைச் சு
சிசெய்யப்படுபவனுடைய வலதுகாதின்மடலி
லும், அவனுடைய வலதுகையின் பெருவிரலி
லும்வலதுகாலின்பெருவிரலிலும்,குற்றநிவிர்த்தி
௰௮ பலியினிரத்தத்தின் மேலிட்டு,-தன்னுள்ளங்கை
யில்மிஞ்சின எண்ணெயைச் சுசிசெய்யப்படுப
வனுடைய தலையில்வார்க்கக்கடவன்: இப்படி
ஆசாரியன் யெகோவாவின் சந்நிதியில் அவ
௰௯ னுக்குப்பிராயச்சித்தஞ் செய்யவேண்டும்.-ஆசா
ரியன் பிராயச்சித்தபலியையுஞ் செலுத்திச்சுசி
செய்யப்படுபவனுடைய அசுசிநீங்க அவனுக்
குப்பிராயச்சித்தஞ்செய்து;பின்புதகனபலியைக்
௨௰ கொல்லவேண்டும்,—ஆசாரியன் தகனபலியை
யும் நைவேத்தியத்தையும், வேதிகையின்மேல்
ஏற்றக்கடவன்: இப்படி ஆசாரியன் அவனுக்குப்
பிராயச்சித்தஞ் செய்யவேண்டும்: அப்பொழுது
௨௧ அவன் சுசியாவான்.—அவன் இப்படிச்செய்யத்
திராணியில்லாமல் தரித்திரனாயிருந்தால், அவன்
தனக்குப் பிராயச்சித்தஞ் செய்யும்படி அசை
வாட்டப்படும்பொருட்டு, குற்றநிவிர்த்தி பலிக்
கு ஒரு ஆட்டுக்குட்டியையும், நைவேத்தியத்துக்
கு எண்ணெயிற் பிசைந்தமாவிற் பத்திலொரு
பங்கையும், ஒரு லோக்கெண்ணெயையும், தன்
௨௨ திராணிக்குத் தக்கபடி,—மணிப்புறாக்களிலாவ
து, மாடப் புறாக்களிலாவது, ஒன்று பாவபி
ராயச்சித்தபலிக்கும், மற்றொன்று தகனபலிக்கு
௨௩ மாக, இரண்டையும்வாங்கி,—தன்னைச்சுசிசெய்
யும்பொருட்டு எட்டாம் நாளில்சபையின் ஆவா
சவாசலில் யெகோவாவின் சந்நிதியில் ஆசா
௨௪ ரியனிடத்துக்குக்கொண்டுவரவேண்டும்.—அப்
பொழுது ஆசாரியன் குற்றநிவிர்த்தி பலிக்குரிய
ஆட்டுக் குட்டியையும் அந்த ஒரு லோக்கெண்
ணெயையும்வாங்கி, யெகோவாவின் சந்நிதி
யிற் அசைவாட்டி,-குற்றநிவிர்த்திபலிக்கான அந் ௨௫
த ஆட்டுக்குட்டியைக்கொன்று குற்றநிவிர்த்திப
லியினிரத்தத்திற் கொஞ்சமெடுத்துச்சுசிசெய்யப்
படுபவனுடைய வலதுகாதின்மடலிலும், வல
துகையின் பெருவிரல்மேலும், வலதுகாலின்பெ
ருவிரல்மேலுமிட்டு,-அந்த எண்ணெயிற்கொஞ் ௨௬
சம் தன்னிடதுகையில்வார்த்து,-தன்னிடதுகை ௨௭
யில் வார்க்கப்பட்ட அந்த எண்ணெயில் தனது
வலதுவிரலைத்தோய்த்து, யெகோவாவின் சந்
நிதியில் ஏழுதரந்தெளித்து;—தன்னுள்ளங்கையி ௨௮
லிருக்கிற எண்ணெயிற்கொஞ்சத்தைச் சுசிசெய்
யப்படுபவனுடைய வலதுகாதின்மடலிலும், வ
லதுகையின் பெருவிரல்மேலும், வலதுகாலின்
பெருவிரல்மேலும், குற்றநிவிர்த்திபலியினிரத்த
மிட்டிருக்கிற இடத்திலிட்டு,-தன்னுள்ளங்கை ௨௯
யிலிருக்கிற மிஞ்சின எண்ணெயைச் சுசிசெய்
யப்படுபவனுடைய தலையின்மேலே யெகோ
வாவின் சந்நிதியில் அவனுக்குப்பிராயச்சித்தஞ்
செய்யும்படி தடவி,—பின்பு அவன் தன் திரா ௩௰
ணிக்குத்தக்கபடி மணிப்புறாக்களையாகிலும், மா
டப் புறாக்குஞ்சுகளையாகிலுங் கொண்டுவந்து,—
அவைகளிலொன்றைப்பிராயச்சித்தபலியும், மற் ௩௧
றதைத்தகனபலியுமாக்கி நைவேத்தியத்துடனே
செலுத்தக்கடவன்: இப்படியே ஆசாரியன் சுசி
செய்யப்படுபவனுக்கு யெகோவாவின்சந்நி
தியில் பிராயச்சித்தம் பண்ணவேண்டும்.—இது ௩௨
வே தன்னைச் சுசிசெய்வதற்கு வேண்டியவைக
ளைச் சம்பாதிக்கமுடியாத குஷ்டரோகியைக்கு
றித்த விதியென்றார்.

பின்னும் யெகோவா மோசேயையும் ஆ ௩௩
ரோனையும் நோக்கி,—நானுங்களுக்குச் சுதந்தர ௩௪
மாயளித்தகானான்தேசத்திலே நீங்கள்சேர்ந்தபின்
பு நானுங்கள் சுதந்தரமான அந்தத்தேசத்தில் ஒரு
வீட்டில்குஷ்டவாதையை வரப்பண்ணினால்,—
அந்தவீட்டையுடையவன்வந்து வீட்டில்வாதை ௩௫
வந்திருக்கிறதாக எனக்குத்தோன்றுகின்றதென்
று ஆசாரியனுக்கு அறிவிக்கக்கடவன்.-அப்பொ ௩௬
ழுது வீட்டிலுள்ளயாவும் அசுசியாகாதபடிக்கு ஆ
சாரியன் அந்தவாதையைப்பார்க்கப்போகுமுன்
னே வீட்டை ஆயத்தப்படுத்தும்படி சொல்லிப்
பின்பு வீட்டைப்பார்க்கும்படிபோய்,-அந்தவா ௩௭
தையிருக்கிற இடத்தைப்பார்க்கும்பொழுது வீட்
டின் சுவர்களிலே கொஞ்சம் பச்சையுங் கொஞ்
சஞ்சிவப்புமுள்ள குழிகளிருக்கவும், அவைகள்
மற்றச்சுவரைப்பார்க்கிலும் அதிக பள்ளமாயிருக்
கவுங் கண்டால்,—ஆசாரியன் வீட்டைவிட்டு ௩௮
வாசற்படியினின்றும் புறப்பட்டு வீட்டை ஏழு
நாள்பூட்டிவைத்து,—ஏழாம்நாளிலே திரும்பிப் ௩௯
போய்ப்பார்த்து வாதைவீட்டின் சுவர்களிலதி

(௰௨) அதி.௫.௨,௰௮. யாத்.௨௯.௨௪. (௰௩) யாத்.௨௯.௰௧. அதி.௭.௬. அதி.௨௧.௨௨. (௰௪) யாத்.௨௯.௨௰. (௰௮) அதி.௪.௨௬. (௰௯) அதி.௰௨.௭. (௨௧) அதி.௰௨ ௮. (௨௨) அதி.௰௫.௰௪,௰௫. (௩௰) அதி.௰௫.௰௫. (௩௪) ஆதி.௰௭. ௮. உபா.௩௨.௪௯. (௩௫) சங்.௯௧.௰.

௪௰ கப்பட்டதென்றுகண்டால்,—அவன் அந்த வா
தையுள்ள கற்களைப்பேர்க்கவும், பட்டணத்துக்
குப்புறம்பே அசுசியான ஒரு இடத்திற்போட
௪௧ வுங் கட்டளையிட்டு,—வீட்டினுள்ளே சுற்றிச்
௪௨ செதுக்கச்சொல்லி,—செதுக்கினமண்ணைப்பட்
டணத்துக்குப் புறம்பே அசுசியானஒரு இடத்
தில் கொட்டவும், வேறுகற்களை யெடுத்துவந்து,
அந்தக் கற்களுக்குப் பிரதியாக வைத்து, வேறு
சாந்தையெடுத்து, வீட்டைப்பூசவுங் கட்டளையி
௪௩ டுவானாக.—கற்களைப்பேர்த்து வீட்டைச்செதுக்
கி நவமாய்ப் பூசினபின்பு அந்தவாதை திரும்ப
௪௪ வீட்டில்வந்ததாகில்,—ஆசாரியன்போய்ப்பார்க்
கக்கடவன்; வாதை வீட்டிலே யதிகப்பட்டதா
னால் அது வீட்டைஅரிக்கிறகுஷ்டம்; அது அசு
௪௫ சியாயிருக்கும்.—ஆகையால் வீடுமுழுவதையுமி
டித்து, அதினுடைய கற்களையும், மரங்களையும்,
சாந்தெல்லா வற்றையும், பட்டணத்துக்குப்பு
றம்பே அசுசியானஇடத்திலே கொண்டுபோக
௪௬ வேண்டும்.—வீடு பூட்டப்பட்டிருந்தநாள்களில்
ஒருநாளிலே அதிற்பிரவேசிக்கிறவன், சாயங்கா
௪௭ லபரியந்தம் அசுசிப்பட்டிருப்பான்.-அந்த வீட்
டிலே படுத்தவன் தன் வஸ்திரங்களைத்தோய்க்க
வேண்டும். அந்த வீட்டிலே புசித்தவனும் தன்
வஸ்திரங்களைத்தோய்க்கவேண்டும்.
௪௮ ஆசாரியன் திரும்பிவந்து வீடுபூசப்பட்டபின்
பு அந்தவாதை அதிகப்படவில்லையென்று கண்
டானேயாகில், வியாதி நிவிர்த்தியானபடியினா
லே ஆசாரியன் அந்தவீட்டைச்சுசியுள்ளதென்று
௪௯ தீர்க்கக்கடவன்.—அல்லாமலும் வீட்டைச்சுசி
செய்வதற்கு இரண்டுகுருவிகளையும், எரஸ்கட்
டையையும், சிவப்புநூலையும், ஈசோப்பையும்
௫௰ வாங்கி,—ஒரு குருவியை ஒருமட்பாண்டத்தி
௫௧ லுள்ள ஊற்று நீரின்மேல்கொன்று,—எரஸ்கட்
டையையும், உயிருள்ள குருவியையும், சிவப்
புநூலையும், ஈசோப்பையுமெடுத்து அவைகளைக்
கொல்லப்பட்ட குருவியினிரத்தத்திலும், ஊற்
றுநீரிலுந்தோய்த்து, வீட்டின்மேல் ஏழுதரந்தெ
௫௨ ளித்து;—இப்படிக் குருவியி னிரத்தத்தினாலும்,
ஊற்று நீரினாலும், உயிருள்ள குருவியினாலும்,
எரஸ்கட்டையினாலும், ஈசோப்பினாலும், சிவப்
புநூலினாலும், வீட்டைச்சுசிசெய்யவேண்டும்.-
௫௩ உயிருள்ள குருவியைப்பட்டணத்துக்குப் புறம்
பே வெளியிலே விட்டுவிடக்கடவன்; இப்படி
யே அவன் வீட்டுக்குப்பிராயச்சித்தஞ் செய்ய
வேண்டும்: அப்பொழுது அது சுசியாகும்.—
௫௪ இதுவே சகலவித குஷ்டரோகத்துக்கும், சொ
௫௫ றிக்கும்,—வஸ்திரத்தின் குஷ்டத்துக்கும், வீட்
௫௬ டுக்குஷ்டத்துக்கும்,-தடிப்புக்கும், அசறுக்கும்,
௫௭ வெள்ளைப்படலத்துக்குமேற்றவிதி.—இன்னகா
லத்திலேஅசுசியென்றும், இன்னகாலத்திலேசுசி
யென்றுந்தெரிவிப்பதற்குக்குஷ்டரோகப்பிரமா
ணமிதுவேயென்றார்.

## ௰௫. அதிகாரம்.

௧. மேகசுசிவிதி: ௰௯. ருதுவதியின்சுசிவிதி.

பின்னும் யெகோவா மோசேயையும் ஆரோ ௧
னையும் நோக்கி,—நீங்கள் இஸரவேல்சந்ததியா ௨
ருடனே, ஒருவனுக்கு மேகரோகமிருக்கக்கண்
டால், அவன் தன்மேகரோகத்தினாலே அசுசியா
வான்.-அவனிடத்தில்மேகம்ஊறினாலும்,அவனு ௩
டையமேகம் அடைக்கப்பட்டிருந்தாலும், அதி
னால் அவனுக்கு அசுசியுண்டாயிருக்கும்.-மேக ௪
ரோகமுள்ளவன்படுக்கும் எந்தப்படுக்கையும் அ
சுசியாகும்; அவனிருக்கும்எந்த ஆசனமும் அசு
சியாகும்.-அவனுடைய படுக்கையைப்பரிசிக்கி ௫
றவன்தன்வஸ்திரங்களைத்தோய்த்து,சலத்திலேஸ்
நானம்பண்ணவேண்டும்: சாயங்காலபரியந்தம்
அவன் அசுசியாயிருப்பான்.-மேகரோகியிருந்த ௬
ஆசனத்திலிருப்பவன் தன்வஸ்திரங்களைத்தோய்
த்து, சலத்திலே ஸ்நானம்பண்ணவேண்டும்: சா
யங்காலபரியந்தம் அவன் அசுசியாயிருப்பான்.-
மேகரோகியுடைய சரீரத்தைப்பரிசிக்கிறவன், ௭
தன்வஸ்திரங்களைத் தோய்த்து, சலத்தில் ஸ்நா
னம் பண்ணவேண்டும்; சாயங்காலபரியந்தம்
அவன் அசுசியாயிருப்பான்.—சுசியாயிருக்கிற ௮
ஒருவன்மேல் இவன்துப்பினால் அவன் தன்வஸ்
திரங்களைத் தோய்த்துத் தானுஞ்சலத்தில் ஸ்நா
னம்பண்ணவேண்டும்; சாயங்காலபரியந்தம் அ
வன் அசுசியாயிருப்பான்.—மேகரோகி ஏறும் ௯
எந்தச்சேணமும் அசுசியாயிருக்கும்.—அவனுக் ௰
குக்கீழிருந்தவைகளில் எதையாகிலும் பரிசிக்கி
றவன், சாயங்கால பரியந்தம் அசுசியாயிருப்
பான். அதை யெடுத்துக்கொண்டுபோகிறவன்
தன் வஸ்திரங்களைத்தோய்த்து,சலத்தில்ஸ்நானம்
பண்ணவேண்டும்; சாயங்காலபரியந்தம் அவன்
அசுசியாயிருப்பான்.-மேகரோகி தன்கைகளைத் ௰௧
தண்ணீரினாலே கழுவாமல் ஒருவனைப் பரிசித்
தால், பரிசிக்கப்பட்டவன் தன்வஸ்திரங்களைத்
தோய்த்து சலத்திலேஸ்நானம்பண்ணவேண்டும்;
சாயங்காலபரியந்தம் அவன் அசுசியாயிருப்
பான்.-மேகரோகிபரிசித்தமட்பாண்டம்உடைக் ௰௨
கப்படவும், மரப்பாண்டமெல்லாந் தண்ணீரினா
லேகழுவப்படவும்வேண்டும்.—மேகரோகி தன் ௰௩
மேகரோகம் நீங்கச்சுசியானபின்பு தன்சுசியினி
மித்தம் எழுநாளெண்ணிக்கொண்டிருந்து, தன்
வஸ்திரங்களைத்தோய்த்து, ஊற்றுச்சலத்தில்ஸ்நா
னம்பண்ணக்கடவன், அப்பொழுது அவன் சுசி
யாவான்.—எட்டாம்நாளிலே அவன் இரண்டு ௰௪
மணிப்புறாக்களையாகிலும், இரண்டுமாடப்புறாக்
குஞ்சுகளையாகிலுஞ்சபையின் ஆவாசவாசலிலே
யெகோவாவின் சந்நிதியில்கொண்டுவந்து,
ஆசாரியனிடத்திற் கொடுக்க;—ஆசாரியன் அ ௰௫
வைகளிலொன்றைப் பிராயச்சித்தபலியும், மற்
றதைத் தகனபலியுமாயிடக்கடவன்: இப்படி

---

(௪௪) ௪௧.௫.௪. (௫௭) உபா.௨௪.௮. எசேக்.௪௪.௨௩.—(௰௫. அதி. ௨.) அதி.௨௨.௪. ௨.சாமு.௩.௨௯. லூக்.௮.௪௩.
(௫) அதி.௰௭.௰௫. (௰௨) அதி.௰௧.௩௨,௩௩. (௰௩) அதி.௰௪.௮. (௰௪) அதி.௰௪.௨௨,௨௩. (௰௫) அதி.௰௪.௩௰,௩௧.
அதி.௰௪.௰௯,௩௧.

ஆசாரியன் யெகோவாவின் சந்நிதியில் மே
கரோகிக்குப்பிராயச்சித்தஞ் செய்யவேண்டும்.—
௰௬ வீரியம் ஒருவனிலிருந்து கழிந்ததுண்டானால்,
அவன்சலத்திலே சர்வாங்க ஸ்நானம்பண்ண
வேண்டும்; சாயங்காலபரியந்தம் அவன் அசுசி
௰௭ யாயிருப்பான்.—கழிந்தவீரியம் ஒருவஸ்திரத்தி
லாகிலும், ஒரு தோலிலாகிலும்பட்டால், அவை
கள் சலத்தில் கழுவப்படவேண்டும்: சாயங்கால
௰௮ பரியந்தம் அவைகள் அசுசியாயிருக்கும்.—வீரி
யங்கழிந்தவனுடன்ஸ்திரியானவள்சயனித்தால்,
இருவருஞ் சலத்தில்ஸ்நானம்பண்ணவேண்டும்;
சாயங்காலபரியந்தம் அவர்கள் அசுசியாயிருப்
பார்கள்.
௰௯ உருதுவதியானஸ்திரிதன்சரீரத்தின்ஊறலினி
மித்தம் ஏழுநாளளவும் அசுசியாயிருப்பாள்: அவ
ளைப்பரிசிக்கிறவனெவனோ அவன் சாயங்கால
௨௰ பரியந்தம் அசுசியாயிருப்பான்.—அவள் அசுசி
யாயிருக்கையில் அவள்படுத்த எந்தப்படுக்கை
யும் அவளிருந்த எந்த ஆசனமும் அசுசியாயி
௨௧ ருக்கும்.-அவளுடைய படுக்கையைப் பரிசிக்கி
றவனெவனோ அவன்தன்வஸ்திரங்களைத்தோய்த்
து, சலத்திலே ஸ்நானம்பண்ணக்கடவன்; சா
யங்காலபரியந்தம் அவன் அசுசியாயிருப்பான்.-
௨௨ அவளிருந்த ஆசனத்தைப் பரிசிக்கிறவனெவ
னோ அவன் தன்வஸ்திரங்களைத்தோய்த்து, சலத்
திலே ஸ்நானம்பண்ணவேண்டும், சாயங்கால
௨௩ பரியந்தம் அவன் அசுசியாயிருப்பான்.—அவ
ளுடைய படுக்கையின்மேலாகிலும் அவளுடை
ய ஆசனத்தின்மேலாகிலும், இருந்த யாதொன்
றைப்பரிசித்தவன் சாயங்காலபரியந்தம் அசுசி
௨௪ யாயிருப்பான்.—ருதுவதியானஸ்திரியுடன் படுத்
தும், அவளால்தீண்டப்பட்டுமிருக்கிற எந்தப்
புருஷனும்ஏழுநாள்அசுசியாயிருப்பான்;அவன்
௨௫ படுக்கும் படுக்கையும் அசுசியாகும்.—ருதுவதி
யினிரத்தம் அவள் அசுசிகாலத்தின்பின்னும்வெ
குநாளைக்கு ஊறினாலும் அசுசிதினத்துக்கப்பால்
தங்காவிட்டாலும், அவளுடைய அசௌசதின
மெல்லாம் அவளுடைய அசுசிகாலம்போலிருக்
௨௬ கும்: அவள் அசுசியாவாள்.—அந்தநாள்களெல்
லாம் அவள்படுக்கும் படுக்கைமுழுவதும் அவ
ளுடைய அசுசிகாலத்துப் படுக்கைபோலவேயி
ருக்கும்; அவளுடைய ஆசனமும் அவளுடைய
அசுசிகாலத்தின் ஆசனம்போலவே அசுசியாயி
௨௭ ருக்கும்.-அப்படிப்பட்டவைகளைப்பரிசிக்கிறவ
னெவனோ அவன் தன்வஸ்திரங்களைத்தோய்த்
து, சலத்தில் ஸ்நானம்பண்ணவேண்டும்; சாயங்
காலபரியந்தம் அவன் அசுசியாயிருப்பான்.—
௨௮ அவள் தன் ருதுநீங்கிச்சுசியானபொழுது,அவள்
ஏழுநாளை எண்ணிக்கொள்வாளாக: பின்பு சுசி
௨௯ யாவாள்.—எட்டாம் நாளிலே அவளிரண்டு ம
ணிப்புறாக்களையாகிலும், இரண்டு மாடப்புறாக்
குஞ்சுகளையாகிலும்,சபையின்ஆவாசவாசலிலே
ஆசாரியனிடத்திற் கொண்டுவரக்கடவள்.—ஆசா ௩௰
ரியன் அவைகளிலொன்றை பிராயச்சித்தப்பலி
யும், மற்றதைத்தகனபலியுமாக இடவேண்டும்.
ஆசாரியன் யெகோவாவின் சந்நிதியில் அவ
ளுடைய இரத்தவூறலின் ஆசூசத்தினிமித்தம் அ
வளுக்குப்பிராயச்சித்தஞ்செய்யக்கடவனென்று
சொல்லுங்கள்.—இஸரவேல் சந்ததியார் தங்கள் ௩௧
மத்தியிலிருக்கும் என் ஆவாசத்தை அசுசிப்படுத்
தித்தங்கள் அசுசியினாலே சாவாதிருக்கும்படி,
நீங்கள் அவர்களைஅவர்கள் அசுசிக்கு விலக்கக்க
டவீர்கள்.—மேகரோகிக்கும், வீரியங் கழிந்தி ௩௨
னால் அசுசியானவனுக்கும்,—ருதுவதியானஸ்தி ௩௩
ரிக்கும்,பிரமேகமுள்ள ஸ்திரிபுருஷர்களுக்கும்,
அசுசியானவளுடனே சயனித்தவனுக்குமேற்ற
கட்டளை இதுவேயென்றார்.

## ௰௬. அதிகாரம்.

௧. பிரதான ஆசாரியன் பரிசுத்த ஸ்தானத்திற்பிர
வேசிக்கும் விதி: ௰௧. ஆசாரியனதுபிராயச்சித்
தபலி:௰௫. சனங்களின்பிராயச்சித்தபலி: ௨௰.
தியாகம்பண்ணப்பட்ட வெள்ளாட்டுக்கடாய்
பலி: ௨௯. வருஷாந்தரபலி.

ஆரோனுடைய புத்திரரிருவர் யெகோவா ௧
வின்சந்நிதியிற்சமீபித்துமரித்தபின்பு யெகோ
வா மோசேயுடனேபேசினார்.—யெகோவா ௨
மோசேயைநோக்கி, நான் கிருபாசயத்துக்கு மே
லாய் ஒருமேகத்தில் தரிசனமாவேன், ஆதலால்
உன்சகோதரனாகியஆரோன்சாவாதிருக்கவேண்
டில்பரிசுத்தஸ்தானத்தில்,திரைச்சீலைக்குட்புறத்
திலிருக்கும் பெட்டியின்மேலுள்ள கிருபாசயத்
துக்குமுன்பாக எப்பொழுதும் வரப்படாது.—ஆ ௩
ரோன் பிராயச்சித்தபலிக்கு ஒரு இளங்காளை
யையும், தகனபலிக்கு ஒரு ஆட்டுக்கடாவை
யுங்கொண்டு, பரிசுத்த ஸ்தானத்திற் பிரவேசிக்க
வேண்டும்.—அவன்பரிசுத்தமான சணல்நூற்சட் ௪
டையைப்போட்டு, தன்னரைக்குச் சணல்நூற்
சல்லடத்தையிட்டு, சணல் நூற்கச்சைக்கட்டி,
சணல்நூற் பாகையைப்போட்டுக்கொண்டிருக்
கவேண்டும்: அவைகள் பரிசுத்த வஸ்திரங்கள்;
ஆதலால் அவன் சலத்திலே ஸ்நானம்பண்ணி
அவைகளைத் தரித்துக்கொள்ளவேண்டும்.—இஸ ௫
ரவேல்சந்ததியாராகிய சபையாரிடத்திலே பிரா
யச்சித்தபலிக்கு இரண்டு வெள்ளாட்டுக்கடாக்
களையும், தகனபலிக்கு ஒரு ஆட்டுக்கடாவை
யும் வாங்கக்கடவன்.—பின்பு ஆரோன் தனக் ௬
குந் தன் குடும்பத்தாருக்கும்பிராயச்சித்தஞ்செய்
யும்பொருட்டு, தன் பிராயச்சித்த பலிக்கான
தன் காளையைப் பலியிடவேண்டும்.—அந்த இ ௭
ரண்டுவெள்ளாட்டுக்கடாக்களையும், சபையின்
ஆவாசவாசலில் யெகோவாவின் சந்நிதியி
லே கொண்டுவரவேண்டும்.—அப்பொழுது ஆ ௮

(௰௬) உபா.௨௩.௰. (௰௮) ௧.சாமு.௨௧.௪. (௰௯) அதி.௰௨.௨. (௨௪) அதி.௨௰.௰௮. (௨௫) மத்.௯.௨௰. லூக்.௮.௪௩. (௩௧) உபா.௨௪.௮. எசேக்.௪௪.௨௩.—(௰௬. அதி. ௧.) அதி.௰.௧,௨. (௨) யாத்.௩௰.௰ எபி.௯.௭. எபி.௰.௰௯. யாத். ௪௰.௩௪. ௧.இரா.௮.௰,௰௧,௰௨. (௩) எபி.௯.௭,௰௨,௨௪,௨௫. (௪) யாத்.௨௮.௩௯,௪௨,௪௩. யாத்.௩௰.௨௰. (௫) எண். ௨௯.௰௧ ௨.நாளா.௨௯.௨௧ எஸ்ரு.௬.௰௭. (௬) எபி.௫.௨. எபி.௭.௨௭,௨௮. எபி.௯.௭.

ரோன் அவ்விரண்டு வெள்ளாட்டுக் கடாக்களை
யுங்குறித்து யெகோவாவுக்கென்று ஒரு சீட்
டும், போகவிடப்படும் ஆடென்று ஒருசீட்டும்,
௯ போடக்கடவன்.—பின்பு ஆரோன் யெகோ
வாவின்சீட்டுவிழுந்த வெள்ளாட்டுக்கடாவைக்
கொண்டுவந்து பிராயச்சித்தத்துக்குப் பலியிடக்
௰ கடவன்.—போகவிடப்படுங் கடாவென்னுஞ்
சீட்டுவிழுந்த கடாவை அதைக்கொண்டு பிரா
யச்சித்தஞ்செய்யவும், போகவிடப்படுங் கடா
வாக வனத்திலே விட்டுவிடவும், யெகோவா
வின் சந்நிதியில் உயிரோடே விடவேண்டும்.
௰௧ பின்பு ஆரோன்தனக்குந் தன் குடும்பத்தாருக்
கும் பிராயச்சித்தஞ்செய்யும்படி தன்பிராயச்சித்
தபலிக்கேற்ற காளையைக்கொண்டுவந்து தனது
பிராயச்சித்தபலிக்கான அந்தக்காளையைக்கொல்
௰௨ லவேண்டும்.—யெகோவாவின் சந்நிதியிலி
ருக்கும் வேதிகையிலெரியும் நெருப்புத்தணல்
களினாலே தன்தூபகலசத்தைநிறைத்து, தூளாக்
கப்பட்ட சுகந்ததூபவர்க்கத்தில் தன்கைநிறைய
௰௩ அள்ளி, திரைக்குள்ளேகொண்டுவந்து,—தான்
சாகாதிருக்கும்படி தூபமேகம் சாட்சிப்பத்திரத்
தின்மேலிருக்குங் கிருபாசயத்தை மூடத்தக்கதா
க, யெகோவாவின் சந்நிதியில் அக்கினியின்
௰௪ மேல் தூபவருக்கத்தைப்போடக்கடவன்.—அப்
பால் காளையினிரத்தத்தில் கொஞ்சமெடுத்துத்
தன்விரலினாற் கிருபாசயத்தின்மேல் கிழக்குப்
புறத்திலே தெளித்து அந்த இரத்தத்திற்கொஞ்
சங் கிருபாசயத்துக்குமுன் ஏழுதரம் தன் விரலி
னால் தெளிக்கவேண்டும்.
௰௫ மேலும் சனங்களுடைய பிராயச்சித்தபலிக்
கேற்றவெள்ளாட்டுக்கடாவை அவன் கொன்று,
அதினிரத்தத்தைத் திரைக்குள்ளே கொண்டுவந்
து, காளையினிரத்தத்தைத்தெளித்ததுபோல், அதி
னிரத்தத்தையுங் கிருபாசயத்துமேலும் அதற்கு
௰௬ முன்னுந்தெளிக்கக்கடவன்.—இஸரவேல் சந்த
தியாருடைய அசுசிகளின்நிமித்தமும், அவர்க
ளுடையபாவமாகிய சகலமீறுதல்களின் நிமித்த
மும், பரிசுத்த ஸ்தானத்துக்குப்பிராயச்சித்தஞ்
செய்து, அவர்களிடத்தில்அவர்களுடைய அசுசி
களுக்குள்ளேதங்கும்சபையின் ஆவாசத்துக்கும்,
௰௭ அப்படியே செய்யக்கடவன்.—பிராயச்சித்தஞ்
செய்யும்படி அவன் பரிசுத்த ஸ்தானத்திற்பிர
வேசித்துத்தனக்கும், தன்குடும்பத்துக்கும்,இஸர
வேல்சபையார்யாவருக்கும்பிராயச்சித்தஞ்செய்
துகொண்டுவெளியேவருமளவும்சபையின்ஆவா
௰௮ சத்தில் ஒருவருமிருக்கலாகாது.—பின்பு அவன்
யெகோவாவின் சந்நிதியிலிருக்கும் வேதி
கையைச் சமீபித்து, அதற்கும் பிராயச்சித்தஞ்
செய்து, காளையினிரத்தத்திலும் வெள்ளாட்டுக்க
டாவினிரத்தத்திலுங்கொஞ்சமெடுத்து வேதிகை
யின்கொம்புகளின்மேல்சுற்றிலுமிட்டு,—அந்தஇ ௰௯
ரத்தத்திலே தன்விரலினாலெடுத்து ஏழுதரம அ
தின்மேலேதெளித்து, அதை இஸரவேல்சந்ததி
யாருடைய அசுசிகள் நீங்கச்சுசிசெய்துபரிசுத்
தப்படுத்தக்கடவன்.
அவனிப்படிப்பரிசுத்தஸ்தானத்துக்கும்,சபை ௨௰
யின் ஆவாசத்துக்கும், வேதிகைக்கும், பிராயச்
சித்தஞ்செய்து முடிந்தபின்பு, உயிரோடிருக்கிற
வெள்ளாட்டுக் கடாவைக் கொண்டுவரக் கட
வன்.—அதின் தலையின்மேல் ஆரோன் தன்னி ௨௧
ரண்டுகைகளையும்வைத்து, அதற்குமேலாய் இஸ
ரவேல்சந்ததியாரின் சகலதீமைகளையும், அவர்க
ளுடைய சகல பாவமாகிய அதிக்கிரமங்கள் யா
வையும், விவரித்துச்சொல்லி, அவைகளை வெள்
ளாட்டுக்கடாவினுடைய தலையின்மேல்சுமத்தி,
அதைத்தகுந்த ஒரு ஆளின்வசமாய் வனத்துக்கு
அனுப்பிவிடக்கடவன்.—அந்தவெள்ளாட்டுக்க ௨௨
டா அவர்களுடைய சமஸ்தபாவங்களையுஞ்சுமந்
துகொண்டு குடியில்லாத தேசத்துக்குப்போக
வேண்டும். அவன் அந்த வெள்ளாட்டுக்கடா
வை வனத்திலே போகவிடக்கடவன்.—மேலும் ௨௩
ஆரோன் சபையின் ஆவாசத்தில்வந்து தான் பரி
சுத்தஸ்தானத்திற்பிரவேசிக்கும்பொழுது உடுத்தி
யிருந்த சணல்நூல்வஸ்திரங்களைக்களைந்து, அங்
கேவைத்துவிட்டு,—பரிசுத்தஸ்தானத்திலே சலத் ௨௪
தில் ஸ்நானம்பண்ணி, வஸ்திரங்களையுடுத்துக்
கொண்டு வெளியேவந்து, தன்னுடைய தகனப
லியையும், சனங்களுடைய தகனபலியையுமிட்
டுத் தனக்குஞ் சனங்களுக்கும் பிராயச்சித்தஞ்
செய்து;—பிராயச்சித்தபலியினிணத்தை வேதி ௨௫
கையின்மேலே தகிக்கக்கடவன்.—போகவிடப் ௨௬
படும் ஆடாகிய கடாவைக்கொண்டுபோய் விட்
டவன் தன் வஸ்திரங்களைத்தோய்த்து, சலத்
திலே ஸ்நானம்பண்ணினபின்பு பாளயத்திற்
பிரவேசிக்கலாம்.—பரிசுத்தஸ்தானத்திற் பிரா ௨௭
யச்சித்தஞ்செய்யும்படி கொண்டுவரப்பட்ட இ
ரத்தஞ்சிந்தின பிராயச்சித்தக்காளையையும், பிரா
யச்சித்த ஆட்டுக்கடாவையும், பாளயத்துக்குப்
புறம்பேகொண்டுபோய்அவைகளின்தோல்களை
யும், மாமிசத்தையும், சாணியையும் அக்கினியி
னாற்சுட்டெரிக்கக்கடவர்கள்.—அவைகளைச்சுட் ௨௮
டெரித்தவன் தன்வஸ்திரங்களைத்தோய்த்து,சலத்
திலே ஸ்நானம்பண்ணியபின்பு பாளயத்திற்பிர
வேசிக்கலாம்.
ஏழாம்மாதம் பத்தாந்தினத்தில் சுதேசியானு ௨௯
லும், உங்களுக்குள் தங்கும் பரதேசியானாலும்,
உங்கள் ஆத்துமத்தைத்துக்கப்படுத்துவதேயன்றி,
யாதொருவேலையுஞ்செய்யவேண்டாம்: இதுவே

(௰) ௧.யோவா.௨.௨. (௰௨) அதி.௰.௧. எண்.௰௬.௰௮,௪௬. வெளி.௮.௫. யாத்.௩௰.௩௪. (௰௩) யாத்.௩௰.௧,௭,௮. எண்.௰௬.௭,௰௮,௪௬. வெளி.௮.௩,௪. யாத்.௨௫.௨௧. (௰௪) எபி.௯.௰௩,௨௫. எபி.௰.௪. (௰௫) எபி.௨.௰௭. எபி.௫.௨. எபி.௯.௭,௨௮. எபி.௬.௰௯. எபி.௯.௩,௭,௰௨. (௰௬) எபி.௯.௨௨,௨௩. (௰௭) யாத்.௩௪.௩. லூக்.௧.௰. (௰௮) யாத்.௩௰.௰. எபி.௯.௨௨,௨௩. (௰௯) எசேக்.௪௩.௨௰. (௨௰) எசேக்.௪௫.௨௰. (௨௧) ஏசா.௫௩.௬. (௨௨) ஏசா.௫௩.௰௧,௰௨. யோவா.௧.௨௯. எபி.௯.௨௮. ௧.பேதுரு.௨.௨௪. (௨௩) எசேக்.௪௨.௰௪. (௨௭) எபி.௰௩.௰௧. (௨௯) யாத்.௩௰.௰. எண்.௨௯.௭. ஏசா.௫௮.௩,௫. தானி.௰.௩,௰௨.

௩௰ உங்களுக்கு நித்தியநியமம்.—யெகோவாவின்
சந்நிதியில் உங்கள் பாவங்களெல்லாம் நீங்கிச்
சுத்தியாகும்படி அத்தினத்திலே உங்களைச்சுத்தி
செய்யும்பொருட்டு யெகோவாவின் சந்நிதி
யில் ஆசாரியன் உங்களுக்குப் பிராயச்சித்தஞ்
௩௧ செய்வான்.—நீங்கள் ஓய்ந்திருப்பதற்கு, அது
உங்களுக்கு ஓய்வுநாள், நித்தியநியமப்படி அதி
லுங்கள் ஆத்துமத்தைத்துக்கப்படுத்தவேண்டும்.—
௩௨ தன்பிதாவுக்குப்பின் ஆசாரியத்தொண்டு செய்
யும்படி, அபிஷேகம் பெற்றுப் பரிசுத்தமாக்கப்
பட்ட ஆசாரியனே, பிராயச்சித்தஞ்செய்யக்கட
வன். அவன்பரிசுத்தவஸ்திரங்களாகிய சணல்
௩௩ நூல்வஸ்திரங்களை உடுத்துக்கொண்டு,—பரிசுத்த
ஸ்தானத்துக்கும், சபையின் ஆவாசத்துக்கும்,
வேதிகைக்கும், பிராயச்சித்தஞ்செய்வதுமன்றி,
ஆசாரியனுக்கும், சபையாகிய சமஸ்தசனங்க
ளுக்கும், பிராயச்சித்தமுஞ்செய்யக்கடவன்.—
௩௪ இப்படி வருஷத்தில்ஒருதரம் இஸரவேல்சந்ததி
யாருடைய சமஸ்தபாவங்களுக்கும் பிராயச்சித்
தஞ்செய்வது உங்களுக்கு நித்தியநியமமாயிருக்
கக்கடவதென்று ஆரோனுக்குச்சொல்லென்றார்:
யெகோவா மோசேக்குக் கட்டளையிட்டபடி
யே அவன் செய்தான்.

## ௰௭. அதிகாரம்.

௧. பலியிடுவதெல்லாவற்றையும் ஆவாசவாசலிற் பலியிடும்படிவிதித்தல்: பிசாசுகளுக்குப்பலியிடாதபடி விலக்கல்: ௰. இரத்தபானஞ் செய்யலாகாதென விலக்கல்: ௰௫. இயல்பாயிறந்தனவும் மறுமிருகங்களாற்பீறுண்டிறந்தனவுமாகிய மிருகங்களைப்புசியாதபடி விலக்கல்.

௨ யெகோவா மோசேயுடனே,—நீ ஆரோனை
யும் அவன் புத்திரரையும் இஸரவேல் சந்ததியா
௩ ரனைவரையும் நோக்கி,—இஸரவேல்குடும்பத்தா
ரில் எவனாகிலும் மாட்டையாவதுசெம்மறியாட்
டையாவது வெள்ளாட்டையாவது யெகோ
வாவின் ஆவாசத்துக்கு முன்பாக யெகோ
வாவுக்குப்பலியிடும்படிசபையின் ஆவாசவாச
௪ லிற்கொண்டுவராமல்,—பாளயத்துக்குள்ளேயா
வதுபாளயத்துக்குப் புறம்பேயாவதுகொன்றால்,
அது அந்த மனிதனுக்கு இரத்தப்பழியாக எண்
ணப்படும்: அவன் இரத்தஞ்சிந்தினதினால், தன்
௫ சனங்களினின்றுஞ் சேதிக்கப்படுவான்.—ஆகை
யால் இஸரவேல் சந்ததியார்வெளியிலே தாங்க
ளிடும் பலிகளைச் சபையின் ஆவாச வாசலிலே
யெகோவாவின் சந்நிதியில் ஆசாரியனிடத்
திற் கொண்டுவந்து, அவைகளை யெகோவா
வுக்கு ஸ்தோத்திரபலிகளா யிடக்கடவர்கள்.—
ஆசாரியன் சபையின் ஆவாசவாசலிலிருக்கிற ௬
யெகோவாவின் வேதிகையில் இரத்தத்தைத்
தெளித்து,-நிணத்தை யெகோவாவுக்குச்சுகந் ௭
தமாகத்தகிக்கக்கடவன். தாங்கள்விபசாரமார்க்க
மாய்ப்பின்பற்றின பிசாசுகளுக்குத்தங்கள்பலிக
ளை இனிச்செலுத்தாதிருப்பார்களாக. இது அவர்
கள் தலைமுறைதோறும் அவர்களுக்குநித்தியகட்
டளையா யிருக்கக்கடவது: இப்படி யெகோ
வா கட்டளையிட்டிருக்கிறாரென்றுசொல்லு.
மேலும் அவர்களுடனே, இஸரவேல் சந்ததி ௮
யாரிலும் உங்களுக்குள்தங்கும் பரதேசிகளிலும்
தகனமுதலான பலிகளையிடும் எவனாகிலும்,—
அவைகளை யெகோவாவுக்குச் செலுத்தும் ௯
படிசபையின் ஆவாசவாசலிற் கொண்டுவராதி
ருந்தால், அவன் தன் சனங்களினின்றுஞ் சே
திக்கப்படுவான்.
சரீரசீவன் இரத்தத்திலிருக்கின்றது. வேதிகை ௰
யின்மேல் உங்கள் ஆத்துமத்திற்குப் பிராயச்சித்
தஞ்செய்யும்படி, அதை உங்களுக்குக் கொடுத்
தேன்: ஆத்துமத்திற்குப்பிராயச்சித்தஞ்செய்வது
இரத்தமே.—ஆதலால் உங்களில் ஒருவரும் இரத் ௰௧
தத்தைப் புசிக்கலாகாதென்றும், உங்களுக்குள்
தங்கும்பரதேசிகளும் இரத்தத்தைப் புசிக்கலாகா
தென்றும் இஸரவேல் சந்ததியாருக்குச்சொன்
னேன்.—இஸரவேல் சந்ததியாரிலும் உங்களுக் ௰௨
குள் தங்கும்பரதேசிகளிலும் எவனும் எந்த இரத்
தத்தையாகிலும் புசித்தால், இரத்தத்தைப்புசித்த
அவனுக்கு நான் பராமுகமாகி, அவன் சனங்
களினின்றும் அவனைச் சேதிப்பேன்.—எந்தச் ௰௩
செந்துவின் சீவனும், அதினிரத்தத்திலிருக்கிறதி
னாலும், அதினிரத்தம் அதற்குச் சீவனாயிருக்கி
றதினாலும், இஸரவேல் சந்ததியாரிலும், உங்க
ளுக்குள் தங்கும்பரதேசிகளிலும் எவனும் புசிக்
கத்தக்க ஒரு மிருகத்தையாவது, ஒருபட்சியை
யாவது, வேட்டையாடிப்பிடித்தால், அவன் அ
தினிரத்தத்தைவடியவிட்டு மண்ணினாலேமூடிப்
போடவேண்டும்.—எந்தச்செந்துவின் சீவனும் ௰௪
அதினிரத்தத்திலிருக்கிறதினால் எந்தச்செந்துவி
னிரத்தத்தையும் நீங்கள் புசிக்கவேண்டாமென்
று இஸரவேல்சந்ததியாருக்குச்சொன்னேன். அ
தைப்புசிக்கிறவனெவனோ அவன்சேதிக்கப்படு
வான்.
உங்கள்சுதேசியானாலும்,பரதேசியானாலும்,இ ௰௫
யல்பாயிறந்ததையாகிலும் பீறுண்டதையாகிலும்
புசிக்கிறவனெவனுந் தன்வஸ்திரங்களைத்தோய்த்
து, சலத்திலேஸ்நானம்பண்ணவேண்டும்;சாயங்
காலபரியந்தம் அவன் அசுசியாயிருப்பான்: பின்

(௩௰) சங்.௯௧.௨. எரே.௩௩.௮. எபே.௫.௨௬. எபி.௯.௰௩,௰௪. எபி.௰.௧,௨. ௧.யோவா.௧.௭,௯. (௩௧) அதி.௨௩.௩௨. (௩௨) யாத்.௨௯.௨௯,௩௰. (௩௪) எண்.௨௯.௭. யாத்.௩௰.௰. எபி.௯.௭,௨௫.—(௰௭. அதி. ௩.) உபா.௰௨.௫,௬,௰௩,௰௪. (௪)உபா.௰௨.௫,௰௫,௨௧.ரோ.௫.௰௩.ஆதி.௰௭.௰௪. (௫) ஆதி.௨௧.௩௩. உபா.௰௨.௨. ௧.இரா.௰௪.௨௩. ௨.இரா.௰௬.௪. ௨நாளா.௨௮.௪. (௭) யாத்.௨௯.௰௮. எண்.௰௮.௰௭. உபா.௩௨.௰௭. ௨.நாளா.௰௧.௰௫. சங்.௱௬.௩௭. ௧.கொரி.௰.௨௰. வெளி.௯.௨௰. யாத்.௩௪.௰௫. உபா.௩௧.௰௬. எசேக்.௨௩.௮. (௰) மத்.௨௬.௨௮. மாற்.௰௪.௨௪. ரோ.௩.௨௫.ரோ.௫.௯. எபே.௧.௮. கொலோ.௧.௰௪,௨௰.எபி.௰௩.௰௨.௧.பேது.௧.௨. ௧.யோவா.௧.௭. வெளி.௧.௫.எபி.௯.௨௨ (௰௧)அதி.௩.௪. உபா.௰௨.௰௬,௨௩. ௧.சாமு.௰௪.௩௩. (௰௨) அதி.௨௰.௩,௫,௬. எரே.௪௪.௰௧. எசேக்.௰௪.௮. (௰௩) அதி.௭.௨௬. உபா.௰௫.௨௩. எசேக்.௨௪.௭. ஆதி.௯.௪. உபா.௰௨.௨௩. (௰௫) யாத்.௨௨.௩௧. உபா.௰௪.௨௧. எசேக்.௪௪.௩௧.

௰௬ பு சுசியாவான்.—அவன் தன் வஸ்திரங்களைத்தோ
யாமலும், சலத்திலே ஸ்நானம்பண்ணுமலுமிருந்
தால்,தன்பாவத்தைஅனுபவிப்பானென்றுசொல்
லென்ருர்.

## ௰௮. அதிகாரம்.

௧ முறையற்ற விவாகத்தை விலக்கல்: ௰௮. நாஞ
விததகாத கர்மங்களைவிலக்கல்.

பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,—
௨ நீ இஸரவேல் சந்ததியாரிடத்தில் நானே உங்கள்
௩ தேவனுகிய யெகோவா.—நீங்கள் வாசம்
பண்ணின எகிப்து தேசத்தார்செய்கிறதுபோல்
செய்யாமலும், நான் உங்களையழைத்துக்கொண்
டுபோகுங்காஞன்தேசத்தார் செய்கிறதுபோலச்
செய்யாமலும், அவர்களுடைய கற்பனைகளின்ப
௪ டி நடவாமலும்,—என்னுடைய நியாயங்களின்ப
டி செய்து, என்னுடைய கட்டளைகளைக்கைக்
கொண்டு நடவுங்கள்: நானே உங்கள் தேவனு
௫ கிய யெகோவா.—ஆகையால் என்னுடைய
கட்டளைகளையும், என்னுடைய நியாயங்களையுங்
காத்துக்கொள்ளக்கடவீர்கள். அப்படிச்செய்கி
றவனெவனும், அவைகளால் சீவித்திருப்பான்:
நானே யெகோவா.

௬ யாராகிலும்முறைகேடாகஉதிரக்கலப்பானவ
ரை நிருவாணமாக்கும்வண்ணஞ் சேரப்படாது:
௭ நானே யெகோவா.—உன் பிதாவையாகிலும்
உன்மாதாவையாகிலும் நிருவாணமாக்கலாகாது:
அவள் உன்மாதா; அவளை நிருவாணமாக்கவேண்
௮ டாம்.-உன்பிதாவின்மனைவியை நிருவாணமாக்க
௯ லாகாது: அது உன்பிதாவின் நிருவாணம்.-வீட்டி
லாவது மற்றைஸ்தானத்திலாவது உன் பிதாவாகி
லும் மாதாவாகிலும் பெற்றபுத்திரியாகிய உன் ச
கோதரியை நிருவாணமாக்கலாகாது: அவளைநிரு
௰ வாணமாக்கலாகாது.—உன் புத்திரனுடைய புத்தி
ரியையாகிலும்உன்புத்திரியுடையபுத்திரியையா
கிலும் நிருவாணமாக்கலாகாது: அவர்களுடைய
நிருவாணம்உன்னுடையது. அவர்களைநிருவாண
௰௧ மாக்கலாகாது.—உன் பிதாவின் மனைவியிடத்தில்
உன்பிதாவுக்குப்பிறந்தபுத்திரி உனக்குச்சகோத
௰௨ ரி,ஆதலால்அவளைநிருவாணமாக்கலாகாது.-உன்
பிதாவின் சகோதரியை நிருவாணமாக்கலாகாது:
௰௩ அவளுன்பிதாவின்சுற்றத்தாள்.-உன் மாதாவின்ச
கோதரியை நிருவாணமாக்கலாகாது: அவளுன்
௰௪ மாதாவின்சுற்றத்தாள்.—உன்பிதாவின் சகோதர
னைநிருவாணமாக்கலாகாது, அவன்மனைவியைச்
சேரக்கூடாது: அவளுனக்குச்சிறியதாய்.—உன்ம ௰௫
ருமகளைநிருவாணமாக்கலாகாது, அவளுன்புத்தி
ரனின்மனைவி; அவளைநிருவாணமாக்கலாகாது.—
உன்சகோதரனின் மனைவியை நிருவாணமாக்க ௰௬
லாகாது,அதுஉன்சகோதரனுடையநிருவாணம்.-
ஒருஸ்திரியையும், அவள்புத்திரியையும், நிருவா ௰௭
ணமாக்கலாகாது, அவள்புத்திரனின்புத்திரியை
யாகிலும் அவள்புத்திரியின் புத்திரியையாகிலும்
நிருவாணமாக்கும்வண்ணம் ஏற்கவேண்டாம்;
அது பாதகம்: அவர்கள அவளுடையகோத்திர
ஸ்திரிகள்.

உன்மனைவி யுயிரோடிருக்கையில் அவளுக் ௰௮
குக் கிலேசமுண்டாக அவளுடைய சகோதரி
யை நிருவாணமாக்கும்பொருட்டு அவளை விவா
கம் பண்ணலாகாது.—ருதுவதியாய்விலக்கப்பட் ௰௯
டகாலத்தில் ஸ்திரியை நிருவாணமாக்கும்வண்
ணம் அணுகாதே.—உன்னை அசுசிப்படுத்தும்படி ௨௰
பிறன் மனைவியுடன் சயனிக்கப்படாது.-நீ யுன் ௨௧
சந்ததியில்யாரையாகிலும்மோலேக்குக்கு அக்கி
னிக்கூடாகச் செல்லவிடாதே; உன் தேவனு
டைய நாமத்தை அவமதிக்காதே: நானே யெ
கோவா.—ஸ்திரியுடன் சயனிக்கிறதுபோலப் ௨௨
புருஷனுடனுஞ் சயனிக்கப்படாது; அது அரு
வருப்பானது.—உன்னை அசுசிப்படுத்த ஒரு மிரு ௨௩
கத்துடன் சயனிக்கப்படாது. ஸ்திரியானவள்,
தன்னுடனேபுணர்ச்சிபண்ணும்படி ஒருமிருகத்
துக்குமுன்பாக நிற்கப்படாது. அதுவிபரீதம்.—
இவைகளொன்றினுலுமுங்களை அசுசிப்படுத்தா ௨௪
திருங்கள். நான் உங்கள் முன்னின்றுந் துரத்தி
விடுஞ் சாதியார், இவைகளெல்லாவற்றினுலுந்
தங்களை அசுசிப்படுத்துகிருர்கள்.—இப்படி அந் ௨௫
தத்தேசமும், அசுசியாயிருக்கின்றது. அவர்கள்
தங்கள் பாவங்களை அனுபவிக்கும்படி செய்
வேன்: அந்தத்தேசம் தன்குடிகளைக்கக்கிவிடும்.-
உங்களுக்குமுன் அத்தேசத்திலிருந்தமனிதர் இந் ௨௬
த அருவருப்பானவைகளையெல்லாஞ் செய்தார்
கள்; அதினுல் அத்தேசம் அசுசியாயிருக்கின்ற
து.—நீங்கள் அத்தேசத்தை அசுசிப்படுத்த அது ௨௭
உங்களுக்கு முன்னிருந்த சாதியாரைக்கக்கின
துபோல உங்களையும் வாந்தி செய்யாதபடி,—
உங்கள் சுயசாதியிலொருவனுவது, உங்களுக் ௨௮
குள் தங்கும் பரதேசியாவது, இந்த அருவருப்
பானவைகளிலொன்றையாகிலுஞ் செய்யாமல்,
என்னுடையகட்டளைகளையும்,விதிப்பிரமாணங்

(௰௬) எண்.௰௯.௨௰.—(௰௮. அதி. ௨.) யாத்.௬.௭. எசேக்.௨௰.௫,௭,௰௯,௨௰. (௩) எசேக்.௨௰.௭,௮. யாத்.௨௩.௨௪.
உபா.௰௨.௪,௩௰,௩௧. (௪) உபா.௪.௧,௨. உபா.௬.௧. எசேக்.௨௰.௰௯. (௫) எசேக்.௨௰.௰௧,௰௩,௨௧. லூக்.௰.௨௮.
ரோ.௰.௫. கலா.௩.௰௨. யாத்.௬.௨,௬,௨௯. மல்.௩.௬. (௭) அதி.௨௰.௰௧. (௮) ஆதி.௪௯.௪. உபா.௨௨.௩௰. ஆமோ.
௨.௭. ௧.கொரி.௫.௧. (௯) ௨.சாமு.௰௩.௰௨. (௰௫) ஆதி.௩௮.௰௮,௨௬. எசேக்.௨௨.௰௧. (௰௬) அதி.௨௰.௨௧. மத்.
௰௪.௩. மத்.௨௨.௨௪. (௰௮) யாத்.௨௬.௩. ௧.சாமு.௧.௬,௮. (௰௯) அதி.௨௰.௰௮. எசேக்.௰௮.௬. (௨௰) யாத்.௨௰.௰௪.
உபா.௫.௰௮. நீதி.௬.௨௯,௩௨. மல்.௩.௫. மத்.௫.௨௭. ரோ.௨.௨௨. ௧.கொரி.௬.௯. எபி.௰௩.௪. (௨௧) ௨.இரா.௰௬.௩.
எரே.௰௯.௫. எசேக்.௨௰.௩௧. ௧.இரா.௰௧.௭,௩௩. எசேக்.௩௬.௨௰. மல்.௧.௰௨. (௨௨) அதி.௨௰.௰௩. ரோ.௧.௨௭.
௧.கொரி.௬.௯. ௧.தீமோ.௧.௰. (௨௩) யாத்.௨௨.௰௯. அதி.௨௰.௰௫. (௨௪) வச.௩௰. மத்.௰௫.௰௮,௰௯,௨௰. ௧.கொரி.
௩.௰௭. உபா.௰௮.௰௨. (௨௫) எண்.௩௫.௩௪. எசேக்.௩௬.௰௭. சங்.௮௯.௩௨. ஏசா.௨௬.௨௧. எரே.௫.௯,௨௯. எரே.௯.
௯. எரே.௰௪.௰. எரே.௨௩.௨. ஓசே.௨.௰௩. ஓசே.௮.௰௩. ஓசே.௯.௯. வச.௨௭. (௨௬) வச.௫,௩௰. அதி.௨௰.௨௨,௨௩.
(௨௮) அதி.௨௰.௨௨. எரே.௯.௰௯. எசேக்.௩௬.௰௩,௰௭.

௨௯ களையுங்கைக்கொள்ளவேண்டும்.-இப்படிப்பட்
ட அருவருப்பானவைகளில் யாதொன்றைச்செ
ய்யும் எந்த ஆத்துமாவும் தன்சனங்களினின்றுஞ்
௩௰ சேதிக்கப்படுவான்.-ஆதலால்நீங்கள்உங்களுக்கு
முன்செய்யப்பட்ட இவ்வருவருப்பான முறை
மைகளிலொன்றைச்செய்து,அதினால்உங்களைஅ
சுசிப்படுத்திக்கொள்ளாமல், என் கட்டளையைக்
கைக்கொள்ளுங்கள். நானே யுங்கள் தேவனு
கிய யெகோவாவென்றுசொல்லென்றார்.

## ௰௯. அதிகாரம்.

பலவிதிகளை மறுபடியுந் தெரிவித்தல்.

பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,—
௨ நீ இஸரவேல் சந்ததியாராகிய சமஸ்த சபையா
ரிடத்திலும்,உங்கள் தேவனும் யெகோவா
வுமாகிய நான் பரிசுத்தர்; ஆதலால் நீங்களும்பரி
சுத்தராயிருக்கவேண்டும்.
௩ உங்களில்யாவருந் தங்கள் தங்கள் பிதாமாதாக்
களுக்குப்பயப்படவும், என் ஓய்வுநாள்களையா
சரிக்கவும வேண்டும்: நானே உங்கள் தேவனு
கிய யெகோவா.
௪ நீங்கள் விக்கிரகங்களைப்பின்பற்றவும், உங்க
ளுக்கு வார்ப்பிக்கப்பட்ட தெய்வங்களை உண்
டாக்கவும் வேண்டாம்: நானே உங்கள் தேவ
னுகிய யெகோவா.
௫ நீங்கள் யெகோவாவுக்கு ஸ்தோத்திரபலி
யையிட்டால, அது அங்கிகரிக்கப்படத்தக்கதா
௬ க இடுங்கள்.—நீங்கள்அதையிடும் நாளிலும், மற்
றைநாளிலும்,அதைப்புசிக்கவும்வேண்டும்:மூன்
றாம்நாளில் அதிற்சேஷமிருந்தால், அது அக்கி
௭ னியிலே எரிக்கப்படவும் வேண்டும்.-மூன்றாம்
நாளிலே புசிக்கப்பட்டால் அருவருப்பாயிருக்
௮ கும்; அதுஅங்கிகரிக்கப்படமாட்டாது.-அதைப்
புசித்தவன் யெகோவாவின் பரிசுத்தவஸ்து
வைச் சாதாரணமாகமதித்தபடியால், தன்பாவத்
தையனுபவிப்பான்; அந்த ஆத்துமா தன்சனங்க
ளினின்றுஞ் சேதிக்கப்படுவான்.
௯ நீங்கள்தேசத்தின்பயிரை அறுக்கும்பொழுது,
உங்கள் வயலோரத்திலிருக்கிற யாவையும் அறா
மலும், சிந்திக்கிடக்கிற கதிர்களைப்பொறுக்காம
௰ லும்,—உன் திராட்சத்தோட்டத்திற் சேஷமா
னதைச்சேகரியாமலும், அதிற் சிந்திக்கிடக்கிற
பழங்களைப் பொறுக்காமலும், அவைகளைத்தரித்
திரருக்கும் பரதேசிகளுக்கும் விட்டுவிடுங்கள்:
நானே உங்கள் தேவனுகிய யெகோவா.
௰௧ நீங்கள் களவுசெய்யப்படாது. வஞ்சனைபண்
ணப்படாது. ஒருவருக்கொருவர் பொய்சொல்
லவும்படாது.
என்னுமத்தைக்கொண்டு பொய்ஆணையிடப் ௰௨
படாது. உன்தேவனுடைய நாமத்தைச்சாதார
ணமாய்வழங்கப்படாது: நானே யெகோவா.
பிறனுக்கு அநியாயஞ்செய்யவும், அவனிடத் ௰௩
திற்கொள்ளையிடவும்படாது. கூலிக்காரனுடை
யகூலி இரவிலே உன்னிடத்தில் விடியற்காலம்
வரைக்குந்தங்கவேண்டாம்.
செவிடனை நிந்திக்கப்படாது. குருடனுக்கு ௰௪
முன்னே தடுக்கத்தக்க ஒருபொருளைப்போடா
தே. உன் தேவனுக்குப்பயப்படவேண்டும்:
நானே யெகோவா.
நியாயவிசாரணையில் அநியாயஞ்செய்யப்ப ௰௫
டாது. தரித்திரனுடையமுகத்தைப்பாராமலும்,
வலியவனுடையமுகத்தையெண்ணாமலும், நீதி
யாகப்பிறனுக்கு நியாயந்தீர்க்கவேண்டும்.
உன் சனங்களுக்குள் அங்குமிங்கும் கோட் ௰௬
சொல்லித்திரியுவேண்டாம். பிறனுடைய இரத்
தத்துக்குவிரோதமாய்நிற்கப்படாது:நானே யெ
கோவா.
உன்னிருதயத்திலே உன் சகோதரனைப்பகை ௰௭
யாதிருப்பாயாக; பிறன்மேற்பாவமேறவிடாமல்
எப்படியாவது அவனைக்கண்டிக்கவேண்டும்.
பழிவாங்காமலும், உன்னுடைய சனங்களுக் ௰௮
குள் எவர்மேலும் பொறாமைகொள்ளாமலும்,
உன்னைப்போலவே பிறனையும் நேசிக்கவேண்
டும்: நானே யெகோவா.
நீங்கள் என் கட்டளைகளைக் கைக்கொள்வீர்க ௰௯
ளாக. உன் மிருகங்களை இனமல்லாத மிருகங்
களுடனே புணர்ச்சிசெய்யவிடாதிருப்பாயாக:
உன் வயலிலே வெவ்வேறு விதைகளைக்கலந்து
விதையாதிருப்பாயாக: சணல்நூலும், ஆட்டுரோ
மமுங்கலந்த வஸ்திரங்களைத்தரியாதிரு.
ஒருவனுக்குமனைவியாக வாக்குத்தத்தம் பண் ௨௰
ணப்பட்டு ஒருவனால் மீட்கப்படாமலும், விடு
தலைபெறாமலுமிருக்கிற அடிமைப் பெண்ணுட
னே ஒருவன்சயனித்தால், அவள்விடுதலை பெ
றாதவளாதலால் அவ்விருவருங் கொலைசெய்யப்
படாமல், அடிக்கப்படவேண்டும்.—அன்றியும் ௨௧
அவன் குற்றநிவிர்த்தி பலிக்குச்சபையின் ஆசா
சவாசலில் யெகோவாவின்சந்நிதியில் ஒரு
ஆட்டுக்கடாவைக் கொண்டுவரவேண்டும்.—ஆ ௨௨
சாரியன் அவன்செய்த பாவத்தினிமித்தம் குற்
றநிவிர்த்தி பலியாகிய அந்தக்கடாவைக்கொண்

(கய) வச.கூ,உக. அதி.உய.உரு. உபா.யஅ.கூ. வச.உச. வச.உ,ச.—(யகூ. அதி. உ.) அதி.உய.எ,உசு. க.பேதுரு.
க.யசு. (ரு) யாத்.உய.யஉ. யாத்.உய.அ. (ச) யாத்.உய.எ. க.கொரி.ய.யச. க.யோவா.ரு.உக. யாத்.ஙச.யஎ. அதி.
எ.யரு. (க) உபா.உச.யகூ,உய,உக. ரூத்.உ.யரு,யசு. (யக) யாத்.உய.யரு. யாத்.உஉ.க,எ,ய—யஉ. உபா.ரு.யகூ.
அதி.கூ உ. எபே.ச.உரு. கொலோ.ங.கூ. (யஉ) யாத்.உய.எ. மத்.ரு.ஙங. யாக்.ரு.யஉ. அதி.யஅ.உக. (யங) மாற்.ய.
யகூ. க.தெச.ச.சு. உபா.உச.யச,யரு. மல்.ங.ரு. யாக்.ரு.ச. (யச) உபா.உஎ.யஅ. ரோ.யச.யங. ஆதி.சஉ.யஅ. பிர.
கூ.எ. க.பேதுரு உ.யஎ. (யரு) யாத்.உங.உ,ங. உபா.க.யஎ. சங்.அஉ.உ. நீதி.உச.உங. யாக்.உ.கூ. (யசு) யாத்.உங.
உ சங்.யரு.ங. சங்.ருய.உய. நீதி.யக.யங. யாத்.உங.உ,எ. க.இரா.உக.யங. மத்.உசு.சுய,சுக. மத்.உஎ.ச. (யஎ)
க.யோவா.உ.கூ.யக. மத்.யஅ.யரு. கலா.சு.க. எபே.ரு.யக. க.தீமோ.ரு.உய. உ.தீமோ.ச.உ. தீத்.க.யச. தீத்.உ.யரு.
ரோ.க.ஙஉ. க.கொரி.ரு.உ. க.தீமோ.ரு.உஉ. உ.யோவா.யக. (யஅ) உ.சாமு.யங.உஉ. நீதி.உய.உஉ. ரோ.யஉ.யஎ,
யகூ.கலா.ரு.உய.எபே.ச.ஙக.யாக்.ரு.கூ.க.பேதுரு.உ.உ. மத்.ரு.சங.மத்.உஉ.ஙகூ.ரோ.யங.கூ.கலா.ரு.யச.யாக்.உ.அ.

டு யெகோவாவின் சந்நிதியில் அவனுக்
குப் பிராயச்சித்தம்பண்ணக்கடவன்; அப்பொ
ழுது அவன்செய்த பாவம் அவனுக்கு மன்னிக்
கப்படும்.
௨௩ நீங்கள் அந்தத்தேசத்திற்சேர்ந்து, புசிக்கத்தக்க
கனிகளைத்தருகிற பலவிதமரங்களை நட்டபின்பு
அவைகளின்கனிகளை விருத்தசேதனமில்லாதன
வாக எண்ணவேண்டும்; மூன்றுவருஷம் அவை
கள்புசிக்கப்படாமல், உங்களுக்கு விருத்தசேத
௨௪ னமில்லாதனவாயிருக்கவேண்டும்.—பின்பு நா
லாம்வருஷத்தில் அவற்றின் கனிகளெல்லாம்
யெகோவாவுக்கேற்ற துதியினாற் பரிசுத்தமா
௨௫ கும்.—ஐந்தாம்வருஷத்தில் அவற்றின்கனிகளைப்
புசிக்கலாம்; இப்படி அவைகளின் பலன் உங்
களுக்குப்பெருகும்: நானே உங்கள் தேவனாகி
ய யெகோவா.
௨௬ இரத்தத்துடன்கூட யாதொன்றையும் புசிக்க
வேண்டாம், மாயாவித்தைகளைச்செய்யாமலும்,
சுபாசுபகாலங்கள் பாராமலுமிருக்கவேண்டும்.—
௨௭ உங்கள்தலைமயிரைச்சுற்றியொதுக்காமலுந் தாடி
௨௮ யின்ஓரங்களைக்கெடாமலும்,-மரித்தோர்நிமித்தம்
உங்கள்சரீரத்தைக்கிறிக்கொள்ளாமலும், அடை
யாளமாக எழுத்துக்களை உங்கள்மேற்பதியாம
லும் இருப்பீர்களாக: நானே யெகோவா.
௨௯ தேசத்தார்விபசாரமார்க்கத்திற்சாரந்தேசமெங்
கும் தீங்குநிறையும்படி உன்புத்திரியை வேசை
யாக ஏற்படுத்தவேண்டாம்.
௩௰ என்னுடைய ஓய்வுநாள்களை நீங்கள் ஆசரித்
து, என்பரிசுத்தஸ்தானத்தைமதிக்கவேண்டும்: நா
னே யெகோவா.
௩௧ பேய்வித்தைக்காரரை மதிக்கவும்வேண்டாம்;
மந்திரக்காரர்களால் அசுசிப்படும்படி அவர்களைத்
தேடவும்வேண்டாம்: நானே உங்கள் தேவனா
கிய யெகோவா.
௩௨ நரைத்தலைக்குமுன்எழுந்துநிற்கவேண்டும், மு
திர்ந்த வயதுள்ளவனுடைய முகத்தை மதிக்க
வேண்டும்; உன் தேவனுக்குப்பயப்படவேண்
டும்: நானே யெகோவா.
௩௩ பரதேசியொருவன் உங்கள்தேசத்திலே உங்
களுடன்தங்கினால் அவனை உபத்திரவப்படுத்த
௩௪ வேண்டாம்.—உங்களிடத்திலே தங்கும் பரதேசி
யைச்சுதேசியாக எண்ணி உங்களைப்போல் அவ
னையும் நேசிக்கவேண்டும்; நீங்கள் எகிப்துதே
சத்தில் பரதேசிகளாயிருந்தீர்கள்: நானே உங்கள்
தேவனாகிய யெகோவா.
௩௫ நியாயவிசாரணையிலும் அளவுகோலிலும் நி
றையிலும் படியிலும் அநியாயஞ்செய்யப்படா
து.—ஒத்ததராசும் ஒத்தநிறைகல்லும் ஒத்த ஏபா ௩௬
வும் ஒத்த கின்னும் நீங்கள் வைத்திருக்கவேண்
டும்: நானே எகிப்து தேசத்தினின்றும் உங்க
ளைப்புறப்படச்செய்தஉங்கள் தேவனாகிய யெ
கோவா.—ஆதலால் என்னுடையகட்டளைகள் ௩௭
யாவையும், என்னுடையவிதிப்பிரமாணங்கள்
யாவையும், கைக்கொண்டு நடக்கக்கடவீர்கள்:
நானே யெகோவாவென்றுசொல்லென்றார்.

## ௨௰. அதிகாரம்.

௧. மோலேக்குக்குப் புத்திரபலியிடுவோர் அடை
யுந்தண்டனை: ௬. பேய்வித்தைக்காரரைப்பின்
பற்றுவோரடையுந் தண்டனை: ௭. பரிசுத்தத்
தைக்கட்டளையிடல்: ௯. பிதாமாதாக்களை நிந்
திப்போரடையுந்தண்டனை: ௰. அசுசியினிமித்
தம்வருந் தண்டனை: ௨௨. கட்டளையைக்காத்
துக்கொள்ளும்படி விதித்தல்: ௨௭. பேய்வித்
தைக்காரரடையுந்தண்டனை.

மேலும் யெகோவா மோசேயைநோக்கி,— ௧
பின்னும் நீ இஸ்ரவேல்சந்ததியாருடனே, இஸ்ர ௨
வேல்சந்ததியாரிலும் அவர்களிடத்திலே தங்கும்
பரதேசிகளிலும் எவனானாலுந் தன் சந்ததியில்
ஒரு பிள்ளையை மோலேக்குக்கிட்டால் அவன்
கொலைசெய்யப்படவேண்டும்: தேசத்துச்சனங்
கள் அவன்மேல் கல்லெறியவேண்டும்.—அவன் ௩
என் பரிசுத்தஸ்தானத்தை அசுசிப்படுத்தி, என்
பரிசுத்தநாமத்தைச் சாதாரணப்படுத்தத்தன் சந்த
தியை மோலேக்குக்குக் கொடுத்தபடியினாலே,
நான் அவனை விரோதித்து, அவன் சனங்களி
னின்றும் அவனைச்சேதிப்பேன்.—அவன் தன் ௪
சந்ததியை மோலேக்குக்குக் கொடுக்கையில் தே
சத்துச் சனங்கள் அவனைக் கொலைசெய்யாமற்
கண்சாய்வாயிருந்தால்,—நான் அவனையும், அ ௫
வன்குடும்பத்தாரையும் விரோதித்து, அவனையும்,
அவன்பிறகே மோலேக்கைவிபசாரமார்க்கமாய்
ப்பின்பற்றினயாவரையும், அவர்கள் சனங்களி
னின்றுஞ்சேதிப்பேன்.
பேய்வித்தைக்காரரையும், மந்திரகாரர்களை ௬
யும் விபசாரமார்க்கமாய்ப் பின்பற்றுகிறவனெவ
னோ அவனை நான் விரோதித்து அவனையவன்
சனங்களினின்றுஞ்சேதிப்பேன்: நானே உங்
கள் தேவனாகிய யெகோவா.
ஆதலால் நீங்கள் உங்களைப்பரிசுத்தப்படுத்திப் ௭
பரிசுத்தராயிருப்பீர்களாக. நானே உங்கள்தேவ
னாகிய யெகோவா.—என்கட்டளைகளைக்கைக் ௮
கொண்டு நடவுங்கள்: நானே உங்களைப்பரிசுத்
தப்படுத்துகிற யெகோவா.
தன் பிதாமாதாக்களை நிந்திக்கிறவனெவனுங் ௯

---

(௨௪) உபா.௰௨.௰௭,௰௮. நீதி.௩.௯. (௨௬) உபா.௰௨.௨௩. உபா.௰௮.௰,௰௧.௰௪. ௧.சாமு.௰௫.௨௩. ௨.இரா.௰௭.௰௭. ௨.நாளா.௩௩.௬. மல்.௩.௫. (௨௭) ஏசா.௰௫.௨. எரே.௯.௨௬. (௨௮) உபா.௰௪.௨. எரே.௰௬.௬. (௨௯) உபா.௨௩.௰௭. (௩௰) அதி.௨௬.௨. பிர.௫.௧. (௩௧) யாத்.௨௨.௰௮. உபா.௰௮.௰. ௧.சாமு.௨௮.௭. ௧.நாளா.௰.௰௩. ஏசா.௮.௰௯. அப்.௰௬.௰௬. (௩௨) நீதி.௨௰.௨௯. ௧.தீமோ.௫.௧. (௩௩) யாத்.௨௨.௨௧. (௩௪) யாத்.௰௨.௪௮,௪௯. உபா.௰.௰௯. (௩௬) உபா.௨௫.௰௩,௰௫. நீதி.௰௧.௧. (௩௭) அதி.௰௮.௪,௫. உபா.௪.௫,௬.—(௨௰. அதி. ௨.) அதி.௰௮.௨. உபா.௰௨.௩௧. ௨.இரா.௰௭.௰௭. ௨.நாளா.௩௩.௬. எரே.௭.௩௧. (௩) எசேக்.௫.௰௧. (௪) உபா.௰௭.௨,௩,௫. (௫) அதி.௰௭.௰௨. யாத்.௨௰.௫. (௬) அதி.௰௯.௩௧. (௭) அதி.௰௧.௪௪. ௧.பேதுரு.௧.௰௬. (௮) அதி.௰௯.௩௭. யாத்.௩௧.௰௩. எசேக்.௩௭.௨௮. (௯) யாத்.௨௧.௰௭. உபா.௨௭.௰௬. நீதி.௨௰.௨௰. மத்.௰௫.௪. ௨.சாமு.௧.௰௬.

கொலைசெய்யப்படவேண்டும்: அவன் பிதாமா
தாக்களை நிந்தித்தான்; அவனிரத்தப்பழி அவன்
மேலேதங்கும்.
௰ ஒருவன் பிறன்மனைவியுடன் விபசாரஞ்செய்
தால், பிறன்மனைவியுடன்விபசாரஞ்செய்தவிப
சாரனும்,அந்த விபசாரியுங் கொலைசெய்யப்பட
௰௧ வேண்டும்.-தன்பிதாவின்மனைவியுடனேசயனித்
தவன் தன்பிதாவை நிருவாணமாக்கினபடியால்,
அவ்விருவருங்கொலைசெய்யப்படவேண்டும்;அ
௰௨ வர்களிரத்தப்பழி அவர்கள்மேலே தங்கும்.—ஒரு
வன் தன்மருமகளுடன் சயனித்தால் இருவருங்
கொலைசெய்யப்படவேண்டும்: அவர்கள் விபரீ
தஞ்செய்தார்கள்; அவர்களிரத்தப்பழி அவர்கள்
௰௩ மேலே தங்கும்.—ஒருவன் ஸ்திரியுடன் சயனித்
ததுபோலப் புருஷரோடுஞ்சயனித்தால், இருவ
ரும்அருவருப்பானதைச்செய்ததினிமித்தம்,கொ
லைசெய்யப்படவேண்டும்; அவர்களிரத்தப்பழி
௰௪ அவர்கள்மேலே தங்கும்.—ஒருவன் ஒரு கன்
னிகையையும், அவள் மாதாவையுஞ்சேர்ந்தால்,
அது பாதகம்: இவ்விதப்பாதகம் உங்களுக்குள்
ளிராதபடி, அவனையும், அவர்களையும் அக்கினி
௰௫ யினுற் சுட்டெரிக்கவேண்டும்.—மிருகத்துடன்
ஒருவன்புணர்ச்சிசெய்தால்,அவன் கொலைசெய்
யப்படவேண்டும்: நீங்கள் அந்த மிருகத்தையுங்
௰௬ கொல்லவேண்டும்.-ஒருஸ்திரிஒருமிருகத்துடன்
சேர்ந்து சயனித்தால், அந்த ஸ்திரியையும், அந்த
மிருகத்தையுங்கொல்லவேண்டும்: இருசீவனுங்
கொலைசெய்யப்படவேண்டும்; அவைகளினிரத்
௰௭ தப்பழி அவைகளின்மேலே தங்கும்.—ஒருவன்
தன் பிதாவின்புத்திரியாயாகிலும்,தன்மாதாவின்
புத்திரியாயாகிலுமிருக்குந் தன் சகோதரியைச்
சேர்த்துக்கொண்டு அவன் அவளுடைய நிருவா
ணத்தையும், அவள் அவனுடையநிருவாணத்தை
யும்பார்த்தால், அது பாதகம்; அவர்கள் தங்கள்
சனங்கள் முன்னிலையில் சேதிக்கப்படவேண்
டும்: அவன் தன் சகோதரியை நிருவாணமாக்கி
னுனே; அவன் தன் பாவதண்டனையை யனு
௰௮ பவிக்க வேண்டும்.—ருதுவதியுடனே ஒருவன்
சயனித்து அவளை நிருவாணமாக்கினுல் அவன்
அவளுடைய இரத்தவூற்றை நிருவாணமாக்கின
படியினுலும், அவள் தன்னிரத்தவூற்றைவெளிப்
படுத்தினபடியினுலும், இருவருந் தங்கள் சனங்
௰௯ களினின்றுஞ் சேதிக்கப்படவேண்டும்.—உன்
மாதாவின் சகோதரியையாகிலும் பிதாவின் ச
கோதரியையாகிலும் நிருவாணமாக்கவேண்டா
ம். ஒருவன் தன் சுயகோத்திரத்தாளை நிருவாண
மாக்கினுல் இருவருந் தங்கள் பாவதண்டனை
௨௰ யை அனுபவிப்பார்கள்.—ஒருவன் தன் சிறிய
பிதாவின் மனைவியுடன் சயனித்தால், அவன்
தன் சிறியபிதாவின் நிருவாணத்தை வெளிப்ப
டுத்தினபடியால், இருவருந்தங்கள் பாவதண்ட
னையை அனுபவிப்பார்கள்: அவர்கள்பிள்ளையில்
லாமற்சாவார்கள்.—ஒருவன் தன் சகோதரனுடை ௨௧
ய மனைவியைச்சேர்ந்தால் அது அசுசி: அவன்
தன்சகோதரன்நிருவாணத்தைவெளிப்படுத்தின
படியால் அவர்கள் பிள்ளையற்றிருப்பார்கள்.
ஆதலால் நீங்கள் வாசஞ்செய்யும்படி நானுங் ௨௨
களை அழைத்துக்கொண்டுபோகுந்தேசம் உங்க
ளைவாந்திசெய்யாதபடி நீங்கள் என்னுடையகட்
டளைகள் யாவையும், விதிப்பிரமாணங்கள் யா
வையுங்காத்து நடக்கக்கடவீர்கள்.—நானுங்கள் ௨௩
முன்னின்றுந் துரத்திவிடுஞ் சனங்களைப்போல
நடவாதிருங்கள். அவர்களிப்படிப்பட்ட கரு
மங்களையெல்லாஞ்செய்தபடியால், நான் அவர்
களை வெறுத்தேன்.—பாலுந்தேனும் பெருகுகிற ௨௪
அவர்களுடைய தேசத்தை உங்களுக்களிப்பே
னென்றும், நீங்கள் அதைச்சுதந்தரித்துக்கொள்
வீர்களென்றுஞ்சொல்லியிருக்கிறேன்: உங்களை
மற்றைச்சனங்களினின்றும் வேறுபடுத்திய உங்
கள் தேவனாகிய யெகோவா நானே.—ஆத ௨௫
லால் நீங்கள் சுத்தமான மிருகங்களுக்கும், அ
சுத்தமானமிருகங்களுக்கும்,அசுத்தமானபறவை
களுக்கும், சுத்தமான பறவைகளுக்கும், வேற்
றுமைசெய்யக்கடவீர்கள். உங்களுக்கு அசுசியா
னவைகளென்று நான் வேற்றுமைசெய்து விலக்
கினமிருகங்களாலும் பறவைகளாலுந்தரையிலூ
ருகிற மற்றென்றுலுமுங்களை அருவருப்பாக்
காதிருப்பீர்களாக.—யெகோவாவாகிய நான் ௨௬
பரிசுத்தராயிருந்து நீங்களென்னுடையவர்களா
கும்பொருட்டுமற்றைச்சனங்களினின்றும்உங்க
ளைவேறுபடுத்தினேன்; ஆதலால் நீங்களெனக்
கேற்ற பரிசுத்தராயிருக்கவேண்டும்.
பேய்வித்தைக்காரரும், மாந்திரிகருமாயிருக் ௨௭
கிற ஸ்திரி புருஷர் யாவராகிலுங் கொலைசெய்
யப்படவேண்டும்; அவர்கள்மேல் கல்லெறிவார்
களாக: அவர்களிரத்தப்பழிஅவர்கள்மேலேதங்
குமென்று சொல்லென்றுர்.

## ௨௧. அதிகாரம்.

௧. ஆசாரியர் இழவுகொண்டாடுதலின் விதி: ௰௩. அவர்களின் விவாகவிதி: ௰௬. சரீரதோஷமுள்ளவர்கள் ஆசாரியத்தொண்டு செய்யலாகாதெனல்.

பின்பு யெகோவா மோசேயைநோக்கி, ஆ ௧
ரோனுடைய புத்திரராகிய ஆசாரியர்களிலெவ
னுகிலுந்தன் சனத்தாரிலொருவன் மரித்தால், அ
சுசியாயிருக்கப்படாது.—தன்பிதாவும் மாதாவும் ௨
புத்திரனும் புத்திரியும் சகோதரனுமாகியதன்கிட்
டினஉறவின்முறையாருக்காகவும்,—தன்கிட்டி ௩

(௰) அதி.௰௮.௨௰. உபா.௨௨.௨௨. யோவா.௮.௪,௫. (௰௧) அதி.௰௮.௮. (௰௨) அதி.௰௮.௰௫. அதி.௰௮.௨௩. (௰௩) அதி.௰௮.௨௨. ஆதி.௰௯.௫. (௰௪) அதி.௰௮.௰௭. உபா.௨௭.௨௩. (௰௫) அதி.௰௮.௨௩. (௰௭) அதி.௰௮.௯. ஆதி.௨௰.௰௨. (௰௮) அதி.௰௮.௰௯. (௰௯) அதி.௰௮.௰௨,௰௩. அதி.௰௮.௬. (௨௰) அதி.௰௮.௰௪. (௨௧) அதி.௰௮.௰௬. (௨௨) அதி.௰௮.௨௮. அதி.௰௮.௨௫,௨௭. (௨௩) அதி.௰௮.௩,௨௪,௩௰. அதி.௰௮.௨௬. (௨௪) யாத்.௩.௰௭. யாத்.௰௯.௫. உபா.௭.௬. ௧.இரா.௮.௫௨. (௨௫) அதி.௰௧.௪௬. அதி.௰௧.௪௩. (௨௬) அதி.௰௯.௨. ௧.பேதுரு.௧.௰௬. வச.௨௪. தீத்.௨.௰௪. (௨௭) யாத்.௨௨.௰௮. உபா.௰௮.௰,௰௧. ௧.சாமு.௨௮.௭,௮.—(௨௧. அதி. ௧.) எசேக்.௪௪.௨௫.

ண இனத்தாலும் புருஷனில்லாத கன்னிகையு
மாகிய தன்சகோதரிக்காகவும் அசுசியாயிருக்க
௪ லாம்.—அவன் தன் சனங்களுக்குள்ளே பிரதா
னியாயிருக்கிறபடியினால் தன்னைச் சாதாரணப்
௫ படுத்தும்படி அசுசியாயிருக்கப்படாது.—அவர்
கள் தங்கள் தலையை மொட்டையிடாமலுந் தங்
கள்தாடியின் முனைகளைக்கத்தரியாமலுந் தங்கள்
சரீரத்தைவெட்டிக்கொள்ளாமலுமிருப்பார்களா
௬ க.—தங்கள் தேவனுடைய நாமத்தைச்சாதார
ணப்படுத்தாமல், அவருக்கேற்கப் பரிசுத்தராயி
ருக்கவேண்டும். அவர்கள் அக்கினியிலிடப்ப
டும் யெகோவாவின் நைவேத்தியங்களையுந்
தங்கள் தேவனுடைய அப்பத்தையும்நைவேத்
தியம் பண்ணுகிறவர்களாதலால், அவர்கள் பரி
௭ சுத்தராயிருக்கவேண்டும்.—அவர்கள் தங்கள்தே
வனுக்குமுன்பாகப் பரிசுத்தராயிருக்கிறபடியி
னால் வேசையையாகிலுங் களங்கமுடையவளை
யாகிலும் புருஷனாலே தள்ளப்பட்ட ஸ்திரியை
௮ யாகிலும்,விவாகம்பண்ணவேண்டாம்.—அவன்,
உன் தேவனுடைய ஆகாரத்தை நைவேத்தியம்
பண்ணுகிற படியால் அவனைப்பரிசுத்தப்படுத்த
வேண்டும். உங்களைப்பரிசுத்தப்படுத்தும் யெ
கோவாவாகிய நான் பரிசுத்தராயிருக்கிறபடி
யால், அவனும், உனக்குமுன்பாகப்பரிசுத்தனா
௯ யிருக்கவேண்டும்.—ஆசாரியனுடையபுத்திரிவிப
சாரம்பண்ணித்தன்னை அசுசிப்படுத்தினால்தன்பி
தாவையும், அசுசிப்படுத்துவாளாதலால், அவள்
அக்கினியினாலேசுட்டெரிக்கப்படவேண்டும்.—
௰ தன்சகோதரருக்குள்ளே பிரதான ஆசாரியனாகச்
சிரசின்மேல் அபிஷேகதைலம் வார்க்கப்பட்ட
வனும்வஸ்திரங்களைத்தரிக்கும்படி பரிசுத்தமாக்
கப்பட்டவனுமாயிருக்கிறவனெவனோ அவன்
தன் தேவனுடையஅபிஷேகதைலகிரீடம்தன்
மேலிருக்கிறதினால் தன் தலையைத்திறக்கவுந்தன்
௰௧ வஸ்திரங்களைக் கிழிக்கவும்,—பிரேதங்கிடக்குமி
டத்திற்பிரவேசிக்கவுந் தன் பிதாமாதாக்களுக்கா
௰௨ கத்தன்னை அசுசிப்படுத்தவும்;—பரிசுத்தஸ்தானத்
துக்குவெளியேபோகவுந் தன் தேவனுடைய
பரிசுத்த ஸ்தானத்தைச் சாதாரணப் படுத்தவும்
வேண்டாம்: நானே யெகோவா.
௰௩ அவன் ஒருகன்னிகையை விவாகம் பண்ண
௰௪ வேண்டும்.—விதவையை யாகிலுந் தள்ளப்பட்
டஸ்திரியையாகிலும் வேசையையாகிலுங்களங்
கமுடையவளையாகிலும் விவாகம் பண்ணாமல்,
தன் சனங்களுக்குள்ளே ஒரு கன்னிகையைவி
௰௫ வாகம்பண்ணவேண்டும்.—யெகோவாவாகிய
நான் அவனைப் பரிசுத்தப்படுத்துகிறபடியால்,
அவன் தன்சனங்களுக்குள்ளே தன் சந்ததியை
சாதாரணப்படுத்தலாகாதென்று ஆசாரியரிடத்
திற்சொல்லென்றார்.

பின்னும்யெகோவாமோசேயைநோக்கி,- ௰௬
நீ ஆரோனிடத்தில்,தலைமுறைதோறும்உன்சந்த ௰௭
தியாருக்குள்ளே சரீரதோஷமுள்ளவன்தன் தே
வனுக்கு ஆகாரத்தை நைவேத்தியம் பண்ணும்
படிஅணுகலாகாது.—குருடன், முடவன், மூக்க ௰௮
றையன், அதிகாங்கி,-காலொடிந்தவன்,கையொ ௰௯
டிந்தவன், கூனன், குறளன், நேத்திரரோகி, சி
ரங்குள்ளவன், அசறுள்ளவன், நசுங்கினஅண்ட
முள்ளவனென்னும் சரீரதோஷமுள்ள எவர்க
ளும் அணுகலாகாது.—ஆசாரியனாகிய ஆரோனு ௨௰
டைய சந்ததியாரிற் சரீரதோஷமுள்ளவனெவ
னோ அவன் அக்கினியிலிடப்படும் யெகோ
வாவின் நைவேத்தியங்களைநிவேதிக்கும்படி அ
ணுகலாகாது.—அவன்சரீரதோஷமுள்ளவன் அதி ௨௧
னால்தன் தேவனுடைய ஆகாரத்தை நைவேத்தி
யம் பண்ணும்படி அணுகலாகாது.—அவன் தன் ௨௨
தேவனுடைய ஆகாரமான மிகவும்பரிசுத்தமுள்
ளவைகளிலும் பரிசுத்தமானவைகளிலும் புசிக்க
லாம்.—ஆனாலும் சரீரதோஷமுள்ளவனானபடி ௨௩
யால் அவன்என்பரிசுத்தமானவைகளை அசுசிப்
படுத்தும்படி திரைக்குள்ளேவரவும், வேதிகைக்
குச்சமீபிக்கவும்படாது. யெகோவாவாகிய
நான் அவைகளைப்பரிசுத்தப்படுத்துகிறேனென்
றுசொல்லென்றார்.—மோசே இவைகளை ஆரோ ௨௪
னுக்கும், அவன்புத்திரருக்கும், இஸரவேல் சந்
ததியார்யாவருக்குஞ்சொன்னான்.

## ௨௨. அதிகாரம்.

௧. ஆசாரியர் அசுத்தமாயிருக்கையில்பரிசுத்தவஸ்துக்களைத்தீண்டலாகாதெனவிதித்தல்: ௰. ஆசாரிய குடும்பத்தில் பிரசாதம் புசிக்கத்தக்கவர்களின்னாரென விதித்தல்: ௰௪. அபுத்திபூருவமாய்ப் பரிசுத்த பிரசாதத்தைப் புசித்தவனுக்குப்பிராயச்சித்தம் விதித்தல்: ௰௭. பலிகள்நிர்த்தோஷமாயிருக்கவேண்டுமெனல்: ௨௬. பலியிடப்படும்மிருகங்களுக்கு வயது குறித்தல்: ௨௯. நன்றியறிவிக்கும் பலிபுசிக்கும்விதி.

யெகோவா மோசேயை நோக்கி,—இஸர ௧
வேல்சந்ததியார்எனக்கென்றுபரிசுத்தப்படுத்தும் ௨
பரிசுத்த வஸ்துக்களைக்குறித்து என்னாமத்தைச்
சாதாரணப்படுத்தாதபடி ஆரோனும் அவன்புத்தி
ரரும் அவைகளுக்கு விலகி நிற்கவேண்டுமென்
று அவர்களுக்குச்சொல்லு: நானே யெகோ
வா.—அன்றியும் நீ அவர்களைநோக்கி, உங்கள் ௩
தலைமுறைகளிலுள்ள சந்ததியாரிலெவனாகிலுந்
தான் அசுசியாயிருக்கையில் இஸரவேல் சந்ததி
யார் யெகோவாவுக்கென்று பரிசுத்தப்படுத்
தும்பரிசுத்தவஸ்துக்களின் சமீபத்திற்சேர்ந்தால்,
அவன் என் சந்நிதியினின்றுஞ் சேதிக்கப்படு
வான்: நானே யெகோவா.—ஆரோனின் சந்த ௪
தியாரிற் குஷ்டரோகியெவனோ அவனும், மேக

(௪) எசேக்.௪௪.௰௬,௰௭. (௫) உபா.௰௪.௧. எசேக்.௪௪.௨௰. (௬) அதி.௰௮.௨௧. அதி.௩.௰௧. (௭) எசேக்.௪௪.௨௨. உபா.௨௪.௧,௨. (௯) ஆதி.௩௮.௨௪. (௰) யாத்.௨௯.௨௯,௩௰. எண்.௩௫.௨௫. யாத்.௨௮.௨. அதி.௰.௬. அதி.௮.௯,௰௨, ௩௰. (௰௧) எண்.௰௯.௰௪. (௰௨) அதி.௰.௭. (௰௩) எசேக்.௪௪.௨௨. (௰௭) எண்.௰௬.௫. சங்.௬௫.௪. (௰௮) அதி.௨௨.௨௩. (௰௯) உபா.௨௩.௧. (௨௨) அதி.௨.௩௰. எண்.௰௮.௯. அதி.௨௨.௰,௰௧,௰௨.—(௨௨. அதி. ௨.) எண்.௬.௩. அதி.௰௮.௨௧. யாத்.௨௮.௩௮. உபா.௰௫.௰௯. (௪) அதி.௰௫.௨.

ரோகியெவனே அவனுஞ் சுசியாகும்வரைக்கும்
பரிசுத்தவஸ்துக்களிற்புசிக்கலாகாது;பிணத்தினு
லே அசுசியானவைகளில் எதையாகிலுந்தொட்
டவனாகிலும், வீரியங்கழியவிட்டவனாகிலும்,—
௫ ஆசூசப்படுத்துகிற ஊர்வனவற்றிலொன்றையா
வது அசுசியுள்ளமனிதனையாவது தொட்டவனா
௬ கிலும்,—சாயங்காலபரியந்தம் அசுசியாயிருப்
பான்; அவன் சலத்தில் ஸ்நானம்பண்ணும் வ
ரைக்கும்பரிசுத்தவஸ்துக்களில்புசிக்கலாகாது.—
௭ சூரியன் அஸ்தமித்தபின்பு சுசியாவான்: அதன்
பின்பு பரிசுத்தவஸ்துக்கள் அவனுக்கு ஆகாரமா
௮ யிருப்பதினால் அவைகளைப்புசிக்கலாம்.-அவன்
தன்னை அசுசிப்படுத்தும்படிக்கு இயல்பாயிறந்த
தையும், பீறுண்டதையும், புசிக்கவேண்டாம்: நா
௯ னே யெகோவா.-ஆதலால்என்கட்டளையைக்
காத்துக்கொள்ளக்கடவர்கள், அல்லாதிருந்தால்
அதைச் சாதாரணப் படுத்தினதினிமித்தம் பாவ
தண்டனையை யனுபவித்து மரிப்பார்கள்: யெ
கோவாவாகிய நான் அவர்களைப்பரிசுத்தப்ப
டுத்துகிறேன்.

௰ பரதேசி ஒருவனும் பரிசுத்தவஸ்துவில்புசிக்க
லாகாது, ஆசாரியர்வீட்டில் விடுதிபெற்றிருக்கிற
வனும்,கூலிக்காரனும்,பரிசுத்தவஸ்துவில்புசிக்க
௰௧ லாகாது.—ஆசாரியனால் பணத்துக்குக்கொள்ளப்
பட்டவனும்,அவன்வீட்டிற்பிறந்தவனும்,அதில்
புசிக்கலாம்: அவர்கள் அவனுடைய ஆகாரத்தில்
௰௨ புசிக்கலாம்.—ஆசாரியனுடையபுத்திரி அந்நிய
வமிசத்தானுக்கு மனைவியாயிருந்தால், அவள்
நைவேத்தியமாகிய பரிசுத்தவஸ்துவில் புசிக்க
௰௩ லாகாது.—ஆசாரியனுடையபுத்திரி விதவையா
யுந் தள்ளப்பட்டவளாயும் பிள்ளையின்றித்தன்பி
தாவீட்டில் தன்னிளமையிலிருந்ததுபோலத் தி
ரும்ப வந்திருந்தால், அவள் தன் பிதாவினுகாரத்
தில் புசிக்கலாம்: அந்நியசாதியா னொருவனும்
புசிக்கப்படாது.

௰௪ ஒருவன் அபுத்தி பூருவமாகப்பரிசுத்த வஸ்
துக்களில் புசித்தால், அவன் ஐந்திலொருபங்கு
கூட்டிப் பரிசுத்தவஸ்துவுடன் ஆசாரியனுக்குக்
௰௫ கொடுக்கக்கடவன்.—யெகோவாவாகியநான்
இஸரவேல் சந்ததியாரைப் பரிசுத்தப் படுத்துகி
றேன்; ஆதலால் அவர்கள் யெகோவாவுக்கு
நைவேத்தியம் பண்ணும் பரிசுத்தவஸ்துக்களைச்
௰௬ சாதாரணப்படுத்தவும்,-அந்தப்பரிசுத்த வஸ்துக்க
ளைப்புசிப்பதினால், குற்றத்தின் தண்டனையைய
வர்கள்மேற்சுமத்தவும், வேண்டாமென்றுசொல்
லென்றார்.

௰௭ பின்னும் யெகோவா மோசேயுடனே,—
௰௮ நீ ஆரோனையும்,அவன்புத்திரரையும் இஸரவேல்
சந்ததியாரனைவரையும்நோக்கி,இஸரவேல்குடும்
பத்தாரிலாவது, இஸரவேலருக்குள்ளே தங்கும்
பரதேசிகளிலாவது, தங்கள் சங்கற்பப்படியாகி
லும்,இஷ்டப்படியாகிலும்,யெகோவாவுக்கி
டப்படுந் தகனபலிக்குக் காணிக்கை கொண்டு
வரும் யாவராகிலும் அது அங்கிகரிக்கப்படும்
பொருட்டு,—மாட்டிலாவது செம்மறி யாட்டி ௰௯
லாவது வெள்ளாட்டிலாவது பழுதற்ற ஒரு ஆ
ணைத் தெரிந்து பலியிடவேண்டும்.—பழுதுள்ள ௨௰
தைப்பலியிடவேண்டாம்: அது உங்களுக்காக
அங்கிகரிக்கப்படமாட்டாது.—ஒருவன்தன்சங் ௨௧
கற்பசித்தியின்பொருட்டு யெகோவாவுக்கு
ஸ்தோத்திரபலியையாகிலும் மாட்டிலாவது ஆட்
டிலாவது இஷ்டபலியையாகிலும், இட்டால்அ
து அங்கிகரிக்கப்படும்படி பழுதற்றிருக்கவேண்
டும்: அதிலே பழுதிருக்கப்படாது.—குருடு நெ ௨௨
ரிவு முடம் கழலை சொறி புண்ணுள்ளவைகளை
நீங்கள் யெகோவாவுக்குப் பலியிடவேண்
டாம். இவைகளில்யாதொன்றையாகிலும் வே
திகையின்மேலே யெகோவாவுக்கு அக்கினி
யிற்பலியிடப்படாது.—அதிகாங்கமாவது அங் ௨௩
கவீனமாவது இருக்குங்காளையையாகிலும் ஆட்
டையாகிலும் இஷ்ட பலிக்குக் கொடுக்கலாம்;
சங்கற்பபலியாக அது அங்கிகரிக்கப்படமாட்
டாது.—நசுங்கினதையும் நொருங்கினதையுங் கா ௨௪
யப்பட்டதையும் விதையறுக்கப்பட்டதையும்
நீங்கள் யெகோவாவுக்குப் பலியிடவேண்
டாம்: உங்கள்தேசத்தில்அப்படிச்செய்யப்படா
து.—இவைகளில் யாதொன்றையும்பரதேசியின் ௨௫
கையிலிருந்துவாங்கி யெகோவாவுக்கு ஆகா
ரமாகப்பலியிடலாகாது; அவைகளுடையஅசுத்
தம்அவைகளிலிருக்கும். அவைகளுடையபழு
து அவைகளிலிருக்கும், ஆதலால்அவைகள் உங்
களுக்காகஅங்கிகரிக்கப்படலாகாதென்றுசொல்
லென்றார்.

பின்னும் யெகோவா மோசேயை நோக் ௨௬
கி,—காளையாகிலுஞ் செம்மறியாடாகிலும் வெள் ௨௭
ளாடாகிலும் ஈனப்பட்டால், அது எழுநாள்தன்
தாயினிடத்திலிருக்கக்கடவது; எட்டாம்நாள்
முதல் அது யெகோவாவுக்கு அக்கினியிற்
பலியிடப்பட்டால், அங்கிகரிக்கப்படும்.—பசு ௨௮
வுடன் அதின் கன்றையாகிலும், ஆட்டுடன் அ
தின் குட்டியையாகிலும் ஒரேநாளில் கொல்ல
வேண்டாம்.

யெகோவாவுக்கு நன்றியறிவிக்கும் பலி ௨௯
யிட்டால், அது அங்கிகரிக்கப்படும்பொருட்டு,-
அத்தினத்திலேதான் புசிக்கவேண்டும்; விடியற் ௩௰
காலபரியந்தம் அது சேஷமாயிருக்கப்படாது:
நானே யெகோவா.—நீங்கள் என் கட்டளை ௩௧
களைக்காத்துநடவுங்கள்:நானே யெகோவா.-
என் பரிசுத்த நாமத்தை நீங்கள் சாதாரணப்படுத் ௩௨
தப்படாது, இஸரவேல் சந்ததியாரின் மத்தியில்

(௬) எபி.௰.௨௨. (௭) எண்.௰௮.௰௧,௰௩. (௮) யாத்.௨௨.௩௧. (௯) யாத்.௨௮.௪௩. (௰) ௧.சாமு.௨௧.௬. (௰௧) எண். ௰௮.௰௧,௰௩. (௰௩) ஆதி.௩௮.௰௧. எண்.௰௮.௰௧,௰௯. (௰௫) எண்.௰௮.௩௨. (௨௰) உபா.௰௫.௨௧. மல்.௧.௮,௰௪. எபே. ௫.௨௭. எபி.௯.௰௪. ௧.பேதுரு.௧.௰௯. (௨௧) எண்.௰௫.௩,௮. சங்.௬௧.௮. பிர.௫.௪,௫. (௨௨) மல்.௧.௮. (௨௩) அதி. ௨௧.௰௮. (௨௫) எண்.௰௫.௰௫,௰௬. அதி.௨௧.௬,௰௭. மல்.௧.௰௪. (௨௮) உபா.௨௨.௬. (௨௯) சங்.௱௰௬.௰௭. ஆமோ. ௪.௫. (௩௧) எண்.௰௫.௪௰. உபா.௪.௪௰. (௩௨) அதி.௰௮.௨௧. அதி.௰.௩. மத்.௬.௯. லூக்.௰௧.௨. அதி.௨௰.௮.

நான்பரிசுத்தரென்று மதிக்கப்படவேண்டும: நா
னே யுங்களைப் பரிசுத்தப்படுத்தும் யெகோ
௩௩ வா.—நான்உங்கள் தேவனாகும்படி எகிப்துதே
சத்தினின்றும் உங்களைப் புறப்படுத்தினேன்: நா
னே யெகோவாவென்று சொல்லென்றார்.

## ௨௩. அதிகாரம்.

௧. யெகோவாவின்உற்சவங்கள்:௩. ஒய்வுநாள்: ௪. பஷ்கா:௯. முதல்விளைவின் அரிக்கட்டு:௰௫. பெந்திக்கோஸ்து உற்சவம்: ௨௨. சிந்தினகதிரை எடுக்கலாகாதெனவிதித்தல்: ௨௩. தூரியவாத்தியஉற்சவம்: ௨௬.பிராயச்சித்ததினம்: ௩௩. குடிசையில்வசித்தலினுற்சவம்.

பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,—
௨ நீ இஸரவேல்சந்ததியாரிடத்தில், நீங்கள் திருச்
சபைகூடும்படி பிரசித்தம்பண்ணி யெகோ
வாவுக்கென்று ஆசரிக்கவேண்டிய உற்சவங்க
ளாவன.
௩ ஆறுநாள் வேலைகள்நடப்பிக்கப்படும்; ஏழாம்
நாளோ இளைப்பாறுவதற்கேற்ற ஒய்வுநாள்; அ
திலே திருச்சபைகூடவேண்டும்; அதிலேயெந்
தவேலையுஞ் செய்யப்படாது: அது உங்கள் வா
சஸ்தலமெங்கும் யெகோவாவுக்குரிய ஒய்
வுநாள்.
௪ நீங்கள் திருச்சபைகூடும்படி அந்தந்தக்காலத்
திலே பிரசித்தம்பண்ணவேண்டிய யெகோ
௫ வாவின் உற்சவங்களாவன.—முதலாம்மாதம்
பதினாலாந்தினத்தில் சாயங்காலம் யெகோவா
௬ வின்பஷ்கா.—அந்தமாதம் பதினைந்தாந்தினத்தில்
யெகோவாவுக்குப்புளிப்பில்லாதஅப்பங்களி
னுற்சவம் நடக்கும், ஏழுநாள் புளிப்பில்லாத
௭ அப்பத்தைப்புசிக்கவேண்டும்.—முதலாம் நாளில்
திருச்சபைகூடவேண்டும்; அதிலே எவ்விதசா
௮ தாரணவேலையுஞ் செய்யப்படாது.—ஏழு நாளும்
யெகோவாவுக்கு அக்கினியில்பலியிடவேண்
டும்; ஏழாம்நாள் திருச்சபைகூடவேண்டும்; அ
திலே எவ்விதசாதாரணவேலையுஞ்செய்யப்படா
தென்றுசொல்லென்றார்.
௯ பின்னும் யெகோவா மோசேயைநோக்
௰ கி,—நீ இஸரவேல்சந்ததியாரிடத்தில் நான் உங்
களுக்களிக்குந்தேசத்திலே நீங்கள்போய்ச்சேர்ந்
தபின்பு அங்கே அரியரியும்பொழுது உங்கள்
முதல்விளைவின் ஒரு அரிக்கட்டை ஆசாரியனி
௰௧ டத்திற் கொண்டுவரவேண்டும்.—உங்களுக்காக
அது அங்கிகரிக்கப்படும்பொருட்டு அதை யெ
கோவாவின் சந்நிதியில் அசைவாட்டக்கட
வன். ஒய்வுநாளுக்கு மற்றைநாள் ஆசாரியன் அ
௰௨ தை அசைவாட்டவேண்டும்.—நீங்கள் அரிக்கட்
டை அசைவாட்டுந்தினத்தில் யெகோவாவுக்
குத்தகனபலியாய்க்குற்றமற்ற ஒரு வருஷத்துக்
௰௩ கடாக்குட்டியையும்,—அதினுடன் யெகோ
வாவுக்கு அக்கினியிலிடப்படும் சுகந்தபலியாய்
ஒரு ஏபாவின்பத்திலிரண்டுபங்காகிய எண்ணெ
யிற்பிசைந்த மெல்லியமாவின் நைவேத்தியத்தை
யும், கால் கின் திராட்சபான பலியையுமிடக்க
டவீர்கள்.—உங்கள் தேவனுக்குக் காணிக்கை ௰௪
யை நீங்கள்கொண்டுவருந்தினம்வரைக்கும் அப்
பமும், வாட்டியகதிரும், பச்சைக்கதிரும் புசிக்
கப்படாது. இதுவேஉங்கள்வாசஸ்தலமெங்கும்
உங்கள் தலைமுறைதோறும் நித்தியநியமம்.
நீங்கள் அசைவாட்டும்படி அரிக்கட்டைக் ௰௫
கொண்டுவருகிற ஒய்வுநாளுக்கு மறுநாள் முதல்
எண்ணி, ஏழு ஒய்வுநாள் பூரணமானபின்,—ஏ ௰௬
ழாம்ஒய்வுநாளுக்கு மற்றைநாளாகிய ஐம்பதாம்
நாள்வரைக்கும் எண்ணிப்பின்பு யெகோவா
வுக்குப் புதிய நைவேத்தியத்தை யிடக்கடவீர்
கள்.—நீங்கள் ஒரு ஏபாவிற் பத்திலிரண்டுபங்கு ௰௭
மெல்லிய புளித்தமாவினாற்சுடப்பட்ட அசை
வாட்டப்படுமிரண்டப்பங்களை உங்கள் வாசஸ்
தலங்களிலிருந்து யெகோவாவுக்கென்று மு
தற்பலனாகக்கொண்டுவந்து,—அப்பத்தோடே கூ ௰௮
ட யெகோவாவுக்குத்தகனபலியாகக் குற்ற
மற்ற ஒருவருஷத்து ஏழாட்டுக்குட்டிகளையும்,
ஒரு இளங்காளையையும், இரண்டு ஆட்டுக்கடாக்
களையும், யெகோவாவுக்கு அக்கினியிலிடப்
படும் சுகந்தபலியாகஅவைகளுக்கடுத்தநைவேத்
தியத்தையும், பான பலியையுமிட்டு,—வெள்ளா ௰௯
டுகளில் ஒரு கடாவைப் பிராயச்சித்தபலியாக
வும், ஒரு வருஷத்து இரண்டு ஆட்டுக்குட்டி
களை ஸ்தோத்திரபலியாகவுமிடக்கடவீர்கள்.—
அவைகளை ஆசாரியன் முதற்பலனாகிய அப்பத் ௨௰
தோடும் இரண்டு ஆட்டுக்குட்டிகளோடுங்கூட
யெகோவாவின் சந்நிதியில் அசைவாட்டப்
படும் நைவேத்தியமாக அசைவாட்டக்கடவன்:
யெகோவாவுக்குப்பரிசுத்தமாகிய அவைகள்
ஆசாரியனுடையவைகளாம்.-அத்தினத்தில்திருச் ௨௧
சபை கூடும்படி நீங்கள் பிரசித்தப்படுத்தவேண்
டும். அதில் எவ்விதசாதாரணவேலையுஞ்செய்யப்
படாது: இது உங்கள்வாசஸ்தலமெங்கும்உங்கள்
தலைமுறைதோறும் நித்தியநியமம்.
நீங்கள் உங்கள் தேசத்தில் அரியரியும்பொழு ௨௨
து,உங்கள் வயல்மூலைகளிலே தீர அரியாமலுஞ்
சிந்திக்கிடக்கிற கதிர்களைப் பொறுக்காமலும் த
ரித்திரருக்கும்பரதேசிகளுக்கும் அவைகளைவிட்
டுவிடுவீர்களாக:நானேயுங்கள் தேவனாகிய யெ
கோவாவென்று சொல்லென்றார்.
பின்னும் யெகோவா மோசேயைநோக் ௨௩
கி,—நீ இஸரவேல்சந்ததியாரிடத்தில் ஏழாம்மா ௨௪
தம் முதல்தினத்தில் தூரியவாத்தியத்தின் ஞாப
கக்குறியாக ஒரு ஒய்வுநாளிருக்கும்; அதில் திருச்
சபை கூடவேண்டும்.—அதில் எவ்வித சாதார ௨௫

(௩௩) யாத்.௬.௭. எண்.௰௫.௪௧.—(௨௩. அதி. ௨.) ௨.இரா.௰.௨௰. சங்.௮௧.௩. (௩) யாத்.௨௰.௯. உபா.௫.௰௩. லூக்.௰௩.௰௪. (௪) யாத்.௨௩.௰௪. (௫) யாத்.௰௨.௬. உபா.௰௬.௧—௮. யோசு.௫.௰. (௭) யாத்.௰௨.௰௬. (௰) யாத்.௨௩.௰௬, ௰௯. எண்.௰௫.௨,௰௮. உபா.௰௬.௯. யோசு.௩.௰௫. ரோ.௰௧.௰௬. ௧.கொரி.௰௫.௨௰. யாக்.௧.௰௮. வெளி.௰௪.௪. (௰௧) யாத்.௨௯.௨௪. (௰௫) யாத்.௩௪.௨௨. (௰௬) அப்.௨.௧. எண்.௨௮.௨௬. (௰௭) யாத்.௨௩.௰௬,௰௯. எண்.௰௫. ௰௭—௨௧. (௰௯) எண்.௨௮.௩௰. அதி.௩.௧. (௨௰) எண்.௰௮.௰௨. (௨௪) எண்.௨௯.௧.

ணவேலையுஞ்செய்யலாகாது; யெகோவாவுக்
கு அக்கினியிற்பலியிடவேண்டுமென்று சொல்
லென்றார்.
௨௬ பின்னும்யெகோவாமோசேயைநோக்கி,—
௨௭ அந்த ஏழாம்மாதம் பத்தாந்தினத்தில் பிராயச்சித்
ததினமாயிருப்பதாக; அதில் திருச்சபைகூட
வேண்டும். அதில் உங்கள் ஆத்துமத்தைத்துக்கப்
படுத்தி, யெகோவாவுக்கு அக்கினியிற்பலி
௨௮ யிடக்கடவீர்கள்.—அந்தத்தினம் உங்கள் தேவ
னாகிய யெகோவாவின் சந்நிதியில் உங்க
ளுக்குப்பிராயச்சித்தஞ் செய்யப்படும் பிராயச்
சித்ததினமாதலால் அதில் எந்தவேலையுஞ்செய்
௨௯ யப்படாது.—அத்தினத்தில் தன்னைத்துக்கப்படுத்
தாதிருப்பவனெவனோ அவன் தன் சனங்களி
௩௰ னின்றுஞ்சேதிக்கப்படுவான்.—அத்தினத்தில் ஒரு
வன் யாதொரு வேலைசெய்தால், அவனை அ
௩௧ வன் சனங்களினின்றும்நாசப்படுத்துவேன்.—அ
தில் நீங்கள் எந்தவேலையுஞ்செய்யப்படாது: இ
து உங்கள் வாசஸ்தலமெங்கும் உங்கள் தலைமு
௩௨ றைதோறும் நித்தியநியமமாயிருக்கும்.—அது நீங்
கள் இளைப்பாறுதற்கான ஓய்வுநாள்; அதில் உங்
கள் ஆத்துமாவைத்துக்கப்படுத்தவேண்டும். அந்
தமாதத்தின் ஒன்பதாந்தினம் சாயங்காலந்தொ
டங்கி மறுநாள் சாயங்காலம்வரைக்கும் உங்
கள் ஓய்வை ஆசரிக்கக்கடவீர்களென்றார்.
௩௩ பின்னும்யெகோவாமோசேயைநோக்கி,-
௩௪ நீ இஸரவேல் சந்ததியாரிடத்தில் அந்த ஏழாம்
மாதம் பதினைந்தாந்தினமுதல் ஏழுநாளும் யெ
கோவாவுக்குக்கூடார உற்சவம் நடக்கவேண்
௩௫ டும்.-முதல்தினத்தில் திருச்சபைகூடவேண்டும்.
அதில் எவ்விதசாதாரணவேலையுஞ் செய்யப்ப
௩௬ டாது.—ஏழுநாள் யெகோவாவுக்கு அக்கினி
யிற்பலியிடவேண்டும்: எட்டாம்நாளுந் திருச்
சபைகூடவேண்டும்; அதிலும் யெகோவா
வுக்கு அக்கினியிற்பலியிடவேண்டும்; அது ஆ
சரிக்கப்படுந்தினம்: அதிலே எவ்விதசாதாரண
௩௭ வேலையுஞ்செய்யப்படாது.—யெகோவாவின்
ஓய்வுநாள்களையும், நீங்கள் யெகோவாவுக்கி
டுங் காணிக்கைகளையும், சங்கற்பங்கள்யாவை
யும், இஷ்டபலிகள் யாவையுமன்றி அந்தந்த
நாள்களுக்குத்தக்கதாய்த் தகனபலியாகவும் நை
வேத்தியமாகவும் மற்றைப்பலியாகவும் பானப
௩௮ லியாகவும்,—யெகோவாவுக்கு அக்கினியில்
நைவேத்தியமிடும்படி யெகோவாவுக்குஇந்த
உற்சவங்களை நீங்கள்திருச்சபையிலே பிரசித்தப்
௩௯ படுத்தவேண்டும்.—அன்றியும் நிலத்தின்பலனை
நீங்கள் சேர்த்துவைக்கும் ஏழாம்மாதம் பதினைந்
தாந்தினமுதல் ஏழுநாள் யெகோவாவின் உற்
௪௰ சவத்தை ஆசரிக்கக்கடவீர்கள்.—முதல்தினம் ஓய்
வுநாள்; எட்டாந்தினமும் ஓய்வுநாள்; முதல்நா
ளிலே நீங்கள் உத்தமவிருட்சங்களின் கிளைகளை
யும், பேரீந்துமட்டையோலைகளையும், தழைத்தி
ருக்கிற விருட்சங்களின் கிளைகளையும், ஆற்றல
ரிகளையுங்கொண்டுவந்து, உங்கள் தேவனாகிய
யெகோவாவின் சந்நிதியில்ஏழுநாளும்மகிழ்ச்
சியாயிருங்கள்.-இப்படியேவருஷந்தோறும்ஏழு ௪௧
நாள் யெகோவாவுக்கு உற்சவம் ஆசரிக்கக்க
டவீர்கள்: இது உங்கள் தலைமுறைதோறும் நித்
திய நியமமாயிருக்கும், ஏழாம்மாதத்தில் அதை
ஆசரிக்கவேண்டும்.—நான் இஸரவேல் சந்ததி ௪௨
யாரை எகிப்துதேசத்தினின்றும் புறப்படச்செய்
தபொழுது, அவர்களைக்குடிசைகளில் வாசமாயி
ருக்கப்பண்ணினதை உங்கள் சந்ததியார் அறி
யும்படிக்கு,—ஏழுநாளும் குடிசையிலே வாசம் ௪௩
பண்ணக்கடவீர்கள்: இஸரவேலருக்குள்ளே பி
றந்தவர்களெல்லாருங்குடிசைகளில் வாசம்பண்
ணவேண்டும்: நானேயுங்கள் தேவனாகிய யெ
கோவாவென்று சொல்லென்றார்.—அப்படியே ௪௪
மோசே யெகோவாவின் உற்சவங்களை இ
ஸரவேல் சந்ததியாருக்குத்தெரிவித்தான்.

## ௨௪. அதிகாரம்.

௧. விளக்கெண்ணெய்: ௫. சமுகத்தப்பம்: ௰.
ஷிலொமித்தின் புத்திரன் நிந்தனைசெய்தல்:
௰௭. கொலை: ௰௮. உத்தரவாதம்: ௨௩. நிந்தனை
செய்தவனுக்குத்தண்டனை.

பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,— ௧
நித்தமும் விளக்கெரியும்படிக்கு இஸரவேல்சந் ௨
ததியார் இடித்துப்பிழிந்த சீதவிருட்சத்தின் சுத்
தமான எண்ணெயையுன்னிடத்தில் கொண்டுவ
ரும்படி அவர்களுக்குக் கட்டளையிடு.—ஆரோ ௩
னவன் சபையின் ஆவாசத்தில் சாட்சிப்பத்தி
ரத்தின் திரைச்சீலைக்குவெளியே சாயங்காலந்
தொடங்கி விடியற்காலபரியந்தம் யெகோவா
வின் சந்நிதியில் நித்தமும் ஏற்றக்கடவன்; இது
உங்கள் தலைமுறைதோறும் நித்திய நியமமாயி
ருக்கும்.—அவன் பரிசுத்தக்கிளைவிளக்கின் அ ௪
கல்களை யெகோவாவின் சந்நிதியில் ஒழுங்
குப்படுத்தவேண்டும்.
அன்றியும் நீ மெல்லியமாவையெடுத்து ஒவ் ௫
வொரு அப்பம், ஒரு ஏபாவிற்பத்திலிரண்டுபங்
குள்ளதாகப் பன்னிரண்டு அப்பஞ்சுடவேண்
டும்.—நீ அவைகளை யெகோவாவின் சந்நி ௬
தியில் பரிசுத்தபீடத்தின்மேல் ஒவ்வொரு அடுக்
கில் அவ்வாறிருக்கும்படி இரண்டு அடுக்காக
வைத்து,—யெகோவாவுக்கு அக்கினியிலிடப் ௭
படும் ஞாபகக்குறியாகிய நைவேத்தியமாகும்
பொருட்டு, அடுக்குத்தோறுஞ்சுத்த குந்துருவை
யிடக்கடவாய்.—அவைகளை நித்திய உடன்படிக் ௮
கையாய் இஸரவேல் சந்ததியார்கையில் வாங்கி
ஓய்வுநாள் தோறும் யெகோவாவின் சந்நிதி

(௨௭) அதி.௰௬.௩௰. (௨௯) ஆதி.௰௭.௰௪. (௩௰) அதி.௨௰.௩,௫,௬. (௩௪) யாத்.௨௩.௰௬. எண்.௨௯.௰௨. எஸ்ரு.௩.௪. நிகி.அ.௰௪. ௪௧.௰௪.௰௬. யோவா.௭.௨. (௩௬) எண்.௨௯.௩௫. நிகி.அ.௰௮. யோவா.௭.௩௭. உபா.௰௬.௮. நிகி.அ.௰௮. யோவே.௧.௰௪. (௩௯) உபா.௰௬.௰௩. (௪௰) நிகி.அ.௰௫. உபா.௰௬.௰௪,௰௫. (௪௧) நிகி.அ.௰௮. (௪௨) உபா.௩௧.௰௩. சங்.௭௮.௫,௮. (௪௩) நிகி.அ.௰௪,௰௫,௰௬.—(௨௪. அதி. ௨.) யாத்.௨௭.௨௰,௨௧. (௪) யாத்.௩௧.௩. (௫) யாத்.௨௫.௩௰. (௬) ௧.இரா.௭.௪௮. ௨.நாளா.௪.௰௯. எபி.௯.௨. (௮) எண்.௪.௬. ௨.நாளா.௨.௪.

௯ யில் அடுக்கிவைக்கக்கடவன்.—நித்திய நியமமா
க யெகோவாவுக்கு அக்கினியிலிடப்படும்
நைவேத்தியங்களுக்குள் அவைகள்மிகவும் பரி
சுத்தமானவைகளாகையால் அவைகள் ஆரோ
னுக்கும் அவன்புத்திரருக்குமுரித்தாகும்: அவை
களைப்பரிசுத்த ஸ்தானத்திற்புசிக்கக்கடவர்கள்.
௰ அக்காலத்திலே இஸரவேல்வமிசத்திலுள்ளஸ்
திரிக்கும், எகிப்தியனான ஒருவனுக்கும் புத்திர
னானவன் இஸரவேல் சந்ததியார் மத்தியிலே பு
றப்படவந்து இஸரவேல்சந்ததியிலுள்ள ஒருவ
௰௧ னுடன்பாளயத்தில் விரோதஞ்செய்தான்.—அப்
பொழுது இஸரவேல்வமிசத்திலுள்ள ஸ்திரியின்
புத்திரனானவன் யெகோவாவின் நாமத்தை
நிந்தனைபண்ணிச்சபித்தான். அவனை மோசேயி
னிடத்துக்குக் கொண்டுவந்தார்கள். தாணின்
கோத்திரத்திலுள்ள திப்ரி யென்பவனுடையபுத்
திரியாகிய ஷிலொமித்தென்பவள்அவன்மாதா.—
௰௨ யெகோவாவின் திருவுள்ளந்தங்களுக்குத்தெ
ரிவிக்கப்படுமளவும், அவனைச் சிறைச்சாலையில்
௰௩ வைத்தார்கள்.—யெகோவா மோசேயைநோக்
௰௪ கி,—சாபஞ்செய்தவனைப் பாளயத்திற்குப்புறம்
பேகொண்டுவா; கேட்டவர்களெல்லாரும் அவ
னுடையதலையின்மேல் தங்கள் கைகளைவைத்த
பின்பு சபையாரெல்லாரும் அவனைக்கல்லெறிந்
௰௫ து கொல்லக்கடவர்கள்.—நீ இஸரவேல் சந்ததி
யாரிடத்தில் தன் தேவனைச் சபிக்கிறவனெவ
னோ அவன் தன் பாவத்தின்தண்டனையை அனு
௰௬ பவிப்பான்.—யெகோவாவின் நாமத்தை நிந்
தனைபண்ணுகிறவனெவனோ, அவன் கொலை
செய்யப்படவேண்டும். சபையாரெல்லாரும் அ
வனைக்கல்லெறியவேண்டும்: யெகோவாவின்
நாமத்தை நிந்தனைபண்ணுகிறவன் பரதேசியா
னாலுஞ்சுதேசியானாலும் அவன் கொலைசெய்யப்
படவேண்டும்.
௰௭ ஒருமனிதனைக் கொல்லுகிறவனெவனோ, அ
வன்கொலை செய்யப்படவேண்டும்.
௰௮ மிருகத்தைவதைக்கிறவன், மிருகத்துக்கு மிரு
௰௯ கங்கொடுக்கக்கடவன்.—பிறனையொருவன் ஊ
னப்படுத்தினால், அவன்செய்தபடியே அவனுக்
௨௰ குஞ்செய்யப்படவேண்டும்.—சிதைவுக்குச்சிதை
வு, கண்ணுக்குக்கண், பல்லுக்குப்பல், ஒருமனி
தனுக்கு அவன் ஊனப்படுத்தினதுபோல், அவ
௨௧ னுக்கும் அப்படியேசெய்யவேண்டும்.—மிருகத்
தைக்கொன்றவன், அதற்குப்பிரதியாக மிருகத்
தைக்கொடுக்கக்கடவன். மனிதனைக்கொன்றவ
௨௨ னே கொலைசெய்யப்படவேண்டும்.—சுதேசிக்
கும் பரதேசிக்கும் ஒரே கட்டளையிருக்கவேண்
டும்: நானே உங்கள் தேவனாகிய யெகோ
வா வென்றுசொல்லென்றார்.
மோசே சபித்தவனைப் பாளயத்திற்குப்புறம் ௨௩
பேகொண்டுவந்து அவனைக்கல்லெறிந்து கொல்
லவேண்டுமென்று இஸரவேல்சந்ததியாரிடத்திற்
சொன்னான். இஸரவேல் சந்ததியார் யெகோ
வா மோசேக்குக் கட்டளையிட்டபடியே செய்
தார்கள்.

## ௨௫. அதிகாரம்.

௧. ஏழாம்வருஷமெல்லாம்ஓய்வுவருஷமாம்படிவிதித்தல்: ௮. ஐம்பதாம்வருஷமெல்லாம் மகோற்சவஞ்செய்யும்படி விதித்தல்: ௰௪. உபத்திரவத்தைநீக்கல்: ௰௮. கீழ்ப்படிதலின்பலன்: ௨௩.நிலமீட்டல்: ௨௯. வீடுமீட்டல்: ௩௫. தரித்திரருக்கிரங்கல்: ௩௯. அடிமைகளை நடத்தும்விதி:௪௭. சிறைமீட்டல்.

பின்னும் சீனாய் மலையில் யெகோவா மோ ௧
சேயைநோக்கி,—நீ இஸரவேல் சந்ததியாரிடத் ௨
தில் நான் உங்களுக்கு அளிக்குந்தேசத்தில் நீங்
கள்போய்ச்சேர்ந்தபின்பு யெகோவாவுக்குத்
தேசத்தின் ஓய்வுகாலமிருக்கவேண்டும்.—ஆறுவ ௩
ருஷம் உன்வயலை விதைப்பாய், உன்திராட்சத்
தைநறுக்கி அவைகளின்பலனைச்சேர்ப்பாய்.—
தேசம் இளைப்பாறுவதற்கு ஏழாம்வருஷம் யெ ௪
கோவாவுக்கு ஓய்வு வருஷமாயிருக்கவேண்
டும்; அதில் உன் நிலத்தில் விதைக்கவும், உன் தி
ராட்சத்தை நறுக்கவும் வேண்டாம்.—தானாய்வி ௫
ளைந்ததையும் வெட்டவேண்டாம்; நறுக்கப்படா
ததிராட்சக்கனியையும் பறிக்கவேண்டாம்; அது
தேசத்துக்குஓய்வுவருஷமாகும்.—தேசத்தின் ஓய் ௬
வுவருஷத்தின்பலன், உங்களுக்கும் உங்கள்ப
ணிவிடைக்காரருக்கும் உங்கள்பணிவிடைக்கா
ரிகளுக்கும் உங்கள் கூலிக்காரருக்கும் உங்களி
டத்தில் தங்கும் பரதேசிகளுக்கும் ஆகாரமாயி
ருக்கும்.—அதில் விளைந்திருப்பதெல்லாம் உங் ௭
கள் தேசத்திலுள்ள மிருகசீவன்களுக்கும் ஆகார
மாயிருக்கும்.
அன்றியும் ஓய்வுவருஷங்கள் ஏழையும் ஏ ௮
ழினாற்பெருக்குங்கள்; அந்த ஏழேழுவருஷங்க
ளும் உங்களுக்கு நாற்பத்தொன்பதுவருஷமா
கும்.—அவ்வருஷத்துக்கு ஏழாம்மாதம் பத்தாந் ௯
தினத்தில் மகாசத்தம்பொருந்தியஎக்காளம் ஊத
வேண்டும்; பிராயச்சித்ததினத்தில் அந்த எக்கா
ளம் உங்கள்தேசமெங்கும் ஊதவேண்டும்.—ஐம் ௰
பதாம்வருஷத்தைப்பரிசுத்தப்படுத்தித் தேசத்தார்
சமஸ்தருக்கும் விடுதலையென்று எங்கும்பிரசித்
தப்படுத்தவேண்டும்; அது உங்களுக்கு யோபே
லென்னும் மகோற்சவம்; அதிலே உங்களில்
ஒவ்வொருவனும் தன்தன்சுதந்தரத்துக்குத்திரும்
பிப்போகக்கடவன்; உங்களில் ஒவ்வொருவ
னுந்தன்தன் வமிசத்துக்குத்திரும்பிப்போகக்கட

(௯) ௧.சாமு.௨௧.௬. மத்.௰௨.௪. மாற்.௨.௨௬. லூக்.௬.௪. யாத்.௨௯.௩௩. (௰௧) யோபு.௧.௫,௰௧,௨௨. ஏசா.௮.௨௧. யாத்.௰௮.௨௨,௨௬. (௰௨) எண்.௰௫.௩௪. யாத்.௰௮.௰௫,௰௬. (௰௪) உபா.௰௩.௯. (௰௫) அதி.௫.௧. எண்.௯.௰௩. (௰௬) ௧.இரா.௨௧.௰,௰௩. சங்.௭௪.௰,௰௮. மத்.௰௨.௩௧. யாக்.௨.௭. (௰௭) யாத்.௨௧.௰௨. எண்.௩௫.௩௧. உபா.௰௯.௰௧,௰௨. (௰௯) யாத்.௨௧.௨௪. உபா.௰௯.௨௧. மத்.௫.௩௮. (௨௧) யாத்.௨௧.௩௩. வச.௰௭. (௨௨) யாத்.௰௨.௪௯. எண்.௰௫.௰௬. (௨௫. அதி. ௨.) யாத்.௨௩.௰. ௨.நாளா.௩௬.௨௧. (௫) ௨.இரா.௰௯.௩௧. (௯) அதி.௨௩.௨௪,௨௭. (௰) ஏசா.௬௧.௨. ஏசா.௬௩.௪. எரே.௩௪.௮,௰௫,௰௭. லூக்.௪.௰௯. எண்.௩௬.௪.

௰௧ வன்.—அந்த ஐம்பதாம்வருஷம் உங்களுக்கு யோ
பேலென்னும் மகோற்சவகாலம். அதுவே யோ
பேலென்னும் மகோற்சவம். அதுஉங்களுக்குப்
பரிசுத்தமாயிருக்கவேண்டும்;ஆதலால் நீங்கள்அ
தில்விதையாமலும், தானாய்விளைந்தவைகளைஅரி
யாமலும்,நறுக்கப்படாத உங்கள்திராட்சக் கனி
௰௨ யைப்பறியாமலுமிருக்கவேண்டும்.—நீங்கள் வ
யல்வெளியில் விளைந்தவைகளைப் புசிக்கவேண்
௰௩ டும்.—யோபேலென்னும் மகோற்சவத்தில் உங்க
ளில் ஒவ்வொருவனுந் தன்தன் சுதந்தரத்துக்குத்
திரும்பிப்போகக்கடவன்.

௰௪ ஆகையால் எதையாவது பிறனுக்கு விற்று
லும், அவன் கையிற்கொண்டாலும், ஒருவருக்
௰௫ கொருவர்அநியாயஞ்செய்யப்படாது.—மகோற்
சவத்துக்குப் பின்வரும் வருஷத்தொகைக் கேற்
கப்பிறனிடத்திற் கொள்ளுங்கள்; பலனுள்ளவ
ருஷத்தொகைக்கேற்க அவனுனக்கு விற்பானா
௰௬ க.—பலனுள்ளவருஷத்துக்கேற்க அவனுங்களுக்
குவிற்கிறபடியால் வருஷத்தொகையேறினால்வி
லையையேற்றவும்,வருஷத்தொகை குறைந்தால்,
௰௭ விலையைக்குறைக்கவும்வேண்டும்.—நீங்கள் ஒரு
வருக்கொருவர் அநியாயஞ்செய்யப்படாது;உங்
கள் தேவனுக்குப்பயப்படுங்கள்: நானே உங்
கள் தேவனாகிய யெகோவா.

௰௮ என்னுடையகட்டளைகளின்படிசெய்து, என்
னுடைய விதிப்பிரமாணங்களைக்காத்து நடவுங்
கள்,அப்பொழுதுஉங்கள்தேசத்தில்வாழ்வடைந்
௰௯ துவசித்திருப்பீர்கள்.—பூமி தன் கனியைத்தரும்,
நீங்கள்திருத்தியாகப்புசித்துவாழ்வடைந்துவசித்
௨௰ திருப்பீர்கள்.—ஏழாம்வருஷத்தில் எதைப்புசிப்
போம், நாங்கள்விதைப்பதுமில்லைவிளைந்ததைச்
சேர்ப்பதுமில்லையென்று சொல்வீர்களாகில்,—
௨௧ நான் ஆறாம்வருஷத்தில் உங்களுக்கு ஆசீர்வா
தஞ்செய்வேன்; அது மூன்றுவருஷத்துக்குத்தக்
௨௨ கபலனைத்தரும்.—நீங்கள் எட்டாம்வருஷத்தில்
விதைத்து ஒன்பதாம்வருஷத்திலும் பழையபல
னைப்புசிப்பீர்கள்; அதின்பலன் விளையும்வரைக்
கும் பழையதானியத்தையே புசிப்பீர்கள்.

௨௩ அந்தத்தேசம்எனக்குரித்தாதலால்நீங்களுங்கள்
நிலங்களை அறுதியாய்விற்கவேண்டாம்: நீங்கள்
பரதேசிகளும், என்னிடத்தில் விடுதிபெற்றவர்
௨௪ களுமாயிருக்கிறீர்கள்.—நீங்கள் சுதந்தரிக்குந்தே
சமெங்கும் நிலங்களைமீட்டுக்கொள்ள அனுமதி
௨௫ கொடுக்கவேண்டும்.—உங்கள் சகோதரன் தரித்
திரப்பட்டுத்தன் சுதந்தரத்திலெதையாகிலும் விற்
றுப்போட அவனினத்தானொருவன் அதைமீட்
கும்படிவந்தால் அவன்தன்சகோதரன் விற்றதை
௨௬ மீட்கலாம்.—அதைமீட்க ஒருவருமில்லாமல்தா
னே அதைமீட்கத்தக்கவனானால்,—அது விலைப் ௨௭
பட்டவருஷத்தை யெண்ணிக்கழித்து மீந்ததொ
கையைக் கொண்டவனுக்குக் கொடுத்துத் தன்சு
தந்தரத்துக்குத் திரும்பப்போகக்கடவன்.—அப் ௨௮
படிக்கொடுக்க முடியாதிருந்தால், விற்கப்பட்ட
து, மகோற்சவவருஷம் வரைக்கும் வாங்கின
வன்கையிலிருக்கவேண்டும்; மகோற்சவத்தில்
அதுவிடுதலையாகும், அப்பொழுது அவன் தன்
சுதந்தரத்துக்குத்திரும்பப்போவான்.

ஒருவன் மதில்சூழ்ந்த நகரத்திலுள்ள தன்வா ௨௯
சஸ்தலமாகிய வீட்டைவிற்றால், அதைவிற்ற ஒரு
வருஷத்துக்குள் அதைமீட்டுக்கொள்ளலாம்;ஒரு
வருஷத்துக்குள்ளேமீட்டுக்கொள்ளவேண்டும்.—
ஒருவருஷத்துக்குள்ளே அது மீட்கப்படாதிருந் ௩௰
தால், மதில்சூழ்ந்த நகரத்திலுள்ள அந்தவீடு அ
தைக்கொண்டவனுக்கே தலைமுறைதோறும் உ
ரித்தாகும்: அது மகோற்சவத்திலும் விடுதலையா
காது.—மதில்சூழப்படாத கிராமங்களிலுள்ள வீடு ௩௧
களோ தேசத்தின் நிலங்கள்போலவே எண்ணப்
படும்; அவைகள் மீட்கப்படலாம்; மகோற்சவத்
தில் அவைகள்விடுதலையாகும்.—லேவியர் தங் ௩௨
கள் பட்டணங்களையாகிலுந் தங்களுக்குச்சுதந்த
ரமான பட்டணங்களிலுள்ள வீடுகளையாகிலும்
எக்காலத்திலும்மீட்டுக்கொள்ளலாம்;இஸரவேல்
சந்ததியாருக்குள்ளே லேவியருடைய பட்ட
ணங்களிலுள்ள வீடுகள் அவர்களுக்குச் சுதந்தர
மாதலால்,—ஒருவன் லேவியரிடத்தில் வீட்டை ௩௩
யாகிலும், அவர்கள் சுதந்தரமாகிய பட்டணத்
தையாகிலுங்கொண்டால், விற்கப்பட்ட அவை
கள் மகோற்சவத்தில் விடுதலையாகும்.—அவர்கள் ௩௪
பட்டணங்களைச்சேர்ந்த பேட்டைகளிலுள்ள நி
லம் அவர்களுக்கு நித்தியசுதந்தரமாயிருக்கிறபடி
யால் அதுவிலைப்படலாகாது.

உன்சகோதரன் தரித்திரப்பட்டுக்கைமெலிந் ௩௫
தானாகில் அவன் பரதேசியானாலும், விடுதிபெற்
றவனானாலும், உன்னுடன்கூடவசிக்கும்படிக்கு
அவனை ஆதரித்துக்கொள்ளவேண்டும்.—நீ அவன் ௩௬
கையில்வட்டியையும் இலாபத்தையும் வாங்கா
மல் உன் தேவனுக்குப்பயந்து, உன்சகோதரன்
உன்னோடேகூடவாழும்படிசெய்வாயாக.—அவ ௩௭
னுக்கு உன்பணத்தைவட்டிக்காகவும், உன்னுகா
ரத்தை இலாபத்துக்காகவுங்கொடுக்கப்படாது.—
உங்களுக்குக்கானான் தேசத்தையளித்து உங்க ௩௮
ளுக்குத் தேவனாகும்பொருட்டு உங்களை எகிப்
துதேசத்தினின்றும் புறப்படப்பண்ணின உங்
கள் தேவனாகிய யெகோவா நானே.

உன்சகோதரன் தரித்திரனாகி உனக்குவிலைப் ௩௯
பட்டால் அவனை அடிமைபோல ஊழியஞ்செய்

(௰௩) அதி.௨௭.௨௪. எண்.௩௬.௪. (௰௪) ௧.சாமு.௰௨.௩,௪. மீகா.௨.௨. ௧.கொரி.௬.௮. (௰௫) அதி.௨௭.௰௮,௨௩. (௰௮) உபா.௰௨.௰. சங்.௪.௮. நீதி.௧.௩௩. எரே.௨௩.௬. (௰௯) அதி.௨௬.௫. எசேக்.௩௪.௨௫,௨௭,௨௮. (௨௰) மத்.௬.௨௫.௩௧. (௨௧) யாத்.௰௬.௨௯. (௨௨) ௨.இரா.௰௯.௨௯. யோசு.௫.௰௧,௰௨. (௨௩) உபா.௩௨.௪௩. சங்.௮௫.௧. யோவே.௨.௰௮. ௧.நாளா.௨௯.௰௫. சங்.௩௯.௰௨. சங்.௱௰௯.௰௯. ௧.பேதுரு.௨.௰௧. (௨௫) ரூத்.௨.௨௰. (௨௬) அதி.௫.௭. (௨௭) வச.௫௰.௫௧,௫௨. (௩௨) எண்.௩௫.௨. யோசு.௨௧.௨. (௩௫) உபா.௰௫.௭,௮. சங்.௩௭.௨௬. நீதி.௰௪.௩௧. லூக்.௬.௩௫. அப்.௰௧.௨௯. ரோ.௰௨.௰. ௧.யோவா.௩.௰௭. (௩௬) யாத்.௨௨.௨௫. நெகே.௫.௭. சங்.௰௫.௫. நீதி.௨௮.௮. எசேக்.௰௮.௮. (௩௯) உபா.௰௫.௰௨. ௧.இரா.௯.௨௨. எரே.௩௪.௰௪.

௪௰ யும்படி நெருக்கவேண்டாம்.-அவன் கூலிக்கார
னையும் விடுதிபெற்றவனையும்போல உன்னுடன்
வசித்து, மகோற்சவவருஷம்வரைக்கும் உனக்கு
௪௧ வேலைசெய்யக்கடவன்.–பின்பு தன் பிள்ளைகளு
டன் உன்னைவிட்டுநீங்கித் தன் குடும்பத்திற்குந்
தன்பிதாக்களின் சுதந்தரத்திற்குந் திரும்பிப்போ
௪௨ கக்கடவன்.—அவர்கள் என்தாசர், நானவர்களை
எகிப்துதேசத்தினின்றும் புறப்படச்செய்தேன்:
ஆதலால் அவர்கள் அடிமையாகவிலைப்படலாகா
௪௩ து.–நீ அவர்களைக்கடுமையாக ஆளவேண்டாம்.
௪௪ உன் தேவனுக்குப் பயப்படுவாயாக.—உங்க
ளைச்சூழ்ந்திருக்கிற புறத்தேசத்தார்களில் யாராகி
லும் உனக்குப்பணிவிடைக்காரராகவும் பணிவி
டைக்காரிகளாகவுமிருக்கலாம்; அவர்களுக்குள்
ளே பணிவிடைக்காரர்களையும்,பணிவிடைக்கா
௪௫ ரிகளையும் நீவாங்கலாம்.–உங்களிடத்தில் தங்கும்
பரதேசிகளுடைய புத்திரருக்குள்ளும், அவர்க
ளுங்கள் தேசத்திற்பெற்ற உங்களோடிருக்கிற அ
வர்கள் குடும்பத்தாருக்குள்ளும், நீங்கள் விலைக்
குக்கொள்ளலாம்; அவர்களை உங்களுக்குச்சுதந்
௪௬ தரமாக்கலாம்.—அவர்களை உங்களுக்குப்பின்வ
ரும் உங்கள் சந்ததியாருஞ்சுதந்தரிக்குஞ்சுதந்தர
மாக்கலாம்; அவர்கள் உங்களுக்குமீளா அடிமை
யாயிருக்கவேண்டும்: உங்கள்சகோதரராகிய இ
ஸரவேல் சந்ததியார் ஒருவரையொருவர்கடுமை
யாயாளவேண்டாம்.
௪௭ விடுதி பெற்றவனாகிலும் பரதேசியாகிலுஞ்
செல்வனாயிருக்க அவன்சமீபத்தில்வசிக்கும்உன்
சகோதரன்தரித்திரப்பட்டு,அந்தப்பரதேசிக்காகி
லும் விடுதிபெற்றவனுக்காகிலும் பரதேசியின்கு
டும்பத்தாரிலெவனுக்காகிலுந் தன்னை விற்றானா
௪௮ கில்,–அவன் விலைப்பட்டபின் திரும்பமீட்கப்ப
டலாம்;அவன்சகோதரரிலொருவன்அவனைமீட்
௪௯ கலாம்.—அவனுடைய பிதாவின் சகோதரனாகி
லும் அச்சகோதரனுடைய புத்திரனாகிலும் அ
வன்குடும்பத்திலுள்ள அவனினத்தாரிலெவனாகி
லும் அவனைமீட்கலாம்;தன்னால்கூடாதிருந்தால்
௫௰ அவன் தன்னைத்தானே மீட்கலாம்.–அவன் தான்
விலைப்பட்டவருஷந்தொடங்கி மகோற்சவவரு
ஷம்வரைக்கும் தன்னைக்கொண்டவனுடன் க
ணக்குப்பார்க்கக்கடவன்; அவனுடைய விலைப்
பணம் கூலிக்காரனுடைய காலக்கிரயம்போல்
௫௧ வருஷத்தொகைக்கேற்றதாயிருக்கவேண்டும்.-வ
ருஷங்கள்அதிகமாயிருந்தால், அவன்தான்கொள்
ளப்பட்டபணத்தில் அவைகளுக்குத்தக்கதைத்
தன் மீட்சியின் விலையாகத் திரும்பக்கொடுக்க
௫௨ வேண்டும்.—மகோற்சவவருஷத்துக்குக் கொஞ்
சவருஷம்மாத்திரங்குறைவாயிருந்தால், அவனு
டன்கணக்குப்பார்த்துவருஷத்தொகைக்கேற்கத்
தன் மீட்சியின்விலையை அவனுக்குத்திரும்பக்
கொடுக்கவேண்டும்.–இவன் வருஷக்கூலிக்கார ௫௩
னைப்போல் அவனிடத்திலிருக்கவேண்டும்; அ
வன் உனக்குமுன்பாக இவனைக்கடுமையாகஆள
வேண்டாம்.–இப்படி இவன்மீட்கப்படாதிருந் ௫௪
தால் இவன் தன்பிள்ளைகளுடன் மகோற்சவவரு
ஷத்திலே விடுதலையாவான்.–இஸரவேல் சந்ததி ௫௫
யார் என்பணிவிடைக்காரர்;அவர்கள்நான்எகிப்
துதேசத்தினின்றும் புறப்படச்செய்த என் பணி
விடைக்காரர்கள்:நானே உங்கள் தேவனாகிய
யெகோவாவென்று சொல்லென்றார்.

## உகா. அதிகாரம்.

க. விக்கிரகாராதனையைவிலக்கல்: ௩. கட்டளை
யைக்காத்துக்கொள்வதினாலுண்டாகும் ஆசீர்
வாதங்களைவிவரித்தல்: ௰௪. கட்டளை மீறுவ
தினாலுண்டாகுஞ் சாபங்களைவிவரித்தல்: ௪௰.
மனந்திரும்பும் அவர்களுக்கு வாக்குத்தத்தஞ்
செய்தல்.

நானே உங்கள்தேவனாகிய யெகோவா: ஆ க
கையால் நீங்கள் நமஸ்காரம்பண்ணுவதற்கு,உங்
கள் தேசத்திலுங்களுக்காக விக்கிரகங்களையாகி
லும்,தொழிற்படுத்திய உரூபத்தையாகிலும் உண்
டுபண்ணாமலும், ஸ்தம்பவிக்கிரகத்தை நிறுத்தாம
லும், எந்தச்சிலாவிக்கிரகத்தையும் ஸ்தாபியாம
லுமிருப்பீர்களாக.—என் ஓய்வுநாள்களை ஆசரித் உ
துக்கொள்ளுங்கள்; பரிசுத்தஸ்தானத்தை மதிப்
பீர்களாக: நானே யெகோவா.

நீங்கள் என்நியமங்களின்படிநடந்து என்கட் ௩
டளைகளைக்காத்து அவைகளின்படியேசெய்வீர்
களாகில்,—நான் வேண்டுங்காலத்திலுங்களுக்கு ௪
மழைபெய்யப்பண்ணுவேன்; பூமிதானியத்தை
விளைவிக்கும்; வெளியிலுள்ள விருட்சங்கள் க
னிகளைத்தரும்.-திராட்சம்பறிக்குங்காலம்வரைக் ௫
கும், போரடிக்குங்காலமிருக்கும்; விதைப்புக்
காலம்வரைக்கும், திராட்சம்பறிக்குங்காலமிருக்
கும்; நீங்கள்திருத்தியாக உங்கள் ஆகாரத்தைப்பு
சித்து, உங்கள்தேசத்தில் வசித்துவாழ்வடைவீர்
கள்.—தேசத்தில் சமாதானமிருக்கச்செய்வேன், ௬
நீங்கள் படுத்துக்கொள்வீர்கள், ஒருவரும் உங்க
ளைப் பயப்படுத்தவிடேன்: துஷ்டமிருகங்களைத்
தேசத்தினின்றும் அகற்றுவேன்,கட்கம் உங்கள்
தேசத்தில் உலாவாது.–உங்கள்சத்துருக்களை ஒட் ௭
டுவீர்கள்; அவர்கள்உங்கள்முன்கட்கத்தால்விழு
வார்கள்.–உங்களில் ஐந்துபெயர்நூறுபெயரை ஓ ௮
ட்டுவார்கள்; உங்களில்நூறுபெயர் பதினாயிரவ
ரைப்புறங்காண்பார்கள்; உங்கள் சத்துருக்கள்
உங்கள்முன் கட்கத்தால் விழுவார்கள்.—நான் ௯

(௪௧) யாத்.உக.௩. (௪உ) வச.௫௫. ரோ.௬.உஉ. க.கொரி.எ.உ௩. (௪௩) எபே.௬.௯. கொலோ.௪.க. யாத்.க.௰௭, உக. மல்.௩.௫. (௪௫) ஏசா.௫௬.௩,௬. (௪௬) ஏசா.௰௪.உ. (௪௮) நிகி.௫.௫. (௫௰) ஏசா.௰௬.௰௪. (௫௪) யாத்.உக. உ,௩.—(உகா. அதி. க.) யாத்.உ௰.௪,௫. சங்.௯௭.எ. (உ) அதி.௰௯.௩௰. (௩) உபா.௰க.௰௩,௰௪,௰௫. (௪) ஏசா.௩௰. உ௩. எசேக்.௩௪.உ௬. யோவே.உ.உ௩,உ௪. சங்.௬௭.௬. எசேக்.௩௪.உ௭. சக.அ.௰உ. (௫) ஆமோ.௯.௰௩. உபா. ௰க.௰௫. யோவே.உ.௰௯.உ௬. யோபு.௰க.௰௮. (௬) க.நாளா.உஉ.௯. சங்.உ௯.௰க. ஏசா.௪௫.எ. ஏசா.௩௫.௯. எரே. ௩௰.௰. எசேக்.௩௪.உ௫. ஓசெ.உ.௰௮. செப்.௩.௰௩. உ.இரா.௰௭.உ௫. எசேக்.௰௪.௰௭. (௮) உபா.௩உ.௩௰. யோசு. உ௩.௰. (௯) யாத்.உ.உ௫. உ.இரா.௰௩.உ௩. ஆதி.௰௭.௬,௭.

உங்களுக்கு அனுக்கிரகஞ்செய்து, உங்களைத்த
ழைக்கவும் பெருகவும்பண்ணி, உங்களோடே
௰ என்னுடன்படிக்கையை ஸ்தாபிப்பேன்.—பழை
யதானியத்தைப்புசித்துப் புதியதானியத்தினிமித்
தம் பழையதானியத்தைவெளியே கொண்டுவரு
௰௧ வீர்கள்.-உங்கள் மத்தியில் என் ஆவாசத்தைஸ்தா
பிப்பேன்: நான் உங்களைவெறுக்கமாட்டேன்.-
௰௨ நான் உங்கள்மத்தியிலே உலாவித்திரிவேன், உங்
களுக்குத் தேவனாவேன், நீங்களென்சனங்க
௰௩ ளாவீர்கள்.—நீங்களினி அடிமைகளாயிராதபடி.
உங்கள் தேவனானயெகோவாவாகிய நான்
உங்களை எகிப்துதேசத்தினின்றும் புறப்படப்
பண்ணினேன், உங்கள் நுகத்தின்பந்தத்தை நீக்
கி உங்களை நிமிர்ந்து நடக்கப்பண்ணினேன்.
௰௪ என் கட்டளைகள் யாவையுங்கைக்கொள்ளா
மல் என்னுடன்படிக்கையை மீறும்படி நீங்களெ
௰௫ னக்குச்செவிகொடாமலும்;—என் கட்டளைகள்
யாவையுங்கைக்கொள்ளாமலும்,என்நியமங்களை
அவமதித்து என் விதிப்பிரமாணங்களை வெறுப்
௰௬ பீர்களாகில்,-கண்ணைக்குருடாக்கிறதற்கும்,இரு
தயபீடையைத் தருவதற்குமேற்ற பயங்கரத்தை
யும், ஈளையையும், நடுக்கச்சுரத்தையும், உங்களுக்
குவரப்பண்ணுவேன்: நீங்கள் விதைக்கும்விதை
விருதா, உங்கள் சத்துருக்கள் அதைப் புசிப்பார்
௰௭ கள்.—நான் உங்களுக்குவிரோதமாய் என்முகத்
தைத்திருப்புவேன், உங்கள் சத்துருவுக்குமுன்
கொலையுண்பீர்கள்: உங்கள்பகைவர்உங்களை ஆ
ளுவார்கள்; உங்களைத்தொடர்பவர்கள் ஒருவரு
௰௮ மில்லாதிருந்தாலும்ஓடுவீர்கள்.-இவ்விதமாய் உங்
களுக்குச்செய்வேன். இப்படி நடந்தும்நீங்களெ
னக்குச் செவிகொடாதிருந்தால், உங்கள் பாவங்
கள்நிமித்தம் இன்னும்எழுமடங்கு உங்களைத்தண்
௰௯ டிப்பேன்.-உங்கள் பராக்கிரமகருவத்தைத்தகர்த்
து, உங்கள்வானத்தையிரும்பும், உங்கள்பூமியை
௨௰ ப் பித்தளையும்போலாக்குவேன்.—உங்கள் பிரயா
சம் விருதாவாய் முடியும்: உங்கள் தேசந் தானி
யத்தை விளைவிக்கவுமாட்டாது; தேசத்தின் வி
௨௧ ருட்சங்கனிகளைத்தரவுமாட்டாது;-பின்னும் நீங்
கள் எனக்கு விரோதமாய்நடந்து எனக்குச் செ
விகொடாதிருந்தால், நான் உங்கள் பாவங்களுக்
கேற்க இன்னும் எழுமடங்கு கிலேசத்தை உங்க
௨௨ ள்மேல் வருவிப்பேன்.—உங்களைப் புத்திரவீன
ராக்கி, உங்கள் ஆடுமாடுகளையழித்து, உங்கள்
தொகையைக் குறைவுபடுத்துவதற்குத் துஷ்டமி
ருகங்களை உங்களுக்குள் அனுப்புவேன்; உங்கள்
வழிகள் பாழாய்க்கிடக்கும்.—என்னாலும் இ ௨௩
வைகளினாலும், நீங்கள் சீர்திருந்த மனதில்லா
மல் எனக்கு விரோதமாய்நடந்தால்,—நான் உங் ௨௪
களுக்கு விரோதமாய்நடந்து, உங்கள் பாவங்க
ளினிமித்தம இன்னும் எழுமடங்கு தண்டனை
செய்வேன்.—என்னுடன்படிக்கையை மீறின ௨௫
தற்குப் பழிவாங்குங்கட்கத்தை யுங்கள்மேல் வி
ழப்பண்ணுவேன்: நீங்களுங்கள் பட்டணங்க
ளிற்சேர்ந்தபின்பு உங்களுக்குள்ளேபெருவாரிக்
காய்ச்சலைஅனுப்புவேன்:நீங்கள்சத்துருவின்கை
யில் அகப்படுவீர்கள்.—உங்கள் ஆகாரமாகியகோ ௨௬
லை நான் முறித்துப்போட உங்களுக்குப்பத்து
ஸ்திரிகள் ஒரு அடுப்பில் அப்பஞ்சுட்டு அதைத்
திரும்பஉங்களுக்குநிறுத்துக்கொடுப்பார்கள்:நீங்
கள் அதைப்புசித்துத் திருத்தியடையாதிருப்பீர்
கள்.—இன்னுமிவைகளெல்லாவற்றினாலும் நீங்க ௨௭
ளெனக்குச் செவிகொடாமல் எனக்கு விரோத
மாய்நடந்தால்,—நானும் உக்கிரங்கொண்டு உங்க ௨௮
ளுக்குவிரோதமாய் நடப்பேன்; நானே உங்கள்
பாவங்களினிமித்தம் உங்களுக்கு எழுமடங்கு
தண்டனைசெய்வேன்.-உங்கள்புத்திரருடையமா ௨௯
மிசத்தையும், உங்கள் புத்திரிகளுடைய மாமிசத்
தையும் புசிப்பீர்கள்.—நான் உங்களுயர்ந்த ஸ்தா ௩௰
னங்களையழித்து, உங்கள் உரூபங்களைத் துணித்
து, உங்கள் பிணங்களை விக்கிரகப்பிணங்கள்மே
லெறிவேன்; எனதுள்ளம் உங்களை வெறுக்கும்.—
உங்கள் பட்டணங்களை வெறுமையும், உங்கள் ௩௧
பரிசுத்தஸ்தானங்களைப்பாழுமாக்குவேன்; உங்
கள் சுகந்தத்தின் வாசனையை மோந்துகொள்
ளேன்.—நான் அத்தேசத்தைப்பாழாக்குவேன்; அ ௩௨
தில் வசிக்கும் உங்கள் சத்துருக்களும் பார்த்துப்
பிரமிப்பார்கள்.-புறத்தேசத்தாருக்குள்ளே உங்க ௩௩
ளைச்சிதற அடித்து,உங்கள்பின்னேகட்கத்தையும்
உருவுவேன்: உங்கள்தேசம் பாழ்பட்டுப்போம்,
உங்கள் பட்டணங்களும் வெறுமையாகும்.—
அக்காலத்தில் தேசம் பாழாயிருக்க அது தன் ஓய் ௩௪
வுநாள்களை அனுபவிக்கும்; நீங்களோ உங்கள்சத்
துருக்களின் தேசத்திலிருப்பீர்கள்; அப்பொழு
து அந்தத்தேசம் இளைப்பாறித் தன் ஓய்வுநாள்க
ளை அனுபவிக்கும்.—அதுபாழாயிருக்குமளவும் இ ௩௫
ளைப்பாறும்; நீங்கள்அங்கேவசித்தபொழுது உங்
கள்ஓய்வுநாள்களில்,அதுஇளைப்பாறவில்லையே.-
உங்களுக்குள் உயிர்கொண்டு தப்பினவர்களு ௩௬

(௰௧) யாத்.௨௫.௮. யோசு.௨௨.௰௯. சங்.௭௬.௨. எசேக்.௩௭.௨௬,௨௭,௨௮. வெளி.௨௧.௩. உபா.௩௨.௰௯. (௰௨) ௨.கொரி.௬.௰௬. யாத்.௬.௭. (௰௩) எரே.௨.௨௰. எசேக்.௩௪.௨௭. (௰௪) உபா.௨௮.௰௫. புல.௨.௰௭. மல்.௨.௨. (௰௫) ௨.இரா.௰௭.௰௫. (௰௬) உபா.௨௮.௬௫,௬௬,௬௭. எரே.௰௫.௮. உபா.௨௮.௨௨. ௧.சாமு.௨.௩௩. உபா.௨௮. ௩௩,௫௧. எரே.௫.௰௭. மீகா.௬.௰௫. (௰௭) உபா.௨௮.௨௫. எரே.௰௯.௭. சங்.௱௬.௪௧. சங்.௫௩.௫. நீதி.௨௮.௧. (௰௮) ௧.சாமு.௨.௫. நீதி.௨௪.௰௬. (௰௯) ஏசா.௨௫.௰௧. எசேக்.௭.௨௪. உபா.௨௮.௨௩. (௨௰) சங்.௱௨௭.௧. ஏசா. ௪௯.௪. உபா.௰௧.௰௭. ஆகா.௧.௰. (௨௨) ௨.இரா.௰௭.௨௫. நியா.௫.௬. புல.௧.௪. சக.௭.௰௪. (௨௩) எரே.௨.௩௰. ஆமோ.௪.௬—௰௨. (௨௪) ௨.சாமு.௨௨.௨௭. (௨௫) எசேக்.௫.௰௭. எண்.௰௪.௰௨. எரே.௰௪.௰௨. ஆமோ.௪.௰. (௨௬) ஏசா.௩.௧. எசேக்.௪.௰௬. ஏசா.௯.௨௰. மீகா.௬.௰௪. ஆகா.௧.௬. (௨௮) ஏசா.௫௯.௰௮. எரே.௨௧.௫. எசேக். ௫.௰௩,௰௫. (௨௯) ௨.இரா.௬.௨௯. புல.௪.௰. எசேக்.௫.௰. (௩௰) ௨.நாளா.௩௪.௩,௪,௭. ஏசா.௨௭.௯. ௨.இரா.௨௩. ௨௰. சங்.௭௮.௫௯. எரே.௰௪.௰௯. (௩௧) நிகி.௨.௩. எசேக்.௬.௬. சங்.௭௪.௭. புல.௧.௰. (௩௨) எரே.௨௫.௰௧,௰௮. ௧.இரா.௯.௮. எரே.௰௮.௰௬. (௩௩) சங்.௪௪.௰௧. எரே.௯.௰௬. எசேக்.௰௨.௰௫. சக.௭.௰௪. (௩௪) ௨.நாளா.௩௬. ௨௧. (௩௬) எசேக்.௨௧.௭,௰௨,௰௫. யோபு.௰௫.௨௧. நீதி.௨௮.௧.

டைய இருதயம் தங்கள் சத்துருக்களுடைய தே
சத்திலுஞ்சோர்வடையும்படி செய்வேன்; இலை
அசைகிற சத்தமும் அவர்களையோட்டும்; கட்கத்
துக்கு ஓடுவதுபோல அவர்களோடுவார்கள்.—
௩௭ தொடர்பவர் ஒருவருமில்லாதிருந்தாலும் விழு
வார்கள். தொடர்பவரில்லாமல்கட்கத்துக்குவிழு
வதுபோல ஒருவர்மேலொருவர் விழுவார்கள்:
உங்கள் சத்துருக்களுக்குமுன் நிற்க உங்களுக்
௩௮ குப் பெலனிராது.—புறச்சாதிகளுக்குள்ளே நாச
மாவீர்கள்; உங்கள் சத்துருக்களின் தேசம் உங்
௩௯ களைப்பட்சிக்கும்.—உங்களுக்குள்ளே தப்பின
வர்கள் தங்கள் பாவங்களினிமித்தம் உங்கள் சத்
துருக்களின் தேசங்களில் அழிந்துபோவார்கள்;
தங்கள் பிதாக்களின் பாவங்களினிமித்தமும் அ
வர்கள் அழிந்துபோவார்கள்.
௪௰ அவர்கள் எனக்கு விரோதமாய்நடந்து, என்
கட்டளைகளை மீறினதினால், நானும் அவர்களுக்
கு விரோதமாய் நடந்து, அவர்கள் சத்துருக்க
ளின்தேசத்திற் கொண்டுபோய்விட்டதையும், அ
வர்கள் தங்கள் பாவங்களையும், தங்கள் பிதாக்க
௪௧ ளின் பாவங்களையும் உணர்ந்து சொல்லி,—முன்
னே விருத்தசேதனமில்லாத தங்களிருதயத்தைத்
தாழ்த்தித்தங்கள் பாவத்துக்குக்கிடைத்த தண்ட
௪௨ னைக்கு அமைந்தால்,—நான் யாக்கோபுடனே
பண்ணின என் உடன்படிக்கையையும் ஈசாக்
குடனேபண்ணின என் உடன்படிக்கையையும்
ஆபிரகாமுடனேபண்ணின என் உடன்படிக்
கையையும் நினைப்பேன்; அந்தத்தேசத்தையும்
௪௩ நினைப்பேன்.—அத்தேசம் அவர்களாலே விடப்
பட்டு அது பாழாகி ஓய்வுநாள்களை அனுபவிக்
கும். அவர்கள் என்விதிப்பிரமாணங்களை அவ
மதித்து, என் நியமங்களை வெறுத்ததினாலுண்டா
ன பாவத்தின் தண்டனையை அங்கிகரிப்பார்
௪௪ கள்.—அவர்கள் தங்கள் சத்துருக்களின் தேசங்
களிலிருக்கையிலும், நான் அவர்களை நிர்மூல
மாக்கவும், நான் அவர்களுடன்பண்ணிய உடன்
படிக்கையை அபத்தமாக்கவும் நான் அவர்களைக்
கைவிடவும், வெறுக்கவுமாட்டேன்: நானே அ
௪௫ வர்கள் தேவனாகிய யெகோவா:—அவர்க
ளுடைய தேவனாயிருக்கும்படிக்கு நான் புறச்
சாதிகளுக்குமுன்பாக எகிப்துதேசத்தினின்றும்
புறப்படச்செய்து அவர்களுடைய முன்னோர்க
ளுடனே நான்பண்ணின உடன்படிக்கையை
அவர்கள்நிமித்தம் நினைப்பேன்: நானே யெ
௪௬ கோவாவென்று சொல்லென்றார்.—சீனாய்மலை
யில் மோசேயைக்கொண்டு யெகோவா தம்
மைப்பற்றி இஸரவேல்சந்ததியாருக்கு விதித்த
நியமங்களும், நியாயப்பிரமாணங்களும், கட்ட
ளைகளும், இவைகளே.

## ௨௭. அதிகாரம்.

௧. பொருத்தனைசெய்தவனையும்; ௯, பிரார்த்தனையாற்கொடுத்தமிருகத்தையும்; ௰௪, வீட்டையும்; ௰௬, புலத்தையும் மீட்கும்படி மதித்தல்: ௨௬. தலையீற்றுச்செந்துக்கள் யெகோவாவுக்கு உரித்தாமெனல்: ௨௮. நிவேதனமிருகம் விடுதலையாகாதெனவும்; ௩௨, தசபாகம் மாற்றப்படாதெனவும் விதித்தல்.

பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,— ௧
நீ இஸரவேல்சந்ததியாரிடத்தில், யெகோவா ௨
வுக்கு ஒருவன் விசேஷமான ஒருசங்கற்பம்பண்
ணியிருந்தால், அந்த ஆளின்மதிப்பு உன்னாலே
மதிக்கப்படவேண்டும்.—இருபதுவயது முதல் அ ௩
றுபதுவயதுக்குட்பட்ட புருஷனை நீ பரிசுத்த
ஸ்தானத்து ஷேக்கலின்படி ஐம்பது வெள்ளி
ஷேக்கலாகவும்,—ஸ்திரியைமுப்பதுஷேக்கலாக ௪
வும் மதிப்பாயாக.—ஐந்துவயதுமுதல் இருபது ௫
வயதுவரைக்குமுள்ள ஆணை இருபதுஷேக்கலா
கவும்பெண்ணைப்பத்துஷேக்கலாகவும்மதிப்பா
யாக.—ஒருமாதம்முதல் ஐந்துவயதுக்குட்பட்ட ௬
ஆண்பிள்ளையை ஐந்துவெள்ளிஷேக்கலாகவும்,
பெண்பிள்ளையை மூன்று வெள்ளிஷேக்கலாக
வும்,—அறுபதுவயதுதொடங்கி அதற்குமேற்பட் ௭
ட வயதுள்ள புருஷனைப்பதினைந்துஷேக்கலாக
வும், ஸ்திரியைப்பத்துஷேக்கலாகவும் மதிப்பா
யாக.—உன் மதிப்பின்படிசெலுத்தக்கூடாததரித் ௮
திரனாயிருந்தால் அவன் ஆசாரியனுக்குமுன்னிற்
க ஆசாரியன் அவனை மதிக்கக்கடவன். சங்கற்
பம்பண்ணினவனுடைய திராணிக்கேற்க ஆசா
ரியன் அவனை மதிக்கக்கடவன்.
யெகோவாவுக்குப் பலியிடத்தக்க மிருக ௯
செந்துவானால், அவன் யெகோவாவுக்கு நி
வேதிக்கும் அவையெல்லாம் பரிசுத்தமாகும்.—
தீதுக்குநன்றும் நன்றுக்குத்தீதுமாக மாற்றவும்ப ௰
டாது, வேறுபடுத்தவும்படாது: அவன்மிருகத்துக்
குமிருகத்தைமாற்றினால், அதுவும் மாற்றப்பட்ட
தும் பரிசுத்தமாகும்.—அது யெகோவாவுக்குப் ௰௧
பலியிடத்தகாத அசுசியான ஒருமிருகமானால், ஆ
சாரியனுக்கு முன்னே அந்தமிருகத்தைக்கொண்
டுவர,—ஆசாரியனே அதுநன்றென்றாலுந்தீதென் ௰௨
றாலும் விலைமதிக்க வேண்டும்; அது உன்மதிப்
பின்படியாகும்.—அவன் அதை மீட்டுக்கொண் ௰௩
டால், உன் மதிப்பின்படி ஐந்திலொரு பங்கு
கூட்டிக்கொடுக்கவேண்டும்.
ஒருவன் தன்வீட்டை யெகோவாவுக்கென் ௰௪
றுபரிசுத்தமாகும்படி பரிசுத்தப்படுத்தினால், ஆ
சாரியன் நன்றாயிருந்தாலுந் தீதாயிருந்தாலும் அ
தை மதிக்கக்கடவன்: அது ஆசாரியனுடைய ம
திப்பின்படி நிலைத்திருக்கும்.—தன்வீட்டைப்பரி ௰௫

(௩௭) ஏசா.௰.௪. நியா.௭.௨௨. ௧.சாமு.௰௪.௰௫,௰௬. யோசு.௭.௰௨,௰௩. நியா.௨.௰௪. (௩௯) நிகி.௧.௮. எரே.௩.௨௫. எசேக்.௩௬.௩௧. ஓசே.௫.௰௫. சக.௰.௯. (௪௰) எண்.௫.௭. ௧.இரா.௮.௩௩,௩௫,௪௭. நிகி.௯.௨. நீதி.௨௮.௰௩. தானி.௯.௩,௪. லூக்.௰௫.௰௮. ௧.யோவா.௧.௯. (௪௧) எரே.௬.௰. எசேக்.௪௪.௭. அப்.௭.௫௧. ரோ.௨.௨௯. கொலோ.௨.௰௧. ௧.இரா.௨௧.௨௯. ௨.நாளா.௰௨.௬,௭,௰௨. (௪௨) சங்.௱௬.௪௫. (௪௩) வச.௰௫. (௪௪) ௨.இரா.௰௩.௨௩. ரோ.௰௧.௨. (௪௫) ரோ.௰௧.௨௮. (௪௬) உபா.௬.௧. யோவா.௧.௰௭.—(௨௭. அதி. ௨.) எண்.௬.௨. நியா.௰௧.௩௰,௩௧,௩௯. ௧.சாமு.௧.௰௧,௨௮. (௩) யாத்.௩௰.௰௩. (௰௩) வச.௰௫,௰௯. (௰௫) வச.௰௩.

சுத்தப்படுத்தினவன் அதைமீட்டுக்கொண்டால்,
நீ மதித்த திரவியத்துடனே ஐந்திலொருபங்கு
கூட்டிக்கொடுக்கவேண்டும், அப்பொழுது அவ
னுடையதாகும்.
௰௬ ஒருவன் தனக்குச்சுதந்தரமானவயலில் ஏதா
கிலுமொருபங்கை யெகோவாவுக்கென்றுப
ரிசுத்தப்படுத்தினால்,அதின்விதைப்பின்படி ஒரு
ஓமர் வாற்கோதுமைவிதைக்கு ஐம்பதுவெள்ளி
௰௭ ஷேக்கலாகமதிக்கவேண்டும்.-மகோற்சவவருஷ
முதல் அவன் தன்வயலைப்பரிசுத்தப்படுத்தினால்,
அதுஉன்மதிப்பின்படிநிலைத்திருக்கவேண்டும்.—
௰௮ மகோற்சவவருஷத்துக்குப்பின்பு தன் வயலைப்
பரிசுத்தப்படுத்தினால், மகோற்சவவருஷபரியந்
தமுள்ள மற்றவருஷங்களின்படியே ஆசாரியன்
திரவியத்தைக் கணக்குப்பார்த்து, உன்மதிப்பின்
௰௯ படி தள்ளிவிடக்கடவன்.—வயலைப் பரிசுத்தப்ப
டுத்தினவன்,அதைமீட்டுக்கொண்டால்,நீமதித்த
திரவியத்துடனே ஐந்திலொருபங்கைக்கூட்டிக்
கொடுக்கவேண்டும்; அப்பொழுது அது அவனுக்
௨௰ கு உறுதியாகும்.—அவன்வயலை மீட்டுக்கொள்ளா
திருந்தாலும், வயலை மற்றொருவனுக்கு விற்றுப்
போட்டாலும், அதுதிரும்ப மீட்கப்படாமல்,—
௨௰௧ மகோற்சவ வருஷத்தில் விடுதலையாகும்பொழு
து நிவேதன பூமியைப்போல யெகோவாவுக்
குப்பரிசுத்தமாகும்: அது ஆசாரியனுக்குச் சுதந்
௨௰௨ தரமாகும்.—ஒருவன் தனக்குச் சுதந்தரமானவ
யலாயிராமல், தான் விலைக்குக்கொண்ட வய
லை யெகோவாவுக்கென்று பரிசுத்தப்படுத்தி
௨௰௩ னால்,—அதுமகோற்சவ வருஷபரியந்தம் உன்ம
திப்பின்படிபெறும்விலை இன்னதென்று ஆசாரி
யனுடனேகணக்குப்பார்த்து, யெகோவாவுக்
கிடப்பட்ட பரிசுத்தவஸ்துவைப்போல நீமதித்
௨௰௪ ததை அந்நாளிலே கொடுக்கக்கடவன்.—மகோற்
சவ வருஷத்தில் வயல், அந்நிலத்தைச் சுதந்த
௨௰௫ ரித்தவனாகிய விற்றவனையே சேரும்.—மதிப்பு
களெல்லாம் பரிசுத்தஸ்தானத்து ஷேக்கலின்ப
டியிருக்கவேண்டும்:ஒருஷேக்கல்இருபதுகேரா.
தலையீற்றுக்கள்; யெகோவாவுக்குரித்தான ௨௰௬
மிருகங்களின் தலையீற்றுக்களைமாத்திரம் ஒருவ
ரும் நிவேதிக்கவேண்டாம்; அதுமாடானாலும் ஆ
டானாலும்யெகோவாவுக்குரித்தாகும்.-அசுசி ௨௰௭
யானமிருகத்தினுடைய தலையீற்றேயானால் அ
வன் உன்மதிப்பின்படி அதைமீட்டுக்கொண்டு
அதனோடே அதிலைந்திலொருபங்கைக்கூட்டிக்
கொடுக்கவேண்டும்:மீட்கப்படாதிருந்தால்,உன்
மதிப்பின்படி விலைப்படுத்தவேண்டும்.
ஒருவன் தன் வசத்திலுள்ள மனிதரிலாயினும் ௨௰௮
மிருகத்திலாயினும் தன் சுதந்தரமான வயலி
லாயினும் யெகோவாவுக்கு நிவேதிக்கப்பட்
ட நிவேதனவஸ்துக்கள்யாவையும்விலைப்படுத்த
வும், மீட்டுக்கொள்ளவும்வேண்டாம்: நிவேதன
வஸ்துக்கள் ஒவ்வொன்றும் யெகோவாவுக்
குமிகவும்பரிசுத்தமுள்ளது.—மனிதருக்குள்ளே ௨௰௯
நிவேதிக்கப்பட்ட புருஷரும் மீட்கப்படலாகா
து, அவர்கள் கொலைசெய்யப்படவேண்டும்.—
தேசத்தின் நிலத்தில்வித்திலும், விருட்சக்கனியி ௩௰
லும் பத்திலொரு பங்கெல்லாம் யெகோவா
வுக்குரியது: அது யெகோவாவுக்குப்பரிசுத்த
முள்ளது.—ஒருவன் பத்திலொருபங்காகிய அ ௩௰௧
வைகளை மீட்டுக்கொண்டால், அதனுடன் ஐந்
திலொருபங்கைக்கூட்டிக்கொடுக்கவேண்டும்.
கோவின்கீழ்ப்பட்ட ஆடுமாடுகளிற்பத்திலொ ௩௰௨
ருபங்கெல்லாம் யெகோவாவுக்குப்பரிசுத்த
முள்ளது.—அதை நன்றோதீதோவென்று தெரிந் ௩௰௩
தெடுக்கவும், மாற்றவும்படாது, மாற்றினால், அது
வும்,மாற்றப்பட்டதுமாகியஇரண்டும்பரிசுத்தமா
கும்: அது மீட்கப்படலாகாதென்றுசொல்லென்
றார்.—சீனாய்மலையில் இஸரவேல் சந்ததியாருக் ௩௰௪
காக யெகோவா மோசேக்கு விதித்த கட்ட
ளைகள் இவைகளே.

(௰௮) அதி.௨௫.௰௫,௰௬. (௰௯) வச.௰௩. (௨௧) அதி.௨௫.௰,௨௮,௩௧. வச.௨௮. எண்.௰௮.௰௪. (௨௨) அதி.௨௫.௰, ௨௫. (௨௩) வச.௰௮. (௨௪) அதி.௨௫.௨௮. (௨௫) யாத்.௩௰.௰௩. (௨௬) யாத்.௰௩.௨,௰௨. உபா.௰௫.௰௯. (௨௮) யோசு.௬.௰௭,௰௮,௰௯. (௨௯) எண்.௨௧.௨,௩. (௩௰) ஆதி.௨௮.௨௨. ௨.நாளா.௩௧.௫,௬,௰௨. நெகி.௰௩.௰௨. மல்.௩.௮, ௰. (௩௧) வச.௰௩. (௩௨) எரே.௩௩.௰௩. மீகா.௭.௰௪. (௩௩) வச.௰. (௩௪) அதி.௨௬.௪௬.

# மோசே எழுதின நான்காம் புத்தகமாகிய

# எண்ணாகமம்.

---

## ௧. அதிகாரம்.

௧. சனங்களை எண்ணும்படி தேவன் மோசேக்
குக்கட்டளையிடல்: ௫. அந்தந்தவமிசபிரதானி
களின்நாமங்கள்: ௰௭. சனங்களை எண்ணல்:
௨௰. அந்தந்த வமிசத்தொகை: ௪௰. லேவிவமி
சத்தை எண்ணாமல்விடல்.

அவர்கள் எகிப்துதேசத்தைவிட்டுப் புறப்பட்
ட இரண்டாம் வருஷம் இரண்டாம்மாதம் முத
லாந்தினத்தில் சீனாய்வனத்தில் சபையின் ஆவா
சத்தினிடத்தில் யெகோவா மோசேயைநோக்
௨ கி,-நீங்கள் இஸரவேல் சந்ததியாரில் ஒவ்வொரு
புருஷனையும், தலைதலையாயெண்ணி அவர்களு
டைய நாமத்தின்தொகையைக்கொண்டு, அவர்
கள்குலத்தின்படிக்கும், அவர்கள்பிதாக்களின் வ
மிசத்தின்படிக்கும், சமஸ்தசபையின் தொகை
௩ யையுஞ் சேருங்கள்.—இஸரவேலருக்குள்ளே
இருபதுவயதுள்ளவர்கள்முதல் யுத்தத்துக்குப் பு
றப்படத்தக்கவர்களெல்லாரையும் அவரவர்கள்
சேனையின்படி, நீயும் ஆரோனும் எண்ணிப்பார்ப்
௪ பீர்களாக.—ஒவ்வொரு கோத்திரத்தாரிலும் ஒவ்
வொரு மனிதன் உங்களுடனேகூட இருப்பா
னாக; அவன் தன் பிதாக்களுடைய வமிசத்துக்
குத்தலைவனாயிருக்கவேண்டும்.
௫ உங்களுடனேகூட இருக்கவேண்டிய மனித
ருடையநாமங்களாவன: ரூபேனுடைய கோத்
திரத்தில் சேதேயூருடைய புத்திரனாகிய இலீ
௬ சூர்.—ஷிமியோனுடைய கோத்திரத்தில் சூரிஷ்
௭ தாவினுடைய புத்திரனாகிய ஷிலூமியேல்.—யூதா
வின் கோத்திரத்தில் அம்மினதாபினுடைய புத்
௮ திரனாகிய நாக்ஷோன்.—ஈஷகார் கோத்திரத்தில்
௯ சூவாருடைய புத்திரனாகிய நிதனேல்.—செபு
லோன் கோத்திரத்தில் ஏலோனுடைய புத்திர
௰ னாகிய இலியாபு.—யோசேப்பினுடைய புத்திர
னாகிய எப்ராயீமின்கோத்திரத்தில் அம்மியூத்தினு
டைய புத்திரனாகிய இலீஷாமா, மனாஷேகோத்
திரத்தில் பிதாத் சூரினுடைய புத்திரனாகிய க
௰௧ மாலீயேல்.—பேன்யாமீன் கோத்திரத்தில் கிதீ
௰௨ யோனியினுடைய புத்திரனாகிய அபீதான்.—தா
ணின்கோத்திரத்தில் அம்மிஷத்தாயினுடைய புத்
௰௩ திரனாகிய அகியேசேர்.—ஆஷேர் கோத்திரத்தில்
௰௪ ஒகிரானுடைய புத்திரனாகிய பாகியேல்.—காத்
கோத்திரத்தில் தியூவேலுடைய புத்திரனாகிய
௰௫ இலியாசப்.—நப்தாலி கோத்திரத்தில் ஏனானு
டைய புத்திரனாகிய அகீரா என்பவைகளாம்.—
௰௬ இவர்களே சபைக்கேற்படுத்தப்பட்டவர்களும்,
தங்கள்தங்கள் பிதாக்களுடைய வமிசத்திற் பிர
புகளும், இஸரவேலர் ஆயிரவருக்குத்தலைவர்களு
மானவர்களென்றார்.
அப்படியே மோசேயும் ஆரோனும் பெயர்கு ௰௭
றிக்கப்பட்ட மனிதரைக்கூட்டிகொண்டு,—இ ௰௮
ரண்டாம்மாதம்முதல்தினத்தில் சபையாரெல்லா
ரையுங்கூடிவரச்செய்தார்கள்; அப்பொழுது அ
வர்கள் தங்கள்தங்கள்குலத்தின்படிக்கும், பிதாக்
களுடைய வமிசத்தின்படிக்கும், நாமத்தொகை
யின்படிக்கும், இருபதுவயதுள்ளவர்கள் முதல் த
லைதலையாகத் தங்கள் வமிச உற்பத்தியைத்தெரி
வித்தார்கள்.-இப்படியே மோசே யெகோவா ௰௯
தனக்குக்கட்டளையிட்டபடி சீனாய்வனத்தில் அ
வர்களை எண்ணிப்பார்த்தான்.
இஸரவேலின் சேஷ்டபுத்திரனாகிய ரூபேன் ௨௰
சந்ததியாரில் இருபதுவயதுள்ளவர்கள்முதல் யுத்
தத்துக்குப் புறப்படத்தக்க புருஷர் யாவருந் தங்
கள் தங்கள் வமிச உற்பத்தியின்படிக்கும், குலத்
தின்படிக்கும், பிதாக்களுடைய வமிசத்தின்ப
டிக்கும், நாமத்தொகையின்படிக்கும், ஒவ்வொ
ருவராயெண்ணப்பட்ட,-ரூபேன்கோத்திரத்தார் ௨௧
நாற்பத்தாறாயிரத்தைஞ்ஞூறு.—ஷிமியோன் கோ ௨௨
த்திரத்தில் இருபதுவயதுள்ளவர்கள் முதல்யுத்தத்
துக்குப்புறப்படத்தக்க புருஷர்யாவருந் தங்கள்
தங்கள்வமிசஉற்பத்தியின்படிக்கும், குலத்தின்ப
டிக்கும், பிதாக்களுடைய வமிசத்தின்படிக்கும்,
தொகுக்கப்படடவர்களுடைய நாமத்தொகையி
ன்படிக்கும், ஒவ்வொருவராயெண்ணப்பட்ட,-
ஷிமியோன் கோத்திரத்தார் ஐம்பத்தொன்பதினா ௨௩
யிரத்துமுந்நூறு.—காத்சந்ததியாரில் இருபதுவய ௨௪
துள்ளவர்கள் முதல்யுத்தத்துக்குப்புறப்படத்தக்க
புருஷர்யாவருந் தங்கள் தங்கள் வமிச உற்பத்தி
யின்படிக்கும், குலத்தின்படிக்கும், பிதாக்களு
டைய வமிசத்தின்படிக்கும், நாமத்தொகையின்
படிக்கும், ஒவ்வொருவராயெண்ணப்பட்ட,—
காத் கோத்திரத்தார் நாற்பத்தையாயிரத்தறுநூற் ௨௫
றைம்பது.—யூதா சந்ததியாரில் இருபதுவயதுள் ௨௬
ளவர்கள் முதல்யுத்தத்துக்குப்புறப்படத்தக்கபுரு
ஷர்யாவருந் தங்கள் தங்கள்வமிச உற்பத்தியின்
படிக்கும், குலத்தின்படிக்கும், பிதாக்களுடைய
வமிசத்தின்படிக்கும், நாமத்தொகையின்படிக்
கும், ஒவ்வொருவராயெண்ணப்பட்ட,—யூதா ௨௭
கோத்திரத்தார்எழுபத்துநாலாயிரத்தறுநூறு.-ஈஷ ௨௮
கார் சந்ததியாரில் இருபதுவயதுமுதல்யுத்தத்துக்
குப்புறப்படத்தக்கபுருஷர் யாவருந் தங்கள் தங்
கள் வமிச உற்பத்தியின்படிக்கும், குலத்தின்
படிக்கும், பிதாக்களுடைய வமிசத்தின்படிக்

---

(௧. அதி. ௧.) யாத்.௰௯.௧. யாத்.௨௫.௨௨. (௨) யாத்.௩௰.௰௨. ௧.நாளா.௨௧.௨. (௰௬) யாத்.௰௮.௨௧,௨௫.

கும், நாமத்தொகையின்படிக்கும், ஒவ்வொருவ
௨௯ ராயெண்ணப்பட்ட,-ஈஷகார்கோத்திரத்தார் ஐம்
௩௰ பத்துநாலாயிரத்து நானூறு.—செபுலோன் சந்த
தியாரில் இருபதுவயது முதல் யுத்தத்துக்குப்பு
றப்படத்தக்க புருஷர் யாவருந் தங்கள் தங்கள்
வமிச உற்பத்தியின்படிக்கும், குலத்தின்படிக்
கும், பிதாக்களுடைய வமிசத்தின்படிக்கும், நா
மத்தொகையின்படிக்கும், ஒவ்வொருவராயெண்
௩௧ ணப்பட்ட,—செபுலோன் கோத்திரத்தார் ஐம்
௩௨ பத்தேழாயிரத்துநானூறு.—யோசேப்பின் புத்தி
ரருக்குள்ளே எப்ராயீம் சந்ததியாரில் இருபது
வயதுமுதல் யுத்தத்துக்குப் புறப்படத்தக்க புரு
ஷர்யாவருந் தங்கள் தங்கள் வமிச உற்பத்தியின்
படிக்கும், குலத்தின்படிக்கும், பிதாக்களுடைய
வமிசத்தின்படிக்கும், நாமத்தொகையின்படிக்
௩௩ கும், ஒவ்வொருவராயெண்ணப்பட்ட,—எப்ரா
௩௪ யீம்கோத்திரத்தார் நாற்பதினாயிரத்தைஞ்ஞூறு.-ம
னாசே சந்ததியாரில் இருபதுவயதுமுதல்யுத்தத்
துக்குப்புறப்படத்தக்க புருஷர்யாவருந் தங்கள்
தங்கள் வமிச உற்பத்தியின்படிக்கும், குலத்தின்
படிக்கும், பிதாக்களுடைய வமிசத்தின்படிக்
கும், நாமத்தொகையின்படிக்கும், ஒவ்வொருவ
௩௫ ராயெண்ணப்பட்ட,—மனாசே கோத்திரத்தார்
௩௬ முப்பத்தீராயிரத்திருநூறு.-பேன்யாமீன் சந்ததி
யாரில் இருபதுவயதுமுதல் யுத்தத்துக்குப் புறப்
படத்தக்க புருஷர்யாவருந் தங்கள் தங்கள்வமிச
உற்பத்தியின்படிக்கும், குலத்தின்படிக்கும், பி
தாக்களுடைய வமிசத்தின்படிக்கும், நாமத்தொ
கையின்படிக்கும், ஒவ்வொருவராயெண்ணப்
௩௭ பட்ட,—பேன்யாமீன் கோத்திரத்தார் முப்பத்
௩௮ தையாயிரத்து நானூறு.—தாணின் சந்ததியாரில்
இருபதுவயதுமுதல் யுத்தத்துக்குப்புறப்படத்தக்
க புருஷர்யாவருந் தங்கள் தங்கள் வமிசஉற்பத்
தியின்படிக்கும், குலத்தின்படிக்கும், பிதாக்களு
டைய வமிசத்தின்படிக்கும், நாமத்தொகையின்
படிக்கும், ஒவ்வொருவராயெண்ணப்பட்ட,—
௩௯ தாண்கோத்திரத்தார்அறுபத்திராயிரத்தெழுநூறு.-
௪௰ ஆஷேர் சந்ததியாரில் இருபதுவயதுமுதல்யுத்தத்
துக்குப் புறப்படத்தக்க புருஷர்யாவருந் தங்கள்
தங்கள்வமிச உற்பத்தியின்படிக்கும், குலத்தின்
படிக்கும், பிதாக்களுடைய வமிசத்தின்படிக்
கும், நாமத்தொகையின்படிக்கும், ஒவ்வொருவ
௪௧ ராயெண்ணப்பட்ட,-ஆஷேர்கோத்திரத்தார் நாற்
௪௨ பத்தோராயிரத்தைஞ்ஞூறு.—நப்தாலி சந்ததியா
ரில் இருபதுவயதுமுதல் யுத்தத்துக்குப் புறப்ப
டத்தக்க புருஷர்யாவருந் தங்கள் தங்கள் வமிச
உற்பத்தியின்படிக்கும், குலத்தின்படிக்கும், பி
தாக்களுடைய வமிசத்தின்படிக்கும், நாமத்தொ
கையின்படிக்கும், ஒவ்வொருவராயெண்ணப்ப
௪௩ ட்ட,—நப்தாலிகோத்திரத்தார் ஐம்பத்துமூவாயி
௪௪ ரத்துநானூறு.—குறிக்கப்பட்ட இவர்களை மோ
சேயும் ஆரோனும் இஸரவேலருடைய பிதாக்க
ளின் வமிசத்தில் ஒவ்வொரு வமிசத்துக்கு ஒவ்
வொருபிரபுவாகிய பன்னிருவரும் எண்ணினார்
கள்.—இப்படியே இஸரவேல் சந்ததியாரில் தங் ௪௫
கள் தங்கள் பிதாக்களுடைய வமிசத்தின்படி
இருபதுவயதுமுதல் இஸரவேலரில் யுத்தத்துக்
குப் புறப்படத்தக்கவர்கள்யாவரும் எண்ணப்
பட்டார்கள்.-எண்ணப்பட்டவர்களுடைய மு ௪௬
ழுத்தொகை ஆறிலட்சத்துமூவாயிரத்தைஞ்ஞூற்
றைம்பது.

லேவியரோ தங்கள் தங்கள் பிதாக்களுடைய ௪௭
கோத்திரத்தின்படி, அவர்களுடன் எண்ணப்ப
டவில்லை.—யெகோவா மோசேயை நோக் ௪௮
கி,—நீ இஸரவேல் சந்ததியாருக்குள்ளே லேவி ௪௯
கோத்திரத்தைமாத்திரம் எண்ணாமலும், அவர்க
ளுடைய தொகையைச் சேராமலும்,—லேவிய ௫௰
ரைச்சாட்சியின் ஆவாசத்துக்கும், அதிலுள்ளசக
ல பாத்திரங்களுக்கும், அதைச்சேர்ந்த சமஸ்தமா
னபொருள்களுக்கும், மேல்விசாரிப்புக்காரராக
ஏற்படுத்துவாயாக: அவர்கள் ஆவாசத்தையும், அ
திலுள்ளசகலபாத்திரங்களையுஞ் சுமந்து, அதினி
டத்தில் தொண்டுசெய்து, ஆவாசத்தைச்சூழப்பா
ளயமிறங்கக்கடவர்கள்.—ஆவாசம் புறப்படும் ௫௧
பொழுது லேவியர் அதைக்கழற்றிவைக்கக்கட
வர்கள்: ஆவாசம் ஸ்தாபனம்பண்ணவேண்டிய
பொழுது லேவியர் அதை ஸ்தாபனம்பண்ணக்
கடவர்கள்: அந்நியன் அதற்குச்சமீபித்தால் கொ
லைசெய்யப்படக்கடவன்.—இஸரவேல் சந்ததி ௫௨
யார் அவரவர் தங்கள் தங்கள் சேனையின் சருவ
பாளயத்தோடும் அவரவர் தங்கள் தங்கள் கொ
டியினோடுங் கூடாரம் நாட்டக்கடவர்கள்.—இ ௫௩
ஸரவேல் சந்ததியாராகிய சபையின்மேலேகடுங்
கோபம்வராதபடிக்கு லேவியரே சாட்சியின் ஆ
வாசத்தைச்சூழப்பாளயமிறங்கி, சாட்சியுடைய
ஆவாசத்தின்காவலை லேவியரே காப்பார்களா
கவென்று சொல்லியிருந்தார்.—யெகோவா ௫௪
மோசேக்குக்கட்டளையிட்டபடி எல்லாவற்றை
யும் இஸரவேல்சந்ததியார்செய்தார்கள், அப்படி
யேசெய்தார்கள்.

## ௨. அதிகாரம்.

கோத்திரத்தார்பாளயமிறங்குங்கிரமம்.

பின்னும் யெகோவா மோசேயையும் ஆரோ ௧
னையும் நோக்கி,—இஸரவேல் சந்ததியார் அவர ௨
வர் தங்கள் தங்கள் பிதாக்களுடையவமிசத்தின்
அடையாளமாகிய தங்கள் தங்கள் கொடியரு
கே கூடாரத்தைநாட்டி, சபையின் ஆவாசத்துக்
குநேரே பாளயத்தில் தங்கக்கடவர்கள்.—யூதா ௩
வின் பாளயத்திற்கொடியையுடையவர்கள் தங்
கள் சேனைகளின்படிசூரியன் உதிக்கிற கீழ்ப்பு
றத்திலே பாளயத்தில் தங்கவேண்டும்: அம்மின்
தாபின் புத்திரனாகிய நாஷோன் யூதாசந்ததியா
ருக்குச்சேனாபதியாயிருக்கக்கடவன்.-எண்ணப் ௪
பட்டவர்களாகிய அவனுடையசேனைஎழுபத்து
நாலாயிரத்தறுநூறு.—அவனருகே ஈஷகார்கோத் ௫

(௪௯) யாத்.௩௮.௨௬. அதி.௨௬.௫௭. (௫௰) யாத்.௩௮.௨௧. (௫௩) லேவி.௰.௬. ௧.சாமு.௬.௰௯. ௧.நாளா.௨௩.௩௨.
(௨.அதி.௨.) அதி.௧.௫௨. யோசு.௩.௪.

திரத்தார் பாளயமிறங்கவேண்டும், சூவாரின் புத்
திரன் நிதனேல் ஈஷகார் சந்ததியாருக்குச்சே
௬ னாபதியாயிருக்கக்கடவன்.—அவனுடைய சே
னையில் எண்ணப்பட்டவர்கள் ஐம்பத்துநாலாயி
௭ ரத்து நானூறு.—அவனருகேசெபுலோன் கோத்
திரத்தாரிறங்கவேண்டும், ஏலோனுடைய புத்
திரனாகிய இலியாப் செபுலோன் சந்ததியாருக்
௮ குச் சேனாபதியாயிருக்கக்கடவன்.—அவனுடை
யசேனையில் எண்ணப்பட்டவர்கள் ஐம்பத்தே
௯ ழாயிரத்துநானூறு.—யூதாவின்பாளயத்தில் எண்
ணப்பட்டவர்களுடைய முழுத்தொகை அவர
வர் சேனைகளின்படி இலட்சத்தெண்பத்தாறாயி
ரத்துநானூறு. இவர்கள் முன்னணியாய்ச் செல்
லக்கடவர்கள்.
௰ ரூபேனின் பாளயத்திற் கொடியையுடைய
வர்கள் தங்கள் தங்கள் சேனைகளின்படி தென்
புறத்திற் பாளயமிறங்கவேண்டும், ஷெதேயூ
ரின்புத்திரனாகிய இலீசூர் ரூபேன் சந்ததியா
௰௧ ருக்குச் சேனாபதியாயிருக்கக்கடவன்.—அவனு
டைய சேனையில் எண்ணப்பட்டவர்கள் நாற்
௰௨ பத்தாறாயிரத் தைஞ்ஞூறு.—அவனருகே ஷிமி
யோன் கோத்திரத்தாரிறங்கவேண்டும், சூரிஷத்
தாயினுடைய புத்திரனாகிய ஷெலூமியேல் ஷிமி
யோன் சந்ததியாருக்குச் சேனாபதியாயிருக்கக்க
௰௩ டவன்.—அவனுடைய சேனையில் எண்ணப்பட்
டவர்கள் ஐம்பத்தொன்பதினாயிரத்து முந்நூறு.—
௰௪ அவனருகே காத்கோத்திரத்தாரிறங்கவேண்டும்,
ரேகுவேலின்புத்திரனாகிய இலியாசப் காத்சந்த
௰௫ தியாருக்குச்சேனாபதியாயிருக்கக்கடவன்.-எண்
ணப்பட்டவர்களாகிய அவனுடையசேனைநாற்
௰௬ பத்தையாயிரத் தறுநூற்றைம்பது.-ரூபேனருடை
ய பாளயத்தில் எண்ணப்பட்டவர்களின் முழுத்
தொகை அவரவர் சேனைகளின்படி இலட்சத்
தைம்பத்தோராயிரத்து நானூற்றைம்பது. இவர்
கள் இரண்டாம் அணியாய்ச்செல்லக்கடவர்கள்.
௰௭ பின்பு சபையின் ஆவாசம்லேவியரின் சேனை
யுடனே பாளயங்களுக்கு மத்தியிலேபிரயாணப்
பட்டுப்போகவேண்டும்: அவர்கள் ஒவ்வொரு
வருந் தங்கள் தங்கள் கொடியுடனே வரிசையா
யிறங்குவதெப்படியோ அப்படியே பிரயாண
௰௮ மாய்ச் செல்லக்கடவர்கள்.—எப்ராயீமின் பாள
யத்திற் கொடியையுடையவர்கள் தங்கள் தங்கள்
சேனைகளின்படி மேலைப்புறத்திலிறங்கவேண்
டும்: அம்மியூத்தின்புத்திரனாகிய இலீஷாமா எப்
ராயீம் சந்ததியாருக்குச் சேனாபதியாயிருக்கக்க
௰௯ டவன்.-எண்ணப்பட்டவர்களாகிய அவனுடை
௨௰ ய சேனை நாற்பதினாயிரத்தைஞ்ஞூறு.—அவன
ருகே மனாஷே கோத்திரத்தாரிறங்கவேண்டும்:
பிதாத்சூரின் புத்திரனாகிய கமாலீயேல் மனா
ஷே சந்ததியாருக்குச் சேனாபதியாயிருக்கக்கட
௨௧ வன்.—எண்ணப்பட்டவர்களாகிய அவனுடை
௨௨ யசேனை முப்பத்தீராயிரத்திருநூறு.—அவனரு
கே பேன்யாமீன்கோத்திரத்தாரிறங்கவேண்டும்,
கிதீயோனியினுடைய புத்திரனாகிய அபீதான்
பேன்யாமீன்சந்ததியாருக்குச்சேனாபதியாயிருக்
கக்கடவன்.—எண்ணப்பட்டவர்களாகிய அவ ௨௩
னுடையசேனை முப்பத்தையாயிரத்துநானூறு.—
எப்ராயீம் பாளயத்தில் எண்ணப்பட்டவர்களு ௨௪
டைய முழுத்தொகை அவரவர் சேனையின்ப
டி இலட்சத்தெண்ணாயிரத்தொருநூறு: இவர்கள்
மூன்றாம் அணியாய்ச்செல்லக்கடவர்கள்.
தாணுடையபாளயத்திற்கொடியுடையவர்கள் ௨௫
தங்கள் தங்கள் சேனைகளின்படி வடபுறத்திலி
றங்கவேண்டும்: அம்மிஷத்தாயினுடைய புத்தி
ரனாகிய அகியேசெர் தாணின் சந்ததியாருக்குச்
சேனாபதியாயிருக்கக்கடவன்.—எண்ணப்பட்ட ௨௬
வர்களாகிய அவனுடையசேனை அறுபத்தீராயி
ரத்தெழுநூறு.—அவனருகே ஆஷேர் கோத்திரத் ௨௭
தாரிறங்கவேண்டும்:ஒகிரானின்புத்திரனாகிய பா
கியேல் ஆஷேர் சந்ததியாருக்குச்சேனாபதியாயி
ருக்கக்கடவன்.—எண்ணப்பட்டவர்களாகியஅ ௨௮
வனுடையசேனை நாற்பத்தோராயிரத்தைஞ்ஞூ
று.—அவனருகே நப்தாலி கோத்திரத்தாரிறங்க ௨௯
வேண்டும்: ஏனானின் புத்திரனாகிய அகீரா நப்
தாலி சந்ததியாருக்குச்சேனாபதியாயிருக்கக்கட
வன்.—எண்ணப்பட்டவர்களாகிய அவனுடை ௩௰
யசேனை ஐம்பத்துமூவாயிரத்துநானூறு.—தாணு ௩௧
டையபாளயத்தில் எண்ணப்பட்டவர்களுடை
ய முழுத்தொகை இலட்சத்தைம்பத்தேழாயிரத்
தறுநூறு: இவர்கள் தங்கள் தங்கள் கொடிகளு
டன் பின்னணியாய்ச்செல்லக்கடவர்களென்று
சொன்னார்.—இவர்களே தங்கள் தங்கள் பிதாக் ௩௨
களுடைய வமிசத்தின்படி இஸ்ரவேல்சந்ததியா
ரில் எண்ணப்பட்டவர்கள்: பாளயங்களில் தங்
கள் தங்கள் சேனைகளின்படி எண்ணப்பட்ட
வர்களுடைய முழுத்தொகை ஆறிலட்சத்துமூ
வாயிரத்தைஞ்ஞூற்றைம்பது.—லேவியரோ யெ ௩௩
கோவா மோசேக்குக் கட்டளையிட்டபடியே
இஸ்ரவேல்சந்ததியாருக்குள்ளே எண்ணப்பட
வில்லை.—இஸ்ரவேல்சந்ததியார் தங்கள்தங்கள் கு ௩௪
லத்தின்படிக்கும், பிதாக்களுடைய வமிசத்தின்
படிக்கும்,தங்கள்கொடிகளுடன்பிரயாணமாய்ப்
புறப்பட்டார்கள்: இப்படியே யெகோவா
மோசேக்குக்கட்டளையிட்டபடி சகலத்தையுஞ்
செய்தார்கள்.

## ௩. அதிகாரம்.

௧. ஆரோனுடைய சந்ததியின் விவரம்: ௫. ஆவாச கிரியைசெய்யும்படிலேவியர்நியமிக்கப்படல்: ௨௧. கெர்ஷோனின் வமிசத்தொகை: அவர்கள் செய்யுங்கிரியை: ௨௭. கோகாத்தின் வமிசமுதலாயின: ௩௩. மிராரியின் வமிச முதலாயின: ௩௯. லேவியரின் முதற்பேறானவர்களுடைய தொகை:

சீனாய் மலையில் யெகோவா மோசே யுட ௧
னே சம்பாஷித்தகாலத்தில் ஆரோன் மோசே
யென்பவர்களுக்கிருந்த சந்ததியின் விவரமாவ
து.—ஆரோனின் புத்திரருடையநாமங்களாவன: ௨
முதற்பிறந்தவனாகிய நாதாபும், அபியூவும், எலீ

(௩௨) யாத்.௩௮.௨௫. (௩௪) அதி.௨௪.௨,௫,௬.—(௩. அதி.)

௩ யேசாரும், இதாமாரும் என்பவைகளாம்.—ஆ
சாரியத்தொண்டுசெய்வதற்கு ஏற்படுத்தப்பட்டு
அபிஷேகம்பெற்ற ஆசாரியராகிய ஆரோனின்
௪ புத்திரருடையநாமங்கள் இவைகளாம்.—நாதா
பும் அபியூவும் சீனாய் வனத்தில் யெகோவா
வின்சந்நிதியில் சாதாரண அக்கினியைக்கொண்
டுவந்தபொழுது யெகோவாவின் சந்நிதியில்
மரித்தார்கள், அவர்களுக்குப் பிள்ளைகளில்லை:
எலீயேசாரும் இதாமாருமே தங்கள் பிதாவாகிய
ஆரோனுக்குமுன்பாக ஆசாரியத்தொண்டு செய்
தார்கள்.
௫ யெகோவா மோசேயைநோக்கி,—நீ லேவி
௬ கோத்திரத்தார், ஆசாரியனாகிய ஆரோனுக்கு உத
வியாக ஆசாரியத்தொண்டுசெய்யும்படிக்கு, அ
வர்களை அவனுக்குமுன்னேநிறுத்தி அவன்வசம்
௭ ஒப்பிப்பாயாக.—அவர்கள் ஆவாசத்திலுள்ள கிரி
யைகளைச்செய்யும்பொருட்டு சபையின் ஆவா
சத்திற்குமுன்பாக அவனும் சமஸ்தசபையாரும்
௮ காக்கவேண்டியகாவல் காக்கக்கடவர்கள்.-ஆவா
சத்திலுள்ள கிரியைகளைச்செய்யும்பொருட்டுச்ச
பையின்ஆவாசத்துக்கேற்றபாத்திரமுதலானவை
களையும், இஸ்ரவேல்சந்ததியார் பண்ணவேண்டி
௯ யகாவலையுங்காக்கக்கடவர்கள்.—நீ லேவியரைஆ
ரோனும் அவன் புத்திரருமாகிய இவர்கள்வசம்
ஒப்பிக்கக்கடவாய், இஸ்ரவேல் சந்ததியாரில் அ
வர்களே முழுமையும் அவனுக்குக்கொடுக்கப்
௰ பட்டிருக்கிறார்கள்.—நீ ஆரோனையும் அவன்புத்
திரரையும் ஏற்படுத்துவாயாக. அவர்கள் தங்கள்
தங்கள் ஆசாரியத்தொண்டைச்செய்வார்கள்: அ
தற்குச்சமீபிக்கும் அந்நியன் கொல்லப்படுவா
௰௧ னென்றார்.—பின்னும் யெகோவா மோசே
௰௨ யைநோக்கி,—எகிப்துதேசத்தில் முதற்பேறான
யாவையும் நான்சங்கரித்தநாளில் இஸரவேல
ருக்குள்ளே மனிதர் முதல் மிருகம் வரைக்கு
முள்ள முதற்பேறானயாவையும் எனக்கென்று
௰௩ ஏற்படுத்தினேன்.—அவைகள் என்னுடையவை
களாயிருக்கவேண்டும்; ஆதலால்பார் இஸரவேல்
சந்ததியாருக்குள்ளே கருப்பத்தினின்று தோன்
றும் முதற்பேறான சகலருக்கும்பிரதியாக இஸர
வேல் சந்ததியாரில் லேவியரைஅங்கிகரித்தேன்;
இப்படிமுதற்பேறானயாவும் என்னுடையவைக
ளாயிருப்பதினால் லேவியர்கள் என்னுடையவர்
களாயிருக்கவேண்டும்: நானே யெகோவா
௰௪ என்றார்.—மேலும் சீனாய்வனத்தில் யெகோ
௰௫ வா மோசேயை நோக்கி,—லேவிசந்ததியாரை
அவரவர் பிதாக்களின் வமிசத்தின் படிக்கும்,
குலத்தின்படிக்கும், எண்ணிப்பார்: அவர்களில்
ஒருமாதமுதல் அதற்குமேற்பட்ட வயதுள்ளசக
ல ஆண்பிள்ளைகளையும் எண்ணிப்பாரென்றார்.—
௰௬ அப்பொழுது யெகோவாவுடைய வாக்கின்
படி மோசே தான் கட்டளைபெற்ற பிரகாரம்
௰௭ எண்ணிப்பார்த்தான்.—லேவியின் புத்திரர் கெர்
ஷோன், கோகாத், மிராரியென்கிறநாமங்களையு
டைய இவர்களே.—கெர்ஷோனுடைய புத்திரர் ௰௮
அவர்கள்குலத்தின்படி, லிப்னீ, ஷிமியி என்கிற
நாமங்களையுடைய இவர்களே.-கோகாத்தின்புத் ௰௯
திரர் அவர்கள்குலத்தின்படி, அம்ராம், இத்சார்,
எப்ரோன், ஊசியேல் என்பவர்களே.—மிராரியி ௨௰
னுடையபுத்திரர் அவர்கள்குலத்தின்படி, மாலி,
மூஷிஎன்பவர்களே: இவர்களே அவரவர்பிதாக்
களின்வமிசத்தின்படிலேவியருடையகுலத்தார்.
கெர்ஷோனின் வழியாய் லிப்னீயர் குலத்தா ௨௧
ரும் ஷிமேயியர் குலத்தாருந்தோன்றினார்கள்: இ
வர்களே கெர்ஷோனியர்குலத்தார்.-அவர்களில் ௨௨
ஒருமாதமுதல் அதற்குமேற்பட்ட சகல ஆண்
பிள்ளைகளும் எண்ணப்பட்டபொழுது, அவர்க
ளின் முழுத்தொகை ஏழாயிரத்தைந்நூறு.—கெர் ௨௩
ஷோனியர் குலத்தார் ஆவாசத்துக்குப்பின்னே
மேலைப்புறத்திற் பாளயமிறங்கவேண்டும்.—லா ௨௪
யேலின் புத்திரனாகிய இலியாசப் கெர்ஷோனி
யரின் பிதாக்களுடைய வமிசத்துக்குத்தலைவனா
யிருந்தான்.—சபையின்ஆவாசத்திற் கெர்ஷோன் ௨௫
சந்ததியார் ஆவாசத்தையும், கூடாரத்தையும், அ
தின் போர்வையையும், சபையின் ஆவாசவா
சலின் தொங்குதிரையையும்,—ஆவாசத்தையும், ௨௬
வேதிகையைச் சூழ்ந்திருக்கும் பிராகாரத்தின்
தொங்குதிரைகளையும், பிராகாரவாசலின் திரை
ப்புடவையையும், செய்யவேண்டியசகலவேலை
களுக்கேற்றகயிறுகளையுங்காக்கக்கடவர்கள்.
கோகாத்தின் வழியாய் அம்ராமியர் குலத்தா ௨௭
ரும், இத்சார்குலத்தாரும், எப்ரோனியர் குலத்தா
ரும், ஊசியேல்குலத்தாரும், உற்பத்தியானார்கள்:
இவர்களே கோகாத்தின் குலத்தார்.—ஒருமாத ௨௮
முதல் அதற்குமேற்பட்ட வயதுள்ளசகல ஆண்
பிள்ளைகளும் எண்ணப்பட்டபொழுது பரிசுத்த
ஸ்தானத்தைக் காப்பவர்கள் எண்ணாயிரத்தறுநூ
று.—கோகாத்துச்சந்ததியாரின் குலத்தார் ஆவா ௨௯
சத்துக்குத் தென்புறத்திற் பாளயமிறங்கவேண்
டும்.—ஊசியேலின் புத்திரனாகிய இலீத்சாபான் ௩௰
கோகாத் குலத்தாரின் பிதாக்களுடைய வமிசத்
துக்குத்தலைவனாயிருந்தான்.—அவர்கள் பெட்டி ௩௧
யையும், பீடத்தையும், கிளைவிளக்கையும், வேதி
கைகளையும், பரிசுத்தஸ்தானத்திலுள்ள ஆராத
னைக்கேற்ற பாத்திரங்களையும், திரைப்புடவை
யையும், அதிலுள்ள சகலதொண்டுகளுக்கேற்ற
வைகளையுங் காக்கக்கடவர்கள்.—ஆசாரியனான ௩௨
ஆரோனின் புத்திரனாகிய எலீயேசார் லேவியத்
தலைவருக்குத் தலைவனாய்ப்பரிசுத்தஸ்தானத்தின்
விசாரிப்புக்காரரை விசாரிக்கவேண்டும்.—மிரா ௩௩
ரியின்வழியாய் மாலியர்குலத்தாரும், மூஷியர்கு
லத்தாரும் உற்பத்தியானார்கள்: இவர்களே மிரா
ரியின்குலத்தார்.—அவர்களில் ஒருமாதமுதல் அ ௩௪
தற்குமேற்பட்ட வயதுள்ள சகல ஆண்பிள்ளைக
ளும் எண்ணப்பட்டபொழுது அவர்கள்தொகை

(௩) யாத்.௨௮.௪௧. (௪) அதி.௮.௰௪. (௰) அதி.௰௮.௭. (௰௨) யாத்.௰௩.௰௨,௰௫. (௰௩) யாத்.௰௩.௨. லூக்.௨.௨௩. (௨௫) அதி.௪.௨௪,௨௫,௨௬. யாத்.௨௬.௧. யாத்.௨௬.௭,௰௪. யாத்.௨௬.௩௬. (௨௬) யாத்.௨௭.௯. யாத்.௨௭.௰௬. யாத்.௩௫.௰௮. (௩௧) யாத்.௨௫.௰. யாத்.௨௫.௨௩. யாத்.௨௫.௩௧. யாத்.௨௭.௧. யாத்.௨௬.௩௨.

௩௫ ஆறாயிரத்திருநூறு.—அபிகயிலின் புத்திரனாகிய
சூரியேல் மிராரிகுலத்தாரின் பிதாக்களுடைய
௩௬ வமிசத்துக்குத் தலைவனாயிருந்தான்.—இவர்கள்
ஆவாசத்துக்குவடபுறத்திற் பாளயமிறங்கவேண்
டும். ஆவாசத்தின் பலகைகளும், தாள்களும்,
தூண்களும், பாதங்களும், சகலபாத்திரங்களும்,
௩௭ அதின் ஆராதனைக்கேற்றசகலமும்,—சுற்றுப்பிரா
காரத்தின் தூண்களும், அவைகளின் பாதங்க
ளும், முளைகளும், கயிறுகளும், மிராரியின்புத்
௩௮ திரருடைய விசாரணையிலிருக்கவேண்டும்.—இ
ஸ்ரவேல் சந்ததியார் செய்யவேண்டிய காவலுக்
குப்பிரதியாகப் பரிசுத்தஸ்தானத்தைக் காக்கும்
மோசேயும் ஆரோனும் அவன்புத்திரரும் சபை
யின் ஆவாசத்துக்குமுன்னே கீழ்த்திசையாய் ஆ
வாசத்துக்கு முன்பாகக்கீழ்ப்புறத்திற் பாளயமி
றங்கவேண்டும்; அதற்குச்சமீபிக்கும் அந்நியன்
கொல்லப்படுவான்.
௩௯ மோசேயும்ஆரோனும் யெகோவா இட்ட
கட்டளைப் பிரகாரம் லேவியருக்குள்ளே ஒரு
மாதமுதல் அதற்குமேற்பட்ட வயதுள்ள சகல
ஆண்பிள்ளைகளையும், அவரவர் குலத்தின்படி
யெண்ணினார்கள்; எண்ணப்பட்டதொகை இ
௪௰ ருபத்தீராயிரம்.—அதன் பின்பு யெகோவா
மோசேயை நோக்கி, நீ இஸ்ரவேல் சந்ததியா
ரில் ஒருமாத முதல் அதற்குமேற்பட்ட வய
துள்ள முதற்பேறான சகல ஆண்பிள்ளைகளையும்
எண்ணி அவர்கள் நாமத்தின்தொகையைக்கூட்
௪௧ டி,—இஸ்ரவேல்சந்ததியாரிலுள்ள முதற்பேறு
னயாவருக்கும் பிரதியாக லேவியரையும், இஸ்ர
வேல்சந்ததியாருடைய மிருகங்களிலுள்ள தலை
யீற்றான யாவுக்கும் பிரதியாக லேவியரின் மிரு
கங்களையும், எனக்கென்று கிரகித்துக்கொள்: நா
௪௨ னே யெகோவா என்றார்.—அப்பொழுது
மோசேதனக்கு யெகோவா கட்டளையிட்ட
பிரகாரம் இஸ்ரவேல்சந்ததியாரிலுள்ளமுதற்பே
றானயாவரையும் எண்ணிப்பார்த்தான்; இப்படி
அவரவர் நாமத்தொகையின்படி எண்ணப்பட்
௪௩ டவர்களில்,—ஒருமாதமுதல் அதற்கு மேற்பட்
ட வயதுள்ள முதற்பேறான சகல ஆண்பிள்
ளைகளும் இருபத்தீராயிரத் திருநூற் றெழுபத்து
௪௪ மூன்று.—மேலும் யெகோவா மோசேயை
௪௫ நோக்கி,—நீ இஸ்ரவேல்சந்ததியாரிலுள்ள முதற்
பேறானயாவருக்கும் பிரதியாக லேவியரையும்,
அவர்களுடைய மிருகங்களுக்குப்பிரதியாகலே
வியருடைய மிருகங்களையுங் கிரகித்துக்கொள்;
லேவியர்என்னுடையவர்களாயிருப்பார்கள்: நா
௪௬ னேயெகோவா.—இஸ்ரவேல்சந்ததியாருடை
ய முதற்பேறுகளில் லேவியருடைய தொகைக்
கு அதிகமாயிருந்து மீட்கப்படவேண்டிய இரு
௪௭ நூற்றெழுபத்துமூவரிடத்திலும்,—தலைவீதம் இ
ருபதுகேராக்கொண்டபரிசுத்தஸ்தானத்து ஷேக்
௪௮ கலாகஐவ்வைந்துஷேக்கல்வாங்கி,-மிஞ்சுந்தொ
கையிலுள்ளவர்களை மீட்குங்கிரயத்தை ஆரோ
னுக்கும் அவனுடைய புத்திரருக்குங்கொடுப்பா
யாகவென்றார்.—அப்படியேலேவியரால் மீட்சி ௪௯
பெற்றவர்களுக்குமிஞ்சின தொகையிலுள்ளவர்
களாகிய இஸ்ரவேல்சந்ததியாரின் முதற்பேறு
னவர்களிடத்தில்,—பரிசுத்த ஸ்தானத்துக்குரி ௫௰
ய ஷேக்கலாக ஆயிரத்துமுந்நூற்றறுபத்தைந்து
ஷேக்கலாகிய மீட்சிக்கிரயத்தைவாங்கினான்.—
பின்பு யெகோவா மோசேக்குக் கட்டளை ௫௧
யிட்டபிரகாரம்மோசே யெகோவாவுடைய
வாக்கின்படி மீட்கப்பட்டவர்களுடைய கிரயத்
தை ஆரோனுக்கும் அவன்புத்திரருக்குங்கொடுத்
தான்.

## ௪. அதிகாரம்.

௧. லேவியருக்குள்ளேகிரியைசெய்யத்தக்கவயது நியமித்தல்: ௪. கோகாத்தியர்சுமக்கவேண்டிய ஆவாசத்தின்சுமைகளை நியமித்தல்: ௰௬. ஆசாரியருடையதொண்டு நியமித்தல்: கெர்ஷோனியரின் வயதையுங் கிரியையையும் நியமித்தல்: ௨௧. மிராரியரின் சுமைகளைக்குறித்தல்: ௩௪. கோகாத்தியரின்தொகை: ௩௮. கெர்ஷோனியரின்தொகை: ௨௪. மிராரியரின்தொகை.

பின்பு யெகோவா மோசேயையும் ஆரோனை ௧
யும் நோக்கி,—லேவியின் சந்ததியாருக்குள்ளே ௨
கோகாத்துச் சந்ததியாரில் அவரவர் குலத்தின்ப
டிக்கும்,பிதாக்களுடையவமிசத்தின்படிக்கும்,-
சபையின் ஆவாசத்திலுள்ள கிரியையைச் செய் ௩
யும்படி சேனையிலுட்படும் முப்பதுவயது முதல்
ஐம்பதுவயதுவரைக்குமுள்ள சகலரையும் எண்
ணிப்பாருங்கள்.
பாளயம் புறப்படும்பொழுது ஆரோனும் அ ௪
வன்புத்திரரும்வந்து திரைச்சீலையை யெடுத்துச்
சாட்சிப்பெட்டியை அதினால் மூடி,—அதின்மே ௫
லே தகசுத்தோற்போர்வையைப்போட்டு அதின்
மேலே சுத்த நீலத்துப்பட்டியைவிரித்து, அதினு
டைய தண்டுகளைப்பாய்ச்சி,—சமுகத்தப்பபீடத் ௬
தின்மேல் நீலத்துப்பட்டியைவிரித்து, போசன
பாத்திரங்களையுங் கரண்டிகளையுங் கரகங்களை
யும் வார்ப்பதற்கேற்ற பாத்திரங்களையும் அதின்
மேல்வைப்பார்களாக: நித்திய அப்பமும் அதின்
மேல்வைக்கப்படும்.—அவைகளின்மேல் அவர் ௭
கள் சிவப்புத்துப்பட்டியைவிரித்து, அதைத்தக
சுத்தோற்போர்வையினால்மூடி, அதின் தண்டுக
ளைப்பாய்ச்சவும்.—நீலத்துப்பட்டியை யெடுத்துக் ௮
கிளைவிளக்கையும், அகல்களையும், திரிவெட்டிக
ளையும்,திரிப்பாத்திரங்களையும்,அதற்காகஎடுத்து
வழங்கும் எண்ணெய்ப்பாத்திரங்களெல்லாவற்
றையும்மூடி,—அதையும், அதற்கேற்றபாத்திரங் ௯
கள் யாவையுந் தகசுத்தோற்போர்வைக்குள்ளே
போட்டு, அதை ஒருதண்டிலிடவும்;—பொற் ௰
பீடத்தின்மேல் நீலத்துப்பட்டியை விரித்து, அ
தைத் தகசுத்தோற்போர்வையால் மூடி, அதின்

(௪௧) வச.௰௩,௪௫. (௪௬) யாத்.௰௩.௰௩. (௪௭) யாத்.௩௰.௰௩. எசேக்.௪௫.௰௨.—(௪. அதி. ௩.) அதி.௮.௨௪. ௧.நாளா.௨௩.௩,௨௪,௨௭. (௪) யாத்.௨௬.௩௧. யாத்.௨௫.௰,௰௬. (௫) யாத்.௨௫.௰௩. (௬) யாத்.௨௫.௨௩,௨௯,௩௰. (௮) யாத்.௨௫.௩௧. யாத்.௨௫.௩௭,௩௮. (௰) யாத்.௩௰.௧,௩.

௰௧ தண்டுகளைப்பாய்ச்சவும்,—பரிசுத்தஸ்தானத்தில்
வழங்கும் ஆராதனைக்கேற்ற சகலபாத்திரங்களை
யுமெடுத்து, நீலத்துப்பட்டியிற்போட்டுத் தகசுத்
தோற்போர்வையினால்மூடிஒருதண்டிலிடவும்,—
௰௨ வேதிகையைச் சாம்பலறவிளக்கி அதின்மேற்சி
௰௩ வப்புத்துப்பட்டியைவிரித்து,—தாங்கள் அதிலே
வழங்கும்வேதிகையிலுள்ளகலசங்களும், முட்க
ருவிகளும், சாம்பல் அள்ளும் கரண்டிகளும், க
லங்களுமாகிய சகல பாத்திரங்களையும், அதின்
மேல்வைத்து,அதின்மேல் தகசுத்தோற்போர்வை
யைவிரித்து அதின் தண்டுகளைப்பாய்ச்சவுங்கட
௰௪ வர்கள்.—பாளயம்புறப்படும்பொழுது ஆரோனும்
அவன் புத்திரரும் பரிசுத்தஸ்தானத்தையும், பரி
சுத்த ஸ்தானத்தின் சகல பாத்திரங்களையும் மூ
டித்தீர்ந்தபின்பு கோகாத்துச்சந்ததியார் அதை
யெடுத்துக்கொண்டுபோகிறதற்கு வரவேண்டும்:
ஆகிலும்அவர்கள்சாவாதிருக்கவேண்டில்பரிசுத்
தவஸ்துக்களில் எதையாகிலும்,பரிசியாதிருக்கக்
கடவர்கள். சபையின் ஆவாசத்தில் கோகாத்துச்
௰௫ சந்ததியார் சுமக்கும்பாரம் இதுவே.—இப்படிச்
சபையின் ஆவாசத்திலுள்ள பரிசுத்தவஸ்துகளுக்
கேற்ற பணிவிடைகளைக்கோகாத்துச்சந்ததியார்
செய்வார்கள்.

௰௬ ஆசாரியனாகிய ஆரோனுடைய புத்திரனான
எலியேசார் விளக்கெண்ணெயையும் சுகந்த தூ
பவருக்கத்தையும், நித்தியநைவேத்தியத்தையும்,
அபிஷேகதைலத்தையுங் கையாளவும்,ஆவாசமு
முவதையும் அதிலுள்ளயாவையும் பரிசுத்தஸ்தா
னத்தையும் அதின் பாத்திரங்களையும் விசாரிக்க
வுங்கடவனென்றார்.

௰௭ பின்னும்யெகோவாமோசேயையும்ஆரோ
௰௮ னையும்நோக்கி,-லேவியருக்குள்ளேகோகாத்துவ
மிசக்கோத்திரத்தார்அழிந்துபோகும்படிவிடாதி
௰௯ ருங்கள்.-அவர்கள் பரிசுத்தவஸ்துக்களுக்குச்சமீ
பிக்கும்பொழுது சாவாமற் சீவித்திருக்கும்வண்
ணம் இப்படிச்செய்யும்பொருட்டுஆரோனும் அ
வன்புத்திரரும்வந்துஅவர்களுக்குஅவரவர் பணி
விடையையுஞ் சுமையையும் ஏற்படுத்தவேண்
௨௰ டும்.-அவர்களேதாங்கள்சாவாதிருக்கவேண்டில்,
பரிசுத்தவஸ்துக்கள்மூடப்படும்பொழுது பார்க்க
உட்பிரவேசியாதிருக்கக்கடவர்களென்றார்.

௨௧ பின்னும்யெகோவாமோசேயை நோக்கி,-
௨௨ கெர்ஷோன் சந்ததியாரில் அவரவர் பிதாக்களு
டைய வமிசத்தின்படிக்கும், குலத்தின் படிக்
௨௩ கும்,—சபையின் ஆவாசத்தின் கிரியையைச்
செய்வதற்குப் பணிவிடையிற் பிரவேசிக்கத்தக்
கமுப்பது வயதுமுதல் ஐம்பது வயதுவரைக்கு
௨௪ முள்ள சகலரையும்எண்ணிப்பார்.-பணிவிடை
செய்து சுமையெடுக்குங் கெர்ஷோன் வமிசத்
௨௫ தார்செய்யவேண்டிய கிரியையாவது.-அவர்கள்
ஆவாசத்தின் திரைச்சீலையையும், சபையின் ஆ
வாசத்தின் போர்வையையும், அதின்மேலிருக்
கிற தகசுத்தோற் போர்வையையும், சபையின்
ஆவாசவாசலின்தொங்குதிரையையும்,-ஆவாசத் ௨௬
தையும், வேதிகையையும், சூழ்ந்திருக்கிற பிரா
காரத்தின்தொங்குதிரைகளையும், பிராகாரவாசல்
துவாரத்தின் திரைச்சீலையையும், கயிறுகளையும்,
அவைகளின் வேலைக்கடுத்த கருவிகள் யாவை
யுஞ்சுமந்து, அவைகளைக்குறித்துச்செய்யப்படும்
யாவையுஞ்செய்து,இப்படியேபணிவிடைசெய்
யக்கடவர்கள்.—கெர்ஷோன் சந்ததியார்சுமக்க ௨௭
வேண்டிய சகல சுமைகளும், செய்யவேண்டிய
சகல கிரியைகளுமாகிய பணிவிடைகள்யாவும்
ஆரோனாலும் அவன்புத்திரராலும் நியமிக்கப்ப
டும்: நீங்கள் அவர்கள் சுமக்கவேண்டிய சகலசு
மைகளையும் நியமித்து, அவர்களிடத்தில் ஒப்பி
யுங்கள்.—கெர்ஷோன் சந்ததியாரின் வமிசத்தார்௨௮
சபையின் ஆவாசத்திற் செய்யவேண்டிய பணி
விடை யிதுவேயாம்: அவர்கள்பாரம் ஆசாரியனா
கிய ஆரோனின் புத்திரனான இதாமாருடைய
கைக்கீழிருக்கவேண்டும்.

மிராரி சந்ததியாருக்குள் அவரவர் குலத்தின் ௨௯
படிக்கும், பிதாக்களுடைய வமிசத்தின்படிக்
கும்,—சபையின் ஆவாசத்திலுள்ள கிரியைகளைச் ௩௰
செய்யும்படிபணிவிடையிற்பிரவேசிக்கும் முப்
பதுவயது முதல் ஐம்பதுவயதுவரைக்குமுள்ள
ஒவ்வொருவரையும் எண்ணிப்பார்.—அவர்கள் ௩௧
சபையின் ஆவாசத்திலே தாங்கள்செய்யவேண்
டிய பணிவிடைக்கேற்க ஆவாசத்தின்பலகைக
ளையும், தாள்களையும், தூண்களையும், பாதங்க
ளையும்,—சுற்றுப்பிராகாரத்தின் தூண்களையும், ௩௨
அவைகளின் பாதங்களையும், முளையாணிகளை
யும், கயிறுகளையும், அவைகளின் சகல கருவி
களையும், அவற்றின் தொண்டுக்கேற்றயாவையும்
காப்பதே அவர்கள்பாரம்: அவர்கள் காக்கும்
பாரத்திலுள்ள திரவியங்களைப் பெயர்பெயரா
க எண்ணக்கடவீர்கள்.—ஆசாரியனாகிய ஆரோ ௩௩
னின்புத்திரனான இதாமாருடையகைக்கீழ் மிரா
ரிசந்ததியாரின்வமிசத்தார் சபையின் ஆவாசத்தி
லுள்ள தங்கள்சகலகிரியைகளுக்குமேற்கச்செய்
யவேண்டிய பணிவிடையிதுவேயென்றார்.

அப்படியே மோசேயும் ஆரோனுஞ்சபையின் ௩௪
பிரதானிகளுங்கோகாத் சந்ததியாரில் அவரவர்
குலத்தின்படிக்கும், பிதாக்களுடைய வமிசத்
தின்படிக்கும்,—சபையின் ஆவாசத்திலுள்ளகிரி ௩௫
யையைச்செய்யப் பணிவிடையிற் பிரவேசிக்
கும் முப்பதுவயதுமுதல் ஐம்பதுவயதுவரைக்கு
முள்ள ஒவ்வொருவரையும் எண்ணிப்பார்த்தார்
கள்.—அவர்களுக்குள் அவரவர் குலத்தின்படி ௩௬
எண்ணப்பட்டவர்கள் இரண்டாயிரத்தெழுநூற்
றைம்பது.—யெகோவா மோசேக்குக்கட்ட ௩௭
ளையிட்டபிரகாரம் கோகாத்வமிசத்தாரில் சபை

(௰௪) ௨.சாமு.௬.௰௩. ௧.நாளா.௰௫.௨,௰௫. ௨.சாமு.௬.௬,௭. ௧.நாளா.௰௩.௯,௰. (௰௬) யாத்.௨௫.௬. லேவி.௨௪.௨. யாத்.௩௰.௩௪. யாத்.௨௯.௪௰. யாத்.௩௰.௨௫. (௰௯) வச.௰௫. (௨௰) யாத்.௰௯.௨௧. ௧.சாமு.௬.௰௯. (௩௧) அதி.௩.௩௬, ௩௭. யாத்.௨௬.௰௫. (௩௨) யாத்.௩௮.௨௧.

யின் ஆவாசத்திற் பணிவிடைசெய்வதற்கு மோ
சேயினாலும் ஆரோனாலும் எண்ணித்தொகையி
டப்பட்டவர்கள் இவர்களே.
௩௮ கெர்ஷோன் சந்ததியாரிலும் அவரவர்குலத்
தின்படிக்கும், பிதாக்களுடைய வமிசத்தின்ப
௩௯ டிக்கும்,—சபையின் ஆவாசத்தின் கிரியையைச்
செய்யப்பணிவிடையிற் பிரவேசிக்கும் முப்ப
துவயதுமுதல் ஐம்பதுவயதுவரைக்குமுள்ள சக
௪௰ லரும் எண்ணப்பட்டார்கள்.—இப்படி அவர
வர்குலத்தின்படிக்கும், பிதாக்களுடையவமிசத்
தின்படிக்கும், எண்ணப்பட்டவர்கள் இரண்டா
௪௧ யிரத்தறுநூற்றுமுப்பது.—யெகோவா இட்ட
கட்டளைப்பிரகாரம் கெர்ஷோன் சந்ததியாரின்
வமிசத்தாரில்சபையின் ஆவாசத்திற்பணிவிடை
செய்வதற்குமோசேயினாலும் ஆரோனாலும் எண்
ணித்தொகையிடப்பட்டவர்கள் இவர்களே.
௪௨ மிராரி சந்ததியாரிலும் அவரவர் குலத்தின்ப
டிக்கும்,பிதாக்களுடையவமிசத்தின்படிக்கும்.—
௪௩ சபையின் ஆவாசத்தின் கிரியையைச் செய்யப்
பணிவிடையிற் பிரவேசிக்கும்முப்பதுவயதுமு
தல் ஐம்பதுவயதுவரைக்குமுள்ளசகலரும் எண்
௪௪ ணப்பட்டார்கள்.—இப்படி அவர்கள் குலத்தின்
படிக்கும், பிதாக்களுடைய வமிசத்தின்படிக்
கும்,எண்ணப்பட்டவர்கள்மூவாயிரத்திருநூறு.-
௪௫ யெகோவா மோசேக்குச் சொல்லிய வாக்
கின்படி மிராரிசந்ததியாரின்வமிசத்தாரில் மோ
சேயினாலும் ஆரோனாலும் எண்ணித் தொகை
௪௬ யிடப்பட்டவர்கள் இவர்களே.—லேவியரில் அ
வரவர் குலத்தின்படிக்கும், பிதாக்களுடையவ
மிசத்தின்படிக்கும், சபையின் ஆவாசத்தில் ஆ
ராதனைத்தொண்டுஞ் சுமக்குந்தொண்டுஞ்செய்ய
உட்பட்ட முப்பதுவயதுமுதல் ஐம்பதுவயதுவ
௪௭ ரைக்குமுள்ள ஒவ்வொருவரும்,—மோசேயினா
லும் ஆரோனாலும் இஸரவேலரின் பிரதானிக
ளினாலும் எண்ணித்தொகையிடப்பட்டார்கள்.—
௪௮ இப்படி அவரவர் குலத்தின்படிக்கும், பிதாக்க
ளுடைய வமிசத்தின்படிக்கும், எண்ணப்பட்
டவர்கள் எண்ணாயிரத்தைஞ்ஞூற்றெண்பது.—
௪௯ யெகோவா இட்டகட்டளைப்பிரகாரம் ஒவ்
வொருவருந் தங்கள் தங்கள் தொண்டின்படிக்
கும், தங்கள்தங்கள் சுமையின்படிக்கும், மோசே
யினால்எண்ணப்பட்டார்கள்: இவ்விதமாய் யெ
கோவா மோசேக்குக்கட்டளையிட்டபடி அவ
னால் எண்ணப்பட்டார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. அசுசியானவர்களைப்பாளயத்தினின்றும் அகற்றல்: ௫. குற்றத்துக்கு உத்தரவாதஞ்செய்ய விதித்தல்: ௰௧. புருஷன் தன்மனைவியில்வைராக்கியமாயிருக்குமிடத்து அவளைச் சோதிக்கும் விதி.

மேலும் யெகோவா மோசேயைநோக்கி,—
௨ குஷ்டரோகிகள் ஒவ்வொருவரையும், மேகரோ
கிகள் எவர்களையும்,பிரேதத்தைப்பரிசித்த அசுசி
யுள்ளவர்கள்யாவரையும், பாளயத்தினின்றும் வி
லக்கிவிடும்படி இஸரவேல் சந்ததியாருக்குக்கட்
டளையிடு.—ஸ்திரியானாலும், புருஷனானாலும், ௩
நான்வாசம்பண்ணுகிற தங்கள்பாளயங்களைஅசு
சிப்படுத்தாதபடிக்கு, நீங்கள் அவர்களைப்பாளய
த்துக்குப்புறம்பாக விலக்கிவிடக்கடவீர்களென்
றார்.—அப்படியே இஸரவேல் சந்ததியார்செய்து ௪
அவர்களைப் பாளயத்துக்குப் புறம்பாக விலக்கி
விட்டார்கள் யெகோவா மோசேக்குச்சொல்
லியபிரகாரம்இஸரவேல்சந்ததியார்செய்தார்கள்.
மேலும் யெகோவா மோசேயைநோக்கி,— ௫
ஒருபுருஷனானாலும்,ஸ்திரியானாலும், யெகோ ௬
வாவின் கட்டளையைமீறி மனிதருக்கு விரோத
மாகஎதாகிலும் ஒரு பாவத்தைச்செய்து குற்றவா
ளியானபொழுது,—அவர்கள் தாங்கள் செய்தபா ௭
வத்தையுணர்ந்துசொல்லக்கடவர்கள்: அப்படிப்
பட்டவன் தான்செய்த குற்றத்தினிமித்தந்தான்
வாங்கின முதலோடே ஐந்திலொருபங்கும்அதி
கமாய்க்கூட்டி, தான் குற்றஞ்செய்தது எவனுக்
கோ அவனுக்குச்செலுத்தக்கடவன்.—அவன்தன் ௮
குற்றத்தினிமித்தங்கொடுக்குந்தானத்தைவாங்கத்
தக்க இனத்தாரொருவருமில்லாதிருந்தால்,தனக்
குப்பிராயச்சித்தஞ்செய்யும்படி பிராயச்சித்தக்க
டாவையேயன்றித் தன்குற்றத்தினிமித்தங் கொ
டுக்கவேண்டியதானத்தையும் யெகோவாவின்
சந்நிதியில்ஆசாரியனுக்குக்கொடுக்கக்கடவன்.—
இஸரவேல்சந்ததியார் பரிசுத்தவஸ்துக்களில் ஆ ௯
சாரியனுக்குக்கொண்டுவரும்நைவேத்தியம் ஒவ்
வொன்றும் அவனுடையவைகளாயிருக்கும்.—
ஒவ்வொருவரும் நைவேத்தியஞ்செய்யும் பரிசுத் ௰
தவஸ்துக்கள் அவனுடையவைகளாயிருக்கும்;
எந்தமனிதனும்ஆசாரியனுக்குக்கொடுப்பது எது
வோ, அது அவனுக்கேயுரியதென்று இஸரவேல்
சந்ததியாருக்குச் சொல்லென்றார்.
பின்னும்யெகோவா மோசேயைநோக்கி,- ௰௧
யாவனொருவனுடைய மனைவி நெறிதவறி அவ ௰௨
னுக்குத் துரோகமாய்த் தன்புருஷன் கண்காணாத
படி ஒளித்து அந்நியபுருஷனுடன்சஞ்சாரம்பண்
ணி அசுசிப்பட்டும்,—அவளுக்குவிரோதமாய்ச் ௰௩
சாட்சியில்லாமலும் அந்தச்சமயத்தில் அவளைப்பி
டியாமலுமிருக்கையில்,-அவன்மனங்கொதித்துத் ௰௪
தன்மனைவியின்மேல் குரோதங்கொண்டபொழு
து அப்படி அவள் அசுசியாயிருந்தாலும், அவன்
மனங்கொதித்துக் குரோதங்கொண்டபொழுது
சுசியாயிருந்தாலும்,-அந்தப்புருஷன் தன்மனைவி ௰௫
யை ஆசாரியனிடத்துக்கழைத்துவந்து, அவள் நி
மித்தம் ஒரு எபா வாற்கோதுமைமாவிலே பத்தி
லொருபங்கை நைவேத்தியமாகக்கொண்டுவந்
து,அது குரோதத்தின் நைவேத்தியமும் அதிக்கிர
மத்தைஞாபகப்படுத்தும்நைவேத்தியமுமாயிருப்
பதினால், அதின்மேல் எண்ணெயைவாராமலுங்

(௫. அதி. ௨.) லேவி.௰௩.௩,௪௬. லேவி.௰௫.௨. லேவி.௨௧.௧. (௩) லேவி.௨௬.௰௧,௰௨. ௨.கொரி.௬.௰௬. (௬) லேவி.௬.௨,௩. (௭) லேவி.௫.௫. யோசு.௭.௰௯. லேவி.௬.௫. (௮) லேவி.௬.௬,௭. (௯) யாத்.௨௯.௨௮. உபா.௰௮.௩,௪. (௰௩) லேவி.௰௮.௨௰. (௰௫) ௧.இரா.௰௭,௰௮. எசேக்.௨௯.௰௬.

௰௬ குந்துருவைப் போடாமலுமிருப்பானாக.—அப்
பொழுது ஆசாரியன் அவளைச்சமீபத்தில் அழைத்
து யெகோவாவின் சந்நிதியில் நிறுத்தக்கட
௰௭ வன்.-மேலும் ஆசாரியன் ஒருமட்கலத்திற்சுத்தச
லத்தைவார்த்து ஆவாசத்தின் நிலத்திலுள்ளபுழுதி
யிற்கொஞ்சமெடுத்து அந்தச்சலத்திற்போட்டு,-
௰௮ யெகோவாவுக்குமுன்விட்டஸ்திரியினுடை
யதலையைத்திறந்து குரோதத்தின்நைவேத்தியமா
கியஞாபகநைவேத்தியத்தை அவளுடையகையி
லிடுவானாக: சாபங்கொடுக்கிறகசப்பானநீர்ஆசா
௰௯ ரியனுடைய கையிலிருக்கவேண்டும்.-பின்பு ஆ
சாரியன் அந்தஸ்திரியை ஆணையிடுவித்து, அவளை
நோக்கி, உன்சுயபுருஷனோடேயன்றி அந்நியபு
ருஷனோடுஞ்சயனியாமலும், ஒருவனோடும் அ
சுசிக்கிரியைசெய்யவழுவாமலும்இருந்தாயாகில்
சாபங்கொடுக்குமிந்தக் கசப்பானசலத்துக்குநீவி
௨௰ லகுவாயாகவென்று சொல்லியபின்பு,—ஆசாரி
யன் அந்தஸ்திரியைச் சாபந்தருவதற்கேதுவான
ஆணையிடுவித்து, அவளைநோக்கி,உன்புருஷனோ
டேயன்றி அந்நியனோடும் நீவழுவி உன் சுயபுரு
ஷனேயன்றி அந்நியபுருஷனும் உன்னுடன் ச
௨௧ யனித்ததினால் நீ அசுசியாயிருப்பாயாகில்,—யெ
கோவா,உன்னிடுப்புவிழவும், உன்னுதரம்வீங்
கவும்பண்ணுவதினால், உன்னை உன்சனங்களுக்
௨௨ குள்ளே சாபமும் ஆணையுமாகவைப்பாராக.—உ
ன்னுதரம்வீங்கவும், இடுப்புவிழவும் பண்ணும்ப
டிசாபத்தைத்தரும் இந்தச்சலம் உன்னுதரத்திற்பி
ரவேசிக்கக்கடவதென்று சொல்வானாக: அதற்கு
அந்தஸ்திரி,ஆமென் ஆமெனென்றுசொல்லக்கட
௨௩ வள்.-பின்பு ஆசாரியன் இந்தச்சாபங்களை ஒருபுத்
தகத்திலெழுதிக் கசப்பான சலத்தினால் கழுவி
௨௪ நீக்கி,—சாபத்தைத்தரும் அந்தக்கசப்பானசலத்
தை அவள்குடிக்கும்படிபண்ணுவான்: அப்பொ
ழுது சாபத்தைத்தரும் அந்தச்சலம் அவளிடத்திற்
௨௫ பிரவேசித்துக்கசப்பாகும்.—அதற்குமுன் ஆசாரி
யன் குரோதத்தின் நைவேத்தியத்தை அந்தஸ்திரி
யின்கையினின்றும்வாங்கி,அதை யெகோவா
வின்சந்நிதியில் அசைவாட்டிவேதிகையின்மேல்
௨௬ நைவேத்தியஞ்செய்து,-அதற்குஞாபகமாய் அந்த
நைவேத்தியத்தில் கைநிறைய அள்ளி வேதிகை
யின்மேலேதகித்து, பின்பு அவளந்தச்சலத்தைக்
௨௭ குடிக்கும்படி செய்யக்கடவன்.—அந்தச் சலத்
தைக்குடிக்கச்செய்தபின்பு அவள் அசுசிப்பட்
டுத் தன்புருஷனுக்குத் துரோகம்பண்ணினவளா
யிருந்தால், சாபத்தைத்தரும் அந்தச்சலம் அவளி
டத்தில் பிரவேசித்துக்கசப்பானதினால் அவளுத
ரம்வீங்கும்,அவளிடுப்பும்விழும்: இப்படியேஅந்
தஸ்திரி தன்சனங்களுக்குள்ளே சாபத்துக்குட்ப
௨௮ டுவாள்.-அந்தஸ்திரி அசுசிப்படாமற்சுசியாயிருந்
தாளேயாகில், அவளதற்குவிலகிக்கருப்பந்தரிப்
௨௯ பாள்.-ஒருஸ்திரிதன்புருஷனோடன்றி அந்நியபு
ருஷனோடே வழுவி அசுசி யடைந்ததினாலுண்
டான குரோதத்துக்கேற்ற பிரமாணமிதுவே.—
அன்றியும் புருஷனுக்கு மனங்கொதிக்கும்பொ ௩௰
ழுது அவன் தன்மனைவியின்மேல் குரோதங்
கொண்டுதன்மனைவியை யெகோவாவின்சந்
நிதியில் நிறுத்துவானாக; பின்பு ஆசாரியன் இந்
தப்பிரமாணத்தின்படி முழுவதும் அவளுக்குச்
செய்யக்கடவன்.—அப்பொழுது அந்தப்புருஷன் ௩௧
பாவம் நீங்கிக் குற்றமற்றவனாவான்; ஸ்திரியே
தன்னதிக்கிரமத்தையனுபவிப்பாளென்று இஸர
வேலருக்குச்சொல்லென்றார்.

## ௬. அதிகாரம்.

௧. நசரீயரின்விரதவிதி: ௨௨.சனங்களை ஆசீர்வதிக்குமுறைமை.

மேலும் யெகோவா மோசேயுடனே,—புரு ௧
ஷனானாலும் ஸ்திரியானாலும் தன்னை யெகோ ௨
வாவுக்கென்று பிரதிஷ்டைபண்ணும்பொருட்
டு நசரீயர் சங்கற்பத்தைச்செய்யும்பொழுது,—
அப்படிப்பட்டவன் திராட்சரசத்தையும், மற்ற ௩
லாகிரியுள்ள பானத்தையும்விட்டுப் பிரிந்திருக்
கக்கடவன். அவன் திராட்சரசத்தின் காடியை
யும், மற்ற லாகிரியுள்ள பானத்தின் காடியையும்,
திராட்சரசத்தினாற்செய்த எந்தப்பானத்தையும்,
குடியாமலும் பச்சையானதிராட்சங்களையாவது
வற்றிப்போன திராட்சங்களையாவது, புசியாம
லும்,—தன் பிரதிஷ்டைகாலமுழுதுந் திராட்சக் ௪
கொடிக்கனியின் விதைமுதல் தோல்வரைக்கு
முள்ள ஒன்றையும் புசியாமலிருக்கக்கடவன்.—
அவன்பிரதிஷ்டை சங்கற்பகாலமுழுதும் சௌ ௫
ரகன்கத்தி அவன் தலையின்மேல் படலாகாது.
யெகோவாவுக்கென்று பிரதிஷ்டைபண்ணி
னகாலம் நிறைவேறுமளவும், அவன் பரிசுத்தமா
யிருந்து தன் தலைமயிரை வளரவிடக்கடவன்.—
அவன் யெகோவாவுக்கென்று பிரதிஷ்டை ௬
பண்ணினநாள்முழுதும் பிரேதத்துக்குச்சமீபிக்
கப்படாது.—அவன் தேவனுக்கென்று செய்த ௭
பிரதிஷ்டை அவன் தலைமேலிருப்பதினால், மர
ணமடைந்த தன் பிதாவினாலாவது, மாதாவினா
லாவது, சகோதரனாலாவது, சகோதரியினாலாவ
துதன்னை அசுசிப்படுத்தவேண்டாம்.—தான் பிரதி ௮
ஷ்டையான காலமெல்லாம் யெகோவாவுக்
கேற்கப்பரிசுத்தமாயிருப்பானாக.—ஒருவன் அவ ௯
னருகே சடிதியில் மரணமடைந்தால், பிரதிஷ்
டைக்கேற்ற அவன்தலை அசுசிப்படும், அதினால்
அவன் தன்னைச்சுத்திகரிப்பதற்கு ஏற்றதினமாகி
ய ஏழாம்நாளில்தன்தலையைச்சௌரம்பண்ணி,—
எட்டாம்நாளில் இரண்டு மணிப்புறாக்களையா ௰
வது இரண்டுமாடப்புறாக்குஞ்சுகளையாவதுசபை
யின் ஆவாசவாசலில் ஆசாரியனிடத்திற்கொண்
டுவரக்கடவன்.—அப்பொழுது ஆசாரியன் ஒன் ௰௧

(௰௯) ரோ.௭.௨. (௨௰) யோசு.௬.௨௬. ௧.சாமு.௰௪.௨௪. நிகி.௰.௨௯. (௨௧) எரே.௨௯.௨௨. (௨௨) சங்.௱௯.௰௮. உபா.௨௭.௰௫. (௨௭) உபா.௨௮.௩௭. சக.௮.௰௩. (௩௧) லேவி.௨௰.௰௭,௰௯,௨௰.—(௬. அதி. ௨.) லேவி.௨௭.௨. நியா.௰௩.௫. அப்.௨௧.௨௩. ரோ.௧.௨. (௩) ஆமோ.௨.௰௨. லூக்.௧.௰௫. (௫) நியா.௰௩.௫. நியா.௰௬.௰௭. ௧.சாமு. ௧.௰௧. (௬) லேவி.௨௧.௰௧. (௭) லேவி.௨௧.௧,௨. (௯) அப்.௰௮.௰௮. அப்.௨௧.௨௪. (௰) லேவி.௫.௭.

றைப்பிராயச்சித்த பலியாகவும், மற்றதைத்தக
னபலியாகவும் நைவேத்தியம் பண்ணிப்பிணத்
தினால் அவனுக்குண்டான அசுசியை நிவிர்த்தி
செய்து, அந்நாளிலே அவனுடைய தலையைச்
௰௨ சுத்திசெய்வானாக,—அவன் திரும்பவுந்தன் பிர
திஷ்டைநாள்களை யெகோவாவுக்கென்று ஏற்
படுத்தி ஒருவருஷத்து ஆட்டுக்குட்டியைக்குற்ற
நிவிர்த்தி பலியாகக்கொண்டு வரக்கடவன்: அவ
னுடைய பிரதிஷ்டை அசுசிப்பட்டபடியினா
லே சென்றநாள்கள்விருதாவாகும்.
௰௩ நசரீயனுக்குரிய பிரமாணமாவது, அவன்தன்
பிரதிஷ்டை நாள்கள் நிறைவேறும்பொழுது,
௰௪ சபையின் ஆவாசவாசலில்வந்து,—தகனபலிக்
குப்பழுதற்ற ஒருவருஷத்தாட்டுக் குட்டியை
யும், பிராயச்சித்தபலிக்குப்பழுதற்ற ஒருவரு
ஷத்துப் பெண்ணாட்டுக்குட்டியையும், ஸ்தோத்
திரபலிக்குப்பழுதற்ற ஓராட்டுக்கடாவையும்,—
௰௫ நைவேத்தியத்துக்கு ஒரு கூடையில் எண்ணெ
யிற் பிசைந்த புளிப்பில்லாதமெல்லியமாவினாற்
செய்த அதிரசங்களையும், எண்ணெய் தடவப்
பட்டபுளிப்பில்லாத அடைகளையும், பானபலி
யுடன் யெகோவாவுக்கு நைவேத்தியமாகக்
௰௬ கொண்டுவரக்கடவன்.—அவைகளை ஆசாரியன்
யெகோவாவின் சந்நிதியில் கொண்டுவந்து,
அவனுடைய பிராயச்சித்தபலியையும், அவனு
டைய தகனபலியையும், நிவேதனம்பண்ணி,—
௰௭ ஆட்டுக்கடாவைக் கூடையிலுள்ள புளிப்பில்
லாத அப்பங்களுடனேகூட, யெகோவாவுக்
கு ஸ்தோத்திரபலியாயிடக்கடவன்: அன்றியும்
ஆசாரியன் நைவேத்தியத்துடனே பானபலி
௰௮ யைச் செலுத்துவானாக.—அப்பொழுது நசரீ
யன் தன்பிரதிஷ்டைக்குத் தலையை, சபையின்
ஆவாசவாசலில் சௌரம்பண்ணி, தன்பிரதிஷ்
டையின் தலைமயிரையெடுத்து ஸ்தோத்திரபலி
யின் கீழெரிகிற அக்கினியிற் போடக்கடவன்.-
௰௯ நசரீயன் தன்பிரதிஷ்டையின் தலையைச் சௌ
ரம்பண்ணியபின்பு ஆசாரியன் ஆட்டுக்கடாவில்
வெந்த ஒரு முன்னங்கால் தொடையையும், கூ
டையிலிருக்கிறவைகளிற் புளிப்பில்லாத ஒரு
அதிரசத்தையும், புளிப்பில்லாத ஒரு அடையை
யுமெடுத்து அவனுடைய கைகளில்வைத்து,—
௨௰ அவைகளை யெகோவாவுக்குமுன்பாக அசை
வாட்டக்கடவன்: அது அசைவாட்டப்பட்ட
மார்பின் துண்டத்தோடும் உயர்த்தி நைவேத்தி
யம்பண்ணப்பட்டமுன்னந்தொடையோடும் ஆ
சாரியனுக்குரித்தாகும், அவைபரிசுத்தமுள்ளன:
பின்பு நசரீயன் திராட்சரசத்தைப்பானம்பண்
௨௧ ணலாம்.—சங்கற்பம்பண்ணின நசரீயனுக்கும்
அவன் தன்கைதரும் பொருளுக்கேயன்றித் தன்
பிரதிஷ்டையினிமித்தம் யெகோவாவுக்
கிடும் நைவேத்தியத்துக்குமுரிய பிரமாணமிது
வேயாம்: அவன் தான்செய்த சங்கற்பத்தின்படி
தன்பிரதிஷ்டையின்பிரமாணத்துக்கேற்கச்செய்
யவேண்டுமென்று இஸரவேல் சந்ததியாருக்குச்
சொல்லென்றார்.

பின்னும் யெகோவா மோசேயுடனே,—நீ ௨௨
ஆரோனையும் அவன் புத்திரரையும்நோக்கி, நீங் ௨௩
கள் இஸரவேல் சந்ததியாரை ஆசீர்வதிக்கும்படி
அவர்களைப்பார்த்து,-யெகோவா உன்னை ஆசீர் ௨௪
வதித்துக்காக்கக்கடவர்:—யெகோவா தமதுமு ௨௫
கத்தை உன்மேல் பிரசன்னப்படுத்தி, உனக்கு
அனுக்கிரகஞ்செய்யக்கடவர்: யெகோவாதம
து முகப்பிரசன்னம் உன்மேல் உதயமாகும்படி
செய்து, உனக்குச்சமாதானத்தை அருளக்கட
வரென்பதாய்ச் சொல்லுங்களென்று சொல்வா
யாக.—இப்படி அவர்கள் என்னுத்துமத்தைஇஸ ௨௬
ரவேல் சந்ததியார்மேலுச்சரிக்கக்கடவர்கள்;—
அப்பொழுது நான் அவர்களை ஆசீர்வதிப்பே ௨௭
னென்றார்.

## ௭. அதிகாரம்.

௧. ஆவாசத்தின்பிரதிஷ்டை: ௰. வேதிகைக்காக அதிபதிகள்செய்தநைவேத்தியம்: அ௯. கிருபாசயத்தினின்றுமோசேக்குவாக்கு அருளப்படல்.

மோசே ஆவாசத்தை ஸ்தாபனம்பண்ணி அ ௧
தையும், அதின் சமஸ்த பாத்திரங்களையும் அபி
ஷேகம்பண்ணி,பரிசுத்தப்படுத்தி,வேதிகையை
யும், அதின் சமஸ்தபாத்திரங்களையும் அபிஷே
கம்பண்ணி,பரிசுத்தப்படுத்திமுடித்ததினத்தில்,-
தங்கள் தங்கள் பிதாக்களுடைய வமிசத்தாருக் ௨
குத்தலைவர்களும் கோததிரப்பிரதானிகளுந்தொ
கையிடப்பட்டவர்களுக்கு மேல்விசாரணைக்கா
ரருமாகிய இஸரவேலின் பிரதானிகள் நிவேத
னம்பண்ணினார்கள்.—இவ்விரண்டு பிரதானிகள் ௩
ஒவ்வொருவண்டிலும், ஒவ்வொருவன் ஒவ்வொ
ருமாடுமாக, ஆறுகுலால்வண்டில்களையும், பன்
னிரண்டுமாடுகளையும் யெகோவாவுடையசந்
நிதியில்காணிக்கையாகச்செலுத்தும்படி ஆவாசத்
துக்குமுன்பாகக்கொண்டுவந்தார்கள்.—அப்பொ ௪
ழுது யெகோவா மோசேயைநோக்கி,—நீ ச ௫
பையின் ஆவாசத்தின் கிரியைக்காக அவைகளை
அவர்களிடத்தில் வாங்கி லேவியருக்கு அவர
வர் ஊழியத்துக்குத்தக்கதாய்க் கொடுப்பாயென்
றார்: அப்பொழுது மோசே அந்த வண்டில்களை
யும் மாடுகளையும்வாங்கி லேவியருக்குக்கொடுத்
தான்.—கெர்ஷோன் புத்திரருடைய ஊழியத்துக் ௬
குத்தக்கவைகளாய் இரண்டுவண்டில்களையும், நா
லுமாடுகளையும், அவர்களுக்குக்கொடுத்தான்:—
பின்பு ஆசாரியனாகிய ஆரோனின்புத்திரனாஇ ௭
தாமாருடையகையின்கீழிருக்கிற,—மிராரியின் ௮
புத்திரருடைய ஊழியத்துக்குத்தக்கவைகளாய்

(௰௩) அப்.௨௧.௨௬. (௰௪) லேவி.௪.௨,௨௭,௩௨. லேவி.௩.௬. (௰௫) லேவி.௨.௪. யாத்.௨௯.௨. அதி.௰௫.௫,௭,௰. (௰௮) அப்.௨௧.௨௪. (௰௯) ௧.சாமு.௨.௰௫. யாத்.௨௯.௨௩,௨௪. (௨௰) யாத்.௨௯.௨௭,௨௮. (௨௩) லேவி.௯.௨௨. ௧.நாளா.௨௩.௰௩. (௨௪) சங்.௱௨௧,௭. யோவா.௰௭.௰௧. (௨௫) சங்.௩௧.௰௬. சங்.௬௭.௧. சங்.௮௰.௩,௭,௰௯. தானி.௯.௰௭. ஆதி.௪௩.௨௯. சங்.௪.௬. யோவா.௰௪.௨௭. ௨.தெச.௩.௰௬. (௨௬) உபா.௨௮.௰. ௨.நாளா.௭.௰௪. ஏசா.௪௩.௭. தானி.௯.௰௮,௰௯. (௨௭) சங்.௱௰௫.௰௨.—(௭. அதி. ௧.) யாத்.௪௰.௰௮.

நாலு வண்டில்களையும், எட்டு மாடுகளையுங்கொ
௯ டுத்தான்.—கோகாத்தின் புத்திரர் தோளின்மேல்
சுமப்பதே அவர்களுக்குரிய ஆவாசத்தின் பணி
விடையாதலால், அவர்களுக்கு ஒன்றுங்கொடுக்
கவில்லை.
௰ அன்றியும், பிரபுகள் வேதிகையின் அபிஷேக
தினத்தில் அதின் பிரதிஷ்டைக்காக நிவேதனம்
பண்ணினார்கள். அந்தப்பிரபுகள் வேதிகைக்கு
முன்பாகத் தங்கள் காணிக்கைகளைச் செலுத்தி
௰௧ னார்கள்.—அப்பொழுது யெகோவா மோசே
யை நோக்கி, வேதிகைப்பிரதிஷ்டைக்கு ஒவ்
வொரு பிரபுவுந் தன்தன் தினத்தில் தன்தன்
காணிக்கையைநிவேதனஞ்செய்யக்கடவனென்
௰௨ றார்.—அப்படியே முதல்தினத்திலே தன் காணிக்
கையைச்செலுத்தினவன் யூதாகோத்திரத்தானகி
௰௩ ய அம்மினதாபுடைய புத்திரன்நாக்ஷோன்.—அ
வனுடைய காணிக்கையாவது நைவேத்தியத்துக்
கு எண்ணெயிற்பிசைந்த மெல்லியமாவினால் நி
றைந்ததும்,பரிசுத்தஸ்தானத்துஷேக்கலாகநூற்று
முப்பதுஷேக்கல்நிறைகொண்டதுமானஒருவெ
ள்ளித்தாலமும், எழுபது ஷேக்கல்நிறைகொண்
௰௪ ட ஒரு வெள்ளிக்கலமும்,—தூபவருக்கம்நிறைந்
த பத்துஷேக்கல்நிறைகொண்ட ஒருபொற்கிண்
௰௫ ணமும்,—தகனபலிக்கு ஒரு இளங்காளையும்,
ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவருஷத்து ஒரு ஆட்
௰௬ டுக்குட்டியும்,—பிராயச்சித்தத்துக்கு ஒரு வெள்
௰௭ ளாட்டுக் கடாவும்,—ஸ்தோத்திரபலிக்கு இரண்
டுமாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து
வெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவருஷத்து ஐந்
து ஆட்டுக்குட்டிகளுமே: இவையே அம்மினதா
பின்புத்திரனாகிய நாக்ஷோனுடைய நைவேத்
௰௮ தியம்.—இரண்டாந்தினத்தில் ஈஷகாரின் பிர
புவாகிய சூவாரின் புத்திரனான நிதனேல் கா
௰௯ ணிக்கைசெலுத்தினான்.—அவன் நைவேத்தியத்
துக்கு எண்ணெயிற்பிசைந்தமெல்லியமாவினால்
நிறைந்ததும், பரிசுத்தஸ்தானத்து ஷேக்கலாக
நூற்றுமுப்பது ஷேக்கல் நிறைகொண்டதுமான
ஒருவெள்ளித்தாலமும், எழுபதுஷேக்கல் நிறை
௨௰ கொண்ட ஒரு வெள்ளிக்கலமும்,-தூபவருக்கம்
நிறைந்த பத்துஷேக்கல் நிறைகொண்ட ஒரு
௨௰௧ பொற்கிண்ணமும்,—தகனபலிக்கு ஒரு இளங்கா
ளையும், ஒரு ஆட்டுக்கடாவும் ஒரு வருஷத்துஒரு
௨௰௨ ஆட்டுக்குட்டியும்,—பிராயச்சித்த பலிக்கு ஒரு
௨௰௩ வெள்ளாட்டுக்கடாவும்,—ஸ்தோத்திரபலிக்கு இ
ரண்டுமாடுகளும், ஐந்துசெம்மறி ஆட்டுக்கடாக்க
ளும் ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவரு
ஷத்துஆட்டுக்குட்டிகள் ஐந்தும்நிவேதனம்பண்
ணினான். சூவாரின்புத்திரனாகியநிதனேலுடை
௨௰௪ ய காணிக்கையிதுவே.—மூன்றாந்தினத்தில் ஏ
லோனுடைய புத்திரனாகிய எலியாமென்னும்செ
புலோனின் புத்திரருடைய பிரபு காணிக்கை
௨௰௫ செலுத்தினான்.—அவனுடைய காணிக்கையாவ
து, நைவேத்தியத்துக்கு எண்ணெயிற் பிசைந்த

மெல்லிய மாவினால்நிறைந்ததும் பரிசுத்தஸ்தா
னத்து ஷேக்கலாக நூற்றுமுப்பது ஷேக்கல்நி
றைகொண்டதுமான ஒருவெள்ளித்தாலமும், எ
ழுபதுஷேக்கல்நிறைகொண்ட ஒரு வெள்ளிக்க
லமும்,—தூபவருக்கம்நிறைந்தபத்துஷேக்கல்நி ௨௰௬
றைகொண்ட ஒருபொற்கிண்ணமும்,—தகனப ௨௰௭
லிக்கு ஒரு இளங்காளையும் ஒரு ஆட்டுக்கடாவும்
ஒருவருஷத்து ஒருஆட்டுக்குட்டியும்,—பிராயச் ௨௰௮
சித்தபலிக்கு ஒரு வெள்ளாட்டுக் கடாவும்,—ஸ் ௨௰௯
தோத்திரபலிக்கு இரண்டுமாடுகளும், ஐந்துசெம்
மறியாட்டுக்கடாக்களும், ஐந்துவெள்ளாட்டுக்க
டாக்களும், ஒருவருஷத்து ஐந்து ஆட்டுக்குட்டி
களுமே: இவையே ஏலோனுடைய புத்திரனா
கிய எலியாபின் நைவேத்தியம்.—நாலாந்தினத் ௩௰
திலே செதேயூரின் புத்திரனாகிய எலித்சூரென்
னும் ரூபேன்புத்திரருடைய பிரபு காணிக்கை
செலுத்தினான்.-அவனுடைய காணிக்கையாவது ௩௰௧
நைவேத்தியத்துக்கு எண்ணெயிற்பிசைந்தமெல்
லிய மாவினால் நிறைந்ததும் பரிசுத்தஸ்தானத்
துஷேக்கலாக நூற்றுமுப்பது ஷேக்கல நிறை
கொண்டதுமான ஒருவெள்ளித்தாலமும், எழுப
து ஷேக்கல் நிறைகொண்ட ஒரு வெள்ளிக் கல
மும்,—தூபவருக்கம்நிறைந்த பத்துஷேக்கல் நி ௩௰௨
றைகொண்ட ஒருபொற்கிண்ணமும்,—தகனப ௩௰௩
லிக்கு ஒருஇளங்காளையும்,-ஒருஆட்டுக்கடாவும்,
ஒருவருஷத்து ஒரு ஆட்டுக்குட்டியும்,—பிராயச் ௩௰௪
சித்தபலிக்கு ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,—ஸ் ௩௰௫
தோத்திரபலிக்கு இரண்டுமாடுகளும், ஐந்துசெம்
மறியாட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்க
டாக்களும், ஒருவருஷத்து ஐந்து ஆட்டுக்குட்டி
களுமே: இவையே சேதேயூரினுடையபுத்திர
னாகிய எலித்சூரின் நைவேத்தியம்.—ஐந்தாந் ௩௰௬
தினத்தில் சூரிஷ்தாயினுடைய புத்திரனாகியசெ
லூமியேல் என்னுஞ் சிமேயோன்புத்திரருடைய
பிரபு காணிக்கைசெலுத்தினான்.—அவனுடை ௩௰௭
ய காணிக்கையாவது, நைவேத்தியத்துக்கு எண்
ணெயிற்பிசைந்த மெல்லியமாவினாலே நிறைந்
ததும் பரிசுத்தஸ்தானத்து ஷேக்கலாக நூற்று
முப்பது ஷேக்கல் நிறைகொண்டதுமான ஒரு
வெள்ளித்தாலமும், எழுபது ஷேக்கல் நிறை
கொண்ட ஒருவெள்ளிக்கலமும்,—தூபவருக்கம் ௩௰௮
நிறைந்த பத்து ஷேக்கல் நிறைகொண்ட ஒரு
பொற்கிண்ணமும்,—தகனபலிக்கு ஒரு இளங் ௩௰௯
காளையும், ஒரு ஆட்டுக்கடாவும்,—ஒருவருஷத்து ௪௰
ஒரு ஆட்டுக்குட்டியும், பிராயச்சித்தபலிக்கு ஒரு
வெள்ளாட்டுக்கடாவும்,—ஸ்தோத்திரபலிக்கு இ ௪௰௧
ரண்டுமாடுகளும், ஐந்து செம்மறியாட்டுக்கடாக்
களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு
வருஷத்து ஆட்டுக்குட்டிகளுமே: இவையேசூ
ரிஷ்தாயினுடையபுத்திரனாகிய செலூமியேலின்
நைவேத்தியம்.—ஆறாந்தினத்தில் தியூவேலின் ௪௰௨
புத்திரனாகிய எலியாசாபென்னும் காத்புத்திரரு
டைய பிரபு காணிக்கை செலுத்தினான்.—அவ ௪௰௩

(௯) ௨.சாமு.௬.௰௩. (௰) ௧.இரா.௮.௬௩. ௨.நாளா.௭.௫,௯. எஸ்ற.௬.௰௬. நிகி.௰௨.௨௭. (௰௩) யாத்.௩௰.௰௩. (௰௪) யாத்.௩௰.௩௪. (௰௫) லேவி.௧.௨. (௰௬) லேவி.௪.௨௩. (௰௭) லேவி.௩.௧.

னுடைய காணிக்கையாவது, நைவேத்தியத்துக்
கு எண்ணெயிற்பிசைந்த மெல்லிய மாவினால்
நிறைந்ததும், பரிசுத்தஸ்தானத்து ஷேக்கலாக
நூற்றுமுப்பதுஷேக்கல் நிறைகொண்டதுமான
ஒரு வெள்ளித்தாலமும், எழுபதுஷேக்கல் நிறை
௪௪ கொண்ட ஒரு வெள்ளிக்கலமும்,—தூபவருக்
கம்நிறைந்த பத்துஷேக்கல் நிறைகொண்ட ஒரு
௪௫ பொற்கிண்ணமும்,—தகனபலிக்கு ஒரு இளங்
காளையும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவருஷ்த்து
௪௬ ஒரு ஆட்டுக்குட்டியும்,-பிராயச்சித்தபலிக்கு ஒரு
௪௭ வெள்ளாட்டுக்கடாவும்,-ஸ்தோத்திரபலிக்கு இ
ரண்டு மாடுகளும், ஐந்துசெம்மறியாட்டுக்கடாக்
களும், ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவ
ருஷ்த்து ஆட்டுக்குட்டிகள் ஐந்துமே: இவையே
தியூவேலின்புத்திரனாகியஎலியாசாபின்நைவேத்
௪௮ தியம்.—ஏழாந்தினத்தில் அம்மிஷ்யூத்தின் புத்
திரனாகிய எலிம்மா என்னும் எப்ராயீம் புத்திர
௪௯ ருடைய பிரபு காணிக்கைசெலுத்தினான்.—அ
வனுடைய காணிக்கையாவது, நைவேத்தியத்
துக்கு எண்ணெயிற்பிசைந்தமெல்லியமாவினால்
நிறைந்ததும், பரிசுத்த ஸ்தானத்து ஷேக்கலாக
நூற்றுமுப்பதுஷேக்கல் நிறைகொண்டதுமான
ஒருவெள்ளித்தாலமும், எழுபதுஷேக்கல் நிறை
௫௰ கொண்ட ஒரு வெள்ளிக்கலமும்,—தூபவருக்
கம்நிறைந்த பத்துஷேக்கல் நிறைகொண்ட ஒரு
௫௧ பொற்கிண்ணமும்,—தகனபலிக்கு ஒரு இளங்
காளையும் ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவருஷத்து
௫௨ ஒரு ஆட்டுக்குட்டியும்,—பிராயச்சித்த பலிக்கு
௫௩ ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,—ஸ்தோத்திரபலிக்
கு இரண்டு மாடுகளும் ஐந்து செம்மறி யாட்டுக்
கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும்,
ஒருவருஷத்து ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே: இ
வையே அம்மியூத்தினுடைய புத்திரனாகிய எலி
௫௪ ஷம்மாவின் நைவேத்தியம்.—எட்டாந்தினத்தில்
பேதாத்து சூரினுடைய புத்திரனாகிய கமாலி
யேல் என்னும் மனாசேபுத்திரருடைய பிரபு
௫௫ காணிக்கை செலுத்தினான்.—அவனுடைய கா
ணிகையாவது, நைவேத்தியத்துக்கு எண்ணெ
யிற் பிசைந்த மெல்லியமாவினாலே நிறைந்ததும்
பரிசுத்தஸ்தானத்து ஷேக்கலாக நூற்றுமுப்பது
ஷேக்கல் நிறைகொண்டதுமான ஒரு வெள்ளித்
தாலமும், எழுபது ஷேக்கல் நிறைகொண்ட
௫௬ ஒரு வெள்ளிக்கலமும்,—தூபவருக்கம் நிறைந்த
பத்துஷேக்கல் நிறைகொண்ட ஒரு பொற்கிண்
௫௭ ணமும்,—தகனபலிக்கு ஒரு இளங்காளையும், ஒரு
ஆட்டுக்கடாவும், ஒருவருஷத்து ஒரு ஆட்டுக்
௫௮ குட்டியும்,—பிராயச்சித்தபலிக்கு ஒரு வெள்
௫௯ ளாட்டுக்கடாவும்,—ஸ்தோத்திரபலிக்கு இரண்டு
மாடுகளும், ஐந்துசெம்மறியாட்டுக்கடாக்களும்,
ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவருஷத்து
ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே: இவையே பிதாத்
சூரினுடைய புத்திரனாகிய கமாலியேலின் நை
௬௰ வேத்தியம்.—ஒன்பதாந்தினத்தில் கிதேயோனி
ன்புத்திரனாகிய அபிதான் என்னும் பேன்யா
மீன்புத்திரருடைய பிரபு காணிக்கைசெலுத்தி

னான்.—அவனுடைய காணிக்கையாவது, என் ௬௧
ணெயிற்பிசைந்த மெல்லிய மாவினாலேநிறைந்த
தும், பரிசுத்தஸ்தானத்துஷேக்கலாக நூற்றுமுப்
பது ஷேக்கல்நிறைகொண்டதுமான ஒருவெள்
ளித்தாலமும், எழுபது ஷேக்கல்நிறைகொண்ட
ஒருவெள்ளிக்கலமும்,—தூபவருக்கம் நிறைந்த ௬௨
பத்துஷேக்கல் நிறைகொண்ட ஒரு பொற்கிண்
ணமும்,-தகனபலிக்கு ஒரு இளங்காளையும், ஒரு ௬௩
ஆட்டுக்கடாவும், ஒருவருஷத்து ஒரு ஆட்டுக்
குட்டியும்,-பிராயச்சித்தபலிக்கு ஒருவெள்ளாட் ௬௪
டுக்கடாவும்,—ஸ்தோத்திரபலிக்கு இரண்டுமாடு ௬௫
களும், ஐந்துசெம்மறியாட்டுக்கடாகக்ளும், ஐந்
துவெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவருஷத்துஐந்
து ஆட்டுக்குட்டிகளுமே: இவையேகிதேயோனி
யினுடையபுத்திரனாகிய அபிதானின் நைவேத்தி
யம்.—பத்தாந்தினத்தில் அம்மிஷத்தாயின் புத் ௬௬
திரனாகிய அகியேசேர் என்னுந் தாண்புத்திரரு
டைய பிரபு காணிக்கைசெலுத்தினான்.—அவனு ௬௭
டைய காணிக்கையாவது, நைவேத்தியத்துக்கு
எண்ணெயிற்பிசைந்தமெல்லியமாவினால்நிறைந்
ததும், பரிசுத்தஸ்தானத்து ஷேக்கலாக நூற்று
முப்பதுஷேக்கல்நிறைகொண்டதுமான ஒருவெ
ள்ளித்தாலமும்,எழுபதுஷேக்கல்நிறைகொண்ட
ஒரு வெள்ளிக்கலமும்,—தூபவருக்கம்நிறைந்த ௬௮
பத்துஷேக்கல் நிறைகொண்ட ஒரு பொற்கிண்
ணமும்,—தகனபலிக்கு ஒரு இளங்காளையும், ஒரு ௬௯
ஆட்டுக்கடாவும், ஒருவருஷத்து ஒரு ஆட்டுக்
குட்டியும்,—பிராயச்சித்த பலிக்கு ஒரு வெள் ௭௰
ளாட்டுக்கடாவும்,—ஸ்தோத்திரபலிக்கு இரண் ௭௧
டுமாடுகளும் ஐந்துசெம்மறியாட்டுக்கடாக்களும்
ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும் ஒருவருஷத்து
ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே: இவையே அம்மி
ஷத்தாயினுடைய புத்திரனாகிய அகியேசேரின்
நைவேத்தியம்.—பதினோராந்தினத்தில் ஒகிரா ௭௨
னுடைய புத்திரனாகிய பாகியேல் என்னும் ஆ
ஷேர்புத்திரருடைய பிரபு காணிக்கைசெலுத்தி
னான்.—அவனுடைய காணிக்கையாவது, நை ௭௩
வேத்தியத்துக்கு எண்ணெயிற்பிசைந்தமெல்லிய
மாவினால்நிறைந்ததும், பரிசுத்தஸ்தானத்துஷேக்
கலாக நூற்றுமுப்பது ஷேக்கல் நிறைகொண்
டதுமான ஒருவெள்ளித்தாலமும், எழுபதுஷேக்
கல் நிறைகொண்ட ஒரு வெள்ளிக் கலமும்,—
தூபவருக்கம் நிறைந்த பத்து ஷேக்கல் நிறை ௭௪
கொண்ட ஒரு பொற்கிண்ணமும்,—தகனபலிக் ௭௫
கு ஒரு இளங்காளையும், ஒரு ஆட்டுக்கடாவும்,
ஒருவருஷத்து ஒரு ஆட்டுக்குட்டியும்,—பிரா ௭௬
யச்சித்தபலிக்கு ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,—
ஸ்தோத்திரபலிக்கு இரண்டு மாடுகளும், ஐந்து ௭௭
செம்மறியாட்டுக்கடாக்களும், ஐந்துவெள்ளாட்
டுக்கடாக்களும், ஒருவருஷத்து ஐந்து ஆட்டுக்
குட்டிகளுமே: இவையே ஒகிரானுடைய புத்தி
ரனாகிய பாகியேலின் நைவேத்தியம்.—பன்னி ௭௮
ரண்டாந்தினத்தில் ஏனானுடைய புத்திரனாகிய
அகீரா என்னும் நப்தாலி புத்திரருடைய பிர
பு காணிக்கைசெலுத்தினான்.—அவனுடைய கா ௭௯

ணிக்கையாவது, நைவேத்தியத்துக்கு எண்ணெ
யிற் பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்ததும்
பரிசுத்தஸ்தானத்து ஷேக்கலாக நூற்று முப்பது
ஷேக்கல் நிறைகொண்டதுமான ஒருவெள்ளித்
தாலமும், எழுபதுஷேக்கல் நிறைகொண்ட ஒரு
௮௰ வெள்ளிக்கலமும்,—தூபவருக்கம் நிறைந்த பத்
துஷேக்கல் நிறைகொண்ட ஒரு பொற்கிண்ண
௮௧ மும்,—தகனபலிக்கு ஒரு இளங்காளையும், ஒரு
ஆட்டுக்கடாவும், ஒருவருஷத்து ஒரு ஆட்டுக்
௮௨ குட்டியும்,—பிராயச்சித்தபலிக்கு ஒருவெள்ளாட்
௮௩ டுக்கடாவும்,—ஸ்தோத்திரபலிக்கு இரண்டுமா
டுகளும், ஐந்து செம்மறியாட்டுக்கடாக்களும்,
ஐந்துவெள்ளாட்டுக்கடாக்களும், ஒருவருஷத்து
ஐந்து ஆட்டுக்குட்டிகளுமே: இவையே என்னு
டைய புத்திரனாகிய அகீராவின் நைவேத்தியம்.-
௮௪ வேதிகையின் அபிஷேகதினத்தில் இஸரவேல்
பிரபுகளுடைய பிரதிஷ்டைப்பொருள்களாவ
ன, வெள்ளித்தாலங்கள்பன்னிரண்டு, வெள்ளிக்
கலங்கள் பன்னிரண்டு, பொற்றூபக்கிண்ணங்
௮௫ கள் பன்னிரண்டு.—ஒவ்வொருவெள்ளித்தாலம்
நூற்றுமுப்பது ஷேக்கல் நிறையும், ஒவ்வொருக
லம் எழுபதுஷேக்கல்நிறையுமாகப்பாத்திரங்கள்
பரிசுத்த ஸ்தானத்துஷேக்கலாக இரண்டாயிரத்
௮௬ துநானூறுஷேக்கல்நிறை.—தூபவர்க்கம் நிறைந்த
பன்னிரண்டு பொற்றூபக் கிண்ணங்கள், ஒவ்
வொன்று பரிசுத்த ஸ்தானத்துஷேக்கலாகப் பத்
துஷேக்கல் நிறையுள்ளதாகத் தூபக்கிண்ணங்க
ளின் பொன்னெல்லாம் நூற்றிருபதுஷேக்கல்நி
௮௭ றை.—அதினதின் நைவேத்தியத்துடன் தகன
பலிக்கு இளங்காளைகள் பன்னிரண்டு, ஆட்டுக்
கடாக்கள்பன்னிரண்டு, ஒரு வருஷத்து ஆட்
டுக்குட்டிகள் பன்னிரண்டு, பிராயச்சித்தபலிக்
௮௮ குவெள்ளாட்டுக் கடாக்கள் பன்னிரண்டு.—ஸ்
தோத்திரபலிக்கு இளங்காளைகள் இருபத்துநாலு,
செம்மறியாட்டுக்கடாக்கள் அறுபது,வெள்ளாட்
டுக்கடாக்கள் அறுபது, ஒருவருஷத்து ஆட்டுக்
குட்டிகள் அறுபது, வேதிகையின் அபிஷேகம்
முடிந்தபின்பு செய்யப்பட்ட பிரதிஷ்டைக்
குரிய பொருள்கள் இவைகளே.
௮௯ மோசே தேவனுடனே பேசும்படிசபையின்
ஆவாசத்துக்குட்பிரவேசிக்கையில் தன்னுடனே
பேசுகிறவருடையசத்தம் சாட்சிப் பெட்டியின
து கிருபாசயத்தின் இரண்டுகெரூபிகளின் மத்தி
யினின்றுந்தோன்றக்கேட்டான்: அங்கே அவர்
அவனுடனே பேசுவார்.

## ௮. அதிகாரம்.

௧. விளக்கேற்ற வேண்டிய தன்மை: ௫. லேவி
யரின் பிரதிஷ்டை: ௨௩. அவர்கள் ஊழியஞ்
செய்யவேண்டியவயது.

௨ யெகோவாமோசேயைநோக்கி,—ஆரோனுக்
கு,நீவிளக்கேற்றும்பொழுது ஏழு தீபமும், கிளை
விளக்குத்தண்டிற்குநேரே ஒளிகொடுக்கவேண்
டுமென்றுசொல்லென்றார்.—யெகோவா மோ ௩
சேக்குக் கட்டளையிட்டபிரகாரம் ஆரோன்கிளை
விளக்குத் தண்டிற்குநேரே எரிய விளக்கேற்றி
னான்.—இந்தக்கிளைவிளக்குத் தண்டுமுதல் புஷ் ௪
பங்கள்வரைக்கும் பொன்னினால் வைரவேலை
யாகச் செய்யப்பட்டது: யெகோவா மோ
சேக்குக்காண்பித்தசாயலின்படியே அந்தக்கிளை
விளக்கையுண்டாக்கினான்.

பின்னும் யெகோவா மோசேயை நோக் ௫
கி,—நீ இஸரவேல்சந்ததியாரினின்றும் லேவி ௬
யரைப் பிரித்தெடுத்துச் சுத்திகரிப்பாயாக.—அ ௭
வர்களைச்சுத்திகரிக்கும்படி அவர்கள்மேற் சுத்தி
கரிக்குஞ்சலத்தைத்தெளிப்பாயாக; பின்புஅவர்
கள் சருவாங்கசௌரம்பண்ணித் தங்கள்வஸ்தி
ரங்களைத்தோய்த்து, இந்தப்பிரகாரந் தங்களைச்
சுத்திகரிக்கக்கடவர்கள்.—அப்பொழுது ஒரு இ ௮
ளங்காளையையும், அதற்கேற்ற எண்ணெயிற்பி
சைந்த மெல்லிய மாவாகிய நைவேத்தியத்தை
யுங் கொண்டுவரக்கடவர்கள்: அன்றியும் பிரா
யச்சித்தபலிக்கு நீவேறொரு இளங்காளையையும்
வாங்கி,—லேவியரைச்சபையின் ஆவாசத்துக்கு ௯
முன்வரச்செய்து இஸரவேல்சந்ததியின்சபையா
ரெல்லாருங் கூடிவரப்பண்ணுவாயாக.—லேவி ௰
யரை யெகோவாவின் சந்நிதியில்வரப்பண்
ணினபொழுது இஸரவேல்சந்ததியார், தங்கள்
கைகளை லேவியர்மேல் வைக்கக்கடவர்கள்.—
லேவியர் யெகோவாவுக்குரியதொண்டைச் ௰௧
செய்யும்பொருட்டு ஆரோன் இஸரவேல்சந்ததி
யாரினின்றும் எடுக்கப்பட்ட அவர்களை யெ
கோவாவுக்குமுன்பாக அசைவாட்டப்படுங்
காணிக்கைபோல ஒப்பிக்கக்கடவன்.—அதன் ௰௨
பின் லேவியர் தங்கள் கைகளைக் காளைகளுடை
யதலைகளின்மேல்வைப்பார்களாக, பின்புலேவி
யருக்காகப் பிராயச்சித்தஞ் செய்யும்பொருட்டு
யெகோவாவுக்கு அவைகளிலொன்றைப்பி
ராயச்சித்தபலியாகவும், மற்றதைத்தகனபலியாக
வும், நைவேத்தியம்பண்ணி,—லேவியரை ஆரோ ௰௩
னுக்கும்அவன்புத்திரருக்கும்முன்பாகநிறுத்தி அ
வர்களை யெகோவாவுக்குரியநைவேத்தியமாக
ஒப்பிப்பாய்.-இப்படி நீ லேவியரை இஸரவேல் ௰௪
சந்ததியாரிலிருந்து பிரிக்கக்கடவாய்: லேவிய
ரோ என்னுடையவர்களாயிருப்பார்கள்.-நான் எ ௰௫
கிப்துதேசத்தில் முதற்பேறானயாவையுஞ் சங்க
ரித்தநாளில் இஸரவேல்சந்ததியாராகிய மனிதரி
லும்,அவர்களுடைய மிருகங்களிலும், முதற்பே
றானயாவையும் எனக்கென்றுபரிசுத்தமாக்கினப
டியால்அவைகள்என்னுடையவைகளே.-அன்றி ௰௬
யும் இஸரவேல்சந்ததியாருக்குள்ளேமுதற்பேறா
னயாவருக்கும்பிரதியாக லேவியரை நான்பிரித்
தெடுத்துக்கொண்டேன்.—இப்படி இஸரவேல் ௰௭
சந்ததியார்யாவருக்குள்ளுங் கருப்பத்தினின்று
தோன்றும் முதற்பேறானவர்களுக்குப்பிரதியாக

(௮௯) அதி.௰௨.௮. யாத்.௩௩.௯,௰௧. யாத்.௨௫.௨௨.—(௮. அதி. ௨.) யாத்.௨௫.௩௭. (௪) யாத்.௨௫.௩௧. யாத்.௨௫.௰௮. யாத்.௨௫.௪௰. (௭) அதி.௰௯.௯,௰௭,௰௮. லேவி.௰௪.௮,௯. (௮) லேவி.௨.௧. (௯) யாத்.௨௯.௪. லேவி.௮.௩. (௰) லேவி.௧.௪. (௰௨) யாத்.௨௯.௰. (௰௪) அதி.௩.௪௫. (௰௫) யாத்.௰௩.௨,௰௨,௰௩,௰௫. லூக்.௨.௨௩. (௰௭) அதி.௩.௰௨,௪௫.

எனக்கென்று நான் அவர்களைப்பிரித்தெடுத்துக்
கொண்டபடியால் அவர்கள் இஸரவேல் சந்ததி
யாரினின்றும்முழுமையும் எனக்குக்கொடுக்கப்
௰௮ பட்டிருக்கிறார்கள்.-ஆதலால் நீ அவர்களைச்சுத்தி
கரித்து, எனக்குநைவேத்தியமாக ஒப்பிக்கக்கட
வாய்; அதன்பின்பு லேவியர்சபையின் ஆவாசத்
தின் தொண்டைச்செய்யப் பிரவேசிக்கக்கடவர்
௰௯ கள்.-இஸரவேல்சந்ததியார் பரிசுத்தஸ்தானத்துக்
குச் சமீபிக்கும்பொழுது இஸரவேல்சந்ததியா
ருக்குள்ளேயாதாயினும்வாதையுண்டாகாதபடிக்
கு இஸரவேல்சபையார்செய்யவேண்டிய சபை
யின்தொண்டை ஆவாசத்தில்செய்யவும், இஸர
வேல் சந்ததியாருக்காகப் பிராயச்சித்தம்பண்ண
வும் லேவியரை இஸரவேல்சந்ததியாரினின்றும்
பிரித்துஆரோனுக்கும் அவன்புத்திரருக்குங்கொ
௨௰ டுத்துவிட்டேனென்றார்.—மோசேயும் ஆரோனு
ம்இஸரவேல் சந்ததியின் சபையார்யாவரும் லே
வியரைக்குறித்துயெகோவாமோசேக்குக்கட்
டளையிட்டபடியெல்லாம் லேவியருக்குச்செய்
தார்கள், இஸரவேல்சந்ததியார்அப்படியே அவர்
௨௧ களுக்குச்செய்தார்கள்.-இந்தப்பிரகாரம்லேவியர்
சுத்திகரிக்கப்பட்டுத் தங்கள் தங்கள் வஸ்திரங்க
ளைத்தோய்த்தார்கள்; பின்பு ஆரோன் அவர்களை
யெகோவாவின் சந்நிதியில் நைவேத்தியம்
போல் ஒப்பித்தான்;ஆரோன் அவர்களைச்சுத்திக
ரிக்கும்படி அவர்களுக்காகப்பிராயச்சித்தம்பண்
௨௨ ணினான்.—அதற்குப்பின்புலேவியர் ஆரோனுக்
கும் அவன்புத்திரருக்கும் முன்பாகச் சபையின்
ஆவாசத்தின் தொண்டைச்செய்யும்படி பிரவே
சித்தார்கள்: யெகோவா லேவியரைக்குறித்து
மோசேக்குக் கட்டளையிட்டபிரகாரம் அவர்க
ளுக்குச்செய்தார்கள்.
௨௩ பின்னும்யெகோவாமோசேயைநோக்கி.-
௨௪ லேவியர் இருபத்தைந்துவயதுமுதல்சபையின்ஆ
வாசத்தின்தொண்டைச்செய்யும்படி ஏற்படுத்தப்
௨௫ படவேண்டும்.—ஐம்பதுவயதுக்குமேல் தொண்
௨௬ டுசெய்யாமல் விட்டு நீங்குவார்கள்.—அவர்கள்
சபையின் ஆவாசத்தினிடத்தில்காவல் காக்கிற
தற்கு தங்கள்சகோதரருடன்ஊழியஞ்செய்வதே
யன்றி வேறொரு சேவகமுஞ்செய்யவேண்டிய
தில்லை: இதுவேலேவியருக்குமுறைமை: லேவி
யர்செய்யவேண்டியகாவலைக்குறித்து நீ இவ்வித
மாய்ச்செய்யக்கடவாயென்றார்.

## ௯. அதிகாரம்.

௧. பஷ்காவை ஆசரணைசெய்யுங்கட்டளை: ௬. அசுசிப்பட்டவர்கள்நிமித்தந் திரும்பவும் பஷ்காசெலுத்துங்கட்டளை: ௰௫. மேகம் இஸரவேலரின் யாத்திரையையுந்தங்கலையும் நடத்தல்.

அவர்கள் எகிப்துதேசத்தைவிட்டுப்புறப்பட்ட
இரண்டாம்வருஷம் முதன்மாதத்தில் யெகோ
௨ வா சீனாய்வனத்தில் மோசேயைநோக்கி,—இஸர
வேல்சந்ததியார் பஷ்கா உற்சவத்தைக்குறித்தகா
லத்தில் அனுசரிக்கக்கடவர்கள்.—அதற்கேற்றகா ௩
லமாகிய இந்தமாதம் பதினாலாந்தினத்தின்சாயங்
காலத்தில் அதின் சகலவிதிகளுக்குஞ் சகலமு
றைமைகளுக்குமேற்றபிரகாரம் அதையனுசரிப்
பீர்களாகவென்றார்.—அப்படியே பஷ்கா உற் ௪
சவத்தையனுசரிக்கும்படி மோசே இஸரவேல்
சந்ததியாருக்குக்கட்டளையிட்டான்.—அதினால் ௫
இஸரவேல் சந்ததியார் யெகோவா மோசேக்
குக்கட்டளையிட்டபடியெல்லாம், முதலாமாதம்
பதினாலாந்தினத்தின் சாயங்காலத்தில் சீனாய்வ
னத்திலே பஷ்காவையனுசரித்தார்கள்.
அந்நாளிலே சிலமனிதர்கள் சவத்தினால் அசு ௬
சிப்பட்டதினாலே பஷ்காவை அனுசரிக்கத்தகா
தவர்களாயிருந்தார்கள்: அவர்கள் அந்நாளிலே
மோசேயினிடத்திலும்ஆரோனிடத்திலுஞ்சேர்ந்
து,—சவத்தினால் அசுசிப்பட்டநாங்கள் குறித் ௭
தகாலத்தில் இஸரவேல் சந்ததியாருடன் கூட
யெகோவாவுக்கு நைவேத்தியஞ் செலுத்தா
தபடிக்கு விலக்கப்பட்டிருக்கிறதென்னவென்று
கேட்க;—மோசே அவர்களை நோக்கிப்பொறுங் ௮
கள்; உங்களைக்குறித்து யெகோவா கட்ட
ளையிடுவதென்னவென்றுகேட்பேனென்றான்.
அப்பொழுது யெகோவா மோசேயை ௯
நோக்கி,—நீ இஸரவேல்சந்ததியாரிடத்தில் உங் ௰
களிலாவது உங்கள் சந்ததியாரிலாவது ஒருவன்
சவத்தினால் அசுசிப்பட்டாலும், பிரயாணமாய்த்
தூரப்போயிருந்தாலும், அவன் யெகோவா
வின் பஷ்கா உற்சவத்தை அனுசரிக்கலாம்.—அ ௰௧
வர்கள் அதை இரண்டாம்மாதம் பதினாலாந்தி
னத்தின் சாயங்காலத்தில் அனுசரித்துப் புளிப்
பில்லாத அப்பங்களோடுங் கசப்பான கீரைக
ளோடும் அதைப்புசிப்பார்கள்.—விடியற்காலபரி ௰௨
யந்தம் அதில் ஒன்றுஞ் சேஷமாகவையாமலும்,
அதிலொருஎலும்பையும் முறியாமலும், பஷ்கா
வின் சகலமுறைமைகளின் படிக்கும், அதைய
னுசரிக்கக்கடவர்கள்.—ஒருவன் சுத்தமுள்ளவனு ௰௩
மாய்ப் பிரயாணம் போகாதவனுமா யிருந்தும்,
பஷ்காவை யனுசரியாதேபோனால், தன்சனங்க
ளினின்றுஞ்சேதிக்கப்படுவான்: அந்தமனிதன்
குறித்தகாலத்திலே யெகோவாவுக்குரிய நை
வேத்தியத்தைச்செலுத்தாதபடியினால் தன்பாவத்
தைச்சுமப்பான்.—உங்களிடத்திலே தங்கும்பர ௰௪
தேசி யெகோவாவின் பஷ்காவை அனுசரிக்
கவேண்டுமாகில், பஷ்காவின்விதிக்கும், அதின்
முறைமைக்குமேற்கச் செய்யக்கடவன்: பரதே
சிக்கும், சுதேசிக்கும், விதி ஒரேபிரகாரமாயி
ருக்கவேண்டுமென்று சொல்லென்றார்.
ஆவாசஸ்தாபனஞ்செய்த அந்தநாளிலே மேக ௰௫
மானதுசாட்சியின் கூடாரமாகிய ஆவாசத்தை
மூடிற்று: சாயங்காலம் ஆவாசத்தில் அக்கினிம

(௰௮) வச.௰௧,௰௩. (௰௯) ௨.நாளா.௨௬.௰௬. (௨௪) ௧.நாளா.௨௩.௩,௨௪,௨௭. ௧.தீமோ.௧.௰௮.—(௯. அதி. ௨.) யாத். ௰௨. உபா.௰௬.௧,௨. (௩) யாத்.௰௨.௬. (௫) யோசு.௫.௰. (௬) யோவா.௰௮.௨௮. யாத்.௰௮.௰௫,௰௯,௨௬. (௰௧) ௨.நாளா.௩௰.௨,௰௫. யாத்.௰௨.௮. (௰௨) யாத்.௰௨.௰. யாத்.௰௨.௪௬. யோவா.௰௯.௩௬. யாத்.௰௨.௪௩. (௰௩) ஆதி. ௰௭. ௰௪. யாத்.௰௨.௰௫. (௰௪) யாத்.௰௨.௪௯. (௰௫) யாத்.௪௰.௩௪. நிகி.௯.௰௨,௰௯. சங்.௭௮.௰௪. யாத்.௰௩.௨௧.

யமாய் ஒருதோற்றமுண்டாயிற்று, அதுவிடியற்
௰௬ காலம்வரைக்குமிருந்தது.-நித்தமும் இப்படியே நடந்தது: பகலிலே மேகமும், இரவிலே அக்கினித்தோற்றமும் அதைமூடிக்கொண்டிருந்தன.-
௰௭ மேகம் ஆவாசத்துக்குமேலாயுயர எழும்புவதைக் கண்டு அதின்பின்பு இஸ்ரவேல் சந்ததியார் யாத்திரை பண்ணுவார்கள்: மேகம்போய்த் தங்குமிடத்தில் இஸ்ரவேல் சந்ததியார் பாளயமிறங்கு
௰௮ வார்கள்.—யெகோவாவுடைய வாக்கின்படி இஸ்ரவேல் சந்ததியார்யாத்திரைபண்ணிவந்தார்கள். யெகோவாவுடைய வாக்கின்படி பாளயமிறங்கினார்கள்: மேகமானது ஆவாசத்தின் மேல்தங்கியநாளெல்லாம் பாளயத்தில்தங்குவார்
௰௯ கள்.—மேகமானது ஆவாசத்தின்மேல் நெடுநாள் தங்கியிருந்தபொழுது இஸ்ரவேல் சந்ததியார் யாத்திரை பண்ணாமல் யெகோவாவின்கா
௨௰ வலைக் காத்துக்கொண்டிருப்பார்கள்.—அப்படியேமேகமானது ஆவாசத்தின்மேற் சிலநாள்மாத்திரந் தங்கியிருந்தபொழுது யெகோவாவுடையவாக்கின்படி பாளயமிறங்குவார்கள், யெகோவாவுடைய வாக்கின்படி யாத்திரைபண்
௨௧ ணுவார்கள்.—மேகஞ் சாயங்காலந் தொடங்கி விடியற்காலபரியந்தமிருந்து விடியற்காலத்தில் உயர எழும்பும்பொழுது அந்நேரமே யாத்திரைபண்ணினார்கள்; பகலிலாவது இரவிலாவது மேகம் எழும்பும் நேரம் எப்பொழுதோ, அப்
௨௨ பொழுதே யாத்திரைபண்ணுவார்கள்.—மேகமானது இரண்டுநாளாவது ஒருமாதமாவது ஒருவருஷமாவது ஆவாசத்தின்மேலே தங்கியிருந்தபொழுது இஸ்ரவேல் சந்ததியார் யாத்திரைபண்ணாமற்கூடாரங்களில் தங்கியிருப்பார்கள்: அதுஉயரஎழும்பினபொழுதுமாத்திரம்யாத்திரைபண்ணு
௨௩ வார்கள்.—யெகோவாவுடையவாக்கின்படி பாளயமிறங்குவார்கள்; யெகோவாவுடைய வாக்கின்படி யாத்திரைபண்ணுவார்கள்: யெகோவாமோசேக்குஅருளியவாக்கின்படி யெகோவாவின் காவலைக்காத்துக்கொள்வார்கள்.

## ௰. அதிகாரம்.

௧. வெள்ளி எக்காளம்: ௰௧. இஸ்ரவேலர் சீனாய்வனத்தைவிட்டுப் பாரன்பரியந்தம் பிரயாணஞ்செய்தல்: ௰௪. யாத்திரையின்கிரமம்: ௨௯. ஒபாபுக்கு மோசேசெய்த வேண்டுதல்: ௩௩. சாட்சிப்பெட்டியை யெடுக்கும்போதும் இறக்கும்போதும் மோசே ஆசீர்வாதஞ்செய்தல்.

௨ யெகோவா மோசேயைநோக்கி,—சபையைக் கூடி வரவழைப்பதற்கும், பாளயத்திலுள்ளவர்கள் யாத்திரைசெய்வதற்குமுபயோகமாய் வைரவேலையாக இரண்டு வெள்ளி எக்காளங்களைச்
௩ செய்துகொள்வாயாக.—அவர்கள்அவைகளை ஊதும்பொழுதுசமஸ்தசபையாரும்சபையின் ஆவாசவாசலில் உன்னிடத்திற்கூடிவரவேண்டும்.—

ஒன்றைமாத்திரம் ஊதினால் இஸ்ரவேலர் ஆயிரவ ௪
ருக்குத்தலைவராகியபிரபுகள்உன்னிடத்திற்கூடிவரக்கடவர்கள்.—நீங்கள்பேரொலியாயூதும்பொ ௫
ழுது கீழ்த்திசையிலுள்ள பாளயத்தார் புறப்படக்கடவர்கள்.—இரண்டாந்தரம்பேரொலியா யூதும் ௬
பொழுது தென்றிசையிலுள்ளபாளயத்தார்பிரயாணம்பண்ணக்கடவர்கள்: இப்படிஅவர்கள்தங்கள்பிரயாணங்களுக்காகப்பேரொலியாயூதவேண்டும்.—சபையார் கூடிவருவதற்கு ஊதும்பொழு ௭
து பேரொலியாயூதவேண்டாம்.-ஆரோனின் புத் ௮
திரராகிய ஆசாரியர்களே எக்காளங்களையூதக்கடவர்கள்; உங்கள் தலைமுறைதோறும் இந்தவிதி நித்தியநியமமாயிருக்கும்.—உங்கள்தேசத்தில் உங் ௯
களைக்கிலேசப்படுத்துஞ்சத்துருவுக்குவிரோதமாயுத்தத்துக்குப்போகும்பொழுதுநீங்கள்எக்காளங்களைப் பேரொலியாயூதக்கடவீர்கள்; அதினால் உங்கள் தேவனாகிய யெகோவா உங்களை நினைப்பார், நீங்களுங்கள் சத்துருக்களினின்றும் இரட்சிக்கப்படுவீர்கள்.-அன்றியுமுங்கள் ஆனந் ௰
ததினத்திலும், உற்சவநாள்களிலும், மாசாரம்பங்களிலும், உங்கள் தகனபலிகளையும், ஸ்தோத்திரபலிகளையும், செலுத்தும்பொழுது எக்காளங்களையூதவேண்டும்; அது யெகோவாவின் சந்நிதியில் உங்களுக்கு ஞாபகக்குறியாயிருக்கும்: நானேஉங்கள்தேவனாகியயெகோவாவென்றார்.

இரண்டாம்வருஷம் இரண்டாம்மாதம் இருப ௰௧
தாந்தினத்தில் மேகமானது சாட்சியின் ஆவாசத்துக்குமேலே உயர எழும்பிற்று.—அப்பொழுது ௰௨
இஸ்ரவேல்சந்ததியார்சீனாய்வனத்தினின்றும்பிரயாணப்பட்டார்கள். மேகம் பாரன்வனத்தில் தங்கிற்று.—இப்படியே யெகோவா மோசேக் ௰௩
கு அருளின வாக்கின்படிமுதற்பிரயாணம்பண்ணினார்கள்.

யூதா சந்ததியாருடைய பாளயத்தின்கொடி அ ௰௪
வர்கள் சேனைகளோடும் முதற்புறப்பட்டது: அவனுடையசேனைக்குத்தலைவன் அம்மினதாபின் புத்திரன் நாக்ஷோன்.—ஈஷகார்சந்ததியாருடை ௰௫
யகோத்திரத்தின் சேனைக்குத்தலைவன் சூவாரின் புத்திரனாகிய நிதனேல்.—செபுலோன் சந்ததியா ௰௬
ருடைய கோத்திரத்தின் சேனைக்குத்தலைவன் ஏலோனுடைய புத்திரனாகிய இலியாப்.—அப்பொ ௰௭
ழுது ஆவாசங் கழற்றிவைக்கப்பட்டது; கெர்ஷோன்புத்திரரும் மிராரி புத்திரரும் ஆவாசத்தைச் சுமந்துகொண்டு புறப்பட்டார்கள்.—அ ௰௮
தின்பின்பு ரூபேன் சந்ததியாருடைய பாளயத்தின்கொடி அவர்கள் சேனைகளோடும் புறப்பட்டது: அவனுடைய சேனைக்குத்தலைவன்ஷெதேயூரின்புத்திரனாகிய இலீசூர்.—ஷிமியோன் சந் ௰௯
ததியாருடைய கோத்திரத்தின் சேனைக்குத்தலைவன் சூரிஷத்தாயின்புத்திரனாகிய ஷிலூமீயேல்.-
காத் சந்ததியாருடைய கோத்திரத்தின் சேனைக் ௨௰

(௰௭)யாத்.௪௰.௩௪. சங்.௮௰.௧.(௰௮)௧.கொரி.௰.௧.(௨௨)யாத்.௪௰.௩௬,௩௭.—(௰. அதி. ௨.) ஏசா.௧.௰௩.(௩)எரே.௪.௫. யோவே.௨.௰௫. (௪) யாத்.௰௮.௨௧. (௭) யோவே.௨.௧. (௮) யோசு.௬.௪. ௨.நாளா.௰௩.௰௨. (௯) யோசு.௬.௫. ௨.நாளா.௰௩.௰௪. நியா.௨.௰௮. ௧.சாமு.௰.௰௮. சங்.௱௬.௪௨. ஆதி.௮.௧. சங்.௱௬.௪. (௰) அதி.௨௯.௧. ௧.நாளா.௰௫.௨௪. எஸ்ரா.௩.௰. நிகி.௰௨.௩௫. சங்.௮௧.௩. (௰௨) யாத்.௪௰.௩௬. யாத்.௰௩.௧. ஆதி.௨௧.௨௧.

குத்தலைவன் தியூவேலின் புத்திரனாகிய இலியா
௨௧ சப்.—கோகாத்தியர் பரிசுத்தஸ்தானத்தைச்சுமந்து
கொண்டு புறப்பட்டார்கள்: இவர்கள் வந்துசே
ருமுன் மற்றவர்கள் ஆவாசஸ்தாபனம்பண்ணு
௨௨ வார்கள்.—பின்பு எப்பிராயீம் சந்ததியாருடையபா
ளயத்தின்கொடி அவர்கள் சேனைகளோடும் பு
றப்பட்டது; அவனுடைய சேனைக்குத்தலைவன்
அம்மியூத்தினுடைய புத்திரனாகிய இலீஷாமா.-
௨௩ மனாசே சந்ததியாருடைய கோத்திரத்தின் சே
னைக்குத் தலைவன் பீதாத்சூரின் புத்திரனாகிய
௨௪ கமாலியேல்.—பென்யாமீன் சந்ததியாருடைய
கோத்திரத்தின் சேனைக்குத் தலைவன் கிதியோ
௨௫ னியினுடைய புத்திரனாகிய அபீதான்.—அதின்
பின்பு தாண்சந்ததியாருடைய பாளயத்தின்கொ
டி சகல பாளயங்களுக்கும்பின்னாக அவர்கள்
சேனைகளோடும்புறப்பட்டது;அவனுடைய சே
னைக்குத்தலைவன் அம்மிஷத்தாயின் புத்திரனாகி
௨௬ ய அகியேசெர்.—ஆசேர்சந்ததியாருடையகோத்
திரத்தின் சேனைக்குத்தலைவன் ஒகிரானுடைய
௨௭ புத்திரனாகிய பாகியேல்.—நப்தாலி சந்ததியாரு
டைய கோத்திரத்தின் சேனைக்குத்தலைவன் ஏனா
௨௮ னுடைய புத்திரனாகிய அகீரா.—இஸரவேல் சந்
ததியார் புறப்பட்டபொழுது இவ்விதமாய்த் தங்
கள் தங்கள் சேனைகளின்படி பிரயாணம்பண்
ணினார்கள்.

௨௯ அப்பொழுது மோசே தன்மாமனும்மீதியானி
யனுமாகிய ரேகுவேலின்புத்திரனான ஓபாப்பை
நோக்கி, யெகோவா, நானுங்களுக்குத் தரு
வேனென்றுசொல்லி வாக்குத்தத்தம்பண்ணின
ஸ்தானத்துக்குப் பிரயாணம்பண்ணுகிறோம்: நீ
யும் எங்களோடேவா, உனக்கு நன்மைசெய்
வோம்: யெகோவா இஸரவேலருக்கு நல்ல
௩௰ வாக்கு அருளினார் என்றான்.—அதற்கவன், நான்
வரமாட்டேன்; என் சுயதேசத்துக்கும், என்னி
௩௧ னத்தாரிடத்துக்கும் போகிறேனென்றான்.—அ
தற்கிவன் எங்களை விடவேண்டாம்; வனத்தில்
நாங்கள் பாளயமிறங்கவேண்டிய ஸ்தானங்களை
நீ அறிந்திருக்கிறபடியினாலே எங்களுக்குக்கண்
௩௨ போலிருப்பாய்.—நீ யெங்களுடன்கூடவந்தால்
யெகோவா எங்களுக்குச்செய்யும் நன்மை
எப்படியோ அப்படியே நாங்களும் உனக்குச்
செய்வோமென்றான்.

௩௩ அந்தப்பிரகாரம் அவர்கள் யெகோவாவின்
மலையிலிருந்து மூன்றுநாள் பிரயாணஞ்செய்தார்
கள்: மூன்றுநாள்பிரயாணத்திலும் யெகோவா
வுடைய உடன்படிக்கையின்பெட்டி அவர்க
ளுக்கு இளைப்பாறும் ஸ்தானத்தைத்தேடிக்காட்
௩௪ டும்படிக்கு அவர்கள் முன்சென்றது.—அவர்கள்
பாளயத்தினின்றும் புறப்படும்பகலில் யெகோ
வாவின்மேகம் அவர்கள்மேலேதங்கியிருந்தது.—
பெட்டியானது புறப்படுஞ்சமயத்தில் மோசே, ௩௫
யெகோவாவே, எழுந்தருளும், உம்முடைய
சத்துருக்கள் சிதறடிக்கப்படட்டும்; உமது ப
கைவர் உமக்குமுன்னின்றும் ஓடிப்போகட்டு
மென்பான்.—அது தங்கும்பொழுது யெகோ ௩௬
வாவே, இஸரவேலர் அநேக ஆயிரவரிடத்தில்
திரும்பிவாருமென்பான்.

## ௰௧. அதிகாரம்.

௧. தபேராவில் மோசேசெய்த பிரார்த்தனையினால்
அக்கினி தணிந்துபோதல்: ௪. சனங்கள் மன்
னாவை வெறுத்து மாமிசத்தை விரும்பல்: ௰.
மோசே தன்னுத்தியோக பாரத்தைக் குறித்து
விசனப்படல்: ௰௬. எழுபது முதியோரிடத்
தில் அப்பாரத்தைப்பங்கிடும்படி தேவன்கட்
டளையிடல்: ௩௧. தேவன் கோபித்து, சனங்
களுக்குக்காடைகொடுத்தல்.

பின்பு சனங்கள் முறுமுறுத்தார்கள். யெ ௧
கோவா அதைக்கேட்டார், அது அவருக்குப்
பிரியவீனமாயிருந்தது; அவருடைய கோபாக்கி
னிமூண்டது: யெகோவாவின் அக்கினி அ
வர்களுக்குள்ளே மூண்டு பாளயத்தினெல்லையி
லுள்ளவர்களைப்பட்சித்தது.—அப்பொழுதுசனங் ௨
கள் மோசேயைநோக்கி ஓலமிட்டார்கள்; மோ
சே யெகோவாவைநோக்கிப்பிரார்த்தித்தான்;
உடனே அக்கினிதணிந்துபோயிற்று.-யெகோ ௩
வாவுடைய அக்கினி அவர்களுக்குள்ளே மூண்
டதினால், அவ்விடத்துக்குத்தபேராவென்று பெ
யரிட்டான்.

மேலும் அவர்களுக்குள்ளிருந்த பலதேசத்துச் ௪
சனங்களும் மிகுந்த இச்சையிலமிழ்ந்தினார்கள்;
இஸரவேல்சந்ததியார்திரும்பவும் அழுது மாமிச
போசனத்தை யெங்களுக்குக் கொடுப்பவன்யா
வன்.—நாங்கள் எகிப்தில் இஷ்டப்படி புசித் ௫
தமச்சங்களும், வெள்ளரிக்காய்களும், கோமட்
டிக்காய்களும், ஈரவெண்காயங்களும், வெண்
காயங்களும், வெள்ளைவெண்காயங்களும், எங்
களுக்கு ஞாபகத்திலே வருகின்றன.—இப்பொ ௬
ழுது எங்கள் உள்ளம்மெலிந்துபோகின்றது, இந்
தமன்னாவைத்தவிர எங்கள் கண்களுக்குமுன்பா
க வேறொன்றுமில்லையென்றார்கள்.—அந்த மன் ௭
னா கொத்துமல்லியளவாயும் அதின்நிறம் முத்துப்
போலவுமிருந்தது.—சனங்கள் திரிந்து அதைப் ௮
பொறுக்கிக்கொண்டுவந்து திரிகையிலே திரித்
தாவது, உரலிலிடித்தாவது பானைகளிற் ச
மைப்பார்கள், அதை அப்பவருக்கங்களுமாக்
கிக்கொள்வார்கள்: அதின்ருசி புதுச்சீதவிருட்
சத்தெண்ணெயின் ருசிபோலிருக்கும்.—இரவி ௯
லே பாளயத்தின்மேற் பனிபெய்யும்பொழுது
மன்னாவும் அதிலேவிழும்.

குடும்பத்தாராகிய சனங்கள் தங்கள் தங்கள் ௰

(௨௧) அதி.௪.௰௪,௰௫. (௨௯) யாத்.௨.௰௮. ஆதி.௰௨.௭. நியா.௧.௰௬. நியா.௪.௰௧. ஆதி.௩௨.௰௨. யாத்.௩.௮. யாத்.௬.௭,௮. (௩௧) யோபு.௨௯.௰௫. (௩௨) நியா.௧.௰௬. (௩௩) யாத்.௩.௧. உபா.௧.௩௨. யோசு.௩.௩,௪,௬. சங்.௱௩௨.௮. எரே.௩௧.௨. எசேக்.௨௰.௬. (௩௪) யாத்.௰௩.௨௧. நிகி.௯.௰௨,௰௯. (௩௫) சங்.௬௮.௧,௨. சங்.௱௩௨.௮.—(௰௧. அதி. ௧.) உபா.௯.௨௨. சங்.௭௮.௨௧. லேவி.௰.௨. (௨) யாக்.௫.௰௬. (௪) யாத்.௰௨.௩௮. ௧.கொரி.௰.௬. (௫) யாத்.௰௬.௩. (௭) யாத்.௰௬.௰௪,௩௧. (௰) சங்.௭௮.௨௧.

கூடாரவாசலில்நின்றுஅழுகிறதைமோசே கேட்
டான்: யெகோவாவின்கோபம் மிகவும்மூண்
௰௧ டது; மோசேக்கும்பிரியவீனமாயிருந்தது.—அப்
பொழுதுமோசேயெகோவாவைநோக்கி,நீர்உ
மதடியேனைக் கிலேசப்படுத்துவதென்ன, இந்தச்
சனங்களுடையபாரத்தை என்மேற்சுமத்த,உமது
கிருபாகடாட்சம் எனக்குக்கிடையாமற்போன
௰௨ தென்ன.—பாலிக்கும்பிதா குழந்தையையெடுக்கிக்
கொண்டுபோவதுபோல, இவர்களுடையபிதாக்
களுக்கு நான் ஆணையிட்டுக்கொடுத்த தேசத்துக்
கு இவர்களை நீ உன்மார்பிலேயணைத்துக்கொண்
டுபோவென்று நீரென்னுடன்சொல்ல, இந்தச்
சனங்களெல்லாரையுங் கருப்பந்தரித்தவன் நா
௰௩ ளு; இவர்களைப்பெற்றவன் நானு.—இந்தச்சன
ங்களெல்லாருக்குங்கொடுக்கத்தக்கதாக எனக்கு
எங்கேயிருந்துமாமிசம்வரும். நாங்கள்புசிக்க மா
மிசத்தைத் தரவேண்டுமென்று என்னைப்பார்த்து
௰௪ அழுகிறார்கள்.—இந்தச் சனங்களெல்லாரையுந் த
னியேசுமக்க நான்திராணியுள்ளவனல்லவே, அ
௰௫ து எனக்கு மிகுந்த பாரமாயிருக்கின்றது.—என்
மேல் உமக்குக் கடாட்சமுண்டானால், இப்ப
டி எனக்குச்செய்யாமல் நானிந்த உபத்திரவத்
தைக்காணாதபடி என்னைக்கொன்றுபோடுமென்
று வேண்டுகிறேனென்றான்.

௰௬ அப்பொழுதுயெகோவா மோசேயைநோக்
கி, இஸரவேலருக்கு முதியோருந்தலைவருமான
வர்கள்இன்னாரென்றுநீயறிந்திருக்கிறாயே; அந்த
முதியோரில்எழுபதுபேரைக்கூட்டிஅவர்களைச்
சபையின் ஆவாசத்தினிடத்தில் உன்னுடனே
௰௭ நிற்கும்படி வருவித்துக்கொள்.—அப்பொழுது
நானங்கேயிறங்கி உன்னுடனே பேசிக்கொண்
டு, நீ ஒருவன்மாத்திரம் சனங்களின்பாரத்தைச்
சுமவாமல், உன்னுடனேகூட அவர்களும் அ
தைச்சுமக்கும்படிக்கு, உன்னிடத்தில் தங்கியிரு
க்கிற ஆவியையெடுத்துஅவர்களிடத்திலுங் கொ
௰௮ டுப்பேன்.—நீ சனங்களைப்பார்த்து,நீங்கள்மாமி
சம்புசிக்கும்படியாய்நாளைக்கு உங்களைப்பரிசுத்
தம் பண்ணிக்கொள்ளுங்கள்: எங்களுக்கு மாமி
சம் புசிக்கக்கொடுக்கிறவன்யாவனென்றும், எகி
ப்திலே எங்களுக்குச்சௌக்கியமாயிருந்ததென்
றும், யெகோவாவின் செவிக்கேற அழுதீர்
களே: ஆகையால் நீங்கள் புசிக்கும்படிக்கு யெ
கோவா உங்களுககு மாமிசங்கொடுப்பார்.—
௰௯ நீங்கள் ஒருநாள், இரண்டுநாள், ஐந்துநாள், பத்
௨௰ துநாள், இருபதுநாள்வரைக்குமல்ல;—ஒருமாதம்
வரைக்கும் புசிப்பீர்கள், அது உங்கள் மூக்கா
லேபுறப்பட்டு உங்களுக்குத்தெவிட்டிப்போகு
மட்டுமே புசிப்பீர்கள்: உங்களுக்குள்ளேயிருக்
கிறயெகோவாவை அற்பமாக எண்ணி, என்
எகிப்தைவிட்டுப்புறப்பட்டோமென்று அவருக்
குமுன்பாகஅழுதீர்களேயென்று அவர்களுக்குச்
சொல்லென்றார்.

அதற்குமோசே என்வசத்திலிருக்கிற காலாள் ௨௧
கள்மாத்திரம் ஆறுலட்சம்பேரல்லவா, ஒருமாதம்
முழுவதும் புசிக்கும்படி இவர்களுக்கு மாமிசங்
கொடுப்பேனென்றீரே.—ஆடுமாடுகளை அடித்தா ௨௨
லும் இவர்களுக்குத் திருத்தியாகுமா, சமுத்திரத்
தின் மச்சங்களெல்லாவற்றையுஞ் சேர்த்தாலும்,
இவர்களுக்குத்திருத்தியாகுமா வென்றான்.—அ ௨௩
தற்கு யெகோவா மோசேயைநோக்கி, யெ
கோவாவின் கரங்குறுகிப்போயிற்றா; என்
வாக்குச்சித்தியாகுமா இல்லையாவென்பதை நீ
இப்பொழுது காண்பாயென்றார்.

அப்பொழுது மோசே புறப்பட்டு யெகோ ௨௪
வாவுடைய வாக்கைச் சனங்களுக்குச் சொல்
லிச்சனங்களின் முதியொரில் எழுபதுபேரைக்
கூட்டி ஆவாசத்தைச்சூழ இருத்தினான்.—பின்பு ௨௫
யெகோவா மேகத்தில் வீற்றிருப்பவராயிறங்
கி அவனுடனேபேசி அவனிடத்திலுள்ள ஆவி
யையெடுத்துமுதியோராகிய அந்த எழுபதுபேரி
டத்திலுங்கொடுத்தார்: அந்த ஆவி அவர்கள்மேல்
வந்து தங்கினமாத்திரத்தில்அவர்கள் ஓயாமல் தீர்
க்கதரிசனஞ்சொன்னார்கள்.—அப்பொழுது பா ௨௬
ளயத்துக்குள்ளிருந்த எல்தாத்தென்னும்நாமத்தை
யுடையவனும் மேதாத்தென்னும்நாமத்தையுடை
யவனுமாகிய இருவரிடத்திலும் ஆவிதங்கிற்று:
இவர்களும் பேர்வழியிலெழுதப்பட்டிருந்தும்,
ஆவாசத்துக்குப் போகாமற் பாளயத்துக்குள்ளி
ருந்து தீர்க்கதரிசனஞ்சொன்னார்கள்.—அப்பொ ௨௭
ழுது ஒருவாலிபன் ஓடிவந்துஎல்தாத்தும்மேதாத்
தும் பாளயத்தில் தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறார்
களென்று மோசேக்கு அறிவித்தான்.—உடனே ௨௮
மோசேயிடத்திலுள்ள வாலிபரிலொருவனும் அ
வனுடையதாசனும்நூனின்புத்திரனுமாகிய யோ
சுவா, என்பிரபுவாகிய மோசேயே, அவர்களைத்த
டைப்படுத்துமென்றான்.—அதற்கு மோசே என் ௨௯
னிமித்தமோ நீ இப்படிப்பொறாமைகொள்வது,
யெகோவாவின் சனங்களெல்லாரும் தீர்க்க
தரிசனஞ்சொல்லத்தக்கதாக யெகோவா தம்
முடைய ஆவியை அவர்கள்மேலிறங்கப்பண்
ணினால் நலமென்றான்.—பின்பு மோசேயும் இஸ ௩௰
ரவேலரின் முதியோரும் பாளயத்திலே பிரவே
சித்தார்கள்.

அப்பொழுது யெகோவாவின் சமீபத்தி ௩௧
னின்றும் புறப்பட்ட ஒரு காற்றுச் சமுத்திரத்தி
லிருந்து காடைகளை அடித்துக்கொண்டுவந்து பா

(௰௧) உபா.௧.௰௨. (௰௨) ஏசா.௪௰.௰௧. ஏசா.௪௯.௨௩. ௧.தெச.௨.௭. ஆதி.௨௬.௩. ஆதி.௫௰.௨௪. யாத்.௰௩.௫. (௰௩) மத்.௰௫.௩௩. (௰௪) யாத்.௰௮.௰௮. (௰௫) ௧.இரா.௰௯.௪. யோனா.௪.௩. செப்.௩.௰௫. (௰௬) யாத்.௨௪.௧,௯. உபா.௰௬.௰௮. (௰௭) ஆதி.௰௧.௫. ஆதி.௰௮.௨௧. யாத்.௰௯.௨௰. ௧.சாமு.௰.௬. ௨.இரா.௨.௰௫. நிகி.௯.௨௰. ஏசா.௪௪.௩. யோவே.௨.௨௮. (௰௮) யாத்.௰௯.௰௧. யாத்.௰௬.௭. (௨௰) சங்.௭௮.௨௯. (௨௧) ஆதி.௰௨.௨. யாத்.௰௨.௩௭. (௨௨) ௨.இரா.௭.௨. மத்.௰௫.௩௩. யோவா.௬.௭,௯. (௨௩) ஏசா.௫௰.௨. ஏசா.௫௯.௧. ஏசேக்.௰௨.௨௫. (௨௫) ௨.இரா.௨.௰௫. ௧.சாமு.௰.௫,௬,௰. ௧.சாமு.௰௯.௨௰,௨௧,௨௩. யோவே.௨.௨௮. அப்.௨.௰௭,௰௮. ௧.கொரி.௰௪. (௨௬) ௧.சாமு.௨௰.௨௬. எரே.௩௬.௫. (௨௮) மாற்.௯.௩௮. லூக்.௯.௪௯. யோவா.௩.௨௬. (௨௯) ௧.கொரி.௰௪.௫. (௩௧) யாத்.௰௬.௰௩.

ளயத்திலும் பாளயத்தின்சுற்றிலும் ஒருநாள் பிர
யாணமட்டும், இருபுறமுந்தரையின்மேல் இரண்
௩௨ டுமுழ உயரம்விழுந்து கிடக்கச்செய்தது.—அப்
பொழுது சனங்கள் எழும்பி அன்றுபகல் முழு
வதும் இராமுழுவதும் மறுநாள்முழுவதுங் கா
டைகளைச்சேர்த்துக்கொண்டார்கள்: கொஞ்சம்
சேர்த்தவன் பத்து ஓமர்சேர்த்தான்: பாளயத்தின்
சுற்றிலும் அவைகளைத் தங்களுக்காகப் பரப்பி
௩௩ வைத்தார்கள்.—தங்கள் பற்களுக்குள்ளே யிருக்
கும் மாமிசத்தை அவர்கள் புசித்துமுடியுமுன்
னே, யெகோவாவின்கோபம் சனங்களுக்
குள்ளே மூண்டது; யெகோவா மிகவும்பெ
௩௪ ரியவாதையால் அவர்களைவாதித்தார்.—இச்சை
கொண்ட சனங்களை அங்கே அடக்கம்பண்ணி
னதினால் அந்தஸ்தானத்துக்குக் கிப்ரோத் அத்தா
௩௫ வாவென்று பெயரிட்டான்.—பின்பு சனங்கள்
கிப்ரோத் அத்தாவாவைவிட்டுப் புறப்பட்டு அத்
சேரோத்துக்குப்போய் அத்சேரோத்திலே தங்கி
னார்கள்.

## ௰௨. அதிகாரம்.

௧. மிரியம் ஆரோன் என்பவர்கள் மோசேக்குச் செய்த விரோதத்தினிமித்தம் தேவன் அவர்களைக்கண்டித்தல்: ௰. குஷ்டம்பிடித்தமிரியமின் நிமித்தம் மோசே பிரார்த்தித்தல்: ௰௪. மிரியமைப் பாளயத்தினின்றும் அகற்றல்.

பின்பு கூஷ்தேசஸ்திரியை மோசே விவாகம்
பண்ணியிருந்தபடியினாலே மிரியமும் ஆரோ
னும் அந்தக்கூஷ்தேச ஸ்திரியினிமித்தம் அவ
௨ னுக்கு விரோதமாகப்பேசி,—யெகோவா மோ
சேயைக்கொண்டு மாத்திரமா வசனித்தார்; எங்
களையுங்கொண்டு வசனித்தாரல்லவாவென்றார்
௩ கள்: யெகோவா அதைக்கேட்டார்.—மோசே
யானவன் பூமியிலுள்ள சகலமனிதரிலுந்தாழ்ந்த
௪ சிந்தையுடையவன்.—உடனே யெகோவா
மோசேயையும் ஆரோனையும்மிரியமையும்நோக்
கி, நீங்கள் மூவருஞ்சபையின் ஆவாசத்திற்குவா
ருங்களென்றுசொல்ல, மூவரும்போனார்கள்.—
௫ யெகோவாமேகதூணில்வீற்றிருப்பவராயிறங்
கி, ஆவாசவாசலிலேநின்று ஆரோனையும் மிரிய
மையும் வரவழைக்க, இருவரும்போனார்கள்.—
௬ அப்பொழுது அவர், என் வாக்கைக்கேளுங்கள்,
உங்களிலொருவன் தீர்க்கதரிசியாயிருப்பானா
கில், யெகோவாவாகிய நான் தரிசனத்தில்
என்னையவனுக்கு வெளிப்படுத்திச் சொப்பனத்
௭ தில் அவனுடன்பேசுவேன்.—என் தாசனாகிய
மோசேயோ அப்படிப்பட்டவனல்ல, அவன்
என் சகல வீட்டாருக்குள்ளும் உண்மையுள்ள
௮ வன்.—நான் அவனுடன் மறைபொருளாயல்ல,
அவன் யெகோவாவின் சாயலின் தரிசனத்
தைத் தரிசிக்கும்படி முகமுகமாகிப் பிரத்தியட்
சமாய்ப் பேசுகிறேன்; இப்படியிருக்க என்தாச
னாகிய மோசேக்கு விரோதம்பேச உங்களுக்குப்
பயமில்லாமற் போனதென்னவென்றார்.—யெ ௯
கோவாவின்கோபம்அவர்கள்மேல்மூண்டது;
அவர் அவர்களைவிட்டு நீங்கினார்.
மேகம் ஆவாசத்தைவிட்டுநீங்க மிரியம் குஷ் ௰
டரோகியாய் உறைந்த தூறலைப்போல் வெண்
மையானாள்: ஆரோன் மிரியமைப் பார்த்தபொ
ழுது அவள்குஷ்டரோகியாயிருக்கக்கண்டான்.-
அப்பொழுது ஆரோன் மோசேயைநோக்கி, ஐ ௰௧
யோ! என் ஆண்டவனே நாங்கள் புத்தியீனராய்
நடந்தோம். நாங்கள் பர்வஞ்செய்தோம். நீர்இந்
தப்பாவத்தை எங்கள்மேற் சுமத்தாதபடி கெஞ்
சுகிறேன்.—தன்மாதாவின் கருப்பத்தினின்றுந் ௰௨
தோன்றுகையில் பாதிமாமிசம் அழுகிவிழுந்த ச
வம்போலிருக்க இவளைவிடாதிருமென்றான்.—
அதினால்மோசே யெகோவாவைநோக்கி,என் ௰௩
தேவனே, இப்பொழுது இவளைச் சொஸ்தப்ப
டுத்தும்படி உம்மைவேண்டுகிறேனென்றுசொல்
லிப் பிரார்த்தித்தான்.
யெகோவா மோசேயை நோக்கி, அவள்பி ௰௪
தா அவள்முகத்தில் துப்பினால் அவள் ஏழுநாள்
வெட்கப்படுவாளல்லவா. அதுபோலவே அவள்
ஏழுநாள் பாளயத்துக்குவெளியேயிருந்து பின்பு
ஏற்றுக்கொள்ளப்படக்கடவளென்றார்.—அப்ப ௰௫
டியே மிரியம் ஏழுநாள்பாளயத்துக்கு வெளியே
யிருந்தாள். மிரியம் திரும்ப ஏற்றுக்கொள்ளப்ப
டுமளவும் சனங்கள் பிரயாணம்பண்ணவில்லை.-
பின்பு சனங்கள் அத்சேரோத்தைவிட்டுப் புறப் ௰௬
பட்டுப் பாரன்வனத்திற் பாளயமிறங்கினார்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. தேசத்தைப்பார்க்கும்படியனுப்பப்பட்டவர்களுடைய நாமங்கள்:௰௭. அவர்களுக்கு மோசேயிட்டகட்டளை:௨௧.அவர்களுடைய பிரயாணவிவரம்:௨௬.அவர்களுடையவரவையும் அவர்கள்கொண்டுவந்தசெய்தியையுந்தெரிவித்தல்.

அப்பொழுது யெகோவாமோசேயைநோக் ௧
கி,—நான் இஸரவேல் சந்ததியாருக்களிக்குங் கா ௨
னான் தேசத்தைச்சோதித்துப்பார்ப்பதற்கு நீசில
மனிதரை அனுப்புவாயாக: ஒவ்வொரு பிதாக்க
ளின் கோத்திரத்திலும், ஒவ்வொரு அதிபதியை
அனுப்பவேண்டுமென்றார்.—மோசே யெகோ ௩
வாவின் வாக்கினபடி பாரன் வனத்திலிருந்து
அவர்களை அனுப்பினான்: அவர்கள் யாவரும்
இஸரவேல்சந்ததியாரின் அதிபதிகள்.—அவர்க ௪
ளுடைய நாமங்களாவன: ரூபேனுடையகோத்

(௩௨) யாத்.௰௬.௩௬. எசேக்.௪௫.௰௧. (௩௪) உபா.௯.௨௨.—(௰௨. அதி. ௧.) யாத்.௨.௨௧. (௨) யாத்.௰௫.௨௰. மீகா. ௬.௪. ஆதி.௨௯.௩௩. ௨.இரா.௰௯.௪. ஏசா.௩௭.௪. (௫) அதி.௰௧.௨௫. (௬) ஆதி.௰௫.௧. ஆதி.௪௬.௨. யோபு.௩௩.௰௪. எசேக்.௧.௧. தானி.௮.௨. தானி.௰.௮,௰௬,௰௭. லூக்.௧.௰௧,௨௨. அப்.௰.௰௧,௰௭. அப்.௨௨.௰௭,௰௮. ஆதி.௩௧.௰,௰௧. ௧.இரா.௩.௫. மத்.௧.௨௰. (௭) சங்.௱௫.௨௬. எபி.௩.௨,௫. ௧.தீமோ.௩.௰௫. (௮) யாத்.௩௩.௰௧. உபா.௩௪.௰. ௧.கொரி. ௰௩.௰௨. யாத்.௩௩.௰௯. ௨.பேதுரு.௨.௰. யூதா.௮. (௰) உபா.௨௪.௯. ௨.இரா.௫.௨௭. ௨.இரா.௰௫.௫. (௰௧) ௨.சாமு. ௰௯.௰௯. ௨.சாமு.௨௪.௰. நீதி.௩௰.௩௨. (௰௪) லேவி.௰௩.௪௬. (௰௫) உபா.௨௪.௯. (௰௬) அதி.௰௧.௩௫.—(௰௩. அதி. ௨.) அதி.௩௨.௮. உபா.௧.௨௨.

திரத்துச்சக்கூரின் புத்திரனாகிய ஷம்முவா.—
௫ ஷிமியோனுடைய கோத்திரத்து ஓரியின் புத்தி
௬ ரனாகிய ஷாபாத்.—யூதாவினுடைய கோத்திரத்
து யெபுன்னேயின் புத்திரனாகிய காலேபு.—
௭ ஈஷகாருடைய கோத்திரத்து யோசேப்பின் புத்
௮ திரனாகிய ஈகால்.—எப்ராயீமுடைய கோத்திரத்
௯ து நூனின் புத்திரனாகிய ஓஷேயா.—பென்யா
மீனுடைய கோத்திரத்து ரப்பூவின் புத்திரனாகிய
௰ பல்த்தி.—செபுலோனுடைய கோத்திரத்துச்சோ
௰௧ தியின் புத்திரனாகிய கத்தீயேல்.—யோசேப்பி
னுடைய கோத்திரத்திலேயும் மனாஷேகோத்தி
௰௨ ரத்திலுமுள்ள சூசியின் புத்திரனாகிய கத்தீ.—தா
ணுடைய கோத்திரத்துக்கிமல்லீயின் புத்திரனா
௰௩ கிய அம்மியேல்.—ஆஷேருடைய கோத்திரத்து
௰௪ மீகாயேலின் புத்திரனாகிய சேதூர்.—நப்தாலியி
னுடைய கோத்திரத்து வப்சீயின் புத்திரனாகிய
௰௫ நக்பி.—காத்கோத்திரத்து மாகீயின் புத்திரனாகிய
௰௬ கியுவேல்என்பனவாம்.-தேசத்தைச்சுற்றிப்பார்க்
கும்படி மோசேஅனுப்பினமனிதருடையநாமங்
களிவைகளே:நூனின்புத்திரனாகிய ஓஷேயாவுக்
கு யோசுவாவென்று மோசேபெயரிட்டான்.

௰௭ மோசேஅவர்களைக்கானான்தேசத்தைச்சுற்றிப்
பார்க்கும்படி அனுப்புகையில், அவர்களைநோக்
கி, நீங்களிப்படித்தெற்காகப்போய் மலையிலே
௰௮ றி,—தேசம் எப்படிப்பட்டதென்றும், அங்கேவா
சம்பண்ணுகிறசனங்கள் பலவான்களோ, பலவீ
௰௯ னரோ, சிலரோ பலரோவென்றும்,—அவர்கள் வ
சிக்குந்தேசம் நல்லதோ,தீயதோவென்றும்,அவர்
கள்பட்டணங்கள் எப்படிப்பட்டதென்றும் அ
வர்கள்வசிப்பது, கூடாரங்களிலோ, கோட்டை
௨௰ களிலோ வென்றும்,—நிலம் நல்லநிலமோ உவர்
நிலமோவென்றும், அதில்விருட்சங்களுண்டோ
இல்லையோவென்றும், பாருங்கள்: தைரியமாயி
ருங்கள். அத்தேசத்தின்கனிகளிற் சில கொண்டு
வாருங்களென்றான். அக்காலம் திராட்சக்கொடி
முதற்பழங்கொடுக்கிற காலமாயிருந்தது.

௨௧ அவர்களேறிப்போய்ச் சீன் வனந்தொடங்கி
அமாத்துக்குப்போகிறவழியாகிய ரேகோப்மட்
௨௨ டுமுள்ள தேசத்தைச் சுற்றிப்பார்த்தார்கள்.—பின்
புதெற்கேநடந்து எப்ரோன்மட்டும்போனார்கள்.
அங்கே ஏனாக்கின்புத்திரராகியஅகீமானுஞ் ஷேஷாயுந் தல்மாயுமிருந்தார்கள்: எப்ரோன் எகிப்
திலுள்ள சோவானுக்கு ஏழுவருஷத்துக்குமுன்
௨௩ னே உண்டாக்கப்பட்டது.—அதைவிட்டுஅவர்
கள் எஸ்கோல் என்னுந்தாழ்ந்த பூமிமட்டும்
போய்,அங்கே ஒரேகுலையுள்ள ஒருதிராட்சக்கி
ளையை அறுத்தார்கள். அதை ஒருதடியில்கட்டி,
இரண்டுபேர் தங்களுக்கிடையில்விட்டுக்காவிக்
கொண்டுவந்தார்கள்: மாதுளம் பழங்களிலும்,
அத்திப்பழங்களிலுஞ் சிலகொண்டுவந்தார்கள்.-
இஸரவேல்சந்ததியார் அங்கே அறுத்ததிராட்சக் ௨௪
குலையினிமித்தம்,அவ்விடம் எஸ்கோல்என்னுந்
தாழ்ந்த பூமியென்னப்பட்டது.—அந்தத் தேசத் ௨௫
தைச் சுற்றிப்பார்த்து நாற்பதுநாள்சென்றபின்பு
அவர்கள் திரும்பினார்கள்.

அவர்கள் பாரன்வனத்திலுள்ள காதேஸுக்கு ௨௬
வந்து மோசே ஆரோன் என்பவர்களிடத்திலும்
இஸரவேல் சந்ததியாராகியசமஸ்தசபையாரிடத்
திலுஞ்சேர்ந்து, அவர்களுக்குஞ் சபையாரனைவ
ருக்குஞ் சமாசாரத்தைத்தெரிவித்துத் தேசத்தின்
கனிகளை அவர்களுக்குக் காண்பித்தார்கள்.—அ ௨௭
வர்கள் அவனைநோக்கி, நீர் எங்களையனுப்பின
தேசத்துக்கு நாங்கள்போய்வந்தோம்; அது பா
லுந்தேனும் பெருகுகிறதேசந்தான்: இதுவே அ
தின்கனி.—அத்தேசத்துச்சனங்கள் பலவான்கள். ௨௮
அதின்நகரங்கள் மதில்சூழ்ந்தனவும் மிகப்பெரி
யனவுமாயிருக்கின்றன: அங்கே ஏனாக்கின்புத்
திரரையுங்கண்டோம்.—அமலேக்கியர்தென்தே ௨௯
சத்தில்வாசமாயிருக்கிறார்கள் எத்தியரும், எபூசி
யரும்,எமோரியரும், மலைநாட்டில்வாசமாயிருக்
கிறார்கள். கானானியர்கடலருகேயும் யோர்தான
ருகேயும் வாசமாயிருக்கிறார்களென்றார்கள்.—
அப்பொழுது காலேப் மோசேக்குமுன்பாகச் ச ௩௰
னங்களையமைத்து நாம் துரிதமாயேறி அதைச்
சுதந்தரித்துக்கொள்வோம்; நாம் அதை எளிதாய்
மேற்கொள்ளலாமென்றான்.—பின்பு அவனுடன் ௩௧
போய்வந்தமனிதர்கள்,அந்தச்சனங்களையெதிர்த்
துப்போக எங்களால் முடியாது; எங்களைப்
பார்க்கிலும் அவர்கள் பலவான்களென்றார்கள்.—
அன்றியும் நாங்கள்போய்ச்சுற்றிப்பார்த்த அந்தத் ௩௨
தேசந் தன்குடிகளைப்பட்சிக்கிறதேசம், நாங்கள்
அதிலேகண்ட சனங்களெல்லாரும் நெடியமனி
தர்கள்.—அங்கே வீரருக்குப்பிறந்த ஏனாக்கின் ௩௩
புத்திரராகியவீரரையுங்கண்டோம்: நாங்கள் எங்
கள் சுயபார்வைக்கு வெட்டுக்கிளிகளைப்போலி
ருந்தோம்; அவர்கள்பார்வைக்கும் அப்படியே
யிருந்தோமென்றுசொல்லி இப்படி இஸரவேல்
சந்ததியாருக்குள்ளே தாங்கள் சுற்றிப்பார்த்துவந்
த தேசத்தைக்குறித்துப் பயங்கரமான செய்தி
யைப்பரம்பச்செய்தார்கள்.

## ௰௪. அதிகாரம்.

௧. சனங்களந்தச் சமசாரத்தைக்கேட்டு மொறுமொறுத்தல்: ௬. அவர்களைச்சாந்தப்படுத்தும்படி யோசுவாவுங் காலேபும் எத்தனம்பண்ணல்: ௰௧. தேவன் அவர்களைப்பயமுறுத்தல்: ௰௩. மோசே மன்னிப்புக்காகத் தேவனைப்பிரார்த்தித்தல்: ௨௬. மொறுமொறுக்கிறவர்களைத்தேசத்திற்பிரவேசியாதபடி விலக்கல்: ௩௬. பயங்கரமானசெய்தியைச் சொன்னமனிதர் நோயினாற் சாதல்: ௪௰. இஸரவேலர் தங்கள் சத்துருக்களினால் நாசமடைதல்.

(௨௰) நிகி.௯.௨௫,௩௫. உபா.௩௧.௬,௭,௨௩. (௨௧) யோசு.௰௫.௧. யோசு.௰௯.௨௮. (௨௨) யோசு.௰௧.௨௧,௨௨. நியா.௧.௰. வச.௩௩. யோசு.௨௧.௰௧. சங்.௭௮.௰௨. ஏசா.௰௯.௰௧. (௨௩) உபா.௧.௨௪,௨௫. நியா.௰௬.௪. (௨௬) உபா.௧.௰௯. யோசு.௰௪.௬. (௨௭) யாத்.௩.௮. உபா.௧.௨௫. (௨௮) உபா.௧.௨௮. (௨௯) யாத்.௰௭.௮. நியா.௬.௩. ௧.சாமு.௰௪.௪௮. (௩௰) யோசு.௰௪.௭. (௩௧) உபா.௧.௨௮. யோசு.௰௪.௮. (௩௨) அதி.௰௪.௩௬,௩௭. ஆமோ.௨.௯. (௩௩) உபா.௧.௨௮. ஏசா.௪௰.௨௨. ௧.சாமு.௰௭.௪௨.—(௰௪. அதி.)

அப்பொழுது சபையாரெல்லாருங் குரலிட்டுப்
புலம்பினார்கள்: அன்றிராமுழுவதும்சனங்கள்அ
௨ ழுதுகொண்டிருந்தார்கள்.—மேலும் இஸ்ரவேல்
சந்ததியாரெல்லாரும் மோசேக்கும் ஆரோனுக்
கும் விரோதமாய் மொறுமொறுத்தார்கள்: சபை
யாரெல்லாரும் அவர்களைநோக்கி, எகிப்துதேசத்
திலேமரித்தோமாகில்நலம். இந்தவனாந்தரத்திலே
௩ மரணமடைந்தாலும்நலம்.-நாங்கள்கட்கத்தால் ம
டியும்படிக்கும் எங்கள்மனைவிகளுங் குழந்தைக
ளும் இரையாகும்படிக்கும் யெகோவா எங்க
ளை இத்தேசத்துக்குக்கொண்டுவந்ததென்ன; எ
கிப்து தேசத்துக்குத்திரும்பிப்போகிறதே நமக்கு
௪ உத்தமமல்லவாவென்றார்கள்.—பின்பு அவர்கள்,
நாங்கள் ஒரு அதிபதியைவைத்துக்கொண்டு, எ
கிப்துக்குத்திரும்பிப்போவோம் வாருங்களென்
று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.-
௫ அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ரவேல்
சந்ததியாரின் சபையாராகிய சமஸ்தகூட்டத்தா
ருக்குமுன்னும் முகங்குப்புறவிழுந்தார்கள்.
௬ அந்தத்தேசத்தைச் சுற்றிப்பார்த்து வந்தவர்க
ளுக்குள்ளே நூனின்புத்திரனாகிய யோசுவாவும்
யெபுன்னேயின்புத்திரனாகிய காலேபுந் தங்கள்
௭ வஸ்திரங்களைக் கிழித்து,–இஸ்ரவேல்சந்ததியின்
சமஸ்த கூட்டத்தையும்நோக்கி, நாங்கள்போய்ச்
சுற்றிப்பார்த்துவந்ததேசம் அதியுத்தமதேசம்.—
௮ யெகோவா எங்கள்மேற்பிரியமாயிருந்தால்
பாலுந்தேனும்பெருகுகிற இந்தத்தேசத்தில் எங்
களைக்கொண்டு வந்து அதை யெங்களுக்களிப்
௯ பார்.—யெகோவாவுக்கு மாத்திரம் விரோத
மாய் நடவாதிருங்கள்: அந்தத்தேசத்துச் சனங்க
ளுக்குப்பயப்படவேண்டாம்; அவர்கள் நமக்கி
ரையாயிருக்கிறார்கள்; அவர்களைக்காத்தநிழல் அ
வர்களைவிட்டுவிலகிவிட்டது;யெகோவாஎங்
களோடிருக்கிறார்: அவர்களுக்குப்பயப்படவே
௰ ண்டாமென்றார்கள்.—அப்பொழுது சபையா
ரெல்லாரும் அவர்கள்மேற் கல்லெறியச்சொன்
னார்கள். உடனே யெகோவாவின் மகிமை
சபையின் ஆவாசத்தில் இஸ்ரவேல்சந்ததியின்
சமஸ்த சபையாருக்குமுன்பாக பிரகாசமாய்த்
தோன்றிற்று.
௰௧ யெகோவாமோசேயைநோக்கி எதுவரைக்
கும், இந்தச்சனங்களென்னைக் கோபப்படுத்து
வார்கள். அவர்கள்,தங்களுக்குள்ளே நான் காட்
டின சகல அடையாளங்களையுஞ்சார்ந்து, என்
னை விசுவாசிக்க எதுவரைக்கும் பின்னிடுவார்
௰௨ கள்.—நான் அவர்களைப் பெருவாரிக்காய்ச்சலி
னாற் கொலைசெய்வேன், சுதந்தரம் பெறாதபடி
அவர்களைப் புறக்கணித்து, அவர்களைப்பார்க்கி
லும் மிகுதியும் மகத்துவமுள்ள ஒரு சாதியை
உன்னிலே தோற்றுவிப்பேனென்றார்.
மோசே யெகோவாவைநோக்கி உமது ௰௩
வல்லபத்தைக்காட்டி எகிப்தியரினின்றும் இந்
தச்சனங்களைப்புறப்படச்செய்தீரே; அவர்களி
தைக்கேட்பார்கள்.—யெகோவாவாகிய நீர் ௰௪
இந்தச்சனங்களுக்குள்ளே இருக்கிறீரென்பதை
யும், யெகோவாவாகிய நீர் பிரத்தியட்சமாய்த்
தரிசனப்படுகிறவரென்பதையும், உமது மேகம்
அவர்கள்மேல்நிற்கின்றதென்பதையும்,பகலிலே
மேகத்தூணிலும், இரவில் அக்கினித்தூணிலும்,
நீர் அவர்களுக்கு முன்செல்லுகிறதையுங்கேட்
டிருக்கிறார்கள்: அவர்கள் இந்தத்தேசத்தார்களுக்
குச்சொல்லுவார்கள்.—ஒரே மனிதனைப்போல ௰௫
இந்தச்சமஸ்தமனிதரையும் நாசப்படுத்தினால் உ
மது கீர்த்தியைக்கேட்டிருக்குஞ்சாதியார்,—யெ ௰௬
கோவா இந்தச்சனங்களுக்கு வாக்குத்தத்தம்
பண்ணிக்கொடுத்ததேசத்தில் இவர்களைக்கொண்
டுவரமுடியாததினால் வனத்தில் அழித்துவிட்டா
ரென்பார்களே.—ஆதலால் யெகோவா நீடிய ௰௭
பொறுமையும், மிகுந்த கிருபையுமுள்ளவரென்
றும், பாவத்தையும், அதிக்கிரமத்தையும், மன்னி
க்கிறவரென்றும், குற்றவாளிகளைச்சுற்றவாளிக
ளாகவிடாமற் பிதாக்கள்செய்தஅதிக்கிரமத்தைப்
புத்திரர்பௌத்திரரிடத்திலும் மூன்றாம்நான்காந்
தலைமுறைவரைக்கும் விசாரிக்கிறவரென்றும்,—
நீர்சொல்லியபிரகாரம் என் ஆண்டவருடைய ௰௮
வல்லமை இப்பொழுது பெரிதாகும்படிவேண்
டுகிறேன்.—எகிப்தைவிட்டதுமுதல் இந்நாள்வ ௰௯
ரைக்கும் இந்தச்சனங்களை மன்னித்துவந்தது
போல உமது பரிபூரணதயையினால் இந்தச்ச
னங்களின் பாவத்தை மன்னித்தருளும்படி உம்
மை வேண்டுகிறேனென்றான்.—அதற்கு யெ ௨௰
கோவா, உன் வாக்கின்படி மன்னித்தேன்:—
நான் நித்தியமுள்ளவரானால்பூமிமுழுவதும் யெ ௨௧
கோவாவின்மகிமையினாலேநிறைந்திருக்கும்.—
நான் எகிப்திலும் வனாந்தரத்திலுஞ்செய்த அற்பு ௨௨
தங்களையும், என் மகிமையையுங்கண்டிருந்தும்,
என் வாக்குக்கமையாமல் இப்படிப்பத்துமுறை
என்னைப்பரிட்சித்த அந்தச்சகலமனிதரிலொரு
வரும்,—அவர்கள் பிதாக்களுக்கு நான் ஆணை ௨௩
யிட்டுக்கொடுத்ததேசத்தைக்காணமாட்டார்கள்;
என்னைக் கோபப்படுத்தினவர்களில் ஒருவனும்
அதைக் காணமாட்டான்.—என்னுடைய தாச ௨௪

(௨) யாத்.௰௬.௩. (௫) அதி.௰௬.௪,௨௨. (௭) உபா.௧.௨௫. (௮) உபா.௰.௰௫. ௨.சாமு.௰௫.௨௫,௨௬. ௧.இரா.௰.௯. சங்.௨௨.௮. ஏசா.௬௨.௪. (௯) உபா.௯.௭,௨௩,௨௪. உபா.௭.௰௯. சங்.௱௨௧.௫. ஏசா.௩௰.௨,௩. எரே.௪௮.௪௫. ஆதி. ௪௮.௨௧. உபா.௨௰.௧,௪. யோசு.௧.௫. நியா.௧.௨௨. ௨.நாளா.௰௩.௰௨. சங்.௪௬.௭,௰௧. ஏசா.௪௧.௰. ஆமோ.௫.௰௪. சக. ௮.௨௩. (௰) யாத்.௰௬.௰. அதி.௨௰.௬. (௰௧) உபா.௯.௭,௮,௨௨. சங்.௯௫.௮. எபி.௩.௮,௰௬. உபா.௧.௩௩. யோவா.௰௨.௩௭. எபி.௩.௰௮. (௰௨) யாத்.௩௨.௰. (௰௩) யாத்.௩௨.௰௨. எசேக்.௨௰.௯,௰௪. (௰௪) யோசு.௫.௧. யாத். ௰௩.௨௧. (௰௬) யோசு.௭.௯. (௰௭) யாத்.௩௪.௬,௭. சங்.௱௩.௮. சங்.௱௪௫.௮. யோனா.௪.௨. யாத்.௨௰.௫. (௰௯) யாத். ௩௪.௯. சங்.௱௬.௪௫. சங்.௭௮.௩௮. (௨௰) சங்.௱௬.௨௩. யாக்.௫.௰௬. ௧.யோவா.௫.௰௪,௰௫,௰௬. (௨௧) சங். ௭௨.௰௯. (௨௨) உபா.௧.௩௫. சங்.௯௫.௰௧. எபி.௩.௰௭,௰௮. ஆதி.௩௧.௭. (௨௩) அதி.௩௨.௰௨. (௨௪) உபா.௧.௩௬. யோசு.௰௪.௬,௮,௯,௰௪.

ஞகியகாலேபோவேறுவிதஆவியையுடையவஞ
னபடியினுலும், சம்பூரணமாயென்னைப்பின்பற்
றினபடியினுலும்,அவன்போய்வந்ததேசத்தில்அ
வனைச்சேரப்பண்ணுவேன்; அவன்சந்ததியார்அ
௨௫ தைச்சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.—நாளைக்கு
நீங்கள் திரும்பிச்செங்கடலின்வழியாய் வனாந்
தரத்துக்குப்போங்களென்ருர்: அப்பொழுது அம
லேக்கியருங்கானனியருந்தாழ்ந்தபூமியிலே வா
சம்பண்ணினுர்கள்.
௨௬ பின்னும் யெகோவா மோசேயையும் ஆ
௨௭ ரோனையும்நோக்கி,—எனக்கு விரோதமாய்மொ
றுமொறுக்கிற இந்தத்துஷ்டசபையாரை எதுவ
ரைக்கும்பொறுப்பேன்: இஸரவேல்சந்ததியார்எ
னக்குவிரோதமாய்மொறுமொறுக்கிறதைக்கேட்
௨௮ டேன்.—நீ அவர்களைநோக்கி, யெகோவாவா
கிய நான் நித்தியமுள்ளவராஞல் என் செவிக்
கேற நீங்கள்பேசினபிரகாரம் உங்களுக்குச்செய்
௨௯ வேன்.—எனக்கு விரோதமாய் மொறுமொறுக்
கிறவர்களும், இருபதுவயதுதொடங்கி அதற்கு
மேற்பட எண்ணப்பட்டவர்களுமாகிய உங்க
ளெல்லாருடைய பிணங்களும் இந்தவனாந்தரத்
௩௰ தில் விழும்.—உங்களை வசிப்பிக்கும்படி நான்
கை யுயர்த்திச்சொல்லியதேசத்தில் யெபுன்னே
யின்புத்திரஞகிய காலேபும் நூனின்புத்திரஞகி
ய யோசுவாவுந்தவிர நீங்கள் பிரவேசிக்கமாட்
௩௧ டீர்கள்.—இரையாவார்களென்று நீங்கள் குறித்த
உங்கள் குழந்தைகளைமாத்திரம் அதில் பிரவே
சிக்கச்செய்வேன்; நீங்கள் அற்பமாயெண்ணின
௩௨ தேசத்தை அவர்கள் கண்டறிவார்கள்.—நீங்க
ளோ—உங்கள் பிணங்கள் இந்த வனாந்தரத்தில்
௩௩ விழும்.—உங்கள் பிணங்கள் வனாந்தரத்தில் நா
சமடையும்வரைக்கும், உங்கள் சந்ததியார் நாற்
பதுவருஷம் வனாந்தரத்திலே திரிந்து, உங்கள்
விபசாரமார்க்கத்தின் தண்டனையை அனுபவிப்
௩௪ பார்கள்.—நீங்கள் தேசத்தைச்சுற்றிப்பார்த்தநாள்
நாற்பதின்படியே,ஒருநாளொருவருஷமாக,நாற்
பதுவருஷம் உங்கள் அதிக்கிரமங்களைச்சுமப்பீர்
கள்; எனது அபிப்பிராயம் மாறிற்றென்று அறி
௩௫ வீர்கள்.—யெகோவாவாகிய நான் இதைச்
சொன்னேன்; எனக்கு விரோதமாய்க்கூட்டங்
கூடின இந்தத்துஷ்டசபையார்யாவருக்கும் இப்
படிச்செய்வேன்: இந்தவனாந்தரத்தில் இவர்கள்
நாசமடைவார்கள்;இவ்விடத்தில்சாவார்களென்
று யெகோவா சொல்லச்சொன்ஞர்.
௩௬ பின்பு அத்தேசத்தைச் சுற்றிப்பார்க்கும்படி
மோசேயிஞலனுப்பப்பட்டுத்திரும்பி அத்தேசத்
தைக்குறித்துத் துற்செய்தியைக்கொண்டுவந்து,-
௩௭ சபையாரெல்லாரும்அவனுக்குவிரோதமாய்மொ
றுமொறுக்கும்படி அந்தத்துற்செய்தியைச்சொன்
னவர்களாகிய அந்தமனிதர்கள்வாதையினுல் யெ
கோவாவின் சந்நிதியில் மரித்தார்கள்.—அத் ௩௮
தேசத்தைப்போய்ச் சுற்றிப்பார்த்துவந்த அந்தம
னிதரில் நூனின்புத்திரஞகிய யோசுவாவும் யெ
புன்னேயின் புத்திரஞகிய காலேபுமாத்திரஞ்சா
வாமல் மீந்திருந்தார்கள்.—மோசே இந்தச் சமா ௩௯
சாரங்கள்யாவையும் இஸரவேல்சந்ததியார் யாவ
ரிடத்திலுஞ் சொன்னபொழுது சனங்கள் மிக
வுந் துக்கித்தார்கள்.
அதிகாலையில் அவர்களெழுந்திருந்து, நாங்கள் ௪௰
வந்துவிட்டோம், யெகோவா வாக்குத்தத்தம்
பண்ணிய ஸ்தானத்துக்குப்போவோம், நாங்கள்
பாவஞ்செய்தோமென்று சொல்லி மலையின்மே
லேறிப்போஞர்கள்.—அப்பொழுது மோசே அ ௪௧
வர்களைநோக்கி, இப்பொழுது நீங்கள் யெகோ
வாவின்கட்டளையை மீறுகிறதென்ன. அது உங்
களுக்கு அனுகூலமாகாது.—யெகோவா உங் ௪௨
களுக்குள்ளிரார், ஆதலால் ஏறிப்போகாதிருங்
கள், உங்கள்சத்துருக்களுக்குமுன் முறிய அடிக்
கப்படுவீர்கள்.—அமலேக்கியரும், கானனியரும் ௪௩
உங்களுக்குமுன்னே அங்கேயிருக்கிருர்களே,
கட்கத்தினுலேவிழுவீர்கள்,நீங்கள்யெகோவா
வைவிட்டுப்பின்வாங்கினபடியினுல் யெகோ
வா உங்களோடிருக்கமாட்டாரென்ருன்.—ஆ ௪௪
னுலும் அவர்கள்மலையுச்சியின்மேலேறத்துணிந்
தார்கள்: யெகோவாவின் உடன்படிக்கைப்
பெட்டியும் மோசேயும் பாளயத்துக்குப்புறம்
பேபோகவில்லை.—அப்பொழுது அந்தமலையில் ௪௫
வசிக்கிற அமலேக்கியருங் கானனியருமிறங்கி
வந்து அவர்களை முறியஅடித்து ஓர்மாமட்டுந்து
ரத்திஞர்கள்.

## ௰௫. அதிகாரம்.

௧. போசனபானபலிகள் செலுத்தும்விதி: ௰௪. பரதேசிக்குஞ்சுயதேசிக்கும்விதிசமமெனக்காட்டல்: ௰௭. அசைவாட்டும்நைவேத்தியத்துக்குப் பிசையுமாவின்விதி: ௨௨. அபுத்தி பூருவமான பாவபலி: ௩௰. துணிவான பாவத்துக்குத்தண்டனை: ௩௨. ஓய்வுநாளைமீறினவனைக்கல்லாலெறியுந்தண்டனை: ௩௭. வஸ்திரத்தின்குஞ்சம்.

யெகோவா மோசேயைநோக்கி,—நீ இஸர ௧
வேல்சந்ததியாரிடத்தில் நீங்கள்வசிக்கும்படிநா ௨
னுங்களுக்களிக்குந் தேசத்திற்போய்ச் சேர்ந்த
பின்பு.—யெகோவாவுக்குச் சுகந்தபலியாகும் ௩
பொருட்டு, தகனபலியாகவாகிலுஞ் சங்கற்பத்
திற்கேற்றபலியாகவாகிலும் இஷ்டபலியாகவா
கிலும்உங்கள்உற்சவத்துக்காகிலும் யெகோவா
வுக்கு அக்கினியிலே நைவேத்தியம் பண்ணவி

(௨௭) யாத்.௰௬.௨௮. மத்.௰௭.௰௭. யாத்.௰௬.௰௨. (௨௮) அதி.௩௨.௰௨. உபா.௧.௩௫. எபி.௩.௰௭. (௨௯) அதி.௧.௪௫. (௩௰) ஆதி.௰௪.௨௨. அதி.௩௨.௰௧. உபா.௧.௩௫,௩௮. (௩௧) உபா.௧.௩௯. (௩௨) ௧.கொரி.௰.௫. எபி.௩.௰௭. (௩௩) அதி.௩௨.௰௩. உபா.௨.௰௪. எசேக்.௨௩.௩௫. (௩௪) அதி.௰௩.௨௫. சங்.௯௫.௰. ௧.இரா.௮.௫௫. எபி.௪.௧. (௩௫) ௧.கொரி.௰.௫. (௩௬) அதி.௰௩.௩௧,௩௨. (௩௭) ௧.கொரி.௰.௰. எபி.௩.௰௭. யூதா.௫. (௩௮) யோசு.௰௪.௬,௰. (௩௯) யாத்.௩௩.௫. (௪௰) உபா.௧.௪௧. (௪௧) ௨.நாளா.௨௪.௨௰. (௪௨) உபா.௧.௪௨. (௪௩) ௨.நாளா.௰௫.௨. (௪௪) உபா.௧.௪௩. (௪௫) உபா.௧.௪௪. நியா.௧.௰௭.—(௰௫. அதி. ௨.) உபா.௭.௧. (௩) லேவி.௨௨.௰௮,௨௧. லேவி.௨௩.௮, ௰௨,௩௯. ஆதி.௮.௨௧.

௪ ரும்பி,-ஆடுகளிலாவதுமாடுகளிலாவதுயெகோ
வாவின் சந்நிதியில் தன் நைவேத்தியத்தைக்
கொண்டுவருகிறவன், தகனபலிக்காகிலும், மற்
றைப்பலிக்காகிலும்வேண்டிய ஒரு ஆட்டுக்குட்
டியுடனேநைவேத்தியத்துக்குக் கால் கின்எண்
ணெயிற்பிசைந்த ஒரு எபாமாவிற்பத்திலிரண்டு
௫ பங்கும்,—பானபலிக்குக்கால்கின் திராட்சரசத்
௬ தையும்,படைக்கவேண்டும்.-ஆட்டுக்கடாவுக்கா
னால், நைவேத்தியத்துக்கு ஒரு கின்னில்மூன்றி
லொருபங்கு எண்ணெயிற் பிசைந்தபத்திலிரண்
௭ டுபங்கு மாவையும்,—பானபலிக்கு ஒரு கின்
னில் மூன்றிலொருபங்கு திராட்சரசத்தையும்,
யெகோவாவுக்குச் சுகந்தமாகக்கொண்டுவர
௮ வேண்டும்.—நீ தகனபலிக்காகிலும் சங்கற்பசித்
திசெய்யும் பலிக்காகிலும், ஸ்தோத்திரபலிக்கா
கிலும், ஒருகாளையை யெகோவாவுக்கென்
௯ று ஆயத்தப்படுத்தியிருக்கும்பொழுது,—நைவேத்
தியத்துக்கு அந்தக்காளையுடன் அரைக்கின் எண்
ணெயிற்பிசைந்த பத்தில் மூன்றுபங்குமாவை
௰ யும்,—பானபலிக்கு அரைக்கின் திராட்சரசத்தை
யும், யெகோவாவுக்குச் சுகந்தமாகக்கொண்
௰௧ டுவரவேண்டும்.—ஒரு மாட்டுக்காகிலும் ஒரு
ஆட்டுக்கடாவுக்காகிலும், செம்மறியாட்டுக்குட்
டிக்காகிலும், வெள்ளாட்டுக் குட்டிக்காகிலும்,
௰௨ இந்தப்பிரகாரமே செய்யவேண்டும்.—எத்தனை
மிருகங்களை ஆயத்தப்படுத்தினாலும், இந்தப்
பிரகாரமே ஒவ்வொரு மிருகத்துக்குஞ் செய்ய
௰௩ வேண்டும்.—சுயதேசத்திலுள்ள யாவரும் யெ
கோவாவுக்கு அக்கினியிற் சுகந்தபலியைச்
செலுத்தும்பொழுது, இவ்விதமாகவே செய்ய
வேண்டும்.

௰௪ உங்களிடத்தில்தங்கும்பரதேசியாயினும்,உங்
கள் தலைமுறைதோறும் உங்களுக்குள் எவராயி
னும் யெகோவாவுக்கு அக்கினியிற் சுகந்தப
லியிடவிரும்பினால், நீங்கள்செய்வதுபோலவே
௰௫ அவனுஞ்செய்யவேண்டும்.—உங்கள் தலைமுறை
தோறும் நித்தியமாய், சபையாரிலுள்ள உங்க
ளுக்கும், உங்களிடத்தில்தங்கும்பரதேசிக்கும்,
நியமம் ஒரேதன்மையாயிருக்கவேண்டும்: யெ
கோவாவின் சந்நிதியில் நீங்களிருப்பதுபோ
௰௬ லவே பரதேசியுமிருப்பான்.—உங்களுக்கும் உங்
களிடத்தில் தங்கும் பரதேசிக்கும்விதியுங்கட்ட
ளையும்ஒரேவிதமாயிருக்கவேண்டுமென்றுசொல்
லென்றார்.

௰௭ பின்னும் யெகோவா மோசேயை நோக்
௰௮ கி,—நீ இஸரவேல்சந்ததியாரிடத்தில்,நான் உங்
களையழைத்துக்கொண்டுபோகிறதேசத்தில் நீங்
௰௯ கள்சேர்ந்து,—அத்தேசத்தின் ஆகாரத்தைப்புசிக்
கும்பொழுது யெகோவாவுக்கு உயர்த்தும்
௨௰ நைவேத்தியத்தை நிவேதிக்கக்கடவீர்கள்.—பி
சைந்தமாவினால் முதற்சுடும் அப்பத்தை உயர்த்
திப்படைக்கவேண்டும். போரடிக்குங்களத்தில்
உயர்த்திப்படைப்பதுபோலவே இதையும் உ
யர்த்திப்படைக்கவேண்டும்.—இப்படி உங்கள் ௨௧
தலைமுறைதோறும் நீங்கள் முதற்பிசைந்தமாவில்
யெகோவாவுக்கு உயர்த்திப்படைக்கக்கட
வீர்கள்.

யெகோவாமோசேயினிடத்திற்சொல்லிய ௨௨
இந்தக் கற்பனைகளெல்லாவற்றின்படிக்கும்,—
யெகோவா மோசேயினால் கட்டளையிட்ட ௨௩
நாள்முதல்அவர்உங்களுக்கும், உங்கள்சந்ததியா
ருக்கும், நியமித்தஎல்லாவற்றின்படிக்கும், நீங்
கள் செய்யாமல் அபுத்திபூருவமாய்த்தவறிப்போ
னாலும்,—சபையாருக்குத்தெரியாமல் ஒருதப்பி ௨௪
தஞ்செயததுண்டானாலும், சமஸ்த சபையாரும்
யெகோவாவுக்குச்சுகந்தமாய்த்தகனபலிக்கு
ஒரு இளங்காளையையும், நியமப்பிரகாரம் அதற்
கேற்ற நைவேத்தியத்தையும், பானபலியையும்,
பிராயச்சித்தத்துக்கு ஒருவெள்ளாட்டுக்கடாவை
யுஞ் செலுத்தவேண்டும்.—அதினால் ஆசாரியன் ௨௫
இஸரவேல் சந்ததியாராகிய சபையாரனைவருக்
கும், பிராயச்சித்தஞ்செய்வான்; அது அபுத்தி
பூருவமாய் நடந்ததினாலும், அதினிமித்தம்அவர்
கள் யெகோவாவுக்குத் தகன பலியையும்,
தங்கள் பிராயச்சித்தபலியையும், யெகோவா
வின் சந்நிதியில் கொண்டுவந்ததினாலும்,—அது ௨௬
அவர்களுக்குமன்னிக்கப்படும்; அது அபுத்திபூ
ருவமாகச்சனங்கள் யாவருக்கும் வந்தபடியால்
இஸரவேல் சந்ததியாராகிய சபையாருக்கும், அ
வர்களுக்குள்ளே தங்கும் பரதேசிக்கும்மன்னிக்
கப்படும்.—யாவனாகிலும், அபுத்தி பூருவமாகப் ௨௭
பாவஞ்செய்தானாகில்,ஒருவருஷத்துவெள்ளாட்
டைப் பிராயச்சித்த பலியாகச் செலுத்தக்கட
வன்.—ஆசாரியன் யெகோவாவின் சந்நிதி ௨௮
யில் அபுத்திபூருவமாய்ப் பாவஞ்செய்தவனுக்கா
க அபுத்திபூருவமான அப்பாவத்தை நிவிர்த்தி
பண்ணும்படி பிராயச்சித்தஞ் செய்யக்கடவன்;
அது அவனுக்குமன்னிக்கப்படும்.—அபுத்திபூரு ௨௯
வமாய்ப் பாவஞ்செய்தவனிமித்தம் இஸரவேல்
சந்ததியாருக்குள் பிறந்தவனுக்கும், அவர்களுக்
குள் தங்கும் பரதேசிக்கும் ஒரேகட்டளையிருக்
கவேண்டும்.

அன்றியும், துணிவாயெதையாகிலுஞ்செய்கி ௩௰
றவன் சுதேசியாகிலும், பரதேசியாகிலும், யெ
கோவாவை நிந்திக்கிறான்; ஆதலால் அவன்
சனங்களினின்றுஞ்சேதிக்கப்படுவான்.—அவன் ௩௧
யெகோவாவின் வாக்கை அலட்சயம்பண்
ணி, அவருடையகட்டளையை மீறினபடியினால்
அவன் சேதிக்கப்படவேண்டும்; அவன் குற்றம்
அவன்மேலே தங்குமென்றுசொல்லென்றார்.

இஸரவேல் சந்ததியார் வனாந்தரத்திலிருக்கை ௩௨
யில்,ஒய்வுநாளிலே விறகுகளைப்பொறுக்கிக்கொ

(௪) லேவி.௨.௧. லேவி.௬.௰௪. யாத்.௨௯.௪௰. லேவி.௰௪.௰. (௫) அதி.௨௮.௭,௰௪. (௬) அதி.௨௮.௰௨,௰௪. (௰௫) யாத்.௰௨.௪௯. (௰௮) உபா.௨௬.௧. (௰௯) யோசு.௫.௰௧,௰௨. (௨௰) உபா.௨௬.௨,௰. நீதி.௩.௯,௰. லேவி.௨.௰௪. (௨௪) வச.௮,௯,௰. எஸ்ரா.௬.௰௭. (௩௰) உபா.௰௭.௰௨. சங்.௰௯.௰௩. எபி.௰.௨௬. ௨.பேதுரு.௨.௰. (௩௧) ௨.சாமு.௰௨.௯. நீதி.௰௩.௰௩. லேவி.௫.௧. எசேக்.௰௮.௨௰. (௩௨) யாத்.௩௧.௰௪,௰௫.

ண்டிருக்கிறஒருமனிதனைக்கண்டுபிடித்தார்கள்.-
௩௩ அவனைக்கண்டுபிடித்தவர்கள், அவனை மோசே
ஆரோன் என்பவர்களிடத்திற்குஞ்சபையாரனை
௩௪ வரிடத்திற்குங் கொண்டுவந்தார்கள்.—அவனுக்
குச்செய்யவேண்டுவதினன்னதென்றுநிச்சயமாய்த்
தெரியாதபடியினால் அவனைக்காவலில்வைத்தார்
௩௫ கள்.—அப்பொழுது யெகோவா மோசேயை
நோக்கி, அந்தமனிதன் கொலைசெய்யப்படவே
வேண்டும்; ஆகையால் சமஸ்தசபையாரும் பா
ளயத்திற்குவெளியே அவனைக் கல்லெறியக்கட
௩௬ வர்களென்றார்.—சமஸ்தசபையாரும் யெகோ
வா மோசேக்குக்கட்டளையிட்டபிரகாரம் அவ
னைப் பாளயத்திற்குவெளியே கொண்டுபோய்க்
கல்லெறிந்தார்கள், அவன் மரித்தான்.
௩௭ பின்னும் யெகோவாமோசேயைநோக்கி.-
௩௮ நீ இஸரவேல் சந்ததியாரிடத்தில் உங்கள்தலை
முறைதோறும் உங்கள்வஸ்திரங்களின் ஓரங்க
ளிற்குஞ்சங்களையுண்டாக்கி, ஓரத்தின்குஞ்சத்தி
௩௯ லே நீலநாடாவைக்கட்டவேண்டும்.-உங்களுக்
காக அதுகுஞ்சத்திலேயிருக்கவேண்டும், அதைப்
பார்த்து விபசாரமார்க்கமாய்ப்போகிற உங்கள்சு
ய இருதயத்திற்கும் உங்கள்சுயகண்களுக்குமேற்
கநடவாமல், என்சகல கட்டளைகளையும் நினைத்
துக்காத்து உங்கள்தேவனுக்குப்பரிசுத்தராகும்
௪௰ படி நீங்கள்பார்த்து.—யெகோவாவின் சகல
கட்டளைகளையுங்கைக்கொள்ளும்படிநினைக்கும்
பொருட்டு, அதுஉங்களுக்கு ஒருகுஞ்சமாயிருக்
௪௧ கவேண்டும்.-உங்கள் தேவனாகும்படி எகிப்து
தேசத்தினின்றும் உங்களைப் புறப்படச்செய்த
உங்கள் தேவனாகிய யெகோவா நானே:
நானே உங்கள் தேவனாகிய யெகோவா
வென்றுசொல்லென்றார்.

## ௰௬. அதிகாரம்.

௧. கோரா தாதான் அபீராமென்பவர்கள்மோசேக்கு விபட்சமாதல்: ௨௩. விபட்சத்தாரின்கூடாரத்தினின்றுஞ் சனங்கள் புறப்படக்கட்டளையிடல்: ௩௧. பூமிவிபட்சத்தாரை விழுங்கல்: ௩௬. கலசங்களினாலே வேதிகைக்கு மூடிகளைச்செய்யக் கற்பித்தல்: ௪௧. கலகஞ்செய்ததினிமித்தம் அனேகர்அதமாதல்: ௪௬. தண்டனை விதித்தல் மோசே ஆரோனென்பவர்களால் அதைவிலக்கல்.

பின்பு லேவியின் புத்திரனாகிய கோகாத்தின்
பௌத்திரனும் இத்சாரின் புத்திரனுமாகிய கோ
ராகும்ரூபேன்வமிசத்திலுள்ள இலியாப்பின்புத்
திரராகிய தாதானும் அபீராமும் பெலேத்தின்
௨ புத்திரனாகிய ஓனும்,—இஸரவேல்சந்ததியாரில்
சபைக்கதிபதிகளுங் கூட்டத்திற்குத் தலைவரும்
பேர்பெற்றவர்களுமாகியஇருநூற்றைம்பதுபேர்
௩ களோடுங்கூட மோசேக்குமுன் எழும்பி.-மோ
சேக்கும் ஆரோனுக்கும் விரோதமாகக்கூட்டங்
கூடி அவர்களைநோக்கி,நீங்கள் உங்களைமெத்தக்
கனப்படுத்திக்கொள்ளப்பார்க்கிறீர்கள்,சமஸ்தச
பையும் பரிசுத்தம்,ஒவ்வொருவரும் பரிசுத்தர்:
யெகோவா அவர்களுக்குள்ளிருக்கிறார். இப்
படியிருக்க யெகோவாவின் சபைக்குமேலா
க உங்களை நீங்கள் உயர்த்திக்கொள்ளுகிறதென்
னவென்றார்கள்.
மோசே அதைக்கேட்டமாத்திரத்தில் முகங் ௪
குப்புறவிழுந்தான்.-பின்புஅவன்கோராகையும் ௫
அவனுடையகூட்டத்தாரெல்லாரையும்நோக்கி,
நாளைக்கு யெகோவா தம்முடையவனும் பரி
சுத்தனுமின்னானென்று தெரிவிப்பார். அவர்
தமதுசமீபத்தில்அவனைச்சேர்ப்பார்: தாம்தெரிந்
தவனையே தமது சமீபத்திற்சேர்ப்பார்.—ஒன்று ௬
செய்யுங்கள்;கோராகே,கோராகுடன்கூடிவந்த
சனங்களே;-நீங்கள் தூபகலசங்களையெடுத்துக் ௭
கொண்டுநாளைக்குஅவைகளில்அக்கினியையிட்
டு,யெகோவாவின் சந்நிதியில்அவைகளிலே
தூபவருக்கந்தூவுங்கள். அப்பொழுது யெகோ
வாவால்தெரிந்துகொள்ளப்படுபவனெவனோஅ
வனேபரிசுத்தமாவான். லேவியின்சந்ததியாரே,
நீங்கள் உங்களை மெத்தக்கனம்பண்ணப்பார்க்
கிறீர்களென்றுசொன்னான்.—பின்னும் மோசே ௮
கோராகைநோக்கி, லேவியின் சந்ததியாரே கே
ளுங்கள்.-யெகோவாவின்ஆவாசத்தில்தொண் ௯
டுசெய்யவும் சபையாருக்குமுன்பாகநின்று அ
வர்கள் செய்யவேண்டிய தொண்டுகளைச்செய்
யவும் உங்களைத்தமது சமீபத்திற் சேர்விக்கும்
படி இஸரவேலருடைய தேவனானவர் இஸர
வேல்சபையாரில் உங்களைப்பிரித்தெடுத்தும்.—
இப்படியே அவர் உன்னையும், உன்னுடனே கூ ௰
டலேவியின்சந்ததியாராகிய உன்னுடையசகோ
தரரெல்லாரையும், சமீபிக்கச்செய்ததும், உங்க
ளுக்கு அற்பமா: இப்பொழுது ஆசாரியபட்டத்
தையுந்தேடுகிறீர்களா.—இதற்காகவா நீயும் உன் ௰௧
கூட்டத்தாரனைவரும் யெகோவாவுக்கே வி
ரோதமாய்க் கூட்டங்கூடினீர்கள்: நீங்கள் ஆ
ரோனுக்கு விரோதமாய் மொறுமொறுக்க அவ
னாரென்றான்.
பின்பு மோசே இலியாப்பின்புத்திரராகிய தா ௰௨
தானையும் அபீராமையும் வரும்படி சொல்லிஅ
னுப்ப, அவர்கள், நாங்கள்வரமாட்டோம்.—இந் ௰௩
தவனாந்தரத்தில் எங்களைக்கொன்றுபோடும்படி,
பாலுந்தேனும்பெருகுகிறதேசத்திலிருந்து எங்க
ளைஅழைத்துவந்தது அற்பமா: நீஉன்னைமுழுமை
யும் எங்களுக்குக் கர்த்தாவாக்குகிறாயே.—நீ எங் ௰௪
களைப் பாலுந்தேனும் பெருகுகிற தேசத்திற்குக்
கொண்டுபோய் எங்களுக்குத் தானியவயல்களை
யும், திராட்சத்தோட்டங்களையும், சுதந்தரமாகத்

(௩௫) யாத்.௩௧.௰௪,௰௫. ௧.இரா.௨௧.௰௩. அப்.௭.௫௮. (௩௮) உபா.௨௨.௰௨. மத்.௨௩.௫. (௩௯) உபா.௨௯.௰௯. யோபு.௩௧.௭. எரே.௯.௰௪. சங்.௭௩.௨௭. யாக்.௪.௪. (௪௰) லேவி.௰௧.௪௪,௪௫. ரோ.௰௨.௧. கொலோ.௧.௨௨. ௧.பேதுரு.௧.௰௫,௰௬.—(௰௬. அதி. ௧.) யாத்.௬.௨௧. யூதா.௰௧.(௩) யாத்.௰௯.௬. யாத்.௨௯.௪௫. (௪) அதி.௨௰.௬. (௫) லேவி.௨௧.௬,௭. யாத்.௨௮.௧. ௧.சாமு.௨.௨௮. சங்.௱௫.௨௬. லேவி.௰.௩. எசேக்.௪௰.௪௬. (௯) உபா.௰.௮. (௰) ௧.சாமு.௰௮.௨௩. ஏசா.௭.௰௩. (௰௧) யாத்.௰௬.௮. ௧.கொரி.௩.௫. (௰௩) யாத்.௨.௰௪. (௰௪) யாத்.௩.௮.

தந்தாயா, இல்லையே: இந்தமனிதருடைய தண்
களைத்தோண்டப்பார்க்கிறாயா;நாங்கள் வரமாட்
௰௫ டோமென்றார்கள்.—அப்பொழுது மோசே க
டுங்கோபங்கொண்டு யெகோவாவைநோக்
கி, நீர் இவர்களுடைய நைவேத்தியத்தை அங்கி
கரியாதிருப்பீராக: நான் அவர்களிடத்தில் ஒரு
கழுதையையாகிலும், எடுக்கவுமில்லை. அவர்க
ளிலொருவனுக்குத் தீங்குசெய்யவுமில்லையென்
றான்.
௰௬ பின்பு மோசே கோராகைநோக்கி, நீயும் உன்
னுடைய கூட்டத்தாரெல்லாரும் நாளைக்கு யெ
கோவாவின்சந்நிதியில்வாருங்கள், நீயும் அவர்
௰௭ களும் ஆரோனும் வந்திருங்கள்.—உங்களிலொவ்
வொருவருந் தங்கள் தங்கள் தூபகலசங்களை
யெடுத்து, அவைகளின்மேல் தூபவருக்கத்தைப்
போட்டுத் தங்கள் தங்கள் தூபகலசங்களில் இ
ருநூற்றைம்பதையும் யெகோவாவின் சந்நி
தியில் கொண்டுவரவேண்டும். நீயும் ஆரோனும்
உங்களுங்கள் தூபகலசத்தைக்கொண்டு வாருங்
௰௮ களென்றான்.—அப்படியே அவரவர் தங்கள் தங்
கள் தூபகலசங்களையெடுத்து, அவைகளில் அக்
கினியையுந்தூபவருக்கத்தையும்போட்டுச்சபை
யின் ஆவாசவாசலிற்கொண்டுவந்துமோசேயோ
௰௯ டும்ஆரோனோடும்நின்றார்கள்.—அன்றியும்அவர்
களுக்குவிரோதமாகக் கோராகு சபையாரெல்
லாரையும் சபையின் ஆவாசவாசலினெதிரேகூ
டிவரும்படிசெய்தான்: அப்பொழுது யெகோ
வாவின் மகிமை சமஸ்த சபையாருக்கும்பிரசன்
னமாய்த் தோன்றிற்று.
௨௰ யெகோவா மோசேயையும் ஆரோனையும்
௨௧ நோக்கி,—இந்தச்சபையாரை நான் ஒரு நிமிஷத்
தில் சங்கரிக்கும்படி நீங்கள் அவர்களைவிட்டுப்
௨௨ பிரியுங்களென்றுசொல்ல;—அவர்கள்முகங் குப்
புறவிழுந்து தேவனே, சகலதேகங்களிலுள்ள
ஆத்துமாக்களுக்குந்தேவனே, ஒருவன்பாவஞ்
செய்யச் சமஸ்தசபையார்மேலுங்கோபங்கொள்
வீராவென்றார்கள்.
௨௩ யெகோவா மோசேயைநோக்கி,—கோரா,
௨௪ தாதான், அபீராம் என்பவர்களுடைய கூடாரத்
தை விட்டுப்போகும்படி சபையாருக்குச்சொல்
௨௫ லென்றார்.—உடனே மோசே எழுந்து தாதான் அ
பீராமென்பவர்களிடத்திற்போனான். இஸரவே
லின் முதியோரும் அவனுக்குப்பின்சென்றார்
௨௬ கள்.—அவன் சபையாரைநோக்கி, நீங்கள் இந்
தத்துஷ்டசனங்களின் சகல பாவங்களினாலும,
நாசமடையாதபடி அவர்கள் கூடாரங்களைவிட்
டுப்பிரியுங்கள்; அவர்களுடைமைகளிலொன்
௨௭ றையுந்தொடாதிருங்களென்றான்.—அப்படியே
அவர்கள் கோராகு, தாதான், அபீராமென்பவர்
களுடைய கூடாரத்தின் நான்குதிசையிலும் நின்
று புறப்பட்டார்கள். தாதானும், அபீராமும்வெ
ளியிலேவந்து தங்கள் மனைவிகள் புத்திரர் குழந்
தைகளோடுந் தங்கள் கூடாரவாசலிலேநின்று
கொண்டார்கள்.—அப்பொழுது மோசே சகல ௨௮
மனிதரையும்போல இவர்கள் சாதாரணமரணம
டைந்து எல்லாருக்கும் நடப்பதுபோல இவர்க
ளுக்கும் நடந்தால், யெகோவா என்னையனுப்
பவில்லையென்றறிவீர்கள்.—யெகோவா அற் ௨௯
புதகிரியையைச்செய்ய அதினால் இவர்களையும்,
இவர்களுக்குண்டான யாவையும் விழுங்கத்தக்க
தாகப்பூமி தன்வாயைத்திறக்கும்பொழுது இவர்
கள் உயிருடனே பாதாளத்தில்விழுந்தால், இவர்
கள் யெகோவாவை அவமதித்தார்களென்ப
தையறிவீர்கள்.—இதினால் இந்தச்சகலகாரியங்க ௩௰
ளையுஞ்செய்யும்பொருட்டு யெகோவா என்
னையனுப்பினாரென்றறிவீர்கள்; நான் என் மன
தின்படி செய்யவில்லையென்றான்.
அவன் இந்த வாக்குகளெல்லாவற்றையுஞ் ௩௧
சொல்லிமுடிந்தவுடனே அவர்கள்நின்ற பூமி பி
ளந்தது.—பூமி தன் வாயைத்திறந்து அவர்களை ௩௨
யும், அவர்கள் குடும்பத்தாரையும், கோராகைச்
சேர்ந்த மனிதரெல்லாரையும், அவர்களுக்குண்
டான சகலபொருள்களையும் விழுங்கிற்று.—அ ௩௩
வர்கள் தங்களுக்குண்டான எல்லாவற்றோடும்
உயிருடன். பாதாளத்தில் இறங்கினார்கள்; பூமி
அவர்களை மூடிக்கொண்டது: இப்படிச்சபை
யை நீங்கினவர்கள் நாசமடைந்தார்கள்.—அவர் ௩௪
களைச்சூழஇருந்த இஸரவேலர் யாவரும் அவர்க
ளிடும்ஓலத்தைக்கேட்டுப்பூமி எங்களையும்விழுங்
கிவிடப்போகின்றதென்று சொல்லிக்கொண்டு
தப்பியோட,—அக்கினி யெகோவாவின் சந் ௩௫
நிதியினின்றும்புறப்பட்டுத்தூபங்காட்டின இரு
நூற்றைம்பதுபேரையும் பட்சித்தது.
பின்பு யெகோவா மோசேயைநோக்கி,— ௩௬
தூபகலசங்கள்பரிசுத்தமாயிருப்பதினால்அவைக ௩௭
ளை அக்கினியினின்றுமெடுத்து, அவைகளிலிருக்
கிற அக்கினியை அப்புறங்கொட்டிப்போடும்
படி ஆசாரியனாயிருக்கிற ஆரோனின் புத்திரனா
கிய எலீயேசாருக்குச்சொல்லு,—தங்கள் தங்கள் ௩௮
ஆத்துமங்களுக்கு விரோதஞ்செய்த அந்தப்பாவி
களுடைய தூபகலசங்களை வேதிகைக்கு மூடி
யாக விசாலமான தகடுகளாயடிக்கக்கடவர்கள்.
அவர்கள்அவைகளை யெகோவாவின் சந்நிதி
யிற்கொண்டுவந்தபடியால் அவைகள்பரிசுத்தமா
கும்: அவைகள் இஸரவேல்சந்ததியாருக்கு ஒரு
அடையாளமாயிருக்க வேண்டுமென்றார்.—அப்ப ௩௯

(௰௫) ஆதி.௪.௪,௫. ௧.சாமு.௰௨.௩. அப்.௨௰.௩௩. ௨.கொரி.௭.௨. (௰௬) ௧.சாமு.௰௨.௩,௭. (௰௯) யாத்.௰௬.௭,௰. (௨௧) ஆதி.௰௯.௰௭,௨௨. எரே.௫௧.௬. அப்.௨.௪௰. வெளி.௰௮.௪. யாத்.௩௨.௰. (௨௨) அதி.௨௭.௰௭. யோபு. ௰௨.௰. பிர.௰௨.௭. எசா.௫௭.௰௬. சக.௰௨.௧. எபி.௰௨.௯. (௨௬) ஆதி.௰௯.௰௨,௰௪. எசா.௫௨.௰௧. ௨.கொரி. ௬.௰௭. வெளி.௰௮.௪. (௨௮) யாத்.௨௰.௫. யோபு.௩௫.௰௫. எசா.௰.௩. (௨௯) எசா.௪௫.௭. யோபு.௩௧.௩. எசா. ௨௮.௨௧. (௩௰) யாத்.௩.௰௨. உபா.௰௮.௨௨. சக.௨.௯,௰௧. யோவா.௫.௩௬. அதி.௨௪.௰௩. எரே.௨௩.௰௬. எசேக். ௰௩.௰௭. யோவா.௫.௩௰. யோவா.௬.௩௮. (௩௧) அதி.௨௬.௰. (௩௫) லேவி.௰.௨. (௩௭) லேவி.௨௭.௨௮. (௩௮) நீதி.௨௰.௨. அபகூ.௨.௰. (௩௯) எசேக்.௰௪.௮.

டியே ஆசாரியனாகிய எலீயேசார் தகிக்கப்பட்
டவர்கள் கொண்டுவந்த பித்தளைத்தூபகலசங்க
௪௰ ளையெடுத்து,—ஆரோனின் சந்ததியாரையொழி
ய எந்த அந்நியனும் யெகோவாவின் சந்நிதி
யில் தூபங்காட்டவராதபடிக்கும், கோராகைப்
போலவும் அவன் கூட்டத்தாரைப்போலவுமிரா
தபடிக்கும், இஸரவேல்சந்ததியாருக்கு ஒரு ஞா
பகக்குறியாயிருக்கும்பொருட்டுத் தனக்கு யெ
கோவா மோசேயைக்கொண்டு சொல்லியபிர
காரம் அவைகளை வேதிகையை மூடுவதற்கு வி
சாலமான தகடுகளாக அடிப்பித்தான்.
௪௧ மற்றைநாள் இஸரவேல்சந்ததியின் சமஸ்தச
பையாரும் மோசேக்கும் ஆரோனுக்கும் விரோ
தமாக மொறுமொறுத்து நீங்கள் யெகோவா
வின் சனங்களைக்கொன்றுபோட்டீர்களேயென்
௪௨ றார்கள்.—சபையார் மோசேக்கும் ஆரோனுக்கும்
விரோதமாகக்கூடிச்சபையின் ஆவாசத்திற்குநே
ரே பார்க்கிறபொழுதுமேகம்அதைமூடிற்று, யெ
கோவாவின் மகிமை பிரகாசமாய்த்தோன்றிற்
௪௩ று.—மோசேயும் ஆரோனும் சபையின் ஆவாசத்
திற்கு முன்னே வந்தார்கள்.
௪௪ அப்பொழுது யெகோவா மோசேயை
௪௫ நோக்கி,—இந்தச்சபையாரை ஒருநிமிஷத்திலே
நான்சங்கரிக்கும்படிக்கு நீங்கள் அவர்களைவிட்
டுப் பிரியுங்களென்றுசொல்ல, அவர்கள் முகங்
குப்புறவிழுந்தார்கள்.
௪௬ பின்பு மோசே ஆரோனைநோக்கி, யெகோ
வாவின் சந்நிதியிலிருந்து கடுங்கோபம் புறப்
பட்டதே; வாதைதொடங்கிற்றே; நீ தூபகலசத்
தை யெடுத்து வேதிகையின் அக்கினியை அதி
லிட்டு, அதின்மேலே தூபவருக்கந்தூவிச் சபை
யினிடத்தில் சீக்கிரமாயோடி அவர்களுக்குப் பி
௪௭ ராயச்சித்தஞ்செய்யென்றான்.—மோசேசொன்ன
படிஆரோன்அதையெடுத்துச்சபையின்மத்தியில்
ஓடினான், அப்பொழுது சனங்களுக்குள்ளே வா
தைதொடங்கிற்று; அதைக்கண்டு அவன் தூபவ
ருக்கத்தைப்போட்டுச்சனங்களுக்காகப் பிராயச்
௪௮ சித்தஞ்செய்து,—அவன் மரித்தோருக்குஞ் சீவ
னுள்ளோருக்கும் இடையிலேநிற்க வாதைநின்
௪௯ றது.—கோராகுடன்மரித்தவர்கள் தவிர அந்த வா
தையினால்மரித்தவர்கள் பதினாலாயிரத்தெழுநூறு
௫௰ பேர்.—வாதைநின்றபடியால் ஆரோன்சபையின்
ஆவாசவாசலில் நிற்கும் மோசேயிடத்திற்குத்
திரும்பினான்.

## ௰௭. அதிகாரம்.

௧. அதிபதிகள் கோல்களைக்கொண்டுவரக் கட்டளையிடல்: ௬. ஆரோனின் கோல் புஷ்பித்தல்: ௰. கலகஞ்செய்தவர்களுக்கு விரோதமான ஒரடையாளமாக அதைக்காத்தல்.

௨ பின்புயெகோவா மோசேயைநோக்கி,—நீ
இஸரவேல் சந்ததியாரிடத்திற்பேசி அவர்கள் பி
தாக்களின் வமிசத்தின்படிக்கு ஒவ்வொருவரி
டத்தில் ஒவ்வொருகோலாக அவர்கள் பிதாக்க
ளின்வமிசத்தின்படிசகலஅதிபதிகளிடத்திலும்,
பன்னிரண்டுகோல்களைவாங்கி,அவனவன் கோ
லில்அவனவன்பேரை எழுதுவாயாக.—அவர்கள் ௩
பிதாக்களின்வமிசத்தின் அதிபதிகள் ஒவ்வொரு
வருக்கு ஒவ்வொருகோலிருப்பதினால்லேவியின்
கோலில் ஆரோனின்நாமத்தைப் பதிப்பாயாக.—
அவைகளைச்சபையின் ஆவாசத்தில் நான் உங்க ௪
ளுக்குத்தோன்றும்சாட்சிப்பெட்டிக்கு முன்னே
வை.—நான் தெரிந்துகொள்பவனுடைய கோல் ௫
புஷ்பிக்கும்; இஸரவேல்சந்ததியார் உங்களுக்கு
விரோதமாய்மொறுமொறுக்காதபடி இந்தப்பிரகா
ரஞ்செய்வேனென்றார்.
மோசே இஸரவேல் சந்ததியாரோடேபேசி ௬
னான்; அப்பொழுது அவர்கள் அதிபதிகளெல்
லாருந் தங்கள் பிதாக்களின் வமிசத்தின்படி ஒவ்
வொரு அதிபதிக்கு ஒவ்வொரு கோலாகப்பன்
னிரண்டு கோல்களை அவனிடத்தில் கொடுத்
தார்கள். ஆரோனுடையகோல் அவர்களுடைய
கோல்களுடனே யிருந்தது.—அந்தக்கோல்களை ௭
மோசே சாட்சி ஆவாசத்தில் யெகோவாவின்
சமுகத்தில்வைத்தான்.—மற்றைநாள் மோசே அந் ௮
தச்சாட்சி ஆவாசத்தில் பிரவேசித்தபொழுது லே
வியின் குடும்பத்தாருக்கிருந்த ஆரோனின்கோல்
மாத்திரம் தளிர்த்து அரும்பிப்புஷ்பித்து வாதுமப்
பழம்பழுக்கக்கண்டான்.—பின்பு மோசே யெ ௯
கோவாவின் சந்நிதியிலிருந்த அந்தக்கோல்க
ளெல்லாவற்றையுமெடுத்து இஸரவேல்சந்ததியா
ரெல்லாருங்காண வெளியே கொண்டுவந்தான்.
அவர்கள்கண்டு அவரவர் தங்கள் தங்கள் கோல்க
ளைவாங்கிக்கொண்டார்கள்.
அப்பொழுதுயெகோவா மோசேயைநோக் ௰
கி, ஆரோனின்கோல் அந்தத்துரோகிகளுக்குவி
ரோதமான அடையாளமாகும்பொருட்டு அதைத்
திரும்பவுஞ் சாட்சிப்பெட்டிக்குமுன்னேகொ
ண்டுபோய்வை. இப்படி அவர்கள் எனக்குவிரோ
தமாய்மொறுமொறுப்பதையொழிப்பாயாக; அப்
பொழுது அவர்கள் சாவமாட்டார்கள் என்றார்.—
மோசே அப்படியேசெய்தான்: யெகோவா த ௰௧
னக்குக்கட்டளையிட்டபடியே செய்தான்.—பின் ௰௨
பு இஸரவேல்சந்ததியார்மோசேயிடத்தில், பார்,
நாங்கள் சாகிறோம், நாங்கள் நாசமடைகிறோம்,
நாங்கள்எல்லாரும்நாசமடைகிறோம்.—யெகோ ௰௩
வாவின் ஆவாசத்தைச் சமீபிக்கிறவன் எவனுஞ்
சாகிறான்: இப்படி நாங்கள்முழுமையுஞ் சாகலா
மாவென்றார்கள்.

## ௰௮. அதிகாரம்.

௧. ஆசாரியரும் லேவியருஞ் செய்யுங்கிரியைவிதித்தல்: ௮. ஆசாரியருக்குப் பங்குநியமித்தல்: ௨௰. லேவியருக்குப்பங்குநியமித்தல்: ௨௫. லேவியரின் பங்கில் உயர்த்தும்நைவேத்தியத்தை ஆசாரியர் பங்காக ஏற்படுத்தல்.

(௪௰) ௨.நாளா.௨௬.௰௮. (௪௬) லேவி.௰௬. அதி.௧.௫௩. ௧.நாளா.௨௭.௨௪.—(௰௭. அதி. ௪.) யாத்.௨௫.௨௨. (௫) அதி.௰௬.௫. அதி.௰௬.௰௧. (௭) யாத்.௩௮.௨௧. (௰) எபி.௯.௪. அதி.௰௬.௩௮. (௰௩) அதி.௧.௫௧,௫௩.—(௰௮. அதி.)

பின்பு யெகோவா ஆரோனைநோக்கி, பரி
சுத்தஸ்தானத்தின்குற்றத்தை நீயும்உன்புத்திரரும்
உன்னுடன் பிதாவமிசத்தாருஞ் சுமப்பீர்கள்: நீ
யும் உன்னுடன் உன்புத்திரரும் ஆசாரியத்துவத்
௨ தின் குற்றத்தைச்சுமப்பீர்கள்.—உன் பிதாவின்
வமிசத்தாராகிய லேவி கோத்திரத்தாராகிய உன்
சகோதரரும் உன்னுடன்கூடி உன்னிடத்தில்
சேவிக்கும்படி அவர்களைச்சேர்த்துக்கொள்: நீ
யும் உன் புத்திரருமே சாட்சியின் ஆவாசத்திற்கு
௩ முன்னிருக்கவேண்டும்.—அவர்கள் உன் காவ
லையும் ஆவாசத்தின் சமஸ்தகாவலையும் காக்கக்க
டவர்கள்: ஆகிலும் அவர்களும் நீங்களும் சா
வாதிருக்கவேண்டுமாகில் அவர்கள்பரிசுத்தஸ்தா
னத்தின் பாத்திரங்களையும் வேதிகையையுஞ்சமீ
௪ பிக்கவேண்டாம்.—ஆவாசத்தின் சகல தொண்
டுகளையுஞ் செய்யும்படி உன்னுடன்கூடிக்கொ
ண்டு சபையின் ஆவாசத்தின் காவலைக்காத்துக்
கொள்ளவேண்டும்: அந்நியன் ஒருவனும் உங்
௫ களைச் சமீபிக்கவேண்டாம்.—இனி இஸரவேல்
சந்ததியார்மேற் கடுங்கோபம் வராதபடிநீங்கள்
பரிசுத்தஸ்தானத்தின் காவலையும் வேதிகையின்
௬ காவலையுங்காத்துக்கொள்ளவேண்டும்.—உன் ச
கோதரராகிய லேவியரை இஸரவேல் சந்ததியா
ரினின்றும் பிரித்துச் சபையின் ஆவாசத்தின்கி
ரியையைச் செய்யும்பொருட்டு யெகோவா
வுக்குக்கொடுக்குந்தானம்போல் உங்களிடத்தில்
௭ தந்தேனே.—ஆதலால்நீயும் உன்னுடன்கூடஉன்
புத்திரரும் வேதிகையினிடத்திற்குந் திரைச்சீ
லைக்குட்புறத்துமுள்ளஉங்கள் ஆசாரியத்தொண்
டைச்செய்யக்கடவீர்கள்; உங்கள் ஆசாரிய அதி
காரத்தை உங்களுக்கு ஒரு தானமாக அருளி
னேன்: அதைச்சமீபிக்கும் அந்நியன் கொலை
செய்யப்படக்கடவனென்றார்.
௮ பின்னும் யெகோவா ஆரோனைநோக்கி,
கேள்,இஸரவேல் சந்ததியார் பரிசுத்தப்படுத்துகி
றவைகளெல்லாவற்றிலும் எனக்குமுன்பு உயர்த்
தப்படும் நைவேத்தியங்களின் காவலையுனக்குத்
தந்தேன்; அபிஷேகத்தினிமித்தம் நித்தியநியமப்
படி அவைகளையுனக்கும் உன்புத்திரருக்குந் தந்
௯ தேன்.—அக்கினிபட்சியாமல் சேஷமாயிருக்கும்
மிகவும் பரிசுத்த வஸ்துக்களுக்குள்ளே, அவர்க
ளெனக்குச்செலுத்தும் ஒவ்வொரு நைவேத்திய
மும், ஒவ்வொரு மாவின் நைவேத்தியமும், ஒவ்
வொருபிராயச்சித்த பலியும், ஒவ்வொரு குற்ற
நிவிர்த்திபலியும், உனக்கும் உன் புத்திரருக்கும்
௰ மிகவும் பரிசுத்தமாயிருக்கும்.—பரிசுத்தஸ்தானத்
தில் அவைகளைப்புசிக்கவேண்டும்: ஆண்மக்கள்
யாவரும் அவைகளைப் புசிக்கலாம்: அவைகள்
உனக்குப் பரிசுத்தமாகும்.—இஸரவேல் சந்ததி ௰௧
யாருடைய உயர்த்தும் நைவேத்தியங்களோடே
அசைவாட்டும் நைவேத்தியங்களெல்லாம் உன்
னுடையவைகளாகும், நித்தியநியமமாய் அவை
களையுனக்கும், உன்புத்திரருக்கும் புத்திரிகளுக்
குந் தந்தேன்; உன்வீட்டிலே சுசியாயிருப்பவர்
கள்யாவரும் அதிற் புசிக்கலாம்.—அவர்கள் யெ ௰௨
கோவாவுக்கு முதற்பலமாயிடும் உத்தம எண்
ணெயும், உத்தமதிராட்சரசமும், உத்தம தானிய
முமாகிய எல்லாவற்றையும் உனக்குத்தந்தேன்.—
அவர்கள் தங்கள் தேசத்தில் முதற்பழுத்த பலத் ௰௩
தில் யெகோவாவுக்குக்கொண்டுவருவதெல்
லாம் உனக்குரித்தாகும்; உன்வீட்டிலே சுசியா
யிருப்பவர்கள்யாவரும் அதிற் புசிக்கலாம்.—இ ௰௪
ஸரவேலருக்குள் நிவேதிக்கப்படும் சகலவஸ்து
வும் உனக்குரித்தாகும்.—மனிதரிலும் மிருகங்க ௰௫
ளிலும் அவர்கள் யெகோவாவுக்குக்கொண்
டுவரும் சமஸ்தபிராணிகளுக்குள்ளே கருப்பத்தி
னின்றுதோன்றும் முதற்பேறனைத்தும், உனக்கு
ரித்தாகும்; ஆனாலும் மனிதரின் முதற்பேற்றை
மீட்கவேண்டும்; அசுத்தமிருகங்களின் தலையீற்
றையும்மீட்கவேண்டும்.—மீட்கப்பட வேண்டி ௰௬
யவை ஒருமாதத்திற்குமேற்பட்டால், உன்மதிப்
புக்கிசைய இருபதுகோராக்கொண்டபரிசுத்தஸ்
தானத்து ஷேக்கலின்படி ஐந்து ஷேக்கலாலே
அவைகளைமீட்கவேண்டும்.—மாட்டின் தலையீற் ௰௭
றும், செம்மறியாட்டின் தலையீற்றும்,வெள்ளாட்
டுத்தலையீற்றும், மீட்கப்படலாகாது; அவைகள்
பரிசுத்தமுள்ளவைகள்: அவைகளின் இரத்தத்
தைவேதிகையின்மேலேதெளித்து அவைகளின்
நிணத்தை யெகோவாவுக்குஅக்கினியிலிடும்
சுகந்த நைவேத்தியமாகத்தகனிக்க வேண்டும்.—
அசைவாட்டும் மார்புக்கண்டமும், வலது முன் ௰௮
னந் தொடையும், உன்னுடையவைகள்போல,
அவைகளின்மாமிசமும் உன்னுடையதாகும்.—
பரிசுத்தவஸ்துக்களுக்குள்ளே இஸரவேல்சந்ததி ௰௯
யார் யெகோவாவின் சந்நிதியில் உயர்த்திப்
படைக்கும்யாவும் நித்திய நியமமாய்உனக்கும்
உன்புத்திரருக்கும் புத்திரிகளுக்கும் தந்தேன்:
யெகோவாவின் சந்நிதியில் இது உனக்கும்
உன்சந்ததிக்கும்மாறாத நித்திய நியமமாயிருக்கு
மென்றார்.
பின்னும் யெகோவா ஆரோனை நோக்கி, ௨௰
இஸரவேல் சந்ததியாருக்குள் நானே உன்பாக
முஞ்சுதந்தரமுமாயிருக்கிறேன்; ஆதலால் அவர்
களுடைய தேசத்தில் உனக்குச்சுதந்தரமுமில்
லை; அவர்களுக்குள்ளே உனக்குப் பாகமுமில்
லை.—சபையின் ஆவாசத்திற் சேவிக்குந்தொண் ௨௧

(௧) யாத்.௨௮.௩௮. (௩) அதி.௰௬.௪௰. அதி.௪.௰௪. (௫) யாத்.௨௭.௨௧. லேவி.௨௪.௩. (௬) அதி.௩.௰௨,௪௫. (௭) எபி.௯.௩,௬. (௮) லேவி.௬.௰௬,௰௮,௨௬. யாத்.௨௯.௨௯. (௯) லேவி.௨.௨,௩. லேவி.௪.௨௨,௨௭. லேவி.௫.௧. (௰) லேவி.௬.௰௬. (௰௧) யாத்.௨௯.௨௭,௨௮. லேவி.௰.௰௪. லேவி.௨௨.௨,௩. (௰௨) யாத்.௨௩.௰௯. நிகி.௰.௩௫,௩௬. யாத்.௨௨.௨௯. (௰௩) யாத்.௨௨.௨௯. ௨பா.௨௬.௨. (௰௪) லேவி.௨௭.௨௮. (௰௫) யாத்.௰௩.௨. லேவி.௨௭.௨௬. யாத்.௰௩.௰௩. (௰௬) லேவி.௨௭.௨,௭. அதி.௩.௪௭. (௰௭) ௨பா.௰௫.௰௯. (௰௮) யாத்.௨௯.௨௬,௨௮. (௰௯) ௨.நாளா.௰௩.௫. (௨௰) ௨பா.௰.௯. யோசு.௰௩.௰௪,௩௩. சங்.௰௬.௫. (௨௧) லேவி.௨௭.௩௰,௩௨. நிகி.௰.௩௭. எபி.௭.௫,௮,௰. அதி.௩.௭,௮.

டினிமித்தம் இஸ்ரவேலருக்குள்ளவையெல்லா
வற்றிலும் பத்திலொருபங்கை லேவியின் சந்ததி
௨௨ யாருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தேன்.—இஸ்ர
வேல்சந்ததியார் பாவத்தைச்சுமந்து சாவாதிருக்
கவேண்டுமாகில், இனிச்சபையின்ஆவாசத்தைச்
௨௩ சமீபியாதிருப்பார்களாக.—லேவியர் மாத்திரஞ்
சபையின் ஆவாசத்தில் கிரியைகளைச் செய்ய
வேண்டும்; அவர்கள் தங்கள் சுயபாவத்தைச்சு
மப்பார்கள். இஸ்ரவேல் சந்ததியாருக்குள்ளே
அவர்களுக்குச் சுதந்தரமில்லையென்பது உங்கள்
தலைமுறைதோறும் நித்தியநியமமாயிருக்கும்.—
௨௪ இஸ்ரவேல்சந்ததியார் யெகோவாவின் சந்
நிதியில் உயர்த்திப் படைப்பவைகளிற் பத்தி
லொன்றை லேவியருக்குச்சுதந்தரமாகக்கொடுத்
தேன்: ஆதலால்இஸ்ரவேல்சந்ததியாருக்குள்ளே
அவர்களுக்குச் சுதந்தரமில்லையென்று நான் அ
வர்களிடத்தில் சொன்னேன் என்றார்.

௨௫ பின்னும் யெகோவா மோசேயைநோக்
௨௬ கி,—நீ லேவியரிடத்தில் இஸ்ரவேல் சந்ததியார்
கையில் நீங்கள் வாங்கிக்கொள்ளும்படி நான்
உங்களுக்குச்சுதந்தரமாகத்தந்த பத்திலொன்றை
நீங்கள் அவர்கள்கையில் வாங்கும்பொழுது, பத்
திலொன்றாகிய அதிலே பத்திலொருபங்கை உ
யர்த்தும் நைவேத்தியமாய் யெகோவாவின்
௨௭ சந்நிதியில் நிவேதிக்கவேண்டும்.—நீங்கள் உயர்த்
திப்படைக்கும் நைவேத்தியம் சூட்டுக்களத்துத்
தானியத்தையும், திராட்சத்தின் ஆலையின் பரிபூர
ணத்தையும்போலஉங்களுக்கு எண்ணப்படும்.—
௨௮ இப்படியேநீங்கள் இஸ்ரவேல்சந்ததியார்கையில்
வாங்கும் பத்திலொன்றாகிய உங்கள் பங்குகள்
எவற்றிலும் யெகோவாவுக்கு உயர்த்தும் நை
வேத்தியத்தைச்செலுத்தி யெகோவாவுக்குரி
ய அந்த உயர்த்தும் நைவேத்தியத்தை ஆசாரிய
௨௯ னாகிய ஆரோனுக்குக்கொடுக்கவேண்டும்.—நீங்
கள் வாங்குந்தானங்கள் யாவற்றிலும் உத்தமபரி
சுத்தவஸ்துக்களுக்குள் யெகோவாவுக்கு ஒவ்
வொரு உயர்த்துநைவேத்தியத்தைச்செலுத்தவே
௩௰ ண்டும்.—ஆதலால்நீங்கள் உத்தமவஸ்துவிற்சில உ
யர்த்திப்படைத்தபின் அது சூட்டுக்களத்தின்பூர
ணத்தையும், திராட்சத்தின் ஆலையின்பூரணத்தை
௩௧ யும்போல லேவியருக்குஎண்ணப்படும்.-சேஷத்
தை நீங்களும் உங்கள் குடும்பத்தாரும் எவ்விடத்
திலும்புசிக்கலாம்: சபையின் ஆவாசப்பணிவி
டையினிமித்தம் அது உங்களுக்குச் சம்பளமா
௩௨ கும்.—இப்படி அதில் உத்தமமானதை உயர்த்
திப்படைத்தால் நீங்கள் அதினிமித்தம் பாவஞ்
சுமக்கமாட்டீர்கள்: நீங்கள் சாவாதிருக்கவேண்
டுமாகில் இஸ்ரவேல் சந்ததியாரின் பரிசுத்தவஸ்
துக்களை அசுசிப்படுத்தவேண்டாமென்று சொல்
லென்றார்.

## ௰௯. அதிகாரம்.

௧. செங்கடாரியின்சாம்பலினால் சுத்தசலம் ஆயத்
தப்படுத்தல்: ௰௧. அதனால் அசுசியுள்ளவர்க
ளைச்சுசியாக்கும்விதி.

பின்பு யெகோவா மோசேயையும்ஆரோனை ௧
யும் நோக்கி,—ஒருபொழுதும் நுகம் பூட்டப்ப ௨
டாத பழுதற்ற ஒருசுத்தசிவப்பாகியகடாரியைக்
கொண்டுவரும்படி இஸ்ரவேல் சந்ததியாருக்குச்
சொல்லுங்கள்.—அதைப் பாளயத்திற்கு வெளி ௩
யே கொண்டுவரும்படிக்கு ஆசாரியனாகிய எலீ
யேசாரிடத்திற் கொடுங்கள்; அவன் சமுகத்தி
லொருவன் அதைக்கொல்லக்கடவன்.—ஆசாரி ௪
யனாகியஎலீயேசார்தன்விரலினாலே அதின் இரத்
தத்திலெடுத்துச்சபையின் ஆவாசத்திற்குநேரே ஏ
ழுதரந்தெளிக்கக்கடவன்.—பின்பு அவன் முன் ௫
னிற்க ஒருவன் அந்தக்கடாரியை எரிக்கவேண்
டும்; அதின்தோலும்மாமிசமும்இரத்தமுஞ்சாணி
யும் எரிக்கப்படவேண்டும்.—அப்பொழுது ஆ ௬
சாரியன் ஏரஸ் கட்டையையும் ஈசோப்பையுஞ்
சிவப்புநூலையுமெடுத்துக் கடாரியை எரிக்கிற
அக்கினியில் போடக்கடவன்.—பின்பு ஆசாரி ௭
யன்தன் வஸ்திரங்களைத்தோய்த்து சலத்திலே ஸ்
நானம்பண்ணினதின்மேல் பாளயத்திற் பிரவே
சிக்கக்கடவன், ஆசாரியன்சாயங்காலபரியந்தம்
அசுசியாயிருப்பான்.—அதை எரித்தவன் தன் ௮
வஸ்திரங்களைத்தோய்த்து சலத்திலே ஸ்நானம்
பண்ணக்கடவன், சாயங்காலபரியந்தம்அசுசியா
யிருப்பான்.—சுசியாயிருக்கிறவனொருவன் அந் ௯
தக் கடாரியின்சாம்பலைப் பாளயத்திற்குப்புறம்
பே சுசியான ஒரு இடத்திலே கொட்டிவைக்
கக்கடவன். அது இஸ்ரவேல் சந்ததியின்சபை
யார் நிமித்தம் சுசிசெய்யும் சலத்தின்பொருட்டு
வைக்கப்படவேண்டும்: அது பாவத்தைப்பரிக
ரிக்கும்.—கடாரியின்சாம்பலை வாரினவன் தன் ௰
வஸ்திரங்களைத் தோய்க்கக்கடவன். அவன்சா
யங்காலபரியந்தம் அசுசியாயிருப்பான்: இது
வே யெகோவா கற்பித்த விதிப்பிரமாணத்
தின் நியமம்; இது இஸ்ரவேல் சந்ததியாருக்கும்
அவர்களுக்குள்ளே தங்குகிற பரதேசிக்கும் நித்
திய நியமமாயிருக்கும்.

ஒருமனிதனுடைய சவத்தைப்பரிசித்தவன் ஏ ௰௧
ழுநாள் அசுசியாயிருப்பான்.-அவன்மூன்றும் நா ௰௨
ளில் அதினாலே தன்னைச்சுத்திகரிக்கக்கடவன்,
ஏழாந்தினத்திற்சுசியாவான்: மூன்றாந்தினத்தில்
தன்னைச்சுத்திகரியாதிருந்தால்ஏழாந்தினத்திற் சு
சியாகான்.—மரித்தமனிதனுடைய சவத்தைப்ப ௰௩
ரிசித்தும்தன்னைச்சுத்திகரியாமல் யெகோவா
வின்ஆவாசத்தைஅசுசிப்படுத்துகிறவனெவனோ
அவன் தன்மேல்சுசிசெய்யுஞ்சலம் தெளிக்கப்
படாததினால் இன்னும் அசுசியானவனாயிருக்கி

(௨௨) அதி.௧.௫௧. லேவி.௨௨.௯. (௨௪) உபா.௰.௯. (௨௬) நெகி.௰.௩௮. (௩௧) மத்.௰.௰. லூக்.௰.௭. ௧.கொரி.௯.௰௩. ௧.தீமோ.௫.௰௭. (௩௨) லேவி.௰௯.௮. லேவி.௨௨.௨,௰௫.—(௰௯. அதி. ௨.) உபா.௨௧.௩. ௧.சாமு.௬.௭. (௩) லேவி. ௰௬.௨௭. எபி.௰௩.௰௧. (௪) லேவி.௪.௬. எபி.௯.௰௩. (௫) யாத்.௨௯.௰௪. லேவி.௪.௰௧,௰௨. (௬) லேவி.௰௪.௪,௬, ௪௯. (௭) லேவி.௰௧.௨௫. (௯) எபி.௯.௰௩. அதி.௩௧.௨௩. (௰௧) லேவி.௨௧.௧. புல.௪.௰௪. ஆகா.௨.௰௩. (௰௩) லேவி.௰௫.௩௧. வச.௩. லேவி.௭.௰௧.

றான்; அவன் அசுசியாகவே இருப்பான், அத
னால் அவன் இஸரவேலரினின்றுஞ்சேதிக்கப்ப
௰௪ டுவான்.—கூடாரத்தில் ஒருவன்மரித்தால் அக்கூ
டாரத்திற் பிரவேசிப்பவர்கள் யாவரும், அக்கூ
டாரத்திலுள்ள சகலவஸ்துக்களோடும், ஏழுநாள்
௰௫ அசுசியாயிருப்பார்கள்.—மூடிக் கட்டப்படாமல்
திறந்திருக்கும் ஒவ்வொருபாத்திரமும் அசுசியா
௰௬ யிருக்கும்: அதற்குவிதி இதுவே.—வெளியிலே
கட்கத்தால் வெட்டப்பட்டவனையாகிலும் எந்
தப்பிணத்தையாகிலும் ஒருமனிதனுடைய எலும்
பையாகிலும் பிரேதக்குழியையாகிலும் பரிசித்
தவனெவனோ அவன் ஏழுநாள் அசுசியாயிருப்
௰௭ பான்.—ஆதலால் அசுசியானவனிமித்தம் பாவத்
தைப்பரிகரிக்கும் தகனிக்கப்பட்ட கடாரியின்
சாம்பலை ஒரு பாத்திரத்திலிட்டு அதில் ஊற்றுச்
௰௮ சலத்தை வார்க்கவேண்டும்.—சுசியானவனொரு
வன் ஒரு ஈசோப்பின்கிளையையெடுத்து அந்தச்
சலத்திலே தோய்த்துக் கூடாரத்தின் மேலும் அ
திலுள்ள சகல பாத்திரங்கள் மேலும், அங்கிருந்
த யாவர்மேலும் எலும்பையாகிலும் வெட்டுண்
டவனையாகிலும், பிணத்தையாகிலும் பிரேதக்கு
ழியையாகிலும் பரிசித்தவன்மேலுந் தெளிக்கக்
௰௯ கடவன்.—சுசியானவன், அசுசியானவன் மேல்
மூன்றாம் நாளிலும் ஏழாம் நாளிலுந் தெளிக்க
வேண்டும். ஏழாம்நாளில் இவன்தன்னைப்பரிகரி
த்துத்தன்வஸ்திரங்களைத்தோய்த்துச்சலத்திலேஸ்
நானம்பண்ணிச்சாயங்காலத்திலேசுசியாவான்.-
௨௰ அசுசியானவனொருவன் தன்னைப் பரிகரியாதி
ருந்தால், அவன் யெகோவாவின் பரிசுத்தஸ்
தானத்தை அசுசிப்படுத்தினதினிமித்தம் சபை
யின் மத்தியினின்றும் சேதிக்கப்படுவான்: சுசி
செய்யுஞ் சலம் அவன்மேலே தெளிக்கப்படாத
௨௧ தினால் அவன் அசுசியாகவே இருப்பான்.—சுசி
செய்யுஞ்சலத்தைத்தெளிக்கிறவன்தன்வஸ்திரங்
களைத் தோய்க்கவேண்டும்; சுசிசெய்யுஞ் சலத்
தைப்பரிசிக்கிறவன் சாயங்காலபரியந்தம் அசுசி
௨௨ யாயிருப்பான்.—அசுசியானவன் பரிசித்தவை
யெல்லாம்அசுசியாகும்; அதைப்பரிசித்தவன்சா
யங்காலபரியந்தம் அசுசியாயிருப்பான்: இதுநித்
தியநியமமென்றார்.

## ௨௰. அதிகாரம்.

௧. மிரியம் மரித்தல்: ௨. இஸரவேல் சந்ததியார் மொறு மொறுத்தல்: ௭. மோசேதண்டத்தினால் மலையை அடிக்க அதினின்றுஞ் சலம்புறப்படல்: ௰௪. ஏதோம்தேசத்துவழியாய்ப்போகும்படிமோசேவேண்டல்: ௨௨. ஓர்மலையில் ஆரோன்தன் ஆசாரியத்துவத்தைத் தன்புத்திரனிடத்தில் ஒப்பித்துமரித்தல்.

இஸரவேல் சந்ததியாரின் சமஸ்த சபையாரும்
முதலாம்மாதம் சீன் வனத்திற் சேர்ந்து காதேஷி
லே தங்கி இருக்கையில் மிரியம் மரித்து அங்கே
யடக்கம்பண்ணப்பட்டாள்.
அவ்விடத்திலே சபையார், தங்களுக்குத்தண் ௨
ணீர்கிடையாததினால் மோசேக்கும் ஆரோனுக்
கும் விரோதமாகக் கூட்டங்கூடினார்கள்.—சனங் ௩
கள் மோசேயுடன் முறையிட்டு, எங்கள் சகோ
தரர் யெகோவாவின் சந்நிதியில் மாய்ந்து
போனபொழுது, நாங்களும் மாய்ந்துபோனால்,
நலமே.—நாங்களும் எங்கள்மிருகங்களும் இங் ௪
கே சாகும்படி நீங்கள் யெகோவாவின்சபை
யை இந்த வனாந்தரத்திலே கொண்டுவந்ததென்
ன.—விதைப்பும் அத்திமரமுந் திராட்சக்கொ ௫
டியும் மாதுளமரமும் குடிக்கத்தண்ணீருமில்லா
த இந்தக்கெட்ட இடத்தில் எங்களைக்கொண்டு
வரும்படி நீங்கள் எங்களைஎகிப்து தேசத்தினின்
று புறப்படுத்தியதென்னவென்றார்கள்.-அப்பொ ௬
ழுது மோசேயும் ஆரோனுஞ் சபையின்சமுகத்
தைவிட்டுச்சபையின் ஆவாசவாசலிற்போய் மு
கங்குப்புறவிழுந்தார்கள்: யெகோவாவின் ம
கிமை அவர்களுக்குப்பிரகாசமாய்த்தோன்றிற்று.
யெகோவா மோசேயை நோக்கி,—நீ உன் ௭
கோலைஎடுத்துக்கொண்டு, நீயும் உன்சகோதரனா ௮
கிய ஆரோனுஞ் சபையாரைக் கூடிவரும்படி
செய்து, அவர்கள் கண்ணுக்குமுன்னே கல்மலை
யைப்பார்த்துப்பேசு; அப்பொழுது அதுதன்னி
டத்துள்ளதண்ணீரைத்தரும்: இப்படி நீ அவர்க
ளுக்கு, கல்மலையிலிருந்து தண்ணீர் பாயும்படி
செய்து, சபையாருக்கும் அவர்கள் மிருகங்களுக்
குங் குடிக்கக்கொடுவென்றார்.—மோசே தனக்கு ௯
யெகோவா இட்டகட்டளைப்படி யெகோ
வாவின் சந்நிதியிலிருந்த கோலைஎடுத்தான்.—
மோசேயும் ஆரோனுஞ் சபையாரைக்கல்மலைக் ௰
குமுன்பாகக்கூடிவரச்செய்தார்கள். அப்பொழு
து மோசே அவர்களைநோக்கி, கலகக்காரரே, கே
ளுங்கள், இந்தக்கன்மலையினின்றும் உங்களுக்
குத்தண்ணீர் புறப்படப்பண்ணுவோமாவென்று
சொல்லி.—தன்கையை ஓங்கிக்கன்மலையைக்கோ ௰௧
லினால் இரண்டுதரம் அடித்தான்: உடனே அதி
னின்றும் தண்ணீர் மிகுதியாய்ப்புறப்பட, சபை
யார்குடித்தார்கள், அவர்கள் மிருகங்களுங்குடித்
தன.—பின்பு யெகோவா மோசேயையும் ஆ ௰௨
ரோனையும்நோக்கி, நீங்கள் இஸரவேல்சந்ததியா
ரின் பார்வைக்கு என்மகிமை பிரகாசிக்கப்பண்
ணும்பொருட்டுநீங்கள் என்னைவிசுவாசிக்கவில்
லை. ஆதலால்இந்தச்சபையாருக்குநானளித்ததே
சத்திற்கு நீங்கள் இவர்களைக்கொண்டுபோகவி
டேனென்றார்.-இஸரவேல்சந்ததியார்யெகோ ௰௩
வாவுடன் முறையிட்டதினால், அதுமேரிபாசல
மென்னப்பட்டது,அங்கே அவர்அவர்களுக்குள்
ளே பரிசுத்தரென்றுமதிக்கப்பட்டார்.

(௰௫) லேவி.௰௧.௩௨. (௰௭) வச.௯. ஆதி.௨௬.௰௯. (௰௮) சங்.௫௧.௭. (௰௯) லேவி.௰௪.௯. (௨௨) ஆகா.௨.௰௩.—(௨௰. அதி. ௧.) அதி.௩௩.௩௬. யாத்.௰௫.௨௰. (௨) யாத்.௰௭.௧. அதி.௰௬.௰௯,௪௨. (௩) யாத்.௰௭.௨. அதி.௰௧.௧, ௩௩. (௪) யாத்.௰௭.௩. (௬) அதி.௰௪.௰. (௮) யாத்.௰௭.௫. நிகி.௯.௰௫. சங்.௭௮.௰௫,௰௬. ஏசா.௪௩.௨௰. ஏசா.௪௮. ௨௧. (௯) அதி.௰௭.௰. (௰௧) யாத்.௰௭.௬. ௧.கொரி.௰.௪. (௰௨) லேவி.௰.௩. ௧.பேதுரு.௩.௰௫. (௰௩) உபா.௩௩.௰. சங்.௯௫.௮.

௰௪ பின்பு மோசே காதேஷிலிருந்து ஏதோமின்
இராசனிடத்திலேதூதர்களைஅனுப்புகையில்,
எங்களுக்குநேரிட்ட கிலேசங்களெல்லாவற்றை
௰௫ யும், அறிந்திருக்கிறீர்.—எங்கள் பிதாக்கள் எகிப்
துக்குப்போனார்கள். நாங்கள் நெடுநாள் அந்த
எகிப்திலேவாசம்பண்ணினோம். எகிப்தியர் எங்
களையும் எங்கள் பிதாக்களையும் உபத்திரவப்படுத்
௰௬ தினார்கள்.–நாங்கள் யெகோவாவைநோக்கி,
ஓலமிட்டோம். அவர் எங்களுக்குச்செவிகொ
டுத்து ஒரு தூதனையனுப்பி எங்களை எகிப்தினின்
றும் புறப்படச்செய்தார். இப்பொழுது நாங்கள்
உமது எல்லைக்குட்பட்ட காதேஷூரில் வந்திருக்
௰௭ கிறோம்.—நாங்கள் உம்முடைய தேசத்தின் வழி
யாய்க்கடந்து செல்லும்படிக்கு இடங்கொடும்:
வயல்வெளிகளின் வழியாயுந் திராட்சத்தோட்
டங்களின் வழியாயும் நாங்கள் செல்லாமலும்,
துரவுகளின் தண்ணீரைக்குடியாமலும், இராச
பாதையாகவே நடந்து உமது எல்லையைக்கடந்
துபோமட்டும் வலப்புறம் இடப்புறம் சாயாமற்
போவோமென்பதாக உம்முடைய சகோதரனா
கிய இஸரவேல்சொல்லுகிறானென்பதை சொல்
௰௮ லும்படி அவர்களையனுப்பினான்.—ஏதோமின்
இராசன், நீ என் தேசத்தின் வழியாய்க் கடந்
து செல்லலாகாது; சென்றாற்கட்கத்தோடே உ
னக்கெதிராகப்புறப்படுவேனென்று, அவனுக்
௰௯ குச்சொல்லச்சொன்னான்.—இஸரவேல் சந்ததி
யார் அவனைநோக்கி, பெரியபாதையில் நடந்து
போவோம்; நாங்களும் எங்கள்மிருகங்களும்
உன் தண்ணீரைக்குடித்தால், அதற்கு விலைகொ
டுப்போம்:வேறொன்றுஞ்செய்யாமல் கால்நடை
யாகமாத்திரம் நடந்துபோகிறோமென்றார்கள்.–
௨௰ அவன்,நீகடந்துபோகவேண்டாமென்றான்.பின்
பு ஏதோம் தன்கைவல்லபத்துடன் வெகுசனங்
களோடும் அவனுக்கு விரோதமாகப் புறப்பட்
௨௧ டான்.-இப்படி ஏதோம்,தன்னெல்லைவழியாய்ப்
போகும்படி இஸரவேலருக்கு உத்தரவுகொடா
மல் மறுத்தான்: ஆதலால் இஸரவேலர் அவனை
விட்டுவிலகினார்கள்.
௨௨ இஸரவேல்சந்ததியாரின் சமஸ்தசபையாருங்
காதேஷைவிட்டுப்பிரயாணப்பட்டு ஓர் என்னும்
௨௩ மலைக்குப்போனார்கள்.—ஏதோம்தேசத்தின்ஓரத்
திலுள்ள ஓர்மலையில் யெகோவா மோசேயை
௨௪ யும் ஆரோனையும்நோக்கி,–ஆரோன் தன் பிதாக்
களுடன் சேர்க்கப்படுவான். மேரிபாசலசமீபத்
தில் என் கட்டளையை மீறினபடியினால் இஸர
வேல்சந்ததியாருக்கு நானளித்ததேசத்தில் அவ
௨௫ னைப்பிரவேசிக்கவிடேன்.—நீ ஆரோனையும் அ
வன் புத்திரனாகிய எலீயேசாரையுங் கூட்டிக்
கொண்டு அவர்களை ஓர்மலையிலேறப்பண்ணி,–
௨௬ ஆரோனின்வஸ்திரங்களைக்கழற்றி, அவைகளை
அவன்புத்திரனாகிய எலீயேசாருக்குத்தரிப்பாய்:
ஆரோன் அங்கேமரித்துத்தன் பிதாக்களுடன்
சேர்க்கப்படுவான் என்றார்.–யெகோவா கட் ௨௭
டளையிட்டபிரகாரம் மோசே செய்தான்: அவர்
கள் சமஸ்தசபையின் சமுகத்திலும் ஓர் மலையி
லேறினார்கள்.—அங்கே ஆரோனின் வஸ்திரங்க ௨௮
ளை மோசேகழற்றி, அவைகளை அவன் புத்திரனா
கிய எலீயேசாருக்குத்தரித்தான்; ஆரோன் அங்
கே அந்தமலையின் உச்சியிலே மரித்தான். பின்பு
மோசேயும் எலீயேசாரும் மலையைவிட்டிறங்கி
னார்கள்.–ஆரோன் இறந்துபோனானென்று சபை ௨௯
யாரெல்லாரும் அறிந்தபொழுது இஸரவேல்வமி
சத்தாரெல்லாரும் ஆரோனுக்காக முப்பதுநாள்
துக்கங்கொண்டாடினார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧. ஓர்மாவின் கானானியரை நாசப்படுத்தல்: ௪. மொறுமொறுத்ததினிமித்தம்அக்கினிமயமானசருப்பங்கள்அனுப்பப்படல்: ௭. பித்தளைச்சருப்பத்தைத் தரிசித்ததினால் சொஸ்தமடைதல்:௰. இஸரவேலர்பிரயாணஞ்செய்தல்:௨௧. சீகோன் இராசாவையும் ஒகு இராசாவையுஞ்சயித்தல்.

அத்தாரிமூரின்வழியாய் இஸரவேலர்வருகிறார் ௧
களென்று தெற்கிலுள்ள கானானியனாகிய அராத்
இராசாகேட்டு இஸரவேலருக்கு விரோதமாகயுத்
தம்பண்ணி, அவர்களிற் சிலரைச் சிறைபிடித்
துக்கொண்டுபோனான்.-அப்பொழுது இஸரவே ௨
லர் யெகோவாவுக்குச் சங்கற்பம்பண்ணி அ
வரைநோக்கி, நீர் இந்தச்சனங்களை எங்கள் கை
யில் ஒப்பித்தால்,நாங்கள் அவர்களுடைய நகரங்
களைநிருமூலமாக்குவோமென்றுசொல்ல;—யெ ௩
கோவா இஸரவேலரின் சத்தத்திற்குச் செவி
கொடுத்து, அவர்கள்கையில் கானானியரை ஒப்
பித்தார்; அப்பொழுது இவர்கள் அவர்களையும்,அ
வர்கள் நகரங்களையும் நிருமூலப்படுத்தினார்கள்:
அந்தஸ்தானத்திற்கு ஓர்மாவென்று பேரிட்டார்
கள்.—அவர்கள் ஏதோம்தேசத்தைச்சுற்றிப்போ ௪
கும்படி ஓர்மலையினின்று செங்கடற்கரைவழி
யாய்ப்பிரயாணஞ்செய்தார்கள்: வழியினிமித்தம்
சனங்கள் மிகவும் மனக்கிலேசமடைந்தார்கள்.—
சனங்கள், யெகோவாவுக்கும் மோசேக்கும் ௫
விரோதமாக, நாங்கள் வனாந்தரத்திலே சாகும்ப
டி நீங்கள் எங்களை எகிப்துதேசத்தினின்றும்புறப்
படுத்தியதென்ன, எங்களுக்கு அன்னமுமில்லை,
சலமுமில்லை, இந்தச்சிற்றுணவை எங்கள் மனம்
அரோசிக்கின்றதென்றுசொன்னார்கள்.-அப்பொ ௬
ழுது யெகோவா அக்கினிச்சருப்பங்களைச்ச
னங்களுக்குள்ளே அனுப்ப, அவைகள் சனங்க
ளைக்கடித்தன: அதனால் இஸரவேலருக்குள்ளே
அநேகசனங்கள் மரித்தார்கள்.
அதினால் சனங்கள்மோசேயினிடத்தில்போய் ௭

(௰௪)நியா.௰௧.௰௬,௰௭. ஒப.௰,௰௨. யாத்.௰௮.௮.(௰௫)ஆதி.௪௬.௬. யாத்.௰௨.௪௰. யாத்.௧.௰௧,(௰௬)யாத்.௨.௨௩. யாத். ௩.௨. யாத்.௰௪.௰௯. யாத்.௨௩.௨௰. யாத்.௩௩.௨. (௰௯) உபா.௨.௬,௨௮. (௨௰)நியா.௰௧.௰௭.(௨௪)வச.௰௨.(௨௫)உபா. ௩௨.௫௰. (௨௮) யாத்.௨௯.௨௯,௩௰. அதி.௩௩.௩௮. (௨௯) உபா.௩௪.௮.—(௨௧. அதி. ௧.) அதி.௩௩.௪௰. நியா.௧.௰௬. அதி.௰௩.௨௧. (௨) ஆதி.௨௮.௨௨. நியா.௰௧.௩௧. லேவி.௨௭.௨௮. (௪) அதி.௨௰.௨௨. நியா.௰௧.௰௮. யாத்.௬.௯. (௫) யாத்.௰௬.௩. (௬) ௧.கொரி.௰.௯. உபா.௮.௰௫. (௭) யாத்.௮.௮,௨௮. ௧.சாமு.௰௨.௰௯. ௧.இரா.௰௩.௬. அப்.௮.௨௪.

நாங்கள் யெகோவாவுக்கும் உமக்கும் வி
ரோதமாய்ப்பேசிப் பாவஞ்செய்தோம்;சருப்பங்
கள் எங்களைவிட்டு நீங்கும்படி யெகோவா
வைப் பிரார்த்திப்பீராகவென்றுசொல்ல,மோசே
சனங்களினிமித்தம் பிரார்த்தனைபண்ணினான்.—
௮ யெகோவா மோசேயைநோக்கி, நீ ஒரு பித்
தளைச் சருப்பத்தைச்செய்து, அதை ஒரு கம்பத்
தின்மேலிடுவாய்: கடிபட்டவனெவனோ அவன்
௯ அதைப்பார்த்தால் பிழைப்பான் என்றார்.—அப்
படியேமோசே ஒருபித்தளைச்சருப்பத்தைச்செய்
து, அதை ஒரு கம்பத்தின்மேலிட்டான்; சருப்
பத்தினால் கடிபட்டவன் அந்தப்பித்தளைச்சருப்
பத்தைப்பார்க்கப் பிழைப்பான்.
௰ பின்பு இஸரவேல் சந்ததியார் பிரயாணப்பட்
௰௧ டு ஓபோத்திற் பாளயமிறங்கினார்கள்.—ஓபோத்
தினின்றும் பிரயாணம்பண்ணிச்சூரியனுதிக்கிற
திசைக்குநேராய் மோவாபுக்கெதிரான வனாந்த
ரத்திலுள்ள அபாரீமின் மேடுகளிற் பாளயமிறங்
௰௨ கினார்கள்.—அங்கேநின்றும் பிரயாணம்பண்ணிச்
சாரேத் என்னுந்தாழ்ந்த பூமியிலே பாளயமிறங்
௰௩ கினார்கள்.—அங்கேநின்றும் பிரயாணம்பண்ணி
எமோரியருடைய எல்லையில்நின்றுந் தோன்றும்
வனாந்தரத்திலுள்ள அர்னோனின்கரையிற்பாளய
மிறங்கினார்கள்:அந்த அர்னோன்மோவாபினெல்
லை, அது மோவாபியருக்கும் எமோரியருக்கும்
௰௪ நடுவேயுள்ளது.—அதினால்சூப்பாவிலுள்ளவாபும்
௰௫ அர்னோன் ஆற்றுக்கால்களும்,—மோவாபினுடை
ய எல்லையைச்சார்ந்த அர் என்றதலத்திற்குப்பா
யும்நீரோடையும்என்னும்வசனம்யெகோவா
வினுடைய யுத்த புத்தகத்திலெழுதியிருக்கின்ற
௰௬ து.—அங்கேநின்றும்பேருக்குப்போனார்கள்: அதி
லுள்ளகிணற்றைக்குறித்துயெகோவாமோசே
யைநோக்கிச் சனங்களைக்கூடிவரச்செய். அவர்
களுக்குத் தண்ணீர்கொடுப்பேனென்று சொன்
௰௭ னார்.-அப்பொழுது இஸரவேலர்,கிணறே, ஊறு;
௰௮ அதைக்குறித்துப்பாடுங்கள்.—அதிபதிகள் கிணற்
றைத்தோண்டினார்கள், குலபதிகள்தங்கள்கோல்
களினால்நியாயாதிபதிவிதியபிரகாரம்அதைத்
தோண்டினார்கள் என்னும் இந்தப்பாட்டைப்பா
டினார்கள்.வனாந்தரத்தினின்று மத்தானாவுக்கும்:-
௰௯ மத்தானாவில்நின்று நகாலியேலுக்கும்: நகாலியே
லினின்று பாமோத்துக்கும்:மோவாபின்வெளியி
லுள்ள பாமோத்தினின்று யெஷீமோனைநோக்
கும் பிஸ்காவின் உச்சிக்கும் போனார்கள்.
௨௰ அப்பொழுது இஸரவேலர் எமோரியருடைய
௨௧ இராசாவாகிய சீகோனிடத்தில்,—உமதுதேசத்
தின்வழியாய்ச்செல்லவிடும்; நாங்கள் வயல்வெ
ளிகளிலுந் திராட்சத் தோட்டங்களிலும் புக
மாட்டோம். துரவுகளின் தண்ணீரைக்குடிக்க
௨௨ வுமாட்டோம்:—உமது எல்லையைக் கடக்கும்வ
ரைக்கும் இராசபாதையில் நடந்து போகிறோ
மென்று சொல்லும்படி தூதர்களை யனுப்பினார்

கள்.—சீகோன் தன்னுடைய எல்லையின்வழி ௨௩
யாய்ச்செல்லும்படி இஸரவேலரைவிடவில்லை:
சீகோன் தன் சனங்களெல்லாரையுங்கூடிவரும்
படிசெய்து இஸரவேலருக்கு விரோதமாய் வனா
ந்தரத்திலே புறப்பட்டு யாகஸ்என்னுமிடத்திற்
சேர்ந்து இஸரவேலருக்குவிரோதமாயுத்தஞ்செய்
தான்.—அப்பொழுது இஸரவேலர் அவனைக்கட் ௨௪
கத்தின் வாயினால் முறிய அடித்து அர்னோன்
தொடங்கி அம்மோன்புத்திரருடையதேசத்தைச்
சார்ந்த யாப்போக்வரைக்குமுள்ள அவனுடை
யதேசத்தைத்தங்கள் வசப்படுத்தினார்கள்: அம்
மோன் புத்திரருடைய எல்லை அரணுள்ளதாயி
ருந்தது.—இஸரவேலர் அந்தநகரங்கள் யாவை ௨௫
யும்பிடித்து எஷ்போனிலேயும் அதைச்சேர்ந்த
கிராமங்களெல்லாவற்றிலேயும் எமோரியருடை
யமற்றநகரங்களெல்லாவற்றிலேயும் வாசம்பண்
ணினார்கள்.—எஷ்போனானது,மோவாபருடைய ௨௬
முந்தின இராசனுக்குவிரோதமாயுத்தம்பண்ணி,
அர்னோன்வரைக்குமுள்ள அவனுடைய தேசம்
முழுவதையும் அவன் கையினின்றும் பற்றிய எ
மோரியரின்இராசனாகியசீகோனுடைய நகரம்.-
அதினாலே புலவர் எஷ்போனுக்கு வாருங்கள், ௨௭
சீகோனுடைய நகரந் திரும்பக் கட்டித் திடப்
படுத்தப்படுவதாக.—எஷ்போனிலிருந்து அக்கி ௨௮
னியுஞ் சீகோனுடைய நகரத்திலிருந்து சுவா
லையும் புறப்பட்டு மோவாபுடைய அரூரையும்
அர்னோனுடைய உயர்ந்தஸ்தானங்களின்நாயன்
மாரையும் பட்சித்தன.—ஐயோ மோவாபே, கி ௨௯
மோஷின் சனங்களே, நீங்கள் நாசமானீர்கள்.
தப்பி ஓடினபுத்திர புத்திரிகளையும் எமோரியரா
சனாகிய சீகோனுக்குச்சிறைகளாக ஒப்புக்கொ
டுத்தான்.—அவர்களை எய்துபோட்டோம்; எஷ் ௩௰
போன் தீபோன்பரியந்தம் நாசமாயிற்று, மே
தேபாமட்டுமுள்ள நோபாபரியந்தம் அவர்க
ளைப்பாழாக்கினோமென்றுபாடியிருக்கிறார்கள்.—
இஸரவேலர் இப்படியே எமோரியருடையதே ௩௧
சத்தில் வசித்தார்கள்.—பின்பு மோசே யாசேர் ௩௨
நகரத்திற்கு வேவுபார்க்கிறவர்களை அனுப்பி
னான். அவர்கள் அதைச்சேர்ந்த கிராமங்களைப்
பிடித்து அங்கிருந்த எமோரியரைத் துரத்திவிட்
டார்கள்.—பின்பு திரும்பிப்பாஷான்வழியாய்ச் ௩௩
செல்லப் பாஷான் இராசாவாகிய ஓகு தன்சமஸ்
த சனங்களோடும் அவர்களுக்கு விரோதமாக
யுத்தம்பண்ணும்படி எத்ரேயிக்குப் புறப்பட்டு
வந்தான்:—அப்பொழுது யெகோவா மோ ௩௪
சேயைநோக்கி, அவனுக்குப் பயப்படவேண்
டாம்: அவனையும் அவனுடையசனங்களெல்லா
ரையும், அவனுடையதேசத்தையும், உன்கையி
லொப்புத்தந்துவிட்டேன்; எஷ்போனில்வசித்த
எமோரிய இராசாவாகிய சீகோனுக்குச்செய்த
பிரகாரம் இவனுக்குஞ்செய்வாயென்றார்.—அப் ௩௫
படியே உயிருடன் ஒருவரும் மீதியாயிராதபடி

(௯) ௨.இரா.௰௮.௪. யோவா.௩.௰௪,௰௫. (௰௬) நியா.௯.௨௧. (௰௭) யாத்.௰௫.௨. (௰௮) எசா.௩௩.௨௨. (௨௪) உபா.௨.௩௩. யோசு.௰௨.௧,௨. நிகி.௯.௨௨. ஆமோ.௨.௯. (௨௮) எரே.௪௮.௪௫,௪௬. எசா.௰௫.௧. (௨௯) நியா.௰௧.௨௪. ௧.இரா.௰௧.௭,௩௨. ௨.இரா௨௩.௰௩. எரே.௪௮.௭,௰௩. (௩௪) உபா.௩.௨. (௩௫) உபா.௩.௩,௪.

அவனையும், அவன் புத்திரரையும், அவனுடைய எல்லாச்சனங்களையுஞ் சங்கரித்து, அவனுடையதேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டார்கள்.

## உஉ. அதிகாரம்.

க. பிலியாமிடத்தில் பாலாக் தூதனையனுப்பல்: ௰ரு. இரண்டாந்தூதனையனுப்பப்பிலியாம்போகச்சம்மதித்தல்: உஉ. பிலியாமைத்தடைப்படுத்தத் தேவன் தூதனையனுப்பல்: ஙசு. பாலாக்பிலியாமை உபசரித்தல்.

பின்பு இஸரவேல் சந்ததியார் பிரயாணப்பட்டு யெரிகோசமீபத்திலுள்ள யோர்தானுக்கு இக்கரையைச்சேர்ந்த மோவாபின் சமபூமியிலே பாளயமிறங்கினார்கள்.

உ இஸரவேலர் எமோரியருக்குச்செய்தயாவையும் சிப்போருடைய புத்திரனாகிய பாலாக் கண்
ங டான்.—சனங்கள் மிகுதியானபடியினாலே மோவாபு அவர்களுக்கு மிகவும் பயந்தான், இஸரவேல் சந்ததியாரைக்குறித்து மோவாபு மனமடி
ச வானான்.—மோவாபு மீதியானின் முதியோரை நோக்கி, மாடு வெளியிலுள்ள புல்லைப்பட்சிக்கிறதுபோல இப்பொழுது இந்தக்கூட்டம் நம்மைச் சுற்றியிருக்கிறயாவையும் பட்சித்துவிடுமென்றான். அக்காலத்திலே சிப்போரின் புத்திரனாகிய பாலாக் மோவாபருக்கு இராசனாயிருந்
ரு தான்.—அவன் தன் சந்ததியாருடைய தேசத்திலே நதியருகேயுள்ள பெதோரில், எகிப்தினின்றும் ஒரு சனத்திரள் வந்திருக்கின்றது. அவர்கள் பூமியின் முகத்தை மூடிக்கொண்டு எனக்
சு கெதிரே இறங்கியிருக்கிறார்கள்.—அவர்களோ என்னிலும் பலவான்கள்: நீர் ஆசீர்வதிக்கிறவனெவனோ அவனே ஆசீர்வதிக்கப் பட்டவன்; நீர் சபிக்கிறவனெவனோ அவனே சபிக்கப்பட்டவன்; ஆதலால் நீர் என்னிமித்தம்வந்து, அந்தச் சனங்களைச் சபிக்கும்படி உம்மைவேண்டுகிறேன்: அப்போதுநான் அவர்களை முறிய அடித்து அவர்களை இத்தேசத்தினின்றுந்துரத்திச்சயங்கொள்ளக்கூடுமென்று பேயோருடைய புத்திரனாகியபிலியாமுக்குச்சொல்லி அவனையழைத்து
எ வரும்படிதூதர்களையனுப்பினான்.—அப்படியே மோவாபின்முதியோரும், மீதியானின்முதியோரும், மாந்திரிகத்திற்குத் தட்சணையுங் கையிலெடுத்துக்கொண்டு புறப்பட்டு, பிலியா மிடத்திற்சேர்ந்து, பாலாக்சொன்ன வாக்குகளையவனுக்
அ குத்தெரிவிக்க,—அவன் அவர்களைநோக்கி, இராத்திரிக்கு இங்கே தங்கியிருங்கள். யெகோவா எனக்குச்சொல்லும்பிரகாரம் உங்களுக்குத்தரங் கொடுப்பேனென்றான்: அப்படியே மோவாபின்பிரபுகள் பிலியாமிடத்தில் தங்கினார்கள்.—
கூ அப்பொழுது தேவன் பிலியாமுக்குத்தோன்றி, உன்னிடத்திலிருக்கிற இந்தமனிதர்கள் ஆ
௰ ரென்றுகேட்க;—பிலியாம் தேவனைநோக்கி, மோவாபு இராசனும் சிப்போரின் புத்திரனுமாகி
ய பாலாக்,—பூமியின்முகத்தை மூடும் ஒருசனத் ௰க
திரள் எகிப்தினின்றும்வந்திருக்கின்றது: ஆகையால் நீர்வந்து என்னிமித்தம் அவர்களைச்சபிக்கவேண்டும்; நான் அவர்களுக்கு விரோதமாகயுத்தம்பண்ணி அவர்களைத்துரத்திச்செயங் கொள்ளவுங் கூடுமென்று சொல்லியனுப்பி யிருக்கிறானென்றான்.—அதற்குத் தேவன் பிலியாமை ௰உ
நொக்கி, நீ அவர்களுடன் போகவேண்டாம். அந்தச் சனங்களோ ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்: ஆகையால் நீ அவர்களைச் சபிக்கவேண்டாமென்றார்.—பிலியாம் அதிகாலையிலெழுந்து பாலாக் ௰ங
அனுப்பியபிரபுகளைநோக்கி, நான் உங்களுடன் கூடவருகிறதற்கு யெகோவா எனக்குத்தரவு கொடுக்கவில்லை: நீங்கள் உங்கள் தேசத்திற்குப் போய்விடுங்களென்றான்.-அப்படியேமோவாபி ௰ச
யருடைய பிரபுகள் எழுந்துபாலாக்கினிடத்திற் போய் பிலியாம் எங்களுடனே வரமாட்டேனென்கிறானென்றுசொல்ல;

பாலாக் திரும்பவும் அவர்களிலுமதிக கனம் ௰ரு
பெற்றபிரபுகளை அனுப்பினான்.—அவர்களும்பி ௰சு
லியாமைச்சேர்ந்து அவனைநோக்கி, சிப்போரின் புத்திரனாகியபாலாக், நீர் என்னிடத்தில்வருகிறதற்குத்தடைப்படவேண்டாம்.—நான் மிகவும் ௰எ
உம்மைமேன்மைப்படுத்திவைப்பேன்; நீர்சொல்வதெதுவோ அதைச்செய்வேன்: என்னிமித்தம் நீர்வந்து அந்தச்சனங்களைச் சபிக்கும்படி உம்மை வேண்டுகிறேனென்று சொல்லுகிறானென்றார்கள்.—பிலியாம் பாலாக்கின்தாசரைநோக்கி, ௰அ
ஒரு சிறியகாரியத்தையாகிலும் பெரியகாரியத்தையாகிலும் நான்செய்யும்படிக்கு, பாலாக் தன் வீடுநிறைய வெள்ளியையும் பொன்னையுமெனக்குக்கொடுத்தாலும் நான் என் தேவனாகிய யெகோவாவின் கட்டளையைமீறமாட்டேன்.—
ஆகிலும் இனிமேல் யெகோவா எனக்கென் ௰கூ
னசொல்லுகிறாரென்றறிவேன்; நீங்களும் இராத்திரிக்கு இங்கே தங்கியிருங்களென்றான்.—இர உ௰
விலே தேவன் பிலியாமுக்குத்தோன்றி, அவனைநோக்கி, அந்தமனிதர்கள் உன்னையழைக்க வந்தால், நீ எழுந்து அவர்களுடனேகூடிப்போ; ஆனாலும் நான் உனக்குச்சொல்லும்வாக்கின்படியே நீசெய்யவேண்டுமென்றார்.-பிலியாம்அதிகா உக
லையில்எழுந்துதன்கழுதையின்மேற் சேணங்கட்டி மோவாபின்பிரபுகளுடனேகூடிப்போனான்.

அவன்போனபடியினாலே யெகோவாவின் உஉ
கோபமூண்டது. பின்பு யெகோவாவின் தூதனொருவன் வழியில் அவனுக்கு விரோதியாய் நின்றான். இவன் தன் கழுதையின்மேலேறிக்கொண்டு தன் பணிவிடைக்காரரிருவருடன் செல்லுகையில்,—யெகோவாவின் தூ உங
தன் உருவின கட்கத்தைக் கையிற் பிடித்துக்

---

(உஉ. அதி. உ.) நியா.௰க.உரு. (ங) யாத்.௰ரு.௰ரு. (ச) யோசு.௰ங.உக. (ரு) அதி.உங.எ. உபா.உங.ரு. (சு) அதி. உங.எ. உபா.உங.ச. யோசு.௰ங.உஉ. நிகி.௰ங.க. மீகா.சு.ரு. உ.பேதுரு.உ.௰ரு. யூதா.௰க. வெளி.உ.௰ச. (எ) க.சாமு.கூ.எ,அ. (கூ) ஆதி.உ௰.ங. (௰உ) ரோ.௰க.உகூ. (௰அ) க.இரா.உஉ.௰ச. உ.நாளா.௰அ.௰ங. (உ௰) அதி.உச. ௰உ. (உஉ) யாத்.ச.உச. (உங) உ.இரா.சு.௰எ. தானி.௰.எ. அப்.உஉ.கூ. உ.பேதுரு.உ.௰சு. யூதா.௰க.

கொண்டு வழியிலே நிற்பதைக் கழுதைகண்டது: அதனால் கழுதைவழியை விட்டுவிலகிவயலிலேபோயிற்று: பிலியாம் கழுதையைவழிக்குத்
உச திருப்பும்படி அடித்தான்.—யெகோவாவின் தூதன் இருபுறத்திலுஞ் சுவர்வைத்திருந்ததிராட்சத்தோட்டத்தின் பாதையிலேபோய்நின்றான்.—
உரு கழுதை யெகோவாவின் தூதனைக் கண்டு சுவர் ஓரமாயொதுங்கிப் பிலியாமினுடைய காலைச் சுவரோடே நெருக்கிற்று: திரும்பவும் அ
உசு தை அடித்தான்.—அப்பொழுது யெகோவாவின் தூதன் சற்று அப்பாற்போய் வலப்புறம் இடப்புறம் விலக இடமில்லாத ஒருநெருங்கிய
உஎ இடத்திலே நின்றான்.—யெகோவாவின் தூதனைக் கழுதைகண்டு பிலியாமோடே விழுந்தது: அப்பொழுது பிலியாம் கோபம்மூண்டுகழு
உஅ தையைத் தன் கோலாலே அடித்தான்.—உடனே யெகோவா கழுதையின்வாயைத்திறக்க, அது பிலியாமைநோக்கி, நீ என்னை இப்பொழுது மூன்றுதரம் அடிக்கும்படி நான் உனக்கென்
உக னசெய்தேன் என்றது.—அப்பொழுது பிலியாம் கழுதையைப்பார்த்து, நீ என்னைப்பரிகாசம்பண்ணிக்கொண்டுவருகிறபடியால் என்கையிலொரு கத்தியிருந்தால், இப்பொழுதே உன்னைக்கொன்
௩௰ றுபோடுவேனென்று சொல்ல;—கழுதை பிலியாமைநோக்கி, நீ என்னைக்கைக்கொண்ட காலம் முதல்இந்நாள்வரைக்கும்உன்னைச்சுமந்த உன்கழுதைநானல்லவா. இப்படியுனக்குஎப்போதாகிலுஞ்செய்ததுண்டாவென்றது. அதற்கவன் இல்
௩க லை யென்றான்.—அப்பொழுது யெகோவா பிலியாமுடைய கண்களைத் திறக்க அவன் யெகோவாவின் தூதன் உருவின கட்கத்தைக் கையிற் பிடித்துக்கொண்டு வழியிலே நிற்கிறதைக்கண்டு தாழ்ந்துவணங்கி முகங்குப்புறவி
௩உ ழுந்தான்.—யெகோவாவின் தூதன் அவனை நோக்கி, நீ உன் கழுதையை இப்பொழுது மூன்றுதரம் அடித்ததென்ன; உன் வழியெனக்கு மாறுபாடாயிருப்பதினால் நான் உனக்கு விரோத
௩௩ மாய்ப்புறப்பட்டுவந்தேன்.—கழுதை என்னைக் கண்டு இந்த மூன்றுதரமும் எனக்குநேரேவராமல்விலகிற்று: எனக்குவிலகாமல் நேரேவந்ததானால் இப்பொழுது நான் உன்னைக்கொலைசெய்து, அதைஉயிரோடிருக்கவைப்பேனென்றார்.—
௩ச அப்பொழுது பிலியாம் யெகோவாவின் தூதனைநோக்கி, நான் பாவஞ்செய்தேன்; நீர் வழியில் எனக்கு விரோதமாய் நிற்கின்றதை நானறியவில்லை: ஆகையால் இது உமது பார்வைக்குத் தகாததாயிருக்குமானால், நான் திரும்பிப்
௩ரு போய்விடுவேனென்றுசொல்ல;—யெகோவாவின் தூதன் பிலியாமைநோக்கி, அந்த மனிதருடனே கூடப்போ: நான்உன்னிடத்திற்சொல்லும் வாக்கையே நீயும் சொல்லென்றான்: அப்படியே பிலியாம் பாலாக்கனுப்பிய பிரபுகளுடன் போனான்.

பாலாக் பிலியாம்வருவதைக்கேட்டமாத்திரத் ௩சு
திலே கடையெல்லையாகிய அர்னோன்நதியினோரத்திலுள்ள மோவாபின் பட்டினம்வரைக்கும் அவனுக்கெதிர்கொண்டுபோனான்.—பாலாக் பி ௩எ
லியாமைநோக்கி நான் உம்மையழைக்கும்படி விருப்பத்துடன் உம்மிடத்தில் ஆளனுப்பவில்லையா; என்னிடத்திற்கு வராமலிருந்ததென்ன: உம்மைமேன்மைப்படுத்திவைக்க என்னால் முடியாதாவென்றுசொல்ல;—பிலியாம் பாலாக்கை ௩அ
நோக்கி, உம்மிடத்தில்வந்துவிட்டேன்: ஆனாலும்இப்பொழுதுஎதையாகிலுஞ்சொல்லுகிறதற்கென்னால்முடியுமா, தேவன் என்வாயிலிடும் வாக்கையே நான்சொல்லுவேனென்றான்.—பிலி ௩க
யாம் பாலாக்குடனேகூடப்போனான், அவர்கள் கீரியாத் ஊத்சோத்திற்சேர்ந்தார்கள்.—அங்கே பா ச௰
லாக் ஆடுமாடுகளையடித்து, பிலியாமுக்கும் அவனோடிருந்தபிரபுகளுக்கும் அனுப்பினான்.—மறு சக
நாள்காலையிலே பாலாக்கு அவனைப்பாகாலின் உயர்ந்த ஸ்தானங்களில் நின்றுகொண்டு கடையெல்லையிலுள்ள சனங்களைப்பார்க்கும்படி பிலியாமை அழைத்துக்கொண்டுபோனான்.

## உ௩. அதிகாரம்.

க, ௰௩, ௰அ. பாலாக்குப் பலியிடல்: எ, ௰அ. பிலியாம் உவமையாற் பேசல்:

அப்பொழுது பிலியாம் பாலாக்கை நோக்கி, நீர் க
இங்கே ஏழுவேதிகைகளையுண்டாக்கி, ஏழுகாளைகளையும், ஏழுஆட்டுக்கடாக்களையும் இங்கே ஆயத்தப்படுத்துமென்றான்.—பிலியாம்சொன்ன உ
படியேபாலாக்குச்செய்தான்; பின்புபாலாக்கும் பிலியாமும் வேதிகைதோறும் ஒவ்வொருகாளையையும், ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும், பலியிட்டார்கள்.—அப்பால் பிலியாம் பாலாக்கை ௩
நோக்கி, உம்முடைய தகனபலிக்குச்சமீபத்தில் நில்லும், நான்போய்வருகிறேன்: யெகோவா எனக்குப் பிரசன்னராகவுங்கூடும்: அவர் எனக்குவெளிப்படுத்துவதை உமக்கறிவிப்பேனென்று சொல்லிக்கொண்டு, ஒரு உயர்ந்த ஸ்தானத்திற்குப்போனான்.—தேவன் பிலியாமுக்குப் ச
பிரசன்னரானார்: அப்பொழுது அவன் அவரை நோக்கி, நான் ஏழுபலிவேதிகைகளை ஆயத்தம்பண்ணிவேதிகைதோறும் ஒவ்வொருகாளையையும், ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும், பலியிட்டேனென்று சொல்ல;—யெகோவா பிலியாமினுடைய வாயில் ஒருவாக்கையிட்டு, நீ பா ரு
லாக்கினிடத்தில் திரும்பிப்போய், இவ்விதமாகச்சொல்லக்கடவாயென்றார்.—இவன் அவனி சு
டத்திற்குத்திரும்பிப்போனான்; பாலாக் மோவாபின் பிரபுகளெல்லாரோடும் தன் தகனபலிக்குச்

(உஅ) உ.பேதுரு.உ.௰சு. (உக) நீதி.௰உ.௰. (௩௰) உ.பேதுரு.உ.௰சு. (௩க) ஆதி.உக.௰க. உ.இரா.சு.௰எ. லூக். உச.௰சு,௩க. யாத்.௩ச.அ. (௩உ) உ.பேதுரு.உ.௰ச,௰ரு. (௩ச) க.சாமு.௰ரு.உச,௩௰. உ.சாமு.௰உ.௰௩. யோபு.௩ச. ௩க,௩உ. (௩எ) அதி.உச.௰க. (௩அ) அதி.உச.௰உ. க.இரா.உஉ.௰ச. உ.நாளா.௰அ.௰௩. (சக) உபா.௰உ.உ.—(உ௩. அதி. உ.) வச.௰ச,௩௰. (௩) அதி.உ௩.க. (ரு) உபா.௰அ.௰அ. எரே.க.௯.

எ சமீபத்தில் நின்றான்.-அப்பொழுது அவன் தன்
வாக்கியத்தைச்சார்ந்து, மோவாபின் இராசாவா
கிய பாலாக், நீர்வந்து என்னிமித்தம் யாக்கோ
பைச்சபிக்கவேண்டும், நீர்வந்து, இஸரவேலர்
மேல் அபிசாபமிடவேண்டுமென்று என்னைக் கி
ழக்குமலைகளிலுள்ள அராமிலிருந்து வரவழைத்
அ தான்.—தேவனாற்சபிக்கப்படாதவனை நான் ச
பிப்பதெப்படி; யெகோவாவால் அபிசாபம்
பெருதவன்மேல் நான் அபிசாபமிடுவதெப்ப
கூ டி;—நான்கல்மலையுச்சியினின்று அவனைக்கண்
டேன், குன்றுகளினின்று அவனைக்கண்டேன்:
அந்தச்சனங்கள் தனித்துவசிப்பார்கள், மற்றைச்
௰ சாதியாருடன் மதிக்கப்படார்கள்.-யாக்கோபின்
துண்மணலையும் இஸரவேலின் காற்பங்கையுங்
கணிக்கத்தக்கவன்யாவன். என்மரணம், நீதிமா
னுடைய மரணம்போல் ஆவதாக, என்முடிவும்,
அவனுடையமுடிவுபோல் ஆவதாகவென்பதை,
௰க வசனித்தான்.—அப்பொழுதுபாலாக் பிலியாமை
நோக்கி, நீர் எனக்கென்னசெய்தீர்;என்சத்துருக்
களைச்சபிக்கும்படி நான் உம்மைக்கொண்டுவர,
நீர் அவர்களை ஆசீர்வதித்துவிட்டீரென்றான்.—
௰உ அதற்கு அவன், என்வாயில் யெகோவா இட்
டதையே அவதானமாய்ச்சொல்வது என்கடமை
௰௩ யல்லவாவென்றான்.—பின்பு பாலாக் அவனை
நோக்கி,நீர்அவர்களெல்லாரையுமல்ல,அவர்களு
டைய கடைப்பாளயத்திலுள்ளவர்களைமாத்திரம்
பார்க்கும்படி இன்னம் ஒரு இடத்திற்குஎன்னோ
டேவாரும்: அங்கிருந்து என்னிமித்தம் அவர்க
ளைச்சபிக்கவேண்டுமென்றுசொல்லிக்கொண்டு;
௰ச அவனைப்பிஸ்காவினுச்சியிலிருக்கிற சோபீ
மின்வெளியில் அழைத்துக்கொண்டுபோய், எழு
வேதிகைகளை யுண்டாக்கி, வேதிகைதோறும்
ஒவ்வொரு காளையையும், ஒவ்வொரு ஆட்டுக்
௰ரு கடாவையும், பலியிட்டான்.—பின்பு பிலியாம்
பாலாக்கைநோக்கி, நான் அங்கே யெகோவா
வைத்தரிசிக்கப்போகிறேன்,அம்மட்டும் நீர் இங்
கே உம்முடைய தகனபலிக்குச்சமீபத்தில் நில்
௰சு லுமென்றான்.—யெகோவா பிலியாமுக்குப்
பிரசன்னராகி அவனுடையவாயில் ஒருவாக்கை
யிட்டு, நீபாலாக்கினிடத்திற்குத்திரும்பிப்போய்
௰எ இவ்விதமாகச்சொல்லக்கடவாயென்றார்.—அவ
னிடத்திற்கு அவன்வருகிறபொழுது பாலாக்
மோவாபின் பிரபுகளுடனேயுங்கூடித் தன்னு
டையதகனபலியின்சமீபத்தில்நின்றான்.பாலாக்
அவனைநோக்கி,யெகோவா என்னசொன்னா
௰அ ரென்றுகேட்க;-இவன் தன்வாக்கியத்தைச்சார்ந்
து,பாலாகே, எழுந்துகேளும்; சிப்போரின்புத்தி
௰கூ ரனே, எனக்குச்செவிகொடும்:—பொய்சொல்ல,
தேவன் ஒருமனிதனல்ல; மனம்பேதிக்க, அவர்
ஒரு மனுப்புத்திரனல்ல: அவர் தாம் சொன்ன
தைச்செய்யாமல்விடுவாரா, தாம் வசனித்ததைச்
சித்திக்கச்செய்யாரா.-கேளும், ஆசீர்வதிக்கக்கட் உ௰
டளைபெற்றிருக்கிறேன்: அவரே ஆசீர்வதித்திருக்
கிறார்; நான் அதை மாற்றமுடியுமா.—அவர் யாக் உக
கோபிலே பாவத்தைக்காணவுமில்லை: இஸரவே
லரிலே துராசாரத்தைக்காணவுமில்லை: அவனு
டைய தேவனாகிய யெகோவா அவனுட
னிருக்கிறார், இராசசயத்தொனி அவர்களுக்குள்
ளே இருக்கின்றது.—தேவன்அவர்களை எகிப்தி உஉ
னின்றும் புறப்படச்செய்தார்; அவன் காண்டா
மிருகத்தைப்போலப் பலவான்.—யாக்கோபுக்கு உ௩
விரோதமான மாயாவித்தை இல்லை, இஸரவே
லுக்கு விரோதமானமாந்திரிகமில்லை: இக்காலத்
திலிருக்கிறபடி, இன்னும்யாக்கோபையும்இஸர
வேலையுங்குறித்துயெகோவாஎன்னசெய்தார்!
என்று பேசவரும்.—அந்தச்சனம் பெண்சிங்கம் உச
போலெழும்பும்,சிங்கக்குட்டிபோல்நிமிரும்: அ
துதான்பிடித்த இரையைப்பட்சித்து, வெட்டுண்
டவர்களுடைய இரத்தத்தைக்குடிக்குமளவும் ப
டுத்துக்கொள்ளாதென்பதை வசனித்தான்.

அப்பொழுது பாலாக் பிலியாமைநோக்கி, நீ உரு
அவர்களைச் சபிக்கவும்வேண்டாம், ஆசீர்வதிக்க
வும் வேண்டாமென்றான்.—அதற்குப் பிலியாம் உசு
பாலாகைநோக்கி, யெகோவாசொல்லுவதெ
துவோ, அதைச்செய்வேனென்றுநான் உமக்குச்
சொல்லவில்லையாவென்றான்.

அப்பொழுதுபாலாக் பிலியாமைநோக்கி, வா உஎ
ரும், நான்இன்னம் ஒரு இடத்திற்கு உம்மை அ
ழைத்துக்கொண்டுபோகிறேன்; நீர்அங்கேயிருந்
து என்னிமித்தம் அவர்களைச்சபிக்கிறது தேவ
னுக்குப்பிரியமாயிருக்கவுங் கூடுமென்று சொல்
லிக்கொண்டு,—யெஷீமோனுக்கெதிராயிருக்கிற உஅ
பேயோரினுச்சிக்கு அவனையழைத்துக்கொண்
டுபோனான்.—பிலியாம் பாலாகை நோக்கி,இங் உகூ
கே எனக்கு எழுவேதிகைகளையுண்டாக்கி, எழு
காளைகளையும், எழுஆட்டுக்கடாக்களையும், ஆயத்
தம்பண்ணுமென்றான்.—பிலியாம்சொன்னபடி ௩௰
பாலாக்செய்தான், பின்பு வேதிகைதோறும் ஒவ்
வொரு காளையையும் ஒவ்வொரு ஆட்டுக்கடா
வையும்பலியிட்டான்.

## உச. அதிகாரம்.

க. இஸரவேலரைக்குறித்துப் பிலியாம் தீர்க்கதரி
சனமுரைத்தல்: ௰. அதினிமித்தம் பாலாக் அ
வன்மேற்கோபித்தல்: ௰ரு. யாக்கோபின் நட்
சத்திரத்தைக்குறித்துப்பிலியாம்தீர்க்கதரிசனஞ்
சொல்லல்.

இஸரவேலரை ஆசீர்வதிப்பதே யெகோவா க
வுக்குப்பிரியமென்று பிலியாம்கண்டபின்பு அ
வன் தான்முன்செய்துவந்ததுபோலக் குறிபார்க்
கும்படிசெல்லாமல் வனாந்தரத்திற்குநேராய் மு

(எ) எசேக்.௰எ.உ. மீகா.உ.ச. அபகூ.உ.சு. க.சாமு.௰எ.௰. (அ) எசா.சஎ.௰உ,௰௩. (கூ) உபா.௩௩.உஅ. யாத் ௩௩.௰சு. எஸ்றா.கூ.உ. எபே.உ.௰ச. (௰) ஆதி.௰௩.௰சு. சங்.௱௰சு.௰ரு. (௰சு) அதி.உஉ.௩ரு. (௰அ) நியா.௩.உ௰. (௰கூ) க.சாமு.௰ரு.உகூ. மல்.௩.சு. ரோ.௰க.உகூ. யாக்.க.௰எ. தீத்.க.க. (உ௰) ஆதி.௰உ.உ. எண்.உஉ.௰உ. (உக) ரோ.ச.எ,அ. யாத்.௰௩.உக. சங்.அகூ.௰ரு. (உஉ) அதி.உச.அ. உபா.௩௩.௰எ. யோபு.௩கூ.௰,௰க. (உ௩) சங்.௩க.௰கூ. (உச) ஆதி.சகூ.கூ. ஆதி.சகூ.உஎ. (உசு) அதி.உஉ.௩அ. க.இரா.உஉ.௰ச.—(உச. அதி. க.) அதி.உ௩.௩,௰ரு.

௨ கந்திருப்பி,-பார்வைசெலுத்தி இஸரவேலர் தங்
கள்தங்கள் கோத்திரங்களின்படியே பாளயமி
றங்கியிருக்கிறதைக்கண்டான்: தேவ ஆவி அ
௩ வன்மேல்வந்தது.—அப்பொழுது அவன் தன்
வாக்கியத்தைச்சார்ந்து பேயோரின்புத்திரனாகிய
பிலியாஞ்சொல்வதும், கண்தெளியப்பெற்ற ம
௪ னிதன்சொல்வதும்,—தேவ வாக்குகளைக்கேட்
டுச் சருவவல்லவருடைய தரிசனத்தையடைந்து
தாழவிழும்பொழுது கண்கள் திறக்கப்படுகிற
௫ வன் சொல்வதும்யாதெனில்,-யாக்கோபே உன்
கூடாரங்களும், இஸரவேலே, உன் வாசஸ்தலங்
௬ களும், எவ்வளவு சௌந்தரியம்.—அவை விஸ்
தாரமான தாழ்ந்த பூமிகளைப்போலவும், நதியோ
ரத்திலுள்ள தோட்டங்களைப்போலவும், யெ
கோவா நட்ட அகுரு விருட்சங்களைப்போல
வும், நீரருகேயுள்ள ஏரஸ் விருட்சங்களைப்போ
௭ லவுமிருக்கின்றன.—அவனுடையநீர்ச்சால்களி
லிருந்து தண்ணீர்பாயும், அவனுடைய விதை
மிகுந்த நீர்ப்பாய்ச்சலுள்ளதாயிருக்கும், அவனு
டையஇராசாஅகாகிலும்உன்னதமாயிருப்பான்,
௮ அவனுடைய இராச்சியம்மேன்மைபெறும்.-தே
வன் அவனை எகிப்தினின்றும்புறப்படச்செய்
தார். அவன் காண்டாமிருகம்போலப்பலவான்:
அவன் தனக்குப் பகைவராகிய சாதிகளைப்பட்
சிப்பான்;அவர்கள்எலும்புகளைநொறுக்குவான்;
அவனுடைய அம்புகள் அவர்களை ஊடுருவும்.-
௯ அவன் சிங்கம்போலவும் பெண்சிங்கம்போல
வும் மடங்கிப்படுத்துக்கொண்டிருக்கிறான்: அ
வனை எழுப்புகிறவன்யாவன். உன்னை ஆசீர்
வதிக்கிறவன் ஆசீர்வதிக்கப்படுவான், உன்னைச்
சபிக்கிறவன் சபிக்கப்படுவானென்பதை வச
னித்தான்.
௰ அப்பொழுது பாலாக்பிலியாமின்மேலேகோ
பம்மூள,கையோடேகைகொட்டினான்: பாலாக்
பிலியாமைநோக்கி, என்சத்துருக்களைச்சபிக்கும்
படியல்லவா, உன்னை அழைப்பித்தேன், நீ அப்
படிச்செய்யாமல், இந்தமூன்றுதரமும் அவர்களை
௰௧ ஆசீர்வதித்தாயே.—ஆகையால் உன்னுடைய இ
டத்திற்கு ஓடிப்போ. உன்னைமேன்மைப்படுத்தி
வைக்க எண்ணியிருந்தேன்; நீ மேன்மைபெறா
௰௨ தபடி யெகோவா தடுத்தாரென்றான்.-அப்பொ
ழுது பிலியாம்பாலாக்கைநோக்கி, பாலாக் எனக்
குத்தன்வீடுநிறைய வெள்ளியையும் பொன்னை
யுந்தந்தாலும், என்மனதினால் நன்மையையாகி
லுந்தீமையையாகிலும் செய்கிறதற்கு யெகோ
௰௩ வாவின் கட்டளையை மீறமாட்டேன்.—யெ
கோவா சொல்வதையே சொல்லுவேனென்று
நீர்என்னிடத்திற்கனுப்பினதூதரிடத்திலே நான்
சொல்லவில்லையா.—ஆகையாற்கேளும், சனங்க ௰௪
ளிடத்திற்குப் போகிறேன். பிற்காலத்திலே இந்
தச்சனங்கள் உம்முடைய சனங்களுக்குச்செய்
வதின்னதென்று உமக்குத்தெரிவிப்பேன் வாரு
மென்றுசொல்லி,
அவன் தன் வாக்கியத்தைச்சார்ந்து பேயோ ௰௫
ரின் புத்திரனாகிய பிலியாஞ்சொல்வதும், கண்டு
தெளியப்பெற்ற மனிதன்சொல்வதும்,—தேவ ௰௬
னுடைய வாக்குகளைக்கேட்டு உன்னதமானவர்
அளித்த அறிவையறிந்து சருவவல்லவருடைய
தரிசனத்தைக்கண்டு தாழவிழுகையிற் கண்கள்
திறக்கப்படுகிறவன்சொல்லுவதும்யாதெனில்,—
அவரைக் காண்பேன், இப்பொழுதல்ல: அவ ௰௭
ரைத்தரிசிப்பேன், சமீபமாயல்ல: ஒரு நட்சத்தி
ரம் யாக்கோபிலிருந்து தோன்றும், ஒரு செங்
கோல் இஸரவேலிலிருந்தெழும்பும், அது மோ
வாபுடைய எல்லைகளை நொறுக்கிச் சேத்துசந்த
தியாரெல்லாரையும் நிருமூலமாக்கும்.—ஏதோம் ௰௮
அதற்குச்சுதந்தரமாகும், சேயீர் தன் சத்துருக்க
ளுக்குச்சுதந்தரமாகும்; இஸரவேலர் வீரங்காட்
டுவார்கள்.—யாக்கோபினின்றும்தோன்றும் ஒரு ௰௯
வன் கத்துருத்துவம்பண்ணி நகரங்களில் மீந்தி
ருக்கிறவர்களை நாசப்படுத்துவானென்பதை வச
னித்தான்.—மேலும், அவன் அமலேக்கைப்பார்க் ௨௰
கையில் தன்வாக்கியத்தைச்சார்ந்து அமலேக் சா
தியாருக்குள்ளே பிரதானி, அவன்முடிவில் நாச
மடைவானென்பதைவசனித்தான்.—அன்றியுங் ௨௧
கேனியனை அவன்பார்த்து தன்வாக்கியத்தைச்
சார்ந்து உன் வாசஸ்தலம் திடமுள்ளது, உன்
கூட்டைக்கன்மலையில் வைத்திருக்கிறாய்.—அப் ௨௨
படியிருந்துங் கேனியன் மெலிவடைவான், அ
சூர் உன்னைச்சிறைபிடித்துக்கொண்டுபோகஎத்
தனைநாள் செல்லும் என்பதை வசனித்தான்.—
பின்னும் அவன் ஐயோ தேவன் இதைச்செய் ௨௩
யும்பொழுது ஆர் சீவிப்பான்:—கித்தீமின் கரை ௨௪
யிலிருந்து கப்பல்கள்வந்து அசூரை கிலேசப்
படுத்தி ஏபேரையும் வருத்தப்படுத்தும், அவனும்
முழுவதும் நாசமாவானென்றான்.—பின்பு பிலி ௨௫
யாம்எழுந்துபுறப்பட்டுத் தன்இடத்திற்குத்திரும்
பினான்: பாலாக்குந் தன்வழியேபோனான்.

## ௨௫. அதிகாரம்.

௧. இஸரவேல் சந்ததியார் விக்கிரகாராதனையை
யும் விபசாரத்தையுஞ்செய்தல்: ௬. பீனிகாஸ்
சிம்றியையும் காஸ்பியையுங் கொலைசெய்தல்:
௰. அவன் அக்கொலையினிமித்தம் நித்தியாசாரி
யத்துவம்பெறுதல்: ௰௬. மீதியானியரைத் துய
ரப்படுத்தத் தேவன் கட்டளையிடல்.

பின்பு இஸரவேலர் சித்தீமிடத்திலே தங்கியி ௧

(௩) ௧.சாமு.௰.௰. ௨.நாளா.௰௫.௧. அதி.௨௩.௭,௰௮.(௪) ௧.சாமு.௰௯.௨௪. எசேக்.௧.௨௮. தானி.௮.௰௮. ௨.கொரி. ௰௨.௨,௩,௪.வெளி.௧.௰,௰௭.(௬)சங்.௧.௩ எரே.௰௭.௮.(௭) எரே.௫௧.௰௩.வெளி.௰௭.௧,௰௫.௧.சாமு.௰௫.௯.௨.சாமு. ௫.௰௨. (௮) அதி.௨௩.௨௪.சங்.௨.௯.எசா.௩௮.௰௩.எரே.௫௰.௰௭.சங்.௪௫.௫.எரே.௫௰.௯. (௯) ஆதி.௪௯.௯.ஆதி.௨௭. ௨௯. (௰) எசேக்.௨௧.௰௪,௰௭. அதி.௨௩.௰௧. உபா.௨௩.௩,௫. யோசு.௨௪.௯,௰. நிகி.௰௩.௨. (௰௨) அதி.௨௨.௰௮.(௰௪) மீகா.௬.௫.வெளி.௨.௰௪.ஆதி.௪௯.௧.தானி.௰.௰௪ (௰௭)வெளி.௧.௭. மத்.௨.௨.வெளி.௨௨.௰௬.ஆதி.௪௯.௰.சங்.௱௰. ௨. ௨.சாமு ௮.௨.எரே.௪௮.௪௫.(௰௮)௨.சாமு.௮.௰௪. (௰௯) ஆதி.௪௯.௰. (௨௰)யாத்.௰௭.௮.யாத்.௰௭.௰௪. ௧.சாமு. ௰௫.௩,௮. (௨௪) ஆதி.௰.௪. தானி.௰௧.௩௰.—(௨௫. அதி. ௧.) யோசு.௨.௧. மீகா.௬.௫. அதி.௩௧.௰௬. ௧.கொரி.௰.௮.

ருக்கையிற் சனங்கள் மோவாபின்ஸ்திரிகளுட
னே விபசாரஞ்செய்யத் தொடங்கினார்கள்.—
௨ அவர்கள் தங்கள் தெய்வங்களுக்கிட்ட பிரசா
தங்களைப்புசிக்கும்படி இந்தச்சனங்களை அழைத்
தார்கள்: சனங்கள்போய்ப்புசித்து அவர்களுடை
ய தெய்வங்களை நமஸ்காரம்பண்ணினார்கள்.—
௩ இப்படி இஸ்ரவேலர் பாகால்பேயோரைச்சார்ந்
தார்கள்: அதனால் இஸ்ரவேலர்மேல் யெகோ
௪ வாவின் கோபமூண்டது.—யெகோவா மோ
சேயைநோக்கி, யெகோவாவின் உக்கிரகோ
பம் இஸ்ரவேலரைவிட்டு நீங்கும்படி நீ சனங்க
ளின் சகல அதிபதிகளையுஞ்சேர்த்துக்கொண்டு,
அவர்களைச் சூரியனுக்கெதிராக யெகோவா
வின் சந்நிதானத்திலே தூக்கிப்போடென்றார்.—
௫ மோசே இஸ்ரவேலரின் நியாயாதிபதிகளைநோக்
கி, நீங்கள் யாவரும் பாகால்பேயோரைச்சேர்ந்த
உங்கள் மனிதர்களைக் கொன்றுபோடுங்களென்
றான்.
௬ அதைக்குறித்து மோசேயும் இஸ்ரவேல் சந்த
தியின் சபையாரனைவரும் சபையின் ஆவாசவா
சலுக்குமுன்பாக அழுதுகொண்டுநிற்கையில்,அ
வர்கள் சமுகத்தில் இஸ்ரவேல்சந்ததியாரிலொரு
வன் ஒரு மீதியானிய ஸ்திரீயைத் தன்சகோதர
௭ ரிடத்தில் அழைத்துக்கொண்டு வந்தான்.—ஆசா
ரியனாகிய ஆரோனின் பௌத்திரனும் எலீயே
சாரின் புத்திரனுமாகிய பீனிகாஸ்அதைக்கண்ட
பொழுது, சபையினின்றும் எழுந்து ஒரு ஈட்டி
௮ யைத்தன்கையிற்பிடித்து,—இஸ்ரவேலனாகியஅந்
தமனிதனுக்குப்பின்னாகக்கூடாரத்திற்போய்,இ
ஸ்ரவேல்புருஷனும் அந்த ஸ்திரீயுமாகிய இருவ
ருடைய வயிற்றிலும் ஊடுருவும்படி அவர்களைக்
குத்திப்போட்டான். அப்பொழுது இஸ்ரவேல்
சந்ததியாருக்குள்ளே வாதை நின்றுபோயிற்று.—
௯ அந்தவாதையினால் செத்தவர்கள் இருபத்துநாலா
யிரம்பேர்.
௰ யெகோவா மோசேயை நோக்கி,—நான்
௰௧ என் குரோதத்தினால் இஸ்ரவேல் சந்ததியாரை
நிர்மூலப்படுத்தாதபடி, ஆசாரியனாகிய ஆரோ
னின் பௌத்திரனும் எலீயேசாரின் புத்திரனு
மாகிய பீனிகாஸ்,என்னிமித்தம் அவர்களுக்குள்
வைராக்கியமாயிருந்ததினால், இஸ்ரவேல்சந்ததி
யார்மேலுண்டான என்னுடைய உக்கிரத்தை
௰௨ மாற்றினான்.—ஆகையால் சமாதானத்தைத்தரும்
என் உடன்படிக்கையை அவனுக்கு கொடுப்
௰௩ பேன்.—அவன் தன் தேவனிமித்தம் வைராக்
கியங்கொண்டு இஸ்ரவேல்சந்ததியாருக்குப்பிரா
யச்சித்தஞ்செய்தபடியினாலே நித்திய ஆசாரியத்
துவத்திற்குரிய உடன்படிக்கை அவனுக்கும்,
அவனுக்குப் பின்வரும் அவனுடைய சந்ததியா
ருக்குங் கிடைக்குமென்று சொல்லென்றார்.—
மீதியானிய ஸ்திரீயுடனேகூடக் குத்துண்டிறந் ௰௪
த இஸ்ரவேலன், ஷிமியோனரின் பிதாவமிசத்
தில்பிரபுவும் சல்லூவின்புத்திரனுமாகிய சிம்ரி.—
குத்துண்டமீதியானியஸ்திரி, மீதியானின் பிதா ௰௫
வமிசத்தாருஞ் சனங்களுக்குத் தலைவனுமாகிய
சூரின் புத்திரியான காஸ்பி.
யெகோவா மோசேயைநோக்கி,—மீதியா ௰௬
னியரில் பேயோரின் காரியத்திலும் பேயோரி ௰௭
னிமித்தம் வாதையுண்டானநாளிலேகுத்துண்ட
அவர்கள் சகோதரியும் மீதியானிய அதிபதியின்
புத்திரியுமாகிய காஸ்பியின் காரியத்திலும், உங்
களை வஞ்சித்துச்செய்த வஞ்சனைகளினால் உங்
களைக் கிலேசப்படுத்தின படியினாலே,—நீங்க ௰௮
ளும் அவர்களைக் கிலேசப்படுத்தி அடிக்கவேண்
டுமென்றார்.

## ௨௬. அதிகாரம்.

௧. சனங்களைத் தொகைப்படுத்தும்படி தேவன் கட்டளையிடல்: ௫௨. பூமியைவகுக்கும் விதி: ௫௭. லேவியவமிசமுந்தொகையும்: ௬௩. எகிப்தினின்றும்புறப்பட்டவர்களுக்குள்ளே காலேபு, யோசுவா என்பவர்கள்மாத்திரம் மீந்திருத்தல்.

அந்தவாதை தீர்ந்தபின்பு, யெகோவா மோ ௧
சேயையும் ஆசாரியனாகிய ஆரோனின் புத்திரன்
எலீயேசாரையும் நோக்கி,—இஸ்ரவேல்சந்ததி ௨
யின் சமஸ்தசபையாரையும் அவரவர் பிதாக்க
ளின்வமிசத்தின்படி இருபதுவயதுமுதல் அதற்
குமேற்பட்ட இஸ்ரவேலரில்யுத்தத்திற்குப்புறப்
படத்தக்கவர்களெல்லாரையுந் தொகைப் படுத்
துங்களென்றார்.—அப்பொழுது மோசேயும் ஆசா ௩
ரியனாகிய எலீயேசாரும்யெரிகோவினருகேயுள்
ள யோர்தான் நதிக்கிப்புறத்திலே மோவாபின்
சமனான வெளிகளில் அவர்களுடனேபேசி,—
யெகோவா மோசேக்கும் எகிப்துதேசத்தை ௪
விட்டுப்புறப்பட்டஇஸ்ரவேல்சந்ததியாருக்குங்
கட்டளையிட்டிருக்கிறபடி, இருபதுவயதுமுதற்
கொண்டிருக்கிறவர்களைத் தொகைப் படுத்துங்க
ளென்றார்கள்.
ரூபேன் இஸ்ரவேலரின் சேஷ்டபுத்திரன்:ரூ ௫
பேனின்புத்திரர், ஆனோக்கியர் குடும்பத்திற்குப்
பிதாவானஆனோக்கும், பல்லூவியர்குடும்பத்திற்
குப்பிதாவானபல்லூவும்,—எத்சரோனியர் குடும் ௬
பத்திற்குப்பிதாவான எத்சரோனும், கர்மியர் கு
டும்பத்திற்குப்பிதாவானகர்மியும்என்பவர்களே;
இவர்களேரூபேனின்குடும்பத்தார்:-அவர்களில் ௭
தொகையிடப்பட்டவர்கள் நாற்பத்துமூவாயிரத்
தெழுநூற்று முப்பதுபேர்.—பல்லூவின்புத்திரர் ௮
இலியாப்.—இலியாப்பின்புத்திரர்நெமுவேல்,தா ௯
தான், அபீராமென்பவர்கள்: இந்தத்தாதான் அபீ

(௨) யோசு.௨௨.௰௭. ஓசி.௯.௰. யாத்.௩௪.௰௫,௰௬. ௧.கொரி.௰.௨௰. (௪) உபா.௪.௩. யோசு.௨௨.௰௭. உபா.௰௩.௰௭. (௫) யாத்.௰௮.௨௧,௨௫. யாத்.௩௨.௨௭. (௬) யோவே.௨.௰௭. (௭) யாத்.௬௨௫. (௯) உபா.௪.௩. ௧.கொரி. ௰.௮. (௰௧) ௨.கொரி.௰௧.௨. யாத்.௨௰.௫. உபா.௩௨.௰௬,௨௧. ௧.இரா.௰௯.௨௨. எசேக்.௰௬.௩௮. செப்.௧.௰௮. செப்.௩.௮. (௰௨) மல்.௨.௪,௫. (௰௩) யாத்.௪௰.௰௫. அப்.௨௨.௩. ரோ.௰.௨. எபி.௨.௰௭. (௰௫) யோசு.௰௩.௨௧. (௰௭) அதி.௩௧.௰௬. வெளி.௨.௰௪. (௰௮) அதி.௩௧.௨.—(௨௬. அதி. ௨.) யாத்.௩௰.௰௨. (௩) அதி.௨௨.௧. (௫) ஆதி. ௪௬.௯. யாத்.௬.௰௪. (௯) அதி.௰௬.௧,௨.

ராமென்பவர்களே சபையிற்பேர்பெற்றவர்களா
யிருந்து,பின்பு யெகோவாவுக்கு விரோதமாக
விவாதம்பண்ணி, கோராகின் கூட்டத்தில் மோ
சேக்கும் ஆரோனுக்கும் விரோதமாக விவாதம்
௰ பண்ணினவர்கள்.—பூமிதன்வாயைத்திறந்து அ
வர்களையும் கோராகையும் விழுங்கிற்று. இந்தக்
கூட்டமிறந்தசமயத்தில் அக்கினி இருநூற்றைம்
பதுபேரைப்பட்சித்தது: இப்படியிவர்கள் ஒரு
௰௧ அடையாளமானார்கள்.—கோராகின் புத்திரர் ம
௰௨ ரிக்கவில்லை.—ஷிமியோன் புத்திரருடைய கு
டும்பங்களாவன: நெமுவேலின் சந்ததியான நெ
முவேலரென்னுங் குடும்பமும்: யாமினுடைய
சந்ததியான யாமினியரென்னுங்குடும்பமும்:யா
கினுடைய சந்ததியான யாகினியரென்னுங்கு
௰௩ டும்பமும்:—சேராகினுடையசந்ததியானசிரகிய
ரென்னுங்குடும்பமும்: ஷவுலின்சந்ததியான ஷ
வுலியரென்னுங்குடும்பமுமாகிய இவைகளே.—
௰௪ ஷிமியோனரென்னுங்குடும்பத்தார் இருபத்தீரா
௰௫ யிரத்திருநூறுபேர்.—காத்தென்பவனுடைய புத்
திரரின் குடும்பங்களாவன: சிபோனுடைய சந்
ததியான சிபோனியரென்னுங்குடும்பமும்: அகி
யின்சந்ததியானஅகியரென்னுங்குடும்பமும்:ஊ
னியினுடைய சந்ததியான ஊனியரென்னுங்கு
௰௬ டும்பமும்:—ஒஸ்னியுடையசந்ததியான ஒஸ்னி
யரென்னுங்குடும்பமும்: ஏரியினுடைய சந்ததி
௰௭ யான ஏரியரென்னுங்குடும்பமும்:—அரோத்தின்
சந்ததியான அரோதியரென்னுங்குடும்பமும்: அ
ரேலியின் சந்ததியான அரேலியரின் குடும்பமு
௰௮ மாகிய இவைகளே.-காத்சந்ததியாருடைய குடும்
பங்கள்: அவர்களில் தொகையிடப்பட்டவர்கள்
௰௯ நாற்பதினாயிரத்தைஞ்ஞூறுபேர்.—யூதாவின் புத்தி
ரர்ஏரும்,ஓனானும்: ஏரும்,ஓனானும்கானான்தேசத்
௨௰ திலே மரித்தார்கள்.—யூதாவின் மற்றப்புத்திரரின்
குடும்பங்களாவன:ஷேலாவின்சந்ததியான ஷே
லானியரென்னுங்குடும்பமும்: பேரேசின்சந்ததி
யான பேரேசியரென்னுங்குடும்பமும்: சேராகி
னுடைய சந்ததியான சர்கியரென்னுங்குடும்ப
௨௧ முமாகிய இவைகளே.—பேரேசினுடைய புத்திர
ரின்குடும்பங்களாவன: எத்சரோனுடையசந்ததி
யான எத்சரோனியரென்னுங்குடும்பமும்: ஆமூ
லின்சந்ததியான ஆமூலியரென்னுங் குடும்பமு
௨௨ மாகிய இவைகளே.—இவர்களே யூதாவின்குடும்
பத்தார்; அவர்களிற் தொகையிடப்பட்டவர்கள்
௨௩ எழுபத்தாறாயிரத் தைஞ்ஞூறு பேர்.—ஈஷகாரு
டைய புத்திரரின் குடும்பங்களாவன: தோலா
க்கின் சந்ததியான தோலாகியரென்னுங் குடும்
பமும்: பூவாவின் சந்ததியான பூனியரென்னுங்
௨௪ குடும்பமும்:-யாஷூப்பின்சந்ததியான யாஷூபிய
ரென்னுங்குடும்பமும்: ஷிம்ரோனுடைய சந்ததி
யானஷிம்ரோனியரென்னுங்குடும்பமுமாகிய,—
௨௫ இவைகளே ஈஷகாருடையகுடும்பங்கள்:அவை
களில் தொகையிடப்பட்டவர்கள் அறுபத்துநா
௨௬ லாயிரத்துமுந்நூறுபேர்.-செபுலோனுடைய புத்
திரரின்குடும்பங்களாவன:சேரேத்தின்சந்ததியா
னசார்தியரென்னுங்குடும்பமும்:ஏலோனுடைய
சந்ததியானஏலோனியரென்னுங்குடும்பமும்: ய
கலேலின் சந்ததியான யாலேலரென்னுங் குடும்
பமுமாகிய,—இவைகளே செபுலோனரென்னுங் ௨௭
குடும்பங்கள்: அவைகளில் தொகையிடப்பட்ட
வர்கள் அறுபதினாயிரத்தைஞ்ஞூறுபேர்.-யோசே ௨௮
ப்புடைய புத்திரராகிய மனாசே எப்ராயீமென்
பவர்களுடைய குடும்பங்களாவன:—மனாசே ௨௯
யின் புத்திரருடைய குடும்பங்கள் மாகீரின்சந்த
தியான மாகீரியரென்னுங் குடும்பமும்: மாகீர்
பெற்ற கிலியாத்தின் சந்ததியான கிலியாத்திய
ரென்னுங்குடும்பமும்:—கிலியாத்பெற்ற ஈயே ௩௰
சேரின்சந்ததியான ஈயேசேரியரென்னுங்குடும்
பமும்: ஏலெக்கின் சந்ததியான ஏலெக்கிய
ரென்னுங் குடும்பமும்:—அஸ்ரியேலின்சந்ததி ௩௧
யான அஸ்ரியேலரென்னுங் குடும்பமும்: ஷிகே
மின் சந்ததியான ஷிகேமியரென்னுங் குடும்ப
மும்:-ஷிமீதாவின்சந்ததியான ஷிமீதாவியரென் ௩௨
னுங்குடும்பமும்: எபெரின் சந்ததியான எபரிய
ரென்னுங்குடும்பமுமானவைகளே.—எபெரின் ௩௩
புத்திரனான சிலாப்காத்திற்குப் புத்திரிகளேயன்
றிப் புத்திரரில்லை. சிலாப்காத்தின் புத்திரிகளின்
நாமங்களாவன: மகலாள், நோவா, ஒக்லாள்,
மில்க்காள், திரசாள் என்பவைகளாம்.—இவர்க ௩௪
ளே மனாசேயின்குடும்பத்தார்: அவர்களில் தொ
கையிடப்பட்டவர்கள் ஐம்பத்தீராயிரத்தெழுநூ
றுபேர்.—எப்ராயீமுடைய புத்திரரின் குடும்பங்க ௩௫
ளாவன: ஊதேலாகின்சந்ததியான ஊதேலாகிய
ரென்னுங்குடும்பமும்: பேகேரின் சந்ததியான
பக்ரியரென்னுங்குடும்பமும்: தாகானுடையசந்
ததியான தாகானியரென்னுங் குடும்பமும்:—
ஊதேலாகுபெற்ற ஏரானின்சந்ததியாகிய ஏரா ௩௬
னியரென்னுங் குடும்பமுமாகிய இவைகளே.—
எப்ராயீம் புத்திரருடைய குடும்பங்கள்: அவர் ௩௭
களில் தொகையிடப்பட்டவர்கள் முப்பத்திரா
யிரத்தைஞ்ஞூறுபேர்:இவைகளே யோசேப்பின்
புத்திரருடைய குடும்பங்கள்.—பேன்யாமீனுடை ௩௮
ய புத்திரரின் குடும்பங்களாவன: பேலாவின்சந்
ததியான பெலியரென்னுங் குடும்பமும்: அஷ
பேலின் சந்ததியான அஷபேலியரென்னுங் கு
டும்பமும்: அகீராமின் சந்ததியான அகீராமிய
ரென்னுங்குடும்பமும்:—ஊபாமின்சந்ததியான ௩௯
ஊபாமியரென்னுங்குடும்பமும்: ஊபாமின்சந்
ததியான ஊபாமியரென்னுங் குடும்பமும்:—பே ௪௰
லாபெற்றஆர்த்தின்சந்ததியான ஆர்தியரென்னுங்
குடும்பமும்: நாமானுடைய சந்ததியான நாகா
மியரென்னுங் குடும்பமுமாகிய இவைகளே.—
பேன்யாமீன் புத்திரருடைய குடும்பங்கள்: அ ௪௧
வர்களில் தொகையிடப்பட்டவர்கள் நாற்பத்
தையாயிரத்தறுநூறுபேர்.—தாணுடைய புத்திர ௪௨
ரின்குடும்பமாவது: ஷூகாமின்சந்ததியான ஷூகா
மியரென்னுங்குடும்பமாகிய இவைகளே தாணு

(௰) அதி.௰௬.௩௨,௩௫. அதி.௰௬.௩௮. ௧.கொரி.௰.௬. ௨.பேதுரு.௨.௬. (௰௧) யாத்.௬.௨௪. (௰௨) ஆதி.௪௬.௰. யாத்.௬.௰௫, ௧.நாளா.௪.௨௪, (௰௩) ஆதி.௪௬.௰.

சங டையகுடும்பம்.–ஸூகாமியரென்னுங்குடும்பங்க
ளில்தொகையிடப்பட்டவர்கள் ஆகஅறுபத்துநா
சச லாயிரத்து நானூறுபேர்.–ஆஷேருடைய புத்திர
ரின் குடும்பங்களாவன: இம்னாவின்சந்ததியான
இம்னியரென்னுங்குடும்பமும்: ஈஸ்வியரின் சந்
ததியான ஈஸ்வியரென்னுங் குடும்பமும்: பேரீ
யாவின் சந்ததியான பிரியரென்னுங் குடும்ப
சரு மும்:–பேரீயாபெற்ற ஏபெரின்சந்ததியான ஏப
ரியரென்னுங் குடும்பமும்: மல்கியேலின் சந்ததி
யான மல்கியேலரென்னுங் குடும்பமுமானவை
சசு கள்.–ஆஷேருடைய புத்திரிக்குச் சாராளென்று
சஎ பேர்.–இவைகளே ஆஷேர்புத்திரருடைய குடும்
பங்கள்: அவைகளில் தொகையிடப்பட்டவர்
சஅ கள் ஐம்பத்து மூவாயிரத்து நானூறுபேர்.—நப்
தாலியினுடைய புத்திரரின் குடும்பங்களாவன:
யாக்சேலின் சந்ததியான யாசேலரென்னுங் கு
டும்பமும்: கூனியின்சந்ததியான கூனியரென்
சகூ னுங் குடும்பமும்:—யேத்சேரின் சந்ததியான
யேத்சேரியரென்னுங்குடும்பமும்: ஷில்லேமின்
சந்ததியான ஷில்லீமியரென்னுங் குடும்பமுமா
ருய கிய இவைகளே.—நப்தாலியின் குடும்பங்கள்:
அவைகளில்தொகையிடப்பட்டவர்கள் நாற்பத்
ருக தையாயிரத்து நானூறுபேர்.—இஸரவேல் சந்ததி
யாரில் தொகையிடப்பட்டவர்கள் ஆக ஆறுலட்
சத்தோராயிரத்தெழுநூற்றுமுப்பதுபேர்.
ருஉ யெகோவாமோசேயை நோக்கி,–இவர்கள்
ருங சுதந்தரிக்கும்படி, அத்தேசம் அவர்கள்நாமத்தொ
ருச கைக்கேற்கப் பகுக்கப்படவேண்டும்.—அதிகவ
மிசத்தொகைக்கு அதிகசுதந்தரமும்,சொற்பவமி
சத்தொகைக்கு சொற்ப சுதந்தரமுங் கொடுக்க
வேண்டும்:அவர்களிலிடப்பட்டதொகைக்கேற்
க அவரவர்களுக்குவேண்டிய சுதந்தரங்கொடுக்
ருரு கப்படக்கடவது.—ஆனாலும் சீட்டுப்போட்டுத்
தேசத்தைப்பங்கிடவேண்டும்; ஒவ்வொருவருந்
தங்கள் தங்கள் பிதாவின்கோத்திரங்களுக்குள்ள
நாமங்களின்படியே சுதந்தரித்துக்கொள்ளக்கட
ருசு வர்கள்.—அநேகராயினும் சொற்பராயினும் சீட்
டுவிழுந்தபிரகாரமாகவே சுதந்தரித்துக்கொள்ள
வேண்டுமென்றார்.
ருஎ தொகையிடப்பட்ட லேவியரென்னுங் குடும்
பங்களாவன: கெர்ஷோனுடைய சந்ததியான
கெர்ஷோனியரென்னுங் குடும்பமும்: கோகாத்
தின்சந்ததியான கோகாத்தியரென்னுங் குடும்ப
மும்: மிராரியின் சந்ததியான மிராரியரென்னும்
ருஅ குடும்பமும்:—லேவியினுடையமற்றக்குடும்பங்
களாகிய லிப்னீயரென்னுங்குடும்பமும்:எப்ரோ
னியரென்னுங் குடும்பமும்: மாலியரென்னுங்கு
டும்பமும்: மூஷியரென்னுங்குடும்பமும்: கோரா
கியரென்னுங்குடும்பமுமாகிய இவைகளே.கோ
ருகூ காத் அம்ராமைப்பெற்றான்.—அம்ராமுடைய ம
னைவிக்கு யோகெபேத்தென்றுபேர்; அவள் எ
கிப்திலே லேவிக்குப்பிறந்த புத்திரி: அவள் அம்
ராமுக்கு ஆரோனையும், மோசேயையும் அவர்க
ளுடையசகோதரியான மிரியமையும்பெற்றாள்.-
சுய ஆரோனுக்கு நாதாபும் அபியூவும் எலீயேசாரும்
இதாமாரும் பிறந்தார்கள்.—நாதாபும் அபியூவும்
சுக யெகோவாவின் சந்நிதியில் சாதாரண அக்கி
னியைக்கொண்டுவந்தபொழுது இறந்துபோனார்
சுஉ கள்.—அவர்களில் ஒருமாதத்துப்பிள்ளை முதலா
கத் தொகையிடப்பட்ட ஆண்மக்கள் இருபத்து
மூவாயிரம்பேர். இஸரவேல் சந்ததியாருக்குள்
ளே அவர்களுக்குச் சுதந்தரங்கொடுக்கப்படாத
படியினால் அவர்கள் இஸரவேல் சந்ததியாருக்
குள்ளே தொகையிடப்படவில்லை.
சுங மோசேயும் ஆசாரியனாகிய எலீயேசாரும்யெ
ரீகோவினருகேயுள்ள யோர்தான் நதியோரத்தி
லேமோவாபின்சமனானவெளிகளில்இஸரவேல்
சந்ததியாரைத் தொகையிடுகிறபொழுது இருந்த
சுச வர்கள்இவர்களே.-முன்புமோசேயும்ஆசாரியனா
கிய ஆரோனுஞ் சீனாய்வனாந்தரத்தில்இஸரவேல்
சந்ததியாரைத் தொகையிட்டபொழுது, இருந்த
வர்களில் ஒருவரும் இவர்களுக்குள்ளேயில்லை.–
சுரு வனாந்தரத்திலிறந்துபோவார்களென்றுயெகோ
வா அவர்களுக்குச்சொல்லியிருந்தார்: யெபுன்
னேயின்புத்திரனாகிய காலேபும் நூனின்புத்திர
னாகிய யோசுவாவுமொழிய வேறொருவரும் அ
வர்களில் மீந்திருக்கவில்லை.

## உஎ. அதிகாரம்.

க. சிலாப்காத்தின்புத்திரர்சுதந்தரம்வேண்டல்:சு. பூமியைச்சுதந்தரிக்குங்கட்டளை: ௰உ.மோசேக்குத் தேவன் கட்டளையிடல்: ௰ரு. மோசே தேவனைப்பிரார்த்தித்தல்: ௰அ. மோசே இறந்தபின் அவன் கிரியையைச்செய்யும்படி யோசுவா நியமிக்கப்படல்.

க யோசேப்பின் புத்திரனாகிய மனாஷேயின் கு
டும்பங்களில் மனாஷேயின் புத்திரன் மாகீர், அ
வனுடைய புத்திரனான கிலியாத்தின் பௌத்திர
னும் ஏபெரின் புத்திரனுமாகிய சிலாப்காத்தின்
புத்திரிகளான மகலாள், நோவாள், ஓக்லாள்,
உ மில்க்காள், திரசாளென்பவர்கள்வந்து,—சபை
யினாவாசவாசலிலே மோசேக்கும், ஆசாரியனா
கிய எலீயேசாருக்கும், பிரபுகளுக்கும் சமஸ்தச
ங பையாருக்கும் முன்பாக நின்றுகொண்டு,—எங்
கள்பிதா வனாந்தரத்தில் இறந்துபோனான்; அ
வன் யெகோவாவுக்கு விரோதமாகக்கூடின
கோராகின்கூட்டத்தாரிற் சேர்ந்தவனல்ல; அ
வன் தன் பாவத்தினால் மரித்தான், அவனுக்குப்
ச புத்திரரில்லை.—எங்கள் பிதாவுக்குப்புத்திரனில்
லாததினால் அவனுடையபேர் அவனுடைய வ
மிசத்திலில்லாதற்றுப்போகலாமா. எங்கள் பிதா
வுடைய சகோதரருக்குள்ளே எங்களுக்குஞ்சுதந்
ரு தரந்தரவேண்டுமென்றார்கள்.—அவர்களுடைய

(ருக) அதி.க.சகூ. (ருங) யோசு.௰க.உங. (ருரு) யோசு.௰க.உங. (ருகூ) யாத்.உ.க,உ. (சுக) லேவி.௰.க,உ. (சுஉ) அதி.ங.ஙகூ. அதி.க.சகூ. உபா.௰.கூ. யோசு.௰ங.௰ச,ஙங. (சுரு) அதி.௰ச.உஅ,உகூ. க.கொரி.௰.ரு,சு. அதி.௰ச. சு௰.—(உஎ. அதி. க.) அதி.உசு.ஙங. யோசு.௰எ.ங. (ங) அதி.௰ச.ஙரு. அதி.௰சு.க,உ. (ச) யோசு.௰எ.ச. (ரு) யாத்.௰அ.௰ரு,௰கூ.

காரியத்தைமோசேயெகோவாவின்சந்நிதிப்
படுத்தினான்.
௬ அப்பொழுதுயெகோவாமோசேயைநோக்
௭ கி,—சிலாப்காத்தின் புத்திரிகள் சொல்வதுசரி:
அவர்கள் தங்கள் பிதாவின் சகோதரருக்குள்ளே
சுதந்தரமடையும்படி அவர்களுக்குச் சுதந்தரங்
கொடுக்கவேண்டும்; அவர்கள் பிதாவின் சுதந்த
ரத்தை அவர்களுக்குக்கிடைக்கப்பண்ணுவாயா
௮ க.—நீ இஸரவேல் சந்ததியாரைநோக்கி, ஒரு
வன் புத்திரனில்லாமல் மரித்தால், அவனுக்குரிய
சுதந்தரத்தை அவன் புத்திரிக்குக்கொடுக்கவேண்
௯ டும்.—அவனுக்குப்புத்திரியுமில்லாதிருந்தால், அ
வனுக்குரிய சுதந்தரத்தை அவன் சகோதரருக்
௰ குக் கொடுக்கக்கடவீர்கள்.—அவனுக்குச் சகோ
தரருமில்லாதிருந்தால், அவனுக்குரிய சுதந்தரத்
தை அவன் பிதாவின் சகோதரருக்குக்கொடுக்
௰௧ கக்கடவீர்கள்.—அவன்பிதாவுக்குஞ் சகோதரரில்
லாதிருந்தால், அவனுக்குரியசுதந்தரத்தைஅவன்
வமிசத்தில் அவனுக்குக்கிட்டின ஒரு இனத்தவ
னுக்குக்கொடுக்கவேண்டும், அவன் அதைச்சுதந்
தரித்துக்கொள்வான்: யெகோவா மோசேக்
குக்கட்டளையிட்டபிரகாரம் இது இஸரவேல்சந்
ததியாருக்கு நியாயவிதிப்பிரமாணமாயிருப்பதா
கவென்றுசொல்லென்றார்.
௰௨ பின்னும்யெகோவாமோசேயைநோக்கி,நீ
இந்த அபாரீம் மலையிலேறி நான் இஸரவேல்சந்
௰௩ ததியாருக்களித்த தேசத்தைப்பார்.—சபையார் வி
வாதம்பண்ணினபொழுது, சீனாய்வனாந்தரத்திலி
ருக்கிற காதேஷிலுள்ள மேரிபாசலதீரத்தில், அ
வர்கள் கண்களுக்குமுன்பாக சீனாய்வனாந்தரத்
தில் என்னைமதியாமல், நீங்கள் என்கட்டளையை
௰௪ மீறினீர்கள்.—ஆதலால் நீ அதைப்பார்த்தபின்பு,
உன்சகோதரனாகிய ஆரோன் சேர்க்கப்பட்டது
போலநீயும் உன்சனங்களுடன் சேர்க்கப்படுவா
யென்றார்.
௰௫ அதற்குமோசே யெகோவாவைநோக்கி,-
௰௬ யெகோவாவின் சபை மேய்ப்பனில்லாதகி
௰௭ டையைப் போலிராதபடி,—அச்சபைக்கு முன்
பாகப்போக்கும்வரவுமாயிருப்பதற்கும் ஒருமனி
தனைச்சருவதேகங்களின் ஆவிகளுக்குந் தேவ
னாகிய யெகோவா, அவர்களுக்கு அதிகாரி
யாக ஏற்படுத்தவேண்டுமென்று பிரார்த்திக்க,
௰௮ யெகோவாமோசேயைநோக்கி,ஆவியைப்
பெற்றிருக்கிறமனிதனும் நூனின்புத்திரனுமாகி
யயோசுவாவைத்தெரிந்து, அவன்மேல் உன்கை
௰௯ யைவைத்து,—அவனை ஆசாரியனாகிய எலீயேசா
ருக்கும் சமஸ்தசபையாருக்கும்முன்பாகநிற்கப்
பண்ணி, அவர்கள் முன்னிலையில் அவனுக்குக்
௨௰ கட்டளைகொடுத்து,—இஸரவேல் சந்ததியின் சம
ஸ்தசபையாரும் அமையும்படிக்கு, உனது கனத்
திலொருபாகத்தை அவன்மேலிடுவாயாக.—மே ௨௧
லும் அவன்ஆசாரியனாகிய எலீயேசாருக்குமுன்
பாக நிற்கவேண்டும்; அந்த ஆசாரியன் அவன்நி
மித்தம்யெகோவாவின்சந்நிதானத்திலேவந்து
ஊரீமென்னும் நியாயத்தினால் உசாவக்கடவன்:
ஆசாரியனுடைய கட்டளையின்படி அவனும்
அவனோடே எல்லாஇஸரவேல்சந்ததியாராகியச
மஸ்தசபையாரும்போகவும், அவனுடையகட்ட
ளையின்படிவரவுங் கடவர்களென்றார்.-மோசே
தனக்குயெகோவாகட்டளையிட்டபடியோசு ௨௨
வாவைஅழைத்துக்கொண்டு,அவனை ஆசாரியனா
கியஎலீயேசாருக்கும்சமஸ்தசபையாருக்குமுன்
பாகநிற்கப்பண்ணி,-அவன்மேலே தன்கைகளை ௨௩
வைத்து, மோசேயினால் யெகோவாகட்டளை
யிட்டபடியேஅவனுக்குக்கட்டளைகொடுத்தான்.

## ௨௮. அதிகாரம்.

௧. தகனபலிகளைக்குறித்துத் தேவனிட்டகட்ட
ளை: ௩. காலையிலும் மாலையிலும் இடும்பலி: ௯.
ஓய்வுநாள்களிலிடும்பலி: ௰௧. அமவாசியிலிடும்
பலி: ௰௬. பஷ்காவிலிடும்பலி: ௨௬. முதற்பல
னை நிவேதிக்கிறநாளிலிடும்பலி.

அன்றியும் யெகோவா மோசேயை நோக் ௧
கி,—எனக்குச் சுகந்தவாசனையாயிருக்கும் பொ ௨
ருட்டு, அக்கினியிலிடும் பலியாக என் நைவேத்
தியத்தையும், அதினதின் குறித்தகாலத்தில் எனக்
குச்செலுத்தும்படி சாவதானமாயிருங்களென்று,
நீ இஸரவேல் சந்ததியாருக்குக்கட்டளையிடு.
இன்னும் நீ அவர்களை நோக்கி, நீங்கள் யெ ௩
கோவாவுக்கு அக்கினியிலே நித்திய தகன
பலியாக நாடோறும்பழுதற்ற ஒரு வருஷத்து
இரண்டு ஆட்டுக்குட்டிகளைப் பலியிடவேண்
டும்.—நைவேத்தியமாக இடித்துப்பிழிந்த கால் ௪
கின் எண்ணெயிற்பிசைந்த ஒரு ஏபாவில் பத்
திலொருபங்குமெல்லியமாவுடன்,-காலையிலொ ௫
ரு ஆட்டுக்குட்டியையும், மாலையில் ஒருஆட்டுக்
குட்டியையும், பலியிடவேண்டும்.—யெகோ ௬
வாவுக்கு அக்கினியிலிடப்படும் சுகந்தபலியா
கிய இந்த நித்தியதகனபலி சீனாய்மலையிலே கட்
டளையிடப்பட்டது.—கால்கின் பானபலி ஒரு ௭
ஆட்டுக்குட்டிக்குரியது; அந்த இரசம் பரிசுத்த
ஸதானத்தில் யெகோவாவுக்குப் பானபலி
யாக ஊற்றப்படக்கடவது.—காலையின் நைவேத் ௮
தியத்திற்கும், அதின் பானபலிக்கும் ஒப்பாகவே
மாலையில் மற்ற ஆட்டுக்குட்டியையும், யெகோ
வாவுக்குச் சுகந்தவாசனையான தகனப்பலியா
கச்செலுத்தக்கடவீர்கள்.
ஓய்வுநாளிலேகுற்றமற்றஒருவருஷத்துஇரண் ௯
டு ஆட்டுக்குட்டிகளையும், எண்ணெயிற்பிசைந்த

(௭) அதி.௩௬.௨. (௰௧) அதி.௩௫.௨௯. (௰௨) அதி.௩௩.௪௭. உபா.௩௪.௧. (௰௩) உபா.௧.௩௭. யாத்.௰௭.௭. (௰௪) அதி. ௩௧.௨. உபா.௰.௬. (௰௬) அதி.௰௬.௨௨. எபி.௰௨.௯. (௰௭) உபா.௩௧.௨. ௧.சாமு.௮.௨௰. ௧.இரா.௨௨.௰௭. சக.௰.௨. மத்.௯.௩௬. (௰௮) ஆதி.௪௧.௩௮. நியா.௩.௰. ௧.சாமு.௰௬.௰௩,௰௮. உபா.௩௪.௯. (௰௯) உபா.௩௧.௭. (௨௰) ௧.சாமு. ௰.௬,௯. ௨.இரா.௨.௰௫. யோசு.௧.௰௬,௰௭. (௨௧) யோசு.௯.௰௪. நியா.௧.௧. ௧.சாமு.௨௩.௯. யாத்.௨௮.௩௰. யோசு. ௯.௰௪. ௧.சாமு.௨௨.௰,௰௩,௰௫. (௨௩) உபா.௩.௨௮.—(௨௮. அதி. ௨.) லேவி.௩.௰௧. மல்.௧.௭,௰௨. (௩) யாத்.௨௯. ௩௮. (௪) யாத்.௰௬.௩௬. லேவி.௨.௧. யாத்.௨௯.௪௰. (௫) யாத்.௰௨.௬. (௬) யாத்.௨௯.௪௨. (௭) யாத்.௨௯.௪௨.

ஒரு எபாவில் பத்திலிரண்டுபங்கு மெல்லியமா
வின் நைவேத்தியத்தையும், அதின் பானபலியை
௰ யுஞ்செலுத்தக்கடவீர்கள்.-நித்தமும்பானபலியுட
னிடப்படுந் தகனபலியையன்றி ஒவ்வொரு ஓய்
வுநாளிலும்இந்தத்தகனபலிஇடப்படவேண்டும்.
௰௧ உங்கள் மாதங்களின் ஆரம்பத்தில் நீங்கள்
யெகோவாவுக்குத் தகனபலியாக இரண்டு
இளங்காளைகளையும், ஒரு ஆட்டுக்கடாவையும்,
குற்றமற்ற ஒரு வருஷத்து ஏழு ஆட்டுக்குட்டிக
௰௨ ளையும், செலுத்துவீர்களாக.—யெகோவாவுக்
கு அக்கினியிலிடப்படுஞ் சுகந்த தகனபலியாய்
ஒவ்வொரு காளைக்காக, எண்ணெயிற் பிசைந்த
எபாவில் பத்தில் மூன்றுபங்கு மெல்லியமாவா
கிய நைவேத்தியத்தையும், ஒரு ஆட்டுக்கடாவுக்
காக எண்ணெயிற் பிசைந்த எபாவில் பத்திலி
ரண்டுபங்கு மாவாகிய நைவேத்தியத்தையும்;—
௰௩ ஒவ்வொரு ஆட்டுக்குட்டிக்காக, எண்ணெயிற்
பிசைந்த எபாவில் பத்திலொருபங்குமாவாகிய
௰௪ நைவேத்தியத்தையுஞ் செலுத்துவீர்களாக.—அ
வைகளுக்கேற்ற பானபலிகள் திராட்சரசத்தில்
காளைக்கு அரைக்கின்னும், ஆட்டுக்கடாவுக்கு
ஒருகின்னில் மூன்றிலொருபங்கும், ஆட்டுக்
குட்டிக்குக் கால்கின்னுமா யிருக்கவேண்டும்:
இதுவருஷம்முழுவதும் மாதந்தோறும் செலுத்த
௰௫ வேண்டிய தகனபலி.—நித்தமும் பானபலியுட
னிடப்படுந் தகனபலியேயன்றிப் பிராயச்சித்த
பலியாக யெகோவாவுக்கு ஒருவெள்ளாட்
டுக்கடாவுஞ் செலுத்தப்படக்கடவது.
௰௬ முதல்மாதம் பதினாலாந்தினமே யெகோ
௰௭ வாவுக்குரிய பஷ்கா.—அந்தமாதம் பதினைந்தாந்
தினத்தில் உற்சவமிருக்கும்: ஏழுநாள்வரைக்கும்
புளிப்பில்லாத அப்பங்களைப்புசிக்கவேண்டும்.-
௰௮ முதலாம்நாளிலே திருச்சபைகூடவேண்டும்; அ
தில் எவ்விதகிரியைகளுஞ் செய்யப்படாது.—
௰௯ அப்பொழுது நீங்கள் யெகோவாவுக்குத்தக
னபலியாக இரண்டு இளங்காளைகளையும், ஒரு
ஆட்டுக்கடாவையும், குற்றமற்ற ஒருவருஷத்து
௨௰ ஏழாட்டுக்குட்டிகளையும்,-அவைகளுக்குரியநை
வேத்தியங்களாக, எண்ணெயிற்பிசைந்தமெல்லி
யமாவில் காளைக்காக எபாவில் பத்தில்மூன்று
பங்கையும், ஆட்டுக்கடாவுக்காக எபாவில் பத்
௨௧ திலிரண்டு பங்கையும்,—ஏழாட்டுக் குட்டிகளி
லொவ்வொன்றுக்கு எபாவில் பத்திலொருபங்
௨௨ கையும்,—உங்களுக்குப்பிராயச்சித்தஞ்செய்யும்
பொருட்டுப் பிராயச்சித்தபலியாக ஒரு வெள்
௨௩ ளாட்டுக்கடாவையுஞ் செலுத்தவேண்டும்.—கா
லையிலே நித்தமுமிடப்படுந் தகனபலியேயன்றி
௨௪ இவைகளையுஞ்செலுத்தக்கடவீர்கள்.—இந்தப்பிர
காரம் ஏழுநாள்வரைக்கும்நாடோறும் யெகோ
வாவுக்குச் சுகந்தவாசனையான தகனபலியைச்
செலுத்தக்கடவீர்கள்: நித்தமும் பானபலியுட
னிடப்படுந் தகனபலியேயன்றி இதையுஞ் செ
லுத்த வேண்டும்.—ஏழாந்தினத்தில் திருச்சபை ௨௫
கூடவேண்டும்; அதில் எந்தக்கிரியையுஞ்செய்ய
வேண்டாம்.

இன்னும் அவ்வாரத்திற்குப்பின் புது நைவேத் ௨௬
தியமாகிய முதற்பலத்தை நீங்கள் யெகோவா
வுக்கு நிவேதிக்கும் உற்சவதினத்திலும் திருச்ச
பைகூடவேண்டும்; அதில் எந்தக்கிரியைகளுஞ்
செய்யப்படாது:—அப்பொழுது நீங்கள் யெ ௨௭
கோவாவுக்குச் சுகந்த தகனபலியாக இரண்
டு இளங்காளைகளையும், ஒரு ஆட்டுக்கடாவையும்,
ஒருவருஷத்து ஏழு ஆட்டுக்குட்டிகளையும்,—அ ௨௮
வைகளுக்கேற்றநைவேத்தியமாக, எண்ணெயிற்
பிசைந்தமெல்லியமாவில் ஒருகாளைக்காக எபா
வில் பத்தில் மூன்றுபங்கையும், ஒரு ஆட்டுக்
கடாவுக்காக எபாவில் பத்திலிரண்டு பங்கை
யும்,—ஏழாட்டுக்குட்டிகளில் ஒவ்வொன்றுக்காக ௨௯
எபாவில் பத்திலொரு பங்கையும்,—உங்களுக் ௩௰
குப் பிராயச்சித்தஞ் செய்யும்பொருட்டு, ஒரு
வெள்ளாட்டுக் கடாவையுஞ் செலுத்த வேண்
டும்:—நித்தியதகனபலியையும், அதின்நைவேத் ௩௧
தியத்தையும், அவைகளின் பானபலியையுமன்
றி இவைகளையுஞ் செலுத்தக்கடவீர்கள்: இவை
கள் குற்றமற்றவைகளாயிருக்கவேண்டும்.

## ௨௯. அதிகாரம்.

௧. எக்காள உற்சவத்திலிடும்பலி: ௭. திருச்சபை
-கூடும்பொழுது இடும்பலிமுதலியவைகள்: ௰௩.
கூடார உற்சவகாலத்திலிடும் பலிமுதலியவை
கள்.

ஏழாம்மாதம் முதற்தினத்திலே திருச்சபைகூட ௧
வேண்டும்; அதில் எந்தக்கிரியையுஞ் செய்ய
வேண்டாம்: அதுஉங்களுக்குஎககாளந்தொனிக்
குந்தினமாயிருக்கும்.—அப்பொழுது நீங்கள் வி ௨
திப்படி யெகோவாவுக்கு அக்கினியிலிடப்
படுஞ்சுகந்தபலியாக மாதந்தோறுமிடுந்தகனபலி
யையும், அதின் நைவேத்தியத்தையும், தினந்
தோறுமிடுந் தகனபலியையும், அதின் நைவேத்
தியத்தையும், அவைகளுக்குரிய பானபலிகளையு
மன்றி.—யெகோவாவுக்குச் சுகந்த தகனபலி ௩
யாக ஒரு இளங்காளையையும், ஒரு ஆட்டுக்கடா
வையும், குற்றமற்ற ஒருவருஷத்து ஏழாட்டுக்
குட்டிகளையும்,—அவைகளுக்கேற்ற நைவேத்தி ௪
யமாக எண்ணெயிற்பிசைந்த மெல்லியமாவிலே
காளைக்காக எபாவில் பத்தில்மூன்றுபங்கையும்,
ஆட்டுக்கடாவுக்காக எபாவில் இரண்டுபங்கை
யும்,-ஏழாட்டுக்குட்டிகளிலொவ்வொன்றுக்காக ௫
எபாவில் ஒருபங்கையும்,—உங்களுக்காகப் பாவ ௬
பிராயச்சித்தஞ் செய்யும்பொருட்டு, பிராயச்சித்
தபலியாக ஒருவெள்ளாட்டுக் கடாவையுஞ்செ
லுத்தவேண்டும்.

(௰) எசேக்.௪௬.௪. (௰௧) ௧.சாமு.௨௰.௫. ௨.நாளா.௨.௪. எஸ்றா.௩.௫. எசா.௧.௰௩,௰௪. ஓசி.௨.௰௧. கொலோ.௨.௰௬. (௰௪) யாத்.௰௨.௬,௰௮. ௨பா.௰௬.௧. (௰௭) லேவி.௨௩.௬. (௰௮) யாத்.௰௨.௰௬. லேவி.௨௩.௭. (௰௯) லேவி.௨௨.௨௰. ௨பா.௰௫.௨௧. (௨௫) யாத்.௰௨.௰௬. லேவி.௨௩.௮. (௨௬) யாத்.௨௩.௰௬. லேவி.௨௩.௰,௰௫. ௨பா.௰௬.௰. அப்.௨.௧. (௨௭) லேவி.௨௩.௰௮,௰௯.—(௨௯. அதி. ௧.) லேவி.௨௩.௨௪. (௨) அதி.௨௮.௰௧. அதி.௨௮.௩. அதி.௰௫.௰௧,௰௨.

௭ இந்த ஏழாம்மாதம் பத்தாந்தினத்திலே திருச்
சபைகூடவேண்டும்; அதிலே நீங்கள் எந்தக்கிரி
யையுஞ் செய்யாமல் உங்கள் ஆத்துமத்தைத்துக்
௮ கப்படுத்த வேண்டும்.—இன்னும், பிராயச்சித்த
பலியையும், தினந்தோறுமிடுந்தகனபலியையும்,
அதின் நைவேத்தியத்தையும், அவைகளின் பா
௯ னபலிகளையுமன்றி.–யெகோவாவுக்குச்சுகந்
த தகனபலியாக ஒருகாளையையும், ஒரு ஆட்டுக்
கடாவையும், குற்றமற்ற ஒருவருஷத்து ஏழாட்
௰ டுக்குட்டிகளையும்,–அவைகளுக்கேற்ற நைவேத்
தியமாக எண்ணெயிற்பிசைந்த மெல்லியமாவி
லே காளைக்காக ஏபாவில் பத்தில்மூன்றுபங்கை
யும், அந்த ஒரு ஆட்டுக்கடாவுக்காக ஏபாவில்
௰௧ பத்தில் இரண்டுபங்கையும்,—ஏழாட்டுக்குட்டி
களில் ஒவ்வொன்றுக்காக ஏபாவில் ஒருபங்கை
யும், பிராயச்சித்த பலியாக ஒரு வெள்ளாட்டுக்
கடாவையுஞ்செலுத்தவேண்டும்.
௰௨ ஏழாம்மாதம் பதினைந்தாந்தினத்திலே திருச்ச
பைகூடவேண்டும்; அதில் எந்தவேலையையுஞ்
செய்யலாகாது: யெகோவாவுக்காக ஏழுநாள்
௰௩ உற்சவங்கொண்டாடவேண்டும்.—நீங்கள் யெ
கோவாவுக்கு அக்கினியிலிடப்படுஞ் சுகந்த
தகனபலியாகப் பதின்மூன்று காளைகளையும், இ
ரண்டு ஆட்டுக்கடாக்களையும், குற்றமற்ற ஒருவ
௰௪ ருஷத்துப்பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,—அ
வைகளுக்கேற்ற நைவேத்தியமாக, எண்ணெ
யிற்பிசைந்த மெல்லியமாவில், அந்தப்பதின்
மூன்றுகாளைகளிலொவ்வொன்றுக்காகஏபாவில்
பத்தில் மூன்றுபங்கையும், அந்த இரண்டு ஆட்
டுக்கடாக்களி லொவ்வொன்றுக்காக ஏபாவில்
௰௫ பத்தில் இரண்டுபங்கையும்,–பதினாலு ஆட்டுக்
குட்டிகள் ஒவ்வொன்றுக்காக ஏபாவில் பத்தில்
௰௬ ஒருபங்கையும்,—நித்தமிடுந் தகனபலியையும்,
அதின் நைவேத்தியத்தையும், அதின் பானபலி
யையுமன்றி, பிராயச்சித்த பலியாக ஒரு வெள்
ளாட்டுக்கடாவையும்,
௰௭ இரண்டாம்நாளிலே பன்னிரண்டு இளங்கா
ளைகளையும், இரண்டுஆட்டுக்கடாக்களையும், குற்
றமற்ற ஒரு வருஷத்துப்பதினாலு ஆட்டுக்குட்டி
௰௮ களையும்,–காளைகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்
டுக்குட்டிகளும்இருக்கிறதொகைக்கேற்க,விதிப்
படி, அவைகளுக்கேற்ற நைவேத்தியத்தையும்,
௰௯ அவைகளின் பானபலிகளையும்,–அன்றன்றுள்ள
தகனபலியையும், அதின் நைவேத்தியத்தையும்,
அவைகளின் பானபலிகளையுமன்றி, பிராயச்சித்
தபலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்;
௨௰ மூன்றும் நாளிலே பதினொருகாளைகளையும்,
இரண்டு ஆட்டுக்கடாக்களையும், குற்றமற்ற ஒரு
வருஷத்துப்பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,—
௨௧ காளைகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டி
களும் இருக்கிற தொகைக்கேற்க, விதிப்படி, அ
வைகளுக்கேற்ற நைவேத்தியத்தையும், அவை
௨௨ களின் பானபலிகளையும்,—அன்றன்றுள்ள தக
னபலியையும், அதின் நைவேத்தியத்தையும், அ
தின் பானபலியேயன்றி, பிராயச்சித்தபலியாக
ஒருவெள்ளாட்டுக்கடாவையும்;
நாலாம்நாளிலே பத்துக்காளைகளையும், இரண் ௨௩
டுஆட்டுக்கடாக்களையும், குற்றமற்ற ஒருவருஷத்
துப்பதினாலு ஆட்டுக் குட்டிகளையும்,—காளைக ௨௪
ளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டிகளும்
இருக்கிற தொகைக்கேற்க, விதிப்படி, அவைக
ளுக்கேற்ற நைவேத்தியத்தையும், அவைகளின்
பானபலிகளையும்,–நித்தமிடுந் தகனபலியையும், ௨௫
அதின்நைவேத்தியத்தையும்அதின்பானபலியை
யுமன்றி, பிராயச்சித்தபலியாக ஒருவெள்ளாட்
டுக்கடாவையும்;
ஐந்தாம்நாளில் ஒன்பது காளைகளையும், இ ௨௬
ரண்டு ஆட்டுக்கடாக்களையும், குற்றமற்ற ஒருவ
ருஷத்துப்பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,—கா ௨௭
ளைகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டிக
ளுமிருக்கிற தொகைக்கேற்க, விதிப்படி, அவை
களுக்கேற்றநைவேத்தியத்தையும், அவைகளின்
பானபலிகளையும்,—நித்தமுமிடுந் தகனபலியை ௨௮
யும், அதின் நைவேத்தியத்தையும், அதின்பான
பலியையுமன்றி, பிராயச்சித்தபலியாகஒருவெள்
ளாட்டுக்கடாவையும்;
ஆறும்நாளில் எட்டுக்காளைகளையும், இரண்டு ௨௯
ஆட்டுக்கடாக்களையும், குற்றமற்ற ஒருவருஷத்
துப்பதினாலு ஆட்டுக் குட்டிகளையும்,—காளைக ௩௰
ளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டிகளுமி
ருக்கிறதொகைக்கேற்க, விதிப்படி, அவைகளுக்
கேற்ற நைவேத்தியத்தையும், அவைகளின்பான
பலிகளையும்,-நித்தமுமிடுந் தகனபலியையும், அ ௩௧
தின் நைவேத்தியத்தையும், அதின்பானபலியை
யுமன்றி, பிராயச்சித்தபலியாக ஒரு வெள்ளாட்
டுக்கடாவையும்;
ஏழாம்நாளில் ஏழுகாளைகளையும், இரண்டு ௩௨
ஆட்டுக்கடாக்களையும், குற்றமற்ற ஒருவருஷத்
துப்பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,—காளைக ௩௩
ளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டிகளுமி
ருக்கிற தொகைக்கேற்க, விதிப்படி, அவைக
ளுக்கேற்ற நைவேத்தியத்தையும், அவைகளின்
பானபலிகளையும்,—நித்தமுமிடுந் தகனபலியை ௩௪
யும், அதின் நைவேத்தியத்தையும், அதின் பான
பலியையுமன்றி,பிராயச்சித்தபலியாக ஒருவெள்
ளாட்டுக்கடாவையுஞ் செலுத்தக்கடவீர்கள்.
எட்டாந்தினத்தில் மகாசபைகூடவேண்டும். ௩௫
அதில் எந்தக்கிரியையுஞ் செய்யவேண்டாம்.-
அப்பொழுது நீங்கள் யெகோவாவுக்கு அக் ௩௬
கினியிலிடுஞ் சுகந்த தகனபலியாக ஒரு காளை
யையும், ஒரு ஆட்டுக்கடாவையும், குற்றமற்ற
ஒருவருஷத்து ஏழாட்டுக்குட்டிகளையும்,—கா ௩௭
ளையும் ஆட்டுக்கடாவும் ஆட்டுக்குட்டிகளுமி
ருக்கிற தொகைக்கேற்க, விதிப்படி, அவைக
ளுக்கேற்ற நைவேத்தியத்தையும், அவைகளின்
பானபலிகளையும்,—நித்தமுமிடுந் தகனபலியை ௩௮

(௭) லேவி.௰௬.௨௯. சங்.௩௫.௰௩. ஏசா.௫௮.௫. (௮) லேவி.௰௬.௩௫. (௯) அதி.௨௮.௰௯. (௰௨) லேவி.௨௩.௩௪. உபா.௰௬.௰௩. (௰௩) எஸ்றா.௩.௪. (௰௮) அதி.௰௫.௰௨. (௩௫) லேவி.௨௩.௩௬.

யும், அதின் நைவேத்தியத்தையும், அதின் பானபலியையுமன்றி, பிராயச்சித்தபலியாக ஒரு வெள்ளாட்டுக் கடாவையுஞ் செலுத்தக்கடவீர்
ஙகூ கள்.—உங்கள் சங்கற்பங்களும், உங்கள் இஷ்டபலிகளும், உங்கள் தகனபலிகளும், உங்கள்நைவேத்தியங்களும், உங்கள்பானபலிகளும், உங்கள் ஸ்தோத்திரபலிகளுமாகியஇவைகளையன்றி, நீங்கள் உங்களுக்குக்குறிக்கப்பட்ட உற்சவங்களில் யெகோவாவுக்குச் செலுத்தவேண்டியவைகள் இவைகளேயென்றுசொல்லென்றார்.-
சய யெகோவாமோசேக்குக் கட்டளையிட்டபடியெல்லாம் மோசே இஸரவேல் சந்ததியாருக்குச் சொன்னான்.

## ஙய. அதிகாரம்.

க. சங்கற்பங்கள் தவறாமல்நிறைவேற்றுவது அவசியமெனல்: ங. கன்னியர்செய்யுஞ் சங்கற்பம் பிதாவினுத்தரவினால் தடை படலாமெனல்: சு. மனைவிசெய்யுஞ்சங்கற்பம் புருஷனுத்தரவினாற் தடைபடலாகுமெனல்: கூ. விதவைசெய்யுஞ்சங்கற்பத்தின்பலனையும் பலனின்மையையுங்காட்டல்.

மோசே இஸரவேல்சந்ததியாருடைய வமிசத்
உ துக்கதிபதிகளைநோக்கி,-ஒருவன் யெகோவாவுக்குச் சங்கற்பம்பண்ணியாவது, யாதொருகடமைசெய்யும்படி ஆணையிட்டுத்தன்மனதைக்கட்டுப்படுத்தியாவதிருந்தால், அவன் சொல் தவறாமல் தன் வாக்கினாலே சொன்னபடியெல்லாஞ் செய்யக்கடவன்.
ங தனது பிதாவீட்டிலிருக்கிற ஒரு கன்னிகை, தன் இளம்பிராயத்தில் யெகோவாவுக்குச் சங்கற்பம்பண்ணியாவது, யாதொருகடமையைச்செய்யும்பொருட்டுத்தன்மனதைக்கட்டுப்படுத்
ச தியாவதிருந்தால்,—அவள்செய்த சங்கற்பத்தையும்,யாதொருகடமைசெய்யும்படி தன்மனதைக் கட்டுப்பாடுசெய்ததையும்,அவளுடைய பிதாகேட்டும் பேசாமலிருப்பானானால், அவள்செய்தசகலசங்கற்பங்களும், அவள் தன்மனதைக் கட்டுப்பாடுசெய்தகடமையும், நிறைவேறவேண்டும்.—
ரு அவன் செய்த சகலசங்கற்பங்களையும்,யாதொரு கடமைசெய்யும்படி தன்மனதைக் கட்டுப்பாடுசெய்ததையும், அவளுடைய பிதாகேள்விப்பட்டபொழுது, செய்யாதபடி அவளைவிலக்கினால், அது நிறைவேறவேண்டுவதில்லை: அவளுடைய பிதாஅதற்குச்சம்மதியாதபடியினாலே யெகோவா அதை அவளுக்குமன்னிப்பார்.
சு அவள் சங்கற்பஞ்செய்யும்பொழுதாயினும், யாதொரு கடமையைச்செய்யும்படி தன் வாக்கினால் தன் மனதைக்கட்டுப்பாடு செய்யும்பொழு
எ தாயினும், அவளுக்குப்புருஷனிருந்தால்,—அப்பொழுது அவளுடைய புருஷன் அதைக்கேட்டநாளிலே பேசாமலிருந்தால், அவளுடைய சங்கற்பங்களும், தன்மனதைக்கட்டுப்பாடுசெய்துகொண்ட கடமையும், நிறைவேறவேண்டும்:—
அவளுடைய புருஷன் அதைக்கேட்டநாளில் அ
அவளை விலக்கினானாகில் அவள்செய்த சங்கற்பமும், அவள்தன்வாக்கினாலே மனதைக்கட்டுப்பாடுபண்ணிக்கொண்ட கடமையும், விருதாவாகும்; அப்பொழுது யெகோவா அதை அவளுக்குமன்னிப்பார்.
விதவையாவது, தள்ளப்பட்ட ஸ்திரியாவது, கூ
தன்மனதைக் கட்டுப்பாடுசெய்யும் ஒவ்வொரு சங்கற்பமும் நிறைவேறவேண்டும்.—அவள்தன் ய
புருஷனிடத்திலிருக்கையிற் சங்கற்பம்பண்ணியாயினும், யாதொரு கடமையைச்செய்யும்படி ஆணையிட்டுத் தன்மனதைக் கட்டுப்பாடுசெய்தாயினுமிருக்கிறபொழுது,-அவளுடைய புருஷன் யக
அதைக்கேட்டும் அவளை விலக்காமல் பேசாமலிருந்தானானால், அவள்செய்த சங்கற்பங்கள் யாவும், அவள் தன் மனதைக்கட்டுப்பாடுசெய்த கடமைகள்யாவும் நிறைவேற்றவேண்டும்.—அவ யஉ
ளுடைய புருஷன் அவைகளைக்கேட்டநாளில் அவளை விலக்கினானாகில், அப்பொழுது அவள் தன் சங்கற்பங்களையும், அவள் தன்மனதைக்கட்டுப்பாடுசெய்த கடமையையுங்குறித்துப் பேசினவாக்கு நிலைகொள்ளாது: அவளுடைய புருஷன் அதை விலக்கினபடியினாலே யெகோவா அதை அவளுக்கு மன்னிப்பார்.—ஆத்துமத் யங
தை உபத்திரவப்படுத்தும்படிசெய்யும் எந்தச்சங்கற்பத்தையாயினும், எந்த ஆணைகளையாயினும், அவளுடையபுருஷனால்நிலைப்படுத்தவுங்கூடும், விலக்கவுங்கூடும்.—அவளுடையபுருஷன் ஒரு யச
நாளும் அவளுக்கொன்றுஞ்சொல்லானாகில், அவன் அவளுடைய சங்கற்பங்கள்யாவையும், அவள்தன்மனதைக்கட்டுப்படுத்துங்கடமைகள் யாவையும் நிலைப்படுத்துகிறான்: அவன் அதைக் கேட்டநாளிலே பேசாமலிருப்பதினால் அவன் அவைகளைநிலைப்படுத்துகிறான்.—அவன் அதைக் யரு
கேட்டபின்பு விலக்கினானாகில் அவளுக்குவருங்குற்றத்தை அவனேசுமப்பான்: யெகோவாகட்டளையிட்டகாரியம் இதுவேயென்றான்.-
ஸ்திரியையும், புருஷனையும், பிதாவையும், மா யசு
தாவையும், இளம்பிராயத்தில் அவன் வீட்டிலிருக்கும் அவன்புத்திரியையுங்குறித்து யெகோவா மோசேக்குவிதித்த விதிப்பிரமாணங்கள் இவைகளே.

## ஙக. அதிகாரம்.

க. மீதியானியரைத்தண்டித்தல்:பிலியாமைக்கொல்லல்: யங. ஸ்திரிகளைரட்சித்ததினிமித்தம்மோசே படைஞர்மேற்கோபித்தல்: யகூ. அவர்கள் சுசிசெய்தல்: உரு. கொள்ளையிட்டபொருளைப் பகிர்தல்: சஅ. சேனாபதிகள் யெகோவாவுக்குக்காணிக்கையிடல்.

பின்பு யெகோவா மோசேயைநோக்கி,— க
இஸரவேல்சந்ததியார்நிமித்தம் மீதியானியரிடத் உ

(ஙகூ) லேவி.உங.உ. நிகி.ய.ஙஉ. எசா.க.யச. லேவி.எ.யக,யசு.—(ஙய. அதி. க.) அதி.க.ச,யசு. (உ) லேவி.உஎ.உ. உபா.உங.உக. நியா.யக.ஙக,ஙரு. பிர.ரு.ச. லேவி.ரு.ச. மத்.யச.கூ. அப்.உங.யச. சங்.ருரு.உய. யோபு.உஉ.உஎ. சங்.உஉ.உரு. நாகூ.க,யரு. (சு) சங்.ருசு.யஉ. (அ) ஆதி.ங.யசு.—(ஙக. அதி.)

திற் பழிவாங்குவாயாக: அதன்பின்பு உன்பிதா
வின்சனங்களுடன் சேர்க்கப்படுவாயென்றார்.–
௩ மோசே சனங்களைநோக்கி, யெகோவாவினி
மித்தம் மீதியானியரிடத்திற் பழிவாங்கும்பொ
ருட்டு உங்களிற் சிலர் படையெடுக்கும்படி ஆ
யத்தமாகி மீதியானியருக்கு விரோதமாய்ப்புறப்
௪ படக்கடவர்கள்.—இஸரவேலருடைய கோத்தி
ரங்கள் யாவற்றிலும் ஒவ்வொருகோத்திரத்திலும்
ஒவ்வொரு ஆயிரவரை யுத்தத்திற்கனுப்பவேண்
௫ டுமென்றான்.—அப்படியே இஸரவேலராகிய அ
நேக ஆயிரவரில் ஒவ்வொரு கோத்திரத்திற்கு
ஒவ்வொரு ஆயிரவராகப்பன்னீராயிரம்பேர் தெ
ரிந்துகொள்ளப்பட்டு யுத்தசன்னத்தமானார்கள்.–
௬ மோசே அவர்களையும், ஆசாரியனான எலீயே
சாரின் புத்திரனாகிய பீனிகாசையும், யுத்தத்திற்
கு அனுப்புகையில், பரிசுத்தபாத்திரங்களையும்,
ஊதும்படி அவன்கையில்எக்காளங்களையுங்கொ
எ டுத்தனுப்பினான்.—யெகோவா மோசேக்குக்
கட்டளையிட்டபடியே அவர்கள் மீதியானியரு
டன் யுத்தம்பண்ணிச் சமஸ்தபுருஷரையுங் கொ
அ ன்றுபோட்டார்கள்.–அவர்களைக்கொன்றதுமன்
றி மீதியானியருடைய இராசாக்களாகிய எவி,
ரேக்கேம், சூர், ஊர், ரேபாவென்னும் இவ்
வைந்து இராசாக்களையுங் கொலைசெய்தார்கள்.
பேயோரின் புத்திரனாகிய பிலியாமைக் கட்கத்
௯ தினாலே கொன்றுபோட்டார்கள்.—அன்றியும்
இஸரவேல் சந்ததியார் மீதியானியருடைய ஸ்தி
ரிகளையும், குழந்தைகளையும், சிறைப்பிடித்து அ
வர்களுடைய மிருகங்கள்யாவையும், ஆடுகள்யா
வையும், மற்றை ஆஸ்திகள்யாவையுங்கொள்ளை
௰ யிட்டு,—அவர்கள் வசித்த பட்டணங்களெல்லா
வற்றையுங் கோட்டைகளெல்லாவற்றையும் அக்
௰௧ கினியினாற்சுட்டெரித்து,—தாங்கள் கொள்ளை
யிட்ட பொருளையும், தாங்கள் சூறையாடிய ம
னிதரையும், மிருகங்களையுங்கைக்கொண்டு,—
௰௨ சிறைப்பிடிக்கப்பட்ட மனிதரையும், மிருகங்க
ளையும், மற்றைப்பொருள்களையும், யெரீகோவி
னருகேயுள்ள யோர்தான்நதிக்கு இக்கரையிலே
மோவாபின் சமனானவெளிகளிலுள்ள பாளயத்
திலிருந்த மோசேயினிடத்திலும், ஆசாரியனா
கிய எலீயேசாரினிடத்திலும், இஸரவேல் சந்த
தியாராகிய சபையாரிடத்திலும், கொண்டுவந்
தார்கள்.
௰௩ அவர்களை எதிர்கொள்ளும்படி மோசேயும் ஆ
சாரியனாகிய எலீயேசாரின் சபையின் பிரபுக
ளெல்லாரும் பாளயத்திற்குவெளியே புறப்பட்
௰௪ டார்கள்.–அப்பொழுது மோசே யுத்தத்திலிருந்
துவந்த ஆயிரம்பெயருக்குத்தலைவரும், நூறுபெய
ருக்குத் தலைவருமாகிய சேனாபதிகள்மேல் கடுங்
௰௫ கோபங்கொண்டு,-அவர்களைநோக்கி, ஸ்திரிகள்
யாவரையும் உயிரோடே விட்டு விட்டீர்களா.–
௰௬ கேளுங்கள், பேயோரின் காரியத்திலே பிலியா
மின் ஆலோசனையினால் இஸரவேல் சந்ததியார்
யெகோவாவின் கட்டளையைமீறும்படிசெய்
தவர்கள் இவர்களே: அதினால் வாதை யெகோ
வாவின் சபைக்கு நேரிட்டதே.—ஆதலால் ௰௭
ஆண்குழந்தைகளையும், புருஷரையறிந்த ஸ்திரிக
ளையுங்கொன்றுபோடுங்கள்.—புருஷரை யறியா ௰௮
தஸ்திரிகள்யாவரையுமுங்களுக்காக உயிரோடே
வைத்துக்கொள்ளுங்கள்.-பின்பு நீங்கள் ஏழுநாள் ௰௯
பாளயத்திற்குப் புறம்பேதங்குங்கள். சீவனை வ
தைசெய்தும், வெட்டுண்டவர்களைப் பரிசித்தும்
வந்த நீங்கள்யாவரும் மூன்றாம் நாளிலும் ஏழாம்
நாளிலும் உங்களையும், உங்களாற் சிறைப்பிடிக்
கப்பட்டவர்களையும், சுசிப்படுத்துவீர்களாக.—
அப்படியே எல்லாவஸ்திரங்களையும், தோலாற் ௨௰
செய்த கருவிகளையும், வெள்ளாட்டுமயிர்நெச
வையும், மரப்பாத்திரங்களையுஞ்சுத்திகரிக்கக்கட
வீர்களென்றான்.
ஆசாரியனாகிய எலீயேசாரும் யுத்தத்திற்குப் ௨௧
போய்வந்த சேனாபதிகளைநோக்கி,—அக்கினியி ௨௨
லேபோடத்தக்க பொன், வெள்ளி, பித்தளை, இ
ரும்பு, வெள்ளீயங் காரீயமென்னுமிவைகளெல்
லாஞ்சுத்தமாகும்படிக்கு,—அவைகளை அக்கினி ௨௩
யிலே போட்டெடுக்கக்கடவீர்கள்; அசுசியை
நீக்குந்தண்ணீராலும் அவைகள் சுத்திகரிக்கப்ப
டவேண்டும்: அக்கினியிலே போடத்தகாதவை
களையெல்லாந் தண்ணீரினாலே சுத்தம்பண்ணக்
கடவீர்கள்:—ஏழாம் நாளில் உங்கள் வஸ்திரங் ௨௪
களைத்தோய்க்கவேண்டும்; அப்பொழுது சுசியா
வீர்கள்; நீங்கள் பாளயத்திற் பிரவேசிக்கலாம்:
இதுவே யெகோவா மோசேக்கிட்ட கட்ட
ளைப்பிரமாணமென்றான்.
யெகோவா மோசேயைநோக்கி,–நீயும் ஆ ௨௫
சாரியனாகிய எலீயேசாருஞ் சபையின் பிதா ௨௬
வின் வமிச அதிபதிகளுங் கொள்ளையிடப்பட்
டமனிதரையும் மிருகங்களையுந் தொகைப்படுத்
தி,-கொள்ளையிடப்பட்டதை இரண்டுபங்காகப் ௨௭
பகிர்ந்து, யுத்தத்திற்குப் படையெடுத்தவர்களுக்
குஞ் சமஸ்தசபையாருக்குங் கொடுக்கக்கடவீர்
கள்.—மேலும் யுத்தத்திற்குப்போன படைவீரரி ௨௮
டத்தில் அவர்கள் பாதிப்பங்கிலே யெகோவா
வினிமித்தம் மனிதரிலும், மாடுகளிலும், கழுதை
களிலும், ஆடுகளிலும், ஐந்நூற்றிற்கு ஒருபிராணி
வீதமாகத் திறைவாங்கி.-யெகோவாவுக்கு உ ௨௯
யர்த்தும்நைவேத்தியமாக ஆசாரியனாகிய எலீயே
சாருக்குக்கொடுக்கக்கடவீர்கள்.-இஸரவேல் சந் ௩௰
ததியாரின் பாதிப்பங்கிலே மனிதரிலும் மிருகங்
களாகிய மாடுகள் கழுதைகள் ஆடுகள் யாவற்றி
லும் ஐம்பதிற்கொன்று வீதமாய்வாங்கி யெகோ
வாவின் ஆவாசத்தின்காவலைக்காத்துக்கொண்டி
ருக்கும் லேவியருக்குக்கொடுக்கவேண்டுமென்
றார்.—யெகோவா மோசேக்குக்கட்டளையிட் ௩௧
டபடியே மோசேயும் ஆசாரியனாகிய எலீயே

(எ) உபா.௨௰.௰௩. நியா.௨௧.௰௧. ௧.சாமு.௨எ.௯. ௧.இரா.௰௧.௰௫,௰௬. நியா.௬.௧,௨,௩. (அ) யோசு.௰௩.௨௧. (௰௫) உபா.௨௰.௰௪. ௧.சாமு.௰௫.௩. (௰௬) அதி.௨௫.௨. அதி.௨௪.௰௪. ௨.பேதுரு.௨.௰௫. வெளி.௨.௰௪. அதி. ௨௫.௯. (௰எ) நியா.௨௧.௰௧. (௰௯) அதி.௫.௨. (௨எ) யோசு.௨௨.அ. ௧.சாமு.௩௰.௨௪.

௩௨ சாருஞ்செய்தார்கள்.—படைவீரர்கொள்ளையிட்
டபொருளில் ஆறிலட்சத்து எழுபத்தையாயி
௩௩ ரம் ஆடுகளும்,—எழுபத்திராயிரம் மாடுகளும்.—
௩௪ அறுபத்தையாயிரங் கழுதைகளும் மீந்திருந்தன
௩௫ வன்றி,—புருஷரை அறியாத ஸ்திரிகளிலும்முப்
௩௬ பத்திராயிரம்பேரிருந்தார்கள்.—யுத்தஞ்செய்யப்
போனவர்களுக்குக்கிடைத்தபாதிப்பங்கின்தொ
கையாதெனில் ஆடுகள்மூன்றிலட்சத்து முப்பத்
௩௭ தேழாயிரத்தைஞ்ஞூறு.-இந்தஆடுகளில்யெகோ
வாவுக்குத்திறையாகவந்தவை அறுநூற்றெழுபத்
௩௮ தைந்து.-மாடுகள்முப்பத்தாறாயிரம்; அவைகளில்
யெகோவாவுக்குத் திறையாகவந்தவை எழு
௩௯ பத்திரண்டு.—கழுதைகள் முப்பதினாயிரத்தைஞ்
ஞூறு; அவைகளில் யெகோவாவுக்குத்திறை
௪௰ யாய்வந்தவை அறுபத்துமூன்று.—மனிதர்கள் பதி
னாயிரம்பேர்;அவர்களில் யெகோவாவுக்குத்
௪௧ திறையாய்வந்தவர்கள்முப்பத்திரண்டுபேர்.-யெ
கோவாவுக்கு உயர்த்தும்நைவேத்தியமாகவாங்
கிக்கொண்ட அந்தத்திறையை மோசே தனக்கு
யெகோவா கட்டளையிட்டபடியே ஆசாரிய
௪௨ னாகிய எலீயேசாரிடத்தில் கொடுத்தான்,-யுத்தம்
பண்ணினபேர்களுக்கும், இஸரவேல் சந்ததியா
ருக்கும், மோசே பாதிபாதியாகப் பங்கிட்டப
௪௩ டியே,-சபையாருக்குவந்தபாதிப்பங்கு ஆடுகளி
ல் மூன்றிலட்சத்து முப்பத்தேழாயிரத்தைஞ்ஞூ
௪௪ றும்,-மாடுகளில் முப்பத்தாறாயிரமும்,-கழுதைக
௪௫ ளில் முப்பதினாயிரத்தைஞ்ஞூறும்,—மனிதரிற் ப
௪௬ தினாறாயிரம்பேருமாம்.—இஸரவேல் சந்ததியாரு
௪௭ டைய பாதிப்பங்குக்குவந்த இந்த மனிதரிலும்
மிருகங்களிலும் மோசே ஐம்பதுக்கொன்று வீத
மாகவாங்கித் தனக்கு யெகோவா கட்டளை
யிட்டபடியே யெகோவாவின்ஆவாசகாவல்
காத்திருக்கிற லேவியருக்குக்கொடுத்தான்.
௪௮ பின்பு ஆயிரம்பெயருக்குத்தலைவரும் நூறுபெ
யருக்குத்தலைவருமாகிய சேனாபதிகள் மோசேயி
௪௯ டத்தில்வந்து,—அவனைநோக்கி, உமதடியாராகி
ய நாங்கள் எங்கள் கையின்கீழ்ப்பட்ட படை
களின் தொகையைப்பார்த்தோம்; அவர்களுக்
௫௰ குள்ளே ஒருவருங்குறையவில்லை.-ஆதலால் யெ
கோவாவின் சந்நிதியில் எங்கள் ஆத்துமத்
திற்குப்பிராயச்சித்தஞ்செய்யும்பொருட்டு,எங்க
ளெங்களுக்குக்கிடைத்த பொற்பணிகளாகிய க
டகங்களையும், சரிகளையும், மோதிரங்களையும்,
காதணிகளையும்,ஆரங்களையும்,யெகோவாவுக்
குக் காணிக்கையாகக்கொண்டுவந்தோமென்றார்
௫௧ கள்.—அப்பொழுது மோசேயும் ஆசாரியனாகிய
எலீயேசாரும் பணிமுற்றிய சகல பொன்னாபர
ணங்களையும்அவர்களிடத்தில்வாங்கினார்கள்.—
௫௨ இப்படி ஆயிரம்பெயருக்குத் தலைவரானவர்களா
லும், நூறுபெயருக்குத் தலைவரானவர்களாலும்,
யெகோவாவுக்குக் காணிக்கையாகக் கொடுக்
கப்பட்ட பொன்முழுவதும் பதினாறாயிரத்தெழு
நூற்றைம்பதுஷேக்கல்நிறை.-படைவீரர்கள்ஒவ் ௫௩
வொருவரும் தங்கள் தங்களுக்காகக் கொள்ளை
யிட்டிருந்தார்கள்.—அப்பொழுது மோசேயும் ஆ ௫௪
சாரினாகிய எலீயேசாரும் ஆயிரம்பெயருக்குத்த
லைவரானவர்கள்கையிலும்நூறுபெயருக்குத்தலை
வரானவர்கள்கையிலுமுள்ள பொன்னை வாங்கி
இஸரவேல் சந்ததியார் நிமித்தம் ஞாபகக்குறியா
கச்சபையின்ஆவாசத்தில்யெகோவாவின்சந்
நிதியிற்கொண்டுவந்துவைத்தார்கள்.

## ௩௨. அதிகாரம்.

௧. காத்தின்கோத்திரத்தாரும் ரூபேன் கோத்திரத்தாரும் யோர்தானின் கீழ்த்திசையில் சுதந்தரம் வேண்டல்: ௬. மோசே அவர்களைக்கண்டித்தல்: ௰௬. அவர்கள் அதற்கு உத்தரங்கூறல்:௨௰. மோசே அவர்கள் பிரார்த்தனையை அங்கிகரித்தல்: ௩௩. அவர்கள்தேசத்தைச்செய்த்தல்.

ரூபேன் புத்திரருக்கும் காத் புத்திரருக்கும் ஆடு ௧
மாடுகள் மிகவுந்திரளாயிருந்தன: அவர்கள் யா
சேர்தேசத்தையும், கிலியாத்தேசத்தையும்பார்த்த
பொழுது அவர்கள் ஆடுமாடுகளுக்கு உபயோக
ஸ்தானமாயிருக்கக்கண்டார்கள்.—காத் வமிசத்தா ௨
ரும் ரூபேன்வமிசத்தாரும்வந்துமோசேயையும்,
ஆசாரியனாகிய எலீயேசாரையும், சபையின்அதி
பதிகளையும்நோக்கி,—யெகோவா இஸரவேல் ௩
சபைக்குமுன்பாக அடித்த அதரோத், தீபோன்,
யாசேர்,நிமறா,எஷபோன், எலியாலே, ஷிபாம்,
நேபோ, பெயோன் என்னும்பட்டணங்களைச்
சேர்ந்த நாடு, ஆடுமாடுகளுக்கு உபயோகமானஸ்
தானம்.—உமதடியாருக்கு ஆடுமாடுகளுண்டு.— ௪
எங்களுக்கு தயைசெய்யச் சித்தமானால், எங் ௫
களை யோர்தான்நதிக்கப்புறம் விடாமல் உமத
டியாருக்கு இந்தநாட்டைத் தரவேண்டுமென்
றார்கள்.
அப்பொழுது மோசேகாத்சந்ததியாரையும்,ரூ ௬
பேன்சந்ததியாரையும்நோக்கி,உங்கள்சகோதரர்
யுத்தத்திற்குப்போக நீங்கள் இங்கேயிருக்கவா:—
இஸரவேல்சந்ததியார் தங்களுக்கு யெகோவா ௭
அளித்ததேசத்திற்குப்போகாதபடி நீங்கள் அவர்
கள் இருதயத்தை மெலிவடையப்பண்ணுகிற
தென்ன.—அந்தத்தேசத்தைப்பார்ப்பதற்கு நான் ௮
உங்கள் பிதாக்களைக் காதேஷ்பர்னீயவிலிருந்த
னுப்பினபொழுது, அவர்களும் இப்படியேசெய்
தார்கள்.—அவர்கள் எஸ்கோலாகிய தாழ்ந்தபூமி ௯
மட்டும்போய்அத்தேசத்தைப்பார்த்துவந்து, இஸ
ரவேல் சந்ததியார்தங்களுக்கு யெகோவா அ
ளித்ததேசத்திற்குப் போகாதபடி,அவர்கள் இரு
தயத்தை மெலிவடையப்பண்ணினார்கள்.—அதி ௰
னால் யெகோவாவின் கோபமூள,—அவர், ௰௧
அந்நாளிலே சம்பூரணமாக என்னைப்பின்பற்றி
ன கேனாசியனான யெபுன்னேயின் புத்திரனாகிய
காலேபும்,நூனின்புத்திரன் யோசுவாவுமேயொ
ழிய,—எகிப்தைவிட்டுவந்தவர்களில் இருபதுவ ௰௨

(௫௰) யாத்.௩௰.௰௨,௰௬. (௫௩) உபா.௨௰.௰௪. (௫௪) யாத்.௩௰.௰௬.—(௩௨. அதி. ௧.) யோசு.௰௩.௨௫. ௨.சாமு.௨௪.௫. (௩) அதி.௨௧.௨௪,௩௪. (௮) உபா.௧.௨௨. (௯) அதி.௰௩.௨௪,௩௧. (௰) அதி.௰௪.௰௧,௨௧. (௰௧) அதி.௰௪.௨௪. யோசு.௰௪.௮.௯. (௰௨) அதி.௰௪.௨௮,௨௯. அதி.௰௪.௨௪,௩௰.

யதுமுதல் அதற்குமேற்பட்ட மனிதர்களொருவ
ரும் என்னைச்சம்பூரணமாகப்பின்பற்றாத படியி
னால், ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், யாக்கோ
புக்குந்தருவேனென்று நான் ஆணையிட்டதேசத்
தைக்காணார்களென்று ஆணையிட்டிருக்கிறார்.—
௰௩ அன்றியும், யெகோவாவின் கோபம் இஸர
வேலர்மேலேமூண்டது, யெகோவாதமதுச
முகத்தில்தீங்குசெய்த அந்தச் சகலசந்ததியாரும்
நாசமாகுமளவும் அவர்களைவனாந்தரத்திலே நாற்
௰௪ பதுவருஷம் அலையப்பண்ணினார்.-இஸரவேலர்
மேலிருக்கும் யெகோவாவின் உக்கிர கோ
பத்தை இன்னும் அதிகரிக்கப்பண்ணும்படிபாவ
முள்ள கூட்டத்தாராய் உங்கள்பிதாக்களுக்குப்
௰௫ பின்னாகத்தோன்றியிருக்கிறீர்கள்.—நீங்கள் அவ
ரைப்பின்பற்றாமல் திரும்பினால், அவரின்னும்
அவர்களை வனாந்தரத்தில் விட்டுவிடுவார்: இப்ப
டி நீங்கள் இந்தச் சகல சனங்களையும் நாசப்படுத்
துவீர்களென்றான்.

௰௬ அப்பொழுதுஅவர்கள்அவனுக்குச்சமீபத்தில்
வந்து, எங்கள் ஆடுமாடுகளுக்காகத்தொழுக்களை
யும், எங்கள் பிள்ளைகளுக்காகப்பட்டணங்களை
௰௭ யும், இங்கேயுண்டாக்குவோம்.—நாங்கள் இஸ
ரவேல் சந்ததியாரை அவர்கள் தானத்திற்குக்
கொண்டுபோகுமளவும் அவர்களுக்குமுன்யுத்த
சன்னத்தராய்நடப்போம்: எங்கள் பிள்ளைகள்
இத்தேசத்தாரினிமித்தம் அரணான பட்டணங்க
௰௮ ளிலே வசிக்கட்டும்.—யோர்தான்நதிக்கப்புறத்
திற் கிழக்கே எங்களுக்குச் சுதந்தரமுண்டான
படியினாலே, நாங்கள் அவர்களுடன்கூட யோர்
தானுக்கக்கரையிலும் அதற்கப்புறத்திலுஞ் சுதந்
௰௯ தரம் வாங்கமாட்டோம்.-ஆதலால் இஸரவேலர்
யாவருந் தங்கள் தங்கள் சுதந்தரத்தைப்பெற்றுக்
கொள்ளும்வரைக்கும், நாங்கள் எங்கள் வீடுக
ளுக்குத்திரும்பவேமாட்டோமென்றார்கள்.

௨௰ அப்பொழுது மோசே அவர்களைநோக்கி, நீங்
கள் இந்த வாக்கின்படியே யெகோவாவின்
௨௧ சமுகத்தில் யுத்தசன்னத்தராகி,—யெகோவா
தம்முடைய சத்துருக்களைத்தமது முன்னின்றும்
துரத்திவிடுமளவும் நீங்கள் யாவரும் அவருடை
யசமுகத்தில் ஆயுதபாணிகளாய் யோர்தானைக்க
௨௨ டந்துபோயிருப்பீர்களானால்,—அத்தேசம் யெ
கோவாவுக்கு வசப்பட்டபின்பு, நீங்கள்யெ
கோவாவின் சமுகத்திலும் இஸரவேலரின்
முன்னிலையிலுங்குற்றமில்லாதவர்களாய்த்திரும்
பலாம்; அதற்குப்பின்பு இந்தத்தேசம் யெகோ
வாவின் சமுகத்தில் உங்களுக்குச் சுதந்தரமா
௨௩ கும்.—நீங்கள் இப்படிச் செய்யாமற் போனால்
யெகோவாவுக்கு விரோதமாய்ப்பாவஞ்செய்
தீர்கள்: உங்கள் பாவம் உங்களைத்தொடரும், அ
௨௪ துநிச்சயமென்றறியுங்கள்.-உங்கள் பிள்ளைகளுக்
காகப்பட்டணங்களையும்,உங்கள் ஆடுமாடுகளுக்
காகத்தொழுவங்களையுமுண்டாக்கி,உங்கள்வாக்
கின்படியே செய்யுங்களென்றான்.—அதற்குக் ௨௫
காத்சந்ததியாரும் ரூபேன் சந்ததியாரும் மோசே
யைநோக்கி, எங்கள் ஆண்டவன்கட்டளையிட்ட
படியே உமதடியாராகிய நாங்கள் செய்வோம்.—
எங்கள்பிள்ளைகளும் எங்கள்ஸ்திரிகளும் எங்கள் ௨௬
ஆடுமாடு முதலான மிருகங்களெல்லாவற்றோ
டும் இங்கே கிலியாத்தின் பட்டணங்களிலி
ருப்பார்கள்.—உமதடியாராகிய நாங்கள் மாத்தி ௨௭
ரம்எங்கள்ஆண்டவன்சொன்னபடியே ஒவ்வொ
ருவரும்யுத்தஞ்செய்யச்சன்னத்தராய் யெகோ
வாவின் சமுகத்தில் யுத்தகளத்திற்குப் போ
வோமென்றார்கள்.—அப்பொழுது மோசே அவர் ௨௮
களைக்குறித்து ஆசாரியனாகிய எலீயேசாருக்கும்
நூனின் புத்திரனாகிய யோசுவாவுக்கும் இஸர
வேல் சந்ததியாரின் கோத்திரப் பிதாக்களாகிய
அதிபதிகளுக்குங்கட்டளையிட்டு,—காத்சந்ததியா ௨௯
ரும்,ரூபேன்சந்ததியாரும், யெகோவாவின்ச
முகத்தில்யுத்தஞ்செய்யச் சன்னத்தராய் உங்களு
டன்கூட யோர்தான் நதியைக்கடந்துபோனால்,
அத்தேசம் உங்களுக்குக் கீழ்ப்பட்டபின்பு அ
வர்களுக்குக் கிலியாத் தேசத்தைச் சுதந்தரமாகக்
கொடுக்கக்கடவீர்கள்.—உங்களுடனேகூட யுத் ௩௰
தஞ்செய்யச் சன்னத்தராய்க்கடந்துப் போகாதி
ருந்தால், அவர்கள் உங்கள் மத்தியிலே கானான்
தேசத்திற் சுதந்தரமடையக்கடவர்களென்றான்.-
காத் சந்ததியாரும், ரூபேன் சந்ததியாரும், உத்தர ௩௧
மாய்,உமதடியாராகியநாங்கள்யெகோவாஎங்
களுக்குச்சொன்னபடியே செய்வோம்.—யோர் ௩௨
தான் நதிக்கு இக்கரையிலே நாங்கள் சுதந்தரத்
தைச் சுதந்தரித்துக்கொள்ளத்தக்கதாக, நாங்கள்
யெகோவாவின் சமுகத்தில் யுத்தஞ்செய்யச்
சன்னத்தராய்க்கானான் தேசத்திற்குப் போவோ
மென்றார்கள்.—இப்படியே மோசே காத் சந்ததி ௩௩
யாருக்கும், ரூபேன் சந்ததியாருக்கும், யோசேப்
பின் புத்திரனாகிய மனாசேயின் பாதிக்கோத்தி
ரத்தாருக்கும், எமோரியருடைய இராசனாகிய
சீகோனுடைய ராச்சியத்தையும், பாஷானுடை
யஇராசனாகிய ஓகின் இராச்சியத்தையும், அவை
களைச்சேர்ந்ததேசங்களையும்,அவைகளின்எல்லை
யைச்சுற்றிலுமுள்ள நகரங்களையுங்கொடுத்தான்.

பின்பு காத் சந்ததியார் தீபோன் அதரோத் அ ௩௪
ரோவேர்,—அத்ரோத் ஷோபான் யாசேர் யொக் ௩௫
பிகா,—பேத்நிம்ரா, பேதாறன் என்னுமரணையு ௩௬
டைய பட்டணங்களையும், ஆட்டுத்தொழுவங்க
ளையுமுண்டாக்கினார்கள்.—ரூபேன் சந்ததியார் ௩௭
எஷ்போன் எலியாலே கீரியத்தாயீம்,—பேர்கள் ௩௮
மாற்றப்பட்ட நேபோ, பாகால்மியோன், ஷிப்
மா என்பவைகளை உண்டாக்கி, தாங்கள் உண்
டாக்கின பட்டணங்களுக்குவேறேநாமங்களைக்
கொடுத்தார்கள்.—மனாசேயின் புத்திரனாகிய மா ௩௯
கீரின் சந்ததியார் கிலியாத்திற்குப்போய் அதை
வசப்படுத்தி, அதிலிருந்த எமோரியரைத்துரத்தி

(௰௩) அதி.௰௪.௩௩,௩௪,௩௫. (௰௫) உபா.௩௰.௰௭. யோசு.௨௨.௰௬,௰௮. (௰௮) யோசு.௰௩.௮. (௰௯) யோசு.௨௨.௪. (௨௰) யேசு.௧.௰௪. (௨௨) உபா.௩.௨௰. யோசு.௰௧.௨௩. யோசு.௨௨.௪. உபா.௩.௰௨,௰௫,௰௬,௰௮. (௨௩) ஆதி.௪.௭. ஆதி.௪௪.௰௬. ஏசா.௫௯.௰௨. (௩௩) உபா.௩.௰௨—௰௭. (௩௮) ஏசா.௪௬.௧.

௪௰ விட்டார்கள்.—அப்பொழுது மோசே கிலியாத்தை மனாசேயின் புத்திரனாகிய மாகீரின் புத்திரருக்குக்கொடுத்தான்; அவர்கள் அதிலேவசித்தார்
௪௧ கள்.—மனாசேயின் புத்திரனாகிய யாயீர் போய் அவர்களுடையகிராமங்களைவசப்படுத்தி,அவைகளுக்கு யாயீரின் கிராமங்களென்றுபெயரிட்
௪௨ டான்.—நோபாக் போய்க் கேனாத்தையும், அதைச்சேர்ந்த கிராமங்களையும் வசப்படுத்தித்தன் சுயநாமத்தின்படி அதற்கு நோபாக்கென்று பெயரிட்டான்.

## ௩௩. அதிகாரம்.

௧. இஸரவேல் சந்ததியாரின் நாற்பத்திரண்டுயாத்திரை ஸ்தலங்களை விவரித்தல்: ௫௰. கானானியரை நாசப்படுத்தக்கட்டளையிடல்.

மோசேக்கும் ஆரோனுக்குமாதீனமாய், தங்கள் தங்கள்சேனைகளோடும் எகிப்துசேத்தினின்றும் புறப்பட்ட இஸரவேல் சந்ததியாருடைய
௨ பிரயாணங்களின் விபரம்.—மோசே தனக்கு யெகோவா கட்டளையிட்டபடியே அவர்கள் புறப்பட்டபிரகாரமாக அவர்களுடைய பிரயாணவிவரத்தை எழுதினான்: அவர்கள் புறப்பட்
௩ டபடிசெய்த பிரயாணவிவரமாவது,—முதன்மாதத்திற் பதினைந்தாந்தினத்தில் அவர்கள் ராமேசேசை விட்டுப்புறப்பட்டார்கள்; பஷ்காவுக்கு மற்றநாள் இஸரவேல் சந்ததியார் எகிப்தியரெல்லாருடைய சமுகத்திலும்நின்று மகாவல்லபத்து
௪ டன் புறப்பட்டார்கள்.—அப்பொழுது எகிப்தியர் தங்களுக்குள்ளே யெகோவா சங்கரித்த தலைப்பிள்ளைகளெல்லாரையும் அடக்கம்பண்ணினார்கள். அவர்களுடைய தேவதைகளின்மே
௫ லும் யெகோவா தண்டனைசெய்தார்.—பின்பு இஸரவேல் சந்ததியார் ராமேசேசைவிட்டுப் புறப்பட்டுப்போய், சுக்கோத்திலே பாளயமி
௬ றங்கினார்கள்.—சுக்கோத்தினின்றும் புறப்பட்டு வனாந்தரத்தின் எல்லையிலிருக்கிற ஏதாமிலே பா
௭ ளயமிறங்கினார்கள்.—ஏதாமினின்றும் புறப்பட்டுப் பாகால் சிபோனுக்கெதிராக இருக்கிற பீயகீரோத்தூருக்குத்திரும்பி மிக்தோலுக்கு எதிரே
௮ பாளய மிறங்கினார்கள்.—பீயகீரோத் தூரினின்றும் பிரயாணம்பண்ணிச் சமுத்திரமத்தியாய்ச் சென்று வனாந்தரத்திற்குப்போய் ஏதாமென்னும் வனத்திலே மூன்றுநாளாக நடந்து மாராவிலே
௯ பாளயமிறங்கினார்கள்.—மாராவைவிட்டுப்புறப்பட்டு ஏலீமுக்குப்போனார்கள். ஏலீமிலேபன்னிரண்டு நீரூற்றுக்களும் எழுபது பேரீந்துமரங்களுமிருந்தன; அங்கே பாளயமிறங்கினார்
௰ கள்.—ஏலீமைவிட்டுப் பிரயாணம்பண்ணிச்செ
௰௧ ங்கடலருகே பாளயமிறங்கினார்கள்.—செங்கடலைவிட்டுப் புறப்பட்டுப்போய்ச் சீன்வனத்தி
௰௨ லே பாளயமிறங்கினார்கள்.—சீன்வனத்தினின்றும் பிரயாணம்பண்ணித் தோப்காவிலே பாளயமிறங்கினார்கள்.—தோப்காவைவிட்டுப் புறப் ௰௩
பட்டுப்போய் ஆலூஷிலே பாளயமிறங்கினார்கள்.—ஆலூஷினின்றும் பிரயாணஞ்செய்து ரிவீ ௰௪
தீமிலேபாளயமிறங்கினார்கள்: சனங்கள் குடிக்க அங்கே சலமில்லை.—ரிவீதீமைவிட்டுப்புறப்பட் ௰௫
டுப்போய்ச் சீனாய்வனத்திலே பாளயமிறங்கினார்கள்.—சீனாய்வனத்தைவிட்டுப் புறப்பட்டுப் ௰௬
போய்க் கிப்ரோத் அத்தாவாவிற்சென்று பாளயமிறங்கினார்கள்.—கிப்ரோத் அத்தாவாவைவிட் ௰௭
டுப்புறப்பட்டுப்போய் அத்சேரோத்திலே பாளயமிறங்கினார்கள்.—அத்சேரோத்தைவிட்டுப் பு ௰௮
றப்பட்டுப்போய் ரித்மாவிலே பாளயமிறங்கினார்கள்.—ரித்மாவைவிட்டுப் புறப்பட்டுப்போய் ௰௯
ரிம்மோன்பாரேசிலே பாளயமிறங்கினார்கள்.—ரிம்மோன்பாரேசினின்றும்புறப்பட்டு லிப்னாவி ௨௰
லே பாளயமிறங்கினார்கள்.—லிப்னாவினின்றும் ௨௧
பிரயாணம்பண்ணிரிசாவிலேபாளயமிறங்கினார்கள்.—ரிசாவைவிட்டுப் பயணஞ்செய்து கேலத் ௨௨
தாவிலே பாளயமிறங்கினார்கள்.—கேலத்தாவை ௨௩
விட்டுப் புறப்பட்டுப்போய் ஷாபேர் மலையிலே பாளயமிறங்கினார்கள்.—ஷாபேர் மலையி ௨௪
னின்றும் பிரயாணம்பண்ணி அராதாவிலே பாளயமிறங்கினார்கள்.—அராதாவைவிட்டுப் புறப் ௨௫
பட்டுப்போய் மக்கேலோத்திலே பாளயமிறங்கினார்கள்.—மக்கேலோத்தைவிட்டுப் புறப்பட் ௨௬
டுப்போய்த்தாகாத்திலே பாளயமிறங்கினார்கள்.—தாகாத்தினின்றும் பிரயாணஞ்செய்து தாருகி ௨௭
லே பாளயமிறங்கினார்கள்.—தாருகைவிட்டுப்பு ௨௮
றப்பட்டுப்போய் மித்காவிலே பாளயமிறங்கினார்கள்.—மித்காவினின்றும் புறப்பட்டு அஷ் ௨௯
மோனாவிலே பாளயமிறங்கினார்கள்.—அஷ்மோ ௩௰
னாவைவிட்டுப்புறப்பட்டுப்போய்மோசெரோத்திலே பாளயமிறங்கினார்கள்.—மோசெரோத்தை ௩௧
விட்டுப் புறப்பட்டுப்போய் பினேயாக்கனிலே பாளயமிறங்கினார்கள்.—பினேயாக்கனினின்றும் ௩௨
புறப்பட்டு ஓர் அகித்காத்திற் பாளயமிறங்கினார்கள்.—ஓர் அகித்காத்தினின்றும் புறப்பட்டுப் ௩௩
போய்யோத்பாதாவிலே பாளயமிறங்கினார்கள்.—யோத்பாதாவைவிட்டுப் புறப்பட்டுப்போய் அப் ௩௪
ரோனாவிலே பாளயமிறங்கினார்கள்.—அப்ரோ ௩௫
னாவைவிட்டுப்புறப்பட்டுப்போய்எத்சேயோன் கேபரிலே பாளயமிறங்கினார்கள்.—எத்சேயோன் ௩௬
கேபரினின்றும் புறப்பட்டுச் சீன்வனாந்தரத்திலுள்ள காதேஷிலே பாளயமிறங்கினார்கள்.—
காதேஷைவிட்டுப் புறப்பட்டுப்போய் ஏதோம் ௩௭
தேசத்தின் எல்லையிலுள்ள ஓரென்னும் மலையிலே பாளயமிறங்கினார்கள்.—அப்பொழுது ஆ ௩௮
சாரியனாகிய ஆரோன் யெகோவாவின் கட்டளைப்படியே ஓரென்னும் மலையிலேறி அங்கே

(௪௰) உபா.௩.௰௨. (௪௧) உபா.௩.௰௪.—(௩௩. அதி. ௩.) யாத்.௰௨.௩௭. யாத்.௰௨.௨. யாத்.௰௪.௮. (௪) யாத்.௰௨.௨௯. யாத்.௰௨.௰௨. ஏசா.௰௯.௧. வெளி.௰௨.௮. (௫) யாத்.௰௨.௩௭. (௬) யாத்.௰௩.௨௰. (௭) யாத்.௰௪.௨,௯. (௮) யாத்.௰௪.௨௨. (௯) யாத்.௰௫.௨௭. (௰௧) யாத்.௰௬.௧. (௰௪) யாத்.௰௭.௧. (௰௫) யாத்.௰௯.௧. (௰௬) அதி.௰௧.௩௪. (௰௭) அதி.௰௧.௩௫. (௰௮) அதி.௰௨.௰௬. (௩௰) உபா.௰.௬. (௩௫) உபா.௨.௮. (௩௬) அதி.௨௰.௧. (௩௭) அதி.௨௰.௨௨,௨௩. (௩௮) உபா.௩௨ ௫௰.

இஸரவேல்சந்ததியார் எகிப்துதேசத்தைவிட்டுப்
புறப்பட்ட நாற்பதாம்வருஷம் ஐந்தாம்மாதம்
ஙக முதல்தினத்தில் மரணமடைந்தான்.—ஆரோன்
ஓர்மலையிலே மரணமடைந்தபொழுது அவனுக்
சய கு நூற்றிருபத்துமூன்றுவயது.—அந்நாட்களிலே
கானான்தேசத்தின் தென்றிசையில்வாசமாயிருந்
தகானானியனாகிய அராத்தென்னும்அரசன்இஸர
வேல் சந்ததியார் வருகிறதைக் கேள்விப்பட்
சக டான்.—ஓரென்னும்மலையைவிட்டுப் புறப்பட்
டுப்போய்ச்சல்மோனாவிலே பாளயமிறங்கினார்
சஉ கள்.-சல்மோனாவைவிட்டுப் புறப்பட்டுப்போய்
சங பூனோனிலேபாளயமிறங்கினார்கள்.—பூனோனை
விட்டுப்புறப்பட்டுப்போய் ஓபோத்திலேபாளய
சச மிறங்கினார்கள்.—ஓபோத்தினின்றும்பிரயாணஞ்
செய்துமோவாபின் எல்லையிலுள்ள இசி அபாரீ
சரு மில் பாளயமிறங்கினார்கள்.—ஈமைவிட்டுப்புறப்
பட்டுப்போய்த்தீபோன்காத்திலேபாளயமிறங்கி
சசு னார்கள்.—தீபோன் காத்தினின்றும்புறப்பட்டுப்
போய் அல்மோன்திப்லாதாயீமிலேபாளயமிறங்
சஎ கினார்கள்.—அல்மோன் திப்லாதாயீமைவிட்டுப்
புறப்பட்டுப்போய் நேபோவுக்கெதிரான அபா
சஅ ரீம் மலைகளில் பாளயமிறங்கினார்கள்.—அபா
ரீம் மலைகளினின்றும் பிரயாணஞ்செய்து யெரீ
கோவினருகே யோர்தான்நதியைச் சார்ந்தமோ
வாபின் சமனான வெளிகளிலே பாளயமிறங்கி
சகூ னார்கள்.-யோர்தான்நதியைச்சார்ந்தமோவாபின்
அந்தச்சமனான வெளிகளில் அவர்கள் பேத்ஷீ
மோத்தொடங்கி ஆபேல் சீத்தீம்மட்டும் பாளய
மிறங்கியிருந்தார்கள்.

ருய யெரீகோவினருகே யோர்தான்நதியைச்சார்ந்
த மோவாபின் சமனானவெளிகளில் யெகோ
ருக வா மோசேயைநோக்கி,—நீ இஸரவேல் சந்த
தியாரிடத்தில், நீங்கள் யோர்தான்நதியைக்கடந்
ருஉ து கானான்தேசத்திலே சேரும்பொழுது,-அத்தே
சத்தார்யாவரையும் உங்கள்முன்னின்றுந்துரத்தி,
அவர்களுடைய உயர்ந்தஸ்தானங்கள்யாவையும்
ருங நிருமூலமாக்கி,—தேசத்தார்களைச் சுதந்தரத்
தினின்றும் நீக்கி, அங்கே வாசம்பண்ணக்கட
வீர்கள்: அந்தத்தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்
ருச ளும்படிக்கு அதை உங்களுக்களித்தேன்.—உங்
கள் குடும்பங்களுக்குச் சுதந்தரங்களாகச்சீட்டுக்
களைப்போட்டு, அத்தேசத்தைப்பங்கிட்டு, அதி
க சனங்களுக்கு அதிக சுதந்தரபாகமும், சொற்
பசனங்களுக்குச் சொற்பபாகமுங் கொடுக்கக்க
டவீர்கள்; அவர்களுக்குச்சீட்டுவிழுமிடமெது
வோ அதையவரவர்பெற்றுக்கொள்ளவேண்டும்:
உங்கள் பிதாக்களுடைய வமிசத்தின்படியே சு
ருரு தந்தரம் பெற்றுக்கொள்ளக்கடவீர்கள்.—நீங்கள்
அத்தேசத்தார்களை உங்கள் முன்னிலையினின்
றுந் துரத்திவிடாதிருப்பீர்களானால்,அப்பொழு
து உங்களால்சேஷமாய்விடப்பட்டவர்கள் உங்
கள்கண்களுக்குக்கூரும், உங்கள்விலாக்களுக்கு
முள்ளுமாயிருந்து, நீங்கள் வசிக்குந்தேசத்தில்
உங்களைக்கிலேசப்படுத்துவார்கள்.—அன்றியும், ருசு
நான் அவர்களுக்குச்செய்ய நினைத்ததை உங்க
ளுக்கே செய்வேனென்று சொல்லென்றார்.

## ஙச. அதிகாரம்.

க. இஸரவேல் சந்ததியாருக்குப் பங்கிடப்பட்ட
தேசஎல்லைகளைக்குறித்தல்:யசு.தேசத்தைப்பங்
கிடும்படிஅதிபதிகள் நாமங்களைத்தெரிவித்தல்.

**பி**ன்னும் யெகோவா மோசேயைநோக்கி,— க
நீ இஸரவேல்சந்ததியாரிடத்தில், நீங்கள்கானான் உ
தேசத்திலேசேரும்பொழுது கானான்தேசமே அ
தின் எல்லைகளோடே உங்களுக்குச்சுதந்தரமாய்
வரும்.—உங்கள் தென் மூலை எதோமோரத்தி ங
லுள்ள சீன் வனத்திலிருக்கும் கிழக்கேயுள்ள
உப்புக்கடலின் அந்தமே உங்கள் தெற்கெல்லை
யாகும்.—உங்களெல்லை தெற்கிலிருந்து திரும் ச
பி அக்ரபீம் மேடுகளின்வழியாய் சீன்வனம்வ
ரையிற் செல்லும், அங்கேயிருந்து அத்சரதருக்
கும்,-அங்கேயிருந்து அஸ்மோனுக்குஞ்சென்று, ரு
அஸ்மோனிலிருந்து எகிப்தின் நதிவரைக்குஞ்
சுற்றிப்போய்க் கடலில்முடியும்.—மேற்றிசைக் சு
குப்பெருஞ்சமுத்திரமே உங்களுக்கெல்லை: அ
துவேஉங்களுக்கு மேற்குப்புறமான எல்லையாயி
ருக்கின்றது.—உங்களுக்கு வடதிசை எல்லை பெ எ
ருஞ்சமுத்திரந்தொடங்கிஓரென்னும்மலைக்குநே
ராய்அமாத்தினெல்லைபரியந்தமாயிருக்கும்:-அதி அ
னின்றுசேதாத்வரைக்குஞ்செல்லும் அந்தஎல்லை
சிப்ரோன்பரியந்தம்போய் அத்சரேனானில்முடி
வுபெறும்:—அதுவேஉங்களுக்குவடபுறத்து எல் கூ
லை.-உங்களுக்குக்கீழ்த்திசையெல்லை அத்சரேனா ய
னிலிருந்து ஷிபாம்பரியந்தமும் ஷிபாமிலிருந்
து,—அயினுக்குக்கீழ்த்திசையிலுள்ள ரிப்லாபரி யக
யந்தமும்; அதுமுதல் கின்னேரேத்கடல்பரியந்த
மும்,—அதின் கீழ்க்கரை யோர்தான்நதிபரியந்த யஉ
மும்போய் உப்புக்கடலில் முடிவுபெறும். இந்
தச்சுற்றெல்லைகளையுடைய இடமே உங்களுக்
குத்தேசமாயிருப்பதாகவென்று அவர்களுக்குக்
கட்டளையிடுவாயாக என்றார்.—அப்பொழுது யங
மோசே இஸரவேல்சந்ததியாருடனே,தங்கள் பி
தாக்களுடைய வமிசத்தின்படி ரூபேன்சந்ததி
யாரும், தங்கள்பிதாக்களுடைய வமிசத்தின்படி
காத்சந்ததியாரும், தங்கள் தங்கள் சுதந்தரத்தைப்
பெற்றுக்கொண்டார்கள்.—இந்த இரண்டரைக் யச
கோத்திரத்தாரும், சூரியோதயதிசையாகிய கிழக்
கே யெரீகோவினருகேயுள்ள யோர்தான்நதிக்
கிப்புறத்திலே தங்கள் சுதந்தரத்தைப் பெற்றுக்

---

(சய) அதி.உக. (சக) அதி.உக.ச. (சங) அதி.உக.ய. (சச) அதி.உக.யக. (சரு) அதி.ஙஉ.ஙச. (சசு) எரே.சஅ.
உஉ. (சஎ) அதி.உக.உய. (சஅ) அதி.உஉ.க. (சகூ) அதி.உரு.க. (ருக) உபா.எ.க,உ. யோசு.ங.யஎ. (ருஉ) யாத்.
உங.உச,ஙங. யோசு.யக.யஉ. நியா.உ.உ. (ருச) அதி.உசு.ருங,ருச,ருரு. (ருரு) யோசு.உங.யங. நியா.உ.ங. எசேக்.
உஅ.உச.—(ஙச. அதி. உ.) ஆதி.யஎ.அ. உபா.க.எ.(ங)யோசு.யரு.க. ஆதி.யச.ச. யோசு.யரு.உ. (ச) யோசு.யரு.ங.
அதி.யங.உசு.யோசு.யரு.ங,ச. ஆதி.யரு.யஅ. யோசு.யரு.ச,சஎ.க.இரா.அ.சுரு.ஏசா.உஎ.யஉ.(எ)அதி.ஙங.ஙஎ. அதி.
யங.உக.(அ)எசேக்.சஎ.யரு. எசேக்.சஎ.யஎ.(யக)உ.இரா.உங.ஙங. உபா.ங.யஎ. மத்.யச.ஙச.(யங)யோசு.யச.உ,ங.

௰௫ கொண்டார்கள்.—ஆதலால் ஒன்பதரைக்கோத்தி
ரத்தாராகியஉங்களுக்கு அளிக்கும்படி யெகோ
வா கட்டளையிட்ட இந்தத்தேசத்தை, நீங்கள்
சீட்டுப்போட்டுச் சுதந்தரித்துக்கொள்ளவேண்டு
மென்று சொல்லிக்கட்டளையிட்டான்.
௰௬ மேலும் யெகோவா மோசேயைநோக்கி,-
௰௭ உங்களுக்குத்தேசத்தைப்பங்கிட்டுத்தரும் மனித
ரின்நாமங்களாவன: ஆசாரியனாகிய எலீயேசா
௰௮ ரும், நூனின்புத்திரனாகிய யோசுவாவுமே.—அன்
றியும், தேசத்தைப்பங்கிடும்படி ஒவ்வொருகோத்
திரத்திலும் ஒவ்வொரு அதிபதியையுந் தெரிந்து
௰௯ கொள்ளுங்கள்.—அந்தமனிதருடைய நாமங்களா
வன: யூதாகோத்திரத்திற்கு, யெபுன்னேயின் புத்
௨௰ திரனாகியகாலேபும்;—ஷிமியோன் சந்ததியாரின்
கோத்திரத்திற்கு, அம்மியூத்தின்புத்திரனாகிய ஷி
௨௧ மூவேலும்;—பென்யாமீன் கோத்திரத்திற்கு, கிஸ்
௨௨ லோனுடைய புத்திரனாகிய எலிதாதும்;—தாண்
சந்ததியாரின் கோத்திரத்திற்கு, யோக்லியின் புத்
௨௩ திரனாகிய புக்கீயென்னும் அதிபதியும்;—யோ
சேப்பின் புத்திரனாகிய மனாசேயினுடைய சந்
ததியாரின் கோத்திரத்திற்கு, எபோத்தின்புத்திர
௨௪ னாகிய அன்னியேலென்னும் அதிபதியும்;—எப்ரா
யீம்சந்ததியாரின் கோத்திரத்திற்கு, ஷிப்தானு
டைய புத்திரனாகிய கேமுவேலென்னும்அதிபதி
௨௫ யும்;—செபுலோன்சந்ததியாரின்கோத்திரத்திற்கு,
பர்னாக்கின்புத்திரனாகிய இலீத்சாபானென்னும்
௨௬ அதிபதியும்;—ஈஸகார் சந்ததியாரின்கோத்திரத்
திற்கு, அத்சானின்புத்திரனாகியபலத்தியேலென்
௨௭ னும் அதிபதியும்;—ஆஷேர் சந்ததியாரின் கோத்
திரத்திற்கு, ஷெலோமியின் புத்திரனாகிய அகி
௨௮ யுத்தென்னும் அதிபதியும்;—நப்தாலி சந்ததியா
ரின் கோத்திரத்திற்கு, அம்மியூத்தின் புத்திர
னாகிய பிதாகேலென்னும் அதிபதியுமேயென்
௨௯ றான்.—கானான்தேசத்தில் இஸரவேல் சந்ததி
யாருக்குச்சுதந்தரங்களைப்பங்கிட்டுக்கொடுக்கிற
தற்கு யெகோவா கட்டளையிட்டவர்கள் இ
வர்களே.

## ௩௫. அதிகாரம்.

௧. லேவியரின்நகரங்களையும், பேட்டைகளையும், அடைக்கல நகரங்களையுங்குறித்தல்: ௯. கொலை பாதகனைக்குறித்துக் கட்டளையிடல்: ௩௰. கொலைபாதகரை விடுதலையாக்கலாகாதெனவிலக்கல்.

யெரீகோவினருகேயோர்தான்நதியைச்சேர்ந்த
மோவாபின்சமனானவெளிகளில் யெகோவா
௨ மோசேயைநோக்கி,—நீ இஸரவேல் சந்ததியாரி
டத்தில், நீங்கள்சுதந்தரிக்குஞ்சுதந்தரத்திலே லே
வியர் வசிக்கும்படி அவர்களுக்குப் பட்டணங்
களையும் அந்தப்பட்டணங்களைச்சூழ்ந்திருக்கும்
௩ பேட்டைகளையுங் கொடுக்கவேண்டும்.—அந்தப்
பட்டணங்கள் அவர்கள்வசிப்பதற்கும், அவை
களின் பேட்டைகள் அவர்களுடைய ஆடுமாடு
களுக்கும், அவர்கள்ஆஸ்திகளுக்கும், அவர்களு
டைய சகல மிருகங்களுக்குமிருக்கவேண்டும்.—
நீங்கள் லேவியருக்குக் கொடுக்கும்பட்டணங் ௪
களைச்சேர்ந்த பேட்டைகள், பட்டணத்தின்ம
தில் தொடங்கி வெளியிலே சுற்றிவர ஆயிரமுழ
மளவு விசாலங்கொண்டிருக்கவேண்டும்.—இன் ௫
னும் நீங்கள் அவர்கள்பட்டணத்திற்குப்பேட்
டைகளாக, பட்டணத்தின் வெளிப்புறந்தொ
டங்கிக்கிழக்கே இரண்டாயிரமுழமுந் தெற்கே
இரண்டாயிர முழமும் மேற்கே இரண்டாயிர
முழமும் வடக்கேயிரண்டாயிரமுழமும் அளந்
துவிடக்கடவீர்கள், அவர்கள் பட்டணம் இதற்
குமத்தியிலிருக்கவேண்டும்.—கொலைசெய்தவன் ௬
தப்பிப்போயிருக்கும்பொருட்டு ஆறுநகரங்களை,
நீங்கள் லேவியருக்குக்கொடுக்கும் பட்டணங்க
ளுக்குள்ளே அடைக்கல நகரங்களாக ஏற்படுத்த
வேண்டும்; அவைகளையல்லாமல் இன்னும் நாற்
பத்திரண்டு பட்டணங்களை அவர்களுக்குக்கூட்
டிக்கொடுக்க வேண்டும்.—நீங்கள் லேவியருக் ௭
குக்கொடுக்கவேண்டிய பட்டணங்களெல்லாம்
நாற்பத்தெட்டுப் பட்டணங்களும் அவைகளின்
பேட்டைகளுமே.—நீங்கள் இஸரவேல் சந்ததி ௮
யாருடைய சுதந்தரத்தில் அந்தப் பட்டணங்க
ளைக் கொடுக்கும்பொழுது, அதிகமானவர்களி
டத்தில் அதிகமுஞ் சொற்பமானவர்களிடத்தில்
சொற்பமுங் கொடுக்கவேண்டும். ஒவ்வொருவ
ருந் தாங்கள் தாங்கள் சுதந்தரித்துக்கொண்ட
சுதந்தரத்தின்படியே லேவியருக்குத்தங்கள் தங்
கள் பட்டணங்களைக் கொடுக்கக்கடவர்களென்
று சொல்லிக் கட்டளையிடுவாயாகவென்றார்.
பின்னும் யெகோவா மோசேயைநோக்கி,- ௯
நீ இஸரவேல்சந்ததியாரிடத்தில், நீங்கள்யோர்தா ௰
னைக்கடந்து கானான்தேசத்திற் பிரவேசித்தபொ
ழுது,—அறியாமல் ஒருவனைக்கொன்றவன் தப் ௰௧
பிப் போயிருக்கும்படி அடைக்கல நகரங்களா
கச் சிலநகரங்களை ஏற்படுத்தவேண்டும்.—கொ ௰௨
லைசெய்தவன் விசாரிக்கப்படச் சபையின் சமு
கத்தில்வந்துநிற்க, முன்னிறந்துபோகாமல் பழி
வாங்குகிறவனுடைய கைக்குத் தப்பிப்போயி
ருக்கும்படி, அவைகள் உங்களுக்கு அடைக்கல
நகரங்களாயிருக்கும்.—நீங்கள் கொடுக்கும் பட் ௰௩
டணங்களுக்குள்ளே, ஆறு அடைக்கல நகரங்க
ளாயிருக்கவேண்டும்.—அடைக்கல நகரங்களில் ௰௪
மூன்றுநகரங்கள் யோர்தான்நதிக்கப்புறத்திலும்
மூன்று நகரங்கள் கானானதேசத்திலும் கொடுக்க
வேண்டும்.-அறியாமல்ஒருவனைக்கொன்றவனெ ௰௫
வனோ அவன் தப்பிப்போயிருக்கும்படி இவ்வா
று நகரங்களும் இஸரவேற் சந்ததியாருக்கும்,
அவர்களுக்குள்ளே தங்கும்பிரவாசிக்கும், பரதே
சிக்கும், அடைக்கல நகரங்களாயிருக்கவேண்
டும்.—ஒருவன் இருப்பாயுதத்தினால் ஒருவனை ௰௬
அடிக்க அவனிறந்துபோனால், இவன் கொலை

(௰௫) யோசு.௰௪.௧,௨. (௰௭) யோசு.௰௪.௧. (௰௮) அதி.௧.௪,௰௬.—(௩௫. அதி. ௨.) யோசு.௰௪.௩,௪. எசேக்.௪௫.௫. (௬) உபா.௪.௪௩. யோசு.௨௰.௨,௭,௮. (௭) யோசு.௨௧.௪௧. (௮) யோசு.௨௧.௩. (௰) உபா.௰௯.௨. யோசு.௨௰.௨. (௰௧) யாத்.௨௧.௰௩. (௰௨) உபா.௰௯.௬. (௰௪) உபா.௪.௪௩. யோசு.௨௰.௮. (௰௫) அதி.௰௫.௰௬. (௰௬) யாத்.௨௧.௰௨,௰௪.

பாதகன்: இந்தக் கொலைபாதகன் கொலைசெய்
௰௭ யப்படவேண்டும்.—ஒருவன் கையிலொரு கல்
லையெடுத்துச்சாவத்தக்கதாக ஒருவன்மேலெறிய
அவன் இறந்துபோனால், இவன்கொலைபாதகன்:
இந்தக் கொலைபாதகன் கொலைசெய்யப்படவே
௰௮ வேண்டும்.—ஒருவன் கையிலொருமர ஆயுதத்
தை எடுத்துச்சாவத்தக்கதாக ஒருவனையடிக்க, அ
வன் இறந்துபோனால், இவன் கொலைபாதகன்:
இந்தக் கொலைபாதகன் கொலைசெய்யப்படவே
௰௯ வேண்டும்.—பழிவாங்கவேண்டியவனே கொலை
பாதகனைக் கொல்லவேண்டும்: அவனைக்கண்ட
௨௰ மாத்திரத்தில் அவனைக்கொன்றுபோடலாம்.-ஒரு
வன் குரோதத்தால் ஒருவனைவிழத்தள்ளினதினா
லாயினும், பதுங்கியிருந்து அவன் சாவத்தக்கதா
கயாதொன்றினால் அவனைஎறிந்ததினாலாயினும்,-
௨௧ அவனைப்பகைத்துத் தன்கையினால் அடித்ததினா
லாயினும், அவன் இறந்துபோனால், அடித்தவன்
கொலைபாதகன்: ஆதலால் கொலைசெய்யப்பட
வேவேண்டும்: பழிவாங்குகிறவன் இந்தக்கொ
லைபாதகனைக் கண்டமாத்திரத்திலே கொல்ல
௨௨ வேண்டும்.—ஒருவன் பகையில்லாமற் சடிதியில்
ஒருவனைத்தள்ளிவிழுத்தினதினாலாயினும், பதுங்
கியிராமல் ஒரு ஆயுதத்தை அவன்மேற்பட எறிந்
௨௩ ததினாலாயினும்,—அவனுக்குப் பகைவனாய்த்
தீங்குசெய்ய நினையாமல் கொன்றுபோடத்தக்க
ஒருகல்லினால் அவனைக்காணாமலெறிய, அது அ
வன்மேற்பட்டதினாலாயினும் அவனிறந்துபோ
௨௪ னால்,—அப்பொழுது கொலைசெய்தவனையும், இ
ரத்தப்பழிவாங்குகிறவனையும், சபையார் இந்த
௨௫ நியாயப்படிவிசாரித்து,—கொலைசெய்தவனை இ
ரத்தப் பழிவாங்குகிறவனுடைய கைக்குத்தப்பு
வித்து, அவன் தப்பிப்போயிருந்த அடைக்கல
நகரத்திற்குத் திரும்பிப்போகும்படிசெய்யக்கட
வர்கள். பரிசுத்ததைலத்தினால் அபிஷேகம்பெற்
ற பிரதான ஆசாரியன் மரணமடையுமளவும் அ
௨௬ வன் அதிலேயிருக்கக்கடவன்.—பின்பு கொலை
செய்தவன் தான்தப்பிப்போயிருக்கிற அடைக்க
ல நகரத்தின் எல்லையைவிட்டுப் புறப்படும்பொ
௨௭ ழுது,—இரத்தப் பழிவாங்குகிறவன் அந்தக்கொ
லைபாதகனை அவனுடைய அடைக்கல நகரத்திற்
குவெளியே கண்டுபிடித்துக் கொன்றுபோட்
௨௮ டால், அவன்மேல் இரத்தப்பழியில்லை.-பிரதான
ஆசாரியன்மரணமடையுமளவுங்கொலைபாதகன்
அடைக்கலநகரத்திலேயிருக்கவேண்டும்; அவன்
அந்தப்பிரதான ஆசாரியன்மரணமடைந்தபின்பு
தன்சுதந்தரமானபூமிக்குத்திரும்பிப்போகலாம்.-
௨௯ இவைகளே உங்கள் வாசஸ்தலங்கள் எல்லாவற்
றிலும் உங்கள்தலைமுறைதோறும் உங்களுக்கு நி
யாயப்பிரமாணத்தின் விதியாயிருக்கவேண்டும்.
௩௰ எவனாகிலும் ஒருமனிதனைக்கொன்றால், அப்
பொழுதுசாட்சிகளுடையவாக்குமூலத்தின்படி
யேஅந்தக்கொலைபாதகனைக்கொலைசெய்யக்கட
வர்கள்: ஒரேசாட்சியைக்கொண்டுமாத்திரம் ஒரு
மனிதனைச்சாகும்படி தீர்க்கலாகாது.—மரணம ௩௧
டைவதற்கேற்ற குற்றஞ்சுமந்த கொலைபாதகனி
டத்தில் பிராணனைமீட்கும்பொருளை வாங்கலா
காது: அவன்கொலைசெய்யப்படவேவேண்டும்.-
மேலுந் தனக்கடைக்கலமான நகரத்தில் தப்பிப் ௩௨
போயிருக்கிறவன், ஆசாரியன் மரணமடைகிற
தற்குமுன்னே தன் பூமிக்குத்திரும்பிவரும்படிக்
குஅவனிடத்தில்மீட்கும்பொருளை வாங்கலாகா
து.—இவ்வண்ணமே நீங்களிருக்குந் தேசத்தை ௩௩
அசுசிப்படுத்தவேண்டாம்: இரத்தம்அத்தேசத்தை
யும் அசுசிப்படுத்துமே: அன்றியும், இரத்தஞ்சிந்தி
னவனுடைய இரத்தத்தினாலொழியவேறொன்றி
னாலுந் தேசத்திற்குப் பிராயச்சித்தமில்லை.—நீங் ௩௪
கள்வசிக்கும் என்வாசஸ்தலமாகிய தேசத்தை அ
சுசிப்படுத்த வேண்டாம். யெகோவாவாகிய
நான் இஸரவேல்சந்ததியார்மத்தியிலே வாசமா
யிருக்கிறேன் என்றுசொல்லென்றார்.

## ௩௬. அதிகாரம்.

௧. சிலாப்காத்தின் புத்திரிகளுக்குச் சுதந்தரங்கு
றித்தல்: ௫. வமிசசுதந்தரங்காக்கும்படி வமிசத்
தாருக்குள் விவாகஞ்செய்யநிருபித்தல்: ௰. நிய
மித்த பிரமாணத்தின்படி அவர்கள்செய்தல்.

பின்பு யோசேப்பின் புத்திரருடைய வமிசத்தா ௧
ரில்மனாசேயின் பௌத்திரனும் மாகீரின்புத்திர
னுமாகிய கிலியாத்தின்புத்திரரின் பிதாவின்வமி
சஅதிபதிகள்மோசேக்கும், இஸரவேல்சந்ததியா
ரின்பிதாவின்வமிச அதிபதிகளுக்கும் முன்பா
கவந்து;—சீட்டுபோட்டு, தேசத்தை இஸரவேல் ௨
சந்ததியாருக்குச் சுதந்தரமாகக் கொடுக்கும்படி
எங்கள் ஆண்டவனுக்கு யெகோவா கட்டளை
யிட்டாரே; அன்றியும், எங்கள் சகோதரனாகிய
சிலாப்காத்தின் சுதந்தரத்தை அவன் புத்திரிக
ளுக்குக்கொடுக்கும்படி எங்கள் ஆண்டவனுக்கு
யெகோவாவினாற்கட்டளையிடப்பட்டதே;—
ஆதலால் அவர்கள் இஸரவேல்சந்ததியாருடைய ௩
வேறொருகோத்திரத்தின் புத்திரருக்கும் மனைவி
களானால், அந்தப்புத்திரிகளுடையசுதந்தரம் எங்
கள்பிதாக்களுடைய சுதந்தரத்தினின்று நீங்கி அ
வர்களுட்படுகிற கோத்திரத்தின் சுதந்தரத்தோ
டேசேரும்: இப்படி எங்கள் சுதந்தரத்துச்சீட்டி
னால் விழுந்தபங்கிலிராமல் அற்றுப்போகுமே;—
இஸரவேல்சந்ததியாருக்கு யோபேலென்னும் ம ௪
கோற்சவம்வந்தாலும், அவர்களுடைய சுதந்தரம்
அவர்களுட்பட்ட கோத்திரத்தின் சுதந்தரத்தோ
டேசேரும்: இப்படி எங்கள் பிதாக்களுடைய
கோத்திரத்தின் சுதந்தரத்தினின்றும் நீங்கிப்போ
குமேயென்றார்கள்.

---

(௰௯) வச.௨௧,௨௪,௨௭. யோசு.௨௰.௨,௫. (௨௰) ஆதி.௪.௮. ௨.சாமு.௩.௨௭. ௧.இரா.௨.௩௧,௩௨. யாத்.௨௧.௰௪. (௨௨) யாத்.௨௧.௰௩. (௨௪) யோசு.௨௰.௬. (௨௫) யோசு.௨௰.௬. யாத்.௨௯.௭. (௨௭) யாத்.௨௨.௨. (௨௯) அதி.௨௭.௰௧. (௩௰) உபா.௰௭.௬. மத்.௰௮.௰௬. ௨.கொரி.௰௩.௧. எபி.௰.௨௮. (௩௩) மீகா.௪.௰௧. ஆதி.௯.௬. (௩௪) லேவி.௰௮.௨௫. உபா.௨௧.௨௩. யாத்.௨௯.௪௫,௪௬.—(௩௬. அதி. ௧.) அதி.௨௬.௨௯. (௨) அதி.௨௬.௫௫. யோசு.௰௭.௩. அதி.௨௭.௧,௭. யோசு.௰௭.௩,௪. (௪) லேவி.௨௫.௰.

௫ அப்பொழுது மோசே யெகோவாவின் கட்டளைப்படியே இஸரவேல்சந்ததியாரிடத்தில் யோசேப்பின் புத்திரருடைய கோத்திரத்தார்
௬ சொல்லுவதுசரி,—ஆதலாற் சிலாப்காத்தின்புத்திரிகள் தங்களுக்கிஷ்டமானவர்களை விவாகஞ் செய்யலாம்; ஆயினுந் தங்கள் பிதாவின் கோத்திரவமிசத்தாரில்மாத்திரம் விவாகஞ்செய்யவே
௭ ண்டும்;—இப்படியே இஸரவேல்சந்ததியாருடைய சுதந்தரம் ஒருகோத்திரத்தைவிட்டு மற்றொரு கோத்திரத்திற்போகாதிருக்கும்: இஸரவேல்சந்ததியார் அவரவர் தங்கள் தங்கள் பிதாக்களின் கோத்திரத்தின் சுதந்தரத்திலே நிலைகொண்டிருக்
௮ கவேண்டும்.—இஸரவேல் சந்ததியாரில் அவரவர்தங்கள் தங்கள் பிதாக்களுடைய சுதந்தரத்தை அநுபவிக்கும்படி இஸரவேல் சந்ததியாருடைய ஒரு கோத்திரத்திலே சுதந்தரமடைந்திருக்கிற எந்தப்புத்திரியும், தன் பிதாவின் கோத்திரவமிசத்தாரில் ஒருவனுக்கு மனைவியாகவேண்
௯ டும்.—இஸரவேல்சந்ததியாருடைய கோத்திரம் யாவுந் தன் சுதந்தரத்திலே நிலைகொண்டிருக்கவேண்டியபடியால், சுதந்தரமானது ஒரு கோத்திரத்தைவிட்டு மற்றொரு கோத்திரத்தைச்சேரக்கூடாதென்று யெகோவா கட்டளையிட்டிருக்கிறாரென்றான்.

யெகோவா மோசேக்குக்கட்டளையிட்டப ௰
டியே சிலாப்காத்தின் புத்திரிகள் செய்தார்கள்.—
சிலாப்காத்தின்புத்திரிகளாகிய மக்லாள்,திர்சாள், ௰௧
ஒக்லாள், பில்க்காள், நோவாள் என்பவர்கள் தங்கள் பிதாவின் சகோதரருடையபுத்திரரை விவா
கம்பண்ணினார்கள்.—யோசேப்பின்புத்திரனாகிய ௰௨
மனாசே புத்திரரின் வமிசத்தாரைவிவாகம்பண்ணினபடியால் அவர்களுடைய சுதந்தரம் அவர்கள் பிதாவின் வமிசமான கோத்திரத்தோடேயி
ருந்தது.—யெரிகோவூரினருகேயோர்தான் நதிக் ௰௩
கிப்புறத்திலுள்ள மோவாபின் சமனானவெளிகளில் யெகோவா மோசேயைக்கொண்டு இஸரவேல்சந்ததியாருக்கு விதித்த கட்டளைகளும் நியாயப்பிரமாணங்களும் இவைகளே.

(௭) ௧.இரா.௨௧.௩. (௮) ௧.நாளா.௨௩.௨௨. (௰௩) அதி.௩௩.௫௰.

## மோசே எழுதின ஐந்தாம் புத்தகமாகிய

# உபாகமம்.

---

### ௧. அதிகாரம்.

*௧. யாத்திரையின் நாற்பதாம்வருஷத்தில் இஸரவேலருக்கு மோசே, நடந்தசங்கதிகளையெடுத்துக்காட்டல்: ௬. தேவன் பண்ணினவாக்குத்தத்தம்: ௰௩. அதிபதிகளை ஏற்படுத்தல்: ௰௯. வேவுகாரரையனுப்பல: ௩௪. அவர்கள் அவிசுவாசத்தினிமித்தம் தேவன் கோபித்தல்.*

சேயீர்மலையின்வழியாய் ஓரேபுக்குப் பதினொ
ருநாட்பிரயாணதூரத்திலுள்ள காதேஷ்பர்னீய
௨ விலிருந்து,—சூப்புக்கு எதிராகவும், பாரனுக்குந்
தோபேலுக்கும் லாபானுக்கும் அத்சேரோத்துக்
கும் தீசாகாபுக்குமிடையாகவுமிருக்கிற யோர்
தான் நதிக்கிக்கரையான வனத்தின் சமபூமியி
லே மோசே இஸரவேலர் அனைவரையும் நோக்
௩ கிச்சொல்லிய வசனங்களாவன:—எஷ்போனில்
வாசம்பண்ணிய எமோரியரின் இராசனாகிய சீ
கோனையும், எத்ரேயினருகே அஸ்தாரோத்தில்வா
சம்பண்ணிய ஒகு என்னும் பாஷானுடைய இ
௪ ராசனையும் மோசே கொன்றபின்பு,—நாற்பதாம்
வருஷம் பதினோராம் மாதம் முதல் தினத்தில்,
மோசே இஸரவேல் சந்ததியாருக்குச்சொல்லும்
படிதனக்கு யெகோவா விதித்தயாவையும்அ
௫ வர்களுக்குச்சொன்னான்.—அவன் யோர்தான்
நதிக்கிப்புறத்திலுள்ள மோவாபின் தேசத்தில்
இந்தப்பிரமாணத்தை விபரிக்கத்தொடங்கி,
௬ ஓரேபிலே நம்முடைய தேவனாகிய யெ
கோவா நம்மைநோக்கி, இந்தமலையில் நீங்கள்
௭ வெகுநாள்தங்கினீர்கள்.—நீங்கள் திரும்பிப் பிர
யாணமாய்ப்புறப்பட்டு,எமோரியரின்மலைக்கும்
அதைச் சேர்ந்த சமபூமியிலும் குன்றுகளிலும்
தாழ்ந்தபூமிகளிலுந் தெற்கிலுங் கடலோரத்திலு
மிருக்கிற கானான் தேசத்திற்கும், லிபானோனுக்
கும் பிருத்தென்னும்பெரியநதிவரைக்கும்போங்
௮ கள்.-பாருங்கள், இத்தேசத்தை உங்களுக்கு ஒப்
பித்தேன்: நீங்கள்போய் யெகோவா உங்கள்
பிதாக்களாகிய ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும்
யாக்கோபுக்கும் அவர்களுக்குப்பின்வரும் அவர்
கள்சந்ததிக்கும் அளிப்பேனென்று ஆணையிட்ட
அந்தத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்க
ளென்றார்.
௯ அக்காலத்தில் நானுங்களைநோக்கி, தனியே
௰ உங்கள் பாரத்தைச் சகிக்கமுடியாது,—உங்கள்
தேவனாகிய யெகோவா உங்களைவர்த்திக்கப்
பண்ணினார், இந்நாளில் நீங்கள் வானத்துநட்சத்
திரங்களைப்போலத் திரளாயிருக்கிறீர்களே.—நீங் ௰௧
கள் ஆயிரம்மடங்கு அதிகமாகும்பொருட்டுத்தா
முங்களுக்குச் சொல்லியபடியே உங்கள் பிதாக்
களுடைய தேவனாகியயெகோவா உங்களை
ஆசீர்வதிக்கக்கடவர்.—உங்களால்வரும் வருத் ௰௨
தத்தையும், பாரத்தையும், உங்கள் விவாதத்தை
யும் நான்தனியேசகிப்பதெப்படி.—உங்களுக்கு ௰௩
அதிபதிகளாக ஏற்படுத்தும்பொருட்டு, உங்கள்
கோத்திரங்களில் பேர்பெற்றபுத்தியும் விவேக
முமுள்ளமனிதரைத்தெரிந்துகொள்ளுங்களென்
று நான்சொல்ல;—நீங்கள் எனக்குத்தரமாக, நீர் ௰௪
சொன்னகாரியஞ்செய்வது உத்தமந்தானென்றீர்
கள்.—அதனால் பேர்பெற்றபுத்தியுள்ளவர்களாயி ௰௫
ருந்த உங்கள் வமிசத்ததிபதிகளைத் தலைவராயி
ருக்கும்படி, ஆயிரம்பேருக்கதிபதிகளாகவும் நூ
றுபேருக்கதிபதிகளாகவும் ஐம்பதுபேருக்கதிப
திகளாகவும் பத்துப்பேருக்கதிபதிகளாகவும் உங்
கள் வமிசத்தில் மற்றை அதிபதிகளாகவும்ஏற்ப
டுத்தினேன்.—அக்காலத்தில் நானுங்கள் நியாயா ௰௬
திபதிகளைநோக்கி, நீங்களுங்கள் சகோதரரின்கா
ரியங்களைக்கேட்டு, இருபட்சத்தாராகிய உங்கள்
சகோதரருக்கும், அவர்களிடத்தில்தங்கும் பரதே
சிக்கும், நீதிப்படி தீர்ப்புச்செய்யுங்கள்.—நியா ௰௭
யத்திலே நீங்கள் முகம்பாராமல், பெரியவனுக்
குஞ் சிறியவனுக்குஞ் சமமாய்ச்செவிகொடுப்பீர்
களாக; நீங்கள் செய்யுந்தீர்ப்புத் தேவனுடைய
து: ஆதலால் மனிதனுடையமுகத்துக்குப்பயப்ப
டாதிருங்கள்; உங்களுக்குக் கடினமாயிருக்குங்
காரியத்தை என்னிடத்தில்கொண்டுவாருங்கள்,
அதை நான் கேட்பேனென்றுசொல்லி,—நீங்கள் ௰௮
செய்யவேண்டிய காரியங்கள் யாவையும் அக்கா
லத்தில் உங்களுக்குக்கட்டளையிட்டேன்.
நம்முடைய தேவனாகிய யெகோவா ந ௰௯
மக்குவிதித்தபடி நாம் ஓரேபில்நின்று புறப்பட்
டுப்பிரயாணமாய்ப்போய், எமோரியரின் மலைக்
குச் சமீபமாய் நீங்கள்கண்ட அந்தப்பயங்கரமா
ன பெரியவனாந்தரம் முழுவதையுங்கடந்து, கா
தேஷ்பர்னீயவிலே சேர்ந்தோம்.—அப்பொழுது ௨௰
நானுங்களைநோக்கி, நம்முடைய தேவனாகிய
யெகோவா நமக்களிக்கும் எமோரியரின்மலை

---

(௧. அதி. ௧.) எண்.௰௩.௨௬. (௨) யோசு.௯.௧,௰. (௩) எண்.௨௧.௨௪,௩௩. (௪) எண்.௩௩.௩௮. (௬) யாத்.௩.௧. யாத். ௰௯.௧. எண்.௰.௰௧. (௮) ஆதி.௰௨.௭. ஆதி.௨௮.௰௩. ஆதி.௨௬.௫. (௯) யாத்.௰௮.௰௮. (௰) ஆதி.௰௫.௫. (௰௧) ௨.சாமு.௨௪.௩. யாத்.௩௨.௰௩. (௰௨) ௧.இரா.௩.௮,௯. (௰௩) யாத்.௰௮.௨௧. (௰௫) யாத்.௰௮.௨௫. (௰௬) யோவா.௭. ௨௪. லேவி.௨௪.௨௨. (௰௭) லேவி.௰௯.௰௫. ௧.சாமு.௰௬.௭. நீதி.௨௪.௨௩. யாக்.௨.௧. ௨.நாளா.௰௯.௬. யாத்.௰௮. ௨௨,௨௬. (௰௯) எண்.௰.௰௨. எரே.௨.௫. எண்.௰௩.௨௬.

உக யிற்சேர்ந்தீர்கள்.—பார், அந்தத்தேசத்தை உன்
தேவனுகிய யெகோவா உனக்குமுன்பாக
வைத்திருக்கிருர்: நீ பயப்படாமலுங் கலங்கா
மலும் உன் பிதாக்களுடைய தேவனுகிய யெ
கோவா உனக்குச்சொன்னபடியே அதைச்
சுதந்தரித்துக்கொள்ளென்றுசொல்ல;
உஉ நீங்களெல்லாரும் என்னிடத்தில்வந்து, நமக்
காக அந்தத்தேசத்தைச் சுற்றிப்பார்த்து நாமதிற்
செல்லும்வழியும், நாம்சேரும்பட்டணங்களும்,
இன்னவையென்று நமக்குத் தெரிவிக்கும்படி
நமக்கு முன்பாக மனிதரை யனுப்பிவிடுவோ
உரு மென்றீர்கள்.—அது எனக்கும் நன்ருகத்தோன்
றினபடியால் உங்களில் ஒவ்வொரு கோத்திரத்
திற்கு ஒவ்வொருவனுகப் பன்னிரண்டு மனித
உச ரைத்தெரிந்தனுப்ப,—அவர்கள் புறப்பட்டு மலை
யிலேறி, எஸ்கோல்தாழ்ந்தபூமிவரைக்கும்போய்
உரு அதைச்சுற்றிப் பார்த்தார்கள்.—அந்தத்தேசத்துக்
கனிகளில் சிலவற்றைத்தங்கள்கைகளிலெடுத்து
நம்மிடத்திற்கொண்டுவந்து நம்முடைய தேவ
னுகிய யெகோவா நமக்களிக்குந்தேசம் நல்
உசு லதேசமென்று நமக்குச்சொன்னர்கள்.—அப்ப
டியிருந்தும், நீங்கள் உங்கள் தேவனுகிய யெ
கோவாவுடைய கட்டளைக்குவிரோதமாகி,—
உஎ உங்கள் கூடாரங்களிலேயிருந்துகொண்டு, ஏற
மாட்டோமென்றுஅங்கேமொறுமொறுத்து, யெ
கோவா நம்மை வெறுத்து நம்மை யழிக்கும்
பொருட்டாக நம்மை எமோரியருடையகையில்
ஒப்பிக்க,நம்மை எகிப்துதேசத்தினின்றும் புறப்
உஅ படச்செய்தார்.—எங்கே நாம்போயேறலாம்; அந்
தச்சனங்கள் நம்மைப்பார்க்கிலும் பலவான்க
ளும் நெடியவர்களும்; நகரங்கள் பெரியவைக
ளும் வானத்தையளாவும் மதிலுள்ளவைகளும்;ஏ
னுக்கியரின்புத்திரரையும் அங்கேகண்டோமெ
ன்று நமதுசகோதரர்சொல்லி நம்முடைய இருத
யம் மெலிவடையும்படி பண்ணிஞர்களேயென்
உகூ று சொன்னீர்கள்.—அப்பொழுது நானுங்களை
நோக்கி, நீங்கள் கலங்கவேண்டியதில்லை, அ
ஙய வர்களுக்குப் பயப்படாதிருங்கள்.—உங்களுக்கு
முன்செல்லுமுங்கள்தேவனுகி, யெகோவா
தாமே எகிப்தில் உங்கள் பட்சத்திலிருந்து உங்
கள் பார்வையில் எல்லாவற்றையுஞ் செய்தது
போலவும், வனத்திலேசெய்துவந்ததுபோலவும்,
ஙக உங்கள்நிமித்தம் யுத்தம்பண்ணுவார்.—ஒருமனி
தன் தன்புத்திரனைத்தாங்குவதுபோல், நீங்களிவ்
விடத்திற்கு வருகிறவரைக்கும் நடந்துவந்தவழி
களெல்லாவற்றிலும் உங்கள் தேவனுகிய யெ
கோவா உங்களைத் தாங்கிவந்ததைக்கண்டீர்க
ஙஉ ளே.—உங்கள் தேவனுகிய யெகோவா நீங்
கள் பாளயமிறங்கத்தக்க இடத்தைப்பார்க்கவும்,
நீங்கள் போகவேண்டிய வழியையுங்களுக்குக்
காட்டவும், இரவில் அக்கினியிலும், பகலிலே
மேகத்திலும், உங்களுக்கு முன்சென்ருரே.—
இப்படியிருந்தும் இக்காரியத்தில்நீங்கள் அவரை ஙரு
விசுவாசிக்கவில்லையே என்றேன்.

யெகோவா உங்கள் வாக்கைக் கேட்டுக் ஙச
கோபங்கொண்டு,—உங்கள் பிதாக்களுக்களிப் ஙரு
பேனென்று நான் ஆணையிட்ட அந்த உத்தமதே
சத்தை, யெபுன்னேயின் புத்திரனுகியகாலேபே
யொழிய, இந்தத்துஷ்ட சந்ததியாராகிய மனித
ரில் ஒருவருங்காணமாட்டார்கள்.—அவன் சம் ஙசு
பூரணமாய் யெகோவாவைப் பின்பற்றிவந்த
படியால், அவன் மிதித்துவந்ததேசத்தை அவ
னுக்கும், அவன் பிள்ளைகளுக்கும் அளிப்பே
னென்று ஆணையிட்டார்.—அன்றியும், உங்கள் ஙஎ
நிமித்தம் யெகோவா என்மேலுங் கோபங்
கொண்டு, நீயுமதிற் பிரவேசிக்கமாட்டாய்.—உன் ஙஅ
னிடத்தில் நிற்கிற நூனின்புத்திரனுகிய யோசு
வா அதிற்பிரவேசிப்பான்: அவனே அதை இஸ
ரவேலருக்குச் சுதந்தரமாகப்பங்கிடுவான்: அவ
னைத் திடப்படுத்துவாயாக.—இரையாவார்களென் ஙகூ
று நீங்கள்சொல்லிய உங்கள் குழந்தைகளும் இந்
நாளிலே நன்மை தீமையறியாத உங்கள் பிள்ளை
களுமதிற்பிரவேசிப்பார்கள்: அவர்களுக்கே அ
தையளிப்பேன், அவர்களே அதைச் சுதந்தரித்
துக்கொள்வார்கள்.—நீங்களோ திரும்பிச்செங்க சய
டல்வழியாய் வனத்திற்குப் பிரயாணப்பட்டுப்
போங்களென்ருர்.—அப்பொழுது நீங்களெனக்கு சக
உத்தரமாக, யெகோவாவுக்கு விரோதமாய்ப்
பாவஞ்செய்தோம், நம்முடைய தேவனுகிய
யெகோவா எங்களுக்குவிதித்தகட்டளையெல்
லாவற்றின்படியும் நாங்களேறிப்போய் யுத்தம்
பண்ணுவோமென்று சொல்லிக்கொண்டு, ஒவ்
வொருவரும் உங்களுங்களாயுதங்களைத்தரித்துக்
கொண்டு மலையின்மேலேற எத்தனம்பண்ணியி
ருக்க;—யெகோவா என்னைநோக்கி, நீ அவர் சஉ
களிடத்தில், நானுங்களுக்குள்ளில்லை;நீங்களுங்
கள்சத்துருக்கள்முன்முறிய அடிக்கப்படுவீர்கள்;
ஆதலால் நீங்கள் ஏறவும்வேண்டாம், யுத்தம்பண்
ணவும் வேண்டாமென்று சொல்வாயாகவென்
ருர்.—அதை நானுங்களுக்குச் சொல்ல, நீங் சரு
கள்அதைக்கேளாமல் யெகோவாவின்கட்ட
ளைக்குவிரோதமாகி, துணிவாய் மலையின்மேலே
றினீர்கள்.—அந்தமலையில்வசித்த எமோரியர் உங் சச
களோடேயெதிர்த்து, தேனீகள்போல உங்களைத்
துரத்தி, உங்களைச்சேயீரில் ஓர்மாபரியந்தம் முறி
ய அடிக்க;—நீங்கள் திரும்பி யெகோவாவின் சரு

(உக) யோசு.க.கூ. (உரு) எண்.யரு.ரு. (உச) எண்.யரு.உஉ,உரு,உச. (உரு) எண்.யரு.உஎ. (உசு) எண்.யச.க,உ. கூ,ச. (உஅ) யோசு.உ.யக. எண்.யரு.உஅ. (ஙய) யாத்.யச.யச,உரு. நிகி.ச.உய. (ஙக) யாத்.யகூ.ச. அதி.ஙஉ.யக,யஉ. ஏசா.சசு.ஙச. ஏசா.சுங.கூ. ஓசி.யக.ரு. அப்.யரு.யஅ. (ஙஉ) யாத்.யரு.உக. எண்.ய.ஙரு. (ஙரு) சங்.ாசு.உச. யூதா.ரு. (ஙரு) எண்.யச.உஉ,உரு. சங்.கரு.யரு. எண்.யச.உச,ஙய. யோசு.யச.கூ. (ஙசு) எண்.யச.உச. (ஙஎ) எண்.உய.யஉ. (ஙஅ) எண்.யச.ஙய. யாத்.உச.யரு. க.சாமு.யசு.உஉ. எண்.உஎ.யஅ,யகூ. (ஙகூ) எண்.யச.ஙக. எண்.யச.ஙரு. ஏசா.எ.யரு,யசு. ரோ.கூ.யக. (சய) எண்.யச.உரு. (சக) எண்.யச.சய. (சஉ) எண்.யச.சஉ. (சரு) எண்.யச.சச, சரு. (சச) சங்.ாயஅ.யஉ.

சமுகத்தில்அழுதீர்கள்; யெகோவாவோ உங்கள் சத்தத்தைக்கேட்கவுமில்லை, உங்களுக்குச்
௪௬ செவிகொடுக்கவுமில்லை;-இப்படிக்காதேஷிலே தங்கி அங்கே வெகுநாளாயிருந்தீர்கள்.

## ௨. அதிகாரம்.

௧. ஏதோமியருடன்யுத்தஞ்செய்யாமல்விலக்கல்: ௯. மோவாபியருடன்யுத்தஞ்செய்யாமல் விலக்கல்: ௰௭. அம்மோனியருடன் யுத்தஞ்செய்யாமல்விலக்கல்: ௨௪. எமோரியராசனாகிய சீகோனுடன் யுத்தஞ்செய்து வசப்படுத்தக் கட்டளையிடல்.

மேலும் யெகோவா எனக்குச் சொல்லியப
௨ டி,—நாம் திரும்பிச் செங்கடல்வழியாய் வனத்திற் பிரயாணமாய்ப்புறப்பட்டு, அநேகநாள்சே
௩ யீர்மலையைச்சுற்றி யிருந்தோம்.—யெகோவா என்னைநோக்கி, நீங்களிந்தமலையை வெகுநாளாய்ச் சுற்றியிருந்தீர்கள்: வடக்கே திரும்புங்
௪ கள்.-நீ சனங்களைநோக்கி, சேயீரில்வசிக்குமுங்கள்சகோதரராகிய ஏசாவின்சந்ததியாரின்எல்லைவழியாகப்போவீர்கள்; அவர்களுங்களுக்குப்பயப்படுவார்கள்; ஆகையால் நீங்கள் மிகவுமெச்ச
௫ ரிக்கையா யிருக்கக்கடவீர்கள்.—சேயீர்மலையை நான் ஏசாவுக்குச் சுதந்தரமாகக்கொடுத்தேனேயன்றி, அவர்களுடையதேசத்தில் ஒரு அடிநிலமும் உங்களுக்குக்கொடுக்கவில்லை; ஆனபடியினால்அவர்களுடன் யுத்தஞ்செய்யவேண்டாம்.-
௬ போசனபதார்த்தங்களை அவர்களிடத்தில்விலைக்குவாங்கிப் புசித்துக்கொண்டும், தண்ணீரை அவர்களிடத்தில் விலைக்குவாங்கிப்பானம் பண்
௭ ணிக்கொண்டுமிருங்கள்.—உங்கள்கையாற் செய்கிற எல்லாவற்றிலும் உங்கள் தேவனாகிய யெகோவா உங்களையாசீர்வதித்து வருகிறார். இந்தப்பெரிய வனாந்தரவழியாய் நீ நடந்துவருகிறதை அறிந்திருக்கிறாரே: இந்த நாற்பதுவருஷமும் உன் தேவனாகிய யெகோவா உன்பட்சத்திலிருந்தார்: உனக்கு ஒன்றுங் குறைவுபட
௮ வில்லையென்று சொல்லென்றார்.—நாம் சேயீரில் வசித்த நமது சகோதரராகிய ஏசாவின் சந்ததியாரை விட்டுப்புறப்பட்டு, ஏலாத்தினின்றும் எத்சேயோன் கேபெரினின்றும் சமபூமிவழியாய் திரும்பி, மோவாபுவனத்தின்வழியாய்வந்தோம்.
௯ யெகோவா என்னைநோக்கி, அர்வை நான் லோத்து புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தேன், அதினால் அவர்களுடைய தேசத்தில் உனக்குச்சுதந்தரந் தரமாட்டேன்: நீங்கள் மோவாபியரைக் கிலேசப்படுத்தவும்வேண்டாம், அவர்களுடனேயுத்தம்பண்ணவும் வேண்டாம்.—
௰ திரளானவர்களும், ஏனாக்கியரைப்போல்நெடியவர்களுமாயிருந்த பலத்தசனங்களாகிய எமியர்
௰௧ அதில்முன்னேவசித்தார்கள்;-அவர்களும் ஏனாக்கைப்போலும்வீரரென்றுஎண்ணப்பட்டார்கள்; மோவாபியரோ அவர்களை எமியரென்று சொல்
லுகிறார்கள்.—ஓரியரும் அக்காலத்திலே சேயீரில் ௰௨
வசித்தார்கள், யெகோவா தங்களுக்குச் சுதந்தரமாகக்கொடுத்ததேசத்தாரை இஸரவேலர் துரத்தினதுபோல், ஏசாவின் சந்ததியார் அந்த ஓரியரைத்துரத்தி, தங்கள் முகத்துக்குமுன்பாக அழித்து, அவர்களிருந்தஸ்தானத்திலே குடியேறி
னார்கள்.—நீங்களெழுந்து சேரெத்தென்னும் சிற் ௰௩
றாற்றைக்கடவுங்களென்றுசொல்ல, சேரெத் சிற்
றாற்றைக்கடந்தோம்.—படைஞரெல்லாரும் யெ ௰௪
கோவா அவர்களுக்காணையிட்டபடி பாளயத்திலேமாண்டு ஒழிந்துபோக, நாம் காதேஷ்பர்னீயவைவிட்டுப் புறப்பட்டது முதற்கொண்டுசேரெத் சிற்றாற்றைக் கடக்கும்வரைக்குஞ் சென்ற
காலம் முப்பத்தெட்டுவருஷமாயிற்று.—அவர்கள் ௰௫
பாளயத்தில்மாண்டுஒழியுமளவும் யெகோவாவின் கரம் அவர்களை நிருமூலமாக்கும்பொருட்டாகவே அவர்களுக்கு விரோதமாயிருந்தது.—
படைஞரெல்லாரும் மரித்துச் சனங்களை விட் ௰௬
டொழிந்தபின்பு,
யெகோவா என்னைநோக்கி,—இன்று மோ ௰௭
வாபின் எல்லையாகிய அர்வைக்கடந்து போ ௰௮
வாய்.—நான் அம்மோன்புத்திரருடையதேசத்தை ௰௯
லோத்தின் புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுத்திருக்கிறதினால் அதில் உனக்குச் சுதந்தரமாக ஒன்றுந்தரமாட்டேன்; ஆகையால் அம்மோன் சந்ததியாரிடத்திற் சமீபமாய்ச் செல்லும்பொழுது, நீ அவர்களைக் கிலேசப்படுத்தவும் வேண்டாம், அவர்களோடே போர் செய்யவும் வேண்
டாம்.—அதுவும் வீரருடையதேசமாக எண்ணப் ௨௰
பட்டது, முற்காலத்தில் வீரர் அதில்வசித்தார்கள், அம்மோனியர் அவர்களைச் சம்சூமியரென்
றுசொல்லுகிறார்கள்.—அவர்கள் திரளானவர்க ௨௧
ளும்ஏனாக்கியரைப்போல்நெடியவர்களும் பலத்தவர்களுமாயிருந்தும், யெகோவா சேயீரில் வசித்த ஏசாவின் சந்ததியாருக்குமுன்பாக ஓரியரையழிக்க, அவர்களிவர்களைத்துரத்தி இவர்களிருந்தஸ்தானத்தில் இந்நாள்வரைக்குங் குடியி
ருக்கிறது போலவும்,—கப்தோரிலிருந்து புறப் ௨௨
பட்ட கப்தோரியர் அத்சேரிந்தொடங்கிக்காசாமட்டுங்குடியிருந்த அவியரை அழித்து, அவர்களிருந்தஸ்தானத்திலே குடியேறினதுபோலவும்,—
அவர்களை இவர்கள் சமுகத்தில் நாசப்படுத்த இ ௨௩
வர்கள் அவர்களைத்துரத்தி, அவர்களிருந்த ஸ்தானத்திலே குடியேறினார்கள்.
நீங்களெழுந்துபிரயாணமாய்ப்புறப்பட்டு, அர் ௨௪
னோன் ஆற்றைக்கடவுங்கள்: எஷ்போனுடைய இராசனாகிய சீகோன் என்னும்எமோரியனையும், அவன் தேசத்தையும், உன் கையிலொப்பித்தேனே: அதைச்சுதந்தரித்துக்கொள்ள அவனுடனே
யுத்தஞ்செய்.—வானத்தின்கீழெங்குமுள்ள சனங் ௨௫

(௪௬) எண்.௰௩.௨௫. நியா.௰௧.௰௭—(௨. அதி. ௧.) எண்.௰௪.௨௫. (௪) எண்.௨௰.௰௪. (௫) ஆதி.௩௬.௮. யோசு. ௨௪.௪. (௭) அதி.௮.௨,௩,௪. (௮) நியா.௰௧.௰௮. ௧.இரா.௯.௨௬. (௯) எண்.௨௧.௨௮. ஆதி.௰௯.௩௬,௩௭. (௰) எண். ௰௩.௨௨,௩௩. (௰௩) எண்.௨௧.௰௨. எண்.௰௩.௨௬. (௰௪) எண்.௰௩.௨௬. எண்.௰௪.௩௩. எண்.௰௪.௩௫. (௰௯) ஆதி.௰௯. ௩௮. (௨௧) ஆதி.௩௬.௮. (௨௪) எண்.௨௧.௰௩,௰௪. நியா.௰௧.௰௮,௨௧. (௨௫) யாத்.௰௫.௰௫. யோசு.௨.௯,௰.

கள் உன்னாலேதிகிலும்பயமுமடையும்படிசெய்
யஇன்றுநான்தொடங்குவேன்; அவர்களுன்கீர்த்
தியைக்கேட்டு உன்னிமித்தம் நடுங்கிவேதனைப்
௨௬ படுவார்களென்றார்.—அப்பொழுது நான் எஷ்
போன்ராசனாகிய சீகோனிடத்தில்,உம்முடைய
தேசத்தைக் கடந்துபோகிறதற்கு உத்தரவுகொ
டும்:வலப்புறம் இடப்புறஞ்சாயாமல் பெரும்பா
௨௭ தைவழியாய்நடப்பேன்.-சேயீரில்குடியிருக்கிற
ஏசாவின் சந்ததியாரும், அர்வில்குடியிருக்கிற
மோவாபியரும், எனக்குச்செய்ததுபோல,நீரும்,
நான் யோர்தானைக்கடந்து எங்கள் தேவனாகிய
யெகோவா எங்களுக்களிக்குந் தேசத்திற்சே
௨௮ ரும் வரைக்கும்,—நான் புசிக்க ஆகாரத்தையும்,
நான் குடிக்கச்சலத்தையுங் கிரயத்துக்குத் தருவீ
ராக; நான் கால்நடையாய்க் கடந்துபோகமாத்
௨௯ திரம் உத்தரவுகொடுமென்று,—இந்தச் சமாதான
வார்த்தைகளைச்சொல்லும்படி, கிதேமோத்வனத்
௩௰ தினின்றுந் தூதர்களை யனுப்பினேன்.—இந்நா
ளிலிருக்கிறதுபோல, எஷ்போனுக்கிராசனாகிய
சீகோனை உங்கள் தேவனாகிய யெகோவா
உங்கள் கைக்கு ஒப்பிக்கும்படி அவனுடைய ம
னதைக்கடினமாக்கி, அவனுடைய இருதயம் உ
ரங்கொள்ளும்படி செய்தபடியால், அவன் தன்
தேசத்தைக் கடந்துபோகும்படி யெங்களை விட
௩௧ வில்லை,—யெகோவா என்னைநோக்கி, சீகோ
னையும் அவன்தேசத்தையும் உனக்கு ஒப்பிக்கப்
போகிறேன்: அவனுடைய தேசத்தைவசப்படுத்
௩௨ திச்சுதந்தரித்துக்கொள்ளென்றார்.—சீகோன், தன
தெல்லாச்சனங்களோடும்நம்மோடேயுத்தம்பண்
௩௩ ணப்புறப்பட்டு யாகாசில் வந்தான்.—அவனை
நம்முடைய தேவனாகிய யெகோவா நமக்
கொப்பிக்க, நாம் அவனையும் அவன் புத்திரரை
யும் அவனுடைய சகலசனங்களையும் முறிய அ
௩௪ டித்து,—அக்காலத்தில் அவனுடையசகல நகரங்
களையும்பிடித்து, சகல நகரங்களிலுமிருந்த ஸ்தி
ரீபுருஷருள்ளும் குழந்தைகளுள்ளும் ஒருவரும்
௩௫ மீந்திராதபடி நிருமூலப்படுத்தினோம்.—மிருகங்
களையும், நாம் பிடித்த நகரங்களிற்கொள்ளையிட்
ட பொருள்களையுமாத்திரம் நமக்கென்று வைத்
௩௬ தோம்.—அர்னோன் ஆற்றங்கரையிலுள்ள அரோ
வேரும் நதியோரத்திலுள்ளபட்டினமுந் தொ
டங்கி கிலியாத்வரைக்கும் நமக்கு எதிர்நிற்கத்
தக்க நகரம் ஒன்றுமில்லை: எல்லாவற்றையும் நம்
முடைய தேவனாகிய யெகோவா நமக்கே
௩௭ யொப்பித்தார்.—அம்மோன் புத்திரருடைய தே
சத்தையும், யாப்போக் ஆற்றங்கரையிலுள்ள யா
வையும், மலைகளிலுள்ள நகரங்களையும், நம்மு
டைய தேவனாகிய யெகோவா நமக்கு வி
லக்கின மற்ற யாவையுஞ்சேராமல் விட்டுப்போ
னோய்.

## ௩. அதிகாரம்.

௧. பாஷானினிராசாவாகிய ஓகைச்செயித்தல்: ௰௨. ரூபேன் சந்ததியாருக்கும் காத் சந்ததியாருக்கும் அவனுடைய தேசத்தைப் பகிர்ந்து கொடுத்தல்: ௨௩. தேசத்திற் பிரவேசிக்க மோசே வேண்டல். ௨௬. அதைக்காண உத்தரவு பெறல்.

பின்பு நாம்திரும்பிப் பாஷானுக்குப்போகிறவ ௧
ழியேஏறிப்போனோம்:பாஷானின்இராசனாகிய
ஓகு,தன்சமஸ்தசனங்களோடும் நம்மோடெதிர்த்
து யுத்தம்பண்ணும்படிபுறப்பட்டு, எத்ரேயிக்கு
வந்தான்.—யெகோவா என்னைநோக்கி, அவ ௨
னுக்குப்பயப்படாதிரு; அவனையும்அவன்சனங்
களெல்லாரையும், அவன்தேசத்தையும், உன்கை
யிலொப்பிப்பேன்; எஷ்போனில்வசித்த எமோ
ரியருக்கிராசனாகிய சீகோனுக்கு நீசெய்ததுபோ
ல அவனுக்குஞ்செய்வாயென்றார்.—அப்படியே ௩
நம்முடைய தேவனாகிய யெகோவா பா
ஷானின்ராசாவாகிய ஓகையும்,அவனுடையசக
லசனங்களையும் நமதுகையிலொப்பித்தார்: அவ
னிடத்திலொருவரும் மீந்திராதபடிமுறிய அடித்
தோம்.—அக்காலத்தில் அவனுடைய சகல நக ௪
ரங்களையும் பிடித்துக்கொண்டோம்; அவர்களி
டத்தில்நாம்பிடித்துக்கொள்ளாதநகரமில்லை: பா
ஷானிலிருந்த ஓகினுடையராச்சியமாயும் அறுப
து நகரங்களுள்ளதாயுமிருந்த அர்கோப் தேசம்
முழுவதையும் பிடித்துக்கொண்டோம்.—அந்த ௫
நகரங்களெல்லாம் உயர்ந்த மதில்களாலும் வா
சல்களாலும் தாழ்களாலும் அரணாக்கப்பட்டி
ருந்தன: அவையன்றிமதிலில்லாத பட்டணங்க
ளும் அநேகம்; அவைகளையுமழித்தோம்.—எஷ் ௬
போனிலிருந்தசீகோனுக்குச்செய்ததுபோலஅந்
நகரங்கள்யாவற்றிலுமுள்ள புருஷரையும்,ஸ்திரி
களையும், பிள்ளைகளையும், முழுமையும், சங்கரித்
தோம்.—நகரங்களிலுள்ள சகலமிருகங்களையும், ௭
கொள்ளையிட்டபொருள்களையும் நமக்கிரையாக
வைத்துக்கொண்டோம்.—இப்படியே யோர்தா ௮
னுக் கிப்புறத்திலுள்ள அர்னோன் நதிதொடங்
கி,—சீதோனியரால் சிரியோனென்றும்எமோரிய ௯
ரால் ஷனீரென்றும் பெயரிடப்பட்ட எர்மோன்
மலைவரைக்குமுள்ள தேசத்தையும்,—சமபூமியி ௰
லுள்ள சகலநகரங்களையும், கிலியாத் முழுவதை
யும், சல்கா எத்ரேயிஎன்னும் பாஷானிலிருந்தஓ
கினுடையராச்சியத்தின்நகரங்கள்வரைக்குமுள்
ளபாஷான் முழுவதையும்,அக்காலத்தில் எமோ
ரியராசாக்களிருவரிடத்திலும் பிடித்துக்கொண்
டோம்.—மீந்திருந்த வீரருக்குள்ளே பாஷானின் ௰௧
ராசனாகிய ஓகுமாத்திரம் மீந்திருந்தான்; மனித
ருடைய கை முழத்தின்படி ஒன்பதுமுழ நீள
மும் நாலுமுழ அகலமுமாக இரும்பினாற்செய்த

(௨௬) எண்.௨௧.௨௧,௨௨. நியா.௰௧.௰௯. (௨௭) எண்.௨௰.௰௮. நியா.௰௧.௰௭,௰௮. (௨௮) எண்.௨௰.௰௯. (௨௯) அதி.௨௰.௰. (௩௰) எண்.௨௧.௨௩. யோசு.௰௧.௨௰. யாத்.௪.௨௰. (௩௧) அதி.௧.௮. (௩௨) எண்.௨௧.௨௩. (௩௩) எண்.௨௧.௨௪. (௩௪) லேவி.௨௭.௨௮. (௩௬) அதி.௩.௰௨. யோசு.௰௩.௯. சங்.௪௪.௩. (௩௭) ஆதி.௩௨.௨௨. எண்.௨௧.௨௪—(௩. அதி. ௧.) எண்.௨௧.௩௩. (௩) எண்.௨௧.௩௫. (௪) ௧.இரா.௪.௰௩. (௰) யோசு.௰௨.௫. (௰௧) ஆமோ.௨.௯. ௨.சாமு.௰௨.௨௬.

அவனுடையகட்டில் அம்மோன்புத்திரருடைய ரப்பத்நகரத்திலிருக்கவில்லையா.
௰௨ அக்காலத்திலேசுதந்தரமாகப்பெற்றுக்கொண்டதேசத்தை அர்னோன் நதியருகேயுள்ள அரோவேர்தொடங்கிக் கிலியாத்மலையிற் பாதியையும், அதிலிருக்கிற நகரங்களையும், ரூபேனியருக்குங்
௰௩ காத்தியருக்குங்கொடுத்தேன்.—மற்றக் கிலியாத்தையும்,ஓகினுடையராச்சியமாயிருந்த பாஷான் முழுவதையும், மனாசேயின் பாதிக்கோத்திரத்துக்குக்கொடுத்ததுமன்றி, வீரருடையதேசமென்னப்பட்டிருந்த பாஷானுக்குள்ளான அர்கோப்
௰௪ திசையாவையுங்கொடுத்தேன்.–மனாசேயின் குமாரனாகிய யாயீர் அந்த அர்கோப் திசைமுழுவதையும், கெஷூரி, மாகாத்தி என்பவர்களுடைய எல்லைமட்டுந் தன் வசப்படுத்தி, அதற்குத் தன் நாமத்தைத் தரித்து, பாஷான் அவோத் யாயீரென்று பெயரிட்டான்: அது இந்நாள்வரைக்
௰௫ கும் வழங்கி வருகின்றது.—மாகீருக்குக் கிலி
௰௬ யாத்தைக் கொடுத்தேன்.—மேலும் கிலியாத்தொடங்கி அர்னோன் நதிஓடுகிறதாழ்ந்தபூமியும் அந்தமுமான தேசபரியந்தமும் அம்மோன் புத்திருடைய எல்லையான யாப்போக்காறு பரியந்தமு
௰௭ முள்ள தேசத்தையும்,–கின்னேரேத் தொடங்கிக் கிழக்கேயுள்ள அஷ்தோத் பிஸ்காவுக்குத் தாழ்வாய்ச் சமபூமியின் கடலாகிய உப்புக்கடல்வரைக்கும் யோர்தானின்எல்லைக்குள்ளடங்கிய சமபூமியையும் ரூபேனியருக்குங்காத்தியருக்குங்
௰௮ கொடுத்தேன்.–அக்காலத்திலேநானுங்களைநோக்கி,உங்கள்தேவனாகிய யெகோவா உங்களுக்கு இந்தத்தேசத்தைச் சுதந்தரமாகக்கொடுத்தார்: உங்களுக்கு வெகு ஆடுமாடுகளுண்டென்றறி
௰௯ வேன்.—ஆனாலும் உங்கள் தேவனாகிய யெகோவா உங்களை இளைப்பாறப் பண்ணினதுபோல, உங்கள்சகோதரரையுமிளைப்பாறப்பண்ணி, யோர்தான் நதிக்கப்புறத்தில் அவர் கொடுத்ததேசத்தை அவர்கள்சுதந்தரித்துக்கொள்ளும்வரைக்கும், உங்கள் மனைவிகளும், உங்கள் பிள்ளைகளும், உங்களாடுமாடுகளும்மாத்திரம் நானுங்
௨௰ களுக்குக்கொடுத்த பட்டணங்களிலிருக்க,–யுத்தஞ் செய்யத்தக்கவர்களாகிய நீங்கள் எல்லாரும் மற்ற இஸரவேல் சந்ததியாரான உங்கள் சகோதரருக்குமுன்னே யுத்தத்துக்குச் சன்னத்தராய் நடந்துபோகவேண்டும்; பின்புஒவ்வொருவரும் நானுங்களுக்குக்கொடுத்த சுதந்தரத்துக்குத்திரும்புவீர்களாகவென்று கட்டளையிட்டேன்.
௨௧ அன்றியும் அக்காலத்திலே நான் யோசுவாவிடத்தில்,உங்கள்தேவனாகியயெகோவாஅவ்விராசாக்களிருவருக்குஞ்செய்தயாவையும் உன் கண்கள்கண்டன:நீபோகும்ஒவ்வொருராச்சியத்துக்கும்யெகோவா அப்படியேசெய்வார்.-உங் ௨௨
கள் தேவனாகியயெகோவாதாமேஉங்கள்நிமித்தம் யுத்தம்பண்ணுவார்: நீங்களவர்களுக்குப் பயப்படவேண்டாமென்றுகட்டளையிட்டேன்.
அக்காலத்தில் நான் யெகோவாவைநோக் ௨௩
கி,—தேவனாகிய யெகோவாவே, நீர் அடி ௨௪
யேனுக்கு உமதுமகத்துவத்தையும், உமது பலத்தகரத்தையுங்காட்டத்தொடங்கினீர்:வானத்திலும் பூமியிலும் உமதுகிரியைக்கும் உமதுவல்லமைகளுக்குமொப்பாகச் செய்யத்தக்க தேவன் யாவன்.—நான்போய் யோர்தான் நதிக்கப்புறத்தி ௨௫
லுள்ள அந்த உத்தமதேசத்தையும், அந்த உத்தம மலையையும், லிபானோனையும் பார்க்கும்படி உத்தரவுகொடுத்தருளுமென்றுவேண்டிக்கொண்
டேன்.—ஆயினும் யெகோவா உங்கள் நிமித் ௨௬
தம் என்மேல் கோபங்கொண்டு எனக்குச்செவிகொடாமல் என்னைநோக்கி, போதும், இந்தக் காரியத்தைக்குறித்தென்னுடனே இனிப்பேச
வேண்டாம்.–பிஸ்காவினுச்சியிலேறி, பார்வை ௨௭
செலுத்தி, மேற்கும் வடக்குந் தெற்குங் கிழக்குமாகிய நான்கு திசைகளையும் பார்த்துக்கொள்: இந்த யோர்தான் நதியை நீகடந்துபோகவேண்
டாம்.—யோசுவா, இந்தச்சனங்களுக்கு முன்ன ௨௮
டந்து,நீபார்க்குமிந்தத்தேசத்தை அவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கவேண்டும்: ஆகையால் நீ அவனுக்குக் கட்டளைகொடுத்து, அவனைத் திட
மாக்கி ஸ்திரப்படுத்துவாயாகவென்றார்.–பின்பு ௨௯
பேத்பேயோருக்கு எதிரான இந்தத்தாழ்ந்த பூமியிலே தங்கிவிட்டோம்.

## ௪. அதிகாரம்.

௧. கட்டளையைக்கைக்கொள்ளும்படி ஏவல்:௪௧. யோர்தானின் கீழ்த்திசையில் மூன்று அடைக்கலநகரங்களைநியமித்தல்.

இஸரவேலரே! நீங்கள் சீவிப்பதற்காகவும்,உங் ௧
கள்பிதாக்களுடையதேவனாகிய யெகோவா உங்களுக்களித்ததேசத்திற் பிரவேசித்து, அதைச் சுதந்தரித்துக்கொள்வதற்காகவும், நீங்கள் செய்யவேண்டுவதின்னதென்று நானுங்களுக்குப் போதிக்கிற விதிகளுக்கும், நியாயப்பிரமாணங்களுக்
குஞ் செவிகொடுங்கள்.—நானுங்களுக்கு விதிக் ௨
கும் உங்கள் தேவனாகிய யெகோவாவின் கட்டளைகளை நீங்கள் காத்துக்கொள்ளவேண்டுமென்று நானுங்களுக்குச் சொல்லும் வாக்குடனே நீங்கள் யாதொன்றைக்கூட்டவும் வேண்டாம், அதிலொன்றைக் குறைக்கவும் வேண்
டாம்.–யெகோவா பாகால் பேயோரின்நிமித் ௩
தஞ்செயததை உங்கள்கண்கள்கண்டன. பாகால் பேயோரைப்பின்றொடர்ந்த சகல மனிதரையும், உங்கள் தேவனாகிய யெகோவா உங்கள்

(௰௨) யோசு.௰௨.௨. எண்.௩௨.௩௩. (௰௩) யோசு.௰௩.௨௯. (௰௪) ௧.நாளா.௨.௨௨. யோசு.௰௩.௰௩. ௨.சாமு.௩.௩. ௨.சாமு.௰.௬. எண்.௩௨.௪௧. (௰௫)எண்.௩௨.௩௯. (௰௬) ௨.சாமு.௨௪.௫. எண்.௨௧.௨௪. யோசு.௰௨.௨. எண்.௩௪.௰௧. (௰௭) எண்.௩௪.௰௨. யோசு.௰௨.௩.(௨௰)எண்.௩௨.௨௰, யோசு.௨௨.௪.(௨௧)எண்.௨௭.௰௮.(௨௨)யாத்.௰௪.௰௪. (௨௩) ௨.கொரி.௰௨.௮,௯. (௨௪) யாத்.௰௫.௰௧. ௨.சாமு.௭.௨௨. சங்.௭௧.௰௯. (௨௫) யாத்.௩.௮.(௨௬)எண்.௨௰.௰௨. (௨௭)எண்.௨௭.௰௨.(௨௮)எண்.௨௭.௰௮,௨௩.(௨௯)அதி.௪.௪௬—(௪.அதி.௧.) லேவி.௰௯.௩௭. எசேக்.௨௰.௰௧.ரோ. ௰.௫.(௨)அதி.௰௨.௩௨. யோசு.௧.௭. நீதி.௩௰.௬. பிர.௰௨.௰௩. வெளி.௨௨.௰௮,௰௯.(௩)எண்.௨௫.௪, யோசு.௨௨.௰௭.

௪ மத்தியினின்றும்நாசப்படுத்தினாரே.-உங்கள் தே
வனாகிய யெகோவாவைப் பற்றிக்கொண்ட
நீங்களெல்லாரும் இந்நாள்வரைக்கும் உயிரோ
௫ டிருக்கிறீர்கள்.-நீங்கள் சுதந்தரித்துக்கொள்ளும்
படிபிரவேசிக்குந் தேசத்தில், நீங்கள் காத்துக்
கொள்ளும்பொருட்டு, என் தேவனாகிய யெ
கோவா எனக்கு விதித்தபடி நானுங்களுக்கு
விதிகளையும், நியாயப்பிரமாணங்களையும், போ
௬ தித்தேனே.—ஆகையால் அவைகளைக் கைக்கொ
ண்டு நடவுங்கள்; இந்த நியமங்களைக்கேட்குந்
தேசத்தாருக்கு முன்பாக இதுவே யுங்களுக்குப்
புத்தியும் விவேகமுமாயிருக்கும்: அவர்கள் இந்
தப் பெரியசாதியார், நிச்சயமாய் ஞானமும் புத்
௭ தியுமுள்ள சனங்களென்று பேசுவார்கள்.—நாம்
பிரார்த்திக்கும் ஒவ்வொரு காரியத்திலும், நம்மு
டைய தேவனாகிய யெகோவா நமக்குச்
சமீபித்திருக்கிறதுபோல, தேவனைத் தங்களுக்
குச்சமீபமாகப்பெற்ற பெரியசாதி வேறெது.—
௮ இந்நாளில் நானுங்களுக்குவிதிக்கிற இந்தப் பிர
மாணங்கள் முழுவதுக்குஞ் சமமாய் இத்தனை நீ
தியுள்ள விதிகளையும் நியாயப்பிரமாணங்களையும்
௯ பெற்ற அத்தனை பெரியசாதிவேறெது.—ஒரேபி
னிடத்தில் உங்கள் தேவனாகிய யெகோவா
வுக்குமுன்பாகநீங்கள்நிற்க, யெகோவா என்
னைநோக்கி, சனங்களென்னிடத்திற் கூடிவரச்
செய்; என் வாக்குகளை அவர்கள் கேட்கப்பண்
ணுவேன்; அவர்கள் பூமியிற் சீவித்திருக்கும் நா
ளெல்லாம் எனக்குப் பயப்படும்படி, அவைக
ளைப்படித்துத் தங்கள் பிள்ளைகளுக்கும் போதிக்
௰ கவேண்டுமென்றுசொல்லியநாளில்,—உன்கண்
கள்கண்டகாரியங்களை நீ மறவாதபடிக்கும்,உன்
சீவனுள்ள நாளெல்லாம் அவைகள் உன்னிரு
தயத்தினின்று நீங்காதபடிக்கும், நீ எச்சரிக்கை
யாகவேயிருந்து, உன்னாத்துமத்தை மிகவுங் காத்
துக்கொள்வதுமன்றி,உன் புத்திரருக்கும்,பௌத்
௰௧ திரருக்கும், உணர்த்தவும் வேண்டும்.—நீங்கள்
சேர்ந்த மலையடிவாரத்தில் நின்றீர்கள்; அந்தமலை
யில் ஆகாயத்தையளாவின அக்கினியெரிய, இரு
௰௨ ளும் மேகமுங் காரிருளுஞ்சூழ்ந்தன.—அந்தஅக்
கினிமத்தியினின்று யெகோவா உங்களுக்குச்
சொல்லியவாக்குகளின்சத்தத்தைக்கேட்டீர்கள்;
அந்தச் சத்தத்தைக் கேட்டதேயன்றி ஒரு ரூபத்
௰௩ தையுங்காணவில்லை.-நீங்கள்செய்யும்பொருட்டு
அவருங்களுக்குவிதித்தபத்துக்கட்டளைகளாகிய
தமதுஉடன்படிக்கையையுங்களுக்குஅறிவித்து,
அவைகளை யிரண்டுகற்பலகைகளிலெழுதினார்.-
௰௪ அன்றியும் நீங்கள் சுதந்தரித்துக்கொள்ளப்போகி
றதேசத்தில் நீங்கள் கைக்கொள்ளவேண்டியவிதி

களையும், நியாயப்பிரமாணங்களையும், உங்களுக்
குப்போதிக்கவேண்டுமென்றுஅக்காலத்தில்யெ
கோவா எனக்குக் கட்டளையிட்டார்.—யெ ௰௫
கோவா ஒரேபில் அக்கினிமத்தியினின்று உங்
களுடனே பேசினநாளில் நீங்கள் ஒரு ரூபத்
தையுங்காணவில்லை.—ஆதலால் நீங்கள்தொழிற் ௰௬
படுத்திய எந்தவிக்கிரகத்தையும், எந்த உருவத்
தின்பிரதிரூபத்தையும், ஸ்திரிபுருஷர்களின் சா
யலையும்,—பூமியிலுள்ள எந்த மிருகத்தின் சாய ௰௭
லையும் ஆகாசத்திற்பறக்கிற எந்தப்பட்சிகளின்
சாயலையும்,-பூமியிலூரும் எந்தஊர்வனவற்றின் ௰௮
சாயலையும், பூமியின்கீழ் சலத்திலுள்ள எந்தமச்
சத்தின் சாயலையுஞ்செய்து, உங்களைக்கெடுத்துக்
கொள்ளாமலும்,-நீ வானத்தை யேறிட்டுப்பார்த் ௰௯
து, உன் தேவனாகிய யெகோவா, வானத்
தின் கீழெங்குமுள்ள சகல தேசத்தாருக்கும் ஏற்
படுத்திய வானத்தின் மிகுந்த சேனையாகிய சூரி
யசந்திர நட்சத்திரங்களைநோக்கி, அவைகளைத்
தொழுது சேவிக்க இழுக்கப்படாமலுஞ்சாவதா
னமாயிரு.—இந்நாளில் நீங்களிருக்கிறபிரகாரம் ௨௰
தமக்குச்சுதந்தரமான சனமாயிருக்கும்பொருட்
டு, யெகோவா உங்களை எகிப்தென்னும் இ
ருப்புச்சுள்ளையினின்றும் அழைத்துப்புறப்படச்
செய்தார்.—அன்றியும், யெகோவா உங்கள் ௨௧
நிமித்தம் என்மேற் கோபங்கொண்டு, நான்
யோர்தான் நதியைக்கடந்துபோகவேண்டாமெ
ன்றும், உன் தேவனாகிய யெகோவா உனக்
குச் சுதந்தரமாக அளிக்கும் அந்த உத்தமதேசத்
தில் நான் பிரவேசிக்கவேண்டாமென்றும் ஆணை
யிட்டார்.—அதினால் இத்தேசத்திலேயே நான் ௨௨
மரணமடையவேண்டும், நான் யோர்தான் நதி
யைக்கடந்து போகவிடார்: நீங்களோ கடந்து
போய் அந்த உத்தமதேசத்தைச் சுதந்தரித்துக்
கொள்வீர்கள்.-உங்கள் தேவனாகிய யெகோ ௨௩
வா உங்களுடனே பண்ணின உடன்படிக்கை
யை நீங்கள் மறவாமலும், உன் தேவனாகிய
யெகோவா விலக்கின யாதொரு தொழிற்ப
டுத்திய விக்கிரகத்தையாகிலும் எந்த வஸ்துவின்
சாயலையாகிலுஞ் செய்யாமலும், சாவதானமா
யிருங்கள்.—உன் தேவனாகிய யெகோவா ௨௪
பட்சிக்கிற அக்கினி, எரிச்சலுள்ள தேவன்,—
உனக்குப்புத்திரரும் பௌத்திரரும்பிறந்து, நீங் ௨௫
களத்தேசத்தில் அநேகநாளிருந்து, நீங்களுங்க
ளைக்கெடுத்து, யாதொரு தொழிற்படுத்திய விக்
கிரகத்தையாகிலும் எந்த வஸ்துவின் சாயலை
யாகிலுஞ்செய்து, உன் தேவனாகிய யெகோ
வாவுக்குக் கோபமுண்டாக அவருடைய சமு
கத்தில் தீங்குசெய்தீர்களேயாகில்,-நீங்கள் யோர் ௨௬

(௬)யோபு.௨௮.௨௮. சங்.௱௰௧.௰. நீதி.௧.௭. (௭) ௨.சாமு.௭.௨௩. சங்.௪௬.௧. சங்.௱௪௫.௰௮. சங்.௱௰௮.
௰௪. ஏசா.௫௫.௬. (௯) யாத்.௰௯.௯,௰௬. எபி.௰௨.௰௮,௰௯.(௰)நீதி.௪.௨௩. நீதி.௩.௧,௩. ஆதி.௰௮.௰௯. எபே.௬.௪.(௰௧)
யாத்.௰௯.௰௮. (௰௨) யாத்.௨௰.௨௨. ௧.இரா.௰௯.௰௨. (௰௩) அதி.௯.௯,௰௧. யாத்.௩௪.௨௮. யாத்.௨௪.௰௨. (௰௪) யாத்.
௨௧.௧. (௰௫) ஏசா.௪௰.௰௮. (௰௬) யாத்.௩௨.௭. யாத்.௨௰.௪,௫. ரோ.௧.௨௩. (௰௯) யோசு.௨௩.௰௧. அதி.௰௭.௩.
யோபு.௩௧.௨௬,௨௭. ஆதி.௨.௧. ௨.இரா.௰௭.௰௬. ரோ.௧.௨௫. (௨௰) ௧.இரா.௮.௫௧. எரே.௰௧.௪. யாத்.௰௯.௫.
(௨௧) எண்.௨௰.௰௨. (௨௨) ௨.பேதுரு.௧.௰௩,௰௪,௰௫. (௨௩) யாத்.௨௰.௪,௫. (௨௪) யாத்.௨௪.௰௭. ஏசா.௩௩.௰௪.
எபி.௰௨.௨௯. யாத்.௨௰.௫. ஏசா.௪௨.௮. (௨௫) ௨.இரா.௰௭.௰௭. (௨௬) அதி.௩௰.௰௮,௰௯. ஏசா.௧.௨. மீகா.௬.௨.

தான் நதியைக்கடந்து சுதந்தரிக்கப்போகிற தே
சத்தினின்றும் முழுவதும் நாசமாவீர்களென்று,
இந்நாளிலுங்களைக்குறித்து வானத்தையும், பூமி
யையுஞ் சாட்சிவைத்திருக்கிறேன்; நீங்கள் அ
திலே நெடுநாளிராமல் நிருமூலமாக்கப்படுவீர்
௨௭ கள்.—யெகோவா உங்களைப்புறச்சாதியாருக்
குள்ளே சிதற அடிப்பார், யெகோவா உஙக
ளைக் கொண்டுபோய்விடுஞ் சாதிகளுக்குள்ளே
௨௮ நீங்கள் அற்பதொகையாய்மீந்திருப்பீர்கள்.—அங்
கே மனிதருடையகையால் மரத்திலுங் கல்லிலுந்
தொழிற்படுத்தப்பட்ட, காணவும், கேட்கவும்,
புசிக்கவும், ஆக்கிராணிக்கவும் கூடாத தெய்வங்
௨௯ களைச்சேவிப்பீர்கள்.—அங்கேயும் உன்பூரணஇ
ருதயத்தினாலும், உன் பூரண ஆத்துமத்தினாலும்,
உன் தேவனாகிய யெகோவாவைத்தேடிக்
கொள்வாயானால், அவரைக்கண்டடைவாய்.—
௩௰ வருங்காலத்தில் நீவியாகுலப்பட இவைகளெல்
லாம் உனக்கு நேரிடும்பொழுது, நீயுன் தேவ
னாகிய யெகோவாவிடந்திரும்பி, அவருடை
௩௧ ய வாக்குக்கமைந்திருப்பாயாகில்,—உன் தேவ
னாகிய யெகோவா காருண்ணிய தேவனாயி
ருக்கிறபடியால், உன்னைக்கைவிடவுமாட்டார்,
உன்னை நாசப்படுத்தவுமாட்டார், உன் பிதாக்க
ளுக்குத் தாம் ஆணையிட்டுக்கொடுத்த உடன்ப
௩௨ டிக்கையை நினையாமல்விடவுமாட்டார்.—ஆகை
யால் தேவன் பூமியில் மனிதனைப்படைத்த
நாள்முதல் உனக்கு முன்சென்ற பூருவநாள்க
ளில், வானத்தின் ஒரு திசைதொடங்கி அதின்
மறுதிசைமட்டுமுள்ள எவ்விடத்திலாகிலும்,—
௩௩ தேவன் அக்கினி மத்தியினின்று பேசுகிற சத்
தத்தை நீ கேட்டதுபோல, மற்றைச்சனங்கள்
௩௪ கேட்டதும் பிழைத்ததுமுண்டா.—அல்லது, உங்
கள் தேவனாகிய யெகோவா உங்கள் கண்
களுக்குமுன்பாக எகிப்திலே யுங்களுக்குச்செய்
தபடியே, தேவன் அந்நியதேசத்தார் மத்தியி
னின்று ஒருசனத்தைச்சோதனைகளாகிய அடை
யாளங்களினாலும், அற்புதங்களினாலும், யுத்தத்
தினாலும், கைவல்லபத்தினாலும், நீட்டிய புயத்
தினாலும், மிகுந்த பயங்கரமான செயல்களினா
லுந் தமக்கென்று தெரிந்துகொள்ளப் பிரயத்தி
னஞ்செய்ததுண்டா; இப்படிப்பட்ட அற்புதம்
நடந்ததுண்டா; இப்படியொன்று கேட்டதுண்
௩௫ டாவென்று விசாரியுங்கள்.—யெகோவாவே
தேவனேயன்றி வேறொருவருமில்லையென்று
நீ உணரும்படி இது உனக்குக் காட்டப்பட்ட
௩௬ து.—உனக்குணர்த்தும்படி அவரே வானத்தினின்
று தமதுவாக்கை உனக்குக்கேட்கப்பண்ணி, பூ
மியிலே தமதுபெரிய அக்கினியை உனக்குக்
காண்பித்தார்; அக்கினி மத்தியினின்றுந் தொ
னித்த அவருடைய வாக்குகளைக்கேட்டாய்.—
அவர் உன் பிதாக்களை நேசித்ததினால், அவர்கள் ௩௭
பிற்சந்ததியைத் தெரிந்தெடுத்துக்கொண்டு,—உன் ௩௮
னிலும் பலத்த பெரியசாதியாரை உனக்குமுன்
னின்று துரத்தவும், உன்னை யழைத்துக்கொண்டு
போய் அவர்கள் தேசத்தை இந்நாளில் இருக்கி
றதுபோல உனக்குச்சுதந்தரமாக அளிக்கவும்,
உன்னைத்தமது முகத்துக்குமுன் தம்முடைய மி
குந்த வல்லமையினால் எகிப்தை விட்டுப்புறப்
படச்செய்தார்.—ஆகையால் உயர்ந்த வானத்தி ௩௯
லும், தாழ்ந்தபூமியிலும், யெகோவா தேவ
னேயன்றி வேறொருவருமில்லையென்று நீ இந்
நாளிலுமுணர்ந்து, உன் மனதிலேசிந்தித்து,—
உனக்கும், உனக்குப்பின்வருமுன் பிள்ளைகளுக் ௪௰
கும், நன்மையுண்டாகும்படிக்கும், உன் தேவ
னாகிய யெகோவா என்றைக்கும் உனக்குக்
கொடுக்கிற தேசத்தில் நீ நெடுநாளிருக்கும்படிக்
கும், நான் இன்று உனக்குவிதிக்கிற அவருடை
ய விதிகளையும், அவருடைய கட்டளைகளையும்,
காத்துக்கொள்வாயாகவென்றான்.

முற்பகையின்றிக்கைப்பிழையாகப்பிறனைக் ௪௧
கொன்ற ஒருவன் அடைக்கலநகரங்களில் ஒரு
நகரத்திற்குத் தப்பிப்போய்ப் பிழைக்கும்படி,—
ரூபேனியரைச்சேர்ந்த சமபூமியாகிய வனத்தி ௪௨
லுள்ளபெத்செரும்,காத்தியரைச்சேர்ந்தகிலியாத்
திலுள்ள ராமொத்தும்,மனாஷேயரைச்சேர்ந்த பா
ஷானிலுள்ள கோலானுமாகிய,—மூன்று நகரங்க ௪௩
ளை யோர்தானுக்கிப்புறத்திலே சூரியோதயதிசை
யிலே மோசே ஏற்படுத்தினான்.—இதுவே மோ ௪௪
சே இஸரவேல்சந்ததியாருக்கு ஏற்படுத்திய பிர
மாணம்.—இஸரவேல்சந்ததியார் எகிப்தைவிட் ௪௫
டுப் புறப்பட்டபின்பு யோர்தானுக்கிப்புறத்தில்
எஷ்போனிற்குடியிருந்த எமோரியரின் இராச
னாகியசீகோனுடைய தேசத்திலேயுள்ளபேத்பே
யோருக்கெதிரான தாழ்ந்த பூமியில் அவர்களுக்
கு மோசே சொன்ன சாட்சிகளும் விதிகளும்
நியாயப்பிரமாணங்களுமிவைகளே.-மோசேயும் ௪௬
இஸரவேல்சந்ததியாரும் எகிப்தைவிட்டுப்புறப்
பட்டபின்பு அந்த இராசனை முறிய அடித்து,—
யோர்தான்நதிக்கிப்புறத்திலே சூரியோதய திசை ௪௭
யில் அர்னோன் ஆற்றங்கரையிலுள்ள அரோவேர்
தொடங்கி எர்மோன் என்னுஞ் சீயோன்மலைவ
ரைக்குமுள்ள தேசமும்,—யோர்தான் நதிக்கிப் ௪௮
புறமாகிய சூரியோதயதிசையில் பிஸ்காவுக்குத்
தாழ்ந்தசமபூமியைச்சேர்ந்த கடல்மட்டுமுள்ளச
மபூமி யாவுமாகிய,—எமோரிய இராசாக்களிருவ ௪௯
ரின் தேசங்களான அந்தச்சீகோனுடைய தேசத்

(௨௭) லேவி.௨௬.௩௩. நிகி.௧.௮. (௨௮) அதி.௨௮.௬௪. ௧.சாமு.௨௬.௰௯. எரே.௰௬.௰௩. சங்.௱௰௫.௪,௫. ஏசா.௪௪.௯. ஏசா.௪௬.௭. (௨௯) லேவி.௨௬.௩௯,௪௰. ௨.நாளா.௰௫.௪. நிகி.௧.௯. ஏசா.௫௫.௬,௭. எரே.௨௯.௰௨,௰௩,௰௪. (௩௰) ஆதி.௪௯.௧. எரே.௨௩.௨௰. ஓசி.௩.௫. யோவே.௨.௰௨. (௩௧) ௨.நாளா.௩௰.௯. நிகி.௯.௩௧. சங்.௱௰௬.௫. யோனா.௪.௨. (௩௨) மத்.௨௪.௩௧. (௩௩) யாத்.௨௪.௰௧. (௩௪) யாத்.௭.௩. யாத்.௰௩.௩. யாத்.௬.௬. யோபு.௮.௯. (௩௫) ௧.சாமு.௨.௨. ஏசா.௪௫.௫,௰௮,௨௨. மாற்.௰௨.௨௯,௩௨. (௩௬) யாத்.௰௯.௯,௰௯. எபி.௰௨.௰௮. (௩௭) யாத்.௰௩.௩,௯,௰௪. (௩௯) யோசு.௨.௰௧. (௪௰) லேவி.௨௨.௩௧. அதி.௫.௰௬. எபே.௬.௨. (௪௨) யோசு.௨௰.௮. (௪௩) எண்.௩௫.௬,௰௪. (௪௫) அதி.௩.௨௯. (௪௬) எண்.௨௧.௨௪. (௪௯) எண்.௨௧.௩௫.

தையும் பாஷானின் இராசனாகிய ஓகினுடைய
தேசத்தையும் வசப்படுத்திக்கொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. ஓரேபிலே உடன்படிக்கையை ஏற்படுத்தல்:
௬. பத்துக்கட்டளைகளை விவரித்தல்:௨௨. சனங்
கள் கேட்டபடி மோசேபத்துக்கட்டளைகளைத்
தேவனிடத்திற்பெறல்.

மோசேஇஸரவேலரெல்லாரையும்அழைப்பித்
து அவர்களைநோக்கி, இஸரவேலரே, நீங்களறிந்
து கைக்கொண்டுநடக்கும்படிக்கு, நான் இன்று
உங்கள்செவிகளிற்சொல்லும்விதிகளையும், நியா
௨ யப்பிரமாணங்களையுங் கேளுங்கள்.—நம்முடை
ய தேவனாகிய யெகோவா ஓரேபிலே நம்
௩ முடனே உடன்படிக்கைபண்ணினார்.—அந்த உ
டன்படிக்கையை யெகோவா நம்முடையபி
தாக்களுடனல்ல, இந்நாளில் இங்கே உயிரோ
டிருக்கிற எங்களெல்லாரோடும்பண்ணினார்.—
௪ நீங்கள் அக்கினிக்குப்பயந்து மலையில் ஏறாதி
ருந்தால், நான் யெகோவாவின் வாக்கை உங்க
ளுக்குணர்த்தும்பொருட்டு, அக்காலத்தில் யெ
கோவாவுக்கும் உங்களுக்கும் மத்தியஸ்தமாய்
௫ நிற்க,—அந்த மலையில் அக்கினிமத்தியினின்று
யெகோவா முகமுகமாய்உங்களுடனேபேசி,
௬ நீ அடிமைப்பட்டிருந்தஇடமாகிய எகிப்துதே
சத்தினின்றும் உன்னைப் புறப்படச்செய்த யெ
௭ கோவாவாகிய நானே உன் தேவன்.—என்
னையன்றி நீ வேறு தேவர்களைப்பற்றிக்கொள்
௮ ளவேண்டாம்.—தொழிற்படுத்திய எந்தவிக்கிரகத்
தையாகிலும், மேலே வானத்திலும், கீழே பூமியி
லும்,பூமியின்கீழேசலத்திலுமுள்ள எந்த வஸ்து
வின்பிரதிரூபத்தையாகிலும், நீ யுனக்குண்டாக்
கவேண்டாம்: நீ அவைகளை நமஸ்கரிக்கவுஞ்சே
௯ விக்கவும் வேண்டாம்.—உன் தேவனும் யெ
கோவாவுமாகிய நான், பிதாக்கள்செய்த அதிக்
கிரமத்தை என்னைப் பகைக்கிற பிள்ளைகளிடத்
தில் மூன்றுநாலு தலைமுறைவரைக்கும் விசாரிக்
௰ கிற எரிச்சலுள்ள தேவனாயிருக்கிறேன்.—என்
னிடத்திலன்புவைத்து, என்கட்டளைகளைக்காத்
துக்கொள்ளுகிறவர்களுக்கோ ஆயிரந்தலைமுறை
வரைக்குந் தயைசெய்கிறவராயிருக்கிறேன்.—
௰௧ உன் தேவனாகிய யெகோவாவின் நாமத்தை
வீணாய்வழங்காயாக. யெகோவா தமது நாமத்
தை வீணாய்வழங்குகிறவனைத் தண்டியாமல் வி
௰௨ டார்.—உன் தேவனாகிய யெகோவா உனக்
கிட்டகட்டளைப்படி ஓய்வுநாளைப் பரிசுத்தமாய்
௰௩ ஆசரிப்பாயாக.—ஆறுநாளும்,நீவேலைசெய்துஉன்
௰௪ எல்லாக்கிரியையையும் நடத்துவாயாக.—உன்
தேவனாகிய யெகோவாவின் ஓய்வுநாளாகிய
ஏழாம்நாளில் நீயானாலும், உன்புத்திரனானாலும்,
உன்புத்திரியானாலும், உன் பணிவிடைக்காரனா
னாலும், உன் பணிவிடைக்காரியானாலும், உன்
எருதானாலும், உன் கழுதையானாலும், உன்னி
டத்திலுள்ள மற்றெந்த மிருகசீவனானாலும், உன்
வாசல்களிலுள்ள பரதேசியானாலும், யாதொரு
வேலையையுஞ்செய்யவேண்டாம்: அதிலே நீ இ
ளைப்பாறுகிறதுபோல உன் பணிவிடைக்கார
னும் உன் பணிவிடைக்காரியுமிளைப்பாறவேண்
டுமே.—நீ எகிப்துதேசத்தில் அடிமைப்பட்டிருந் ௰௫
தாய், உன் தேவனாகிய யெகோவா கைவல்
லபத்தினாலும், ஓங்கிய கரத்தினாலுமவ்விடத்திலி
ருந்து உன்னைப்புறப்படச்செய்தார். ஆதலால்
ஓய்வுநாளை ஆசரிக்கவேண்டுமென்று உன் தேவ
னாகிய யெகோவா உனக்குக் கட்டளையிட்
டார்: அதை நினைத்துக்கொள்.—உன் தேவனாகி ௰௬
ய யெகோவா உனக்களிக்குந்தேசத்தில் உன்
ஆயுள் நீடித்திருப்பதற்கும்,உனக்கு நன்மையுண்
டாவதற்கும், உன் தேவனாகிய யெகோவா
உனக்கிட்ட கட்டளைப்படியே உன் பிதாவை
யும் உன் மாதாவையுங் கனம்பண்ணுவாயாக.—
கொலைசெய்யாயாக.—விபசாரஞ்செய்யா ௰௭ ௰௮
யாக.—களவுசெய்யாயாக.—பிறனுக்கு வி ௰௯ ௨௰
ரோதமாகப் பொய்ச்சாட்சி சொல்லாயாக.—பிற ௨௧
னுடைய மனைவியை இச்சியாயாக, பிறனுடை
ய வீட்டையும், அவன் நிலத்தையும், அவன் ப
ணிவிடைக்காரனையும், அவன் பணிவிடைக்கா
ரியையும்,அவன் எருதையும், அவன்கழுதையை
யும், பிறனுடைய மற்றெந்தப்பொருளையும் இச்
சியாயாகவென்று சொன்னார்.

யெகோவா மலையில் அக்கினியிலும், மே ௨௨
கத்திலும்,காரிருளிலும்நின்றுசபையாராகியஉங்
களெல்லாருக்கும் இவ்வாக்குகளை உரத்த சத்தத்
துடனேசொன்னார்: அவைகளுடன் வேறொன்
றையுங்கூட்டாமல், அவைகளை இரண்டு கற்பல
கைகளில் எழுதி எனக்கு ஒப்பித்தார்.—மலை அக் ௨௩
கினிபற்றியெரிய, இருளின் மத்தியிலுண்டான
சத்தத்தை நீங்கள் கேட்டவுடனே கோத்திரத்த
லைவரும் முதியோருமாகிய நீங்களெல்லாரும்
என்சமீபத்தில்வந்து,—நம்முடையதேவனாகி ௨௪
ய யெகோவா தமது மகிமையையும், தமதும
கத்துவத்தையும், நமக்குக்காண்பித்திருக்கிறாரே,
அக்கினியின்மத்தியினின்று அவருடைய சத்தத்
தையுங்கேட்டோம்: தேவன் மனிதனுடனே
பேசவும், அவனுயிரோடிருக்கவும் இந்நாளிலே
கண்டோம்.—இந்தப்பெரிய அக்கினி எங்களைப் ௨௫
பட்சிக்குமே: நாங்களின்னும் நம்முடைய தே
வனாகிய யெகோவாவின் சத்தத்தைக்கேட்

(௫. அதி. ௨.) யாத்.௰௯.௫. (௩) மத்.௰௩.௰௭. எபி.௮.௯. (௪) யாத்.௨௰.௨௧. கலா.௩.௰௯. யாத்.௰௯.௰௬. (௫) யாத்.௰௯.௯. (௬) யாத்.௨௰. (௭) யாத்.௨௰.௧. (௮) யாத்.௨௰.௪. (௯) யாத்.௩௪.௭. (௰) எரே.௩௨.௰௮. தானி.௯.௪. (௰௧) யாத்.௨௰.௭. மத்.௫.௩௩. (௰௨) யாத்.௨௰.௮. (௰௩) யாத்.௨௩.௰௨. எசேக்.௨௰.௰௨. (௰௪) ஆதி.௨.௨. யாத்.௰௬.௨௯, ௩௰. எபி.௪.௪. (௰௫) அதி.௰௫.௰௫. (௰௬) யாத்.௨௰.௰௨. எபே.௬.௨,௩. கொலோ.௩.௨௰. (௰௭) யாத்.௨௰.௰௩. மத்.௫.௨௧. (௰௮) யாத்.௨௰.௰௪. லூக்.௰௮.௨௰. யாக்.௨.௰௧. (௰௯) யாத்.௨௰.௰௫. ரோ.௰௩.௯. (௨௰) யாத்.௨௰.௰௬. (௨௧) யாத்.௨௰.௰௭. மீகா.௨.௨. அபகூ.௨.௯. லூக்.௰௨.௰௫. ரோ.௭.௭. ரோ.௰௩.௯. (௨௨) யாத்.௨௪.௰௨. யாத்.௩௧.௰௮. (௨௩) யாத்.௨௰.௰௮,௰௯. (௨௪) யாத்.௰௯.௰௯. நியா.௰௩.௨௨.

டால் மரிப்போம்; நாங்கள் மரிக்கவேண்டுவ
௨௬ தென்ன.—அக்கினிமத்தியினின்றுபேசுகிற சீவ
னுள்ள தேவனுடையவாக்கைக்கேட்டுஞ்சீவித்
திருப்பவர்கள் மாமிசமுள்ள யாவருக்குள்ளும்
௨௭ நம்மைப்போலாராகிலுமுண்டோ.—நீரே சமீபித்
து நம்முடைய தேவனாகிய யெகோவா
சொல்லும் யாவையுங்கேளும்: நம்முடைய தே
வனாகிய யெகோவா சொல்லும் யாவையும்
நீரே எங்களுக்குச்சொல்லவேண்டும்; நாங்கள்
கேட்டுக்கொண்டு அதின்படிசெய்வோமென்றீர்
௨௮ கள்.—நீங்களென்னுடனேசொல்லியவாக்குகளை
யெகோவா கேட்டார்; யெகோவா என்னை
நோக்கி, இந்தச்சனங்கள் உன்னுடனேசொன்
னவாக்குகளைக்கேட்டேன்: அவர்கள் சொல்வ
௨௯ தெல்லாம் நன்றாய்ச்சொன்னார்கள்.—அவர்களும்
அவர்கள் பிள்ளைகளுஞ்சதாகாலமும்வாழ்வடை
யும்பொருட்டு, எனக்குப்பயந்து என் சகலகட்
டளைகளையும் இடைவிடாமற் காத்துக்கொள்வ
தற்கேற்ற இருதயம் அவர்களுக்குண்டானால் நல
௩௰ மே.—நீபோய், நீங்கள் உங்கள் கூடாரங்களுக்
குத் திரும்பிப்போங்களென்று அவர்களுக்குச்
௩௧ சொல்லு.—நீயோ, நானவர்களுக்குச்சுதந்தரமா
கக்கொடுக்குந்தேசத்தில் அவர்கள் செய்யும்படி
நீ அவர்களுக்குப் போதிக்கவேண்டிய கட்டளை
கள் விதிகள் நியாயப்பிரமாணங்கள்யாவையும் உ
னக்குச்சொல்ல, என்னிடத்தில் நில்லென்றார்.—
௩௨ உங்கள் தேவனாகிய யெகோவா உங்களுக்
கு விதித்தபிரகாரஞ்செய்யச் சாவதானமாயிருங்
கள்: வலப்புறமாவது இடப்புறமாவது சாயாதி
௩௩ ருப்பீர்களாக.—நீங்கள் சுதந்தரிக்குந்தேசத்திலே
சீவித்துவாழ்ந்து நீடித்திருக்கும்படி, உங்கள் தே
வனாகிய யெகோவா உங்களுக்குவிதித்தவழி
யெல்லாவற்றிலுமே நடக்கக்கடவீர்கள்.

## ௬. அதிகாரம்.

௧. கட்டளையின்தாற்பரியம்: கட்டளைக்கு அமை
வது கடமையெனக்காட்டல்: ௩. அதற்கிசைய
நடக்கும்படி உபதேசித்தல்.

நீ உன் தேவனாகிய யெகோவாவுக்குப்
பயந்து சீவித்திருக்கும் எல்லாநாட்களிலும், நீ
யும், உன் புத்திரரும், உன் பௌத்திரரும், நானு
னக்கு விதிக்கிற அவருடையவிதிகள் கட்டளை
கள்யாவையும் காத்துக்கொள்வதினால், உன்வாழ்
௨ நாள்கள் நீடித்திருக்கும்படிக்கு,—நீங்கள் சுதந்த
ரிக்கப்போகிறதேசத்தில் செய்யும்படி உங்களுக்
குப்போதிக்க, உங்கள் தேவனாகிய யெகோ
வா சொல்லியகட்டளைகளும், விதிகளும், நியா
யப்பிரமாணங்களுமிவைகளே.
௩ இஸரவேலே, உனக்கு நன்மையுண்டாவதற்
கும், உன் பிதாக்களின் தேவனாகிய யெகோ
வா உனக்குச்சொல்லியபிரகாரம் பாலுந்தேனும்
பெருகுகிறதேசத்தில் நீ மிகவும் விருத்தியடைவ
தற்கும், அவைகளுக்குச்செவிகொடுத்து, அவை
களின்படி செய்யச்சாவதானமாயிரு.—இஸரவே ௪
லே, கேள், நம்முடைய தேவனாகிய யெகோ
வா, ஒரே யெகோவா.—உன்பூரண இருதயத் ௫
தோடும், உன்பூரண ஆத்துமத்தோடும், உன் பூ
ரணபலத்தோடும் உன் தேவனாகிய யெகோ
வாவினிடத்திலன்புகூர்வாயாக.—இன்று நானு ௬
னக்குக் கட்டளையிடுகிற இவ்வாக்குகள் உன்
இருதயத்திலிருக்கக்கடவன.—நீ அவைகளைச் ௭
சாக்கிரதையாய் உன் பிள்ளைகளுக்குப்போதித்
து, உன் வீட்டிலிருக்கிறபொழுதும், வழியில்
நடக்கிறபொழுதும், படுக்கிறபொழுதும், எழுந்
திருக்கிறபொழுதும், அவைகளை யெடுத்துச்சொ
ல்லி,—அவைகளை உன்கையில் அடையாளங்க ௮
ளாகக்கட்டிக்கொள்ளக்கடவாய், அவைகள் உன்
கண்களுக்கிடையே நுதலணியாக இருக்கக்கட
வன.—அவைகளை உன்வீட்டுநிலைகளிலும், வா ௯
சல்களிலும் எழுதுவாயாக.—உன் தேவனாகிய ௰
யெகோவா உனக்களிக்கும்படி ஆபிரகாம்,
ஈசாக்கு யாக்கோபு என்னும் உன் பிதாக்களுக்
கு ஆணையிட்டுக்கொடுத்ததேசத்தில் உன்னைப்
பிரவேசிப்பித்தபின்பு நீ உண்டாக்காதவிஸ்தா
ரமும் அலங்காரமுமான பட்டணங்களையும்,—
நீ நிரப்பாத சகல உத்தமபதார்த்தங்களினாலும் ௰௧
நிரம்பிய வீடுகளையும், நீ வெட்டாமல்வெட்டப்
பட்டிருக்கிற கிணறுகளையும், நீ நடாததிராட்
சத்தோட்டங்களையும் சீதவிருட்சத் தோப்புக்க
ளையும், அவர் உனக்குத்தர, நீ புசித்துத்திருத்திய
டையுங்காலத்தில்,—நீ அடிமைப்பட்டிருந்த இட ௰௨
மாகிய எகிப்துதேசத்தினின்றும் உன்னைப்புறப்
படச்செய்த யெகோவாவை மறவாமல், எச்
சரிக்கையாயிரு.—உன் தேவனாகிய யெகோ ௰௩
வாவுக்குப்பயந்து, அவருக்கே ஆராதனைசெய்து,
அவருடைய நாமத்தைக்கொண்டே ஆணையிடு
வாயாக.—உங்களைச்சூழ்ந்திருக்கிற சனங்களின் ௰௪
தெய்வங்களாகிய அந்நியதேவர்களைப்பின்பற்றா
திருப்பீர்களாக: உங்களுக்குள்ளிருக்கிற உன்
தேவனாகிய யெகோவா எரிச்சலுள்ள தே
வன்.—உன் தேவனாகிய யெகோவாவின் ௰௫
கோபம் உன்மேல்மூண்டு, பூமியைவிட்டு நீங்க
உன்னை அழித்துவிடும்.—நீங்கள் மாசாவிடத்திற்ப ௰௬
ரீட்சித்ததுபோல உங்கள் தேவனாகிய யெகோ
வாவைப்பரிட்சை பாராதிருப்பீர்களாக.—உங் ௰௭
கள் தேவனாகிய யெகோவா உங்களுக்குக்
கொடுத்த கட்டளைகளையும், சாட்சிகளையும், வி

(௨௭) யாத். ௨௰.௰௯. எபி.௰௨.௰௯. (௨௯) அதி.௩௨.௨௯. சங்.௮௧.௰௩. ஏசா.௪௮.௰௮. மத்.௨௩.௩௭. லூக்.௰௯.௪௨. (௩௧) கலா.௩.௰௯. (௩௨) யோசு.௧.௭. நீதி.௪.௨௭. (௩௩) சங்.௱௰௯.௬. எரே.௭.௨௩. லூக்.௧.௬.—(௬. அதி. ௧.) அதி.௪.௧. அதி.௫.௩௧. (௨) யாத்.௨௰.௨௰. சங்.௱௰௧.௰. பிர.௰௨.௰௩. நீதி.௩.௧,௨. (௩) ஆதி.௰௫.௫. ஆதி.௨௨.௰௭. யாத்.௩.௮. (௪) ஏசா.௪௨.௮. மாற்.௰௨.௨௯,௩௨. யோவா.௰௭.௩. ௧.கொரி.௮.௪,௬. (௫) அதி.௰.௰௨. மத்.௨௨.௩௭. ௨.இரா.௨௩.௨௫. (௬) சங்.௩௭.௩௧. சங்.௱௰௯.௰௧,௯௮. நீதி.௩.௩. ஏசா.௫௧.௭. (௭) அதி.௪.௯. சங்.௭௮.௪,௫,௬. எபே.௬.௪. (௮) யாத்.௰௩.௯,௰௬. நீதி.௩.௩. நீதி.௬.௨௧. நீதி.௭.௩. (௯) ஏசா.௫௭.௮. (௰) யோசு.௨௪.௰௩. (௰௩) மத்.௪.௰. சங்.௬௩.௰௧. ஏசா.௪௫.௨௩. எரே.௪.௨. (௰௪) எரே.௨௫.௬. யாத்.௨௰.௫. (௰௬) மத்.௪.௭. யாத்.௰௭.௨,௭. ௧.கொரி.௰.௯. (௰௭) சங்.௱௰௯.௪.

திகளையுஞ் சாக்கிரதையாய்க்காத்துக்கொள்வீர்க
௰௮ ளாக.—யெகோவா தாம்சொல்லியபடி உன்சத்
துருக்களெல்லாரையும் உன் முன்னிலையினின்
௰௯ றுந்துரத்திவிடுவார்.—யெகோவா உன்பிதாக்
களுக்கு ஆணையிட்டுக்கொடுத்தஉத்தமதேசத்தில்
நீபிரவேசித்து,அதைச்சுதந்தரிப்பதற்கும், உனக்
குநன்மையுண்டாவதற்கும், யெகோவாவின்
பார்வைக்குச்செவ்வையும் நன்மையுமானவைக
௨௰ ளைச் செய்யக்கடவீர்கள்.—வருங்காலத்தில் உன்
புத்திரர்,நம்முடையதேவனாகிய யெகோவா
உங்களுக்குக் கட்டளையிட்ட இந்தச் சாட்சிக
ளும், விதிகளும், நியாயப்பிரமாணங்களுமென்
௨௰௧ னவென்றுஉன்னிடத்திற்கேட்டால்,—நாம்எகிப்
திலே பார்வோனுக்கு அடிமைகளாயிருந்தோம்,
எகிப்தினின்றும் நம்மை யெகோவா கைவல்
௨௰௨ லபத்தினாலே புறப்படச்செய்தார்.—யெகோ
வா நம்முடைய கண்களுக்குமுன்பாக எகிப்தி
லே பார்வோனுக்கும், அவன்குடும்பத்தாரனைவ
ருக்கும், மகத்துவமுங் கடுமையுமான அடையா
௨௰௩ ளங்களையும், அற்புதங்களையுங்காண்பித்து,—தாம்
நம்முடையபிதாக்களுக்கு ஆணையிட்டுக்கொடுத்
ததேசத்துக்குநம்மைஅழைத்துக்கொண்டுபோய்,
அதைநமக்குக்கொடுக்கும்படி அவ்விடத்தினின்
௨௰௪ றும் நம்மைப் புறப்படச்செய்தார்.—இந்நாளிலி
ருக்கிறதுபோல நம்மை உயிரோடேகாப்பதற்
கும், நித்தமும் நமக்கு நன்மையுண்டாவதற்கும்
நம்முடைய தேவனாகிய யெகோவாவுக்
குப்பயந்து, இந்த விதிகளையெல்லாம் காத்துக்
கொள்ளவேண்டுமென்று யெகோவா கட்ட
௨௰௫ ளையிட்டார்.—ஆகையால் நம்முடைய தேவனா
கிய யெகோவா நமக்குவிதித்தபிரகாரம்,நாம்
அவர்சமூகத்தில் இந்தச்சகல கட்டளைகளின் ப
டிக்கும் செய்தால் நமக்கு நீதியாகுமென்று உன்
புத்திரனுக்குச்சொல்லவேண்டும்.

## எ. அதிகாரம்.

௧. விக்கிரகாராதனைக்காரருடன் கூடாமல்விலக்
கல்:௰௨. கட்டளையைக்காப்பதினால் வரும்பல
னையும் ஆசிர்வாதத்தையும் விவரித்தல்.

நீசுதந்தரிக்கப்போகிற தேசத்தில் உன் தேவ
னாகிய யெகோவா உன்னைப்பிரவேசிப்பித்
து,உன்னிலும் அதிகதிரளானவர்களும், பலமுள்
ளவர்களுமாயிருக்கிற சாதியாராகிய எத்தியர்,கிர்
காஷியர், எமோரியர், கானானியர், பெரிசியர், ஈ
வியர்,எபூசியராகிய இவ்வேழுசாதியாரையுமுன்
௨ முன்னிலையினின்றுந்துரத்தி,—உன் தேவனா
கிய யெகோவா அவர்களை உன்னிடத்தி
லொப்பிக்கும்பொழுது, அவர்களைமுறிய அடித்
து முழுமையும் நாசப்படுத்து; அவர்களுடனே
உடன்படிக்கைபண்ணவும், அவர்களுக்கிரங்க
வும்வேண்டாம்.—என்னைப்பின்பற்றாமல் அந்நிய ௩
தேவர்களைச்சேவிக்கும்படி அவர்களுன்புத்திர
ரைத்திருப்புவார்களே; அதனால் யெகோவா
வின்கோபம் உன்மேல் மூண்டு உன்னைச் சீக்
கிரமாயழிக்கும்.—ஆதலாலவர்களோடே நீ வி ௪
வாகசம்பந்தஞ் செய்யவேண்டாம்; உன் புத்திரி
யை அவனுடைய புத்திரனுக்குக்கொடுக்கவும்,
வேண்டாம்; அவனுடைய புத்திரியை உன் புத்தி
ரனுக்காகக்கொள்ளவும் வேண்டாம்.—அவர்களு ௫
டையவேதிகைகளையிடித்து, சிலைகளைத்தகர்த்து,
அவர்களுடைய அஷரீவிருட்சங்களைத்தறித்து,
தொழிற்படுத்திய விக்கிரகங்களை அக்கினியிலெ
ரித்துப்போடவேண்டும்.—நீ உன் தேவனாகிய ௬
யெகோவாவுக்குரிய பரிசுத்த சனமாயிருப்ப
தினால், உன்தேவனாகிய யெகோவா பூமியி
லுள்ள சமஸ்தசனங்களிலும் உன்னையே தமக்கு
ரிய சொந்தச்சனமாகத் தெரிந்துகொண்டார்.—
யெகோவா உங்களிடத்திலன்புவைத்து உங்க ௭
ளைத்தெரிந்துகொண்டு நீங்கள்மற்றச்சனங்களில்
திரளானவர்களென்றல்ல; சகலசனங்களுக்குள்
ளும் உங்கள்தொகைமிகஅற்பம்.-யெகோவா ௮
உங்களை நேசித்ததினாலும், உங்கள் பிதாக்களுக்
கிட்ட ஆணையைக் காக்கவேண்டுமென்பதினா
லும், யெகோவா உங்களைக் கைவல்லபத்தி
னால், நீங்கள் அடிமைப்பட்டிருந்த இடமாகிய
எகிப்துராசனான பார்வோனுடைய கையினின்
றும் மீட்டுக்கொண்டுவந்தார்.—ஆதலால் உன் ௯
தேவனாகிய யெகோவாவே தேவனென்
றும், அவர் தம்மிலன்புவைத்துத்தமதுகட்டளை
களைக் காத்துக்கொள்ளுகிறவர்களுக்கு ஆயிரந்
தலைமுறைவரைக்கும்உடன்படிக்கையையும்,த
யவையுங்காக்கும் உண்மையுள்ள தேவனென்
றும்,—தம்மைப் பகைக்கிறவர்களுக்கும் பிரத்தி ௰
யட்சமாய்ப் பிரதிசெய்து, அவர்களை அழிப்பா
ரென்றும், தாமதஞ்செய்யாமற்சீக்கிரமாகவே தம்
மைப் பகைக்கிறவனுக்குப் பிரதிசெய்வாரென்
றும் நீயுணர்ந்து,—நீசெய்யும்படிநானின்று உனக் ௰௧
குவிதிக்கிற கட்டளைகளையும், விதிகளையும்,நியா
யப்பிரமாணங்களையுங் காத்துக்கொள்வாயாக.

இந்த நியாயப்பிரமாணங்களை நீங்கள்சேட் ௰௨
டுக்காத்துநடப்பீர்களானால், உன் தேவனாகிய
யெகோவா உன்பிதாக்களுக்கு ஆணையிட்டுக்
கொடுத்த உடன்படிக்கையையுங் கிருபையை

(௰௮) எண். ௩௩.௫௨,௫௩. (௰௯) யாத். ௰௫.௨௯. (௨௰) யாத். ௰௩.௰௪. (௨௧) யாத். ௩.௰௯. யாத். ௰௩.௩. (௨௨) யாத். எ—அ—௯—௰—௰௧—௰௨. (௨௪) யோபு. ௩௫.எ,அ. எரே. ௩௨.௩௯. சங். ௪௧.௨. லூக். ௰.௨அ. (௨௫) லேவி. ௰அ.௫. ரோ. ௰.௩,௫.—(எ. அதி. ௧.) சங். ௪௪.௨,௩. ஆதி. ௰௫.௰௯. (௨) அதி. ௨௩.௰௪. லேவி. ௨எ.௨அ,௨௯. எண். ௩௩.௫௨. யோசு. ௬.௰எ. யோசு. ௰.௨அ,௪௰. யாத். ௩௪.௰௨,௰௫,௰௬. நியா. ௨.௨. யோசு. ௨.௰௪. நியா. ௧.௨௪. (௪) யோசு. ௨௩. ௰௨. ௧.இரா. ௰௧.௨. எஸ்றா. ௯.௨. (௫) யாத். ௨௩.௨௪. யாத். ௰௯.௬. சங். ௫௰.௫. எரே. ௨.௩. (௬) யாத். ௰௯.௫. ஆமோ. ௯.௨. ௧.பேதுரு. ௨.௯. (அ) யாத். ௩௨.௰௩. லூக். ௧.௫௫,எ௨,எ௩. யாத். ௰௩.௩,௰௪. (௯) ஏசா. ௪௯.எ. ௧.கொரி. ௧.௯. ௨.கொரி. ௧.௰அ. ௧.தெச. ௫.௨௪. ௨.தீமோ. ௨.௰௩. எபி. ௰௧.௰௧. ௧.யோவா. ௧.௯. (௰) யாத். ௨௰.௬. நிகி. ௧.௫. தானி. ௯.௪. (௰௧) ஏசா. ௫௯.௰அ. நாகூ. ௧.௨. அதி. ௩௨.௩௫. (௰௨) லேவி. ௨௬.௩. சங். ௱௫.அ,௯. லூக். ௧.௫௫,எ௨,எ௩.

௰௩ யும்உனக்காகக்காத்து,-உன்மேல் அன்புவைத்து,
உன்னை ஆசீர்வதித்து, உனக்கு அளிப்பேனென்
று உன்பிதாக்களுக்கு ஆணையிட்டுக்கொடுத்த தே
சத்தில் உன்னை விருத்தியடையப்பண்ணி, உன்
கருப்பக்கனிகளையும், உன் நிலத்தின்கனிகளாகி
யதானியத்தையும், உன்திராட்சரசத்தையும்,உன்
எண்ணெயையும், உன் மாடுகளின் பலனையும்,
உன் ஆட்டுக்கிடைகளையும் ஆசீர்வதிப்பார்.—
௰௪ சகலசனங்களிலும் நீஆசீர்வதிக்கப்பட்டிருப்பா
ய்: உங்களுக்குள்ளும், உங்கள் மிருகசீவன்களு
க்குள்ளும், ஆணிலாயினும் பெண்ணிலாயினும்,
௰௫ மலடிராது.–யெகோவா சகலநோய்களையும்
உன்னிடத்தினின்றும் விலக்குவார்; உனக்குத்
தெரிந்திருக்கிற எகிப்தியரின் கொடியரோகங்க
ளிலொன்றும் உனககுவரவிடாமல், உன்னைப்ப
௰௬ கைக்கிற யாவரிடத்திலும் வருவிப்பார்.—உன்
தேவனாகிய யெகோவா உன்னிடத்திலொப்
பிக்குஞ் சகலசனங்களையும் நிருமூலமாக்கக்கட
வாய்; உன்கண் அவர்களுக்கிரங்கவேண்டாம்:
நீ அவர்களுடைய தேவர்களைச் சேவிக்கவேண்
௰௭ டாம்; அது உனக்கு ஒருகண்ணியேயாகும்.–அந்
தச்சாதியார் என்னிலும் மிகுதியானவர்களாயி
ருக்க, நானவர்களைத்துரத்திவிடுவதெப்படியென்
௰௮ று உன் இருதயத்திலே சிந்தனைவந்தால்,—உன்
தேவனாகிய யெகோவா பார்வோனுக்கும்
௰௯ எகிப்தியர் யாவருக்குஞ் செய்ததையும்,—உன்
கண்கள் கண்டபெரியசோதனைகளாகிய அடை
யாளங்களையும், அற்புதங்களையும், உன்தேவ
னாகியயெகோவா உன்னைப்புறப்படச்செய்து
காட்டினபலத்தகையையும், நீட்டிய புயத்தை
யும் உற்றுணர்ந்து அவர்களுக்குப் பயப்படாதி
ரு:உன்னைப்பயப்படுத்துஞ்சகலசனங்களுக்கும்
உன் தேவனாகிய யெகோவா அப்படிச்செய்
௨௰ வார்.–உனக்குத் தப்பி ஒளித்துக்கொள்ளுகிறவர்
களும்அழிந்துபோகும்வரைக்கும்உன் தேவனா
கியயெகோவா அவர்களுக்குள்ளே குளவிக
௨௧ ளையனுப்புவார்.—உன் தேவனாகியயெகோ
வா உங்களுக்குள்ளேயிருக்கிறார்: அவர் வல்ல
மையும் பயங்கரமுமான தேவன்; ஆதலால் அ
௨௨ வர்களுக்குப் பயப்படவேண்டாம்.—அந்தச்சா
தியாரை உன் தேவனாகிய யெகோவா உன்
முன்னிலையினின்றுங் கொஞ்சங்கொஞ்சமாய்த்
துரத்திவிடுவார்: நீ அவர்களை ஒருமிக்க அழிக்க
லாகாது; காட்டுமிருகங்கள் உன்னிடத்தில் பெ
௨௩ ருகிவிடுமே.–உன் தேவனாகிய யெகோவா
அவர்களை உன்னிடத்தில் ஒப்பித்து, அவர்கள்நா
சமாகுமளவும் அவர்களை மகா சங்காரத்தோடே
௨௪ சங்கரிப்பார்.—அவர்களுடைய இராசாக்களை
அவர் உன்கையில் ஒப்பித்ததின்பின்பு அவர்கள்
வானத்தின்கீழிராமல் ஒழிந்துபோகும்வண்ணம்
அவர்களைச் சங்கரிக்கக்கடவாய்: நீ அவர்களைச்
சங்கரித்து முடியும்வரைக்கும் ஒருவரும் உனக்
கு எதிர்த்து நிற்கமாட்டார்கள்.
அவர்களுடைய தேவர்களின் தொழிற்படுத்தி ௨௫
யவிக்கிரகங்களை அக்கினியிலெரிக்கவேண்டும்:
அவைகளிலுள்ள பொன் வெள்ளிகளினால், நீ
வஞ்சிக்கப்படவுங்கூடும்; ஆதலால் அவைகளை
இச்சியாமலும், எடுத்துக்கொள்ளாமலுமிரு: அ
வைகள் உன் தேவனாகிய யெகோவாவுக்
கு அருவருப்பானவைகள்.–அவைகளைப்போல ௨௬
நீயுஞ்சாபம்பெறும்படி அருவருப்பானவைகளி
லொன்றையும் உன்வீட்டுக்குக்கொண்டுபோகா
திரு: அதுசாபத்துக்குட்பட்டபடியால் நீ அதை
முழுவதும்புறக்கணித்து வெறுக்கக்கடவாய்.

## அ. அதிகாரம்.

இஸரவேல் சந்ததியாருக்குத் தேவன் செய்த தயையினிமித்தம் அவருடைய கட்டளையைக் காத்துக்கொள்ளும்படி மோசே அவர்களுக்கு ணர்த்தல்.

நீ சீவித்து,விருத்தியடைந்து, உன் பிதாக்களுக் ௧
கு யெகோவா ஆணையிட்டுக்கொடுத்த தேசத்
திற் பிரவேசித்து, அதைச் சுதந்தரிக்கும்படிக்கு
நான் இன்று உனக்கிடுகிற சகலகட்டளைகளின்
படிக்கும் செய்யச்சாவதானமாயிரு.—உன் தே ௨
வனாகிய யெகோவா தமதுகட்டளைகளை நீ
காத்துக்கொள்வாயோ, இல்லையோவென்று உன்
இருதயத்திலுள்ளதையறிந்து, உன்னைச்சோதிக்
கும்பொருட்டு, உன்னைச்சிறுமைப்படுத்தி, இந்
த நாற்பதுவருஷமளவும் வனாந்தரத்தில் உன்னை
நடத்திவந்தவழிகள்யாவையும் நினைப்பாயாக.-
மனிதன் அப்பத்தினாலே சீவிக்கிறதுமன்றி, யெ ௩
கோவாவின் வாயினின்று புறப்படுகிற எந்த
வாக்கினாலுஞ் சீவிக்கிறானென்று உனக்குணர்த்
தும்படி அவர் உன்னைப் பசியடையச்செய்து,
உன்னைச் சிறுமைப்படுத்தி, நீயும் உன்பிதாக்க
ளும் அறியாதமன்னாவினாலேஉன்னைப்போஷித்
தார்.–இந்தநாற்பதுவருஷம் உன்வஸ்திரம் பழை ௪
யதாய்ப்போகவுமில்லை, உன்கால்கள் வீங்கவு
மில்லை.—ஒருவன் தன் புத்திரனைச் சிட்சைபண் ௫
ணுகிறபிரகாரம் உன் தேவனாகிய யெகோ
வா உன்னைச்சிட்சைபண்ணினதை உன்னிருத
யத்தில் அறிந்திருக்கிறாய்.—உன் தேவனாகிய ௬
யெகோவாவுக்குப்பயந்து, அவருடையவழி
யில்நடந்து, அவருடையகட்டளைகளைக்காத்துக்
கொள்ளக்கடவாய்.—தாழ்ந்தபூமிகளிலும், மலை ௭
களிலுமிருந்துபுறப்படுகிறஆறுகளும், ஊற்றுக்க
ளும், மடுக்களும்,–கோதுமையும்வாற்கோதுமை ௮
யும் திராட்சக்கொடிகளும், அத்திமரங்களும்,மா

(௰௩) யோவா.௰௪.௨௧. (௰௪) யாத்.௨௩.௨௬, (௰௫) யாத்.௯.௰௪. யாத்.௰௫.௨௬. (௰௬) யாத்.௨௩.௩௩. நியா.அ.௨௭. எண்.௩௩.௫௩. (௨௰) யாத்.௨௩.௨௮. யோசு.௨௪.௰௨. (௨௧) எண்.௰௧.௨௰. அதி.௰.௰௭. நிகி.௧.௫. நிகி.௪.௰௪. (௨௨) யாத்.௨௩.௨௯,௩௰. (௨௪) யோசு.௰.௨௪,௨௫. யாத்.௰௭.௰௪. யோசு.௧.௫. (௨௫) யாத்.௩௨.௨௰. ௧.நாளா.௰௪.௰௨. யோசு.௭.௧,௨௧. நியா.அ.௨௭. செப்.௧.௩. (௨௬) யோசு.௬.௰௭,௰௮.—(அ. அதி. ௧.) அதி.௪.௧. (௨) சங்.௱௩௬.௰௬. ஆமோ.௨.௰. யாத்.௰௬.௪. ௨.நாளா.௩௨.௩௧. யோவா.௨.௨௫. (௩) யாத்.௰௬.௨,௩. யாத்.௰௬.௰௨,௰௪,௩௫. சங்.௱௪. ௨௯. மத்.௪.௪. (௪) நிகி.௯.௨௧. (௫) ௨.சாமு.௭.௰௪. சங்.அ௯.௩௨. நீதி.௩.௰௨. எபி.௰௨.௫,௬. வெளி.௩.௰௯.

தனமரங்களும், சீதவிருட்சத்தின் எண்ணெயும்,
௯ தேனும் உள்ளதும்,-முட்டின்றி அப்பம்புசிக்கத்
தக்கதும், ஒன்றும் உனக்குக்குறைவுபடாததும்,
இருப்புக்கல்லுகளும், பித்தளைவெட்டி யெடுக்
கத்தக்கமலைகளுமுள்ளதுமாகிய உத்தமதேசத்தில்
உன் தேவனாகிய யெகோவா உன்னைப்பிர
௰ வேசிப்பித்தபின்பு,—நீ புசித்துத் திருத்தியடைந்
திருக்குங்காலத்தில், அந்தஉத்தமதேசத்தைஉனக்
களித்ததற்காக உன் தேவனாகிய யெகோவா
௰௧ வைஸ்தோத்திரஞ்செய்யக்கடவாய்.-இன்றுநான்
உனக்கிடுகிற அவருடைய கட்டளைகளையும், நி
யாயப்பிரமாணங்களையும், விதிகளையுங்காத்துக்
கொண்டு, நீ உன் தேவனாகிய யெகோவா
௰௨ வைமறவாமல், எச்சரிக்கையாயிரு.—நீ புசித்துத்
திருத்தியடைந்து, நல்லவீடுகளைக்கட்டி, அவை
௰௩ களில் வாசம்பண்ணி,—திரளான ஆடு மாடுகளை
யும், மிகுந்த பொன் வெள்ளிகளையும், மிகுதியா
ன மற்றும் ஆஸ்திகளையுமுடையவனாயிருக்குங்
௰௪ காலத்தில்,—உன் இருதயம் இறுமாப்படையா
மலும், நீ அடிமைப்பட்டிருந்த இடமாகிய எகிப்
தினின்றும் உன்னைப் புறப்படச்செய்தவரும்,—
௰௫ பின்னே உனக்கு நன்மைசெய்யும்பொருட்டு,
உன்னைச்சிறுமைப்படுத்திச்சோதிக்கும்படி, அக்
கினிச்சருப்பங்களும், தேள்களும், தண்ணீரில்
லாத வரட்சியுமுள்ள பூமியாகிய பயங்கரமான
வனாந்தரவழியாய் உன்னையழைத்தவரும், உனக்
காகப்பாறையான கன்மலையினின்றுந் தண்ணீர்
௰௬ புறப்படப்பண்ணினவரும்,—உன் பிதாக்களும்
அறியாதமன்னாவினாலேவனாந்தரத்தில்உன்னைப்
போஷித்துவந்தவருமாகிய உன் தேவனாகிய
௰௭ யெகோவாவை நீ மறவாமலும்,—என் சுயசா
மர்த்தியமுங்கைப்பெலனுமிந்த ஐசுவரியத்தைச்
சம்பாதித்தனவென்று நீ உன்னிருதயத்தில் எண்
௰௮ ணிக்கொள்ளாமலுமிரு.—உன் பிதாக்களுக்கு ஆ
ணையிட்டுக்கொடுத்த தமது உடன்படிக்கையை
நிலைப்படுத்தும்படி உன் தேவனாகிய யெகோ
வாவே இன்று இருக்கிறதுபோல, உனக்கு ஐசு
வரியத்தைச் சம்பாதிப்பதற்கான சாமர்த்தியத்
தைத்தருகிறவர்: ஆதலால் அவரையே நினைத்துக்
௰௯ கொள்வாயாக.—உன் தேவனாகிய யெகோ
வாவை நீ சற்றும் மறந்து அந்நிய தேவர்களைப்
பின்பற்றி, அவர்களைச்சேவித்து, அவர்களைத்தொ
ழுதுகொள்வாயானால், அழிந்தேபோவாயென்று
௨௰ உனக்குச் சாட்சியிடுகிறேன்.—உன்னை விட்டு
விலகி யெகோவாவாலே அழிக்கப்பட்ட ச
னங்கள்போல் நீயும் உன் தேவனாகிய யெ
கோவாவின் வாக்குக்கமையாதிருப்பதினால்
அழிக்கப்படுவாய்.

## ௯. அதிகாரம்.

மோசே அவர்கள் தங்கள் தங்கள் சுயநீதியில்நம்
பிக்கைவையாதபடி கட்டளைமீறினதையெடுத்
துரைத்தல்.

இஸரவேலே கேள்: நீ இக்காலத்தில் யோர்தா ௧
னைக்கடந்து, உன்னிலும், மகத்துவமும் வல்ல
மையுமுள்ளசாதியாரையும் வானத்தைஅளாவிய
மதில்சூழ்ந்த பெரியநகரங்களையும்,—நீ கண்டுங் ௨
கேள்விப்பட்டும் ஏனாக்கின் புத்திரருக்கு முன்
நிற்பவன் ஆரென்றுபேசிய ஏனாக்கின் புத்திர
ராகிய பெரியவர்களும் நெடியவர்களுமான ச
னங்களையும், வசப்படுத்துவதற்குப்போகிறாய்.—
உன் தேவனாகிய யெகோவா உனக்குமுன் ௩
பட்சிக்கும் அக்கினிபோலச்சென்று, அவர்களை
நாசப்படுத்தி, அவர்களை உனக்கடிப்படுத்துவா
ரென்பதை இந்நாளில்அறி: ஆதலால் யெகோ
வா உனக்குச்சொல்லியபிரகாரம் நீ அவர்களைச்
சீக்கிரமாய்த்துரத்தி அவர்களையழிப்பாய்.—உன் ௪
தேவனாகியயெகோவா உன் முன்னிலையி
னின்றும் அவர்களைத்துரத்திவிட்டதின்பின், என்
நீதியின் நிமித்தம் இந்தத்தேசத்தைச் சுதந்தரித்
துக்கொள்ளும்படி யெகோவா என்னை அ
ழைத்துவந்தாரென்று நீ உன்னிருதயத்தில் எண்
ணத்தகாது: அந்தச்சாதியாருடைய பாவத்தினி
மித்தமே யெகோவா உன் முன்னிலையினின்
றும் அவர்களைத்துரத்திவிடுகிறார்.—நீ அவர்கள் ௫
தேசத்தைச்சுதந்தரித்துக்கொள்ளப் பிரவேசிப்ப
து, உன் நீதியினாலும், உன் மனநேர்மையினாலு
மல்ல, அந்தச்சாதியாருடைய பாவத்தினிமித்தத்
தினாலும், யெகோவா ஆபிரகாம், ஈசாக்கு,
யாக்கோபென்னும் உன் பிதாக்களுக்கு ஆணை
யிட்டுச்சொல்லியவாக்கைநிலைப்படுத்தவேண்டு
மென்பதினாலும், உன் தேவனாகியயெகோவா
உன் முன்னிலையினின்றும் அவர்களைத் துரத்தி
விடுகிறார்.—ஆகையால் உன் தேவனாகியயெ ௬
கோவா அந்த உத்தமதேசத்தை நீ சுதந்தரித்துக்
கொள்ளும்படிபண்ணுகிறது உன் நீதியின்நிமித்
தத்தினாலல்லவென்று அறியக்கடவாய்: நீவணங்
காத கழுத்துள்ள சனம்.

நீவனாந்தரத்தில் உன்தேவனாகியயெகோ ௭
வாவைக் கோபப்படுத்தினதை நினை, அதை மற
வாதிரு: நீ எகிப்துதேசத்தைவிட்டுப்புறப்பட்ட
நாள்முதல் நீங்கள் இவ்விடத்தில்வருமளவும், யெ
கோவாவின் கட்டளையை மீறிநடந்தீர்கள்.—
ஒரேபிலே நீங்கள் யெகோவாவைக் கோ ௮
பப்படுத்தினதினாலே யெகோவா உங்களை நி
ருமூலமாக்குகிறதற்கு உங்கள்மேல் உக்கிரங்
கொண்டார்.—யெகோவா உங்களுடனேசெய் ௯

(௯) அதி.௩௩.௨௫. (௰) அதி.௬.௰௧,௰௨. (௰௨) நீதி.௩௰.௯. ஓசி.௰௩.௬. (௰௪) ௧.கொரி.௪.௭. (௰௫) ஏசா.௬௩.௰௨,௰௩, ௰௪. எரே.௨.௬. எண்.௨௧.௬. ஓசி.௰௩.௫. எண்.௨௰.௰௧. எரே.௨௪.௫,௬. எபி.௰௨.௰௧. (௰௬) யாத்.௰௬.௰௫. சங்.௭௮. ௨௪. (௰௭) ௧.கொரி.௪.௭. (௰௮) நீதி.௰.௨௨. ஓசி.௨.௮. அதி.௭.௮,௰௨. (௰௯) அதி.௩௰.௰௮. (௨௰) தானி.௯.௰௧, ௰௨.—(௯.அதி.௧.) யோசு.௩.௰௬. அதி.௧.௨௮. (௨) எண்.௰௩.௨௨. (௩) அதி.௪.௨௪. எபி.௰௨.௨௯. அதி.௭.௨௩.யாத். ௨௩.௩௧. (௪) அதி.௮.௰௭. ரோ.௰௧.௬.௨௰. ௧.கொரி.௪.௪,௭. ஆதி.௰௫.௰௬. (௫) தீத்.௩.௫. ஆதி.௰௨.௭. ஆதி.௰௭.௮. ஆதி.௨௯.௪. ஆதி.௨௮.௰௩. (௭) யாத்.௰௪.௰௧. அதி.௩௧.௨௭. (௮) யாத்.௩௨.௪. (௯) யாத்.௨௪.௰௨,௰௫. யாத்.௩௪.௨௮.

த உடன்படிக்கையின் பலகைகளாகிய கற்பல
கைகளை வாங்கும்படி, நான் மலையிலேறி நாற்
பதுநாள் இரவும் பகலும் மலையிலே அப்பம்புசி
யாமலும், தண்ணீர் குடியாமலுமிருந்தேன்.—
௰ அப்பொழுது தேவ விரலினால் எழுதப்பட்ட
இரண்டு கற்பலகைகளை யெகோவா என்னி
டத்தில் ஒப்பித்தார்; சபைகூடியநாளில் யெ
கோவா மலையில் அக்கினிமத்தியினின்று உங்
களுடனேபேசின சகலவாக்குகளும் அவைக
௰௧ ளில் எழுதப்பட்டிருந்தன.—இரவும் பகலுமாக
நாற்பதுநாள்சென்றபின்பு யெகோவா அந்த
உடன்படிக்கையின்இரண்டுகற்பலகைகளைஎன்
௰௨ னிடத்தில்ஒப்பிக்கிறபொழுது,—யெகோவா
என்னைநோக்கி, நீ எழுந்துசீக்கிரமாய்இதைவிட்
டிறங்கிப்போ; நீ எகிப்தினின்றும்புறப்படுத்திக்
கொண்டுவந்த உன் சனங்கள் தங்களைக் கெடுத்
துக்கொண்டார்கள்; நான் அவர்களுக்கு விதித்த
வழியை அவர்கள் சீக்கிரமாக விட்டுவிலகி, விக்
கிரகத்தைத் தங்களுக்காக வார்ப்பித்துக்கொண்
௰௩ டார்களென்றார்.—பின்னும் யெகோவா என்
னைநோக்கி, அந்தச்சனங்களைக் கண்டேன்; கே
௰௪ ள், அது வணங்காத கழுத்துள்ள சனம்.—ஆகை
யால் நான் அவர்களை நிருமூலப்படுத்தி, அவர்க
ளுடைய நாமம் வானத்தின்கீழிராதொழியும்படி
செய்ய, என்னை விட்டுவிடு; நான் அவர்களிலும்
அதிகவல்லபமும் மகத்துவமுமுள்ள ஒருசாதியா
ரை உன்னில் தோற்றுவிப்பேனென்று சொல்
௰௫ ல;—நான் திரும்பி மலையைவிட்டிறங்கினேன்;
மலை அக்கினிபற்றி யெரிந்துகொண்டிருந்தது:
உடன்படிக்கையின் இரண்டுபலகைகளும் என்
௰௬ னிரண்டு கைகளிலுமிருந்தன.-நான்பார்த்தபொ
ழுது நீங்கள்உங்கள்தேவனாகிய யெகோவா
வுக்கு விரோதமாய்வார்ப்பான ஒருபசுக்கன்றை
உங்களுக்குண்டாக்கிக்கொண்டு, யெகோவா
உங்களுக்குவிதித்தவழியைச்சீக்கிரம்விட்டுவில
கி, இப்படிப் பாவஞ்செய்ததைக் கண்டேன்.—
௰௭ நான் என்இரண்டுகைகளிலுமிருந்தஅவ்விருபல
கைகளையுமெறிந்து, அவைகளை உங்கள் கண்க
௰௮ ளுக்குமுன்னேஉடைத்துவிட்டேன்.-யெகோ
வாவைக்கோபப்படுத்துவதற்கு அவருடைய ச
முகத்தில் தீங்குசெய்து, உங்கள் சகல பாவங்கள்
நிமித்தமும் யெகோவா உங்களை அழிக்கும்
படி உங்கள்மேற்கொண்ட கோபத்திற்கும் உக்
கிரத்துக்கும் நான் பயந்தபடியால் முன்போல
யெகோவாவின் சமுகத்தில் நாற்பதுநாள் இர
வும்பகலும் விழுந்துகிடந்தேன்: நான் போச
னஞ்செய்யவுமில்லைப்பானம்பண்ணவுமில்லை.-
௰௯ யெகோவா அந்தவேளையிலும் என்பிரார்த்த
௨௰ னையைக் கேட்டருளினார்.—யெகோவா ஆ
ரோன்மேலும்மிகுந்த கோபங்கொண்டு அவனை
அழிக்கவேண்டுமென்றிருக்க, ஆரோன் நிமித்த
மும் விண்ணப்பம்பண்ணினேன்.—நீங்கள்செய் ௨௧
த பாவமாகிய அந்தப்பசுக்கன்றையெடுத்து, அக்
கினியிலெரித்து, அதை மிதித்துத்தூளாய்ப்போ
கும்படி நன்றாய்ப்பொடிசெய்து, அந்தத்தூளை ம
லையிலிருந்துஓடுகிற சிற்றாற்றிலேபோட்டேன்.-
பின்பு தபேராவிலும்,மாசாவிலும்,கிப்ரோத் அத் ௨௨
தாவாவிலும், யெகோவாவுக்குக் கடுங்கோப
முண்டாக்கினீர்கள்.—நீங்கள் போய் நானுங்க ௨௩
ளுக்களித்ததேசத்தைச்சுதந்தரித்துக்கொள்ளுங்க
ளென்று யெகோவா காதேஷ்பர்னீயவிலிருந்
துஉங்களையனுப்புகிறபொழுதும்,நீங்கள்உங்கள்
தேவனாகிய யெகோவாவை விசுவாசியாம
லும், அவருடைய வாக்குக்குச் செவிகொடாம
லும்,அவருடைய கட்டளையை மீறினீர்கள்.—நா ௨௪
னுங்களை அறிந்தநாள்முதல் யெகோவாவின்
கட்டளையை மீறி நடந்துவந்தீர்கள்.—யெகோ ௨௫
வா உங்களை அழிப்பேனென்று சொன்னபடி
யால்,நான் முன்போல யெகோவாவின் சமு
கத்தில் நாற்பதுநாளிரவும்பகலும் விழுந்துகிடந்
தேன்.—மேலும் நான் யெகோவாவைநோக்கி, ௨௬
தேவனாகிய யெகோவாவே, நீர் உமது மகத்
துவத்தினாலேமீட்டு, கைவல்லபத்தினால் எகிப்தி
னின்றும் புறப்படச்செய்த உமது சுதந்தரமா
கிய சனங்களை நீர் அழிக்காதிருப்பீராக.—எங் ௨௭
களை நீர்புறப்படச்செய்த தேசத்திலுள்ள மனிதர்
கள், யெகோவா அவர்களுக்கு வாக்குத்தத்தம்
பண்ணியிருந்த தேசத்திலவர்களைப் பிரவேசிப்
பிக்க முடியாமையினாலும், அவர்களைப்பகைத்த
படியினாலும், அவர்களை வனத்தில் கொலைசெய்
யும்படிக்கே புறப்படச்செய்தாரென்று பேசாத
படிக்கு,—உமது தாசராகிய ஆபிரகாமையும் ஈ ௨௮
சாக்கையும் யாக்கோபையும் நினைந்தருளும்; நீர்
இந்தச் சனங்களின் மூர்க்கத்தையும், இவர்களு
டைய அதிக்கிரமத்தையும், பாவத்தையும் பாரா
திரும்.—நீர்உமது மகாபராக்கிரமத்தினாலும், ஓங் ௨௯
கிய கரத்தினாலும், புறப்படச்செய்த இவர்கள்
உம்முடையசனம், உமது சுதந்தரம்என்றுசொல்
லிப் பிரார்த்தனைபண்ணினேன்.

## ௰. அதிகாரம்.

௧. இரண்டாம்முறைபத்துக்கட்டளைகொடுத்தல்: ௬. ஆரோன்மரித்தபின்பு அவன் புத்திரனுக்கு ஆசாரியப்பட்டந்தரித்தல்: ௮. லேவியரைவேறுபடுத்தல்: ௰. தேவகட்டளை: ௰௨. தேவனுடையகட்டளைகளைக் காத்துக்கொள்ளும்படி மோசே புத்திசொல்லல்.

அக்காலத்திலேயெகோவா என்னைநோக்கி, ௧
நீமுந்தினபிரகாரமாக இரண்டு கற்பலகைகளை
வெட்டி எடுத்துக்கொண்டு, மலையிலேறி என்ச
மீபத்தில்வா, ஒருமரப்பெட்டியுங்கூடச்செய்ய

(௰) யாத்.௩௧.௰௮. யாத்.௰௯.௰௭. (௰௨) யாத்.௩௨.௭. (௰௩) யாத்.௩௨.௯. ௨.இரா.௰௭.௰௪. (௰௪) யாத்.௩௨.௰. அதி.௨௯.௨௰. எண்.௰௪.௰௨. (௰௫) யாத்.௩௨.௰௫. யாத்.௰௯.௰௮. (௰௬) யாத்.௩௨.௰௯. (௰௮) யாத்.௩௪.௨௮. யாத்.௩௨.௰,௰௧. (௰௯) யாத்.௩௨.௰௪. (௨௧) யாத்.௩௨.௨௰. ஏசா.௩௧.௭. (௨௨) எண்.௰௧.௧. யாத்.௰௭.௭. எண்.௰௧.௪,௩௪. (௨௩) எண்.௰௩.௩. (௨௬) யாத்.௩௨.௰௧. (௨௭) ஆதி.௪௧.௫௭. ௧.சாமு.௰௪.௨௫. யாத்.௩௨.௰௨. (௨௯) ௧.இரா.௮.௫௰. நிகி. ௧.௰. சங்.௯௫.௭.—(௰. அதி. ௧.) யாத்.௩௪.௧,௨. யாத்.௨௫.௰.

௨ வேண்டும்.—நீயுடைத்த முந்தின பலகைகளிலி
ருந்தவாக்குகளை அந்தப்பலகைகளிலும் எழுது
வேன், நீயவைகளைப்பெட்டியிலே வைப்பாயா
௩ கவென்ருர்.—சீத்தீம்மரத்தினல் நான் ஒருபெட்
டியைச்செய்து முந்தினபிரகாரம் இரண்டு கற்
பலகைகளைவெட்டி, அவைகளை என்கையிலெ
௪ டுத்துக்கொண்டு மலையிலேறினேன்.—முன்னே
சபைகூடிவந்தநாளில் மலையில் அக்கினி மத்தி
யினின்று யெகோவா உங்களுக்குச்சொன்
னபத்துக் கட்டளைகளையும், முந்தின பிரகாரம்
யெகோவா அந்தப் பலகைகளிலெழுதி அ
௫ வைகளை யெனக்குத்தந்தார்.—நான்திரும்பி மலை
யினின்றிறங்கி யெகோவா எனக்கு விதித்த
பிரகாரம் கற்பலகைகளை நான்செய்த பெட்டியி
லே வைத்தேன்; அவைகளங்கேயிருக்கின்றன.
௬ பின்பு இஸரவேல்சந்ததியார்பினேயாக்கனுக்
கடுத்த பெரோத்தைவிட்டு மோசெராவுக்குப் பிர
யாணஞ்செய்தார்கள்: அங்கே ஆரோன் மரித்து
அடக்கம்பண்ணப்பட்டான்; அவனுக்குப்பின்
அவன் புத்திரனுகிய எலியேசார் ஆசாரியனு
௭ ன்.—அங்கேயிருந்து குத்கோதாவுக்கும் குத்கோ
தாவைவிட்டு நீரோடையுள்ள நாடாகிய யோத்
பாத்துக்கும் பிரயாணஞ்செய்தார்கள்.
௮ அக்காலத்திலே யெகோவாவுடையஉடன்
படிக்கையின் பெட்டியைச்சுமப்பதற்கும், யெ
கோவாவின் சந்நிதியில்நின்று இந்நாள்வரைக்
கும்நடந்துவருகிறபிரகாரம் அவருக்கு ஆராதனை
செய்வதற்கும், அவருடையநாமத்தைக்கொண்டு
ஆசீர்வதிப்பதற்கும், லேவிகோத்திரத்தாரைப்பி
௯ ரித்தெடுத்தார்.—ஆதலால் லேவியருக்கு அவர்கள்
சகோதரரோடு பாகமுஞ் சுதந்தரமுமில்லை; உங்
கள் தேவனுகிய யெகோவா அவர்களுக்கு
வாக்குத்தத்தம் பண்ணினபிரகாரம் யெகோ
வாவே அவர்களுக்குச்சுதந்தரம்.
௰ நான்முந்தின பிரகாரமாகவே நாற்பதுநாளிர
வும் பகலும் மலையில்நின்றேன்; அந்தமுறையும்
யெகோவா எனக்குச்செவிகொடுத்து, உங்க
௰௧ ளைஅழியாமல்விட்டார்.—யெகோவா என்னை
நோக்கி, அவர்களுக்குக்கொடுக்கும்படி நான் அ
வர்களுடையபிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்
தை அவர்கள்போய்ச் சுதந்தரித்துக் கொள்ளும்
பொருட்டு, நீயெழுந்து சனங்களுக்குமுன் பிர
யாணப்பட்டுப்போவென்ருர்.
௰௨ இஸரவேலே, நீ உன் தேவனுகிய யெகோ
வாவுக்குப்பயந்து, அவரருளியவழியேநடந்து,
அவரிடத்திலன்புகூர்ந்து, உன்பூரண இருதயத்
திஞலும், பூரணஆத்துமத்திஞலும், உன் தேவ
னுகிய யெகோவாவைச்சேவித்து, உனக்கு
நன்மையுண்டாகும்படி,—இன்றுநான் உனக்கு ௰௩
விதிக்கிற யெகோவாவின் கட்டளையையும்,
விதிகளையும், காத்துநடப்பதையேயொழிய, உன்
தேவனுகிய யெகோவாவேறெதை உன்னி
டத்தில் கேட்கிருர்.—வானங்களும், வானங்க ௰௪
ளுக்குமேலானவானங்களும், பூமியும்அதிலுள்ள
யாவும், உன் தேவனுகிய யெகோவாவினு
டையன,—ஆனலும் யெகோவா உன்பிதாக் ௰௫
களை நேசித்து, அவர்கள்மேற் பிரியப்பட்டு, அ
வர்களுக்குப்பின் அவர்கள் சந்ததியாராகிய உங்
களை, இந்நாளிலிருக்கிறதுபோல, சகல சனங்க
ளுக்குள்ளுந்தமக்கென்றுதெரிந்துகொண்டார்.—
ஆதலால் இனிஉங்களிருதயத்தின் அக்கிரசருமத் ௰௬
தை விருத்தசேதனம்பண்ணி, வணங்காத கழுத்
துள்ளவர்களாய்நடவாமலுமிருங்கள்.—உங்கள் ௰௭
தேவனுகிய யெகோவா தேவாதி தேவ
னும், கர்த்தாதி கர்த்தாவுமாய், மகத்துவமும்,
வல்லமையும், பயங்கரமுமுடைய தேவனு
மாயிருக்கிருர், அவர் முகம்பார்க்கிறவருமல்ல,
பரிதானம் வாங்குகிறவருமல்ல.—அவர் அநாத ௰௮
பிள்ளைக்கும், விதவைக்கும், நியாயஞ்செய்கிறவ
ருமாய்ப் பரதேசியின்மேல் அன்புவைத்து, அவ
னுக்கு அன்னவஸ்திரங்கொடுக்கிறவருமாயிருக்
கிருர்.—நீங்களும் எகிப்துதேசத்தில் பரதேசிகளா ௰௯
யிருந்தபடியால் பரதேசிகள்மேல் அன்புவைப்
பீர்களாக.—உன் தேவனுகிய யெகோவா ௨௰
வுக்குப்பயந்து, அவரைச் சேவித்து, அவரைச்
சார்ந்து, அவருடையநாமத்தைக்கொண்டு ஆணை
யிடுவாயாக.—அவரே உன்துதி, அவரே உன் தே ௨௧
வன், அவரே உன்கண்கண்ட இந்தப்பெரியப
யங்கரமான காரியங்களை உன்னிமித்தம் செய்
தவர்.—எகிப்துக்குப்போன உன்முன்னேர்கள் ௨௨
எழுபதுபேர்; இப்பொழுது உன் தேவனுகிய
யெகோவா உன்னைவானத்து நட்சத்திரத்தி
ரளைப்போலாக்கினர்.

## ௰௧. அதிகாரம்.

௧. தேவன்செய்த அற்புத கிரியையைநினைத்து அவருடைய கட்டளையைக் காத்துக்கொள்ள வேண்டுமெனல்: ௰௩. கட்டளைகாப்பதினல் வரும்பலனுரைத்தல்: ௰௮. பாலகருக்குப்போதிக்கக் கட்டளையிடல்: ௨௬. சாபமும் ஆசீர்வாதமுமுரைத்தல்.

நீஉன் தேவனுகிய யெகோவாவிடத்தில் ௧
அன்புகூர்ந்து, அவருடைய உபதேசங்களையும்,
அவருடையவிதிகளையும், அவருடைய நியாயப்
பிரமாணங்களையும், அவருடைய கட்டளைகளை

(௨) யாத்.௨௫.௰௬,௨௧. (௩) யாத்.௨௫.௫,௰. யாத்.௩௪.௪. (௪) யாத்.௩௪.௨௮. யாத்.௨௰.௧. யாத்.௰௯.௰௭. (௫) யாத்.௩௪.௨௯. யாத்.௪௰.௨௰. ௧.இரா.௮.௯. (௭) எண்.௩௩.௩௨,௩௩. (௮) எண்.௩.௬. எண்.௬.௨௩. (௯) எண்.௰௮.௨௰,௨௪. (௰) யாத்.௩௪.௨௮. யாத்.௩௨.௰௪,௩௩,௩௪. (௰௧) யாத்.௩௨.௩௪. (௰௨) அதி.௬.௰௩. அதி.௫.௩௩. அதி.௬.௫. மத்.௨௨.௩௭. அதி.௬.௨௪. (௰௩) மீகா.௬.௮. (௰௪) ௧.இரா.௮.௨௭. சங்.௱௰௫.௰௬. ஆதி.௰௪.௰௯. சங்.௨௪.௧. (௰௬) லேவி.௨௬.௪௧. எரே.௪.௪. ரோ.௨.௨௮,௨௯. கொலோ.௨.௰௧. அதி.௯.௬,௰௩. (௰௭) யோசு.௨௨.௨௨. சங்.௱௩௬.௨. தானி.௨.௪௭. வெளி.௰௭.௰௪. வெளி.௰௯.௰௬. அதி.௭.௨௧. ௨.நாளா.௰௯.௭. யோபு.௩௪.௰௯. அப்.௰.௩௪. ரோ.௨.௰௧. கலா.௨.௬. எபே.௬.௯. கொலோ.௩.௨௫. ௧.பேதுரு.௧.௰௭. (௰௮) சங்.௱௪௬.௯. (௰௯) லேவி.௰௯.௩௩,௩௪. (௨௰) அதி.௬.௰௩. மத்.௪.௰. லூக்.௪.௮. அதி.௰௧.௨௨. சங்.௬௩.௰௧. (௨௧) யாத்.௰௫.௨. சங்.௨௨.௩. எரே.௰௭.௰௪. ௧.சாமு.௰௨.௨௪. ௨.சாமு.௭.௨௩. சங்.௱௬.௨௧,௨௨. (௨௨) ஆதி.௪௬.௨௭. ஆதி.௰௫.௫.—(௰௧. அதி. ௧.) ௪௧.௩௭.

௨ யும், எப்பொழுதுங் காத்துக்கொள்வாயாக.—உங்
கள் தேவனாகிய யெகோவா செய்த தண்டனை
யையும், அவருடைய மகத்துவத்தையும், கைவல்
௩ லபத்தையும், ஓங்கினகரத்தையும்,-அவர் எகிப்து
மத்தியில் எகிப்தின் இராசனாகிய பார்வோனுக்
கும், அவனுடைய சமஸ்ததேசத்திற்கும்செய்த
௪ அற்புதங்களையும், கிரியைகளையும்,—எகிப்தியசே
னைகளும், அவர்கள்குதிரைகளும், இரதங்களும்,
உங்களுக்குப் பின்தொடருகையில், யெகோ
வா செங்கடற்சலத்தை அவர்கள்மேற் பாயப்
பண்ணி, இந்நாள்வரைக்கும் நிற்கும் நாசத்தை
௫ அவர்களுக்கு வருவித்ததையும்,—நீங்களிவ்வி
டத்தில் வருமளவும் அவர் வனாந்தரத்தில் உங்க
௬ ளுக்குச்செய்ததையும்,—பூமி தன் வாயைத்திறந்
து ரூபேனுடைய பௌத்திரரும் எலியாபின்
புத்திரருமாகிய தாதானையும், அபீராமையும், அ
வர்கள் குடும்பத்தாரையும், கூடாரங்களையும், ச
மஸ்த இஸரவேலர் மத்தியிலும் அவர்கள் சுதந்த
ரித்த சகலபொருள்களையும் விழுங்கும்படிசெய்
ததையும், அறியாமலுங்காணாமலுமிருக்கிற உங்
கள் சந்ததியாருடன் நான் பேசவில்லையென்று
௭ இந்நாளில் அறிந்துகொள்ளுங்கள்.—யெகோ
வாசெய்த மகத்துவமான கிரியைகளை எல்லாம்
௮ உங்கள்கண்கள் கண்டன.—ஆதலால் உற்சாகங்
கொண்டு நீங்கள் சுதந்தரிக்கப்போகிறதேசத்திற்
௯ பிரவேசித்து, அதைச் சுதந்தரிப்பதற்கும்,—யெ
கோவா உங்கள் பிதாக்களுக்கும், அவர்கள் சந்
ததிக்குங்கொடுப்பேனென்று அவர்களுக்காணை
யிட்ட பாலுந் தேனும்பெருகுகிறதேசத்தில் நீங்
கள் நீடித்திருப்பதற்கும், இன்று நானுங்களுக்கு
விதிக்குங்கட்டளைகளெல்லாவற்றையுங்காத்துக்
கொள்வீர்களாக.

௰ நீ சுதந்தரிக்கப்போகிறதேசம், நீ விட்டுவந்த
எகிப்துதேசத்தைப்போலிராது; அங்கே நீ விதை
விதைத்து, ஒருகீரைத்தோட்டத்தைப்போல உன்
௰௧ காலால் நீர்ப்பாய்ச்சிவந்தாய்.—நீங்கள்போய்ச்
சுதந்தரிக்குந்தேசமோ, மலைகளுந் தாழ்ந்த பூமி
களுமுள்ளதேசம், அது வானஞ்சொரியும்மழை
௰௨ யுள்ளதேசம்:—அது உன் தேவனாகிய யெ
கோவா பாலித்துவருகிறதேசம்: வருஷத்தின்
ஆதிதொடுத்து வருஷத்தின் அந்தம்வரைக்கும் இ
டைவிடாமல் உன் தேவனாகிய யெகோவா
வின்கண்கள் அதின்மேலிருக்கின்றன.

௰௩ நீங்கள் உங்கள் தேவனாகிய யெகோவா
வைநேசித்து, உங்கள் பூரண இருதயத்தினாலும்,
பூரண ஆத்துமத்தினாலும், அவரைச்சேவிக்கும்
படி இந்நாளில் நானுங்களுக்கு விதிக்கிற என்
னுடைய கட்டளைகளைச் சாவதானமாய்க் கேட்
௰௪ டமைந்தால்,—நீ புசித்துத் திருத்தியடையும் வண்
ணம், உன் தானியத்தையும், திராட்சரசத்தை
யும், எண்ணெயையுஞ் சேர்ப்பதற்குப் பருவகா
லங்களிலே உங்கள் தேசத்தில் முன்மாரியை
யும் பின்மாரியையும் பெய்விப்பேன்.—உன் மி ௰௫
ருகசீவன்களுக்காக உன் வெளிகளிலே புல்லி
ருக்கும்படிசெய்வேன்.—உங்கள் இருதயம் வஞ் ௰௬
சிக்கப்படாமலும், நீங்கள் நெறிதவறி அந்நிய
தேவர்களைச்சேவித்து, அவர்களை நமஸ்கரியாம
லுமிருக்கும்படி, எச்சரிக்கையாயிருங்கள்.—இல் ௰௭
லாதிருந்தால் யெகோவா உங்கள்மேல் கோ
பங்கொண்டு, மழைபெய்யாமலும் தேசந்தன்ப
லனைக் கொடாமலுமிருக்கும்படி வானத்தைய
டைத்துவிடுவார்; யெகோவா உங்களுக்க
ளித்த உத்தமதேசத்தில் நீங்களும் அதிசீக்கிரமா
யழிந்துபோவீர்கள்.

ஆகையால் யெகோவா உங்கள் பிதாக்க ௰௮
ளுக்குக்கொடுக்கும்படி ஆணையிட்ட தேசத்தில்
உங்கள் நாள்களும், உங்கள் சந்ததியாருடைய
நாள்களும், வானத்தின் நாள்களைப்போலப் பூமி
யில் பெருக்கமாயிருக்கும்பொருட்டு,—நீங்கள் ௰௯
என் வாக்குகளை உங்களிருதயத்திலும், உள்ளத்
திலும்வைத்து, அவைகளை உங்கள் கையின்மேல்
அடையாளமாகக்கட்டி, உங்கள் கண்களின்மத்
தியில் நுதலணியாயிட்டு,—அவைகளை உங்கள் ௨௰
பிள்ளைகளுக்குப்போதித்து, நீங்கள்வீட்டிலிருக்
கிறபொழுதும், வழிநடக்கிறபொழுதும், படுக்
கிறபொழுதும், எழுந்திருக்கிறபொழுதும், அ
வைகளையெடுத்துப் பேசிக்கொண்டு,—அவைக ௨௧
ளை உங்கள்வீட்டுவாசல் நிலைகளிலும், உங்கள்
தலைவாசல்களிலும், எழுதக்கடவீர்கள்.

நீங்கள் உங்கள் தேவனாகிய யெகோவா ௨௨
வைநேசித்து, அவர் அருளிய எல்லாவழிகளிலும்
நடந்து, அவரைச் சார்ந்திருக்கும்படிசெய்யும்
பொருட்டு, நான் உங்களுக்கு விதிக்கிற இந்தக்
கட்டளைகள்யாவையுஞ் சாவதானத்துடன் காத்
துக்கொள்வீர்களானால்,—யெகோவா உங்கள் ௨௩
முன்னிலையினின்றும், அந்தச்சாதியாரெல்லலா
ரையுந் துரத்திவிடுவார், நீங்கள் உங்களிலும் ம
கத்துவமும், வல்லமையுமுள்ள சனங்களை வசப்
படுத்துவீர்கள்.—உங்கள் உள்ளங்கால் படுமிட ௨௪
மெங்கும் உங்களுக்கேயுரித்தாகும்: வனாந்தரம்,
லிபானோன், பிருத்நதி இவைதொடங்கி, கடைச்
சமுத்திரம்வரைக்கும் உங்களெல்லையாகவேயி
ருக்கும்.—உங்கள் தேவனாகிய யெகோவா ௨௫
உங்களுக்குச்சொல்லியபிரகாரம் நீங்கள் மிதிக்
குஞ்சமஸ்தபூமியும் உங்களால் பயமுங்கெடியும்
அடையும்படி செய்வார்: ஒருவனும்உங்களுக்கு
எதிர்த்து நிற்கமாட்டான்.

கேளுங்கள், இன்று நானுங்களுக்கு முன்பாக ௨௬
ஆசீர்வாதமும், சாபமும்வைக்கிறேன்.—இன்று ௨௭
நானுங்களுக்கு விதிக்கிற உங்கள் தேவனாகிய

(௪) யாத்.௰௫.௰,௰௧. (௬) எண்.௰௬.௧,௩௧. (௮) யோசு.௧.௬,௭. (௯) நீதி.௰.௨௭. (௰) சக.௰௪.௰௮. (௰௨) ௧.இரா. ௯.௩. (௰௪) லேவி.௨௬.௪. யோவே.௨.௨௩. யாக்.௫.௭. (௰௫) யோவே.௨.௰௯. (௰௬) அதி.௨௯.௰௮. யோபு.௩௧. ௨௭. (௰௭) ௧.இரா.௮.௩௫. யோசு.௨௩.௰௩,௰௫,௰௬. (௰௮) அதி.௬.௮. (௨௧) அதி.௪.௪௰. நீதி.௩.௨. சங்.௭௨.௫. (௨௩) அதி.௪.௩௮. (௨௪) யோசு.௧.௩. ஆதி.௰௫.௰௮. எண்.௩௪.௩. (௨௫) யாத்.௨௩.௨௭. (௨௬) அதி.௩௰.௧,௰௫,௰௯. (௨௭) அதி.௨௮.௨.

யெகோவாவின் கட்டளைகளுக்கு அமைந்
௨௮ தால் ஆசீர்வாதம்.—நீங்கள் உங்கள் தேவனாகிய
யெகோவாவின் கட்டளைகளுக் கமையாமல்
இன்று நானுங்களுக்கு விதிக்கிற நெறிதவறிநீங்
களறியாத அந்நிய தேவர்களைப்பின்பற்றினால்
௨௯ சாபம்.—நீ சுதந்தரிக்கப்போகிறதேசத்தில் உன்
தேவனாகிய யெகோவா உன்னைப்பிரவே
சிப்பிக்குங்காலத்தில், கிரிசீம் மலையின்மேல் ஆ
சீர்வாதத்தையும், எபால் மலையின்மேற் சாபத்
௩௰ தையும் ஸ்தாபனம்பண்ணுவீர்கள்.—அவைகள்,
யோர்தான் நதிக்கப்புறத்தில் சூரியன் அஸ்தமிக்
கிற மேற்குவழியாய்க் கானானியர் வாசம்பண்
ணுகிறகாட்டுவெளியிலே கில்காலுக்கு எதிரான
மோரே யென்னுஞ் சமபூமியினருகேயல்லவோ
௩௧ இருக்கின்றன.—உங்கள் தேவனாகிய யெகோ
வா உங்களுக்களிக்குந் தேசத்தைச் சுதந்தரித்
துக்கொள்வதற்கு நீங்கள் யோர்தானைக்கடந்து
போய், அதைச் சுதந்தரித்துக்கொண்டு, அதிலே
௩௨ வாசம்பண்ணுவீர்கள்.—ஆதலால் உங்களுக்கு
இன்று நான் ஏற்படுத்துகிற சகல விதிகளையும்,
நியாயப் பிரமாணங்களையுங் காத்துக்கொள்ளக்
கடவீர்கள்.

## ௰௨. அதிகாரம்.

௧. விக்கிரகம் முதலானவைகளை யழிக்கக்கட்டளையிடல்: ௫. தேவன் நியமிக்கும் ஸ்தானத்தில் ஆராதனைசெய்யக் கட்டளையிடல்: ௰௭. விசேஷக்கட்டளையிடல்: ௨௰. பரிசுத்தஸ்தானத்திற் பரிசுத்த வஸ்துவைப் புசிக்கக்கட்டளையிடல்: ௨௯. விக்கிரகாராதனைக்காரர் செய்யுங் கருமம் போலச்செய்யாமல் விலக்கல்.

உங்கள்பிதாக்களின் தேவனாகிய யெகோ
வா உங்களுக்குச்சுதந்தரமாயளிக்குந்தேசத்தில்,
நீங்கள் பூமியிலே சீவிக்குங்காலமுழுவதுங்காத்
துநடக்கவேண்டிய விதிகளும், நியாயப்பிரமா
௨ ணங்களுமாவன.—நீங்கள் வசப்படுத்துஞ் சாதி
யார் தங்கள் தெய்வங்களைச்சேவித்த உயர்ந்த ம
லைகளின்மேலும், குன்றுகளின்மேலுமுள்ளன
வும்,பச்சைமரங்களின்கீழுள்ளனவுமாகிய சமஸ்
௩ தஸ்தலங்களையும் நிருமூலப்படுத்தவேண்டும்.-அ
வர்களுடைய வேதிகைகளையிடித்து, அவர்களு
டையசிலைகளைத்தகர்த்து, அவர்களுடைய அஷ
ரீவிருட்சங்களை அக்கினியினாலெரித்து, அவர்க
ளுடைய தேவர்களின் தொழிற்படுத்திய விக்கிர
கங்களைச்சேதித்து, அவ்விடத்தில் அவைகளின்
நாமமும் இராதழியும்படி செய்யக்கடவீர்கள்.—
௪ உங்கள் தேவனாகிய யெகோவாவுக்கு நீங்
௫ கள்அப்படிச்செய்யாமல்,-உங்கள்தேவனாகிய
யெகோவா தமது நாமத்தை ஸ்தாபிக்கும்பொ
ருட்டு, உங்கள் கோத்திரங்களெல்லாவற்றிலுந்
தெரிந்துகொள்ளும் ஸ்தானமாகிய அவருடைய
௬ வாசஸ்தலத்தையேநாடி அங்கேபோய்,—அங்கே
உங்கள் தகனபலிகளையும், உங்கள் மற்றைப்பலி
களையும், பத்திலொன்றாகிய பதார்த்தங்களையும்,
உங்கள் கையினாலுயர்த்தும் நைவேத்தியங்களை
யும்,சங்கற்பங்களையும், உங்கள் இஷ்டபலிகளை
யும், உங்கள் ஆடுமாடுகளின் தலையீற்றுக்களையுங்
கொண்டுபோய்,—அங்கே உங்கள் தேவனாகிய ௭
யெகோவாவின்சந்நிதியிலேபுசித்து,நீங்களுங்
கள்கைகளாற்செய்தவைகளும்,உங்கள் தேவனா
கிய யெகோவாவாலே ஆசீர்வதிக்கப்பட்ட
வைகளுமாகிய எல்லாவற்றிற்காகவும், நீங்களும்
உங்கள் குடும்பத்தாருஞ் சந்தோஷப்படுவீர்களா
க.-இங்கே இந்நாளில் நாம் அவனவன் தன் இஷ் ௮
டப்படியெல்லாஞ்செய்துவருவதுபோலநீங்கள்
செய்யாதிருப்பீர்களாக.—உங்கள் தேவனாகிய ௯
யெகோவா உங்களுக்கருளும் இளைப்பாறுதலி
லும், சுதந்தரத்திலும் நீங்களின்னும் பிரவேசிக்க
வில்லையே.—பின்பு நீங்கள் யோர்தானைக்கடந்து ௰
போய், உங்கள் தேவனாகிய யெகோவா உங்
களுக்குச் சுதந்தரமாய் அளிக்குந்தேசத்திலேவா
சம்பண்ணும்பொருட்டு, உங்களைச் சூழ்ந்திருக்
கும் உங்கள் சத்துருக்களெல்லாரையும் அவர்வி
லக்கி, உங்களை இளைப்பாறப்பண்ண, நீங்கள்
வாழ்வடைந்து வசித்திருக்குங்காலத்தில்,—உங் ௰௧
கள்தேவனாகிய யெகோவா தமது நாமத்தை
வசிக்கச்செய்யும்படிதெரிந்துகொள்ளும்ஸ்தான
த்திலே நீங்கள்உங்களுக்குநான் விதித்தபிரகாரம்
உங்கள் தகனபலிகளும்,மற்றைப்பலிகளும், பத்
திலொன்றாகிய பதார்த்தங்களும், உங்கள் கையி
னாலுயர்த்தும் நைவேத்தியங்களும், யெகோ
வாவுக்குச் சங்கற்பித்தவிசேஷித்தசங்கற்ப பலி
களுமாக எல்லாவற்றையுங் கொண்டுபோய்,—
உங்கள் தேவனாகிய யெகோவாவின் சந்நி ௰௨
தியில் நீங்களும் உங்கள்புத்திரரும், உங்கள் புத்
திரிகளும்,உங்கள்பணிவிடைக்காரரும்,உங்கள்
பணிவிடைக்காரிகளும், உங்களுடன்பாகமுஞ்
சுதந்தரமும் பெறாமல் உங்கள் வாசல்களிலிருக்
கும் லேவியருஞ் சந்தோஷப்படுவீர்களாக.-நீகா ௰௩
ணுமெவ்விடத்திலும் உன் தகனபலிகளையிடாத
படிஎச்சரிக்கையாயிரு.—உன் கோத்திரங்களுக் ௰௪
குள் யெகோவா தெரிந்துகொள்ளும் ஒரே
ஸ்தலத்தில் நீ உன் தகனபலிகளையிட்டு, நானு
னக்கு விதிக்கிற யாவையும் அங்கே செய்யக்கட
வாய்.—இதுவுமன்றி, உன் தேவனாகிய யெ ௰௫
கோவா உனக்கருளிய ஆசீர்வாதத்தின்படி நீ
உன்னிஷ்டத்திற்கேற்க உன் வாசல்களெங்கும்
மிருகசீவன்களையும் அடித்துப்புசிக்கலாம்: அசு
சியானவனும், சுசியானவனும், கலைமானையும்,
பெண்மானையும் புசிக்கிறதுபோல் அதைப் பு
சிக்கலாம்.—இரத்தத்தைமாத்திரம் புசிக்கவேண் ௰௬
டாம்; அதைச் சலத்தைப்போலத் தரையிலே
யூற்றிவிடவேண்டும்.

(௨௮) அதி.௨௮.௰௫. (௨௯) அதி.௨௭.௰௨,௰௩. (௩௰) நியா.௭.௧. (௩௧) யோசு.௧.௰௧.—(௰௨. அதி. ௧.) அதி.௬.௧. அதி.௪.௯. (௨) யாத்.௩௪.௰௩. ௨.இரா.௰௬.௪. எரே.௩.௬. (௩) எண்.௩௩.௫௨. நியா.௨.௨. (௫) வச.௰௧. அதி.௨௬.௨. யோசு.௯.௨௭. ௧.இரா.௮.௨௯. ௨.நாளா.௭.௰௨. (௭) வச.௰௨,௰௮. லேவி.௨௩.௪௰. (௮) நியா.௰௭.௬. (௰௧) யோசு.௰௮.௧. ௧.இரா.௮.௨௯. (௰௨) அதி.௰.௯. (௰௪) வச.௰௧. (௰௬) ஆதி.௯.௪. லேவி.௭.௨௬.

௰௭ உன் தானியத்திலுந் திராட்சரசத்திலும் எண்
ணெயிலும் பத்திலொருபாகத்தையும், உன் ஆடு
மாடுகளின் தலையீற்றுக்களையும், நீ சங்கற்பித்த
சங்கற்பபலிகளையும், உன் இஷ்டபலிகளையும்,
உன் கையினாலுயர்த்தும் நைவேத்தியங்களையும்,
௰௮ நீ உன் வாசல்களில் புசிக்கவேண்டாம்.—உன்
தேவனாகிய யெகோவா தெரிந்துகொள்
ளும் ஸ்தானத்தில் நீயும், உன் புத்திரரும், உன்
புத்திரிகளும், பணிவிடைக்காரரும், பணிவி
டைக்காரிகளும், உன் வாசல்களிலுள்ள லேவி
யரும் உன் தேவனாகிய யெகோவாவின் சந்
நிதியில் அவற்றைப்புசித்து, நீ உன் கைகளாற்
செய்யும் யாவற்றிற்கும் உன் தேவனாகிய யெ
கோவாவின் சந்நிதியில் சந்தோஷப்படுவா
௰௯ யாக.—நீ பூமியிற்சீவித்திருக்குங்காலமளவும் லே
வியரைக்கைவிடாதபடி எச்சரிக்கையாயிரு.
௨௰ உன் தேவனாகிய யெகோவா, தாம்உனக்
குவாக்குத்தத்தஞ்செய்தபிரகாரம், உன்னெல்லை
யை விஸ்தாரமாக்குங்காலத்தில் மாமிசத்தைப்பு
சிக்கவிரும்பி, நான்மாமிசம்புசிப்பேனென்றிரு
ந்தால் உன் இஷ்டப்படி மாமிசம் புசிக்கலாம்.—
௨௧ உன் தேவனாகிய யெகோவா தமது நாமத்
தை ஸ்தாபிக்கும்படி தெரிந்துகொள்ளும் ஸ்த
லம் உனக்குத்தூரமானால், யெகோவா உனக்
களித்த உன் ஆடுமாடுகளில் எதையாகிலும் நா
னுனக்கு விதித்தபிரகாரம் நீ கொன்று, உன்இஷ்
௨௨ டப்படி உன் வாசல்களிலே புசிக்கலாம்.—ஒரு
கலைமானையும் பெண்மானையும் புசிக்கிறதுபோ
ல நீ அதைப்புசிக்கலாம்; அசுசியானவனாவது,
௨௩ சுசியானவனாவது, அதைப் புசிக்கலாம்.—எப்
படியாயினும் இரத்தத்தைமாத்திரம் புசிக்கவேண்
டாம்: இரத்தமே சீவன்; மாமிசத்துடன் சீவனை
௨௪ யும் புசிக்கவேண்டாம்.—அதைப்புசியாமல் சலத்
தைப்போலத்தரையில் ஊற்றிவிடவேண்டும்.—
௨௫ அதை நீ புசிக்கலாகாது; நீ யெகோவாவின்
பார்வைக்குச் செவ்வையானதைச்செய்தால் உ
னக்கும், உன்பின்சந்ததியாருக்கும் நன்மையுண்
௨௬ டாகும்.—உன் பரிசுத்தவஸ்துக்களையும், சங்கற்ப
பலிகளையும், யெகோவா தெரிந்துகொள்ளும்
௨௭ ஸ்தானத்திற்கு நீ கொண்டுபோய்,—உன் தேவ
னாகிய யெகோவாவின் வேதிகையின்மேல்
மாமிசமும் இரத்தமுமாகிய உன் தகனபலிகளா
க இடக்கடவாய்: உன் பலிகளினிரத்தம் உன்
தேவனாகிய யெகோவாவின் வேதிகையின்
மேல் ஊற்றப்படக்கடவது; மாமிசத்தை நீபுசிக்
௨௮ கலாம்.—நானுனக்கு விதிக்கிற இந்த வாக்கு
கள் யாவையுங்கேட்டுக் காத்துக்கொள்வாயாக,
உன் தேவனாகிய யெகோவாவின் பார்வைக்
குநன்மையுஞ் செவ்வையுமானதைச் செய்துவந்
தால், உனக்கும், உன்பின்சந்ததியாருக்கும் நித்
திய நன்மையுண்டாகும்.
நீ சுதந்தரிக்கப்போகிற தேசத்தின்சாதியாரை ௨௯
உன் தேவனாகிய யெகோவா உன்முன்னின்
றுஞ்சேதிக்க; நீஅவர்களைவசப்படுத்தி, அவர்கள்
தேசத்தில் வாசம்பண்ணுங்காலத்தில்,—அவர்கள் ௩௰
உன்முன்னின்றுமழிக்கப்பட்டபின்பு, நீ அவர்
களைப்பின்சென்று, வஞ்சிக்கப்படாதபடி, அந்
தச்சனங்கள் தங்கள்தேவர்களைச் சேவித்தபிரகா
ரம் நானுஞ்செய்வேனென்றெண்ணி, இந்தச்ச
னங்கள் தங்கள் தேவர்களை எப்படி ஆராதிக்கி
றார்களென்று விசாரியாதபடி எச்சரிக்கையாயி
ரு.—உன் தேவனாகிய யெகோவாவுக்கிப்ப ௩௧
டிச்செய்யாதிரு: யெகோவா வெறுக்கிற அரு
வருப்பானயாவையும் அவர்கள் தங்கள் தேவர்க
ளுக்குச்செய்து, தங்கள் புத்திரரையும், புத்திரிக
ளையும், தங்கள்தேவர்களுக்கு அக்கினியிலேதக
னித்தார்கள்.—நானுனக்கு விதிக்கிற யாவையுஞ் ௩௨
செய்யும்படி சாவதானமாயிரு: நீ அதனோடே
ஒன்றைக்கூட்டவும், அதில் ஒன்றைக் குறைக்
கவும் வேண்டாம்.

## ௰௩. அதிகாரம்.

௧. விக்கிரகாராதனைசெய்ய ஏவினவர்களைக்கொல்லக்கட்டளையிடல்: ௬. விக்கிரகாராதனைசெய்ய ஏவினவர்கள்சுயகுடும்பத்திலுள்ளவர்களாயினுங்கொலைசெய்யக்கட்டளையிடல்: ௰௨. விக்கிரகாராதனைக்காரருடைய நகரங்களை நிருமூலப்படுத்தக்கட்டளையிடல்.

உங்களுக்குள்ளேஒருதீர்க்கதரிசியாகிலும், சொ ௧
ப்பனார்த்தக்காரனாகிலும் எழுந்து,—நீங்களறியா ௨
த அந்நியதேவர்களைப் பின்பற்றி, அவர்களைச்
சேவிப்போம் வாருங்களென்றுசொல்லி, உங்க
ளுக்குஒரு அடையாளத்தையும்,அற்புதத்தையுஞ்
சொன்னாலும், அவனுங்களுக்குச்சொல்லிய அ
டையாளமும் அற்புதங்களும் நடந்தாலும்,—அந் ௩
தத்தீர்க்கதரிசியாகிலும், அந்தச் சொப்பனார்த்தக்
காரனாகிலும், சொல்லும்வாக்குகளுக்குச் செவி
கொடாதிருப்பீர்களாக; உங்கள் தேவனாகிய
யெகோவாவிடத்தில் நீங்கள் உங்கள் பூரண
இருதயத்தினாலும், உங்கள் பூரண ஆத்துமத்தினா
லும், அன்புகூருகிறீர்களா, இல்லையாவென்றறி
யும்படி, உங்கள் தேவனாகிய யெகோவா
உங்களைச்சோதிக்கிறார்.—நீங்கள் உங்கள் தேவ ௪
னாகிய யெகோவாவைப்பின்பற்றி, அவருக்
குப்பயந்து, அவருடையகட்டளைகளைக்காத்துக்
கொண்டு, அவருடைய வாக்குக்குச் செவிகொ
டுத்து, அவரைச்சேவித்து, அவரையே சார்ந்து

(௰௮) வச.௰௧,௰௨. அதி.௰௪.௨௩. (௰௯) அதி.௰௪.௨௭. (௨௰) ஆதி.௰௫.௰௮. ஆதி.௨௮.௰௪. யாத்.௩௪.௨௪. (௨௩) ஆதி.௯.௪. (௨௫) ஏசா.௩௰. யாத்.௰௫.௨௬. ௧.இரா.௰௧.௩௮. (௨௬) எண்.௫.௯,௰. ௧.சாமு.௧.௨௧,௨௨,௨௪. (௨௭) லேவி.௧.௫,௯,௰௩. (௨௯) யாத்.௨௩.௨௩. யோசு.௨௩.௪. (௩௰) அதி.௭.௰௬. (௩௧) லேவி.௰௮.௩,௨௬,௩௰. ௨.இரா.௰௭.௰௫. லேவி.௰௮.௨௧. எரே.௩௨.௩௫. எசேக்.௨௨.௩௭. (௩௨) அதி.௪.௨. யோசு.௧.௭. நீதி.௩௰.௬. வெளி.௨௨.௰௮.—(௰௩ அதி. ௧) சக.௰.௨. (௨) மத்.௨௪.௨௪. ௨.தெச.௨.௯. அதி.௰௮.௨௨. எரே.௨௮.௯. மத்.௭.௨௨. (௩) அதி.௮.௨. மத்.௨௪.௨௪. ௧.கொரி.௰௧.௰௯. ௨.தெச.௨.௰௩. வெளி.௰௩.௰௪. (௪) ௨.இரா.௨௩.௩.

௫ கொள்ளவேண்டும்.-அன்றியும், நீங்கள் நடக்கும்
படி, உங்கள்தேவனாகிய யெகோவா உங்க
ளுக்கு விதித்தவழியினின்றும், உங்களை விலக்
கும்பொருட்டு, அந்தத்தீர்க்கதரிசியாகிலும், அந்
தச்சொப்பனார்த்தக்காரனாகிலும், எகிப்து தேசத்
தினின்றும் உங்களைப் புறப்படச்செய்தவரும்,
நீங்களடிமைப்பட்டிருந்த இடத்தினின்றும் உங்
களைமீட்டுக்கொண்டுவந்தவருமான உங்கள் தே
வனாகிய யெகோவாவைவிட்டு விலகும்படி
போதித்தபடியால், அவர்கள் கொலைசெய்யப்
படவேண்டும். இப்படியே நீ உன்னிடத்திலி
ருக்குந் தீமையையகற்றிவிடு.
௬ தேசத்தின் ஒரு எல்லைதொடங்கி, மறு எல்லை
மட்டும் உன்னைச்சூழ உனக்குச்சமீபத்தில் இ
ருக்குஞ்சனங்களுடையதேவர்களில் நீயும்உன்
பிதாக்களும் அறியாத அந்நியதேவர்களைச்சே
௭ விப்போம் வாருங்களென்றுசொல்லி,—உன்மா
தாவின் புத்திரராகிய உன்சகோதரராகிலும், உன்
புத்திரனாகிலும், உன் புத்திரியாகிலும், உன்மார்
பிலுள்ள உன்மனைவியாகிலும், உன்சிநேகிதனா
௮ கிலும், இரகசியமாய் உன்னையேவினால்,—நீ அ
தற்குச்சம்மதியாமலும், அவர்களுக்குச் செவி
கொடாமலும், அவர்கள்மேலிரக்கக்கண்ணை வை
யாமலும், அவர்களைத்தப்பவிடாமலும், ஒளித்து
௯ வையாமலும்,—அவர்களைக்கொலைசெய்து விட
வேண்டும்; அவர்களைக் கொலைசெய்யும்படி மு
தல் நீயும், பின்பு சகலசனங்களும், அவர்கள்மே
௰ லே கையைவைக்கவேண்டும்.—அடிமைப்பட்டி
ருந்த இடமாகிய எகிப்துதேசத்தினின்றும் உன்
னைப்புறப்படச்செய்த உன் தேவனாகிய யெ
கோவாவை விட்டுவிலக்க வகைதேடினபடி
யால், அவர்கள் மரிக்கும்படி அவர்கள்மேற் கல்
௰௧ லெறியக்கடவாய்.-இஸரவேலர்யாவரும்அதைக்
கேள்விப்பட்டுப்பயந்து, பின்பு உங்களுக்குள்
ளே இப்படிப்பட்ட தீமையைச்செய்யார்கள்.
௰௨ நீ வாசம்பண்ணும்படிஉன் தேவனாகிய யெ
கோவா உனக்களித்த நகரங்களொன்றில்,—
௰௩ பீலியாலின் கெட்டமக்கள் உங்களிடத்தினின்
றும்புறப்பட்டு, உங்களுக்குத்தெரியாத அந்நிய
தேவர்களைச் சேவிப்போம்வாருங்களென்று தங்
கள் நகரத்தாரை வலிந்து ஏவினார்களென்று நீ
௰௪ கேள்விப்பட்டபொழுது,—நன்றாய் விசாரித்துக்
கேட்டாராய்ந்து, அப்படிப்பட்டவெறுப்பான
காரியம் உங்களுக்குள்ளே நடந்தது மெய்மை
௰௫ யும், நிச்சயமுமென்றுகண்டால்,—அந்த நகரத்தா
ரனைவரையும் கட்கத்தின்வாயினாலே வெட்டி,
அதையும், அதிலுள்ளயாவையும், அதின்மிருகங்
களையும், கட்கத்தின் வாயினாலே நிருமூலமாக்
கி,—அதிற் கொள்ளையிட்டபொருள் யாவையும் ௰௬
அதின் நடுவீதியிலே கூட்டி, உன் தேவனாகிய
யெகோவாவுக்கென்று அந்த நகரத்தையுங்
கொள்ளையிடப்பட்ட அந்தப்பொருள் யாவை
யும் முழுவதும் அக்கினியிலெரிக்கக்கடவாய்:
அது என்றைக்கும்மேடாயிருக்கக்கடவது; அது
திரும்பவும் உண்டாக்கப்படலாகாது.—மேலும், ௰௭
சபிக்கப்பட்டபொருளிலொன்றும்உன்கையிலி
ருக்கவேண்டாம்: இப்படிநான் இன்று உனக்கு
விதிக்கிற தேவனாகிய யெகோவாவின்கட்
டளைகள் யாவையும், நீ காத்துக்கொண்டு, உன்
தேவனாகிய யெகோவாவின் பார்வைக்குச்
செவ்வையானதைச் செய்யும்படி அவருடைய
வாக்குக்குச்செவிகொடுப்பாயானால்,-யெகோ ௰௮
வா தமது உக்கிரகோபத்தைத்தணித்து, உனக்
குத்தயைசெய்து, உன்மேலிரங்கி, தாம் உன் பி
தாக்களுக்கு ஆணையிட்டபிரகாரம் உன்னை வி
ருத்தியடையப்பண்ணுவார்.

## ௰௪. அதிகாரம்.

௧. மரித்தோரினிமித்தம் சரீரத்தைச்சேதிக்கலாகா
தெனல்: ௩. சுசி அசுசியான மிருகங்களைக்கு
றித்தல்: ௯. சுசியும் அசுசியுமான நீர்வாழ்வன
வற்றைக்குறித்தல்: ௨௧. பத்தாம்பாகமுதலிய
வைகளைக்குறித்தல்.

நீங்கள் உங்கள் தேவனாகிய யெகோவாவுக் ௧
குப்பரிசுத்தசனங்கள்: பூமியெங்குமுள்ள சகல
சாதியாருக்குள்ளும் உங்களையே யெகோவா
தமக்குரிய விசேஷ சனமாகத் தெரிந்துகொண்
டார்.-உங்கள் தேவனாகிய யெகோவாவின் ௨
பிள்ளைகளாகிய நீங்கள் மரித்தோர்நிமித்தம் உங்
கள்சரீரத்தைச்சேதிக்கவேண்டாம், உங்கள்கண்
களுக்கிடையிலே சௌரம்பண்ணவும் வேண்
டாம்.
அருவருப்பானதொன்றையும் புசிக்கவேண் ௩
டாம்.-நீங்கள் புசிக்கத்தக்கமிருகங்களாவன: மா ௪
டும், செம்மறியாடும்,—வெள்ளாடும், மானும், புல் ௫
வாயும், கலையும், மலையாடும், புள்ளிமானும், ச
ருகுமானும், காட்டாடும்,—மிருகங்களில், கவை ௬
யடியிருப்பவைகளுமாய், இருபிளவான குளம்
புள்ளவைகளுமாய், இரைமீட்கிறவைகளுமாயி
ருக்கிற சகல மிருகங்களையும், நீங்கள் புசிக்க
லாம்.—இரைமீட்கிறவைகளுக்குள்ளும், கவை ௭
யடியுள்ளவைகளுக்குள்ளும் ஒட்டகமும், முய
லும், குழிமுயலும் இரைமீட்டும், இரண்டுபிள
வாயிருக்கிற குளம்பில்லாதபடியால் அவைக
ளைப்புசிக்கலாகாது; அவைகள் உங்களுக்கு அ
சுத்தமாயிருக்கும்.—பன்றிக்கும் இரண்டுபிளவா ௮
யிருக்கிற குளம்பிருந்தும் இரைமீளாதிருக்கிறப

(௬) அதி.௰௮.௨௰. எரே.௰௪.௰௫. சக.௰௩.௩. அதி.௰௭.௭. ௧.கொரி.௫.௰௩. (௭) ஆதி.௰௬.௫. நீதி.௫.௨௰. மீகா.௭.௫. ௧.சாமு.௰௮.௧,௩. (௮) நீதி.௧.௰. (௯) அதி.௰௭.௫. அதி.௰௭.௭. (௰௧) அதி.௰௯.௨௰. (௰௨) யோசு.௨௨.௰௧,. நியா. ௨௰.௧,௨. (௰௩) நியா.௰௯.௨௨. ௧.சாமு.௨.௰௨. ௧.இரா.௨௧.௰,௰௩. ௨.கொரி.௬.௰௫. ௧.யோவா.௨.௰௯. யூதா.௰௯. ௨.இரா.௰௭.௨௧. வச.௨,௭. (௰௫) யாத்.௨௨.௨௰. யோசு.௬.௰௭,௨௧. (௰௬) யோசு.௬.௨௪. யோசு.௮.௨௮. எசா.௰௭.௧. எரே.௪௯.௨. (௰௭) யோசு.௬.௰௮. (௰௮) யோசு.௬.௨௬. ஆதி.௨௨.௰௭. ஆதி.௨௬.௫,௨௪. ஆதி.௨௮.௰௪.— (௰௪. அதி. ௧.) லேவி.௨௰.௨௬. (௨) ரோ.௮.௰௬. கலா.௩.௨௬. லேவி.௰௯.௨௮. எரே.௰௬.௬. ௧.தெச.௪.௰௩. (௩) எசேக்.௪.௰௪. அப்.௰.௰௩,௰௪. (௪) லேவி.௰௧.௨. (௮) லேவி.௰௧.௨௬,௨௭.

டியால்அதுவும் உங்களுக்கு அசுத்தமாயிருக்கும்:
இவைகளின்மாமிசத்தைப்புசியாமலும், இவைக
ளின்பிணங்களைத்தொடாமலும் இருப்பீர்களாக.
௯ நீர்வாழ்வனவெல்லாவற்றுள்ளுஞ்சிறகும்,செதி
ளுமுள்ள எவைகளையும் நீங்கள்புசிக்கலாம்.—
௰ சிறகுஞ்செதிளுமில்லாத யாதொன்றையும் புசிக்
கலாகாது. அதுஉங்களுக்குஅசுத்தமாயிருக்கும்.-
௰௧ சுத்தமானபட்சிகள் யாவையும் புசிக்கலாம்.—
௰௨ கழுகும், கருடனும்,கடலூராஞ்சியும்,பருந்தும்,
௰௩ வல்லூறும்,—எவ்வகையானதயாப்பட்சியும்,எவ்
௰௪ வகையான காகங்களும், பெரும்புள்ளும்,-கரு
௰௫ வாலியும்,செம்போத்தும்,—எவ்வகையானஆள்
௰௬ காட்டியும்,—ஆந்தையும், கோட்டானும், நீர்க்
௰௭ கோழியும்,—நாரையும், கூகையும், சகோரப்பட்
௰௮ சியும்,—கொக்கும், எவ்வகையானஇராசாளியும்,
புழுக்குற்றியும்,துரிஞ்சிலுமாகிய இவைகளைநீங்
௰௯ கள் புசிக்கலாகாது.—மேலும் பறக்கிற ஊர்வன
யாவும் உங்களுக்கு அசுத்தமாயிருக்கும்: அவை
௨௰ கள் புசிக்கத்தகாதவைகள்.—சுத்தமான பறவை
கள் யாவையும் நீங்கள்புசிக்கலாம். நீங்கள் உங்
கள் தேவனாகிய யெகோவாவுக்குப்பரிசுத்த
சனங்களானபடியால், வலிய இறந்ததொன்றை
யும் புசிக்கவேண்டாம்.
௨௧ உங்கள்வாசல்களிலுள்ள பரதேசிக்கு அதைப்
புசிக்கக்கொடுக்கலாம்; அந்நியனுக்கு அதைவிற்
றுப்போடலாம். தாயின்பாலிலே வெள்ளாட்டுக்
௨௨ குட்டியைப்பாகம்பண்ணவேண்டாம்.—நீ உன்
தேவனாகிய யெகோவாவுக்கு எப்பொழு
தும் பயப்படவேண்டுமென்று உணரும்பொ
ருட்டு, வருஷந்தோறும் நீ விதைக்கும் விதைப்
பினாலே வயல்விளையும் பலனெல்லாவற்றிலும்
௨௩ பத்திலொருபாகத்தையெடுத்து,—உன் தேவனா
கிய யெகோவா தமது நாமத்தை ஸ்தாபிக்
கும்படிதெரிந்துகொள்ளும் ஸ்தானத்தில் அவரு
டைய சந்நிதியில் உன்தானியத்திலும், திராட்ச
ரசத்திலும், எண்ணெயிலும், பத்திலொருபாகத்
தையும், உன் ஆடுமாடுகளின் தலையீற்றுக்களை
௨௪ யும், புசிப்பாயாக.—உன் தேவனாகிய யெ
கோவாஉன்னை ஆசீர்வதிக்குங்காலத்தில், யெ
கோவா தமதுநாமத்தை ஸ்தாபிக்கும்படி தெ
ரிந்துகொண்டஸ்தலம் உனக்கதிகதூரமாயிருந்
தாலும், பிரயாணவழிநெடுந்தூரமாயிருந்தாலும்,
நீ அவைகளைக்கொண்டுபோகக்கூடாதிருக்குமா
௨௫ னால்,—அவைகளைப் பணமாக்கிப் பணமுடிப்
பை உன் கையிலெடுத்துக்கொண்டு, உன் தே
வனாகிய யெகோவா தெரிந்துகொண்டஸ்
௨௬ தலத்திற்குப்போய்,-அங்கே மனவிருப்பத்தின்ப
டி ஆடுமாடு, திராட்சரசம், மதுபானம், முதலான
உன் ஆத்துமம்விரும்புகிற எவைகளையும், பணத்
துக்குவாங்கி உன் தேவனாகிய யெகோவா
வின்சந்நிதியில் நீயும், உன்குடும்பத்தாரும், உன்
வாசல்களிலுள்ள லேவியரும் புசித்துச் சந்தோ
ஷப்படுவீர்களாக.—உன் வாசல்களிலுள்ள லே ௨௭
வியனுக்கு உன்னோடேபாகமுஞ் சுதந்தரமுமில்
லாதபடியால் அவனைக் கைவிடாதிரு.—மூன் ௨௮
றும்வருஷத்தில் உனக்குவந்தபலனெல்லாவற்றி
லும் பத்திலொருபாகத்தையெடுத்து, அவ்வரு
ஷத்தின் முடிவில் உன் வாசல்களில் வைக்கக்
கடவாய்.—அப்பொழுது நீ செய்துவருகிறஉன் ௨௯
கைத்தொழில்கள் யாவற்றிலும் உன் தேவனாகி
ய யெகோவா உன்னை ஆசீர்வதிக்கும்பொ
ருட்டு, லேவியருக்கு உன்னுடனேபாகமுஞ்சு
தந்தரமுமில்லாதபடியால் அவர்களும், உன் வா
சல்களிலுள்ள பரதேசியும், அநாதபிள்ளையும்,வி
தவையும்வந்துபுசித்துத்திருத்தியடைவார்களாக.

## ௰௫. அதிகாரம்.

௧. கடனைக்குறித்துவிடுதலைபெறும் வருஷம்: ௭. அதினாற்கடன்கொடுப்பதற்குப் பின்வாங்கப்படாதெனல்: ௰௨. ஏழாம்வருஷத்தில் அடிமைகள் விடுதலைபெறவேண்டுமெனல்: ௰௯. மிருகசீவன்களின் தலையீற்றுக்கள் யெகோவாவுக்கு ஒப்பிக்கப்படக்கட்டளையிடல்.

ஏழாம்வருஷத்தின்முடிவிலே ஒருவிடுதலைபண் ௧
ணுவீர்களாக.—விடுதலையின் விபரமாவது: பிற ௨
னுக்குக்கடன்கொடுத்தவன் எவனோ அவன் யெ
கோவாவின் நிமித்தம் விடுதலையென்று கூறிய
காலத்தில், அதைத்தன் அயலானிடத்திலாகிலும்
சகோதரனிடத்திலாகிலும் வாங்காமல் விட்டுவி
டக்கடவன்.—பரதேசியிடத்திலே நீவாங்கலாம், ௩
உங்களுக்குள்ளே தரித்திரரிராதபடி, உன் சகோ
தரனிடத்தில் உனக்குவரவேண்டியகடனை உன்
கைகள்விட்டுவிடக்கடவன.-இன்றுநானுனக்கு ௪
விதிக்கிற சகலகட்டளைகளையுங் காத்துக்கொள்
ளும்பொருட்டு, உன் தேவனாகிய யெகோ
வாவின்வாக்கைச் சாவதானமாய்க் கேட்பாயா
னால்,-உன் தேவனாகிய யெகோவாஉனக்கு ௫
ச்சுதந்தரமாய் அளிக்குந்தேசத்தில்,அவர்உன்னை
அதிகமாய்ஆசீர்வதிப்பார்.-உன் தேவனாகியயெ ௬
கோவா உனக்கு வாக்குத்தத்தமருளிய பிரகா
ரம் உன்னைஆசீர்வதிப்பதினால், நீ அநேகசாதியா
ருக்குக்கடன்கொடுப்பதேயொழியக்கடன்வாங்
கமாட்டாய்; நீ அநேகசாதியாரைஆளுவதேயொ
ழிய, அவர்கள் உன்னை அரசாளமாட்டார்கள்.
உன்தேவனாகியயெகோவாஉனக்களிக் ௭
குந்தேசத்தின் எந்தவாசலிலும்,உங்கள் சகோதர
ருக்குள்ளேதரித்திரனொருவனிருந்தால்,நீதரித்தி
ரனாகியஉன்சகோதரனுக்குஉன்னிருதயத்தைக்க
டினமாக்காமலும்,உன்கையைப்பொத்திக்கொள்

(௯) லேவி.௰௧.௯. (௰௨) லேவி.௰௧.௰௩. (௰௯) லேவி.௰௧.௨௰. லேவி.௰௧.௨௧. (௨௰) லேவி.௰௭.௰௫. (௨௧) யாத். ௨௩.௰௯. (௨௨) லேவி.௨௭.௩௰. நெகே.௰.௩௭. (௨௩) அதி.௰௨.௫,௬,௭. அதி.௰௫.௰௯,௨௰. (௨௪) அதி.௰௨.௨௧. (௨௬) அதி.௰௨.௭,௰௮. (௨௭) அதி.௰௨.௰௨,௰௮,௰௯. எண்.௰௮.௨௰. (௨௮) அதி.௨௬.௰௨. ஆமோ.௪.௪. (௨௯) அதி.௨௬.௰௨. வச.௨௭. அதி.௰௫.௰. நீதி.௩.௯,௰.—(௰௫. அதி. ௧.) யாத்.௨௧.௨. லேவி.௨௫.௨,௪. எரே.௩௪.௰௪. (௩) அதி.௨௩.௨௰. (௪) அதி.௨௮.௧. (௫) அதி.௨௮.௮. (௬) அதி.௨௮.௰௨,௪௪. அதி.௨௮.௰௪. நீதி.௨௨.௭. (௭) ௧.யோவா.௩.௰௭.

௮ ளாமலும்,—அவனுக்குஉன்கையை நன்ருய்விரித்
து, அவனுடைய அவசியத்திற்கு வேண்டியபடி,
௯ அவனுக்குக் கடன்கொடுப்பாயாக.—விடுதலைவ
ருஷமாகிய ஏழாம்வருஷம் சமீபித்ததென்கிற
எண்ணம் தீமையான உன்னிருதயத்திலுண்டா
காதபடிக்கும், தரித்திரனுகிய உன் சகோதரனுக்
குக்கொடாமல் மறுத்து, அவன்மேற் குரூரபார்
வைவையாதபடிக்கும், அவன் உன்னைக்குறித்து
யெகோவாவைநோக்கி, ஓலமிடாதபடிக்கும்,
எச்சரிக்கையாயிரு: இல்லாதிருந்தால் உனக்குப்
௰ பாவம்வரும்.—அவனுக்குக்கொடுக்கவே வேண்
டும், இதற்காகஉன் தேவனுகியயெகோவா
உன் சகலகிரியைகளிலும், உன்கைத்தொழில்
யாவற்றிலும், உன்னையாசீர்வதிப்பார்: ஆதலால்
௰௧ கொடுக்கும்போது மனவிசனப்படாதிரு.—உன்
தேசத்திலே தரித்திரரில்லாதிருப்பதில்லை: ஆத
லால் உன்தேசத்திலுள்ள தரித்திரனும், முட்டுள்
ளவனுமாகிய உன்சகோதரனுக்கு உன்கையை
நன்ருய் விரிக்கவேண்டுமென்று உனக்குக்கட்
டளையிடுகிறேன்.
௰௨ உன்சகோதரனுகிய எபிரேயனுகிலும், எபிரே
யஸ்திரியாகிலும், தன்னை உனக்குவிற்ருல், ஆ
றுவருஷம் உனக்கு ஊழியஞ்செய்யவேண்டும்;
ஏழாம்வருஷத்தில் அவன் விடுதலைபெற்றுப்போ
௰௩ கவிட்டுவிடவேண்டும்.—அவன் விடுதலைபெற்
றுப்போக விடும் பொழுது, அவனை வெறுமை
௰௪ யாய்ப் போகவிடாமல்,—உன் தேவனுகிய
யெகோவா உனக்குஅருளிய ஆசீர்வாதத்தின்
படி ஆட்டுக்கிடையிலும், உன்களஞ்சியத்திலும்,
உன் ஆலையிலும், சிலவற்றையெடுத்து உதார
௰௫ மாய்க் கொடுத்தனுப்பவேண்டும்.—நீ எகிப்து
தேசத்தில் அடிமையாயிருந்ததையும், உன் தேவ
னுகிய யெகோவா உன்னை மீட்டுக்கொண்
டதையும், நீ நினைக்கும்பொருட்டு, இன்றுநான்
இந்தக் காரியத்தை உனக்குக் கட்டளையிடுகி
௰௬ றேன்.—அவனுன்னிடத்தில்நன்மைபெற்று, உன்
னையும் உன் குடும்பத்தாரையும் நேசிப்பதினுல்,
நானுன்னைவிட்டுப்போகமாட்டேனென்று உன்
௰௭ னுடனே சொன்னுல்,—நீ அவனுடையகாதைக்
கதவிலே சேர்த்து ஒரு கம்பியினுற்குற்றுவாயாக,
பின்பு அவன்என்றைக்கும்உனக்குஅடிமையாயி
ருக்கக்கடவன். உன் அடியாளுக்கும்அப்படியே
௰௮ செய்யக்கடவாய்.—அவன் ஆறுவருஷம் உனக்கு
ஊழியஞ்செய்தபடியாலிரண்டு கூலிக்காரருக்கு
ஒப்பாயிருப்பான்; அவன் விடுதலைபெற்றுப்போ
கவிடும்பொழுது, நீவிசனப்படவேண்டாம்: இப்
படி உன் தேவனுகிய யெகோவா நீசெய்யு
மெல்லாவற்றிலுமுன்னை ஆசீர்வதிப்பார்.
௰௯ உன் ஆடுமாடுகளிலே தலையீற்ருண்கள் யா
வையும் உன் தேவனுகிய யெகோவாவுக்
கென்று பரிசுத்தப்படுத்தவேண்டும்: உன்மாட்
டின் தலையீற்றை வேலைகொள்ளாமலும், உன்
தலையீற்ருட்டின் மயிரைக் கத்தரியாமலும்,—
யெகோவாதெரிந்தேற்படுத்தும் ஸ்தலத்தில்வ ௨௰
ருஷந்தோறும்நீயும் உன்குடும்பத்தாரும் உன்தே
வனுகிய யெகோவாவின்சந்நிதியில் அவை
களைப்புசிக்கக்கடவீர்கள்.—அதற்கு முடம்,குரு ௨௧
டு, முதலிய தீதானதோஷமிருந்தால், அதை உன்
தேவனுகிய யெகோவாவுக்குப்பலியிடவே
ண்டாம்.-அப்படிப்பட்டதை நீ உன் வாசல்களி ௨௨
லே, கலைமானைப்போலவும், புல்வாயைப்போல
வும், புசிக்கலாம்: அசுசியானவனும் சுசியானவ
னும்அதைப்புசிக்கலாம்.—அதினிரத்தத்தைமாத்தி ௨௩
ரம் புசிக்கவேண்டாம்; சலத்தைப்போல அதைத்
தரையில் ஊற்றிவிடக்கடவாய்.

## ௰௬. அதிகாரம்.

௧. பஸ்கா உற்சவம்: ௯. எழுவார உற்சவம்: ௰௩. கூடார உற்சவம்: ௰௬. வருஷந்தோறும் இம்மூன்றுற்சவங்களில் ஆண்மக்கள் யாவரும் நிவேதனஞ்செய்யக்கட்டளையிடல்: ௰௮. நியாயாதிபதிகளைக்குறித்தல்: ௨௧. சோலையையும் விக்கிரகங்களையும் ஸ்தாபியாமல் விலக்கல்.

ஆபீப்மாதத்தில் இராத்திரிகாலத்தில் உன் தே ௧
வனுகிய யெகோவா உன்னை எகிப்தினின்
றும் புறப்படச்செய்ததினுல், ஆபீப்மாதத்தைம
தித்து, அதில் உன்தேவனுகிய யெகோவா
வுக்குப்பஸ்காஉற்சவத்தையாசரிக்கக்கடவாய்.-
யெகோவா தமதுநாமத்தை ஸ்தாபிக்கும்படி ௨
தெரிந்துகொள்ளும் ஸ்தலத்தில், உன் தேவனு
கிய யெகோவாவுக்குப் பஸ்காவின் பலியா
கிய ஆடுமாடுகளைப்பலியிடுவாயாக.—நீ எகிப்து ௩
தேசத்தினின்றும்புறப்பட்டதினத்தை உன்வாழ்
நாள்முழுவதும் நினைக்கும்படி, நீ எகிப்துதேசத்
தினின்றுந் தீவிரமாய்ப்புறப்பட்டதைக்குறித்து
அத்துடன் புளிப்புள்ள அப்பத்தைப்புசியாமல்,
துக்கத்தின் அப்பமாகிய புளிப்பில்லாத அப்பத்
தைஎழுநாளளவும்அதினுடன்புசிக்கக்கடவாய்.-
புளிப்புள்ள அப்பம் எழுநாளளவும் உன் எல்லை ௪
யெங்கும் உன்னிடத்திற் காணப்பட வேண்
டாம்; நீமுதனுள்சாயங்காலமிட்டபலியின்மாமி
சத்தில் எதாகிலும் இராமுழுவதும் உதயகாலம்வ
ரைக்கும்சேஷித்திருக்கப்படாது.—உன் தேவ ௫
னுகியயெகோவா உனக்களிக்கும்வாசல்களெ
திலும் நீ பஸ்காவையடிக்கவேண்டாம்.—உன் ௬
தேவனுகிய யெகோவா தமது நாமத்தைஸ்
தாபிக்கும்படி தெரிந்தேற்படுத்தும்ஸ்தலத்திலே,
நீ எகிப்தினின்றும் புறப்பட்டநேரமாகியசாயங்
காலத்திலேசூரியன் அஸ்தமிக்கிறபொழுது பஸ்

(௮) லேவி,௨௫.௩௫. மத்.௫.௪௨. (௯) அதி.௨௮.௫௪,௫௭. நீதி.௨௩.௬. மத்.௨௰.௰௫. அதி.௨௪.௰௫. மத்.௨௫.௪௧, ௪௨. (௰) ௨.கொரி.௯.௫,௭. அதி.௰௪.௨௯. சங்.௪௧.௧. நீதி.௨௨.௯. (௰௧) மத்.௨௬.௰௧. யோவா.௰௨.௮. (௰௨) யாத்.௨௧.௨. எரே.௩௪.௰௪. (௰௪) நீதி.௰.௨௨. (௰௫) அதி.௫.௰௫. (௰௬) யாத்.௨௧.௫,௬. (௰௯) யாத்.௰௩.௨. (௨௰) அதி.௰௨.௫,௬,௭. (௨௧) லேவி.௨௨.௨௰. (௨௨) அதி.௰௨.௰௫,௨௨. (௨௩) அதி.௰௨.௰௬,௨௩.—(௰௬. அதி. ௧.) யாத்.௰௨.௨,. யாத்.௰௩.௪. யாத்.௰௨.௨௧,௪௨. (௨) அதி.௰௨.௫,௨௬. (௩) யாத்.௰௨.௰௫,௰௯,௩௯. (௪) யாத்.௰௩.௭. (௬) யாத்.௰௨.௬.

௭ காவை அடித்து,—உன் தேவனாகிய யெகோ
வா தெரிந்தேற்படுத்தும் ஸ்தலத்தில் அதைப்
பொரித்துப்புசித்து,விடியற்காலத்திலே திரும்பி
௮ உன் கூடாரங்களுக்குப்போவாயாக.—நீ ஆறு
நாளும் புளிப்பில்லாத அப்பங்களைப் புசிக்க
வேண்டும்: ஏழாநாள் உன் தேவனாகிய யெ
கோவாவுக்கென்று மகா சபைகூடவேண்டும்:
அதில் எந்தவேலையையுஞ்செய்ய வேண்டாம்.
௯ அரிவரியுந்தினந்தொடங்கி நீ ஏழுவாரங்களை
யெண்ணுவாயாக: இப்படி உன்னிமித்தம் ஏழு
௰ வாரங்களையும் எண்ணுவாயாக.—உன் தேவனா
கிய யெகோவா உன்னை ஆசீர்வதித்தபிரகாரம்
உன்கையினிஷ்டபலியாகிய நைவேத்தியத்தை
உன்தேவனாகிய யெகோவாவுக்குநிவேதித்
து,இப்படியேவார உற்சவத்தை உன்தேவனாகி
யயெகோவாவுக்கென்றுஆசரிக்கக்கடவாய்.-
௰௧ உன்தேவனாகிய யெகோவாதமது நாமத்
தைஸ்தாபிக்கும்படி தெரிந்தேற்படுத்தும் ஸ்தலத்
தில் நீயும் உன் புத்திரனும், புத்திரியும், பணிவி
டைக்காரனும், பணிவிடைக்காரியும், உன் வா
சல்களிலுள்ள லேவியரும், பரதேசியும், உங்க
ளுக்குள்ளிருக்கிற அநாதபிள்ளையும், விதவை
யும் உன் தேவனாகிய யெகோவாவின்சந்நி
௰௨ தியிற் சந்தோஷப்பட்டு,—நீ எகிப்தில் அடிமை
யாயிருந்ததை நினைத்து, இந்த விதிகளையனுசரித்
து அவைகளின்படி செய்யக்கடவாய்.
௰௩ நீ உன்தானியபலத்தையும், திராட்சபலத்தை
யுஞ் சேர்த்தபின்பு ஆவாச உற்சவத்தை ஏழுநா
௰௪ ளாசரித்து,—உன்னுற்சவத்தில் நீயும் உன் புத்திர
னும், புத்திரியும், பணிவிடைக்காரனும், பணிவி
டைக்காரியும், உன் வாசல்களிலுள்ள லேவிய
னும்,பரதேசியும்,அநாதபிள்ளையும், விதவையுஞ்
௰௫ சந்தோஷப்படக்கடவீர்கள்.—உன் தேவனாகி
ய யெகோவா உன் சகலவிருத்தியிலும்,உன்
கைத்தொழில்யாவற்றிலும், உன்னை ஆசீர்வதித்
தபடியால்,நீயெகோவா தெரிந்தேற்படுத்தும்
ஸ்தலத்தில் உன் தேவனாகிய யெகோவா
வுக்கு ஏழுநாள் உற்சவத்தை ஆசரித்து, அவசிய
மாய்ச்சந்தோஷமாயிருப்பாயாக.
௰௬ வருஷத்தில் மூன்றுதரம், புளிப்பில்லாத அப்
ப உற்சவத்திலும், வார உற்சவத்திலும், கூடார
உற்சவத்திலும், உன்ஆண்மக்களெல்லாரும் உன்
தேவனாகிய யெகோவா தெரிந்தேற்படுத்
தும் ஸ்தலத்தில் அவருடையசந்நிதியில் வெளிப்
௰௭ படக்கடவர்கள்.—அவர்கள் யெகோவாவின்
சந்நிதியில் வெறுங்கையுடனே காணப்படவே
ண்டாம்: உன் தேவனாகிய யெகோவா உ
னக்கருளிச்செய்த ஆசீர்வாதப்படி, ஒவ்வொரு

வனுந் தன்னாலியன்றளவு கொடுக்கவேண்டும்.
உன் தேவனாகிய யெகோவா உனக்களித் ௰௮
தவாசல்கள்தோறும், உன் கோத்திரங்களுக்கு நி
யாயாதிபதிகளையும், தலைவர்களையும் ஏற்படுத்து
வாயாக: அவர்கள்நீதியுடன் சனங்களுக்கு நியா
யத்தீர்ப்புச் செய்யக்கடவர்கள்.—நியாயத்தைப் ௰௯
புரட்டாதிருப்பாயாக; முகம்பார்க்கவும் படா
து; பரிதானம்வாங்கவும்வேண்டாம்; பரிதானம்
ஞானவான்களுடைய கண்களைக்குருடாக்கி, நீ
திமான்களுடைய மொழிகளைப் புரட்டும்.—நீசீ ௨௰
வித்து, உன் தேவனாகிய யெகோவா உனக்
களித்ததேசத்தைச்சுதந்தரித்துக்கொள்ளும்படி நீ
தியையே பின்பற்றுவாயாக.
நீ உன் தேவனாகிய யெகோவாவுக்குஉண் ௨௰௧
டாக்கும் வேதிகையின்சமீபத்தில்யாதொருமரச்
சோலைவைக்கவேண்டாம்.—உன் தேவனாகிய ௨௰௨
யெகோவாவெறுக்கிற யாதொருசிலையையும்
ஸ்தாபிக்கவும் வேண்டாம்.

## ௰௭. அதிகாரம்.

௧. பலிகள்நிர்த்தோஷமாயிருக்கவேண்டுமெனல்:
௨. விக்கிரகாராதனைக்காரரைக்கொலைசெய்யக்
கட்டளையிடல்: ௮. ஆசாரியரும் நியாயாதிபதி
களும் கடினவழக்குகளை விசாரிக்கக்கட்டளை
யிடல்: ௰௨. அவர்களிடுந்தீர்ப்பை விரோதித்த
வர்களைக்கொலைசெய்யக் கட்டளையிடல்: ௰௪.
இராசாவை ஏற்படுத்தும்விதியையும்அரசாட்சி
செய்யும் விதியையுந்தெரிவித்தல்.

தோஷமும் அவலட்சணமுமுள்ள ஆடுமாடு ௧
களை உன் தேவனாகிய யெகோவாவுக்குப்
பலியிடவேண்டாம்: அவை உன் தேவனாகிய
யெகோவாவுக்கு அருவருப்பானவைகள்.
உன் தேவனாகிய யெகோவா உனக்க ௨
ளிக்கும்எந்தவாசல்களிலும்ஒருபுருஷனாவது,ஸ்
திரியாவது, நான்விலக்கிய சூரியன் சந்திரன் மு
தலான வானத்துச்சேனைகளாகிய அந்நிய தெய்
வங்களைச்சேவித்து, நமஸ்கரித்து, இப்படி உன்
தேவனாகிய யெகோவா அருளிய உடன்ப
டிக்கையைமீறி, அவருடைய சமுகத்திற்பாவஞ்
செய்திருக்கக்கண்டு,-அதைஉனக்கறிவித்தால்,நீ ௩
கேள்விப்பட்டவுடனே அதைநன்றாய் விசார
ணைபண்ணவேண்டும்.—அந்த அருவருப்பான ௪
காரியம் இஸரவேலருக்குள்ளே நடந்தது மெய்
மையும்,நிச்சயமுமென்றறிந்தால்,—அந்தத்துர்க் ௫
கருமத்தைச்செய்யும் புருஷனையாயினும், ஸ்திரீ
யையாயினும், உன்வாசலுக்குப்புறம்பேகொண்
டுபோய்ச்சாகும்படி கல்லெறியக்கடவாய்.—சா ௬
கத்தக்க குற்றவாளி இரண்டுமூன்று சாட்சிகளி
னாலே கொலையுண்ணக்கடவன்: ஒரே சாட்சி

(௭) யாத்.௰௨.௮,௯. ௨.இரா.௨௩.௨௩. யோவா.௨.௰௩,௨௩. யோவா.௰௧.௫௫. (௮) லேவி.௨௩.௮. லேவி.௨௩.௩௬. (௯) யாத்.௨௩.௰௫. லேவி.௨௩.௰௫. அப்.௨.௧. (௰) ௧.கொரி.௰௬.௨. (௰௩) யாத்.௨௩.௰௬. (௰௪) நிகி.௮.௯,. (௰௫) லேவி.௨௩.௩௯,௪௰. (௰௬) யாத்.௨௩.௰௪,௰௭. (௰௭) யாத்.௩௪.௨௰. ௨.கொரி.௮.௰௨. (௰௮) ௧.நாளா.௨௩.௪. (௰௯) யாத்.௨௩.௨,௮. நீதி.௨௪.௨௩. நீதி.௰௭.௨௩. பிர.௭.௭. (௨௰) எசேக்.௰௮.௫,௯. (௨௰௧) யாத்.௩௪.௰௩. ௧.இரா.௰௪.௰௫. ௨.இரா.௰௭.௰௬. ௨.நாளா.௩௩.௩. (௨௰௨) லேவி.௨௬.௧.—(௰௭. அதி. ௧.) மல்.௧.௮,௰௩,௰௪. (௨) யோபு.௩௧.௨௬. எரே.௭.௨௨,௨௩,௩௧. யோசு.௭.௰௧,௰௫. நியா.௨,௨௰. ஓசி.௮.௧. (௫) லேவி.௨௪.௰௪,௰௬. யோசு.௭.௨௫. (௬) எண்.௩௫.௩௰. மத்.௰௮.௰௬. யோவா.௮.௰௭. ௨.கொரி.௰௩.௧. ௧.தீமோ.௫.௰௯. எபி.௰.௨௮.

யின் வாக்கினால் அவனைக்கொலைசெய்யவேண்
௭ டாம்.-அவனைக்கொலைசெய்யும்படி முன்பு சாட்
சிக்காரருடைய கைகளும், பின்பு சகலசனங்க
ளின்கைகளும் அவன்மேல்வைக்கப்படவேண்
டும்: இப்படியே உங்களிடத்தினின்றுதீமையை
யகற்றிவிடு.
௮ உன்வாசல்களில் வந்திருக்கிறவழக்குகளாகி
ய இரத்தப்பழி, வியாச்சியம், அடி, இவைகளி
லொன்றைக்குறித்து நியாயந்தீர்ப்பது உனக்குக்
கடினமாயிருந்தால், நீ எழுந்துபுறப்பட்டு, உன்
தேவனாகிய யெகோவா தெரிந்தேற்படுத்
௯ தும் ஸ்தலத்துக்குப்போய்,—லேவியரான ஆசா
ரியரிடத்திலும், அந்நாட்களிலிருக்கும்நியாயாதி
பதியினிடத்திலும் விசாரிக்கவேண்டும்: அவர்
கள்நியாயமின்னதென்றுஉனக்கறிவிப்பார்கள்.-
௰ யெகோவா தெரிந்து ஏற்படுத்துமவ்விடத்தி
லிருந்து அவர்களுனக்கறிவிக்குந்தீர்ப்புக்கிணங்
கி, அவர்களுனக்குப்போதிப்ப தெப்படியோ,
௰௧ அப்படியேசெய்யச்சாவதானமாயிரு.-அவர்களு
னக்கு அறிவிக்கும்வாக்கைவிட்டு வலப்புறம்இ
டப்புறஞ் சாயாமல், அவர்களுனக்குணர்த்தும்
பிரமாணத்தின்படிக்கும், உனக்குச்சொல்லும்நி
யாயத்தின்படிக்கும், செய்யக்கடவாய்.
௰௨ அங்கே உன்தேவனாகிய யெகோவாவுக்
கு ஆராதனைசெய்யும்படிநிற்கிற ஆசாரியனுடை
ய சொல்லையாகிலும், நியாயாதிபதியினுடைய
சொல்லையாகிலும்கேளாமல் ஒருவனிடும்புசெய்
தால்,அவன்சாகவேண்டும்:இஸரவேலினின்றுதீ
௰௩ மையையகற்றிவிடு.—அப்பொழுது சனங்களெல்
லாரும் அதைக்கேட்டுப்பயந்து, இனி இடும்பு
செய்யாதிருப்பார்கள்.
௰௪ உன் தேவனாகிய யெகோவா உனக்க
ளிக்குந்தேசத்திலே, நீ சேர்ந்து அதைச் சுதந்த
ரித்துக்கொண்டு அதில் வாசமாயிருக்குங்காலத்
தில்,நீ என்னைச்சூழ்ந்திருக்கிறசகலசாதியாரைப்
போல் நான் என்மேல் ஒரு இராசாவைவைத்துக்
௰௫ கொள்ளவேண்டுமென்பாயானால்,—உன் சகோ
தரரிலொருவனுமாய், உன் தேவனாகிய யெ
கோவா தெரிந்துகொள்பவனுமாயிருக்கிறவ
னையே உனக்கு இராசனாகவைத்துக்கொள்ளக்
கடவாய்: உன்சகோதரனல்லாத அந்நியனை நீ
௰௬ வைத்துக்கொள்ளவேண்டாம்.-மேலும்அவன் அ
நேககுதிரைகளைச்சம்பாதியாமலும், அநேகங்கு
திரைகளைத்தனக்குச்சம்பாதிக்கும்படிசனங்களை
எகிப்துக்கு அனுப்பாமலுமிருக்கக்கடவன். இ
னி அந்தவழியாய் நீங்கள்திரும்பிப்போகவேண்
டாமென்று, யெகோவா உங்களுக்குச்சொன்
௰௭ னாரே.—அவன் அநேகம்ஸ்திரிகளைச் சேரவேண்
டாம்: பொன்வெள்ளிகளைத்தனக்குப்பெருகும்
படிசெய்யலாகாது: அவனுடைய இருதயம்வழு
விப்போகவுங்கூடும்.—அவன்தன் இராசாசனத் ௰௮
தின்மேல் வீற்றிருக்கிறபொழுது, அவனுடைய
இருதயம் அவனுடையசகோதரருக்குமேலுயரா
மலும், இந்தக்கட்டளைகளைவிட்டுவலப்புறமாவ
து, இடப்புறமாவது, சாயாமலும்,—இந்தவேதப் ௰௯
பிரமாணத்தின் சகலவாக்குகளையும், இந்தவிதிக
ளையுங் காத்துக்கொண்டு, இவைகளின்படிசெய்
வதற்காகத்தன் தேவனாகிய யெகோவா
வுக்குப் பயப்படவேண்டுமென்றுணரும்பொரு
ட்டு,—அவன் லேவியராகிய ஆசாரியரிடத்தி ௨௰
லிருக்கிற இந்தவேதநூலைப்பார்த்து, தனக்காக
ஒருபுஸ்தகத்தில் ஒருபிரதியையெழுதி, தன்னி
டத்தில்வைத்துக்கொண்டு, தன்வாழ்நாள் முழு
வதும் அதைப்படித்துக்கொள்ளக்கடவன்: அதி
னால் தானும்,தன் புத்திரரும்,தங்களரசாட்சியை
இஸரவேலர் மத்தியிலேநெடுங்காலம்செலுத்தும்
படி செய்வான்.

## ௰௮. அதிகாரம்.

௧. தேவன்தாம்ஆசாரியருக்கும்லேவியருக்குமு ரிய சுதந்தரமாதல்: ௩. ஆசாரியனுக்குப் பாகம் நிரூபித்தல்: ௬. லேவியருக்குப் பாகம் நிரூபித்தல்: ௯. காணியர்செய்யும் முறைமைகளைப் போற் செய்யாமல் விலக்கல்: ௰௫. கிறிஸ்தென்னுந் தீர்க்கதரிசியை மதிக்கக்கட்டளையிடல்: ௨௰. கள்ளத்தீர்க்கதரிசியைத்தண்டிக்கக் கட்டளையிடல்.

இஸரவேல் சந்ததியாருடன் லேவியாசாரியர் ௧
களுக்கும், லேவியின் கோத்திரத்தார் ஒருவருக்
கும், பாகமுஞ்சுதந்தரமுமில்லை: யெகோவா
வுக்கு அக்கினியிலிடப்படும் நைவேத்தியத்தை
யும், அவருடைய சுதந்தரத்தையும் புசிப்பார்
கள்.—ஆதலால் அவர்களுடைய சகோதரருக் ௨
குள்ளே அவர்களுக்குச் சுதந்தரமில்லை: யெ
கோவா அவர்களுக்குச் சொல்லியபடி அவ
ரே அவர்கள் சுதந்தரம்.
நித்தமும் யெகோவாவின் நாமத்தைக் ௩
கொண்டு ஆராதனைசெய்யும்படிநிற்கும்பொருட்
டு, ஆசாரியனையும், அவன் புத்திரரையும், உன்
தேவனாகிய யெகோவா உன் சமஸ்தகோத்
திரத்தாருக்குள்ளுந் தெரிந்தெடுத்துக்கொண்டப
டியால்,—சனங்கள் பலியிடும் ஆடுமாடுகளில் ௪
முன்னந்தொடை, தாடைகள்,இரைப்பையிவை
களை ஆசாரியனுக்குக்கொடுப்பதுகடன்.—உன் ௫
தானியம், திராட்சரசம்,எண்ணெய்,ஆட்டுரோம
மென்னுமிவைகளில் முதற்பலனையும் அவனுக்
குக்கொடுக்கக்கடவீர்கள்.
இஸரவேலில் எவ்விடத்திலுமுள்ள உன்வா ௬
சல்களில்தங்கும்லேவியன் அவ்விடத்தைவிட்டு

(௭) அப்.௭.௫௮. (௮) ௨.நாளா.௰௯.௯. ஆகா.௨.௰௧. மல்.௨.௭. யாத்.௨௧.௰௩. சங்.௱௨௨.௫. அதி.௰௨.௫. (௯) எரே. ௰௮.௰௮. அதி.௰௯.௰௭. எசேக்.௪௪.௨௪. (௰௨) எண்.௰௫.௩௰. எஸ்ரு.௰.௮. ஓசி.௪.௪. அதி.௰௮.௫,௭. அதி.௰௩.௫. (௰௪) ௧.சாமு.௮.௫. (௰௫) ௧.சாமு.௯.௰௫. ௧.நாளா.௨௨.௰. எரே.௩௰.௨௧. (௰௬) ௧.இரா.௪.௨௬. சங்.௨௰.௭. ஏசா. ௩௧.௧. எசேக்.௰௭.௰௫. யாத்.௰௯.௰௭. எண்.௰௪.௩,௪. அதி.௨௮.௬௮. ஓசி.௰௧.௫. (௰௮) ௨.இரா.௰௧.௰௨. ௧.இரா. ௰௯.௯. (௨௰) யோசு.௧.௮. சங்.௱௰௯.௯௭,௯௮.—(௰௮. அதி. ௧.) எண்.௰௮.௨௰. எண்.௰௮.௭,௯. ௧.கொரி.௯.௰௩. (௩) யாத்.௨௮.௧. அதி.௰.௮. (௫) யாத்.௨௨.௨௯. (௬) எண்.௩௫.௨,௩.

மனப்பூரணமாய் யெகோவா தெரிந்துகொண்
எ டஸ்தலத்துக்குவந்தால்,—அங்கே யெகோவா
வின் சந்நிதியில்நிற்கும் லேவியராகியதனதெல்
லாச்சகோதரரையும்போலத்தானுந்தன்தேவ னு
கிய யெகோவாவினுடையநாமத்தைக்கொண்
அ டு ஆசாரியத்தொண்டுசெய்வான்.—அவர்கள்தங்
கள்பிதாக்களின் ஆஸ்தியைவிற்ற கிரயத்தைமாத்
திரமன்றி, புசிக்கச்சமமான பாகத்தையும் பெற்
றுக்கொள்வார்கள்.
கூ உன் தேவனுகிய யெகோவா உனக்க
ளிக்குந்தேசத்திற்போய்ச்சேரும்பொழுது, அவ்
விடத்துச் சாதியார்செய்யும் அருவருப்பானகிரி
ω யைகளைச் செய்யப்பயிலவேண்டாம்.—தன்புத்
திரர் புத்திரிகளை அக்கினியின்மத்தியிற்செல்லப்
பண்ணுகிறவனும், மாயாவியும், யோசியனும்,
மோகனஞ்செய்பவனும், மாந்திரிகனும், விடகா
ωக ரியும்,-சன்னதகாரனும்,சித்தனும்,பேய்வித்தைக்
காரனும் உங்களுக்குள்ளேயிருக்கவேண்டாம்.-
ωஉ இப்படிப்பட்ட கிரியைகளைச் செய்கிறவர்களை
யெகோவா வெறுக்கிறார்: இப்படிப்பட்ட அ
ருவருப்பானவைகளினிமித்தம் உன் தேவனு
கிய யெகோவா உன் முன்னிலையினின்றும்
ωக அவர்களைத்துரத்திவிடுகிறார்.—உன் தேவனுகிய
யெகோவாவுக்குமுன்பாகப் பூரணசற்குண
ωச னயிருக்கக்கடவாய்.—நீ வசப்படுத்தும் இந்தச்சா
தியார் யோசியருக்கும், மாயாவிகளுக்குஞ்செவி
கொடுத்தார்கள்:நீஅப்படிச்செய்வதற்குஉன் தே
வனுகிய யெகோவா உனக்கிடங்கொடார்.
ωரு உன் தேவனுகிய யெகோவா உன்னி
மித்தம் உன் சகோதரருக்குள்ளே என்னைப்போ
ல ஒரு தீர்க்கதரிசியை உன் மத்தியினின்றும்
எழும்பப்பண்ணுவார்; அவருக்கே செவிகொ
ωசு டுங்கள்.—நீ ஓரேபிலே சபைகூடினதினத்தில் நா
னிறந்துபோவேன், ஆதலால் இனி என் தேவ
னுகிய யெகோவாவின் வாக்கைக்கேளாம
லும், இந்தப்பெரிய அக்கினியை இனிக்காணா
லும், அருளவேண்டுமென்று, உன் தேவனுகிய
யெகோவாவுக்கு நீ செய்த சமஸ்தபிரார்த்த
ωஎ னைகளினாலும்,—யெகோவா என்னைநோக்கி,
ωஅ அவர்கள்சொல்லியவாக்குநல்லது.—நான் அவர்
கள்நிமித்தம் அவர்களுடைய சகோதரரிலிருந்து
உன்னைப்போல ஒருதீர்க்கதரிசியை எழும்பப்
பண்ணி, என்னுடையவாக்குகளை அவருடைய
வாயில் இடுவேன்; அவர் தமக்கு நான்விதிக்கு
மனைத்தையும் அவர்களுக்குச் சொல்லுவார்.—
ωகூ என்னுமத்தைக்கொண்டு அவர்சொல்லும் என்
வாக்குகளுக்குச்செவிகொடாதவனை நான்விசா
ரிப்பேன்.
உω நான்விதியாதவைகளைஎன்னுமத்தைக்கொண்
டுசொல்லத்துணியும் தீர்க்கதரிசியும், அந்நியதே
வர்களுடைய நாமத்தைக்கொண்டு சொல்லுந்
தீர்க்கதரிசியுஞ் சாகவேண்டுமென்றார்.—யெ உக
கோவா சொல்லாதவாக்குஇன்னதென்றுநான்
எப்படியறிவேனென்றுஉன்னிருதயத்திற்சிந்தித்
தால்,—ஒரு தீர்க்கதரிசி யெகோவாவுடைய உஉ
நாமத்தைக்கொண்டு சொல்லுங்காரியம் நடவா
மல், அபத்தமாய்முடிந்தால் அவ்வாக்கு, தீர்க்கத
ரிசி துணிவினாற் சொன்னதேயன்றி யெகோ
வா சொன்னதல்ல:அவனுக்குநீபயப்படவேண்
டாம்.

## ωகூ. அதிகாரம்.

க. அடைக்கலநகரங்களை நியமித்தல்: ச. கொலை
செய்தவன் அவைகளில் அடைக்கலம்புகுதல்:
ωச. எல்லையினடையாளங்கள் மாற்றப்படா
தெனல்: ωரு. இரண்டுசாட்சிகளினால் நியாயத்
தீர்ப்புப்பண்ணக்கட்டளையிடல்: ωசு. பொய்ச்
சாட்சிக்காரனைத்தண்டிக்கவிதித்தல்.

உன் தேவனுகிய யெகோவா உனக்களிக் க
குந்தேசத்திலுள்ள சாதியாரை உன் தேவனுகி
ய யெகோவா சேதித்தபின், நீஅவர்கள்தேசத்
தைச்சுதந்தரித்துக்கொண்டு, அவர்கள்நகரங்களி
லும், வீடுகளிலும் வாசம்பண்ணுங்காலத்தில்,—நீ உ
உன் தேவனுகிய யெகோவா உனக்குச்சு
தந்தரமாயளிக்கும் அத்தேசத்துமத்தியில் உனக்
காக மூன்றுநகரங்களை யேற்படுத்தவேண்டும்.—
கொலைசெய்தவனெவனுந் தப்பிப்போயிருக்கும் ங
பொருட்டு, நீசுதந்தரிக்க உன் தேவனுகிய யெ
கோவா உனக்களிக்குந் தேசத்தினெல்லைகளை
மூன்றாய்ப்பகுத்து,அதற்கொவ்வொருவழிசெவ்
வைப்படுத்தவேண்டும்.
தான்முன்னே பகைத்திராத பிறனொருவனை ச
அபுத்திபூருவமாய்க்கொன்றபின் அங்கேதப்பிப்
போய்ப்பிழைக்குங் கொலைகாரனுடைய காரிய
மாவது.—ஒருவன் மரந்தறிக்கிறதற்குப் பிறனொ ரு
ருவனுடனே காட்டிற்போய்,மரம்வெட்டக்கை
யிலிருந்த கோடரியை ஓங்கும்பொழுது, கோ
டரி கம்பைவிட்டுக் கழன்றுபோய் அவன்மேற்
பட அவன் இறந்துபோனால்; இவனுக்கு அவன்
முற்பகையில்லாதபடியால், இவன்கொலைக்குப்
பாத்திரனல்ல.—இரத்தப்பழிகாரன் மனம்புழுங் சு
கிக்கொலைசெய்தவனைப் பின்றொடர்ந்து, வழித்
தூரத்தினால் அவனைக்கிட்டி அவனைக்கொன்று
போடாதபடிக்கு, இவன் அந்த நகரங்களுக்குள்
ளொன்றில் தப்பிப்போய்ச்சீவிப்பானாக.—ஆத எ
லால் உன்னிமித்தம் மூன்றுநகரங்களை ஏற்ப
டுத்தவேண்டுமென்று உனக்குக்கட்டளை யிடுகி
றேன்.—மேலும், நீ உன் தேவனுகிய யெகோ அ
வாவிடத்திலன்புகூர்ந்து, இடைவிடாதபடி அ

(எ) உ.நாளா.௩க.உ. (அ) உ.நாளா.௩க.ச. நிகி.ωஉ.சச,சஎ. (கூ) லேவி.ωஅ.உஅ. (ω) லேவி.ωஅ.உக. லேவி.ωகூ.
உசு,௩க. ஏசா.அ.ωகூ. (ωக) லேவி.உω.உஎ. க.சாமு.உஅ.எ. (ωஉ) லேவி.ωஅ.உச,உரு. (ω௩) ஆதி.ωஎ.க. (ωரு)
வச.ωஅ. யோவா.க.சரு. அப்.௩.உஉ. அப்.எ.௩எ. (ωசு) யாத்.உω.ωகூ. எபி.ωஉ.ωகூ. (ωஎ) அதி.ரு.உஅ. (ωஅ) வச.
ωரு. யோவா.க.சரு. அப்.௩.உஉ. அப்.எ.௩எ. ஏசா.ருக.ωசு. யோவா.ωஎ.அ. யோவா.ச.உரு. யோவா.அ.உஅ. (ωகூ)
அப்.௩.உ௩. (உω) அதி.ω௩.ரு. எரே.ωச.ωச,ωரு. சக.ω௩.௩. அதி.ω௩.க,உ. எரே.உ.அ. (உஉ) எரே.உஅ.கூ. அதி.
ω௩ உ.—(ωகூ. அதி. க.) அதி.ωஉ.உகூ. (உ) யாத்.உக.ω௩. யோசு.உω.உ. (ச) எண்.௩ரு.ωரு. (சு) எண்.௩ரு.ωஉ.

வர் அருளியவழியே நடக்கும்பொருட்டு, இன்
று நானுனக்குவிதிக்கிற இந்தச் சமஸ்தகட்டளை
௯ களையுங்காத்து நடக்கும்பொழுது,—உன் தேவ
னாகிய யெகோவா, தாம் உன்பிதாக்களுக்கு
ஆணையிட்டபடி உன்னெல்லையை விஸ்தாரமாக்
கி, உன்பிதாக்களுக்கு அளிப்பேனென்றுவாக்
குத்தத்தம் பண்ணினதேசம் முழுவதையும்உனக்
௰ குத்தந்தால்,—இந்த மூன்று நகரங்களையுமன்றி
இன்னும் மூன்றுநகரங்களை ஏற்படுத்திக்கொள்:
அதனால் உன் தேவனாகிய யெகோவா உனக்
குச்சுதந்தரமாயளிக்குந் தேசத்தில்குற்றமில்லாத
இரத்தஞ் சிந்தப்பட்டு உன்னிலிரத்தப்பழி தங்
காது.

௰௧ ஒருவன்பிறனொருவனைப்பகைத்து, அவனைப்
பார்த்துப் பதுங்கியிருந்து, அவனுக்குவிரோதமா
யெழும்பி, அவன்சாகும்படி அவனையடித்து, இந்
நகரங்களிலொன்றில் தப்பிப்போயிருந்தால்,—
௰௨ அந்நகரத்துமுதியோர் ஆளனுப்பி, அங்கேயிருந்
து அவனைக்கொண்டுவரும்படிசெய்து, அவனைக்
கொல்லும்படிக்கு இரத்தப்பழிவாங்குகிறவன்
௰௩ கையிலொப்பிக்கக்கடவர்கள்.—உன்கண் அவன்
மேலிரங்கவேண்டாம்; குற்றமில்லாத இரத்தப்
பழியைஇஸரவேலினின்றுஅகற்றிவிடு: இதனால்
உனக்கு நன்மையுண்டாகும்.

௰௪ உன் தேவனாகிய யெகோவா உனக்குச்
சுதந்தரமாக அளிக்குந்தேசத்திலே, நீசுதந்தரிக்கி
றபூமியில், முன்னோர்கள் குறித்திருக்கிற பிறனு
டைய எல்லையை மாற்றவேண்டாம்.

௰௫ ஒருவன் அதிக்கிரமமாவது, அநியாயமாவது,
பாவமாவது செய்தானென்று ஒருசாட்சியினால்
நியாயந் தீர்க்கப்படாது: எந்தக்காரியத்தையும்
இரண்டுமூன்று சாட்சிகளின் வாக்கினால் ஸ்தா
பிக்கவேண்டும்.

௰௬ ஒரு பொய்ச்சாட்சிக்காரன் ஒருவனுக்கு வி
ரோதமாகப் பொய்ச்சாட்சி சொல்லவந்தால்,—
௰௭ விவாதம்செய்யும் அவ்விருவரும் அக்காலத்தில்,
யெகோவாவின் சந்நிதியிலிருக்கும் ஆசாரி
யர்களுக்கும், நியாயாதிபதிகளுக்கும் முன்பாக
௰௮ வந்து நிற்பார்களாக.—நியாயாதிபதிகள் நன்றாய்
விசாரிக்கக்கடவர்கள்: சாட்சிக்காரன் பொய்ய
னென்றும், தன்சகோதரனுக்கு விரோதமாய்ப்
௰௯ பொய்சொன்னானென்றுங் கண்டால்,—அவன்
தன்சகோதரனுக்குச்செய்ய நினைத்ததுபோல அ
வனுக்குச்செய்யக்கடவீர்கள்: இவ்விதமாய்த் தீ
௨௰ மையை உங்களினின்று அகற்றிவிடுங்கள்.—மற்
றவர்களுமதைக்கேட்டு, பின்பு இப்படித்தீமை
யை உங்களுக்குள்ளேசெய்யாமற் பயந்துநடப்
௨௧ பார்கள்.—உன்கண்ணிரங்கவேண்டாம்; உயிருக்
கு உயிரும், கண்ணுக்குக்கண்ணும், பல்லுக்குப்
பல்லும், கைக்குக்கையும், காலுக்குக்காலும் பி
ரதியாகவேண்டும்.

## ௨௰. அதிகாரம்.

௧. யுத்தகாலத்தில் ஆசாரியர் செய்யவேண்டியக டமைகளையுரைத்தல்: ௫. சேனாபதிகளின் கடமைகளையுரைத்தல்: ௰. சத்துரு நகரத்தாரை நடத்தும் முறைமையையுரைத்தல்: ௰௬. எழுசாதியாரைநாசப்படுத்தக்கட்டளையிடல்: ௰௯. யுத்தகாலத்திற் கனிகொடுக்கும் விருட்சங்களை நிர்மூலப்படுத்தாமல் விலக்கல்.

நீ உன்சத்துருக்களுடனேயுத்தஞ்செய்யப்புறப் ௧
பட்டுப் போகையில், உன்னிலும் பெரிய கூட்
டமாகிய குதிரைகளையும், இரதங்களையுங் கண்
டால், எகிப்துதேசத்தினின்றுமுன்னைப் புறப்ப
டச்செய்த உன் தேவனாகிய யெகோவா
உன்பட்சத்தில் இருக்கிறபடியால், அவர்களுக்
குப்பயப்படவேண்டுவதில்லை.—நீயுத்தஞ்செய் ௨
யத்தொடங்கும்பொழுது ஆசாரியன்வந்துசனங்
களைநோக்கி,—இஸரவேலரே, கேளுங்கள், இன் ௩
று உங்கள்சத்துருக்களுடன்யுத்தஞ்செய்யப்போ
கிறீர்கள்:—உங்கள் தேவனாகியயெகோவா ௪
உங்கள் நிமித்தம் உங்கள்சத்துருக்களுடனே யுத்
தஞ்செய்து, உங்களையிரட்சிக்கும்பொருட்டுஉங்
களுடன் வருகிறபடியால், நீங்கள் மனமெலிந்
துபோகவும், நீங்கள் பயப்படவும், கலங்கவும்
வேண்டாம், அவர்களைப்பார்த்துத் திகிலடைய
வும்வேண்டாமென்று சொல்லவேண்டும்.

அன்றியும், அதிபதிகள் சனங்களைநோக்கி, பு ௫
துவீட்டைக்கட்டியும் அதைப்பிரதிஷ்டை பண்
ணாதிருக்கிற எவனும், தான் யுத்தத்திலேயிறந்து
போகாமலும், வேறொருவனதைப் பிரதிஷ்டை
பண்ணாமலுமிருக்கும்படிக்கு, தன் வீட்டுக்குத்
திரும்பிப்போகக்கடவன்.—திராட்சத் தோட்டத் ௬
தையுண்டாக்கியும், அதிலுள்ளதையனுபவியாதி
ருக்கிறஎவனும், தான்யுத்தத்தில் இறந்துபோகா
மலும், வேறொருவன் அதிலுள்ளதையனுபவியா
மலுமிருக்கும்படிக்கு, தன்வீட்டுக்குத்திரும்பிப்
போகக்கடவன்.—ஒரு ஸ்திரியைத்தனக்கு நிய ௭
மித்திருந்தும் அவளை விவாகம்பண்ணாதிருக்கிற
எவனும், தான்யுத்தத்திலிறந்துபோகாமலும், வே
றொருவன் அவளை விவாகம் பண்ணாமலுமிருக்
கும்படிக்கு, தன் வீட்டுக்குத்திரும்பிப்போகக்
கடவனென்றுசொல்லவேண்டும்.—பின்னும் அ ௮
திபதிகள் சனங்களைநோக்கி, பயமுள்ளவனும்
திடனற்றவனுமாயிருக்கிற எவனும், தன்னிருத
யத்தைப்போலத் தன் சகோதரனுடைய இருத
யத்தையுந் தளர்ந்துபோகப் பண்ணாதபடிக்கு,
தன் வீட்டுக்குத் திரும்பிப் போகக்கடவனென்
று சொல்லவேண்டும்.—அதிபதிகள் சனங்களுக் ௯

(௯) ஆதி.௰௫.௰௮. (௰) யோசு.௨௰.௭,௮. (௰௧) யாத்.௨௧.௰௨,. எண்.௩௫.௰௬,௨௪. நீதி.௨௮.௰௭. (௰௩) அதி.௰௩.௮. எண்.௩௫.௩௩,௩௪. ௧.இரா.௨.௩௧. (௰௪) அதி.௨௭.௰௭. யோபு.௨௪.௨. நீதி.௨௨.௨௮. ஓசி.௫.௰. (௰௫) எண்.௩௫.௩௰. மத்.௰௮.௰௬. யோவா.௮.௰௭. ௨.கொரி.௰௩.௧. ௧.தீமோ.௫.௰௯. எபி.௰.௨௮. (௰௬) சங்.௨௭.௰௨. (௰௯) நீதி.௰௯.௫,௯. தானி.௬.௨௪. அதி.௰௩.௫. (௨௰) அதி.௰௭.௰௩. (௨௧) லேவி.௨௪.௨௰. மத்.௫.௩௮.—(௨௰. அதி. ௧.) சங்.௨௰.௭. ஏசா.௩௧.௧. எண்.௨௩.௨௧. ௨.நாளா.௰௩.௰௨. (௪) அதி.௧.௩௰. யோசு.௨௩.௰. (௫) நிகி.௰௨.௨௭. (௬) லேவி.௰௯.௨௩,௨௪. (௭) அதி.௨௪.௫. (௮) நியா.௭.௩.

கு இப்படிச் சொல்லிமுடிந்தபின்பு, சனங்களை
நடத்தும்படி சேனாபதிகள் நியமிக்கப்படக்கட
வர்கள்.
௰ நீ ஒரு நகரத்துடன் யுத்தஞ்செய்யும்படி நேரி
டுகையில், அவர்களுக்குச் சமாதானத்தைப் பிர
௰௧ சித்தப்படுத்தவேண்டும்.—அவர்கள் உனக்குச் ச
மாதானஉத்தரங்கொடுத்து வாசலைத் திறந்தால்,
அதிலுள்ள சனங்களெல்லாரும் உனக்குத்திறை
தந்து உனக்கு ஊழியஞ்செய்யக்கடவர்கள்.—
௰௨ அவர்கள்உன்னுடனேசமாதானப்படாமல்,உன்
னுடனே யுத்தம் பண்ணுவார்களேயாகில், நீ அ
௰௩ தைமுற்றுகைபோட்டு,-உன்தேவனாகிய யெ
கோவா அதை உன்கையிலொப்பித்த பொழு
து, அதிலுள்ள ஸ்திரிகளையும், குழந்தைகளையும்,
மிருகங்களையும் விட்டுப் புருஷர் யாவரையுங்
௰௪ கட்கத்தின்வாயினால் வெட்டி,—நகரத்திலுள்ள
எல்லாவற்றையுங் கொள்ளையிட்டு, உன் தேவ
னாகிய யெகோவா உனக்கு ஒப்பித்தஉன்சத்
துருக்களிடத்திற் கொள்ளையிட்டபொருளை அ
௰௫ னுபவிப்பாயாக.—இந்தச்சாதியாரின் நகரங்களு
க்குவேறாய் உனக்குஅதிதூரத்திலிருக்கும் சமஸ்
த நகரங்களுக்கும் இப்படியேசெய்யவேண்டும்.
௰௬ உன் தேவனாகிய யெகோவா உனக்குச்
சுதந்தரமாக அளிக்கும் நகரங்களிலுள்ள எத்தி
யர், எமோரியர், கானானியர், பெரீசியர், ஈவியர்,
எபூசியர் என்னுமிந்தச்சனங்கள் தங்கள் தேவர்
களுக்குச் செய்கிற அருவருப்பான யாதொன்
றையும் நீங்களுஞ் செய்யும்படி உங்களுக்குப்
௰௭ போதியாமலும்,—நீங்கள் உங்கள் தேவனாகிய
யெகோவாவுக்கு விரோதமாய்ப்பாவஞ்செய்
யாமலுமிருக்கும்பொருட்டு, அங்குள்ள சுவாச
முள்ளவைகளில் ஒன்றையாகிலும் உயிரோடே
௰௮ வையாமல்,-உன் தேவனாகிய யெகோவா
உனக்குக்கட்டளையிட்டபிரகாரம் சகலரையுஞ்
சங்கரிக்கக்கடவாய்.
௰௯ நீ ஒரு நகரத்தைப்பிடிக்கும்படி அத்துடனே
யுத்தம் பண்ணிநெடுநாளாக அதை முற்றுகை
போட்டிருக்கும்பொழுது, அதின் மரங்களின்
கனியைப் புசிக்கக் கூடியதாயிருக்கிறபடியால்,
கொத்தளத்திற்கு உதவுமென்று நீ கோடரியை
௨௰ ஓங்கி அவைகளை வெட்டாதிரு.—புசிக்கிறதற்
கேற்ற கனிகொடாதமரங்களைக் கண்டால், அ
வைகளைமாத்திரந்தறித்து, உன்னுடனே யுத்தம்
பண்ணுகிற நகரத்தைவசப்படுத்துமளவும் அதற்
கெதிராகக்கொத்தளம் போட்டுக்கொள்ளலாம்.

## ௨௧. அதிகாரம்.

௧. அபுத்திபூருவமாய்ச்செய்தகொலைக்குப்பிராயச்சித்தம்: ௰. சிறைப்பட்டஸ்திரியின் விவாகநியமம்: ௰௫. சுயேச்சையின்படி சேஷ்டபுத்திரனைச் சுதந்தரத்தினின்றும் நீக்கலாகாதெனல்: ௰௮. மூர்க்கமுள்ள புத்திரனைக்கொலைசெய்யக் கட்டளையிடல்: ௨௨. தூக்குமரத்தில் துஷ்டரைத்தூக்குமுறைமை.

உன் தேவனாகிய யெகோவா உனக்குச்சு ௧
தந்தரமாக அளிக்குந்தேசத்தில், கொலைசெய்யப்
பட்டுக்கிடக்கிற ஒருவனைவெளியேகண்டு, அவ
னைக் கொன்றவனின்னானென்று தெரியாதிருந்
தால்,—உன் முதியோரும் நியாயாதிபதிகளும் ௨
புறப்பட்டுப்போய், கொல்லப்பட்டவனைச்சுற்
றியிருக்கிற பட்டணங்கள்மட்டும் அளப்பார்க
ளாக.—அவனுக்கதிசமீபமான பட்டணத்து முதி ௩
யோர் வேலையிற்பண்படாததும், நுகத்திற்பூட்
டப்படாததுமாகிய ஒரு கடாரியைப்பிடித்து,—
உழுது விதையாத கரம்பான தாழ்ந்தபூமியிலே ௪
கொண்டுபோய், அந்தத்தாழ்ந்தபூமியிலே அதின்
தலையை வெட்டக்கடவர்கள்.—உங்கள் தேவ ௫
னாகிய யெகோவா தமக்கு ஆராதனைசெய்ய
வும், யெகோவாவின் நாமத்தைக்கொண்டுஆ
சீர்வதிக்கவும், லேவியின் புத்திரரையே ஆசா
ரியர்களாகத் தெரிந்தெடுத்துக்கொண்டபடியினா
லே அவர்கள் அத்தருணத்திற் சமீபித்திருக்க
வேண்டும்; ஒவ்வொருவிவாதமும், ஒவ்வொருஅ
டியும்அவர்களுடையவாக்கினாலேயே தீர்க்கப்ப
டவேண்டும்:—கொலை செய்யப்பட்டவனுக்குச் ௬
சமீபமான பட்டணத்து முதியோரெல்லாரும்,
தாழ்ந்தபூமியிலே தலைவெட்டப்பட்ட கடாரி
யின்மேலே தங்கள் கைகளைக்கழுவி,—யெகோ ௭
வாவே, எங்கள்கைகள் அந்த இரத்தத்தைச்சிந்
தவில்லை, அதை எங்கள் கண்கள்கண்டதுமில்
லை.—உம்முடைய சனங்களாகிய இஸரவேல ௮
ரில் கடாட்சம்வைத்து, நீர் மீட்ட உம்முடைய
சனங்களாகிய இஸரவேலர்மேல்கொலையுண்ட
வனுடைய இரத்தப்பழியைச்சுமத்தாதிருமென்
று சொல்வார்களாக. அப்பொழுது இரத்தப்பழி
விமோசனமாகும்.—இப்படியே யெகோவா ௯
வுடைய பார்வைக்கு நேர்மையானதை நீ செய்
தாயாகில், கொலையுண்டவனுடையஇரத்தப்பழி
உன்னிடத்திலில்லாமல் அகன்றுபோம்.
நீ புறப்பட்டு யுத்தஞ்செய்தெதிர்க்குஞ் சத்து ௰
ருக்களை உன் தேவனாகிய யெகோவா உன்
கையிலொப்பித்திருப்பதினால், அவர்களைச் சி
றைப்படுத்தும்பொழுது,—அச்சிறைகளில் ரூபவ ௰௧
தியான ஒருஸ்திரியைக்கண்டு, அவளைவிவாகம்
பண்ணவிரும்பி,—அவளை உன்வீட்டுக்குஅழைத் ௰௨
துப்போவாயேயானால், அவள் தன்னுடையதலை
மயிரைக்களைந்து, தன்நகங்களைவாங்கி,—தன்சி ௰௩
றையிருப்பின்வஸ்திரத்தையும் நீக்கி, உன் வீட்
டில் இருந்து ஒருமாதமட்டுந்தன் பிதாமாதாவை
நினைத்துத்துக்கங்கொண்டாடக்கடவள்: அதன்
பின்பு நீ அவளோடேகூடி அவளுக்கு நாயகனா
க இரு, அவள் உனக்குமனைவியாவாள்.—அவள் ௰௪
மேலுனக்குப்பிரியமற்றுப்போனால், நீ அவளைத்

(௰) ௨.சாமு.௨௰.௰௮,௨௰. (௰௩) எண்.௩௧.௭. யோசு.௮.௨. (௰௪) யோசு.௨௨.௮. (௰௬) எண்.௨௧.௨,௩,௩௫. யோசு. ௰௧.௰௪. அதி.௭.௪. அதி.௰௨.௩௰,௩௧. (௰௭) யாத்.௨௩.௩௩.—(௨௧. அதி. ௫.) ௧.நாளா.௨௩.௰௩. அதி.௰௭.௮,௯. (௬) சங்.௨௬.௭. மத்.௨௭.௨௪. (௮) யோனா.௧.௰௪. (௯) அதி.௰௯.௰௩. (௰௩) சங்.௪௫.௰. (௰௪) ஆதி.௩௪.௨. அதி.௨௨.௨௯. நியா.௰௯.௨௪.

தாழ்ச்சிப்படுத்தினபடியினாலே, அவளைப்பணத்
திற்கு விற்கவும்வேண்டாம், அவளைச்சிறையாள
வும்வேண்டாம்,அவள்தன்னிஷ்டப்படியே எங்
கேயாகிலும்போக அவளைவிட்டுவிடவேண்டும்.
௰௫ இரண்டுமனைவிகளுடையவன் ஒருத்திமேல்
விருப்பமாயும்,மற்றவள்மேல் வெறுப்பாயுமிருக்
க,இருவரும் பிள்ளைகளைப்பெற்றார்களேயாகில்,
முதற்பிறந்தவன் வெறுக்கப்பட்டவளினுடைய
௰௬ புத்திரனானாலும்,—பிதாவானவன் தனக்குண்டா
ன ஆஸ்தியைத்தன்பிள்ளைகளுக்குப்பங்கிடும் நா
ளிலே,வெறுக்கப்படடவளிடத்திற்பிறந்தமுதற்
பேறானவனுக்கு முதற்பேற்றுக்குள்ள சுதந்தரத்
தைக்கொடுக்கவேண்டுமேயல்லாமல், விரும்பப்
பட்டவளிடத்திற் பிறந்தவனுக்குக்கொடுக்கலா
௰௭ காது.—வெறுக்கப்பட்டவளிடத்திற்பிறந்த புத்
திரனுக்குத்தனக்குண்டான ஆஸ்திகளெல்லாவற்
றிலும் இரண்டுபங்கைக்கொடுத்து,அவனைமுதற்
பேறானவனாகத்தானே அங்கிகரிக்க வேண்டும்:
அவன்பிதாவினுடையமுதற்சத்து,சேஷ்டபுத்தி
ரவதிகாரமவனுக்கேயுரித்தாயிருக்கின்றது.
௰௮ பிதாவின்சொல்லையும்மாதாவின்சொல்லையுங்
கேளாமலும், அவர்களாலே தண்டிக்கப்பட்டும்
அவர்களோடெதிர்த்துக் கீழ்ப்படியாமலும், ஒரு
௰௯ துஷ்டப்பிள்ளை ஒருவனுக்கிருந்தால்,—அவனு
டையபிதாமாதாக்கள் அவனைப்பிடித்து, அவனி
ருக்கும்பட்டணத்தின் மூதியோரிடத்துக்கும்,
அவனிருக்கும்ஸ்தானத்துவாசலுக்கும் அவனைக்
௨௰ கொண்டுபோய்,—எங்கள்மகனாகிய இவன் அடங்
காதவனும், துஷ்டனும், எங்கள்சொல்லைக்கே
ளாதவனும்,பேருண்ணனும்,மதுபானியுமாயிருக்கி
றானென்று, அவனதுபட்டணத்தின் மூதியோரி
௨௧ டத்திற்சொல்லவேண்டும்.—அப்பொழுது அவன்
சாகும்படிஅந்தப்பட்டணத்தாரனைவரும்அவன்
மேற்கல்லெறியக்கடவர்கள்: இப்படிநீ உன்னி
டத்தினின்றும் தீங்கை அகற்றிப்போடவேண்
டும்; இஸரவேலர் எல்லாரும் அதைக்கேட்டுப்ப
யப்படுவார்கள்.
௨௨ கொலைக்குப் பாத்திரனான குற்றவாளியைக்
கொலைசெய்யும்படி மரத்திலே தூக்கிக்கொலை
௨௩ செய்தால்,—இரவில் அந்தப்பிரேதம் மரத்திலே
தொங்கலாகாது;எப்படியுமதைஅந்நாளில்அடக்
கம்பண்ணவேண்டும்; தூக்கப்பட்டவன் யெ
கோவாவாலே சபிக்கப்பட்டவன்; ஆகை
யால் உன் தேவனாகிய யெகோவா உனக்
குச்சுதந்தரமாக அளிக்குந் தேசத்தை அசுசிப்ப
டுத்தாதிரு.

## ௨௨. அதிகாரம்.

௧. சகோதரருக்கு அபகாரஞ்செய்யலாகாதென்று
விலக்கல்: ௪. விபரீதஉடைதரிக்கலாகாதெனவி
லக்கல்: ௫. தாயப்பட்சிகளைக்குஞ்சுகளோடே
பிடியாமல் விலக்கல்: ௮. உப்பரிகைசெய்யக்
கட்டளையிடல்: ௯. விபரீதங்களை நீக்கக்கட்ட
ளையிடல்: ௰௨. வஸ்திரங்களுக்குக்குஞ்சங்கள்
வைக்கும்விதி: ௰௩. ஸ்திரிகளையவமானம்பண்
ணுவதைக்குறித்த தண்டனை: ௨௨. விபசாரத்
துக்குத் தண்டனை: ௨௫. வலிந்துஸ்திரியைமா
னவீனம் பண்ணுவதற்குத்தண்டனை.

உன்சகோதரனுடைய ஆடாவது மாடாவது க ௧
லைந்துபோகிறதைக் கண்டாயானால் பராமுகம்
பண்ணாமல், அதைமறித்து, உன்சகோதரனிடத்
தில் ஒப்பிக்க வேண்டும்.—உன்சகோதரன் உ ௨
னக்குச்சமீபமும் அறிமுகமுமாயிராதிருந்தால்,
நீஅதைஉன்வீட்டிலேகாப்பாற்றிக்கொண்டு, அ
தை உன்சகோதரன்தேடிவருமளவும், உன்வசம்
நிற்கச்செய்து அவனுக்குத்திரும்பக் கொடுக்கக்
கடவாய்.—அப்படியே அவனுடையகழுதையை ௩
யும், அவனுடையவஸ்திரத்தையுஞ் செய்யக்கட
வாய்: உன் சகோதரனிடத்திற் காணாமற்போன
வைகளில் எதையாகிலும் கண்டுபிடித்தாயானால்
அப்படியேசெய்யக்கடவாய்: நீ அதிலேசிந்தை
வையாமல் விடலாகாது.
உன்சகோதரனுடைய கழுதையாவது அவனு ௪
டைய மாடாவது வழியிலேவிழுந்து கிடக்கக்
கண்டாயானால், அதைவிட்டுப் பராமுகமாய்ப்
போகாமல், அவனோடேகூட அவசியமாய்த்
தூக்கிவிடுவாயாக.
புருஷனுடைய உடைகளை ஸ்திரிகளுந் தரிக் ௫
கலாகாது, ஸ்திரிகளினுடையைப் புருஷர்களுந்
தரிக்கலாகாது: அப்படிச்செய்கிறவர்கள் யாவ
ரும் உன் தேவனாகிய யெகோவாவுக்குஅரு
வருப்புள்ளவர்கள்.—வழியருகே ஒருமரத்திலா ௬
வது,தரையிலாவது,குஞ்சுகளாயினும், முட்டை
களாயினுமுள்ள ஒருகுருவிக்கூடு உனக்குக்கா
ணப்படும்பொழுது, தாயானது குஞ்சுகளையாயி
னும், முட்டைகளையாயினும் அணைத்துக்கொண்
டிருந்தால், குஞ்சுகளோடே தாயையும் நீபிடிக்
கலாகாது.—தாயைவிட்டுவிட்டுக் குஞ்சுகளைமாத் ௭
திரம்பிடித்துக்கொள்; அப்பொழுது உனக்குநன்
மையுண்டாகும், உன்நாள்கள் நீடித்திருக்கும்.
நீபுதுவீட்டைக்கட்டும்பொழுதுஒருவன் உன் ௮
உப்பரிகையிலிருந்துவிழுந்துசாகிறதினாலே நீயி
ரத்தப்பழியை உன்வீட்டின்மேற்சுமத்திக்கொள்
ளாதபடிக்கு,அதற்குஒருகைப்பிடிச்சுவரையுண்
டுபண்ணவேண்டும்.
நீ விதைத்தவைகளின் பயிரையும், திராட்சத் ௯
தோட்டத்தின் பலனையும், அசுசிப்படுத்தாதபடி
உன்னுடைய திராட்சத்தோட்டத்தில்பலவிதமா
னவிதையைவிதையாதிருப்பாயாக.—மாட்டை ௰
யுங் கழுதையையும்பூட்டி உழாதிருப்பாயாக.—
ஆட்டுமயிரும் பஞ்சினூலுங்கலந்தவஸ்திரத்தைத் ௰௧
தரியாதிருப்பாயாக.
நீ தரித்துக்கொள்ளுகிற மேல்சட்டையினு ௰௨

(௰௫) ஆதி.௨௯.௩௩. (௰௬) ௧.நாளா.௫.௨. ௨.நாளா.௰௧.௰௯,௨௨. (௰௭) ௧.நாளா.௫.௧. ஆதி.௪௯.௩. ஆதி.௨௫.௩௧,௩௩. (௨௧) அதி.௰௩.௫. அதி.௰௩.௰௧. (௨௨) அதி.௰௯.௬. அப்.௨௩.௨௯. (௨௩) யோசு.௮.௨௯. யோவா.௰௯.௩௧. கலா.௩.௰௩. எண்.௨௫.௪.௨.சாமு.௨௧.௬.லேவி.௰௮.௨௫.எண்.௩௫.௩௪.—(௨௨.அதி.௧.)யாத்.௨௩.௪.(௪)யாத்.௨௩.௫.(௬)லேவி.௨௨.௨௮. (௯) லேவி.௰௯.௰௯. (௰) ௨.கொரி.௬.௰௪,௰௫,௰௬. (௰௧) லேவி.௰௯.௰௯. (௰௨) எண்.௰௫.௩௮. மத்.௨௩.௫.

டைய நாலுவிளிம்புகளிலுந் தொங்கல்களிருக்
கச்செய்துகொள்வாயாக.
௰௩ ஒருவன் ஒரு ஸ்திரியைவிவாகம்பண்ணி,அவ
ளுடனே சகவாசம்பண்ணியபின்பு அவள்மேற்
௰௪ பிரியவீனமாய்,—நான் இந்த ஸ்திரியைவிவாகம்
பண்ணி அவளிடத்திற் சேர்ந்தபொழுது கன்னி
மைகாணவில்லையென்றுசொல்லி, இப்படி அ
வள்மேல் நிந்தையானகாரியங்களைச்சுமத்தி,அவ
௰௫ ளுக்கு அவதூறுண்டாக்கினால்,—அந்த ஸ்திரியி
னுடைய பிதாவும், மாதாவும், அவளுடைய கன்
னிமைக்குரியவைகளைக்கொண்டுவந்து, பட்ட
ணத்து வாசல்களிலுள்ளமுதியோரிடத்தில் மூற்
௰௬ படுத்தக்கடவர்கள்.—அங்கே அந்த ஸ்திரியின்
பிதாவானவன் என்மகளை இந்தமனிதனுக்கும
னைவியாகக்கொடுத்தபின்பு, இவனவளைவெறுத்
௰௭ து,—நான் உன்மகளிடத்திற் கன்னிமையைக்
காணவில்லையென்று, நிந்தையானகாரியங்களை
அவள்மேல் சுமத்துகிறான், என்மகளுடைய கன்
னிமை அடையாளம் இங்கேயிருக்கிறதென்று
முதியோரிடத்திற்சொல்லி, அந்தப் பட்டணத்
தின்முதியோர்முன்பாக அந்தவஸ்திரத்தைவிரிக்
௰௮ கக்கடவன்.—அப்பொழுது அந்தமனிதன் இஸ
ரவேலரில் ஒருகன்னியை அவதூறுபண்ணின
படியினாலே அந்தப்பட்டணத்தின் முதியோர்
அவனைப்பிடித்துத் தண்டித்து அபராதமாக,—
௰௯ அவன்கையில் நூறுவெள்ளிக்காசுவாங்கி, அந்த
ஸ்திரியினுடைய பிதாவுக்குக்கொடுக்கக் கடவர்
கள்: பின்பு அவள் அவனுக்கே மனைவியாயிருக்
கவேண்டும்; அவன் தன் சீவனுள்ளளவும் அவ
௨௰ ளைத் தள்ளிவிடக்கூடாது.—அந்தஸ்திரியிடத்தி
லே கன்னிமை காணப்படவில்லையென்னும்சத்
௨௧ தம்மெய்யானால்,-அவள்தன்பிதாவினுடையவீட்
டிலே விபசாரமார்க்கமாய் இஸரவேலருக்குள்
ளே கெட்டகாரியத்தை நடப்பித்தபடியினாலே,
அந்தஸ்திரியைப் பிதாவினுடைய வீட்டின்வாச
லுக்கு முன்பாகக்கொண்டுவந்து, அவளுடைய
பட்டணத்தின்மனிதர் அவள்மேற் கல்லெறிந்து
கொல்லக்கடவர்கள்: இப்படியே உங்களிடத்தி
னின்று தீங்கை அகற்றவேண்டும்.
௨௨ ஒருவன் பரதாரத்துடன்சயனிக்கக்கண்டால்,
அவளுடனே சயனித்த மனிதனும், அந்தஸ்திரி
யும், இருவரும் அதம்பண்ணப்படவேண்டும்:
இப்படியே தீங்கை இஸரவேலரினின்று அகற்
றிவிடவேண்டும்.
௨௩ ஒருவனுக்கு நியமிக்கப்பட்ட ஒரு கன்னி
யை மற்றொருவன் பட்டணத்துக்குள்ளே கண்
௨௪ டு, அவளுடன் சயனித்தால்,—அந்த ஸ்திரி ஊ
ரிலிருந்தும் ஓலமிடாததினாலும், அந்த மனிதன்
பிறனுடைய ஸ்திரியைத் தாழ்ச்சிப்படுத்தினப
டியினாலும், இருவரையுமந்தப்பட்டணத்து வா
சலுக்குக் கொண்டுபோய், அவர்கள்மேற் கல்
லெறிந்து கொல்லக்கடவீர்கள்: இவ்விதமாய்
உங்களினின்றுந் தீங்கை அகற்றிவிடவேண்டும்.
ஒருவனுக்கு வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட ௨௫
கன்னியை, ஊருக்குப்புறம்பே ஒருவன் கண்
டு அவளைப்பலவந்தமாய்ப்பிடித்து அவளுடனே
சயனித்தானேயாகில், அவளோடே சயனித்த
அந்த மனிதன்மாத்திரம் அதம் பண்ணப்படக்க
டவன்.—கன்னியை ஒன்றுஞ் செய்யலாகாது; ௨௬
சாவுக்கேதுவானகுற்றங் கன்னியின்மேலில்லை,
இக்காரியம் ஒருவன் பிறன்மேலெதிர்த்து, அவ
னுடைய சீவனை வாங்கினதுபோலாயிற்று.—வெ ௨௭
ளியிலே அவனவளைக் கண்டுபிடித்தான், வாக்
குத்தத்தஸ்திரி அப்பொழுது ஓலமிட்டாலும் அ
வளைக்காப்பதற்கு ஒருவருமில்லையே.—வாக்குத் ௨௮
தத்தம்பண்ணப்படாத ஸ்திரியை ஒருவன்கண்
டு, கையைப்பிடித்து, அவளுடனே சயனிக்கை
யில் அவர்கள்கண்டுபிடிக்கப்பட்டால்,—அவளு ௨௯
டனே சயனித்தமனிதன் அந்தஸ்திரியுடைய பி
தாவுக்கு ஐம்பதுவெள்ளிக்காசைக் கொடுக்கக்க
டவன்; அவனவளைத் தாழ்ச்சிப்படுத்தினபடி
யால் அவளவனுக்கே மனைவியாயிருக்கவேண்
டும்.—ஒருவன் தன்பிதாவினுடைய மனைவியைச் ௩௰
சேரலாகாது, அவன்பிதாவின்மானத்தைவெளிப்
படுத்தலாகாது.

## ௨௩. அதிகாரம்.

௧. இன்னாரின்னார்சபையிலே சேரலாகாதெனல்: ௭. இன்னாரின்னார்சேரலாமெனல்: ௯. அசுசியினீங்கும்படி எச்சரிக்கையாயிருக்கவேண்டுமெனல்: ௰௫. தப்பியோடின பணிவிடைக்காரனை ஒப்பிக்கவேண்டாமென்று விலக்கல்: ௰௭. விபசாரம் முதலானவைகளை விலக்கல்: ௰௯. அநியாயவட்டி வாங்கலாகாதெனல்: ௨௧. சங்கற்பத்தை நிறைவேற்றக்கட்டளையிடல்: ௨௪. அயலானின்பொருளைப் புசிக்கும்விதி.

பீசத்தில் ஊனப்பட்டவனாயினும், கோசம்சே ௧
திக்கப்பட்டவனாயினும், யெகோவாவின் ச
பையிற் பிரவேசிக்கலாகாது.—சோரபுத்திரனும் ௨
யெகோவாவின் சபையிற் பிரவேசிக்கலாகா
து; அவனுடைய பத்துத்தலைமுறைவரைக்கும்
ஒருவரும் யெகோவாவுடைய சபையிற் பிர
வேசிக்கலாகாது.—நீங்கள் எகிப்தைவிட்டுப்புறப் ௩
பட்டு வருகிறவழியில் அம்மோனியனும், மோ
வாபியனும், உங்களுக்குஅப்பமுஞ்சலமுங்கொ
டாதபடியினாலும், உங்களைச் சபிக்கும்படியாய்
அரம் நாகாரீமின் ஊராகிய பெதோரிலிருந்த
பேயோரின் புத்திரனாகிய பிலியாமுக்குப் ப
ணங்கொடுத்து அவனை அழைத்தபடியினாலும்,—
பத்துத்தலைமுறைவரைக்கும்அவர்கள் யெகோ ௪
வாவினுடைய சபையிற் பிரவேசிக்கலாகாது;
அவர்கள் ஒருக்காலும் யெகோவாவுடைய
சபையிற்பிரவேசிக்கவேண்டாம்.-உன்தேவனா ௫
கிய யெகோவா அந்தப்பிலியாமுக்குச்செவி
கொடுக்கச் சித்தமில்லாமல், உன் தேவனாகிய

(௰௩) ஆதி.௨௯.௨௧. நியா.௰௫.௧. (௨௧) ஆதி.௩௪.௭. நியா.௨௰.௬,௰. ௨.சாமு.௰௩.௰௨,௰௩. அதி.௰௩.௫. (௨௨) லேவி. ௨௰.௰. யோவா.௮.௫. (௨௩) மத்.௧.௰௮,௰௯. (௨௪) அதி.௨௧.௰௪. வச.௨௧,௨௨. (௨௫) ௨.சாமு.௰௩.௰௪. (௨௮) யாத். ௨௨.௰௬,௰௭. (௩௰) லேவி.௰௮.௮. ௧.கொரி.௫.௧.—(௨௩. அதி. ௩.) நிகி.௰௩.௧,௨. அதி.௨.௨௭. எண்.௨௨.௫,௬.

யெகோவா உன்மேல் அன்புகூர்ந்தபடியினாலே, உன் தேவனாகிய யெகோவா அந்தச் சாபத்தை உனக்கு ஆசீர்வாதமாய் முடியச்செய்
சு தார்.—நீ உன் ஆயுநாட்களுள்ளளவும் ஒருக்காலும் அவர்கள் சமாதானத்தையும், நன்மையையுந்தேடாதிரு.
எ எதோமியன் உனக்குச் சகோதரனானபடியால்; அவனை வெறுக்கலாகாது: நீ எகிப்தியனுடைய தேசத்திலே பரதேசியாயிருந்தபடியால், அவனை
அ யும் வெறுக்கலாகாது.—மூன்றாந்தலைமுறையில் அவர்களுக்குப்பிறந்தபிள்ளைகள் யெகோவாவினுடைய சபையிற் பிரவேசிக்கலாம்.
கூ நீ படை எடுத்து உன் சத்துருக்களுக்கு விரோதமாய்ப்புறப்படும்பொழுது,தீதான காரியங்
ய களெல்லாவற்றிற்கும்விலகுவாயாக.—இராக்காலத்தில் அசுத்தமடைந்தவன் உங்களிலிருந்தால், அவன்பாளயத்திற்குப்புறம்பேபோய், பாளயத்
யக திற்குள்வராமல்,-சாயங்காலத்தில் சலத்திலே ஸ்நானம்பண்ணி, பின்பு சூரியன் அஸ்தமிக்கும் பொழுது பாளயத்துக்குள்ளே வரக்கடவன்.—
யஉ நீ வெளியேபோயிருக்கத்தக்க இடம் பாளயத்
யங திற்குப்புறம்பேயிருக்கவேண்டும்.—உன் ஆயுதங்களோடேகூட ஒருசிறுகோலும் உன்னிடத்திலிருக்கக்கடவது; நீ மலசல விசர்க்கஞ்செய்யும்பொழுது அதற்காகமண்ணைத்தோண்டி மலசலவிசர்க்கஞ்செய்து உன்னிலிருந்துவிசர்ச்சன
யச மானதைமூடிப்போடக்கடவாய்.—உன் தேவனாகிய யெகோவா உன்னை இரட்சித்து உன் சத்துருக்களை உனக்கு ஒப்பிக்கும்படி உன் பாளயத்திற்குள்ளேஉலாவிக்கொண்டிருக்கிறார்; ஆகையால் அவர் உன்னிடத்தில் அசுசியானதைக் கண்டு உன்னை விட்டுப்போகாதபடி உன் பாளயஞ் சுத்தமாயிருக்கவேண்டும்.
யரு தன் எசமானனைவிட்டுத்தப்பித்துக்கொள்ளும்படி, உன்னிடத்திற்குவருகிற பணிவிடைக்காரனை அவனுடைய எசமானன்கையில் ஒப்பியா
யசு திரு.—அவன் உன் வாசல்கள் எதிலேயும் தனக்கிஷ்டமானபடி தெரிந்துகொண்ட இடத்தில் உன்னோடிருக்கக்கடவன்: அவனை நெருக்கவேண்டாம்.
யஎ இஸரவேலரின் புத்திரிகளில் ஒருத்தியும் வேசையாயிருக்கப்படாது: இஸரவேலரின் புத்திரர்களிலொருவனாயினும் ஆண் புணர்ச்சிக்காரனா
யஅ யிருக்கப்படாது.—வேசையின்ஊதியம் நாயின் கிரயமாகிய இவ்விரண்டும், உன் தேவனாகிய யெகோவாவுக்கு அருவருப்பானவைகள்; ஆகையால் யாதொருசங்கற்பத்துக்கும், அவைகளை உன் தேவனாகிய யெகோவாவின் ஆலயத்திலேகொண்டுவரவேண்டாம்.
யகூ கடனாகக்கொடுக்கிற பணத்துக்கும், ஆகாரத்துக்கும், வேறெந்தப்பொருளுக்கும் அந்நியனிடத்தில் வட்டிவாங்குவதன்றி, உன் சகோதர
னிடத்தில் வட்டிவாங்காதிரு.—நீ சுதந்தரிக்கப் உய
போகிறதேசத்தில், உன் தேவனாகிய யெகோவா உன் கைவேலைகளெல்லாவற்றிலும் உன்னை ஆசீர்வதிக்கும்படி, உன்சகோதரனிடத்தில் வட்டிவாங்காதிரு.
நீ உன் தேவனாகிய யெகோவாவுக்குச் உக
சங்கற்பம்பண்ணியிருந்தால், அதைச்செலுத்துகிறதற்குத் தாமதஞ்செய்யாதிரு: உன் தேவனாகிய யெகோவா அதை நிச்சயமாய் உன்கையிற்கேட்பார்; அப்பொழுது உன்மேல் பாவம்வ
ரும்.—நீ சங்கற்பஞ்செய்துகொள்ளாதிருந்தால் உஉ
உன்மேல் பாவமில்லை.—உன் நாவினால்சொன் உங
னதை நீ நிறைவேற்றவேண்டும்; உன் தேவனாகிய யெகோவாவுக்கு உன் வாயினால்சொல்லிச் சங்கற்பம்பண்ணின இஷ்டபலியைச் செலுத்தவேண்டும்.
பிறனுடைய திராட்சத்தோட்டத்திற் பிரவே உச
சித்தால், உன் இச்சையின்படியே திருத்தியாகத் திராட்சப்பழங்களைப்புசிக்கலாம்;உன் பாத்திரத்
திலேமாத்திரம் போடலாகாது.—பிறனுடைய உரு
விளைச்சலுக்குட்பிரவேசித்தால், உன்கையினாற் கதிர்களைக்கிள்ளலாம்; அந்தவிளைச்சலில் அரிவாளைமாத்திரம் இடலாகாது.

## உச. அதிகாரம்.

க. ஸ்திரிக்குத்தொடரா முறிகொடுக்கும்விதி: ரு. விவாகம்செய்தவன் சிலகாலம்வரைக்கும் யுத்தத்திற்குப்போகப்படாதெனல்: சு.ஈடுவைக்கும் முறைமை: எ. நரசோரருக்குரியதண்டனை: அ. குஷ்டரோகத்திற்குத்தப்பச் சாவதானமாயிருக்கவேண்டுமெனல்: யச. கூலியைக்கொடுத்துவிடவேண்டுமென்னுங் கட்டளை: யசு. அநியாயஞ் செய்யப்படாதெனல்: யகூ. அரியரியும்விதி.

ஒருவன் ஒரு ஸ்திரியை விவாகம் பண்ணிக் க
கொண்டபின்பு, அவளிடத்திலே தோஷமான காரியத்தைக்கண்டு அவள்மேற் பிரியமற்றவனானால், அவன் தொடரா முறி எழுதி அவள்கையிற்கொடுத்து, அவளைத்தன் வீட்டிலிருந்து அ
னுப்பிவிடலாம்.—அவள் அவனுடைய வீட்டை உ
விட்டுப் புறப்பட்டுப்போய், வேறொருவனுக்கு
மனைவியானபொழுது,—அந்த இரண்டாம் புரு ங
ஷனுமவளைப்பகைத்துத் தொடராமுறி எழுதி அவள்கையிற்கொடுத்து அவளைத் தன் வீட்டிலிருந்து அனுப்பிவிட்டாலும், அவளை விவாகம் பண்ணின அந்த இரண்டாம்புருஷன் இறந்து
போனாலும்,—அவள் அசுத்தமடைந்தபடியினா ச
லே, அவளைத்தள்ளிவிட்ட புருஷன் திரும்பவும் அவளை விவாகம்பண்ணலாகாது; அது யெ

(சு) எஸ்றா.கூ.யக. (எ) ஆதி.உரு.உச,உரு,உசு. ஒபதி.ய,யஉ. யாத்.உஉ.உக. லேவி.யகூ.ஙச. (ய) லேவி.யரு.யசு. (யக) லேவி.யரு.ரு. (யச) லேவி.உசு.யஉ. (யரு) க.சாமு.ஙய.யரு. (யசு) யாத்.உஉ.உக. (யஎ) லேவி.யகூ.உகூ. ஆதி.யகூ.ரு. உ.இரா.உங.எ. (யகூ) லேவி.உரு.ஙசு,ஙஎ. நெகி.ரு.உ,எ. சங்.யரு.ரு. லூக்.சு.ஙச,ஙரு. (உய) அதி.யரு. ய. (உக) எண்.ஙய.உ. பிர.ரு.ச,ரு. (உங) எண்.ஙய.உ. சங்.சுசு.யங,யச. (உரு) மத்.யஉ.க.—(உச. அதி. க.) மத். ரு.ஙக. மாற்.ய.ச. (ச) எரே.ங.க.

கோவாவுக்கு முன்பாக அருவருப்பானது:
உன்தேவனாகிய யெகோவா உனக்குச் சு
தந்தரமாக அளிக்குந்தேசத்துக்குப் பாவம் வரப்
பண்ணாதிரு.
௫ ஒருஸ்திரியை விவாகம்பண்ணினவன், ஒருவ
ருஷபரியந்தம் தன்வீட்டிலே தன்னிஷ்டமாயி
ருந்து, தான்விவாகம்பண்ணின ஸ்திரியைச்சந்
தோஷப்படுத்துவானாக; அவன் யுத்தஞ்செய்யப்
புறப்படவும்வேண்டாம்; அவன்மேல் ஒருதொ
ழிலைச்சுமத்தவும் வேண்டாம்.
௬ அடித்திரிகைக் கல்லையாவது, மேற்றிரிகைக்
கல்லையாவது, ஒருவனும்அடைவுவைக்கப்படா
து: அது பிராணனை ஈடாகவாங்குவதுபோலா
கும்.
௭ தன் சகோதரராகிய இஸரவேல்சந்ததியாரில்
யாதொருவனைத்திருடி அவனை அடிமையாக்கி
விற்றுப்போட்டவன் அகப்பட்டால், அந்தத்திரு
டனைக்கொல்லவேண்டும்; இப்படி உங்களினின்
றுந்தீமையை அகற்றிவிடவேண்டும்.
௮ குஷ்டரோகத்தைக்குறித்து லேவிய ஆசாரியர்
உங்களுக்குப் போதிக்கும்யாவையுஞ் சாவதான
மாய்க் காத்துக்கொள்ளும்படி, மிகவும் எச்சரிக்
கையாயிருப்பீர்களாக: நானவர்களுக்குக்கட்ட
ளை யிட்டபடியே செய்ய எத்தனமாயிருப்பீர்க
௯ ளாக.—நீங்கள் எகிப்தைவிட்டுப்புறப்பட்டுவந்
தவழியில், உங்கள் தேவனாகிய யெகோவா
மிரியமுக்குச்செய்ததை நினைத்துக்கொள்ளுங்
௰ கள்.—பிறனுக்கு நீ ஏதாகிலுங்கடனாகக்கொடுத்
தால், அவன்கொடுக்கும் அடைவுவாங்கும்படி
அவனுடையவீட்டிற் பிரவேசியாமல் வெளியே
௰௧ நிற்பாயாக.—கடன்வாங்கினவன் அந்தஅடை
வைவெளியேநிற்கிற உன்னிடத்துக்குக்கொண்
௰௨ டுவரக்கடவன்.—அவன் தரித்திரனானால் நீ அ
வன் அடைவை வைத்துக்கொண்டு நித்திரை
௰௩ கொள்ளாமல்,—அவன் தன்வஸ்திரத்தை விரித்
துப்படுத்துக்கொண்டு உன்னை ஆசீர்வதிக்கும்ப
டி, சூரியன் அஸ்தமிக்கும்பொழுது அந்த அடை
வைத்திரும்ப அவனுக்குக் கொடுக்கவேண்டும்:
அது உன் தேவனாகிய யெகோவாவுடைய
பார்வைக்கு உனக்கு நீதியாயிருக்கும்.
௰௪ உன்சகோதரர்களிலும், உன்தேசத்தின்வாசல்
களிலுள்ள பரதேசிகளிலும், தரித்திரமும் முட்
டுமுள்ளகூலிக்காரனை நெருக்காதிருப்பாயாக.—
௰௫ அவன்வேலைசெய்தநாளில்தானே சூரியன் அஸ்
தமிக்குமுன்னே அவன் உன்னைக்குறித்து யெ
கோவாவை நோக்கி ஓலமிட, அதினாலுனக்
குப் பாவமுண்டாகாமலிருக்கும்படி, அவனு
டைய கூலியை அவனுக்குக் கொடுத்துவிட
வேண்டும்: அவன் ஏழையுமாய் அதின்மேற்சிந்
தைவைத்தவனுமாயிருக்கிறான்.

பிள்ளைகளினிமித்தம் பிதாக்களும், பிதாக்க ௰௬
ளினிமித்தம் பிள்ளைகளுங் கொலைசெய்யப்பட
வேண்டாம்: அவனவன்செய்த பாவத்தினிமித்
தம் அவனவனேகொலைசெய்யப்படவேண்டும்.-
நீ பரதேசியின் நியாயத்தையும் அநாத பிள்ளை ௰௭
யின் நியாயத்தையும் புரட்டாமலும், விதவை
யின் வஸ்திரத்தை ஈடாகவாங்காமலு மிருப்பா
யாக: நீ எகிப்தில் அடிமையாயிருந்ததையும்,
உன் தேவனாகிய யெகோவா உன்னைஅங்
கேயிருந்துமீட்டுக்கொண்டுவந்ததையும், நினைக்
கவேண்டும்:—ஆதலால் இப்படிச் செய்யும்படி ௰௮
நான் உனக்குக்கட்டளையிடுகிறேன்.
நீ உன் பயிரையறுக்கையில் மறதியினாலே வ ௰௯
யலிலொருகட்டைவைத்துவிட்டுவந்தாயானால்,
அதை எடுத்துவரும்படி திரும்பிப்போகவேண்
டாம்: உன் தேவனாகிய யெகோவா உன்
கைத்தொழில்களெல்லாவற்றிலும் உன்னை ஆசீர்
வதிக்கும்படி அதுபரதேசிக்கும், அநாதபிள்ளைக்
கும், விதவைக்குமிருக்கட்டும்.—நீ உன் சீதவிருட் ௨௰
சத்தை உதிர்த்துவிட்டபின்பு, கொம்பிலேமீந்தி
ருப்பதைப்பறிக்கும்படி திரும்பிப்போகவேண்
டாம்: அதுபரதேசிக்கும், அநாதபிள்ளைக்கும், வி
தவைக்குமிருக்கட்டும்.—நீ உன் திராட்சப்பழங் ௨௧
களை அறுத்தபின்பு, சேஷத்தை அறுக்கும்படி தி
ரும்பிப்போகவேண்டாம்: அது பரதேசிக்கும்,
அநாத பிள்ளைக்கும், விதவைக்குமிருக்கட்டும்.—
நீ எகிப்தில்அடிமையாயிருந்ததைநினைக்கவேண் ௨௨
டும்: ஆதலால் இப்படிச்செய்யும்படி உனக்குக்
கட்டளையிடுகிறேன்.

## ௨௫. அதிகாரம்.

௧. நாற்பதடிக்கதிகமாகத் தண்டனை செய்யாமல் விலக்கல்: ௪. தானியம் மிதிக்கும் மாட்டின்வாயைக்கட்டலாகாதென விலக்கல்: ௫. சகோதரவமிசவிருத்திசெய்யக்கட்டளையிடல்: ௰௧. இலச்சையீனஸ்திரியைத் தண்டிக்கக்கட்டளையிடல்: ௰௩. எடுத்தல் முகத்தல் அளவைகளில் அநியாயஞ் செய்யலாகாதெனவிலக்கல்: ௰௭. அமலேக்கியரை ஒழிவிக்கக்கட்டளையிடல்.

மனிதர்கள் ஒருவரோடொருவர் வழக்காடி நி ௧
யாயஸ்தலத்தில் சேரும்பொழுது, நியாயாதிபதி
கள் நீதிமானைநீதிமானென்றும், குற்றவாளியைக்
குற்றவாளியென்றுந் தீர்க்கக்கடவர்கள்.—குற்ற ௨
வாளி அடிபடப்பாத்திரனாகில் நியாயாதிபதி அ
வனைக்குப்புறக்கிடக்கச்செய்து, அவனுடைய
குற்றத்துக்குத்தக்கதாய்த் தனக்குமுன்பாக அவ
னைஅடிப்பிக்கக்கடவன்.—அவன் நாற்பது அடி ௩
வரைக்கும் அடிப்பிக்கலாம்: அதிலுமதிகமாய
டிப்பித்தால், உன் சகோதரனாகிய அவன் உன்
கண்ணுக்கு நீசனாகத்தோற்றுவானே, ஆதலால்
அதற்கு அதிகம் அடிப்பிக்கவேண்டாம்.

(௫) அதி.௨௰.௭. நீதி.௫.௰௮. (௭) யாத்.௨௧.௰௬. அதி.௰௯.௰௯. (௮) லேவி.௰௩.௨. (௯) லூக்.௰௭.௩௨. ௧.கொரி.௰.௬. எண்.௰௨.௰. (௰௩) யாத்.௨௨.௨௬. யோபு.௨௯.௰௧,௰௩. ௨.கொரி.௯.௰௩. ௨.தீமோ.௧.௰௮. தானி.௪.௨௭. (௰௪) மல்.௩.௫. (௰௫) லேவி.௰௯.௰௩. சங்.௨௫.௧. யாக்.௫.௪. (௰௬) ௨.இரா.௰௪.௬. எரே.௩௧.௨௯,௩௰. (௰௭) யாத்.௨௨.௨௧,௨௨. நீதி.௨௨.௨௨. ஏசா.௧.௨௩. எசேக்.௨௨.௨௯. மல்.௩.௫. யாத்.௨௨.௨௬. (௰௯) லேவி.௰௯.௯,௰. சங்.௪௧.௧. நீதி.௰௯,௰௭.—(௨௫.அதி.௧.) எசேக்.௪௪.௨௪. நீதி.௰௭.௰௫. (௨) லூக்.௰௨.௪௮. மத்.௰.௰௭. (௩) ௨.கொரி.௰௧.௨௪. யோபு.௰௮.௩.

ச பிணையடிக்கிறபொழுது, மாட்டின்வாயைக் கட்டவேண்டாம்.

ரு சகோதரரானவர்கள் ஒன்ருய்க் குடியிருக்கை யில், அவர்களில் ஒருவன் பிள்ளையில்லாமல்ம ரித்தால், மரித்தவனுடைய மனைவி புறத்தியில் ஒரு அந்நியனுக்கு மனைவியாகப்படாது: அவளு டைய புருஷனின் சகோதரன் அவளைத்தனக் குமனைவியாகக்கொண்டு, அவளுடனே சேர்ந் து,புருஷனின்சகோதரன்செய்யுங்கடமையைச்
சு செய்யக்கடவன்.—மரித்தசகோதரனுடைய நா மம் இஸரவேலரில் அற்றுப்போகாதபடி,அவனு டைய நாமத்தை அவள்பெறும் முதற்பிள்ளைக்
எ குத் தரிக்கவேண்டும்.—அவன் தன் சகோதரனு டைய மனைவியை விவாகம்பண்ண மனதில்லா திருந்தால், அவன் சகோதரனுடைய மனைவி நி யாய வாசலிலிருக்கிற முதியோரிடத்துக்குப் போய், என்புருஷனுடைய சகோதரன் தன்ச கோதரனுடையபேரை இஸரவேலரிலே நிலைப் படுத்தமாட்டேனென்றுமறுக்கிருன்;அவன் என் புருஷனின் சகோதரனுகிய தன்கடமையைச்
அ செய்யவில்லையென்று சொல்வாளாக.-அப்பொ ழுது அந்தப்பட்டணத்து முதியோர் அவனை அ ழைப்பித்து அவனைவிசாரிக்க, அவன் அவளைவி வாகம்பண்ணிக்கொள்ளஎனக்குச்சம்மதமில்லை
கூ யென்று உறுதியாய்ச்சொன்னுல்,—அவன்சகோ தரனுடையமனைவி முதியோருக்கு முன்பாக அ வனைச்சமீபித்து, அவன்காலிலிருக்கிற செருப் பைக்கழற்றிக்கொண்டு, அவனுடைய முகத்தி லே துப்பி, தன்சகோதரனுடைய குடும்பத்தை விருத்திசெய்யமனமில்லாதவனுக்கு இப்படியே
ய செய்யவேண்டுமென்று சொல்லக்கடவள்.—இ ஸரவேலருக்குள் அப்படிப்பட்டவனுடைய கு டும்பம், செருப்புக்கழற்றப்பட்டவனுடைய கு டும்பமென்னப்படும்.

யக புருஷர் ஒருவரோடொருவர் சண்டைபண் ணுகையில்,ஒருவனுடையமனைவிதன்புருஷனை அடிக்கிறவனுடைய கைக்குத் தப்புவிக்கும்படி வந்து தன்கையை நீட்டி, இவனுடைய மானத்
யஉ தைப் பிடித்ததுண்டானுல்,—அவளுடைய கை யைத்தறிக்கக்கடவாய்: உன்கண் அவள்மேலிரங் கவேண்டாம்.

யங உன் பையில் ஏற்றமுங்குறைவுமான நிறை
யச கற்களை வைத்திருக்கவேண்டாம்.—உன் வீட் டில் ஏற்றமுங்குறைவுமான ஏபாக்களைவைத்தி
யரு ருக்கலாகாது.—இப்படிப்பட்டவர்களும், அநி யாயத்தைச்செய்பவர்களும், உன் தேவனுகிய யெகோவாவுக்கு முன்பாக அருவருப்பான
யசு வர்கள்.—உன் தேவனுகிய யெகோவா உ னக்கு அளிக்குந்தேசத்தில் உன் நாள்கள் நீடித் திருக்கும்படிக்கு, குறையற்ற செவ்வையான நி றைகல்லும், குறையற்ற செவ்வையான ஏபா வும் உன்னிடத்திலிருக்கவேண்டும்.

நீ எகிப்திலிருந்து புறப்பட்டுவருகிற வழி யஎ யில்அமலேக் தேவனுக்குப்பயப்படாமல்,உனக் கெதிராகவந்து,—நீ தளர்ந்து இளைத்திருக்கையில், யஅ பின்வருகிற உன் பாளயத்திலுள்ள பெலவீன ரெல்லாரையும் வெட்டினதை நினைத்திரு.—உன் யகூ தேவனுகிய யெகோவா உனக்குச்சுதந்தர மாயளிக்குந் தேசத்தைச் சூழவிருக்கிற உன் சத் துருக்களெல்லாரையும் உன் தேவனுகிய யெ கோவா விலக்கி,நீ ஆறும்படிசெய்தபொழுது, நீ அமலேக்கின் நாமம் வானத்தின் கீழெங்குமொ ழிய நீக்கிப்போடக்கடவாய்; இதைமறவாதிரு.

## உசு. அதிகாரம்.

க. முதற்பலனை நிவேதிக்கிறவன் அறிக்கையிட ல்:யஉ.மூன்ரும் வருஷத்துப்பலத்திலொருபங் கை நிவேதிக்கிறவனுடைய பிரார்த்தனை: யசு. தேவன்சனங்களுடன்செய்தஉடன்படிக்கை.

உன் தேவனுகிய யெகோவா உனக்குச்சு க தந்தரமாயளிக்குந் தேசத்தில், நீபோய்ச்சேர்ந்து அதைச் சுதந்தரித்துக்கொண்டு அதிலே வாசம் பண்ணும்பொழுது,—உன் தேவனுகிய யெ உ கோவா உனக்களிக்குந்தேசத்திலே நீ பயிரி டும் நிலத்திற் பலன்கள்யாவற்றிலும் முந்தினப லனையெடுத்து ஒரு கூடையில்வைத்துக்கொண் டு, உன் தேவனுகிய யெகோவா தமதுதிரு நாமம் வாசமாயிருக்கும்படி தெரிந்துகொண்ட ஸ்தலத்துக்குப்போய்,-அந்நாள்களிலிருக்கும் ஆ ங சாரியனிடத்திற் சேர்ந்து, அவனைநோக்கி, யெ கோவா எங்களுக்களிக்கும்படி நம்முடையபி தாக்களுக்கு ஆணையிட்டதேசத்தில் வந்துசேர்ந் தேனென்று இன்றைக்கு உம்முடைய தேவனு கியயெகோவாவின்சந்நிதியில்சொல்லுகிறே னென்பாயாக.—அப்பொழுது ஆசாரியன் அந்தக் ச கூடையை உன்னிடத்தில் வாங்கிக்கொண்டு, அதை உன் தேவனுகிய யெகோவாவுடை ய வேதிகைக்கு முன்பாக வைக்கக்கடவன்.— மேலும் நீ உன் தேவனுகிய யெகோவா ரு வின் சந்நிதியில்நின்று, எகிப்து தேசத்துக்குப் போய் அங்கேசிலருடன் வாசம்பண்ணி அலைந் த அராமியனுகிய என் பிதா அங்கே பெருமை யும் பலமும் விருத்தியுமுடைய ஒரு சாதியா னுன்.—எகிப்தியர் எங்களை உபத்திரவப்படுத்தி, சு எங்களைச் சிறுமையாக்கி, எங்களுக்குக் கடின மானவேலையைச் சுமத்தினபொழுது,—எங்கள் எ பிதாக்களின் தேவனுகிய யெகோவாவை நோக்கி ஒலமிட்டோம், யெகோவா எங்க ளுடைய வாக்குக்குச்செவிகொடுத்து, எங்கள்

(ச) நீதி.யஉ.ய. க.கொரி.கூ.கூ. க.தீமோ.ரு.யஅ. ஓசி.ய.யக. (ரு) மத்.உஉ.உச. ஆதி.ஙஅ.அ. ரூத்.க.யஉ,யங. ரூத்.ங.கூ. (சு) ரூத்.ச.ய. (எ) ரூத்.ச.க,உ. (அ) ரூத்.ச.சு. (கூ) ரூத்.ச.எ. ரூத்.ச.யக. (யஉ) அதி.யகூ.யங. (யங) லேவி.யகூ.ஙரு,ஙசு. நீதி.யக.க. மீகா.சு.யக. (யரு) நீதி.யக.க. க.தெச.ச.சு. (யசு) யாத்.உய.யஉ. (யஎ) யாத். யஎ.அ. சங்.ஙசு.க. நீதி.யசு.சு. ரோ.ங.யஅ. (யகூ) க.சாமு.யரு.ங. யாத்.யஎ.யச.—(உசு. அதி. உ.) யாத்.உங.யகூ. எண்.யஅ.யகூ. நீதி.ஙகூ. அதி.யஉ.ரு. (ரு) ஓசி.யஉ.யஉ. ஆதி.சங.க,உ. ஆதி.சரு.எ,யக. ஆதி.சசு.க,சு. ஆதி. சசு.உஎ. (சு) யாத்.க.யக,யரு. (எ) யாத்.உ.உங.

துக்கத்தையும், கஷ்டத்தையும், உபத்திரவத்
௮ தையும்பார்த்து,—கைவல்லபத்தினாலும், நீட்டிய
புயத்தினாலும், மகா பயங்கரத்தினாலும், அடை
யாளங்களினாலும், அற்புதங்களினாலும், எங்க
௯ ளை எகிப்திலிருந்து புறப்படச்செய்து,—எங்களை
இவ்விடத்துக்கு அழைத்துவந்து, பாலுந்தேனும்
பெருகுகிற தேசமாகிய இந்தத்தேசத்தை எங்க
௰ ளுக்களித்தாரென்றுசொல்வதுமன்றி,-யெகோ
வாவே, நீர் எனக்குக்கொடுத்த நிலத்தினுடைய
பலன்களில் முதற்பலனை இதோ, கொண்டுவந்
தேனென்று உன் தேவனாகிய யெகோவா
வின் சந்நிதியில்வைத்து, உன் தேவனாகிய
யெகோவாவின் சந்நிதியில் நமஸ்காரம்பண்
௰௧ ணி,—நீயும், லேவியனும், உங்களுக்குள்ளே தங்
குகிறபரதேசியும்,உன் தேவனாகிய யெகோ
வா உனக்கும் உன் குடும்பங்களுக்கும் அனுக்
கிரகம்பண்ணின சகல நன்மைகளினிமித்தமும்
சந்தோஷப்படுவீர்கள்.
௰௨ பத்திலொருபாகத்தைச்செலுத்தும் வருஷமா
கிய மூன்றாம்வருஷத்திலே, நீ உன்வரவுகள்யா
வற்றிலும் பத்திலொருபாகத்தையெடுத்து, அதை
லேவியனும், பரதேசியும், அநாதபிள்ளையும், வித
வையும்,உன்வாசல்களிற் புசித்துத்திருத்தியடை
யும்படி,அவர்களுக்குக்கொடுத்துத்தீர்ந்தபின்பு,-
௰௩ நீ உன் தேவனாகிய யெகோவாவின் சந்நிதி
யையடைந்து, நீர் எங்களுக்களித்த சகலகட்ட
ளைகளின்படிக்கும் நான் பரிசுத்தமானபொருளை
என்வீட்டிலிருந்தெடுத்துவந்து லேவியனுக்கும்,
பரதேசிக்கும், அநாத பிள்ளைக்கும், விதவைக்
குங் கொடுத்தேன்: நான் உமது கட்டளைகளில்
ஒன்றையும் மீறவுமில்லை, மறக்கவுமில்லை.—
௰௪ நான்என் துக்ககாலத்தில் அதில்புசிக்கவுமில்லை,
அசுசியானவைகளுக்காக அதில் ஒன்றை எடுக்
கவுமில்லை,மரித்தவர்களுக்காக அதிலொன்றைக்
கொடுக்கவுமில்லை:நான் என் தேவனாகிய யெ
கோவாவாயிருக்கிற உம்முடைய வாக்குக்
கமைந்து, நீர் எனக்கிட்ட கட்டளைப்படி சகல
௰௫ முஞ் செய்தேன்.—உமது பரிசுத்த வாசஸ்தல
மாகிய வானத்தினின்றும் நோக்கிப்பார்த்து,உம்
முடைய சனங்களாகிய இஸரவேலரையும், நீர்
எங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்டபடியே எங்
களுக்களித்த பாலுந் தேனும் பெருகுகிறதேசத்
தையும், ஆசீர்வதித்தருளுமென்றுசொல்வாயாக.
௰௬ இந்த விதிகளின்படிக்கும், நியாயப்பிரமா
ணங்களின்படிக்கும்,நீசெய்யும்பொருட்டு;இன்
று உன் தேவனாகிய யெகோவா உனக்குக்
கட்டளையிடுகிறார்: ஆகையால் உன்பூரண இரு
தயத்தோடும், உன்பூரண ஆத்துமத்தோடும், அ
௰௭ வைகளைக்காத்து நடக்கக்கடவாய்.—யெகோ
வாவே எனக்குத்தேவனாயிருக்கவேண்டுமென்
றும்; நான் அவருடைய நெறியிலேநடந்து, அவ
ருடைய விதிகளையும், நியாயப்பிரமாணங்களை
யும், கட்டளைகளையுங் காத்துக்கொண்டு, அவரு
டைய வாக்குக்கமைவேனென்றும்; நீ இன்று அ
வருக்கு வாக்குக்கொடுத்தாய்:—யெகோவா ௰௮
வும், நீ தம்முடைய கட்டளைகளெல்லாவற்றை
யுங்காத்துக்கொண்டால், தாம் ஏற்படுத்திய சரு
வதேசத்தாருக்குள்ளும் நீ புகழ்ச்சி, கீர்த்தி, மகி
மையென்னும் இவைகளிலே சிரேஷ்டமாகும்ப
டிசெய்வேனென்று தாம்சொல்லியபிரகாரம்,—நீ ௰௯
உன் தேவனாகிய யெகோவா தமக்குப்பரி
சுத்தசனமாயிருப்பாயென்று, தாம்அருளிய வாக்
குத்தத்தத்தின்படி, நீ தமது சொந்தச்சனமென்று
உனக்கு இன்றும் வாக்குக் கொடுத்தாரென்றான்.

## ௨௭. அதிகாரம்.

*௧. கட்டளைகளைக்கற்பலகையிலெழுதக்கட்டளை
யிடல்: ௫. வேதிகையுண்டாக்கும்விதி: ௰௧. கி
ரிசீம், எபால் என்னும் மலைகளில் இஸரவேல்
சந்ததியார்பிரிக்கப்படல்: ௰௪. எபால்மலையிற்
சொல்லிய சாபமொழி.*

பின்பு இஸரவேலரின் முதியோர்கூட இருக் ௧
கையில் மோசே சனங்களைநோக்கி, நான் இன்று
உங்களுக்கு விதிக்கிற சமஸ்த கட்டளைகளையுங்
காத்துக்கொள்வீர்களாக.—உங்கள் தேவனாகிய ௨
யெகோவா உங்களுக்கு அளிக்குந்தேசத்திற்
கு நீங்கள் போகிறதற்கு யோர்தானைக்கடக்கும்
நாளில், நீங்கள் பெரியகல்லுகளைநட்டு, அவைக
ளுக்குச் சாந்துபூசி,—உங்கள் பிதாக்களுடைய ௩
தேவனாகிய யெகோவா உங்களுக்கருளின
வாக்குத்தத்தத்தின்படி, உங்களுக்களிக்கும் பா
லுந் தேனும் பெருகுகிற தேசத்திற் பிரவேசிக்
கும்படி நீங்கள் கடந்துபோனபின்பு; இந்த நியா
யப்பிரமாணவாக்குகள் யாவையும் அவைகளி
லெழுதக்கடவீர்கள்.—மேலும் நீங்கள் யோர்தா ௪
னைக்கடந்தபொழுது, இன்றுநான் உங்களுக்குக்
கட்டளையிட்டபடி அந்தக்கல்லுகளை எபால்ம
லையிலேநட்டு, அவைகளுக்குச் சாந்துபூசி,-அங் ௫
கே இருப்பாயுதம் படாதகல்லுகளாலே உன்
தேவனாகிய யெகோவாவுக்கு ஒருவேதி
கையைஉண்டாக்கக்கடவாய்.-நீ உன் தேவனா ௬
கிய யெகோவாவின் வேதிகையைப்பொளி
யாதகல்லுகளாலேகட்டி, அதின்மேல் உன் தே
வனாகிய யெகோவாவுக்குத் தகனபலிகளை
யும், ஸ்தோத்திரபலிகளையும் இட்டு,—உன் தேவ ௭
னாகிய யெகோவாவின் சந்நிதியில் அங்கே
புசித்துச் சந்தோஷப்படுவாய்.—அந்தக் கல்லுக ௮
ளிலே இந்த நியாயப்பிரமாண வாக்குகள் எல்
லாவற்றையுந் துலக்கமாயெழுதக்கடவாயென்று
கட்டளையிட்டான்.
பின்னும் மோசே லேவியராகிய ஆசாரியர்க ௯
ளுங்கூட இருக்கையில் இஸரவேலர் சகலரை
யும் நோக்கி, இஸரவேலரே, கருத்தாய்க்கேளுங்

(௮) யாத்.௰௨.௩௭. அதி.௪.௩௪. (௯) யாத்.௩.௮. (௰௧) அதி.௰௨.௭,௰௨,௰௮. (௰௨) லேவி.௨௭.௩௰. அதி.௰௪.௨௮,௨௯. (௰௩) சங்.௱௰௯,௱௪௧,௱௫௩,௱௭௬. (௰௪) லேவி.௭.௨௰. ஓசி.௯.௪. (௰௫) எசா.௬௩.௰௫. சக.௨.௰௩. (௰௭) யாத்.௨௰. ௰௯. (௰௮) அதி.௪.௭,௮. சங்.௱௪௮.௰௪. (௰௯) யாத்.௬.௭. யாத்.௰௯.௬. ௧.பேதுரு.௨.௯.—(௨௭. அதி. ௨.) யோசு. ௪.௧. யோசு.௮.௩௨. (௪) யோசு.௮.௩௰. (௫) யாத்.௨௰.௨௫. யோசு.௮.௩௧. (௯) அதி.௨௬.௰௯.

கள், இந்நாளில் உங்கள் தேவனாகிய யெ
௰ கோவாவுக்குரிய சனங்களானீர்கள்.—ஆகை
யால் நீங்கள் உங்கள் தேவனாகிய யெகோ
வாவின் வாக்குக்கமைந்து, இன்று நானுங்களுக்
குவிதிக்கிற அவருடைய கட்டளைகளின்படிக்
கும், அவருடைய விதிகளின்படிக்குஞ்செய்வீர்
களாகவென்றான்.
௰௧ மேலும் அந்நாளிலே மோசே சனங்களைநோக்
௰௨ கி,—நீங்கள் யோர்தானைக் கடந்தபின்பு ஷிமி
யோன், லேவி, யூதா, ஈஷகார், யோசேப்பு,
பேன்யாமீன் என்னுங் கோத்திரத்தார்கள் சனங்
களை ஆசீர்வதிக்கும்படி கிரிசீம் மலையிலும்,—
௰௩ ரூபேன், காத், ஆஷேர், செபுலோன், தாண், நப்
தாலி என்னுங் கோத்திரத்தார்கள் சபிக்கும்படி
எபால்மலையிலும் நிற்கவேண்டுமென்றுகட்டளை
யிட்டான்.
௰௪ லேவியர் உரத்தசத்தத்துடன் இஸரவேலின்
௰௫ சமஸ்த சநத்தியாரையும் நோக்கி,—தொழிற்ப
டுத்தியதாயானாலும், வார்ப்பிக்கப்பட்டதாயா
லும், சிற்பருடையகைவேலையும் யெகோவா
வின்சமுகத்திலருவருப்புமாயிருக்கிற யாதொரு
விக்கிரகத்தைச்செய்து, ஒளிப்பிடத்தில் வைக்கி
றவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. அதற்
குத்தரமாகச் சனங்களெல்லாரும், ஆமென் என்
௰௬ னக்கடவர்கள்.—தன் பிதாவையும் மாதாவையும்
அவமதிக்கிறவன் சபிக்கப்பட்டவனென்பார்க
ளாக. சனங்களெல்லாரும், ஆமென் என்னக்கட
௰௭ வர்கள்-.பிறனுடையஎல்லையைக்கூட்டிக்கொள்
ளுகிறவன் சபிக்கப்பட்டவன் என்பார்களாக.
சனங்களெல்லாரும், ஆமென் என்னக்கடவர்
௰௮ கள்.-குருடனை வழிதப்பிப்போகும்படி செய்கி
றவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனங்
௰௯ களெல்லாரும், ஆமென் என்னக்கடவர்கள்.—பர
தேசி, அநாதபிள்ளை, விதவை, இவர்களுடையநி
யாயத்தைப்புரட்டுகிறவன் சபிக்கப்பட்டவன்
என்பார்களாக. சனங்களெல்லாரும், ஆமென்
௨௰ என்னக்கடவர்கள்.-தன்பிதாவின் மனைவியுடன்
சயனிக்கிறவன் தன் பிதாவுக்கேற்ற வஸ்திரத்
தை நீக்கினபடியினாலே சபிக்கப்பட்டவனென்
பார்களாக. சனங்களெல்லாரும், ஆமென் என்
௨௧ னக்கடவர்கள்.—ஒரு மிருகத்துடன் புணருகிற
வன் சபிக்கப்பட்டவனென்பார்களாக. சனங்க
௨௨ ளெல்லாரும், ஆமென் என்னக்கடவர்கள்.—தன்
பிதாவாகிலும், மாதாவாகிலும்பெற்ற புத்திரியா
கிய தன் சகோதரியுடன் சயனிக்கிறவன் சபிக்
கப்பட்டவனென்பார்களாக. சனங்களெல்லா
௨௩ ரும், ஆமென் என்னக்கடவர்கள்.—தன் மாமியு
டன் சயனிக்கிறவன் சபிக்கப்பட்டவனென்
பார்களாக. சனங்களெல்லாரும், ஆமென் என்
னக்கடவர்கள்.—அந்தரங்கத்திலே பிறனை வ ௨௪
தைக்கிறவன் சபிக்கப்பட்டவனென்பார்களாக.
சனங்களெல்லாரும், ஆமென் என்னக்கடவர்
கள்.—குற்றமில்லாதவனைக் கொலைசெய்யும்ப ௨௫
டி பரிதானம் வாங்குகிறவன் சபிக்கப்பட்டவ
னென்பார்களாக. சனங்களெல்லாரும், ஆமென்
என்னக்கடவர்கள்.—இந்த நியாயப் பிரமாண ௨௬
வாக்குகளைக்காத்து நடவாதவன் சபிக்கப்பட்ட
வனென்பார்களாக. சனங்கள் எல்லாரும், ஆ
மென் என்னக்கடவர்கள்.

## ௨௮. அதிகாரம்.

௧. கட்டளையைக் காப்பதினால் வரும் ஆசீர்வா
தங்களைக் காட்டல்: ௰௫. கட்டளையை மீறுவ
தினால் வரும் சாபங்களைக் காட்டல்.

இன்றுநான் உனக்குவிதிக்கிற உன் தேவனாகி ௧
ய யெகோவாவின் சமஸ்தகட்டளைகளின்ப
டிக்குஞ்செய்யஎச்சரிக்கையாயிருப்பதற்கு, நீ அ
வருடையவாக்குக்குச் சாக்கிரதையாய்ச் செவி
கொடுப்பாயானால், உன் தேவனாகிய யெகோ
வா பூமியிலுள்ள சகலதேசத்தாருக்குள்ளும்உன்
னை மேன்மையுள்ளவனாக்கிவைப்பார்.—நீ உன் ௨
தேவனாகிய யெகோவாவின் வாக்குக்குச்
செவிகொடுப்பாயாகில், மேல்வரும் ஆசீர்வாதங்
கள்வந்து உன்னிடத்தில்தங்கும்.—நீபட்டணத் ௩
திலும் ஆசீர்வதிக்கப்படுவாய், வெளியிலும் ஆசீர்
வதிக்கப்படுவாய்.—உன்கருப்பக்கனியும், உன்நி ௪
லத்தின்விளைவும், உன்மாட்டின்பெருக்கம் ஆட்
டின்கிடையென்னும் உன்மிருகபலனும் ஆசீர்
வதிக்கப்படும்.—உன் கூடையும், மாப்பிசைகிற ௫
தொட்டியும், ஆசீர்வதிக்கப்படும்.—நீபோகையி ௬
லும்ஆசீர்வதிக்கப்படுவாய், நீவருகையிலும் ஆசீர்
வதிக்கப்படுவாய்.-யெகோவா உனக்குமுன் ௭
னின்று உனக்குவிரோதமாயெழும்புஞ் சத்துருக்
களைமுறியஅடிக்கும்படிசெய்வார்: ஒருவழியாய்
உனக்கு எதிராகப்புறப்பட்டு வருவார்கள், ஏழு
வழியாய் உனக்குமுன்பாக ஓடிப்போவார்கள்.-
யெகோவா உன்களஞ்சியங்களிலும், நீ கையி ௮
டுஞ் சகலதொழில்களிலும் உனக்கு ஆசீர்வாதத்
தைக்கட்டளையிடுவார். உன் தேவனாகிய யெ
கோவா உனக்களிக்குந் தேசத்தில் உன்னை
ஆசீர்வதிப்பார்.—நீ உன் தேவனாகிய யெகோ ௯
வாவின் கட்டளையைக் காத்துக்கொண்டு, அவ
ருடையநெறிகளிலேநடப்பாயாகில், யெகோ
வா உனக்கு ஆணையிட்டபிரகாரம் உன்னைத்
தமக்குரிய சனமாக ஏற்படுத்திக்கொள்வார்.—

(௰௨) யோசு.௮.௩௩. நியா.௯.௭. (௰௩) யோசு.௮.௩௩. (௰௪) யோசு.௮.௩௩. தானி.௯.௰௧. (௰௫) யாத்.௨௰.௪,௨௩. லேவி.௰௯,௪. ஏசா.௪௪.௯. ஓசி.௰௩.௨. எண்.௫.௨௨. எரே.௰௧.௫. ௧.கொரி.௰௪.௰௬. (௰௬) யாத்.௨௰.௰௨. லேவி.௰௯.௩. (௰௭) அதி.௰௯.௰௪. நீதி.௨௨.௨௮. (௰௮) லேவி.௰௯.௰௪. (௰௯) யாத்.௨௨.௨௧,௨௨. மல்.௩.௫. (௨௰) லேவி.௰௮.௮. அதி.௨௨.௩௰. (௨௧) லேவி.௰௮.௨௩. (௨௨) லேவி.௰௮.௯. (௨௩) லேவி.௰௮.௰௭. (௨௪) யாத்.௨௰.௰௩. எண்.௩௫.௩௧. (௨௫) யாத்.௨௩.௭,௮. எசேக்.௨௨.௰௨. (௨௬) அதி.௨௮.௰௫. சங்.௱௰௯.௨௧. எரே.௰௧.௫. கலா.௩.௰.—(௨௮. அதி. ௧.) யாத்.௰௫.௨௬. ஏசா.௫௫.௨. அதி.௨௬.௰௮. (௨) சக.௧.௬. (௩) சங்.௱௨௮.௧,௪. ஆதி.௩௯.௫. (௪) ஆதி.௨௨.௰௭. சங்.௱௭.௩௮. சங்.௱௨௭.௩. சங்.௱௨௮.௩. நீதி.௰.௨௨. ௧.தீமோ.௪.௮. (௬) சங்.௱௨௧.௮. (௭) லேவி.௨௬.௭,௮. சங்.௮௯.௨௩. (௮) லேவி.௨௫.௨௧. நீதி.௩.௰. அதி.௰௫.௰. (௯) யாத்.௰௯.௫,௬.

௰ அன்றியும்,நீ யெகோவாவின்நாமத்தைத்தரித்
தவனென்று பூமியிலுள்ள சகலதேசத்தாருங்கண்
௰௧ டுஉனக்குப் பயப்படுவார்கள்.–உனக் களிப்பே
னென்று யெகோவா உன்பிதாக்களுக்கிட்ட
ஆணைப்பிரகாரம் அளித்த தேசத்தில் உன் சந்தா
னவிருத்தியும், உன்மிருகப்பெருக்கமும், உன்
நிலத்தின்விளைவுமாகிய இந்த நன்மைகள் உனக்
௰௨ குப்பூரணமாகும்படி பண்ணுவார்.—யெகோ
வா பருவகாலத்தில் உன்தேசத்தில் மழையைவ
ருஷிக்கப்பண்ணி, நீ கையிடுஞ்செய்கைகள்யா
வையும்ஆசீர்வதிக்கும்படிஉனக்காகத்தமதுஉத்த
மவானமாகிய பொக்கிஷத்தைத்திறப்பார்: நீ அ
நேகசனங்களுக்குக்கடன் கொடுப்பாயேயன்றி,
௰௩ கடன்வாங்காமலிருப்பாய்.—இன்றுநான் உனக்
குவிதிக்கிறவாக்குகள்யாவையும்விட்டு, நீபோய்
வேறுதேவர்களைச் சேவிக்கும்படி வலதுபுறத்தி
௰௪ லும், இடதுபுறத்திலுஞ்சாயாமல்,—இன்றுநான்
உனக்குவிதிக்கிற உன் தேவனாகிய யெகோ
வாவின் கட்டளைக்குச்செவிகொடுத்து, அவை
களைக் காத்துநடந்து வருவாயாகில், யெகோ
வா உன்னைவாலாக்காமல் தலையாக்குவார்: நீ கீ
ழிராமல் மேலாகவேயிருப்பாய்.
௰௫ உன் தேவனாகிய யெகோவாவின் வாக்
குக்குச்செவிகொடுத்து, இன்று நான் உனக்குவி
திக்கிற உன் தேவனாகிய யெகோவாவின்
கட்டளைகளையும், விதிகளையுங்காத்து நடவாமற்
போவாயாகில், இந்தச்சாபங்கள்வந்து உன்னைத்
௰௬ தொடரும்.–நீ பட்டணத்திலுஞ் சபிக்கப்படுவா
௰௭ ய், வெளியிலுஞ் சபிக்கப்படுவாய்.–உன்கூடை
யும் மாப்பிசைகிறதொட்டியுஞ் சபிக்கப்படும்.-
௰௮ உன்கருப்பக்கனியும் உன் நிலத்தின்விளைவும்,
உன்மாட்டின்பெருக்கமும் உன் ஆட்டுக்கிடை
௰௯ களுஞ் சபிக்கப்படும்.—நீபோகையிலுஞ் சபிக்
கப்படுவாய், நீவருகையிலுஞ்சபிக்கப்படுவாய்.-
௨௰ நீ என்னை விட்டுத்துர்க்கிரியைகளைச்செய்ததினி
மித்தம், சீக்கிரமாய்க்கெட்டுஅழியுமட்டும், யெ
கோவா நீ கையிடுஞ் செய்கைகள்யாவிலும்,
சாபத்தையும்,கலக்கத்தையும், தண்டனையையும்
௨௧ உன்மேல்வரப்பண்ணுவார்.–நீ சுதந்தரிக்குந்தே
சத்தில் யெகோவா உன்னைச்சங்கரிக்குமள
வும், பெருவாரிக்காய்ச்சல் உன்னைப் பிடித்துக்
௨௨ கொள்ளப்பண்ணுவார்.—யெகோவா ஈளையி
னாலும், காய்ச்சலினாலும், உஷ்டணத்தினாலும்,
மிகுந்த எரிச்சலினாலும், கட்கத்தினாலும், பெ
ருங்காற்றினாலும், விஷப்பனியினாலும் உன்னை
வதைப்பார்; நீ அழியுமளவும் இவைகளுன்னைத்
௨௩ தொடரும்.—உன்தலைக்குமேலுள்ள வானம்பித்
தளையும், உனக்குக்கீழுள்ளபூமி இரும்புமாயிருக்
கும்.—யெகோவா உன்தேசத்தில் புழுதிமா ௨௪
ரியும், மண்மாரியும், பெய்யப்பண்ணுவார்: நீ
அழியும் அளவும் அப்படியே வானத்திலிருந்து
உன்மேலிறங்கும்.–நீ உன்சத்துருக்களுக்குமுன் ௨௫
பாக முறிய அடிக்கப்படும்படி யெகோவா
செய்வார்: ஒரு வழியாய் அவர்களுக்கெதிராகப்
புறப்படுவாய், ஏழுவழியாய் அவர்களுக்குமுன்
னே ஓடிப்போவாய்: நீ அலைந்து, பூமியிலுள்ள
இராச்சியமெங்குஞ் சிதறுண்பாய்.—உன்தேகங் ௨௬
கள் ஆகாயத்துப் பறவைகள் எவற்றிற்கும், பூமி
யிலுள்ள மிருகங்களுக்கும், இரையாகும், ஒரு
வராகிலும்அவைகளைவெருட்டார்கள்.–நீசொஸ் ௨௭
தமாக்கிக்கொள்ளாதபடி, எகிப்தியருக்குவந்த எ
ரிபந்தமான பருக்களினாலும், மூலவியாதியினா
லும், சொறியினாலும், சிரங்கினாலும், யெகோ
வா உன்னை வாதிப்பார்.–குருடன் அந்தகாரத் ௨௮
திலே தடவிக்கொண்டு திரிகிறதுபோல, நீயும்
பட்டப்பகலிலே தடவிக்கொண்டு திரியும்படி
புத்தி மயக்கத்தையும், குருட்டாட்டத்தையும்,
மனத்திகைப்பையும், தந்து யெகோவா உன்
னைவாதைசெய்வார்.–உன்வழிகளில்அனுகூலம் ௨௯
பெறாய்: நீ எக்காலமும் நெருக்கப்பட்டும்பறிக்
கப்பட்டும்போவாய், ஒருவரும் உதவிசெய்யார்
கள்.—உனக்கு நியமிக்கப்பட்ட ஸ்திரியுடனே ௩௰
வேறொருவன் சயனிப்பான்: நீவீட்டைக்கட்டு
வாய், அதிலேகுடியிருக்கமாட்டாய், திராட்சத்
தோட்டத்தைஉண்டாக்குவாய்,அதின்பலனை அ
னுபவிக்கமாட்டாய்.—உன் கண்களுக்கு முன் ௩௧
பாக உன்மாடுகள் அடிக்கப்படும், நீ அதிலொன்
றும் புசியாமற்போவாய்: உன் கழுதை உனக்கு
முன்பாகக் கொள்ளையிட்டுக் கொண்டுபோகப்
பட்டுத்திரும்ப உன்னிடத்திற்கு வராமற்போம்:
உன் ஆடுகள் உன் சத்துருக்களுக்குக் கொடுக்
கப்படும், விடுவிப்பார் உனக்கு ஒருவருமில்
லை.—உன்புத்திரரும், புத்திரிகளும் அந்நியச ௩௨
னங்களுக்குக் கொடுக்கப்படுவார்கள், நாடோ
றும் அவர்களைக்காண உன்கண்கள் பார்த்துப்
பார்த்துப் பூத்துப்போம்: உன் கைக்குப் பெல
னில்லை.—நீ அறியாதசனங்கள் உன் நிலத்தின் ௩௩
விளைவையும், உன் பிரயாசத்தினாலுண்டாகும்
பலன் யாவையும் புசிப்பார்கள்; நீ எப்போ
தும் நெருக்கப்பட்டும் நொருங்குண்டும் போ
வாய்.—இப்படி உன் கண்களுக்குத்தோற்றப்ப ௩௪
டும் விஷயங்களினாலே மதிமயக்கமடைவாய்.—
உன் உள்ளங்கால் தொடங்கி உச்சந்தலைமட்டும் ௩௫
முழங்கால்களிலும், தொடைகளிலும், நீ சொஸ்

(௰) எண்.௬.௨௬. ௨.நாளா.௭.௰௪. எசா.௬௩.௰௯. தானி.௯.௰௮,௰௯. அதி.௰௧.௨௫. (௰௧) அதி.௩௰.௯. நீதி.௰.௨௨. (௰௨) லேவி.௨௬.௪. (௰௩) அதி.௫.௩௨. (௰௪) எசா.௯.௰௪,௰௫. அதி.௫.௩௨. (௰௫) லேவி.௨௬.௰௪. புல.௨.௰௭. தானி.௯.௰௧,௰௩. மல்.௨.௨. (௨௰) மல்.௨.௨. ௧.சாமு.௰௪.௨௰. சக.௰௪.௰௩. சங்.௮௰.௰௬. எசா.௩௰.௰௭. எசா.௫௧.௨௰. (௨௧) லேவி.௨௬.௨௫. எரே.௨௪.௰. (௨௨) லேவி.௨௬.௰௬. ஆமோ.௪.௯. (௨௩) லேவி.௨௬.௰௯. (௨௫) லேவி.௨௬.௰௭,௩௭. எசா.௩௰.௰௭. எரே.௰௫.௪. எசேக்.௨௩.௪௬. (௨௬) ௧.சாமு.௰௭.௪௪,௪௬. சங்.௭௯.௨. (௨௭) யாத்.௯.௯. ௧.சாமு.௫.௬. சங்.௭௮.௬௬. (௨௮) எரே.௪.௯. யோபு.௫.௰௪. எசா.௫௯.௰. (௩௰) யோபு.௩௧.௰. எரே.௮.௰. யோபு.௩௧.௮. எரே.௰௨.௰௩. ஆமோ.௫.௰௧. மீகா.௬.௰௫. செப்.௧.௰௩. அதி.௨௰.௬. (௩௨) சங்.௱௰௯.௮௨. (௩௩) லேவி.௨௬.௰௬. (௩௪) வச.௬௭. (௩௫) வச.௨௭.

தப்படுத்தக்கூடாத எரிபந்தப்பருக்களினால் யெ
௩௬ கோவா உன்னை வாதைசெய்வார்.-யெகோ
வா உன்னையும், உனக்காக நீ வைத்துக்கொண்
டிருக்கும் இராசனையும், உனக்கும் உன் பிதாக்
களுக்குந்தெரியாத தேசத்திற்குப் போய்விடப்
பண்ணுவார், அங்கே நீ மரமும் கல்லுமான அந்
௩௭ நிய தெய்வங்களைச்சேவிப்பாய்.—யெகோவா
உன்னைக்கொண்டுபோய்விட்டிருக்குந்தேசத்தா
ருக்குள்ளே பிரமிப்பும், பழிமொழியும், பரிகா
௩௮ சச்சொல்லுமாவாய்.—மிகுந்த விதையை வய
லுக்குக்கொண்டுபோவாய், கொஞ்சம் அறுப்
௩௯ பாய்; வெட்டுக்கிளி அதைப்பட்சிக்கும்.—தோட்
டங்களை நாட்டி, திராட்சங்களை யுண்டாக்கினு
லும், அதினிரசத்தை நீ குடிக்கவும்பழங்களை ஆ
யவுமாட்டாய்; புழுக்கள் அதைத்தின்னும்.—
௪௰ சீதவிருட்சங்கள் உன் எல்லைகளெங்கும் இருக்
கும், அதினுடைய எண்ணெயைப்பூசிக்கொள்
ளமாட்டாய்; உன் சீதவிருட்சத்தின் பிஞ்சுகள்
௪௧ உதிர்ந்துபோம்.—நீ புத்திரரையும் புத்திரிகளையும்
பெறுவாய், அவர்களால் உனக்குப்பலனில்லை;
௪௨ அவர்கள்சிறைப்பட்டுப்போவார்கள்.—உன்மரங்
களெல்லாவற்றையும்,உன்நிலத்தின்விளைவுகளை
யும்,வெட்டுக்கிளிகள் சுதந்தரித்துக்கொள்ளும்.—
௪௩ உனக்குள்ளே தங்கும்பரதேசிகள் உனக்குமேற்
பட்டுமேன்மேலும்உயர்வார்கள்,நீகுறைவுபட்டு
௪௪ த்தாழ்ந்துபோவாய்.—அவன்உனக்குக்கடன்கொ
டுப்பதேயொழிய, நீஅவனுக்குக்கடன்கொடுக்க
மாட்டாய்: அவன் தலையாவான்,நீ வாலாவாய்.—
௪௫ உன் தேவனாகிய யெகோவாவின் வாக்குக்
குச்செவிகொடுத்து, அவர் உனக்கு விதித்த கட்
டளைகளையும், விதிகளையுங்காத்துக்கொள்ளாததி
னாலே இந்தச்சாபங்களெல்லாம் உன்மேல்வந்து,
நீ அழியுமட்டும் உன்னைத்தொடர்ந்துபிடித்து,—
௪௬ என்றென்றைக்கும் அடையாளமாகவும், அற்புத
மாகவும், உன்னிடத்திலும் உன் சந்ததியினிடத்
௪௭ திலுந்தங்கும்.—சகலமும்நிறைவாயிருக்கையில்
நீ மனமகிழ்ச்சியோடும்,களிப்போடும்,உன் தே
வனாகிய யெகோவாவைச்சேவியாமற்போ
௪௮ னதினிமித்தம்,—சகலமுங்குறைவுபடப் பசி, தா
கம், நிருவாணம் என்னுமிவைகளோடும் யெ
கோவா உனக்கு விரோதமாயனுப்பும் உன்
சத்துருக்களைச்சேவிப்பாய்: அவன் உன்னை அ
ழிக்குமட்டும் இருப்புநுகத்தை உன் கழுத்தின்
௪௯ மேல்வைப்பான்.—விருத்தருடைய முகத்தைப்
பாராமலும், பாலகருக்கு இரங்காமலுமிருக்கிற
௫௰ கொடியமுகமும்,—உனக்குத்தெரியாத பாஷை
யுமுள்ள ஒரு தேசத்தார், அதிதூரமாகப்பூமியி
னெல்லையிலிருந்து கழுகுபறக்கிறதுபோல, வே
கத்துடன் உன்னை எதிர்க்கும்படி யெகோவா

செய்வார்.—நீ அழியுமளவும் அவன் உன் மிரு ௫௧
கபலனையும், உன் நிலத்தின் விளைவையுந் தின்
பான்: உன்னை நாசமாக்குமளவும் அவனுன்தா
னியம், திராட்சரசம், எண்ணெய் உன் கிடையி
லுள்ள ஆடுமாடு இவைகளிலொன்றையாகிலும்,
உனக்குவிட்டுவையான்.—நீ நம்பியிருக்கிற உன் ௫௨
தேசமெங்குமுள்ள உயரமும் பலமுமான உன்
மதில்கள் கீழேவிழுமளவும், அவனுன்வாசல்கள்
தோறும் உன்னைத்தகைவான்: உன் தேவனாகி
ய யெகோவா உனக்கு அளித்ததேசம் முழு
வதிலுமுள்ள உன்னுடைய வாசல்கள்தோறும்
உன்னைத்தகைவான்.—உன் சத்துருக்கள் உன் ௫௩
னைத்தகைந்து நெருக்குங்காலத்தில், உன் தேவ
னாகிய யெகோவா உனக்களித்ததேகக்கனிக
ளாகிய உன் புத்திரபுத்திரிகளுடைய மாமிசத்
தைப்புசிப்பாய்.—உன் சத்துருக்கள் உன் வா ௫௪
சல்கள்தோறும் உன்னைத்தகைந்து நெருக்குங்கா
லத்தில், உன்னிடத்திற் கோமளமும் மிருதுவு
முள்ள மனிதன் சகலத்தையுமிழந்து, தன்னில்
லாமையினாலே தான்புசிக்குந் தன்பிள்ளைகளின்
மாமிசத்திலே,—தன் சகோதரனுக்கும் தன் பிரா ௫௫
ணநாயகிக்கும் தனக்கு மீந்திருக்கிற மற்றமக்க
ளிலொருவனுக்கும் சற்றாகிலுங் கொடாதபடி
அவர்கள்மேல் வன்கண்ணாயிருப்பான்.—உன்னி ௫௬
டத்திலே கோமளத்தினாலும் மிருதுவினாலுந்த
ரையின்மேல் தன்னுள்ளங்காலைவையாத கோம
ளமும் மிருதுவுமுள்ள ஸ்திரி, உன் சத்துருக்கள்
வாசல்களில் உன்னைத்தகைந்து வருத்துகையில்
சகலமுங்குறைவுபடுவதினால்,-தன்னிடத்திலுற் ௫௭
பவித்துப்பிறக்கும் பிள்ளையை ஒளித்துப்புசிக்
கும்போது, தன் பிராணநாயகனுக்கும், புத்திர
னுக்கும்,புத்திரிக்கும்அற்பமாயினுங்கொடாமல்
அவர்கள்மேல் அவள் வன்கண்ணாயிருப்பாள்.—
மகிமையும் பயங்கரமுமான உன் தேவனாகிய ௫௮
யெகோவாவுடைய திருநாமத்துக்குப்பயப்ப
டும்பொருட்டு, நீ இப்புத்தகத்திலெழுதியிருக்கிற
சகல வேதப்பிரமாண வாக்குகளின்படிக்கும்
நடக்க எச்சரிக்கையாயிராவிட்டால்,—நீங்காத ௫௯
பெரிய வேதனைகளினாலும், நீங்காத கொடிய
ரோகங்களினாலும் யெகோவா உன்னையும்
உன்சந்ததியையும் அதிசயமாகவாதித்து,—நீ அஞ் ௬௰
சின எகிப்தியருக்குண்டான வியாதிகள்யாவை
யும் உன்மேல் வருவிப்பார்; அவைகள் உன்
னைப்பற்றிக்கொள்ளும்.—நீ அழியுமளவும் இந்த ௬௧
நியாயப்பிரமாணப்புத்தகத்தில் எழுதாத மற்றவி
யாதிகள் வேதனைகள் யாவையும் யெகோவா
உன்மேல் வருவிப்பார்.—நீங்கள் வானத்து நட் ௬௨
சத்திரங்களுக்கொப்பான திரளாயிருந்தும், உங்
கள் தேவனாகிய யெகோவாவின்வாக்குக்குச்

(௩௬) ௨.இரா.௰௭.௪,௬. ௨.நாளா.௩௩.௰௧. எரே.௰௬.௰௩. (௩௭) ௧.இரா.௯.௭,௮. எரே.௨௪.௯. சங்.௪௪.௰௪. (௩௮) மீகா.௬.௰௫. ஆகா.௧.௬. யோவே.௧.௪. (௪௧) புல.௧.௫. (௪௪) புல.௧.௫. (௪௬) ஏசா.௮.௰௮. (௪௭) நெகி.௯.௩௫,௩௬,௩௭. (௪௮) எரே.௨௮.௰௪. (௪௯) ௨.நாளா.௩௬.௰௭. ஏசா.௪௭.௬. (௫௰) எரே.௫.௰௫. லூக்.௰௯.௪௩. எரே.௪௮.௪௰. புல.௪.௰௯. எசேக்.௰௭.௩௰௨. ஓசி.௮.௧. நீதி.௭.௰௩. பிர.௮.௯. தானி.௮.௨௩. (௫௧) ஏசா.௧.௭. ஏசா.௬௨.௮. (௫௨) ௨.இரா.௨௫.௧,௨,௪. (௫௩) லேவி.௨௬.௨௯. ௨.இரா.௬.௨௮,௨௯. எரே.௰௯.௯. புல.௨.௨௰. புல.௪.௰. (௫௭) வச.௫௪. ஆதி.௪௯.௰. (௫௮) யாத்.௬.௩. (௫௯) தானி.௯.௰௨. (௬௰) அதி.௭.௰௫. (௬௨) அதி.௪.௨௭. நெகி.௯.௨௩.

செவிகொடாமற்போனதினால்குறைந்துபோவீர்
௬௩ கள்.—யெகோவா உங்களுக்கு நன்மைசெய்
யவும், உங்களைப்பெருகப்பண்ணவுந் திருவுளங்
கொண்டபடியே யெகோவா உங்களைஅழிக்
கவும், உங்களைஅதம்பண்ணவுந்திருவுளங்கொள்
வார்; நீங்கள் சுதந்தரிக்குந்தேசத்தினின்றும் களை
௬௪ யப்படுவீர்கள்.—நீ பூமியினொருதிசை தொடங்கி
மறுதிசைமட்டுமிருக்கிற தேசத்தார் யாவருக்குள்
ளும் சிதறும்படி யெகோவா உன்னை அடிப்
பார்; அங்கே நீயும் உன்பிதாக்களும் அறியாத
மரமுங் கல்லுமான அந்நிய தெய்வங்களைச் சே
௬௫ விப்பாய்.—நீ அந்தத்தேசத்தாருக்குள்ளே இளைப்
பாறமாட்டாய், உன் உள்ளங்கால்தங்க இடமில்
லை: அங்கே சஞ்சல இருதயத்தையும், சோருங்
கண்களையும்,மனத்துக்கத்தையும் யெகோவா
௬௬ உனக்குக்கொடுப்பார்.—உன் சீவனைப்பற்றிச்ச
முசயப்பட்டு,இரவும்பகலும்பயமடைந்து, உன்
சீவன் காக்கப்படுமென்ற நம்பிக்கையில்லாதி
௬௭ ருப்பாய்.—உன் இருதயத்தினாலும், உன் கண்
கள் காணுங்காட்சியினாலும், விடியற்காலத்தில்
எப்பொழுது அஸ்தமிக்குமோவென்றும் சாயங்
காலத்தில் எப்பொழுது விடியுமோ வென்றுஞ்
௬௮ சொல்லுவாய்.—நான் உனக்குச்சொன்ன வழி
யாக நீ எகிப்தை என்றும்நோக்காமல், யெகோ
வா உன்னைக்கப்பல்களில் அங்கேகொண்டுபோ
கப்பண்ணுவார், அங்கே உங்களைக்கொள்ளுகிற
வர்கள் இல்லாமற்போகுமளவும், உங்கள் சத்து
ருக்களுக்கு ஊழியக்காரராகவும் ஊழியக்காரிக
ளாகவும் விற்கப்படுவீர்கள்.

## ௨௯. அதிகாரம்.

௧. கட்டளைகைக்கொள்ள ஏவல்: ௰. தேவனோ
டே உடன்படிக்கை நிலைப்படுத்தல்: ௰௮. கட்
டளை மீறுதலினால் வரும்பலனுரைத்தல்.

ஓரேபிலே தாம் இஸரவேல் சந்ததியாருடனே
பண்ணிக்கொண்ட உடன்படிக்கையை யல்லா
மல், மோவாபின்தேசத்தில் அவர்களுடனே உ
டன் படிக்கை பண்ணிக்கொள்ளும்படி, யெ
கோவா மோசேக்குக் கட்டளையிட்ட வாக்கு
௨ கள் இவைகளே.—மோசே இஸரவேலர் சகலரை
௩ யும்வரவழைத்து அவர்களைநோக்கி,—உங்கள்கண்
களுக்குமுன் எகிப்துதேசத்தில் பார்வோனுக்
கும், அவனுடையசேவகர் யாவருக்கும், அவனு
டையதேசம் முழுமைக்கும், யெகோவா ந
டப்பித்த பெரிய சோதனைகளையும், பெரிய அ
டையாளங்களையும் அற்புதங்களையுங் கண்ணி
௪ னாலேகண்டீர்களே.—அவைகளை உணர இருத
யத்தையும், காணக்கண்களையும், கேட்கக்காது
களையும், இந்நாள்வரைக்கும் யெகோவா உங்
௫ களுக்குக் கொடுக்கவில்லை.—யெகோவாவாகி
ய நான் உங்கள் தேவனென்று நீங்கள் அறிந்து
கொள்ளும்படி, நான் நாற்பதுவருஷம் உங்களை
வனாந்தரத்தில் நடத்தினேன்: உங்கள்மேலிருந்த
வஸ்திரங்களும் பழையனவாய்ப்போகவில்லை,
உங்கள் பாதரட்சைகளும் பழையனவாய்ப்போ
கவில்லை.—நீங்கள் அப்பஞ்சாப்பிடவுமில்லை, ௬
திராட்சரசமும் மதுவுங்குடிக்கவுமில்லை.—நீங்க ௭
ளிவ்விடத்துக்கு வந்தபொழுது எஷ்போனின்
இராசனாகிய சீகோனும், பாஷானின் இராசனா
கிய ஓகும், நம்முடன் யுத்தஞ்செய்யப்புறப்பட்
டார்கள்.—நாம்அவர்களைமுறியஅடித்து,அவர்க ௮
ளுடையதேசத்தைப்பிடித்து,ரூபேனியருக்குங்
காத்தியருக்கும் மனாசேயரின் கோத்திரத்தாரிற்
பாதிப்பேருக்கும் சுதந்தரமாகக்கொடுத்தோம்.—
ஆகையால் நீங்கள் செய்வதெல்லாம் உங்களுக் ௯
குச்சித்திக்கும்படி, இந்த உடன்படிக்கையின்
வாக்குகளைக் கைக்கொண்டு அவைகளின்படி
செய்வீர்களாக.

உங்கள் தேவனாகிய யெகோவா உங்க ௰
ளுக்குச்சொன்னபடிக்கும், உங்கள் பிதாக்களா
கிய ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், யாக்கோ
புக்கும் ஆணையிட்டுக்கொடுத்தபடிக்கும், இன்று
உங்களைத் தமது சனங்களாக ஏற்படுத்திக்கொள்
ளும்பொருட்டும், தாம் உங்களுக்குத் தேவனா
யிருக்கும் பொருட்டும்,—உங்கள் தேவனாகிய ௰௧
யெகோவாவின் உடன்படிக்கைக்கும், இன்
று அவர் உங்களுக்கிடும் ஆணைக்கும் நீங்களு
டன்படும் படிக்கு,—எல்லா இஸரவேலராகிய ௰௨
உங்கள் கோத்திரத்தலைவர், உங்கள் முதியோர்,
உத்தியோகஸ்தர்,—உங்கள் பிள்ளைகள், உங்கள் ௰௩
மனைவிகள், உங்கள் பாளயத்திலுள்ள விறகுகா
ரன்முதல், உங்கள் தண்ணீர்க்காரன்வரைக்கு
முள்ள அந்நியரெல்லாரும்,—இன்று உங்கள் ௰௪
தேவனாகிய யெகோவாவின் சமுகத்தில்
நிற்கிறீர்களே.—நான் உங்களுடனேமாத்திரமல் ௰௫
ல, இன்று இங்கே நம்முடனே நம்முடைய
தேவனாகிய யெகோவாவுக்கு முன்பாக
நிற்கிறவனுடனேயும்இன்றுஇங்கேநம்முடனே
யிராதவனுடனேயுங்கூட,இந்தஉடன்படிக்கை
யையும், இந்த ஆணையினுறுதியையும் பண்ணிக்
கொள்ளுகிறேன்.—நீங்கள், நாம் எகிப்துதேசத் ௰௬
திலே குடியிருந்தவகையையும், நீங்கள் நடந்து
வந்ததேசங்களுக்குள்ளே நாம் நடந்துவந்தவகை
யையும் அறிந்தும்,—அவர்கள் செய்கிற அருவருப் ௰௭
பானவைகளையும் மரம், கல், வெள்ளி, பொன்
என்னுமிவைகளினால் வகுத்த அவர்களுடைய
விக்கிரகங்களையும் கண்டுமிருக்கிறீர்கள்.
ஆதலால் அந்தச்சனங்களுடைய தெய்வங்க ௰௮
ளைச்சேவிக்கப்போகும்படி, இன்று நம்முடைய

(௬௩) எரே.௩௨.௪௧. நீதி.௧.௨௬. ஏசா.௧.௨௪. (௬௪) லேவி.௨௬.௩௩. நிகி.௧.௮. எரே.௰௬.௰௩. (௬௫) ஆமோ.௯.௪. லேவி.௨௬.௩௬. லேவி.௨௬.௰௬. (௬௭) யோபு.௭.௪. (௬௮) எரே.௪௩.௭. ஒசி.௮.௰௩. அதி.௰௭.௰௬.—(௨௯.அதி.௧.) அதி.௫.௨,௩. (௩) யாத்.௰௧.௪. அதி.௪.௩௪. அதி.௭.௰௯. (௪) ஏசா.௬.௯,௰. யோவா.௮.௪௩. அப்.௨௮.௨௬,௨௭. எபே.௪.௰௮. ௨.தெச.௨.௰௧,௰௨. (௫) அதி.௮.௪. (௬) யாத்.௰௬.௰௨. சங்.௭௮.௨௨,௨௩. (௭) எண்.௨௧.௨௩,௨௪,௩௩. (௮) எண்.௩௨.௩௩. (௯) அதி.௪.௬. யோசு.௧.௭. ௧.இரா.௨.௩. யோசு.௧.௭. (௰) அதி.௨௮.௯. யாத்.௬.௭. ஆதி.௰௭.௭. (௰௧) நிகி.௰.௨௯. (௰௫) எரே.௩௧.௩௧,௩௨,௩௩. எபி.௮.௭,௮. அப்.௨.௩௯. ௧.கொரி.௭.௰௪. (௰௮) அதி.௰௧.௰௬.

தேவனாகிய யெகோவாவைவிட்டகலுகிறஇ
ருதயமுள்ள ஒருபுருஷனாகிலும்,ஸ்திரியாகிலும்,
குடும்பமாகிலும், கோத்திரமாகிலும், உங்களிலி
௰௯ ராதபடிக்கும்,—இந்தப் பிரமாணவாக்குகளைக்கே
ட்டும்,நான்தாகத்தினிமித்தம்வெறிக்கக்குடித்து,
மனஇஷ்டப்படிநடந்தாலும் எனக்குச் சௌக்
கியமுண்டாகுமென்று, தன்னுள்ளத்தைத் தேற்
றிக்கொள்ளுகிறவனாகிய ஊமத்தையையும் எட்
டியையும் உண்டாக்குகிற ஒருவேர்உங்களிலிரா
தபடிக்கும் எச்சரிக்கையாயிருங்கள்: அப்படிப்
௨௰ பட்டவனுக்கு யெகோவா இரங்கார்.—அப்
பொழுது யெகோவாவுடையகோபமும், எ
ரிச்சலும் அவன்மேற்புகையும், இந்தப்புத்தகத்தி
லெழுதியிருக்கிற சாபங்களெல்லாம் அவன்
மேல்வரும்; யெகோவா அவனுடையபேரை
௨௧ வானத்தின் கீழிராதொழியத் துடைப்பார்.—இந்
தவேத புத்தகத்திலெழுதியிருக்கிற உடன்படிக்
கையின் சகலசாபங்களின்படிக்கும், தீமையை
அடைய யெகோவா அவனை இஸ்ரவேல்
கோத்திரங்களெல்லாவற்றிற்கும் புறம்பாக்கிவி
௨௨ டுவார்.—உங்களுக்குப்பின் உண்டாகுந்தலைமு
றையான உங்கள் பிள்ளைகளும், தூரதேசத்திலி
ருந்து வரும் அந்நியரும், யெகோவா இந்தத்
தேசத்தாருக்கு வருவித்தவேதனைகளையும், நோய்
௨௩ களையுங்காணும்பொழுதும்,—முன்பு யெகோ
வா தமது உக்கிரகோபத்தினாலே சோதோம்,
கொமோரா, அத்மா, செபோயிம் என்னும்பட்ட
ணங்களைக்கவிழ்த்ததுபோல், இந்தத் தேசத்தினு
டைய நிலங்களெல்லாம் விதைப்பும் விளைவும்
எந்தக்கீரையின் முளையுமில்லாதபடிக்குக் கந்த
கத்தாலும், உப்பாலும், எரிக்கப்பட்டதைக் கா
௨௪ ணும்பொழுதும்,-தேசத்தாரெல்லாரும்யெகோ
வா எதின்நிமித்தம் இந்தத்தேசத்திற்கு இப்படிச்
செய்தாரென்றும் இத்தனைபெரியகோபாக்கினிக்
௨௫ குக் காரணமேதென்றுஞ் சொல்வார்கள்.—அதற்
கு அவர்களுடைய பிதாக்களின் தேவனாகிய
யெகோவா அவர்களை எகிப்துதேசத்திலிருந்
து புறப்படச்செய்தபொழுது, அவர்களுடனே
பண்ணின உடன்படிக்கையை அவர்கள் விட்
௨௬ டுப்போய்,—தாங்களறியாமலுந் தங்களுக்குப்ப
லன்கொடாமலுமிருக்கிற அந்நிய தேவர்களைச்
சேவித்து, அவர்களை வணங்கினபடியினாலே,—
௨௭ யெகோவா இந்தப் புத்தகத்திலெழுதியிருக்
கிற சாபங்களெல்லாவற்றையும் இத்தேசத்தின்
மேல் வருவிக்கும்படி கோபமூண்டவரானார்:-
௨௮ யெகோவா உக்கிரத்தினாலும், குரோதத்தினா
லும், மிகுந்தகோபத்தினாலும், அவர்களுடைய
தேசத்திலிருந்துவேரறக்களைந்து, இந்நாளிலிருக்
கிறதுபோல் வேறுதேசத்துக்குப்போகும்படி அ
வர்களைத்தள்ளிவிட்டாரென்று சொல்லப்படும்.-
மறைபொருளானவைகள்நம்முடைய தேவனா ௨௯
கிய யெகோவாவுக்கே உரியவைகள்: நாமிந்
த நியாயப்பிரமாணத்தின் வாக்குகளெல்லாவற்
றையும் நிறைவேற்றிக்கொள்வதற்கேற்ற வெளி
பொருளானவைகளோ சதாகாலமும் நமக்கும்
நம்முடையபிள்ளைகளுக்குமுரியவைகள்.

## ௩௰. அதிகாரம்.

௧. மனஸ்தாபப்பட்டோரைக்கடாட்சிக்கும்படி தேவன்வாக்குத்தத்தஞ்செய்தல்: ௰௧.கட்டளையின்துலக்கத்தைக்காட்டல்: ௰௫. மரணமும் சீவனும் அவர்கள்முன்பாக முற்படுத்தல்.

நான் உனக்குக்காட்டிய ஆசீர்வாதமுஞ் சாப ௧
முமாகிய இவைகளெல்லாம் உன்மேலேவருங்
காலத்தில், நீ உன் தேவனாகிய யெகோவா
வினாலே துரத்தப்பட்டு, சமஸ்தசாதியாருக்குள்
ளும்போயிருக்கும்பொழுது அவைகளைச்சிந்தித்
துக்கொண்டு,—உன் தேவனாகிய யெகோ ௨
வாவிடத்துக்கே மனந்திரும்பி, இன்று நான் உ
னக்கு விதிக்கிற கட்டளைகளெல்லாவற்றின் ப
டிக்கும், நீயும் உன்பிள்ளைகளும் உன்பூரண இ
ருதயத்தினாலும் உன்பூரண ஆத்துமத்தினாலும் அ
வருடைய வாக்குக்குச்செவிகொடுத்தால்,—உன் ௩
தேவனாகிய யெகோவா தம்மால்சிதறஅடிக்
கப்பட்டுச் சமஸ்த சாதியாருக்குள்ளுமிருக்கிற
உனக்கு, உன் தேவனாகிய யெகோவா இ
ரங்கி, உன் அடிமைத்தனத்தை மாற்றித்திரும்ப
உன்னைச் சேர்த்துக்கொள்ளுவார்.—நீ வானத்தி ௪
னெல்லையளவுந்துரத்தப்பட்டு எங்கேபோயிருந்
தாலும், அங்கேயிருந்து உன் தேவனாகிய யெ
கோவா உன்னைக்கூட்டி, அவ்விடத்தினின்
றும்,—உன்னை அழைத்து,உன்பிதாக்கள்சுதந்தரித் ௫
துவந்ததேசத்தை நீசுதந்தரித்துக்கொள்ளும்படிக்
கு அதிலே பிரவேசிக்கப்பண்ணி, உனக்கு நன்
மைசெய்து, உன்பிதாக்களிலும் உன்னைப்பெரு
கப்பண்ணுவார்.—நீ சீவிக்கும் பொருட்டாக ௬
உன்தேவனாகிய யெகோவாவிடத்தில்உன்
பூரண இருதயத்தினாலும், உன்பூரண ஆத்துமத்
தினாலும்அன்புகூரும்படிக்கு, உன் தேவனாகி
ய யெகோவா உன் இருதயத்தையும், உன்சந்
ததியாருடைய இருதயத்தையும்,விருத்தசேதனம்
பண்ணி,—இந்தச் சாபங்களெல்லாவற்றையும் ௭
உன்சத்துருக்கள்மேலும், உன்னைத்துன்பப்படுத்
தின பகைவர்மேலும் வருவிப்பார்.—அப்பொ ௮
ழுது நீ திரும்பி யெகோவாவின்வாக்குக்குச்
செவிகொடுத்து, இன்று நானுனக்கு விதிக்கிற
அவருடைய கட்டளைகளெல்லாவற்றின்படிக்
குஞ்செய்வாய்.—உனக்கு நன்மையுண்டாகும் ௯
படி, உன்தேவனாகிய யெகோவா உன்கைத்

(௰௯) அப்.௮.௨௨. எபி.௰௨.௰௫. எண்.௰௫.௩௯. பிர.௰௧.௯. எரே.௩.௰௭. ஏசா.௩௰.௧. (௨௰) எசேக்.௰௪.௭,௮. சங்.௭௪.௧. சங்.௭௯.௫. எசேக்.௨௩.௨௫. அதி.௯.௰௪. (௨௧) மத்.௨௪.௫௧. (௨௩) சங்.௱௭.௩௪. எரே.௰௭.௬. செப்.௨.௯. ஆதி.௰௯.௨௪,௨௫. எரே.௨௰.௰௬. (௨௪) ௧.இரா.௯.௮,௯. எரே.௨௨.௮,௯. (௨௭) தானி.௯.௰௧,௰௩,௰௪. (௨௮) ௧.இரா.௰௪.௰௫. ௨.நாளா.௭.௨௰. சங்.௭௨.௫. நீதி.௨.௨௨.—(௩௰. அதி. ௧.) லேவி.௨௬.௪௰. ௧.இரா.௮.௪௭,௪௮. (௨) நிகி.௧.௯. ஏசா.௫௫.௭. புல.௩.௪௰. யோவே.௨.௰௨,௰௩. (௩) சங்.௱௨௬.௧,௪. எரே.௨௯.௰௪. புல.௩.௨௨,௩௨. சங்.௱௪௭.௨. எரே.௩௨.௩௭. எசேக்.௩௪.௰௩. (௪) நிகி.௧.௯. (௬) எரே.௩௨.௩௯. எசேக்.௩௬.௨௬. (௯) அதி.௨௮.௰௧.

தொழிலெல்லாவற்றிலும், உன் சந்தானவிருத்தி
யிலும், உன்மிருகபலனிலும், உன் நிலத்தின் வி
௰ ளைவிலும், பரிபூரணத்தைக்கொடுப்பார்.—உன்
தேவனாகிய யெகோவாவின் வாக்குக்குச்
செவிகொடுத்து, இந்த வேதபுத்தகத்திலெழுதியி
ருக்கிற அவருடைய கட்டளைகளையும் அவரு
டைய விதிகளையுங் காத்துக்கொள்ளும்பொழு
தும், உன் தேவனாகிய யெகோவாவினி
டத்துக்கு உன்பூரண இருதயத்தாலும்பூரண ஆத்
துமத்தினாலும் திரும்பும்பொழுதும், யெகோ
வா உன் பிதாக்கள்மேற் சந்தோஷமாயிருந்தது
போல் உனக்கு நன்மையுண்டாகத்திரும்பவும்
உன்மேற்சந்தோஷமாயிருப்பார்.
௰௧ நான் இன்று உனக்கு விதிக்கிற கட்டளை
உனக்கு எட்டாததுமல்ல, தூரமானதுமல்ல.—
௰௨ நாங்கள் அதைக்கேட்டுக்காத்துக்கொள்ளும்பொ
ருட்டு, எங்கள்நிமித்தம்வானத்திற்சென்று அதை
எங்களுக்குக்கொண்டுவருபவன் யாவனென்று
நீசொல்லும்படி, அதுவானத்திலுள்ளதுமல்ல.—
௰௩ நாங்களதைக்கேட்டுக் காத்துக்கொள்ளும் பொ
ருட்டு எங்கள்நிமித்தம் சமுத்திரத்தைக்கடந்து
அதைக்கொண்டு வருபவன் யாவனென்று நீ
சொல்லும்படி, அதுசமுத்திரத்துக்கு அப்புறத்தி
௰௪ லுள்ளதுமல்ல.—நீங்கள் காத்துக்கொள்ளும்படி
அந்தவாக்கு உனக்குமிகவும் சமீபமாய் உன்வா
யிலும் மனதிலுமிருக்கின்றதே.
௰௫ பார், சீவனையும், நன்மையையும், மரணத்தை
யும்,தீமையையும் இன்று உனக்குமுன்னேவைத்
௰௬ தேன்.—ஆகையால் நீ சீவித்துப்பெருகுவதற்கே
துவாய் இன்றுநான் உனக்குக்கட்டளையிட்டபி
ரகாரம், உன் தேவனாகிய யெகோவாவினி
டத்தில் அன்புகூர்ந்து, அவருடைய நெறிகளி
லேநடந்து, அவருடைய கட்டளைகளையும் விதி
களையும் நியாயப்பிரமாணங்களையுங் காத்துக்
கொள்வாயாகில்; நீ சுதந்தரிக்குந்தேசத்தில் உன்
தேவனாகிய யெகோவா உன்னை ஆசீர்வ
௰௭ திப்பார்.—நீ இதற்குச்செவிகொடாதபடி, உன்
னிருதயம்வேறுபட்டு, இழுப்புண்டுபோய் அந்நி
யதேவர்களை நமஸ்கரித்துச்சேவிப்பாயானால்,—
௰௮ நீ நிச்சயமாய் அழிந்துபோவாயென்று இன்று உ
னக்கு உணர்த்துகிறேன்: யோர்தானைக்கடந்து நீ
சுதந்தரிக்கும்படி போகிறதேசத்தில் உன் ஆயுள்
௰௯ நாள்களை விருத்தியாக்கமாட்டாய்.—இன்று வா
னமும் பூமியுஞ்சாட்சியாய்முன்னிற்க, நான் சீ
வனையும், மரணத்தையும், ஆசீர்வாதத்தையும், சா
பத்தையும் உங்களுக்குமுன்பாகவைத்தேன்; ஆ
கையால் நீயும் உன்சந்ததியுஞ் சீவிக்கும் பொ
ருட்டு, உன் தேவனாகிய யெகோவாவில் அ
ன்புகூர்ந்து, அவருடையவாக்குக்குச்செவிகொ
டுத்து,உன்சீவனுக்கும், தீர்க்காயுளுக்குங்காரண
ராகிய அவரையேசார்ந்து, சீவனையே தெரிந்து
கொள்ளுங்கள்.-இப்படி யெகோவா உன் பி ௨௰
தாக்களாகிய ஆபிரகாமுக்கும், ஈசாக்குக்கும், யாக்
கோபுக்கும், கொடுப்பேனென்று அவர்களுக்கு
ஆணையிட்டுக்கொடுத்த தேசத்திலே வாசம்பண்
ணுவாய்.

## ௩௧. அதிகாரம்.

௧. மோசேசனங்களைத்தைரியப்படுத்தல்: ௭. யோசுவாவை ஏவல்: ௯. லேவியாசாரியருக்குக்கட்டளையையொப்புக்கொடுத்தல்: ௰௪. தேவன் யோசுவாவுக்குக்கட்டளையிடல்: ௰௬. கீதத்தை எழுதத் தேவன் மோசேக்குக்கட்டளையிடல்: ௨௪.லேவியாசாரியருக்குப் புத்தகத்தை யொப்பித்தல்: ௨௮. முதியோர்கேட்கக்கீதத்தைப்பாடல்.

பின்னும் மோசேபோய் இஸரவேலர்யாவரை ௧
யும்நோக்கி,—இன்றளவிலே நான் நூற்றிருபது ௨
வயதுள்ளவனாயிருக்கிறேன்; இனி என்னாலே
போக்குவரவு செய்யமுடியாது: யெகோவா
வும் நீ இந்தயோர்தானைக்கடந்துபோகமாட்டா
யென்று எனக்குச்சொன்னார்.—உன் தேவனா ௩
கிய யெகோவாதாமே உனக்கு முன்னேக
டந்துபோவார், அவரே உனக்குமுன்னின்று அந்
தத் தேசத்தாரை அழிப்பார், நீ அவர்கள் தேசத்
தைச்சுதந்தரிப்பாய்: யெகோவா சொல்லியப
டியோசுவா உனக்குமுன்பாக அந்தயோர்தானைக்
கடந்துபோவான்.—யெகோவா அழித்தஎமோ ௪
ரியருடைய இராசாக்களாகிய சீகோனுக்கும், ஓ
குக்கும், அவர்களுடையதேசத்துக்குஞ்செய்தபி
ரகாரமாகவே அவர்களுக்குஞ்செய்வார்.—நான் ௫
உனக்கு விதித்த கட்டளைகளின்படிக்கு அவர்
களுக்குச்செய்யும்பொருட்டு, யெகோவா அ
வர்களை உங்களுக்கு ஒப்புக்கொடுப்பார்.-உன்தே ௬
வனாகிய யெகோவா தாமே உன்னுடனேகூ
டநடந்து, உன்னை நீங்காமலும் உன்னைக்கைவி
டாமலுமிருப்பார்; ஆதலால் நீ அவர்களுக்குப்
பயப்படாமலும் திகையாமலும் பலங்கொண்டு
திடசித்தமுள்ளவர்களாயிருங்களென்று இந்த
வாக்குகளை வசனித்தான்.
பின்பு மோசேயோசுவாவை அழைத்து, இஸ ௭
ரவேலர்யாவருக்கும் பிரத்தியட்சமாக அவனை
நோக்கி, பலங்கொண்டு திடசித்தமுள்ளவனாயி
ரு: யெகோவா இவர்களுடைய பிதாக்களுக்
குக்கொடுப்பேனென்று ஆணையிட்டதேசத்துக்
கு நீ இவர்களோடுகூடிக்கொண்டுபோய், அதை
இவர்கள்சுதந்தரிக்கும்படிசெய்வாய்.-யெகோ ௮
வா தாமே உனக்குமுன்பாக நடப்பார்; அவர்
உன்னோடிருப்பார், அவர் உன்னைநீங்கவுங் கை
விடவுமாட்டார்: நீபயப்படாமலும்கலங்காமலு
மிருப்பாயாகவென்றான்.
மோசே இந்தநியாயப்பிரமாணத்தையெழுதி, ௯
அதை யெகோவாவின் உடன்படிக்கைப்

(௰)எரே.௩௨.௪௧.(௰௧)ஏசா.௪௫.௰௯.(௰௨)ரோ.௰.௬,.(௰௫) அதி.௰௧.௨௬.(௰௮) அதி.௪.௨௬.(௰௯)அதி.௪.௨௬. அதி. ௩௧.௨௯. சங்.௨௭.௧. சங்.௬௬.௯. யோ.௰௧.௨௫.—(௩௧.அதி.௨.) யாத்.௭.௭. அதி.௩௪.௭. எண்.௨௭.௰௭. ௧.இரா.௩.௭. எண்.௨௰.௰௨.(௩)அதி.௯.௩.எண்.௨௭.௨௧.(௪)எண்.௨௧.௨௪,௩௩.(௬)யோசு.௰.௨௫.அதி.௭.௰௮.அதி.௨௰.௪.யோசு. ௧.௫. எபி.௰௩.௫.(௭)யோசு.௧.௬.(௮)யாத்.௰௩.௨௧,௨௨. யோசு.௧.௫,௯. (௯) அதி.௰௭.௰௮. எண்.௪.௰௫. யோசு.௩.௩.

பெட்டியைச்சுமக்கிற லேவியின்புத்திரரான ஆ
சாரியருக்கும், இஸரவேலருடையமுதியோரெ
௰ ல்லாருக்குமொப்பித்து,-விடுதலையாகும்வருஷமா
கிய ஏழாம்வருஷாந்தம் ஒவ்வொன்றிலும்கூடார
௰௧ உற்சவத்தில்,—உங்கள் தேவனாகிய யெகோ
வா தெரிந்துகொள்ளும் ஸ்தலத்தில் இஸரவே
லர் யாவரும் அவருடைய சந்நிதியிற்சேர்ந்துவந்
திருக்கும்பொழுது, இந்த நியாயப்பிரமாணத்
தைஇஸரவேலர் எல்லாருங்கேட்க அவர்களுக்கு
௰௨ முன்பாகவாசிக்கவேண்டும்.-புருஷரும்,ஸ்திரிக
ளும், பிள்ளைகளும், உன்வாசல்களிலுள்ளபரதே
சிகளும் கேட்டுக் கற்றுக்கொண்டு; உன் தேவ
னாகிய யெகோவாவுக்குப்பயந்து, இந்தநியா
யப்பிரமாணவாக்குகளெல்லாவற்றின்படிக்குஞ்
செய்ய எச்சரிக்கையாயிருக்கும் பொருட்டும்,—
௰௩ அறிவில்லாதஅவர்களுடையபிள்ளைகளுங்கேட்
டு,நீங்கள் யோர்தானைக்கடந்துபோய்ச்சுதந்தரித்
துக்கொள்ளும் தேசத்திலே சீவித்திருக்கும்பரி
யந்தம், உங்கள் தேவனாகிய யெகோவாவுக்
குப் பயப்படவேண்டுமென்றுணரும் பொருட்
டும், இப்படிச்சனங்களைச்சேர்த்து அதைவாசிக்
கக் கடவீர்களென்று அவர்களுக்குக் கட்டளை
யிட்டான்.
௰௪ பின்பு யெகோவா மோசேயை நோக்கி,
கேள், நீ மரிக்குங்காலஞ் சமீபமாயிற்று: நான்
யோசுவாவுக்குக் கட்டளையிடும்பொருட்டு அவ
னை அழைத்துக்கொண்டு சபையின்ஆவாசத்தில்
வந்து நில்லுங்களென்றார். அப்படியே மோசே
யும் யோசுவாவும் போய்ச்சபையின் ஆவாசத்தி
௰௫ லே நின்றார்கள்.—யெகோவா மேகத்தூணி
லேதோன்றி ஆவாசத்திற் பிரசன்னமானார்: மே
கத்தூண் ஆவாசவாசலின்மேல் நின்றது.
௰௬ அப்பொழுது யெகோவாமோசேயைநோக்
கி, கேள்,நீ உன்பிதாக்களுடனேகூட மகாநித்தி
ரை அடையப்போகிறாய்; இனி இந்தச்சனங்க
ளெழுந்து தாங்கள் போயிருக்குந்தேசத்திலுள்ள
அந்நியர் வணங்குந் தேவர்களை விபசாரமார்க்க
மாய்ப்பின்பற்றி, என்னைவிட்டுத் தங்களுடனே
நான்பண்ணின உடன்படிக்கையை மீறுவார்
௰௭ கள்.—நான் அவர்கள்மேற்கோபங்கொண்டு அவர்
களைக்கைவிட்டு, என்முகத்தை அவர்களுக்கு ம
றைப்பேன், அதினால் அவர்கள் பட்சிக்கப்படும்
படிக்கு அநேகந் தீமைகளும், இடுக்கண்களும்
அவர்களைத்தொடரும்; அக்காலத்தில் அவர்கள்
எங்களுடைய தேவன் எங்கள் மத்தியில் இரா
ததினாலே யல்லவா இந்தத்தீமைகள் எங்களைத்
௰௮ தொடர்ந்தனவென்பார்கள்.—அந்நிய தேவர்க
ளிடத்தில் திரும்பினதினால்அவர்கள்செய்தசகல
தீமைகளினிமித்தமும், நான் அக்காலத்தில் என்
முகத்தை நிச்சயமாய் மறைப்பேன்.—இப்பொ ௰௯
ழுது நீங்களிந்தப்பாட்டை யெழுதிக்கொண்டு,
இதை இஸரவேல் சந்ததியாருக்குப்படிப்பித்து,
இந்தப்பாட்டு என்னுடைய சாட்சியாக இஸ
ரவேல் சந்ததியாருக்குள்ளேயிருக்கும்படி,' இ
தை அவர்கள் வாயில் வழங்கப்பண்ணுங்கள்.—
நான் அவர்களுடையபிதாக்களுக்கு ஆணையிட் ௨௰
டுக்கொடுத்த பாலுந்தேனும் பெருகுகிற தேசத்
தில் அவர்களைப் பிரவேசிக்கப்பண்ணினபின்பு,
அவர்கள் புசித்துத் திருத்தியடைந்து, புஷ்டி
யாகி, அந்நியதேவர்களிடத்தில்திரும்பி, அவர்க
ளைச்சேவித்து, எனக்குக்கோபம்மூட்டி, என்னு
டன்படிக்கையை மீறினதினாலே,—அநேகந்தீ ௨௧
மைகளும் இடுக்கண்களும் அவர்களைத்தொட
ருங் காலத்தில் இந்தப்பாட்டே அவர்களுக்கு
முன்பாகச் சாட்சியாகும்; இது அவர்களுடை
ய சந்ததியாரின் வாயில் ஒருபொழுதும் மறவா
மலிருக்கும்: நான் ஆணையிட்டுக்கொடுத்த தே
சத்தில் அவர்களைப்பிரவேசிக்கப் பண்ணுமுன்
னமே, இன்றைக்கு அவர்கள்கொண்ட எண்
ணம் இன்னதென்று அறிந்தேனென்றார்.—அன் ௨௨
றைக்கே மோசே அந்தப்பாட்டையெழுதி, அ
தை இஸரவேல் சந்ததியாருக்குக்கற்பித்தான்.
அவர் நூனின்புத்திரனாகியயோசுவாவைநோ ௨௩
க்கி, இஸரவேல்சந்ததியாருக்கு நான்ஆணையிட்
டுக்கொடுத்த தேசத்துக்கு நீ அவர்களை நடத்திக்
கொண்டுபோவாய்,ஆகையால் தைரியங்கொண்
டு உறுதியாயிரு:நான்உன்னுடனிருப்பேனென்
று கட்டளையிட்டார்.
மோசே இந்த நியாயப்பிரமாணவாக்குகளை ஒ ௨௪
ருபுஸ்தகத்திலே முழுவது மெழுதிமுடித்தபின்
பு,-மோசே யெகோவாவுடைய உடன்படிக் ௨௫
கையின் பெட்டியைச்சுமக்கிற லேவியரைநோக்
கி,—நீங்களிந்தநியாயப்பிரமாணப் புஸ்தகத்தை ௨௬
அங்கே உனக்கு எதிரான சாட்சியாகும்படி இ
தையெடுத்து, உங்கள் தேவனாகிய யெகோ
வாவுடைய உடன்படிக்கைப்பெட்டியின் பக்
கத்திலே வையுங்கள்.—நான் உன் கலகக்குணத் ௨௭
தையும், வணங்காத உன் கழுத்தையும் அறிந்தி
ருக்கிறேன்: பார், நான் உயிரோடே உன்னுடன்
கூட இருக்கிற இன்றைத்தினமே யெகோவா
வின் கட்டளையை மீறினீர்கள்; என்மரணத்துக்
குப்பின்பு இதிலும் எவ்வளவு அதிகம்.
என் மரணத்துக்குப்பின்பு நீங்கள் நிச்சயமாய் ௨௮
உங்களைக்கெடுத்து, நான் உங்களுக்குக்கட்டளை
யிட்டவழியைவிட்டுவிலகுவீர்களென்றும்; உங்
கள் கைக்கிரியையினாலே யெகோவாவைக்
கோபப்படுத்தி, அவருடையபார்வைக்கு முன்
பாகப் பாவஞ்செய்வதினாலே பிற்காலத்திலே தீ

(௰) அதி.௰௫.௧. லேவி.௨௩.௩௪. (௰௧) அதி.௰௬.௰௬. யோசு.௮.௩௪,௩௫. ௨.இரா.௨௩.௨. நிகி.௮. (௰௨) அதி.௪.௰௯. (௰௩) சங்.௭௮.௫,௬. (௰௪) அதி.௩௪.௫. எண்.௨௭.௰௯. (௰௫) யாத்.௩௩.௯. (௰௬) ௨.சாமு.௭.௰௧. யாத்.௩௨.௬. யாத்.௩௪.௰௫. நியா.௨.௰௨. நியா.௨.௨௰. (௰௭) ௨.நாளா.௰௫.௨. அதி.௩௨.௨௰. சங்.௱௪.௨௯. ஏசா.௮.௰௭. ஏசா.௬௪.௭. எசேக்.௩௯.௨௩. நிகி.௯.௩௨. நியா.௬.௰௩. எண்.௰௪.௪௨. (௰௯) வச.௨௬. (௨௰) அதி.௩௨.௰௫. நிகி.௯.௨௫,௨௬. ஓசி.௰௩.௬. வச.௰௬. (௨௧) ஓசி.௫.௩. ஆமோ.௫.௨௫,௨௬. (௨௩) யோசு.௧.௬. (௨௪) வச.௯. (௨௬) ௨.இரா.௨௨.௮. (௨௭) அதி.௯.௨௪. யாத்.௩௨.௯. (௨௮) அதி.௩௨.௫. நியா.௨.௰௯. ஓசி.௯.௯. அதி.௨௮.௰௫. ஆதி.௪௯.௧.

மை உங்களைத்தொடருமென்றும்; நான் அறிந்தி
௨௯ ருக்கிறேன்.-ஆகையால்உங்கள்கோத்திரத்திலுள்
ள முதியோர்கள் உங்கள் உத்தியோகஸ்தர் எல்
லாருங்கேட்கத்தக்கதாக,நான் இந்தவாக்குகளைச்
சொல்லவும்,அவர்களுக்கெதிராக வானத்தையும்
பூமியையுஞ் சாட்சிவைக்கவும், அவர்களை என்
னிடத்திற்கூடிவரும்படி செய்யுங்களென்று கட்
௩௰ டளையிட்டான்.—இஸரவேல் சபையாரெல்லா
ருங்கேட்க இந்தப் பாட்டிலுள்ள வாக்குகளைமு
டிவுபெற மோசே சொன்னான்.

## ௩௨. அதிகாரம்.

௧. தேவனுடைய அனுக்கிரகத்தையும்நிக்கிரகத்தையும் வர்ணிக்கிறபாட்டு: ௪௪. மோசே சனங்களை ஏவல்: ௪௮. நேபோமலையிலேறமோசேக்குக் கட்டளையிடல்.

வானங்களே, செவிகொடுங்கள், நான்வசனிப்
பேன்; பூமியே, என்வாய்மொழிகளைக்கேள்.—
௨ இளம்பயிரின்மேல் மழைத்தூறல் சொரிவதும்,
புல்லின்மேல் மழைத்தாரைபொழிவதும் எப்ப
டியோ, அப்படியே என் உபதேசம் மழைபோ
லப்பொழிய என் வசனம்பனிபோலச் சொரி
யும்: யெகோவாவின் நாமத்தை நான் பிரசித்
௩ தப்படுத்துகிறேன்.—நீங்கள் நம்முடைய தேவ
௪ னின் மகிமையைக் கீர்த்தனஞ்செய்யுங்கள்.-அ
வரே கன்மலை, அவருடையகிரியை பூரணமுள்
ளது: அவருடைய நெறிகளெல்லாம்நியாயநெறி
கள்: தேவனேசத்தியவாதி,நிர்த்தோஷமும்,நீதி
௫ யும், யதார்த்தமுமுள்ளவர்.—அவர்கள்அவமார்க்
கமும்மாறுபாடுமுள்ள சந்ததியார், தங்களைத்தா
மேகெடுத்துக்கொண்டார்கள்: அவர்கள் அவருக்
குரியபிள்ளைகளல்ல; அதுதான் அவர்கள் மாசு.-
௬ இப்படியா நீங்கள் யெகோவாவுக்குக்கைமா
றுசெய்கிறீர்கள், ஆ! அவிவேகமும் அஞ்ஞான
முமுள்ளசனமே, அவரல்லவா உன்னைச்சிருஷ்
டித்து உன்னைக்காத்துக்கொண்டார், அவரல்ல
வா உன்பிதா, உன்மீட்பர்.
௭ ஆதிநாட்களைநினை, தலைமுறை தலைமுறையா
கச்சென்றவருஷங்களை உற்றுப்பார்:உன்பிதாவி
டத்திற்கேள்,அவன் உனக்குணர்த்துவான்; உன்
முதியோரிடத்திற் கேள், அவர்கள் உனக்குச்
௮ சொல்லுவார்கள்.—யெகோவாவுக்குரிய சன
மே அவருடையபாகம்; யாக்கோபே அவருடை
௯ யசுதந்தரம்.-ஆதலால் சருவத்திற்கும்மேலானவர்
சாதிகளுக்கு அவரவர் சுதந்தரத்தைப் பங்கிட்டு,
ஆதாமின் சந்ததியாரை வெவ்வேறாய்ப்பிரித்தகா
லத்தில், இஸரவேல் சந்ததியாருடைய தொகை
யைப்பார்த்து, உலகத்தவர்களுடைய எல்லைக
ளைத்தீர்மானம்பண்ணினார்.—அவர் அவாந்தரமும் ௰
ஊளையிரைச்சலுமுள்ள வெறிய பாழ்நிலத்தில்
அவனைக் கண்டுக்கொண்டார், அவனை நடத்தி
னார், அவனுக்கு உணர்த்தினார், அவனைத்தமது
கண்மணியைப்போலக் காத்துக்கொண்டார்.—
கழுகானதுகூட்டிலுள்ள தன் குஞ்சுகளை எழுப் ௰௧
பியும், அவைகளின்மேல் அசைவாடியும், தன்
சிறகுகளைவிரித்து,அவைகளையெடுத்தும்,அவை
களைத்தன் சிறகுகளின்மேல் சுமந்தும்வருகிறது
போல,—யெகோவாதாமே அவனை நடத்தி ௰௨
னார், அந்நியதேவன் அவரோடேயில்லை.—வய ௰௩
லில்விளையும் பலனைப்புசிக்கும்பொருட்டு, பூமி
யிலுள்ள உயர்ந்த ஸ்தானங்களின்மேல் அவனை
ஏற்றினார். கன்மலையிலுள்ளதேனையும், கற்பா
றையிலிருந்துவருகிற எண்ணெயையும், அவன்
உறிஞ்சும்படிசெய்தார்.-பசுவெண்ணெயையும், ௰௪
ஆட்டுப்பாலையும், பாஷானிலுள்ள இனமாகிய
ஆட்டுக்கடாக்கள்வெள்ளாட்டுக்கடாக்கள் ஆட்
டுக்குட்டிகள் இவைகளுடைய நிணத்தையும்,
முதல்தரமானகோதுமையையும் தந்தார்; இரத்
தவர்ணத் திராட்சத்தைப்பானம்பண்ணினாய்.
யெஷூரனோ புஷ்டியாகி,உதைத்தான்: புஷ்டி ௰௫
யாகித் தூலித்துத்திருத்தியடைந்தபொழுது, தன்
னைச்சிருஷ்டித்த தேவனைவிட்டுத் தன்னிரட்
சிப்பின்மலையை அற்பமாயெண்ணினான்.—அந் ௰௬
நிய தெய்வங்களை ஆராதித்து, அவருக்கெரிச்ச
லை மூட்டினார்கள், அருவருப்பானவைகளைச்
செய்து அவரைக்கோபப்படுத்தினார்கள்.-தாங்க ௰௭
ளறியாதவைகளும், தங்கள்பிதாக்கள் பயப்படா
தவைகளும், நூதனமாகத்தோன்றிய புதுத்தெய்
வங்களுமாகிய பிசாசுகளுக்கேயன்றித் தேவ
னுக்குப் பலியிடவில்லை.-உன்னைத்தோற்றுவித் ௰௮
தகன்மலையை அவமதித்தாய், உன்னைச்சிருஷ்
டித்த தேவனை மறந்தாய்.—யெகோவா அ ௰௯
தைக்கண்டு தமது புத்திரரும் புத்திரிகளுந்தம்
மைக்கோபப்படுத்தினநிமித்தம்அவர்களைவெ
றுத்தார்.—அவர்கள் மிகவும் மாறுபாடுள்ள வமி ௨௰
சத்தார், விசுவாசமில்லாத சந்ததியார்; அவர்க
ளுக்குப்பராமுகமாவேன், அவர்களுடையமுடி
வு எப்படியாகுமென்று பார்ப்பேன்.—தெய்வ ௨௧
மல்லாதவைகளினால் எனக்கு எரிச்சலைமூட்டி,
தங்கள் விக்கிரகங்களினால் என்னைக்கோபப்
படுத்தினார்கள், ஆகையால் மதிக்கப்படாத

(௨௯) அதி.௩௨.௧.—(௩௨.அதி.௧.) அதி.௩௰.௰௯. சங்.௫௰.௪. ஏசா.௧.௨. எரே.௨.௰௨.(௨)ஏசா.௫௫.௰,௰௧. ௧.கொரி. ௩.௬,௭,௮. சங்.௭௨.௬. மீகா.௫.௭. (௩) ௧.நாளா.௨௯.௰௧. (௪) ௨.சாமு.௨௨.௩. சங்.௰௮.௨,௩௧,௪௬. ௨.சாமு.௨௨. ௩௧. தானி.௪.௩௭. வெளி.௰௫.௩. எரே.௰.௰. யோபு.௩௪.௰. (௫) அதி.௩௧.௨௮. மத்.௰௭.௰௭. (௬) சங்.௱௰௬.௰௨. ஏசா.௬௩.௰௬. சங்.௭௪.௨. ஏசா.௨௭.௰௧. (௭) யாத்.௰௩.௰௪. சங்.௪௪.௧. (௮) யாத்.௰௫.௰௭. ௧.சாமு.௰.௧. சங்.௭௮. ௭௧. (௯) சக.௯.௰௨. அப்.௰௭.௨௬. ஆதி.௧.௮. (௰) எரே.௨.௫. ஓசி.௰௩.௫. உபா.௪.௩௬. சங்.௰௭.௮. நீதி.௭.௨. சக. ௨.௮. (௰௧) யாத்.௰௯.௪. ஏசா.௪௬.௪. ஏசா.௬௩.௯. ஓசி.௰௧.௩. (௰௩) ஏசா.௫௮.௰௪. யோபு.௨௯.௬. சங்.௮௧.௰௬. (௰௪) சங்.௮௧.௰௬. ஆதி.௪௯.௰௧. (௰௫) ஏசா.௪௪.௨. ௧.சாமு.௨.௨௯. அதி.௩௧.௨௰. நீகி.௯.௨௫. சங்.௰௭.௰. ஓசி. ௰௩.௬. அதி.௩௧.௰௬. ஏசா.௧.௪. வச.௬. ஏசா.௫௧.௰௩. ௨.சாமு.௨௨.௪௭. சங்.௯௫.௧. (௰௬) ௧.இரா.௰௪.௨௨. ௧.கொரி.௰.௨௨. (௰௭) லேவி.௰௭.௭. சங்.௱௬.௩௭. ௧.கொரி.௰.௨௰. வெளி.௯.௨௰. (௰௮) ஏசா.௰௭.௰. எரே.௨. ௩௨. (௰௯) நியா.௨.௰௪. ஏசா.௧.௨. (௨௰) அதி.௩௧.௰௭. ஏசா.௩௰.௯. மத்.௰௭.௰௭. (௨௧) சங்.௭௮.௫௮. ௧.சாமு.௰௨. ௨௧. சங்.௩௧.௬. யோனா.௨.௮. அப்.௰௪.௰௫. ஓசி.௧.௰. ரோ.௰.௰௯.

சனங்களினுல் அவர்களுக்கு எரிச்சலை யுண்
டாக்கி,மதிகெட்ட சாதியாரால் அவர்களைக்கோ
௨௨ பப்படுத்துவேன்.—என்கோபத்தினுல் அக்கினி
பற்றுகின்றது, அது கீழான பாதாளமட்டும் எரி
யும், அது பூமியையும், அதின் பலனையும் அ
ழித்து, பருவதங்களின் மூலங்களை வேகப்பண்
௨௩ ணும்.—தீமைகளை அவர்கள்மேலே குவிப்பேன்;
என்னுடைய அம்புகள் முழுவதையும் அவர்கள்
௨௪ மேற்பிரயோகிப்பேன்.—பசியினுலேவாடித் தா
கசுரத்தினுலும், மற்றுங்கொடியவியாதியினுலும்
பட்சிக்கப்படுவார்கள்: மிருகதந்தங்களும், தரை
யிலூரும்பாம்புகளின்விஷமும், அவர்களுக்குள்
௨௫ ளே பிரவேசிக்கப் பண்ணுவேன்.—வெளியிலே
கட்கமும், உள்ளே பயங்கரமும்,வாலிபனையும்,
கன்னியையும், குழந்தையையும், நரைக்கிழவ
௨௬ னையும் அழிக்கும்.—அவர்களுடைய பகைவர்,
இவையெல்லாவற்றையும் எங்கள் வலிமையுள்
ள கையேயன்றி யெகோவா செய்தனவல்ல
௨௭ வென்று கருவமாய்ச்சொல்லுவார்கள்.—அந்தச்
சத்துருக்களுடைய அகங்காரத்தை எண்ணமல்
விட்டேனுகில், அவர்களுடைய நாமம் மனித
ருக்குள்ளே ஒழிந்துபோகும்படி மூலைக்குமூலை
அவர்களைச் சிதற அடிப்பேனென்றுசொன்னே
௨௮ ன்.—அவர்கள் கெட்டபுத்தியுள்ளசாதி, அவர்க
௨௯ ளில் விவேகமில்லை.—ஆ! அவர்கள்ஞானமடைந்
து, இதையுணர்ந்து, தங்களுக்குண்டாகும் முடி
வைச் சிந்தித்துப்பார்ப்பார்களானுல் நலமென்று
௩௰ சொன்னுர்.—அவர்களுடையகன்மலை அவர்களை
விற்றுப்போடாமலும், யெகோவா அவர்க
ளை அடைத்துவைக்காமலும் இருந்தாரேயானுல்,
ஒருவன் ஆயிரம்பேரைத்துரத்துவானு, இரண்டு
௩௧ பேர் பதினுயிரம்பேரை ஓட்டுவார்களா.—தங்க
ளுடைய கன்மலை நம்முடைய கன்மலையைப்
போலல்லவென்று நம்முடைய சத்துருக்களுந்
௩௨ தீர்மானிக்கிருர்கள்.—அவர்களுடைய திராட்சக்
கொடிசோதோமிலும், கொமோராவின் வெளி
யிலுமுள்ள திராட்சத்தினினம்: அவைகளின்
திராட்சங்கள்விஷமுள்ளவைகள், அவைகளின்
௩௩ குலைகள் கசப்பாயிருக்கின்றன:—அவர்களுடை
ய திராட்சரசம் வலியசர்ப்பவிஷம், விரியன்
௩௪ களுடைய கொடிய விஷம்.—இவையெல்லாம்
என்னிடத்தில் வைக்கப்பட வில்லையா, என்
பொக்கிஷத்துக்குள்ளேமுத்திரையிடப்படவில்
௩௫ லையா.—தண்டிப்பதும், பலனளிப்பதும் எனக்
குரியன; அவர்களுடையகால்தள்ளாடும்: அவர்
களுடையகிலேசதினம் சமீபிக்கின்றது, அவர்க

ளுக்கு நேரிடுபவைகள் தீவரிக்கின்றது.—யெ ௩௬
கோவா தம்முடைய சனங்களைவிசாரித்து, அ
வர்கள்பெலன் போயிற்றென்றும், அடைக்கப்
பட்டவர்கள்விடுதலைபெற்றவர்கள் ஒருவருமில்
லையென்றும், காணும்பொழுது, தமதுதாசர்மே
லிரங்கி,—அவர்களிட்டபலிகளின் நிணத்தைப் ௩௭
புசித்து, பானபலிகளாகிய திராட்சரசத்தைக்கு
டித்துவந்த அவர்களுடையதெய்வங்களும் அவர்
கள்நம்பினகன்மலையுமெங்கே.—அவைகளே எ ௩௮
ழுந்து உங்களுக்குச்சகாயம்பண்ணி உங்களுக்
குப் புகலிடந்தரட்டுமென்றும்,—என்னைத்தவிர ௩௯
வேறுதேவன் இல்லை: நான் கொல்லுகிறேன்,
நான் உயிர்ப்பிக்கிறேன்; நான் காயப்படுத்து
கிறேன், நான் சொஸ்தப்படுத்துகிறேன்: என்
கைக்குத்தப்புவிக்க ஒருவனுலுங்கூடாது, நான்
தான் அவரென்றறிந்துகொள்ளுங்கள்.—நான் என் ௪௰
கையை வானத்துக்குநேராக உயர்த்தி, நான்
நித்தமுஞ் சீவித்திருக்கிறேனென்கிறேன்.—மினு ௪௧
மினுப்புள்ள என்கட்கத்தைக் கூர்மையாக்கிக்
கொண்டு, நான்தண்டனையைக்கைக்கொள்ளும்
பொழுது;என்னுடையசத்துருக்களிடத்திற்பழி
வாங்கி,என்பகைவருக்குப் பிரதிசெய்வேன்.—
கொலையுண்டும் சிறைப்பட்டும் போனவர்களு ௪௨
டைய இரத்தத்தாலே என் அம்புகளைவெறிகொள்
ளப்பண்ணுவேன்; என்கட்கம்சத்துருக்களின்த
லைவர்முதலானவர்களுடைய மாமிசத்தைப்பட்
சிக்குமென்றுஞ்சொன்னுர்.—அவர் தம்முடைய ௪௩
தாசருக்காகஇரத்தப்பழியைவாங்கி,தம்முடைய
சத்துருக்களுக்குப்பலனளித்து, தமதுதேசத்தின்
மேலும், தமது சனங்களின்மேலும் தயைவைப்
பார், ஆகையால் சருவதேசத்தாரே, அவருடைய
சனங்களோடேகளிகூருங்கள்.

மோசேயும், நூனின்புத்திரனுகிய யோசுவா ௪௪
வும், இந்தப்பாட்டின் வாக்குகள் யாவையும் ச
னங்கள் கேட்கத்தக்கதாக வசனித்தார்கள்.—மோ ௪௫
சே இவ்வாக்குகளெல்லாவற்றையும் இஸரவே
லர் யாவருக்குஞ்சொல்லி முடித்தபின்னும், அ
வர்களைநோக்கி,—நான் இன்று உங்களுக்குச் ௪௬
சாட்சியிட்டுச் சொல்லியவசனங்கள் எல்லாவற்
றிலும் சிந்தைவைத்து, உங்கள் பிள்ளைகளிந்த
நியாயப்பிரமாண வாக்குகள் யாவையும் சிந்தித்
துக்காக்கும்பொருட்டு, அவைகளை அவர்களுக்
கு உணர்த்துங்கள்.—இது உங்களுக்கு ஒரு அற் ௪௭
பகாரியமல்ல; இதுவே உங்கள் சீவன்: நீங்கள்
சுதந்தரித்துக்கொள்ளும்பொருட்டு, யோர்தானை
க்கடந்துபோகுந் தேசத்தில் இதினுல் உங்கள்

(௨௨) எரே.௰௫.௰௪. புல.௪.௰௧. (௨௩) ஏசா.௨௬.௰௫. சங்.௭.௰௨,௰௩. (௨௪) அபகூ.௩.௫. லேவி.௨௬.௨௨. (௨௫) புல.௧.௨௰. ௨.கொரி.௭.௫. (௨௬) ஏசா.௨௭.௰௧. (௨௭) எரே.௰௯.௪. சங்.௱௪௰.௮. (௨௮) எசேக்.௨௰.௰௩,௰௪,௨௩. (௨௯) சங்.௮௧.௰௩. சங்.௱௭.௪௩. லூக்.௰௯.௪௨. ஏசா.௪௭.௭. புல.௧.௯. (௩௰) லேவி.௨௬.௮. யோசு.௨௩.௰. சங்.௪௪.௰௨. ஏசா.௫௰.௧. (௩௧) ௧.சாமு.௨.௨. ௧.சாமு.௪.௮. எரே.௪௰.௩. (௩௨) ஏசா.௧.௰. (௩௩) சங்.௫௮.௪. சங்.௱௪௰.௩. (௩௪) யோபு.௰௪.௰௭. எரே.௨.௨௨. ஓசி.௰௩.௰௨. ரோ.௨.௫. (௩௫) சங்.௯௪.௧. ரோ.௰௨.௰௯. எபி.௰.௩௰. ௨.பேதுரு.௨.௩. (௩௬) சங்.௱௩௫.௰௪. சங்.௱௬.௪௫. யோவே.௨.௰௪. ௧.இரா.௰௪.௰. ௨.இரா.௯.௮. ௨.இரா.௰௪.௨௬. (௩௭) நியா.௰.௰௪. எரே.௨.௨௮. (௩௯) சங்.௱௨.௨௭. ஏசா.௪௧.௪. ஏசா.௪௫.௫,௰௮,௨௨. ௧.சாமு.௨.௬. யோபு.௫.௰௮. ஓசி.௬.௧. (௪௰) ஆதி.௰௪.௨௪. யாத்.௬.௮. (௪௧) ஏசா.௨௭.௧. ஏசா.௧.௨௪. நாகூ.௧.௨. (௪௨) எரே.௪௬.௰. யோபு.௰௩.௨௪. புல.௨.௫. (௪௩) ரோ.௰௫.௰. வெளி.௬.௰. வெளி.௰௯.௨. சங்.௮௫.௧. (௪௬) அதி.௬.௬. எசேக்.௪௰.௪. (௪௭) லேவி.௰௮.௫. நீதி.௩.௨,௨௨. ரோ.௰.௫.

காலம்நீடிக்கப்பண்ணுவீர்களென்றுசொன்னார்.
சஅ அந்த நாளிலேதானே யெகோவா மோ
சகூ சேயைநோக்கி,—நீயெரீகோவுக்கெதிரானமோ
வாபுதேசத்திலுள்ள அபாரீம்பருவதங்களிலிருக்
கிற நேபோமலையிலேறி, நான் இஸரவேல் சந்த
தியாருக்குச் சுதந்தரமாயளிக்கும் கானான்தேசத்
ருய தைப்பார்த்து,—சீன் வனாந்தரத்திலுள்ள காதே
ஷ்ரிலே மேரிபாவின் சலசமீபத்தில் நீங்கள் இ
ஸரவேல் சந்ததியாருக்குள்ளே என்னைக்கனம்
பண்ணாமல், எனக்குவிரோதமாய்க்குற்றஞ்செய்
ருக தபடியினாலே,—உன் சகோதரனாகிய ஆரோன்
ஓர் என்னும் மலையிலேமரித்துத் தன்சனங்களு
டன்சேர்ந்ததுபோல், நீயும் ஏறிப்போகும் மலை
யிலேமரித்து உன் சனங்களுடன் சேருவாய்.—
ருஉ நான் இஸரவேல் சந்ததியாருக்கு அளிக்குந்தே
சத்திலே நீ பிரவேசிக்கமாட்டாய்; ஆனாலும் உ
னக்கெதிர்ப்படும்தேசத்தை நீகாண்பாயென்றார்.

## ஙங. அதிகாரம்.

க. தேவமகத்துவத்தைவர்ணித்தல்: சு. இஸரவே
லின் பன்னிருகோத்திரத்தைக்குறித்து மோசே
தீர்க்கதரிசனஞ்சொல்லல்.

தேவனுடைய தாசனாகிய மோசே தான்மரிப்
பதற்கு முன்னே இஸரவேல் சந்ததியாருக்குச்
உ செய்த ஆசீர்வாதமாவது:—யெகோவா சீனா
யினின்றுதோன்றிச் சேயீரினின்று அவர்களுக்
கு உதயமானார்; பாரன் மலையினின்று பிரகாசித்
தார், பதினாயிரம் பரிசுத்தவான்களுடன்வந்தார்;
அவருடைய வலக்கரத்தினின்றும் அக்கினிமய
மான ஒருநியாயப் பிரமாணமும் அவர்களுக்கா
ங கத்தோன்றியிருந்தது.—அவர் அந்தச் சனங்களை
நேசித்தாரே; அவருடையபரிசுத்தவான்கள் சக
லரும் உமதுகையிலிருக்கிறார்கள்: அவர்கள் உம
து பாதத்திற்பணிந்து; உம்முடைய வசனங்க
ளைக் கிரகித்துக் கொள்ளுகிறார்களென்றான்.—
ச மோசே, யாக்கோபின்சபைக்குச் சுதந்தரமாயி
ருக்கும்பொருட்டு, ஒரு நியாயப்பிரமாணத்தை
ரு நமக்குவிதித்தான்.—சனங்களின் தலைவரும் இ
ஸரவேல் கோத்திரத்தாரும் கூட்டங்கூடினபொ
ழுது யெஷூரன் இராசாவாயிருந்தான்.
சு ரூபேன் மரிக்காமற்சீவித்திருப்பான்; அவன்
எ சனம்அற்பமாயிராது.—மேலும்யூதாவைக்குறித்
து, யெகோவாவே, நீர்யூதாவின் சத்தத்தைக்
கேட்டு, அவன் தன் சனத்தோடே திரும்பச்சே
ரும்படிபண்ணும்: அவனுடையகைவலிமைபெ
றக்கடவது, அவனுக்குச்சகாயராகி, அவனுடை
ய சத்துருக்களினின்றும் அவனை விடுவிப்பீராக
வென்றான்.–லேவியைக்குறித்து,உம்முடைய நி அ
யாயங்களை யாக்கோபுக்கும், உம்முடைய நியா
யப்பிரமாணத்தை இஸரவேலருக்கும்போதித்து,
உமது சந்நிதானத்திலே தூபவருக்கத்தையும், உ
மது வேதிகையின்மேல் சருவாங்க தகனபலிக
ளையுங்கொடுத்திருப்பவர்கள்,-உம்முடைய வாக் கூ
கைச் சிந்தித்துக்கொண்டு,உமதுஉடன்படிக்கை
க்குக்காத்திருப்பார்களாதலால்நான்அவனைப்பா
ரேனென்று, தன் பிதாவையும் மாதாவையுங்கு
றித்துச்சொல்லித் தன் சகோதரரை நோக்காம
லும், தன்பிள்ளைகளை அறியாமலுமிருந்தவனும்,–
நீர் மாசா என்னுமிடத்தில் பரீட்சித்து, மேரிபா ய
வின் சலசமீபத்தில்விரோதித்தவனுமாகிய உமது
பரிசுத்தவானிடத்தில்உம்முடைய தூமீம் ஊரீம்
என்பவைகள் தரித்திருக்கக்கடவன.-யெகோ யக
வாவே, அவனுடைய சம்பத்தை ஆசீர்வதித்து,
அவனுடைய கைக்கிரியையின்மேற் பிரியமாயி
ருப்பீராக: அவனைப்பகைத்து அவனுக்கு வி
ரோதமாயெழும்புகிறவர்கள் திரும்ப எழும்பாத
படி, அவர்களுடைய இடுப்புகளைநொருக்கிவிடு
மென்றான்.–பென்யாமீனைக்குறித்து, யெகோ யஉ
வாவுக்குப்பிரியமானவன், அவர் சமீபத்தில்விக்
கினமின்றிவசித்திருப்பான்; அவர் சமஸ்ததின
மும்அவனைத்தாங்கிக்கொண்டு,அவனுடையஎல்
லைகளுக்குள்ளே வாசமாயிருப்பாரென்றான்.—
யோசேப்பைக்குறித்து, ஆகாயத்திலுள்ள அரு யங
மையானவைகளும், பனியும், தாழ்வாயிருக்கும்
ஆழியும்,—சூரியன் பக்குவப் படுத்தும்உத்தம யச
பலன்களும்,மாசந்தோறும்பக்குவப்படும்உத்தம
பொருள்களும்,—புராதன மலைகளின் உத்தம ப யரு
தார்த்தங்களும், நித்தியகுன்றுகளின் அருமையா
னபலன்களும்,—நிலத்திலுள்ள உத்தம பொருள் யசு
களும், அதின் பரிபூரணமுமாகிய இவைகளைக்
கொண்டு அவனுடையதேசம் யெகோவாவி
னாலே ஆசீர்வதிக்கப்படுவதாக: முட்செடியில்
வசித்தவருடையதயவு, தன் சகோதரரினின்றும்
பிரிக்கப்பட்ட யோசேப்பின் சிரசின்மேலும்
உச்சியின்மேலும்வருவதாக.-அவனுடையமேன் யஎ
மை அவனுடையதலையீற்றுக் காளையின் மேன்
மையைப்போலிருக்கும், அவன் காண்டாமிரு
கக்கொம்புகளைப்போன்ற எப்ராயீமின் பதினா
யிரஞ்சேனைகளும், மனாசேயின்ஆயிரஞ்சேனை
களுமாகிய தன் கொம்புகளினாலே சனங்களை ஒ
ருமிக்கமுட்டிப் பூமியினெல்லைகள் வரைக்கும்
துரத்துவான்.—செபுலோனைக் குறித்து, செபு யஅ
லோன் நீ போகையிலும், ஈஷகார் கூடாரத்தி

(சஅ) எண்.உஎ.யஉ,யச. (சகூ) எண்.ஙங சஎ,சஅ. (ருய) எண்.உய.யக,யஉ,யங. எண்.உஎ.யங. (ருக) எண்.ஙங.ஙஅ. (ருஉ) எண்.உஎ.யஉ. அதி.ஙச.ச.—(ஙங. அதி. க.) ஆதி.சகூ.உஅ. (உ) யாத்.யகூ.யஅ,உய. அபகூ.ங.ங. சங்.சுஅ.யஎ. தானி.எ.ய. கலா.ங.யகூ. எபி.உ.உ. வெளி.ரு.யக. வெளி.கூ.யசு. (ங) யாத்.யகூ.ரு. சங்.சஎ.ச. ஓசி.யக.க. மல்.க. உ. க.சாமு.உ.கூ. சங்.ருய.ரு. லூக்.ய.ஙகூ. அப்.உஉ.ங. நீதி.உ.க. (ச) யோவா.க.யஎ. சங்.௱யகூ.௱யக. (ரு) நியா. கூ.உ. அதி.ஙஉ.யரு. (எ) ஆதி.சகூ.அ. சங்.௱சசு.ரு. (அ) லேவி.ய.ய. எசேக்.சச.உங,உச. மல்.உ.எ. யாத்.ஙய.எ. க.சாமு.உ.உஅ. லேவி.க.கூ,யங,யஎ. சங்.ருக.யகூ. (கூ) ஆதி.உகூ.ஙஉ. க.நாளா.யஎ.யஎ. யோபு.ஙஎ.உச. யாத்.ஙஉ. உசு,உஎ,உஅ. எரே.யஅ.யஅ. மல்.உ.ரு,சு. (ய) யாத்.உஅ.ஙய. யாத்.யஎ.எ. எண்.உய.யங. சங்.அக.எ. (யக) உ.சாமு. உச.உங. சங்.உய.ங. (யங) ஆதி.உஎ.உஅ. (யரு) ஆதி.சகூ.உசு. அபகூ.ங.சு. (யசு) ஆதி.சகூ.உரு. யாத்.ங.உ,ச. ஆதி.சகூ.உசு. (யஎ) க.நாளா.ரு.க. எண்.உங.உஉ. சங்.கூஉ.ய. க.இரா.உஉ.யக. சங்.சச.ரு. ஆதி.சஅ.யகூ. (யஅ) ஆதி.சகூ.யங,யச,யரு.

௰௯ லுங் களிகூர்ந்திருப்பீர்களாக.—அவர்கள் ச
னங்களை மலையினிடத்திற்சேர்த்து, நீதியின்ப
லிகளையிடுவார்கள்: சமுத்திரத்திலுள்ள சம்பூர
ணத்தையும், மண்ணுக்குள்ளே மறைந்திருக்
கிறபொருள்களையும், அனுபவிப்பார்கள் என்
௨௰ றான்.—காத்தைக்குறித்து,காத்துக்குவிஸ்தாரஸ்தா
னத்தைக் கொடுக்கிறவர் துதிக்கப்படத்தக்கவர்:
அவன் சிங்கத்தைப்போலிருந்து, புயத்தையும்
௨௧ உச்சந்தலையையும் பீறிப்போடுவான்.—அவன்
தனக்காகமுதற்பாகத்தைப்பார்த்தான், அங்கேநி
யாயப்பிரமாணி தனக்குக்கொடுத்தபாகத்தில் நி
லைகொண்டிருந்தான்; ஆயினும் அவன் சனங்க
ளுக்குமுன்னணியாய்நடந்து, மற்ற இஸரவேல
ருடனேகூட யெகோவாவுடைய நியாயத்
தீர்ப்பையும், அவருடைய தண்டனையையும் ந
௨௨ டப்பிப்பானென்றான்.—தாணைக்குறித்து,தாண்
ஒரு சிங்கக்குட்டி: அவன் பாஷானினின்றும்
௨௩ பாய்வான் என்றான்.—நப்தாலியைக்குறித்து, நப்
தாலியே தயவினாலே, திருத்தியடைந்து, யெ
கோவாவுடைய ஆசீர்வாதத்தினாலே நிறைந்தி
ருக்கிறான்: நீ மேற்றிசையையுந் தென்றிசையை
௨௪ யும் சுதந்தரித்துக்கொள்ளென்றான்.—ஆஷேரைக்
குறித்து,ஆஷேர் சந்ததிமூலமாக வாழ்வடைந்து
தன் சகோதரருக்குள்ளே அங்கிகரிக்கப்பட்டவ
னாகி, எண்ணெயிலே தன் பாதத்தைத்தோய்க்கக்
௨௫ கடவன்.—இரும்புந் தாம்பிரமும் உன் பாதரட்
சையின்கீழிருக்கும், உன் நாள் எப்படியோஅப்
படியே உன் வல்லமையுமிருக்குமென்றான்.—
௨௬ உனக்குச்சகாயமாய் வானங்களின்மேலும், தம
து மாட்சிமையோடும், ஆகாசமண்டலங்களின்
மேலும் எறிவருகிறயெஷூரனுடைய தேவனைப்
௨௭ போல் ஒருவருமில்லை.—அனாதி தேவனே உன
து அடைக்கலஸ்தானம், நித்தியபுயங்கள் உனக்
குக் கீழிருக்கின்றன: அவர் உனக்குமுன்னின்
றும் சத்துருக்களைத்துரத்தி,அவர்களை அழிக்கும்ப
௨௮ டிகட்டளையிடுவார்.—அப்பொழுது இஸரவேல்
வாழ்வடைந்து வசித்திருப்பான்: யாக்கோபின்
ஊற்றானது தானியமுந் திராட்சரசமுமுள்ளதே
சத்திலேயிருக்கும்; அவருடையவானமும் பனி
௨௯ யைப்பெய்யும்.—ஆ! இஸரவேலே,நீவாழ்வுடை
யவன்: உன்னைப்போன்றவன்யாவன், உனக்
குச் சகாயஞ்செய்யுங் கேடகமும், உனக்கு மகி
மைபொருந்திய கட்கமுமாயிருக்கிற யெகோ
வாவால்இரட்சிக்கப்பட்டசனம்! உன்சத்துருக்
கள் உனக்குவசமாயிருப்பார்கள்;அவர்களுடை
ய உயர்ந்தஸ்தானங்களில் மிதிப்பாய்என்றான்.

## ௩௪. அதிகாரம்.

௧. மோசே தேசத்தைப்பார்த்தல்: ௫. அவன்மரித்தல்: ௯. யோசுவா அவனுத்தியோகத்தைப் பெறல்: ௰. மோசேயைப்புகழ்தல்.

பின்பு மோசே மோவாபின் சமபூமியைவிட்டு ௧
யெரீகோவுக்கெதிரான நேபோ மலையிலுள்ள
பிஸ்காவின் உச்சியில் ஏறினான். அப்பொழு
து யெகோவா தாண்மட்டுமுள்ள கிலியாத்தே
சமனைத்தையும்,—நப்தாலிதேசமனைத்தையும்,எப் ௨
ராயீம் மனாசே என்பவர்களுடைய தேசத்தை
யும் கடைசிச்சமுத்திரம் வரைக்குமுள்ள யூதா
தேசமனைத்தையும்,—தென்புறத்தையும், பேரீந் ௩
துகளின் நகரமுதற்கொண்டு சோவார்வரைக்கு
முள்ளயெரீகோபள்ளமென்னும் சமபூமியையும்
அவனுக்குக்காண்பித்தார்.—பின்னும் யெகோ ௪
வா அவனைநோக்கி, ஆபிரகாம், ஈசாக்கு, யாக்
கோபு, என்பவர்களுடைய சந்ததிக்கு அளிக்
கும்படிநான் ஆணையிட்டதேசம் இதுவே: இதை
உன் கண்காணப்பண்ணினேன், ஆனாலும் நீ
அங்கேகடந்துபோகவிடேனென்றார்.
அதினால் யெகோவாவின்தாசனாகியமோ ௫
சேமோவாபுதேசத்திலுள்ளஅவ்விடத்திலே யெ
கோவாவுடையவாக்கின்படி மரித்தான்.-பின் ௬
புமோவாபுதேசத்திலுள்ளபேத்பேயோருக்கெதி
ரான தாழ்ந்தபூமியில் அவனை அடக்கம்பண்ணி
னார்: இந்நாள்வரைக்கும்ஒருவனும்அவனுடைய
பிரேதவறையை யறியவில்லை.—மோசேமரிக்கிற ௭
பொழுதுஅவனுக்கு நூற்றிருபதுவயது: அவன்
கண்இருளடையவுமில்லை, அவன்பெலன்குறை
யவுமில்லை.-இஸரவேல்சந்ததியார் மோசேக்காக ௮
மோவாபின் சமபூமியிலே முப்பது நாள்வரைக்
கும் அழுதுகொண்டிருந்தார்கள்: அப்படிமோ
சேக்காக அழுதுபுலம்பினநாட்கள் முடிந்தன.
மோசே நூனின்புத்திரனாகிய யோசுவாவின் ௯
மேலேதன் கைகளைவைத்தபடியினாலே, யோசு
வா ஞானத்தின் ஆவியினால் பூரணப்பட்டான்:
இஸரவேல்சந்ததியார் அவனுக்குக் கீழமைந்து,
யெகோவா மோசேக்குக்கட்டளையிட்டபடி
யேசெய்தார்கள்.
யெகோவா முகமுகமாயறிந்து,எகிப்துதே ௰
சத்திலே பார்வோனுக்கும், அவனுடைய சமஸ்
தபணிவிடைக்காரருக்கும், அவனுடையதேசம்
அனைத்துக்குஞ்செய்யும்படி அனுப்பிய மோசே
செய்த அடையாளங்களும் ஆச்சரியமான கிரி
யைகளும்,—இஸரவேலர் சகலருக்கும் பிரத்தி ௰௧
யட்சமாக அவன்காண்பித்த வல்லமையான கர
மும், அவன்செய்த மகாபயங்கரமான செய்கை
களுமாகிய இவைகளிலே,—மோசேயைப்போ ௰௨
லும் தீர்க்கதரிசி இஸரவேலருக்குள்ளே பின்பு
தோன்றவில்லை.

(௰௯) ஏசா.௨.௩. சங்.௪.௫. (௨௰) யோசு.௰௩.௰,. (௨௧) எண்.௩௨.௰௬,. யோசு.௪.௰௨. (௨௨) யோசு.௰௯.௪௭. நியா. ௰௮.௨௭. (௨௩) ஆதி.௪௯.௨௧. (௨௪) ஆதி.௪௯.௨௰. யோபு.௨௯.௬. (௨௫) அதி.௮.௯. (௨௬) யாத்.௰௫.௰௨. சங்.௮௬.௮. எரே.௰.௬. அதி.௩௨.௰௫. அப௯.௩.௮. (௨௭) சங்.௯௰.௧. (௨௮) எண்.௨௩.௯. அதி.௮.௭,௮. ஆதி.௨௭.௨௮. (௨௯) சங்.௱௪௪.௰௫. ௨.சாமு.௭.௨௩. சங்.௱௰௫.௯,௰,௰௧. ௨.சாமு.௨௨.௪௫. சங்.௰௮.௪௪. அதி.௩௨.௰௩.—(௩௪. அதி. ௧.) எண்.௩௩.௪௭. அதி.௩௨.௪௯. ஆதி.௰௪.௰௪. (௩) நியா.௧.௰௬. ௨.நாளா.௨௮.௰௫. (௪) ஆதி.௰௨.௭. ஆதி.௨௬.௩. ஆதி. ௨௮.௰௩. அதி.௩௨.௫௨. (௫) யாத்.௩௨.௫௧. யோசு.௧.௧,௨. (௭) ஆதி.௨௭.௧. யோசு.௰௪.௰,௰௧. (௮) ஆதி.௫௰.௩,௰. எண்.௨௰.௨௯. (௯) ஏசா.௰௧.௨. தானி.௬.௩. எண்.௨௭.௰௮,௨௩. (௰) அதி.௪.௩௪. (௰௨) யாத்.௩௩.௰௧. எண்.௰௨.௬,௮.

# யோசுவாவின் புத்தகம்.

## ௧. அதிகாரம்.

௧. யெகோவா யோசுவாவுக்குக் கட்டளையிடல்: ௰. யோசுவா சனங்களுக்குக் கட்டளையிடல்: ௰௬. சனங்கள் யோசுவாவுக்கு வாக்குக் கொடுத்தல்.

யெகோவாவின் தாசனாகிய மோசேமரித்த
பின்பு, யெகோவா மோசேயின் பரிசாரக
னும், நூனின் புத்திரனுமான யோசுவாவை
௨ நோக்கி,—என்னுடையதாசனாகிய மோசேமரித்
தான்; இப்பொழுதுநீயும், இந்தச்சனங்களெல்லா
ரும், எழுந்து இந்தயோர்தானைக்கடந்து, இஸ்ர
வேல் சந்ததியாருக்குநான் அளித்ததேசத்துக்குப்
௩ போங்கள்.-நான்மோசேக்குச்சொன்னபடி, உங்
கள் உள்ளங்கால்படும் ஸ்தானமெல்லாவற்றை
௪ யும் உங்களுக்கு அளித்தேன்.—வனமும் இந்தலி
பானோனுந்தொடங்கி, எத்தியருடையதேசமுழு
வதும் உட்பட, பெரியநதியாகிய பிருத்வரைக்
கும், சூரியன் அஸ்தமிக்கிற திசையிலுள்ள பெ
ரிய சமுத்திரம்வரைக்கும் உங்கள் எல்லையாயி
௫ ருக்கும்.—உன் ஆயுள்நாட்களில் ஒருவனும் உன்
னோடெதிர்நிற்கமுடியாது: நான்மோசேபட்சத்
திலிருந்தபிரகாரம் உன்பட்சத்திலுமிருப்பேன்,
நான் உன்னைப்பிரியவும் உன்னைக்கைவிடவு
௬ மாட்டேன்.—திடங்கொண்டு தைரியமாயிரு:
நான் இந்தச்சனங்களுடைய பிதாக்களுக்கு ஆ
ணையிட்டுக்கொடுத்ததேசத்தை நீ இவர்களுக்குப்
௭ பங்கிடுவாய்.—என்னுடையதாசனாகிய மோசே
உனக்குக்கட்டளையிட்ட சமஸ்த நியாயப்பிரமா
ணத்தின்படிக்குஞ்செய்யச்சாவதானமாயிருப்ப
தற்குமாத்திரம் திடங்கொண்டு தைரியமாயிரு. நீ
போகுமிடமெங்கும் விவேகியாகநடக்கும்பொ
ருட்டு, அதைவிட்டுவலப்புறம் இடப்புறம் வில
௮ காதிருப்பாயாக.—இந்த நியாயப்பிரமாணபுஸ்த
கம் உன்வாயைவிட்டு நீங்காதிருப்பதாக, அதில்
எழுதியிருக்கிற யாவற்றின்படிக்குஞ் செய்யச்
சாவதானமாக இருக்கும்பொருட்டு, இரவும் பக
லும் அதைச்சிந்தித்துக்கொண்டிருப்பாயாக: அ
தினால் நீ உன்வழியை அனுகூலப்படுத்திவிவே
௯ கியாக நடந்துகொள்வாய்.—நான் உனக்குக்கட்
டளையிடவில்லையா: திடங்கொண்டு தைரியமா
யிரு; நீபோகுமிடமெங்கும் உன் தேவனாகிய
யெகோவா உன்னோடிருப்பதினாலே பயப்ப
டாமலுந் திகையாமலுமிரு என்றார்.
௰ அப்பொழுது யோசுவா சனங்களின் அதிபதி
களைநோக்கி,—நீங்கள் பாளயமெங்குஞ்சென்று ௰௧
சனங்களைப்பார்த்து, உங்கள் தேவனாகிய யெ
கோவா உங்களுக்குச்சுதந்தரமாக அளித்த தே
சத்தை நீங்கள் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு,
இன்னும் மூன்றுநாளைக்குள்ளே இந்த யோர்தா
னைக்கடந்துபோவீர்கள்; ஆகையால் உங்களுக்
குப்போசனபதார்த்தங்களை ஆயத்தப்படுத்துங்க
ளென்று சொல்லச்சொன்னான்.—பின்பு யோசு ௰௨
வா ரூபேனியரையும், காத்தியரையும், மனாஷே
யின் பாதிக்கோத்திரத்தாரையும்நோக்கி,—யெ ௰௩
கோவாவின் தாசனாகிய மோசே உங்களைப்
பார்த்து, உங்கள் தேவனாகிய யெகோவா
உங்களை இளைப்பாறப்பண்ணி, உங்களுக்கு இந்
தத்தேசத்தை யளித்தாரென்றுசொல்லியவாக்கை
நினைந்து,—உங்கள் ஸ்திரிகளும், பிள்ளைகளும், ௰௪
மிருகசீவன்களும், மோசே யோர்தானுக் கிப்பு
றத்தில் உங்களுக்கு அளித்த தேசத்திலிருக்கும்
படிவிடுங்கள்; உங்களிற் பராக்கிரமசாலிகளா
கிய சமஸ்தவீரரும், உங்கள் சகோதரருக்குமுன்
பாக யுத்தசன்னத்தராகப்போய்,—யெகோவா ௰௫
உங்களைப்போல உங்கள்சகோதரரையும் இளைப்
பாறப்பண்ணி, அவர்களும், தங்களுக்கு உங்கள்
தேவனாகிய யெகோவா அளித்ததேசத்தைச்
சுதந்தரித்துக்கொள்ளும்வரைக்கும் அவர்களுக்
குதவிசெய்யவேண்டும்: பின்புநீங்கள்யெகோ
வாவின் தாசனாகிய மோசே யோர்தானுக்கிப்பு
றத்திலே சூரியனுதிக்கிற திசைக்குநேராக உங்
களுக்கு அளித்த சுதந்தரமான தேசத்திற்குத்தி
ரும்பி, அதைச் சுதந்தரித்துக்கொண்டிருப்பீர்க
ளாகவென்றான்.
அதற்குத்தரமாக அவர்கள் யோசுவாவைநோக் ௰௬
கி, நீர் எங்களுக்குக்கட்டளையிடுகிற யாவற்றை
யுஞ்செய்வோம், நீர் எங்களை அனுப்புமிடமெங்
கேயோ அங்கே போவோம்.—எல்லாவற்றிலும் ௰௭
நாங்கள் மோசேக்குச் செவிகொடுத்ததுபோல
வே உமக்குஞ்செவிகொடுப்போம்: உம்முடைய
தேவனாகிய யெகோவா மோசேயோடிருந்
தபிரகாரம் உம்மோடுமிருப்பதுமாத்திரம் வேண்
டும்.—நீர் எங்களுக்கு விதிக்கிற சமஸ்தவாக் ௰௮
குகளுக்குஞ் செவிகொடாமல், உம்முடைய
கட்டளையை மீறிநடப்பவனெவனோ, அவன்
கொலைசெய்யப்படக்கடவன்: எப்படியும் நீ
ர் திடங்கொண்டு தைரியமாயிருப்பீராகவென்
றார்கள்.

---

(௧. அதி. ௧.) யாத்.௨௪.௰௩. (௨) உபா.௩௪.௫. (௩) உபா.௰௧.௨௪. (௪) ஆதி.௰௫.௰௮. எண்.௩௪.௩—௰௨. (௫) உபா.௭.௨௪. யாத்.௩.௰௨. உபா.௩௧.௮,௨௩. அதி.௩.௭. எசா.௪௩.௩,௫. உபா.௩௧.௬,௮. எபி.௰௩.௫. (௬) உபா.௩௧.௭,௨௩. (௭) எண்.௨௭.௨௩. உபா.௩௧.௭. உபா.௫.௩௨. உபா.௨௮.௰௩. உபா.௨௯.௯. (௮) உபா.௰௭.௰௮,௰௯. சங்.௧.௨. (௯) உபா.௩௧.௭,௮,௨௩. சங்.௨௭.௧. எரே.௧.௮. (௰௧) அதி.௩.௨. (௰௩) எண்.௩௨.௨௰—௨௮. (௰௪) யாத்.௰௩.௰௮. (௰௫) அதி.௨௨.௪,. (௰௭) ௧.சாமு.௨௰.௰௩. ௧.இரா.௧.௩௭.

## ௨. அதிகாரம்.

*௧. தேசத்தை வேவுபார்ப்பதற்குச் சீத்தீமினின்
றம் இருவரையனுப்பல் இராகாப்பென்னும்
வேசைஅவர்களை மறைத்துவைத்தல்: ௮. வேவு
காரரோடும் இராகாப் உடன்படிக்கை செய்து
கொள்ளல்: ௨௩. வேவுகாரர் திரும்பிவந்துசமா
சாரந்தெரிவித்தல்.*

நூனின்புத்திரனாகிய யோசுவாவேவுகாரர் இரு
வரைநோக்கி, நீங்கள்போய்த் தேசத்தையும் வி
சேஷமாக யெரிகோவையும்பார்த்து வாருங்க
ளென்றுசொல்லிச் சீத்தீமிலிருந்து இரகசியமாக
அனுப்ப, அவர்கள்போய் இராகாப்பென்றுபெ
யர்கொண்ட ஒரு வேசைவீட்டிற் பிரவேசித்து,
௨ அங்கே இராத்தங்கினார்கள்.—யெரிகோவின் இரா
சாவுக்கு இத்தேசத்தை வேவுபார்க்கும்படி இஸ
ரவேல் சந்ததியாரிற்சிலர் இன்றிரவு இங்கேவந்
௩ திருக்கிறார்களென்று சொல்லப்பட்டது.—உட
னேயெரிகோவின் இராசா இராகாப்பினிடத்தில்
ஆளனுப்பி, உன்னிடத்தில்வந்து உன் வீட்டில்
பிரவேசித்த மனிதரை வெளியேவரவிடு: தேசத்
தையெல்லாஞ் சுற்றிப்பார்க்கவந்தார்களேயென்
௪ று சொல்லுவித்தான்.—அந்தஸ்திரி அவ்விரண்டு
மனிதரையும் ஒளித்திருக்கச்செய்து, என்னிடத்
திற் சிலமனிதர்கள்வந்திருந்தது மெய், அவர்கள்
எங்கிருந்து வந்தார்களோ எனக்குத்தெரியாது.—
௫ அவர்கள் நகரவாசல் அடைக்கிறநேரத்தில் இ
ருட்டிலேபுறப்பட்டுப்போய்விட்டார்கள்: எங்
கேபோனார்களோ நான் அறியேன்: அவர்களைப்
பிடித்துக்கொள்ளலாம்; சீக்கிரமாய் அவர்களைப்
௬ பின்தொடருங்களென்றாள்.—அவள் அவர்களை
வீட்டின்மேலேறப்பண்ணி, அங்கேபரப்பப்பட்
ட சணற்கம்புகளுக்குள்ளே மறைவாயிருக்கச்
௭ செய்தாள்.—அந்த மனிதர்கள் யோர்தானுக்குப்
போகிறவழியில் ஆற்றிலிறங்குகிறதுறைகள்மட்
டும் அவர்களைப்பின்தொடர்ந்தார்கள்: அவர்க
ளைப்பின்தொடர்பவர்கள் புறப்பட்டமாத்திரத்
தில் வாசல் அடைக்கப்பட்டது.
௮ அவர்கள் படுக்குமுன் அவள் வீட்டின்மேலே
௯ றி அவர்களிடத்திற்போய்,—அவர்களைநோக்கி,
யெகோவா இந்தத்தேசத்தை உங்களுக்களித்
தாரென்பது எனக்குத்தெரியும், உங்கள் மூலமா
கத்திகில் எங்களைப்பிடித்தது, உங்களை நினைந்து
இத்தேசத்தார் யாவருங்கரைந்துபோகிறார்கள்.—
௰ நீங்கள் எகிப்தினின்றும் புறப்பட்டபொழுது
யெகோவா உங்களுக்குமுன்பாகச்செங்கட
லின் சலத்தை வற்றப்பண்ணினதையும், நீங்கள்
யோர்தானுக்கப்புறத்திலிருந்த எமோரியரின் இ
ராசாக்களாகிய சீகோன் ஒகு என்கின்ற இரு
வரையும் அழித்ததையுங் கேள்விப்பட்டோம்.—
௰௧ கேள்விப்பட்டமாத்திரத்தில் எங்கள் மனங்க
ரைந்துபோயிற்று, உங்களாலே எல்லாருடைய
தைரியமும் அற்றுப்போயிற்று: யெகோவா
வாகிய உங்கள் தேவன் மேலே வானத்திற்குங்
கீழே பூமிக்குந் தேவனாயிருக்கிறார்.—நான் ௰௨
உங்களுக்குத்தயவுசெய்தபடியினாலே, நீங்களும்
என்பிதாவின் குடும்பத்திற்குத் தயவுசெய்வோ
மென்று யெகோவாவைக்கொண்டு ஆணை
யிட்டு,—என் பிதாவையும், என் மாதாவையும், ௰௩
என்சகோதரரையும், என் சகோதரிகளையும், அ
வர்களுக்குண்டான யாவையும், உயிரோடே
விட்டு, எங்கள்சீவனைமரணத்தினின்றும்விடுவிக்
கும்படி எனக்கு நீங்கள் நிச்சயமான அடையா
ளத்தைத் தரவேண்டுமென்றாள்.—அப்பொழுது ௰௪
அந்தமனிதர் அவளைநோக்கி, நீங்கள் எங்கள் கா
ரியத்தை வெளிப்படுத்தாதிருந்தால், எங்கள் சீவ
னே உங்கள் சீவனுக்கீடாகும். யெகோவா
எங்களுக்கு இந்தத்தேசத்தை அளிக்கும்பொழு
து நாங்கள் தயவுஞ் சத்தியமுமுள்ளவர்களாய்
உன்னை நடத்துவோமென்றார்கள்.—அவளுடைய ௰௫
வீடுநகரத்தின் மதிலோரத்திலிருந்தது: அவள் ம
திலின்மீதேவாசமாயிருந்தபடியினாலே, கயிற்றிற்
பலகணியின் வழியாக அவர்களை இறக்கிவிடுகி
றபொழுது அவர்களைநோக்கி,—உங்களைத்தொ ௰௬
டர்பவர்கள் உங்களைக்காணாதபடிக்கு நீங்கள் ம
லையிலேபோய் அவர்கள் திரும்பிவருகிறவரைக்
கும் அங்கே மூன்று நாளளவும் ஒளித்திருந்து,
பின்பு உங்கள் வழியேபோங்களென்றாள்.—அப் ௰௭
பொழுது அந்தமனிதர் அவளைநோக்கி, கேள்,
நாங்களிந்தத்தேசத்திற் பிரவேசிக்கும்பொழுது,—
நீ இந்தச்சிவப்புநூற்கயிற்றை எங்களை இறக்கி ௰௮
விட்ட பலகணியிலேகட்டி, உன் பிதாவையும்,
உன்மாதாவையும், உன் சகோதரரையும், உன்பி
தாவின் குடும்பத்தாரனைவரையும், உன்வீட்டி
லே சேர்த்துக்கொண்டிருக்கக்கடவாய், இல்லா
விட்டால் உனக்கிட்ட ஆணை நிலைபெறாது.—மே ௰௯
லும் உன் வீட்டுவாசலிலிருந்து வெளியே புறப்
படுபவனெவனோ அவனுடைய இரத்தப்பழி அ
வன் தலையின்மேலே இருக்கும், எங்கள் மேற்
குற்றமில்லை: உன்னுடன்கூட வீட்டிலிருப்ப
வர்களுக்குள்ளே ஒருவன்மேற் கைபட்டால், அ
வனுடைய இரத்தப்பழி எங்கள் தலையின்மேலி
ருக்கும்.—அன்றியும்நீ எங்கள்காரியத்தைவெளிப் ௨௰
படுத்தினால் நீ எங்களிடத்தில் வாங்கிக்கொண்
ட ஆணைக்கு நீங்கலாயிருப்போமென்றார்கள்.—
அதற்கவள் உங்கள்வாக்குகளின்படியே ஆகட்டு ௨௧
மென்றுசொல்லி, அவர்களை அனுப்பிவிட்டாள்,
அவர்கள்போய் விட்டார்கள்: பின்பு அந்தச்சி
வப்புக்கயிற்றைப் பலகணியிற் கட்டினாள்.—அ ௨௨
வர்கள்போய் மலையிலேசேர்ந்து, தங்களைத்தொ
டர்ந்தவர்கள் திரும்பிவருமளவும், மூன்றுநாள்
அங்கேதங்கியிருந்தார்கள்: தொடர்ந்தவர்கள்வழி
களிலெங்கும்அவர்களைத்தேடியுங் கண்டுபிடிக்க
வில்லை.

அவ்விருவருந் திரும்பி மலையிலிருந்திறங்கி, ௨௩

---

(௨. அதி. ௧.) எண். ௨௫. ௧. எபி. ௰௧. ௩௧. யாக். ௨. ௨௫. மத். ௧. ௫. (௨) சங். ௱௨௭. ௧. நீதி. ௨௧. ௩௰. (௯) ஆதி. ௩௫. ௫. உபா. ௨. ௨௫. யாத். ௰௫. ௰௬. (௰) யாத். ௰௪. ௨௧. எண். ௨௧. ௨௪, ௩௪, ௩௫. (௰௧) யாத். ௰௫. ௰௩, ௰௪. அதி. ௫. ௧. அதி. ௭. ௫. எசா. ௰௩. ௭. உபா. ௪. ௩௯. (௰௪) நியா. ௧. ௨௪. மத். ௫. ௭. (௰௫) அப். ௯. ௨௫. (௰௮) யாத். ௨௰. ௭. அதி. ௬. ௨௩. (௰௯) மத். ௨௭. ௨௫.

ஆற்றைக்கடந்து,நூனின்புத்திரனாகிய யோசுவா
வினிடத்திற்சேர்ந்து, தங்களுக்குச் சம்பவித்த
௨௪ யாவையும் அவனுக்குத் தெரிவித்து,—பின்னும்
யோசுவாவைநோக்கி, யெகோவா அந்தத்தே
சம் முழுவதையும் எங்கள் கையில் ஒப்பித்தார்;
எங்கள் நிமித்தம், தேசத்தார் யாவரும் கரைந்து
போனார்களென்றார்கள்.

## ௩. அதிகாரம்.

௧. யோசுவா யோர்தான் நதியைச் சேர்தல்: ௭. யெகோவா யோசுவாவைத் தைரியப்படுத்தல்: ௰௪. ஆற்றுநீர் பிரிக்கப்படல்.

அதிகாலையிலே யோசுவா எழுந்திருந்தபின்பு;
அவனும் இஸரவேல் சந்ததியாரனைவருஞ் சித்தீ
மிலிருந்து புறப்பட்டு, யோர்தான் வரைக்குஞ்
சென்று, அதைக்கடந்துபோகாமல் அங்கேதங்கி
௨ னார்கள்.—மூன்றுநாள் சென்றபின்பு அதிபதி
௩ கள் பாளயமெங்கும்போய்,—சனங்களை நோக்
கி, உங்கள் தேவனாகிய யெகோவாவினு
டன்படிக்கைப்பெட்டியையும், லேவிய ஆசாரி
யர் அதைச்சுமக்கிறதையுங்கண்டவுடனே நீங்
களும் புறப்பட்டு அதற்குப்பின் செல்லுங்கள்.-
௪ உங்களுக்கும் அதற்கும் இடையில் இரண்டாயி
ரமுழமளவுதூரமிருக்கவேண்டும்: இதற்கு முன்
னே நீங்கள் ஒருபோதும், இந்தவழியாலே போ
கவில்லையே, ஆகையால் நடக்கவேண்டிய வழி
யை அறியும்படிக்கு அதற்குச்சமீபமாய் வரா
திருப்பீர்களாகவென்றுசொல்லிக் கட்டளையிட்
௫ டார்கள்.—யோசுவா சனங்களைநோக்கி, நாளைக்
கு யெகோவா உங்களுக்குள் அற்புதங்களைச்
செய்வார், ஆகையால் உங்களைப்பரிசுத்தப்படுத்
௬ திக்கொள்ளுங்களென்றான்.—பின்பு யோசுவா
ஆசாரியர்களைநோக்கி, நீங்கள் உடன்படிக்கைப்
பெட்டியை எடுத்துக்கொண்டு, சனங்களுக்குமு
ன்னேநடந்துபோங்களென்றுசொல்ல, அவர்கள்
உடன்படிக்கைப்பெட்டியை எடுத்துக்கொண்
டு சனங்களுக்குமுன்னே நடந்துபோனார்கள்.
௭ பின்பு யெகோவா யோசுவாவை நோக்கி,
நான் மோசேயோடிருந்ததுபோல், உன்னோடுமி
ருக்கிறேனென்பதை இஸரவேலர் எல்லாருமறி
யும்படிக்கு, இன்று அவர்கள் பார்வையில் உன்
௮ னை மகிமைப்படுத்துவேன்.-ஆகையால் உடன்ப
டிக்கைப்பெட்டியைச்சுமக்கிற ஆசாரியர்களைப்
பார்த்து,நீங்கள் யோர்தானின் சலத்தருகேசேர்ந்
தபொழுது அந்த யோர்தானில் நில்லுங்களென்
று கட்டளையிடுவாயென்றார்.
௯ யோசுவாஇஸரவேல்சந்ததியாரைநோக்கி,நீங்
களிங்கேவந்து உங்கள் தேவனாகிய யெகோ
௰ வாவின்வாக்குகளைக்கேளுங்களென்றான்.-பின்
னும்யோசுவா, பாருங்கள், பூமண்டலமுழுவதற்
கும் ஆண்டவராயிருப்பவருடைய உடன்ப
டிக்கைப்பெட்டி உங்களுக்குமுன்பாகயோர்தா
னிலே கடந்துபோகின்றது.—ஆகையால் இஸர ௰௧
வேல்கோத்திரங்களில் ஒவ்வொருகோத்திரத்திற்
கொவ்வொருவராகப் பன்னிரண்டுபேரைப்பி
ரித்தெடுங்கள்.-பூமண்டலம்முழுவதிற்கும்ஆண் ௰௨
டவராகிய யெகோவாவுடைய பெட்டி
யைச்சுமக்கும் ஆசாரியர்களின் உள்ளங்கால்கள்
யோர்தானின்சலத்திலேபட்டமாத்திரத்தில், மே
லேயிருந்தோடிவருகிற யோர்தானின்சலம் ஓடா
மல் ஒருகுவியலாகநிற்கும்.-அதினாலே சீவனுள் ௰௩
ள தேவன் உங்களுக்குள்ளிருக்கிறாரென்பதை
யும், கானானியரையும், எத்தியரையும், ஈவியரை
யும், பெரிசியரையும், கிர்காஷியரையும், எமோ
ரியரையும், எபூசியரையும் உங்கள் முன்னின்
றுந் துரத்திவிடுவாரென்பதையும் அறிந்துகொள்
வீர்களென்றான்.
சனங்கள் யோர்தானைக்கடக்கும்படி தங்கள் ௰௪
கூடாரங்களிலிருந்து புறப்பட்டார்கள், ஆசாரி
யர்கள் உடன்படிக்கைப் பெட்டியைச் சனங்க
ளுக்கு முன்பாகச் சுமந்துகொண்டார்கள், உ
டன்படிக்கைப் பெட்டியைச் சுமந்தவர்கள்
யோர்தான்வரைக்குஞ்சென்றார்கள்.-யோர்தான் ௰௫
நதி அறுப்புக்காலமுழுவதும் தன்கரைகளின்மே
லே பிரவாகித்துப்பாயும், பெட்டியைச் சுமந்த
வர்கள் யோர்தான் நதியைச்சேர, பெட்டியைச்
சுமக்கிற ஆசாரியர்களுடைய கால்கள் சலத்தரு
கேவைக்கப்பட்டவுடனே,—மேலிருந்துஓடிவ ௰௬
ருகிற சலம் நின்று, சார்தானுக்கடுத்த ஆதாமூர்வ
ரைக்கும் நெடுந்தூரமாய் ஒரு அணையாகக்குவிந்
தது: உப்புக்கடலென்னுஞ் சமபூமியின்கடலுக்
கோடிப்போகிற சலம் பிரிந்து,ஓடிப்போயிற்று:
அப்பொழுது சனங்கள் யெரிகோவுக்கு எதிரே
ஆற்றைக் கடந்துபோனார்கள்.—சமஸ்தசனங்க ௰௭
ளும்யோர்தானைக்கடந்துதீருமளவும்,யெகோ
வாவுடையஉடன்படிக்கைப்பெட்டியைச்சுமக்
கிற ஆசாரியர்கள் யோர்தானின்மத்தியில் உலர்ந்
ததரையில் உறுதியாய்நிற்க, இஸரவேலர் எல்லா
ரும் உலர்ந்ததரைவழியாய்க்கடந்துபோனார்கள்.

## ௪. அதிகாரம்.

௧. யோர்தானினின்றும் பன்னிரண்டு கற்களை எடுத்துக்கொண்டுபோதல், யோர்தானுக்கு அக்கரையிலே அவைகளை ஸ்தாபித்தல்: ௰௪. சனங்கள் கடந்துபோதல்: ௰௯. கில்காலிலே அந்தப் பன்னிரண்டு கற்களை அடையாளமாக ஸ்தாபித்தல்.

சனங்களெல்லாரும் யோர்தானைக்கடந்துதீர்ந்த ௧
பொழுது,யெகோவாயோசுவாவைநோக்கி,-
நீங்கள் சனங்களில், கோத்திரத்திற்கு ஒவ்வொ ௨

(௨௪) அதி.௬.௨. அதி.௨௧.௪௪.—(௩. அதி. ௧.) அதி.௨.௧. (௨) அதி.௧.௰,௰௧. (௩) உபா.௩௧.௯,௨௫. (௪) யாத்.௰௯.௰௨. (௫) யாத்.௰௯.௰௧,௰௪,௰௫. லேவி.௨௰.௭. ௧.சாமு.௰௬.௫. யோவே.௨.௰௬. (௬) எண்.௪.௰௫. (௭) அதி.௪.௰௪. ௧.நாளா.௨௯.௨௫. அதி.௧.௫. (௮) வச.௰௭. (௰) மீகா.௪.௰௩. சக.௪.௰௪. (௰௧) அதி.௪.௨. (௰௨) வச.௰௫,௰௬. வச.௰. (௰௩) ௧.சாமு.௰௭.௨௬. ௨.இரா.௰௯.௪. ஓசி.௧.௰. மத்.௰௬.௰௬. ௧.தெச.௧.௯. யாத்.௩௩.௨.(௰௫)வச.௰௨. ௧.நாளா.௰௨.௰௫. எரே.௰௨.௫. எரே.௪௯.௰௯. அதி.௪.௰௮. (௰௬) ௧.இரா.௪.௰௨. உபா.௩.௰௭. ஆதி.௰௪.௩. எண்.௩௪.௩. (௰௭) யாத்.௰௪.௨௯.—(௪. அதி. ௧.) உபா.௨௭.௨. (௨) அதி.௩.௰௨.

ருவராகப் பன்னிரண்டுபேரைத்தெரிந்து, அவர்
௩ களைப்பார்த்து,—இங்கேயோர்தானின் மத்தியில்
ஆசாரியர்களுடையகால்கள் உறுதியாய்நின்றஇ
டத்திலே பன்னிரண்டுகற்களை எடுத்துக்கொண்
டு, அவைகளை உங்களோடே அக்கரைப்படுத்
தி, நீங்கள் இன்றிரவு தங்கும்ஸ்தானத்தில் அ
வைகளை வைத்துவிடுங்களென்று சொல்லிக்கட்
௪ டளையிடுவாயென்றார்.—அப்பொழுது யோசுவா
இஸரவேல்சந்ததியாரில் ஒவ்வொரு கோத்திரத்
திற்கு ஒவ்வொருவராக ஏற்படுத்தப்பட்ட பன்
௫ னிரண்டுபேரையும் வரவழைத்தான்.—யோசுவா
அவர்களைநோக்கி, நீங்கள் யோர்தானின் மத்தி
யில் உங்கள் தேவனாகிய யெகோவாவின்
பெட்டிக்குமுன்னே கடந்துபோய், உங்களுக்
குள்ளே ஒரு அடையாளமாகும்பொருட்டு, இஸ
ரவேல்சந்ததியாருடைய கோத்திரங்களின் தொ
கைக்கேற்கநீங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு
கல்லை உங்கள் உங்கள் தோளின்மேலெடுத்துக்
௬ கொண்டுபோங்கள்.—வருங்காலத்தில்உங்கள்சந்
ததியார் இந்தக்கற்களைப்பற்றிய உங்கள் அபிப்
௭ பிராயமென்னவென்று கேட்டால்,-நீங்கள் அ
வர்களைநோக்கி, யெகோவாவின் உடன்ப
டிக்கைப்பெட்டிக்குமுன் யோர்தானின்சலம்பி
ரிக்கப்பட்டது; யோர்தானைக்கடந்து போகிற
பொழுது யோர்தானின்சலம்பிரிந்துபோயிற்று:
அதற்கு இந்தக்கற்கள் இஸரவேல்சந்ததியாருக்
குள்ளே சதாகாலமும்ஞாபகக்குறியாக இருக்கு
௮ மென்றுசொல்லுங்களென்றான்.—யோசுவாகட்
டளையிட்டபடி இஸரவேல்சந்ததியார் செய்தார்
கள், யெகோவா யோசுவாவுக்குச்சொல்லிய
பிரகாரம் இஸரவேல்சந்ததியாருடைய கோத்திர
ங்களின்தொகைக்கேற்கப் பன்னிரண்டுகற்களை
யோர்தானின்மத்தியினின்றும்எடுத்துக்கொண்டு
போய், தாங்கள் தங்கின இடத்தில் வைத்துவிட்
௯ டார்கள்.—யோசுவாவும், யோர்தானின்மத்தியில்
உடன்படிக்கைப் பெட்டியைச்சுமந்த ஆசாரிய
ருடைய கால்கள்நின்ற இடத்தில் பன்னிரண்டு
கற்களைநாட்டினான்: அவைகள் இந்நாள்வரைக்
௰ கும் அங்கேநிற்கின்றன.—மோசே, யோசுவாவுக்
குக்கட்டளையிட்டிருந்த யாவற்றிற்குமேற்க, ச
னங்களுக்குச்சொல்லும்படி யெகோவா யோ
சுவாவுக்குக் கட்டளையிட்டவைகள் ஒவ்வொன்
றும் நிறைவேறுமளவும், ஆசாரியர்பெட்டியைச்
சுமந்துகொண்டு யோர்தானின் மத்தியிலேநிற்க,
௰௧ சனங்கள்துரிதமாய்க்கடந்துபோனார்கள்.—சமஸ்
தசனங்களுங்கடந்துதீர்ந்தபின்பு, யெகோவா
வின்பெட்டியுடன்ஆசாரியர்களுஞ்சனங்களின்
௰௨ சமுகத்திற்கடந்துபோனார்கள்.—ரூபேன்சந்ததி
யாரும், காத்சந்ததியாரும், மனாஷேயின் பாதிக்
கோத்திரத்தாரும்,தங்களுக்குமோசேசொன்னப
டியே ஆயுதந்தரித்து, இஸரவேலருக்கு முன்பா
கக்கடந்தார்கள்.—ஏறக்குறைய நாற்பதினாயிரம் ௰௩
பேர்யுத்தசன்னத்தராய், யெகோவாவின்முன்
பாகயுத்தஞ்செய்யும்படி யெரீகோவின்சமபூமிக்
குக்கடந்துபோனார்கள்.

அந்நாளிலே யெகோவா யோசுவாவைச் ௰௪
சமஸ்த இஸரவேலருடைய பார்வையிலும்மேன்
மைப்படுத்தினார்; அவர்கள் மோசேக்கு அவன்
ஆயுள்பரியந்தம் பயந்து நடந்ததுபோல், இவ
னுக்கும் பயந்து நடந்தார்கள்.—யெகோவா ௰௫
யோசுவாவை நோக்கி,—சாட்சிப்பெட்டியைச் ௰௬
சுமக்கிற ஆசாரியருக்கு யோர்தானினின்றுங்க
ரையேறும்படி கட்டளையிடுவாயாகவென்றார்.—
யோசுவா ஆசாரியர்களைநோக்கி, நீங்கள் யோர் ௰௭
தானினின்றுங் கரையேறுங்களென்று அவர்க
ளுக்குக்கட்டளையிட்டான்.—அப்பொழுது யெ ௰௮
கோவாவின் உடன்படிக்கைப் பெட்டியைச்
சுமக்கிற ஆசாரியர் யோர்தான்மத்தியினின்றும்
ஏறி, தங்கள் உள்ளங்கால்களைத் தூக்கிவைத்துக்
கரைசேர்ந்தவுடனே யோர்தானின்சலம் தன்னி
டத்திற்குத்திரும்பி, முன்போலத் தன்கரையெங்
கும் பிரவாகித்தது.

முதலாம் மாதம் பத்தாந்தினத்தில் சனங்கள் ௰௯
யோர்தானினின்றுங்கரையேறி, யெரீகோவுக்குக்
கிழெல்லையான கில்காலிலே பாளயமிறங்கினார்
கள்.—அவர்கள் யோர்தானில் எடுத்துக்கொண்டு ௨௰
வந்த பன்னிரண்டுகற்களையும் யோசுவா கில்கா
லிலேநாட்டி,—பின்பு இஸரவேல் சந்ததியாரை ௨௧
நோக்கி, வருங்காலத்தில் உங்கள்சந்ததியார் தங்க
ள்பிதாக்களிடத்தில், இந்தக்கற்களென்னவென்
றுகேட்டால்,—நீங்கள் உங்கள் சந்ததியாருட ௨௨
னே, இஸரவேலர் உலர்ந்த தரைவழியாக இந்த
யோர்தானைக்கடந்து வந்தார்கள்.—நீங்கள் உங் ௨௩
கள் தேவனாகிய யெகோவாவுக்கு என்
றென்றைக்கும் பயப்படுவதற்கும், பூமியிலுள்ள
சகல சனங்களும் யெகோவாவின் கரம்வல்
லமையுள்ளதென்று அறிவதற்கும்,—உங்கள் தே ௨௪
வனாகிய யெகோவா செங்கடலின்சலத்தை
நாங்கள்கடந்துதீருமளவும்எங்களுக்குமுன்பாக
வற்றப்பண்ணினதுபோல், உங்கள்தேவனாகிய
யெகோவா யோர்தானின்சலத்தையும்நீங்கள்
கடந்து தீருமளவும் உங்களுக்கு முன்பாக வற்
றப்பண்ணினாரென்று தெரிவியுங்களென்றான்.

## ௫. அதிகாரம்.

௧. கானானியர் பயப்படல்: ௨. இஸரவேலர் வி
ருத்தசேதனம் பண்ணல்: ௰. பஸ்கா உற்சவம்
ஆசரணைசெய்தல்: ௰௨. மன்னாஒழிந்துபோதல்:
௰௩. யெகோவாவின் சேனாபதி யோசுவா
வுக்குப் பிரசன்னமாதல்.

யோர்தானின் சலத்தை இஸரவேல்சந்ததியார் ௧

(௩) அதி.௩.௰௨. வச.௰௧,௨௰. (௬) யாத்.௰௨.௨௬. உபா.௬.௨௰. சங்.௪௪.௧. (௭) அதி.௩.௰௨,௰௬. யாத்.௰௨.௰௪. எண்.௰௬.௪௰. (௰௨) எண்.௩௨.௨௰,௨௭,௨௮. (௰௪) அதி.௩.௭. (௰௬) யாத்.௨௫.௰௬,௨௨. (௰௮) அதி.௩.௰௫. (௰௯) அதி.௫.௯. (௨௰) வச.௩. (௨௧) வச.௬. (௨௨) அதி.௩.௰௭. (௨௩) ௧.இரா.௮.௪௨,௪௩. ௨.இரா.௰௯.௰௯. யாத்.௰௫.௰௬. ௧.நாளா.௨௯.௰௨. சங்.௮௯.௰௩. யாத்.௰௪.௩௧. உபா.௬.௨. எரே.௰.௭. சங்.௮௯.௭. (௨௪) யாத்.௰௪.௨௧.—(௫. அதி. ௧.) எண்.௰௩.௨௯. யாத்.௰௫.௰௪,௰௫. அதி.௨.௯,௰,௰௧. ௧.இரா.௰.௫.

கடந்து தீருமளவும் யெகோவா அதை அவர்
களுக்குமுன்பாக வற்றப்பண்ணினதை, யோர்
தானுக்கு மேற்கே வாசம்பண்ணின எமோரிய
இராசாக்களெல்லாரும், சமுத்திரத்திற்குச் சமீப
மாய்வாசம்பண்ணினகானானியஇராசாக்களெல்
லாருங்கேள்விப்பட்டபொழுது, அவர்கள் இஸ
ரவேல் சந்ததியாரை நினைந்து தைரியமிழந்து, ம
னங்கரைந்துபோனார்கள்.
௨ அக்காலத்தில் யெகோவா யோசுவாவை
நோக்கி, நீ கூர்மையான கத்திகளைச்செய்து, இ
ரண்டாந்தரமும் இஸரவேலருக்கு விருத்தசேத
௩ னம்பண்ணென்றார்.—அப்படியேயோசுவாகூர்
மையானகத்திகளைச்செய்து அக்கிரசருமமேட்டி
லே இஸரவேலருக்கு விருத்தசேதனம்பண்ணி
௪ னான்.—எகிப்திலிருந்துபுறப்பட்ட சமஸ்தசனங்
களுள்ளும் ஆண்மக்களாகிய படைஞரனைவரும்
எகிப்திலிருந்தும் புறப்பட்டபின்புவழியிலே வ
௫ னத்தில்மரித்தார்கள்.—புறப்பட்ட சமஸ்தசனங்
களும் விருத்தசேதனம்பண்ணப்பட்டிருந்தார்
கள்: அவர்கள் எகிப்திலிருந்து புறப்பட்டபின்பு
வனத்திற்பிறந்த சமஸ்தசனங்களுக்கும் விருத்த
சேதனம்பண்ணவில்லை: அதினிமித்தம் யோசு
௬ வா இங்கேவிருத்தசேதனம்பண்ணினான்.-எகிப்
திலிருந்து புறப்பட்ட படைஞராகிய சமஸ்த
சனங்களும் யெகோவாவின் வாக்குக்கு அ
மையாததினால் யெகோவா எங்களுக்குஅளிக்
கும்படி, அவர்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட
தேசமாகிய பாலுந்தேனும்பெருகுகிற தேசத்தை
அவர்கள் காணவிடேனென்று, யெகோவா
ஆணையிட்டபிரகாரம் இறந்துபோகுமளவும், இ
ஸரவேல்சந்ததியார்நாற்பதுவருஷம் வனத்திலே
௭ திரிந்தார்கள்.—அவர்கள்ஸ்தானத்தில் யெகோ
வா தோற்றுவித்த அவர்கள்சந்ததியார் வழியிலே
விருத்தசேதனமில்லாதிருந்தார்கள்; அவர்கள் வ
ழியிலே விருத்தசேதனம்பண்ணப்படாததினால்
யோசுவா அவர்களுக்கே விருத்தசேதனம்பண்
௮ ணினான்.—சமஸ்தசனங்களுக்கும் விருத்தசேத
னம்பண்ணி முடிந்தபின்பு அவர்கள்சொஸ்தமா
குமளவும் பாளயத்திலே தங்கள்தங்கள்ஸ்தானங்
௯ களிலே தங்கினார்கள்.—யெகோவா யோசுவா
வைநோக்கி, இன்று எகிப்தின்நிந்தையை உங்க
ளிலிருந்தும் உருட்டிவிட்டேன் என்றார். அத
னால் அந்த ஸ்தானத்திற்கு இந்நாள்வரைக்குங்
கில்காலென்று பெயர்வழங்கிவருகின்றது.
௰ இஸரவேல்சந்ததியார் கில்காலிலே பாளயமி
றங்கியிருந்து, அந்தமாதம் பதினாலாந்தினத்தில்
சாயங்காலம் யெரீகோவின்சமபூமியிலேபஷ்கா
௰௧ வை ஆசரித்தார்கள்.—பஷ்காவின் மறுநாளாகிய
அத்தினம் அவர்கள் அந்தத்தேசத்திலுள்ள பழந்
தானியத்தாலாகிய புளிப்பில்லாத அப்பங்களை
யும் பொரிகளையும்புசித்தார்கள்.
அவர்கள் அத்தேசத்தின் பழந்தானியத்தைப்பு ௰௨
சித்த மற்றைநாள் மன்னா பெய்யாமல்நின்றது; அ
துமுதல் இஸரவேல் சந்ததியாருக்கு மன்னா இல்
லாமற்போயிற்று; அவர்கள் கானான்தேசத்துப்
பலத்தை அந்த வருஷத்தில்தானே புசித்தார்கள்.
பின்னும் யோசுவா யெரீகோ சமீபத்திலிருக் ௰௩
கையில், அவன் தன் கண்களையேறிட்டுப்பார்க்
கையில், உருவின கட்கத்தைக்கையிற்பிடித்துத்
தனக்கெதிரே ஒருவர்நிற்கக்கண்டான்:யோசுவா
அவரிடத்திற்போய், அவரைநோக்கி, நீர் எங்கள்
பட்சமோ, எங்கள் சத்துருக்கள்பட்சமோவென்
றுகேட்க;—அவர் அப்படியல்ல, நான் யெகோ ௰௪
வாவின் சேனைக்கதிபதியாய் வந்திருக்கிறேன்
என்றார். அப்பொழுது யோசுவா தரையிலே மு
கங்குப்புறவிழுந்து நமஸ்காரம்பண்ணிஅவருட
னே, என் ஆண்டவர் தமதுஅடியேனுக்குஎன்
னசொல்லுகிறீரென்று வினவ;—யெகோவா ௰௫
வின்சேனைக்கதிபதியோசுவாவைநோக்கி, நீநிற்
கிற ஸ்தானம் பரிசுத்தமுள்ளது; உன் காலிலுள்
ள செருப்பைக் கழற்றிப்போடென்றார். அப்ப
டியே யோசுவாசெய்தான்.

## ௬. அதிகாரம்.

௧. யெரீகோ நகரம் அடைக்கப்படல்: ௨. அதை
முற்றிக்கைபோடத்தேவன் கட்டளையிடல்:
௰௨. ஆசாரியர்கள்பெட்டியைச்சுமந்துகொண்
டு நகரத்தைச்சுற்றிவருதல்: நகரஞ்சாபம்பெறு
தல்: ௨௰. சுவரிடிந்துவிழல்: ௨௬. அதை மறுப
டி கட்டலாகாதென விலக்கல்.

யெரீகோ இஸரவேல் சந்ததியாரினிமித்தம்கா ௧
வலாக அடைக்கப்பட்டிருந்தது: ஒருவரும்வெ
ளியேபோகவுமில்லை, உள்ளேவரவுமில்லை.
யெகோவா யோசுவாவைநோக்கி, யெரீ ௨
கோவையும்,அதின் இராசாவையும்,யுத்தபராக்கி
ரமசாலிகளையும்உன்கையில் ஒப்பித்தேன்.-பார், ௩
படைஞர்களாகிய நீங்களனைவரும் நகரத்தைச்
சூழ்ந்து ஒருதரஞ்சுற்றிவாருங்கள். இப்படி ஆறு
நாள் செய்யக்கடவீர்கள்.—ஆசாரியர்கள் எழு ௪
பேர் பெட்டிக்குமுன்பாக ஆட்டுக்கடாக்கொம்
பாலாகியஎழு எக்காளங்களைப்பிடித்துக்கொண்
டுபோகவேண்டும்: எழாந்தினத்தில் நகரத்தை எ
ழுதரஞ்சுற்றிவரக்கடவர்கள், ஆசாரியர்கள் எக்
காளங்களை ஊதவேண்டும்.—அந்தஆட்டுக்கடாக் ௫
கொம்புகளால் அவர்கள்நெடுந்தொனியிட, நீங்
கள் எக்காளசத்தத்தைக் கேட்டமாத்திரத்தில்ச
மஸ்த சனங்களும் உரத்தசத்தமாய் ஆரவாரிக்க
வேண்டும்; உடனேநகரத்தின்மதில்கீழே இடிந்
துவிழும், சனங்கள் அவரவர் தங்கள்தங்களுக்கு

(௨) யாத்.௪.௨௫. (௪) எண்.௰௪.௨௯. எண்.௨௬.௬௪,௬௫. (௬) எண்.௰௪.௩௩. சங்.௯௫.௰. எண்.௰௪.௨௩. சங்.௯௫.௰௧. எபி.௩.௰௧. யாத்.௩.௮. (௭) எண்.௰௪.௩௧. உபா.௧.௩௯. (௮) ஆதி.௩௪.௨௫. (௯) ஆதி.௩௪.௰௪. ௧.சாமு.௰௪.௬. எசேக்.௨௰.௭. அதி.௪.௰௯. (௰) யாத்.௰௨.௬. எண்.௯.௫. (௰௨) யாத்.௰௬.௩௫. (௰௩) ஆதி.௰௮.௨. யாத்.௨௩.௨௩. சக.௧.௮. அப்.௧.௰. எண்.௨௨.௨௩. (௰௪) யாத்.௨௩.௨௰. தானி.௰.௰௩,௨௧. தானி.௰௨.௧. வெளி.௰௨.௭. வெளி.௰௯.௰௧,௰௪. ஆதி.௰௭.௩. (௰௫) யாத்.௩.௫.—(௬. அதி. ௨.) அதி.௨.௯,௨௪. உபா.௭.௨௪. (௪) நியா.௭.௰௬,௨௨. எண்.௰.௮.

௬ நேர்வழியாக ஏறக்கடவர்களென்றார்.—அந்தப்
படி நூனின்புத்திரனாகியயோசுவா ஆசாரியரை
யழைத்து, உடன்படிக்கைப் பெட்டியை எடுத்
துக்கொண்டுபோங்கள், ஆசாரியர் ஏழுபேர்ஆட்
டுக்கடாக்கொம்பாலாகிய எக்காளங்கள் ஏழை
யெகோவாவுடைய பெட்டிக்குமுன்பாகப்
பிடித்துக்கொண்டுபோகக்கடவர்கள்என்று சொ
௭ ன்னான்.—பின்பு அவன் சனங்களைநோக்கி, நக
ரத்தைச்சுற்றி நடந்துபோங்கள், யுத்தசன்னத்
தரோவ்வொருவரும் யெகோவாவின் பெட்
௮ டிக்குமுன் செல்லக்கடவர்களென்றான்.-யோசு
வாசனங்களுடன் சொன்னபடி ஏழு ஆசாரியர்
ஆட்டுக்கடாக் கொம்பாலாகிய எக்காளங்களைப்
பிடித்து, எக்காளங்களை ஊதிக்கொண்டு, யெ
கோவாவுக்கு முன்பாக நடக்க உடன்படிக்
கைப்பெட்டி அவர்களுக்குப் பின்சென்றது.—
௯ எக்காளங்களை ஊதுகிற ஆசாரியருக்குமுன்பாக
யுத்தசன்னத்தரானவர்கள் நடந்தார்கள், ஆசாரி
யர்கள் எக்காளங்களைஊதிக்கொண்டுமுன்செல்
ல, மற்றைச்சனங்கள் பெட்டிக்குப் பின்சென்
௰ றார்கள்.—யோசுவாசனங்களைநோக்கி, ஆரவாரிக்
கும்படி நான்சொல்லும் நாளிலேநீங்கள் ஆரவா
ரம்பண்ணுங்கள், அதுவரைக்கும் நீங்கள்ஆரவா
ரம்பண்ணாமலும், உங்கள்சத்தத்தைக் காட்டாம
லுமிருப்பீர்களாக. உங்கள்வாயிலிருந்துஒருமொ
ழியும் புறப்படலாகாது என்று சொல்லிக்கட்ட
௰௧ ளையிட்டிருந்தான்.—அந்தப்பிரகாரம் யெகோ
வாவின்பெட்டி ஒருதரம்நகரத்தைச் சுற்றிவந்த
து: அவர்கள் திரும்பப்பாளயத்திலே சேர்ந்து,
பாளயத்தில் இராத்தங்கினார்கள்.
௰௨ யோசுவா அதிகாலையில் எழுந்திருந்தான், ஆ
சாரியர்கள் யெகோவாவின்பெட்டியையெடுத்
௰௩ துக்கொண்டு போனார்கள்.—ஆட்டுக்கடாக்கொம்
பாலாகிய எக்காளங்கள் ஏழையும்பிடித்த ஏழுஆ
சாரியரும், எக்காளங்கள் ஊதிக்கொண்டே யெ
கோவாவின் பெட்டிக்குமுன்நடந்தார்கள்: யுத்
தசன்னத்தர்கள் அவர்களுக்குமுன்சென்றார்கள்;
ஆசாரியர் எக்காளங்களை ஊதிக்கொண்டு முன்
செல்ல மற்றைச்சனங்கள் யெகோவாவின்
௰௪ பெட்டிக்குப்பின்சென்றார்கள்.—இரண்டாம் நா
ளிலும் நகரத்தை ஒருதரஞ்சுற்றிவந்து பாளயத்
திற்குத்திரும்பினார்கள்: இப்படி ஆறுநாள்செய்
௰௫ துவந்தார்கள்.—ஏழாம்நாளில் அதிகாலையில் அ
ருணோதயசமயத்தில்அவர்கள்எழுந்து, அவ்வண்
ணமேநகரத்தை ஏழுதரஞ்சுற்றிவந்தார்கள்: அன்
றைத்தினத்தில்மாத்திரம் நகரத்தை ஏழுதரஞ்சுற்
௰௬ றினார்கள்.—ஏழாந்தரம் ஆசாரியர் எக்காளங்களை
ஊத, யோசுவா சனங்களை நோக்கி, நகரத்தை
யெகோவா உங்களுக்குத்தந்துவிட்டார்; ஆர
௰௭ வாரியுங்கள்.—நகரமும் அதிலுள்ளயாவும் யெ
கோவா இடுகிறசாபத்திற்கு ஒப்பிக்கப்பட்ட
ன! வேசையான இராகாப்பென்பவள் நாம் அ
னுப்பிவைத்த தூதர்களை மறைத்துவைத்தபடியி
னாலே அவளும், வீட்டுக்குள் அவளோடிருக்கி
ற அனைவருமாத்திரம் உயிரோடிருக்கக்கடவர்
கள்.—சபிக்கப்பட்டபொருளை எடுத்து நீங்கள் ௰௮
சாபத்துக்குட்படாதபடிக்கும், இஸரவேலின்பா
ளயத்தைச் சாபத்துக்குட்படுத்தி, அதைக்கலங்
கப்பண்ணாதபடிக்கும், சபிக்கப்பட்டவைகளுக்
கு விலகி எப்படியும் உங்களைக் காத்துக்கொள்
ளுங்கள்.—பொன் வெள்ளிகளும், பித்தளை இ ௰௯
ருப்புப் பாத்திரங்களுமாகிய சமஸ்தமும் யெ
கோவாவுக்குப் பரிசுத்தமானவைகள்: அவை
கள் யெகோவாவின் பொக்கிஷத்திற் சேர
வேண்டுமென்றான்.

எக்காளங்கள் தொனிக்கையில், சனங்கள் ஆர ௨௰
வாரம்பண்ணினார்கள்: எக்காளத் தொனியைச்
சனங்கள் கேட்டு உரத்தசத்தமாய் ஆரவாரம்பண்
ணுகையில் மதிலிடிந்துகீழேவிழுந்தது; உடனே
சனங்கள் அவரவர்தங்களுக்குநேர்வழியாக நகர
த்தில் ஏறி நகரத்தைப்பிடித்துக்கொண்டார்கள்.-
அதிலிருந்தவாலிபமும்விருத்தாபியமுமான ஸ்தி ௨௧
ரிபுருஷரையும், ஆடுமாடுகழுதைகளனைத்தையும்
கட்கத்தின்வாயினாலே சங்காரம்பண்ணினார்க
ள்.-அத்தேசத்தைவேவுபார்த்த இரண்டுபுருஷரை ௨௨
யும் யோசுவாநோக்கி, நீங்கள்அந்தவேசைவீட்டி
ற்போய், அவளுக்குஆணையிட்டபடி அவளையும்,
அவளைச்சேர்ந்த அனைவரையும், அங்கேயிருந்து
வெளியேகொண்டுவாருங்களென்றான்.—வேவு ௨௩
பார்த்த அந்தவாலிபர்உள்ளேபோய்இராகாப்பை
யும், அவளுடைய பிதாமாதா சகோதரரையும், அ
வளைச்சேர்ந்தயாவரையும் வெளியே அழைத்துக்
கொண்டுவந்தார்கள்; அவளுடைய குடும்பத்தா
ரனைவரையும் வெளியேகொண்டுவந்து, அவர்க
ளை இஸரவேலின் பாளயத்திற்குப்புறம்பேவிட்
டார்கள்.—நகரத்தையும், அதிலுள்ள யாவையும், ௨௪
அக்கினியினாலேதகித்து, பொன் வெள்ளிகளை
யும், பித்தளை இருப்புப்பாத்திரங்களையுமாத்திரம்
யெகோவாவின் ஆலயத்தின் பொக்கிஷத்திற்
சேர்த்தார்கள்.-இராகாப்பென்னும் வேசை யெரி ௨௫
கோவை வேவுபார்க்கும்படி யோசுவா அனுப்பி
னதூதரை மறைவாயிருக்கச்செய்தபடியினாலே,
அவளையும், அவள்பிதாவின் குடும்பத்தாரையும்,
அவளைச்சேர்ந்தயாவரையும், யோசுவா உயிரோ
டேபாதுகாத்தான்; அவள் இந்நாள்வரைக்கும்
இஸரவேலருக்குள்ளே வசித்திருக்கிறாள்.

அக்காலத்தில் யோசுவா யெரிகோ நகரத்தைத் ௨௬
திரும்பக்கட்டத்துணிபவன் யெகோவாவுக்
கு முன்பாகச்சபிக்கப்பட்டவன்: அவன் அதற்
கு அஸ்திபாரம் போடுகையில் தன் மூத்தமகனை
யும், அதற்குவாசல் விடுகையில் தன் இளையமக
னையும்இழந்துபோகக்கடவனென்றுசபித்தான்.-
யெகோவா யோசுவாவின் பட்சத்திலிருந் ௨௭
தார்; அவன் கீர்த்தி தேசமெங்கும்பரம்பிற்று.

---

(௬) எண்.௰.௨௫. (௰௨) உபா.௩௧.௨௫. (௰௭) லேவி.௨௭.௨௮. மீகா.௪.௰௩. அதி.௨.௪. (௰௮) உபா.௭.௨௬. அதி.௭. ௧,௰௧,௰௨. ௧.இரா.௰௮.௰௭,௰௮. யோனா.௧.௰௨. (௨௰) எபி.௰௧.௩௰. (௨௧) உபா.௭.௨. (௨௨) அதி.௨.௰௪. எபி.௰௧. ௩௧. (௨௩) அதி.௨.௰௩. (௨௪) வச.௰௯. (௨௫) மத்.௧.௫. (௨௬) ௧.இரா.௰௬.௩௪. (௨௭) அதி.௧.௫. அதி.௯.௧,௩.

## ௭. அதிகாரம்.

௧. ஆயியின்சமீபத்தில் இஸரவேலரில் சிலரைமுறியஅடித்தல்: ௬. அதைக்குறித்து யோசுவா புலம்பல்: ௰. அதைக்குறித்து அவன் செய்யவேண்டியதின்னதென்று தேவன் விதித்தல்: ௰௬. ஆகான் அகப்படல்: ௨௨. அவன் தன் குற்றத்தினிமித்தம் நாசமடைதல்.

யூதாகோத்திரத்துச் சேராகின்புத்திரனாகிய சப்
தியின் பௌத்திரனும், கர்மியின் புத்திரனுமாகி
ய ஆகான் சபிக்கப்பட்ட பொருளில் எடுத்தப
டியினாலே, இஸரவேல் சந்ததியார் சபிக்கப்பட்
டபொருளைக்குறித்த கட்டளையை மீறினார்கள்:
அதனால் இஸரவேல்சந்ததியார்மேல் யெகோ
௨ வாவின் கோபமூண்டது.—யெரீகோவிலிருந்து
யோசுவா பெத்தேலுக்குக் கிழக்கிலுள்ள பேதா
வெனூருக்குச் சமீபமான ஆயிநகரத்துக்கு நீங்
கள்போய், அத்தேசத்தை வேவுபாருங்களென்று
ஆள்களை யனுப்பினான். அவர்கள்போய் ஆயி
௩ யை வேவுபார்த்து,—யோசுவாவினிடத்திற்குத்தி
ரும்பிவந்து அவனைநோக்கி, சனங்களெல்லா
ரும்போகவேண்டுவதில்லை; ஏறக்குறையஇரண்
டாயிரம் மூவாயிரம்பேர் ஏறிப்போய் ஆயியைச்
சங்காரஞ்செய்யலாம்; அவ்வூரார்கொஞ்சப்பேர்;
ஆகையால் சமஸ்த சனங்களையும் வருந்திப்போ
கும்படி பண்ணவேண்டுவதில்லை என்றார்கள்.—
௪ அப்படியே சனங்களில் ஏறக்குறைய மூவாயி
ரம்பேர் அவ்விடத்தில் ஏறிப்போய் யுத்தஞ்செய்
கையில், ஆயிநகரத்தாருக்குப் புறங்காட்டி ஓடி
௫ னார்கள்.—ஆயிநகரத்தார் நகரவாசலின் வெளி
தொடங்கி ஷிபாரிம்மட்டும் அவர்களைத்துரத்தி,
மலைச்சாரலில் அவர்களைமுறிய அடித்தார்கள்:
அவர்களில் முப்பத்தாறுபேரைச் சங்கரித்தார்
கள். அப்பொழுதுசனங்களுடையமனங் கரைந்
து நீர்போலாயிற்று.
௬ யோசுவா தன் வஸ்திரங்களைக்கிழித்து, யெ
கோவாவின் பெட்டிக்குமுன்பாகச் சாயங்கா
லம்வரைக்குந் தரையிலே முகங்குப்புறவிழுந்து
கிடந்தான்; அவனும், இஸரவேலின் மூதியோ
ரும் தங்கள் தலைகளின்மேல் மண்ணை அள்ளிப்
௭ போட்டுக்கொண்டார்கள்.—யோசுவா, ஐயோ
என் ஆண்டவரே, யெகோவாவே, எங்க
ளை நாசப்படுத்துவதற்கு எமோரியர் கைகளில்
ஒப்பித்து விடும்படி நீர் இந்தச்சனங்கள் யோர்
தானைக்கடந்துவரப்பண்ணினதென்ன; நாங்கள்
மனப்பூருவமாக யோர்தானுக்கப்புறத்திலிருந்து
௮ விட்டோமானால், நலமாகும்.—என் ஆண்டவ
ரே, இஸரவேலர் தங்கள் சத்துருக்களுக்குப்பு
றங்காட்டுகையில் நான் என்னசொல்வேன்.—
௯ கானானியருந் தேசத்தார்யாவரும் இதைக்கேள்
விப்பட்டு, எங்களை வளைந்துகொண்டு, பூமியில்
எங்கள் நாமமறக்களைந்துபோடுவார்களே: அப்
பொழுது உமது மகிமையுள்ள நாமத்திற்கு என்
னசெய்வீரென்றான்.
யெகோவா யோசுவாவைநோக்கி, நீ ஏன் ௰
இப்படிமுகங்குப்புறக்கிடக்கிறாய்; எழுந்திரு.—
இஸரவேலர் பாவஞ்செய்தார்கள், அவர்கள் தங் ௰௧
களுக்கு நான் கட்டளையிட்ட நியமத்தை மீறி
னார்கள்: சபிக்கப்பட்ட பொருள்களில் எடுத்
துக்கொண்டார்கள், களவுசெய்தார்கள், வஞ்சகம்
பண்ணினார்கள், அதைத் தங்கள் பண்டங்களு
டன் சேர்த்துக்கொண்டார்கள்.—ஆதலால் இஸர ௰௨
வேல் சந்ததியார் சாபத்திற்குள்ளானார்கள், அதி
னிமித்தம் அவர்கள் சத்துருக்களுக்கு எதிர்த்து
நிற்கமுடியாமல், தங்கள்சத்துருக்களுக்குப்புறங்
காட்டினார்கள்: சபிக்கப்பட்டபொருளை உங்க
ளிலிருந்து நீக்காவிட்டால், இனிநான் உங்க
ளோடிரேன்.—எழும்பு, சனங்களைப்பரிசுத்தப்ப ௰௩
டுத்து, இஸரவேலரே, உங்கள்மத்தியிலே சபிக்
கப்பட்ட பொருளிருக்கின்றது: உங்கள்மத்தியி
னின்று சபிக்கப்பட்டபொருளை நீங்கள் நீக்கா
விட்டால், உங்கள் சத்துருக்களுக்கு எதிர்த்து
நிற்கமாட்டீர்கள்.—ஆதலால் காலையில் நீங்கள் ௰௪
கோத்திரங் கோத்திரமாக வரவேண்டும்: யெ
கோவாகுறிக்கிற கோத்திரத்தார் வமிசம்வமிச
மாகவரவேண்டும்; யெகோவாகுறிக்கிற வமி
சத்தார் தங்கள் குடும்பங் குடும்பமாகவரவேண்
டும்; யெகோவாகுறிக்கிறகுடும்பத்தார், ஒருவ
ரொருவராகவரவேண்டும்.—சபிக்கப்பட்ட பொ ௰௫
ருளை யெடுத்தவன் யெகோவாவின் நியமத்
தை மீறினதினாலும், இஸரவேலருக்குள்ளேதீவி
னைசெய்தபடியினாலும், தனக்குண்டான யாவற்
றோடும் அக்கினியினாலே தகிக்கப்படவேண்டு
மென்றும், நீங்கள் நாளைக்கு உங்களைப்பரிசுத்
தப்படுத்த வேண்டுமென்றும், இஸரவேலரின்
தேவனாகிய யெகோவா சொல்லுகிறாரென்
பதைச்சொல்லென்றார்.
யோசுவா அதிகாலையிலெழுந்திருந்து, இஸ ௰௬
ரவேலரைக் கோத்திரங்கோத்திரமாக அழைக்க,
யூதாகோத்திரங்குறிக்கப்பட்டது.—யூதாவின்வ ௰௭
மிசங்களையழைக்க, சர்கியரின் வமிசத்தைக்கு
றித்தான்: அவன் சர்கியரின் வமிசத்தின் புருஷ
ரையழைக்க, சப்தி குறிக்கப்பட்டான்.—அவனு ௰௮
டையகுடும்பத்தாரை ஒருவரொருவராக அழைக்
க, யூதாகோத்திரத்துச்சேராகின்புத்திரனாகிய சப்
தியின் பௌத்திரனும் கர்மியின்புத்திரனுமாகிய
ஆகான் அகப்பட்டான்.—அப்பொழுது யோசு ௰௯
வா ஆகானைநோக்கி, என்மகனே, நீ இப்பொ
ழுது இஸரவேலின் தேவனாகிய யெகோவா
வின் நாமத்தைக் கனம்பண்ணு, அவர் சமுகத்
தில் குற்றமுணர்ந்துச்சொல்லி, நீசெய்தது இன்

(௭. அதி. ௧.) அதி.௨௨.௨௰. ௧.நாளா.௨.௭,. ௧.நாளா.௨.௬. (௪) லேவி.௨௬.௰௭. (௫) லேவி.௨௬.௩௬. சங்.௨௨.௰௪. (௬) ஆதி.௩௭.௨௯,௩௪. ௧.சாமு.௪.௰௨. ௨.சாமு.௧.௨. நிகி.௯.௧. யோபு.௨.௰௨. (௭) யாத்.௫.௨௨. ௨.இரா.௩௰. (௯) சங்.௮௩.௪. யாத்.௩௨.௰௨. (௰௧) அதி.௬.௰௭,௰௮. (௰௨) எண்.௰௪.௪௫. உபா.௭.௨௬. (௰௩) யாத்.௰௯.௰௧. (௰௪) நீதி.௰௬.௩௩. (௰௫) வச.௰௧. ஆதி.௩௪.௭. நியா.௨௰.௬. அதி.௩.௫. (௰௮) ௧.சாமு.௰௪.௪௨. (௰௯) ௧.சாமு.௬.௫. எரே.௰௩.௰௬. யோவா.௯.௨௪. ௨.நாளா.௩௰.௨௨. சங்.௫௧.௩. தானி.௯.௪. ௧.சாமு.௰௪.௪௩.

னதென்றிப்பொழுது எனக்குத்தெரிவி; அதை
௨௰ எனக்கு ஒளியாதே என்றான்.—அதற்கு உத்தர
மாக ஆகான்யோசுவாவைநோக்கி, இஸரவேல
ரின் தேவனாகிய யெகோவாவுக்கு விரோ
௨௧ தமாக நான்பாவஞ்செய்தது மெய்.—கொள்ளையி
டப்பட்டவைகளில்நேர்த்தியான பாபேலோனி
யவஸ்திரத்தையும், இருநூறு ஷேக்கல் வெள்ளி
யையும், ஐம்பது ஷேக்கல் நிறைகொண்ட ஒரு
பொன் நாக்கையும் நான்கண்டு, இச்சித்து எடுத்
துக்கொண்டேன்; இப்படியே செய்தேன்;. அ
வைகள் என் கூடாரத்தின் மத்தியில் பூமிக்குள்
ளும், வெள்ளி அதின்கீழும்புதைத்திருக்கின்றன
வென்றான்.
௨௨ உடனேயோசுவாஆள்களையனுப்ப, அவர்கள்
கூடாரத்திற்கோடிப்போய், அவைகள்அவன்கூ
டாரத்தில் புதைத்திருக்கக்கண்டார்கள்; வெள்
௨௩ ளிஅவைகளின் கீழிருந்தது.—அவைகளைக் கூ
டாரமத்தியினின்றும் எடுத்து யோசுவாவினிடத்
திலும், சமஸ்த இஸரவேல்சந்ததியாரிடத்திலுங்
கொண்டுவந்து யெகோவாவின் சமுகத்தில்
௨௪ வைத்தார்கள்.—அப்பொழுது யோசுவாவும், அ
வனுடன் நின்றசமஸ்த இஸரவேலரும் சேரா
கின்புத்திரனாகிய ஆகானையும், அவன்புத்திரரை
யும், புத்திரிகளையும், வெள்ளி, வஸ்திரம், பொன்
நாக்கு, மாடு, கழுதை, ஆடு, கூடாரமுதலிய அ
வனுக்குண்டான யாவற்றோடும் பிடித்து அக்
௨௫ கோர்பள்ளத்துக்குக்கொண்டுபோனார்கள்.—அங்
கே யோசுவா அவனைநோக்கி, நீஎன்எங்களைக்
கலங்கப் பண்ணினாய், இன்று யெகோவா
உன்னைக்கலங்கப் பண்ணுவாரென்றான். உட
னே சமஸ்த இஸரவேலரும் அவன்மேற்கல்லெ
றிந்து மற்றவர்களின் மேலும்கல்லெறிந்த பின்பு
௨௬ அக்கினியினால் தகித்து,—அவன்மேல் இந்நாள்
வரைக்குமிருக்கிற ஒரு பெரியகற்குவியலைக்கு
வித்தார்கள்: யெகோவா தமது உக்கிரகோப
மாறினார். அந்தஸ்தானம் இந்நாள்வரைக்கும்அக்
கோர் பள்ளமென்னப்படுகின்றது.

## அ. அதிகாரம்.

௧. யெகோவா யோசுவாவைத் தைரியப்படுத்
தல்: யோசுவா தன்சேனைகளிற்சிலரைப் பதிவி
ருக்கச்செய்தல்: ௯. ஆயிநகரத்தைப்பிடித்தல்:
௰௪. நகரமுஞ் சனஙகளும் நாசமடைதல்: ௩௰.
வேதிகையை யுண்டாக்கல், கட்டளையும்ஆசீர்
வாதமுந்தெரிவித்தல்.

பின்பு யெகோவா யோசுவாவை நோக்கி,
நீ பயப்படவேண்டாம் கலங்கவும்வேண்டாம்:
எழுந்து படைஞராகிய சமஸ்த சனங்களையு
ங் கூட்டிக்கொண்டு, ஆயி நகரத்திற்குப் போ:
பார், ஆயியின் இராசாவையும், அவன் சனங்க
ளையும், நாடுநகரங்களையும், உன்கையிலொப்பித்
௨ தேன்.—நீ யெரிகோவுக்கும் அதின் இராசாவுக்
குஞ் செய்தபிரகாரம் ஆயிக்கும், அதின் இராசா
வுக்குஞ் செய்யக்கடவாய்: அதிற் கொள்ளையி
டப்படுகிற பொருளையும், மிருக சீவன்களையு
மாத்திரம் உங்களுக்காக எடுத்துக்கொள்ளலாம்:
நகரத்தைப்பிடிக்க அதற்கப்புறத்திலே சேனைக
ளைப்பதிவிருக்க ஏற்படுத்தக்கடவாயென்றார்.—
அப்படியே யோசுவாவும் படைஞராகிய சமஸ் ௩
த சனங்களும் ஆயிநகரத்தை எதிர்க்கும்படி எ
ழுந்துபுறப்பட்டார்கள்: யோசுவா இரவில் அ
னுப்பும்படி பராக்கிரம வீரரில் முப்பதினாயி
ரம்பேரைத் தெரிந்துஅவர்களைநோக்கி,—கேளுங் ௪
கள், நீங்கள் நகரத்திற்கப்புறத்திலே பதிவிருக்
கவேண்டும்: நகரத்திற்கு அதிதூரத்திலேபோய்வி
டாமல், நீங்களெல்லாரும் ஆயத்தமாயிருங்கள்.-
நானும், என்னோடிருக்கிற சமஸ்த சனங்களும் ௫
நகரத்திற்குச் சமீபமாய்ப்போவோம்: அவர்கள்
முன் போல் எங்களுக்கு எதிர்த்துவரும் பொழு
து, நாங்கள் அவர்களுக்குப் புறங்காட்டி ஓடு
வோம்.-அப்பொழுது அவர்கள், இவர்கள் முன் ௬
போல் நமக்குப்புறங்காட்டி ஓடுகிறார்களென்று
சொல்லிக்கொண்டு எங்களைத்துரத்தப் புறப்படு
வார்கள்: நாங்கள் அவர்களை நகரத்தினின்றும்
நீங்கி இப்புறத்தில் வரப்பண்ணும்படி அவர்க
ளுக்குப்புறங்காட்டி ஓடுவோம்.—உடனே நீங் ௭
கள் எழுந்துபதிவிடைநீங்கிவந்து, நகரத்தைப்பி
டிக்கக்கடவீர்கள்: உங்கள் தேவனாகிய யெ
கோவா அதை உங்கள்கையிலொப்பிப்பார்.—
நீங்கள் நகரத்தைப்பிடித்தபின்பு அதிலேநெருப் ௮
புப்போட்டுக்கொளுத்தக்கடவீர்கள்: யெகோ
வாவின் கட்டளைப்படிசெய்யுங்கள். நான் உங்
களுக்குக்கட்டளையிட்டேன், பாருங்களென்று
சொல்லியனுப்பினான்.
அவர்கள் போய்ப்பெத்தேலுக்கும் ஆயிக்கும் ௯
நடுவே ஆயிக்குமேற்காகப்பதிவிருந்தார்கள்: யோ
சுவா அன்றிராத்திரி சனங்களுக்குள்ளே தங்கி
னான்.—யோசுவா அதிகாலையிலெழுந்து சனங் ௰
களை எண்ணிப்பார்த்துக்கொண்டுபுறப்பட்டு, இ
ஸரவேலின் முதியோரோடுஞ் சனங்களுக்கு
முன்பாக ஆயிக்கு நடந்துபோனான்.—அவனோ ௰௧
டு நின்றபடைஞராகிய சமஸ்த சனங்களும் எ
ழுந்து, நடந்து நகரத்திற்கு எதிராகச்சமீபித்துச்
சென்று, ஆயிக்கு வடக்கேபாளயம் இறங்கினார்
கள்: அவர்களுக்கும் ஆயிக்கும்நடுவே ஒரு பள்
ளமிருந்தது.—அங்கே அவன் ஏறக்குறைய ஐ ௰௨
யாயிரம்பேரைப்பிரித்தெடுத்து அவர்களைப் பெத்
தேலுக்கும் ஆயிக்கும் நடுவே நகரத்திற்கு மேற்
கே பதிவிருக்கப்பண்ணினான்.—நகரத்திற்கு வ ௰௩
டக்கேயிருந்த சமஸ்தசேனைகளையும், மேற்கேப
திவிருந்தவர்களையும் அணிவகுத்தபின்பு, யோ
சுவா அன்றிராத்திரிபள்ளத்திலேபோயிருந்தான்.
ஆயியின் இராசா, அதைக்கண்டபொழுது நக ௰௪

(௨௪) வச.௨௬. அதி.௰௫.௭. (௨௫) அதி.௬.௰௮. ௧.நாளா.௨.௭. கலா.௫.௰௨. உபா.௰௭.௫. (௨௬) ௨.சாமு.௰௮.௰௭. புல.௩.௫௩. உபா.௰௩.௰௭. ௨.சாமு.௨௧.௰௪. ஏசா.௬௫.௰. ஓசி.௨.௰௫.—(அ. அதி. ௧.) உபா.௧.௨௧. அதி.௧,௯. அதி. ௬.௨. (௨) அதி.௬.௨௧. உபா.௨௰.௰௩. (௪) நியா.௨௰.௨௯. (௫) நியா.௨௰.௩௨. (௮) ௨.சாமு.௰௩.௨௮. (௰௧) வச.௫. (௰௩) வச.௪. (௰௪) நியா.௨௰.௩௪. பிர.௯.௰௨.

ரத்திற்குப் புறத்திலே பதிவிருக்கிறதை அறியா
மல், தானும் நகரத்தாராகிய சமஸ்த சனங்களுந்
துரிதமாய் அதிகாலையிலே குறித்தவேளையில் இ
ஸ்ரவேலருக்கு எதிரே யுத்தம் பண்ணும்படி சம
௰௫ பூமிக்குநேராகப் புறப்பட்டார்கள்.—யோசுவா
வும் மற்ற இஸ்ரவேலரெல்லாரும் அவர்களால்
முறிய அடிக்கப்பட்டவர்கள்போல், வனத்தின்
௰௬ வழியேஓடினார்கள்.—அப்பொழுது அவர்களைப்
பின்தொடரும்படி ஆயிநகரத்திலுள்ள சமஸ்த ச
னங்களுங் கூடிவரவழைக்கப்பட்டார்கள். அ
வர்கள் யோசுவாவைப் பின்தொடரும்பொருட்
௰௭ டுநகரத்தைவிட்டுநீங்கினார்கள்.—ஆயியிலும் பெத்
தேலிலும் இஸ்ரவேலரைப் பின்தொடராதவர் ஒ
ருவருமில்லை: நகரவாசலைத்திறந்துவிட்டு எல்
௰௮ லாரும் இஸ்ரவேலரைத்தோடர்ந்தார்கள்.—அப்
பொழுது யெகோவா யோசுவாவைநோக்கி,
உன்கையிலிருக்கிற ஈட்டியை ஆயிக்குநேராக
நீட்டு; அதை உன்கையில் ஒப்பிப்பேனென்று
சொல்ல, யோசுவா தன்கையிலிருந்த ஈட்டியை
௰௯ நகரத்திற்குநேராக நீட்டினான்.—அவன் தன்கை
யை நீட்டினவுடனே, பதிவிருந்தவர்கள் துரித
மாயெழும்பித் தாங்களிருந்த இடத்தைவிட்டோ
டி, நகரத்திற்பிரவேசித்து, அதைப்பிடித்து, சீக்கி
ரமாய் அதில் நெருப்புப்போட்டுக் கொளுத்தி
௨௰ னார்கள்.—ஆயிநகரத்தார் பின்னிட்டுப் பார்த்த
பொழுது ஆகாயத்தில் நகரத்தின்புகை எழும்பு
வதைக்கண்டார்கள்; எந்தப்பக்கத்திலும் ஓட அ
வர்களுக்குத் திடமில்லாமற் போயிற்று: வனத்
திற்கோடின சனங்களுந் தங்களைத்தொடர்ந்த
௨௧ வர்களுக்கெதிரே திரும்பினார்கள்.—பதிவிருந்த
வர்கள் நகரத்தைப் பிடித்ததையும், நகரத்திற்பு
கை எழும்புவதையும், யோசுவாவும் இஸ்ரவே
லருங்கண்டபொழுது திரும்பி ஆயி நகரத்தைச்
௨௨ சங்காரஞ்செய்ய,—மற்றவர்களும்நகரத்திலிருந்
து அவர்களுக் கெதிர்ப்பட்டதினால் அவர்கள்
இருபக்கத்திலும் இஸ்ரவேலரின் மத்தியில்அகப்
பட்டுக்கொண்டார்கள்: அவர்களில் ஒருவரை
யுந்தப்பி ஓடவும் மீந்திருக்கவும் விடாமல் அ
௨௩ வர்களைச் சங்காரஞ்செய்து,—ஆயியின் இராசா
வை உயிரோடேபிடித்து யோசுவாவினிடத்திற்
௨௪ குக்கொண்டுவந்தார்கள்.—இஸ்ரவேலர்வனவெ
ளியிலே தங்களைப் பின்தொடர்ந்து வந்த ஆயி
நகரத்தாரெல்லாரையுங் கொலைசெய்ய, அவர்க
ளெல்லாருங் கட்கத்தின்வாயினால் விழுந்திறந்
தபின்பு;இஸ்ரவேலர் எல்லாரும் ஆயிக்குத்திரும்
பி அதைக்கட்கத்தின் வாயினாலே சங்கரித்தார்
௨௫ கள்.—அந்நாளிலே விழுந்த ஆயிநகரத்தாராகிய
௨௬ ஸ்திரிபுருஷர்கள் பன்னீராயிரம்பேர்.—ஆயிநகரத்
தார் எல்லாரையுஞ் சங்கரித்து முடியுமளவும்,
யோசுவா ஈட்டியைப்பிடித்து நீட்டிக்கொண்டி
௨௭ ருந்த தன்கையைமடக்கவில்லை.—மிருகஜீவனை
யும், அந்தநகரத்திற் கொள்ளையிட்ட மற்றைப்
பொருள்களையு மாத்திரம் யெகோவா யோ
சுவாவுக்குச்சொல்லிய வாக்கின்படி, இஸ்ரவே
லர் தங்களுக்குக் கொள்ளைப்பொருளாக எடுத்
துக்கொண்டார்கள்.—யோசுவா ஆயியைத்தகித் ௨௮
து இந்நாள்வரைக்குமிருக்கிறபடி அதை என்
றைக்கும் பாழாய்க்கிடக்கும் மண்மேடாக்கி,—
ஆயியின் இராசாவை ஒரு மரத்திலே தூக்குவித் ௨௯
து, சாயங்காலபரியந்தமிருந்த அவன் உடலைச்
சூரியன் அஸ்தமித்தபின் மரத்தினின்றும் இறக்
கி, அதை நகரத்தின் பெரியவாசலில் எறிந்து, அ
தின்மேல் இந்நாள்வரைக்கும் இருக்கிறபடி பெ
ரியகற்குவியலைக் குவிக்கக்கட்டளையிட்டான்.
அக்காலத்திலே யெகோவாவின் தாசனாகி ௩௰
ய மோசே இஸ்ரவேல்சந்ததியாருக்குக் கட்ட
ளையிட்டபடிக்கும், மோசேயின் வேதப்பிரமா
ணபுத்தகத்தில் எழுதியிருக்கிறபடிக்கும், யோ
சுவா எபால்மலையில் இஸ்ரவேலரின் தேவனா
கிய யெகோவாவுக்கு இரும்புபடாத முழுக்
கற்களால் ஒரு வேதிகையை உண்டாக்கினான்.-
அதின்மேல் யெகோவாவுக்குத் தகனபலிக ௩௧
ளையும், ஸ்தோத்திர பலிகளையுமிட்டார்கள்.—
அங்கே அவன் இஸ்ரவேல் சந்ததியாருக்குமுன் ௩௨
பாக மோசே எழுதியிருந்த வேதப்பிரமாணத்
தைக்கற்களில் எழுதினான்.—இஸ்ரவேல் சனங் ௩௩
களை ஆசீர்வதிக்கும்படி யெகோவாவின்தாச
னாகிய மோசே முன்கட்டளை யிட்டபடியே
சமஸ்த இஸ்ரவேலரும், அவர்களுடைய முதி
யோரும், அதிபதிகளும், நியாயாதிபதிகளும், அ
வர்களுக்குள் பிறந்தவர்களைப்போல் பரதேசி
களும், யெகோவாவின் உடன்படிக்கைப்
பெட்டியைச்சுமக்கிற லேவிய ஆசாரியருக்கெ
திரே பெட்டியின் இருபக்கத்திலும், பாதிப்பேர்
கிரிசீம் மலைக்கு எதிர்ப்புறமாகவும், பாதிப்பேர்
எபால்மலைக் கெதிர்ப்புறமாகவும் நின்றார்கள்.—
அதற்குப்பின்பு வேதப்பிரமாணபுத்தகத்தில் எ ௩௪
ழுதியிருக்கிற ஆசீர்வாதமுஞ் சாபமும் பொருந்
திய வேதப்பிரமாணவாக்குகள் யாவையும் வா
சித்தான்.—மோசேகட்டளையிட்ட எல்லாவற்றி ௩௫
லும் யோசுவா இஸ்ரவேலின்சமஸ்தசபையாருக்
கும், ஸ்திரிகளுக்கும், குழந்தைகளுக்கும், அவர்
களுக்குள்ளேசஞ்சரிக்கிற பரதேசிகளுக்குமுன்
பாக வாசியாமல் விட்டவாக்கு ஒன்றுமில்லை.

## ௯. அதிகாரம்.

௧. இஸ்ரவேல் சந்ததியாருடன் இராசாக்கள் யுத்தஞ் செய்தல்: ௩. கிபியோனியர் தந்திரம்பண்ணி, இஸ்ரவேலரோடும் உடன்படிக்கையைச் செய்துகொள்ளல்: ௰௬. தந்திரத்தினிமித்தம் அவர்களை யடிமைப்படுத்தல்.

யோர்தானுக்கிப்புறத்திலே மலைகளிலும், பள் ௧
ளங்களிலும், லிபானோன் மலைக்கெதிரான பெரி

(௰௫) நியா.௨௰.௩௬,. (௨௨) உபா.௭.௨. (௨௭) எண்.௩௧.௨௨,௨௬. (௨௮) உபா.௰௩.௰௬. (௨௯) அதி.௰.௨௬. சங்.௱௭.௪௰. உபா.௨௧.௨௩. அதி.௰.௨௭,. அதி.௭.௨௬. (௩௰) உபா.௨௭.௪,௫. யாத்.௨௰.௨௫. உபா.௨௭.௫,௬. (௩௧) யாத்.௨௰.௨௪. (௩௨) உபா.௨௭.௨,௮. (௩௩) உபா.௰௧.௨௯. உபா.௩௧.௯,௨௫. உபா.௩௧.௰௨. (௩௪) உபா.௩௧.௰௧. நிகி.௮.௩. உபா.௨௮.௨,௰௫,௪௫. (௩௫) உபா.௩௧.௰௨. வச.௩௩.—(௯. அதி. ௧.) எண்.௩௪.௫. யாத்.௩.௰௭.

ய சமுத்திரத்தின் கரையோரங்களெங்குமிருந்த
சமஸ்த இராசாக்களும், எத்தியரும், எமோரிய
ரும், கானனியரும், பெரீசியரும், ஈவியரும்,
௨ எபூசியரும், அதைக் கேட்ட பொழுது,—அவர்
கள் ஒருமனப்பட்டு யோசுவாவோடும்,இஸரவே
லரோடும், யுத்தம்பண்ணும்படி கூடிவந்தார்கள்.
௩ கிபியோனியரோ, யெரீகோவுக்கும், ஆயிக்
கும், யோசுவாசெய்ததைக் கேட்டபொழுது,—
௪ பழைய இரட்டுப்பைகளையும், கிழிந்தவைகளும்
பழையவைகளுமான திராட்சரசத் துருத்திகளை
௫ யும், தங்கள் கழுதைகள்மேல் வைத்து;—தைக்
கப்பட்ட பழையசெருப்புக்களைத் தங்கள் கால்
களிலிட்டு, பழையவஸ்திரங்களை உடுத்துக்கொ
ண்டு, தூதரைப்போலத் தந்திரமாய்ப் போனார்
கள்; வழிக்குஅவர்கள்ஆகாரமாகக்கொண்டுபோ
ன அப்பமெல்லாங் காய்ந்து பூரணம்பிடித்திருந்த
௬ து.—அவர்கள் கில்காலில் இறங்கிப் பாளயத்தி
லுள்ள யோசுவாவினிடத்திற்சென்று, அவனை
யும், இஸரவேலரையும்நோக்கி, நாங்கள் தூரதே
சத்திலிருந்து வந்தோம்: ஆகையால் எங்களோ
டே உடன்படிக்கைபண்ணுங்களென்றார்கள்.—
௭ அப்பொழுது இஸரவேலர் அந்த ஈவியரைநோக்
கி, ஒருபொழுதுநீங்கள்எங்களுக்குள்வாசம்பண்
ணுகிறீர்கள்; நாங்கள் எப்படி உங்களோடே உ
௮ டன்படிக்கை பண்ணலாமென்றார்கள்.—அதற்கு
அவர்கள்யோசுவாவைநோக்கி, நாங்கள் உமக்கு
அடிமைகளென்றார்கள். யோசுவா, நீங்கள் ஆர்,
எங்கேயிருந்து வந்தீர்களென்று கேட்டபொழு
௯ து,—அவர்கள் அவனைநோக்கி, உம்முடைய தே
வனாகிய யெகோவாவினதுநாமத்தின் பிரஸ்
தாபத்தைக்கேட்டு, உமது அடியாராகிய நாங்கள்
அதிதூரதேசத்திலிருந்துவந்தோம்: அவருடைய
கீர்த்தியையும், அவர் எகிப்திலே செய்தயாவற்
௰ றையும்,-அவர் யோர்தானுக்கப்புறத்திலிருந்த எ
மோரியரில் எஷ்போனுடைய இராசாவாகிய சீ
கோனும், அஷ்தாரோத்திலிருந்தபாஷானுடைய
இராசாவாகிய ஓகுவும் என்கிற இரண்டுஇராசாக்
களுக்குஞ் செய்தயாவற்றையுங் கேள்விப்பட்
௰௧ டோம்.—ஆதலால் எங்கள மூதியோரும், எங்
கள்தேசத்தாரெல்லாரும் எங்களைநோக்கி, உங்
கள்கையிலே பிரயாணத்துக்கு ஆகாரம் எடுத்துக்
கொண்டு, அவர்களுக்கு எதிர்கொண்டுபோய்,
அவர்களிடத்தில், நாங்கள் உங்கள் அடியார்:
எங்களோடே உடன்படிக்கைபண்ணவேண்டு
௰௨ மென்று சொல்வீர்களாக வென்றார்கள்.—அப்ப
டியே நாங்கள் உங்களிடத்தில் வரும்படி புறப்
படுகிற அன்றே, எங்கள் வழிப்பிரயாணத்திற்கு
இந்த அப்பத்தைச் சூட்டோடே எங்கள்வீட்டி
லிருந்து எடுத்துக்கொண்டுவந்தோம்; இப்பொழு
து பாரும், இது காய்ந்து பூரணம்பிடித்திருக்கின்
றது.—நாங்கள் இந்தத்திராட்சரசத் துருத்திகளை ௰௩
நிரப்பினபொழுது, புதியவைகளாயிருந்தன; பா
ரும், கிழிந்துபோயின: எங்கள் வஸ்திரங்களுஞ்
செருப்புகளும் நெடும்பிரயாணத்தினாலே பழை
யவைகளாய்ப்போயின வென்றார்கள்.—அப்பொ ௰௪
ழுது இஸரவேலர், யெகோவாவின் வாக்கில்
உசாவாமல், அவர்களுடைய ஆகாரத்திற் சிறிது
வாங்கிக்கொண்டார்கள்.—யோசுவா அவர்களோ ௰௫
டுஞ் சந்திசெய்து, அவர்களை உயிரோடே காப்
பாற்றும்படி உடன்படிக்கை பண்ணினான்: ச
பையின் பிரபுகள் அவர்களுக்கு ஆணையிட்டுக்
கொடுத்தார்கள்.
அவர்களோடே உடன்படிக்கை பண்ணின ௰௬
மூன்றாம்நாளில், அவர்கள் தங்களுக்கு அயலார்
களென்றும்,தங்களுக்குள்வசிப்பவர்களென்றுங்
கேள்விப்பட்டார்கள்.—இஸரவேல் சந்ததியார் ௰௭
பிரயாணஞ்செய்கையில் மூன்றாம் நாளிலே கிபி
யோன், கிபீரா, பெரோத், கீரியாத்-எயாரிம்,
என்னும் அவர்களுடையபட்டணங்களிற்சேர்ந்
தார்கள்.—சபையின் பிரபுகள் இஸரவேலின் ௰௮
தேவனாகிய யெகோவாவைக்கொண்டு அ
வர்களுக்கு ஆணையிட்டிருந்தபடியினாலே,இஸர
வேல் சந்ததியார் அவர்களைச்சங்காரஞ் செய்ய
வில்லை. சபையாரெல்லாரும் பிரபுகளைக்குறித்
துக்குறையாய்ப்பேசினார்கள்.—அப்பொழுது சக ௰௯
ல பிரபுகளும் சமஸ்த சபையாரையும்நோக்கி,
நாங்கள் இஸரவேலின் தேவனாகிய யெகோ
வாவைக்கொண்டு அவர்களுக்கு ஆணையிட்
டோம்: ஆகையால் நாம் அவர்களைத்தொடலா
காது.—நாம் அவர்களுக்கிட்ட ஆணையினிமித் ௨௰
தங்கோபம் நமதுமேல்வராதபடிக்கு, நாம் அவர்
களை உயிரோடேவைத்து ஒன்றுசெய்வோம்.—
பிரபுகளாகிய நாங்கள் அவர்களுக்கு வாக்குத்தத் ௨௧
தஞ்செய்தபடி, அவர்கள் உயிரோடிருக்கட்டும்;
ஆனாலுஞ்சபையாரெல்லாருக்கும்விறகுவெட்டு
கிறவர்களாகவும், தண்ணீர்மொண்டுவருகிறவர்
களாகவுமிருக்கக்கடவர்களென்றார்கள்.
பின்பு யோசுவா அவர்களை அழைப்பித்து, அ ௨௨
வர்களைநோக்கி, எங்களுக்குள் வாசம்பண்ணுகி
ற நீங்கள், நாங்கள் உங்களுக்கு மிகத்தூரமான
வர்களென்று சொல்லி எங்களை வஞ்சித்ததென்
ன.—நீங்கள்சபிக்கப்பட்டவர்கள், என் தேவனு ௨௩
டைய ஆலயத்திற்கு விறகுவெட்டிக்கொண்டும்,
தண்ணீர் மொண்டுகொண்டும்வருகிற பணிவி
டைக்காரராயிருப்பீர்கள்; இந்த ஊழியம் உங்க
ளை நீங்கமாட்டாதென்றான்.—அதற்கு உத்தரமா ௨௪
க அவர்கள் யோசுவாவைநோக்கி, இந்தத்தேச
முழுமையும் உங்களுக்கு ஒப்பிக்கவும், இத்தே
சத்தாரெல்லாரையும் உங்களுக்குமுன்பாக அ
ழிக்கவும், உம்முடைய தேவனாகிய யெகோ

(௨) சங்.௮௩.௩,௭. (௩) அதி.௰.௨. ௨.சாமு.௨௧.௧,௨. அதி.௬.௨௭. (௬) அதி.௫.௰. (௭) அதி.௰௧.௰௯. யாத்.௨௩.௩௨.
நியா.௨.௨. (௮) உபா.௨௰.௰௧. ௨.இரா.௰.௫. (௯) உபா.௨௰.௰௫. யாத்.௰௫.௰௫. அதி.௨.௰. (௰) எண்.௨௧.௨௪,௩௩.
(௰௪) எண்.௨௭.௨௧. ஏசா.௩௰.௧,௨. ௧.சாமு.௨௨.௰. ௨.சாமு.௨.௧. (௰௫) அதி.௰௧.௰௯. ௨.சாமு.௨௧.௨. (௰௭)
அதி.௰௮.௨௫,௨௬,௨௮. எஸ்றா.௨.௨௫.(௰௮)சங்.௰௫.௪. பிர.௫.௨.(௨௰)எசேக்.௰௭.௰௪,௰௫. சக.௫.௩,௪. மல்.௩.௫.
(௨௧)உபா.௨௯.௰௩. வச.௰௫.(௨௨)வச.௬,௯,௰௬.(௨௩)ஆதி.௯.௨௫. வச.௨௧,௨௭.(௨௪)யாத்.௨௩.௩௨. யாத்.௰௫.௰௫.

வா தமது தாசனாகிய மோசேக்குக்கட்டளையிட்
டாரென்று உமது அடியாராகிய நாங்கள் நிச்சய
மாகக்கேள்விப்பட்டதினால், எங்கள் சீவனிமித்
தம் உங்களுக்கு மிகவும்பயந்து, இந்தக்காரியத்
௨௫ தைச்செய்தோம்.—இப்பொழுது உமது கையிலி
ருக்கிறோம்: உம்முடையபார்வைக்கு நன்மையு
ம்நியாயமுமானபடி, எங்களுக்குச்செய்யுமென்
௨௬ றார்கள்.—அப்படியே யோசுவா அவர்களுக்குச்
செய்தான், இஸரவேல் சந்ததியார் அவர்களைக்
கொன்றுபோடாதபடி அவர்களைத் தப்புவித்து,—
௨௭ இந்நாள்வரைக்குமிருக்கிறபடி அந்நாளில் அவர்
களைச்சபைக்கும், யெகோவாதெரிந்துகொள்
ளுமிடத்திலிருக்கிறவேதிகைககும்,விறகுவெட்
டுகிறவர்களாகவுந் தண்ணீர்மொண்டுவருகிறவர்
களாகவுஞ்செய்தான்.

## ௰. அதிகாரம்.

க. கிபியோனியருடன் ஐந்து இராசாக்கள் யுத்தஞ்செய்தல்: ௬. யோசுவாவுக்கு அதையறிவித்தல்: ௮. அவ்வைந்து இராசாக்களுடன் யோசுவா யுத்தஞ்செய்தல்: ௰௨. யோசுவாவின் கட்டளையினால் சந்திர சூரியர் ஆகாயத்தில் தரித்துநிற்றல்: ௰௫. அவ்வைந்து இராசாக்களுங் கெபியிலே போயொளித்தல்: ௨௨. அவர்களைப் பிடித்துக்கொல்லல்: ௨௮. மக்கேதா, லிப்னா, லாகிஷ்,காசா, எக்லோன், திபீர் என்னுந்தென்னாடுகளை வசப்படுத்தல்.

யோசுவா ஆயியைப்பிடித்துச் சங்காரம்பண்
ணி, யெரீகோவுக்கும் அதின் இராசாவுக்குஞ்
செய்தபடி, ஆயிக்கும் அதின் இராசாவுக்குஞ்
செய்ததையுங் கிபியோனியர்இஸரவேலரோடும்
உடன்படிக்கை செய்து அவர்களுக்குட்பட்ட
தையும் யெருஷலேமின் இராசனாகியஅதோனி
௨ சேதெக் கேள்விப்பட்டபொழுது;—கிபியோன்
இராசதானிகளில் ஒன்றைப்போலப் பெரிய நக
ரமும், ஆயியிலும்பெரிதுமாயிருந்தபடியினாலும்,
அதிலுள்ள சமஸ்தரும்பராக்கிரமசாலிகளாயிருந்
௩ தபடியினாலும், மிகவும் பயந்தார்கள்.—மேலும்
யோசுவாவோடும் இஸரவேல் சந்ததியாரோடும்
சந்திசெய்த கிபியோனை நாம் சங்கரிக்கும்படி
நீங்கள்என்னிடத்தில்வந்து, எனக்குத்துணையாய்
௪ நில்லுங்களென்று,—யெருஷலேமின் இராசனா
கிய அதோனிசேதெக் எப்ரோனின்இராசனாகிய
ஓகாமுக்கும், யர்மூத்தின் இராசனாகிய பீராமுக்
கும், லாகீஷின் இராசனாகிய யபீயவுக்கும், எக்
லோனின் இராசனாகிய திபீருக்குஞ்சொல்லிய
௫ னுப்பினான்.—அப்படியே யெருஷலேமின் இரா
சாவும், எப்ரோனின் இராசாவும், யர்மூத்தின் இ
ராசாவும், லாகீஷின் இராசாவும், எக்லோனின்
இராசாவுமாகிய எமோரியரின் ஐந்து இராசாக்க
ளுங் கூடிக்கொண்டு, தங்கள் சமஸ்தசேனைக
ளோடும் எறிப்போய்,கிபியோனுக்குமுன் இறங்
கி அதற்கெதிராக யுத்தம்பண்ணினார்கள்.
அப்பொழுது கிபியோனியர் சிலரையழைத் ௬
து, நீங்கள்கில்காலில்இருக்கிற பாளயத்திலுள்ள
யோசுவாவினிடத்திற்போய், மலைகளில்வாசம்
பண்ணுகிற எமோரியரின் இராசாக்களெல்லா
ரும் எங்களுக்கு விரோதமாகக் கூடிவந்திருக்கி
றார்கள்; ஆதலால் நீர் அடியேங்களைக் கைவி
டாமற் சீக்கிரமாய் எங்களிடத்தில்வந்து, எங்க
ளை இரட்சித்து, எங்களுக்குதவிசெய்யுமென்று
சொல்லுங்களென்று சொல்லியனுப்பினார்கள்.—
உடனே யோசுவாவும், அவனுடன்கூடப்படை ௭
ஞராகிய சமஸ்தசனங்களும், பராக்கிரமவீரர்யா
வருங் கில்காலினின்று எறிப்போனார்கள்.
அப்பொழுது யெகோவா யோசுவாவை ௮
நோக்கி, நான் அவர்களை உன்கையில் ஒப்பித்
தேன், அவர்களில் ஒருவனும் உனக்கெதிர்த்து
நிற்கமாட்டான்: ஆகையால் அவர்களுக்குப்ப
யப்படவேண்டாமென்றார்.—யோசுவா கில்கா ௯
லைவிட்டு இராமுழுவதும்நடந்து, சடிதியாய் அ
வர்களிடத்திற்சேர்ந்தான்.—அப்பொழுது யெ ௰
கோவா அவர்களை இஸரவேலருக்கு முன்பா
கக் கலங்கப்பண்ண, இவர்கள் கிபியோனில் அ
வர்களை மிகவும் அதிகமாய்வெட்டி, பேதோ
ரோனுக்குப்போகிறவழியாய்த்துரத்தி, அசேகா,
மக்கேதாவரைக்கும் முறிய அடித்தார்கள்.—அவர் ௰௧
கள் பேதோரோனிலிருந்திறங்குகிற வழியில் இ
ஸரவேலருக்குமுன்பாக ஓடிப்போகையில், அ
சேகாவில் சேருகிறவரைக்கும் யெகோவா
வானத்திலிருந்துபெரிய கற்களை அவர்கள்மேல்
வீசினார், அவைகளால் அவர்கள் கொலைசெய்
யப்பட்டார்கள்: இஸரவேலருடைய கட்கத்தி
னாலே கொலைசெய்யப்பட்டவர்களிலுங் கன்ம
ழையினாலே செத்தவர்கள் அநேகர்.
யெகோவா எமோரியரை இஸரவேலருக் ௰௨
கு முன்பாக ஒப்பித்த அந்தத்தினத்தில் யோசு
வா யெகோவாவுடன்பேசி, பின்பு இஸர
வேலர்முன்னிலையில், சூரியனே, நீ கிபியோன்
மேலும், சந்திரனே நீ அயாலோன் பள்ளத்தின்
மேலும், நில்லுங்களென்றான்.—சனங்கள் தங் ௰௩
கள் சத்துருக்களிடத்திற்பழிவாங்குமளவும் சூரி
யன் நின்றுவிட்டது, சந்திரனுந் தடைபட்டது,
இது யாஷேருடைய புத்தகத்திலல்லவோ எழுதி
யிருக்கின்றது. சூரியன்அஸ்தமிக்கத்தீவரியாமல்
எறக்குறைய ஒரு பகல்முழுவதும் ஆகாயமத்தி
யிலே நின்றுவிட்டது.—இப்படி யெகோவா ௰௪
ஒருமனுஷனுடைய சொற்கேட்ட அந்தநாளைப்
போன்ற நாள், அதற்கு முன்னுமில்லை, அதற்
குப்பின்னுமில்லை: யெகோவாவே இஸரவே
லருக்காக யுத்தம்பண்ணினார்.

(௨௫) ஆதி.௰௬.௬. (௨௭) க.நாளா.௯.௨. எஸ்றா.௮.௨௰. வச.௨௧.௨௩. உபா.௰௨.௫.—(௰.அதி.க.) அதி.௬.௨௧. அதி.௮.௨௨,௨௬,௨௮. அதி.௯.௰௫. (௨) யாத்.௰௫.௰௫,௰௬,௰௭. உபா.௰௧.௨௫. (௩) வச.க. அதி.௯.௰௫. (௫) அதி.௯.௨. (௬) அதி.௫.௰. (௭) அதி.௮.க. (௮) அதி.௰க.௬. நியா.௪.௰௪. அதி.க.௫. (௰) நியா.௪.௰௫. க.சாமு.௭.௰,௰௨. சங்.௰௮.௰௪. ஏசா.௨௮.௨க. அதி.௰௬.௩,௫. அதி.௰௫.௩௫. (௰க) சங்.௰௮.௰௩,௰௪. ஏசா.௩௰.௩௰. வெளி.௰௬.௨க. (௰௨) ஏசா.௨௮.௨க. அபகூ.௩.௰க. நியா.௰௨.௰௨. (௰௩) ௨.சாமு.க.௨௭.(௰௪) ஏசா.௩௮.௮. உபா.க.௩௰.

௰௫ பின்பு யோசுவா சமஸ்த இஸரவேலரோடுங்
கில்காலிலுள்ள பாளயத்திற்குத்திரும்பினான்.—
௰௬ அந்த ஐந்து இராசாக்களும் ஓடிப்போய், மக்கே
தாவிலிருக்கிற ஒருகுகையில் ஒளித்துக்கொண்
௰௭ டார்கள்.—அவ்வைந்து இராசாக்களும் மக்கே
தாவிலிருக்கிற ஒருகுகையில் ஒளித்திருந்து, அ
கப்பட்டார்களென்று யோசுவாவுக்கு அறிவிக்
௰௮ கப்பட்டது.—யோசுவா பெரியகற்களை உருட்
டிக் குகையின்வாயைமூடி, அவ்விடத்தில் அ
வர்களைக் காவல்பண்ணும்படி ஆள்களை ஏற்ப
௰௯ டுத்துங்கள்.—நீங்கள் தாமதப்படாமல், உங்கள்
சத்துருக்களைத்தொடர்ந்து, பின்னணியைச் சங்
கரியுங்கள்; அவர்களைத் தங்கள் நகரங்களிற் பிர
வேசிக்கவிடாதிருங்கள்: உங்கள் தேவனாகி
ய யெகோவா அவர்களை உங்கள் கையில் ஒப்
௨௰ பித்தாரென்றான்.—சத்துருக்கள் நாசமடையும்
வரைக்கும், யோசுவாவும் இஸரவேல் சந்ததியா
ரும் அவர்களை மகாபெரிய சங்காரத்தோடேகொ
லைசெய்து முடியும் சமயத்தில், சிலர்தப்பி அர
௨௧ ணுள்ள நகரங்களுக்குட்புகுந்தார்கள்.—பின்பு
சமஸ்தசனங்களுஞ் சமாதானத்துடன் மக்கேதா
விலிருக்கிற பாளயத்திலுள்ள யோசுவாவினி
டத்திற்குத் திரும்பினார்கள்: இஸரவேல் சந்ததி
யாருக்கு விரோதமாக ஒருவனுந்தன் நாவை அ
சைக்கவுமில்லை.
௨௨ யோசுவா குகையின் வாயைத்திறந்து, அந்த
ஐந்து இராசாக்களையும் அந்தக் குகையிலிருந்து
என்னிடத்திற் கொண்டுவாருங்களென்றான்.—
௨௩ அப்படியே அவர்கள் யெரூஷலேமின் இராசா
வும், எப்ரோனின் இராசாவும், யர்மூத்தின் இரா
சாவும்,லாகீஷின் இராசாவும், எக்லோனின்இரா
சாவுமாகிய ஐந்து இராசாக்களையும், அந்தக்கு
கையிலிருந்து அவனிடத்திற் கொண்டுவந்தார்
௨௪ கள்.—அவர்களை யோசுவாவினிடத்திற்கொண்
டுவந்தபொழுது, யோசுவா சமஸ்த இஸரவேல
ரையும் அழைப்பித்து, தன்னுடன் போய்வந்த
படைஞரின் அதிபதிகளைநோக்கி, நீங்கள் சமீப
மாகவந்து, இந்த இராசாக்களுடைய கழுத்துக்க
ளின்மேல் உங்கள் கால்களை வையுங்களென்று
சொல்ல; அவர்கள் சமீபமாகவந்து, தங்கள் கால்
களை அவர்களுடையகழுத்துக்களின்மேல்வைத்
௨௫ தார்கள்.—பின்பு யோசுவா அவர்களைநோக்கி,
நீங்கள் எதிர்த்து யுத்தஞ்செய்யும் உங்கள் சத்து
ருக்களெல்லாருக்கும் யெகோவாஇப்படியே
செய்வார்: ஆகையால் பயப்படவுங் கலங்கவும்
வேண்டாம், திடங்கொண்டு தைரியமாயிருங்க
௨௬ ளென்றான்.—அதற்குப்பின்பு யோசுவா அவர்க
ளை அடித்துக்கொலைசெய்து, ஐந்து மரங்களில்
தூக்குவித்தான்: அந்தமரங்களிற் சாயங்காலபரி
௨௭ யந்தந்தொங்கினார்கள்.—சூரியன் அஸ்தமிக்கிற
பொழுதுயோசுவாகட்டளையிட, அவர்களைமரங்
களைவிட்டிறக்கி, அவர்கள் ஒளித்துக்கொண்டி
ருந்தகுகையில்இட்டு, இந்நாளளவுமிருக்கிறபடி
பெரியகற்களால் அந்தக்குகையின் வாயை மூடி
னார்கள்.
அந்நாளில் யோசுவா மக்கேதாவைப்பிடித்து, ௨௮
அதைக்கட்கத்தின் வாயினாலே சங்கரித்து, அ
தின் இராசாவையும், அதிலுள்ள சமஸ்த பிரா
ணிகளையுஞ்சங்கரித்தான்; ஒருவரையும் மிகுதி
யாக விடவில்லை: யெரிகோவின் இராசாவுக்
குச்செய்தபடியே, மக்கேதாவின்இராசாவுக்குஞ்
செய்தான்.—மக்கேதாவினின்றும் யோசுவா ச ௨௯
மஸ்த இஸரவேலரோடும் லிப்னாவுக்குப்போய்,
லிப்னாவுக்கு விரோதமாக யுத்தம்பண்ணினான்.—
அதையும் அதின் இராசாவையும் யெகோவா ௩௰
இஸரவேலரின் கையிலொப்பித்தார்; யோசுவா
கட்கத்தின்வாயினால் அதையும், அதிலுள்ள ச
மஸ்த பிராணிகளையுஞ் சங்கரித்தான்; அதில் ஒ
ருவரையும் மீதியாகவிடவில்லை: யெரிகோவின்
இராசாவுக்குச்செய்தபடியே அதின் இராசாவுக்
குஞ்செய்தான்.—லிப்னாவினின்றும் யோசுவா ௩௧
சமஸ்த இஸரவேலரோடும் லாகீஷுக்குப்போய்,
அதற்கெதிரே பாளயமிறங்கி, அதற்கு விரோத
மாக யுத்தம்பணணினான்.—யெகோவா லா ௩௨
கீஷை இஸரவேலரின்கையில் ஒப்பித்தார், அ
வர்கள் இரண்டாம்நாளில் அதைப்பிடித்து லிப்
னாவுக்குச்செய்தபடியே அதையும், அதிலுள்ள
சமஸ்தபிராணிகளையுங் கட்கத்தின்வாயினாற் சங்
கரித்தார்கள்.—அப்பொழுது கெசேரின் இரா ௩௩
சாவாகிய ஓராம் லாகீஷுக்குத் துணைசெய்யும்ப
டிவந்தான்; யோசுவா அவனையும், அவனுடை
ய சனங்களையும், ஒருவரும் மீந்திராதபடி, சங்
கரித்தான்.—லாகீஷினின்றும் யோசுவா சமஸ்த ௩௪
இஸரவேலரோடும் எக்லோனுக்குப்போய், அ
தற்கெதிரே பாளயமிறங்கி, அதற்கு விரோதமா
க யுத்தம்பண்ணி,—அந்நாளில் அதைப்பிடித்து, ௩௫
லாகீஷுக்குச் செய்தபடியே அதைக்கட்கத்தின்
வாயினாற்சங்காரஞ்செய்தான்; அதிலுள்ள சமஸ்
த பிராணிகளையும் அந்நாளிலே சங்காரம்பண்
ணினான்.—பின்பு எக்லோனினின்றும் யோ ௩௬
சுவா சமஸ்த இஸரவேலரோடும் எப்ரோனுக்
குப்புறப்பட்டுப்போய், அதற்குவிரோதமாக யுத்
தம்பண்ணி,—அதைப்பிடித்து எக்லோனுக்குச் ௩௭
செய்தபடியே அதையும், அதின் இராசாவையும்,
அதைச்சேர்ந்தசகலபட்டணங்களையும், அவைக
ளிலுள்ள சமஸ்தபிராணிகளையுங் கட்கத்தின்வா
யினாற்சங்கரித்தான்; ஒருவரும் மீந்திராதபடி ச
மஸ்தபிராணிகளையுஞ்சங்காரம்பண்ணினான்.—
பின்பு யோசுவா சமஸ்த இஸரவேலரோடுந்திபீ ௩௮
ருக்குத்திரும்பி, அதற்குவிரோதமாக யுத்தம்பண்
ணி,—அதையும் அதின் இராசாவையும் அதைச் ௩௯
சேர்ந்தசகலபட்டணங்களையும்பிடித்து, அவைக
ளைக் கட்கத்தின்வாயினாலே சங்காரஞ்செய்து,
அவைகளிலுள்ள சமஸ்த பிராணிகளையுஞ் சங்
காரம்பண்ணினான்; ஒருவரையும் மீதியாக வி
டவில்லை; எப்ரோனுக்கும், லிப்னாவுக்கும் அ

(௰௫) வச.௪௩. (௨௧) யாத்.௰௧.௭. (௨௪) சங்.௱௭.௪௰. சங்.௱௰.௫. ஏசா.௨௬.௫,௬. மல்.௪.௩. (௨௫) உபா.௩௧.௬.அ. உபா.௩.௨௧ (௨௬) அதி.௮.௨௯. (௨௭) உபா.௨௧.௨௩. (௨௮) அதி.௬.௨௧. (௩௬) நியா.௧.௰. (௩௮) நியா.௧ ௰௧

தின் இராசாவுக்குஞ்செய்தபடியே திபீருக்கும்
௪௰ அதின் இராசாவுக்குஞ்செய்தான்.—இப்படியே
யோசுவா மலையிலும், தென்றிசையிலும், தாழ்ந்த
பூமியிலும், நீரூற்றுஸ்தானத்திலுமுள்ள சமஸ்த
தேசங்களையும், அவைகளின் இராசாக்களெல்
லாரையுஞ் சங்கரித்து, இஸரவேலின் தேவனா
கிய யெகோவா கட்டளையிட்டபடி ஒருவ
ரையும் மீதியாக விடாமல், சுவாசமுள்ள யா
௪௧ வையும் சங்காரம்பண்ணினான்.—காதேஷ்பர்னீ
யதொடங்கிக் காசாவரைக்குமுள்ளதையும், கிபி
யோன் வரைக்குமுள்ள கோஷேன் நாட்டை
௪௨ யுஞ் சங்காரஞ்செய்தான்.—இஸரவேலின் தேவ
னாகிய யெகோவா இஸரவேலருக்காக யுத்
தம்பண்ணினபடியினாலே, யோசுவா அந்த இரா
சாக்களெல்லாரையும் அவர்களுடையதேசத்தை
௪௩ யும் ஒருமிக்கப்பிடித்தான்.—பின்புசமஸ்த இஸர
வேலரோடும் கில்காலிலுள்ள பாளயத்திற்குத்தி
ரும்பினான்.

## ௰௧. அதிகாரம்.

*௧. வடநாட்டிலுள்ள அநேக இராசாக்கள் இஸர வேல் சந்ததியாருக்கு விரோதமாய்க்கூடிவரல்: ௬. அவர்கள் நாசமடைதல்: ௰. ஆத்சோர் நகரத்தைப்பிடித்துத்தகனித்தல்: ௰௬. அநேகநாடுகளை வசப்படுத்தல்: ௨௧. ஏனாகியரைச்சேதித்தல்.*

ஆத்சோரின் இராசாவாகிய யாபீன் அதைக்
கேள்விப்பட்டபொழுது, அவன்மாதோனின் இ
ராசாவாகியயோபாபுக்கும், ஷிம்ரோனின் இரா
௨ சாவுக்கும், அக்ஷாபின் இராசாவுக்கும்,—வடக்
கேயுள்ள மலைகளிலுங் கின்னரோத்துக்குத்தெற்
கேயுள்ள நாட்டுப்புறத்திலுந் தாழ்ந்தபூமியிலும்
தோரின் மேற்கெல்லையிலும் இருந்த இராசாக்க
௩ ளுக்கும்,—கிழக்கிலும்மேற்கிலுமிருந்த கானானி
யருக்கும், மலைகளிலிருந்த எமோரியர், எத்தியர்,
பெரீசியர், எபூசியர் என்னும் இவர்களுக்கும்,
எர்மோனடிவாரத்திலே மிஸ்பாதேசத்திலிருந்த
௪ ஈவியருக்கும் ஆளனுப்ப;—அவர்கள், கடற்கரை
யின் மணலைப்போல் மிகுந்த திரளான தங்கள்
படைஞராகிய சமஸ்தசனங்களோடும், மிகுதி
யானகுதிரைகளோடும், இரதங்களோடுங்கூடப்
௫ புறப்பட்டார்கள்.—இந்த இராசாக்களெல்லாருங்
கூடி இஸரவேல்ருக்கு விரோதமாகயுத்தம் பண்
ணும்படிவந்து, ஏகமாய் மேரோம் சலசமீபத்தில்
ஒருமிக்கப்பாளயம் இறங்கினார்கள்.
௬ அப்பொழுது யெகோவா யோசுவாவை
நோக்கி, நீ அவர்களுக்குப்பயப்படவேண்டாம்:
நாளை இந்நேரத்திலே நான் அவர்களெல்லாரை
யும் இஸரவேலருக்குமுன் கொலையுண்பவர்க
ளாக ஒப்பிப்பேன்: அவர்களுடைய குதிரைக
ளின் குதிங்கால்நரம்புகளை அறுத்து, அவர்கள் இ
ரதங்களை அக்கினியினாலெரிக்கக்கடவாயென்
றார்.—யோசுவாவும் அவனுடன்கூடியபடைஞ ௭
ராகிய சமஸ்தசனங்களும், சடிதியாய் மேரோம்
சலசமீபத்தில் அவர்களிடத்திற்சென்று, அவர்
கள்மேற்பாய்ந்தார்கள்.—யெகோவா இஸர ௮
வேலரின் கையில் அவர்களையொப்பித்தார்: அவர்
களைச்சங்கரித்துப் பெரிய சீதோன் மட்டும், உப்
பளமட்டும் கிழக்கேயுள்ள மிஸ்பே பள்ளமட்
டும் துரத்தி ஒருவரையும் மீதியாகவிடாமல் அவர்
களைச்சங்கரித்தார்கள்.—யோசுவா தனக்கு யெ ௯
கோவா சொன்னபடி அவர்களுக்குச் செய்
தான்: அவர்களுடைய குதிரைகளின் குதிங்கால்
நரம்புகளை அறுத்து, அவர்களுடைய இரதங்களை
அக்கினியாலெரித்தான்.
அக்காலத்திலே யோசுவா திரும்பி ஆத்சோ ௰
ரைப்பிடித்து, அதின் இராசாவைக்கட்கத்தினா
லேசங்காரஞ்செய்தான். முன்னே ஆத்சோரான
து அந்த இராச்சியங்களெல்லாவற்றிற்கும் இராச
தானியாயிருந்தது.—அதிலிருந்த சமஸ்த பிரதா ௰௧
னிகளையுங் கட்கத்தின்வாயினாலேவெட்டிச்சங்
காரம் பண்ணினார்கள்: சுவாசமுள்ளதொன்றும்
மீதியாகவில்லை: ஆத்சோரை அக்கினியினாலேத
கித்தான்.—அந்த இராசாக்களின் சகலநகரங்களை ௰௨
யும், அவைகளின் இராசாக்களெல்லாரையும்,
யோசுவாபிடித்துக்கட்கத்தின் வாயினாலே சங்க
ரித்து, யெகோவாவின்தாசனாகியமோசேகட்
டளையிட்டபடி அவர்களைச்சங்காரம் பண்ணி
னான்.—அரணழியாதசமஸ்தநகரங்களையும், இஸ ௰௩
ரவேலர் தகியாமல் விட்டுவிட்டார்கள்; ஆத்சோ
ரைமாத்திரம் யொசுவா தகித்தான்.—அந்நகரங் ௰௪
களிலுள்ள எல்லாப்பொருள்களையும், மிருகசீ
வன்களையும், இஸரவேல் சந்ததியார் தங்களுக்
குக்கொள்ளைப்பொருளாக எடுத்துக்கொண்டார்
கள்; மனிதர் யாவரும் மாளுகிறவரைக்கும் அ
வர்களைக் கட்கத்தின் வாயினாற் சங்கரித்தார்
கள், சுவாசமுள்ள ஒருவரையும் அவர்கள் மீதி
யாகவிட வில்லை.—யெகோவாதமது தாசனா ௰௫
கியமோசேக்குக்கட்டளை யிட்டபிரகாரம், மோ
சே யோசுவாவுக்குக் கட்டளை யிட்டிருந்தான்;
அபபடியே யோசுவாசெய்தான், யெகோவா
மோசேக்குக் கட்டளையிட்டதில் ஒன்றையும்
அவன்செய்யாமல்விடவில்லை.
இந்தப்பிரகாரம்யோசுவாசேயீருக்குஏறிப்போ ௰௬
கிற ஆலாக்மலைதொடங்கி, லிபானோன் பள்ளத்
தில் எர்மோன் மலையினடிவாரத்திலிருக்கிற பா
கால்காத்வரையிலுமுள்ள தேசமாகிய மலைகளை
யும், தென்னாட்டையும், கோஷேன்நாடனைத்தை
யும், பள்ளத்தையும், சமபூமியையும் இஸரவேலி
ன்மலையையும், அதின்சமபூமியையும், பிடித்துக்
கொண்டு,—அவைகளின் இராசக்களெல்லாரை ௰௭
யும்பிடித்து, அவர்களைவெட்டிக்கொன்றுபோட்

(௪௰) உபா.௨௰.௰௬,௰௭. (௪௧) ஆதி.௰.௰௯. அதி.௰௧.௰௬. (௪௨) வச.௰௪.—(௰௧. அதி. ௧.) அதி.௰.௩. அதி.௰௯.௰௫. (௨) எண்.௩௪.௰௧. அதி.௰௭.௰௧. நியா.௧.௨௭. (௩) நியா.௩.௩. அதி.௰௩.௰௧. ஆதி.௩௧.௪௯. (௪) ஆதி.௨௨.௰௭. ஆதி.௩௨.௰௨. நியா.௭.௰௨. ௧.சாமு.௰௩.௫. (௬) அதி.௰.௮. ௨.சாமு.௮.௪. (௮) அதி.௰௩.௬. (௯) வச.௬. (௰௨) எண்.௩௩.௫௨. உபா.௨௰.௰௬,௰௭. (௰௫) யாத்.௩௪.௰௧,௰௨. உபா.௭.௨. அதி.௧.௭. (௰௬) அதி.௰௨.௮. அதி.௰.௪௧. அதி.௰௨.௭. (௰௭) உபா.௭.௨௪. அதி.௰௨.௭.

யஅ டான்.—நெடுங்காலமாகயோசுவா அந்தஇராசாக்
யகூ களெல்லாரோடும்யுத்தம்பண்ணினான்.-கிபியோ
னியராகிய ஈவியர்தவிர, இஸரவேல்சந்ததியாரு
டன் உடன்படிக்கைபண்ணின நகரமொன்று
மில்லை: யுத்தஞ்செய்து எல்லாவற்றையும் பிடித்
உய துக்கொண்டார்கள்.—யெகோவா மோசேக்
குக்கட்டளையிட்டபிரகாரம் இஸரவேலர் இவர்
களைச்சங்கரிக்கும்படி, இவர்கள் அவர்களுக்குவி
ரோதமாகயுத்தம்பண்ணவரவும், அவர்கள் இவர்
கள்மேலிரங்காமல் இவர்களைச்சங்கரிக்கவுந் தக்
கதாக, யெகோவா இவர்களுடைய இருதயத்
தைக்கடினப்படுத்தத்திருவுளங்கொண்டார்.
உக அக்காலத்திலேயோசுவாபோய் மலைத்தேசமா
கிய எப்ரோனிலும், திபீரிலும், அனாபிலும், யூதா
வின்சகலமலைகளிலும் இஸரவேலின் சமஸ்தம
லைகளிலுமிருந்த ஏனாக்கியரைச்சேதித்து, அவர்
களை அவர்கள் நகரங்களோடுஞ் சங்கரித்தான்.—
உஉ ஏனாகியரில் காசாவிலும், காத்திலும், அஷ்தோதி
லுமாத்திரஞ்சிலர் மீந்ததேயன்றி இஸரவேல்சந்த
தியாரின் தேசத்தில் ஒருவரும்மீதியாகவில்லை.—
உங யெகோவா மோசேக்குச் சொல்லிய பிரகா
ரம் யோசுவா அந்தத்தேசமனைத்தையும்பிடித்து,
அதை இஸரவேலின்கோத்திரங்களுடையவகுப்
புக்களின்படியே அவர்களுக்குச் சுதந்தரமாகக்
கொடுத்தான். தேசத்தில்யுத்தமில்லாதொழிந்தது.

## யஉ. அதிகாரம்.

க. மோசே பிடித்த இரண்டு இராசாக்களின் தே
சம் பங்கிடப்படல்: எ. யோசுவாபிடித்த முப்
பத்தொரு இராசாக்களின் நாம விபரம்.

யோர்தானுக்கப்புறத்தில் சூரியனுதிக்கிற கீழ்த்
திசையில் இஸரவேல்சந்ததியார், அர்னோன் நதி
தொடங்கி எர்மோன் மலைமட்டுமுள்ள சமபூ
மியாகிய தேசத்தின் இராசாக்களைச் சங்கரித்
து, அவர்களுடைய தேசமுழுவதையும் சுதந்த
உ ரித்துக்கொண்டார்கள்.—அந்த இராசாக்களில்
எஷ்போனில்வசித்த எமோரியரின் இராசாவா
கிய சீகோன், அர்னோன் நதியோரத்திலுள்ள அ
ரோவேர்தொடங்கி நதியின் மத்தியஸ்தானமும்,
பாதிக்கிலியாத்து முட்பட அம்மோன்சந்ததியா
ரின் எல்லையான யாப்போக் மட்டுமுள்ளதேசத்
ங தையும்,—சமபூமிதொடங்கிக் கிழக்கேயிருக்கி
ற கின்னரோத்துக்கடல்மட்டும், அதுமுதல் பே
தஷீமோத்துக்குப்போகிற வழியுட்படக் கிழக்
கேயிருக்கிறசமபூமியின்கடலாகியஉப்புக்கடல்
மட்டுமுள்ள தேசத்தையும், தெற்கே அஷ்தோத்
பிஸ்காவுக்குத் தாழ்வான தேசத்தையும் ஆண்
ச டான்.—வீரருக்குள்ளே மீதியாகவிருந்த பாஷா
னின் இராசாவாகிய ஓகின் எல்லையையுஞ்சுதந்
தரித்துக்கொண்டார்கள், அவன் அஷ்தாரோத்தி
லும் எத்ரேயிலும் வாசம்பண்ணி,—எர்மோன் ம ரு
லையையும்,சல்காவையுங் கெஷூரியர்,மாகாத்தியர்
இவர்களுடைய எல்லைமட்டுமுள்ள தேசத்தை
யும், எஷ்போனின் இராசாவாகிய சீகோனுக்கு
எல்லையாயிருந்த பாதிக்கிலியாத் மட்டுமுள்ள
பாஷான்தேசமனைத்தையும் ஆண்டான்.—அவர் சு
களை யெகோவாவின் தாசனாகிய மோசே
யும் இஸரவேல் சந்ததியாருஞ் சங்காரஞ்செய்
தார்கள்: யெகோவாவின் தாசனாகிய மோ
சே அத்தேசத்தை ரூபேனியருக்கும்,காத்தியருக்
கும்,மனாசேயின் பாதிக்கோத்திரத்துக்கும் சுதந்
தரமாகக்கொடுத்தான்.

யோர்தானுக்கிப்புறத்திலே மேற்கே லிபானோ எ
னின் பள்ளத்திலுள்ள பாகால் காத் முதற்கொண்
டு, சேயீருக்கு ஏறிப்போகிற ஆலாக் மலைமட்டு
முள்ளதேசத்தையோசுவாஇஸரவேல்கோத்திரங்
களுக்குச் சுதந்தரமாகப்பகிர்ந்துகொடுத்தான்.—
அந்தத்தேசத்தின்மலைகளிலும், பள்ளங்களிலும், அ
சமபூமியிலும், நீரூற்றுஸ்தானங்களிலும், வனத்
திலும், தென்னாட்டிலும், எத்தியர், எமோரியர்,
கானானியர், பெரீசியர், ஈவியர், எபூசியரும் இ
ருந்தார்கள்; அவர்களுடைய இராசாக்களை யோ
சுவாவும் இஸரவேல் சந்ததியாருஞ் சங்காரஞ்
செய்தார்கள்.—அந்த இராசாக்கள் யாரெனில் யெ கூ
ரீகோவின் இராசா ஒருவன்; பெத்தேலுக்கருகா
ன ஆயியின் இராசா ஒருவன்.—யெரூஷலேமின் ய
இராசா ஒருவன்; எப்ரோனின்இராசா ஒருவன்.-
யர்மூத்தின் இராசா ஒருவன்; லாகீஷின் இராசா யக
ஒருவன்.—எக்லோனின் இராசா ஒருவன்; கெ யஉ
சேரின் இராசா ஒருவன்.—திபீரின் இராசா ஒரு யங
வன்; கெதேரின் இராசா ஒருவன்.—ஓர்மாவின் யச
இராசா ஒருவன்; அராத்தின் இராசா ஒருவன்.—
லிப்னாவின் இராசா ஒருவன்; அதுல்லாமின் இ யரு
ராசா ஒருவன்.—மக்கேதாவின் இராசா ஒருவன்; யசு
பெத்தேலின் இராசா ஒருவன்.—தப்புவாவின் யஎ
இராசா ஒருவன்; ஏபேரின் இராசா ஒருவன்.—
அப்பெக்கின் இராசா ஒருவன்; லாஷாரோனின் யஅ
இராசா ஒருவன்;-மாதோனின் இராசா ஒருவன்; யகூ
ஆத்சோரின் இராசா ஒருவன்.—ஷிம்ரோன் மே உய
ரோனின் இராசா ஒருவன்; அக்ஷாப்பின் இரா
சா ஒருவன்.—தானாகின் இராசா ஒருவன்; மெகி உக
தோவின் இராசா ஒருவன்.—கேதேஷின் இரா உஉ
சா ஒருவன்; கர்மேலைச்சேர்ந்தயொக்னியாமின்
இராசா ஒருவன்.-தோரின்கரையைச்சேர்ந்ததோ உங
ரின் இராசா ஒருவன்; கில்காலுக்கருகானகோயீ

(யஅ) வச.உங. (யகூ) அதி.கூ.ஙு,எ. (உய) உபா.உய.யசு,யஎ. உபா.உ.ஙய. நியா.யச.ச. க.சாமு.உ.உரு. க.இரா. யஉ.யரு. ரோ.க.யஅ. (உக) எண்.யங.உஉ,ஙங. உபா.க.உஅ. (உஉ) க.சாமு.யஎ.ச. அதி.யரு.சங. (உங) எண்.ஙச. உ,. எண்.உசு.ருங.—(யஉ. அதி. க.) எண்.உக.உச. உபா.ங.க. (உ) எண்.உக.உச. (ங) உபா.ங.யஎ. அதி.யங.உய. உபா.ஙயஎ. (ச) எண்.உக.ஙரு. உபா.ங.ச,ய. உபா.ங.யக. அதி.யங.யஉ. உபா.க.ங. (ரு) உபா.ங.அ. உபா.ங.ய. அதி. யங.யஉ. உபா.ங.யச. (சு) உபா.உக.உச,ஙங. எண்.ஙஉ.உசு,ஙங. (எ) அதி.யக.யசு. ஆதி.யச.சு. உபா.உ.உ,ச. அதி. யக.உங. (அ) அதி.ய.சய. யாத்.ங.அ. அதி.கூ.க. (கூ) அதி.சு.உ. அதி.அ.உகூ. (ய) அதி.ய.உங. (யஉ) அதி.ய.ஙங. (யங) அதி.ய.ஙஅ. (யரு) அதி.ய.உகூ. (யசு) அதி.ய.உஅ. அதி.அ.யஎ. நியா.க.உஉ. (யஎ) க.இரா.ச.ய. (யஅ) ஏசா.ஙங.கூ. (யகூ) அதி.யக.ய. (உய) அதி.யக.க. அதி.யகூ.யரு. (உஉ) அதி.யகூ.ஙஎ. (உங) அதி.யக.உ. ஆதி.யச.க,உ. ஏசா.கூ.க.

௨௪ மின் இராசா ஒருவன்.—திர்சாவின் இராசா ஒருவன்; ஆகமுப்பத்தொரு இராசாக்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. மீந்ததேசத்தின் எல்லையைத்தெரிவித்தல்: ௰௫. ரூபேன்வமிசத்தாரின்சுதந்தரத்தைவிவரித்தல்: ௨௪. காத்வமிசத்தாரின்சுதந்தரத்தைவிவரித்தல்: ௨௯. மனாசேயின் பாதிவமிசத்தாரின்சுதந்தரத்தைவிவரித்தல்.

யோசுவாவயதுசென்றுவிருத்தனானபொழுது,
யெகோவா அவனைநோக்கி,நீவயதுசென்றுவி
ருத்தனாயிருக்கிறாய், இன்னஞ்சுதந்தரித்துக்கொ
ள்ளத்தக்கதேசம்மிகவும் அதிகமாயிருக்கின்றது.-
௨ எகிப்துக்கெதிரான சீகோராறுதொடங்கிக்கானா
னியரைச்சேர்ந்ததாக எண்ணப்படுகிறவடக்கே
யுள்ள எக்ரோனுடையஎல்லைவரைக்குமிருக்கிற
கிஷூரிமுழுவதும்,பெலிஸ்தியருடையஎல்லையா
௩ யுள்ளயாவும்,—காசா, அஷ்தோத், அஷ்கலோன்,
கித்தியன்,எக்ரோனென்னும்நகரங்களிலுள்ள ஐ
௪ ந்துபிரபுகளுடைய நாடும்,—அவியருடைய நா
டும், தெற்கே கானானியருடையபூமிமுழுவதும்,
அப்பெக்குட்பட எமோரியருடைய எல்லைவ
ரைக்குமுள்ள சீதோனுக்கடுத்தமெயாராநாடும்,—
௫ கிப்லீயருடையநாடும், கிழக்கே எர்மோன் மலை
அடிவாரத்திலுள்ளபாகால்காத்தொடங்கி அமாத்
தில்பிரவேசமாகிறவரைக்குமுள்ள லிபானோன்
௬ முழுவதும்,—லிபானோன்முதல்மிசிரபோதமயிம்
வரைக்கும் மலைகளிற்குடியிருக்கிற யாவருடை
யநாடும், சீதோனியருடைய எல்லாநாடும்மீதியா
கவிருக்கின்றன: நான் இஸரவேல் சந்ததியார்மு
ன்னின்றும் அவர்களைத்துரத்திவிடுவேன்; நான்
உனக்குக்கட்டளையிட்டபடியே, நீ இஸரவேல
ருக்குச்சுதந்தரமாக இந்தத்தேசத்தைக்குறித்துச்
௭ சீட்டுப்போட வேண்டும்.—ஆதலால் ஒன்பது
கோத்திரங்களுக்கும், மனாசேயின் பாதிக்கோத்
திரத்துக்கும், சுதந்தரமாக இந்தத்தேசத்தைப்பங்
௮ கிடுவென்றார்.-மனாசேயின் மற்றப்பாதிக்கோத்
திரத்தாரும், ரூபேனியரும், காத்தியருந் தங்கள்
சுதந்தரத்தை அடைந்தார்கள், அதை யெகோ
வாவின் தாசனாகியமோசேகிழக்கேயுள்ளயோர்
தானுக்கப்புறத்தில்அவர்களுக்குக்கொடுத்தான்.-
௯ அர்னோன் ஆற்றங்கரையிலுள்ள அரோவேர் நக
ரமும், நதியின் மத்தியிலிருக்கிற நகரமுந்தொ
டங்கித் தீபோன்மட்டுமிருக்கிற மேதேபாவின்
௰ சமபூமியாவும்,—எஷ்போனிலிருந்து அம்மோ
னியருடைய எல்லைவரைக்கும் ஆண்ட எமோ
ரியருடைய இராசாவாகிய சீகோனுக்கு உரிய
௰௧ வைகளாயிருந்த நகரங்கள்யாவும்,—கிலியாத்நா
டும்கிஷூரியர், மாகாத்தியர் இவர்களுடைய எல்
லைக்குள்ளானநாடும்,எர்மோன்மலைமுழுவதும்,-
அஷ்தாரோத்திலும், எத்ரேயியிலும் ஆண்டு,மோ ௰௨
சேயினால் சங்கரிக்கப்பட்டு,துரத்தப்பட்ட வீர
ரில்மீதியாகவிருந்தபாஷானின்இராசாவாகிய ஓ
குக்குச்சல்காமட்டுமிருந்தபாஷான்முழுவதுமா
கியஇவைகளையே அவர்களுக்குக்கொடுத்தான்.—
அப்படியிருந்தும்இஸரவேல்சந்ததியார் கிஷூரிய ௰௩
ரையும்மாகாத்தியரையுந் துரத்தவில்லை: கிஷூரிய
ரும்மாகாத்தியரும் இந்நாள்வரைக்கும் இஸரவே
ல்மத்தியிலேவசித்திருக்கிறார்கள்.—லேவியரின் ௰௪
கோத்திரத்துக்குமாத்திரம் அவன் சுதந்தரங் கொ
டுக்கவில்லை; இஸரவேலின் தேவனாகிய யெ
கோவா அவனுக்குச்சொன்னபடி அவருக்கு
அக்கினியிலிடப்படும்நைவேத்தியமே அவர்கள்
சுதந்தரம்.

ரூபேன் சந்ததியாகிய கோத்திரத்துக்கு அவர் ௰௫
களுடைய குடும்பங்களுக்குத் தக்கதாக மோ
சேசுதந்தரங்கொடுத்தான்.—அர்னோன் ஆற்றங்க ௰௬
ரையிலுள்ள அரோவேரென்னும் நகரமும், நதி
யின்மத்தியிலுள்ள நகரமுந்தொடங்கி,மேதேபா
வரைக்குமுள்ளசமபூமிமுழுவதும்,-சமபூமியிலி ௰௭
ருக்கிறஎஷ்போனும், அதைச்சேர்ந்தநகரங்களா
கியதீபோன்,பாமோத்-பாகால்,பேத்-பாகால்-மி
யோன்,-யாகாசா, கிதேமோத், மேபாகாத்,—கீரி ௰௮
யத்தாயீம், சிப்மா, பள்ளத்தின் மலையிலுள்ளசெ ௰௯
ரெத்ஷகார்;—பேத்பேயோர், அஷ்தோத் பிஸ்கா, ௨௰
பேதஷீமோத்தென்னும்இவைகளும்;-சமபூமியி ௨௧
லுள்ளமற்றநகரங்கள்யாவும்,எஷ்போனில்ஆண்
டுவந்த எமோரியருடைய இராசாவாகிய சீகோ
னுடைய இராச்சியம்முழுவதும் அவர்களுக்குச்
சுதந்தரமாயின: அந்தச்சீகோனையும் அத்தேசத்தி
ற்குடியிருந்துசீகோனுக்குச்சேனைத்தலைவர்களா
யிருந்த எவி, ரேக்கேம், சூர், ஊர், ரேபா என்
னும்மீதியானின் பிரபுகளையும் மோசே சங்கரித்
தான்.—இஸரவேல்சந்ததியார் சங்காரஞ் செய்த ௨௨
மற்றவர்களோடுங்கூட, பேயோரின் புத்திரனா
கிய பிலியாமென்னும் மாயாவித்தைக்காரனையுங்
கட்கத்தினாற் கொலைசெய்தார்கள்.—யோர்தான் ௨௩
நதிரூபேன்சந்ததியாருக்கு எல்லையாயிற்று:மேற்
சொல்லிய நகரங்களும், அவைகளின் கிராமங்க
ளும்,ரூபேன்சந்ததியாருக்கு அவர்களுடையகு
டும்பங்களின்படி வந்தசுதந்தரம்.

காத்சந்ததியாரின் கோத்திரத்துக்குமோசே அ ௨௪
வர்களுடைய குடும்பங்களுக்குத்தக்கதாகச்சுதந்
தரங் கொடுத்தான்.—யாசேரும், கிலியாத்தைச் ௨௫
சேர்ந்தநகரங்கள்யாவும்,ரப்பாவுக்கெதிரேயிருக்
கிற அரோவேர்வரைக்குமுள்ள அம்மோன்சந்த
தியாருடையபாதித் தேசமும்,—எஷ்போன்தொ ௨௬

---

(௰௩. அதி. ௧.) அதி.௰௪.௰. உபா.௩௧.௩. (௨) யோவே.௩.௪. வச.௰௩. ௨.சாமு.௩.௩. ௨.சாமு.௰௩.௩௭,௩௮. எரே.௨.௰௮. (௩) நியா.௩.௩. ௧.சாமு.௬.௪,௰௭. செப்.௨.௫. உபா.௨.௨௩. (௪) அதி.௰௯.௩௰. நியா.௧.௩௪. (௫) ௧.இரா.௫.௰௮. எசேக்.௨௭.௯. அதி.௰௨.௭. (௬) அதி.௰௧.௮. அதி.௨௩.௰௩. நியா.௨.௨௧,௨௩. அதி.௰௪.௧,௨. (௮) எண்.௩௨.௩௩. அதி.௨௨.௪. (௯) வச.௰௬. எண்.௨௧.௩௰. (௰) எண்.௨௧.௨௪,௨௫. (௰௧) அதி.௰௨.௫. (௰௨) உபா.௩.௰௧. எண்.௨௧.௨௪,௩௫. (௰௩) வச.௰௧. (௰௪) எண்.௰௮.௨௰,௨௩,௨௪. வச.௩௩. (௰௬) அதி.௰௨.௨. எண்.௨௧.௨௮. எண்.௨௧.௩௰. வச.௯. (௰௭) எண்.௩௨.௩௮. (௰௮) எண்.௨௧.௨௩. (௰௯) எண்.௩௨.௩௭. எண்.௩௨.௩௮. (௨௰) உபா.௩.௰௭. அதி.௰௨.௩. (௨௧) உபா.௩.௰. எண்.௨௧.௨௪. எண்.௩௧.௮. (௨௨) எண்.௨௨.௫. (௨௩) எண்.௩௨.௩௫. ௨.சாமு.௰௧.௧.

டங்கி ராமாத்-மிஸ்பேயின்வழியாய்ப் பிற்ரே
னீம்வரைக்குமிருக்கிறநாடும்,மக்னாயிம்தொடங்
கித்திபீரின் எல்லைவரைக்குமிருக்கிற நாடும்,—
௨௭ யோர்தான்நதி எல்லையாகியஎஷ்போனின் இரா
சாவானசீகோனுடைய இராச்சியத்தின் மற்றப்
பங்காகிய பள்ளத்திலுள்ள பேதாராம், பேத்நிம்
ரு, சுக்கோத்,சாப்போன் என்னும் இவைகளும்,
கிழக்கேயோர்தானின் கரையோரமாகக்கின்னே
ரேத்துக்கடலின் முடிவுவரைக்குமிருக்கிற நாடு
மாகிய இவைகளே அவர்களுக்குஎல்லையாயின.-
௨௮ இந்தநகரங்களும் இவைகளின் கிராமங்களும்
காத் சந்ததியாருக்கு அவரவர்குடும்பங்களின்ப
டிவந்தசுதந்தரம்.
௨௯ மனாசே சந்ததியாரின் பாதிக்கோத்திரத்துக்
கும்,மோசே அந்தமனாசேசந்ததியாரின் குடும்
பங்களுக்குத்தக்கதாகச் சுதந்தரங்கொடுத்தான்.—
௩௰ மக்னாயிம்தொடங்கிப் பாஷானின் இராசாவா
கிய ஓகினுடைய இராச்சியமாயிருந்த பாஷான்
முழுவதும், பாஷானிலுள்ளயாயீரினுடையஊர்
கள்யாவுமாகிய அறுபதுநகரங்களே அவர்களு
௩௧ டைய எல்லைக்குள்ளாயின.—பாதிக்கிலியாத்தை
யும், பாஷானிலே அஷ்தாரோத் எத்ரேயி என்
னும்ஓகினுடைய இராச்சியத்தின்நகரங்களையும்,
மனாசேயின் புத்திரனாகிய மாகீரின்சந்ததியா
ருக்கு அந்தமாகீரின்சந்ததியாரின் பாதிப்பேரு
௩௨ டைய குடும்பங்களின்படிகொடுத்தான்.—மோ
சே கிழக்கே யெரிகோவுக்குச்சமீபமாக யோர்
தானுக்கக்கரையிலுள்ள மோவாபின் சமபூமிக
ளிற்சுதந்தரமாகக்கொடுத்தவைகள் இவைகளே.—
௩௩ லேவிகோத்திரத்துக்கு மோசேசுதந்தரங் கொடுக்
கவில்லை:இஸரவேலின் தேவனாகிய யெகோ
வாவே தாம் அவர்களுக்குச்சொன்னபடி அவர்
களுக்குச்சுதந்தரமானார்.

## ௰௪. அதிகாரம்.

௧. ஒன்பதரைக்கோத்திரத்துக்குச் சுதந்தரத்தைப் பங்கிடல்: ௬. காலேபு சுதந்தரம்பெறல்.

கானான்தேசத்திலே இஸரவேல்சந்ததியார்சுதந்
தரித்துக்கொண்டதேசங்கள் இவைகளே. ஆசாரி
யனாகிய எலீயேசாரும், நூனின் புத்திரனாகிய
யோசுவாவும், இஸரவேல்சந்ததியாருடையகோ
த்திரபிதாவமிசத்தலைவரும் அதைச்சுதந்தரமாகப்
௨ பங்கிட்டார்கள்.—யெகோவா மோசேயைக்
கொண்டு கட்டளையிட்டபடி, அவர்கள் சீட்டுப்
போட்டு ஒன்பதரைக் கோத்திரங்களுக்கே அ
௩ தைச்சுதந்தரமாகப் பங்கிட்டார்கள்.—மற்ற இ
ரண்டரைக் கோத்திரங்களுக்கும் மோசே யோர்
தானுக்கப்புறத்தில்சுதந்தரங்கொடுத்தான்: லேவி
யருக்குமாத்திரம் இஸரவேலர் மத்தியிலே சுதந்
தரங்கொடுக்கவில்லை.—யோசேப்பின் புத்திரர்க ௪
ளாகிய மனாசேயும் எப்ராயீமும் இரண்டுகோத்
திரங்களானார்கள்:ஆதலால் அவர்கள்லேவியருக்
குத்தேசத்திலே பங்குகொடாமற் குடியிருக்கும்
படி பட்டணங்களையும்,அவர்களுடைய ஆடுமா
டுகள்முதலான பொருள்களுக்காகப்பேட்டைக
ளையுமாத்திரங் கொடுத்தார்கள்.—யெகோவா ௫
மோசேக்குக்கட்டளையிட்டபடியே இஸரவேல்
சந்ததியார் தேசத்தைப்பங்கிட்டார்கள்.
அப்பொழுது யூதாவின்சந்ததியார் கில்காலி ௬
லே யோசுவாவினிடத்திற் சேர்ந்தார்கள்: கேனா
சியனான யெபுன்னேயின் புத்திரனாகிய காலேபு
அவனைநோக்கி,காதேஷ்பர்னீயவிலே யெகோ
வா என்னையும் உம்மையுங்குறித்து, தேவனு
டைய தாசனாகிய மோசேயிடத்திற் சொல்லிய
வாக்கை அறிந்திருக்கிறீர்.—இத்தேசத்தைவேவு ௭
பார்த்துவரும்படி யெகோவாவின்தாசனாகிய
மோசே என்னைக்காதேஷ்பர்னீயவிலிருந்தனுப்
பினபொழுது எனக்குநாற்பதுவயது; நான்திரும்
பிவந்து என்னுள்ளத்திலே தோன்றியபிரகாரம்
காரியத்தைத் தெரிவித்தேன்.—என்னுடன்வந்த ௮
என்சகோதரர்கள் சனங்களுடைய மனதைக்க
ரையப்பண்ணினார்கள்: நானோ என் தேவனா
கிய யெகோவாவைச்சம்பூரணமாகப்பின்பற்
றினேன்.—அந்நாளிலே மோசே என்னைநோக்கி, ௯
நீ என்தேவனாகிய யெகோவாவைச்சம்பூ
ரணமாகப் பின்பற்றினபடியினாலே உன்கால்
மிதித்தபூமி, சதாகாலமும் உனக்கும், உன்சந்
ததியாருக்கும், சுதந்தரமாகுமென்றுசொல்லி ஆ
ணையிட்டான்.—யெகோவா தாம் சொல்லி ௰
யபிரகாரம் உயிருடன் என்னைக்காத்துக்கொண்
டார், பாரும், இஸரவேல்சந்ததியார் வனத்
தில் அலைந்து திரிகையில் யெகோவா இந்
தவாக்கை மோசேக்குச்சொல்லி இப்பொழுது
நாற்பத்தைந்து வருஷமாயிற்று: இப்பொழுது
எனக்கு எண்பத்தைந்துவயது.—ஆயினும் மோ ௰௧
சே என்னையனுப்பின நாளிலிருந்த பிரகா
ரம் இந்நாளிலும் நான்பெலவானாயிருக்கிறேன்:
யுத்தத்துக்குப்போய்வர அப்பொழுது எனக்கி
ருந்தபெலம் இப்பொழுதும் இருக்கின்றது.-ஆன ௰௨
படியினாலே அந்நாளிலே யெகோவா குறித்
த இந்தமலைநாட்டை எனக்குத்தாரும்; அங்கே
ஏனாக்கியர் இருக்கிறார்களென்றும், அங்குள்ள
நகரங்கள் பெரியவைகளும் அரணுள்ளவைகளு
மாமென்றுங்கேட்டிருப்பீர்: யெகோவா என்
பட்சத்திலிருப்பாராகில் யெகோவா சொல்
லியபிரகாரம் நான் அவர்களைத்துரத்தி விடுவே

(௨௭) எண்.௩௨.௩௩. ஆதி.௩௩.௰௭. ௧.இரா.௭.௪௬. எண்.௩௪.௰௧. (௩௰) எண்.௩௨.௪௧. ௧.நாளா.௨.௨௩. (௩௧) அதி.௰௨.௪. எண்.௩௨.௩௯,௪௰. (௩௩) வச.௰௪. அதி.௰௮.௭. எண்.௰௮.௨௰. உபா.௰.௯. உபா.௰௮.௧,௨.—(௰௪. அதி. ௧.) எண்.௩௪.௰௭,௰௮. (௨) எண்.௨௬.௫௫. (௩) அதி.௰௩.௮,௩௨,௩௩. (௪) ஆதி.௪௮.௫. ௧.நாளா.௫.௧,௨. (௫) எண்.௩௫.௨. அதி.௨௧.௨. (௬) எண்.௩௨.௰௧. எண்.௰௪.௨௪,௩௰. உபா.௧.௩௬,௩௮. எண்.௰௩.௨௬. (௭) எண்.௰௩.௬. எண்.௰௪.௬. (௮) எண்.௰௩.௩௧,௩௨. உபா.௧.௨௮. எண்.௰௪.௨௪. உபா.௧.௩௬. (௯) எண்.௰௪.௨௩,௨௪. உபா.௧.௩௬. அதி.௧.௯. எண்.௰௩.௨௨. (௰) எண்.௰௪.௩௰. (௰௧) உபா.௩௪.௭. உபா.௩௧.௨. (௰௨) எண்.௰௩.௨௮,௩௩. சங்.௰௮.௩௨,௩௪. ரோ.௮.௩௧. அதி.௰௫.௰௪. நியா.௧.௨௰.

௰௩ னென்றான்.—அப்பொழுது யோசுவா யெபுன்
னேயின் புத்திரனாகிய காலேபை ஆசீர்வதித்து,
எப்ரோனை அவனுக்குச்சுதந்தரமாகக் கொடுத்
௰௪ தான்.—கேனாசியனான யெபுன்னேயின் புத்திர
னாகிய காலேபு இஸரவேலின் தேவனாகிய
யெகோவாவைச்சம்பூரணமாய்ப் பின்பற்றி
னபடியினாலே, எப்ரோனானது இந்நாளிலிருக்
௰௫ கிறபடி அவனுக்குச்சுதந்தரமாயிற்று.—முன்னே
எப்ரோனுக்குக் கீரியாத் அர்பா என்றுபெயர்.
அர்பா என்பவன் ஏனாக்கியருக்குள்ளே பெரி
யவனாயிருந்தான். தேசத்திலே யுத்தமில்லாதொ
ழிந்தது.

## ௰௫. அதிகாரம்.

௧. யூதாவமிசத்தாரின் எல்லையைக்குறித்தல்: ௰௩. காலேபு எப்ரோனைச்செயித்துச் சுதந்தரம்பெறல்: ௰௬. ஒத்னியேல் திபீரைச்செயித்துக் காலேபின் கன்னியைப்பெறல்: ௨௰. யூதாவின் சுதந்தரத்திலுள்ள பட்டணங்களை விவரித்தல். எபூசியரை அகற்றாமல்விடல்.

யூதா சந்ததியாரின் கோத்திரத்துக்கு அவரவர்
குடும்பப்படி பங்குகிடைத்தது; தென்றிசையி
லே ஏதோமின் எல்லைக்கருகிலுள்ள சீன்வன
௨ மே தென்புறத்தின் கடையெல்லை.—தெற்கெல்
லை தெற்கேபாயும் உப்புக்கடலிலுள்ள குடாக்
௩ கரைதொடங்கி,—தென்புறத்துள்ள அக்ரபீமின்
மேடுகளுக்கும், அங்கிருந்து சீனுக்கும்போய்,
தெற்கேயிருக்கிற காதேஷ்பர்னீயவுக்கு ஏறி,எத்
சரோனைக்கடந்து அடாருக்கேறிக் கர்காவைச்
௪ சுற்றிப்போய்,—அஸ்மோனுக்கும் அங்கிருந்து
எகிப்தின் ஆற்றுக்குஞ்சென்று பெரியகடல்மட்
டும்போய் முடியும்: இதுவே உங்களுக்குத்தெற்
௫ கெல்லை.—கிழக்கெல்லை,யோர்தான் முகத்துவா
௬ ரம் வரைக்குமுள்ள உப்புக்கடல்.—வடக்கெல்
லை, யோர்தானின் முகத்துவாரம் இருக்கிற கட
லின்முனை தொடங்கிப் பேதோக்லாவுக்கேறி,
வடக்கேயிருக்கிற பேதரபாவைக்கடந்து,ரூபே
னுடைய புத்திரனாகிய போவனின் கல்லிலே
௭ றிப்போய்,—அப்புறம் அக்கோர்பள்ளத்தைவிட்
டுத்திபீரிலேறி, வடக்கே ஆற்றின் தென்புற
மான அதுமமீமின் மேட்டுக்குமுன்பாக இருக்
கிற கில்காலுக்கு நேராகச்சென்று,அங்கேயிருந்
து ஐன்ஷிமெஷ் என்னுஞ் சலஸ்தானத்துக்குப்
போய், ரோகேலென்னுங் கிணற்றுக்குச்சென்
௮ று,—அப்புறம் எபூசியர் குடியிருக்கிற தென்புற
மாய் இன்னோமின் புத்திரனுடையபள்ளத்தைக்
கடந்து,வடக்கேயிருக்கிறரெபாயீமருடையபள்
ளத்தின்கடைசியில்மேற்காகஇன்னோம் பள்ளத்
தின் முன்னிருக்கிற மலையுச்சிவரைக்குமேறி,—
அந்த மலையுச்சியிலிருந்து நெப்தோவாவின் நீ ௯
ரூற்றுக்குப்போய்; எப்பிரோன் மலையின் நகரங்
களுக்குச்சென்று, கீரியாத் எயாரீமாகிய பாகா
லாவுக்குப்போய்,—பாகாலாவிலிருந்து மேற்கே ௰
சேயீர்மலைக்குத்திரும்பி, வடக்கேயிருக்கிற கிசா
லோனாகிய எயாரீம் மலைக்குப்பக்கமாகப்போய்,
பேத்ஷிமெஷுக்கு இறங்கித் திம்னாவைக்கடந்
து,—அப்புறம் வடக்கேயிருக்கிற எக்ரோனுக் ௰௧
குப்பக்கமாகச்சென்று, ஷிக்ரோனுக்கோடி, பா
லாமலையைக்கடந்து, யப்னியேலுக்குச்சென்று,
கடலிலே முடியும்.—மேற்கெல்லை சமுத்திரத் ௰௨
தின்கரையே: இது யூதாசந்ததியாருக்கு அவரவர்
குடும்பப்படி சுற்றிவரும் எல்லை.

யெபுன்னேயின் புத்திரனாகிய காலேபுக்கு, ௰௩
யோசுவா தனக்கு யெகோவா கட்டளையிட்
டபடி ஏனாக்கின் பிதாவாகிய அர்பாவின் நகர
மான எப்ரோனை யூதாசந்ததியாருக்குள்ளே பங்
காகக்கொடுத்தான்.—அங்கேயிருந்த ஷேஷாய், ௰௪
அகீமான், தல்மாவென்னும் ஏனாக்கின் புத்திரர்
மூன்றுபேரையுங் காலேபுதுரத்தி,—அங்கிருந்து ௰௫
திபீர்குடிகளிடத்திற்போனான்: முற்காலத்திலே
திபீருக்குக்கீரியாத்செப்பேரென்றுபெயர்.

கீரியாத்செப்பேரைச்சங்காரஞ்செய்து பிடிப் ௰௬
பவனுக்கு என்புத்திரியாகிய அக்சாளைவிவாகம்
பண்ணிக்கொடுப்பேனென்று காலேபு சொன்
னான்.—அப்பொழுது காலேபின் சகோதரனான ௰௭
கேனாசின்புத்திரனாகிய ஒத்னியேல் அதைப்பி
டித்தான்: அவன் தன்புத்திரியாகிய அக்சாளை இ
வனுக்கு விவாகம் பண்ணிக்கொடுத்தான்.—அ ௰௮
வள் புறப்படுகையில், தன் பிதாவினிடத்தில் ஒ
ருவயல்வெளியைக் கேட்கும்படி அவனிடத்
தில் உத்தரவு பெற்றுக்கொண்டு, கழுதையை
விட்டிறங்க, காலேபு அவளைநோக்கி, உனக்கு
என்னவேண்டு மென்றான்.—அதற்குத்தரமாக அ ௰௯
வள் எனக்கொரு ஆசீர்வாதந்தரவேண்டும்; எ
னக்குத் தென்னாட்டைத்தந்தீர், நீரூற்றையுந் தா
ருமென்றாள். அவன் மேலுள்ள நீரூற்றையும்,
கீழுள்ள நீரூற்றையும் கொடுத்தான்.

இதுவே யூதா சந்ததியாருக்கு அவரவர்குடும் ௨௰
பப்படிகிடைத்த சுதந்தரம்.—தென்றிசையில் ஏ ௨௧
தோமின் எல்லைக்குஎதிர்ப்புறத்திலுள்ளயூதாசந்த
தியாரின் கோத்திரத்துக்குக்கிடைத்த பட்டணங்
களாவன: கப்செயேல், ஏதேர், யாகூர்,—கீனா, ௨௨
தீமோனா, அதாதா,—கேதேஷ், ஆத்சோர், இத் ௨௩
னான்.—சீப், தெலெம், பியலோத்,—ஆத்சோர், ௨௪
அதத்தா, கிரீயோத், எத்சரோனென்னும் ஆத் ௨௫
சோர்,—அமாம், ஷிமா, மோலாதா,—அத்சர்க ௨௬ ௨௭
தா, எஷ்மோன், பேத்பாலெத்,—அத்சர்ஷூவால், ௨௮

(௰௩) அதி.௨௨.௬. அதி.௰.௩௭. நியா.௧.௨௰. ௧.நாளா.௬.௫௪,௫௫. (௰௪) அதி.௨௧.௰௨. வச.௮,௯. (௰௫) ஆதி.௨௩.௨. அதி.௰௫.௰௩. அதி.௰௧.௨௩.—(௰௫. அதி. ௧.) எண்.௩௪.௩. எண்.௩௩.௩௬. (௩) எண்.௩௪.௪. (௪) எண்.௩௪.௪. (௬) அதி.௰௮.௰௯. அதி.௰௮.௰௭. (௭) அதி.௭.௨௬. ௨.சாமு.௰௭.௰௭. (௮) அதி.௰௮.௰௬. ௨.இரா.௨௩.௰. எரே.௰௯.௨,௬. அதி.௰௮.௨௮. நியா.௧.௨௧. அதி.௰௮.௰௬. (௯) அதி.௰௮.௰௫. ௧.நாளா.௰௩.௬. நியா.௰௮.௰௨. (௰) ஆதி.௩௮.௰௩. நியா.௰௪.௧. (௰௧) அதி.௰௯.௪௩. (௰௨) எண்.௩௪.௬,௭. (௰௩) அதி.௰௪.௰௩. அதி.௰௪.௰௫. (௰௪) நியா.௧.௰,௨௰. எண்.௰௩.௨௨. (௰௫) அதி.௰.௩௮. நியா.௧.௰௧. (௰௬) நியா.௧.௰௨. (௰௭) நியா.௧.௰௩. எண்.௩௨.௰௨. (௰௮) நியா.௧.௰௪. ஆதி.௨௪.௬௪. ௧.சாமு.௨௫.௨௩. (௰௯) ஆதி.௩௩.௰௧.

௨௯ பேர்ஷேபா, பிஸ்யோத்யா,—பாலா, ஈம், அத்
௩௰ ௩௧ சேம்,-இல்தோலாத், கிசீல், ஓர்மா,-சிக்லாக்,
௩௨ மத்மன்னா,சன்சன்னா,-லிபாயோத், ஷில்லீம்,அ
யின், ரிம்மோன், கிராமங்கள்தவிர, எல்லாப்பட்
௩௩ டணங்களும்இருபத்தொன்பது.-பள்ளமான நா
௩௪ ட் டி ல் எஷ்தாவுல், சோரிய,அஷ்னா,-சனோகா,
௩௫ ஐன்கன்னீம், தப்புவா, ஏனாம்.-யர்மூத், அதுல்
௩௬ லாம், சொகோ, அசேகா,—ஷாராயீம், அதித்தா
யீம், கிதேரா, கிதேரோதாயீம், கிராமங்கள்தவி
௩௭ ர, பட்டணங்கள் பதினாலு.—சேனான், அதா
௩௮ ஷா, மிக்தால்காத்,—திலியன், மிஸ்பே, யொக்
௩௯ தியேல்.—லாகீஷ், பொஸ்காத், எக்லோன்.—
௪௰ ௪௧ கபூன், இலாமாம், கித்லீஷ்.-கிதேரோத்,பேத்
தாகோன், நாமா,மக்கேதா,கிராமங்கள்தவிர,பட்
௪௨ டணங்கள் பதினாறு.—லிப்னா, ஏதேர், ஆஷா
௪௩ ன்,—இப்தா, அஷ்னா, நெத்சீப்.—கேயிலா, அக்
௪௪ சீப், மாரேஷா,கிராமங்கள்தவிர, பட்டணங்கள்
௪௫ ஒன்பது.-பட்டணங்களுங் கிராமங்களுங்கூட
௪௬ எக்ரோன்,-எக்ரோன்தொடங்கிச் சமுத்திரமட்
டும் அஸ்தோத்தின்புறத்தில் சகல பட்டணங்
௪௭ களுங்கிராமங்களும்.-பட்டணங்களுங் கிராமங்
களுங்கூட அஸ்தோத், எகிப்தின் நதிவரைக்கும்
பெரிய சமுத்திரத்தின்கரைவரைக்குமுள்ள பட்
௪௮ டணங்களுங் கிராமங்களுங்கூடக்காசா.—மலை
௪௯ களில் ஷாமீர்,யத்தீர்,சொகோ,-தான்னா,திபீரென்
௫௰ னப்பட்டகீரியாத்சன்னா.—அனாபு, எஷ்தெமோ,
௫௧ ஆனீம்.-கோஷேன், ஒலோன்,கிலோ, கிராமங்
௫௨ கள்தவிர, பட்டணங்கள் பதினொன்று.-அராப்,
௫௩ தூமா, இஷியான்.—யானூம், பேத்தப்புவா, அ
௫௪ பேகா.—உம்தா, எப்ரோன் என்னப்பட்ட கீரி
யாத் அர்பா, சீயோர், கிராமங்கள் தவிர, பட்
௫௫ டணங்கள் ஒன்பது.—மாகோன், கர்மேல், சீப்,
௫௬ யுற்றா.-யெஸ்ரியேல், யோக்தியாம், சனோகா.-
௫௭ காயீன், கிபியா, திம்னா, கிராமங்கள் தவிர, பட்
௫௮ டணங்கள் பத்து.-அல்கூல், பேத்சூர், கிதோர்.-
௫௯ மாராத், பேதானோத்,இல்தகோன், கிராமங்கள்த
௬௰ விர, பட்டணங்கள் ஆறு.-கீரியாத் எயாரீம்,என்
னப்பட்ட கீரியாத் பாகால், ரப்பா கிராமங்கள்
௬௧ தவிர, பட்டணங்கள் இரண்டு.-வனத்திலே பே
௬௨ தரபா, மித்தீன்,செக்காக்க.—நிப்ஷான்,உப்பூர்,
ஐன்கெதி, கிராமங்கள்தவிர, பட்டணங்கள் ஆ
௬௩ று.-யெரூஷலேம் குடிகளாகிய எபூசியரை யூதா
சந்ததியார்துரத்தக்கூடாமற்போயிற்று; ஆகையா
ல் இந்நாள்மட்டும் எபூசியர் யூதா சந்ததியாரோ
டேயெரூஷலேமிலே வாசம்பண்ணுகிறார்கள்.

## ௰௬. அதிகாரம்.

௧. யோசேப்பு வமிசத்தாரின் எல்லையைக்குறித்தல்: ௫. எப்ராயீமின் வமிசத்தாரின்எல்லையைக் குறித்தல்.

யோசேப்பின் சந்ததியாருக்கு விழுந்தசீட்டில் ௧
அகப்பட்டபங்கு யெரிகோவின் அருகேயிருக்
கிற யோர்தானிலிருந்து, கிழக்கான யெரிகோ
வின் தண்ணீருக்குப்போய், யெரிகோ தொடங்
கிப் பெத்தேலின் மலைகள்வரைக்குமுள்ள வன
வழியாகச்சென்று,—பெத்தேலிலிருந்து லூசுக் ௨
குப்புறப்பட்டு அர்கீமினுடைய எல்லையாகிய அ
தரோத்தைக்கடந்து,-மேற்கே யப்லேற்றியரின் ௩
எல்லைக்குந் தாழ்வான பேத்தோரோனின் எல்லை
வரைக்குங் கெசேர் வரைக்கும் இறங்கி, சமுத்
திரம்வரைக்கும்போய்முடியும்.-இதையோசேப் ௪
பின் சந்ததியாராகிய மனாசேயும் எப்ராயீமுஞ்
சுதந்தரித்தார்கள்.

எப்ராயீம் சந்ததியாருக்கு அவரவர்வமிசங்க ௫
ளின்படி உண்டான சுதந்தரத்தினுடைய கிழக்
கெல்லை, அதரோத் அத்தார்தொடங்கி மேலான
பேத்தோரோன் வரைக்கும் போகின்றது.—மேற் ௬
கெல்லைமிக்மேதாவிற்குவடக்காகப்புறப்பட்டு, கி
ழக்கேதானாத் ஷீலோவுக்குத்திரும்பி, அதைய
னோகாவுக்குக்கிழக்காகக்கடந்து,-யனோகாவிலி ௭
ருந்துஅதரோத்நகரத்திற்கு இறங்கி,யெரிகோவுக்
கு வந்து யோர்தானுக்குப்புறப்படும்.—தப்புவா ௮
விலிருந்து மேற்கெல்லை கானாநதிக்குப்போய்,
சமுத்திரத்திலேமுடியும். இது எப்ராயீமின் சந்த
தியாரின் கோத்திரத்திற்கு அவரவர் வமிசங்க
ளின்படியுண்டானசுதந்தரம்.—பின்னும் எப்ரா ௯
யீமின் சந்ததியாருக்குக்கொடுக்கப்பட்ட நகரங்
களும்,அவைகளின்கிராமங்களும், மனாசேயின்
சந்ததியாருடையசுதந்தரத்திற்குள்ளேயிருக்கின்
றன.—கெசேரிலேவசித்த கானானியரைத்துரத் ௰
திவிடவில்லை: கானானியர் இந்நாள்வரைக்குமி
ருக்கிறபடி எப்ராயீமருக்குள்ளே வாசம்பண்
ணி, அவர்களுக்குத்திறைகொடுத்து ஊழியஞ்
செய்துவருகிறார்கள்.

## ௰௭. அதிகாரம்.

௧. மனாசேயின் வமிசத்தாரின் சுதந்தரத்தைக்குறித்தல்: ௭. தேசத்தின் எல்லைமுதலானவைகளைவிவரித்தல்: ௰௪. யோசேப்புவமிசத்தார் தங்கள் சுதந்தரத்தை விசாலப்படுத்தி யோசுவாவினிடத்தில் அனுமதிபெறல்.

மனாசே யோசேப்பின் சேஷ்டபுத்திரனானப ௧
டியினால் அவன்கோத்திரத்திற்கும் பங்குகிடைத்
தது; மனாசேயின் சேஷ்டபுத்திரனும் கிலியாத்
தின் பிதாவுமாகிய மாகீர் யுத்தவீரனானபடியினா
லேகிலியாத்தும் பாஷானும் அவனுக்குக்கிடைத்
தன.-மனாசேயின் சந்ததியாரில் மீதியாயிருந்த ௨
அபியேசரின் சந்ததியாரும், எலெக்கின்சந்ததி
யாரும், அஸ்ரியேலின் சந்ததியாரும், ஷிகேமின்
சந்ததியாரும், எபெரின் சந்ததியாரும், ஷிமீதா

(௩௧) ௧.சாமு.௨௭.௬. (௩௩) எண்.௰௩.௨௩. (௩௮) ௨.இரா.௰௪.௭. (௪௭) வச.௪. எண்.௩௪.௬. (௫௧) அதி.௰.௪௧. அதி.௰௧.௰௬. (௫௪) அதி.௰௪.௰௫. வச.௰௩. (௬௰) அதி.௰௮.௰௪. (௬௩) நியா.௧.௮,௨௧. ௨.சாமு.௫.௬. நியா.௧. ௨௧.—(௰௬. அதி. ௨.) அதி.௰௮.௰௩. நியா.௧.௨௬. (௩) அதி.௰௮.௰௩. ௧.நாளா.௭.௨௮. (௪) அதி.௰௭.௰௪. (௫) அதி.௰௮.௰௩. ௨.நாளா.௮.௫. (௬) அதி.௰௭.௭. (௭) ௧.நாளா.௭.௨௮. (௮) அதி.௰௭.௯. (௯) அதி.௰௭.௯. (௰) நியா. ௧.௨௯.—(௰௭. அதி. ௧.) ஆதி.௪௧.௫௧. ஆதி.௪௬.௨௰. ஆதி.௪௮.௰௮. ஆதி.௫௰.௨௩. உபா.௩.௰௫. (௨) எண்.௨௬. ௨௯—௩௨. ௧.நாளா.௭.௰௮. எண்.௨௬.௩௰,. எண்.௨௬.௩௧. எண்.௨௬.௩௨.

வின் சந்ததியாரும் ஆகிய இவர்களுக்கு அவர
வர் வமிசப்படிபங்குகிடைத்தது: இவர்கள் அ
வரவர் வமிசப்படி யோசேப்பின் புத்திரனாகி
௩ ய மனாசேயின் ஆண்மக்கள்.—மனாசேயின்
பௌத்திரனும் மாகீரின் புத்திரனுமாகிய கிலி
யாத்தின் பௌத்திரனும், எபேரின் புத்திரனுமா
கிய செலொப்பியாத்துக்குப் புத்திரிகளன்றிப் புத்திர
ரில்லை. அவன்புத்திரிகளின் நாமங்கள் மக்லாள்,
நோவாள், ஒக்லாள், மில்க்காள், திர்சாள் என்
௪ பவைகள்.—அவர்கள்ஆசாரியனாகிய எலீயேசா
ருக்கும், நூனின்புத்திரனாகிய யோசுவாவுக்கும்,
பிரபுகளுக்கும் முன்பாகவந்து, எங்கள் சகோ
தரர்களுக்குள்ளே எங்களுக்குச் சுதந்தரங்கொ
டுக்கும்படி யெகோவா மோசேக்குக் கட்ட
ளை யிட்டாரென்றார்கள். ஆகையால் அவர்கள்
பிதாவின்சகோதரருக்குள்ளேஅவர்களுக்கு யெ
கோவாவின் கட்டளையின்படி சுதந்தரங்கொ
௫ டுத்தான்.—மனாசேயின் புத்திரிகள் அவன் புத்
திரருக்குள்ளே சுதந்தரம் பெற்றுக்கொண்டார்
கள்: மனாசேயின் மற்றப்புத்திரருக்கோ கிலி
௬ யாத்தேசங்கிடைத்தது.—ஆதலால் மனாசேக்கு
யோர்தானுக் கப்புறத்திலேயிருக்கிற கிலியாத்,
பாசானென்றதேசங்களேயன்றிப்பத்துப்பங்கு
களுங்கிடைத்தன.
௭ மனாசேயின் எல்லை ஆசேர் தொடங்கிசீ
கேமின் முன்னிருக்கிற மிக்மேதாவுக்கும், அங்
கிருந்து வலப்புறமாக ஏன்தப்புவாவின் குடிக
௮ ளிடத்துக்கும்போகின்றது.—தப்புவா நாடு மனா
சேக்குக்கிடைத்தது:மனாசேயின்எல்லையிலுள்
ளதப்புவாவோஎப்பிராயீம்சந்ததியாருக்கு உரித்தா
௯ யிற்று.—அப்புறம் அந்த எல்லைகானாவென்ற ஆற்
றுக்குப்போய்,ஆற்றுக்குத்தெற்காக இறங்குகின்
றது: மனாசேயின்பட்டணங்களுக்குள்ளே எப்
பிராயீமின் இந்தபட்டணங்களிருக்கின்றன: மனா
சேயின் எல்லை ஆற்றுக்குவடக்கேயிருந்துசமுத்
௰ திரத்திற்குச்செல்லும்.—தென்புறம் எப்பிராயீமு
டையது, வடபுறம் மனாசேயினுடையது,சமுத்
திரமே அதின் எல்லை; வடக்கே ஆசேரையுங்
௰௧ கிழக்கே இசக்காரையுந்தொடுகின்றது.—இசக்கா
ரிலும் ஆசேரிலுமிருக்கிற மூன்றுநாடுகளாகிய
பேத்சேயாலும் அதின் கிராமங்களும், இப்லெயா
மும் அதின்கிராமங்களும், சனங்களோடு,தோரு
ம் அதின்கிராமங்களும், சனங்களோடு,ஏன்தோ
ரும் அதின்கிராமங்களும், சனங்களோடு, தானா
கும் அதின்கிராமங்களும், சனங்களோடு, மெகி
தோவும் அதின் கிராமங்களும் மனாசேக்குரி
௰௨ யன.—மனாசேயின் சந்ததியாரால் அந்நகரத்
தாரைத்துரத்திவிடக்கூடாமற்போயிற்று. கானா
னியர் அத்தேசத்திலே வசிக்கவேண்டுமென்றி
௰௩ ருந்தார்கள்.—இஸரவேல் சந்ததியார் திடங்
கொண்டபொழுதுங் கானானியரைமுழுமையும்
துரத்திவிடாமல், அவர்களிடத்தில் திறைவாங்
கிக்கொண்டு வந்தார்கள்.
யோசேப்பின்சந்ததியார் யோசுவாவைநோக் ௰௪
கி, யெகோவா எங்களை இதுவரைக்கும் ஆ
சீர்வதித்து வந்ததினாலே நாங்கள் பெரியசனங்க
ளாயிருந்தும், நீர் எங்களுக்குச்சுதந்தரிக்கும்படி
ஒரே பாகத்தையும், ஒரே பங்கையுந் தந்ததென்
னவென்றார்கள்.—யோசுவா அவர்களைநோக்கி, ௰௫
நீங்கள் பெரிய சனங்களானால் காட்டிற்போய்,
எப்பிராயீமின்மலைகள் உங்களுக்கு நெருக்கமாயி
ருக்கிறபடியினாலே அங்கேபெரிசியர் எப்பிராயீம
ருடைய தேசத்தில் உங்களுக்கு இடமுண்
டாக்கிக்கொள்ளுங்களென்றான்.—அதற்கு யோ ௰௬
சேப்பின்சந்ததியார் அந்த மலை எங்களுக்குப்
போதாது, தாழ்ந்த பூமியிலிருக்கிற பேத்சேயா
னிலும், அதின்கிராமங்களிலும்,யெஸ்ரியேலின்
தாழ்ந்த பூமியிலும் வசிக்கிற எல்லாக்கானானிய
ரிடத்திலும், இருப்பு இரதங்கள் உண்டென்றார்
கள்.—யோசுவா யோசேப்பின் வமிசத்தாராகிய ௰௭
எப்பிராயீமரையும், மனாசேயரையும்நோக்கி, நீங்
கள் பெரியசனங்கள், உங்களுக்குமகாபராக்கிர
மமுண்டு: உங்களுக்கு ஒரு பங்குமாத்திரமல்ல,
மலைகளும் உங்களுடையவைகளாயிருக்கும்.—
அது காடானபடியினாலே அதை வெட்டுங்கள், ௰௮
அப்பொழுது அதின் எல்லைமட்டும் அது உங்க
ளுடையதாயிருக்கும்: கானானியர் இருப்புரதங்
களையுடையவர்களும் பராக்கிரமசாலிகளுமாயி
ருந்தாலும் அவர்களை நீங்கள் துரத்திவிடுவீர்க
ளென்றான்.

## ௰௮. அதிகாரம்.

௧. ஆவாசத்தை ஸ்தாபித்தல்: ௨. தேசத்தின் எல்லையைக்குறிக்க ஆளனுப்பல்: ௰. தேசத்தின் எல்லையைப்பங்கிடல்: ௰௧. பென்யாமீன் சுதந்தரத்தைக்குறித்தல் அதிலுள்ள நகரங்களின் நாமங்களை விவரித்தல்.

இஸரவேல்சந்ததியாராகிய சமஸ்த சபையாரும் ௧
சீலோவிலே ஏகமாய்க்கூடி, சபையின் ஆவா
சத்தை அங்கே ஸ்தாபித்தார்கள். தேசம் அவர்க
ளுக்கு வசப்பட்டது.
இஸரவேல்சந்ததியாரில் தங்கள் சுதந்தரத்தை ௨
இன்னும் பங்கிட்டுக்கொள்ளாத ஏழுகோத்திரங்
களிருந்தன.-ஆகையால்யோசுவா இஸரவேல்சந் ௩
ததியாரைநோக்கி,உங்கள்பிதாக்களின் தேவனா
கிய யெகோவா உங்களுக்குக்கொடுத்ததேசத்
தைச் சுதந்தரித்துக்கொள்ள வாருங்கள், நீங்கள்
எந்தமட்டும் தாமசமாயிருப்பீர்கள்.—கோத்திரத் ௪
தில் மும்மூன்றுமனுஷரைத் தெரிந்துகொள்ளுங்
கள்: அவர்கள்புறப்பட்டுத்தேசத்திலேசுற்றித்திரி
ந்து, அதைத்தங்கள் சுதந்தரத்துக்குத்தக்கதாகக்கு

(௩) எண்.௨௬.௩௩. (௪) அதி.௰௪.௧. எண்.௨௭.௬,௭. (௭) அதி.௰௬.௬. (௮) அதி.௰௬.௮. (௯) அதி.௰௬.௮. அதி.௰௬.௯. (௰௧) ௧.நாளா.௭.௨௯. ௧.சாமு.௩௧.௰. ௧.இரா.௪.௰௨. (௰௨) நியா.௧.௨௭,௨௮. (௰௩) அதி.௰௬.௰. (௰௪) அதி.௰௬.௪. ஆதி.௪௮.௨௨. ஆதி.௪௮.௰௯. எண்.௨௬.௩௪,௩௭. (௰௫) ஆதி.௰௪.௫. ஆதி.௰௫.௨௰. (௰௬) நியா.௧.௰௯. நியா.௪.௩. அதி.௰௯.௰௯. ௧.இரா.௪.௰௨. (௰௮) உபா.௨௰.௧.—(௰௮. அதி. ௧.) அதி.௰௯.௫௧. எரே.௭.௰௨. நியா. ௰௮.௩௧. ௧.சாமு.௧.௩,௨௪. (௩) நியா.௰௮.௯.

றித்து, என்னிடத்திற் கொண்டுவரும்படிக்கு அ
௫ வர்களையனுப்புவேன்.—அதை ஏழுபங்காகப்பகி
ரக்கடவர்கள்: யூதாவமிசத்தார் தெற்கேயிருக்கிற
தங்கள் எல்லையிலும்யோசேப்புவமிசததார்வடக்
௬ கேயிருக்கிற தங்களெல்லையிலுந்தங்கட்டும்.-நீங்
கள் தேசத்தை ஏழுபங்காகக் குறித்தெழுதிக்
கொண்டுஎன்னிடத்தில்வாருங்கள், அப்பொழு
து இவ்விடத்திலேநம்முடையதேவனாகிய யெ
கோவாவின் சந்நிதியில் சீட்டுப்போடுவேன்.-
௭ லேவியருக்குஉங்களுக்குள்பங்கில்லை;யெகோ
வாவின் ஆசாரியபட்டமே அவர்கள்சுதந்தரம்:
காத்தும்,ரூபேனும்,மனாசேயின்பாதிக்கோத்தி
ரமும், யோர்தானுக்கப்புறத்திலே கிழக்கே யெ
கோவாவின் தாசனாகியமோசே தங்களுக்குக்
கொடுத்த தங்கள்சுதந்தரத்தை வாங்கியிருக்கிறார்
௮ களென்றான்.—அந்த மனிதர்கள் எழுந்து புறப்
பட்டார்கள்: தேசத்தைக்குறித்து எழுதும்படி
புறப்படுகையில், யோசுவா அவர்களைநோக்கி,
நீங்கள்போய்த் தேசமெங்கும் உலாவித்திரிந்து,
அதையெழுதிக்கொண்டு என்னிடத்தில்திரும்பி
வாருங்கள், அப்பொழுது இங்கே, ஷீலோவி
லே யெகோவாவின் சந்நிதியில், உங்களுக்
௯ குச்சீட்டுப்போடுவேனென்றுசொன்னான்.—அந்
தமனிதர்கள்போய்த்தேசத்தைக்கடந்து, அந்தந்த
நகரங்களின்படியே அதையேழுபங்காக ஒருபுத்
தகத்தில் எழுதிக்கொண்டு, ஷீலோவிலிருக்கிற
பாளயத்திலுள்ள யோசுவாவினிடத்திற் சேர்ந்
தார்கள்.
௰ அப்பொழுது யோசுவா ஷீலோவிலே யெ
கோவாவின் சந்நிதியில் அவர்களுக்குச்சீட்
டுப்போட்டு, அங்கே இஸரவேல் சந்ததியாருக்
குப்பங்குகளாகப்பகிர்ந்து கொடுத்தான்.
௰௧ பேன்யாமீன்சந்ததியாரின் கோத்திரத்திற்கு அ
வர்களுடைய குடும்பங்களின்படி சீட்டுவிழுந்த
து: அவர்கள்பங்கின் எல்லை யூதாசந்ததியாருடை
ய இடத்துக்கும், யோசேப்பின் சந்ததியாருடை
௰௨ ய இடத்துக்குமிடையே யிருக்கின்றது.-அவர்க
ளுடையவடபுறத்தின்எல்லையோர்தானிலிருந்து
புறப்பட்டு, யெரிகோவுக்கு வடபக்கமாயேறி,
அப்புறம்மேற்கேமலையிற்சென்றுபேதாவென் வ
௰௩ னத்திற்போய்முடிகின்றது.-அங்கேயிருந்து அவ்
வெல்லைலூசுக்குநேராகப் பெத்தேலாகியலூசுக்
குத்தென்பக்கமாய்ப்போய், அதரோத் அத்தாரிலி
றங்கி, தாழ்வானபேதோரோனுக்குத்தெற்கேயுள்
௰௪ ளமலையினிடத்திற் செல்லுகின்றது.—அந்த எல்
லைதெற்கேயுள்ள பேதோரோனுக்கெதிரே யிருக்
கிறமலைக்குத்தென்புறமாய் மேற்கெல்லைக்குத்தி
ரும்பி, கீரியாத் பாகாலென்னப்பட்ட யூதாசந்த
தியாரின் பட்டணமாகிய கீரியாத் எயாரீமருகே
௰௫ முடிகின்றது: இதுமேற்கெல்லை.-தென்புற எல்
லை கீரியாத் எயாரீமின் முடிவிலிருக்கின்றது:
அங்கிருந்து மேற்கேபோய் நெப்தோவாவின் நீ
ரூற்றுக்குச்சென்று,-அங்கிருந்துவடக்கே ரெபா ௰௬
யீமரின்பள்ளத்திலிருக்கிற இன்னோமின் புத்திர
னுடைய பள்ளத்துக்கெதிரான மலையடி வாரத்தி
லிறங்கி, தெற்கேயுள்ள யெபூசிக்குப் பக்கமான
இன்னோமின் பள்ளத்துக்குப்போய், அங்கிருந்
துரோகேலென்னுங் கிணற்றருகே யிறங்கி,—
வடக்கேயுள்ள ஐன்ஷிமெஷுக்குப்போய், அங் ௰௭
கிருந்து அதும்மீம் மேட்டுக்கெதிரான கெலி
லோத்துக்குப்போய், அங்கிருந்து ரூபேனுடை
ய புத்திரனாகிய போவனின் கல்லிலிறங்கி,—
அரபாவுக்கெதிரான வடபுறமாய்ப்போய், அர ௰௮
பாவில் இறங்குகின்றது.—அப்புறம் அந்த எல் ௰௯
லை வடபக்கமாய்ப் பேதோக்லாவுக்குப்போய்,
யோர்தானின் முகத்துவாரத்துக்குத் தெற்கான
உப்புக்கடலின் வடகுடாவிலே புறப்படுகின்ற
து: இதுவே தென்புறத்தெல்லை.—கிழக்குப்புறத் ௨௰
தெல்லையோர்தான்: இந்தச்சுற்றெல்லைக்குட்பட்
டதே பேன்யாமீன் சந்ததியாருக்கு அவர்களு
டைய குடும்பங்களின்படி கிடைத்தசுதந்தரம்.—
பேன்யாமீன் சந்ததியாரின் கோத்திரத்துக்கு அ ௨௧
வர்களுடைய குடும்பங்களின்படியிருக்கிற பட்
டணங்களாவன: யெரிகோ,பேதோக்லா,ஏமேக்
கெசீஸ்.—பேதரபா, செம்ராயீம், பெத்தேல்.— ௨௨
அவீம், பாரா, ஒபிரா, கேபார் ஆம்மோனாய், ௨௩
ஒப்பினீ, காபா.—கிராமங்கள்தவிர, பட்டணங் ௨௪
கள் பன்னிரண்டு.—மேலும் கிபியோன், ராமா, ௨௫
பெரோத்.—மிஸ்பே, கிபீரா, மோசா.—ரேக் ௨௬ ௨௭
கேம், இர்பேல், தாரலக்.—செலா, எலேப், யெ ௨௮
ரூஷலேமென்னும் யெபூசி, கிபியாத், கீரியாத்,
கிராமங்கள்தவிர,பட்டணங்கள்பதினாலு:பேன்
யாமீன் சந்ததியாருக்கு அவர்களுடைய குடும்
பங்களின்படியிருக்கிற சுதந்தரம் இவைகளே.

## ௰௯. அதிகாரம்.

௧. ஷிமியோன்வமிசத்தாரின் பங்கைக்குறித்தல்: ௰. செபுலோன் வமிசத்தாரின்பங்கு: ௰௭. இசகார் வமிசத்தாரின்பங்கு: ௨௪. ஆசேர் வமிசத்தாரின்பங்கு: ௩௨. நப்தாலி வமிசத்தாரின்பங்கு: ௪௰. தாண்வமிசத்தாரின்பங்கு: ௪௯.யோசுவாவின்பங்கு.

இரண்டாஞ்சீட்டு ஷிமியோனுக்கு விழுந்தது: ௧
ஷிமியோனுடைய சந்ததியாரின் கோத்திரத்துக்
கு அவர்கள் குடும்பங்களின்படி கிடைத்த சுதந்
தரம், யூதாசந்ததியாருடையசுதந்தரத்திற்குள்ளே
யிருக்கின்றது.—அவர்களுக்குச் சுதந்தரமாகக்கி ௨
டைத்த பட்டணங்களாவன: பேர்ஷெபா, ஷெ
பா,மோலாதா,-அத்சர்சூவால்,பாலா,அத்சேம்,- ௩
இல்தோலாத்,பித்தூல்,ஒர்மா,-சிக்லாக்,பேத் ௪ ௫
மர்காபோத், அத்சர்சூசா,—பேத்லிபாயோத், ஷா ௬
ருகென் கிராமங்கள்தவிர, பட்டணங்கள்பதின்
மூன்று.—மேலும் அயின், ரெம்மோன், ஈதெர், ௭
ஆஷான் கிராமங்கள்தவிர, பட்டணங்கள்நாலு.-
மேற்சொல்லிய நகரங்களைச்சுற்றித் தெற்கேயுள் ௮

(௫) அதி.௰௫.௧. அதி.௰௬.௧,௪. (௬) அதி.௰௪.௨. வச.௰. (௭) அதி.௰௩.௩௩. அதி.௰௩.௮. (௰௨) அதி.௰௬.௧. (௰௩) ஆதி.௨௮.௰௯. நியா.௧.௨௩. அதி.௰௬.௩. (௰௪) அதி.௰௫.௯. (௰௫) அதி.௰௫.௯. (௰௬) அதி.௰௫.௮. அதி.௰௫.௭. (௰௭) அதி.௰௫.௬. (௰௮) அதி.௰௫.௬. (௨௮) அதி.௰௫.௮.—(௰௯. அதி. ௧.) வச ௯. (௨) ௧.நாளா.௪.௨௮.

ள ராமாத்தென்னும் பாலாத்பேர்மட்டுமிருக்கிற
கிராமங்களெல்லாம்ஆகிய இவைகளே ஷிமியோ
ன்சந்ததியாரின் கோத்திரத்துக்கு அவர்களுடை
ய குடும்பங்களின்படி கிடைத்த சுதந்தரம்.—
௯ யூதாசந்ததியாருக்குக்கிடைத்தபங்கு அவர்களுக்
குமிகுதியாயிருந்தபடியினாலே, ஷிமியோன் சந்
ததியாருடைய சுதந்தரம் யூதாசந்ததியாரின்சுதந்
தரத்துக்குள்ளிருக்கின்றது: அவர்களுடையசுதந்
தரத்துக்குள்ளே ஷிமியோன் சந்ததியார் சுதந்
தரத்தைப்பெற்றார்கள்.
௰ மூன்றாஞ்சீட்டு செபுலோன் சந்ததியாருக்கு
விழுந்தது: அவர்களுக்கு அவர்களுடைய குடும்
பங்களின்படிகிடைத்த சுதந்தரத்தின் எல்லை சா
௰௧ ரீத்மட்டுமுள்ளது.-மேற்கே அந்த எல்லை மரால
விலேறி, தப்பேஷெத்தேசத்தைத்தொட்டுயொக்
னியாமுக்கெதிரான ஆற்றையுந்தொடுகின்றது.-
௰௨ அது சாரீத்திலிருந்து சூரியோதயமாகிற கிழக்கி
லுள்ள கிஸ்லோத் தாபோரின் எல்லையினிடத்
திற்குத் திரும்பி, தாபிராத்துக்குப்போய் யபீய
௰௩ வில்ஏறி,—அங்கிருந்து கிழக்குத்திசையிலே கித்
தாஏபெரையும், இத்தாகாத்சீனையுங்கடந்து நே
யா வென்னப்பட்ட ரெம்மோன்மெதோவாருக்
௰௪ குச் செல்லுகின்றது.—அப்புறம் அந்த எல்லைவ
டக்கே அன்னாதோனுக்குத்திரும்பி, இப்தாவெ
௰௫ லின் பள்ளத்திலேமுடிகின்றது.—காத்தாத், நக
லால், ஷிம்ரோன், இதலா, பேத்லகேம், முதலா
னபன்னிரண்டு பட்டணங்களும் அவைகளைச்
௰௬ சேர்ந்த கிராமங்களுமாகிய இவைகளே,—செபு
லோன் சந்ததியாருக்கு அவர்களுடைய குடும்
பங்களின்படி கிடைத்தசுதந்தரம்.
௰௭ நாலாஞ்சீட்டு ஈஷகாருக்கு விழுந்தது.—ஈஷ
௰௮ கார் சந்ததியாருக்கு அவர்களுடைய குடும்பங்க
௰௯ ளின்படியேகிடைத்த எல்லையாவது.—யெஸ்ரி
௨௰ யேல், கிசுலோத் ஷூனேம்,—அபாராயீம், ஷீ
௨௧ யோன், அனாகராத்,-ரப்பீத்,கிஷியோன், எபெத்
சு, ரெமேத், ஐன்கன்னீம், ஐன்கதா, பேத்பத்
௨௨ சேத்ஸ் என்னுமிவைகளே.-அப்புறம் அந்த எல்
லை தாபோரையும், ஷகத்சீமாவையும், பேத்ஷி
மெஷையுந் தொட்டு யோர்தானிலே முடிகின்ற
து: அதிலேபதினாறு பட்டணங்களும் அவைக
௨௩ ளைச்சேர்ந்த கிராமங்களுமுண்டு.—இந்த பட்ட
ணங்களும் அவைகளைச்சேர்ந்த கிராமங்களும்
ஈஷகார்சந்ததியாரின்கோத்திரத்துக்கு அவர்களு
டைய குடும்பங்களின்படி கிடைத்த சுதந்தரம்.
௨௪ ஐந்தாஞ்சீட்டு ஆஷேர் சந்ததியாருடைய
௨௫ கோத்திரத்துக்கு விழுந்தது.—அவர்களுடைய கு
டும்பங்களின்படி அவர்களுக்குக் கிடைத்த எல்
லையாவது, எல்காத், அலீ,பெற்றன், அக்ஷாப்.—
௨௬ அலம்மெலேக், அமாத், மிஷியல் என்னுமிவை
களே: பின்பு அது மேற்கேகர்மேலையும் ஷீகோர்
௨௭ லிப்னாத்தையுந்தொட்டு,—சூரியோதய முகமா
ய்ப் பேத்தாகோனுக்குத்திரும்பி, செபுலோனை
யும்வடக்கேயுள்ள இப்தாவெலின்பள்ளத்தையும்
பேத்தேமேக்கையும் நிகியேலையுந்தொட்டு, இ
டப்புறமான காபூலுக்கும்,—எப்ரோனுக்கும், ரே ௨௮
கோப்புக்கும் அம்மோனுக்கும், கானாவுக்குஞ்
சென்று, பெரிய சீதோன் வரைக்கும் போகின்
றது.—அப்புறம் அந்த எல்லை ராமாவுக்குந்தீறு ௨௯
என்னும் அரணுள்ள நகரத்துக்கும் திரும்புகின்
றது. பின்புஅந்த எல்லை ஓசாவுக்குத்திரும்பி அக்
சீப்பினிடத்திலுள்ள சமுத்திரத்திலே முடிகின்
றது.—ஊமாவும் அப்பெக்கும் ரேகோப்பும் அதற் ௩௰
குட்பட்டிருக்கின்றன: அந்தப்பட்டணங்களைச்
சேர்ந்த கிராமங்கள் தவிர, பட்டணங்கள் இரு
பத்திரண்டு.—இந்தப்பட்டணங்களும், இவைக ௩௧
ளைச்சேர்ந்த கிராமங்களும், ஆஷேர் சந்ததியா
ரின் கோத்திரத்துக்கு அவர்களுடைய குடும்பங்
களின்படி கிடைத்த சுதந்தரம்.
ஆறாஞ்சீட்டு நப்தாலி சந்ததியாருக்குவிழுந்த ௩௨
து.—நப்தாலி சந்ததியாருக்கு அவர்களுடைய ௩௩
குடும்பங்களின்படி கிடைத்த எல்லையானது, ஏ
லெப்பிலிருந்து அல்லோன், சானனீம், அதாமீ,
நெக்கேபு, யப்னியேல், இவைகளுட்பட லா
கூம் வரைக்கும்போய் யோர்தான் இடத்திலே
முடிகின்றது.—அப்புறம் அந்த எல்லை மேற்கே ௩௪
அஸ்னோத்தாபோருக்குத்திரும்பி,அங்கிருந்துஊ
கோக்குக்குப்போய், தெற்கே செபுலோனையும்,
மேற்கே ஆஷேரையும், கிழக்கேயோர்தானிடத்
திலுள்ள யூதாவையுந் தொட்டு வருகின்றது.-அ ௩௫
ரணுள்ள நகரங்களாவன,சித்தீம், சேர், அம்மாத்,
ரக்காத், கின்னேரேத்.-அதாமா,ராமா,ஆத்சோர்.- ௩௬
கேதேஷ், எத்ரேயி, ஐன்-ஆத்சோர்.—இரோன், ௩௭
மிக்தாலேல், ஒரேம், பேதனாத், பேத்ஷிமெஷ் ௩௮
முதலானவைகளே: அவைகளைச்சேர்ந்த கிராமங்
கள் தவிர,பட்டணங்கள் பத்தொன்பது.-இந்தப் ௩௯
பட்டணங்களும் இவைகளைச்சேர்ந்த கிராமங்க
ளும் நப்தாலி சந்ததியாரின் கோத்திரத்துக்கு அ
வர்களுடைய குடும்பங்களின்படி கிடைத்த சு
தந்தரம்.
ஏழாஞ்சீட்டுத் தாண்சந்ததியாரின் கோத்திரத் ௪௰
திற்குவிழுந்தது.—அவர்களுக்கு அவர்களுடை ௪௧
யகுடும்பங்களின்படிகிடைத்தசுதந்தரத்தின் எல்
லையாவது, சோரா, எஷ்தாவுல், ஈர்ஷிமெஷ்,-ஷ ௪௨
கல்பீன், அயாலோன், இதலா,-ஏலோன், திம் ௪௩
னாதா, எக்ரோன்,—இல்திக்கே, கிபிதோன், பா ௪௪
லாத்.—யெகூத், பினேபிராக், காத்ரிம்மோன்.— ௪௫
மிக்யார்கோன், ராக்கோன், இந்தப்பட்டணங்க ௪௬
ளும், யாபோவுக்கெதிரான எல்லையுமே,—தாண் ௪௭
சந்ததியார் தங்கள் எல்லை தங்களுக்கு ஒடுக்கமா
யிருந்தபடியால் புறப்பட்டுப்போய், லேஷே
முக்குவிரோதமாயுத்தம்பண்ணி, அதைப்பிடித்
துக் கட்கத்தின்வாயினாலே சங்கரித்து, அதைச்
சுதந்தரித்து அதிலே வாசம்பண்ணி,லேஷேமுக்
குத் தங்கள் பிதாவாகிய தாணுடைய நாமத்தின்
படியே தாணென்று பெயர்தரித்தார்கள்.—இந் ௪௮
தப்பட்டணங்களும்இவைகளைச்சேர்ந்தகிராமங்

(௯) வச.௧. (௰௧) ஆதி.௪௯.௰௩. அதி.௰௨.௨௨. (௨௮) அதி.௰௧.௮. நியா.௧.௩௧. (௨௯) ௨.சாமு.௫.௰௧. ஆதி.௩௮.௫. நியா.௧.௩௧. மீகா.௧.௰௪. (௩௪) உபா.௩௩.௨௩. (௪௨) நியா.௧.௩௫. (௪௬) அப்.௯.௩௬. (௪௭) நியா.௰௮.

களும் தாண்சந்ததியாருக்கு அவர்களுடைய கு
டும்பங்களின்படி கிடைத்த சுதந்தரம்.
௪௯ அந்தத்தேசத்தை அதின்எல்லைகளின்படிசுதந்
தரமாகப்பங்கிட்டுமுடித்தபின்பு, இஸரவேல்சந்
ததியார் தங்களுக்குள்ளே நூனின் புத்திரனாகிய
யோசுவாவுக்கு ஒருசுதந்தரங்கொடுத்தார்கள்.—
௫௰ யெகோவாவுடைய வாக்கின்படியேஎப்ராயீ
மின்மலைத்தேசத்திலிருக்கிற திம்னாத்செராகென்
னும் பட்டணத்தை அவன் கேட்டபடியினாலே
அதையே அவனுக்குக்கொடுத்தார்கள், அந்தப்
பட்டணத்தைத் திரும்பவுங்கட்டி அதிலே வா
௫௧ சம்பண்ணினான்.-ஆசாரியனாகியஎலீயேசாரும்,
நூனின்புத்திரனாகியயோசுவாவும், வமிச பிதாக்
களின்தலைவரும், ஷீலோவிலே யெகோவா
வின் சந்நிதியில் சபையின் ஆவாசவாசலில் இ
ஸரவேல்சந்ததியாரின் கோத்திரங்களுக்குச் சீட்
டுப்போட்டுக் கொடுத்த சுதந்தரங்கள் இவைக
ளே: அவர்கள் அந்தத்தேசத்தைப்பங்கிட்டு மு
டித்தார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. அடைக்கல நகரங்களையேற்படுத்தத் தேவன் கட்டளையிடல்: ௭. அவைகள் ஏற்படுத்தப்படல்.

பின்பு யெகோவா யோசுவாவைநோக்கி,—
௨ நீ இஸரவேல் சந்ததியாரிடத்தில், அபுத்தி பூருவ
மாகக் கைபிழைபாடாய் ஒருவனைக் கொன்று
போட்டவன் தப்பிப்போயிருக்கும்படி, நான்
மோசேயைக்கொண்டு உங்களுக்குச் சொல்லு
வித்த அடைக்கலநகரங்களை உங்களுக்கு ஏற்ப
௩ டுத்துங்கள்.—அவைகள்இரத்தப்பழிவாங்குகிறவ
னுடையகைக்குத்தப்பிப்போய் இருப்பதற்கேற்
௪ ற உங்கள்அடைக்கலஸ்தானங்களாகும்.-அந்த ந
கரங்களில்ஒன்றிலேதப்பிப்போயிருக்கிறவன் ந
கரப்பிரவேசவாசலில் நின்றுகொண்டு அந்தநக
ரத்தின் மூதியோருடையசெவிகள் கேட்கத்தன்
காரியத்தைச்சொல்வானாக, அப்பொழுது அவர்
கள் அவனை நகரத்துக்குள்ளே தங்களிடத்திற்
சேர்த்துக்கொண்டு,தங்களுக்குள்ளேவசிக்கும்ப
௫ டிஅவனுக்கிடங்கொடுக்கக்கடவர்கள்.-மேலும்
இரத்தப்பழி வாங்குகிறவன் அவனைத்தொடர்ந்
துவந்தால், அவன்பிறனை முற்பகையின்றிக்கை
பிழைபாடாகக்கொலைசெய்தபடியினாலே அவ
௬ னை இவனுடையகையிலொப்பிக்கலாகாது.—நி
யாயம்விசாரிக்கும் சபைக்குமுன்பாக அவன்
நிற்கும்வரைக்கும், அந்நாட்களிலிருக்கும் மகா
ஆசாரியன் மரணமடைகிறவரைக்கும் அவன்
அந்தநகரத்தில் வசிக்கவேண்டும்: பின்புகொலை
செய்தவன் தான்விட்டு ஓடிப்போன தன்நகரத்
திற்குந் தன்வீட்டுக்குந்திரும்பிப்போகலாமென்
றுசொல்லென்றார்.

அப்படியே அவர்கள் நப்தாலியின் மலைத்தே ௭
சமான கலிலேயாவிலுள்ள கேதேஷையும், எப்
ராயீமின் மலைத்தேசத்திலுள்ள ஷிகேமையும், யூ
தாவின் மலைத்தேசத்திலுள்ள எப்ரோனென்னும்
கீரியாத்அர்பாவையும் ஏற்படுத்தினார்கள்.—அன் ௮
றியும் யெரீகோவுக்குக்கிழக்கே யோர்தானுக்கக்
கரையிலே ரூபேன்கோத்திரத்தைச்சேர்ந்த சம
பூமியின்வனத்திலுள்ளபெத்செரையும்காத்கோத்
திரத்தைச்சேர்ந்த கிலியாத்திலுள்ள ராமொத்தை
யும், மனாஷேகோத்திரத்தைச்சேர்ந்த பாஷானி
லுள்ள கோலானையுங் குறித்துவைத்தார்கள்.—
கைபிழைபாடாய் ஒருவனைக் கொன்றவனெவ ௯
னோ அவன் சபைக்குமுன்பாக நிற்குமளவும்,
இரத்தப்பழி வாங்குகிறவனுடைய கையினால்
இறவாதபடிக்கு ஓடிப்போய் ஒதுங்கத்தக்கதாகச்
சமஸ்த இஸரவேல் சந்ததியார் நிமித்தமும் அவர்
களுக்குள்ளே தங்கும் பரதேசிகள் நிமித்தமும்
ஏற்படுத்தப்பட்ட நகரங்கள் இவைகளே.

## ௨௧. அதிகாரம்.

௧. லேவியருக்கு நகரங்கள் கொடுக்கப்படல்: ௪௩. தேவன் இஸரவேலருக்குத்தேசத்தையும் இளைப்பாறுதலையுங்கொடுத்தல்.

லேவியரின் வமிசபிதாக்களின் அதிபதிகள்கா ௧
னான் தேசத்திலுள்ள ஷீலோவிலே ஆசாரியனா
கிய எலீயேசாரிடத்திலும், நூனின்புத்திரனாகிய
யோசுவாவிடத்திலும், இஸரவேல் சந்ததியாரு
டைய கோத்திரங்களின் மற்றை வமிசபிதாக்க
ளின் அதிபதிகளிடத்திலுஞ்சேர்ந்து,—நாங்கள் ௨
வாசம்பண்ணும்படி நகரங்களையும், எங்கள்மி
ருகங்களுக்காகப் பேட்டைகளையும், எங்களுக்
குக்கொடுக்கும்படி யெகோவா மோசேயைக்
கொண்டு கட்டளையிட்டாரே யென்றார்கள்.—
ஆதலால் யெகோவாவுடைய வாக்கின்படி ௩
யே இஸரவேல் சந்ததியார் தங்கள் சுதந்தரத்தி
லே நகரங்களையும், அவைகளின்பேட்டைகளை
யும், லேவியருக்குக் கொடுத்தார்கள்.—கோகாத் ௪
தியருடைய குடும்பங்களுக்குச்சீட்டுவிழுந்தது:
அந்தச்சீட்டின்படி லேவியரில் ஆசாரியனாகிய
ஆரோன்புத்திரருக்கு யூதாவின்கோத்திரத்திலும்,
ஷிமியோனின் கோத்திரத்திலும், பேன்யாமின்
கோத்திரத்திலுங் கிடைத்த நகரங்கள்பதின்மூன்
று.—கோகாத்தின் மற்றப்புத்திரருக்கு எப்ராயீம் ௫
கோத்திரத்தின் குடும்பங்களுக்குள்ளும், தாண்
கோத்திரத்திலும், மனாஷேயின் பாதிக்கோத்தி
ரத்திலுங் கிடைத்தநகரங்கள்பத்து.-கெர்ஷோன் ௬
புத்திரருக்கு ஈஷகார்கோத்திரத்தின் குடும்பங்க
ளுக்குள்ளும், ஆஷேர்கோத்திரத்திலும், நப்தா
லிகோத்திரத்திலும், பாஷானிலுள்ள மனாஷே
யின் பாதிக்கோத்திரத்திலுங்கிடைத்த நகரங்கள்
பதின்மூன்று.-மிராரிபுத்திரருக்குஅவர்களுடை ௭

(௫௰) அதி.௨௪.௩௰. ௧.நாளா.௭.௨௪. (௫௧) எண்.௩௪.௰௭. அதி.௰௪.௧. அதி.௰௮.௧,௰.—(௨௰. அதி. ௨.) யாத்.௨௧.௰௩. எண்.௩௫.௬,௰௧,௰௪. உபா.௰௯.௨,௯. (௪) ரூத்.௪.௧,௨. (௫) எண்.௩௫.௰௨. (௬) எண்.௩௫.௰௨.௨௫. (௭) அதி.௨௧.௩௨. ௧.நாளா.௬.௭௬. அதி.௨௧.௨௧. ௨.நாளா.௰.௧. அதி.௰௪.௰௫. லூக்.௧.௩௯. (௮) உபா.௪.௪௩. அதி.௨௧.௩௮. ௧.இரா.௨௨.௩. அதி.௨௧.௨௭. (௯) எண்.௩௫.௰௫. வச.௬.—(௨௧. அதி. ௧.) அதி.௰௪.௧. அதி.௰௭.௪. (௨) அதி.௰௮.௧. எண்.௩௫.௨. (௪) வச.௮,௰௯. அதி.௨௪.௩௩. (௫) வச.௨௰,. (௬) வச.௨௭,.(௭) வச.௩௪,.

யகுடும்பங்களின்படியே ரூபேன் கோத்திரத்தி
லும், காத்கோத்திரத்திலும், செபுலோன்கோத்தி
ரத்திலுங்கிடைத்த நகரங்கள் பன்னிரண்டு.—
௮ இந்த நகரங்களையும், இவைகளைச்சேர்ந்த பேட்
டைகளையும், இஸரவேல்சந்ததியார் யெகோ
வா மோசேயைக்கொண்டு கட்டளையிட்டபடி
யே சீட்டுப்போட்டு லேவியருக்குக் கொடுத்
தார்கள்.
௯ லேவியின் புத்திரரில் முதலாஞ் சீட்டைப்
பெற்ற கோகாத்தியரின் குடும்பங்களிலிருக்கிற
௰ ஆரோனுடைய புத்திரருக்கு,—யூதா சந்ததியின்
கோத்திரத்திலும், ஷிமியோன்சந்ததியின் கோத்
திரத்திலுமுள்ள மேல்வரும் பெயர்கொண்ட நக
௰௧ ரங்களைக்கொடுத்தார்கள்.—யூதாவின் மலைத்தே
சத்தில் ஏனாக்கின்பிதாவாகிய அர்பாவின் நகரமா
ன எப்ரோனையும், அதின்சுற்றிலுள்ளபேட்டை
௰௨ யையும் அவர்களுக்குக் கொடுத்தார்கள்.—நகரத்
தைச்சேர்ந்த நாட்டையும், அதின் கிராமங்களை
யும் யெபுன்னேயின் புத்திரனாகிய காலேபுக்குச்
சுதந்தரமாகக்கொடுத்தார்கள்.
௰௩ இப்படியே கொலைகாரன் அடைக்கலம் புகு
மிடமாக ஆசாரியனாகிய ஆரோனின்புத்திரருக்
குஎப்ரோனையும் அதின்பேட்டையையும், லிப்
௰௪ னாவையும் அதின் பேட்டையையும்,-யத்தீரை
யும் அதின் பேட்டையையும், எஷ்திமோவா
௰௫ வையும் அதின் பேட்டையையும்,—ஒலோனை
யும் அதின்பேட்டையையும், திபீரையும் அதின்
௰௬ பேட்டையையும்,—அயினையும் அதின் பேட்
டையையும், யுற்றாவையும் அதின் பேட்டை
யையும், பேத்ஷிமெஷையும் அதின் பேட்டை
யையும் கொடுத்தார்கள். அவ்விரண்டு கோத்
௰௭ திரங்களிலுள்ள நகரங்கள், ஒன்பது.—பேன்
யாமீன் கோத்திரத்திலே அவர்களுக்குக்கிபியோ
னையும் அதின் பேட்டையையும், கேபாவையும்
௰௮ அதின் பேட்டையையும்,—அனதோத்தையும்
அதின்பேட்டையையும் அல்மோனையும் அதின்
பேட்டையையும், கொடுத்தார்கள்: இந்தநகரங்
௰௯ கள் நாலு.—ஆசாரியரான ஆரோனின் புத்திர
ருக்கு பேட்டைகள்தவிர நகரங்கள் ஆகப்பதின்
மூன்று.
௨௰ லேவிகோத்திரத்தின் கோகாத்தின் புத்திரரில்
மற்றக்குடும்பங்களுக்கு எப்ராயீம் கோத்திரத்தி
லே சீட்டுப்போட்டு,அவர்கள் கொடுத்த நகரங்க
௨௧ ளாவன,—கொலைகாரன் அடைக்கலம்புகுமிட
மாகிய எப்ராயீமின் மலைத்தேசத்திலுள்ள ஷிகே
மையும், அதின் பேட்டையையும்,கெசெரையும்
௨௨ அதின்பேட்டையையும்,-கிப்சயிமையும் அதின்
பேட்டையையும்,பேதோரோனையும் அதின்பே
ட்டையையும்,அவர்களுக்குக்கொடுத்தார்கள்: இ
௨௩ ந்த நகரங்கள் நாலு.-தாண் கோத்திரத்திலே இல்
திக்கேயையும் அதின்பேட்டையையும்,கிபிதோ
னையும் அதின் பேட்டையையும்,-அயாலோனை ௨௪
யும் அதின்பேட்டையையும்,காத்ரிம்மோனையும்
அதின்பேட்டையையும், அவர்களுக்குக்கொடுத்
தார்கள்: இந்த நகரங்கள் நாலு.—மனாசேயின் ௨௫
பாதிக்கோத்திரத்திலே தானாகையும் அதின் பே
ட்டையையும், காத்ரிம்மோனையும் அதின் பேட்
டையையும்,அவர்களுக்குக்கொடுத்தார்கள்: இந்
தநகரங்கள் இரண்டு.-பேட்டைகள்தவிரக் கோ ௨௬
காத்புத்திரரில் மற்றக்குடும்பங்களுக்குக் கிடைத்
த நகரங்கள்பத்து.
லேவியரின்குடும்பங்களிற் கெர்ஷோன்புத்தி ௨௭
ரருக்குமனாசேயின் பாதிக்கோத்திரத்திலேகொ
லைகாரன்அடைக்கலம்புகுமிடமாகிய பாஷானி
லுள்ளகோலானையும், அதின் பேட்டையையும்,
பீஷ்திராவையும்அதின்பேட்டையையும், கொ
டுத்தார்கள்: நகரங்கள் இரண்டு.—ஈஷகாரின் ௨௮
கோத்திரத்திலே கிஷோனையும் அதின்பேட்
டையையும், தபரியையும் அதின்பேட்டையை
யும்,—யர்மூத்தையும் அதின் பேட்டையையு ௨௯
ம், ஐன்கன்னீமையும் அதின் பேட்டையையும்
கொடுத்தார்கள். நகரங்கள்நான்கு.—ஆஷே ௩௰
ரின் கோத்திரத்திலே மீஷாலையும் அதின் பேட்
டையையும், அப்தோனையும் அதின் பேட்டை
யையும்,—எல்காத்தையும் அதின் பேட்டையை ௩௧
யும், ரேகோப்பையும் அதின் பேட்டையையும்
கொடுத்தார்கள். நகரங்கள் நான்கு.—நப் ௩௨
தாலி கோத்திரத்திலே கொலைகாரன் அடைக்
கலம்புகுமிடமாகிய கலிலேயாவிலுள்ள கேதே
ஷையும், அதின் பேட்டையையும், அம்மோத்
தோரையும் அதின் பேட்டையையும், கர்தானை
யும் அதின் பேட்டையையுங் கொடுத்தார்
கள். நகரங்கள் மூன்று.—பேட்டைகள் தவி ௩௩
ரக் கெர்ஷோனியருக்கு அவர்களுடைய குடும்
பங்களின்படிகிடைத்தநகரங்கள் பதின்மூன்று.
மற்றலேவியராகியமிராரிபுத்திரரின்குடும்பங் ௩௪
களுக்குச் செபுலோன்கோத்திரத்திலேயொக்னி
யாமையும், அதின் பேட்டையையும், கர்தாவை
யும் அதின் பேட்டையையும்,-திம்னாவையும், அ ௩௫
தின்பேட்டையையும்,நகலாலையும்,அதின்பேட்
டையையும் கொடுத்தார்கள். நகரங்கள்நான்
கு.—ரூபேன்கோத்திரத்திலேபெத்செரையும் அ ௩௬
தின்பேட்டையையும், யாகாசாவையும் அதின்
பேட்டையையும்,-கிதேமோத்தையும் அதின்பே ௩௭
ட்டையையும், மேபாகாத்தையும் அதின் பேட்
டையையும் கொடுத்தார்கள். நகரங்கள்நான்
கு.-காத்கோத்திரத்திலே கொலைகாரன் அடைக் ௩௮
கலம் புகுமிடமாகிய கிலியாத்திலுள்ள ராமொத்
தையும்அதின்பேட்டையையும்,மக்னாயீமையும்,
அதின் பேட்டையையும்,—எஷ்போனையும் அ ௩௯

(௮) வச.௩. எண்.௩௫.௨. (௯) வச.௪. (௰௧) க.நாளா.௬.௫௫. ஆதி.௨௩.௨. அதி.௰௫.௰௩,௰௪. அதி.௨௰.௭. லூக்.௧.௩௯. (௰௨) அதி.௰௪.௰௪. க.நாளா.௬.௫௬. (௰௩) க.நாளா.௬.௫௬,. அதி.௰௫.௫௪. அதி.௨௰.௭. அதி.௰௫.௪௨. (௰௪) அதி.௰௫.௪௮. அதி.௰௫.௫௰. (௰௫) அதி.௰௫.௫௧. அதி.௰௫.௪௯. (௰௬) அதி.௰௫.௪௨. அதி.௰௫.௫௫. அதி.௰௫.௰. (௰௭) அதி.௰௮.௨௫. அதி.௰௮.௨௩,. (௨௰) வச.௫. க.நாளா.௬.௬௬. (௨௧) அதி.௨௰.௭. (௨௭) வச.௬. அதி.௨௰.௮. (௩௨) அதி.௨௰.௭. (௩௪) வச.௭. (௩௬) அதி.௨௰.௮. (௩௮) அதி.௨௰.௮.

தின் பேட்டையையும் யாசேரையும் அதின்
பேட்டையையும் கொடுத்தார்கள். நகரங்
சய கள் நான்கு.—இவைகளெல்லாம் லேவியரின்
மற்றக் குடும்பங்களாகிய மிராரிபுத்திரருக்கு அ
வர்கள் குடும்பங்களின்படி சீட்டுப்போட்டுக்
கொடுக்கப்பட்ட நகரங்கள்: அவைகளின் தொ
சக கை பன்னிரண்டு.—இஸரவேல் சந்ததியாருடை
ய சுதந்தரத்துக்குள்ளே பேட்டைகள்தவிர, லே
வியருக்குக் கொடுக்கப்பட்ட நகரங்களின் தொ
சஉ கை நாற்பத்தெட்டு.—இந்த நகரங்களில் ஒவ்
வொன்றை ஒவ்வொருபேட்டைசுற்றியிருந்தது:
எல்லாநகரங்களுக்கும் அப்படியேயிருந்தன.
சங இந்தப்பிரகாரமாக யெகோவா இஸரவேல
ருக்கு அளிப்பேனென்று அவர்களுடையபிதாக்
களுக்கு ஆணையிட்டுக்கொடுத்த தேசம்முழுவ
தையும் அளித்தார்; அவர்கள் அதைச்சுதந்தரித்துக்
சச கொண்டு அதிலேவாசம்பண்ணினார்கள்.—யெ
கோவா அவர்களுடையபிதாக்களுக்கு ஆணையி
ட்டயாவற்றின்படிக்கும், அவர்களுக்கு நான்குதி
சையிலும் இளைப்பாறுதலை அளித்தார்: அவர்களு
டைய சமஸ்தசத்துருக்களுக்குள்ளும், ஒருவராகி
லும் அவர்களுக்கு எதிர்த்துநிற்கவில்லை; சத்துருக்
களெல்லாரையும் யெகோவா அவர்களுடைய
சரு கையில் ஒப்பித்தார்.—யெகோவா இஸரவேல்
குடும்பத்தாருக்குச் சொல்லியிருந்த மங்கலவாக்
குகளெல்லாவற்றுள்ளும் ஒரு வாக்காகிலுந்தவற
வில்லை: அவைகளெல்லாம் நிறைவேறின.

## உஉ. அதிகாரம்.

க. ஆசீர்வாதம்பெற்ற இரண்டரைக் கோத்திரத்தார் அனுப்பப்படல்: கூ. யோர்தான் நதிதீரத்தில் வேதிகையையுண்டாக்கல்: யக. மற்ற இஸரவேலர் அதைக்கேட்டுப் பிரியவீனப்பட்டுத் தூதர்களை யனுப்பிவிடல்: உக. தூதருக்கவர்கள் நல்ல உத்தரஞ்சொல்லல்:

அக்காலத்திலே யோசுவா ரூபேனியரையும்,
காத்தியரையும், மனாசேயின் பாதிக் கோத்திரத்
உ தாரையும் அழைத்து,—அவர்களைநோக்கி, யெ
கோவாவின்தாசனாகிய மோசே உங்களுக்குக்
கட்டளையிட்ட எல்லாவற்றையும்நீங்கள்காத்துக்
கொண்டதுமன்றி, நான் உங்களுக்குக்கட்டளை
யிட்ட எல்லாவற்றிலும் என்வாக்குக்கமைந்தும்
ங நடந்தீர்கள்.—நீங்கள் அநேகநாளாகஇதுவரைக்
கும் உங்கள்சகோதரரைவிட்டுவிடாமல், உங்கள்
தேவனாகிய யெகோவாவுடைய கட்டளை
ச யின் காவலைக்காத்துவந்தீர்கள்.—இப்பொழுது
உங்கள் தேவனாகிய யெகோவா தாம் உங்
கள் சகோதரருக்குச் சொல்லியிருந்தபடியே, அ
வர்களை இளைப்பாறப்பண்ணினார்: ஆகையால்
யெகோவாவின் தாசனாகிய மோசே யோர்
தானுக்கப்புறத்தில் உங்களுக்கு அளித்த சுதந்தர
மான தேசத்திலிருக்கிற உங்கள் கூடாரங்களுக்
குத் திரும்பிப்போங்கள்.—நீங்கள் உங்கள் தே ரு
வனாகிய யெகோவாவினிடத்தில் அன்புகூ
ர்ந்து, அவர் அருளியவழியேநடந்து, அவருடை
ய கட்டளைகளைக் காத்துக்கொண்டு, அவரைச்
சார்ந்து, உங்கள் பூரண இருதயத்தினாலும், உங்
கள் பூரண ஆத்துமத்தினாலும், அவரைச்சேவித்
துவரத்தக்கதாக யெகோவாவின் தாசனாகிய
மோசே உங்களுக்கிட்டகட்டளையின்படிக்கும்
செய்ய எச்சரிக்கையாயிருங்களென்று சொல்
லி,—அவர்களை ஆசீர்வதித்து, அவர்களையனுப் சா
பிவிட, அவர்கள் தங்கள் தங்கள்கூடாரங்களுக்
குப்போனார்கள்.—மனாசேயின் பாதிக்கோத்தி எ
ரத்துக்கு மோசே பாசானிலே சுதந்தரங்கொ
டுத்தான்: அதின்மற்றப்பாதி யோசுவா யோர்
தானுக்கிப்புறத்தில் மேற்கே அவர்கள் சகோதர
ரோடேகூடச் சுதந்தரங்கொடுத்தான்: யோசுவா
அவர்களுடையகூடாரங்களுக்கு அவர்களை அ
னுப்பிவிடுகையில் அவர்களை நோக்கி,—நீங்கள் அ
மிகுந்த செல்வமுள்ளவர்களாய், மிகவும் அதிக
மான ஆடுமாடுகளோடும், வெள்ளி, பொன், பித்
தளை, இரும்புகளோடும், மிகவும் அதிகமான வஸ்
திரங்களோடும் உங்கள் கூடாரங்களுக்குத்திரும்
பி, உங்கள் சத்துருக்களிடத்திற் கொள்ளையிட்ட
வைகளை உங்கள் சகோதரரோடே பங்கிட்டுக்
கொள்ளுங்களென்று சொல்லி, அவர்களை ஆசீர்
வதித்து அனுப்பிவிட்டான்.
அப்பொழுது ரூபேன் சந்ததியாரும், காத் சந் கூ
ததியாரும், மனாசேயின்பாதிக்கோத்திரத்தாரும்,
மோசேயைக்கொண்டு, யெகோவா சொல்லு
வித்தவாக்கின்படி, தாங்கள் பெற்றுக்கொண்ட
சுதந்தரமாகிய கிலியாத் தேசத்துக்குப் போகும்
படிக்குக் கானான் தேசத்திலுள்ள ஷீலோவிலி
ருந்த இஸரவேல் சந்ததியாரை விட்டுத் திரும்
பிப்போனார்கள்.—கானான் தேசத்திற் சேர்ந்த ய
பொழுது, ரூபேன் சந்ததியாரும், காத்சந்ததியா
ரும், மனாசேயின்பாதிக்கோத்திரத்தாரும், யோர்
தானின் ஓரத்திலே பார்வைக்குப் பெரியவேதி
கையைக்கட்டினார்கள்.
ரூபேன் சந்ததியாரும், காத்சந்ததியாரும், மனா யக
சேயின் பாதிக்கோத்திரத்தாரும், கானான்தேசத்
துக்கெதிரே இஸரவேல்சந்ததியாருக்கடுத்தயோர்
தானின் எல்லையிடத்தில் ஒருவேதிகை கட்டியி
ருக்கிறார்கள் என்று இஸரவேல்சந்ததியார்கேள்
விப்பட்டார்கள்.—அவர்கள் அதைக்கேட்டபொ யஉ
ழுது இஸரவேல்சந்ததியாராகிய சமஸ்தசபையா
ரும் அவர்களிடத்திற்போய், யுத்தம்பண்ணும்ப
டிக்கு ஷீலோவிலேகூடி,—கிலியாத் தேசத்திலி யங
ருக்கிற ரூபேன்சந்ததியாரிடத்துக்கும், காத்சந்த
தியாரிடத்துக்கும், மனாசேயின் பாதிக்கோத்தி

(சக) எண்.ஙரு.எ. (சங) ஆதி.யங.யரு. ஆதி.உசா.ங. ஆதி.உஅ.ச,யங. (சச) அதி.யக.உங. உபா.எ.உச. (சரு) அதி.உங.யச.—(உஉ. அதி. உ.) எண்.ஙஉ.உய. உபா.ங.யஅ. அதி.க.யசா,யஎ. (ச) எண்.ஙஉ.ஙங. உபா.உகூ.கூ. ஆதி.யங.அ. (ரு) உபா.சா.சா,யஎ. உபா.யக.உஉ. உபா.ய.யஉ. (சா) ஆதி.சஎ.எ. யாத்.ஙகூ.சங. உ.சாமு.சா.யஅ. லூக். உச.ருய. (எ) அதி.யஎ.ரு. (அ) எண்.ஙக.உஎ. க.சாமு.ஙய.உச. (கூ) எண்.ஙஉ.க,உசா,உக (யக) உபா.யங.யஉ,. நியா.உய.யஉ. (யஉ) நியா.உய.க. (யங) நியா.யங.யச. நியா.உய.யஉ. யாத்.சா.உரு. எண்.உரு.எ.

ரத்தாரிடத்துக்கும், ஆசாரியனாகிய எலீயேசாரு
௰௪ டைய புத்திரனாகிய பீனிகாசையும்,—அவனோ
டேகூட இஸரவேலின் கோத்திரங்களில் ஒவ்
வொரு கோத்திர பிதாவின்குடும்பத்துக்கு ஒவ்
வொருபிரபுவாகப்பத்துப்பிரபுகளையும் அனுப்பி
னார்கள்; அந்தப்பிரபுகளில் ஒவ்வொருவனும் இ
ஸரவேலர் ஆயிரவருக்குள் தன்தன் பிதாவின்கு
௰௫ டும்பத்திற்கு அதிபதியாயிருந்தான்.—அவர்கள் கி
லியாத்தேசத்திலேரூபேன்சந்ததியாரையும்,காத்
சந்ததியாரையும்,மனாசேயின் பாதிக்கோத்திரத்
௰௬ தாரையுஞ்சேர்ந்து,அவர்களைநோக்கி,-நீங்கள் இக்
காலத்திலே யெகோவாவைப்பின்பற்றாமல்,
அவருடைய கட்டளைக்குவிரோதஞ் செய்யத்தி
ரும்பி,உங்களுக்கொருவேதிகையைக்கட்டி இப்
படிஇஸரவேலின் தேவனுடையகட்டளையை
௰௭ மீறித்துரோகஞ்செய்ததேது.-யெகோவாவின்
சபையிலேவாதையை வருவித்தபேயோரின் பா
வம்நமக்குப்போதாதா, இந்நாள்வரைக்கும் நாம்
௰௮ அதினின்றும்நீங்கிச்சுத்தமாகவில்லையே.-இக்கா
லத்திலே நீங்கள் யெகோவாவைப்பின்பற்றா
மல்திரும்பி,அவருடையகட்டளைக்குவிரோதஞ்
செய்கிறதினால் அவர்நாளைக்கு இஸரவேல்சபை
யாரெல்லார்மேலுங் கோபங்கொள்ளுவாரே.—
௰௯ உங்கள்சுதந்தரமாகியதேசம் அசுசியாயிருந்தால்,
நீங்கள்யெகோவாவின்ஆவாசந்தங்குகிறஅவ
ருடைய சுதந்தரமாகிய அக்கரையிலுள்ளதேசத்
திற்குவந்து எங்களுக்குள்ளே சுதந்தரம் பெற்றுக்
கொள்ளலாமே: நம்முடைய தேவனாகிய யெ
கோவாவுக்குரியவேதிகையைத்தவிர,உங்களு
க்காகவேறொருவேதிகையைக்கட்டி,யெகோ
வாவின் கட்டளைக்கும்,எங்களுக்கும்விரோதஞ்
௨௰ செய்யாதிருப்பீர்களாக.—சபிக்கப்பட்ட பொரு
ளைக்குறித்தகட்டளையைச்சேராவின்புத்திரனாகி
ய ஆகான் மீறினபொழுது,இஸரவேல்சந்ததியா
ரெல்லார்மேலுங் கடுங்கோபம்வரவில்லையா; அ
வன் ஒருவன்மாத்திரம் தன்பாவத்தினாலே மடிந்
துபோகவில்லையென்று யெகோவாவின் ச
மஸ்தசபையாருஞ் சொல்லச்சொன்னார்களென்
றார்கள்.
௨௧ அப்பொழுது ரூபேன் சந்ததியாரும்,காத்சந்த
தியாரும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரும்,
இஸரவேலர் ஆயிரவரின் அதிபதிகளைநோக்கி,—
௨௨ தேவாதிதேவனாகிய யெகோவா,தேவா
திதேவனாகிய யெகோவாவே இதையறிந்தி
ருக்கிறார்; இஸரவேலரும் அறிவார்கள்: அது து
ரோகமாயாவது, யெகோவாவின் கட்டளைக்
குவிரோதமாயாவது, செய்யப்பட்டதானால் இந்
நாளில் அவர் எங்களைக்காப்பாற்றாமலிருக்கக்க
௨௩ டவர்.—யெகோவாவைப்பின்பற்றாமல் திரும்
புவதற்காயினும், தகனபலியையாவது போசன
பலியையாவது ஸ்தோத்திரபலியையாவது இடு
வதற்காயினும், நாங்கள் எங்களுக்கொரு வேதி
கையைக்கட்டினோமாகில், யெகோவா அ
தைவிசாரிப்பாராக.—வருங்காலத்தில் உங்கள் ௨௪
சந்ததியார் எங்கள் சந்ததியாரைநோக்கி, இஸர
வேலின் தேவனாகிய யெகோவாவுக்கும்
உங்களுக்குமென்ன.—ரூபேன்சந்ததியாரே,காத் ௨௫
சந்ததியாரே, யெகோவா எங்களுக்கும், உங்
களுக்கும் நடுவான எல்லையாக யோர்தானைவைத்
தார்; யெகோவாவினிடத்தில் உங்களுக்குப்
பங்கில்லையென்று சொல்லி, எங்கள் சந்ததியா
ரை உங்கள் சந்ததியார் யெகோவாவுக்குப்ப
யப்படாதிருக்கும்படி செய்வார்கள்.-அதினாலே ௨௬
நாங்கள் தகனபலிக்குமல்ல, மற்றொருபலிக்கு
மல்ல, எங்கள் தகனபலிகளினாலும், பலிகளா
லும் ஸ்தோத்திர பலிகளாலும் யெகோவா
வின் சந்நிதியில் ஆராதனைத்தொண்டு செய்கிற
வர்களென்று எங்களுக்கும், உங்களுக்கும், ந
மக்குப்பின்னிருக்கும் நம்முடைய சந்ததியா
ருக்குள்ளேசாட்சியாயிருக்கும்படிக்கும்,—யெ ௨௭
கோவாவிடத்தில் உங்களுக்குப் பங்கில்லை
யென்று வருங்காலத்தில் உங்களுடைய சந்ததி
யார் எங்கள் சந்ததியாருடனே சொல்லாதபடிக்
கும், ஒருவேதிகையை நமக்காக உண்டாக்க
வேண்டுமென்றோம்.—மேலும் வருங்காலத்தில் ௨௮
எங்களோடும் எங்கள் சந்ததியாரோடும் அப்ப
டிச்சொல்வார்களானால், அப்பொழுது தகனப
லிக்குமல்ல, மற்றொருபலிக்குமல்ல, எங்களுக்
கும் உங்களுக்கும் மத்தியிலே சாட்சியாக யெ
கோவாவுக்குரிய வேதிகையின்சாயலாய்,எங்
கள் பிதாக்கள் உண்டாக்கினவேதிகையைப்பா
ருங்களென்று சொல்லலாமென்றோம்,—நம்மு ௨௯
டைய தேவனாகிய யெகோவாவின் ஆவா
சத்துக்கு முன்னிருக்கிற அவருடைய வேதிகை
யைத்தவிர நாங்கள் தகனபலிக்கும், போசனப
லிக்கும்,மற்றப்பலிக்கும்வேறொருவேதிகையை
யுண்டாக்கி, இப்படி யெகோவாவின் கட்ட
ளைக்கு விரோதஞ்செய்வதும், இன்று யெகோ
வாவைப் பின்பற்றாமல் திரும்புவதும், எங்க
ளுக்குமிகவுந் தூரமாயிருப்பதாகவென்றார்கள்.—
ரூபேன் சந்ததியாரும், காத் சந்ததியாரும், மனா ௩௰
சேயின் சந்ததியாரும், சொன்னவாக்குகளை ஆ
சாரியனாகிய பீனிகாசும், அவனோடேயிருந்த
சபையின் பிரபுகளும், இஸரவேலர் ஆயிரவ
ரின் அதிபதிகளும் கேட்டபொழுது,அது அவர்
களுடைய பார்வைக்கு உத்தமமென்றுதோன்
றிற்று.—அன்றியும் ஆசாரியனான எலீயேசாரு ௩௧
டைய புத்திரனாகிய பீனிகாஸ் ரூபேன் சந்ததி
யாரையும், காத் சந்ததியாரையும், மனாசேயின்
சந்ததியாரையும் நோக்கி, நீங்கள் யெகோவா
வுக்கு விரோதமாக அப்படிப்பட்ட துரோகத்
தைப் பண்ணாதிருக்கிறதினாலே யெகோவா

(௰௪) எண்.௧.௪. (௰௬) லேவி.௰௭.௮,௯. (௰௭) எண்.௨௫.௩,௪. உபா.௪.௩. (௰௮) எண்.௰௬.௨௨. (௰௯) அதி.௰௮.௧. (௨௰) அதி.௭.௧,௫. (௨௨) உபா.௰.௰௭. ௧.இரா.௮.௩௯. யோபு.௰.௭. யோபு.௨௩.௰. சங்.௪௪.௨௧. சங்.௱௩௯.௧,௨. எரே.௰௨.௩. ௨.கொரி.௰௧.௰௧,௩௧. (௨௩) உபா.௰௮.௰௯. ௧.சாமு.௨௰.௰௬. (௨௬) ஆதி.௩௧.௪௮. அதி.௨௪.௨௭. வச.௩௪. உபா.௰௨.௫,௬. (௨௭) உபா.௰௨.௰௩,௰௪. (௩௧) லேவி.௨௬.௰௧,௰௨. ௨.நாளா.௰௫.௨.

எங்களுக்குள்ளே யிருக்கிறாரென்று இன்று அ
றிந்திருக்கிறோம். இஸ்ரவேல் சந்ததியாரை யெ
கோவாவின் கைக்குத் தப்புவித்தீர்களென்று
௩௨ சொன்னான்.—பின்பு ஆசாரியனான எலீயேசா
ருடைய புத்திரனாகிய பீனிகாசும், பிரபுகளும்,
கிலியாத் தேசத்திலுள்ள ரூபேன் சந்ததியாரை
யும், காத் சந்ததியாரையும், விட்டுக் கானான்தே
சத்திலுள்ள இஸ்ரவேல் சந்ததியாரிடத்திற்குத்
திரும்பிப்போய், அவர்களுக்குச் சமாசாரத்தைத்
௩௩ தெரிவித்தார்கள்.—அந்தச்சமாசாரம் இஸ்ரவேல்
சந்ததியாரைச் சந்தோஷப்படுத்திற்று; ஆகை
யால் அவர்கள் ரூபேன் சந்ததியாரும் காத் சந்த
தியாரும் வாசம்பண்ணுகிறதேசத்தை நாசப்ப
டுத்தும்படி அவர்கள்மேல் யுத்தம்பண்ணப்புறப்
படவேண்டுமென்னும் அபிப்பிராயத்தை விட்
௩௪ டுத் தேவனைத்துதித்தார்கள்.—யெகோவா
தேவனென்பதற்கு அந்த வேதிகை நமக்குள்
ளே சாட்சியா யிருக்குமென்று, ரூபேன் சந்ததி
யாரும் காத் சந்ததியாருஞ்சொல்லி அந்தவேதி
கைக்கு எத்தென்று பெயரிட்டார்கள்.

## ௨௩. அதிகாரம்.

*யோசுவா மரணமடையுமுன் சமஸ்த இஸ்ரவேலருக்கும் புத்திசொல்லல்.*

யெகோவா இஸ்ரவேலரைச் சூழ்ந்திருந்த
சத்துருக்களொருவராலும் யுத்தமில்லாதபடிக்கு
இளைப்பாறப்பண்ணி, நெடுநாட்சென்ற பின்பு
யோசுவா வயதுசென்று விருத்தனானபொழுது,-
௨ யோசுவாஇஸ்ரவேலரின்முதியோரையும்,அதிப
திகளையும், நியாயாதிபதிகளையும், தலைவரையும்,
மற்ற இஸ்ரவேலரெல்லாரையும் அழைப்பித்து,
அவர்களைநோக்கி, நான் வயதுசென்று விருத்த
௩ னானேன்.—உங்கள் தேவனாகிய யெகோவா
உங்களுக்கு முன்பாக இந்தச்சமஸ்தசாதியாருக்
குஞ் செய்தயாவையும் நீங்கள் கண்டீர்கள்; உங்
கள் தேவனாகிய யெகோவா தாமே உங்
௪ கள் நிமித்தம் யுத்தம்பண்ணினார்.—பாருங்கள்,
யோர்தான்முதல், சூரியன் அஸ்தமிக்கிறதிசையி
லுள்ளபெரியசமுத்திரமட்டும் நானழித்துவிட்ட
வைகளும் இன்னுஞ் சேஷமாயிருக்கிறவைகளு
மாகிய சமஸ்தசாதிகளின்தேசத்தையும் நான்சீட்
டுப்போட்டு உங்கள் கோத்திரங்களுக்குத்தக்கதா
ய் உங்களுக்குச்சுதந்தரமாகப்பங்கிட்டேன்.—
௫ உங்கள் தேவனாகிய யெகோவாஉங்களுக்
குச்சொன்னபடியே நீங்கள் அவர்களுடைய
தேசத்தை வசப்படுத்தும்படிக்கும், உங்கள் தே
வனாகிய யெகோவா தாமேஅவர்களைஉங்கள்
முன்னின்றும் துரத்தி, உங்கள் பார்வையினின்
றுமகற்றுவார்.-ஆதலால் உங்களுக்குள்ளேசேஷ ௬
மாயிருக்கிற இந்தச்சனசாதியாருடன்ஐக்கமாகா
மலும், இவர்களுடைய தேவர்களின்பேரை நி
னையாமலும், அவர்களைக்கொண்டு ஆணையிடாம
லும், அவர்களைச்சேவியாமலும்,அவர்களை நமஸ்
கரியாமலுமிருக்கும்படிக்கு,—மோசேயின் வேத ௭
ப்பிரமாண புஸ்தகத்திலெழுதியிருக்கிறதைவிட்
டுவலப்புறம் இடப்புறம்திரும்பிப்போகாமல்,அ
தின்படியே சகலத்தையுங் காத்து நடக்கும்பொ
ருட்டு மிகவுந் தைரியமாயிருங்கள்.—இந்நாள் ௮
வரைக்குஞ்செய்ததுபோல உங்கள் தேவனாகி
ய யெகோவாவையே சார்ந்துநில்லுங்கள்.—
யெகோவா உங்கள்முன்னின்று பெருமை ௯
யும்பலமுமுள்ளசாதியார்களைத்துரத்தினாரே:இந்
நாள்வரைக்குமொருவரும் உங்களுக்கெதிர்த்து
நிற்கக்கூடாமற்போயிற்று.—உங்கள் தேவனாகி ௰
ய யெகோவா உங்களுக்குச்சொன்னபடி அ
வர்தாமேஉங்களுக்காக யுத்தம்பண்ணுகிறபடியி
னாலே, உங்களிலொருவன் ஆயிரம்பேரைத்துரத்
துவான்.-ஆகையால் உங்கள் தேவனாகிய யெ ௰௧
கோவாவிடத்தில் அன்பாயிருக்கும்படி உங்
களைக்காத்துக்கொள்ளுங்கள்.-நீங்களெப்படியும் ௰௨
பின்வாங்கி,உங்களுக்குள்ளேசேஷமாயிருக்கிற
சாதியாரைப்பற்றிக்கொண்டு அவர்களுடனே வி
வாகசம்பந்தம்பண்ணி, நீங்கள்அவர்களோடும்அ
வர்கள் உங்களோடும் ஐக்கமாகநடந்தால்,—உங் ௰௩
கள் தேவனாகிய யெகோவா இனிஇந்தச்சா
தியாரை உங்கள் முன்னின்றுந்துரத்திவிடமாட்
டாரென்றும், உங்கள் தேவனாகிய யெகோ
வா உங்களுக்கு அளித்த இந்த உத்தமதேசத்தி
னின்றும்நீங்கள் அற்றுப்போகுமளவும் அவர்கள்
உங்களுக்குக்கண்ணியாகவும்,வலையாகவும்,உங்
கள் விலாக்களுக்குக்கசையாகவும், உங்கள் கண்
களில் முள்ளுக்களாகவுமிருப்பார்களென்றும்
நிச்சயமாயறிவீர்களாக.-பாருங்கள், இன்று நான் ௰௪
பூலோகத்தாரெல்லாரும்போகிறவழியாய்ப்போ
கிறேன்: உங்கள் தேவனாகிய யெகோவா
உங்களைக்குறித்துச் சொல்லிய மங்கலவாக்குக
ளெல்லாவற்றிலும் ஒன்றாகிலும், ஒருவாக்காவது
தவறிப்போகாமல் சகலமும் உங்களுக்கு நிறை
வேறினவென்றும், அவைகளிலொருவாக்காவது
தவறிப்போக வில்லையென்றும், நீங்களெல்லா
ரும் உங்களிருதயத்திலும் உங்கள் ஆத்துமத்தி
லும் அறிந்திருக்கிறீர்கள்.—மேலும் உங்கள் தே ௰௫
வனாகிய யெகோவா உங்களுக்குச் சொன்
னசமஸ்த நன்மைகளும் உங்களுக்கு நிறைவே

(௩௩) ௧.நாளா.௨௯.௨௰. நெகே.௮.௬. தானி.௨.௰௯. லூக்.௨.௨௮. (௩௪) அதி.௨௪.௨௭.—(௨௩. அதி. ௧.) அதி.௨௧.௪௪. அதி.௨௨.௪. அதி.௰௩.௧. (௨) உபா.௩௧.௨௮. அதி.௨௪.௧. ௧.நாளா ௨௮.௧. (௩) யாத்.௰௪.௰௪. அதி.௰.௰௪,௪௨. (௪) அதி.௰௩.௨,௬. (௫) யாத்.௨௩.௩௰. உபா.௰௧.௨௩. எண்.௩௩.௫௩. (௬) உபா.௫.௩௨. உபா.௨௮.௰௪. (௭) யாத்.௨௩.௩௩. உபா.௭.௨,௪. நீதி.௪.௰௪. எபே.௫.௰௧. யாத்.௨௩.௰௩. சங்.௰௬.௪. எரே.௫.௭. செப்.௧.௫. (௮) உபா.௰.௨௰. அதி.௨௨.௫. (௯) உபா.௰௧.௨௩. அதி.௧.௫. (௰) லேவி.௨௬.௮. உபா.௩௨.௩௰. நியா.௩.௩௧. ௨.சாமு.௨௩.௮. யாத்.௰௪.௰௪. உபா.௩.௨௨. (௰௧) அதி.௨௨.௫. (௰௨) எபி.௰.௩௮,௩௯. ௨.பேதுரு.௨.௨௰,௨௧. உபா.௭.௪. (௰௩) நியா.௨.௩. யாத்.௨௩.௩௩. எண்.௩௩.௫௫. உபா.௭.௬. ௧.இரா.௰௧.௪. (௰௪) ௧.இரா.௨.௨. எபி.௯.௨௭. அதி.௨௧.௪௫. லூக்.௨௧.௩௩. (௰௫) உபா.௨௮.௬௩.

றப்பண்ணினதுபோல், உங்கள் தேவனாகிய
யெகோவா உங்களுக்குக் கட்டளையிட்ட
உடன்படிக்கையை நீங்கள் மீறி, அந்நிய தேவர்
களைச்சேவித்து, அவர்களுக்கு நமஸ்காரம்பண்
யசு ணினால்,-உங்கள் தேவனாகிய யெகோவா
உங்களுக்கு அளித்த இந்த உத்தமதேசத்தினின்
றும் உங்களை நாசப்படுத்துமளவும் சமஸ்த தீமை
களையும் உங்கள் மேல்வரப்பண்ணுவார்; யெ
கோவாவின்கோபம்உங்கள்மேல்மூள,நீங்கள்
சீக்கிரமாக அவர் உங்களுக்கு அளித்த உத்தம
தேசத்தினின்றும் அழிந்துபோவீர்களென்றான்.

## உச. அதிகாரம்.

க. யோசுவா சமஸ்த இஸரவேலரையும் சேர்த்தல்: உ. அவர்கள் பூருவபுருஷரின் சரித்திரத்தைச்சுருக்கிச்சொல்லல்: யச. அவர்களோடும் உடன்படிக்கைசெய்தல்: உசு. அந்த உடன்படிக்கைக்குச்சாட்சியாக ஒருகல்லை நிறுத்தல்: உகூ. யோசுவாமரித்தல்: ஙஉ. யோசேப்பின் எலும்புகளைப்புதைத்தல். எலீயேசார் மரித்தல்.

அன்றியும் யோசுவா இஸரவேலின் சமஸ்த
கோத்திரத்தாரையும் ஷிகேமிலே கூடிவரப்பண்
ணி, அவர்களுடைய மூதியோரையும், அதிபதிக
ளையும், நியாயாதிபதிகளையும், தலைவரையும் அ
ழைப்பித்தான்; அவர்கள் தேவ சந்நிதியில்வந்து
நின்றார்கள்.
உ அப்பொழுது யோசுவா சமஸ்த சனங்களையும்
நோக்கி, இஸரவேலின் தேவனாகிய யெகோ
வா பூர்வீகத்தில் உங்கள் பிதாக்களாகிய ஆபி
ரகாமுக்கும், நாகோருக்கும் பிதாவாகிய தேரா
கென்பவன் நதிக்கப்புறத்திலே வசித்திருந்து
அந்நிய தேவர்களைச் சேவித்து வருகையில்,—
ங நான் அந்த நதிக்கப்புறத்தில் இருந்த உங்கள்
பிதாவாகிய ஆபிரகாமைக் கூட்டிக்கொண்டு
வந்து, அவனைக்கானான் தேசமெங்குங் கடந்து
போகச்செய்து, அவனுக்கு ஈசாக்கைக்கொடுத்
து, அவனுடைய சந்ததியை வர்த்திக்கப்பண்ணி
ச னேன்.—ஈசாக்குக்கு யாக்கோபையும், ஏசாவை
யுங் கொடுத்தேன்; ஏசாவுக்குச் சேயீர்மலைத்தே
சத்தைச்சுதந்தரிக்கும்படி அளித்தேன்; யாக்கோ
பும்அவனுடையபிள்ளைகளும் எகிப்துக்குப்போ
ரு னார்கள்.-பின்பு நான் மோசேயையும், ஆரோனை
யும்அனுப்பி, எகிப்தியருக்குள்ளே நான்செய்தகி
ரியைகளினாலே அவர்களைவாதித்தேன்: அப்படி
அவர்களுக்குச்செய்து உங்களைப்புறப்படச்செ
சு ய்தேன்.—நான் உங்கள்பிதாக்களை எகிப்தினின்
றும் புறப்படப்பண்ணினபின்பு, அவர்கள் ச
முத்திரக்கரையிற் சேருகையில் எகிப்தியர் இர
தங்களோடும், குதிரைவீரரோடும், உங்கள் பிதாக்
களைச் செங்கடல்மட்டும் பின்தொடர்ந்தார்கள்;
அவர்கள் யெகோவாவைநோக்கி, ஓலமிட,-
அவர் உங்களுக்கும் எகிப்தியருக்கும் இடையி எ
லே இருளையுண்டாக்கிச் சமுத்திரத்தை அவர்
கள்மேற் பாயச்செய்து அவர்களைமூடினார்; நான்
எகிப்திலே செய்ததை உங்கள் கண்கண்டது:
பின்பு வனத்திலே நெடுநாள் சஞ்சரித்தீர்கள்.—
பின்பு நான் உங்களை யோர்தானுக்கப்புறத்திலே அ
வசித்த எமோரியருடைய தேசத்திற்குக்கொண்
டுவந்தேன்; அவர்கள் உங்களோடுயுத்தம்பண்ணு
கிறபொழுது நீங்கள் அவர்களுடையதேசத்தைச்
சுதந்தரித்துக்கொள்ளும்படி அவர்களை உங்கள்
கையில் ஒப்பித்தேன்; அவர்களை உங்கள் முன்
னின்றும் சங்கரித்தேன்.—அப்பொழுது சிப்போ கூ
ரின் புத்திரனாகிய பாலாக்கென்னும் மோவாபிய
ருடையஇராசாவெழுந்து, இஸரவேலராகியஉங்
களுடன் யுத்தம்பண்ணி, உங்களைச் சபிக்கும்ப
டிக்குப் பேயோரின் புத்திரனாகிய பிலியாமை
அழைத்து அனுப்பினான்.—நான் பிலியாமுக்குச் ய
செவிகொடாதபடியால் அவன் உங்களை ஆசீர்
வதித்தான்: இப்படி உங்களை அவனுடையகைக்
குத்தப்புவித்தேன்.—பின்பு நீங்கள் யோர்தானைக் யக
கடந்து யெரீகோவுக்குவந்தீர்கள், யெரீகோ நக
ரத்தாரும், எமோரியரும், பெரீசியரும், கானானி
யரும், எத்தியரும், கிர்காஷியரும், ஈவியரும், எ
பூசியரும் உங்களுக்குவிரோதமாக யுத்தம்பண்
ணினார்கள்; அவர்களையும் உங்கள் கையில் ஒப்
பித்தேன்.—எமோரியருடைய இரண்டு இராசாக் யஉ
களையும் நீங்கள் உங்கள் கட்கத்தாலும், உங்கள்
வில்லாலும் வெல்லவில்லை; நான் உங்களுக்கு
முன்பாக வண்டுகளையனுப்ப அவைகள் அவர்க
ளை உங்கள்முன்னின்றுந்துரத்தின.—நீங்கள்பெ யங
றும்படி பிரயாசப்படாத தேசத்தையும், நீங்க
ளுண்டாக்காத நகரங்களையும், உங்களுக்கு அ
ளித்தேன், அவைகளில் வசித்திருக்கிறீர்கள்; நீங்
கள் உண்டாக்காத திராட்சத்தோட்டங்களின்
பலனையும், சீதவிருட்சத்தோப்புகளின் பலனை
யும் புசித்தீர்களென்று சொல்லுகிறார்.
ஆகையால் நீங்கள் யெகோவாவுக்குப்ப யச
யந்து சற்குணத்தோடும், சத்தியத்தோடும், அவ
ரைச்சேவித்து, நதிக்கப்புறத்திலும் எகிப்திலும்
உங்கள் பிதாக்கள் சேவித்த தேவர்களை விலக்
கி, யெகோவாவைச்சேவிக்கக்கடவீர்கள்.—
யெகோவாவைச் சேவிப்பது உங்கள் பார் யரு
வைக்குத் தீதென்றுகண்டால், நதிக்கப்புறத்திலி
ருந்த உங்கள் பிதாக்கள் சேவித்த தேவர்களை

(யசு) லேவி.உசு.யசு. உபா.உஅ.யரு,யசு,.—(உச. அதி. க.) ஆதி.ஙரு.ச. அதி.உங.உ. க.சாமு.ய.யங. (உ) ஆதி. யக.உசு,ஙக. ஆதி.ஙக.ருங. (ங) அதி.யஉ.க. அப்.எ.உ,ங. ஆதி.உக.உ,ங. சங்.ஈஉஎ.ங. (ச) ஆதி.உரு.உச,உரு,உசு. ஆதி.ஙசு.அ. உபா.உ.ரு. ஆதி.சசு.க,சு. அப்.எ.யரு. (ரு) யாத்.ங.ய. யாத்.எ. யாத்.அ. யாத்.கூ. யாத்.ய. யாத்.யஉ. (சு) யாத்.யஉ.ஙஎ,ருக. யாத்.யச.உ. யாத்.யச.கூ. யாத்.யச.ய. (எ) யாத்.யச.உய. யாத்.யச.உஎ,உஅ. உபா.ச.ஙச. அதி.ரு.சு. (அ) எண்.உக.உக,ஙங. உபா.உ.ஙஉ. உபா.ங.க.(கூ)நியா.யக.உரு. எண்.உஉ.ரு. உபா.உங.ங.(ய)உபா. உங.ரு. எண்.உங.யக,உய. எண்.உச.ய. (யக) அதி.ங.யச,யஎ. அதி.ச.ய,யக,யஉ. அதி.சு.க. அதி.ய.க. அதி.யக.க. (யஉ) யாத்.உங.உஅ. உபா.எ.உய. சங்.சச.ங,சு. (யங) உபா.சு.ய,யக. (யச) உபா.ய.யஉ. க.சாமு.யஉ.உச. ஆதி. யஎ.க. உபா.யஅ.யங. சங்.ஈயங.க. உ.கொரி.க.யஉ. எபே.சு.உச. லேவி.யஎ.எ. எசேக்.உய.யஅ. எசேக்.உய.எ,அ. (யரு) ரூத்.க.யரு. க.இரா.யஅ.உக. யோவா.சு.சுஎ. வச.யச. உபா.யங.சு. நியா.சு.ய. ஆதி.யஅ.யக.

யோ, நீங்கள் வசித்ததேசத்தாராகிய எமோரியரு
டைய தேவர்களையோ, யாரைச்சேவிக்கப்போ
கிறீர்கள், இன்றே தெரிந்துகொள்ளுங்கள், எப்ப
டியும் நானும் என்குடும்பத்தாரும் யெகோவா
௰௬ வையே சேவிப்போமென்றான்.—அதற்குத்தரமா
கச்சனங்கள், அந்நியதேவர்களைச் சேவிக்கும்
பொருட்டு யெகோவாவைவிட்டு நீங்குவது
௰௭ எங்களுக்குமிகவுந் தூரமாயிருப்பதாக.—நம்மை
யும்,நம்முடையபிதாக்களையும், அடிமைப்பட்டி
ருந்த இடமாகிய எகிப்துதேசத்தினின்றும் புறப்
படச்செய்து;நம்முடையகண்களுக்குமுன்பாக
அடையாளங்களையும்செய்து,நாம் நடந்துவந்தச
மஸ்தவழியிலும், நாம் கடந்துவந்த சகலசாதி
யாருக்குள்ளும், நம்மைக் காப்பாற்றினவர், நம்
௰௮ முடைய தேவனாகிய யெகோவாவே.—அத்
தேசத்திலேவசித்த எமோரியராகிய சமஸ்தசனங்
களையும்,யெகோவா நமது முன்னின்றுந்துரத்
தினார்; நாமும் யெகோவாவையே, சேவிப்
போம், அவரே நம்முடைய தேவன் என்றார்
௰௯ கள்.-அதற்குயோசுவாசனங்களைநோக்கி,நீங்கள்
யெகோவாவைச் சேவிக்கமாட்டீர்களே: அ
வர்பரிசுத்தமுள்ள தேவன், எரிச்சலுள்ள தே
வன், உங்கள் அதிக்கிரமங்களையும் உங்கள்பா
௨௰ வங்களையும் மன்னிக்கமாட்டார்.—நீங்கள் யெ
கோவாவைவிட்டு அந்நியதேவர்களைச்சேவி
த்தால், அவர் உங்களுக்கு முன்நன்மைசெய்
திருந்தும், திரும்ப உங்களுக்குத் தீமைசெய்து,
௨௧ உங்களை அழித்துவிடுவாரென்றான்.—அதற்குச்
சனங்கள் யோசுவாவைநோக்கி, அப்படியல்ல,
யெகோவாவைச்சேவிப்போமென்றார்கள்.—
௨௨ அப்பொழுது யோசுவா சனங்களைநோக்கி, யெ
கோவாவைச்சேவிக்கும்படிநீங்கள் அவரைத்
தெரிந்துகொண்டதைக்குறித்து நீங்களே உங்க
ளுக்குச்சாட்சிகளென்றான். அதற்கவர்கள்,நாங்
௨௩ களே சாட்சிகளென்றார்கள்.—அப்பொழுது அ
வன் இனி உங்களுக்குள்ளிருக்கிற அந்நிய தே
வர்களை அகற்றி, உங்கள் இருதயத்தை இஸரவே
லின் தேவனாகிய யெகோவாவுக்குநேராகத்
௨௪ திருப்புங்களென்றான்.—சனங்கள் யோசுவாவை
நோக்கி, நாங்கள் நம்முடையதேவனாகிய யெ
கோவாவைச்சேவிப்போம்,அவருடையவாக்
குக்குஅமைந்து நடப்போமென்றார்கள்.—அந்நா ௨௫
ளிலே யோசுவா ஷிகேமிலே சனங்களோடும்உ
டன்படிக்கைபண்ணி, அவர்களுக்குக்கட்டளை
யும் விதிப்பிரமாணமுமாகவேற்படுத்திவைத்தான்.
இந்த வாக்குகளை யோசுவா தேவனுடைய ௨௬
வேதப்பிரமாணபுத்தகத்திலெழுதி, ஒரு பெரிய
கல்லையெடுத்து, அங்கே யெகோவாவின்பரி
சுத்தஸ்தானத்துக்குச் சமீபத்திலுள்ள அல்லோன்
மரத்தின்கீழ்அதைநாட்டினான்.—பின்புயோசுவா ௨௭
சகலசனங்களிடத்திலும், பாருங்கள், இந்தக்கல்
நமக்குள்ளே சாட்சியாயிருக்கக்கடவது; யெ
கோவா நமக்குச்சொல்லியவாக்குகள் யாவை
யும் இதுகேட்டிருக்கின்றது: நீங்கள் உங்கள் தே
வனைவிட்டு விலகாதபடிக்கு இது உங்களுக்குச்
சாட்சியாயிருக்கக்கடவதென்று சொன்னான்.—
இவ்வண்ணமே யோசுவா சனங்கள் தங்கள் தங் ௨௮
கள் சுதந்தரத்துக்குப் போகும்படி அவர்களைய
னுப்பிவிட்டான்.
இந்தக்காரியங்கள் நடந்தபின்பு, நூனின்புத் ௨௯
திரனும், யெகோவாவின் தாசனுமாகிய யோ
சுவா நூற்றுப்பத்துவய்தில் மரணமடைந்தான்.—
எப்ராயீமின்மலைத்தேசத்திலுள்ள காகாஷ்மலைக் ௩௰
குவடக்கே அவனுடைய சுதந்தரத்தின் எல்லை
யாகிய திம்னாத்செராக்கில் அவனையடக்கம்பண்
ணினார்கள்.—யோசுவா உயிரோடிருந்த சகல ௩௧
நாள்களிலும் யெகோவா இஸரவேலர் நிமித்
தஞ்செய்த கிரியைகள்யாவையும் அறிந்து, யோ
சுவாவுக்குப்பின்பு உயிரோடிருந்த முதியோரு
டையசகலநாள்களிலும் இஸரவேலர்யெகோ
வாவைச்சேவித்தார்கள்.
இஸரவேல்சந்ததியார் எகிப்திலிருந்துகொண் ௩௨
டுவந்த யோசேப்பினுடைய எலும்புகளை ஷிகே
மைச்சேர்ந்த துண்டுநிலத்தில் அடக்கம்பண்
ணினார்கள்: அந்த நிலத்தை யாக்கோபு ஷிகே
மின்பிதாவாகிய காமோரிடத்தில் நூறுவெள்ளிக்
காசுக்குவாங்கியிருந்தான், அதுவே யோசேப்
பின்சந்ததியாருக்குச் சுதந்தரமாயிற்று.—ஆரோ ௩௩
னின்புத்திரனாகிய எலீயேசாரும் மரித்தான்: அ
வனுடைய புத்திரனாகிய பீனிகாசுக்கு எப்ராயீ
மின் மலைத்தேசத்திலேகொடுக்கப்பட்ட கிபியா
வில் அவனையடக்கம்பண்ணினார்கள்.

(௰௯) மத்.௬.௨௪. லேவி.௰௯.௨. ௧.சாமு.௬.௨௰. சங்.௯௯.௫,௯. ஏசா.௫.௰௬. யாத்.௨௰.௫. யாத்.௨௩.௨௧. (௨௰) ௧.நாளா.௨௮.௯. ௨.நாளா.௰௫.௨. எஸ்றா.௮.௨௨. ஏசா.௧.௨௮. எரே.௰௭.௰௩. அதி.௨௩.௰௫. ஏசா.௬௩.௰. (௨௨) சங்.௱௰௯.௱௭௩. (௨௩) ஆதி.௩௫.௨. நியா.௰.௰௬. ௧.சாமு.௭.௩. (௨௫) யாத்.௰௫.௨௫. ௨.இரா.௰௧.௰௭. ௨௩.௩. (௨௬) உபா.௩௧.௨௪. நியா.௯.௬. ஆதி.௨௮.௰௮. அதி.௪.௩. ஆதி.௩௫.௪. (௨௭) ஆதி.௩௧.௪௮,௫௨. உபா.௩௧.௰௯,௨௧,௨௬. உபா.௩௨.௧. (௨௮) நியா.௨.௬. (௨௯) நியா.௨.௮. (௩௰) அதி.௰௯.௫௰. (௩௧) நியா.௨.௭. உபா.௰௧.௨. உபா.௩௧.௰௩. (௩௨) ஆதி.௫௰.௨௫. யாத்.௰௩.௰௯. ஆதி.௩௩.௰௯. (௩௩) யாத்.௬.௨௫. நியா.௨௰.௨௮.

# நியாயாதிபதிகளின் புத்தகம்.

---

## ௧. அதிகாரம்.

௧. யூதா, ஷிமியோன் என்னும்வமிசத்தாரின் சங்கதிகளைத்தெரிவித்தல்: ௮. யெருஷலேமைப்பிடித்தல்: ௰௬. பலநகரங்களைச் செயித்தல்: ௨௨. யோசேப்பு வமிசத்தார் பெத்தேல்நகரத்தை நிலைப்படுத்தல்: ௨௭. மனாஷேயின்வமிசத்தாரின் சங்கதி: ௨௯. எப்ராயீம் வமிசத்தாரின்சங்கதி: ௩௰. செபுலோன்வமிசத்தாரின்சங்கதி: ௩௧. ஆஷேர்வமிசத்தாரின்சங்கதி: ௩௩.நப்தாலிவமிசத்தாரின்சங்கதி: ௩௪. தாண்வமிசத்தாரின்சங்கதி.

யோசுவா மரித்தபின் இஸரவேல் சந்ததியார்
யெகோவாவைநோக்கி, கானானியரைஎதிர்த்
துயுத்தம்பண்ணும்படி எங்கள்நிமித்தம் முதல்மு
தல் ஆர் எழுந்துபுறப்பட வேண்டுமென்றுகேட்
௨ க,—யெகோவா, யூதா எழுந்துபுறப்படக்கட
வன்: பாருங்கள்,அந்தத்தேசத்தை அவனுடைய
௩ கையில் ஒப்பித்தேனென்றார்.-அப்பொழுதுயூதா
தன்சகோதரனாகிய ஷிமியோனை நோக்கி, நாம்
கானானியருடன் யுத்தம்பண்ணும்படி நீ என்சு
தந்தரபாகத்தில் என்னுடன் எழுந்துவா, உன்சு
தந்தரபாகத்தில் நானும் உன்னுடன் வருவே
னென்றான்; அதினால் ஷிமியோன் அவனுடன்
௪ போனான்.—யூதா எழுந்துபுறப்பட யெகோ
வா கானானியரையும்,பெரீசியரையும் அவர்கள்
கையில் ஒப்பித்தார். அவர்கள் பேசெக்கிலேபதி
௫ னாயிரம்பேரைக்கொலைசெய்தார்கள்.—பேசெக்
கிலே அதோனிபேசெக்கைக்கண்டு, அவனோ
டெதிர்த்துயுத்தம்பண்ணி, கானானியரையும் பெ
௬ ரீசியரையுங் கொலைசெய்தார்கள்.—அதோனிபே
செக்குத்தப்பிஓட, அவனைத்தொடர்ந்துபிடித்து,
அவன்கைகால்களின் பெருவிரல்களைத் தறித்து
௭ விட்டார்கள்.—அப்பொழுது அதோனிபேசெக்,
எழுபதுஇராசாக்கள்தங்கள்கைகால்களின்பெரு
விரல்கள்தறிக்கப்பட்டு என்னுடையபோசனபீ
டத்தின்கீழுள்ள சேஷத்தைப் பொறுக்கினார்
கள்:நான்செய்தவண்ணமே தேவன் எனக்கும்
பிரதிசெய்தாரென்றான்: பின்பு அவனையெருஷ
லேமுக்குக்கொண்டுபோனார்கள், அங்கே அவ
௮ னிறந்துபோனான்.—யூதாவின்சந்ததியார் யெரு
ஷலேமையெதிர்த்துயுத்தஞ்செய்துபிடித்து, கட்
கத்தின்வாயினால் அதைச்சங்கரித்து, நகரத்தை
அக்கினியினாலேதகித்தார்கள்.
௯ பின்பு யூதாவின் சந்ததியார், மலைகளிலுந்
தெற்கிலுந் தாழ்ந்த பூமியிலும் வசித்தகானானிய
ரை எதிர்த்துயுத்தஞ்செய்யப் புறப்பட்டார்கள்.—
அன்றியும், யூதாசந்ததியார்முற்காலத்திலே கீரி ௰
யாத் அர்பா என்று பெயர்கொண்டிருந்த எப்
ரோனில்வசித்தகானானியரை எதிர்த்துப்போய்,
ஷேஷாயையும், அகிமானையும், தல்மாயையுங்
கொலைசெய்து,-அங்கிருந்து முற்காலத்திலேகீரி ௰௧
யாத்செப்பேர் என்றுபெயர்கொண்டிருந்த திபீ
ரின் குடிகளை யெதிர்க்கப்புறப்பட்டார்கள்.—
அப்பொழுது காலேபு, கீரியாத் செப்பேரைச் ௰௨
சங்கரித்துப்பிடிக்கிறவனுக்கு என்புத்திரியாகிய
அக்சாளை விவாகம்பண்ணிக் கொடுப்பேனென்
றான்.—பின்புகாலேபின் தம்பியாகிய கேனாசின் ௰௩
புத்திரனான ஒத்னியேல் அதைப்பிடித்தான்; அத
னால் தன்புத்திரியாகிய அக்சாளை அவனுக்கு வி
வாகம்பண்ணிக்கொடுத்தான்.—அவன் புறப்படு ௰௪
கையில் அவனுடைய உத்தரவுபெற்றுக் கொண்
டு, தன்பிதாவினிடத்தில் ஒருவயல்வெளி கேட்
கும்படி அவள்கழுதையைவிட்டிறங்க, காலேபு
அவளை நோக்கி, உனக்கென்னவேண்டுமென்
றான்.—அவனுக்கு உத்தரமாக அவள் எனக்கொ ௰௫
ரு ஆசீர்வாதந்தரவேண்டும், எனக்குத்தென்னாட்
டைத்தந்தீர் நீரூற்றையுந் தாருமென்றாள்: அப்
பொழுது காலேபுமேலுள்ள நீரூற்றையுங்கீழுள்
ளநீரூற்றையுங் கொடுத்தான்.
மோசேயின் மாமனாகிய கேனியின் சந்ததியா ௰௬
ரும், யூதாவின் சந்ததியாரோடேபேரீந்துகளின்
நகரத்தைவிட்டு, அராத்திற்குத்தெற்கேயிருக்கிற
யூதாவின் வனாந்தரத்துக்குப்போனார்கள்: அவர்
கள் போய்ச்சனங்களுக்குள்ளே வாசம்பண்ணி
னார்கள்.—யூதாவும் அவன் சகோதரனாகிய ஷிமி ௰௭
யோனுங் கூடப்போய்ச் சிப்பாத்தில் வசித்திருந்
த கானானியரைக் கொலைசெய்து, அதைச்சங்க
ரித்தார்கள்: அந்நகரத்துக்கு ஓர்மாவென்று பெய
ரிடப்பட்டது.—மேலும் யூதா காசாவையும், அ ௰௮
தின் எல்லையையும், அஷ்கிலோனையும், அதின்
எல்லையையும், எக்ரோனையும்,அதின் எல்லையை
யும் பிடித்தான்.—யெகோவா யூதாபட்சத்தி ௰௯
லிருந்தபடியால் அவன் பருவதத்தாரைத்துரத்தி
னான்: தாழ்ந்த பூமியின் குடிகளுக்கு இருப்பு ர
தங்களிருந்தபடியினாலே அவர்களைத்துரத்தமுடி
யாமற் போயிற்று.—மோசே சொல்லியபிரகா ௨௰
ரம் எப்ரோனைக்காலேபுக்குக்கொடுத்தார்கள்: அ
வனதிலிருந்த ஏனாக்கின்புத்திரர்மூவரையுந்துரத்
திவிட்டான்.—பேன்யாமீன் சந்ததியார் யெருஷ ௨௧

---

(௧. அதி. ௧.) எண். ௨௭. ௨௧. அதி. ௨௰. ௰௮. (௨) ஆதி. ௪௯. ௮. (௪) ௧. சாமு. ௰௧. ௮. (௭) லேவி. ௨௪. ௰௯. ௧. சாமு. ௰௫. ௩௩. யாக். ௨. ௰௩. (௮) யோசு. ௰௫. ௬௩. (௯) யோசு. ௰. ௩௬. யோசு. ௰௧. ௨௧. (௰) யோசு. ௰௪. ௰௫. (௰௧) யோசு. ௰௫. ௰௫. (௰௨) யோசு. ௰௫. ௰௬, ௰௭. (௰௩) அதி. ௩. ௯. (௰௪) யோசு. ௰௫. ௰௮, ௰௯. (௰௫) ஆதி. ௩௩. ௰௧. (௰௬) அதி. ௪. ௰௧, ௰௭. ௧. சாமு. ௰௫. ௬. எரே. ௩௫. ௨. உபா. ௩௪. ௩. எண். ௨௧. ௧. எண். ௰. ௩௨. (௰௭) எண். ௨௧. ௩. (௰௮) யோசு. ௰௧, ௨௨. (௰௯) வச. ௨. ௨. இரா. ௰௮. ௭. யோசு. ௰௭. ௰௬, ௰௮. (௨௰) எண். ௰௪. ௨௪. உபா. ௧. ௩௬. யோசு. ௰௪. ௯, ௰௩. (௨௧) யோசு. ௰௫. ௬௩.

லேமில்வசித்த எபூசியரையுந்துரத்தவில்லை: எபூ
சியர் இந்நாள்வரைக்கும்பென்யாமீன் சந்ததியா
ரோடே யெரூஷலேமில் வசித்திருக்கிறார்கள்.
௨௨ யோசேப்பின் வமிசத்தாரும் பெத்தேலை யெ
திர்க்கப்புறப்பட்டார்கள்: யெகோவா அவர்
௨௩ கள் பட்சத்திலிருந்தார்.—முற்காலத்திலே லூஸ்
என்று பெயர்கொண்டிருந்த அந்தப் பெத்தேலை
வேவுபார்க்கும்படி யோசேப்பின்வமிசத்தார் ஆ
௨௪ ளனுப்பினார்கள்.-அந்த வேவுகாரர் ஒருமனிதன்
நகரத்திலிருந்து புறப்படக்கண்டு, அவனைநோக்
கி, நகரத்திற்பிரவேசிக்கிற வாசலை எங்களுக்குக்
காட்டித்தந்தால் உனக்குத்தயைசெய்வோமென்
௨௫ றார்கள்.—அப்படியே அவன் நகரத்திற் பிரவே
சிக்கிறவாசலை அவர்களுக்குக்காட்டிக் கொடுக்
க, அவர்கள் கட்கத்தின்வாயினால்நகரத்தைச்சங்
கரித்தார்கள்: அந்தமனிதனையும் அவன்குடும்பம்
௨௬ முழுவதையும் போகவிட்டுவிட்டார்கள்.–அந்த
மனிதன்எத்தியருடையதேசத்துக்குப்போய் ஒரு
நகரத்தையுண்டாக்கிஇந்நாள்வரைக்கும்வழங்கு
கிற லூஸ் என்னும்பெயரை அதற்கு இட்டான்.
௨௭ மனாஷேபேத்ஷியான் ஊராரையும், அதைச்
சேர்ந்த நகரங்களிலுள்ளவர்களையும், தானாகின்
நகரத்தாரையும், அதைச்சேர்ந்தஊராரையும், தோ
ரின் குடிகளையும் அதைச் சேர்ந்த ஊராரையும்,
இப்லியம் குடிகளையும், அதைச்சேர்ந்த ஊராரை
யும், மெகிதோவின் குடிகளையும், அதைச்சேர்ந்த
ஊராரையுந் துரத்திவிடவில்லை; அதனால் கானா
னியர் பின்னும் அத்தேசத்திலே வசிக்கப்பெற்
௨௮ றார்கள்.–இஸரவேலர் வலிமைபெற்றபொழுது,
அவர்களிடத்தில் திறைவாங்கிவந்ததேயொழிய,
அவர்களைமுழுவதுமாய்துரத்திவிடவில்லை.
௨௯ எப்ராயீமருங் கெசெரில் வசித்த கானானிய
ரைத்துரத்திவிடவில்லை, கானானியர் கெசெரில்
அவர்களுக்குள்ளே வசித்தார்கள்.
௩௰ செபுலோனியரும்கித்ரோன் குடிகளையும், நக
லோல் குடிகளையுந் துரத்திவிடவில்லை, கானா
னியர் அவர்களுக்குத்திறைகொடுக்கிறவர்களாய்
அவர்களுக்குள்ளேவாசம்பண்ணினார்கள்.
௩௧ ஆஷேரும் அக்கோவின் குடிகளையும், சீ
தோன், அக்லாப், அக்சீப், எல்பா, அபீக், ரேகோப்
பென்னும் ஸ்தானங்களின்குடிகளையுந்துரத்திவி
௩௨ டவில்லை.—அவர்களைத்துரத்திவிடாதபடியால்,
ஆஷேரியர் அத்தேசத்தில் வசிக்கிறவர்களாகிய
கானானியருக்குள்ளே வாசம்பண்ணினார்கள்.
௩௩ நப்தாலி பேத்ஷிமேஷின் குடிகளையும், பேத
னாத்தின் குடிகளையுந் துரத்திவிடாமல், அத்தே
சத்தாராகிய கானானியருக்குள்ளே வாசம்பண்
ணினார்கள். பேத்ஷிமேஷின் குடிகளும் பேத
னாத்தின்குடிகளும் அவர்களுக்குத்திறைகொடுக்
கிறவர்களானார்கள்.

மேலும் பள்ளத்திலிறங்கவிடாமல் தாண்சந் ௩௪
ததியாரை வலாற்காரம்பண்ணி, எமோரியர் அ
வர்களைமலையில் வசிக்கும்படி செய்தார்கள்.—
எமோரியர் எரெஸ்மலைகளிலும் அயர்லோனி ௩௫
லும் ஷகல்பீமிலும் வசிக்கப்பெற்றார்கள்: ஆயி
னும் யோசேப்பின் வமிசத்தார்மேற்கொண்ட
மையால் அவர்களுக்குத் திறைகொடுக்கிறவர்க
ளானார்கள்.
எமோரியரின் எல்லை ஷேலாதொடங்கி அக் ௩௬
ரபீமுக்குப்போகும் வழிபரியந்தமும் அதற்கப்
பாலுமிருந்தது.

## ௨. அதிகாரம்.

௧. போகீம் ஸ்தானத்தில் தூதன்சனங்களைக்கண்
டித்தல்: ௬. யோசுவா மரணமடைந்தபின்பு
பிற்சந்ததியார்துஷ்டராதல்: ௰௪. யெகோவா
அவர்கள்மேற் குரோதங்கொண்டும் இரங்கல்:
௨௰. இஸரவேலரைப்பரீட்சிக்கும்படிகானானி
யரில் சிலரை மீந்திருக்கவைத்தல்.

யெகோவாவின்தூதனவர்கில்காலிலிருந் ௧
து போகீமுக்குவந்து, நான் உங்களை எகிப்தி
னின்றும் புறப்படச்செய்து, உங்கள் பிதாக்க
ளுக்கு நான் ஆணையிட்டதேசத்தில் உங்களைக்
கொண்டுவந்ததுமன்றி, உங்களுடன்பண்ணின
என்னுடன்படிக்கையையும் ஒருக்காலுந் தள்ளி
விடேன்.—நீங்கள் இத்தேசத்தாரோடும் உடன் ௨
பாடுசெய்யாமல், அவர்களுடையவேதிகைகளை
யிடித்துவிடக் கடவீர்களென்று சொன்னேன்;
ஆயினும் நீங்கள் என்சொல்லைக்கேட்கவில்லை,
எனிப்படிச்செய்தீர்கள்.—இனிநான் அவர்களை ௩
உங்கள்முன்னிலையினின்றும் துரத்திவிடேன்,
அவர்கள் உங்களுக்கு விரோதிகளாவார்கள், அ
வர்கள்தேவர்கள் உங்களுக்குக்கண்ணிகளாவார்
களென்றார்.—யெகோவாவின் தூதனவர் ௪
இந்தவாக்குகளை இஸரவேலின் சமஸ்த சந்ததி
யாருக்குஞ் சொன்னபொழுது, சனங்கள் உரத்
தசத்தமிட்டு அழுதார்கள்.—அதனால் அவர்கள் ௫
அந்தஸ்தானத்துக்குப் போகீமென்று பெயர்தரித்
தார்கள்: அங்கே யெகோவாவுக்குப்பலியிட்
டார்கள்.
யோசுவா இஸரவேல் சந்ததியாராகிய சனங் ௬
களை அனுப்பினகாலத்தில், அவர்கள் அத்தேசத்
தைச் சுதந்தரித்துக்கொள்ளும்படி அவரவர் தங்
கள் தங்கள்சுதந்தரத்துக்குப்போனார்கள்.–யோசு ௭
வாவின் ஆயுள்வரைக்கும் யெகோவா இஸர
வேல்நிமித்தம் செய்த எல்லாப்பெரிய கிரியைக
ளையும் கண்டவர்களும், யோசுவாவுக்குப்பின்பு
உயிரோடிருந்தவர்களுமாகிய, முதியோருடைய
சகல நாள்களிலும், சனங்கள் யெகோவா
வைச்சேவித்தார்கள்.–நூனின் புத்திரனும் யெ ௮
கோவாவின் தாசனுமாகிய யோசுவா நூற்றுப்

(௨௨) வச.௰௧. (௨௩) யோசு.௨.௧. ஆதி.௰௮.௨. ஆதி.௨௮.௰௯. (௨௪) யோசு.௨.௰௨,௰௪. (௨௭) யோசு.௰௭.௰௧,௰௨,
௰௩. (௨௯) யோசு.௰௬.௰. ௧.இரா.௯.௰௬. (௩௰) யோசு.௰௯.௰௫. (௩௧) யோசு.௰௯.௨௪—௩௰. (௩௨) சங்.௱௬.௩௪,௩௫.
(௩௩) யோசு.௰௯.௩௮. வச.௩௨. வச.௩௰. (௩௫) யோசு.௰௯.௪௨. (௩௬) எண்.௩௪.௪. யோசு.௰௫.௩.—(௨. அதி. ௧.)
வச.௫. ஆதி.௰௭.௭. (௨) உபா.௭.௨. உபா.௰௨.௩. வச.௨௰. (௩) யோசு.௨௩.௰௩. அதி.௩.௬. யாத்.௨௩.௩௩. உபா.௭.
௰௬. (௬) யோசு.௨௨.௬. யோசு.௨௪.௨௮. (௭) யோசு.௨௪.௩௧. (௮) யோசு.௨௪.௨௯.

௯ பத்துவயதில் மரணமடைந்தான்.—எப்பிராயீமின்
மலைத்தேசத்துள்ள காகாஷ்மலைக்கு வடக்கே
அவனுடைய சுதந்தரத்தின் எல்லையாகிய திம்
னாத்சேரெசில் அவனை அடக்கம்பண்ணினார்
௰ கள்.—அக்காலத்திலிருந்த சந்ததியாரெல்லாரும்
தங்கள் பிதாக்களுடன் சேர்க்கப்பட்டார்கள்:
அவர்களுக்குப் பின்பு யெகோவாவையும்,
அவர் இஸ்ரவேல்நிமித்தம்செய்தகிரியைகளையும்
அறியாதவேறொரு சந்ததியார்தோன்றினார்கள்.—
௰௧ இஸ்ரவேல்சந்ததியார் யெகோவாவின் பார்
வைக்குத்தீங்குசெய்து,பாகால்களைச்சேவித்து,—
௰௨ தங்கள்பிதாக்களை எகிப்துதேசத்தினின்றும்புறப்
படச்செய்த அவர்கள் தேவனாகிய யெகோ
வாவைவிட்டு, தங்களைச் சூழ்ந்திருக்கிற சனங்
களின் தெய்வங்களாகிய அந்நிய தேவர்களைப்
பின்பற்றி, அவர்களை நமஸ்காரம்பண்ணி, யெ
௰௩ கோவாவைக் கோபப்படுத்தினார்கள்.—இப்ப
டி அவர்கள் யெகோவாவைவிட்டுப் பாகா
லையும், அஷ்தாரோத் விருட்சங்களையும் சேவித்
தார்கள்.
௰௪ அதனால் யெகோவா இஸ்ரவேல்மேல் உக்
கிரகோபம்மூள, கொள்ளையிடுகிற கொள்ளைக்கா
ரர்கையில் அவர்களை ஒப்பித்தார்: அவர்கள் அப்
புறந் தங்கள் சத்துருக்களுக்கு எதிர்த்து நிற்கக்கூ
டாதபடிக்கு, அவர்களைச் சுற்றியிருக்கிற அவர்
கள் சத்துருக்களின்கையில் அவர்களை விற்றார்.—
௰௫ யெகோவா சொல்லியபடிக்கும், யெகோ
வா அவர்களுக்காணையிட்டபடிக்கும்,அவர்கள்
புறப்படுந்தோறும் யெகோவாவின்கரம் அ
வர்களுக்கு விரோதமாயிருந்தது; அவர்கள் மிக
௰௬ வுங் கிலேசப்பட்டார்கள்.—யெகோவா நி
யாயாதிபதிகளை ஏற்படுத்தினார், அவர்கள் இவர்
களைக்கொள்ளையிடுகிறவர்களின் கையினின்றும்
௰௭ விடுவித்து இரட்சித்தார்கள்.—ஆயினும்அவர்கள்
தங்கள் நியாயாதிபதிகளுக்குச்செவிகொடாமல்,
விபசாரமார்க்கமாய் அந்நிய தேவர்களைப் பின்
பற்றி அவர்களை நமஸ்காரம் பண்ணினார்கள்:
யெகோவாவின் கட்டளைக்கமைந்து தங்கள்
பிதாக்கள் நடந்தபிரகாரம் தாங்களும்நடவாமல்,
அவர்களுடைய வழியைத்துரிதமாய்விட்டு வில
௰௮ கினார்கள்.—அவர்கள் தங்களை ஒடுக்கிக்கிலேசப்
படுத்துகிறவர்களினிமித்தம் ஓலமிடுவதை யெ
கோவாகேட்டு இரங்கினார்: யெகோவா அ
வர்கள் நிமித்தம் நியாயாதிபதிகளை ஏற்படுத்தி,
நியாயாதிபதி பட்சத்திலிருந்து, நியாயாதிபதி
யின் சமஸ்த நாள்களிலும் அவர்களை அவர்கள்
சத்துருக்கள்கையினின்றும் யெகோவா விடு
௰௯ வித்தார்.—நியாயாதிபதி மரணமடைந்தவுடனே,
அவர்கள் திரும்பித் தங்கள் பிதாக்களிலும் மிகக்
கெட்டவர்களாகி, அந்நியதேவர்களைப்பின்பற்
றிச்சேவித்து அவர்களை நமஸ்காரம் பண்ணி,
தங்கள் சுயகிரியைகளையுந் தங்கள் துன்மார்க்கத்
தையும் விடாமல் நடந்தார்கள்.
ஆதலால்யெகோவா இஸ்ரவேல்மேல்கோ ௨௰
பம்மூள, இந்தச்சனங்கள் தங்கள்பிதாக்களுக்கு
நான் ஏற்படுத்திய என்னுடன்படிக்கையைமீறி,
என்வாக்குக்குச் செவிகொடாத படியினால்,—
யோசுவாமரித்தபின் மீந்திருந்த சாதியாரிலொரு ௨௧
வரையும்,நான் இனிஅவர்கள்முன்னிலையினின்
றுந் துரத்திவிடேன்.—இப்படி இஸ்ரவேலர் ௨௨
யெகோவா அருளிய வழியைத்தங்கள்பிதாக்
கள் காத்துநடந்ததுபோலத் தாங்களும் காத்து ந
டப்பார்களோ, மாட்டார்களோ என்பதை,அவர்
கள்மூலமாகப் பரிட்சிப்பேனென்றார்.—அப்ப ௨௩
டியே யெகோவா அந்தச்சாதியாரை யோசு
வாவின்கையில் ஒப்பியாமலும், அவர்களைச் சீக்
கிரமாய்த் துரத்திவிடாமலும் இருக்கச்செய்தார்.

## ௩. அதிகாரம்.

௧. மீதியான சனங்களுடன் இஸ்ரவேலர் கலந்து துஷ்டராதல்: ௮. ஒத்னியேல் அவர்களைக்கூசானரிசத்தாயீமினின்று இரட்சித்தல்: ௰௨. மோவாபுதேசத்தின் இராசாவாகியஎக்லோனினின்றும் ஏகூத் அவர்களை யிரட்சித்தல்: ௩௧. ஷம்கார் அவர்களைவிடுவித்தல்.

கானான்தேசத்திலே நடந்த யுத்தங்களிலொன் ௧
றையும் அறியாதவர்களாகிய இஸ்ரவேலரைப்ப
ரிட்சை பண்ணும்பொருட்டும்,—இஸ்ரவேல்சந் ௨
ததியாரின் வமிசத்தாருக்குயுத்தம் பயில்விக்கும்
பொருட்டும், யெகோவா மீதியாகவிட்டசா
தியார்;—பெலிஸ்தியருடைய அதிபதிகள் ஐந்து ௩
பேரும், சகலகானானியரும், சீதோனியரும், பா
கால்எர்மோன்முதல் அமாத்தின்பிரவேசம்வரை
க்கும்லிபானோன்மலைகளில்வசித்திருந்தஈவியரு
மாகிய,இவர்களே.—இஸ்ரவேலர் யெகோவா ௪
மோசேயைக்கொண்டு தங்கள் பிதாக்களுக்கு வி
தித்த கட்டளைகளுக்கமைந்து நடப்பார்களோ
வென்றுசோதிக்கும்பொருட்டு, அவர்கள்விடப்
பட்டிருந்தார்கள்.—இப்படியே இஸ்ரவேல்சந்த ௫
தியார் கானானியரும், எத்தியரும், அம்மோனி
யரும், பெரீசியரும், ஈவியரும், எபூசியருமாகிய
இவர்கள்மத்தியில் வசித்திருந்தார்கள்.—அவர்கள் ௬
புத்திரிகளை விவாகம்பண்ணியும், தங்கள்புத்திரி
களை அவர்கள் புத்திரருக்குக்கொடுத்தும், அவர்
கள் தேவர்களைச் சேவித்தும் வந்தார்கள்.—இப் ௭
படி இஸ்ரவேல்சந்ததியார் யெகோவாவின்
பார்வைக்குத்தீங்கானதைச்செய்து, தங்கள் தே

(௯) யோசு.௨௪.௩௰. யோசு.௰௯.௫௰. யோசு.௨௪.௩௰,. (௰) யாத்.௫.௨. ௧.சாமு.௨.௰௨. ௧.நாளா.௨௮.௯. எரே.௯.௩. கலா.௪.௮. ௨.தெச.௧.௮. தீத்.௧.௬. (௰௨) உபா.௩௧.௰௬. உபா.௬.௰௪. யாத்.௨௰.௫. (௰௩) அதி.௩.௭. (௰௪) அதி.௩.௮. சங்.௱௬.௪௰,௪௧,௪௨. ௨.இரா.௰௭.௨௰. அதி.௩.௮. அதி.௪.௨. சங்.௪௪.௰௨. ஏசா.௫௰.௧. லேவி.௨௬.௩௭. யோசு.௭.௰௨,௰௩. (௰௫) லேவி.௨௬. உபா.௨௮. (௰௬) அதி.௩.௯,௰,௰௫. ௧.சாமு.௰௨.௰௧. அப்.௰௩.௨௰. (௰௭) யாத்.௩௪.௰௫,௰௬. லேவி.௰௭.௭. (௰௮) யோசு.௧.௫. ஆதி.௬.௬. உபா.௩௨.௩௬. (௰௯) அதி.௩.௰௨. அதி.௪.௧. (௨௰) வச.௰௪. யோசு.௨௩.௰௫. (௨௧) யோசு.௨௩.௰௩. (௨௨) அதி.௩.௧,௪. உபா.௮.௨,௰௬.—(௩. அதி. ௩.) அதி.௨.௨௧,௨௨. யோசு.௰௩.௩. (௪) அதி.௨.௨௨. (௫) சங்.௱௬.௩௫. (௬) யாத்.௩௪.௰௬. உபா.௭.௩. (௭) அதி.௨.௰௧. அதி.௨.௰௩. யாத்.௩௪.௰௩.

வனாகிய யெகோவாவைமறந்து, பாகாலையு
ம் அஷரீவிருட்சங்களையுஞ்சேவித்துவந்தார்கள்.
௮ அதினால் யெகோவா இஸரவேலர்மேல்
கோபமூள,அவர்களை அரம்நாகாரீம் இராசனாகி
யகூஷான்ரிஷதயிமின்கையிலே விற்றுப்போட்
டார். இஸரவேல்சந்ததியார் கூஷான்ரிஷதயி
மிடத்தில் எட்டுவருஷம் ஊழியஞ் செய்தார்
௯ கள்.—பின்பு இஸரவேல்சந்ததியார் யெகோ
வாவைநோக்கி ஓலமிட, யெகோவா இஸர
வேல்சந்ததியாரை இரட்சிக்கும்பொருட்டு, அ
வர்களுக்குக்காலேபின்சகோதரனான கேனாசின்
புத்திரனாகிய ஒத்னியேல் என்னும் ஒரு இரட்ச
௰ கனைத்தோற்றுவித்தார்.—அவன்மேல் யெகோ
வாவின் ஆவிவந்ததினால், அவன் இஸரவேல
ருக்கு நியாயாதிபதியாகி யுத்தஞ்செய்யப்புறப்
பட்டான்: யெகோவா அவன்கையில் அ
ரம்நாகாரீம்இராசனாகியகூஷான்ரிஷதயீமையொப்
பித்தார்: அவன்கை கூஷான்ரிஷதயீமை மேற்
௰௧ கொண்டது.—தேசம் நாற்பதுவருஷம் அமைவா
யிருந்தது: கேனாசின் புத்திரனாகிய ஒத்னியேல்
மரணமடைந்தான்.
௰௨ இஸரவேல்சந்ததியார் திரும்பவும் யெகோ
வாவின் பார்வைக்குத் தீங்கானதைச்செய்தார்
கள். அவர்கள் யெகோவாவின் பார்வைக்
குத்தீங்கானதைச்செய்தபடியினாலே, யெகோ
வாமோவாபியரின்இராசனாகியஎக்லோனைஇஸ
ரவேலரை விரோதிக்கும்படி பலப்படுத்தினார்.—
௰௩ அவன் அம்மோன் சந்ததியாரையும், அமலேக்கி
யரையுங் கூட்டிக்கொண்டுபோய், இஸரவேல
ரைச்சங்கரித்து, பேரீந்துநகரத்தை வசப்படுத்தி
௰௪ னான்.—இஸரவேல்சந்ததியார் பதினெட்டுவரு
ஷம் மோவாபின் இராசனாகிய எக்லோனுக்கு
௰௫ ஊழியஞ்செய்தார்கள்.—பின்பு இஸரவேல் சந்
ததியார்யெகோவாவைநோக்கி ஓலமிட,யெ
கோவா அவர்களுக்கு இரட்சகனாக எமினியி
ன்பௌத்திரனும், கேராவின்புத்திரனும், இடது
கைவழக்கமுள்ளவனுமாகிய ஏகூத்தென்பவனை
த்தோற்றுவித்தார். அவன்கையில் இஸரவேல்சந்
ததியார்மோவாபின் இராசனாகிய எக்லோனுக்
௰௬ குவெகுமதிகொடுத்தனுப்பினார்கள்.-ஏகூத்தென்
பவன் இருபுறமுங் கூருள்ள ஒருமுழநீளமான
ஒரு குற்றுவாளையுண்டுபண்ணி, அதைத்தன்வஸ்
திரத்துக்குள்ளே தன் வலதுதொடையிலே கட்
௰௭ டிக்கொண்டு,-மோவாபின் இராசனாகியஎக்லோ
னுக்குவெகுமானத்தைக்கொண்டுபோனான்: எக்
௰௮ லோன் மிகவும்புஷ்டியானவன்.—இவன்வெகு
மானத்தைக்கொடுத்து முடிந்தபின்பு, வெகுமா
னத்தைச்சுமந்துவந்தசனங்களையனுப்பிவிட்டு,—
௰௯ கில்காலிலுள்ளதொழிற்படுத்திய விக்கிரகமிருக்
கிற ஸ்தானத்தினின்றுந்திரும்பிவந்து, இராசா
வே, நான் உம்முடனே சொல்லவேண்டிய இ
ரகசியமான ஒருகாரியமுண்டென்று சொல்ல;
அதற்கவன் பொறுஎன்றான்: அவன் சமீபத்தில்
நின்றயாவரும் அவனைவிட்டு வெளியேபோய்
விட்டார்கள்.—தான் தனித்திருக்கும்படி செய் ௨௰
யப்பட்ட குளிர்ச்சியான அறையிலிருந்த எக்
லோன்சமீபத்தில் ஏகூத்போய், அவனைநோக்கி,
தேவனருளிய செய்தியொன்று உமக்குச்சொல்
லவேண்டுமென்றுசொல்ல; அவன் தன் ஆசனத்
தைவிட்டெழுந்தான்.—உடனே ஏகூத் தன் இ ௨௧
டது கையை நீட்டித் தன்வலது தொடையிற்
கட்டியிருந்த சிறுவாளையுருவி அதை அவன் வ
யிற்றில்பாய்ச்சினான்.—பிடி அலகோடே உட் ௨௨
புகுந்தது: அவனுடைய வயிற்றுக்குட்போன
சிறுவாளை இவன் இழுக்கக்கூடாதபடிக்கு நி
ணம் அலகைச்சுற்றி அடைத்தது; அதுபிற்புறத்
திலே புறப்பட்டது.—ஏகூத் புறப்பட்டு அறை ௨௩
யின் கதவைப்பூட்டிக்கொண்டு, கொலுக்கூடத்
தின் வழியாய்ப்போய்விட்டான்.—இவன்போ ௨௪
னபின்பு அவனுடைய பணிவிடைக்காரர் வந்
து அறையின் கதவு பூட்டியிருக்கக்கண்டு, அ
வர் தமதுகுளிர்ச்சியான அறையில் தமது பாதங்
களை மூடிக்கொண்டிருக்கிறாரென்றார்கள்.—அ ௨௫
வர்கள்காத்திருந்துவெட்கிப்போனார்கள்: அவன்
அந்த அறையின் கதவைத்திறக்கவில்லை; அத
னால் அவர்கள் ஒரு திறவுகோலையெடுத்துத்திறந்
தபொழுது, தங்கள்பிரபுதரையிலேவிழுந்துசெத்
துக் கிடக்கக்கண்டார்கள்.—அவர்கள் தாமதித் ௨௬
து நிற்க ஏகூத் தப்பியோடி, தொழிற்படுத்திய
விக்கிரக ஸ்தானத்தைக்கடந்து செயிராத்துக்குப்
போனான்.—அங்கே சேர்ந்தவுடனே எப்ராயீம் ௨௭
மலைகளில் அவன் எக்காளமூதிக்கொண்டு முன்
செல்ல, இஸரவேல்சந்ததியார்அவனோடேகூட
மலைகளிலிருந்திறங்கினார்கள்.—அவன் அவர்க ௨௮
ளைநோக்கி, யெகோவா மோவாபியராகிய
உங்கள் பகைவரை உங்கள் கைகளில் ஒப்பித்
துவிட்டார், என்னைப் பின்றொடர்ந்துவாருங்க
ளென்றான். அவர்கள் அவனைப்பின்றொடர்ந்து
போய், மோவாபியர் யோர்தானைக்கடக்கத்தக்க
துறைகளைப்பிடித்து,ஒருவனையுங்கடக்கவொட்
டாமல்,—அக்காலத்தில் ஏறக்குறைய மோவா ௨௯
பியரில் பதினாயிரம்பேரைக் கொன்றுபோட்
டார்கள். அவர்களெல்லாரும் புஷ்டியுள்ளவர்
களும் பராக்கிரம வீரர்களுமாயிருந்தார்கள்: அ
வர்களிலொருவனுந் தப்பிப்போகவில்லை.—அந் ௩௰
நாளிலே மோவாபியர் இஸரவேலரின் கைக்கு
வசப்பட்டார்கள். தேசம் எண்பது வருஷம் அ
மைவாயிருந்தது.

---

(௮) அதி.௨.௰௪. அபகூ.௩௭. (௯) அதி.௬.௭. அதி.௰.௰. ௧.சாமு.௰௨.௰. நிகி.௯.௨௭. அதி.௨.௰௬. அதி.௧.௰௩. (௰) எண்.௨௭.௰௮. அதி.௯.௩௪. ௧.சாமு.௰௧.௬. ௨.நாளா.௰௫.௧. (௰௨) அதி.௨.௰௯. ௧.சாமு.௰௨.௯. (௰௩) அதி.௫.௰௪. அதி.௧.௰௬. உபா.௨௮.௪௮. (௰௫) வச.௯. சங்.௭௮.௩௪. அதி.௨௰.௰௬. (௰௯) யோசு.௪.௨௰. (௨௰) ஆமோ.௩.௰௫. (௨௪) ௧.சாமு.௨௪.௩. (௨௭) அதி.௫.௰௪. அதி.௬.௩௪. ௧.சாமு.௰௩.௩. யோசு.௰௭.௰௫. (௨௮) ௧.சாமு.௰௭.௪௭. யோசு.௨.௭. அதி.௰௨.௫. (௩௰) வச.௰௧.

௩௧ அதற்குப்பின்பு அனாத்தின்புத்திரனாகிய ஷம்
கார் தோனறி, ஒரு தாற்றுக்கோலினால் பெலிஸ்
தியரில் அறுநூறுபேரைச் சங்காரஞ்செய்து,இப்
படி அவனும் இஸரவேலரை இரட்சித்தான்.

## ௪. அதிகாரம்.

க. தெபோராள் பாரகைக்கொண்டு இஸரவேல
ரை விடுவித்தல்: ௰அ. யாகேல் சிசெராவைக்
கொல்லல்.

ஏகூத் மரணமடைந்தபின்பு, இஸரவேல்சந்தி
யார் திரும்பவும் யெகோவாவின் பார்வைக்
௨ குத் தீங்கானதைச்செய்துவந்தார்கள்.—அதினால்
யெகோவா அவர்களைக்கானானிலுள்ள ஆத்
சோரிலிருந்து அரசாண்ட இராசனாகிய யாபீன்
கையில் விற்றுப்போட்டார். அவனுடைய சே
னாபதிக்குச்சிசெராவென்றுபெயர். அவன் கோ
யீமருடைய நகரமாகிய அரோஷெத்திலே வசித்
௩ திருந்தான்.—அவன் தொளாயிரம் இருப்பு இர
தங்களையுடையவனாய், இருபதுவருஷகாலம் இ
ஸரவேல் சந்தியாரை வலிமையோடுந் துயரப்
படுத்தினபடியினாலே; இஸரவேலர் யெகோ
வாவைநோக்கி ஓலமிட்டார்கள்.
௪ அக்காலத்திலே லப்பீதோத்தின் மனைவியாகி
யதெபோராளென்னுந்தீர்க்கதரிசியானவள் இ
௫ ஸரவேலருக்கு நியாயாதிபதியாயிருந்தாள்.—அ
வள் எப்ராயீமின் மலைத்தேசமானராமாவுக்கும்
பெத்தேலுக்கும் மத்தியிலுள்ள தெபோராளின்
பேரீந்துமரத்தின்கீழே வாசம்பண்ணினாள். அங்
கே இஸரவேல் சந்தியார்நியாயத்தீர்ப்புக்கேட்
௬ க அவளிடத்திற்கு ஏறிப்போவார்கள்.—அவள்
நப்தாலியிலுள்ளகேதேஷிலிருக்கிற அபினோகா
மின் புத்திரனாகிய பாரகைவரவழைத்து அவனை
௭ நோக்கி,—நான் யாபீனுடைய சேனாபதியாகிய
சிசெராவையும், அவனுடைய இரதங்களையும்,
அவனுடைய பெருங்கூட்டத்தையும், கீஷோன்
பள்ளத்திலே உன்னிடத்திலேவர இழுத்து, அவ
னை உன்கையில்ஒப்பித்துவிடுவேன்; ஆகையால்
நீ நப்தாலிசந்தியாரிடத்திலும் செபுலோன் சந்
தியாரிடத்திலும் பதினாயிரம்பேரைக் கூட்டிக்
கொண்டு, தாபோர்மலைக்குப்போவென்று இஸ
ரவேலின் தேவனாகிய யெகோவா உனக்
௮ குக்கட்டளையிடவில்லையா வென்றாள்.—அதற்
குப்பாரக், நீ என்னோடேவராவிட்டால் நான்
௯ போகமாட்டேனென்றான்.—அவள், நான் நிச்ச
யமாய் உன்னோடே வருகிறேன்; ஆகிலும் நீ
செய்யும்பிரயாணம் உனக்கு மேன்மையாய்மு
டியாது:ஒரு ஸ்திரியின்கையிலே யெகோவா
சிசெராவை விற்றுப்போடுவாரென்றாள். பின்
பு தெபோராள் எழுந்து பாரகுடனேகேதேஷுக்
குப்போனாள்.

அப்பொழுதுபாரக் செபுலோனியரையும் நப் ௰
தாலியரையுங்கேதேஷுக்குவரவழைப்பித்து,பதி
னாயிரம்பேரைத் தனக்குப்பின்வரச்செய்து ஏறி
னான்; தெபோராளும் அவனோடேபோனாள்.—
கேனியனான ஏபெர் மோசேயின் மாமனாகிய ஓ ௰௧
பாப்பின் சந்ததியாராயிருக்கிற கேனியரைவிட்
டுப்பிரிந்து, தன்கூடாரத்தைக் கேதேஷுக்குச் ச
மீபத்திலுள்ள சாகானி மென்னும் சமபூமியிலே
போட்டிருந்தான்.—அபீனோகாமின் புத்திரனா ௰௨
கிய பாரக் தாபோர் மலையிலேறிப்போனானென்
று சிசெராவுக்குத்தெரிவிக்க,—சிசெரா தன்னு ௰௩
டைய தொளாயிரம் இருப்புரதங்களெல்லாவற்
றையும், கோயீமின் நகரமாகிய அரோஷெத் மு
தல் கீஷோன் நதிவரைக்குமுள்ள தன்னுடைய
சனங்களெல்லாரையும், வரவழைத்தான்.—அப் ௰௪
பொழுது தெபோராள் பாரகைநோக்கி, யெ
கோவா சிசெராவை உன்கையில் ஒப்பிக்கும்
நாளிதுவே; ஆதலால் நீ யெழுந்துபோ, யெ
கோவா உனக்கு முன்செல்லவில்லையாவென்
றாள்: உடனே பாரகும் அவனுடனேகூடப்பதி
னாயிரம் பேருந் தாபோர் மலையிலிருந்திறங்கி
னார்கள்.—யெகோவா சிசெராவையும், அ ௰௫
வனுடைய சமஸ்த இரதங்களையும், அவன்சமஸ்
தசேனைகளையும், பாரகுக்குமுன்பாகக் கட்கத்
தின் வாயினாலே சின்னபின்னப் படுத்தினார்:
சிசெரா தன் இரதத்தைவிட்டிறங்கிக்கால்நடை
யாய் ஓடிப்போனான்.—பாரக் கோயீமின் நகர ௰௬
மாகிய அரோஷேத் வரைக்கும் அந்த இரதங்க
ளையுஞ் சேனைகளையுந் தொடர்ந்துபோனான், சி
செராவுடைய சமஸ்தசேனைகளும் கட்கத்தின்
வாயினால் விழுந்தன; ஒருவனும் மீதியாயிருக்க
வில்லை.—சிசெராமாத்திரங்கால்நடையாய் ஓடி, ௰௭
ஆத்சோரின் இராசனாகிய யாபீனுக்கும், கேனி
யனான ஏபெருக்கும் சமாதானமுண்டாயிருந்
தபடியினாலே, கேனியனான ஏபெருடையமனை
வியாகிய யாகேலின்கூடாரத்திற்சேர்ந்தான்.
அப்பொழுது யாகேல் வெளியே சிசெராவுக் ௰௮
கெதிர்கொண்டுபோய் அவனைநோக்கி, என்நாய
னாரே, உள்ளேவாரும், என்னிடத்தில் உள்ளே
வாரும், பயப்படவேண்டாமென்றுசொல்ல, அ
வன் கூடாரத்துக்குள்ளே அவளிடத்திற்போ
னான். அவள் அவனை ஒருசமுக்காளத்தினால் மூ
டினாள்.—பின்பு சிசெரா அவளைநோக்கி, எனக் ௰௯
குத்தாகமாயிருக்கின்றது,குடிக்கக்கொஞ்சந்தண்
ணீர் தாவென்றான். உடனேஅவள் பால்துருத்தி
யைத்திறந்து அவனுக்குக் குடிக்கக்கொடுத்து,
திரும்பவும் அவனைமூடினாள்.—அவன் அவளை ௨௰
நோக்கி, நீகூடாரவாசலிலே நின்றுகொண்டியா
வனொருவன்வந்து இங்கேயாராகிலுமுண்டோ
வென்றுகேட்டால், இல்லையென்றுசொல்லென்

---

(௩௧) அதி.௫.௬,அ.௧.சாமு.௰௩.௰௯,௨௨.௧.சாமு.௰௭.௪௭,௫௰. அதி.௨.௰௬. அதி.௪.௧,௩. ௧.சாமு.௪.௧.—(௪.அதி.௧.) அதி.௨.௰௯. (௨) அதி.௨.௰௪. யோசு.௰௧.௧,௰. ௧.சாமு.௰௨.௯. வச.௰௩,௰௬. (௩) அதி.௧.௰௯. அதி.௫.அ. (௫) ஆதி. ௩௫.அ. (௬) எபி.௰௧.௩௨. யோசு.௰௯.௩௭. (௭) யாத்.௰௪.௪. அதி.௫.௨௧. ௧.இரா.௰அ.௪௰. (௯) அதி.௨.௰௪. (௰) அதி. ௫.௰அ. யாத்.௰௧.அ. ௧.இரா.௨௰.௰. (௰௧) அதி.௧.௰௬. எண்.௰.௨௯. வச.௬. (௰௪) உபா.௯.௩. ௨.சாமு.௫.௨௪. ஏசா. ௫௨.௰௨. (௰௫) அதி.௫.௨௫.

உக ரூன்.—பின்பு எபெருடைய மனைவியாகிய யா
கேல் கூடாரத்துமுளையையெடுத்துத் தன்கையி
லேசுத்தியைப்பிடித்துக்கொண்டுமெள்ள அவனி
டத்திற்போய், அவனுடையநெறியில் ஒருமு
ளையைஅடித்துவிட்டாள், அது உருவிப்போய்த்
தரையிலே புதைந்தது; அதினால் ஆயாசமாய்த்
உஉ தூங்கின அவன்இறந்துபோனான்.-பின்பு சிசெ
ராவைத் துரத்துகிற பாரக் வந்தான். அப்பொழு
து யாகேல் வெளியே அவனுக்கெதிர்கொண்டு
போய், நீர்வாரும், நீர்தேடுகிறமனிதனை உமக்குக்
காண்பிப்பேனென்று அவனுக்குச்சொன்னாள்:
அவன் அவளிடத்துக்குப்போய், சிசெரா செத்
துக்கிடக்கிறதையும், முளை அவனுடையநெறியி
உ௩ லே அடித்திருக்கிறதையுங்கண்டான்.-இப்படித்
தேவன் அந்நாளிலே கானானின் இராசனாகிய
யாபீனை இஸ்ரவேல் சந்ததியார்முன்தாழ்ச்சிப்ப
உச டுத்தினார்.-இஸ்ரவேல் சந்ததியாருடையகைவல்
லமை கானான் இராசனாகிய யாபீனைச் சங்கரித்
துவிடுமளவும் வரவர அதிகரித்தது.

## ரு. அதிகாரம்.

தெபோராள்பாரக்கென்பவர்கள்பாட்டுப்பாடல்.

அந்நாளிலேதெபோராளும்அபீனோகாமின்புத்
உ திரனாகிய பாரக்கும்பாட்டாக,—யெகோவா
இஸ்ரவேலருக்காக நீதியைச் சரிக்கட்டினதினி
மித்தமும், சனங்கள் மனப்பூருவமாய்ச் சேர்ந்த
தினிமித்தமும் யெகோவாவை வாழ்த்துங்
௩ கள்.—இராசாக்களே, கேளுங்கள், பிரபுகளே,
செவிகொடுங்கள்; நான் யெகோவாவைப்பா
டுகிறேன்; இஸ்ரவேலின் தேவனாகிய யெ
கோவாவைக் கீர்த்தனம் பண்ணுகிறேன்.—
ச யெகோவாவே, நீர் சேயீரிலிருந்து புறப்பட்
டு, ஏதோமின் வெளியிலிருந்து நடந்துவருகை
யில், பூமியதிர்ந்தது, வானமும்சொரிந்தது, மே
ரு கங்களும் மழைபொழிந்தன.—யெகோவா
வின் சமுகத்தினின்று பருவதங்களும், விசேஷ
மாகச்சீனாயும்,இஸ்ரவேலின் தேவனாகிய யெ
சு கோவாவின்சமுகத்தில் உருகின.-அனாத்தின்
புத்திரனாகிய ஷம்காரின் நாள்களிலும், யாகே
லின் நாள்களிலும், பெரும்பாதைகள் பாழாய்க்
கிடந்தன, பிரயாணக்காரர் கோணலான வழி
எ யில் நடந்தார்கள்.—தெபோராளாகிய நான் எ
ழும்பி, இஸ்ரவேலருக்கு மாதாவாய் எழும்புமள
வும், கிராமங்கள் பாழாய், இஸ்ரவேலரின் கிரா
அ மங்களே பாழாய்க்கிடந்தன.—அவர்கள் புதிய
தேவர்களைத் தெரிந்துகொண்டார்கள்; அப்பொ
ழுது வாசல்களிலே யுத்தம்நடந்தது: இஸ்ரவே
லர்நாற்பதினாயிரவருக்குள்ளும்கேடகமும், ஈட்
டியுங் காணப்பட்டதுண்டா.—என் சிந்தை கூ
சனங்களுக்குள் மனப்பூருவமாயெழுந்த இஸ்ர
வேலரின் அதிபதிகளை நாடுகின்றது. யெகோ
வாவை வாழ்த்துங்கள்.—வெண்கழுதைகளின் ய
மேலேறுகிறவர்களே, நியாயாசனத்தில் வீற்றி
ருக்கிறவர்களே, பிரயாணக்காரரே, சிந்தித்துக்
கொள்ளுங்கள்.—சலம் மொண்டுகொள்ளுகிறஸ் யக
தானங்களில், வில்லாளருடைய சத்தத்தைநீங்கி
னவர்கள்அங்கே யெகோவாவின்நியாயக்கிரி
யைகளையும், அவர் இஸ்ரவேலரின் கிராமங்க
ளுக்குச்செய்த நியாயக்கிரியைகளையும், புகழு
வார்கள்: அது முதல் யெகோவாவுக்குரிய ச
னங்கள் வாசல்களிலே கூடிவருவார்கள்.—வி யஉ
ழி, விழி, தெபோராளே: விழி, விழி, பாட்டுப்
பாடு:பாரக்கே, எழும்பு, அபீனோகாமின் புத்திர
னே, உன்னைச்சிறையாக்கினவர்களைச் சிறையா
கநடத்திவா.—மீதியாயிருந்தவன் சனங்களின் ய௩
பிரபுகளை ஆளச்செய்வார்: யெகோவா ப
ராக்கிரமசாலிகளை எனக்குமுன்பாக ஏற்படுத்தி
னார்.— அமலேக்கிலே வேரூன்றியிருந்தவர்கள் யச
எப்ராயீமினின்றுந் தோன்றினார்கள்; உன்சனங்
களுக்குள்ளே பேன்யமீனியர் உனக்குப்பின்
சென்றார்கள்; மாகீரிலிருந்து அதிபதிகளும், செ
புலோனிலிருந்து எழுது கோலைப்பிடித்தவர்க
ளும் இறங்கிவந்தார்கள்.—ஈஷகாரும், பாரக்கும், யரு
ஈஷகாரின் பிரபுகளும், தெபோராளோடேயி
ருந்தார்கள்: அவர்கள் காலாள்களாகத் தாழ்ந்தபூ
மிக்குப்போனார்கள். ரூபேனின் பிரிவினைகளி
னிமித்தம் மனோசிந்தனைகள்மிகுதியாயின.-ஆடு யசு
களின் சத்தத்தைக்கேட்கும்படி, நீ தொழுவங்க
ளுக்குள்ளே தங்கிவிட்டதென்ன. ரூபேனின்
பிரிவினைகளினிமித்தம் மனோசிந்தனைகள் மிகு
தியாயின.—கிலியாத்தியர் யோர்தானுக்கு அக்க யஎ
ரையிலிருந்து விட்டார்கள்: தாணூரார்கப்பலி
லே தங்கிவிட்டதேது, ஆஷேர் கடற்கரையில்
வாசம்பண்ணி, தங்கள் குடாக்களிலே தங்கி
விட்டார்கள்.—செபுலோனியரும், நப்தாலிய யஅ
ருந் தங்கள் பிராணன்களை அற்பமும் மதியாமல்,
வெளியிலுள்ள உயர்ந்த ஸ்தானங்களிலேபோ
னார்கள்.—இராசாக்கள்வந்து யுத்தம்பண்ணினார் யகூ
கள், அப்பொழுது கானானின் இராசாக்கள் மெ
கிதோவின் சலசமீபத்திலுள்ள தானாகிலே யுத்
தம் பண்ணினார்கள்; அவர்கள் திரவியஞ் சம்
பாதிக்க வில்லை.—அணியணியாய் நிற்கும் நட் உய
சத்திரங்களும்சிசெராவையெதிர்த்துயுத்தஞ்செய்
தன; வானத்தினின்றும்யுத்தஞ்செய்தன.-கீஷோ உக

(உக) அதி.ரு.உசு. (உ௩) சங்.யஅ.சஎ.—(ரு. அதி. க.) யாத்.யரு.உ. (உ) சங்.யஅ.சஎ. உ.நாளா.யஎ.யசு. (௩) உபா.௩உ.க,௩. சங்.உ.ய. (ச) உபா.௩௩.உ. உ.சாமு.உஉ.அ. சங்.சுஅ.அ. ஏசா.சுச.௩. அபகூ.௩.௩,ய. (ரு) உபா.ச.யக. சங்.கஎ.ரு. யாத்.யகூ.யஅ. (சு) அதி.௩.௩க. அதி.ச.யஎ. லேவி.உசு.உஉ. உ.நாளா.யரு.ரு. ஏசா.௩௩.அ. புல.க.ச,யஅ. (எ) ஏசா.சக.உ௩. (அ) உபா.௩உ.யசு. அதி.உ.யஉ,யஎ. க.சாமு.ய௩.யகூ,உஉ. அதி.ச.௩. (கூ) வச.உ. (ய) சங்.௱ரு.உ. சங்.௱சரு.ரு. அதி.ய.ச. அதி.யஉ.யச. சங்.௱எ.௩உ. (யக) க.சாமு.யஉ.எ. சங்.௱சரு.எ. (யஉ) சங்.ருஎ.அ. சங்.சுஅ.யஅ. (ய௩) சங்.சகூ.யச. (யச) அதி.௩.உஎ. அதி.௩.ய௩. எண்.௩உ.௩கூ,சய. (யரு) அதி.ச.யச. (யசு) எண்.௩உ.க. (யஎ) யோசு.ய௩.உரு,௩க. யோசு.யகூ.உகூ,௩க. (யஅ) அதி.ச.ய. (யகூ) அதி.ச.யசு. சங்.சச.யஉ. வச.௩ய. (உய) யோசு.ய.யக. சங்.எஎ.யஎ,யஅ. அதி.ச.யரு. (உக) அதி.ச.எ.

ன் நதி, புராதனநதியாகிய கீஷோன் நதியே, அ
வர்களை வாரிக்கொண்டுபோயிற்று. என் ஆத்து
௨௨ மமே, நீபராக்கிரமசாலியைமிதித்தாய்.-அப்பொ
ழுது வேகத்திஞலே, பராக்கிரமக் குதிரைகள்
செல்லும்வேகத்திஞலேகுளம்புகள்தகர்ந்துபோ
௨௩ யின.-யெகோவாவின் தூதஞனவர், மேரோ
சைச்சபித்துவிடுங்கள், அந்நகரத்தார் யெகோ
வாவுக்குத்துணையாகவும், யெகோவாவுக்குத்
துணையாகும்படி பராக்கிரமசாலிகளுக்கு விரோ
தமாகவும் வராமலிருந்தபடியிஞலே,அவர்களைக்
௨௪ கடிதாய்ச் சபித்துவிடுங்களென்கிருர்.—ஸ்திரிக
ளுக்குள்ளே கேனியஞன ஏபெரின் மனைவியா
கிய யாகேலே புகழப்படுவாள், கூடாரத்தில்வா
சஞ்செய்கிற அவளேஸ்திரிகளுக்குள்ளேபுகழப்
௨௫ படுவாள்.-அவன்தண்ணீரைக்கேட்க, அவள்பா
லைக்கொடுத்தாள்; சிறந்தபாத்திரத்திலே வெண்
௨௬ ணெயைக்கொண்டுவந்து கொடுத்தாள்.—தன்கை
யால்முளையையும், தன்வலதுகையால் தொழிற்
காரனுடைய சுத்தியலையும் பிடித்துக்கொண்டு;
சிசெராவை அடித்தாள், அவனுடைய தலையில்
அடித்து, அதைநசுக்கி, அவனுடைய நெறியை
௨௭ உருவக்குத்திஞள்.—அவன் அவளுடையகால
டியிலே முடங்கி விழுந்துகிடந்தான்: அவளு
டையகாலடியிலே முடங்கிவிழுந்தான்: முடங்
௨௮ கின இடத்தில் அவன்செத்துக்கிடந்தான்.—சி
செராவின் மாதா சாளரவாசலினின்று பலகணி
வழியாகப்பார்த்து, அவனுடைய இரதம்வரநே
ரஞ்செல்லுகிறதென்ன, அவனுடைய இரதங்க
ளின்உருள்கள்தாமதிக்கிறதென்னவென்றுபுலம்
௨௯ பிஞள்.—விவேகிகளாகிய அவள்தோழிமார் அவ
௩௰ ளுக்கு உத்தரஞ்சொன்னதுமன்றி,—அவளும், அ
வர்கள் நினைத்துப்போனகாரியம் சித்தியாகவில்
லையா, அவர்கள் கொள்ளையிட்ட பொருளைப்ப
கிர்ந்து, ஒவ்வொருவருக்கு இரண்டொருகன்னி
யரையும், சிசெராவுக்குப்பலவர்னமான ஆடை
களையும், பலவர்னசித்திரத்தையலாடைகளையும்,
கொள்ளையிட்டவர்களுடையகழுத்துகளுககு இ
ருபுறமும்பொருந்துஞ் சித்திரத்தையலுள்ள பல
வர்னமான ஆடைகளையும், கொடுக்கவில்லையா
என்று தனக்குள்ளேதானே உத்தரஞ் சொல்லிக்
௩௧ கொண்டாள்.—யெகோவாவே, உம்மைப்ப
கைக்கிறயாவரும் இப்படியே நாசமாகக்கடவர்
கள்: அவரிடத்திலன்புகூருகிறவர்களோ, வல்ல
மையோடே புறப்படுகிற சூரியனைப்போலா
கக்கடவர்கள் என்றுபாடிஞர்கள். பின்புதேசம்
நாற்பதுவருஷம் அமைவாயிருந்தது.

## ௬. அதிகாரம்.

௧. பாவத்தினிமித்தம் மீதியானியரால் இஸரவே
லர் உபத்திரவப்படல்: ௭. தீர்க்கத்தரிசி ஒரு
வன் வாக்குச்சொல்லல்: ௰௧. யெகோவா
வின்தூதன் கிதியோனிடத்தில்வாக்குச் சொல்
லல்: ௰௭. கிதியோன் தூதனுடனே பேசி நை
வேத்தியஞ்செய்தல்: பாகாலின் வேதிகையை
யிடித்தல்: ௨௮. யோவாஷ் தன்புத்திரனைக்காக்
கும்படிசனங்களை யெதிர்த்தல்: ௩௩. சனங்கள்
கிதியோனிடத்தில் கூடிவரல்: ௩௬. கிதியோன்
பிரார்த்திக்கையில் ஆச்சரியமான அடையாளந்
தோன்றல்.

பின்னும் இஸரவேல் சந்ததியார் யெகோவா ௧
வின் பார்வைக்குத்தீங்கானதைச் செய்தார்கள்:
அதிஞல் யெகோவா அவர்களை ஏழுவரு
ஷம் மீதியானுடையகையிலொப்பித்தார்.—மீதி ௨
யானுடையகை இஸரவேலரை மேற்கொண்ட
படியிஞலே, இஸரவேல் சந்ததியார் மீதியா
னியருக்கு அஞ்சி, தங்களுக்கு மலைகளிலுள்
ள குகைகளையும், கெபிகளையும், துருக்கங்களை
யும், அடைக்கலஸ்தானமாக்கிஞர்கள்.—இஸர ௩
வேலர் விதைவிதைத்தபின்பு, மீதியானியரும்,
அமலேக்கியரும், கேதேமின்சந்ததியாரும் அவர்
களுக்குவிரோதமாய் எழுந்துவந்து,-அவர்களைச் ௪
சூழப்பாளயம்போட்டு, காசாவின் எல்லைமட்
டும் நிலத்தின்விளைவைக்கெடுத்ததுமன்றி, இஸர
வேலருக்கு ஆகாரமும், ஆடுமாடுகள், கழுதை
களும் இல்லாதபடி செய்தார்கள்.—அவர்கள் ௫
தங்கள் மிருகங்களோடும் கூடாரங்களோடும்,
வெட்டுக்கிளிகள்போலத் திரளாய் ஏறிவருவார்
கள்; அவர்களையும், அவர்களுடைய ஒட்டகங்க
ளையும் எண்ணமுடியாது: இந்தப்பிரகாரமாகத்
தேசத்தைக்கெடுத்துவிடும்படி வருவார்கள்.—இப் ௬
படி இஸரவேலர் மீதியானியரால் மிகவுஞ்சிறு
மைப்பட்டதிஞல் அவர்கள் யெகோவாவை
நோக்கி ஓலமிட்டார்கள்.

இஸரவேல் சந்ததியார் மீதியானியரினிமித் ௭
தம் யெகோவாவை நோக்கி ஓலமிட்டபொ
ழுது,—யெகோவா இஸரவேல் சந்ததியாருக் ௮
கு ஒருதீர்க்கதரிசியை அனுப்ப, அவன் அவர்க
ளைநோக்கி, இஸரவேலின் தேவஞகிய யெ
கோவா, நான் உங்களை எகிப்தினின்றும் நீங்
கப்பண்ணி, அடிமையாயிருந்த இடத்தினின்
றும் புறப்படச்செய்து;—எகிப்தியர் கையிலும், ௯
உங்களை ஒடுக்கினயாவர்கையிலுனின்று உங்க
ளைவிடுவித்து, அவர்களை உங்கள் முன்னிலையி
னின்றுந்துரத்தி, அவர்கள் தேசத்தை உங்களுக்
குத்தந்து; உங்களைநோக்கி,—நான் உங்கள் தே ௰
வஞகிய யெகோவா; நீங்கள் வசித்திருக
கிற தேசத்தாராகிய எமோரியருடைய தேவர்க
ளுக்கு அஞ்சவேண்டாமென்று சொன்னேன்:
நீங்களோஎன்வாக்குகளுக்கு அமையவில்லையே
யென்று சொல்லுகிருரென்ருன்.

பின்பு யெகோவாவின் தூதஞனவர்வந்து, ௰௧
அபீயெஸ்ரியஞனயோவாஷின் ஊராகிய ஒபி

(௨௩) அதி.௨௧.௯,௰. நெகி.௩.௫. ௧.சாமு.௰௭.௪௭. (௨௪) அதி.௪.௰௭. லூக்.௧.௨௮. (௨௫) அதி.௪.௰௯. (௨௬) அதி.௪.௨௧. (௩௰) யாத்.௰௫.௰. (௩௧) சங்.௮.௩.௯,௰. ௨.சாமு.௨௩.௪. சங்.௰௯.௫.—(௬. அதி. ௧.) அதி.௨.௰௯. அபகூ.௩.௭. (௨) ௧.சாமு.௰௩.௬. எபி.௰௧.௩௮. (௩) அதி.௩.௰௩. ஆதி.௨௯.௧. ௧.இரா.௪.௩௰. யோபு.௧.௩. (௪) லேவி.௨௬.௰௬. மீகா.௬.௰௫. (௫) அதி.௭.௰௨. (௬) அதி.௩.௰௫. ஓசி.௫.௰௫. (௯) சங்.௪௪.௨,௩. (௰) ௨.இரா.௰௭.௩௫,௩௭,௩௮. (௰௧) யோசு.௰௭.௨. எபி.௰௧.௩௨,.

ருவிலிருந்த அலோன்விருட்சத்தின்கீழிருந்தார்:
அவனுடைய புத்திரனாகிய கிதீயோன் கோது
மையை மீதியானியர் காணாதபடி ஒளிக்கும்
பொருட்டு, ஆலையினிடத்தில் அதைப்போரடித்
௰௨ தான்.—அப்பொழுது யெகோவாவின் தூத
னானவர் அவனுக்குத்தரிசனையாகி,அவனைநோக்
கி, பராக்கிரமவீரனே, யெகோவா உன்னோ
௰௩ டிருக்கிறாரென்றார்.-அதற்குக்கிதீயோன் அவரை
நோக்கி, ஐயோ என்ஆண்டவரே,யெகோவா
எங்களோடிருந்தால், இவையெல்லாம் எங்களுக்
கு நேரிட்டதென்ன; யெகோவா எங்களை
எகிப்தினின்றும் புறப்படுத்திக்கொண்டுவரவில்
லையாவென்று, எங்கள் பிதாக்கள் எங்களுக்குச்
சொல்லிய அவருடையசகல அற்புதங்களுமெங்
கே: இப்பொழுது யெகோவா எங்களை
க்கைவிட்டு, மீதியானியருடையகையில் ஒப்
௰௪ பித்தாரேயென்றான்.—அப்பொழுது யெகோ
வா அவன்மேல் நோக்கம்வைத்து, உனக்குக்கி
டைத்த உன்வல்லமையுடன்போ, நீ இஸரவே
லரை மீதியானியருடையகையினின்றும் இரட்
சிப்பாய்: நான்உன்னை அனுப்பவில்லையாவென்
௰௫ றார்.—அவன்அவரைநோக்கி, ஆ, என்ஆண்டவ
ரே,நான்இஸரவேலரை எப்படி இரட்சிப்பேன்.
மனாசேயரில் என்வமிசத்தார் மிகவும்தரித்திரர்,
என்பிதாவின் குடும்பத்துக்குள்ளே நானேமிக
௰௬ வும் அற்பனென்றான்.—யெகோவா அவனை
நோக்கி, நான் உன்பட்சத்திலிருப்பேன், நீ மீதி
யானியரில் ஒருவனைப்போலச் சங்காரஞ்செய்
வாயென்றார்.
௰௭ அப்பொழுது அவன் அவரைநோக்கி, உமது
கடாட்சம் என்மேலுண்டானால், என்னோடே
பேசுகிறவர்நீர்தானென்று,எனக்குஒருஅடையா
௰௮ ளங்காட்டவேண்டும்.—நான்போய், உம்மிடத்
திற்கு என்காணிக்கையைக்கொண்டுவந்து,உமக்
குமுன்பாக வைக்குமளவும், இவ்விடம்விட்டுப்
போகாதிருப்பீராகவென்றான். அதற்கவர் நீ தி
ரும்புமளவும் நான் தரித்து நிற்பேனென்றார்.—
௰௯ உடனே கிதீயோன் ஒரு வெள்ளாட்டுக்குட்டி
யையும், ஒரு ஏபாமாவினாற்செய்த புளிப்பில்லா
த அப்பங்களையும் ஆயத்தப்படுத்தி; இறைச்சி
யை ஒரு கூடையிலிட்டு, ஆணத்தை ஒருகிண்
ணத்தில்வார்த்து, அதை வெளியே அலோன்வி
ருட்சத்தின் கீழிருக்கிறவரிடத்திற் கொண்டு
௨௰ வந்து வைத்தான்.-அப்பொழுது யெகோவா
வின் தூதனானவர் அவனைநோக்கி, நீ இந்த இ
றைச்சியையும், புளிப்பில்லாதஅப்பங்களையுமெ
டுத்து, இந்தக் கன்மலையின்மேல்வைத்து, ஆணத்
தை ஊற்றென்றார்: அவன் அப்படியே செய்
௨௧ தான்.-அப்பொழுது யெகோவாவின் தூதனா
னவர் தமது கையிலிருந்ததண்டத்தை நீட்டி, அ
தின் நுனியினாலே இறைச்சியையும், புளிப்பில்
லாத அப்பங்களையுந் தொட்டார்; உடனே அக்
கினி கன்மலையினின்றுந் தோன்றி, இறைச்சி
யையும், புளிப்பில்லாத அப்பங்களையும் பட்சித்
தது. அப்பொழுது யெகோவாவின் தூதனா
னவர் அவனுடைய கண்களுக்கு மறைந்துபோ
னார்.-கிதீயோன் யெகோவாவின் தூதனென் ௨௨
று அறிந்து, ஐயோ, என் ஆண்டவராகிய யெ
கோவாவே, நான் யெகோவாவின் தூதனை
முகமுகமாய்க் கண்டேனே என்றான்.—யெ ௨௩
கோவா அவனைநோக்கி, அமைதியாயிரு; ப
யப்படவேண்டாம்: சாகமாட்டாயென்றார்.—
அங்கேகிதீயோன் யெகோவாவுக்கு ஒருவே ௨௪
திகையை உண்டாக்கி, அதற்கு யெகோவா
ஷாலோம் என்றுபெயரிட்டான்: அது இந்நாள்
வரைக்கும் அபீயெஸ்ரியரின் ஊராகிய ஒபி
ருவிலிருக்கின்றது.—அன்றிராத்திரி யெகோ ௨௫
வா அவனைநோக்கி, நீ உன்பிதாவின் எருதுக்
குள்ளே ஏழுவயதுள்ள இரண்டாங்காளையைக்
கொண்டுபோய், உன் பிதாவினுடைய பாகா
லின் வேதிகையைத்தகர்த்து அதின்சமீபத்திலுள்
ள அஷேராமரத்தை வெட்டிப்போட்டு,—இந் ௨௬
தக்கல்மலையின் உச்சியிலே நிருபிக்கப்பட்டஸ்
தானத்தில் உன் தேவனாகிய யெகோவாவுக்
கு ஒரு வேதிகையையுண்டாக்கி, அந்த இரண்
டாம் எருதைக்கொண்டுவந்து நீ வெட்டிப்போ
டு: அஷேராமரத்தின் விறகுகட்டைகளின்மே
லே தகனபலியிடுவாயென்றார்.—அப்பொழுது ௨௭
கிதீயோன் தன் பணிவிடைக்காரரில் பத்துப்பே
ரைச்சேர்த்து, தனக்கு யெகோவா சொல்லி
ய பிரகாரஞ் செய்தான்: அவன் தன் பிதாவின்
குடும்பத்தாருக்கும், ஊராருக்கும் அஞ்சினபடி
யால், அதைப்பகலிலே செய்யாமல் இரவிலே
செய்தான்.
காலையிலே ஊரார் எழுந்திருக்கிறபொழுது, ௨௮
பாகாலின்வேதிகை இடிந்துபோனதையும், அதி
ன்சமீபத்திலுள்ள அஷேராமரம் வெட்டப்பட்
டதையும், உண்டாக்கப்பட்ட வேதிகையின்
மேல் அந்த இரண்டாம் எருது பலியிடப்பட்
டதையுங்கண்டு,—ஒருவரை யொருவர் நோக் ௨௯
கி, இந்தக்காரியத்தைச்செய்தவன் யாவனென்
றார்கள்: கேட்டு விசாரிக்கிறபொழுது, யோவா
ஷின் புத்திரனாகிய கிதீயோன் இதைச்செய்தா
னென்றார்கள்.—அப்பொழுது ஊரார் யோவா ௩௰
ஷைநோக்கி, உன் புத்திரன் பாகாலின் வே
திகையை இடித்து அதின் சமீபத்திலுள்ள அ
ஷேராமரத்தை வெட்டிப்போட்ட படியினாலே
அவனை வெளியே கொண்டுவா, அவன் சாக

(௰௨) அதி. ௰௩. ௩. லூக். ௧. ௰௧, ௨௮. யோசு. ௧. ௫. (௰௩) சங். ௮௯. ௪௯. எசா. ௫௯. ௧. எசா. ௬௩. ௰௫. சங். ௪௪. ௧. ௨. நாளா. ௰௫. ௨. (௰௪) ௧. சாமு. ௰௨. ௰௧. எபி. ௰௧. ௩௨, ௩௪. யோசு. ௧. ௯. அதி. ௪. ௭. (௰௫) ௧. சாமு. ௯. ௨௧. யாத். ௰௮. ௨௧, ௨௫. மீகா. ௫. ௨. (௰௬) யாத். ௩. ௰௨. யோசு. ௧. ௫. (௰௭) யாத். ௪. ௧—௮. வச. ௩௬, ௩௭. ௨. இரா. ௨௰. ௮. சங். ௮௬. ௰௭. எசா. ௭. ௰௧. (௰௮) ஆதி. ௰௮. ௩௫. அதி. ௰௩. ௰௫. (௰௯) ஆதி. ௰௮. ௬. ௭., ௮. (௨௰) அதி. ௰௩. ௰௯. ௧. இரா. ௰௮. ௩௩, ௩௪. (௨௧) லேவி. ௯. ௨௪. ௧. இரா. ௰௮. ௩௮. ௨. நாளா. ௭. ௧. (௨௨) அதி. ௰௩. ௨௧. ஆதி. ௰௬. ௰௩. ஆதி. ௩௨. ௩௰. யாத். ௩௩. ௨௰. அதி. ௰௩. ௨௨. (௨௩) தானி. ௰. ௰௯. (௨௪) ஆதி. ௨௨. ௰௪. யாத். ௰௭. ௰௫. எரே. ௩௩. ௰௬. எசேக். ௪௮. ௩௫. அதி. ௮. ௩௨. (௨௫) யாத். ௩௪. ௰௩. உபா. ௭. ௫.

௩௧ வேண்டுமென்றூர்கள்:—அதற்கு யோவாஷ் த
னக்கெதிர்நின்ற சமஸ்தரையும் நோக்கி, நீங்
கள் பாகாலுக்காக வழக்காடலாமா, நீங்கள் அ
வனை இரட்சிப்பீர்களா, அவனுக்காக வழக்கா
டுகிறவன் இந்தக்காலையிலேதானே சாகக்கட
வன்: அவன் தேவனுனல் தன்வேதிகை இடி
பட்டதினிமித்தம் அவன்தானே தனக்காக வழக்
௩௨ காடட்டுமென்றூன்.—அன்றியும் பாகால் தன்
வேதிகையை இடித்ததினிமித்தம் அவனோடே
வழக்காடட்டுமென்றுசொல்லி, அந்நாளில் அவ
னுக்கு யெருபாகாலென்று பெயரிட்டான்.
௩௩ பின்பு மீதியானியர் அமலேக்கியர்கேதேமின்
புத்திரரெல்லாரும் ஏகமாய்க்கூடி, கடந்துவந்து,
யெஸ்ரியேல் பள்ளத்திலே பாளயமிறங்கினூர்
௩௪ கள்.—அப்பொழுது யெகோவாவின் ஆவிகிதி
யோன்மேல்வர, அவன் எக்காளத்தையூதி அபீ
யெஸ்ரியரைத் தனக்குப்பின்வரும்படி அழைத்
௩௫ துக்கொண்டு;—மனூஷேயின் நாடெங்குந் தூத
ரையனுப்பி, அவர்களையுந்தனக்குப் பின்வரச்
செய்து, ஆஷேர், செபுலோன், நப்தாலிநாடுகளி
லுந் தூதர்களையனுப்பினூன்: இவர்கள் அவர்க
ளைச் சந்திக்கப்போனூர்கள்.
௩௬ அப்பொழுது கிதீயோன் தேவனைநோக்கி,
நீர் சொல்லியபிரகாரம் என்கையினூல் இஸ்ர
௩௭ வேலை இரட்சிக்கத் திருவுள்ளமானுல்,—நான்ம
யிருள்ள ஒருதோலைப்போர்க்களத்திலே போடு
கிறேன்; பனியானது தோலின் மேல்மாத்திரம்
பெய்யத் தரைமுழுவதும் காய்ந்திருந்தால், அ
தனூல் நீர் சொன்னபடி இஸ்ரவேலரை என்
கையினூல் இரட்சிப்பீரென்று அறிவேனென்
௩௮ றூன்.—அப்படியேயாயிற்று: மறுநாட் காலமே
அவன்எழுந்திருந்து, தோலைக்கசக்கி, அதின்மே
லிருந்த பனித்தண்ணீரை ஒருகிண்ணிநிறையப்
௩௯ பிழிந்தான்.-பின்புகிதீயோன் தேவனைநோக்கி,
உமதுகோபம் என்மேல் மூளவிடாதிரும், நான்
இன்னமொருதரம் மாத்திரம் பேசுகிறேன்: தோ
லினூலே நான் இன்னமொருதரம் பரிட்சிக்கும்
படியிடங்கொடும்; தோல்மாத்திரங் காயந்திருக்
கவும், தரையெங்கும்பனிபெய்திருக்கவுஞ்செய்
௪௰ வீராக வென்றூன்.—அப்படியே அன்றிராத்திரித்
தேவன்செய்தார்: தோல்மாத்திரம் காய்ந்திருந்
தது, தரையெங்கும்பனிபெய்திருந்தது.

## ௭. அதிகாரம்.

௧, கிதீயோன் தன் சேனைகளைக்குறைத்தல்: ௯. சொப்பனத்தைக்கேட்டுக் கிதீயோனின்மனம் ஸ்திரமாதல்: ௰௫. கிதீயோன் தன்சனங்களுக்குக்கட்டளையிடல்: ௰௯. தீபம், தூரியம் குடம் இவைகளினூல் மீதியானியரைச் செயித்தல்: ௨௪. ஒரேப், சேப்பென்னும் இராசாக்களைப்பிடித்தல்.

பின்பு கிதீயோன்என்னும்யெருபாகாலும், அவ
னோடிருந்த சமஸ்தசனங்களும், காலையிலெழுந்
துபுறப்பட்டு, அரோத்தென்னும் நீரூற்றினிடத்
தில் இறங்கினூர்கள்: மீதியானியருடைய பாள
யம் அவர்களுக்குவடக்கே மோரேமேட்டுக்குப்
பின்னூனபள்ளத்திலேயிருந்தது.-யெகோவா ௨
கிதீயோனைநோக்கி, நான் மீதியானியரை உங்
கள் கையில் ஒப்பிப்பதற்கு உன்னோடிருக்கிற
சனங்கள்மிகுத்திருக்கிறூர்களே, எங்கள்கையே
எங்களை இரட்சித்ததென்று இஸ்ரவேலர் எனக்கு
விரோதமாகத் தங்களைத்தாமே மேன்மைபாராட்
டவுங்கூடும்.-ஆகையால் பயமுந்திகிலுமுள்ளவ ௩
னெவனோ, அவன்திரும்பிக்கிலியாத்மலைகளிலி
ருந்து ஓடிப்போகக்கடவனென்று, நீ சனங்க
ளின்செவிக்கேறப்பிரசித்தப்படுத்தென்றூர். அ
தினூலே சனங்களில் இருபத்தீராயிரம்பேர் திரு
ம்பிப்போய்விட்டார்கள்:பதினூயிரம்பேர்மாத்தி
ரம்நின்றூர்கள்.-யெகோவா கிதீயோனைநோக் ௪
கி, இன்னுஞ்சனங்கள்அதிகம்; அவர்களைச்சலத்
தில் இறங்கப்பண்ணு, அங்கேநான் உனக்காக
அவர்களைச் சோதிப்பேன்: உன்னோடே வர
லாமென்று நான் குறிக்கிறவனெவனோ, அவன்
உன்னோடேகூட வரக்கடவன்; உன்னோடே
வரலாகாதென்று நான் உனக்குக் குறிக்கிறவ
னெவனோ, அவன் உன்னோடேகூடவராதிருக்
கக்கடவனென்றூர்.—அப்படியே அவன்சனங்க ௫
ளைச்சலத்தில் இறங்கிப்போகப் பண்ணினூன்:
யெகோவா கிதீயோனைநோக்கி, தண்ணீரை
நாய் நக்குகிறபிரகாரம் தன்னூவினூலே நக்குகிற
வனெவனோ, அவனைத்தனியேநிறுத்து; குடிக்
கிறதற்குமுழங்கால்களை ஊன்றிக்குனிகிறவனெ
வனோ, அவனையுந்தனியேநிறுத்தென்றூர்.—தங் ௬
கள்கையால் அள்ளி,தங்கள்வாயின் சமீபத்திலே
கொண்டுபோய்நக்கினவர்களின்தொகை முந்நூ
று: மற்றைச்சனங்களெல்லாருந் தண்ணீரைக்கு
டிக்கிறதற்குமுழங்கால்களை ஊன்றிக்குனிந்தார்
கள்.—அப்பொழுது யெகோவா கிதீயோனை ௭
நோக்கி, நக்கிக்குடித்த அந்த முந்நூறுபேராலே
நான் உங்களை இரட்சித்து, மீதியானியரை உங்
கள்கையிலொப்பிப்பேன்: மற்றைச்சனங்களெ
ல்லாருந் தங்கள் தங்கள் இடத்துக்குப்போகக்க
டவர்களென்றூர்.—பின்புசனங்கள் தங்கள்கைக ௮
ளில் ஆகாரத்தையும், எக்காளங்களையும் எடுத்துக்
கொண்டார்கள்: மற்ற இஸ்ரவேலரெல்லாரை
யும் அவன் தங்கள் தங்கள் கூடாரங்களுக்கனுப்
பி, அந்த முந்நூறுபேரைமாத்திரம் தன்னுடன்
சேர்த்துக்கொண்டான்: மீதியானியருடையசே
னை அவனுக்குக்கீழே தாழ்ந்தபூமியிலிருந்தது.
அன்றிராத்திரியெகோவாஅவனைநோக்கி, ௯
நீ எழுந்து, அந்தச்சேனையினிடத்திற்கு இறங்
கிப்போ; அதை உன்கையிலொப்பித்தேன்.—
இறங்கிப்போக உனக்குப்பயமிருந்தால், முதல் ௰

(௩௨) ௧.சாமு.௰௨.௰௧. ௨.சாமு.௰௧.௨௧,. எரே.௰௧.௰௩. ஓசி.௯.௰. (௩௩) வச.௩. யோசு.௰௭.௰௬. (௩௪) அதி.௩.௰. ௧.நாளா.௰௨.௰௮. ௨.நாளா.௨௪.௨௰. எண்.௰.௩. அதி.௩.௨௭. (௩௭) யாத்.௪.௩,௪,௬,௭. (௩௯) ஆதி.௰௮.௩௨.—(௭. அதி. ௧.) அதி.௬.௩௨. (௨) உபா.௮.௰௭. ஏசா.௰.௰௩. ௧.கொரி.௧.௨௯. ௨.கொரி.௪.௭. (௩) உபா.௨௰.௮. (௭) ௧.சாமு.௰௪.௬. (௯) ஆதி.௪௬.௨,௩.

நீ உன் பணிவிடைக்காரனாகிய பூருவுடனேகூ
௰௧ டச்சேனையினிடத்திற்கு இறங்கிப்போய்;—அங்
கே என்னபேசுகிறார்களென்றுகேள்; பின்பு சே
னைக்குள் இறங்கிப்போக உன்கைகள்திடப்படு
மென்றார். அப்படியே அவனும் அவனுடையப
ணிவிடைக்காரனாகிய பூருவும் சேனையின்பின்
௰௨ னணியில் இறங்கிப்போனார்கள்.—மீதியானிய
ரும்அமலேக்கியரும் கேதேமின் புத்திரரெல்லா
ரும்வெட்டுக்கிளிகள்போலதிரளாய்தாழ்ந்த பூமி
யில்கிடந்தார்கள்; அவர்களுடைய ஒட்டகங்க
ளும்எண்ணிறந்தன, கடற்கரைமணலத்தனைதிர
௰௩ ளாயிருந்தன.—கிதியோன் அங்கேவந்தபொழு
து அவர்களிலொருவன் மற்றொருவனுக்கு ஒரு
சொப்பனத்தைவிவரித்துச்சொல்லத்தொடங்கி,
கேள், ஒருசொப்பனத்தைக் கண்டேன், ஒரு
வாற்கோதுமை அப்பம் மீதியானியருடைய சே
னைகளுக்குள் உருண்டுகூடாரத்திற் பிரவேசித்
து, அதைவிழத்தள்ளி, மேல்கீழாகக் கவிழ்த்துப்
போட்டது, அப்படியே கூடாரம் விழுந்துகி
௰௪ டக்கக்கண்டேனென்றான்.—அதற்கு மற்றவன்,
யோவாஷின் புத்திரனாகிய கிதியோனென்னும்
இஸரவேலுடையகட்கமேயன்றிவேறல்ல: தே
வன் மீதியானியருடையசேனையை அவன்கை
யிலொப்பித்தாரென்று சொன்னான்.

௰௫ கிதியோன் அந்தச்சொப்பனத்தின் விவரத்தை
யும், அதின் தாற்பரியத்தையுங்கேட்டு, நமஸ்கா
ரம் பண்ணி, இஸரவேலரின் சேனையினிடத்
தில் திரும்பிவந்து, அவர்களைநோக்கி, எழுந்தி
ருங்கள்; யெகோவா மீதியானியருடைய சே
னையை உங்கள் கைகளிலொப்பித்தாரென்று
௰௬ சொல்லி,-அந்தமுந்நூறுபேரையும் மூன்றுவகுப்
பாக்கி, அவர்களெல்லாருடையகைகளிலும் எக்
காளங்களையும், வெறும்பானைகளையும், அவைக
௰௭ ளுக்குள் தீவர்த்திகளையுங்கொடுத்து.—நான் செய்
வதை நீங்கள் பார்த்து, அப்படியேசெய்யுங்கள்:
பாளயத்திற்குச்சமீபத்திற் சேர்ந்திருக்கும்பொ
ழுது, நான்செய்யும் வண்ணமே நீங்களுஞ்செய்
௰௮ யுங்கள்.—நானும் என்னோடிருக்கிறசமஸ்தமனி
தரும் எக்காளம் ஊதும்பொழுது, நீங்களும்பாள
யமுழுவதையுஞ் சுற்றி எக்காளங்களைஊதி, யெ
கோவாவுக்காகவுங் கிதீயோனுக்காகவுமென்று
கூப்பிடுங்களென்று சொன்னான்.

௰௯ நடுச்சாமத்தின் ஆரம்பத்திலே காவலாளரை
ஏற்படுத்தினவுடனே; கிதீயோனும் அவனோடி
ருந்தநூறுபேரும்பாளயத்துக்குச்சமீபத்திற்சேர்ந்
து, எக்காளங்களை ஊதித்தங்கள் கைகளிலிருந்த
௨௰ பானைகளையுடைத்தார்கள்.—மூன்று வகுப்பாரும்
எக்காளங்களை ஊதி,பானைகளையுடைத்து,தீவர்த்
திகளைத்தங்கள் இடதுகைகளிலும், ஊதுகிறதற்
கான எக்காளங்களைத்தங்கள் வலதுகைகளிலும்
பிடித்துக்கொண்டு, யெகோவாவுடையதும்
கிதீயோனுடையதுமான கட்கமேயென்றுசொல்
லிச்சத்தமிட்டு,—பாளயத்தைச்சுற்றி, அவரவர் ௨௧
நின்ற இடத்திலேநிற்க,சமஸ்தசேனைகளும்ஓடிக்
கூக்குரலிட்டுப்புறங்கொடுத்துப்போயின.—முந் ௨௨
நூறுபேரும் எக்காளங்களைஊதுகையில், யெ
கோவா பாளயமெங்கும் ஒருவருடையகட்கத்
தைஒருவருக்குவிரோதமாக ஓங்கப்பண்ணினார்:
சேனைகள் பேத்ஷித்தா செரீராத்தின் வழியாய்த்
தப்பாத்திற்குச் சமீபமான ஆபேல் மிகோலா
வின் எல்லைமட்டும் ஓடிப்போயின.—அப்பொ ௨௩
ழுது நப்தாலியாரும், ஆஷேரும், மனாஷேயரெல்
லாருமாகிய இஸரவேலர் கூடிவந்து, மீதியானி
யரைப்பின்தொடர்ந்தார்கள்.

கிதீயோன் எப்ராயீம் மலைகளெங்குந்தூதரை ௨௪
அனுப்பி, நீங்கள் மீதியானியருக்கெதிராக இ
றங்கி,பேத்பாராமுதலாகிய யோர்தானின் துறை
முகங்களனைத்தையும், அவர்களுக்கு முன்னே
நீங்கள்வசப்படுத்திக்கொள்ளுங்களென்றுசொல்
லுவித்தான். அப்படியெ எப்ராயீமரெல்லாருங்
கூடிவந்து, பேத்பாரா முதலாகிய யோர்தான் து
றைமுகங்களனைத்தையுந் தங்கள் வசப்படுத்திக்
கொண்டு,—மீதியானியருடைய இரண்டு அதி ௨௫
பதிகளாகிய ஓரேப்பையுஞ் சேப்பையும் அகப்
படுத்தி; ஓரேப்பை ஓரேப்பென்னுங் கல்மலை
யிலும், சேப்பைச் சேப்பென்னும் ஆலையிலுங்
கொன்றுபோட்டு,மீதியானியரைத்தொடர்ந்தார்
கள்: மேலும் ஓரேப் சேப் என்பவர்களுடைய
தலைகளை யோர்தானுக்கிக்கரையிலிருந்தகிதீயோ
னிடத்திற்குக்கொண்டுவந்தார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. கிதீயோன் எப்ராயீம் சனங்களைச் சாந்தப்படுத்தல்: ௪. சுக்கோத் பெனுவேலின் சனங்கள் கிதீயோனுக்கு உதவிசெய்யாமல் மறுத்தல்: ௰. சேபாவும்சல்முனாவும் பிடிக்கப்படல்: ௰௩. சுக்கோத் பெனுவேலின் சனங்களைத்தண்டித்தல்: ௰௮. இரண்டு இராசாக்களைக் கொலைசெய்தல்: ௨௨. கிதீயோன் அரசாளவிரும்பாமல் கொள்ளைப்பொருளிலே பங்குகேட்டு, அதினால் ஒரு எபோத்து ஆயத்தப்படுத்தல்: ௨௮. கிதீயோன் தோல்வியடைதல்: ௨௯. கிதீயோனின் சந்தானருடைய தொகையையும் அவன் மரணத்தையுந் தெரிவித்தல்: ௩௨. இஸரவேல் வமிசத்தாரின் செய்ந்நன்றியீனத்தைக்காட்டல்.

மேலும் எப்ராயீமர் அவனைநோக்கி, நீர் மீதி ௧
யானியரை எதிர்த்து யுத்தம் பண்ணப்போகிற
பொழுது, எங்களை அழைக்கவில்லையே; எதி
னாலே எங்களுக்கப்படிச் செய்தீரென்றுசொல்
லி, அவனுடன் விவாதம்பண்ணினார்கள்.—அதற் ௨
கவன் நீங்கள் செய்ததிலும் நானென்னசெய்
தேன்; அபீயெஸ்ரியருடையதிராட்சப்பழத்தின்
அறுப்பிலும் எப்ராயீமருடையபின் அறுப்பு அ
திக உத்தமமல்லவா;—உங்கள்கையிலே தேவன் ௩

(௰௧) வச.௰௫,௰௪,௰௫. ஆதி.௨௪.௰௪. ௧.சாமு.௰௪.௯,௰. யாத்.௰௫.௰௮. (௰௨) அதி.௬.௫,௩௩. அதி.௮.௰. (௨௧) யாத். ௰௪.௰௩,௰௪. ௨.நாளா.௨௰.௰௭. ௨.இரா.௭.௭. (௨௨) யோசு.௬.௪,௰௬,௨௰. ௨.கொரி.௪.௭. சங்.௮௩.௯. ஏசா.௯.௪, ௧.சாமு.௰௪.௨௰. ௨.நாளா.௨௰.௨௩. (௨௪) அதி.௩.௨௭. அதி.௩.௨௮. யோவா.௧.௨௮. (௨௫) அதி.௮.௩. சங்.௮௩.௰௧, ஏசா.௰.௨௬. அதி.௮.௪.—(௮. அதி. ௧.) அதி.௰௨.௧. ௨.சாமு.௰௯.௪௧. (௩) அதி.௭.௨௪,௨௫. பிலி.௨.௩. நீதி.௰௫.௧.

மீதியானியருடைய அதிபதிகளாகிய ஓரேப்பை
யுஞ்சேப்பையும் ஒப்பித்தார்: உங்களிலும் நான்
என்னசெய்யக் கூடுமென்றான்; இந்தச்சொல்லை
அவன்சொன்னபொழுது அவர்கள் அவன்மேற்
கொண்ட கோபம் ஆறிற்று.
௪ கிதீயோன் யோர்தானிடத்திற் சேர்ந்தபொழு
து, அவனும் அவனோடிருந்த முந்நூறுபேரும் அ
தைக்கடந்து, இளைப்படைந்தும், பின்தொடர்ந்
௫ தார்கள்.—அவன் சுக்கோத்தூராரைநோக்கி, நான்
மீதியானியருடைய இராசாக்களாகியசேபாவை
யுஞ்சல்மூனாவையும் பின்தொடருகிறேன்; என்
பின்வருகிற சனங்கள் இளைத்துப்போனார்கள்,
அவர்களுக்குச் சில அப்பங்களைக் கொடுக்க
௬ வேண்டுமென்றான்.—அதற்குச்சுக்கோத்தின் பிர
புகள், உன்னுடைய சேனைக்கு நாங்கள் அப்
பந்தருவதற்கு, சேபாவுசல்மூனா என்பவர்களின்
கைகள் உன் கைவசப்பட்டு விட்டனவாவென்
௭ றுசொல்ல;—கிதீயோன் அவர்களைநோக்கி, யெ
கோவா சேபாவையுஞ் சல்மூனாவையும் என்
கையிலொப்பித்தபின்பு, நான் உங்கள் மாமிசத்
தை வனாந்தரத்தின் முள்ளுக்களாலும் நெரிஞ்
சில்களாலும்கீறிப்போடுவேனென்றுசொல்லி,—
௮ அவ்விடம் விட்டுப் பெனுவேலுக்குப்போய்,
அவ்வூராரிடத்தில் அப்படியேகேட்டான்: அவர்
களுஞ்சுக்கோத்தூராரைப்போல அவனுக்கு உத்
௯ தரங்கொடுத்தார்கள்.—அப்பொழுது அவன் பெ
னுவேலூராரை நோக்கி, நான் சமாதானத்தோ
டேதிரும்பிவரும்பொழுது, இந்தக்கோபுரத்தை
இடித்துப் போடுவேனென்றான்.
௰ சேபாவுஞ் சல்மூனாவுங் கேதேமின்சந்ததியா
ருடைய சமஸ்தசேனைகளுக்குள்ளும் ஏறக்கு
றையப் பதினையாயிரம் பேர்களுடன் கர்கோரி
லிருந்தார்கள்: கட்கத்தை உருவிய இலட்சத்து
இருபதினாயிரம்பேர் விழுந்ததினால், இவர்கள்
௰௧ மாத்திரம் மீந்திருந்தார்கள்.—கிதீயோன் கூடா
ரவாசிகளின்வழியாய் நோபாக்குக்கும் யொக்பி
காவுக்குங் கிழக்கேபோய், அந்தச்சேனையிலுள்
ளவர்கள் ஆறுதலாயிருந்தபொழுது, அவர்களை
௰௨ முறிய அடித்தான்.—சேபாவுஞ் சல்மூனாவென்
ற மீதியானியருடைய இராசாக்களிருவரும் ஓ
டிப்போனபொழுது, அவன் அவர்களைப்பின்
தொடர்ந்து முறிய அடித்து, சேபாவையுஞ்சல்
மூனாவையும் பிடித்தான்.
௰௩ சூரியன் உதிப்பதற்குமுன்னே யோவாஷின்
புத்திரனாகிய கிதீயோன் யுத்தத்தினின்று திரும்பி
௰௪ வருகையில்,—அவன் சுக்கோத் ஊராரில் ஒருவா
லிபனைப்பிடித்து வினாவ, இவன் சுக்கோத்தின்
பிரபுகளும், அதின் மூப்பரோருமாகிய எழுபத்
தேழுபேரை அவனுக்கு எழுதிக்கொடுத்தான்.—
௰௫ அவன் சுக்கோத் ஊராரிடத்துக்குப்போய் அவர்
களைநோக்கி, இளைத்துப்போன உன்சேனைகளுக்
கு நாங்கள் அப்பந்தருவதற்கு, சேபா சல்மூனா
என்பவர்களுடைய கைகள் உன் கைவசமாய்
விட்டனவா என்று நீங்கள் என்னை நிந்தித்தீர்க
ளே; அவர்கள் இங்கே இருக்கிறார்களென்று
சொல்லி,—பின்பு ஊரின் மூப்பரோரைப்பிடித் ௰௬
து வனத்தின் முள்ளுக்களையும், நெரிஞ்சில்களை
யுமெடுத்து, அவைகளால் சுக்கோத் ஊராருக்குப்
புத்தி வரப்பண்ணி;—பெனுவேலின் கோபுரத் ௰௭
தையும் இடித்து அவ்வூராரையுங்கொன்றுபோட்
டான்.
பின்பு அவன் சேபாவையுஞ் சல்மூனாவை ௰௮
யும்நோக்கி, தாபோரிலேநீங்கள்கொன்றுபோட்
ட அந்தமனிதர் எவ்விதமான ரூபமுள்ளவர்க
ளென்று வினாவ; அவர்கள் உம்மைப்போலிருந்
தார்கள்; யாவரும் இராசகுமாரருக்குச் சமான
மென்றார்கள்.—அப்பொழுது அவன், அவர்கள் ௰௯
என்சகோதரர், அவர்கள் என்மாதாவின்புத்திரர்:
அவர்களை உயிரோடேவிட்டுவிட்டீர்களானால்,
உங்களைக்கொல்வதில்லையென்று யெகோவா
வின் நித்தியத்துவத்தைக்கொண்டுச் சொல்லுகி
றேனென்று சொல்லி,—தன் சேஷ்டபுத்திரனா ௨௰
கிய எத்தெரைநோக்கி, நீ எழுந்து இவர்களைக்
கொன்றுபோடென்றான். அந்தவாலிபன் இளை
ஞனானபடியால், தன் கட்கத்தை உருவாமல்
அஞ்சிநின்றான்.—அப்பொழுது சேபாவுஞ் சல் ௨௧
மூனாவும் மனிதன் எப்படியோ அப்படியே அ
வன் பெலனுமிருக்கும், ஆதலால் நீரே எழுந்
து எங்களைக் கொன்றுபோடுமென்றார்கள்: அ
தினால் கிதீயோன் எழுந்து, சேபாவையுஞ் சல்
மூனாவையுங்கொன்றுபோட்டு, அவர்களுடைய
ஒட்டகங்களின்கழுத்தணிகளை எடுத்துக்கொண்
டான்.
பின்பு இஸரவேலர் கிதீயோனைநோக்கி, நீர் ௨௨
எங்களை மீதியானியருடைய கைக்கு விலக்கி
இரட்சித்தபடியினாலே நீரும், உம்முடைய புத்
திரர் பௌத்திரரும், எங்களை ஆளக்கடவீர்கள்
என்றார்கள்.—அதற்குக்கிதீயோன், நான் உங்க ௨௩
ளை ஆளமாட்டேன், என்புத்திரனும் உங்களை
ஆளமாட்டான்: யெகோவாவே உங்களை ஆ
ளுவாரென்றான்.—பின்பு கிதீயோன் அவர்களை ௨௪
நோக்கி, உங்களிடத்தில் ஒன்றைக்கேட்கிறேன்,
நீங்கள் கொள்ளையிட்ட காதணிகளை எனக்குத்
தரவேண்டுமென்றான்: அவர்கள் இஷ்மாவே
லரானபடியினாலே அவர்களுக்குக் காதணிகளி
ருந்தன.—இஸரவேலர் நாங்கள் மனப்பூருவ ௨௫
மாய்த் தருகிறோமென்றுசொல்லி, ஒருவஸ்திரத்
தைவிரித்து, ஒவ்வொருவரும் தாம் தாம் கொள்
ளையிட்ட காதணிகளை அதிலேபோட்டார்கள்.—
பிறைச்சிந்தாக்குகளும், ஆரங்களும், மீதியானி ௨௬

(௫) ஆதி.௩௩.௰௭. சங்.௬௰.௬. (௬) க.இரா.௨௰.௰௧. க.சாமு.௨௫.௰௧. (௭) வச.௰௬. (௮) ஆதி.௩௨.௩௰. க.இரா.௰௨.௨௫. (௯) க.இரா.௨௨.௨௭. வச.௰௭. (௰) அதி.௭.௰௨. அதி.௨௰.௨,௰௫,௰௭,௨௫. ௨.இரா.௩.௨௬. (௰௧) எண்.௩௨.௩௫,௪௨. அதி.௰௮.௨௭. க.தெச.௫.௩. (௰௨) சங்.௮௩.௰௧. (௰௫) வச.௬. (௰௬) வச.௭. (௰௭) வச.௯. க.இரா.௰௨.௨௫. (௰௮) அதி.௪.௭. சங்.௮௯.௰௨. (௨௧) சங்.௮௩.௰௧. (௨௩) க.சாமு.௮.௭. க.சாமு.௰.௰௯. க.சாமு.௰௨.௰௨. (௨௪) ஆதி.௨௫.௰௩. ஆதி.௩௭.௨௫,௨௮.

யருடைய இராசாக்கள் போர்த்திருந்தஇரத்தாம்
பரங்களும், அவர்களுடைய ஒட்டகங்களின்
கழுத்துகளிலிருந்தசரப்பணிகளுந்தவிர; அவன்
கேட்டுவாங்கின பொற்காதணிகளின் பொன்
உஎ னிறை ஆயிரத்தெழுநூறு ஷேக்கல்.—அதினாற்
கிதீயோன் எபோத்தொன்றைச்செய்து, அதை
ஒபிரூவென்னுந் தன் நகரத்திலே வைத்தான்:
சமஸ்த இஸரவேலரும் விபசாரமார்க்கமாய் அ
தைப்பின்பற்றினார்கள்: அது கிதீயோனுக்கும்
அவன் குடும்பத்தாருக்குங்கண்ணியாயிற்று.
உஅ இந்தப்பிரகாரம் மீதியானியர் தலைநிமிர்த்தக்
கூடாமல், இஸரவேல்சந்ததியாரின்சமுகத்திலே
தாழ்த்தப்பட்டார்கள்: தேசமானது கிதீயோனு
டைய நாள்களில் நாற்பது வருஷம் அமைதியா
யிருந்தது.
உகூ யோவாஷின்புத்திரனாகிய யெருபாகால்போ
ஙய ய்த் தன்சுயவீட்டிலே வசித்தான்.—கிதீயோன்
அநேகஸ்திரிகளைக் கொண்டபடியினாலே, அவ
னுக்குச் சொந்தமாக எழுபது புத்திரர்பிறந்தார்
ஙக கள்.—ஷிகேமிலிருந்த அவனுடைய வைப்பாட்
டியும் அவனுக்கொருபுத்திரனைப்பெற்றாள், அவ
னுக்கு அபிமேலேக்கென்றுபெயரிட்டான்.
ஙஉ பின்பு யோவாஷின் புத்திரனாகிய கிதீயோன்
மிகவும்விருத்தனாய்மரித்து, ஒபிரூவில் தன் பிதா
வாகியயோவாஷென்னும்அபீயெஸ்ரியருடைய
பிரேதவறையில் அடக்கம்பண்ணப்பட்டான்.—
ஙங கிதீயோன்மரித்தபின்பு, இஸரவேல்சந்ததியார்தி
ரும்பவும் பாகால்களைவிபசாரமார்க்கமாய்ப்பின்
பற்றி, பாகால்பிரீத்தைத் தங்களுக்குத்தேவனாக
ஙச ஏற்படுத்தினார்கள்.—இஸரவேல் சந்ததியார் தங்
களைச்சுற்றியிருந்த தங்கள் சத்துருக்களெல்லாரு
டையகைக்குந்தப்புவித்த தங்கள் தேவனாகிய
ஙரு யெகோவாவை நினையாமலும்,—கிதீயோன்
என்னும் யெருபாகால் இஸரவேலுக்குச் செய்த
நன்மைகளெல்லாவற்றிற்குந் தக்கதாக, அவனு
டைய குடும்பத்திற்குத் தயைசெய்யாமலுமிருந்
தார்கள்.

## கூ. அதிகாரம்.

க. அபிமேலேக் தன்சகோதரரைக் கொலைசெய்து இராசாவாதல்: எ. யோதாம் உவமைசொல்லல்: உஉ. காகால் அபிமேலேக்குக்கு விரோதமாய்த்துராலோசனை கொடுத்தல்: ஙய. செபுல் அதை வெளிப்படுத்தல்: ஙச. அபிமேலேக்செயித்தல்: சகூ. பிரீத்தேவனின் துருக்கத்தைத்தகித்தல்: ருய. தேபேத்சுநகரத்தில் ஒரு ஸ்திரியெறிந்தகல்லினால் அபிமேலேக் கொல்லப்படல்: ருகூ. யோதாமின்வாக்கியம் நிறைவேறல்.

யெருபாகாலின் புத்திரனாகிய அபிமேலேக் ஷி
கேமிலுள்ள தன் மாதாவின் சகோதரரிடத்திற்
போய், அவர்களையும் தன் மாதாவின் பிதாவினு
டைய குடும்பத்தார் சகலரையும்நோக்கி,—யெ உ
ருபாகாலின் புத்திரராகிய எழுபதுபேரும் உங்
களை ஆளுவது நலமோ, ஒருவன்மாத்திரம் உங்க
ளை ஆளுவது நலமோவென்று நீங்கள் ஷிகேமி
லுள்ள ஆண்மக்கள் சகலரிடத்திலும்பேசுங்கள்,
நான் உங்கள் எலும்பும் உங்கள் மாமிசமுமென்
று நினையுங்களென்றான்.—அப்படியே அவன் ங
மாதாவின் சகோதரர் ஷிகேமிலுள்ள ஆண்மக்
கள் சமஸ்தரிடத்திலும் இவ்வார்த்தைகள் யாவை
யும்பேச; அவர்கள், அவன் நம்முடையசகோத
ரன்தானென்றுசொல்லி அபிமேலேக்கைப்பின்
பற்றுவதற்குமனமிசைந்தார்கள்.—மேலும் அவர் ச
கள் பாகால்பிரீத்தின் ஆலயத்தில் எழுபதுவெள்
ளிக்காசைஎடுத்து அவனுக்குக் கொடுத்தார்கள்,
அவைகளால் அபிமேலேக் வீணரும் நீசருமாகி
ய மனிதரைச்சேவகத்தில் வைத்தான்: அவர்கள்
அவனைப்பின்பற்றினார்கள்.—அவன் ஒபிரூத்தி ரு
லுள்ள தன்பிதாவின் வீட்டுக்குப்போய், யெரு
பாகாலின்புத்திரராகிய தன்சகோதரர் எழுபது
பேரையும் ஒரேகல்லின்மேற் கொலைசெய்தான்:
யெருபாகாலின் இளையமகனாகிய யோதாம் ஒ
ளித்திருந்தபடியினாலே, அவன்மாத்திரம் தப்பி
யிருந்தான்.—பின்பு ஷிகேமிலுள்ள சமஸ்தமனி சு
தரும், மில்லோவின் சமஸ்தகுடும்பத்தாரும் கூ
டிக்கொண்டுபோய், ஷிகேமிலுள்ள உயர்ந்த
அல்லோன் மரத்தினிடத்தில் அபிமேலேக்கை
இராசாவாக ஏற்படுத்தினார்கள்.
அது யோதாமுக்குத்தெரிவிக்கப்பட, அவன் எ
போய்க் கிரிசீம் மலையுச்சியிலேறி நின்று, உரத்
தசத்தமிட்டுக் கூப்பிட்டு, அவர்களை நோக்கி,
ஷிகேமின் மனிதர்களே, தேவன் உங்களுக்
கு செவிகொடுக்கும்படி நீங்கள் எனக்குச்செ
விகொடுங்கள்.—விருட்சங்கள் தங்கள்மேல் ஒரு அ
இராசாவை வைத்து அபிஷேகம் பண்ணும்ப
டிபோய்; சீதவிருட்சத்தை நோக்கி, நீ எங்க
ளை அரசாள வேண்டுமென்றன.—அதற்குச் சீத கூ
விருட்சம் அவைகளைநோக்கி, நான் தேவனு
டையமேன்மைக்கும் மனிதருடையமேன்மைக்
கும் ஏதுவாயுள்ள என்சாரத்தைவிட்டு, மரங்களை
அரசாளப்போவேனோவென்று சொல்லிற்று.—
அப்பொழுது மரங்கள் அத்திமரத்தைநோக்கி, நீ ய
வந்து எங்களை அரசாளவேண்டுமென்றுசொல்
ல;—அத்திமரம் நான் என்னுடைய மதுரத்தை யக
யும், என்னுடைய நற்கனிகளையும்விட்டு, மரங்
களை அரசாளப்போவேனோவென்று சொல்லிற்
று.—பின்பு மரங்கள் திராட்சக்கொடியைநோக் யஉ
கி, நீவந்து எங்களை அரசாள வேண்டுமென்று
சொல்ல;—திராட்சக்கொடி, தேவனையும் மனி யங

(உஎ) அதி.யஎ.ரு. அதி.சு.உச. சங்.ாசு.ஙக. உபா.எ.யசு. (உஅ) அதி.ரு.ஙக. (ஙய) அதி.கூ.உ,ரு. (ஙக) அதி.கூ.க. (ஙஉ) ஆதி.உரு.அ. வச.உஎ. அதி.சு.உச. (ஙங) அதி.உ.யக. அதி.உ.யஎ. அதி.கூ.ச,சசு. (ஙச) சங்.எஅ.யக,சஉ. (ஙரு) அதி.கூ.யசு,யஎ,யஅ. பிர.கூ.யச,யரு.—(கூ. அதி. க.) அதி.அ.ஙக. (உ) அதி.அ.ஙய. ஆதி.உக.யச. (ங) ஆதி.உக.யரு. (ச) அதி.அ.ஙங. அதி.யக.ங. உ.நாளா.யங.எ. நீதி.யஉ.யக. அப்.யஎ.ரு. (ரு) அதி.சு.உச. உ.இரா.யச.க,உ. (சு) யோசு.உச.உசு. (எ) உபா.யக.உக. உபா.உஎ.யஉ. யோசு.அ.ஙங. யோவா.ச.உய. (அ) உ.இரா.யச.கூ. அதி.அ.உஉ,உக. (கூ) சங்.ாச.யரு. (யங) சங்.ாச.யரு.

தரையுங் களிக்கப்பண்ணுகிற என்னிரசத்தை
விட்டு, மரங்களை அரசாளப்போவேனோவென்
௰௪ றுசொல்லிற்று.—பின்பு மரங்களெல்லாம் முட்
செடியை நோக்கி, நீவந்து எங்களை அரசாள
௰௫ வேண்டுமென்றுசொல்ல;—முட்செடி மரங்களை
நோக்கி, நீங்கள் மெய்யாய் என்னை உங்களுக்கு
இராசாவாக அபிஷேகம்பண்ணினால் என் நிழ
லிலே வந்தடையுங்கள்: இல்லாவிட்டால் முட்
செடியிலிருந்து அக்கினி புறப்பட்டு, லிபானோ
னின் ஏரஸ்மரங்களைப்பட்சிக்கக் கடவதென்று
௰௬ சொல்லிற்று.—என்பிதா உங்கள் நிமித்தம் யுத்
தம்பண்ணி, தன்சீவனை எண்ணாமற்போய், உங்
களைமீதியானியருடையகைக்கு நீக்கிவிட்டார்.-
௰௭ நீங்களின்று என்பிதாவின்குடும்பத்திற்கு விரோ
தமாயெழுந்து, அவருடைய புத்திரர் எழுபது
பேரை ஒரே கல்லின்மேற்கொலைசெய்து, அவ
ருடைய பணிவிடைக்காரியின் புத்திரனாகிய அ
பிமேலேக் உங்கள் சகோதரனானபடியினாலே,
அவனை ஷிகேம் நகரத்துக்கு இராசாவாக்கினீர்க
௰௮ ளே.—இப்பொழுது நீங்கள் அபிமேலேக்கை இ
ராசனாக்கினதினால் உண்மையும் நேர்மையுஞ்
செய்தீர்களா; யெருபாகாலுக்கும் அவருடைய
குடும்பத்திற்கும் நன்மைசெய்தீர்களா; அவரு
டைய செய்கைக்குத்தக்கதாக அவருக்குச்செய்
௰௯ தீர்களா;-நீங்கள் இன்றைக்குயெருபாகாலுக்கும்
அவனுடையகுடும்பத்திற்கும் உண்மையும் நேர்
மையுஞ் செய்தீர்களானால், அபிமேலேக்கின்
மேல் சந்தோஷப்படுவீர்களாக, அவனும் உங்
௨௰ கள்மேற் சந்தோஷப்படுவானாக:—இல்லாவிட்
டால் அபிமேலேக்கிலிருந்து அக்கினிபுறப்பட்
டு ஷிகேம் நகரத்தாரையும், மில்லோவின் குடும்
பத்தாரையும் பட்சிக்கவும், ஷிகேம் நகரத்தாரி
லும் மில்லோவின் குடும்பத்தாரிலுமிருந்து அக்
கினி புறப்பட்டு, அபிமேலேக்கைப் பட்சிக்க
௨௧ வுங்கடவதென்றுயோதாம்சொல்லி;—தன் சகோ
தரனாகிய அபிமேலேக்குக்கு அஞ்சித்தப்பிஓடிப்
பேருக்குப்போய்அங்கே வாசம்பண்ணினான்.
௨௨ அபிமேலேக் மூன்றுவருஷம் இஸரவேலரை
௨௩ அரசாண்டபின்பு,—தேவன் அபிமேலேக்குக்
கும் ஷிகேமின் மனிதருக்குந் தீமையுள்ள ஆ
௨௪ வியை வரப்பண்ணினார்.—யெருபாகாலுடைய
எழுபது புத்திரருக்குஞ் செய்யப்பட்ட கொடு
மை அவர்களைக்கொன்ற அவர்களுடைய சகோ
தரனாகிய அபிமேலேக்கின்மேலும், அவன்தன்
சகோதரரைக்கொல்லும்படி அவனுடைய கைக
ளைப்பலப்படுத்தின ஷிகேமின் மனிதர்மேலுஞ்
செல்லவும், அவர்களுடைய இரத்தப்பழி இவர்
கள்மேலே திரும்பிவரவும், ஷிகேமின் மனிதர்
௨௫ அபிமேலேக்கை வஞ்சித்து நடந்தார்கள்.—ஷி
கேமின் மனிதர் அவனைக்குறித்துப் பதிவிருக்
கும்படி மலைகளின்மேலே மனிதர்களை வைத்
தார்கள், அவர்கள் தங்களுக்குச்சமீபமான வழி
யிலே நடந்துபோகிறயாவரையுங் கொள்ளையிட்
டார்கள்: அது அபிமேலேக்குக்குத் தெரிவிக்கப்
பட்டது.—பின்பு எபேத்தின் புத்திரனாகிய கா ௨௬
காலும் அவனுடைய சகோதரரும் புறப்பட்டு,
ஷிகேமுக்குட் பிரவேசித்தார்கள்: ஷிகேமின்ம
னிதர்கள் அவர்களை நம்பி,—வெளியேபோய், ௨௭
தங்கள்திராட்சத்தோட்டங்களிலுள்ளபழங்களை
அறுத்து, ஆலையாட்டி, சந்தோஷப்பாட்டுகளைப்
பாடி, தங்கள்தேவனுடைய ஆலயத்திற்போய்,
போசனபானம்பண்ணி, அபிமேலேக்கை நிந்
தித்தார்கள்.—அன்றியும் எபேத்தின் புத்திரனாகி ௨௮
ய காகால், அபிமேலேக்யாவன், ஷிகேம்யாவன்,
அவனுக்கு நாம் சேவிக்கவேண்டுவதென்ன; அ
வன் யெருபாகாலினுடைய புத்திரனல்லவா;
செபுல் அவனுடையசேனாபதியல்லவா; ஷிகே
மின் பிதாவாகிய காமோரின் மனிதரிடத்திலே
யேசேவியுங்கள்: இவனிடத்தில்நாம் சேவிக்கிற
தேது;—இந்தச்சனங்கள் என்கைக்குட்பட்டால், ௨௯
அபிமேலேக்கை நீக்கிவிடுவேனே யென்றான்.
அபிமேலேக்குக்கு, உன் சேனையைமிகுதியாக்
கி, புறப்பட்டுவாவென்று சொல்லுவித்தான்.
நகரத்தின் அதிபதியாகிய செபுல் எபேத்தின் ௩௰
புத்திரனாகிய காகாலின் வார்த்தைகளைக்கேட்டு,
கோபங்கொண்டு,—இரகசியமாய் அபிமேலேக் ௩௧
கிடத்துக்குத்தூதர்களைஅனுப்பி, கேளும், எபேத்
தின்புத்திரனாகிய காகாலும் அவனுடைய சகோ
தரரும் ஷிகேமுக்குவந்து; உமக்குவிரோதமாக
நகரத்தை அரணிக்கிறார்கள்;—ஆகையால் நீர் ௩௨
உம்மோடிருக்கிற சனங்களுடனேகூட இரவி
ல் எழுந்துவந்து, வெளியிலேபதிவிருந்து,—கா ௩௩
லையிலே சூரியோதயமாகிறபொழுது எழுந்து,
நகரத்துக்குவிரோதமாய் எதிர்த்து, அவனும் அ
வனோடிருக்கிற சனங்களும் உமக்கெதிரேபுறப்
படும்பொழுது, சம்பவிக்குங் காரியத்துக்குத்தக்
கதாக அவனுக்குச்செய்யுமென்று சொல்லுவித்
தான்.
அப்படியே அபிமேலேக்கும், அவனோடிருக் ௩௪
கிற சமஸ்தசனங்களும் இரவில் எழுந்துபோய்,
ஷிகேமுக்கு விரோதமாய் நான்கு அணியாகப்
பதிவிருந்தார்கள்.—எபேத்தின்புத்திரனாகிய கா ௩௫
கால் புறப்பட்டு, நகரத்தின் பிரவேசவாசலினி
டத்தில் நின்றுகொண்டான்: அப்பொழுது பதி
விருந்த அபிமேலேக்கு, தன்னோடிருக்கிறசனங்
களுடனே கூட எழுந்துவந்தான்.—காகால் அந் ௩௬
தச்சனங்களைக்கண்டு, பார், மலைகளின் உச்சிக
ளிலிருந்து சனங்கள் இறங்கிவருகிறார்களென்
று செபுலோடே சொல்ல, செபுல் அவனைநோக்
கி, நீ மலைகளின் நிழலைக்கண்டு மனிதரென்று

(௰௫) ஏசா.௩௰.௨. தானி.௪.௰௨. ஓசி.௰௪.௭. வச.௨௰. எண்.௨௧.௨௮. எசேக்.௰௯.௰௪. ௨.இரா.௰௪.௯. ஏசா.௨.௰௩. ஏசா.௩௭.௨௪. எசேக்.௩௧.௩. (௰௭) வச.௫,௬. (௰௮) அதி.௮.௩௫. (௰௯) ஏசா.௮.௬. பிலி.௩.௩. வச.௰௫,௫௬,௫௭. (௨௧) ௨.சாமு.௨௰.௰௪. (௨௩) ௧.சாமு.௰௬.௰௪. ௧.இரா.௰௨.௰௫. ௨.நாளா.௰.௰௫. ஏசா.௰௯.௨,௰௪. (௨௪) ஏசா.௩௩.௧. ௧.இரா.௨.௩௨. எஸ்த.௯.௨௪. சங்.௭.௰௬. மத்.௨௩.௩௫,௩௬. (௨௭) ஏசா.௰௬.௯,௰. எரே.௨௫.௩௰. வச.௪. (௨௮) ௧.சாமு.௨௫.௰. ௧.இரா.௰௨.௰௬. ஆதி.௩௪.௨,௬. (௨௯) ௨.சாமு.௰௫.௪. (௩௩) ௧.சாமு.௰.௭. ௧.சாமு.௨௫.௮. பிர.௯.௰.

௩௭ நினைக்கிருயென்ருன்.—பின்னும் காகால் அதோ சனங்கள்தேசத்தின்மேட்டிலிருந்து இறங்கிவருகிருர்களே, ஒரு அணி ஏலோம்மே யோனிமின்வ
௩௮ ழியாய் வருகிறதேயென்ருன்.-அப்பொழுது செபுல் அவனைநோக்கி, நாம் அபிமேலேக்கை அவன் யாவனென்றுசொன்னவாய், இப்பொழுது எங்கே;நீ அவமதித்தசனங்கள்,அவர்களல்லவா; இப்பொழுது நீ புறப்பட்டு அவர்களுடனே யுத்
௩௯ தம் பண்ணவேண்டுமென்ருன்.—அப்பொழுது காகால் ஷிகேமின்மனிதருக்குமுன்பாகப்புறப்பட்டு, அபிமேலேக்கோடே யுத்தம்பண்ணிஞ
௪௰ ன்.—அபிமேலேக்அவனைத்துரத்திஞன், அவன் முன்னின்றுங் காகால் ஓடிஞன், நகரவாசல்வரைக்கும் அநேகர் வெட்டுண்டுவிழுந்தார்கள்.-
௪௧ அபிமேலேக் அருமாவிலிருந்துவிட்டான்: செபுல் காகாலேயும்,அவன்சகோதரரையும், ஷிகே
௪௨ மிலிராதபடி துரத்திவிட்டான்.-மறுநாளிலே சனங்கள் வெளியிலேபுறப்பட்டார்கள்;அதுஅபிமேலேக்குக்குத் தெரிவிக்கப்பட்டபொழுது,—
௪௩ அவன்சனங்களைக்கூட்டிக்கொண்டு, அவர்களை மூன்று அணியாகவகுத்து, வெளியிலே பதிவிருந்து,அந்தச்சனங்கள் நகரத்திலிருந்துபுறப்பட்டுவருகிறதைக்கண்டு; எழுந்து அவர்களை எதிர்த்
௪௪ து, அவர்களைமுறிய அடித்தான்.—அபிமேலேக்கும், அவனேடிருந்தவகுப்பாரும், வேகமாய்ச்சென்று, நகரவாசலினின்றுகொண்டார்கள்: மற்ற இரண்டுவகுப்பாரும்வெளியில் இருக்கிற யாவர்மேலும் பாய்ந்து, அவர்களைக்கொன்ருர்கள்.-
௪௫ அந்தநாள்முழுவதும் அபிமேலேக்நகரத்தை எதிர்த்து யுத்தம்பண்ணி; நகரத்தைப்பிடித்து, அதிலிருந்த சனங்களைக்கொன்று, நகரத்தை யிடித்துப்போட்டு, அதில் உப்புத்தெளித்தான்.
௪௬ ஷிகேமைச்சேர்ந்த துருக்கத்திலுள்ள சமஸ்த மனிதரும் அதைக்கேட்டபொழுது, பிரீத்துத்தேவனுடைய ஆலயத்தின் ஒரு அரணிற் புகுந்தார்
௪௭ கள்.—ஷிகேமின் துருக்கத்திலுள்ள சமஸ்தமனிதரும் அங்கேகூடியிருக்கிறது அபிமேலேக்குக்
௪௮ குத் தெரிவிக்கப்பட்டபொழுது,-அபிமேலேக் தன்ஞேடிருந்த சமஸ்த சனங்களோடுஞ்சல்மோன் மலையிலேறி; தன்கையிற்கோடரியைப்பிடித்து, ஒரு மரக்கொப்பைவெட்டி, அதையெடுத்துத் தன்தோளின்மேற்சுமந்துகொண்டு, தன்ஞேடிருந்தசனங்களைநோக்கி, நான்செய்தவண்ணம் நீங்களுந் தீவிரமாய்ச்செய்யுங்களென்று சொல்
௪௯ ல;—சனங்களெல்லாரும் ஒவ்வொருகொப்பை வெட்டி, அபிமேலேக்குக்குப்பின்சென்று, அதை அவ்வரணுக்கிட்டு, அக்கினியைக்கொளுத்தி, அரணைச்சுட்டுப்போட்டார்கள்; அதிஞலே ஷிகேமின் துருக்கத்து ஸ்திரிபுருஷர்களெல்லாரும், ஏறக்குறைய ஆயிரம்பேர் இறந்துபோஞர்கள்.
௫௰ பின்பு அபிமேலேக் தேபேத்சுக்குப்போய், அதற்கு விரோதமாய் முற்றிக்கைபோட்டு, அதைப்பிடித்தான்.—அந்த நகரத்தின் மத்தியிலே ௫௧
பலத்ததுருக்கமிருந்தது, அங்கே ஸ்திரி புருஷர்கள்யாவரும் ஓடிச்சேர்ந்து, தங்கள் பின்ஞலே வாசலைப்பூட்டிக்கொண்டு, துருக்கத்தின்மேலேறிஞர்கள்.-அபிமேலேக் அந்தத்துருக்கம்வரைக் ௫௨
குஞ்சென்று, அதை எதிர்த்துயுத்தம்பண்ணி, துருக்கத்தின்வாசலைச்சுட்டுப்போடும்படிக்கு அதினருகேசேர்ந்தான்.—அப்பொழுதே ஒருஸ்திரி ௫௩
ஒரு எந்திரக்கல்லின்துண்டை அபிமேலேக்கினுடைய தலையின்மேற்போட்டாள், அது அவனுடைய கபாலத்தையுடைத்தது.—உடனே அ ௫௪
வன் தன் ஆயுததாரியைக் கூப்பிட்டு, ஒருஸ்திரி அவனைக்கொன்ருள் என்று அவர்கள்என்னைக் குறித்துச் சொல்லாதபடி, நீ உன்கத்தியை உருவி, என்னைக் கொலைசெய்யென்று அவனுடன் சொன்ஞன். அப்படியே அவனுடைய பணிவிடைக்காரன் அவனைக்குத்த, அவனிறந்துபோஞன்.—அபிமேலேக் இறந்துபோனதை இஸர ௫௫
வேலர்கண்டபொழுது, அவர்கள் தங்கள் தங்களிடங்களுக்குப்போய்விட்டார்கள்.

இப்படியே அபிமேலேக்தன்னுடைய சகோ ௫௬
தரர்எழுபதுபேரைக்கொலைசெய்ததிஞலே, தன் பிதாவுக்குச்செய்த பாவத்தின்பலனை அவன் அனுபவிக்கும்படி தேவன் செய்தார்.—ஷிகே ௫௭
மின்மனிதர்செய்ததீங்குகள்யாவையும்தேவன் அவர்கள் தலையில்வருவித்தார்: யெருபாகாலின் புத்திரஞகியயோதாம் இட்டசாபமேஅவர்களுக்குக்கிடைத்தது.

## ௰. அதிகாரம்.

க. தோலாக் நியாயம் விசாரித்தல்: ௩. யாயீர் நியாயம் விசாரித்தல்: எ. பாவத்தினிமித்தம் இஸரவேலர்துக்கமடைதல்: ௰. யெகோவாவைப் பிரார்த்தித்தல்;அவர்உத்தரமருளல்: ௰௫. சனங்கள் தங்கள்பாவத்தை உணர்ந்துசொல்லத் தேவன் அவர்கள்மேலிரங்கல்.

அபிமேலேக்குக்குப்பின்பு ஈஷகார்கோத்திரத் ௧
தாஞகியதோதோவின்பௌத்திரனும், பூகாளின் புத்திரனுமாகிய தோலாக் இஸரவேலை இரட்சிக்கும்படி எழுந்தான்; அவன் எப்ராயீம் மலைத்தேசத்திலுள்ள ஷாமீரிலேவசித்து,-இஸரவேலரை ௨
இருபத்துமூன்றுவருஷம் நியாயம் விசாரித்து, பின்புமரித்து, ஷாமீரிலே அடக்கம்பண்ணப்பட்டான்.

அவனுக்குப்பின்பு கிலியாத் நாட்டாஞகிய ௩
யாயீர் எழுந்து, இஸரவேலரை இருபத்திரண்டு வருஷம் நியாயம்விசாரித்தான்.—முப்பது கழு ௪
தைக் குட்டிகளின்மேல் ஏறுகிறபுத்திரர்முப்பது பேர் அவனுக்கிருந்தார்கள், அவர்களுக்கு முப்பது ஊர்களிருந்தன, கிலியாத்தேசத்திலுள்ள அவைகள் இந்நாள்வரைக்கும் யாயீரின்கிராமங்களென்றுபெயர்ப்படுகின்றன.—யாயீர்மரித்து, கா ௫

(௩௭) உபா.௰௮.௰௪. (௩௮) வச.௨௮,௨௯. (௪௫) வச.௨௰. உபா.௨௯.௨௩. க.இரா.௰௨.௨௫. உ.இரா.௩.௨௫. (௪௬) அதி.௮.௩௩. (௪௮) சங்.௬௮.௰௪. (௫௩) உ.சாமு.௰௧.௨௧. (௫௪) க.சாமு.௩௧.௪. (௫௬) வச.௨௪. யோபு.௩௧.௩. சங்.௯௪.௨௩. நீதி.௫.௨௨. (௫௭) வச.௨௰.—(௰. அதி. க.) அதி.௨.௰௬. (௪) அதி.௫.௰. உபா.௩.௰௪. எண்.௩௨.௪௧.

௬ மோனிலே அடக்கம்பண்ணப்பட்டான்.—பின்
னும் இஸரவேல்சந்ததியார் யெகோவாவின்
பார்வைக்குத்தீங்குசெய்தார்கள்; அவர்கள் யெ
கோவாவைச்சேவியாமல் விட்டுப்போய், பா
கால்களையும், அஷ்தாரோத்தையும், ஷீரியருடை
யதேவர்களையும் சீதோனின்தேவர்களையும், மோ
வாபின்தேவர்களையும், அம்மோன்சந்ததியாரின்
தேவர்களையும் பெலிஸ்தியருடைய தேவர்களை
யுஞ்சேவித்தார்கள்.
௭ அப்பொழுது யெகோவா இஸரவேலரின்
மேல் கோபம்மூள, அவர்களைப் பெலிஸ்தியரு
டையகையிலும், அம்மோன் சந்ததியாருடைய
௮ கையிலும்ஒப்பித்தார்.—அவர்கள் அந்தவருஷம்
முதல் பதினெட்டுவருஷமளவும், யோர்தானுக்
கப்புறத்திலே கிலியாத்திலுள்ள எமோரியருடை
யதேசத்திலிருந்த இஸரவேலரெல்லாரையும் நெ
௯ ருக்கி உபத்திரவப் படுத்தினார்கள்.—அன்றியும்
அம்மோன்சந்ததியார் யூதாவின்மேலும்,பேன்யா
மீன் மேலும், எப்ராயீம் சந்ததியார்மேலும், யுத்
தம்பண்ணும்படி யோர்தானையுங்கடந்து வந்தார்
கள்; அதினால் இஸரவேலருக்குமிகவும்நெருக்க
மாயிற்று.
௰ அப்பொழுது இஸரவேல் சந்ததியார் யெ
கோவாவை நோக்கி, நாங்கள் எங்கள் தேவ
னைவிட்டுப் பாகால்களைச் சேவித்து உமக்குவி
ரோதமாய்ப்பாவஞ்செய்தோமென்று ஓலமிட;—
௰௧ யெகோவா இஸரவேலரை நோக்கி, எகிப்தி
யரும், எமோரியரும், அம்மோன்சந்ததியாரும்,
௰௨ பெலிஸ்தியரும்;—சீதோனியரும், அமலேக்கிய
ரும், மாகோனியரும் உங்களை உபத்திரவப்படுத்
தினபொழுது; என்னைநோக்கி ஓலமிட, நான்
உங்களை அவர்கள்கையினின்று நீக்கி இரட்சிக்க
௰௩ வில்லையா;—அப்படிச்செய்தும் நீங்கள் என்னை
விட்டு, அந்நியதேவர்களைச்சேவித்துவந்தீர்கள்;
ஆகையால்இனிஉங்களைஇரட்சிக்கமாட்டேன்.-
௰௪ நீங்கள் உங்களுக்காகத்தெரிந்துகொண்டதேவர்
களிடத்திலேபோய், அவர்களைநோக்கிஓலமிடுங்
கள்; அவர்களே உங்கள் உபத்திரவகாலத்திலே
உங்களை இரட்சிக்கக்கடவர்களென்றார்.
௰௫ அதற்கு இஸரவேல் சந்ததியார் யெகோவா
வைநோக்கி,நாங்கள்பாவஞ்செய்தோம்: நீர் உம
துபார்வைக்கு நலமானதை எங்களுக்குச்செய்
யும்; இக்காலத்தில் எங்களைத்தப்புவித்தருளுமெ
௰௬ ன்றுசொல்லி,—தங்களிடத்தினின்றும் அந்நியதே
வர்களை விலக்கிவிட்டு, யெகோவாவையே
சேவித்தார்கள், அப்பொழுது அவர் இஸரவேல
ருடையவியாகுலத்தைக்கண்டு மனமுருகினார்.—
௰௭ அம்மோன்சந்ததியார்கூட்டங்கூடி, கிலியாத்தி
லேபாளயமிறங்கினார்கள். இஸரவேல் சந்ததியா
ருங்கூடிமிஸ்பேயிலே பாளயமிறங்கினார்கள்.—
அப்பொழுது கிலியாத்தின் பிரபுகளாகிய சனங் ௰௮
கள் ஒருவரையொருவர்நோக்கி,அம்மோன் சந்த
தியாருடன் யுத்தம்பண்ணத்தொடங்குகிறவனெ
வனோ, அவனே கிலியாத்தின்குடிகளெல்லாருக்
கும் அதிபதியாவானென்றார்கள்.

## ௰௧. அதிகாரம்.

௧. யெப்தாவைத் தூரப்படுத்தல்: ௪. அவனைத்தி
ரும்பக்கொண்டுவரும்படி ஆட்களையனுப்பல்:
௰௨. இஸரவேலருக்குச் சேனாபதியாகிய அம்
மோன் புத்திரரின் இராசாவிடத்தில் தூதரைய
னுப்பல்: இவன்சம்மதியாமலிருத்தல்: ௨௯. யெ
ப்தாசங்கற்பஞ்செய்தல்: ௩௨. அவன்செயித்தல்:
௩௪. சங்கற்பத்தின்படி தன் குமாரத்தியை ஒப்
பித்தல்.

கிலியாத்தியனான யெப்தா வென்பவன் பராக்கி ௧
ரமவீரன், அவன் ஒருவேசைபெற்றபுத்திரன்: கி
லியாத்அவனைப்பெற்றான்.-கிலியாத்தின்மனைவி ௨
யும் அவனுக்குப்புத்திரரைப்பெற்றாள்; அவர்கள்
வளர்ந்தபின்பு, அவர்கள் யெப்தாவை நோக்கி,
நீ அந்நியஸ்திரியின் புத்திரனானதால், நீ எங்
கள் பிதாவின் குடும்பத்திலே சுதந்தரம்பெறலா
காதென்றுசொல்லி, அவனைத்துரத்தினார்கள்.—
அப்பொழுது யெப்தா தன் சகோதரரைவிட்டோ ௩
டிப்போய், தோப்நாட்டிலேவசித்தான்: அங்கே
கெட்டமனிதர்கள்யெப்தாவைச்சேர்ந்துகொண்
டு, அவனோடேகூடப்புறப்படுவார்கள்.
சிலநாளுக்குப்பின்பு, அம்மோன் சந்ததியார் ௪
இஸரவேலரை எதிர்த்துயுத்தம்பண்ணினார்கள்.—
அவர்கள் இஸரவேலரை எதிர்த்து யுத்தம்பண் ௫
ணுகையில், கிலியாத்தின் முதியோர்கள் யெப்
தாவைத் தோப் நாட்டிலிருந்து அழைத்துவரப்
போய்,—யெப்தாவைநோக்கி, நீவந்து எங்களுக் ௬
குச் சேனாபதியாயிருக்கவேண்டும், நாம் அம்
மோன் சந்ததியாருடனே யுத்தம்பண்ணக்கட
வோமென்றார்கள்.-அதற்குயெப்தா கிலியாத்தின் ௭
முதியோரைநோக்கி, நீங்களல்லவா என்னைப்ப
கைத்து, என்பிதாவின்வீட்டினின்றும் என்னைத்
துரத்தினவர்கள்; நீங்கள் அவதிப்படுமிக்காலத்
தில் என்னிடத்தில் வந்ததென்னவென்றான்;—
அதற்குக்கிலியாத்தின்முதியோர்கள்யெப்தாவை ௮
நோக்கி, நீ எங்களுடனேகூடவந்து, அம்மோன்
சந்ததியாரோடேயுத்தம்பண்ணி, கிலியாத்தியரா
கிய எங்களனைவருக்கும் அதிபதியாயிருக்கவே
ண்டும், இதற்காக நாங்கள் இப்பொழுது உன்னி
டத்தில் திரும்பிவந்தோமென்றார்கள்.—அதற்கு ௯
யெப்தா கிலியாத்தின்முதியோரைநோக்கி, அம்
மோன் சந்ததியாரை எதிர்த்து யுத்தம்பண்ணும்
படி நீங்கள் என்னைத்திரும்பவீட்டுக்கு அழைத்

(௬) அதி.௨.௰௧. அதி.௯.௧. அதி.௰௩.௧. அதி.௨.௰௩. அதி.௨.௰௨. ௧.இரா.௰௧.௩௩. (௭) அதி.௨.௰௪. ௧.சாமு.௰௨.௯. (௰) ௧.சாமு.௰௨.௰. (௰௧) யாத்.௰௪.௩௰. எண்.௨௧.௨௧,௨௪,௨௫. அதி.௩.௰௨,௰௩. அதி.௩.௩௧. (௰௨) அதி.௫.௰௯. அதி.௬.௩. (௰௩) உபா.௩௨.௰௫. எரே.௨.௰௩. (௰௪) உபா.௩௨.௩௭,௩௮. ௨.இரா.௩.௰௩. (௰௫) ௧.சாமு.௩.௰௮. ௨.சாமு.௰௫.௨௬. (௰௬) ௨.நாளா.௭.௰௪. எரே.௰௮.௭,௮. ஏசா.௬௩.௯. (௰௭) ஆதி.௩௧.௪௯. (௰௮) அதி.௰௧.௮,௰௧.—(௰௧. அதி.௧.) எபி.௰௧.௩௨. அதி.௬.௰௨. ௨.இரா.௫.௧. (௩) அதி.௯.௪. ௧.சாமு.௨௨.௨. (௭) ஆதி.௨௬.௨௭. (௮) அதி.௰.௰௮. லூக்.௰௭.௪. அதி.௰.௰௮.

துப்போனபின்பு, யெகோவா அவர்களை எ
னக்குமுன் ஒப்பித்தால், நான் உங்களுக்கு அதி
௰ பதியாவேனுவென்றுகேட்க;-கிலியாத்தின் முதி
யோர் யெப்தாவைநோக்கி, உன்சொற்படி நாங்
கள் செய்யாமல்விட்டால், யெகோவா எங்
கள் மத்தியில் நியாயங்கேட்கக் கடவரென்றார்
௰௧ கள்.—அப்பொழுது யெப்தா கிலியாத்தின்முதி
யோருடன்போனான், சனங்கள் அவனைத் தங்க
ளுக்குத் தலைவனுஞ் சேனாபதியுமாக வைத்தார்
கள்: யெப்தா தன் காரியங்களெல்லாவற்றை
யும் மிஸ்பேயிலே யெகோவாவின் சந்நிதி
யில்சொன்னான்.
௰௨ பின்பு யெப்தா அம்மோனுடைய இராசனி
டத்துக்குத் தூதரை யனுப்பி, நீர் என் தேசத்துக்
கு விரோதமாக யுத்தம்பண்ணும்படி என்னி
டத்தில் வருகிறதற்குக் காரணமென்னவென்று
௰௩ கேட்பிக்க;—அம்மோனுடைய இராசா யெப்
தாவின் தூதரைநோக்கி, இஸரவேலர் எகிப்தி
னின்றும் புறப்பட்டுவந்தபொழுது, அர்னோன்
தொடங்கி யாப்போக் யோர்தான் மட்டுமுள்ள
என்னுடையதேசத்தைப் பிடித்துக்கொண்டதே
காரணம், இப்பொழுது விரோதமின்றி அதை எ
௰௪ னக்குத்தந்துவிடவேண்டுமென்றான்.—யெப்தா
திரும்பவும் அம்மோனியருடைய இராசனிடத்
௰௫ தில் தூதரையனுப்பி,—இஸ்ரவேலர் மோவாபி
யருடைய தேசத்தையாவது, அம்மோனியரு
டைய தேசத்தையாவது பிடித்துக்கொள்ளவில்
௰௬ லையே.—இஸரவேலர் எகிப்தினின்றும் புறப்
பட்டுவருகிறபொழுது, வனத்திலே செங்கடல்
மட்டும்நடந்து, பின்பு காதேஷினிடத்தில்சேர்ந்
௰௭ து,—எதோமின் இராசாவினிடத்தில் தூதரைய
னுப்பி, நாங்கள் உன்தேசத்தின் வழியாய்க்க
டந்துபோவதற்கு இடங்கொடுக்கவேண்டுமென்
றுசொல்லுவிக்க, எதோமின் இராசா செவிகொ
டுக்கவில்லை. அவ்வண்ணமே மோவாபின் இரா
சாவிடத்திலும்அனுப்ப, அவனுஞ்சம்மதிக்கவில்
லை: ஆதலால் இஸரவேலர் காதேஷிலே தரித்தி
௰௮ ருந்து,—பின்பு வனத்திலே நடந்து, எதோம்தே
சத்தையும் மோவாபு தேசத்தையுஞ் சுற்றிவந்து,
மோவாபின்தேசத்துக்குக்கிழக்கேசென்று, மோ
வாபின் எல்லைக்குட்பிரவேசியாமல் அர்னோன்
நதிக்கப்புறத்தில் பாளயமிறங்கினார்கள்: அந்த
௰௯ அர்னோன் மோவாபின் எல்லை.—அப்பொழு
து இஸரவேலர் எஷ்போனை அரசாண்ட சீகோ
னென்னும் எமோரியருடைய இராசாவினிடத்
தில் தூதரையனுப்பி, நாங்கள் உன்தேசத்தின் வ
ழியாய் எங்கள் தானத்துக்குக்கடந்துபோகிறதற்
௨௰ கு இடங்கொடுவென்றுசொல்லுவிக்க,—தன் எல்
லையைமாத்திரம் இஸரவேலர் கடந்துபோவார்க
ளென்று சீகோன் நம்பாமல், தன் சனங்களெல்
லாரையுங் கூட்டி யாகாசாவில் இறங்கி, இஸர
வேலரோடே யுத்தம்பண்ணினான்.—அப்பொ ௨௧
ழுது இஸரவேலின் தேவனாகிய யெகோ
வா சீகோனையும்அவனுடையசமஸ்தசனங்களை
யும், இஸரவேலருடைய கையில் ஒப்பித்தார்,
இஸரவேலர் அவர்களை முறிய அடித்து, எமோ
ரியர்வசித்த அத்தேசம்முழுவதையும் பிடித்து,—
அர்னோன் தொடங்கி, யாப்போக் வரைக்கும், ௨௨
வனம்தொடங்கி, யோர்தான் வரைக்குமுள்ள எ
மோரியருடைய எல்லைமுழுவதையுஞ் சுதந்தரித்
துக்கொண்டார்கள்.—இப்படி இஸரவேலின் ௨௩
தேவனாகிய யெகோவா தமது சனங்களா
கிய இஸரவேலர்முன்னின்றும் எமோரியரைத்து
ரத்திவிட்டார், நீர் அந்தத்தேசத்தைச்சுதந்தரிக்க
லாமா.—நீர் சுதந்தரிக்கும்படி, உம்முடைய தே ௨௪
வனாகிய கிமோஷ் உமக்குத்தருவதை நீர் சுதந்
தரிக்கமாட்டீரா; அவ்வண்ணமே, எங்கள் தே
வனாகிய யெகோவா எங்கள் முன்னின்றுந்
துரத்திவிடுகிறவர்களுடைய தேசத்தை நாங்க
ளுஞ் சுதந்தரிப்போம்.-மேலும் சிப்போரின் புத் ௨௫
திரனாகிய பாலாக்கென்னும் மோவாபின் இரா
சாவிலும் நீர் அதிகமேன்மையுள்ளவரா; அவன்
எப்பொழுதாகிலும் இஸரவேலருடன் விவாதம்
பண்ணினானா; எப்பொழுதாகிலும் அவர்களுக்
கு விரோதமாய் யுத்தஞ்செய்தானா;—அன்றியும் ௨௬
இஸரவேலர் எஷ்போனிலும் அதின் நகரங்களி
லும், அரோவேரிலும் அதின் நகரங்களிலும்,
அர்னோன் நதிக்கருகான ஊர்களெல்லாவற்றி
லும் குடியேறி முந்நூறுவருஷமாயிற்றே; இத்த
னைகாலத்துக்குள்ளே நீங்களதை மீட்டுக்கொள்
ளாததேது.—அன்றியும் நான் உமக்குவிரோதமா ௨௭
கக்குற்றஞ்செய்யவில்லையே, நீர் எனக்குவிரோ
தமாயுத்தம்பண்ணுகிறதினால் எனக்குத் தீங்கு
செய்கிறீர்: நியாயாதிபதியாகிய யெகோவா
இன்று இஸரவேல் சந்ததியாருக்கும், அம்மோன்
சந்ததியாருக்கும் மத்தியில், நியாயந் தீர்க்கக்கட
வரென்று யெப்தா சொல்லுகிறானென்று சொல்
லுவித்தான்.—அப்படியிருந்தும் அம்மோனியரு ௨௮
டைய இராசா தனக்கு யெப்தாசொல்லியனுப்பி
ய சொற்களுக்குச்செவிகொடுக்கவில்லை.
பின்பு யெகோவாவின் ஆவி யெப்தாவின் ௨௯
மேலேவர, அவன் கிலியாத்தையும், மனாசே
யின்நாட்டையுங்கடந்து, கிலியாத்திலுள்ள மிஸ்
பேக்குச்சென்று, அங்கிருந்து அம்மோனியருக்
கு எதிராகப்போனான்.—அப்பொழுது யெப்தா ௩௰
நீர் அம்மோனியரை என்கையிலொப்பித்தால்,-

(௰) எரே.௪௨.௫. (௰௧) அதி.௰.௰௭. ௧.சாமு.௰.௰௭. (௰௩) எண்.௨௧.௨௪,௨௫,௨௬. ஆதி.௩௨.௨௨. (௰௫) உபா.௨.௯,௰௯. (௰௬) எண்.௰௪.௨௫. உபா.௧.௪௰. யோசு.௫.௬. எண்.௰௩.௨௬. உபா.௧.௪௬. (௰௭) எண்.௨௰.௰௪. எண்.௨௰.௰௮,௨௧. எண்.௨௰.௧. (௰௮) எண்.௨௧.௪. உபா.௨.௧—௮. எண்.௨௧.௰௧. எண்.௨௧.௰௩. (௰௯) எண்.௨௧.௨௧. உபா.௨.௨௬. எண்.௨௧.௨௨. உபா.௨.௨௬. (௨௰) எண்.௨௧.௨௩. உபா.௨.௩௨. (௨௧) எண்.௨௧.௨௪,௨௫. உபா.௨.௩௩,௩௪. (௨௨) உபா.௨.௩௬. (௨௪) எண்.௨௧.௨௯. ௧.இரா.௰௧.௭. உபா.௯.௪,௫. யோசு.௩.௰௩. (௨௫) எண்.௨௨.௨. யோசு.௨௪.௯. (௨௬) எண்.௨௧.௨௫. உபா.௨.௩௬. (௨௭) ஆதி.௰௮.௨௫. ஆதி.௰௬.௫. ௧.சாமு.௨௪.௰௨,௰௫. (௨௯) அதி.௩.௰.

௩௧ நான் அம்மோனியரைவிட்டுச்சமாதானத்துடன் திரும்பவரும்பொழுது, என் வீட்டுவாசற்படியிலிருந்துஎனக்கெதிரேகொண்டுவருவதெதுவோ, அது யெகோவாவுக்கு நிவேதிக்கப்படும்; அதைத்தகனபலியாகச் செலுத்துவேனென்றுசொல்லி, யெகோவாவுக்கொரு சங்கற்பம்பண்ணினுன்.

௩௨ பின்பு யெப்தா அம்மோனியருக்கு விரோதமாயுத்தம்பண்ணும்படி புறப்பட்டுப்போனுன்; யெகோவா அவர்களை அவனுடையகையி
௩௩ லொப்பித்தார்.—அவன் அரோவேர் தொடங்கி, மின்னீத்தூரின் வழியாய் அபேல் கோமீம் வரைக்கும் அவர்களை மகாசங்காரமாக முறியஅடித்து,இருபதுபட்டணங்களைப்பிடித்தான். இப்படி அம்மோன் சந்ததியார் இஸ்ரவேலருக்கு முன்தாழ்ச்சிப்பட்டார்கள்.

௩௪ பின்பு யெப்தா மிஸ்பேயிலுள்ள தன்வீட்டுக்குப்போகிறபொழுது,தன்புத்திரி மிருதங்கத்தோடு நடனஞ்செய்து, தனக்கெதிர்கொண்டுவரக் கண்டான்: அவள் அவனுக்கோரேபிள்ளை; அவள் தவிர அவனுக்குப்புத்திரியுமில்லைப்புத்திர
௩௫ னுமில்லை.—அவளைக்கண்டவுடனே அவன்தன் வஸ்திரங்களைக்கிழித்துக்கொண்டு, ஐயோ என் மகளே, நீ என்னை மிகவுந்தாழ்ச்சிப்படுத்தினுய், நீ என்னைக் கிலேசப்படுத்துகிறவர்களிலொருத்தி: நான் என்வாயைத்திறந்து யெகோவாவை நோக்கிப்பேசினேன்,அந்தவாக்குத் தவறப்படா
௩௬ தென்றுன்.—அதற்கு அவள் என்பிதாவே,நீர் உமது வாயைத்திறந்து யெகோவாவுக்கு வாக்குக் கொடுத்தால், உமது வாயிலிருந்து புறப்பட்டப்படியே எனக்குச்செய்யும்; அம்மோனியராகிய உம்முடைய சத்துருக்களிடத்திற் பழிவாங்கும்படி யெகோவா உமக்கு அனுக்கிரகம் பண்
௩௭ ணினதே போதுமென்றுள்.—பின்னும் அவள் தன்பிதாவைநோக்கி, நீர் எனக்கொன்று செய்யவேண்டும்: நான் மலைகளின்மேலே உலாவித்திரிந்து, என்தோழிகளுடனே என்னுடைய கன்னிமைநிமித்தம் துக்கங்கொண்டாடும்படி,எனக்கு இரண்டுமாதத்தவணை தரவேண்டுமென்றுள்.-
௩௮ அதற்கவன் நீபோய்வாவென்று அவளை இரண்டுமாதத்துக்கனுப்பிவிட்டான்: அவள் தன் தோழிகளோடுபோய், தன் கன்னிமைநிமித்தம் மலை
௩௯ களின்மேல் துக்கங்கொண்டாடி,—இரண்டு மாதம் முடிந்தபின்பு தன் பிதாவினிடத்துக்குத் திரும்பினுள்; அப்பொழுது அவன் தான்பண்ணியிருந்த சங்கற்பத்தின்படியே அவளுக்குச்செய்
௪௰ தான்: அவள் புருஷனையறியாதிருந்தாள்.—பின்பு இஸ்ரவேலருடைய ஸ்திரிகள் வருஷந்தோறும் போய் நாலுநாளளவும் கிலியாத்தியனுன யெப்தாவின் புத்திரியைக்குறித்துப் புலம்புவது இஸ்ரவேலருக்குள்ளே வழக்கமாயிற்று.

## ௰௨. அதிகாரம்.

௧. திம்னியசனங்கள்யெப்தாவோடே வாக்குவாதம் பண்ணல்: ௭. யெப்தாமரணமடைதல்: ௮. இப்த்சாவின் விருத்தாந்தந் தெரிவித்தல்: ௰௧. ஏலோனின் விருத்தாந்தந் தெரிவித்தல்: ௰௩. அப்தோனின் விருத்தாந்தந் தெரிவித்தல்.

பின்பு எப்ராயீமர் ஏகமாய்க்கூடி, வடதிசை ௧
யிற்போய் யெப்தாவைநோக்கி, நீ அம்மோனியரை எதிர்த்து யுத்தம்பண்ணப்போகிறபொழுது, உன்னேடேவரும்படிக்கு எங்களை அழைப்பியாமலிருந்ததென்ன; உன் வீட்டையும் உன்னையும் அக்கினியாற் சுட்டுப்போடுவோமென்
றுர்கள்.—அதற்கு யெப்தா அவர்களைநோக்கி, ௨
நானும் என்சனங்களும் அம்மோனியரோடே மிகவும் விவாதம்பண்ணுகிறகாலத்தில்,நான்உங்களைக்கூப்பிட்டேன்; நீங்கள் என்னைஅவர்களு
டையகைக்குநீக்கி இரட்சிக்கவில்லை.—நீங்கள் ௩
என்னைவிடுவிக்கவில்லையென்று நான் கண்டபொழுது, நான் என்சீவனை என்கையிலேபிடித்துக்கொண்டு, அம்மோனியருக்குவிரோதமாகப் போனேன்,யெகோவாஅவர்களைஎன்கையில் ஒப்பித்தார்: இப்படியிருக்க, நீங்கள் என்னை எதிர்த்து யுத்தம்பண்ணும்படி இன்று என்னிடத்
துக்கு வரவேண்டியதென்னவென்றுன்.—பின்பு ௪
யெப்தா கிலியாத்தின் சகலமனிதரையுஞ் சேர்த்துக்கொண்டு, எப்ராயீமருடனேயுத்தம்பண்ணினுன்: எப்ராயீமருக்குள்ளும் மனேஷேயருக்குள்ளும் வாசம்பண்ணுகிற கிலியாத்தியராகிய நீங்கள் எப்ராயீமரை விட்டோடிப் போனீர்களென்று எப்ராயீமர் சொன்னபடியினுலே, கிலியாத்தின்மனிதர் எப்ராயீமரை முறிய அடித்தார்
கள்.—கிலியாத்தியர் எப்ராயீமருக்குமுந்தி, யோர் ௫
தானின் துறைகளைப்பிடித்தார்கள்: அன்றியும் எப்ராயீமருக்குள்ளே தப்பியோடினவன் ஒருவன்வந்து,நான்அக்கரைக்குப்போகட்டுமென்று சொல்லுகிறபொழுது, கிலியாத்தின்மனிதர் அவனைநோக்கி, நீ எப்ராயீமனுவென்றுகேட்க அவ
னல்லவென்றுல்;—நீ ஷிபோலேத்தென்றுசொல் ௬
லென்பார்கள்:அப்பொழுதுஅவன்அப்படிஉச்சரிக்கமுடியாமல் சிபோலேத்தென்றுசொல்வதைக்கேட்டு, அவனைப்பிடித்து யோர்தான் துறையிலேகொன்றுபோடுவார்கள்:அக்காலத்தில்அங்கே எப்ராயீமில் நாற்பத்தீராயிரம்பேர் மாய்ந்தார்கள்.
யெப்தா இஸ்ரவேலரை ஆறுவருஷம் நியா ௭
யம்விசாரித்தான். பின்புகிலியாத்தியனுனயெப்தா மரித்துக் கிலியாத்துக்குள் ஒருபட்டணத்தில் அடக்கம்பண்ணப்பட்டான்.

---

(௩௧) ஆதி.௨௮.௨௰. ௧.சாமு.௧.௰௧. லேவி.௨௭.௨,௩. ௧.சாமு.௧.௰௧,௨௮. சங்.௬௬.௰௩. லேவி.௨௭.௰௧,௰௨. (௩௩) எசேக்.௨௭.௰௭. (௩௪) அதி.௰.௰௭. வச.௰௧. யாத்.௰௫.௨௰. ௧.சாமு.௰௮.௬. சங்.௬௮.௨௫. எரே.௩௧.௪. (௩௫) ஆதி.௩௭.௨௯,௩௪. பிர.௫.௨. எண்.௩௰.௨. சங்.௰௫.௪. பிர.௫.௪,௫. (௩௬) எண்.௩௰.௨. ௨.சாமு.௰௮.௰௯,௩௧. (௩௯) வச.௩௧. ௧.சாமு.௧.௨௨,௨௪. ௧.சாமு.௨.௰௮. (௪௰) அதி.௫.௰௧.—(௰௨.அதி.௧.)அதி.௮.௧. (௩)௧.சாமு.௰௯.௫. ௧.சாமு.௨௮.௨௧. யோபு.௰௩.௰௪. சங்.௱௰௯.௱௯. (௪) ௧.சாமு.௨௫.௰. (௫) யோசு.௨௨.௰௧. அதி.௩.௨௮. அதி.௭.௨௪. (௬) சங்.௬௯.௨,௰௫. ஏசா.௨௭.௰௨.

௮ அவனுக்குப்பின்புபேத்லகேமூரானாகியஇப்த்
சான் இஸரவேலரை நியாயம்விசாரித்தான்.—
௯ அவனுக்கு முப்பதுபுத்திரரும் முப்பதுபுத்திரிக
ளுமிருந்தார்கள்: இந்த ஸ்திரிகளை அவன் மற்ற
வர்களுக்குவிவாகம்பண்ணிக்கொடுத்து, தன்புத்
திரருக்குமுப்பதுபெண்களைப்புறத்திலேகொண்
டான். அவன் இஸரவேலரை ஏழுவருஷம் நி
௰ யாயம்விசாரித்தான்.—பின்பு இப்த்சான்மரித்துப்
பேத்லகேமிலே அடக்கம்பண்ணப்பட்டான்.
௰௧ அவனுக்குப் பின்பு செபுலோனியனாகிய ஏ
லோன் இஸரவேலரை நியாயம்விசாரித்தான்; இ
வன்இஸரவேலரைப்பத்துவருஷம்நியாயம்விசா
௰௨ ரித்தான்.—பின்பு செபுலோனியனாகிய ஏலோன்
மரித்துச்செபுலோன் நாட்டின் அயாலோனூரில்
அடக்கம்பண்ணப்பட்டான்.
௰௩ அவனுக்குப்பின்பு பிரத்தோனியனான இல்
லேலின் புத்திரனாகிய அப்தோன்இஸரவேலரை
௰௪ நியாயம்விசாரித்தான்.—எழுபது கழுதைக்குட்
டிகளின்மேலேறுகிற நாற்பதுபுத்திரரும்முப்பது
பௌத்திரரும் அவனுக்கு இருந்தார்கள்: அவன்
இஸரவேலரை எட்டுவருஷம் நியாயம்விசாரித்
௰௫ தான்.—பின்பு பிரத்தோனியனான இல்லேலின்
புத்திரனாகிய அப்தோன் மரித்து எப்ராயீம்நாட்
டில் அமலேக்கின் மலையிலுள்ள பிரத்தோன் ஊ
ரிலே அடக்கம்பண்ணப்பட்டான்.

## ௰௩. அதிகாரம்.

௧. இஸரவேல் வமிசத்தார் பாவஞ்செய்தல்: ௨. மனோவாவின் ஸ்திரிக்குத் தேவ தூதன் தரிசனப்படல்: ௮. மனோவாவுக்குத்தரிசனப்படல்: ௰௯. மனோவா நைவேத்தியஞ்செலுத்தல். தூதனானவர் மறைதல்: ௨௪. ஷிம்ஷோனின்சென்மவிருத்தாந்தஞ்சொல்லல்.

இஸரவேல் சந்ததியார் திரும்பவும் யெகோ
வாவின் பார்வைக்குத்தீங்குசெய்தபடியினாலே;
யெகோவா அவர்களை நாற்பதுவருஷமட்டும்
பெலிஸ்தியருடைய கையிலொப்பித்தார்.
௨ அக்காலத்திலே தாண்வமிசத்தானாகியசோ
ரா ஊரானான ஒருமனிதனிருந்தான், அவனுக்கு
மனோவாவென்றுபெயர்; அவனுடைய மனைவி
௩ பிள்ளைபெறாமல் மலடியாயிருந்தாள்.—யெகோ
வாவின் தூதனானவர் அவளுக்குத்தரிசனமாகி,
அவளைநோக்கி, கேள், நீ பிள்ளைபெறாமல் மல
டியாயிருக்கிறாய்: இனி நீ கருப்பந்தரித்து, ஒரு
௪ புத்திரனைப்பெறுவாய்.—ஆதலால் நீ திராட்சர
சத்தையும் மதுவையுங் குடியாதபடிக்கும், அசு
சியான தொன்றையும்புசியாதபடிக்கும் எச்சரிக்
௫ கையாயிருக்கக்கடவாய்.—நீ கருப்பந்தரித்து, புத்
திரனைப்பெற்றபொழுது, அந்தப்பிள்ளை சென்
மமுதல், தேவனுக்கு நசரீயனாயிருப்பதினா
லே அவனுடைய தலையின்மேல் சௌரகன்
கத்தி படலாகாது: அவன் இஸரவேலரைப் பெ
லிஸ்தியருடையகைக்கு நீக்கி இரட்சிக்கத்தொ
டங்குவானென்றார்.—பின்பு அந்தஸ்திரிபோய்த் ௬
தன்புருஷனைநோக்கி, தேவ தாசனொருவர் என்
னிடத்துக்குவந்தார், அவருடைய முகச்சாயல்
தேவ தூதனின் முகச்சாயல்போல மிகவும் ப
யங்கரமாயிருந்தது:எங்கிருந்துவந்தீரென்றுநான்
அவரிடத்திற்கேட்கவுமில்லை, அவர்தம்முடைய
நாமத்தை எனக்குத்தெரிவிக்கவுமில்லை.—அவர் ௭
என்னைநோக்கி, கேள், நீ கருப்பந்தரித்து ஒரு புத்
திரனைப்பெறுவாய்; அந்தப்பிள்ளை சென்ம மு
தல் மரணம்வரைக்கும் தேவனுக்கு நசரீயனாயி
ருப்பதினாலே,நீதிராட்சரசத்தையும்,மதுவையுங்
குடியாமலும், அசுசியானதொன்றையும் புசியா
மலுமிருப்பாயாகவென்று சொன்னாரென்றாள்.
அப்பொழுது மனோவா யெகோவாவை ௮
நோக்கி, ஆ!என் ஆண்டவரே, நீர்அனுப்பின
தேவ தாசன் இன்னமொருதரம் எங்களிடத்தில்
வந்து, பிறக்கும் பிள்ளையைக்குறித்து நாங்கள்
செய்யவேண்டியதை எங்களுக்கு உணர்த்தும்ப
டிசெய்யுமென்று விண்ணப்பம் பண்ணினான்.—
தேவன் மனோவாவின்விண்ணப்பத்துக்குச்செ ௯
விகொடுத்தார்; அந்த ஸ்திரி வயல் வெளியிலே
யிருந்தபொழுது, தேவ தூதனானவர் திரும்ப
வும் அவளிடத்தில்வந்தார்: அப்பொழுது அவ
ளுடைய புருஷனாகிய மனோவா அவளிடத்தி
லில்லை.—ஆதலால் அவள் தன் புருஷனிடத்தில் ௰
விரைந்து ஓடி, அவனைநோக்கி, கேளும்,அன்று
என்னிடத்தில் வந்தவர் எனக்குத்தரிசனமானா
ரென்றுஅறிவித்தாள்.—உடனே மனோவாஎழுந் ௰௧
து, தன்மனைவிக்குப்பின்சென்று, அவரிடத்திற்
போய், இந்தஸ்திரியுடன் பேசினவர் நீர்தானா
என்றவரிடத்திலேகேட்க; அவர் நான்தானென்
றார்.—அப்பொழுது மனோவா அவரைநோக்கி, ௰௨
உமது வாக்குகள் சித்தியாகக்கடவன. அந்தப்
பிள்ளையை எப்படிவளர்க்கவேண்டும்; அதை
எப்படி நடத்தவேண்டுமென்று கேட்க;—யெ ௰௩
கோவாவின் தூதனானவர்மனோவாவைநோக்
கி, நான் ஸ்திரிக்குச்சொல்லிய யாவற்றின்படிக்
கும் அவள் எச்சரிக்கையாயிருக்கவேண்டும்.—அ ௰௪
வள் திராட்சக்கொடியிலுள்ளதொன்றையும் புசி
யாமலும், திராட்ச ரசத்தையும் மதுவையுங் குடி
யாமலும், அசுசியானதொன்றையும் புசியாமலு
மிருக்கவேண்டும்: நான் அவளுக்கு விதித்த யா
வையும் அவள் காத்து நடக்கக்கடவளென்றார்.
அப்பொழுது மனோவா யெகோவாவின் ௰௫
தூதனைநோக்கி, நாங்கள் ஒருவெள்ளாட்டுக்குட்
டியை உமக்குப்பாகம்பண்ணிக்கொண்டு வரு
மளவும், நீர் தரித்திருக்கவேண்டுமென்றான்.—
யெகோவாவின் தூதன் மனோவாவைநோக் ௰௬
கி, நீ என்னைத்தாமதிக்கப்பண்ணினாலும், உன
தாகாரமொன்றையும் புசிக்கமாட்டேன்: தகன

(௰௪) அதி.௫.௰. அதி.௰.௪. (௰௫) அதி.௩.௰௩,௨௭.—(௰௩. அதி. ௧.) அதி.௨.௰௧. அதி.௩.௭. ௧.சாமு.௰௨.௯. (௨) யோசு.௰௯.௪௧. (௩) அதி.௬.௰௨. லூக்.௧.௰௧,௰௩,௨௮,௩௧. (௪) வச.௰௪. எண்.௬.௨,௩. லூக்.௧.௰௫. (௫) எண்.௬.௫. ௧.சாமு.௧.௰௧. எண்.௬.௨. ௧.சாமு.௭.௰௩. ௨.சாமு.௮.௧. ௧.நாளா.௰௮.௧. (௬) உபா.௩௩.௧. ௧.சாமு.௨.௨௭. ௧.இரா.௰௭.௨௪. மத்.௨௮.௩. லூக்.௯.௨௯. அப்.௬.௰௫. (௰௪) வச.௪. (௰௫) ஆதி.௰௮.௫. அதி.௬.௰௮.

பலியிட உனக்கிஷ்டமானால் அதை யெகோ
வாவுக்கிடவேண்டுமென்றார்: அவர் யெகோ
வாவின் தூதனென்பது மனோவாவுக்குத்தெரி
௰௭ யவில்லை.—மனோவா தூதனானவரைநோக்கி, நீர்
சொல்லிய வாக்கு நிறைவேறும்பொழுது நாங்
கள் உம்மைக்கனம்பண்ணவேண்டுமே, உம்மு
௰௮ டைய நாமம் ஏதென்றுகேட்க.—யெகோவா
வின் தூதனானவர் அவனைநோக்கி, நீ என் நா
மத்தைக்குறித்து விசாரிக்கவேண்டியதென்ன;
௰௯ அது இரகசியமென்றார்.—பின்பு மனோவாபோய்
வெள்ளாட்டுக்குட்டியையும், போசனபலியை
யுங்கொண்டுவந்து, அதைக் கன்மலையின்மேலே
யெகோவாவுக்கிட்டான்: அப்பொழுது ம
னோவாவும் அவனுடைய மனைவியும் பார்த்துக்
கொண்டு நிற்க, ஆச்சரியமானவைகளை நடப்
௨௰ பித்தார்.—அக்கினிச்சுவாலை வேதிகையினின்
றும் வானத்துக்குநேரே எழும்புகையில், யெ
கோவாவின் தூதனானவர் வேதிகையினின்
றும் எழுந்த சுவாலையில் ஏறிப்போனார். அதை
மனோவாவும் அவனுடைய மனைவியுங்கண்டு த
௨௧ ரையிலே முகங்குப்புற விழுந்தார்கள்.—பின்பு
யெகோவாவின் தூதனானவர் மனோவாவுக்
கும் அவனுடைய மனைவிக்குந் தரிசனமாகவில்
லை. அப்பொழுது அவரை யெகோவாவின்தூ
௨௨ தனென்று மனோவா அறிந்தான்.—மனோவா தன்ம
னைவியைநோக்கி, நாம் தேவனைக்கண்டோம்,
ஆதலால் நாம் இறந்து போவோமென்றான்.—
௨௩ அதற்கு அவன்மனைவி அவனுடனே, யெகோ
வா நம்மைக் கொலைசெய்யத் திருவுளங்கொண்
டால் அவர் நம்முடைய கையில் தகனபலியை
யும், போசனபலியையும் அங்கிகரிக்கவும், இ
வைகளெல்லாவற்றையும் நமக்குக் காண்பிக்க
வும், இக்காலத்தில் இவைகளை நமக்குத்தெரிவிக்
கவும் மாட்டாரேயென்றாள்.
௨௪ பின்பு அந்தஸ்திரி ஒருபுத்திரனைப்பெற்று அ
வனுக்கு ஷிம்ஷோனென்று பெயரிட்டாள்,
அந்தப்பிள்ளை வளர்ந்தது; யெகோவா அவ
௨௫ னை ஆசீர்வதித்தார்.—மேலும் அவன்சோராவுக்
கும்எஷ்தாவுலுக்கும் இடையிலுள்ளதாணின்பா
ளயத்திலிருக்கையில், யெகோவாவின் ஆவி
அவனை ஏவத்தொடங்கிற்று.

## ௰௪. அதிகாரம்.

௧. ஷிம்ஷோன் பெலிஸ்தியரின் ஒரு கன்னியை விவாகஞ் செய்யவிரும்பல்: ௫. திம்னாத்துக்குப் போகையில் ஒருசிங்கத்தைக் கொலைசெய்தல்: ௮. திம்னாத்துக்கு மறுபடி போகையில் சிங்கத்தின்பிணத்தில்தேனைக்காணல்: ௰. ஷிம்ஷோனுடைய விவாகத்தின்விருந்து: ௰௨. விருந்தின் சமயத்தில் ஷிம்ஷோன் நொடியைச் சொல்லல்: ௰௯. நொடியின் அர்த்தம் தெரிவிப்பதினால் கிடைக்கும்பலனைச் சொல்லல்.

ஷிம்ஷோன் திம்னாத்துக்குப்போனான், அங் ௧
கேபெலிஸ்தியருடையபெண்களில் ஒருபெண்
ணை அவன்கண்டு,—தன் பிதாமாதாவினிடத்தில் ௨
திரும்பி, அவர்களை திம்னாத்தில் பெலிஸ்தியரு
டையஸ்திரிகளில்ஒருஸ்திரியைக்கண்டேன், அ
வளைநீங்கள் எனக்குவிவாகம்செய்விக்கவேண்டு
மென்றான்.—அதற்கு அவனுடைய பிதாவும்மா ௩
தாவும், விருத்தசேதனமில்லாதபெலிஸ்தியரிடத்
திற்கு நீ போய் ஒருஸ்திரியை விவாகம்பண்ண
வேண்டியதேது; உன்சகோதரருடைய புத்திரிக
ளுக்குள்ளும், நம்முடைய சமஸ்த சனங்களுக்கு
ள்ளும் ஒருபெண்ணில்லையாவென்றார்கள்: ஷிம்
ஷோன் தன்பிதாவைநோக்கி, அவள் என் பார்
வைக்குப் பிரியமானவள், ஆதலால் அவளைஎனக்
குக்கொள்ளவேண்டுமென்றான்.-அவன்பெலிஸ் ௪
தியரைவிரோதிக்க வகைதேடும் வண்ணம் யெ
கோவாவினாலிப்படி நடந்ததென்பது அவன்
பிதாமாதாவுக்குவிளங்கவில்லை: அக்காலத்திலே
பெலிஸ்தியர் இஸரவேலரை அரசாண்டார்கள்.
ஷிம்ஷோனும்அவனுடையபிதாமாதாவும்திம் ௫
னாத்துக்குப் போகப்புறப்பட்டார்கள்; திம்னாத்
தூரின் திராட்சதோட்டங்கள் வரைக்குஞ்சென்
றபொழுது, கர்ச்சிக்கிற பாலசிங்கம் அவனுக்கெ
திராக வந்தது.—உடனே யெகோவாவின் ஆ ௬
விவலிமையோடும் அவன் மேலிறங்கினதினால்,
அவன் தன் கையிலொன்றுமில்லாதிருந்தும், அ
தை ஒரு ஆட்டுக் குட்டியைக் கிழிப்பதுபோலக்
கிழித்துப்போட்டான்: தான் செய்ததை அவன்
தன் பிதா மாதாவுக்குத்தெரிவியாமல்,-போய், ஸ் ௭
திரியுடன் சம்பாஷணை பண்ணினான்; அவள்
ஷிம்ஷோனுக்கு மிகவும் பிரியமாயிருந்தாள்.
சிலநாட்சென்றபின் அவன் அவளைவிவாகம் ௮
பண்ணும்படிதிரும்பிப்போகையில், சிங்கத்தின்
உடலைப்பார்க்கும்படிக்கு வழியைவிட்டுச் சா
ய்ந்து சிங்கத்தின் உடலுக்குள்ளேதேனீக்கூட்ட
முந்தேனுமிருக்கக்கண்டு,—அதைத்தன்கைகளி ௯
னாலெடுத்துப்புசித்துக்கொண்டு நடந்து, தன் பி
தாமாதாவினிடத்தில்வந்து, அவர்களுக்குங்கொ
டுத்தான், அவர்களும் புசித்தார்கள்: தான்சிங்கத்
தின் உடலில் அந்தத்தேனை யெடுத்ததை அவர்
களுக்குத் தெரிவிக்கவில்லை.
அவனுடைய பிதா அந்தஸ்திரியிருக்கிற ஸ்தா ௰
னத்துக்குப்போனபொழுது, ஷிம்ஷோன் வாலி
பர்செய்துவருகிறபிரகாரம் அங்கே ஒரு விருந்து
செய்தான்.—அவர்கள் அவனைப் பார்த்தபொழு ௰௧
து, முப்பது தோழரைக்கொண்டுவந்து அவனோ
டிருக்கவிட்டார்கள்.

(௰௮) ஆதி.௩௨.௨௯. ஏசா.௯.௬. (௰௯) அதி.௬.௰௯,௨௰. (௨௰) லேவி.௯.௨௪. ௧.நாளா.௨௧.௰௬. எசேக்.௧.௨௮. மத்.௰௭.௬. (௨௧) அதி.௬.௨௨. (௨௨) ஆதி.௩௨.௩௰. யாத்.௩௩.௨௰. உபா.௫.௨௬. அதி.௬.௨௨. (௨௪) எபி.௰௧.௩௨. ௧.சாமு.௩.௰௯. லூக்.௧.௮௰. லூக்.௨.௫௨. (௨௫) அதி.௩.௰. ௧.சாமு.௰௧.௬. மத்.௪.௧. அதி.௰௮.௰௨. யோசு.௰௫.௩௩. அதி.௰௮.௰௧.—(௰௪. அதி. ௧.) ஆதி.௩௮.௰௩. யோசு.௰௫.௰. ஆதி.௩௪.௨. (௨) ஆதி.௨௧.௨௧. ஆதி.௩௪.௪. (௩) ஆதி.௨௪.௩,௪. ஆதி.௩௪.௰௪. யாத்.௩௪.௰௬. உபா.௭.௩. (௪) யோசு.௰௧.௨௰. ௧.இரா.௰௨.௰௫. ௨.இரா.௬.௩௩. அதி.௰௩.௧. உபா.௨௮.௪௮. (௬) அதி.௩.௰. அதி.௰௩.௨௫. ௧.சாமு.௰௧.௬.

௰௨ பின்புஷிம்ஷோன் அவர்களைநோக்கி, ஒருவி
டுகதையைஉங்களுக்குச்சொல்லுகிறேன்: அதை
நீங்கள் விருந்திருக்கிற ஏழுநாளுக்குள்ளே அ
றிந்து எனக்குவிடுவித்தால், நான் முப்பது மெல்
லிய புடவைகளையும், முப்பது மாற்றுவஸ்திரங்
௰௩ களையும் கொடுப்பேன்:—எனக்கு விடுவிக்கமாட்
டாதிருந்தால், நீங்கள் எனக்கு முப்பதுமெல்லி
ய புடவைகளையும், முப்பது மாற்றுவஸ்திரங்க
ளையும் கொடுக்கவேண்டுமென்றான். அதற்கவர்
கள் உன் விடுகதையைச்சொல்லு, நாங்கள் அ
௰௪ தைக்கேட்போமென்றார்கள்.—அப்பொழுது அ
வன் பட்சித்துப்போடுகிறதிலிருந்து போசன
மும், பலத்திருக்கிறதிலிருந்து மதுரமும் புறப்
பட்டன வென்றான். அந்தவிடுகதையை அவர்
கள் மூன்று நாளளவும் விடுவிக்கக்கூடாதிருந்
௰௫ தார்கள்.—ஏழாம் நாளில் அவர்கள் ஷிம்ஷோ
னுடையமனைவியைநோக்கி, உன்புருஷன் அந்
தவிடுகதையை எங்களுக்கு விடுவிக்கும்படி நீ
அவனை வசப்படுத்து, இல்லாதிருந்தால், நாங்
கள் உன்னையும் உன்பிதாவின் வீட்டையும் அக்
கினியினால் எரித்துப்போடுவோம்; எங்களுக்
குரியவைகளை அபகரித்துக்கொள்வதற்காக எங்
௰௬ களை அழைத்தீர்களல்லவாவென்றார்கள்;—அப்
பொழுது ஷிம்ஷோனுடையமனைவி அவனுக்கு
முன்பாக அழுது, அவனைநோக்கி, நீ என்மேல்
விருப்பமாயிராமல் என்னைவெறுக்கிறாயே: என்
சனங்களுக்கு ஒருவிடுகதையைச் சொன்னாய்,
அதையெனக்கு விடுவிக்கவில்லையேயென்றாள்.
அதற்கவன் அவளைநோக்கி, கேள், அதை நான்
என்பிதா மாதாவுக்கும் விடுவிக்கவில்லை, உனக்
௰௭ கதைவிடுவிப்பேனோவென்றான்.—அவர்கள் வி
ருந்துண்கிற ஏழுநாளும் அவனுக்கு முன்பாக
அழுதுகொண்டிருந்தாள்: ஏழாம்நாளில் அவ
ளவனைமிகவும் நெருக்கினபடியினாலே, அவன்
அதை அவளுக்கு விடுவித்தான்: அப்பொழுது
அவள் தன்சனங்களுக்கு அந்த விடுகதையைவி
௰௮ டுவித்தாள்.—ஏழாம்நாளிலே சூரியன்அஸ்தமிப்
பதற்குமுன்னே அந்த ஊரார் அவனைநோக்கி,
தேனிலுமதிக மதுரமானதென்ன; சிங்கத்திலும
திகபலமானதென்ன வென்றார்கள். அவன் அ
வர்களைநோக்கி, நீங்கள் என்கடாரியால் உழாதி
ருந்தீர்களானால், என்னுடைய விடுகதையை அ
றிந்துகொள்ளமாட்டீர்களென்றான்.
௰௯ பின்பு யெகோவாவின்ஆவி அவன்மேல்
வர,அஷ்கிலோனுக்குப்போய்,அவ்வூராரில்முப்
பதுபேரைக்கொன்று, அவர்களுடைய வஸ்தி
ரங்களைக்கொண்டுவந்து, விடுகதையை விடுவித்
தவர்களுக்கு அந்தமாற்றுவஸ்திரங்களைக் கொ
டுத்துவிட்டு; கோபம்மூளத் தன்பிதாவின் வீட்
௨௰ டுக்குப்போனான்.—ஷிம்ஷோனுடைய மனைவி
அவனோடே கூட இருந்த தோழரிலொருவனுக்
குக் கொடுக்கப்பட்டாள்.

## ௰௫. அதிகாரம்.

௧. ஷிம்ஷோன் தன் ஸ்திரியிடம்போகாதபடி மறுத்தல்: ௩. வெளியிலுள்ள விளைவைத்தகித்தல்: ௬. அவன் ஸ்திரியும் அவள் பிதாவுந் தகிக்கப்படல்: ௭. ஷிம்ஷோன் அநேகசனங்களைக்கொலைசெய்தல்: ௯. அவன் யூதேயசனங்களால் கட்டுண்டு ஒப்பிக்கப்படல்: ௰௪. கழுதையின் எலும்பினால் ஆயிரஞ்சனங்களைக்கொலைசெய்தல்: ௰௮. தாகத்தைத்தீர்க்கச்சலத்தைக் கண்டடைதல்.

ஷிம்ஷோன் கோதுமை அறுக்கிறகாலத்தில் ஒ ௧
ரு வெள்ளாட்டுக்குட்டியை எடுத்துக்கொண்டு
தன் மனைவியைக் காணும்படிபோய், நான் அ
றைக்குள்ளிருக்கிற என் மனைவியினிடத்திற்பிர
வேசிக்கவேணுமென்றான். அதற்கு அவளுடை
யபிதா இடங்கொடுக்கவில்லை,—அவள் பிதா நீ ௨
அவளைமிகவும் பகைத்துவிட்டாயென்று நான்
எண்ணி, அவளை உன் தோழனுக்குக்கொடுத்
தேன். அவளுடையதங்கை அவளிலும் அதிக
அழகுள்ளவளல்லவா; இவள் அவளுக்கு ஈடாக
உன்னோடேயிருக்கட்டுமென்றான்.
அப்பொழுது ஷிம்ஷோன் அவர்களைக்குறித் ௩
து நான் பெலிஸ்தியருக்குத்தீங்குசெய்தாலும்,
என்மேற் குற்றமில்லையென்றுசொல்லி,—புறப் ௪
பட்டுப்போய், முந்நூறுநரிகளைப்பிடித்து, பந்
தங்களைஎடுத்து,வாலோடேவால்சேர்த்து,இரண்
டுவால்களின்நடுவே ஒவ்வொருபந்தத்தைவைத்
துக்கட்டி,-பந்தங்களைக்கொளுத்தி,அவைகளைப் ௫
பெலிஸ்தியருடைய நிலத்தின்பயிரில் ஓடவிட்
டு, அரிக்கட்டுகளையும்,திராட்சத்தோட்டங்களை
யும், சீதவிருட்சத்தோப்புகளையும் சுட்டெரித்
தான்.
இப்படிச்செய்தவன்யாவனென்று பெலிஸ்தி ௬
யர் விசாரித்தபொழுது, திம்னாத்தானுடையமரு
மகனாகிய ஷிம்ஷோன், தன் மனைவியை அவன்
தோழனுக்குக் கொடுத்துவிட்டபடியால் இப்ப
டிச்செய்தானென்றார்கள். அதற்காகப்பெலிஸ்தி
யர்போய் அவளையும்,அவளுடைய பிதாவையும்
அக்கினியினாற்சுட்டுப்போட்டார்கள்.
அப்பொழுது ஷிம்ஷோன் அவர்களைநோக்கி, ௭
நீங்கள் இப்படிச்செய்தும், நான் இன்னும் உங்
களிடத்திற் பழிவாங்காதிருந்தால் இளைப்பாற
மாட்டேனென்றுசொல்லி,—அவர்கள் தொடை ௮
களையும், இடுப்புகளையும் முறித்து, மகா சங்கார
மாக அவர்களைச் சங்கரித்து,பின்புபோய் ஈத்தா
மூரின் கன்மலையின்மேலேவாசம்பண்ணினான்.
அப்பொழுது பெலிஸ்தியர் போய் யூதாவிலே ௯
பாளயமிறங்கி, இலேகியென்னும் வெளியிலே
பரவியிருந்தார்கள்.—யூதா சனங்கள் அவர்களை ௰
நோக்கி, நீங்கள்எங்களுக்குவிரோதமாய்வந்ததே
தென்றுகேட்க;அவர்கள்,ஷிம்ஷோன் எங்களுக்
குச்செய்ததுபோல்நாங்களும் அவனுக்குச்செய்

(௰௨) ௧.இரா.௰.௧. எசேக்.௰௭.௨. லூக்.௰௪.௭. ஆதி.௨௯.௨௭. ஆதி.௪௫.௨௨. ௨.இரா.௫.௨௨. (௰௫) அதி.௰௬.௫. அதி.௰௫.௬. (௰௬) அதி.௰௬.௰௫. (௰௯) அதி.௩.௰. (௨௰) அதி.௰௫.௨. யோவா.௩.௨௯.—(௰௫. அதி. ௨.) அதி.௰௪. ௨௰. (௬) அதி.௰௪.௰௫. (௯) வச.௰௯.

யும்படி அவனைக்கட்ட வந்திருக்கிறோமென்றார்
௰௧ கள்.—அப்பொழுது யூதா சனங்களில்மூவாயிரம்
பேர் ஈத்தாமூரின் கன்மலையின்மேலேபோய்
ஷிம்ஷோனைநோக்கி, பெலிஸ்தியர் நம்மை அர
சாளுகிறவர்களென்று உனக்குத்தெரியாதா; என்
எங்களுக்கு இப்படிச்செய்தாயென்றுசொன்னார்
கள்: அதற்கவன் அவர்கள் எனக்குச்செய்தது
போல், நானும் அவர்களுக்குச் செய்தேனென்
௰௨ றான்.—அவர்கள், நாங்கள் உன்னைக்கட்டிப்பெ
லிஸ்தியருடையகையில் ஒப்பிக்கும்படி வந்தோ
மென்றார்கள். அதற்கு ஷிம்ஷோன் நீங்களேஎன்
மேல் விழமாட்டோமென்று எனக்காணையிடுங்
௰௩ கள்என்றான்.—அவர்கள் அவனைநோக்கி,நாங்கள்
உன்னைக்கட்டி அவர்களுடைய கையிலொப்
பிப்போமேயல்லாமல், உன்னைக் கொன்றுபோ
டமாட்டோமென்றுசொல்லி, இரண்டு புதுக்க
யிறுகளால் அவனைக்கட்டிக் கன்மலையிலிருந்து
கொண்டுபோனார்கள்.
௰௪ அவன் இலேகிவரைக்கும்வந்துசேருகையில்,
பெலிஸ்தியர் அவனுக்குவிரோதமாக ஆரவாரம்
பண்ணினார்கள்: அப்பொழுது யெகோவா
வின் ஆவிவலிமையோடும் அவன்மேல்வர, அ
வன்கைப்புயங்களிலே கட்டப்பட்டகயிறுகள்
நெருப்புப்பட்ட நூல்களைப்போலாகி, அவனு
௰௫ டைய கைகளைவிட்டு அறுந்துபோயின.—உட
னே அவன் ஒரு கழுதையின் பச்சைத்தாடை
எலும்பைக்கண்டு, தன் கையைநீட்டி அதை
யெடுத்து, அதினால் ஆயிரம்பேரைக்கொன்று
௰௬ போட்டான்.—பின்பு ஷிம்ஷோன், கழுதையின்
தாடை எலும்பினாலே குவியல்மேற்குவியலாகக்
கிடக்கிறார்கள்: கழுதையின்தாடைஎலும்பினால்
௰௭ ஆயிரம்பேரைக் கொன்றேனேயென்றான்.—அவ
னிப்படிச்சொல்லிமுடித்தபின்பு, தன் கையிலி
ருந்த தாடையெலும்பை எறிந்துபோட்டுஅவ்வி
டத்துக்குராமாத்இலேகியென்றுபேரிட்டான்.
௰௮ பின்பு அவன் மிகுந்த தாகத்தையடைந்து,
யெகோவாவை நோக்கி ஓலமிட்டு, நீர் அடி
யேன்கையினால் இந்தப்பெரிய இரட்சிப்பைத்
தந்தீரே, இப்பொழுது நான் தாகத்தாலிறந்து
போகலாமா; விருத்தசேதன மில்லாதவர்களு
௰௯ டையகைக்குஅகப்படலாமாவென்றான்.—அப்
பொழுது தேவன் இலேகியிலுள்ள பள்ளத்
தைப் பிளக்கப்பண்ணினார். அதிலிருந்து தண்
ணீர் ஓடிவந்தது; அதை அவன் குடித்தபின்பு
அவனுடைய ஆவி திரும்பிவர, அவன் உற்சா
கம்பெற்றான்: அதனால் அவன் அதற்கு ஓலமிட்
டவனுடையநீரூற்றென்றுபெயரிட்டான்; அது
இந்நாள்வரைக்கும் இலேகியிலிருக்கின்றது.—
௨௰ அவன் பெலிஸ்தியருடைய காலத்தில் இருபது
வருஷம் இஸரவேலரை நியாயம்விசாரித்தான்.

## ௰௬. அதிகாரம்.

௧. ஷிம்ஷோன் காசாவிலேசெல்லல்: ௪. அவன்
நேசித்த தெலீலாள் அவன்வல்லமையின் விசே
ஷத்தையறிய வகைதேடல். அவனதைத்தெரி
வியாமல்விடுதல்: ௰௫. மறைபொருளைவெளிப்
படுத்தினதினால் பெலக்கேடடைதல்: ௨௧. சி
றைச்சாலையிலடைக்கப்படல்: பெலிஸ்தியரு
டன் மரணமடைதல்.

பின்பு ஷிம்ஷோன் காசாவுக்குப்போய்,அங்கே ௧
ஒரு வேசியைக்கண்டு, அவளிடத்தில் பிரவே
சித்தான்.—அப்பொழுது ஷிம்ஷோன் இங்கே ௨
வந்திருக்கிறானென்று காசாருக்குத் தெரிவிக்கப்
பட்டது. அவர்கள்சுற்றிவந்து, இராமுழுவதும்
நகரவாசலில் அவனுக்குப்பதிவிருந்து;நாம்விடி
யற்காலமளவும் எதிர்பார்த்து அவனைக்கொன்று
போடலாமென்றுசொல்லிக்கொண்டு,இராமுழு
வதும் அமைந்திருந்தார்கள்.—ஷிம்ஷோன் அத் ௩
தசாமம்வரைக்கும் படுத்திருந்து, அத்தசாமத்தில்
எழுந்து, நகரவாசலின் கதவுகளையும் அதின் இ
ரண்டு நிலைகளையும் தாழோடேபேர்த்துத் தன்
தோள்களின்மேற்சுமந்து, எப்ரோனுக்கெதிர்ப்பு
றத்திலுள்ள மலையின்மேற்கொண்டுபோனான்.
அதற்குப்பின்புஅவன், சோரேக்ஆற்றங்கரை ௪
யிலிருந்த தெலீலாளென்றுபெயருள்ள ஒருஸ்திரி
யை நேசித்திருந்தான்.—அப்பொழுது பெலிஸ்தி ௫
யருடைய பிரபுகள் அவளிடத்திற்போய், நீ அ
வனைவசியப்படுத்தி, அவனுடைய மகாபெலம்
இன்னதினாலுண்டாயிருக்கிறதென்றும், நாங்
கள் இன்ன இன்னவகையினால் அவனை மேற்
கொண்டு, அவனைக்கட்டிக்கீழ்ப்படுத்திக்கொள்
ளலாமென்றும் அறிந்து எங்களுக்குச்சொல்லு;
அப்பொழுதுநாங்கள் ஒவ்வொருவரும் ஆயிரத்
தொருநூறு வெள்ளிக்காசு உனக்குத் தருவோ
மென்றார்கள்.—தெலீலாள் ஷிம்ஷோனை நோக்கி, ௬
உன்னுடைய மகாபெலம் எதினாலுண்டாயிருக்
கின்றது, நீ கீழ்ப்படும்வண்ணம் எதினாலேகட்
டப்படலாம்; அதைத்தயவுசெய்துஎனக்குச்சொ
ல்ல வேண்டுமென்றாள்.—ஷிம்ஷோன் அவளை ௭
நோக்கி, உலராமற்பச்சையாயிருக்கிற ஏழுநார்க்
கயிறுகளால் என்னைக்கட்டினால் நான்பெலவீ
னமடைந்து, மற்றமனிதனைப்போலாவேனென்
றான்.—பின்பு பெலிஸ்தியருடைய் பிரபுகள் உ ௮
லராமற் பச்சையாயிருக்கிற ஏழுநார்க்கயிறுக
ளை அவளுக்குக்கொண்டுவந்துக்கொடுத்தார்கள்,
அவைகளால் அவள் அவனைக்கட்டினாள்.-ஒரு ௯
அறையிற்சிலர் பதிவிருக்க, அவள் ஷிம்ஷோ
னே, பெலிஸ்தியர் உன்மேல் வருகிறார்களென்
றுசொன்னாள். உடனே அவன் ஒரு சணல்நூற்
புரி நெருப்பை மோந்தமாத்திரத்தில் அறுந்து
போவதுபோல அந்த நார்க்கயிறுகளை அறுத்துப்
போட்டான். அவனுடைய வலிமைதெரியவில்
லை.—அப்பொழுதுதெலீலாள் ஷிம்ஷோனைநோக் ௰
கி, நீ என்னைவஞ்சித்து, எனக்குப்பொய்சொன்
னாய்: இப்பொழுது நீ எதினாலேகட்டப்படலா

(௰௧) அதி.௰௪.௪. (௰௪) அதி.௩.௰. (௰௫) அதி.௩.௩௧. லேவி.௨௬.௮. யோசு.௨௩.௰. (௰௮) சங்.௩.௭. (௰௯) ஆதி. ௪௫.௨௭. ஏசா.௪௰.௨௯. சங்.௩௪.௬. (௨௰) அதி.௰௩.௧.—(௰௬. அதி. ௨.) ௧.சாமு.௨௩.௨௬. அப்.௯.௨௪. (௯) அதி. ௰௪.௰௫. நீதி.௨.௰௬—௰௯.

௰௧ மென்றுசொல்லவேண்டுமென்ருள்.-அதற்கவன்
யாதொரு வேலையிலும் பழகாமலிருககிற புதுக்
கயிறுகளால் என்னைநன்ருகக்கட்டினுல், நான்
பெலவீனமடைந்து,மற்றமனிதனைப்போலாவே
௰௨ னென்ருன்.—பின்பு திலீலாள் புதுக்கயிறுகளை
வாங்கி,அவைகளால்அவனைக்கட்டி, ஷிம்ஷோ
னே, பெலிஸ்தியர் உன்மேல் வருகிருர்களென்
ருள். பதிவுகாரர் அறையிலிருந்தார்கள். அவன்
தன்புயங்களிலிருந்தகயிறுகளைநூலைப்போல அ
௰௩ றுத்துப்போட்டான்.-பின்புதிலீலாள்ஷிம்ஷோ
னைநோக்கி, இதுவரைக்கும் என்னைவஞ்சித்து,
எனக்குப் பொய்சொன்னுய்: நீ எதினுலே கட்
டப்படக்கூடுமென்று எனக்குச்சொல்லவேண்
டுமென்ருள். அதற்கவன் நீஎன்தலைமயிரில் ஏழு
சடைகளை நூற்பாவுடன்பின்னினுல் ஆகுமென்
௰௪ ருன்.—அப்படியே அவள் அவைகளைப்பின்னி,
ஒரு முளையடித்துவிட்டு, பின்பு ஷிம்ஷோனே
பெலிஸ்தியர் உன்மேல் வருகிருர்களென்று
சொன்னுள். அவன் நித்திரைவிட்டெழுந்து, மு
ளையையும் நெசவையுந் தறிமரத்தையுங்கூடப்
பிடுங்கிப்போனுன்.
௰௫ அப்பொழுது அவள் அவனைநோக்கி, உன்ம
னம்என்னிடத்திலில்லாதிருக்க,நான்உன்னைநே
சிக்கிறேனென்று நீஎப்படிச்சொல்லுகிருய்;இந்
தமூன்றுதரமும்என்னைவஞ்சித்தாய், உன்னுடை
யமகாவலிமை எதினுல் உண்டாயிருக்கிறதென்
று, இன்னுமெனக்குச்சொன்னுயில்லையே என்
௰௬ ருள்.—இப்படிப்பட்ட வார்த்தைகளினுல் அ
வள்நாடோறும் அவனைநெருக்கி அலட்டிவந்த
படியால், அவன் சாவதற்கு மனக்கிலேசப்பட்
௰௭ டு,—தன்னிருதயம் முழுவதையும் அவளுக்கு
வெளிப்படுத்தி, அவளைநோக்கி, நான் என்மா
தாவின்கருப்பத்திலே தோன்றியதுமுதல் தேவ
னுக்கு நசரீயனுயிருக்கிற படியினுலே, சௌர
கன்கத்திஎன்தலையின்மேற்படவில்லை: என்தலை
சிரைக்கப்பட்டால், என்பெலன் என்னைவிட்
டுப்போய்விடும்,நான்பெலவீனமடைந்துமற்றம
௰௮ னிதனைப்போலாவேனென்ருன்.–அவன்தன்னி
ருதயம் முழுவதையுந் தனக்குவெளிப்படுத்தின
தைத்திலீலாள் அறிந்து, பெலிஸ்தியருடையபிர
புகளுக்கு ஆளனுப்பி, அவன் தன்னிருதயம்மு
ழுவதையும் எனக்குவெளிப்படுத்தினுன்; ஆத
லால் இன்னுமொருதரம்வாருங்களென்றுசொல்
லுவித்தாள். அப்பொழுதுபெலிஸ்தியருடையபி
ரபுகள் வெள்ளிக்காசுகளைத் தங்கள் கையில் எ
டுத்துக்கொண்டுஅவளிடத்துக்குப்போனுர்கள்.-
௰௯ அவள் அவனைத்தன்மடியில் நித்திரைசெய்யப்
பண்ணி, ஒருவனைஅழைத்து, அவனுடையதலை
மயிரின் ஏழுசடைகளையுஞ் சிரைப்பித்து; அவ
னைச் சிறுமைப்படுத்தத்தொடங்கினுள், அவனு
டையபெலம் அவனைவிட்டுநீங்கிப்போயிற்று.–
௨௰ அப்பொழுதுஅவள்ஷிம்ஷோனே பெலிஸ்தியர்
உன்மேல் வருகிருர்களென்றுசொல்ல; அவன்
நித்திரைவிட்டுத்தெளிந்து, யெகோவா தன்
னைவிட்டுவிலகினதையறியாமல், நான் எப்பொ
ழுதும்போலப்புறப்பட்டு என்னை விடுதலையாக்
கிக்கொள்வேனென்று சொன்னுன்.
பெலிஸ்தியர் அவனைப்பிடித்து, அவனுடைய ௨௧
கண்களைத்தோண்டி,அவனைக் காசாவுக்குக்கொ
ண்டுபோய், அவனுக்கு இரண்டு பித்தளை விலங்
கிட்டு; சிறைச்சாலையில் மாவரைத்துக்கொண்டி
ருக்கவைத்தார்கள்.—அவனுடைய தலைமயிர் சி ௨௨
ரைக்கப்பட்டபின்பு திரும்பவும் முளைக்கத்தொ
டங்கிற்று.—பெலிஸ்தியருடைய பிரபுகள், நம் ௨௩
முடைய தேவனுகிய தாகோன் நம்முடைய ப
கைஞனுகிய ஷிம்ஷோனை நமதுகையிலொப்
பித்தாரென்றுசொல்லி, அந்தத் தேவனுக்கொரு
பெரிய பலிசெலுத்தி, சந்தோஷங்கொண்டா
டும்படி ஏகமாய்க்கூடினுர்கள்.—சனங்களும் அ ௨௪
வனைக்கண்டபொழுது, நம்முடையதேசத்தைப்
பாழாக்கி, நம்மில் அநேகரைக்கொன்ற நம்மு
டைய பகைஞனை, நம்முடைய தேவன் நமது
கையிலொப்பித்தாரேயென்று சொல்லிக்கொண்
டு, அந்தத்தேவனைப் புகழ்ந்தார்கள்.—இப்படி ௨௫
அவர்கள் மனமகிழ்ச்சியாயிருக்கிறபொழுது, ந
மக்குமுன்பாக விளையாடும்படிக்கு ஷிம்ஷோ
னை அழைத்துக்கொண்டுவாருங்களென்ருர்கள்:
அப்படியே ஷிம்ஷோனைச்சிறைச்சாலையிலிருந்
து கொண்டுவந்தார்கள்; அவர்களுக்குமுன்பாக
விளையாடினுன்: அவனைத்தூண்களுக்கு இடை
யேநிறுத்தினுர்கள்.—அப்பொழுது ஷிம்ஷோன் ௨௬
தனக்குக்கைகொடுத்து நின்ற வாலிபனிடத்தில்,
வீட்டைத்தாங்கியிருக்கிற தூண்களிலே நான்
சாய்ந்துகொள்ளுகிறதற்கு, நான் அவைகளைத்
தொடும்படிசெய் என்ருன்.—அந்த வீடு புருஷர் ௨௭
களாலும் ஸ்திரிகளாலும் நிறைந்திருந்தது; அங்
கே பெலிஸ்தியருடைய பிரபுகள் சமஸ்தரும்,
வீட்டின்மேல் ஸ்திரி புருஷர்கள் ஏறக்குறைய
மூவாயிரம்பேரும் ஷிம்ஷோன் விளையாடுகிற
தைப்பார்த்துக்கொண்டிருந்தார்கள்.-அப்பொழு ௨௮
து ஷிம்ஷோன் யெகோவாவைநோக்கி ஓல
மிட்டு; ஆ! தேவனே, யெகோவாவே,நான்
என்இரண்டுகண்கள்நிமித்தம் உடனேபெலிஸ்தி
யரிடத்தில்பழிவாங்கும்படிக்கு, நீர் இந்தஒருதர
மாத்திரம் என்னை நினைந்து, பெலப்படுத்தியரு
ளும்; என் தேவனேயென்றுவிண்ணப்பம்பண்
ணி,-அந்தவீட்டுக்குநிலையும், அதைத்தாங்குகின் ௨௯
றவைகளுமாயிருந்த அவ்விரண்டு நடுத்தூண்க
ளில் ஒன்றைத்தன்வலதுகையினுலும், மற்றதைத்
தன் இடதுகையினுலும் பிடித்துக்கொண்டு,—
என் சீவன் பெலிஸ்தியரோடே போகக்கடவ ௩௰
தென்றுசொல்லி, அந்தத் தூண்களை வலிமையு
டன்சாய்க்க; அந்தவீடு அதிலிருந்தபிரபுகள்மே
லும் சமஸ்தசனங்கள்மேலும்விழுந்தது. இப்படி

(௰௫) அதி.௰௪.௰௬. (௰௭) மீகா.௭.௫. எண்.௬.௫. அதி.௰௩.௫. (௰௯) நீதி.௭.௨௫,௨௬. (௨௰) எண்.௰௪.௯,௪௨,௪௩. யோசு.௭.௰௨. ௧.சாமு.௰௬.௰௪. ௨.நாளா.௰௫.௨. (௨௪) தானி.௫.௪. (௨௫) அதி.௯.௨௭. (௨௭) உபா.௨௨.௮. (௨௮) எரே.௰௫.௰௫.

அவன்சாகையிற்கொன்றவர்கள், அவனுயிரோ
டிருக்கையிற் கொன்றவர்களிலுமதிகமாயிருந்தா
௩௧ ர்கள்.-பின்பு அவனுடையசகோதரரும், அவனு
டையபிதாவமிசத்தார் சமஸ்தரும்போய்,அவனை
யெடுத்து,சோராவுக்கும் எஷ்தாவுலுக்கும்இடை
யிலுள்ள அவனுடைய பிதாவாகிய மனோவா
வின் மயானஸ்தானத்தில் அடக்கம்பண்ணினார்
கள். அவன் இஸரவேலரை இருபதுவருஷம்
நியாயம்விசாரித்தான்.

## ௰௭. அதிகாரம்.

௧. மீகா வெள்ளியைத் திருடிக்கொண்டு விக்கிரகத்தையுண்டாக்கல்: ௭. விக்கிரகத்தைச் சேவிக்கும்படி ஒருஆசாரியன் ஏற்படுத்தப்படல்.

எப்ராயீமின் மலையிலே மீகாவென்று பெயர்
௨ கொண்ட ஒருமனிதனிருந்தான்.-அவன் தன்மா
தாவைநோக்கி, உன்னிடத்தில் ஆயிரத்தொருநூ
றுவெள்ளிக்காசுகளவுபோயிற்றே, அதைக்குறித்
து என்காதுகள்கேட்க நீசபித்தாயே, அந்தவெள்
ளிக்காசு என்னிடத்திலிருக்கிறது; அவைகளை
யெடுத்தவன்நான்தானென்ருன். அதற்கவன் மா
தா, என்புத்திரனே நீ யெகோவாவினால்ஆசீர்
௩ வதிக்கப்படுவாயென்ருள்.-அவன் அந்த ஆயிரத்
தொருநூறுவெள்ளிக்காசையும்,தன் மாதாவிடத்
தில் திரும்பவுங் கொடுத்தபொழுது, வார்க்கப்
பட்டதும், தொழிற்படுத்தப்பட்டதுமான ஒரு
விக்கிரகத்தையுண்டுபண்ண, என்கையில் இருந்
த இந்தவெள்ளியை நான் என்புத்திரனிமித்தம்
யெகோவாவுக்கே முழுவதும் நியமித்திருந்
தேன்: இப்பொழுது அதை உனக்குத்திரும்பவுந்
௪ தருகிறேனென்று அவள்சொன்னாள்.—அவனந்
த வெள்ளியைத்திரும்பவுந் தன் மாதாவினிடத்
திற்கொடுக்க; அவனுடைய தாய் இருநூறுவெள்
ளிக்காசையெடுத்துத் தட்டான்கையில் கொடுத்
தாள், அதினால் அவன் வார்ப்புஞ் சித்திரமுமான
ஒருவிக்கிரகத்தையுண்டுபண்ணினான்: அது மீகா
௫ வின் வீட்டிலிருந்தது.—மீகா, தன் தேவனுக்கு
ஒரு ஆலயமுண்டாக்கி, எபோத்தென்னும் ஒரு
வஸ்திரத்தையும், சிறியவிக்கிரகங்களையுஞ்செய்
து, தன் புத்திரரிலொருவனைத் தனக்கு ஆசாரிய
௬ னாரும்படி பிரதிஷ்டைபண்ணினான்.—அக்கா
லத்தில் இஸரவேலருக்கு இராசாவில்லை, அவ
னவன்தன்தன் இஷ்டப்படிசெய்து வந்தான்.
௭ யூதா கோத்திரத்தைச்சேர்ந்த பேத்லகேம் ஊ
ரானும் லேவியனுமான ஒருவாலிபன் அங்கே
௮ தங்கியிருந்தான்.-அந்தமனிதன் எங்கேயாகிலுஞ்
சஞ்சரிக்கும்படிக்கு யூதாவிலுள்ளபேத்லகேமூ
ரைவிட்டுப்புறப்பட்டுப்பிரயாணஞ்செய்யுங்கா
லத்தில், எப்ராயீம் மலையிலுள்ள மீகாவின்வீட்
௯ டிற்சேர்ந்தான்.—மீகா அவனைநோக்கி, நீ எங்கே
யிருந்துவருகிருயென்றுகேட்டான்; அதற்கு அ
வன், நான் யூதாவிலுள்ள பேத்லகேமூராளுகிய
லேவியன்,எங்கேயாகிலும்போய்த்தங்கப்போகி
றேனென்ருன்.-அப்பொழுது மீகா,நீஎன்னிடத் ௰
திலேயிரு, நீ எனக்குப்பிதாவும் ஆசாரியனுமாயி
ருக்கவேண்டும், நான் உனக்குவருஷத்திலே பத்
துவெள்ளிக்காசையும், மாற்றுவஸ்திரங்களையும்,
ஆகாரத்தையுந் தருவேனென்ருன். லேவியன்
உள்ளேபோனான்,-லேவியன்அவனிடத்திலிருக் ௰௧
கச்சம்மதித்தான்; அந்தவாலிபன் அவனுக்கு அவ
னுடையபுத்திரரிலொருவனைப்போலிருந்தான்.-
மேலும் மீகா அந்தவாலிபனாகிய லேவியனைத்த ௰௨
னக்கு ஆசாரியனாகப்பிரதிஷ்டைபண்ணினான்;
அவன் மீகாவின் வீட்டிலேயிருந்தான்.-அப்பொ ௰௩
ழுது மீகா எனக்கொரு லேவியன் ஆசாரியனா
படியினாலே, யெகோவா எனக்கு நன்மை
செய்வாரென்று இப்பொழுது அறிந்திருக்கிறே
னென்ருன்.

## ௰௮. அதிகாரம்.

௧. சுதந்தரத்தைத்தேடும்படி தாண்வமிசத்தார் ஐந்துபேரையனுப்பல்: ௭. லாயீஷை வேவுபார்த்தல்: ௰௧. அறுநூறு சனங்களைக்கூட்டிக்கொண்டு அதை முற்றிக்கைசெய்தல்: ௰௪. வழியிலே மீகாவின் விக்கிரகம் முதலானவைகளைக் களவெடுத்தல்: ௨௨. மீகாவின் வாக்கைக்கேளாமல் லாயீஷுக்குப்போய் அதை வசப்படுத்தல்: ௩௰. அவ்விடத்தில் விக்கிரகத்தை ஸ்தாபித்தல்.

அக்காலத்தில் இஸரவேலருக்கு இராசாவில் ௧
லை: தாண்கோத்திரத்தார் தங்களுக்கு இஸரவே
லின் கோத்திரங்களுக்குள்ளே வரவேண்டிய சு
தந்தரம் முழுதும் வராதபடியால், அந்நாட்களில்
தாங்கள் வசிக்கும்பொருட்டுத் தங்களுக்குச் சு
தந்தரம் தேடினார்கள்.—ஆகையால் தேசத்தைச் ௨
சோதித்து வேவுபார்த்துவரும்படி தாண் சந்ததி
யார் தங்கள் கோத்திரத்தில் ஐந்து வீரரைத் தங்
கள் எல்லைகளிலுள்ள சோராவிலும் எஷ்தாவு
லிலும்இருந்தழைத்து,நீங்கள்போய்த்தேசத்தைச்
சோதித்துப்பார்த்து வாருங்களென்று சொல்லி
யனுப்ப; அவர்கள் எப்ராயீம் மலையிலுள்ள மீகா
வின் வீடுவரைக்கும்போய் அங்கே இராத்தங்கி
னார்கள்.—அவர்கள் மீகாவின் வீட்டிலிருக்கை ௩
யில் லேவியனான வாலிபனுடைய குரலையறிந்
து, அவ்விடத்திற் பிரவேசித்து அவனைநோக்கி,
உன்னைஇங்கே அழைத்துவந்தவன்யாவன்; இவ்
விடத்தில்என்னசெய்கிருய்;உனக்கிங்கேஎன்ன
இருக்கிறதென்றுகேட்டார்கள்.—அவன் அவர்க ௪
ளைநோக்கி, இன்ன இன்னபடி மீகாவெனக்குச்
செய்தான்,எனக்குச்சம்பளம்குறித்தான், அவனு
க்கு ஆசாரியனானேனென்ருன்.—அப்பொழுது ௫

(௩௧) அதி.௰௩.௨௫.—(௰௭. அதி. ௨.) ஆதி.௰௪.௰௯. ரூத்.௩.௰. (௩) யாத்.௨௰.௪,௨௩. லேவி.௰௯.௪. (௪) ஏசா.௪௬.௬. (௫) அதி.௮.௨௭. ஆதி.௩௧.௰௯,௩௰. ஓசி.௩.௪. யாத்.௨௯.௯. ௧.இரா.௰௩.௩௩. (௬) அதி.௰௮.௧. அதி.௰௯.௧. உபா.௩௩.௫. உபா.௰௨.௮. (௭) யோசு.௰௯.௰௫. அதி.௰௯.௧. ரூத்.௧.௧,௨. மீகா.௫.௨. மத்.௨.௧,௫,௬. (௰) அதி.௰௮.௰௯. ஆதி.௪௫.௮. யோபு.௨௯.௰௬. (௰௨) வச.௫. அதி.௰௮.௩௰.—(௰௮. அதி. ௧.) அதி.௰௭.௬. அதி.௨௧.௨௫. யோசு.௰௯.௪௭. (௨) அதி.௰௩.௨௫. எண்.௰௩.௰௭. யோசு.௨.௧. அதி.௰௭.௧. (௪) அதி.௰௭.௰. (௫) ௧.இரா.௨௨.௫. ஏசா.௩௰.௧. ஓசி.௪.௰௨. அதி.௰௭.௫. வச.௰௪.

அவர்கள் அவனைநோக்கி, நாங்கள் போகும்வழி
அனுகூலமாய்முடியுமோவென்றுநீ தேவனிடத்
திற்கேட்டு எங்களுக்கு அறிவிக்கவேண்டுமென்
௬ றார்கள்.–அவர்களுக்கு அந்த ஆசாரியன், நீங்கள்
போகும்வழி யெகோவாவின் பார்வைக்கு
முன்னிருக்கின்றதே,நீங்கள் சமாதானத்தோடே
போங்களென்றான்.
௭ அப்பொழுது அவ்வைந்துமனிதரும் புறப்பட்
டு லாயீஷுக்குச்சென்று, அதில்வசித்திருக்கிற ச
னங்கள் சீதோனியர் வாழும்வண்ணம் பயமின்
றிச் சௌக்கியமும் அமைதலுமாயிருக்கிறதை
யும்,அவர்களை அடக்கிக்கொள்வதற்கு அத்தேசத்
தில் அதிகாரிகளில்லாமையையும், அவர்கள்ஒரு
வரோடும்விவகாரமின்றிச்சீதோனியருக்குத்தூர
௮ மாய் இருக்கிறதையுங்கண்டு,-சோராவிலும் எஷ்
தாவுலிலுமுள்ள தங்கள் சகோதரரிடத்திற்குத்தி
ரும்பிவந்தார்கள்: அவர்கள் சகோதரர் அவர்களை
௯ என்ன செய்தியென்றுகேட்க,-அவர்கள், நாம் எ
ழுந்து அவர்களை யெதிர்க்கப்புறப்படுவோம் வா
ருங்கள்: அத்தேசத்தைப்பார்த்தோம்,அதுமிகவும்
நல்லது: நீங்கள் சும்மாயிருக்கிறீர்களா; தேசத்
தைச்சுதந்தரித்துக்கொள்ளப்போவதற்குத் தாம
௰ தமில்லாதிருங்கள்.–நீங்கள் அங்கே சேரும்பொ
ழுது அமைதலாயிருக்குஞ் சனங்களிடத்திற்சே
ருவீர்கள், தேசம் விஸ்தாரமாயிருக்கின்றது: தே
வன் அதை உங்கள் கையிலொப்பித்தார். அதுபூ
மியில் விளையும் எவ்வித பலன்களும் குறைவின்
றியிருக்கும் ஸ்தானமென்றார்கள்.
௰௧ அப்பொழுதுசோராவிலும்எஷ்தாவுலிலுமுள்
ள தாண்கோத்திரத்தாரில் அறுநூறுபேர் ஆயுதபா
ணிகளாய் அங்கேயிருந்து புறப்பட்டுப்போய்,–
௰௨ யூதாவிலுள்ளகீரியாத் எயாரீமிலேபாளயமிறங்கி
னார்கள், அதனால் அவ்விடம்இந்நாள்வரைக்கும்
மகனிதானென்று சொல்லப்படும்; அது கீரியாத்
௰௩ எயாரீமின் பின்பக்கத்திலேயிருக்கின்றது.–பின்
பு அவர்கள் அங்கேயிருந்து எப்ராயீம்மலைக்குப்
போய் மீகாவின்வீடுமட்டும் வந்தார்கள்.
௰௪ அப்பொழுதுலாயீஷின் நாட்டை வேவுபார்க்
கும்படிபோய்வந்த அவ்வைந்துமனிதரும் தங்
கள் சகோதரரைநோக்கி,இந்தவீடுகளில் எபோத்
தென்னும் வஸ்திரமும், சிறியவிக்கிரகங்களும்
தொழிற்பட்ட விக்கிரகமும், வார்க்கப்பட்ட
விக்கிரகமுமிருப்பதுஉங்களுக்குத்தெரியுமா; இ
னி நீங்கள் செய்யவேண்டியதின்னதென்று சிந்
௰௫ தித்துக்கொள்ளுங்களென்றார்கள்.-அப்பொழுது
அவ்விடத்துக்குத்திரும்பி மீகாவின் வீட்டிலிருக்
கிற லேவியனான வாலிபனுடைய வீட்டிலே பி
௰௬ ரவேசித்து அவனைவாழ்த்தினார்கள்.-ஆயுதபாணி
களாகிய தாண் சந்ததியார் அறுநூறுபேரும் வா
௰௭ சற்பிரவேசஸ்தானத்திலே நின்றார்கள்.—தேசத்
தை வேவுபார்க்கும்படிபோய்வந்த அந்த ஐந்து
மனிதர்மாத்திரம்உட்பிரவேசித்து, ஆசாரியனும்,
ஆயுதபாணிகளாகிய அறுநூறுபேரும்,வாசற்பிர
வேசஸ்தானத்திலே நிற்கையில்; தொழிற்பட்ட
விக்கிரகத்தையும்,எபோத்தையும்,சிறுவிக்கிரகங்
களையும், வார்க்கப்பட்டவிக்கிரகத்தையும் எடுத்
துக்கொண்டுவந்தார்கள்.—அவர்கள் மீகாவின் ௰௮
வீட்டிற்பிரவேசித்து, தொழிற்பட்ட விக்கிரகத்
தையும், எபோத்தையும், சிறுவிக்கிரகங்களையும்,
வார்க்கப்பட்ட விக்கிரகத்தையும் எடுத்துக்கொ
ண்டுவருகிறபொழுது, நீங்கள் என்னசெய்கிறீர்
களென்று ஆசாரியன் அவர்களிடத்திற்கேட்
டான்.—அதற்கவர்கள் நீ பேசாமல் உன்வாயை ௰௯
மூடிக்கொண்டு எங்களோடேகூடவந்து எங்க
ளுக்குப்பிதாவும் ஆசாரியனுமாயிரு: நீ ஒரேவீட்
டுக்காரனுக்கு ஆசாரியனாயிருக்கிறதுநல்லதா, இ
ஸரவேலின் கோத்திரமாகிய ஒருவமிசத்தாருக்கு
ஆசாரியனாயிருக்கிறது நல்லதாவென்றார்கள்.—
அப்பொழுது ஆசாரியன் மனச்சந்தோஷப்பட் ௨௰
டு, எபோத்தையும், சிறுவிக்கிரகங்களையும், தொ
ழிற்பட்ட விக்கிரகத்தையும் எடுத்துக்கொண்டு,
சனங்களுக்குள்ளே புகுந்தான்.—பின்பு அவர் ௨௧
கள் திரும்பிப்புறப்பட்டுப்பிள்ளைகளையும், ஆடு
மாடுகளையும், மற்றப்பொருள்களையுந் தங்களுக்
குமுன்னேபோகப்பண்ணினார்கள்.
அவர்கள்புறப்பட்டு மீகாவின்வீட்டை விட் ௨௨
டுத்தூரத்திற்சென்றபின்பு மீகாவின்வீட்டுக்குஅ
யல் வீட்டார்கூடித் தாண்சந்ததியாரைத்தொடர்
ந்து.—அவர்களைப்பார்த்துக்கூப்பிட்டார்கள். அ ௨௩
வர்கள்திரும்பிமீகாவைநோக்கி நீயிப்படிச்சனக்
கூட்டத்துடன் வரவேண்டியதென்னவென்று
கேட்க,–அவன் நான் உண்டாக்கினஎன்னுடை ௨௪
ய தெய்வங்களையும், அந்த ஆசாரியனையுங்கூட
நீங்கள்கொண்டுபோகிறீர்களே இனிஎனக்கென்
ன இருக்கிறது: நீ கூப்பிடுகிறகாரியமென்னவெ
ன்று நீங்களெனக்கெப்படிச் சொல்லலாமென்
றான்.—அப்பொழுது தாண்சந்ததியார் அவனை ௨௫
நோக்கி, இனிஉன்கூக்குரல் எங்களுக்குக்கேட்
கப்படலாகாது, கேட்டாற்கோபிகள் உன்மேற்
பாய்வார்கள், நீயும் உன்வீட்டாரும் உங்கள் சீவ
னையிழந்துபோவீர்களென்றார்கள்.–பின்புதாண் ௨௬
சந்ததியார் தங்கள்வழியே நடந்துபோனார்கள்.
மீகா தன்னிலும் அவர்கள் பலவான்களென்று
கண்டு தன்வீட்டுக்குத் திரும்பிவிட்டான்.—அ ௨௭
வர்கள்மீகாஉண்டாக்கினதையெடுத்து, அவனுக்
கிருந்தஆசாரியனைக்கூட்டிக்கொண்டுபோய், வி
சாரமின்றி அமைதியாயிருந்தலாயீஷ்நகரத்தைச்
சேர்ந்து,கட்கத்தின் வாயினாலே அவர்களைச்சங்
கரித்து,நகரத்தை அக்கினியாற் சுட்டார்கள்.—
அது சீதோனுக்குத் தூரமானபடியினாலும்,அங்கி ௨௮

(௬) ௧.இரா.௨௨.௬. (௭) யோசு.௰௯.௪௭. வச.௨௭,௨௮. (௮) வச.௨. (௯) எண்.௰௩.௩௰. யோசு.௨.௨௩,௨௪. ௧.இரா.௨௨.௩. (௰) வச.௭,௨௭. உபா.௮.௯. (௰௨) யொசு.௰௫.௬௰. அதி.௰௩.௨௫. (௰௩) வச.௨. (௰௪) ௧.சாமு.௰௪.௨௮. அதி.௰௭.௫. (௰௫) ஆதி.௪௩.௨௭. ௧.சாமு.௰௭.௨௨. (௰௬) வச.௰௧. (௰௭) வச.௨,௰௪. அதி.௰௭.௪,௫. (௰௯) யோபு.௨௧.௫. நீதி.௩௰.௩௨. மீகா.௭.௰௬. அதி.௰௭.௰. (௨௫) ௨.சாமு.௰௭.௮. (௨௭) வச.௭,௰. உபா.௩௩.௨௨. யோசு.௰௯.௪௭. (௨௮) வச.௭. எண்.௰௩.௨௧. ௨.சாமு.௰.௬.

யமனிதரோடே அவர்களுக்குச் சம்பந்தமில்லா
தபடியினாலும், அவர்களைத் தப்புவிக்க ஒருவரு
மில்லை. அந்நகரம் பேத்ரேகோப்புக்குச்சமீபமா
ன தாழ்ந்தபூமியிலேயிருந்தது. அவர்கள் அந்த
நகரத்தைத்திரும்ப உண்டாக்கி அதில் வசித்தார்
௨௯ கள்.—பூருவத்திலே லாயீஷென்று பெயர்கொண்
டிருந்த அந்நகரத்துக்கு இஸ்ரவேலுக்குப்பிறந்த
தங்கள் ஆதிபிதாவாகிய தாணுடைய நாமத்தின்
படியே தாணென்று பெயரிட்டார்கள்.
௩௰ மேலும் தாண்சந்ததியார் அந்தத்தொழிற்படுத்
திய விக்கிரகத்தைத் தங்களுக்காக ஸ்தாபித்துக்
கொண்டார்கள்: மனாசேயின் பௌத்திரனும்
கெர்ஷோமின் புத்திரனுமாகிய யோனாதானும்,
அவன்புத்திரரும், தேசத்தார்சிறையாகக்கொண்
டுபோகப்பட்ட நாள்வரைக்கும் தாண்கோத்தி
௩௧ ரத்தாருக்கு ஆசாரியராயிருந்தார்கள்.—தேவால
யம் ஷீலோவில் இருந்தகாலம்முழுவதும் அவர்
கள் மீகாவுண்டாக்கின தொழிற்பட்ட விக்கிர
கத்தை வைத்துக்கொண்டிருந்தார்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. வைப்பாட்டியைக் கொண்டுவரும்படி லேவி
யன் ஒருவன் பேத்லகேமுக்குப்போனசெய்தி
யைத் தெரிவித்தல்: ௰௬. அவன் பயணம் பண்
ணுகையில் கிபியாவில்கிழவனுடையவீட்டில்
உபசரிக்கப்படல்: ௨௨. கிபியாவின்சனங்கள்
அவன் வைப்பாட்டி மரணம் அடையும் வண்
ணம் வலாற்காரஞ் செய்தல்: ௨௯. வைப்பாட்
டியின்பிணத்தைப் பன்னிரண்டு துண்டமாகத்
துண்டித்து இஸ்ரவேலரின் பன்னிரண்டு வமி
சத்தாருக்கும் அனுப்பல்.

இஸ்ரவேலருக்கு இராசாவில்லாத அக்காலத்
தில் எப்பிராயீம் மலைச்சாரலிலே சஞ்சரித்த ஒரு
லேவியன் யூதாதேசத்துப் பேத்லகேமூராளாகி
ய ஒரு ஸ்திரியைத்தனக்கு வைப்பாட்டியாய்க்
௨ கொண்டிருந்தான்.—அவள் விபசாரஞ்செய்து
அவனைவிட்டு யூதாதேசத்துப் பேத்லகேம் ஊரி
லிருக்கிற தன்பிதாவின் வீட்டுக்குப்போய், அங்
கே ஒரு வருஷமும் நாலுமாதமுமிருந்தாள்.—
௩ அவளுடையபுருஷன் அவளுடன் இங்கிதமாய்ப்
பேசவும்,அவளைத்திரும்ப அழைத்துவரவும்,தன்
பணிவிடைக்காரனை இரண்டு கழுதைகளுடன்
கூட்டிக்கொண்டு புறப்பட்டு அவளிடத்துக்
குப்போனான்: அப்பொழுது அவள் அவனைத்
தன் பிதாவின் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு
போக, அவளுடையபிதா அவனைக்கண்டுபோய்
௪ ச்சந்தித்துச் சந்தோஷப்பட்டான்.—ஸ்திரியின்
பிதாவாகிய அவன்மாமன் அவனைத்தங்கச்சொன்
னதினால்மூன்றுநாள் அவனோடேதங்கினான்: அங்
கே போசனபானம்பண்ணிக்கொண்டுதங்கினார்
௫ கள்.—நாலாம் நாள் அதிகாலையில் அவர்கள் எ
ழுந்திருந்தபொழுது,அவன்பிரயாணம்பண்ணஆ
யத்தப்படுகையில் ஸ்திரியின் பிதாதன்மருமகனை
நோக்கி,திருத்தியாகப் போசனம்பண்ணிப்பின்
புபோகலாமென்று சொல்ல,—அவர்களிருவருங் ௬
கூடியிருந்து பொசனபானம் பண்ணினார்கள்.
பின்பு ஸ்திரியின்பிதா அந்தமனிதனைநோக்கி,நீ
தயவுசெய்து உன்னிருதயம் மகிழ்ச்சியடைய
இராவிலுமிருவென்றான்.—அந்தமனிதன் புறப் ௭
படவெழுந்தபொழுது அவனுடைய மாமன் அ
வனை வலிந்துவேண்டினபடியினால் அவனன்று
ராத்திரியுமங்கிருந்தான்.—ஐந்தாம் நாள் அதிகா ௮
லையில் அவன்போகவெழுந்திருந்தபொழுதுஸ்தி
ரியின் பிதா, இருந்து இளைப்பாறென்று சொல்
ல, அவர்கள் சாயங்காலமளவுந்தங்கி இருவரும்
போசனம்பண்ணினார்கள்.—பின்பு அவனும் அவ ௯
னுடைய வைப்பாட்டியும் அவனுடையபணிவி
டைக்காரனும்புறப்படவெழுந்தபொழுது, ஸ்தி
ரியின்பிதாவாகிய அவன்மாமன்அவனைநோக்கி,
பொழுதுபடுகின்றது, சாயங்காலமாயிற்று, இங்
கே யிராத்தங்குங்கள், மாலைக்காலம் வந்துவிட்
டது,சந்தோஷமாயிங்கே யிராத்தங்கி நாளைக்குப்
பொழுதுவிடிய எழுந்து புறப்பட்டு உன்வாச
ஸ்தானத்துக்குப்போகலாமென்றுசொல்ல,—அந் ௰
த மனிதன் அன்றிரவு தங்கப் பிரியமில்லாமல்
எழுந்து, சேணம்வைத்த இரண்டு கழுதைகளோ
டுந் தன் வைப்பாட்டியோடும் புறப்பட்டு யெரு
ஷலேமாகிய எபூசுக்கு நேராகவந்தான்.—அவர் ௰௧
கள் எபூசுக்குச்சமீபமாக வருகையில் பொழுது
பட, பணிவிடைக்காரன் தன் நாயனைநோக்
கி, நாம் எபூசியரின் இந்தநகரத்திற் பிரவேசித்து
இங்கே யிராத்தங்கிப்போகலாமென்றான்.—அதற் ௰௨
கு அவனுடைய நாயன் அவனைநோக்கி, இஸ்ர
வேல் சந்ததியாரல்லாத அந்நியர்களுடைய நக
ரத்திற் பிரவேசிக்கலாகாது; அப்பாலே கிபியா
மட்டும் போவோமென்றான்.—மேலும் அவன் ௰௩
தன் பணிவிடைக்காரனைநோக்கி,நாம்கிபியாவி
லாவது ராமாவிலாவது இராத்தங்கும்படி அவை
களில் ஒருஸ்தானத்துக்குப்போய்ச் சேரத்தக்க
தாக நடந்துபோவோமென்றான்.—அப்படியே ௰௪
அப்பால் நடந்துபோனார்கள்; அவர்கள் பேன்
யாமீன் நாட்டைச்சேர்ந்த கிபியாவுக்குச் சமீப
மாய்வருகையிற் சூரியனவர்களுக்கு அஸ்தமன
மாயிற்று.—ஆகையால் கிபியாவில் இராத்தங்கும் ௰௫
படிக்கு அவர்கள் அவ்விடத்திற் பிரவேசித்தார்
கள்: அவர்கள் பிரவேசித்தபின் அந்நகரத்தில் இ
ராத்தங்கும்படிதன்னைவீட்டுக்கழைத்துக்கொண்
டுபோக ஒருவருமில்லாமையால் வீதியில் இருந்
தான்.
பின்பு மாலையில் ஒரு கிழவன் வயல்வெளி ௰௬
யில் தன் வேலையை விட்டுவந்தான், அவன் எப்
ராயீம் பருவதத்தானும் கிபியாவின் பிரவாசியு
மானவன்: அவ்வூராரோபேன்யாமீனியர்.—அந் ௰௭

(௨௯) யோசு.௰௯.௪௭. ஆதி.௰௪.௰௪. அதி.௨௰.௧. ௧.இரா.௰௨.௨௯,௩௰. (௩௰) அதி.௰௩.௧. ௧.சாமு.௪.௨,௩,௰,௰௧.
(௩௧) யோசு.௰௮.௧.—(௰௯. அதி. ௧.) அதி.௰௭.௬. அதி.௰௮.௧. அதி.௨௧.௨௫. அதி.௰௭.௭. (௩) ஆதி.௩௪.௩. (௫)
ஆதி.௰௮.௫. (௰) யோசு.௰௮.௨௮. (௰௧) யோசு.௰௫.௮,௬௩. அதி.௧.௨௧. ௨.சாமு.௫.௬. (௰௨) யோசு.௰௮.௨௮.
(௰௩) யோசு.௰௮.௨௫. (௰௫) மத்.௨௫.௪௩. எபி.௰௩.௨. (௰௬) சங்.௱௪.௨௩.

தக்கிழவன் தன்கண்களையேறிட்டு நகரவீதியில்
அந்தப்பிரயாணக்காரனைக்கண்டு எவ்விடத்துக்
குப் போகிறாய், எங்கேயிருந்து வந்தாயென்று
௰௮ கேட்க.—அவன் இவனைநோக்கி, நாங்கள்யூதா
வின் ஊராகியபேத்லகேமிலிருந்து, நான்விட்டு
வந்த எப்ராயீம் மலைச்சாரலுக்குப்போகிறோம்;
நான் யூதாவிலுள்ள பேத்லகேம் மட்டும்போய்
வந்தேன்: இப்பொழுது யெகோவாவின்ஆல
யத்துக்குப்போகிறேன்; இங்கே ஒருவரும் என்
௰௯ னை வீட்டிலே சேர்த்துக்கொள்ளவில்லை.—எங்
கள் கழுதைகளுக்கு வைக்கோல்முதலான உண
வுகளிருக்கின்றன; எனக்கும், உம்முடைய அடி
யாளுக்கும், உம்முடைய அடியானோடிருக்கிற
பணிவிடைக்காரனுக்கும் அப்பமுந் திராட்சரச
௨௰ முமுண்டு: ஒருகுறைவுமில்லையென்றான்.—அப்
பொழுது அந்தக்கிழவன் உனக்கு நன்மையுண்
டாவதாக; உன்குறைவெல்லாம் என்னையடைவ
தாக; வீதியிலேமாத்திரம் இராத்தங்கவேண்டா
௨௧ மென்றுசொல்லி;—அவனைத் தன்வீட்டுக்கழைத்
துக்கொண்டுபோய், கழுதைகளுக்குத்தீன்போ
ட்டான்: அவர்கள்பாதசுத்தி பண்ணிக்கொண்டு
போசனபானம்பண்ணினார்கள்.
௨௨ இப்படியவர்கள் மனமகிழ்ச்சியடையும்பொ
ழுது, பேலியாலின் மக்களாகிய அந்த ஊர்மனி
தர் அந்தவீட்டைச்சுற்றிக்கொண்டு, கதவைத்தட்
டி, வீட்டுக்காரனாகியஅந்தக்கிழவனை அழைத்து,
உன்வீட்டிலே வந்தமனிதனை நாங்களறியும்படி
அவனை வெளியேகொண்டுவாவென்றார்கள்.—
௨௩ அப்பொழுதுவீட்டுக்காரனாகிய அந்தமனிதன் அ
வர்களிடத்திற்போய், அவர்களைநோக்கி, என்ச
கோதரரே, நீங்களிப்படிச் செய்யவேண்டாம்;
இப்படிப்பட்ட தீங்கைச்செய்யாதிருப்பீர்களா
க: அந்தமனிதன் என்வீட்டுக்குட்பிரவேசித்திரு
க்கையில், இப்படிப்பட்ட மதிகேட்டைச்செய்
௨௪ யாதிருப்பீர்களாக,-கேளுங்கள், கன்னிகையாகி
யஎன்புத்திரியையும், அவனுடையவைப்பாட்டி
யையும் வெளியேகொண்டுவருவேன்; அவர்க
ளைத்தாழ்ச்சிப்படுத்தலாம், உங்கள் இஷ்டப்படி
யேஅவர்களுக்குச்செய்யுங்கள்: இந்தமனிதனுக்
குமாத்திரம் இப்படிப்பட்ட மதிகேடான காரி
௨௫ யத்தைச்செய்யாதிருங்களென்றான்.—அந்த மனி
தர்கள் அவனுடைய சொல்லுக்குச் செவிகொ
டுக்கவில்லை: அப்பொழுது அந்தமனிதன் தன்
வைப்பாட்டியைப்பிடித்து, வெளியே அவர்களி
டத்திற் கொண்டுவந்துவிட; அவர்கள் அவளைச்
சேர்ந்து, இராமுழுவதும் விடியற்காலம்வரைக்
கும் அவளை அவமானமாய்நடத்தி; பொழுதுவி
௨௬ டிய அவளைப்போகவிட்டுவிட்டார்கள்.—பொ
ழுதுவிடிய அந்தஸ்திரிவைகறையிலே தன் நாய
னிருக்கிற வீட்டுவாசற்படிவரைக்கும்போய், வி
டியுமட்டும் அங்கே விழுந்துகிடந்தாள்.—அவளு ௨௭
டைய நாயன்அதிகாலையி லெழுந்திருந்து, வீட்
டுக்கதவைத்திறந்து வெளியே புறப்படுகிறபொ
ழுது, தன்வைப்பாட்டியாகிய ஸ்திரிவீட்டு வா
சலுக்குமுன்பாகத் தன்கைகளை வாசற்படியின்
மேல் வைத்துக்கொண்டுகிடக்கக்கண்டு,—அவ ௨௮
ளைநோக்கி, எழுந்திரு போவோமென்றுசொல்
ல, அவள் அதற்கு உத்தரஞ்சொல்லவில்லை. அப்
பொழுது அந்தமனிதன் அவளைக்கழுதையின்
மேலேற்றிக்கொண்டு புறப்பட்டுத்தனது இடத்
துக்குப்போனான்;
அவன்தன்வீட்டிற் சேர்ந்தவுடனே, ஒருகத்தி ௨௯
யை எடுத்து, தன்வைப்பாட்டியைப்பிடித்து, அ
வளுடைய எலும்புகள் உட்படப்பன்னிரண்டு
துண்டமாக்கி, இஸரவேலின் எல்லைகளெங்கும்
அனுப்பினான்.—அப்பொழுது அதைக்கண்டவர் ௩௰
களெல்லாரும், இஸரவேல்சந்ததியார் எகிப்தில்
நின்றுபுறப்பட்டநாள்முதல் இந்நாள்வரைக்கும்
இப்படிப்பட்ட காரியஞ்செய்யப்படவுமில்லை
காணப்படவுமில்லை: இதைக்குறித்துச் சிந்தித்
து ஆலோசனைபண்ணி, தீர்மானஞ் செய்யுங்க
ளென்றுசொல்லிக்கொண்டார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. லேவியன்செய்யப்பட்ட தீமையைச் சபைக்குத் தெரிவித்தல்: ௮. அதைத்தொட்டுச் சபை நிருபணஞ் செய்தல்: ௰௨. இஸரவேல் வமிசத்தை எதிர்த்து யுத்தஞ்செய்யப் பேன்யாமீன் வமிசத்தார் ஆயத்தப்படுத்தல்: ௰௮. முதல் யுத்தத்திலே இஸரவேலரால் இருபத்தீராயிரஞ் சனங்கள் அதமாதல்: ௨௨. இரண்டாம் யுத்தத்தில் அவர்களிற் பதினெண்ணாயிரஞ்சனங்கள் அதமாதல்: ௨௬. மூன்றாம் யுத்தத்தில் பேன்யாமீன் வமிசத்தார் யாவருஞ் சங்கரிக்கப்படல்.

அப்பொழுது தாண் நகரந்தொடங்கிப் பேர் ௧
ஷேபாமட்டுமுள்ள சமஸ்த இஸரவேல் சந்ததி
யின் சபையாரும் கிலியாத் நாட்டாருடன் புறப்
பட்டு, மிஸ்பேயிலே யெகோவாவின்சந்நிதி
யில் எகாங்கமாய்க்கூடினார்கள்.—இஸரவேலின் ௨
சகலகோத்திரத்திலுள்ள சமஸ்தசனங்களின் அதி
பதிகளும், கட்கத்தைப்பிடிக்கிற நாலு லட்சம்
காலாள்களாகிய தேவனுக்குரிய சனங்களின்
சபையிலே கூடி நின்றார்கள்.—இஸரவேல் சந் ௩
ததியார் மிஸ்பேக்கு வந்திருக்கிறார்களென்று
பேன்யாமீன் சந்ததியார் கேள்விப்பட்டார்கள்.
இஸரவேல் சந்ததியார் இந்தத்தீங்குநடந்ததெப்
படிச் சொல்லுங்களென்று கேட்டபோது;—
கொலைசெய்யப்பட்ட ஸ்திரியின் புருஷனாகிய ௪
லேவியன், நானும் என்வைப்பாட்டியும் பேன்

(௰௮) யோசு.௰௮.௧. ௧.சாமு.௪.௩,௭. வச.௰௫. (௨௰) ஆதி.௪௩.௨௩. அதி.௬.௨௩. ஆதி.௰௯.௨. (௨௧) ஆதி.௨௪.௩௨. ஆதி.௪௩.௨௪. ஆதி.௰௮.௪. யோவா.௰௩.௫. (௨௨) ஆதி.௰௯.௪. அதி.௨௰.௫. ஓசி.௯.௯. உபா.௰௩.௰௩. ஆதி.௰௯.௫. ரோ.௧.௨௬,௨௭. (௨௩) ஆதி.௰௯.௬,௭. ௨.சாமு.௰௩.௰௨. (௨௪) ஆதி.௰௯.௮. ஆதி.௩௪.௨. உபா.௨௧.௰௪. (௨௫) ஆதி.௪.௧. (௨௮) அதி.௨௰.௫. (௨௯) அதி.௨௰.௬. ௧.சாமு.௰௧.௭. (௩௰) அதி.௨௰.௭. நீதி.௰௩.௰.—(௨௰. அதி. ௧.) உபா.௰௩.௰௨. யோசு.௨௨.௰௨. ௧.சாமு.௰௧.௭. அதி.௰௮.௨௯. ௧.சாமு.௩.௨௰. ௨.சாமு.௩.௰. அதி.௰.௰௭. ௧.சாமு.௭.௫. (௨) அதி.௮.௰. (௪) அதி.௰௯.௰௫.

யாமீனின் ஊரான கிபியாவில் இராத்தங்கும்
௫ படிக்குப் போனோம்.—அப்பொழுது கிபியாவூ
ரார் எனக்கு விரோதமாயெழுந்து, இராத்திரியி
லே நானிருந்தவீட்டைச்சூழ்ந்துகொண்டு, என்
னைக்கொன்றுபோடநினைத்து, என்வைப்பாட்டி
யை அவமானப்படுத்தினார்கள்: அதினால் அவள்
௬ இறந்து போனாள்.—இஸரவேலருக்குள்ளே அ
வர்கள் இலச்சையும் மதிகேடுமுள்ள இந்தக்கா
ரியத்தைச் செய்தபடியினாலே; நான் என்வைப்
பாட்டியைப்பிடித்துத்துண்டித்து, இஸரவேலின்
சுதந்தரமான நாடுகளெங்கும் அனுப்பினேன்.—
௭ கேளுங்கள், நீங்களெல்லாரும் இஸரவேல் சந்த
தியார்; ஆதலால் இங்கேநீங்கள் ஆலோசித்து ஒ
ரு தீர்மானம் பண்ணுங்களென்றான்.
௮ அப்பொழுது சமஸ்தசனங்களும் எகாங்கமா
யெழுந்து, எங்களி லொருவனும் தன் கூடாரத்
துக்குப்போகவும்படாது, வீட்டுக்குத்திரும்பவும்
௯ படாது,—நாம் கிபியாவை யெதிர்க்கும்படி தா
ணயம் போடுவோம்; இதுவேநாம் அதற்குச்செய்
௰ யவேண்டியது.—பேன்யாமீன் கோத்திரத்தைச்
சேர்ந்தகிபியா நகரத்தார் இஸரவேலருக்குள்ளே
செய்த மதிகேடுமுழுவதிற்குந் தக்கதாய் சனங்
கள் போய்ச்செய்யும்படிக்கு போசனபதார்த்தங்
களைச் சம்பாதிக்கும்பொருட்டு, இஸரவேலின்ச
மஸ்தகோத்திரங்களிலும் நூறுபேரில் பத்துப்பே
ரையும், ஆயிரவரில் நூறுபேரையும், பதினாயிரவ
ரில் ஆயிரவரையுந் தெரிந்தெடுக்கவேண்டுமென்
௰௧ றார்கள்.—பின்பு சமஸ்த இஸரவேலரும் ஒரு ம
னப்பட்டு அந்நகரத்துக்கு விரோதமாக ஏகாங்க
மாய்க்கூட்டங் கூடினார்கள்.
௰௨ அங்கிருந்து இஸரவேலின் கோத்திரத்தார்பே
ன்யாமீன் கோத்திரமெங்கும் ஆளனுப்பி, உங்க
௰௩ ளுக்குள்ளே நடந்த இந்தத்தீங்கென்ன;—இப்
பொழுது கிபியாவில் இருக்கிற பேலியாலின் மக்
களாகிய அந்த மனிதரை நாங்கள் கொலைசெய்
து, இந்தத்தீங்கை இஸரவேலில் நின்றும் நீக்கும்
படிக்கு அவர்களை ஒப்புவியுங்களென்று சொல்
லுவித்தார்கள். பேனயாமீன் சந்ததியார் இஸர
வேல் சந்ததியாராகிய தங்கள் சகோதரருடைய
௰௪ சொல்லுக்குச் செவிகொடுக்கவில்லை.—பேன்யா
மீன் சந்ததியார் இஸரவேல் சந்ததியாருடன்யுத்
தம்பண்ணப் புறப்படும்படிக்கு நகரங்களைவிட்
௰௫ டுக் கிபியாவுக்குப்போய்க் கூடினார்கள்.—கிபி
யா ஊராரில் தெரிந்துகொள்ளப்பட்ட எழுநூறு
பேரைத்தவிர, அந்நாளிலே நகரங்களிலிருந்து
வந்துகூடின கட்கத்தைப் பிடிக்கிறவர்கள் இரு
௰௬ பத்தாறாயிரம்பேர்.—அந்தச்சமஸ்த சனங்களுக்
குள்ளும் இடக்கை வழக்கமுள்ள எழுநூறுபேர்
தெரிந்துகொள்ளப்பட்டார்கள்; அவர்கள் அனை
வரும் ஒருமயிரிடைதப்பாதபடிக்குக் கவணால்
௰௭ கல்லெறிவார்கள்.—பேன்யாமீன்கோத்திரந்தவி
ர, இஸரவேலரில் தொகையிடப்பட்ட கட்கத்
தைப் பிடிக்கிறவர்கள் நாலுலட்சம்பேர்: இவர்
கள் சமஸ்தரும் யுத்தவீரர்.
இஸரவேல் சந்ததியாரெழுந்து, தேவாலயத் ௰௮
துக்குப்போய், தேவனைநோக்கி, எங்களில் ஆர்
போய்ப் பேன்யாமீன் சந்ததியாருடன் யுத்தம்
பண்ணத்தொடங்கவேண்டுமென்றுகேட்க; யெ
கோவா, முதல் யூதாபோகவேண்டுமென்றார்.-
இஸரவேலர் காலையிலெழுந்து புறப்பட்டுக்கி ௰௯
பியாவுக் கெதிராகப் பாளயமிறங்கினார்கள்.—
இஸரவேலரில் யாவரும் பேன்யாமீனுடன் யுத் ௨௰
தம்பண்ணப்புறப்பட்டு, கிபியாவினிடத்தில் அ
வர்களுக்கெதிராகப் போர்செய்ய அணிவகுத்து
நின்றார்கள்.—அப்பொழுது பேன்யாமீன் சந்த ௨௧
தியார் கிபியாவிலிருந்து புறப்பட்டு, இஸரவேல
ரில் இருபத்தீராயிரம்பேரைத் தரையிலே விழும்
படி நாசப்படுத்தினார்கள்.
அப்படியிருந்தும், இஸரவேல்சனங்கள்திடங் ௨௨
கொண்டு, முதல்நாள்தாங்கள் அணிவகுத்த ஸ்தா
னத்திலே திரும்பவும் போர்செய்ய அணிவகுத்
தார்கள்.—அன்றியுமவர்கள்போய்ச் சாயங்கால ௨௩
மளவும் யெகோவாவின் சந்நிதியில் அழுது,
நாங்கள்பின்னும் எங்கள்சகோதரராகிய பேன்
யமீனியரோடே யுத்தம்பண்ணப் போகலாமா
வென்று யெகோவாவைக்கேட்க; யெகோ
வா அவர்களையெதிர்த்துப்போங்களென்றார்.—
இரண்டாம்நாள் இஸரவேல்சந்ததியார்பேன்யமீ ௨௪
னியருக்குச் சமீபிக்கிறபொழுது,—பேன்யாமீன் ௨௫
வமிசத்தார் அந்நாளிலே கிபியாவிலிருந்து அவர்
களுக்கெதிராகப் புறப்பட்டுவந்து, திரும்பவும்
இஸரவேலரில் கட்கத்தைப்பிடிக்கிறவர்கள் பதி
னெண்ணாயிரம்பேரைத் தரையிலேவிழ நாசப்
படுத்தினார்கள்.
பின்பு இஸரவேலராகிய சமஸ்தசனங்களும் ௨௬
புறப்பட்டுத் தேவாலயத்துக்குப்போய், அங்கே
யெகோவாவின் சந்நிதியிலிருந்து அழுது அன்
றுசாயங்காலபரியந்தம் உபவாசித்து, யெகோ
வாவின் சந்நிதியில் தகனபலிகளையும், ஸ்தோத்
திரபலிகளையும் இட்டார்கள்; அந்நாள்களிலே
தேவ உடன்படிக்கையின் பெட்டி அங்கேயி
ருந்தது: ஆரோனின் பௌத்திரனும் எலீயேசா
ரின் புத்திரனுமாகிய பீனிகாஸ் அந்நாளில் அ
வர் சந்நிதியில் நின்றான்.—இஸரவேல் சந்ததி ௨௭
யார் யெகோவாவைநோக்கி,—நாங்கள் பின் ௨௮
னும் எங்கள்சகோதரராகிய பேன்யாமீன்சந்ததி
யாருடன்யுத்தம்பண்ணப்புறப்படலாமா, புறப்
படலாகாதாவென்றுகேட்க, யெகோவா நீங்
கள் புறப்பட்டுப்போங்கள், நாளைக்கு அவர்க
ளை உங்கள் கையிலொப்பிப்பேன் என்றார்.—
அப்பொழுது இஸரவேலர் கிபியாவைச்சூழ ஆள் ௨௯
களை பதிவிடைவைத்து;—மூன்றாம் நாளிலே ௩௰

(௫) அதி.௰௯.௨௨. அதி.௰௯.௨௫,௨௬. (௬) அதி.௰௯.௨௯. யோசு.௭.௰௫. (௭) அதி.௰௯.௩௰. (௰௨) உபா.௰௩.௰௪. யோசு.௨௨.௰௩,௰௬. (௰௩) உபா.௰௩.௰௩. அதி.௰௯.௨௨. உபா.௰௭.௰௨. (௰௬) அதி.௩.௰௫. ௧.நாளா.௰௨.௨. (௰௮) வச.௨௩,௨௬. எண்.௨௭.௨௧. அதி.௧.௧. (௨௧) ஆதி.௪௯.௨௭. (௨௩) வச.௨௬,௨௭. (௨௫) வச.௨௧. (௨௬) வச.௰௮. யோசு.௰௮.௧. ௧.சாமு.௪.௩,௪. யோசு.௨௪.௩௩. உபா.௰.௮. உபா.௰௮.௩. (௨௯) யோசு.௮.௪.

பேன்யமீனியருக்கெதிராகப்போய்,முன்செய்த
துபோலக் கிபியாவுக்குச் சமீபமாய்ப்போருக்கு
௩௧ அணிவகுத்தார்கள்.-அப்பொழுது பேன்யாமீன்
சந்ததியார் அந்தச்சனங்களை எதிர்க்கப்புறப்பட்
டு,நகரத்தைவிட்டு இப்பாலேவந்து;பெத்தேலுக்
கும் வெளியிலேகிபியாவுக்கும்போகிற இரண்டு
வழிகளில் முன்செய்ததுபோல், இஸரவேலரில்
ஏறக்குறையமுப்பதுபேரை வெட்டவுங் கொல்
௩௨ லவுந் தொடங்கினார்கள்.—பேன்யாமீன் இவர்
கள்முன்போல் நமக்குமுன்பாகமுறிய அடிக்கப்
படுகிறார்களென்றார்கள். இஸரவேல்சந்ததியார்
அவர்கள் நகரத்தைவிட்டிப்பாலேயிருக்கிறவழி
களிலே வரும்படிக்கு நாம் ஓடவேண்டுமென்று
௩௩ சொல்லியிருந்தார்கள்.—சமஸ்த இஸரவேலருந்
தங்கள்ஸ்தானத்தைவிட்டெழுந்து,பாகால்தாமா
ரிலே யுத்தத்துக்கு அணிவகுத்தார்கள்: அன்றியும்
இஸரவேலருக்குள்ளே கிபியாவின்பள்ளத்திலே
பதிவிருந்தவர்கள் தங்கள் ஸ்தானத்தைவிட்டெ
௩௪ ழுந்தார்கள்.-சமஸ்த இஸரவேலருக்குள்ளும் தெ
ரிந்துகொள்ளப்பட்டபதினாயிரம்பேர்கிபியாவுக்
கெதிர்ப்பட்டார்கள், யுத்தம்கொடிதாயிற்று: இ
வர்கள் தங்களுக்குத் தீமைநேரிட்டதென்று அ
௩௫ றியவில்லை.—யெகோவா இஸரவேலருக்கு
முன்பாகப் பேன்யமீனியரைமுறிய அடித்தார்:
அந்நாளில் இஸரவேல் சந்ததியார் பேன்யமீனி
யரில் கட்கத்தைப் பிடிக்கிறவர்களாகிய இரு
பத்தையாயிரத் தொருநூறுபேரைச் சங்கரித்தார்
௩௬ கள்.—இஸரவேலர் கிபியாவுக்கப்பாலே வைத்
த பதிவிடையை நம்பியிருந்து, பேன்யமீனி
யருக்கு இடங்கொடுத்தார்கள், அதினாலே தாங்
கள்முறிய அடிக்கப்படுகிறார்களென்று பேன்ய
௩௭ மீனியர் எண்ணிக்கொண்டார்கள்.—பின்பு ப
திவிடையிருந்தவர்கள் தீவிரமாய்க் கிபியாவின்
மேற்பாய்ந்து; எங்கும்பரந்து நகரத்திலுள்ளவர்க
ளெல்லாரையும் கட்கத்தின்வாயினாற் சங்காரஞ்
௩௮ செய்தார்கள்.-நகரத்திலேதீயையிட்டு அதிலிருந்
து மிகுந்தபுகையையெழும்பப்பண்ணுவதே இ
ஸரவேலருக்கும், பதிவிடைகாரருக்கும் அடை
௩௯ யாளமாகக்குறிக்கப்பட்டிருந்தது.-இஸரவேலர்
யுத்தத்திலே பின்வாங்கினதினாலே பேன்யமீனி
யர் இஸரவேலரில் ஏறக்குறைய முப்பதுபேரை
வெட்டவுங்கொல்லவுந்தொடங்கி, முந்தின யுத்
தத்தில் நடந்ததுபோல் இவர்கள் நமக்குமுன்பா
க முறிய அடிக்கப்படுகிறார்களேயென்று சொல்
௪௰ லிவருகையில்,—நகரத்தில் இருந்துபுகைத்தூண்
எழும்பத்தொடங்கிற்று; பேன்யமீனியர் திரும்
பிப்பார்க்கும்பொழுது நகரமெங்கும் பற்றிய தீ
௪௧ வானத்தையளாவக் கண்டார்கள்.-அப்பொழுது
இஸரவேலர் திரும்பிக்கொண்டார்கள், பேன்ய
மீனியர் தங்களுக்குத் தீமை நேரிட்டதென்று
௪௨ கண்டுதிகைத்து,-இஸரவேலருக்குப் புறங்காட்
டி, வனத்தின் வழிக்குத்திரும்பி ஓடிப்போனார்
கள்; யுத்தம் அவர்களைத் தொடர்ந்துபிடித்தது,
நகரங்களினின்றும் வந்து அவர்களுக்குள் அகப்
பட்டவர்களும் நாசமாக்கப்பட்டார்கள்.-அவர் ௪௩
கள் பேன்யமீனியரை வளைந்துகொண்டுதுரத்தி,
கிழக்குப்புறமாகக் கிபியாமட்டும் வருமளவும்
எளிதாய் அவர்களைமிதித்துவிட்டார்கள்.—இவ் ௪௪
விதமாய்ப் பேன்யமீனியரிற்பதினெண்ணாயிரம்
பேர்விழுந்தார்கள்; அவர்களெல்லாரும்பராக்கிர
மசாலிகள்.-மற்றவர்கள்விலகி,வனத்திலிருக்கிற ௪௫
ரிம்மோன் கன்மலைக்கோடிப்போனார்கள்: வழி
களிலே அவர்களில் ஐயாயிரம்பேரைக் கொன்
று, மற்றவர்களைக் கிதோம்மட்டும் பின்தொடர்ந்
து, அவர்களில் இரண்டாயிரம்பேரைக்கொன்று
போட்டார்கள்.-இவ்விதமாய் அந்நாளிலேபேன் ௪௬
யமீனியரில் விழுந்தவர்கள் இருபத்தையாயிரம்
பேர்; அவர்களெல்லாரும் கட்கத்தைப்பிடிக்கி
றவர்களாகியபராக்கிரமசாலிகள்.—தப்பியோடி ௪௭
வனத்திலிருக்கிற ரிம்மோன் கன்மலையிலே நா
லுமாதமிருந்தார்கள்.—இஸரவேலர் பேன்யமீனி ௪௮
யரைத்திரும்பவும் எதிர்த்து, நகரத்திலுள்ள மனி
தரையும் மிருகங்களையுந்தங்கள்கைக்ககப்பட்ட
யாவற்றையும் கட்கத்தின்வாயினாற் சங்கரித்து,
தாங்கள் சேர்ந்தசமஸ்த நகரங்களையும் அக்கினி
யாற் கொளுத்திப்போட்டார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧.பேன்யாமீன்வமிசத்தாரைக்குறித்துச்சனங்கள் புலம்பல்: ௮.யாபேஷ்கிலியாத்தின் சனங்களை நாசப்படுத்தி நானூறு கன்னிகளைப்பிடித்தல்: ௰௬. ஷிலோவில் நடனம்பண்ணின கன்னியரைப்பிடிக்கப் பேன்யாமீன் வமிசத்தாருக்கு ஆலோசனை கொடுத்தல்.

இஸரவேலர் மிஸ்பேயில் இருக்கையில், நம்மி ௧
லொருவனுந்தன்புத்திரியைப்பேன்யமீனியருக்
குவிவாகம் பண்ணிக்கொடுக்கலாகாதென்று ஆ
ணையிட்டிருந்தார்கள்.-பின்பு சனங்கள் தேவால ௨
யத்துக்குப்போய், அங்கே தேவனுடைய சந்நி
தியிற்சாயங்காலபரியந்தமிருந்துசத்தமிட்டு மிக
வும் அழுது,—இஸரவேலின் தேவனாகிய யெ ௩
கோவாவே, இன்று இஸரவேலரில் ஒருகோத்
திரம்குறைந்துபோகத்தக்கதாகஇப்படி இஸரவே
லருக்குள்ளே நடந்ததென்னவென்றார்கள்.-மறு ௪
நாள் காலையில்சனங்கள் எழுந்திருந்து, அங்கே
ஒருவேதிகையையுண்டாக்கி, தகனபலிகளையும்
ஸ்தோத்திரபலிகளையுமிட்டார்கள்.-மிஸ்பேயில் ௫
யெகோவாவின்சந்நிதியில் வராதவன் கொ
லைசெய்யப்படவேண்டுமென்று பெரிய ஆணை
யிடப்பட்டிருந்தது; ஆதலால் இஸரவேல் சந்த
தியார் இஸரவேலின் சமஸ்தகோத்திரங்களிலும்
சபையாருடன் யெகோவாவின் சந்நிதியில்
வராதவன் யாவனென்று விசாரித்தார்கள்.-அன் ௬
றியும் இஸரவேல்சந்ததியார்தங்கள்சகோதரனாகி
யபேன்யாமீனைநினைந்திரங்கி, இன்று இஸரவே

(௩௪) யோசு.அ.௰௪. ஏசா.௪௭.௰௧. (௩௬) யோசு.அ.௰௫. (௩௭) யோசு.அ.௰௩. யோசு.௩.௫. (௪௰) யோசு.அ.௨௰. (௪௫) யோசு.௰௫.௩௨. (௪௭) அதி.௨௧.௰௩.—(௨௧. அதி. ௧.) அதி.௨௰.௧. (௨) அதி.௨௰.௰௮,௨௬. (௪) ௨.சாமு.௨௪.௨௫. (௫) அதி.௫.௨௩.

லரில் ஒருகோத்திரம் சேதிக்கப்பட்டுப்போயிற்
ஏ று.—நம்முடைய புத்திரிகளிலொருத்தியையும் அவர்களுக்கு விவாகஞ்செய்து கொடுக்கமாட் டோமென்று யெகோவாவைக்கொண்டு ஆ ணையிட்டோம், இனி மீந்திருப்பவர்களுக்கும மனவியர்வேண்டுமே இதற்கென்னசெய்வோம்.
அ இஸரவேலின் கோத்திரங்களில் மிஸ்பேயில் யெகோவாவின் சந்நிதியில் வராதவனொரு வனுண்டாவென்று விசாரித்தார்கள். கிலியாத்தி லுள்ளயாபேஷின்மனிதர் ஒருவரும்பாளயத்தில்
கூ சபையுடன்கூட வந்திருக்கவில்லை.—சனங்கள் தொகையிடப்பட்டபொழுது,கிலியாத்திலுள்ள யாபேஷ் ஊராரில் ஒருவரும் அங்கேகாணப்ப
௰ டவில்லை.–உடனேசபையார்பராக்கிரம வீரரிற் பன்னீராயிரம்பேரை யழைத்து, நீங்கள்போய்க் கிலியாத்திலுள்ள யாபேஷின்குடிகளை ஸ்திரிக ளோடும் பிள்ளைகளோடும் கட்கத்தின்வாயினாற்
௰க சங்கரியுங்கள்.—சமஸ்த புருஷரையும், புருஷ ரைச்சேர்ந்த சமஸ்த ஸ்திரிகளையுஞ் சங்கரித்து
௰உ விடுங்களென்று சொல்லியனுப்பினார்கள்.–கிலி யாத்திலுள்ள யாபேஷ் ஊராருக்குள்ளே புருஷ ரைச்சேராத கன்னிகைகளாகிய நானூறுபேர்க ளைக்கண்டுபிடித்து, அவர்களைக்கானான்தேசத்தி லுள்ள ஷீலோவிலிருக்கிற பாளயத்துக்குக்கொ
௰௩ ண்டுவந்தார்கள்.–அப்பொழுது சமஸ்த சபையா ரும் ரிம்மோன் கன்மலையிலிருக்கிற பேன்யா மீன் சந்ததியாருடன்பேசவும், அவர்களுக்குச்
௰ச சமாதானங்கூறவும் ஆளனுப்பினார்கள்.—அப்ப டியே அக்காலத்திலே பேன்யமீனியர் திரும்ப வந்தார்கள்: கிலியாத்திலிருந்த யாபேஷின் ஸ்தி ரிகளில் உயிரோடே விடப்பட்ட பெண்களை அவர்களுக்கு விவாகம்பண்ணிக்கொடுத்தார்கள். ஆயினும் அவர்கள் தொகைக்குப்பெண்தொகை
௰ரு போதாமற்போயிற்று.—ஆதலால் சனங்கள் இஸ ரவேல் கோத்திரங்களில் யெகோவா ஒரு சேதமுண்டாக்கினாரேயென்று பேன்யமீனிய ரினிமித்தம் மனஸ்தாபப்பட்டார்கள்.
௰சு அப்பொழுது சபையின்முதியோர், பேன்யா மீன் கோத்திரஸ்திரிகள் நாசமடைந்த படியினா லேமீந்திருக்கிறவர்களுக்குமனைவிகள்கிடைப்ப தற்கு என்னசெய்வோம்.-இஸரவேலின்ஒருகோ ௰எ
த்திரம் நிருமூலமாகாதபடிக்குப் பேன்யாமீன் கோத்திரத்தில்தப்பினவர்களுக்குச்சுதந்தரமிருக் கவேண்டுமே.-பேன்யமீனியருக்குப்பெண்கொ ௰அ
டுக்கிறவன் சபிக்கப்பட்டவனென்று இஸரவே லர் ஆணையிட்டிருக்கிறபடியால்,நம்முடையபுத் திரிகளை அவர்களுக்கு மனைவிகளாகக்கொடுக் கலாகாதேயென்று சொல்லிக்கொண்டார்கள்.— மேலும்அவர்கள்,கேளுங்கள், ஷீலோவிலேவரு ௰கூ
ஷந்தோறும் யெகோவாவுக்கு ஒரு உற்சவ முண்டே, அது பெத்தேலுக்கு வடக்காகவும், பெத்தேலிலிருந்து ஷிகேமுக்குப்போகிற வழிக் குக்கிழக்காகவும், லிபோனாவுக்குத்தெற்காகவும் நடக்குமென்றுசொல்லி,—பின்பு பேன்யமீனி உ௰
யரைநோக்கி, நீங்கள்போய்த் திராட்சத்தோட் டங்களிற் பதிவிருந்து,—ஷீலோவின் கன்னி உக
யர்கள் கீதவாத்தியத்தோடே நடனம்பண்ணிக் கொண்டு வருகிறதை நீங்கள் காணும்பொழுது, திராட்சத்தோட்டத்திலிருந்து புறப்பட்டு, நீங் கள் ஒவ்வொருவரும் ஷீலோவின் கன்னியர்க ளில்ஒவ்வொருகன்னிகையைப்பிடித்துப் பேன் யாமீன் தேசத்துக்குக் கொண்டுபோங்கள்.—அ உஉ
வர்களுடைய பிதாக்களாகிலும், சகோதரராகி லும் எங்களிடத்தில்முறையிடவந்தால், நாங்கள் அவர்களைநோக்கி, எங்கள் நிமித்தம் அவர்களுக் கிரங்குங்கள்; யுத்தத்தில் அவரவர் மனைவியரை நாங்கள் மீதியாகவிடவில்லையே, இக்காலத்தில் நீங்கள் அவர்களுக்குக்கொடாததினால் உங்கள் மேற் குற்றமில்லையென்று சொல்லுவோமென் றார்கள்.—அப்படியே பேன்யாமீன் சந்ததியார் உ௩
செய்தார்கள், நடனம் பண்ணுகிற கன்னியர்க ளில் தங்கள்தொகைக்கேற்கப் பிடித்துக்கொண் டு, தங்கள்சுதந்தரத்துக்குத் திரும்பிப்போய், நக ரங்களைப்புதுப்பித்து அவைகளில்வசித்தார்கள்.— மற்ற இஸரவேல்சந்ததியாரும்அக்காலத்திலேஅ உச
வ்விடம்விட்டுப்புறப்பட்டு,தங்கள்தங்கள்கோத் திரத்துக்கும் வமிசத்துக்கும்போய், யாவருந் தங் கள் சுதந்தரத்திற்சேர்ந்தார்கள்.—அந்நாள்களில் உரு
இஸரவேலருக்குள்ளே இராசாவில்லை: அவன வன் தன் தன் இஷ்டப்படி செய்துவந்தான்.

(அ) க.சாமு.௰க.க. க.சாமு.௩௰க.௰க. (௰) வச.ரு. அதி.ரு.உ௩. க.சாமு.௰க.எ. (௰க) எண்.௩௰க.௰எ. (௰உ) யோசு. ௰அ.க. (௰௩) அதி.உ௰.சஎ. உபா.உ௰.௰. (௰ரு) வச.சு. (௰அ) வச.க. அதி.௰க.௩ரு. (உக) யாத்.௰ரு.உ௰. அதி.௰க. ௩ச. க.சாமு.௰அ.சு. எரே.௩க.௰௩. (உ௩) அதி.உ௰.சஅ. (உரு) அதி.௰எ.சு. அதி.௰அ.க. உபா.௰உ.அ. அதி.௰எ.சு.

# ரூத்தின் புத்தகம்.

---

## க. அதிகாரம்.

க. பஞ்சத்தினிமித்தம் இலீமேலேக்கும் அவன் ஸ்திரி நகோமியும் அவன்புத்திரரிருவரும்மோவாபுதேசத்தில்செல்லல்: புத்திரரிருவரும்மோவாபியரின் கன்னிகளைவிவாகஞ்செய்தல்:சு. நகோமிசுயதேசத்துக்குப்புறப்பட்ட சமயத்தில் தன்மருமக்கள் கூடப்போகாதபடிவேண்டல்: யச. ஓர்ப்பாள்திரும்பிவிட ரூத் போதல்:யகூ. நகோமியும்ரூத்தும்பேத்லகேமிலேசேர்ந்துவரல்

நியாயாதிபதிகள் நியாயம் விசாரித்துவரும்நாள்
களில், தேசத்திலே பஞ்சமுண்டாயிற்று. அப்
பொழுது யூதாவிலுள்ள பேத்லகேம் ஊராளு
கிய ஒருவன் தன் மனைவியோடும், புத்திரரிருவ
ரோடும், மோவாபுதேசத்திலே வாசம்பண்ணப்
உ போனான்.—அந்த மனுஷனுடையபெயர் இலீ
மேலேக், அவன்மனைவியின்பெயர் நகோமி, அ
வன் புத்திரரிருவரின்பெயர் மக்லோனும், கிலி
யோனும்: யூதாவிலுள்ள பேத்லகேமிலுள்ள எப்
ராத்தியராகிய அவர்கள் மோவாபுதேசத்திற்போ
ங யிருந்தார்கள்.—நகோமியின் புருஷனாகிய இலீ
மேலேக் இறந்தபொழுது, அவளும் அவள்புத்தி
ச ரர் இருவரும் அங்கிருந்தார்கள்.—இவர்கள் மோ
வாபுதேசத்துக்கன்னியருக்குள் விவாகஞ்செய்
தார்கள்; அவர்களில் ஒருத்திபெயர் ஓர்ப்பாள்,
மற்றவள்பெயர் ரூத்: அங்கே அவர்கள் ஏறக்கு
ரு றையப் பத்துவருஷம் வசித்தார்கள்.–பின்பு மக்
லோனுங் கிலியோனும் இறந்துபோனார்கள்;அந்
த ஸ்திரி தன் புத்திரரிருவரையும் தன் புருஷனை
யும் இழந்தவளாயிருந்தாள்.

சு அவள், யெகோவா தமது சனங்களுக்குத்
தயைசெய்து,அவர்களுக்கு ஆகாரங்கொடுக்கிறா
ரென்று மோவாபுதேசத்தில் கேள்விப்பட்டு,அந்
தமோவாபு தேசத்தைவிட்டுப்போகும்படி தன்ம
எ ருமக்களுடன் எழுந்தாள்.—அவள் தானிருந்த
ஸ்தானத்தைவிட்டு, தன் மருமக்களிருவரோடும்
புறப்பட்டு யூதாதேசத்துக்குத்திரும்பிப்போகும்
அ வழியிலே,–நகோமி தன் மருமக்களிருவரையும்
நோக்கி, நீங்களுங்களுங்கள் தாய்வீட்டுக்குத்தி
ரும்பிப்போங்கள்: மரித்தோருக்கும் எனக்கும்
நீங்கள்தயைசெய்தபிரகாரம், யெகோவா உங்
கூ களுக்குத் தயைசெய்வாராக.—நீங்களுங்களில்
ஒவ்வொருத்திக்கு வாய்க்கும் புருஷர்வீட்டில்
இளைப்பாறுதலை அடையும்படி, யெகோவா
உங்களுக்கருள்செய்வாராகவென்றுசொல்லி அ
வர்களை முத்தமிட, அவர்கள்சத்தமிட்டழுது அ
வளைநோக்கி,—உம்முடன் உமது சனங்களிடத் ய
தில் வருகிறோமென்றார்கள்.—அதற்கு நகோமி, யக
என்மக்களே,நீங்கள் போய்விடுங்கள்:உங்களுக்
குப்புருஷராகும்படி இன்னும் என் கருப்பத்தி
லே புத்திரருண்டா; ஏன் என்னுடன்வருகிறீர்
கள்.—இனி ஒரு நாயகனுடன் கூடிவாழாதபடி யஉ
எனக்குவயதுசென்றது. நம்பிக்கையாய்அப்படி
நடக்குமென்றுசொல்லி இன்றிரவில் ஒரு புருஷ
னுடன்கூடிப் புத்திரரைப்பெற்றாலும்;அவர்கள்
பிராயமாகும்வரைக்கும் புருஷசஞ்சாரமின்றிக்
காத்திருப்பீர்களா, கூடாதே.—என் மக்களே, யங
யெகோவாவின்கரம் என்னைவிரோதித்தோங்
கியிருக்கின்றது. உங்கள் நிமித்தம் நான் மிகவும்
விசனப்படுகிறேன்: என்மக்களே, நீங்கள்போய்
விடுங்களென்று சொல்ல,—அவர்கள் பின்னுஞ் யச
சத்தமிட்டழுதார்கள்: ஓர்ப்பாள் தன் மாமியை
முத்தஞ் செய்துவிட்டாள்; ரூத்தோ அவளைவி
டாமல் நின்றாள்.—அப்பொழுது அவள், உன் யரு
னுடைய ஒரகத்தி தன்சனங்களிடத்திற்கும்,தன்
தேவர்களிடத்திற்கும் திரும்பிப் போய்விட்டா
ளே: நீயுமுன் ஒரகத்திக்குப் பின்னாகத் திரும்
பிப்போவென்றுசொல்ல,—ரூத் நான் உம்மைப் யசு
பின்பற்றாமல் திரும்பி உம்மைவிட்டுப்பிரியும்
படி வருந்தவேண்டாம்: நீர்போகுமிடத்துக்கு
நானும்வருகிறேன், நீர் இராத்தங்குமிடத்திலே
நானுந் தங்குகிறேன்; உம்முடைய சனங்களே
என்சனங்கள், உம்முடையதேவனே என்தே
வன்.–நீர்மரிக்குமிடத்திலே நானும்மரிப்பேன், யஎ
அங்கேயே அடக்கம்பண்ணப்படுவேன்: மரண
மேயன்றி வேறேதாவது உம்மையும் என்னை
யும் பிரித்தால், யெகோவா அதின்படியாயி
னும், அதற்கதிகமாயினும் எனக்குச்செய்யக்கட
வரென்றாள்.–அவள் தன்னோடேகூடவருவதற் யஅ
குத்திடங்கொண்டிருப்பதைக் கண்டபடியால்,
இவள் அப்புறம் ஒன்றும்பேசவில்லை.

பின்பு இருவரும் பேத்லகேம்மட்டும் நடந்து யகூ
போனார்கள்.அவர்கள் பேத்லகேமுக்குட்பிரவே
சித்தமாத்திரத்தில் ஊராரெல்லாரும் ஓடிவந்து,இ
வள் நகோமியோவென்று பேசிக்கொண்டார்
கள்.-அவள் அவர்களைநோக்கி, நீங்களென்னை ந உய
கோமியென்றுசொல்லவேண்டாம், மாராளென்
றுசொல்லுங்கள்: சருவவல்லமையுள்ளவர் என்
னைமிகவும்கிலேசப்படுத்தினார்.–நான் நிறைவுள் உக

---

(க. அதி. க.) நியா.உ.யசு. ஆதி.யஉ.ய. உ.இரா.அ.க. நியா.யஎ.அ. (உ) ஆதி.ருரு.யகூ. நியா.ஙு.ஙய. (சு) யாத்.ச.ஙக. லூக்.க.சுஅ. சங்.ாஙஉ.யரு. மத்.சு.யக. (அ) யோசு.உச.யரு. உ.தீமோ.க.யசு,யஎ,யஅ. வச.ரு. அதி.உ.உய. (கூ) அதி.ஙுக. (யக) ஆதி.ஙஅ.யக. உபா.உரு.ரு. (யங) நியா.உ.யரு. யோபு.யகூ.உக. (யச) நீதி.யஎ.யஎ. (யரு) நியா.யக.உச. யோசு.உச.யரு,யகூ. உ.இரா.உ.உ. லூக்.உச.உஅ. (யசு) உ.இரா.உ.உ,ச,சு. அதி.உ.யக,யஉ. (யஎ) க.சாமு.ஙு.யஎ. உ.சாமு.யகூ.யங. உ.இரா.சு.ஙக. (யஅ) அப்.உக.யச. (யகூ) மத்.உக.ய. ஏசா.உங.எ. புல.உ.யரு. (உக) யோபு.க.உக.

ளவளாய்ப்புறப்பட்டேன்,யெகோவாவென்
னை வறுமையுள்ளவளாகத் திரும்பிவரப்பண்ணி
னார்:யெகோவாவென்னைத் தாழ்ச்சிப்படுத்தி
னார்; சருவவல்லமையுள்ளவர் என்னைக்கிலேசப்
படுத்தினார், இன்னும் எனக்கு நீங்கள் நகோமி
௨௨ யென்று பெயரிடுவதென்னவென்றாள்.—நகோ
மிமோவாபியஸ்திரியும்,தன்மருமகளுமாகியரூத்
துடன் மோவாபு தேசத்தினின்றுந்திரும்பி,வாற்
கோதுமை அறுக்கும் கால ஆரம்பத்தில் பேத்ல
கேமிலே வந்துசேர்ந்தாள்.

## ௨. அதிகாரம்.

௧. ரூத்போவசின்வயல்வெளியில்தானியத்தைப் பொறுக்கிக்கொள்ளல்: ௪. போவஸ் அவளைக் கண்டு கடாட்சித்தல்: ௰௮. ரூத் தன்மாமியிடத்தில் தானியத்தைக்கொண்டுபோதல்.

நகோமிக்கு அவளுடைய புருஷனாகிய இலீ
மேலேக்கின் குடும்பத்தானும்,மகா ஐசுவரியவா
னுமாகிய போவசென்று பெயருள்ள இனத்தா
௨ னொருவனிருந்தான்.—மோவாபு தேசத்தாளாகி
யரூத் நகோமியைநோக்கி, நான் வயல்வெளிக்
குப்போய், என்னைக்கடாட்சிக்கும் எவரையாகி
லும் பின்பற்றி, கதிர்களைப் பொறுக்கிக்கொண்
டுவர உத்தரவுதாருமென்று கேட்க; அவளிவளை
௩ நோக்கி, என்மகளே, போவென்றாள்.—அவள்
போய்ச்சேர்ந்து, வயல்வெளியில் அரியரிகிற
வர்களைப்பின்பற்றிப் பொறுக்கினாள்: இலீமே
லேக்கின் இனத்தானாகியபோவசுக்குரியவயல்நி
லம் தற்செயலாக அவளுக்கு நேரிட்டது.
௪ போவஸ் பேத்லகேமில் இருந்துவந்த அரிய
ரிகிறவர்களைநோக்கி, யெகோவா உங்களுட
னிருப்பாராகவென்றுசொல்ல; அவர்கள் அதற்
குத்தரமாய் யெகோவா உம்மை ஆசீர்வதிப்
௫ பாராகவென்றார்கள்.-பின்பு போவஸ் அரியரிகி
றவர்களை விசாரிக்கிற தன் பணிவிடைக்காரனை
நோக்கி,இவள்ஆருடையஸ்திரியென்றுகேட்க;-
௬ அரியரிகிறவர்களை விசாரிக்கிற பணிவிடைக்கா
ரன்,இவள் மோவாபு தேசத்தினின்றுந் திரும்பி
௭ ன நகோமியுடன்வந்த மோவாபிய ஸ்திரி.—இ
வள் எங்களைநோக்கி, நான் அரியரிகிறவர்களுக்
குப்பின்னாக அரிக்கட்டுகளிலே சிந்தினதைப்
பொறுக்கிக்கொள்ள எனக்கு உத்தரவுதரவேண்
டுமென்று கேட்டாள்: அவ்வண்ணமே இவள்
வந்து காலைதொடங்கி இம்மட்டும் இங்கே நின்
றாள், இப்பொழுது கொஞ்சநேரங் குடிசையி
௮ லேயிருக்கிறாளென்றான்.—அப்பொழுது போ
வஸ் ரூத்தைநோக்கி, கேள், என்மகளே, பொ
றுக்கிக்கொள்ள மறுவயல்களுக்குப் போகாம
லும்,இவ்விடத்தைவிட்டுப்புறப்படாமலும்,இங்
கே என் பணிவிடைக்காரிகளுடனேகூட இ
௯ ரு.—அவர்கள் அரியரியும்வயலைப்பார்த்து, அ
வர்கள் பின்னாகப்போ: வாலிபர்கள் உன்னைத்
தீண்டாதபடி, நான் அவர்களை எச்சரிக்கைப்ப
டுத்தியிருக்கிறேன்; உனக்குத் தாகமாயிருந்தால்
பாத்திரங்களிருக்குமிடத்திற்குப்போய், வாலி
பர் மொண்டுகொண்டு வந்ததிலே குடிக்கலா
மென்றுசொல்ல,—அவள் தரையிலே முகங்குப் ௰
புறவிழுந்துவணங்கி, அவனைநோக்கி, நான்பர
தேசி; நீரென்னை விசாரிக்கிறதற்கு உமதுகடாட்
சம்எனக்குக்கிடைத்ததென்னவென்றாள்.—அதற் ௰௧
குப் போவஸ் அவளைநோக்கி, உத்தரமாக, உன்பு
ருஷனிறந்தபின் நீ உன்மாமியாருக்குச் செய்த
தும், நீ உன்பிதா மாதாவையும் உன் ஜென்மதே
சத்தையும்விட்டு நீ முன்னறியாத சனங்களிடத்
தில் வந்ததுமாகிய எல்லாம் எனக்கு விவரமாகத்
தெரிவிக்கப்பட்டன.—நீ செய்தகிரியையின்படி ௰௨
யெகோவா உனக்குப்பலனளிப்பாராக, இஸ
ரவேலின் தேவனாகிய யெகோவாவின் சிற
குகளின்கீழ்வந்தொதுங்கின உனக்கு அவராலே
பரிபூரணபலன் அருளப்படுவதாகவென்றான்.—
அப்பொழுது அவள் அவனைநோக்கி, என் ஆண் ௰௩
டவரே, நான் உமது பணிவிடைக்காரிகளில் ஒ
ருதிக்கொப்பல்லாதிருந்தும், நீரென்னைத்தேற்றி
என்னுடன் இங்கிதமாய்ப்பேசினீர்; உமது க
டாட்சம் எனக்குக் கிடைத்ததேயென்றாள்.—
போவஸ் அவளைநோக்கி, புசிக்குஞ்சமயத்தில் நீ ௰௪
இங்கேவந்து, ஆகாரத்தையெடுத்துக் காடியில்
உன்துணிக்கையைத் தோய்த்துப் போசனம்பண்
ணென்றான். அப்படியே அவள் அரியரிகிறவர்
களுக்கருகேயிருக்கையில், அவன்வறுத்தகோது
மையைக்கொடுக்கஅவள்திருத்தியாகப்புசித்தும்,
மீந்திருந்தது.—அவள் பொறுக்கிக்கொள்ள எழுந் ௰௫
தபொழுது, போவஸ் தன் பணிவிடைக்காரரை
நோக்கி, இவள் அரிக்கட்டுகளிலும்பொறுக்கட்
டும், இவளை இலச்சைப் படுத்தவேண்டாம்.—
இவளுக்காக அரிகளிலே சிலவற்றைச்சிந்தவிட் ௰௬
டு இவளைப்பொறுக்கிக்கொள்ள விடுங்கள், இவ
ளைக்கண்டிக்கவேண்டாம் என்றான்.—அப்படி ௰௭
யே அவள் சாயங்காலமட்டும் வயலிலேபொறுக்
கி, பொறுக்கினதைத்தட்டியடித்தாள்: அது ஏறக்
குறைய ஒரு எபாவாற்கோதுமைகண்டது.
அவள் அதை யெடுத்துக்கொண்டு ஊருக்கு ௰௮
வந்தாள்: அவள் பொறுக்கினதை அவள்மாமி
கண்டாள்: அவள்திருத்தியாய்ப்புசித்து மீதியாக
வைத்ததையும் இவளுக்கெடுத்துக்கொடுத்தாள்.—
அப்பொழுது அவளுடையமாமி இன்று எங்கே ௰௯
பொறுக்கிக்கொண்டுவந்தாய்; எவ்விடத்திலேமு
யற்சிசெய்தாய்; உன்னைவிசாரித்தவன்ஆசீர்வதிக்
கப்பட்டவன்என்றுசொல்ல; இவள் தான்முயற்
சிசெய்தது இன்னானிடத்திலே யென்றுசொல்லி,
நானின்று*முயற்சிசெய்தவனுடையபெயர் போ

(௨௨) யாத்.௯.௩௧,௩௨. அதி.௨.௨௩. ௨.சாமு.௨௧.௯.—(௨.அதி.௧.) அதி.௩.௨,௰௨. அதி.௪.௨௧. மத்.௧.௫. லேவி.௰௯.௯. உபா.௨௪.௰௯. (௪) சங்.௱௨௯.௭,௮. லூக்.௧.௨௮. ௨.தெச.௩.௰௬. (௬) அதி.௧.௨௨. (௰) ௧.சாமு.௨௫.௨௩. (௰௧) அதி.௧.௰௪,௰௬,௰௭. (௰௨) ௧.சாமு.௨௪.௰௯. அதி.௧.௰௬. சங்.௰௭.௯. (௰௩) ஆதி.௩௩.௰௫. ௧.சாமு.௧.௰௮. ஆதி.௩௪.௩. நியா.௰௯.௩. ௧.சாமு.௨௫.௪௧. (௰௪) வச.௰௮. (௰௮) வச.௰௪. (௰௯) வச.௰. சங்.௪௧.௧.

௨௰ வஸ் என்றாள்.—அப்பொழுது நகோமி தன்மரு
மகளைநோக்கி, சீவனுள்ளோருக்கும் மரித்தோ
ருக்கும் தயைசெய்வதை யொழியாத யெகோ
வாவால் அவன் ஆசீர்வதிக்கப்பட்டவன், என்
றாள். பின்னும் நகோமி அவளைநோக்கி, அவன்
நமக்கினத்தான், அவன் நம்மை மீட்கும் அதிகா
௨௧ ரத்தை யுடையவனென்றாள்.—மோவாபு தேசத்
தாளாகிய ரூத் அவரென்னைநோக்கி, என்தானி
யம் அரிந்துமுடியுமளவும், நீ என்பணிவிடைக்
காரிகளோடேகூட விருவென்றுசொன்னாரென்
௨௨ றாள்.–அப்பொழுது நகோமி தன் மருமகளாகிய
ரூத்தைநோக்கி, என்மகளே, நீ மறுவயலில் அ
வர்களுக்கெதிர்ப்படாதபடிஅவன்பணிவிடைக்
௨௩ காரிகளோடும் போவதே நலமென்றாள்.—அப்
படியே அவள்வாற்கோதுமையும், கோதுமையும்
அரிந்து முடியுமளவும், போவசுடைய பணிவி
டைக்காரிகளோடுங் கூடிக்கொண்டு பொறுக்கி
னாள்; அவள் தன்மாமியுடன் வசித்தாள்.

## ௩. அதிகாரம்.

௧. நகோமி சொல்லியபிரகாரம் ரூத் போவசிடத்தில்அடைக்கலம்புகுதல்: ௮. போவஸ்மீட்கும் அதிகாரிசெய்யுங்கடமைசெய்யச் சம்மதித்தல்: ௰௪. ஆறுபடிவாற்கோதுமையைக்கொடுத்து அவளையனுப்பல்.

பின்பு அவள் மாமியாகிய நகோமி அவளைநோக்
கி, என்மகளே, நீவாழ்வுபெறும்படி நானுனக்கு
௨ இளைப்பாறுதலைத்தேடவேண்டாமா.–நீபோவசி
ன்பணிவிடைக்காரிகளோடுங்கூடியிருந்தாயே,
அவன் எங்களுக்கினத்தானல்லவா; அவனின்றி
ராத்திரிக்குக்களத்திலே வாற்கோதுமை தூற்று
௩ வான்.—நீகுளித்து, எண்ணெய்பூசி, வஸ்திரங்க
ளைத்தரித்துக்கொண்டு,களத்துக்குப்போ: அவன்
போசன பானம் பண்ணிமுடியுமளவும், அவன்
௪ கண்ணுக்கெதிர்ப்படாமல் நில்.—அவன்படுத்த
பின்பு, அவன்படுத்தவிடத்தைக்குறித்து அங்கே
போய்அவன்கால்களைமூடியவஸ்திரத்தைநீக்கிப்
படுத்துக்கொள்; நீசெய்யவேண்டுவதின்னதென்
று அவன் உனக்குத்தெரிவிப்பானென்று சொல்
௫ ல,–அவள் இவளைநோக்கி,நீர்சொன்னபடியெல்
௬ லாஞ்செய்கிறேனென்றாள்.-அவள் களத்துக்குப்
போய், தன்மாமி தனக்குக்கட்டளையிட்டபடி
௭ யெல்லாஞ்செய்தாள்.-போவஸ் போசனபானம்
பண்ணி மனமகிழ்ந்து, தானியக்குவியலுக்குச்
சமீபத்தில்போய்ப்படுத்தான்: பின்புஅவள்மெள்
ளப்போய், அவன் கால்களைமூடிய வஸ்திரத்தை
நீக்கிப்படுத்துக்கொண்டாள்.
௮ அத்தசாமத்தில் அவன்பயந்து புரண்டு, தன்
காலடியில் ஒருஸ்திரிபடுத்திருக்கக்கண்டு, நீயா
௯ ரென்றுகேட்க,—அவள், நான்உமதடியாளாகிய
ரூத்; நீர் உமதடியாள்மேல் உமதுசிறகைவிரியும்,
நீரேமீட்கும் அதிகாரியென்றாள்.—அதற்கவன் ௰
என்மகளே, நீ யெகோவாவால் ஆசீர்வதிக்கப்
படுவாயாக, தரித்திரராயும்செல்வராயுமுள்ள எங்
தவாலிபரையாகிலும் பின்பற்றாமல், நீ முன்னி
லும்இப்பொழுதுஅதிகபட்சங்காட்டினாய்.-என் ௰௧
மகளே, இனிப்பயப்படவேண்டாம்; நீவிரும்பி
யபடியெல்லாம்செய்கிறேன்: நீகுணவதியென்
பது இவ்வூரிலுள்ள சமஸ்த சனங்களுக்குந்தெரி
யும்.–நானுன்னை மீட்குமதிகாரியென்பதுமெய்: ௰௨
ஆகிலும் என்னிலும் உரியமீட்கும் அதிகாரியொ
ருவனிருக்கிறான்.—நீ இராத்திரிக்குத்தங்கியிரு, ௰௩
காலமேஅவன்மீட்குமதிகாரிசெய்யவேண்டியக
டமையை உனக்குச்செய்தால்நலமாகும், மீட்கு
மதிகாரி செய்யுங்கடமையை அவன் செய்வானா
க; அவன் அப்படியே மீட்கும் அதிகாரிசெய்ய
வேண்டியகடமையைச்செய்யாதிருந்தால், யெ
கோவா நித்தியரானால் நானேமீட்கும் அதிகா
ரிசெய்யவேண்டியகடமையைச்செய்வேன்: வி
டியற்காலமட்டும் படுத்திருவென்றான்.
அவள் அவன் காலடியிற் படுத்திருந்து, களத் ௰௪
தில் ஒரு ஸ்திரிவந்தாளென்பது ஒருவருக்குந்
தெரியாதிருக்கவேண்டுமென்று அவன்சொல்லி
யிருந்தபடியால்; ஒருவரையொருவர் அறியக்கூ
டாதநேரத்திலேயெழுந்தாள்.—நீபோர்த்திருக்கி ௰௫
றபோர்வையைவிரித்துப்பிடியென்றான். அவள்
அதைப்பிடிக்க, அவன் அதில் ஆறுபடிவாற்
கோதுமையை அளந்துபோட்டு, அவள்மேலேற்
றிவிட அவள் ஊருக்குப்போனாள்.–அவள் தன் ௰௬
மாமியிடத்தில்வந்தபொழுது,இவள் என்மகளே,
நீயாரென்றுகேட்க,அவள் தனக்கு அவன்செய்த
தெல்லாம் இவளுக்குவிவரித்தாள்.–பின்னும் அ ௰௭
வர் என்னைநோக்கி, நீ உன் மாமியிடத்தில்வெறு
ங்கையோடே போகலாகாதென்றுசொல்லி, இந்
த ஆறுபடி வாற்கோதுமையைத்தந்தாரென்று அ
வள் சொன்னாள்.—அப்பொழுது இவள், என்ம ௰௮
களே, காரியம் எப்படிமுடியுமென்று,நீ அறியும்
வரைக்கும்பொறுத்திரு: அவனின்றைக்குஇக்கா
ரியத்தை நிறைவேற்றினாலொழிய ஆறமாட்டா
னென்றாள்.

## ௪. அதிகாரம்.

௧. போவஸ்நியாயஸ்தலத்திலே ரூத்தின் இனத்தானை வரவழைத்தல்: ௬. இனத்தான் தன்கடமையைச் செய்ய விரும்பாததினால் போவஸ் இலீமேலேக்கின் வயல்வெளியைக்கிரயத்துக்குவாங்கல்: ௰௩. ரூத்தைவிவாகஞ்செய்தல். அவள் பிள்ளைப்பெறல்: ௰௮. பேரேசின்வமிசவரலாற்றைத்தெரிவித்தல்.

போவஸ் வாசலினிடத்திலே போயிருந்தபொ ௧
ழுது, போவஸ் சொல்லியிருந்த மீட்குமதிகா
ரி அந்தவழியாகச்செல்ல அவனைநோக்கி, பெ

(௨௰) அதி.௩.௰. ௨.சாமு.௨.௫. யோபு.௨௯.௰௩. நீதி.௰௭.௰௭. அதி.௩.௯. லேவி.௨௫.௨௫.—(௩. அதி. ௧.) ௧.கொரி.௭.௩௯. ௧.தீமோ.௫.௮. அதி.௧.௯. (௨) அதி.௨.௮. (௩) ௨.சாமு.௰௪.௨. (௭) நியா.௰௯.௬,௯,௨௨. ௨.சாமு.௰௩.௨௮. எஸ்த.௧.௰. (௯) எசேக்.௰௬.௮. அதி.௨.௨௰. வச.௰௨. (௰) அதி.௨.௨௰. அதி.௧.௮. (௰௧) நீதி.௰௨.௪. (௰௨) வச.௯. அதி.௪.௧. (௰௩) உபா.௨௫.௫. அதி.௪.௫. மத்.௨௨.௨௪. நியா.௮.௰௯. எரே.௪.௨. (௰௪) ரோ.௰௨.௰௭. ரோ.௰௪.௰௬. ௧.கொரி.௰.௩௩. ௨.கொரி.௮.௨௧. ௧.தெச.௫.௨௨. (௰௮) சங்.௩௭.௩,௫.—(௪. அதி. ௧.) அதி.௩.௰௨.

யர்சொல்லிக் கூப்பிட்டு, சற்றே இங்கேவந்தி
௨ ருமென்ருன்: அவன்போயிருந்தான்.—அப்பொ
ழுது இவன்பட்டணத்தின் முதியோரில்பத்துப்
பெயரை அழைத்து, நீங்கள் இங்கேயிருங்கள்
௩ என்றுசொல்ல, அவர்கள் உட்காந்தார்கள்.—பின்
பு இவன் மீட்குமதிகாரியை நோக்கி, மோவாபு
தேசத்தினின்றும் திரும்பிவந்த நகோமி எங்கள்
சகோதரனுகிய இலீமெலேக்குக்குரிய ஒருதுண்
௪ டுநிலத்தை விற்கிருள்.—தேசத்தாருக்கும் என்ச
னங்களின் முதியோருக்கும் முன்னிலையில் அ
தைக்கொள்ளும்படி சொல்லவிருந்தேன். உமக்
குமீட்கப்பிரியமானல் மீளும்: உம்மையும், உமக்
குப்பின்பு என்னையுந்தவிர, அதைமீட்கத்தக்க
வர்வேருருவருமில்லை: உமக்குமீட்கப் பிரிய
மில்லாதிருந்தால் எனக்குத் தெரிவியுமென்று
௫ சொல்ல, அவன்நான்மீட்கிறேனென்ருன்,-அப்
பொழுது போவஸ், நீர் நகோமியின்கையில் அ
தைவாங்கும்நாளில், மரித்தவனுடைய பெயர்அ
வன் சுதந்தரத்திலே நிலைபெறும்பொருட்டு, மரித்
தவனுடையமனைவியானமோவாபுதேசத்தாளாகி
ய ரூத்கையிலும்அதைவாங்கவேண்டுமென்ருன்.
௬ அப்பொழுது மீட்குமதிகாரி, என் சுதந்தரத்
திற்கு நஷ்டமுண்டாகுமே, நான் எனக்கென்று
மீட்கமாட்டேன்: நான் மீட்கத்தக்கதைநீரேமீட்
டுக்கொள்ளும்: நான்மீட்கமாட்டேனென்ருன்.-
௭ மீட்பதும் மாற்றுவதுமாகிய எந்தக்காரியங்களை
யும் உறுதிப்படுத்தும்பொருட்டு, ஒருவன்தன்செ
ருப்பைக்கழற்றித் தன் அயலானிடத்திற்கொடுத்
துவிடுவது, பூருவகாலத்தில் இஸரவேலருக்குள்
ளேவழக்கமாயிருந்தது: இதுவே இஸரவேலருக்
௮ குள்ளே ஒருதிஷ்டாந்தம்.-அப்படியேமீட்குமதி
காரியும் போவசைநோக்கி, நீயே அதைக்கிரயத்
துக்குக்கொள்என்றுசொல்லி, தன் செருப்பைக்
௯ கழற்றினன்.—அப்பொழுது போவஸ் முதியோ
ரையும், சமஸ்த சனங்களையும்நோக்கி, இன்று நா
ன்இலீமெலேக்குக்குரியசகலத்தையும், கிலியோ
னுக்கும், மக்லோனுக்குமுரிய சகலத்தையும்,
நகோமிகையிலே கொண்டேனென்பதற்கு நீங்
௰ கள்சாட்சிகள்.-அன்றியும் மரித்தவனுடைய பெ
யர் அவன் சகோதரருக்குள்ளும் அவனுடைய
ஊராருக்குள்ளும் அற்றுப்போகாதிருக்கும்படி,
மரித்தவனுடைய சுதந்தரத்தில் அவன் பெய

ரை நிலைப்படுத்துதற்கும், நான் மக்லோனுக்கு
மனைவியாயிருந்த மோவாபுதேசத்தாளாகிய ரூத்
என்பவளை எனக்கு மனைவியாகக் கொண்டே
னென்பதற்கும், இன்றைத்தினம் நீங்கள் சாட்சி
களென்ருன்.—வாசலில் நின்ற சமஸ்தசனங்க ௰௧
ளும், முதியோரும் நாங்கள் சாட்சிகள். உமது வீ
ட்டில் வருகிற ஸ்திரியை யெகோவா இஸர
வேல்வீட்டைக்கட்டுவித்த ராகேல்லேயாளென்
னும் இருவரும்போலாகும்படி செய்வாராக. நீ
எப்ருத்தாவிலே வளம்பெற்று, பேத்லகேமிலே
புகழ் சிறந்திருக்கக்கடவாய்.—இந்த இளம்பெ ௰௨
ண்ணிடத்தில் யெகோவா உமக்கருளும் சந்
ததியினலே, உம்முடைய வீடு தாமார் யூதாவுக்
குப்பெற்ற பேரேசின் வீட்டைப்போலாகக்கட
வதென்ருர்கள்.

போவஸ் ரூத்தை விவாகம்பண்ணினன், அ ௰௩
வள் அவனுக்கு மனைவியானள்: அவன் அவளி
டத்திற்பிரவேசிக்க, அவள் கருப்பந்தரித்து ஒரு
புத்திரனைப் பெறும்படி யெகோவா அருள்
செய்தார்.—அப்பொழுது ஸ்திரிகள் நகோமியை ௰௪
நோக்கி, யெகோவாவுக்குஸ்தோத்திரம், இஸ
ரவேலருக்குள்ளே புகழ்சிறந்திருக்கும் அதிகா
ரியொருத்தன் உனக்கில்லாதிருக்கும்படி அவர்
உன்னைவிட்டுவிடவில்லை.—உனக்கேழு புத்திர ௰௫
ரிருப்பதிலும், உன்னையதிகமாய்நேசிக்கும் உன்
மருமகள் இவனைப்பெற்றிருக்கிருளே; இவனே
உன்னுத்துமத்தைத் தேற்றி, உன் முதிர் வயதில்
உன்னை ஆதரிப்பானென்ருர்கள்.—நகோமி அந் ௰௬
தப்பிள்ளையையெடுத்துத்தன்மடியிலே வைத்துக்
கொண்டு அதற்குக் கைத்தாயானள்.—அயலா ௰௭
ராகிய ஸ்திரிகள் நகோமிக்கொருபுத்திரன் பிறந்
திருக்கிருனென்று சொல்லி, அவனுக்கு ஓபெத்
தென்று பெயரிட்டார்கள்: இவன்தாவீதின் பிதா
வாகிய ஈஷாயின்பிதா.

பேரேஸ்சந்ததியாரின்வரலாறு: பெரேஸ் எத் ௰௮
சரோனைப்பெற்ருன்.-எத்சரோன் ராமைப்பெற் ௰௯
ருன், ராம்அம்மின்தாபைப்பெற்ருன்.-அம்மின் ௨௰
தாபு நாக்ஷோனைப்பெற்ருன், நாக்ஷோன் சல்
மோனைப் பெற்ருன்.—சல்மோன் போவசைப் ௨௧
பெற்ருன், போவஸ் ஓபெத்தைப் பெற்ருன்.—ஓ ௨௨
பெத் ஈஷாயைப் பெற்ருன், ஈஷாய் தாவீதைப்
பெற்ருன்.

(௨) ௧.இரா.௨௧.௮. நீதி.௩௧.௨௩. (௪) எரே.௩௨.௭,௮. ஆதி.௨௩.௰௮. லேவி.௨௫.௨௫. (௫) ஆதி.௩௮.௩௮. உபா.
௨௫.௫,௬. அதி.௩.௰௩. மத்.௨௨.௨௪. (௬) அதி.௩.௰௨,௰௩. (௭) உபா.௨௫.௭,௯. (௰) உபா.௨௫.௬. (௰௧) சங்.௱௨௭.
௩. சங்.௱௨௮.௩. உபா.௨௫.௯. ஆதி.௩௫.௰௬,௰௯. (௰௨) ஆதி.௩௮.௨௯. ௧.நாளா.௨.௪. மத்.௧.௩. ௧.சாமு.௨.௨௰.
(௰௩) அதி.௩.௰௧. ஆதி.௨௯.௩௧. ஆதி.௩௩.௫. (௰௪) லூக்.௧.௫௮. ரோ.௰௨.௰௫. ஆதி.௪௫.௰௧. சங்.௫௫.௨௨. ௧.சாமு.
௧.௮. (௰௭) லூக்.௧.௫௮,௫௯. (௰௮) ௧.நாளா.௨.௪,. மத்.௧.௩. (௨௰) எண்.௧.௭. மத்.௧.௪,. (௨௨) ௧.நாளா.௨.௰௫.
மத்.௧.௬.

# சாமுவேலின் முதலாம் புத்தகம்.

## ௧. அதிகாரம்.

௧. எல்க்கானா ஸ்திரிகளிருவரோடும் ஷீலோவில் ஆராதனை செய்யும்படி வருஷந்தோறும்போதல்: ௪. அன்னாளும் பெனின்னாளும் வாக்குவாதம்பண்ணல்: ௯. புத்திரபாக்கியத்தினிமித்தம்அன்னாள் தேவனைப்பிரார்த்தித்தல்: ௰௨. ஏலி அன்னாளுடன்பேசல்: ௰௯. அன்னாள் புத்திரனைப்பிரசவித்தபடியால் ஆராதிக்கப் போகாமல் வீட்டிலேதங்கல்: ௨௪. சங்கற்பத்தின்படி யெகோவாவிடத்தில் புத்திரனை ஒப்பித்தல்.

எப்ராயீம் மலையைச்சேர்ந்த ராமதாயீம் சோபீ
மென்னும் ஊரில் எப்ருத்தியனாகிய சூப்பின் புத்
திரனான தொகுவின் புத்திரனாகிய இலியூவின்
பௌத்திரனும், எரோகாமின் புத்திரனுமாகிய
௨ எல்க்கானா என்னொருவனிருந்தான்.—அவனுக்கு
மனைவியர் இருவர்; ஒருத்திக்கு அன்னாளென்
றும், மற்றொருத்திக்குப் பெனின்னாளென்றும்
பேர்: பெனின்னாளுக்குப் பிள்ளைகளுண்டு,அன்
௩ னாளுக்கோபிள்ளைகளில்லை.-அந்தமனுஷன் சே
னாபதியாகிய யெகோவாவுக்கு ஷீலோவில்
ஆராதனைசெய்யவும், பலியிடவும், வருஷந்தோ
றும் தன் நகரத்தினின்றும் போய்வருவான். யெ
கோவாவின் ஆசாரியர்களாகிய ஓப்னி, பீனி
காஸ் என்னும் ஏலியின் புத்திரர் இருவரும் அங்
௪ கேயிருந்தார்கள்.—எல்க்கானா பலியிடுஞ் சமயத்
தில், தன் மனைவியாகிய பெனின்னாளுக்கும்,
அவளுடைய புத்திர புத்திரிகள் அனைவருக்கும்
௫ பங்குகளைக்கொடுப்பான்.—அன்னாள்மேல் நே
சமாயிருந்தபடியால், அன்னாளுக்கு இரட்டித்
தபங்குகொடுத்துவருவான்: அவளுக்குக் கருப்
௬ பந்தரியாதபடி யெகோவா தடுத்தார்.—அவ
ளுக்குக்கருப்பந்தரியாதபடி யெகோவா தடுத்
ததினிமித்தம் அவள்துக்கப்படும்படி, அவளுக்கு
எதிராளியானவள் அவளைவிசனப்படுத்துவாள்.-
௭ வருஷந்தோறும் அவள் யெகோவாவின் ஆல
யத்துக்குப்போயிருக்கிறபொழுது, அவன் அவ்வ
ண்ணமேசெய்துவருகிறபடியால் இவள் அவளை
விசனப்படுத்துவாள்; அதினால் அவள்போசனம்
௮ பண்ணாமல், அழுதுகொண்டிருந்தாள்.—அவள்
புருஷனாகிய எல்க்கானா அவளைநோக்கி, அன்னா
ளே, நீ ஏன் அழுகிறாய்; ஏன் போசனம்பண்ண
வில்லை; உன்மனம்விசனப்படுகிறதென்ன; பத்
துப்புத்திரரிலும் நான் இருப்பது உனக்கு அதி
௯ கமல்லவாவென்றான்.-அவர்கள் ஷீலோவிலே
போசனபானம் பண்ணிமுடிந்த பின்பு, அன்
னாள் எழுந்திருந்தாள். ஆசாரியனாகிய ஏலி யெ
கோவாவின் ஆலயவாசல் நிலையருகேயுள்ள
ஆசனத்திலிருந்தான்.—அவள்மனங்கசந்து, மிக ௰
வும் அழுது, யெகோவாவைநோக்கிப்பிரார்த்
தித்து,-சேனாபதியாகிய யெகோவாவே; உம ௰௧
தடியாள் படுங்கிலேசத்தைப்பார்த்து, உமதடியா
ளை மறவாமல் நினைந்து, உமதடியாளுக்கு ஒரு
புத்திரனை அருளினால், அவனை அவனுடைய
ஆயுள்முழுவதும் யெகோவாவுக்கே ஒப்பிப்
பேன், அவன்தலையின்மேல் சௌரகன் கத்திப
டாமலிருக்குமென்று சொல்லி, ஒரு சங்கற்பம்
பண்ணினாள்.—அவள் யெகோவாவின் சந்நி ௰௨
தியில் மிகவும் பிரார்த்தித்து நிற்கையில், ஏலி அ
வள் வாயைப்பார்த்தான்.—அன்னாள் மனதில்தி ௰௩
யானித்ததேயொழிய அவள் சத்தம் கேட்கப்ப
டவில்லை; அவள் உதடுகள்மாத்திரம் அசைந்த
ன: ஆதலால் அவள் வெறியாயிருக்கிறாளென்று
ஏலி நினைத்தான்.—ஏலி அவளைநோக்கி,நீ எதுவ ௰௪
ரைக்கும் வெறியாயிருப்பாய்; உன்திராட்சரசத்
துக்குவிலகிவிடுஎன்றுசொல்ல;—அன்னாள் உத் ௰௫
தரமாய், அப்படியல்ல, என் ஆண்டவனே, நான்
மனோதுக்கமுள்ளஸ்திரி, நான் திராட்சரசத்தை
யாவது, எந்த மதுவையாவது குடிக்கவில்லை:
யெகோவாவின் சந்நிதியில் என் மனோவாஞ்
சையைவெளிவிட்டேன்.—உமதடியாளைப்பேலி ௰௬
யாலின் மகளென்று எண்ணாதிரும்: மிகுந்த வி
சாரத்தினாலும், துக்கத்தினாலும் இதுவரைக்கும்
பேசினேன் என்றாள்.—அப்பொழுது ஏலி உத் ௰௭
தரமாக, இஸரவேலின் தேவன் தம்மிடத்தில்
நீ பிரார்த்தித்ததை உனக்கு அருளுவாராக: நீச
மாதானத்துடனேபோவென்றான்.—அந்தஸ்திரி ௰௮
அவனைநோக்கி, உமதடியாளுக்கு உமதுதயைகி
டைக்கவேண்டுமென்றுசொல்லிப் புறப்பட்டுப்
போய்ப்போசனம்பண்ணினாள். அப்புறம்அவள்
முகம் வாட்டமாயிருக்கவில்லை.—அவர்கள் அதி ௰௯
காலையிலெழுந்து, யெகோவாவின் சந்நிதியில்
நமஸ்காரம்பண்ணி, ராமாவிலிருந்த தங்கள்வீட்
டுக்குத் திரும்பிப்போனார்கள்: எல்க்கானா தன்
மனைவியாகிய அன்னாளை அறிந்தான்; யெகோ
வா அவளை நினைந்தருளினார்.—காலக்கிரமப்ப ௨௰
டி அன்னாள் கருப்பந்தரித்து, ஒருபுத்திரனைப்
பெற்று; இவனை நான் யெகோவாவிடத்திற்
கேட்டேனென்றுசொல்லி, அவனுக்குச் சாமு
வேல்என்றுபேரிட்டாள்.—எல்க்கானா தன் சமஸ் ௨௰௧
தகுடும்பத்தாரோடும் யெகோவாவுக்குத் தன்

(௧. அதி. ௩.) யாத். ௨௩. ௰௪. உபா. ௰௬. ௰௬. லூக். ௨. ௪௧. உபா. ௰௨. ௫, ௬, ௭. யோசு. ௰௮. ௧. (௪) உபா. ௰௨. ௰௭, ௰௮. (௫) ஆதி. ௩௰. ௨. (௬) யோபு. ௨௪. ௨௧. (௮) ரூத். ௪. ௰௫. (௯) அதி. ௩. ௩. (௰) யோபு. ௭. ௰௧. யோபு. ௰. ௧. ௨. சாமு. ௰௭. ௮. (௰௧) ஆதி. ௨௮. ௨௰. நியா. ௰௧. ௩௰. ஆதி. ௨௯. ௩௨. யாத். ௪. ௩௧. ௨. சாமு. ௰௬. ௰௨. சங். ௨௫. ௰௮. ஆதி. ௮. ௧. எண். ௬. ௫. நியா. ௰௩. ௫. (௰௫) சங். ௬௨. ௮. சங். ௱௪௨. ௨. (௰௬) உபா. ௰௩. ௰௩. (௰௭) நியா. ௰௮. ௬. மாற். ௫. ௩௪. லூக். ௭. ௫௰. சங். ௨௰. ௪, ௫. (௰௮) ஆதி. ௩௩. ௰௫. ரூத். ௨. ௰௩. பிர. ௯. ௭. (௰௯) ஆதி. ௪. ௧. ஆதி. ௩௰. ௨௨. (௨௧) வச. ௩.

வருஷாந்தரபலியையிடவும், தன் சங்கற்பத்தை
௨௨ நிறைவேற்றவும் ஏறிப்போனான்.—அன்னாள்
மாத்திரம் போகவில்லை; அவள் தன் புருஷனை
நோக்கி, பிள்ளை முலைமறக்குமுன் நான்போக
மாட்டேன், பின்பு அவன் யெகோவாவின்
சந்நிதியில் வெளிப்பட்டு, அங்கே நித்தமுந்தங்
கும்படி அவனைக்கொண்டுபோய்விடுவேனென்
௨௩ றாள்.—அவள் புருஷனாகிய எல்க்கானா அவளை
நோக்கி, நீ உன்இஷ்டப்படிசெய்; அவன்முலை
மறக்குமளவும் இங்கேயிரு; யெகோவா தம
துவாக்கை மாத்திரம் நிறைவேற்றுவாராகவென்
றான். ஸ்திரிஅங்கேபோகாமலிருந்து, தன் புத்தி
ரன்முலைமறக்குமளவும்பால்கொடுத்துவந்தாள்.-
௨௪ அவன் முலைமறந்தபின்பு, அவள் அவனை, மூன்
றுகாளையும், ஒரு ஏபாமாவும், ஒருதுருத்திதிராட்
சரசமுமாகிய இவைகளோடும், ஷீலோவிலுள்ள
யெகோவாவினாலயத்துக்குக்கொண்டுபோனா
௨௫ ள்: அப்பொழுதுபிள்ளைகுழந்தை.—அவர்கள்ஒரு
காளையைக்கொன்று, பிள்ளையை ஏலியிடத்திற்
௨௬ கொண்டுபோனார்கள்.-அவள்என் ஆண்டவனே,
யெகோவாவைநோக்கிப் பிரார்த்தித்துக்கொ
ண்டு,இங்கே உமக்குச்சமீபத்தில்நின்ற ஸ்திரிநா
னேயென்று, உமதுபிராணனைக்கொண்டுசொல்
௨௭ லுகிறேன்.—இந்தப் பிள்ளையின் பொருட்டுப்பி
ரார்த்தித்தேன்; யெகோவா தம்மைநோக்கி
நான்பிரார்த்தித்துக்கேட்டபடி எனக்கருள்செய்
௨௮ தார்.—ஆதலால்நான் பிரார்த்தனைபண்ணிப் பெற்
ற இவனை யெகோவாவுக்குத்திரும்ப ஒப்பிக்
கிறேன்; இவன் தன்னாயுள்பரியந்தம் யெகோ
வாவுக்கு ஒப்பிக்கப்பட்டிருப்பான் என்றாள்.
அங்கே அவன் யெகோவாவுக்கு ஆராதனை
செய்தான்.

## ௨. அதிகாரம்.

௧. அன்னாள் பாட்டுப்பாடல்: ௰௧. வீட்டுக்குத்திரும்பல்: ௰௨. ஏலியின் புத்திரர்துராசாரஞ்செய்தல்: ௰௮. சாமுவேல்தொண்டுசெய்தல்: ௨௰. ஏலியின் ஆசீர்வாதத்தினால் அன்னாள்புத்திரரைப் பெறல்: ௨௨. ஏலிதன்புத்திரரைக் கண்டித்தல்: ௨௭. ஏலியின் வமிசத்துக்கு விரோதமாகச் சாபம்வெளிப்படல்.

அப்பொழுது அன்னாள் உமது இரட்சிப்பினி
மித்தம் நான் மகிழுகிறேன், ஆதலால் என் இரு
தயம் யெகோவாவில் களிகூருகின்றது, யெ
கோவா மூலமாகஎன்கொம்பு உயர்ந்திருக்கின்
றது; என்சத்துருக்கள்மேல்என்வாய்திறக்கப்பட்
௨ டிருக்கின்றது.—யெகோவாவைப்போலப்பரி
சுத்தமுள்ளவர் ஒருவருமில்லை: உம்மையொழி
யவேறொருவருமில்லை: எங்கள் தேவனைப்போ
லஒருகன்மலையுமில்லை.—யெகோவாவே ஞா ௩
னமுள்ளதேவன், அவரேகிரியைகளைச்சீர்தூக்
கிப்பார்க்கிறார்; ஆதலால்இனிவீம்புபேசாதிருங்
கள்: கடுஞ்சொற்கள் இனிஉங்கள்வாயினின்றும்
புறப்படவேண்டாம்.—பராக்கிரமவீரரின் விற் ௪
கள் முறிந்தன, இடறிவிழுந்தவர்கள் வல்ல
மையினால் இடைக்கச்சுக் கட்டிக்கொள்ளுகி
றார்கள்.—ஆகாரத்தினாலே திருத்தியடைந்தவர் ௫
கள் கூலிக்கு வேலைசெய்கிறார்கள்; பசியாயிருந்
தவர்கள்ஆறியிருக்கிறார்கள்: மலடியாயிருந்தவள்
ஏழுபெற்றாள்; அநேகம் பிள்ளைகளைப் பெற்றவ
ளோமெலிவடைகிறாள்.—யெகோவா கொல் ௬
லுகிறார், உயிர்ப்பிக்கிறார்: மரித்தோர்ஸ்தலத்துக்
குஇறக்குகிறார்,அதினின்றுமேற்றுகிறார்.—யெ ௭
கோவா தரித்திரமாக்குகிறார், செல்வமாக்குகி
றார்: அவர் தாழ்த்துகிறார், உயர்த்துகிறார்.—பூமி ௮
யின் அத்திபாரங்கள் யெகோவாவுக்குரியன,
அவரே அவைகளின்மேல் பூமியைநிலைப்படுத்தி
யிருக்கிறார்:ஆகையால் பிரபுகளுடனேவீற்றிருக்
கவும், மகிமைபொருந்தியசிங்காசனத்தைச்சுதந்
தரிக்கவுந்தக்கதாக, தரித்திரரைப் புழுதியினின்
றுந்தூக்கி, யாசகனை எருக்களத்தினின்றும் உ
யர்த்துகிறார்.—அவர்தமது பரிசுத்தர்களின்கால்க ௯
ளைப்பாதுகாப்பார்,துன்மார்க்கர்இருளிலேமௌ
னமாவார்கள்; வலிமையினால் எந்த மனிதனும்
மேற்கொள்ளான்.—யெகோவாவின் விரோ ௰
திகள் சின்னபின்னமாக்கப்படுவார்கள்; யெ
கோவா வானத்தினின்றும் அவர்கள்மேற் கு
மிறுவார்: பூலோகத்தினெல்லையிலுள்ளவர்களுக்
குநியாயத்தீர்ப்புக்கொடுப்பார்; அவர்தமதுசுயரா
சாவுக்குவல்லமையருளி,தமதுஅபிஷேகம்பெற்
றவரின்கொம்பை உயர்த்துவாரென்றுசொல்லிப்
பிரார்த்தனைபண்ணினாள்.—பின்பு எல்க்கானா ரா ௰௧
மாவிலிருந்துதன்வீட்டுக்குப்போனான். பாலகன்
ஏலிக்கு முன்னாக யெகோவாவுக் காராதனை
செய்துகொண்டிருந்தான்.

ஏலியின் புத்திரர் பேலியாலின் மக்கள்; அவர் ௰௨
கள் யெகோவாவை அறியவில்லை.—எவனா ௰௩
கிலும் பலியிடுங்காலத்தில் அதின் மாமிசத்தை
அவிக்கையில், ஆசாரியனுடைய பணிவிடைக்
காரன் மூன்று முள்ளுடைய கருவியொன்று
தன் கையிலேகொண்டுவந்து,—அதினாலே கல ௰௪
சத்துக்குள்ளாயினும், பானைக்குள்ளாயினும், ச
ருவத்துக்குள்ளாயினும், சட்டிக்குள்ளாயினுங்
குத்துவான்; முட்கருவியினாலேகுத்தண்டவை
களெல்லாவற்றையும் ஆசாரியன் தனக்கென்

(௨௨) லூக்.௨.௨௪. வச.௰௧,௨௮. அதி.௨.௰௧,௰௮. அதி.௩.௧. யாத்.௨௧.௬. (௨௩) எண்.௩௰.௭. ௨.சாமு.௭.௨௫. (௨௪) உபா.௰௨.௫,௬,௰௧. யோசு.௰௮.௧. (௨௫) லூக்.௨.௨௪. (௨௬) ஆதி.௪௨.௰௫. (௨௭) மத்.௭.௮. (௨௮) வச.௰௧,௨௨. ஆதி.௨௪.௨௬,௫௨.—(௨. அதி. ௧.) பிலி.௪.௬. லூக்.௧.௪௬,. சங்.௯௨.௰. சங்.௱௰௨.௯. சங்.௯.௰௪. சங்.௨௰.௫. (௨) யாத்.௰௫.௰௨. உபா.௩௨.௪. சங்.௮௬.௮. சங்.௮௯.௬,௮. உபா.௪.௩௫. ௨.சாமு.௨௨.௩௨. (௩) சங்.௯௪.௪. மல்.௩.௰௩. யூதா.௰௫. (௪) சங்.௩௭.௰௫.௰௭. (௫) சங்.௩௪.௰. லூக்.௧.௫௩. சங்.௱௰௩.௯. ஏசா.௫௪.௧. எரே.௰௫.௯. (௬) உபா.௩௨.௩௯. யோபு.௫.௰௮. ஓசி.௬.௧. (௭) யோபு.௧.௨௧. சங்.௭௫.௭. (௮) சங்.௱௰௩.௭,௮. தானி.௪.௰௭. லூக்.௧.௫௨. யோபு.௩௬.௭. யோபு.௩௮.௪,௫,௬. சங்.௨௪.௨. எபி.௧.௩. (௯) சங்.௯௧.௰௧. (௰) சங்.௨.௯. அதி.௭.௰. சங்.௰௮.௰௩. சங்.௯௬.௰௩. சங்.௮௯.௨௪. (௰௧) வச.௰௮. அதி.௩.௧. (௰௨) உபா.௰௩.௰௩. நியா.௨.௰. எரே.௨௨.௰௬. ரோ.௧.௨௮.

றெடுத்துக்கொள்ளுவான். வழக்கமாக ஆசாரி
யன் சனங்களிடத்தில் இப்படியே செய்துவரு
வான்: ஷீலோவிலே வரும் சமஸ்த இஸரவே
லரிடத்திலும் இப்படியே செய்துவந்தார்கள்.—
௰௫ அன்றியும் அவர்கள் நிணத்தைத் தகிக்குமுன்,
ஆசாரியனுடைய பணிவிடைக்காரன்வந்து, ப
லியிடுகிறவனைநோக்கி, ஆசாரியர் பச்சை இ
றைச்சியையே யன்றி, அவித்ததை உன் கையில்
வாங்கமாட்டார்; ஆதலால் அவருக்குப்பொரிக்
கிறதற்கு இறைச்சி தரவேண்டுமென்று கேட்கு
௰௬ மிடத்தில்,—அந்த மனிதன் அவனைநோக்கி, நி
ணத்தைத் தாமசமில்லாமல் தகிக்கவேண்டும்,
பின்பு உன்மன இஷ்டப்படி எடுத்துக்கொள்ள
லாமென்று சொல்வதும், இவன் அதற்குத்தர
மாக அவனைநோக்கி, அப்படியல்ல, இப்பொழு
தே தா, தராவிட்டால் பலாத்காரமாயெடுத்துக்
௰௭ கொள்வேனென்று சொல்வதுமுண்டு.—இப்ப
டியே அந்தவாலிபர் செய்துவரும் பாவம் யெ
கோவாவின் பார்வையில் மிகவுங்கொடுமை
யாயிருந்தது: மனிதர் யெகோவாவுக்குரிய
காணிக்கையை வெறுத்தார்கள்.
௰௮ சாமுவேலென்னும் பாலகன் சணல்நூலாற்
செய்த ஏபோத்து வஸ்திரத்தைத் தரித்துக்கொண்
டு, யெகோவாவின் சந்நிதியில்ஆராதனைசெய்
௰௯ து வந்தான்.—அவனுடைய மாதா அவனுக்கு ஒரு
சிறிய சட்டையைத்தைத்து,வருஷாந்தரபலியிடு
ம்படி தன் புருஷனோடே வருஷந்தோறும்போ
கும்பொழுது கொண்டுபோய்க்கொடுப்பாள்.
௨௰ ஏலி எல்க்கானாவையும், அவன் மனைவியை
யும்நோக்கி, இந்த ஸ்திரி யெகோவாவுக்கு
ஒப்பித்ததற்கீடாக, யெகோவா இவள் வழி
யாய் உனக்குச் சந்ததியை அருளக்கடவரென்
றுசொல்லி ஆசீர்வதித்தான். பின்பு அவர்கள்தங்
௨௧ கள் வீட்டுக்குப்போய் விட்டார்கள்.—யெகோ
வா அன்னாளைக்கடாட்சிக்க, அவள் கருப்பந்
தரித்து மூன்றுபுத்திரரையும், இரண்டுபுத்திரிக
ளையும் பெற்றாள். சாமுவேலென்னும் பாலகன்
யெகோவாவின் சந்நிதியில் வளர்ந்தான்.
௨௨ ஏலி அதிவிருத்தனானான்,அவன்தன்புத்திரர் ச
மஸ்த இஸரவேலரிடத்திலும் செய்தயாவையும்,
சபையின் ஆவாசவாசலிற் கூட்டங்கூடுகிறஸ்தி
ரிகளுடனே சயனிக்கிறார்களென்பதையுங்கேள்
௨௩ விப்பட்டு,—அவர்களைநோக்கி, உங்கள் துராசா
ரங்களையெல்லாம் இந்தச் சமஸ்தசனங்களிடத்தி
லுங் கேட்டிருக்கிறேன், நீங்கள் ஏன் இப்படிச்
௨௪ செய்கிறீர்கள்.—போதும், என்மக்களே, நான்
கேட்கிறசெய்தி நல்லதல்ல: யெகோவாவுக்
குரிய சனங்கள் கட்டளையை மீறுவதற்கு நீங்க
௨௫ ளே காரணர்.—ஒருவன் மனிதனுக்கு விரோத
மாகக்குற்றஞ்செய்தால்,நியாயாதிபதி அவனுக்கு
நியாயத்தீர்ப்புச்செய்வான்: ஒருவன் யெகோ
வாவுக்கு விரோதமாகப்பாவஞ்செய்தால், அவ
னிமித்தம் வேண்டுதல்பண்ணத் தக்கவனார் என்
றான்; யெகோவா அவர்களைக் கொலைசெய்
யத் திருவுளங்கொண்டபடியினால், அவர்கள் தங்
கள் பிதாவின் வாக்குக்குச் செவிகொடாதிருந்
தார்கள்.—சாமுவேலென்னும் பாலகன் வளரவ ௨௬
ளர, யெகோவாவிடத்திலும் மனிதரிடத்தி
லும் தயைபெற்றான்.
தேவதாசனொருவன் ஏலியிடத்தில்வந்து, அ ௨௭
வனைநோக்கி, உன்பிதா வமிசத்தார் எகிப்திலே
பார்வோன்வீட்டிலேயிருந்தபொழுது, நான் அ
வர்களுக்குத் தரிசனையாகி,—என்வேதிகையிலே ௨௮
பலியிடும்படிக்கும், தூபங்காட்டும் படிக்கும்,
என்சமுகத்தில் ஏபோத்து வஸ்திரத்தைத் தரித்தி
ருக்கும்படிக்கும், இஸரவேலின் சமஸ்தகோத்தி
ரங்களினின்றும் அவனை எனக்கு ஆசாரியனா
கும்படி தெரிந்துகொண்டு, இஸரவேல் சந்ததி
யார் அக்கினியிலிடுஞ் சகல பலிகளையும் உன்பி
தாவமிசத்தாருக்குக் கொடுத்தேனல்லவா.—என் ௨௯
வாசஸ்தலத்திலே செலுத்தும்படி நான்விதித்தப
லியையுங்காணிக்கையையும் நீங்கள் உதைக்கிற
தென்ன; என்சனங்களாகிய இஸரவேலின்சிறந்
தகாணிக்கைகளைக்கொண்டு உங்களைப் புஷ்டி
யாக்கிக்கொள்ளும்படி, என்னிலும் உன்புத்திர
ரைமதிக்கிறதென்னவென்று யெகோவாசொ
ல்லுகிறார்.—இன்னும்இஸரவேலின் தேவனாகிய ௩௰
யெகோவா, என்னைமதிக்கிறவர்களை நானும்
மதிப்பேன், என்னை அவமதிக்கிறவர்கள்தாமும்
அவமதிக்கப்படுவார்கள், உன்வீட்டாரும் உன்
பிதாவமிசத்தாரும் சதாகாலமும் என்சந்நிதியில்
ஆராதனை செய்யவேண்டுமென்றுசொல்லியிருந்
தும், இனி அது எனக்குத்தூரமாயிருப்பதாக.—
உன்புயத்தையும், உன்பிதா வமிசத்தாரின் புயத் ௩௧
தையும்தறித்துப்போடுவேன், அதினால் உன்வீட்
டிலொரு கிழவனுமில்லாதொழியும் நாட்கள்
வரும்.—இஸரவேலருக்குச்செய்யத் திருவுளங் ௩௨
கொண்டசகலநன்மைக்கும் மாறாக ஆவாசத்துக்
குநேரிடுந் தீமையைக்காண்பாய், உன்வீட்டில்
ஒரு கிழவனுமிருப்பதில்லை,—உன்னில் தோன் ௩௩
றினவனும்,என்வேதிகையினின்றும் நான் சேதி
யாமல் விட்டவனுமாகிய மனிதன் உன்கண்க
ளைக்கெடுத்து, உன் இருதயத்தை விசனப்படுத்
தும்படி மீந்திருப்பான்: உன்வமிசத்திலுள்ளச
மஸ்தரும் இளம்பருவத்திலிறந்துபோவார்கள்.—
ஒப்னி பீனிகாஸ் என்னும் உன்புத்திரரிருவருக் ௩௪
கும் வருங்காரியமே உனக்கடையாளமாயிருக்
கும்; அவர்களிருவரும் ஒரேநாளிலே சாவார்

---

(௰௫) லேவி.௩.௩,௪. (௰௭) ஆதி.௬.௰௧. மல்.௨.௰௮. (௰௮) வச.௰௧. யாத்.௨௮.௪. ௨.சாமு.௬.௰௪. (௰௯) அதி.௧.௩. (௨௰) ஆதி.௰௪.௰௧. அதி.௧.௨௮. (௨௧) வச.௨௬. நியா.௰௩.௨௪. அதி.௩.௰௯. லூக்.௧.௮௰. லூக்.௨.௪௰. (௨௨) யாத். ௩௮.௮. (௨௫) எண்.௰௫.௩௰. யோசு.௰௧.௨௰. நீதி.௰௫.௰. (௨௬) வச.௨௧. நீதி.௩.௪. லூக்.௨.௫௨. அப்.௨.௪௭. ரோ. ௰௪.௰௮. (௨௭) ௧.இரா.௰௩.௧. யாத்.௪.௰௪,௨௭. (௨௮) யாத்.௨௮.௧,௪. எண்.௰௬.௫. லேவி.௨.௩,௰. எண்.௫.௯,௰. (௨௯) உபா.௩௨.௰௫. உபா.௰௨.௫,௬. (௩௰) யாத்.௨௯.௯. எரே.௰௮.௯,௰. சங்.௰௮.௨௬. சங்.௯௧.௰௪. மல்.௨.௯. (௩௧) ௧.இரா.௨.௨௭. எசேக்.௪௪.௰. (௩௨) சக.௮.௪. (௩௪) ௧.இரா.௰௩.௩. அதி.௪.௰௧.

௩௫ கள்.—நான் என் உள்ளத்திலும் என்சித்தத்திலு
முள்ளதற்கேற்க யாவையுஞ் செய்யத்தக்க ஒரு
உண்மையான ஆசாரியனையெழுப்பி, அவனுக்
கொரு ஸ்திரமான ஆலயத்தைக் கட்டுவேன்:
நான் ஏற்படுத்தும் அபிஷேகம்பெற்றவரின்முன்
௩௬ பாகச்சதாகாலமும் ஆராதனைசெய்வான்.—உன்
வீட்டில் மீந்திருக்கும் ஒவ்வொருவனும் வெள்
ளிப்பணத்தையும் அப்பத்துண்டையும் பெறும்
படிக்கு அவனிடத்திற்போய்வணங்கி, அவனை
நோக்கி, நானொரு அப்பத்துண்டைப் புசிக்கும்
பொருட்டு, ஆசாரியருக்கேற்ற யாதொன்றைச்
செய்ய என்னை ஏற்படுத்தவேண்டும் என்பார்க
ளென்று சொல்லுகிறாரென்றான்.

## ௩. அதிகாரம்.

௧. யெகோவா சாமுவேலைக்கூப்பிடல்: ௰௧. ஏலியின் வமிசத்தின் நாசம் சாமுவேலுக்குத் தெரிவிக்கப்படல்: ௰௫. அதைச்சாமுவேல் ஏலிக்குத்தெரிவித்தல்: ௰௯. சாமுவேல்மேன்மையில் அதிகரித்தல்.

சாமுவேலென்னும்பாலகன் ஏலிக்குமுன்னின்
று யெகோவாவுக்காராதனை செய்துவந்தான்.
அக்காலத்தில் யெகோவாவின் வாக்குக்கி
டைப்பது அரிது; பிரத்தியட்சமான தரிசன
௨ முமில்லை.—ஏலி தன்னுடையஸ்தானத்திற்படுத்
துக்கொண்டிருந்தான், அவனுக்குப் பார்வை
செல்லாதபடிக்கு அவன்கண்கள் இருளடைந்
௩ தன;-தேவனுடைய பெட்டிவைத்திருந்த யெ
கோவாவின் ஆலயத்திலே தேவனுடைய
விளக்கு அவியுமுன்னே, சாமுவேல் படுத்துக்
௪ கொண்டிருந்தான்.-அப்பொழுது யெகோவா
சாமுவேலைக் கூப்பிட்டார்: அவன் இங்கேயி
௫ ருக்கிறேனென்று சொல்லிக்கொண்டு,—ஏலியி
னிடத்தில் ஓடி, நீர் என்னைக்கூப்பிட்டீரே, இங்
கேயிருக்கிறேனென்றான். அதற்கு அவன் நான்
கூப்பிடவில்லை; போய்ப்படுத்துக்கொள்ளென்
௬ றுசொல்ல, அவன்போய்ப்படுத்தான்.-யெகோ
வா திரும்பவும் சாமுவேலைக் கூப்பிட்டார்.
சாமுவேல் எழுந்து ஏலியினிடத்திற்போய், நீ
ரென்னைக்கூப்பிட்டீரே, இங்கேயிருக்கிறேனெ
ன்றான். அதற்கவன் நான் என்மகனே, உன்னைக்
கூப்பிடவில்லை; போய்ப்படுத்துக்கொள்ளென்
௭ றான்.-சாமுவேல் யெகோவாவைஇன்னுமறி
யவுமில்லை, யெகோவாவின்வாக்குஅவனுக்கு இ
௮ ன்னும்வெளிப்படுத்தப்படவுமில்லை.-யெகோ
வா மூன்றாந்தரம் சாமுவேலைக் கூப்பிட்டார்.
அவனெழுந்து ஏலியிடத்தில்போய், நீர் என்
னைக் கூப்பிட்டீரே, இங்கேயிருக்கிறேனென்
றான். அப்பொழுது ஏலி யெகோவா பாலக
னைக்கூப்பிட்டாரென்று அறிந்துகொண்டான்.—
பின்பு சாமுவேலைநோக்கி, நீபோய்ப்படுத்துக் ௯
கொள்: அவர்உன்னைக்கூப்பிட்டால், யெகோ
வாவே சொல்லும்; அடியேன் கேட்கிறேனென்
று சொல்லென்றான். சாமுவேல் போய்த் தன்
னுடைய ஸ்தானத்திலே படுத்தான்.—யெகோ ௰
வா வந்துநின்று மறுதரமும் சாமுவேலே, சா
முவேலே, என்று கூப்பிட்டார். அதற்குத்தர
மாகச் சாமுவேல், சொல்லும்; அடியேன் கேட்
கிறேனென்றான்.—யெகோவா சாமுவேலை ௰௧
நோக்கி, கேட்பவர்களனைவருக்கும் இரண்டு
காதிலுந்தொனிக்கும் வண்ணம், இஸரவேலருக்
குள்ளே ஒன்றுசெய்யப்போகிறேன்.—நான் ஏலி ௰௨
யின் குடும்பத்தைக்குறித்துச் சொல்லியயாவை
யும் அவனுக்கு விரோதமாக அந்நாளிலேநடப்
பிப்பேன்: தொடங்கும்பொழுது நிறைவேற்
றுவேன்.—அவன் தன்புத்திரர் தங்களைத்தாமே ௰௩
சபிக்கப்பட்டவர்களாக்கினதை அறிந்தும் அவர்
களை ஒறுக்காமல் செய்தபாவத்தினிமித்தம், அ
வன்குடும்பத்தாருக்கு என்றுமொழியாத நியா
யத்தீர்ப்புச்செய்வேன்.—ஏலியின் குடும்பத்தார் ௰௪
செய்தபாவம் பலியினாலாகிலும், காணிக்கையி
னாலாகிலும், நிவாரணமாகமாட்டாதென்று ஏலி
யின் குடும்பத்தாருக்கு ஆணை யிட்டிருக்கிறே
னென்றார்.—சாமுவேல் விடியுமட்டும் படுத்தி ௰௫
ருந்து, பின்பு யெகோவாவின் ஆலயத்தின்
கதவுகளைத்திறந்தான். சாமுவேல் ஏலிக்கு அந்
தத்தரிசனத்தை வெளிப்படுத்தப் பயந்தான்.—
ஏலி என்மகனாகியசாமுவேலே என்று சாமுவே ௰௬
லைக்கூப்பிட, இவன் இங்கேயிருக்கிறேனென்
றான்.—அப்பொழுது அவன் யெகோவா உ ௰௭
னக்குச்சொல்லிய வாக்கென்ன; எனக்கதைம
றைக்கவேண்டாம்: அவருனக்குச் சொல்லிய
சகலகாரியங்களுள்ளும் ஏதாவது ஒன்றை எனக்
குமறைத்தால், தேவன் உனக்கு அப்படியும்,
அதற்கதிகமுஞ் செய்வாராகவென்றான்.—அதி ௰௮
னால் சாமுவேல் ஒன்றையும் அவனுக்கு மறை
யாமல், எல்லாவற்றையுஞ் சொன்னான். அதற்க
வன் அவரே யெகோவா: அவர்தமது பார்
வைக்கு நலமானதைச்செய்வாராகவென்றான்.—
சாமுவேல்வளர்ந்தான், யெகோவா அவனு ௰௯
டனிருந்தார், அவர் தமதுவாக்குகளிலொன்றுந்
தவறவிடவில்லை.—சாமுவேல் யெகோவா ௨௰
வுக்குத்தீர்க்கதரிசியாகஏற்படுத்தப்பட்டானென்
பது தாண்முதல் பேர்ஷேபா வரைக்குமுள்ள
சமஸ்த இஸரவேலருக்கும் தெரியவந்தது. யெ
கோவா அப்புறம் ஷீலோவிலே தரிசனையா
னார்.—யெகோவா ஷீலோவிலே தமதுவாக் ௨௧
கினாலே சாமுவேலுக்குத் தம்மை வெளிப்படுத்
தினார்.

---

(௩௫) ௧.இரா.௨.௩௫. ௧.நாளா.௨௯.௨௨. எசேக்.௪௪.௰௫. ௨.சாமு.௭.௰௧,௨௭. ௧.இரா.௰௧.௩௮. சங்.௨.௨,௩௬. ௧.இரா.௨.௨௭.—(௩. அதி. ௧.) அதி.௨.௰௧. சங்.௭௪.௯. ஆமோ.௮.௰௧. வச.௨௧. (௨) ஆதி.௨௭.௧. (௩) யாத்.௨௭. ௨௧. லேவி.௨௪.௩. ௨.நாளா.௰௩.௰௧. அதி.௪.௰௧. (௭) அப்.௰௯.௨. (௰௧) ௨.இரா.௨௧.௰௨. எரே.௰௯.௩. (௰௨) அதி. ௨.௩௰—௩௬. (௰௩) அதி.௨.௨௯,௩௰,௩௧. எசேக்.௭.௩. அதி.௨.௰௨,௰௭,௨௨. அதி.௨.௨௩,௨௫. (௰௪) எண்.௰௫.௩௰, ௩௧. ஏசா.௨௨.௰௪. (௰௭) ரூத்.௧.௰௭. (௰௮) யோபு.௧.௨௧. சங்.௩௯.௯. ஏசா.௩௯.௮. (௰௯) அதி.௨.௨௧. ஆதி.௩௯. ௨,௨௧,௨௩. அதி.௯.௬. (௨௰) நியா.௨௰.௧. (௨௧) வச.௧,௪.

## ச. அதிகாரம்.

க. எபேனேசரில்இஸரவேலர்தோல்வியடைதல்: ரு. ஷீலோவினின்றும்உடன்படிக்கைப்பெட்டியைப்பாளயத்துக்குக் கொண்டுபோதல்: ய. திரும்பவுந்தோல்வியடைதல்: ஏலியின்புத்திரர் இருவரும் மாண்டுபோதல்: யஉ. அதைக்கேள்விப்பட்டு ஏலி மரித்தல்: யகூ. அவன் மருமகள் பிரசவித்து மரணமடைதல்.

சாமுவேலின் வாக்கு இஸரவேலர் சமஸ்தருக்
கும் கிடைத்தது. இஸரவேலர் பெலிஸ்தியரை
எதிர்த்துயுத்தஞ்செய்யப்புறப்பட்டு, எபேனேச
ருக்குச் சமீபத்தில் பாளயமிறங்கினார்கள்: பெ
லிஸ்தியரோ அப்பெக்கிலே பாளயமிறங்கினார்
உ கள்.—பெலிஸ்தியர் இஸரவேலருக் கெதிராக அ
ணிவகுத்தார்கள்: யுத்தம் அதிகரித்தபொழுது,இ
ஸரவேலர் பெலிஸ்தியருக்குமுன் முறிய அடிக்
கப்பட்டார்கள்: இவர்கள் யுத்தகளத்திலே சே
னைகளில் ஏறக்குறையநாலாயிரம்பேரைக் கொ
௩ ன்றார்கள்.—சனங்கள் பாளயத்துக்குத் திரும்பி
வந்தபொழுது, இஸரவேலின் மூதியோர் இன்
று யெகோவா பெலிஸ்தியருக்கு முன்பாக
எங்களை முறிய அடித்ததென்ன; யெகோவா
வின் உடன்படிக்கைப்பெட்டி நமக்குள்ளேயி
ருந்து, நம்மை நம்முடைய சத்துருக்கள் கையி
னின்றும் இரட்சிக்கும்பொருட்டு, அதை ஷீ
லோவிலிருந்து கொண்டுவரக்கடவோமென்றார்
ச கள்.-அப்படியே கெருபிகளின் மத்தியிலே வாச
மாயிருக்கிறசேனாபதியாகிய யெகோவாவின்
உடன்படிக்கைப் பெட்டியைக்கொண்டுவரும்
படி ஷீலோவுக்கு ஆளனுப்பினார்கள்: ஏலியின்
புத்திரராகிய ஓப்னி பீனிகாஸ் என்னும் இருவ
ரும், தேவனுடைய உடன்படிக்கைப்பெட்டி
ரு யோடும் அங்கேயிருந்தார்கள்,—யெகோவா
வின் உடன்படிக்கைப்பெட்டிபாளயத்திலேவ
ர, இஸரவேலர் எல்லாரும் பூமியதிரத்தக்கதாக
சா உரத்தசத்தமாய் ஆரவாரித்தார்கள்.—அவர்கள் ஆர
வாரித்தசத்தத்தைப் பெலிஸ்தியர் கேட்டபொழு
து, எபிரேயருடைய பாளயத்தில் ஆரவாரமான
இந்தப் பெரியசத்தமேதென்றார்கள்; யெகோ
வாவின்பெட்டிபாளயத்தில்வந்ததென்பதுஅவர்
எ களுக்குத்தெரியவந்தது.—தேவன் பாளயத்தில்
வந்தாரென்றுசொல்லிப் பெலிஸ்தியர் பயந்து,
ஐயோ,இதுவரையும்இப்படிநடக்கவில்லையே.—
அ ஐயோ, அந்தமகத்துவமானதேவர்கள்கைக்கு நம்
மைத்தப்புவிக்கவல்லவன்யாவன்; எகிப்தியரை
ச்சகலவிதவாதைகளினாலும் வனத்தில்தண்டித்த
கூ தேவர்கள் அவர்களே.—பெலிஸ்தியரே, திடங்
கொண்டு ஆண்மையைக்காட்டுங்கள், எபிரேயர்
உங்களுக்குஅடிமையாயிருந்ததுபோல, நீங்களு
ம்அவர்களுக்குஅடிமையாயிராதபடி ஆண்மையு
டையவர்களாய் யுத்தஞ்செய்யுங்களென்றார்கள்.
பெலிஸ்தியர் யுத்தஞ்செய்தபொழுது இஸர ய
வேலர் முறிய அடிக்கப்பட்டு, அவரவர் தங்கள்
தங்கள் கூடாரத்துக்கோடிப்போனார்கள்: மகா
சங்காரமுண்டாயிற்று; இஸரவேலருக்குள் முப்
பதினாயிரங்காலாட்கள்விழுந்தார்கள்:யெகோ
வாவின் பெட்டி பிடிக்கப்பட்டது.—ஏலியின் யக
புத்திரராகிய ஓப்னிபீனிகாஸ்என்னும்இருவரும்
மாய்ந்தார்கள்.

அன்றைத்தினமே பேன்யாமீன் கோத்திரத்தா யஉ
னொருவன் சேனைகளை விட்டோடி, தன் வஸ்
திரங்களைக்கிழித்து, தன் தலையின்மேல் புழுதி
யைவாரிப்போட்டுக்கொண்டு ஷீலோவுக்குவந்
தான்.—அவன் வருகையில் ஏலி தேவனுடைய ய௩
பெட்டியினிமித்தம் மனநடுக்கமாய் வழியருகே
காத்துக்கொண்டொருஆசனத்தின்மேலிருந்தான்:
அந்த மனிதன் நகரத்திற்சென்று செய்தியைத்
தெரிவிக்க, நகரத்தாரியாவருங் குரலிட்டழுதார்
கள்.—அழுகிறசத்தத்தை ஏலிகேட்டு, இந்த அம யச
ளியின் இரைச்சலென்னவென்று வினாவ; அந்த
மனுஷன் விரைந்துபோய் ஏலிக்குச் செய்திக
ளைத்தெரிவித்தான்.-ஏலிக்குத் தொண்ணூற்றெட் யரு
டுவயது; அவன் நிலைக்கண்பட்டவனானபடியி
னாலே அவன் பார்க்கக்கூடாதிருந்தான்.—அந்த யசா
மனிதன் ஏலியை நோக்கி, சேனையைவிட்டுவந்
தவன்நான்தான், இன்று நான் சேனையைவிட்டு
ஓடிவந்தேனென்றான். அப்பொழுது இவன் என்
மகனே, அங்கே நடந்த காரியமென்னவென்று
கேட்க,—தூதன் அதற்குத்தரமாக, இஸரவேலர் யஎ
பெலிஸ்தியருக்கு முன்னின்றும் ஓடிவிட்டார்
கள், சனங்களுக்குள்ளே மகாசங்காரமுண்டா
யிற்று, உமது புத்திரராகிய ஓப்னிபீனிகாஸ் என்
னும் இருவரும் மாய்ந்தார்கள், தேவனுடைய
பெட்டி பிடிக்கப்பட்டுப் போயிற்றென்றான்.—
தேவனுடையபெட்டியைக்குறித்துச்சொன்ன யஅ
மாத்திரத்தில் அவன்தானிருந்த ஆசனத்தைவிட்
டுப் பின்புறமாகவாசலருகே விழுந்து, விருத்த
னுங் கனத்ததேகத்தையுடையவனுமாயிருந்தபடி
யால் கழுத்துமுறிந்திறந்துபோனான்: அவன் இ
ஸரவேலரை நாற்பதுவருஷம் நியாயம் விசாரித்
தான்.

பீனிகாசின்மனைவியாகிய அவன்மருமகளுக் யகூ
குப் பிரசவகாலம் சமீபித்தது: தேவனுடைய
பெட்டிபிடிக்கப்பட்டசெய்தியையும், தன்மாம
னும்புருஷனும் இறந்துபோனதையுங்கேள்விப்
பட்டபொழுது,கருப்பவேதனைப்பட்டு, குனிந்
துபிரசவித்தாள்.—அவளுடையமரணகாலத்தில் உய
அவள்சமீபத்தில்நின்ற ஸ்திரிகள் அவளை நோக்
கி, நீ பயப்படவேண்டாம்,ஒருபுத்திரனைப்பெற்
றாய் என்றார்கள். அவள் அதற்குத்தரஞ்சொல்ல
வுமில்லை. அதின்மேற் சிந்தைவைக்கவுமில்லை.—
யெகோவாவின்பெட்டிபிடிக்கப்பட்டுப்போ உக

(ச. அதி. க.) அதி.ரு.க. அதி.எ.யஉ. (ச) உ.சாமு.சா.உ. சங்.அய.க. சங்.கஅ.க. யாத்.உரு.யஅ,உஉ. எண்.எ.அகூ. (அ) க.கொரி.யசா.யகூ. நியா.யகூ.க. (ய) வச.உ. லேவி.உசா.யஎ. உபா.உஅ.உரு. சங்.எஅ.கூ,சாஉ. அதி.உ.கூஉ. சங். எஅ.சாக.(யக)அதி.உ.கூச. சங்.எஅ.சாச.(யஉ)உ.சாமு.க.உ. யோசு.எ.சா. உ.சாமு.யகூ.யக.நிகி.கூ.க. யோபு.உ.யஉ. (யகூ)அதி.க.கூ.(யரு)அதி.கூ.உ.(யசா)உ.சாமு.க.ச.(உய)ஆதி.கூரு.யஎ. (உக) அதி.யச.கூ. சங்.உசா.அ. சங்.எஅ.சாக.

னதினிமித்தமும், தன்மாமனும்புருஷனுமிறந்து
போனதினிமித்தமும்,அவள் இஸரவேலரைவிட்
டுமகிமைநீங்கிற்றென்று,பிள்ளைக்குஇக்காபோத்
௨௨ தென்றுபெயரிட்டாள்.—தேவனுடையபெட்
டிபிடிக்கப்பட்டுப்போயிற்றே,மகிமைஇஸரவே
லரைவிட்டு நீங்கிற்றே என்றாள்.

## ௫. அதிகாரம்.

௧. தாகோன் தேவனுடைய ஆலயத்தில உடன் படிக்கைப்பெட்டிவைக்கப்படல்: ௩ தாகோன் உடைந்துபோதல்: அஷ்தோத்தியரும் காத்தியரும்வருந்தி நாசமடைதல்: ௰. பெட்டியை எக்ரோனுக்கு அனுப்பல்.

பெலிஸ்தியர் தேவனுடைய பெட்டியை எ
டுத்து, எபேனேசரிலிருந்து அஷ்தோத்திற்குக்
௨ கொண்டுபோனார்கள்.—பெலிஸ்தியர் தேவனு
டைய பெட்டியைப்பிடித்துத்தாகோனின் ஆல
யத்திற் கொண்டுவந்து, தாகோன் சமீபத்தில்
வைத்தார்கள்.
௩ மற்றநாட்காலமே அஷ்தோத்தூரார் எழுந்து
போனபொழுது, தாகோன் யெகோவாவின்
பெட்டிக்குமுன் தரையிலே முகங்குப்புறவி
ழுந்துகிடந்தது, அவர்கள் தாகோனைத்தூக்கி, அ
தின்ஸ்தானத்திலே திரும்பவும் நிறுத்தினார்கள்.-
௪ அவர்கள் மறுநாட்காலமே எழுந்துபோக, தா
கோன்பின்னும் யெகோவாவின் பெட்டிக்
குமுன்தரையிலே முகங்குப்புறவிழுந்துகிடந்த
து;அதின்தலையுங்கைகளிரண்டும்வாசற்படியின்
மேலே வெட்டுண்டுகிடந்தன; தாகோனின் உ
௫ டல்மாத்திரம்மீந்திருந்தது.—ஆதலால் இந்நாள்
வரைக்கும்தாகோனின்பூசாசாரிகளாயினும், தா
கோன் ஆலயத்திற் பிரவேசிப்பவர்களாயினும்,
அஷ்தோத்திலுள்ள தாகோனின் வாசற்படியை
௬ மிதிக்கிறதில்லை.-யெகோவாவின் கரம் அஷ்
தோத்தூரார்மேல் பாரமாயிருந்தது, அவர் அவர்
களைநாசப்படுத்தும் வண்ணம், அஷ்தோத்தூரா
ரையும் அவர்களெல்லையிலுள்ளவர்களையும்மூல
௭ வியாதியினால் வாதித்தார்.-அஷ்தோத்தூரார் இப்
படி நடந்ததைக்கண்டு, இஸரவேலரின் தேவ
னுடைய பெட்டி எங்களுடனிருக்கப்படாது,
அவருடையகரம் எங்கள்மேலும் எங்கள்தேவனா
கிய தாகோன்மேலும் மகாகடுமையாயிருக்கின்
௮ றதென்றுசொல்லி,—பெலிஸ்தியரின் சகலபிர
புகளிடத்திலும் ஆளனுப்பி, தங்களிடத்தில் வர
வழைத்து, அவர்களைநோக்கி, இஸரவேலரின்
தேவனுடைய பெட்டியை நாமென்னசெய்ய
வேண்டுமென்று கேட்க; அவர்கள் இஸரவேல
ரின் தேவனுடைய பெட்டியை எடுத்து, காத்
துக்குச்சுற்றிக்கொண்டுபோகவேண்டுமென்றார்
கள், அப்படியே இஸரவேலரின் தேவனுடை
யபெட்டியை எடுத்துச்சுற்றிக்கொண்டுபோனார்
கள்.—அவர்களதைச் சுற்றியெடுத்துக்கொண்டு ௯
போய்விட்டபின்பு, அந்தநகரத்தாருக்குமகாசங்
காரமுண்டாகும்படி யெகோவாவின் கரம்
அவர்களுக்குவிரோதமாயிருந்தது.அவர்சிறியோ
ரும் பெரியோருமாகிய அந்தநகரத்தாரைத்தண்
டிக்க, அவர்களுக்கு அந்தரங்கமூலவியாதியுண்
டாயிற்று.
அதினால் அவர்கள் தேவனுடைய பெட்டி ௰
யை எக்ரோனுக்கு அனுப்பினார்கள். தேவனு
டைய பெட்டி எக்ரோனைச்சேர, எக்ரோன் நக
ரத்தார் எங்களையும் எங்கள் சனங்களையுங்கொன்
றுபோடும்படி இஸரவேலரின் தேவனுடைய
பெட்டியை எடுத்துச் சுற்றிக்கொண்டுவந்தார்க
ளென்றுசொல்லி,—பெலிஸ்தியரின் சகலபிரபுக ௰௧
ளுக்கும் ஆளனுப்பி, அவர்களைக்கூடிவரச்செய்
து, அவர்களைநோக்கி, இஸரவேலின் தேவனு
டைய பெட்டி எங்களையும் எங்கள் சனங்களை
யுங்கொன்றுபோடாதபடிக்கு, அதை அதின் ஸ்
தானத்திற்கு அனுப்பிவிடுங்களென்றார்கள்: அந்
த நகரமெங்கும் மகாசங்காரமுண்டாயிற்று, அங்
கேயுந் தேவனுடைய கரம் கடும்பாரமாயிற்று.-
மரணமடையாதவர்களும் மூல வியாதியினால் ௰௨
தண்டிக்கப்பட்டார்கள்: அந்நகரத்தாரிட்ட ஓ
லம் வானபரியந்தமெழும்பிற்று.

## ௬. அதிகாரம்.

௧. இஸரவேலரிடத்தில் பெட்டியை அனுப்பும் படி பெலிஸ்தியர் ஆலோசித்தல்: ௰. பெட்டியை அனுப்பல்: ௰௩. பேத்ஷிமெஷிலே பெட்டியைத்திறந்து பார்த்ததினால் சனங்களுக்குள்ளே பெரியவாதையுண்டாதல்: ௨௧. கீரியாத் எயாரீமுக்குப் பெட்டியை அனுப்பல்.

யெகோவாவின்பெட்டிபெலிஸ்தியர்நாட் ௧
டிலே எழுமாதமிருந்தது.—பின்பு பெலிஸ்தியர் ௨
பூசாசாரிகளையும் மாயாவிகளையும் அழைத்து,
நாம்யெகோவாவின்பெட்டியையென்னசெய்ய
வேண்டும்; அதை நாம் எவ்விதமாய் அதின்ஸ்தா
னத்திற்கு அனுப்புவோம்; அதை எங்களுக்குச்
சொல்லுங்களென்றுகேட்க,—இவர்கள், இஸர ௩
வேலருடைய தேவனின் பெட்டியை நீங்
கள் அனுப்பிவிட்டால் வெறுமையாய் அனுப்
பாமல், குற்றநிவிர்த்திக்காணிக்கையோடும் அ
னுப்பவேண்டும்: அப்பொழுது நீங்கள் சொஸ்த
மடைந்தால், அவருடைய கரம் உங்களைவிட்
டு நீங்காதகாரணம் இன்னதென்று உங்களுக்கு
விளங்குமென்றார்கள்.—அதற்கு அவர்கள் நாங் ௪
கள் அவருக்குச்செலுத்தவேண்டிய குற்றநிவிர்த்
திபலி யென்னவென்றுகேட்க, இவர்கள், உங்
களெல்லாருக்கும் உங்கள் பிரபுகளுக்கும் ஒரே
வாதையுண்டாயிற்று; ஆதலால் பெலிஸ்தியரின்
பிரபுகளின் தொகைக்கேற்க, மூலவியாதியின்

(௫. அதி. ௧.) அதி.௪.௧. அதி.௭.௰௨. (௨) நியா.௰௬.௨௩. (௩) ஏசா.௰௯.௧. ஏசா ௪௬.௧,௨. ஏசா.௪௬.௭. (௪) எரே. ௫௰.௨. எசேக்.௬.௪,௬. மீகா.௧.௭. (௫) செப்.௧.௯. (௬) வச.௭.௰௧. யாத்.௯.௩. சங்.௩௨.௪. அப்.௰௩.௰௧. அதி.௬.௫. உபா ௨௮.௨௭. சங்.௭௮.௬௬. (௯) உபா.௨.௰௫. அதி.௭.௰௩. வச.௰௧. வச.௬. சங்.௭௮.௬௬. (௰௧) வச.௬,௯.—(௬. அதி. ௨.) ஆதி.௪௧.௮. யாத்.௭.௰௧. தானி.௨.௨. மத்.௨.௪. (௩) யாத்.௨௩.௰௫. உபா.௰௬.௰௬. லேவி.௫.௰௫, ௰௬. வச.௯. (௪) வச.௰௭,௰௮. யோசு.௰௩.௩. நியா.௩.௩.

சாயற்படிசெய்த ஐந்து பொன்னுருவங்களும்,
௫ ஐந்து பொற்சுண்டெலிகளுமே.—உங்கள் மூல
வியாதியின் சாயலான உருவங்களையும், தேசத்
தை நாசப்படுத்துகிற உங்கள் சுண்டெலிகளின்
சாயலான உருவங்களையும் நீங்கள் உண்டாக்கி,
இஸ்ரவேலருடைய தேவனின் மகிமை பிரகா
சிக்கப்பண்ணுங்கள்: உங்கள் மேலும், உங்கள்
தேவர்கள்மேலும், உங்கள் தேசத்தின்மெலும் இ
ருக்கிற அவருடைய கரம் உங்களைவிட்டு நீங்கி,
௬ இலகுவாகவுங்கூடும்.—எகிப்தியரும் பார்வோ
னும் தங்கள் இருதயங்களைக்கடினப்படுத்தினது
போல, நீங்களும் உங்களிருதயங்களை என் கடி
னப்படுத்துகிறீர்கள்; அவர்கள் தங்களுக்குள் அ
வர் அற்புதங்களைக்காட்டியபின்பு, சனங்களைப்
௭ புறப்படும்படி அனுப்பிவிடவில்லையோ.—இனி
நீங்கள் ஒரு புதுவண்டிசெய்வித்து, நுகம்பூட்
டப்படாத கறவைப்பசுக்களிரண்டைத் தெரிந்
து, அவைகளைவண்டியிலேகட்டி, அவைகளின்
கன்றுகளை அவைகளுக்குப்பின்போகவிடாமல்
௮ வீட்டிலேகொண்டுபோய்விட்டு,—யெகோவா
வின் பெட்டியை யெடுத்துவண்டியின்மேலேற்
றி; நீங்கள் அவருக்கிடுங்குற்றநிவிர்த்திக்காணிக்
கையாகிய பொன்னுருவங்களை அதின் பக்கத்
திலொருபெட்டியிலே இட்டுப்போகும்படி அ
௯ னுப்பிவிடுங்கள்.—நிதானமாய்ப்பாருங்கள், அது
அவருடைய எல்லைவழியாகப் பேத்ஷிமெஷூக்
குப்போனால், அவரே நமக்கு இந்தப்பெரியதீங்
கைச்செய்தார்: போகாதிருந்தால் இது நமக்குத்
தற்செயலாக நேரிட்டதேயன்றி, அவர் கரம் நம்
மைத்தண்டிக்கவில்லை யென்றறிந்துகொள்வோ
மென்றார்கள்.
௰ அந்தமனிதர் அப்படியேசெய்து, கறவைப்ப
சுக்களிரண்டைத்தெரிந்து, அவைகளை வண்டி
யிலேகட்டி, அவைகளின் கன்றுகளை வீட்டில்
௰௧ அடைத்துவைத்து,—யெகோவாவின் பெட்
டியையும், பொற்சுண்டெலிகளும், மூலவியாதி
களின் சாயலான உருவங்களுமிருந்த பெட்டி
௰௨ யையும்வண்டியின்மேலேற்றினார்கள்.—பசுக்கள்
பேத்ஷிமெஷூக்குப்போகிற வழியாலே நேரா
கப்போய், வலமிடம் விலகாமல் பெரும்பாதை
யில் அழுதுகொண்டு சென்றன; பெலிஸ்திய
ரின் பிரபுகள் பேத்ஷிமெஷின் எல்லைவரைக்
௰௩ கும் அவைகளுக்குப்பின்சென்றார்கள்.—தாழ்ந்த
பூமியிலே கோதுமை அரி அரிந்துகொண்டிருந்
த பேத்ஷிமெஷ்ராரில் சிலர் தங்கள்கண்களையே
றிட்டுப் பெட்டியைக்கண்டு, அதைப்பார்த்ததி
௰௪ னிமித்தஞ் சந்தோஷப்பட்டார்கள்.—அந்தவண்
டி பேத்ஷிமெஷ்ரானாகிய யோசுவாவின் வய
லிலேவந்து, அங்கே ஒருபெரிய கல்லிருந்த இ
டத்தில் நின்றுவிட்டது: அப்பொழுது அவர்கள்
வண்டியின்மரங்களைப்பிளந்து, பசுக்களைத்தகன
பலியாக யெகோவாவுக்கிட்டார்கள்.—லேவி ௰௫
யர் யெகோவாவின் பெட்டியையும், அத
னோடிருந்த பொன்னுருவங்கள்வைத்த பெட்டி
யையுமிறக்கி, அந்தப்பெரிய கல்லின்மேல்வைத்
தார்கள்: அன்றைத்தினம் பேத்ஷிமெஷ்ரார் தக
னபலிகளையும், மற்றப்பலிகளையும்யெகோவா
வுக்கிட்டார்கள்.—பெலிஸ்தியரின் ஐந்து பிரபு ௰௬
களும் இவைகளைக்கண்டபின்பு, அந்நாளில்
எக்ரோனுக்குத் திரும்பிப்போனார்கள்.—பெலிஸ் ௰௭
தியர் குற்ற நிவிர்த்தியின்பொருட்டு யெகோ
வாவுக்கிட்ட மூலவியாதியின் சாயலானபொன்
னுருவங்கள் அஷ்தோத்துக்காக ஒன்று, காசா
வுக்காக ஒன்று, அஷ்கிலோனுக்காக ஒன்று, காத்
துக்காக ஒன்று, எக்ரோனுக்காக ஒன்று.—பொற் ௰௮
சுண்டெலிகள், யெகோவாவின் பெட்டியை
வைத்த ஆபேலென்னும்பெரியகல்வரைக்குமுள்
ள அரணான நகரங்களும், நாட்டிலுள்ள கிராமங்
களுமாகிய பெலிஸ்தியரின் பிரபுகளைவருக்
கும் ஆதீனமாயிருந்த சகல ஊர்களின்தொகைக்
குமேற்பட விருந்தன: அந்தக்கல் இந்நாள்வ
ரைக்கும் பேத்ஷிமெஷ்ரானாகிய யோசுவாவின்
வயலிலிருக்கின்றது.
பேத்ஷிமெஷ்ரார் யெகோவாவின் பெட் ௰௯
டியைத்திறந்துபார்த்தபடியால், அவர்களை அடித்
தார், சனங்களில் ஐம்பதினாயிரத்தெழுபதுபே
ரையும் அடித்தார்: யெகோவா மகா சங்
காரத்துடன் சனங்களிற் சிலரை வதைத்ததினி
மித்தம் சனங்கள் புலம்பினார்கள்.—பேத்ஷிமெ ௨௰
ஷ்ரார் இந்தப்பரிசுத்த தேவனாகிய யெகோ
வாவுக்கு முன்பாக நிற்கத்தக்கவன்யாவன்; நம்
மைவிட்டுஅவர்ஆரிடத்திற்போவாரென்றார்கள்.
பின்பு கீரியாத் எயாரீமிடத்தில் தூதரையனுப் ௨௧
பி, யெகோவாவின் பெட்டியைப் பெலிஸ்
தியர் திரும்பக்கொண்டுவந்துவிட்டார்கள்; நீங்
கள்வந்து இதை யெடுத்துக்கொண்டு போங்க
ளென்று சொல்லுவித்தார்கள்.

## ௭. அதிகாரம்.

௧. அபீனதாப்பின் வீட்டிலேபெட்டிவைக்கப்படல்: ௩. மிஸ்பேயில் இஸரவேலர் புலம்பல்: ௭. பெலிஸ்தியரை எதிர்த்து யுத்தஞ்செய்ய ஆயத்தப்படுதல்: ௯. சாமுவேல்பலியிட்டுபிரார்த்தித்தசமயத்தில் மகாமுழக்கத்தினால்பெலிஸ்தியர் தோல்வியடைதல்: ௰௩. பெலிஸ்தியர் வசப்படுதல்: ௰௫. சாமுவேல் நியாயம்விசாரித்தல்.

கீரியாத் எயாரீமூரார்வந்து, யெகோவாவின் ௧
பெட்டியை எடுத்துக் குன்றின்மேலுள்ள அபீ
னதாப்பின்வீட்டிலே கொண்டுபோய்வைத்து,
யெகோவாவின் பெட்டியைக் காக்கும்படி
அவன் புத்திரனாகிய எலீயேசாரைப்பரிசுத்தப்
படுத்தினார்கள்.—பெட்டி கீரியாத் எயாரீமிலே ௨
தங்கிநெடுநாளாயிருந்தது; இருபதுவருஷம் அங்

(௫) அதி.௫.௬. யோசு.௭.௰௯. ஏசா.௪௨.௰௨. மல்.௨.௨. யோவா.௯.௨௪. அதி.௫.௬,௰௧. சங்.௩௯.௰. அதி.௫.௩,௪,௭. (௬) யாத்.௭.௰௩. யாத்.௮.௰௫. யாத்.௰௪.௰௭. யாத்.௰௨.௩௧. (௭) ௨.சாமு.௬.௩. எண்.௰௯.௨. (௮) வச.௪,௫. (௯) யோசு.௰௫.௰. வச.௩. (௰௬) யோசு.௰௩.௩. (௰௭) வச.௪. (௰௯) யாத்.௰௯.௨௧. எண்.௫.௰௪,௨௰. ௨.சாமு.௬.௭. (௨௰) ௨.சாமு.௬.௯. மல்.௩.௨. (௨௧) யோசு.௰௮.௰௪. நியா.௰௮.௰௨.—(௭. அதி. ௧.) அதி.௬.௨௧. சங்.௱௩௨.௬. ௨.சாமு.௬.௪.

கேயிருந்தது: இஸரவேல்வமிசத்தாரெல்லாரும்
யெகோவாவை நினைந்து புலம்பிக்கொண்டி
ருந்தார்கள்.
௩ அப்பொழுது சாமுவேல் இஸரவேல்வமிசத்
தார் எல்லாரையும்நோக்கி,நீங்கள் உங்கள்பூரண
இருதயத்தோடும் யெகோவாவினிடத்தில் தி
ரும்பினல்; அந்நிய தேவர்களையும் அஷ்தரோத்
தையும் உங்களிடத்தினின்றுமகற்றிவிட்டு, யெ
கோவாவுக்குஉங்களிருதயத்தைச்செவ்வைப்ப
டுத்தி, அவர்ஒருவருக்கே ஆராதனைசெய்யுங்கள்;
அப்பொழுது அவர் உங்களைப் பெலிஸ்தியர்கை
௪ யினின்றும் விடுவிப்பார் என்றான்.–பின்பு இஸர
வேல்சந்ததியார் பாகால்களையும் அஷ்தாரோத்
தையும் அகற்றிவிட்டு, யெகோவா ஒருவரை
௫ யே சேவித்தார்கள்.—சாமுவேல் இஸரவேலர்
எல்லாரையும் மிஸ்பேயிலே கூடிவரச்செய்யுங்
கள், உங்கள்நிமித்தம் நான் யெகோவாவை
நோக்கி வேண்டுதல்பண்ணுவேனென்றான்.—
௬ அவர்கள் அப்படியே மிஸ்பேயிலேகூடிவந்து,
தண்ணீர்மொண்டு யெகோவாவின் சந்நிதி
யிலூற்றி அன்றைத்தினம் உபவாசமாயிருந்து,
யெகோவாவுக்கு விரோதமாகப்பாவஞ்செய்
தோமென்றங்கேசொன்னார்கள். மிஸ்பேயிலே
சாமுவேல் இஸரவேல் சந்ததியாரை நியாயம்வி
சாரித்துக்கொண்டிருந்தான்.
௭ இஸரவேல் சந்ததியார் மிஸ்பேயிலே கூடிவந்
ததைப்பெலிஸ்தியர் கேள்விப்பட்டபொழுது,
பெலிஸ்தியரின் பிரபுகள் இஸரவேலரை எதிர்க்
கப்புறப்பட்டுவந்தார்கள், இஸரவேல்சந்ததியார்
அதைக்கேட்டுப் பெலிஸ்தியருக்குப் பயந்தார்
௮ கள்.—பின்பு இஸரவேல் சந்ததியார் சாமுவே
லைநோக்கி, நம்முடைய தேவனாகிய யெகோ
வா எங்களைப் பெலிஸ்தியரின் கையினின்றும்
இரட்சிக்கும்படி, எங்கள்நிமித்தம்அவரைநோக்
௯ கி ஓயாமல் ஓலமிடுமென்றார்கள்.-அப்பொழுது
சாமுவேல் பால்குடிக்கிற ஒரு ஆட்டுக்குட்டி
யைத்தெரிந்து, அதை யெகோவாவுக்குச் சரு
வாங்கதகனபலியாக இட்டான்: அன்றியுஞ் சா
முவேல் இஸரவேலர் நிமித்தம் யெகோவா
வைநோக்கி ஓலமிட, யெகோவா உத்தரமரு
௰ ளினார்.—சாமுவேல் தகனபலியிடுகையில், பெ
லிஸ்தியர் இஸரவேலரோடே எதிர்த்துயுத்தஞ்
செய்யச் சமீபித்துவந்தார்கள்: யெகோவா
அன்றைத்தினத்தில் பெலிஸ்தியர் மேல் பெருமு
ழக்கம்முழங்கப்பண்ணி,அவர்களைச்சின்னபின்
னப்படுத்த அவர்கள் இஸரவேலருக்குமுன் மு
௰௧ றிய அடிக்கப்பட்டார்கள்.—இஸரவேலர் மிஸ்
பேயை விட்டுப் பெலிஸ்தியரைத் தொடர்ந்து
போய், பேத்காரிம்மட்டும் அவர்களை முறிய அ
டித்தார்கள்.—பின்பு சாமுவேல் ஒருகல்லையெ ௰௨
டுத்து மிஸ்பேக்கும், ஷேனுக்குமிடையிலே நி
றுத்தி, இதுவரைக்கும் யெகோவா நமக்குத
விசெய்தாரென்று சொல்லி, அதற்கு எபெனேச
ரென்றுபெயரிட்டான்.
இப்படியே பெலிஸ்தியர் தாழ்த்தப்பட்டார் ௰௩
கள், பின்பு அவர்கள் இஸரவேலரின் எல்லைக்
குள்வரவில்லை: சாமுவேலுடையகாலமுழுதும்
யெகோவாவின் கரம் பெலிஸ்தியருக்கு வி
ரோதமாயிருந்தது.—பெலிஸ்தியர் இஸரவேலரி ௰௪
டத்திற்பிடித்திருந்த எக்ரோன்முதல் காத்வரைக்
குமுள்ள நகரங்கள் இஸரவேலருக்குத்திரும்பக்
கிடைத்தன; அவைகளினெல்லையிலுள்ள ஸ்தா
னங்களையும் இஸரவேலர் பெலிஸ்தியர் கையி
னின்றும் விடுவித்துக்கொண்டார்கள். இஸரவே
லருக்கும் எமோரியருக்குஞ் சமாதானமுண்டா
யிற்று.
சாமுவேல் தன் ஆயுள்பரியந்தம் இஸரவேல ௰௫
ரை நியாயம்விசாரித்தான்.–அவன் வருஷந்தோ ௰௬
றும் புறப்பட்டுப் பெத்தேலையுங் கில்காலையும்
மிஸ்பேயையுஞ் சுற்றிப்போய், அந்தஸ்தானங்க
ளிலெல்லாம் இஸரவேலரை நியாயம் விசாரித்
துக்கொண்டு,–தன் வீடு ராமாவிலிருந்தபடியால் ௰௭
அங்கேதிரும்பிவருவான்; அங்கேயும் இஸரவே
லரை நியாயம் விசாரித்தான்; அவன் அவ்விடத்
திலே யெகோவாவுக்கு ஒருவேதிகையையுண்
டாக்கினான்.

## ௮. அதிகாரம்.

௧. சாமுவேலின் புத்திரர்செய்த அநியாயத்தினி
மித்தம் சனங்கள் ஒருஇராசாவைவிரும்பல்:௬.
அவர்கள் பிரார்த்தனைக்குச் சாமுவேல் பிரியப்
படாதிருத்தல்: ௰. வரும் இராசாவைவருணித்
தல்: ௰௯. இராசாவை ஏற்படுத்தும்படி தேவன்
சாமுவேலுக்குக்கட்டளையிடல்.

சாமுவேல் முதிர்ந்தவயதானபொழுது, அவன் ௧
தன் புத்திரரை இஸரவேலருக்கு நியாயாதிபதிக
ளாக ஏற்படுத்தினான்.—அவனுடைய மூத்தமக ௨
னுக்குப்பெயர் யோவேல்; இளையமகனுக்குப்
பெயர் அபியா: அவர்கள் பேர்ஷேபாவிலே நி
யாயாதிபதிகளாயிருந்தார்கள்.—அவன் புத்திரர் ௩
அவனுடைய நெறிப்படி நடவாமல் பொருளா
சையில் அமுந்தி, பரிதானம்வாங்கிநியாயத்தைப்
புரட்டினார்கள்.—அதினால் இஸரவேலரின்முதி ௪
யோர்யாவரும் கூட்டங்கூடி, ராமாவிலிருந்தசா
முவேலினிடத்தில்வந்து,—அவனைநோக்கி, நீர் ௫

(௩)உபா.௩௰.௨—௰. ௧.இரா.௮.௪௮. ஏசா.௫௫.௭. ஓசி.௬.௧.யோவே.௨.௰௨.ஆதி.௩௫.௨.யோசு.௨௪.௰௪,௨௩.நியா.
௨.௰௩. ௨.நாளா.௩௰.௰௩. யோபு.௰௧.௰௩,௰௪. உபா.௬.௰௩. மத்.௪.௰. லூக்.௪.௮. (௪) நியா.௨.௰௧. (௫) நியா.௨௰.௧.
௨.இரா.௨௫.௨௩. (௬) ௨.சாமு.௰௪.௰௪. நெகி.௯.௧,௨. தானி.௯.௩,௪,௫. யோவே.௨.௰௨. நியா.௰.௰. ௧.இரா.௮.௪௭.
சங்.௱௬.௬. (௮) ஏசா.௩௭.௪. (௯) சங்.௯௯.௬. எரே.௰௫.௧. (௰) யோசு.௰.௰. நியா.௪.௰௫. நியா.௫.௨௰. அதி.௨.௰.
௨.சாமு.௨௨.௰௪,௰௫. (௰௨) ஆதி.௨௮.௰௮. ஆதி.௩௧.௪௫. ஆதி.௩௫.௰௪. யோசு.௪.௯. யோசு.௨௪.௨௬. (௰௩) நியா.
௰௩.௧. அதி.௰௩.௫. (௰௫) வச.௬. அதி.௰௨.௰௧. நியா.௨.௰௬. (௰௭) அதி.௮.௪. நியா.௨௧.௪.—(௮. அதி. ௧.) உபா.
௰௬.௰௮. ௨.நாளா.௰௯.௫. நியா.௰.௪. நியா.௰௨.௰௪. நியா.௫.௰. (௨) ௧.நாளா.௬.௨௮. (௩) எரே.௨௨.௰௫,௰௬,௰௭.
யாத்.௰௮.௨௧. ௧.தீமோ.௩.௩. ௧.தீமோ.௬.௰. உபா.௰௬.௰௯. சங்.௰௫.௫.(௫)வச.௰௩.௨௰. உபா.௰௭.௰௪. ஓசி.௰௩.௰.

விருத்தரானீர், உம்முடைய புத்திரர் உமது நெ
றிப்படி நடக்கவில்லை: ஆதலால் சகலசாதியா
ருக்குள்ளுமிருக்கிறபிரகாரம் எங்களை நியாயம்
விசாரிக்கும்பொருட்டு எங்களுக்கொரு இராசா
வை ஏற்படுத்துமென்றார்கள்.
௬ எங்களை நியாயம்விசாரிக்க ஒரு இராசாவை
ஏற்படுத்துமென்று அவர்கள் சொல்லியகாரியம்,
சாமுவேலின் பார்வைக்குத் தீமையாகத்தோன்
றிற்று. அதினால் சாமுவேல் யெகோவாவை
௭ நோக்கி வேண்டுதல் பண்ணினான்.—யெகோ
வா சாமுவேலைநோக்கி, சனங்கள் உன்னிடத்
தில்சொல்வதெல்லாவற்றிலும் நீ அவர்களுக்குச்
செவிகொடு: அவர்கள் உன்னைத் தள்ளவில்லை,
தங்களை நான் அரசாளாதபடி என்னையே தள்ளி
௮ னார்கள்.—நான் அவர்களை எகிப்தினின்றும்புறப்
படச்செய்த நாள்தொடங்கி இந்நாள்வரைக்கும்
என்னைவிட்டு, அந்நியதேவர்களைச்சேவித்துவந்
த தங்கள் எல்லாக்கிரியைகளின்படியும், உனக்
௯ குஞ்செய்கிறார்கள்.—ஆகையால் அவர்கள்சொற்
படிசெய்: ஆயினும் திடசாட்சியாய் உன்பிரிய
வீனத்தைக் காட்டும்படிக்கு, அவர்களை அரசா
ளும் இராசாவின் இயல்பின்னதென்று அவர்க
ளுக்குத்தெரியப்படுத்தென்றார்.
௰ அப்பொழுது சாமுவேல் ஒரு இராசாவேண்டு
மென்று தன்னிடத்திற் கேட்ட சனங்களுக்கு
யெகோவாவின் சகலவாக்குகளையுஞ்சொல்
௰௧ லி,—உங்களை அரசாளும் இராசா உங்கள் புத்
திரரைத்தனக்கு இரதசாரதிகளாகவும், குதிரைப்
பாகர்களாகவும் தன்மூலமாகத் தெரிந்தேற்படுத்
துவான்; அவர்களிற் சிலர் அவனிரதங்களுக்கு
௰௨ முன்னேடுவார்கள்.—ஆயிரவருக்கும் ஐம்பதுபே
ருக்கும் அதிபதிகளாகவும், தனக்கு வேளாண்
மைசெய்கிறவர்களாகவும், அரியரிகிறவர்களாக
வும், யுத்தாயுதங்களையும் இரதங்களின் கருவிக
ளையுஞ் செய்கிறவர்களாகவும், அவர்களை ஏற்ப
௰௩ டுத்துவான்.—உங்கள் புத்திரிகளை மோதகக்காரி
களாகவும், சுயம்பாகிகளாகவும், அப்பஞ்சுடுகிற
௰௪ வர்களாகவும் வைத்துக்கொள்ளுவான்.—உங்கள்
வயல்வெளிகளிலும், திராட்சத் தோட்டங்களி
லும்,சீதவிருட்சத்தோப்புக்களிலும்சிரேஷ்டமா
னவைகளைப்பிடித்து, தன் பணிவிடைக்காரருக்
௰௫ குக்கொடுப்பான்.—உங்கள் விதைத்தானியத்தி
லும், திராட்சப்பலனிலும், பத்திலொருபங்கை
எடுத்து, தன்பிரதானிகளுக்கும் பணிவிடைகா
௰௬ ரருக்குங்கொடுப்பான்.—உத்தமமாகிய உங்கள்
பணிவிடைக்காரரையும்,பணிவிடைக்காரிகளை
யும், உங்கள் வாலிபரையும், கழுதைகளையுந்தெ
ரிந்து தன் பணிவிடைகளுக்கேற்படுத்துவான்.—
௰௭ உங்கள் ஆடுகளிலேபத்திலொன்றுவாங்குவான்;
அவன் இப்படிப்பட்டவனாவான்: நீங்களும்
௰௮ அவனுக்குப்பணிவிடைக்காரராவீர்கள்.-நீங்கள்
உங்களுக்குத்தெரிந்துகொண்ட உங்கள் இராசா
வினிமித்தம் அந்நாளில் ஓலமிடுவீர்கள்; அந்
நாளிலே யெகோவா உங்களுக்குச்செவிகொ
டுக்கமாட்டாரென்றான்.
ஆனாலுஞ்சனங்கள்சாமுவேலின் சொல்லைக் ௰௯
கேளாமல், எப்படியும் எங்களுக்கு ஒரு இராசா
வேண்டும்;—மற்றைச் சகலசாதியாரையும்போல ௨௰
நாங்களுமிருப்போம்; எங்கள் இராசா எங்களை
நியாயம்விசாரித்து,எங்களுக்குமுன்பாகச்சென்
று, எங்கள் யுத்தங்களை நடத்தவேண்டுமென்றார்
கள்.—சாமுவேல் சனங்களின் சமஸ்தவாக்குக ௨௧
ளையுங்கேட்டு, யெகோவாவின் செவிக்கேற
அவைகளைச் சொன்னான்.—யெகோவா சா ௨௨
முவேலைநோக்கி, நீ அவர்கள் சொல்லைக்கேட்
டு அவர்களுக்கொரு இராசாவை ஏற்படுத்தென்
றார். பின்பு சாமுவேல் இஸரவேலராகிய அந்த
மனிதரைநோக்கி, நீங்கள் உங்கள் ஊருக்குப்
போங்களென்றான்.

## ௯. அதிகாரம்.

௧. ஷவுல் காணாமற்போன தன்பிதாவின்கழுதை
யைத்தேடல்: ௰௧. சாமுவேலினிடத்தில்போய்
ச்சேருதல்: ௰௫. சாமுவேல்ஷவுலுக்குவிருந்து
செய்தல்: ௨௫ அவனை அனுப்பும்படி அவனு
டன் வழிச்செல்லல்.

பேன்யாமீன் கோத்திரத்தில் அபீயவின் புத் ௧
திரனான பிகோராத்தின் மகனாகிய சேரோரின்
பௌத்திரனும், அபீயேலின்புத்திரனும், பராக்கி
ரமவீரனாய்க்கீஷென்றுபெயர்கொண்டபேன்யா
மீன் கோத்திரத்தானுமாகிய ஒருவனிருந்தான்.—
அவனுக்கு ஷவுலென்றுபெயருள்ள சௌந்தரி ௨
யமுஞ் சுரூபமுமாகியவாலிபனான ஒரு புத்திர
னிருந்தான்: இஸரவேல் சந்ததியாருக்குள்ளே
அவனிலுமதிக சௌந்தரியவான் ஒருவனுமில்
லை: அவன் எந்தச் சனங்களுந் தன்தோளுக்குக்
கீழ்ப்படத்தக்க நெடியவனாயிருந்தான்.—ஷவு ௩
லின் பிதாவாகிய கீஷினுடைய கழுதைகள் காணா
மற்போயின. அதினால் கீஷ் தன்புத்திரனாகிய ஷ
வுலைநோக்கி,நீபணிவிடைக்காரரிலொருவனைக்
கூட்டிக்கொண்டு கழுதைகளைத்தேடும்படி புறப்
பட்டுப்போவென்றான்.—அவன் எப்ராயீம் ம ௪
லையையும், ஷாலீஷாநாட்டையுங் கடந்துபோ
னான்: அங்கே அவைகளைக் கண்டடையாமல்
ஷாலீஷாநாட்டைக் கடந்தார்கள், அங்குமில்
லை: பேன்யாமீன் நாட்டைக்கடந்துசென்றுங்
கண்டடையவில்லை.—அவர்கள் சூப்தேசத்திற் ௫
சேர்ந்தபொழுது, ஷவுல் தன்னோடிருந்த பணி
விடைக்காரனைநோக்கி,என்பிதா கழுதைகளின்
மேல்வைத்த நினைவைவிட்டு நமது நிமித்தம்வி
சாரப்படாதபடிக்குத் திரும்பிப்போவோம் வா
வென்றுசொல்ல,-இவன்அவனைநோக்கி,இந்தப் ௬
பட்டணத்திலேதேவனுடையதாசனொருவனி

(௭) யாத்.௰௬.௮. அதி.௰.௰௯. ஓசி.௰௩.௰,௰௧. (௯) வச.௰௧. (௰௧) உபா.௰௭.௰௬. அதி.௰௪.௫௨. (௰௪) ௧.இரா.௨௧.
௭. எசேக்.௪௬.௰௮. (௰௫) ஆதி.௩௭.௩௬. (௰௮) நீதி.௧.௨௫,௨௬,௨௭,௨௮. ஏசா.௧.௰௫. மீகா.௩.௪. (௰௯) எரே.௪௪.
௰௬. (௨௰) வச.௫. (௨௨) வச.௭. ஓசி.௰௩.௰௧.—(௯. அதி. ௧.) அதி.௰௪.௫௧. (௨) அதி.௰.௨௩. (௪) ௨.இரா.௪.௪௨.
(௬) உபா.௩௩.௧. ௧.இரா.௰௩.௧. அதி.௩.௰௧.

ருக்கிறான், அவன்பெரியமனுஷன்; அவன்சொ
ல்வதெல்லாந்தவறாமல்நிறைவேறும்: நாம்செல்ல
வேண்டிய வழியின்னதென்று, அவன் நமக்குத்
தெரிவிக்கவுங்கூடும்; இனி அங்கேபோவோம்
௭ வாவென்றான்.—அப்பொழுது ஷவுல் தன்பணி
விடைக்காரனை நோக்கி, நாம்போனாலும் அந்த
மனிதனுக்கெதைக்கொண்டுபோவோம்; நம்மு
டைய பாத்திரங்களிலிருந்த உணவுப்பொருள்
செலவழிந்துபோயிற்று, தேவதாசனாகிய அவ
னுக்குக்கொண்டுபோகிறதற்குக் காணிக்கை நம்
மிடத்திலில்லையே: நாமென்னவைத்திருக்கிறோ
௮ மென்றுசொல்ல,—அந்தப் பணிவிடைக்காரன்
திரும்பவும் ஷவுலைநோக்கி, கேளும், என்கையி
லே கால் ஷேக்கல் வெள்ளியிருக்கின்றது: தே
வனுடையதாசன் நமக்குநாம்செல்லவேண்டிய
வழியைக் காட்டும்படி அதையவனுக்குக் கொ
௯ டுப்பேனென்றான்;-அதற்குஷவுல் தன் பணிவி
டைக்காரனைநோக்கி, நீசொன்னதுநல்லது,போ
வோம்வாவென்றான்: அப்படியே தேவதாசனி
௰ ருந்த அந்தப்பட்டணத்துக்குப்போனார்கள்.-இக்
காலத்திலே தீர்க்கதரிசியென்னப்படுகிறவன்,
முற்காலத்திலே தரிசியென்னப்படுவான்: ஆத
லால் பூருவகாலத்தில் இஸரவேலருக்குள் யா
வனொருவன் தேவனிடத்தில் ஆலோசனை
கேட்கப்போனால்,தரிசியிடத்திற்போவோம்வா
வென்பான்.
௰௧ அவர்கள்பட்டணத்துக்கு மலையின்வழியாய்
ஏறுகையில், தண்ணீர்மொள்ளப்போகிற கன்னி
கைகளைக்கண்டு, தரிசி இங்கே யிருக்கிறானோ
௰௨ வென்று அவர்களைக்கேட்க,—அவர்கள் இவர்க
ளுக்குத்தரமாய் இருக்கிறான்; அவன் உங்களுக்
குமுன்னே போயிருக்கிறான்: விரைந்துபோங்
கள், இன்றைக்கு உயர்ந்த ஸ்தானத்தின்மேலே
சனங்கள் பலியிடுகிறபடியால் இன்றைத்தினம்
௰௩ பட்டணத்துக்குவந்தான்.—அவன் பலியை ஆ
சீர்வதிக்கவேண்டியபடியால், சனங்கள் அவன்
வருமளவும் போசனம் பண்ணமாட்டார்கள்;
அப்பால் அழைக்கப்பட்டவர்கள் போசனம்
பண்ணுவார்கள்: ஆதலால்நீங்கள்பட்டணத்திற்
பிரவேசித்தவுடனே, அவன் போசனம்பண்ணு
வதற்குஉயர்ந்தஸ்தானத்துக்குஏறுமுன்அவனைக்
காணக்கூடும்: ஏறிப்போங்கள்,இந்நேரத்தில் அ
௰௪ வனைக் கண்டுகொள்ளலாமென்றார்கள்.—அவர்
கள் பட்டணத்திற்கேறிப்போனார்கள்: அவர்கள்
பட்டணத்தில் பிரவேசித்தபின்பு, சாமுவேல்
உயர்ந்தஸ்தானத்துக்கேறிப்போகும்படி அவர்க
ளுக்கெதிரே புறப்பட்டுவந்தான்.
௰௫ ஷவுல்வர ஒரு நாளைக்குமுன்னே யெகோ
௰௬ வா, சாமுவேல் காதுக்கேற,—என்சனங்களிட்
ட ஓலம் எனக்குக்கேட்டபடியால் நான் அவர்
களைக்கடாட்சித்தேன்: நாளை இந்நேரம் பேன்
யாமீன் தேசத்தானொருவனை உன்னிடத்தில் அ
னுப்புவேன், அவன் என் சனங்களைப் பெலிஸ்
தியர்கையினின்றும் விடுவித்துஇரட்சிக்கும்படி,
என்சனங்களாகிய இஸரவேலருக்கு அதிபதியா
கும்பொருட்டு நீ அவனுக்கு அபிஷேகம்பண்
ணென்றுசொல்லியிருந்தார்.—சாமுவேல்ஷவுலை ௰௭
க்கண்டமாத்திரத்தில், யெகோவா அவனிடத்
தில்,பார், நான் உனக்குச்சொல்லியிருந்தமனுஷ
ன்இவனே;என் சனங்கள்மேல்இவனேஆளுகை
செய்வானென்றார்.—அப்பொழுது ஷவுல் வாச ௰௮
லில்நின்ற சாமுவேலின் சமீபத்திற்சென்று, தரி
சியின் வீடு எங்கே, சொல்லுமென்றுகேட்க,—சா ௰௯
முவேல் ஷவுலைநோக்கி, தரிசிநானே: நீ எனக்
குமுன் உயர்ந்தஸ்தானத்துக்கு ஏறிப்போ; நீங்
கள் இன்றைக்கு என்னோடேபோசனம்பண்ண
வேண்டும், நாளைக்கு உன் இருதயத்திலுள்ளயா
வையும் உனக்கறிவித்து, உன்னை அனுப்பிவிடு
வேன்.—மூன்று நாளுக்குமுன் காணாமற்போன ௨௰
கழுதைகள்மேற் சிந்தை வைக்கவேண்டியதில்
லை; அவைகள் அகப்பட்டன. சமஸ்த இஸரவே
லரின் அபேட்சையும் ஆரை நாடுகின்றது: உன்
னையும் உன் பிதாவின் வமிசத்தார் சமஸ்தரையு
மல்லவாவென்றான்.—அதற்குத்தரமாக ஷவுல், ௨௧
நான் இஸரவேல் கோத்திரங்களுக்குள் அற்பமா
கிய பேன்யாமீன் கோத்திரத்தான்;பேன்யாமீன்
கோத்திரத்திலுள்ள சமஸ்தவமிசங்களிலும் என்
வமிசமேமிகவும் அற்பமானது; ஏன் என்னைக்கு
றித்து இப்படிப்பேசுகிறீரென்றான்.-சாமுவேல் ௨௨
ஷவுலையும், அவன்பணிவிடைக்காரனையும் வீட்
டுக்குள்ளேஅழைத்துப்போய்,அவர்களை அழைக்
கப்பட்டவர்களுக்குள்ளே முக்கியஸ்தானத்தில்
இருக்கப்பண்ணினான்: ஏறக்குறைய முப்பது
பேர்அங்கேயிருந்தார்கள்.-சாமுவேல் சுயம்பாகி ௨௩
யைநோக்கி, நான் உன்கையிலே தந்து, வைத்தி
ருக்கச்சொன்ன பங்கைக்கொண்டுவந்து வை
யென்றான்.-சமயற்காரன் முன்னந்தொடையை ௨௪
யும், அதனுடனிருந்ததையுமெடுத்துக்கொண்டு
வந்து ஷவுலுக்குமுன்வைக்க,சாமுவேல் சேஷ
மாய்வைக்கப்பட்டதைப்பார், நான் சனங்களை
வரவழைத்ததுமுதல் இதுவரைக்குமிது உனக்கா
கவைக்கப்பட்டிருந்தது:ஆதலால்இதை உனக்கு
முன்பாகவைத்துப் போசனம்பண்ணென்றான்.
அப்படியே ஷவுல் அன்றைத்தினம் சாமுவேலு
டன் போசனம்பண்ணினான்.
அவர்கள் உயர்ந்த ஸ்தானத்தைவிட்டுப் பட் ௨௫
டணத்துக்கிறங்கிவந்த பின்பு, சாமுவேல் ஷவு
லுடன் நிலாமுற்றத்தில் சம்பாஷித்துக்கொண்
டிருந்தான்.—அவர்கள் அதிகாலையிலெழுந்தார் ௨௬
கள்: விடியற்காலத்தில் சாமுவேல் ஷவுலைக்கூடப்

(௭) நியா.௬.௰௮. ௧.இரா.௰௪.௩. ௨.இரா.௪.௪௨. (௰) ஆதி.௨௫.௨௨. ௨.சாமு.௨௪.௰௧. ௨.இரா.௰௭.௰௩. ௧.நாளா. ௨௬.௨௮. ஏசா.௩௰.௰. ஆமோ,௭.௰௨. (௰௧) ஆதி.௨௪.௰௧. (௰௨) ஆதி.௩௧.௫௪. அதி.௰௬.௨. ௧.இரா.௩.௨. (௰௫) அதி.௰௫.௧. அப்.௰௩.௨௧. அதி.௨௰.௨. (௰௬) அதி.௰.௧. யாத்.௨.௨௫. (௰௭) அதி.௰௬.௰௨. ஓசி.௰௩.௰௧. (௨௰) வச.௩. அதி.௮.௫,௰௯. (௨௧) அதி.௰௫.௰௭. நியா.௨௰.௪௬,௪௭,௪௮.- சங்.௬௮.௨௭. நியா.௬.௰௫. (௨௪) லேவி.௭.௩௨,௩௩. எசேக்.௨௪.௪. (௨௫) உபா.௨௨.௮. ௨.சாமு.௰௧.௨. அப்.௰.௯.

பிட்டு, நான் உன்னையனுப்ப எழுந்திருவென்
றுசொல்ல, ஷவுல்எழுந்திருந்தான். பின்பு அவ
னுஞ் சாமுவேலும் வெளியேபுறப்பட்டார்கள்.-
௨௭ அவர்கள் பட்டணத்தின் எல்லையிற் சேர்ந்தபொ
ழுது, சாமுவேல் ஷவுலைநோக்கி, உன் பணிவி
டைக்காரனை முன்னேபோகச்சொல்லு, நான்
தேவனுடைய வாக்கை உனக்குத்தெரிவிக்கும்
படி நீ சற்றேதரித்து நில்லென்முன்.

## ௰. அதிகாரம்.

௧. ஷவுலுக்குஅபிஷேகஞ்செய்தல்: வீட்டிற்குப் போன சமயத்தில் நடந்ததைத்தெரிவித்தல்: ௯. ஷவுலுடைய குணம்வேறுபடல்: ௰௪. ஷவுல் சிறியபிதாவுக்குச் சாமுவேலின் வாக்கைத்தெரிவிக்காமல்விடல்: ௰௭. ஷவுல் இராசாவாகத் தெரிந்து ஏற்படுத்தப்படல்: ௨௬. அவனைப்பற்றிச் சனங்கள்கொண்டிருந்த விருப்புவெறுப்பு இன்னதென்று காட்டல்.

சாமுவேல் எண்ணெய்ப்பாத்திரத்தை எடுத்து,
அவன் தலையில்வார்த்து, அவனை முத்தமிட்டு,
யெகோவா உன்னைத்தமது சுதந்தரத்திற்கு அ
திபதியாக்கும்படி அபிஷேகம் பண்ணினாரல்ல
௨ வா,—நீ இன்றைத்தினம் என்னைவிட்டுப் புறப்
பட்டபின்பு, பேன்யாமீன் எல்லையிலுள்ளசெல்
சாலில் ராகேலின்பிரேதவறையின் சமீபத்தில்
இரண்டு மனுஷரைக்காண்பாய்; அவர்கள் உன்
னைநோக்கி, நீ தேடிப்போன கழுதைகள் அகப்
பட்டன: பார், உன்பிதா கழுதைகளின்மேல்
வைத்தவிசாரத்தைவிட்டு, உங்கள்நிமித்தம்விசா
ரமடைந்தவனாய்என்புத்திரனுக்காகஎன்னசெய்
௩ வேனென்கிறானென்றுசொல்லுவார்கள்.-நீ அவ்
விடத்தைநீங்கியப்பாற்போய்,தாபோர்என்னுஞ்
சமபூமியிற்சேரும்பொழுது, தேவனுக்கு ஆரா
தனைசெய்யும்படி பெத்தேலுக்குப்போகிற மூன்
றுமனிதர் உன்னைக்கண்டுசந்திப்பார்கள்; அவர்
களிலொருவன் மூன்று ஆட்டுக்குட்டிகளையும்,
வேறொருவன் மூன்று அப்பங்களையும், மற்ற
வன் திராட்சரசத் துருத்தியையுங் கொண்டுவரு
௪ வார்கள்.—அவர்கள் உன்சுகச்செய்தியைவிசாரித்
து, உனக்கு இரண்டு அப்பங்களைத்தருவார்கள்;
நீ அவைகளை அவர்கள்கையிலே வாங்குவாய்.—
௫ அப்பால் பெலிஸ்தியரின் பாளயமிருக்கிற தே
வ மலைக்குப்போவாய்: அங்கே நீ நகரத்திற்சே
ரும்பொழுது தம்புருவும், மேளமும், நாய்கசுர
மும், சுரமண்டலமும் முன்செல்ல, தீர்க்கதரி
சனஞ் சொல்லிக்கொண்டு உயர்ந்த ஸ்தானத்தி
னின்று இறங்கிவருகிறதீர்க்கதரிசிகளின் சங்கத்
௬ தைச் சந்திப்பாய்:-யெகோவாவின்ஆவிஉன்
மேல்வர, நீயும் அவர்களுடன்கூடத் தீர்க்கதரிச
௭ னஞ்சொல்லுவாய், நீ புதியமனிதனுவாய்.-இந்த
அடையாளங்கள்உனக்குண்டானதின்பின்,தே
வன் உன்னோடிருப்பதினால், உனக்குநேரிடுகிற
பிரகாரஞ்செய்.-நீ எனக்குமுன்னேகில்காலுக்கு ௮
இறங்கிப்போ; நான்தகனபலிகளையும், ஸ்தோத்
திரபலிகளையுமிடும்படி, அங்கே உன்னிடத்தில்
வருவேன்: நான் உன்னிடத்தில்வந்து நீசெய்ய
வேண்டியதின்னதென்று உனக்குத்தெரிவிக்கிற
வரைக்கும் ஏழுநாள் தரித்திருவென்முன்.
அவன்சாமுவேலை விட்டுத்திரும்பிப்போகிற ௯
பொழுது, தேவன் அவன் இருதயத்தைமாற்றி
ஞர்: அந்தஅடையாளங்களெல்லாம் அன்றைத்தி
னம் அவனுக்குண்டாயின.—அவர்கள் அந்தமலை ௰
யைச்சேர்ந்தபொழுது, தீர்க்கதரிசிகளுடையசங்
கம்அவனுக்கெதிரேவந்தது; அப்பொழுது தேவ
னுடைய ஆவி அவன்மேல்வர, அவனும்அவர்க
ளுக்குள்ளே தீர்க்கதரிசனஞ்சொன்னான்.—அதற் ௰௧
குமுன்னே அவனையறிந்த சனங்களெல்லாரும்,
அவனுந் தீர்க்கதரிசிகளுக்குள்ளே தீர்க்கதரிச
னஞ் சொல்வதைக்கண்டு, கீஷின்புத்திரனுக்கு
நடந்ததென்ன; ஷவுலுந்தீர்க்கதரிசிகளுக்குள்ளி
ருக்கிறானாவென்று ஒருவருக்கொருவர் பேசிக்
கொண்டார்கள்.—அதற்குத்தரமாக அவ்விடத்தி ௰௨
லிருந்த ஒருவன் இவர்களுக்குப் பிதாவானவர்
ஆரென்முன், ஷவுலுந் தீர்க்கதரிசிகளுக்குள்ளி
ருக்கிறானாவென்பது அதன்பின் ஒருபழமொழி
யாயிற்று.—அவன் தீர்க்கதரிசனஞ் சொல்லிமு ௰௩
டித்தபின்பு உயர்ந்தஸ்தானத்துக்குச்சென்முன்.
ஷவுலுடைய சிறியபிதா, நீங்கள் எங்கேபோ ௰௪
னீர்களென்று அவனிடத்திலும் அவனுடைய
பணிவிடைக்காரனிடத்திலுங்கேட்க, அவன்,
நாங்கள்கழுதைகளைத்தேடிப்போனோம்: அவை
களை எவ்விடத்திலுங் காணாதபடியினால், சாமு
வேலிடத்திற்போனோமென்முன்.—அப்பொழு ௰௫
து ஷவுலின் சிறியபிதா சாமுவேல் உங்களுக்
கென்ன சொன்னான் சொல்லென்றுகேட்க,—
ஷவுல் தன் சிறியபிதாவைநோக்கி, கழுதைகள் ௰௬
அகப்பட்டனவென்று எங்களுக்குத் தீர்ப்பாய்ச்
சொன்னான் என்முன். இராச்சியபாரத்தைக்கு
றித்து சாமுவேல் தனக்குச்சொல்லியதை அவ
னுக்குத்தெரிவிக்கவில்லை.
சாமுவேல் சனங்களை மிஸ்பாவிலே யெ ௰௭
கோவாவிடத்தில் வரவழைத்து,—இஸரவேல் ௰௮
சந்ததியாரைநோக்கி, இஸரவேலின் தேவனாகி
ய யெகோவா, நான் இஸரவேலரை எகிப்
தினின்றும் புறப்படச்செய்து, உங்களை எகிப்
தியரின்கைக்கும், உங்களைக் கிலேசப்படுத்தின
சமஸ்தஇராச்சியத்தாரின்கைக்கும்விலக்கி இரட்
சித்தேன்.—உங்கள்சமஸ்ததீமைகளுக்குங்கிலே ௰௯
சங்களுக்கும்விலக்கி, உங்களை இரட்சித்த உங்

---

(௰. அதி. ௧.) அதி.௯.௰௬. ௨.இரா.௯.௩,௬. சங்.௨.௰௨. அப்.௰௩.௨௧. உபா.௩௨.௯. சங்.௭௮.௭௧. (௨) ஆதி.௩௫.௰௯,௨௰. யோசு.௰௮.௨௮. (௩) ஆதி.௨௮.௨௨. ஆதி.௩௫.௧,௩,௭. (௪) நியா.௰௮.௰௫. (௫) வச.௰. அதி.௰௩.௩. அதி.௯.௰௨. யாத்.௰௫.௨௰,௨௧. ௨.இரா.௩.௰௫.௰௨. (௮) அதி.௧.கொரி.௰௪.௧. (௬) எண்.௰௧.௨௫. வச.௰. அதி.௰௯.௨௩,௨௪. (௭) யாத்.௪.௮. லூக்.௨.௰௨. நியா.௯.௩௩. நியா.௬.௰௨. (௮) அதி.௰௧.௰௪,௰௫. அதி.௰௩.௮. (௰) வச.௫. அதி.௰௯.௨௰. வச.௬. (௰௧) அதி.௰௯.௨௪. மத்.௰௩.௫௪,௫௫. யோவா.௭.௰௫. அப்.௪.௰௩. (௰௨) ஏசா.௫௪.௰௩. யோவா.௬.௪௫. யோவா.௭.௰௬. (௰௭) நியா.௰௧.௰௧. அதி.௰௧.௰௫. அதி.௭.௫,௬. (௰௮) நியா.௬.௮,௯. (௰௯) அதி.௮.௭,௰௯. அதி.௰௨.௰௨.

கள் தேவனை நீங்களோ இந்நாளிலே புறக்க
ணித்ததுமன்றி; அவரைநோக்கி, எங்களுக்கோர்
இராசாவை ஏற்படுத்தவேண்டுமென்றுஞ் சொல்
லுகிறீர்களென்கிறார். இப்பொழுது நீங்கள் உங்
கள் வமிசத்தின்படிக்கும், ஆயிரவரான உங்கள்
சேர்வைகளின்படிக்கும்,யெகோவாவின்சந்
௨௰ நிதியில்முற்பட்டு நில்லுங்களென்றான்.—சாமு
வேல்இஸரவேலரின் சமஸ்தகோத்திரங்களையுஞ்
சமீபித்துவரச்செய்தபின்பு, பேன்யாமீன் கோத்
௨௧ திரங்குறிக்கப்பட்டது.—பேன்யாமீன் கோத்தி
ரத்தை வமிசப்படி சமீபித்துவரச்செய்தபின்பு,
மாத்திரிகுடும்பங் குறிக்கப்பட்டது, அதில் கீ
ஷின்புத்திரனாகியஷவுல்குறிக்கப்பட்டான்: அ
வர்கள் அவனைத்தேடினபொழுது அவன்அகப்ப
௨௨ டவில்லை.—இனி அவனிங்கே வருவானோவென்
று அவர்கள் யெகோவாவினிடத்திற்கேட்க,
யெகோவா,அவன்வீட்டுப்பொருளுக்குள்ளே
௨௩ ஒளித்துக்கொண்டிருக்கிறானென்றார்.—அப்பொ
ழுதுஅவர்களோடிப்போய் அவனைக்கொண்டுவ
ந்துவிட்டார்கள்: அவன்சனங்களுக்குள்ளே நிற்
கையில்சமஸ்தசனங்களுந்தன்தோளுக்குக்கீழ்ப்
௨௪ படத்தக்க நெடியவனாய்த் தோற்றினான்.—அப்
பொழுதுசாமுவேல் சமஸ்தசனங்களையும்நோக்
கி,யெகோவாவால் தெரிந்துகொள்ளப்பட்
டவனைப் பாருங்கள், சமஸ்த சனங்களுக்குள்
ளும் இவனுக்கு நிகருண்டாவென்று சொல்ல,
சமஸ்த சனங்களும் ஆரவாரம்பண்ணி, இராசன்
௨௫ வாழ்க என்றார்கள்.—பின்பு சாமுவேல் இராச்சி
யபாரத்தின்முறைமையைச்சனங்களுக்குத்தெரிவித்
து,அதை ஒருபுத்தகத்திலெழுதி, யெகோவா
வின் சந்நிதியில்வைத்துவிட்டு, சமஸ்த சனங்க
ளையும் அவரவர் வீட்டுக்குப்போகும்படியனுப்
பினான்.
௨௬ ஷவுலும் கிபியாவிலிருக்கிற தன்வீட்டுக்குப்
போய்விட்டான்; தேவனாலேவப்பட்ட இருத
யத்தையுடைய ஒரு சனக்கூட்டம் அவனுடன்
௨௭ போயிற்று.—பேலியாலின் மக்கள் இவன் நம்மை
இரட்சிப்பதேதென்றுசொல்லி அவனை அவம
தித்து, அவனுக்குக்காணிக்கைகொண்டுபோகா
மல்விட்டுவிட்டார்கள். அவன் அதைக்கேளாத
வன்போலிருந்தான்.

## ௰௧. அதிகாரம்.

௧. நாகாஷோடும் உடன்படிக்கைசெய்தல்: ௪. இஸரவேல் ஷவுலிடத்தில் தூதனுப்பல்: அவனால் இரட்சைபெறல்: ௰௨. ஷவுல் அபிஷேகம்பெறல்.

அக்காலத்தில் அம்மோனியனாகிய நாகாஷ் பு
றப்பட்டுக் கிலியாத்திலுள்ள யாபேசை முற்
றிக்கைபோட; யாபேஷிலுள்ள சமஸ்தமனித
ரும் நாகாசை நோக்கி, எங்களோடே உடன்ப
டிக்கைபண்ணினால் நாங்கள் உம்மைச்சேவிப்
போமென்றார்கள்.—அதற்கு அம்மோனியனாகி ௨
ய நாகாஷ் அவர்களைநோக்கி, இஸரவேலர் யா
வரும் அவமானமடையும்படி, உங்களெல்லாரு
டைய வலது கண்களையும் பிடுங்காவிட்டால்
அப்படிச் செய்வேனென்று சொல்ல,—யாபே ௩
ஷின் முதியோர் அவனைநோக்கி, நாங்கள் இஸ
ரவேலின் சமஸ்த எல்லைகளுக்குந் தூதர்களை அ
னுப்பும்படி ஏழுநாள் பொறுத்திரும்: எங்களை
இரட்சிக்க ஒருவருமில்லாதிருந்தால், நாங்கள்
உம்மிடத்திற்புறப்பட்டுவருவோமென்றார்கள்.—
அந்தத்தூதர்கள் ஷவுல் இருக்கிற கிபியாவிலே ௪
போய், சனங்களின் செவிக்கேறச் சமாசாரங்க
ளைத்தெரிவித்தபொழுது, சமஸ்தசனங்களுங்கூ
விட்டழுதார்கள்.—அப்பொழுது ஷவுல் மாடுக ௫
ளுக்குப்பின்னாக வயல்வெளியினின்றுவந்து; ச
னங்கள் ஏன் அழுகிறார்களென்றுகேட்க, யாபே
ஷின் மனுஷர்சொல்லிய சமாசாரங்களை அவ
னுக்குத்தெரிவித்தார்கள்.—அந்தச் சமாசாரங்களை ௬
ஷவுல் கேள்விப்பட்டவுடனே தேவனுடைய
ஆவியவன்மேல் வந்தது, அப்பொழுது அவன்
கோபம்மிகவும்மூள,—ஒரிணைமாட்டைப்பிடித் ௭
துக் கண்டதுண்டமாக்கித் தூதர்கையிற்கொடுத்
து, இஸரவேலரின் எல்லையெங்குமனுப்பி, ஷ
வுலுக்குஞ் சாமுவேலுக்கும் பின்னாகப்புறப்பட்
டுவராதவனுடைய மாடுகளுக்கு இப்படிச்செய்
யப்படுமென்று சொல்லுவித்தான். அப்பொழுது
யெகோவா வருவித்தபயம் சனங்கள் மேல்
வந்ததினால், அவர்கள் ஒருமனப்பட்டுப்புறப்
பட்டுவந்தார்கள்.—பேசெக்கில் அவன் அவர் ௮
களைத்தொகையிட்டபொழுது, இஸரவேல் சந்த
தியார் மூன்றுலட்சம்பேர், யூதாவின் சனங்கள்
முப்பதினாயிரம்பேர்.—வந்ததூதர்களை அவர்கள் ௯
நோக்கி, கிலியாத்திலுள்ள யாபேஷின் மனித
ருக்கு, நாளைவெயிலேறும்பொழுது நீங்கள் து
ணை பெறுவீர்களென்று சொல்லுங்களென்றார்
கள். தூதர்கள்வந்து யாபேஷின் மனுஷருக்கு அ
தைத்தெரிவிக்க, அவர்கள் சந்தோஷப்பட்டார்
கள்.—பின்னும்யாபேஷின் மனுஷர், நாளைநாங் ௰
கள் உங்களிடத்தில் புறப்பட்டுவருவோம்,உங்
கள் பார்வைக்குநலமென்றுகண்டதையெல்லாம்
எங்களுக்குச் செய்யலாமென்றார்கள்.—மற்றை ௰௧
நாள் ஷவுல் சனங்களைமூன்று அணியாகவகுத்
தான்; அவர்கள்விடியுஞ்சாமத்திலேபாளயத்தின்
மத்தியில்சென்று வெயிலேறும்வரைக்கும் அம்
மோனியரைக் கொலைசெய்தார்கள்: மீந்திருந்த
வர்களுக்குள்ளேஇருவராகிலும் ஒருமித்துப்போ
காதவண்ணம் சிதற அடிக்கப்பட்டார்கள்.

(௨௰) யோசு.௭.௰௪,௰௬,௰௭. அப்.௧.௨௪,௨௬. (௨௨) அதி.௨௩.௨,௪,௯,௰௧. (௨௩) அதி.௯.௨. (௨௪) ௨.சாமு.௨௧.௬. ௧.இரா.௧.௨௫,௩௯. ௨.இரா.௰௧.௰௨. (௨௫) உபா.௰௭.௰௪. (௨௬) நியா.௨௰.௰௪. (௨௭) அதி.௰௧.௰௨. உபா.௰௩.௰௩. ௨.சாமு.௮.௨. ௧.இரா.௪.௨௧. ௨.நாளா.௰௭.௫. சங்.௭௨.௰. மத்.௨.௰௧.—(௰௧. அதி. ௧.) அதி.௰௨.௰௨. நியா.௨௧.௮. ஆதி.௨௬.௨௮. யாத்.௨௩.௩௨. ௧.இரா.௨௰.௩௪. யோபு.௪௧.௪. எசேக்.௰௭.௰௩. (௨) ஆதி.௩௪.௰௪. அதி.௰௭.௨௬. (௪) அதி.௰.௨௬. ௨.சாமு.௨௧.௬. நியா.௨.௪. நியா.௨௧.௨. (௬) நியா.௩.௰. (௭) நியா.௰௯.௨௯. நியா.௨௧.௫,௮,௰. நியா.௨௰.௧. (௮) நியா.௧.௫. ௨.சாமு.௨௪.௯. (௰) வச.௩. (௰௧) அதி.௩௧.௰௧. நியா.௭.௰௬.

௰௨ பின்பு சனங்கள் சாமுவேலைநோக்கி, ஷவுல்
எங்களை அரசாளுவானென்று சொன்னவர்க
ளார்; அந்த மனுஷரை நாம் கொலைசெய்யும்ப
டி எங்களிடத்தில் கொண்டுவரவேண்டுமென்று
௰௩ சொல்ல,—ஷவுல்,இன்றைத்தினம் தேவன் இ
ஸரவேலருக்குள்ளே இரட்சிப்பைவருவித்தார்;
ஆதலால் இந்தநாளில் ஒருவருங் கொல்லப்பட
௰௪ லாகாதென்றான்.-அப்பொழுதுசாமுவேல்சனங்
களுடனே, நாம் கில்காலுக்குப்போய், அங்கே
இராசரிகத்தைத்திரும்பவும்ஸ்திரப்படுத்துவோம்
௰௫ வாருங்களென்றான்.—அப்படியே சமஸ்த சனங்
களுங் கில்காலுக்குப்போய், அங்கே யெகோ
வாவின்சந்நிதியில்ஷவுலை இராசாவாக ஏற்படுத்
தி;யெகோவாவின்சந்நிதியில்ஸ்தோத்திரபலி
களையிட்டார்கள்; அங்கே ஷவுலும் இஸரவேல
ரனைவரும் மிகவுங் களிகூர்ந்திருந்தார்கள்.

## ௰௨. அதிகாரம்.

௧. சாமுவேல் குற்றமற்றவனெனக்காட்டல்: ௬. சனங்களின் நன்றியீனத்தை வெளிப்படுத்தல்: ௰௬. அரியரியுங் காலத்தில் உண்டான முழக்கத்தினால்பயமடைதல்: ௨௰. சாமுவேல் அவர்களைச் சாந்தப்படுத்திப் புத்திசொல்லல்.

சாமுவேல் இஸரவேலரனைவரிடத்திலும், கே
ளுங்கள், நீங்கள் எனக்குச் சொல்லியதெல்லா
வற்றிலும் உங்கள் வாக்குக்குச்செவிகொடுத்து,
உங்களுக்கொரு இராசாவை ஏற்படுத்தினேன்.-
௨ கேளுங்கள்,இப்பொழுதுஅவர்உங்களுக்குமுன்
பாக இராசாவாய் நிருவாகம்பண்ணிவருகிறார்;
நானோவிருத்தனும் நரைத்தவனுமானேன்; என்
புத்திரர் உங்களோடிருக்கிறார்கள்: நான் என்சி
றுபிராயமுதல் இந்நாள்வரைக்கும் உங்கள்முன்
௩ பாக நடந்துவந்தேன்.—கேளுங்கள், நான் இங்
கேயிருக்கிறேன்: ஆருடைய எருதைப்பிடித்துக்
கொண்டேன்; ஆருடைய கழுதையை எடுத்துக்
கொண்டேன்; ஆருக்கு அநியாயஞ்செய்தேன்;
ஆரைவருத்தினேன்;என்கண்களைமறைவாக்கும்
வண்ணம் ஆரிடத்திற் பரிதானம்வாங்கினேன்;
யெகோவாவின் சந்நிதியிலும், அவரால் அபி
ஷேகம்பண்ணப்பட்டவருக்குமுன்பாகவும் இ
தற்குத்தரஞ்சொல்லுங்கள்: அப்பொழுதுநான்அ
தைஉங்களுக்குத்திரும்பத்தருவேனென்றுசொல்
௪ ல;-அவர்கள், நீர் எங்களுக்கு அநியாயஞ்செய்த
துமில்லை, எங்களை வருத்தினதுமில்லை, ஒருவர்
கையிலும் யாதொன்றையும் வாங்கினதுமில்லை
௫ யென்றார்கள்.-அதற்கவன்அவர்களைநோக்கி,என்
கையிலே நீங்களொன்றையுங் கண்டுபிடித்ததில்
லையென்பதற்குஉங்களுக்கெதிராக, இன்றைத்தி
னம்யெகோவாவுஞ்சாட்சி,அவரால்அபிஷே
கம்பண்ணப்பட்டவருஞ் சாட்சியென்றுசொல்
ல,அதற்குத்தரமாகஅவர்சாட்சிதானென்றார்கள்.
பின்னுஞ் சாமுவேல் சனங்களைநோக்கி,மோ ௬
சேயையும்,ஆரோனையும்ஏற்படுத்தினவரும்,உங்
கள்பிதாக்களை எகிப்துதேசத்தினின்றும் புறப்ப
டச்செய்தவரும் யெகோவாவே.—ஆதலால் ௭
யெகோவா உங்களுக்கும் உங்கள்பிதாக்களுக்
கும் செய்துவந்த நியாயக்கிரியைகளனைத்தையு
மெடுத்து,யெகோவாவின் சந்நிதியில் நான்
உங்களுடனே நியாயம்பேசும்படி, நீங்கள் நில்
லுங்கள்.—யாக்கோபு எகிப்தில்போயிருக்கிறகா ௮
லத்தில், உங்கள் பிதாக்கள் யெகோவாவை
நோக்கி ஓலமிடுகையில், யெகோவா மோசே
யையும்,ஆரோனையும் அனுப்ப, இவர்கள் உங்
கள்பிதாக்களை எகிப்தினின்றும் புறப்படச்செய்
து இந்த ஸ்தானத்திலே வாசம்பண்ணவைத்தார்
கள்.—அவர்கள் தங்கள் தேவனாகிய யெகோ ௯
வாவை மறந்தபொழுது, அவர் ஆத்சோரின் சே
னாபதியாகிய சிசெராவின் கைக்கும், பெலிஸ்தி
யரின் கைக்கும், மோவாபியராசாவின்கைக்கும்
அவர்களை விற்றுப்போட்டார், இவர்கள் அவர்
களுக்கு விரோதமாக யுத்தம்பண்ணினார்கள்.—
அவர்கள் யெகோவாவைநோக்கி ஓலமிட்டு, ௰
நாங்கள் யெகோவாவைவிட்டு, பாகால்களை
யும் அஷ்தாரோத்தையுஞ் சேவித்ததினால் பா
வஞ்செய்தோம்: இப்பொழுது எங்கள் சத்துருக்
கள் கையினின்றும் எங்களை விடுவித்தருளும்,
இனி உம்மைச்சேவிப்போமென்றார்கள்.—யெ ௰௧
கோவா யெருபாகாலையும், பிதானையும், யெப்
தாவையும், சாமுவேலையுமனுப்பி,சுற்றி இருந்த
உங்களசத்துருக்கள் கையினின்றும் விடுவித்தடி
னால் நீங்கள் விக்கினமின்றி வசித்தீர்கள்.—அம் ௰௨
மோன்சந்ததியாரின் இராசாவாகிய நாகாஷ் உங்
களுக்கு விரோதமாய் வருகிறதைக்கண்டு, உங்
கள் தேவனாகிய யெகோவாவே உங்களுக்
கு அரசனாயிருந்தும், நீங்களென்னைநோக்கி,எப்
படியுமெங்களுக்கொரு இராசா வேண்டுமென்
றீர்கள்.—இப்பொழுது நீங்கள் விரும்பித்தெரிந் ௰௩
துகொண்ட இராசாவைப்பாருங்கள்,யெகோ
வா உங்களுக்கொரு இராசாவை ஏற்படுத்தியி
ருக்கிறார்.—நீங்கள் யெகோவாவின் கட்ட ௰௪
ளையை விரோதித்து நடவாமல் யெகோவா
வுக்குப்பயந்து, அவருடைய வாக்குக்கமைந்து,
அவரைச்சேவித்து நடப்பீர்களாகில்; நீங்களும்
உங்களை அரசாளும் இராசாவும் உங்கள் தே
வனாகிய யெகோவாவுக்குப் பின்செல்லுவீர்
கள்:-நீங்கள் யெகோவாவின்வாக்குக்கமைந் ௰௫
துநடவாமல், யெகோவாவின் கட்டளையை

(௰௨) அதி.௰.௨௭.லூக்.௰௯.௨௭. (௰௩)௨.சாமு.௰௯.௨௨.யாத்.௰௪.௰௩,௩௰.அதி.௰௯.௫.(௰௪)அதி.௰.௮. (௰௫)அதி.௰.௰௭.அதி.௰.௮.—(௰௨.அதி.௧.)அதி.௮.௫,௰௯,௨௰.அதி.௰.௨௪.(௨)எண்.௨௭.௰௭.அதி.௮.௧,௫. (௩)வச.௫.அதி.௰.௧.௨.சாமு.௧.௰௪,௰௬.எண்.௰௬.௰௫.அப்.௨௰.௩௩.௧.தெச.௨.௫.உபா.௰௬.௰௯. (௫) யோவா.௰௮.௩௮.அப்.௨௩.௯.யாத்.௨௨.௪. (௬) மீகா.௬.௪. (௭) ஏசா.௧.௰௮. மீகா.௬.௨,௩.நியா.௫.௰௧. (௮) ஆதி.௪௬.௫,௬.யாத்.௨.௨௩.யாத்.௩.௰. (௯) நியா.௩.௭. நியா.௪.௨. நியா.௰.௭. நியா.௩.௰௨. (௰) நியா.௰.௰. நியா.௨.௰௩. நியா.௰.௰௫,௰௬. (௰௧) நியா.௬.௰௪,௩௨. நியா.௰௧.௧.அதி.௭.௰௩. (௰௨) அதி.௰௧.௧.அதி.௮.௫,௰௯.நியா.௮.௨௩. (௰௩) அதி.௰.௨௪.அதி.௮.௫.அதி.௯.௨௰.ஓசி.௰௩.௰௧. (௰௪) யோசு.௨௪.௰௪. சங்.௮௧.௰௩,௰௪. (௰௫) லேவி.௨௬.௰௪,௰௫,.உபா.௨௮.௰௫,.யோசு.௨௪.௨௰.வச.௯.

விரோதித்து நடப்பீர்களாகில், யெகோவா
வின்கரம் உங்கள்பிதாக்களுக்குவிரோதமாயிருந்
ததுபோல உங்களுக்கும் விரோதமாயிருக்கும்.
௰௬ இப்பொழுது யெகோவா உங்கள்பார்வைக்
குமுன்செய்யும்பெரியகாரியத்தை நின்றுபாருங்
௰௭ கள்.—இது கோதுமையரியுங்காலமல்லவா; நான்
யெகோவாவைநோக்கிப்பிரார்த்திப்பேன்,அ
வர் இடிமுழக்கத்தையும் மழையையும் அனுப்பு
வார்;அதைக்கொண்டுநீங்கள் உங்களுக்கொருஇ
ராசாவேண்டுமென்றுகேட்டதினாலே யெகோ
வாவின் பார்வைக்கு முன் நீங்கள்செய்ததீமை
பெரிதென்பதைக் கண்டுணர்வீர்களென்றான்.—
௰௮ அப்படியே சாமுவேல் யெகோவாவைநோக்
கிப் பிரார்த்திக்க; அன்றைத்தினம் யெகோ
வா இடிமுழக்கத்தையும் மழையையும் அனுப்
பினார்: சமஸ்த சனங்களும் யெகோவாவுக்
கும் சாமுவேலுக்கும் மிகவும் பயந்தார்கள்.—
௰௯ அன்றியுஞ் சனங்களெல்லாரும் சாமுவேலை
நோக்கி, நாங்கள்செய்த சகல பாவங்களோடும்
எங்களுக்கொரு இராசாவேண்டுமென்ற தீமை
யையுங் கூட்டிக்கொண்டோம்: இனி நாங்கள்
சாவாதபடி உமது தேவனாகிய யெகோவா
வைநோக்கி அடியார்நிமித்தம் பிரார்த்திப்பீராக
வென்றார்கள்.
௨௰ அப்பொழுதுசாமுவேல்சனங்களைநோக்கி, ப
யப்படாதிருங்கள்: இந்தப்பாவத்தையெல்லாஞ்
செய்தீர்களே: ஆகிலும் நீங்கள் வழுவாமல் யெ
கோவாவைப் பின்பற்றி, உங்கள்பூரண இருத
யத்தோடும் யெகோவாவைச் சேவியுங்கள்,—
௨௧ அவரைவிட்டு விலகாதிருங்கள்: மற்றப்படி பல
னையும் இரட்சிப்பையுந் தராத அபத்தமானவை
களைப்பின்பற்றுவீர்கள்; அவைகள் அபத்தமான
௨௨ வைகளே.—யெகோவா உங்களைத்தமக்குரியச
னங்களாக்கிக்கொள்ளத் திருவுளங்கொண்டார்:
ஆதலால் யெகோவா தமது மகத்துவமான நா
மத்தினிமித்தம் தமது சனங்களைக் கைவிடார்.—
௨௩ நானோ உங்கள்நிமித்தம் பிரார்த்தனைபண்ணுவ
தை விட்டு, யெகோவாவுக்கு விரோதமாகச்
செய்யும் பாவமெனக்குத் தூரமாயிருப்பதாக:
நன்மையுஞ்செவ்வையுமானவழியையேநானுங்
௨௪ களுக்குப் போதிப்பேன்.—நீங்கள் யெகோ
வாவுக்குப்பயந்து, உங்கள் பூரண இருதயத்தோ
டும் அவரை உண்மையாய்ச் சேவிக்கக்கடவீர்
கள்: அவர் உங்களுக்கு எத்தனை மகத்துவமான
காரியங்களைச் செய்திருக்கிறார் என்பதைச்
௨௫ சிந்தித்துப்பாருங்கள்.—இன்னுந் தீமைசெய்வீர்
களாகில்நீங்களும் உங்கள் இராசாவும்நாசமடை
வீர்களென்றான்.

## ௰௩. அதிகாரம்.

௧. ஷவுல் மூவாயிரம்பேரைத்தெரிந்துகொள்ளல்: ௫. யுத்தஞ்செய்யப் பெலிஸ்தியர் ஏகமாய்ச் சேர்தல்: ௮. சாமுவேல் வராமையினால் ஷவுல் பலியிடல்: ௰௧. சாமுவேல் ஷவுலைக்கண்டித்தல்: ௰௭. பெலிஸ்தியரின் மூன்று தளத்தார் புறப்படல்: ௰௯. இஸரவேலர்மத்தியில் கம்மாளர் இல்லாதொழிதல்.

ஷவுல் அரசாண்டு ஒருவருஷஞ் சென்றபின், ௧
இஸரவேலரை இரண்டாம் வருஷம் அரசாண்டு
வருங்காலத்தில்,—இஸரவேலரில் தனக்கு மூவா ௨
யிரம் பேரைத்தெரிந்துகொண்டான்;அவர்களில்
இரண்டாயிரம்பேர் ஷவுலுடனே மிக்மாஷிலும்
பெத்தேல் மலையிலும், ஆயிரம்பேர் யோனதா
னோடே பேன்யாமீன் தேசத்துக் கிபியாவிலுமி
ருந்தார்கள்: மற்றச்சனங்களை அவரவர்கூடாரத்
துக்கு அனுப்பிவிட்டான்.—யோனதான் கேபா ௩
விலே பாளயம்போட்டிருந்த பெலிஸ்தியரை மு
றிய அடித்தான், பெலிஸ்தியர்கள் அதைக்கேள்
விப்பட்டார்கள். அதனால்ஷவுல்எபிரேயர்கேட்
கக்கடவர்களென்றுசொல்லித்தேசமெங்கும் எக்
காளமூதுவித்தான்.—சமஸ்தஇஸரவேலரும், தா ௪
ணயத்தையுடைய பெலிஸ்தியரை ஷவுல் முறி
ய அடித்தானென்றும், இஸரவேலரும்பெலிஸ்தி
யருக்குத் துர்க்கந்தமானார்களென்றுஞ்சொல்லக்
கேள்விப்பட்டார்கள். பின்பு சனங்கள் ஷவு
லுக்குப் பின்செல்லும்படி கில்காலில் அழைக்
கப்பட்டார்கள்.—இஸரவேலரோடு யுத்தம்பண் ௫
ணும்படி பெலிஸ்தியர் முப்பதினாயிரம் இர
தத்தோடும், ஆறாயிரங்குதிரை வீரரோடும் கடற்
கரைமணல்போலுந் திரளானசனங்களுடன் கூ
டிப்புறப்பட்டுவந்து, பேதாவெனுக்குக் கீழ்த்
திசையிலுள்ள மிக்மாஷிலே பாளயம் இறங்கி
னார்கள்.—அதினால் சனங்கள் கிலேசப்பட்டார் ௬
கள், இஸரவேல் சனங்கள் தங்களுக்கு ஆபத்து
நேரிட்டதைக்கண்டு, கெபிகளிலும், முட்காடு
களிலும், கல்மலைகளிலும்,துருக்கங்களிலும், கு
கைகளிலுமொளித்துக்கொண்டார்கள்.—எபிரே ௭
யரிற் சிலர்யோர்தானையுங்கடந்து காத்தேசத்துக்
குங் கிலியாத் தேசத்துக்கும்போனார்கள். ஷவு
லோ பின்னுங் கிலியாத் தேசத்திலிருந்தான்; சக
லசனங்களும் நடுநடுங்கிக்கொண்டு அவனுக்குப்
பின்சென்றார்கள்.—அவன் தனக்குச் சாமுவேல் ௮
குறித்தகாலத்தின்படி, ஏழுநாள்வரைக்கும் காத்
திருந்தான்: சாமுவேல் கில்காலுக்குவரவில்லை;
சனங்கள் அவனைவிட்டுக் கலைந்துபோனார்கள்.—
அப்பொழுது ஷவுல் தகனபலியையும் ஸ்தோத் ௯
திரபலிகளையுங்கொண்டுவாருங்களென்றுசொல்

(௰௬) யாத்.௰௪.௰௩,௩௧. (௰௭) நீதி.௨௬.௧. யோசு.௰.௰௨. யாக்.௫.௰௬,௰௭,௰௮. அதி.௮.௭. (௰௮) யாத்.௰௪.௩௧. எஸ்ரு.௰.௯. (௰௯) யாத்.௯.௨௮. யாக்.௫.௰௫. ௧.யோவா.௫.௰௬. (௨௧) உபா.௰௧.௰௬. எரே.௰௬.௰௯. அபகூ.௨.௰௮. ௧.கொரி.௮.௪. (௨௨) ௧.இரா.௬.௰௩. சங்.௯௪.௰௪. யோசு.௭.௯. சங்.௱௬.௮. எரே.௰௪.௨௧. எசேக்.௨௰.௯,௰௪. உபா.௭.௭,௮. உபா.௰௪.௨. மல்.௧.௨. (௨௩) அப்.௰௨.௫. ரோ.௧.௯. கொலோ.௧.௰௯. ௨.தீமோ.௧.௩. சங்.௩௪.௰௧. நீதி.௪.௰௧. ௧.இரா.௮.௩௬. ௨.நாளா.௬.௨௭. எரே.௬.௰௬. (௨௪) பிர.௰௨.௰௩. ஏசா.௫.௰௨. உபா.௰.௨௧. சங்.௱௨௬.௨,௩. (௨௫) யோசு.௨௪.௨௰. உபா.௨௮.௩௬.—(௰௩. அதி. ௨.) அதி.௰.௨௬. (௩) அதி.௰.௫. (௪) ஆதி.௩௪.௩௰. யாத்.௫.௨௧. (௬) நியா.௬.௨. (௮) அதி.௰.௮.

௰ லி, தானே தகனபலியையிட்டான்.—அவன் தக
னபலியிட்டு முடிந்தவுடனே சாமுவேல்வர, ஷ
வுல் அவனுக்கு வாழ்த்துதல் சொல்லும்படி அவ
௰௧ னுக்கெதிர்கொண்டுபோனான்.—சாமுவேல் நீர்
செய்ததென்னவென்றுகேட்க; ஷவுல் சனங்கள்
என்னைவிட்டுக் கலைந்துபோனதையும், குறித்த
நாள்களுக்குள்ளே நீர் வராததையும், பெலிஸ்தி
யர் மிக்மாஷிலே கூடிவந்திருக்கிறதையும் நான்
௰௨ கண்டு;—பெலிஸ்தியர் கில்காலில் எனக்கு வி
ரோதமாக வந்துவிடுவார்களே, நான் யெகோ
வாவின் சந்நிதியில் விண்ணப்பம் பண்ணவில்
லையேயென்று துணிந்து ஒரு தகனபலியையிட்
௰௩ டேன் என்றான்.—அப்பொழுது சாமுவேல் ஷ
வுலைநோக்கி, நீர் செய்தது புத்தியீனம்: உமது
தேவனாகிய யெகோவா உமக்குவிதித்தகட்
டளையை நீர் கைக்கொள்ளவில்லை: யெகோ
வா இஸ்ரவேலருக்குள்ளே உம்முடையஆளுகை
யை நித்தமும் நிலைப்படுத்தத் திருவுளங்கொண்
௰௪ டிருந்தாரே.—இனி உமது ஆளுகை நிலைப்பட
மாட்டாது: யெகோவா தமது உள்ளத்துக்
கேற்ற ஒரு மனிதனைத்தேடிக்கொண்டார், யெ
கோவா உமக்குக்கட்டளையிட்டதை நீர் காத்
துக்கொள்ளாதபடியினாலே, யெகோவா அவ
னைத் தமது சனங்களுக்கு அதிபதியாக ஏற்ப
௰௫ டுத்தியிருக்கிறார்என்றான்.—பின்பு சாமுவேல் எ
ழுந்திருந்து, கில்காலை விட்டுப் புறப்பட்டுப்
பென்யாமீன் தேசத்திலுள்ள கிபியாவுக்குப்போ
னான். ஷவுல்தன்னோடிருந்தசனங்களைத்தொகை
பார்த்தபொழுது, ஏறக்குறைய அறுநூறுபேர் இ
௰௬ ருந்தார்கள்.—ஷவுலும், அவன்புத்திரனாகிய யோ
னத்தானும், அவர்களோடிருந்தசனங்களும், பென்
யாமீன் தேசத்திலுள்ளகிபியாவில்இருந்தார்கள்:
பெலிஸ்தியரோ மிக்மாஷிலே பாளயமிறங்கியி
௰௭ ருந்தார்கள்.—கொள்ளைக்காரர்பெலிஸ்தியரின்பா
ளயத்திலிருந்து மூன்று தண்டாகப் புறப்பட்
டார்கள்: ஒரு தண்டு ஒபிறாவழியாய் ஷூவால்
௰௮ தேசத்துக்கு நேராய்ப்போயிற்று.—வேறொருதண்
டு பேத்தோரோன் வழியாய்ப்போயிற்று: மற்றத்
தண்டு வனத்திலுள்ள சேபோயிமின் தாழ்ந்தபூ
மிக்கெதிர்ப்புறமான எல்லையின்வழியாய்ப்போ
௰௯ யிற்று.—கட்கங்களையாகிலும், ஈட்டிகளையாகி
லும் செப்பனிட எபிரேயரை விடப்படாதென்
பதைப்பெலிஸ்தியர் பேசியிருந்ததினால், இஸர
வேலரின் தேசமெங்கும் ஒரு கம்மாளனும் அகப்
௨௰ படவில்லை.—இஸரவேலர் யாவருந் தங்கள் தங்
கள் கொழுவையும், மண்வெட்டியையும், கோ
டரியையும், பாரையையும் கூர்மையாக்குகிறதற்
குப் பெலிஸ்தியரிடத்திற்போய் வருவார்கள்.—
௨௧ பாரைகளையும், மண்வெட்டிகளையும், முட்கூ
ருள்ள ஆயுதங்களையும், கோடரிகளையும், தாற்
றுக்கோல்களையும் கூர்மையாக்குகிறதற்கு அரங்
கள் அவர்களிடத்திலுண்டு.—யுத்தம் நடந்தநா ௨௨
ளில் ஷவுலிடத்திலும், அவன் புத்திரனாகிய யோ
னத்தானிடத்திலுமேயன்றி, ஷவுலோடும்யோனு
த்தானோடும் இருந்தசனங்களிலொருவர்கையிலும்
கட்கமுமில்லை ஈட்டியுமில்லை.-பெலிஸ்தியரின் ௨௩
பாளயம் மிக்மாஷுக்குப் போகும்வழிமட்டும் ப
ரம்பியிருந்தது.

## ௰௪. அதிகாரம்.

௧. யோனத்தான் பெலிஸ்தியரின் துருக்கத்தைவி
ரோதித்தல்: ௪. துருக்கத்தைப்பிடித்தல்: ௰௧.
தோல்வியடைந்தவர்களைப் பின்றொடரும்படி
சனங்கள் ஏகமாய்க்கூடல்: ௨௪. யோனத்தான்
ஷவுலிடுவித்த ஆணையை மீறல்: ௩௧. சனங்கள்
மாமிசத்துடன் இரத்தத்தைப்புசித்ததினால் தோ
ஷமடைதல்: ௩௬. யோனத்தான் சனங்களால்
இரட்சைபெறல்: ௪௭. ஷவுலின் சங்கதிகளை
விவரித்தல்: ௪௯. ஷவுலின் வமிசவரலாற்றை
யெடுத்துக்காட்டல்.

ஒருநாள் ஷவுலின் புத்திரனாகிய யோனத்தான் ௧
தன்னாயுததாரியாகிய வாலிபனைநோக்கி, நாம் க
டந்து எதிர்ப்புறத்திலுள்ள பெலிஸ்தியரின் தா
ணயத்துக்குப்போவோம்வாவென்றான். அவன்
அதைத்தன் பிதாவுக்குச்சொல்லவில்லை.—ஷவு ௨
லோ கிபியாவின் கடையெல்லையாகிய மிக்ரோ
னிலேஒருமாதுளமரத்தின்கீழிருந்தான்: அவனோ
டிருந்த சனங்கள் ஏறக்குறைய அறுநூறுபேர்.—
ஷீலோவிலே யெகோவாவின் ஆசாரியனா ௩
யிருந்த ஏலியின் பௌத்திரனும், பீனிகாசின்புத்
திரனுமான இக்காபோத்தின் சகோதரனும், அ
கீதூப்பின் புத்திரனுமாகிய ஏபோத்து வஸ்திரத்
தைத்தரித்த அகியாவென்பவனுமிருந்தான். யோ
னத்தான்போனதுசனங்களுக்குத்தெரியவில்லை.—
யோனத்தான்கடந்துபெலிஸ்தியரின்தாணயத்துக் ௪
குப்போகத்துணிந்த வழிநடுவே, இப்புறத்தில் ஒ
ரு கூர்மையானகுன்றும், அப்புறத்தில் ஒருகூர்
மையான குன்றும் இருந்தன; ஒன்றுக்குப்பேர்
போத்சேத்ஸ், மற்றொன்றுக்குப்பேர் சேனே.—
அந்தக் குன்றுகளிலொன்று வடக்கே மிக்மா ௫
ஷுக்கு எதிர்ப்புறமாகவும், மற்றது தெற்கே கிபி
யாவுக்கு எதிர்ப்புறமாகவுமிருந்தன.—யோனு ௬
த்தான் தன்னாயுதம் சுமந்துபோகிறவனாகிய வாலி
பனைநோக்கி, நாம் தாண்டி விருத்தசேதனம்இல்
லாத இவர்களுடைய தாணயத்துக்குப்போவோ
ம்வா: யெகோவா நமக்காக ஒருகாரியஞ்செய்
யவுங்கூடும்: பலரைக்கொண்டாவது, சிலரைக்
கொண்டாவது இரட்சிப்புச் செய்வதற்கு யெ
கோவாவுக்குத் தடையுண்டோவென்றுசொல்
ல.—அவனாயுததாரி அவனைநோக்கி, உமது மன ௭
திலுள்ள எல்லாவற்றின்படிக்குஞ்செய்யும்: அப்
படிப்போம்; கேளும், உமது மனதின்படி நானு
மும்முடன் வருகிறேனென்றான்.—அப்பொழு ௮

(௰௩) ௨.நாளா.௰௬.௯. அதி.௰௫.௰௧. (௰௪) அதி.௰௫.௨௮. சங்.௮௯.௨௰. அப்.௰௩.௨௨. (௰௫) அதி.௰௪.௨. (௰௬) வச.௩. (௰௭) யோசு.௰௮.௨௩. (௰௮) யோசு.௰௬.௩. யோசு.௰௮.௰௩,௰௪. நிகி.௰௧.௩௪. (௰௯) ௨.இரா.௨௪.௰௪. எரே.
௨௪.௧. (௨௨) நியா.௫.௮. (௨௩) அதி.௰௪.௧,௪.—(௰௪. அதி. ௨.) அதி.௰௩.௰௫. (௩) அதி.௨௨.௯,௰௧,௨௰. அதி.௪.
௨௧. அதி.௨.௨௮. (௪) அதி.௰௩.௨௩. (௬) நியா.௭.௪,௭. ௨.நாளா.௰௪.௰௧.

துயோனாதான், கேள், நாம்கடந்து அந்தமனிதரி
டத்தில்போய்,அவர்களுக்குவெளிப்படுவோம்.-
௯ அவர்கள்நம்மைநோக்கி,நாங்கள்உங்களிடத்தில்
வருமட்டும் நீங்கள் நில்லுங்களென்றுசொல்வார்
களாகில்; நாம்அவர்களிடத்தில்ஏறிப்போகாமல்
௰ நின்ற ஸ்தானத்தில் நிற்போம்.—எங்களிடத்தில்
ஏறிவாருங்களென்று சொல்வார்களாகில்; யெ
கோவா நமதுகையில்அவர்களைஒப்பித்தாரென்
று ஏறிப்போவோம்: இது நமக்கடையாளமென்
௰௧ றான்.—பின்பு அவ்விருவரும் பெலிஸ்தியரின்
தாணயத்துக்குமுன் வெளிப்பட்டார்கள்; பெ
லிஸ்தியர், பாருங்கள், எபிரேயர் தாங்கள் ஒளித்
துக்கொண்டிருந்த வளைகளைவிட்டுப் புறப்படுகி
௰௨ றார்களென்றார்கள்.—தாணயத்திலுள்ள மனிதர்
யோனாதானையும் அவன் ஆயுததாரியையும்நோக்
கி, ஏறிவாருங்கள், உங்களுக்கு ஒருகாரியம் அறி
விப்போமென்றார்கள். யோனாதான் தன்னாயுத
தாரியைநோக்கி, யெகோவா அவர்களை இஸ
ரவேலர் கையிலொப்பித்தார்: எனக்குப்பின்னாக
௰௩ ஏறிவாவென்றுசொல்லி,—யோனாதான் தன்கை
கால்களினாலே தவழ்ந்துபோனான், அவன் ஆயுத
தாரியும் அவனுக்குப்பின்னாக ஏறினான்: அப்
பொழுதவர்கள் யோனாதானுக்கு முன்விழுந்தார்
கள்; அவனாயுததாரி அவனுக்குப்பின்னாகவெட்
௰௪ டிக்கொண்டே போனான்.—யோனாதானும் அ
வன் ஆயுததாரியும் முதல் முதல் அடிக்க, அரை
யேர்நிலத்துக்குள் ஏறக்குறைய இருபதுபேர்வி
௰௫ ழுந்தார்கள்.—அப்பொழுது பாளயத்திலும் வெ
ளியிலும் சமஸ்தசனங்களிடத்திலும்நடுக்கமுண்
டாயிற்று: தாணயத்தில் உள்ளவர்களையும்கொள்
ளைக்காரரையும் நடுக்கம்பிடித்தது, பூமியதிர்ந்த
து: இவ்வண்ணமே மிகவும்பெரியபயங்கரமுண்
௰௬ டாயிற்று.—அந்தச் சனக்கூட்டத்தார் ஒருவரை
ஒருவர் அடித்துக்கொண்டு கரைந்துபோவதை,
பேன்யாமீன் கிபியாவிலுள்ள ஷவுலின்காவலா
௰௭ ளர் கண்டார்கள்.—அப்பொழுது ஷவுல் தன்னோ
டிருந்த சனங்களைநோக்கி, நம்மைவிட்டுப்போ
னவர்கள் யாரென்று எண்ணிப்பாருங்களென்
றான். அவர்கள் எண்ணினபொழுது யோனாதா
௰௮ னும் அவன் ஆயுததாரியும் அங்கேயில்லை.—ஷ
வுல் அகியாவைநோக்கி, தேவனுடைய பெட்
டியைக் கொண்டுவாவென்றான். அக்காலத்தி
லே தேவனுடைய பெட்டி இஸரவேல் சந்ததி
௰௯ யாரிடத்திலிருந்தது.—ஷவுல் ஆசாரியனோடே
சம்பாஷித்துக்கொண்டிருக்கையில்,பெலிஸ்திய
ரின் பாளயத்தில் கலகம்வரவர அதிகரித்தது: அ
தனால் ஷவுல்ஆசாரியனைநோக்கி,இனியிருக்கட்
௨௰ டுமென்றான்.—பின்பு ஷவுலும் அவனோடிருந்
த சனங்களும் ஏகமாய்க்கூடி, யுத்தகளத்துக்குப்
போய்ச்சேர்ந்தார்கள்: அவர்களுக்குள்ளே ஒரு
வர்கட்டம் ஒருவருக்கு விரோதமாயிருந்ததினால்
மகாசங்காரமுண்டாயிற்று.—சிலநாளுக்குமுன் ௨௧
னே பெலிஸ்தியருடன்கூடிப் பாளயத்துக்கே
றிப்போன எபிரேயரும் ஷவுலோடும் யோனா
தானோடும் இருந்த இஸரவேலரோடே கூடிக்
கொண்டார்கள்.—எப்ராயீம் மலையில் ஒளித்தி ௨௨
ருந்த இஸரவேலர் சமஸ்தரும், பெலிஸ்தியர் மு
றிந்தோடி விட்டார்களென்று கேள்விப்பட்டவு
டனே, தாங்களும் யுத்தத்திலே துரிதமாய் அவர்
களைப்பின்தொடர்ந்தார்கள்.-இப்படி யெகோ ௨௩
வா அந்நாளில் இஸரவேலரை இரட்சித்தார்:
யுத்தம் பேதாவென்மட்டும் பரந்தது.—நானென் ௨௪
சத்துருக்களிடத்தில் பழிவாங்கவேண்டுமே, சா
யங்காலத்துக்குமுன் போசனம் பண்ணுகிறவ
னெவனோ அவன் சபிக்கப்படக்கடவனென்று
ஷவுல்சனங்களுக்கு ஆணையிட்டதினிமித்தம் ச
னங்களிலொருவரும்போசனமுட்கொள்ளவில்
லை; அதனால் இஸரவேலர்அன்றைத்தினம் வருத்
தப்பட்டார்கள்.—அத்தேசத்தாராகிய சமஸ்தரும் ௨௫
ஒருகாட்டிலேவந்தார்கள்: அங்கேதரையிலே தே
ன்ஒழுகியிருந்தது.-சனங்கள் காட்டிற்பிரவேசித் ௨௬
துத் தேன் ஒழுகியிருக்கிறதைக்கண்டும், ஒருவ
னும் தன் கையை வாயில் இடவில்லை: சனங்
கள்ஆணையினிமித்தம் பயந்தார்கள்.—யோனாதா ௨௭
னோ தன்பிதா சனங்களுக்கு ஆணையிட்டதைக்
கேள்விப்படவில்லை: ஆதலால் அவன் தன்கை
யிலிருந்த கோலைநீட்டி, அதின்நுனியைத்தேன்
கூட்டிலே தோய்த்து, அதை எடுத்துத் தன்வாயி
லிட்டுக்கொண்டான்: அதனால் அவன் கண்கள்
தெளிந்தன.-அப்பொழுது சனங்களிலொருவன் ௨௮
இன்றைத்தினம் புசிக்கிறவனெவனோ, அவன்
சபிக்கப்பட்டவனென்று சொல்லி உமது பிதா
சனங்களுக்கு ஆணையிட்டார். சனங்கள் இளைத்
துப்போனார்களேயென்றுசொல்ல,-யோனாதான் ௨௯
என்பிதா தேசத்தை வருத்தினாரே: நானிந்தத்தே
னிற்கொஞ்சம் பருகினதினால் என் கண்கள்தெ
ளிந்தன, பாருங்கள்.—இப்படியே சனங்கள் ௩௰
இன்றைத்தினம் தங்களுக்குக்கிடைத்த தங்கள்
சத்துருக்களின் கொள்ளைப்பொருள்களிலே தே
னும் புசித்திருந்தார்களாகில் எவ்வளவு நலமா
கும்; பெலிஸ்தியருக்குள் உண்டான அழிவு மி
கவும் அதிகமாயிருக்கமாட்டாதாவென்றான்.—
அவர்கள் அன்றைத்தினம் பெலிஸ்தியரை மிக் ௩௧
மாஷ்தொடங்கி அயாலோன்மட்டும் முறிய அ
டித்தார்கள்: சனங்கள் மிகவும் இளைத்துப்போ
னார்கள்.—அப்பொழுது சனங்கள் கொள்ளைப் ௩௨
பொருளின்மேற் பறந்து, ஆடுமாடுகளையும், கன்
றுகளையுந் தரையிலேபோட்டு அடித்து, இரத்தத்
தோடும்புசித்தார்கள்.—அப்பொழுது அவர்கள் ௩௩
ஷவுலைநோக்கி, சனங்கள் இரத்தத்துடன் புசித்
ததினால் யெகோவாவுக்கு விரோதமாகப்பா
வஞ்செய்கிறார்களென்றுதெரிவிக்க, அவன், நீங்

(௰) ஆதி.௨௪.௰௪. நியா.௭.௰௧. (௰௪) நியா.௭.௨௧. (௰௫) ௨.இரா.௭.௭. யோபு.௰௮.௰௧. அதி.௰௩.௰௭. ஆதி.௩௫.௫. (௰௬) வச.௨௰. (௰௯) எண்.௨௭.௨௧. (௨௰) நியா.௭.௨௨. ௨.நாளா.௨௰.௨௩. (௨௨) அதி.௰௩.௬. (௨௩) யாத்.௰௪.௩௰. சங்.௪௪.௬,௭. ஓசி.௧.௭. அதி.௰௩.௫. (௨௪) யோசு.௬.௨௬. (௨௫) உபா.௯.௨௭. மத்.௩.௫. யாத்.௩.௮. எண்.௰௩.௨௭. மத்.௩.௪. (௩௨) லேவி.௩.௰௭. லேவி.௭.௨௬. லேவி.௰௭.௰. லேவி.௰௯.௨௬. உபா.௰௨.௰௬,௨௩,௨௪.

கள் துரோகஞ்செய்தீர்கள்: இன்றைக்கு என்னி
டத்தில் ஒரு பெரியகல்லை உருட்டிக்கொண்டு
௩௪ வாருங்களென்றான்.—பின்னும் ஷவுல் நீங்கள்
சனங்களுக்குள்ளே திரிந்து, அவர்களைநோக்கி,
நீங்களுங்களுங்கள் ஆடுமாடுகளை என்னிடத்தில்
கொண்டுவந்து, இங்கே அடித்துப்புசிக்கவேண்
டும்; இரத்தத்துடன் புசிப்பதினால் யெகோ
வாவுக்கு விரோதமாகப் பாவஞ்செய்யாதிருப்
பீர்களாகவென்று சொல்லுங்களென்றான். அதி
னால் சமஸ்தசனங்களும் அன்றிரவு தங்கள் தங்
கள் மாடுகளைக்கொண்டுவந்து அங்கே அடித்
௩௫ தார்கள்.—பின்பு ஷவுல் யெகோவாவுக்கு
ஒரு வேதிகையை யுண்டாக்கினான்: அதுவே
யெகோவாவுக்கு அவன் முதல் உண்டாக்கி
௩௬ ய வேதிகை.—அப்புறம் ஷவுல், நாம் இன்றிரவு
புறப்பட்டு, பெலிஸ்தியரைத்தொடர்ந்து, அரு
ணோதயமட்டும் அவர்களிலொருவரையும் மீந்தி
ருக்கவிடாமல் நாசப்படுத்துவோமென்றுசொல்
ல; அவர்கள் உம்முடைய பார்வைக்குநலமென்
று கண்டதைச் செய்யுமென்றார்கள். ஆசாரிய
னோ நாமிங்கே தேவ சந்நிதியிற்சேரக்கடவோ
௩௭ மென்றான்.—அப்பொழுது ஷவுல் நான் புறப்
பட்டுப் பெலிஸ்தியரைத் தொடரலாமா; இஸ
ரவேலர்கையில் அவர்களை ஒப்பிப்பீராவென்
று தேவனிடத்தில்கேட்க; அவர் அந்நாளில்
௩௮ உத்தரங்கொடுக்கவில்லை.—ஷவுல் சகலவித ச
னங்களும் இங்கே சேர்ந்துவாருங்கள்: இன்
றைத்தினம் உண்டான பாவம் இன்னதென்று
௩௯ பார்த்தறியுங்கள்.—அது என் புத்திரனாகிய யோ
னாதானிலே காணப்பட்டாலும், இஸரவேலரை
இரட்சிக்கும் யெகோவா நித்தியரானால், அ
வன் மரிக்கவேவேண்டுமென்றான். சகல சனங்
களுள்ளும் ஒருவனும் அதற்கு உத்தரஞ்சொல்ல
௪௰ வில்லை.—அவன் இஸரவேலர் யாவரையும்நோக்
கி, நீங்கள்ஒருபக்கத்திலேயிருங்கள்,நானும் என்
மகனாகிய யோனாதானும் மற்றப்பக்கத்திலேயி
ருப்போமென்று சொல்ல; சனங்கள் ஷவுலை
நோக்கி, உமதுபார்வைக்கு நலமென்று கண்ட
௪௧ தைச் செய்யுமென்றார்கள்.—அப்பொழுது ஷ
வுல் இஸரவேலின் தேவனாகிய யெகோவா
வைநோக்கி, யதார்த்தமுள்ள சீட்டைத் தரக்க
டவீரென்றான். ஷவுலும் யோனாதானும் குறிக்
கப்பட்டார்கள்: சனங்களோ தப்பிவிட்டார்
௪௨ கள்.—பின்பு ஷவுல் எனக்கும் என் புத்திரனாகிய
யோனாதானுக்கும் சீட்டுப்போடுங்களென்றான்.
௪௩ யோனாதான் குறிக்கப்பட்டான்.—அப்பொழு
து ஷவுல் யோனாதானைநோக்கி, நீ என்னசெய்
தாய்சொல்லென்றுகேட்க; யோனாதான் அவனை
நோக்கி, என்கையிலிருந்தகோலின் நுனியினால்
கொஞ்சந்தேனெடுத்துச்சுவைத்தேன்,நான் மரிக்
கவேண்டுமென்றான்.—அதற்கு ஷவுல் யோனா ௪௪
தானே, யெகோவா அப்படியாயினும் அதற்க
திகமாயினும்எனக்குச்செய்தாலும், நீ மரிக்கவே
வேண்டுமென்றான்.—அப்பொழுது சனங்கள் ௪௫
ஷவுலைநோக்கி, இஸரவேலருக்குள்ளே இந்தப்
பெரிய இரட்சிப்பைச்செய்த யோனாதான் மரிக்
கலாமா; அது வேண்டாம்: தேவன் தன்னு
டன்துணைநிற்க அவன்இன்றுகாரியஞ்சித்திக்கப்
பண்ணினான்; ஆகையினால் யெகோவா நித்
தியரானால் அவன் தலைமயிர்களிலொன்றுந்தரை
யிலே விழப்படாதென்றார்கள். அவ்வண்ணமே
சனங்கள் யோனாதானைச் சாவாதபடி விடுவித்
தார்கள்.—பின்பு ஷவுல் பெலிஸ்தியரைத் தொ ௪௬
டராமல் திரும்பிவிட்டான்: பெலிஸ்தியருந்தங்
கள் ஸ்தானத்திற்குப்போய்விட்டார்கள்.—இப் ௪௭
படியே ஷவுல் இஸரவேலரை அரசாளுவதில்
நிலைபெற்றான், நான்குதிசையிலுமுள்ள தன் சத்
துருக்களாகியமோவாபியருக்கும்,அம்மோன்சந்
ததியாருக்கும், ஏதோமியருக்கும், சோபாவின்
இராசாக்களுக்கும், பெலிஸ்தியருக்கும் விரோ
தமாகயுத்தஞ்செய்து, தான்போகும் எவ்விடத்
திலுள்ளவர்களையும் அடக்கினான்.—அவன்பராக் ௪௮
கிரமங்காட்டி, அமலேக்கியரை முறிய அடித்
து, இஸரவேலரைத் துயரப்படுத்தினவர்கள்கை
யினின்று அவர்களை விடுவித்தான்.—ஷவுலின் ௪௯
புத்திரர் யோனாதான், இஷ்வி, மல்கீஷுவா என்
பவர்களே: அவன்புத்திரிகளிருவரில் மூத்தவள்
பெயர் மேரப், இளையவள்பெயர் மீகாள்.—ஷ ௫௰
வுலின் மனைவியின்பெயர் அகினோவாம், அவள்
அகீமாத்சின்புத்திரி: அவன் சேனாபதியின் பெ
யர் அப்னேர், அவன் ஷவுலின் சிறியபிதாவாகி
யநேரின் புத்திரன்.—ஷவுலின் பிதா கீஷ; அப் ௫௧
னேரின்பிதாவாகியநேர் அபீயேலின்புத்திரன்.-
ஷவுலின் காலமுழுவதும் பெலிஸ்தியருக்குவி ௫௨
ரோதமாகக்கடுமையான யுத்தம்நடந்தது: ஷவுல்
ஒரு பராக்கிரமசாலியையாகிலும், யுத்தவீரனை
யாகிலும் கண்டானாகில், தன்னிடத்திற் சேர்த்
துக்கொள்ளுவான்.

## ௰௫. அதிகாரம்.

௧. அமலேக்கியருக்குவிரோதமாக ஷவுல் அனுப்பப்படல்: ௬. கேனியர்மேல் அவன் தயையும் அமலேக்கியர்மேல் நிருதயையுங் காட்டல்: ௰. ஷவுல் தேவனுடையகட்டளையைமீறல்: ௨௪. கட்டளை மீறினதினிமித்தம் சாமுவேல் அவனுக்குவருந் தண்டனையை அறிவித்தல்: ௩௨. அகாக்கைக்கொலைசெய்தல்: ௩௪. சாமுவேல் தன்வீட்டுக்குச்செல்லல்.

சாமுவேல் ஷவுலைநோக்கி, யெகோவாதம ௧
து சனங்களாகிய இஸரவேலருக்கு உம்மை இ
ராசாவாக அபிஷேகம்பண்ணும்படி என்னைய

(௩௫) அதி.௭.௰௭. (௩௭) அதி.௨௮.௬. (௩௮) யோசு.௭.௰௪. அதி.௰.௰௯. நியா.௨௰.௨. (௩௯) ௨.சாமு.௰௨.௫. (௪௧) நீதி.௰௬.௩௩. அப்.௧.௨௫. யோசு.௭.௰௬. அதி.௰.௨௰,௨௧. (௪௩) யோசு.௭.௰௯. வச.௨௭. (௪௪) ரூத்.௧.௰௭. வச.௩௯. (௪௫) ௨.சாமு.௰௪.௰௧. ௧.இரா.௧.௫௨. லூக்.௨௧.௰௮. (௪௭) அதி.௰௧.௰௧. ௨.சாமு.௰.௬. (௪௮) அதி.௰௫.௩,௭. (௪௯) அதி.௩௧.௨. ௧.நாளா.௮.௩௩. (௫௧) அதி.௯.௧. (௫௨) அதி.௮.௰௧.—(௰௫. அதி. ௧.) அதி.௯.௰௬.

னுப்பினாரே: ஆதலால் யெகோவாவுடைய
௨ வாக்கின் சத்தத்தைக்கேளும்.—சேனைகளுக்கு
அதிபதியாகிய யெகோவா, இஸரவேலர் எ
கிப்தைவிட்டுப் புறப்பட்டபொழுது அமலேக்
கியர் வழியிலே விரோதித்துச் செய்ததை நான்
௩ உள்ளத்தில் வைத்திருக்கிறேன்.—இப்பொழுது
நீபோய் அமலேக்கியரை அடித்து, அவர்களுக்
குண்டான யாவற்றையுமழித்து; அவர்களுக்கு
இரங்காமல் ஸ்திரி புருஷர்களையும், பிள்ளைகளை
யும், குழந்தைகளையும், ஆடுமாடுகளையும், ஒட்ட
கங்களையும், கழுதைகளையும்கொலைசெய்யக்கட
௪ வாயென்று சொல்லுகிறாரென்றான்.—அப்பொ
ழுது ஷவுல் சனங்களைவரவழைத்து, திலாயீமி
லே அவர்களைத் தொகைபார்த்தான், காலாள்
கள் இரண்டுலட்சம்பேர், யூதசனங்கள் பதினா
௫ யிரம்பேர்.—பின்பு ஷவுல் அமலேக்கியரின் ஒ
ருநகரத்திற்சேர்ந்து, தாழ்ந்தபூமியில் பதிவிடை
௬ வைத்தான்.—ஷவுல் கேனியரைநோக்கி, இஸர
வேலர் எகிப்தைவிட்டுப்புறப்பட்டுவருகிறபொ
ழுது, நீங்கள் அவர்கள்யாவருக்கும் தயைசெய்
தீர்கள்: அமலேக்கியருடன் நான் உங்களைச்சங்
கரியாதபடி, நீங்கள் அவர்களிடத்தினின்றும் பு
றப்பட்டுப் போய்விடுங்களென்றுசொல்ல, கே
னியரும் அப்படியே அமலேக்கியரிடத்தினின்
௭ றுபுறப்பட்டுப்போய்விட்டார்கள்.—ஷவுல் அவி
லாதொடங்கி எகிப்துக் கெதிர்ப்புறத்திலுள்ள
ஷூர்வரைக்கும் இருந்த அமலேக்கியரை அடித்
௮ து,—அமலேக்கியரின் இராசாவாகிய அகாக்கை
உயிரோடேபிடித்துக்கொண்டு, சனங்கள் யாவ
ரையும் கட்கத்தின்வாயினாலே சங்கரித்தான்.—
௯ ஷவுலும் சனங்களும் கீழ்மையும் இழிவுமான
பொருளனைத்தையும் அழித்து விட்டு, அகாக்
கையும், ஆடுமாடுகளில் முதல்தரமானவைகளை
யும், இரண்டாந்தரமானவைகளையும், ஆட்டுக்
குட்டிகளையும், உத்தமப்பொருளனைத்தையும் அ
௰ ழியாமற் பேணிவைத்துக்கொண்டார்கள்.—அப்
பொழுது யெகோவாவின்வாக்கு, சாமுவே
லிடத்தில், ஷவுல் என்னைப்பின்பற்றி என்கட்
டளைகளைக்காத்துக்கொள்ளாமல் பராமுகம்பண்
ணினபடியினாலே, அவனை இராசாவாக ஏற்ப
டுத்தினது,நான்அனுதாபப்படுவதற்குஏதுவாயிற்
௰௧ றென்றுசொல்லிற்று.-அதனால் சாமுவேல் வியா
குலமடைந்து,இராமுழுவதும்யெகோவாவை
௰௨ நோக்கி ஓலமிட்டான்.—அதிகாலையிலே சாமு
வேல் ஷவுலைச்சந்திக்கும்படி எழுந்தபொழுது,
ஷவுல் கர்மேலுக்குவந்து, ஞாபகக்குறியொன்று
ஸ்தாபித்து, சுற்றிநடந்து கில்காலுக்குப்போய்ச்

சேர்ந்தானென்று சாமுவேலுக்குத் தெரிவிக்கப்
பட்டது.—சாமுவேல் ஷவுலினிடத்தில் போ ௰௩
னான்: அப்பொழுது ஷவுல் அவனைநோக்கி, நீர்
யெகோவாவால் ஆசீர்வதிக்கப்படுவீராக:யெ
கோவாவின் கட்டளையை நிறைவேற்றினே
னென்றான்.—அதற்குச்சாமுவேல் என்செவிக் ௰௪
கேறுகிற ஆட்டின்சத்தமும், எனக்குக்கேட்கிற
மாட்டின்சத்தமும்,என்னவென்றுகேட்க,—ஷவு ௰௫
ல்அமலேக்கியரிடத்தினின்றும்அவைகளைக்கொ
ண்டுவந்தார்கள்: உமது தேவனாகிய யெகோ
வாவுக்குப் பலியிடும்படி, சனங்கள் ஆடுமாடுக
ளில்சிரேஷ்டமானவைகளைமீந்திருக்கவிட்டார்
கள்; மற்றவைகளை நாங்கள் சங்கரித்தோம் என்
றான்.—அதற்குச்சாமுவேல் ஷவுலைநோக்கி,பொ ௰௬
றும்,இராத்திரி யெகோவாஎனக்குச்சொன்ன
தைச்சொல்லுகிறேனென்றுசொல்ல;அவனுக்கு
இவன்சொல்லுமென்றான்.—அப்பொழுது சாமு ௰௭
வேல்,நீர்உமதுசுயபார்வைக்குச்சிறியவனாயிருந்
தபொழுது, இஸரவேல்கோத்திரங்களுக்குத்தலை
வனாக ஏற்படுத்தப்படவில்லையா; உம்மை இஸர
வேலருக்கு இராசாவாக யெகோவா அபிஷே
கம்பண்ணிவைத்தாரே.—போய்அமலேக்கியரா ௰௮
கிய அந்தப்பாவிகள் நாசமாகும்வரைக்கும்அவர்
களுக்குவிரோதமாகயுத்தம்பண்ணி, அவர்களைச்
சங்கரிக்கக்கடவாய் என்று யெகோவா பிர
யாணமாய் உம்மை அனுப்பிவிட்டார்.—நீர்யெ ௰௯
கோவாவின் வாக்குக்கமைந்து நடவாமல்,
கொள்ளைப் பொருள்மேல் பாய்ந்து, யெகோ
வாவின் பார்வைக்குத் தீமைசெய்ததென்ன
வென்றான்.—ஷவுல்சாமுவேலைநோக்கி, நான் ௨௰
யெகோவாவுடைய வாக்குக்கு அமைந்து,
யெகோவா என்னையனுப்பியநெறியேசென்
று, அமலேக்கியரைச் சங்கரித்து, அமலேக்கின்
இராசாவாகிய அகாக்கைக் கொண்டுவந்தேன்.—
சனங்களோஅழிக்கப்படவேண்டியகொள்ளைப் ௨௧
பொருள்களுக்குள்ளே சிரேஷ்டமாகிய ஆடுமா
டுகளை, கில்காலிலே உமது தேவனாகிய யெ
கோவாவுக்குப்பலியிடும்படி தெரிந்தெடுத்தார்
கள் என்றான்.-அதற்குச் சாமுவேல், யெகோ ௨௨
வாவின் வாக்குக்கு அமைதலைப்போல யெ
கோவா தகனபலிகளையும் மற்றப்பலிகளையும்
விரும்புகிறாரா; கேளும், பலியிடுவதிலும் கட்ட
ளையைக் கைக்கொள்வதே உத்தமம், ஆட்டுக்க
டாவின் நிணத்திலும் செவிகொடுப்பதே உத்த
மம்.—கட்டளைமீறுதல் மாயாவித்தையைப்போ ௨௩
லப்பாவமுள்ளது, முருட்டாட்டம் விக்கிரகா
ராதனையைப்போலப் பாவமுள்ளது. நீர் யெ

(௨) யாத்.௰௭.௮,௰௪. எண்.௨௪.௨௰. உபா.௨௫.௰௭,௰௮,௰௯. (௩) லேவி.௨௭.௨௮,௨௯. யோசு.௬.௰௭,௨௧. (௬) எண்.௨௪.௨௧. நியா.௧.௰௬. ஆதி.௰௮.௨௫. வெளி.௰௮.௪. யாத்.௰௮.௰,௰௯. எண்.௰.௨௯,௩௨. (௭) அதி.௰௪.௪௮. ஆதி.௨.௰௧. ஆதி.௨௫.௰௮. ஆதி.௰௬.௭. (௮) ௧.இரா.௨௰.௩௪,௩௫. அதி.௩௰.௧. (௯) வச.௩,௰௫. (௰௧) வச.௩௫. ஆதி.௬.௬,௭. ௨.சாமு.௨௪.௰௬. யோசு.௨௨.௰௬. ௧.இரா.௯.௬. அதி.௰௩.௰௩. வச.௩,௯. வச.௩௫. அதி.௰௯.௧. (௰௨) யோசு.௰௫.௫௫. (௰௩) ஆதி.௰௪.௰௯. நியா.௰௭.௨. ரூத்.௩.௰. (௰௫) வச.௯,௨௧. ஆதி.௩.௰௨. நீதி.௨௮.௰௩. (௰௭) அதி.௯.௨௧. (௨௰) வச.௰௩. (௨௧) வச.௰௫. (௨௨) சங்.௫௰.௮,௯. நீதி.௨௧.௩. ஏசா.௧.௰௧,௰௨,௰௩,௰௬,௰௭. எரே.௭.௨௨,௨௩. மீகா.௬.௬,௭,௮. எபி.௰.௬,௭,௮,௯. பிர.௫.௧. ஓசி.௬.௬. மத்.௫.௨௪. மத்.௯.௰௩. மத்.௰௨.௭. மாற்.௰௨.௩௩. (௨௩) உபா.௰௮.௰. அதி.௰௩.௰௪. ௨.சாமு.௰௨.௰௩.

கோவாவின் வாக்கைப் புறக்கணித்தபடியினு
லே, நீர் இராசாவாயிராதபடி அவரும் உம்மைப்
உச புறக்கணித்தாரென்ருன்.—அப்பொழுது ஷவுல்
சாமுவேலைநோக்கி, நான் பாவஞ்செய்தேன்: ச
னங்களுக்குப்பயந்து, அவர்கள் வாக்குக்கிணங்
கநடந்து, யெகோவாவின்கட்டளைகளையும்,
உரு உமதுவாக்குகளையும் மீறினேன்.—இப்பொழுது
நீர் என்பாவத்தை மன்னித்து, நான் யெகோ
வாவுக்காராதனை செய்யும்படி, என்னேடே தி
உசு ரும்பிவாருமென்ருன்.—சாமுவேல்ஷவுலைநோக்
கி, நான்உம்மோடேதிரும்பிவரேன்: யெகோ
வாவின் வாக்கை நீர் புறக்கணித்தீர், அதனுல்
நீர் இஸரவேலருக்கு இராசாவாயிராதபடி யெ
கோவா உம்மைப்புறக்கணித்தாரென்ருன்.—
உஎ போகும்படி சாமுவேல் திரும்புகையில், இவன்
அவன்மேலங்கியின் விளிம்பைப்பிடிக்க, அது
உஅ கிழிந்துபோயிற்று.—சாமுவேல் அவனைநோக்
கி, யெகோவா இந்நாளிலே இஸரவேலரின்
இராச்சிய பரிபாலனத்தை உம்மிடத்தினின்றும்
நீக்கி, உம்மிலும் அதிகஉத்தமனுயிருக்கிற உமது
உகூ அயலானுக்குக்கொடுத்தார்.—இஸரவேலருக்குப்
பலமாயிருக்கிறவர் பொய்சொல்லார், மனமும்
பேதியார்: மனம்பேதிக்க அவரொரு மனிதனல்
கூ௰ லவென்ருன்.—அதற்கவன் நான்பாவஞ் செய்
தேனே: என்சனங்களின் முதியோருக்கு முன்
பாகவும், இஸரவேலருக்கு முன்பாகவும் என்
னைக்கனம்பண்ணி, நான் உமது தேவனுகிய
யெகோவாவுக்கு ஆராதனைசெய்யும்படி என்
கூக னேடேதிரும்பிவாருமென்ருன்.—அதனுல் சா
முவேல் திரும்பி ஷவுலுக்குப் பின்சென்ருன்;
ஷவுல் யெகோவாவுக்கு ஆராதனைசெய்தான்.—
கூஉ பின்புசாமுவேல், அமலேக்கியரின் இராசாவா
கிய அகாக்கை என்னிடத்திற் கொண்டுவாருங்
களென்ருன். அகாக் பிரியமுள்ளவனுகி, உள்
ளேவந்து, மரணத்தின் கசப்பு அற்றுப்போயிற்
கூகூ றே என்ருன்.—சாமுவேல் உன்கட்கம் ஸ்திரி
களைப் பிள்ளையற்றவர்களாக்கினதுபோல, ஸ்தி
ரிகளுக்குள்ளே உன்மாதாவும் பிள்ளையற்றவளா
வாளென்ருன். அப்பொழுது சாமுவேல் கில்
காலிலே யெகோவாவுக்குமுன்பாக அகாக்
கூச கைத் துண்டித்துப்போட்டான்.—அதன்மேல்
சாமுவேல் ராமாவுக்குப்போனுன்,ஷவுலோதன்
வாசஸ்தலமாகிய கிபியாவிலிருக்கிற தன் வீட்
கூரு டிற்குப்போய்விட்டான்.—ஷவுல் மரணமடை
யும் நாள்மட்டும் சாமுவேல் அவனைச்சந்திக்கப்
போகவில்லை: ஆயினும் சாமுவேல் ஷவுலின் நி
மித்தம்துக்கித்துக்கொண்டிருந்தான்: யெகோ
வா ஷவுலைஇஸரவேலருக்கு இராசாவாக ஏற்ப
டுத்தினதைக்குறித்து அனுதாபப்பட்டார்.

## ௰சு. அதிகாரம்.

க. சாமுவேல் ஈஷாயிடத்தில் அனுப்பப்படல்: சு. ஈஷாயின் சமஸ்தபுத்திரரையும்கண்டு தாவீதுக்கு அபிஷேகஞ்செய்தல்: ௰ச. ஷவுலினுள்ளதுஷ்ட ஆவியை அடக்கும்படிசனங்கள் தாவீதைவரவழைத்தல்: ௰கூ. அவன்இராசசமுகத்தில் வெளிப்படல்.

யெகோவா சாமுவேலைநோக்கி, ஷவுலினி க
மித்தம் நீ எதுவரைக்கும் துக்கங்கொண்டிருப்
பாய், இஸரவேலருக்கு இராசாவாயிராதபடி அ
வனைப்புறக்கணித்தேன்; நீ உன்கொம்பை எண்
ணெயினுல் நிறைத்துக்கொண்டுவா, பேத்லகே
மியனுகிய ஈஷாயிடத்திலுன்னை அனுப்புவேன்,
அவன் புத்திரரிலொருவனை இராசாவாய் எனக்
காகத்தெரிந்து கொண்டேனென்ருர்.—அதற்குச் உ
சாமுவேல் நான் எப்படிப்போவேன்; ஷவுலி
தைக்கேள்விப்பட்டால், என்னைக்கொல்லுவா
னென்ருன். யெகோவா நீ ஒரு காளையைக்
கொண்டுபோய், யெகோவாவுக்குப் பலியிட
வந்தேனென்றுசொல்லி,—பலிக்கு ஈஷாயைவ கூ
ரவழைப்பாய், பின்பு நீ செய்யவேண்டுவதின்
னதென்று உனக்குத்தெரிவிப்பேன்: நான் உனக்
குக்காண்பிப்பவனை நீ எனக்காக அபிஷேகம்
பண்ணென்ருர்.—யெகோவா தனக்குச்சொல் ச
லியபடி சாமுவேல்செய்துகொண்டுபேத்லகேம்
ஊருக்குப்போனுன். அவன் போகவும் நகரத்
தின் முதியோர் நடுநடுங்கி, நீர்சமாதானத்துடன்
வருகிறீராவென்றுகேட்க;—அவன் சமாதானத்து ரு
டன்யெகோவாவுக்குப்பலியிடவந்தேன்:நீங்
கள்உங்களைச்சுத்திசெய்துகொண்டு, விருந்துக்கு
என்னுடன் வாருங்களென்ருன். அவன் ஈஷா
யையும் அவன் புத்திரரையுஞ் சுத்தப்படுத்தி, அ
வர்களை விருந்துக்கழைத்தான்.—அவர்கள் வந் சு
து சேர்ந்தபின்பு அவன் இலியாப்பைநோக்கி,
யெகோவாவினுல் அபிஷேகம்பெறுபவன்
அவர் சந்நிதியில் நிற்கிருனேயென்ருன்.—யெ எ
கோவா சாமுவேலைநோக்கி, நீ அவனுடை
ய முகத்தையும் அவனுடையசரீரத்தினுயரத்தை
யும் பார்க்கவேண்டாம்; நான் அவனைப்புறக்க
ணித்தேன்: மனிதர் பார்ப்பதுபோலப்பாரேன்:
மனிதன் கண்ணுக்குத் தோன்றுகிறதைப்பார்க்
கிருன், யெகோவாவோ உள்ளத்தைையேபார்க்
கிருர் என்ருர்.—அப்பொழுது ஈஷாய் அபீனு அ
தாப்பை அழைத்து, சாமுவேலுக்குமுன்செல்
லப்பண்ண, அவன், இவனையும் யெகோவா

(உச) உ.சாமு.௰உ.௰கூ. யாத்.உகூ.உ. நீதி.உக.உரு. எசா.ருக.௰உ,௰கூ. (உசு) அதி.உ.கூ௰. (உஎ) க.இரா.௰க.கூ௰. (உஅ) அதி.உஅ.௰எ,௰அ. க.இரா.௰க.கூக. (உகூ) எண்.உகூ.௰கூ. எசேக்.உச.௰ச. உ.தீமோ.உ.௰கூ. தீத்.க.உ. யோவா. ரு.சச. யோவா.௰உ.சகூ. (கூகூ) யாத்.௰எ.௰க. எண்.௰ச.சரு. நியா.க.எ. (கூச) அதி.௰க.ச. (கூரு) அதி.௰கூ.உச.வச. ௰க. அதி.௰கூ.க. வச.௰க.—(௰சு. அதி. க.) அதி.௰ரு.கூரு. அதி.௰ரு.உகூ. அதி.கூ.௰சு. உ.இரா.கூ.க. அதி.கூ.௰சு. உ.இரா.கூ.க. சங்.எஅ.எ௰. அப்.௰கூ.உஉ. (உ) அதி.கூ.௰உ. அதி.உ௰.உகூ. (கூ) யாத்.ச.௰ரு. அதி.கூ.௰சு. (ச) அதி. உக.க. க.இரா.உ.௰கூ. உ.இரா.கூ.உஉ. யாத்.௰கூ.௰,௰ச. (சு) அதி.௰எ.௰கூ. க.நாளா.உஎ.௰அ. க.இரா.௰உ.உசு. (எ) சங்.௱சஎ.௰,௰க. எசா.ருரு.அ. உ.கொரி.௰.எ. க.இரா.அ.கூகூ. க.நாளா.உஅ.கூ. சங்.எ.கூ. எரே.௰க.உ௰. அப். க.உச. (அ) அதி.௰எ.௰கூ.

௯ தெரிந்துகொள்ளவில்லையென்றான்.—இப்படி ஈ
ஷாய்ஷம்மாவையுஞ் செல்லப்பண்ண, அவன்,
இவனையும்யெகோவா தெரிந்துகொள்ளவில்
௰ லையென்றான்.—இப்படி ஈஷாய் தன் ஏழுபுத்திர
ரையும் சாமுவேலுக்குமுன்செல்லப்பண்ண,சா
முவேல்ஈஷாயைநோக்கி; இவர்களை யெகோ
௰௧ வா தெரிந்துகொள்ளவில்லையென்றான்.—பின்பு
சாமுவேல் ஈஷாயைநோக்கி, பிள்ளைகள் உமக்
கு இத்தனைதானாவென்றுகேட்க; அவன் இன்
னும் இளையவனொருவனிருக்கிறான், அவன் ஆ
டு மேய்க்கிறானென்றான். அப்பொழுது சாமு
வேல் ஈஷாயைநோக்கி, அவன்வருமட்டும் நாங்
கள்பந்தியிருக்கமாட்டோம்: ஒருஆளனுப்பிஅவ
௰௨ னை அழைப்பாயாகவென்றான்.—அவன் ஆளனுப்
பி,அவனையழைப்பித்தான். அவன்செந்நிறமும்,
அழகியகண்ணும், சௌந்தரியமுமுள்ளவனாயி
ருந்தான். யெகோவா, இவனே அவன்: நீ
எழுந்து இவனுக்கு அபிஷேகம் பண்ணென்
௰௩ றார்.—அப்பொழுது சாமுவேல் எண்ணெய்க்
கொம்பையெடுத்து, அவனை அவன் சகோதரருக்
குள்ளே அபிஷேகம்பண்ணினான்; அந்நாள்மு
தல் யெகோவாவுடைய ஆவி தாவீதின்மேல்
வந்தது. சாமுவேல் எழுந்து ராமாவுக்குப்போ
௰௪ னான்.—யெகோவாவுடைய ஆவி ஷவுலை
விட்டு நீங்க, யெகோவா அனுப்பிய துஷ்ட
௰௫ ஆவி அவனைக் கிலேசப்படுத்திற்று.—அதினால்
ஷவுலின் தாசர் அவனைநோக்கி, கேளும், தே
வனுடைய உத்தரவின்படி ஒருதுஷ்ட ஆவி உம்
௰௬ மைக்கிலேசப்படுத்துகின்றது.—கின்னரம் வாசித்
தலிலே நிபுணனாகிய ஒருவனைத்தேடும்படி, எங்
கள் நாயனாரே, உமக்குமுன் நிற்குந் தாசருக்குக்
கட்டளையிடுவீராக: தேவன் அனுப்பியதுஷ்ட
ஆவி உம்மிடத்தில் வரும்பொழுது, அவன் தன்
கையினால் வாசித்தால் நீர் சகாயம் பெறுவீரென்
௰௭ றுசொல்ல;—ஷவுல் தன் தாசரைநோக்கி, நன்
றாய்வாசிக்கத்தக்க ஒருவனைத்தேடி, என்னிடத்
௰௮ தில் கொண்டுவாருங்களென்றான்.—அப்பொழு
து அவன் தாசரிலொருவன், கேளும் பேத்லகே
மியனாகிய ஈஷாயின் புத்திரனொருவனைக்கண்
டிருக்கிறேன், அவன் அதுவாசித்தலிலே சாமர்த்
தியமுள்ளவன், அவன் பராக்கிரமசூரன், யுத்த
வீரன், காரியங்களிலே புத்திமான், சௌந்தரி
யமுள்ளவன், யெகோவா அவனோடேயிருக்
௰௯ கிறாரென்றான்.—பின்பு ஷவுல் ஈஷாயிடத்தில்
தூதரையனுப்பி, ஆடுமேய்க்கிற உன் புத்திரனா
கிய தாவீதை என்னிடத்தில் அனுப்பென்று
௨௰ சொல்லுவிக்க;—ஈஷாய் அப்பத்தையும், ஒருது
ருத்தித்திராட்சரசத்தையும், ஒரு வெள்ளாட்டுக்
குட்டியையும், கழுதையின் மேலேற்றி, தன் புத்
திரனாகிய தாவீதின் வசத்திலொப்பித்து ஷவுலுக்
கனுப்பினான்.—தாவீது ஷவுலினிடத்தில்வந்து, ௨௧
அவன் முன்னின்றான்: அவன் இவனில் மிக
வும் அன்புவைத்தான்; அவனுக்கு இவன் ஆயுத
தாரியானான்.—ஷவுல் ஈஷாயினிடத்துக்கு, தாவீ ௨௨
துக்கு என் கடாட்சம்கிடைத்தது; அவனென்
முன்னிற்கட்டுமென்று சொல்லி யனுப்புவித்
தான்.—தேவனுடைய உத்தரவின்படி துஷ்ட ௨௩
ஆவி ஷவுலிடத்தில்வரும்பொழுது, தாவீது கின்
னரத்தையெடுத்துத் தன்கையினால் வாசிப்பான்:
அதனால்துஷ்ட ஆவி தன்னைவிட்டுநீங்க, ஷவுல்
ஆறுதலடைந்து சொஸ்தமாவான்.

## ௰௭. அதிகாரம்.

௧. பெலிஸ்தியருடன் யுத்தஞ்செய்ய இஸரவேலர் ஆயத்தப்படுதல்: ௪. கொல்யாத்தென்னும்வீரன் இஸரவேலரைஅலட்சியம்பண்ணல்: ௰௨. சேனைகள் மத்தியில் தாவீது தன்சகோதரரிடத்தில்செல்லல்: ௨௰. இராசாஅவ்வீரனைக்கொன்றவனுக்கு என்ன தருவானெனக் கேட்டல்: ௨௮. அவன் சகோதரர் அவன்மேற் கோபங்கொள்ளல்: ௩௰. இராசாவிடத்தில் அழைக்கப்படுகையில் யுத்தஞ்செய்யச் சம்மதித்தல்: ௩௨. இராசாவிடத்தில்பேசுதல்: ௩௮. வீரனுடன்யுத்தஞ்செய்து செயித்தல்: ௫௨. பெலிஸ்தியரைக் கொலைசெய்தல்.

பெலிஸ்தியர் யுத்தம்பண்ணும்படி தங்கள் சே ௧
னைகளைச்சேர்த்துக்கொண்டு, யூதாவைச்சேர்ந்த
ஷோகோவில் ஒருமித்துக்கூடி, ஷோகோவுக்
கும் அசேகாவுக்கும் இடையிலுள்ள ஏபெஸ்தம்
மீமிலே பாளயமிறங்கினார்கள்.-ஷவுலும் இஸர ௨
வேலரும் ஒருமித்துக்கூடி, எலாவென்னுந்தாழ்ந்
தபூமியிலே பாளயமிறங்கி, பெலிஸ்தியருக்கு வி
ரோதமாக அணிவகுத்தார்கள்.-பெலிஸ்தியர்அப் ௩
புறத்திலொருமலையின்மேலும்,இஸரவேலர் இப்
புறத்திலொருமலையின்மேலும் நின்றார்கள்: அ
வர்களுக்கிடையிலே தாழ்ந்த பூமியிருந்தது.—
காத் ஊரானாகிய ஆறரைமுழ உயரமுள்ளகொல் ௪
யாத்தென்னும் வீரனொருவன், பெலிஸ்தியரு
டைய பாளயத்தினின்றும் அங்கே புறப்பட்டு
வருவான்.—அவன் தலையிலே பித்தளைப்பாகை ௫
யைத்தரித்தும், ஐயாயிரம்ஷேக்கல் நிறைகொண்
டபித்தளைப்போர்க்கவசத்தையிட்டும்,—காலிலே ௬
பித்தளைச்சீராவையும், தோள்களுக்கிடையிலே
பித்தளைப்பரிசையையுந் தரித்துமிருப்பான்.—அ ௭
வனுடைய ஈட்டிப்பிடி, நெய்கிறவர்களின் ப
டைமரம்போலிருக்கும்; அவனுடைய ஈட்டி
யின் அலகு அறுநூறுஷேக்கல் இரும்புகொண்

(௯) அதி.௰௭.௰௩. ௨.சாமு.௰௩.௩. ௧.நாளா.௨.௰௩. (௰௧) அதி.௰௭.௰௨. ௨.சாமு.௭.௮. சங்.௭௮.௭௰. (௰௨) அதி.௰௭.௪௨. உன்.௫.௰. அதி.௯.௰௭. (௰௩) அதி.௰.௧. சங்.௮௯.௨௰. எண்.௨௭.௰௮. நியா.௰௧.௨௯. அதி.௰.௬,௰. (௰௪) நியா.௰௬.௨௰. அதி.௰௧.௬. சங்.௫௧.௰௧. நியா.௯.௨௩. அதி.௰௮.௰. அதி.௰௯.௯. (௰௬) ஆதி.௪௧.௪௬. வச.௨௧,௨௨. ௧.இரா.௰.௮. வச.௨௩. ௨.இரா.௩.௰௫. (௰௮) அதி.௰௭.௩௨,௩௪,௩௫,௩௬. அதி.௩.௰௯. அதி.௰௮.௰௨,௰௪. (௰௯) வச.௰௧. அதி.௰௭.௰௫,௩௪. (௨௰) அதி.௰.௨௭. ஆதி.௪௩.௰௧. நீதி.௰௮.௰௬. (௨௧) ஆதி.௪௧.௪௬. ௧.இரா.௰.௮. நீதி.௨௨.௨௯. (௨௩) வச.௰௪,௰௬.—(௰௭. அதி. ௧.) அதி.௰௩.௫. யோசு.௰௫.௩௫. ௨.நாளா.௨௮.௰௮. ௧.நாளா.௰௧.௰௩. (௪) ௨.சாமு.௨௧.௰௯. யோசு.௰௧.௨௨. (௭) ௨.சாமு.௨௧.௰௯.

டது: பரிசைபிடிக்கிறவன் அவனுக்குமுன்னே
௮ நடப்பான்.—அவன் நின்றுகொண்டு சத்தமிட்
டு இஸரவேல்சேனைகளைநோக்கி, நீங்கள் யுத்தத்
துக்கு அணிவகுத்து வந்ததென்ன; நான் பெ
லிஸ்தியனல்லவா, நீங்கள் அல்லவா ஷவுலின்
சேவகர்; என்னிடத்தில் இறங்கிவர நீங்கள் உங்
களுக்குள் ஒருவனைத் தெரிந்துகொள்ளுங்கள்.—
௯ அவனென்னுடன் போராடி என்னைக் கொல்ல
வல்லவனாகில், நாங்கள் உங்களுக்குப் பணி
விடைக்காரராவோம்; நான் அவனை மேற்கொ
ண்டு கொலைசெய்தால், நீங்கள் எங்களுக்குப்
பணிவிடைக்காரராகி எங்களிடத்தில் சேவிக்க
௰ வேண்டுமென்பான்.—பின்னும் அந்தப்பெலிஸ்
தியன், இன்றைத்தினம் இஸரவேல்சேனைகளை
நிந்திக்கிறேன்; நாங்கள் யுத்தம்பண்ணும்படி
ஒருவனை விடுங்களென்றுசொல்லிவருவான்.—
௰௧ ஷவுலும் இஸரவேலர் சமஸ்தரும் பெலிஸ்திய
னுடைய அந்த வாக்குகளைக்கேட்டு, நடுநடுங்கி
மிகவும் பயப்பட்டார்கள்.
௰௨ தாவீது, யூதாவிலுள்ளபேத்லகேமூரானும்எட்
டுப்புத்திரரைப்பெற்றவனுமாகிய ஈஷாய் என்
னும்பெயருள்ள எப்ரூத்தியனுடைய புத்திரனா
யிருந்தான்: அந்த மனிதன் ஷவுலினுடைய கா
லத்திலே சனங்களுக்குள்ளே கிழவனாக மதிக்
௰௩ கப்பட்டான்.—ஈஷாயின் சேஷ்டபுத்திரன்முத
லாகிய மூவர் யுத்தம்பண்ணும்படி ஷவுலுக்குப்
பின்சென்றார்கள்: யுத்தத்துக்குப்போயிருந்த மூ
ன்றுபுத்திரருக்குள் முதலாம் புத்திரனுக்கு இலி
யாப்பென்றும், இரண்டாம்புத்திரனுக்கு அபீனா
தாப்பென்றும், மூன்றாம் புத்திரனுக்கு ஷம்மா
௰௪ வென்றும்பெயர்.—தாவீது எல்லாருக்கும் இளை
யவன்: மூத்தவர்கள் மூவரும் ஷவுலுக்குப்பின்
௰௫ சென்றார்கள்.—தாவீது ஷவுலைவிட்டுத் திரும்பிப்
பேத்லகேமிலுள்ள தன்பிதாவின்ஆடுகளைமேய்க்
௰௬ கப்போனான்.—பெலிஸ்தியன் நாற்பதுநாளாக
காலையிலும் மாலையிலும் வந்துவந்து நிற்பான்.—
௰௭ ஈஷாய் தன்புத்திரனாகிய தாவீதைநோக்கி, உன்
சகோதரருக்கு இந்த ஒருஏபா வறுத்த தானியத்
தையும், இந்தப்பத்து அப்பங்களையும் எடுத்து,
பாளயத்திலிருக்கிற உன் சகோதரரிடத்திற்கொ
௰௮ ண்டுபோ;—இந்தப்பாற்கட்டிகளையும் ஆயிரவர்
சேனாபதிக்குக் கொண்டுபோ; உன் சகோதரரு
டைய சுகச்செய்தியைவிசாரித்து, அவர்களிடத்
௰௯ தில் அடையாளம் வாங்கிவாவென்றான்.—அப்
பொழுது ஷவுலும்,அவர்களும்,இஸரவேலர் சம
ஸ்தரும்,ஏலாவென்னுந் தாழ்ந்தபூமியில்பெலிஸ்
தியருடன்யுத்தம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்.
௨௰ தாவீதுஅதிகாலையிலெழுந்து, ஆடுகளை,மேய்க்
கிறவர்கள் வசம்விட்டு, ஈஷாய் தனக்குக் கட்ட
ளையிட்டபிரகாரம்எடுத்துக்கொண்டு இரதங்களி
ருக்கிறஇடத்திலே போய்ச்சேர்ந்தான்;அப்பொ
ழுது சேனைகள் யுத்தத்துக்குப்புறப்பட்டுப் போ
ர்க்கறை கூவினார்கள்.—இஸரவேலரும் பெலிஸ் ௨௧
தியரும்சேனைகளை யொன்றுக்கொன்று விரோத
மாக அணிவகுத்துக்கொண்டிருந்தார்கள்.—தாவீ ௨௨
து தன்சகோதரருக்குத் தான்கொண்டுவந்தவைக
ளை இரதங்காப்பவன்வசத்தில் வைத்துவிட்டு,சே
னைகளுக்குள்ளோடிப்போய், தன்சகோதரரிடத்
தில் சுகச்செய்தி விசாரித்தான்.—அவன் அவர் ௨௩
களோடே சம்பாஷித்துக்கொண்டிருக்கையில்,
காத் ஊரானாகிய கொல்யாத்தென்கிற பெயர்
பெற்ற பெலிஸ்தியவீரன் பெலிஸ்தியருடைய
பாளயங்களினின்றும் புறப்பட்டுவந்து முந்தி
னபிரகாரம் பேச, தாவீது கேட்டான்.—இஸர ௨௪
வேலர்சமஸ்தரும் அந்தமனிதனைக் கண்டபொ
ழுதுமிகவும்பயப்பட்டு, அவன் முகத்துக்குவில
கி ஓடினார்கள்.—இஸரவேலர், வந்துநிற்கிற இந் ௨௫
தமனிதனைக்கண்டீர்களா; இஸரவேலரை நிந்திக்
கவேவந்து நிற்கிறான்: இவனைக்கொன்றுபோடு
கிறவனெவனோ, அவனை இராசா பொருள்கொ
டுத்து மிகவும் ஐசுவரியவானாக்கி, தன் புத்திரி
யையும் அவனுக்குவிவாகஞ்செய்வித்து, அவன்
பிதாவின் குடும்பத்தாரையும் இஸரவேலருக்
குள்ளே சுயாதீனராகும்படி செய்வார் என்றார்
கள்.—அப்பொழுது தாவீது தன் சமீபத்தில் நின் ௨௬
றமனிதரைநோக்கி, நித்திய தேவனுடைய சே
னைகளை நிந்தித்துவருகிறவனும், விருத்தசேதன
மில்லாதவனுமாகிய இந்தப்பெலிஸ்தியன் எம்
மாத்திரம்; இவனைக்கொன்று இந்த நிந்தையை
இஸரவேலரினின்றும் நீக்குகிறவனுக்கு என்ன
செய்யப்படுமென்றுகேட்க;—அந்தச் சனங்கள் ௨௭
இவனைக் கொல்பவனுக்கு இன்னதுசெய்யப்ப
டுமென்று,சொல்லுகிறபிரகாரம்,உத்தரஞ்சொன்
னார்கள்.-அந்தமனிதரோடே அவன் பேசுவதை ௨௮
அவன் மூத்தசகோதரனாகிய இலியாப் கேட்ட
பொழுது, தாவீதின்மேலே கோபங்கொண்டு, நீ
இங்கேவந்ததென்ன; வனாந்தரத்திலுள்ள அந்தக்
கொஞ்ச ஆடுகளை ஆர்வசத்தில்விட்டாய்; யுத்தத்
தைப்பார்க்கும்படிவந்தாய்; உன் இறுமாப்பை
யும், உன்மனக்குறும்பையும்நான் அறிவேனென்
றான்.-அதற்குத் தாவீது நான் என்னசெய்தேன்; ௨௯
காரணமில்லையாவென்றான்.—பின்பு அவன் இ ௩௰
வனைவிட்டு வேறொருவனுக்கெதிராகத்திரும்பி,
முந்தினபிரகாரம்கேட்க; சனங்கள்முன்போல
வே உத்தரஞ்சொன்னார்கள்.—தாவீது சொல்லி ௩௧
யவாக்குகளைக்கேட்டபொழுது அவைகளை ஷ
வுலுக்கறிவிக்க,அவன் இவனை அழைப்பித்தான்.
தாவீது ஷவுலைநோக்கி, ஒருவருமிவன் நிமித் ௩௨
தம் மனங்கலங்கவேண்டாம்; உமதடியானாகிய
நான் போய் இந்தப்பெலிஸ்தியனுடன் யுத்தஞ்

(௮)அதி.௮.௰௭.(௯)அதி.௰௧.௧.(௰)வச.௨௬. ௨.சாமு.௨௧.௨௧. (௰௨) வச.௫௮. ரூத்.௪.௨௨. அதி.௰௬.௧,௰௮. ஆதி.
௩௫.௰௯. அதி.௰௬.௰,௰௧. (௰௩) அதி.௰௬.௬,௮,௯. (௰௫) அதி.௰௬.௰௯. (௰௮) ஆதி.௩௭.௰௪. (௨௰) அதி.௨௬.௫. (௨௨)
நியா.௰௮.௰௫. (௨௩) வச.௮. (௨௫) யோசு.௰௫.௰௬. (௨௬) அதி.௰௧.௨. அதி.௰௪.௬. வச.௰. உபா.௫.௨௬. (௨௭)
வச.௨௫.(௨௮)ஆதி.௩௭.௪,௮,௰௧. மத்.௰.௩௬.(௨௯)வச.௰௭.(௩௰)வச.௨௬,௨௭. (௩௨) உபா.௨௰.௧,௩. அதி.௰௬.௰௮.

௩௩ செய்வேனென்று சொல்ல;—ஷவுல் தாவீதை
நோக்கி, நீ இளைஞன்: இந்தப்பெலிஸ்தியனோ
தன் சிறுபிராயம்முதற்கொண்டு யுத்தவீரன், நீ
இவனை எதிர்த்து யுத்தஞ்செய்யப் போவதற்கு
௩௪ வல்லவனல்லவென்றான்.—அதற்குத் தாவீது ஷ
வுலை நோக்கி, உமதடியான் என்பிதாவின் ஆடுக
ளைமேய்த்துவருமொருசமயத்தில் ஒருசிங்கமும்,
மறுசமயத்தில் ஒருகரடியும்வந்து, மந்தையினின்
௩௫ றும் ஒரு ஆட்டுக்குட்டியைப் பிடிக்க,—நான்
அதைத்தொடர்ந்து பிடித்து, அதை அதின் வா
யினின்றும் விடுவித்தேன்: அது என்மேற் பாய்ந்
தபொழுது, நான் தாடியிலே பிடித்து அதை அ
௩௬ டித்துக்கொலைசெய்தேன்.—அடியேன் சிங்கம்,
கரடி, இரண்டையும் கொன்றேன்: விருத்தசேத
னமில்லாத இந்தப்பெலிஸ்தியனும், நித்திய தே
வனுடைய சேனைகளைநிந்தித்தபடியால், அவை
௩௭ களிலொன்றைப்போ லாவானென்றான்.—பின்
னும் தாவீது சிங்கத்தின்கைக்கும், கரடியின்கைக்
கும், என்னைவிடுவித்த யெகோவா இந்தப்
பெலிஸ்தியனுடையகைக்கும், என்னைவிடுவிப்
பாரேயென்றான். அப்பொழுது ஷவுல் தாவீதை
நோக்கி, போ, யெகோவா உன்னோடிருப்பா
ராகவென்றான்.
௩௮ பின்பு ஷவுல் தாவீதுக்குத் தன் யுத்தாயுதங்க
ளைத்தரிப்பித்து, தலையிலே பித்தளைத் தலைமூடி
யையிட்டு, போர்க்கவசத்தையும் போட்டு அவ
௩௯ னை யுத்தத்திற்கு ஆயத்தமாக்கினான்.—தாவீது
தன் கட்கத்தை வஸ்திரங்களின்மேலே கட்டிக்
கொண்டு, அதிலே பரிட்சையில்லாதபடியினா
லே நடந்துபார்த்தான். அதன் பின்பு தாவீது
ஷவுலை நோக்கி, இவைகளுடன்போக என்னா
லேமுடியாது; நான் இவைகளிலே பயிற்சிபெற்
றிருக்கவில்லையென்றான். பின்பு தாவீது அவை
௪௰ களைக்களைந்து,—தன் தடியைக்கையிலேபிடித்துக்
கொண்டு, சிற்றாற்றிலுள்ள ஐந்துகூழாங்கல்லுக
ளைத்தெரிந்தெடுத்து, மேய்ப்பருக்குரிய தன்னு
டைய சிறுபையிலிட்டு; தன் கவணையும் தன்கை
யில் எடுத்துக்கொண்டு, அந்தப்பெலிஸ்தியனி
௪௧ டத்தில் சமீபித்தான்.—பெலிஸ்தியனும் நடந்து
வந்து தாவீதைச்சமீபித்தான்; பரிசைகொண்டு
போகிறவன் அவனுக்குமுன்னேநடந்தான்.—
௪௨ பெலிஸ்தியன் விழிபரப்பித் தாவீதைக்கண்ட
பொழுது அவன் இளைஞனும், செந்நிறமும்,
சௌந்தரிய முகமுள்ளவனுமாயிருந்தபடியால்
௪௩ அவனையவமதித்தான்.-பெலிஸ்தியன் தாவீதைப்
பார்த்து, நீ தடிகளோடு என்னிடத்தில்வர நான்
நாயாவென்றான்: அன்றியும் அந்தப்பெலிஸ்தி
யன் தன் தேவர்களைக்கொண்டு தாவீதைச்சபித்
௪௪ தான்.—பின்னும் பெலிஸ்தியன் தாவீதைநோக்
கி, நீ என்னிடத்தில்வா, நான் உன்மாமிசத்தை
ஆகாயத்துப்பறவைகளுக்கும், காட்டுமிருகங்க
ளுக்கும் கொடுத்துவிடுவேனென்றான்.—அதற் ௪௫
குத் தாவீது பெலிஸ்தியனை நோக்கி, நீ கட்கத்
தோடும், ஈட்டியோடும், கேடகத்தோடும் என்
னிடத்தில்வருகிறாய: நானோ நீ நிந்தித்த இஸ்ர
வேல் சேனைகளின் தேவனும், சேனாபதியுமா
கிய யெகோவாவின் நாமத்தைக்கொண்டு
உன்னிடத்தில் வருகிறேன்.—இன்றைத்தினம் ௪௬
யெகோவா என்கைக்குஉன்னை அகப்படுத்து
வார்; நான் உன்னைஅடித்து, சிரசேதம்பண்ணி;
பெலிஸ்தியருடைய சேனைகளின் பிணங்களை
இன்றைத்தினம் ஆகாயத்துப்பறவைகளுக்கும்,
பூமியிலுள்ள காட்டுமிருகங்களுக்கும் கொடுப்
பேன்; அதனால் இஸ்ரவேலருக்குள் தேவன்
உண்டென்பதைப் பூமண்டலத்திலுள்ள யாவ
ரும் அறிந்துகொள்ளுவார்கள்.—யெகோவா ௪௭
கட்கத்தினாலும், ஈட்டியினாலும், இரட்சிக்கிற
தில்லையென்பதை இந்தச்சனத்திரள் அனைத்தும்
அறிந்துகொள்ளும்: யுத்தம் யெகோவாவுடை
யதே, அவர் உங்களை எங்கள் கைகளுக்கு ஒப்
பிப்பாரென்றான்.—அந்தப்பெலிஸ்தியன் எழுந் ௪௮
து, தாவீதை எதிர்க்கப்புறப்படுகையில், தாவீது
விரைந்து பெலிஸ்தியனை யெதிர்க்கச் சேனைக
ளுக்கு நேரேஓடி,—தன்பைக்குள்ளே கையை ௪௯
யிட்டு, ஒருகல்லையெடுத்து, கவணில்வைத்துச்
சுழற்றி, பெலிஸ்தியனுடைய நெற்றியிலே பட
எறிய, கல்அவன்நெற்றியிலுருவிச்சென்றதினால்
அவன் தரையிலே முகங்குப்புறவிழுந்தான்;—
இவ்வண்ணமே தாவீது கவணினாலும் ஒருகல்வி ௫௰
னாலும் பெலிஸ்தியனை மேற்கொண்டு, அந்தப்
பெலிஸ்தியனை அடித்துக்கொன்றான்; தாவீதின்
கையிலே கட்கமில்லை.-அதனால் தாவீதுபெலிஸ் ௫௧
தியன் சமீபத்தில் ஓடி, அவன்மேல்நின்றுகொண்
டு, அவன் கட்கத்தைப்பிடித்து, உறையைவிட்டு
ருவி அவனைக்கொன்று, அவன் சிரசைச்சேதித்
தான். தங்கள்வீரன்மரணமடைந்தானென்று பெ
லிஸ்தியர்கண்டு, ஓடிப்போனார்கள்.
அப்பொழுது இஸ்ரவேல்மனிதரும் யூதாமனி ௫௨
தரும் எழுந்து ஆரவாரம்பண்ணி, தாழ்ந்த பூமியி
னெல்லையிலுள்ள எக்ரோன் வாசல்மட்டும் பெ
லிஸ்தியரைத்தொடர்ந்தார்கள். காத்மட்டும், எக்
ரோன்மட்டும், ஷாராயீமுக்குப்போகிற வழியி
லே பெலிஸ்தியர் காயப்பட்டு விழுந்தார்கள்.—
இஸ்ரவேலர் பெலிஸ்தியரைத்தொடர்வதைவிட் ௫௩
டுத்திரும்பிவந்து, இவர்கள்பாளயங்களைக்கொள்
ளையிட்டார்கள்.—தாவீது தன்னாயுதங்களைக் கூ ௫௪
டாரத்தில் வைத்துவிட்டு, பெலிஸ்தியனுடைய
தலையை யெரூஷலேமுக்குக்கொண்டுவந்தான்.

(௩௩) எண்.௰௩.௩௩. உபா.௯.௨. (௩௭) சங்.௰௮.௰௬,௰௭. ௨.கொரி.௧.௰. ௨.தீமோ.௪.௰௭,௰௮. அதி.௨௰.௰௩. ௧.நாளா. ௨௨.௰௧,௰௬. (௪௨) சங்.௱௨௩.௩,௪. ௧.கொரி.௧.௨௭,௨௮. அதி.௰௬.௰௨. (௪௩) அதி.௨௪.௰௪. ௨.சாமு.௩.௮. ௨.இரா. ௮.௰௩. (௪௪) ௧.இரா.௨௰.௰,௰௧. (௪௫) ௨.சாமு.௨௨.௩௩,௩௫. சங்.௱௨௪.௮. சங்.௱௨௫.௧. ௨.கொரி.௰.௪. எபி.௰௧. ௩௩,௩௪. வச.௰. (௪௬) உபா.௨௮.௨௬. யோசு.௪.௨௪. ௧.இரா.௮.௪௩. ௨.இரா.௰௯.௰௯. ஏசா.௫௨.௰. (௪௭) சங்.௪௪. ௬,௭. ஓசி.௧.௭. சக.௪.௬. ௨.நாளா.௨௰.௰௫. (௫௰) அதி.௨௧.௯. நியா.௩.௩௧. ௨.சாமு.௨௩.௨௧. (௫௧) எபி.௰௧.௩௪. (௫௨) யோசு.௰௫.௩௧.

௫௫ தாவீது பெலிஸ்தியனை எதிர்க்கப்போவதை
ஷவுல்கண்டு, சேனாபதியாகிய அப்னேரை நோக்
கி, அப்னேரே, இந்த வாலிபன் ஆருடைய புத்தி
ரன் என்றுகேட்க; அப்னேர், இராசாவே, நான்
அறியேனென்று உமது பிராணனைக்கொண்டு
௫௬ சொல்லுகிறேனென்றான்.—அப்பொழுது இரா
சா அந்தவாலிபன் ஆருடைய புத்திரனென்று வி
௫௭ சாரியென்றான்.—தாவீது பெலிஸ்தியனைக்கொன்
று திரும்புகையில், அப்னேர் அவனை ஷவுலுக்
குமுன் அழைத்துக்கொண்டுபோய்விட்டான்:
பெலிஸ்தியனுடைய தலை அவன் கையிலிருந்த
௫௮ து.—ஷவுல் அவனைநோக்கி, வாலிபனே, நீ ஆரு
டையபுத்திரனென்றுகேட்க, தாவீது, நானுமதடி
யானும், பேத்லகேமியனுமாகிய ஈஷாயின் புத்
திரனென்றான்.

## ௰௮. அதிகாரம்.

௧. தாவீது யோனத்தான் மேல்வைத்த அன்புகுறித்தல்: ௫. ஷவுல் பொறாமைகொள்ளல்: ௰. தாவீதைக்கொலைசெய்யவகைதேடல்: ௰௨. அவன் பயப்படல்: ௰௭. சேஷ்ட புத்திரியைத்தருவேனென்று வாக்குச்சொல்லல்: ௨௰. கனிஷ்ட புத்திரியைத் தருவேனென்று வாக்குச்சொல்லல்: ௨௮. தாவீது செய்த கிரியைகளினிமித்தம் அவன்பயம் அதிகரித்தல்.

அவன் ஷவுலுடன் சம்பாஷித்து முடிந்தபின்
பு, யோனத்தானுடைய ஆத்துமம் தாவீதின் ஆத்
துமத்தோடே ஐக்கமாயிற்று, யோனத்தான் அவ
னைத் தன் சுய ஆத்துமத்தைப்போல்நேசித்தான்.—
௨ ஷவுல் அவனைத் தன் பிதாவின்வீட்டுக்குத்திரும்
பிப்போகவிடாமல், அன்றைத்தினம் தன்னிடத்
௩ தில் சேர்த்துக்கொண்டான்.—யோனத்தான் தன்
சுய ஆத்துமத்தைப்போலத் தாவீதை நேசித்தபடி
யினாலே, அவனும் இவனும் உடன்படிக்கை
௪ பண்ணிக்கொண்டார்கள்.—யோனத்தான் தான்
தரித்திருந்தமேலங்கியையும், தன் வஸ்திரங்களை
யும்களைந்து அவைகளையும், தன் கட்கத்தையும்,
வில்லையும், இடைக்கச்சையும், தாவீதுக்குக் கொ
டுத்தான்.
௫ தாவீது ஷவுல் தன்னையனுப்பும் இடமெங்
கும்போய், புத்திமானாய் நடந்துவந்தான்: அத
னால் ஷவுல் அவனைப்படைகளுக்கு அதிபதி
யாக ஏற்படுத்தினான், அவன் சமஸ்தசனங்கள்
சமுகத்திலும், ஷவுலின் தாசர் சமுகத்திலும்,
௬ அங்கிகரிக்கப்பட்டான்.—தாவீது பெலிஸ்திய
னைக்கொன்று திரும்பி வருகையில், ஸ்திரிகள்
இஸரவேலின் சமஸ்த நகரங்களிலும்நின்று இரா
சாவாகியஷவுலைச்சந்திக்கவருகிறபொழுது, சந்
தோஷமாக மேளத்தோடும், கீதவாத்தியங்களோ
டும், பாடலாடல்செய்துகொண்டுவந்தார்கள்.—
அந்த ஸ்திரிகள் கீதவாத்தியத்தை வாசிக்கிற ௭
பொழுது, ஷவுல் ஆயிரம்பேரையும், தாவீதோப
தினாயிரம்பேரையும், கொன்றார்களென்று ஒருவ
ருக்கொருவர் சொன்னார்கள்.—அந்தவாக்கு ஷ ௮
வுலுக்குப் பிரியவீனமாயிருந்தபடியால் அவன்
மிகவுங்கோபங்கொண்டு, தாவீதுக்குப் பதினாயி
ரவரென்றும், எனக்கு ஆயிரவரென்றுஞ்சொல்
லிக்கீர்த்தனம்பண்ணினார்களே: இனி இராச்சி
யத்தையன்றிவேறென்ன அதிகம்பெற்றுக்கொள்
ளப்போகிறானென்றான்.—அந்நாள்முதல் ஷவுல் ௯
தாவீதைக் காய்மகாரமாய்ப் பார்த்தான்.
மற்றநாள் தேவனுடைய உத்தரவின்படி ௰
துஷ்ட ஆவி ஷவுல்மேல்வர, அவன்வீட்டுக்குள்
தீர்க்கதரிசனஞ்சொல்லிக்கொண்டிருந்தான்: தா
வீதுமுன்போலவே தன்கையினால் வாத்தியத்
தைத்தட்டினான்: அப்பொழுது ஷவுலின் கையி
லே ஒரு ஈட்டியிருந்தது.—ஷவுல் தாவீதைச் சுவ ௰௧
ரோடுருவக்குத்துவேனென்று ஈட்டியை அவன்
மேல் எறிய, தாவீது சாய்ந்து, இரண்டுதரம் அ
வன்சமுகத்துக்கு விலகிவிட்டான்.
யெகோவா தாவீதுடனிருக்கிறாரென்றும், ௰௨
தன்னைவிட்டுநீங்கிவிட்டாரென்றும் ஷவுல்கண்
டு, அவனுக்குப்பயந்தான்.—அதினால் ஷவுல் ௰௩
தன் சமுகத்தினின்றும் அவனை அகற்றி, ஆயிர
வருக்கதிபதியாக ஏற்படுத்தினான்; அவன்சனங்
கள் சமுகத்தில் போக்குவரவுசெய்துகொண்டி
ருந்தான்.—தாவீது தனது நெறிகளெல்லாவற்றி ௰௪
லும் புத்திமானாய் நடந்தான்; யெகோவா
அவனுடனிருந்தார்.—அவன்புத்திமானாய் நடந் ௰௫
துவருவதை ஷவுல்கண்டு, அவனுக்குப்பயந்
தான்.—இஸரவேலரும் யூதா சனங்களுமாகிய ௰௬
யாவரும், தாவீது தங்களுக்குமுன் போக்குவர
வுசெய்தபடியினாலே அவனை நேசித்தார்கள்.
ஷவுல் என்கையல்ல, பெலிஸ்தியருடையகை ௰௭
யே அவன்மேலிருக்கவேண்டுமென்கிற அபிப்
பிராயத்துடனே தாவீதைநோக்கி, கேள், என்மூத்
தமகளாகிய மேரப்பை உனக்கு விவாகஞ்செய்
துதருவேன்: நீ வீரவானாகமாத்திரமிருந்து யெ
கோவாவின் யுத்தங்களை நடத்துவாயாகவென்
றான்.—அதற்குத் தாவீது ஷவுலைநோக்கி, இராசா ௰௮
வுக்குமருமகனாகிறதற்கு நான் எம்மாத்திரம், என்
பிராணன் எம்மாத்திரம்; இஸரவேலருக்குள் என்
பிதாவின்வமிசம்எம்மாத்திரம் என்றான்.—ஷவுலி ௰௯
ன்புத்திரியாகியமேரப் தாவீதுக்குவிவாகஞ்செய்
துகொடுக்கவேண்டியசமயத்தில், மிகோலாத்திய
னாகிய அதரியேலுக்கு விவாகஞ்செய்துகொடுக்
கப்பட்டாள்.

(௫௫) அதி.௰௬.௨௧,௨௨. (௫௭) வச.௫௪. (௫௮) வச.௰௨.—(௰௮. அதி. ௧.) ஆதி.௪௪.௩௰. அதி.௰௯.௨. அதி.௨௰.௰௭. ௨.சாமு.௧.௨௬. உபா.௰௩.௬. (௨) அதி.௰௭.௰௫. (௫) வச.௰௪,௰௫,௩௰. (௬) யாத்.௰௫.௨௰. நியா.௰௧.௩௪. (௭) யாத்.௰௫.௨௧. அதி.௨௧.௰௧. அதி.௨௯.௫. (௮) பிர.௪.௪. அதி.௰௫.௨௮. (௰) அதி.௰௬.௰௪. அதி.௰௯.௨௪. ௧.இரா.௰௮.௨௯. அப்.௰௬.௰௬. அதி.௰௯.௯. (௰௧) அதி.௰௯.௰. அதி.௨௰.௩௩. நீதி.௨௭.௪. (௰௨) வச.௰௫,௨௯. அதி.௰௬.௰௩,௰௪. அதி.௰௬.௰௪, அதி,௨௮.௰௫. (௰௩) வச.௰௬. எண்.௨௭.௰௭. ௨.சாமு.௫.௨. (௰௪) வச.௫. ஆதி.௩௯.௨,௩,௨௩. யோசு.௬.௨௭. (௰௬) வச.௫. (௰௭) அதி.௰௭.௨௫. எண்.௩௨.௨௰,௨௭,௨௯. அதி.௨௫.௨௮. வச.௨௧,௨௫. ௨.சாமு.௰௨.௯. (௰௮) வச.௨௩. அதி.௯.௨௧. ௨.சாமு.௭.௰௮. (௰௯) ௨.சாமு.௨௧.௮. நியா.௭.௨௨.

௨௰ ஷவுலின் புத்திரியாகிய மீகாள் தாவீதைநே
சித்தாள்: அது ஷவுலுக்குத் தெரிவிக்கப்பட்ட
பொழுது, அவனுக்கு நலமாகத்தோன்றிற்று.—
௨௧ அதனால் ஷவுல் அவள் அவனுக்கு ஒரு கண்
ணியாகும்படிக்கும், பெலிஸ்தியரின்கை அவ
னுக்குவிரோதமாகும்படிக்கும், அவளை அவனுக்
கு விவாகஞ்செய்துகொடுப்பேனென்று சிந்தித்
து, தாவீதைநோக்கி, இந்நாளில் என்னிரண்டு
புத்திரிகளிலொருத்தியைக்கொண்டுஎனக்குமரு
௨௨ மகனுவாயென்றான்.—பின்பு ஷவுல் தன் பணிவி
டைக்காரரைநோக்கி, நீங்கள் தாவீதினிடத்தில்,
கேள், இராசா உன்மேல்பிரியமாயிருக்கிறார், அவ
ருடையசமஸ்ததாசரும் உன்னைநேசிக்கிறார்கள்;
ஆதலால் நீ இராசாவுக்கு மருமகனுனால் நலம்
என்று இரகசியமாய்ப் பேசிப்பாருங்களென்று
௨௩ கட்டளையிட்டான்.—அந்தவாக்குகளை ஷவுலின்
பணிவிடைக்காரர் தாவீதின் செவிக்கேறும்படி
சொல்ல, தாவீது நான் தரித்திரனும் அவமதிக்
கப்படுகிறவனுமாயிருக்க, இராசாவுக்கு மருமக
னுவது உங்களுக்குஒரு அற்பகாரியமாகத்தோன்
௨௪ றுகின்றதாவென்றான்.—தாவீது இன்னபிரகாரஞ்
சொன்னுனென்று ஷவுலின் பணிவிடைக்காரர்
௨௫ அவனுக்கு அறிவித்தார்கள்.—பின்பு ஷவுல், நீங்
கள் தாவீதினிடத்தில், இராசாவின் சத்துருக்களி
டத்தில் பழிவாங்கும்படி பெலிஸ்தியருடைய
நூறு அக்கிரசருமங்களேயொழிய, இராசாவேறு
பரிசம்வேண்டுகிறதில்லையென்று சொல்லுங்க
ளென்றான். ஷவுல் தாவீதைப் பெலிஸ்தியரின்
௨௬ கையினுல் விழப்பண்ணநினைத்தான்.—அவன்ப
ணிவிடைக்காரர் தாவீதுக்கு இதைச்சொன்ன
பொழுது, இராசாவுக்கு மருமகனுகிறது தாவீதுக்
குநலமாகத்தோன்றிற்று: நாள்கள் பூரணப்பட
௨௭ வில்லை.—அதனுல் தாவீது தன் ஆள்களுடன் எ
ழுந்துபோய், பெலிஸ்தியரில் இருநூறுபேரைக்
கொலைசெய்தான்; பின்பு தாவீது அவர்கள் அக்
கிரசருமங்களைக்கொண்டுவந்தான், அவன் இரா
சாவுக்கு மருமகனுகும்படி, அவர்கள் பூரணத்
தொகைக்கேற்க, இராசாவிடத்தில் அவைகளை
ஒப்புவித்தார்கள். ஷவுல் தன் புத்திரியாகிய மீகா
ளை அவனுக்குவிவாகஞ் செய்துகொடுத்தான்.
௨௮ யெகோவா தாவீதோடிருக்கிறாரென்றும்,
தன்புத்திரியாகிய மீகாள்அவனை நேசித்தாளென்
௨௯ றும் ஷவுல் கண்டுணர்ந்தான்.—ஷவுல் அதிகமதி
கமாய்த் தாவீதுக்குப்பயந்திருந்தான்; ஷவுல் தா
௩௰ வீதுக்குநித்திய சத்துருவானுன்.—அக்காலத்தில்
பெலிஸ்தியரின் அதிபதிகள் புறப்பட்டுவந்தார்
கள்: அவர்கள் புறப்பட்டுவர, ஷவுலின் சகலப
ணிவிடைக்காரரிலும் தாவீது மிகவும் புத்திமா
னய்நடந்தான்; அதனுல் அவன்பெயர் மிகவும்
மேன்மை சிறந்தது.

## ௰௯. அதிகாரம்.

க. யோனுதான் தாவீதுக்குச்சொல்லியவாக்கைத் தெரிவித்தல்: ௪. தாவீதைக்குறித்துப்பிதாவிடத்தில்வேண்டல்: ௮. ஷவுல் தாவீதின்மேல்பகைவைத்து, அவன்வீட்டுக்குச் சமீபித்தல்: ௮வனைக்கொல்லஆளனுப்பல்: ௰௨. தாவீதுதப்பியோடல்: ௰௮. அவன் சாமுவேலிடத்தில் ராமாவுக்குச்செல்லல்.

ஷவுல் தன் புத்திரனுகிய யோனுதான் இடத்தி க
லும், தன்சகல தாசரிடத்திலும், தாவீதைக்கொல்
லும்படி சொன்னுன்.—ஷவுலின் புத்திரனுகிய ௨
யோனுதான் தாவீதின்மேல்மிகவும் பிரியமாயி
ருந்தான்: அதினுல்யோனுதான்தாவீதைநோக்கி,
என்பிதாவாகிய ஷவுல் உம்மைக்கொல்ல வகை
தேடுகிறார்: ஆதலால் நீர்காலைமட்டும் சாவதான
மாகமறைவான ஒரு இடத்தில் ஒளித்துக்கொண்
டிரும்.-நானேபுறப்பட்டு, நீர்இருக்கும்வயல்வெ ௩
ளியில் என்பிதாவிடத்தில் நின்று, உம்மைக்கு
றித்து என் பிதாவினிடத்தில் சம்பாஷணைபண்
ணி, அறிந்ததை உமக்குத் தெரிவிப்பேனென்
றான்.
யோனுதான் தன்பிதாவாகிய ஷவுலிடத்தில் ௪
தாவீதுக்கு நலமாய்ப்பேசி, அவனைநோக்கி, தம
தடியானுகிய தாவீது தமக்குவிரோதமாகப்பா
வஞ்செய்யவில்லை, அவன்செய்த செய்கைக
ளெல்லாம் தமக்கு நன்மையாய்முடிந்தன; ஆத
லால் இராசாவாகியநீர் அவனுக்குவிரோதமாகப்
பாவஞ்செய்யலாகாது.-அவன் தன் பிராணனைக் ௫
கையில்வைத்து, அந்தப்பெலிஸ்தியனைக்கொலை
செய்ததினுலே, யெகோவா இஸ்ரவேலர்யா
வருக்கும் மகா இரட்சிப்பை யுண்டுபண்ணினு
ரே: நீரும் அதைக்கண்டு களிகூர்ந்திருந்தீரே:
இப்படியிருக்க, நியாயமின்றித் தாவீதைக்கொ
ன்று, குற்றமில்லாத இரத்தத்துக்கு விரோத
மாகப்பாவஞ்செய்கிறதென்னவென்றான்.—ஷ ௬
வுல்யோனுதானுடைய சொல்லைக்கேட்டு, யெ
கோவா நித்தியரானுல் அவன்கொல்லப்படுவ
தில்லையென்று ஆணையிட்டான்.—பின்புயோனு ௭
தான் தாவீதை அழைத்து, இவைகளெல்லாவற்
றையும் அவனுக்குத்தெரிவித்தான். அன்றியும்
யோனுதான்தாவீதைஷவுலினிடத்தில்கொண்டு
போய்விட்டான், அவன்முன்போலஅவனுடை
யசமுகத்திலிருந்தான்.
திரும்பவும் யுத்தமுண்டாயிற்று: அப்பொழு ௮
து தாவீது புறப்பட்டுப்போய், பெலிஸ்தியரு
டன் யுத்தஞ்செய்து, மகாசங்காரமாக அவர்க
ளைவெட்ட, அவர்கள் அவன் முகத்துக்குத்தப்
பியோடினுர்கள்.—ஷவுல் தன்கையில் ஈட்டி ௯
யைவைத்துக்கொண்டு வீட்டிலேயிருக்கிறபொ
ழுது, யெகோவாவின் உத்தரவின்படி துஷ்

(௨௰) வச.௨௮. (௨௧) யாத்.௰.௭. வச.௰௭. வச.௨௬. (௨௫) ஆதி.௩௪.௰௨. யாத்.௨௨.௰௭. அதி.௰௪.௨௪. வச.௰௭. (௨௬) வச.௨௧. (௨௭) வச.௰௩. ௨.சாமு.௩௰.௪. (௩௰) ௨.சாமு.௰௧.௧. வச.௫. அதி.௨௬.௨௧. ௨.இரா.௧.௰௩. சங்.௱௰௯.௰௫.—(௰௯. அதி. ௨.) அதி.௰௮.௧. (௪) நீதி.௩௧.௮,௯. ஆதி.௪௨.௨௨. சங்.௩௫.௰௨. நீதி.௰௭.௰௩. எரே.௰௮.௨௰. (௫) நியா.௯.௰௭. அதி.௨௮.௨௧. சங்.௱௰௯.௱௯. அதி.௰௭.௪௯,௫௰. ௧.சாமு.௰௧.௰௩. அதி.௨௰.௩௨. மத்.௨௭.௪. (௭) அதி.௰௬.௨௧. அதி.௰௮.௨,௰௩. (௯) அதி.௰௬.௰௪. அதி.௰௮.௰,௰௧.

ட ஆவி அவன்மேல்வர, தாவீது தன் கையினால்
௰ வாத்தியத்தை வாசித்தான்.—அப்பொழுது ஷ
வுல் தன் ஈட்டியினாலே தாவீதைச் சுவரோடு
உருவக் குத்தப்பார்த்தான்; இவன் ஷவுலின் ச
முகத்துக்கு விலக, அவனெறிந்த ஈட்டி சுவரி
லேபட்டது: தாவீது அன்று இராத்திரி ஓடித்
௰௧ தப்பிவிட்டான்.—தாவீதுக்காகப்பதிவிருந்து, கா
லையிலே அவனைக்கொல்லும்படி, ஷவுல்அவன்
வீட்டுக்கு ஆள்களையனுப்பினான்: தாவீதின்ம
னைவியாகிய மீகாள் அவனைநோக்கி, இன்றிரவு
உமது சீவனைத்தப்புவியாதேபோனால், நாளை நீர்
கொல்லப்படுவீரென்றாள்.
௰௨ பின்பு மீகாள் தாவீதைப்பலகணிவழியாய் இ
௰௩ றக்கிவிட, அவன் தப்பியோடிப்போனான்.—மீ
காள் ஒரு விக்கிரகத்தை யெடுத்துக் கட்டிலிலே
வளர்த்தி, அதின் தலைமாட்டிலே ஒருவெள்ளாட்
டுத்தோலைப்போட்டு, புடவையினாலேமூடிவிட்
௰௪ டாள்.-தாவீதைக்கொண்டுவரும்படி ஷவுல் ஆள்
களை அனுப்பினபொழுது, அவர் வருத்தமாயிருக்
௰௫ கிறாரென்றாள்.-திரும்பவும்ஷவுல், தாவீதைநான்
கொல்லும்படி என்னிடத்தில் அவனைக் கட்டி
லோடே கொண்டுவாருங்களென்றுசொல்லி, அ
வனைப்பார்க்கிறதற்கு ஆள்களை யனுப்பினான்.—
௰௬ ஆள்கள் பிரவேசித்தபொழுது, வெள்ளாட்டுத்
தோல் தலைமாட்டிலேயிருக்க, கட்டிலின்மேல்
௰௭ ஒருவிக்கிரகம் கிடந்தது.—அப்பொழுது ஷவுல்
மீகாளைநோக்கி, நீ இப்படி என்னைவஞ்சித்து,
என் சத்துருவைத் தப்பிப்போகும்படி அனுப்
பிவிட்டதென்னவென்றுகேட்க; மீகாள் ஷவு
லைநோக்கி, அவரென்னிடத்தில் என்னை விட்
டுவிடு, நான் உன்னைக் கொல்லவேண்டியதென்
னவென்றாரென்றாள்.
௰௮ இப்படித்தாவீது தப்பியோடி ராமாவிலிருந்த
சாமுவேலிடத்தில்போய், தனக்கு ஷவுல் செய்
தயாவையும் அவனுக்குத்தெரிவித்தான். பின்பு
அவனும் சாமுவேலும் நயோதில் போய்த்தங்கி
௰௯ யிருந்தார்கள்.—தாவீதுராமாவிலுள்ளநயோதில்இ
ருக்கிறானென்பது ஷவுலுக்குத் தெரிவிக்கப்பட்
௨௰ டது.—அப்பொழுது ஷவுல் தாவீதைக்கொண்டு
வரும்படி ஆள்களையனுப்பினான்: அவர்கள் தீர்க்
கதரிசிகளின்சங்கம் தீர்க்கதரிசனஞ்சொல்வதை
யும், சாமுவேல் அவர்கள்தலைவனாகநிற்பதையுங்
கண்டபொழுது, ஷவுலுடைய ஆள்களின்மே
லுந் தேவனுடைய ஆவி வர, அவர்களுந்தீர்க்க
௨௰௧ தரிசனஞ்சொன்னார்கள்.—இது ஷவுலுக்குத் தெ
ரிவிக்கப்பட்டபொழுது அவன் வேறாள்களைய
னுப்ப, அவர்களுந் தீர்க்கதரிசனஞ்சொன்னார்
கள். ஷவுல்திரும்பமூன்றாம்முறையும் ஆள்களை
யனுப்ப, அவர்களுந் தீர்க்கதரிசனஞ்சொன்னார்
௨௰௨ கள்.-பின்பு அவனும் ராமாவுக்குப்போய், சகூவி
லிருக்கிறபெரிய கிணற்றண்டையிலே சேர்ந்து,
சாமுவேலுந் தாவீதும் எங்கேயென்றுகேட்க;
ஒருவன் ராமாவிலுள்ள நயோதிலிருக்கிறார்க
ளென்றான்.—அவன் ராமாவிலுள்ள நயோதுக் ௨௩
குப்போனான்: அவன்மேலுந் தேவனுடைய
ஆவிவர ராமாவிலுள்ள நயோதுக்குப் போகும்
வரைக்கும் தீர்க்கதரிசனஞ் சொல்லிக்கொண்டு
போனான்.—அவன் தன் வஸ்திரங்களைக்களைந்து, ௨௪
தானுஞ் சாமுவேலின் சமுகத்தில் தீர்க்கதரிச
னஞ்சொல்லி, அன்றுபகல்முழுவதும் இராமுழு
வதும் வஸ்திரமில்லாமல்விழுந்துகிடந்தான். அ
தனால் ஷவுலுந் தீர்க்கதரிசிகளுக்குள்ளிருக்கிறா
னா என்பார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. யோனத்தானும் தாவீதும் சம்பாஷித்தல்: ௰௧. அவர்கள் வயல்வெளிக்குப்போய் ஆணையிட்டு உடன்படிக்கைசெய்தல்: ௨௪. தாவீதுதன்ஸ்தானத்தில் இராததினால் ஷவுல் யோனத்தான்மேல் கோபித்தல்: ௩௫. யோனத்தான்தாவீதுக்குச்செய்திதெரிவித்தல்.

தாவீது ராமாவிலுள்ள நயோதிலிருந்து தப்பி ௧
யோடி, யோனத்தானுக்கு முற்பட்டு, நான் என்
னசெய்தேன்; உமதுபிதா என்பிராணனை வாங்
கவகைதேடும்படிநான்செய்த அநியாயமென்ன;
அவருக்குமுன் நான்செய்த பாவமென்னவென்
றுசொல்ல,—இவன் அவனைநோக்கி, அப்படி ௨
வராது; நீர் மரிக்கமாட்டீர்: கேளும், என்பிதா
எனக்கு அறிவியாமல், பெரிய காரியத்தையா
கிலும் சிறியகாரியத்தையாகிலுஞ் செய்யமாட்
டார்: இந்தக்காரியத்தைஎன்பிதாஎனக்குமறைப்
பாரா; அப்படியில்லையென்றான்.—அதற்குத்தா ௩
வீது, உமது கடாட்சம் எனக்குக்கிடைத்ததென்
று உமதுபிதா நன்றாய் அறிவார்; அதனால் அவர்
யோனத்தானுக்கிதை அறிவிக்கவேண்டாம். அ
வன் துக்கிப்பானேயென்கிறார்: எனக்கும் மர
ணத்துக்கும் நிச்சயமாய் ஒருஅடிதூரமாத்திரம் இ
ருக்கின்றதென்றுசொல்லி, நித்தியயெகோவா
வையும், சீவிக்கும்உமதாத்துமத்தையுங்கொண்டு
ஆணையிடுகிறேனென்றான்.-அப்பொழுது யோ ௪
னத்தான் தாவீதைநோக்கி, உமது மனம்விரும்பு
கிறதெதுவோ, அதை உமது நிமித்தஞ் செய்வே
னென்றான்.—அதற்குத் தாவீது யோனத்தானுட ௫
னே, நாளைக்கு அமாவாசி, நான் இராசாவோடே
புசிக்கவேண்டுமே: ஆயினும் மூன்றாம்நாள் சா
யங்காலம் வயலில் ஒளித்திருக்க என்னைவிட்டு
விடும்.—நான் எங்கேயென்று உமதுபிதாக்கேட் ௬
டால், தாவீது தன் ஊராகிய பேத்லகேமிலே
தன்வமிசத்தார்யாவரும் வருஷாந்தர பலியிடுகி
றபடியால் அங்கேபோகும்படி என்னிடத்தில்
வருந்திக் கேட்டானென்றுசொல்லும்.—அதற்க ௭

(௰௧) சங்.௫௯. (௰௨) யோசு.௨.௰௫. அப்.௯.௨௪,௨௫. (௰௩) ஆதி.௩௧.௰௯. நியா.௰௭.௫.(௰௭)௨.சாமு.௨.௨௨.(௨௰) யோவா.௭.௩௨,௪௫,. அதி.௰.௫,௬. ௧.கொரி.௰௪.௩,௨௪,௨௫. எண்.௰௧.௨௫. யோவே.௨.௨௮.(௨௩) அதி.௰.௰.(௨௪) ஏசா.௨௰.௨. எண்.௨௪.௪. மீகா.௧.௮. ௨.சாமு.௬.௰௪,௨௰. அதி.௰.௰௧.—(௨௰. அதி. ௨.) வச.௰௨. அதி.௯.௰௫. (௫) எண்.௰.௰. எண்.௨௮.௰௧. அதி.௰௯.௨. (௬) அதி.௰௬.௪. அதி.௯.௰௨. (௭) ௨பா.௧.௨௩. ௨.சாமு.௰௭.௪. அதி.௨௫. ௰௭. எஸ்த.௭.௭.

வர் நல்லதென்றால், உமதடியானுக்கு நன்மை
யாகும்: அவர் மிகவும் கோபமாயிருந்தால் நிச்ச
யமாய் அவர் தீமைசெய்யத் தீர்மானித்திருக்கிறா
௮ ரென்று அறிந்துகொள்ளும்.—நீர் யெகோவா
வின் முன்னிலையில் உமதடியானோடு உடன்ப
டிக்கை பண்ணியிருக்கிறீரே; ஆதலால் உமதடி
யானுக்குத்தயைசெய்யவேண்டும்: என்மேற்குற்
றமுண்டானால்நீரே என்னைக்கொல்லும்; உம்மு
டைய பிதாவிடத்துக்குக் கொண்டுபோகவேண்
௯ டியதென்னவென்றான்.—அப்பொழுது யோனா
தான் அந்த எண்ணத்தைத் தூரத்திலே தள்ளும்:
என்பிதா உமக்குத் தீமைசெய்யத் தீர்மானித்தா
ரென்று நான் நிச்சயமாய் அறிந்தேனாகில், நான்
அதை உமக்குச்சொல்லாமல் விடுவேனாவென்
௰ றான்.—அதற்குத் தாவீது யோனதானைநோக்கி,
உமதுபிதா கடுமையான உத்தரஞ்சொன்னால்,அ
தை ஆரெனக்குச்சொல்லுவார் என்றான்.
௰௧ பின்புயோனதான் தாவீதுடனே நாம் வெளி
யே புறப்பட்டுப்போவோம் வாருமென்றான்.
அப்படியே அவர்களிருவரும் வெளியே புறப்
௰௨ பட்டுப்போனார்கள்.-யோனதான் இஸரவேலின்
தேவனாகிய யெகோவாவை முன்னிட்டுத்
தாவீதைநோக்கி, நான் நாளை இந்நேரமாயினும்,
நாளைநின்றாயினும், என் பிதாவைச்சோதித்துத்
தாவீதுக்கு நன்மையுண்டென்று கண்டும், அதை
உமக்கு வெளிப்படுத்தும்படி சொல்லியனுப்பா
திருந்தால்; யெகோவா யோனதானுக்கு அப்
௰௩ படியும் அதற்கதிகமுஞ்செய்வாராக.—உமக்குத்தீ
மைசெய்யும்படி என்பிதாவுக்குப்பிரியமாயிருந்
தாலும், அதை நான் உமக்குத்தெரிவித்து, நீர்சுக
மேபோய்விடும்படி நான் உம்மை அனுப்பிவிடு
வேன்: யெகோவா என்பிதாவோடு இருந்தது
௰௪ போல் உம்மோடும் இருப்பாராக.—நான் உயி
ரோடிருக்கையில் யெகோவாசெய்ததுபோல்,
நான் மரியாதபடி நீர் எனக்குத்தயைசெய்யமாட்
௰௫ டீரா.—தாவீதின் சத்துருக்களாகிய ஒவ்வொருவ
ரையும் பூமியின்முகத்தினின்றும் யெகோவா
சேதித்தபின்னும், ஒருபொழுதும் உமது தயை
என்குடும்பத்தாருக்குமில்லாதொழிய விடாதிரு
௰௬ மென்றான்.—இவ்வண்ணமே யோனதான் தா
வீதின் சத்துருக்கள் கையில் யெகோவா உத்
தரவாதங்கேட்கக்கடவரென்று சொல்லி, தாவீ
தின் குடும்பத்தாரோடும் உடன்படிக்கைபண்
௰௭ ணினான்.—யோனதான் தாவீதை மிகவும் நே
சித்தபடியினாலே, திரும்பவும் அவனை ஆணையி
டுவித்தான்: அவன் தன் பிராணனைப்போலவே
௰௮ அவனைநேசித்தான்.—பின்பு யோனதான் தாவீ
தை நோக்கி, நாளை அமாவாசி: பந்தியிலே நீர் உ
மதாசனத்திலிராவிட்டால், நீர் வரவில்லையென்
௰௯ பது வெளிப்படும்.—மூன்றுநாள் தரித்திருந்து,
காரியம்நடந்தபொழுது, நீர் ஒளித்திருந்த ஸ்தா
னத்துக்கு விரைந்துவந்து, ஏசெலென்னுங்கல்
லுக்குச் சமீபத்தில் நில்லும்,-அப்பொழுது நான் ௨௰
இலக்குவைத்து எய்வதுபோல், அதற்குப் புறத்
தில் மூன்று அம்புகளை எய்து,—ஒருபாலகனிடத் ௨௧
தில்,நீ அந்த அம்புகளைப்பார்த்துவாவென்றுசொ
ல்லியனுப்புவேன். கேளும்,அம்புகள் உனக்கிப்
புறத்திலிருக்கின்றன, அவைகளை யெடுத்துவா
வென்று அந்தப்பாலகனிடத்தில் திட்டமாய்ச்
சொன்னால், நீர் வாரும்: உமக்கு நன்மையன்றி,
தீமையில்லையென்றுநித்திய யெகோவாவைக்
கொண்டு ஆணையிடுகிறேன்.—அம்புகள் உனக் ௨௨
கப்புறமிருக்கின்றன பாரென்று நான் பாலக
னிடத்திற்சொன்னால்; யெகோவா உம்மை
யனுப்பிவிட்டாரே; நீர் வழிகொண்டுபோய் வி
டும்.—கேளும், நீரும் நானும் பேசிக்கொண்ட ௨௩
காரியத்துக்கு, யெகோவா உமக்கும் எனக்
கும்சதாகாலமும் சாட்சி என்றான்.
பின்பு தாவீதுவயலில் ஒளித்துக்கொண்டிருந் ௨௪
தான்: அமாவாசியானபொழுது, இராசா பந்தி
யிலிருந்தான்.—இராசா சுவர் அருகேயுள்ள தன் ௨௫
ஆசனத்தில் முன்போலிருந்தான்: யோனதான்
எழுந்திருக்க, அப்னேர் ஷவுலுக்குப்பக்கத்திலி
ருந்தான்,தாவீதின் ஆசனத்திலொருவருமில்லை.-
அவனுக்கேதோநடந்தது, அதனால் அவன் அசுசி ௨௬
யானான்; நிச்சயமாய் அசுசியானானென்று எண்
ணிக்கொண்டபடியினால்; ஷவுல் அன்றைத்தி
னம் ஒன்றும்பேசவில்லை.-அந்தமாதத்தின்இரண் ௨௭
டாந்தினமாகிய மற்றநாளும், தாவீதின் ஆசனத்
திலொருவருமில்லை: ஆதலால் ஷவுல் தன்புத்தி
ரனாகிய யோனதானைநோக்கி, ஈஷாயின் புத்தி
ரன் நேற்றும்இன்றும் போசனத்துக்கு வராததே
தென்றுகேட்க;—யோனதான் ஷவுலுக்குத்தர ௨௮
மாக, பேத்லகேமுக்குப்போகத் தாவீது என்னை
வருந்திக்கேட்டான்.—அவன் தயைசெய்து என் ௨௯
னைப் போகவிடும்; எங்கள் வமிசத்தார் நகரத்
தில் பலியிடுகிறார்கள்; என்னை வரும்படி என் ச
கோதரன் அழைக்கிறான்: உமதுகடாட்சம்எனக்
குக்கிடைத்ததேயாகில்,நான்போய்என்சகோதர
ரைக்காணும்படி உத்தரவுதரவேண்டுமென்றான்.
அதனால் அவன் இராசாவின்பந்திக்குவரவில்லை
யென்றான்.—அப்பொழுது ஷவுல் யோனதா ௩௰
னின்மேல் கோபம்மூள அவனைநோக்கி, குறும்
பும்மாறுபாடுமுள்ளவனே, உனக்குவெட்கமாக
வும், உன்மாதாவுக்குநிருவாணவெட்கமாகவும்,
நீ ஈஷாயின் புத்திரனைத்தெரிந்துகொண்டதை
நான் அறியேனா.—ஈஷாயின் புத்திரன் பூமி ௩௧
யின்மேல் உயிரோடிருக்குமளவும் நீயானாலும்,
உன்இராச்சியமானாலும்நிலைப்படுவதில்லை. இப்
பொழுதே ஆளனுப்பி அவனைப் பிடிப்பித்துக்
கொண்டுவா, அவன்சாவதே நிச்சயமென்றான்.-
அதற்கு உத்தரமாகயோனதான் தன் பிதாவாகிய ௩௨

(௮)யோசு.௨.௰௪. வச.௰௬. அதி.௰௮.௩. அதி.௨௩.௰௮. ௨.சாமு.௰௪.௩௨.(௰௨)வச.௨. (௰௩)ரூத்.௧.௰௭. யோசு.௧.௫. அதி.௰௭.௩௭. ௧.நாளா.௨௨.௰௧,௰௬. (௰௫) ௨.சாமு.௯.௧,௩௭. ௨.சாமு.௨௧.௭. (௰௬) அதி.௨௫.௨௨. அதி.௩௧.௨. ௨.சாமு.௪.௭. ௨.சாமு.௨௧.௮. (௰௭) அதி.௰௮.௧. (௰௮) வச.௫. (௰௯) அதி.௰௯.௨. (௨௧)எரே.௪.௨.(௨௩)வச.௰௪,௰௫.வச.௪௨. (௨௬) லேவி.௭.௨௧. லேவி.௰௫.௫.(௨௮) வச.௬.(௩௨)அதி.௰௯.௫. மத்.௨௭.௨௩. லூக்.௨௩.௨௨.

ஷவுலைநோக்கி, அவன் கொலைசெய்யப்படவே
ண்டியதென்ன; அவன் என்னசெய்தானென்
௩௩ ருன்.—அதற்கு ஷவுல் அவனைக் குத்துகிறதற்கு
ஈட்டியை அவன்மேல் எறிந்தான்: அதனால் யோ
னத்தான், தன் பிதா தாவீதைக்கொலைசெய்ய நிச்
௩௪ சயித்திருக்கிருரென்று அறிந்தான்.—யோனத்தான்
மிகுந்த கோபத்துடன் பந்தியை விட்டெழுந்
தான், மாதத்தின் இரண்டாந்தினத்தில் போசனம்
பண்ணவில்லை: அவன் தன் பிதா தாவீதை அ
வமானம் பண்ணினபடியால், அவன் நிமித்தந்
துக்கித்தான்.
௩௫ மற்றநாட்காலமே யோனத்தான் தாவீதுக்குக்
குறித்தசமயத்தில், ஒருசிறுபாலகனையுங்கூட்டிக்
௩௬ கொண்டு வயலிலேபோய்;—அந்தப்பாலகனை
நோக்கி, நான் எய்கிற அம்புகளைத்தேடி எடுத்
துக்கொண்டு வாவென்ருன். பாலகன் ஓடுகிற
பொழுது, அவனுக்கப்பாற் செல்லும்படி ஒரு
௩௭ அம்பை எய்துவிட்டான்.—யோனத்தான் எய்த
அம்புசென்றதானத்துக்குப் பாலகன்போகையி
ல், யோனத்தான் பாலகனைக் கூப்பிட்டு, அம்பு
௩௮ உனக்கப்பால் அல்லவாவென்ருன்.—பின்னும்
யோனத்தான்பாலகனைக்கூப்பிட்டு, தரிக்கவேண்
டாம், சீக்கிரம், சீக்கிரமென்ருன். அப்படியே
யோனத்தானின் பாலகன் அம்புகளைப்பொறுக்கி
யெடுத்துக்கொண்டு, தன்னெசமானனிடத்தில்
௩௯ வந்தான்.—அந்தக் காரியத்தை யோனத்தானும் தா
வீதும் அறிந்ததேயொழிய, அந்தப்பாலகனொன்
௪௰ றும் அறியவில்லை.—யோனத்தான் தன் அம்புமு
தலியவைகளைப் பாலகனிடத்திற்கொடுத்து, இ
வைகளைப் பட்டணத்துக்குக் கொண்டுபோவெ
ன்ருன்.
௪௧ பாலகன் புறப்பட்டவுடனே, தாவீதுதெற்கு
முகமாய்த் தான் இருந்தஸ்தானத்தினின்றும்வந்
து, தரையிலே முகங்குப்புறவிழுந்து, மூன்று
தரந் தாழ்ந்தான்: அவர்கள் ஒருவரையொருவர்
முத்தஞ்செய்து அழுதார்கள், தாவீதோ மிகவும்
௪௨ அழுதான்.—யோனத்தான் தாவீதைநோக்கி, நீர்
சுகமேபோம், யெகோவா சதாகாலமும் எ
னக்கும் உமக்கும், என்சந்ததிக்கும் உமதுசந்த
திக்கும் சாட்சியென்றுசொல்லி, யெகோவா
வின் நாமத்தைக்கொண்டு நாம் இருவரும் ஆணை
யிட்டோமேயென்ருன்: பின்பு அவன் எழுந்து
புறப்பட, யோனத்தானும் பட்டணத்துக்குப்
போய்விட்டான்.

## ௨௧. அதிகாரம்.

௧. அகிமெலேக்கிடத்தில் தாவீதுபரிசுத்த அப்பம் வாங்கல்: ௭. தோவேக் அவ்விடத்திற் சேர்ந்து தங்கல்: ௮. பெலிஸ்தியனாகிய கொல்யாத்தின் கட்கத்தை எடுத்தல்: ௰. காத்தின் இராசாவைச் சந்தித்துப் பித்தன்போலக்காட்டல்.

பின்பு தாவீது நோப்பில் ஆசாரியனாகிய அகீ
மெலேக்கிடத்தில்போக, அகீமெலேக் தாவீதுவ
ருவதைக்கண்டு பயந்து, அவனைநோக்கி, ஒருவ
ருமின்றி நீ தனித்துவந்ததென்னவென்று கேட்
டான்.—அதற்குத்தாவீது ஆசாரியனாகிய அகீமெ ௨
லேக்கைநோக்கி, இராசா என்னிடத்தில் நான்
உன்னை அனுப்புங்காரியமின்னதென்றும், நான்
உனக்குக் கட்டளையிட்டதென்னவென்றும், ஒ
ருவருமறியாதிருக்கவேண்டுமென்று சொல்லி;
எனக்கொரு காரியத்தைக் கட்டளையிட்டார்:
நான்என்பணிவிடைக்காரரை அந்தந்த இடங்க
ளில் இருக்கச்சொல்லிவிட்டேன்.—உமது கை ௩
யிலிருக்கிறதென்ன; ஐந்தப்பமாகிலும், இருப்ப
தெம்மாத்திரமாகிலும் என்கையிலே தாருமென்
ருன்.—அதற்கு ஆசாரியன்தாவீதைநோக்கி, சா ௪
தாரண அப்பம் என்கையில் இல்லை, வாலிபர்
ஸ்திரிகளுடன்சேராதிருந்தால், பரிசுத்த அப்பம்
அகப்படக்கூடுமென்ருன்.—தாவீது ஆசாரியனை ௫
நோக்கி, நான் புறப்பட்ட முந்தைநாள் முத
லாக ஸ்திரிகள் எங்களுக்கு விலக்காயிருந்தார்
கள், வாலிபருடைய பாத்திரங்கள் சுத்தமாயி
ருக்கின்றன, இன்றைத்தினம் பாத்திரத்தில்வே
றப்பம்பரிசுத்தமாக்கப்பட்டதினால், இதுசாதார
ணமாயிற்றேயென்ருன்.—அப்பொழுது ஆசாரி ௬
யன் அவனுக்குப்பரிசுத்த அப்பத்தைக்கொடுத்
தான்: சூடான அப்பத்தை வைக்கிற சமயத்தில்,
யெகோவாவின் சந்நிதியினின்றும் எடுக்கப்
பட்டசமுகத்தப்பமேயொழிய, வேறப்பம் அங்
கில்லை.
அப்பொழுது ஷவுலின் பணிவிடைக்காரரி ௭
லொருவனும், ஷவுலின் மேய்ப்பருள் பிரதானி
யுமாகிய தோவேக்கென்னும் பெயருள்ள ஏதோ
மியன் அன்றைத்தினம் அங்கே யெகோவா
வின் சந்நிதியிலே தடைபட்டிருந்தான்.
தாவீதுஅகீமெலேக்கைநோக்கி, இங்கேஈட்டி ௮
யாகிலும்கட்கமாகிலும், உமது கைவசமுண்டா,
இராசாவின் காரியத்தைத் துரிதமாய்ச் செய்ய
வேண்டும் ஆதலால், என் கட்கத்தையும், மற்ற
ஆயுதங்களையுங் கொண்டுவரவில்லையென்ருன்.—
அதற்கு ஆசாரியன் நீர் ஏலாவென்னுந்தாழ்ந்தபூ ௯
மியிலேகொன்ற பெலிஸ்தியனாகிய கொல்யாத்
தின்கட்கம், ஏபோத்தென்னும் வஸ்திரத்துக்குப்
பின்னாக, ஒருபுடவையிலேசுற்றிவைத்திருக்கின்
றது: அதை எடுக்கப்பிரியமானால், எடும்: இங்
கே அதுவன்றி வேறில்லையென்ருன். தாவீது அ
தைப்போல வேறில்லை, அதை யெனக்குத்தாரு
மென்ருன்.
அந்நாளிலே தாவீது எழுந்து ஷவுலுக்குத்தப் ௰
பியோடி, காத்தின் இராசாவாகிய ஆகிஷிடத்
தில்போனான்.—ஆகிஷின் பணிவிடைக்காரர் அ ௰௧
வனைநோக்கி, இவனல்லவா தேசத்தின் இரா
சாவாகிய தாவீது; ஷவுல் ஆயிரம்பேரையும், தா

(௩௩) அதி.௰௮.௰௧. வச.௭.(௪௨) அதி.௧.௰௭. வச.௨௩.—(௨௧. அதி. ௧.) அதி.௰௪.௩. மாற்.௨.௨௬. அதி.௰௬.௪.(௪) யாத்.௨௫.௩௰. லேவி.௨௪.௫. மத்.௰௨.௪. யாத்.௰௯.௰௫. ௪௧.௭.௩. (௫) ௧.தெச.௪.௪. லேவி.௮.௨௬. (௬) மத்.௰௨.௩,௪. மாற்.௨.௨௫,௨௬. லூக்.௬.௩,௪. லேவி.௨௪.௮,௯. (௭) அதி.௨௨.௯. சங்.௫௨. (௯) அதி.௰௭.௨,௫௰. அதி.௩௧.௰. (௰) சங்.௩௪. (௰௧) சங்.௫௬.அதி.௰௮.௭. அதி.௨௯.௫.

வீது பதினாயிரம்பேரையும்,கொன்றார்களென்று
சொல்லி, ஒருவரோடொருவர் பாடி யாடவில்
௰௨ லையா வென்றார்கள்.—தாவீது இவ்வாக்குகளைத்
தன்மனதில்வைத்துக்கொண்டு, காத்தின் இராசா
௰௩ வாகிய ஆகிஸுக்குமிகவும்பயப்பட்டு,—அவர்க
ளுக்குமுன்பாகநடைவேறுபட்டு, அவர்களிடத்
தில்பித்தன்போலத்தன்னைக்காட்டி, வாசற்கதவு
களிலே கீறிக்கொண்டு, தன்தாடியில் வாய்நுரை
௰௪ ஒழுகநின்றான்.—அப்பொழுது ஆகிஷ்தன்பணி
விடைக்காரரிடத்தில், பாருங்கள்,இந்தமனிதன்
பித்தங்கொண்டவனென்று காண்கிறீர்களே: இ
வனை என்னிடத்தில் கொண்டுவந்ததென்ன.—
௰௫ பித்தங்கொண்டவர்கள் எனக்கவசியமா; இவனு
டைய பைத்தியத்தனத்தைக் காட்டும்படியாஇவ
னை என்சமுகத்திற் கொண்டுவந்தீர்கள்; இவன்
என்வீட்டில் வரலாமாவென்றான்.

## ௨௨. அதிகாரம்.

௧. அதுல்லாமின்குகையில் தாவீது இரட்சைபெ
றல்: ௩.அவன்தன்பிதாமாதாவைமோவாபுஇரா
சாவிடத்தில் ஒப்பித்தல்: ௫. காத்தென்னுந்தீர்க்
கதரிசியின்ஆலோசனைப்படிதாவீதுயூதாதேசத்
திற்செல்லல்: ௬. தாவீதைக்குறித்துஷவுல் தன்
தாசரைக் கண்டித்தல்: ௯. தோவேக் அகிமெ
லெக்கைக்குறித்துக் குறைசொல்லல்: ௰௧. ஆ
சாரியரைக் கொலைசெய்யும்படி ஷவுல் கட்ட
ளையிடல்: ௰௭. அவர்களும் அவர்கள் நகரமும்
நாசமடைதல்: ௨௰. அப்யாதார் தப்பியோடல்.

பின்பு தாவீது அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்
டு, அதுல்லாமென்னுங் கெபிக்குப் போனான்:
அவன்சகோதரரும்அவன்பிதாவின்குடும்பத்தார்
யாவரும்அதைக்கேட்டு, அங்கே அவனிடத்தில்
௨ போனார்கள்.-நெருக்கப்பட்டவர்களும், கடன்
பட்டவர்களும், மனக்கசப்படைந்தவர்களுமா
கிய யாவரும்அவனுடன்கூடிக்கொண்டார்கள்;
அவன் அவர்களுக்கு அதிபதியானான்: ஏறக்கு
றைய நானூறுபேர் அவனோடிருந்தார்கள்.
௩ தாவீது அவ்விடத்தைவிட்டு மோவாபிலுள்ள
மிஸ்பேக்குப்போய், மோவாபியரின் இராசா
வைநோக்கி, தேவன் எனக்கென்னசெய்வா
ரென்றுநானறியுமட்டும், என் பிதாவும் மாதாவும்
வந்து உம்மோடிருக்கவிடும்படி உம்மைவேண்
௪ டிக்கொள்ளுகிறேனென்றான்.—பின்பு அவன்
மோவாபிய இராசாவின்சமுகத்தில் அவர்களை
யழைத்துக்கொண்டுபோய் விட்டான்: தாவீது
துருக்கத்திலிருந்தகாலமுழுவதும், அவர்கள் அந்
த இராசாவோடிருந்தார்கள்.
௫ பின்பு காத்தென்னுந்தீர்க்கதரிசி தாவீதைநோ
க்கி, நீதுருக்கத்திலேதங்கியிராமல், யூதாதேசத்
துக்குப் புறப்பட்டுப்போய்விடென்றான். அப்
பொழுது தாவீதுபுறப்பட்டு அரேத்தென்னும்
காட்டிலேபோனான்.
௬ ஷவுல் கிபியாராமாவிலே ஒரு விருட்சத்தின்
கீழ் தன் பணிவிடைக்காரர்யாவரும் தன்னைச்
சூழ்ந்துநிற்க, தன்கையில் ஒரு ஈட்டியை வைத்
துக்கொண்டிருக்கிறபொழுது, தாவீது தன்னோ
டுகூடிய மனுஷரோடும் வெளிப்பட்டுவிட்டா
னென்று, கேள்விப்பட்டான்.—அப்பொழுது ஷ ௭
வுல் தன்சமீபத்தினின்ற பணிவிடைக்காரரை
நோக்கி,பேன்யாமீன்வமிசத்தாரே,கேளுங்கள்;
உங்களிலொருவனும் என்குமாரன் ஈஷாயின்
புத்திரனோடுஉடன்படிக்கை பண்ணினானென்
பதை எனக்குத்தெரிவிக்கவில்லை; உங்களிலொ
ருவனும் என்னிமித்தந் துக்கப்படவுமில்லை: இ
ன்றைத்தினம்போல், எனக்குச்சதிபண்ண என்
குமாரன் என்பணிவிடைக்காரனை எனக்குவி
ரோதமாக ஏவிவிட்டானென்பதை எனக்கு வெ
ளிப்படுத்தவுமில்லை.—நீங்கள் எல்லாரும் எனக் ௮
குவிரோதமாகத் துராலோசனை செய்ததற்காக, ஈ
ஷாயின் புத்திரன் உங்கள் ஒவ்வொருவருக்கும்
வயல்களையும், திராட்சத்தோட்டங்களையுந் தரு
வானோ; உங்களெல்லாரையும் ஆயிரவருக்கு அதி
பதிகளும், நூறுபேருக்கு அதிபதிகளுமாக ஏற்
படுத்துவானோவென்றான்.
அப்பொழுது ஷவுலின் பணிவிடைக்காரருக் ௯
குத் தலைவனும், ஏதோமியனுமாகிய தோவேக்,
ஈஷாயின் புத்திரனை நோப்பிலே அகிதூப்பின்
புத்திரனாகிய அகிமெலெக்கிடத்தில் வரக்கண்
டேன்.-இவன் அவன்நிமித்தம் யெகோவாவி ௰
னிடத்தில் உசாவினதுமன்றி, அவனுக்குப்போ
சனமுங்கொடுத்து, பெலிஸ்தியனாகிய கொல்
யாத்தின் கட்கத்தையுங் கொடுத்தானென்றான்.-
அதனால் ஷவுல்அகிதூப்பின் புத்திரனாகிய அகி ௰௧
மெலெக் என்னும் ஆசாரியனையும், நோப்பிலி
ருக்கிற அவன் பிதாவின் குடும்பத்தாராகிய ஆசா
ரியர்யாவரையும் அழைத்துவரும்படி ஆளனுப்
ப; அவர்களெல்லாரும் இராசாவிடத்தில் வந்
தார்கள்.—அப்பொழுது ஷவுல் அகிதூப்பின் ௰௨
புத்திரனே, கேளென்றுசொல்ல; இவன், என்
னாண்டவனே, இங்கே நிற்கிறேனென்றான்.—
பின்பு ஷவுல் அவனைநோக்கி,நீயும் ஈஷாயின் ௰௩
புத்திரனும், துராலோசனை பண்ணினதென்ன;
அவன் இன்றைத்தினம்போல், எனக்குவிரோத
மாயெழுந்து சதிசெய்யும்படி நீ அவனுக்கு அப்
பத்தையும் கட்கத்தையுங்கொடுத்து, அவன்நிமித்
தம் யெகோவாவிடத்தில் உசாவினதென்ன
வென்றான்.—அதற்கு அகிமெலெக் இராசாவை ௰௪
நோக்கி, இராசாவுக்கு மருமகனும், உமது கட்ட
ளைக்கமைந்துநடக்கிறவனும், உமது வீட்டிலே
மேன்மையுள்ளவனுமாகிய தாவீதைப்போல, உ
மதுசகல பணிவிடைக்காரரிலும் உண்மையுள்ள
வன்யாவன்.-ஆகிலும், நான் அவனிமித்தம் தே ௰௫
வனிடத்தில் விசாரிக்கத்தொடங்கினேனோ; அது
எனக்கு வெகு தூரமாயிருக்கும்: இராசா தமத
டியான்மேலும், என் பிதாவின்குடும்பத்தார் ஒ

(௰௨) லூக்.௨.௰௯. (௰௩) சங்.௩௪.—(௨௨. அதி.௧.) சங்.௫௭. சங்.௱௪௨. ௨.சாமு.௨௩.௰௩. (௨) நியா.௰௧.௩. (௫) ௨.சாமு.௨௪.௰௧. ௧.நாளா.௨௧.௯. ௨.நாளா.௨௯.௨௫. (௭) அதி.௨௰.௨. அதி.௰௮.௩. அதி.௨௰.௩௰. (௮) அதி.௮.௰௪. (௯) அதி.௨௧.௭. சங்.௫௨. அதி.௨௧.௧. அதி.௰௪.௩. (௰) எண்.௨௭.௨௧. அதி.௨௧.௬,௯.

ருவர்மேலும் குற்றஞ் சுமத்தவேண்டாம்: உமத
டியானாகிய நான் இவைகளைக்குறித்து, கூடவாயி
னும், குறையவாயினும், ஒன்றும் அறியேனென்
௰௬ றான்.—இராசா அகிமெலெக்கே, நீயும் உன்பிதா
வின்வீட்டாரும் மரிக்கவேவேண்டுமென்றான்.
௰௭ பின்பு இராசா தன் சமீபத்தினின்ற காலாட்க
ளைநோக்கி, யெகோவாவுடைய ஆசாரியர்க
ளின்கை தாவீதுக்குத்துணைநிற்கின்றது: அவன்
தப்பியோடினதைஅவர்கள்அறிந்திருந்தும்எனக்
குவெளிப்படுத்தவில்லை; ஆனபடியினால் நீங்கள்
திரும்பி அவர்களைக்கொல்லுங்களென்றான். இ
ராசாவின் பணிவிடைக்காரரோ, யெகோவா
வின் ஆசாரியர்களைக்கொலைசெய்யத்தங்கள்கை
௰௮ களைநீட்டச்சம்மதிக்கவில்லை.—அதினால் இராசா
தோவேக்கைநோக்கி, நீ திரும்பி, ஆசாரியர்கள்
மேற்பாய்ந்து கொன்றுபோடென்றான். ஏதோ
மியனாகிய தோவேக் ஆசாரியர்கள்மேற்பாய்ந்து,
அந்நாளிலே சணல் நூலினாற்செய்த ஏபோத்து
வஸ்திரத்தைத்தரித்த எண்பத்தைந்து பேரைக்
௰௯ கொன்றான்.—ஆசாரியர்களின் நகரமாகிய நோப்
பையுங் கட்கத்தின்வாயினாலே சங்கரித்தான்:
ஸ்திரிபுருஷர்களையும், பாலகரையும், குழந்தை
களையும், ஆடுமாடுகழுதைகளையுங் கட்கத்தின்வா
யினால் வெட்டினான்.
௨௰ அகிதூப்பின் புத்திரனாகிய அகிமெலெக்கின்
புத்திரருக்குள் அப்யாதார் என்னும் ஒருவன் தப்
௨௧ பித் தாவீதினிடத்தில் ஓடிப்போனான்.—அந்த
அப்யாதார் யெகோவாவின் ஆசாரியர்களை
ஷவுல் கொன்றானென்று தாவீதுக்குத்தெரிவிக்
௨௨ க,—தாவீது அப்யாதாரைநோக்கி, அன்றைத்தி
னமே ஏதோமியனாகிய தோவேக் அங்கிருந்தப
டியினாலே, அவன்நிச்சயமாய்ஷவுலுக்குச்சொல்
லுவானென்று எண்ணியிருந்தேன்: உன்பிதாவ
மிசத்தாராகிய சமஸ்தரின் மரணத்துக்கும் கார
௨௩ ணம்நானே.—நீஎன்னோடேயிரு, பயப்படவேண்
டாம்: என்பிராணனைத்தேடுகிறவன் உன்பிராண
னையுந்தேடுகிறான்: நீஎன்னுடன்தங்கினால், இ
ரட்சைபெறுவாயென்றான்.

## உ௩. அதிகாரம்.

க. கேயிலாவை முற்றிக்கைபோடல்: எ. ஷவுல்தாவீதைப்பிடிக்கவகைதேடல்: ௯. யெகோவா தாவீதுக்கு உத்தரமருளல்: ௰௩. தாவீதுசீப்பென்னும் வனத்திற்குத்தப்பியோடி யோனத்தானைச் சந்தித்தல்: ௰௯. சீப்பின் சனங்கள் தாவீதை ஷவுலுக்குக்காட்டல்: அவன்தொடராமல் திரும்பிவிடுதல்.

பின்பு பெலிஸ்தியர் கேயிலாவுடன்யுத்தம்பண்
ணி, போரடிக்குங் களத்திலே கொள்ளையிடுகி
றார்களென்று தாவீதுக்குத் தெரிவிக்கப்பட்ட
௨ து.—தாவீது, நான்போய் அந்தப்பெலிஸ்தியரை
முறிய அடிக்கலாமாவென்று யெகோவாவி
டத்தில்கேட்க; யெகோவா தாவீதிடத்தில்,
நீபோய்ப் பெலிஸ்தியரை முறியஅடித்து, கேயி
லாவை விடுவிப்பாயாகஎன்றார்.—தாவீதின்சனங் ௩
கள் அவனைநோக்கி, கேளும், நாம்யூதாவிலிருக்
கவும் பயப்படுகிறோம்: பெலிஸ்தியரின் சேனை
களுக்கு விரோதமாகக்கேயிலாவுக்குப்போவோ
மாகில், எவ்வளவதிகமென்றார்கள்.—அதினால் ௪
திரும்பவும் தாவீது யெகோவாவினிடத்தில்
கேட்க, யெகோவா அவனுக்கு உத்தரமாக,
நீ எழுந்து கேயிலாவுக்குப்போ, நான் பெலிஸ்
தியரை உன்கையில் ஒப்பிப்பேனென்றார்.—அதி ௫
னால் தாவீது தன் சனங்களைக்கூட்டிக்கொண்டு
போய், பெலிஸ்தியரோடேயுத்தம்பண்ணி, மகா
சங்காரமாக அவர்களை அழித்து, அவர்கள் மிரு
கஜெந்துகளைக்கொண்டுபோனான். இவ்விதமா
ய்த் தாவீது கேயிலாவிலுள்ளவர்களை இரட்சித்
தான்.—அகிமெலெக்கின் புத்திரனாகிய அப்யா ௬
தார் கேயிலாவிலுள்ள தாவீதினிடத்தில் தப்பி
யோடுகிறபொழுது, அவன் கையில் ஒருஏபோத்
திருந்தது.

தாவீது கேயிலாவிலே வந்திருக்கிறானென்று ௭
ஷவுலுக்குத்தெரிவிக்கப்பட்டபொழுது, ஷவுல்,
அவன் கதவுகளும் தாழ்களுமுள்ள நகரத்திற்
பிரவேசித்ததினால், உள்ளே அடைபட்டிருக்கி
றானே. தேவன் அவனை என்கையிலொப்பித்
தாரென்றான்.—பின்பு ஷவுல் தாவீதையும், அ ௮
வன் சனங்களையும் வளைக்கக் கேயிலாவுக்குப்
போகும்பொருட்டு, சகல சனங்களையும் யுத்தத்
துக்கு வரவழைத்தான்.

தாவீது தனக்கு ஷவுல் தீமைசெய்ய இரகசிய ௯
மாய் வகைதேடுகிறானென்றறிந்து, ஆசாரியனா
கிய அப்யாதாரைநோக்கி, ஏபோத்தை இங்கே
கொண்டுவாவென்றான்.—அப்பொழுது தாவீது, ௰
இஸரவேலின் தேவனாகிய யெகோவாவே,
ஷவுல் என்னிமித்தம் கேயிலாவுக்குவந்து, அ
தைச்சங்கரிக்க வகைதேடுகிறானென்று உமத
டியானாகிய நான் நிச்சயமாய்க் கேள்விப்பட்
டேன்.—கேயிலா ஊரார் என்னை அவன் கை ௰௧
யிலொப்பிப்பார்களா, உமதடியான் கேள்விப்
பட்டபடி ஷவுல் வருவானா; இஸரவேலின்
தேவனாகிய யெகோவாவே இதை உமதடி
யானுக்குத்தெரிவிக்கும்படிவேண்டுகிறேனென்
றுசொல்ல, யெகோவா அவன்வருவானென்
றார்.—திரும்பவுந் தாவீது கேயிலா ஊரார் என் ௰௨
னையும், என்சனங்களையும் ஷவுலின்கையில்ஒப்
பிப்பார்களாவென்று கேட்க; யெகோவா,
உன்னை ஒப்பிப்பார்களென்றார்.

பின்பு தாவீதும் அவன் சனங்கள் ஏறக்குறை ௰௩
ய அறுநூறுபேரும், எழுந்துகேயிலாவைவிட்டுப்
புறப்பட்டு, தாங்கள் போகக்கூடிய இடமெங்
கும்போனார்கள். தாவீது கேயிலாவில் நின்று
தப்பிவிட்டானென்று ஷவுலுக்குத்தெரிவிக்கப்
பட்டதினால், அவன் புறப்படாமல் விட்டுவிட்

(௰௭) யாத்.௧.௰௭. (௰௮) அதி.௨.௩௧. (௰௯) வச.௯,௰௧. (௨௰) அதி.௨௩.௬. அதி.௨.௩௩. (௨௩) ௧.இரா.௨.௨௬.— (௨௩. அதி. ௧.) யோசு.௰௫.௪௪. (௨) வச.௪,௬,௯. அதி.௩௰.௮. ௨.சாமு.௫.௰௯,௨௩. (௬) அதி.௨௨.௨௰. (௯) எண். ௨௭.௨௧. அதி.௩௰.௭. (௰) அதி.௨௨.௰௯. (௰௩) அதி.௨௨.௨. அதி.௨௫.௰௩.

௰௪ டான்;—தாவீதோ வனாந்தரத்திலுள்ள அரணான
ஸ்தானங்களிலேதங்கி, சீப்பென்னும் வனாந்த
ரத்தில் ஒரு மலையிலே தரித்திருந்தான். ஷவுல்
அனுதினமும் அவனைத்தேடியும், தேவன் இ
௰௫ வன் கையில் அவனை ஒப்புவிக்கவில்லை.—ஷ
வுல், தன்பிராணனைவாங்க வந்துவிட்டானென்
று அறிந்து, தாவீது சீப்பென்னும்வனத்திலுள்ள
௰௬ ஒருகாட்டிலேதங்கியிருந்தபொழுது;—ஷவுலின்
புத்திரனாகிய யோனத்தான் எழுந்து காட்டிலே
தாவீதினிடத்திற்போய், தேவன்மூலமாய் அ
வன் கையைப் பலங்கொள்ளும்படிசெய்து,—
௰௭ அவனைநோக்கி, என் பிதாவாகிய ஷவுலின்கரம்
உம்மைக்கண்டுபிடிக்கமாட்டாது, நீர் பயப்பட
வேண்டாம்: நீர் இஸரவேலருக்கு இராசாவாயி
ருப்பீர்,நான்உமக்கு இரண்டாவதாயிருப்பேன்;
அது என் பிதாவாகிய ஷவுலுக்குத் தெரியுமென்
௰௮ றான்.—பின்பு அவ்விருவரும்யெகோவாவின்
முன்பாக உடன்படிக்கைசெய்தார்கள்: தாவீது
காட்டிலே தங்க, யோனத்தான் தன் வீட்டுக்குப்
போனான்.
௰௯ பின்பு சீப்பூரார் கிபியாவிலே ஷவுலினிடத்
தில்வந்து, தாவீது எங்களிடத்தில் யெஷீமோ
னுக்குத் தென்றிசையில்அகீலாவென்னும் மலைக்
காட்டிலுள்ள அரணானஸ்தானங்களில்ஒளித்துக்
௨௰ கொண்டிருக்கிறானல்லவா.—இப்பொழுது இரா
சாவே, நீர் பூரணமனதோடே விரும்பியிருக்கிற
படி இறங்கிவாரும்; நாங்களே அவனை இராசா
௨௧ வின்கையிலொப்பிப்போமென்றார்கள்.—அதற்
கு ஷவுல், நீங்கள் என்மேல் தயைவைத்தபடியி
னாலே,யெகோவாவால் ஆசீர்வதிக்கப்படுவீர்
௨௨ களாக.—நீங்கள்போய்,அவன்கால்சஞ்சரிக்கிறஸ்
தானத்தையும்பார்த்து அவனைக்கண்டவன் இன்
னானென்பதையும், இன்னும் நன்றாய்ப்பார்த்து,
அறியுங்கள்: அவன்வெகு சூதாகநடந்துவருகிறா
௨௩ னென்று எனக்குத்தெரிவிக்கப்பட்டது.—அவன்
ஒளித்திருக்கிறமறைவிடங்களெல்லாவற்றையும்
பார்த்தறிந்துகொண்டு, நிச்சயச்செய்தி எனக்குக்
கொண்டுவாருங்கள், பின்பு நான் உங்களுடன்
வருவேன்: அவன் தேசத்திலிருந்தால் யூதாவி
லுள்ள ஆயிரவர் யாவருக்குள்ளும் அவனைத் தே
௨௪ டுவேனென்றான்.—அப்பொழுது அவர்கள் எழுந்
து ஷவுலுக்கு முன்னே சீப்புக்குப்போனார்கள்:
தாவீதும் அவன் சனங்களும் யெஷீமோனுக்குத்
தென்புறத்திலுள்ள சமபூமியிலே மாகோன் வ
௨௫ னாந்தரத்திலிருந்தார்கள்.—ஷவுலும்அவன்சனங்
களும் அவனைத்தேடப்போனார்கள். அது தாவீ
துக்குத் தெரிவிக்கப்பட்டதினால், அவன்மலையி
னின்றிறங்கி, மாகோன் வனாந்தரத்திலே தங்கி
னான். ஷவுல் அதைக்கேள்விப்பட்டமாத்திரத்
திலே மாகோன் வனாந்தரத்தில் தாவீதைப்பின்
றொடர்ந்தான்.—ஷவுல் மலைக்கு இப்புறத்திற் ௨௬
போக, தாவீதும் அவன் சனங்களும் மலைக்கு
அப்புறத்திற்போனார்கள்: ஷவுலும் அவன்சனங்
களும் தாவீதையும் அவன் சனங்களையும் சுற்றிப்
பிடிக்க வளைந்துகொண்டார்கள்; அதனால் ஷவு
லுக்குத்தாவீது தப்பியோடும்படி துரிதமானான்.
அந்தச்சமயத்தில் ஷவுலிடத்தில் ஒரு தூதன் ௨௭
வந்து, பெலிஸ்தியர் உமதுதேசத்தைச் சருவிவந்
து நிற்கிறார்களென்றான்.—அதனாலே ஷவுல்தா ௨௮
வீதைப் பின்தொடராமல் திரும்பிப் பெலிஸ்தி
யருக்கு விரோதமாய்ப்போனான்: அதினிமித்தம்
அவர்கள் அந்த ஸ்தானத்துக்குச் சேலா அம்மாலி
கொத்தென்றுபெயரிட்டார்கள்.—பின்புதாவீது ௨௯
அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டு, ஐன்கெதியி
லுள்ள அரணான ஸ்தானங்களிலே தங்கினான்.

## ௨௪. அதிகாரம்.

௧. ஐன்கெதியின் ஒரு குகையிலே தாவீது ஷ
வுலின் வஸ்திரவிளிம்பை யறுத்தும், அவனுயி
ரைக் காத்தல்: ௮. இந்தக்காரியத்தினால் ஷவு
லிடத்தில், தன் நிர்தோஷத்தை வெளிப்படுத்
தல்: ௰௬. ஷவுல் தன் தோஷத்தையுணர்ந்து
சொல்லித் தாவீதிடத்தில்ஆணைவாங்கித் திரும்
பிப்போதல்.

பின்பு ஷவுல் பெலிஸ்தியரைத் தொடர்வதை ௧
விட்டுத் திரும்பிவந்தபொழுது, தாவீது ஐன்கெ
தியின் வனாந்தரத்திலிருக்கிறானென்று, அவனுக்
குத்தெரிவிக்கப்பட்டது.—அதனாலே ஷவுல் இ ௨
ஸரவேலர் சமஸ்தருக்குள்ளும் தெரிந்துகொள்
ளப்பட்ட மூவாயிரம்பேரைக் கூட்டிக்கொண்
டு, தாவீதையும்,அவன்சனங்களையும், காட்டாடு
களின் கல்மலைகளிலே தேடப்போனான்.—வழி ௩
யருகேயுள்ள ஆட்டுத்தொழுவங்களுக்கு அவன்
வந்தபொழுது, ஷவுல் தன்கால்களை மூடும்படி
அவ்விடத்திலிருந்த ஒரு கெபியிலே பிரவேசித்
தான்: தாவீதும் அவன்சனங்களும் அந்தக்கெபிக்
குள்ளேயிருந்தார்கள்.—அப்பொழுது தாவீதின் ௪
சனங்கள் அவனைநோக்கி, கேளும்,நான்உன்சத்
துருவை உன்கையிலொப்பிப்பேன், அவனுக்
கு உன் இஷ்டப்படி செய்யலாமென்றுசொல்
லி, யெகோவா உமக்குக்குறித்ததினம் இது
வேயென்றார்கள்: தாவீது எழுந்துபோய், ஷவு
லின்மேலங்கியின் விளிம்பை அவனுக்குத்தெரி
யாதபடி அறுத்தான்.—அதன்பின்பு தான் ஷவு ௫
லின்வஸ்திரவிளிம்பை அறுத்ததினிமித்தம் தாவீ
தின்மனம் அவனைக்கடிந்துகொண்டது.—அவன் ௬
தன் சனங்களைநோக்கி, அவன் யெகோவா
வினால் அபிஷேகம்பெற்றவன், ஆதலால் யெ
கோவாவின் அபிஷேகனாகிய என் நாயகனுக்
கு விரோதமாய் என் கையை நீட்டி இப்படிச்
செய்யாமல், யெகோவா என்னைத் தடைப்

(௰௪) சங்.௰௧.௧. யோசு.௰௫.௫௫. சங்.௫௪.௩,௪.(௰௭)அதி.௨௪.௨௰.(௰௮)அதி.௰௮.௩. அதி.௨௰.௰௬,௪௨. ௨.சாமு.௨௧.௭. (௰௯) அதி.௨௬.௧. சங்.௫௪. (௨௰) சங்.௫௪.௩. (௨௪) யோசு.௰௫.௫௫. அதி.௨௫.௨. (௨௬) சங்.௩௧.௨௨. சங்.௰௭.௯. (௨௭) ௨.இரா.௰௯.௯. (௨௯) ௨.நாளா.௨௰.௨.—(௨௪. அதி. ௧.) அதி.௨௩.௨௮. (௨) சங்.௩௮.௰௨. (௩) சங்.௱௪௧.௬. நியா.௩.௨௪. சங்.௫௭. சங்.௱௪௨. (௪) அதி.௨௬.௮. (௫) ௨.சாமு.௨௪.௰. (௬) அதி.௨௬.௰௧.

௭ படுத்துவாராகவென்றான்.—இப்படித் தாவீதுதன்
பணிவிடைக்காரரை ஷவுலுக்கு விரோதமாயெ
ழும்பவிடாமல் இந்த வாக்குகளினாலே தடைப்
படுத்தினான். பின்பு ஷவுல் எழுந்து கெபியை
விட்டுத் தன்வழியேசென்றான்.
௮ அப்பொழுது தாவீது கெபியை விட்டுப்புறப்
பட்டுப்போய், என் ஆண்டவனே, இராசாவே
யென்றுசொல்லி ஷவுலைக் கூப்பிட்டான். ஷ
வுல் திரும்பிப்பார்த்தபொழுது, தாவீது தரையி
௯ லே தலைகுனிந்து வணங்கினான்.—அன்றியும்
தாவீது ஷவுலை நோக்கி, சேளும், தாவீது உமக்
குத் தீமைசெய்ய வகைதேடுகிறானென்றுசொல்
லுகிற மனிதரின் வாக்குகளை என்கேட்கிறீர்.—
௰ பாரும், இன்றைத்தினம் கெபியில் யெகோ
வா உம்மை என்கையிலொப்பித்தாரென்பதை
உமது கண்கண்டது: உம்மைக்கொலைசெய்யும்
படிசிலர் சொல்லியும், நான், அவன் யெகோ
வாவினால் அபிஷேகம்பெற்றவன்; என் ஆண்
டவனுக்கு விரோதமாய் என்கையை நீட்டமாட்
டேனென்றுசொல்லி, உம்மை இரட்சித்தேன்.—
௰௧ என்பிதாவே, கேளும், என் கையிலிருக்கின்ற உ
மது வஸ்திரத்தின்விளிம்பைப்பாரும்: உம்மைக்
கொல்லாமல் உமது வஸ்திரவிளிம்பைமாத்திரம்
அறுத்தேன்; இதனால் என்னிடத்தில் தீமையா
கிலுந் துரோகமாகிலும் இல்லையென்று கண்டு
கொள்ளும்: நான் உமக்குவிரோதமாய்ப் பாவஞ்
செய்யவில்லையே; அப்படியிருந்தும் நீரோ என்
௰௨ பிராணனைவாங்கத் தொடருகிறீர்.—யெகோ
வாவே எனக்கும் உமக்கும் மத்தியில் நியாயம் வி
சாரிப்பாராக, யெகோவாவே என்னிமித்தம்
உம்மிடத்திற் பழிவாங்குவாராக: என்கையோ
௰௩ உம்மைத் தீண்டாது.—தீயோரிடத்திலே தீமை
தோன்றுமென்று முதியோரின் பழமொழியுண்
௰௪ டு: என்கையோ உம்மைத்தீண்டாது.-இஸரவே
லின் இராசா ஆரைத்தேடப் புறப்பட்டார்; செத்
தநாயையா; தெள்ளுப்பூச்சியையா; ஆரைத்தொ
௰௫ டருகிறீர்;—எனக்கும் உமக்கும்மத்தியில் யெ
கோவாவே நியாயாதிபதியாகி நியாயந்தீர்ப்
பாராக: அவரேபார்த்து என் வழக்கைப்பேசி,
உமது கையினின்றும் என்னை விடுவிப்பாராக
வென்றான்.
௰௬ தாவீது இந்தவாக்குகளைச்சொல்லி முடிந்த
மாத்திரத்தில், ஷவுல், என்புத்திரனாகிய தாவீதே,
இது உன் குரலாவென்றான்: பின்பு ஷவுல்சத்த
௰௭ மிட்டழுதான்.—பின்பு ஷவுல் தாவீதைநோக்கி,
நான் உனக்குத்தீமைசெய்திருக்க நீஎனக்கு நன்
௰௮ மைசெய்தாயே, என்னிலும் நீயே நீதிமான்.-யெ
கோவா உன்கையில் என்னை ஒப்பித்தும், நீ
யென்னைக்கொல்லவில்லை: அதினாலே நீ எனக்
குச்செய்த நன்மையை இன்றைத்தினம்வெளிப்
படுத்தினாய்.—ஒருவன் தன்சத்துருவைக்கண்டு ௰௯
பிடித்தால், அவனைச்சுகமேபோக விட்டுவிடுவா
னோ; இன்றைத்தினம் நீ எனக்கு நன்மைசெய்
தாய், அதினிமித்தம் யெகோவா உனக்குநன்
மைசெய்வாராக.—கேள், நீ நிச்சயமாய் இராசா ௨௰
வாயிருப்பாய்: இஸரவேலின் இராச்சியபாரம்
உன்கைவசமாக நிலைப்படும், இது எனக்கு நன்
றாய்த்தெரியும்.—ஆதலால் எனக்குப்பின் என்வ ௨௧
மிசத்தைச்சேதியேனென்றும், என்பிதாவின் கு
டும்பத்தினின்று என்பெயரை ஒழிவியேனென்
றும், யெகோவாவைக்கொண்டு இப்பொழு
து எனக்கு ஆணையிட்டுத்தரவேண்டுமென்றான்.-
அப்பொழுது தாவீது ஷவுலுக்கு ஆணையிட்டுக் ௨௨
கொடுத்தான். பின்பு ஷவுல் வீட்டிற்குப்போய்
விட, தாவீதும் அவன்சனங்களும் அரணானஸ்தா
னத்திற்கு ஏறிப்போனார்கள்.

## ௨௫. அதிகாரம்.

௧. சாமுவேல் மரித்தல்: ௨. தாவீதுநாபாலிடம் சனங்களை அனுப்பல். ௰. நாபால் நிந்தித்ததினிமித்தம் தாவீது அவனைக்கொல்ல பணிவிடைக்காரரை ஆயத்தமாக்கல்: ௰௪. அபீகயிலுக்குக் காரியத்தை வெளிப்படுத்தல்: ௰௮. சில பொருளையெடுத்து அபீகயில் தாவீதிடஞ்செல்லல்: ௩௨. தாவீது அவளை அங்கிகரித்தல்: ௩௬. நாபால் மரித்தல்: ௩௯. தாவீது அபீகயிலை விவாகஞ்செய்தல்: தாவீதின் மனைவியாகிய மீகாள் வேறொருவனுக்கு விவாகஞ்செய்து கொடுக்கப்படல்.

சாமுவேல் மரணமடைந்தான்; இஸரவேலர்யா ௧
வருங்கூடிவந்து, அவன் நிமித்தந்துக்கங்கொண்
டாடி, ராமாவிலுள்ள அவன்வீட்டில் அவனை
அடக்கம்பண்ணினார்கள்.—பின்புதாவீது எழுந்து ௨
பாரன் வனத்திற்குப்புறப்பட்டுப்போனான். மா
கோன் ஊரானும் கர்மேலிலே சுதந்தரமுடைய
வனுமாகிய பெரிய மனுஷனொருவனிருந்தான்;
அவனுக்குமூவாயிரம் ஆடும், ஆயிரம் வெள்ளாடு
மிருந்தன.—அந்தமனிதனுடையபெயர் நாபால்; ௩
அவன்மனைவியின்பெயர் அபீகயில்: அந்த ஸ்திரி
விவேகியும், ரூபவதியுமாயிருந்தாள்: புருஷனோ
கொடியனுமாய், துன்மார்க்கனுமாய் இருந்தான்;
அவன் காலேபின் வமிசத்தான். அவன்கர்மேலி
லே தன் ஆடுகளுக்கு மயிர்கத்திரித்துக்கொண்டி
ருந்தான்.
நாபால்தன்னாடுகளுக்குமயிர்கத்திரிக்கிறானெ ௪
ன்று தாவீது வனத்திலே கேள்விப்பட்டான்.—
பின்பு தாவீது பத்துவாலிபரைநோக்கி, நீங்கள் ௫

(௭) சங்.௭.௪. மத்.௫.௪௪. ரோ.௰௨.௰௭.௰௯. (௯) சங்.௱௪௧.௯. நீதி.௰௯.௨௮. நீதி.௰௭.௯. (௰௧) சங்.௭.௩. சங்.௩௫.௭. அதி.௨௬.௨௰. (௰௨) ஆதி.௰௬.௫. நியா.௰௧.௨௭. அதி.௨௬.௰. யோபு.௫.௮. (௰௪) அதி.௰௭.௪௩. ௨.சாமு.௯.௮. அதி.௨௬.௨௰. (௰௫) வச.௰௨. ௨.நாளா.௨௪.௨௨. சங்.௩௫.௧. சங்.௪௩.௧. சங்.௱௰௯.௱௫௪. மீகா.௭.௯. (௰௬) அதி.௨௬.௰௭. (௰௭) அதி.௨௬.௨௧. ஆதி.௩௮.௨௬. மத்.௫.௪௪. (௰௮) அதி.௨௬.௨௩. அதி.௨௩.௰௨. அதி.௨௬.௮. (௨௰) அதி.௨௩.௰௭. (௨௧) ஆதி.௨௧.௨௩. ௨.சாமு.௨௧.௬.௮. (௨௨) அதி.௨௩.௨௯.—(௨௫. அதி. ௧.) அதி.௨௮.௩. எண்.௨௰.௨௯. உபா.௩௪.௮. (௨) ஆதி.௨௧.௨௧. சங்.௱௨௰.௫. அதி.௨௩.௨௪. யோசு.௰௫.௫௫. (௪) ஆதி.௩௮.௰௩. ௨.சாமு.௰௩.௨௩. (௫) அதி.௰௭.௨௨.

கர்மேலுக்குப்போய் நாபால் இடத்திற்சென்று,
௬ என்னுமத்தினாலே வாழ்த்துதல்சொல்லி,—அவ
னிடத்தில், நீர் வாழ்ந்திரும்; உமக்கும், உமது
குடும்பத்தாருக்கும், உமக்குரிய யாவற்றிற்கும்,
௭ வாழ்வு உண்டாவதாக.-ஆடுகளை மயிர்கத்திரிக்கி
றவர்களும்மிடத்தில் இருக்கிறார்களென்று கேள்
விப்பட்டேன்: எங்களோடிருந்த உம்முடைய
மேய்ப்பரை நாங்கள் வருத்தியிருக்கவில்லை, அ
வர்கள் கர்மேலிலேயிருந்த காலமுழுவதிலும்,
அவர்கள் பொருளொன்றுங் காணாமற்போன
௮ தில்லை.—உமது வாலிபரைக்கேட்டுப்பாரும், அ
வர்கள் சொல்லுவார்கள். ஆதலால் இந்தவாலி
பருக்கு உமதுகடாட்சங் கிடைக்கவேண்டும்:
நாங்கள் சுபதினத்தில்வந்தோம்: உமது கைக்கு
அகப்படுவதெதையாகிலும் உமது அடியாருக்
கும், உமதுமகனாகியதாவீதுக்குந்தரும்படிவேண்
டுகிறேனென்று சொல்லுங்களென்று சொல்லி,
௯ வாலிபரை அனுப்பினான்.—தாவீதின் வாலிபர்
போய், தாவீதின் நாமத்தைக்கொண்டு நாபாலுக்
கு இந்தவார்த்தைகள் யாவையுஞ்சொல்லி, பின்
பு பேசாமல் நின்றார்கள்.
௰ நாபால் தாவீதின் பணிவிடைக்காரருடன் தா
வீதென்பவனார்; ஈசாயின் புத்திரனார்; தங்கள்
தங்கள் நாயன்மாரைவிட்டுப் பிரிந்துபோகிற
௰௧ வர்கள் இந்நாளில் அநேகர்.—நான் என் அப்
பத்தையும், தண்ணீரையும், என் ஆடுகளுக்கு
மயிர்கத்திரிக்கிறவர்களின் நிமித்தம் நான் அடிப்
பித்த மிருகமாமிசத்தையும், எவ்விடத்தாரென்
று எனக்குத்தெரியாத மனுஷருக்குக் கொடுப்
௰௨ பேனாவென்றான்.—அதினாலே தாவீதின் வாலி
பர் தங்கள்வழியே திரும்பிப்போய்ச்சேர்ந்து,
இந்தவார்த்தைகள் யாவையும் அவனுக்குத்தெரி
௰௩ வித்தார்கள்.—அப்பொழுது தாவீது நீங்கள்உங்க
ளுங்கள் கட்கத்தைக் கட்டிக்கொள்ளுங்களென்
றுசொல்ல, அவர்கள் தங்கள்தங்கள் கட்கங்களை
அரையிற்கட்டிக்கொண்டார்கள். தாவீதும் தன்
கட்கத்தைக் கட்டிக்கொண்டான்: பின்பு தாவீ
துடன் ஏறக்குறைய நானூறுபேர் புறப்பட்டுப்
போக; இருநூறுபேர் தளவாளங்களைக்காக்க இ
ருந்துவிட்டார்கள்.
௰௪ அந்தச்சமயத்தில் வாலிபரிலொருவன் நாபா
லின்மனைவியாகிய அபீகயிலிடத்தில், கேள், தா
வீது நம்முடைய நாயனாருக்கு வந்தனஞ்சொல்
லும்படி தூதர்களை அனுப்பினான்; இவன் அவர்
௰௫ களைச்சீறினான்.-அந்தச்சனங்கள், எங்களுக்குமி
கவும் உபகாரிகளாயிருந்தார்கள், நாங்கள் வெ
ளிகளில் அவர்களுடன் சஞ்சரித்தளவும் எங்
களை அவர்கள் வருத்தினதுமில்லை, நமதுபொரு
ளில் யாதொன்று காணாமற் போனதுமில்லை.—
நாங்கள் ஆடுமேய்த்து அவர்களோடிருந்த கால ௰௬
முழுவதும், இரவும் பகலும் எங்களுக்கு ஒருமதி
லாயிருந்தார்கள்.—எங்கள் நாயனாருக்கும், அவர் ௰௭
பரிவாரம் அனைத்திற்கும், தீமை தீர்மானிக்கப்
பட்டிருக்கின்றது: ஆதலால் இப்பொழுது நீர்
செய்யவேண்டியதை விசாரித்து அறிந்துகொள்
ளும்; இவனுடன் ஒருவரும் பேசவுங்கூடாது;
இவன் ஒரு பேலியாலின் மகனென்றான்.
அப்பொழுது அபீகயில் சீக்கிரமாய் இருநூறு ௰௮
அப்பமும், இரண்டு துருத்தித்திராட்சரசமும், ச
மைக்கப்பட்ட ஐந்துஆடும்,ஐந்துசேர் வறுத்த தா
னியமும், நூறுதிராட்சக்குலைவற்றலும், இரு
நூறு அத்திப்பழஅடையும் எடுத்துக் கழுதைகளி
ன்மேலேற்றி,-தன் பணிவிடைக்காரரைநோக்கி, ௰௯
நீங்கள் முன்னேபோங்கள்; நான் பின்னேவரு
கிறேனென்றாள். அவள் தன்புருஷனாகிய நாபா
லுக்குச் சொல்லவில்லை.—அவள் கழுதையிலே ௨௰
றி, மலையின் மறைவில் இறங்கிவருகையில், தா
வீதும் அவன் சனங்களும் எதிர்ப்பட்டார்கள்;
அவள் அவர்களுக்கு முற்பட்டாள்.—தாவீது, ௨௧
அவனுக்குரியவைகளிலொன்றுங் காணாமற்போ
காதபடி வனாந்தரத்தில் அவனுக்குரிய யாவற்
றையும் காப்பாற்றினதுவீண்: நன்மைக்குப்பிர
தியாக, அவன் எனக்குத்தீமைசெய்தான்.—நான் ௨௨
விடியற்காலமட்டும் அவனுடைய புருஷரிலொ
ருவனையாகிலுந் தப்பவிட்டேனாகில், தாவீதின்
சத்துருக்களுக்குத் தேவன் அப்படியும் அதற்க
திகமுஞ் செய்வாராகவென்றுமுன்னேசொல்லி
யிருந்தான்.—அபீகயில்தாவீதைக்கண்டமாத்திரத் ௨௩
தில், அவள் தீவரித்துக்கழுதையைவிட்டிறங்கி,
தாவீதுக்கு முன்பாக முகங்குப்புறவிழுந்துவ
ணங்கி,-அவன்பாதத்தில்விழுந்து, ஆ, என் ஆண் ௨௪
டவரே, இந்தப்பாதகம் என்மேலாகட்டும்: உமது
அடியாள் உமது செவியிலேறப்பேசவிடும்படி
வேண்டுகிறேன், உமது அடியாளின் வாக்குக
ளைக்கேளும்.—என் ஆண்டவன், அந்தப்பேலியா ௨௫
லின் மனிதனாகிய நாபாலைச்சிந்தையில் வைக்க
வேண்டாம், அவன் பெயரும் அவனுஞ்சரி: அ
வன் நாமமே நாபால், மூர்க்கமே அவனிடத்துள்
ளது: உமதடியாளாகிய நான் என்னாண்டவன்
அனுப்பிய வாலிபரைக் காணவில்லை.—ஆதலால் ௨௬
என் ஆண்டவனே, நீர் இரத்தஞ் சிந்தாமலும்,
உமதுகை உமக்காகப் பழிவாங்காமலும், யெ
கோவா உம்மைத் தடைப்படுத்தினாரென்று;
நித்திய யெகோவாவையும், சீவிக்கிற உம
து பிராணனையுங் கொண்டு ஆணையிடுகிறேன்:
இப்பொழுது உமது சத்துருக்களும், என் ஆண்
டவராகிய உமக்குத் தீமைசெய்கிறவர்களும் நா
பாலைப்போலாவார்கள்.—உமதடியாள் என் ஆண் ௨௭

(௬) ௧.நாளா.௰௨.௰௮. சங்.௱௨௨.௭. லூக்.௰.௫. (௭) வச.௰௫.௨௧. (௮) நிகி.௮.௰. எஸ்த.௯.௰௯. (௰) நியா.௯.௨௮. சங்.௭௩.௭.௮. சங்.௱௨௩.௩.௪. (௰௧) நியா.௮.௬. (௰௩) ஆதி.௩௰.௨௪. (௰௫) வச ௭. (௰௬) யாத்.௰௪.௨௨. யோபு.௧.௰. (௰௭) ஆதி.௨௰.௭. உபா.௰௩.௰௩. நியா.௰௯.௨௨. (௰௮) ஆதி.௩௨.௰௩. நீதி.௰௮.௰௬. (௰௯) ஆதி.௩௨.௰௬.௨௰. (௨௧) சங்.௱௯.௫. நீதி.௰௭.௰௩. (௨௨) ரூத் ௧.௰௭. ஆதி.௩.௰௭. ஆதி.௨௰.௰௩,௰௬. வச.௩௪. ௧.இரா.௰௪.௰. ௧.இரா.௨௧.௨௧. ௨.இரா.௯.௮. (௨௩) யோசு.௰௫.௰௮. நியா.௧.௰௪. (௨௬) ௨.இரா.௨.௨. ஆதி.௨௰.௬. வச.௩௩. ரோ.௰௨.௰௯. ௨.சாமு.௰௮.௩௨. (௨௭) ஆதி.௩௩.௰௧. ஆதி.௩௰.௩௧. ௨.இரா.௫.௰௫. வச.௪௨. நியா.௪.௰.

டவனுக்குக்கொண்டுவந்த காணிக்கை, என்
ஆண்டவனைப்பின்பற்றுகிற வாலிபருக்குக்கொ
உஅ டுக்கப்படுவதாக.—என் ஆண்டவன் யெகோ
வாவின் யுத்தத்தை நடத்துகிறபடியால், யெ
கோவா என் ஆண்டவனுடைய குடும்பத்தை
நிலைப்படுத்துவாரே; உமது ஆயுள்நாட்களுக்குள்
உகூ உம்மிடத்திலே தீங்கு காணப்படவில்லை.—ஆ
கிலும் உம்மைத்தொடர்ந்து, உமது பிராணனை
வாங்கும்படி ஒரு மனிதன் எழுந்திருக்கிறான்:
உமது தேவனாகிய யெகோவா தம்மிடத்
துக்கு, என் ஆண்டவனுடைய ஆத்துமத்தைச் சீ
வன்பொருந்திய கட்டுக்குள்ளே கட்டுவார்; அ
வர் உமது சத்துருக்களின் ஆத்துமங்களையோ,
கூம கவணில் வைத்து எறிந்துவிடுவார்.—ஆனபடி
யால் உமது அடியாளின்குற்றத்தை மன்னியும்:
அப்பொழுது யெகோவா என் ஆண்டவனா
கிய உம்மைக்குறித்துத் தாம்சொல்லிய நல்வாக்
கின்படிசெய்து, உம்மை இஸரவேலருக்கு அதி
கூக பதியாக நியமிக்குங்காலத்தில்,—நியாயமின்றி
இரத்தஞ்சிந்தாமலும், என்னாண்டவன் தமக்கா
கப் பழிவாங்காமலும் விட்டது, என்னாண்ட
வனுக்குத் துக்கத்துக்கும், மனோவேதனைக்குங்
காரணமாயிருக்கமாட்டாது: யெகோவா என்
ஆண்டவனுக்கு நன்மைசெய்யும்பொழுது, உம
து அடியாளையும் நினையுமென்றாள்.
கூஉ பின்பு தாவீது அபீகயிலைநோக்கி, எனக்கு
எதிர்ப்படும்படி உன்னை இன்றைத்தினம் அ
னுப்பின இஸரவேலின் தேவனாகிய யெ
கூகூ கோவாவுக்கு ஸ்தோத்திரம்:—நீ சொல்லிய
புத்தியும் ஆசீர்வதிக்கப்படுவதாக, நான் இன்
றைத்தினம் இரத்தஞ் சிந்தாமலும், என் கையி
னால் என்னிமித்தம் பழிவாங்காமலும், என்
னைத்தடைப்படுத்தின நீயும் ஆசீர்வதிக்கப்படு
கூச வாயாக.—நீ விரைந்துவந்து எனக்கெதிர்ப்ப
டாதிருந்தால், நாபாலின் புருஷரிலொருவனா
கிலும் விடியற்காலத்தில் மீந்திருக்கமாட்டா
னென்று, உனக்குத் தீமைசெய்யாமல் தடுத்த சீ
விக்கிற இஸரவேலின் நித்தியதேவனாகிய யெ
கோவாவைக்கொண்டு ஆணையிடுகிறேனென்
கூரு றான்.—பின்பு தாவீது தனக்கு அவள் கொண்டு
வந்ததை அவள்கையில் வாங்கிக்கொண்டு, அவ
ளைநோக்கி, நீ உன்வீட்டுக்குச்சுகமேபோ;கேள்,
நான் உன் சொல்லைக்கேட்டு, உன்னை அங்கிக
ரித்தேனென்றான்.
கூசு அபீகயில் நாபாலிடத்தில் வந்தாள்; அப்பொ
ழுது அவன் இராசவிருந்துபோலத் தன் வீட்
டிலே ஒரு விருந்துகொண்டாடினான்; நாபால்
மிகவும் வெறித்திருந்ததினால் அவன் மனம் தன்
னிலே களித்திருந்தது: ஆனபடியினாலே அவன்
விடியற்காலத்துக்குமுன் அற்பமாயினும்,' அதிக
மாயினும், ஒன்றும் அவனுக்குத் தெரிவிக்கவில்
லை.—காலையில் நாபாலுக்கு வெறிதீர்ந்தபின், இந் கூஎ
தச் சகல வார்த்தைகளையும் அவனுக்குத்தெரி
விக்க, மனஞ்சோர்ந்து அவன் கல்லானான்.—
ஏறக்குறையப் பத்துநாள்சென்றபின், நாபால் கூஅ
சாகும்படி யெகோவா அவனை வாதித்தார்.
நாபால் இறந்துபோனானென்று தாவீது கேள் கூகூ
விப்பட்டபொழுது, நாபாலினால் எனக்குண்
டான அவமானத்திற்குத்தக்க பிரதிபலனை அவ
னுக்குச்செய்து, தமதடியானைத் தீமைசெய்யா
மல் தடுத்த யெகோவாவுக்கு ஸ்தோத்திரம்;
யெகோவா தாமே, நாபால் நினைத்த தீமை
யை அவன் தலையில் வருவித்தாரென்றான். பின்
பு தாவீது அபீகயிலை விவாகம்பண்ணும்படி அ
வளுடன் பேச ஆட்களையனுப்பினான்.—தாவீ சம
தின் பணிவிடைக்காரர்கர்மேலிலிருந்த அபீகயி
லிடத்தில்வந்து, தாவீது உன்னைத் தனக்கு ம
னைவியாக ஏற்றுக்கொள்ள விரும்பி, எங்களை
உன்னிடத்தில்அனுப்பினானென்றுசொல்லி, அ
வளுடனே பேசினபொழுது,—அவள் எழுந்து சக
பூமிக்குநேரேவணங்கி, கேளும், உமதடியாள்
என் ஆண்டவனுடைய பணிவிடைக்காரரின்
பாதங்களைக்கழுவும் பணிவிடைக்காரியாகக்க
டவளென்றாள்.—பின்பு அபீகயில் விரைந்தெ சஉ
ழுந்து, கழுதையின்மேலேறி,தன்னுடன் தன்னு
டைய ஐந்துதாதிமார்கள் தன்பின்வர, தாவீதின்
தூதருக்குப்பின்னாகப்போய், அவனுக்கு மனை
வியானாள்.–யெஸ்ரியேலூராளாகிய அகினோவா சகூ
மையுந் தாவீது விவாகம்பண்ணினான்; அவ்விரு
வரும் அவனுக்கு மனைவிகளானார்கள்.—ஷவுல் சச
தன்புத்திரியும்தாவீதின்மனைவியுமாகியமீகாளைக்
கலீமூரானாகிய லாயீஷின் புத்திரனான பல்தி
யேலுக்கு விவாகஞ் செய்துகொடுத்திருந்தான்.

## உசு. அதிகாரம்.

க. ஷவுல் அகீலா மேட்டிற்குத் தாவீதைத்தொ
டர்தல்:ரு.தாவீது அவனைக்கொல்லாமல்அவன்
ஈட்டியையும் பாத்திரத்தையும் எடுத்தல்:யரு தா
வீது அப்னேரைக்கண்டித்தல்: உக. ஷவுல் தா
வீதுடன் சம்பாஷித்தல்.

பின்பு சீப்பூரார் கிபியாவிலே ஷவுலிடத்தில் க
வந்து, தாவீது யெஷீமோனுக்கு முன் புறத்தி
லுள்ள அகீலாமேட்டில் ஒளித்துக்கொண்டிருக்
கவில்லையா வென்றார்கள்.—அதனால் சீப்வனத் உ
திலே தாவீதைத்தேடும்படி ஷவுல் எழுந்து, இ
ஸரவேலருக்குள்ளே தெரிந்துகொள்ளப்பட்ட
மூவாயிரம்பேருடன் வனத்துக்குப் புறப்பட்
டுப்போனான்.—ஷவுல், வழியில் யெஷீமோ கூ
னுக்கு முன்புறத்திலுள்ள அகீலாமேட்டிலே

(உஅ) உ.சாமு.எ.யக,உஎ. க.இரா.கூ.ரு. க.நாளா.யஎ.ய,உரு. அதி.யஅ.யஎ. அதி.உச.யக. (உகூ) எரே.ய.யஅ. (கூஉ) ஆதி.உச.உஎ. யாத்.யஅ.ய. சங்.சக.யகூ. சங்.எஉ.யஅ. லூக்.க.கூஅ. (கூகூ) வச.உகூ. (கூச) வச.உகூ. வச.உஉ. (கூரு) அதி உய.சஉ. உ.சாமு.யரு.கூ. உ.இரா.ரு.யகூ. லூக்.எ.ருய. லூக்.அ.சஅ. ஆதி.யகூ.உக. (கூசு) உ.சாமு.யகூ.உகூ. (கூகூ) வச.கூஉ. நீதி.உஉ உகூ. வச.உகூ,கூச. க.இரா.உ.சச. சங்.எ.யசு. (சக) ரூத்.உ.ய யகூ. நீதி.யரு.கூகூ. (சஉ) வச. உஎ.(சகூ)யோசு.யரு.ருசு.அதி.உஎ.கூ.அதி.கூய.ரு.(சச)உ.சாமு.கூ.யச.உ.சாமு.கூ.யரு.லொ.ய.கூய.—(உசு.அதி.க.) அதி.உகூ.யக. சங்.ருச.

பாளயமிறங்கினான். தாவீது வனத்திலே தங்கி
னான்: வனத்திலே ஷவுல் தனக்குப்பின்னாக வ
ச ருகிறானென்றறிந்து,—தாவீது வேவுகாரரை அ
னுப்பி, ஷவுல் நிச்சயமாக வந்துவிட்டானென்
பதை அறிந்துகொண்டான்.
ரு பின்பு தாவீது எழுந்து, ஷவுல் பாளயமிறங்
கியிருந்த இடத்திற்குவந்து, ஷவுலும், நெரின்
புத்திரனாகிய அப்னேரென்னும் அவன் சேனா
பதியும் படுத்த இடத்தை உற்றுப்பார்த்தான்:
ஷவுல் இரதங்களுக்கு மத்தியிலே படுத்திருந்
தான், சனங்கள் அவனைச்சுற்றிப் பாளயமிறங்
சு கியிருந்தார்கள்.—தாவீது எத்தியனாகிய அகிமெ
லெக்கையும் சேருயாவின்புத்திரனும் யோவாப்
பின் சகோதரனுமாகிய அபீஷாயையும்நோக்கி,
பாளயத்திற்கு ஷவுலினிடத்தில் என்னுடன்வ
ரக்கூடியவன் யாவனென்றுகேட்க; அபீஷாய்,
எ நான் உம்முடனே வருகிறேனென்றான்.—பின்
பு தாவீதும் அபீஷாயும் இராக்காலத்தில் ச
னங்களுக்குள்ளே வந்தபொழுது, ஷவுல் இர
தங்களுக்கு மத்தியில்படுத்து நித்திரைகொள்வ
தையும், அவன்தலைமாட்டில் அவனுடைய ஈட்
டி நிலத்திலே குத்தியிருக்கிறதையும், அப்னே
ருஞ்சனங்களும் அவனைச் சுற்றிப்படுத்திருக்கி
அ றதையும்கண்டார்கள்.-அப்பொழுது அபீஷாய்,
தாவீதைநோக்கி, இன்றைத்தினம் தேவன் உ
மது சத்துருவை உம்முடைய கையில் ஒப்பித்
தார்: இப்பொழுது நான் அவனை யீட்டியினாலே
நிலத்தோடுருவ ஒரு குத்தோடேகுத்திப்போட
விடும், இரண்டாம் முறைமுறிய அடிக்கவேண்
கூ டுவ தில்லையென்றான்.—அதற்குத் தாவீது அபீ
ஷாயைநோக்கி, இவனை நாசப்படுத்த வேண்
டாம்: யெகோவாவினால் அபிஷேகம்பெற்
றவன்மேல் கைநீட்டி, குற்றமில்லாதிருப்பவ
ய னாரென்றான்.-பின்னும் தாவீது, யெகோவா
நித்தியரானால், யெகோவாவே இவனைஅடிப்
பார்; அல்லது இவனுக்கு மரணதினம் குறுகி
விடும்; இல்லாவிட்டால் யுத்தத்திலேபோய் நா
யக சமாவான்.—யெகோவாவினால் அபிஷேகம்
பெற்றவன்மேல் நான் கைநீட்டாதபடி, யெ
கோவா விலக்குவாராக: இப்பொழுது இவன்
தலைமாட்டிலிருக்கிற ஈட்டியையும், தண்ணீர்ச்
செம்பையுமெடுத்துக்கொண்டு போவோம் வா
யஉ வென்றான்.—தாவீது ஷவுலின் தலைமாட்டிலி
ருந்த ஈட்டியையும், தண்ணீர்ச்செம்பையும் எ
டுத்தான்; அவர்கள் புறப்பட்டுப்போனார்கள்,
யெகோவா இவர்களுக்குக் கடுநித்திரை வரு
வித்தபடியினாலே, இவர்களெல்லாரும் நித்திரை
கொண்டார்கள்; அதினால் ஒருவரும் கண்டது
மில்லை, அறிந்ததுமில்லை, விழித்ததுமில்லை.

தாவீது அப்பாலேபோய், தூரத்தில் ஒருமலை யங
யுச்சியில் நின்றான்; அவர்களுக்கு இடைவெளி
மிகவிஸ்தாரமாயிருந்தது.—தாவீது சனங்களை யச
யும், நெரின்புத்திரனாகிய அப்னேரையும்நோக்
கி, அப்னேரே, உத்தரஞ் சொல்லமாட்டாயா
வென்றுகூப்பிட, அப்னேர் அதற்குத்தரமாக இ
ராசாவைக்கூப்பிடுகிறநீயாரென்றான்.-அதற்குத் யரு
தாவீது அப்னேரைநோக்கி, நீ ஒரு வீரனல்லவா;
இஸரவேலருக்குள்ளே உனக்கு நிகரானவனார்;
உன் ஆண்டவனாகிய இராசாவைக் காப்பாற்றா
மல் போனதென்ன; உன் ஆண்டவனாகிய இரா
சாவை நாசமாக்கும்படி சனங்களிலொருவன்
பிரவேசித்தானே, நீ செய்தகாரியம் நல்லதல்ல.—
யெகோவாவினால் அபிஷேகம் பெற்றவனா யசு
கிய உங்கள் நாயனாரைக் காப்பாற்றாமல் விட்
டபடியால், யெகோவா நித்தியரானால், நீங்
கள் மரண ஆக்கினைக்குப் பாத்திரர், இப்பொ
ழுது இராசாவின் ஈட்டியும், அவன் தலைமாட்
டிலிருந்த தண்ணீர்ச்செம்புமெங்கே பாரென்
றான்.
அப்பொழுது ஷவுல் தாவீதின்குரலை அறிந்து, யஎ
என்மகனாகிய தாவீதே, இது உன்குரலாவென்று
கேட்க, தாவீது என் ஆண்டவனே, இராசாவே,
என் குரல்தானென்றுசொல்லி,—பின்னும் என் யஅ
ஆண்டவன் தமதடியானை இப்படித்தொடருகிற
தென்ன; நான் என்னசெய்தேன்; நான்செய்த
குற்றமென்ன.—இப்பொழுது என் ஆண்டவனா யகூ
கிய இராசா தமதடியான் சொல்லுகிற வாக்குக
ளைக் கேட்கட்டும். எனக்கு விரோதமாயெழும்
ப யெகோவா உம்மை ஏவினாராகில், ஒருகா
ணிக்கையை அங்கிகரிப்பாராக: மனிதபுத்திர
ரானால், அவர்கள், நீ போய் அந்நியதேவர்களைச்
சேவியென்று யெகோவாவின் சுதந்தரத்தை
அடையாதபடி இந்நாளில் என்னைத்துரத்திவிட்
டபடியினாலே, யெகோவாவுக்கு முன் சபிக்
கப்படுவார்களாக.—ஒருவன் மலைகளில் கவு உய
தாரியைத் தேடுகிறதுபோல, இஸரவேலின் இ
ராசா ஒரு தெள்ளுப்பூச்சியைத் தேடவந்தாரே:
ஆதலால் யெகோவாவுக்குமுன்பாக என் இ
ரத்தம் நிலத்திலே சிந்தாதிருப்பதாகவென்றான்.-
அதினால் ஷவுல், நான் பாவஞ்செய்தேன்: என் உக
மகனாகிய தாவீதே, திரும்பிவா: இன்றைத்தி
னம் என் ஆத்துமம் உன்கண்ணுக்கு அருமையா
யிருந்ததினால், இனி உனக்கொரு தீங்குஞ்செய்
யேன். நான் மதியீனனாய்நடந்தேன், பெரியதப்
பிதஞ்செய்தேன் என்றான்.—தாவீது இராசாவுக் உஉ
கு உத்தரமாக, ஈட்டியைப்பாரும், இதைவாலிப
ரிலொருவன்வந்து வாங்கிக்கொண்டு போகட்
டும்.—யெகோவா எந்த மனிதனுக்கும் அவ உங

(ரு) அதி.யச.ருய. அதி.யஎ.ருரு. அதி யஎ.உய. (சு) க.நாளா.உ.யசு. நியா.எ.ய,யக. (அ) அதி.உச.யஅ. (கூ) அதி.உச.சு,எ. உ.சாமு.க.யசு. (ய) அதி.உரு.ஙஅ. சங்.கூச.க,உ.உங. லூக்.யஅ.எ. ரோ.யஉ.யகூ. ஆதி.சஎ.உகூ. உபா.ஙக.யச. யோபு.எ.க. சங்.ஙஎ.யங. அதி.ஙக.சு. (யக) அதி.உச.சு,யஉ. (யஉ) ஆதி.உ.உக. ஆதி.யரு.யஉ. (யசு) உ.சாமு.யஉ.ரு. (யஎ) அதி.உச.யசு. (யஅ) அதி.உச.கூ,யக. (யகூ) உ.சாமு.யசு.யக. உ.சாமு.உச.க. ஆதி.அ.உக. லேவி.உசு.ஙக. உபா.ச.உஅ. சங்.ாஉய.ரு. உ.சாமு.யச.யசு. உ.சாமு.உய.யகூ. (உய) அதி.உச.யச. (உக) அதி.யரு.உச. அதி.உச.யஎ. அதி.யஅ.ஙய. (உங) சங்.எ.அ. சங்.யஅ.உய.

னவன் நீதிக்கும்உண்மைக்கும்ஏற்கப்பலனளிப்
பார்: இன்றைக்கு யெகோவா உம்மை என்
கையில் ஒப்பித்தும், யெகோவாவினால் அபி
ஷேகம் பெற்றவர்மேல் நான் என்கையை நீட்
௨௪ டவில்லை.—உமது பிராணன் இன்றைத்தினம்
என் கண்ணுக்கு அருமையாயிருந்ததுபோலவே,
என் பிராணனும் யெகோவாவின் கண்ணுக்
கு அருமையாயிருப்பதாக; அவரே சகல உபத்
திரவங்களினின்றும் என்னை விடுவிப்பாராக
௨௫ வென்றான்.—ஷவுல் தாவீதைநோக்கி, என்மக
னாகிய தாவீதே, நீ ஆசீர்வதிக்கப்படுவாயாக: நீ
மகத்துவமானவைகளைச்செய்வாய், அவைகள்
உனக்குச் சித்தியாகுமென்றான். பின்பு தாவீது
தன் வழியேசெல்ல, ஷவுலும் தன் இடத்திற்குத்
திரும்பிவிட்டான்.

## ௨௭. அதிகாரம்.

௧. தாவீதுபெலிஸ்தியதேசத்திற்செல்லல்: ௫. சிக்
லாக்நகரத்தில் வசித்தல்: ௭. தாவீது அந்நியதே
சங்களைச் சருவிக்கொள்ளல்.

பின்பு தாவீது நான் ஷவுலின்கையினால் ஒரு
நாள் மடிந்துபோவேன்: நான் பெலிஸ்தியரின்
தேசத்துக்கு, தப்பித்துக்கொள்வதிலும் நலம் வே
றில்லை; அப்பொழுது ஷவுல் இஸரவேலின் எல்
லையெங்கும்இன்னும்என்னைதேடத்துணியமாட்
டான்: அதனால் நான் அவன் கைக்குத்தப்பித்துக்
கொள்ளலாமென்று தன்மனதிலே சிந்தித்தான்.-
௨ பின்பு தாவீதுஎழுந்து, தன்னோடிருந்த அறுநூறு
பேரோடும்காத்தின் இராசாவும்,மாகோகின்புத்தி
ரனுமாகிய ஆகிஷிடத்தில்போய்ச்சேர்ந்தான்.—
௩ யெஸ்ரியேலூராளாகிய அகினோவாம்,நாபாலின்
மனைவியும்கர்மேலூராளுமாகியஅபீகயில்,என்
னுந் தன்மனைவியர் இருவரோடு தாவீதும், அவ
ரவர் குடும்பத்தாரோடு அவன் சனங்களும், காத்
௪ திலே ஆகிஷினுடன் தங்கினார்கள்.—தாவீது காத்
துக்குத் தப்பியோடிவிட்டானென்று ஷவுலுக்
குத்தெரிவிக்கப்பட்டது: அவன் அப்பால் அவ
னைத்தேடவில்லை.
௫ பின்பு தாவீது ஆகிஷைநோக்கி, உமதுகடாட்
சம் எனக்குக் கிடைத்ததேயாகில், நான் வாசம்
பண்ணும்படி நாட்டிலுள்ள ஊர்களிலொன்றில்
எனக்கிடந்தாரும்: உமது அடியான் இராசதா
னியில் உம்முடனே எப்படிவாசம்பண்ணலா
௬ மென்றான்.—அதனால் ஆகிஷ் அந்நாளிலே சிக்
லாக்கை அவனுக்குக்கொடுத்தான்: அதினிமித்
தம் சிக்லாக் இந்நாள்வரைக்கும் யூதாவின் இரா
௭ சாக்களுக்குரித்தாயிருக்கின்றது.—பெலிஸ்திய
ரின் தேசத்திலே தாவீது வசித்தகாலம் ஒருவரு
ஷமும் நாலுமாதமும்.
௮ அக்காலத்திலே தாவீதும் அவன் சனங்களும்
புறப்பட்டுப்போய், கிஷூரியரையும், கெஸரிய
ரையும்,அமலேக்கியரையுஞ்சருவிக்கொண்டார்
கள்: அவர்கள் பூருவகாலத்தில் ஷூரின்வழிதொ
டங்கி எகிப்துதேசம்வரைக்குமுள்ள தேசத்தில்
வசித்திருந்தார்கள்.—தாவீது ஸ்திரிபுருஷரை உ ௯
யிரோடேவையாமல் தேசத்தை அடித்து, ஆடு
மாடுகளையும், கழுதைகளையும், ஒட்டகங்களை
யும், வஸ்திரங்களையுங் கொள்ளையிட்டுக்கொண்
டு, ஆகிஷ் இடத்தில் திரும்பிவந்தான்.—அப்பொ ௰
ழுது ஆகிஷ் இன்றைத்தினம் நீங்கள் எத்திசை
யைச் சருவிச்சென்றீர்களென்றுகேட்க; தாவீது,
யூதாவின் தென்திசையையும், இரகமேலரின்
தென்திசையையும், கேனியரின் தென்திசையை
யுமென்றான்.—தாவீது இன்ன இன்னபிரகாரஞ் ௰௧
செய்தானென்றும், அவன் பெலிஸ்தியரின் தே
சத்தில் வசித்திருக்குங்காலமுழுவதும் இவ்வண்
ணஞ்செய்வானென்றுஞ் சொல்லுவார்களென்
று; காத்துக்குவரும்படி தாவீது ஸ்திரிபுருஷர் ஒ
ருவரையும் மீந்திருக்கவிடவில்லை.—ஆகிஷ்தாவீ ௰௨
தைநம்பி, அவன் இஸரவேலராகியதன்சனங்கள்
தன்னைவெறுக்கும்படிசெய்தான்; அதினாலவன்
நித்தமும் எனக்கு அடிமையாவானென்றான்.

## ௨௮. அதிகாரம்.

௧. ஆகிஷ் தாவீதை விசுவாசித்தல்: ௩.சாமுவேல்
மரித்தபின் ஷவுல் சகுனிகளையும் பேயவித்
தைக்காரரையும் தூரப்படுத்தல்:௪. ஷவுல் பெ
லிஸ்தியரைப்பற்றிக்கொள்ளல்:௭.ஷவுல்பேய்
வித்தைக்காரியிடத்திற்போய்ச் சாமுவேலை உ
யிர்த்தெழும்பும்படி செய்யக் கட்டளையிடல்:
௰௫.சாமுவேல் ஷவுலிடத்தில் வாக்குச்சொல்
லல்: ௨௰. அந்தவாக்கினால் ஷவுல் கலங்கல்.

அக்காலத்தில் இஸரவேலரை எதிர்த்துயுத்தஞ் ௧
செய்யும்படி பெலிஸ்தியர் தங்கள் சேனைகளைக்
கூட்டிக்கொண்டார்கள். அப்பொழுது ஆகிஷ்
தாவீதைநோக்கி, நீயும் உன்சனங்களும் யுத்தம்
பண்ணும்படிவரவேண்டும், நிச்சயமாய் அறிந்
துகொள்ளென்று சொல்ல;—தாவீது ஆகிஷை ௨
நோக்கி, உமதடியான் என்னசெய்வானென்று
நிச்சயமாய் அறிந்துகொள்வீரென்றான். அத
னால் ஆகிஷ் தாவீதைநோக்கி, என்தலையை நித்த
முங்காக்கும்படி உன்னை ஏற்படுத்துகிறேனென்
றான்.
இதற்குமுன்னே சாமுவேல் மரித்து விட் ௩
டான்; இஸரவேலர் சமஸ்தரும் அவனிமித்தந்
துக்கங்கொண்டாடி,ராமாவென்னும் அவன்சுய
நகரத்தில் அவனை அடக்கம்பண்ணினார்கள். ஷ
வுலோ பேய்வித்தைக்காரரையும், மாந்திரிகரை
யும், தேசத்தினின்றும் அகற்றிவிட்டான்.—பெ ௪
லிஸ்தியர்கூடிவந்து, ஷூனேமிலே பாளயமிறங்
கினார்கள்: ஷவுல் இஸரவேலர் சமஸ்தரையும்
கூடிவரச்செய்தான், அவர்கள்கில்போவாவிலே
பாளயமிறங்கினார்கள்.—ஷவுல்பெலிஸ்தியரின் ௫
சேனையைக்கண்டபொழுது, பயந்து மிகவும்

(௨௫) ஆதி.௩௨.௨௮.—(௨௭. அதி. ௨.) அதி.௨௫.௰௩. அதி.௨௧.௰. (௩) அதி.௨௫.௪௩. (௬) யோசு.௰௫.௩௧. யோசு.
௰௯.௫. (௭) அதி.௨௯.௩. (௮) யோசு.௰௩.௨. யோசு.௰௬.௰. நியா.௧.௨௯. யாத்.௰௭.௰௫. அதி.௰௫.௭,௮. ஆதி.௨௫.
௰௮. (௰) ௧.நாளா.௨.௯,௨௫. நியா.௧.௰௬.—(௨௮. அதி. ௧.) அதி.௨௯.௧. (௩) அதி.௨௫.௧. வச.௯. யாத்.௨௨.௰௮.
லேவி.௰௯.௩௧. உபா.௰௮.௰,௰௧. (௪) யோசு.௰௯.௰௮. ௨.இரா.௪.௮. அதி.௩௧.௧. (௫) யோபு.௰௮.௰௧.

௬ மனம்பதறினான்.—ஷவுல் யெகோவாவினி
டத்தில்உசாவினபொழுது, யெகோவாசொ
ப்பனத்தினாலாயினும்,ஊரீமினாலாயினும்,தீர்க்க
தரிசிகளினாலாயினும், அவனுக்குத்தரங்கொடுக்
கவில்லை.
௭ அதனால் ஷவுல் தன் பணிவிடைக்காரரை
நோக்கி, நீங்கள்பேய்வித்தைக்காரியாகிய ஒருஸ்
திரியைத்தேடுங்கள், நான் அவளிடத்தில்போய்,
உசாவுவேனென்று சொல்ல; அவன் பணிவி
டைக்காரர், கேளும், பேய்வித்தைக்காரிஒருத்தி
௮ ஐன்தோரில் இருக்கிறாளென்றார்கள்.—ஷவுல்,
வேஷம்மாறி வேறுவஸ்திரந்தரித்து, தன்னுடன்
இரண்டுபேரைக்கூட்டிக்கொண்டு இரவில் அந்
த ஸ்திரியிடத்தில்வந்து, நான் உன்னிடத்தில்
குறிக்கிறவனை எழுப்பும்படி உன்னை வேண்டு
௯ கிறேனென்றான்.—அதற்கு ஸ்திரி அவனைநோக்
கி, பேய்வித்தைக்காரரையும், மாந்திரிகரையும்,
ஷவுல் தேசத்தினின்றுந் துரத்திவிட்டார், அது
உமக்குத்தெரியும்: என்னைக்கொன்று போடும்ப
டிஎன்பிராணனுக்குங்கண்ணிவைக்கிறீராவென்
௰ றாள்.—அதினால் ஷவுல் அவளைநோக்கி, யெ
கோவா நித்தியரானால், இந்தக்காரியத்தின் மூ
லமாக உனக்கு யாதொரு ஆபத்தும் நேரிடா
தென்றுசொல்லி, யெகோவாவைக்கொண்டு
௰௧ ஆணையிட்டுக்கொடுத்தான்.—அப்பொழுது அந்
த ஸ்திரி உமக்காக நான் ஆரையெழுப்பவேண்
டுமென்றுகேட்க; இவன், எனக்காகச் சாமுவே
௰௨ லை எழுப்பவேண்டுமென்றான்.—அந்த ஸ்திரி
சாமுவேலைக் கண்டமாத்திரத்தில், உரத்தசத்தத்
தோடே கூப்பிட்டு, ஷவுலைநோக்கி, நீரே ஷ
வுல்: நீர் என்னைவஞ்சித்ததென்னவென்றாள்.—
௰௩ இராசா அவளைநோக்கி, நீபயப்படாதே: என்ன
கண்டாய்என்றுசொல்ல;ஸ்திரி ஷவுலைநோக்கி,
தேவர்கள் பூமியினின்றும் எழுந்துவருகிறதைக்
௰௪ கண்டேனென்றாள்.—அவன் அவளை நோக்கி,
அவனுடைய ரூபமென்னவென்றுகேட்க; அ
வள் முதிர்ந்தவயதுள்ள ஒருமனுஷன் எழுந்துவ
ருகிறான்; அவன்மேலே அங்கியைத்தரித்திருக்கி
றானென்றாள். அதினால் அவன்சாமுவேலென்று
ஷவுல் அறிந்து, பூமிக்குநேரேவணங்கினான்.
௰௫ பின்புசாமுவேல்ஷவுலைநோக்கி, நீஎன்னை எ
ழுப்பிச்சஞ்சலப்படுத்தினதென்னவென்றுகேட்
க; ஷவுல் உத்தரமாய், பெலிஸ்தியர் எனக்குவி
ரோதமாக யுத்தஞ்செய்கிறார்கள்; தேவன் என்
னை விட்டுவிலகினார்; தீர்க்கதரிசிகளினாலாயினு
ம், சொப்பனங்களினாலாயினும், அவர் எனக்கு
உத்தரந்தரவில்லை; ஆதலால் நான்மிகவும்வியாகு
லப்படுகிறேன்: இனி நான் செய்யவேண்டிய
தின்னதென்றுதெரிவிக்கும்படி உம்மை அழைப்
௰௬ பித்தேனென்றான்.—அதற்குச் சாமுவேல், யெ
கோவா உம்மை விட்டுவிலகி உமக்குச் சத்
துருவாய் விட்டாரென்று கண்டும், என்னிடத்
திற் கேட்கிறதென்ன.—யெகோவா என் ௰௭
னைக்கொண்டுசொல்லியபிரகாரம்செய்துமுடித்
து,உமது கையினின்றும் இராச்சியத்தைப் பறித்
து, உமது அயலானாகிய தாவீதுக்குக் கொடுத்து
விட்டாரே.—நீர் யெகோவாவின் வாக்குக்க ௰௮
மைந்துநடந்து, அமலேக்கியரின்மேல் அவரு
டைய உக்கிரகோபத்தைச் சித்தியாக்கும்படி
செய்யாமல்விட்டதினிமித்தம், இன்றைத்தினம்
யெகோவா இந்தக்காரியத்தை உமக்குச்செய்
தார்.—அன்றியும் யெகோவா உம்முடன் ௰௯
இஸ்ரவேலரைப் பெலிஸ்தியர்கையில் ஒப்பிப்
பார்: நாளை நீரும்உமதுபுத்திரரும்என்னோடிருப்
பீர்கள்: யெகோவா இஸ்ரவேல்சேனையைப்
பெலிஸ்தியர்கையில் ஒப்பிப்பாரென்றான்.—அ ௨௰
தினால் ஷவுல் அந்நேரமே தரையில் தண்டமாய்
விழுந்தான், அவன் சாமுவேலின் வாக்குகளைக்
கேட்டுமிகவும் பயந்துவிட்டான்: அன்று பகல்
இராமுழுவதும் போசனம் பண்ணாததினால் அ
வன்பெலவீனமாயிருந்தான்.
பின்பு அந்த ஸ்திரி ஷவுலினிடத்தில்வந்து, ௨௧
அவன்மிகவும் வியாகுலப்படுகிறதைக்கண்டு,அ
வனைநோக்கி, கேளும், உமதடியாள் உமதுசொற்
கேட்டு, என்பிராணனை என் கையிலேவைத்து,
நீர் என்னுடன் சொல்லிய வாக்குகளுக்கமைந்
து செய்தேன்.—இப்பொழுது நீரும் உமதடியாள் ௨௨
சொல்கேட்கும்படி உம்மை வேண்டுகிறேன்;
நான் உமக்குமுன்பாகக் கொஞ்சம் போசனம்
வைக்கிறேன், நீர் வழிப்பட்டுப்போகிறபொழு
து பெலன்கொண்டிருக்கும்படி,போசனம்பண்
ணுவீராகவென்றுசொல்ல,—அவன், நான்புசிக்க ௨௩
மாட்டேனென்றுமறுத்தான்: பின்புஸ்திரியுடன்
பணிவிடைக்காரரும் அவனைவருந்திக்கேட்டப
டியினால், அவன் அவர்கள் சொற்கேட்டுத்தரை
யைவிட்டெழுந்து, கட்டிலின்மேலிருந்தான்.—
அப்பொழுது அந்த ஸ்திரிவீட்டிலேதன்னிடத் ௨௪
தில் நின்ற ஒருகொழுத்தகன்றைவிரைவில் அ
டித்து, மாஎடுத்துப்பிசைந்து,புளிப்பில்லாத அப்
பஞ்சுட்டு,-ஷவுலுக்கும் அவன்பணிவிடைக்கா ௨௫
ரருக்கும் முன்பாகக்கொண்டுவந்துவைக்க, அ
வர்கள் புசித்தார்கள்: பின்பு அவர்கள் அன்றிரவி
லெழுந்துபுறப்பட்டுப்போனார்கள்.

## ௨௯. அதிகாரம்.

௧. தாவீது யுத்தத்துக்குப்போதல்: ௩. பெலிஸ்திய ரின்நரபதிகளுக்குப்பிரியவீன்மாதல்: ௯. ஆகீஷ் தாவீதைப்போற்றியனுப்பிவிடல்.

அந்தச்சமயத்தில் பெலிஸ்தியர் தங்கள் சமஸ்த ௧
சேனைகளையும் அப்பெக்கிலே கூடிவரச்செய்
தார்கள்.இஸரவேலரோ யெஸரியேலிலுள்ள ஒரு

(௬) அதி.௰௪.௩௭. நீதி.௧.௨௮. புல.௨.௯. எண்.௰௨.௬. யாத்.௨௮.௩௰. எண்.௨௭.௨௧. உபா.௩௩.௮. (௮) உபா.௰௮.௰௧. ௧.நாளா.௰.௰௩. ஏசா.௮.௰௯. (௯) வச.௩. (௰௩) யாத்.௨௨.௨௮. (௰௪) அதி.௰௫.௨௭. ௨.இரா.௨.௮,௰௩. (௰௫) நீதி.௫.௰௧,௰௨,௰௩. நீதி.௰௪.௰௪. அதி.௰௮.௰௨. வச.௬. (௰௭) நீதி.௰௬.௪. அதி.௰௫.௨௮.(௰௮)அதி.௰௫.௯. ௧.இரா.௨௰௪௨. ௧.நாளா.௰.௰௩. எரே.௪௮.௰. (௨௧) நியா.௰௨.௩. அதி.௰௯.௫. யோபு.௰௩.௰௪.—(௨௯. அதி. ௧.) அதி.௨௮.௧. அதி.௪.௧.

ஊற்றின் சமீபத்தில் பாளயமிறங்கினார்கள்.—
௨ அப்பொழுது பெலிஸ்தியரின் அதிபதிகள் நூறு பேரோடும், ஆயிரவரோடும் சென்றார்கள்: தாவீதும் அவன் சனங்களும் ஆகிஷோடே சேனை
௩ களுக்குப் பின்அணியிலேசென்றார்கள்.—அதினால் பெலிஸ்தியரின் அதிபதிகள் இந்த எபிரேயர் என்னத்திற்கென்று கேட்க, ஆகிஷ் பெலிஸ்தியரின் அதிபதிகளைநோக்கி, இவன் இஸரவேலின் இராசஞன ஷவுலின் தாசனாகிய தாவீதல்லவா; இவன் என்னோடே அநேகநாட்களும் வருஷங்களும் இருக்கிறான், இவன் என்னிடத்தில் சேர்ந்தநாள்முதல் இந்நாள்மட்டும், நான் இவனிலொருகுற்றமுங்காணவில்லையென்றான்.—
௪ அதினால் பெலிஸ்தியரின் அதிபதிகள் அவன் மேற்கோபங்கொண்டார்கள்; அன்றியும் பெலிஸ்தியரின் அதிபதிகள் அவனைநோக்கி, இவன் நீர் ஏற்படுத்திய தன்னிடத்துக்குத்திரும்பிப்போகும்படி அனுப்பிவிடும், நம்முடன் யுத்தத்துக்கு வரவிடாதிரும், யுத்தத்தில் இவன் எங்களுக்குச்சத்துருவாய்விடுவான்: இந்த மனிதருடைய தலைகளினாலேயன்றி, வேறெவ்விதத்தினால் தன் ஆண்டவனுடன் தன்னை ஒப்புரவாக்கிக்கொள்
௫ வான்.—ஷவுல் ஆயிரவரையும் தாவீது பதினாயிரவரையும் கொன்றுபோட்டார்களென்று, இந்தத் தாவீதைக்குறித்தல்லவா ஒருவரோடொருவர் பாடி ஆடினார்கள் என்றார்கள்.
௬ அப்பொழுது ஆகிஷ் தாவீதை வரவழைத்து, அவனைநோக்கி, நீர் என்னிடத்தில் வந்தநாள் முதல் இந்நாள்வரைக்கும் உம்மிடத்தில் நானொரு தீமையுங்கண்டதில்லை, நீர் நேர்மையாய்நடந்தீர்: சேனையின்மத்தியில் நீர் என்னுடன் போக்குவரவுசெய்வது என் பார்வைக்கு நலமென்று யெகோவாவைக்கொண்டு நிச்சயமாய்ச்சொல்லுகிறேன்; ஆயினும்அதிபதிகள் உம்மேற் பிரி
௭ யப்படவில்லை.—ஆதலால் நீர் பெலிஸ்தியரின் அதிபதிகளைப்பிரியவீனப்படுத்தாமல்,திரும்பிப்
௮ போய்விடுமென்றான்.—அதற்குத் தாவீது ஆகிஷைநோக்கி, ஆண்டவனாகிய இராசாவின் சத்துருக்களுக்கு விரோதமாய் யுத்தஞ்செய்யவராமலிருப்பதற்குநான் என்னசெய்தேன்; நான் உம்மைச்சேர்ந்தநாள்முதற்கொண்டு இந்நாள்வரைக்கும் உமதடியானில் என்னகண்டீர் என்றான்.—
௯ அதற்கு உத்தரமாக ஆகிஷ் தாவீதைநோக்கி, நீர் ஒரு தேவதூதனைப்போல என்பார்வைக்குப் பிரியமுள்ளவராயிருக்கிறீர், அது தெரியும். ஆயினும்இவன் எங்களுடன் யுத்தத்துக்கு வரவேண்டாமென்று பெலிஸ்தியரின் அதிபதிகள் சொல்
௰ லுகிறார்கள்.—ஆதலால் நீர் நாளை உம்முடன்வந்திருக்கிற நாயனாருடைய பணிவிடைக்காரரோடும் எழுந்து, அதிகாலையில் வெள்ளெனப் புறப்பட்டுப்போமென்றான்.—அப்படியே தாவீதும், ௰௧
அவன் சனங்களும், பெலிஸ்தியருடைய தேசத்துக்குத் திரும்பிப்போகும்படி அதிகாலையிலெழுந்து புறப்பட்டார்கள். பெலிஸ்தியர் யெஸரியேலுக்குப்புறப்பட்டுப்போனார்கள்.

## ௩௰. அதிகாரம்.

௧. அமலேக்கியர் சிக்லாக்கைக்கொள்ளையிடல்: ௩. அதைப்பற்றித்தாவீதும் அவன் சனங்களும் துக்கித்தல்: ௯. அமலேக்கியரைத்தொடர்தல். செய்தியைப்பெறல்: ௰௬. அவர்களைக்கொலைசெய்து, கொள்ளைப்பொருளை மீட்டல்: ௨௧. கொள்ளைப்பொருளைப்பங்கிடும்முறைமையை நியமித்தல்: ௨௬. தாவீது தன் பெந்துசனங்களிடம் கொள்ளைப்பொருளை அனுப்பல்.

தாவீதும், அவன் சனங்களும் மூன்றாந்தினத் ௧
தில் சிக்லாக்கில் வந்துசேர்ந்தார்கள், அதற்கு முன் அமலேக்கியர் தென்றிசையையும் சிக்லாக்கையும் சருவி, சிக்லாக் நகரத்தை அடித்து, அக்கினியினாலே தகனித்து,—அதிலுள்ளஸ்திரிகளைச் ௨
சிறைப்படுத்தி, சிறியோர் பெரியோர் ஒருவரையுங்கொன்றுபோடாமல் பிடித்துக்கொண்டு, தங்கள்வழியே போய்விட்டார்கள்.—தாவீதும் அ ௩
வன் சனங்களும் நகரத்திற்கு வந்தபொழுது, அது அக்கினியினாலே தகனிக்கப்பட்டிருந்தது; அவர்கள் மனைவியரும், புத்திர புத்திரிகளும், சிறைப்பட்டுப் போய்விட்டார்கள்.

அப்பொழுது தாவீதும், அவனோடுகூடிய ச ௪
னங்களும், தங்களுக்கு அழப்பெலனில்லாமற் போகும்வரைக்கும் குரலிட்டழுதார்கள்.—யெ ௫
ஸரியேலூராளாகிய அகினோவாம், கர்மேல் ஊராளும் நாபாலின் மனைவியுமாகிய அபீகயில் என்னுந் தாவீதின் மனைவியர் இருவரும் சிறைப்பட்டுப்போய்விட்டார்கள்.—அன்றியும் சமஸ்த ௬
சனங்களும் தங்கள் தங்கள் புத்திரிகளினிமித்தம் துக்கப்பட்டதினால்,தாவீதைக்கல்லெறியவேண்டுமென்றுபேசிக்கொண்டார்கள், அதனால் தாவீது மிகவும்வியாகுலப்பட்டான்: ஆயினும் அவன் தன் தேவனாகிய யெகோவாவைச்சேர்ந்து, தன்னைத் திடமாக்கிக்கொண்டான்.—பின்பு தா ௭
வீது அமலேக்கின் புத்திரனாகிய அப்யாதாரென்னும் ஆசாரியனைநோக்கி, எபோத்தை இங்கே கொண்டுவாருமென்று சொல்ல, அப்யாதார் எபோத்தைத் தாவீதிடத்திற் கொண்டுவந்தான்.—
அப்பொழுது தாவீது நான் இந்தச் சேனைத்தண் ௮
டைத் தொடர்வேனா; இவர்களைப்பிடித்து விடுவேனாவென்று யெகோவாவினிடத்தில் உசாவ, அவர் அவனுக்குத்தரமாய், நீ நிச்சயமாய் அவர்களைப்பிடித்து, சகலத்தையும் மீட்டுக்கொள்ளுவாயென்றார்.

பின்பு தாவீதும், அவனோடுகூடிய அறுநூறு ச ௯

(௨) அதி.௨௮.௧,௨. (௩) அதி.௨௭.௭. தானி.௬.௫. (௪) ௧.நாளா.௰௨.௰௯. அதி.௰௪.௨௧. (௫) அதி.௰௮.௭. அதி.௨௧.௰௧. (௬) ௨.சாமு.௩.௨௫. ௨.இரா.௰௯.௨௭. வச.௩. (௯) ௨.சாமு.௰௪.௰௭,௨௰. ௨.சாமு.௰௯.௨௭. வச.௪. (௰௧) ௨.சாமு.௪.௪.—(௩௰. அதி. ௧.) அதி.௰௫.௭. அதி.௨௭.௮. (௫) அதி.௨௫.௪௨,௪௩. ௨.சாமு.௨.௨. (௬) யாத்.௰௭.௪. நியா.௰௮.௨௫. அதி.௧.௰. ௨.சாமு.௰௭.௮. ௨.இரா.௪.௨௭. சங்.௪௨.௫. சங்.௫௬.௩,௪,௰௧. அபகூ.௩.௰௭,௰௮. (௭) அதி.௨௩.௬,௯. (௮) அதி.௨௩.௨,௪.

னங்களும் புறப்பட்டுப்போய், பிசோரென்னும்
ஆற்றங்கரையிற் சேர்ந்தபொழுது, அவர்களிற்
௰ சிலர் நின்றுவிட்டார்கள்.—இருநூறுபேர் பிசோ
ரென்னும்ஆறறைக்கடக்கக்கூடாமல் இளைத்துப்
போனதினால் அங்கேநின்றுவிட்டார்கள்: தாவீ
தும் மற்ற நானூறுபேரும் தொடர்ந்துபோனார்
௰௧ கள்.—அவர்கள் வயல்வெளியில் எகிப்தியன்
ஒருவனைக்கண்டு, அவனைத் தாவீதினிடத்தில்
கூட்டிக்கொண்டுவந்துவிட்டுப் போசனங்கொ
டுக்க, அவன்புசித்தான்; சலபானமும்பண்ணு
௰௨ வித்தார்கள்.—அத்திப்பழ அடைத்துண்டையும்,
இரண்டு திராட்சப்பழக்குலை வற்றலையும், அவ
னுக்குக்கொடுத்தார்கள்:அதைஅவன்புசித்தபின்,
மனோற்சாகம்பெற்றான்: அவன்மூன்றுநாள் இர
௰௩ வும் பகலும்போசனபானம் பண்ணவில்லை.—தா
வீது அவனைநோக்கி, நீ ஆரிடத்திலிருக்கிறாய்; நீ
எங்கிருந்து வந்தாயென்றுகேட்க, அவன் நான்
அமலேக்கியன், ஒருவனுடைய பணிவிடைகா
ரன், எகிப்தியவாலிபன்; நான் முந்தைநாள் வ
ருத்தமானபொழுது என்னுயனார் என்னைக்கை
௰௪ விட்டார்.—நாங்கள் கிரேத்தியரின் தென்றிசை
யையும், யூதாவின் எல்லையையும், காலேபின்
தென்றிசையையும் சருவிப்போய், அக்கினியி
னாலே சிக்லாக்கைத் தகனித்து விட்டோமென்
௰௫ றான்.—தாவீது அவனைநோக்கி, நீ என்னை அந்
தச் சேனைத்தண்டினிடத்தில் கொண்டுபோய்
விடக்கூடுமாவென்று கேட்க; நீர் என்னைக்
கொன்றுபோடவுமாட்டேன், என்னுயனார்கை
யிலென்னை ஒப்புவித்து விடவுமாட்டேனென்
று தேவனைக்கொண்டு ஆணையிட்டுத் தாரும்,
நான் அந்தச்சேனைத்தண்டினிடத்தில் உம்மைக்
கொண்டுபோய் விடுவேனென்றான்.
௰௬ இவன் அவனைக்கொண்டுபோய் விட்டபொ
ழுது, அவர்கள் பெலிஸ்தியரின் தேசத்தினின்
றும், யூதாதேசத்தினின்றும் தாங்கள் வெகு
கொள்ளையிட்டதினிமித்தம், தரையெங்கும் ப
ரந்து போசனபானம்பண்ணி, நடனஞ் செய்
௰௭ துகொண்டிருக்கக்கண்டான்.—தாவீது சாயங்
காலந்தொடங்கி, மறுநாட்சாயங்காலவரைக்கும்
அவர்களை அடித்தான்: நானூறுவாலிபர் ஒட்ட
கத்திலேறிக்கொண்டு தப்பிவிட்டார்கள், மற்ற
௰௮ வர் ஒருவருந் தப்பவில்லை.—அமலேக்கியர் பி
டித்துக்கொண்டுபோன எல்லாவற்றையுந் தாவீ
து மீட்டுக்கொண்டான்: அன்றியுந் தன் மனை
வியரிருவரையுந் தாவீது தப்புவித்துக்கொண்
௰௯ டான்.—அவர்கள்கொள்ளையிட்டுக்கொண்டுபோ
ன எல்லாப்பொருள்களிலும் புத்திரரிலும், புத்தி
ரிகளிலும், சிறியதாயினும் பெரியதாயினும் ஒன்
றுங் குறையவிடாமல், தாவீது எல்லாவற்றையும்
௨௰ மீட்டுக்கொண்டான்.—தாவீதுதனக்காகப்பிடித்
துக்கொண்ட ஆடுமாடுகளெல்லாவற்றையும்,மற்
றமிருகங்களுக்கு முன்னாக ஓட்டி, இது தாவீ
துகொள்ளையாடினதென்றார்கள்.
பின்பு தாவீதைப் பின்செல்லக்கூடாமல் இ ௨௧
ளைத்துப்போனதினால்பிசோர்ஆற்றங்கரையிலே
தங்கும்படிவிட்ட அவ்விருநூறுபேரிடத்தில் தா
வீதுவர,அவர்கள் தாவீதையும் அவனோடு கூடிய
சனங்களையும் எதிர்கொண்டுபோனார்கள்; தாவீ
து சனங்களுக்குச் சமீபத்தில்வந்து, அவர்கள் சு
கச்செய்தியை விசாரித்தான்.—அப்பொழுது தாவீ ௨௨
துடன்போனவர்களுக்குள்ளே பேலியாலின்மக்
களாகிய துஷ்டர் அனைவரும், இவர்கள் எங்க
ளுடன்வராதபடியினாலே நாம்மீட்டுக்கொண்ட
கொள்ளைப்பொருள்களிலொன்றும் இவர்களுக்
குக்கொடுக்கமாட்டோம், இவர்கள் தங்கள் தங்
கள் மனைவியரையும் பிள்ளைகளையுமாத்திரம்கூட்
டிக்கொண்டு போகட்டுமென்றார்கள்.—அதினா ௨௩
லே தாவீது என் சகோதரரே, நமக்கு விரோ
தமாய் வந்தசேனைகளை நம்முடையகையில் ஒப்
பித்து, நம்மையிரட்சித்தயெகோவா நமக்குத்
தந்ததை, நீங்கள்இப்படிச்செய்யவேண்டாம்.—
இக்காரியத்தில் உங்கள் சொற்கேட்கிறவனார்; ௨௪
யுத்தத்துக்குப்போனவர்களின் பங்குபோலவே,
பொருளோடிருந்தவர்களுடைய பங்குமிருக்க
வேண்டும்: அவர்கள் சமபாகம் பெறவேண்டு
மென்றான்.—அன்றியும் இஸரவேலர் நிமித்தம் ௨௫
அந்நாளில் அந்த விதியையும் ஏற்படுத்தினான்.
அது இந்நாள்வரைக்கும் நடந்துவருகின்றது.
பின்பு தாவீது சிக்லாக்கைச்சேர்ந்தபொழுது, ௨௬
தன்சிநேகிதராகிய யூதாவின் முதியோருக்கும்,—
பெத்தேலிலும், தேஷேண், ராமொத்திலும், யத் ௨௭
தீரிலும்,-அரோவேரிலும்,சிப்மோத்திலும், எஷ் ௨௮
திமோவாவிலும்,—ராகாலிலும், இரகமேலரின் ௨௯
நகரங்களிலும், கேனியரின் நகரங்களிலும்,—
ஓர்மாவிலும், கோருஷானிலும், அதாக்கிலும்,— ௩௰
எப்ரோனிலும், தானும் தன் சனங்களும்போக் ௩௧
குவரவுசெய்துவரும் எந்த ஸ்தானங்களிலுமுள்
ளவர்களுக்கும், யெகோவாவின் சத்துருக்க
ளிடத்திற் கொள்ளையிட்டபொருளில் இது உங்
களுக்குவெகுமானம் பாருங்களென்றுசொல்லி,
கொள்ளைப்பொருளில்கொஞ்சங்கொஞ்சமனுப்
பினான்.

## ௩௧. அதிகாரம்.

௧. ஷவுலும் அவன்புத்திரர் இருவரும் மரித்தல்: ௭. இஸரவேலர்விட்ட நகரங்களைப்பெலிஸ்தியர் அரசாளல்: ௮. ஷவுலுடைய பிரேதத்தையும் அவன்புத்திரருடைய பிரேதத்தையும் அவமானஞ்செய்தல்: ௰௧. யாபேஷின்சனங்கள் அந்தப்பிரேதங்களையெடுத்து அடக்கம்பண்ணல்.

பெலிஸ்தியர் இஸரவேலரை எதிர்த்து யுத்தம் ௧

(௰) வச.௨௧. (௰௨) நியா.௰௫.௰௯. அதி.௰௪.௨௭. (௰௪) வச.௰௬. ௨.சாமு.௮.௰௮. ௧.இரா.௧.௩௮,௪௪. எசேக்.௨௫.௰௬. செப்.௨.௫. யோசு.௰௪.௰௩. யோசு.௰௫.௰௩.(௰௬)௧.தெச.௫.௩. (௰௯)வச.௮.(௨௧)வச.௰. நியா.௰௮.௰௫.(௨௨)௨.பா.௰௩.௰௩. நியா.௰௯.௨௨. (௨௪) எண்.௩௧.௨௭. யோசு.௨௨.௮. (௨௭) யோசு.௰௯.௮. யோசு.௰௫.௪௮. (௨௮) யோசு.௰௩.௰௬. யோசு.௰௫.௫௰. (௨௯) அதி.௨௭.௰. நியா.௧.௰௬. (௩௰) நியா.௧.௰௭. (௩௧) ஆதி.௩௩.௰௯. அதி.௨௫.௨௭. யோசு.௰௪.௰௩. ௨.சாமு.௨.௧.—(௩௧.அதி.௧.)௧.நாளா.௰.௧—௰௨. அதி.௨௮.௪.

பண்ண இஸரவேலர், பெலிஸ்தியருக்கு முன்
னின்று ஓடி, கில்போவா மலையிலே வெட்டு
௨ ண்டு விழுந்தார்கள்.—பெலிஸ்தியர் ஷவுலையும்,
அவன் புத்திரரையும் பின்தொடர்ந்து நெருங்கி,
ஷவுலின் புத்திரராகிய யோனத்தானையும்,அபீன
தாப்பையும், மல்கிஷூவாவையும், கொலைசெய்
௩ தார்கள்.—யுத்தம் ஷவுலுக்கு விரோதமாய் மிக
வும் அதிகரித்தது; வில்வீரர் அவனைக்கண்டு பி
டித்தார்கள், அவன்வில்வீரராலே மிகவுங்காயப்
௪ பட்டான்.—அதினாலே ஷவுல் தன் ஆயுததா
ரியைநோக்கி, விருத்தசேதனமில்லாத இவர்
கள்வந்து என்னை உருவக்குத்தி என்னை அவமா
னம்பண்ணாதபடிக்கு, நீயே உன்கட்கத்தைஉரு
வி அதினால் என்னைக்குத்தென்றான்; அவனாயுத
தாரிமிகவும்பயந்ததினால், அப்படிச்செய்யச்சம்
மதிக்கவில்லை: ஆனபடியினாலே ஷவுல் ஒரு
கட்கத்தையெடுத்து, அதின் நுனியிலே விழுந்
௫ தான்.—ஷவுல் மரணமடைந்ததை அவனாயுததா
ரிகண்டபொழுது தானும், கட்கத்தில் விழுந்து,
௬ அவனோடு இறந்துவிட்டான்.—இவ்விதமாய்ஷ
வுலும், அவன் புத்திரர்மூவரும், அவனாயுததாரி
யும், அவன்சமஸ்தசனங்களும் ஏகமாய் அத்தி
னத்தில் இறந்துபோனார்கள்.
௭ தாழ்ந்த பூமிக்கப்புறத்திலும், யோர்தான்நதிக்
கு இப்புறத்திலும், நின்ற இஸரவேலர், சனங்
கள் தோற்றோடினதையும், ஷவுலும் அவன்புத்
திரரும் இறந்துபோனதையுங் கண்டபொழுது;
நகரங்களை விட்டோடிப்போனார்கள்: பெலிஸ்
தியர் வந்து அவைகளில்வாசம்பண்ணினார்கள்.-
மற்றநாள் பெலிஸ்தியர் கொலையுண்டவர்களின் ௮
வஸ்திராதிகளைக்கொண்டுபோகும்படிவந்தபொ
ழுது, ஷவுலும் அவன் புத்திரர் மூவரும் கில்
போவா மலையிலேவிழுந்து கிடக்கக்கண்டு,—
அவன் தலையைவெட்டி, அவனாயுதங்களையும் ௯
எடுத்துக்கொண்டு, தங்கள்விக்கிரகங்களின் ஆல
யத்திலும் சனங்களின்மத்தியிலும் பிரசித்தப்ப
டுத்தும்பொருட்டு,பெலிஸ்தியர்தேசத்தின் நான்
குதிசையிலும் அனுப்பினார்கள்.—அவன் ஆயு ௰
தங்களை அஷ்தாரோத்தேவனுடைய ஆலயத்தில்
வைத்தார்கள்; அவன்உடலைப் பேத்ஷான் மதி
லிலே தூக்கிப்போட்டார்கள்.—பெலிஸ்தியர் ௰௧
ஷவுலுக்குச்செய்ததைக்கிலியாத்தேசத்து யாபே
ஷீரார் கேள்விப்பட்டபொழுது,—பராக்கிரம ௰௨
சாலிகள் சமஸ்தரும்எழுந்து இராமுழுவதும் ந
டந்துபோய்,பேத்ஷான்மதிலிலிருந்த ஷவுலின்
உடலையும், அவன்புத்திரரின் உடல்களையும் எ
டுத்து, யாபேஷூக்குக்கொண்டுபோய் அங்கே
அவைகளைத்தகனித்துப்போட்டு,—அவர்கள் எ ௰௩
லும்புகளை யெடுத்துயாபேஷிலுள்ள ஒரு விருட்
சத்தின் கீழ்அடக்கம்பண்ணி, எழுநாள் அளவும்
உபவாசஞ்செய்தார்கள்.

(௨) அதி.௰௪.௪௯. ௧.நாளா.௮.௩௩. (௩.) ௨.சாமு.௧.௬, (௪) நியா.௯.௫௪. அதி.௰௪.௬. அதி.௰௭.௨௬. ௨.சாமு.௧.௰௪. ௨.சாமு.௧.௰. (௯) ௨.சாமு.௧.௨௰. (௰) அதி.௨௧.௯. நியா.௨.௰௩. ௨.சாமு.௨௧.௰௨. யோசு.௰௭.௰௧. நியா.௧.௨௭. (௰௧) அதி.௰௧.௩,௯,௰௧. (௰௨) அதி.௰௧.௧—௰௧. ௨.சாமு.௨.௪—௭. ௨.நாளா.௰௬.௰௪. எரே.௩௪.௫. ஆமோ.௬.௰. (௰௩) ௨.சாமு.௨.௪,௫. ஆதி.௫௰.௰.

# சாமுவேலின் இரண்டாம் புத்தகம்.

## க. அதிகாரம்.

*க. ஷவுல் யோனாதான் என்பவர்களுடைய மரணசெய்தியைத்தெரிவித்த அமலேக்கியனொருவன் கொல்லப்படல்: உ. ஷவுல் யோனாதான் என்பவர்களைக்குறித்துப்பாட்டுப்பாடல்.*

ஷவுல் மரணமடைந்தபின்னும், தாவீது அம
லேக்கியரைக்கொலைசெய்து திரும்பிவந்து, சிக்
லாக் நகரத்தில் இரண்டுநாள் இருந்தபின்பு;—
௨ மூன்றாம்நாளில் ஒருமனுஷன் ஷவுலின் பாள
யத்தினின்று புறப்பட்டு, வஸ்திரத்தைக்கிழித்
துக்கொண்டும், தன் தலையின்மேல் மண்ணைப்
போட்டுக்கொண்டும் தாவீதினிடத்தில்வந்து, த
௩ ரையில்விழுந்து நமஸ்காரம்பண்ணினான்.—தா
வீது அவனைநோக்கி, நீஎங்கிருந்துவருகிறாயென்
றுகேட்க, இஸரவேலின் பாளயத்தினின்றுந்தப்
௪ பிவந்தேனென்றான்.—தாவீது அவனைநோக்கி,
நடந்ததென்ன சொல்லென்றுகேட்க, அவன் ச
னங்கள் யுத்தத்தினின்றுந் தப்பியோடிவிட்டார்
கள், வெகுசனங்கள் விழுந்து இறந்துபோனார்
கள்; ஷவுலும், அவன் புத்திரனாகிய யோனாதா
௫ னுங்கூட மரித்தார்களென்றான்.-தனக்கிப்படிச்
சொன்ன வாலிபனைத் தாவீதுநோக்கி, ஷவுலும்
அவன் புத்திரனாகிய யோனாதானும் இறந்துபோ
னார்களென்று உனக்கெப்படித் தெரியுமென்று
௬ கேட்க,—அந்தவாலிபன், நான் கில்போவாமலை
யிலிருந்தபொழுது, ஷவுல் தன் ஈட்டியை ஊன்
றிக்கொண்டு நிற்கவும், இரதங்களும் குதிரை
வீரரும் அவரைத்தொடர்ந்துநெருங்கவுந் தற்செ
௭ யலாகக்கண்டேன்.-அவர் திரும்பிப்பார்த்தபொ
ழுது, என்னைக்கண்டு கூப்பிட்டார், அதற்கு
௮ நான் இங்கே நிற்கிறேனென்றேன்.—அவர், நீ
ஆரென்றென்னிடத்தில் கேட்க, நான் அமலேக்
௯ கியனென்றேன்.—பின்பு அவர் என்னை நோக்
கி, நான் வேதனைப்பட்டும் என் பிராணன்போ
கவில்லை, ஆதலால் நீ என்சமீபத்தில்நின்று என்
௰ னைக் கொன்றுபோடென்றார்.—அவர் விழுந்து
போனபடியால்பிழைக்கமாட்டார்: இது நிச்சய
மென்றுகண்டு, நான்அவர்சமீபத்தில்நின்று,அவ
ரைக்கொன்றுபோட்டேன். அவர்தலையிலிருந்த
முடியையும், அவர் புயத்திலிருந்த அஸ்தகடகத்
தையுமெடுத்து, என்ஆண்டவனிடத்தில்கொண்
௰௧ டுவந்தேனென்றான்.—அப்பொழுது தாவீதுதன்
வஸ்திரங்களைப் பிடித்துக்கிழித்தான்; அவனோ
டிருந்த சகலமனுஷரும் அப்படியே செய்தார்
கள்.—ஷவுலும் அவன்புத்திரனாகிய யோனாதா ௰௨
னும், யெகோவாவின் சனங்களும், இஸர
வேலின் குடும்பத்தாருங் கட்கத்தினால் விழுந்
ததினால், அவர்களுக்காக இவர்கள் சாயங்கால
மட்டும் அழுது துக்கங்கொண்டாடி, உபவாசம்
பண்ணினார்கள்.

தாவீது தனக்குச்சொன்னவாலிபனைநோக்கி, ௰௩
நீ எவ்விடத்தானென்றுகேட்க; நான் அந்நியனு
டையமகன், அமலேக்கியனென்றான்.—தாவீது ௰௪
அவனைநோக்கி, யெகோவாவின் அபிஷேக
னைக் கொலைசெய்யும்படி உன்கையை நீட்டப்
பயப்படாமல் விட்டதென்னவென்றான்.—பின் ௰௫
பு தாவீதுவாலிபனொருவனை அழைத்து, நீ சமீ
பித்து இவனை அடியென்றுசொல்ல, அவன் இவ
னைச்சாகும்படி அடித்தான்.—தாவீது அவனைப் ௰௬
பார்த்து நான் யெகோவாவினால் அபிஷே
கம்பெற்றவனைக் கொன்றுபோட்டேனென்று
சொல்லி, உன்வாயே உனக்கு விரோதமாய்ச்
சாட்சியிட்டது, ஆதலால் உன்இரத்தப்பழி உன்
தலைமேலே தங்குவதாகவென்றான்.

பின்பு தாவீது, ஷவுலையும் அவன் புத்திரனா ௰௭
கியயோனாதானையுங்குறித்துப்புலம்பி,—ஆ! இஸ ௰௮
ரவேலே, உன் அலங்காரம் உயர்ந்த ஸ்தானங்க
ளில் அதமாயிற்று: ஐயோ! பராக்கிரமசாலிகள்
விழுந்தார்களே.—பெலிஸ்தியரின்குமாரத்திகள் ௰௯
மகிழ்வார்கள், விருத்தசேதனமில்லாதவர்களின்
குமாரத்திகள் வெற்றிபாராட்டுவார்கள்.—காத் ௨௰
திலே தெரிவிக்கவொண்ணாது, அஷ்கிலோனின்
வீதிகளிலே பிரசித்தமாக்கவேண்டாம். கில்போ
வா மலைகளே, உங்களிடத்தில் பராக்கிரமசாலி
யாகிய ஷவுலின் கேடகம், தைலத்தால் அபிஷே
கம் பெறாதவனுடையகேடகம்போல அவமான
மாகத்தள்ளுண்டதே: இனி உங்கள்மேலே பனி
யும், மழையும் பெய்யாமலும், முதற்பலனைவிளை
விக்கும்வயலிராமலும்போகக்கடவன.—யோனா ௨௧
தானின் வில்லுகொலையுண்டவர்களின் இரத்தத்
திற்கும், பராக்கிரமசாலிகளின் நிணத்திற்கும்
பின்னிடவில்லை: ஷவுலின்கட்கம் பயன்படா
மல் திரும்பவில்லை.—ஷவுலும் யோனாதானும் ௨௨
தங்கள் சீவியகாலத்திலேபிரியமும் இனிமையு
முள்ளவர்கள்: தங்கள் மரணகாலத்திலும் அவர்
கள் பிரியவில்லை: அவர்கள் கழுகுகளைப்பார்க்
கிலும் வேகமுள்ளவர்கள், சிங்கங்களைப்பார்க்
கிலுந் தைரியமுள்ளவர்கள்.—இஸரவேலின் கு ௨௩

(௧.அதி.௧.) ௧.சாமு.௩௰.௰௭,௨௬. (௨) அதி.௪.௰. ௧.சாமு.௪.௰௨. (௪)௧.சாமு.௪.௰௬.(௬)௧.சாமு.௩௧.௧. ௧.சாமு.௩௧.௨,௩,௪. (௰) நியா.௯.௫௪. (௰௧) அதி.௩.௩௧. (௰௪) எண்.௰௨.௮. ௧.சாமு.௩௧.௪. ௧.சாமு.௨௪.௬. சங்.௱௫.௰௫. (௰௫)அதி.௪.௰,௰௨. (௰௬) ௧.சாமு.௨௬.௯. ௧.இரா.௨.௩௨,௩௩,௩௭. வச.௰. லூக்.௰௯.௨௨.(௰௮) வச.௨௭.(௰௯)யாத்.௰௫.௨௰. நியா.௰௧.௩௪. ௧.சாமு.௰௮.௬. ௧.சாமு.௩௧.௪. (௨௰) ௧.சாமு.௩௧.௧. நியா.௫.௨௩. யோபு.௩,௪. எரே.௨௰.௰௪. ௧.சாமு.௰.௧. (௨௧) ௧.சாமு.௰௮.௪. (௨௨) நியா.௰௪.௰௮.

மாரத்திகளே, இரத்தாம்பரத்தையும் மற்றும் இ
ரம்மியதிரவியங்களையும் உங்களுக்குத் தரிப்பித்
து, உங்கள் வஸ்திரங்களின்மேல் பொன்னாபர
ணங்களையிடுவித்த ஷவுலினிமித்தம்அழுங்கள்.-
௨௪ ஐயோ! யுத்தத்தின்மத்தியிலே பராக்கிரமசாலிகள்
விழுந்தார்களே. யோனத்தானே, ஐயோ! நீ உன்
னுயர்ந்த ஸ்தானங்களிலே கொலையுண்டாயே.—
௨௫ என் சகோதரனாகியயோனத்தானே, உன்னிமித்
தம் நான் வியாகுலப்படுகிறேன்: நீ எனக்கு மி
கவும் இனிமையாயிருந்தாய், என்மேல் நீ வைத்த
அன்பு ஸ்திரியின் அன்பைப்பார்க்கிலும் அதிக
௨௬ ஆச்சரியமாயிருந்தது.—ஐயோ! பராக்கிரமசாலி
கள் விழுந்தார்களே, அவர்கள் யுத்த ஆயுதங்கள்
௨௭ நாசமாயினவேயென்று பாடினான்.—அன்றியும்
தன்பரிட்சையை யூதாசந்ததியாருக்குப்போதிக்
கும்படி கட்டளையிட்டான். அதுயாஷேரின்புத்
தகத்தில் எழுதப்பட்டிருக்கின்றது.

## ௨. அதிகாரம்.

௧. தேவனுடையகட்டளைப்படிக்குத்தாவீது எப்ரோனுக்குப்போய் இராசாபிஷேகம்பெறுதல்: ௫. யாபேஷ் கிலியாத்தின் சனங்களைத் தாவீது கீர்த்தனம்பண்ணுதல்: ௮. இஷ்போஷேத்தை இஸரவேலருக்கு இராசாவாக்கல்: ௰௨. யோவாப் அப்னேர் என்பவர்களின் வாலிபர் யுத்தஞ்செய்தல்: ௰௮. அசாகேல் மரணமடைதல்: ௨௫. அப்னேரின் வாக்கினால் யோவாப் திரும்பிப்போதல்: ௩௨. அசாகேலை அடக்கம் பண்ணல்.

பின்பு தாவீது யூதாவிலுள்ள நகரங்களிலொன்
றிலே நான்போயிருக்கலாமாவென்று சொல்லி
யெகோவாவினிடத்தில் உசாவ, யெகோ
வா அவனைநோக்கி, போவென்றார், பின்பு தா
வீது எந்தஸ்தானத்திற்குப்போவேனென்றுகேட்
௨ க, எப்ரோனுக்கு என்றார்.—அப்படியே தாவீதும்
யெஸ்ரியேலூராளாகிய அகினோவாம்,நாபாலின்
மனைவியாயிருந்த கர்மேலூராளாகிய அபீகயிலெ
ன்னும் அவன் மனைவியரிருவரும் போனார்கள்.-
௩ அன்றியுந்தாவீது தன் சனங்களையும் அவரவர்கு
டும்பத்தாருடன் கூட்டிக்கொண்டுபோனான்; அ
வர்கள் எப்ரோனிலுள்ள நகரங்களிலே வாசம்
௪ பண்ணினார்கள்.—பின்பு யூதா சனங்கள்வந்து,
அவ்விடத்தில் யூதா வமிசத்துக்கு இராசாவாகத்
தாவீதை அபிஷேகம்பண்ணினார்கள்.
௫ யாபேஷ் கிலியாத்திலுள்ள சனங்கள் ஷவுலை
அடக்கம்பண்ணினார்களென்று அவர்கள் தாவீ
துக்குத்தெரிவித்தபொழுது,தாவீதுயாபேஷ்கிலி
யாத்திலுள்ள சனங்களிடத்தில் தூதரையனுப்பி,
உங்கள் ஆண்டவனாகிய ஷவுலுக்கு இந்தத்தயை
யைச்செய்து, அவரை அடக்கம்பண்ணினபடியி
னால்நீங்கள் யெகோவாவினால் ஆசீர்வதிக்கப்
படுவீர்களாக.-யெகோவா உங்களுக்குத்தயை ௬
யையுஞ் சத்தியத்தையுஞ்செய்வாராக; நீங்களிந்
தக்காரியத்தைச்செய்தபடியினாலே நானும் உங்க
ளுக்குத தயைசெய்வேன்.—இப்பொழுது உங் ௭
கள் கை திடமாவதாக, நீங்கள் தைரியமாயிருங்
கள்: உங்கள் நாயனாராகிய ஷவுல் மரித்தபின்பு
யூதாவின் வமிசத்தார் தங்களுக்கு இராசாவாக
என்னை அபிஷேகம்பண்ணினார்கள்என்று,அவர்
களுக்குச் சொல்லுவித்தான்.
ஷவுலின் சேனாபதியும், நேரின்புத்திரனுமா ௮
கிய அப்னேர் ஷவுலின் புத்திரனாகிய இஷ்போ
ஷேத்தை மக்னாயிமுக்குக்கூட்டிப்போய்,—கிலி ௯
யாத்துக்கும், அஷூரியருக்கும், யெஸ்ரியேலுக்
கும், எப்ராயீமுக்கும், பேன்யாமீனுக்கும், இ
ஸரவேலர் சமஸ்தருக்கும் இராசாவாக அவனை
ஏற்படுத்தினான்.—ஷவுலின் புத்திரனாகிய இஷ் ௰
போஷேத் இஸரவேலரை அரசாள ஆரம்பித்த
காலத்தில், அவனுக்கு நாற்பது வயது, அவன்
இரண்டுவருஷம் ஆளுகைசெய்தான். யூதாவமி
சத்தார்மாத்திரம் தாவீதைப் பின்பற்றினார்கள்.—
தாவீது எப்ரோனிலே யூதாவமிசத்தாருக்கு இரா ௰௧
சாவாயிருந்தகாலம் எழுவருஷமும், ஆறுமாத
முமாகும்.
நேரின் புத்திரனாகிய அப்னேரும், ஷவுலின் ௰௨
புத்திரனாகிய இஷ்போஷேத்தின் பணிவிடைக்
காரரும், மக்னாயிமினின்றும் புறப்பட்டுக் கிபி
யோனுக்குப்போனார்கள்.—சேருயாவின் புத்திர ௰௩
னாகிய யோவாப்பும்,தாவீதின் பணிவிடைக்கார
ரும்புறப்பட்டுப்போனார்கள், கிபியோனிலுள்ள
குளத்துக்குச்சமீபத்தில்ஒருவருக்கொருவர்எதிர்
ப்பட்டார்கள்: ஒருபட்சத்தார்குளத்துக்கிப்புறத்
திலும், மறுபட்சத்தார்குளத்துக்கப்புறத்திலும்இ
றங்கினார்கள்.—அப்னேர் யோவாப்பைநோக்கி, ௰௪
வாலிபர் எழுந்து நமக்குமுன்பாகச் சிலம்பம்வி
ளையாடட்டுமென்றுசொல்ல, யோவாப் அப்படி
யாகட்டுமென்றான்.-அப்பொழுது ஷவுலின் புத் ௰௫
திரனாகிய இஷ்போஷேத்தின் பட்சத்தாராகிய
பேன்யமீனியருக்குள்ளே தொகைப்படி பன்னி
ரண்டுபேரும், தாவீதின் பணிவிடைக்காரருக்
குள்ளே பன்னிரண்டுபேரும் எழுந்துவந்தார்
கள்.-அவர்கள் ஒவ்வொருவரும்தங்கள் தங்கள் எ ௰௬
திரிகளின் தலையைப்பிடித்து,தங்கள் தங்கள் எதி
ரிகளின் விலாவிலே தங்கள் தங்கள் கட்கத்தினா
லேகுத்த, அவர்கள் ஏகமாய்விழுந்தார்கள்: அதி
னாலே கிபியோனிலுள்ள அந்த ஸ்தானத்துக்கு
எல்காத்தசூரிமென்று பேராயிற்று.—பின்பு அந்த ௰௭
நாளிலேமிகவுங்கடினமானயுத்தம்நடந்தது; அப்
னேரும், இஸரவேலரும்,தாவீதின்பணிவிடைக்
காரருக்கு முன் முறிய அடிக்கப்பட்டார்கள்.
அங்கே சேருயாவின் புத்திரராகிய யோவாப், ௰௮

(௨௫)௧.சாமு.௰௮.௧,௩. (௨௬)வச.௰௧.(௨௭)௧.சாமு.௩௧.௩.யோசு.௰.௰௩.—(௨. அதி. ௧.)நியா.௧.௧. ௧.சாமு.௨௩.௨,௪,௯. ௧.சாமு.௩௰.௭,௮. ௧.சாமு.௩௰.௩௧. (௨) ௧.சாமு.௩௰.௫. (௩) ௧.சாமு.௨௭.௨,௩. ௧.நாளா.௰௨.௧. (௪) வச.௰௧. அதி.௫.௫. (௫) ௧.சாமு.௩௧.௰௧,௰௩. ரூத்.௨.௨௰. சங்.௱௰௫.௰௫. (௬) ௨.தீமோ.௧.௰௬,௰௮. (௮) ௧.சாமு.௰௪,௫௰. (௰௧) அதி.௫.௫. ௧.இரா.௨.௰௧. (௰௨)யோசு.௰௮.௨௫. (௰௩) எரே.௪௧.௰௨. (௰௮) ௧.நாளா.௨.௰௬. ௧.நாளா. ௰௨.௮. சங்.௰௮.௩௩.

அபீஷாய், அசாகேல் என்னும் மூவருமிருந்தார்
கள்: அசாகேல் காட்டுமானைப்போல ஓட்டத்தில்
யகூ வேகமுள்ளவன்.—அந்த அசாகேல் அப்னேரைப்
பின்தொடர்ந்தான்; அவன் அப்னேரைவிட்டு
உய வலப்புறம் இடப்புறம் விலகவில்லை.—அப்னேர்
திரும்பிப்பார்த்து, அசாகேலாவென்று கேட்க;
உக இவன் ஆமென்றான்.—அப்பொழுது அப்னேர்
அவனைநோக்கி, நீ வலப்புறமாயினும் இடப்புற
மாயினும் விலகி, வாலிபரிலொருவனைப் பிடித்
து, அவன் ஆயுதத்தை யெடுத்துக்கொள்ளென்
றான். ஆனாலும் அசாகேல் அவனைவிட்டுவிலகா
உஉ மல் தொடர்ந்தான்.—அதனால் அப்னேர் திரும்ப
வும் அசாகேலைநோக்கி, என்னைப் பின்தொடரா
மல் விலகிவிடு: உன்னைத் தரையில் விழும்படி
நான் அடிக்கவேண்டியதென்ன; பின்னும் உன்
சகோதரனாகிய யோவாப்பின் முன்பாக நான்
உங எப்படி முகங்காட்டுவேனென்றான்.—ஆகிலும்
அவன் விலகிப்போகச் சம்மதிக்கவில்லை: ஆன
தினால் அப்னேர் தன் ஈட்டியின் பின்னலகினா
லே, விலாவெலும்பை ஊடுருவி ஈட்டி முது
கிலே புறப்படும்படி குத்த, அவன் அவ்விடத்
திலே விழுந்துஇறந்துபோனான்: பின்னும் அசா
கேல் விழுந்து இறந்த ஸ்தானத்திற்கு வந்தவர்க
உச ளெல்லாரும் தரித்துநின்றார்கள்.—யோவாப்பும்
அபீஷாயும் அப்னேரைப் பின்தொடர்ந்தார்கள்:
அவர்கள் கிபியோன் வழிக்கருகான கீயவுக்கு
எதிர்ப்புறத்திலுள்ள அம்மாமேட்டுக்குவரச் சூரி
யன் அஸ்தமித்தது.
உரு அச்சமயத்தில் அப்னேரைப் பின்பற்றிய பே
ன்யாமீன் வமிசத்தார் ஏகமாய்க்கூடி, ஒரே அ
உசு ணியாக ஒரு மலையுச்சியில் நின்றார்கள்.—அப்
பொழுது அப்னேர் யோவாப்பைநோக்கி, கட்
கம் இடைவிடாதபடி பட்சிக்கவேண்டுமா; மு
டிவிலே கசப்புண்டாகுமே; இதை நீர் அறியீரா,
சனங்கள் தங்கள்சகோதரரைப்பின்தொடராமல்
திரும்பும்படிசொல்லாமல்,எம்மட்டும்தாமதிப்பீ
உஎ ரென்றுசொல்ல,—யோவாப் நீர்சொல்லாதிருந்
தால் இன்றுகாலமே சனங்கள் ஒவ்வொருவரும்
தங்கள் சகோதரரைத்தொடராமல் நிச்சயமாய்த்
திரும்பிவிடுவார்களென்று,சீவிக்கிற தேவனைக்
உஅ கொண்டு ஆணையிடுகிறேனென்றான்.—பின்பு
யோவாப் எக்காளத்தை ஊத, சமஸ்தசனங்களும்
இஸரவேலரைத்தொடராமலும், யுத்தம்பண்ணா
உகூ மலும் நின்றுவிட்டார்கள்.—அன்றிராமுழுவதும்
அப்னேரும் அவன்சனங்களும் சமபூமிவழியாய்
நடந்து, யோர்தானைக்கடந்து, பித்ரோன் எல்லை
முழுவதும் தாண்டி, மக்னாயிமுக்குப் போனார்
ஙய கள்.—யோவாப் அப்னேரைத் தொடராமல் திரும்
பிவிட்டான்: அவன் சமஸ்த சனங்களையுங் கூ
டிவரச்செய்தபொழுது, தாவீதின் சேவகரில் பத்
தொன்பதுபேரும், அசாகேலுமில்லாதிருந்தார்
ஙக கள்.—தாவீதின் சேவகர் பேன்யமீனியருக்குள்
ளும், அப்னேரின்சனங்களுக்குள்ளும், முந்நூற்
றறுபதுபேரைச் சாகும்படி அடித்தார்கள்.
அவர்கள் அசாகேலையெடுத்து, பேத்லகேமி ஙஉ
லுள்ள அவன் பிதாவின் பிரேதவறையில் அவனை
அடக்கம்பண்ணினார்கள். யோவாப்பும் அவன்
சனங்களும் இராமுழுவதும் நடந்து, விடியற்கா
லத்தில் எப்ரோனிற் சேர்ந்தார்கள்.

## ங. அதிகாரம்.

க. தாவீது மென்மேலும் பராக்கிரமமடைதல்: உ. அவன் புத்திரரின் நாமங்களைத்தெரிவித்தல்: சு. அப்னேர் இஷ்போஷேத்தைவெறுத்துத்தாவீதிடத்தில் சேர்தல்: யங. அப்னேரோடு உடன்படிக்கை செய்கிறபொழுது தாவீது தன் மனைவியாகிய மீகாளை விரும்பல்: யஎ. அப்னேருக்கு விருந்துசெய்து அவனை யனுப்பிவிடல்: உஉ. யோவாப் பிரியவீனமாயிருந்து அப்னேரைக் கொலைசெய்தல்: உஅ. தாவீது யோவாப்பைச் சபித்தல்: தாவீது அப்னேரினிமித்தம்புலம்பல்.

பின்னும்ஷவுலின்குடும்பத்தாருக்கும்,தாவீதின் க
குடும்பத்தாருக்கும்நெடுங்காலம்யுத்தம்நடந்தது:
அதிலே தாவீதுவரவரப்பெலமடைந்தான், ஷவு
லின்குடும்பத்தார் வரவரப் பெலவீனமானார்கள்.
எப்ரோனிலே தாவீதுக்குப் புத்திரர் பிறந்தார் உ
கள்: முதற்புத்திரன், யெஸ்ரியேலூராளாகிய அ
கினோவாமிடத்திற் பிறந்த அம்னோன்.—இரண் ங
டாம் புத்திரன், நாபாலின் மனைவியாயிருந்த கர்
மேலூராளாகிய அபீகயிலிடத்திற் பிறந்த கிலி
யாப், மூன்றாம்புத்திரன், கிஷூரின் இராசாவான
தல்மாயின் புத்திரியாகிய மாகாள்பெற்ற அப்ஷா
லோம்.—நான்காம்புத்திரன், அகீத்தின் மகனாகிய ச
அதோனியா; ஐந்தாம் புத்திரன், அபீதாளின் மக
னாகிய ஷிபத்தியா.—ஆறாம்புத்திரன், தாவீதின் ரு
மனைவியாகிய எக்லாளிடத்திலே பிறந்த இத்ரி
யாம்: இவர்கள் எப்ரோனிலேதாவீதுக்குப்பிறந்
தவர்கள்.
ஷவுலின் வமிசத்தாருக்கும் தாவீதின் வமிசத் சு
தாருக்கும் யுத்தம்நடந்து வருகிறபொழுது, அப்
னேர் ஷவுலின் வமிசத்தினிமித்தம் பெலன்
கொண்டுநின்றான்.—ஷவுலுக்கு ஆயாவின் புத் எ
திரியாகிய ரிஸ்பாளென்றுபெயருள்ளஒரு வைப்
பாட்டியிருந்தாள்: இஷ்போஷேத் அப்னேரை
நோக்கி,நீர்என்பிதாவின்வைப்பாட்டியிடத்தில்
பிரவேசித்ததென்னவென்றான்.—அப்னேர் இஷ் அ
போஷேத் சொல்லிய வாக்கினிமித்தம் மிகவுங்
கோபங்கொண்டு,உம்மைத்தாவீதின்கையில் ஒப்
பியாமல், இந்நாள்வரைக்கும் யூதாவுக்குவிரோ
தமாக உமது பிதாவாகிய ஷவுலின் குடும்பத்துக்
கும், அவர் சகோதரருக்கும், பெந்துசனங்களுக்
கும், தயைசெய்த என்மேலே ஒரு ஸ்திரியைக்கு
றித்துக்குற்றஞ்சுமத்த, நான் ஒரு நாய்த்தலையா.—
இராச்சியத்தை ஷவுலின் குடும்பத்தினின்றும்ப கூ
றித்து, தாண்தொடங்கிப் பேர்ஷேபாபரியந்தம்

(உஉ) நியா.யச.யகூ. (உங) அதி.ங.உஎ. (உஎ) வச.யச. நீதி.யஎ.யச.—(ங. அதி. ங.)க.சாமு.உஎ.அ. (ச) க.இரா.க.ரு. (எ) அதி.உக.அ,ய. அதி.யசு.உக. (அ) உபா.உங.யஅ. க.சாமு.உச.யச. (கூ) நியா.உய.க. அதி.யஎ.யக. க.இரா.ச.உரு.

இஸரவேலுக்கும் யூதாவுக்கும் தாவீதின் சிங்கா
௰ சனத்தைஸ்தாபனம்பண்ணி,-இப்படி யெகோ
வா தாவீதுக்காணையிட்டபிரகாரம் நான் அவ
னுக்குச்செய்யாமல் விட்டால், தேவன் அப்
னேருக்கு அப்படியும் அதற்கதிகமுஞ் செய்வா
௰௧ ராகவென்றான்.—அவன் அப்னேருக்குப் பயப்
பட்டபடியினாலே, திரும்ப அவனுக்குத்தரமாக
௰௨ ஒருசொல்லும் சொல்லவில்லை.—பின்பு அப்
னேர்தன்னிமித்தம் தாவீதினிடத்தில் தூதர்களை
யனுப்பி, தேசம் ஆருடையது; என்னோடு உ
டன்படிக்கைபண்ணும், கேளும், சமஸ்த இஸ
ரவேலரையும் உமதுபட்சத்திலேதிருப்பஎன்கை
உம்மோடிருக்குமென்று சொல்லுவித்தான்.
௰௩ அவன், நல்லது; நான் உன்னோடுஉடன்படிக்
கைபண்ணுவேன்: ஆனாலும்நான்உன்னிடத்தில்
ஒருகாரியங்கேட்டுக்கொள்ளுகிறேன்,என்முகத்
தைக்காணவரும்பொழுது ஷவுலின் புத்திரியாகி
யமிகாளைஎன்னிடத்தில் அழைத்துவந்தாலொழி
ய,நீ என்முகத்தைக்காணமாட்டாயென்றுசொல்
௰௪ லுவித்தான்.—பின்பு தாவீது ஷவுலின்புத்திரனா
கிய இஷ்போஷேத்தினிடத்தில் தூதரையனுப்
பி, நான் பெலிஸ்தயரின் நூறு அக்கிரசருமங்க
ளைப் பரிசாகக்கொடுத்துவிவாகம்பண்ணினஎன்
மனைவியாகிய மிகாளை எனக்கொப்பியுமென்று
௰௫ சொல்லுவிக்க,—இஷ்போஷேத், அவளை லாயீ
ஷின் புத்திரனாகிய பல்தியேலென்னும் புருஷ
னைவிட்டு, அழைத்துவரும்படி ஆட்களையனுப்
௰௬ பினான்.—அவள்புருஷன் பகூரீம்வரைக்கும் அ
வள்பின்னாக அழுதுகொண்டு அவளோடேபோ
னான். அப்னேர்அவனைநோக்கி, நீதிரும்பிப்போ
வென்றுசொல்ல, அவன் திரும்பிவிட்டான்.
௰௭ அப்னேர் இஸரவேலரின்முதியோருடன் சம்
பாஷணைபண்ணி, தாவீதை உங்களுக்கிராசாவா
யிருக்கும்படி நெடுநாளாய்த் தேடினீர்களே,—
௰௮ என்தாசனாகிய தாவீதின்கையினால், என் சனங்
களாகிய இஸரவேலரைப் பெலிஸ்தியர்கையி
னின்றும், அவர்கள் சத்துருக்கள் சமஸ்தர்கையி
னின்றும் விடுவிப்பேன்என்று, யெகோவா
தாவீதைக்குறித்துச் சொல்லியிருக்கிறாரே, ஆத
லால் இப்பொழுது அப்படிச்செய்துகொள்ளுங்
௰௯ களென்றான்.-இந்தப்பிரகாரம்அப்னேர்பென்யா
மீன் வமிசத்தாரின் செவிக்கேறப் பேசினான்:
அப்னேர் பென்யாமீனின் சமஸ்த வமிசத்தா
ருக்கும், இஸரவேலருக்கும் நலமாய்த்தோன்றிய
தெல்லாவற்றையும் எப்ரோனிலிருந்த தாவீதின்
செவிக்கேறும்படி சொல்லப்புறப்பட்டான்.—
௨௰ அப்னேர் இருபதுபேருடன் எப்ரோனிலே தா
வீதிடத்தில்சென்றான். அப்பொழுதுதாவீது அப்
னேருக்கும், அவனுடன்வந்த மனிதருக்கும் வி
௨௧ ருந்துபண்ணினான்.—பின்பு அப்னேர்தாவீதை
நோக்கி, நான் எழுந்துபோய், சமஸ்த இஸர
வேலரையும் என்னாண்டவனாகிய இராசாவிடத்
தில் கூட்டிவருவேன்; அவர்கள் உம்மோடும்
உடன்படிக்கைபண்ணுவார்கள், அதினாலே நீர்
உமது மனோவாஞ்சையின்படி சமஸ்தரையும் ஆ
ளுவீரென்றான். தாவீது அப்னேரை யனுப்பிவி
ட, அவன் சந்தோஷத்தோடேபோனான்.
தாவீதின் பணிவிடைக்காரரும் யோவாப்பும் ௨௨
ஒரு சேனையைத்தொடர்ந்து, வெகு கொள்ளைப்
பொருள்களையுங்கொண்டு திரும்பி வந்தார்கள்:
அப்னேர் எப்ரோனிலே தாவீதிடத்திலில்லை, இ
வன் அவனையனுப்ப அவன் சந்தோஷத்துடன்
போய்விட்டான்.—யோவாப்பும் அவனோடு கூ ௨௩
டிய சமஸ்தசேனைகளும் வந்தபொழுது, நேரின்
புத்திரனாகிய அப்னேர் இராசாவிடத்தில் வந்
திருந்தான், இவன் அவனையனுப்ப அவன் சந்
தோஷத்துடன்போய்விட்டானென்றுயோவாப்
புக்குத் தெரிவித்தார்கள்.—அப்பொழுது யோ ௨௪
வாப்இராசாவினிடத்தில்போய்,என்னசெய்தீர்;
அப்னேர் உம்மிடத்தில்வந்தானே; நீர் அவனைப்
போகும்படி அனுப்பிவிட்டதென்ன.—நேரின் ௨௫
புத்திரனாகியஅப்னேர் உம்மைவஞ்சிப்பதற்கும்,
உம்முடைய போக்குவரவுகளை அறிகிறதற்கும்,
நீர் செய்வதெல்லாம் பார்க்கிறதற்கும்வந்தான்.
இது உமக்குத்தெரியுமென்றான்.—யோவாப் தா ௨௬
வீதைவிட்டுப் புறப்பட்டமாத்திரத்தில் அவன்
அப்னேருக்குத் தூதர்களையனுப்ப, அவர்கள் சீ
ராவென்னுங்கிணற்றடியில்நின்று அவனைக்கூட்
டிக்கொண்டுவந்தார்கள்: தாவீது இதைஅறியவில்
லை.-அப்னேர் எப்ரோனுக்குத்திரும்பிவந்தபொ ௨௭
ழுது, யோவாப் அவனுடன் தனியேபேசவேண்
டுமென்று வாசலினொருபக்கத்தில் கூட்டிக்கொ
ண்டுபோய், தன் சகோதரனாகிய அசாகேலைக்
கொன்றதினிமித்தம் அவனுக்கு அவன் விலா
விலே குத்த அவன் இறந்துபோனான்.
தாவீது அதைக் கேள்விப்பட்டபொழுது,நே ௨௮
ரின் புத்திரனாகிய அப்னேரின் கொலைக்காரியத்
திலே யெகோவாவின் சமுகத்தில் என்மே
லும், என்இராச்சியத்தின்மேலும் ஒருபொழுதுங்
குற்றமில்லை.—அது யோவாப்பின் தலைமேலும், ௨௯
அவன் பிதாவின்சமஸ்த குடும்பத்தார் மேலும்
தங்குவதாக;யோவாப்பின்வமிசத்திலேபிரமேகி
யும், குஷ்டரோகியும், கோலையூன்றி நடக்கிறவ
ரும், கட்கதுனியில் விழுகிறவரும்,உணவற்றவ
ருமில்லாமல் போகலாகாதென்றான்.—அப்னேர் ௩௰
கிபியோனில்யுத்தத்திலே தங்கள் சகோதரனாகிய
அசாகேலைக் கொன்றதினிமித்தம், யோவாப்பும்
அபீஷாயும் அவனைக்கொன்றுபோட்டார்கள்.
பின்புதாவீது யோவாப்பையும்அவனோடிருந் ௩௧
த சமஸ்த சனங்களையும்நோக்கி, நீங்கள் உங்கள்
வஸ்திரங்களைக்கிழித்து, இரட்டுடுத்து, அப்னே
ருக்குமுன்னாகத் துக்கங்கொண்டாடுங்களென்

(௰) ரூத்.௧.௰௭. ௧.இரா.௰௩.௨. ௧.சாமு.௰௫.௨௮. ௧.நாளா.௰௨.௨௩. (௰௩) ஆதி.௪௩.௩. ௧.சாமு.௰௮.௨௰. (௰௪) ௧.சாமு.௰௮.௨௫,௨௭. (௰௫) ௧.சாமு.௨௫.௪௪. (௰௬) அதி.௰௯.௰௬. (௰௮) வச.௯. (௰௯) ௧.நாளா.௰௨.௨௯. (௨௧) வச.௰,௰௨. ௧.இரா.௰௧.௭. (௨௫) ௧.சாமு.௨௯.௬. ஏசா.௩௭.௨௮. (௨௭) ௧.இரா.௨.௫. அதி.௪.௬. அதி.௨.௨௩. (௨௯) ௧.இரா.௨.௩௨,௩௩. லேவி.௰௫.௨. (௩௰) அதி.௨.௨௩. (௩௧) யோசு.௭.௬. ஆதி.௩௭.௩௪.

ளுன். இராசாவாகிய தாவீது பாடைக்குப்பின்
௩௨ னேபோனான்.—அவர்கள் அப்னேரை எப்ரோ
னில் அடக்கம்பண்ணினார்கள்: இராசா அப்
னேரின்பிரேதக்குழியருகேநின்று சத்தமிட்டழு
௩௩ தான்; சமஸ்த சனங்களும் அழுதார்கள்.-இராசா,
மூடனைப்போல அப்னேர் இறந்துபோனானோ;
உன்கைகள் கட்டப்படவுமில்லை, உன் கால்கள்
௩௪ விலங்கு பூட்டப்படவுமில்லை.—ஒருவன் தீயருக்
குமுன் விழுவதுபோல நீயும் விழுந்தாயென்று
சொல்லிஅப்னேரினிமித்தம்புலம்பினான். சனங்
கள் எல்லாரும் அவனிமித்தம் திரும்பவும் அழு
௩௫ தார்கள்.—பொழுதிருக்கையில் சமஸ்த சனங்க
ளும் வந்துபோசனம்பண்ணும்படி தாவீதுக்குச்
சொல்ல, தாவீதுசூரியன் அஸ்தமிக்குமுன் நான்
அப்பமாகிலும் வேறேதாகிலும் புசித்தேனாகில்
தேவன் எனக்கப்படியுமதற்கதிகமுஞ் செய்
௩௬ வாராகவென்று ஆணையிட்டான்.—சமஸ்த ச
னங்களும் அதைச் சிந்தித்துப்பார்த்துச் சந்தோ
ஷப்பட்டார்கள். இராசா செய்த யாவும் சனங்
௩௭ களுக்குச் சந்தோஷமாயிருந்தது.—நேரின் புத்
திரனாகிய அப்னேரை இராசா கொலைசெய்ய
வில்லையென்று, சனங்களும் சமஸ்த இஸரவேல
ரும் அன்றைத்தினம் அறிந்துகொண்டார்கள்.—
௩௮ பின்பு இராசா தமது பணிவிடைக்காரரைநோக்
கி, இஸரவேலருக்குள்ளே பிரபும் பெரிய மனு
ஷனுமாகிய ஒருவன் இன்றைத்தினம் விழுந்
௩௯ தான், இது நீங்கள் அறியீர்களா.—இராச அபிஷே
கம்பெற்றிருந்தும், நான் இன்றைத்தினம் பெல
வீனமாயிருக்கிறேன்; சேருயாவின் புத்திரராகிய
இவர்கள் மிகக்குறும்பராயிருக்கிறார்கள்: ஆனா
லும் யெகோவா தீமைசெய்தவனுக்கு அவ
னது தீமைக்குத்தக்கபலன் அளிப்பாரென்றான்.

## ௪. அதிகாரம்.

௧. அப்னேரின் மரணத்தைக்குறித்து இஷ்போ
ஷேத் துக்கித்தல்: ௨. பானா, ரேகாப், மெபீபோ
ஷேத்தென்னுமிவர்களுடைய வமிசவரலாற்
றைக்குறித்தல்: ௫. பானா, ரேகாப்பென்பவர்க
ளால் இஷ்போஷேத் கொல்லப்படல்: ௯. அ
வர்கள் தாவீதால் அதமாதல்.

அப்னேர் எப்ரோனில் இறந்துபோனானென்
று ஷவுலின் புத்திரன்கேள்விப்பட்டபொழுது,
அவன்கைபெலவீனமாயிற்று, இஸரவேலர்யாவ
௨ ரும் வியாகுலப்பட்டார்கள்.—ஷவுலின்புத்திர
னிடத்தில்தளகர்த்தரிருவரிருந்தார்கள்: ஒருவனுக்
குப்பெயர் பானா, மற்றவனுக்குப்பெயர் ரே
காப், இவர்கள் பேன்யாமீன் வமிசத்தாரில் பெ
ரோத்தியனாகிய ரிம்மோனின் புத்திரர்கள்: பெ
ரோத்தும்பேன்யாமீன் வமிசத்தாருடன்தொகை
௩ யிடப்பட்டவன்,—பெரோத்தியர் கித்தாயிமுக்
கோடிப்போய், இந்நாள்வரைக்கும் அந்த ஸ்தா
௪ னத்திலே வாசம் பண்ணுகிறார்கள்.—ஷவுலின்
புத்திரனாகிய யோனாதானுக்கு இரண்டுகாலும்
முடமான ஒரு புத்திரனிருந்தான். அவன் பெ
யர் மெபீபோஷேத். ஷவுலும் யோனாதானும்
இறந்துபோனார்களென்கிறசெய்தியெஸ்ரியேலி
லிருந்துவந்தபொழுது, அவனுக்குஐந்துவயது: அ
வன் தாதி அவனை எடுத்துக்கொண்டு தப்பும்படி
விரைந்தோடும்பொழுது, அவன்விழுந்து முட
மானான்.—பெரோத்தியனான ரிம்மோனின் புத் ௫
திரராகியரேகாப்பும், பானாவும்போய், மத்தியான
வேளையிலே இஷ்போஷேத்தின்வீட்டிற்பிரவே
சித்தார்கள், அவன் மத்தியானத்திலேகட்டிலில்
படுத்திருந்தான்.—அவர்கள் கோதுமையெடுக் ௬
கப்போகிறவர்கள்போலவீட்டுக்குள்ளேபோய்;
அவன் விலாவுக்குக்கீழே குத்தினார்கள்: பின்பு
ரேகாப்பும் அவன் சகோதரனாகிய பானாவும் தப்
பிவிட்டார்கள்.—அவர்கள் வீட்டிற் பிரவேசித்த ௭
சமயத்தில், அவன் பள்ளி அறையில் தன் கட்
டிலிலே படுத்துக்கொண்டிருந்தான், அவர்கள்
அவனை அடித்துக்கொன்று, அவனைச்சிரச்சேதம்
பண்ணி, அவன் தலையையெடுத்துக்கொண்டு, இ
ராமுழுவதும் சமபூமிவழியாய் நடந்து,—இஷ் ௮
போஷேத்தின் தலையை எப்ரோனிலிருந்த தாவீ
திடத்தில் கொண்டுவந்து, இராசாவைநோக்கி,
உமது பிராணனைவாங்க வகைதேடின உமது
சத்துருவாகிய ஷவுலின் புத்திரனான இஷ்போ
ஷேத்தின்தலையைப்பாரும்; இன்றைத்தினம்யெ
கோவா இராசாவாகிய எங்கள் ஆண்டவரினி
மித்தம் ஷவுலிடத்திலும், அவன் சந்ததியாரிடத்
திலும் பழிவாங்கினாரென்றார்கள்.

அப்பொழுது தாவீது பெரோத்தியனான ரிம் ௯
மோனின் புத்திரராகிய ரேகாப்பையும், அவன்
சகோதரனாகிய பானாவையும் நோக்கி,—ஒருவன் ௰
எனக்கு நற்செய்திகொண்டு வருகிறானென்றெ
ண்ணி, அந்தச்செய்தியினிமித்தம் தனக்கு நான்
வெகுமதிசெய்வேனென்று நினைத்து, ஷவுல் இ
றந்துபோனானென்று எனக்குச்சொன்னபொழு
து, நான் அவனைப்பிடித்துச் சிக்லாக்கில் அவ
னைக்கொலைசெய்தேனென்று, சகல உபத்திரவங்
களினின்றும் என் பிராணனை விடுவித்த சீவிக்
கிற யெகோவாவைக்கொண்டு, ஆணையிட்
டுச் சொல்லுகிறேன்.-அப்படியானால் தன் வீட் ௰௧
டுக்குள்ளே கட்டிலின்மேல்படுத்திருந்த நீதிமா
னைக்கொலைசெய்த துஷ்டருக்கு எவ்வளவதிக
மாகும்; இப்பொழுது நான் அவன் இரத்தப்பழி
யை உங்களிடத்தில்வாங்கி, உங்களைப்பூமியிலி
ருந்து சேதியாதிருப்பேனாவென்றான்.—பின்பு ௰௨
தாவீது தன் வாலிபருக்குக்கட்டளையிட, அவர்
கள்இவர்களைக்கொன்றுபோட்டு, இவர்கள்கைக
ளையுங் கால்களையுந்தறித்து, எப்ரோனிலுள்ளஒரு
குளத்தின்சமீபத்தில் தூக்கிவிட்டார்கள். இஷ்
போஷேத்தின் தலையையெடுத்து எப்ரோனிலுள்

(௩௩) அதி.௰௩.௰௨,௰௩. (௩௫) அதி.௰௨.௰௭. எரே.௰௬.௰௭. ரூத்.௧.௰௭. அதி.௧.௰௨. (௩௯) அதி.௰௯.௭. அதி.௰௯.௰௩. ௧.இரா.௨.௫,௬,௩௩,௩௪. சங்.௨௮.௪. சங்.௬௨.௰௨. ௨.தீமோ.௪.௰௪.—(௪. அதி. ௧.) எஸ்ற.௪.௪. ஏசா.௰௩.௭. மத். ௨.௩. (௨) யோசு.௰௮.௨௫. (௩) நிகி.௰௧.௩௩. (௪) அதி.௯.௩. ௧.சாமு.௨௯.௧,௰௧. (௬) அதி.௨.௨௩. (௮) ௧.சாமு.௰௯. ௨,௰,௰௧. (௰) ஆதி.௪௮.௰௬. ௧.இரா.௧.௨௯. சங்.௩௧.௭. அதி.௧.௨,௪,௰௫. (௰௧) ஆதி.௯.௫,௬. அதி.௧.௰௫. அதி.௩.௩௨.

ள அப்னேரின் பிரேதவறையிலே அடக்கம்பண்
ணினார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. சமஸ்த இஸ்ரவேலரும் தாவீதுக்கு அபிஷே
கஞ்செய்தல்: ௬. எபூசியரைவென்றுசீயோன்
துருக்கத்தைப்பிடித்தல்: ௰௧. ஈராம் தாவீதிடத்
தில் தூதரையனுப்பல்: ௰௩. யெரூஷலேமில்
தாவீதுக்குப்பிறந்த புத்திரரின் நாமங்களைத் தெ
ரிவித்தல்: ௰௭. தாவீது பாகால்பிராத்சீம் ஸ்
தானத்தில்பெலிஸ்தியரைமேற்கொள்ளல்:௨௨.
ரெபாயீமென்னுந் தாழ்ந்த பூமியில் திரும்பவும்
அவர்களைச்செயித்தல்.

பின்பு இஸ்ரவேலின் சமஸ்தவமிசத்தாரும் எப்
ரோனிலிருந்த தாவீதினிடத்தில்வந்து, கேளும்,
நாங்கள் உமது எலும்பும் உமது மாமிசமுமாயி
௨ ருக்கிறோம்.—சிலநாளுக்குமுன் ஷவுல் இராசா
வாயிருந்தபொழுதும், இஸ்ரவேலரைப் போக
வும் வரவும் நடத்தினவர் நீரே: யெகோவா
உம்மைநோக்கி, நீ என் சனங்களாகிய இஸ்ர
வேலரை மேய்ப்பனைப்போலப் பாலிப்பாய்,
இஸ்ரவேலருக்கு நீ அதிபதியாவாயென்றுசொல்
௩ லியிருக்கிறாரென்றார்கள்.—இவ்விதமாய் இஸ்ர
வேலரின் முதியோர் யாவரும் எப்ரோனிலிருந்
த இராசாவிடத்தில் வந்தார்கள்; தாவீது இரா
சா யெகோவாவின் சமுகத்தில் எப்ரோனி
லே அவர்களோடு உடன்படிக்கை பண்ணின
பொழுது, அவர்கள்இஸ்ரவேலருக்கு இராசாவா
கத் தாவீதுக்கு அபிஷேகம்பண்ணினார்கள்.
௪ தாவீது அரசாளத்தொடங்கினபொழுது அவ
னுக்கு முப்பதுவயது, அவன் நாற்பது வருஷம்
௫ ஆளுகைசெய்தான்.—அவன் எப்ரோனிலே யூ
தா வமிசத்தாரை ஏழுவருஷமும் ஆறுமாதமும்
அரசாண்டான்: அவன் யெரூஷலேமில் இஸ்ர
வேலர் சமஸ்தரையும், யூதா சனங்களையும், முப்
பத்துமூன்றுவருஷம் அரசாண்டான்.
௬ இராசாவும், அவன் சனங்களும், தேசத்தார்க
ளாகிய எபூசியருக்கு விரோதமாய் யெரூஷலே
முக்குப்போக, அவர்கள் தாவீது இதிற்பிரவே
சிக்கமாட்டானென்றெண்ணித் தாவீதைநோக்
கி, நீ குருடரையும் முடவரையும் துரத்தினாலொ
ழிய, இதிற்பிரவேசிக்கமாட்டாயென்றார்கள்.—
௭ ஆனாலும் தாவீதுசீயோனின்வலிமையான துருக்
கத்தைப்பிடித்தான்: அதுவே தாவீதின் நகர மா
௮ யிற்று.—அத்தினத்தில் தாவீது, சாலகத்திலேறி,
எபூசியரையும், தாவீதின் பிராணனால் வெறுக்
கப்படும் முடவரையும், குருடரையும் அடிக்கி
றவனெவனோ, அவன் பிரதானியுஞ் சே
னாபதியும் ஆவானென்றான். அதைக்குறித்
துக்குருடரும் முடவரும் வீட்டிலே வரலாகா
தென்றுசொல்லுகிறார்கள்.—தாவீது அந்தத் துரு ௯
க்கத்திலே வாசம்பண்ணி, அதற்குத் தாவீது நகர
மென்று பெயரிட்டான். தாவீது மில்லோதொ
டங்கி, உட்புறம்வரைக்கும் சுற்றிவரமதில்கட்
டுவித்தான்.—தாவீது வரவர விருத்தியடைந்து ௰
பெரியவனானான், சேனைகளுக்குத் தேவனாகிய
யெகோவா அவனோடிருந்தார்.
தீருவின் இராசாவாகிய ஈராம் தாவீதிடத்தில் ௰௧
எரஸ் மரங்களையும், தச்சரையும், கற்சிற்பரை
யும் அனுப்பினான்: அவர்கள் தாவீதுக்கு ஒருவீடு
கட்டினார்கள்.—தாவீது, யெகோவா தன்னை ௰௨
இஸ்ரவேலருக்குஇராசாவாகநிலைப்படுத்தியிருக்
கிறாரென்றும், தன் சனங்களாகிய இஸ்ரவேலரி
னிமித்தம் தனது இராச்சியத்தை உன்னதப்ப
டுத்தினாரென்றும் அறிந்துகொண்டான்.
தாவீது எப்ரோனைவிட்டுவந்தபின், யெரூஷ ௰௩
லேமில் இன்னும் வைப்பாட்டிகளையும், மனை
விகளையுஞ் சேர்த்துக்கொண்டான்: தாவீதுக்குப்
புத்திரரும் புத்திரிகளும் பிறந்தார்கள்.—யெரூஷ ௰௪
லேமிலே ஷம்முவா, ஷோபாப், நாதான், சலோ
மோன்.—இபார், இலீஷுவா, நெப்பேக், யபீ ௰௫
ய,—இலீஷாமா, இலியாதா, இலீப்பேலேத்தென் ௰௬
னும் நாமங்களையுடையவர்கள் அவனுக்குப் பி
றந்தார்கள்.
இஸ்ரவேலருக்கு இராசாவாகத்தாவீதை அபி ௰௭
ஷேகம்பண்ணினார்களென்றுபெலிஸ்தியர்கேள்
விப்பட்டபொழுது, அவர்கள் சமஸ்தரும் தாவீ
தைத்தேடும்படிவந்தார்கள்; தாவீது அதைக்கேட்
டமாத்திரத்திலே துருக்கத்துக்குப் புறப்பட்டுப்
போனான்.—பெலிஸ்தியரும் வந்து ரெபாயீமென் ௰௮
னுந்தாழ்ந்த பூமியிலே பரவினார்கள்.—பின்புதா ௰௯
வீது, நான் பெலிஸ்தியரிடத்தில்போகலாமா; அ
வர்களை என் கையிலொப்பிப்பீராவென்று யெ
கோவாவிடத்தில் உசாவ, யெகோவா தா
வீதைநோக்கி, போ, நான் நிச்சயமாய்ப்பெலிஸ்
தியரை உன் கையில் ஒப்பிப்பேனென்றார்.—
தாவீது பாகால்பிராத்சீமுக்குப்போய், அங்கே ௨௰
அவர்களைமுறியஅடித்து, யெகோவா எனக்
குமுன்பாக என் சத்துருக்களை, வெள்ளமானது
கரையைச்சிதைக்கிறதுபோலச் சிதைத்தாரென்
று சொல்லி, அதினால் அந்தஸ்தானத்திற்குப் பா
கால்பிராத்சீமென்றுபெயரிட்டான்.—அங்கேபெ ௨௧
லிஸ்தியர் தங்கள் விக்கிரகங்களை விட்டுப்போ
னார்கள், அவைகளைத்தாவீதும் அவனுடையமனு
ஷரும் எடுத்து எரித்துப்போட்டார்கள்.
திரும்பவும் பெலிஸ்தியர்வந்து, ரெபாயீமென் ௨௨
னுந்தாழ்ந்த பூமியிலே பரந்தார்கள்.—தாவீது யெ ௨௩
கோவாவினிடத்தில் உசாவினபொழுது, அ
வர், நீ போகலாகாது; அவர்களுக்குப்பின்னாகப்

(௫. அதி. ௧.) ௧.நாளா.௰௧.௧. ஆதி.௨௯.௰௪. (௨) ௧.சாமு.௰௮.௰௩. ௧.சாமு.௰௬.௧,௰௨. சங்.௭௮.௭௧. அதி.௭.௭. (௩) ௧.நாளா.௰௧.௩. ௨.இரா.௰௧.௰௭. நியா.௰௧.௰௧. ௧.சாமு.௨௩.௰௮. (௪) ௧.நாளா.௨௬.௩௧. (௫) அதி.௨.௰௧. (௬) நியா.௧.௨௧. யோசு.௰௫.௬௩. நியா.௧.௮. (௭) வச.௯. ௧.இரா.௨.௰. (௮) ௧.நாளா.௰௧.௬—௯. (௯) வச.௭. (௰௧) ௧.இரா.௫.௨. ௧.நாளா.௰௪.௧. (௰௩) உபா.௰௭.௰௭. (௰௭) ௧.நாளா.௰௧.௰௬. அதி.௨௩.௰௪. (௰௮) யோசு.௰௫.௮. ஏசா.௰௭.௫. (௰௯) அதி.௨.௧. ௧.சாமு.௨௩.௨,௪. (௨௰) ஏசா.௨௮.௨௧. (௨௧) உபா.௭.௫,௨௫. ௧.நாளா.௰௪.௰௨. (௨௨) ௧.நாளா.௰௪.௰௩. (௨௩) வச.௰௯.

போய்ச்சுற்றி, முசுக்கட்டைச் செடிகளுக்கு எ
௨௪ திர்ப்புறத்தில் அவர்களோடெதிர்த்து,—முசுக்
கட்டைச்செடிகளின் நுனியில் உலாவுஞ் சத்
தங்கேட்கும்பொழுது உற்சாகங்கொள்ளு; அப்
பொழுது பெலிஸ்தியரின் சேனையை முறிய அ
டிக்கும்படி உனக்குமுன்னே யெகோவா பு
௨௫ றப்பட்டுப் போவாரென்றார்.—யெகோவா
தனக்குக் கட்டளையிட்டபிரகாரந் தாவீது செய்
து, கேபாதொடங்கிக் கெசேருக்குப் போகும்
வரைக்கும் பெலிஸ்தியரை அடித்தான்.

## ௬. அதிகாரம்.

*௧. தாவீது யெகோவாவின் பெட்டியைக் கொண்டுவரல்: ௬. ஊசா அடிக்கப்பட்டுப் பின்பு பெட்டியை ஓபெத் ஏதோம் வீட்டிற் சேர்த்தல்: ௰௨. பலியிட்டு நடனம்பண்ணித் தாவீது யெகோவாவின் பெட்டியைத்திரும்பவுங்கொண்டுவரல்: ௰௭. அதை ஆவாசத்தில் வைத்தல்: ௨௰. மீகாள் தாவீதைநிந்தித்தல்.*

பின்பு தாவீது, இஸரவேலருக்குள்ளே தெரிந்து
கொள்ளப்பட்ட சமஸ்தமனிதரையுங்கூடிவரச்
௨ செய்தான், அவர்கள் முப்பதினாயிரம்பேர்.—கெ
ரூபியரின்மத்தியில் வாசமாயிருக்கிற சேனாபதி
யாகிய யெகோவாவின்நாமம்தொழுதுகொள்
ளப்படுகிற தேவனின் பெட்டியைப் பாலையூ
தாவினின்று கொண்டுவரும்படி தாவீதும் அவ
னோடிருந்த சமஸ்தசனங்களும் எழுந்து புறப்
௩ பட்டுப்போய்,—தேவனுடைய பெட்டியை
ஒரு புது இரதத்தின்மேலேற்றி, கிபியாவிலுள்ள
அபீனாதாப்பின் வீட்டிலிருந்து அதைக்கொண்டு
வந்தார்கள்: அபீனாதாப்பின் புத்திரராகிய ஊசா
வும் அகியோவும் அந்தப்புது இரதத்தை நடத்தி
௪ னார்கள்.—அவர்கள் தேவனுடைய பெட்டியை
ஏற்றி, அதைக் கிபியாவிலுள்ள அபீனாதாப்பின்
வீட்டிலிருந்து நடத்திக்கொண்டுவருகையில் அ
௫ கியோபெட்டிக்கு முன்போனான்.—தாவீதும்
இஸரவேல் சந்ததியார் சமஸ்தரும் யெகோ
வாவின் சமுகத்தில் தேவதாருவினாற்செய்யப்
பட்டகின்னரமும், தம்புருவும், மிருதங்கமும்,
வீணையும், கைத்தாளமுமாகிய நானாவித வாத்தி
யங்களையும் முழக்கினார்கள்.
௬ அவர்கள் நாகோனின் சூட்டுக்களத்துக்குச்
சமீபத்தில்வந்தபொழுது, மாடுகள் தேவனுடை
யபெட்டியை அசைத்தபடியினாலே, ஊசா தன்
௭ கையைநீட்டி அதைப்பிடித்தான்.-அதினால் யெ
கோவாவின் கோபம் ஊசாமேல் மூண்டது;
தேவன் அவன்துணிவினிமித்தம் அங்கே அவ
னை அடிக்க, அவன் தேவனுடைய பெட்டிக்
௮ குச் சமீபத்தில் இறந்துபோனான்.—யெகோ
வா ஊசாவை அடித்ததினிமித்தம் தாவீது விச
னப்பட்டு, இந்நாள்வரைக்கும் வழங்குகிற பிர
காரம், அந்த ஸ்தானத்திற்குப்பெரெஸ் ஊசா
வென்று பெயரிட்டான்.—தாவீது அன்றைத்தி ௯
னம் யெகோவாவுக்குப்பயந்து, யெகோ
வாவின்பெட்டி என்னிடத்தில் வருவதெப்படி
யென்றான்.—தாவீது யெகோவாவின் பெட் ௰
டியை நகரத்திலே தன்னிடத்தில் கொண்டுவர
விரும்பாதபடியினாலே, சமீபத்திலுள்ள கித்தி
யனாகிய ஓபெத் ஏதோமின் வீட்டிலே கொண்டு
போய் வைத்தான்.—யெகோவாவின்பெட் ௰௧
டி கித்தியனாகிய ஓபெத் ஏதோமின் வீட்டிலே
மூன்றுமாதம் தங்கிற்று: யெகோவா ஓபெத்
ஏதோமையும், அவன் குடும்பத்தாரனைவரையும்
ஆசீர்வதித்தார்.
யெகோவா, தேவனுடையபெட்டியினி ௰௨
மித்தம் ஓபெத் ஏதோமின் குடும்பத்தாரையும் அ
வனுக்குரியயாவையும் ஆசீர்வதித்தாரென்று, தா
வீது இராசாவுக்குத்தெரிவிக்கப்பட்டது. அதினா
லே தாவீதுபோய், தேவனுடைய பெட்டியை
ஆனந்தத்துடன் ஓபெத் ஏதோமின் வீட்டிலிருந்
து தாவீது நகரத்திற்குக்கொண்டுவந்தான்.—யெ ௰௩
கோவாவின் பெட்டியைச்சுமக்கிறவர்கள் ஆ
றடிதூரஞ்சென்றபின்பு, மாடுகளையும் கொழுத்த
ஆட்டுக்கடாக்களையும் பலியிட்டான்.—அன்றி ௰௪
யுந் தாவீது சணல் நூலினாற் செய்யப்பட்ட ஏ
போத்தைத் தரித்துக்கொண்டு, யெகோவா
வின் சமுகத்தில் மிகுந்த உற்சாகத்துடன் நட
னம்பண்ணினான்.—இப்படியே தாவீதும் இஸர ௰௫
வேல் சந்ததியார்யாவரும், ஆரவாரத்தோடும் எக்
காளத்தொனியோடும், யெகோவாவின்பெட்
டியைக் கொண்டுவந்தார்கள்.—யெகோவா ௰௬
வின் பெட்டி தாவீதின் நகரத்திற் பிரவேசிக்கை
யில், ஷவுலின் புத்திரியாகிய மீகாள் பலகணி
வழியாகப்பார்த்து, தாவீது இராசா யெகோ
வாவின் சமுகத்திலேகுதித்து நடனம் பண்ணு
வதைக்கண்டு, தன் மனதுக்குள்ளே அவனைஅவ
மதித்தாள்.
அவர்கள் யெகோவாவின் பெட்டியை ௰௭
உள்ளேகொண்டுவந்து, அதற்குத்தாவீதுஸ்தாபித்
த ஆவாசத்தின் மத்தியில் அதற்குரிய ஸ்தானத்
தில் அதை ஸ்தாபித்தார்கள்: பின்பு தாவீது யெ
கோவாவின் சந்நிதியிலேதகனபலிகளையும்ஸ்
தோத்திரபலிகளையுமிட்டான்.—தாவீது தகனப ௰௮
லிகளையும் ஸ்தோத்திரபலிகளையுமிட்டு முடிந்த
பின், சேனைகளுக்கதிபதியாகிய யெகோவா
வின் நாமத்தைக்கொண்டுசனங்களை ஆசீர்வதித்
து,—இஸரவேலின்சமுதாயத்திலே, சமஸ்தசனங் ௰௯

(௨௪) ௨.இரா.௭.௯. நியா.௪.௰௪. (௨௫) ௧.நாளா.௰௪.௰௬. யோசு.௰௬.௰.—(௬. அதி. ௨.) ௧.நாளா.௰௩.௫,௬. யோசு. ௰௫.௯,௬௰. ௧.சாமு.௪.௪. சங்.௮௰.௧. (௩) எண்.௭.௯. ௧.சாமு.௬.௭. (௪) ௧.சாமு.௭.௧. (௬) ௧.நாளா.௰௩.௯. எண். ௪.௰௪. (௭) ௧.சாமு.௬.௰௯. (௯) சங்.௱௰௯.௱௨௰. லூக்.௫.௮,௯. (௰) ௧.நாளா.௰௩.௰௩. (௰௧) ௧.நாளா.௰௩.௰௪. ஆதி. ௩௰.௨௭. ஆதி.௩௯.௫. (௰௨) ௧.நாளா.௰௫.௨௫. (௰௩) எண்.௪.௰௫. யோசு.௩.௩. ௧.நாளா.௰௫.௨,௰௫. ௧.இரா.௮.௫. ௧.நாளா.௰௫.௨௬. (௰௪) யாத்.௰௫.௨௰. சங்.௩௰.௰௧. ௧.சாமு.௨.௰௮. ௧.நாளா.௰௫.௨௭. (௰௫) ௧.நாளா.௰௫.௨௮. (௰௬) ௧.நாளா.௰௫.௨௯. (௰௭) ௧.நாளா.௰௬.௧. ௧.நாளா.௰௫.௧. சங்.௱௩௨.௮. ௧.இரா.௮.௫. (௰௮) ௧.இரா.௮.௫௫. ௧.நாளா.௰௬.௨. (௰௯) ௧.நாளா.௰௬.௩.

களுக்குள்ளும் ஸ்திரிபுருஷர் ஒவ்வொருவருக்
கும்ஒவ்வொரு பணியாரமும் நல்லஒவ்வொருஇ
றைச்சித்துண்டும், ஒவ்வொருபடி திராட்ச
ரசமுமாகப்பகிர்ந்துகொடுத்தான். பின்பு சகல
சனங்களும் தங்கள் தங்கள் வீட்டுக்குப்போய்
விட்டார்கள்.
௨௰ தாவீது தன்குடும்பத்தாரை ஆசீர்வதிக்கும்படி
திரும்பிவந்தான். ஷவுலின் புத்திரியாகிய மீ
காள் தாவீதை எதிர்கொண்டுவந்து, வீணனொரு
வன் வெளியாகத் தன் வஸ்திரங்களைக் களைந்து
போட்டு நிற்பதுபோல, இன்றைத்தினம் தம்மு
டைய தாசருடைய பணிவிடைக்காரிகளுக்கு
முன்பாக தமது வஸ்திரங்களைக் களைந்துபோட்
டு நின்ற இஸரவேலரின் இராசா, இன்றைக்கு
எவ்வளவு மகிமையுள்ளவராயிருந்தாரென்றாள்.-
௨௧ அதற்குத் தாவீது, உன் பிதாவையும் அவன் கு
டும்பத்தாரனைவரையும் விட்டு, யெகோவா
வின் சனங்களாகிய இஸரவேலருக்கு அதிபதி
யாக ஏற்படுத்தும்படி, என்னையே தெரிந்து
கொண்ட யெகோவாவின் சமுகத்தில் நின்
றேன்: இன்னும் யெகோவாவின் சமுகத்
௨௨ தில் நடனம் பண்ணுவேன்.—இதைப்பார்க்கி
லும் இன்னும் அற்பனாவேன், என் பார்வைக்கு
நீசனுமாவேன்: ஆனாலும் நீ குறித்த என் தா
சரின் கன்னியராலோ மதிக்கப்பட்டிருப்பேன்
௨௩ என்றான்.—அதினாலே ஷவுலின் புத்திரியாகிய
மீகாளுக்கு மரணபரியந்தம் பிள்ளையில்லை.

## ௭. அதிகாரம்.

௧. தாவீது ஆலயத்தைக்கட்டவிரும்பல் அதற்கு நாதான்சம்மதித்தல்: ௪. நாதான் யெகோவாவாலேவப்பட்டு அதைத்தடைபடுத்தல்: ௰௨. தாவீதின் வமிசத்துக்குத் தேவன் வாக்குத்தத்தம்செய்தல்: ௰௮. தாவீது பிரார்த்தித்துத்துதித்தல்.

யெகோவா நான்கு திசையிலுமுள்ள சத்
துருக்கள் சமஸ்தரினின்றும் இளைப்பாறுதலைக்
கொடுத்தபின்பு, இராசா தன் வீட்டிலே வசித்தி
௨ ருந்தான்.—அப்பொழுது இராசா நாதானென்
னும் தீர்க்கதரிசியைநோக்கி, பாரும், நான் ஏ
ரஸ்மரத்தினாற் செய்யப்பட்ட வீட்டிலே வா
சம்பண்ணுகிறேன், தேவனுடைய பெட்டி
யோ தொங்குதிரைக்குள்ளே வாசமாயிருக்கின்
௩ றதென்றுசொல்ல,—நாதான் இராசாவைநோக்
கி, உம்முடைய இருதயத்திலே தோன்றுகிறபடி
எல்லாவற்றையும் செய்யும்; யெகோவா உம்
மோடிருக்கிறாரேயென்றான்.

அன்றிராத்திரி, நீஎன்அடியானாகியதாவீதிடத் ௪
தில்போய், அவனைநோக்கி, யெகோவா,
நான் வாசம்பண்ணும்படி நீ எனக்கொரு வீடு
கட்டப்போகிறாயா;—நான் இஸரவேல் சந்ததி ௫
யாரை எகிப்தினின்றும் புறப்படச்செய்த நாள்
முதல், இந்நாள்வரைக்கும், நானொருவீட்டிலேவா
சம்பண்ணினதில்லை, கூடாரத்திலும், ஆவாசத்
திலுமே அங்கங்கே உலாவினேன்.—நான் இ ௬
ஸரவேலாகிய என்னுடைய சனங்களை மேய்க்
கும்படிவிதித்த இஸரவேலின் நியாயாதிபதிக
ளில் ஒருவரைநோக்கி, எரஸ்மரத்தினாலெனக்
கொரு வீடுகட்டாதிருக்கிற தென்னவென்று,
நான் இஸரவேற்சந்ததியாரோடு உலாவித்திரிந்
த எவ்விடத்திலாகிலும் ஒரு வாக்கைச்சொல்லி
யிருக்கிறேனா என்கிறாரென்று சொல்லு.—இன் ௭
னும் என்அடியானாகிய தாவீதைநோக்கி, சேனா
பதியாகிய யெகோவா, நீ என் சனங்களாகிய
இஸரவேலருக்கு அதிபதியாயிருக்கும்பொருட்
டு, ஆடுகளின்பின்னே நடந்த உன்னை ஆட்டுமந்
தையைவிட்டுத்தெரிந்துகொண்டு,-நீபோகுமிட ௮
மெங்கும் உன்னோடிருந்து, உன்சமஸ்த சத்து
ருக்களையும் உன்முன்னின்றும் சேதித்து, பூமி
யிலுள்ள பெரியோர்களின் நாமத்தைப்போல,
உனக்கும் ஒரு பெரிய நாமத்தை உண்டாக்கி
னேன்.—அதுவுமன்றி, என்சனங்களாகிய இஸ ௯
ரவேலர் தங்கள் சுயஸ்தானத்திலே நெடுங்காலம்
வாசஞ்செய்து, என்றும் நீங்காதிருக்கும்பொ
ருட்டு அவர்களுக்கொரு ஸ்தானத்தைநிருபணம்
பண்ணி, அதில்அவர்களைநிலைப்படுத்துவேன்.—
என்சனங்களாகிய இஸரவேலருக்கு நான் நியா ௰
யாதிபதிகளை ஏற்படுத்தி, உன்னைச்சமஸ்த சத்து
ருக்களினின்றும்விலக்கி இளைப்பாறும்படிசெய்
த காலம்வரைக்கும் நடந்ததுபோல, இனி ஒரு
பொழுதும் துஷ்டசனங்கள் அவர்களை முன்
போலக் கிலேசப்படுத்த மாட்டார்களென்று
சொல்லுகிறாரென்றும்,—யெகோவா, உனக் ௰௧
கு ஒரு வீடுகட்டுவேன், உன் ஆயுள் நாட்கள் பூ
ரணமாகி, உன் பிதாக்களுடன் நீ மகாநித்திரை
அடையுங்காலத்தில், உன்உதரத்தில் தோன்றும்
உன்சுயசந்ததியை ஸ்தாபிப்பேன், அவன்இராச்
சியத்தை நிலைப்படுத்துவேன்.
அவன் என் நாமத்தினிமித்தம் ஒரு ஆலயத் ௰௨
தைக்கட்டுவான், அவனுடைய இராசாசனத்
தைச்சதாகாலமும் நிலைப்படுத்துவேன்.-நான் அ ௰௩
வனுக்குப்பிதாவாயிருப்பேன், அவன்எனக்குப்
புத்திரனாவான். அவன் பாவஞ்செய்வானாகில்,

(௨௰)சங்.௩௰. வச.௰௪,௰௬. ௧.சாமு.௰௯.௨௪. நியா.௯.௪. (௨௧) ௧.சாமு.௰௩.௰௪. (௨௩) ௧.சாமு.௰௫.௩௫. ஏசா. ௨௨.௰௪. மத்.௧.௨௫.—(௭. அதி. ௧.) ௧.நாளா.௰௭.௧,. (௨) அதி.௫.௰௧. அப்.௭.௪௬. யாத்.௨௬.௧. (௩) ௧.இரா. ௮.௰௭,௰௮. ௧.நாளா.௨௨.௭. (௪) ௧.இரா.௫.௩. ௧.நாளா.௨௨.௮. (௫) ௧.இரா.௮.௰௬. யாத்.௪௰.௰௮,௰௯,௩௪. (௬) லேவி.௨௬.௰௧,௰௨. உபா.௨௩.௰௪. ௧.நாளா.௰௭.௬. அதி.௫.௨. சங்.௭௮.௭௧,௭௨. மத்.௨.௬. அப்.௨௰.௨௮. (௭) ௧. சாமு.௰௬.௰௧,௰௨. சங்.௭௮.௭௰. (௮) ௧.சாமு.௰௮.௰௪. ௧.சாமு.௩௧.௬. சங்.௮௯.௨௩. ஆதி.௰௨.௨. (௯) சங்.௪௪. ௧. ஏரே.௨௪.௬. ஆமோ.௯.௰௫. சங்.௮௯.௨௨. (௰) நியா.௨.௰௪,௰௫,௰௬. ௧.சாமு.௰௨.௯,௰௧. சங்.௱௬.௪௨. வச.௧. (௰௧) யாத்.௧.௨௧. வச.௨௭. ௧.இரா.௰௧.௩௮. ௧.இரா.௨.௧. உபா.௩௧.௰௬. ௧.இரா.௧.௨௧. அப்.௰௩.௩௬. ௧.இரா. ௮.௨௰. சங்.௱௩௨.௰௧. (௰௨) ௧.இரா.௫.௫. ௧.நாளா.௨௨.௰. வச.௰௫. சங்.௮௯.௪,௨௯,௩௬,௩௭. (௰௩) சங்.௮௯. ௨௬,௨௭. எபி.௧.௫. சங்.௮௯.௩௰,௩௧,௩௨,௩௩.

நான் அவனை மனிதருடைய மிலாற்றினாலும்,
மனுபுத்திரரின் அடிகளினாலுந் தண்டிப்பேன்.—
யச நான் உன் சமுகத்தினின்றுந் தள்ளிப்போட்ட
சவுலைவிட்டு என் அனுக்கிரகத்தை நீக்கினது
யரு போல, அவனைவிட்டு நீக்கமாட்டேன்.—உன்
வமிசமும் உன் இராச்சியமும் உனக்கு முன்பா
கச் சதாகாலமும் நிலைப்படும்: உன் சிங்காசன
மும் சதாகாலமும் நிலைப்படுமென்றுஞ் சொல்
லுகிறாரென்பதைச் சொல்லவேண்டுமென்று,—
யசு யெகோவாவின வாக்குநாதானுக்குக்கிடைத்
யஎ தது.—பின்பு நாதான் இந்தச்சமஸ்தவாக்குகளின்
படிக்கும், தரிசனத்தின்படிக்கும் தாவீதிடத்தில்
பேசினான்.
யஅ அதினாலே தாவீதுஇராசாஉள்ளேபோய், யெ
கோவாவின் சமுகத்திலிருந்து, தேவனாகிய
யெகோவாவே, நீர் என்னை இதுவரைக்கும்
யகூ நடத்திவர நான் ஆர்; என்வமிசமென்ன.—தேவ
னாகிய யெகோவாவே, உமது பார்வைக்கு இ
து ஒருஅற்பகாரியம், இன்னும் நெடுங்காலத்தின்
பின்வரும் உமது அடியானின் வமிசத்தைக்குறித்
உய தும்பேசினீர்.—தேவனாகிய யெகோவாவே,
இதுவா மனிதருக்கேற்ற முறைமை;இதுவன்றித்
தாவீது உமக்கென்னசொல்லக்கூடும்; தேவனா
கிய யெகோவாவே, நீர்உமது அடியானைஅ
உக றிவீர்.—உமதடியானுக்கு அறிவிக்கும்படி, உமது
வாக்கினிமித்தம் உமதுள்ளத்துக்கேற்க இந்த ம
கத்துவமானகாரியங்களெல்லாவற்றையும் செய்
உஉ தீர்.—ஆதலால் தேவனாகிய யெகோவாவே,
நீரேமகத்துவமானவர்: நாங்கள்எங்கள் காதினாற்
கேள்விப்பட்ட எல்லாவற்றின்படிக்கும், உமக்
கு நிகரொருவருமில்லை. உம்மையன்றி வேறு
உ௩ தேவனில்லை.—எகிப்தினின்றும், அந்நிய சாதி
களினின்றும், அவர்கள் தேவர்களினின்றும், நீர்
மீட்ட உமது சனங்களுக்குமுன்பாக, அவர்கள்
நிமித்தமும் அவர்கள் தேசத்தினிமித்தமும் மகத்
துவமும் பயங்கரமுமான கிரியைகளைச் செய்
தீர்: இப்படித் தேவன் தமதுநாமம்விளங்கும்ப
டி தமக்கென்று தாம்மீட்ட உமது சனங்களாகிய
இஸரவேலரைப்போலப் பூலோகத்தில் ஒரு சா
உச தியுண்டா.—உமது சனங்களாகிய இஸரவேலர்
சதாகாலமும் உமக்குரிய சனங்களாயிருக்கும்ப
டி, அவர்களை நிலைப்படுத்தினீர்: யெகோவா
உரு வாகியநீரே அவர்களுக்குத் தேவனானீர்.—தேவ
னாகிய யெகோவாவே, உமதடியானையும்,அ
வன் குடும்பத்தையுங்குறித்து நீர் சொன்ன வாக்
கைச் சதாகாலமும் நிலைப்படுத்தி, நீர்சொல்லிய
உசு படிசெய்வீராக.—சேனாபதியாகியயெகோவா
இஸரவேலருக்குத்தேவனென்றுசொல்லி, உம
துநாமம் சதாகாலமும் துதிக்கப்படுவதாக: உம
து அடியானாகிய தாவீதின்வமிசம் உமதுசமுகத்
தில் நிலைத்திருப்பதாக.—சேனைகளுக்கு அதிப உஎ
தியாகிய யெகோவாவே, இஸரவேலின் தே
வனே, நான் உனக்கொரு வீடுகட்டுவேனென்
று நீர் உமதடியானுக்குத் தெரிவித்தீர்: ஆதலால்
உமக்கிந்தப் பிரார்த்தனைபண்ண உமது அடியா
னின் மனம் உச்சாகங்கொண்டது.—தேவனா உஅ
கிய யெகோவாவே, நீரே சத்தியதேவன்.
உமதுவாக்குஞ் சத்தியம், நீர் உமது அடியானுக்
கு இந்தமங்கலவாக்கை அருளினீர்.—தேவனா உகூ
கிய யெகோவாவே, உமது அடியானின்வமி
சம் சதாகாலமும் உமது சமுகத்தில் நிலைபெறும்
படி அருள்வீர், நீரேவாக்குத்தந்தீர்: உமது ஆசீர்
வாதத்தினால் உமது அடியானின் வமிசம்சதாகா
லமும் ஆசீர்வதிக்கப்படுவதாக என்றான்.

## அ. அதிகாரம்.

க. பெலிஸ்தியரும் மோவாபியருமாகிய சனங்க
ளைத் தாவீது வசப்படுத்தல்: ௩. ஆததேசரை
யும் ஸீரியசனங்களையும்தாழ்ச்சிப்படுத்தல்: கூ.
தோயிராசா தன் புத்திரனைத்தாவீதிடத்தில் அ
னுப்பல்: யச. எதோம்தேசத்திலே தருக்கத்தை
ஸ்தாபித்தல்: யசு. தாவீதுக்கு ஆதீனமான பிர
தான அதிபதிகளின்பெயர்.

பின்பு தாவீது பெலிஸ்தியரை முறிய அடித்து க
அவர்களைத் தன்வசப்படுத்தி, பெலிஸ்தயர்கை
யினின்றும் மெத்தேக் அமாவைப் பிடித்துக்
கொண்டான்.—அவன் மோவாபியரையும் முறி உ
ய அடித்து, தரையிலே தள்ளி அவர்கள்மேல்
இரண்டுநூல்போட்டு அளந்து, ஒருபங்கு மனித
ரைக்கொன்று,சம்பூரணமானமற்றப்பங்கானவர்
களை உயிரோடேவிட்டான். அதினாலே மோவா
பியர் தாவீதுக்கு அடிமைகளாகி, அவனுக்குப்
பரிதானங்கொடுத்துவந்தார்கள்.
தாவீது பிருத்நதி தீரத்திலுள்ள தன்எல்லையை ௩
வசப்படுத்திக்கொள்ளும்படி புறப்பட்டுப்போ
கையில், ரேகோப்பின் புத்திரனும், சோபாவின்
இராசாவுமாகிய ஆததேசரையும் அடித்து,—ஆயி ச
ரமிரதங்களையும், எழுநூறு குதிரைவீரரையும்,
இருபதினாயிரம் காலாட்களையும்பிடித்து, இர
தங்களில் நூறு இரதங்களைமாத்திரம் வைத்துக்
கொண்டு, மற்ற இரதங்களெல்லாவற்றையுஞ்
சேதித்துப்போட்டான்.—சோபாவின் இராசா ரு
வாகிய ஆததேசருக்குத் துணைசெய்யும்பொருட்
டு, தமஸ்கு நகரவாசிகளாகிய ஸீரியர் வந்த
பொழுது, தாவீது அந்த ஸீரியரில் இருபத்தீரா
யிரம்பேரைக் கொன்றுபோட்டான்.—தமஸ்கு சு
விலுள்ள ஸீரியாவிலே தாவீது தாணையங்களை

(யச) க.சாமு.யரு.உ௩,உஅ. க.இரா.யக.ய௩,௩ச. (யரு) வச.யஉ. சங்.அகூ.௩சு,௩எ. யோவா.யஉ.௩ச. (யஅ) ஆதி.௩உ.ய. (யகூ) வச.யக,யஉ. எசா.ருரு.அ. (உய) ஆதி.யஅ.யகூ. சங்.ா௩கூ.க. (உஉ) க.நாளா.யசு.உரு. உ.நாளா.உ.ரு. சங்.சஅ.க. சங்.அசு.ய. எரே.ய.சு. உபா.௩.உச. க.சாமு.உ.உ. சங்.அசு.அ. எசா.சரு.ரு,யஅ,உஉ. (உ௩) உபா.ச.எ,௩உ,௩ச. சங்.ாசஎ.உய. உபா.கூ.உசு. நிகி.க.ய. (உச) உபா.உசு.யகூ சங்.சஅ.யச. (உஎ) ரூத்.ச.ச.க.சாமு.கூ.யரு. (உஅ) யோவா.யஎ.யஎ. (உகூ) அதி உஉ.ருக.—(அ. அதி. க.) க.நாளா.யஅ.க,. (உ) எண்.உச.யஎ. வச.சு,யச. சங்.எஉ.ய. க.சாமு.ய.உஎ. (௩) க.நாளா.யஅ.௩. அதி.ய.சு. சங்.சுய. ஆதி.யரு.யஅ. (ச) க.நாளா.யஅ.ச. யோசு.யக.சு,கூ. (ரு) க.இரா.யக.உ௩,உச,உரு. (சு) வச.உ. வச.யச. அதி.எ.அ.

ஸ்தாபித்தான்: ஷீரியர் தாவீதுக்கடிமைகளாகி,
அவனுக்குப் பரிதானங் கொடுத்துவந்தார்கள்.
தாவீது போன இடமெங்கும் யெகோவா
௭ அவனை இரட்சித்துவந்தார்.—ஆததேசரின் பணி
விடைக்காரர் வைத்திருந்த பொற்பரிசைகளைத்
தாவீது பறித்து யெரூஷலேமுக்குக் கொண்டு
௮ வந்தான்.—ஆததேசரின் நகரங்களாகிய பெற்
ரூவிலும், பேரோதாயிலும், தாவீது இராசா மிகு
தியான பித்தளைகளை எடுத்துவந்தான்.
௯ தாவீது ஆததேசரின்சேனைகளனைத்தையும்மு
றிய அடித்தானென்று அமாத்தின் இராசாவாகிய
௰ தோயீகேள்விப்பட்டபொழுது,—அந்தஆததேசர்
தன்னோடும் யுத்தஞ்செய்திருந்தபடியால், தாவீது
இராசாவிடத்தில் வாழ்வை விசாரிக்கவும், அ
வன் ஆததேசருடன் யுத்தம்பண்ணி அவனைமு
றிய அடித்ததினிமித்தம் அவனுக்கு வாழ்த்துதல்
சொல்லவும், தோயீ தன்புத்திரனாகிய யோராமை
அவனிடத்தில் அனுப்பினான்: இவன்வெள்ளிப்
பாத்திரங்களையும், பொற்பாத்திரங்களையும், பித்
தளைப் பாத்திரங்களையுங் கொண்டுவந்தான்.—
௰௧ தாவீது இராசா தான் வசப்படுத்தின ஷீரியர்,
மோவாபியர், அம்மோன் வமிசத்தார், பெலிஸ்
தியர், அமலேக்கியரென்னுஞ்சகல சாதிகளிடத்
திலும், ரேகோப்பின் புத்திரனாகிய ஆததேச
ரென்கிற சோபாவின் இராசாவிடத்திலும்கொள்
௰௨ ளையிட்ட பொருளையும்,—தான் எடுத்த பொன்
வெள்ளிகளோடு யெகோவாவுக்குநிவேதனம்
௰௩ பண்ணினான்.—தாவீது உப்பையுடைய தாழ்ந்த
பூமியில் பதினெண்ணாயிரம் ஷீரியரைமுறிய அ
டித்துத் திரும்பிவந்தகாலத்தில் கீர்த்திபெற்றான்.
௰௪ அவன் ஏதோமிலுந் தாணையங்களை ஸ்தாபித்
தான்; ஏதோம் எங்கும் தாணையங்களை ஸ்தாபித்
ததினால், ஏதோமியர் சமஸ்தரும் தாவீதுக்கடி
மைகளானார்கள். தாவீது சென்ற இடமெங்கும்
யெகோவா தாவீதை இரட்சித்துவந்தார்.—
௰௫ தாவீது இஸ்ரவேலர் யாவரையும் பரிபாலனம்
பண்ணி, தன் சமஸ்த சனங்களையும் நீதியுடன்
௰௬ விசாரித்து நியாயஞ்செய்துவந்தான்.—சேருயா
வின் புத்திரனாகிய யோவாப் அவன் பிரதான
சேனாபதியானான். அகிலூத்தின் புத்திரனாகிய
௰௭ யோஷாபாத் இதிகாச கர்த்தனானான்.— அகீ
தூப்பின் புத்திரனாகிய சாதோக்கும், அப்யாதா
ரின் புத்திரனாகிய அகிமெலேக்கும் ஆசாரியர்க
௰௮ ளானார்கள்; செராயா இலேக்கனானான்.—யோய்
தாவின் புத்திரனாகிய பினாயா கிரேத்தியருக்கும்
பெலேத்தியருக்குந் தலைவனானான்; தாவீதின்
புத்திரர் பிரதான அதிபதிகளானார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. ஷவுல்வமிசத்தைக்குறித்துத் தாவீது வினாவல்: ௬. மெபீபோஷேத்தைத் தாவீதினிடத்தில்கொண்டுவரல்: ௭. மெபீபோஷேத்தைத் தன்போசனபீடத்திலிருத்தி ஷவுலின் பூமி முழுவதும் அவனுக்குக் கொடுத்தல்: ௯. சீபாவை மெபீபோஷேத்தின் கீழாக நியமித்தல்.

தாவீது, யோனத்தானினிமித்தம் நான்தயைசெய் ௧
ய இன்னும் ஷவுலின்குடும்பத்தில் மீந்திருக்கிற
வனுண்டாவென்றுகேட்டான்.—அதினால் ஷவு ௨
லின் குடும்பத்தில் சீபாவென்றுபெயர்கொண்ட
பணிவிடைக்காரனொருவனைத் தாவீதினிடத்தி
ல் அழைத்துவந்துவிட, இராசா அவனைநோக்கி,
நீ சீபாவாவென்றுகேட்க; அவன் அடியேனென்
றான்.—பின்பு இராசா, தேவனைப்போலநான் ௩
தயைசெய்ய, ஷவுலின் குடும்பத்தாரில் இன்
னும் எஞ்சியிருக்கிறவனுண்டாவென்றுகேட்க,
சீபா இராசாவைநோக்கி, யோனத்தானுக்கொரு
புத்திரனிருக்கிறான், அவன்கால்களிரண்டும் மு
டமென்றான்.-அவனெங்கேயென்று இராசா இவ ௪
னிடத்தில்கேட்க, சீபா இராசாவைநோக்கி, அ
வன்லோதேபாரில் அம்மியேலின் புத்திரனாகி
ய மாகீரின்வீட்டிலேயிருக்கிறானென்றான்.
அப்பொழுது தாவீது இராசா, லோதேபாரிலி ௫
ருந்த அம்மியேலின் புத்திரனாகிய மாகீர்வீட்டுக்
கு ஆளனுப்பி, அவனை அழைப்பித்தான்.—ஷவு ௬
லின் பௌத்திரனும், யோனத்தானின் புத்திரனு
மாகிய மெபீபோஷேத் தாவீதினிடத்தில் வந்த
பொழுது, அவன் முகங்குப்புறவிழுந்துநமஸ்கா
ரம்பண்ணினான். தாவீது மெபீபோஷேத்தே
யென்றுசொல்ல, அவன் அடியேனென்றான்.—
தாவீது அவனைநோக்கி, பயப்படவேண்டாம்: ௭
உன்பிதாவாகிய யோனத்தானிமித்தம் நான்நிச்ச
யமாய் உனக்குத்தயைசெய்து, உன்பிதாவாகிய
ஷவுலின் நிலங்களெல்லாம்உனக்குத்திரும்பத்த
ருவேன்; நீஎன்போசனபந்தியில் நித்தமும்போ
சனம்பண்ணுவாயென்றான்.-இவன் நமஸ்காரம் ௮
பண்ணி, நீர் செத்தநாய்போன்ற என்னைநோக்
குகிறதற்கு, உமதடியான் எம்மாத்திரமென்றான்.
பின்பு இராசா ஷவுலின் பணிவிடைக்கார ௯
னாகிய சீபாவையழைத்து அவனிடத்தில் ஷவு
லுக்கும் அவன் வமிசத்துக்குமுரியதெல்லாவற்
றையும் உன் எசமானின் புத்திரனுக்குக்கொடுத்
தேன்.—ஆதலால்நீயும், உன்புத்திரரும், உன்பணி ௰
விடைக்காரரும் அவனுக்காக அவன் நிலத்தைப்
பயிரிட, உன்எசமானனின்புத்திரனுக்குப் போ
சனநிமித்தம் அதின் விளைவைச்சேர்ப்பாயாக:
உன் எசமானனின்புத்திரனாகியமெபீபோஷேத்
நித்தமும் என் போசனபீடத்திலே போசனம்
பண்ணுவானென்றான், சீபாவுக்குப் பதினைந்
து புத்திரரும், இருபது பணிவிடைக்காரருமி
ருந்தார்கள்.—சீபா இராசாவைநோக்கி, என் ௰௧
ஆண்டவனாகிய இராசா தமதடியானுக்குக்கட்ட

(௭) ௧.இரா.௰.௰௬. (௮) ௧.நாளா.௰௮.௮. (௯) ௧.நாளா.௰௮.௯. (௰) ௧.நாளா.௰௮.௰. (௰௨) ௧.இரா.௭.௫௧. ௧.நாளா.௰௮.௰௧. (௰௩) ௨.இரா.௰௪.௭. ௧.நாளா.௰௮.௰௨. சங்.௬௰. (௰௪) ஆதி.௨௭.௨௯,௩௭,௪௰. எண்.௨௪.௰௮. வச.௬. (௰௬) அதி.௰௯.௰௩. ௧.நாளா.௰௧.௬. ௧.இரா.௪.௩. (௰௭) ௧.நாளா.௨௪.௩. (௰௮) ௧.நாளா.௰௮.௰௭. ௧.சாமு.௩௰.௰௪. அதி.௨௰.௨௩.—(௯.அதி.௧.) ௧.சாமு.௰௮.௩. நீதி.௨௭.௰.(௨)அதி.௰௬.௧. (௩) ௧.சாமு.௨௰.௰௪. அதி.௪.௪.(௪)அதி.௰௭.௨௭. (௭) வச.௧,௩. (௮) ௧.சாமு.௨௪.௰௪. (௯) அதி.௰௬.௪. (௰) வச.௭,௰௧,௰௩. அதி.௰௯.௨௮. அதி.௰௯.௰௭.

ளையிட்ட எல்லாவற்றின்படிக்கும்,உமதடியானா
கிய நான்செய்வேனென்றான். மெபிபோஷேத்
தோ ஒரு இராசபுத்திரனைப்போல, என் போச
னபீடத்தில் போசனம்பண்ணுவானென்று இ
௰௨ ராசா சொன்னான்.—மெபிபோஷேத்துக்கு
மீகாவென்று இளம்வயதுள்ள ஒருபுத்திரனிருந்
தான். சீபாவின்வீட்டில்வாசமாயிருந்தயாவரும்
மெபிபோஷேத்துக்குப்பணிவிடைக்காரரானார்
௰௩ கள்.—மெபிபோஷேத் நித்தமும் இராசாவுடை
யபோசனபந்தியில் போசனம்பண்ணவேண்டி
யிருந்தபடியால், யெருஷலேமிலே வசித்தான்:
அவனுக்குக்காலிரண்டும் முடமாயிருந்தன.

## ௰. அதிகாரம்.

*௧. தாவீது அனூனுக்குத்தூதரையனுப்ப அவர்கள் அவமானப்படல்: ௬. அம்மோனியரும் ஸீரியருந் தோல்வியடைதல்: ௰௫. ஷோபாக் மற்ற ஸீரியரோடே அதமாக்கப்படல்.*

அதன் பின்பு அம்மோன் சந்ததியாரின் இரா
சா இறந்துபோக, அவன் புத்திரனாகிய அனூன்
௨ இராசபட்டம் பெற்றான்.—அப்பொழுது தாவீ
து அனூனின் பிதாவாகிய நாகாஷ் எனக்குத்
தயைசெய்ததுபோல, நானும் அவன் புத்திரனா
கிய இவனுக்குத் தயைசெய்வேனென்று சொல்
லி, அவன் பிதாவைக்குறித்து அவனுக்கு ஆறு
தல் சொல்லும்படி தன் பணிவிடைக்காரனைய
னுப்பினான். தாவீதின் பணிவிடைக்காரர் அம்
௩ மோன சந்ததியாருடையதேசத்தில்போக,—அம்
மோன் சந்ததியாரின் அதிபதிகள் தங்கள்பிதா
வாகிய அனூனைநோக்கி, ஆறுதல்சொல்லுகிற
வர்களை உமக்கனுப்பி, உமது பிதாவைக்கனம்
பண்ணுகிறானென்று நீரெண்ணுகிறீரா; இந்த
நகரத்தைச்சோதித்து, வேவுபார்த்து, இதைக்க
விழ்த்துப்போடுவதற்கல்லவா, தாவீது தன் பணி
விடைக்காரரை உம்மிடத்திலனுப்பினானென்
௪ றார்கள்.—அதினால் அனூன் தாவீதின் பணிவி
டைக்காரரைப்பிடித்து, அவர்கள்தாடியிலே பா
தியைச் சிரைப்பித்து, அவர்களிருப்பிடமட்டும்
அவர்கள் வஸ்திரங்களிலே பாதியை அரிந்து,
௫ அவர்களை அனுப்பிவிட்டான்.-அவர்கள் அதைத்
தாவீதுக்குத்தெரிவித்தபொழுது, இராசா, அவர்
கள்மிகவும்வெட்கப்பட்டபடியினால், நீங்கள் அ
வர்களுக்கு முற்பட்டு, உங்கள் தாடிவளருமள
வும் யெரிகோவிலேதங்கியிருந்துபின்புவாருங்க
ளென்றுசொல்லும்படி, ஆட்களையனுப்பினான்.
௬ அம்மோன் சந்ததியார் தாங்கள் தாவீதின்சமு
கத்தில் அரோசிக்கப்பட்டதைக்கண்டு அவர்கள்
ஆளனுப்பி, பேத்ரேகோப்தேசத்து ஸீரியரிலும்,
சோபாவிலுள்ள ஸீரியரிலும் இருபதினாயிரங்கா
லாட்களையும்,மகாராசாவிடத்தில் ஆயிரம்பேரை
யும்,தோப்பிலுள்ளவர்களுக்குள்ளே பன்னீராயி
ரம்பேரையுங்கூலிக்குவரும்படி அழைப்பித்தார்
௭ கள்.—அதைத் தாவீது கேள்விப்பட்டபொழுது,
யோவாப்பையும் பராக்கிரமசாலிகளாகிய சமஸ்
தசேனைகளையும் அனுப்பினான்.—அம்மோன் சந் ௮
ததியார் புறப்பட்டுவந்து, வாசலுக்குச் சமீபத்
தில் போருக்கணி வகுத்தார்கள்: சோபாவிலும்,
ரேகோப்பிலும், இஷ்தோப்பிலும், மாகாவிலு
முள்ள ஸீரியர் வயல்வெளியிலே தனித்து நின்
றார்கள்.—யோவாப் தனக்கு முன்னும் பின்னும் ௯
படைமுகம் நிற்பதைக்கண்டு, இஸரவேலரில்
பரிட்சித்த சகல சனங்களுக்குள்ளும் சிலரைத்
தெரிந்து, ஸீரியருக்கெதிராக அணிவகுத்து,—
மற்றைச்சனங்களை அம்மோன் சந்ததியாருக்கெ ௰
திராக அணிவகுக்கும்படி தன் சகோதரனாகிய
அபிஷாய் கையிலொப்பித்து,—என்னைப்பார்க் ௰௧
கிலும் ஸீரியர்பலன் கொண்டால் நீ எனக்குத்
துணைசெய்யவேண்டும், உன்னைப்பார்க்கிலும்
அம்மோன் சந்ததியார்பெலன்கொண்டால்நான்
உனக்குத் துணைசெய்வேன்.—தைரியமாயிரு, ௰௨
நாம் நம்முடைய சனங்கள் நிமித்தமும், நமது
தேவனுடைய நகரங்களினிமித்தமும், ஆண்
மையைக்காட்டுவோம்வா: யெகோவா தம
து பார்வைக்கு நலமானதைச் செய்வாராகவென்
றான்.-பின்பு யோவாப்பும், அவனோடுகூடிய ச ௰௩
னங்களும் ஸீரியரை யெதிர்த்து யுத்தஞ்செய்யும்
படி சமீபித்துவர, அவர்கள் அவன்முன்னின்றுந்
தப்பியோடினார்கள்.-ஸீரியர் தப்பியோடினதை ௰௪
அம்மோன் சந்ததியார்கண்டு, தாங்களும் அபி
ஷாய் முன்னின்றுந் தப்பி நகரத்துக்கு ஓடினார்
கள். யோவாப் அம்மோன்சந்ததியாரைவிட்டுத்
திரும்பி, யெருஷலேமுக்கு வந்தான்.
பின்பு ஸீரியர்தாங்கள் இஸரவேலருக்குமுன் ௰௫
முறியஅடிக்கப்பட்டதைக்கண்டு ஏகமாய்க்கூடி
னார்கள்.—ஆததேசர் ஆளனுப்பி, நதிக்கப்பாலி ௰௬
ருந்த ஸீரியரையும் அழைப்பித்தான்: அவர்கள்
எலாமுக்குவந்தார்கள்; ஆததேசரின் சேனாபதி
யாகியஷோபாக்அவர்களுக்குமுன்சென்றான்.—
இது தாவீதுக்குத்தெரிவிக்கப்பட்டபொழுது,அ ௰௭
வன்சமஸ்த இஸரவேலரையுங்கூட்டிக்கொண்டு
யோர்தானைக்கடந்து, எலாமிலே சேர்ந்தான், ஸீ
ரியர் தாவீதுக்கெதிராக அணிவகுத்துக்கொண்டு,
அவனோடே யுத்தம்பண்ணினார்கள்.—ஸீரியர் ௰௮
இஸரவேலருக்குமுன்னின்றுந் தப்பியோடினார்
கள், தாவீது ஸீரியருக்குள்ளே எழுநூறு இரதங்
களிலுள்ளவர்களையும், நாற்பதினாயிரங் குதி
ரை வீரரையுங்கொன்று, அவர்கள் சேனாபதியா
கிய ஷோபாக்கையும் முறியஅடித்தான்: அவன்
அங்கே இறந்துபோனான்.—ஆததேசருக்கு அதீ ௰௯
னமாகிய இராசாக்கள்சமஸ்தரும் தாங்கள் இஸர
வேலருக்குமுன் முறிய அடிக்கப்பட்டதைக்க
ண்டு,இஸரவேலருடன் சமாதானப்பட்டு, அவர்
களுக்கு ஊழியஞ்செய்தார்கள். அப்பால் அம்
மோன் சந்ததியாருக்குத் துணைசெய்ய ஸீரியர்
பயப்பட்டார்கள்.

---

(௰௩) வச.௭,௰. வச.௩.—(௰. அதி. ௧.)௧.நாளா.௰௯.௧,. (௪) ஏசா.௨௰.௪. ஏசா.௪௭.௨. (௬) அதி.௩௪.௩௰. ௧.சாமு. ௰௩.௪. அதி.௮.௩,௫. நியா.௰௧.௩,௫. (௭) அதி.௨௩.௮. (௮) வச.௬. (௰௨) உபா.௩௧.௬. ௧.சாமு.௪.௯. ௧.கொரி.௰௪. ௰௩. ௧.சாமு.௩.௰௮. (௰௬) ௧.நாளா.௰௯.௰௬. (௰௮) ௧.நாளா.௰௯.௰௮. (௰௯) அதி.௮.௬.

## ௰௧. அதிகாரம்.

*௧. ரப்பாவை விரோதித்தல்: ௨. பத்சேபாவோ
டே தாவீது விபசாரஞ் செய்தல்: ௬. ஊரியா
வுக்குத் தாவீது அநியாயஞ்செய்தல். ௰௪. ஊரி
யாவைக் கொல்லும்படியோவாப்பிடத்தில்பத்
திரத்தை யனுப்பல்: ௰௮. ஊரியா கொல்லப்
பட்டசெய்திதாவீதிடத்தில்வந்துசேர்தல்:௨௨.
யோவாப்பிடத்தில் தாவீது உத்தரம்அனுப்பல்:
௨௬. தாவீது பத்சேபாவைவிவாகஞ்செய்தல்.*

மறுவருஷம் இராசாக்கள் யுத்தத்துக்குப் புறப்
படுங்காலத்தில், தாவீது யோவாப்பையும், அவ
னுடனே தன் பணிவிடைக்காரரையும், சமஸ்த
இஸ்ரவேலரையும்அனுப்ப; அவர்கள்அம்மோன்
சந்ததியாரைச்சங்கரித்து, ரப்பாநகரத்தை முற்
றிக்கைபோட்டார்கள். தாவீதுயெருஷலேமிலி
ருந்துவிட்டான்.
௨ பின்பு ஒருநாட்சாயங்காலத்தில்தாவீது தன்ப
டுக்கையைவிட்டெழுந்து, அரமனையின் உப்பரி
கைமேல்உலாவுகையில், கண்ணுக்குமகாசௌந்
தரவதியாகிய ஒருஸ்திரி ஸ்நானம்பண்ணுவதை
௩ உப்பரிகையினின்று கண்டான்.—அந்த ஸ்திரி
ஆரென்று தாவீது ஆளனுப்பிவிசாரிக்க, அவள்
இலியாமின் புத்திரியும், எத்தியனான ஊரியா
வின் மனைவியுமாகிய பத்சேபா அல்லவா என்
௪ றார்கள்.—அப்பொழுது தாவீது ஆளனுப்பி அவ
ளை அழைப்பிக்க, அவள் அவனிடத்தில்வந்தாள்,
தன் அசுசி நீங்கும்படி சுத்திபண்ணிக்கொண்ட
அவளுடனே, அவன் சயனித்தான்: பின்பு அ
௫ வள் தன்வீட்டுக்குத் திரும்பிவிட்டாள்.—அந்தஸ்
திரி கருப்பவதியாகி, நான்கருப்பவதியாயிருக்கி
றேனென்று தாவீதுக்குச் சொல்லியனுப்பினாள்.
௬ அப்பொழுதுதாவீது எத்தியனான ஊரியாவை
என்னிடத்தில் அனுப்பிவிடென்றுயோவாப்புக்
குச்சொல்லியனுப்ப, யோவாப்ஊரியாவைத்தா
௭ வீதிடத்தில் அனுப்பினான்.—ஊரியா அவனி
டத்தில்வந்தபொழுது தாவீது அவனைநோக்கி,
யோவாப்சுகமேயிருக்கிறானா; சனங்கள்சுகமேயி
ருக்கிறார்களா; யுத்தம் எப்படிநடக்கின்றதுஎன்
௮ றுவினாவியபின்,—நீஉன்வீட்டுக்குபோய், பாத
சுத்தி செய்வாயென்று ஊரியாவுக்குச் சொன்
னான். ஊரியா அரமனையைவிட்டுப்புறப்பட,
அவன்பின் இராசாவிடத்தினின்றும் போசனம
௯ னுப்பப்பட்டது.—ஊரியாதன்வீட்டுக்குப்போ
காமல், தன் ஆண்டவனுடைய பணிவிடைக்கா
ரர் சகலரோடும் அரமனை வாசலிலே படுத்திருந்
௰ தான்.-ஊரியா தன்வீட்டுக்குப் போகவில்லையெ
ன்பது தாவீதுக்குத்தெரிவிக்கப்பட்டபொழுது,
தாவீதுஊரியாவைநோக்கி, நீ பிரயாணத்தினின்
றுவந்தாயல்லவா; நீ என் வீட்டுக்குப்போகவில்
௰௧ லையென்று கேட்க,—ஊரியா தாவீதைநோக்கி,
பெட்டியும், இஸரவேலரும், யூதாவமிசத்தாருங்
கூடாரங்களிலிருக்கவும், என்நாயனாராகியயோ
வாப்பும், என்னாண்டவனுடைய பணிவிடைக்
காரரும் அந்தரவெளியிலே பாளயமிறங்கியிருக்
கவும், நான் போசனபானம்பண்ணிக்கொண்டு,
என்மனைவியுடன்சயனிக்கும்படி என் வீட்டுக்
குப்போவேனா; இப்படிப்பட்ட ஒருகாரியத்தை
நான்செய்யமாட்டேனென்று உம்மேலும், உமது
பிராணன்மேலும் ஆணையிட்டுச் சொல்லுகிறே
னென்றான்.-அதினாலேதாவீதுஊரியாவைநோக் ௰௨
கி, நீ இன்றைக்குமிங்கேயிரு, நாளை உன்னை அ
னுப்பிவிடுவேனென்றான். ஊரியா அன்றைக்
கும் மற்றைநாளும் யெருஷலேமிலிருந்தான்.—
தாவீது அவனை அழைக்க, அவன்வந்து இவன் ௰௩
முன்போசனபானம்பண்ணினான், இவன் அவ
னை வெறிக்கப்பண்ணினான்: இன்னும் அவன்
தன் வீட்டுக்குப்போகாமல், தன் ஆண்டவனு
டைய பணிவிடைக்காரரோடு, தன் படுக்கையி
லே போய்ப்படுத்துவிட்டான்.
பின்பு காலமே தாவீது யோவாப்புக்கு ஒரு ௰௪
கடிதம்எழுதி, ஊரியாவின்கையில்கொடுத்தனுப்
பினான்.—அந்தநிருபத்தில், நீங்கள் கொடியயுத் ௰௫
தமுகத்தில் ஊரியாவை நிறுத்தி, அவன் வெட்
டுண்டு இறந்துபோகும்படி, அவனை விட்டுப்
பின்வாங்கி விடுங்களென்று, எழுதியிருந்தான்.—
யோவாப் நகரத்தை உற்றுப்பார்த்து, வீரர்நிற்கு ௰௬
மிடத்தை அறிந்து, அதிலே ஊரியாவை நிறுத்
தினான்.—நகரத்தார் புறப்பட்டுவந்து, யோவாப் ௰௭
புடன் யுத்தஞ்செய்ய, தாவீதின் பணிவிடைக்
காரராகிய சனங்களிற் சிலர் விழுந்தார்கள்; எத்
தியனாகிய ஊரியாவும் மாய்ந்துபோனான்.
பின்பு யோவாப் அந்த யுத்தத்தின் சமாசாரங் ௰௮
கள்யாவற்றையுந் தாவீதுக்குத் தெரிவிக்கும்படி
ஆளனுப்பினான்.—அவன் தூதனைநோக்கி, நீ யுத் ௰௯
தத்தின் சமாசாரங்களைச்சொல்லிமுடித்தபின்பு,-
இராசா கோபங்கொண்டு, உன்னைநோக்கி, யுத் ௨௰
தஞ்செய்கையில் நீங்கள் நகரத்துக்கு அவ்வளவு
சமீபத்திற்போய்நெருங்கினதென்ன; மதிலினி
ன்றும் அவர்கள் எய்வார்களென்று நீங்களறி
யவில்லையா;—எருப்பேசேத்தின்புத்திரனாகிய ௨௧
அபிமேலேக்கைக்கொன்றதார்; தேபேத்சில் அ
வனிறந்துபோக ஒரு ஸ்திரி மதிலினின்றும் ஒரு
எந்திரக்கல்லுத்துண்டை எறிந்தாளல்லவா; நீங்
கள் மதிலுக்குச்சமீபத்தில் நெருங்கினதென்ன
வென்று சொல்வானாகில், நீ, எத்தியனாகிய ஊரி
யா வென்னும் உமதடியானும் இறந்துபோனா
னென்று சொல்லென்றான்.
பின்பு தூதன் புறப்பட்டுவந்து, யோவாப் ௨௨
தன்னை அனுப்பின செய்திகளெல்லாவற்றையும்
தாவீதுக்குத்தெரிவித்தான்.—பின்னும் அந்தத்தூ ௨௩
தன் தாவீதைநோக்கி, அந்தச்சனங்கள் எங்களை
மேற்கொண்டு வெளியில் எங்களை எதிர்த்துவ

(௰௧. அதி. ௧.) ௧.இரா.௨௰.௨௨,௨௬. ௨.நாளா.௩௬.௰. ௧.நாளா.௨௰.௧. (௨) உபா.௨௨.௮. ஆதி.௩௪.௨. யோபு.௩௧.௧. மத்.௫.௨௮. (௩) அதி.௨௩.௩௯. (௪) சங்.௫௧. யாக்.௧.௰௪. லேவி.௰௫.௰௯,௨௮. லேவி.௰௮.௰௯. (௮) ஆதி.௰௮.௪. (௰௧) அதி.௭.௨,௬. அதி.௨௰.௬. (௰௩) ஆதி.௰௯.௩௩,௩௫. வச.௯. (௰௪) ௧.இரா.௨௧.௮,௯. (௰௫) அதி.௰௨.௯. (௨௧) நியா.௯.௫௩. நியா.௬.௩௨.

ருகிறபொழுது, நாங்கள் நகரவாசல்மட்டும் அ
வர்களோடு யுத்தஞ்செய்துகொண்டுபோனோம்.-
௨௪ அதினாலே வில்வீரர்மதிலினின்றும் உமதடியார்
மேல் எய்ய, இராசாவின் பணிவிடைக்காரரிற்சி
லர் இறந்துபோனார்கள், எத்தியனாகிய ஊரியா
வென்னும் உமதடியானு மிறந்துபோனானென்
௨௫ றான்.—அப்பொழுது தாவீது அந்தத்தூதனைநோக்
கி, நீ யோவாப்பிடத்தில், இந்தக்காரியத்தைக்கு
றித்து நீ விசனப்படவேண்டாம், கட்கம் ஒருவ
ரைப்போலவே மற்றவர்களையும்பட்சிக்கின்றது:
நீ இன்னும் நகரத்துக்கு விரோதமாக அதிகதிட
மாய்யுத்தஞ்செய்து, அதை வசப்படுத்திப்போடு
என்றுசொல்லி, இவ்விதமாய் அவனைத்தையிரி
யப்படுத்தென்றான்.
௨௬ ஊரியாவின் மனைவி தன் புருஷனாகிய ஊரி
யா இறந்துபோனதைக் கேள்விப்பட்டு, தன் பு
௨௭ ருஷனுக்காகத் துக்கங்கொண்டாடினாள்.—துக்க
நாட்கள் நிறைவேறினபின் தாவீது ஆளனுப்பி,
அவளைத் தன் வீட்டுக்கு வருவித்தான், அவள்
அவன் மனைவியாகி, அவனுக்கொரு புத்திரனைப்
பெற்றாள். தாவீதுசெய்தஅந்தக்கருமம் யெகோ
வாவின்பார்வைக்குத்தீதாயிருந்தது.

## ௰௨. அதிகாரம்.

*௧. நாதான் ஆட்டுக்குட்டியை உவமித்தல்: ௭. நாதான் தாவீதைக்கண்டிக்க, இவன் தன் பாவத்தை உணர்ந்துசொல்லி, மன்னிப்படைதல்: ௰௫. தாவீதின் பிள்ளை சாதல்: ௨௪. சலோமோன் உற்பத்தியாதல்: ௨௬. ரப்பாவசப்படல்.*

பின்பு யெகோவா நாதானைத்தாவீதினிடத்
தில் அனுப்பினார். இவன் அவனிடத்தில் வந்து,
அவனை நோக்கி, ஒரு நகரத்தில் ஐசுவரியவா
௨ னுந் தரித்திரனுமாகிய இருவரிருந்தார்கள்.—அந்
த ஐசுவரியவானுக்கு அநேக ஆடுமாடுகளிருந்த
௩ ன.—தரித்திரனுக்கோ அவன்கொண்டுவளர்த்த
ஒருசிறு ஆட்டுக்குட்டியே யன்றி வேறொன்று
மில்லை, அது அவனோடும் அவன் பிள்ளைகளோ
டுமிருந்து வளர்ந்து, அவன் போசனத்திற்புசித்
து, அவன் பாத்திரத்திலேகுடித்து, அவன் மடியி
லே படுத்து, அவனுக்கொரு குமாரத்திக்கொப்
௪ பாயிருந்தது.—பிரயாணக்காரனொருவன் அந்த
ஐசுவரியவானிடத்தில் வந்தபொழுது, அவன்
தன்னிடத்தில்வந்த அந்தப் பிரயாணக்காரனுக்
குப்பாகம்பண்ணும்படி தன் சுய ஆடுமாடுகளி
லொன்றையும் பிடிக்கவிரும்பாமல், அந்தத்தரித்
திரனுடையஆட்டுக்குட்டியைப்பிடித்து, தன்னி
டத்தில் வந்த அந்த மனிதனுக்குச் சமைப்பித்தா
௫ னென்றான்.—தாவீது அந்தஐசுவரியவான்மேல்த
னக்குமிகவுங்கோபமூள, நாதானைநோக்கி, யெ
கோவா நித்தியரானால், இந்தக்காரியத்தைச்செ
௬ ய்தஅந்தமனிதன் சாகவேவேண்டும்.-இவன் சற்
றுமிரக்கமில்லாமல் இந்தக்காரியத்தைச்செய்தப
டியினால் அந்த ஆட்டுக்குட்டியினிமித்தம், நாலு
மடங்கு திரும்பக்கொடுக்கவேண்டுமென்றான்.
நாதான் தாவீதை நோக்கி, நீரே அந்தமனி ௭
தன். இஸ்ரவேலின் தேவனாகிய யெகோ
வா, நானுன்னை இஸ்ரவேலருக்கு இராசாவாக
அபிஷேகம் பண்ணினேன், ஷவுலின்கையினி
ன்றும் உன்னைவிடுவித்தேன்;—உன் ஆண்டவனு ௮
டையகுடும்பத்தையும், உன்மார்பில்அவன்மனை
வியரையுந் தந்தேன், இஸ்ரவேல் வமிசத்தாரை
யும் யூதா வமிசத்தாரையும் உனக்குத்தந்தேன்;
இதுஉனக்குப் போதாதிருந்தால், இன்னுமுனக்
கு எதையாகிலுந்தருவேனே.—நீ, யெகோவா ௯
முன்னிலையிற் பாவஞ்செய்து, அவருடையகட்
டளையைஅலட்சியம்பண்ணினதென்ன; எத்திய
னாகிய ஊரியாவைக் கட்கத்தினாலே கொன்று
போட்டாயே, நீ உனக்கு மனைவியாக அவன் ம
னைவியைச் சேர்த்துக்கொண்டு, அம்மோன்சந்த
தியாரின் கட்கத்தினால் அவனைக்கொன்றுபோட்
டாய்.—ஆதலால்கட்கம் உன்வீட்டைவிட்டு ஒ ௰
ருபொழுதும் விலகமாட்டாது; நீ என்னை அலட்
சியம் பண்ணி, உனக்குமனைவியாக எத்தியனாகி
ய ஊரியாவின் மனைவியைச் சேர்த்துக்கொண்
டாயென்றுசொல்லுகிறார்.-இன்னும் யெகோ ௰௧
வா, உன் சுயவீட்டிலே நானுனக்குத் தீமையை
எழும்பப்பண்ணுவேன், உன் கண்ணுக்குமுன்
னே உன்மனைவியரைப்பிடித்து உன் அயலானுக்
குக்கொடுக்க, அவன் இந்தச்சூரியனுக்குமுன்
னே உன்மனைவியருடன் சயனிப்பான்.—நீ ௰௨
யோஅந்தக்காரியத்தை இரகசியமாய்ச்செய்தாய்:
நானோ சமஸ்த இஸ்ரவேலரும் இந்தச் சூரிய
னுஞ்சாட்சியாய்நிற்க, இந்தக்காரியத்தைச் செய்
வேனென்றுஞ் சொல்லுகிறாரென்றான்.-தாவீது ௰௩
நாதானிடத்தில், நான் யெகோவாவுக்கு வி
ரோதமாய்ப் பாவஞ்செய்தேன்என்றான். நாதான்
தாவீதைநோக்கி, நீசாகமாட்டாய்; யெகோவா
உன்பாவம்நீங்கச்செய்தார்.—ஆயினும்நீஇந்தக்கா ௰௪
ரியத்தினால் யெகோவாவின் சத்துருக்கள் அ
திக நிந்தனைபண்ணச்செய்ததினிமித்தம், உனக்
குப்பிறந்த பிள்ளை சாகவேவேண்டுமென்றான்.
பின்புநாதான்தன்வீட்டுக்குப்போய்விட்டான்.
அப்புறம் யெகோவா, ஊரியாவின்மனைவி ௰௫
தாவீதுக்குப்பெற்றபிள்ளையை அடித்ததினால், அ
துமிகவும்வருத்தமாயிருந்தது.-தாவீது அந்தப்பிள் ௰௬
ளைநிமித்தம் தேவனிடத்தில் பிரார்த்தனைபண்
ணினான்; தாவீது உபவாசமாயிருந்து, உள்ளே
போய் இராமுழுவதுந் தரையிலேகிடந்தான்.—
அவன் வீட்டிலுள்ள முதியோர் தரையினின்றும் ௰௭
அவனையெழுப்பிவிடும்படி, எழுந்து அவனிடத்
தில்சென்றார்கள்: அவனோ உடன்படவுமில்லை,

(௨௭) அதி.௰௨.௯.—(௰௨.அதி.௧.) சங்.௫௧. அதி.௰௪.௫. ௧.இரா.௨௰.௩௫—௪௧. ஏசா.௫.௩. (௫) ௧.சாமு.௨௬.௰௬.
(௬) யாத்.௨௨.௧. லூக்.௰௯.௮.(௭)௧.சாமு.௰௬.௰௩. (௯)௧.சாமு.௰௫.௰௧. எண்.௰௫.௩௧. அதி.௰௧.௰௫,௰௬,௰௭,௨௭.
(௰) ஆமோ.௭.௯. (௰௧) உபா.௨௮.௩௰. (௰௨) அதி.௰௬.௨௨. (௰௩) ௧.சாமு.௰௫.௨௪. அதி.௨௪.௰. யோபு.௭.௨௰.
சங்.௩௨.௰. சங்.௫௧.௪. நீதி.௨௮.௰௩. அதி.௨௪.௰. யோபு.௭.௨௧. சங்.௩௨.௧. மீகா.௭.௰௮. சக.௩.௪. (௰௪) ஏசா.
௫௨.௫. எசேக்.௩௬.௨௰,௨௩. ரோ.௨.௨௪. (௰௬) அதி.௰௩.௩௧.

அவர்களோடே அவன் போசனம்பண்ணவுமில்
௰௮ லை.—ஏழாந்தினத்தில் பிள்ளைமரித்தது. தாவீ
தின் பணிவிடைக்காரர், கேளுங்கள், பிள்ளை
உயிரோடிருக்கையில்நாம் அவருக்குச்சொல்லச்
சொல்ல, அவரெங்கள் சொற்களைக்கேட்கவில்
லை: இப்பொழுது பிள்ளை மரித்ததென்று சொல்
வோமாகில், அவர் இன்னுமெவ்வளவு வியாகு
லப்படுவாரென்றுசொல்லி, பிள்ளை மரித்ததென்
௰௯ று அவனுக்குத் தெரிவிக்கப்பயந்தார்கள்.—தன்ப
ணிவிடைக்காரர் விசாரமாகப்பேசிக்கொள்ளுகி
றதைத் தாவீதுகண்டு, பிள்ளை மரித்ததென்றறிந்
து, தன் பணிவிடைக்காரரைநோக்கி, பிள்ளைமரி
த்ததாவென்று கேட்க, அது மரித்ததென்றார்கள்.-
௨௰ அப்பொழுது தாவீது தரையைவிட்டெழுந்து,
ஸ்நானம்பண்ணி, எண்ணெய் பூசிக்கொண்டு,
தன்வஸ்திரங்களைமாற்றி, யெகோவாவின் ஆ
லயத்திற்பிரவேசித்து ஆராதனைசெய்தான்: பின்
பு அவன் தன்வீட்டுக்குவந்துபோசனங்கேட்ட
பொழுது, அவர்கள் தனக்குமுன்கொண்டுவந்து
௨௧ வைக்கப் போசனம்பண்ணினான்.—அதினால் அ
வன் பணிவிடைக்காரர் அவனைநோக்கி, பிள்ளை
உயிரோடிருந்தபொழுது அதினிமித்தம் அழுது
கொண்டு உபவாசமாயிருந்தீர், பிள்ளைமரித்தபின்
எழுந்து போசனம்பண்ணினீர், நீரிப்படிச்செய்
௨௨ ததென்னவென்றுசொல்ல,—இவன், பிள்ளை உயி
ரோடிருக்கும்படி தேவன் எனக்குத்தயைசெய்
வாரோ, ஆர் அறிவாரென்று பிள்ளை உயிரோடி
ருக்கிறபொழுது நான் அழுதுகொண்டு உபவா
௨௩ சமாயிருந்தேன்.—இப்பொழுது பிள்ளை மரித்து
விட்டது, இனி நான் உபவாசமாயிருக்கவேண்
டியதென்ன; அதை இனிமேல் திரும்பிவரப்பண்
ணக்கூடுமோ; நான் அது இருக்குமிடத்துக்குப்
போவேன், அதோ நானிருக்குமிடத்துக்குத்தி
ரும்பிவரமாட்டாதென்றான்.
௨௪ பின்புதாவீதுதன்மனைவியாகியபத்ஷேபாவை
யாற்றி, அவளிடத்தில்போய், அவளோடு சய
னித்தான்: அவள் ஒருபுத்திரனைப்பெற்றாள், அவ
னுக்குச் சலோமோனென்று பெயரிட்டான்:
௨௫ யெகோவா அவனில்அன்பாயிருந்தார்.-அவர்
தீர்க்கதரிசியாகியநாதானை அனுப்ப, அவன் யெ
கோவாவினிமித்தம், இவனுக்கு யெதிதீயா
வென்றுபெயரிட்டான்.
௨௬ இதற்குள்ளே யோவாப் அம்மோன்சந்ததி
யாரின் ரப்பாவை எதிர்த்து யுத்தஞ்செய்து, இரா
௨௭ சதானியைப் பிடித்துக்கொண்டான்.-யோவாப்
தாவீதிடத்தில் தூதரையனுப்பி, நான் ரப்பாவு
டன் யுத்தஞ்செய்து, சலநகரத்தைப் பிடித்துக்
௨௮ கொண்டேன்.-ஆதலால் நான் நகரத்தைப்பிடித்
து, அதற்கென்பெயரிடாதபடி, நீர் சேஷமான
சனங்களைக்கூட்டிக்கொண்டு, நகரத்தைமுற்றிக்
கைபோட்டுப் பிடித்துக்கொள்ளுமென்றுசொல்
௨௯ லுவித்தான்.—அதினாலே தாவீது சமஸ்தசனங்க
ளையுங்கூட்டிக்கொண்டு ரப்பாவுக்குப்போய், அ
தற்கு விரோதமாயுத்தம்பண்ணி, அதைப்பிடித்
தான்.—அவன் அவர்கள் இராசாவின் தலையி ௩௰
னின்றும் ஒரு கிக்கார்நிறைகொண்டபொன்னி
னால்செய்து சுத்தரத்தினம்பதித்த அவன் கிரீடத்
தையெடுத்தான்: அது தாவீதின் தலையிலே தரிக்
கப்பட்டது. அவன் நகரத்தினின்றுவெகுகொள்
ளைப்பொருள்களைக் கொண்டுவந்தான்.—பின்பு ௩௧
அதிலுள்ள சனங்களைப்புறப்படுத்தி, அவர்களை
வாள்களுக்கும், இருப்புப்பாரைகளுக்கும், இ
ருப்புக்கோடரிகளுக்குங்கீழ்ப்படுத்தி, செங்கற்
சூளையிற்செல்லப்பண்ணினான்: அம்மோன் சந்த
தியாரின்சமஸ்தநகரங்களுக்குமிப்படியே செய்
தான். பின்பு தாவீதும்அவன்சமஸ்தசனங்களும்
யெரூஷலேமுக்குத் திரும்பிவந்தார்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. அம்னோன் தன் சகோதரியை இச்சித்தல்: ௬. சூதினாலே தான்வருத்தமென்று காட்டித் தன்னைப் பார்க்கவந்த ஸ்திரியைப் பலாத்காரஞ் செய்தல்: ௰௫. அவளை அரோசித்துத்துரத்திவிடல்: உ௧. அப்ஷாலோம் அவளை ஆதரித்து அம்னோனைவெறுத்தல்: உ௩. ஆட்டுமயிர் கத்திரிக்குமிடத்தில் இராசபுத்திரரை விருந்துக்கழைத்தல்: உ௮. அம்னோனைக்கொலைசெய்தல்: தாவீது செய்தியைக்கேட்டல்: ௩௭. அப்ஷாலோம் தப்பியோடல்.

தாவீதின்புத்திரனாகிய அப்ஷாலோமுக்குத் தா ௧
மாரென்று பெயர்கொண்ட சௌந்தரியமுள்ள
ஒரு சகோதரியிருந்தாள்; தாவீதின் புத்திரனாகி
ய அம்னோன்அவள்மேல்மோகங்கொண்டான்.-
அவள் கன்னிகையாயிருந்ததினால், அவளுக்கு ௨
ஏதாகிலுஞ் செய்வது அம்னோனின் பார்வைக்
குத்தகாததாய்த்தோன்றிற்று: ஆதலால் அம்னோன்
தன்சகோதரியாகிய தாமாரினிமித்தம், வருத்தம
டையத்தக்கதாய்வியாகுலப்பட்டான்.-அம்னோ ௩
னுக்கு, தாவீதின் சகோதரனான ஷிமியாவின்
புத்திரனாகிய யோனதாபென்று பெயருள்ள
ஒருசிநேகிதனிருந்தான்: அந்த யோனதாப்கன
சூதுள்ளவன்.—அவன் இவனைநோக்கி, இராச ௪
புத்திரனாகிய நீ நாளுக்குநாள் மெலிவடைகிற
தென்ன; எனக்குச்சொல்லமாட்டாயாவென்று
சொல்ல, அம்னோன் அவனிடத்தில், என்சகோத
ரனான அப்ஷாலோமின் சகோதரியாகியதாமார்
மேல் நான் அன்பாயிருக்கிறேனென்றான்.—யோ ௫
னதாப் அவனைநோக்கி, நீ நோயாளிபோலஉன்
கட்டிலின்மேல் படுத்துக்கொள், உன்னைப்பார்க்
க உன்பிதாவரும்பொழுது, என்சகோதரியாகிய
தாமார்வந்து எனக்குப்போசனம்தரும்படிக்கும்,
நான்பார்த்து அவள்கையினாற் போசனம்பண்
ணும்பொருட்டு, என்கண்ணுக்குமுன்னே பா
கம்பண்ணும்படிக்கும், கட்டளையிடுமென்று அ
வருக்குச்சொல்லென்றான்.

(௨௰) ரூத்.௩.௩. யோபு.௧.௨௰. (௨௨) ஏசா.௩௮.௧,௫. யோனா.௩.௯.(௨௩)யோபு.௭.௮,௯,௰.(௨௪)மத்.௧.௬. ௧.நாளா. ௨௨.௯. (௨௬) ௧.நாளா.௨௰.௧. ௨பா.௩.௰௧. (௩௰) ௧.நாளா.௨௰.௨.—(௰௩. அதி. ௧.) அதி.௩.௨,௩. ௧.நாளா.௩.௯.(௩) ௧.சாமு.௰௬.௯.

௬ அப்படியே அம்னோன் நோயாளிபோலப் ப
டுத்தான்: இராசா அவனைப் பார்க்கவந்தபொழு
து, அம்னோன் இராசாவைநோக்கி, என் சகோத
ரியாகிய தாமார்கையினால் நான் போசனம்பண்
ணும்படி, அவள்வந்து என் கண்களுக்குமுன்
பாக இரண்டு பணிகாரம் பண்ணட்டுமென்
௭ றான்.—அதினால் தாவீது வீட்டுக்குத்தாமாரிடத்
தில் ஆளனுப்பி, நீ உன் சகோதரனாகிய அம்
னோன் வீட்டுக்குப்போய் அவனுக்குப்போச
னம் சமைக்கவேண்டுமென்றுசொல்லுவிக்க,—
௮ தாமார் தன் சகோதரனாகிய அம்னோன் வீட்டுக்
குப்போனாள், அவன் படுத்திருந்தான். அவள்
மாவெடுத்துப்பிசைந்து, அவன்கண்ணுக்குமுன்
பாகப் பணிகாரம்பண்ணி, அவைகளைச்சுட்டு,-
௯ ஒரு பாத்திரத்தையெடுத்து அவனுக்கு முன்பாக
அதிலே கொட்டினாள்; அவன் புசிக்கவில்லை.
பின்பு அம்னோன், எல்லாரும் என்னைவிட்டுவெ
ளியே போகட்டுமென்றுசொல்ல, அவர்கள் ஒவ்
வொருவரும் அவனை விட்டுப் போய்விட்டார்
௰ கள்.—அம்னோன் தாமாரைநோக்கி, நான் உன்
கையினாலே புசிக்கும்படி அந்தப்போசனத்தை
உள்ளறைக்குக் கொண்டுவாவென்று சொல்ல,
தாமார் தான்செய்த பணிகாரங்களையெடுத்து, அ
றையிலே தன்சகோதரனாகிய அம்னோனிடத்தில்
௰௧ கொண்டுபோனாள்.—அவன் புசிக்கும்படி அ
வள் அவைகளை அவனிடத்தில் கொண்டுபோ
னபொழுது, அவன் அவளைப்பிடித்துக்கொண்
டு, அவளைநோக்கி, என் சகோதரியே நீ வந்து
என்னோடே சயனித்துக் கொள்ளென்றுசொல்
௰௨ ல;—அவள் நான்மாட்டேன், என் சகோதரனே,
என்னை அவமானஞ்செய்யவேண்டாம்; இஸ்ர
வேலருக்குள்ளே இப்படி ஒருகாரியஞ்செய்வது
தகாது: இப்படி மதிகேடு செய்யவேண்டாம்.—
௰௩ நான் என்வெட்கத்தை எங்கேபோக்குவேன்;
நீயோ இஸ்ரவேலருக்குள்ளே ஒரு துஷ்டனா
வாய். நீ இராசாவிடத்திற் பேசும்படி வேண்டு
கிறேன்; என்னை உனக்குத்தராமல் அவர் மறுக்க
௰௪ மாட்டாரென்றாள்.—ஆயினும் அவன் அவள்
சொற்கேட்கவில்லை: அவன் அவளிலும் பெல
வானானதினால், வலாற்காரம்செய்து, அவளுடன்
சயனித்தான்.

௰௫ பின்புஅம்னோன்அவளைமிகவும்வெறுத்தான்;
முன் தான் அவளை நேசித்ததைப்பார்க்கிலும் அ
திகமாய்ப்பின் அவளைவெறுத்தான். பின்பு அம்
னோன் அவளைநோக்கி, எழுந்துபோய்விடென்
௰௬ றுசொல்ல,—அவள் அவனைநோக்கி, காரணமென்
ன: நீர் முன் எனக்குச்செய்ததீமையிலும்என்னை
அனுப்பிவிடுந் தீமை மிகக்கொடிதாயிருக்கின்ற
தென்றாள். அவன் அவளுக்குச்செவிகொடுக்க
௰௭ வில்லை.—பின்பு அவன் தன்னிடத்தில் சேவிக்
கிற தன் பணிவிடைக்காரனைக்கூப்பிட்டு, நீ
என்னைவிட்டு இவளை வெளியே அகற்றி, இவள்
போனபின், கதவைப்பூட்டிப்போடென்றான்.-
கன்னியராகிய இராசகுமாரத்திகள் உடுக்கும் ௰௮
வஸ்திரம்போன்ற நானா வருணமான வஸ்திரத்
தை உடுத்திருந்தாள். அவன் பணிவிடைக்கா
ரன் அவளை வெளியே கொண்டுவந்துவிட்டு,
பின்பு கதவைப்பூட்டினான்.

அப்பொழுது தாமார் தன் தலையிலே சாம்பலை ௰௯
அள்ளிப்போட்டு, தான் உடுத்திருந்த பலவருண
வஸ்திரத்தைக்கிழித்து, தன்கையைத் தன் தலை
யின்மேல்வைத்து அழுதுகொண்டுபோனாள்.—
அதினால், அவள் சகோதரனாகிய அப்ஷாலோம் ௨௰
அவளைநோக்கி, உன் சகோதரனாகிய அம்னோன்
உன்னோடிருந்தானா; என்சகோதரியே, இப்பொ
ழுது நீ பேசாமலிரு: அவன் உன் சகோதரன்;
இதைச்சிந்தையில் வையாதேயென்றான். தாமார்
தன் சகோதரனாகிய அப்ஷாலோமின் வீட்டிலே
அநாதமாயிருந்தாள்.

தாவீது இராசா இவைகளெல்லாவற்றையுங் ௨௧
கேள்விப்பட்டபொழுது, மிகவுங்கோபங்கொ
ண்டான்.—அப்ஷாலோம், தன் சகோதரியாகிய ௨௨
தாமாரை அம்னோன் வலாற்காரம்பண்ணினபடி
யினாலே அவனைவெறுத்தான்: ஆதலால் அப்ஷா
லோம் தன் சகோதரனாகிய அம்னோனுடன் நன்
மையாவது தீமையாவது பேசவில்லை.

இரண்டுவருஷம் பூரணமான பின்பு, அப்ஷா ௨௩
லோம் எப்ராயீமுக்குச்சமீபமானபாகாலாத்சோ
ரில் ஆட்டுக்கு மயிர்கத்திரிக்கிறவர்களைவைத்தி
ருக்கையில், இராசாவின் புத்திரர்யாவரையும் வி
ருந்துக்கழைத்தான்.—அப்ஷாலோம் இராசாவி ௨௪
டத்தில்வந்து, கேளும், ஆட்டுக்கு மயிர்கத்திரிக்
கிறவர்களை உமது அடியானாகிய நான் வைத்தி
ருக்கிறேன்; இராசாவும், அவர்தாசரும் அடியே
னுடன் வரும்படி வேண்டுகிறேனென்று சொல்
ல,—இராசா அப்ஷாலோமைநோக்கி, என்மக ௨௫
னே, நான்வரவில்லை, நாங்களனைவரும் வந்தோ
மாகில் உனக்கு வெகு செலவுண்டாகுமென்
றான். அவன் இவனைநெருக்கினான்: ஆயினும்
இவன் அவனைஆசீர்வதித்ததேயன்றி, போகவில்
லை.—பின்பு அப்ஷாலோம் அதுகூடாதிருந்தால், ௨௬
என் சகோதரனாகிய அம்னோனை என்னுடன்வர
விடும்படி வேண்டுகிறேனென்றான். அதற்கு இ
ராசா அவனைநோக்கி, அவன் உன்னோடு வர
வேண்டியதென்னவென்றான்.—அப்ஷாலோம் ௨௭
இவனை மிகவும்நெருக்கினபடியால், இவன்அம்
னோனையும் இராசபுத்திரர்யாவரையும் அவனோ
டேபோகவிட்டான்.

முன்னமே அப்ஷாலோம் தன் பணிவிடைக் ௨௮
காரரிடத்தில், அம்னோன்திராட்சரசத்தினால்களி
கூர்ந்திருக்கும் சமயத்தையறிந்து, அம்னோனை
அடியுங்களென்று நான் உங்களுக்குச்சொல்லும்

(௬) ஆதி.௰௮.௬. (௯) ஆதி.௪௫.௧. (௰௧) ஆதி.௩௯.௰௨. (௰௨) ஆதி.௩௪.௨. லேவி.௰௮.௯,௰௧. ஆதி.௩௪.௭. நியா.௰௯.
௨௩. (௰௩) லேவி.௰௮.௯,௰௧. (௰௪) உபா.௨௨.௨௫. அதி.௰௨.௰௧.(௰௮) ஆதி.௩௭.௩. நியா.௫.௩௰.சங்.௪௫.௰௪.(௰௯)
யோசு.௭.௬. அதி.௧.௨. யோபு.௨.௰௨. எரே.௨.௩௭.(௨௨) ஆதி.௨௪.௫௰. லேவி.௰௯.௰௭,௰௮.(௨௩) ஆதி.௩௮.௰௨,௰௩
௧.சாமு.௨௫.௪,௩௬. (௨௮) நியா.௰௯.௬,௯,௨௨. ரூத்.௩.௭. ௧.சாமு.௨௫.௩௬. எஸ்த.௧.௰. சங்.௱௪.௰௫. யோசு.௧.௯.

பொழுது,நீங்கள் அவனைக்கொன்றுபோடுங்கள்;
பயப்படவேண்டாம்: நானல்லவாஉங்களுக்குக்
கட்டளையிட்டேன்: திடமாயிருங்கள், வீரங்
கொள்ளுங்களென்றுசொல்லி, கட்டளையிட்டி
௨௯ ருந்தான்.—அப்ஷாலோமின் பணிவிடைக்கா
ரர் தங்களுக்கு அப்ஷாலோம் கட்டளையிட்டி
ருந்தபடியே அம்னோனுக்குச்செய்தார்கள். அப்
பொழுது இராசபுத்திரர் யாவரும் எழுந்து, அவ
ரவர் கோவேறுகழுதையிலேறிக்கொண்டு ஓடிப்
போனார்கள்.
௩௰ அவர்கள் வழிநடக்கையில், அப்ஷாலோம்
இராசபுத்திரர் யாவரையும் கொன்றுபோட்டா
ன், ஒருவரையும் மீந்திருக்க விடவில்லையென்
௩௧ று, தாவீதுக்குத்தெரிவிக்கப்பட்டது.—இராசா
எழுந்து, தன்வஸ்திரங்களைக்கிழித்துக்கொண்டு,
தரையிலே விழுந்துகிடந்தான்; அவன் பணிவி
டைக்காரர்யாவரும் தங்கள் தங்கள் வஸ்திரங்
களைக்கிழித்துக்கொண்டு, சுற்றி நின்றார்கள்.—
௩௨ அப்பொழுது தாவீதின் சகோதரனான ஷிமியா
வின் புத்திரனாகிய யோனதாப், வாலிபராகிய
இராசகுமாரர்யாவரையுங் கொன்றுபோட்டார்
களென்றெண்ணவேண்டாம்; அம்னோன்மாத்தி
ரமே இறந்துபோனான்: இவன் அவன்சகோதரி
யாகிய தாமாரை வலாற்காரம்பண்ணினநாள்மு
தற்கொண்டு, இப்படிச் செய்யவேண்டுமென்று
அப்ஷாலோம் அபிப்பிராயங் கொண்டிருந்தா
௩௩ ன்.—ஆதலால் என் ஆண்டவனாகிய இராசா,
இராசபுத்திரர்யாவரும் இறந்துபோனார்களென்
று சிந்தித்துத் துக்கிக்கவேண்டாம்: அம்னோன்
௩௪ மாத்திரமே இறந்துபோனானென்றான்.—அப்ஷா
லோம் தப்பி ஓடிவிட்டான். காவல்செய்யும்
வாலிபன் தன்கண்களை ஏறிட்டுப்பார்த்தபொழு
து, தனக்குப்பின்புறத்திலுள்ளமலைச்சாரல் வழி
யாக அநேக சனங்கள் வருவதைக்கண்டான்.-
௩௫ அப்பொழுது யோனதாப் இராசாவுடனே, பா
ரும், இராசாவின் புத்திரர் வருகிறார்கள்: உம
து அடியானுடைய வாக்கின்படி ஆயிற்றென்
௩௬ றான்.—அவன்சொல்லி முடித்தவுடனே, இரா
சபுத்திரர்வந்து குரலிட்டழுதார்கள்: இராசாவும்
அவனோடு சமஸ்தபணி விடைக்காரரும்மிகவும்
அழுதார்கள்.
௩௭ அப்ஷாலோம் கிஷூரின் இராசாவும், அம்மி
யூத்தின் புத்திரனுமாகிய தல்மாயிடத்தில் ஓடிப்
போய்ச்சேர்ந்தான். தாவீது தினந்தோறுந் தன்
புத்திரனுக்காகத் துக்கித்துக்கொண்டிருந்தான்.—
௩௮ அப்ஷாலோம் கிஷூருக்குத்தப்பி ஓடிப்போய்,
௩௯ அங்கே மூன்றுவருஷமிருந்தான்.—தாவீது இ
ராசா அம்னோன் இறந்துபோனதைக்கண்டு அ
வனைக்குறித்து ஆறுதலடைந்து, அப்ஷாலோமி
டத்தில் போகமிகவும்வாஞ்சையாயிருந்தான்.

## ௰௪. அதிகாரம்.

௧. யோவாப் தெக்கோயாவிலுள்ள ஸ்திரியை வர
வழைத்தல்:௪.அப்ஷாலோமை அழைப்பிக்கும்
படி அந்தஸ்திரி உவமைசொல்லல்: ௨௧. யோ
வாப்பினால் அப்ஷாலோம் யெருஷலேமில்
அழைக்கப்படல்: ௨௫. அப்ஷாலோமின்சௌ
ந்தரியத்தையும் வமிசவரலாற்றையுந் தெரிவித்
தல்: ௨௮. இரண்டுவருஷஞ்சென்றபின் அப்
ஷாலோம் தாவீதிடத்தில் சேர்தல்.

இராசாவின்மனம் அப்ஷாலோம்மேல் சார்ந்து ௧
நிற்பதைச் சேருயாவின் புத்திரனாகிய யோவாப்
கண்டு,—தெக்கோயாவுக்கு ஆளனுப்பி, அங்கி ௨
ருந்து ஞானவதியாகிய ஒருஸ்திரியை அழைப்
பித்து, அவளைநோக்கி, நீ துக்கங்கொண்டாடு
கிறவளைப்போலத் துக்கவஸ்திரந்தரித்து, எண்
ணெய்பூசாமல், இறந்துபோனவன்நிமித்தம் நெ
டுங்காலந்துக்கிக்கிற ஸ்திரிபோலாகி,—இராசா ௩
விடத்தில்வந்து, இவ்விதமாய் அவருக்குச்சொல்
லென்று, அவள் சொல்லவேண்டிய வாக்குகளை
அவள் வாயிலிட்டான்.
தெக்கோயாவிலுள்ளஅந்தஸ்திரிஇராசாவிடத் ௪
தில்வந்து தரையில் முகங்குப்புறவிழுந்துவணங்
கி, அவனைநோக்கி, இராசாவே, இரட்சியுமென்
றாள்.—அப்பொழுது இராசா அவளைநோக்கி, உ ௫
னக்கு நேரிட்டதென்னவென்றுகேட்க, அவள்
நான் ஒருவிதவை, என் புருஷன் இறந்துவிட்
டான்.—உமதடியாளுக்கு இரண்டு புத்திரரிருந் ௬
தார்கள், அவர்களிருவரும் வயல்வெளியில் ஒரு
வரோடொருவர் போராடினார்கள், அவர்களைவி
லக்கிவிட ஒருவருமில்லாததினால் ஒருவன் மற்ற
வனை அடித்துக்கொன்றுபோட்டான்.—கேளும், ௭
குடும்பத்தார்யாவரும் உமதடியாளுக்கு விரோத
மாயெழுந்து, தன்சகோதரனை அடித்தவனை, அ
வன்கொன்ற அவன் சகோதரன்பிராணன்நிமித்
தம் நாங்கள்கொன்றுபோடும்படி, எங்களிடத்தி
லொப்பித்துவிடு; நாங்கள் சுதந்தரவாளியையுங்
கொன்றுபோடுவோமென்றார்கள்: இவ்விதமாய்
அவர்களெனக்கு மிஞ்சியிருக்கிற தழலையும் அ
வித்துவிடுவார்கள்,பூமியிலேஎன்புருஷனுக்குப்
பெயருஞ்சேஷமும்மிஞ்சவிடார்களென்றாள்.—
இராசா அந்தஸ்திரியைநோக்கி, நீ உன்வீட்டுக் ௮
குப்போ, நான் உன்னைக்குறித்துக்கட்டளையிடு
வேனென்றான்.-பின்புதெக்கோயாவிலுள்ள அந் ௯
தஸ்திரி இராசாவைநோக்கி, என்னாண்டவனே,
இராசாவே, அந்தக்குற்றம் என்மேலும், என்பி
தாவமிசத்தின்மேலுந்தங்குவதாக: இராசாவும் அ
வர் சிங்காசனமுங்குற்றமில்லாமல் இருக்கக்கட
வனவென்றாள்.—அதற்கு இராசா,உன்னோடே ௰
வாக்குவாதம்பண்ணுகிறவனை என்னிடத்தில்
கொண்டுவா,பின்பு அவன்உன்னைத்தொடமாட்

(௩௧) அதி.௧.௰௧. அதி.௰௨.௰௬. (௩௨) வச.௩. (௩௩) அதி.௰௩.௰௩. (௩௪) வச.௩௮. (௩௭) அதி.௩.௩. (௩௮) அதி.௰௪. ௨௩,௩௨. (௩௯) சங்.௮௪.௨. ஆதி.௩௮.௰௨.—(௰௪. அதி. ௧.) அதி.௰௩.௩௯. (௨) ௨.நாளா.௰௧.௬. ரூத்.௩.௩. (௩) வச. ௰௯. யாத்.௪.௰௫. (௪) ௧.சாமு.௨௰.௪௧. அதி.௧.௨. ௨.இரா.௬.௨௬,௨௮. (௫) அதி.௰௨.௧. (௭) எண்.௩௫.௰௯. உபா. ௰௯.௰௨. (௯) ஆதி.௨௭.௰௩. ௧.சாமு.௨௫.௨௪. மத்.௨௭.௨௫. அதி.௩.௨௮,௨௯. ௧.இரா.௨.௩௩.

௰௧ டானென்றுசொல்ல,—அவள், இரத்தப்பழிவாங்
குகிறவர்கள் என்புத்திரனைநாசப்படுத்தக்கூடும்,
ஆதலால் இராசாவாகிய நீர் உமது தேவனாகிய
யெகோவாவைநினைந்து, அவர்கள் பிறரை
யுஞ் சங்கரிக்கவிடாதிருக்கும்படி நான் உம்
மைவேண்டிக்கொள்ளுகிறேனென்றாள். அதற்க
வன், யெகோவா நித்தியராதலால், உன்புத்தி
ரனுடைய தலைமயிரிலொன்றுந்தரையிலே விழ
௰௨ மாட்டாதென்றான்.—அப்பொழுது அந்தஸ்திரி
என்னாண்டவனாகிய இராசாவுக்கு உமதடியாள்
ஒருசொல்பேசும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்
௰௩ என்றுசொல்ல, அவன் சொல்லென்றான.—பின்
பு அந்த ஸ்திரி, தேவனுடைய சனங்களுக்கு
விரோதமாக நீரிப்படிப்பட்டகாரியம் சிந்தித்த
தென்ன; இராசா, தம்மைவிட்டுப் பிரிக்கப்பட்
டவனைத் திரும்பச் சேர்த்துக்கொள்ளாதபடியி
னால்,இப்படிப்பேசின இராசா,குற்றவாளிபோ
௰௪ லிருக்கிறார்.—நாம்மரிக்கவேவேண்டும்,திரும்ப
வும் அள்ளக்கூடாதபடிதரையிலேசிந்தின சலத்
திற்கொப்பாயிருக்கிறோம்; தேவன் ஒருவரை
யுந்தப்பவிடார்: ஆயினும் தம்மைவிட்டுப் பிரிக்
கப்பட்டவர்களைச் சேர்த்துக்கொள்ளும்படி உ
௰௫ பாயம்பண்ணுகிறாரே.—சனங்கள் எனக்குப்பய
முண்டாக்குகிறார்கள், அதினால் உமதடியாளாகி
ய நான் இராசாவிடத்தில் பேசுகிறேன்: இராசா
தமதடியாளின் பிரார்த்தனைக்கேற்கச்செய்வார்.—
௰௬ என்னையும் என் புத்திரனையுந் தேவனுடைய
சுதந்தரத்தினின்றுஞ்சேதிக்கவகை தேடுகிறவனு
டையகைக்குத் தமதடியாளைத்தப்புவிக்கும்வண்
௰௭ ணம், நிச்சயமாய்க் கேட்பாரென்றேன்.—இன்
னும் உமதடியாளாகிய நான், என் ஆண்டவனாகி
ய இராசா நன்மை தீமை அறியத்தக்க ஒரு தேவ
தூதனைபோலிருக்கிறார்:ஆதலால் என் ஆண்டவ
னாகிய இராசாவின்வாக்கு எனக்காறுதலைத் தரு
மென்றுஞ்சொன்னேன், இப்படியே என் ஆண்
டவனாகிய இராசாவிடத்தில்இந்தக்காரியத்தைப்
பேசவந்தேன்: உமது தேவனாகிய யெகோ
௰௮ வா உம்மோடிருப்பார் என்றாள்.—அப்பொழுது
இராசாஅந்தஸ்திரியைநோக்கி, நான் உன்னிடத்
திற் கேட்கப்போகிறகாரியத்தை மறைக்கவேண்
டாமென்றுசொல்ல, அந்தஸ்திரி என் ஆண்டவ
௰௯ னாகிய இராசா சொல்வாராகவென்றாள்.—பின்பு
இராசா, இந்தக்காரியம் முழுவதிலும் நீயோவாப்
பின் ஆலோசனையைச் சார்ந்திருக்க வில்லையா
வென்றுகேட்க, ஸ்திரி, என்ஆண்டவனாகியஇரா
சாவே, ஒருவரும் என்ஆண்டவனாகிய இராசா
சொன்ன காரியத்துக்குவலப்புறம் இடப்புறஞ்
சாயமுடியாதென்று உமது பிராணனைக்கொண்
டு ஆணையிடுகிறேன்: உமதடியானாகியயோவாப்
எனக்குக்கட்டளையிட்டு, இந்தவாக்குகளெல்லா
௨௰ வற்றையும் உமதடியாள் வாயிலிட்டார்.—இந்
தச்சம்பாஷணை நடக்கும்படி, உமதடியானாகிய
யோவாப் இப்படிச்செய்தார்: என் ஆண்டவன்
பூமண்டலத்திலுள்ள சகல காரியங்களையும் அறி
கிறதற்குத் தேவதூதனைப்போல ஞானவானாயி
ருக்கிறாரென்றாள்.

இராசா யோவாப்பை நோக்கி, கேள், அப்ப ௨௧
டிச்செய்கிறேன்: நீபோய்,வாலிபனாகியஅப்ஷா
லோமைக்கொண்டுவாவென்று சொல்ல,—யோ ௨௨
வாப்தரையிலே முகங்குப்புறவிழுந்து, வணங்
கி, இராசாவுக்குவாழ்த்துதல்செய்து, என் ஆண்
டவனாகிய இராசா, தமதடியானின் பிரார்த்தனை
யை நிறைவேற்றுவதினால், இன்றைத்தினம் உம
தடியானுக்கு உமது கடாட்சங்கிடைத்ததென்று
அறிந்தேனென்றான்.—பின்பு யோவாப் எழுந் ௨௩
து கெஷூருக்குப்போய், அப்ஷாலோமை யெரு
ஷலேமுக்கு அழைத்துவந்தான்.-இராசா,அவன் ௨௪
தன் வீட்டுக்குப்போய்விடட்டும், அவன் என்
முகத்தைப்பார்க்கவேண்டாமென்றான். அப்படி
யே அப்ஷாலோம் இராசாவின்முகத்தைப்பாரா
மல் தன் வீட்டுக்குத்திரும்பிவிட்டான்.

சமஸ்த இஸரவேலருக்குள்ளும் சௌந்தரியத் ௨௫
தில் அப்ஷாலோமைப்போல் வியக்கப்படத்தக்
கவனொருவனுமில்லை: அவனில் உள்ளங்கால்
தொடங்கி உச்சிவரைக்கும் ஒருபழுதுமில்லை.—
அவன் தன் தலைமயிர் தனக்குப்பாரமாயிருந்தி ௨௬
னால், வருஷாந்தரமாகச் சிரைப்பித்துவருவான்:
சிரைப்பிக்கும்பொழுது அவன் தலைமயிர், இரா
சாவின் நிறைப்படி, இருநூறுஷேக்கல் நிறை
கொண்டதாயிருக்கும்.-அப்ஷாலோமுக்குமூன் ௨௭
று புத்திரரும், தாமாரென்று பெயர்கொண்ட
மகா சௌந்தரவதியாகிய ஒரு புத்திரியும் பிறந்
தார்கள்.

அப்ஷாலோம் யெருஷலேமிலே பூரணமாக ௨௮
இரண்டுவருஷம்வசித்தான், அவன் இராசாவின்
முகத்தைக் காணவில்லை.—அதினால் அப்ஷா ௨௯
லோம் யோவாப்பை இராசாவிடத்திலனுப்பும்
படி, அவனுக்கு ஆளனுப்ப; அவன் இவனிடத்
தில்வரவில்லை: இரண்டாமுறையும் ஆளனுப்
பினான்,அதற்கும்அவன்வரவில்லை.—ஆதலால் இ ௩௰
வன் தன்பணிவிடைக்காரரை நோக்கி, கேளுங்
கள், யோவாப்பின்வயல் என் வயலுக்கடுத்தது,
அதிலே வாற்கோதுமை விளைந்திருக்கின்றது,
நீங்கள்போய் அதிலே நெருப்புக்கொளுத்திவி
டுங்களென்றுசொல்ல, அப்ஷாலோமின் பணி
விடைக்காரர் அந்தவயலிலே நெருப்பைகொ
ளுத்தினார்கள்.-யோவாப்எழுந்து அப்ஷாலோம் ௩௧
வீட்டுக்குவந்து, அவனைநோக்கி, என் வயலில்
உமது பணிவிடைக்காரர் நெருப்புக்கொளுத்
தினதென்னவென்று கேட்க,— அப்ஷாலோம் ௩௨
யோவாப்பை நோக்கி, கேளும், நான் என் கெஷூ
ரினின்று வந்தேன்; நான் அங்கே இருந்துவிட்
டால்நலமென்றுஇராசாவுக்குச்சொல்ல, நானும்
மையனுப்புவதற்காக, வரும்படி உமக்கு ஆள

(௰௧) எண்.௩௫.௰௯. ௧.சாமு.௰௪.௪௫. அப்.௨௭.௩௪. (௰௩) நியா.௨௰.௨. அதி.௰௩.௩௭,௩௮. (௰௪) யோபு.௩௪.௰௫. எபி.௯.௨௭. எண்.௩௫.௰௫,௨௫,௨௮. (௰௭) வச.௨௰. அதி.௰௯.௨௭. (௰௯) வச.௩.(௨௰)வச.௰௭. அதி.௰௯.௨௭.(௨௩) அதி.௰௩.௩௭. (௨௪) ஆதி.௪௩.௩. அதி.௩.௰௩. (௨௫) ஏசா.௧.௬. (௨௭) அதி.௰௮.௰௮. (௨௮) வச.௨௪.

னுப்பினேன்: இப்பொழுது நான் இராசாவின்
முகத்தைப்பார்க்கட்டும்; என்னிலேகுற்றமுண்
டானால் அவர் என்னைக் கொன்றுபோடட்டு
௩௩ மென்றான்.—யோவாப் இராசாவிடத்தில்வந்து,
அவனுக்கு இதைத்தெரிவித்தான்: அவன் அப்
ஷாலோமை அழைப்பிக்க,இவன் இராசாவிடத்
தில்வந்து, இராசாவின் சமுகத்தில் தரையிலே
முகங்குப்புறவிழுந்து, வணங்கினான்: அப்பொ
ழுது இராசா அப்ஷாலோமைமுத்தமிட்டான்.

## ௰௫. அதிகாரம்.

*௧. அப்ஷாலோம் இஸரவேல் சனங்களின் மனதைக்கவர்தல்: ௭. சங்கற்பநிமித்தம்எப்ரோனுக்குப் புறப்பட அனுமதிபெறல்: ௰. அவன் இராசத்துரோகஞ்செய்தல்: ௰௩. தாவீது தப்பியோடல்: ௰௯. இத்தாயி தாவீதைவிட்டுப்புறப்படாமல்நிற்றல்: ௨௪. சாதோக் அப்யாதாரைத் திரும்ப அனுப்பல்: ௩௰. தாவீது அழுதல்: ௩௧. அகிதோபேல் ஆலோசனைசொல்லல்: ௩௨. ஊஷாயைத்திரும்ப அனுப்பல்.*

பின்பு அப்ஷாலோம் இரதங்களையும், குதிரை
களையும், தனக்கு முன்னேடுவதற்கு ஐம்பதுபே
௨ ரையும், ஆயத்தப்படுத்தினான்.—அப்ஷாலோம்,
அதிகாலையிலெழுந்து, வாசல்வழியருகேநின்று
கொண்டு, எவனாகிலும் தன் வழக்கின்நியாயத்
தீர்ப்பினிமித்தம் இராசாவிடத்தில்வந்தால், அவ
னைக்கூப்பிட்டு, நீ எந்த ஊரானென்று கேட்பா
௩ ன்.-அதற்கவன்,உமதடியான்இஸரவேல்கோத்தி
ரங்களில் இன்ன கோத்திரத்தானென்று சொல்
ல, அப்ஷாலோம் அவனைநோக்கி, கேள், உன்
வழக்குக்காரியம் நன்மையும், நீதியுமாயிருக்கின்
றது; இராசாமுதலாக உன்காரியத்தைக் கேட்
௪ பாரொருவருமில்லையென்பான்.—மேலும் அப்
ஷாலோம், வழக்குள்ளவர்கள் யாவரும் என்னி
டத்தில்வர, நான் அவர்களுக்கு நியாயஞ்செய்
யும்படி என்னைத்தேசத்துக்கு நியாயாதிபதியாக
ஏற்படுத்துவார்களாகில் நலமென்றுஞ் சொல்லி
௫ வருவான்.-யாவனொருவன் தனக்கு நமஸ்காரம்
பண்ணும்படி சமீபத்துவந்தால், இவன் தன்கை
யை நீட்டி, அவனைத்தழுவி முத்தஞ்செய்வான்.-
௬ அப்ஷாலோம், இராசாவிடத்தில் நியாயத்தீர்ப்
புப் பெறும்படி வரும் சமஸ்த இஸரவேலருக்
கும் இப்படியே செய்துவருவான்: இந்தப்பிர
காரம் அப்ஷாலோம் இஸரவேல் சனங்களுடை
யமனதைத்தன் வசமாக்கிக்கொண்டான்.
௭ நாற்பது வருஷஞ் சென்ற பின்பு, அப்ஷா
லோம் இராசாவைநோக்கி, உமது அடியானாகிய
நான் ஷீரியாவிலுள்ள கெஷூரிலே வாசமாயிருந்
தபொழுது, யெகோவா என்னை யெரூஷ
லேமுக்குக்கொண்டுவந்துவிட்டால், நான் யெ
கோவாவைச் சேவிப்பேனென்று ஒருசங்கற்
௮ பம்பண்ணியிருக்கிறேன்.—ஆதலால் எப்ரோனுக்
குப்போய், நான் யெகோவாவுக்குப்பண்ணி
னசங்கற்பத்தை நிறைவேற்ற என்னைவிடும்படி
வேண்டிக்கொள்ளுகிறேனென்றுசொல்ல,—இ ௯
ராசா அவனைநோக்கி, சமாதானத்தோடேபோய்
வாவென்றான். அப்படியே அவன் எழுந்து எப்
ரோனுக்குப்போனான்.
அப்ஷாலோம் இஸரவேலின் சமஸ்தகோத்தி ௰
ரத்தாரிடத்திலும், நீங்கள் எக்காளத்தொனியைக்
கேட்ட மாத்திரத்தில், அப்ஷாலோம் எப்ரோ
னில் அரசாளுகிறானென்றுசொல்லுங்களென்று
சொல்லும்படி, வேவுகாரரையனுப்பிருந்தான்.—
யெரூஷலேமிலிருந்து வர அழைக்கப்பட்ட இ ௰௧
ருநூறுபேர் அப்ஷாலோமுடன்போனார்கள்; அ
வர்கள் ஒன்றும்அறியாமல், தங்கள்பேதைமையி
னாலேபோனார்கள்.—பின்பு அப்ஷாலோம் பலி ௰௨
யிடுகிறசமயத்தில் தூதரையனுப்பி, தாவீதின் மந்
திரியாகிய அகிதோபேலென்னுங்கிலோனியனை
அவன் நகரமாகிய கிலோவிலிருந்துவரும்படி அ
ழைப்பித்தான். சனங்கள் அப்ஷாலோமுடன்
வரவர அதிகமாகக் கூடினபடியினால், இராசத்து
ரோகந் திடங்கொண்டது.
தூதனொருவன் தாவீதிடத்தில் வந்து, இஸர ௰௩
வேலருடைய மனம் அப்ஷாலோமைப்பற்றி இ
ருக்கின்றதென்றான்.—அதினாலே தாவீது யெரூ ௰௪
ஷலேமிலுள்ள தன்பணிவிடைக்காரர் யாவரை
யும்நோக்கி, நாம் எழுந்து ஓடிவிடுவோம்; இல்
லாவிட்டால் அப்ஷாலோமுக்குத் தப்பமாட்
டோம்: அவன்விரைந்து நம்மை அணுகி, நகரத்
தைக் கட்கத்தின்வாயினால் அடித்து, நமக்குத்
தீமைவருவியாதபடிக்குப் புறப்பட விரைவாயி
ருங்களென்று சொல்ல,—இராசாவின் பணிவி ௰௫
டைக்காரர் இராசாவைநோக்கி, கேளும், உம
தடியாராகிய நாங்கள் எங்கள் ஆண்டவனாகிய
இராசாகட்டளையிடுவதெதுவோ, அதைச்செய்ய
ஆயத்தமாயிருக்கிறோமென்றார்கள்.—இராசாவும், ௰௬
அவனுடைய குடும்பத்தார் யாவரும் புறப்பட்
டார்கள். வீட்டைக் காவல்பண்ணும்படி இரா
சா, வைப்பாட்டிகளாகிய பத்துஸ்திரிகளையிருக்
கவைத்தான்.—இராசாவும், அவனோடிருந்தசமஸ் ௰௭
தசனங்களும்புறப்பட்டுப்போய், தூரத்திலுள்ள
ஒருஸ்தானத்திலே தரித்தார்கள்.—அவனுடைய ௰௮
பணிவிடைக்காரர் சமஸ்தரும், சகல கிரேத்திய
ரும், சகல பெலேத்தியரும், காத்திலிருந்து அவ
னைப்பின்பற்றிய கித்தியர் அறுநூறுபேரும், இ
ராசாவுக்கு முன்நடந்தார்கள்.
பின்பு இராசா, கித்தியனாகிய இத்தாயியை ௰௯
நோக்கி,என் நீயும் எங்களுடன்வருகிறாய்; நீபுற
தேசியும் அந்நியனுமாயிருக்கிறாய்: ஆதலால் நீ
உன்னிடத்துக்குத் திரும்பிப்போய், இராசாவு
டனிரு.—நீ நேற்றுவந்தாய், இன்று நான் உன் ௨௰
னை எங்களுடன்வரும்படி அழைத்துக்கொண்டு

(௩௩) ஆதி.௩௩.௪. ஆதி.௪௫.௰௫. லூக்.௰௫.௨௰.—(௰௫. அதி. ௧.) அதி.௰௨.௰௧. ௧.இரா.௧.௫. (௪) நியா.௯.௨௯.(௬) ரோ.௰௬.௰௮. (௭) ௧.சாமு.௰௬.௧. ௧.சாமு.௰௬.௨. ஆதி.௨௮.௨௧,௨௨. அதி.௰௩.௩௮. (௰௧) ௧.சாமு.௯.௰௩. ஆதி. ௨௰.௫. (௰௨) சங்.௪௧.௯. யோசு.௰௫.௫௧. சங்.௩.௧. (௰௩) வச.௬. நியா.௯.௩. (௰௪) அதி.௰௯.௯. சங்.௩. (௰௬) சங். ௩. அதி.௰௬.௨௧,௨௨. (௰௮) அதி.௮.௰௮. (௰௯) அதி.௮.௨. (௨௰) ௧.சாமு.௨௩.௰௩.

போகலாமா; நான் எங்கேபோகக்கூடுமோ அங்
கே போகிறேன், நீ திரும்பிவிடு, உன் சகோதர
ரையுங் கூட்டிக்கொண்டுபோ: தயையும் சத்தி
யமும் உன்னோடிருக்கக்கடவனவென்றான்.—
௨௧ அதற்குத்தரமாக இத்தாயி இராசாவைநோக்கி, ம
ரித்தாலும், சீவித்தாலும், என் ஆண்டவனாகிய இ
ராசா எங்கேயிருப்பாரோ, அங்கே உமதடியா
னும்இருப்பானென்று, சீவிக்கிற யெகோவா
மேலும், சீவிக்கிற என் ஆண்டவனாகிய இராசா
௨௨ மேலும் ஆணையிடுகிறேனென்றான்.—பின்பு தாவீ
து இத்தாயியைநோக்கி, நீ கடந்துபோவென்று
சொல்ல, கித்தியனாகிய இத்தாயியும், அவனுடை
யசமஸ்தமனிதரும், அவனோடிருந்த எல்லாக்கு
௨௩ ழந்தைகளுங்கடந்துபோனார்கள்.—சகல சனங்க
ளுங்கடந்துபோகையில், தேசத்தார்யாவருங்குர
லிட்டழுதார்கள், இராசாவும்கீதரோன் ஆற்றைக்
கடந்தான்: சகல சனங்களும் வனாந்திரத்துக்குப்
போகிறவழியே நடந்துபோனார்கள்.
௨௪ சாதோக்கும், தேவனுடைய உடன் படிக்
கைப்பெட்டியைச் சுமக்கிற சகல லேவியரும்,
இருந்தார்கள்: அன்றியும்அவர்கள் தேவனுடை
யபெட்டியை இறக்கியிருக்கையில், சகலசனங்
களும் நகரத்தைவிட்டுப் புறப்பட்டுப்போகும்வ
௨௫ ரைக்கும் அப்யாதார் ஏறிப்போனான்.—இராசா சா
தோக்கைநோக்கி, தேவனுடையபெட்டியைத்
திரும்பநகரத்துக்குச்சுமந்துகொண்டுபோ: யெ
கோவாவின்கடாட்சம் எனக்குக்கிடைத்தால்,
அவர் என்னைத் திரும்பக்கொண்டுவந்து, அதை
யும் தன் வாசஸ்தலத்தையும் எனக்குக் காட்டு
௨௬ வார்.—அவர், உன்மேல் எனக்குப் பிரியமில்லை
யென்றுசொல்வாராகில் நான் இங்கே இருக்கி
றேன், அவர் தமதுபார்வைக்குநலமாய்த்தோன்
றுகிறபடி எனக்குச் செய்வாராகவென்றான்.—
௨௭ பின்பு இராசா ஆசாரியனாகியசாதோக்கைநோக்
கி, நீ தரிசியல்லவா; உன் புத்திரனாகிய அகிமாத்
சும், அப்யாதாரின் புத்திரனாகிய யோனாதானு
மான உங்கள் புத்திரர் இருவரோடும், நகரத்துக்
௨௮ குச்சமாதானத்துடன்திரும்பிப்போ.—பார், உங்
களிடத்திலிருந்து எனக்கு நிச்சயமான சமாசா
ரம்வருமட்டும், நான் வனாந்தரவெளியில் தரித்தி
௨௯ ருப்பேனென்றான்.—அதனால் சாதோக்கும், அப்
யாதாருந் தேவனுடைய பெட்டியை யெரூஷ
லேமுக்குச் சுமந்துகொண்டுபோய், அங்கே தங்
கினார்கள்.
௩௰ தாவீது சீதவிருட்சமலையின்வழியாய் ஏறினா
ன், அவன் தன் தலையைமூடிக்கொண்டு வெ
றுங்காலுடன் ஏறுகையில், அழுதான்: அவனோ
டிருந்த சகலசனங்களுந் தங்கள்தங்கள் தலையை
மூடிக்கொண்டு ஏறுகையில் அழுதார்கள்.

அகிதோபேலும், அப்ஷாலோமிடத்தில் இரா ௩௧
சத்துரோகிகளுடன்சேர்ந்திருக்கிறானென்றுஒரு
வன் தாவீதுக்குஅறிவிக்க, தாவீது யெகோவா
வே, அகிதோபேலின் மந்திராலோசனையைமூட
மாக்கும்படி உம்மை வேண்டுகிறேனென்றான்.
தாவீது தான் தேவனை ஆராதித்த மலை உச் ௩௨
சியில்சேர, அர்கீயனாகிய ஊஷாய் தன் அங்
கியைக்கிழித்து, தன் தலையின்மேல் மண்ணை
அள்ளிப்போட்டுக்கொண்டவனாய்அவனுக்கு எ
திர்ப்பட்டான்.—தாவீது அவனைநோக்கி, நீ என் ௩௩
னுடன் வருவாயாகில் எனக்குப் பாரமாயிருப்
பாய்.—நீ நகரத்திற்குத்திரும்பிப்போய் அப்ஷா ௩௪
லோமிடத்தில், இராசாவே, நான் உம்முடை
ய பிதாவுக்குத் தாசனாயிருந்ததுபோல, உமக்குந்
தாசனாயிருப்பேனென்று சொன்னால், என்னி
மித்தம் அகிதோபேலின் மந்திராலோசனையை
வியர்த்தமாக்குவாய்.—அங்கே சாதோக் அப்யா ௩௫
தாரென்னும் ஆசாரியர்கள் உன்னோடிருப்பார்க
ளல்லவா; ஆதலால் நீ அரமனையிலே கேள்விப்
படுகிற எந்தக்காரியங்களையும், சாதோக் அப்யா
தாரென்னும் ஆசாரியர்களுக்குத்தெரிவிப்பாய்.—
கேள், அங்கே அவர்களோடே சாதோக்கின்புத் ௩௬
திரனாகிய அகிமாத்ஸ், அப்யாதாரின் புத்திரனா
கிய யோனாதானென்னும் இருவருமிருக்கிறார்
களே; நீங்கள் கேள்விப்படுகிறயாவையும், அ
வர்கள் வழியாய் எனக்குச் சொல்லியனுப்புங்
களென்றான்.—அப்ஷாலோம் யெரூஷலேமுக் ௩௭
குவர, தாவீதின் சிநேகிதனாகிய ஊஷாயும் நக
ரத்துக்கு வந்தான்.

## ௰௬. அதிகாரம்.

௧. சீபா காணிக்கைகளினாலும் சூதினாலும் தன்னெசமானனுடைய சுதந்தரத்தைப்பெறல்: ௫. ஷிமியி தாவீதைச் சமீபித்தல்: ௯. தாவீது பொறுதியாயிருத்தல்: ௰௫. ஊஷாய் அப்ஷாலோமுடன் சம்பாஷித்தல்: ௨௰. அகிதோபேல் ஆலோசனை சொல்லல்.

தாவீது மலை உச்சிக்குச் சற்றப்பால் சென்ற ௧
பொழுது, மெபீபோஷேத்தின் பணிவிடைக்
காரனாகிய சீபா, பொதியேற்றிய இரண்டு கழு
தைகளின்மேல் இருநூறு அப்பங்களும், நூறு
திராட்சப்பழக்குலைவற்றலும், வசந்தகாலத்திற்
பழுக்கும் அத்திப்பழங்களும், ஒரு துருத்தித்தி
ராட்சரசமும், கொண்டுவந்து அவனுக்கெதிர்ப்
பட்டான்.—இராசா சீபாவைநோக்கி, இவை ௨
கள் என்னத்துக்கென்று கேட்க, சீபா கழுதை
கள் இராசகுடும்பத்தார் ஏறுகிறதற்கும், அப்ப
மும் அத்திப்பழமும் வாலிபர் புசிக்கிறதற்கும்,
திராட்சரசம் வனத்தில் இளைத்தவர்கள் குடிக்கி
றதற்குமென்றான்.—பின்பு இராசா உன் எசமா ௩

(௨௧) ரூத்.௧.௰௬,௰௭. நீதி.௰௭.௰௭. (௨௩) யோவா.௰௮.௧. அதி.௰௯.௨. (௨௪) எண்.௪.௰௪. (௨௫) சங்.௪௩.௩. (௨௬) எண்.௰௪.௮. ௧.இரா.௰.௯. ௨.நாளா.௯.௮. ஏசா.௬௨.௪. ௧.சாமு.௩.௰௮. (௨௭) ௧.சாமு.௯.௰. அதி.௰௭.௰௭. (௨௮) அதி.௰௭.௰௬. (௩௰) அதி.௰௯.௪. எஸ்த.௬.௰௨. ஏசா.௨௰.௨,௪. எரே.௰௪.௩,௪. சங்.௱௨௬.௬. (௩௧) சங்.௩.௧,௨. அதி.௰௬.௨௩. (௩௨) யோசு.௰௬.௨. அதி.௧.௨. (௩௩) அதி.௰௯.௩௫. (௩௪) அதி.௰௬.௰௯. (௩௫) அதி.௰௭.௰௫,௰௬. (௩௬) வச.௨௭. (௩௭) அதி.௰௬.௰௬. ௧.நாளா.௨௭.௩௩. அதி.௰௬.௰௫.—(௰௬. அதி. ௧.) அதி.௰௫.௩௰,௩௨. அதி.௯.௨.(௨) அதி.௰௫.௨௩. அதி.௰௭.௨௮. (௩) அதி.௰௯.௨௭.

னின் புத்திரன் எங்கேயென்று கேட்க, சீபா இ
ராசாவைநோக்கி, அவன், இன்றைத்தினம் இஸ
ரவேல் சந்ததியார் என்பிதாவின் இராச்சியத்தை
எனக்கு மீண்டு தருவார்களென்று சொல்லிக்
கொண்டு, யெருஷலேமிலிருக்கிறானென்றான்.-
௪ அப்பொழுது இராசா சீபாவைநோக்கி, கேள்,
மெபீபோஷேத்துக்கு உரியதெல்லாம் உனக்கு
ரித்தாவதாகவென்றுசொல்ல, சீபா என் ஆண்ட
வனாகிய இராசாவே, உமது கடாட்சம் எனக்
குக்கிடைக்கும்படி, வணக்கமாய்க் கேட்கிறே
னென்றான்.
௫ பின்பு தாவீது இராசா, பகூரீமிற் சேர்ந்தபொ
ழுது, ஷவுலின் வமிசத்தாரின் குடும்பத்தில் கே
ராவின் புத்திரனாகிய ஷிமியியென்னும் பெயர்
கொண்ட ஒருவன் புறப்பட்டுவருகையில், தூ
௬ ஷணித்துக்கொண்டுவந்து,—சகல சனங்களும்,
சகல பராக்கிரமசாலிகளும், தாவீதுக்கு வலப்பு
றத்திலும் இடப்புறத்திலும் நிற்க, தாவீதின்மே
லும், தாவீது இராசாவின் சமஸ்த பணிவிடைக்
௭ கரார்மேலும் கல்லெறிந்தான்.—ஷிமியி தூஷ
ணஞ்செய்து, இரத்தப்பிரியனே, பேலியாலின் ம
௮ கனே, போய்விடு, போய்விடு.—யெகோவா,
ஷவுல் வமிசத்தாரின் இரத்தப்பழியை அவனு
டைய இராச்சியத்தைப்பெற்ற உன்மேலேதிருப்
பிவிட்டாரே; யெகோவா, இராச்சியத்தை
உன்புத்திரனாகிய அப்ஷாலோம்கையில் ஒப்பித்
துவிட்டார்: நீ இரத்தப்பிரியனானபடியினால் ஆ
பத்தில் அகப்பட்டாயென்றான்.
௯ அப்பொழுது சேருயாவின்புத்திரனாகிய அபீ
ஷாய் இராசாவை நோக்கி, அந்தச் செத்தநாய்,
என் ஆண்டவனாகிய இராசாவைத் தூஷணிக்க
வேண்டியதென்ன; நான்கடந்து அவன் தலையை
௰ ச்சேதிக்கும்படி உத்தரவுதாருமென்றான்.—அதற்
கு இராசா சேருயாவின்புத்திரரே, எனக்கும்உங்
களுக்கும் காரியம் என்ன; தாவீதைத் தூஷணிக்
கவேண்டுமென்று யெகோவா அவனுக்குச்
சொல்லியிருக்கிறபடியால், அவன்தூஷணிக்கட்
டும், நீ ஏன் இப்படிச்செய்தாயென்று அவனைக்
௰௧ கேட்கக்கூடியவன் யாவனென்றான்.—பின்னும்
தாவீது அபீஷாயையும், அவன் சமஸ்தபணிவி
டைக்காரரையும்நோக்கி, கேளுங்கள், என் உத
ரத்தினின்றுந்தோன்றியஎன்சுயபுத்திரனே, என்
பிராணனை வாங்கத்தேடுகிறான்: இந்தப் பேன்ய
மீனன் அதிலும் எவ்வளவு அதிகஞ்செய்யலாம்;
யெகோவா அவனுக்குக்கட்டளையிட்டிருக்
கிறார், ஆதலால் அவன் தூஷணிக்கட்டும்; அவ
௰௨ னைத்தடைப்படுத்தலாகாது.—யெகோவாஎன்
கண்ணீரைப் பார்க்கவுங்கூடும், இன்றைத்தினம்
நடந்த நிந்தனைக்குப் பிரதியாக யெகோவா
எனக்கு நன்மைசெய்யவுங் கூடுமென்றான்.—
பின்பு தாவீதும் அவன் சனங்களும்வழிகொண் ௰௩
டுசெல்லுகிறபொழுது, ஷிமியி மலையருகாக அ
வனுக்கெதிரே தூஷணித்து, அவன்மேல் கல்
லெறிந்து, மண்ணைத்தூற்றிக்கொண்டுவந்தான்.—
இராசாவும், அவனோடுகூடிய சகல சனங்களும் ௰௪
இளைத்தவர்களாகி, அவ்விடத்தில் ஆறினார்கள்.
அப்ஷாலோமும், அவனோடுகூடியஇஸரவே ௰௫
லராகிய சகல சனங்களும், அகீதோபேலும், யெ
ருஷலேமுக்கு வந்தார்கள்.—அர்கீயனாகிய ஊ ௰௬
ஷாயென்னுந் தாவீதின்சிநேகிதன் அப்ஷாலோ
மிடத்தில் வந்தபொழுது, ஊஷாய் அப்ஷா
லோமைநோக்கி, இராசாவாழ்க, இராசாவாழ்க
வென்றான்.—அப்ஷாலோம்ஊஷாயைநோக்கி, ௰௭
உன் சிநேகிதன்மேல் நீ வைத்திருக்கிற பிரீதி
இவ்வளவா; நீ உன் சிநேகிதனுடன்போகாமல்
விட்டதென்னவென்றுகேட்க,—ஊஷாய் அப் ௰௮
ஷாலோமைநோக்கி, அப்படியல்ல; யெகோ
வாவும், இந்தச்சனங்களும், இஸரவேலர் சமஸ்
தரும், தெரிந்துகொள்ளுகிறவரையேசேர்ந்து, அ
வருடனேயிருப்பேன்.—மேலும் நான் ஆரிடத் ௰௯
தில் சேவிப்பேன்; அவர்புத்திரனுடைய சமுகத்
திலல்லவா; நான் உமது பிதாவின் சமுகத்தில்
சேவித்தபிரகாரம், உமது சமுகத்திலுஞ்சேவிப்
பேனென்றான்.
அப்பொழுது அப்ஷாலோம் அகீதோபேலை ௨௰
நோக்கி, நாம்செய்யவேண்டியது இன்னதென்று
நீங்கள் மந்திராலோசனைசெய்து சொல்லுங்க
ளென்றுசொல்ல,—அகீதோபேல் அப்ஷாலோ ௨௧
மை நோக்கி, உமது பிதா, வீட்டுக்குக்காவலாக
வைத்த அவருடைய வைப்பாட்டிகளிடத்தில்
பிரவேசியும்; அதினால் உமதுபிதாவினால் நீர் அ
ரோசிக்கப்பட்டிருக்கிறீரென்று இஸரவேலரெ
ல்லாருங் கேள்விப்படுவார்கள்: உம்மோடிருக்
கிறசகலருடையகைகளுந் திடமாகுமென்றான்.-
பின்பு அப்ஷாலோமுக்கு உப்பரிகையின்மேல் ௨௨
ஒருகூடாரம் விரித்தார்கள்; அப்ஷாலோம்சகல
இஸரவேலருங் காணத் தன்பிதாவின் வைப்
பாட்டிகளிடததில்பிரவேசித்தான்.—அந்நாட்க ௨௩
ளில் அகீதோபேல் கொடுக்கும் மந்திராலோச
னை, உசாவுகிறவன் தேவனிடத்தில் பெறும்
வாக்கைப்போலிருந்தது: அகீதோபேலின் மந்
திராலோசனை யெல்லாம் தாவீதுக்கும், அப்ஷா
லோமுக்கும் இப்படியே தோன்றிற்று.

## ௰௭. அதிகாரம்.

௧. அகீதோபேலின் ஆலோசனைக்கு விரோதமாக ஊஷாய் ஆலோசனைசொல்லல்: ௰௫. அந்த ஆலோசனையைத் தாவீதுக்குத் தெரிவித்தல்: ௨௩. அகீதோபேல் தூங்கிச்சாதல்: ௨௪. அமாசா சேனாபதியாய் எற்படுத்தப்படல்: ௨௭. மக்னாயிமினின்றுந்தாவீதுஉணவுப்பொருளைப்பெறல்.

(௪)நீதி.௰௮.௰௩.(௫)அதி.௰௯.௰௬. ௧.இரா.௨.௮,௪௪.(௭)உபா.௰௩.௰௩.(௮)நியா.௯.௨௪,௫௬,௫௭. ௧.இரா.௨.௩௨,௩௩. அதி.௧.௰௬.(௯)௧.சாமு.௨௪.௰௪. அதி.௯.௮. யாத்.௨௨.௨௮.(௰)அதி.௰௯.௨௨. ௧.பேதுரு.௨.௨௩. ௨.இரா.௰௮.௨௫. புல.௩.௩௮.ரோ.௯.௨௰.(௰௧)அதி.௰௨.௰௧.ஆதி.௰௫.௪.(௰௨)ஆதி.௨௯.௩௨. ௧.சாமு.௧.௰௧.சங்.௨௫.௰௮.ரோ.௮.௨௮. (௰௫) அதி.௰௫.௩௭. (௰௬) அதி.௰௫.௩௭. (௰௭) அதி.௰௯.௨௫. நீதி.௰௭.௰௭. (௰௯) அதி.௰௫.௩௪.(௨௧)அதி.௰௫.௰௬. ஆதி.௩௪.௩௰. ௧.சாமு.௰௩.௪. அதி.௨.௭. சக.௮.௰௩. (௨௨) அதி.௰௨.௰௧,௰௨. (௨௩) அதி.௰௫.௰௨.—(௰௭. அதி.)

மேலும் அகீதோபேல் அப்ஷாலோமை நோக்
கி, நான் பன்னீராயிரம்பேரைத்தெரிந்துகொண்
டு எழுந்து, இன்றிரவு தாவீதைத்தொடரவிடும்.-
௨ அவன் இளைத்து மெலிவடைந் திருக்கையில்
நான் அவன்மேற் பாய்ந்து, அவனைப்பயப்படுத்
துவேன்: அவனோடுகூடிய சனங்கள் யாவரும்
அவனைவிட்டு ஓடி விடுவார்கள்; நான் இராசா
௩ வைமாத்திரம்சங்கரிப்பேன்:—சனங்கள்சமஸ்த
ரையும் உன்னிடத்தில் திரும்பக்கொண்டுவரு
வேன்: நீ தேடுகிறவன் விழுந்தால் யாவரும்
வந்து விட்டதுபோலாகும்: சனங்கள் சமஸ்த
௪ ருஞ் சமாதானமாயிருப்பார்களென்றான்.—அந்த
வாக்கு அப்ஷாலோமுக்கும், இஸரவேலின்முதி
௫ யோர்அனைவருக்கும்நலமாகத்தோன்றிற்று.-அப்
ஷாலோம் அர்கீயனாகிய ஊஷாயையும் அழைத்
துவாருங்கள், அவன்வாக்குமின்னதென்றுகேட்
௬ போமென்றான்.-ஊஷாய்அப்ஷாலோமிடத்தில்
வர,அப்ஷாலோம்அவனைநோக்கி,அகீதோபேல்
இன்னஇன்னபிரகாரஞ்சொன்னான்:அவன்வாக்
கின்படிசெய்வோமா; அல்லவெனில் நீ சொல்
௭ லென்றுகேட்க,-ஊஷாய் அப்ஷாலோமைநோக்
கி,அகீதோபேல் சொன்னமந்திராலோசனை இந்
௮ தச்சமயத்துக்குத் தகாதென்றான்.—மேலும் ஊ
ஷாய்,உன்பிதாவும்அவன்சனங்களும்பராக்கிரம
சாலிகளென்றும்,வெளியிலேதன்குட்டிகளைப்ப
றிகொடுத்த கரடிபோல மனங்கசந்திருக்கிறார்க
ளென்றும், உமக்குத்தெரியும்: அன்றியும் உம்மு
டையபிதாயுத்தவீரன்,அவர் இரவிலே சனங்களு
௯ டன்தங்கமாட்டார்.-அவர்இப்பொழுதுஒருகுழி
யிலாவது, வேறெவ்விடத்திலாவது ஒளித்திருப்
பார்: ஆரம்பத்தில் அவர்களில் சிலர் விழுவார்க
ளாகில், அதைக்கேட்கும் யாவரும், அப்ஷாலோ
மைப் பின்பற்றுஞ் சனங்களுக்குள்ளே சங்கார
௰ முண்டாயிற்றென்பார்கள்.—அப்பொழுது சிங்
கத்தின் இருதயத்துக்கொப்பான இருதயமுள்ள
தைரியவானுங் கரைந்துபோவான்: உம்முடை
ய பிதா பராக்கிரமசாலியென்றும், அவரோடி
ருப்பவர்களும் பராக்கிரம வீரர்களென்றும் இஸ
௰௧ ரவேலரனைவருக்குந்தெரியும்.—ஆதலால் தாண்
முதல் பேர்ஷேபாவரைக்குமுள்ள சமஸ்த இஸ
ரவேலரும், கடற்கரையிலுள்ள எண்ணிறந்த ம
ணல்போலச் சாதாரணமாக உம்மிடத்தில் ஏக
மாய்க் கூடிவரவும், நீரே யுத்தத்துக்குப் புறப்ப
டவும் வேண்டுமென்பதே என் மந்திராலோச
௰௨ னை.—அதினால் நாம் அவரைக்கண்டு பிடிக்கும்
எவ்விடத்திலும், பூமியின்மேலே பனிபெய்வது
போல் அவர்மேல் விழுவோம்: அவரோடுகூடி
யசனங்களில் ஒருவனும்மீந்திருக்கமாட்டான்.-
௰௩ இன்னும் அவர் ஒருநகரத்திற் புகுந்துவிட்டால்,
இஸரவேலர் சமஸ்தருங்கயிறுகளைக் கொண்டுவ
ர,நாம் ஒருபொடிக்கல்லும்அங்கேகாணப்படாத
படிஅதை நதியிலே தள்ளிவிடுவோமென்றான்.—
யெகோவா அப்ஷாலோமேலே தீமையைவ ௰௪
ருவிக்கும்பொருட்டு, அவர்அகீதோபேலின் உத்
தம மந்திராலோசனையை வியர்த்தமாக்க விதித்
திருந்தார். ஆதலால் அப்ஷாலோமும், இஸரவே
லர் சமஸ்தரும், அகீதோபேலின் மந்திராலோச
னையைப் பார்க்கிலும் அர்கீயனாகிய ஊஷாயின்
மந்திராலோசனை அதியுத்தமமென்றார்கள்.
பின்புஊஷாய்ஆசாரியர்களாகியசாதோக்கை ௰௫
யும், அப்யாதாரையும்நோக்கி, அப்ஷாலோமுக்
கும், இஸரவேலின் முதியோருக்கும், அகீதோ
பேல் கொடுத்த மந்திராலோசனை இன்னதென்
றும், தான் கொடுத்த மந்திராலோசனை இன்ன
தென்றுஞ்சொன்னான்.—ஆதலால் நீங்கள் சீக்கிர ௰௬
மாகத்தாவீதுக்காளனுப்பி, இன்றிரவு வனாந்தர
வெளிகளிலே தங்காமல் இராசாவும், அவரோ
டுகூடிய சகல சனங்களும் விழுங்கப்படாதப
டி, அக்கரைப்படவேண்டுமென்று அவருக்குச்
சொல்லுவியுங்களென்றான்.—யோனாதானும், அ ௰௭
கீமாத்சும் நகரத்திற்பிரவேசிக்கக் காணப்படாத
படி ஐன்ரோகேலில்தரித்திருந்தார்கள்; ஒருசிறு
பெண்வந்து அவர்களுக்குச்சொல்ல, அவர்கள்
போய்த்தாவீது இராசாவுக்குத்தெரிவித்தார்கள்.—
அவர்களை ஒரு பாலகன் கண்டு, அப்ஷாலோ ௰௮
முக்கு அறிவித்தான்: அவர்களிருவருஞ் சீக்கிர
மாய்ப்போய், பகூரீமிலுள்ள ஒருவன் வீட்டிற்
பிரவேசித்து, அவன்முற்றத்திலிருந்தகிணற்றில்
இறங்கினார்கள்.— வீட்டுக்காரி ஒரு திரையை ௰௯
எடுத்துக் கிணற்றின் வாயிலேவிரித்து, அதின்
மேலே அரைத்ததானியத்தைப் பரவினாள்; அதி
னால் காரியம் வெளிப்படவில்லை.—பின்பு அப் ௨௰
ஷாலோமின் பணிவிடைக்காரர் அந்தவீட்டிலி
ருக்கிற ஸ்திரியினிடத்தில்வந்து, அகீமாத்சும்
யோனாதானும் எங்கேயென்றுகேட்க, அந்தஸ்
திரி அவர்களுடனே, அவர்கள் நீரோடைக்கப்
பாலே போய்விட்டார்களென்றாள். இவர்கள்
அவர்களைத்தேடிக்கண்டடையாமல்யெருஷலே
முக்குத் திரும்பிவிட்டார்கள்.—இவர்கள் புறப் ௨௧
படவும் அவர்கள் கிணற்றினின்றும் ஏறிவந்து,
தாவீது இராசாவுக்குத்தெரிவித்து, அவனைநோக்
கி, அகீதோபேல் உமக்குவிரோதமாய் மந்திரா
லோசனை செய்திருக்கிறான்: ஆதலால் எழுந்து,
சீக்கிரமாக நதியைக்கடந்துபோய்விடுங்களென்
றார்கள்.—அதினால் தாவீதும், அவனோடுகூடிய ௨௨
சகல சனங்களும் எழுந்து, யோர்தானைக்கடந்
துபோனார்கள்: பொழுதுவிடிந்து யோர்தானைக்
கடந்துபோகாமல்நின்றவர்கள் ஒருவருமில்லை.
தன்மந்திராலோசனையை அங்கிகரிக்கவில்லை ௨௩
யென்று அகீதோபேல்கண்டு, தன்கழுதையைப்
பண்ணுறுத்தி, அதில் ஏறிக்கொண்டு,தன்நகரத்
திலுள்ள தன்வீட்டுக்குப்போய், தன்குடும்பத்தா

(௨)உபா.௨௫.௰௮. அதி.௰௬.௰௪. சக.௰௩.௭.(௪)௧.சாமு.௰௮.௨௰.(௮)நியா.௰௮.௨௫. ஓசி.௰௩.௮.(௰)யோசு.௨.௰௧. (௰௧) நியா.௨௰.௧. ஆதி.௨௨.௰௭. (௰௪) அதி.௰௫.௩௧,௩௪. (௰௫) அதி.௰௫.௩௫. (௰௬) அதி.௰௫.௨௮. (௰௭) அதி.௰௫.௨௭,௩௬. யோசு.௨.௪,. யோசு.௰௫.௭. (௰௮) அதி.௰௬.௫. (௰௯) யோசு.௨.௬. (௨௰) யாத்.௧.௰௯. யோசு.௨.௪,௫. (௨௧) வச.௰௫,௰௬. (௨௩) அதி.௰௫.௰௨. ௨.இரா.௨௰.௧. மத்.௨௭.௫.

ருக்கு நிருவாகம்பண்ணிவைத்துவிட்டு, நான்று
கொண்டுசெத்தான், அவன் தன்பிதாவின் பிரே
௨௪ தவறையில் அடக்கம்பண்ணப்பட்டான்.—தாவீ
து மகனயிமிற்சேர, அப்ஷாலோமும், அவனோ
டேகூடிய சகல இஸரவேலரும், யோர்தானைக்க
டந்துபோனார்கள்.
௨௫ அப்ஷாலோம் யோவாப்புக்குப்பிரதியாக அ
மாசாவைச்சேனாபதியாக்கினான்: இந்த அமாசா
நாகாஷின் புத்திரியும், சேருயாவின் சகோதரி
யும்,மோவாபின்மாதாவுமாகிய அபீகயிலைச்சேர்ந்
த இஸரவேலனாகிய இத்ராயென்னும்பெயர்கொ
௨௬ ண்டவனுடையபுத்திரன்.—இஸரவேலரும், அப்
ஷாலோமும், கீலியாத்தேசத்தில் பாளையமிறங்
கினார்கள்.
௨௭ தாவீது மகனயிமிற் சேர்ந்தபொழுது, அம்
மோன்சந்ததியாரிலுள்ள ரப்பாவில் நாகாஷின்
புத்திரனாகியஷோபியும், லோதேபாரிலுள்ளஅம்
மியேலின் புத்திரனாகிய மாகீரும், ரொகெலிமி
௨௮ லுள்ளகிலியாத்தியனாகிய பர்சில்லாயும்,—சனங்
கள் பசியும், இளைப்பும், தாகமுமாயிருக்கிறார்க
ளென்று, மெத்தைகளையும், கலங்களையும், மட்
பாத்திரங்களையும், தாவீதும் அவனோடேகூடிய ச
௨௯ னங்களும்புசிப்பதற்கு,-கோதுமையையும்,வாற்
கோதுமையையும், மாவையும், வறுத்ததானியத்
தையும், பெரும்பயற்றையும் சிறுபயற்றையும்,
வறுத்தசிறுபயற்றையும்,தேனையும்,நெய்யையும்,
ஆட்டையும், பசுப்பாலின் அடைக்கட்டியை
யுங்கொண்டுவந்தார்கள்.

## ௰௮. அதிகாரம்.

௧. தாவீது சேனைகளையனுப்பல்: ௬. இஸரவேலர் தோல்வியடைதல்: ௯. அப்ஷாலோம் அதமாதல்: ௰௮. அப்ஷாலோமின் தம்பத்தைக்குறித்தல்:௰௯.தாவீது அப்ஷாலோமின் மரணச்செய்தியைக்கேட்டல்: ௩௩.தாவீதுபுலம்பல்.

தாவீதுதன்னோடிருந்தசனங்களைத்தொகையிட்
டு,அவர்களுக்குள்ஆயிரவருக்குஅதிபதிகளையும்,
நூறுபேருக்கு அதிபதிகளையும் ஏற்படுத்தினான்.-
௨ பின்பு தாவீதுசனங்களில் மூன்றிலொருபங்கை
யோவாப்பின்வசமாகவும்,மூன்றிலொருபங்கை
ச்சேருயாவின் புத்திரனும்யோவாபின் சகோதர
னுமாகிய அபீஷாய் வசமாகவும், மூன்றிலொரு
பங்கைக் கித்தியனாகிய இத்தாயி வசமாகவும் அ
னுப்பினான். அன்றியும் இராசா சனங்களை
நோக்கி, நானும் உங்களுடன் வருகிறேனென்
௩ றான்.-சனங்கள், நாங்கள் தப்பியோடினாலும்,அ
வர்கள் எங்கள்மேல் சிந்தைவையார்கள்; எங்க
ளில் பாதிப்பேர் இறந்துபோனாலும், அது ஒரு
பொருளென்று எண்ணமாட்டார்கள்: நீரோ,எங்
களில்பதினாயிரவருக்குச்சரி: நீர்புறப்படவேண்
டாம்:நீர் நகரத்தினின்று எங்களுக்கு உதவிசெய்
௪ தால்நலமென்றார்கள்.-அதற்குஇராசா அவர்களை
நோக்கி, உங்கள் பார்வைக்கு நலமாகத்தோன்று
கிறதைச்செய்வேனென்றான். இராசா வாசலுக்
குச்சமீபத்தில் நிற்க, சனங்களெல்லாரும் நூறு
பேரும், ஆயிரவருமாகப் புறப்பட்டுப்போனார்
கள்.—அப்பொழுது இராசா யோவாப்பையும், அ ௫
பீஷாயையும், இத்தாயியையும்நோக்கி, என்னி
மித்தம் வாலிபனாகிய அப்ஷாலோமைமிருதுவா
கநடத்துங்களென்று கட்டளையிட்டான். இரா
சா அப்ஷாலோமைக்குறித்துச்சேனாபதிகள் யா
வருக்குங் கட்டளையிட்டதைச்சனங்கள் சகல
ருங் கேட்டிருந்தார்கள்.
பின்பு சனங்கள் இஸரவேலருக்கு விரோத ௬
மாய் வயல்வெளிக்குப் புறப்பட்டார்கள்: யுத்
தம் எப்ராயீமிலுள்ள ஒருகாட்டில் நடந்தது.—
அதில் இஸரவேல் சனங்கள் தாவீதின் தாசரின் ௭
முன் கொலைசெய்யப்பட்டார்கள், அன்றைத்தி
னம் இருபதினாயிரஞ்சனங்கள் சங்கரிக்கப்பட்
டார்கள்.—யுத்தம் தேசமெங்கும் பரந்தது: அதி ௮
னால் அன்றைத்தினத்தில் கட்கம்பட்சித்ததிலும்,
காடுபட்சித்த சனம் அதிகம்.
அப்ஷாலோம் தாவீதின் பணிவிடைக்கார ௯
ருக்கு எதிர்ப்பட்டான். அப்ஷாலோம் ஒரு
கோவேறு கழுதையின்மேல் ஏறிப்போகையில்,
அந்தக்கோவேறுகழுதை ஒருபெரிய அல்லோன்
மரத்தின் நெருங்கியகிளைகளுக்குக் கீழாகச்செல்
ல, அப்ஷாலோமின்தலை அல்லோன் மரத்திலே
மாட்டிக்கொண்டது, அதினால் அவனைச் சுமந்
த கோவேறுகழுதை ஓடிவிட, அவன் வானத்துக்
கும்பூமிக்கும் இடையேதொங்கினான்.-அதை ஒ ௰
ருவன்கண்டு,யோவாப்பைநோக்கி, கேளும், அ
ப்ஷாலோம் ஒரு கருவாலிமரத்திலே தொங்கக்க
ண்டேனென்றுசொல்ல,-தனக்கு அதைத் தெரி ௰௧
வித்த அந்த மனிதனை நோக்கி, நீ அவனைக்கண்
டாயே, நீ ஏன் அவனைத்தரையிலேவிழ அடிக்க
வில்லை;நான்பத்து ஷேக்கல் வெள்ளியும்,ஒரு
கச்சுந் தருவேனேயென்றான்.—அந்த மனிதன் ௰௨
யோவாப்பைநோக்கி,என்கையிலே நான் ஆயி
ரம் ஷேக்கல் வெள்ளிவாங்கினாலும், இராசா
வின் புத்திரனுக்குவிரோதமாக என் கையைநீட்
டமாட்டேன்: நாம் கேட்டுக்கொண்டு நிற்க,
வாலிபனாகிய அப்ஷாலோமை ஒருவருந்தொ
டப்படாதென்று இராசா உமக்கும், அபீஷாய்க்
கும், இத்தாயிக்குங் கட்டளையிட்டாரே.—இரா ௰௩
சாவுக்கு ஒருகாரியமும் மறைவாயிருக்கமாட்
டாது, ஆதலால் நான் அதைச்செய்தேனாகில்,
என் பிராணனுக்கே விரோதமாகச் செய்வேன்:
நீரும் எனக்கு விரோதமாயிருப்பீர் என்றான்.—
யோவாப் நான் உன்னுடனே தாமதித்து நிற்க ௰௪
முடியாதென்றுசொல்லி, தன் கையிலேமூன்று
வல்லயங்களை எடுத்து, அல்லோன் மரத்தின்மத்
தியில்உயிருடனேதொங்குகிறஅப்ஷாலோமின்
மார்பில் அவைகளினாலே உருவக்குத்தினான்.—
யோவாப்பின் ஆயுததாரிகளாகிய பத்துவாலிபர் ௰௫

(௨௪) ஆதி.௩௨.௨. யோசு.௰௩.௨௬. (௨௫) ௧.நாளா.௨.௰௬,௰௭. ௧.நாளா.௨.௰௩,௰௬. (௨௭) அதி.௰.௧. அதி.௯.௪. அதி.௰௯.௩௧,௩௨. (௨௮) அதி.௰௬.௨.—(௰௮. அதி. ௨.) அதி.௰௫.௰௯. (௩) அதி.௨௧.௰௭. (௫) வச.௰௨.(௬)யோசு.௰௭.௰௫,௰௮. (௰௨) வச.௫.

அப்ஷாலோமைச்சூழ்ந்து,அவனை அடித்துக்கொ
௰௬ ன்றுபோட்டார்கள்.—அப்பொழுது யோவாப் எக்காளத்தையூதி, சனங்களைத்தடைப்படுத்த, அவர்கள்இஸரவேலரைத்தொடராமல்திரும்பிவிட்
௰௭ டார்கள்.—பின்பு அவர்கள் அப்ஷாலோமை எடுத்துக்காட்டிலுள்ள ஒருபெரியகுழியிலேவீசி, அவன்மேல் ஒருபெரியகற்குவியலைக்குவித்தார்கள்: இஸரவேலர்யாவரும் தங்கள்தங்கள் கூடாரங்களுக்கு ஓடிப்போனார்கள்.
௰௮ அப்ஷாலோம் உயிரோடிருக்கையில், என் பேரை வழங்கப்பண்ண எனக்குப்புத்திரனில்லையென்றுசொல்லி, தன்னிமித்தம் இராசபள்ளத்தில் ஒரு தூணைநிறுத்தி, அந்தத்தூணுக்குத் தன்பெயரைத்தரித்தான்: அது இந்நாள்வரைக்கும் அப்ஷாலோமின் தூண் என்றுவழங்கிவருகின்றது.
௰௯ சாதோக்கின் புத்திரனாகிய அகிமாத்ஸ், யெகோவா, இராசாநிமித்தம் அவர் சத்துருக்களிடத்தில் பழிவாங்கின சமாசாரங்களை இராசாவுக்குத் தெரிவிக்கும்படி நான் சீக்கிரம்போக
௨௰ விடுமென்று கேட்க,—யோவாப் அவனை நோக்கி, நீ இன்றைத்தினம் சமாசாரங் கொண்டுபோகப்படாது, வேறொரு நாளைக்குச் சமாசாரங் கொண்டுபோகலாம்: இராசாவின் புத்திரன் இறந்துபோனான். அதினிமித்தம் நீ இன்றைத்தினம் ஒரு சமாசாரமுங்கொண்டுபோகவேண்டா
௨௧ மென்றான்.—பின்பு யோவாப் கூஷியை நோக்கி, நீ கண்டதை இராசாவுக்குப்போய்ச் சொல்லென்றுசொல்ல, கூஷி யோவாப்பைத்தாழ்ந்து
௨௨ வணங்கிக்கொண்டு, ஓடிப்போனான்.—சாதோக்கின் புத்திரனாகிய அகிமாத்ஸ் திரும்பவும் யோவாப்பை நோக்கி, எப்படியும் நான் கூஷிக்குப் பின்னோடவிடுமென்றுகேட்க, யோவாப் என் மகனே, சொல்வதற்குச் சமாசாரமில்லாதிருக்க, நீ ஓடவேண்டியதென்னவென்று சொல்ல,—
௨௩ இவன் எப்படியும் நான் ஓடவிடுமென்றான். அதற்கவன் ஓடென்றான். அப்பொழுது அகிமாத்ஸ் சமபூமிவழியாய் ஓடிக் கூஷிக்குமுந்தி
௨௪ விட்டான்.—அந்தச்சமயத்தில் தாவீது இரண்டு வாசலுக்குமிடையிலிருந்தான்: காவலாளன் வாசலுக்குமேலுள்ள அரமியத்திலேறிச் சுவரருகே நின்று, ஏறிட்டுப்பார்த்து, ஒருமனிதன் தனித்து
௨௫ ஓடிவருகிறதைக்கண்டான்.—காவலாளன் கூப்பிட்டு இராசாவுக்குச்சொன்னான், இராசா, அவன் தனித்திருந்தால் அவன்வாயிலே சமாசாரமிருக்குமென்றான். அவன் துரிதமாய் ஓடிச்சமீபித்
௨௬ துவர,—காவலாளன் இன்னும் ஒருவன் ஓடிவருகிறதைக்கண்டான்: பின்பு காவலாளன் வாசற்காவற்காரனைக் கூப்பிட்டு, இன்னுமொருவன் தனித்து ஓடிவருகிறானென்றான். இராசா அவனும் சமாசாரங்கொண்டுவருகிறானென்றான்.—
௨௭ மேலுங்காவலாளன், முந்தினவனுடையஓட்டம் சாதோக்கின் புத்திரனாகிய அகிமாத்சுடைய ஓட்டம்போலிருக்கின்றதென்றான். அதற்கு இராசா அவன் நல்லமனிதன், மங்கல சமாசாரங்கொண்டு
வருகிறானென்றான்.—அகிமாத்ஸ் இராசாவைக் ௨௮
கூப்பிட்டு, வாழ்கவென்று சொல்லி, இராசாவுக்குமுன் தரையிலே முகங் குப்புறவிழுந்து, என் ஆண்டவனாகிய இராசாவுக்குக்கை ஓங்கிய மனிதரை ஒப்பித்துவிட்ட உமது தேவனாகிய யெகோவாவுக்குஸ்தோத்திரமென்றான்.-
அப்பொழுது இராசா, வாலிபனாகிய அப்ஷா ௨௯
லோம் சுகமேயிருக்கிறானாவென்றுகேட்க, அகிமாத்ஸ், யோவாப் இராசாவின் தாசனையும், உமதடியானையும் அனுப்புகையில் ஒருபெரிய கலகம் நடக்கக்கண்டேன், அதின்னதென்று நான்
அறியேனென்றான்.—இராசா நீ போய் அங்கே ௩௰
நில்லென்றுசொல்ல, அவன் ஒரு பக்கத்திலே
போய்நின்றான்.—கூஷியும்வந்தான்; கூஷி, என் ௩௧
ஆண்டவனே, இராசாவே, சமாசாரம்: உமக்கு விரோதமாய் எழுந்த சமஸ்தரிடத்திலும் இன்றைத்தினம் யெகோவா பழிவாங்கினாரென்
றான்.—இராசா கூஷியைநோக்கி, வாலிபனாகிய ௩௨
அப்ஷாலோம் சுகமாயிருக்கிறானாவென்று கேட்க, கூஷி அதற்கு உத்தரமாக, என் ஆண்டவனாகிய இராசாவின் சத்துருக்களும், உமக்குவிரோதமாய் எழும்பும்சகலரும், அந்த வாலிபனைப் போலாவார்களாகவென்றான்.
அப்பொழுது இராசா மிகவுங்கலங்கி, வாச ௩௩
லுக்குமேலுள்ள அறைக்குட்பிரவேசித்து, அழுதான்: அவன்போகையில் ஐயோ!என்மகனாகிய அப்ஷாலோமே, என்மகனே, என்மகனாகியஅப்ஷாலோமே, உனக்காகநான்மரணமடைந்தால்; நலம்:ஐயோ! அப்ஷாலோமே,என்மகனே, என் மகனேயென்றுசொல்லிக்கொண்டுபோனான்.

## ௰௯. அதிகாரம்.

௧. தாவீது துக்கப்பட யோவாப் ஆற்றல்: ௯. இராசாவைத்திரும்பிக்கொண்டுவரும்படி இஸரவேலர்எத்தனஞ்செய்தல்: ௰௧. யூதாவமிசத்தாரைஏவும்படிஆசாரியரையனுப்பல்: ௰௬.ஷிமியியின் குற்றத்தை மன்னித்தல்: ௨௪. மெபீபோஷேத்தின்மேற்குற்றஞ்சாற்றல்: ௩௧. பர்சில்லாயையனுப்பல்: அவன்புத்திரனாகிய கிமாமைத் தன்னிடத்தில்சேர்த்தல்: ௪௧. இராசாவைக்குறித்து யூதேயரும் இஸரவேலரும் விவாதஞ்செய்தல்.

இராசா அப்ஷாலோமுக்காகஅழுதுபுலம்புகிறு ௧
ரென்று யோவாப்புக்குத் தெரிவிக்கப்பட்டது.—
இராசாதன் புத்திரனுக்காகத்துக்கித்துக்கொண்டி ௨
ருக்கிறாரென்று அன்றைத்தினம் சனங்கள்கேள்விப்பட்டார்கள்: அதினிமித்தம் அந்நாளில் அடைந்த வெற்றி,சனங்கள் சமஸ்தருக்கும்புலம்ப
லாய்முடிந்தது.—யுத்தத்தினின்று தோற்றோடுகிற ௩
வர்கள் வெட்கப்பட்டுத்திருடர்போல் ஓடுகிறவண்ணம், சனங்கள் அன்றைத்தினம் நகரத்திற்பு
குந்தார்கள்.—இராசா தன்முகத்தைமூடிக்கொண் ௪
டு,ஐயோ!என்மகனாகியஅப்ஷாலோமே,ஐயோ!

(௰௭) யோசு.௭.௨௬. (௰௮) ஆதி.௰௪.௰௭. அதி.௰௪.௨௭. (௨௪) ௨.இரா.௯.௰௭. (௩௩) அதி.௰௯.௪.—(௰௯. அதி. ௩) ௵.௩௨. (௪) அதி.௰௫.௩௰. அதி.௰௮.௩௩.

அப்ஷாலோமே, என்மகனே, என்மகனேயென்
௫ று உரத்தசத்தமிட்டழுதான்.—யோவாப்,வீட்டி
லே இராசாவிடத்திற்போய், நீர் உம்முடையசத்
துருக்களை நேசித்து, உமது மித்திரரை வெறுக்
கிறீர். அதினால் இன்றைத்தினம் உமது பிராண
னையும், உமது புத்திரபுத்திரிகளின் பிராணனை
யும், உமது மனைவியரின் பிராணனையும், உமது
வைப்பாட்டிகளின் பிராணனையும் இரட்சித்த
உமதுதாசர் சமஸ்தருடைய முகத்தையும்நாணப்
௬ பண்ணினீர்.—நீர் அதிபதிகளையும் பணிவிடைக்
காரர்களையும்நேசிக்கவில்லை; இன்றைத்தினம்இ
தை நீர்தெரியப்படுத்திப்போட்டீர், நாங்களெல்
லாரும் இன்றைத்தினம் இறந்துபோனாலும்,அப்
ஷாலோம்மாத்திரம்உயிரோடிருந்தால்,உமக்குச்
சந்தோஷமாயிருக்குமென்று நான் அறிகிறேன்.-
௭ இப்பொழுது நீர் எழுந்து வெளியேபுறப்பட்டு,
உமது தாசரோடே ஆறுதலாய்ப்பேசும்: நீர் வெ
ளியே போகாதிருந்தால், இன்றிரவு உம்முடன்
ஒருவருந் தரித்திருக்கமாட்டார்களென்று யெ
கோவாமேல் ஆணையிடுகிறேன்: அது உமதுசி
றுபிராயமுதல், இதுவரைக்கும் உமக்குநேரிட்
ட சகல தீமைகளிலும் அதிகதீமையாயிருக்கு
௮ மென்றான்.—அப்பொழுது இராசாஎழுந்து, வாச
லிலிருந்தார். இராசா வாசலிலிருக்கிறாரென்று
சொல்லிச் சமஸ்த சனங்களுக்குந் தெரிவிக்க,
சனங்கள்யாவரும் இராசாவின் சமுகத்தில்வந்
தார்கள்: இஸரவேலரோ தங்கள் தங்கள் கூடா
ரங்களுக்கு ஓடிவிட்டார்கள்.
௯ பின்பு இஸரவேல் கோத்திரமெங்குமுள்ள ச
மஸ்த சனங்களும்கலகம்பண்ணி, இராசா எங்க
ளை எங்கள்சத்துருக்கள்கையினின்றும் விடுவித்
தும், பெலிஸ்தியரின் கையினின்றும் இரட்சித்
தும்வந்தார்; இப்பொழுது அப்ஷாலோமினிமித்
௰ தம்தேசத்தைவிட்டோடிவிட்டார்.—நாம் அபி
ஷேகம் பண்ணிநமக்கு ஏறப்படுத்திக்கொண்ட
அப்ஷாலோம்யுத்தத்திலேஇறந்துபோனான். ஆத
லால்இப்பொழுது இராசாவைத்திரும்பக்கொண்
டுவராமல்மௌனமாயிருக்கிறதென்னவென்றார்
௰௧ கள்.-பின்புதாவீது இராசா, ஆசாரியர்களாகியசா
தோக்கிடத்திலும்,அப்யாதாரிடத்திலும்ஆளனுப்
பி, நீங்கள்யூதாவின்முதியோரைநோக்கி, இஸர
வேலர் சமஸ்தரும்பேசும்வாக்கு, இராசாவினி
டத்தில் அவன்வீட்டில்வந்ததைகண்டும்,இராசா
வைத்தன்வீட்டுக்கழைத்துவராமல் நீங்கள் தாம
௰௨ திக்கிறதென்ன.—நீங்கள் என்சகோதரர், என்னெ
லும்பு,என்மாமிசம்:இப்படியிருக்க, நீங்கள்இரா
சாவைத்திரும்ப அழைத்துக்கொண்டுவராமல்தா
௰௩ மதிக்கிறதென்னவென்றும்,—நீங்கள் அமாசாவை
நோக்கி, நீ என்னெலும்பும், என்மாமிசமுமல்ல
வா; இனிநீநித்தமும்எனக்குமுன்பாகயோவாப்
புக்குப் பிரதிசேனாபதியாயிராவிட்டால், தே
வன்எனக்குஅதின்படியும்,அதற்கதிகமுஞ்செய்
வாராகவென்றுஞ் சொல்லுங்களென்றுசொல்லி
அனுப்பினான்.—யூதாவின் சமஸ்தசனங்களுடை ௰௪
ய இருதயத்தையும் ஒருவனுடைய இருதயத்
தைப்போல இசையப்பண்ணினதினால், அவர்
கள் இராசாவுக்கு, நீரும், உம்முடையதாசர்யா
வரும், திரும்பி வாருங்களென்றுசொல்லியனுப்
பினார்கள்.—அதினால் இராசா திரும்பியோர்தான் ௰௫
சமீபத்துக்குவந்தபொழுது, யூதா சனங்கள் இரா
சாவை எதிர்கொண்டுபோய், யோர்தானைக்கடக்
கப்பண்ணும்படி கில்காலுக்குப்போனார்கள்.
பகூரீமிலுள்ள பேன்யமீனியனானகேராவின் ௰௬
புத்திரனாகியஷிமியியும்விரைந்து,தாவீதுஇராசா
வை எதிர்கொள்ளும்படி யூதாவமிசத்தாரோடு
போனான்.—பேன்யாமீன் வமிசத்தாரில் ஆயிரம் ௰௭
பேரும், ஷவுலின்குடும்பத்துக்குப்பணிவிடைக்
காரனாகிய சீபாவும்,இவனோடுகூடியபுத்திரர்பதி
னைந்துபேரும், பணிவிடைக்காரர் இருபதுபே
ரும், அவனுடன்இராசாவுக்குமுன்பாகயோர்தா
னைக்கடந்துபோனார்கள்.—இராசாவின்பரிவாரத் ௰௮
தைக்கரைப்படுத்தவும், அவன்விரும்புங்காரியத்
தைநடத்தவும் ஒருபடகு அங்கேநின்றது. கேரா
வின்புத்திரனாகியஷிமியி, இராசா யோர்தானைக்
கடந்தமாத்திரத்தில் அவனுக்குமுன்னே விழுந்
து,—இராசாவைநோக்கி, என் ஆண்டவனே, ௰௯
என்குற்றத்தை மன்னியும், என்ஆண்டவனாகிய
இராசா யெரூஷலேமினின்றும் புறப்பட்டதி
னத்தில் உமது அடியான்செய்த விரோதத்தைச்
சிந்தையில்வையாமல், உமது நினைவுக்குத்தூர
மாக அதைவிட்டுவிடும்.—உமதுதாசனாகிய நான் ௨௰
பாவஞ்செய்தேன், அது எனக்குத்தெரியும்: ஆத
லால் என் ஆண்டவனாகிய இராசாவை எதிர்
கொள்ளும்படி புறப்படும்யோசேப்பின் வமிசத்
தார்யாவருக்கும்இன்றைக்கு முந்திக்கொண்டே
னென்றான்.—அதற்குச்சேருயாவின் புத்திரனாகி ௨௧
ய அபீஷாய், ஷிமியி யெகோவாவின் அபி
ஷேகனைத் தூஷணித்தபடியால் கொலைசெய்
யப்படவேண்டாமா என்றான்.—தாவீது, சேரு ௨௨
யாவின்புத்திரரே, என்னோடு உங்களுக்கென்ன
காரியம், நீங்கள் இன்றைத்தினம் ஏன் எனக்கு
விரோதமாயிருக்கிறீர்கள்; இஸரவேலின் தேசத்
தில் இன்றைத்தினம் யாவனாகிலுங்கொலைசெய்
யப்படலாமா; இன்றைத்தினம் நான் இஸரவே
லருக்கு இராசாவாயிருக்கிறேன், அது எனக்
குத்தெரியாதா என்றான்.—பின்பு இராசா ஷிமி ௨௩
யைநோக்கி, நீ கொலைசெய்யப்படமாட்டாய்
என்றான். அன்றியும்இராசாஅவனுக்காணையிட்
டுக்கொடுத்தான்.
ஷவுலின் புத்திரனாகிய மெபீபோஷேத்தும் ௨௪
இராசாவை எதிர்கொள்ளும்படிபோனான். இரா
சாபுறப்பட்ட நாள்முதல் சுகமே திரும்பிவரும்
நாள்வரைக்கும் அவன் தன்காலைச்சுத்திபண்ண
வுமில்லை, தன் தாடியைச்சிரைப்பிக்கவுமில்லை,

(௭) ஆதி.௩௪.௩. (௯) அதி.௰௫.௰௪. (௰௨) அதி.௫.௧. (௰௩) அதி.௰௭.௨௫. ரூத்.௧.௰௭.(௰௪)நியா.௨௰.௧.(௰௫)யோசு.
௫.௯. (௰௬) அதி.௰௬.௫. ௧.இரா.௨.௮. (௰௭) அதி.௯.௨,௰.(௰௯)௧.சாமு.௨௨.௰௫. அதி.௰௬.௫,௬. அதி.௰௩.௩௩.(௨௰)
அதி.௰௬.௫. (௨௧) யாத்.௨௨.௨௮. (௨௨) அதி.௰௬.௰. ௧.சாமு.௰௧.௰௩. (௨௩) ௧.இரா.௨.௮. (௨௪) அதி.௯.௬.

௨௫ தன் வஸ்திரங்களைத்தோய்க்கவுமில்லை.—அவன்
இராசாவை எதிர்கொள்ளும்படி யெருஷலே
முக்குவந்தபொழுது, இராசா அவனைநோக்கி,
மெபீபோஷேத்தே நீ என்னோடேவராமல்விட்
௨௬ டதென்னவென்றுகேட்க,—இவன், என் ஆண்ட
வனே, இராசாவே, என் பணிவிடைக்காரன்
என்னைவஞ்சித்தான்: உமதடியான் முடவனா
படியினாலே நானொருகழுதையைப்பண்ணுறுத்
தி, அதின்மேலேறிக்கொண்டு,இராசாவிடத்திற்
௨௭ போவேனென்றேன்.—அவன் என் ஆண்டவனா
கிய இராசாவிடத்தில் என்னைக்குறித்து வீண்ப
ழிச்சொல்லைப்பேசினான்; என் ஆண்டவனாகிய
இராசா ஒருதேவதூதனைப்போலிருக்கிறார்: ஆத
லால் உம்முடையபார்வைக்கு நலமாய்த்தோன்
௨௮ றுகிறதைச்செய்வீராக.—என் ஆண்டவனாகிய இ
ராசாவின் சமுகத்தில் என்பிதாவமிசத்தார் யாவ
ரும் செத்தவர்கள்போலிருந்தும், நீர் உமதடியா
னைஉமது போசனபீடத்தில் புசிப்பவர்களுடன்
இருக்க இடந்தந்தீர். இனி இராசாவிடத்தில் மு
றையிட எனக்கதிகாரம் எங்கேயென்றான்.—
௨௯ அதற்கு இராசாஅவனைநோக்கி, உன்காரியத்தை
நீ அதிகமாய் விவரிக்கவேண்டியதென்ன; நீ
யும் சீபாவும் நிலத்தைப்பங்கிட்டுக்கொள்ளுங்க
ளென்று நான்சொல்லியிருக்கிறேன் என்றான்.—
௩௰ அதற்கு மெபீபோஷேத் இராசாவை நோக்கி,
என் ஆண்டவனாகிய இராசா தன் வீட்டுக்குச்
சுகமே திரும்பிவந்துவிட்டாரே, அவன் சகல
மும் எடுத்துக்கொள்ளட்டுமென்றான்.
௩௧ கிலியாத்தியனாகிய பர்சில்லாயும் ரொகெலி
மிலிருந்துவந்து, இராசாவை யோர்தானுக்கக்க
ரைப்படுத்துவதற்கு இராசாவுடன்யோர்தானைக்
௩௨ கடந்துவந்தான்.—பர்சில்லாய் எண்பது வய
துள்ளவனாகி, மிகவும்விருத்தனாயிருந்தான்: அ
வன் மகாபெரிய மனிதனானபடியினாலே, இரா
சா மக்னாயிமிலேயிருக்கிறவரைக்கும் அவனுக்
௩௩ கு ஆகாரமனுப்பிவந்தான்.—இராசா பர்சில்லா
யைநோக்கி, நீ என்னுடன்கடந்துவா, நான்
யெருஷலேமில் உன்னை என்னுடனே வைத்
௩௪ து ஆதரித்துவருவேனென்று சொல்ல,—பர்சில்
லாய் இராசாவைநோக்கி, நான் இராசாவுடன்
யெருஷலேமுக்குவர, இன்னும் நான் எவ்வள
வுகாலத்துக்கு இருக்கப்போகிறேன். இன்றை
டே எனக்குஎண்பதுவயது: நான் நன்மைதீமை
௩௫ யின்னதென்று பகுத்தறிவேனா.—உமது தாசன்
போசனபானங்களின்சுவை அறியக்கூடுமா;பா
டகர் பாடினிகளுடைய கீதசத்தத்தை இனிக்
கேட்கக்கூடுமா; என் ஆண்டவனாகிய இராசா
வுக்கு உமதடியான் ஒரு பாரமாயிருக்கவேண்டி
௩௬ யதென்ன.—உமதடியான் யோர்தானைக்கடந்து
இராசாவுடன் கொஞ்சத்தூரம் வருவேன்: இரா
சா எனக்கு இவ்வளவு சம்பிரமந்தரவேண்டிய
௩௭ தென்ன.—உமதடியானாகிய நான் என் பிதா மா
தாக்களின் பிரேதவறையிருக்கிற என்நகரத்தில்
மரணமடையும்படி, என்னைத் திரும்பிப்போக
விடும். உமதடியானாகிய கிமாமைப்பாரும்; இ
வன் என் ஆண்டவனாகிய இராசாவுடன் வரட்
டும்; உமதுபார்வைக்கு நலமாய்த்தோன்றுவதை
இவனுக்குச் செய்வீராகவென்றான்.—அதற்குத் ௩௮
தரமாய் இராசா, கிமாம் என்னுடன் வரட்டும்,
உனக்கு நலமாய்த்தோன்றுவதை நான் அவனுக்
குச்செய்வேன்: அன்றியும் நீ என்னிடத்தில்
வேண்டும்பிரகாரம் நான் உனக்குச் செய்வே
னென்றான்.—சமஸ்த சனங்களும் யோர்தானைக் ௩௯
கடந்தார்கள். இராசா கரைப்பட்டமாத்திரத்தில்
பர்சில்லாயை முத்தஞ்செய்து, அவனை ஆசீர்வ
தித்தான்; பின்பு இவன் தன்சுயஸ்தானத்துக்குப்
போய்விட்டான்.—இராசா கில்காலுக்குப்போ ௪௰
னான், கிமாமும் அவனுடன்போனான்: யூதா
வின் சமஸ்தசனங்களும், இஸரவேலில் பாதிச்
சனங்களும், இராசாவைநடத்திக்கொண்டுபோ
னார்கள்.

மேலும் இஸரவேலர் சமஸ்தரும் இராசாவி ௪௧
னிடத்தில்வந்து, இராசாவைநோக்கி, எங்கள்
சகோதரராகிய யூதா சனங்கள் உம்மைக்கவர்ந்
து, இராசாவையும், அவர் குடும்பத்தாரையும்,
அவரோடுள்ள தாவீதின் சமஸ்த மனிதரையும்,
யோர்தானுக் கிக்கரைப்படுத்தினதென்னவென்
றுசொல்ல,—அதற்குத்தரமாய், யூதாவின் சமஸ்த ௪௨
சனங்களும் இஸரவேலரை நோக்கி, இராசா
எங்களுக்கு நெருங்கின உறவான்: இக்காரியத்
தினிமித்தம் நீங்கள் கோபிக்கவேண்டியதென்
ன; நாங்கள் இராசாவிடத்தில் சொற்பமாகிலும்
புசித்தோமா, அல்லது அவர் எங்களுக்கேதாகி
லுங் காணிக்கை தந்தாராவென்றார்கள்.—இஸர ௪௩
வேலர் யூதாவின் சனங்களைநோக்கி,இராசாவில்
எங்களுக்குப்பத்துப்பங்கு, தாவீதிடத்தில் உங்
களிலும் எங்களுக்கு உரித்ததிகம்: ஆதலால் நாங்
கள் இராசாவைத் திரும்ப அழைத்துவரும்படி
எங்கள் ஆலோசனையே முந்தாதபடிக்கு,நீங்கள்
எங்களைப்புறக்கணித்ததென்னவென்றார்கள். இ
ஸரவேலரின் வாக்கிலும் யூதாசனங்களின் வாக்
கு அதிக கடினமாயிருந்தது.

## ௨௰. அதிகாரம்.

௧. இஸரவேலர்கலகஞ்செய்கையில்ஷேபாசனங்
களைத் தன்னிடத்திற் சேர்த்தல்: ௩. தாவீது தன்
வீட்டிற்குத் திரும்பிவரல்: ௪. அமாசா சேனாப
தியாக ஏற்படுத்தப்பட்டபின்பு யோவாப்பால்
கொல்லப்படல்: ௰௪. ஆபேல் நகரத்தை முற்
றிக்கைசெய்தல்: ௰௬. ஷேபாவின் தலை ஒரு
ஸ்திரியால் யோவாப்புக்கு ஒப்பிக்கப்படல்:
௨௩. தாவீதின் அதிபதிகள்.

அந்தச் சமயத்திலே, பேன்யமீனியனும் பிக்ரீ ௧
யின் புத்திரனுமாகிய ஷேபாவென்று பெயருள்
ள பீலியாலின் மகன் ஒருவனிருந்தான்: அவன்

(௨௫) அதி.௰௬.௰௭. (௨௭) அதி.௰௬.௩. அதி.௰௪.௰௭,௨௰. (௨௮) ௧.சாமு.௨௬.௰௬. அதி.௯.௭,௰,௰௩. (௩௧) ௧.இரா.
௨.௭. (௩௨) அதி.௰௭.௨௭. (௩௪) சங்.௯௰.௰. (௩௭) ௧.இரா.௨.௭. எரே.௪௧.௰௮. (௩௯) ஆதி.௩௧.௫௫. (௪௧) வச.௰௫.
(௪௨) வச.௰௨. (௪௩) நியா.௮.௧. நியா.௰௨.௧.—(௨௰. அதி. ௧.) அதி.௰௯.௪௩. ௧.இரா.௰௨.௰௬. ௨.நாளா.௰.௰௬.

எக்காளமூதி, தாவீதிடத்தில் எங்களுக்கு ஒரு
பங்குமில்லை, ஈஷாயின் புத்திரனிடத்தில் எங்க
ளுக்கொரு சுதந்தரமுமில்லை: இஸரவேலரே,
நீங்கள் உங்களுங்கள் கூடாரங்களுக்குப்போய்
௨ விடுங்களென்றான்.—அதனால் இஸரவேலர் ஒவ்
வொருவரும் தாவீதைப் பின்பற்றாமல் திரும்பி,
பிக்ரீயின் புத்திரனாகிய ஷேபாவைப் பின்பற்றி
னார்கள்: யோர்தான் தொடங்கி யெருஷலேம்
வரைக்குமுள்ள யூதாவின் சனங்கள், தங்கள்
௩ இராசாவைச்சார்ந்திருந்தார்கள்.—தாவீது யெரு
ஷலேமிலே தன் வீட்டுக்குவந்து சேர்ந்தான்;
இராசா தான் வீட்டைக்காக்கும்படிவைத்துவிட்
டுப்போன தன் வைப்பாட்டிகளாகிய அந்தப்
பத்து ஸ்திரிகளையும் வருவித்து, காவல்வீட்டி
லிட்டு, அவர்களை ஆதரித்துவந்தான், அவர்களி
டத்தில் பிரவேசிக்கவில்லை. அவர்கள் மரணதி
னம்வரைக்கும் அடைக்கப்பட்டு, விதவைகள்
போலிருந்தார்கள்.
௪ பின்பு இராசா அமாசாவைநோக்கி, நீ மூன்று
நாளுக்குள்ளே யூதாவின்சனங்களின் சமுதாயத்
தையென்னிடத்தில்வரப்பண்ணு,நீயும் இவ்விடத்
௫ திலிருக்கவேண்டுமென்றான்.—அதினால் அமா
சா யூதாவின் சனங்களைக்கூடிவரச்செய்யும்படி
புறப்பட்டுப்போய்,குறித்தகாலத்தில்வராமல்நெ
௬ டுநேரமாய்த்தாமதித்திருந்தான்.—ஆதலால் தாவீ
து அபீஷாயைநோக்கி, அப்ஷாலோமைப்பார்க்
கிலும்பிக்ரீயின்புத்திரனாகியஷேபா அதிகதீங்கு
செய்வான்: அவன் மதில் சூழ்ந்த நகரங்களிற்பு
குந்து,நமக்குத்தப்பிக்கொள்ளாதபடிக்கு, நீ உன்
ஆண்டவனின் தாசரைக்கூட்டிக்கொண்டு அவ
௭ னைத்தொடர்ந்து போவென்றான்.—அப்பொழுது
யோவாப்பின் சனங்களும், கிரேத்தியரும், பெ
லேத்தியரும், பராக்கிரமசாலிகள்யாவரும் அவ
னைத்தொடரும்படி புறப்பட்டு, யெருஷலே
மைவிட்டு, பிக்ரீயின்புத்திரனாகிய ஷேபாவைப்
௮ பின் தொடரப்போனார்கள்.—அவர்கள் கிபியோ
னிலுள்ள பெரியகல்லினிடத்தில் சேர்ந்தபொ
ழுது, அமாசா அவர்களோடுவந்து சேர்ந்தான்.
யோவாப் தான் தரித்தவஸ்திரத்தை இறுக்கிக்கட்
டினான், அதின் மேலிட்டகச்சில் இடையிலே
உறையுடன் ஒருகட்கமிருந்தது; அவன் நடந்து
௯ போகையில் அதுநழுவிவிழுந்தது.—யோவாப்
அமாசாவை நோக்கி, என்சகோதரனே, சுகமா
யிருக்கிறாயாவென்று சொன்னான், யோவாப் அ
மாசாவை முத்தமிட, தன் வலதுகையினால் அ
௰ வன் தாடியைப்பிடித்தான்.—அமாசா யோவாப்
பின் கையிலிருந்த கட்கத்தைக்குறித்துச் சிந்தி
யாமலிருக்க, அவனை அவன் குடல்கள் தரையி
லே சரிந்துபோகத்தக்கதாக வயிற்றிலே ஒரு
குத்தாகக்குத்தினான், அவன் இறந்துபோனான்.
பின்பு யோவாப்பும், அவன் சகோதரனாகிய அ
பீஷாயும், பிக்ரீயின் புத்திரனாகிய ஷேபாவைத்
தொடர்ந்தார்கள்.—மேலும் யோவாப்பைச்சேர்ந் ௰௧
தவன் ஒருவன் சவத்தினருகேநின்று, யோவாப்
மேல் பிரியங்கொண்டு, தாவீதின் பட்சமாயிருக்
கிற எவனும் யோவாப்பைப் பின்பற்றிப்போ
வானாகவென்றான்.—அமாசா,இராசவழியின் மத் ௰௨
தியில் இரத்தத்திலேபுரண்டு கிடந்தபடியால், ச
னங்கள் யாவருந்தரித்துநிற்பதை அவன் கண்
டு, அமாசாவை வழியிலிருந்து வயலிலே இழுத்
துவிட்டு, அவனருகே வருகிறவர்களெல்லா
ரும் பின்னுந் தரித்துநிற்பதைக்கண்டு, அவன்
மேல் ஒருவஸ்திரத்தைப்போட்டான்.—அவன் ௰௩
இராசவழியினின்று நீக்கப்பட்டபின்பு, பிக்ரீ
யின் புத்திரனாகிய ஷேபாவைத்தொடர, சமஸ்த
சனங்களும் யோவாப்புக்குப்பின்சென்றார்கள்.
அவன் இஸரவேல் கோத்திரமெங்கும்போய் ௰௪
ஆபேலுக்கும், பேத்மாகாவுக்கும், சமஸ்தபீரிய
ரினிடத்துக்குஞ் சென்றான்: அவர்களும் கூ
டிவந்து அவனைத்தொடர்ந்தார்கள்.—அவர்கள் ௰௫
போய், பேத்மாகாவிலுள்ள ஆபேலில் அவனை
முற்றிக்கைபோட்டு, நகரத்துக்குச்சமீபத்திலே
கொத்தளம்போட்டார்கள்: யோவாப்புடனிருந்
த சகலசனங்களும் மதிலைவிழ இடித்தார்கள்.
அப்பொழுது நகரத்தினின்று விவேகமுள்ள ௰௬
ஒரு ஸ்திரி, கேளுங்கள், கேளுங்கள், நான் யோ
வாப்பிடத்தில், பேசும்படி சமீபித்துவர அவ
ருக்குச்சொல்லுங்களென்றுகூப்பிட்டாள்.—அ ௰௭
வன் அவளுக்குச் சமீபித்தபொழுது, அந்தஸ்தி
ரி, யோவாப் நீரோவென்றுகேட்க, அவன் நான்
தானென்றான். பின்பு அவள் அவனை நோக்கி,
உமதடியாள்சொல்லும் வாக்கைக்கேளுமென்று
சொல்ல, அவன் கேட்கிறேனென்றான்.—அப் ௰௮
பொழுது அவள், பூருவகாலத்திலுள்ளவர்கள்
ஆபேலிடத்தில் ஆலோசனைகேட்டு, தங்கள்
விவாதத்தைத் தீர்ப்பார்கள்.—நான் இஸரவே ௰௯
லுக்குள் சமாதானமும் நேர்மையுமுள்ளவளாயி
ருக்கிறேன்: நீர் இஸரவேலுக்குள்ளே ஒரு மா
தாவைப்போன்ற நகரத்தை அழிக்கப்பார்க்கி
றீர்: யெகோவாவின் சுதந்தரத்தை விழுங்கு
வதென்னவென்று சொல்ல,—யோவாப் அதற் ௨௰
குத்தரமாக, விழுங்குதலும், அழித்தலும், எனக்
குத் தூரமாயிருக்கக்கடவன.—காரியமப்படியல் ௨௧
ல: பிக்ரீயின் புத்திரனாகிய ஷேபாவென்றுபெய
ருள்ள எப்ராயீம் பருவதத்தானொருவன், தாவீது
ராசாவுக்குவிரோதமாகத்தன்கையை ஓங்கினான்:
அவனை மாத்திரம் ஒப்பித்துவிடுங்கள், அப்பொ
ழுது நான் நகரத்தைவிட்டுப் புறப்பட்டுப்போ
வேனென்றான். அந்த ஸ்திரியோவாப்பைநோக்
கி, கேளும், அவன் தலைமதில்மேலாக உம்மிடத்
தில் வீசப்படுமென்றாள்.—பின்பு அந்த ஸ்திரி ௨௨
தன்புத்தியினால் சகல சனங்களிடத்திலும் போ
னாள். அவர்கள் பிக்ரீயின்புத்திரனாகிய ஷேபா
வின் தலையைச்சேதித்து, யோவாப்பிடத்தில் வீ

(௧) அதி.௰௯.௰௫. (௪) அதி.௰௯.௰௩. (௬) அதி.௰௧.௰௧. க.இரா.௧.௩௩. (௭) அதி.௮.௰௮. க.இரா.௧.௩௮. (௯) மத். ௨௬.௪௯. லூக்.௨௨.௪௭. (௰) க.இரா.௨.௫. அதி.௨.௨௩. (௰௪) உ.இரா.௰௫.௨௯. உ.நாளா.௰௬.௪. (௰௫) உ.இரா. ௰௯.௩௨. (௰௮) உபா.௨௰.௰௧. (௰௯) க.சாமு.௨௬.௰௯. அதி.௨௧.௩. (௨௨) பிர.௯.௰௪,௰௫.

சிவிட்டார்கள். அப்பொழுது அவன் எக்காளம்
ஊத, அவர்கள்நகரத்தைவிட்டுக்கலைந்து, தங்கள்
தங்கள் கூடாரங்களுக்குப் போய்விட்டார்கள்.
யோவாப்பும் யெருஷலேமில் இராசாவிடத்துக்
குத்திரும்பினான்.
௨௩ அக்காலத்தில் யோவாப் இஸரவேலரின் சகல
வமிசத்துக்கும் பிரதானசேனாபதியாயிருந்தான்:
யோய்தாவின் புத்திரனாகிய பினாயா, கிரேத்திய
ருக்கும் பெலேத்தியருக்கும் அதிபதியானான்.—
௨௪ ஆதோராம்திறைவாங்குகிறவனும், அகீலூத்தின்
புத்திரனாகியயோஷாபாத் இதிகாசகத்தனும்,—
௨௫ ஷிவா இலேக்கனும், சாதோக்கும் அப்யாதா
௨௬ ரும் ஆசாரியரும்,—யாயீரியனாகிய ஈரா, தாவீ
தினிடத்திற் பிரதான அதிபதியுமானார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧. கிபியோன் சனங்களைக்கொலை செய்ததினி
மித்தம்மூன்றுவருஷம்பஞ்சமதிகரித்தல்: ஷவு
லின் புத்திரபௌத்திரரைக்கொல்லல்: ௰. கொ
ல்லப்பட்டசனங்களின்மேல் ரிஸ்பாள்சிந்தை
வைத்தல்: ௰௨. ஷவுல் யோனாதானென்பவர்க
ளின் எலும்புகளைப் புதைத்தல்: ௰௫. பெலிஸ்
தியருடன் யுத்தஞ்செய்தல்.

தாவீதின்காலத்தில் மூன்று வருஷம் இடைவி
டாதபஞ்சமுண்டாயிருந்தது,அதினாலே தாவீது
யெகோவாவிடத்தில்உசாவ, யெகோவா,
ஷவுலும் இரத்தப்பிரியராகிய அவன் வமிசத்தா
ரும்,கிபியோனியரைக்கொன்றுபோட்டார்கள்,
௨ அதினிமித்தம் உண்டாயிற்றென்றார்.—இ
ராசா, கிபியோனியரையழைப்பித்து, அவர்களு
டன் சம்பாஷித்தான்; அந்தக்கிபியோனியர் இ
ஸரவேலரைச்சேர்ந்தவர்களல்ல, எமோரியரில்
எஞ்சி நின்றவர்கள்; இஸரவேல்சந்ததியார் அ
வர்களுக்கு ஆணையிட்டிருந்தும், ஷவுல் இஸர
வேல் சந்ததியார்மேலும், யூதாவமிசத்தார் மே
லுங் கொண்டவைராக்கியத்தினால், அவர்களைக்
௩ கொல்ல வகைதேடினான்.—தாவீது கிபியோனி
யரைநோக்கி, நான் உங்களுக்குச்செய்யவேண்
டியதென்ன, நீங்கள் யெகோவாவின் சுதந்த
ரத்தைஆசீர்வதிக்கும்படிக்கு,நான்செய்யவேண்
௪ டியபிராயச்சித்தமென்னவென்றுகேட்க,—கிபி
யோனியர் அவனைநோக்கி, நாங்கள் ஷவுலிடத்
திலும், அவன் குடும்பத்தாரிடத்திலும், வெள்ளி
யையாவதுபொன்னையாவதுவாங்கமாட்டோம்;
எங்கள்நிமித்தம் இஸரவேலருக்குள்ளே யாதொ
ருவனைக் கொல்லவும் வேண்டாமென்றார்கள்.
அப்பொழுது அவன், நீங்கள் சொல்லுவதெது
வோ அதை உங்களுக்குச்செய்வேனென்றான்.—
௫ அதினால் அவர்கள் இராசாவைநோக்கி,எங்களை
நாசப்படுத்தி, நாங்கள் இஸரவேலின் தேசமெங்
கும் நிலைத்திராமல்ஒழிந்துபோகும்படிஎங்களைச்
சேதித்தவனுடையபுத்திரரில்,—ஏழுபேர் எங்க ௬
ளிடத்தில் ஒப்பிக்கப்படவேண்டும், அப்பொ
ழுதுநாங்கள் யெகோவா தெரிந்தஷவுலிருந்
த கிபியாவில் யெகோவாவுக்காக அவர்க
ளைத் தூக்கிப்போடுவோமென்றார்கள். அதற்கு
இராசா நான்தருவேனென்றான்.—ஆனாலும் தாவீ ௭
தும், ஷவுலின்புத்திரனாகிய யோனாதானும் யெ
கோவாவைக்கொண்டு ஆணையிட்டிருந்தபடி
யால், இராசா, ஷவுலின்பௌத்திரனும் யோனா
தானின் புத்திரனுமாகிய மெபீபோஷேத்தை இ
ரட்சித்தான்.—ஆயாவின்புத்திரியாகியரிஸ்பாள் ௮
ஷவுலுக்குப்பெற்ற அர்மோனி,மெபீபோஷேத்
தென்னும் புத்திரரிருவரையும்,ஷவுலின் புத்திரி
யாகிய மீகாளின் சகோதரி மெகோலாவியனான
பார்சில்லாவின் புத்திரனாகிய ஆத்ரியேலுக்குப்
பெற்ற புத்திரர் ஐந்துபேரையும் பிடித்து,—கிபி ௯
யோனியர்கையிலொப்பிக்க, அவர்கள் இவர்க
ளை யெகோவாவின் சமுகத்திலே மலையில்
தூக்கிப்போட்டார்கள்: இவர்கள் ஏழுபேரும்
ஏகமாய்விழுந்தார்கள், வாற்கோதுமைஅறுக்கும்
ஆரம்பத்தில், அறுப்புக்கு முதல்நாட்களில், இ
வர்கள் கொன்றுபோடப்பட்டார்கள்.
ஆயாவின்புத்திரியாகிய ரிஸ்பாள் இரட்டுப்பு ௰
டவையை யெடுத்துக்கொண்டுபோய், அதைக்
கன்மலையில்தனக்காகவிரித்து, அறுப்பின் ஆரம்
பம்முதல்வானத்தினின்றுமழைபெய்யும்வரைக்
கும், பகலில்ஆகாயத்துப்பறவைகளும், இரவில்
காட்டுமிருகங்களும் இவர்கள்மேல் விழாதபடி
காத்தாள்.-ஆயாவின்புத்திரியும், ஷவுலின்வைப் ௰௧
பாட்டியுமாகிய ரிஸ்பாள்செய்தகாரியம்தாவீதுக்
குத்தெரிவிக்கப்பட்டது.
பின்பு தாவீதுபோய், பெலிஸ்தியர் கில்போ ௰௨
வாவிலே ஷவுலைக் கொன்றபொழுது, அந்தப்
பெலிஸ்தியர் ஷவுலையும், அவன் புத்திரனாகிய
யோனாதானையுந்தூக்கினபேத்ஷானின் வீதியிலி
ருந்து, யாபேஷ் கிலியாத்திலுள்ளசனங்கள்திரு
டிக்கொண்டுபோன அவர்கள்எலும்புகளை அவர்
களிடத்தில்வாங்கி,—அங்கிருந்து ஷவுலின்எலும் ௰௩
புகளையும், அவன் புத்திரனாகிய யோனாதானின்
எலும்புகளையுங்கொண்டுவந்தான்: தூக்கப்பட்ட
வர்களுடைய எலும்புகளையுங் கூடச்சேர்த்து,-
ஷவுலின் எலும்புகளையும், அவன் புத்திரனாகி ௰௪
யயோனாதானின் எலும்புகளையும், பேன்யாமீன்
தேசத்துச்செலாவூரிலுள்ள அவன் பிதாவாகியகீ
ஷின்பிரேதவறையில் அடக்கம்பண்ணினார்கள்:
இராசாகட்டளையிட்ட எல்லாவற்றையுஞ்செய்
தார்கள். தேவன் தேசத்தினிமித்தம் அவர்கள்
பிரார்த்தித்ததைக்கேட்டருளினார்.
பின்பு இஸரவேலருடன் பெலிஸ்தியர் யுத் ௰௫
தஞ்செய்தார்கள்; தாவீதும் அவனோடுகூடிய அ

(௨௩) அதி.௮.௰௬,௰௮. (௨௪) ௧.இரா.௪.௬. அதி.௮.௰௬. ௧.இரா.௪.௩. (௨௫) அதி.௮.௰௭. ௧.இரா.௪.௪. (௨௬) அதி.௨௩.௩௮. ஆதி.௪௧.௪௫. யாத்.௨.௰௬. அதி.௮.௰௮.—(௨௧. அதி. ௧.) எண்.௨௭.௨௧. (௨) யோசு.௯.௩,௰௫,௰௬, ௰௭. (௩) அதி.௨௰.௰௯. (௬) ௧.சாமு.௰.௨௬. ௧.சாமு.௰.௨௪. (௭) ௧.சாமு.௰௮.௩. (௮) அதி.௩.௭. ௧.சாமு.௰௮.௰௯. (௯) அதி.௬.௰௭. (௰) வச.௮. அதி.௩.௭. உபா.௨௧.௨௩. (௰௨) ௧.சாமு.௩௧.௰௧,௰௨,௰௩. ௧.சாமு.௩௧.௰. (௰௪) யோசு.௰௮.௨௮. யோசு.௭.௨௬. அதி.௨௪.௨௫.

வன் தாசரும் பெலிஸ்தியரை எதிர்த்து யுத்தஞ்
செய்தார்கள்: தாவீது இளைத்துப்போனபொழு
௰௬ து,—முந்நூறுஷேக்கல் நிறைகொண்ட பித்தளை
யினாற்செய்த ஈட்டியை உடையவனும், புதுக்
கட்கத்தைத்தரித்தவனுமாகிய இஷ்பீ பினோப்
பென்னும் ரப்பாயரில்ஒருவன் தாவீதைக்கொல்
௰௭ ல அபிப்பிராயங் கொண்டான்.—சேருயாவின்
புத்திரனாகிய அபீஷாய் இவனுக்குத்துணை நின்
று, பெலிஸ்தியனை அடித்துக்கொன்றுபோட்
டான். பின்பு தாவீதின் சனங்கள் அவனுக்கா
ணையிட்டு, நீர் இஸரவேலரின் விளக்கை அவி
யாதிருக்கவேண்டுமானால், இனி எங்களோடு
கூடி யுத்தத்துக்குப் புறப்படவேண்டாமென்று
௰௮ சொன்னார்கள்.—பின்பு கோப்பிலே பெலிஸ்தி
யருடன்திரும்பவும் யுத்தம்நடந்தது: அதில் ஊ
ஷாத்தியனாகிய சிபெக்காய், ரப்பாயரில் ஒருவ
௰௯ னாகிய ஷாப்பைக்கொன்று போட்டான்.-திரும்
பவும் பெலிஸ்தியருடன் கோப்பிலே ஒருயுத்தம்
நடந்தது, அதில் பேத்லகேமியனான யாரெயொ
ரிகீமின்புத்திரனாகிய எல்கானான், நெய்கிறவர்
களின்படைமரம்போன்ற ஈட்டிப்பிடியையுள்
ள கித்தியனாகிய கொல்யாத்தின் சகோதரனைக்
௨௰ கொன்று போட்டான்.—இன்னும் ஒரு யுத்தம்
காத்தூரிலே நடந்தது, அங்கேநெடியவனும்,கை
களில் அவ்வாறு விரலும், கால்களில் அவ்வாறு
விரலும், ஆக இருபத்துநான்கு விரல்களையுடை
யவனும், ரப்பாயருக்குப் பிறந்தவனுமாகிய ஒ
௨௧ ருவன்,—இஸரவேலரை நிந்திக்க, தாவீதின் ச
கோதரனான ஷிமியாவின் புத்திரனாகிய யோனா
௨௨ தான்அவனைக்கொன்றுப்போட்டான்.-இந்நான்
குபேரும் காத்தூரிலே ரப்பாயருக்குப்பிறந்தவர்
கள், இவர்கள் தாவீதின் கையினாலும், அவன்
தாசரின் கையினாலும்விழுந்தார்கள்.

## ௨௨. அதிகாரம்.

இரட்சையினிமித்தமும், நானாவித நன்மைக
ளினிமித்தமும், தாவீது யெகோவாவுக்குஸ்
தோத்திரப்பாட்டுப்பாடல்.

தாவீது தன்சமஸ்தசத்துருக்கள்கையினின்றும்,
ஷவுல் கையினின்றும் தன்னை யெகோவாவி
டுவித்தகாலத்தில்,மேல்வரும்பாட்டையெகோ
௨ வாமேலேபாடினான்:—யெகோவாவே என்
கன்மலை, என்கோட்டை, என் இரட்சகர்;—
௩ என் தேவன், நான் நம்பும் என்கன்மலை: என்
கேடகம், என்னை இரட்சிக்குங்கொம்பு, என் உ
யர்ந்த துருக்கம், என்புகலிடம், என் இரட்சகர்;
உபத்திரவத்தினின்றும் என்னை விடுவிக்கிறீர்.—

துதிக்கப்படுகிற யெகோவாவைநோக்கிப்பி ௪
ரார்த்தித்தேன்: அதினால் என் சத்துருக்களினின்
றும் இரட்சிக்கப்பட்டேன்.—மரணமாகிய திரை ௫
கள் என்னைச்சூழ்ந்துவீசின, துஷ்டராகிய வெள்
ளம் என்னைப்பயப்படுத்திற்று;—நரகபந்தங்கள் ௬
என்னைச்சூழ்ந்தன; மரணக்கண்ணிகள்என்னைச்
சுற்றிக்கொண்டன;—நான் வியாகுலப்பட்ட ௭
பொழுது யெகோவாவைப்பிரார்த்தித்தேன்,
என் தேவனுக்கு ஓலமிட்டேன்: அவர் தமது ஆ
லயத்திலிருந்து என்சத்தத்தைக்கேட்டார், நான்
இட்ட ஓலம் அவர்செவிக்கேறிற்று.—அப்பொழு ௮
து அவர்கோபித்தபடியால், பூமிஅசைந்து அதிர்ந்
தது; ஆகாயமண்டலத்தின் அஸ்திபாரங்கள் அ
சைந்துகுலுங்கின.—அவருடைய நாசியிலிருந்து ௯
புகை கிளர்ந்தது, அவர் வாயிலிருந்து அக்கினி
புறப்பட்டுப் பட்சித்தது: தழல்கள் அதினாலே
எரிந்தன.—அவர்வானத்தைத்தாழும்படிசெய்து ௰
இறங்கினார்; காரிருள் அவர்பாதத்தின்கீழிருந்த
து.-அவர்கெரூபியின்மேல் ஏறிப்பறந்தார்: அவர் ௰௧
காற்றின்சிறகுகளின்மேல் தரிசனப்பட்டார்.—
அவர் சலராசியையுங்கார்மேகத்தையும தம்மைச் ௰௨
சூழும் ஆவாசமாக்கி, அந்தகாரத்தில் வாசம்பண்
ணினார்.-அவர் சந்நிதிப்பிரகாசத்தினால்தழல்கள் ௰௩
எரிந்தன.—யெகோவா வானத்தில் முழக்க ௰௪
மிட்டார், சருவத்திற்கும் மேலானவர் தொனி
செய்தார்.—அவர் அம்புகளைப்பிரயோகித்து, அ ௰௫
வர்களைச் சின்னபின்னப்படுத்தினார்; மின்னலி
னால் அவர்களைக்கிலேசப்படுத்தினார்.—யெகோ ௰௬
வாவின் கண்டனையினாலும், அவருடைய நாசி
யின் சுவாசவேகத்தினாலும், சமுத்திரத்தின் நீர்க்
கால்கள் வெளிப்பட்டன, பூமியின் அஸ்திபா
ரங்கள் தோற்றப்பட்டன.—உயரத்தினின்று கை ௰௭
நீட்டி, என்னைப்பிடித்து, மிகுந்த சலத்தினின்
றும் நீக்கிவிட்டார்;—என்னிலும் அதிகபலவான் ௰௮
களாயிருந்த வல்லமையுள்ள என் சத்துருவுக்
கும், என் பகைவருக்கும், என்னைத் தப்புவித்
தார்.—எனக்கு ஆபத்து நேரிட்டசமயத்தில் அ ௰௯
வர்களெனக்கு முற்பட்டார்கள்: அப்பொழுது
யெகோவா எனக்கு ஆதாரமாயிருந்தார்.—
அவர் என்மேற் பிரியப்பட்டபடியினால், என் ௨௰
னை விடுவித்து, விஸ்தாரஸ்தானத்திற் கொண்டு
வந்துவிட்டார்.—நான் யெகோவா அருளி ௨௧
ய நெறிகளைப் பேணிநடந்தேன், நான் பாவஞ்
செய்து தேவனைவிட்டுவிலகவில்லை.-ஆதலால் ௨௨
யெகோவா என் நீதிக்கேற்ற பலனை எனக்கு
அளித்தார்: என் கையின் சுத்தத்திற்கேற்க, எ

(௰௭)அதி.௰௮.௩.௧.இரா.௰௧.௩௬.சங்.௱௩௨.௰௭.(௰௮)௧.நாளா.௨௰.௪. ௧.நாளா.௰௧.௨௯.(௰௯)௧.நாளா.௨௰.௫.(௨௰) ௧.நாளா.௨௰.௬.(௨௧)௧.சாமு.௰௭.௰,௨௫,௨௬.௧.சாமு.௰௬.௯.௧.நாளா.௨௰.௮.—(௨௨.அதி.௧.)யாத்.௰௫.௧.நியா.௫. ௧. சங்.௰௮.(௨)உபா.௩௨.௪. சங்.௰௮.௨,(௩)எபி.௨.௰௩.ஆதி.௰௫.௧.லூக்.௧.௬௯. நீதி.௰௮.௰.சங்.௯.௯.எரே.௰௬.௰௯. (௬)சங்.௱௰௬.௩.(௭)சங்.௱௰௬.௪.யோனா.௨.௨.யாத்.௩.௭.(௮)நியா.௫.௪. சங்.௭௭.௰௮. யோபு.௨௬.௰௧.(௯)சங்.௯௭. ௩.அபகூ.௩.௫.எபி.௰௨.௨௯.(௰)சங்.௱௪௪.௫.ஏசா.௬௪.௧.யாத்.௨௰.௨௧.௧.இரா.௮.௰௨. சங்.௯௭.௨,(௰௧)சங்.௱௪.௩. (௰௨)வச.௰.சங்.௯௭.௨.(௰௩)வச.௯.(௰௪)நியா.௫.௨௰. ௧.சாமு.௨.௰. சங்.௨௯.௩. ஏசா.௩௰.௩௰.(௰௫)உபா.௩௨.௨௩. சங்.௭.௰௩. அபகூ.௩.௰௧.(௰௬)யாத்.௰௫.௮. சங்.௱௬.௯. நாகூ.௧.௪. மத்.௮.௨௬.சங்.௭௪.௧.(௰௭)சங்.௱௪௪.௭.(௰௮) வச.௧.(௨௰)சங்.௩௧.௮.அதி.௰௫.௨௬.சங்.௨௨.௮.(௨௧)ஆதி.௰௮.௰௯. சங்.௱௰௯.௩. நீதி.௮.௩௨.(௨௨)வச.௨௫. ௧.சாமு.௨௬.௨௩. ௧.இரா.௮.௩௨. சங்.௭.௮. சங்.௨௪.௪.

௨௩ னக்கு நன்மைசெய்தார்.—அவருடையநியாயத்
தீர்ப்புகள் யாவும் என்முன்னிருந்தன: அவரு
டைய பிரமாணங்களையோ, நான் விட்டுவிலக
௨௪ வில்லை.—நான் அவர்சமுகத்திற்கு நேர்மையா
னவனாயிருந்தேன், என் பாவத்துக்கு என்னைவி
௨௫ லக்கிக்கொண்டேன்.–ஆதலால் யெகோவா
என் நீதிக்கும், தமது பார்வைக்குத் தோன்றிய
என்சுத்தத்துக்குமேற்கஎனக்குப்பலனளித்தார்.-
௨௬ தயையுள்ளவனுக்குத்தயையுள்ளவராகவும், நேர்
௨௭ மையுள்ளவனுக்கு நேர்மையுள்ளவராகவும்,–சுத்
தனுக்குச் சுத்தராகவும், விரோதிக்கு விரோதி
௨௮ யாகவும் நடந்துவருகிறீர்.—துக்கமுள்ளவர்களை
இரட்சித்துவருகிறீர்: அகங்காரிகளைத் தாழ்த்தும்
௨௯ படி அவர்கள்மேல் கண்வைக்கிறீர்.—யெகோ
வாவே, நீரே என்விளக்கு: யெகோவா என்
௩௰ இருளை ஒளியாக்குவார்.—உம்மால் ஒரு சேனை
யை ஊடறுத்துச்சென்றேன்: என் தேவனால்
௩௧ ஒரு மதிலைத் தாண்டினேன்.—தேவனுடைய
நெறி நிருதோஷமானது: தேவனுடைய வாக்
குப் பரிட்சிக்கப்பட்டது: அவர் தம்மை நம்பும்
௩௨ யாவருக்கும் கேடகமாயிருக்கிறார்.—யெகோ
வாவேயன்றி, வேறார் தேவன்; நம்முடைய
௩௩ தேவனேயன்றி, ஆர் கன்மலை.—தேவனே
என்பலம், என்சத்துவம்: அவர் என்வழியைச்
௩௪ செவ்வைப்படுத்துகிறார்.—என் கால்களை மான்
கால்கள்போலாக்குகிறார்: என் உயர்ந்த ஸ்தா
௩௫ னங்களில் என்னை ஸ்தாபித்தார்.—வெண்கல்
வில்லு என் புயத்தினால்வளையத்தக்கதாக, என்
கை யுத்தஞ்செய்யும்படி பரிட்சைப்படுத்தினார்.-
௩௬ இரட்சைசெய்யுங் கேடகத்தையும் எனக்குதந்
தீர்: உமது காருண்ணியம் என்னை மேன்மைப்
௩௭ படுத்திற்று.—என் கால்கள் தவறாதபடிக்கு, என்
௩௮ வழிகளை விசாலமாக்கினீர்.—நான் என் சத்து
ருக்களைத்தொடர்ந்து, அவர்களை நாசப்படுத்தி
னேன்; அவர்களைச் சங்கரிக்கும்வரைக்கும் நான்
௩௯ திரும்பவில்லை.—அவர்கள் எழுந்திருக்கத் திரா
ணியில்லாதபடிக்கு, அவர்களை முறிய அடித்துச்
சங்கரித்தேன்: அவர்கள் என் காலின்கீழ் விழுந்
௪௰ தார்கள்.—யுத்தஞ்செய்கிறதற்கு எனக்கு வல்ல
மையென்னுங் கச்சுக்கட்டி, எனக்கு விரோ
தமாய் எழுந்தவர்களை எனக்குக் கீழ்ப்படுத்தி
௪௧ னீர்.—நான் என் பகைவரைச் சங்கரிக்கும்ப
டி, என் சத்துருக்களின் கழுத்தை எனக்கு ஒப்
௪௨ பித்தீர்.—அவர்கள் நோக்கிப்பார்த்தும், அவர்க
ளைஇரட்சிப்பார் ஒருவருமில்லை; யெகோவா
வைப் பார்த்தும், அவர்உத்தரங்கொடுக்கவில்
லை.—அப்பொழுது நான் அவர்களைப் பூதூளி ௪௩
யாக்கினேன், தெருக்களின் சேற்றைப்போல,
அவர்களை மிதித்து, பரப்பினேன்.—என் சனங் ௪௪
களின் விரோதங்களுக்கு என்னை விலக்கிவிட்
டு, புறத்தேசத்தாருக்கு என்னைத் தலையாக ஏற்
படுத்தினீர்: நான் அறியாதசனங்கள் என்னிடத்
தில் சேவிப்பார்கள்.-புறத்தேசத்தார் தாமே என் ௪௫
வசமாவார்கள்: அவர்கள் கேள்விப்பட்டமாத்
திரத்தில் எனக்கு அமைவார்கள்.-புறத்தேசத்தார் ௪௬
மெலிவடைந்து, தங்கள் ஒளிப்பிடங்களிலே ப
யந்திருப்பார்கள்.—யெகோவாவே நித்தியர்; ௪௭
என் கன்மலை துதிக்கப்படுவதாக; என்னை இரட்
சிக்குங் கன்மலையாகிய தேவன் உன்னதமாயி
ருப்பாராக.—என்னிமித்தம் பழிவாங்கி, சனங் ௪௮
களை என்கீழ்ப்படுத்தி, என் சத்துருக்களினின்
றும் என்னை விடுவிக்கிறவர் தேவனே.–எனக் ௪௯
கு விரோதமாயெழுந்தவர்கள்மேல் என்னை உன்
னதப்படுத்துகிறீர்: கொடிய மனிதனுக்கு என்
னைத்தப்புவித்தீர்.—யெகோவாவே, இதினி ௫௰
மித்தம் புறத்தேசத்தாருக்குள்ளே உம்மைக்கீர்த்
தனம்பண்ணுவேன், உமது நாமத்திற்குத்துதிபா
டுவேன்.—அவர் தாம் ஏற்படுத்திய இராசாவுக் ௫௧
கு மகா இரட்சிப்பைச்செய்து,தாம் அபிஷேகம்
பண்ணின தாவீதுக்கும், அவன் சந்ததிக்கும், ச
தாகாலமுந் தயை செய்கிறார் என்றான்.

## ௨௩. அதிகாரம்.

௧. தாவீது சொல்லிய இறுதியான மொழிகள்: ௮. அவனுடையபிரதான சனங்களின் நாமஙகள்.

தாவீதின் கடைசியானமொழிகள். உன்னதத் ௧
திலுயர்த்தப்பட்டவனும், யாக்கோபின் தேவ
னால் அபிஷேகம்பெற்றவனும், இஸரவேலரில்
இனியபாடகனும்,ஈஷாயின்புத்திரனுமாகிய தா
வீது,—என்னைக்கொண்டு யெகோவாவின் ௨
ஆவிவிளம்பினார், அவர்வாக்கு என் நாவிலிருந்
தது.—மனிதனை அரசாளுகிறவன் நீதிமானாயி ௩
ருக்கவேண்டும், தேவனுக்குப்பயந்து இராச்சி
யபரிபாலனம்பண்ணவேண்டும்.—மேகமில்லா ௪
த வைகறையிலுதிக்கிற சூரியகிரணம் போல
வும், மழைபெய்தபின் கிரணத்தினால் பூமியிலே
முளைக்கும் புல்லுப்போலவுமிருப்பான் என்று
சொல்லி, இஸரவேலின் தேவனும், இஸர
வேலின் கன்மலையுமானவர் என்னுடன் பேசி

(௨௩)உபா.௭.௰௨.சங்.௱௰௯.௩௰,௱௨.(௨௪)ஆதி.௬௯.யோபு.௧.௧. (௨௫) வச.௨௨. (௨௬) மத்.௫.௭. (௨௭) லேவி.
௨௬.௨௩,௨௪,௨௭,௨௮. சங்.௰௮.௨௬. (௨௮) யாத்.௩.௭,௮. யோபு.௪௰.௰௧,௰௨. ஏசா.௨.௰௧,௰௨,௰௭. தானி.௪.௩௭.
(௨௯) யோபு.௨௯.௩. சங்.௨௭.௧. (௩௧) உபா.௩௨.௪. தானி.௪.௩௭.வெளி.௰௫.௩. சங்.௰௨.௬. சங்.௱௰௯.௱௪௰. நீதி.
௩௰.௫. (௩௨) ௧.சாமு.௨.௨. ஏசா.௪௫.௫,௬. (௩௩) யாத்.௰௫.௨. ஏசா.௰௨.௨. எபி.௰௩.௨௧. உபா.௰௮.௰௩. யோபு.
௨௨.௩. சங்.௱௧.௨,௬. (௩௪) அதி.௨.௰௮. அபகூ.௩.௰௯. உபா.௩௨.௰௩.ஏசா.௩௩.௰௬. (௩௫) சங்.௱௪௪.௧.(௩௭) நீதி.
௪.௰௨. (௩௯) மல்.௪.௩. (௪௰) சங்.௰௮.௩௨,௩௯.சங்.௪௪.௫. (௪௧) ஆதி.௪௯.௮. யாத்.௨௩.௨௭. யோசு.௰.௨௪. (௪௨)
யோபு.௨௭.௯. நீதி.௧.௨௮. ஏசா.௧.௰௫. மீகா.௩.௪. (௪௩) ௨.இரா.௰௩.௭. சங்.௫௫.௫. தானி.௨.௩௫.ஏசா.௰.௬.மீகா.
௭.௰. ௪௧.௰.௫.(௪௪)அதி.௩.௧. உபா.௨௮.௰௪. அதி.௮.௧—௰௪. சங்.௨.௮. ஏசா.௫௫.௫. (௪௫) உபா.௩௩.௨௯. சங்.
௬௬.௩. சங்.௮௧.௰௫. (௪௬) மீகா.௭.௰௭. (௪௭) சங்.௮௯.௨௬. (௪௮)௧.சாமு.௨௫.௩௯. சங்.௱௪௪.௨. (௪௯) சங்.
௱௪௰.௧. (௫௰) ரோ.௰௫.௯.(௫௧)சங்.௱௪௪.௰. சங்.௮௯.௨௰. அதி.௭.௰௩,௰௨. சங்.௮௯.௨௯.—(௨௩.அதி.௧.)அதி.௭.
௭,௮.சங்.௭௮.௭௰,௭௧.௧.சாமு.௰௬.௰௨,௰௩.சங்.௮௯.௨௰. (௨) ௨.பேதுரு.௧.௨௧. (௪) சங்.௱௰.௨. யாத்.௰௮.௨௧. ௨.
நாளா.௰௯.௭,௰. நியா.௫.௩௧. சங்.௮௯.௩௬. நீதி.௪.௰௮. ஓசி.௬.௫. சங்.௱௰.௩. உபா.௩௨.௪,௩௧. அதி.௨௨.௨,௩௨.

௫ னார்.—என்வமிசம் தேவனுக்கப்படித்தோன்
றாமலிருந்தும், அவர் சகலவிதத்திலும் நிச்சய
முள்ளதாக, ஒருநித்திய உடன்படிக்கையைஎன்
னுடன் செய்திருக்கிறார்: அவர் இதை வர்த்திக்
கச்செய்யாவிட்டாலும் என்முழு இரட்சிப்பும்,
௬ என் வாஞ்சையுமிதுவே.—பேலியாலின் மக்கள்
யாவரும், கையினாலே தொடத்தகாத முள்ளுக்
௭ கள் போல எறியப்படுவார்கள்.—அவைகளைத்
தொடுகிறவன் இருப்பாயுதத்தையும் ஈட்டிக்கழி
யையும்பிடித்துக்கொள்ளவேண்டும்; அவைகள்
தாங்களிருக்கும் ஸ்தானத்தில் அக்கினியினாலே
தகனிக்கப்படவேண்டுமென்றான்.
௮ தாவீதின் பராக்கிரமசாலிகளின் நாமங்களா
வன: வீரருக்குள்ளே தக்கேமோனியனாகியயோ
ஷிச்சிபேத்தென்பவன் பிரதானியாயிருந்தான்;
இவன் எண்ணூறு பேருக்கு விரோதமாகத்தன்
ஈட்டியையோங்கி, ஒருதரத்தில் அவர்களைக்கொன்
றுபோட்ட அதீனோஎஸ்னி ஊரானவன்.—
௯ இவனுக்குப்பின் அகோயியனாகியதோதோவின்
புத்திரனான எலீயேசார்,இஸரவேல்சனங்களில்
லாத சமயத்தில் தாவீதுடனே, யுத்தத்திற்குக்
கூடிவந்த பெலிஸ்தியரை நிந்தித்தமூன்றுபராக்
௰ கிரமசாலிகளில் ஒருவனாயிருந்தான்.-இவன் எ
ழுந்து, தன்கைசலித்து, தன்கை கட்கத்தோடே
ஒட்டிக்கொள்ளும் வரைக்கும் பெலிஸ்தியரை
அடிக்க, யெகோவா அந்நாளிலே மகாசெய
முண்டாகப்பண்ணினார்; சனங்கள் கொள்ளை
௰௧ யிட அவனைப்பின்சென்றார்கள்.—இவனுக்குப்
பின்னிருந்தவன் ஆசாரியனாகிய ஆகேயின்
புத்திரனான ஷம்மா. சிறுபயறுநிறைந்தவயலில்
பெலிஸ்தியர் தளமாய்க்கூடினார்கள்: சனங்கள்
௰௨ பெலிஸ்தியரைக்கண்டோட,—இவன் அந்த வய
லின் மத்தியில்நின்று, அதைக்காப்பாற்றி, பெ
லிஸ்தியரைக்கொன்றுபோட்டான்: அதினாலே
யெகோவா மிகுந்த வெற்றிஉண்டாகச்செய்
௰௩ தார்.—முப்பது பிரதானிகளுக்குள்ளே மூன்று
பேர், அரியறுக்கிறகாலத்தில் அதுல்லாம் கெபி
யிலே தாவீதினிடத்தில்வந்தபொழுது, பெலிஸ்
தியரின்சேனைகள், ரெபாயீமென்னும் தாழ்ந்தபூ
௰௪ மியிலே பாளயமிறங்கினார்கள்.—அப்பொழுது
தாவீது அரணானஸ்தானத்திலிருந்தான், பெலிஸ்
௰௫ தியரின் தாணையம் பேத்லகேமிலிருந்தது.—தா
வீது தாகங்கொண்டு, பேத்லகேமின்வாசலருகா
ன கிணற்றில் கொஞ்சத் தண்ணீர் எனக்குக்கு
டிக்கக்கொண்டுவருகிறவன் யாவனென்றான்.—
௰௬ அந்தமூன்று பராக்கிரமசாலிகள்பெலிஸ்தியரின்
பாளயத்தை ஊடறுத்துச்சென்று, பேத்லகே
மின்வாசலருகானகிணற்றிலே தண்ணீர்மொண்
டு, தாவீதிடத்திற்கொண்டுவந்தார்கள்: அவன
௰௭ தைப்பானம் பண்ண வில்லை.—அவன், யெ
கோவாவே, அப்படிச்செய்வதெனக்குத்தூர
மாயிருப்பதாக: இதுதங்கள்பிராணனை எண்ணா
மல்போய்வந்த அந்தமனிதருடைய இரத்தமல்ல
வா என்றுசொல்லி, அதைப்பானம்பண்ணாமல்,
யெகோவாவுக்கென்று ஊற்றிவிட்டான். இ
ந்த மூன்று பராக்கிரமசாலிகளும் இந்தக்காரி
யத்தைச்செய்தார்கள்.—யோவாப்பின் சகோதர ௰௮
னும், செருயாவின் புத்திரனுமாகிய அபீஷாய்,
அம்மூவரில் சிரேஷ்டன். இவன்தன்னீட்டியை
ஓங்கி முந்நூறுபேரை அடித்ததினால், அம்மூ
வருக்குள்ளேபேர்பெற்றவனானான்.-அந்த மூன் ௰௯
றுபேருக்குள்ளும் அவன் அதிக மேன்மையுள்
ளவனாயிருக்கவில்லையா; ஆதலால் அவன்அவர்
களுக்குஅதிபதியானான்: ஆயினும் அவன்முந்தி
ன மூவருக்குச் சமானமானவனல்ல.—அதிச ௨௰
யமான கிரியைகளைச்செய்த கப்சயேலிலுள்ள
பராக்கிரமசாலியின் பௌத்திரனும், யோய்தா
வின் புத்திரனுமாகிய பினாயா, சிங்கம்போன்ற
இரண்டு மோவாபியரைக் கொனறதுமன்றி, உ
றைந்த மழைகாலத்தில் ஒரு கெபிக்குள்ளேபோ
ய், ஒரு சிங்கத்தையுங் கொன்றுபோட்டான்.—
அன்றியும்,ஒரு உத்தமபலவானாகிய எகிப்தியனை ௨௧
யுங் கொன்றுபோட்டான்: எகிப்தியன் தன்கை
யில் ஈட்டியைப்பிடித்திருக்க, இவன் ஒரு தண்
டத்துடன்போய் எகிப்தியன் கையிலிருந்த ஈட்
டியைப்பறித்து, அவன் சொந்த ஈட்டியினால்
அவனைக்கொன்றுபோட்டான்.—யோய்தாவின் ௨௨
புத்திரனாகிய பினாயா இவைகளைச்செய்தபடியி
னாலே, பராக்கிரமசாலிகள்மூவருக்குள்ளும்பேர்
பெற்றான்.—இவன் முப்பது பேரிலும் அதிக ௨௩
மேன்மையுள்ளவன், முந்தின மூவருக்குஞ்சமா
னமானவனல்ல. தாவீது இவனைத் தன் மெய்க்
காவலுக்கு அதிபதியாக்கினான்.—யோவாப்பின் ௨௪
சகோதரனாகிய அசாகேல் முப்பதுபேருக்குத்த
லைவன்; பேத்லகேமிலுள்ளதோதோவின் புத்திர
னாகியஎல்கானான்,-அரோதியனாகிய ஷம்மா, அ ௨௫
ரோதியனாகிய இலீகா,-பல்தியனாகிய எலேத்ஸ், ௨௬
தெக்கோயனான இக்கேஷின்புத்திரனான ஈரா,-
ஆனதோத்தியனாகிய அபீயேஸர், ஊஷாத்தியனா ௨௭
கிய மெபுன்னாயி,-அகோயியனாகிய சல்மோன், ௨௮
நிதோபாத்தியனாகிய மகராயி,-நிதோபாத்தியனா ௨௯
ன பானாவின்புத்திரனாகிய எலெப்,பேன்யாமீன்
சந்ததியின்கிபியாஊரானும்ரீபாயின்புத்திரனுமா
கியஇத்தாயி,—பிரத்தோனியனாகிய பினாயா,கா ௩௰
காஷின்ஆற்றங்கரையிலுள்ள இடாய்,—அர்பத் ௩௧
தியனாகிய அபியல்போன், பருமியனானஅஸ்மா
வேத்,-ஷகல்போனியனான இலியபா, யாஷே ௩௨
னின் புத்திரரில் யோனாதான்,—அராரீயனாகிய ௩௩
ஷம்மா, அராரீயரான ஷாராரின் புத்திரனாகிய
அகியாம்,—மாகாத்தியனின் பௌத்திரனும், அ ௩௪
கஸ்பாயின் புத்திரனுமாகிய இலீப்பேலேத், கி
லோனியனான அகீத்தோபேலின் புத்திரனாகியஇ
லியாம்.-கர்மேலியனாகியஎத்சராய்,அரபியனான ௩௫
பாராயி,—சோபாஊரானான நாதானின்புத்திரனா ௩௬

(௫) அதி.௭.௰௪,௰௫. சங்.௮௯.௨௯. ஏசா.௫௫.௩.(௰௩)௧.நாளா.௰௧.௰௫. ௧.சாமு.௨௨.௧. அதி.௫.௰௮.(௰௪)௧.சாமு.௨௨.௪,௫. (௰௭) லேவி.௰௭.௰. (௰௮) ௧.நாளா.௰௧.௨௰. (௨௰) யோசு.௰௫.௨௧. யாத்.௰௫.௰௬. (௨௧) ௧.நாளா.௰௧.௨௩.(௨௩)அதி.௮.௰௮. ௧.சாமு.௨௨.௰௪. (௨௪) அதி.௨.௰௮. (௩௰) உபா.௧.௨௪. நியா.௨.௯.

௩௭ கியஈகால், காத்தியனான பானீ,—அம்மோனிய
னாகியசெலெக், செருயாவின் புத்திரனாகியயோ
வாப்பின் ஆயுததாரியும்,பெரோத்தியனுமாகியந
௩௮ கராய்,—இத்ரீயனான ஈரா, இத்ரீயனானகாரேப்,-
௩௯ எத்தியனான ஊரியா: ஆக இவர்கள் முப்பத்தே
ழுபேர்.

## ௨௪. அதிகாரம்.

*௧. சனங்களைத்தொகையிடும்படி தாவீதுகட்டளை பண்ணல்: ௫. சனங்கள் தொகையிடப்படல்: ௰. மூன்று ஆபத்துக்களிலொன்றைத் தெரிந்துகொள்ளும்படி யெகோவா கட்டளையிட, தாவீது பெருவாரிக்காய்ச்சலைத் தெரிந்துகொள்ளல்: ௰௫. பெருவாரிக்காய்ச்சலை யெருஷலேமிலேயில்லாமல்விலக்கல்: ௰௮. அறவ்னாவின் சூட்டுக்களத்தை விலைக்குவாங்கி அதில் வேதிகையுண்டாக்கல்.*

பின்பு இஸரவேல் சந்ததியாரையும், யூதாவமி
சத்தாரையும்தொகையிடவேண்டுமென்றுசொல்
லும்படி, அவர்களுக்கு விரோதமாகத்தாவீது ஏ
வப்பட்டபொழுது,யெகோவாவின்கோபம்
௨ பின்னும் இஸரவேலரின்மேல்மூண்டது.—இரா
சாதன்னோடுகூடிய சேனாபதியாகிய யோவாப்
பைநோக்கி, தாண்முதல்பேர்ஷேபா வரைக்கு
முள்ள இஸரவேலரின்கோத்திரமெங்கும்போய்,
சனங்களின் தொகை நான் அறியும்படிக்குச் ச
னங்களைத்தொகையிட்டுவாவென்று சொல்ல,—
௩ யோவாப் இராசாவை நோக்கி, என்ஆண்டவனா
கிய இராசாவின்கண் காணும்படி, உமது தேவ
னாகிய யெகோவா சனங்களை இப்பொழுது
இருக்கிறதற்கும் நூறுமடங்குஅதிகமாகவர்த்திக்
கச்செய்வார்: என்ஆண்டவனாகியஇராசாஇந்தக்
௪ காரியத்தை விரும்புகிறதென்னவென்றான்.—ஆ
கிலும் யோவாப்பின் வாக்கிலும், மற்றைச்சேனா
பதிகளின் வாக்கிலும், இராசாவின் வாக்கேபெ
லன்கொண்டது. அதனால் யோவாப்பும் சேனா
பதிகளும் இஸரவேல் சனங்களைத் தொகையி
டும்படி, இராசாவின் சமுகத்தினின்று புறப்பட்
௫ டு யோர்தானைக்கடந்து,-யாசேருக்குநேரே காத்
நகரத்தின் மத்தியிலிருக்கிற வலப்புறத்திலுள்ள
௬ அரோவேரிலே பாளயமிறங்கி,—அங்கிருந்து
கிலியாத்துக்கும் தாதீம் ஒத்ஷி தேசத்துக்கும்
போய், அங்கிருந்து தன்சகானுக்கும் சீதோ
௭ னின் சுற்றுப்புறங்களுக்கும்போய்,—அங்கிருந்
து தீருவின்கோட்டைக்கும் ஈவியர், கானானியர்
என்னுமிவர்களுடைய சகல நகரங்களுக்குஞ்
சென்று, அங்கிருந்து யூதாவுக்குத் தென்புறத்தி
௮ லுள்ள பேர்ஷேபாவுக்குப்போய்,—இப்படித்தே
சமெங்குந்திரிந்து, ஒன்பது மாதமும் இருபது
நாளுஞ் சென்றபின் யெருஷலேமுக்கு வந்து
சேர்ந்தார்கள்.-யோவாப்,இஸரவேலருக்குள்கட் ௯
கத்தை உருவத்தக்கபராக்கிரமசாலிகள் எட்டு இ
லட்சம்பேரென்றும், யூதா சந்ததியாருக்குள்ஐந்
து இலட்சம்பேரென்றும், தான்தொகையிட்டச
னத்தொகையை இராசாவிடத்தில் ஒப்பித்தான்.
இவ்விதமாய்த் தாவீது சனங்களைத் தொகை ௰
யிட்ட பின்பு, அவன் இருதயமே அவனைக்க
டிந்தது. அதினால் தாவீது யெகோவாவை
நோக்கி, இந்தக்காரியத்திலேநான்ஒருபெரியபா
வஞ் செய்தேன்: யெகோவாவே, உமதடி
யான் செய்தபாவத்தை மன்னித்தருளும்: நான்
மிகவும்புத்தியீனமாய்நடந்தேன்.—பின்பு தாவீது ௰௧
அதிகாலையில் எழுந்திருந்தபொழுது, தாவீதின்
தரிசியாகிய காத்தென்னுந் தீர்க்கதரிசிக்கு,—நீதா ௰௨
வீதிடத்தில்போய், நான் மூன்றுகாரியங்களை உ
னக்குமுன்வைக்கிறேன்; அவைகளில்ஒன்றைத்
தெரிந்துகொள், அதை நான் உனக்குச்செய்வே
னென்று யெகோவாசொல்லுகிறாரென்பதை,
சொல்லவேண்டுமென்றுயெகோவாவின்வாக்
குக்கிடைத்தது.—காத், தாவீதிடத்தில்வந்து, அவ ௰௩
னைநோக்கி, உன்தேசத்திலே ஏழுவருஷம் பஞ்
சம் வரவேண்டுமோ; உன் சத்துருக்கள்உன்னைத்
தொடர, நீ மூன்றுமாதம்அவர்கள்முன்னின்றும்
ஓடிப்போகவேண்டுமோ; உன்தேசத்திலே மூன்
றுநாள் பெருவாரிக்காய்ச்சலிருக்கவேண்டுமோ;
என்னைஅனுப்பினவருக்கு நான் போய்ச்சொல்
லவேண்டிய உத்தரமென்ன; நீ ஆலோசித்துச்
சொல்லென்றுசொல்ல,—தாவீது காத்தைநோக் ௰௪
கி, நான்மகா ஆபத்தில் அகப்பட்டிருக்கிறேன்:
நாம் யெகோவாவின் கையிலகப்பட்டால்
நலம்; அவர்தயை அதிகம்: நான்மனிதர்கையில்
மாத்திரம் அகப்படாதிருக்கவேண்டுமென்றான்.
பின்பு விடியற்காலம் முதல் குறித்தகாலம் வ ௰௫
ரைக்கும் யெகோவா இஸரவேலருக்குள்
பெருவாரிக்காய்ச்சலை வருவிக்க, தாண்முதல்
பேர்ஷேபாவரைக்குமுள்ள சனங்களில் எழுப
தினாயிரம்பேர் இறந்து போனார்கள்.—தூதன் ௰௬
யெருஷலேமைச்சங்கரிக்கும்படி அதின் மேல்
அவன்கையைஓங்கினபொழுது, யெகோவா
அந்த ஆபத்தைக்குறித்து அனுதாபப்பட்டு, ச
னங்களைச்சங்கரிக்கும் அந்தத்தூதனை நோக்கி,
இனிப்போதும் கையை எடு என்றார்: அப்
பொழுது யெகோவாவின் தூதன் எபூசி
யனான அறவ்னாவின் சூட்டுக்களத்துக்குச்சமீப
மாயிருந்தான்.—பின்பு தாவீது சனங்களைஅடித் ௰௭
ததூதனைக்கண்டபொழுது, யெகோவாவை
நோக்கி, நானேபாவஞ்செய்தேன், நானேதீங்கு
செய்தேன்: இந்த ஆடுகளோ, இவைகள் என்ன
செய்தன; உமதுகரம்எனக்கும்,என்பிதாவமிசத்

(௩௮) அதி.௨௰.௨௬. (௩௯) அதி.௰௧.௩,௬.—(௨௪. அதி. ௧.) அதி.௨௧.௧. ௧.நாளா.௨௧.௧. யாக்.௧.௰௩,௰௪. ௧.நாளா. ௨௭.௨௩,௨௪. (௨) நியா.௨௰.௧. எரே.௰௭.௫. (௫) உபா.௨.௩௬. யோசு.௰௩.௯,௰௬. எண்.௩௨.௧,௩. (௬) யோசு.௰௯. ௪௭. நியா.௰௮.௨௯. யோசு.௰௯.௨௮. நியா.௰௮.௨௮.(௯)௧.நாளா.௨௧.௫.(௰)௧.சாமு.௨௪.௫. அதி.௰௨.௰௩. ௧.சாமு. ௰௩.௰௩. (௰௧) ௧.சாமு.௨௨.௫. ௧.சாமு.௯.௰. ௧.நாளா.௨௯.௨௯. (௰௩) ௧.நாளா.௨௧.௰௨. (௰௪) சங்.௱௩.௮,௰௩,௰௪. ஏசா.௪௭.௬. சக.௧.௰௫. (௰௫) ௧.நாளா.௨௧.௰௪. (௰௬) யாத்.௰௨.௨௩. ௧.நாளா.௨௧.௰௫. ஆதி.௬.௬. ௧.சாமு.௰௫.௰. யோவே.௨.௰௩,௰௪. ௧.நாளா.௨௧.௰௫. ௨.நாளா.௩.௧. (௰௭) ௧.நாளா.௨௧.௰௭.

தாருக்கும்விரோதமாக ஓங்கும்படிவேண்டுகிறே
னென்றான்.
௰௮ அன்றைத்தினம் காத், தாவீதிடத்திற்சென்று,
அவனைநோக்கி, நீபோய் எபூசியனாகிய அறவ்
னாவின் சூட்டுக்களத்திலே யெகோவாவுக்
கு ஒரு வேதிகையை உண்டாக்கு என்றான்.—
௰௯ காத்தின்சொற்படி தாவீது யெகோவா கட்
௨௰ டளையிட்டபிரகாரம்போக,—அறவ்னாபார்த்து,
தாவீதும் அவன்பணிவிடைக்காரரும் தனக்கு
நேரே வருகிறதைக்கண்டான்: அறவ்னா புறப்
பட்டு, தாவீதின் சமீபத்தில் பூமிக்குநேரே உற
௨௧ வணங்கினான்.—பின்பு அறவ்னா என் ஆண்ட
வனாகியஇராசா,உமதடியானிடத்தில்வந்ததென்
னவென்றுகேட்க, தாவீது பெருவாரிக்காய்ச்ச
லைச்சனங்களைவிட்டு நீக்கும்பொருட்டு, யெ
கோவாவுக்கு ஒருவேதிகை உண்டாக்கும்ப
டி இந்தச்சூட்டுக்களத்தை உன்னிடத்தில்கொள்
௨௨ ளவந்தேனென்றான்.— அதற்கு அறவ்னா தாவீ
தைநோக்கி, என் ஆண்டவனாகியஇராசா இதை
வாங்கிக்கொண்டு தமக்கு நலமாகத்தோன்றுகிற
படி பலியிடுவாராக: பாரும், இங்கேதகனபலிக்
கு மாடுகளும், விறகுக்குப்போரடிக்குங் கருவிக
ளும், மாடுகளின் நுகங்களுமிருக்கின்றனவென்
றான்.—அறவ்னா ஒருஇராசாவைப்போல இவை ௨௩
களெல்லாவற்றையும் இராசாவுக்குக் கொடுத்
தான். அன்றியும் அறவ்னா இராசாவைநோக்கி,
உமதுதேவனாகிய யெகோவா உம்மைஅங்
கிகரிப்பாராக என்றான்.—இராசாஅறவ்னாவை ௨௪
நோக்கி, நான் விலைதராமல், என் தேவனாகிய
யெகோவாவுக்குத் தகனபலிகளையிடமாட்
டேன்: நான் உன்னிடத்தில்கிரயமாகவேவாங்க
வேண்டுமென்றான். பின்பு தாவீதுசூட்டுக்களத்
தையும் மாடுகளையும்ஐம்பதுஷேக்கல் வெள்ளிக்
குக்கொண்டான்.—அங்கே தாவீது யெகோ ௨௫
வாவுக்கு ஒருவேதிகையையுண்டாக்கி, தகன
பலிகளையும், ஸ்தோத்திரபலிகளையுமிட்டான்.
யெகோவாதேசத்தின்மேல்இரங்கினார்; பெரு
வாரிக்காய்ச்சல் இஸரவேலரைவிட்டுநீங்கிற்று.

---

(௰௮) ௧.நாளா.௨௧.௰௮. (௨௧) ஆதி.௨௩.௮—௰௬. எண்.௰௬.௪௮,௫௰. (௨௨) ௧.இரா.௰௯.௨௧. (௨௩) எசேக்.௨௰.௪௰,௪௧. (௨௪) ௧.நாளா.௨௧.௨௪,௨௫. (௨௫) அதி.௨௧.௰௪. வச.௨௧.

# இராசாக்களின் முதலாம் புத்தகம்.

## க. அதிகாரம்.

*க. தாவீது தீர்க்காயுள்பெற்றபொழுது அபீஷாக் அவனைத்தேற்றல்: ரு. அதொனியா அரசாளுகையைக் கைக்கொள்ளும்படி தெண்டித்தல்: ௰௧. நாதான் பத்ஷேபாவுக்கு ஆலோசனை சொல்லல்: ௰௫. பத்ஷேபா தாவீதினிடத்தில் பிரார்த்தித்தல்: ௨௨. நாதான் தாவீதுடன் சம்பாஷித்தல்: ௨௮. தாவீது பத்ஷேபாவிடத்தில் திரும்பவும் ஆணையிடல்: ௩௨. தாவீதின் கட்டளையினால் சலோமோன் அபிஷேகம்பண்ணப்படல்: ௪௧. அதொனியாவும் அவன் சனங்களும் தப்பியோடல்: ௫௰. சலோமோன் அதொனியாவுக்கு மன்னிப்புக்கொடுத்தல்.*

தாவீது இராசா தீர்க்காயுள்பெற்று விருத்தனான
காலத்தில் அவர்கள் அவனைவஸ்திரங்களினாலே
மூடியும், அவனுக்கு அனல்கொள்ளவில்லை.—
௨ ஆதலால் அவன் பணிவிடைக்காரர் அவனை
நோக்கி, எங்கள் ஆண்டவனாகிய இராசாவினி
மித்தம் இளவயதுள்ள ஒருகன்னிகையைத் தே
டுவோம்: அவள் இராசாவின் முன்னின்று, அவ
ரைப்பாலித்துக்கொள்வாள், அவள் உமது மடி
யிலே சயனித்தால், எங்கள் ஆண்டவனாகிய இ
ராசாவுக்கு அனலுண்டாகுமென்றுசொல்லி,—
௩ இஸரவேலின் எல்லையெங்கும் சௌந்தரியவதி
யாகிய ஒரு கன்னிகையைத்தேடி, ஊனேம் ஊ
ராளாகிய அபீஷாக்கைக் கண்டழைத்து, இரா
௪ சாவிடத்தில் கொண்டுவந்தார்கள்.—அந்தக்கன்
னிகை மிகவும் சௌந்தரியவதி, அவள் இராசா
வைப்பரிபாலித்து, அவனிடத்தில் சேவித்துவந்
தாள்: இராசா அவளை அறியவில்லை.
௫ அகீத்தின் புத்திரனாகிய அதோனியா தன்னை
உயர்த்தி, நான் அரசாளுவேனென்று சொல்லிக்
கொண்டு, தனக்கு இரதங்களையும்குதிரைவீரரை
யும், தனக்குமுன்னோட ஐம்பதுகாலாள்களையும்
௬ ஆயத்தப்படுத்தினான்.—அவன் பிதா, நீ இப்படிச்
செய்ததென்னவென்று எப்பொழுதாவது அவ
னைப்பிரியவீனப் படுத்தினதில்லை; அவன் அப்
ஷாலோமுக்கு நேரிளையவனாகப்பிறந்தவன்.—
௭ அவன்சேருயாவின்புத்திரனாகிய யோவாப்போ
டும், ஆசாரியனாகிய அப்யாதாரோடும் ஆலோச
னை பண்ணிவந்தான்: இவர்கள் அதோனியா
வைப்பின்பற்றி அவனுக்குத்துணையாய் நின்றார்
௮ கள்.—ஆசாரியனாகிய சாதோக்கும், யோய்தா
வின் புத்திரனாகிய பினாயாவும், தீர்க்கதரிசியாகி
ய நாதானும், ஷிமியியும், ரேயியும், தாவீதின் ப
ராக்கிரமசாலிகளும், அதோனியாவுடன் கூட
௯ வில்லை.—அதொனியா ஐன்ரோகேலினுள்ளசோ
கெலெத்தென்னுங் கல்லுக்குச் சமீபத்தில் ஆடு
மாடுகளையும், மற்றைப்புஷ்டியான மிருகங்களை
யும் அடித்து, இராசாவின்புத்திரராகியதன்சகோ
தரர்யாவரையும், இராசாவின் தாசராகிய யூதா
வமிசத்தார் சகலரையும், விருந்துக்கு அழைத்
தான்.—தீர்க்கதரிசியாகிய நாதானையும், பினாயா ௰
வையும், பராக்கிரமசாலிகளையும், தன்சகோதர
னாகிய சலோமோனையும் அழைக்கவில்லை.
அதினால்நாதான்சலோமோனின்மாதாவாகிய ௰௧
பத்ஷேபாவைநோக்கி, எங்கள் ஆண்டவனாகிய
இராசாவுக்குத்தெரியாதபடி, அகீத்தின்புத்திரனா
கிய அதோனியாஅரசாளுகிறானென்பது நீகேள்
விப்படவில்லையா.—இப்பொழுது வா, நான் உ ௰௨
னக்கு ஆலோசனை சொல்லுவேன், அதினால் நீ
உன்சுயபிராணனையும், உன்புத்திரனாகியசலோ
மோனின் பிராணனையும் இரட்சிப்பாய்.—நீ பு ௰௩
றப்பட்டு இராசாவினிடத்தில்போய், அவரை
நோக்கி, என்ஆண்டவனே இராசாவே, நீர் உம
து புத்திரனாகிய சலோமோன் எனக்குப்பின்அர
சாளுவான், அவனே என் சிங்காசனத்தில் வீற்
றிருப்பானென்றுசொல்லி, உமதடியாளுக்கு ஆ
ணையிடவில்லையா; அப்படியிருக்க, அதொனி
யா அரசாளுகிறதென்னவென்றுகேள்.—நீ இரா ௰௪
சாவுடன் அங்கேபேசிநிற்கும்பொழுது, நானும்
உனக்குப்பின்வந்து, உன்வாக்கை நிலைப்படுத்
துவேன் என்றான்.
பின்பு பத்ஷேபா பள்ளிஅறையில் இராசாவி ௰௫
டத்தில்போனாள்: இராசா மிகுவிருத்தனாயிருந்
தான்; ஊனேம்ஊராளாகிய அபீஷாக் இராசா
விடத்தில்சேவித்துக்கொண்டிருந்தாள்.-பத்ஷே ௰௬
பா இராசாவைப்பணிந்து, வணங்கினாள். இரா
சா உனக்கு என்னவேண்டுமென்றுகேட்க,—
அவள் அவனைநோக்கி,என்ஆண்டவனே,எனக் ௰௭
குப்பின் உமது புத்திரனாகிய சலோமோன் அர
சாளுவான், அவன் என் சிங்காசனத்தில் வீற்
றிருப்பானென்று,உமதுதேவனாகியயெகோ
வாவைக்கொண்டு உமதடியாளுக்கு ஆணையிட்
டிருக்கிறீரே.—பாரும், இப்பொழுது அதொனி ௰௮
யா அரசாளுகிறான்; என் ஆண்டவனாகிய இரா
சாவுக்கு அது தெரியவில்லை.—அவன் அநேகஆ ௰௯
டுமாடுகளையும், புஷ்டியான மிருகங்களையும் அ
டித்து, இராசாவின் சகலபுத்திரரையும், ஆசாரி
யனாகியஅப்யாதாரையும், சேனாபதியாகிய யோ
வாப்பையும் விருந்துக்கு அழைத்தான்: உமது
அடியானாகிய சலோமோனை அழைக்கவில்லை.—
இப்பொழுது என் ஆண்டவனே, இராசாவே, உ௰

(க.அதி.௩.) யோசு.௰௯.௰௮. (ரு) உ.சாமு.௩.௪. உ.சாமு.௰ரு.க. (௬) உ.சாமு.௩.௩,௪. (௭) உ.சாமு.உ௰.உ௫. அதி. உ.உஉ,உ௮. (௮) அதி.௪.௰௮. உ.சாமு.உ௩.௮. (௯) உ.சாமு.௰௭.௰௭. (௰க) உ.சாமு.௩.௩,௪. (௰௩) க.நாளா.உஉ.௯. (௰௭) வச.௰௩,௩௰. (௰௯) வச.௭,௮,௯,உ௫.

என் ஆண்டவஞகிய இராசாவின் சிங்காசனத்
தில்தமக்குப்பின் வீற்றிருப்பவன் இன்னுனென்
றுதங்களுக்குத்தெரிவிப்பீரென்று, சமஸ்த இஸ்ர
௨௧ வேலரும் உம்மை நோக்குகிறார்கள்.—தெரிவி
யாவிட்டால், என் ஆண்டவஞகியஇராசா,தமது
பிதாக்களுடன் மகா நித்திரையடையும்பொழு
து, நானும், என்புத்திரஞகிய சலோமோனும்,
குற்றவாளிகளாய் எண்ணப்படுவோம்என்றாள்.
௨௨ அவள் இராசாவுடன் பேசிக்கொண்டு நிற்கை
யில், தீர்க்கதரிசியாகிய நாதானும் வந்தான்.—
௨௩ அப்பொழுது தீர்க்கதரிசியாகிய நாதானும் வந்தி
ருக்கிறுனென்றுஇராசாவுக்குத்தெரிவித்தார்கள்.
அவன் இராசாவின் சமுகத்தில் பூமிக்குநேரேத
௨௪ லைகுனிந்து வணங்கிஞன்.—பின்பு நாதான் என்
ஆண்டவனே, இராசாவே, எனக்குப் பின் அ
தொனியா அரசாளுவான், அவன் என் சிங்காச
னத்தில் வீற்றிருப்பானென்று நீர் சொல்லியிருக்
௨௫ கிறீரா.—அவன் இன்றைத்தினம்போய், அநேக
ஆடுமாடுகளையும், மற்றப்புஷ்டியான மிருகங்க
ளையும் அடித்து, இராசாவின் சகல புத்திரரை
யும், சேனுபதிகளையும், ஆசாரியஞகிய அப்யா
தாரையும் விருந்துக்கு அழைத்தான்; அவர்கள்
அவன் சமுகத்தில் போசன பானம்பண்ணி, இ
ராசாவாகிய அதொனியாவாழ்கவென்று சொல்
௨௬ லுகிறார்கள்.—உமது அடியாஞகிய என்னையும்,
ஆசாரியஞகிய சாதோக்கையும், யோயதாவின்
புத்திரஞகிய பினுயாவையும், உமது அடியாஞ
கிய சலோமோனையும் அவன் அழைக்கவில்லை.-
௨௭ என் ஆண்டவஞகிய இராசா, தமக்குப் பின் த
மது சிங்காசனத்தில் வீற்றிருப்பவன் இன்னு
னென்று உமது தாசனுக்குத்தெரிவிக்கவில்லை,
இந்தக்காரியம் என் ஆண்டவஞகிய இராசாவி
ஞல் செய்யப்பட்டதாவென்றான்.
௨௮ அப்பொழுது தாவீது இராசா, பத்ஷேபாவை
அழைப்பியென்றான். பின்பு அவள் இராசாவின்
சமுகத்தில்வந்து, இராசாவுக்கு முன்னே நின்
௨௯ றாள்.—இராசா, சகலவித கிலேசங்களினின்றும்
என் ஆத்துமத்தை மீட்டருளிய யெகோவா
௩௰ நித்தியராஞல்,—எனக்குப் பின் உன்புத்திரஞகி
ய சலோமோன் அரசாளுவான்; எனக்குப் பின்
அவன்என்சிங்காசனத்தில்வீற்றிருப்பானென்று
சொல்லி, இஸ்ரவேலின் தேவஞகிய யெகோ
வாவைக்கொண்டு நான் ஆணையிட்டபிரகாரம்,
இன்றைத்தினம் நான் நிச்சயமாய்ச் செய்வே
௩௧ னென்றான்.—அப்பொழுது பத்ஷேபா பூமிக்கு
நேரே தாழ்ந்து, இராசாவை நமஸ்காரம்பண்ணி,
என் ஆண்டவஞகிய தாவீது, சதாகாலமும் வாழ்
கவென்றாள்.
௩௨ பின்பு தாவீது இராசா, ஆசாரியஞகிய சா
தோக்கையும், தீர்க்கதரிசியாகிய நாதானையும்,
யோயதாவின்புத்திரஞகிய பினுயாவையும் என்
னிடத்தில் வரச்சொல்லுங்களென்றான். அவர்
கள் இராசாவின் சமுகத்தில் சேர்ந்தபொழுது,—
இராசா அவர்களைநோக்கி, உங்கள் ஆண்டவனு ௩௩
டையசேவகரைக்கூட்டிக்கொண்டு, என்புத்திர
ஞகிய சலோமோனை எனது கோவேறு கழுதை
யின்மேல்ஏற்றி,கீயோனுக்கு அழைத்துக்கொண்
டுபோங்கள்:—அங்கே ஆசாரியஞகிய சாதோக் ௩௪
கும், தீர்க்கதரிசியாகிய நாதானும் அவனை இஸ்ர
வேலருக்கு இராசாவாக அபிஷேகம் பண்ணு
வார்களாக: எக்காளத்தையூதி, இராசாவாகியச
லோமோன் வாழ்கவென்று சொல்லுங்கள்.—
அதின்பின்பு அவன் என்சிங்காசனத்தின்மேல் ௩௫
வீற்றிருக்கும்படி நீங்களும் அவன்பின் வாருங்
கள்: அவன் என்னுடையஸ்தலத்தில் அரசாளு
வான், இஸ்ரவேலர்மேலும், யூதாவமிசத்தார்மே
லும் ஆளுகைசெய்யும்படி, அவனை ஏற்படுத்தி
னேனென்றான்.—யோயதாவின்புத்திரஞகியபி ௩௬
னுயா, இராசாவுக்கு உத்தரமாக, ஆமென்: என்
ஆண்டவஞகிய இராசாவின் தேவஞன யெ
கோவாவும் இப்படியே சொல்வாராக.—யெ ௩௭
கோவா, என் ஆண்டவஞகிய இராசாவுடன்இ
ருந்ததுபோலச் சலோமோனேடும் இருந்து, அ
வன்சிங்காசனத்தை, என் ஆண்டவஞகிய தாவீ
துஇராசாவின் சிங்காசனத்திலும் பெரிதாக்குவா
ராகவென்றான்.—பின்புஆசாரியஞகியசாதோக் ௩௮
கும், தீர்க்கதரிசியாகிய நாதானும், யோயதாவின்
புத்திரஞகிய பினுயாவும், கிரேத்தியரும், பெ
லேத்தியரும் இறங்கிப்போய், சலோமோனைத்
தாவீதுஇராசாவின்கோவேறுகழுதைமேலேற்றி,
கீயோனுக்கு நடத்திக்கொண்டு போனார்கள்.—
ஆசாரியஞகியசாதோக்ஒருகொம்புஎண்ணெயை ௩௯
ஆவாசத்தினின்று எடுத்து, சலோமோனுக்குஅபி
ஷேகம்பண்ணிஞன். அப்பொழுது எக்காளமூ
தி, சமஸ்தசனங்களும், சலோமோன் இராசா
வாழ்கவென்றார்கள்.—சமஸ்தசனங்களும் அவ ௪௰
னுக்குப்பின்னே போனார்கள், தொனியினலே
பூமிபிளக்கச்சனங்கள்நாகசுரங்களையூதி, மகா
ஆனந்தத்துடன் சந்தோஷப்பட்டார்கள்.
அதொனியாவும், அவனேடிருந்தவிருந்தாளி ௪௧
கள் அனைவரும், போசனம்பண்ணி முடிந்த
பொழுது, அதைக்கேட்டார்கள். யோவாப் எக்
காளத்தொனியைக் கேட்டபொழுது, நகரத்தி
லுண்டான இந்த ஆரவாரமேதென்றான்.—அ ௪௨
வன் பேசிக்கொண்டிருக்கிறபொழுது, ஆசாரி
யஞகிய அப்யாதாரின்புத்திரஞகியயோனுதான்
வந்தான்: அதொனியா அவனைநோக்கி, உள்ளே
வா; நீயோக்கியன், நற்செய்தி கொண்டுவருகிற
வன்என்றான்.-அதற்குஉத்தரமாய்யோனுதான்அ ௪௩
தொனியாவைநோக்கி,நம்முடைய ஆண்டவஞ
கியதாவீதுஇராசா, சலோமோனுக்கு இராசபட்
டங்கொடுத்துவிட்டார்.—இராசா,ஆசாரியஞகிய ௪௪

(௨௧) உபா.௩௧.௰௬. அதி.௨.௰. (௨௫) வச.௰௯. ௧.சாமு.௰.௨௪. (௨௯) ௨.சாமு.௪.௯. (௩௰) வச.௰௭. (௩௧) நிகி.௨.௩. தானி.௨.௪. (௩௩) ௨.சாமு.௨௰.௬. எஸ்த.௬.௮. ௨.நாளா.௩௨.௩௰. (௩௪) ௧.சாமு.௰.௧. ௨.சாமு.௨.௪. ௨.இரா.௯.௩. ௨.சாமு.௰௫.௰. ௨.இரா.௯.௰௩. (௩௭) யோசு.௧.௫,௰௭. (௩௮) ௨.சாமு.௮.௰௮. (௩௯) யாத்.௩௰.௨௩,௨௫,௩௨. சங்.௮௯.௨௰. ௧.நாளா.௨௯.௨௨. ௧.சாமு.௰.௨௪. (௪௨) ௨.சாமு.௰௮.௨௭.

சாதோக்கையும், தீர்க்கதரிசியாகிய நாதானையும்,
யோயதாவின் புத்திரனாகிய பெனாயாவையும், கி
ரேத்தியரையும், பெலேத்தியரையும் அவனோடே
னுப்ப,அவர்கள் அவனை இராசாவின் கோவேறுக
௪௫ ழுதையில் ஏற்றினார்கள்.-ஆசாரியனாகியசாதோக்
கும்,தீர்க்கதரிசியாகியநாதானும்,கீயோனில் அவ
னுக்கு இராசஅபிஷேகம் பண்ணினார்கள்: பின்
பு அவர்கள் அங்கிருந்து நகரம்ஆரவாரிக்கத்தக்க
தாக, மகா ஆனந்தத்துடன் போனார்கள். அது
௪௬ தான் நீங்கள்கேட்ட ஆரவாரம்.—சலோமோன்
௪௭ இராசசிங்காசனத்தில் வீற்றிருக்கிறான்.—இன்
னும்இராசாவின்பரிசனங்கள் எங்கள் ஆண்டவ
னாகியதாவீது இராசாவை வாழ்த்துதல்செய்யவந்
து, தேவன், உமது நாமத்திலும்சலோமோனின்
நாமத்தைப்பிரபலப்படுத்தி, உமதுசிங்காசனத்தி
லும் அவனுடையசிங்காசனத்தைமகிமைப்படுத்
துவாராக என்றார்கள். இராசா கட்டிலின்மேற்
௪௮ குனிந்துபணிந்துகொண்டார்.—பின்னும் இரா
சா, இன்றைத்தினம் என்கண்காண ஒருவனை
என்சிங்காசனத்தில் வீற்றிருக்கும்படிசெய்த, இ
ஸரவேலின் தேவனாகிய யெகோவாவுக்குஸ்
௪௯ தோத்திரமென்றுஞ் சொன்னாரென்றான்.-அதொ
னியாவுடன் இருந்த விருந்தாளிகளெல்லாரும்
பயந்து, எழுந்து தங்கள் தங்கள்வழியே போய்
விட்டார்கள்.

௫௰ அதொனியாவுஞ் சலோமோனினிமித்தம், ப
யந்தெழுந்துபோய், வேதிகையின்கொம்புகளைப்
௫௧ பிடித்தான்.—பின்பு அதொனியா சலோமோன்
இராசாவுக்குப் பயந்ததினாலே வேதிகையின்
கொம்புகளைப் பிடித்து, கட்கத்தினால் தமதடியா
னைக்கொல்லமாட்டேனென்று சலோமோன் இ
ராசா இன்றைத்தினம் எனக்கு ஆணையிட்டுத் த
ருவாராக வென்கிறானென்று, சலோமோனுக்
௫௨ குத்தெரிவிக்கப்பட்டது.-அதனால் சலோமோன்
அவன்யோக்கியனென்று காணப்பட்டால், அ
வன் தலைமயிரிலொன்றுந் தரையிலே விழமாட்
டாது: அவனிடத்தில் ஏதாவது தீங்கு காணப்
௫௩ பட்டால், அவன் சாகவேண்டுமென்றான்.-பின்
பு சலோமோன் இராசா ஆளனுப்ப, வேதிகை
யினின்றுங் கூட்டிக்கொண்டு வந்தார்கள்; அ
வன்வந்து சலோமோன் இராசாவை நமஸ்காரம்
பண்ண, சலோமோன் அவனை நோக்கி, உன்
வீட்டுக்குப்போவென்றான்.

## ௨. அதிகாரம்.

௧. தாவீது இறுதியிலே சலோமோனுக்குப் புத்தி சொல்லல்: ௫. யோவாப், பர்சில்லா, ஷிமியி என்பவர்களைக்குறித்து ஆலோசனைசொல்லல்: ௰. தாவீது மரித்த பின்பு சலோமோன் அரசாளல்: ௰௩. அதொனியா அபீஷாக்கை விவாகஞ்செய்யத்துணிந்ததினால் கொல்லப்படல்: ௨௬.அப்யாதார்ஆசாரியப்பட்டத்தைஇழத்தல்: ௨௮.யோவாப்வேதிகையின்கொம்பில்அடைக்கலம்புகுதல்: ௩௫. யோவாப்பின் உத்தியோகம் பெனாயாவுக்கும் அப்யாதாரின் உத்தியோகம்சாதோக்குக்குங்கிடைத்தல்: ௩௬. ஷிமியி கொலை செய்யப்படல்.

தாவீதுக்கு மரணகாலஞ்சமீபித்தபொழுது,தன் ௧
புத்திரனாகிய சலோமோனைநோக்கி,—நான் பூமி ௨
யிலுள்ள யாவரும் போகிறவழியேபோகிறேன்:
நீ ஆண்மையைக்காட்டிக்கொண்டு பலமாயிரு.-
நீ செய்யுஞ் சகலகாரியத்திலும், நீ போகும் எவ் ௩
விடத்திலும் வாழ்வடையும்பொருட்டு, உன் தே
வனாகிய யெகோவாவின் காவலைக்காத்து,
அவர் அருளியவழியேநடந்து, மோசேயின்வே
தபுத்தகத்தில் எழுதியிருக்கிற அவருடைய விதி
களையும், கட்டளைகளையும், கற்பனைகளையும், பி
ரமாணங்களையும் பேணிக்கொள்.—அதினால் யெ ௪
கோவா, உன்பிள்ளைகள் உண்மையுள்ளவர்க
ளாய்த் தங்கள் பூரண இருதயத்தோடும் தங்கள்
பூரண ஆத்துமத்தோடும் எனக்குமுன் நடந்து,
தங்கள் நெறிகளிலே சாவதானமா யிருப்பார்க
ளாகில், இஸரவேலின் சிங்காசனத்தில் வீற்றி
ருப்பவன் ஒழிந்துபோகமாட்டானென்று என்
னைக்குறித்து உத்தரம்சொல்லிய தமது வாக்கை,
நிலைப்படுத்துவார்.

இன்னும் நேரின்புத்திரனாகிய அப்னேர், எத் ௫
தெரின் புத்திரனாகிய அமாசா என்னும் இஸர
வேலின் சேனாபதிகளிருவரையும் சேருயாவின்
புத்திரனாகிய யோவாப் கொன்றுபோட்டு, சமா
தானகாலத்தில் யுத்தம்போல இரத்தஞ்சிந்தி,தன்
அரையிலிருந்தகச்சிலும், தன்பாதரட்சையிலும்,
யுத்தத்தின்இரத்தத்தையிட்டானே, இதில் எனக்
கும் அவர்களுக்கும் அவன்செய்ததை நீ அறி
வாய்.—ஆகையால் நீ உன் புத்திக்கிசைய அ ௬
வனுக்குச்செய், அவனுடைய நரைமயிர்பிரே
தக்குழியில் சமாதானத்துடன் சேரவிடாதே.—
கிலியாத்தியனாகிய பர்சில்லாயின் புத்திரருக்குத் ௭
தயைகாட்டி, உன்போசனபீடத்திலே போச
னம்பண்ணுகிறவர்களுக்குள்ளேஅவர்களுக்கும்
இடங்கொடு: உன்சகோதரனாகிய அப்ஷாலோ
முக்கு அஞ்சி நான் தப்பியோடின சமயத்தில்
என்னைச்சார்ந்து நின்றார்கள்.—அன்றியும் பகூ ௮
ரீமிலுள்ள பென்யமீனியனான கேராவின் புத்தி
ரனாகியஷிமியி உன்னிடத்திலிருக்கிறான், நான்
மகனாயிமுக்குப் போனதினத்தில் அவன் என்
னைக்கொடிதாகத் தூஷணித்தான்: பின்பு அவன்
என்னைச்சந்திக்கும்படி யோர்தானில் வந்தபொ
ழுது, நான் உன்னைக்கட்கத்தினாலே கொன்று

(௪௬) ௧.நாளா.௨௯.௨௩. (௪௭) வச.௩௭. ஆதி.௪௭.௩௧. (௪௮) அதி.௩.௬. சங்.௱௩௨.௰௧,௰௨. (௫௰) அதி.௨.௨௮. (௫௨) ௧.சாமு.௰௪.௪௫. ௨.சாமு.௰௪.௰௧. அப்.௨௭.௩௪.—(௨. அதி. ௧.) ஆதி.௪௭.௨௯. உபா.௩௧.௰௪. (௨) யோசு. ௨௩.௰௪. உபா.௰௭.௰௯,௨௰. உபா.௨௯.௯. யோசு.௧.௭. ௧.நாளா.௨௨.௰௨,௰௩. ௧.சாமு.௰௮.௫. (௪) ௨.சாமு.௭.௨௫. சங்.௱௩௨.௰௨. ௨.இரா.௨௰.௩. ௨.சாமு.௭.௰௨,௰௩. அதி.௮.௨௫. (௫) ௨.சாமு.௩.௩௧. ௨.சாமு.௩.௨௭. ௨.சாமு. ௨௰.௰. (௬) வச.௯. நீதி.௨௰.௨௬. (௭) ௨.சாமு.௰௯.௩௧,௩௮. ௨.சாமு.௯.௭,௰. ௨.சாமு.௰௭.௨௭. (௮) ௨.சாமு.௰௬. ௫. ௨.சாமு.௰௯.௰௮. ௨.சாமு.௰௯.௨௩.

போடமாட்டேன் என்று யெகோவாவைக்
௯ கொண்டு ஆணையிட்டேன்.—ஆகிலும் நீ அவ
னைக்குற்றமற்றவனென்று எண்ணவேண்டாம்:
நீ புத்திமான், அவனுக்கு இன்னதுசெய்யத் தகு
மென்பது உனக்குத்தெரியும்; அவன் நரைமயி
ரை எப்படியும் இரத்தத்துடன் பிரேதக்குழியில்
சேர்ப்பாயென்றான்.
௰ பின்பு தாவீது தன் முன்னோருடன் மகா நித்
திரையடைந்து, தாவீதின் நகரத்தில் அடக்கம்
௰௧ பண்ணப்பட்டான்.–தாவீது இஸ்ரவேலரைநாற்
பதுவருஷம் அரசாண்டான்: ஏழுவருஷம் எப்
ரோனிலும், முப்பத்துமூன்றுவருஷம் யெருஷ
௰௨ லேமிலும் அரசாண்டான்.—சலோமோன் தன்
பிதாவாகிய தாவீதின் சிங்காசனத்தில் வீற்றிருந்
தான்; அவனுடைய இராச்சியம் மிகவும் ஸ்திரப்
பட்டது.
௰௩ அகீத்தின் புத்திரனாகிய அதொனியா சலோ
மோனின் மாதாவாகிய பத்ஷேபாவிடத்தில்வந்
தான். அவள், நீ சமாதானமாய்வருகிறாயாவென்
றுகேட்க, சமாதானமாய் வருகிறேனென்றான்.—
௰௪ இன்னும் அவன், நான் உம்மிடத்திற் சொல்ல
வேண்டியவை சில உண்டென்றுசொல்ல, அ
௰௫ வள் அதைச் சொல்லென்றாள்.—அப்பொழுது
அவன், இராச்சியம் எனக்குரித்தாயிருந்ததென்
றும், நான் அரசாளவேண்டுமென்று இஸ்ரவே
லர் யாவரும் அபேட்சித்திருந்தார்களென்றும்,
நீர் அறிவீர்: ஆகிலும் இராச்சியம் மாறுபட்டு,
என்சகோதரனுக்காயிற்று: யெகோவாவினால்
௰௬ அது அவனுக்குக் கிடைத்தது.—இப்பொழுது
நான் உம்மிடத்தில் ஒருகாரியங் கேட்கிறேன்,
மறுக்கவேண்டாமென்றுசொல்ல, அவள் அவ
௰௭ னுடனே, சொல்லென்றாள்.—பின்பு அதொ
னியா, ஷூனேம்ஊராளாகிய அபீஷாக்கை என
க்கு விவாகஞ்செய்துகொடுக்க, சலோமோன் இ
ராசாவிடத்தில்பேசும்பொருட்டு,உம்மைவேண்
டுகிறேன்; அவன் உமதுசொல்லை மறுக்கமாட்
௰௮ டானென்றான்.—பத்ஷேபா,நல்லது, உன்னி
மித்தம் இராசாவிடத்தில்பேசுவேனென்றாள்.—
௰௯ பத்ஷேபா அதொனியாவுக்காகச் சலோமோன்
இராசாவிடத்தில் பேசும்படி போனாள். இரா
சா அவளைச்சந்திக்க எழுந்துபோய், அவளைவ
ணங்கி, தன் சிங்காசனத்திலிருந்து கொண்டு இ
ராசாவின் மாதாவுக்கு ஒரு ஆசனம் இடுவிக்க,
௨௰ அவள் அவன் வலப்புறத்திலிருந்தாள்.—பின்பு
அவள், நான் உம்மிடத்தில் ஒரு அற்பகாரியம்
கேட்கவிரும்புகிறேன்; இல்லையென்று சொல்
லவேண்டாமென்று சொல்ல, இராசா அவளை
நோக்கி, என்மாதாவே, கேளும், நான் இல்லை
௨௧ என்றுசொல்லமாட்டேனென்றான்.–அவள், ஷூ
னேம் ஊராளாகிய அபீஷாக்கை உமது சகோத
ரனாகிய அதொனியாவுக்கு விவாகஞ்செய்விக்க
வேண்டுமென்று கேட்கிறேனென்றாள்.—அதற் ௨௨
கு உத்தரமாய், சலோமோன் இராசா, தன் மாதா
வைநோக்கி, நீர் அதொனியாவுக்காக ஷூனேம்
ஊராளாகிய அபீஷாக்கைக்கேட்டதென்ன; அ
வன் எனக்கு மூத்தசகோதரனானபடியால் அவ
னுக்காகவும், ஆசாரியனாகிய அப்யாதாருக்காக
வும், சேருயாவின் புத்திரனாகிய யோவாப்புக்கா
கவும், இராச்சியத்தையுங்கேளுமென்றான்.–பின் ௨௩
னும் சலோமோன் இராசா, அதொனியா இந்த
வாக்கைச்சொல்லி, தனக்குப்பிராணமோசம் வ
ருவியாதேபோனால், தேவன் எனக்கு அப்படி
யும், அதற்கதிகமுஞ்செய்வாராக.–ஆதலால் தாம் ௨௪
செய்த வாக்குத்தத்தத்தின்படி என்னை நிலைப்
படுத்தி, என் பிதாவாகிய தாவீதின் சிங்காசனத்
தில் என்னை வீற்றிருக்கப்பண்ணின யெகோ
வா நித்தியரானால், அதொனியா இன்றைத்தி
னங்கொல்லப்படவேண்டுமென்றுசொல்லி,யெ
கோவாவைக்கொண்டு ஆணையிட்டான்.–பின் ௨௫
பு சலோமோன் இராசா யோயதாவின் புத்திரனா
கிய பெனாயாவை அனுப்ப,இவன் அவன் இறந்து
போகும்வண்ணம் அவன்மேற்பாய்ந்தான்.
இராசா,ஆசாரியனாகிய அப்யாதாரையும்நோக் ௨௬
கி, நீ அனதோத்திலிருக்கிற உன் நிலத்துக்குப்
போய்விடு; நீ மரணத்துக்குப்பாத்திரன்: ஆகி
லும் நீ என்பிதாவாகிய தாவீதுக்குமுன் தே
வனாகிய யெகோவாவின் பெட்டியைச்சுமந்
தபடியினாலும், என்பிதா அனுபவித்த உபத்திர
வமெல்லாம்நீயும்அனுபவித்தபடியினாலும், நான்
இப்பொழுது உன்னைக்கொலைசெய்ய மாட்டே
னென்றான்.—இவ்விதமாய்ச் சலோமோன் அபி ௨௭
யாதாரை யெகோவாவுக்கு ஆசாரியனாயிரா
மல் தள்ளிவிட்டதனால், ஷீலோவில் ஏலியின்
வமிசத்தைக்குறித்து யெகோவா சொல்லிய
வாக்கை நிறைவேற்றினான்.
யோவாப் அப்ஷாலோம் பட்சம் சாயாதிருந் ௨௮
தாலும், அதொனியாபட்சம் சாய்ந்து நின்றபடி
யால், நடந்த சமாசாரங்கள் தெரிவிக்கப்பட்ட
மாத்திரத்தில்யெகோவாவின்ஆவாசத்துக்குள்
ளே ஓடிப்போய், வேதிகையின் கொம்புகளைப்
பிடித்தான்.—யோவாப் யெகோவாவின் ஆ ௨௯
வாசத்தில் ஓடிப்போய்வேதிகையின் சமீபத்திலி
ருக்கிறானென்றுசலோமோன் இராசாவுக்குத்தெ
ரிவிக்கப்பட்டது. அப்பொழுது சலோமோன்,
நீபோய் அவன்மேற் பாய்வாயென்றுசொல்லி
யோயதாவின் புத்திரனாகிய பெனாயாவை அனுப்
பினான்.—பெனாயா யெகோவாவின் ஆவாசத் ௩௰
துக்குப்போய்அவனைநோக்கி, இராசாஉன்னைப்
புறப்பட்டு வரச்சொல்லுகிறாரென்று சொல்ல,
இவன் நான்வரமாட்டேன்; இங்கே சாவேன்

(௯) யாத்.௨௰.௭. யோபு.௯.௨௮. ஆதி.௪௨.௩௮. (௰) அதி.௧.௨௧. ௨.சாமு.௫.௭. (௰௧) ௨.சாமு.௫.௪. ௧.நாளா.௨௯. ௨௯. (௰௨) ௧.நாளா.௨௯.௨௩. ௨.நாளா.௧.௧. (௰௩) ௧.சாமு.௰௬.௪,௫. (௰௫) அதி.௧.௫. ௧.நாளா.௨௨.௯,௰. நீதி.௨௧.௩௰. தானி.௨.௨௧. (௰௬) சங்.௱௩௨.௰. (௰௭) அதி.௧.௩,௪. (௰௯) யாத்.௨௰.௰௨. சங்.௪௫.௯. (௨௨) அதி.௧.௭. (௨௩) ரூத்.௧.௰௭. (௨௪) ௨.சாமு.௭.௰௧,௰௩. ௧.நாளா.௨௨.௰. (௨௬) யோசு.௨௧.௰௮. ௧.சாமு.௨௩.௬. ௨.சாமு.௰௫.௨௪, ௨௯. ௧.சாமு.௨௨.௨௰,௨௩. ௨.சாமு.௰௫.௨௪. (௨௭) ௧.சாமு.௨.௩௧—௩௫. (௨௮) அதி.௧.௭. அதி.௧.௫௰.

என்றான். பினாயா யோவாப் இன்னபிரகாரம்
உத்தரஞ்சொன்னானென்று அவன்வாக்கை இரா
௩௧ சாவுக்குத்தெரிவிக்க,—இராசா அவனைநோக்கி,
அவன்சொல்லியபடி நீசெய்து, அவனைக்கொன்
று அடக்கம்பண்ணி, யோவாப் நியாயமின்றிச்
சிந்தின இரத்தப்பழியை என்னிலும், என்பிதா
௩௨ வமிசத்தாரிலும் நின்றுவிலக்கிப்போடு.—இப்ப
டி என்பிதாவாகியதாவீது அறியாதபடி,தன்னைப்
பார்க்கிலும் சற்குணரும் உத்தமருமான நேரின்
புத்திரனாகிய அப்னேரென்னும் இஸரவேல் சே
னாபதியும், எத்தேரின்புத்திரனான அமாசாவென்
னும் யூதாவின்சேனாபதியுமாகிய இருவர்மேலும்
பாய்ந்து, கட்கத்தினால்அவர்களைக்கொன்றுபோ
ட்டவனுடையதலையின்மேல் அவன் இரத்தப்ப
௩௩ ழியை யெகோவாவருவிப்பாராக.-அவர்களு
டையஇரத்தப்பழி யோவாப்பின்தலையின்மேலு
ம், அவன் சந்ததியின் தலையின்மேலும்,சதாகால
முந்திரும்பும்: தாவீதின்மேலும், அவன் சந்ததி
யின்மேலும், அவன்வமிசத்தின்மேலும், அவன்
சிங்காசனத்தின்மேலும்சதாகாலமும் யெகோ
வாவினின்று சமாதானமுண்டாகுமென்றான்.—
௩௪ அப்பொழுது யோயதாவின்புத்திரனாகிய பினா
யாபோய், அவன்மேற்பாய்ந்து அவனைக்கொன்
றுபோட்டான்: அவன் வனத்திலுள்ள தன் சுய
வீட்டில் அடக்கம்பண்ணப்பட்டான்.
௩௫ அவனுக்குப்பிரதியாக இராசா யோயதாவின்
புத்திரனாகிய பினாயாவைப்பிரதான சேனாபதி
யாக்கினான்: அப்யாதாருக்குப்பிரதியாக இராசா
ஆசாரியனாகியசாதோக்கை ஏற்படுத்தினான்.
௩௬ பின்புஇராசாஆளனுப்பி,ஷிமியியைஅழைப்
பித்து, அவனைநோக்கி, நீயெருஷலேமில்ஒருவீ
டுகட்டிக்கொண்டுஅங்கேவாசம்பண்ணு,அங்கி
ருந்து நீவேறே ஒரு இடத்துக்குப்போகவேண்
௩௭ டாம்.-நீபுறப்பட்டுக்கீதரோன்ஓடையைக்கடந்
துபோகிறஅத்தினத்தில் நீசாகவேண்டுமென்று,
நீ நிச்சயமாய் அறிந்துகொள்: உன் இரத்தப்பழி
௩௮ உன்சுயதலையில் தங்கும்என்றுசொல்ல,—ஷிமி
யிஇராசாவைநோக்கி,சொல் நல்லது: என்ஆண்
டவனாகிய இராசாசொன்னபடி உமதடியானா
கிய நான் செய்வேனென்றான். அப்படியேஷி
மியி யெருஷலேமிலே நெடுநாளாய்வாசம்பண்
௩௯ ணினான்.—மூன்று வருஷஞ்சென்றபின்பு, ஷி
மியின்பணிவிடைக்காரர் இருவர் காத்தின்இரா
சாவும் மாகாவின்புத்திரனுமாகிய ஆகிஷ் இடத்
தில் ஓடிவிட்டார்கள். உன் பணிவிடைக்காரர்
காத்தில் இருக்கிறார்களென்று ஷிமியிக்குத்தெ
௪௰ ரிவித்தார்கள்.—அப்பொழுது ஷிமியி எழுந்து
தன்கழுதையின்மேற்சேணம்வைத்து, காத்துக்கு
ஆகிஷிடத்தில் தன் பணிவிடைக்காரரைத்தே
டிப்போனான்: அப்படியேஷிமியிபோய்,காத்தி
லிருந்துதன்பணிவிடைக்காரரைக் கொண்டுவந்
தான்.—பின்பு ஷிமியி யெருஷலேமிலிருந்து ௪௧
காத்துக்குப்போய்த்திரும்பிவந்துவிட்டானென்
று சலோமோனுக்குத்தெரிவிக்கப்பட்டது.—அ ௪௨
தினால்இராசாஆளனுப்பிஷிமியியைஅழைப்பித்
து அவனைநோக்கி,நீபுறப்பட்டு எவ்விடத்துக்கா
வதுபோகிறதினத்தில் நீ சாகவேவேண்டுமென்
று அறிந்துகொள்ளென்றுசொல்லி, உன்னைக்
கொண்டு யெகோவாவின்பேரால் ஆணையி
டுவித்துநான்உனக்குவற்புறுத்த,நீ என்னைநோக்
கி, நான்கேட்டசொல் நல்லதென்று சொல்ல
வில்லையா.—நீ யெகோவாவின் ஆணையை ௪௩
யும், நான்உனக்குத்தந்தகட்டளையையும்பேணி
நடவாமல்விட்டதென்னவென்றான்.—மேலும் ௪௪
இராசாஷிமியியைநோக்கி, நீ என்பிதாவாகிய தா
வீதுக்குச்செய்த்துர்க்கருமம் உன்சுயமனதுக்கே
தெரியும்: ஆதலால் யெகோவா உன் துர்க்க
ருமத்தின்பலனை உன்தலையின்மேலே திருப்பு
வார்.-சலோமோன் இராசாவோ ஆசீர்வதிக்கப் ௪௫
படுவான், தாவீதின்சிங்காசனம் யெகோவா
வின் சமுகத்தில் சதாகாலமும் நிலைத்திருக்கு
மென்றான்.—பின்பு இராசா யோயதாவின்புத்தி ௪௬
ரனாகிய பினாயாவுக்குக் கட்டளையிட, அவன்
போய் இவன்மேற்பாய்ந்து இவனைக்கொன்று
போட்டான்; சலோமோனின்கையில் இராச்சி
யம் நிலைப்பட்டது.

## ௩. அதிகாரம்.

௧. சலோமோன் பார்வோன் குமாரத்தியை விவா
கஞ்செய்தல்: ௨. உயர்ந்த ஸ்தானத்தில் பலியி
டல்: ௫. ஞானம்பெறும்படி தேவனிடத்தில்
பிரார்த்தித்தல்: ௰௬. இரண்டு வேசைகளுக்குச்
சொல்லிய நியாயத்தீர்ப்பினால் கீர்த்திபெறல்.

சலோமோன், எகிப்தின் இராசாவாகிய பார் ௧
வோனுடன் சம்பந்தங்கலந்து, பார்வோனின் கு
மாரத்தியை விவாகம்பண்ணி, தன்சுயவீட்டை
யும் யெகோவாவின் ஆலயத்தையும்யெருஷ
லேமின் சுற்று மதிலையும் கட்டிமுடித்ததன்பின்
பு, தாவீதின் நகரத்தில் அவளைக்கொண்டுவந்
தான்.

அக்காலபரியந்தம் யெகோவாவின் நாமத் ௨
துக்கு ஒரு ஆலயம் கட்டப்படாததினால், சனங்
கள் உயர்ந்த ஸ்தானங்களிலே பலியிட்டுவந்தார்
கள்.—சலோமோன் தன்பிதாவாகிய தாவீதின் ௩
விதிப்பிரகாரம்நடந்து, யெகோவாவில் அன்
புவைத்தான்: ஆகிலும் அவனும் உயர்ந்த ஸ்தா
னங்களிலேபலியிட்டுத் தூபங்காட்டிவந்தான்.-
இராசா பலியிடும்படி கிபியோனுக்குப் போ ௪
னான்; முக்கியமான அந்த உயர்ந்த ஸ்தானத்தி

(௩௧) யாத்.௨௧.௰௪. எண்.௩௫.௩௩. உபா.௰௯.௰௩. (௩௨) நியா.௯.௨௪,௫௭. சங்.௭.௰௬. ௨.நாளா.௨௧.௰௩. ௨.சாமு.௩.௨௭. ௨.சாமு.௨௰.௰. (௩௩) ௨.சாமு.௩.௨௯. நீதி.௨௫.௫. (௩௫) ௧.சாமு.௨.௩௫. வச.௨௭. (௩௬) ௨.சாமு.௰௬.௫. வச.௮. (௩௭) ௨.சாமு.௰௫.௨௩. லேவி.௨௰.௯. யோசு.௨.௰௯. ௨.சாமு.௧.௰௬. (௩௯) ௧.சாமு.௨௭.௨. (௪௪) ௨.சாமு.௰௬.௫. சங்.௭.௰௬. எசேக்.௰௭.௰௯. (௪௫) நீதி.௨௫.௫. (௪௬) வச.௰௨. ௨.நாளா.௧.௧.—(௩. அதி. ௧.) அதி.௭.௮. ௨.சாமு.௫.௭. அதி.௭.௧. அதி.௬. அதி.௯.௰௫,௰௯. (௨) லேவி.௰௭.௩,௪,௫. அதி.௨௨.௪௩. (௩) உபா.௬.௫. சங்.௩௧.௨௩. ரோ.௮.௨௮. ௧.கொரி.௮.௩. வச.௬,௰௪. (௪) ௨.நாளா.௧.௩. ௧.நாளா.௰௬.௩௯. ௨.நாளா.௧.௩.

லுள்ள வேதிகையில் சலோமோன் ஆயிரந்தகன
பலிகளையிட்டான்.
௫ கிபியோனில் யெகோவா இரவிலே சலோ
மோனுக்குச் சொப்பனத்திலே தரிசனமாகி,
நான் உனக்குத்தரவேண்டிய வரமென்ன, கே
௬ ளென்றார்.—அதற்குச் சலோமோன், என் பிதா
வாகிய தாவீதென்னும் உமதடியான் உமது சமு
கத்தில் சத்தியமும், நீதியும், மனநேர்மையுமுள்
ளவனாய் நடந்ததற்கு, நீர் அவனுக்கு மகாதயை
யைக்காட்டி,இந்நாளிலிருக்கிற பிரகாரம்அவன்
ஆசனத்தில் வீற்றிருக்க அவனுக்கொரு புத்திர
னைக்கொடுத்து, இந்த மகா அனுக்கிரகத்தைச்
௭ செய்தருளினீர்.—என் தேவனாகிய யெகோ
வாவே, என் பிதாவாகிய தாவீதின் ஸ்தலத்தில்
உமது அடியானை இராசாவாக ஏற்படுத்தினீர்:
நானோ ஒரு சிறுபாலகன்: நான் போக்குவரவு
௮ செய்ய அறியேன்.—உமது தாசனாகிய நான்,
உம்மால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களும், மி
குதிபற்றி எண்ணுக்குந்தொகைக்கும்அடங்காத
வர்களுமாகிய உமது மகா சனங்களுக்குள்ளேயி
௯ ருக்கிறேன்.—ஆதலால் உமது சனங்களை நியா
யம் விசாரிப்பதற்கும், நன்மை தீமை பகுத்தறி
வதற்கும், உமது அடியானுடையமனதில்ஞானத்
தைத்தந்தருளும்: உமது மகா சனங்களை நியா
௰ யந்தீர்க்க வல்லவன் யாவனென்றான்.—சலோ
மோன்பிரார்த்தித்துவிண்ணப்பமாகக்கேட்டகா
ரியம் ஆண்டவருடைய பார்வைக்கு நன்றாய்த்
௰௧ தோன்றிற்று.—ஆகையினாலே தேவன் அவனை
நோக்கி, நீ உனக்காகத் தீர்க்காயுளைக்கேளாம
லும், செல்வத்தைவேண்டாமலும், உன் சத்து
ருக்களின் சீவனைப் பிரார்த்திக்காமலும், நியா
யத்தை விசாரிப்பதற்கு உனக்காக ஞானத்தை
௰௨ வேண்டி, இதைப் பிரார்த்தித்ததினால்,–உன்வாக்
குகளின்படி செய்தேன்: கேள், நான் உனக்கு
ஞானமும் புத்தியுமுள்ள மனதைத் தந்தேன்; உ
னக்குமுன்னும், உன்னைப்போல ஒருவனுமில்
லை, உனக்குப்பின்னும் உன்னைப்போல ஒருவ
௰௩ னுந்தோன்றான்.—அதுவுமன்றி, நீ கேளாதசெல்
வம்,மேன்மை,இரண்டையும்உனக்குத்தந்தேன்:
உன் நாள்களுக்குள்ளே எந்த இராசகுலத்திலும்
௰௪ ஒருவனும் உனக்கு நிகராகான்.—உன் பிதாவா
கிய தாவீதைப்போல,நீயும் என்விதிகளையும் கட்
டளைகளையும் காத்துக்கொண்டு என்வழியிலே
நடந்தாயாகில், உன் ஆயுள்நாட்களையும் நீடிக்
௰௫ கப்பண்ணுவேன் என்றார்.-பின்பு சலோமோன்
விழித்து,அதுசொப்பனமென்று அறிந்தான். அப்
பால் அவன்யெருஷலேமுக்குவந்து, யெகோ
வாவின் உடன்படிக்கைப் பெட்டிக்கு முன்
னின்று, தகனபலிகளையும், ஸ்தோத்திர பலிகளை

யும் இட்டு, தன்பணிவிடைக்காரர் யாவருக்கும்
விருந்துசெய்வித்தான்.
அக்காலத்தில் வேசைகளாகிய இரண்டு ஸ்தி ௰௬
ரிகள் இராசாவிடத்தில்வந்து, அவன் சமுகத்
தில் நின்றார்கள்.–அவர்களில் ஒருத்தி,என் ஆண் ௰௭
டவனே, நானும்இந்த ஸ்திரியும் ஒருவீட்டிலே
வாசமாயிருக்கிறோம்; நான் இவளுடன் வீட்டி
லிருக்கையில் ஒரு பிள்ளையைப் பெற்றேன்.—
நான்பிரசவித்த மூன்றாந் தினத்தில் இந்த ஸ்திரி ௰௮
யும் பிள்ளையைப்பெற்றாள்: நாங்கள் ஒருமித்தி
ருந்தோம்; எங்கள்இருவரையுந்தவிர வீட்டிலே
வேறொருவருமில்லை.–பின்பு இராத்திரியில் இந் ௰௯
தஸ்திரிதன்பிள்ளையின்மேல் படுத்ததினால், அது
இறந்துபோயிற்று.—அத்தசாமத்தில்இவள்எழுந் ௨௰
து, உமது அடியாள் நித்திரையாயிருக்கிறபொ
ழுது, என் மார்பில்படுத்திருந்த என் மகனையெ
டுத்துத்தன்மார்பிலே கிடத்திக்கொண்டு, செத்த
பிள்ளையை என்மார்பிலே கிடத்தினாள்.— நான் ௨௧
பிள்ளைக்குப் பால் கொடுக்கும்படி காலையில் எ
ழுந்தபொழுது அதுசெத்துக்கிடந்தது: விடிந்த
பின் அதைநான் உற்றுப்பார்த்தேன், அது நான்
பெற்றபிள்ளை யல்லவென்றாள்.—மற்ற ஸ்திரி, ௨௨
அப்படியல்ல; உயிரோடிருக்கிறபிள்ளை என்னு
டையது,செத்தபிள்ளைஉன்னுடையது என்றாள்.
பின்பு இவள், அல்ல; செத்தபிள்ளைஉன்னுடை
யது, உயிரோடிருக்கிறபிள்ளை என்னுடையது
என்றாள். இவர்கள் இராசாவுக்குமுன்னே இப்
படிப்பேசிக்கொண்டு நிற்க,—இராசா, ஒருத்தி ௨௩
உயிரோடிருக்கிறபிள்ளை என்னுடையது, செத்
தபிள்ளை உன்னுடையதென்றும்; மற்றவள்,அப்
படியல்ல; செத்தபிள்ளை உன்னுடையது, உயி
ரோடிருக்கிற பிள்ளை என்னுடையதென்றுஞ்
சொல்லுகிறார்களென்றான்.—பின்னும் இராசா, ௨௪
ஒருகட்கங் கொண்டுவாருங்களென்று சொல்ல,
இராசாவினிடத்தில் ஒரு கட்கங் கொண்டுவந்
தார்கள்.-இராசா, உயிரோடிருக்கிறபிள்ளையைத் ௨௫
துண்டித்து, பாதியை ஒருத்திக்கும், பாதியைமற்
றவளுக்குங் கொடுங்களென்றான்.—அப்பொழு ௨௬
து உயிரோடிருக்கிற பிள்ளையின் மாதா, தன் ம
கன்நிமித்தம் வயிறு எரிய இராசாவைநோக்கி,
ஐயோ! என் ஆண்டவனே, உயிரோடிருக்கிற
பிள்ளையை இவளுக்குக்கொடுத்துவிடும், எதுவி
தமும் அதைக்கொல்லவேண்டாம் என்றுசொல்
ல, மற்றவள், எனக்கும்வேண்டாம், அது உனக்
கும்வேண்டாம், சேதித்துப்போடுமென்றாள்.—
அப்பொழுது இராசா, உயிரோடிருக்கிறபிள்ளை ௨௭
யைஅவளுக்குக்கொடுத்துவிடுங்கள், எப்படியும்
அதைக்கொன்றுபோடாதிருங்கள்: அவளே அ
தற்கு மாதாவென்றான்.—இராசா தீர்த்தநியாயத் ௨௮

(௫) அதி.௯.௨. ௨.நாளா.௧.௭. எண்.௰௨.௬. மத்.௧.௨௰. மத்.௨.௰௩,௰௯. (௬) ௨.நாளா.௧.௮. அதி.௨.௪. ௨.இரா.௨௰. ௩. சங்.௰௫.௨. அதி.௧.௪௮. (௭) ௧.நாளா.௨௯.௧. எண்.௨௭.௰௭. (௮) உபா.௭.௬. ஆதி.௰௩.௰௬. (௯) ௨.நாளா.௯.௰. நீதி.௨.௩—௯. யாக்.௧.௫. சங்.௭௨.௧,௨. எபி.௫.௪. (௰௧) யாக்.௪.௩. (௰௨) ௧.யோவா.௫.௰௪,௰௫. அதி.௪.௨௯,௩௰. பிர.௧.௰௬. (௰௩) மத்.௬.௩௩. எபே.௩.௨௰. அதி.௪.௨௧,௨௪. நீதி.௩.௰௬. (௰௪) அதி.௰௫.௫. சங்.௯௧.௰௬. நீதி.௩.௨. (௰௫) ஆதி.௪௧.௭. ஆதி.௪௰.௨௰. தானி.௫.௧. மாற்.௬.௨௧. (௰௬) எண்.௨௭.௨. (௨௬) ஆதி.௪௩.௩௰. ஏசா.௪௯.௰௫. எரே.௩௧.௨௰. ஓசி.௰௧.௰௮ (௨௮) வச.௯.௰௧,௰௨.

தீர்ப்பை இஸரவேலர் அனைவரும் கேள்விப்பட்
டு, நியாயம்விசாரிக்கிறதற்குத் தேவன்கொடுத்
த ஞானம் இராசாவிடத்திலிருக்கின்றதென்று
கண்டு, அவனுக்குப்பயந்தார்கள்.

## ௪. அதிகாரம்.

*௧. சலோமோனின் பிரதான அதிபதிகள்: ௭. உணவுப்பொருளைச்சேகரிக்கும் அதிகாரிகளின் நாமங்கள் ௨௰. இராச்சியம் வர்த்தித்து வாழ்வடைதல்: ௨௨. நாடோறுங்கொடுக்கவேண்டிய உணவுப் பொருளைக் குறித்தல்: ௨௬. குதிரைச்சாலையின்தொகை: ௨௯. சலோமோன் ஞானத்தில் அதிகரித்தல்.*

இவ்விதமாய்ச் சலோமோன் இஸரவேலர் அ
௨ னைவருக்கும் அரசனானன்.—ஆசாரியனான சா
௩ தோக்கின் புத்திரனாகிய அசரியாவும்,—ஷீஷா
வின் புத்திரராகிய இலியோரேப்பும் அகியாவும்
இலேககராகவும், அகிலூத்தின் புத்திரனாகியயோ
௪ ஷாபாத் இதிகாச கர்த்தனாகவும்,—யோயதாவின்
புத்திரனாகிய பினயாசேனாபதியாகவும்,சாதோக்
௫ கும் அப்யாதாரும் ஆசாரியராகவும்,—நாதானின்
புத்திரனாகிய அசரியா அதிபதிகளுக்குமேலான
வனாகவும், நாதானின் புத்திரனாகிய சாபூத் பிர
தான அதிபதியாகவும் இராசாவுக்குச் சுயமித்தி
௬ ரனாகவும்,—அகீஷார்வீட்டதிகாரியாகவும்,அப்
தாவின் புத்திரனாகிய அதொனிராம் திறைவாங்
குகிறவனாகவும் இருந்தார்கள்: இவர்களே அவ
னிடத்துள்ள பிரதான அதிபதிகள்.
௭ சமஸ்த இஸரவேலருக்கும் மேலாகிய அதிகா
ரிகள் பன்னிருவர் சலோமோனுக்கிருந்தார்கள்;
இவர்கள் இராசாவுக்கும் அவன் குடும்பத்தாருக்
கும்உணவுப்பொருளைச்சேகரித்துவந்தார்கள்:இ
வர்கள் ஒவ்வொருமாதத்துக்கு ஒவ்வொருவராக,
வருஷத்திலே பொருளைக்கொடுத்துவந்தார்கள்.-
௮ அவர்கள் நாமங்களாவன: எப்ராயீம் மலையிலே
௯ ஊரின்புத்திரன்:—மாகாத்சிலும், ஷகல்பீமிலும்,
பேத்ஷிமெஷிலும், ஈலோன் பேத்கானானிலும்,
௰ தேகாரின் புத்திரன்:—அறுபோத்தில்எசெத்தின்
புத்திரன்; சோகோவும், எபெர்நாடு சகலமும்இ
௰௧ வன்அதிகாரத்திலிருந்தது:—தோரென்னும்நாட்
டுப்புறம் எங்கும் அபீனதாப்பின் புத்திரன்; ச
லோமோனின் புத்திரியாகிய தாபத் இவனுக்கு
௰௨ மனைவி:—அகிலூத்தின்புத்திரனாகிய பானாவுக்கு,
தானாகும்மெகிதோவும், யெஸரியேலின்கீழே சர்
தானாவுக்கு அருகே பேத்ஷியான் முதல் யொக்
னியாமுக்கு அப்புறத்திலுள்ள ஆபேல் மிகோ
லாவரைக்குமுள்ள பேத்ஷியான் அனைத்தும்,இ
௰௩ வன் அதிகாரத்திலிருந்தது:—ராமொத் கிலியாத்
திலே கெபெரின் புத்திரன்; கிலியாத்திலுள்ள ம
னாஷேயின் புத்திரனாகிய யாயீரின் நகரங்களும்,
பாஷானிலிருக்கிற அர்கோப்நாட்டைச்சேர்ந்த
மதில்களையும் பித்தளைத்தாழ்களையுமுடைய அறு
பது மகா நகரங்களும், இவன் அதிகாரத்திலிருந்
தன:—மக்னயிமில்இத்தோவின்புத்திரனாகிய அ ௰௪
கீனதாப்.—நப்தாலியில் அகிமாத்ஸ்; சலோமோ ௰௫
னின்புத்திரியாகிய பஸ்மாத் இவனுக்குமனைவி:-
ஆஷேரிலும் அலோத்திலும் ஊஷாயின் புத்திர ௰௬
னாகிய பானா:—ஈஷகாரில் பருவாவின் புத்திர ௰௭
னாகிய யோஷாபாத்:—பேன்யாமீனில் ஏலாவின் ௰௮
புத்திரனாகியஷிமியி:—எமோரியரின் இராசாவா ௰௯
கிய சீகோனுக்கும் பாஷானின் இராசாவாகிய
ஓகுக்குமுரிய கிலியாத் தேசத்தில் ஊரியின் புத்
திரனாகியகெபெர்;அத்தேசத்தில்இவன்மாத்திரம்
அதிபதியாயிருந்தான்.
யூதாவமிசத்தாரும் இஸரவேல் வமிசத்தாரும் ௨௰
களிப்புடன் போசனபானம்பண்ணி, கடற்க
ரைமணல்போல எண்ணிறந்தவர்களாயிருந்தார்
கள்.—நதிதொடங்கி எகிப்து எல்லைவரைக்கு ௨௧
முள்ள பெலிஸ்தியரின் தேசத்திலிருக்கிற சகல
இராச்சியத்தாரையும் சலோமோனே அரசாண்
டான்: அதினால் அவர்கள் சலோமோனுக்கு அ
வன் ஆயுள்காலமுழுவதும் காணிக்கைகொடுத்
தும், அவனுக்குச்சேவித்தும் வந்தார்கள்.
சலோமோனுக்கு நாளொன்றுக்குச்செல்லும் ௨௨
உணவுப்பொருள் முப்பது கோர் மெல்லியமா
வும், அறுபதுகோர் மாவும்,—கலைமான்களையும், ௨௩
பிணைமான்களையும், காட்டாடுகளையும், புஷ்டி
யான பறவைகளையுந் தவிர; புஷ்டியான பத்து
மாடுகளும் மேய்கிற இருபதுமாடுகளும் நூறுஆடு
களுமாம்.—நதிக்கிப்புறத்திலிருக்கிறதிப்சாதொ ௨௪
டங்கி, காசாவரைக்குமுள்ள அனைத்தையும், ந
திக்கிப்புறத்திலுள்ளசகல இராசாக்களையும்ஆண்
டுவந்தான்: அவன்தனக்குநான்குதிசையிலுமுள்
ளஎவ்விடத்தாருடனும்சமாதானமாயிருந்தான்.-
அன்றியும் சலோமோனின் ஆயுள்நாளெல்லாம், ௨௫
தாண்தொடங்கி பேர்ஷேபாவரைக்குமுள்ள யூ
தாவமிசத்தார், இஸரவேல்வமிசத்தார் யாவரும்,
தங்கள் தங்கள் திராட்சக்கொடியையும் அத்திம
ரத்தையும் சார்ந்து,வாழ்வடைந்துவசித்திருந்தார்
கள்.
சலோமோனுக்கு நாலாயிரம் இரதக்குதிரை ௨௬
லாயங்களும், பன்னீராயிரம் குதிரைவீரருமிருந்
தார்கள்.—அந்த அதிகாரிகள்தங்கள்தங்கள்மாதத் ௨௭
தில் சலோமோன் இராசாவுக்கும், இராசாவின்
போசனபீடத்தில் வரும்யாவருக்கும், ஒருகுறை
வுமின்றி உணவுப்பொருள்களைக் கொடுத்துவந்
தார்கள்.—இன்னும் அவர்கள் ஒவ்வொருவரும் ௨௮
தங்கள் தங்களுக்கு இடப்பட்டகட்டளைப்படி
குதிரைகளுக்கும், ஒட்டைகளுக்கும், வாற்கோ
துமையையும் வைக்கோலையும், அவைகளிருக்
கிற இடத்திற்கொண்டுவருவார்கள்.

(௪.அதி.௩.) ௨.சாமு.௮.௰௬.(௪)அதி.௨.௩௫. அதி.௨.௨௭.(௫)வச.௭. ௨.சாமு.௮.௰௮. ௨.சாமு.௰௫.௩௭. ௧.நாளா. ௨௭.௩௩. (௬) அதி.௫.௰௪. (௰௩) எண்.௩௨.௪௧. உபா.௩.௪. (௰௯) உபா.௩.௮. (௨௰) ஆதி.௨௨.௰௭. அதி.௩.௮. நீதி. ௰௪.௨௮, சங்.௭௨.௩,௭. மீகா.௪.௪. (௨௧) ௨.நாளா.௯.௨௬. சங்.௭௨.௮. ஆதி.௰௫.௰௮. யோசு.௧.௪. சங்.௯௮.௨௧. சங்.௭௨.௰,௰௧. (௨௪) சங்.௭௨.௰௧. ௧.நாளா.௨௨.௯. (௨௫) எரே.௨௩.௬. மீகா.௪.௪. சக.௩.௰. நியா.௨௰.௧. (௨௬) அதி.௰.௨௬. ௨.நாளா.௧.௰௪. உபா.௰௭.௰௬. வச.௭.(௨௮) எஸ்த.௮.௰௪. மீகா.௧.௰௩.

உகூ தேவன் சலோமோனுக்கு ஞானத்தையும், அதிகபுத்தியையும், கடற்கரை மணல்போலும்
ஙய மனவிருத்தியையுங் கொடுத்தார்.—கீழ்த்தேசத்தின் சகல சனங்களுடையஞானத்திலும், எகிப்தியருடைய ஞானத்திலும், சலோமோனுடைய
ஙக ஞானங்கதித்தது.—அவன் எஸ்றாகியனான எதானிலும், எமான், கல்கோல், தார்தா என்னும் மாகோலின்புத்திரரிலும், மற்றும் எந்தமனிதரிலும் வித்துவானாயிருந்தான்: அவன் கீர்த்தி நான்கு திசையிலுமுள்ள சகல சாதியாருக்குள்ளும் பரம்
ஙஉ பிற்று.—அவன் மூவாயிரம் நீதிமொழிகளை வசனித்தான்: அவன்செய்த கவிகள் ஆயிரத்தைந்
ஙங து.—லிபானோனிலுள்ள ஏரஸ்விருட்சந்தொடங்கி, சுவரில் முளைக்கும் ஈசோப்புப்பூண்டுவரைக்குமுள்ள தாபரங்களை வருணித்ததுமன்றி, மிருகம், பட்சி, ஊர்வன, மச்சம் என்னும்இவை
ஙச களையும் வருணித்தான்.—சலோமோனின் ஞானத்தைக்குறித்துக் கேள்விப்பட்ட பூமியிலுள்ள சகல இராசாக்களிடத்திலும், சகல சனங்களுக்குள்ளும் இருந்து, பலர் அவனுடைய ஞானத்தைக்கேட்கிறதற்கு வந்தார்கள்.

## ரு. அதிகாரம்.

க. மரத்துக்காகச் சலோமோன் ஈராமிடத்தில் ஆளனுப்பல்: எ. ஈராம் மரத்தைக்கொடுத்தனுப்பல்: ய. அவ்விருவரும் உடன்படிக்கை செய்து உபகாரம்பண்ணல்: யங. சலோமோனின் தொழிற்காரரின் தொகைகாட்டல்.

தீருவின் இராசாவாகிய ஈராம், சலோமோனை அவன்பிதாவுக்குப்பின்பு இராசாபிஷேகம்பண்ணினார்களென்றுகேள்விப்பட்டு, தன்தாசரைஅவனிடத்தில் அனுப்பினான்; ஈராம்தாவீதின் ஆ
உ யுள்பரியந்தம் அவனுக்குநண்பனாயிருந்தான்.-ச
ங லோமோன் ஈராமிடத்தில்,-என் பிதாவாகிய தாவீதுதம்முடைய சத்துருக்களை யெகோவாதமதுகாலடிப்படுத்தும்வரைக்கும், தமக்குநான்கு திசையிலும் யுத்தங்கள் இருந்தபடியால், அவர்தமது தேவனாகிய யெகோவாவின் பேரால் ஒருஆலயத்தைக்கட்டக்கூடாமற்போயிற்றென்
ச றுஉமக்குத்தெரியும்.-இப்பொழுதோஎன் தேவனாகிய யெகோவா நான்குதிசையிலும் எனக்கிளைப்பாறுதலைத்தந்தார், எனக்குவிரோதியுமில்
ரு லை, இடையூறுமில்லை.-ஆதலால் யெகோவா, என்பிதாவாகியதாவீதைநோக்கி, உனக்குப்பிரதியாக உன்சிங்காசனத்தில்நான்வீற்றிருக்கப்பண்ணும்உன்புத்திரன், என்பேரால்ஒருஆலயத்தைக் கட்டுவான் என்றுசொல்லியபிரகாரம், நான் என் தேவனாகிய யெகோவாவின்பேரால்ஒருஆலயங் கட்டவேண்டுமென்று கருதியிருக்கிறே
சா ன்.-ஆனதினால்என்னிமித்தம்அவர்கள்லிபானோனுக்குப்போய் ஏரஸ்மரங்களை வெட்டக் கட்டளையிடும்; சீதோனியரைப்போல மரம்வெட்ட வல்லவர் ஒருவரும் எங்களிடத்திலில்லையென்பது உமக்குத்தெரியும்: என்பணிவிடைக்காரர் உம்முடைய பணிவிடைக்காரரோடே இருப்பார்கள்: நீர்நியமிக்கும்பிரகாரம் உம்முடைய பணிவிடைக்காரருக்குக் கூலி நான்தருவேன் என்று சொல்லி ஆளனுப்பினான்.

ஈராம் சலோமோனின் வாக்குகளைக் கேட் எ
டபொழுது மிகவுஞ் சந்தோஷப்பட்டு, இந்த மகாசனங்களை அரசாளும்படி தாவீதுக்கு ஞானமுள்ள ஒரு புத்திரனைக் கொடுத்தருளிய யெகோவா இன்றைத்தினம் ஸ்தோத்திரிக்கப்படுவாராகவென்றான்.—பின்பு ஈராம் சலோமோ அ
னிடத்தில், நீர் எனக்குச்சொல்லியனுப்பினகாரியத்தை நான் கேட்டேன்: ஏரஸ், தேவதாருமரங்களைத்தந்து, உமது முழுவிருப்பத்தையும் நிறைவேற்றுவேன்.—என் பணிவிடைக்காரர் லிபா கூ
னோனினின்றும் கடற்கரைக்குக்கொண்டுவருவார்கள்: அங்கே நான் அவைகளைத்தெப்பமாகக் கட்டுவித்து, நீர் நியமிக்கும் இடத்துக்குக் கடல் வழியாயனுப்பி, அங்கே அவைகளை ஒப்புவிப்பேன், நீர் அவைகளை ஒப்புக்கொள்வீர்: நீர் என் குடும்பத்துக்கு உணவுப்பொருளைத்தந்து, என் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்ளுவீரென்று சொல்லி, ஆளனுப்பினான்.

இவ்விதமாய்ஈராம்சலோமோனுடைய விருப் ய
பத்தின்படி, ஏரஸ் தேவதாருமரங்களைச் சலோமோனுக்குக்கொடுத்தான்.—சலோமோன் ஈராம் யக
குடும்பத்துக்கு ஆகாரத்துக்காக இருபதினாயிரம் கோர் கோதுமையையும், இருபதுகோர் சுத்த எண்ணெயையுங்கொடுத்தான்: இந்தப்பிரகாரம் வருஷத்துக்கு வருஷம் சலோமோன் ஈராமுக்குக் கொடுத்துவந்தான்.—யெகோவா தாம் யஉ
செய்த வாக்குத்தத்தத்தின்படி சலோமோனுக்கு ஞானத்தைக்கொடுத்தார்: ஈராமும் சலோமோனும் சமாதானமாய் இருவரும் ஒரு உடன்படிக்கை பண்ணிக்கொண்டார்கள்.

சலோமோன் இராசா, இஸரவேலரெல்லாரி யங
லும் அமஞ்சியாள்களைப் பிரித்தெடுத்தான்; அந்த அமஞ்சியாள்கள் முப்பதினாயிரம்பேர்.—அவர் யச
களைமாதமொன்றுக்குப்பதினாயிரம்பேராக, மாற்றி மாற்றி லிபானோனுக்கு அனுப்பிவந்தான்: அவர்கள் ஒருமாதம் லிபானோனிலும், இரண்டுமாதம் வீட்டிலும் இருப்பார்கள்: அதொனிராம் அந்த அமஞ்சியாள்களுக்குத் தலைவனாயிருந்தான்.-
சலோமோனிடத்தில் சுமைகொண்டுபோகிறவர் யரு
கள் எழுபதினாயிரம் பேர், மலைகளில் வெட்டுகிறவர்கள் எண்பதினாயிரம்பேர்:—இவர்களேயன் யசா
றி, வேலையைச்செய்யும் சனங்களுக்கு மேலாக ஏற்படுத்தப்பட்ட சலோமோனுடைய பிரதான

---

(உகூ) அதி.ங.யஉ. (ஙய) ஆதி.உரு.சா. (ஙக) அதி.ங.யஉ. க.நாளா.யரு.யக. சங்.அக. சங்.அஅ. (ஙஉ) நீதி.க.க. பிர.யஉ.கூ. உன்.க.க. (ஙச) அதி.ய.க. உ.நாளா.கூ.உங.—(ரு. அதி. க.) வச.ய,யஅ. உ.நாளா.உ.ங உ.சாமு.ரு.யக. க.நாளா.யச.க. ஆமோ.க.கூ. (உ) உ.நாளா.உ.ங. (ங) க.நாளா.உஉ.அ. (ச) அதி.ச.உச. க.நாளா.உஉ.கூ. (ரு) உ.நாளா.உ.ச. உ.சாமு.எ.யங. க.நாளா.யஎ.யஉ. (சா) உ.நாளா.உ.அ,ய. (கூ) உ நாளா.உ.யசா. எஸ்றா.ங.எ. (யக) உ.நாளா.உ.ய. (யஉ) அதி.ங.யஉ. (யச) அதி.ச.சா. (யரு) அதி.க.உக. உ.நாளா.உ.யஎ,யஅ.

வேலைக்காரர் மூவாயிரத்துமுந்நூறுபேருமிருந்
யஎ தார்கள்.—இராசாவின் கட்டளைப்படி வெட்
டப்பட்டகற்களால் ஆலயத்துக்கு அஸ்திவாரம்
போடுவதற்கு, விலையேறப்பெற்ற பெரியகற்க
யஅ ளைக்கொண்டுவந்தார்கள்.—சலோமோனின் சிற்
பர்களும், ஈராமின்சிற்பர்களும், கிப்லீயரும் அ
வைகளை வெட்டினார்கள்: ஆலயங்கட்டும்படி
அவர்கள் மரங்களையுங்கற்களையும்ஆயத்தப்படுத்
தினார்கள்.

## சு. அதிகாரம்.

க. ஆலயத்தைக் கட்டத்தொடங்கல். யக. அதைக் குறித்துத் தேவன் வாக்குத்தத்தம் செய்தல்: யச. ஆலயத்தின் அரமிய முதலியவைகளைக்குறித்தல்: உரு. கெருபிகளைக்குறித்தல்: ருக. கதவைக்குறித்தல்: ருசு. பிராகாரத்தையும் ஆலயங்கட்டும் சமயத்தையுங் குறித்தல்.

இஸரவேல் சந்ததியார் எகிப்தினின்றும் புறப்
பட்டு நானூற்றெண்பதாம்வருஷத்திலும், சலோ
மோன் இஸரவேலரை அரசாண்ட நான்காம்வரு
ஷத்திலும், இரண்டாம்மாதமாகிய சீப்மாதத்தில்
யெகோவாவுக்கு ஆலயங்கட்டத்தொடங்கி
உ னான்.—சலோமோன் இராசா யெகோவாவுக்
குக்கட்டின ஆலயத்தின் நீளம் அறுபது முழம்,
அகலம் இருபதுமுழம், உயரம் முப்பதுமுழம்.—
ரு ஆலயமாகியவீட்டுத்தலைவாசலின்மண்டபத்தின்
நீளம், ஆலயத்தின் அகலம்போலஇருபதுமுழம்;
அதின் அகலம் ஆலயத்துக்கு முற்புறத்தில் பத்
ச துமுழம்.—அவன் ஆலயத்துக்கு உள்ளேவிசால
மும்புறம்பே ஒடுக்கமுமானபலகணிகளைச்செய்
ரு வித்தான்.—ஆலயத்தின்சுற்றுச்சுவரோடிசைய அ
றைகளைக்கட்டினான்; ஆலயத்தையும்,தேவவாக்
கியஸ்தானத்தையுஞ்சுற்றி நான்குதிசையிலுமுள்
ள ஆலயத்தின் சுவரோடிசையச்சுற்றிலும் அறை
சு களைக்கட்டினான்.—கீழ் அறையின் அகலம் ஐந்
துமுழம், நடு அறையின் அகலம் ஆறுமுழம்,
மேல் அறையின்அகலம்எழுமுழம்: உத்திரங்கள்
ஆலயத்தின் சுவர்களிலே தங்காதபடி, ஆலயத்
துக்குப்புறம்பேவரவர ஒடுக்கமானஉதைகால்க
எ ளைக் கட்டினான்.—ஆலயங் கட்டப்படுகையில்
முன்பொளிந்துகொண்டுவந்தகல்லுக்களால்கட்
டப்பட்டது: அதினால்ஆலயங்கட்டப்படும்பொ
ழுதுசுத்தியல்,வாச்சிமுதலியஎந்தஇருப்பாயுதங்
அ களின்சத்தமும் அதிற்கேட்கப்படவில்லை.—நடு
அறையின்வாசல் ஆலயத்தின்வலப்புறத்திலிருந்
தது: சுழற்படிகளினால்நடு அறைக்கும், அதி
கூ னின்றுமேலறைக்கும்ஏறுவார்கள்.—இவ்விதமாய்
ஆலயத்தைக்கட்டிமுடித்து,எரஸ்மரத்தாற்செய்த
உத்திரங்களினாலும், பலகைகளினாலும் மச்சுப்
ய பரவினான்.—ஆலயத்தைச்சுற்றி எங்கும் ஐவைந்
துமுழ உயரமுள்ள அறைகளைக்கட்டினான்: அ
வைகள் வீட்டின்மேல் இடப்பட்ட எரஸ்மரத்
தின் உத்திரங்களிலே தங்கியிருந்தன.

பின்பு இந்த ஆலயத்தைநீகட்டுகிறாய், நீ என் யக
விதிகளின்படிநடந்து, என் சற்பனைகளை நிறை
வேற்றி, என்சகலகட்டளைகளையுங்காத்து நடப்
பாயாகில்; நான் உன்பிதாவாகிய தாவீதுக்குச்
சொன்ன என்வாக்கை உன்னிடத்தில்சித்தியாக்
குவேன்.—நான் என்சனங்களாகிய இஸரவேல யஉ
ரைக்கைவிடாமல், இஸரவேல்சந்ததியாருக்குள்
ளேவாசம்பண்ணுவேனென்று,—யெகோவா யரு
வின்வாக்குச் சலோமோனுக்குக்கிடைத்தது.—
சலோமோன் ஆலயத்தைக்கட்டி முடித்தான்.— யச
ஆலயச்சுவர்களின் உட்புறத்தை நிலந்தொடங் யரு
கிமச்சுவரைக்கும் எரஸ்மரப்பலகைகளால்மூடி,
இப்படி உட்புறத்தைமரவேலையாக்கி, ஆலயத்
தின் நிலத்தைத் தேவதாருப்பலகைகளால் மூடி
னான்.—அவன் ஆலயத்திற்குஉள்ளே நிலத்தையுஞ் யசு
சுவரையும்இருபதுமுழமளவுக்கு எரஸ்மரப்பல
கைகளால்மூடினான்: தேவவாக்கியஸ்தானமாகி
ய மிகவும் பரிசுத்தஸ்தானத்திற்காக இப்படிச்
செய்தான்.—அதற்குமுன்னுள்ளவீடாகிய ஆலயத் யஎ
தின் நீளம் நாற்பதுமுழம்.—ஆலயத்துக்கு உட் யஅ
பட்ட எரஸ்மரங்களில் குமிழ்களும் மலர்களும்
வகுக்கப்பட்டன: சகலமும் எரஸ்மரம்; கல்சற்
றுங்காணப்படவில்லை.—யெகோவாவின் உ யகூ
டன்படிக்கையின்பெட்டிவைக்கிறதற்கு, ஆல
யத்துக்குள்ளே தேவவாக்கியஸ்தானத்தைச்செய்
தான்.—அந்தத்தேவவாக்கியஸ்தானத்தின்முற்பு உய
றத்தின்நீளம் இருபதுமுழம், அகலம் இருபதுமு
ழம், உயரம்இருபதுமுழம்: அதைப்பசும்பொற்
றகட்டால் மூடி, எரஸ்மரத்தினாற்செய்த வேதி
கையையும் அப்படியேமூடினான்.—சலோமோன் உக
ஆலயத்தின் உட்புறத்தைப் பசும்பொற்றகட்டா
ல்மூடி, தேவவாக்கியஸ்தானத்துக்குமுன் பொற்
சங்கிலிகளையிட்டு மறைப்புச்செய்தான்; அதை
யும்பசும்பொற்றகட்டால் மூடினான்.—இப்படி உஉ
ஆலயமுழுவதையுங்கட்டி முடிக்கும்வரைக்கும்
ஆலயமுழுவதையும் பசும்பொற்றகட்டால் மூ
டி, தேவவாக்கியஸ்தானத்தின் சமீபத்திலுள்ள
வேதிகையையும் பொற்றகட்டால்மூடினான்.

தேவவாக்கியஸ்தானத்துக்குள்ளே சீத மரத்தி உரு
னால் பத்துமுழ உயரமுள்ள இரண்டு கெருபிக
ளைச்செய்தான்.—கெருபியின் ஒரு சிறகு ஐந்து உச
முழம், மற்றச்சிறகு ஐந்துமுழம்: ஒருசிறகின்நு
னிதொடங்கி மற்றச்சிறகின்நுனிவரைக்கும்பத்
துமுழம்.—மற்றக்கெருபியும் பத்துமுழம்: இரண் உரு
டுகெருபிகளும் ஒரு அளவும் ஒருபருமையுமாயி
ருந்தன.—ஒருகெருபியின் உயரம் பத்துமுழம், உசு
மற்றக்கெருபியும் அப்படியே.—அந்தக்கெருபி உஎ
களை அந்தரங்க ஆலயத்துக்குள்ளேவைத்தான்: ஒ

(யஎ) க.நாளா.உஉ.உ. (யஅ) எசேக்.உஎ.கூ.—(சு.அதி க.) உ.நாளா.ரு.க,உ. அப்.எ.சஎ. (உ) எசேக்.சக. (ச) எசேக். சய.யசு. (ரு) எசேக்.சக.சு. வச.யசு,யகூ,உய,உக,ருக. (எ) உபா.உஎ.ரு,சு. அதி.ரு.யஅ. (கூ) வச.யச,ருஅ. (யக) அதி. உ.ச. (யஉ) உ.சாமு.எ.யரு.க.நாளா.உஉ.ய. (யரு) யாத்.உரு.அ. லேவி.உசு.யக. உ.கொரி.சு.யசு. வெளி.உக.ரு.உபா. ருக.சு. (யச) வச.ருஅ. (யரு) வச.யசு. (யசு) யாத்.உசு.ருரு. லேவி.யசு.உ. அதி.அ.சு. உ.நாளா.ரு.அ. எசேக்.சரு. ரு. எபி.கூ.ரு. (உஉ) யாத்.ருய.க. (உரு) யாத்.ருஎ.எ. (உஎ) யாத்.உரு.உய. உ.நாளா.ரு.அ.

ருகெருபியின் சிறகொன்று ஒருசுவரையும், மற்
றக்கெருபியின் சிறகொன்று மற்றச்சுவரையுந்
தொடத்தக்கதாக,அந்தக்கெருபிகள்தங்கள்சிறகு
களை விரித்துக்கொண்டிருந்தன; அவைகளின்
மற்றச்சிறகுகள் ஆலயத்தின் மத்தியில் சந்தித்தி
௨௮ ருந்தன.—கெருபிகளையும் பொற்றகட்டால் மூடி
௨௯ னான்.—ஆலயத்தின்சுற்றுச்சுவர்களெங்கும்உள்
ளும் புறம்பும் கெருபிரூபங்களையும், பேரீந்துக
௩௰ ளையும், மலர்களையும்வகுத்தான்.—உள்ளும்புறம்
பும் ஆலயத்தின் தளவரிசையைப் பொற்றகட்
டால் மூடினான்.
௩௧ தேவவாக்கிய ஸ்தானத்தின் வாசலுக்குச்சீதம
ரத்தினால் கதவுகளைச்செய்தான்: மேற்சட்டமும்
நிலைகளும்சுவரின்ஐந்திலொருபங்கின் உயரம்.—
௩௨ இரண்டுகதவுகளும் சீதமரத்தினாற் செய்யபட்
டன; அவைகளின்மேல் கெருபிகளையும்,பேரீந்
துகளையும்,மலர்களையும்வகுத்து,அந்தமலர்களைப்
பொற்றகட்டால்மூடி,கெருபிகளையும், பேரீந்து
௩௩ களையும்கூடப்பொற்றகட்டால் மூடினான்.—ஆ
லயத்தின்கதவுக்கும் சீதமரத்தினால் நிலைகள்செய்
தான், அவைகள்சுவரின்நான்கிலொருபங்குஉய
௩௪ ரம்.-இரண்டுகதவுகளும்தேவதாருமரத்தினாற்செ
ய்யப்பட்டன:ஒருகதவுக்குஇரண்டுமடிப்புச்சிற
குகளும், மற்றக்கதவுக்கும்அப்படியேஇரண்டும
௩௫ டிப்புச்சிறகுகளுமிருந்தன.—அவைகளின் மேல்
கெருபிகளையும், பேரீந்துகளையும், மலர்களையும்
வகுத்து, சித்திரத்தொழிலுக்கிசையஅவைகளைப்
பொற்றகட்டால் மூடினான்.
௩௬ உட்பிராகாரத்தை மூன்றுவரிசைபொளிந்தக
ற்களினாலும்,ஒருவரிசை எரஸ் உத்திரங்களினா
௩௭ லுங்கட்டினான்.-நான்காம் வருஷம் சீப்மாதத்தி
லே யெகோவாவின் ஆலயத்துக்கு அஸ்திபா
௩௮ ரம்போடப்பட்டது.—பதினோராம் வருஷம் பூ
லென்னும் எட்டாம்மாதத்தில், ஆலயமுழுவதும்
நியமிக்கப்பட்ட சாயலின்படி நிறைவேறிற்று.
ஏழுவருஷத்தில் அதைக்கட்டிமுடித்தான்.

## எ. அதிகாரம்.

௧. சலோமோன் அரமனையைக் கட்டுவித்தல்: ௨. லிபானோன்வனத்திலுள்ளவீட்டையும் அவன் ஸ்திரியின்வீட்டையுங்கட்டுவித்தல்: ௰௩. ஊராம்வரல்: ௰௫. இரண்டுதூண்களைச்செய்தல்: ௨௩. பித்தளைச் சமுத்திரத்தைவார்த்தல்: ௨௭. அதின் பாதங்களைக்குறித்தல்: ௩௮. ஸ்நானபாத்திரங்களைக்குறித்தல்: ௪௰. மற்றும் பாத்திரங்களைச்செய்தல்.

சலோமோன்தன்சுயவீட்டைக்கட்டி, பதின்மூ
ன்றுவருஷத்தில்வீட்டையெல்லாம் முடித்தான்.
௨ பின்னும் லிபானோன்வனத்திலும்நாலுவரிசை
எரஸ்தூண்களை நிறுத்தி,அந்தத்தூண்களின்மேல்
எரஸ் உத்திரங்களிட்டு, நூறு முழநீளமும், ஐம்
பதுமுழ அகலமும், முப்பது முழ உயரமுங்
௩ கொண்ட ஒருவீடுகட்டினான்.—நிரை ஒன்றுக்
குப் பதினைந்துதூண்களாக,கூடிய நாற்பத்தைந்
து தூண்களின்மேலுள்ள உத்திரங்களின்மேல்,
எரஸ் மரங்கள் பரவப்பட்டன.—மூன்றுவரிசை ௪
பலகணிகளிருந்தன; மூன்றுவரிசைகளிலும் ப
லகணிகள் ஒன்றுக்கொன்று எதிராயிருந்தன.—
பலகணியின் வாசல்களும் நிலைகளும் சதுரமா ௫
யிருந்தன, மூன்றுவரிசையிலும்பலகணிகள்ஒன்
றுக்கொன்று எதிராயிருந்தன.—ஐம்பதுமுழநீள ௬
மும், முப்பதுமுழ அகலமுங்கொண்ட வாசற்
றூண்மண்டபங்கட்டினான்: அந்தமண்டபத்தின்
தூண்களும் உத்திரங்களும்,வீட்டின்தூண்களுக்
கும் உத்திரங்களுக்கும் எதிராயிருந்தன.—தான் இ ௭
ருந்துநியாயந்தீர்ப்பதற்குநியாயாசனம்வைக்கும்
படி ஒருநியாயமண்டபத்தைக்கட்டினான்: தரை
யில் ஒருபக்கந்தொடங்கி மறுபக்கம்வரைக்கும்,
எரஸ்பலகைகளைப்பரப்பினான்.—அவன் வாசம் ௮
பண்ணும் அவன்வீட்டிலே மண்டபத்துக்குட்பு
றத்தில்அதின்படிசெய்யப்பட்ட வேறொருபிரா
காரமிருந்தது. சலோமோன் தான்விவாகம்பண்
ணினபார்வோனின்புத்திரியினிமித்தம்இன்னும்
ஒரு மண்டபங்கட்டினான்.—இவைகளெல்லாம் ௯
உள்ளும்புறம்பும் அஸ்திபாரமுதல் மேற்புறம்வ
ரைக்கும்வாளால் அரிந்து, அளவின்படி வெட்
டப்பட்டவிலையேறப்பெற்ற கற்களாயிருந்தன;
வெளியிலே பெரும்பிராகாரம்வரைக்கும் அப்ப
டியேயிருந்தன.—அத்திபாரம் பத்துமுழக்கற்க ௰
ளும், எட்டுமுழக்கற்களுமாகிய விலையேறப்பெ
ற்றபெரியகற்களால் போடப்பட்டது.—மேற்பு ௰௧
றத்தில்அளவின்படிவெட்டினவிலையேறப்பெற்
றகற்களும், எரஸ் மரங்களும் இருந்தன.—பெரி ௰௨
யபிராகாரத்தின் சுற்றிலும்மூன்று வரிசை வெட்
டுக்கற்களும், ஒருவரிசைஎரஸ்மரஉத்திரங்களும்
இடப்பட்டன; யெகோவாவின்ஆலயத்தின்
உட்பிராகாரத்துக்கும், வீட்டின் மண்டபத்துக்
கும்இப்படியே செய்யப்பட்டன.
பின்பு சலோமோன் இராசா ஆளனுப்பி, தீரு ௰௩
விலிருந்துஊராமைஅழைப்பித்தான்.-இவன்நப் ௰௪
தாலிகோத்திரத்தாளாகிய ஒருவிதவையின்புத்திர
ன்,இவன் பிதா,தீருநகரத்தானாகிய ஒருகன்னான்,
இவன் விவேகமும்புத்தியுமுடையவனாகிச்சகல
பித்தளைவேலைகளிலும் நிபுணனாயிருந்தான்: இ
வன்சலோமோன் இராசாவிடத்தில்வந்து, அவ
ன்வேலைகள் எல்லாவற்றையுஞ்செய்தான்.—இ ௰௫
வன் இரண்டு பித்தளைத்தூண்களை உண்டாக்கி
னான், ஒவ்வொருதூணின் உயரம்பதினெட்டுமு
ழம்: அவைகளின்சுற்றளவு பன்னிரண்டுமுழம்.-
தூண்களின் மேலிடத்தக்கதாக இவன்பித்தளையி ௰௬
னால்இரண்டுகும்பங்களை வார்த்தான்:ஒருகும்பத்
தினுயரம்ஐந்துமுழம், மற்றக்கும்பத்தினுயரம்ஐந்
துமுழம்.-தூண்களின்மேலுள்ள கும்பங்களுக்கு ௰௭
வலைபோன்றபின்னல்களும்,சங்கிலிமாலைகளும்
இருந்தன.-ஒருகும்பத்துக்குஎழும்,மற்றக்கும்பத் ௰௮

---

(௩௪) எசேக்.௪௧.௨௩. (௩௭) வச.௧.(௩௮)வச.௧.—(எ. அதி.௧.) அதி.௯.௰. ௨.நாளா.௮.௧.(௮)அதி.௩.௧. ௨.நாளா. ௮.௰௧. (௰௨) யோவா.௰.௨௩. அப்.௩.௰௧. (௰௩) ௨.நாளா.௪.௰௧. (௰௪) ௨.நாளா.௨.௰௪. ௨.நாளா.௪.௰௬. யாத்.௩௧. ௩. (௰௫) ௨.இரா.௨௫.௰௭. ௨.நாளா.௩.௰௫. எரே.௫௨.௨௧.

துக்கு எழுமாயிருந்தன; தூண்களின்மேலுள்ள
கும்பங்களைமூடும்படி, கும்பம் ஒன்றில் பின்ன
லின்மேற்சுற்றிலே இரண்டுவரிசை மாதுளம்ப
ழங்களைச்செப்பனிட்டான்: மற்றக்கும்பத்துக்
௰௯ கும் அப்படியேசெய்தான்.—மண்டபத்திலிருக்
கிற தூண்களின்மேலுள்ள கும்பங்கள் நாலுமு
ழம்வரைக்கும் லீஷன்புஷ்பம்போலச் செய்
௨௰ யப்பட்டன.—இரண்டு தூண்களின்மேலுள்ள
கும்பங்களில்செய்யப்பட்டபின்னலுக்கு அரு
கேயிருந்தபொலிவான இடத்தில் மாதுளம்பழங்
களிருந்தன: வரிசைவரிசையாக ஒவ்வொருகும்
பங்களிலும்இருநூறுமாதுளம்பழங்களிருந்தன.–
௨௧ அந்தத்தூண்களை ஆலயத்தின்வாசல் மண்டபத்
தில்நிறுத்தினான்: அவன்வலப்புறத்தில்நிறுத்தின
தூணுக்குயாகினென்றும்,இடப்புறத்தில்நிறுத்தி
னதூணுக்குப்போவசென்றும்பெயரிட்டான்.–
௨௨ அந்தத்தூண்களின்மேலே லீஷன்புஷ்பவேலை
செய்யப்பட்டது: இவ்விதமாய்த்தூண்வேலை நி
றைவேறிற்று.
௨௩ ஒருவிளிம்பு தொடங்கி மற்றவிளிம்புவரைக்
கும், பத்துமுழங்கொண்டகோளவடிவான ஒரு
கடல்தொட்டியைவார்ப்பித்தான்: அதின்உயரம்
ஐந்துமுழம், அதின் சுற்றளவுமுப்பதுமுழம்.—
௨௪ அந்தக்கடல்தொட்டியைச் சுற்றி விளிம்புக்குக்
கீழே,முழமொன்றுக்குப்பத்துப்பத்தாகக் குமிழ்
களிருந்தன: அது வார்க்கப்பட்டபொழுது இ
ரண்டுவரிசைகுமிழ்களாய்வார்க்கப்பட்டன.—
௨௫ அதுபன்னிரண்டு எருதுகளின் மேல்நின்றது,அ
வைகளில்மூன்றுவடக்கையும், மூன்றுமேற்கை
யும், மூன்று தெற்கையும், மூன்று கிழக்கையும்
நோக்கிக்கொண்டிருந்தன: அந்தக்கடல்தொட்
டிஅவைகளின்மேல்தங்கிற்று, அவைகளின் பிற்
௨௬ பக்கம்எல்லாம் உட்புறமாயிருந்தது.—அதின்க
னம்நாலுவிரற்கடை, அதின்விளிம்பு பானபாத்
திரம்போல் லீஷன்புஷ்ப விசித்திரங்களினாற்
சிங்காரிக்கப்பட்டது: அது இரண்டாயிரம்பாத்
அளவுகொள்ளும்.
௨௭ ஒவ்வொன்று நான்குமுழநீளமும், நான்குமு
ழ அகலமும், மூன்றுமுழ உயரமும் கொண்ட
தாக, பித்தளையினாற் பத்துப்பீடங்களைச் செய்
௨௮ தான்.—அந்தப்பீடங்களுக்கு இடைவெளிகளி
ருந்தன: அந்த இடைவெளிகள் சட்டங்களுக்
௨௯ கு நடுவிலுமிருந்தன.—சட்டங்களுக்கு நடுவி
லிருக்கிற திரணைகளில் சிங்கங்களும், எருதுக
ளும், கெருபிகளுமிருந்தன: ஆதாரங்களின்மே
லாக ஒரு திரணையும், சிங்கங்களுக்கும் எருதுக
ளுக்கும் கீழாக, சில சித்திரங்களும் செய்யப்
௩௰ பட்டிருந்தன.—ஒவ்வொரு பீடத்துக்கு நாலு
பித்தளைச்சில்லுகளும், பித்தளைத்தகடுகளுமிருந்
தன: அதின் நாலுமூலைகளுக்கும் ஆதாரங்களி
ருந்தன: ஸ்நானபாத்திரத்தின்கீழ் சித்திரங்களு
டனே வார்க்கப்பட்ட ஆதாரங்களிருந்தன.—
திரணைக்குள்ளான அதின்வாய்மேலாக ஒரு மு ௩௧
ழம்: திரணையின்வேலைபோலச்செய்யப்பட்ட
வட்டமான அதின்வாய் ஒன்றரைமுழம்,அதின்
வாயிலேசித்திரவேலைகளுமுண்டு; அதின்இடை
வெளிகள் வட்டமாயிராமல் சதுரமாயிருந்தன.–
இடைவெளிகளின் கீழ் நாலுசில்லுகளிருந்தன; ௩௨
அந்தச்சில்லுகளின் அச்சுகள் பீடத்திற் பதிந்தி
ருந்தன: ஒவ்வொருசில்லின் உயரம்ஒன்றரைமு
ழம்.—அந்தச்சில்லுகளின்வேலை இரதச்சில்லுக ௩௩
ளின் வேலைபோலிருந்தது: அவைகளின் அச்சு
களும், வட்டக்குத்திகளும், சக்கரக்கட்டைக
ளும், சிலக்கம்புகளும் எல்லாம் வார்ப்பாயிருந்த
ன.–ஒவ்வொருபீடத்தின் நாலுமூலைகளிலும் நா ௩௪
லுஆதாரங்களிருந்தன: அந்தஆதாரங்கள் பீடத்
தோடிசைந்திருந்தன.– பீடத்தின் மேற்புறத்தில் ௩௫
அரை முழ உயரமுள்ள ஒருவட்டமிருந்தது: பீ
டத்தின்மேற்புறத்திலுள்ளதிரணைகளும்,விளிம்பு
களும் அதனோடிசைந்திருந்தன.-அவைகளின்தி ௩௬
ரணைகளிலும்அவைகளின்இடைவெளிகளிலும்
கெருபிகளையும், சிங்கங்களையும், பேரீந்துகளையு
ம்,அவற்றின்ரூபத்துக்கேற்க வகுத்தான்;சுற்றிலு
ம்விசித்திரங்களிருந்தன.–பத்துப் பீடங்களையும் ௩௭
இவ்விதமாகச்செய்தான்;அவையெல்லாம்ஒருவா
ர்ப்பும்,ஒருஅளவும்,ஒருபருமையுமாயிருந்தன.
பின்பு பித்தளையினால் பத்து ஸ்நானபாத்திரங் ௩௮
களைச்செய்தான்: ஒவ்வொரு ஸ்நானபாத்திரம்
நாற்பதுபாத் கொள்ளும்: ஒவ்வொருஸ்நானபாத்
திரமும் நந்நாலுமுழம்: பத்துப் பீடங்களிலும்
ஒவ்வொன்றின்மேல் ஒவ்வொரு ஸ்நானபாத்திர
மிருந்தது.—ஐந்துபீடங்களை ஆலயத்தின் வலப் ௩௯
புறத்திலும், ஐந்துபீடங்களை ஆலயத்தின் இடப்
புறத்திலும் வைத்தான்: கடல்தொட்டியைக் கி
ழக்குத்திசையில் ஆலயத்தின் வலப்புறத்திலே,
தெற்குக்குநேரே ஸ்தாபித்தான்.
ஊராம்ஸ்நானபாத்திரங்களையும்,கரண்டிகளை ௪௰
யும், கலங்களையுஞ்செய்தான். இவ்விதமாய் ஊ
ராம் யெகோவாவின் ஆலயத்துக்காகச்சலோ
மோன் இராசாவினிமித்தம் தான்செய்த எல்
லாவேலையையும் முடித்தான்.—அந்த இரண்டு ௪௧
தூண்களும்,அந்தஇரண்டுதூண்களின்மேலுள்ள
கோளவடிவாகிய இரண்டுகும்பங்களும், தூண்
களின்மேலுள்ள கோளவடிவாகிய அந்த இரண்
டுகும்பங்களையும் மூடும்வலைப்பின்னல்களிரண்
டும்,—தூண்களின்மேலுள்ள கோளவடிவாகிய ௪௨
அந்த இரண்டு கும்பங்களையும் மூடும் வலைப்
பின்னல் ஒவ்வொன்றுக்கு இவ்விரண்டுவரிசை
மாதுளம்பழமாக, இரண்டுவலைப்பின்னல்களுக்
கும் நானூறுமாதுளம் பழங்களும்,–பத்துப்பீடங் ௪௩
களும், பீடங்களின்மேலுள்ள பத்துஸ்நான பாத்
திரங்களும்,—ஒரு கடல்தொட்டியும், அக்கடல் ௪௪
தொட்டியின் கீழிருக்கிற பன்னிரண்டு எருதுக
ளும்,—கடாரங்களும், கரண்டிகளும், கலங்க ௪௫

(௨௰) ௨.நாளா.௩.௰௬. எரே.௫௨.௨௩. (௨௧) ௨.நாளா.௩.௰௭. அதி.௬.௩. (௨௩) ௨.இரா.௨௫.௰௩. ௨.நாளா.௪.௨. எரே.௫௨.௰௭. (௨௪) ௨.நாளா.௪.௩. (௨௫) ௨.நாளா.௪.௪,௫. எரே.௫௨.௨௰. (௨௬) ௨.நாளா.௪.௫. (௩௮) ௨.நாளா.௪.௬. (௪௰) வச.௰௩. (௪௧) வச.௰௭,௰௮. (௪௫) யாத்.௨௭.௩. ௨.நாளா.௪.௰௬.

ளும், யெகோவாவின்ஆலயத்துக்காகச்சலோ
மோனிமித்தம்ஊராம்செய்த இந்தச் சகலபாத்தி
ரங்களும், துலக்கமான பித்தளையினாற்செய்யப்
௪௬ பட்டன.—இராசா யோர்தானுக்கடுத்த சமபூமி
யிலே சுக்கோத்துக்கும் சார்தானுக்கும் இடையி
லுள்ள களிமண்தரையில், இவைகளைவார்ப்பித்
௪௭ தான்.—பாத்திரங்கள்யாவும் மிகுதியாயிருந்தப
டியினால், சலோமோன் அவைகளை நிறுத்துப்
பார்க்கவில்லை: பித்தளை இவ்வளவென்று ஆராயப்
௪௮ பட்டதில்லை.—சலோமோன் பொன் வேதிகை
யும், சமுகத்தப்பம் வைக்கும் பொற்பீடமும்,—
௪௯ பசும்பொற் செடிவிளக்கும், தேவவாக்கியஸ்தா
னத்தின் முன்பாக வலப்புறத்திலேந்தும், இடப்
புறத்திலேந்துமாக, புஷ்பங்களையும் அலகுகளையு
முடைய விளக்குத்தண்டுகளும், பொற்கருவிக
௫௰ ளும்,—பாத்திரங்களும்,திரிவெட்டிகளும்,கிண்
ணங்களும், கரண்டிகளும், பசும்பொற் கலசங்
களும், உள்வீடாகியமிகவும்பரிசுத்த ஸ்தானத்
தின் கதவுகளுக்கும், வீடாகிய ஆலயத்தின் கத
வுகளுக்கும், பொற்பிணையல்களுமாகிய, யெ
கோவாவின் ஆலயத்துக்கேற்ற, சகல பாத்தி
௫௰௧ ரங்களையுஞ் செய்தான்.-இவ்விதமாய் யெகோ
வாவின் ஆலயத்துக்காகச் சலோமோன் இரா
சாசெய்த கிரியையெல்லாம் நிறைவேறிற்று. ச
லோமோன், தன்பிதாவாகிய தாவீது நிவேதித்த
வெள்ளியையும், பொன்னையும், பாத்திரங்களை
யும் கொண்டுவந்து, யெகோவாவின் ஆல
யத்திலுள்ள பொக்கிஷங்களுடன்சேர்த்துவைத்
தான்.

## ௮. அதிகாரம்.

௧. ஆலயப்பிரதிஷ்டையின்உற்சவம்: ௰௨.சலோமோன் ஆசீர்வாதஞ்சொல்லல்: ௨௨. சலோமோன் பிரார்த்தனைசெய்தல்: ௬௨. ஸ்தோத்திர பலிகளையிடல்.

பின்பு யெகோவாவுடைய உடன்படிக்கை
யின் பெட்டியைச் சீயோன் என்னுந் தாவீதின்
நகரத்தினின்றுகொண்டுவரும்படி, யெரூஷலே
மிலே சலோமோன் இராசா,இஸரவேலின்முதி
யோரையும், இஸரவேல்சந்ததியாரின்பிரதானபி
தாக்களாகிய கோத்திரத்தலைவர்களையும், தன்னி
௨ டத்தில் கூடிவரச்செய்தான்.—இஸரவேலின் ச
மஸ்தசனங்களும்,ஏதானீம் என்னும்ஏழாம்மாதத்
து உற்சவத்தில் சலோமோன்இராசாவிடத்தில் ஏ
௩ கமாய்க்கூடினார்கள்.—இஸரவேலின்முதியோர்
யாவரும் வந்தபொழுது, ஆசாரியர்கள் பெட்டி
௪ யை எடுத்தார்கள்.—ஆசாரியர்களும் லேவியரும்
யெகோவாவின் பெட்டியையும், சபையின
வாசத்தையும், ஆவாசத்திலுள்ள பரிசுத்தபாத்தி
ரங்களனைத்தையும் சுமந்துகொண்டுவந்தார்கள்.-
சலோமோன்இராசாவும்,அவனிடத்தில்கூடிவந் ௫
த இஸரவேலின் சமஸ்தசபையாரும், மிகுதிபற்
றிச்சொல்லுக்குந்தொகைக்கும் அடங்காத ஆடு
மாடுகளையும்பலியிட்டார்கள்.-ஆசாரியர்கள்ஆல ௬
யத்தின் தேவவாக்கியஸ்தானமாகிய மிகவும் பரி
சுத்தஸ்தானத்திலகெரூபிகளுடையசிறகுகளின்
கீழே யெகோவாவுடைய உடன்படிக்கைப்
பெட்டியை அதனிடத்தில்வைத்தார்கள்.—கெரூ ௭
பிகள்பெட்டியிருக்கிற ஸ்தானத்தின்மேல் தங்
கள் இரண்டுசிறகுகளையும்விரித்துக்கொண்டிருந்
தன,கெரூபிகள் பெட்டியையும் அதின் தண்டுக
ளையும் மூடிக்கொண்டன.—தண்டுகளின் நுனி ௮
கள், தேவவாக்கிய ஸ்தானத்தின் முன்னானபரி
சுத்தஸ்தானத்திலே காணப்படும்படி, தண்டுகளை
முன்னே இழுத்துவிட்டார்கள், அவைகள் வெ
ளியே காணப்படவில்லை: அவைகள் இந்நாள்
வரைக்கும் அங்கேயிருக்கின்றன.—இஸரவேல் ௯
சந்ததியார் எகிப்துதேசத்தைவிட்டுப்புறப்பட்ட
பின்பு, யெகோவா அவர்களோடே உடன்
படிக்கைசெய்த ஓரேப்பிலே மோசேவைத்
த கற்பலகைகள் இரண்டேயன்றி, பெட்டியி
லே வேறொன்றுமில்லை.—ஆசாரியர்கள் பரிசுத்த ௰
ஸ்தானத்தினின்று புறப்பட்டபொழுது, மே
கம்யெகோவாவின் ஆலயத்தில் நிறைந்தது.—
அந்தமேகத்தினிமித்தம் ஆசாரியர்கள் ஆராதனை ௰௧
செய்யநிற்கக்கூடாமற்போயிற்று:யெகோவா
வின் மகிமையினால் யெகோவாவின் ஆலயம்
நிறைந்தது.

அப்பொழுதுசலோமோன்,யெகோவாகா ௰௨
ரிருளிலே வாசம்பண்ணுவேனென்று சொல்லி
யிருக்கிறாரென்றும்,—நீர்சதாகாலமும்வாசம்பண் ௰௩
ணும் பொருட்டு நிலையுள்ள வாசஸ்தானமாகிய
ஒரு ஆலயத்தைஉமக்காகக்கட்டினேனென்றுஞ்
சொன்னான்.—பின்பு இராசாமுகந்திரும்பி இஸ ௰௪
ரவேலின் சபையாரெல்லாரையும் ஆசீர்வதித்
தான்: இஸரவேலின்சமஸ்தசபையாரும்நின்றார்
கள்.—இராசா இஸரவேலின் தேவனாகிய யெ ௰௫
கோவாவுக்குஸ்தோத்திரம்.—அவர், என்சனங் ௰௬
களாகியஇஸரவேலரைஎகிப்துதேசத்தினின்றும்
புறப்படச்செய்தநாள்முதல்,என்னாமத்தைநிறுத்
தும்படி ஒருஆலயங்கட்டுவதற்கு, இஸரவேலின்
கோத்திரங்களெங்கும் ஒரு நகரந்தெரிந்துகொள்
ளவில்லை: என் சனங்களாகிய இஸரவேலருக்கு
மேலதிகாரியாயிருக்கத்தாவீதையேதெரிந்துகொ
ண்டேனென்று, என் பிதாவாகிய தாவீதுக்குச்

---

(௪௬) ௨.நாளா.௪.௰௭. ஆதி.௩௩.௰௭. யோசு.௩.௰௬. (௪௭) ௧.நாளா.௨௨.௰௪. (௪௮) யாத்.௩௭.௨௫,. யாத்.௩௭.௰. யாத்.௨௫.௩௰. லேவி.௨௪.௫—௮. (௫௧) ௨.சாமு.௮.௰௧. ௨.நாளா.௫.௧.—(௮. அதி. ௧.) ௨.நாளா.௫. ௨.சாமு.௬.௰௭. ௨.சாமு.௫.௭,௯. (௨) லேவி.௨௩.௩௪. ௨.நாளா.௭.௮. (௩) எண்.௪.௰௫. உபா.௩௧.௯. யோசு.௩.௩,௬. ௧.நாளா.௰௫.௰௪,௰௫.(௪)அதி.௩.௪. ௨.நாளா.௧.௩. (௫) ௨.சாமு.௬.௰௩. (௬) ௨.சாமு.௬.௰௭. யாத்.௨௬.௩௩,௩௪. அதி.௬.௰௯. அதி.௬.௨௭. (௮) யாத்.௨௫.௰௪,௰௫. ௨.நாளா.௫.௯. (௯) யாத்.௨௫.௨௧. உபா.௰.௨. உபா.௰.௫. எபி.௯.௪. யாத்.௪௰.௨௰. யாத்.௩௪.௨௭,௨௮. உபா.௪.௰௩. வச.௨௧. (௰) யாத்.௪௰.௩௪,௩௫. ௨.நாளா.௫.௰௩,௰௪. (௰௨) ௨.நாளா.௬. லேவி.௰௬.௨. சங்.௰௮.௰௧. (௰௩) ௨.சாமு.௭.௰௩. சங்.௱௩௰௨.௰௪. (௰௪) ௨.சாமு.௬.௰௮. (௰௫) லூக்.௧.௬௮. (௰௬) ௨.சாமு.௭.௬. ௨.நாளா.௬.௫. வச.௨௯. உபா.௰௨.௰௧. ௧.சாமு.௰௬.௧. ௨.சாமு.௭.௮. ௧.நாளா.௨௮.௪. ௨.சாமு.௭.௫,௨௫.

சொல்லியவாக்கைத்தமதுகையினாலே நிறைவே
௰௭ ற்றினார்.-இஸரவேலின் தேவனாகிய யெகோ
வாவின்நாமத்துக்கு ஒருவீடுகட்ட, என்பிதாவா
௰௮ கிய தாவீது அபிப்பிராயங்கொண்டார்.—யெ
கோவா என்பிதாவாகியதாவீதைநோக்கி,என்
பேரால் ஒரு ஆலயங்கட்ட நீஅபிப்பிராயங்கொ
௰௯ ண்டாய், நீகொண்ட அபிப்பிராயம்நல்லது.—ஆ
கிலும் நீ அந்த ஆலயத்தைக்கட்டமாட்டாய்;
உன்உதரத்தில்தோன்றும்புத்திரனே என்பேரால்
ஆலயங் கட்டுவானென்று சொல்லியிருந்தார்.—
௨௰ யெகோவா தான்சொல்லியவாக்கை உறுதிப்
படுத்தினார், யெகோவா வாக்குத்தத்தம் பண்
ணியபிரகாரம், என்பிதாவாகிய தாவீதுக்குப்பிர
தியாகநான்தோன்றி, இஸரவேலின் சிங்காசனத்
தின்மேல் வீற்றிருக்கிறேன், இஸரவேலுடைய
தேவனாகிய யெகோவாவின்பேரால்ஒருஆ
௨௧ லயங்கட்டினேன்.—யெகோவா நம்முடைய
முன்னோரை எகிப்துதேசத்தினின்று புறப்படச்
செய்தகாலத்தில், அவர்களோடே அவர்பண்ணி
னஉடன்படிக்கைவைத்தபெட்டியைஸ்தாபிப்ப
தற்குஒருஸ்தானத்தைஏற்படுத்தினேனென்றான்.
௨௨ சலோமோன்யெகோவாவின்வேதிகைக்கு
முன் இஸரவேலின் சமஸ்தசபையாருக்கு முன்
பாகநின்று, வானத்துக்குநேரேதன்கையைவிரித்
௨௩ து,—இஸரவேலின் தேவனாகிய யெகோவா
வே, மேலேவானத்திலும், கீழேபூமியிலும், உமக்
கொப்பான தேவனில்லை; தங்கள் பூரணஇரு
தயத்தோடும் உமக்குமுன்பாகநடக்கும் உமதுதா
சருக்காக உடன்படிக்கையையும், அனுக்கிரகத்
௨௪ தையும் காத்துவருகிறீர்.—என்பிதாவாகிய தாவீ
தென்னும் உமதுதாசனுக்கு நீர் செய்தவாக்குத்தத்
தத்தைக்காத்துக்கொண்டீர்: உமதுவாக்கினால்நீர்
சொன்னதைஇன்றுபோலஉமதுகையினால்நிறை
௨௫ வேற்றினீர்.—இஸரவேலின் தேவனாகிய யெ
கோவாவே,நீர் என்பிதாவாகியதாவீதென்னும்
உமதுதாசனைநோக்கி, நீ என்சமுகத்தில் நடந்த
பிரகாரம் உன்சந்ததியாரும்என்சமுகத்தில்நடக்
கத்தக்கதாகத் தங்கள்வழியில் சாவதானமாயிருப்
பார்களாகில், என்சமுகத்தில் இஸரவேலின் சிங்
காசனத்தில் வீற்றிருக்கத்தக்க உன் வமிசத்தா
னொருவன் இல்லாதொழியானென்றுசொல்லி,
நீர் அவருக்குச் செய்தவாக்குத்தத்தத்தை இப்
௨௬ பொழுது நிறைவேற்றும்.—இஸரவேலின் தேவ
னே, என்பிதாவாகிய தாவீதென்னும் உமது தாச
னுக்கு நீர் சொல்லியவாக்கை மெய்ப்படுத்தும்
௨௭ படி உம்மைவேண்டுகிறேன்.—தேவன்நிச்சய
மாய்ப்பூமியிலே வாசம்பண்ணுவாரோ, வானங்
களுக்கு மேலான வானமும் உம்மைக்கொள்ளா
தே; நான் கட்டினவீடு உம்மைக்கொள்வதெப்ப
டி.—என்தேவனாகிய யெகோவாவே, உம ௨௮
து அடியான்செய்கிற பிரார்த்தனையையும் விண்
ணப்பத்தையும்நினைந்தருளும், உமதடியான்இன்
றைத்தினம் உமது சந்நிதியிலிடுகிற ஓலத்தையும்,
அவன்செய்கிற பிரார்த்தனையையுங் கேட்டரு
ளும்.—எனது நாமம் அதில் நிறுத்தப்படுமென் ௨௯
று நீர் குறித்த இந்த ஸ்தானத்துக்குநேரே, உம
து அடியான் செய்கிற பிரார்த்தனையைக் கேட்
கும்படி இரவும் பகலும் இந்த வீட்டின்மேல்,
நீர்கண்திறந்திருப்பீராக.—உமது அடியானும்,இ ௩௰
ஸரவேலராகிய உமதுசனங்களும்,இந்தஸ்தானத்
துக்கு நேராய்ச்செய்யும்விண்ணப்பத்தைக்கேட்
பீராக: உமது வாசஸ்தலமாகிய வானத்தினின்று
கேட்பீராக: கேட்டு, மன்னித்தருளும்.
ஒருவன்தன் அயலானுக்கு விரோதமாய்க்குற் ௩௧
றஞ் செய்தபொழுது, இவனை ஆணையிடுவிக்க
அவ்வாணை இவ்வாலயத்தில் உமதுவேதிகைக்கு
முன்வந்தால்,—நீர் வானத்தினின்றுகேட்டு, கா ௩௨
ரியம்நிறைவேற்றி,உமது அடியாரை விசாரித்து,
தீயனைக்குற்றவாளியாக்கி, அவனுக்குத் தண்ட
னை செய்து, நீதிமானுடைய நீதியை விளங்கப்
பண்ணி, அவன் நீதிக்கேற்க அவனுக்குப்பலன
ளிப்பீராக.
இஸரவேலராகியஉமது சனங்கள் உமக்குவி ௩௩
ரோதமாய்ப்பாவஞ்செய்தநிமித்தம், சத்துருவு
க்கு முன்முறிய அடிக்கப்படும்பொழுது உம்மி
டத்தில்திரும்பி, உமதுநாமத்தைப்புகழ்ந்துபிரார்
த்தித்து, இவ்வாலயத்துக்குநேராக உமக்கு விண்
ணப்பஞ்செய்தால்,—நீர்வானத்தினின்று அதைக் ௩௪
கேட்டு, இஸரவேலராகிய உமதுசனங்களின்பா
வத்தைமன்னித்து, அவர்கள் முன்னோர்களுக்கு
நீர் அளித்ததேசத்துக்கு அவர்களைமீண்டுங்கொ
ண்டுவருவீராக.
அவர்கள் உமக்கு விரோதமாய்ப்பாவஞ்செய் ௩௫
தநிமித்தம்வானம் அடைபட்டுமழைபெய்யா
திருக்குங் காலத்தில்,அவர்கள், தங்களை நீர்கிலே
சப்படுத்துகையில் தங்கள் பாவங்களைவிட்டுத்தி
ரும்பி, உமதுநாமத்தைப்புகழ்ந்து,இந்த ஸ்தானத்
துக்குநேராகப்பிரார்த்தனைபண்ணினால்,—நீர் வா ௩௬
னத்தினின்றுகேட்டு,உமதடியாரும்,உமது சனங்
களாகிய இஸரவேலரும், செய்தபாவத்தை மன்
னித்தருளும்; அவர்கள்நடக்கவேண்டியநன்னெ
றியைஅவர்களுக்குப்போதித்து, நீர் உமதுசனங்
களுக்குச் சுதந்தரமாகக்கொடுத்ததேசத்தில்மழை
வருஷிக்கப்பண்ணியருளும்.
தேசத்திலே பஞ்சமாகிலும், கொள்ளைநோயா ௩௭
கிலும், வரட்சியாகிலும், சாவியாகிலும், வெட்

(௰௭) ௨.சாமு.௭.௨. ௧.நாளா.௰௭.௧. (௰௮) ௨.நாளா.௬.௮,௯. (௰௯) ௨.சாமு.௭.௫,௰௨,௰௩. அதி.௫.௩,௫. (௨௰) ௧.நாளா.௨௮.௫,௬. (௨௧) வச.௯. உபா.௩௧.௨௬. (௨௨) ௨.நாளா.௬.௰௨. யாத்.௯.௩௩. எஸ்று.௯.௫. ஏசா.௧.௰௫. (௨௩) யாத்.௰௫.௰௧. ௨.சாமு.௭.௨௨. உபா.௭.௯. நிகி.௧.௫. தானி.௯.௪. ஆதி.௰௭.௧. ௨.இரா.௨௰.௩. (௨௫) ௨.சாமு.௭.௰௨,௰௬. (௨௬) ௨.சாமு.௭.௨௫. (௨௭) ௨.நாளா.௨.௬. ஏசா.௬௬.௧. எரே.௨௩.௨௪. அப்.௰௭.௨௪. ௨.கொரி.௰௨.௨. (௨௯) உபா.௰௨.௰௧. தானி.௬.௰. (௩௰) ௨.நாளா.௨௰.௯. நிகி.௧.௬. (௩௧) லேவி.௫.௧. யாத்.௨௨.௰௧. (௩௨) உபா.௨௫.௧. (௩௩) லேவி.௨௬.௰௭. உபா.௨௮.௨௫. லேவி.௨௬.௩௯,௪௰. நிகி.௧.௯. (௩௫) லேவி.௨௬.௰௯. உபா.௨௮.௨௩. (௩௬) சங்.௨௫.௪. ௧.சாமு.௰௨.௨௩. (௩௭) லேவி.௨௬.௰௬. உபா.௨௮.௨௧. ௨.நாளா.௨௰.௯.

டுக்கிளியாகிலும், பச்சைக்கிளியாகிலும் உண்டாகும்பொழுதும், அவர்கள் சத்துருக்கள் அவர்கள் தேசத்தின் நகரங்களைச்சுற்றி முற்றிகைபோடும்பொழுதும், எவ்விதவாதையாகிலும், எ
கூஅ வ்வித ரோகமாகிலும் வரும்பொழுதும்,—தன்தன் இருதய வாதையை அறிந்து, ஒருவனாவது உமது சனங்களாகியஇஸரவேலர் சமஸ்தருமாவது, இந்த ஆலயத்துக்கு நேராகக்கையை விரித்து, எந்தப்பிரார்த்தனையையாகிலும்விண்ணப்பத்
கூகூ தையாகிலுஞ்செய்தால்,—நீர் உமதுவாசஸ்தலமாகியவானத்தினின்றுகேட்டு, மன்னித்து, மனுபுத்திரர்சமஸ்தருடைய இருதயத்தையும் அறிந்தவர் நீரேஆதலால், அவரவர் இருதயத்தைஅறிந்து, ஒவ்வொருவருக்கும் அவரவர் நெறிக்கேற்க அவர்க
சய ளுக்குச்செய்து, பலனளிப்பீராக.—அதினால்அவர்கள், நீர் எங்கள் பிதாக்களுக்கு அளித்த தேசத்தில் வாசம்பண்ணும் காலமுழுவதும் உமக்
சக குப்பயந்து, நடப்பார்கள்.—அன்றியும், புறத்தேசத்தார் உமது மகா நாமத்தையும், உமதுவலிமையானகரத்தையும், ஓங்கிய உமது புயத்தையுங்கு
சஉ றித்துக்கேட்டிருப்பார்களே.— ஆதலால் உமது சனங்களாகிய இஸரவேலரிலேசேராத அவர்களில் ஒருவன் உமது நாமத்தினிமித்தம் தூரதேசத்திலிருந்துவந்து, இந்த ஆலயத்துக்குநேராகப்
சகூ பிரார்த்தனை பண்ணினால்,—நீர் உமது வாசஸ்தலமாகிய வானத்தினின்றுகேட்டு, உமது சனங்களாகியஇஸரவேலர்போலவேபூமியிலுள்ளசமஸ்தசனங்களும் உமது நாமத்தை அறிந்து, உமக்குப் பயப்படும்படிக்கும், நான் கட்டின இந்த ஆலயத்துக்கு உமதுநாமம் இடப்பட்டதென்று அறியும்படிக்கும், அந்தப்புறத்தேசத்தான் உம்மை நோக்கிப்பிரார்த்திப்ப தெல்லாவற்றையும் அவனுக்குச்செய்தருளும்.

சச உமது சனங்கள், சத்துருவை எதிர்த்துயுத்தஞ்செய்யும்படி நீர் தங்களை அனுப்புகிற எந்தஸ்தானத்துக்காகிலும் புறப்பட்டு, நீர்தெரிந்துகொண்ட இந்த நகரத்துக்கும், உமதுபேரால் நான்கட்டின இந்த ஆலயத்துக்கும் நேராக யெகோவா
சரு வை நோக்கிப்பிரார்த்தனை பண்ணினால்,—வானத்தில் அவர்கள் பிரார்த்தனையையும்விண்ணப்பத்தையுங்கேட்டு, அவர்கள் நீதியைவிளங்கப்
சசு பண்ணும்.—பாவஞ்செய்யாதவன் ஒருவனுமில்லையே, ஆதலால் அவர்கள் உமக்கு விரோதமாய்ப்பாவஞ்செய்ததினிமித்தம் அவர்கள்மேல் கோபங்கொண்டு, சத்துருக்கள்தூரத்திலாகிலும் சமீபத்திலாகிலும் இருக்கும் தங்கள் தேசத்துக்குச்சிறையாகக்கொண்டுபோகும்படி சத்துருக்க
சஎ ளிடத்தில் அவர்களை ஒப்பித்தபின்பு,—அவர்கள் தாங்கள்சிறைபிடிக்கப்பட்டுப்போயிருக்குந் தேசத்திலிருந்து, தாங்களேசிந்தனைபண்ணி மனந்தி

ரும்பி, நாங்கள்பாவஞ்செய்து குறும்பாய்நடந்து தீங்குசெய்தோமென்றுசொல்லி, தங்களைச்சிறைபிடித்துப்போனவர்களுடையதேசத்தில்உமக்கு விண்ணப்பஞ்செய்து,—தங்களைச் சிறையாகக் சஅ
கொண்டுபோன தங்கள் சத்துருக்களுடையதேசத்திலிருந்து, தங்கள் பூரண இருதயத்தோடும், தங்கள் பூரண ஆத்துமத்தோடும் உம்மிடத்தில் திரும்பி, தங்கள் பிதாக்களுக்கு நீர் அளித்த தங்கள் தேசத்துக்கும், நீர் தெரிந்துகொண்ட நகரத்துக்கும், உமதுபேரால் நான்கட்டின இந்த ஆலயத்துக்கும்நேராகப்பிரார்த்தனைபண்ணினால்,-
அவர்கள், எகிப்தென்னும்இருப்புச்சூளையினின் சகூ
றும் நீர் புறப்படச்செய்த உமது சனங்களும், உமது சுதந்தரமுமாயிருப்பதினால்,—நீர் உமதுவா ருய
சஸ்தலமாகிய வானத்தில் அவர்கள் பிரார்த்தனையையும் விண்ணப்பத்தையுங்கேட்டு, அவர்கள் நீதியை விளங்கப்பண்ணி,—உமது சனங்கள் உ ருக
மக்குவிரோதமாய்ச்செய்த பாவத்தையும், உமது கட்டளையை மீறிச்செய்த அவர்கள் அதிக்கிரமங்கள்யாவையும் மன்னித்து, அவர்களைச்சிறைப்பிடித்துக்கொண்டுபோனவர்கள் அவர்கள்மேல் இரங்கும்படி மனம் உருகச்செய்யும்.-ஆண்டவரா ருஉ
கிய யெகோவாவே, நீர் எங்கள் பிதாக்களை எகிப்தினின்றும் புறப்படச்செய்தபொழுது, உமது தாசனாகிய மோசேயைக்கொண்டு சொல்லிய பிரகாரம், பூமியிலுள்ள சமஸ்த சனங்களினின்றும் உமது சனங்களாகிய இஸரவேலரை உமக்குரிய சுதந்தரமாகும்படி வேறுபடுத்தினீர்.-
ஆதலால் அவர்கள் உம்மை நோக்கிப்பிரார்த்திப் ருகூ
பதெல்லாவற்றையுங்கேட்டருளும்படி, உமதடியான் செய்யும் விண்ணப்பத்தின்மேலும், அவர்கள் செய்யும் விண்ணப்பத்தின்மேலும் கண்திறந்தருளுவீராகவென்றான்.—சலோமோன் இப் ருச
படி யெகோவாவை நோக்கிச்செய்த சகல பிரார்த்தனையையும், விண்ணப்பத்தையும் முடித்த பின்பு, யெகோவாவுடைய வேதிகைக்கு முன், வானத்தைநோக்கி, கைவிரித்துக்கொண்டு, முழங்காற்படியிட்டதிலே விட்டெழுந்து,—நின்று ருரு
கொண்டு, தாம் வாக்குத்தத்தஞ்செய்த யாவற்றின் படிக்கும் தமதுசனங்களாகிய இஸரவேலருக்கு இளைப்பாறுதலையருளின யெகோவாவுக்கு ஸ்தோத்திரம்: அவர் தமது தாசனாகிய மோசேயைக் கொண்டு வாக்குத்தத்தஞ்செய்த சகலவாக்குத்தத்தங்களுள்ளும், ஒருவாக்கும் தவறிப்போகவில்லை.—நமது தேவனாகிய யெகோவா, நம ருசு
து முன்னோர்களோடிருந்த பிரகாரம் நம்மோடும் இருப்பாராக: அவர் நம்மைவிட்டுவிலகாமலும், நம்மைவிட்டு நீங்காமலும் இருப்பாராக.—நாம், ருஎ
தாம் செய்தசமஸ்தநெறிகளிலும் நடப்பதற்கும், நமது பிதாக்களுக்குத் தாம்விதித்த தமது கட்

(கூகூ) க.சாமு.௰௬.எ. க.நாளா.உஅ.௯. சங்.௰௪.௪. எரே.௰எ.௰. அப்.க.உ௪. (சய) சங்.௱௰.௪. (சஉ) உபா.௯.உ௯. (சகூ) க.சாமு.௰எ.௪௬. உ.இரா.௰௯.௰௯. சங்.௬எ.உ.சங்.௱உ.௰ரு. (சசு) உ.நாளா.௬.௩௬. நீதி.உ௰.௯.பிர.எ.உ௰.யாக். ௩.உ. க.யோவா.க.அ,௰. லேவி.உ௬.௩௪,௪௪. (சஎ) லேவி.உ௬.௪௰.நிகி.க.௬.தானி.௯.ரு. (சஅ) எரே.உ௯.௰உ,௰௩,௰௪. தானி.௬.௰. (சக) உபா.௯.உ௯. நிகி.க.௰. உபா.௪.உ௰. எரே.௰க.௪. (ருக) எஸ்ரா.எ.௪. சங்.௱௬.௪௬. (ருஉ) யாத்.௰௯.ரு. உபா.௯.உ௬,உ௯. (ருரு) உபா.௰உ.௰. யோசு.உக.௪ரு. (ருசு) உபா.௩க.௬. யோசு.க.ரு. (ருஎ) சங்.௱௰௯.௩௬.

டளைகளையும் விதிகளையும் கற்பனைகளையும் பே
ணிக்கொள்வதற்கும், நமது இருதயத்தைத் தம்
௫௮ வசமாக்குவாராக.—யெகோவாவே தேவ
னென்றும், அவரே ஒழிய வேறொருவரில்லை
யென்றும், பூமியிலுள்ளசமஸ்தசனங்களும் அறி
௫௯ யும்படி,—நமது தேவனாகிய யெகோவா, அந்
தந்தக் காலத்தில் நடக்குங்காரியத்துக்கேற்க எப்
பொழுதும் தமதடியானுடைய நீதியையும், தமது
சனங்களாகிய இஸரவேலருடையநீதியையும்வி
ளங்கப்பண்ணத்தக்கதாக, யெகோவாவின்
சந்நிதியில் நான்செய்தவிண்ணப்பமாகிய இந்த
௬௰ வாக்குகள் அவர்சமீபத்தில் சேரக்கடவன.-நீங்
கள் இன்றுபோல, நமது தேவனாகிய யெகோ
வாவின் விதிகளில் நடந்து, அவருடைய கட்
டளைகளைப் பேணிக்கொள்ளும்படி, உங்களி
ருதயம் பூரணமாய் அவரிடத்திற் சேர்ந்திருப்ப
௬௧ தாகவென்று சொல்லி,—உரத்த சத்தத்துடன் இ
ஸரவேலின் சமஸ்தசபையாரையும் ஆசீர்வதித்
தான்.
௬௨ பின்பு இராசாவும், அவனோடுகூடிய இஸர
வேலரனைவரும், யெகோவாவின் சந்நிதி
௬௩ யில் பலியிட்டார்கள்.-சலோமோன் யெகோ
வாவுக்குஸ்தோத்திரபலிகளாக இருபத்தீராயிரம்
மாடுகளையும், ஒருலட்சத்து இருபதினாயிரம்ஆடு
களையும்பலியிட்டான். இராசாவும், இஸரவேல்
சந்ததியார்சமஸ்தரும், யெகோவாவின் ஆல
யத்தைஇப்படியேபிரதிஷ்டைபண்ணினார்கள்.-
௬௪ யெகோவாவின் சந்நிதியிலிருந்த பித்தளை
வேதிகையானது, தகனபலிகளையும் போசனப
லிகளையும் ஸ்தோத்திரபலிகளின் நிணத்தையுங்
கொள்ளக்கூடாததாகச் சிறிதாயிருந்தபடியால்,
இராசா, அன்றைத்தினம் யெகோவாவின்
ஆலயத்துக்கு முன்னிருந்தபிராகாரத்தின் மத்தி
யத்தைப் பரிசுத்தப்படுத்தி, தகனபலிகளையும்,
போசனபலிகளையும், ஸ்தோத்திரபலிகளின் நி
௬௫ ணத்தையும், அங்கேசெலுத்தினான்.—அக்காலத்
திலே சலோமோனும், அமாத்தின் எல்லைதொ
டங்கி எகிப்தின் நதிவரைக்குமுள்ள மகாசபை
யாராகிய இஸரவேலர் சமஸ்தரும், நமது தேவ
னாகிய யெகோவாவின் சந்நிதியில் ஏழுநா
ளும்,பிறகேழுநாளும் ஆகப்பதினாலுநாள்வரைக்
௬௬ கும் உற்சவங்கொண்டாடினார்கள்.—எட்டாம்
நாளில் அவன் சனங்களை அனுப்பிவிட, அவர்
கள்இராசாவைவாழ்த்தி, யெகோவா, தமதடி
யானாகிய தாவீதுக்கும், தமது சனங்களாகிய இ
ஸரவேலருக்குஞ்செய்த சகல நன்மைக்காகவுஞ்
சந்தோஷப்பட்டு, மனமகிழ்ச்சியோடுதங்கள்தங்
கள் கூடாரங்களுக்குப்போய்விட்டார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. தேவன் சலோமோனுக்குத் தரிசனங்கொடுத்து உடன்படிக்கை செய்தல்: ௰. சலோமோனும் ஈராமும் ஒருவருக்கொருவர் காணிக்கையனுப்பல்: ௰௫. சில நகரங்கள் கட்டப்படல்: ௨௪. பார்வோனின் குமாரத்தி தன்வீட்டிற் பிரவேசஞ்செய்தல்: ௨௫. சலோமோன் வருஷாந்தரபலியிடல்: ௨௬. அவனுடைய கப்பல்கள் யாத்திரை பண்ணல்.

சலோமோன், யெகோவாவின் ஆலயத்தை ௧
யும், இராசமாளிகையையும், தனது இஷ்டப்ப
டி தான் செய்யவிரும்பின தெல்லாவற்றையும்
செய்து முடித்தபின்பு,—யெகோவா கிபி ௨
யோனில் தரிசனையானதுபோல, இரண்டாந்த
ரமும் சலோமோனுக்குத் தரிசனையானார்.—யெ ௩
கோவா அவனைநோக்கி, நீ என் சமுகத்திற்
செய்த பிரார்த்தனையையும் விண்ணப்பத்தையும்
கேட்டேன்: சதாகாலமும் என்னுமத்தை நிறுத்
தும்படி நீ கட்டின இந்த ஆலயத்தைநான் பரிசுத்
தப்படுத்தினேன்; இந்த ஸ்தானத்தின்மேல் நித்த
மும் என் கண்ணும் என்சிந்தையுமிருக்கும்.—
நான் உனக்குக்கட்டளையிட்ட தெல்லாவற்றை ௪
யும்செய்து, பூரண இருதயத்தோடும் நேர்மை
யோடும் உன்பிதாவாகிய தாவீதைப்போல என்
சமுகத்தில் நடந்து, என் விதிகளையும் கற்பனை
களையும் காத்துக்கொள்வாயாகில்,—நான் உன் ௫
பிதாவாகியதாவீதைநோக்கி, இஸரவேலரின்சிங்
காசனத்திலிருக்க உன் வமிசத்தாரொருவனும்
இல்லாதொழியானென்று வாக்குத்தத்தஞ்செய்த
பிரகாரம், இஸரவேலருக்குள் உன் இராசசிங்
காசனத்தைச் சதாகாலமும்நிலைப்படுத்துவேன்.-
நீங்களும் உங்கள் சந்ததியாரும் நான் உங்களுக் ௬
குமுன் ஏற்படுத்திய என் கட்டளைகளையும் வி
திகளையும் காத்துக்கொள்ளாமல், என்னை எப்
பொழுதாகிலும் விலகிப்போய், அந்நியதேவர்
களைச் சேவித்து அவர்களுக்கு ஆராதனைசெய்தா
ல்,—நான் அவர்களுக்கு அளித்ததேசத்தினின் ௭
றும் இஸரவேலரைச் சேதிப்பேன்; என்னுடை
ய நாமத்துக்கு நான் பரிசுத்தப்படுத்திய இந்த ஆ
லயத்தை என்பார்வையினின்றும் அகற்றுவேன்;
இஸரவேலர் சகல சனங்களுக்குள்ளும் பழமொ
ழியாகவும், பரிகாசமொழியாகவும் இருப்பார்
கள்.-உன்னதமாகிய இந்த ஆலயத்துக்கருகாகச் ௮
செல்லும் யாவரும்ஆச்சரியப்பட்டு, சீயென்று,
யெகோவா இத்தேசத்துக்கும், இந்தஆலயத்
துக்கும்இப்படிச்செய்ததென்னவென்பார்கள்.-
அதற்கு,அவர்கள் தங்கள்முன்னோரைஎகிப்துதே ௯
சத்தினின்றும்புறப்படச்செய்ததங்கள் தேவனா

(௫௮) யோசு.௪.௨௪. ௧.சாமு.௰௭.௪௬. உபா.௪.௩௫,௩௯. (௬௰) அதி.௰௧.௪. ௨.இரா.௨௰.௩. (௬௧) ௨.சாமு.௬.௰௮. (௬௨) ௨.நாளா.௭.௪. (௬௪) ௨.நாளா.௭.௭. ௨.நாளா.௪.௧. (௬௫) வச.௨. லேவி.௨௩.௩௪. எண்.௩௪.௮. யோசு.௰௩.௫. நியா.௩.௩. ஆதி.௰௫.௰௮. எண்.௩௪.௫. ௨.நாளா.௭.௮. (௬௬) ௨.நாளா.௭.௯,௰.—(௯. அதி. ௧.) ௨.நாளா.௭.௰௧. அதி.௭.௧. ௨.நாளா.௮.௬.(௨)அதி.௩.௫. (௩) ௨.இரா.௨௰.௫. சங்.௱௰௭. அதி.௮.௨௯. உபா.௰௧.௰௨. (௪) ஆதி.௰௭.௧. அதி.௰௧.௪,௬. (௫) ௨.சாமு.௭.௰௨,௰௬. அதி.௨.௪. சங்.௱௩௨.௰௨. (௬) ௨.சாமு.௭.௰௪. ௨.நாளா.௭.௰௯,௨௰. சங்.௮௯.௩௰. (௭) உபா.௪.௨௬. ௨.இரா.௰௭.௨௩. எரே.௭.௰௬. உபா.௨௮.௩௭. சங்.௪௪.௰௪. (௮) ௨.நாளா.௭.௨௧. உபா.௨௯.௨௪,௨௫,௨௬. எரே.௨௨.௮,௯.

கியயெகோவாவைவிட்டு அந்நியதேவர்களை
ப்பற்றிநின்று, அவர்களுக்கு ஆராதனைசெய்து,அ
வர்களைச்சேவித்தார்கள்; அதினிமித்தம்யெகோ
வா இந்தத்தீங்கெல்லாவற்றையும் அவர்கள்மேல்
வருவித்தாரென்று உத்தரமும்சொல்வார்கள்.
௰ சலோமோன் யெகோவாவின் ஆலயமும்,
அரமனையுமாகிய இரண்டுவீடுகளையும் கட்டுகிற
௰௧ இருபதுவருஷகாலமளவும்,—தீருவின் இராசா
வாகிய ஈராம், சலோமோனுக்கு அவன் இஷ்
டப்படி எரஸ்மரங்களையும், தேவதாருமரங்களை
யும், பொன்னையுங்கொடுத்துவந்தபடியால், ச
லோமோன்இராசா கலிலேயாநாட்டிலுள்ளஇரு
பதுபட்டணங்களை ஈராமுக்குக்கொடுத்தான்.—
௰௨ ஈராம் தனக்குச்சலோமோன் கொடுத்த பட்ட
ணங்களைப்பார்க்கும்படிதீருவிலிருந்துபுறப்பட்
டுவந்தான்; அவைகளில் அவன் பிரியப்படவில்
௰௩ லை.—அதினாலே அவன் என்சகோதரனே, நீர்
எனக்கு என்ன பட்டணங்களைத் தந்தீரென்று
சொல்லி, இந்நாள்வரைக்கும் வழங்குகிறபிரகா
௰௪ ரமாகக்காபூல்நாடென்றுபெயரிட்டான்.—ஈராம்
நூற்றிருபது கிக்கேர்பொன்னையும் இராசாவுக்கு
அனுப்பியிருந்தான்.
௰௫ சலோமோன்இராசா யெகோவாவின் ஆ
லயத்தையும், தன்வீட்டையும்,மில்லோவையும்,
யெருஷலேமின்மதிலையும், ஆத்சோரையும்,மெ
கிதோவையும், கெசெரையுங்கட்டுகிறதற்கு ஒ
௰௬ ருவிசேஷித்த வரிபோட்டுவாங்கினான்.—எகிப்
தின் இராசாவாகிய பார்வோன் புறப்பட்டுக்
கேசெரைப்பிடித்து, அக்கினியினாலே தகனித்
து, அந்நகரத்திலிருந்த கானானியரைக் கொன்று
போட்டு, சலோமோனின் மனைவியாகிய தன்
குமாரத்திக்குஅதைச் சீதனமாகக் கொடுத்திருந்
௰௭ தான்.—சலோமோன் கேசெரையும் கீழுள்ளபே
௰௮ தோரோனையும்,—பாலாத்தையும், தன் சுயதேசத்
௰௯ துவனத்திலுள்ள தாத்மோரையும்,—சலோமோன்
யெருஷலேமிலும் லீபானோனிலுந்தன்ஆளுகை
யைச்சார்ந்த சகல தேசத்திலும் தான்கட்டவி
ரும்பிய தனக்குள்ள சகல களஞ்சிய பட்டணங்
களையும், இரதநகரங்களையும், குதிரைவீரரின்
பட்டணங்களையுங்கட்டினான்.
௨௰ இஸரவேல்சந்ததியார் சங்காரம்பண்ண முடி
யாமல் மிஞ்சியிருந்தவர்களும் இஸரவேல் சந்த
தியாறிற் சேராதவர்களுமாகிய எமோரியர், எத்
தியர், பெரீசியர், ஈவியர், எபூசியர் என்னும் இ
௨௧ வர்களுக்குள்,—தேசத்தில் மிஞ்சியிருந்த சகல
சனங்களின் சந்ததியாரையும், சலோமோன் இந்
நாள்வரைக்கும்நடக்கிறதுபோலஊழியஞ்செய்
௨௨ யும்படி அடிமைப்படுத்திக்கொண்டான்.—இஸர
வேல் சந்ததியாரில் ஒருவரையும் அடிமையாக்
கிக்கொள்ளவில்லை: அவர்கள், படைஞரும், அ
வனுக்குப்பணிவிடைக்காரரும்,பிரபுகளும், சே
னாபதிகளும்,இரதவீரரும், குதிரைவீரருமாயிருந்
தார்கள்.—ஐஞ்ஞூற்றைம்பதுபேர்சலோமோனி ௨௩
டத்தில் வேலைசெய்யுஞ்சனங்களை நடத்துகிறபி
ரதான அதிபதிகளாக ஏற்படுத்தப்பட்டார்கள்.
பார்வோனின் புத்திரி தாவீதின் நகரத்தை ௨௪
விட்டுத் தனக்குச்சலோமோன்கட்டின வீட்டுக்
குவந்தாள்: அப்பொழுது அவன் மில்லோவைக்
கட்டினான்.
சலோமோன் ஆலயத்தைக்கட்டி நிறைவேற் ௨௫
றி, தான் யெகோவாவுக்கு உண்டாக்கின
வேதிகையின்மேல் வருஷத்திலே மூன்றுதரம்
தகனபலிகளையும், ஸ்தோத்திரபலிகளையுமிட்டு,
யெகோவாவின் சந்நிதியில் இருந்த வேதி
கையின்மேல் தூபங்காட்டிவந்தான்.
சலோமோன் இராசா, ஏதோம் தேசத்திலே ௨௬
செங்கடற்கரையில் ஏலோத்துக்குச் சமீபத்தி
லுள்ள எத்சேயோன் கேபெரிலே, பல கப்பல்க
ளைச்செய்வித்தான்.—அந்தக்கப்பல்களில் ஈராம் ௨௭
சமுத்திரயாத்திரையில் பரீட்சித்த தன் பணிவி
டைக்காரரைச் சலோமோனின் பணிவிடைக்
காரருடன் அனுப்பினான்.—அவர்கள் ஒப்பீருக் ௨௮
குப்போய், அவ்விடத்தினின்றும் நானூற்றிருப
து கிக்கேர்பொன்னைச் சலோமோன் இடத்தில்
கொண்டுவந்தார்கள்.

## ௰. அதிகாரம்.

௧. ஷேபாவின் இராசாத்தி சலோமோனின் ஞா
னத்தை வியத்தல்: ௰௪. சலோமோன் பொறப
ரிசைகளைச்செய்தல்: ௰௮. சிங்காசனத்தைவரு
ணித்தல்: ௨௪. சருவதேசத்தாரும் சலோமோ
னுக்குக்காணிக்கைக்கொண்டுவரல்: ௨௬. இரத
மூங் குதிரையும் எகிப்தினின்றுவரல்.

ஷேபாதேசஇராசாத்தி யெகோவாவின்நாம ௧
த்தைக்குறித்துச்சலோமோனுக்குக்கிடைத்த கீர்
த்தியைக்கேள்விப்பட்டு,விடுகதைகளினால் அவ
னைப்பரீட்சிக்கும்படிவந்தாள்.—அவள் சுகந்ததிர ௨
வியங்களையும்,மிகுதியானபொன்னையும்,இரத்தி
னங்களையும் சுமக்கிற ஒட்டகங்களோடும்,மிகுந்
த பரிவாரத்தோடும் யெருஷலேமுக்குவந்தாள்:
பின்புஅவள் சலோமோனிடத்தில் வந்தபொழு
துதன் மனதிலுள்ளயாவையும் வெளிப்படுத்திப்
பேசினாள்.—சலோமோன் அவள் கேட்ட சகல ௩
கேள்விக்கும் உத்தரங்கொடுத்தான்: இராசா அவ
ளுக்குத் தெரிவிக்கக்கூடாதமறைபொருளொன்
றுமில்லை.—ஷேபாவின்இராசாத்தி சலோமோ ௪
னின் எல்லாஞானத்தையும், அவன்கட்டினவீட்

(௰) அதி.௬.௩௭,௩௮. ௨.நாளா.௮.௧.(௰௧)௨.நாளா.௮.௧.(௰௩)யோசு.௰௯.௨௭.(௰௫)அதி.௫.௰௩. வச.௨௪. ௨.சாமு.௫.௧௯. யோசு.௰௯.௩௬. யோசு.௰௭.௰௧. யோசு.௰௬.௰. நியா.௧.௨௯.(௰௬)யோசு.௰௬.௰.(௰௭)யோசு.௰௬.௩. ௨.நாளா.௮.௫. (௰௮) யோசு.௰௯.௪௪. ௨.நாளா.௮.௪,௬. (௰௯) அதி.௪.௨௬. வச.௧. (௨௰) ௨.நாளா.௮.௭. (௨௧)நியா.௧.௨௧,௨௭,௨௯. யோசு.௰௫.௬௩. நியா.௧.௨௮. ஆதி.௯.௨௫,௨௬. எஸ்ற.௨.௫௫,௫௮. நிகி.௭.௫௭. (௨௨) லேவி.௨௫.௩௯. (௨௩) ௨.நாளா.௮,௰. (௨௪) அதி.௩.௧. ௨.நாளா.௮.௰௧. அதி.௭.௮. ௨.சாமு.௫.௯. ௨.நாளா.௩௨.௫.(௨௫)௨.நாளா.௮.௰௨,௰௩,௰௪. (௨௬) ௨.நாளா.௮.௰௭,௰௮. எண்.௩௩.௩௫. உபா.௨.௮. (௨௭) அதி.௰.௰௧.(௨௮)யோபு.௨௨.௨௪.—(௰. அதி. ௧.) ௨.நாளா.௯.௧. மத்.௰௨.௪௨. லூக்.௰௧.௩௧. நியா.௰௪.௰௨. நீதி.௧.௬.

௫ டையும்,—அவன் போசன பீடத்தின் உணவுப்
பொருளையும், அவன் தாசரின் இருப்பையும்,
அவன்மந்திரிகள் நிற்கும் வரிசையையும், அவர்
கள் வஸ்திரங்களையும், அவன் பானபாத்திரதாரி
களையும்,யெகோவாவின்ஆலயத்துக்குஅவன்
ஏறிப்போகிற மார்க்கத்தையும் கண்டபொழுது,
௬ மனமயங்கிவிட்டாள்.–அவள் இராசாவைநோக்
கி, நான் என் தேசத்திலிருக்கையில் உமது கிரி
யைகளையும், வித்தையையும்குறித்துநான் கேட்
௭ டவாக்கு உண்மை.—ஆனாலும் நான் வந்து என்
கண்ணினாற்காணும்வரைக்கும் அதை நம்பவில்
லை: பாதியாகிலும்எனக்குத்தெரிவிக்கப்படவில்
லை: உமதுஞானமும் ஐசுவரியமும், நான்கேள்
௮ விப்பட்ட கீர்த்தியைப்பார்க்கிலும்அதிகம்.-உம
து சனங்கள்வாழ்வுடையவர்கள்,நித்தமும் உமது
சமுகத்தில்நின்று உமது ஞானத்தைக்கேட்கிறஉ
௯ மது தாசரும்வாழ்வுடையவர்கள்.–உம்மேல் பிரி
யங்கொண்டுஇஸரவேலரின்சிங்காசனத்தில்உம்
மைஸ்தாபித்த தேவனாகிய யெகோவாவுக்
குஸ்தோத்திரம்; யெகோவா நித்தமும் இஸர
வேலரில் அன்புவைத்திருக்கிறபடியினாலே, நி
யாயத்தையும் நீதியையும்நடத்த,உம்மை இராசா
௰ வாக ஏற்படுத்தினார் என்றாள்.-அவள்இராசாவுக்
கு நூற்றிருபது கிக்கேர்பொன்னும், மிகுதியா
ன சுகந்ததிரவியங்களும், இரத்தினங்களும் கொ
டுத்தாள்: ஷேபாவின் இராசாத்தி சலோமோனுக்
குக்கொடுத்த சுகந்ததிரவியங்களைப்போலப்பின்
௰௧ பு ஒருபொழுதும் வரவில்லை.—ஓப்பீரிலிருந்து
பொன்கொண்டுவந்த ஈராமின் கப்பல்களும்வெ
கு அலமுக்மரங்களையும் இரத்தினங்களையும்கொ
௰௨ ண்டுவந்தன.—இராசா யெகோவாவின் ஆல
யத்துக்கும் அரமனைக்கும் சிறியதூண்களும், பா
டகருக்குச் சுரமண்டலங்களும் தம்பூருகளும்,
அல்முக்மரத்தினாலே செய்வித்தான்: அந்த அல்
முக்மரங்கள் போலப் பின்பு வந்ததுமில்லை, இந்
௰௩ நாள் வரைக்குங்கண்டது மில்லை.-சலோமோன்
இராசா, ஷேபாவின் இராசாத்திக்குத்தனதுஇரா
சரிக்க உதாரத்துவத்தினால் கொடுத்ததுமன்றி, அ
வள்விருப்பத்தின்படிக்கும் அவள்கேட்டதெல்
லாவற்றையும் கொடுத்தான். பின்பு அவள்தன்ப
ணிவிடைக்காரரோடேதன்தேசத்துக்குத் திரும்
பிப்போனாள்.

௰௪ சலோமோனுக்கு வர்த்தகரினாலும், சுகந்ததி
ரவிய வியாபாரிகளின் வியாபாரத்தினாலும், அ
ரபியாதேசத்துச்சகல இராசாக்களாலும், தேசாதி
௰௫ பதிகளாலும் வந்த பொன்னையன்றி,—ஒருவரு
ஷத்தில் அவனுக்குவந்தபொன் அறுநூற்றறுபத்
௰௬ தாறு கிக்கேர் நிறைகொண்ட பொன்.—சலோ
மோன் இராசா அடித்தபொன்னினால் இருநூறு
பரிசைகளைச்செய்வித்தான்:ஒவ்வொருபரிசைக்
கு அறுநூறுஷேக்கல் நிறைபொன் சென்றது.—
அடித்தபொன்னினால் முந்நூறுகேடகங்களைச் ௰௭
செய்வித்தான்; ஒவ்வொருகேடகத்துக்கு மும்
மூன்று இருத்தல் பொன்சென்றது: அவைகளை
இராசா லிபானோன் வனத்திலுள்ள வீட்டிலே
வைத்தான்.

இராசாயானைத்தந்தத்தினால்பெரியஒருசிங்கா ௰௮
சனஞ்செய்வித்து அதைப்பசும்பொற்றகட்டால்
மூடினான்.—அந்தச்சிங்காசனத்துக்கு ஆறுபடிக ௰௯
ளிருந்தன; மேற்புறப்பிற்பக்கத்தில்கோளவடிவ
மாயிருந்தது;ஆசனத்தின்இருபுறத்திலும்ஆதாரங்
களிருந்தன; ஆதாரங்களின் அருகேஇரண்டுசிங்
கங்கள்நின்றன.—ஆறுபடிகளின்மேலும் இருபு ௨௰
றத்திலும் பன்னிரண்டு சிங்கங்கள்நின்றன: எந்
தஇராச்சியத்திலும் இப்படிச்செய்யப்பட்டதில்
லை.—சலோமோன் இராசாவின் சகலபானபாத் ௨௧
திரங்களும் பொன், லிபானோன்வனத்திலுள்ள
வீட்டிலுள்ளசகலபாத்திரங்களும் பசும்பொன்;
ஒன்றும்வெள்ளியல்ல: சலோமோனின் காலத்
தில்இதொருபொருளாய் மதிக்கப்படவில்லை.—
இராசாவுக்குச்சமுத்திரத்திலே ஈராமின்கப்பல்க ௨௨
ளோடுகூட, தர்ஷீஷின் கப்பல்களுமிருந்தன:
தர்ஷீஷின் கப்பல்கள் மூன்றுவருஷத்துக்கொ
ருதரம் பொன்னையும், வெள்ளியையும், யானை
த்தந்தங்களையும், வானரங்களையும்,மயில்களையுங்
கொண்டுவரும்.—சலோமோன் இராசா ஐசுவரி ௨௩
யத்திலும் ஞானத்திலும்பூமியிலுள்ள எல்லாஇரா
சாக்களைப்பார்க்கிலும் மேலானவனாயிருந்தான்.

தேவன் சலோமோனுக்கு அவன் இருதயத் ௨௪
தில் அருளிய ஞானத்தைக்கேட்டறியும்படி, பூ
மண்டலத்திலுள்ள சகலரும் அவனைச்சந்திக்க
வகைதேடினார்கள்.—அவர்கள்யாவரும்வருஷந் ௨௫
தோறும் வீதம்வீதமாய் வெள்ளிப்பாத்திரங்களை
யும், பொற்பாத்திரங்களையும், வஸ்திரங்களையும்,
ஆயுதங்களையும்,சுகந்தபொருள்களையும், குதிரை
களையும், கோவேறுகழுதைகளையும், கப்பமாகக்
கொண்டுவருவார்கள்.

சலோமோன் இரதங்களையும் குதிரைவீரரை ௨௬
யும்சேர்த்தான்: அவனுக்கு ஆயிரத்துநானூறு இர
தங்களும், பன்னீராயிரங்குதிரை வீரருமுண்டு,
அவர்களைஇராசா,தங்களுடையபட்டணங்களி
லும், தன்னோடே யெருஷலேமிலும்வைத்திருந்
தான்.–யெருஷலேமிலே இராசாவெள்ளியைக் ௨௭
கற்கள்பொலவும், ஏரஸ்மரங்களைத் தாழ்ந்த பூமி
யிலுள்ள காட்டத்திமரங்கள்போலவும் அதிகப்
படச்செய்தான்.

இராசா எகிப்திலிருந்து குதிரைகளையும், ச ௨௮
ணல்நூலையும் வருவித்தான்: இராசாவின் வர்த்த
கர் சணல்நூலைவிலைக்கு வாங்கிவந்தார்கள்.—எ ௨௯
கிப்திலிருந்துவரும் ரதம் ஒன்றுக்குவிலை அறுநூ

(௫) ௧.நாளா.௨௬.௰௬. (௮) நீதி.௮.௩௪. (௯) அதி.௫.௭. ௨.சாமு.௮.௰௫. சங்.௭௨.௨. நீதி.௮.௰௫. (௰) சங்.௭௨.௰, ௰௫. (௰௧) அதி.௯.௨௭. (௰௨) ௨.நாளா.௯.௰௧. ௨.நாளா.௯.௰. (௰௪) ௨.நாளா.௯.௨௪. சங்.௭௨.௰. (௰௭) அதி.௰௪. ௨௬. அதி.௭.௨. (௰௮) ௨.நாளா.௯.௰௭. (௨௧) அதி.௯.௨௰. (௨௨) ஆதி.௰.௪. ௨.நாளா.௨௰.௩௬. அதி.௩.௰௨,௰௩. (௨௬) அதி.௪.௨௬. ௨.நாளா.௧.௰௪. ௨.பா.௰௭.௰௬. (௨௭) ௨.நாளா.௧.௰௫—௰௭. (௨௮) ௨.பா.௰௭.௰௬. ௨.நாளா.௧.௰௬. எசேக்.௨௭.௭. (௨௯) யோசு.௧.௪. ௨.இரா.௭.௬.

று ஷேக்கல வெள்ளி,குதிரை ஒன்றுக்குவிலை நூற்றைம்பது: இந்தப்பிரகாரம் எத்தியரின் இராசாக்களுக்கும், ஷீரியரின் இராசாக்களுக்கும் அவர்கள் வழியாய்க் கொண்டுவரப்பட்டன.

## ௰௧. அதிகாரம்.

௧. ஸ்திரிகள் நிமித்தம் சலோமோன்தேவபூசைசெய்தல்: ௯. யெகோவா அவனைக்கண்டித்தல்: ௰௪. ஆதாத்தும் அவனுக்குச்சத்துருவாதல்:௨௬. யெரொபேயாம்அவனுக்குச்சத்துருவாதல்:௪௧. சலோமோன் மரணமடைதல்.

சலோமோன்இராசா பார்வோனின் புத்திரியேயன்றி மோவாபியரும், அம்மோனியரும்,ஏதோமியரும், சீதோனியரும், எத்தியருமாகிய, அந்நியசாதிகளுடைய ஸ்திரிகள் பலரையும் நேசித்
௨ தான்.—அந்தச்சாதியாரைக்குறித்து யெகோவா இஸரவேலரைநோக்கி, நீங்கள் அவர்களிடத்தில்போகவும்படாது, அவர்கள் உங்களிடத்தில்வரவும்படாது: அவர்கள்நிச்சயமாய்த்தங்கள் தேவர்களைப்பின்பற்றும்படி உங்கள் மனதைத் திருப்பிவிடுவார்களென்று சொல்லியிருந்தார்: சலோமோனே அவர்களை அன்பாய்ப் பற்றிக்
௩ கொண்டான்.–அவனுக்கு இராசகன்னியராகிய எழுநூறுமனைவிகளும், முந்நூறு வைப்பாட்டிகளும் இருந்தார்கள்: அவன்மனைவியர்அவன்இரு
௪ தயத்தைச்சரியப்பண்ணினார்கள்.–சலோமோன் விருத்தனானபின்பு அவன்மனைவியர்அவன்இருதயத்தை அந்நிய தேவர்களைப்பின்பற்றும்படி திருப்பிக்கொண்டார்கள்: அதினால் அவன் பிதாவாகியதாவீதின்இருதயம்போலஅவன்இருதயம் தன் தேவனாகிய யெகோவாவைப்பூரண
௫ மாய்ச்சார்ந்து நிற்கவில்லை.–சலோமோன் சீதோனியரின்தேவியாகிய அஷ்தோரேத்தையும், அம்மோனியரின் அருவருப்பான மோலெக்கையும்
௬ பின்பற்றினான்.—சலோமோன் தன் பிதாவாகிய தாவீதுசெய்தபிரகாரம் யெகோவாவை முழுவதும்பின்பற்றாமல், யெகோவாவின்
௭ பார்வைக்குத்தீங்குசெய்தான்.—அப்பொழுதுசலோமோன் யெரூஷலேமுக்கு எதிர்ப்புறத்திலுள்ள மலையிலே மோவாபியரின் அருவருப்பானகிமோஷுக்கும், அம்மோன்சந்ததியாரின் அருவருப்பானமோலெக்குக்கும், உயர்ந்தஸ்தானங்
௮ கட்டினான்.—இப்படியேதங்கள்தெய்வங்களுக்குத்தூபங்காட்டிப்பலியிடுகிற அந்நியராகியதன் மனைவியர் எல்லாருக்காகவுஞ்செய்தான்.
௯ இந்தப்பிரகாரம் சலோமோனுக்கு இரண்டுதரம் தரிசனையாகி, அந்நியதேவர்களைப்பின்பற்ற வேண்டாமென்று, இந்தக்காரியத்தைப் பற்றிக் கட்டளையிட்ட இஸரவேலரின் தேவனாகிய
௰ யெகோவாவை அவனிருதயம்விட்டு,–யெகோவா கட்டளையிட்டதைப் பேணிக்கொள்ளாமல் விலகினபடியினால் யெகோவா அவன்மேல்கோபங்கொண்டார்.—ஆதலால் யெ ௰௧
கோவா சலோமோனைநோக்கி, நான் உனக்குக்கட்டளையிட்ட என்உடன்படிக்கையையும் என்விதிகளையும் நீகாத்துக்கொள்ளாமல், இப்படிச்செய்தபடியினால் இரர்ச்சியத்தை உன்னிடத்தினின்றும் பேர்த்து, உன் தாசனுக்குக்கொடுத்
துவிடுவேன்.—ஆகிலும் உன் பிதாவாகிய தாவீ ௰௨
தினிமித்தம் உன் நாளிலே நான் அப்படிச்செய்யேன்: உன்புத்திரன்கையினின்றும்பேர்த்துவிடு
வேன்.—எப்படியும் நான் அந்த இராச்சியம் மு ௰௩
ழுவதையும்பேர்த்துவிடாமல், என்தாசனாகியதாவீதினிமித்தமும், நான்தெரிந்துகொண்ட யெரூஷலேமின்நிமித்தமும், ஒருகோத்திரத்தை உன் புத்திரனுக்குக்கொடுப்பேனென்றார்.
யெகோவாசலோமோனுக்குவிரோதமாய் ௰௪
ஏதோமியனாகிய ஆதாத்தை எழுப்பினார்: இவன் ஏதோமிலுள்ள இராசாவின் வித்தானவன்.—தா ௰௫
வீது ஏதோமிலே தங்க, சேனாபதியாகிய யோவாப்பு, ஏதோமிலுள்ள ஆண்மக்கள்சகலரையும் சேதிக்கும்வரைக்கும் சகல இஸரவேலரோடும்
அங்கே ஆறுமாதமிருந்தான்.—யோவாப் ஏதோ ௰௬
மிலுள்ள ஆண்மக்கள் சகலரையும் சங்காரஞ்செய்தபின்பு, கொலைசெய்யப்பட்டவர்களை அ
டக்கம்பண்ணும்படி போனபொழுது,—ஆதாத் ௰௭
தும், அவனுடன் அவன் பிதாவின் தாசரில் சில ஏதோமியரும், எகிப்துக்குப்போய்விடும்படி தப்பி ஓடினார்கள்; அப்பொழுது ஆதாத் சிறுபால
கன்.—அவர்கள் மீதியானிலிருந்தெழுந்து பார ௰௮
னுக்குப்போய், பாரனிலே சிலமனிதரைக்கூட்டிக்கொண்டு எகிப்துக்கு எகிப்து இராசாவாகிய பார்வோனிடத்தில்வந்தார்கள்: அவன் இவனுக்கு ஒரு வீடுகொடுத்து, உணவுப்பொருளை
ஏற்படுத்தி, நிலத்தையுங்கொடுத்தான்.—ஆதாத் ௰௯
பார்வோனிடத்தில் மிகவும் தயைபெற்றான், அதனால் அவன் இராசஸ்திரியாகிய தாப்பெனேஸ் என்னும் தன்மனைவியின் சகோதரியை இவனுக்
கு விவாகஞ்செய்வித்தான்.—தாப்பெனேசின் ௨௰
சகோதரி இவனுக்குக்கினுபாத்தென்னும் ஒரு புத்திரனைப்பெற்றாள், அவனைத்தாப்பெனேஸ், பார்வோனின்வீட்டிலே முலைமறப்பித்தாள்: அதனால் கினுபாத் பார்வோனின் குடும்பத்தாரிற் சேர்ந்து, பார்வோன் புத்திரனுடன் இருந்தான்.-
பின்புதாவீது தன் முன்னோர்களோடே மகாநித் ௨௧
திரையடைந்தானென்றும்,சேனாபதியாகியயோவாப் இறந்துபோனானென்றும், எகிப்தில் ஆதாத் கேள்விப்பட்டபொழுது, பார்வோனைநோக்கி, நான்என் சுயதேசத்துக்குப்போகும்படி என்னை
அனுப்பிவிடுமென்று கேட்டான்.—அதற்குப் ௨௨
பார்வோன் இவனைநோக்கி, கேள், உன் சுயதே

(௰௧. அதி. ௧.) நெகி.௰௩.௨௬. உபா.௰௭.௰௭. (௨) யாத்.௩௪.௰௬. உபா.௭.௩,௪. (௪) உபா.௰௭.௰௭. நெகி.௰௩.௨௬. அதி-௮.௬௰. அதி.௯.௪. (௫) வச.௩௩. நியா.௨.௰௩. ௨.இரா.௨௩.௰௩. வச.௭. (௬) எண்.௰௪.௨௪. (௭) எண்.௩௩.௫௨. எண். ௨௧.௨௯. நியா.௰௧.௨௪. ௨.இரா.௨௩.௰௩. (௯) அதி.௩.௫. அதி.௯.௨. (௰) வச.௨,௩. அதி.௬.௰௨. அதி.௯.௬. (௰௧) வச.௩௧. அதி.௰௨.௰௫,௰௬. (௰௩) ௨.சாமு.௭.௰௫. சங்.௮௯,௩௩. அதி.௰௨.௨௰. உபா.௰௨.௰௧. ௧.நாளா.௫.௨௬. (௰௫) ௨.சாமு.௮.௰௪. ௧.நாளா.௰௮.௰௨,௰௩. (௰௬) எண்.௨௪.௰௯. உபா.௨௰.௰௩. (௨௧) ௧.இரா.௨.௰,௩௪.

சத்துக்குப்போக விரும்புகிறதென்ன; என்னி
டத்தில் உனக்கென்ன குறையென்று கேட்க,
இவன் உத்தரமாய், ஒருகுறைவுமில்லை: ஆகிலும்
எப்படியுமென்னைப்போகவிடுமென்றான்.
௨௩ இலியாதாவின் புத்திரனாகிய ரேசோனென்ற
வேறொரு விரோதக்காரனையும், யெகோவா
௨௪ அவனுக்குத் தோற்றுவித்தார்.—இவன் சோபா
வின் இராசாவாகிய ஆததேசரென்னும் தன் ஆண்
டவனை விட்டோடிப்போய், சோபாவிலுள்ள
வர்களைத்தாவீது கொலைசெய்தபொழுது தன்னு
டன் சிலசனங்களைச்சேர்த்துக்கொண்டு ஒருதள
பதியானான்: இவர்கள்தமஸ்குவுக்குப்போய்அங்
கேவாசம்பண்ணித் தமஸ்குவை அரசாண்டார்
௨௫ கள்.—ஆதாத் தீமைசெய்ததுமன்றி, இவனும் ச
லோமோனுடைய காலமுழுவதும் இஸரவேல
ருக்குச் சத்துருவாகி, இஸரவேலரை வெறுத்து,
ஷீரியதேசத்தை அரசாண்டான்.
௨௬ சேரேதாவூரிலுள்ள எப்ராத்தியனும், நேபாத்
தின்புத்திரனும், விதவையாகிய செரூகாளென்
னும்ஸ்திரியின்குமாரனும்,சலோமோனின்பணி
விடைக்காரனுமாகிய யெரோபேயாமென்பவ
னும் இராசாவுக்குவிரோதமாகத்தன்கையை ஓங்
௨௭ கினான்.—சலோமோன் மில்லோவைக்கட்டி,தன்
பிதாவாகிய தாவீதின் இடிந்தநகரத்தைப் பழுது
௨௮ பார்த்தபொழுது,—யெரோபேயாம் பராக்கிரமசா
லியாயிருந்தான்: இந்தவாலிபன் காரிய சாமார்த்
தியனென்று சலோமோன்கண்டு, யோசேப்புவ
மிசத்தாரின் பாரத்தை விசாரிக்கும்படி இவனைத்
௨௯ தலைவனாக ஏற்படுத்தினான்.—அக்காலத்திலே யெ
ரோபேயாம் யெரூஷலேமினின்று புறப்படுகிற
பொழுது, ஷீலோனியனாகிய அகியாவென்னும்
தீர்க்கதரிசிவழியில் இவனைக்கண்டான்; இவன்
புதுவஸ்திரம் போர்த்திருந்தான்; இருவர்மாத்தி
௩௰ ரம் வயல்வெளியிலே நின்றார்கள்.—அகியாஇவ
ன்போர்த்திருந்த வஸ்திரத்தைப்பிடித்து, பன்னி
௩௧ ரண்டுதுண்டாகக்கிழித்துப்போட்டான்.-பின்பு
யெரோபேயாமைநோக்கி, இந்தப்பத்துத்துண்டு
௩௨ களையும்எடுத்துக்கொள்.—இஸரவேலின் தேவ
னாகிய யெகோவா, அவர்கள் என்பார்வைக்
குச் செவ்வையானதைச்செய்து, சலோமோனு
டைய பிதாவாகிய தாவீதைப்போல, என்விதிக
ளையும் கற்பனைகளையும்பேணி என்நெறியில் ந
டவாமல், என்னைவிட்டுவிலகிச் சீதோனியரின்
தேவியாகிய அஷ்தோரேத்தையும், மோவாபிய
ரின் தேவனாகியகிமோஷையும்,அம்மோன்சந்
ததியாரின் தேவனாகிய மில்கோமையும் வணங்
௩௩ கினபடியினால்,—நான் இராச்சியத்தை அவன்
கையினின்றுபேர்த்து, உனக்குப்பத்துக்கோத்தி
ரங்களைத்தருவேன்; என்தாசனாகிய தாவீதின் நி
மித்தமும், இஸரவேலின் சகலகோத்திரங்களுக்
குள்ளும் நான்தெரிந்துகொண்ட யெரூஷலேம்
நகரத்தினிமித்தமும், அவனுக்கு ஒருகோத்திரமி
ருக்கும்.-இராச்சியபாரம் முழுவதும் அவன்கை ௩௪
யினின்று நீக்கமாட்டேன்:என்கட்டளைகளையும்
விதிகளையும் காத்துநடந்து, என்னால் தெரிந்து
கொள்ளப்பட்ட என் தாசனாகிய தாவீதினிமித்
தம்அவன் ஆயுள்பரியந்தம் அவனை அதிபதியாக
வைத்திருப்பேன்.—ஆகிலும் இராச்சியத்தை அ ௩௫
வன் புத்திரன்கையினின்றும் நீக்கி,அதில்பத்துக்
கோத்திரங்களை உனக்குத்தருவேன்.—ஒரு கோத் ௩௬
திரத்தைநான் என் நாமத்தைநிறுத்தும்படிதெரிந்
துகொண்ட நகரமாகிய யெரூஷலேமில், என்ச
முகத்தில் என்தாசனாகிய தாவீதின் விளக்கு நித்
தமும் எரியும்படி,அவன்புத்திரனுக்குக்கொடுப்
பேன்.—நீ உன்முழுமனவிருப்பத்தின்படி அர ௩௭
சாண்டு, இஸரவேலருக்கு இராசாவாயிருப்பதற்
கு நான் உன்னைத்தெரிந்துகொள்வேன்.—நான் ௩௮
உனக்குக் கட்டளையிட்டதெல்லாவற்றையும் நீ
கேட்டு, என்வழியில்நடந்து, என்தாசனாகியதா
வீதுசெய்தபிரகாரம் என்விதிகளையும் என்கட்ட
ளைகளையும் பேணி, என்பார்வைக்குச் செவ்வை
யானவைகளைச் செய்வாயாகில், நான் உன்னோ
டேயிருந்து, தாவீதுக்கு நான்கட்டினதுபோலஉ
னக்கும் ஒருநிலையானவீடுகட்டி, உனக்கு இஸர
வேலரைத்தருவேன்.—இந்தக்காரியத்தினிமித்தம் ௩௯
தாவீதின் வமிசத்தாரைக் கிலேசப்படுத்துவேன்,
ஆனாலும் நித்தமுமல்லவென்றுசொல்லுகிறாரெ
ன்றான்; இவன்இராசாவுக்கு விரோதமாகக்கை
ஓங்கினதற்குக்காரணமிதுவே.-அதினிமித்தம் ச ௪௰
லோமோன் யெரோபேயாமைக்கொல்ல வகை
தேடினான். யெரோபேயாம் எழுந்து எகிப்துக்
குத்தப்பி ஓடி, எகிப்தின் இராசாவாகிய ஷீஷாக்
கிடத்தில்போய், சலோமோனின் மரணபரியந்
தம் எகிப்திலிருந்தான்.
சலோமோனின் மற்றக்கிரியைகளும், அவன் ௪௧
செய்தயாவும், அவன் ஞானமும், சலோமோ
னின் கிரியைகள் அடங்கிய சரித்திரபுத்தகத்தி
லல்லவா எழுதியிருக்கின்றன.—யெரூஷலேமி ௪௨
லே சலோமோன் இஸரவேலர் அனைவர்மேலும்
அரசாண்டகாலம் நாற்பதுவருஷம்.—சலோமோ ௪௩
ன் தன் பிதாக்களுடன் மகா நித்திரையடைந்து,
தன்பிதாவாகியதாவீதின்நகரத்தில்அடக்கம்பண்
ணப்பட்டான்: அவனுக்குப்பின் அவன் புத்திர
னாகிய ரெகோபேயாம் அரசாண்டான்.

## ௰௨. அதிகாரம்.

௨. சனங்கள் ரெகோபேயாமிடத்தில் சகாயம் தேடல்: ௬. வாலிபருடைய ஆலோசனையினால் ரெகோபேயாம்கடினமான உத்தரங் கொடுத்தல்: ௰௬. இஸரவேலின்பத்துக் கோத்திரத்தார் இராசதுரோகஞ் செய்தல்: ௨௧. அவர்கள் யுத்தஞ்செய்யாதபடி ரெகோபேயாம் தீர்க்கதரிசியினால் தடுக்கப்படல்: ௨௫. யெரோபே

(௨௩) ௨.சாமு.௮.௩. (௨௪) ௨.சாமு.௮.௩. ௨.சாமு.௰.௮,௰௮. (௨௬) அதி.௰௨.௨. ௨.நாளா.௰௩.௬. ௨.சாமு.௨௰.
௨௧. (௨௭) அதி.௯.௨௪. (௨௯) அதி.௰௪.௨. (௩௰) ௧.சாமு.௰௫.௨௭. (௩௨) வச.௫,௬,௭. (௩௫) அதி.௰௨.௰௬,௰௭.
(௩௬) அதி.௰௫.௪. ௨.இரா.௮.௰௯. சங்.௱௩௨.௰௭. (௩௮) யோசு.௧.௫. ௨.சாமு.௰௧.௨௭.(௪௧)௨.நாளா.௯.௨௯.(௪௨)
௨.நாளா.௯.௩௰. (௪௩) ௨.நாளா.௯.௩௧. மத்.௧.௭.—(௰௨. அதி.)

*யாம் பத்துக்கோத்திரத்தாரை அரசாளப்பெற்று இரண்டு விக்கிரகங்களை ஸ்தாபித்தல்.*

ரெகோபேயாமை இராசாவாக ஏற்படுத்தும்ப
டி,இஸரவேலரெல்லாருஞ்ஷிகேமுக்குப்போன
படியினால் அவனும் ஷிகேமுக்குப்போனான்.—
௨ சலோமோன்இராசாவின் சமுகத்தினின்றுந் தப்
பிப்போய்,எகிப்திலேவாசம்பண்ணினயெரோ
௩ பேயாம் இதைக்கேள்விப்பட்டான்.—பின்பு அ
வர்கள் எகிப்திலிருந்தநெபாத்தின் புத்திரனாகிய
அந்த யெரோபேயாமுக்கு ஆளனுப்பி, அவனை
அழைப்பித்தார்கள். யெரோபேயாமும்இஸரவே
லின்சமஸ்தசபையாரும்வந்து,ரெகோபேயாமை
௪ நோக்கி,—உமதுபிதா சகிப்பதற்கரிய நுகத்தை
எங்களுக்கிட்டார்: உமது பிதாவின் கடினமான
ஊழியத்தையும், அவர் எங்கள் மேலிட்டபாரமா
னநுகத்தையும் இலகுவாக்கும், நாங்கள் உமக்கு
௫ ஊழியஞ் செய்வோமென்றார்கள்.—அதற்கு அ
வன்அவர்களைநோக்கி,நீங்கள்போய்மூன்றுநாள்
பொறுத்து என்னிடத்தில்வாருங்களென்று சொ
ல்ல, சனங்கள்போய்விட்டார்கள்.
௬ ரெகோபேயாம்இராசா,தன்பிதாவாகியசலோ
மோன் உயிரோடிருந்தபொழுது அவன் முன்
னின்றமுதியோருடன்ஆலோசித்து,நான்இந்தச்
சனங்களுக்கு என்ன உத்தரஞ்சொல்லுவேன்;
நீங்களிதற்கு என்ன ஆலோசனை சொல்லுகிறீர்
௭ களென்றுகேட்க,—இவர்கள் அவனை நோக்கி,
இன்றைத்தினம்நீர்அந்தச்சனங்களுக்குசேவகனா
கி, அவர்களுக்குச்சேவித்து, அவர்களுக்குப்பிரி
யமான வாக்குகளாக உத்தரங்கொடுத்தால்,அவர்
கள் நித்தமும் உமக்குப்பணிவிடைக்காரராவார்
௮ களென்றார்கள்.—அவன் தனக்கந்த முதியோர்
சொன்ன ஆலோசனையைத் தள்ளிவிட்டு, தனக்
குமுன்னின்ற தன்னோடுகூடவளர்ந்த வாலிபரு
௯ டன் மந்திராலோசனைசெய்து,—அவர்களை நோக்
கி, உமது பிதா எங்கள்மேலிட்டநுகத்தை இல
குவாக்குமென்றுசொல்லி, என்னிடத்தில் பேசி
ன இந்தச் சனங்களுக்கு நாம் என்ன உத்தரஞ்
சொல்லுவோம்; நீங்கள் இதற்கென்ன ஆலோச
௰ னைசொல்லுகிறீர்களென்றுகேட்க,—அவனோடு
கூடவளர்ந்த அந்தவாலிபர் அவனைநோக்கி,உம
து பிதா சகிப்பதற்கரிய நுகத்தை எங்களுக்கிட்
டார்,நீர் அதை எங்களுக்குஇலகுவாக்குமென்று
உம்மிடத்தில்சொன்ன இந்தச் சனங்களுக்கு,எ
ன் சிறுவிரல் என்பிதாவின் இடையிலும்பருத்தி
௰௧ ருக்கும்;—என்பிதா பாரமானநுகத்தை உங்களுக்
கிட்டார், நான் இன்னும் உங்கள்நுகத்தைப்பார
மாக்குவேன்: என்பிதா உங்களைக்கசைகளினால்
தண்டித்தார்,நானோதேள்களினால்உங்களைத்தண்
டிப்பேனென்று சொல்லவேண்டுமென்றார்கள்.-
௰௨ மூன்றாம்நாள்வாருங்களென்று இராசாசொல்லி
யபிரகாரம்யெரோபேயாமும், சகலசனங்களும்
௰௩ ரெகோபேயாமிடத்தில் வந்தார்கள்.—இராசா த
னக்கு முதியோர்சொன்ன ஆலோசனையைத்தள்
ளிவிட்டு,வாலிபர்சொன்ன ஆலோசனைப்படி,-
சனங்களிடத்தில், என்பிதா பாரமான நுகத்தை ௰௪
உங்களுக்கிட்டார், நான் இன்னும் உங்கள்நுகத்
தைப்பாரமாக்குவேன்: என்பிதா கசைகளினால்
உங்களைத்தண்டித்தார், நானோ உங்களைத்தேள்க
ளினால் தண்டிப்பேனென்றுசொல்லி, அவர்க
ளுக்குக்கடினமான உத்தரங்கொடுத்தான்.—யெ ௰௫
கோவா ஷீலோனியனாகிய அகியாவைக்கொ
ண்டு, நெபாத்தின் புத்திரனாகிய யெரோபேயா
முக்குத் தாம்சொல்லியவாக்கை நிறைவேற்றும்
படிக்கானகாரணமிருந்தபடியால், இராசாசனங்
களுக்குச் செவிகொடுக்கவில்லை.
இராசா தங்களுக்குச் செவிகொடுக்கவில்லை ௰௬
யென்று இஸரவேலர் சகலருங்கண்டபொழுது,
சனங்கள் இராசாவைநோக்கி,தாவீதினிடத்தில்
நமக்குப்பாகமேது; ஈஷாயின் புத்திரனோடேந
மக்குச்சுதந்தரமில்லை: இஸரவேலரே, உங்கள்
கூடாரங்களுக்குப் போய்விடுங்கள்: தாவீதே,
உன் சுயவமிசத்தைப்பார்த்துக்கொள்ளென்றார்
கள். இப்படியே இஸரவேலர் தங்கள்தங்கள்
கூடாரங்களுக்குப் போய்விட்டார்கள்.—யூதா ௰௭
வின் நகரங்களில் வாசம்பண்ணின இஸரவேல்
சந்ததியாரை ரெகோபேயாம் அரசாண்டான்.—
பின்பு ரெகோபேயாம் இராசா திறைவாங்குகிற ௰௮
வனாகிய ஆதோராமை அனுப்ப, அவன்சாகும்ப
டி இஸரவேல்சனங்கள் சமஸ்தருங் கல்லெறிந்
தார்கள். அதனால் ரெகோபேயாம் இராசாஅதி
தீவரமாய்த் தன் இரதத்தில் ஏறி,யெரூஷலேமுக்
குத் தப்பிப் போய்விட்டான்.—இஸரவேலர் இப் ௰௯
படியே இந்நாள்வரைக்கும் தாவீதின்வமிசஇரா
சாதீனத்தைத் தள்ளிவிட்டார்கள்.—யெரோபே ௨௰
யாம்திரும்பிவந்தானென்று சமஸ்தருங்கேள்விப்
பட்டபொழுது, அவனுக்கு ஆளனுப்பி, அவ
னைச்சபைக்கு அழைப்பித்து, சமஸ்த இஸரவே
லருக்கும் இராசாவாக, அவனை ஏற்படுத்தினார்
கள்: யூதா கோத்திரத்தாரேயன்றி வேறொருவ
ரும் தாவீதின் வமிசத்தைப் பின்பற்றவில்லை.
ரெகோபேயாம்யெரூஷலேமில் சேர்ந்தபொ ௨௧
ழுது, சலோமோனின் புத்திரனாகிய ரெகோபே
யாம் இராச்சியத்தைத் திரும்பத்தனக்காதீனமாக்
கிக்கொள்ளும்பொருட்டு, இஸரவேல் வமிசத்
தாருக்கு விரோதமாகயுத்தஞ்செய்யும்படி, சமஸ்
தயூதாவின் வமிசத்தாரும், பேன்யாமீன் கோத்
திரத்தாருமாகிய தெரிந்துகொள்ளப்பட்ட ஒரு
லட்சத்து ஒன்பதினாயிரம் படைஞரைக்கூடிவ
ரும்படிசெய்தான்.—நீ சலோமோனின் புத்திர ௨௨
னும், யூதாவின் இராசாவுமாகிய ரெகோபேயா
மையும், யூதாவமிசத்தார், பேன்யாமீன் வமிசத்
தார் சமஸ்தரையும், மற்றைச்சனங்களையும்நோக்
கி,—யெகோவா, நீங்கள்போய் உங்கள் ச ௨௩
கோதரராகிய இஸரவேல்சந்ததியாரை எதிர்த்து

(௧) ௨.நாளா.௰.௧. (௨) அதி.௰௧.௨௬. அதி.௰௧.௪௰. (௪) ௧.சாமு.௮.௰௧—௰௮. அதி.௪.௭. (௭) ௨.நாளா.௰.௭. நீதி.௰௫.௧. (௰௫) வச.௨௪. நியா.௰௪.௪. ௨.நாளா.௰.௰௫. அதி.௰௧.௰௧,௩௧. (௰௬) ௨.சாமு.௨௰.௧. (௰௭) அதி.௰௧.௰௩,௩௬. (௰௮) அதி.௪.௬. (௰௯) ௨.இரா.௰௭.௨௧. (௨௰) அதி.௰௧.௰௩,௩௨. (௨௧) ௨.நாளா.௰௧.௧. (௨௩) வச.௰௫.

யுத்தஞ்செய்யவேண்டாம்: இந்தக்காரியம் என்
ஞலாயிற்று.நீங்கள்ஒவ்வொருவரும்உங்கள் உங்
கள்வீடுகளுக்குப் போய்விடுங்களென்கிருரென்
௨௪ று,-தேவனுடையவாக்கு, தேவனுடையதாச
ஞகிய ஷிமாயாவுக்குக் கிடைத்தது:அதிஞல் அ
வர்கள் யெகோவாவின் வாக்குக்குச் செவி
கொடுத்து, யெகோவாவின் வாக்கின்படி தி
ரும்பிப்போய்விட்டார்கள்.
௨௫ பின்பு யெரோபேயாம் எப்ராயீம் மலையில் ஷி
கேமைக்கட்டி, அதில்வாசம்பண்ணிஞன்; அங்
கிருந்துபோய்ப் பெனியேலையுங்கட்டிஞன்.—
௨௬ யெரோபேயாம்,இனி இராச்சியம்தாவீதின் வமி
௨௭ சத்துக்குப்போய்விடும்.—இந்தச் சனங்கள் யெ
கோவாவின் ஆலயத்திலே பலியிடும்படியெ
ருஷலேமுக்குப்போஞல்,இந்தச்சனங்களுடை
ய இருதயம் யூதாவின்இராசாவாகிய ரெகோபே
யாமென்னுந் தங்கள் ஆண்டவனிடத்திற் சார்ந்
துவிடும், அதிஞல் அவர்கள் என்னைக் கொன்று
போட்டு, யூதாவின் இராசாவாகிய ரெகோபே
யாம்பட்சத்தில் போய்விடுவார்களென்று, தன்
௨௮ இருதயத்திற் சிந்தித்தான்.—இப்படி ஆலோசித்
து, இராசா பொன்னிஞல் இரண்டு கன்றுகளைச்
செய்து,இஸ்ரவேலரே,யெருஷலேமுக்குப்போ
கிறது உங்களுக்கு மெத்தவருத்தம்: எகிப்திலி
ருந்து உங்களைப் புறப்படச்செய்த உங்கள் தே
௨௯ வர்களைப் பாருங்களென்று சொல்லி,—ஒன்றைப்
பெத்தேலிலும், மற்றதைத்தாணிலும் ஸ்தாபித்
௩௰ தான்.—சனங்கள் ஒன்றின் முன் ஆராதனைசெய்
யும்படி தாண்வரைக்கும்போகத் தொடங்கிஞர்
கள்: அதஞல் இந்தக்காரியம் பாவமாய் முடிந்
௩௧ தது.—பின்பு அவன் உயர்ந்த ஸ்தானத்தில் ஒரு
வீடுகட்டி, லேவி புத்திரரிற் சேராத நீசச்சனங்
௩௨ களை பூசாரியராக்கிஞன்.-யெரோபேயாம் எட்
டாம் மாதம் பதினைந்தாந்தினத்தில்யூதாவின்உற்
சவம்போல ஒரு உற்சவம் ஏற்படுத்தி,வேதிகை
யில் பலியிட்டான். அப்படியே பெத்தேலிலும்
தான்செய்த கன்றுகளுக்குப் பலியிட்டுவந்தான்:
அவன் தான்செய்த உயர்ந்த ஸ்தானங்களின் பூ
௩௩ சாரிகளைப் பெத்தேலிலேவைத்தான்.-தான்தன்
சுய மனக்கற்பனையின்படி நியமித்த எட்டாம்
மாதம்பதினைந்தாந்தினத்தில்,பெத்தேலிலேதான்
உண்டாக்கின வேதிகையின்மேல் பலியிட்டு,
இஸ்ரவேல் சந்ததியாரினிமித்தம் ஒரு உற்சவம்
ஏற்படுத்திஞன்: அவன் வேதிகையின்மேல்பலி
யிட்டு, தூபங்காட்டிவந்தான்.

## ௰௩. அதிகாரம்.

௧. தேவனுடையதாசன்யெரோபேயாமிடத்தில் வாக்குச்சொல்லல்: ௰௧.விருத்தஞகிய ஒருதீர்க்கதரிசி அந்தத் தேவதாசனுக்குப்பொய் சொல்லல்: ௨௰. அந்தவாக்கைநம்பினதினிமித்தம் அவன்கண்டிக்கப்படல்: ௨௩. அவன் மரித்து அடக்கம்பண்ணப்படல்: ௩௩.யெரோபேயாம்பாவத்தில் அதிகரித்தல்.

பின்பு யெரோபேயாம்தூபங்காட்டும்படி வேதி ௧
கையின்சமீபத்தில்நிற்க, யெகோவாவின்வா
க்கிஞலே தேவனுடைய தாசன்ஒருவன் யூதா
வினின்றும்பெத்தேலுக்குவந்தான்.—அவன்வே ௨
திகையைநோக்கி, வேதிகையே, வேதிகையே,
தாவீதின் வமிசத்தில் யோஷியாவென்னும் ஒரு
பாலகன்பிறந்து,உன்மேல்தூபங்காட்டும்உயர்ந்
தஸ்தானங்களின் பூசாரிகளை உன்மேல் பலியிடு
வான்;மனிதருடைய எலும்புகள் உன்மேல்தகிக்
கப்படுமென்று யெகோவா சொல்லுகிருரெ
ன்று, யெகோவாவின் வாக்கின்படி வசனித்
தான்.—அத்தினத்தில் அவன் ஒரு அடையாளத் ௩
தைச்சொல்லி,கேளுங்கள்,வேதிகைவெடித்துப்
போகும், அதின்மேலிருக்கும் சாம்பல் கொட்
டுண்டுபோகும்,இதுவேயெகோவாசொன்ன
அடையாளமென்ருன்.—யெரோபேயாம் இரா ௪
சா, பெத்தேலிலுள்ள வேதிகைக்கு விரோதமா
கத் தேவனுடையதாசன்சொல்லிய வாக்கைக்
கேட்டபொழுது, அவனைப் பிடியுங்களென்று
சொல்லி,வேதிகையினின்றும்கையை நீட்ட,இ
வன்அவனுக்குவிரோதமாக நீட்டினகை, திரும்
பமுடக்கக்கூடாமல் சூம்பிப்போயிற்று.—யெ ௫
கோவாவுடைய வாக்கிஞல் தேவனுடைய
தாசன்சொல்லியஅடையாளத்தின்படிவேதிகை
வெடிக்க, சாம்பல் வேதிகையினின்றுங் கொட்
டுண்டுபோயிற்று.—அப்பொழுதுஇராசா தேவ ௬
னுடைய தாசனைநோக்கி, நீ உன் தேவஞ
கிய யெகோவாவின் முகத்தைநோக்கி, என்
கை முன்போலிருக்கும்படிபிரார்த்திக்கவேண்டு
மென்ருன். தேவனுடைய தாசன் யெகோ
வாவின் முகத்தைநோக்கிப்பிரார்த்திக்க, இரா
சாவின்கை முன்போலச்சொஸ்தமாயிற்று.-பின் ௭
பு இராசா தேவனுடையதாசனைநோக்கி; நீஎன்
னுடன்வீட்டுக்குவந்து இளைப்பாறு, நான்உனக்
கு வெகுமானந் தருவேனென்ருன்.—அதற்குத் ௮
தேவனுடையதாசன்இராசாவைநோக்கி,எனக்
குயெகோவாநீஅப்பம்புசிக்கவும்வேண்டாம்,
தண்ணீர்குடிக்கவும்வேண்டாம், போனவழியா
ய்த்திரும்பவும் வேண்டாமென்றுதமதுவாக்கிஞ
லே கட்டளையிட்டிருக்கிறபடியால்,-நீர் எனக்கு ௯
உமது வீட்டிற்பாதிதந்தாலும், உம்மோடே வரவு
மாட்டேன், இந்தஸ்தானத்தில் அப்பம்புசிக்கவு
மாட்டேன், தண்ணீர்குடிக்கவுமாட்டேனென்
ருன்.-பின்புஅவன்தான்பெத்தேலுக்குவந்தவழி ௰
யாய்த்திரும்பாமல், வேறு வழியாய்ப்போஞன்.

(௨௪) ௨.நாளா.௰௧.௨. (௨௫) நியா.௯.௪௫. நியா.௮.௰௭. (௨௭) உபா.௰௨.௫,௬. (௨௮) ௨.இரா.௰.௨௯. யாத்.௩௨.௪,௮. (௨௯) ஆதி.௨௮.௰௯. ஓசி.௪.௰௫. நியா.௰௮.௨௯. (௩௰) அதி.௰௩.௩௪. ௨.இரா.௰௭.௨௧.(௩௧)அதி.௰௨.௩௨. எண்.௩.௰. ௨.இரா.௰௭.௩௨. ௨.நாளா.௰௧.௰௪,௰௫. எசேக்.௪௪.௭,௮.(௩௨) லேவி.௨௩.௩௩.௩௪. எண்.௨௯.௰௨. ஆமோ.௭.௰௩. (௩௩) எண்.௰௫.௩௯. அதி.௰௩.௧.—(௰௩. அதி. ௧.) ௨.இரா.௨௩.௰௭. அதி.௰௨.௩௨,௩௩. (௨) ௨.இரா.௨௩.௰௫,௰௬. (௩) எசா.௭.௰௪. யோவா.௨.௰௮. ௧.கொரி.௧.௨௨.(௬)யாத்.௮.௮. எண்.௨௧.௭. அப்.௮.௨௪. யாக்.௫.௰௬.(௭) ௧.சாமு.௯.௭. ௨.இரா.௫.௰௫. (௯) எண்.௨௨.௰௮. ௧.கொரி.௫.௰௧.

௰௧ பெத்தேலிலே விருத்தனான ஒருதீர்க்கதரிசியி
ருந்தான்; அவன்புத்திரர்வந்துதேவனுடையதா
சன் அன்றைத்தினம் பெத்தேலிலேசெய்த கிரி
யைகளைஅவனுக்குவிவரித்ததுமன்றி, அவன் இ
ராசாவிடத்தில் சொல்லிய வாக்குகளையும், தங்
௰௨ கள்பிதாவுக்குச்சொன்னார்கள்.—அவர்கள் பிதா
அவர்களைநோக்கி, அவன் எந்தவழியாய்ப்போகி
றானென்றுகேட்டான்; யூதாவிலிருந்துவந்த தே
வனுடைய தாசன் போனவழி இன்னதென்று
௰௩ அவன்புத்திரர்பார்த்திருந்தார்கள்,—பின்புஅவன்
தன் புத்திரரைநோக்கி, என் கழுதையின் மேல்
சேணம்வையுங்களென்றுசொல்ல,அவர்கள்கழு
தையின்மேலே சேணம்வைத்தார்கள். இவன்அ
௰௪ திலேறி,—தேவனுடைய தாசனைத்தொடர்ந்து
போய், அவனை ஒருஅல்லோன்மரத்தின்கீழிருக்
கக்கண்டு, அவனைநோக்கி,நீர்தானா யூதாவினின்
றும்வந்த தேவனுடைய தாசனென்றுகேட்க,
௰௫ அவன் ஆமென்றான்.—பின்பு இவன் அவனை
நோக்கி, என்னுடன் வீட்டுக்குவந்து போசனம்
௰௬ பண்ணுமென்றுசொல்ல,-அவன் எனக்கு யெ
கோவா, நீ அங்கே அப்பம்புசிக்கவும் வேண்
டாம்; தண்ணீர்குடிக்கவும்வேண்டாம்; போன
வழியாய்த் திரும்பிவரவும்வேண்டாமென்று,தம
து வாக்கினாலே தெரிவித்திருக்கிறபடியால்,—
௰௭ நான் உம்முடன் திரும்பிவரவுமாட்டேன்; இந்
தஸ்தானத்தில் உம்முடன் அப்பம்புசிக்கவுமாட்
டேன்;தண்ணீர்குடிக்கவுமாட்டேனென்றான்.-
௰௮ அதற்கு இவன் அவனைநோக்கி, உம்மைப்போ
லவே நானும் ஒரு தீர்க்கதரிசி; யெகோவா
வின்வாக்கினால் தூதன் ஒருவன்என்னிடத்தில்,
அவன் அப்பம்புசித்துத் தண்ணீர்குடிக்கும்படி
அவனை உன் வீட்டுக்கு உன்னுடன் அழைத்
துக்கொண்டுவாவென்று சொல்லியிருக்கிறான்
என்றான். அவன் இவனுக்குச் சொன்னது
௰௯ பொய்.—இவன் அவனுடன் கூடிக்கொண்டு
போய், அவன் வீட்டில் அப்பம் புசித்துத் தண்
ணீர் குடித்தான்.
௨௰ இவர்கள் போசனபீடத்திலிருக்கிறபொழுது,
யெகோவாவின்வாக்கு, இவனைத்திரும்பக்
௨௧ கொண்டுவந்த தீர்க்கதரிசிக்குக்கிடைக்க,—அ
வன் யூதாவிலிருந்துவந்ததேவனுடையதாசனை
நோக்கி, நீ யெகோவாவின் வாக்குக்கு அ
மையாமலும், உன் தேவனாகிய யெகோ
வா உனக்கிட்ட கட்டளையைப் பேணாமலும்,—
௨௨ யெகோவா உன்னைநோக்கி, அப்பம் புசிக்க
வும்வேண்டாம்; தண்ணீர்குடிக்கவும்வேண்டா
மென்றஸ்தானத்தில்வந்து அப்பம்புசித்து, தண்
ணீர்குடித்தபடியினால், உன்பிரேதம் உன் முன்
னோருடைய பிரேதவறையை அடையமாட்டா
தென்று, யெகோவா சொல்லுகிறாரென்று
உரத்த சத்தத்துடன்சொன்னான்.
௨௩ அவன் போசனபானம்பண்ணி முடிந்தபின்
பு, இவன் தான் கூட்டிக்கொண்டுவந்த தீர்க்கதரி
சிக்குக் கழுதையின்மேல் சேணம்வைத்தான்.—
அவன்போகிறபொழுது வழியில் ஒரு சிங்கம் அ ௨௪
வனுக்கு எதிர்ப்பட்டுக் கொன்றுபோட்டது: அ
வன் பிரேதம் வழியிலே விழுந்துகிடந்தது: கழு
தை இவனருகே நின்றது, சிங்கமும் பிரேதத்துக்
குச் சமீபத்தில் நின்றது.—அந்த வழியாகப்போ ௨௫
ன சில மனிதர்பிரேதம் வழியிலே கிடக்கிறதை
யும், அந்தப் பிரேதத்துக்கருகே சிங்கம் நிற்கிற
தையும்கண்டு, முதியோனாகிய தீர்க்கதரிசிவசித்
தநகரத்திலேவந்து, அதைத் தெரிவித்தார்கள்.—
வழியினின்றும் அவனைக் கூட்டிப்போன தீர்க் ௨௬
கதரிசி அதைக்கேள்விப்பட்டு, அது தேவனு
டைய தாசன், அவன் யெகோவாவின் வாக்
கை மீறினான்: அதனால் யெகோவா அவ
னைச் சிங்கத்துக்கு ஒப்பித்தார், அது யெகோ
வா அவனுக்குச் சொல்லிய வாக்கின்படி அ
வனை முறித்துக்கொன்றுபோட்டதென்றான்.—
பின்பு அவன் தன் புத்திரரைநோக்கி, என் கழு ௨௭
தையின்மேல் சேணம் வையுங்களென்றுசொல்
ல, அவர்கள் கழுதையின்மேல் சேணம் வைத்
தார்கள்.—பின்பு அவன்போய், பிரேதம் வழியி ௨௮
லேகிடக்கிறதையும்,பிரேதத்தின் சமீபத்தில்கழு
தையும் சிங்கமும் நிற்கிறதையுங்கண்டான்: அந்
தச்சிங்கம் பிரேதத்தைப்பட்சித்துப்போடவுமில்
லை, கழுதையை முறித்துப்போடவுமில்லை.—
தீர்க்கத்தரிசி தேவனுடைய தாசனின் பிரே ௨௯
தத்தை எடுத்து, கழுதைமேலேற்றித் திரும்பக்
கொண்டுவந்தான். முதியோனாகிய தீர்க்கதரிசி
நகரத்திற்சேர்ந்து, துக்கங்கொண்டாடி, அடக்
கம்பண்ணினான்.—அவன் பிரேதத்தைத் தன் சுய ௩௰
பிரேதக்குழியில் வைத்தான்: அவர்கள், ஐயோ,
எங்கள் சகோதரனே யென்றுசொல்லி, துக்கங்
கொண்டாடினார்கள்.—அவன் இவனை அடக்கம் ௩௧
பண்ணினபின்பு, தன் புத்திரரைநோக்கி, நான்
மரணமடைந்தபொழுது தேவனுடைய தாசன்
அடக்கம் பண்ணப்பட்ட குழியில் என்னையும்
அடக்கம்பண்ணுங்கள்; என் எலும்புகளை அ
வன் எலும்புகளுடன் வையுங்கள்.—பெத்தேலி ௩௨
லுள்ள வேதிகைக்குவிரோதமாகவும், ஷமாரியா
வின் பட்டணங்களிலுள்ள உயர்ந்த ஸ்தானங்க
ளின் சகலவீடுகளுக்கும் விரோதமாகவும், யெ
கோவாவுடைய வாக்கின்படி அவன் உரத்த
சத்தத்துடன் சொல்லிய வாக்கு நிச்சயமாய்ச் சித்
திக்குமென்றான்.
இதன்பின்பு யெரோபேயாம் தனது துன்னெ ௩௩
றியைவிட்டுத்திரும்பாமல், மறுபடியும் நீசசனங்
களை உயர்ந்த ஸ்தானங்களின் பூசாரிகளாக ஏற்
படுத்தினான்: விரும்பினவன் எவனோ, அவனை
ஏற்படுத்த, அவன் உயர்ந்த ஸ்தானங்களில் பூசா
ரியாவான்.—இந்தக்காரியம் யெரோபேயாமின் ௩௪
வமிசத்துக்குப் பாவமாய் முடிந்தது, அதினால்

(௰௬) அதி.௨௰.௩௫. (௰௭) வச.௮,௯.(௨௨)வச.௯. (௨௪) அதி.௨௰.௩௬. (௩௰) எரே.௨௨.௰௮. ௨.இரா.௨௩.௰௭,௰௮. (௩௨) வச.௨. ௨.இரா.௨௩.௰௬,௰௯. அதி.௰௩.௨௪.(௩௩)அதி.௰௨.௩௧,௩௨. ௨.கொரி.௰௪.௰௫. ௨.கொரி.௰௩.௯. நியா. ௰௭.௰௨. (௩௪) அதி.௰௨.௩௰. அதி.௰௪.௰.

அந்த வமிசம் சேதிக்கப்பட்டது, பூமியினின்
றும் ஒழிந்துபோயிற்று.

## ௰௪. அதிகாரம்.

௧. தன் புத்திரன் வருத்தமாயிருக்கிறபடியால் யெரோபெயாம் தன் ஸ்திரியை அகியா இடத்திலனுப்பல்: ௫. அகியா துக்கந்தருஞ்செய்தியனுப்பல்: ௰௭. அபீயா மரித்து அடக்கம்பண்ணப்படல்: ௨௧. ரெகோபெயாமின் தீமையுள்ள ஆளுகை: ௨௫. ஷீஷாக் யெருஷலேமைக்கொள்ளையாடல்: ௨௯. ரெகோபெயாமுக்குப்பின் அபீயாம் இராச அபிஷேகம்பெறல்.

அக்காலத்திலே யெரோபெயாமின் புத்திரனாகி
௨ ய அபீயா நோயாயிருந்தான்.—அதனால் யெரோ
பெயாம் தன் மனைவியைநோக்கி, நீ யெரோபெ
யாமின் மனைவியென்று ஒருவருக்குந்தெரியாத
படி, வேஷம்மாறி, எழுந்து, ஷீலோவுக்குப்போ
கும்படிவேண்டுகிறேன்: நான் இந்தச் சனங்க
ளுக்கு இராசாவாவேனென்று எனக்குத் தெரி
வித்த அகியா தீர்க்கதரிசி அங்கேயிருக்கிறான்;—
௩ நீ உன்கையிலேபத்து அப்பங்களையும், கச்சாயங்
களையும், ஒருகரகந்தேனையும் எடுத்துக்கொண்டு
அவனிடத்தில்போ, பாலகனுக்கு என்ன சம்ப
விக்குமென்று அவன் உனக்குச் சொல்லுவா
௪ னென்றான்.—யெரோபெயாமின் மனைவி அப்
படியே எழுந்து, ஷீலோவுக்குப்போய், அகியா
வின் வீட்டிற்பிரவேசித்தாள்: அகியா முதிர்வய
தானதினால் அவன் கண்கள் நிலைக்கண்பட்டு,
பார்க்கக்கூடாதிருந்தான்.
௫ அப்பொழுது யெகோவா அகியாவைநோக்
கி, கேள், யெரோபெயாமின் மனைவி தன்புத்தி
ரன் நோயாயிருப்பதினால் அவனைக்குறித்துஉன்
னிடத்தில் ஒன்றுகேட்கவருகிறாள்; அவள்வே
றொருஸ்திரிபோலவேஷம்தரித்துவருவாள் என்
றுசொல்லி, பின்பு அவளுக்கு இன்ன இன்னபி
௬ ரகாரம்சொல்லென்றார்.—அந்த ஸ்திரி வாசலிற்
பிரவேசிக்க, அவள் காலின் சத்தத்தை அகியா
கேட்டு, யெரோபெயாமின் மனைவியே, உள்
ளேவா, வேறொருஸ்திரிபோல வேஷம்தரித்து
வந்ததென்ன; உனக்குக்கொடியசெய்தியைத்
தெரிவிக்க, நான் உன்னிடத்தில் அனுப்பப்பட்
௭ டேன்.—நீபோய் யெரோபெயாமைநோக்கி, ச
னங்களில்நின்றும் உன்னை உயர்த்தி, என்சனங்
களாகிய இஸரவேலருக்கு அதிபதியாக ஏற்ப
௮ டுத்தி,—இராச்சியத்தைத் தாவீதின்வமிசத்தினின்
றும்பேர்த்து உனக்குத்தந்தேன்; ஆகிலும் என்
கட்டளைகளைப்பேணி, தன் பூரண இருதயத்து
டன் என்னைப்பின்பற்றி, என்பார்வைக்கு நல
மானதைமாத்திரஞ்செய்த என்தாசனாகிய தாவீ
௯ தைப்போல நீ இராமல்,—உனக்குமுன்னிருந்த
வர்களெல்லாரைப்பார்க்கிலும் தீங்குசெய்தாய்:
எனக்குக்கோபம்மூட்ட நீ அந்நியதேவர்களை
யும், வார்க்கப்பட்ட விக்கிரகங்களையும் உனக்
காகச் செய்துகொண்டு, உனக்குப்புறம்பே என்
னைத் தள்ளிவிட்டாய்.—ஆகையால் நான் யெ ௰
ரோபெயாமின் வமிசத்தின்மேல் தீங்குவருவித்
து, யெரோபெயாமின் ஒவ்வொருபுருஷரையும்,
இஸரவேலர்மத்தியில் அடைபட்டவனையும் வி
டுபட்டவனையும் சேதித்து, ஒருவன் குப்பைக
ழித்துப்போடுகிறதுபோல, யெரோபெயாமின்வ
மிசத்தில்மீந்திருக்கிறவர்களை அற்றுப்போகும்ப
டிகழித்துப்போடுவேனென்று, இஸரவேலரின்
தேவனாகிய யெகோவா சொல்லுகிறாரென்
றுசொல்லு.—யெரோபெயாமின் வமிசத்திலே ௰௧
நகரத்திற்சாகிறவனை நாய்தின்னும்; வெளியிலே
சாகிறவனை ஆகாயத்துப்பறவைகள் தின்னும்:
இப்படி யெகோவா சொல்லியிருக்கிறார்.—
ஆதலால் நீ எழுந்து உன்வீட்டுக்குப்போ, உன் ௰௨
கால் நகரத்திற்பிரவேசித்தமாத்திரத்தில்பாலகன்
சாவான்.—யெரோபெயாமின் வமிசத்தாருக்குள் ௰௩
இஸரவேலரின் தேவனாகிய யெகோவாவுக்
கேற்ற நன்மை இவனிலேகாணப்பட்டதினால்,
யெரோபெயாமின்வமிசத்தாருக்குள் இவன்மாத்
திரம் பிரேதக்குழியைச்சேருவான்; இஸரவே
லர் சமஸ்தரும் இவனிமித்தந் துக்கங்கொண்டா
டிஅடக்கம்பண்ணுவார்கள்.—இன்னும்யெகோ ௰௪
வா தமக்கேற்ற ஒரு இராசா இஸரவேலருக்
குத்தோன்றச்செய்வார்; அன்றைத்தினம் அவன்
யெரோபெயாமின் வமிசத்தைச் சேதிப்பான்:
இதுதாமதமினறி நடக்கும்.—இஸரவேலர் யெ ௰௫
கோவாவுக்குக் கோபம்மூட்டத் தங்களுக்குத்
தோப்புக்களையுண்டாக்கினபடியினால், சலத்தி
லேநாணல்அசைகிறதுபோல, யெகோவா அ
வர்களை முறிந்தசையப்பண்ணி, இஸரவேலரை
அவர்கள்முன்னோருக்குத்தாம் அளித்த இந்த உத்
தம தேசத்தினின்றும் நிருமூலமாக்கி, நதிக்கப்
பால் சிதறஅடிப்பார்.—தானும்பாவஞ்செய்து, இ ௰௬
ஸரவேலரையும் பாவஞ்செய்யப்பண்ணின யெ
ரோபெயாமின் பாவங்களினிமித்தம், இஸரவே
ல்வமிசத்தாரைத் தள்ளிப்போடுவாரென்றான்.
பின்பு யெரோபெயாமின் மனைவி எழுந்து பு ௰௭
றப்பட்டுத் திர்சாவுக்குவந்தாள்: அவள் வாசற்ப
டியிலே வர, பாலகன் இறந்துபோனான்.—அவர் ௰௮
கள்அவனைஅடக்கம்பண்ணினார்கள்; யெகோ
வா, அகியா தீர்க்கதரிசியென்னும் தமது தாச
னைக்கொண்டு சொல்லிய வாக்கின்படி இஸர
வேலர் சகலரும் அவனிமித்தந் துக்கங்கொண்
டாடினார்கள்.—யெரோபெயாமின்மற்றக்கிரியை ௰௯
களும், அவன் யுத்தஞ்செய்தவிதமும், அரசாண்
டவிதமும், இஸரவேல் இராசாக்களின் சரித்திர
புத்தகத்திலல்லவாஎழுதியிருக்கின்றன.—யெரோ ௨௰

(௰௪. அதி. ௨.) அதி.௰௧.௩௧. (௩) ௧.சாமு.௯.௭,௮. (௪) அதி.௰௧.௨௯. (௭) ௨.சாமு.௰௨.௭,௮. அதி.௰௬.௨. (௮) அதி.௰௧.௩௧. அதி.௰௧.௩௩,௩௮. (௯) அதி.௰௨.௨௮. ௨.நாளா.௰௧.௰௫. நிகி.௯.௨௬. எசேக்.௨௩.௩௫. (௰) அதி.௰௫.௨௯. அதி.௨௧.௨௧. ௨.இரா.௯.௮. ௨ பா.௩௨.௩௬. ௨.இரா.௰௪.௨௬. (௰௧) அதி.௰௬.௪. (௰௨) வச.௰௭. (௰௩) ௨.நாளா.௰௨.௰௨. (௰௫) ௨.இரா.௰௭.௬. சங்.௫௨.௫. யோசு.௨௩.௰௫,௰௬. ௨.இரா.௰௫.௨௯. யாத்.௩௪.௰௩. (௰௬) அதி.௰௨.௩௰. (௰௭) அதி.௰௬.௬,௮. உன்.௬.௪. வச.௰௨. (௰௮) வச.௰௩. (௰௯) ௨.நாளா.௰௩.௨.

பெயாம் அரசாண்டகாலம் இருபத்திரண்டுவரு
ஷம்: அவன் தன் பிதாக்களுடனே மகாநித்தி
ரை அடைந்தான், அவன் புத்திரனாகிய நாதாபு
அவனுக்குப்பின் அரசாண்டான்.
௨௧ சலோமோனின் புத்திரனாகியரெகோபெயாம்
யூதாவில் அரசாண்டான். ரெகோபெயாம் அர
சானத்தொடங்கினபொழுது அவனுக்கு நாற்பத்
தொருவயது;யெகோவாதமதுநாமத்தைநிறுத்
தும்படி இஸரவேலரின் சகல கோத்திரங்களுள்
ளும்தெரிந்துகொண்டயெரூஷலேம்நகரத்திலே
பதினேழுவருஷம் அரசாண்டான்: அம்மோனி
யளாகிய அவன்மாதாவுக்கு நாமாளென்று பெ
௨௨ யர்.-யூதாசனங்கள்யெகோவாவின்பார்வைக்
குத்தீங்குசெய்தார்கள், தங்கள் முன்னோர்செய்
தயாவற்றிலும் அதிகபாவஞ்செய்து, அவரைக்
௨௩ கோபப்படுத்தினார்கள்.— அவர்களும் உயர்ந்த
மலைகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பசுமரத்
தின்கீழும் உயர்ந்த ஸ்தானங்களையும், சிலைகளை
௨௪ யும்,தோப்புக்களையும்ஸ்தாபித்தார்கள்.–சோதோ
மியரும்தேசத்தில் இருந்தார்கள்: யெகோவா
இஸரவேல்சந்ததியார்முன்னிலையினின்றும்தள்
ளின சாதியார்செய்த அருவருப்புக்கள் யாவற்
றையுஞ் செய்தார்கள்.
௨௫ ரெகோபெயாம் இராசா அரசாண்ட ஐந்தாம்
வருஷம், எகிப்து இராசாவாகிய ஷீஷாக்யெரூ
௨௬ ஷலேமை எதிர்த்துப் புறப்பட்டுவந்து,—யெ
கோவாவின் ஆலயத்திலுள்ள பொக்கிஷங்க
ளையும், அரமனையிலுள்ள பொக்கிஷங்களையும்,
எடுத்துக்கொண்டுபோனான்; அவன் சகலத்தை
யும் கொண்டுபோனான்: சலோமோன் செய்த
பொற்கேடகங்கள்யாவையும் எடுத்துக்கொண்டு
௨௭ போய்விட்டான்.—அவைகளுக்குப் பிரதியாக
ரெகோபெயாம் இராசா, பித்தளைப்பரிசைகளைச்
செய்து, அவைகளை அரமனையின்வாசல்காக்கும்
௨௮ பிரதானகாவலாளர்கையில் ஒப்பித்தான்.—இரா
சா யெகோவாவின் ஆலயத்துக்குள் பிரவே
சிக்கிறபொழுது, காவலாளர் அவைகளைப்பிடித்
துக்கொண்டுபோய்த் திரும்பத் தங்கள் அறையி
லே வைப்பார்கள்.
௨௯ ரெகோபெயாமின் மற்றக்கிரியைகளும், அ
வன்செய்தயாவும்,யூதாவின் இராசாக்களுடைய
சரித்திரபுத்தகத்திலல்லவாஎழுதியிருக்கின்றன.-
௩௰ ரெகோபெயாமுக்கும் யெரோபெயாமுக்கும் அ
௩௧ வர்கள் காலமுழுவதும் யுத்தம் நடந்தது.—ரெ
கோபெயாம் தன்பிதாக்களுடன் மகா நித்திரை
யடைந்து, தன்முன்னோருடன் தாவீதின் நகரத்
தில் அடக்கம்பண்ணப்பட்டான். அம்மோனி
யளாகிய அவன் மாதாவுக்கு நாமாளென்றுபேர்,
அவனுக்குப்பின் அவன்புத்திரனாகிய அபீயாம்
அரசாண்டான்.

## ௰௫. அதிகாரம்.

௧. அபீயாம் தீமையாய் ஆளுகைசெய்தல்: ௯. அ
வன் புத்திரனாகிய ஆசா நன்றாய் இராசரிக்கஞ்
செய்தல்: ௰௬. அவனோடே இஸரவேலின் இ
ராசாவாகிய பாஷாயுத்தஞ்செய்தல்:௨௩.அவன்
மரணமடைந்தபின் யோஷாபாத்தென்னும் அ
வன் புத்திரன்அபிஷேகம்பெறல்: ௨௫. நாதாபு
பாஷா என்பவர்களின் சரித்திரம் விவரித்தல்.

நெபாத்தின் புத்திரனாகிய யெரோபெயாம் அர ௧
சாண்ட பதினெட்டாம் வருஷத்தில் அபீயாம்
யூதாவின்மேல் இராசாவாகி,—மூன்றுவருஷம் ௨
யெரூஷலேமில் அரசாண்டான். அவன் மாதா
வின்பேர் மாகாள், அவள் அப்ஷாலோமின் புத்
திரி.—தன் பிதா தனக்குமுன்செய்த சகலபா ௩
வங்களிலும் இவன் நடந்தான்: இவன் இருத
யம் இவன் பிதாவாகிய தாவீதின் இருதயம்போ
லத் தன் தேவனாகிய யெகோவாவைப் பூர
ணமாகச் சார்ந்திருக்கவில்லை.—ஆகிலும் தாவீ ௪
து எத்தியனாகியஊரியாவின் காரியமொன்றே த
விர, தன் ஆயுள்பரியந்தம் யெகோவா தனக்
குக்கட்டளையிட்ட யாதொன்றையும் விட்டுவில
காமல், அவர் பார்வைக்குச்செவ்வையானதைச்
செய்துவந்தபடியினால்,–தாவீதினிமித்தம் அவன் ௫
தேவனாகிய யெகோவா அவனுக்குப்பின்
அவன் புத்திரனை நிறுத்தவும், யெரூஷலேமைநி
லைப்படுத்தவும், யெரூஷலேமில் அவனுக்கு ஒ
ரு விளக்கைக்கொடுத்தார்.—ரெகோபெயாமுக் ௬
கும் யெரோபெயாமுக்கும் இவன் ஆயுள்பரியந்
தம்யுத்தம்நடந்தது.—அபீயாமின் கிரியைகளும், ௭
அவன்செய்தயாவும், யூதா இராசாக்களின் சரித்
திரபுத்தகத்தில் அல்லவா எழுதியிருக்கின்றன;
அபீயாமுக்கும் யெரோபெயாமுக்கும் யுத்தம் ந
டந்தது.—அபீயாம் தன் பிதாக்களுடனே மகா ௮
நித்திரையடைந்தான்; அவனைத்தாவீதின் நகரத்
தில் அடக்கம்பண்ணினார்கள்; அவன் புத்திரனா
கிய ஆசா அவனுக்குப்பின் அரசாண்டான்.
இஸரவேலரின்இராசாவாகியயெரோபெயாம் ௯
அரசாண்ட இருபதாம் வருஷத்தில், ஆசா யூதா
தேசத்துக்கு அரசனானான்.—அவன் யெரூஷலே ௰
மிலே நாற்பத்தொருவருஷம் அரசாண்டான்.
அவன் மாதாவின்பேர் மாகாள், அவள் அப்ஷா
லோமின்புத்திரி.—ஆசா தன்பிதாவாகிய தாவீது ௰௧
செய்தபிரகாரம் யெகோவாவின்பார்வைக்கு
நன்மையானதைச்செய்தான்.—அவன் தேசத்தி ௰௨
னின்றும்சோதோமியரை அகற்றி, தன்பிதாக்கள்
செய்தசகலவிக்கிரகங்களையும் நீக்கிவிட்டான்.—

(௨௧) ௨.நாளா.௰௨.௧௩. வச.௧௩. (௨௨) ௨.நாளா.௰௨.௧. ௨பா.௩௨.௨௧. சங்.௭௮.௫௮. ௧.கொரி.௰.௨௨. (௨௩) ௨பா.௰௨.௨. எசேக்.௰௬.௨௪,௨௫. ௨.இரா.௰௭.௯,௰. ஏசா.௫௭.௫. ௨பா.௨௩.௰௭. ௨.இரா.௨௩.௭. (௨௫) அதி.௰௧.௪௰. ௨.நாளா.௰௨.௨. (௨௬) ௨.நாளா.௰௨.௯. அதி.௰.௰௭. (௨௯) ௨.நாளா.௰௨.௰௫. (௩௰) அதி.௰௨.௨௪. ௨.நாளா.௰௨.௰௫. (௩௧) ௨.நாளா.௰௨.௰௬. வச.௨௧. ௨.நாளா.௰௨.௰௩. மத்.௧.௭.—(௰௫. அதி. ௧.) ௨.நாளா.௰௩.௧,௨. (௨) ௨.நாளா.௰௧.௨௰. ௨.நாளா.௰௩.௨. ௨.நாளா.௰௧.௨௧. (௩) அதி.௰௧.௪. சங்.௱௰௯.௮௰. (௪) அதி.௰௪.௮. ௨.சாமு.௰௧.௪,௰௫. (௫) அதி.௰௧.௩௨,௩௬. ௨.நாளா.௨௧.௭. அதி.௰௧.௩௬. (௬) அதி.௰௪.௩௰. (௭) ௨.நாளா.௰௩.௨,௩,௨௨. (௮) ௨.நாளா.௰௪.௧. (௰) வச.௨. (௰௧) ௨.நாளா.௰௪.௨. (௰௨) அதி.௰௪.௨௪.

௰௩ ஆசா, தன்மாதாவாகிய மாகாள் ஒரு தோப்பில்
ஒரு விக்கிரகத்தைச்செய்தபடியினாலே, அவளை
யும் இராசாத்தியாயிராதபடிநீக்கி, அவள் விக்கிர
கத்தைச்சேதித்து, கீத்ரோன் ஓடைக்குச் சமீபத்
௰௪ தில்தகனித்தான்.—உயர்ந்த ஸ்தானங்கள் அகற்
றப்படவில்லை: ஆசாவின் இருதயம் அவனுயுள்
பரியந்தம் பூரணமாக யெகோவாவைச்சார்ந்
௰௫ துநின்றது.—அவன் தன் பிதா பரிசுத்தப்படுத்
தினவைகளும், தான் பரிசுத்தப்படுத்தினவைக
ளுமாகிய பொன்னையும், வெள்ளியையும், பாத்
திரங்களையும், யெகோவாவின் ஆலயத்திலே
கொண்டுவந்தான்.

௰௬ ஆசாவுக்கும்,இஸரவேலின் இராசாவாகியபா
ஷாவுக்கும், அவர்கள் ஆயுள்பரியந்தம் யுத்தம்
௰௭ நடந்தது.—யூதா தேசத்தின் இராசாவாகியஆசா
விடத்தில் ஒருவரையும் போக்குவரவுசெய்யவி
டாமல், இஸரவேலின் இராசாவாகிய பாஷா
யூதாதேசத்தை எதிர்த்துப்புறப்பட்டு,ராமாவைக்
௰௮ கட்டினான்.—அப்பொழுது ஆசா யெகோவா
வின் ஆலயத்தின் பொக்கிஷங்களில் மீதியான
எல்லாவெள்ளியையும், பொன்னையும், பொக்கி
ஷங்களையும் எடுத்துத் தன் தாசர்கையில் ஒப்பித்
து: ஆசா இராசா,தமஸ்குநகரத்தில்வாசமாயிருந்
த ஏசியா இராசாவும்,எசியோனின் பௌத்திர
னும், தப்ரிம்மோனின் புத்திரனுமாகியபென்னா
௰௯ தத்திடத்தில்,—எனக்கும் உமக்கும், என் பிதா
வுக்கும் உம்முடைய பிதாவுக்கும் உடன்படிக்
கையிருக்கின்றது: ஆதலால் பொன் வெள்ளி
பரிதானம் அனுப்புகிறேன்; இஸரவேலரின் இ
ராசாவாகிய பாஷா என்னைவிட்டு நீங்கும்படி,
நீர்வந்து இஸரவேலின் இராசாவாகிய பாஷாவு
டனிருக்கிற உடன்படிக்கையைத் தள்ளிப்போ
டுமென்று சொல்லச்சொல்லி, அனுப்பினான்.—
௨௰ அப்படியேபென்னாதத்,ஆசா இராசாவின்சொற்
கேட்டு, தனக்கிருந்த சேனைகளுக்கதிபதிகளை
இஸரவேலின்நகரங்களை எதிர்க்கும்படி அனுப்
பி, ஈயோனையும், தாணையும், ஆபேல் பேத்மா
காவையும், கின்னிரோத்தனைத்தையும், நப்தா
லியின் சமஸ்த தேசத்தோடுஞ் சங்காரஞ்செய்
௨௧ தான்.—பாஷா இதைக்கேள்விப்பட்டபொழுது,
ராமாவைக்கட்டாமல்விட்டுவிட்டு, திர்சாவிலே
௨௨ போய்வசித்தான்.—பின்பு ஆசா இராசா, ஒருவ
ருந் தப்பாதபடிக்கு எல்லாரும் பாஷாகட்டின
ராமாவைச்சேர்ந்த கற்களையும், மரங்களையும் எ
டுத்துக்கொண்டுவரும்படி, யூதா தேசமெங்கும்
பிரசித்தம்பண்ணுவித்தான்; அவைகளினால் ஆ
சா இராசா பேன்யாமீன் கோத்திரத்திலுள்ள கே
பாவையும் மிஸ்பாவையுங்கட்டினான்.

௨௩ ஆசாவின் மற்றக்கிரியைகள்யாவும், அவனு
டைய சமஸ்தபராக்கிரமமும், அவன்செய்த சக
லமும், அவன் உண்டாக்கினது இன்னதின்ன
தென்பதும், யூதாவின் இராசாக்களுடைய சரித்
திரபுத்தகத்தில் அல்லவா எழுதியிருக்கின்றன:
அவன் முதிர்வயதானகாலத்தில் அவன் கால் வ
ருத்தமாயிருந்தான்.—ஆசா தன் பிதாக்களுடன் ௨௪
மகா நித்திரையடைந்து, தன் பிதாக்களுடன்
தன் பிதாவாகிய தாவீதின் நகரத்தில் அடக்கம்
பண்ணப்பட்டான்: அவனுக்குப்பின் அவன்
புத்திரனாகிய யோஷாபாத் இராசாவானான்.

யூதாதேசத்தின் இராசாவாகிய ஆசா அரசாண் ௨௫
ட இரண்டாம்வருஷத்தில், யெரோபேயாமின்
புத்திரனாகிய நாதாபு இஸரவேலரை அரசாளத்
தொடங்கி, இரண்டுவருஷம் இஸரவேலரை அ
ரசாண்டான்.—அவன் யெகோவாவின் பார் ௨௬
வைக்குத்தீங்குசெய்து,இஸரவேலர்பாவஞ்செய்
வதற்குக் காரணமாயிருந்த தன் பிதாவின் பாவ
வழியிலே நடந்தான்.

ஈஷகார் வமிசத்தானும், அகியாவின் புத்திர ௨௭
னுமாகிய பாஷா அவனுக்கு விரோதமாய்த்துரா
லோசனைபண்ணி, நாதாபும், இஸரவேலர்சமஸ்
தரும், பெலிஸ்தியரைச்சேர்ந்த கிபிதோனை முற்
றிக்கைபோடுகையில், பாஷா அவனைக்கிபிதோ
னிலே சங்கரித்தான்.—யூதாவின் இராசாவாகிய ௨௮
ஆசா அரசாண்ட மூன்றும்வருஷத்தில் பாஷா
அவனைக்கொன்று, அவனுக்குப்பின் இராசாவா
னான்.—யெரோபேயாம் செய்ததும், இஸரவே ௨௯
லரைச் செய்யப்பண்ணினதுமான பாவத்தினி
மித்தமும், இஸரவேலரின் தேவனாகிய யெ
கோவாவைக் கோபப்படுத்திய கோபத்தினி
மித்தமும்,—யெகோவா ஷீலோனியனாகிய ௩௰
அகியாவென்னுந்தமதுதாசனைக்கொண்டுசொல்
லியவாக்கின்படி, அவன் தான் அரசாண்டகா
லத்தில், யெரோபேயாமின்வமிசத்தார் யாவரை
யும் சங்கரித்தான்: யெரோபேயாமுக்குஒருபிரா
ணியாகிலும் மிஞ்சவிடாமல் சங்கரித்தான்.

நாதாபின்மற்றக்கிரியைகளும், அவன் செய்த ௩௧
யாவும், இஸரவேலரின் இராசாக்களின் சரித்தி
ர புத்தகத்தில் அல்லவா எழுதியிருக்கின்றன.—
ஆசாவுக்கும், இஸரவேலின் இராசாவாகிய பா ௩௨
ஷாவுக்கும், அவர்கள் ஆயுள்பரியந்தம் யுத்தம்ந
டந்தது.—யூதாவின் இராசாவாகிய ஆசா அர ௩௩
சாண்ட மூன்றும்வருஷத்தில், அகியாவின் புத்
திரனாகிய பாஷா திர்சாவில் இஸரவேலரனைவ
ருக்கும் இராசாவாகி, இருபத்துநாலுவருஷம் அ
ரசாண்டான்.—அவன் யெகோவாவின் பார் ௩௪
வைக்குத்தீங்குசெய்து, யெரோபேயாமின்வழி
யிலும் இஸரவேலரைப்பாவஞ்செய்யப்பண்ணி
ன அவனுடைய பாவத்திலும் நடந்தான்.

## ௰௬. அதிகாரம்.

௧. யெகூ பாஷாவுக்கு விரோதமாய்த் தீர்க்கதரிச

(௰௩) ௨.நாளா.௰௫.௰௬. யாத்.௩௨.௨௰. (௰௪) அதி.௨௨.௪௩. ௨.நாளா.௰௫.௰௭,௰௮. வச.௩. (௰௭) ௨.நாளா.௰௬.௧. யோசு.௰௮.௨௫. அதி.௰௨.௨௭. (௰௮) ௨.நாளா.௰௬.௨. அதி.௰௧.௨௩,௨௪. (௨௰) ௨.நாளா.௰௫.௨௬. நியா.௰௮.௨௯. ௨.சாமு.௨௰.௰௪. (௨௨) ௨.நாளா.௰௬.௬. யோசு.௨௧.௰௭. யோசு.௰௮.௨௬. (௨௩) ௨.நாளா.௰௬.௰௨. (௨௪) ௨.நாளா.௰௭.௧. மத்.௧.௮. (௨௬) அதி.௰௨.௩௰. (௨௭) அதி.௰௪.௰௪. யோசு.௰௯.௪௪. (௨௯) அதி.௰௪.௯,௰௬. (௩௰) அதி.௰௪.௰,௰௪. (௩௨) வச.௰௬. (௩௪) அதி.௰௨.௨௮,௨௯.—(௰௬. அதி.)

னஞ்சொல்லல்: ௮. சிம்ரி துரோகஞ்செய்தல்: ௰௧. யெகூசொல்லிய தீர்க்கதரிசனஞ்சித்திபெறல்: ௰௫. உம்ரி இராசாபிஷேகம்பெறல்: சிம்ரி தகிக்கப்படல்: ௨௧. உம்ரியினால் திப்னீ தோல்வியடைதல்: ௨௪. உம்ரிஷமாரியாவை உண்டாக்கல், அவன் தீமையாய் அரசாளல்: ௨௯. ஆகாப் இராசாவாகித் தீமையாய் அரசாளல்: ௩௪. யெரீகோ திரும்பவுங்கட்டப்படல்.

பின்பு பாஷாவுக்கு விரோதமாய், நான் உன்
௨ னைத்தூளியினின்றும்உயர்த்தி,—என்சனங்களா
கிய இஸரவேலருக்கு அதிபதியாக்கினேன்; நீ
யெரோபேயாமின்வழியில் நடந்து, என் சனங்
களாகிய இஸரவேலர் தங்கள் பாவங்களினாலே
என்னைக் கோபப்படுத்தும்படி அவர்களைப்பா
௩ வஞ்செய்ய ஏவினதினால்,—நான் பாஷாவின்
வமிசத்தையும், அவன் வமிசத்தின் சந்ததியாரை
யும் நீக்கிப்போட்டு, உன் வமிசத்தை நெபாத்
தின் புத்திரனாகிய யெரோபேயாமின் வமிசத்
௪ தைப்போலாக்குவேன்.—பாஷாவின் சந்ததியா
ரில் நகரத்திற்சாகிறவனை நாய்கள் தின்னும்;
வெளியிலே சாகிறவனை ஆகாயத்துப்பறவைகள்
தின்னுமென்று, யெகோவாவின் வாக்கு
அனானியின் புத்திரனாகிய யெகூவுக்குக்கிடைத்
௫ தது.—பாஷாவின் மற்றக்கிரியைகளும், அவன்
செய்ததும், அவன் பராக்கிரமமும், இஸரவேல
ரின் இராசாக்களின் சரித்திர புத்தகத்தில் அல்ல
௬ வா எழுதியிருக்கின்றன.—பாஷா தன் பிதாக்க
ளுடன் மகா நித்திரையடைந்து, திர்சாவில் அ
டக்கம்பண்ணப்பட்டான்: அவனுக்குப் பின் அ
௭ வன் புத்திரனாகிய ஏலா இராசாவானான்.—பா
ஷா தன் கைக்கிரியைகளினாலே யெகோவா
வைக் கோபப்படுத்தி, அவர் பார்வைக்குச்செய்
தசகலதீங்குகளினிமித்தமும் யெரோபேயாமின்
வமிசத்தார்போலாகி, அவனைக்கொன்றுபோட்
டதினிமித்தமும், இவனுக்கும், இவன் வமிசத்
துக்கும் விரோதமாக யெகோவாவின்வாக்கு
அனானியின் புத்திரனாகிய யெகூவென்னுந் தீர்க்
கதரிசிவழியாய் வந்தது.

௮ யூதாதேசத்தின் இராசாவாகிய ஆசா அரசாண்
ட இருபத்தாறும் வருஷத்தில், பாஷாவின் புத்
திரனாகிய ஏலா, திர்சாவில் இஸரவேலருக்குஇ
௯ ராசாவாகி, இரண்டுவருஷம் அரசாண்டான்.-அ
வன்தன், இரதங்களிற்பாதிக்கு அதிபதியாகியசி
ம்ரி என்னுந்தன்தாசன் அவனுக்குவிரோதமாய்த்
துராலோசனைபண்ணி, திர்சாவிலுள்ள தன் வீட்
டதிகாரியாகிய அர்த்சாவின் வீட்டிலே குடித்து
௰ வெறித்திருக்கையில்,—சிம்ரிவந்து, யூதாதேசத்
தின் இராசாவாகிய ஆசா அரசாண்ட இருபத்
தேழாம் வருஷத்தில் அவனை அடித்துக்கொன்று,
அவனுக்குப் பிரதியாக அரசாண்டான்.
௰௧ அவன் இராச்சிய ஆரம்பத்தில்சிங்காசனத்தி
லேவீற்றிருந்தவுடனே, பாஷாவின்குடும்பத்தார்
சமஸ்தரையுங் கொலைசெய்தான்: அவன் இனத்
தார்களிலும் சிநேகிதர்களிலும் ஒரு ஆண்பிள்ளை
யையும் உயிரோடே விடவில்லை.—பாஷாவும், ௰௨
அவன்புத்திரனாகிய ஏலாவும், தங்கள் விக்கிரகங்
களினால் இஸரவேலின் தேவனாகிய யெ
கோவாவைக் கோபப்படுத்திச் செய்ததும், இ
ஸரவேலரைச் செய்யப்பண்ணினதுமான அவர்
களுடைய எல்லாப்பாவங்களினிமித்தமும்,—
யெகோவா பாஷாவுக்கு விரோதமாய்யெகூ ௰௩
வென்னுந் தீர்க்கதரிசியைக்கொண்டுசொல்லிய
வாக்கின்படி, சிம்ரிபாஷாவின் குடும்பத்தார்யா
வரையும் சங்கரித்தான்.—ஏலாவின் மற்றக்கிரி ௰௪
யைகளும், அவன்செய்தயாவும், இஸரவேலரின்
இராசாக்களின்சரித்திரபுத்தகத்திலல்லவாஎழுதி
யிருக்கின்றன.

யூதாதேசத்தின் இராசாவாகிய ஆசாஅரசாண் ௰௫
ட இருபத்தேழாம்வருஷத்தில், சிம்ரி திர்சாவி
லே ஏழுநாள் அரசாண்டான். அப்பொழுது,
சனங்கள் பெலிஸ்தியரைச்சேர்ந்த கிபிதோனி
லே பாளயமிறங்கியிருந்தார்கள்.—அப்படிப்பா ௰௬
ளயமிறங்கியிருந்த சனங்கள், சிம்ரி துராலோச
னைபண்ணி இராசாவைக் கொன்றுபோட்டா
னென்றுசொல்லக்கேட்டார்கள்: அதினால் இஸ
ரவேலர் சமஸ்தரும் அன்றைத்தினம் பாளயத்தி
லே சேனைக்கதிபதியாகிய உம்ரியை இஸரவே
லருக்கு இராசாவாக ஏற்படுத்தினார்கள்.—உம் ௰௭
ரியும், அவனோடுகூடிய சமஸ்த இஸரவேலரும்,
கிபிதோனை விட்டுப்போய், திர்சாவை முற்றிக்
கைபோட்டார்கள்.-நகரம் பிடிக்கப்பட்டதென் ௰௮
று கண்டவுடன், சிம்ரி இராசாவின்வீடாகிய
அரமனையிற்பிரவேசித்து, தன்தலையின்மேல்எரி
யும்படி அரமனையிலே நெருப்புக்கொளுத்தி,—
தான் யெகோவாவின் பார்வைக்குத் தீங்கு ௰௯
செய்த பாவங்களினிமித்தமும், இஸரவேலர்பா
வஞ்செய்வதற்குக் காரணமாயிருந்த யெரோபே
யாமின் பாவவழியில் நடந்ததினிமித்தமும், அ
தில் இறந்துபோனான்.—சிம்ரியின் மற்றக்கிரி ௨௰
யைகளும், அவன்செய்ததுரோகமும், இஸரவே
லின் இராசாக்களுடைய சரித்திர புத்தகத்திலல்
லவா எழுதியிருக்கின்றன.

அப்பொழுது இஸரவேல்சனங்கள் இருபிரி ௨௧
வுபட்டார்கள்: பாதிச்சனங்கள் கீனாத்தின்புத்தி
ரனாகிய திப்னீயை இராசாவாக ஏற்படுத்தும்படி
அவனைப்பின்பற்ற, பாதிச்சனங்கள் உம்ரியைப்
பின்பற்றினார்கள்.—உம்ரியைப் பின்பற்றிய ச ௨௨
னங்கள்கீனாத்தின்புத்திரனாகியதிப்னீயைப்பின்
பற்றியசனங்களை மேற்கொண்டார்கள்: திப்னீ
இறந்துபோனான், உம்ரி அரசாண்டான்.

யூதாதேசத்தின் இராசாவாகிய ஆசாஅரசாண் ௨௩
ட முப்பத்தோராம்வருஷத்தில், உம்ரி இஸர

(௧) அதி.௰௪.௭. (௨) அதி.௰௫.௩௪. (௩) வச.௰௧. அதி.௰௪.௰. (௪) வச.௭. ௨.கொரி.௰௩.௨. அதி.௰௪.௰௧. (௫) ௨.நாளா.௰௬.௧. (௬) அதி.௰௪.௰௭. (௭) வச.௧. அதி.௰௫.௨௭,௨௯. ஓசி.௧.௪. (௯) ௨.இரா.௯.௩௧. (௰௧) ௧.சாமு.௨௫.௨௨. (௰௨) ௨பா.௩௨.௨௧. ௧.சாமு.௰௨.௨௧. ஏசா.௪௧.௨௯. யோனா.௨.௮. ௧.கொரி.௮.௪. (௰௩) வச.௩. வச.௧. (௰௫) அதி.௰௫.௨௭. (௰௯) அதி.௰௨.௨௮.

வேலருக்கு இராசாவாகி, பன்னிரண்டு வரு
ஷம் அரசாண்டான்: அவன் திர்சாவில் ஆறுவ
௨௪ ருஷம் ஆளுகைசெய்தான்.—அவன் ஷேமேரின்
கையினின்றும் ஷமாரியாமலையை இரண்டுகிக்
கேர் வெள்ளிக்குக்கொண்டு, மலையின்மேல் நக
ரத்தைக்கட்டி, தான் கட்டினநகரத்துக்கு, அம்ம
லைக்குரியவனாகியஷேமேரின் நாமத்துக்கொத்த
௨௫ ஷமாரியாவென்னும்பெயரைத்தரித்தான்.—உம்
றி யெகோவாவின் பார்வைக்குத் தீங்குசெய்
து, தனக்குமுன்னிருந்தவர்கள்எல்லாரைப்பார்க்
௨௬ கிலும்கேடாய் நடந்தான்.—இஸரவேலர் தங்கள்
விக்கிரகங்களினால்இஸரவேலின் தேவனாகிய
யெகோவாவைக் கோபப்படுத்தும்படி, பா
வஞ்செய்வதற்குக்காரணமாயிருந்த நெபாத்தின்
புத்திரனாகிய யெரோபேயாமின் எல்லாப்பாவ
௨௭ நெறிகளிலும் அவன் நடந்தான்.—உம்றிசெய்
தமற்றக்கிரியைகளும், அவன் காட்டிய அவன்
பராக்கிரமமும், இஸரவேலரின் இராசாக்களு
டைய சரித்திர புத்தகத்தில் அல்லவா எழுதியி
௨௮ ருக்கின்றன.—உம்றி தன் பிதாக்களுடனே ம
கா நித்திரையடைந்து, ஷமாரியாவில் அடக்கம்
பண்ணப்பட்டான்: அவன் புத்திரனாகிய ஆகாப்
அவனுக்குப்பின் அரசாண்டான்.
௨௯ யூதாதேசத்தின் இராசாவாகிய ஆசா அரசாண்
டமுப்பத்தெட்டாம்வருஷத்தில், உம்றியின் புத்
திரனாகிய ஆகாப் இஸரவேலருக்கு இராசாவா
னான்: உம்றியின் புத்திரனாகிய ஆகாப் இஸரவே
லரை ஷமாரியாவில் இருபத்திரண்டுவருஷம் அ
௩௰ ரசாண்டான்.—உம்றியின் புத்திரனாகிய ஆகாப்
தனக்கு முன்னிருந்தவர்களெல்லாரிலும் யெ
கோவாவின் பார்வைக்கு அதிக தீங்குசெய்
௩௧ தான்.-நெபாத்தின் புத்திரனாகிய யெரோபேயா
மின் பாவவழியில் நடப்பது அற்பமென்றெண்
ணுவதுபோல், சீதோனியரின் இராசாவாகிய
இத்பாகாலின் புத்திரியாகிய யெசேபேலை விவா
கஞ்செய்ததுமன்றி, போய்ப்பாகாலைச்சேவித்து,
௩௨ வழிப்பட்டான்.—தான்ஷமாரியாவில் கட்டின
பாகாலின் ஆலயத்தில் பாகாலுக்கு ஒருவேதிகை
௩௩ யை எடுப்பித்தான்.—ஆகாப் ஒரு அஷரிவிருட்
சத்தை நாட்டினான்; ஆகாப் தனக்குமுன்னிருந்
த இஸரவேலின் எல்லா இராசாக்களைப் பார்க்
கிலும், இஸரவேலின் தேவனாகிய யெகோ
வாவை அதிகமாகக்கோபப்படுத்தினான்.
௩௪ அவன் நாள்களிலே பெத்தேலூரானாகிய ஈ
யேல் யெரிகோவைக்கட்டினான்: நூனின் புத்தி
ரனாகியயோசுவாவைக்கொண்டு யெகோவா
சொல்லிய வாக்கின்படி அவன்அதற்கு அத்திபா
ரம்போடுகையில், அவன் மூத்தமகனாகியஅபீரா
மும், அவன் அதின்வாசல்களைஸ்தாபிக்கையில்
அவன் இளையமகனாகிய செகூப்பும்இறந்துபோ
னார்கள்.

## ௰௭. அதிகாரம்.

௧. இலீசா கெரீத் ஓடையினிடத்தில் அனுப்பப்பட்டு காகத்தினால் காக்கப்படல்: ௮. சாரிபாத்திலுள்ள ஒருவிதவையினிடத்தில் அனுப்பப்படல்: ௰௭. அந்த விதவையின்புத்திரனை உயிர்ப்பித்தல்: ௨௪. அந்த விதவையின் விசுவாசம்.

கிலியாத்ஊராரிற்சேர்ந்ததிஷ்பியனாகிய இலீசா ௧
ஆகாப்பைநோக்கி, இஸரவேலின் தேவனாகி
ய யெகோவா நித்தியரானால், இந்தவருஷங்
களில் என் வாக்கினாலன்றி, மழையும் பனியும்
பெய்யாதிருக்குமென்று நான் அவர் முன்னின்
றுசொல்லுகிறேன்.—பின்பு நீ இவ்விடத்தை நீங் ௨
கிக் கிழக்கை நோக்கிப்போய், யோர்தானுக்கெ
திர்ப்புறத்திலிருக்கிறகெரீத்என்னும்சிற்றாற்றின்
சமீபத்தில் ஒளித்துக்கொண்டிரு;—அந்த ஆற் ௩
றுநீரை நீபானம்பண்ணுவாய், அங்கே உன்னைப்
போஷிப்பிக்கும்படிக்கு நான் காகங்களுக்குக்
கட்டளையிட்டேனென்று,—யெகோவாவின் ௪
வாக்கு அவனுக்குக்கிடைத்தது.—அவன் யெ ௫
கோவாவின்வாக்கின்படிபுறப்பட்டுப்போய்,
யோர்தானுக்கெதிர்ப்புறத்திலுள்ள கெரீத்தென்
னும் ஆற்றின் சமீபத்தில் தங்கினான்.—காகங்கள் ௬
காலையில் அப்பமும் மாமிசமும், மாலையில் அப்
பமும் மாமிசமும் அவனிடத்தில் கொண்டுவந்
தன; அவன் ஆற்றுநீரைப்பானம்பண்ணினான்.—
சிலநாள்சென்றபின் மழைபெய்யாதபடியினால், ௭
ஆறுவற்றிப்போயிற்று.
அப்பொழுது, நீ எழுந்து சீதோனைச் சேர்ந்த ௮
சாரிபாத்துக்குப்போய், அங்கே தங்கு: அங்கே
உன்னை ஆதரிக்கும்படி ஒரு விதவைக்குக்கட்ட
ளையிட்டேனென்று,—யெகோவாவின் வாக் ௯
கு அவனுக்குக்கிடைத்தது.—அதினால் அவன் ௰
எழுந்து சாரிபாத்துக்குப்போனான். நகரவாச
லில் அவன் சேர்ந்தபொழுது அந்தவிதவை அங்
கேவிறகுபொறுக்கிக்கொண்டிருந்தாள்: அவன்
அவளைக்கூப்பிட்டு, நான் பானம்பண்ணும்படி
ஒரு பாத்திரத்திலே கொஞ்சத் தண்ணீர் கொண்
டுவரும்படி வேண்டுகிறேனென்றான்.—அவள் ௰௧
கொண்டுவரும்படி போகையில், அவன் அவ
ளைக்கூப்பிட்டு, கையில் ஒருதுண்டு அப்பமுங்
கொண்டுவரும்படி வேண்டுகிறேனென்றான்.—
அதற்கவள், என்னிடத்தில் ஒரு அப்பமுமில்லை, ௰௨
பாத்திரத்தில் ஒருபிடிமாவும், கலசத்திலேகொஞ்
சஎண்ணெயுமிருக்கின்றனவென்று நித்திய தே
வனாகிய யெகோவாவைக்கொண்டுச்சொல்
லுகிறேன்: நானும் என்மகனும் இறந்துபோகு
முன்புசிக்கும்படி, அதை எனக்கும்அவனுக்கும்
ஆயத்தப்படுத்துகிறதற்குஇரண்டுவிறகு பொறுக்
குகிறேனென்றாள்.—இலீசா அவளைநோக்கி,நீப ௰௩
யப்படவேண்டாம்; போய், நீசொன்னபடிசெ
ய்: முன்னேஎனக்குக்கொஞ்சம்அப்பஞ்சுட்டுக்

(௨௫) அதி ௰௩.௩௨. ௨.இரா.௰௭.௨௪. யோவா.௪.௪. மீகா.௬.௰௬. (௨௬) வச.௰௯. வச.௰௩. (௩௧) உபா.௭.௩. நியா. ௰௮.௭. அதி.௨௧.௨௫,௨௬. ௨.இரா.௰.௰௮. (௩௨) ௨.இரா.௰.௨௧,௨௬,௨௭. (௩௩) ௨.இரா.௰௩.௬. எரே.௰௭.௨. வச. ௩௰. அதி.௨௧.௨௫. (௩௪) யோசு.௬.௨௬.—(௰௭. அதி. ௧.) லூக்.௧.௰௭. லூக்.௪.௨௫. ௨.இரா.௩.௰௪. உபா.௰.௮. யாக்.௫.௰௭. லூக்.௪.௨௫. (௮) ஒப.௨௰. லூக்.௪.௨௬.

கொண்டுவா, பின்பு உனக்கும் உன்மகனுக்கும்
௰௪ சுட்டுக்கொள்ளலாம்.—யெகோவா பூமியின்
மேல் மழைபெய்விக்கும்வரைக்கும், பாத்திரத்
தின் மா குறைந்துபோகவுமாட்டாது, கலசத்
தின் எண்ணெய் ஒழிந்துபோகவுமாட்டாதென்
று இஸ்ரவேலின் தேவனாகிய யெகோவா
௰௫ சொல்லுகிறாரென்றான்.–அவள்போய், இலீசா
வின் சொற்படிசெய்தாள்: அவளும், அவனும்,
அவள் குடும்பத்தாரும்,நெடுநாள்போசனம்பண்
௰௬ ணினார்கள்.-யெகோவா இலீசாவைக்கொண்
டுசொல்லியவாக்கின்படி, பாத்திரத்தின் மா கு
றையவுமில்லை, கலசத்தின் எண்ணெய் ஒழிய
வுமில்லை.
௰௭ இவைகள் நடந்தபின்பு, வீட்டு எசமானியா
கிய அந்த ஸ்திரியின் மகன் நோயாயிருந்தான்;
அவன் நோய் அதிகப்பட்டதினால், அவன்ஆவி
௰௮ நீங்கிவிட்டது.—அப்பொழுது அவள் இலீசா
வைநோக்கி, தேவனுடைய தாசனே, உனக்
கும் எனக்கும் என்ன; நீர் என்பாவத்தைநினைப்
பூட்டவும், எனனுடைய மகனைக்கொலைசெய்
௰௯ யவும் வந்தீராவென்று சொல்ல,—அவன் அவ
ளைநோக்கி, உன்மகனை என்னிடத்தில் தாவென்
றுசொல்லி, அவள் மடியிலிருந்து அவனை எடுத்
துத் தான் இருந்த மேல் அறைக்குக்கொண்டு
௨௰ போய், தன் கட்டிலின்மேல்வைத்து,–யெகோ
வாவைநோக்கி,என் தேவனாகியயெகோவா
வே, எனக்கு வசதிக்கு இடந்தந்த விதவையின்
புத்திரனைக்கொன்று, அவளுக்குத் தீங்கை வரு
வித்தீராவென்றுசொல்லிப் பிரார்த்தனைபண்ணி
௨௧ னான்.–பின்னும் அவன் அந்தப்பிள்ளையின்மேல்
மூன்றுதரங்குப்புறச்சாய்ந்து,யெகோவாவை
நோக்கி, என் தேவனாகிய யெகோவாவே,
இந்தப்பிள்ளையின்ஆத்துமம்இதிற்புகும்படிசெய்
ய உம்மை வேண்டுகிறேனென்றுசொல்லிப் பி
௨௨ ரார்த்தனைபண்ணினான்.—யெகோவா இலீ
சாவின்பிரார்த்தனையைக்கேட்டார்;பிள்ளையின்
ஆத்துமம் அவனுக்குள்புக, அவன் உயிர்பெற்
௨௩ றான்.–அப்பொழுது இலீசாபிள்ளையை எடுத்து,
மேலறையிலிருந்து கீழ் வீட்டிற்குள்ளேகொண்
டுவந்து, அவன் மாதாவிடத்தில் ஒப்பித்து, உன்
மகன் உயிர்த்துவிட்டான் பாரென்றான்.
௨௪ அந்தஸ்திரி இலீசாவைநோக்கி, நீர் தேவனு
டைய தாசனென்றும், உமதுவாயில் தோற்றும்
யெகோவாவின் வாக்குச் சத்தியமென்றும்,
இதினால் அறிகிறேனென்றான்.

## ௰௮. அதிகாரம்.

௧. பஞ்சகாலத்தில் இலீசா ஆகாப்பிடத்தில் அனுப்பப்படல்: ௭. ஒபதியாவைச்சந்தித்து அவனோடே சம்பாஷித்தல்: ௰௭. இலீசா ஆகாப்பைக்கண்டித்து ஆகாயத்தினின்று அக்கினிவந்ததினால் பாகாலின் ஆசாரியரையுணர்த்தல்: ௪௧. இலீசாசெய்தபிரார்த்தனைக்குமழைபெய்தல்.

நெடுநாள்சென்றபின்பு இலீசாவுக்கு, நீபோய் ௧
ஆகாப்பினிடத்தில் வெளிப்படு; நான் பூமியின்
மேல் மழை வருஷிக்கப்பண்ணுவேனென்று,
மூன்றாம்வருஷம் யெகோவாவின் வாக்குக்
கிடைத்தது.–இலீசா ஆகாப்பிடத்திலே வெளிப் ௨
படும்படி போனான். அக்காலத்திலே ஷமாரியா
வில்கொடிதானபஞ்சமுண்டாயிருந்தது.-ஆகாப் ௩
தன்வீட்டுக்கு அதிகாரியாயிருந்த ஒபதியாவை
அழைத்தான். அந்த ஒபதியாயெகோவாவுக்கு
மிகவும் பயப்பட்டுநடக்கிறவனாயிருந்தான்.–அ ௪
தினாலே யெசேபேல்யெகோவாவின் தீர்க்க
தரிசிகளைச் சேதித்தபொழுது,ஒபதியா நூறுதீர்க்
கதரிசிகளைச்சேர்த்து, ஒவ்வொரு கெபிக்கு ஐம்
பது ஐம்பது பேராக ஒளித்துவைத்து, அவர்களு
க்கு அப்பமுஞ் சலமுங்கொடுத்து, அவர்களைப்
பாலித்துவந்தான்.—ஆகாப் ஒபதியாவைப்பார்த் ௫
து,சகல மிருகங்களுஞ்சேதப்படாமல்,குதிரைக
ளையும்கோவேறுகழுதைகளையும், காத்துக்கொள்
ளும்படி நமக்குப்புல்லு அகப்படவுங்கூடும், நீ
தேசத்திலுள்ள எல்லா நீரூற்றுக்களிடத்திலும்,
எல்லா ஓடைகளிடத்திலும் போவென்றான்.—
தேசத்தைச் சுற்றிப்பார்க்கும்படி அவர்கள் அ ௬
தைப்பகுத்துக்கொண்டார்கள்.
ஆகாப் ஒருவழியே தனித்துப்போக, ஒபதி ௭
யாவும் மறுவழியாய்த் தனித்துப்போனான்; ஒப
தியா வழியிலேசெல்லுகையில், இலீசா இவனுக்
கெதிர்ப்பட்டான். இவன் அவனையறிந்து, தலை
குனிந்துவணங்கி, என் ஆண்டவனாகிய இலீசா
நீர்தானாவென்றுகேட்க,—அவன் இவனைநோக் ௮
கி, நான்தான்: நீபோய், இலீசா இங்கேயிருக்கி
றானென்று உன் ஆண்டவனுக்குச் சொல்லென்
றான்.—அதற்கிவன் ஆகாப் என்னைக்கொன்று ௯
போடும்படிக்கு, அவன்கையில் உமதடியானை
ஒப்பிக்க, நான் என்னபாவஞ்செய்தேன்.—என் ௰
ஆண்டவன், உம்மைத்தேடும்படி ஆளனுப்பாத
சாதியும்இராச்சியமுமில்லை: அவரில்லையென்று
அவர்கள்சொன்னபொழுது, அவர்கள்உம்மைக்
காணவில்லையென்பதற்கு, அந்தந்த இராச்சியத்
தாரிடத்திலும், சாதியாரிடத்திலும் ஆணைவாங்
கிக்கொண்டானென்று உமது நித்திய தேவனா
கிய யெகோவாவைக்கொண்டு சொல்லுகி
றேன்.—இப்பொழுது நீர், இலீசா இங்கேயி ௰௧
ருக்கிறானென்று உன்ஆண்டவனுக்குப்போய்ச்
சொல்லென்றுசொல்லுகிறீர்.–நான்உம்மைவிட் ௰௨
டு நீங்கினமாத்திரத்திலே, யெகோவாவின்
ஆவி எனக்குத்தெரியாத இடத்திற்கு உம்மைக்
கொண்டுபோய்விடவுங்கூடும், அதினால், நான்
ஆகாப்புக்குப்போய்த்தெரிவித்த பின்பு அவன்
உம்மைக் காணாதிருந்தால், என்னைக் கொன்று
போடுவானே: உமதுதாசனாகிய நான் என் சி
றுபிராயமுதற்கொண்டுயெகோவாவுக்குப்ப
யந்துநடக்கிறேன்.-யெசேபேல் யெகோவா ௰௩

(௰௮) லூக்.௫.௮.(௨௧)௨.இரா.௪.௩௪,௩௫.(௨௨)எபி.௰௧.௩௫.(௨௪)யோவா.௩.௨. யோவா.௰௬.௩௰.—(௰௮.அதி.௧.) லூக்.௪.௨௫. யாக்.௫.௰௭. ௨ பா.௨௮.௰௨. (௰௨) ௨.இரா.௨.௰௬. எசேக்.௩.௰௨,௰௪. மத்.௪.௧. அப்.௮.௩௯.

வின் தீர்க்கதரிசிகளைக் கொன்றபொழுது, யெ
கோவாவின் தீர்க்கதரிசிகளில் நூறுபேரை,
ஒவ்வொரு கெபிக்கு ஐம்பது ஐம்பதுபேராக ஒ
ளித்துவைத்து, அவர்களுக்கு அப்பமுஞ்சலமுங்
கொடுத்து, அவர்களைப் பாலித்துவந்தேனென்ப
து, என் ஆண்டவனுக்குத் தெரிவிக்கப்படவில்
௰௪ லையா.—இப்பொழுது இங்கேயிருக்கிறானென்
று நீ போய் உன் ஆண்டவனுக்குச்சொல்லென்
று சொல்லுகிறீரே, அவன் என்னைக்கொன்று
௰௫ போடுவானென்றான்.–இலீசா இன்றைத்தினம்
நான் நிச்சயமாய் அவனுக்கு முன் வெளிப்படு
வேனென்று, சேனாபதியாகிய நித்திய யெகோ
வாவின்முன்னின்றுசொல்லுகிறேனென்றான்.-
௰௬ அப்பொழுது, ஒபதியா ஆகாப்பைச்சந்திக்கப்
போய், அவனுக்கு அதைத்தெரிவித்தான்: ஆகாப்
இலீசாவைச்சந்திக்கப்போனான்.
௰௭ ஆகாப் இலீசாவைக்கண்டபொழுது, ஆகாப்
அவனைநோக்கி, இஸ்ரவேலரைக் கிலேசப்படுத்
௰௮ துகிறவன் நீதானாவென்றுகேட்க,–இவன், நான்
இஸ்ரவேலரைக் கிலேசப்படுத்தவில்லை: நீயும்
உன்பிதாவமிசத்தாரும் யெகோவாவின்கட்
டளையைமீறிப் பாகாலைப்பின்பற்றி, நீங்களே
௰௯ கிலேசப்படுத்துகிறீர்கள்.—இப்பொழுது ஆள
னுப்பி இஸ்ரவேலரனைவரையும், பாகாலின்நா
னூற்றைம்பது தீர்க்கதரிசிகளையும், யெசேபே
லின் போசனபீடத்திற் புசிக்கிற அஷேரிவிருட்
சத்தீர்க்கதரிசிகள் நானூறு பேரையும், கர்மேல்
மலையில் என்னிடத்தில் கூடிவரும்படி செய்
௨௰ யென்றான்.—ஆகாப் இஸ்ரவேல் சமஸ்தருக்கும்
ஆளனுப்பி, தீர்க்கதரிசிகளைக் கர்மேல்மலையிலே
௨௧ கூடிவரும்படிசெய்தான்.-பின்புஇலீசாஎல்லாச்
சனங்களிடத்திலும்வந்து, நீங்கள் எதுவரைக்
கும் இருமனப்பட்டுநிற்பீர்கள்; யெகோவா
தெய்வமானால்அவரைப்பின்பற்றுங்கள்: பாகால்
தெய்வமானால் அவனைப் பின்பற்றுங்களென்
றான். அதற்குச்சனங்கள் ஒருஉத்தரமுஞ்சொல்
௨௨ லவில்லை.-பின்புஇலீசாசனங்களைநோக்கி, யெ
கோவாவின் தீர்க்கதரிசிகளில் நான்மாத்திரம்
விடப்பட்டிருக்கிறேன்; பாகாலின்தீர்க்கதரிசிக
௨௩ ளோ நானூற்றைம்பதுபேர்.-இப்பொழுதுஇரண்
டுகாளையை எங்களுக்குத்தருவார்களாக; அவர்
கள்தங்களுக்கு ஒரு காளையைத்தெரிந்துகொண்
டு, அதைத்துண்டுதுண்டாகச்சேதித்து, விறகின்
மேல்வைக்கட்டும், அதற்கு அக்கினியிடப்படா
து: மற்றக்காளையை நான் ஆயத்தப்படுத்தி, விற
கின்மேல்வைத்து, அக்கினியிடாமல்விடுவேன்.-
௨௪ பின்பு நீங்கள் உங்கள் தேவனின் நாமத்தில் பி
ரார்த்தியுங்கள், நான் யேகோவாவின் நாமத்
தில்பிரார்த்திப்பேன்: அக்கினிமூலமாகஉத்தரஞ்
சொல்லுந்தேவனே, தேவனென்றான். அப்
பொழுது சமஸ்தசனங்களும் இது நல்ல வாக்
கென்றார்கள்.—பின்பு இலீசாபாகாலின்தீர்க்கத ௨௫
ரிசிகளைநோக்கி, நீங்கள்வெகுபேராதலால்உங்க
ளுக்கு ஒருகாளையைத்தெரிந்துகொண்டு, அதை
முதல் முதல் ஆயத்தம்பண்ணி, உங்கள் தேவ
னின்நாமத்தில் பிரார்த்தியுங்கள், நெருப்பிடப்
படாதென்றான்.–அவர்கள் தங்களுக்குக்கொடுக் ௨௬
கப்பட்டகாளையைப்பிடித்து, அதை ஆயத்தப்
படுத்தி, பாகாலே, எங்களுக்கு உத்தரம் அருளு
மென்றுசொல்லி, காலைமுதல் மத்தியானவரைக்
கும்பாகாலின்நாமத்தில்பிரார்த்தித்தார்கள். ஆனா
லும் யாதொருசத்தமுமில்லை, உத்தரங்கொடுப்
பாருமில்லை. உண்டாக்கப்பட்ட வேதிகைக்
கெதிரே அவர்கள் குதித்தார்கள்.—பின்பு மத் ௨௭
தியானத்தில் இலீசா அவர்களைநோக்கி, அ
வன் ஒருதேவன்தான்; அவன்தியானித்திருக்
கிறானோ. அலுவலாயிருக்கிறானோ, பிரயாணம்
போயிருக்கிறானோ, ஆருக்குத்தெரியும் நித்திரை
யாயிருக்கவுங்கூடும். அவனை எழுப்பவேண்
டும், உரத்த சத்தத்துடன் கூப்பிடுங்களென்று
சொல்லி, அவர்களைப்பரிகாசம்பண்ணினான்.—
பின்பு அவர்கள் உரத்த சத்தத்துடன்கூப்பிட்டு, ௨௮
தங்கள் முறைமைப்படி தங்கள்மேலே இரத்தம்
சோர, கத்திகளினாலும் சுரிகைகளினாலும் தங்க
ளைத்தாமே குத்தினார்கள்.—மத்தியானஞ்சென்ற ௨௯
பின்பும், மாலைப்பலிசெலுத்தும்வரைக்கும் ஓல
மிட்டார்கள், ஆனாலும்யாதொரு சத்தமுமில்லை,
உத்தரங்கொடுப்பாருமில்லை, அதில்சிந்தைவைப்
பாருமில்லை.–பின்பு இலீசாஎல்லாச் சனங்களை ௩௰
யும்நோக்கி, என்சமீபத்தில் வாருங்களென்று
சொல்ல, சகல சனங்களும் அவன் சமீபத்தில்
வந்தார்கள். அவன் யெகோவாவின் இடிந்த
வேதிகையைத் திரும்பவுங் கட்டினான்.—உன் ௩௧
பெயர் இஸ்ரவேலென்று, யெகோவாவின்
வாக்குப் பெற்ற யாக்கோபின் புத்திரருடைய
தொகைப்படி, இலீசா பன்னிரண்டுகற்களை எ
டுத்து,–அந்தக்கற்களினாலே யெகோவாவின் ௩௨
பேரால்ஒருவேதிகைகட்டி,வேதிகையைச்சுற்றி
லும் இரண்டுசேயாதானியம்கொள்ளத்தக்க ஒரு
வாய்க்காலையுண்டாக்கி,—விறகுகளை அடுக்கி, ௩௩
காளையைத் துண்டுதுண்டாகச் சேதித்து, அதை
விறகின்மேல் இட்டு, நீங்கள் நாலுகுடம்நிறை
யத்தண்ணீர்கொண்டுவந்து, தகனபலியின் மே
லும், விறகின்மேலும் ஊற்றுங்களென்றான்.—
பின்பு இரண்டாந்தரமும் அப்படிச்செய்யுங்க ௩௪
ளென்றான்; இரண்டாந்தரமும் அப்படிச்செய்
தார்கள். மூன்றாந்தரமும் அப்படிச்செய்யுங்க
ளென்றான். அவர்கள் மூன்றாந்தரமும்அப்படிச்
செய்தார்கள்.—சலம்வேதிகையைச்சுற்றி ஓடிற் ௩௫
று; வாய்க்காலையும் சலத்தினாலே நிரப்பினான்.—

(௰௭) அதி.௨௧.௨௰. யோசு.௭.௨௫. அப்.௰௬.௨௰. (௰௮) ௨.நாளா.௰௫.௨.(௰௯)யோசு.௰௯.௨௬. அதி.௰௬.௩௩.(௨௰) அதி.௨௨.௬. (௨௧) ௨.இரா.௰௭.௪௧. மத்.௬.௨௪. யோசு.௨௪.௰௫. (௨௨) அதி.௰௯.௰,௰௪. வச.௰௯. (௨௪) வச.௩௮. ௧.நாளா.௨௧.௨௬. (௨௬) சங்.௱௰௫.௫. எரே.௰.௫. ௧.கொரி.௮.௪. (௨௮) லேவி.௰௯.௨௮. உபா.௰௪.௧. ௧.கொரி.௰௧.௪,௫. வச.௨௯. (௩௰) அதி.௰௯.௰. (௩௧) ஆதி.௩௨.௨௮. ௨.நாளா.௰௭.௩௪. (௩௨) கொலோ.௩.௰௭. (௩௩) லேவி.௧.௬,௭,௮. நியா.௬.௨௰. (௩௫) வச.௩௨,௩௮.

௩௬ சாயங்காலபலியிடுகிற சமயத்தில் இலீசா தீர்க்க
தரிசி சமீபித்துவந்து, ஆபிரகாமுக்கும், ஈசாக்
குக்கும், இஸரவேலுக்குந் தேவனாகிய யெ
கோவாவே, நீரே இஸரவேலின் தேவனென்
றும், நான் உமதுதாசனென்றும், உமதுவாக்கின்
படி இந்தச்சகலகாரியங்களையுஞ்செய்தேனென்
றும், இன்றைத்தினம் வெளிப்படுத்தியருளும்.—
௩௭ யெகோவாவே, நீரேதேவனாகிய யெகோ
வாவென்று இந்தச்சனங்கள் அறிந்து, மனந்தி
ரும்பும்படி எனக்குச் செவிகொடுத்தருளும், எ
௩௮ னக்குச் செவிகொடுத்தருளுமென்றான்.—அப்
பொழுது யெகோவாவினின்றும் அக்கினியி
றங்கி, தகனபலியையும், விறகுகளையும், கற்க
ளையும், மண்ணையும் பட்சித்தது, வாய்க்காலிலி
௩௯ ருந்த சலத்தையும்நக்கிவிட்டது.—எல்லாச்சனங்
களும் அதைக்கண்டபொழுது பூமிமட்டும் தலை
குனிந்துவணங்கி, யெகோவாவே தேவன்;
யெகோவாவே தேவன், என்றார்கள்.—
௪௰ இலீசா அவர்களைநோக்கி, பாகாலின் தீர்க்கதரி
சிகளொருவரையுந் தப்பவிடாதபடி பிடித்துக்
கொள்ளுங்களென்றுசொல்ல, அவர்கள் இவர்
களைப்பிடித்துக்கொண்டார்கள்: இலீசா அவர்
களை கீஷோன் சிற்றாற்றினிடத்தில் கொண்டு
வந்து, அங்கேஅவர்களைக்கொன்றுபோட்டான்.
௪௧ பின்பு இலீசாஆகாப்பைநோக்கி, பெருமழை
யிரைச்சல் கேட்கின்றது; நீர்போம், போசன
௪௨ பானம்பண்ணுமென்றான்.—ஆகாப்போசனபா
னம்பண்ணப்போக, இலீசா கர்மேலின் உச்சி
யில் ஏறிப் பூமியில்விழுந்து, தன்முழந்தாள்களு
௪௩ டேமுகங்குப்புறத்தாழ்ந்து,—தன்பணிவிடைக்
காரனுடனே, நீபோய்ச் சமுத்திரத்துக்குநேரே
பாரென்று சொல்ல, இவன்போய்ப் பார்த்து,
ஒன்றுமில்லையென்றான். பின்பு நீ இன்னும்எழு
௪௪ தரம் போவென்றான்.—ஏழாந்தரம் இவன், ஒரு
மனிதனுடையஉள்ளங்கையளவு ஒருசிறுமேகம்
சமுத்திரத்தினின்றும் எழும்புகின்றதென்றான்.
அப்பொழுது அவன், நீபோய் ஆகாப்பைநோக்
கி, மழை உம்மைத்தடைப்படுத்தாதபடி, உம்மு
டைய இரதத்தைப்பூட்டி, ஏறிக்கொண்டுபோய்
௪௫ விடுமென்று சொல்லென்றான்.—இதற்குள்ளே
மேகங்களும் காற்றும்உண்டாய், வானம்இருண்
டு, மிகவும் மழைபெய்தது. ஆகாப் ரதத்தில் ஏறி
௪௬ யெஸரியேலுக்குப்போனான்.—யெகோவா
வின்கை இலீசாவின்மேலிருந்ததினால், அவன்
தன் அரையைக் கட்டிக்கொண்டு வாசல்வரைக்
கும் ஆகாப்புக்குமுன் ஓடினான்.

## ௰௯. அதிகாரம்.

௧. இலீசா தப்பிஓடல்: ௪. வனத்தில் தன்பிராண
னை விட்டுவிடப் பிரியங்கொண்டு துக்கித்த
பொழுது தேவ தூதன் அவனைத் தேற்றரவு
பண்ணல்: ௯. ஓரேப் மலையில் தேவன் இலீ
சாவுக்குத் தரிசனமாகி அசாவேல், யெகூ, எலீ
ஷாவென்னும்இவர்களுக்கு அபிஷேகஞ்செய்
யும்படி அனுப்பல்: ௰௯. இலீஷா தன்குடும்பம்
முதலானவைகளை விட்டு இலீசாவைப் பின்
பற்றல்.

இலீசா செய்தயாவையும், தீர்க்கதரிசிகள் சகல ௧
ரையுங் கட்கத்தினால் கொன்றுபோட்டதையும்
ஆகாப் யெசேபேலுக்குத் தெரிவிக்க,—யெசே ௨
பேல் இலீசாவிடத்தில் தூதனை அனுப்பி, நாளை
இந்நேரம் அவர்களில் ஒருவனுடைய பிராண
னைப்போலஉன்பிராணனையுஞ்செய்யாமல்விட்
டேனாகில், தேவர்கள்எனக்கப்படியும், அதற்கதி
கமுஞ் செய்வார்களாகவென்று சொல்லுவித்தா
ன்.—அது அவனுக்குத்தெரிந்தபொழுது அவன் ௩
எழுந்து, தன் பிராணனைக்காக்கும்படி யூதாதே
சத்தைச்சேர்ந்த பேர்ஷேபாவுக்குவந்து, தன்ப
ணிவிடைக்காரனை அங்கேவிட்டான்.
அவன் தான் வனத்தில் ஒருநாட் பிரயாணஞ் ௪
செய்து, ஒரு உரோதம விருட்சத்தின் கீழேவந்
திருந்து, யெகோவாவே, நான்என்முன்னோ
ரைப்பார்க்கிலும் உத்தமனல்ல, இப்பொழுது
போதும்; என்பிராணனைநீக்கிவிடுமென்று, தான்
மரணமடையும்படிபிரார்த்தித்தான்.—அவன் ஒரு ௫
உரோதமவிருட்சத்தின் கீழ்படுத்து நித்திரைகொ
ள்ளுகையில், தேவ தூதன் ஒருவன் அவனைத்
தட்டி, எழுந்து போசனம்பண்ணென்றான்.—
அவன்விழித்துப்பார்த்து, தழலிலே சுடப்பட்ட ௬
ஒரு அப்பமும், அவன் தலைமாட்டில் ஒருபாத்
திரசலமும், இருக்கக்கண்டான். அவன் போ
சனபானம்பண்ணித் திரும்பவும் படுத்துவிட்
டான்.—யெகோவாவின் தூதன் இரண்டாந் ௭
தரமும் அவனைத்தட்டி, எழுந்து போசனம்பண்
ணு; உனக்குண்டாகும் பிரயாணம் வெகுதூரத்
திற்கிருக்குமென்றான்.—அப்பொழுது அவன் ௮
எழுந்து போசனபானம்பண்ணி, அந்த ஆகார
பெலத்தினால் நாற்பதுநாள் இரவும் பகலும்நடந்
து, தேவ மலையாகிய ஓரேப்பைச்சேர்ந்தான்.
அங்கேஒருகெபியில்பிரவேசித்துத்தங்கினான்; ௯
அப்பொழுது இலீசாவே, நீஇங்கே என்னசெய்
கிறாயென்று யெகோவாவின்வாக்குஅவனுக்
குக்கிடைத்தது.-அதற்கவன்சேனைபதியும் தேவ ௰
னுமாகிய யெகோவாவினிமித்தம், நான்மிக
வும் வைராக்கியங்கொண்டிருக்கிறேன்: இஸர
வேல்சந்ததியார் உமது உடன்படிக்கையைத்தள்
ளி, உமது வேதிகைகளை இடித்து, உமது தீர்க்க
தரிசிகளைக் கட்கத்தினாற் கொன்றுபோட்டார்
கள், நான்மாத்திரம்விடப்பட்டிருக்கிறேன்; என்
பிராணனையும் வாங்க வகைதேடுகிறார்களென்
றான்.—பின்புஅவர் நீபுறப்பட்டுப்போய், மலை ௰௧
யின்மேல் யெகோவாவின் சமுகத்தில் நில்

(௩௬) யாத்.௩.௬. அதி.௮.௪௩. ௨.இரா.௰௯.௰௯. சங்.௮௩.௰௮. எண்.௰௬.௨௮. (௩௮) லேவி.௯.௨௪. நியா.௬.௨௧. ௧.நாளா.௨௧.௨௬. ௨.நாளா.௭.௧. (௩௯) வச.௨௪.(௪௰) ௨.இரா.௰.௨௫. உபா.௰௩.௫. (௪௨) யாக்.௫.௰௭,௰௮. (௪௬) ௨.இரா.௪.௨௯.—(௰௯. அதி. ௧.) அதி.௰௮.௪௰. (௨) ரூத்.௧.௰௭. அதி.௨௰.௰. ௨.இரா.௬.௩௧. (௪) எண்.௰௧.௰௫. யோனா.௪.௩,௮. (௮) யாத்.௩௪.௨௮. உபா.௯.௯,௰௮. மத்.௪.௨. யாத்.௩.௧. (௰) ரோ.௰௧.௩. எண்.௨௫.௰௧,௰௩. சங். ௬௯.௯. அதி.௰௮.௪. அதி.௰௮.௨௨. ரோ.௰௧.௩. (௰௧) யாத்.௨௪.௰௨. எசேக்.௧.௪.

லென்றார். யெகோவா கடந்துபோனார்; யெ
கோவாவின் சமுகத்தில் பெலத்த ஒரு பெருங்
காற்றுப்பருவதங்களைப்பிளந்து, கன்மலைகளைத்
துண்டுதுண்டாகத்தகர்த்தது; யெகோவா காற்
றிலேயில்லை: காற்றுக்குப்பின் பூமியதிர்ச்சியுண்
டாயிற்று; யெகோவா அந்தப்பூமியதிர்ச்சியி
௰௨ லுமில்லை:—பூமியதிர்ச்சிக்குப் பின் அக்கினி
தோன்றிற்று; யெகோவா அந்த அக்கினியிலு
மில்லை: அக்கினிக்குப்பின்பு அமைந்தஒருமெல்
௰௩ லியசத்தம் பிறந்தது;—இலீசா அதைக்கேட்ட
பொழுது, தன் வஸ்திரத்தினாலே தன்முகத்தை
மூடிக்கொண்டு, வெளியேவந்து கெபியின்வாச
லில் நின்றான். இலீசாவே, நீ இங்கே என்ன
செய்கிறாயென்று அங்கே அவனுக்கொரு சத்த
௰௪ முண்டாயிற்று.—அதற்கவன், சேனாபதியும் தே
வனுமாகிய யெகோவாவின் நிமித்தம்நான்
மிகவும் வைராக்கியங்கொண்டிருக்கிறேன்: இ
ஸரவேல்சந்ததியார் உமதுஉடன்படிக்கையைத்
தள்ளி, உமது வேதிகைகளையிடித்து, உமது தீர்க்
கதரிசிகளைக்கட்கத்தினாற் கொன்று போட்டார்
கள், நான்மாத்திரம் விடப்பட்டிருக்கிறேன்;
என் பிராணனையும் வாங்க வகைதேடுகிறார்க
௰௫ ளென்றான்.—யெகோவா அவனைநோக்கி, நீ
தமஸ்கு வனத்தின் வழியாய்த்திரும்பிப்போ, நீ
போகிறபொழுது அசாவேலை, ஷீரியாவுக்கு இ
௰௬ ராசாவாகும்படி அபிஷேகம்பண்ணு:—பின்பு
நிம்ஷீயின்புத்திரனாகிய யெகூவை, இஸரவேல
ருக்கு இராசாவாக அபிஷேகம்பண்ணு: ஆபேல்
மிகோலாவிலுள்ள ஷாபாத்தின்புத்திரனாகிய இ
லீஷாவை, உனக்குப்பிரதி தீர்க்கதரிசியாக அபி
௰௭ ஷேகம்பண்ணு:—அசாவேலின் கட்கத்துக்குத்
தப்புகிறவனையெகூ கொன்றுபோடுவான்: யெ
கூவின் கட்கத்துக்குத் தப்புகிறவனை இலீஷா
௰௮ கொன்றுபோடுவான்.—ஆனாலும் இஸரவேலரில்
பாகாலைக்கண்டு முடங்காத முழங்கால்களையும்,
அவனை முத்தஞ்செய்யாத வாயையுமுடையவர்
கள் ஏழாயிரம்பேரை என்னிமித்தம் இருக்க
விட்டேனென்றார்.

௰௯ அவன் அவ்விடத்தைவிட்டு நீங்கி, பன்னி
ரண்டு ஏர்பூட்டி உழுத ஷாபாத்தின் புத்திரனாகி
ய இலீஷாவைக்கண்டான்; அவன் பன்னிரண்
டாம் ஏரைச்செலுத்தினான்: இலீசா அவன்சமீ
பத்தில்சென்று, தான்போர்த்திருந்தவஸ்திரத்தை
௨௰ அவன்மேலெறிந்தான்.—அவன் எருதுகளைவிட்
டு இலீசாவுக்குப்பின்னோடி, நான் என்பிதாமா
தாவை முத்தஞ்செய்யவிடும், பின்பு உம்மைப்
பின் செல்லுவேனென்றுசொல்ல, இவன் அவ
னைநோக்கி, நான் உனக் கென்னசெய்தேன்;
௨௧ போய்வாவென்றான்.—அவன் இவனைவிட்டுப்
போய், ஒரு ஏர்மாடுகளைப்பிடித்து அடித்து, நுக
ம்முதலியவைகளை விறகாகக்கொண்டு, அவைக
ளின்மாமிசத்தை அவித்துசனங்களுக்குக்கொடுக்
க, அவர்கள்புசித்தார்கள். பின்பு அவன் எழுந்து
இலீசாவைப்பின்சென்று, அவனுக்குப் பணிவி
டைசெய்தான்.

## ௨௰. அதிகாரம்.

௧. பென்னாதத் ஷமாரியாவை முற்றிக்கை போடல்: ௰௩. தீர்க்கதரிசியின் ஆலோசனையினால் ஷீரியர்சனங்களைக்கொலைசெய்தல்: ௨௨. தீர்க்கதரிசன வாக்கியத்தின்படி ஷீரியர்திரும்பிவரல்: ௨௮. தீர்க்கதரிசியின் ஆலோசனையினாலே ஷீரியர் கொலைசெய்யப்படல்: ௩௧. பென்னாதத் தோல்வியடைந்து பரிதானங் கொடுத்தல்: ௩௫. ஆகாப்புக்கு உவமையையுந்தீர்க்கதரிசனங்களையுஞ்சொல்லல்.

ஷீரியாவின் இராசாவாகிய பென்னாதத் தன் ச ௧
கலசேனைகளையுங் கூடிவரும்படி செய்தான்: அ
வனுடன் குதிரைகளோடும், இரதங்களோடும்,
முப்பத்திரண்டு இராசாக்களிருந்தார்கள்: அவன்
புறப்பட்டுப்போய் ஷமாரியாவை முற்றிக்கை
போட்டு, அதற்கு விரோதமாய் யுத்தஞ்செய்
தான்.—அவன் இஸரவேலரின் இராசாவாகிய ௨
ஆகாப்பிடத்தில் நகரத்துக்குள்ளே தூதர்களைஅ
னுப்பி,—உன் வெள்ளியும் பொன்னும் என்னு ௩
டையவைகள்; உன்மனைவியரும், உன்புத்திரருக்
குள் உத்தமரும் என்னுடையவர்களென்றுபென்
னாதத் சொல்லுகிறானென்று சொல்லுவித்தான்.-
அதற்குத்தரமாக இஸரவேலரின் இராசா, என் ௪
ஆண்டவனே, இராசாவே, உமது சொற்படி நா
னும் எனக்குண்டானயாவும் உமக்கே உரிமை
யென்றான்.—தூதர்கள் திரும்பவும்வந்து, உன் ௫
வெள்ளியையும், பொன்னையும், மனைவியரை
யும், புத்திரரையும் எனக்கொப்புவிக்கும்படி உ
னக்குச்சொல்லியனுப்பினேன்.-இனிநாளை இந் ௬
நேரம் என்பணிவிடைக்காரரை உன்னிடத்தில்
அனுப்புவேன், அவர்கள்உன்வீட்டையும், உன்
தாசரின்வீடுகளையுஞ் சோதித்து, உன் கண்ணுக்
குப்பிரியமானவைகளெல்லாவற்றையுந் தங்கள்
கையிலே எடுத்துக்கொண்டு வருவார்களென்று
சொன்னார்கள்.—அப்பொழுது இஸரவேலரின் ௭
இராசாதேசத்து முதியோர் சகலரையும் அழைப்
பித்து, இவன் என் மனைவியரையும், என் பிள்
ளைகளையும், என் வெள்ளியையும், என் பொன்
னையுந்தரும்படி எனக்காளனுப்பினான்; நான்ம
றுக்கவில்லை. இவன் என்னை ஈங்கிஷைபண்
ணப்பார்க்கிறானென்றான்.—அப்பொழுது சகல ௮
முதியோரும் சகல சனங்களும் இவனை நோக்
கி, அவனுக்குச் செவிகொடுக்கவும்வேண்டாம்,
அதற்குச்சம்மதிக்கவும்வேண்டாமென்றார்கள்.-
அதினால் இவன்பென்னாதத்தின்தூதரைநோக்கி, ௯
நீங்கள் என் ஆண்டவனாகிய இராசாவிடத்தில்,
நீர் முன் உமதடியானுக்குச் சொல்லியனுப்பின
யாவற்றையும்செய்வேன்: இந்தக்காரியஞ் செய்
யமாட்டேனென்று சொல்லுங்களென்றான். தூ

(௰௩) யாத்.௩௪.௬. எசா.௬.௨. வச.௯. (௰௪) வச.௰. (௰௫) ௨.இரா.௮.௰௨,௰௩. (௰௬) ௨.இரா.௯.௧—௩. லூக்.௪.௨௭. (௰௭) ௨.இரா.௮.௰௨. ஓசி.௬.௫. (௰௮) ரோ.௰௧.௪. ஓசி.௰௩.௨. (௨௰) மத்.௮.௨௧,௨௨. லூக்.௯.௬௧,௬௨. (௨௧) ௨.சாமு.௨௪.௨௨.—(௨௰. அதி.)

தார்கள்போய், இந்த உத்தரத்தை அவனுக்குத்தெ
௰ ரிவித்தார்கள்.—பின்பு பென்னாதத் இவனுக்கா
ளனுப்பி, என்னைப்பின்செல்லும் சமஸ்த சனங்
களுக்கும் கைப்பிடி நிறைய அள்ளும்படி ஷமா
ரியாவின் தூளிபோதுமானால், தேவர்கள் அப்ப
டியும் அதற்கதிகமுஞ் செய்வார்களாகவென்று
௰க சொல்லுவித்தான்.—அதற்கு இஸரவேலின் இ
ராசா, ஆயுதங்கட்டுகிறவன் அதை அவிழ்ப்ப
வன்போலப் பெருமைபாராட்டலாகாதென்று
௰உ சொல்லுங்களென்றான்.—பென்னாதத்தும், அவ
னுடன்கூடியஇராசாக்களும்இராசகூடாரத்தில்
பானம் பண்ணுகிறபொழுது, இந்தச்சமாசாரத்
தைக்கேட்டு தன்பணிவிடைக்காரரைநோக்கி,
அணிவகுப்பீர்களாகவென்றுசொல்ல,அவர்கள்
நகரத்துக்குவிரோதமாய் அணிவகுத்தார்கள்.
௰௩ பின்பு இஸரவேலின் இராசாவாகிய ஆகாப்
பிடத்தில் ஒருதீர்க்கதரிசிவந்து, இந்தப்பெரியச
னக்கூட்டத்தைக்கண்டீரா;கேளும்,இன்றுநான்
இதை உனதுகையில் ஒப்பித்துப்போடுவேன்;அ
தினாலே நான் யெகோவாவென்று நீ அறிந்
துகொள்ளுவாயென்று யெகோவா சொல்லு
௰௪ கிறாரென்றான்.—அதற்கு ஆகாப் ஆரைக்கொண்
டென்று கேட்க, இவன் மாகாணங்களின் அதி
பதிகளுடைய வாலிபரைக்கொண்டென்று யெ
கோவா சொல்லுகிறாரென்றான். பின்பு அவன்
யுத்தத்தை நடத்துகிறவன் யாவனென்றுகேட்க,
௰௫ இவன் நீர் தாமென்றான்.—அப்பொழுதுஅவன்
மாகாணங்களின் அதிபதிகளைத் தொகையிட்
டான், அவர்கள் இருநூற்று முப்பத்திரண்டு
பேர்: அவர்களுக்குப் பின் சமுதாயமாகிய இ
ஸரவேல் சந்ததியார் சமஸ்தரையும் தொகையிட்
௰௬ டான், அவர்கள் ஏழாயிரம்பேர்.—அவர்கள் மத்
தியானத்தில் புறப்பட்டார்கள். அந்தச் சமயத்
திலே பென்னாதத்தும், அவனுக்குத்துணைநின்ற
முப்பத்திரண்டு இராசாக்களும், இராசகூடா
ரங்களிற் பானம்பண்ணி வெறிகொண்டிருந்
௰௭ தார்கள்.—மாகாணங்களின் அதிபதிகள் முன்ன
மே புறப்பட்டார்கள்; புறப்பட்டவுடனே, பென்னா
தத் அனுப்பின ஆட்கள் ஷமாரியாவினின்றும்
சனங்கள் புறப்பட்டு வருகிறார்களென்று அவ
௰௮ னுக்குத் தெரிவித்தார்கள்.—அப்பொழுது அவர்
கள் சமாதானத்திற்கு வந்தாலும், உயிரோடே பி
டித்துக்கொள்ளுங்கள்;யுத்தத்துக்குவந்தாலும்,அ
வர்களை உயிரோடே பிடித்துக்கொள்ளுங்களெ
௰௯ ன்றான்.—மாகாணங்களின் அதிபதிகளுடைய
வாலிபர்களும், அவர்களைப்பின்பற்றியசேனைக
உ௰ ளும் நகரத்தினின்று புறப்பட்டுப்போய்,—தங்
கள் தங்களுக்கெதிர்ப்பட்டவர்களைக்கொல்ல,
ஸீரியர்தப்பியோடினார்கள்; இஸரவேலர் அவர்
களைத்தொடர்ந்தார்கள்: ஸீரியாவின் இராசாவா
கியபென்னாதத் ஒருகுதிரைமேலேறி, குதிரைவீ
உக ரருடன் தப்பியோடினான்.—பின்பு இஸரவேல
ரின் இராசாபுறப்பட்டுப்போய், குதிரைவீரரை
யும் ரதவீரரையும் சங்காரஞ்செய்து, ஸீரியரை
மகாசங்காரமாகச்சங்கரித்தான்.

அந்தத்தீர்க்கதரிசி இஸரவேலரின் இராசாவி உஉ
டத்தில்வந்து, அவனைநோக்கி, வருகிற வருஷம்
ஸீரியாவின் இராசா உமக்குவிரோதமாய் வரு
வான், ஆதலால் நீர் உம்மைப்பெலப்படுத்தி, நீர்
செய்யத்தக்க தின்னதென்றுபார்த்து, சாவதான
மாயிருமென்றான்.-ஸீரியாவின் இராசாவுடைய உ௩
தாசர் அவனைநோக்கி, அவர்களுடைய தேவர்
கள் மலைத்தேவர்கள்;அதினால் அவர்கள் நம்மை
மேற்கொண்டார்கள்; ஆனாலும் நாம் அவர்களைச்
சமபூமியிலே எதிர்த்து யுத்தஞ்செய்வோம், அப்
பொழுது நாம் நிச்சயமாய்அவர்களைமேற்கொள்
வோம்.—ஆதலால் நீர் ஒன்றுசெய்யும்; நீர் இரா உ௪
சாக்களை அவரவர்கள் நிலையினின்றும் நீக்கிவிட்
டு,அவர்களுக்குப்பிரதியாகச் சேனாபதிகளை ஏற்
படுத்தி,—இழந்துபோனசேனைக்குச்சேனையை உ௫
யும், குதிரைக்குக்குதிரையையும், ரதத்துக்குரதத்
தையுந் தொகையிட்டுக்கொள்ளும்; நாம்சமபூமி
யில் எதிர்த்து யுத்தம்பண்ணுவோம், நிச்சயமாய்
நாம் அவர்களைமேற்கொள்வோமென்றார்கள்.—
மறுவருஷத்தில் பென்னாதத் ஸீரியரைத்தொகை உ௬
யிட்டு, இஸரவேலரை எதிர்த்து யுத்தஞ்செய்யும்
படி அப்பெக்குக்குப்போனான்.-இஸரவேல்சந் உ௭
ததியாருந் தொகையிடப்பட்டு, ஆயத்தமாகி, அ
வர்களை எதிர்க்கப்புறப்பட்டார்கள், இஸரவேல்
சந்ததியார் இரண்டுசிறு வெள்ளாட்டு மந்தைகள்
போல அவர்களுக்கெதிரே பாளயமிறங்கினார்
கள்: ஸீரியரோ தேசத்தில் நிறைந்தார்கள்.

தேவனுடைய தாசனொருவன்வந்து, இஸர உ௮
வேலரின் இராசாவைநோக்கி, யெகோவா
மலைகளுக்குத் தேவனேயன்றி, சமபூமிகளுக்
குத் தேவனல்லவென்று ஸீரியர் சொல்லியிருக்
கிறபடியால், இந்தப்பெரிய சனக்கூட்டம்முழு
வதையும்உன்கையிலேஒப்பித்துவிடுவேன்,அதி
னாலே நானே யெகோவாவென்று அறிந்து
கொள்ளுவீர்களென்று யெகோவாசொல்லு
கிறாரென்றான்.—ஏழுநாளளவும் அவர்கள் முக உ௯
முகமாய்ப் பாளயமிறங்கியிருந்தார்கள். ஏழாம்
நாளில் யுத்தஞ்செய்யத்தொடங்கினார்கள்: இஸ
ரவேல் சந்ததியார் ஒருதினத்தில் ஸீரியருக்குள்
ஒருலட்சங் காலாள்களைக் கொன்றுபோட்டார்
கள்.—மீந்திருந்தவர்கள் அப்பெக்நகரத்துக்குத் ௩௰
தப்பி ஒடினார்கள்; அங்கேமீந்திருந்த இருபத்தே
ழாயிரம் சனங்கள்மேல் ஒரு மதில் விழுந்தது.
பென்னாதத் தப்பி ஓடிப்போய், நகரத்தில் ஒரு
அந்தரங்கமான அறையில் பிரவேசித்தான்.

அவன் தாசர் அவனைநோக்கி, கேளும், இஸர ௩க
வேல்வமிசத்துஇராசாக்கள்தயையுள்ள இராசாக்
களென்று கேள்விப்பட்டோம்:நாங்கள் இரட்டு
களை எங்கள் அரைகளிலேகட்டி, கயிறுகளை எங்
கள் தலையிலே சுற்றிக்கொண்டு, இஸரவேலரின்
இராசாவிடத்தில் போவோம்: அவர் உமது பிரா

(௰) அதி.௰௬.உ. யாத்.௰க.அ. நியா.௪.௰. (௰௩) வச.உ௮. (௰௯) வச.௰க. அதி.௰௯.௯. (உஉ) உ.சாமு.௰க.க. (உ௬) யோசு.௰௩.௪. (உ௮) வச.௰௩. (௩௰) அதி.உஉ.உ௫. (௩க) ஆதி.௩௭.௩௪.

௩௰௨ ணை இரட்சிக்கவுங்கூடுமென்றுசொல்லி,-அப்
படியே அவர்கள் தங்கள் அரைகளிலே இரட்டு
களைக்கட்டி, தங்கள் தலைகளிலே கயிறுகளைச்
சுற்றிக்கொண்டு இஸரவேலரின் இராசாவிடத்
தில்வந்து, உமது தாசனாகிய பென்னாதத் தன்சீ
வனைக் காக்கக்கேட்டுக் கொள்ளுகிறானென்று
சொல்ல, இவன் இன்னும் அவன் உயிரோடே
யிருக்கிறானா; அவன்என்சகோதரனென்றான்.-
௩௰௩ அப்பொழுது அவனை நிதானித்துப்பார்தத அந்த
மனிதர் சீக்கிரமாய் அந்தச்சொல்லைப்பிடித்து,உ
மது சகோதரன் பென்னாதத்தென்றுசொல்ல, இ
வன் நீங்கள்போய் அவனைஅழைத்துக்கொண்டு
வாருங்களென்றான். பின்பு பென்னாதத் புறப்
பட்டுவர, இவன் அவனை இரதத்தின்மேலேறிவ
௩௰௪ ரும்படிசெய்தான்.-பென்னாதத் இவனைநோக்
கி, என் பிதா உமது பிதாவிடத்திலே பிடித்த நக
ரங்களை நான் உமக்குத்திரும்பத்தந்துவிடுவேன்;
என்பிதா ஷமாரியாவிலே செய்தபிரகாரம்நீரும்
தமஸ்குவிலே வீதிகளையுண்டாக்கிக்கொள்ளலா
மென்றான். அதற்கவன் இந்த உடன்படிக்கை
செய்து,உன்னை அனுப்பிவிடுகிறேனென்றுசொ
ல்லி, அவனோடே உடன்படிக்கைசெய்து,அவ
னையனுப்பிவிட்டான்.
௩௰௫ பின்பு தீர்க்கதரிசிகளின் சீஷரில் ஒருவன்
யெகோவாவின் வாக்கின்படி தன்தோழனை
நோக்கி, என்னை அடியென்றான். அந்தமனிதன்
அவனை அடிக்கமாட்டேனென்று மறுத்தான்.—
௩௰௬ அதினாலே அவன் இவனைநோக்கி, நீ யெகோ
வாவின் வாக்குக்கு அமையாதபடியால், என்
னைவிட்டுப்புறப்பட்டஉடனே ஒரு சிங்கம்உன்
னைக் கொன்றுபோடுமென்றான். இவன் அவ
னைவிட்டுப் புறப்பட்டவுடனேஒருசிங்கம் இவ
௩௰௭ னைக்கண்டுகொன்றுபோட்டது.-பின்புவேறொ
ருமனிதனைக்கண்டு, என்னை யடியென்றுசொல்
ல, அவன் இவனுக்குக் காயமுண்டாக அடித்
௩௰௮ தான்.-பின்பு தீர்க்கதரிசி புறப்பட்டுப்போய்,மு
கத்திலே சாம்பலையிட்டு,வேஷமாறி, வழியிலே
௩௰௯ இராசாவைக்காத்து நின்றான்.—இராசா அவ்வ
ழியாக வருகிறபொழுது இராசாவைக்கூப்பிட்
டு, உமதடியான் யுத்தத்திலேநின்றபொழுது,ஒரு
மனிதன்விலகி, ஒருவனைஎன்னிடத்தில்கொண்
டுவந்து, இந்த மனுஷனைக் காவல் பண்ணிக்
கொள்: எவ்விதமாகிலும் இவன் தப்பினால், இ
வன் பிராணனுக்குப்பிரதியாக உன் பிராணன்
வாங்கப்படும், அல்லது நீ ஒரு கிக்கார்வெள்ளி
௪௰ நிறுத்துக் கொடுக்க வேண்டுமென்றான்.—உ
மது தாசன் அங்குமிங்கும் அலுவலாயிருக்கை
யில், அவன் போய்விட்டானென்றான். இஸர
வேலரின் இராசா அவனைநோக்கி, இப்படியே
ஆகும் உன் தண்டனை; நீயேதீர்ப்புச்சொல்லியி
௪௰௧ ருக்கிறாயென்றான்.—அப்பொழுது இவன் தன்
முகத்திலிருந்த சாம்பலைச் சீக்கிரமாய்த்துடைக்
க, இஸரவேலரின் இராசா இவனைத்தீர்க்கதரிசி
களில் ஒருவனென்று அறிந்துகொண்டான்.—
பின்பு இவன் அவனைநோக்கி, சங்கரிக்கும்படி ௪௰௨
நான் நியமித்தமனிதனை உன்கைக்குத் தப்பிப்
போகும்படி நீ விட்டபடியினால்அவனுக்குப்பி
ரதியாக உன் பிராணனும், அவன் சனங்களுக்
குப்பிரதியாக உன் சனங்களுமிருக்குமென்று,
யெகோவா சொல்லுகிறாரென்றான்.—அப் ௪௰௩
பொழுது இஸரவேலரின் இராசா விதனமும் பி
ரியவீனமுமாகி,தன்வீட்டிற்குப்போய், ஷமாரி
யாவைச்சேர்ந்தான்.

## ௨௧. அதிகாரம்.

௧. ஆகாப் நாபோத்தின்தோட்டத்தைப்பெறாமல் விசனப்படல்: ௫.யெசேபேலினால்நாபோத்அதமாதல்:௰௫.ஆகாப்நாபோத்தின்தோட்டத்தை அபகரித்தல்: ௰௭. ஆகாப்யெசேபேலென்பவர்களுக்குவருந் தண்டனையைத் தீர்க்கதரிசனமாய்ச் சொல்லல்: ௨௫. ஆகாப் மனஸ்தாபப்பட்டதினிமித்தம் அத்தண்டனைக்குவிலகல்.

இவைகள் நடந்தபின்பு, யெஸரியேலிலேஷ ௧
மாரியாவின்இராசாவாகிய ஆகாப்பின்அரமனைக்
குச்சமீபத்தில், யெஸரியேலனாகியநாபோத்துக்
கு ஒருதிராட்சத்தோட்டம் இருந்தது.—ஆகாப் ௨
நாபோத்தை நோக்கி, உன்திராட்சத்தோட்டம்
என்வீட்டுக்குச் சமீபமாயிருப்பதினால், நான்
அதைக்கீரைக் கொல்லையாக்கிக்கொள்ளும்படி
அதைஎனக்குத்தந்துவிடு: அதற்குப்பிரதியாக அ
தியுத்தமமான ஒருதிராட்சத் தோட்டத்தைத் தரு
வேன்; அல்லது உனக்குப்பிரியமாகில், அதின்
விலைப்பணந்தந்துவிடுவேனென்றான்.-நாபோத் ௩
ஆகாப்பைநோக்கி, நான்என்முன்னோரின் சுதந்
தரத்தை உமக்குத்தராதபடி, யெகோவா என்
னைத் தடைப்படுத்துவாராகவென்றான்.—இப்ப ௪
டி, என்முன்னோரின் சுதந்தரத்தைத்தரமாட்டே
னென்று யெஸரியேலனாகிய நாபோத் தனக்குச்
சொன்ன வாக்கினிமித்தம், ஆகாப் விதனமும்
பிரியவீனமுமாய், தன் வீட்டுக்குவந்துவிட்டா
ன்:அவன்போசனம்பண்ணாமல்கட்டிலின்மேல்
படுத்துத் தன்முகத்தைத் திருப்பிக்கொண்டான்.
அப்பொழுது அவன் மனைவியாகிய யெசே ௫
பேல் அவனிடத்தில்வந்து, அவனைநோக்கி, நீர்
போசனம்பண்ணாமல்உமதுமனஞ்சலிப்படைந்
திருக்கிறதென்னவென்றுகேட்க,—அவன் அவ ௬
ளைநோக்கி, நான் யெஸரியேலனாகியநாபோத்
திடத்தில், உன்திராட்சத்தோட்டத்தைக் கிரயத்
துக்குத்தா; அல்லது, அதற்குப்பிரதியாக நான்
வேறொருதிராட்சத்தோட்டத்தை உனக்குத்தரு
வேனென்று கேட்டதற்கு, அவன் என்திராட்
சத்தோட்டத்தை உமக்குத் தரமாட்டேனென்
றுசொன்னானென்றான்.—அப்பொழுது அவன் ௭
மனைவியாகிய யெசேபேல், நீர் இப்பொழுது
இஸரவேலின் இராச்சியத்தை ஆளவில்லையா;

(௩௰௪) அதி.௰௫.௨௰ (௩௰௫) ௨.இரா.௨.௩,௫,௭,௰௫. அதி ௰௩.௰௭,௰௮. (௩௰௬) அதி.௰௩.௨௪. (௩௰௯) ௨.சாமு.௰௨. ௨.இரா.௰.௨௪. (௪௰௨) அதி.௨௨.௩௰௧—௩௰௭. (௪௰௩) அதி.௨௧.௪.—(௨௧. அதி. ௨) ௧.சாமு.௮.௰௪. (௩) லேவி.௨௫. ௨௩. எண்.௩௰௬.௭. எசேக்.௪௬.௰௮.

நீர் எழுந்து போசனம்பண்ணி, மனமகிழ்ச்சி
யாயிரும்: யெஸரியேலனாகிய நாபோத்தின் தி
ராட்சத்தோட்டத்தை நான் உமக்குத்தருவேனெ
அ ன்றாள்.—பின்பு அவள் ஆகாப்பின்பேரால் பத்
திரங்களை எழுதி, அவைகளுக்கு அவன்முத்தி
ரையுமிட்டு,நாபோத்தின் நகரத்தில் அவனுடன்
வசிக்கிற முதியோருக்கும் பிரபுகளுக்கும் அப்
க பத்திரங்களை யனுப்பினாள்.—அந்தப்பத்திரங்க
ளில் அவள், நீங்கள் ஒரு உபவாசம்பிரசித்தப்
படுத்தி, சனங்களுக்குள்ளே நாபோத்தை உயர
ய இருத்தி,—பேலியாலின் மக்களிருவரை, நீ தே
வனையும் இராசாவையும் தூஷணம் பண்ணினா
யென்று, அவனுக்குவிரோதமாய்ச்சாட்சிசொல்
லும்படி அவனுக்குமுன்நிறுத்தி, பின்பு அவனை
வெளியே கொண்டுபோய், சாகும்படி அவனுக்
குக் கல்லெறியுங்களென்று எழுதியிருந்தாள்.—
யக அவனுடைய நகரத்தில் வசிக்கிற முதியோரும்,
பிரபுகளுமாகிய நகரத்தார், யெசேபேல் தங்க
ளுக்குச்சொல்லியனுப்பினபடிக்கும்,அவள் தங்
களுக்கு அனுப்பின பத்திரங்களில் எழுதியிருந்
யஉ தபடிக்கும்,—ஒரு உபவாசம் பிரசித்தம்பண்ணி,
சனங்களுக்குள்ளே நாபோத்தை உயர இருத்தி
யங னார்கள்.—அப்பொழுது பேலியாலின் மக்கள் இ
ருவர்வந்து, அவனுக்குமுன்னிருந்தார்கள்: பின்
பு அந்தப்பேலியாலின் மக்கள் சனங்களுக்கு
முன்,நாபோத்,தேவனையும்இராசாவையுந்தூஷ
ணம்பண்ணினானென்று, நாபோத்துக்கு விரோ
தமாகச்சாட்சிசொன்னார்கள்.அதினால் அவர்கள்
அவனை நகரத்துக்கு வெளியேகொண்டுபோய்,
யச சாகும்படி கல்லெறிந்தார்கள்.—பின்பு அவர்கள்
நாபோத் கல்லெறியுண்டு இறந்தானென்று, யெ
சேபேலுக்குச்சொல்லச்சொன்னார்கள்.
யரு யெசேபேல் நாபோத் கல்லெறியுண்டு இறந்
துபோனானென்று கேள்விப்பட்டபொழுது, அ
வள் ஆகாப்பைநோக்கி, எழுந்திரும், நாபோத்
இல்லை,இறந்துபோனான்,யெஸரியேலனாகியநா
போத் கிரயத்துக்குத்தரமாட்டேனென்று மறுத்த
திராட்சத்தோட்டத்தைச் சுதந்தரித்துக்கொள்ளு
யசு மென்றாள்.—நாபோத் இறந்துபோனானென்று
ஆகாப் கேள்விப்பட்டவுடனே, யெஸரியேல
னாகிய நாபோத்தின் திராட்சத்தோட்டத்தைச்
சுதந்தரித்துக்கொள்ளும்படி எழுந்து புறப்பட்
டான்.
யஎ திஷ்பியனாகிய இலீசாவுக்குக்கிடைத்த யெ
யஅ கோவாவின்வாக்கு,—ஷமாரியாவிலிருக்கிற
இஸரவேலரின் இராசாவாகிய ஆகாப்,நாபோத்
தின் திராட்சத்தோட்டத்தைச்சுதந்தரித்துக்கொ
ள்ளும்படி அங்கே போயிருக்கிறான்; நீ எழுந்
யகூ துபோய், அவனைச்சந்தித்து,—அவனைநோக்கி,
நீ கொலைசெய்து, சுதந்தரித்தாயாவென்று யெ
கோவா சொல்லுகிறாரென்று சொல்லு; இன்
னும் நீ அவனைநோக்கி, நாய்கள் நாபோத்தின்
இரத்தத்தைநக்கினதுபோல,உன் இரத்தத்தையும்
நாய்கள் நக்குமென்று யெகோவா சொல்லு
கிறாரென்றும் சொல்வாயென்றுசொல்லிற்று.—
ஆகாப் இலீசாவை நோக்கி, என் சத்துருவே, நீ உய
என்னைக் கண்டுபிடித்தாயாவென்று சொல்ல,
இவன், நான் உன்னைக் கண்டுபிடித்தேன்: யெ
கோவாவின்பார்வைக்குத் தீங்குசெய்யும்படி
உன்னை நீயே விற்றுப்போட்டாய்.-பார், நான் உக
உன்மேல் தீங்கைவருவித்து, உன்சந்ததியைஒழி
யப்பண்ணி, ஆகாப்பின் வமிசத்தில் ஒவ்வொரு
புருஷனையும், இஸரவேலருக்குள் அடைபட்ட
வனையும் விடுபட்டவனையுஞ் சேதித்துவிடுவே
ன்.—நீ என்னைக்கோபப்படுத்தி,இஸரவேலரைப் உஉ
பாவஞ்செய்யப்பண்ணினதினிமித்தம், உன் வ
மிசத்தை நெபாத்தின் புத்திரனாகிய யெரொபே
யாமின் வமிசம்போலவும், அகியாவின் புத்திர
னாகிய பாஷாவின் வமிசம்போலவுமாக்குவே
னென்றும்,—யெஸரியேலின் மதிலருகே யெசே உங
பேலை நாய்கள்தின்னுமென்றும் யெசேபேலைக்
குறித்து,யெகோவா சொல்லியிருக்கிறார்.—
ஆகாப்பின் வமிசத்துக்குள் நகரத்தில் சாகிறவ உச
னை நாய்கள்தின்னும்; வெளியிலே சாகிறவனை
ஆகாயத்துப்பறவைகள் தின்னுமென்றான்.
தன்மனைவியாகியயெசேபேலினால்ஏவப்பட் உரு
டு, யெகோவாவின் பார்வைக்குத்தீங்குசெய்
வதற்குத் தன்னைத்தான் விற்ற ஆகாப்புக்கொப்
பானவன் ஒருவனுமில்லை.—யெகோவா இஸ உசு
ரவேல் சந்ததியார் முன்னின்றுந் துரத்திவிட்ட
எமோரியர் செய்த யாவற்றின்படிக்கும், அவன்
விக்கிரகங்களைப்பின்பற்றி, மிகவும் அருவருப்
பானவைகளைச் செய்துவந்தான்.—ஆகாப் அவ் உஎ
வாக்குகளைக்கேட்டபொழுது, தன் வஸ்திரங்க
ளைக்கிழித்து, தன் சரீரத்தின்மேல் இரட்டைப்
போர்த்துக்கொண்டு உபவாசஞ்செய்து, இரட்
டிலேபடுத்து, அயர்ச்சியாய் நடந்தான்.—ஆகாப் உஅ
எனக்குமுன்பாகத் தன்னைத்தாழ்த்துகிறானே, நீ
அதைக்கண்டாயா; அவன் எனக்குமுன்பாகத்
தன்னைத் தாழ்த்துகிறபடியால், நான் அந்தத்தீங்
கை அவன்காலத்திலே வருவியாமல், அவன் புத்
திரருடைய காலத்தில் அந்தத்தீங்கை வருவிப்
பேன்: அவன் வமிசத்தின்மேல் வருவிப்பே
னென்று,—யெகோவாவின் வாக்குத்திஷ்பி உகூ
யனாகிய இலீசாவுக்குக்கிடைத்தது.

## உஉ. அதிகாரம்.

க. ஆகாப் கள்ளத்தீர்க்கதரிசிகளினால் வஞ்சிக்கப்பட்டு மீகாயாவின் வாக்கின்படி ராமொத்கிலியாத்திலே அதமாதல்: ஙஎ. நாய்கள் அவன் இரத்தத்தை நக்கல். அகஸ்யா அவனுக்குப்பின் அரசனாதல்: சக. யோஷாபாத் நன்றாய் அரசாளல்: சரு. அவன் கிரியைகளை விவரித்தல்: ருய. யெ

(ய)யாத்.உஉ.உஅ.லேவி.உச.யரு,யசு.அப்.கூ.யக.லேவி.உச.யச.(யஉ)ஏசா.ருஅ.ச.(யங)உ.இரா.க.உசு.(யஎ)அதி.யங.ஙஉ.உ.நாளா.உஉ.க.(யக)சங்.க.யஉ.அதி.உஉ.ஙஅ.(உய)அதி.யஅ.யஎ. உ.இரா.யஎ.யஎ.ரோ.எ.யச.(உக)அதி.யச.ய. உ.இரா.கூ.அ.(உஉ)அதி.யரு.உக. அதி.யசு.ஙயக. உ.இரா.க.ஙசு. (உச) அதி.யச.யக. (உரு) அதி.யசு.ஙய. அதி.யசு.ஙக.(உசு)ஆதி.யரு.யசு. உ.இரா.உக.யக. (உஎ) ஆதி.ஙஎ.ஙச. (உஅ) உ.இரா.க.உரு.—(உஉ. அதி.)

கோராம் அவனுக்குப்பின் அரசனாதல்: ௫௧. அ
கஸ்யா தீமையாய் அரசாளல்.

ஷீரியருக்கும் இஸரவேலருக்கும் மூன்றுவரு
௨ ஷம் யுத்தமில்லாமல் இருந்தது.—மூன்றாம்வரு
ஷத்தில் யூதாதேசத்தின் இராசாவாகிய யோஷா
பாத் இஸரவேலரின் இராசாவிடத்தில் புறப்
௩ பட்டுவந்தான்.—இஸரவேலரின் இராசா தன்
தாசரைநோக்கி, கிலியாத்திலுள்ள ராமொத் நம்
முடையதென்று அறியீர்களா; ஆனாலும் நாம் ஷீ
ரிய இராசாவின் கையினின்று அதைப்பிடித்
துக்கொள்ளாமல், பேசாமலிருக்கிறோமேயென்
௪ றான்.—பின்பு அவன் யோஷாபாத்தைநோக்கி,
யுத்தஞ்செய்யும்படி ராமொத் கிலியாத்துக்கு, நீர்
என்னுடன் வருவீராவென்றுகேட்க, யோஷா
பாத் இஸரவேலின் இராசாவைநோக்கி, நானே
நீர், என்சனங்கள் உம்முடையசனங்கள்,என்கு
௫ திரைகள்உம்முடையகுதிரைகளென்றான்.-பின்
னும் யோஷாபாத்இஸரவேலரின்இராசாவுடன்
இன்றைக்கு யெகோவாவின் வாக்கு இன்ன
௬ தென்று கேட்டறியுமென்றான்.—அப்பொழுது
இஸரவேலரின் இராசா ஏறக்குறைய நானூறு
தீர்க்கதரிசிகளைக் கூடிவரச்செய்து, அவர்களை
நோக்கி, நான் ராமொத் கிலியாத்துக்கு விரோ
தமாய் யுத்தஞ்செய்யப்போகிறதுதகுதியா, பொ
றுத்திருக்கிறதுதகுதியாவென்றுகேட்க, போம்;
யெகோவா அதை இராசாவின்கையில் ஒப்
௭ பித்துப்போடுவாரென்றார்கள்.-பின்பு யோஷா
பாத் இவர்களேயன்றி, இங்கே யெகோவா
வின் தீர்க்கதரிசி வேறில்லையா; அவனிடத்திற்
௮ கேட்டறியவேண்டுமென்றான்.-அதற்கு இஸர
வேலின் இராசா யோஷாபாத்தைநோக்கி, இன்
னும் இம்லாவின் புத்திரனாகிய மீகாயாவென்
று ஒருவனிருக்கிறான், அவனைக்கொண்டு யெ
கோவாவிடத்திற் கேட்டறியலாம்: ஆனாலும்
அவன் என்னைக்குறித்துத்தீமையேயன்றி, நன்
மையைச்சொல்லுகிறதில்லை: அதினாலே நான்
அவனை வெறுக்கிறேனென்று சொல்ல, யோ
ஷாபாத் இராசா அப்படிச்சொல்லவேண்டா
௯ மென்றான்.-அப்பொழுது இஸரவேலரின் இரா
சாபிரதானி ஒருவனைக்கூப்பிட்டு, இம்லாவின்
புத்திரனாகிய மீகாயாவைவிரைவில் அழைத்து
௰ வாவென்றான்.—இஸரவேலரின் இராசாவும் யூ
தாதேசத்தின் இராசாவாகிய யோஷாபாத்தும்
தங்கள்தங்கள் வஸ்திரங்களைத்தரித்துக்கொண்டு,
ஷமாரியாவின் வாசலுக்குச்சமீபத்திலுள்ள சம
மானஸ்தானத்திலே தங்கள்தங்கள்ஆசனங்களில்
வீற்றிருந்தார்கள்; தீர்க்கதரிசிகளெல்லாரும் அ
வர்கள் சமுகத்தில் தீர்க்கதரிசனஞ் சொன்னார்
௰௧ கள்.—கினானாவின்புத்திரனாகிய சிதிகியா இ
ருப்புக்கொம்புகளையுண்டாக்கி, இவைகளினால்
நீர் ஷீரியரை நாசமாக்கும்வரைக்கும், முட்டிப்
போடுவீரென்று யெகோவா சொல்லுகிறா
ரென்றான்.—அப்படியே தீர்க்கதரிசிகள் சமஸ்த ௰௨
ரும், நீர் ராமொத்கிலியாத்துக்குப்போம்,அனுகூ
லமாவதாக: யெகோவா அதை இராசாவின்
கையில்ஒப்பிப்பாரென்றுதீர்க்கதரிசனஞ்சொன்
னார்கள்.—மீகாயாவை அழைக்கப்போன தூதன் ௰௩
அவனிடத்தில், கேளும், தீர்க்கதரிசிகளின்வாக்
குகள் ஒருமித்து இராசாவுக்கு நன்மையைச்
சொல்லுகின்றன: உம்முடையவாக்கும் அவர்க
ளில் ஒருவன்வாக்குப்போலாவதாக, நீர்நன்மை
யையேசொல்லுமென்றுசொல்ல,—மீகாயா, யெ ௰௪
கோவா நித்தியரானால், யெகோவா எனக்
குச்சொல்வதை நான்சொல்வேனென்றான்.

பின்பு அவன் இராசாவிடத்தில்வர, இராசாஅ ௰௫
வனைநோக்கி, மீகாயாவே, நாங்கள்ராமொத்கிலி
யாத்துக்குவிரோதமாகப்போகவேண்டுமா; போ
காமற் பொறுத்திருக்கவேண்டுமாவென்று கேட்
டான். அதற்கவன், போம், உமக்குஅனுகூலமா
வதாக: யெகோவாஅதைஇராசாவின்கையில்
ஒப்பிப்பாரென்றான்.—இராசாஅவனைநோக்கி, நீ ௰௬
யெகோவாவின்பேரால்எனக்குஉண்மையே
யன்றிவேறொன்றுஞ் சொல்லாதபடிக்கு, நான்
எத்தனைதரம்உன்னைஆணையிடுவிக்கவேண்டுமெ
ன்றுசொல்ல,-இவன், மேய்ப்பன்இல்லாதஆடுக ௰௭
ளைப்போல, இஸரவேலரனைவரும் மலைகளின்
மேல்சிதறுண்டதைக்கண்டேன்: அப்பொழுது
யெகோவா இவர்களுக்குஆண்டவனில்லை:இ
வர்கள்யாவருந் தங்கள்தங்கள்வீட்டுக்குச்சுகமே
திரும்பிவிடட்டுமென்று சொன்னாரென்றான்.—
அப்பொழுது இஸரவேலரின் இராசா யோஷா ௰௮
பாத்தைநோக்கி, இவன்என்னைக்குறித்துத்தீமை
யேயன்றி, நன்மை தீர்க்கதரிசனம் சொல்லுகிற
தில்லையென்று நான் உமக்குச் சொல்லவில்லை
யாவென்றான்.—பின்பு இவன், யெகோவா ௰௯
வின் வாக்கைக்கேளும், நான், யெகோவா
தமது ஆசனத்தில் வீற்றிருக்க, அவர் சமீபத்
தில் அவர் வலப்புறத்திலும் அவர் இடப்புறத்தி
லும் வானத்தின் சகல சேனைகளும் நிற்கக்கண்
டேன்.—அப்பொழுது யெகோவா, ஆகாப், ௨௰
ராமொத் கிலியாத்துக்குப்போய், அங்கேமாளும்
படி அவனை ஏவுகிறவன்யாவனென்று கேட்க,
ஒருவன் ஒருவிதமாகவும், ஒருவன் மறுவிதமா
கவுஞ் சொன்னார்கள்.—பின்பு ஒரு ஆவிவந்து ௨௧
யெகோவாவுக்கு முன்னின்று, நான் அவ
னை ஏவுவேனென்றது.—அதற்கு யெகோ ௨௨
வா அதைநோக்கி,எப்படியென்றுகேட்க,அது,
நான்போய் அவனுடைய சகல தீர்க்கதரிசிக
ளின்வாயிலும்பொய்பிறப்பிக்கும்ஆவியாயிருப்
பேனென்றது. அதற்கு அவர், நீ அவனை ஏவி,
மேற்கொள்ளுவாய்: நீ புறப்பட்டுப்போ, அப்ப
டிச்செய்யென்றார்.—கேளும், இப்பொழுது யெ ௨௩
கோவா இந்தச்சகல தீர்க்கதரிசிகளின் வாயி
லும்பொய்பிறப்பிக்கும் ஆவியையிட்டார், யெ

(௨) ௨.நாளா.௰௮.௨,. (௩) உபா.௪.௪௩. (௪) ௨.இரா.௩.௭. (௬) அதி.௰௮.௰௯. ௨.இரா.௩.௰௧. (௰௪) எண்.௨௨.௩௮. (௰௭) மத்.௯.௩௬. (௰௯) ஏசா.௬.௧. தானி.௭.௯. யோபு.௧.௬. யோபு.௨.௧. சங்.௱௩.௨௰,௨௧. தானி.௭.௰. சக.௧.௰. மத்.௰௮.௰. எபி.௧.௭,௰௪. (௨௨) நியா.௯.௨௩. யோபு.௰௨.௰௬. எசேக்.௰௪.௯. ௨.தெச.௨.௰௧. (௨௩) எசேக்.௰௪.௯.

கோவா உம்மைக்குறித்துத்தீமையாகியவாக்கு
உச ச்சொன்னரென்றான்.—அப்பொழுது கினானு
வின் புத்திரனாகிய சிதிகியா சமீபித்துப்போய்,
கன்னத்தில்அடித்து,யெகோவாவின்ஆவிஉன்
னுடன்பேசும்படி எந்தவழியாய் என்னைவிட்டு
உரு வந்ததென்றான்.—அதற்கு மீகாயா, நீ ஒளித்துக்
கொள்ளும்படி ஒரு அந்தரங்கமான அறையிற்
பிரவேசிக்கும் அத்தினத்தில் அறிந்துகொள்ளு
உசு வாயென்றான்.—அப்பொழுது இஸரவேலரின்இ
ராசா மீகாயாவைப்பிடித்து, நகரத்தின் அதிபதி
யாகிய அம்மோனிடத்திலும்,இராசாவின்புத்திர
னாகியயோவாஷிடத்திலுங்கொண்டுபோய்விட்
உஎ டு,—இவனைச் சிறைச்சாலையிலேவைத்து, நான்
சுகமேதிரும்பிவரும்வரைக்கும் இவனுக்குத்துக்
கத்தின் அப்பமும்துக்கத்தின்சலமுங்கொடுத்து,
ஆதரித்துக்கொள்ளுங்களென்று, இராசாசொல்
உஅ லுகிறாரென்றுசொல்லுங்களென்றான்.—அதனால்
மீகாயா, நீர் எவ்விதமும் சுகமேதிரும்பிவந்தால்,
யெகோவா என்னைக்கொண்டு வாக்கிடவில்
லையென்றான். மேலும் அவன் சனங்களே, நீங்
கள் ஒவ்வொருவரும் கேளுங்களென்றான்.—
உகூ பின்பு இஸரவேலரின் இராசாவும் யூதாதேசத்து
இராசாவாகிய யோஷாபாத்தும் ராமொத் கிலி
கூய யாத்துக்குப் புறப்பட்டுப்போகையில்,—இஸர
வேலின் இராசா யோஷாபாத்தைநோக்கி, நான்
வேஷமாறி, யுத்தத்திற் பிரவேசிப்பேன்; நீரோ
உமது இராசரிக்கவஸ்திரங்களைத்தரித்துக்கொள்
ளுமென்றான். அப்பால் இஸரவேலரின் இரா
சா வேஷமாறி யுத்தத்திற் பிரவேசித்தான்.—
கூக ஊரியாவின் இராசா தன் ரதங்களுக்கதிபதியா
கிய முப்பத்திரண்டு சேனாபதிகளைநோக்கி, நீங்
கள் இஸரவேலரின் இராசாவுடனே மாத்திர
மன்றி, மற்றச் சிறியோர் பெரியோருடன் யுத்
தஞ்செய்ய வேண்டாமென்று கட்டளையிட்டி
கூஉ ருந்தான்.—இரதங்களுக்கதிபதிகள் யோஷாபாத்
தைக்கண்டபொழுது, நிச்சயமாய் இவனே இஸ
ரவேலின் இராசாவென்றுசொல்லி, அவனை எ
திர்த்து யுத்தஞ்செய்யும்படி சாய்ந்துபோக, யோ
கூகூ ஷாபாத் குரலிட்டான்.—இரதங்களின் அதிப
திகள் அவன் இஸரவேலரின் இராசா அல்ல
வென்று கண்டபொழுது, அவனைத்தொடரா
கூச மல் திரும்பினார்கள்.—ஒருவன் இலக்குக்குறி
யாமல், தன் வில்லை நாணேற்றி எய்ய, அது
இஸரவேலின் இராசாவுக்கு, கவசமிட்ட சந்து
களுக்கிடையேபட்டது: அதினால் அவன் தன்
சாரதியை நோக்கி, எனக்குக்காயம்பட்டது;
நீ உன்கையைத்திருப்பி, சேனைகளுக்கப்பால்
கூரு என்னைக்கொண்டுபோய் விடென்றான்.—அன்
றைத்தினம் யுத்தம் அதிகரித்தது: இராசா ஊரி
யருக்கு விரோதமாய்த்தன் ரதத்திலே தரித்தான்,
சாயங்காலம் அவன் இறந்துபோனான்: அந்தக்
காயத்தின் இரத்தம் ரதத்துக்குள்ளே வடிந்தது.—
சூரியன் அஸ்தமனமாகிறபொழுது, ஒவ்வொரு கூசு
வருந் தங்கள் தங்கள் தேசத்துக்குப் போகலா
மென்று சமஸ்தசேனைகளுக்கும் பிரசித்தம்பண்
ணப்பட்டது.

இராசா இறந்தபின்பு ஷமாரியாவுக்குக்கொ கூஎ
ண்டுபோகப்பட்டான்; இராசாவை அவர்கள்
ஷமாரியாவில் அடக்கம்பண்ணினார்கள்.—அந் கூஅ
தரதம் ஷமாரியாவின் குளத்திலே கழுவப்படு
கையில்,யெகோவாசொல்லியிருந்தவாக்கின்
படி, நாய்கள் அவனுடைய இரத்தத்தை நக்கின:
அவன்கவசத்தையுந்தோய்த்தார்கள்.—ஆகாப்பின் கூகூ
மற்றக்கிரியைகளும், அவன் செய்தயாவும், அ
வன்யானைத்தந்தத்தால் வீடுகட்டினதும், பலநக
ரங்களைக்கட்டினதும், இஸரவேலின் இராசாக்
களின் சரித்திர புத்தகத்திலல்லவா எழுதியிருக்
கின்றன.—ஆகாப் தன்முன்னோருடன் மகாநித் சய
திரையடைந்தான்; அவனுக்குப்பின் அவன்புத்
திரனாகிய அகஸ்யா அரசாண்டான்.

ஆசாவின் புத்திரனாகிய யோஷாபாத், இஸர சக
வேலின் இராசாவாகிய ஆகாப் அரசாண்ட நா
லாம் வருஷத்தில் யூதாதேசத்துக்கு இராசாவா
னான்.—யோஷாபாத் அரசாளத்தொடங்கினபொ சஉ
ழுது, அவனுக்கு முப்பத்தைந்து வயது; அவன்
யெரூஷலேமில் இருபத்தைந்து வருஷம் அர
சாண்டான். ஷில்லீயின் புத்திரனாகிய அவன்
மாதாவின்பேர் அசூபாள்.—அவன்தன் பிதாவா சகூ
கிய ஆசாவின் எல்லாநெறிகளிலும் நடந்தான்;
அவன் அதைவிட்டுவிலகாமல், யெகோவா
வின் பார்வைக்கு நலமானதைச்செய்தான்: ஆ
னாலும் உயர்ந்தஸ்தானங்கள் நீக்கப்படவில்லை; ச
னங்கள்பின்னும் உயர்ந்தஸ்தானங்களிலே பலி
யிட்டுத்தூபங்காட்டிவந்தார்கள்.—யோஷாபாத் சச
இஸரவேலின் இராசாவுடன் சந்திசெய்தான்.—
யோஷாபாத்தின் மற்றக்கிரியைகளும், அவன் சரு
காட்டியபராக்கிரமமும், அவன் நடப்பித்தயுத்த
மும்,யூதாதேசத்து இராசாக்களின் சரித்திரபுத்த
கத்திலல்லவா எழுதியிருக்கின்றன.—அவன் தன் சசு
பிதாவாகிய ஆசாவின்காலத்திலேமீந்திருந்தசோ
தோமியரைத் தேசத்தினின்று அகற்றிப்போட்
டான்.—அக்காலத்தில் ஏதோமிலே இராசாவில் சஎ
லை: பிரதியாக ஒருவன் அரசாண்டான்.—யோ சஅ
ஷாபாத் பொன்னுக்காக ஒப்பீருக்குப்போகும்
படி தர்ஷீஷின் கப்பல்களைச்செய்தான்: அந்தக்
கப்பல்கள் போகவில்லை; அவைகள் எத்சே
யோன்கேபெரிலே உடைந்துபோயின.—ஆகாப் சகூ
பின் புத்திரனாகிய அகஸ்யா யோஷாபாத்தை
நோக்கி, கப்பல்களில் என் பணிவிடைக்காரர்
உமதுபணிவிடைக்காரருடன் போகவிடுமென்

(உச) உ.நாளா.யஅ.உகூ. (உசு) அதி.உய.கூய. (உஅ) எண்.யசு.உக. உபா.யஅ.உய,உக,உஉ. (கூய) உ.நாளா.கூரு.
உஉ. (கூஉ) உ.நாளா.யஅ.கூக. நீதி.யகூ.உய. (கூச) உ.சாமு.யரு.யக. (கூஅ) அதி.உக.யகூ. (கூகூ) ஆமோ.கூ.யரு.(சக)
உ.நாளா.உய.கூக. (சகூ) உ.நாளா.யஎ.கூ. அதி.யச.உகூ. உ.இரா.யஉ.கூ. (சச) உ.நாளா.யகூ.உ. உ.கொரி.சு.யச.
(சசு) அதி.யச.உச. (சஎ) ஆதி.உரு.உகூ. உ.சாமு.அ.யச. உ.இரா.கூ.கூ. (சஅ) உ.நாளா.உய.கூரு. அதி.ய.உஉ.
உ.நாளா.உய.கூஎ. அதி.கூ.உசு.

ரூன். அதற்கு யோஷாபாத் சம்மதிக்கவில்லை.
௫௰ யோஷாபாத் தன் பிதாக்களுடன் மகா நித்தி
ரையடைந்து, தன் பிதாவாகிய தாவீதின் நகரத்
திலே தன் முன்னோருடன் அடக்கம்பண்ணப்
பட்டான்: அவனுக்குப் பின்பு அவன் புத்திர
னாகிய யெகோராம் அரசாண்டான்.
௫௧ ஆகாப்பின் புத்திரனாகிய அகஸ்யா, யூதாதே
சத்து இராசாவாகிய யோஷாபாத் அரசாண்ட
பதினேழாம் வருஷத்தில் ஷமாரியாவில் இஸர
வேலருக்கு இராசாவாகி, இஸரவேலரை இர
ண்டுவருஷம் அரசாண்டான்.-அவன் யெகோ ௫௨
வாவின் பார்வைக்குத்தீங்குசெய்து, தன் பிதா
வின் வழியிலும், மாதாவின் வழியிலும், இஸர
வேலரைப் பாவஞ்செய்யப்பண்ணின நெபாத்
தின் புத்திரனாகிய யெரோபேயாமின் வழியி
லும் நடந்தான்.—அன்றியும் அவன் தன் பிதா ௫௩
செய்த யாவற்றின் படிக்கும் பாகாலைச் சேவித்
து, அவனுக்குப் பூசைசெய்து, இஸரவேலரின்
தேவனாகிய யெகோவாவைக்கோபப்படுத்
தினான்.

(௫௰) ௨.நாளா.௨௧.௧. (௫௧) வச.௪௰. (௫௨) அதி.௰௫.௨௬. (௫௩) நியா.௨.௨. அதி.௰௬.௩௧.

# இராசாக்களின் இரண்டாம் புத்தகம்.

## ௧. அதிகாரம்.

௧. அகஸ்யா வருத்தமாயிருந்தபொழுது தேவர்களிடத்தில்தூதரையனுப்ப, இலீசாவினுல் கண்டிக்கப்படல்: ௫. இலீசா அந்தத்தூதர்மேல் வானத்தினின்று அக்கினி வரப்பண்ணல்: ௰௩. அனுப்பப்பட்ட மூன்ருந்தளத்தார் காக்கப்படல்: ௰௭. அகஸ்யாசாதல்.

ஆகாப் மரணமடைந்தபின்பு, மோவாபியர் இ
ஸரவேலரின்ஆளுகையைத்தள்ளிவிட்டார்கள்.-
௨ அகஸ்யா ஷமாரியாவிலுள்ள தன் மேலறையி
னின்றும் பலகணிவழியாய் விழுந்து வருத்தமா
யிருந்தான்: அதினுல் அவன், நான் இந்தவருத்
தம் நீங்கிச்சொஸ்தமாவேனேவென்று எக்ரோ
னின்தேவனுகியபாகால்சிபூப்பிடத்திற்போய்க்
கேட்டறியுங்களென்று தூதரை அனுப்பினுன்.—
௩ யெகோவாவின் தூதனுனவர் திஷ்பியனுகிய
இலீசாவைநோக்கி, நீ எழுந்து ஷமாரியாவின்
இராசாவுடைய தூதர்களுக்கெதிர்ப்பட்டு, இஸ
ரவேலருக்குள் தேவனில்லையென்ரு, நீங்கள்
எக்ரோனின் தேவனுகிய பாகால்சிபூப்பிடத்
௪ தில் கேட்கப்போகிறீர்கள்.—நீ படுக்கும்படி ஏ
றின கட்டிலினின்றும் இறங்கமாட்டாய், நிச்சய
மாய் நீசாவாயென்று இப்பொழுது யெகோவா
சொல்லுகிருரென்பதை, அவர்களுக்குச் சொல்
லென்று சொல்ல; இலீசா புறப்பட்டான்.
௫ தூதர்கள் அவனிடத்தில் திரும்பிவந்தபொ
ழுது, இவன் அவர்களைநோக்கி, நீங்கள் திரும்
௬ பிவந்ததென்னவென்றுகேட்க,—அவர்கள் இவ
னைநோக்கி, ஒருமனுஷன் எங்களுக்கெதிர்ப்
பட்டுவந்து, நீங்கள் உங்களையனுப்பின இராசா
விடத்தில் திரும்பிப்போய் அவனைநோக்கி, இஸ
ரவேலருக்குள் தேவனில்லையென்ரு நீ எக்
ரோனின்தேவனுகிய பாகால்சிபூப்பிடத்தில் அ
னுப்புகிருய்;நீபடுக்கும்படிஏறினகட்டிலினின்
று இறங்கமாட்டாய்,நிச்சயமாய் நீசாவாயென்று
யெகோவாசொல்லுகிருரென்பதைச் சொல்
லுங்களென்று, எங்களிடத்தில் சொன்னுனென்
௭ ருர்கள்.—அப்பொழுது இவன் அவர்களை நோக்
கி,உங்களுக்கெதிர்ப்பட்டுவந்துஇவ்வாக்குகளை
உங்களுக்குச்சொல்லிய அந்தமனுஷன் எவ்வித
௮ மானவனென்றுகேட்க,—அவர்கள் இவனைநோக்
கி, அவன் ரோமமுள்ளவன், அரையிலே தோற்
கச்சுக்கட்டுகிறவனென்ருர்கள். அவனேதிஷ்பி
௯ யனுகிய இலீசாவென்ருன்.—பின்பு இராசா ஐம்
பதுபேருடனே அந்த ஐம்பதுபேருக்கதிபதியை
அவனிடத்தில் அனுப்பினுன். இவன் அவனி
டத்தில் போனபொழுது அவன் ஒரு மலையுச்சி
யிலிருந்தான். இவன் அவனைநோக்கி, தேவ
னுடைய தாசனே, இராசா உன்னைவரச்சொல்
லுகிருரென்றுசொல்ல,—இலீசா ஐம்பது பே ௰
ருக்கதிபதியைநோக்கி, நான் தேவனுடைய
தாசனுனல் வானத்தினின்றும் அக்கினியிறங்கி,
உன்னையும் உன் ஐம்பதுபேரையும் பட்சிப்ப
தாகவென்ருன். உடனே வானத்தினின்றும்அக்
கினியிறங்கி, அவனையும் அவன் ஐம்பதுபேரை
யும் பட்சித்தது.-திரும்பவும் அவன்வேறே ஐம் ௰௧
பதுபேருடனே அந்த ஐம்பதுபேருக்கதிபதியை
அவனிடத்தில் அனுப்பினுன். இவன் அவனை
நோக்கி, தேவனுடையதாசனே, இராசா உன்
னைவிரைவில் வரச்சொல்லுகிருரென்று சொல்
ல,-இலீசா அவர்களைநோக்கி, நான் தேவனு ௰௨
டைய தாசனுனல் வானத்தினின்றும் அக்கினி
யிறங்கி, உன்னையும் உன்ஐம்பதுபேரையும் பட்
சிப்பதாகவென்ருன். உடனே தேவனுடைய
அக்கினி வானத்தினின்று இறங்கி, அவனையும்
அவன் ஐம்பதுபேரையும்பட்சித்தது.
பின்னும் அவன் மூன்ருந்தரம் ஐம்பதுபேரு ௰௩
டனே அந்த ஐம்பதுபேருக்கதிபதியையும் அ
னுப்பினுன். இந்த மூன்ரும் ஐம்பதுபேருக்கதி
பதிபோய்ச்சேர்ந்து, இலீசாவின் முன்பாக மு
ழங்காற்படியிட்டு அவனைப்பிரார்த்தித்து, தேவ
னுடைய தாசனே, என்பிராணனும், உமது அடி
யாராகிய ஐம்பதுபேருடையபிராணனும் உமது
பார்வைக்கு அருமையாயிருக்கக்கடவன.—வா ௰௪
னத்தினின்றும் அக்கினியிறங்கி, முன்வந்த ஐம்
பதுபேருக்கு அதிபதிகளிருவரையும், அவரவர்
ஐம்பதுபேரையும் தகித்தது: இப்பொழுது என்
பிராணன் உமதுபார்வைக்கு அருமையாய் இ
ருப்பதாகவென்ருன்.-அப்பொழுது யெகோ ௰௫
வாவின்தூதன் இலீசாவைநோக்கி, இவனுடன்
போ: இவனுக்குப்பயப்படவேண்டாமென்ருர்.
அதினுல் அவன் எழுந்து இவனுடனே இராசா
விடத்திற்போய், அவனைநோக்கி,—இஸரவேல ௰௬
ருக்குள்ளே தேவனில்லையென்ரு, எக்ரோனின்
தேவனுகிய பாகால்சிபூப்பிடத்தில் கேட்கும்ப
டி தூதரையனுப்பினுய்; ஆதலால் நீ படுக்கும்ப
டி ஏறின கட்டிலினின்றும் இறங்கமாட்டாய்,
நிச்சயமாய் நீ சாவாயென்று யெகோவாசொ
ல்லுகிருரென்ருன்.
இலீசாசொன்ன யெகோவாவுடையவாக் ௰௭
கின்படியே அவன் இறந்துபோனுன். அவனுக்
குப்புத்திரனில்லாதபடியால், அவனுக்குப் பின்
புயூதாதேசத்து இராசாவாகிய யோஷாபாத்தின்
புத்திரனுனயெகோராம் அரசாண்ட இரண்டாம்

(௧. அதி. ௧.) ௨.சாமு.௮.௨. அதி ௩.௫. ௧.சாமு.௫.௰. (௮) ௪௧.௰௩.௪. மத்.௩.௪. (௰) லூக்.௯.௫௪. (௰௩) ௧.சாமு. ௨௬.௨௧. சங்.௭௨.௰௪. (௰௭) அதி.௩.௧.

௰௮ வருஷத்தில் யெகோராம் இராசாவானான்.—அக
ஸ்யா செய்த மற்றக்கிரியைகள் இஸரவேலரின்
இராசாக்களுடைய சரித்திர புத்தகத்திலல்லவா
எழுதியிருக்கின்றன.

## ௨. அதிகாரம்.

௧. இலீசாவும் இலீஷாவும்யாத்திரைசெய்தல். நதி கடக்கல்: ௯. சம்பாஷித்தபின்பு இலீசாவான மேறல்: ௰௨. இலீஷாதிரும்பிவந்து நதியைக் கடத்தல்: தீர்க்கதரிசிகளிடத்தில்மேன்மைபெறல்: ௰௬. வாலிபதீர்க்கதரிசிகள் இலீசாவைத் தேடியுங்காணாதிருத்தல்:௰௯. இலீஷாஉப்பைக் கொண்டு சவர்நீரைச்சீர்ப்படுத்தல்: ௨௩. இலீஷாவைப்பரிகாசம் பண்ணினவர்களைக் கரடி கீறல்.

பின்பு யெகோவா இலீசாவைச்சுழல்காற்றி
னாலேவானத்துக்கு எடுத்துக்கொள்ளுமுன்,இலீ
சா இலீஷாவுடன்கில்காலினின்றுபுறப்பட்டுப்
௨ போனான்.—அப்பொழுது இலீசா இலீஷாவை
நோக்கி, யெகோவா என்னைப்பெத்தேலுக்
கனுப்புகிறார், நீ இங்கே தரிக்கவேண்டுமென்று
சொல்ல, இலீஷா, நான் உம்மைவிட்டுப்பிரிய
மாட்டேனென்று நித்திய யெகோவாவைக்
கொண்டும்,உமது ஆத்துமத்தைக்கொண்டுஞ்சொ
ல்லுகிறேனென்றான். அதினால் இருவரும்பெத்
௩ தேலுக்குப்போனார்கள்.—பெத்தேலிலே யிருந்த
தீர்க்கதரிசிகளின் சீஷர்கள் இலீஷாவிடத்தில்வ
ந்து,அவனைநோக்கி, இன்றைத்தினம் யெகோ
வா உனக்குத் தலையாகிய உன் ஆண்டவனை
எடுத்துக்கொள்ளுவார்; இது உனக்குத்தெரியு
மாவென்றுசொல்ல, எனக்குத் தெரியும்; நீங்
௪ கள் பேசாம லிருங்களென்றான்.—பின்பு இலீ
சா இவனைநோக்கி, இலீஷாவே, யெகோ
வா என்னை யெரீகோவுக்கு அனுப்புகிறார், நீ
இங்கே தங்கியிருக்கவேண்டுமென்றான்; அதற்
கு இவன், நான் உம்மைவிட்டுப் பிரியமாட்டே
னென்று நித்திய யெகோவாவைக்கொண்
டும், உமது பிராணனைக்கொண்டும் சொல்லுகி
றேனென்றான். அப்படியே அவர்கள் யெரீகோ
௫ வுக்குவந்தார்கள்.—யெரீகோவிலிருந்த தீர்க்கத
ரிசிகள் இலீஷாவிடத்தில்வந்து, அவனைநோக்
கி, இன்றைத்தினம் யெகோவா உனக்குத்
தலையாகிய உன் ஆண்டவனை எடுத்துக்கொள்ளு
வார்; இது உனக்குத்தெரியுமாவென்றுசொல்ல,
இவன், எனக்குத்தெரியும்; நீங்கள் ஒன்றும் பே
௬ சவேண்டாமென்றான்.—பின்பு இலீசா அவனை
நோக்கி, யெகோவா யோர்தானுக்கு என்னை
யனுப்புகிறார்; நீ இங்கே தரித்திருக்கவேண்டு
மென்றுசொல்ல, இவன், நான் உம்மைவிட்டுப்
பிரியமாட்டேனென்று நித்திய யெகோவா
வைக்கொண்டும்,உமதுபிராணனைக்கொண்டுஞ்
சொல்லுகிறேனென்றான். அதினால் அவர்கள்
௭ நடந்துபோனார்கள்.—தீர்க்கதரிசிகளின் சீஷருக்
குள் ஐம்பதுபேர் பார்க்கும்படிபோய் எதிர்ப்பு
றத்தில் தூரமாய் நின்றார்கள்: அவர்கள் யோர்
தான்கரையில் நிற்கையில்,—இலீசா தன்மேலங் ௮
கியை எடுத்துச்சுருட்டி, சலத்தையடிக்க, அது
இரண்டாய்ப்பிரிந்தது; அதினால் அவ்விருவரும்
உலர்ந்த தரைவழியாய்க்கடந்துபோனார்கள்.

அவர்கள் கடந்தபின்பு இலீசா இலீஷாவை ௯
நோக்கி, நான் உன்னைவிட்டெடுத்துக்கொள்ளப்
படுமுன்னே உனக்கென்ன செய்யவேண்டும்,
கேளென்றுசொல்ல, இலீஷா, உம்மிலுள்ளஆவி
எனக்கு இருமடங்காய்க் கிடைக்கவேண்டும்:
இதுவே என் பிரார்த்தனையென்றான்.—அதற்கு ௰
அவன் நீ கேட்டகாரியம் அரிது: நான் உன்னை
விட்டெடுத்துக்கொள்ளப்படுகிறபொழுதுநீஎன்
னைக்கண்டால், அது உனக்குக்கிடைக்கும்;இல்
லாவிட்டால் உனக்குக்கிடையாதென்றான்.—அ ௰௧
வர்கள் இப்படிச்சம்பாஷித்துக்கொண்டுநடந்து
போகையில், ஒரு அக்கினிஇரதமும், அக்கினிக்
குதிரைகளுந் தோன்றி அவர்களைப் பிரிவுபடுத்
த, இலீசா சுழல்காற்றினாலேவானத்துக்கு ஏறிப்
போனான்.

இலீஷா கண்டு, என்பிதாவே, என்பிதாவே, ௰௨
இஸரவேலரின் இரதமே, அவர்கள் குதிரைவீர
ரேயென்றான். பின்புஇவன் அவனைக்காணவில்
லை: இவன் தன்வஸ்திரங்களை எடுத்து இரண்டு
துண்டாகக் கிழித்துப் போட்டான்.—பின்பு ௰௩
இலீசாவினின்றும் விழுந்தமேலங்கியை எடுத்து
யோர்தானுக்குத் திரும்பிப்போய்க் கரையிலே
நின்றுகொண்டு,—இலீசாவினின்று விழுந்தமே ௰௪
லங்கியைப்பிடித்து, சலத்தை அடித்து, இலீசா
வின் தேவனாகிய யெகோவா எங்கேயென்
றான்; இவன்சலத்தை அடித்தமாத்திரத்தில், அது
இருபுறமும் ஒதுங்கிப்பிரிவுபட்டது: இலீஷா
கடந்துபோனான்.—யெரீகோவிலே நின்ற தீர்க்க ௰௫
தரிசிகளின் சீஷர்கள் அவனைக்கண்டவுடனே,
இலீசாவின் ஆவி இலீஷாவிடத்திலேதங்குகின்
றதென்றார்கள். பின்பு அவர்கள்வந்து அவனுக்
கெதிர்ப்பட்டு, அவனுக்குமுன்பாகப் பூமிக்கு
நேரே தாழ்ந்து வணங்கினார்கள்.

அவர்கள் அவனை நோக்கி, உமதடியாருடன் ௰௬
ஐம்பது பராக்கிரமசாலிகளிருக்கிறார்கள்; அவர்
கள் போய், உமது ஆண்டவனைத் தேடவிடும்:
யெகோவாவின் ஆவி அவரை எடுத்து, மலைக
ளில் ஒன்றிலாவது யாதொரு பள்ளத்திலாவது
கொண்டுபோய் எறிந்துவிட்டிருக்கவுங்கூடுமெ
ன்றுசொல்ல, அவன் நீங்கள் அனுப்பவேண்டா
மென்றான்.—அவர்கள் நெருக்கினதினால் அவன் ௰௭
வெட்கப்பட்டு அனுப்புங்களென்றான். அப்
பொழுது அவர்கள் ஐம்பதுபேரை அனுப்பினார்
கள்; இவர்கள் மூன்றுநாளாய்த் தேடிப்பார்த்தும்,
அவனைக்காணாமல் திரும்பி இவனிடத்தில் வந்
தார்கள்.—இவன் யெரீகோவிலிருந்தான்; இவன் ௰௮

(௨. அதி. ௧.) ஆதி.௫.௨௪. ௧.இரா.௰௯.௨௧. (௨) ரூத்.௧.௰௫,௰௬. ௨.சாமு.௧.௨௬. வச.௪,௬. அதி.௪.௩௰. (௩) ௧.இரா.௨௰.௩௫. (௮) யாத்.௰௪.௨௧. யோசு.௩.௰௬. வச.௰௪. (௰௧) அதி.௬.௰௭. சங்.௱௪.௪. (௰௨) அதி.௰௩.௰௪. (௰௪) வச.௮. (௰௫) வச.௭. (௰௬) ௧.இரா.௰௮.௰௨. எசேக்.௮.௩. அப்.௮.௩௯.

அவர்களைநோக்கி,போகவேண்டாமென்றுநான்
உங்களுக்குமுன்னமேசொல்லவில்லையாவென்
றான்.
௰௯ பின்பு அந்நகரத்திலுள்ள சனங்கள் இலீஷா
வைநோக்கி, இந்த நகரம் நிற்கிற ஸ்தானம் ரம்
மியமுள்ளது, அது எங்கள் ஆண்டவனுக்குத்தெ
ரியும்: ஆனாலும், நீர் சவர், நிலம்பாழ்நிலமென்
௨௰ றார்கள்.-அவன் ஒருபுதுத்தோண்டிகொண்டுவந்
து, அதிலே கொஞ்சம் உப்புப்போடுங்களென்
௨௧ றான். அவர்கள்கொண்டுவந்தார்கள்.—பின்புஅ
வன் புறப்பட்டு நீரூற்றினிடத்திற்போய், அதில்
உப்பைத்தெளித்து, இந்தச்சலத்தை நான் சுத்தி
செய்தேன்; இனி இதினால் மரணமும், நிலப்பா
ழும் உண்டாகாதென்று யெகோவாசொல்லு
௨௨ கிறாரென்றான்.-இலீஷாசொல்லியவாக்கின்படி
இந்நாள்வரைக்கும் அந்த நீர் நல்லநீராயிருக்கின்
றது.
௨௩ அவன் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டுப்
பெத்தேலுக்குப்போனான்: அவன் வழிநடந்து
போகையில், நகரத்திலிருந்து இளைஞர் சிலர் பு
றப்பட்டுவந்து, மொட்டைத்தலையனே, ஏறிப்
போ; மொட்டைத்தலையனே, ஏறிப்போவென்
௨௪ றுசொல்லி அவனைநிந்தித்தார்கள்.—அப்பொழு
துஅவன்திரும்பிஅவர்களைப்பார்த்து, யெகோ
வாவின் பேரால் அவர்களைச்சபித்தான். அப்
பொழுது காட்டிலிருந்து இரண்டுபெட்டைக்க
ரடிகள்வந்து, அவர்களில் நாற்பத்திரண்டு இளை
௨௫ ஞரைப்பீறிப்போட்டன.—அவன் அங்கேநின்
று புறப்பட்டுக் கர்மேல்மலைக்குப்போய், அங்கி
ருந்து ஷமாரியாவுக்குத் திரும்பினான்.

## ௩. அதிகாரம்.

௧. யெகோராம் ஆளுகைசெய்தல்: ௪. மேஷா ஆளுகையை விரோதித்தல்: ௬. யெகோராம், யோஷாபாத், ஏதோம் இராசா என்னுமிவர்கள்சலங்கிடையாதபடி கிலேசப்பட்டவேளையில் இலீஷாவால் சலத்தையும்,செயத்தைக்குறித்துவாக்குத்தத்தத்தையும்பெறல்: ௨௧. மோவாபியர்தோல்வியடைதல்: ௨௬. மோவாபு இராசா தன்புத்திரனைப்பலியிடல்.

யூதாதேசத்து இராசாவாகிய யோஷாபாத் அர
சாண்ட பதினெட்டாம் வருஷத்தில், ஆகாப்
பின் புத்திரனாகிய யெகோராம் ஷமாரியாவில்
இஸரவேலருக்கு இராசாவாகி, பன்னிரண்டுவ
௨ ருஷம் இராச்சியபரிபாலனஞ் செய்தான்.—அ
வன் யெகோவாவின் பார்வைக்குத் தீங்கு
செய்தும், தன் பிதா மாதாவைப்போல நடவா
மல், அவன் தன் பிதாவுண்டாக்கின பாகாலின்
௩ விக்கிரகத்தை அகற்றிவிட்டான்.—ஆகிலும் இ
ஸரவேலரைப் பாவஞ்செய்யப் பண்ணின யெ
ரோபெயாமின் பாவங்களைவிட்டு விலகாமல்,
அவைகளைச் சார்ந்துநடந்தான்.

மோவாபியரின் இராசாவாகிய மேஷா வெகு ௪
ஆடுமாடுகளையுடையவன், அவன்இஸரவேலின்
இராசாவுக்குஒருலட்சம் ஆட்டுக்குட்டிகளையும்,
ரோமமுள்ள ஒருலட்சம் ஆட்டுக்கடாக்களையும்
திறையாகக்கொடுத்துவந்தான்.—ஆகாப் மரண ௫
மடைந்தபின்பு மோவாபியரின்இராசாஇஸரவே
ல் இராசாவின் ஆளுகையைத் தள்ளிவிட்டான்.
அக்காலத்திலே யெகோராம் இராசா ஷமாரி ௬
யாவினின்றும் புறப்பட்டு, சமஸ்த இஸரவேல
ரையுந் தொகையிட்டான்.—அவன் போய் யூ ௭
தாதேசத்தின் இராசாவாகிய யோஷாபாத்திடத்
தில் ஆளனுப்பி, மோவாபியரின் இராசா என்
ஆளுகையைவிரோதித்தான்: ஆதலால் மோவா
புக்கு விரோதமாய் யுத்தஞ்செய்ய என்னுடன்
வருவீராவென்றுகேட்பித்தான்; அதற்கு இவன்
நான் வருவேன்: நானே நீர், என் சனங்களே
உம்முடையசனங்கள், என்குதிரைகளே உம்மு
டைய குதிரைகளென்றான்.—அவன் எந்த வழி ௮
யாய்ப் போவோமென்று கேட்க, இவன் ஏதோ
மின்வனாந்தரவழியாயென்றான்.-அதினால்இஸர ௯
வேலரின் இராசாவும், யூதாவின் இராசாவும், ஏ
தோமின் இராசாவும் சுற்றிப்போய் ஏழுநாள்பய
ணஞ்செய்தார்கள்: சேனைகளுக்கும், அவர்களு
டனேயிருந்த மிருகசீவன்களுக்கும் தண்ணீர்
கிடைக்கவில்லை.—இஸரவேலரின் இராசா, ஐ ௰
யோ, மோவாபியரின் கையில் ஒப்பிக்கும்படி
யெகோவா இந்த இராசாக்கள் மூன்றுபேரை
யுங்கூட்டிவந்தாரேயென்றான்.-யோஷாபாத்,யெ ௰௧
கோவாவின் தீர்க்கதரிசி ஒருவனுமில்லையா;
அவனைக்கொண்டு யெகோவாவிடத்திற் கே
ட்போமென்று சொல்ல, இஸரவேலருடையஇ
ராசாவின் பணிவிடைக்காரரில் ஒருவன், இலீ
சாவின்கையில்தண்ணீரூற்றின ஷாபாத்தின்புத்
திரனாகியஇலீஷா இங்கேஇருக்கிறானென்றான்.
யோஷாபாத் யெகோவாவின் வாக்கு அவ ௰௨
னிடத்திலிருக்கின்றதென்றான். இஸரவேலரி
ன் இராசாவும், யோஷாபாத்தும், ஏதோமின் இ
ராசாவும் அவனிடத்திற்போனார்கள்.—இலீஷா ௰௩
இஸரவேலரின் இராசாவைநோக்கி, எனக்கும்
உமக்குமென்ன உமதுபிதாவின் தீர்க்கதரிசிகளி
டத்திலும், உமது மாதாவின் தீர்க்கதரிசிகளிடத்
திலும்போமென்றான். இஸரவேலரின் இராசா
அவனைநோக்கி, அப்படியல்ல: மோவாபியரின்
கையில் ஒப்புக்கொடுக்கும்படி, இம்மூன்று இ
ராசாக்களையும் யெகோவா கூட்டிக்கொண்
டுவந்தாரென்றான்.—அதற்கு இலீஷா யூதாதேசத் ௰௪
தின் இராசாவாகிய யோஷாபாத்தின்முகத்தை
நான் பாராதிருந்தால், உம்மை நோக்கவுமாட்
டேன், பார்க்கவுமாட்டேனென்று, சேனைபதி
யாகிய நித்திய யெகோவாவை முன்னிட்டுச்
சொல்லுகிறேன்.-இப்பொழுதுசுரமண்டலவாத் ௰௫

(௨௧) யாத்.௰௫.௨௫. அதி.௪.௪௧. அதி.௬.௬. யோவா.௯.௬.—(௩. அதி. ௧.) அதி.௧.௭. (௨) ௧.இரா.௰௬.௩௧,௩௨. (௩) ௧.இரா.௰௨.௨௮,௩௧,௩௨. (௪) ஏசா.௰௬.௧. (௫) அதி.௧.௧. (௭) ௧.இரா.௨௨.௪. (௯) யாத்.௰௧.௮. (௰௧) ௧.இரா. ௨௨.௭. (௰௨) அதி.௨.௨௫. (௰௩) எசேக்.௰௪.௩. நியா.௰.௰௪. ரூத்.௧.௰௫. ௧.இரா.௰௮.௰௯. (௰௪) ௧.இரா.௰௭.௧. அதி.௫.௰௬. (௰௫) ௧.சாமு.௰.௫. எசேக்.௧.௧. எசேக்.௩.௰௪,௨௨. எசேக்.௮.௧.

தியகாரனை என்னிடத்தில் கொண்டுவாருங்க
ளென்றான். வாத்தியகாரன் வாசித்தபொழுது
யெகோவாவின்கரம் அவன்மேல்அமர்ந்தது.-
௰௬ அவன்,இந்தத்தாழ்ந்தபூமியிலெங்கும்வாய்க்கால்
களை வெட்டுங்களென்று யெகோவா சொல்
௰௭ லுகிறார்,—நீங்கள் காற்றைக்காணவுமாட்டீர்கள்,
மழையைக் காணவுமாட்டீர்கள்; ஆனாலும் நீங்
களும் உங்கள் ஆடுமாடுமுதலிய மிருகஜீவன்க
ளும் குடிக்கும்படி, இந்தத் தாழ்ந்தபூமி நீரினால்
நிரப்பப்படுமென்று யெகோவா சொல்லுகி
௰௮ றார்.—இது யெகோவாவின் பார்வைக்கு அற்
பகாரியம்: அவர் மோவாபியரை உங்கள்கையில்
௰௯ ஒப்பித்துவிடுவார்.—நீங்கள் அரணான ஒவ்வொரு
நகரத்தையும், ஒவ்வொரு உத்தம நகரத்தையுஞ்
சேதிப்பீர்கள், ஒவ்வொரு நல்லமரத்தையுந்தறிப்
பீர்கள், கிணறுகளெல்லாவற்றையும் தூர்ப்பீர்
கள், நல்ல நிலங்களையெல்லாம் கற்களால் நா
௨௰ சப்படுத்துவீர்களென்றான்.-மற்றைநாட்காலமே
போசனபலியிட்டபொழுது ஏதோமின்வழியா
ய்ச்சலம்வர, தேசம்சலத்தினால் நிறைந்தது.
௨௧ பின்பு இராசாக்கள் தங்களுக்கு விரோதமாய்
யுத்தஞ் செய்யவருகிறார்களென்று மோவாபியர்
எல்லாருங் கேள்விப் பட்டபொழுது, ஆயுதத்
தைத்தரிக்கச் சாமர்த்தியமுள்ளயாவரையும் அ
ழைப்பித்துவந்து, தேசத்தின் எல்லைகளிலேநின்
௨௨ றார்கள்.—அதிகாலையில் மோவாபியர் எழுந்த
பொழுது சூரியன் நீரின்மேல்பிரகாசித்ததினால்,
எதிர்ப்புறத்திலுள்ள அவர்களுக்கு நீர் இரத்தத்
௨௩ தைப் போலச் சிவப்பாய்த் தோன்றிற்று.—அதி
னால்அவர்கள்இது இரத்தம்: இராசாக்கள் ஒருவ
ரை ஒருவர் வதைத்ததினால் கொலையுண்டார்
கள்: ஆதலால் மோவாபியரே,கொள்ளையாடவா
௨௪ ருங்களென்றார்கள்.—அவர்கள் இஸரவேலின்பா
ளயத்தைச்சேர்ந்தபொழுது இஸரவேலர்எழுந்து
மோவாபியரை முறிய அடிக்க, அவர்கள் இவர்
கள் முன்னின்றுந் தப்பி ஓடினார்கள்: இவர்கள்
தொடர்ந்துபோய் மோவாபியரைத்தங்கள்தேசத்
௨௫ தில் முறிய அடித்தார்கள்.—அன்றியும் இவர்கள்
நகரங்களை யிடித்தார்கள், நிலத்தை ஒவ்வொரு
வரும் கல்லெறிந்து நிரப்பினார்கள்; கிணறுக
ளெல்லாவற்றையுந் தூர்த்தார்கள், நல்லமரங்கள்
யாவையும் தறித்தார்கள்: கீர்அராசேத்திலேமாத்
திரம் அதின் மதிலை இடியாமல் விட்டார்கள்;
ஆனாலும் கவண்காரர் அதைச் சுற்றிக்கொண்டு,
அதைச் சேதமாக்கினார்கள்.
௨௬ மோவாபிய இராசா யுத்தத்தைச்சகிப்பது அரி
தென்றுகண்டு, ஏதோமின் இராசாவிடத்தில்ப
லாற்காரமாய்த்தாண்டிப்போவதற்குக்கட்கத்தை
யுருவின எழுநூறுபேரைக் கூட்டிப்போனான்:
௨௭ ஆகிலும் அது முடியாமற்போயிற்று.—அப்பொ
ழுது அவன்தனக்குப்பின்இராசாபிஷேகத்தைப்
பெறத்தகும் தன்மூத்தமகனைப்பிடித்து மதிலின்
மேல் தகனபலியிட்டான். அதினால் இஸரவே
லர்மேல் மிகவும்குரோதமுண்டாயிற்று: அவர்
கள் அவனை விட்டுப்புறப்பட்டுத் தங்கள்தேசத்
துக்குத் திரும்பிவிட்டார்கள்.

## ௪. அதிகாரம்.

௧. விதவையின் எண்ணெயைப் பெருகச்செய்தல்: ௮. ஷூனேமிய ஸ்திரிக்குப் புத்திரபாக்கியங்கொடுத்தல்: ௰௮. புத்திரன்மரித்தபின்பு அவனை உயிர்ப்பித்தல்: ௩௮. கில்காலில் பிராணநாசஞ்செய்யுங்கூழின் விஷத்தைக்கெடுத்தல்: ௪௨. கொஞ்ச உணவினால் அநேகசனங்களைப் போஷிப்பித்தல்.

தீர்க்கதரிசிகளின் சீஷருடைய மனைவிகளி ௧
ல் ஒருத்தி இலீஷாவைநோக்கி, உமது அடியா
னாகிய என்புருஷன் இறந்துபோனான்; உமது
அடியான் யெகோவாவுக்குப்பயந்து நடந்தா
னென்பதுஉமக்குத்தெரியும்:கடன்தந்தவன்என்
புத்திரரிருவரையுந்தனக்கடிமைகளாக்கிக்கொள்
ளவருகிறானென்றுசொல்லிக்குரலிட்டழுதாள்.-
இலீஷா அவளைநோக்கி, நான் உனக்காகஎன் ௨
ன செய்வேன்; உன் வீட்டிலிருக்கிறதென்ன,
சொல்லென்று கேட்க, அவள், வீட்டில் உமத
டியாளுக்கு ஒருபாத்திரம்நிறைந்தஎண்ணெயன்
றி வேறொன்றுமில்லையென்றாள்.—அப்பொழு ௩
து அவன், நீபோய், உன் அயலாரெல்லாரிடத்தி
லும் அநேகம் வெறும்பாத்திரங்களை இரவலாக
வாங்கு.—நீ உள்ளேபோய் உன்புத்திரருடன் ௪
உள்ளே நின்று கதவைப்பூட்டு, பின்பு அந்தப்
பாத்திரங்களெல்லாவற்றிலும் வார்த்து, நிறைந்
த பாத்திரத்தை ஒரு புறத்தில் வையென்றான்.-
அவள் அவனை விட்டுப்போய், தன்னிடத்தில் ௫
பாத்திரங்களைக் கொண்டுவந்த தன் புத்திரரு
டன் உள்ளேநின்றுகொண்டு கதவைப்பூட்டிவி
ட்டு, வார்த்தாள்.—பாத்திரங்கள் நிறைந்தபின்பு, ௬
அவள்தன்புத்திரனைநோக்கி, இன்னுமொருபாத்
திரங் கொண்டுவாவென்றுசொல்ல, அவன் அவ
ளைநோக்கி, இனிப் பாத்திரமில்லையென்றான்.
அப்பொழுது எண்ணெய் நின்றுவிட்டது.—அ ௭
வள்போய்த் தேவனுடைய தாசனுக்கு அதைத்
தெரிவிக்க அவன், நீபோய் எண்ணெயைவிற்று
உன்கடனைத்தீர்த்துவிட்டு, சேஷத்தைக்கொண்
டு நீயும் உன் பிள்ளைகளுஞ் சீவனம்பண்ணுங்க
ளென்றான்.
பின்பு ஒருநாள் இலீஷாஷூனேமுக்குப்போ ௮
னபொழுது, அங்கிருந்த கனமுள்ள ஒரு ஸ்தி
ரி போசனம் பண்ணும்படி, அவனைவருந்தி அ
ழைத்தாள். அவன் அந்த வழியாகச் செல்லும்
பொழுதெல்லாம் போசனம்பண்ண அங்கே தங்
குவான்.—அவள்தன் புருஷனைநோக்கி,நித்தமும் ௯
இந்தவழியிற்செல்லுகிற தேவதாசனாகிய இ
வன் பரிசுத்தமுள்ளவன்.—நாம் மதிலின்மேல் ௰
சிற்றறைகட்டி, இவனுக்கு அதில் ஒரு கட்டி
லும், ஒருபோசனபீடமும், ஒரு ஆசனமும், ஒரு
விளக்கும்வைப்போம்: இவன் நம்மிடத்தில் வ

---

(௰௯) அதி.௪.௩. (௨௰) யாத்.௨௯.௩௯,௪௰. (௨௫) ஏசா.௰௬.௭,௰௧. (௨௭) ஆமோ.௨.௧. அதி.௮.௨௰.—(௪. அதி. ௧.) ௧.இரா.௨௰.௩௫. லேவி.௨௫.௩௯. மத்.௰௮.௨௫. (௩) அதி.௩.௰௬. (௮) யோசு.௰௯.௰௮.

ரும்பொழுது அவ்விடத்திலிருக்கலாமென்றாள்.-
௰௧ ஒருநாள் அவன் அங்கே வந்தபொழுது அந்த அ
றையிற்பிரவேசித்து, அவ்விடத்தில் படுத்தான்.–
௰௨ அவன் தன் பணிவிடைக்காரனாகிய கேயேசா
யைநோக்கி, ஷூனேமியாளைக்கூப்பிடென்றான்.
இவன் அவளைக்கூப்பிட, அவள் அவனுக்குமுன்
௰௩ பாகவந்துநின்றாள்.—அவன் இவளைநோக்கி, நீ
எங்கள்மேல் மிகுதியுஞ் சிந்தைவைத்தாய்; உ
னக்கென்னசெய்யவேண்டும்; இராசாவிடத்தி
லாவது, சேனாபதியிடத்திலாவது பேசவேண்டு
மாவென்று கேட்க, அவள், நான் என் சனங்க
ளுக்குள்ளே வாசமாயிருக்கிறே னென்றாள்.—
௰௪ பின்பு அவன் அவளுக்குச் செய்யவேண்டிய
தென்னவென்றுகேட்க, கேயேசாய் அவளுக்குப்
பிள்ளையில்லை, அவள் புருஷன் விருத்தனென்று
௰௫ உத்தரஞ்சொன்னான்.—பின்னும் அவன் அவ
ளைக் கூப்பிடென்றான். அவன் அவளைக்கூப்
பிட்டபொழுது அவள்வாசலில்வந்துநின்றாள்.–
௰௬ அவன், ஒரு உற்பவகாலத்தளவில், குறிக்கப்
பட்டசமயத்தில், நீ ஒருபுத்திரனைத் தழுவுவா
யென்றுசொல்ல, அவள் அல்ல, என் ஆண்ட
வனே, தேவனுடைய தாசனே, உமதடியாளை
௰௭ வஞ்சிக்கலாகாதென்றாள்.–பின்பு அந்தஸ்திரி க
ருப்பந்தரித்து, இலீஷா தனக்குச்சொன்ன கா
லத்தில், ஒரு உற்பவகாலத்தளவிலே, ஒரு புத்தி
ரனைப்பெற்றாள்.

௰௮ அந்தப்பிள்ளை வளர்ந்தபின்பு, ஒருநாள் அரி
வெட்டுகிறவர்களோடிருந்த தன் பிதாவினிடத்
௰௯ துக்குப்போயிற்று.—அது தன் பிதாவைநோக்கி,
என்தலை, என்தலையென்று சொல்ல, அவன் ஒ
ருவேலைக்காரனைப்பார்த்து, இதைத்தன்மாதாவி
௨௰ டத்தில் கொண்டுபோய்விடு என்றான்.—இவன்
அதை எடுத்து மாதாவிடத்திற் கொண்டுபோய்
விட்டான், அது மத்தியானகாலம்வரைக்கும் அ
வளுடைய மடியிலேயிருந்தது, பின்பு இறந்து
௨௧ போயிற்று.—அப்பொழுது அவள் ஏறிப்போய்,
தேவனுடைய தாசனின் கட்டில்மேல் அ
தைக்கிடத்திவிட்டு, கதவைப் பூட்டிககொண்டு
௨௨ வெளியேபுறப்பட்டுப்போய்,—தன்புருஷனைக்
கூப்பிட்டு, நான் தேவனுடையதாசனிடத்தில்
போய்வரும்படி வாலிபரில் ஒருவனையும், கழு
தைகளில் ஒன்றையும் என்னிடத்தில் அனுப்பு
௨௩ மென்றாள்.—அதற்கவன் நீ இன்றைக்கு அவனி
டத்தில் போகவேண்டியதென்ன; அமாவாசியு
மல்ல, ஓய்வுநாளுமல்லவென்றுசொல்ல, அவள்,
௨௪ நன்மையாய் முடியுமென்றாள்.—பின்பு அவள்
தன் பணிவிடைக்காரனைநோக்கி, கழுதைமேல்
சேணம்வைத்துச்செலுத்திக்கொண்டுபோ; நான்
கட்டளையிட்டாலொழியத்தாமதிக்கலாகாதென்
௨௫ றுசொல்லி,–புறப்பட்டு, கர்மேலிலிருந்த தேவ
தாசனிடத்திற் போகையில், தேவனுடையதா
சன் தூரத்தில் அவள்வருகிறதைக்கண்டு, தன்ப
ணிவிடைக்காரனாகிய கேயேசாயிடத்தில், பார்,
ஷூனேமியாள்வருகிறாள்.–நீ அவளுக்கெதிர்கொ ௨௬
ண்டுபோய், நீ சுகமேயிருக்கிறாயா; உன்புருஷன்
சுகமேயிருக்கிறானா; பிள்ளையுஞ் சுகமேயிருக்
கின்றதாவென்று அவளிடத்திற் கேளென்றான்;
அதற்கு உத்தரமாய் அவள், சுகமென்றாள்.–மலை ௨௭
யிலிருந்த தேவதாசனிடத்தில் அவள்வந்து, அ
வன் பாதத்தைப்பிடிக்க, கேயேசாய் அவளைத்
தள்ளிவிடும்படி சமீபித்தான். தேவனுடைய
தாசன் அவளை விட்டுவிடு; அவள் மனம்கசந்
திருக்கிறாள்: யெகோவா அதை எனக்குச்
சொல்லாமல்மறைத்துவிட்டாரென்றான்.—அப் ௨௮
பொழுது அவள், நான் என் ஆண்டவனிடத்தில்
ஒரு புத்திரனை வேண்டினேனா; என்னை வஞ்
சிக்கவேண்டாமென்று நான் சொல்லவில்லையா
வென்றாள்.—அவன் கேயேசாயை நோக்கி, நீ ௨௯
இடைக்கட்டுக்கட்டி, என் கோலை உன்கையில்
எடுத்துக்கொண்டு, வழியில் ஒருவனை நீ சந்தித்
தாலும் அவனைவாழ்த்தாமலும், ஒருவன் உனக்கு
வாழ்த்துதல்சொன்னாலும் அதற்கு உத்தரங்கொ
டாமலும்போய், கோலைப் பிள்ளையின்முகத்தின்
மேல் வையென்றான்.–பிள்ளையின் மாதா, நான் ௩௰
உம்மைவிட்டுப் பிரியமாட்டேனென்று நித்திய
யெகோவாவையும், உமது பிராணனையுங்
கொண்டு சொல்லுகிறேனென்று சொல்ல, அ
வன் எழுந்து அவளுக்குப்பின்சென்றான்.—கே ௩௧
யேசாய் அவர்களுக்குமுன்னேபோய், பிள்ளை
யின்முகத்திலே கோலை வைத்தான்; ஆனாலுஞ்
சத்தமுமில்லை, உணர்வுமில்லை. அதினால் அவன்
வந்து இவனுக்கெதிர்ப்பட்டு, பிள்ளை எழும்ப
வில்லையென்றான்.—இலீஷா வீட்டில் பிரவே ௩௨
சித்தபொழுது, பிள்ளையிறந்து தன் கட்டிலின்
மேல் கிடத்தப்பட்டிருக்கிறதைக்கண்டு,—உள் ௩௩
ளே போய், கதவைப்பூட்டித் தான்பிள்ளையுட
னிருந்து, யெகோவாவைப் பிரார்த்தித்து,—
பிள்ளையின்மேல்படுத்து, தன்வாய் அதின்வாயின் ௩௪
மேலும், தன் கண்கள் அதின் கண்கள்மேலும்,
தன்கைகள் அதின்கைகள்மேலும்படும்படி சாய்ந்
து, பிள்ளையின்மேலே குப்புறப்படுத்தான்: பிள்
ளையின்சரீரம் அனல்கொண்டது.–பின்பு அவன் ௩௫
எழுந்து வீட்டுக்குள்ளே உலாவித்திரிந்து, திரும்
பவும் ஏறிப்பிள்ளையின்மேலே குப்புறப்படுக்க,
பிள்ளை ஏழுதரந்தும்மிற்று, பிள்ளைகண்களைத்தி
றந்தது.–அப்பொழுது அவன்கேயேசாயைநோக் ௩௬
கி, அந்த ஷூனேமியாளைக்கூப்பிடென்றுசொல்
ல, அவன் அவளைக்கூப்பிட்டான். அவள் அவனி
டத்தில்வந்தபொழுது அவன், உன்மகனை எடுத்
துக்கொண்டு போவென்றான்.–அப்பொழுது அ ௩௭
வள் உள்ளேபோய், அவன் பாதத்தில்விழுந்து,
பூமிக்குநேரே தாழ்ந்து வணங்கி, தன் மகனை

---

(௰௬) ஆதி.௰௮.௰,௰௪. வச.௨௮. (௨௫) அதி.௨.௨௫. (௨௭) மத்.௨௮.௯. க.சாமு.க.௰.(௨௮)வச.௰௬.(௨௯)க.இரா.௰௮.௪௬. அதி.௯.க. லூக்.௰.௪. யாத்.௭.௰௯. அப்.௰௯.௰௨. (௩௰) அதி.௨.௨. (௩௧) யோவா.௰௧.௰௧. (௩௩) வச.௪. மத்.௬.௬. க.இரா.௰௭.௨௰. (௩௪) க.இரா.௰௭.௨௧. அப்.௨௰.௰. (௩௫) க.இரா.௰௭.௨௧. அதி.௮.க,௫. (௩௭) க.இரா.௰௭.௨௩. எபி.௰௧.௩௫.

எடுத்துக்கொண்டு வெளியே வந்துவிட்டாள்.
௩௮ திரும்பவும்இலீஷா கில்காலுக்குப்போனான்:
அக்காலத்தில் தேசத்திலேபஞ்சமுண்டாயிற்று;
தீர்க்கதரிசிகளின்சீஷர்அவனுக்குமுன்னிருக்க,
அவன்தன்பணிவிடைக்காரனைநோக்கி, நீ பெரி
யபானையை அடுப்பிலே வைத்து, தீர்க்கதரிசிக
௩௯ ளின் சீஷருக்காகக் கூழ்சமையென்றான்.—ஒரு
வன் இலைக்கறிகள் சேகரிக்கும்படி வயலுக்குப்
போய், பேய்க்கொம்மட்டியைக்கண்டு, அதின்
காய்களில் அறுத்துத்தன்வஸ்திரம்நிறையக் கொ
ண்டுவந்து, கூழ்ப்பானையிலே போட்டான்: அ
௪௰ து அவர்களுக்குத்தெரியவில்லை.—அவர்கள் உண்
ணும்படி அதை அவர்களுக்கு வார்த்தார்கள்; அ
வர்கள்கூழைஉண்ணுகிறபொழுதுதேவனுடை
ய தாசனே, பானையிலே மரணமிருக்கின்றதென்
றுசொல்லி உரத்தசத்தமிட்டார்கள். அது உண்
௪௧ ணக் கூடாமற்போயிற்று.—அப்பொழுது அவன்
மாவைக்கொண்டுவரச்சொல்லி,அதைப் பானைக்
குள்ளே தெளித்துச் சனங்கள் உண்ணும்படி அ
வர்களுக்கு வாரென்றான்; அப்புறம் பானையில்
ஒரு தீங்குமில்லை.
௪௨ பின்பு பாகால் ஷாலீஷாவிலிருந்து ஒருவன்
தேவனுடைய தாசனுக்கு, முதல்விளைந்தவாற்
கோதுமையினாற் சுடப்பட்ட இருபது அப்பங்
களையும், கையிலே தானியத்தின் முற்றிய கதிர்
களையுங் கொண்டுவந்தான். அவன் சனங்க
௪௩ ளுக்குப் புசிக்கக்கொடென்றான்.—அதற்கு அ
வன் பணிவிடைக்காரன் இதை நூறுபேருக்கு
முன்னே எப்படி வைக்கலாமென்று சொல்ல,
அவன் திரும்பவுஞ் சனங்களுக்குப் புசிக்கக்
கொடு: அவர்கள்புசித்துமிகுத்துவிடுவார்களென்
௪௪ று யெகோவா சொல்லுகிறாரென்றான்.—அ
வன் அதையவர்களுக்கு முன்வைத்தான், யெ
கோவாவின் வாக்கின்படி அவர்கள் புசித்து
எஞ்சவிட்டார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. நாமான் குஷ்டரோகம் நீங்கும்படி ஷமாரியாவுக்குச் செல்லல்: ௮. ஏழுதரம் யோர்தான் நதியிலே ஸ்நானம்பண்ணும்படி இலீஷாகட்டளையிடல்: ௰௫. சொஸ்தத்தினிமித்தம் நாமான் தந்த உபகாரத்தை ஏற்றுக்கொள்ளாமல் மறுத்தல்: ௨௰. உபகாரம் ஏற்றுக்கொள்வதினால் கேயேசாய் குஷ்டரோகியாதல்.

ஸீரிய இராசாவினிடத்தில் நாமான் என்றொ
ரு சேனாபதியிருந்தான்; அவனைக்கொண்டு யெ
கோவா ஸீரியருக்குஇரட்சிப்புச்செய்ததினி
மித்தம் அவன் தன் ஆண்டவன்முன்பாகப்பெரி
யவனுங்கனவானுமாயிருந்தான்: அவன்பராக்கி
௨ ரமவீரன், ஆகிலும் அவன்குஷ்டரோகி.—ஸீரியர்
படைவகுப்பாகப்புறப்பட்டுப்போய்,இஸரவே
லரின் தேசத்தினின்றும் ஒரு சிறுபெண்ணைச்சி
றையாகக்கொண்டுவந்தார்கள்;அவள்நாமானின்
மனைவியிடத்திற் பணிவிடை செய்துகொண்டி
ருந்தாள்.—அவள் தன் எசமானியை நோக்கி, ௩
என் எசமானன் ஷமாரியாவிலுள்ள தீர்க்கதரிசி
யுடனிருந்தால் நலமாகும்; அவர் இவருடைய
குஷ்டரோகத்தை நீக்கிவிடுவாரென்றாள்.—ஒரு ௪
வன் தன் எசமானனிடத்திற்போய், இஸரவேல்
தேசத்தினின்றும் வந்தபெண் இன்னஇன்னபிர
காரம்சொல்லுகிறாளென்றுஅவனுக்குத்தெரிவித்
தான்.—அதினால் ஸீரிய இராசா இஸரவேலின் ௫
இராசாவுக்கு ஒருகாகிதந்தருகிறேன்,போய் வா
வென்றான். அவன் பத்துக் கிக்கேர்வெள்ளியும்,
ஆறாயிரந் துண்டுப்பொன்னும்,பத்து மாற்றுவஸ்
திரமும் எடுத்துக்கொண்டு புறப்பட்டுப் போ
னான்.—அவன் அந்தக் காகிதத்தை இஸரவே ௬
லின் இராசாவிடத்தில் கொண்டுவந்தான். இந்
தப்பத்திரிகையுடனே நான் அனுப்பிய என் தா
சனாகிய நாமான் உம்மிடத்தில் வருவான், நீர்
அவனுடைய குஷ்டரோகத்தை நீக்கிச் சொஸ்
தப்படுத்துவீரென்று அதில் எழுதியிருந்தது.—இ ௭
ஸரவேலரின் இராசா அந்தக்காகிதத்தை வாசித்
தவுடனே தன் வஸ்திரங்களைக்கிழித்து, இவன்
ஒருவனை அவன் குஷ்டரோகத்தை நீக்கும்ப
டி என்னிடத்தில் அனுப்பினானே; ஒருவனைக்
கொல்லவும் உயிர்ப்பிக்கவும் நான் தேவனா; இ
வன் என்னை விரோதிக்க வகைதேடுகிறானென்
பதைச் சிந்தித்துப்பாருங்களென்றான்.
இஸரவேலரின் இராசா தன்வஸ்திரங்களைக்கி ௮
ழித்தானென்று தேவனுடைய தாசனாகிய இலீ
ஷாகேள்விப்பட்டபொழுது, நீர் உமது வஸ்தி
ரங்களைக் கிழித்ததென்ன; அவனை என்னிடத்
தில்வரவிடும்,இஸரவேலருக்குள்தீர்க்கதரிசிஒரு
வனிருக்கிறானென்பதை அவன் அறிந்துகொள்
ளுவானேயென்று, இராசாவுக்குச் சொல்லிய
னுப்பினான்.—பின்பு நாமான் தன் குதிரைகளோ ௯
டும், ரதங்களோடும் வந்து இலீஷாவின் வீட்டு
வாசலில் நின்றான்.—இலீஷா, நீபோய் யோர் ௰
தான் நதியில் ஏழுதரம் ஸ்நானம்பண்ணு, உன
துமாமிசம்புதிதாகும்; நீசுசியாவாயென்றுசொல்
ல,அவனிடத்தில் ஒருதூதனை அனுப்பினான்.—
நாமான் கோபங்கொண்டு, இவன்தானே வெ ௰௧
ளியே என்னிடத்தில்வந்துநின்று, தன் தேவ
னாகிய யெகோவாவின் நாமத்தில் பிரார்த்தித்
து, தன் கையினால் அந்த இடத்தைத் தடவி,
குஷ்டரோகத்தை நீக்குவானென்று எண்ணியி
ருந்தேன்.—இஸரவேலரின் சகலநதிகளைப்பார்க் ௰௨
கிலும், தமஸ்குவிலுள்ள நதிகளாகிய அபானா
வும் பர்பரும் மிகவும் உத்தமமானவைகளல்ல
வா; அவைகளில் நான் ஸ்நானம்பண்ணிச்சுத்
திபெற்றுக்கொள்ளக் கூடாதாவென்று சொல்
லிப் புறப்பட்டான். இவ்விதமாய்க் குரோதங்

(௩௮) அதி.௨.௧. அதி.௮.௧. அதி.௨.௩. லூக்.௰.௩௯. அப்.௨௨.௩. (௪௰) யாத்.௰.௭. (௪௧) யாத்.௰௫.௨௫. அதி.௨.௨௧. யோவா.௬.௯. (௪௨) ௧.சாமு.௯.௪. ௧.சாமு.௯.௭. ௧.கொரி.௯.௰௧. கலா.௬.௬. (௪௩) லூக்.௯.௰௩. யோவா.௬.௯. லூக்.௯.௰௭. யோவா.௬.௰௧. (௪௪) மத்.௰௪.௨௰. யோவா.௬.௰௩.—(௫. அதி. ௧.) லூக்.௪.௨௭. யாத்.௰௧.௩. (௫) ௧.சாமு.௯.௮. அதி.௮.௮,௯. (௭) ஆதி.௩௰.௨. உபா.௩௨.௩௯. ௧.சாமு.௨.௬. (௰) அதி.௪.௪௧. யோவா.௯.௭.

௰௩ கொண்டு திரும்பிப்போகையில்,—அவன் பணி
விடைக்காரர் சமீபித்து அவனைநோக்கி, பிதா
வே, தீர்க்கதரிசி ஒரு பெரியகாரியத்தைக்கட்ட
ளை யிட்டாராகில், நீர் செய்யமாட்டிரா; ஸ்நா
னம்பண்ணி, சுத்தமாவாயென்று அவர் உம்மோ
௰௪ டேசொல்ல எத்தனை அதிகம்என்றார்கள்.—அப்
பொழுது அவன் இறங்கித் தேவனுடையதாச
னின் சொற்படி யோர்தானில் ஏழுதரமுழுகி
னான்: அதினால் அவனுடைய மாமிசம் சிறுபிள்
ளையுடைய மாமிசம்போலப் புதிதாக, அவன்
சுத்திபெற்றான்.
௰௫ பின்பு அவன் தன் பரிவாரமெல்லாவற்றோ
டும் தேவனுடையதாசனிடத்திலேதிரும்பிவந்
து, அவனுக்குமுன்பாகநின்று, இஸ்ரவேலருக்
குள்ளேயன்றிப் பூமியின் மற்றஎவ்விடத்திலும்
தேவனில்லையென்று எனக்குவிளங்குகின்றது:
ஆதலால் நீர் உமது தாசனிடத்தில் ஒருகாணிக்
௰௬ கைவாங்கும்படி வேண்டுகிறேனென்றான்.—இ
வன்,நான்ஒன்றும்வாங்கமாட்டேனென்றுநித்தி
ய யெகோவாவை முன்னிட்டுச் சொல்லுகி
றேனென்றான். பின்னும் அவன்வாங்கவேண்டு
௰௭ மென்றுவருந்திக்கேட்டும் இவன்மறுத்தான்.-நா
மான் இரண்டு கோவேறுகழுதைகள் சுமக்கும்
மண்ணை அடியேனுக்குத்தரமாட்டீரா; உமதடி
யான் யெகோவாவுக்கேயன்றி, இனி அந்
நிய தேவர்களுக்கு எந்தத் தகன பலியையாகி
லும் காணிக்கையையாகிலுஞ் செலுத்தமாட்
௰௮ டேன்.—இதிலேமாத்திரம் யெகோவா உமது
தாசனுக்கு மன்னிப்பருளவேண்டும்: என் எச
மானன் ஆராதனைசெய்யும்படி ரிம்மோன் ஆல
யத்திற்பிரவேசிக்கிறபொழுது, என் எசமானன்
என்கைமேற் சார்ந்துநிற்க, நான் ரிம்மோன் ஆல
யத்திலே நமஸ்காரம் பண்ணுகிறேன்: ஆதலால்
ரிம்மோன் ஆலயத்திலே நமஸ்கரிக்கும் இந்தக்
காரியத்திலே யெகோவா உமதடியானுக்கு
௰௯ மன்னிப்பு அருளுவாராகவென்றான்.—இவன்
அவனைநோக்கி, சுகமாய்ப்போவென்றான். அ
வன் புறப்பட்டுக்கொஞ்சவழிசென்றான்.
௨௰ பின்பு தேவனுடைய தாசனாகிய இலீஷா
வின் பணிவிடைக்காரனான கேயேசாய், அந்த
ஊரீயனாகிய நாமான் கொண்டுவந்ததை என்
ஆண்டவன் அவன்கையில் வாங்காமல் அவ
னைவிட்டுவிட்டார்: யெகோவா நித்தியரா
னால், நான் அவனைத்தொடர்ந்துபோய், ஏதாகி
லும் அவனிடத்தில்வாங்கிக்கொள்ளுவேனென்
௨௧ றுசொல்லிக்கொண்டு,—நாமானைத் தொடர்ந்து
போனான். நாமான் இவன் தனக்குப்பின்னாக ஓ
டிவருகிறதைக்கண்டபொழுதுதன் ரதத்தைவிட்
டிறங்கி அவனுக்கு எதிர்கொண்டுபோய், சுகச்
செய்தியாவென்றுகேட்க, அவன் சுகச்செய்தி
௨௨ தான்.—தீர்க்கதரிசிகளின் சீஷரில்இரண்டுவாலி
பர் இப்பொழுது எப்ராயீம்மலையினின்று என்
னிடத்தில் வந்தார்கள்: நீர் ஒருதிக்கோர்வெள்ளி
யும் இரண்டுமாற்றுவஸ்திரமும்தரவேண்டுமென்
றுகேட்க,என் எசமானன் என்னை உம்மிடத்தில்
அனுப்பினாரென்றான்.—அதற்கு நாமான் தயை ௨௩
செய்து இரண்டு திக்கோர் எடுத்துக்கொள்ளென்
றுசொல்லிஅவனைவருந்திக்கேட்டு, இரண்டுதிக்
கோர் வெள்ளியை இரண்டுமாற்றுவஸ்திரங்களு
டன் இரண்டுபைகளிலேகட்டி, தன் பணிவி
டைக்காரர் இருவர்மேலே வைத்தனுப்ப, அவர்
கள் இவனுக்குமுன்னே சுமந்துகொண்டுபோ
னார்கள்.—இவன் ஒருமறைவான இடத்திற்சேர்ந் ௨௪
தபொழுது, அவர்கள்கையினின்றும் அவைகளை
வாங்கிவீட்டிலேவைத்துவிட்டு அவர்களையனுப்
ப, அவர்கள் புறப்பட்டுப்போனார்கள்.—பின்பு ௨௫
இவன் உள்ளேபோய்த்தன் எசமானனுக்குமுன்
பாகநின்றான். இலீஷா இவனைநோக்கி, கேயே
சாயே நீ எங்கிருந்துவருகிறாயென்றுகேட்க, இ
வன் உமதடியான்ஒருஇடத்துக்கும்போகவில்லை
யென்றான்.—அவன் இவனைநோக்கி, அந்தமனு ௨௬
ஷன் உன்னைச்சந்திக்கும்படி இரதத்தைவிட்டு
இறங்கினபொழுது, என்மனம் உன்னுடன்வர
வில்லையா; வெள்ளியைவாங்குகிறதற்கும், வஸ்
திரங்களையும்சீதவிருட்சத்தோப்புகளையுந்திராட்
சத்தோட்டங்களையும் ஆடுமாடுகளையும் பணிவி
டைக்காரரையும்பணிவிடைக்காரிகளையும்வாங்
குகிறதற்கும், இதுவா காலம்.—நாமானின்குஷ் ௨௭
டரோகம் உன்னையும், உன்வமிசத்தாரையும் ச
தாகாலமும் சேருமென்றான். இவன் உறைந்த
பனிபோலும் குஷ்டரோகத்தையுடையவனாகி
அவன்முன்னின்று புறப்பட்டுப்போனான்.

## ௬. அதிகாரம்.

௧. இலீஷா கோடரியைச் சலத்திலே மிதக்கப்
பண்ணல்: ௮. ஊரீயரினிராசாவினாலோசனை
யைத் தெரிவித்தல்: ஊரீயரின் சேனைகளைக்
குருடராக்கல்: ௰௯. ஷமாரியாவில் அவர்க
ளுக்குப் போசனங்கொடுத்து அனுப்பிவிடல்:
௨௪. ஷமாரியாவில் பஞ்சமுண்டாய் இரண்டு
ஸ்திரிகள் தங்கள் பிள்ளைகளைப்புசித்தல்: ௩௰.
இராசா இலீஷாவைக் கொல்லவகைதேடல்.

பின்பு தீர்க்கதரிசிகளின் சீஷர் இலீஷாவை ௧
நோக்கி, உம்முடனே நாங்கள் வசிக்கிற இந்
தஸ்தானம் எங்களுக்கு மிகவும் நெருக்கமாயிருக்
கின்றது.—நாங்கள் யோர்தானுக்குப்போய், அங் ௨
கிருந்து ஒவ்வொருவர் ஒவ்வொரு உத்திரத்தைக்
கொண்டுவந்து, எங்களுக்கு ஒரு வாசஸ்தானத்
தை ஆயத்தப்படுத்துவோமென்று சொல்ல, அ
வன் போங்களென்றான்.—அப்பொழுது ஒரு ௩
வன், தயவுபண்ணி நீரும் உமதடியாருடன் வா
ருமென்று வேண்டிக்கொள்ள, அவன் உத்தர
மாய் வருவேனென்றுசொல்லி,—அவர்களுடன் ௪
போனான். அவர்கள் யோர்தான்நதியருகேசேர்ந்
து, மரங்களை வெட்டினார்கள்.—ஒருவன் ஒரு ௫

(௰௪) யோபு.௩௩.௨௫. லூக்.௪.௨௭. (௰௫) தானி.௨.௪௭. ஆதி.௩௩.௰௧. (௰௬) அதி.௩.௰௪. ஆதி.௰௪.௨௩. மத்.௰.௮. அப்.௮.௰௮,௨௰.(௰௮)அதி.௭.௨,௰௭.(௰௯)ஆதி.௩௫.௰௬.(௨௭)௧.தீமோ.௬.௰. யாத்.௪.௬.எண்.௰௨.௰.—(௬.அதி.௧.) அதி.௪.௩௮.

உத்திரந்தறிக்கிறபொழுதுகோடரி சலத்திலேவி
ழுந்தது: அதினல் அவன் ஐயோ, ஆண்டவனே,
அது இரவலாய் வாங்கப்பட்டதென்று சொல்
௬ லிச்சத்தமிட்டான்.-அப்பொழுது தேவனுடை
ய தாசன் அது எங்கே விழுந்ததென்றுகேட்க,
இவன் அந்த இடத்தைக்காட்டினன். அவன்
ஒரு தடியைவெட்டி அந்த இடத்தில் எறிய, இ
௭ ரும்பு மிதந்தது.—அப்பொழுது அவன் அதை
எடுத்துக்கொள்ளென்றுசொல்ல, இவன் தன்கை
யை நீட்டி அதை எடுத்துக்கொண்டான்.
௮ அக்காலத்தில் ஷீரியஇராசா இஸரவேலரை
எதிர்த்து யுத்தஞ்செய்துவந்தான். அவன் தன்
தாசருடன் மந்திராலோசனைசெய்து, இன்ன
இன்ன ஸ்தானத்தில் நான் பதிவிருப்பேனென்
௯ றான்.-அதினல் தேவனுடையதாசன், இன்ன
ஸ்தானத்துக்குப்போகாமல் சாவதானமாயிரும்;
அங்கேஷீரியர் இறங்கியிருக்கிறர்களென்று இ
ஸரவேலின் இராசாவுக்குச் சொல்லி யனுப்பு
௰ வான்.-இஸரவேலின் இராசா தான் சாவதானமா
யிருக்கவேண்டுமென்று தேவனுடையதாசன்த
னக்குச்சொல்லியனுப்பிய ஸ்தானத்திற்கு ஆள
னுப்பி, தன்னைக்காத்துக்கொண்டான்; இரண்
௰௧ டொருதரமாத்திரமல்ல.—இந்தக்காரியத்தின் நி
மித்தம் ஷீரிய இராசா மனதில் விதனப்பட்டு,
தன்பணிவிடைக்காரரைக்கூப்பிட்டு அவர்களை
நோக்கி, நமக்குள்ளே இஸரவேல் இராசாவின்
பட்சமாயிருக்கிறவன் யாவன், எனக்குத்தெரி
௰௨ விக்கமாட்டீர்களாவென்றுகேட்க,-அவன்பணி
விடைக்காரரில் ஒருவன், என் ஆண்டவனே, இ
ராசாவே, ஒருவருமில்லை: நீர்உமதுபள்ளியறை
யில்பேசுகிறவாக்குகளையும்,இஸரவேலருக்குள்
ளிருக்கிற இலீஷா தீர்க்கதரிசி இஸரவேலரின்
இராசாவுக்குத்தெரிவித்துவருகிறனென்றான்.
௰௩ அப்பொழுது அவன், நான் ஆளனுப்பி அ
வனைப் பிடிக்கும்படி, அவனெங்கேயிருக்கிற
னென்றுபோய்ப்பார்த்துவாவென்றான். அவன்
தோத்தானிலே யிருக்கிறனென்று அவனுக்குத்
௰௪ தெரிவிக்கப்பட்டது.-ஆதலால் அவன்குதிரைக
ளையும்,இரதங்களையும்,மகாசேனையையும்அவ்வி
டத்துக்கனுப்பினன்: அவர்கள் இராக்காலத்தில்
௰௫ வந்து, நகரத்தைவளைந்துகொண்டார்கள்.-தேவ
னுடையதாசனின் பணிவிடைக்காரன் அதிகா
லையில் எழுந்து புறப்படுகையில், சேனைகள்,குதி
ரைகளோடும் ரதங்களோடும் நகரத்தைவளைந்து
கொண்டிருக்கிறதைக்கண்டான்;அந்தப்பணிவி
டைக்காரன் ஐயோ,என்ஆண்டவனே,நாமென்
௰௬ னசெய்வோமென்றுசொல்ல,-அவன்பயப்படா
தே:நம்முடன் இருக்கிறவர்கள்அவர்களுடன்இ
ருக்கிறவர்களைப்பார்க்கிலும் அநேகரென்றான்.—
௰௭ அப்பால் இலீஷா யெகோவாவே, இவன்
காணும்படிஇவன்கண்களைத்திறந்தருளவேண்டு
கிறேனென்றுசொல்லிப்பிரார்த்திக்க,யெகோ
வா அந்தவாலிபனுடையகண்களைத்திறந்தருளி
னார்; அப்பொழுது அவன் இலீஷாவைச்சுற்றி
நான்குதிசையிலும் மலையில் அக்கினிக்குதிரை
களும் இரதங்களும் நிறைந்திருக்கக்கண்டான்.—
அவர்கள் தன்னிடத்தில் வருகையில் இலீஷா ௰௮
யெகோவாவைநோக்கி, இந்தச்சனங்கள் கு
ருடராகும்படி செய்வீராகவென்று சொல்லிப்
பிரார்த்திக்க, அவர் இலீஷாவின் சொற்படி அ
வர்களைக் குருடராகும்படிசெய்தார்.
பின்பு இலீஷா அவர்களைநோக்கி, வழி இது ௰௯
வல்ல, நகரம் இதுவல்ல: எனக்குப்பின்னே வா
ருங்கள், நீங்கள்தேடுகிற மனுஷனிடத்தில்உங்க
ளை நடத்திக்கொண்டுபோவேனென்று சொல்லி
அவர்களை ஷமாரியாவுக்கு நடத்திக்கொண்டு
போனான்.—அவர்கள் ஷமாரியாவில் பிரவேசித் ௨௰
தபொழுது, இலீஷா, யெகோவாவே, இவர்
கள் காணும்படி இவர்கள் கண்களைத்திறப்பீ
ராகவென்றுசொல்ல, யெகோவா அவர்களு
டையகண்களைத்திறந்தார்; அப்பொழுது அவர்
கள் தாங்கள் ஷமாரியாவின் மத்தியில் நிற்கக்
கண்டார்கள்.—இஸரவேலரின் இராசா அவர்க ௨௧
ளைக்கண்டபொழுது, இலீஷாவைநோக்கி, என்
பிதாவே, நான் இவர்களை வதைக்கவேண்டுமா,
வதைக்கவேண்டுமோவென்று கேட்க,—அவன் இ ௨௨
வர்களை வதைக்கவேண்டாம்: சிறைபிடிக்கப்
பட்டவர்களை உமதுகட்கத்தைக்கொண்டும்வில்
லைக்கொண்டும்வதைப்பீரா;இவர்களுக்குஅப்ப
முஞ் சலமுங்கொடும், இவர்கள் போசனபானம்
பண்ணித்தங்கள் ஆண்டவனிடத்தில் போகட்டு
மென்றான்.-அதினல் அவன் அவர்களுக்குவெகு ௨௩
போசன பதார்த்தங்களைச் சேகரித்துக்கொடுத்
தான்: அவர்கள் போசனபானம் பண்ணின பின்
பு அவன் அவர்களையனுப்ப, அவர்கள் தங்கள்
ஆண்டவனிடத்தில் போய்விட்டார்கள். அப்
பால் ஷீரியருடைய தண்டுகள் இஸரவேலரு
டைய தேசத்திலே வரவில்லை.
இந்தக்காரியங்கள் நடந்த பின்பு ஷீரியரின் ௨௪
இராசாவாகிய பென்னாதத் தனதெல்லாச்சேனை
களையுங்கூட்டிக்கொண்டு, ஷமாரியாவை முற்
றிக்கை செய்தான்.—அக்காலத்தில் ஷமாரியாவி ௨௫
லே கொடியபஞ்சமுண்டாயிருந்தது: அவர்கள்
செய்த முற்றிக்கையின் முடிவில், ஒருகழுதைத்
தலை எண்பதுவெள்ளிக் காசுக்கும், கால் காப்
புறா மலம் ஐந்துவெள்ளிக் காசுக்கும் விலைப்
பட்டன.—இஸரவேலரின் இராசாமதிலின்மேல் ௨௬
செல்லுகையில் ஒரு ஸ்திரி அவனை நோக்கி,
என் ஆண்டவனே, இராசாவே, எனக்கு உதவி
செய்யுமென்று ஓலமிட்டாள்.—அதற்கு அவன் ௨௭
யெகோவா உனக்குதவிசெய்யாதிருக்க, நான்
களஞ்சியத்திலேயா, திராட்சஆலையிலேயா, எதி
லிருந்தெடுத்து நான் உனக்குதவிசெய்வேனென்
றான்.—பின்னும் இராசா அவளை நோக்கி, உ ௨௮
னக்கென்னவேண்டுமென்றுகேட்க,அவள் இந்
த ஸ்திரி என்னுடன், உன் மகனைத்தா, அவனை

(௬) அதி.௨.௨௧. (௰௩) ஆதி.௩௭.௰௭. (௰௬) ௨.நாளா.௩௨.௭. சங்.௫௫.௰௮. ரோ.௮.௩௧. (௰௮) ஆதி.௰௯.௰௧. (௨௨) ரோ.௰௨.௨௰. (௨௩) அதி.௫.௨. வச.௮,௯.

இன்றைக்குப் புசிப்போம், நாளைக்கு என் மக
உக னைப் புசிப்போமென்முள்.—அதினுல் நாங்கள்
என் மகனைச் சமைத்துப் புசித்தோம்: மற்றநாள்
நான் இவளை நோக்கி, உன் மகனைப் புசிக்கும்
படி தாவென்றேன்: இவள் தன் மகனை ஒளித்து
விட்டாளென்று சொன்னுள்.
கூய அந்த ஸ்திரியின்வாக்குகளை இராசாகேள்விப்
பட்டபொழுது, தன் வஸ்திரங்களைக்கிழித்து ம
தில்ன்மேலாகச்செல்ல, சனங்கள் பார்த்து, அ
வன் உள்ளேதன்சரீரத்தில் இரட்டுஉடுத்திருக்கக்
கூக கண்டார்கள்.-அவன்,ஷாபாத்தின் புத்திரனுகிய
இலீஷாவின் தலை இன்றைக்கு அவன்தோளின்
மேல் நின்முல், தேவன் எனக்கப்படியும் அதற்
கூஉ கதிகமுஞ்செய்வாராகவென்முன்.-இலீஷாமுதி
யோருடன் தன்வீட்டில் இருக்கையில், இராசா
தன்சமுகத்தினின்றும் ஒருவனை யனுப்பினுன்:
இந்தத்தூதன்அவனிடத்திற்சேருமுன்,அவன்மு
தியோரைநோக்கி, கேளுங்கள், அந்தக்கொலை
காரனுடைய மகன் என்சிரசைச்சேதிக்கும்படி
ஆளனுப்பியிருக்கிமுன்; பாருங்கள், அந்தத்தூ
தன்வரும்பொழுது கதவைப்பூட்டி, கதவுக்குப்
புறம்பே அவனைமறித்துவிடுங்கள்: அவன் எச
மானுடைய காலின்சத்தம் அவனுக்குப்பின்வரு
கூகூ கின்றதல்லவா என்முன்.—அவன் அவர்களுடன்
சம்பாஷித்துக்கொண்டிருக்கையில் தூதன் அவ
னிடத்தில்வந்து, கேள், இந்தத்தீங்கு யெகோ
வாவாலாயிற்று; நான் இனி யெகோவாவை
எதிர்பார்க்கவேண்டியதென்னவென்முன்.

## எ. அதிகாரம்.

க. மிகுதியான உணவுப்பொருளைக்குறித்து இலீ
ஷா தீர்க்கதரிசனமுரைத்தல்: கூ. நாலுகுஷ்ட
ரோகிகள் ஸீரியர் பாளயத்திலேபோய்நற்செய்
திகொண்டுவரல்: யஉ. அந்தச்செய்தி உண்மை
யென்றறிந்துபோய் ஸீரியரின் பாளயத்தைக்
கொள்ளையாடல்: யஎ. தீர்க்கதரிசன வாக்கியத்
தை விசுவாசியாத அதிபதிமரணமடைதல்.

அப்பொழுது இலீஷா, நீங்கள் யெகோவா
வின் வாக்கைக்கேளுங்கள்; நாளை இந்நேரம்ஷ
மாரியாவின்வாசலில் ஒருசேயா மெல்லியகோ
துமைமாஒருஷேக்கலுக்கும்,இரண்டுசேயாவாற்
கோதுமை ஒருஷேக்கலுக்கும் விலைப்படுமென்
உ றுயெகோவாசொல்லுகிமுரென்முன்.—இரா
சா சாரும்படி கைகொடுக்கும் ஒருபிரபு தேவ
னுடையதாசனைநோககி, யெகோவா வானத்
திலேபலகணிகளை உண்டாக்கினுலும்,இந்தக்கா
ரியம்நடக்குமாவென்றுசொல்ல, அவன், கேள்,
நீஇதை உன்கண்ணினுலேகாண்பாய், ஆனுலும்
அதிற்புசிக்கமாட்டாயென்முன்.
கூ நகரவாசலிலே குஷ்டரோகிகள் நாலுபேர்இ
ருந்தார்கள்: அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்
ச கி, நாமிங்கிருந்து சாகவேண்டியதென்ன.—நாம்
நகரத்திற் பிரவேசிப்போமாகில், நகரத்திற்பஞ்ச
முண்டாயிருக்கிறபடியால் அங்கே இறந்துபோ
வோம்: இனி யிங்கேயிருந்தாலும் இறந்துபோ
வோம். ஆதலால்நாம் ஸீரியருடையசேனைகளி
டத்திற்போய்ச்சேருவோம்வாருங்கள்: அவர்கள்
நம்மை உயிரோடிருக்கவிட்டால் சீவிப்போம்;
அவர்கள் நம்மைக்கொன்முலும் மரணமேயன்றி
வேறில்லையென்று சொல்லிக்கொண்டு,—அதிகா ரு
லையில் ஸீரியருடைய பாளயத்திற்குப்போகும்
படி எழுந்துஸீரியருடைய பாளயத்தின்முன்ன
ணியில் இவர்கள் சேர்ந்தபொழுது, அங்கே ஒரு
வருமில்லை.—ஸீரியருடைய சேனைகளுக்கு, இர சு
தங்களின் இரைச்சலும், குதிரைகளின் இரைச்ச
லும், மகாசேனைகளின் இரைச்சலும் கேட்கும்ப
டியெகோவாசெய்தார்:அதினுல்அவர்கள்ஒரு
வரைஒருவர்நோக்கி, இஸரவேலரின் இராசாநம்
மைஎதிர்க்கும்படி எத்தியரின் இராசாக்களையும்,
எகிப்தியரின் இராசாக்களையும்கூலிக்கு அழைப்
பித்தானென்று சொல்லிக்கொண்டு,—தங்கள் கூ எ
டாரங்களையும்,குதிரைகளையும்,கழுதைகளையும்,
தங்கள் பாளயத்தில் இருந்தபிரகாரம்விட்டு,தங்
கள் பிராணனிமித்தம் அதிகாலையில் எழுந்து ஓடி
விட்டார்கள்.—இந்தக்குஷ்டரோகிகள் பாளயத் அ
தின் முன்னணியில் போனபொழுது, ஒருகூடா
ரத்தில் பிரவேசித்துப் போசனபானம்பண்ணி,
அங்கிருந்து பொன்வெள்ளிகளையும், வஸ்திரங்க
ளையும் எடுத்துப்போய், ஒளித்துவைத்தார்கள்; பி
ன்னும் அவர்கள்திரும்பி வேருெரு கூடாரத்திற்
பிரவேசித்து, அங்கிருந்தும் அப்படியே பொ
ருள்களை எடுத்துப்போய்ஒளித்துவைத்தார்கள்.-
பின்பு அவர்கள் ஒருவரை ஒருவர்நோக்கி, நாம் கூ
செய்வதுநன்மையல்ல: இத்தினம் நற்செய்தியுள்
ளதினம்,ஆனுலும்நாம் இதைத்தெரிவியாமலிருக்
கிமுேம்: காலைவரைக்கும் நாம் தரித்துநின்முல்,
நமக்குத் தண்டனைகிடைக்கும்: ஆதலால் நாம்
போய் இராசாவின் குடும்பத்தாருக்குத்தெரிவிப்
போம்வாருங்களென்றுசொல்லி,—வந்து,நகரத் ய
தின் காவலாளனைக்கூப்பிட்டு அவனைநோக்கி,
நாங்கள் ஸீரியரின் பாளயத்துக்குப்போனுேம்,
அங்கே ஒருவருமில்லை, மனிதருடைய சத்தமு
மில்லை, குதிரைகள்கட்டி நிற்கின்றன, கழுதை
களுங் கட்டி நிற்கின்றன, கூடாரங்கள் முன்
போல நிற்கின்றனவென்முர்கள்.—அப்பொழு யக
து அவன் காவலாளரைக்கூப்பிட்டான்; அவர்
கள் உள்ளேயிருந்த இராசகுடும்பத்தாருக்குத்தெ
ரிவித்தார்கள்.
இராசா இராத்திரியிலெழுந்து, தன் பணிவி யஉ
டைக்காரரைநோக்கி, ஸீரியர் நமக்குச்செய்யுங்
காரியத்தை உங்களுக்குத்தெரிவிப்பேன். நாம்
பசியாயிருக்கிமுேமென்று அவர்களுக்குத் தெரி
யும்; ஆதலால் இவர்கள் பட்டணத்தினின்றும்
புறப்படும்பொழுது உயிருடன் இவர்களைப்பி
டித்துக்கொண்டு நகரத்தில்பிரவேசிப்போமென்

(உக) லேவி.உசு.உக. உபா.உஅ.ருகூ,ருஎ. (கூய) க.இரா.உக.உஎ. (கூக) ரூத்.க.யஎ. க.இரா.யகூ.உ. (கூஉ) எசேக்.அ.க. லூக்.யகூ.கூஉ. க.இரா.யஅ.ச. (கூகூ) யோபு.உ.கூ.—(எ. அதி. க.) வச.யஅ,யகூ. (உ) வச.யஎ,யகூ,உய. மல்.கூய. (கூ) லேவி.யகூ.சசு. (சு) உ.சாமு.ரு.உச. யோபு.யரு.உக. க.இரா.ய.உகூ. (எ) சங்.சஅ.ச,ரு,சு. நீதி.உஅ.க.

றெண்ணி, அவர்கள் பாளயத்தைவிட்டுப்போய்,
௰௩ வெளியில் ஒளித்திருக்கிறார்களென்றான்.—அப்
பொழுது அவன் பணிவிடைக்காரரில் ஒருவன்,
நாம் ஆளனுப்பி அறிவோம்; சிலர் நகரத்தில் மீந்
திருக்கிற குதிரைகளில் ஐந்தைக்கொண்டுபோ
கட்டும், இஸ்ரவேலரின் கூட்டத்தில் இவைகள்
மாத்திரம் மீந்திருக்கின்றன; இவைகளும் பட்
சிக்கப்பட்ட இஸ்ரவேலரின் கூட்டம்போலி
௰௪ ருக்கின்றனவென்றான்.—அதினால் அவர்கள் இ
ரண்டு இரதக்குதிரைகளைக்கொண்டுவர, இராசா
போய்ப்பாருங்களென்று சொல்லி, ஸீரியரின்
சேனைகளைத் தொடர்ந்துபோகும்படி அனுப்பி
௰௫ னான்.—அவர்கள் யோர்தான்வரைக்கும் அவர்க
ளைத்தொடர்ந்துபோனார்கள்: ஸீரியர் விரைந்து
சென்றதினால் கைநழுவவிட்ட வஸ்திரங்களும்,
பாத்திரங்களும் வழியெங்கும்நிறைந்திருந்தன.-
௰௬ தூதர் திரும்பிவந்து இராசாவுக்குத் தெரிவித்தார்
கள். அப்பொழுது சனங்கள் புறப்பட்டு ஸீரி
யருடைய பாளயத்தைக் கொள்ளையாடினார்கள்.
அதினால் யெகோவாவுடைய வாக்கின்படி,
ஒரு சேயா மெல்லிய கோதுமைமா ஒரு ஷேக்க
லுக்கும், இரண்டுசேயாவாற்கோதுமைஒருஷேக்
கலுக்கும் விலைப்பட்டன.
௰௭ இராசா, தான் சாரும்படிகைகொடுத்தவனாகிய
அந்தப்பிரபுவை வாசலைக்காக்கும்படி எற்படுத்
தினான்: வாசலில் அவனைச்சனங்கள் மிதித்ததி
னால், அவன், தேவனுடையதாசன் இராசாதன்
னிடத்தில் வந்தபொழுது சொல்லிய பிரகாரம்
௰௮ இறந்துபோனான்.—நாளை இந்நேரம் ஷமாரியா
வின் வாசலில் இரண்டு சேயா வாற்கோதுமை
ஒரு ஷேக்கலுக்கும், ஒருசேயா மெல்லியகோது
மைமா ஒரு ஷேக்கலுக்கும் விலைப்படுமென்று
தேவனுடைய தாசன் இராசாவுக்குச்சொன்ன
௰௯ பொழுது,-அந்தப்பிரபு தேவனுடைய தாசனை
நோக்கி, யெகோவா வானத்திலே பலகணிக
ளை உண்டாக்கினாலும், இந்தக்காரியம் நடக்குமா
வென்று சொல்ல, இவன் நீ இதைஉன் கண்ணி
னாற்காண்பாய், அதைப்புசிக்கமாட்டாயென்று
௨௰ சொன்னபடி,-அவனுக்கு நேரிட்டது: வாசலி
லே சனங்கள் அவனை மிதிக்க அவன் இறந்து
போனான்.

## ௮. அதிகாரம்.

௧. ஸீனேமியஸ்திரியின் சங்கதிகளைச்சொல்லல்: ௭. அசாவேல் தன் நாயனைக்கொல்லல்: ௰௬. யெகோராம் தீதாயாளல்: ௨௰. ஏதோம் லிப்னா வென்னுந்தேச ஆளுகையைத் தள்ளல்: ௨௫. அகஸ்யா இராசாவாதல்: ௨௮. யெஸ்ரியேலிலே காயப்பட்ட யெகோராமைச் சந்தித்தல்.

இலீஷா தான் உயிர்ப்பித்த புத்திரனுடைய மா
தாவை நோக்கி, யெகோவா ஒருபஞ்சத்தை
வருவிப்பார்; அது தேசத்தில் ஏழுவருஷமிருக்
கும், ஆதலால் நீயெழுந்து உன் குடும்பத்துடன்
போய் வசிக்கத்தக்க எந்தஸ்தானத்திலாயினும்
வாசம்பண்ணு என்றான்.—அந்த ஸ்திரி எழுந்து ௨
தேவதாசனுடைய சொற்படி தன் குடும்பத்து
டன்போய், பெலிஸ்தியருடைய தேசத்தில் ஏ
ழுவருஷந் தங்கினாள்.—ஏழுவருஷஞ் சென்ற ௩
பின் அந்த ஸ்திரி பெலிஸ்தியரின் தேசத்தினின்
றுந் திரும்பிவந்து, தன் வீட்டுக்காகவும் நிலத்
துக்காகவும் இராசாவிடத்தில் முறையிடும்படி
போனாள்.—இராசா தேவதாசனுடைய பணி ௪
விடைக்காரனாகிய கேயேசாயை நோக்கி, இலீ
ஷாசெய்த அற்புதங்களெல்லாவற்றையும் எனக்
குத்தெரிவிக்கும்படி கேட்கிறேனென்றான்.—
இவன், அவன் ஒருபிரேதத்தை இன்னபிரகாரம் ௫
உயிர்ப்பித்தானென்று இராசாவுக்குத் தெரிவிக்
கையில், அவன் உயிர்ப்பித்த புத்திரனுடைய மா
தா, தன் வீட்டுக்காகவும் தன் நிலத்துக்காகவும் இ
ராசாவிடத்தில் முறையிட்டாள். அப்பொழுது
கேயேசாய் என் ஆண்டவனே, இராசாவே, இ
வள்தான் அந்த ஸ்திரி, இலீஷா உயிர்ப்பித்த இ
வன், இவளுடைய புத்திரன் என்றான்.—இரா ௬
சா, ஸ்திரியைக்கேட்டபொழுது அவள் அதை
அவனுக்குத்தெரிவித்தாள். இராசா அவள் பட்
சத்தில் ஒரு அதிபதியை ஏற்படுத்தி, அவனை
நோக்கி, இவளுக்குரியயாவையும், இவள் தேசத்
தை விட்டநாள்முதல் இதுவரைக்கும் வயலில்
விளைந்தசகலபலனையுங்கொடுத்துவிடென்றான்.
இலீஷா தமஸ்குவுக்குவந்தான்; ஸீரிய இரா ௭
சாவாகியபென்னாதத் வியாதியாயிருந்தான்; தே
வனுடையதாசன் இங்கேவந்திருக்கிறானென்று
அவனுக்குத்தெரிவிக்கப்பட்டது.—அப்பொழு ௮
து இராசா அசாவேலைநோக்கி, நீ உன்கையில்
ஒரு காணிக்கையை எடுத்துக்கொண்டுபோய்,
தேவனுடையதாசனைச்சந்தித்து, நான் இந்தவி
யாதி நீங்கிச்சொஸ்தமடைவேனாவென்று அவ
னைக்கொண்டு யெகோவாவிடத்திற் கேட்ட
றியென்றுசொல்ல,—அசாவேல் தமஸ்குவிலுள் ௯
ள சகலவித உத்தமபொருள்களிலும்நாற்பது ஒட்
டகங்கள் சுமக்கத்தக்கவைகளைக் காணிக்கை
யாயெடுத்துக்கொண்டு, அவனைச்சந்திக்கும்படி
போய், அவனுக்கெதிர்ப்பட்டு, ஸீரிய இராசா
வாகியபென்னாதத்என்னும்உமதுபுத்திரன், நான்
இந்தவியாதி நீங்கிச்சொஸ்த மடைவேனாவென்
று கேட்கும்படி, என்னை உம்மிடத்தில் அனுப்பி
னாரென்றான்.—அதற்கு இலீஷா அவனைநோக் ௰
கி, நீ வியாதிநீங்கிச்சொஸ்தமடையக்கூடுமென்
று அவனுக்குப்போய்ச்சொல்லு; ஆனாலும் அ
வன் நிச்சயமாய்ச்சாவானென்று யெகோவா
எனக்குத்தெரிவித்திருக்கிறாரென்றான்.—பின்பு ௰௧
தேவனுடையதாசன், இவன் வெட்கப்படும்வ
ரைக்கும் இவன்மேல் கண்ணூன்றிக்கொண்டு
அழுதான்.—அதினால் அசாவேல் என் ஆண்ட ௰௨
வன் அழுகிறதென்னவென்று கேட்க, அவன்

(௰௬) வச.௧. (௰௭) அதி.௬.௩௨. வச.௨. (௰௮) வச.௧.—(அ. அதி. ௧.) அதி.௪.௩௫. சங்.௱௫.௰௬. ஆகா.௧.௰௧. (௪) அதி.௫.௨௭. (௫) அதி.௪.௩௫. (௮) ௧.இரா.௰௯.௰௫. ௧.சாமு.௯.௭. ௧.இரா.௰௪.௩. அதி.௧.௨. (௰) வச.௰௫. (௰௧) லூக்.௰௯.௪௧. (௰௨) அதி.௰.௩௨,௩௩. ஆமோ.௧.௩. அதி.௰௫.௰௬. ஓசி.௰௩.௰௬. ஆமோ.௧.௰௩.

நீ இஸரவேல் சந்ததியாருக்குச்செய்யுந் தீங்கு
இன்னதென்று எனக்குத்தெரியும்: நீ அவர்களு
டைய அரணான ஸ்தானங்களை அக்கினியினாலே
தகிப்பாய், அவர்களுடைய வாலிபரைக் கட்கத்
தினாற்கொலைசெய்வாய், அவர்கள் குழந்தைகளை
மோதியடிப்பாய், கருப்பவதிகளுடைய வயிற்
௰௩ றைக் கீறுவாயென்றான்.—அதற்கு அசாவேல்
இந்தப்பெரிய தீங்கைச்செய்வதற்கு உமது அ
டியான் நாயாவென்றான்; இலீஷா, நீ ஸீரியருக்
கு இராசாவாவாயென்று யெகோவா எனக்
௰௪ குத்தெரிவித்திருக்கிறாரென்றான்.—பின்பு இவன்
இலீஷாவைவிட்டுப்புறப்பட்டுத் தன் எசமான
னிடத்தில்வர, அவன் இலீஷா உனக்கென்ன
சொன்னானென்று இவனைக்கேட்டான். இவன்
நீர்வியாதிநீங்கிச்சொஸ்தமடைவீரென்று சொன்
௰௫ னானென்றான்.—மற்றை நாள் இவன் ஒரு சமுக்
காளத்தையெடுத்து, சலத்திலேதோய்த்து, அவன்
முகத்தின்மேல் விரித்துவிட்டான், அதினால் அ
வன் இறந்துபோனான்: அவனுக்குப்பின் அசா
வேல் இராசாவானான்.

௰௬ இஸரவேலரின் இராசாவாகிய ஆகாப்பின்
புத்திரனான யோராம் அரசாண்ட ஐந்தாம் வரு
ஷத்தில் யோஷாபாத் யூதாவில் இராசாவாயி
ருக்கையில், யூதாவின் இராசாவாகிய யோஷா
பாத்தின் புத்திரனான யெகோராம் இராசாவா
௰௭ னான்.-இவன் அரசாளத்தொடங்கினபொழுதுஇ
வனுக்குமுப்பத்திரண்டுவயது; இவன் யெருஷ
௰௮ லேமில் எட்டுவருஷம்அரசாண்டான்.—ஆகாப்
பின்வமிசத்தார் இஸரவேலரின் இராசாக்களின்
வழியில் நடந்ததுபோல இவனும் நடந்துவந்
தான்: ஆகாப்பின் புத்திரி இவனுக்கு மனைவி:
யெகோவாவின் பார்வைக்கு இவன் தீங்கு
௰௯ செய்துவந்தான்.—ஆனாலும் யெகோவா தன்
தாசனாகிய தாவீதுக்கு அவன் சந்ததியாருக்குள்
ளென்றும் ஒரு விளக்கைத்தருவேனென்று அவ
னுக்கு வாக்குத்தத்தஞ்செய்ததினிமித்தம், அவர்
யூதாவை முழுமையும் நாசப்படுத்தவில்லை.

௨௰ அவன் நாள்களில் ஏதோமியர் யூதாவின் அதி
காரத்தைத்தள்ளிவிட்டு, தங்களுக்குள் ஒரு இரா
௨௧ சாவை ஏற்படுத்திக்கொண்டார்கள்.-அதினாலே
யோராம் தன் சமஸ்த ரதங்களோடும் சாயீருக்
குப்போய் இரவில் எழுந்து, தன்னை வளைந்து
கொண்ட ஏதோமியரையும் ரதங்களின் அதிபதி
களையும் சின்னபின்னப்படுத்த,சனங்கள்தங்கள்
தங்கள் கூடாரங்களுக்குத்தப்பி ஓடினார்கள்.—
௨௨ ஆகிலும் ஏதோமியர் இந்நாள்வரைக்கும் யூதா
வின் அதிகாரத்தைத் தள்ளிவிட்டிருக்கிறார்கள்.
அக்காலத்திலே லிப்னீயரும் அவர்கள் அதிகாரத்
௨௩ தைத் தள்ளிவிட்டார்கள்.—யோராமின் மற்றக்
கிரியைகளும் அவன் செய்தயாவும் யூதாதேசத்து
இராசாக்களின் சரித்திர புத்தகத்திலல்லவா எழு
தியிருக்கின்றன.-யோராம் தன் முன்னோருடன் ௨௪
மகாநித்திரையடைந்து, தன் பிதாக்களுடன் தா
வீதின் நகரத்தில் அடக்கம் பண்ணப்பட்டான்:
அவனுக்குப்பின்பு அவன் புத்திரனாகிய அகஸ்
யா அரசாண்டான்.

இஸரவேலரின் இராசாவாகிய ஆகாப்பின் ௨௫
புத்திரனான யோராம் அரசாண்ட பன்னிரண்
டாம்வருஷத்தில், யூதாதேசத்தின் இராசாவான
யெகோராமின்புத்திரனாகிய அகஸ்யா இராசாவா
னான்.-அகஸ்யா அரசாளத்தொடங்கினபொழுது ௨௬
அவனுக்கு இருபத்திரண்டுவயது; அவன் யெ
ருஷலேமில் ஒருவருஷம் அரசாண்டான். அ
வன் மாதாவின்பெயர் அத்தாலியாள், அவள் இ
ஸரவேலரின் இராசாவாகிய உம்றியின்புத்திரி.—
அவன் ஆகாப்பின் வமிசத்தாருடைய வழியில் ௨௭
நடந்து, ஆகாப்பின்வமிசத்தார் செய்தபிரகாரம்
யெகோவாவின் பார்வைக்குத் தீங்குசெய்
தான்: அவன் ஆகாப்பின் வமிசத்தில் சம்பந்தம்
கலந்தவனானான்.

அவன் ஆகாப்பின் புத்திரனாகிய யோராமு ௨௮
டன் கூடிக்கொண்டு, ராமொத் கிலியாத்திலே
ஸீரியாவின் இராசாவாகிய அசாவேலை எதிர்த்
து யுத்தஞ்செய்யப்போனான்; ஸீரியர் யோரா
மைக் காயப்படுத்தினார்கள்.—யோராம் இராசா, ௨௯
தான் ஸீரிய இராசாவாகிய அசாவேலை எதிர்த்
து யுத்தஞ்செய்தபொழுது, ராமாவிலே ஸீரிய
ரால் தான்பட்ட காயங்களை ஆற்றும்படி யெஸ
ரியேலுக்குப்போயிருந்தான். இப்படி ஆகாப்
பின் புத்திரனாகிய யோராம் வருத்தமாயிருந்ததி
னால்,யூதாதேசத்து இராசாவாகியயெகோராமின்
புத்திரனான அகஸ்யா அவனைப் பார்க்கும்படி
யெஸரியேலுக்குப்போனான்.

## ௯. அதிகாரம்.

௧.யெகூவுக்குஇராசாபிஷேகஞ்செய்யும்படிஇலீ
ஷா ஒரு வாலிபத்தீர்க்கதரிசியையனுப்பல்: ௪.
அதைச்செய்தபின் தீர்க்கதரிசி தப்பி ஓடல்:
௰௧. யெகூ இராசாபிஷேகம்பெற்று நாபோத்
தின் நிலத்தில் யோராமைக் கொலைசெய்தல்:
௨௭. அகஸ்யாவைக் கொலைசெய்தல்: ௩௰. செ
ருக்குள்ள யெசேபேல் பலகணியினின்று தள்
ளுண்டு நாய்களால் பட்சிக்கப்படல்.

இலீஷாவென்னுந் தீர்க்கதரிசி, தீர்க்கதரிசிக ௧
ளின் சீஷரில் ஒருவனைக்கூப்பிட்டு அவனை
நோக்கி, நீ இடைக்கட்டுக்கட்டிக்கொண்டு இந்
த எண்ணெய்ப்பாத்திரத்தைஉன்கையிலெடுத்து,
ராமொத் கிலியாத்துக்குப்போ.—அங்கே சேர்ந் ௨
தபின்பு நிம்ஷீயின் பௌத்திரனும்யோஷாபாத்
தின் புத்திரனுமாகிய யெகூவைத்தேடி, அவனி
ருக்கும்இடத்திற்பிரவேசித்து,அவனைதன் சகோ

(௰௩) ௧.சாமு.௰௭.௪௩. ௧.இரா.௰௯.௰௫. (௰௬) ௨.நாளா.௨௧.௩,௪. (௰௭) ௨.நாளா.௨௧.௫,. (௰௮) வச.௨௬. (௰௯) ௨.சாமு.௭.௰௩. ௧.இரா.௰௧.௩௬. ௨.நாளா.௨௧.௭. (௨௰) ஆதி.௨௭.௪௰. ௨.நாளா.௨௧.௮,௯. ௧.இரா.௨௨.௪௭. (௨௨) ஆதி.௨௭.௪௰. ௨.நாளா.௨௧.௰. (௨௪) ௨.நாளா.௨௨.௧. ௨.நாளா.௨௨.௭. ௨.நாளா.௨௧.௰௭. (௨௬) ௨.நாளா.௨௨.௨. வச.௰௮. (௨௭) ௨.நாளா.௨௨.௩,௪. (௨௮) ௨.நாளா.௨௨.௫. (௨௯) அதி.௯.௰௫. வச.௨௮. அதி.௯.௰௬. ௨.நாளா. ௨௨.௬,௭.—(௯. அதி. ௧.)௧.இரா.௨௰.௩௫. அதி.௪.௨௯. எரே.௧.௰௭. அதி.௮.௨௮,௨௯. (௨) வச.௫,௰௬.

தரர் மத்தியினின்று எழுந்திருக்கும்படி செய்து,
அந்தரங்கமான ஒரு அறையில் அவனைக்கூட்
௩ டிக்கொண்டுபோய்,—பாத்திரத்தையெடுத்து அ
தின் எண்ணெயை அவன் தலையின்மேல்வூற்றி,
நான் உன்னை இஸரவேலருக்கு இராசாவாக அபி
ஷேகஞ்செய்தேனென்று யெகோவா சொல்
லுகிறாரென்று சொல்லு. பின்பு கதவைத்திறந்
து ஓடிப்போ, தரிக்கவேண்டாமென்றான்.
௪ வாலிபன், தீர்க்கதரிசியாகிய அந்த வாலிப
௫ ன் ராமொத்கிலியாத்துக்குப்போனான்.—அவன்
போனபொழுது சேனாபதிகள் அங்கிருக்கக்கண்
டு, சேனாபதியே, நான் உமக்கொரு வாக்குச்
சொல்லவேண்டுமென்றான். அதற்கு யெகூ எங்
களெல்லாருக்குள்ளும் ஆருக்கென்றுகேட்க,சே
௬ னாபதியே, உமக்குத்தானென்றான்.—அப்பொழு
து அவன் எழுந்து வீட்டுக்குள்ளே போனான்;
இவன், அவன் சிரசில் எண்ணெயையூற்றி, அவ
னைநோக்கி, நான், யெகோவாவின்சனங்களா
கிய இஸரவேலருக்கு இராசாவாக உனக்குஅபி
௭ ஷேகஞ்செய்தேன்.—நான், யெசேபேலின் கை
யில் என் தாசராகிய தீர்க்கதரிசிகளின் இரத்தப்
பழியையும், யெகோவாவின் சகல தாசரு
டைய இரத்தப்பழியையும் வாங்கும்படி, நீ உன்
ஆண்டவனாகிய ஆகாப்பின் வமிசத்தை அழிப்
௮ பாய்.—ஆகாப்பின் வமிசத்தார் யாவரும் நாசமா
வார்கள்: இஸரவேலர்மத்தியில் அடைபட்டவ
னும் விடுபட்டவனுமாகிய ஆகாப்பின் சகல பு
ருஷரையும் அவனினின்றுஞ் சேதிப்பேன்.—
௯ ஆகாப்பின்வமிசத்தை, நெபாத்தின்புத்திரனாகிய
யெரோபேயாமின் வமிசமும், அகியாவின் புத்
திரனாகிய பாஷாவின் வமிசமும்போலாக்குவே
௰ ன்.—யெஸரியேலின் நிலத்திலே யெசேபேலை
நாய்கள் தின்னும், அவளைஅடக்கம்பண்ணுவார்
ஒருவருமில்லை என்று இஸரவேலரின் தேவனா
கிய யெகோவா சொல்லுகிறாரென்று சொல்
லி, கதவைத்திறந்து ஓடிப்போனான்.
௰௧ பின்புயெகூவெளியேதன்ஆண்டவனுடைய
பணிவிடைக்காரரிடத்திற்குவந்தான்: அப்பொ
ழுது ஒருவன்அவனைநோக்கி, சுகச்செய்தியா,அ
ந்தப்பித்தன் உம்மிடத்தில் வந்ததேதென்றுகேட்
க, இவன் அவர்களைநோக்கி, அந்தமனிதனையும்,
அவன்பேச்சையும்நீங்கள்அறிவீர்களென்றான்.—
௰௨ அதற்குஅவர்கள்இதுபொய்;இப்பொழுது அதை
எங்களுக்குச்சொல்லுமென்றார்கள். பின்பு இவ
ன்,உன்னை இஸரவேலருக்குஇராசாவாகநான்அ
பிஷேகஞ்செய்தேனென்றுயெகோவாசொல்
லுகிறாரென்று, இன்னஇன்னபிரகாரமாகஅவன்
௰௩ எனக்குச் சொன்னானென்றான்.—அப்பொழுது
அவர்கள்யாவரும்விரைந்து தங்கள்தங்கள்வஸ்தி
ரங்களை எடுத்து வீட்டுப்படிகளின்மேல் நின்று,
அவைகளைஅவன்கீழேயிட்டு, யெகூ இராசாவா
னானென்றுசொல்லிஎக்காளங்களையூதினார்கள்.—
பின்பு நிம்ஷீயின் பௌத்திரனும் யோஷபாத் ௰௪
தின்புத்திரனுமாகியயெகூ யோராமுக்கு விரோ
தமாகத்துராலோசனைசெய்தான். ஆரியஇராசா
வாகிய அசாவேலினிமித்தம், யோராமும் அவனு
டன்இருந்த இஸரவேலரும் ராமொத்கிலியாத்
தைக்காத்துக்கொண்டார்கள்.—ஆனாலும்ஆரிய ௰௫
இராசாவாகியஅசாவேலுடன் யோராம்யுத்தஞ்
செய்தபொழுது, தான்ஆரியரால் பட்டகாயங்க
ளைஆற்றுகிறதற்கு யோராம் இராசா யெஸரியே
லுக்குப்போயிருந்தான். அப்பொழுது யெகூ,
உங்களுக்குப்பிரியமானால் இந்தச்சமாசாரத்தை
யெஸரியேலிலே போய்த் தெரிவிக்கும்படி,ஒரு
வரும் நகரத்தைவிட்டு வெளியேபுறப்பட விட
வேண்டாமென்றான்.—யோராம் யெஸரியேலி ௰௬
லேகிடந்தபடியினால் யெகூ ஒரு இரதத்திலேறி
அங்கே போனான். அப்பொழுதுயூதாதேசத்திரா
சாவாகிய அகஸ்யா யோராமைப்பார்க்கிறதற்கு
அங்கே வந்தான்.—யெஸரியேலிலிருந்த ஒரு ௰௭
கோபுரத்தின்மேல் ஒரு காவலாளன் நின்று யெ
கூவுடன்வருகிறசனக்கூட்டத்தைக்கண்டு, ஒரு
சனக்கூட்டத்தைக் காண்கிறேனென்றான். அதி
னால் யோராம் அவர்களுக்கெதிர்ப்பட்டு அவர்க
ளைநோக்கி,சுகச்செய்தியாவென்றுகேட்கும்படி
ஒரு குதிரைவீரனையனுப்பென்றான்.—ஒரு குதி ௰௮
ரைவீரன்போய் அவனுக்கெதிர்ப்பட்டுச் சுகச்
செய்தியாவென்று இராசாகேட்கிறாரென்றுசொ
ல்ல,யெகூ, சுகச்செய்திவிசாரிக்க நீயார்; எனக்
குப்பின்னாகவாவென்றான். காவலாளன்,தூதன்
அவர்களிடத்தில்போனான், அவன் திரும்பவில்
லையென்றான்.—அப்பொழுது அவன் வேறொ ௰௯
ருகுதிரைவீரனையனுப்பினான்; அவன் அவர்களி
டத்தில்போய், சுகச்செய்தியாவென்று இராசா
கேட்கிறாரென்றுசொல்ல, சுகச்செய்தி விசாரிக்
க நீயார்; என்பின்னாகவாவென்றான்.—காவலா ௨௰
ளன், அவனும் அவனிடத்திற்போனான், திரும்
பிவரவில்லை: ஓட்டுதல் நிம்ஷீயின் புத்திரனாகி
ய யெகூவின் ஓட்டுதல்போலிருக்கின்றது; அ
வன்வேகமாய்ஓட்டுகிறவனென்றான்.—அப்பொ ௨௧
ழுது யோராம்ஆயத்தப்படுத்தென்றான். அவன்
இரதம் ஆயத்தப்பட்டது. இஸரவேலரின் இரா
சாவாகியயோராமும், யூதாதேசத்தின்இராசாவா
கியஅகஸ்யாவும்,தன்தன் இரதத்தில்ஏறிக்கொண்
டு, யெகூவுக்கெதிராகப்புறப்பட்டு, யெஸரியே
லனாகிய நாபோத்தின்நிலத்தில் அவனைச் சந்தித்
தார்கள்.—யோராம் யெகூவைக்கண்டவுடனே ௨௨
யெகூவே, சுகச்செய்தியாவென்று கேட்க, அ
வன் உன் மாதாவாகிய யெசேபேலின் விபசார
மார்க்கங்களும், மாயாவித்தைகளும் இருக்குமட்
டும், என்னசுகச்செய்தி யென்றான்.—அப்பொ ௨௩
ழுது யோராம் தன்கையைத்திருப்பி, தப்பியோ
டி, அகஸ்யாவைநோக்கி, அகஸ்யாவே, இராசத்
துரோகமென்றான்.—யெகூ தன் முழுப்பலத் ௨௪

(௩) ௧.இரா.௰௯.௰௬. (௬) ௧.இரா.௰௯.௰௬. ௨.நாளா.௨௨.௭. (௭) ௧.இரா.௰௮.௪. (௮) ௧.இரா.௰௪.௰. ௧.சாமு.௨௫.௨௨. உபா.௩௨.௩௬. (௯) ௧.இரா.௰௪.௰. ௧.இரா.௰௬.௩,௰௧. (௰) ௧.இரா.௨௧.௨௩. (௰௧) எரே.௨௧.௨௫. யோவா.௰.௨௰. அப்.௨௬.௨௪. ௧.கொரி.௪.௰. (௰௩) மத்.௨௭.௧. (௰௫) அதி.௮.௨௧. (௰௬) அதி.௮.௨௧. (௨௧) ௨.நாளா.௨௨.௭.

தோடும் ஒரு வில்லைவளைத்து, யெகோராமுக்கு
அவன் புயத்துக்கிடையில் எய்துவிட்டான்; அம்
பு அவன் நெஞ்சை ஊடுருவிச்செல்ல, அவனி
உரு ரதத்திலே தாழ்ந்தான்.—அப்பொழுது யெகூ
தன்சேனாபதியாகிய பித்காரைநோக்கி, அவனை
எடுத்து யெஸ்ரியேலனாகிய நாபோத்தின் வயல்
நிலத்தில் எறிந்துவிடு: நீயும் நானுங்குதிரை ஏறி
அவன் பிதாவாகிய ஆகாப்புக்குப் பின்சென்ற
பொழுது, யெகோவா இந்தச்சாபத்தை அ
வன்மேல் ஏற்றினாரென்று நினைத்துக்கொள்.—
உசு நான்நேற்று நாபோத்தின் இரத்தத்தையும் அவன்
புத்திரரின் இரத்தத்தையுங்கண்டேனென்று யெ
கோவா சொல்லுகிறார்; அன்றியும் இந்தநிலத்
தில் உனக்குப்பலனளிப்பேனென்று யெகோ
வா சொல்லுகிறார். ஆகையால் யெகோவா
வின் வாக்கின்படி, இவனைத்தூக்கி இந்தநிலத்
தில் எறிந்துவிடென்றான்.
உஎ யூதாதேசத்தின் இராசாவாகிய அகஸ்யா அ
தைக்கண்டபொழுது தோட்டத்திலிருக்கிறவீட்
டின்வழியாய்த்தப்பி ஓடினான். யெகூ அவனைத்
தொடர்ந்து, அவனையும் இரதத்தில் அடியுங்க
ளென்றான். இப்லியமுக்குச் சமீபத்தில் கூருக்
கு ஏறிப்போகையில் அப்படிச்செய்தார்கள்.
அவன் மெகிதோவுக்குத் தப்பிப்போய், அங்கே
உஅ இறந்துபோனான்.—அவன் பணிவிடைக்காரர்
அவனை இரதத்திலேற்றி, யெருஷலேமுக்குக்
கொண்டுபோய், தாவீதின் நகரத்திலுள்ள அவன்
பிரேதவறையில் அவன்முன்னோருடன் அவனை
உகூ அடக்கம்பண்ணினார்கள்.—இந்த அகஸ்யா ஆ
காப்பின்புத்திரனாகிய யோராம் அரசாண்ட பதி
னோராம்வருஷத்தில் யூதாதேசத்துக்கு இராசா
வானான்.
கூ௰ யெகூ யெஸ்ரியேலுக்கு வந்தபொழுது யெ
சேபேல் அதைக்கேள்விப்பட்டு, தன் கண்களுக்
கு மையிட்டு, தன் கூந்தலைச்சிங்காரித்து, பலக
கூக ணிவழியாய் எட்டிப்பார்த்தாள்.—யெகூ வாச
லிற்பிரவேசித்தபொழுது அவள், தன் ஆண்டவ
னைக்கொலைசெய்தசிம்றி வாழ்வடைந்தானா என்
கூஉ றாள்.-அப்பொழுது அவன் பலகணிக்கேறிட்டுப்
பார்த்து என்பட்சத்தார் யாவரெனறு சொல்ல,
இரண்டு மூன்று பிரதானிகள் பார்த்தார்கள்.—
கூகூ பின்பு அவன் அவளைக் கிழேதள்ளுங்களென்று
சொல்ல, அவர்கள் அவளைத்தள்ளினார்கள்: அவ
ளுடைய இரத்தம் சுவரிலுங் குதிரைகளிலுந்தெ
றித்தது: அவன் அவளைக்காலால் மிதித்துவிட்
கூச டான்.—அவன் பிரவேசித்தபின் போசனபா
னம்பண்ணி, அந்தச் சபிக்கப்பட்ட ஸ்திரி இ
ராசகுமாரத்தியானபடியால், நீங்கள்போய் அவ
ளைப்பார்த்துஅடக்கம்பண்ணுங்களென்றுசொல்
கூரு ல,—அவர்கள் அவளை அடக்கம்பண்ணப் போ
னார்கள்: அவளுடைய தலை ஓட்டையும், கால்க
ளையும், உள்ளங்கைகளையுமேயன்றி, வேறொன்
றையும் அவர்கள் காணவில்லை.—ஆதலால் அ கூசு
வர்கள் திரும்பிவந்து அதை அவனுக்குத் தெரி
வித்தார்கள். அப்பொழுது அவன் யெஸ்ரியே
லின்நிலத்திலே யெசேபேலின்மாமிசத்தை நாய்
கள் தின்னும்; இது யெசேபேலென்று அவர்கள்
சொல்லாதபடிக்கு யெசேபேலுடைய பிரேதம்,
யெஸ்ரியேலின்நிலத்தில் வயல்வெளியிலேபோ
டும் எருவைப்போலிருக்குமென்று,—யெகோ கூஎ
வா திஷ்பியனாகிய இலீசாவென்னுந் தமது தா
சனைக்கொண்டு சொன்ன வாக்கு இதுவேயென்
றான்.

## ௰. அதிகாரம்.

க. யெகூவினால் ஆகாப்பின் எழுபதுபுத்திரர் சிர
சேதனம் பண்ணப்படல்: அ. அவன் இலீசா
வின் வாக்கினால் தன்னை நிர்த்தோஷமாக்கல்:
௰உ. அகஸ்யாவின் வமிசத்தாரைக்கொல்லல்:
௰ரு. யெகொனதாப்பைச் சந்தித்தல்: ௰அ. கப
டத்தினால் பாகாலின்பூசாரிகளைக் கொலைசெய்
தல்: உகூ. யெகூயெரோபேயாமைப் பின்பற்றி
நடத்தல்: கூஉ. அசாவேல் இஸரவேலரை உபத்
திரவப்படுத்தல்: யெகூ மரணமடைதல்.

ஷமாரியாவில் ஆகாப்புக்கு எழுபது புத்திரரி க
ருந்தார்கள். யெகூ,ஷமாரியாவிலிருக்கிற யெஸ
ரியேலின் அதிபதிகளுக்கும், ஆகாப்பின் பிள்
ளைகளை வளர்க்கிறவர்களுக்கும்,—உங்கள் ஆண் உ
டவனுடைய புத்திரர் உங்களோடிருக்கிறார்கள்;
இரதங்களும், குதிரைகளும், அரணுள்ள நகரங்
களும்,ஆயுதங்களும் உங்களுக்குண்டு; ஆதலால்
இந்தக்காகிதம் உங்களிடத்தில் சேர்ந்தமாத்திரத்
தில்,—உங்கள் ஆண்டவனுடைய புத்திரருக்குள் கூ
உத்தமனும் யோக்கியனுமாகிய ஒருவனைத்தெ
ரிந்து, அவன் பிதாவின் சிங்காசனத்தில் அவ
னைவீற்றிருக்கப்பண்ணி,உங்கள் ஆண்டவனின்
வமிசத்தார் நிமித்தம் யுத்தஞ்செய்யுங்களென்று
காகிதங்கள் எழுதியனுப்பினான்.—அவர்கள்மிக ச
வும் பயந்து, இரண்டு இராசாக்களே அவனுக்கு
முன்நிற்கவில்லை: நாங்கள் எப்படி முன் நிற்
போமென்றார்கள்.—ஆதலால் வீட்டதிகாரியும், ரு
நகரத்துக்கதிபதியும், முதியோரும், பிள்ளை
களை வளர்த்தவர்களும், நாங்கள் உமது அடி
யார், நீர் எங்களுக்குக்கட்டளையிடுகிற யாவை
யுஞ்செய்வோம்; நாங்கள் ஒரு இராசாவை ஏற்ப
டுத்துகிறதில்லை: நீர் உமது பார்வைக்கு நலமாய்த்
தோன்றுகிறதைச்செய்வீராகவென்று யெகூவுக்
குச்சொல்லி அனுப்பினார்கள்.—பின்பு அவன் சு
நீங்கள் என் பட்சத்தாராகி, என் சொற்கேட்பீர்
களாகில், உங்கள் ஆண்டவனின் புத்திரராகிய
அந்த மனிதருடைய தலைகளை எடுத்துக்கொண்
டு,நாளை இந்நேரம்யெஸரியேலில்என்னிடத்தில்
வாருங்களென்று, இரண்டாந்தரம் ஒரு காகிதம்
எழுதியனுப்பினான். இராசகுமாரர் எழுபதுபே
ரும் தங்களை வளர்த்த நகரத்தின் பெரியோர்களி

(உரு) க.இரா.உக.உஅ. (உசு) க.இரா.உக.௰அ. (உஎ) உ.நாளா.உஉ.கூ. உ.நாளா.உக.௰அ,௰கூ. அதி.அ.உரு. (கூ௰) எசேக்.உகூ.ச௰. (கூக) க.இரா.௰சு.கூ—உ௰. (கூச) க.இரா.௰சு.கூக. (கூசு) க.இரா.உக.உகூ. சங்.அகூ.௰.—(௰. அதி.)

௭ டத்திலிருந்தார்கள்.—அந்தக்காகிதம் அவர்களி
டத்திற் சேர்ந்தபொழுது, இராச குமாரராகிய
அந்த எழுபது பேரையும் கொலைசெய்து, அவர்
கள்தலைகளைக் கூடைகளிலேபோட்டு, யெஸரி
யேலிலிருக்கிற அவனிடத்தில்அனுப்பினார்கள்.
௮ தூதனொருவன்வந்துஅவனைநோக்கி,இராசகு
மாரரின்தலைகளைக்கொண்டுவந்திருக்கிறார்களெ
ன்று அவனுக்குத்தெரிவித்தான். நீங்கள்அவைக
ளை வாசலிலே காலைமட்டும் இரண்டு குவியலா
௯ கக் குவித்துவையுங்களென்றான்.—மற்றைநாள்
காலமே அவன் வெளியேபோய் நின்றுசமஸ்தச
னங்களையும்நோக்கி, நீங்கள் நீதிமான்கள்: நான்
என் ஆண்டவனுக்கு விரோதமாய் மந்திராலோ
சனைபண்ணி, அவனைக் கொலைசெய்தேனே:
இவர்கள் யாவரையுங் கொலைசெய்தவனார்.—
௰ யெகோவா தமது தாசனாகிய இலீசாவைக்
கொண்டு சொன்னதை நிறைவேற்றினாரே; ஆ
காப்பின் வமிசத்தைக்குறித்து யெகோவா
சொல்லியஅவருடைய வாக்கு ஒன்றும் விருதா
வாகமாட்டாதென்று நீங்கள் அறிந்துகொள்ளுங்
௰௧ களென்றான்.—பின்பு யெஸரியேலிலே ஆகாப்
பின்வமிசத்தில் மீதியாயிருந்தசமஸ்தரையும், அ
வனுடைய பெரியமனிதர் யாவரையும், அவன்
பந்துசனங்களையும்,அவன்பூசாரிகளையும் ஒருவ
ரும்மீதியாயிருக்கவிடாமல்கொலைசெய்தான்.
௰௨ அப்பால் அவன் எழுந்து புறப்பட்டு ஷமாரி
யாவுக்குவந்தான். அவன் வழியிலே மயிர்கத்
திரிக்கிற வீட்டுக்குச்சமீபத்தில் சென்றபொழு
௰௩ து,—யெகூ, யூதாதேசத்து இராசாவாகிய அகஸ்
யாவின் சகோதரருக்கு எதிர்ப்பட்டு, நீங்கள்
ஆரென்றுகேட்க, அவர்கள், நாங்கள் அகஸ்யா
வின் சகோதரர்; நாங்கள் இராசாவின் பிள்ளைக
ளுக்கும்,இராசாத்தியின்பிள்ளைகளுக்கும்வாழ்த்
௰௪ துதல் சொல்லப்போகிறோமென்றார்கள்.—அப்
பொழுது அவன் உயிருடன் அவர்களைப்பிடித்
துக்கொள்ளுங்களென்றுசொல்ல, அவர்களை உ
யிருடன் பிடித்து, அவர்கள் நாற்பத்திரண்டுபே
ரையும் மயிர்கத்திரிக்கிற வீட்டின் குளத்தருகே
கொலைசெய்தார்கள்; அவன், ஒருவரையும் மீதி
யாயிருக்கவிடவில்லை.
௰௫ பின்பு அங்கிருந்து புறப்பட்டுத் தன்னைச்சந்
திக்கும்படிவந்த ரேகாப்பின் புத்திரனாகிய யெ
கொனதாப்பைச்சந்தித்து, அவனுக்கு வாழ்த்து
தல்சொல்லி, அவனைநோக்கி,என்மனம்உன்மன
துக்கிசைந்திருக்கிறதுபோல உன்மனமும் உண்
மையாயிருக்கின்றதாவென்றுகேட்க,யெகொன
தாப், ஆமென்றான். அப்படியாகில் கை தா என்
றுசொல்ல, கைகொடுத்தான்; இவன் அவனைத்
௰௬ தன்னுடன் இரதத்திலேற்றுகையில்,-யெகோ
வா நிமித்தம் என் வைராக்கியத்தைப் பார்க்
கும்படி என்னுடன் வாவென்றான். இப்படி அ
வர்கள் அவனைத்தன் இரதத்தின்மேலேற்றினார்
கள்.—இவன் ஷமாரியாவில் சேர்ந்தபொழுது, ௰௭
யெகோவா இலீசாவைக்கொண்டுசொல்லிய
பிரகாரம் ஆகாப்பை நாசப்படுத்துமளவும் ஷமா
ரியாவில் அவனுக்கு மீந்திருந்த சமஸ்தரையுங்
கொலைசெய்தான்.
பின்புயெகூ சனங்கள்யாவரையுங்கூடிவரும் ௰௮
படிசெய்து,அவர்களைநோக்கி,ஆகாப்,பாகாலைச்
சேவித்தது சொற்பம்; யெகூவாகிய நான் அவ
னையதிகமாகச் சேவிப்பேன்.—ஆதலால் பாகா ௰௯
லின் சகல தீர்க்கதரிசிகளையும், அவன் சகல
சேவகரையும், அவன் சகல பூசாரிகளையும் என்
னிடத்தில் அழைத்துவாருங்கள்; ஒருவரும் வரா
மல் விடலாகாது: நான் பாகாலுக்கு மகாபலி
யிடப்போகிறேன்; வராதவன் எவனோ அவன்
உயிரோடிருக்கமாட்டானென்றான். யெகூ பா
காலைச்சேவிக்கிற சகலரையும் நாசப்படுத்தும்
படி இந்தச்சூதுசெய்தான்.—பின்பு யெகூ பா ௨௰
காலுக்கு மகோற்சவமென்று பிரசிததம் பண்
ணுங்களென்று சொல்ல, அவர்கள் பிரசித்தம்
பண்ணினார்கள்.—யெகூ இஸரவேல் தேசமெங் ௨௧
கும் ஆளனுப்ப, பாகாலைச்சேவிக்கிற சகலரும்
வந்தார்கள், ஒருவரும் வராமல் இருக்கவில்லை.
அவர்கள் பாகாலின் ஆலயத்திற்பிரவேசித்தார்
கள்;பாகாலின் ஆலயம் ஒருபுறந்தொடங்கி மறு
புறம்வரைக்கும் நிறைந்திருந்தது.—அப்பொழு ௨௨
து இவன் வஸ்திரசாலையின் அதிகாரியைநோக்
கி, பாகாலைச்சேவிக்கிற யாவருக்கும் வஸ்திரங்
கொண்டுவாவென்று சொல்ல,—அவன் அவர்க ௨௩
ளுக்கு வஸ்திரங்கொண்டுவந்தான். யெகூவும்
ரேகாப்பின் புத்திரனாகிய யெகொனதாப்பும் பா
காலின் ஆலயத்திற்பிரவேசித்து, பாகாலைச்சே
விக்கிறவர்களைநோக்கி, பாகாலைச்சேவிப்பவர்க
ளேயன்றி, யெகோவாவைச் சேவிப்பவர்க
ளில் ஒருவரும் உங்களுக்குள்ளிராதபடி பாருங்
களென்றான்.—அவர்கள் பலிகளையும் தகனபலி ௨௪
களையும் இடும்படி பிரவேசித்த சமயத்தில், யெ
கூ வெளியில் எண்பதுபேரை ஏற்படுத்தி அவர்
களைநோக்கி, நான் உங்கள்கையில் ஒப்பிக்கிற
மனிதர்களில் யாவனாகிலுந்தப்பினால், அவன்
பிராணனுக்குப்பிரதியாக அவனைத்தப்பவிட்ட
வனுடைய பிராணன் வாங்கப்படுமென்றான்.—
தகனபலியிட்டு முடிந்தவுடனே யெகூ காவ ௨௫
லாளர்களையுஞ் சேனாபதிகளையும் நோக்கி, உள்
ளேபோய் அவர்களைக்கொன்றுபோடுங்கள்;ஒரு
வனும் வெளியேவரலாகாதென்று சொல்ல, இ
வர்கள் அவர்களைக்கட்கத்தின் வாயினால் கொ
லைசெய்தார்கள்; காவலாளருஞ் சேனாபதிகளும்
அவர்களை வெளியே எறிந்துவிட்டார்கள்: பின்
பு அவர்கள் பாகாலின் ஆலயத்தைச்சேர்ந்த நக
ரத்திற்போய்,-பாகாலின் ஆலயத்தினின்றும்விக் ௨௬

(௭)௧.இரா.௨௧.௨௧.(௯)அதி.௯.௰௪,௨௪. (௰) ௧.சாமு.௩.௰௯. ௧.இரா.௨௧.௰௮,௨௧,௨௮.(௰௩)அதி.௮.௨௯.௨.நாளா.௨௨.௮.(௰௫)எரே.௩௫.௯,. ௧.நாளா.௨.௫௫. எஸ்ரா.௰.௰௯. (௰௬) ௧.இரா.௰௯.௰. (௰௭) அதி.௯.௮. ௨.நாளா.௨௨.௮. ௧.இரா.௨௧.௨௧. (௰௮) ௧.இரா.௰௬.௩௧,௩௨. (௰௯) ௧.இரா.௨௨.௬. (௨௧) ௧.இரா.௰௬.௩௨. (௨௪) ௧.இரா.௨௰.௩௯. (௨௬) ௧.இரா.௰௪.௨௩.

கிரகங்களை வெளியேகொண்டுவந்து தகித்தார்
உஎ கள்.—அவர்கள் பாகாலின் விக்கிரகத்தைத்தகர்த்
து, பாகாலின் ஆலயத்தை இடித்து, இந்நாள்வ
ரைக்குமிருக்கிறபடி மலசல ஸ்தானமாக்கினார்
உஅ கள்.—இவ்விதமாய் யெகூ இஸரவேல்தேசத்தி
னின்றும் பாகாலை நிர்மூலப்படுத்தினான்.
உகூ ஆனாலும் பெத்தேலிலுந்தாணிலும் ஸ்தாபிக்
கப்பட்ட பொற்கன்றுகளால் இஸரவேலரைப்
பாவஞ்செய்யப்பண்ணின நெபாத்தின் புத்திர
னாகிய யெரோபேயாமின் பாவங்களை யெகூ
கூய விட்டு நீங்கவில்லை.—அதினால் யெகோவா
யெகூவை நோக்கி, நீ என்பார்வைக்கு நலமா
னதைச்செய்தாய், நீ நன்றாய்ச்செய்தாய், என்
உள்ளத்திலிருந்த யாவையும் ஆகாப்புக்குச்செய்
தாய், ஆதலால் உன் சந்ததியார் நாலாந்தலைமு
றை வரைக்கும் இஸரவேலரின் சிங்காசனத்தில்
கூக வீற்றிருப்பார்களென்றார்.—யெகூ இஸரவேலின்
தேவனாகிய யெகோவாவின் வேதப்பிரமா
ணத்தின்படி தன் பூரண இருதயத்தோடே நடக்
கச் சாவதானமா யிருக்கவுமில்லை; இஸரவேல
ரைப் பாவஞ்செய்யப் பண்ணின யெரோபே
யாமின் பாவங்களை அவன் விட்டுநீங்கவுமில்லை.
கூஉ அந்நாள்களிலே யெகோவா இஸரவேல
ரைக்குறையப்பண்ணத்தொடங்கினார்: சூரியோ
தயத்திலுள்ள யோர்தான்தொடங்கி கிலியாத்
தின் சகலதேசமும், காத்தியர், ரூபேனியர், மனா
ஷேயர் தேசமட்டும் அர்னோன் நதியின் சமீபத்
திலுள்ள அரோவேர் தொடங்கிக் கிலியாத், பா
கூங ஷான் மட்டுமுள்ள,—இஸரவேலரின் சகல
எல்லைகளிலும் அசாவேல் அவர்களைமுறிய அ
கூச டித்தான்.—யெகூவின் மற்றக்கிரியைகளும், அ
வன்செய்த யாவும், அவன் பராக்கிரமம் யாவும்,
இஸரவேலரின் இராசாக்களின் சரித்திரபுத்தகத்
கூரு தில் அல்லவா எழுதியிருக்கின்றன.—யெகூதன்
முன்னோருடன் மகா நித்திரையடைந்தான்: அ
வனை ஷமாரியாவிலே அடக்கம்பண்ணினார்கள்.
அவனுக்குப்பின் அவன் புத்திரனாகிய யோவா
கூசு காஸ் இராசாவானான்.—யெகூ ஷமாரியாவில்
இஸரவேலரை அரசாண்டகாலம் இருபத்தெட்
டுவருஷம்.

## யக. அதிகாரம்.

க. யோவாஷ் இரட்சைபெறல்: ச. யோயதாவி
னால் அபிஷேகஞ் செய்யப்படல்: யரு. அத்தா
லியாளைக் கொலைசெய்தல்: யஎ. யோயதா தே
வாராதனையை ஸ்தாபித்தல்.

அகஸ்யாவின் மாதாவாகிய அத்தாலியாள் தன்
புத்திரன் இறந்ததைக்கண்டு, எழுந்து இராசவமி
உ சமுழுவதையும் நாசப்படுத்தினாள்.—யோராம்
இராசாவின் புத்திரியும், அகஸ்யாவின் சகோத
ரியுமாகிய யோஷேபாள், கொலையுண்ட இராச
புத்திரருக்குள்ளே அகஸ்யாவின்புத்திரனையோ
வாஷைக் களவாயெடுத்தாள்; அவன்கொல்லப்
படாதபடி அவனையும் அவன்தாதியையும் அத்
தாலியாளுக்குத் தெரியாமல் பள்ளி அறையில்
ஒளித்தார்கள்.—இவன் அவளுடன் யெகோ ங
வாவின் ஆலயத்தில் ஆறுவருஷம் ஒளித்திருந்
தான். அத்தாலியாள்தேசத்தை அரசாண்டாள்.
ஏழாம் வருஷத்தில் யோயதா ஆளனுப்பி, நூ ச
றுபேருக்கதிபதிகளையும், சேனாபதிகளையும், கா
வலாளர்களையும் அழைப்பித்து, யெகோவா
வின் ஆலயத்திலே கொண்டுவந்து, அவர்களோ
டே உடன்படிக்கை பண்ணி, யெகோவா
வின் ஆலயத்தில் அவர்களிடத்தில் ஆணையிடு
வித்துக்கொண்டு, இராசகுமாரனை அவர்களுக்
குக் காட்டினான்.—பின்பு அவன் அவர்களை ரு
நோக்கி, உங்களுக்குள் மூன்றில் ஒருபங்கு ச
னங்கள் அரமனையிலும், ஒருபங்கு சனங்கள் சூர்
வாசலிலும், மூன்றிலொருபங்கு சனங்கள் கா
வலாள்ருக்குப்பிற்புறத்திலுள்ள வாசலிலுங் கா
வல் பண்ணவேண்டும்.—அதில் ஒருவரும் பல சு
வந்தமாய்ப்புகாதபடி நீங்கள் காவல் பண்ணிக்
கொள்ளவேண்டும்.—ஓய்வுநாளில், உங்கள் எல் எ
லாருக்குள்ளும் இரண்டுபங்கு சனங்கள், யெ
கோவாவின் ஆலயத்தில் இராசாவைச் சூழ்ந்
து காவல்பண்ணவேண்டும்.—நீங்கள், அவரவர் அ
ஆயுதங்களை உங்களுங்கள் கையிலே பிடித்து,
இராசாவைச் சூழ்ந்து நிற்கவேண்டும்: அணிக்
குட்படுகிறவனெவனோ அவன் கொலைசெய்யப்
படவேண்டும்: இராசாவெளியே போகும்பொ
ழுதும் உள்ளே வரும்பொழுதும் நீங்கள் அவரோ
டிருக்கவேண்டும்; நீங்கள் செய்யவேண்டிய கா
ரியம் இதுவேயென்று அவர்களுக்குக் கட்டளை
யிட்டான்.—ஆசாரியனாகிய யோயதா கட்டளை கூ
யிட்டயாவற்றின்படிக்கும், நூறுபேருக் கதிபதி
கள் செய்தார்கள்: ஒவ்வொருவரும, ஓய்வுநாளில்
உள்ளே வருகிறவர்களும் வெளியேபோகிறவர்
களுமாகிய தங்கள் தங்களைச் சேர்ந்தமனிதரைக்
கூட்டிக்கொண்டு, ஆசாரியனாகிய யோயதாவி
டத்தில் வந்தார்கள்.—ஆசாரியன், நூறுபேருக் ய
கதிபதிகளுக்கு, யெகோவாவின் ஆலயத்தி
லிருந்த தாவீது இராசாவின் ஈட்டிகளையுங் கேட
கங்களையுங் கொடுத்தான்.—காவலாளர்யாவரும் யக
தங்கள் தங்கள் ஆயுதங்களைக்கையிற் பிடித்துக்
கொண்டு, ஆலயத்தின் வலப்புறந்தொடங்கி ஆ
லயத்தின் இடப்புறம் வரைக்கும், வேதிகைக்
கும் ஆலயத்துக்கும் அருகே இராசாவைச்சூழ்ந்
து நின்றார்கள்.—அவன் இராசகுமாரனை வெளி யஉ
யேகொண்டுவந்து, அவனுக்குமுடியைத்தரித்து,
சாட்சியின் புத்தகத்தை அவனுக்குக் கொடுத்
தான்; அவர்கள் அவனுக்கு அபிஷேகஞ்செய்து,
இராசாவாக ஏற்படுத்தினார்கள்; பின்புகைகொட்
டி இராசாவாழ்கவென்றார்கள்.
அத்தாலியாள், காவலாளருஞ் சனங்களுஞ் யங
செய்த ஆரவாரத்தைக் கேட்டபொழுது, யெ

(உஎ) எஸ்ரா.சு.யக. தானி.உ.ரு. (உகூ) க.இரா.யஉ.உஅ,உகூ. (கூய) அதி.யரு.க,ய. (கூக) க.இரா.யச.யசு. (கூஉ) ஆமோ.க.ங. (கூங) அதி.அ.யஉ.—(யக.அதி.க.) உ.இரா.உஉ.ய. அதி.அ.உசு. (உ) உ.நாளா.உஉ.யக. (ச) உ.நாளா.உங. (ரு) க.நாளா.கூ.உசு. (க) உ.நாளா.உங.அ. (யஉ) க.சாமு.ய.உச. (யங) உ.நாளா.உங.யஉ,.

கோவாவின் ஆலயத்திலே சனங்களிடத்தில்
௰௪ வந்தாள்.—அவள் பார்த்தபொழுது, முறைப்ப
டிஇராசா ஒரு தூணருகேநிற்க, பிரபுகளும் எக்
காளக்காரரும் இராசாவுக்குச்சமீபத்தில் நிற்க
வும், தேசத்தின்சகலசனங்களும் மகிழ்ந்துஎக்கா
ளங்களையூதவுங்கண்டு, அத்தாலியாள் தன்வஸ்
திரங்களைக்கிழித்து, இராசதுரோகம், இராசது
௰௫ ரோகமென்று குரலிட்டாள்.—யெகோவா
வின் ஆலயத்தில் அவளைக்கொலைசெய்யலாகா
தென்று ஆசாரியன் சொல்லியிருந்தபடியினால்,
ஆசாரியனாகிய யோயதா நூறுபேருக்கதிபதிக
ளையுஞ் சேனாபதிகளையும்நோக்கி, இவளை அணி
களுக்குவெளியே பிடித்துவிடுங்கள்: இவளைப்
பின்பற்றுகிறவனைக்கட்கத்தினாற் கொன்றுபோ
௰௬ டுங்களென்றான்.—அவர்கள் அவள்மேல் கை
வைத்தார்கள்; குதிரைகள் அரமனைக்குப் போ
கிறவழியாய் அவள்போகையில், கொலைசெய்
யப்பட்டாள்.
௰௭ பின்பு யோயதா, அவர்கள் யெகோவா
வின்சனங்களாகும்பொருட்டு, அவர்களும்இரா
சாவும்யெகோவாவோடே ஒரு உடன்படிக்
கைபண்ணச்செய்தான்; இராசாவுஞ்சனங்களுந்
தங்களுக்குள்ளேஅப்படியேபண்ணும்படிசெய்
௰௮ தான்.—தேசத்தின்சகலசனங்களும் பாகாலின்
ஆலயத்திற்பிரவேசித்து, அதை இடித்து, அதின்
வேதிகைகளையும் விக்கிரகங்களையும் முழுவதும்
தகர்த்து, பாகாலின் பூசாரியாகிய மத்தானை வே
திகைக்குமுன்பாகக்கொன்றுபோட்டார்கள்.—
௰௯ ஆசாரியன் யெகோவாவின் ஆலயத்துக்கு அ
திபதிகளை ஏற்படுத்தினான்; அவன் நூறுபேருக்
கதிபதிகளையும், சேனாபதிகளையும், காவலாளர்க
ளையும், தேசத்திற்சகல சனங்களையும் அழைப்
பிக்க, அவர்கள் யெகோவாவின் ஆலயத்தி
னின்றும் இராசாவை அழைத்துக்கொண்டுஇறங்
கி, காவலாளரின் வாசல்வழியாக அரமனைக்குப்
போனார்கள். அவன் இராசாக்களின் சிங்காச
௨௰ னத்தில் வீற்றிருந்தான்.—தேசத்தின் சகலசனங்
களுஞ் சந்தோஷப்பட்டார்கள், நகரம் அமைத
லாயிற்று: அத்தாலியாளை அரமனைக்கருகே கட்
௨௧ கத்தினாலே கொன்றார்கள்.—யோவாஷ் அரசா
ளத்தொடங்கினபொழுது அவனுக்கு ஏழுவயது.

## ௰௨. அதிகாரம்.

௧. யோயதா இருக்குமளவும் யோவாஷ் நன்றாய் அரசாளல்: ௪. தேவனுடைய ஆலயத்தைப் புதுப்பிக்கக்கட்டளையிடல்: ௰௭. பரிதானம்பெற்று அசாவேல் யெருஷலேமினின்றும் புறப்படல்: ௰௯. யோவாஷ் கொலைசெய்யப்பட்டபின்பு அவன் புத்திரனாகிய அமத்சீயா இராசாபிஷேகம்பெறல்.

யெகூ அரசாண்ட ஏழாம்வருஷத்தில், யோ
வாஷ் இராசாவாகி யெருஷலேமிலே நாற்பது
வருஷம் இராசரிக்கம்பண்ணினான். பேர்ஷே
பா ஊராளாகிய சிபீயாள் அவன் மாதா.—ஆசா ௨
ரியனாகிய யோயதாதனக்குப் போதித்துவந்தகா
லமுழுவதும், யோவாஷ், யெகோவாவின்
பார்வைக்கு நலமானதைச்செய்துவந்தான்.—ஆ ௩
னாலும் உயர்ந்த ஸ்தானங்கள் அகற்றப்படவில்
லை: பின்னுஞ்சனங்கள் உயர்ந்தஸ்தானங்களில்
பலியிட்டு, தூபங்காட்டிவந்தார்கள்.
யோவாஷ் ஆசாரியரைநோக்கி, யெகோவா ௪
வின் ஆலயத்திலே பரிசுத்தத்துக்கென்று நியமிக்
கப்படும்சகலபணத்தையும், தொகையிடப்படும்
ஒவ்வொருவனுடைய பணத்தையும், மீட்சிக்கு
மதிக்கப்படும் ஒவ்வொருவனுடைய பணத்தை
யும், தங்கள்தங்கள் இஷ்டப்படி ஒவ்வொருவரும்
யெகோவாவின் ஆலயத்திலேகொண்டுவரும்
எல்லாப்பணத்தையும்,—ஆசாரியர் தங்கள் தங் ௫
களுக்கு அறிமுகமானவர்களிடத்தில்வாங்கி, ஆ
லயத்தின் எல்லா இடிவுகளையும் புதுப்பிக்கவே
ண்டுமென்றான்.—ஆனாலும் யோவாஷ் இராசா ௬
அரசாண்ட இருபத்துமூன்றாம் வருஷமளவும்,
ஆசாரியர்கள், ஆலயத்தின் இடிவுகளைப்புதுப்பிக்
கவில்லை.—அதினால் யோவாஷ் இராசா ஆசாரி ௭
யனாகிய யோயதாவையும், மற்ற ஆசாரியர்களை
யும்அழைப்பித்து, அவர்களைநோக்கி, ஆலயத்தின்
இடிவுகளை நீங்கள் புதுப்பியாமல் விட்டதென்
ன; இனி நீங்கள் உங்களுக்கு அறிமுகமானவர்
கள் கையிற்பணத்தைவாங்காமல், ஆலயத்தின்
இடிவுகளைப்புதுப்பிக்கும்படி ஒப்பித்துப் போ
டுங்களென்றான்.—ஆதலால் ஆசாரியர்கள் பின் ௮
னுஞ்சனங்களிடத்திற்பணம்வாங்காமலும், ஆல
யத்தின் இடிவுகளைப்புதுப்பியாமலும்விட, சம்ம
தித்தார்கள்.—ஆசாரியனாகிய யோயதா ஒருபெட் ௯
டியை எடுத்து, அதின் மூடியில் ஒரு துவாரத்
தைச்செய்து யெகோவாவின் ஆலயத்தில் பிர
வேசஸ்தானத்தின் வலப்புறத்தில்வேதிகைக்கரு
கே வைத்தான்: வாசலைக்காக்கும் ஆசாரியர்கள்
யெகோவாவின் ஆலயத்தில் கொண்டுவரும்
பணமெல்லாம் அதிற் போட்டார்கள்.—பெட் ௰
டியிலே மிகுந்த பணமுண்டென்று கண்டு, இ
ராசாவின் எழுத்துக்காரனும் பிரதான ஆசாரிய
னும்வந்து, யெகோவாவின் ஆலயத்திலிருந்
த பணத்தை எண்ணிப் பைகளிலே போட்டார்
கள்.—எண்ணப்பட்ட பணத்தை, யெகோ ௰௧
வாவின் ஆலயவேலையின் விசாரிப்புக்காரர்கை
யிற்கொடுத்தார்கள்: அவர்கள் அதை, யெகோ
வாவின் ஆலயத்திலே வேலைசெய்ததச்சருக்கும்,
சிற்பருக்கும்,—கற்சிற்பருக்கும், கல்வெட்டிக ௰௨
ளுக்கும்; யெகோவாவின் ஆலயத்திலிடிவுக
ளைப்புதுப்பிக்கும்படி மரமும், தொழிற்படுத்தப்
பட்டகல்லும் வாங்குவதற்கும்; ஆலயத்தைப்பு
துப்பிக்கும்படிசெல்லும்சகல செலவுகளுக்குந்

(௰௪)அதி.௨௩.௩. ௨.நாளா.௩௪.௩௧.(௰௭)௨.நாளா.௨௩.௰௬. ௨.சாமு.௫.௩.(௰௮)அதி.௰.௨௬. உபா.௰௨.௩. ௨.நாளா. ௨௩.௰௭. ௨.நாளா.௨௩.௰௮. (௨௧) ௨.நாளா.௨௪.௧.—(௰௨. அதி. ௧.) ௨.நாளா.௨௪.௧. (௩) ௧.இரா.௰௫.௰௪. அதி. ௰௪.௪.(௪)அதி.௨௨.௪. யாத்.௩௰.௰௩. லேவி.௨௭.௨. யாத்.௩௫.௫. ௧.நாளா.௨௯.௯.(௬)௨.நாளா.௨௪.௫.(௭)௨.நாளா. ௨௪.௬. (௯) ௨.நாளா.௨௪.௮,.

௰௩ கொடுத்தார்கள்.—யெகோவாவின் ஆலயத்தில்
கொண்டுவரப்பட்ட பணத்தினால், யெகோ
வாவின் ஆலயத்திற்காக வெள்ளிக்கிண்ணங்க
ளும், திரிவெட்டிகளும், பாத்திரங்களும், எக்கா
ளங்களும், எந்தப்பொற்பாத்திரங்களும், வெள்
௰௪ ளிப்பாத்திரங்களும் செய்யப்படவில்லை.—யெ
கோவாவின் ஆலயத்தைப்புதுப்பிக்கும்படி அ
தை வேலைக்காரருக்குக்கொடுத்துவிட்டார்கள்.—
௰௫ வேலைக்காரருக்குக்கொடுக்கும்படிபணத்தைவா
ங்கினவர்கள், உண்மையாய்க்காரியத்தை நடத்
தினபடியினால், அவர்களிடத்திற்கணக்குக்கேட்
௰௬ கப்படவில்லை.—குற்றத்தினிமித்தமும், பாவத்தி
னிமித்தமும் கொடுக்கப்பட்டபணம், யெகோ
வாவின் ஆலயத்தில் கொண்டுவரப்படவில்லை:
அது ஆசாரியர்களுக்கு உரியது.
௰௭ அக்காலத்திலே ஸீரிய இராசாவாகிய அசா
வேல், காத்தை எதிர்த்து யுத்தஞ்செய்து, அ
தைப்பிடித்தான்: மேலும் அசாவேல் யெருஷ
௰௮ லேமுக்குப்போக நேர்முகமாயிருந்தான்.—அதி
னால் யூதாதேசத்து இராசாவாகியயோவாஷ், யூ
தாதேசத்து இராசாக்களும் தன் பிதாக்களுமாகி
ய யோஷாபாத்தும், யெகோராமும், அகஸ்யா
வும் நிவேதித்த பரிசுத்தபொருளையும், தான் நி
வேதித்த பரிசுத்தபொருளையும், யெகோவா
வின் ஆலயத்தின் பொக்கிஷங்களிலும் அரமனை
யிலும் காணப்பட்ட பொன் யாவையுமெடுத்து,
ஸீரிய இராசாவாகிய அசாவேலுக்கு அனுப்பி
னான்: அப்பொழுது அவன் யெருஷலேமை வி
லகித் திரும்பினான்.
௰௯ யோவாஷின் மற்றக்கிரியைகளும், அவன்
செய்தயாவும், யூதாதேசத்து இராசாக்களின் ச
ரித்திர புத்தகத்தில் அல்லவா எழுதியிருக்கின்
௨௰ றன.—அவன் பணிவிடைக்காரர் எழுந்து, துரா
லோசனைசெய்து, சில்லாவுக்கு இறங்கும்வழி
யிலுள்ள மில்லோவென்னும் வீட்டில் யோவா
௨௧ ஷைக்கொன்றார்கள்.—ஷிமியாத்தின் புத்திரனா
கிய யோசாகாரும், ஷோமேரின் புத்திரனாகிய
யோசாபாத்துமாகிய அவன் பணிவிடைக்காரர்
அவனை அடிக்க, அவனிறந்துபோனான்; அவ
னைத்தாவீது நகரத்தில் அவன் முன்னோருடன்
அடக்கம் பண்ணினார்கள்: அவனுக்குப்பின்பு
அவன்புத்திரனாகிய அமத்சியா இராசாவானான்.

## ௰௩. அதிகாரம்.

௧. யோவாகாஸ் தீமையாய் இராசரிக்கஞ் செய்தல்: ௯. சனங்களுக்கு ஆபத்துநேரிடல், யோவாகாஸ் மரணமடைதல்: ௰. அவன் புத்திரனாகிய யோவாஷ் இராசரிக்கஞ்செய்தல்: ௰௪. இலீஷா வருத்தமாயிருக்கையில் தீர்க்கதரிசனம் சொல்லல்: ௨௰. மரித்த இலீஷாவின் எலும்புகளைச்சவந்தொட உயிர்ப்பிக்கப்படல்: ௨௨. இலீஷாவின் தீர்க்கதரிசனங்கள் சித்திபெறல்.

யூதாதேசத்து இராசாவாகிய அகஸ்யாவின் புத் ௧
திரனான யோவாஷ் அரசாண்ட இருபத்துமூன்
றாம்வருஷத்தில், யெகூவின் புத்திரனாகிய யோ
வாகாஸ் ஷமாரியாவிலே இஸரவேலருக்கு இரா
சாவாகி, பதினேழுவருஷம் அரசாண்டான்.—
அவன் யெகோவாவின் பார்வைக்குத் தீங்கு ௨
செய்து, இஸரவேலரைப் பாவஞ்செய்யப்பண்
ணின நெபாத்தின் புத்திரனாகிய யெரோபேயா
மின் பாவங்களைப்பின்பற்றி நடந்தான்; அவன்
அவைகளைவிட்டு நீங்கவில்லை.
அதினால் இஸரவேலருக்கு விரோதமாக யெ ௩
கோவாவின்கோபமூள, அவர்களை அவன்
ஆயுள்நாள்வரைக்கும், ஸீரிய இராசாவாகிய அ
சாவேலின்கையிலும், அசாவேலின் புத்திரனாகி
ய பென்னாதத்கையிலும் ஒப்பித்தார்.—யோவா ௪
காஸ் யெகோவாவைப்பிரார்த்தித்தபொழுது,
ஸீரிய இராசா இஸரவேலரை உபத்திரவப்ப
டுத்தினதைப்பார்த்து, யெகோவா அவனுக்
குச் செவிசாய்த்துக்கேட்டார்.—யெகோவா ௫
இஸரவேலருக்கு இரட்சகன் ஒருவனை அருளி
னார், அதினால் அவர்கள் ஸீரியருடைய கையி
னின்றும் நீங்கினார்கள்: இஸரவேல் சந்ததியார்
முன்போலத்தங்கள் கூடாரங்களில் வாசம்பண்
ணினார்கள்.—ஆனாலும் இஸரவேலரைப்பாவஞ் ௬
செய்யப்பண்ணின யெரோபேயாமின் வமிசத்
தாரின் பாவங்களைவிட்டு நீங்காமல், அவர்கள்
அவைகளில் நடந்தார்கள்: ஷமாரியாவில் ஒரு
அஷரிவிருட்சம் நின்றது.—ஸீரிய இராசா அ ௭
வர்களை நாசப்படுத்தி, போரடிக்குந்தூளைப்போ
லாக்கினான். சனங்களில் ஐம்பதுகுதிரைவீரரும்,
பத்து ரதங்களும், பதினாயிரங் காலாள்களுமாத்
திரம் யோவாஹுக்கு மீதியாயிருக்கவிட்டான்,
யோவாகாசின் மற்றக்கிரியைகளும், அவன் ௮
செய்தயாவும், அவன்பராக்கிரமமும், இஸரவே
லரின் இராசாக்களுடைய சரித்திர புத்தகத்தி
லல்லவா எழுதியிருக்கின்றன.—யோவாகாஸ் ௯
தன்முன்னோருடன் மகா நித்திரையடைந்தான்;
அவர்கள் அவனை ஷமாரியாவில் அடக்கம்பண்
ணினார்கள்: அவனுக்குப்பின் அவன் புத்திரனா
கிய யோவாஷ் இராசாவானான்.
யூதாதேசத்தின் இராசாவாகிய யோவாஷ் அ ௰
ரசாண்டமுப்பத்தேழாம் வருஷத்தில், யோவா
காசின் புத்திரனாகிய யோவாஷ், ஷமாரியாவி
லே இஸரவேலருக்கு இராசாவாகி, பதினாறுவ
ருஷம் அரசாண்டான்.—அவன் யெகோ ௰௧
வாவின் பார்வைக்குத்தீங்கு செய்தான்; இஸர
வேலரைப்பாவஞ் செய்யப்பண்ணின நெபாத்
தின் புத்திரனாகிய யெரோபேயாமின் எந்தப்பா
வங்களையும் விட்டு நீங்காமல், அவைகளில் ந
டந்தான்.—யோவாஷின் மற்றக்கிரியைகளும், ௰௨
அவன் செய்தயாவும், அவன் யூதாதேசத்து இரா

(௰௩) ௨.நாளா.௨௪.௰௪. (௰௫) அதி.௨௨.௭. (௰௬) லேவி.௫.௰௫,௰௮. லேவி.௭.௭. எண்.௰௮.௯. (௰௭) அதி.௮.௰௨. ௨.நாளா.௨௪.௨௩. (௰௮) ௧.இரா.௰௫.௰௮. (௨௰) அதி.௰௪.௫. ௨.நாளா.௨௪.௨௫. (௨௧) ௨.நாளா.௨௪.௨௬. ௨.நாளா.௨௪.௨௭.—(௰௩. அதி.௩.) நியா.௨.௰௪. அதி.௮.௰௨. (௪) சங்.௭௮.௩௪. யாத்.௩.௭. அதி.௰௪.௨௬. (௫) வச.௨௫. அதி.௰௪.௨௫,௨௭. (௬) ௧.இரா.௰௬.௩௩. (௭) ஆமோ.௧.௩. (௯) வச.௰. (௰) அதி.௰௪.௧. (௰௨) அதி.௰௪.௰௫. அதி.௰௪.௯, ௨.நாளா.௨௫.௰௭.

சாவாகிய அமத்சியாவை எதிர்த்து யுத்தம்பண்
ணினவல்லமையும், இஸ்ரவேலரின் இராசாக்க
ளுடைய சரித்திர புத்தகத்திலல்லவா எழுதியி
௰௩ ருக்கின்றன.-யோவாஷ் தன் முன்னோருடனே
மகா நித்திரையடைந்தான்; அவன் சிங்காசனத்
தில் யெரொபெயாம் வீற்றிருந்தான்: யோவாஷ்
ஷமாரியாவில் இஸ்ரவேலரின் இராசாக்களு
டன் அடக்கம் பண்ணப்பட்டான்.
௰௪ இலீஷா மரணத்துக்கேதுவான நோயாயிருந்
தான். அப்பொழுது இஸ்ரவேலரின் இராசாவா
கிய யோவாஷ் அவனிடத்தில் வந்து, அவன் மு
கத்தின்மேல்விழுந்து அழுது, ஐயோ, என்பிதா
வே, என்பிதாவே, இஸ்ரவேலரின் ரதமே, அவர்
௰௫ குதிரை வீரரேயென்றான்.—இலீஷா அவனை
நோக்கி, வில்லையும் அம்புகளையும் எடுவென்று
சொல்ல, இவன் வில்லையும் அம்புகளையும் எடுத்
௰௬ தான்.–அவன் இஸ்ரவேலரின் இராசாவைநோக்
கி, உன்கையில் வில்லைப்பிடித்துக்கொள்ளென்
று சொல்ல, அவன்கையிலே அதைப்பிடித்துக்
கொண்டான்: பின்பு இலீஷாதன்கையை இரா
௰௭ சாவின் கைமேலிட்டான்.—அப்பால் அவன்
கிழக்குப் புறத்தில் பலகணியைத் திறவென்று
சொல்ல, இவன் அதைத்திறந்துவிட்டான். பின்
பு இலீஷா எய்யென்றுசொல்ல, இவன் எய்
தான். அப்பொழுதுஅவன் யெகோவாவுடை
ய இரட்சிப்பின் அம்பும், ஆசீரியரைச் செயிக்
கும் அம்பும், நீ ஆசீரியரைச் சங்கரிக்கும்வரைக்
கும் அப்பெக்கில் அவர்களை முறிய அடிப்பா
௰௮ யென்றான்.–பின்பு அவன் அம்புகளை எடுவென்
று சொல்ல, இவன் எடுத்தான். அவன் இஸ்ர
வேலரின் இராசாவைநோக்கி, நிலத்தில் அடி
யென்று சொல்ல, இவன் மூன்றுதரம் அடித்து
௰௯ நின்றான்.—தேவனுடைய தாசன் இவன்மேற்
கோபங்கொண்டு, நீ ஐந்தாறுதரம் அடித்தாயாகில்
நலமாகும்; அப்பொழுது ஆசீரியரைச் சங்கரிக்
கும்வரைக்கும் அவர்களை முறிய அடிப்பாய்;
இப்பொழுதோ நீ மூன்றுதரம் ஆசீரியரைமுறிய
அடிப்பாயென்றான்.
௨௰ பின்பு எலீஷா மரித்தான், அவர்கள் அவனை
அடக்கம்பண்ணினார்கள். மற்றவருஷ ஆரம்பத்
தில் மோவாபியரின் சேனாதளத்தார் தேசத்தில்
௨௧ வந்தார்கள்.—அவர்கள் ஒரு மனிதனை அடக்கம்
பண்ணுகையில், ஒரு சேனாதளத்தைக்கண்டு,
அந்தமனிதனை இலீஷாவின் பிரேத அறையில்
எறிந்துவிட்டார்கள்: அந்த மனுஷன் இறங்கி
இலீஷாவின் எலும்புகளின்மேலேபட உயிர்த்
தெழுந்து, கால்லூன்றிக்கொண்டு நின்றான்.
௨௨ ஆசீரியாவின் இராசாவாகிய அசாவேல் யோ
வாகாசின் நாள்களெல்லாம் இஸ்ரவேலரை உ
௨௩ பத்திரவப்படுத்தினான்.-ஆனாலும் யெகோவா
ஆபிரகாமோடும், ஈசாக்கோடும், யாக்கோபோ
டும் செய்த உடன்படிக்கையின் நிமித்தம், அ
வர்களை நாசப்படுத்தாமலும், இன்னுந் தமது ச
முகத்தினின்றுந் தள்ளிவிடாமலும், அவர்கள்
மேற்சிந்தைவைத்து அவர்களைக்கடாட்சித்து, அ
வர்களுக்கு இரங்கினார்.—ஆசீரிய இராசாவாகிய ௨௪
அசாவேல் மரித்தான்; அவனுக்குப்பின் அவன்
புத்திரனாகிய பெனாதாத் இராசாவானான்.–யோ ௨௫
வாகாசின்புத்திரனாகிய யோவாஷ் அசாவேலின்
புத்திரனாகிய பெனாதாத்துடன் யுத்தஞ்செய்து,
தன் பிதாவாகிய யோவாகாசிடத்திலே பிடித்த
நகரங்களை, அவனிடத்திலிருந்து திரும்பவும்
தன்வசமாக்கினான். யோவாஷ் அவனை மூன்று
தரம்முறிய அடித்து, இஸ்ரவேலரின் நகரங்க
ளைத்தன் வசமாக்கினான்.

## ௰௪. அதிகாரம்.

௧. அமத்சியாநன்றாய் அரசாளல்: ௫. அவன் தன் பிதாவைக்கொலைசெய்தவர்களையும் எதோமியரையும் அதமாக்கல்: ௮. அவன்யுத்தத்தில் தோல்வியடைதல்: ௰௫. யோவாஷ் மரித்தல்: ௰௭. அமத்சியா அதமாதல்: ௨௧. அசரியா இராசாபிஷேகம் பெறல்: ௨௩. யெரொபெயாம் தீமையாய் அரசாளல்: ௨௮. சகரியா இராசாபிஷேகம்பெறல்.

இஸ்ரவேலரின் இராசாவாகிய யோவாகாசின் ௧
புத்திரனான யோவாஷ் அரசாண்ட இரண்டாம்
வருஷத்தில், யூதாதேசத்தின்இராசாவாகியயோ
வாஷின் புத்திரனாகிய அமத்சியா இராசாவா
னான்.–அவன்அரசாளத்தொடங்கினபொழுதுஅ ௨
வனுக்கு இருபத்தைந்துவயது, அவன் யெரூஷ
லேமில் இருபத்தொன்பது வருஷம் அரசாண்
டான். அவன்மாதாவின்பேர் யெரூஷலேம்நக
ரத்தாளாகிய யோவதாள்.–அவன் யெகோவா ௩
வின் பார்வைக்கு நலமானதைச்செய்தான், ஆகி
லும் தன்பிதாவாகியதாவீதைப்போலல்ல: அவன்
தன்பிதாவாகியயோவாஷ்செய்த யாவற்றின்படி
க்கும்செய்தான்.–உயர்ந்தஸ்தானங்கள் அகற்றப் ௪
படவில்லை: சனங்கள் பின்னும் உயர்ந்தஸ்தா
னங்களில்பலியிட்டுத் தூபங்காட்டிவந்தார்கள்.
ஆளுகை அவன்கையில் ஸ்திரப்பட்டபொழு ௫
து, தன்பிதாவாகிய இராசாவைக் கொலைசெய்த
தன் பணிவிடைக்காரரைக் கொன்றான்.—பிள் ௬
ளைகளினிமித்தம்பிதாக்களும், பிதாக்களினிமித்
தம் பிள்ளைகளும் கொலைசெய்யப்படவேண்டா
ம், அவனவன்செய்த பாவத்தினிமித்தம் அவனவ
னே கொலைசெய்யப்படவேண்டுமென்று, யெ
கோவாகட்டளையிட்டபடி, மோசேயின்நியா
யப்பிரமாண புத்தகத்தில் எழுதியிருந்த பிரகா
ரம், அவன் அக்கொலைபாதகர்களுடைய பிள்ளை
களைக்கொல்லாமல் விட்டுவிட்டான்.—அவன், ௭
உப்புவெளியில் எதோமியரில் பதினாயிரம்பே
ரைக்கொன்று, யுத்தஞ்செய்து சேலாவைப்பிடித்
து, அதற்கு இந்நாள்வரைக்கும் வழங்குகிறபிர
காரம் யொக்தீயேலென்று பெயரிட்டான்.

(௰௪) அதி.௨.௰௨. (௰௭) ௧.இரா.௨௰.௨௬. (௰௯) வச.௨௫. (௨௨) அதி.௮.௰௨. (௨௩) அதி.௰௪.௨௭. யாத்.௨.௨௪, ௨௫. யாத்.௩௨.௰௩. (௨௫) வச.௰௮,௰௯.—(௰௪. அதி. ௧.) அதி.௰௩.௰. ௨.நாளா.௨௫.௧. (௪) அதி.௰௨.௩. (௫) அதி.௰௨.௨௰. (௬) உபா.௨௪.௰௬. எசேக்.௰௮.௪,௨௰. (௭) ௨.நாளா.௨௫.௰௧. ௨.சாமு.௮.௰௩. யோசு.௰௫.௩௮.

௮ பின்பு அமத்சீயா, யெகூவின்பௌத்திரனும்
யோவாகாசின்புத்திரனும் இஸரவேலரின் இரா
சாவுமாகிய யோவாஷுக்குத் தூதரையனுப்பி,
நாம்ஒருவரோடொருவர் எதிர்த்துப்பார்ப்போம்
௯ வாவென்று சொல்லுவித்தான்.—அதற்கு இஸர
வேலரின் இராசாவாகிய யோவாஷ், யூதாதேசத்
துஇராசாவாகிய அமத்சீயாவுக்காளனுப்பி,லிபா
னோனிலுள்ளகுருக்குத்தி லிபானோனிலுள்ள ஏ
ரஸ்மரத்துக்கு, நீஉன்புத்திரியை என்புத்திரனுக்
குவிவாகஞ்செய்து தாவென்று சொல்லியனுப்
பிற்று:லிபானோனிலுள்ளஒருகாட்டுமிருகம்அந்
தவழியாய்ச்சென்று,அந்தமுட்செடியைமிதித்த
௰ து.-நீ ஏதோமியரைமுறியஅடித்தாயே, அதினால்
உன்மனம் கருவம் அடைந்து, மேன்மைபாரா
ட்டிக்கொண்டு உன் வீட்டோடேயிரு: நீயும்,
உன்னோடுகூடிய யூதாசந்ததியாரும் விழும்படி,
என் கேடு தேடிக்கொள்ளுகிறாயென்றுசொல்லி
௰௧ அனுப்பினான்.—அமத்சீயா செவிகொடுக்கவில்
லை. அதினால் இஸரவேலரின் இராசாவாகிய
யோவாஷ் புறப்பட்டுப்போனான்; அவன் யூதா
வைச்சேர்ந்த பேத்ஷிமெஷில் அவனும், யூதா
தேசத்து இராசாவாகிய அமத்சீயாவும் ஒருவரோ
௰௨ டொருவர் எதிர்த்துப்பார்த்தார்கள்.—யூதாசனங்
கள் இஸரவேலருக்குத் தோற்றுப்போனார்கள்;
அவர்கள் தங்கள் தங்கள் கூடாரங்களுக்கு ஓடி
௰௩ விட்டார்கள்.—இஸரவேலரின் இராசாவாகிய
யோவாஷ், அகஸ்யாவின் பௌத்திரனும், யோ
வாஷின் புத்திரனும், யூதாதேசத்து இராசாவுமா
கிய அமத்சீயாவைப்பேத்ஷிமெஷிலேபிடித்துக்
கொண்டு, யெருஷலேமுக்கு வந்து, எப்ராயீ
மின்வாசல்தொடங்கிக்கோடிவாசல்வரைக்கும்,
யெருஷலேமின் மதிலை நானூறுமுழநீளமளவுக்
௰௪ கு இடித்துவிட்டு,—யெகோவாவின் ஆல
யத்திலும்,அரமனையின் பொக்கிஷங்களிலும்கா
ணப்பட்ட சகல பொன்வெள்ளிகளையும், சகல
பாத்திரங்களையும், பிணையாளிகளையும் பிடித்துக்
கொண்டு, ஷமாரியாவுக்குத் திரும்பிவிட்டான்.
௰௫ யோவாஷ்செய்தமற்றக்கிரியைகளும், அவன்
பராக்கிரமமும், யூதாதேசத்துராசாவாகியஅமத்சீ
யாவுடன் யுத்தஞ்செய்த விதமும், இஸரவேல
ரின் இராசாக்களின் சரித்திரபுத்தகத்திலல்லவா
௰௬ எழுதியிருக்கின்றன.—யோவாஷ்தன்முன்னோ
ருடன் மகாநித்திரையடைந்து, இஸரவேலரின்
இராசாக்களுடன் ஷமாரியாவில் அடக்கம்பண்
ணப்பட்டான்; அவனுக்குப்பின்பு அவன் புத்
திரனாகிய யெரோபேயாம் இராசாவானான்.
௰௭ இஸரவேலரின்இராசாவாகிய யோவாகாசின்
புத்திரனான யோவாஷ் மரணமடைந்தபின்பு,
யூதாதேசத்து இராசாவாகிய யோவாஷின் புத்தி
ரனான அமத்சீயா பதினைந்துவருஷஞ் சீவித்தி
ருந்தான்.—அமத்சீயாவின் மற்றக்கிரியைகள் யூ ௰௮
தாதேசத்து இராசாக்களின் சரித்திர புத்தகத்தி
லல்லவா எழுதியிருக்கின்றன.—பின்பு யெரு ௰௯
ஷலேமில் அவர்கள் அவனுக்கு விரோதமாய்த்
துராலோசனைசெய்தபொழுது, அவன்லாகீஷுக்
கு ஓடிப்போனான்; அவர்கள் லாகீஷில் அவன்
பின்னேஆள்களையனுப்பி,அங்கேஅவனைக்கொ
லைசெய்து,—குதிரைகளின்மேல்ஏற்றிக்கொண் ௨௰
டுவந்தார்கள்: அவன் தாவீதின் நகரத்திலே யெ
ருஷலேமில் தன் முன்னோருடன் அடக்கம்
பண்ணப்பட்டான்.

யூதாசனங்கள் அனைவரும், பதினாறு வயதுள் ௨௧
ள அசரியாவை அழைத்து, அவன் பிதாவாகிய
அமத்சீயாவுக்குப்பின் அவனை இரரசாவாக ஏற்
படுத்தினார்கள்.—இராசா தன் முன்னோருடன் ௨௨
மகாநித்திரையடைந்தபின்பு, இவன்ஏலாத்தைக்
கட்டி, திரும்பவும் யூதாவின்வசமாக்கிக்கொண்
டான்.

யூதாதேசத்து இராசாவாகிய யோவாஷின்புத் ௨௩
திரனான அமத்சீயா அரசாண்ட பதினைந்தாம்வ
ருஷத்தில், இஸரவேலரின் இராசாவாகிய யோ
வாஷின்புத்திரனான யெரோபேயாம் ஷமாரியா
வில் இராசாவாகி, நாற்பத்தொருவருஷம் அர
சாண்டான்.—அவன் யெகோவாவின் பார் ௨௪
வைக்குத்தீங்குசெய்தான்: இஸரவேலரைப் பா
வஞ் செய்யப்பண்ணின நெபாத்தின்புத்திரனாகி
யயெரோபேயாமுடைய பாவங்கள் ஒன்றையும்
விட்டுவிடவில்லை.-இஸரவேலரின்தேவனாகிய ௨௫
யெகோவா, காத்தேபெரிலிருந்த அமித்தாய்
தீர்க்கதரிசியின் புத்திரனாகிய யோனாவென்னும்
தமது தாசனைக்கொண்டு சொல்லிய வாக்கின்ப
டி, அவன் அமாத்தின்எல்லைமுதல்சமபூமியின்ச
முத்திரமட்டுமுள்ள இஸரவேலரின்எல்லையைத்
திரும்பவும் வசப்படுத்திக்கொண்டான்.-இஸர ௨௬
வேலர் பட்ட உபத்திரவம் மிகவுங்கொடிதென்
றும்,அடைபட்டவனும், விடுபட்டவனும்,இஸ
ரவேலருக்குத்துணை செய்கிறவனுமில்லையென்
றும் கண்டார்.—இஸரவேலரின் நாமம் வானத் ௨௭
தின் கீழிராதபடி நீக்கிவிடுவேனென்று யெ
கோவா சொல்லாமல், யோவாஷின் புத்திரனா
கிய யெரோபேயாம்கையினால் அவர்களை இரட்
சித்தார்.

யெரோபேயாமின் மற்றக்கிரியைகளும், அ ௨௮
வன் செய்தயாவும், அவன் பராக்கிரமமும், அ
வன் யுத்தஞ்செய்தவிதமும், இஸரவேலருக்காக
யூதாவைச் சேர்ந்த தமஸ்குவையும் அமாத்தை
யும் மீட்டுக்கொண்டதும், இஸரவேலரின் இரா
சாக்களின் சரித்திர புத்தகத்தில் அல்லவா எழு
தியிருக்கின்றன.—யெரோபேயாம் இஸரவேல ௨௯
ரின் இராசாக்களாகிய தன்முன்னோருடன் மகா

---

(௮)௨.நாளா.௨௫.௰௭,௰௮,.(௯)நியா.௯.௮. ௧.இரா.௪.௩௩.(௰)௨பா.௮.௰௪. ௨.நாளா.௩௨.௨௫.எசேக்.௨௮.௨,௫,௰௭. அபகூ.௨.௪.(௰௧)யோசு.௰௯.௩௮.(௰௩)நிகி.௮.௰௬. எரே.௩௧.௩௮.சக.௰௪.௰.(௰௪)௧.இரா.௭.௫௧.(௰௫)அதி.௰௩.௰௨. (௰௭)௨.நாளா.௨௫.௨௫,.(௰௯)௨.நாளா.௨௫.௨௭. யோசு.௰.௩௧.(௨௧)அதி.௰௫.௰௩. ௨.நாளா.௨௬.௧.(௨௨)அதி.௰௬. ௯. ௨.நாளா.௨௬.௨.(௨௫)எண்.௰௩.௨௧. ௨பா.௩.௰௭. யோனா.௧.௧. மத்.௰௨.௩௯,௪௰.யோசு.௰௯.௰௩.(௨௬)அதி.௰௩. ௪. ௨பா.௩௨.௩௬. (௨௭) அதி.௰௩.௫. (௨௮) ௨.சாமு.௮.௬. ௧.இரா.௰௧.௨௪. ௨.நாளா.௮.௩. (௨௯) அதி.௰௫.௮.

நித்திரையடைந்தான்; அவனுக்குப் பின்பு அவன் புத்திரனாகிய சகரியா இராசாவானான்.

## ௰௫. அதிகாரம்.

௧. அசரியாநன்றாய் இராசரிக்கஞ்செய்தல்: ௫. அவன் குஷ்டரோகியாயிருந்ததினால் அவன் புத்திரன் நியாயம் விசாரித்தல்: ௮. சகரியா தீமையாய் இராசரிக்கஞ்செய்து அதமாதல்: ௰௩. ஷல்லும் இராசரிக்கஞ்செய்து அதமாதல்: ௰௬. மெனாகேமின் சரித்திரம் விவரித்தல்: ௨௧. அவன் புத்திரனாகிய பெக்காகியா இராசாபிஷேகம்பெறல்: ௨௩. பெக்காகியா அதமாதல்: ௨௭. பெக்கா அபிஷேகம்பெறல்: அவன் அதமாதல்: ௩௨. யோதாமின் சரித்திரம்விவரித்தல்: ௩௬. ஆகாஸ் அவனுக்குப்பின் அரசனாதல்.

இஸரவேலரின் இராசாவாகிய யெரோபேயாம் அரசாண்ட இருபத்தேழாம்வருஷத்தில், யூதாதேசத்து இராசாவாகிய அமத்சியாவின் புத்திரனான
௨ அசரியா இராசாவானான்.-அவன் அரசாளத்தொடங்கினபொழுது அவனுக்குப் பதினாறுவயது, அவன் யெருஷலேமில் ஐம்பத்திரண்டுவருஷம் அரசாண்டான். அவன்மாதாவின்பேர் யெருஷ
௩ லேம்நகரத்தாளாகிய எக்கோலியாள்.-அவன்தன் பிதாவாகிய அமத்சியா செய்தயாவற்றின்படிக்கும்,யெகோவாவின்பார்வைக்குநலமானதைச்
௪ செய்தான்.—ஆகிலும் உயர்ந்தஸ்தானங்கள் அகற்றப்படவில்லை:பின்னுஞ்சனங்கள் உயர்ந்தஸ்தானங்களிற் பலியிட்டுத் தூபங்காட்டிவந்தார்கள்.
௫ யெகோவா, இராசாவைத்தண்டித்ததினால், அவன் மரணபரியந்தம் குஷ்டரோகியாய், தனித்து ஒருவீட்டிலே வசித்தான். இராசாவின் புத்திரனாகிய யோதாம் குடும்பத்துக்கு அதிகாரியாகி, தேசத்துச்சனங்களை நியாயம் விசாரித்து
௬ வந்தான்.—அசரியாவின் மற்றக்கிரியைகளும், அவன்செய்தயாவும், யூதாதேசத்து இராசாக்களின் சரித்திரபுத்தகத்தில் அல்லவா எழுதியிருக்
௭ கின்றன.—அசரியா தன் முன்னோருடன் மகாநித்திரையடைந்தான்; அவனைத்தாவீதின் நகரத்தில் அவன் முன்னோருடன் அடக்கம் பண்ணினார்கள்: அவனுக்குப்பின்பு அவன்புத்திரனாகிய யோதாம் இராசாவானான்.
௮ யூதாவின் இராசாவாகிய அசரியா அரசாண்ட முப்பத்தெட்டாம் வருஷத்தில், யெரோபேயாமின் புத்திரனாகிய சகரியா, இஸரவேலரை
௯ ஷமாரியாவில் ஆறுமாதம் அரசாண்டான்.—அவன் தன் முன்னோர்செய்தபிரகாரம் யெகோவாவின் பார்வைக்குத் தீங்குசெய்தான்: இஸரவேலரைப் பாவஞ்செய்யப்பண்ணின நெபாத்தின் புத்திரனாகிய யெரோபேயாமின் பாவங்
௰ களை அவன்விட்டு நீங்கவில்லை.—யாபேஷின் புத்திரனாகிய ஷல்லும் அவனுக்குவிரோதமாய்த் துராலோசனைசெய்து, சனங்களுக்குமுன் அவனை அடித்துக்கொன்று, அவனுக்குப்பின் அரசாண்டான்.—சகரியாவின் மற்றக்கிரியைகள், இ ௰௧
ஸரவேலின் சரித்திரபுத்தகத்தில் அல்லவா எழுதியிருக்கின்றன.-யெகோவா யெகூவைநோக் ௰௨
கி, உன்சந்ததியார் நாலாந் தலைமுறைவரைக்கும் இஸரவேலரின் சிங்காசனத்தில் வீற்றிருப்பார்களென்றுசொல்லியிருந்தார். அந்தவாக்கின் படியேயாயிற்று.

யாபேஷின் புத்திரனாகிய ஷல்லும், யூதாதே ௰௩
சத்து இராசாவாகிய ஊசியா அரசாண்ட முப்பத்தொன்பதாம் வருஷத்தில் இராசாவாகி, ஷமாரியாவில் ஒரு முழுமாதம் அரசாண்டான்.—
காதியின்புத்திரனாகிய மெனாகேம் திர்சாவிலிருந் ௰௪
துபுறப்பட்டு ஷமாரியாவுக்குவந்து, ஷமாரியாவில் யாபேஷின் புத்திரனாகிய ஷல்லுமை அடித்துக்கொன்று,அவனுக்குப்பின் அரசாண்டான்.-
ஷல்லுமின் மற்றக் கிரியைகளும், அவன்செய் ௰௫
த துராலோசனையும், இஸரவேலரின் இராசாக்களுடைய சரித்திர புத்தகத்திலல்லவா எழுதியிருக்கின்றன.

மெனாகேம், திப்சாவையும், அதிலுள்ள யா ௰௬
வையும், திர்சாதொடங்கி அதினெல்லையையும், அடித்தான்: அவர்கள் அவனுக்கு வாசலைத் திறவாதபடியினாலே அவன் அவர்களைவதைத்து, அதிலுள்ள சகல கர்ப்பவதிகள் வயிற்றையுங் கீறி
னான்.—யூதாதேசத்து இராசாவாகிய அசரியா அ ௰௭
ரசாண்ட முப்பத்தொன்பதாம்வருஷத்தில், காதியின் புததிரனாகிய மெனாகேம் இஸரவேலருக்கு இராசாவாகி, ஷமாரியாவிலே பத்துவருஷம்
அரசாண்டான்.-அவன் யெகோவாவின் பார் ௰௮
வைக்குத்தீங்குசெய்தான்: இஸவேலரைப் பாவஞ்செய்யப்பண்ணின நெபாத்தின் புத்திரனாகிய யெரோபேயாமின் பாவங்களைத் தன்னாயுள்பரியந்தம் விட்டுவிடவில்லை.—அஷூரியாவின்இரா ௰௯
சாவாகிய பூல், தேசத்தில்வந்தான்: மெனாகேம் பூலின்கைத்துணையினாலே தன்கையில் ஆளுகை நிலைப்படும்பொருட்டு, அவனுக்கு ஆயிரம் கிக்
கேர்வெள்ளிகொடுத்தான்.—மெனாகேம் அஷூரி ௨௰
யாவின் இராசாவுக்குக்கொடுக்கும்படி, இஸரவேலரில் சமஸ்த ஐசுவரியவான்களுக்குள்ளும், ஒவ்வொருவரிடத்திலும் ஐம்பது ஐம்பது ஷேக்கல்வெள்ளிவீதமாகவலாற்காரமாய்வாங்கினான். அஷூரியாவின் இராசா தேசத்திலே நில்லாமல் திரும்பிவிட்டான்.

மெனாகேமின் மற்றக்கிரியைகளும், அவன் ௨௧
செய்தயாவும், இஸரவேலரின்இராசாக்களுடையசரித்திர புத்தகத்திலல்லவா எழுதியிருக்கின்ற
ன.—மெனாகேம் தன்முன்னோருடன் மகாநித் ௨௨
திரையடைந்தான்; அவனுக்குப்பின் அவன்புத்திரனாகிய பெக்காகியா இராசாவானான்.

யூதாதேசத்துஇராசாவாகிய அசரியாஅரசாண் ௨௩
டஐம்பதாம் வருஷத்தில், மெனாகேமின் புத்திரனாகிய பெக்காகியா ஷமாரியாவில் இஸரவே

---

(௰௫. அதி. ௧.) அதி.௰௪.௨௧. ௨.நாளா.௨௬.௧,௩,௪. வச.௰௩,௩௰. (௪) வச.௩௫. அதி.௰௨.௩. (௫) ௨.நாளா.௨௬. ௰௯—௨௧. லேவி.௰௩.௪௬. (௭) ௨.நாளா.௨௬.௨௩. (௰) ஆமோ.௭.௯. (௰௨) அதி.௰.௩௰. (௰௩) மத்.௧.௮,௯. (௰௪) ௧.இரா.௰௪.௰௭. (௰௬) ௧.இரா.௪.௨௪. அதி.௮.௰௨. (௰௯) ௧.நாளா.௫.௨௬. ஏசா.௯.௧. ஓசி.௮.௯. அதி.௰௪.௫.

லருக்கு இராசாவாகி, இரண்டுவருஷம் அர
௨௪ சாண்டான்;-யெகோவாவின் பார்வைக்
குத்தீங்குசெய்தான்: இஸரவேலரைப் பாவஞ்
செய்யப்பண்ணின நெபாத்தின் புத்திரனாகிய
யெரோபேயாமின் பாவங்களை அவன் விட்டு
௨௫ விடவில்லை.-ரெமலீயாவின் புத்திரனாகியபெக்
காவென்னும்அவன்சேனாபதி அவனுக்குவிரோ
தமாகத் துராலோசனைசெய்து, ஷமாரியாவில்
அரமனையின் அந்தரங்கஸ்தானத்தில் அவனைஅர்
கோப்போடும், அர்யேயோடும், கிலியாத்தியர்
ஐம்பதுபேரோடும், அடித்துக்கொன்றுபோட்டு,
௨௬ அவனுக்குப்பின் அரசாண்டான்.-பெக்காகியா
வின்மற்றக்கிரியைகளும், அவன்செய்த யாவும்,
இஸரவேலரின் இராசாக்களுடையசரித்திரபுத்த
கத்திலல்லவா எழுதியிருக்கின்றன.
௨௭ யூதாதேசத்தின் இராசாவாகிய அசரியா அர
சாண்ட ஐம்பத்திரண்டாம் வருஷத்தில், ரெம
லீயாவின் புத்திரனாகிய பெக்கா ஷமாரியாவில்
இஸரவேலருக்கு இராசாவாகி, இருபதுவருஷம்
௨௮ அரசாண்டான்.—அவன் யெகோவாவின்
பார்வைக்குத் தீங்குசெய்தான்: இஸரவேலரைப்
பாவஞ்செய்யப்பண்ணினநெபாத்தின்புத்திரனா
கியயெரோபேயாமின்பாவங்களை விட்டு விலக
௨௯ வில்லை.—இஸரவேலரின் இராசாவாகிய பெக்
காவின் காலத்தில், அஸீரிய இராசாவாகிய திக்
லாத் பிலேசர்வந்து, ஈயோனையும், ஆபேல்பேத்
மாகாவையும், யனோவாவையும், கேதேஷையும்,
ஆத்சோரையும், கிலியாத்தையும், கலிலேயா
வென்னும் நப்தாலிதேசமுழுவதையும் பிடித்து,
அங்குள்ளவர்களைச்சிறையாக அஸீரியாவுக்குக்
௩௰ கொண்டுபோனான்.-ஏலாவின்புத்திரனாகியஓஷி
யா, ரெமலீயாவின் புத்திரனாகிய பெக்காவுக்கு
விரோதமாகத்துராலோசனைபண்ணி, அவனைய
டித்துக்கொன்று,ஊசியாவின்புத்திரனாகிய யோ
தாம் அரசாண்ட இருபதாம் வருஷத்தில் அவ
௩௧ னுக்குப்பின் இராசாவானான்.-பெக்காவின் மற்
றக்கிரியைகளும், அவன்செய்த யாவும், இஸர
வேலருடைய இராசாக்களின் சரித்திரபுத்தகத்
தில் எழுதியிருக்கின்றன.
௩௨ இஸரவேலரின் இராசாவாகியரெமலீயாவின்
புத்திரனான பெக்கா அரசாண்ட இரண்டாம்வ
ருஷத்தில், யூதாதேசத்து இராசாவாகிய ஊசியா
௩௩ வின் புத்திரனானயோதாம் இராசாவானான்.—அ
வன்அரசாளத்தொடங்கினபொழுது,அவனுக்கு
இருபத்தைந்துவயது, அவன் யெருஷலேமிலே
பதினாறுவருஷம் அரசாண்டான். சாதோக்கின்
புத்திரியாகியஅவன்மாதாவின்பெயர் எருசாள்.-
௩௪ அவன் யெகோவாவின் பார்வைக்கு நலமா
னதைச்செய்தான்: அவன்,தன் பிதாவாகிய ஊ
சியாசெய்த யாவற்றின்படிக்கும் செய்தான்.
௩௫ ஆனாலும் உயர்ந்தஸ்தானங்கள் அகற்றப்பட
வில்லை: சனங்கள் பின்னும் உயர்ந்த ஸ்தானங்
களில் பலியிட்டுத் தூபங்காட்டிவந்தார்கள். அ
வன் யெகோவாவின் ஆலயத்திற்கு உயர்ந்த
வாசலை உண்டாக்கினான்.
யோதாமின்மற்றக்கிரியைகளும், அவன்செய் ௩௬
தயாவும், யூதாதேசத்து இராசாக்களின் சரித்திர
புத்தகத்தில் அல்லவா எழுதியிருக்கின்றன.—
அக்காலத்திலே யெகோவா யூதாதேசத்துக் ௩௭
கு விரோதமாய் ஸீரிய இராசாவாகிய ரேத்சினை
யும்,ரெமலீயாவின்புத்திரனாகிய பெக்காவையும்
அனுப்பத்தொடங்கினார்.—யோதாம் தன்முன் ௩௮
னோருடன் மகாநித்திரையடைந்து, தன்பிதாவா
கிய தாவீதின் நகரத்திலே தன் முன்னோருடன்
அடக்கம்பண்ணப்பட்டான்: அவனுக்குப்பின்
பு அவன்புத்திரனாகிய ஆகாஸ் இராசாவானான்.

## ௰௬. அதிகாரம்.

௧. ஆகாஸ்தீமையாய்இராசரிக்கஞ்செய்தல்: ௫. அவன்அடைக்கப்பட்டுவிடுதலைபெறல்: ௰. புதுவேதிகையைச்செய்தல்: ௰௭. ஆலயத்திலுள்ள பொருளைக்கொள்ளையிடல்: ௰௯.இஸ்கியாஅவனுக்குப்பின்அரசனாதல்.

ரெமலீயாவின்புத்திரனாகிய பெக்கா அரசாண் ௧
டபதினேழாம்வருஷத்தில், யூதாதேசத்து இரா
சாவாகிய யோதாமின்புத்திரனான ஆகாஸ், இரா
சாவானான்.-ஆகாஸ்அரசாளத்தொடங்கினபொ ௨
ழுது, அவனுக்குஇருபதுவயது, அவன்யெருஷ
லேமிலே பதினாறுவருஷம் அரசாண்டான்; அ
வன்பிதாவாகியதாவீதைப்போலத்தன் தேவனா
கிய யெகோவாவின் பார்வைக்கு நலமான
தைச்செய்யாமல்,—இஸரவேலரின் இராசாக்க ௩
ளின்வழியிலேநடந்து, இஸரவேல் சந்ததியார்
முன்னின்றும் யெகோவா அகற்றிவிட்டஅந்
நியதேசத்தாருடையஅருவருப்புகளின்படி,தன்
புத்திரனை அக்கினியில் பிரவேசிக்கப்பண்ணி
னான்.—அவன்உயர்ந்தஸ்தானங்களிலும்,மலைக ௪
ளிலும், பசுமையான ஒவ்வொரு விருட்சத்தின்
கீழும்பலியிட்டு, தூபங்காட்டிவந்தான்.
ஸீரியாவின்இராசாவாகியரேத்சீனும், இஸர ௫
வேலரின் இராசாவாகிய ரெமலீயாவின் புத்திர
னானபெக்காவும், யுத்தம்பண்ணும்படி யெருஷ
லேமுக்குப்புறப்பட்டுவந்து, ஆகாசை முற்றிக்
கைசெய்தார்கள்: ஆயினும் அவனைமேற்கொள்
ளவில்லை.-அக்காலத்திலே ஸீரிய இராசாவாகிய ௬
ரேத்சீன், திரும்பவும் ஏலாத்தை ஸீரியருக்கு ஆ
தீனமாக்கிக்கொண்டு, யூதரை ஏலாத்தினின்றும்
துரத்திவிட்டான்: ஸீரியர் ஏலாத்துக்குப்போய்
இந்நாள்வரைக்கும் வாசம்பண்ணுகிறார்கள்.—
பின்பு ஆகாஸ் அஸீரிய இராசாவாகிய திக்லாத் ௭
பிலேசரிடத்தில் தூதரையனுப்பி, நான் உம்மு
டைய தாசன், உம்முடைய குமாரன்: எனக்கு
விரோதமாய் எழுந்திருக்கிற ஸீரிய இராசாவின்

(௨௭) ஏசா.௭.௧. (௨௯) ௧.நாளா.௫.௨௬. ஏசா.௯.௧. ௧.இரா.௰௫.௨௰. (௩௰) அதி.௰௭.௧. ஓசி.௰.௩,௭,௰௫. (௩௨) ௨.நாளா.௨௭.௧. (௩௪) வச.௩. (௩௫) ௨.நாளா.௨௭.௩,. (௩௭) அதி.௰௬.௫. ஏசா.௭.௧. வச.௨௭.—(௰௬. அதி. ௧.) ௨.நாளா.௨௮. (௩) லேவி.௰௮.௨௧. ௨.நாளா.௨௮.௩. சங்.௱௬.௩௭,௩௮. உபா.௰௨.௩௧. (௪) உபா.௰௨.௨. ௧.இரா. ௰௪.௨௩. (௫) ஏசா.௭.௧,௪,. (௬) அதி.௰௪.௨௨. (௭) அதி.௰௫.௨௯. ௧.நாளா.௫.௨௬. ௨.நாளா.௨௮.௨௰.

கைக்கும்,இஸரவேலரின்இராசாவின்கைக்கும்,
என்னைத்தப்புவிக்கும்படிவாருமென்றுசொல்லு
௮ வித்தான்.—ஆகாஸ் யெகோவாவின்ஆலயத்
திலும், அரமனையின் பொக்கிஷங்களிலும் கா
ணப்பட்டபொன்வெள்ளிகளைஎடுத்து,அஷீரிய
௯ இராசாவுக்கு வெகுமானமாக அனுப்பினான்.-அ
ஷீரிய இராசா அவனுக்குச்செவிகொடுத்தான்:
பின்பு அஷீரிய இராசா தமஸ்குவுக்கு விரோத
மாகப்புறப்பட்டுப்போய், அதைப்பிடித்து,அதி
லுள்ள சனங்களைச்சிறையாகக் கீருக்குக்கொ
ண்டுபோய், ரேத்சீனைக்கொலைசெய்தான்.
௰ ஆகாஸ் இராசா, அஷீரிய இராசாவாகிய திக்
லாத்பிலேசரைச்சந்திக்கும்படி தமஸ்குவுக்குப்
போனான்: ஆகாஸ்இராசா தமஸ்குவிலிருந்தஒரு
வேதிகையைக்கண்டு, அந்தவேதிகையின் சாய
லுக்கும் அதிலுள்ள எல்லாச்செய்கைக்குமேற்க
மாதிரி எழுதி, ஆசாரியனாகியஊரியாவுக்கனுப்
௰௧ பினான்.—ஆகாஸ் இராசா தமஸ்குவிலிருந்து அ
னுப்பின எல்லாவற்றின்படிக்கும், ஊரியா ஒரு
வேதிகையையுண்டாக்கினான்: ஆகாஸ் இராசா
தமஸ்குவிலிருந்துவருகிறதற்குமுன் ஆசாரியனா
௰௨ கிய ஊரியா அதை உண்டாக்கினான்.-இராசா
தமஸ்குவினின்றுவந்தபொழுது அந்த வேதிகை
யைக்கண்டு, அதைச்சமீபித்து, அதின்மேல் பலி
௰௩ யிட்டான்.-அவன்அந்த வேதிகையின்மேல் தன்
தகனபலியையும் போசனபலியையும் தகித்து,
பானபலியை ஊற்றி, தன்ஸ்தோத்திரபலிகளின்
௰௪ இரத்தத்தைத்தெளித்தான்.—பின்பு அவன் யெ
கோவாவின் சந்நிதிக்குமுன்பாக யெகோ
வாவின் ஆலயத்துக்கும் வேதிகைக்கும் இடை
யிலிருந்த பித்தளை வேதிகையைஎடுத்துக்கொண்
டுவந்து, இந்தவேதிகைக்கு வடபுறத்தில் வைத்
௰௫ தான்.—ஆகாஸ் இராசா ஆசாரியனாகிய ஊரியா
வைநோக்கி, பெரியவேதிகையின்மேல் காலைத்
தகனபலியையும், மாலைப் போசனபலியையும்,
இராசாவின் தகனபலியையும், அவன் போசன
பலியையும்,தேசத்தின்சகல சனங்களுடையதக
னபலியோடும் அவர்கள் போசனபலியோடும்,
அவர்கள் பானபலியோடும் தகித்து, தகனபலி
யின் எல்லா இரத்தத்தையும்,மற்றப்பலியின் எல்
லா இரத்தத்தையுந் தெளிப்பாய்: நான் கேட்
டறிவதற்குப் பித்தளை வேதிகை என்னிமித்தம்
வைக்கவேண்டுமென்று கட்டளையிட்டான்.—
௰௬ ஆகாஸ் இராசாகட்டளையிட்டதெல்லாவற்றின்
படிக்கும் ஆசாரியனாகிய ஊரியாசெய்தான்.
௰௭ பின்பு ஆகாஸ் இராசா, பீடங்களின் இடை
வெளிகளிலுள்ள அணிகளைவெட்டிப்போட்டு,
அவையினின்றும்ஸ்நானபாத்திரங்களைஅகற்றி,
அதின்கீழிருந்தபித்தளைஎருதுகளினின்று சமுத்
திரத்தை எடுத்துவிட்டுத் தளவரிசைக் கல்லின்
௰௮ மேல் வைத்தான்.—ஓய்வுநாளுக்காகஅவர்கள்ஆ
லயத்திலே கட்டியிருந்தமேற்கட்டியையும்,வெ
ளியேயிருந்த இராசாவின் பிரவேசவாசலையும்,
அஷீரியஇராசாவினிமித்தம்யெகோவாவின்
ஆலயத்தினின்றும் அகற்றிவிட்டான்.
ஆகாஸ் செய்தமற்றக்கிரியைகள்யூதாதேசத்து ௰௯
இராசாக்களின் சரித்திர புத்தகத்திலல்லவா எழு
தியிருக்கின்றன.—ஆகாஸ் தன் பிதாக்களுடன் ௨௰
மகாநித்திரையடைந்து, தாவீதின் நகரத்தில் தன்
முன்னோருடன் அடக்கம்பண்ணப்பட்டான்:
அவனுக்குப்பின்பு அவன் புத்திரனாகிய இஸ்கி
யா இராசாவானான்.

## ௰௭. அதிகாரம்.

௧. ஓஷியா தீமையாய் இராசரிக்கஞ்செய்தல்: ௩. அவன் தண்டிக்கப்படல்: ௫. இஸரவேலர் பாவஞ்செய்து சிறைபிடிக்கப்படல்: ௨௪. அவர்கள் நகரங்களில் அந்நியசனங்கள் ஏற்படுத்தப்படல்.

யூதாதேசத்திராசாவாகிய ஆகாஸ் அரசாண்ட ௧
பன்னிரண்டாம் வருஷத்தில், ஏலாவின் புத்திர
னாகிய ஓஷியா ஷமாரியாவில் இஸரவேலருக்கு
இராசாவாகி, ஒன்பது வருஷம் அரசாண்டான்.-
அவன் யெகோவாவின் பார்வைக்குத்தீங்கு ௨
செய்தான், ஆயினும் தனக்குமுன்னிருந்த இஸர
வேலரின் இராசாக்களைப்போலல்ல.
அஷீரிய இராசாவாகிய ஷல்மனேசர் அவ ௩
னுக்கு விரோதமாகப்புறப்பட்டுவந்தபொழுது,
ஓஷியா அவனுக்குப் பணிவிடைக்காரனாகித்தி
றைகொடுத்தான்.-அஷீரியஇராசா,ஓஷியாசெய் ௪
கிற துரோகத்தைக்கண்டான்: இவன் தான்முன்
னேவருஷந்தோறுஞ்செய்து வந்தபிரகாரம்அஷீ
ரிய இராசாவுக்குத்திறைகொண்டுவராமல்,எகிப்
து இராசாவாகிய சோ விடத்தில் தூதரையனுப்
பியிருந்தான்:ஆதலால்அஷீரியஇராசா அவனைக்
கட்டிச் சிறைச்சாலையில் அடைத்தான்.
அஷீரிய இராசாதேசமெங்குஞ்சென்றுஷமா ௫
ரியாவைச்சேர்ந்து,மூன்றுவருஷமாக அதைமுற்
றிக்கைசெய்தான்.
ஓஷியாஅரசாண்டஒன்பதாம்வருஷத்தில், அ ௬
ஷீரியஇராசாஷமாரியாவைப்பிடித்து,இஸரவே
லரை அஷீரியதேசத்துக்குக்கொண்டுபோய், அ
வர்களைக் கோஷான் ஆற்றங்கரையிலுள்ள அலா
விலும், ஆபோரிலும், மேதியரின்நகரங்களிலும்,
வசிக்கும்படிசெய்தான்.-இஸரவேல் சந்ததியார் ௭
தங்களை எகிப்து இராசாவாகியபார்வோன்கைக்
குவிலக்கி, எகிப்துதேசத்தினின்றும் புறப்படச்
செய்தத்தங்கள் தேவனாகிய யெகோவாவுக்
குவிரோதமாகப் பாவஞ்செய்து, அந்நியதேவர்
களுக்குப்பயந்து,—யெகோவா இஸரவேல் ௮
சந்ததியார் முன்னின்றும் அகற்றிவிட்ட அந்நி
யதேசத்தாருடைய விதிகளின்படிக்கும், இஸர
வேலரின் இராசாக்கள்கற்பித்தவிதிகளின்படிக்

(௮) அதி.௰௨.௰௮.(௯)ஆமோ.௧.௫.(௰௨) ௨.நாளா.௨௯.௰௬,௰௯. (௰௪) ௨.நாளா.௪.௧. (௰௫) யாத்.௨௯.௩௯,௪௰,௪௧. (௰௭) ௨.நாளா.௨௮.௨௪. ௧.இரா.௭.௨௭,௨௮. ௧.இரா.௭.௨௩,௨௫. (௨௰) ௨.நாளா.௨௮.௨௭.—(௰௭. அதி. ௧.) அதி. ௰௫.௩௰. (௩) அதி.௰௮.௯. ௨.சாமு.௮.௨. (௫) அதி.௰௮.௯. (௬) அதி.௮.௰,௰௨. ஓசி.௰௩.௰௬. லேவி.௨௬.௩௨,௩௩. உபா.௨௮.௩௬,௬௪. ௧.நாளா.௫.௨௬. (௮) லேவி.௰௮.௩. உபா.௰௮.௯.

௯ கும் நடந்துவந்தார்கள்.—இஸரவேல்சந்ததியார்
செய்யத்தகாதவைகளை இரகசியமாய்த் தங்கள்
தேவனாகிய யெகோவாவுக்குவிரோதமாகச்
செய்து, காவலாளர் வீடுதொடங்கி அரணுள்ள
நகரமட்டும், தங்கள்சகல நகரங்களிலும் உயர்ந்
௰ தஸ்தானங்களைஉண்டாக்கி,—ஒவ்வொருஉயர்ந்
த மலையின்மேலும், ஒவ்வொரு பசுமையானவி
ருட்சத்தின் கீழும், விக்கிரகங்களையும் அஷரி
௰௧ மரங்களையும் நாட்டி,—தங்களுக்கு முன்னின்
றும் யெகோவா அகற்றிவிட்ட புறத்தேசத்தார்
செய்தபிரகாரம் சகல உயர்ந்த ஸ்தானங்களிலும்
தூபங் காட்டி, யெகோவாவுக்குக் கோப
முண்டாக, துர்க்கிரியைகளைச் செய்துவந்தார்
௰௨ கள்.—இந்தக்காரியஞ் செய்யப்படாதென்று யெ
கோவா தங்களுக்குச் சொல்லியிருந்தும், அ
வர்கள் விக்கிரகங்களைச் சேவித்துவந்தார்கள்.—
௰௩ யெகோவா, நீங்கள் உங்கள் பாவவழியை
விட்டு, நான் உங்கள் முன்னோருக்குக் கட்ட
ளையிட்டதும், என் தாசராகிய தீர்க்கதரிசிக
ளைக்கொண்டு உங்களுக்குச் சொல்லியனுப்பி
னதுமாகிய சகல நியாயப்பிரமாணத்தின்படிக்
கும், என் கட்டளைகளையும் என் விதிகளையும்
கைக்கொள்ளுங்களென்றுசொல்லி, சகல தீர்க்
கதரிசிகளையும், சகல தரிசிகளையுங்கொண்டு இ
ஸரவேலருக்கும், யூதாசனங்களுக்கும் விரோத
௰௪ மாகச்சாட்சியிட்டாலும்.—அவர்கள் அதற்குச்
செவிகொடாமல்,தங்கள்தேவனாகியயெகோ
வாவை விசுவாசியாத தங்கள் முன்னோரின்
கழுத்தைப்போலத்தங்கள் கழுத்தையும் வணங்
௰௫ காக்கழுத்தாக்கினார்கள்.—அன்றியும் அவர்கள்
அவருடைய விதிகளையும், தங்கள் முன்னோரு
டன் அவர்செய்த உடன்படிக்கையையும், தங்
களுக்கு விரோதமாய் அவரிட்ட சாட்சிகளை
யுந்தள்ளி, வீணானதைப்பின்பற்றி வீணானவர்க
ளாகி,தங்களைச்சூழ்ந்திருந்த அந்நியதேசத்தாரை
ப்போலச் செய்யப்படாதென்று யெகோவா
தங்களுக்குக்கட்டளையிட்டிருந்தும்,அவர்களைப்
௰௬ பின்பற்றினார்கள்.—அவர்கள் தங்கள் தேவனா
கிய யெகோவாவின் சகலகட்டளைகளையுமீ
றி, இரண்டுகன்றுகளாகியவார்ப்பானவிக்கிரகங்
களையுண்டாக்கி, ஒரு அஷரிமரத்தை நாட்டி,
வானத்தில் உள்ள சகலசேனைகளுக்கும் பூசை
௰௭ செய்து, பாகாலைச் சேவித்துவந்தார்கள்.—அவர்
கள் தங்கள் புத்திரரையும் புத்திரிகளையும் அக்கி
னியிலே பிரவேசிக்கப்பண்ணி, நிமித்தம்பார்த்
து, மாயாவித்தைசெய்து, யெகோவாவுக்குக்
கோபமுண்டாக அவருடையபார்வைக்குத் தீங்
௰௮ குசெய்யத் தங்களை விற்றார்கள்.—அதினால் யெ
கோவா இஸரவேலர்மேல் மிகவுங் கோபங்
கொண்டு, தமது சமுகத்தினின்றும் அவர்களை அ
கற்றிவிட்டார்: யூதாகோத்திரத்தாரேயன்றி, மற்
றொருவரும் மீந்திருக்கவில்லை.—யூதா சனங்க ௰௯
ளுந்தங்கள்தேவனாகிய யெகோவாவின்கட்
டளைகளைக்கைக்கொள்ளாமல், இஸரவேலர் கற்
பித்த விதிகளின்படி நடந்துவந்தார்கள்.—ஆத ௨௰
லால் யெகோவா இஸரவேல்சந்ததியார்சமஸ்
தரையுந் தள்ளிவிட்டு, அவர்களைக் கிலேசப்ப
டுத்தி, அவர்களைத்தமதுசமுகத்தினின்றும் அகற்
றிவிடும்வரைக்கும், கொள்ளையாடுகிறவர்கள்கை
யில் ஒப்பித்தார்.—அவர்இஸரவேலரைத்தாவீதின் ௨௧
வமிசத்தினின்றும் வேறுபடுத்தினபொழுது, அ
வர்கள் நெபாத்தின் புத்திரனாகிய யெரோபேயா
மை இராசாவாக ஏற்படுத்தினார்கள்: யெரோ
பேயாம்இஸரவேலரையெகோவாவைப்பின்
பற்றாமல் மறித்து, அவர்களை பெரிய பாவத்தில்
உட்படுத்தினான்.—யெகோவா தீர்க்கதரிசிக ௨௨
ளாகிய தமது சகலதாசர்களையுங்கொண்டுசொல்
லியிருந்த பிரகாரம், தாம் இஸரவேலரைத்தமது
சமுகத்தினின்றும் அகற்றிவிடும்வரைக்கும் இஸ
ரவேல்சந்ததியார் யெரோபேயாம்செய்த சகல
பாவங்களையும் விட்டுவிலகாமல் அவைகளில்
நடந்துவந்தார்கள்.-இஸரவேலர் தங்கள்தேசத்தி ௨௩
னின்றும் அஷீரியாதேசத்துக்குக் கொண்டுபோ
கப்பட்டு, இந்நாள்வரைக்கும் இருக்கிறார்கள்.

பின்பு அஷீரிய இராசா பாபேல் நகரத்தாரி ௨௪
லும், கூதாவிலும், அவ்வாவிலும், அமாத்திலும்,
செப்பார்வாயிமிலுமிருந்து சனங்களைக்கொண்
டுவந்து, இஸரவேல்சந்ததியாருக்குப் பிரதியாக
ஷமாரியா நகரங்களில் இருக்கச்செய்தான்: இ
வர்கள் ஷமாரியாவைச் சுதந்தரித்துக்கொண்டு
அதின் பட்டணங்களிலே வாசம்பண்ணினார்
கள்.—அவர்கள் அங்கேவாசம்பண்ணத் தொடங் ௨௫
கினகாலத்தில், யெகோவாவுக்குப்பயப்பட
வில்லை: ஆதலால் யெகோவா சிங்கங்களை
அவர்களுக்குள்ளே அனுப்ப, அவைகள் அவர்
களிற்சிலரைக்கொன்றன.—அதினால் அவர்கள் ௨௬
அஷீரிய இராசாவைநோக்கி, நீர்புறப்படுத்திக்
கொண்டுவந்து,ஷமாரியாவின்பட்டணங்களில்
இருக்கச்செய்தசாதியார், அத்தேசத்தின் தேவ
னை வழிப்பட அறியார்கள்: அதினால் அந்தத்தே
வன் அவர்களுக்குள்ளேசிங்கங்களையனுப்ப, அ
வர்கள் அத்தேசத்துத்தேவனைவழிபட அறியாததி
னால் அவைகள் அவர்களைநாசப்படுத்துகின்றன
வென்றுசொல்ல,—அஷீரியஇராசாநீங்கள் அங் ௨௭
கேயிருந்துகொண்டுவந்த ஆசாரியரில் ஒருவனை
அங்கே அழைத்துக்கொண்டுபோங்கள்; அவர்
கள் அங்கேபோய்வசிக்கட்டும், அவர்கள் அத்
தேசத்தின்தேவனை வழிபடும்படி அவன் அவர்

(௯) அதி.௰௮.௮. (௰) ௧.இரா.௰௪.௨௩. ஏசா.௫௭.௫. யாத்.௩௪.௰௩. மீகா.௫.௰௪. உபா.௰௨.௨. அதி.௰௬.௪. (௰௨) யாத்.௨௰.௩,௪. உபா.௫.௭,௮. உபா.௪.௰௯. (௰௩) ௧.சாமு.௯.௰. எரே.௰௮.௰௧. எரே.௨௫.௫. (௰௪) உபா.௩௧.௨௭. நீதி.௨௯.௧. (௰௫) உபா.௨௯.௨௫. உபா.௩௨.௨௧. ௧.கொரி.௮.௪. சங்.௱௫.௮. ரோ.௧,௨௧. உபா.௰௨.௩௰,௩௧. (௰௬) யாத்.௩௨.௨. ௧.இரா.௰௨.௨௮. ௧.இரா.௰௪.௰௫,௨௩. ௧.இரா.௰௬.௩௧. அதி.௰௧.௰௮. (௰௭) லேவி.௰௮.௨௧. எசேக்.௨௩.௩௭. உபா.௰௮.௰. ௧.இரா.௨௧.௨௰. (௰௮) ௧.இரா.௰௧.௰௩,௩௩.(௰௯)எரே.௩.௮.(௨௰)அதி.௰௩.௩. (௨௧) ௧.இரா.௰௧.௰௧,௩௧. ௧.இரா.௰௨.௨௰,௨௮. (௨௩) ௧.இரா.௰௪.௰௬. வச.௬. (௨௪) எஸ்ரு.௪.௨,௰. அதி.௰௮.௩௪.

௨அ களுக்குப் போதிப்பானாகவென்றான்.—பின்பு
அவர்கள் ஷமாரியாவிலிருந்து முன்கொண்டு
போன ஆசாரியரில் ஒருவன்பெத்தேலிலேவா
சம்பண்ணி, அவர்கள் யெகோவாவுக்குப்ப
௨௯ யந்துநடக்கும்வகையைப் போதித்தான்.—ஆனா
லும் அந்தச்சாதியார் தங்கள் தங்கள் தேவர்களை
உண்டுபண்ணி, அந்தந்தச்சாதியார்வசிக்கிற பட்
டணங்களைச்சேர்ந்த ஷமாரியாவின் சனங்கள்
செய்த உயர்ந்தஸ்தானங்களிலுள்ள ஆலயங்களி
௩௰ லேவைத்தார்கள்.—பாபேல் நகரத்துச்சனங்கள்
சுக்கோத்பேனோத்தையும்,கூதின்சனங்கள் நெர்
கலையும், அமாத்தியசனங்கள் அஷீமாவையும்,—
௩௧ அவியர் நிப்காசையும், தர்தாக்கையு முண்டாக்
கினார்கள். செப்பாவியர்செப்பார்வாயிமின் தே
வர்களாகிய அத்ரமிலெக்குக்கும், அனம்மெலெக்
குக்குந் தங்கள்பிள்ளைகளை அக்கினியில்தகித்து
௩௨ வந்தார்கள்.—இவ்விதமாக அவர்கள் யெகோ
வாவுக்குப் பயந்ததுமன்றி, உயர்ந்த ஸ்தானங்க
ளிலுள்ள ஆலயங்களிலே தங்கள்நிமித்தம் பலி
யிடும்படி, அவர்கள் தங்களுக்குள்ளிருந்த நீசர்
களை உயர்ந்த ஸ்தானங்களின் பூசாரிகளாகவும்
௩௩ ஏற்படுத்தினார்கள்.—அவர்கள் யெகோவாவுக்
குப்பயந்தும், தாங்கள் விட்டுவந்த சந்ததியார்
செய்கிறபிரகாரம் தங்கள் தேவர்களைச் சேவித்
௩௪ தும்,வந்தார்கள்.—அவர்கள்இந்நாள்வரைக்கும் பூ
ருவகாலத்தின் முறைமைப்படியே செய்துவரு
கிறார்கள்: அவர்கள் யெகோவாவுக்குப்பயப்
படவில்லை, யெகோவா தம்மால் இஸரவே
லென்னும்பெயர்பெற்ற யாக்கோபின் சந்ததியா
ருக்குக்கட்டளையிட்ட விதிப்பிரமாணங்களின்
படிக்கும்,முறைமைகளின்படிக்கும்,நியாயப்பி
ரமாணத்தின்படிக்கும், கட்டளையின்படிக்குஞ்
௩௫ செய்யவுமில்லை.-யெகோவா இவர்களுடன்
உடன்படிக்கைபண்ணி, நீங்கள் அந்நியதேவர்
களுக்குப் பயப்படவும்வேண்டாம், அவர்களை
நமஸ்கரிக்கவும்வேண்டாம், அவர்களைச்சேவிக்
கவும்வேண்டாம், அவர்களுக்குப் பலியிடவும்
௩௬ வேண்டாம்.—மகாபராக்கிரமத்தினாலும், ஓங்கி
யபுயத்தினாலும், உங்களை எகிப்தினின்றும் புறப்
படப்பண்ணின யெகோவாவுக்கேபயப்பட
வேண்டும், அவருக்கே ஆராதனைசெய்யவேண்
௩௭ டும், அவருக்கே பலியிடவேண்டும்.—உங்களுக்
காக அவர் எழுதிய விதிப்பிரமாணங்களையும்,
முறைமைகளையும், நியாயப்பிரமாணத்தையுங்
கட்டளையையும், நீங்கள் சதாகாலமும் சாவதா
னமாய்ப் பேணி நடவுங்கள்; அந்நியதேவர்க
௩௮ ளுக்கு நீங்கள்பயப்படவேண்டாம்.—நான்உங்
களுடன்செய்த உடன்படிக்கையை மறவாதிரு
ங்கள்; அந்நியதேவர்களுக்கு நீங்கள் பயப்பட
வேண்டாம்.—உங்கள் தேவனாகிய யெகோ ௩௯
வாவுக்கே பயப்படவேண்டும்; அவர் உங்கள்
எல்லாச்சத்துருக்களின் கைக்கும் உங்களைத்தப்
புவிப்பாரென்றார்.—ஆனாலும் அவர்கள் செவி ௪௰
கொடாமல், தங்கள்பூருவகாலத்தின்முறைமைக்
கேற்க நடந்தார்கள்.—அவ்விதமாய் இந்தச்சாதி ௪௧
யாரும் யெகோவாவுக்குப்பயந்தும், தொழிற்
படுத்தப்பட்ட தங்கள் விக்கிரகங்களைச்சேவித்
தும் வந்தார்கள்: தங்கள் பிதாக்கள் செய்தபடி
அவர்கள் புத்திரரும், பௌத்திரரும், இந்நாள்வ
ரைக்குஞ் செய்துவருகிறார்கள்.

## ௰அ. அதிகாரம்.

க. இஸ்கியா நன்றாய் இராசரிக்கஞ் செய்தல்: ௪. தேவபூசைநீக்கி வாழ்வடைதல்: ௯. ஷமாரியர் தோல்வியடைதல்: ௰௩.சனகெரிப் யூதாதேசத்தில் சருவிக்கொண்டு உபகாரம்பெறல்:௰௭.ரப்ஷாக்கே நிந்தனைசெய்தல்.

இஸரவேலரின் இராசாவாகிய ஏலாவின்புத்தி ௧
ரனான ஓஷியா அரசாண்ட மூன்றாம்வருஷத்
தில், யூதாதேசத்து இராசாவாகிய ஆகாசின்புத்
திரனான இஸ்கியா இராசாவானான்.—அவன் அ ௨
ரசாளத்தொடங்கினபொழுது அவனுக்கு இரு
பத்தைந்துவயது; அவன் யெரூஷலேமில் இரு
பத்தொன்பது வருஷம் அரசாண்டான். அவன்
மாதாவின்பெயர் அபீ, அவள் சகரியாவின்புத்
திரி.—அவன் தன் பிதாவாகிய தாவீது செய்த ௩
எல்லாவற்றின் படிக்கும், யெகோவாவின்
பார்வைக்கு நலமானதைச்செய்தான்.
அவன் உயர்ந்த ஸ்தானங்களை அகற்றி, விக் ௪
கிரகங்களைத்தகர்த்து, அஷரி விருட்சங்களைத் த
றித்து, மோசேசெய்தபித்தளைச் சருப்பத்தையு
டைத்துப்போட்டான்: அந்நாள் வரைக்கும் இ
ஸரவேல் சந்ததியார் அதற்குத் தூபங்காட்டிவந்
தார்கள்: அதற்கு நிகுஷ்தானென்று பேரிட்
டான்.—இஸரவேலரின் தேவனாகிய யெகோ ௫
வாவில் விசுவாசமாயிருந்தான்; யூதாவின் சக
ல இராசாக்களுக்குள்ளும் அவனுக்கு நிகரான
வன் முன்னுமில்லை, பின்னுமில்லை.—அவன் ௬
இடைவிடாமல் யெகோவாவைப்பின்பற்றி,
அவரையேசார்ந்து, யெகோவாமோசேக்குக்
கட்டளையிட்ட அவர் கட்டளையைக் கைக்
கொண்டு நடந்தான்.-யெகோவா அவனோடி ௭
ருந்தார்; அவன்தான்போகிற இடமெங்கும்அனு
கூலம் பெற்றான்: அவன் அஷீரிய ராசாவுக்குச்
சேவியாமல் அவன் அதிகாரத்தைத் தள்ளிவிட்
டான்.-அவன் காவலாளர் வீடுதொடங்கிஅரணா ௮
ன நகரம்வரைக்கும், காசாவிலும் அதின் எல்லை
களிலுமுள்ள பெலிஸ்தியரை அடித்தான்.
இஸ்கியா இராசா அரசாண்ட நாலாம் வரு ௯

(௩௰) வச.௨௪. (௩௧) எஸ்றா.௪.௯. லேவி.௰அ.௨௧. உபா.௰௨.௩௧. (௩௨) ௧.இரா.௰௨.௩௧. (௩௩) செப்.௧.௫. (௩௪) ஆதி.௩௨.௨அ. ௧.இரா.௰௧.௩௧. (௩௫) நியா.௬.௰. யாத்.௨௰.௪. (௩௬) யாத்.௬.௬. உபா.௰.௨௰. (௩௭) உபா.௫.௩௨. (௩அ) உபா.௪.௨௩. (௪௧) வச.௩௨,௩௩.—(௰அ. அதி. ௧.) ௨.நாளா.௨அ.௨௭. மத்.௧.௯. (௨) ௨.நாளா.௨௯.௧. (௪) ௨.நாளா.௩௧.௧. எண்.௨௧.௯. (௫) அதி.௰௯.௰. யோபு.௰௩.௰௫. சங்.௰௩.௫. அதி.௨௩.௨௫.(௬)உபா.௰.௨௰. யோசு.௨௩.அ. (௭) ௨.நாளா.௰௫.௨. ௧.சாமு.௰அ.௫,௰௪. சங்.௬௰.௰௨. அதி.௰௬.௭. (அ) ௧.நாளா.௪.௪௧. ஏசா.௰௪.௨௯. அதி.௰௭.௯. (௯) அதி.௰௭.௩.

ஷத்திலும், இஸரவேலரின இராசாவாகிய ஏலா
வின் புத்திரனுன ஓஷியா அரசாண்ட ஏழாம்வ
ருஷத்திலும், அஷீரிய இராசாவாகிய ஷல்மனே
சர், ஷமாரியாவுக்கு விரோதமாய்வந்து அதை
௰ முற்றிக்கை செய்தான்.—மூன்ரும் வருஷத்துக்
குப்பின் அதைப்பிடித்துக்கொண்டான்: இஸ்கி
யா அரசாண்ட ஆரும்வருஷத்திலும், இஸரவே
லரின் இராசாவாகிய ஓஷியா அரசாண்ட ஒன்
பதாம் வருஷத்திலும், ஷமாரியா பிடிபட்டது.-
௰௧ இஸரவேலர் தங்கள் தேவனுகிய யெகோ
வ ாவின் வாக்குக்கு அமையாமலும், அவருடை
ய உடன்படிக்கையையும் யெகோவாவின்
தாசனுகிய மோசே கட்டளையிட்டதெல்லாவற்
றையும்மீறி,கேளாமலும்,அவற்றின்படிநடவாம
௰௨ லுமிருந்தபடியினுல்,—அஷீரிய இராசா அவர்
களை அஷீரிய தேசத்திற்குக்கொண்டு போய்,
கோஷான் நதிக்குச்சமீபத்திலுள்ள அலாவிலும்,
ஆபோரிலும், மீதியானியருடைய நகரங்களி
லும், இருக்கும்படி செய்தான்.
௰௩ இஸ்கியாஇராசா அரசாண்டபதினுலாம் வரு
ஷத்தில், அஷீரியஇராசாவாகிய சனகெரிப், யூ
தாவிலுள்ள அரணுன சகலநகரங்களுக்கும் வி
ரோதமாய்வந்து, அவைகளைப்பிடித்துக்கொண்
௰௪ டான்.—அதினுல் யூதாதேசத்து இராசாவாகிய
இஸ்கியா, லாகீஷிலே அஷீரிய இராசாவிடத்
தில் ஆளனுப்பி, நான் குற்றஞ்செய்தேன்; ஆனு
லும் என்னைவிட்டுத்திரும்பிப்போய்விடும்: நீர்
என்மேல் என்னபாரமேற்றினுலும் நான் சுமப்
பேனென்றுசொல்லுவித்தான். அதினுல் அஷீ
ரியஇராசா, யூதாதேசத்துராசாவாகிய இஸ்கியா
விடத்தில் முந்நூறு கிக்கேர்வெள்ளியும், முப்ப
௰௫ து கிக்கேர்பொன்னும்வாங்கநியமித்தான்.—இஸ்
கியா யெகோவாவின் ஆலயத்திலும், அரம
னையின் பொக்கிஷங்களிலும் இருந்த சமஸ்த
௰௬ வெள்ளியையுங்கொடுத்தான்.—அந்தச்சமயத்தில்
இஸ்கியா யெகோவாவின் ஆலயத்தின்கதவு
களிலும், யூதாதேசத்துராசாவாகியஇஸ்கியாதங்
கமுறுத்தின தூண்களிலுமிருந்த தங்கத்தை யெ
டுத்து அஷீரியஇராசாவுக்குக்கொடுத்தான்.
௰௭ பின்பு அஷீரிய இராசா லாகீஷிலிருந்து வெ
குசேனைகளுடன் தர்தானையும், இரப்சாரிசுவை
யும், ரப்ஷாக்கேயையும், யெருஷலேமுக்கு வி
ரோதமாய் இஸ்கியா இராசாவிடத்தில் அனுப்பி
னுன். இவர்கள்போய்ச்சேர்ந்தபொழுது,மேற்கு
ளத்தின் சாலகசமீபத்தில் வண்ணுன்துறைக்குப்
௰௮ போகிறவழியிலேநின்ருர்கள்.-அவர்கள் இராசா
வைக்கூப்பிட்டபொழுது, வீட்டதிகாரியும், இ
ல்கியாவின்புத்திரனுகிய இலியகீமும், இலேகக
னுகிய ஷெப்னுவும்,இதிகாசகர்த்தனுகிய ஆசாப்
பின்புத்திரனுன யோவாகும்புறப்பட்டு, அவர்க
௰௯ ளிடத்தில்வந்தார்கள்.-அப்பொழுது ரப்ஷாக்கே
அவர்களைநோக்கி, நீங்கள் இஸ்கியாவிடத்தில்,
நீகொண்டிருக்கிற இந்த நம்பிக்கையென்ன.—
யுத்தத்துக்கு மந்திராலோசனையும், வலிமையும் ௨௰
எனக்குண்டென்றுசொல்லுகிருய், அது வாய்ப்
பேச்சேயன்றி வேறல்ல. நீ என்னை விரோதிக்
கும்படி ஆர்மேல் நம்பிக்கை வைத்திருக்கிரு
ய்.—நெரிந்தநாணற்கோலாகிய எகிப்தின்மேல் ௨௧
நீநம்பிக்கைவைத்திருக்கிருய்,அதுதன்மேல்ஒரு
வன்ஊன்றினுல், அவனுள்ளங்கையில்தைத்துஅ
தை யூடுருவும்: எகிப்துஇராசாவாகியபார்வோன்
தன்னைநம்புகிற யாவருக்கும் இப்படியேயிருப்
பான்.—நீங்கள் என்னிடத்தில், நாங்கள் எங்கள் ௨௨
தேவனுகிய யெகோவாவையே நம்புகிருே
மென்றுசொல்வீர்களாகில்,இஸ்கியா,இவருடை
ய உயர்ந்த ஸ்தானங்களையும் வேதிகைகளையும்
அல்லவாஅகற்றி,யூதாசனங்களையும்யெருஷலே
மின் சனங்களையும்நோக்கி, யெருஷலேமிலுள்
ள இந்தவேதிகையிடத்தில் மாத்திரம் ஆராதனை
செய்யவேண்டுமென்ருன்.—இப்பொழுது என் ௨௩
ஆண்டவனுகிய அஷீரியராசாவுக்குப் பிணைதா,
இரண்டாயிரங் குதிரைமேலேறத் தக்கவர்கள்
உன்னிடத்திலுண்டானுல்,அவைகளைநான்உன
க்குத்தருவேன்.—அப்படி முடியாதிருந்தால்,இர ௨௪
தங்களுக்காகவுங் குதிரைவீரருக்காகவும்எகிப்தி
லே நம்பிக்கைவைத்து, என் ஆண்டவனின்கீழ்த்
தரமான பணிவிடைக்காரருக்குள்ளேயிருக்கும்
ஒரு தலைவனையும் புறங்காட்டப்பண்ணுவதெப்
படி.—நான் இப்பொழுது இந்தஸ்தானத்தைச்சே ௨௫
திக்கும்படி யெகோவாவின் கட்டளையில்லா
மல்வந்தேனு; யெகோவா என்னைநோக்கி, நீ
அந்தத்தேசத்துக்குவிரோதமாய்ப்போய், அதை
அழித்துவிடென்று எனக்குச்சொன்னுர் என்று
அஷீரியஇராசாவாகியமகாஇராசா சொல்லுகிரு
ரென்பதைச் சொல்லுங்களென்ருன்.—அப்பொ ௨௬
ழுது இல்கியாவின்புத்திரனுகிய இலீயகீமும்,
ஷெப்னுவும்,யோவாகும், ரப்ஷாக்கேயைநோக்
கி, உமதுபணிவிடைக்காரருடன் ஷீரியபாஷை
யிலேபேசும்படிவேண்டுகிருேம்; அதுஎங்களுக்
குத் தெரியும்: மதிலின்மேலிருக்கிற சனங்களு
டையசெவியிலேறயூதபாஷையிலேபேசவேண்
டாமென்ருர்கள்.—ரப்ஷாக்கே அவர்களைநோக் ௨௭
கி,இந்த வாக்குகளை என் ஆண்டவன், உன்ஆண்
டவனுக்கும் உனக்கும்மாத்திரமா, தங்கள் மலத்
தைப்புசித்து, தங்கள் சிறுநீரைக்குடிக்கப்போ
கிற மதில்மேலிருக்கிற சனங்களுக்குமல்லவா
சொல்லுவதற்கு, என்னை அனுப்பினுனென்
ருன்.—பின்பு ரப்ஷாக்கே நின்றுகொண்டு, அ ௨௮
ஷீரிய இராசாவாகிய மகாராசாவின் வாக்கைக்
கேளுங்கள்.—இஸ்கியா உங்களை வஞ்சியாதப ௨௯
டி சாவதானமாயிருங்கள்: அவர்கையினின்றும்
அவன் உங்களை விடுவிக்கத்தக்கதிராணியுள்ளவ
னல்ல.-யெகோவா நிச்சயமாய்எங்களைஇரட் ௩௰
சிப்பார், இந்த நகரம் அஷீரிய இராசாவின்கை

(௰) அதி.௰௭.௬. (௰௧) அதி.௰௭.௭. தானி.௯.௬,௰. (௰௨) அதி.௰௭.௬. ௧.நாளா.௫.௨௬. (௰௩) ௨.நாளா.௩௨. ஏசா. ௩௬. (௰௫) அதி.௰௬.௮. (௰௭) ஏசா.௭.௩. (௰௯) ௨.நாளா.௩௨.௰,. (௨௧) எசேக்.௨௯.௬,௭. (௨௨) வச.௪. ௨.நாளா. ௩௧.௧. (௨௯) ௨.நாளா.௩௨.௰௫.

யில் ஒப்பிக்கப் படமாட்டா தென்று, இஸ்கி
யா உங்களை யெகோவாவை நம்பச்சொல்லு
வான்; அதற்கும் இடங்கொடாதிருங்களென்று
௩௧ இராசா சொல்லுகிறார்.—நீங்கள் இஸ்கியாவுக்
குச் செவிகொடாமல், நீங்கள் வெகுமானங்
கொண்டுவந்து என்னோடே சந்திசெய்யுங்கள்;
நான்வந்து, உங்களை உங்கள் தேசத்தைப்போ
லத் தானியமும், திராட்சரசமும், உணவுப்
பொருளும், திராட்சத்தோட்டங்களும், சீதவி
ருட்ச எண்ணெயும், தேனுமுள்ளதேசத்துக்குக்
௩௨ கொண்டுபோகும் பரியந்தம்,—நீங்கள் உங்களு
ங்கள் திராட்சத்திலும், உங்களுங்கள் அத்தி
விருட்சத்திலும் புசித்து, உங்களுங்கள் கிணற்
றுச்சலத்தைக் குடித்துக்கொண்டிருங்கள், அதி
னால் நீங்கள் சாவாமல் சீவித்திருப்பீர்கள்: யெ
கோவா எங்களை இரட்சிப்பாரென்றுசொல்
லி, உங்கள் இஸ்கியாவுக்குச் செவிகொடாதி
௩௩ ருங்கள்.—அந்நியதேசத்தாரின் தேவர்களில் யா
வனாகிலும் தன்தேசத்தை அஷீரியராசாவின்கை
௩௪ யினின்றும் விடுவித்ததுண்டா.—அமாத், அர்பாத்
என்னும் இவைகளின்தேவர்களெங்கே; செப்
பார்வாயிம்,ஐனா,ஈவா என்னும்இவைகளின் தே
வர்களெங்கே; அவர்கள் ஷமாரியாவை என்கை
௩௫ யினின்றும் விடுவித்ததுண்டா.—அந்நியதேசங்
களின் சகல தேவர்களுக்குள்ளும், தங்கள் தங்
கள்தேசத்தை என்கையினின்றும் விடுவித்துக்
கொண்டவர்கள் யாவர்; இனி யெகோவா
என்கையினின்றும் யெரூஷலேமை விடுவிப்பா
ராவென்றும், அஷீரிய இராசாசொல்லுகிறாரெ
ன்று யூதபாஷையில் உரத்தசத்தத்துடன் பேசி
௩௬ னான்.—அவனுக்கு உத்தரஞ்சொல்லவேண்டா
மென்று இராசகட்டளையிருந்ததினால், சனங்கள்
உத்தரமாக அவனுக்கொருவாக்குஞ் சொல்லா
௩௭ மல் பேசாதிருந்தார்கள்.—பின்பு இல்கியாவின்
புத்திரனாகியஇலீயகீமென்னும்வீட்டதிகாரியும்,
ஷெப்னாவென்னும் இலேககனும், ஆசாப்பின்
புத்திரனாகிய யோவாகென்னும் இதிகாச கர்த்த
னும், தங்கள் வஸ்திரங்களைக்கிழித்துக்கொண்டு
இஸ்கியாவிடத்தில்வந்து, ரப்ஷாக்கேயின் வாக்
கை அவனுக்குத்தெரிவித்தார்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. இஸ்கியாஏசாயாவிடத்தில்தூதரையனுப்பல்: ௬. ஏசாயாஅவர்களைத்தேற்றல்: ௮. சனகெரிப் இஸ்கியா இராசாவிடத்தில்வாக்கனுப்பல்: ௰௪. இஸ்கியாபிரார்த்தித்தல்: ௨௰.ஏசாயாதீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௩௫. சனகெரிப்பின்சேனாநாசமடைதல், அவனுங் கொல்லப்படல்.

இஸ்கியா இராசா அதைக்கேள்விப்பட்டபொ
ழுது, தன்வஸ்திரத்தைக்கிழித்து, இரட்டுடுத்து,
௨ யெகோவாவின் ஆலயத்திலேபோய்,—இரட்
டுத்தரித்தவர்களானவீட்டதிகாரியாகிய இலீயகீ
மையும்,இலேககனாகியஷெப்னாவையும், ஆசாரி
யரின் முதியோரையும், ஆமோத்சின்புத்திரனாகி
யஏசாயாவென்னுந்தீர்க்கதரிசியிடத்தில் அனுப்
பினான்.—இவர்கள்அவனைநோக்கி,இன்றைத்தி ௩
னம் கிலேசமும், கண்டிதமும், நிந்தனையுமுள்ள
தினம்: பிள்ளைபிறக்குங்காலம்வந்தது, பிரசவிக்
கிறதற்குப்பெலனில்லை.—நித்தியதேவனை நிந் ௪
திக்கும்படிதன்ஆண்டவனாகிய அஷீரியஇராசா
வினால் அனுப்பப்பட்ட ரப்ஷாக்கேயின் சகல
வாக்குகளும்உமது தேவனாகிய யெகோவா
வின்செவியிலேறவுங்கூடும்; உமது தேவனாகி
ய யெகோவா தாம்கேட்டவாக்குகளினிமித்
தம்தண்டனைசெய்யவுங்கூடும்: ஆதலால் மீதியா
யிருக்கிறவர்கள் நிமித்தம் பிரார்த்தனைபண்ணு
மென்று. இஸ்கியாசொல்லுகிறாரென்றார்கள்.—
இவ்விதமாய்இஸ்கியாஇராசாவின்பணிவிடைக் ௫
காரர் ஏசாயாவிடத்தில் வந்தார்கள்.

ஏசாயா அவர்களைநோக்கி, நீங்கள் உங்கள் ௬
ஆண்டவனிடத்தில்,அஷீரிய இராசாவின் பணி
விடைக்காரர்கள் என்னை நிந்திக்கக்கேட்டவாக்
குகளைக்குறித்து, நீ பயப்படவேண்டாம்.-கேள், ௭
நான் அவனுக்குள் ஒரு ஆவியைப்பிரவேசிக்கப்
பண்ணுவேன், அவன் ஒரு சமாசாரத்தைக்கேட்
டு, தன் தேசத்துக்குத்திரும்பிவிடுவான்; பின்பு
நான்அவனைஅவன்சுயதேசத்திலேகட்கத்தினால்
விழப்பண்ணுவேனென்றுயெகோவாசொல்
லுகிறாரென்பதைச்சொல்லுங்களென்றான்.

பின்பு அஷீரிய இராசா லாகீஷ் நகரத்தினின் ௮
றும் புறப்பட்டுப்போனானென்று கேள்விப்பட்
டதினால், ரப்ஷாக்கே திரும்பிப்போய் லிப்னா
வைஎதிர்த்து அவன்யுத்தஞ்செய்யக்கண்டான்.-
அப்பொழுது கூஷ் தேசத்து இராசாவாகிய திரா ௯
கா, உமக்குவிரோதமாக யுத்தஞ்செய்யப்புறப்ப
டுகிறானென்றுகேள்விப்பட்டான்.-அதினால் அ ௰
வன், நீங்கள் யூதாதேசத்துராசாவாகிய இஸ்கியா
விடத்தில், யெரூஷலேம் அஷீரிய இராசாவின்
கையில் ஒப்பிக்கப்படமாட்டாதென்று, நீ நம்பி
யிருக்கிற உன் தேவன் உன்னைவஞ்சியாதபடி
சாவதானமாயிரு.-கேள், அஷீரிய இராசாக்கள் ௰௧
சகலதேசங்களையும் இன்ன இன்ன பிரகாரஞ்
சங்கரித்தார்களென்று நீ கேள்விப்பட்டிருக்கிறா
ய்: இனி நீயா தப்பிப்போவாய்.-என் ஆதிபிதாக் ௰௨
கள் சங்கரித்த கோஷானையும்,ஆரானையும், ரேத்
சேப்பையும், திலசாரிலே வசித்த ஏதேன் சந்ததி
யாரையும், அந்நிய தேசத்தாரின் தேவர்கள் விடு
வித்தார்களா.—அமாத்தின் இராசாவும், அர்பாத் ௰௩
தின் இராசாவும், செப்பார்வாயிம், ஐனா, ஈவா
வென்னும் நகரங்களின் இராசாவும், எங்கே
யென்று சொல்லுங்களென்று திரும்பவும் இஸ்கி
யாவிடத்தில் தூதர்களை அனுப்பினான்.

இஸ்கியாதூதர்கள்கையினின்றும் காகிதத்தை ௰௪

(௩௧)ஆதி.௩௨.௨௰.நீதி.௰௮.௰௬. உபா.௮.௭,௮.(௩௩)அதி.௯.௰௨. ௨.நாளா.௩௨.௰௪. ஏசா.௰.௰,௰௧.(௩௪)அதி.௰௯.௰௩.
அதி.௰௭.௨௪.(௩௫)தானி.௩.௰௫.(௩௭)ஏசா.௩௩.௭.—(௰௯.அதி.௧.)ஏசா.௩௭.(௨) லூக்.௩.௪. (௪) ௨.சாமு.௰௬.௰௨.
அதி.௰௮.௩௫. சங்.௫௰.௨௧.(௬)ஏசா.௩௭.௬. அதி.௰௮.௰௭. (௭) வச.௩௫,௩௬,௩௭. எரே.௫௧.௧.(௮)அதி.௰௮.௰௪.(௯)
௧.சாமு.௨௩.௨௭. (௰) அதி.௰௮.௰௫. (௰௨) அதி.௰௮.௩௩. எசேக்.௨௭.௨௩. (௰௩) அதி.௰௮.௩௪. (௰௪) ஏசா.௩௭.௰௪.

வாங்கிவாசித்தபின்பு,யெகோவாவின்ஆலயத்
திற்பிரவேசித்து, யெகோவாவின்சந்நிதியில்
௰௫ அதைவிரித்தான்.—இஸ்கியா யெகோவாவை
நோக்கி, கெருபியர்மத்தியிலேவாசமாயிருக்கிற
வரும், இஸரவேலரின் தேவனுமாகிய யெ
கோவாவே, பூமண்டலத்திலுள்ளசகலஇராச்
சியங்களுக்கும் நீரே தேவன்; வானத்தையும்
௰௬ பூமியையுஞ்சிருஷ்டித்தீர்.—யெகோவாவே,
உமதுசெவியைச்சாய்த்துக்கேட்டருளும்: யெ
கோவாவே, கண்ணைத்திறந்து பார்த்தருளும்:
நித்திய தேவனை அவமானம்பண்ணும்படிசன
கெரிப்அனுப்பினவாக்குகளைக்கேட்டருளும்.—
௰௭ யெகோவாவே,அஸ்ஸீரிய இராசாக்கள், சகல
சாதியாரையும் அவர்கள் தேசங்களையும் நாசப்
௰௮ படுத்தினது மெய்.—அவர்கள் இவர்களுடைய
தெய்வங்களை அக்கினியினால் எரித்துப்போட்
டார்கள்: அவைகள்மரத்திலும், கல்லிலும்,மனி
தர்கையினால் தொழிற்படுத்தப்பட்டவைகளே
யன்றி,தேவர்களல்ல:ஆதலால் அவைகளைநாசப்
௰௯ படுத்தினார்கள்.—எங்கள் தேவனாகிய யெ
கோவாவே, எங்களைஅவன்கையினின்றும்வி
டுவித்தருளும், அதினால்நீர்மாத்திரமே தேவனா
கிய யெகோவாவென்பது, பூமண்டலத்தி
லுள்ள சகல இராச்சியத்தாருக்கும் தெரியவரு
மென்று பிரார்த்தித்தான்.
௨௰ பின்புஆமோத்சின்புத்திரனாகிய ஏசாயா, இஸ்
கியாவிடத்தில், அஸ்ஸீரிய இராசாவாகியசனகெ
ரிப்பைக்குறித்துச்செய்தபிரார்த்தனை எனக்குக்
கேட்டதென்று, இஸரவேலின் தேவனாகிய
௨௧ யெகோவாசொல்லுகிறார்.—அவனைக்குறித்து
யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; சீ
யோன்குமாரத்தியாகியகன்னிஉன்னைஅவமதித்
துப் பரிகாசம்பண்ணுகிறாள்; யெரூஷலேமின்
குமாரத்திஉன்னைக்குறித்துத்தலையைத்துலுக்குகி
௨௨ றாள்.—நீ ஆரைநிந்தித்துஅவமானம்பண்ணினாய்;
ஆருக்குவிரோதமாக உரத்தசத்தமெடுத்து, கண்
ணேறிட்டாய்; இஸரவேலரின்பரிசுத்தருக்குவி
௨௩ ரோதமாயல்லவா.—உன் தூதரைக்கொண்டு யெ
கோவாவை நிந்தித்து, நான் அநேகஇரதங்க
ளோடேலிபானோன் சாரல்மேலாய் மலைகளின்
உச்சிகளில் ஏறிவந்தேன், அதிலுள்ள நெடிய
ஏரஸ் விருட்சங்களையும், அதிலுள்ள உத்தம தே
வதாருக்களையும்தறித்துவிட்டேன்:அதினெல்லை
யிலுள்ள இராத்தங்கும் சத்திரங்களிலும், உத்தம
௨௪ வனத்திலும்பிரவேசித்தேன்.—நான் தோண்டி,
புறத்தேசத்தின்சலத்தைக்குடித்தேன், என் உள்
ளங்காலால் அரணுள்ள நகரங்களின் சமஸ்த ஓ
டைகளையும்வற்றப்பண்ணினேனென்று நீ சொ
ன்னாயே.—அரணான நகரங்களை நீ நாசப்படுத்திப் ௨௫
பாழானமேடுகளாக்கும்படி, நான் நெடுங்காலத்
துக்குமுன்தீர்மானம்பண்ணினேன், இதுகேட்க
வில்லையா; பூருவகாலத்தில் அதை நிலைப்படுத்தி
னேன்;இப்பொழுதுஅதைச்சித்தியாக்கினேன்.-
அதின் நிமித்தம் அங்குள்ள பிரசைகள் பெலவீ ௨௬
னராகி, பயந்துங் கலங்கியும் இருந்தார்கள்; வெ
ளியில்புல்லுக்கும், பசும்பூண்டுக்கும், விளைவுக்
கும் முன்தீய்ந்துபோனநிலாமுற்றத்தின்முளைக்
கும், சமானமானார்கள்.—உன் வாசஸ்தலமும், ௨௭
உன் போக்குவரவும், எனக்குவிரோதமான உன்
குரோதமும், நான் அறிவேன்.-எனக்கு விரோத ௨௮
மாகிய உன்குரோதமும், உன் அகங்காரமுமான
வைகளின் செய்தி என்செவிக்கேறினபடியினா
லே, நான் உன் மூக்கில் என் துறட்டியையும்,
உன் உதடுகளில் என்கடிவாளத்தையுமிடுவேன்,
நீ வந்தவழியே உன்னைத்திருப்பிவிடுவேன்.-யெ ௨௯
ரூஷலேமில் மீந்திருக்கிறவர்களும், சீயோன் ம
லையினின்று தப்பி ஓடினவர்களும் புறப்பட்டுப்
போவார்கள்: ஆதலால் யூதாவமிசத்திலே தப்பி
இருக்கிறவர்கள் இன்னுங் கீழேவேரூன்றி, மே
லே கனிகொடுப்பார்கள்.—யெகோவாவின் ௩௰
வைராக்கியம், இதைச்சித்திக்கப்பண்ணும்.-இந் ௩௧
த வருஷத்திலே தானாய் விளைந்திருப்பதையும்,
இரண்டாம் வருஷத்தில் அதினின்றும் தோன்றி
யிருப்பதையும் புசிப்பீர்கள்; மூன்றாம்வருஷத்
தில் நீங்கள் விதைத்து,அறுத்து, திராட்சத்தோட்
டங்களை உண்டாக்கி,அவைகளின் பலனைப் பு
சிப்பீர்கள்:இதுவேஉனக்கு அடையாளமாயிருக்
கும்.—அஸ்ஸீரிய இராசாவைக்குறித்து, யெகோ ௩௨
வா அவன் இந்தநகரத்திலே பிரவேசிக்கவுமாட்
டான், இதற்கு ஒரு அம்புஎய்யவுமாட்டான்,பரி
சையோடே இதற்குமுன்வரவுமாட்டான்,இதற்
கு விரோதமாய் ஒரு கொத்தளம் போடவுமாட்
டான்.—நான் என்னிமித்தமும், என்தாசனாகிய ௩௩
தாவீதினிமித்தமும் இந்தநகரத்தைக்காத்து இரட்
சிப்பேன்.—ஆதலால் அவனிந்த நகரத்தில் பிர ௩௪
வேசியாமல், தான்வந்தவழியே திரும்பிவிடுவா
னென்று யெகோவா சொல்லுகிறாரென்று,
சொல்லியனுப்பினான்.
அன்றிரவில் யெகோவாவின் தூதன்புறப் ௩௫
பட்டு, அஸ்ஸீரியரின் பாளயத்தில் ஒருலட்சத்து
எண்பத்தையாயிரஞ் சனங்களை வதைத்தான்: அ
வர்கள் அதிகாலையில் எழுந்திருந்தபொழுது, இ
வர்களெல்லாருஞ் செத்தபிரேதங்களாய் கிடக்
கக்கண்டார்கள்.-அதினால்அஸ்ஸீரிய இராசாவாகி ௩௬
ய சனகெரிப்புறப்பட்டுத்திரும்பிப்போய், நினி
வேயில்வாசம்பண்ணினான்.—பின்பு அவன்தன் ௩௭

(௰௫) ௧.சாமு.௪.௪. சங்.௮௰.௧. ௧.இரா.௰௮.௩௯. ஏசா.௪௪.௬. எரே.௰.௰. (௰௬) சங்.௩௧.௨. ௨.நாளா.௬.௪௰. வச.௪. (௰௮) சங்.௱௰௫.௪. எரே.௰.௩. (௰௯) சங்.௮௩.௰௮. (௨௰) ஏசா.௩௭.௨௧,. சங்.௬௫.௨. (௨௧) புல.௨.௰௩. யோபு.௰௬.௪. சங்.௨௨.௭,௮. புல.௨.௰௫. (௨௨) சங்.௭௧.௨௨. ஏசா.௫.௨௪. எரே.௫௧.௫. (௨௩) அதி.௰௮.௰௭. சங்.௨௰.௭. ஏசா.௰.௰௮. ஏசா.௰.௫. (௨௫) ஏசா.௪௫.௭. (௨௬) சங்.௱௨௯.௬. (௨௭) சங்.௱௩௯. (௨௮) யோபு.௪௧.௨. எசேக். ௨௯.௪. ஆமோ.௪.௨. வச.௩௪,௩௬,௩௭. (௨௯) ௨.நாளா.௩௨.௨௨,௨௩. (௩௰) ஏசா.௯.௭. (௩௧) ௧.சாமு.௨.௩௪. ஏசா. ௭.௰௧,௰௪. லூக்.௨.௰௨. (௩௩) அதி.௨௰.௬. ௧.இரா.௰௧.௰௨,௰௩. (௩௫) ௨.நாளா.௩௨.௨௧. ஏசா.௩௭.௩௬. (௩௬) ஆதி. ௰.௰௧. (௩௭) ௨.நாளா.௩௨.௨௧. வச.௭. எஸ்றா.௪.௨.

தேவனாகிய நிஸ்ரோக்கின் ஆலயத்திலே பூசை செய்துகொண்டிருக்கையில், அவன் புத்திரராகிய அத்ரமிலேக்கும், ஷரேத்சரும் அவனைக்கட்கத்தினாலேவெட்டி, அரராத்தென்னுந்தேசத்துக்குத்தப்பி ஓடிவிட்டார்கள்: அவனுக்குப்பின் அவன் புத்திரனாகிய ஏசரத்தோன் இராசாவானான்.

## ௨௰. அதிகாரம்.

*௧. இஸ்கியா தன் மரணசெய்தியைக்கேட்டுப் பிரார்த்தனையினாலே தன் மரணத்தை விலக்கல்: ௮. அடையாளம்பெறல்: ௰௨. இஸ்கியாவிடத்தில்வந்ததூதர்களுக்கு அவன் ஐசுவரியங்களை காட்டல்: ௰௪. அதைக்குறித்து ஏசாயாதீர்க்கதரிசனவாக்கியத்தைச் சொல்லல்: ௨௰. இஸ்கியா மரணமடைதல்.*

அக்காலத்தில் இஸ்கியா மரணத்துக்கேதுவான நோயடைந்திருக்கையில், ஆமோத்சின் புத்திரனாகிய ஏசாயா அவனிடத்தில் வந்து, அவனை நோக்கி, நீஇறந்துபோவாய், இனிச்சீவிக்கமாட்டாய்;ஆதலால் உன் வீட்டை ஒழுங்குபண்ணிக் கொள்ளென்று யெகோவா சொல்லுகிறு
௨ ரென்றான்.—அதினால் அவன்சுவர்ப்புறமாகத்தன் முகத்தைத் திருப்பிக்கொண்டு, யெகோவா
௩ வைநோக்கி,—யெகோவாவே, நான் உமக்குமுன்பாக உண்மையாய்ப்பூரண இருதயத்துடனடந்து, உமது பார்வைக்கு நலமானதைச் செய்துவந்தேன், அதை நினைந்தருளுமென்று சொல்லிப்பிரார்த்தித்தான். இஸ்கியா மிகவும் அ
௪ ழுதான்.—ஏசாயாமத்தியப்பிராகாரத்தினின்றும்
௫ புறப்படுமுன்,—நீதிரும்பிப்போய, என்சனங்களுக்கதிபதியாகிய இஸ்கியாவுக்கு, நான் உன் பிரார்த்தனையைக்கேட்டேன், நான் உன்னைச் சொஸ்தப்படுத்துவேன்: மூன்றாந்தினத்தில் நீ யெகோவாவின் ஆலயத்திற்குப்போவாய்.—
௬ உன் ஆயுள் இன்னும் பதினைந்துவருஷம்நீடித்திருக்கப் பண்ணுவேன்: நான் உன்னையும் இந்த நக்ரத்தையும்அஷ்ரியஇராசாவின் கைக்குவிலக்குவேன்; நான் என்னிமித்தமும், என் தாசனாகிய தாவீதினிமித்தமும் இந்த நகரத்தை இரட்சிப்பேனென்று, உன் பிதாவாகிய தாவிதின் தேவனை யெகோவா சொல்லுகிறாரென்பதைத் தெரிவிக்கவேண்டுமென்று, யெகோவாவின்
௭ வாக்கு அவனுக்குக்கிடைத்தது.-பின்பு ஏசாயா அத்திப்பழத்தின் அடையைக்கொண்டுவாருங்களென்று சொன்னபொழுது, அவர்கள் அதைக் கொண்டுவந்து பருவிலேவைக்க, அவன்சொஸ்தமானான்.
௮ அப்பொழுது இஸ்கியா ஏசாயாவைநோக்கி, யெகோவா என்னைச் சொஸ்தப்படுத்துவாரென்பதற்கும், நான் மூன்றாந்தினத்தில் யெகோவாவின் ஆலயத்திற்குப்போவேன் என்பதற்கும் அடையாளமென்னவென்றுகேட்க,—
ஏசாயா, யெகோவா தாம்சொல்லியவாக்கை ௯
நிறைவேற்றுவார்: இதற்குஒருஅடையாளம்யெகோவாவினால் உனக்குக்கொடுக்கப்படும்: சாயைபத்துப்பாகைக்கு முந்தவேண்டுமா, பத்துப்
பாகைக்குப் பிந்தவேண்டுமாவென்றான்.—அதற் ௰
கு இஸ்கியா சாயைபத்துப்பாகைக்கு முந்துவது எளிது: சாயை பத்துப்பாகைக்குத் திரும்ப
வேண்டுமென்றான்.—பின்பு ஏசாயா தீர்க்கதரிசி ௰௧
யெகோவாவைநோக்கிப்பிரார்த்திக்க, அவர் ஆகாசுடைய சூரியகடிகாரத்தில் முந்திவிட்டசாயை, பத்துப்பாகைக்குப் பிந்தும்படிசெய்தார்.
அக்காலத்திலே பலதனின் புத்திரனாகிய பி ௰௨
ரோதக்பலதனென்னும்பாபேல்நகரத்து இராசா, இஸ்கியா நோயாயிருக்கிறானென்று கேள்விப்பட்டபடியால், இஸ்கியாவுக்குக் காகிதமும்வெ
குமானமும் அனுப்பினான்.—இஸ்கியா கொண் ௰௩
டுவந்தவர்களை அங்கிகரித்து, தன் பண்டசாலையிலுள்ள பொன்வெள்ளிகளும், சுகந்தவருக்கங்களும், விலையுயர்ந்த தைலமுமாகிய தன் சமஸ்ததிரவியங்களையும, தன்னாயுதசாலையையும், தன் பொக்கிஷங்களிலுள்ள சமஸ்தபொருள்களையும் அவர்களுக்குக் காண்பித்தான்: இஸ்கியா தன்வீட்டிலும்,தன்முழுஇராச்சியத்திலும்,அவர்களுக்குக் காண்பியாதபொருளொன்றுமில்லை.
பின்பு ஏசாயாதீர்க்கதரிசி இஸ்கியா இராசாவி ௰௪
டத்தில்வந்து அவனைநோக்கி, அந்தமனுஷர்என்னசொன்னார்கள்; எங்கிருந்துவந்தார்களென்று கேட்க, இஸ்கியா தூரதேசமாகிய பாபேலினின்
று வந்தார்களென்றான்.—உன் வீட்டில் அவர் ௰௫
கள் என்னபார்த்தார்களென்றுகேட்க,இஸ்கியா, என் வீட்டிலுள்ளதெல்லாவற்றையும் அவர்கள் பார்த்தார்கள்: என் பொக்கிஷங்களுக்குள்ளே நான் அவர்களுக்குக் காண்பியாதபொருள் ஒன்
றுமில்லையென்றான்.—அப்பொழுது ஏசாயாஇஸ் ௰௬
கியாவை நோக்கி, யெகோவாவின் வாக்
கைக்கேளும்.—உமது முன்னோரின்காலம்முதல் ௰௭
இந்நாள்வரைக்குஞ் சேகரிக்கப்பட்ட உன்வீட்டிலுள்ள சகலமும் பாபேலுக்குக்கொண்டுபோகப்படுங் காலம்வரும்: ஒன்றும்மிஞ்சாதென்று
யெகோவா சொல்லுகிறார்.—உன்வழியாய்த் ௰௮
தோன்றுஞ்சந்ததியாரில் சிலர்கொண்டுபோகப்பட்டு, பாபேலின் அரமனையில்அண்ணகர்களா
யிருப்பார்களென்றான்.—அதினால் இஸ்கியா ஏ ௰௯
சாயாவைநோக்கி, நீர்சொன்ன யெகோவாவின்வாக்கு நல்லதென்றான். என் நாள்களில் சமாதான சௌக்கியமும் சத்தியமுமிருக்குமேயென்றான்.
இஸ்கியாவின் மற்றக்கிரியைகளும், அவன்ப ௨௰
ராக்கிரமம்யாவும், அவனொருகுளமுஞ்சாலகமு

(௨௰. அதி. ௧.) ஏசா.௩௮. ௨.சாமு.௰௭.௨௩. (௩) நிகி.௰௩.௨௨. ஆதி.௰௭.௧. ௧.இரா.௩.௬. (௫) ௧.சாமு.௧.௰௧. அதி.௰௧.௨௰. சங்.௬௫.௨. சங்.௩௯.௰௨. (௬) அதி.௰௯.௩௩. (௭) ஏசா.௩௮.௨௧. (௮) நியா.௬.௰௭,௩௭,௩௯. ஏசா.௭.௰௧,௰௪. (௯) ஏசா.௩௮.௭,௮. (௰௧) யோசு.௰.௰௨,௰௪.எசா.௩௮.௮. (௰௨) ஏசா.௩௯.(௰௩)௨.நாளா.௩௨.௨௭,௩௧. (௰௫) வச.௰௩. (௰௭) அதி.௨௪.௰௩. எரே.௨௭.௨௧,௨௨. (௰௮) அதி.௨௪.௰௨. ௨.நாளா.௩௩.௰௧. தானி.௧.௩.(௰௯)௧.சாமு.௩.௰௮. யோபு.௧.௨௧. சங்.௩௯.௯. (௨௰) ௨.நாளா.௩௨.௩௨. நிகி.௩.௰௬. ௨.நாளா.௩௨.௩௰.

ம்வெட்டுவித்து, நகரத்திலே நீரைவருவித்த வித
மும், யூதாதேசத்துராசாக்களின் சரித்திரபுத்தகத்
௨௧ திலல்லவா எழுதியிருக்கின்றன.—இஸ்கியாதன்
பிதாக்களுடன் மகாநித்திரையடைந்தான்: அவ
ன் புத்திரனாகிய மனாஷே இராசாவானான்.

## ௨௧. அதிகாரம்.

௧. மனாஷேதீதாளுகைசெய்தல்: ௩. தேவபூசை செய்தல்: ௰. அவனுக்குவிரோதமாய் யெகோவா நியாயத்தீர்ப்புச் செய்தல்: ௰௭. அவன் மரணமடைதல்: ௰௯. ஆமோன் தீதாளுகைசெய்தல்: ௨௩. அவன்சாதல்.

மனாஷே அரசாளத்தொடங்கினபொழுது, அவ
னுக்குப்பன்னிரண்டுவயது, அவன்யெரூஷலே
மில் ஐம்பத்தைந்துவருஷம் அரசாண்டான். அ
௨ வன் மாதாவின்பேர் எப்சீபாள்.—அவன், யெ
கோவா இஸ்ரவேல்சந்ததியார் முன்னின்றும்
அகற்றிவிட்ட அந்நியதேசத்தார் செய்த அருவ
ருப்புகள்போல, யெகோவாவின் பார்வைக்
௩ குத்தீங்கானதைச்செய்தான்.—அவன், தன்பிதா
வாகிய இஸ்கியா நாசப்படுத்தின உயர்ந்தஸ்தா
னங்களைத் திரும்பவுங்கட்டி, இஸ்ரவேலரின்இ
ராசாவாகிய ஆகாப்செய்தபிரகாரம் பாகாலுக்கு
வேதிகைகளை எடுப்பித்து, ஒரு அஷேரிமரத்தை
நாட்டி,வானத்திலுள்ள சமஸ்தசேனைகளையும் ஆ
௪ ராதித்துச் சேவித்து வந்தான்.—யெகோவா,
என் நாமத்தை யெரூஷலேமிலே ஸ்தாபிப்பே
னென்று சொல்லிக்குறித்த யெகோவாவின்
ஆலயத்தில் வேதிகைகளையுண்டாக்கினான்.—
௫ அன்றியும்அவன் யெகோவாவின்ஆலயத்தின்
இரண்டு பிராகாரங்களிலும், வானத்திலுள்ள ச
கலசேனைகளுக்கும் வேதிகைகளை உண்டாக்கி
௬ னான்.—தன்புத்திரனை அக்கினியிற்பிரவேசிக்கப்
பண்ணினான், அவன் நாள்பார்த்து மோகனஞ்
செய்தான்,பேய்வித்தைக்காரர்மாந்திரிகர்இவர்க
ளுடையகருமங்களை நடத்திவந்தான்: யெகோ
வாவைக்கோபப்படுத்த அவர்பார்வைக்கு அநே
௭ கதீமைகளைச்செய்தான.—இந்த வீட்டிலும், இ
ஸ்ரவேலரின் சகலகோத்திரத்துள்ளும், நான்தெ
ரிந்துகொண்ட யெரூஷலேமிலும்,சதாகாலமும்
௮ என் நாமத்தை ஸ்தாபிப்பேன்.—இஸ்ரவேலர்,
நான் தங்களுக்குக் கட்டளையிட்டதெல்லாவற்
றின்படிக்கும், என்தாசனாகிய மோசே கட்டளை
யிட்டசமஸ்தநியாயப்பிரமாணமெல்லாவற்றின்
படிக்கும் நடப்பார்களாகில், அவர்கள் பிதாக்க
ளுக்கு நானளித்ததேசத்தினின்றும்அவர்கள்கால்
சரியாதபடி செய்வேனென்று, தாவீதுக்கும் அ
வன் புத்திரனாகிய சலோமோனுக்குஞ் சொல்லி
யிருந்தார்,அவர்கள்அதற்குச்செவிகொடுக்கவில்
லை: அந்த ஆலயத்தில் அவன் தான்செய்து தொ
ழிற்படுத்திய அஷேரி மரவிக்கிரகத்தை ஸ்தாபித்
தான்.—இப்படி யெகோவா இஸ்ரவேல் சந் ௯
ததியார் முன்னின்றுஞ்சேதித்த சாதியார்செய்த
திலும் அதிக தீங்கைச்செய்யும்படி மனாஷே அ
வர்களை ஏவினான்.

ஆதலால் யெகோவா, யூதாதேசத்துராசா ௰
வாகிய மனாஷே இந்த அருவருப்பானவைகளை
நடப்பித்துத் தனக்கு முன்னிருந்த எமோரியர்
செய்ததெல்லாவற்றிலும் அதிகதீங்கைச்செய்து,
தன் விக்கிரகங்களினால் யூதா வமிசத்தாரையும்
பாவஞ்செய்ய ஏவினபடியினாலே,-கேட்பவர், ௰௧
அனைவருடைய இரண்டு காதிலுந் தொனிக்க,
யெரூஷலேமின்மேலும் யூதாவின்மேலும்தீமை
யைவருவிப்பேன்.—யெரூஷலேமின்மேல் ஷ ௰௨
மாரியாவின் அளவுநூலையும், ஆகாப்வமிசத்தின்
தூக்குநூலையும்பிடித்து, ஒருவன் ஒரு பாத்திரத்
தைத் துடைத்துக் கவிழ்த்துவிடுவதுபோல, நா
னும் யெரூஷலேமைத் துடைத்துவிடுவேன்.—
அவர்கள் தங்கள் பிதாக்கள்எகிப்தினின்றும்புறப் ௰௩
பட்ட நாள்முதல் இந்நாள்வரைக்கும் என் சமு
கத்தில் தீமைசெய்து, என்னைக்கோபப்படுத்தின
தினாலே.-என் சுதந்தரத்தில் மீந்திருப்பவர்களைக் ௰௪
கைவிட்டு, அவர்களை அவர்கள்சத்துருக்கள்கை
யில் ஒப்பிப்பேன்; அவர்கள் தங்கள்சமஸ்தசத்து
ருக்களுக்கும் இரையுங் கொள்ளைப்பொருளுமா
வார்களென்று, இஸ்ரவேலரின்தேவனாகிய யெ
கோவாசொல்லுகிறாரென்பதை,-தமது தாசரா ௰௫
கிய தீர்க்கதரிசிகளைக்கொண்டு சொன்னார்.-மனா ௰௬
ஷேயெகோவாவின்சமுகத்தில்தீமைசெய்து,
யூதாவமிசத்தாரைப் பாவஞ்செய்யப்பண்ணின
அந்தப்பாவமுமன்றி, யெரூஷலேமில் ஒருபுறந்
தொடங்கி மறுபுறம்வரைக்கும் நிறையும்படி மி
குதியாகக்குற்றமற்ற இரத்தத்தைச்சிந்தினான்.

மனாஷேயின்மற்றக்கிரியைகளும்அவன்செய் ௰௭
தயாவும், அவன்செய்தபாவமும், யூதாதேசத்து
ராசாக்களின் சரித்திரபுத்தகத்திலல்லவா எழுதி
யிருக்கின்றன.—மனாஷே தன்முன்னோருடன் ௰௮
மகாநித்திரையடைந்து, ஊசாவின் தோட்டமா
கிய தன் வீட்டின்தோட்டத்தில் அடக்கம் பண்
ணப்பட்டான்: அவனுக்குப்பின் அவன்புத்திர
னாகிய ஆமோன் இராசாவானான்.

அவன் அரசாளத்தொடங்கினபொழுது அவ ௰௯
னுக்கு இருபத்திரண்டுவயது, அவன் யெரூஷ
லேமில் இரண்டுவருஷம் அரசாண்டான். அ
வன் மாதாவின்பெயர் மிஷுல்லேமெத், அவள்
யோத்பா ஊரானாகிய ஆருத்சின் புத்திரி.—அ ௨௰
வன் தன் பிதாவாகிய மனாஷேசெய்த பிரகாரம்
யெகோவாவின் பார்வைக்குத் தீமையான
தைச்செய்தான்.—அவன் தன்பிதா நடந்த எல் ௨௧

(௨௧) ௨.நாளா.௩௨.௩௩.—(௨௧. அதி. ௧.) ௨.நாளா.௩௩. (௨) அதி.௰௬.௩. (௩) அதி.௰௮.௪. ௧.இரா.௰௬.௩௨,௩௩. ௨பா.௪.௰௯. அதி.௰௭.௰௬. (௪) எரே.௩௨.௩௪. ௨.சாமு.௭.௰௩. ௧.இரா.௮.௨௯. (௬) லேவி.௰௮.௨௧. அதி.௰௬.௩. லேவி.௰௯.௨௬,௩௧. ௨பா.௰௮.௰,௰௧. அதி.௰௭.௰௭. (௭) ௨.சாமு.௭.௰௩. ௧.இரா.௮.௨௯. அதி.௨௩.௨௭. சங்.௱௩௨.௰௩,௰௪. எரே.௩௨.௩௪. (௮) ௨.சாமு.௭.௰. (௯) நீதி.௨௯.௰௨. (௰) அதி.௨௩.௨௬,௨௭. எரே.௰௫.௪. ௧.இரா.௨௧.௨௬. வச.௯. (௰௧) ௧.சாமு.௩,௰௧. எரே.௰௯.௩. (௰௨) ஏசா.௩௪.௰௧. புல.௨.௮. ஆமோ.௭.௭,௮. (௰௬) அதி.௨௪.௩. (௰௭) ௨.நாளா.௩௩.௰௧—௰௯. (௰௮) ௨.நாளா.௩௩.௨௰. (௰௯) ௨.நாளா.௩௩.௨௧—௨௫.

லாவழியிலும் நடந்து, தன் பிதாசேவித்தவிக்கிர
கங்களைச்சேவித்து அவைகளை நமஸ்கரித்துவந்
௨௨ தான்.–யெகோவாவின்வழியிலேநடவாமல்,
தன்பிதாக்களின்தேவனாகியயெகோவாவை
விட்டுவிட்டான்.
௨௩ ஆமோனின் பணிவிடைக்காரர் அவனுக்கு
விரோதமாகத்துராலோசனைசெய்து, இராசாவை
௨௪ அவன்வீட்டிலே கொன்றுபோட்டார்கள்.—அ
தினால் தேசத்துச்சனங்கள், ஆமோன் இராசா
வுக்கு விரோதமாகத் துராலோசனைசெய்த யா
வரையுங் கொன்றுபோட்டார்கள்; தேசத்துச்ச
னங்கள் அவனுடையஸ்தலத்தில் அவன் புத்திர
னாகிய யோஷியாவை இராசாவாக ஏற்படுத்தி
௨௫ னார்கள்.—ஆமோன் செய்த மற்றக்கிரியைகள்
யூதாதேசத்துராசாக்களின் சரித்திர புத்தகத்தில்
௨௬ அல்லவா எழுதியிருக்கின்றன.—அவன் ஊசா
வின்தோட்டத்திலுள்ள தன் பிரேதவறையில்அ
டக்கம் பண்ணப்பட்டான்: அவன்புத்திரனாகி
ய யோஷியா அவனுக்குப்பின் இராசாவானான்.

## ௨௨. அதிகாரம்.

௧. யோஷியா நல்லாளுகைசெய்தல்: ௩. ஆலயத்தைப்புதுப்பித்தல்: ௮. தேவனருளிய வேத புத்தகத்தைப்பெறல்: ௰௫. உல்தாளென்னுந் தீர்க்கதரிசியிடத்தில்அனுப்பப்பட்டபொழுது அவள்தீர்க்கதரிசனஞ்சொல்லல்.

யோஷியாஅரசாளத்தொடங்கினபொழுது அ
வனுக்கு எட்டுவயது, அவன்யெருஷலேமிலே
முப்பத்தொருவருஷம் அரசாண்டான்: அவன்
மாதாவின்பெயர் இதீதா, அவள்பொஸ்காத்தூரா
௨ னாகிய அதாயாவின்புத்திரி.—அவன் யெகோ
வாவின்பார்வைக்கு நன்மைசெய்து, தன்பிதா
வாகியதாவீதின் எல்லாவழியிலும் வலப்புறம் இ
டப்புறஞ்சாயாமல்நடந்தான்.
௩ யோஷியாஇராசா அரசாண்டபதினெட்டாம்
வருஷத்தில், இராசா, மிஷுல்லாமின் பௌத்தி
ரனும், அத்சல்லியாவின்புத்திரனுமாகிய ஷாபா
௪ னென்னும் லேககனைநோக்கி,—நீ பிரதானஆ
சாரியனாகிய இல்கியாவிடத்தில் போய், யெ
கோவாவின்வீட்டில்கொண்டுவரப்பட்டதும்,
வாசற்காவலாளரால் சனங்களிடத்தில் வாங்கப்
பட்டதுமாகிய வெள்ளியைத்தொகையிட்டு,—
௫ யெகோவாவின் ஆலயத்தின் வேலையைவிசா
ரிப்பவர்கள்கையிலொப்பிக்கச்சொல்லு; அவர்க
ள்அதையெகோவாவின்ஆலயத்தின்இடிவுக
ளைப்புதுப்பிக்கும்படி, யெகோவாவின் ஆல
௬ யத்தின்வேலைக்காரராகிய,–தச்சருக்கும், சிற்பா
சாஸ்திரிகளுக்கும், கற்சிற்பருக்கும், ஆலயத்தை
ப்புதுப்பிக்கும்படி மரமும்பொளிந்தகல்லும்வா
ங்குவதற்கும், கொடுக்கவேண்டுமென்று சொல்
லி, யெகோவாவினாலயத்துக்கனுப்பினான்.–
௭ அவர்கள் உண்மையாய்க்காரியத்தை நடத்தினப
டியினால், அவர்களிடத்தில் ஒப்பிக்கப்பட்டதிர
வியத்தைக்குறித்து அவர்களிடத்திற் கணக்குக்
கேட்கவில்லை.
பிரதானஆசாரியனாகிய,இல்கியா லேககனை ௮
ஷாபானைநோக்கி, நான் யெகோவாவின்ஆ
லயத்திலே நியாயப்பிரமாண புத்தகத்தைக்கண்
டேனென்றான். பின்பு இல்கியா அந்தப்புத்த
கத்தை ஷாபானிடத்தில்கொடுக்க, அவன்அதை
வாசித்தான்.—லேககனாகியஷாபான் இராசாவி ௯
டத்தில் வந்து, ஆலயத்திலே அகப்பட்ட திரவி
யத்தை உமதுதாசர்கள்சேர்த்து, யெகோவா
வின்ஆலயத்தின்வேலையைவிசாரிப்பவர்கள்கை
யில் ஒப்பித்தார்களென்னுஞ்சமாசாரத்தை, இரா
சாவுக்குத்தெரிவித்தான்.—லேககனாகிய ஷாபா ௰
ன், ஆசாரியனாகிய இல்கியா,என்னிடத்தில் ஒரு
புத்தகங்காண்பித்தானென்று இராசாவுக்குச்சொ
ல்லி, இராசாவுக்குமுன்பாக ஷாபான் அதைவா
சித்தான்.—இராசா,நியாயப்பிரமாண புத்தகத்தி ௰௧
ன் வாக்கியங்களைக்கேட்டபொழுது தன் வஸ்தி
ரத்தைக்கிழித்தான்.—அப்பால் இராசா, ஆசாரி ௰௨
யனாகிய இல்கியாவையும், ஷாபானின் புத்திர
னாகிய அகீகாமையும், மீகாயாவின் புத்திரனாகி
ய அக்போரையும், லேககனாகிய ஷாபானையும்,
இராசாவின் தாசர்களில் ஒருவனாகிய அசாகியா
வையும்நோக்கி,–நம்முடைய பிதாக்கள் இந்தப் ௰௩
புத்தகத்திலுள்ள வாக்குகளுக்குச் செவிகொடுத்
து, எங்களைக்குறித்து இதில் எழுதியிருக்கிற யா
வற்றின்படிக்கும் நடவாதபடியினால், எங்களுக்
குவிரோதமாகயெகோவாவின் கோபம்மூண்
டது; ஆதலால் நீங்கள்போய், என்னிமித்தமும்,
சனங்களினிமித்தமும், யூதாவமிசத்தார் எல்லார்
நிமித்தமும் கிடைத்த இந்தப்புத்தகத்தின் வாக்
குகளைக்குறித்து யெகோவாவிடத்தில் கேட்
டறியுங்களென்று கட்டளையிட்டான்.—அதினா ௰௪
ல் ஆசாரியனாகிய இல்கியா,அகீகாம், அக்போர்,
ஷாபான், அசாகியா என்னுமிவர்கள் வஸ்திரசா
லைக்குஅதிகாரியாகிய அர்காசின் பௌத்திரனும்
திக்பாவின் புத்திரனுமாகிய ஷல்லுமின் மனைவி
யான உல்தாளென்னுந்தீர்க்கதரிசியிடத்திற்போ
ய் அவளுடன்சம்பாஷித்தார்கள். அவள்யெருஷ
லேமைச்சேர்ந்த வித்தையாலயத்தில்வாசம்பண்
ணினாள்.
அவள் அவர்களைநோக்கி, யெகோவா, அ ௰௫
வர்கள்என்னைக்கைவிட்டு,தங்கள்கைத்தொழில்
யாவற்றினாலும் என்னைக் கோபப்படுத்தும்படி
அந்நியதேவர்களுக்குத் தூபங்காட்டி வந்தபடி
யால், இந்தஸ்தானத்துக்குவிரோதமாக என்கோ
பம்மூளும், அது தணியமாட்டாது.—யூதாதே ௰௬
சத்து இராசா வாசித்த புத்தகத்திலுள்ள சமஸ்த
வாக்குகளின் படிக்கும், இந்த ஸ்தானத்தின்மே
லும் இதின்சனங்கள்மேலும் தீமையை வருவிப்

(௨௨) ௧.இரா.௰௧.௩௨. (௨௩) ௨.நாளா.௩௩.௨௪,௨௫. (௨௬) மத்.௧.௰.—(௨௨. அதி. ௧.) ௨.நாளா.௩௪.௧. யோசு.௰௫.௩௯. (௨) உபா.௫.௩௨. (௩) ௨.நாளா.௩௪.௮,. (௪) அதி.௰௨.௪. அதி.௰௨.௯. சங்.௮௪.௰. (௭) அதி.௰௨.௰௫.(௮) உபா.௩௧.௨௪,. ௨.நாளா.௩௪.௰௪,. (௰௨) ௨.நாளா.௩௪.௨௰. (௰௩) உபா.௨௯.௨௭. (௰௪) ௨.நாளா.௩௪.௨௨. (௰௫) உபா.௨௯.௨௫. (௰௬) உபா.௨௯.௨௭. தானி.௯.௰௧,௰௨.

பேனென்றுசொல்லுகிறாரென்று, உங்களை என்
னிடத்தில் அனுப்பினமனிதனுக்குச்சொல்லுங்
௰௭ கள்.—யெகோவாவிடத்திற் கேட்டறியும்ப
டி உங்களையனுப்பின யூதாதேசத்து இராசாவுக்
௰௮ கோ,—நான்இந்தஸ்தானத்திலுள்ளவர்கள் தங்கள்
ஸ்தானத்துடன் பாழும் சாபமுமாவார்களென்று
சொல்லி, நான் அவர்களுக்கு விரோதமாய் வச
னித்ததை நீ கேட்டபொழுது மனமுருகி, யெ
கோவாவின் சமுகத்தில் உன்னைத்தாழ்த்தி,
உன் வஸ்திரத்தைக்கிழித்து, எனக்குமுன்பாக
அழுதபடியால், நான் உனக்குச் செவிகொடுத்
௰௯ தேன்.-கேள், உன் முன்னோரிடத்தில் உன்னைச்
சேர்த்துக்கொள்ளுவேன், நீ சமாதானத்தோடே
பிரேதக்குழியில் சேர்க்கப்படுவாய்; இந்தஸ்த
லத்தின்மேல் நான் வருவிக்குந்தீமையை உன்
௨௰ கண்காணமாட்டாதென்று,—நீ கேட்ட வாக்கு
களைக்குறித்து இஸரவேலின் தேவனாகிய யெ
கோவா சொல்லுகிறாரென்று சொல்லுங்கள்,
இப்படியே இஸரவேலின் தேவனாகிய யெ
கோவா சொல்லுகிறாரென்றான்: பின்பு அவர்
கள் திரும்பிவந்து இராசாவுக்கு இந்தவாக்குக
ளைத்தெரிவித்தார்கள்.

## ௨௩. அதிகாரம்.

௧. சபையில் புத்தகத்தைவாசித்தல்: ௩. சனங்கள் உடன்படிக்கைசெய்தல்: ௪. தேவபூசைக்கேற்றவைகளை அழித்தல்: ௰௫. பெத்தேலின் வேதிகையை அசுசிப்படுத்தல்: ௨௧. பஷ்கா உற்சவத்தை ஆசரித்தல்: ௨௪. துஷ்டசனங்களைத்துரத்திவிடல்: ௨௬. தேவன் யூதா சனங்கள்மேல் கோபித்தல்: ௨௯. யோஷியா யுத்தத்தில்சாதல்: ௩௧. அவன் புத்திரனாகிய யோவாகாஸ் சிறையிலகப்படல்: ௩௬. யோயாகீம் தீதாளுகை செய்தல்.

பின்பு இராசா ஆள்களையனுப்ப, அவர்கள், யூ
தாவிலும் யெருஷலேமிலுமிருந்தமுதியோரெல்
லாரையும் அவரிடத்தில் வரவழைத்தார்கள்.—
௨ இராசாவும், அவனோடு யூதாவமிசத்தார் சமஸ்த
சனங்களும், யெருஷலேமியர் அனைவரும், ஆ
சாரியர்களும், தீர்க்கதரிசிகளும், சிறியோர் பெ
ரியோர்யாவரும் யெகோவாவின் ஆலயத்துக்
குப்போனார்கள்: அவன் யெகோவாவின் ஆ
லயத்தில் அகப்பட்ட உடன்படிக்கையின் புத்த
கத்திலுள்ள சகலவாக்குகளையும்அவர்கள்செவிக்
கேற வாசித்தான்.
௩ இராசா ஒருதூணருகேநின்று, யெகோவா
வைப்பின்பற்றி நடக்கவும், அவருடைய கட்ட
ளைகளையும், சாட்சிகளையும், விதிகளையும், பூரண
இருதயத்தோடும் பூரண ஆத்துமத்தோடும் கைக்
கொள்ளவும், புத்தகத்தில் எழுதப்பட்ட இந்த
உடன்படிக்கைகளின் வாக்குகளைக் காக்கவும்,
யெகோவாவின் சந்நிதியில் ஒரு உடன்படிக்
கைபண்ணினான். சனங்களெல்லாரும் அந்த உ
டன்படிக்கைக்கு இசைந்தார்கள்.—பாகாலுக்கும் ௪
அஷரிவிருட்சத்துக்கும், வானத்தின் சகலசே
னைகளுக்கும், செய்யப்பட்டிருந்த சகல பாத்தி
ரங்களையும் யெகோவாவின் ஆலயத்தினின்று
கொண்டுவரும்படி, இராசா, பிரதான ஆசாரியனா
கிய இல்கியாவுக்கும், இரண்டாம்வகுப்பிலுள்ள
ஆசாரியர்களுக்கும், வாசற்காவலாளருக்குங்கட்
டளையிட்டான்: பின்பு அவன் யெருஷலேமுக்
குப்புறம்பே கீதரோன் வெளியில் அவைகளைத்
தகித்து, அவைகளின்சாம்பலைப்பெத்தேலுக்குக்
கொண்டுபோனான்.—யூதா நகரங்களிலும், யெரு ௫
ஷலேமின் நான்குதிசைகளிலுமுள்ள உயர்ந்த
ஸ்தானங்களில்தூபங்காட்டும்படி, யூதாதேசத்து
இராசாக்கள் ஏற்படுத்திய பூசாரிகளையும், பாகா
லுக்கும், சூரியனுக்கும், சந்திரனுக்கும், இராசிக
ளுக்கும், வானத்திலுள்ள சகலசேனைகளுக்கும்,
தூபங்காட்டினவர்களையும்ஒழிவித்தான்.-அன்றி ௬
யும்அவன் அஷரிமரத்தை யெகோவாவினால
யத்தினின்றுமெடுத்து, யெருஷலேமுக்குப்புறம்
பே கீதரோன்சிற்றாற்றுக்குக்கொண்டுபோய், கீத
ரோன்சிற்றாற்றங்கரையில் அதைத்தகித்து, தூளா
கும்படிமிதித்து, அந்தத்தூள்களைச்சாதாரணசன
ங்களின் பிரேதக்குழிகள்மேலெறியும்படி செய்
தான்.-யெகோவாவின் ஆலயத்திற்கருகே ஸ் ௭
திரிகள் அஷரிமரத்துக்காகத் தூங்குதிரை நெய்
தசோதோமியருடையவீட்டை இடித்துப்போட்
டான்.—யூதா நகரங்களினின்றுஞ் சகல ஆசா ௮
ரியர்களையும்புறப்படப்பண்ணி, கேபா தொடங்
கிப்பேர்ஷேபாவரைக்கும்பூசாரிகள்தூபங்காட்
டின உயர்ந்தஸ்தானங்கள்யாவையும் அசுசிபண்
ணி, நகரத்தின் அதிபதியாகியயோசுவாவின்பிர
வேசவாசலில் பிரவேசிப்பவனுடைய இடதுபு
றத்திலிருந்தவாசலின் அருகே யுள்ள உயர்ந்தஸ்
தானங்களை இடிப்பித்தான்.—உயர்ந்த ஸ்தானங் ௯
களின் ஆசாரியர்கள், யெருஷலேமிலுள்ள யெ
கோவாவின் வேதிகைக்குவராமல், தங்கள்
சகோதரருக்குள்ளேபுளிப்பில்லாதஅப்பத்தைப்
புசித்தார்கள்.—ஒருவரும் மோலெக்குக்குத்தன் ௰
புத்திரனையாகிலும், புத்திரியையாகிலும்அக்கினி
யிற் செல்லப்பண்ணாதபடி, இன்னோம்சந்ததியா
ரின்தாழ்ந்தபூமியிலுள்ள தொப்பேத்ஸ்தானத்தை
அசுசிப்படுத்தி,—பேட்டையிலுள்ள நாதான்மெ ௰௧
லெக்கென்னும் அண்ணகனுடைய அறைக்கரு
கே யெகோவாவின் ஆலயத்தில் பிரவேசஸ்
தானத்தில் யூதாதேசத்து ராசாக்களினால் சூரிய
னுக்கிடப்பட்டிருந்த குதிரைகளையும் அகற்றிசூ
ரியனின் இரதங்களை அக்கினியில் தகித்தான்.—
யூதாதேசத்து ராசாக்கள் ஆகாசின் மேலறையிற் ௰௨

(௰௭) உ.நாளா.௩௪.௨௫,. (௰௮) சங்.௫௧.௰௭. எசா.௫௭.௰௫. ௧.இரா.௨௧.௨௯. லேவி.௨௬.௩௧,௩௨. எரே.௨௬.௬.
(௰௯) சங்.௩௭.௩௭. எசா.௫௭.௧,௨.—(௨௩. அதி. ௧.) உ.நாளா.௩௪.௨௯,௩௰,. (௨) அதி.௨௨.௮. (௪) அதி.௨௧.௩,௮.
(௫) ஓசி.௰.௫. செப்.௧.௪. அதி.௨௧.௩. (௬) அதி.௨௧.௮. உ.நாளா.௩௪.௪. (௭) ௧.இரா.௰௪.௨௪. எசேக்.௰௬.௰௬.
(௮) ௧.இரா.௰௫.௨௨. (௯) எசேக்.௪௪.௰—௰௪. ௧.சாமு.௨.௩௬. (௰) எசா.௩௰.௩௩. எரே.௭.௩௧. யோசு.௰௫.௮.
லேவி.௰௮.௨௧. உபா.௰௮.௰. எசேக்.௨௩.௩௭,௩௯. (௰௨) எரே.௰௯.௰௩. செப்.௧.௫. அதி.௨௧.௫.

செய்தவேதிகைகளையும்,மனாசேயெகோவா
விநாலயத்தின் இரண்டுபிரகாரங்களிலும்செய்த
வேதிகைகளையும், இராசா இடித்து அங்கிருந்து
கொண்டுபோய்அவைகளின்தூளைக் கீதரோன்சி
௰௩ ற்றாற்றில் எறியும்படிசெய்தான்.-இஸ்ரவேலரின்
இராசாவாகியசலோமோன் சீதோனியரின் அரு
வருப்பான அஷ்தோரேத்நிமித்தமும்,மோவாபி
யரின் அருவருப்பானகிமோஷ்நிமித்தமும், அம்
மோனியரின் அருவருப்பானமில்கோம் நிமித்த
மும், யெரூஷலேமுக்கெதிர்ப்புறத்திலுள்ள நாச
கமலையின்வலப்புறத்திற் கட்டின உயர்ந்தஸ்தா
௰௪ னங்களை, இராசா அசுசிப்படுத்தி,—சிலைகளைத்
தகர்த்து,அஷேரிமரத்தைச்சேதித்து,அவைகளினி
டங்களை மனிதரின் எலும்புகளால் நிரப்பினான்.
௰௫ பெத்தேலிலிருந்த வேதிகையையும், இஸ்ர
வேலரைப்பாவஞ் செய்யப்பண்ணின நெபாத்
தின்புத்திரனாகிய யெரோபேயாம் செய்த உயர்ந்
த ஸ்தானத்தையும், வேதிகையையும் இடித்து,
உயர்ந்த ஸ்தானத்தைத் தகித்துத் தூளாகும்படி
௰௬ மிதித்து, அஷேரி மரத்தையும் தகித்தான்.-யோஷி
யா திரும்பி மலையிலிருந்த பிரேதக்குழிகளைப்
பார்த்து ஆளனுப்பி, பிரேதக்குழிகளிலிருந்த எ
லும்புகளை எடுப்பித்து, இப்படி நடக்குமென்று
தெரிவித்த தேவனுடைய தாசன் பிரசித்தப்ப
டுத்திய யெகோவாவின் வாக்கின்படி வேதி
கையின்மேல்தகித்து,அதையசுசிப்படுத்தினான்.-
௰௭ பின்பு அவன், நான்காண்கிற அந்தத்தூண் என்
னவென்றுகேட்க, அந்த ஊரார்,யூதாவிலிருந்து
வந்து, பெத்தேலிலுள்ள வேதிகைக்கு விரோத
மாய் நீர்செய்தகாரியங்களைப்பிரசித்தப்படுத்தின
தேவனுடைய தாசனின் பிரேதவறையென்றார்
௰௮ கள்.—அதற்கவன் இருக்கட்டும்; அவன் எலும்பு
களை ஒருவருந்தொடப்படாதென்றதினால் அவர்
கள் அவன் எலும்புகளை ஷமாரியாவினின்றும்
வந்ததீர்க்கதரிசியின்எலும்புகளுடன்விட்டுவிட்
௰௯ டார்கள்.—யெகோவாவைக்கோபப்படுத்தும்
படி,இஸ்ரவேலரின்இராசாக்கள்ஷமாரியாவின்
நகரங்களில்செய்த உயர்ந்த ஸ்தானங்களின் சக
ல ஆலயங்களையும் யோஷியா அகற்றிவிட்டு,
பெத்தேலில் அவன்செய்தயாவற்றின்படிக்கும்
௨௰ அவர்களுக்குஞ்செய்தான்.—அங்கே இருந்த உ
யர்ந்தஸ்தானங்களின்பூசாரிகள் யாவரையும்வே
திகைகளின்மேல் கொன்று, அவைகளின்மேல்
மனிதரின்எலும்புகளைத்தகித்து,யெரூஷலேமுக்
குப்போனான்.
௨௧ பின்புஇராசா இந்த உடன்படிக்கையின்புத்த
கத்தில் எழுதியிருக்கிறபிரகாரம், உங்கள் தேவ
னாகிய யெகோவாவுக்குப் பஸ்காவைக்கொ
ண்டாடுங்களென்று எல்லா சனங்களுக்குங்கட்
டளையிட்டான்.—இஸ்ரவேலரை நியாயம்விசா ௨௨
ரித்த நியாயாதிபதிகளின் காலத்திலாவது, இஸ்ர
வேலருடைய இராசாக்களும் யூதா தேசத்து இ
ராசாக்களுமாகிய இவர்களுடைய எந்தக்காலத்தி
லுமாவது,அப்படிஒரு பஸ்காகொண்டாடவில்
லை.—யோஷியா அரசாண்ட பதினெட்டாம் ௨௩
வருஷத்தில், யெரூஷலேமிலே யெகோவா
வுக்கு இந்தப்பஸ்காகொண்டாடப்பட்டது.
யெகோவாவின் ஆலயத்தில் ஆசாரியனாகிய ௨௪
இல்கியாகண்டு எடுத்த புத்தகத்தில் எழுதியிருந்
தவேதப்பிரமாணத்தின் வாக்குகளை நிறைவேற்
றும்படி, யோஷியா, யூதாதேசத்திலும் யெரூ
ஷலேமிலும் காணப்பட்ட பேய்வித்தைக்கார
ரையும்,மாந்திரிகரையும்,தெராபீன்களையும், விக்
கிரகங்களையும்,சகலஅருவருப்பானவைகளையும்
அகற்றிவிட்டான்.—மோசேயின்நியாயப்பிரமா ௨௫
ணமுழுமைக்குமேற்கப்பூரணஇருதயத்தோடும்,
பூரணஆத்துமத்தோடும்,தன்பூரணவல்லமையோ
டும், யெகோவாவிடத்தில்திரும்பின இராசா
அவனுக்கு முன்னுமில்லை, பின்னுமில்லை.
ஆனாலும்மனாசே குரோதந்தோற்றுவித்தஅவ ௨௬
னுடைய சகலகிரியைகளினிமித்தமும், யூதாவ
மிசத்தாருக்கு விரோதமாய்மூண்ட மகாகோபத்
தைவிட்டு யெகோவா திரும்பவில்லை.—அதி ௨௭
னால் யெகோவா, நான்,இஸ்ரவேலரை என்
சமுகத்தினின்றும்அகற்றிவிட்டதுபோல, யூதா
வமிசத்தாரையும் அகற்றிவிடுவேன், நான்தெரிந்
தயெரூஷலேமென்னும் இந்தநகரத்தையும், என்
நாமம் இவ்விடத்திலிருக்குமென்று நான் குறித்
துச்சொன்ன இந்தஆலயத்தையும், நான்தள்ளிவி
டுவேனென்றார்.—யோஷியாவின் மற்றக்கிரியை ௨௮
களும், அவன்செய்தயாவும், யூதாதேசத்து இரா
சாக்களுடைய சரித்திரபுத்தகத்திலல்லவா எழு
தியிருக்கின்றன.
அவன்காலத்தில் எகிப்து இராசாவாகிய பார் ௨௯
வோன் நேகோ, அஷூரியஇராசாவுக்கு விரோத
மாய் யுத்தஞ்செய்யும்படி பிராத் நதியருகேபோ
றபொழுது, யோஷியா இராசா அவனை எதிர்த்
துப்போனான்: அவன் இவனை மெகிதோவிலே
கண்டு கொன்றுபோட்டான்.—இவன் பணிவி ௩௰
டைக்காரர்மரித்த இவனை ரதத்தில் மெகிதோவி
லிருந்து யெரூஷலேமுக்குக்கொண்டுவந்து, இ
வன் பிரேதவறையில் இவனையடக்கம்பண்ணி
னார்கள். பின்பு தேசத்தின் சனங்கள் யோஷி
யாவின் புத்திரனாகிய யோவாகாசை அழைத்து
அபிஷேகம்பண்ணி, அவன் பிதாவுக்குப்பின்
அவனை இராசாவாக ஏற்படுத்தினார்கள்.
யோவாகாஸ் அரசாளத்தொடங்கினபொழு ௩௧
து அவனுக்கு இருபத்துமூன்றுவயது;அவன் யெ

(௰௩) ௧.இரா.௰௧.௭. (௰௪) யாத்.௨௩.௨௪. உபா.௭.௫,௨௫. (௰௫) ௧.இரா.௰௨.௨௮,௩௩. (௰௬) ௧.இரா.௰௩.௨. (௰௭) ௧.இரா.௰௩.௧,௩௰. (௰௮) ௧.இரா.௰௩.௩௧. (௨௰) ௧.இரா.௰௩.௨. யாத்.௨௨.௨௰. ௧.இரா.௰௮.௪௰. ௨.நாளா.௩௪.௫. (௨௧) ௨.நாளா.௩௫.௧. யாத்.௰௨.௩. எண்.௯.௨. உபா.௰௬.௨. (௨௨) ௨.நாளா.௩௫.௰௮,௰௯. (௨௪) அதி.௨௧.௬. ஆதி.௩௧.௰௯. லேவி.௰௯.௩௧. உபா.௰௮.௰௧. (௨௫) அதி.௰௮.௫. (௨௬) அதி.௨௧.௰,௰௧. எரே.௰௫.௪. (௨௭) அதி.௰௭.௰௮,௨௰. ௧.இரா.௮.௨௯. அதி.௨௧.௪,௭. (௨௯) ௨.நாளா.௩௫.௨௰. சக.௰௨.௰௧. அதி.௰௪.௮. (௩௰) ௨.நாளா.௩௫.௨௪. ௨.நாளா.௩௬.௧. (௩௧) ௧.நாளா.௩.௰௫. எரே.௨௨.௰௧. அதி.௨௪.௰௮.

ரூஷலேமில் மூன்றுமாதம் அரசாண்டான். அவன்மாதாவின்பெயர் அமுற்றாள், அவள்லிப்னா
௩௨ ஊராளுகியஎரேமியாவின்புத்திரி.—அவன் தன் பிதாக்கள்செய்தயாவற்றின்படிக்கும், யெகோ
௩௩ வாவின்பார்வைக்குத் தீமைசெய்தான்.—அவன் யெரூஷலேமில் அரசாளாதபடி,பார்வோன் நேகோ அமாத்தேசத்திலுள்ள ரிப்லாவில் அவனைக் கட்டி, தேசத்தார், அபராதமாய் நூறு கிக்கேர் வெள்ளியையும் ஒருகிக்கேர்பொன்னையுந்தரநிய
௩௪ மித்தான்.—பின்புபார்வோன்நேகோயோஷியாவின்புத்திரனாகிய இலியகீமை அவன்பிதாவாகியயோஷியாவுக்குப்பின் ஏற்படுத்தி, அவன்பெயர் யோயாகீமென்று மாற்றி, யோவாகாசைக் கொண்டுபோனான்: இவன் எகிப்துக்குப்போய்
௩௫ அங்கேமரணமடைந்தான்.—யோயாகீம்பொன்னையும் வெள்ளியையும்பார்வோனுக்குக்கொடுத்தான்; பார்வோனின்கட்டளைப்படி அவனுக்குத் திறைகொடுக்கும்பொருட்டுத் தேசத்தின்மேல்வீதமேற்படுத்தினான்: பார்வோன் நேகோவுக்குக் கொடுக்கும்பொருட்டுத் தேசத்துச்சனங்களிடத்தில் அவரவருக்கு நியமிக்கப்பட்ட வீதப்படி, பொன்வெள்ளிகளைவாங்கினான்.

௩௬ யோயாகீம் அரசாளத் தொடங்கினபொழுது அவனுக்கு இருபத்தைந்துவயது; அவன்யெரூஷலேமிலே பதினொருவருஷம் அரசாண்டான். அவன் மாதாவின்பெயர் செபுதா, அவள் ரூமா
௩௭ ஊராளுகிய பிதாயாவின்புத்திரி.—அவன் தன் பிதாக்கள்செய்தயாவற்றின்படிக்கும்,யெகோவாவின் பார்வைக்குத் தீமைசெய்தான்.

## ௨௪. அதிகாரம்.

௧. யோயாகீம் பாபேலின் ஆளுகையைத்தள்ளல்: ௫.அவன் மரணமடையயோயாகீன்தீதாய்ஆளுகைசெய்தல்: ௰. அவனும் அவன் சனங்கள் அநேகருஞ்சிறையிலகப்படல்: ௰௭. சிதிகியா தீதாய்ஆளுகைசெய்துபாபேலின் இராசாதிகாரத்தைத்தள்ளல்.

அவன்காலத்திலே பாபேல் இராசாவாகிய நெபுகத் நெத்சர்வந்தான், யோயாகீம் மூன்றுவருஷம் அவனுக்காதீனமாயிருந்தான்: பின்புஇவன் அவனுடைய இராசாதிகாரத்தைத்தள்ளிவிட்டா
௨ ன்.—யெகோவா தமது அடியாராகிய தீர்க்கதரிசிகளைக்கொண்டுசொல்லியவாக்கின்படி யூதாவைச்சங்கரிக்கும்பொருட்டு, யெகோவா அவனுக்குவிரோதமாய்க்கல்தேயரின் சேனாதளங்களையும், ஷீரியரின் சேனாதளங்களையும், மோவாபியரின் சேனாதளங்களையும், அம்மோன் சந்ததியாரின் சேனாதளங்களையும் அனுப்பினார்.—
௩ மனாசே யெரூஷலேமைக் குற்றமற்ற இரத்தத்தினால் நிரப்பி, குற்றமற்ற இரத்தஞ்சிந்தினதையும், அவன் செய்த சகலபாவங்களையும், யெகோவா மன்னிக்கவில்லை.—ஆகையினால் யூ ௪
தாவமிசத்தாரைத் தமது சமுகத்தினின்றும்அகற்றிவிடுகிறதற்கு, யெகோவாவின் வாக்கின்படி இவையெல்லாம் அவர்களுக்குநேரிட்டன.

யோயாகீமின் மற்றக்கிரியைகளும், அவன் ௫
செய்தயாவும், யூதாதேசத்து இராசாக்களின் சரித்திர புத்தகத்திலல்லவாஎழுதியிருக்கின்றன.—
யோயாகீம் தன் முன்னோருடன் மகா நித்திரை ௬
யடைந்தான்: அவனுக்குப்பின் அவன் புத்திரனாகிய யோயாகீன் இராசாவானான்.—பாபே ௭
லின் இராசா, எகிப்து நதிமுதல் பிருத்நதிவரைக்குமுள்ள எகிப்து இராசாவுக்குரியயாவற்றையுந் தன் வசமாக்கிக்கொண்டபடியினால், எகிப்து இராசா தன்தேசத்தினின்று பின்னொருபொழுதும் வரவில்லை.

யோயாகீன் அரசாளத் தொடங்கினபொழுது ௮
அவனுக்குப்பதினெட்டுவயது; அவன் யெரூஷலேமிலே மூன்றுமாதம் அரசாண்டான். அவன் மாதாவின்பெயர் நிகுஷ்தா,அவள்யெரூஷலேம்
நகரத்தானாகிய எல்நாதானின் புத்திரி.—அவன் ௯
தன்பிதாசெய்த யாவற்றின்படிக்கும், யெகோவாவின் பார்வைக்குத்தீமைசெய்தான்.

அக்காலத்திலே பாபேல் இராசாவாகிய நெபு ௰
கத்நெத்சரின்பணிவிடைக்காரர்கள்யெரூஷலேமுக்குவிரோதமாய்வர, நகரம் முற்றிக்கைசெய்
யப்பட்டது.—பாபேலின் இராசாவாகியநெபுகத் ௰௧
நெத்சர் நகரத்துக்கு விரோதமாய் வந்தபொழுது, அவன்பணிவிடைக்காரர்அதைமுற்றிக்கைசெய்
தார்கள்.—யூதாதேசத்து இராசாவாகிய யோயா ௰௨
கீன், தன் மாதாவும், தன்பணிவிடைக்காரரும், தன் பிரபுகளும், தன்அதிபதிகளுமாகிய இவர்களோடுபாபேல்இராசாவினிடத்திற்குப்புறப்பட்டுப்போனான்:தான்அரசாண்டஎட்டாம்வருஷத்தில் பாபேலின் இராசா இவனைப்பிடித்துக்கொ
ண்டான்.—யெகோவா சொல்லியபிரகாரம் ௰௩
அவன்,யெகோவாவின்ஆலயத்திலுள்ளபொக்கிஷங்களையும், அரமனையிலுள்ள சகலபொக்கிஷங்களையும்கொண்டுபோனான்; யெகோவாவின்ஆலயத்தில்சலோமோன்செய்துவைத்தபொ
ற்பாத்திரங்களையுந்துண்டித்தான்.-அன்றியும்யெ ௰௪
ரூஷலேமிலுள்ள சகலசனங்களும், சகல பிரபுகளும்,சகலபராக்கிரமவீரருமாகியசிறைப்பட்டவர்கள் பதினாயிரம்பேரையும்,சகலசிற்பரையும், கம்மாளரையுங்கொண்டுபோனான்: தேசத்தில் ஏழைகளேயன்றி வேறொருவரும் மீதியா யிருக்க
வில்லை.-யோயாகீனையும்பாபேலுக்குக்கொண்டு ௰௫

(௩௩) அதி.௨௫.௬. எரே.௫௨.௨௭. ௨.நாளா.௩௬.௩. (௩௪) ௨.நாளா.௩௬.௪. அதி.௨௪.௰௭. தானி.௧.௭. மத்.௧.௰௧. எரே.௨௨.௰௧,௰௨. எசேக்.௰௯.௩,௪. (௩௫) வச.௩௩. (௩௬) ௨.நாளா.௩௬.௫.—(௨௪.அதி.௧.) ௨.நாளா.௩௬.௬. எரே.௨௫.௧,௯. தானி.௧.௧. (௨) அதி.௨௰.௰௭. எரே.௨௫.௯. எசேக்.௰௯.௮. (௩) அதி.௨௧.௨,௰. அதி.௨௩,௨௬. அதி.௨௧.௰௬. (௬) ௨.நாளா.௩௬.௬,௮. எரே.௨௨.௰௮,௰௯. (௭) எரே.௩௭.௫,௭. எரே.௪௬.௨. (௮) ௧.நாளா.௩.௰௬. எரே.௨௪.௧. எரே.௨௨.௨௪,௨௮. ௨.நாளா.௩௬.௯. (௰) தானி.௧.௧. (௰௨) எரே.௨௪.௧. எசேக்.௰௭.௰௨. எரே.௨௫.௧. அதி.௨௫.௨௭. எரே.௫௨.௨௮. (௰௩) அதி.௨௰.௰௭. எசா.௩௯.௬. தானி.௫.௨,௩. எரே.௨௰.௫. (௰௪) எரே.௨௪.௧. எரே.௫௨.௨௮. ௧.சாமு.௰௩.௰௯,௨௨. அதி.௨௫.௰௨. எரே.௪௰.௭. (௰௫) ௨.நாளா.௩௬.௰. எஸ்த.௨.௬. எரே.௨௨.௨௪,.

போனான்; இராசாவின் மாதாவையும், இராசா
வின் மனைவியரையும், அவன்பிரதானிகளையும்,
தேசத்தின்பராக்கிரமசாலிகளையும், யெருஷலே
மினின்றும் பாபேலுக்குச் சிறைப்படுத்திக்கொ
௰௬ ண்டுபோனான்.-பாபேல் இராசாசகலபராக்கிரம
சாலிகளாகியஎழாயிரம்பேரையும்,சிற்பருங் கம்
மாளருமாகியஆயிரம்பேரையும்,யுத்தத்துக்கு வல்
லவர் யாவரையும் சிறைப்படுத்தி, பாபேலுக்குக்
கொண்டுபோனான்.

௰௭ பாபேல் இராசா, அவனுக்குப்பிரதியாக அ
வன் சிறியபிதாவாகிய மத்தனியாவை இராசா
வாக ஏற்படுத்தி, அவனுக்குச் சிதிகியாவென்று
௰௮ மறுநாமமிட்டான்.—சிதிகியா அரசாளத்தொடங்
கினபொழுது, அவனுக்கு இருபத்தொருவயது;
அவன் யெருஷலேமிலே பதினொருவருஷம் அ
ரசாண்டான். அவன் மாதாவின்பெயர் அமுற்
றாள், அவள் லிப்னா ஊரானாகிய எரேமியாவின்
௰௯ புத்திரி.—அவன் யெகோவாவின்பார்வைக்
கு யோயாகீம்செய்த யாவற்றின்படிக்கும் தீமை
௨௰ செய்தான்.—யெகோவா யெருஷலேமையும்
யூதாவையும் தமது சமுகத்தினின்றும் அகற்றிவி
டும்வரைக்கும் அவருடைய குரோதம் அவைக
ளின்மேல் நிலைநின்றது: சிதிகியா பாபேலின்
இராசாவின் அதிகாரத்தைத்தள்ளிவிட்டான்.

## ௨௫. அதிகாரம்.

௧. யெருஷலேமை முற்றிக்கைபோடல்: ௪. சிதி
கியா பிடிக்கப்படல்:௮. சனங்கள் சிறைபிடித்
துக்கொண்டு போகப்படல்: ௰௩. ஆலயத்தின்
பொருளைக் கொள்ளையாடல்: ௰௮. பிரதானச
னங்களைக்கொலைசெய்தல்: ௨௨. கிதலியாவிசா
ரிக்குங் கர்த்தாவாகஏற்படல்: ௨௭. பாபேலின்
இராசாவிடத்தில்யோயாகீன்உன்னதம்பெறல்.

பின்புஅவன் அரசாண்டஒன்பதாம்வருஷம்பத்
தாம்மாதம் பத்தாந்தினத்தில் பாபேலின் இராசா
வாகிய நெபுகத்நெத்சரும் அவன் சகலசேனை
யும் யெருஷலேமுக்கு விரோதமாய்வந்து சுற்றி
௨ லும்கொத்தளங்களைக்கட்டினார்கள்.—சிதிகியா அ
ரசாண்ட பதினோராம்வருஷமட்டும் நகரம்முற்
௩ றிக்கைபோடப்பட்டது.—நாலாம் மாதத்தின்
ஒன்பதாம்தினத்தில் பஞ்சம் நகரத்திலேகொடி
தாயிற்று,தேசத்தின்சனங்களுக்கு உணவுப்பொ
ருள் கொஞ்சமுமில்லை.

௪ பின்புநகரம் இடிக்கப்பட்டது, பராக்கிரமவீ
ரர் யாவரும், இராத்திரிகாலத்தில் நகரத்திற்குவி
ரோதமாகக் கல்தேயர் சூழ்ந்துநிற்க,இராசதோட்
டத்தைச்சேர்ந்தவாசலின்வழியே இரண்டுமதில்
களுக்கிடையில் தப்பிச் சமபூமிக்குநேரே ஓடி
௫ விட்டார்கள்.—பின்பு கல்தேயரின்சேனை இரா
சாவைத்தொடர்ந்துபோய், யெரிகோவின் சமபூ
மியில் அவனைப்பிடிக்க, அவன் சகல சேனைக
ளும் அவனைவிட்டுச் சிதறுண்டன.—அவர்கள் ௬
இராசாவைப்பிடித்து, ரிப்லாவில் இருந்தபாபே
லின் இராசாவிடத்தில் கொண்டுவந்தார்கள்; அ
வர்கள் அவனுக்கு நியாயத் தீர்ப்புக்கொடுத்தார்
கள்.—சிதிகியாவின்புத்திரரை அவன்கண்ணுக்கு ௭
முன் கொலைசெய்து சிதிகியாவின் கண்களைக்
கெடுத்து, பித்தளைவிலங்கிட்டுப் பாபேலுக்குக்
கொண்டுபோனார்கள்.

பாபேலின்இராசாவாகிய நெபுகத்நெத்சர்அர ௮
சாண்டபத்தொன்பதாம்வருஷத்தின் ஐந்தாம்மா
தம் ஏழாந்தினத்தில், பாபேல் இராசாவின் பணி
விடைக்காரனும் காவல்சேனாபதியுமாகிய நெபூ
சராதான் யெருஷலேமுக்குவந்து,—யெகோ ௯
வாவின் ஆலயத்தையும், அரமனையையும், பெரி
யோர்களின் வீடுகளையும், யெருஷலேமிலுள்ள
பெரிய வீடுகளெல்லாவற்றையும் அக்கினியினா
லே தகித்தான்.—காவல் சேனாபதியுடனிருந்தச ௰
கல சேனைகளும், யெருஷலேமைச்சூழ்ந்தமதில்
களை இடித்துப்போட்டார்கள்.—சனத்திரளில் ௰௧
மீந்திருந்தவர்களாகிய நகரத்தில் மீந்திருந்த ச
னங்களையும், தப்பி ஓடிப்பாபேல் இராசாவின்
பட்சத்தில் சேர்ந்தவர்களையும், காவற்சேனாபதி
யாகிய நெபூசராதான் கொண்டுபோனான்.—கா ௰௨
வற்சேனாபதி திராட்சத் தோட்டங்களைக் காக்
கவும், வேளாண்மைசெய்யவும் ஏழைகளில் சில
ரைத்தேசத்தில் இருக்கவிட்டான்.—யெகோ ௰௩
வாவின் ஆலயத்திலிருந்த பித்தளைத் தூண்களை
யும்,பீடங்களையும், யெகோவாவின் ஆலயத்
திலிருந்த பித்தளைச் சமுத்திரத்தையும், கல்தேயர்
கண்டதுண்டமாக்கி, பித்தளையைப் பாபேலுக்
குக் கொண்டுபோனார்கள்.—பாத்திரங்களையும், ௰௪
சாம்பல்பாத்திரங்களையும், திரிவெட்டிகளையும்,
கரண்டிகளையும், ஆராதனைசெய்கிறதற்குப் பித்
தளையினால் செய்யப்பட்ட சகல பாத்திரங்களை
யுங் கொண்டுபோனார்கள்.—அக்கினிப்பாத்திரங் ௰௫
களையும், கிண்ணங்களையும், பொற் பாத்திரங்க
ளின் பொன்னையும், வெள்ளிப் பாத்திரங்களின்
வெள்ளியையும், காவல்சேனாபதி கொண்டுபோ
னான்.-யெகோவாவின்ஆலயத்துக்குச் சலோ ௰௬
மோன்செய்த இரண்டுதூண்களும், ஒரு சமுத்தி
ரமும் பீடங்களுமாகிய இந்தச் சகல பாத்திரங்
களுடைய பித்தளைக்கு நிறையில்லை.—ஒரு தூ ௰௭
ணின் உயரம் பதினெட்டுமுழம், அதின்கும்பம்
பித்தளை: கும்பத்தினுயரம் மூன்றுமுழம்; வலை
போன்ற கொட்டுவேலையும் கும்பத்தின்மேலே
சுற்றிலுமிருந்த மாதுளம்பழமும் எல்லாம் பித்த

(௰௬) எரே.௫௨.௨௮. (௰௭) எரே.௩௭.௧. ௧.நாளா.௩.௰௫. ௨.நாளா.௩௬.௰. ௨.நாளா.௩௬.௪.(௰௮)௨.நாளா.௩௬.௰௧. எரே.௩௭.௧. அதி.௨௩.௩௧. (௰௯) ௨.நாளா.௩௬.௰௨. (௨௰) ௨.நாளா.௩௬.௰௩. எசேக்.௰௭.௰௫.—(௨௫. அதி. ௧.) ௨.நாளா.௩௬.௰௭. எரே.௩௪.௨. எசேக்.௨௪.௧.'(௩) எரே.௩௯.௨. (௪) எரே.௫௨.௭,. எரே.௩௯.௪—௭. எரே.௫௨.௭. எசேக்.௰௨.௰௨. (௬) அதி.௨௩.௩௩. எரே.௫௨.௯.(௭)எரே.௩௯.௭. எசேக்.௰௨.௰௩. (௮) எரே.௫௨.௰௨—௰௪. அதி. ௨௪.௰௨. எரே.௩௯.௯.(௯)௨.நாளா.௩௬.௰௯. சங்.௭௯.௧. எரே.௩௯.௮. ஆமோ.௨.௫.(௰)நிகி.௯.௩. எரே.௫௨.௰௪.(௰௧) எரே.௩௯.௯. (௰௨) அதி.௨௪.௰௪. எரே.௩௯.௰.(௰௩)அதி௨௰.௰௭. எரே.௨௭.௰௯,௨௨. ௧.இரா.௭.௰௫. ௧.இரா.௭.௨௭. ௧.இரா.௭.௨௩. (௰௪) யாத்.௨௭.௩. ௧.இரா.௭.௪௫,௫௰. (௰௬) ௧.இரா.௭.௪௭. (௰௭) ௧.இரா.௭.௰௫. எரே.௫௨.௨௧.

ளை: மற்றத்தூணும் இதுபோலவே வலைபோன்ற
கொட்டுவேலையுள்ளதாயிருந்தது.
௰அ காவற்சேனாபதி, பிரதான ஆசாரியனாகியசெ
ராயாவையும், இரண்டாம் ஆசாரியனாகிய செப்
பனியாவையும், வாசற்காவற்காரராகிய மூன்று
௰௯ பேரையுங் கொண்டுபோனான்.—அவன் நகரத்
தினின்றும் யுத்தவீரருக்கதிபதியையும், இராசா
வின் சமுகத்தில்நிற்பவர்களுக்குள்ளேநகரத்திற்
காணப்பட்ட ஐந்துபேரையும்,தேசத்தின்சனங்
களைத்தொகையிடுகிறசேனைகளிற் பிரதானலேக
கனையும், நகரத்திற் காணப்பட்ட சனங்களில்
௨௰ அறுபதுபேரையும்பிடித்து,—காவல் சேனாபதியா
கிய நெபூசராதான் ரிப்லாவிலிருந்த பாபேல் இ
௨௧ ராசாவிடத்தில் கொண்டுவந்தான்.—பின்பு பா
பேலின் இராசா அமாத்தேசத்தைச்சேர்ந்த ரிப்
லாவில் அவர்களைவெட்டிக் கொலைசெய்தான்.
இவ்விதமாய் யூதாசனங்கள்தங்கள்தேசத்தினின்
றுங்கொண்டுபோகப்பட்டார்கள்.
௨௨ பாபேலின் இராசாவாகிய நெபுகத்நெத்சார்,
யூதாதேசத்திலேயிருக்கும்படி விட்ட சனங்க
ளுக்கு, ஷாபானின் பௌத்திரனும் அகிகாமின்
புத்திரனுமாகிய கிதலியாவைத் தேசாதிபதியாக
௨௩ ஏற்படுத்தினான்.-பாபேல் இராசா கிதலியாவைத்
தேசாதிபதியாக ஏற்படுத்தினானென்று சகல சே
னாபதிகளும், அவர்களுடைய சனங்களும்கேள்
விப்பட்டபொழுது, நிதனியாவின் புத்திரனாகிய
இஷ்மாவேலும், கரியாவின்புத்திரனாகியயோகா
னானும், நிதோபாத்தியனாகியதன்கூமேத்தின்புத்
திரனான செராயாவும், மாகாத்தியனான ஒருவனு
டைய புத்திரனாகிய யசனியாவும், தங்கள்தங்கள்
சனங்களோடு மிஸ்பாவிலிருந்த கிதலியாவிடத்
தில்போனார்கள்.—கிதலியா அவர்களை நோக்கி, ௨௪
கல்தேயருக்குப் பணிவிடைக்காரராவதற்கு நீங்
கள் பயப்படவேண்டாம்: நீங்கள் தேசத்தில்வா
சம்பண்ணி,பாபேல் இராசாவிடத்தில்சேவித்து
வாருங்கள், அதினால் உங்களுக்கு நன்மையுண்
டாகுமென்றுசொல்லி,அவர்களுக்கும் அவர்கள்
சனங்களுக்கும் ஆணையிட்டான்.—ஏழாம்மாதத் ௨௫
தில்இராசவமிசத்தில்தோன்றிய இலீஷாமாவின்
பௌத்திரனும் நிதனியாவின் புத்திரனுமாகிய
இஷ்மாவேலும், அவனோடெபத்துப்பேரும்வந்து,
கிதலியாவும் மிஸ்பாவில் அவனோடிருந்த யூத
ருங் கல்தேயரும் இறந்துபோகும்படி அடித்தார்
கள்.—சிறியோர் பெரியோராகிய சகலசனங்க ௨௬
ளும், சேனாபதிகளும், கல்தேயருக்குப்பயப்பட்
டதினால், எழுந்து எகிப்துக்குப்போனார்கள்.
யூதாதேசத்துஇராசாவாகியயோயாகீன் சிறை ௨௭
பிடிக்கப்பட்டமுப்பத்தேழாம்வருஷத்தின்பன்
னிரண்டாம்மாதம் இருபத்தேழாந்தினத்தில் பா
பேலின் இராசாவாகிய ஏவில்மிரோதக் தான்அ
ரசாளத்தொடங்கின வருஷத்தில், யூதாதேசத்து
இராசாவாகிய யோயாகீனின் தலையையுயர்த்தி
அவனைச் சிறைச்சாலையில்நின்று விடுவித்து,—
இவனுடன் பிரியமாய்ப்பேசி, பாபேலிலே தன் ௨௮
னுடனிருந்த இராசாக்களின் சிங்காசனங்களுக்
கு மேலாக இவன்சிங்காசனத்தை ஸ்தாபித்து,—
சிறைச்சாலையின் வஸ்திரங்களைமாற்றினான்: இ ௨௯
வன் தன்ஆயுள்முழுவதும்அவன்சமுகத்தில்போ
சனபானம்பண்ணினான்.—இவன் தன் ஆயுள்பரி ௩௰
யந்தம், நாள்வீதமாக இராசாவினால் கொடுக்கப்
பட்ட செலவு வாங்கிக்கொண்டான்.

(௰அ) எரே.௫௨.௨௪,. ௧.நாளா.௬.௰௪. எஸ்றா.௭.௧. எரே.௨௧.௧. (௰௯) எரே.௫௨.௨௫. எஸ்த.௧.௰௪. (௨௧) லேவி. ௨௬.௩௩. உபா.௨௮.௩௬,௬௪. அதி.௨௩.௨௭. (௨௨) எரே.௪௰.௫.(௨௩)எரே.௪௰.௭,௮,௯. (௨௫) எரே.௪௧.௧,௨.(௨௬) எரே.௪௩.௪,௭. (௨௭) எரே.௫௨.௩௧. ஆதி.௪௰.௰௩,௨௰. ௨.சாமு.௯.௭.

# நாளாகமத்தின் முதலாம் புத்தகம்.

---

## க. அதிகாரம்.

*க. நோவாவரைக்குமுள்ளவமிசவரலாறு: ரு. யாப்பேத்தின் வமிசவரலாறு: அ. காமின் வமிசவரலாறு: ௰எ. சேமின் வமிசவரலாறு: உச. ஆபிரகாமின்வமிசவரலாறு: உகூ. இஷ்மாவேலின்வமிசவரலாறு: ௩உ. கேத்தூராளின் வமிசவரலாறு: ௩ரு. ஏசாவின் வமிசவரலாறு: ௪௩. அவன்வமிசத்தலைவரின்பெயர்.*

உ ஆதாம், சேத்து, ஏனோஷ்,-கேனான், மகலாலே
௩ யேல், யாரேத்து,-ஏனோகு, மெத்தூஷலாகு, லா
௪ மேகு,—நோவா, ஷேம், காம், யாப்பேத்து.
ரு யாப்பேத்தின் புத்திரர்; கோமர், மாகோக், மாதாய், யாவான், தூபால், மேஷெக், தீராஸ்.—
சு கோமரின் புத்திரர்; அஷ்கினஸ், ரீபாத்து, தொ
எ கர்மா.-யாவானின்புத்திரர்; எலீஷா, தர்ஷிஷ், கித்தீம், தோதானிம்.
அ காமின் புத்திரர்; கூஷ், மிஸ்ராயீம், பூற்று,
கூ கானான்.-கூஷின் புத்திரர்; சேபா, அவிலா, சப்தா, ராமா, சப்தேகா. ராமாவின் புத்திரர்; ஷே
௰ பா, தேதான்.-கூஷ் நிம்ரோத்தைப்பெற்றான்: இவன்பூமியிலே பராக்கிரமசாலியாகத் தொடங்
௰க கினான்.—மிஸ்ராயீம், லூதீயரையும், அனாமிய
௰உ ரையும், லிகாபீயரையும், நப்துகியரையும்,-பத்துருசீயரையும் பெலிஸ்தியருக்கு ஆதி பிதாவாகிய கஸ்லூகியரையும், கப்தோரியரையும் பெற்
௰௩ றான்.—கானான், சீதோனென்னும் சேஷ்ட புத்
௰௪ திரனையும், ஏத்தையும்,—எபூசியரையும், எமோ
௰ரு ரியரையும், கிர்காஷியரையும்,—ஈவியரையும்,
௰சு அர்கீயரையும்,சீனியரையும்,-அர்வாதியரையும், சேமாரியரையும், காமாத்தியரையும் பெற்றான்.
௰எ சேமின்புத்திரர்; எலாம், அஷூர், அர்பக்சாத், லூத்து, அராம், ஊத்சு, கூல், கேத்தேர், மே
௰அ ஷெக்.—அர்பக்சாத், ஷேலாவைப் பெற்றான்,
௰கூ ஷேலா ஏபேரைப்பெற்றான்.-ஏபேருக்குஇரண்டுபுத்திரர்பிறந்தார்கள்: ஒருவனுடைய நாட்களில் பூமிபகுக்கப்பட்டபடியினால்அவனுக்குப் பேலேக் என்னும்பேராயிற்று: அவன்சகோதர
உ௰ னுக்குப்பேர் யோக்தான்.—யோக்தான்அல்மோதாத்தையும்,சலேப்பையும்,ஆசர்மாவேத்தையும்,
உக யாராகையும்,—ஆதோராமையும், ஊசாலையும்,
உஉ திக்லாவையும்,—ஏபாலையும், அபிமாவேலையும்,
உ௩ ஷேபாவையும்,—ஓப்பீரையும்,அவிலாவையும், யோபாப்பையும்பெற்றான். இவர்களெல்லாரும் யோக்தானின்புத்திரர்.

ஷேம், அர்பக்சாத், ஷேலா,—ஏபேர், பே உ௪ உரு
லேக்,ரேகூ,-செரூக், நாகோர்,தேராக்,-ஆபி உசு உஎ
ராமாகிய ஆபிரகாம்,—ஆபிரகாமின் புத்திரர்; ஈ உஅ
சாக்கு, இஷ்மாவேல்.
இவர்கள் வமிசவரலாறு: இஷ்மாவேலின் உகூ
சேஷ்டபுத்திரனாகிய நெபாயோத், கேதார், அத்
பியேல், மிப்சாம்,—மிஷ்மா, தூமா, மாசா, ஆ ௩௰
தாத், தேமா,—எத்தூர், நாபிஷ், கேத்மா இவர் ௩க
கள்இஷ்மாவேலின்புத்திரர்.
ஆபிரகாமின் மறுமனையாட்டியாகிய கேத்தூ ௩உ
ராளின்புத்திரர்: சிம்ரான், யக்ஷான், மேதான், மீதியான், இஸ்பாக், ஷூகா. யக்ஷானின்புத்திரர் ஷேபா, தேதான்.-மீதியானின்புத்திரர்; எப்பா, ௩௩
எப்பேர், ஆனோக், ஆபிதா, எல்தா. இவர்களெல்லாருங்கேத்தூராளின் புத்திரர்.-ஆபிரகாம் ஈசாக் ௩௪
கைப்பெற்றான். ஈசாக்கின்புத்திரர்; ஏசாவு, இஸரவேல்.
ஏசாவின்புத்திரர்; எலீபாஸ், ரேகுவேல், எ ௩ரு
யூஷ், யாலாம், கோரா.—எலீபாசின் புத்திரர்; ௩சு
தேமான், ஓமார், செப்பீ, காத்தாம், கேனாஸ், திம்
னாள், அமலேக்.—ரேகுவேலின்புத்திரர்; நாகாத் ௩எ
து, சேராக், ஷம்மா, மீசா.-சேயீரின் புத்திரர்; ௩அ
லோத்தான், ஷோபால், சிபியோன், ஆனா, தீ
ஷோன், எட்சர், தீஷான்.—லோத்தானின் புத் ௩கூ
திரர்; ஓரி, ஓமாம்: லோத்தானின்சகோதரி திம்
னாள்.—ஷோபாலின் புத்திரர்; அல்யான், மான ௪௰
காத்து, ஏபால், ஷெப்போ, ஓனாம். சிபியோனின்
புத்திரர்; அயா, ஆனா.—ஆனாவின்புத்திரன்; தீ ௪க
ஷோன். தீஷோனின் புத்திரர்; அம்ராம், எஸ்
பான், ஈத்தரான், கிரான்.-எத்சேரின்புத்திரர்; ௪உ
பில்க்கான், சவான், யாகான். தீஷானின் புத்திரர்; ஊத்ஸ், ஆரான்.
இஸரவேலர்மேல் அரசன் அரசாளுமுன்னே, ௪௩
ஏதோம்தேசத்தில் அரசாண்ட இராசாக்களிவர்கள்: பேயோரின் புத்திரன் பேலா: அவன் நக
ரத்தின்பேர் தின்காபா.—பேலா இறந்துபோக, ௪௪
பொத்ஸ்றா ஊரானாகிய சேராகின் புத்திரனான
யோபாப் இராசாவானான்.—யோபாப் இறந்து ௪ரு
போக, அவனுக்குப் பின்பு தேமானியரின் தே
சத்தானாகிய ஊஷாம் இராசாவானான்.-ஊஷாம் ௪சு
இறந்துபோக, அவனுக்குப்பின்பு பேதாத்தின் புத்திரனாகிய ஆதாத் இராசாவானான்: இவன் மீதியானியரை மோவாபின் வெளியிலே முறிய
அடித்தான்: இவன் நகரத்தின்பேர் ஆவீத்.—ஆ ௪எ

---

(க. அதி. க.) ஆதி.௪.உரு,உசு. (ரு) ஆதி.௰.உ,. (அ) ஆதி.௰.சு,. (௰) ஆதி.௰.அ,௰௩,. (௰உ) உபா.உ.உஉ. (௰௩) ஆதி.௰.௰ரு,. (௰எ) ஆதி.௰.உஉ,உ௩. (௰கூ) ஆதி.௰.உரு. (உ௰) ஆதி.௰.உசு. (உ௪) ஆதி.௰க.௰,. லூக்.௩.௩௪,. (உரு) ஆதி.௰க.௰ரு. (உஎ) ஆதி.௰எ.ரு. (உஅ) ஆதி.உக.உ,௩. ஆதி.௰சு.௰க,௰ரு. (உகூ) ஆதி.உரு.௰௩—௰சு.(௩௰) ஆதி.உரு.௰௪. (௩உ) ஆதி.உரு.க,உ. (௩௪) ஆதி.உக.உ. ஆதி.உரு.உரு. (௩ரு) ஆதி.௩சு.கூ.(௩சு) ஆதி.௩சு.௰க. (௩அ) ஆதி.௩சு.உ௰. (௩கூ) ஆதி.௩சு.உஉ. (௪௰) ஆதி.௩சு.உ௩. (௪க) ஆதி.௩சு.உரு,உசு. (௪உ) ஆதி.௩சு.உஎ. (௪௩) ஆதி.௩சு.௩க.

தாத் இறந்துபோக, அவனுக்குப்பின்பு மஸ்ரேக்
௪௮ கா ஊரானாகிய சம்லா இராசாவானான்.—சம்லா
இறந்துபோக, அவனுக்குப்பின்புநதியோரமான
ரேகோபோத்தானாகிய ஷவுல் இராசாவானான்.-
௪௯ ஷவுல் இறந்துபோக, அவனுக்குப்பின்பு அக்
போரின் புத்திரனான பாகாலானான் இராசாவா
௫௰ னான்.—பாகாலானான் இறந்துபோக, அவனுக்
குப்பின்பு ஆதாத் இராசாவானான்: இவன்நகரத்
தின்பேர்பாயி; இவன் மனைவியின்பேர் மெகே
தாபேல், இவள் மேசகாவினுடைய புத்திரியா
கிய மத்ரேத்தின்புத்திரி.
௫௧ ஆதாத்மரித்தபின், ஏதோமில் ஏற்பட்டபிரபு
கள்: திம்னாபிரபு, அல்யாபிரபு, எத்தேத்பிரபு,-
௫௨ அகோலிபாமாபிரபு,ஏலாபிரபு,பீனோன்பிரபு,—
௫௩ கேனாஸ்பிரபு, தேமான்பிரபு, மிப்சார்பிரபு,—
௫௪ மக்தியேல்பிரபு, ஈராம்பிரபு. இவர்களே ஏதோ
மின் பிரபுகள்.

## உ. அதிகாரம்.

*க. இஸரவேலின்வமிசவரலாறு: ௩.யூதாவின்வமிசவரலாறு: ௰௩. ஈஷாயின் சந்ததியார்: ௰௮. காலேபின்வமிசவரலாறு: உக. எத்சரோனின்வமிசவரலாறு: உ௫. இரகமேலின் வமிசவரலாறு: ௩௪. ஷேஷானின் வமிசவரலாறு: ௪உ. காலேபின்புத்திரனாகிய மேஷாவின் வமிசவரலாறு: ௫௰. ஊரின்புத்திரனாகிய காலேபின் வமிசவரலாறு.*

இஸரவேலின்புத்திரர்: ரூபேன், ஷிமியோன்,
௨ லேவி, யூதா, ஈஷகார்,செபுலோன்,-தாண்,யோ
சேப்பு,பேன்யாமீன்,நப்தாலி,காத்,ஆஷேர்.
௩ யூதாவின் புத்திரர்: ஏர், ஓனான், ஷேலா: இம்
மூவரும் ஷூவாவின் புத்திரியாகிய கானானிய
ஸ்திரியிடத்தில் அவனுக்குப்பிறந்தவர்கள். யூதா
வின் சேஷ்ட புத்திரனாகிய ஏர்தமதுசமுகத்தில்
துஷ்டனாயிருந்தபடியால், யெகோவா அவ
௪ னைக் கொன்றுபோட்டார்.—அவன் மருமகளா
கிய தாமார் அவனுக்குப்பேரேசையும்சேராவை
யும்பெற்றாள். யூதாவின் புத்திரர் ஆகஐந்துபேர்.-
௫ பேரேசின் புத்திரர்; எத்சரோன், ஆமூல்.-சேரா
௬ வின் புத்திரர்; சிம்றி,ஏதான், ஏமான், கல்கோல்,
௭ தாரா: இவர்கள் ஆகஐந்துபேர்.—கர்மியின்புத்
திரன் சபிக்கப்பட்டபொருளைக்குறித்துக் கட்
டளைமீறி, இஸரவேலரைக் கலங்கப்பண்ணின
௮ ஆகான்.—ஏதானின்புத்திரர்; அசரியா.—எத்ச
௯ ரோனுக்குப்பிறந்தபுத்திரர்; இரகமேல், ராம், கி
௰ லூபாய்.-ராம் அம்மினதாபைப் பெற்றான்; அம்
மின்தாபு யூதா புத்திரரின் பிரபுவாகிய நாக்
௰௧ ஷோனைப் பெற்றான்;-நாக்ஷோன் சல்மாவைப்
௰௨ பெற்றான், சல்மா போவசைப்பெற்றான்,—போ
வஸ் ஓபெத்தைப்பெற்றான், ஓபெத் ஈஷாயைப்
பெற்றான்.
ஈஷாய்இலியாப்பென்னும்சேஷ்டபுத்திரனை ௰௩
யும், அபீனதாப்பென்னும்இரண்டாம்புத்திரனை
யும், ஷம்மாவென்னும் மூன்றாம்புத்திரனையும்,—
நிதனேலென்னும் நாலாம்புத்திரனையும், ரத்தாயி ௰௪
யென்னும் ஐந்தாம்புத்திரனையும்,—ஓத்சேமென் ௰௫
னும் ஆறாம்புத்திரனையும், தாவீதென்னும் ஏழாம்
புத்திரனையும் பெற்றான்:-அவர்கள் சகோதரிகள் ௰௬
சேருயா, அபீகயில். சேருயாவின் புத்திரர்; அ
பீஷாய், யோவாப், அசாகேல் என்னும் மூன்று
பேர்.—அபீகயில் அமாசாவைப்பெற்றாள்: அமா ௰௭
சாவின் பிதா இஷ்மீவேலனாகிய எத்தெர்.
எத்சரோனின் புத்திரனாகிய காலேபு தன் ம ௰௮
னைவியாகிய அசூபாள் வழியாய் எரீயோத்தைப்
பெற்றான்: அவன்புத்திரர்; ஏஷெர், ஷோபாப்,
அர்தோன்.—அசூபாள் இறந்தபின்பு, காலேபு ௰௯
எப்றாத்தை விவாகம்பண்ணினான், இவள் அவ
னுக்கு ஊரைப்பெற்றாள்.—ஊர் ஊரியைப்பெற் ௨௰
றான், ஊரி பெத்சலேலைப்பெற்றான்.
பின்பு எத்சரோன் அறுபதுவயதில் கிலியாத் ௨௧
தின்பிதாவாகிய மாகீரின்புத்திரியை விவாகம்
பண்ணி, அவளிடத்தில்பிரவேசித்தான்; இவள
வனுக்குச்செகூப்பைப்பெற்றாள்.-செகூப்,யாயீ ௨௨
ரைப்பெற்றான், இவனுக்குக்கிலியாத்தேசத்தில்
இருபத்துமூன்றுபட்டணங்களிருந்தன.-அவன் ௨௩
கிஷூரையும், அராமையும், யாயீரின் கிராமங்க
ளையும், கேனாத்திலுள்ள கிராமங்களாகிய அறுப
து ஊர்களையும், அவர்களிடத்திலே பெற்றுக்
கொண்டான். இவைகளெல்லாம் கிலியாத்தின்
பிதாவாகிய மாகீரின் புத்திரருக்குரியன.—காலே ௨௪
பின் ஊரான எப்றாத்தாவில் எத்சரோனிறந்து
போனபின்பு, எத்சரோனின் மனைவியாகிய அ
பீயாள் அவனுக்குத் தெக்கோயாவின் பிதாவாகி
ய அஷூரைப்பெற்றாள்.
எத்சரோனின் சேஷ்டபுத்திரனாகிய இரகமே ௨௫
லின் புத்திரர், சேஷ்டபுத்திரனாகிய ராம், பூனா,
ஒறென், ஓத்சேம், அகியா.—அத்தாராளென்று ௨௬
பெயருள்ள வேறொரு மனைவியும் இரகமேலுக்
கிருந்தாள்; இவள் ஓனாமின் மாதா.—இரகமே ௨௭
லின்சேஷ்டபுத்திரனாகிய ராமின்புத்திரர் மாஸ்,
யாமின், எக்கேர்.—ஓனாமின் புத்திரர் ஷம்மாய் ௨௮
யாதா. ஷம்மாயின புத்திரர்; நாதாபு, அபிஷூர்.-
அபிஷூரின் மனைவியின்பேர் அபிகயில், அவள் ௨௯
அவனுக்கு அகபானையும், மோலித்தையும் பெற்
றாள்.—நாதாபின் புத்திரர்; சேலெத் அப்பாயிம்: ௩௰
சேலெத் புத்திரரில்லாமல் மரித்தான்.—அப்பா ௩௧
யிமின் புத்திரர்; ஈஷேயி. ஈஷேயின் புத்திரர்;
ஷேஷான். ஷேஷானின்சந்ததியார்; அக்லாய்.-
ஷம்மாயின் சகோதரனாகிய யாதாவின் புத்திரர்; ௩௨
எத்தெர், யோனாதான்: எத்தெர் புத்திரரில்லா
மல் மரித்தான்.—யோனாதானின் புத்திரர்; பெ ௩௩

---

(௪௮) ஆதி.௩௬.௩௭. (௫௰) ஆதி.௩௬.௩௯. (௫௧) ஆதி.௩௬.௪௰.—(௨. அதி. ௧.) ஆதி.௨௯.௩௨. (௩) ஆதி.௩௮.௩. எண். ௨௬.௰௯. ஆதி.௩௮.௨,௭. (௪) ஆதி.௩௮:௨௯,௩௰. மத்.௧.௩. (௫) ஆதி.௪௬.௰௨. ரூத்.௪.௰௮. (௬) யோசு.௭.௧. ௧.இரா.௪.௩௧. (௭) ஆதி.௪.௧. யோசு.௬.௰௮.(௯)மத்.௧.௪. வச.௰௮,௪௨. (௰) ரூத்.௪.௰௯,௨௰. மத்.௧.௪. எண்.௧.௭.(௰௧)ரூத். ௪.௨௧. மத்.௧.௫. (௰௩) ௧.சாமு.௰௬.௬,௯. (௰௬) ௨.சாமு.௨.௰௮. (௰௭) ௨.சாமு.௰௭.௨௫. (௰௯) வச.௫௰. (௨௰) யாத்.௩௧.௨. (௨௧) எண்.௨௭.௧. (௨௩) எண்.௩௨.௪௧. உபா.௩.௰௪. யோசு.௰௩.௩௰.

லேத்து, சாசாவென்பவர்கள். இவர்கள் இரகமே
லின்புத்திரர்.
௩௪ ஷேஷானுக்குப் புத்திரிகளேயன்றி, புத்திர
ரில்லே. ஷேஷானுக்குயர்காவென்றுபெயருள்ள
எகிப்தியனொருவன் பணிவிடைக்காரனாயிருந்
௩௫ தான்.—அவன் தன்புத்திரியைத்தன்பணிவிடை
க்காரனாகிய யர்காவுக்கு விவாகஞ்செய்துகொ
டுத்தான்; அவள் அவனுக்கு அத்தாயியைப்பெற்
௩௬ றாள்.-அத்தாயி நாதானைப்பெற்றான், நாதான்,சா
௩௭ பாத்தைப்பெற்றான்,—சாபாத் இப்லாலைப்பெற்
௩௮ றான், இப்லால் ஓபெத்தைப்பெற்றான்,—ஓபெத்
யெகூவைப்பெற்றான், யெகூ அசரியாவைப்
௩௯ பெற்றான்,—அசரியா ஏலெத்சைப்பெற்றான், ஏ
௪௰ லெத்ஸ் எலீயாசாவைப்பெற்றான்,—எலீயாசா
சிஸ்மாயைப்பெற்றான், சிஸ்மாய் ஷல்லுமைப்
௪௧ பெற்றான்,—ஷல்லும் இகமியவைப்பெற்றான்,
இகமிய இலீஷாமாவைப்பெற்றான்.
௪௨ இரகமேலின் சகோதரனாகிய காலேபின் புத்
திரர், சீப்பின் பிதாவாகிய மேஷாவென்னுஞ்
சேஷ்டபுத்திரன், எப்ரோனின் பிதாவாகிய மா
௪௩ ரேஷாவின் புத்திரர்.-எப்ரோனின் புத்திரர்; கோ
௪௪ ரா, தப்புவா, ரேக்கேம், ஷிமா.—ஷிமா, யோர்
கோவாமின்பிதாவாகிய இராகாமைப்பெற்றான்:
௪௫ ரேக்கேம் ஷம்மாயைப்பெற்றான்.—ஷம்மாயின்
புத்திரன் மாகோன்: மாகோன் பேத்சூரின்பிதா.-
௪௬ காலேபின் வைப்பாட்டியாகிய எபா, ஆரானை
யும், மோத்சாவையும், காசேசையும் பெற்றாள்:
௪௭ ஆரான் காசேசைப்பெற்றான்.—யாதாயின் புத்
திரர்; ரேகேம், யோதாம், கேஷாம், பேலேத்,
௪௮ ஏபா, ஷாகாப்.—காலேபின் வைப்பாட்டியா
கிய மாகாள், ஷேபேரையும், திர்கானாவையும்
௪௯ பெற்றாள்.—அவள் மத்மன்னாவின் பிதாவாகிய
ஷாகாப்பையும்,மக்பேனாவுக்கும்கிபியாவுக்கும்
பிதாவாகிய ஷிவாவையும், பெற்றாள்: காலே
பின் புத்திரி அக்சாள்.
௫௰ எப்ராத்தாளின் சேஷ்ட புத்திரனாகிய ஊரின்
புத்திரரான காலேபின் புத்திரர்; கீரியாத் எயா
௫௧ ரீமின் பிதாவாகிய ஷோபால்,—பேத்லகேமின்
பிதாவாகிய சல்மா, பேத்காதேரின் பிதாவாகி
௫௨ ய ஆரேப்.-கீரியாத் எயாரீமின்பிதாவாகியஷோ
பாலின் புத்திரர்; ஆரோவேயும், அத்சியமினு
௫௩ கோத்தியர்களும்.—கீரியாத் எயாரீமின்குடும்பத்
தார்; இத்ரியர், பூகியர், ஊமாத்தியர், மிஷரா
கியர்; இவர்களினின்றும் சரியாதியரும்,எஷ்தா
௫௪ வுலியரும், தோன்றினார்கள்.—சல்மாவின் சந்த
தியார்; பேத்லகேமியர், நிதோபாத்தியர், பேத்
யோவாப்பென்னும் அதரோத்தூரார், மானகேத்
௫௫ தியர் சோரியரிலும் பாதிச்சனங்கள்.-யாபேசிற்
குடியிருந்த கணக்கரின் குடும்பத்தார்; திராத்தி
யர், ஷிமியாத்தியர், சுக்காத்தியர். இவர்கள் ரே
காப் வமிசத்துக்குப் பிதாவாகிய ஏமாத்தின்சந்
ததியாரான கேனியர்.

## ௩. அதிகாரம்.

௧. தாவீதின் வமிசவரலாறு: ௰. சலோமோனின்
வமிச வரலாறு: ௰௭. யெகொனியவின் வமிச
வரலாறு.

**தா**வீதுக்கு எப்ரோனிலே பிறந்தபுத்திரர்; யெ ௧
ஸரியேலூராளாகிய அகினோவாமினிடத்திலே
பிறந்த அம்னோன் சேஷ்டபுத்திரன்;கர்மேலின்
ஊராளாகிய அபீகயிலினிடத்திலே பிறந்த தா
னியேல் இரண்டாம்புத்திரன்:-கிஷூரின்இராசா ௨
வாகிய தல்மாயின் புத்திரியான மாகாள்பெற்ற
அப்ஷாலோம் மூன்றாம் புத்திரன்: அகீத்பெற்
ற அதொனியா நாலாம் புத்திரன்:—அபீதாள் ௩
பெற்ற ஷிபத்தியா ஐந்தாம் புத்திரன்: அவன்ம
னைவியாகிய எக்லாள்பெற்றஇத்ரியாம் ஆறாம்புத்
திரன்.-இந்த ஆறுபுத்திரரும் அவனுக்கு எப்ரோ ௪
னிலே பிறந்தார்கள்; இவன் அங்கே ஏழுவருஷ
மும் ஆறுமாதமும் அரசாண்டான்: யெரூஷலே
மில் முப்பத்துமூன்றுவருஷம் அரசாண்டான்.-
யெரூஷலேமில் அவனுக்குப்பிறந்தவர்கள்;அம் ௫
மியேலின் புத்திரியாகிய பத்ஷேபாவினிடத்தி
லே ஷிமியா, ஷோபாப், நாதான், சலோமோ
ன் நாலுபேர்:—இபார், இலீஷாமா, இலீப்பே ௬
லேத்,-நோகா, நெப்பேக், யபீய்,-இலீஷா ௭ ௮
மா, இலியாதா, இலீப்பேலேத்தென்ற ஒன்பது
பேர்.-வைப்பாட்டிகளின் புத்திரரும்,அவர்கள் ௯
சகோதரியாகிய தாமாருமன்றி, இவர்கள்எல்லா
ரும்,தாவீதின் புத்திரர்.
சலோமோனின் புத்திரன் ரெகோபேயாம்,இ ௰
வன் புத்திரன் அபீயாம், இவன் புத்திரன் ஆசா,
இவன்புத்திரன் யோஷாபாத்,—இவன்புத்திரன் ௰௧
யோராம், இவன் புத்திரன் அகஸ்யா, இவன்புத்
திரன் யோவாஷ்,—இவன்புத்திரன் அமத்சியா, ௰௨
இவன் புத்திரன் அசரியா, இவன்புத்திரன் யோ
தாம்,—இவன் புத்திரன் ஆகாஸ், இவன் புத்தி ௰௩
ரன் இஸ்கியா, இவன் புத்திரன் மனாஷே,—இ ௰௪
வன் புத்திரன் ஆமோன், இவன் புத்திரன் யோ
ஷியா,—யோஷியாவின் சேஷ்டபுத்திரன் யோ ௰௫
கானான். யோயாகீம் இரண்டாம்புத்திரன், சிதிகி
யாமூன்றாம்புத்திரன்,ஷல்லும்நாலாம்புத்திரன்.-
யோயாகீமின்புத்திரர்; யெகொனிய, இவன்புத் ௰௬
திரன் சிதிகியா.
யெகொனியவின் புத்திரர்; அச்சீரின்புத்திர ௰௭
னாகிய சலாதியேல்,—மல்கீராம், பிதாயா, ஷெ ௰௮
னாத்சர், இகமிய, ஒஷாமா, நிதபியா.—பிதாயா ௰௯
வின் புத்திரர், சிருபப்பெல், ஷிமியி. சிருபப்
பெலின்புத்திரர்; மிஷூல்லாம், அனானிய, இவர்
கள்சகோதரியாகிய ஷிலோமித்தும்:—அஷூபா, ௨௰
ஒகெல், பெரிகாயா, அசதீயா, யூஷாபேசெத்தெ

(௪௯) யோசு.௰௫.௰௭. (௫௨) அதி.௪.௨. (௫௫) நியா.௧.௰௬. எரே.௩௫.௨.—(௩. அதி. ௧.) ௨.சாமு.௩.௨,௩. யோசு.௩௫.௫௬. (௩) ௨.சாமு.௩.௫. (௪) ௨.சாமு.௨.௰௧. ௨.சாமு.௫.௫. ௨.சாமு.௫.௰௪. ௨.சாமு.௰௨.௨௪. ௨.சாமு.௰௧.௰.(௬)௨.சாமு.௫.௰௫. (௮) ௨.சாமு.௫.௰௪. (௯) ௨.சாமு.௰௩.௧. (௰)௧.இரா.௰௧.௪௩. ௧.இரா.௰௫.௧.(௰௧)௨.நாளா.௨௨.௭. ௨.நாளா.௨௧.௰௭. (௰௨) ௨.இரா.௰௫.௩௰. (௰௫) ௨.இரா.௨௩.௩௰,௩௪. ௨.இரா.௨௪.௰௭. (௰௬) மத்.௧.௰௧. ௨.இரா.௨௪.௬. எரே.௨௨.௨௪. ௨.இரா.௨௪.௰௭. (௰௭) மத்.௧.௰௨.

௨௧ ன்ற ஐந்துபேருமே.—அனனியவின் புத்திரர்;
பெலத்தியா, எஷாயா: இவன் புத்திரன் ரெபா
யா, இவன் புத்திரன் அர்னன், இவன் புத்திரன்
௨௨ ஒபதியா, இவன்புத்திரன் ஷெகனியா.—ஷெக
னியாவின்புத்திரன் ஷிமாயா, ஷிமாயாவின்புத்
திரர் அற்றூஷ், இகால், பாரியா,நெயாரியா,ஷா
௨௩ பாத்தென ஆறுபேர்.—நெயாரியாவின் புத்திரர்,
இலியோயேனாய், இஸ்கியா, அசரீக்காமென மூ
௨௪ ன்றுபேர்.–இலியோயேனாயின்புத்திரர், ஒதாயா,
இலியாஷீப், பெலாயா, அக்கூப், யோகானான்,
திலாயா, ஆனானியென ஏழுபேர்.

## ௪. அதிகாரம்.

௧. யூதாவின் வமிசவரலாறு: ௫. அஷூரின் வமிச வரலாறு: ௯. யாபேஸ் பிரார்த்தனைபண்ணல்: ௨௧. ஷேலாவின் வமிசவரலாறு: ௨௪. ஷிமியோனின் வமிசவரலாறு: ௩௯. பிரதான அதிபதிகளின் சங்கதிகள்சிலகாட்டல்.

யூதாவின்புத்திரர்; பேரேஸ், எத்சரோன்,கர்மி,
௨ ஊர், ஷோபால்.–ஷோபாலின்புத்திரனாகிய ரா
யாயகத்தைப்பெற்றான்; யகத் அகுமாயியையும்,
லாகாத்தையும் பெற்றான். இவர்களே சோராத்
௩ தியரின் வமிசத்தார்.—ஏத்தாமின் ஆதிபிதாவின்
சந்ததியார்; யெஸரியேல், இஷ்மா, இத்பாஷ்:
இவர்களுடைய சகோதரியின்பேர் அத்செலெல்
௪ போனி:—கிதோரின் பிதாவாகிய பெனியேல,
ஊஷாவின்பிதாவாகிய எட்சர். இவர்கள் பேத்ல
கேமின் ஆதிபிதாவாகிய எப்ராத்தாவின்சேஷ்ட
புத்திரனான ஊரின் புத்திரர்.
௫ தெக்கோயாவின் பிதாவாகிய அஷூருக்கு எ
லாள், நாராளென்னும் இரண்டு மனைவியரிருந்
௬ தார்கள்.—நாராள் அவனுக்கு அகூசாம், எபெர்,
தெமனி, அகஷ்தாரி என்பவர்களைப்பெற்றாள்.
௭ நாராளின் புத்திரர் இவர்களே.–எலாளின் புத்தி
௮ ரர் சேரெத், இத்சோகார், எத்னான்.–கோசென்
பவன் அனூபையும், சோபேபாவையும், அரு
மின்புத்திரனாகிய அகர்கேலின் குடும்பத்தாரை
யும்பெற்றான்.
௯ யாபேஸ் தன் சகோதரரிலும் மேன்மையுள்ள
வனாயிருந்தான்: அவன் மாதா, நான் துக்கத்து
டன் இவனைப் பெற்றேனென்றுசொல்லி அவ
௰ னுக்கு யாபேசென்று பெயரிட்டாள்.–யாபேஸ்
இஸரவேலரின் தேவனைநோக்கி, ஆ, என்னை
ஆசீர்வதித்தருளும், என் எல்லையைப் பெரிதாக்
கும், உமது கைஎன்னோடிருப்பதாக, தீமை என்
னைக்கிலேசப்படுத்தாதபடி அதினின்றுமென்னை
இரட்சித்தருளுமென்றுசொல்லிப் பிரார்த்தித்தா
ன்:அவன்பிரார்த்தித்ததைத்தேவன்அருளினார்.
௰௧ ஷூகாவின் சகோதரனாகிய கிலூப் மேகீரைப்
௰௨ பெற்றான், இவன் எஷ்தோனின் பிதா.—எஷ்
தோன் பேத்ராபாவையும், பசேயாக்கையும், ஈர்
நாகாஷின்பிதாவாகியதெகினாவையும்பெற்றான்.
௰௩ இவர்கள்ரேகா ஊர்ச்சனங்கள்.—கேனாசின்புத்
திரர்; ஒத்னியேல், செராயா: ஒத்னியேலின்புத்
திரர்;அசத், மெயோனத்தாய்.—மெயோனத் ௰௪
தாய் ஒபிராவைப்பெற்றான்: செராயா தாழ்ந்த
பூமியிலே வாசஞ்செய்த சிற்பராகிய கராஷிய
ரின்பிதாவாகிய யோவாப்பைப்பெற்றான்.–யெ ௰௫
புன்னேயின் புத்திரனாகிய காலேபின் புத்திரர்;
ஈரு, ஏலா, நாகாம்: ஏலாவின்புத்திரர்கேனாஸ்.–
யெகாலிலீலின்புத்திரர்; சீப், சீபா, திரியா, அச ௰௬
ரேல்.—எஸ்ராவின் புத்திரர், எத்தெர், மேரேத், ௰௭
எப்பேர், யாலோன்: மேரேத் விவாகம் செய்த
பார்வோனின்புத்திரியாகிய பித்தியாளின்புத்திரர்
மிரியம், ஷம்மாய், எஷ்திமோவாவியரின் பிதா
வாகிய இஷ்பா.–அவன் மனைவியாகிய யெகூதி ௰௮
யா கிதோரின் பிதாவாகிய யெரெதையும், சோ
கோவின் பிதாவாகிய ஏபெரையும், சனோகாவி
ன்பிதாவாகிய இக்கூதியேலையும் பெற்றாள்.—
நாகாமின் சகோதரியாகிய ஒதியாவின் மனைவி ௰௯
யின் புத்திரர்; கர்மீயனாகிய கேயிலா, மாகாத்திய
னாகிய எஷ்திமோவா.—ஷீமோனின் புத்திரர், ௨௰
அம்னோன், ரின்னா, பென்கானான், தீலோன்.
இஷேயின் புத்திரர், சோகேத், பென்சோகேத்.
யூதாவின் புத்திரனாகிய ஷேலாவின் புத்திரர், ௨௧
லேகா ஊரின்பிதாவாகிய ஏர், மாரேஷாஊரின்
பிதாவாகியலாதா, அஷ்பேயா வமிசத்தில் மெல்
லிய புடவைநெய்யும் அஷ்பேயாவின்வீட்டுக்கு
டும்பத்தார்,–யோகிம் கோசேபாவின் சனங்கள், ௨௨
மோவாபியரை அரசாண்டயோவாஷ், சாராப்,
யாஷூபீலாகெம். இவைகளே பூருவகாலத்தின்
செய்திகள்.–இவர்களும், நெத்தாயிமிலும், கதே ௨௩
ராவிலுமுள்ள சனங்களுங் குயவராகி, இராசா
வின் வேலைசெய்ய ஏற்படுத்தப்பட்டார்கள்.
ஷிமியோனின்புத்திரர்; நெமுவேல்,யாமின், ௨௪
யாறீப், சேரா, ஷவுல்.—இவன் புத்திரன் ஷல் ௨௫
லும், இவன் புத்திரன் மிப்சாம், இவன் புத்தி
ரன் மிஷ்மா.—மிஷ்மாவின் புத்திரர்; அமுவே ௨௬
ல், இவன் புத்திரன் சக்கூர், இவன் புத்திரன்
ஷிமியி.—ஷிமியிக்குப் பதினாறுபுத்திரரும் ஆ ௨௭
றுபுத்திரிகளுமிருந்தார்கள்: அவன் சகோதரருக்
குப் புத்திரர்மிகுதியாயில்லை, அவர்கள் வமிசம்
யூதாவமிசம்போலவர்த்திக்கவில்லை.—அவர்கள் ௨௮
பேர்ஷேபாவிலும், மோலாதாவிலும், அத்சர்ஷூ
வாவிலும்,—பிலக்காவிலும், எத்சேமிலும், தோ ௨௯
லாத்திலும்,–பெத்துவேலிலும், ஓர்மாவிலும்,சிக் ௩௰
லாக்கிலும்,—பேத்மர்காபோத்திலும், அத்சர்சூ ௩௧
சிமிலும், பேத்பீரீயிலும், ஷாராயீமிலும்வாசஞ்
செய்தார்கள். தாவீதின் ஆளுகைவரைக்கும் இ
வைகள் அவர்கள் பட்டணங்களாயிருந்தன.—
அவர்கள் கிராமங்கள்; ஏத்தாம், அயின், ரிம் ௩௨
மோன்,தோகேன், ஆஷான்என்னும் ஐந்துபட்ட
ணங்களும்,—அந்தப்பட்டணங்களைச்சுற்றிலும் ௩௩
பாகால்வரைக்குமுள்ளசகலகிராமங்களுமாகும்.
அவர்கள் வாசஸ்தானங்களும், வமிசவரலாறுமி

(௪. அதி. ௨.) ஆதி.௩௮.௨௯. அதி.௨.௧,௰௮. (௨) அதி.௨.௫௨. (௪) அதி.௨.௫௰. (௫) அதி.௨.௨௪. (௯) அதி.௩௪. ௰௯. (௰௩) யோசு.௰௫.௰௭. (௰௪) நிகி.௰௧.௩௫. (௨௧) ஆதி.௩௮.௧,௫. (௨௪) ஆதி.௪௬.௰. யாத்.௬.௰௫. எண்.௨௬.௰௨. (௨௮) யோசு.௰௯.௨. (௨௯) யோசு.௰௯.௩,௪. (௩௧) யோசு.௰௯.௫. (௩௨) யோசு.௰௯.௭. (௩௩) யோசு.௰௯.௮.

ஙச வைகளே.–மிஷோபாப், யாமேலெக்,அமத்சீயா
ஙரு வின்புத்திரனாகிய யோஷா,–யோவேல், அசியே
லின் புத்திரனாகிய செராயாவின்பௌத்திரனும்
ஙசா யோசிபியாவின் புத்திரனுமாகிய யெகூ,—இலி
யோயேனாய், யாகோபா,இஷோகாயா,அசாயா,
ஙஎ அதியேல், எசீமியேல், பினாயா,–ஷிமாயாவின்
புத்திரனான, ஷிம்ரியின் புத்திரனாகிய, யெதாயா
வின் புத்திரனான அல்லோனின்பௌத்திரனும்,
ஷிப்பியின்புத்திரனுமாகிய சீசாவென்னும்பேர்
ஙஅ பெற்றஇவர்கள்,-தங்கள் தங்கள் வமிசங்களுக்கு
அதிபதிகளாயிருந்தார்கள்: இவர்கள்பிதாவமிசம்
மிகவும் வர்த்தித்தது.
ஙகூ இவர்கள் தங்கள் ஆடுகளை மேய்க்கும்படி, கி
தோரின் எல்லையாகிய பள்ளத்தின்கீழ்ப்புறமட்
ச௰ டும்போய்,—செழிப்பான நல்லமேய்ச்சலைக்கண்
டார்கள்; அந்தத்தேசம் விசாலமும், அமைதியும்,
அவிரோதமுமாயிருந்தது; பூருவகாலத்திலே கா
மின்சந்ததியார் அதில் வாசம்பண்ணினார்கள்.–
சக எழுதப்பட்ட இவர்கள் யூதாவின்இராசாவாகிய
இஸ்கியாவின்காலத்தில்போய், அவர்கள்கூடா
ரங்களையும் அங்கே காணப்பட்ட அவர்கள் வா
சஸ்தானங்களையும் அடித்து, இந்நாளிலிருக்கிற
படி அவர்களைமுழுமையும் சங்கரித்தார்கள்: அங்
கே தங்கள்ஆடுகளுக்கு மேய்ச்சலிருந்தபடியால்
அவர்கள் ஸ்தானத்தில் வாசஞ்செய்தார்கள்.—
சஉ ஷிமியோனின்புத்திரராகிய இவர்களில்ஐஞ்ஞூ
றுசனங்களும்,அவர்கள்சேனாபதிகளாகியஈஷே
யின்புத்திரரான பெலத்தியாவும்,நெயாரியாவும்,
ரெபாயாவும், ஊசியேலும், சேயீர்மலைத்தேசத்
சங துக்குப்போய்,—அமலேக்கியரில்தப்பிமீதியாயி
ருந்தவர்களை மடங்கடித்து, இந்நாள்வரைக்குமி
ருக்கிறபடி அங்கே குடியிறங்கினார்கள்.

## ரு. அதிகாரம்.

க. ரூபேனின் வமிசவரலாறு: ௰க. காத்தின்வமிசவரலாறு: ௰அ. ரூபேன், காத், மனாசேயின் பாதிக்கோத்திரம் என்னுமிவைகளின் விபரம்.

ரூபேன் இஸரவேலின் சேஷ்டபுத்திரன்; அ
வன் தன்பிதாவின் சயனத்தை அசுசிப்படுத்தி
னதினால், அவனுடைய சேஷ்ட அதிகாரம் இ
ஸரவேலின் புத்திரனாகிய யோசேப்பின் புத்திர
ருக்குக்கொடுக்கப்பட்டது:வமிசவரலாறுசேஷ்
உ ட அதிகாரத்தின்படி மதிக்கப்படவில்லை.–யூதா
தன்சகோதரரிலும் வல்லவன், பிரதான அதிபதி
அவனிடத்தில் தோன்றினான்; ஆயினுஞ் சேஷ்
ங ட அதிகாரம் யோசேப்புக்குரியது:—இஸரவே
லின் சேஷ்டபுத்திரனாகிய ரூபேனின்புத்திரர்,
ச ஆனோகு, பல்லூ, எத்சரோன், கர்மீ.—யோவே
லின்புத்திரர்; ஷிமாயா, இவன் புத்திரன் கோக்,
ரு இவன்புத்திரன் ஷிமியி,–இவன் புத்திரன் மீகா,
இவன்புத்திரன் ராயா, இவன் புத்திரன் பாகா
ல்,—இவன் புத்திரன் பேரா, இவனை அஷீரிய சா
இராசாவாகிய திக்லாத் பிலேசர் சிறைபிடித்துக்
கொண்டுபோனான்: இவன் ரூபேனியருக்கதி
பதி.—அவரவர் வமிசப்படி வமிசவரலாற்றிற் எ
குறிக்கப்பட்ட அதிபதிகளாகிய யெயீயேல்,சக
ரியா,—யோவேலின் புத்திரனாகிய, ஷிமாவின் அ
பௌத்திரனும், ஆசாசின் புத்திரனுமாகிய பே
லா அவன் சகோதரர்கள்: இவர்கள் நேபோ, பா
கால்மியோன்வரைக்கும் அரோவேரில் வாசம்
பண்ணினார்கள்.–அவர்கள் மிருகஜீவன்கள் கிலெ கூ
யாத்தேசத்திலே வர்த்தித்திருந்தபடியால், கிழக்
கே பிராத் நதிதொடங்கி வனாந்தரத்தின் எல்லை
வரைக்கும் அவன் வாசம்பண்ணினான்.—ஷவு ௰
லின் நாட்களில் இவர்கள் அகரியரோடு யுத்தம்
பண்ண,அவர்கள், இவர்கள் கையில் விழுந்தார்
கள்: பின்பு இவர்கள் கிலியாத்தின் கீழ்த்திசை
யெங்கும் அவர்கள் கூடாரங்களில் வாசம்பண்
ணினார்கள்.
காத்தின்புத்திரர் அவர்களுக்கெதிர்ப்புறத்தில் ௰க
சல்காமட்டும்பாஷான்தேசத்தில் வாசம்பண்ணி
னார்கள்:—அவர்களுக்குள்ளே யோவேல்அதிப ௰உ
தி, அவனுக்குப்பின்பு ஷாபாம், யானாய், ஷா
பாத், பாஷானில் வாசஞ்செய்தார்கள்.—மீகா ௰ங
யேல், மிஷுல்லாம், ஷேபா, யோராய், யாக்கன்,
சீயா, எபெரென்னும் எழுபேரும் அவர்கள்பிதா
வமிசத்தின்சகோதரர்.—இவர்கள் அபிகயிலின் ௰ச
சந்ததியார், இவன்ஊரியின் புத்திரன், இவன்
யாரோவாவின் புத்திரன், இவன் கிலியாத்தின்
புத்திரன், இவன் மீகாயேலின்புத்திரன், இவன்
எஷீஷாயின் புத்திரன், இவன் யாதோவின் புத்
திரன், இவன் பூசியின் புத்திரன்;—கூனியின் ௰ரு
பௌத்திரனும்,அப்தியேலின்புத்திரனுமாகியஅ
கி அவர்கள் பிதாவமிசத்திற்கதிபதி.—அவர்கள் ௰சா
பாஷானிலுள்ள கிலியாத்திலும்,அதின்கிராமங்க
ளிலும், அவைகளி னெல்லையிலுள்ள ஷாரோ
னின் சகலபேட்டைகளிலும் வாசஞ் செய்தார்
கள்.—இவர்களெல்லாரும் யூதாதேசத்து இராசா ௰எ
வாகியயோதாமின் காலத்திலும், இஸரவேலின்
இராசாவாகிய யெரோபேயாமின் காலத்திலும்,
அவரவர்வமிசப்படிதொகையிடப்பட்டார்கள்.
ரூபேன் சந்ததியாரும், காத்தியரும், மனாசே ௰அ
யின் பாதிக்கோத்திரத்தாருமாகிய இவர்களில்
யுத்தத்துக்குப் புறப்படத்தக்கவர்களும், கேடக
முங் கட்கமும் தரிக்கிறவர்களும், வில்வல்லவ
ரும்,யுத்தத்தில் நிபுணருமாகிய வீரர் நாற்பத்துநா
லாயிரத்து எழுநூற்றறுபதுபேர்.-இவர்கள் அகரி ௰கூ
யரோடும், எத்தூர், நெபிஷ், நோதாப்பென்பவர்
களோடும் யுத்தம்பண்ணுகிறபொழுது,—அவர்க உ௰
ளோடெதிர்க்கத் துணைபெற்றபடியினால், அக
ரியரும், அவர்களோடுகூடிய யாவரும் அவர்கள்

(சக) உ.இரா.௰அ.அ. (சங) க.சாமு.௰ரு.அ.—(ரு. அதி. க.) ஆதி.உகூ.ஙஉ. ஆதி.ஙரு.உஉ. ஆதி.சஅ.௰ரு,உஉ.(உ) ஆதி.சகூ.அ,௰. சங்.ககூ௰.எ. சங்.ாஅ.அ. மீகா.ரு.உ. மத்.உ.சா. (ங) ஆதி.சசா.கூ. யாத்.சா.௰ச. எண்.உசா.ரு. (சா) உ.இரா.௰ரு.உகூ. (எ) வச.௰எ. (அ) யோசு.௰ங.௰ரு,௰சா. (கூ) யோசு.உஉ.கூ. (௰) ஆதி.உரு.௰உ. (௰க) யோசு.௰ங. ௰உ,உச. (௰சா) அதி.உஎ.உகூ. (௰எ) உ.இரா.௰ரு.ரு,ஙஉ. உ.இரா.௰ச.௰சா,உஅ. (௰கூ) ஆதி.உரு.௰ச. அதி.க.ஙக. (உ௰) வச.உஉ. சங்.உஉ.ச,ரு.

கையிலொப்பிக்கப்பட்டார்கள்: அவர்கள் யுத்
தத்திலே தேவனை நோக்கி ஓலமிட்டு, அவ
ரைப்பிரார்த்தித்து, அவர்மேல் நம்பிக்கைவைத்
தபடியினால், அவர்கள் பிரார்த்தனையைக் கேட்
உக டருளினார்.—அவர்கள் இவர்களுடைய மிருகசீ
வன்களாகிய ஐம்பதினாயிரம் ஒட்டகங்களையும்,
இருநூற்றைம்பதினாயிரம் ஆடுகளையும், இரண்
டாயிரங் கழுதைகளையும், இலட்சம் சனங்களை
உஉ யும் பிடித்தார்கள்.—அந்தயுத்தம் தேவனாலே ந
டத்தப்பட்டதினால், அநேகர்கொல்லப்பட்டார்
கள். இவர்கள், சிறைப்பட்டுப்போகுமட்டும்,
தங்கள்ஸ்தானத்தில் வாசஞ்செய்தார்கள்.
உங மனாசேயின்பாதிக்கோத்திரத்தின்சந்ததியார்
விருத்தி யடைந்து, பாஷான் தொடங்கிப் பா
கால் எர்மோன், செனீர், எர்மோன் மலையென்
னுமிவைகள் வரைக்குமுள்ள தேசத்தில் வாசம்
உச பண்ணினார்கள்.—பராக்கிரமவீரரும், பேர்பெற்
றவர்களும், தங்கள் தங்கள் பிதாவமிசத்துக்கும்
குடும்பத்திற்கும் அதிபதிகளுமாகிய எப்பேர்,
இஷேயி, இலியேல், அஸரியேல், எரேமியா,
ஒதாவியா, யாதியேலென்பவர்கள் இவர்களே.
உரு அவர்கள் தங்கள் பிதாக்களின் தேவனுடை
ய கட்டளையைமீறி, தங்கள் முன்னின்றுந் தே
வன் சங்கரித்ததேசத்தின் சனங்களுடைய தே
வர்களை விபசாரமார்க்கமாய்ப் பின்பற்றினார்க
உசு ள்.—இஸ்ரவேலின் தேவன் அஷூரிய இரா
சாவாகிய பூலின் மனதையும், அஷூரிய இராசா
வாகிய திக்லாத் பிலேசரின் மனதையும் எவி
னார்; அதினால் இவன் ரூபேனியரும், காத்திய
ரும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தாருமாகிய
அவர்களைச்சிறைப்பிடித்து, இந்நாள்வரைக்குமி
ருக்கிறபடி அலாவுக்கும், ஆபோருக்கும், ஆரா
வுக்கும், கோஷான் ஆற்றங்கரைக்குங்கொண்டு
போனான்.

## கூ. அதிகாரம்.

க. லேவியின் வமிசவரலாறு: ச. எலீயேசாரின் வமிச வரலாறு: யசு. கெர்ஷோம், கோகாத், மிராரி என்பவர்களின் வமிசவரலாறு: சக. ஆரோன் வமிசத்தாரின் தொழில்: நிச. ஆசாரியர் லேவியரென்பவர்களின் பட்டணங்கள்.

லேவியின் புத்திரர்; கெர்ஷோன், கோகாத்,
உ மிராரி.—கோகாத்தின் புத்திரர்; அம்ராம், இத்
ங சார், எப்ரோன், ஊசியேல்.—அம்ராமின் புத்தி
ரர்; ஆரோன், மோசே, மிரியம். ஆரோனின்புத்
திரர் நாதாபு, அபியூ, எலீயேசார், இதாமார்.
ச எலீயேசார் பீனிகாசைப் பெற்றான், பீனி
ரு காஸ் அபீஷாவாவைப்பெற்றான்,—அபிஷாவா
புகீயைப்பெற்றான், புகீ ஊசியைப்பெற்றான்,—
சு ஊசி சிர்கியாவைப்பெற்றான், சிர்கியா மிரா
எ யோத்தைப்பெற்றான்,—மிராயோத் அமரியாவை
ப்பெற்றான்,அமரியா அகீதூப்பைப்பெற்றான்,—

அகீதூப் சாதோக்கைப்பெற்றான், சாதோக் அகீ அ
மாத்சைப்பெற்றான்,—அகீமாத்ஸ் அசரியாவைப் கூ
பெற்றான், அசரியா யோகானானைப்பெற்றான்,—
யோகானான் அசரியாவைப்பெற்றான், சலோ ய
மோன் யெரூஷலேமிலேகட்டுவித்ததேவாலயத்
தில் ஆசாரியத்தொழிலைச்செய்தவன் இவனே:—
அசரியா அமரியாவைப் பெற்றான், அமரியா யக
அகீதூப்பைப் பெற்றான்,—அகீதூப் சாதோக் யஉ
கைப் பெற்றான், சாதோக் ஷல்லுமைப் பெற்
றான்,—ஷல்லும் இல்கியாவைப்பெற்றான், இல் யங
கியா அசரியாவைப்பெற்றான்,—அசரியா செரா யச
யாவைப்பெற்றான்,செராயா யோத்சாதாக்கைப்
பெற்றான்,—யெகோவா,நெபுகத்நெத்சரைக் யரு
கொண்டு யூதா வமிசத்தாரையும், யெரூஷலேமி
யரையும்சிறைப்பிடித்துக்கொண்டுபோகச்செய்
தபொழுது, யோத்சாதாக்கும் சிறைப்பட்டான்.
லேவியின் புத்திரர்; கெர்ஷோம், கோகாத், யசு
மிராரி.—கெர்ஷோமின் புத்திரரின் நாமங்கள்; யஎ
லிப்னீ, ஷிமியி.-கோகாத்தின்புத்திரர்; அம்ராம், யஅ
இத்சார், எப்ரோன், ஊசியேல்.—மிராரியின்புத் யகூ
திரர்; மாலி, மூஷி. இவர்கள் அவரவர்பிதாவமி
சத்தின்படி லேவியரின் வமிசத்தார்.—கெர்ஷா உய
மோ; இவன்புத்திரன் லிப்னீ, இவன்புத்திரன் ய
கத், இவன்புத்திரன்சிம்மா,-இவன்புத்திரன்யோ உக
வா, இவன் புத்திரன் இத்தோ, இவன் புத்திரன்
சேரா, இவன் புத்திரன் யாதராய்.—கோகாத்தின் உஉ
புத்திரர்; அம்மினதாபு,இவன் புத்திரன் கோரா,
இவன் புத்திரன் அச்சீர்,—இவன்புத்திரன் எல்க் உங
கானா, இவன் புத்திரன் எபியாசாப், இவன்புத்தி
ரன் அச்சீர்,—இவன் புத்திரன் தாகாத், இவன் உச
புத்திரன் ஊரியேல், இவன் புத்திரன் ஊசியா,
இவன் புத்திரன் ஷவுல்.—எல்க்கானாவின் புத்தி உரு
ரர்; அமாசாய், அகீமோத்.—எல்க்கானாவின் புத் உசு
திரர்; சோபாய், இவன் புத்திரன் நாகாத்,—இ உஎ
வன்புத்திரன் இலியாப், இவன்புத்திரன் எரோ
காம், இவன்புத்திரன் எல்க்கானா.-சாமுவேலின் உஅ
புத்திரர்;சேஷ்டபுத்திரனாகிய வஷ்னி, அபீயா.-
மிராரியின்புத்திரர்; மாலி, இவன்புத்திரன் லிப் உகூ
னீ, இவன்புத்திரன் ஷிமியி, இவன் புத்திரன்
ஊசா,—இவன் புத்திரன் ஷிமியா, இவன்புத்தி ஙய
ரன் அகியா, இவன் புத்திரன் அசாயா.—பெட் ஙக
டிநிலைபெற்றபின்பு, யெகோவாவின் ஆல
யத்தில் கீதத்தொழில்செய்யத்தாவீது இவர்களை
ஏற்படுத்தினான்.—சலோமோன் யெரூஷலேமி ஙஉ
லேயெகோவாவின் ஆலயத்தைக்கட்டிமுடிக்
கும்வரைக்கும், இவர்கள்சபையினுவாசத்திலுள்
ள வாசஸ்தானத்துக்குமுன்பாகக் கீதம்பாடிச்
சேவித்துவந்தார்கள்: இவர்கள் தங்கள் முறைப்
படி தங்கள் தொழிலை நடத்திவந்தார்கள்.—கோ ஙங
காத்தியரின் புத்திரரில் எமானென்பவன் பாட
கன்: இவன் யோவேலின் புத்திரன், இவன் ஷி

(உக) எண்.ஙக.ஙரு. (உஉ) உ.இரா.யரு.உகூ. (உரு) உ.இரா.யஎ.எ. (உசு) உ.இரா.யரு.யகூ,உகூ. உ.இரா.யஎ.சு.—(கூ. அதி. க.) ஆதி.சசு.யக. யாத்.கூ.யசு. எண்.உசு.ருஎ. வச.யசு. (உ) வச.உஉ. (ங) லேவி.ய.க. (அ) உ.சாமு.அ.யஎ. உ.சாமு.யரு.உஎ. (ய) உ.நாளா.உசு.யஎ,யஅ. க.இரா.சு. உ.நாளா.ங. (யக) எஸ்றா.எ.ங. (யஉ) .அதி.கூ.யக. (யச) நிகி.யக.யக. (யரு) உ.இரா.உரு.யஅ. (யசு) யாத்.கூ.யசு. வச.க. (ஙக) அதி.யசு.க.

௩௪ மூவேலின் புத்திரன்,—இவன் எல்க்கானாவின்
புத்திரன்,இவன் எரோகாமின் புத்திரன்,இவன்
ஈலியேலின் புத்திரன், இவன் தோவாவின் புத்
௩௫ திரன்,—இவன் சூப்பின்புத்திரன், இவன் எல்க்
கானாவின் புத்திரன், இவன் மாகாத்தின் புத்தி
௩௬ ரன்,இவன் அமாசாயின்புத்திரன்,—இவன் எல்க்
கானாவின்புத்திரன், இவன் யோவேலின் புத்தி
ரன், இவன் அசரியாவின்புத்திரன், இவன்செப்
௩௭ பனியாவின்புத்திரன்,—இவன் தாகாத்தின் புத்
திரன், இவன் அச்சீரின் புத்திரன், இவன் எபி
யாசாப்பின் புத்திரன், இவன் கோராவின்புத்தி
௩௮ ரன்,—இவன் இத்சாரின் புத்திரன், இவன்கோ
காத்தின்புத்திரன், இவன் லேவியின் புத்திரன்,
௩௯ இவன் இஸரவேலின் புத்திரன்.—இவன் சகோ
தரனாகிய ஆசாப் இவன் வலது பக்கத்திலேநிற்
பான். ஆசா பெரிகாயாவின் புத்திரன், இவன்
௪௰ ஷிமியாவின் புத்திரன்,—இவன் மீகாயேலின்
புத்திரன்,இவன் பாஷியாவின் புத்திரன்,இவன்
௪௧ மல்கியாவின்புத்திரன்,—இவன் எத்னியின் புத்
திரன், இவன் சேராகின்புத்திரன், இவன் அதா
௪௨ யாவின் புத்திரன்,—இவன் ஏதானின்புத்திரன்,
இவன் சிம்மாவின்புத்திரன், இவன் ஷிமியின்
௪௩ புத்திரன்,—இவன் யகத்தின் புத்திரன், இவன்
கெர்ஷோமின் புத்திரன், இவன் லேவியின் புத்
௪௪ திரன்.—மிராரியின் புத்திரராகிய இவர்களுடை
ய சகோதரர்கள் இடதுபக்கத்திலே நிற்பார்கள்:
அவர்களில்ஏதானென்பவன்கீஷியின்புத்திரன்,
இவன் அப்தியின் புத்திரன், இவன் மல்லூக்
௪௫ கின் புத்திரன்,—இவன் அஷபியாவின் புத்தி
ரன், இவன் அமத்சியாவின் புத்திரன், இவன்
௪௬ இல்கியாவின் புத்திரன்,—இவன் அம்சியின்புத்
திரன், இவன் பானியின் புத்திரன், இவன் ஷா
௪௭ மேரின் புத்திரன்,—இவன் மாலியின் புத்திரன்,
இவன் மூஷியின் புத்திரன், இவன் மிராரியின்
புத்திரன், இவன் லேவியின்புத்திரன். இவர்கள்
தங்கள் தங்கள்வமிசத்துடன் காத்துநின்றார்கள்.-
௪௮ அவர்கள் சகோதரராகிய மற்ற லேவியர், தேவ
னுடைய ஆவாசமாகிய ஆலயத்தின் ஆராதனை
யெல்லாவற்றையும் நடப்பிக்கும்படி ஏற்படுத்
தப்பட்டார்கள்.

௪௯ ஆரோனும் அவன் புத்திரரும் தகனவேதிகை
யின்மேலும் தூபவேதிகையின்மேலும் பலியிட்
டார்கள்;தேவனுடைய தாசனாகியமோசேகட்
டளையிட்ட யாவற்றின்படிக்கும் இவர்கள் மிக
வும் பரிசுத்த ஸ்தானத்தின் சகல கிரியைகளை
யும்நடப்பிக்கவும், இஸரவேலர் நிமித்தம் பாவ
பிராயச்சித்தஞ்செய்யவும் ஏற்படுத்தப்பட்டார்
௫௰ கள்.—ஆரோனின் புத்திரர்; எலீயேசாரின் புத்தி
௫௧ ரன் பீனிகாஸ், இவன்புத்திரன் அபீஷூவா,—இ
வன்புத்திரன் புக்கீ, இவன்புத்திரன் ஊசி, இவன்
௫௨ புத்திரன் சிர்கியா,—இவன் புத்திரன் மிராயோத்,
இவன் புத்திரன் அமரியா, இவன்புத்திரன் அகீ
தூப்,—இவன் புத்திரன் சாதோக், இவன் புத்தி ௫௩
ரன் அகிமாத்ஸ்.

அவர்கள், யூதாதேசத்திலுள்ள எப்ரோனையும், ௫௪
அதைச் சுற்றியிருந்த பேட்டைகளையும் இவர்க
ளுக்குக் கொடுத்தார்கள்.—அந்த நகரத்தின் வயல் ௫௫
களையும், அதின் கிராமங்களையும் யெபுன்னே
யின்புத்திரனாகிய காலேபுக்குக்கொடுத்தார்கள்.-
ஆரோனின் புத்திரருக்கு எப்ரோனென்னும் அ ௫௬
டைக்கல நகரங்களிலொன்றையும், லிப்னாவை
யும்அதின்பேட்டைகளையும், யத்தீரையும்அதின்
பேட்டைகளையும், எஷ்திமோவாவையும்அதின்
பேட்டைகளையும்,—ஈலேனையும் அதின்பேட் ௫௭
டைகளையும், திபீரையும் அதின்பேட்டைகளை
யும்,—ஆஷானையும் அதின் பேட்டைகளையும், ௫௮
பேத்ஷிமெஷையும் அதின்பேட்டைகளையும்:—
பேன்யாமீன் கோத்திரத்திலே கேபாவையும் அ ௫௯
தின் பேட்டைகளையும், ஆலெமெத்தையும் அ
தின் பேட்டைகளையும், அனாதோத்தையும் அ
தின்பேட்டைகளையுங் கொடுத்தார்கள். இவர்க
ளுக்கு வமிசத்தின்படி கிடைத்த பட்டணங்கள்
ஆகப்பதின்மூன்று.—மனாஷேயின் பாதிக்கோத் ௬௰
திரத்தாருக்குள்ளே கோகாத்தின் வமிசத்தாரில்மீ
தியாயிருந்தவர்களுக்குச் சீட்டுப்போட்டுக்கொ
டுக்கப்பட்ட பட்டணங்கள் பத்து.—பிரதான ௬௧
பங்குக்குரிய ஆரோன் புத்திரராகிய கோகாத்திய
வமிசத்தாருக்கு,அவரவரெல்லையில் அரணானஸ்
தானங்களின்படி கிடைத்த வாசஸ்தலங்களிவை
களே.—ஈஷகார் கோத்திரத்திலும்,ஆஷேர்கோத் ௬௨
திரத்திலும், நப்தாலிகோத்திரத்திலும், பாஷானி
லிருக்கிற மனாஷேகோத்திரத்திலும், கெர்ஷோ
மின் புத்திரருக்கு அவர்கள் வமிசப்படிகொடுக்
கப்பட்ட பட்டணங்கள்பதின்மூன்று.—ரூபே ௬௩
ன் கோத்திரத்திலும், காத் கோத்திரத்திலும், செபு
லோன் கோத்திரத்திலும், மிராரியின் புத்திரருக்
கு அவர்கள் வமிசப்படி சீட்டுப்போட்டுக்கொ
டுக்கப்பட்ட பட்டணங்கள் பன்னிரண்டு.—
இஸரவேல் சந்ததியார்லேவியருக்கு இந்தப்பட் ௬௪
டணங்களையும் அவைகளின் பேட்டைகளையுங்
கொடுத்தார்கள்.—யூதா புத்திரரின் கோத்திரத்தி ௬௫
லும், ஷிமியோன் புத்திரரின் கோத்திரத்திலும்,
பேன்யாமீன் புத்திரரின் கோத்திரத்திலும், அவர்
கள்நாமத்தின்படி சீட்டுப்போட்டுப்பட்டணங்க
ளைக்கொடுத்தார்கள்.—கோகாத்வமிசத்தாரில் மீதி ௬௬
யாயிருந்தவர்கள், எப்ராயீம்வமிசத்தாரினின்றும்
தங்களெல்லைகளிலே பட்டணங்களைப்பெற்றார்
கள்.—கோகாத் வமிசத்தில் மீதியாயிருந்தவர்க ௬௭
ளுக்கு, அடைக்கல நகரங்களில் எப்ராயீம் ம
லைத் தேசத்திலுள்ள ஷிகேமையும், அதின்பேட்
டைகளையும், கேசெரையும் அதின்பேட்டைக
ளையும்,—யொக்மியாமையும் அதின்பேட்டைக ௬௮
ளையும்,பேதோரோனையும்,அதின்பேட்டைகளை
யும்,—அயாலோனையும்அதின்பேட்டைகளையும், ௬௯

(௩௭) யாத்.௬.௨௪. (௪௯) லேவி.௧.௯. யாத்.௩௰.௭. (௫௪) யோசு.௨௧.௰௧,௰௨. (௫௫) யோசு.௰௪.௰௩. (௫௬) யோசு. ௨௧.௰௩. (௫௭) யோசு.௨௧.௰௫. (௫௮) யோசு.௨௧.௰௬. (௫௯) யோசு.௨௧.௰௮. (௬௰) யோசு.௨௧.௫. (௬௧) யோசு. ௨௧. (௬௩) யோசு.௨௧.௭,௩௪. (௬௬) வச.௬,௰. (௬௭) யோசு.௨௧.௨௧. (௬௮) யோசு.௨௧.௨௨—௩௫.

௭௰ காத்ரிம்மோனையும்,—அதின் பேட்டைகளையும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தில் ஆனேரையும் அதின்பேட்டைகளையும்,பிலியாமையும் அதின்
௭௧ பேட்டைகளையுங் கொடுத்தார்கள்.—கெர்சோம் புத்திரருக்கு, மனாசேயின் பாதிக்கோத்திரத்திலே, பாசானிலிருக்கிற கோலானும் அதின்பேட்டைகளும்,அஸ்தாரோத்தும் அதின்பேட்டை
௭௨ களும்,—இசக்கார்கோத்திரத்திலே, கேதேஸும் அதின்பேட்டைகளும், தாபிராத்தும் அதின்பேட்
௭௩ டைகளும்,—ராமொத்தும் அதின் பேட்டைக
௭௪ ளும், ஆனேமும் அதின்பேட்டைகளும்,—ஆசேர் கோத்திரத்திலே, மாசாலும் அதின்பேட்டைகளும், அப்தோனும் அதின் பேட்டைக
௭௫ ளும்,—ஊகோக்கும் அதின்பேட்டைகளும், ரே
௭௬ கோப்பும் அதின் பேட்டைகளும்,—நப்தாலி கோத்திரத்திலே, கலிலேயாவிலிருக்கிற கேதேஸும் அதின் பேட்டைகளும், அம்மோனும் அதின் பேட்டைகளும், கீரியத்தாயீமும் அதின்
௭௭ பேட்டைகளுங் கொடுக்கப்பட்டன.—மிராரியின் வமிசத்தில் மீதியாயிருந்தவர்களுக்கு, செபுலோன் கோத்திரத்திலே, ரிம்மோனும் அதின் பேட்டைகளும், தாபோரும் அதின் பேட்டை
௭௮ களும்,—யோர்தானுக்கப்பாலிருக்கிற யெரிகோவின் சமீபத்திலே, யோர்தானுக்குக் கீழ்ப்புறத்தில் ரூபேன்கோத்திரத்திலே வனாந்தரத்திலுள்ள பெத்செரும் அதின்பேட்டைகளும் யாகஸ்வும்
௭௯ அதின்பேட்டைகளும்,—கிதேமோத்தும் அதின் பேட்டைகளும்,மேபாகாத்தும்அதின்பேட்டை
௮௰ களும்,—காத்கோத்திரத்திலே, கிலியாத்திலுள்ள ராமொத்தும் அதின் பேட்டைகளும், மக்னாயி
௮௧ மும் அதின் பேட்டைகளும்,—எஸ்போனும் அதின் பேட்டைகளும், யாசேரும் அதின் பேட்டைகளுங் கொடுக்கப்பட்டன.

## எ. அதிகாரம்.

க. இசக்காரின்வமிசவரலாறு: ௬. பேன்யாமீனின் வமிசவரலாறு:௰௩.நப்தாலியின்வமிசவரலாறு: ௰௪. மனாசேயின் வமிசவரலாறு: உ௰. எப்ராயீமின் வமிசவரலாறு: உ௩. சாபாத்தின்வமிசவரலாறு: உ௮. அவர்களுடையசுதந்தரம்:௩௰. ஆசேரின் வமிசவரலாறு.

இசக்காரின்புத்திரர்; தோலாக், பூகாள், யாஷூப்,
௨ ஷிம்ரோன்என்னும்நாலுபேர்.—தோலாக்கின்புத்திரர்; ஊசி, ரெபாயா, எரியேல், யாமாய், இப்சாம், ஷிமுவேல், இவர்கள் தங்கள் பிதாவாகிய தோலாக்கின் வமிசத்துக்கதிபதிகளும், தங்கள் சந்ததியாருக்குள்ளே பராக்கிரம சாலிகளுமாயிருந்தார்கள்; தாவீதின் காலத்தில் அவர்கள்தொ
௩ கை இருபத்தீராயிரத்தறுநூறு.—ஊசியின் புத்திரர்; இஸரகியா: இஸரகியாவின் புத்திரர்; மீகாயேல், ஒபதியா, யோவேல், இஷியா இவ்வைந்
௪ துபேரும் பிரதானிகளாயிருந்தார்கள்.—யுத்தஞ்செய்வதற்கு அவர்கள் பிதாவமிசத்தில் அவர்களோடிருந்த சேனைகள் மூப்பத்தாறாயிரம்பேர்: அவர்களுடைய மனைவியரும் புத்திரரும் அநேகர்.—இசக்காரின் வமிசத்தாருள்ளும் அவர்கள் ௫
சகோதரர் அதிக பராக்கிரமசாலிகள், அவர்கள் தங்கள் வமிசவரலாற்றிற் குறிக்கப்பட்ட படி எண்பத்தேழாயிரம் பேர்.

பேன்யாமீனின் புத்திரர்; பேலா, பேகேர், ௬
யெதீயேலென்னுமூன்றுபேர்.—பேலாவின் புத்தி ௭
ரர்; எத்ஸபோன், ஊசி, ஊசியேல், எரேமோத், இரியென்னும்ஐந்துபேர்;இவர்கள்தங்கள்பிதாவமிசத்துக்கதிபதிகளும் பராக்கிரமசாலிகளுமாயிருந்தார்கள்; இவர்கள் தங்கள் வமிசவரலாற்றிற் குறிக்கப்பட்டபடி இருபத்திராயிரத்துமுப்பத்தினாலுபேர்.—பேகேரின் புத்திரர்; சிமீரா, யோ ௮
வாஷ், எலியேசர், இலியோயேனாய், உம்ரி, எரேமோத், அபீயா, அனாதோத், ஆலெமெத். இவர்களெல்லாரும்பேகேரின்புத்திரர்.-வமிசவரலாற் ௯
றின்படி தங்கள் பிதாவமிசத்துக்கதிபதிகளும், பராக்கிரம வீரருமாகிய இவர்கள்தொகை இருபதினாயிரத்திருநூறு.—யெதீயேலின்புத்திரர்; பில்க் ௰
கான்: பில்க்கானின்புத்திரர்; எயூஷ், பேன்யாமீன், எகூத், கினானா, சேதான், தர்ஷீஷ், அகீ
ஷகர்.—யெதியலின்புத்திரராகிய இவர்களெல்லா ௰௧
ரும் தங்கள் பிதாவமிசத்துக் கதிபதிகளும்,பராக்கிரம வீரருமாயிருந்தார்கள்; இவர்களில் யுத்தத்துக்கேற்றவர்கள் பதினேழாயிரத்திருநூறுபேர்.—
ஷூப்பீமும், உப்பீமும், ஈரின்புத்திரர்: ஊஷிம் ௰௨
அகேரின்புத்திரன்.

பில்க்காளின் சந்ததியாராகிய நப்தாலியின்புத் ௰௩
திரர்; யாசியேல், கூனீ, யேத்சேர், ஷல்லூம்.

மனாசேயின் புத்திரர்; அஷ்ரியெல்: அவன் ௰௪
வைப்பாட்டியாகிய அரமியஸ்திரி கிலியாத்தின் பிதாவாகியமாகீரைப்பெற்றாள்.—உப்பீம்,ஷூப் ௰௫
பீம் என்பவர்களின் சகோதரியாகிய மாகாளை மாகீர் விவாகம்பண்ணினான்: மனாசேயின் இரண்டாம்புத்திரன் சிலாப்காத்: சிலாப்காத்புத்திரிகளைப்பெற்றான்.—மாகீரின் மனைவியாகியமா ௰௬
காள், ஒரு புத்திரனைப்பெற்று, அவனுக்குப்பேரேஷென்றுபெயரிட்டாள்; அவள் சகோதரனுடையபேர் ஷேரெஷ், இவன்புத்திரர் ஊலாம், ரேகெம்.-ஊலாமின்புத்திரன்; பிதான். இவர்கள் ௰௭
மனாசேயின் பௌத்திரனும், மாகீரின் புத்திரனுமாகிய கிலியாத்தின் புத்திரர்.—இவன் சகோதரி ௰௮
யாகிய அம்மோளெகேத், இஷோத், அபீயேஸர், மகலாயை என்பவர்களைப்பெற்றாள்.—ஷமிதா ௰௯
வின்புத்திரர்;அகியான்,ஷிகேம், லிகி,அனீயாம்.

எப்ராயீமின்புத்திரன்; ஷூதேலாகு,இவன்புத் உ௰
திரன் பேரேத், இவன்புத்திரன் தாகாத், இவன் புத்திரன் எல்லாதா, இவன்புத்திரன் தாகாத்,

இவன்புத்திரன் சாபாத், இவன்புத்திரர் ஷூதே உ௧
லாகு, எட்சர், எலியாத்:இவர்கள்தேசத்திற்பிறந்த காத்தூராருடையமிருகஜீவன்களை அபகரிக்கப் போனபடியால், அவர்கள் இவர்களைக்கொன்றுபோட்டார்கள்.-இவர்கள் பிதாவாகிய எப்ராயீம் உ௨
அநேகநாள்துக்கங்கொண்டாடுகையில்,அவன்சகோதரர் அவனுக்கு ஆறுதல்சொல்ல வந்தார்கள்.

(எ. அதி. உ.) உ.சாமு.உ௪.க,உ. (௰எ) க.சாமு.௰உ.௰க. (௰அ) எண்.உ௬.௩௰.

௨௩ அவன் தன் மனைவியிடத்தில் பிரவேசிக்க, அ
வள் கருப்பந்தரித்து ஒரு புத்திரனைப்பெற்றாள்,
அவன் தன்குடும்பத்தாருக்குத் தீமைநேரிட்டதி
னால் இவனுக்குப் பேரியாவென்று பேரிட்டா
௨௪ ன்.–இவன்புத்திரி ஷேராள், இவளே கீழ்ப்பே
தோரோனையும்மேல்ஊசென்ஷேராவையுங்கட்
௨௫ டினவள்.—அவன் புத்திரர் ரேபா, ரெஷெப்பு:
இவன் புத்திரன் தேலாக், இவன் புத்திரன் தா
௨௬ கான்,—இவன் புத்திரன் லாதான், இவன் புத்தி
௨௭ ரன் அம்மியூத், இவன்புத்திரன் இலீஷாமா,–இ
வன்புத்திரன் நோன், இவன்புத்திரன்யோசுவா.
௨௮ இவர்களுக்குப்பெத்தேலும் அதின் கிராமங்க
ளும், கீழ்த்திசையிலுள்ள நாரானும், மேற்றிசை
யிலுள்ள கேசெரும் அதினதின்கிராமங்களும்,
ஷிகேமும் அதின்கிராமங்களும், காசாவும் அ
௨௯ தின்கிராமங்களும்,—மனாசே வமிசத்தினெல்
லையிலுள்ள பேத்ஷியானும் அதின் கிராமங்க
ளும், தானாகும் அதின்கிராமங்களும், மெகிதோ
வும் அதின்கிராமங்களும், தோரும் அதின்கிரா
மங்களும், அவர்கள் சுதந்தரமும் வாசஸ்தானங்
களுமாயிருந்தன. இவ்விடங்களில் இஸரவே
லின் புத்திரனாகிய யோசேப்பின் வமிசத்தார் வா
சஞ்செய்தார்கள்.

௩௰ ஆஷேரின்புத்திரர்; இம்னா, இஷ்பா, இஷ்வி,
பேரீயா, இவர்கள் சகோதரியாகிய செராக்கும்.–
௩௧ பேரீயாவின்புத்திரர்;எபெர், மல்கியேல், இவன்
௩௨ பிரசாவீத்தின் பிதா.—எபெர், யப்லேத்தையும்,
ஷோமேரையும், ஒதாமையும், இவர்கள் சகோ
௩௩ தரியாகிய ஊவாவையும் பெற்றாள்.—யப்லேத்
தின் புத்திரர்; பாசாக், பிம்மால், அஷ்வாத்து. இ
௩௪ வர்கள் யப்லேத்தின் புத்திரர்.—ஷாமேரின் புத்
௩௫ திரர்; அகி, ரோகா, யெகுப்பா, அராம்.–அவன்
சகோதரனாகியஏலேமின்புத்திரர்;சோபாக், இம்
௩௬ னா, ஷேலேஷ், ஆமால்.–சோபாக்கின்புத்திரர்;
சூவா, அர்னெபெர், ஊவால், பெரீ, இம்ரா,—
௩௭ பெத்சேர், ஒத், ஷம்மா, ஷில்ஷா, ஈத்தரான்,
௩௮ பேரா.-எத்தெரின்புத்திரர்; யெபுன்னே,பிஸ்பா,
௩௯ அரா.—உல்லாவின் புத்திரர்; ஆரா, அனியேல்,
௪௰ ரீத்சியா.–ஆஷேரின் புத்திரராகிய இவர்களெல்
லாரும் தங்கள் பிதா வமிசத்துக் கதிபதிகளும்,
சிரேஷ்டபராக்கிரம வீரரும், அதிபதிகளுக்குள்
ளே பிரதானிகளுமாயிருந்தார்கள். வமிச வர
லாற்றின்படி இவர்களில் யுத்தத்துக்குத் தகுந்த
வர்கள் இருபத்தாறாயிரம்பேர்.

## ௮. அதிகாரம்.

௧. பேன்யாமீனின் பிரதான சந்ததியாரின் வமிச
வரலாறு: ௩௩. ஷவுல் யோனாதான் என்பவர்க
ளுடையவமிசவரலாறு.

பேன்யாமீன் பேலாவென்னும்சேஷ்டபுத்திர
னையும்,அஷ்பேலென்னும்இரண்டாம்புத்திரனை
யும், அகராக்கென்னும் மூன்றாம்புத்திரனையும்,–
௨ நோகாவென்னும் நாலாம்புத்திரனையும், ரப்பா
௩ வென்ற ஐந்தாம்புத்திரனையும் பெற்றான்.—பே
௪ லாவின் புத்திரர்; அட்டார், கேரா, அபியூத்.–அ
பீஷூவா, நாமான், அகோவா,—கேரா, ஷிபூ ௫
பான், ஊராமென்பவர்கள் ஏகூத்தின்புத்திரர்.–
இவர்கள் கேபாவின் பிதா வமிசத்ததிபதிகளாயி ௬
ருந்து, அவர்களைமானகாத்துக்கழைத்துக்கொண்
டுபோனவர்கள்: நாமான், அகியாவென்பவர்க
ளை புறப்படும்படிசெய்த கேரா,—ஊசாவையும், ௭
அகியூத்தையும் பெற்றான்.—அவர்களையனுப்பி ௮
விட்டபின், ஷகாராயிம் மோவாபு தேசத்திலே
பிள்ளைகளைப்பெற்றான்; ஊஷிம், பாராளென்ப
வர்கள் அவனுக்கு மனைவியர்.—தன்மனைவியா ௯
கிய ஒதெஷ்வழியாய் யோவாப்பையும், சிபீயா
வையும், மேஷாவையும், மல்காமையும்,—எயூ ௰
சையும், ஷாகியவையும், மிர்மாவையும் பெற்
றான். பிதாவமிசத்துக்கதிபதிகளாகிய இவர்கள்
அவன்புத்திரர்.—ஊஷிம்வழியாய் அவன் அபீ ௰௧
தூப்பையும், இல்பாலையும்பெற்றான்.—இல்பா ௰௨
லின் புத்திரர்; ஏபேர், மிஷாம், ஓனோவையும்,
லோதையும், அதின் கிராமங்களையுமுண்டாக்கி
னஷாமேத்.–பேரீயாவும், ஷிமாவும், அயாலோ ௰௩
ன்குடிகளின் பிதாக்களிலே தலைவராயிருந்தார்
கள்: இவர்கள் காத்தின்குடிகளைத் துரத்திவிட்
டார்கள்.—அகியோ, ஷாஷாக், யெரேமோத்,– ௰௪
சிபதியா,அராத், ஏதேர்,-மீகாயேல்,இஸ்பா, ௰௫ ௰௬
யோகா, பேரீயாவின்புத்திரர்;-சிபதியா, மிஷூல் ௰௭
லாம், இஸ்கி, ஏபெர்,—இஷ்மிராய், இஸ்லீயா, ௰௮
யோபாப்பென்பவர்கள் இல்பாலின் புத்திரர்;–
யாகீம், சிக்ரி, சப்தி,-இலீயேனாய், சில்தாய், ௰௯ ௨௰
ஈலியேல்,—அதாயா, பிராயா, ஷிம்றாத், ஷிமி ௨௧
கியின்புத்திரர்;–இஷ்பான், ஏபெர், ஈலியேல்,– ௨௨
அப்தோன்,சிக்ரி,ஆனான்,-அனனிய,ஏலாம்,௨௩ ௨௪
ஆன்தோத்தியா,—இபிதியா, பெனியேலென்ப ௨௫
வர்கள் ஷாஷாக்கின்புத்திரர்;-ஷம்ஷிராய்,ஷெ ௨௬
கரியா, அத்தாலியாள்,–யரெஷியா, இலியா சிக் ௨௭
ரியென்பவர்கள் எரோகாமின்புத்திரர்;—இவர் ௨௮
கள் தங்கள் வமிசவரலாற்றின்படி, பிதாவமிசத்
துக்கதிபதிகளும் பிரதானிகளுமாயிருந்தார்கள்.
இவர்கள் யெருஷலேமிலே வாசஞ் செய்தார்
கள்.—கிபியோனிலே குடியிருந்தவன் கிபியோ ௨௯
னின்பிதா; அவன் மனைவியின்பேர் மாகாள்;—
அவன் சேஷ்டபுத்திரன் அப்தோன், மற்றவர் ௩௰
கள் சூர், கீஷ், பாகால், நாதாபு,—கிதோர், அகி ௩௧
யோ, செகெர்.—மிக்லோத் ஷிமியாவைப்பெற் ௩௨
றான். இவர்களுந் தங்கள் சகோதரர் சமீபத்தில்
யெருஷலேமிலே வாசஞ்செய்தார்கள்.

நெர் கீசைப்பெற்றான், கீஷ் ஷவுலைப்பெற் ௩௩
றான், ஷவுல் யோனாதானையும், மல்கிஷூவாவை
யும், அபீனாதாப்பையும், எஷ்பாலையும் பெற்
றான்.—யோனாதானின் புத்திரன் மெரிப்பால்; ௩௪
மெரிப்பால் மீகாவைப் பெற்றான்.—மீகாவின் ௩௫
புத்திரர் பீத்தோன், மேலேக், தரேயா, ஆகாஸ்.–
ஆகாஸ் யோவதாவைப்பெற்றான்; யோவதா ஆ ௩௬
லெமெத்தையும், அஸ்மாவேத்தையும், சிம்றியை
யும்பெற்றான்; சிம்றி மோத்சாவைப்பெற்றான்,–
மோத்சா பினியவைப்பெற்றான்: இவன் புத்தி ௩௭

(௮. அதி. ௨௧.) வச.௰௩. (௩௩) ௧.சாமு.௰௪.௪௯,௫௧. ௨.சாமு.௨.௮. (௩௪) ௨.சாமு.௪.௪. ௨.சாமு.௯.௰௨.

ரன் ரப்பா, இவன் புத்திரன் எலீயாசர், இவன்
௩௮ புத்திரன் ஆத்சேல்:—ஆத்சேலுக்கு ஆறு புத்திரர்,
அவர்கள் நாமங்களாவன: அசரீக்காம், பொக்
றூ, இஷ்மாவேல், ஷீகரியா, ஒபதியா, ஆனான்.
௩௯ இவர்களெல்லாரும் ஆத்சேலின்புத்திரர்.—அவன்
சகோதரனாகியஈஷெக்கின்புத்திரர்; ஊலாமென்
னுஞ் சேஷ்டபுத்திரனும், எயூஷென்ற இரண்
டாம் புத்திரனும், இலீப்பேலேத்தென்ற மூன்
௪௰ றும் புத்திரனுமே.—ஊலாமின் புத்திரர் வில்வீர
ரும், பராக்கிரமசாலிகளுமாயிருந்தார்கள்; இவர்
களுக்கு அநேகபுத்திரர் பௌத்திரரிருந்தார்கள்:
அவர்கள் தொகை நூற்றைம்பது. இவர்களெல்
லாரும் பேன்யாமீனின்புத்திரர்.

## ௯. அதிகாரம்.

௧. வமிச வரலாற்றை எழுதியவிதம்: ௨. பாபேலி
லிருந்து திரும்பி வந்தவர்களுடைய விபரம்:
௰. ஆசாரியர்லேவியர் என்பவர்களின் விபரம்:
௨௭. லேவியரின் தொழில் விசேஷம்: ௩௫. ஷ
வுலின் விபரம்.

இவ்விதமாய் இஸ்ரவேலரெல்லாரும் தங்கள்
தங்கள் வமிச வரலாற்றின்படி தொகையிடப்
பட்டார்கள்; யூதா வமிசத்தார் தங்கள் அதிக்கிர
மத்தினிமித்தம் பாபேலுக்குக் கொண்டுபோகப்
பட்டார்கள்; இவர்கள் நாமங்கள் இஸ்ரவேல
ரின் இராசாக்களின்புத்தகத்திலெழுதப்பட்டன.
௨ இஸ்ரவேலரின்தேசத்தில் ஆசாரியரும்,லேவி
யரும், நிதீனியரும் முதன்முதல் தங்கள் சுதந்த
௩ ரங்களிலே வாசஞ்செய்தார்கள்.—யெரூஷலே
மில் குடியிருந்தவர்கள் யூதா சந்ததியாரிலும்,
பேன்யாமீன்சந்ததியாரிலும், எப்ராயீம்மனாஷே
௪ சந்ததியாரிலும்,—யூதாவின்புத்திரனாகியபேரேசி
ன்வமிசத்தில் பானீயின்புத்திரனாகிய இம்ரீயின்
புத்திரனான உம்றியின்பௌத்திரனும் அம்மியூத்
௫ தின் புத்திரனுமாகிய ஊதாயி.-ஷீலோனியரில்;
சேஷ்டபுத்திரனாகிய அசாயாவும், அவன்புத்திர
௬ ரும்,-சேராவின்வமிசத்தில்; எயூவேலும், அவன்
சகோதரராகிய அறுநூற்றுத் தொண்ணூறுபே
௭ ரும்.-பேன்யாமீன்வமிசத்தில்அசினுயவின்புத்தி
ரனாகிய ஓதாவியாவின் பௌத்திரனும், மிஷூல்
௮ லாமின் புத்திரனுமாகிய சல்லூ.—எரோகாமின்
புத்திரனாகிய இப்னிய, மிக்கிரியின் பௌத்திர
னும் ஊசியின் புத்திரனுமாகிய ஏலா, இப்னிய
வின்புத்திரனாகிய ரேகுவேலின் பௌத்திரனும்
ஷிபத்தியாவின்புத்திரனுமாகியமிஷூல்லாம்என்
௯ பவர்களும்,—தங்கள்தங்கள் வமிசப்படி இவர்கள்
சகோதரர் தொளாயிரத்து ஐம்பத்தாறுபேருமே.
இவர்கள் யாவருந் தங்கள் தங்கள் பிதாவமிசத்
துக்குப்பிரதானிகளா யிருந்தார்கள்.
௰ ஆசாரியர்களில்; யெதாயா, யோயாரிப், யா
௰௧ கின்,—தேவனுடைய ஆலயத்துக்கதிபதியாகிய
அகீதூப்பின் புத்திரனாகியமிராயோத்தின்புத்திர
னான சாதோக்கின் புத்திரனாகிய மிஷூல்லாமின்
பௌத்திரனும், இல்கியாவின் புத்திரனுமாகிய
அசரியா;—மல்கீயாவின் புத்திரனாகிய பஷ்கூ ௰௨
ரின்பௌத்திரனும், எரோகாமின் புத்திரனுமா
கிய அதாயா, இம்மேரின் புத்திரனாகிய மிஷில்
லேமீத்தின் புத்திரனான, மிஷூல்லாமின் புத்திர
னென்ற யாசேராவின் பௌத்திரனும், அதியே
லின் புத்திரனுமாகிய மாசாயி;—அவரவர் பிதா ௰௩
வமிசத்துக்கதிபதிகளாகிய அவர்கள் சகோதரர்
ஆயிரத்தெழுநூற் றறுபதுபேர்; இவர்கள் தேவ
னுடைய ஆலயத்திலுள்ளபணிவிடைசெய்வதற்
கு வல்லவராயிருந்தார்கள்.—லேவியரில் மிராரி ௰௪
யின் சந்ததியிலுள்ள அஷபியாவின் புத்திரனா
கிய, அசரீக்காமின் பௌத்திரனும், அஷூப்பின்
புத்திரனுமான ஷிமாயா;—பக்பக்கார், ஏரேஷ், ௰௫
காலால், ஆசாப்பின் புத்திரனாகிய சிக்ரியின்
பௌத்திரனும், மீகாவின் புத்திரனுமான மத்த
னியா;—யெதூதூனின் புத்திரனான காலாலின் ௰௬
பௌத்திரனும், ஷிமாயாவின் புத்திரனுமாகிய
ஒபதியா, நிதோபாத்தியரின் கிராமங்களிலே கு
டியிருந்த எல்க்கானாவின் பௌத்திரனும் ஆசா
வின் புத்திரனுமாகிய பெரிகாயா.—வாசற்காவ ௰௭
லாளராகிய ஷல்லூம், அக்கூப், தல்மோன், அ
கீமான், இவர்கள் சகோதரர். இவர்களிற் பிரதா
னி ஷல்லூம்;—லேவியின் புத்திரரின் கூட்டத் ௰௮
தாரைச்சேர்ந்த காவலாளராகிய இவர்கள், இரா
சாவின் கீழ்த்திசைவாசலைக் காத்துவந்தார்கள்.-
கோராவின்புத்திரனாகிய, எபியாசாப்பின் பௌ ௰௯
த்திரனும், கோரேயின்புத்திரனுமாகிய ஷல்லூம்,
அவன் பிதா வமிசத்தைச்சேர்ந்த அவன் சகோ
தரராகிய கோராகியரும், தங்கள் பிதாக்கள் யெ
கோவாவின் சேனைகளுக்கதிபதிகளாகி வா
சலைக் காத்துவந்தபிரகாரம் பணிவிடைசெய்வ
தற்கு அதிபதிகளாகி ஆவாசத்தின்வாசலைக் காத்
துவந்தார்கள்.—எலீயேசாரின் புத்திரனாகிய பீ ௨௰
னிகாஸ், பூருவகாலத்தில் அவர்களுக்கதிபதியா
யிருந்தான், யெகோவா அவனோடிருந்தார்.—
மிஷெலிமியாவின் புத்திரனாகிய சகரியா சபை ௨௧
யின் ஆவாசவாசலின் காவலனாயிருந்தான்.—
வாசல்களுக்குக் காவலாளராகத்தெரிந்து கொள் ௨௨
ளப்பட்டவர்கள் ஆக இருநூற்றுப்பன்னிரண்டு
பேர். இவர்கள் தங்கள் தங்கள் கிராமங்களின்ப
டிதங்கள் தங்கள் வமிசவரலாற்றிற்குறிக்கப்பட்
டார்கள், இவர்களைத்தாவீதும், தரிசியாகியசாமு
வேலும், அவரவருக்குநியமிக்கப்பட்ட வேலை
யில் ஏற்படுத்தினார்கள்.—இவர்களும், இவர்கள் ௨௩
சந்ததியாரும், ஆவாசஸ்தலமாகிய யெகோவா
வின் ஆலயத்தின் வாசல்களை முறைமுறையாய்
விசாரித்துவந்தார்கள்.—கிழக்கு, மேற்கு, வடக் ௨௪
கு, தெற்கு என்னும் நான்குதிசைகளிலும் வா
சற்காவலாளரிருந்தார்கள்.—லேவியராகிய பிரதா ௨௫
னவாசற்காவலாளர் நாலுபேரும் தங்களுக்குநி
யமிக்கப்பட்ட வேலையைச்செய்து, தேவனு
டைய ஆலயத்தின் அறைகளுக்கும் பொக்கிஷ
சாலைகளுக்கும் அதிபதிகளாயிருந்தார்கள்.—அதி ௨௬

(௯. அதி. ௧.) எஸ்றா.௨.௫௯. (௨) எஸ்றா.௨.௭௰. நிகி.௭.௭௩. யோசு.௯.௨௭. எஸ்றா.௨.௪௩. (௩) நிகி.௰௧.௧. (௰) நிகி.௰௧.௰. (௰௧) நிகி.௰௧.௰௧. (௨௰) நிகி.௩௧.௯. (௨௨) அதி.௨௬.௧,௨. ௧.சாமு.௯.௰. (௨௬) ௨.இரா.௰௧.௫.

னால் தங்கள் தங்கள் கிராமங்களிலேயிருந்த அ
வர்கள்சகோதரர், முறைக்குமுறை கிழமைதோ
றும் இவர்களுக்குப்பிரதியாக வருவார்கள்.
௨௭ அவர்களுக்குக்காவல்காக்கும் வேலை யொப்
புவிக்கப்பட்டிருந்தபடியினால், தேவனுடைய
ஆலயத்தைச்சூழப்படுத்திருந்து, காலைதோறும் க
௨௮ தவுகளைத்திறந்து விடுவார்கள்.-அவர்களிற் சிலர்
தேவ ஆராதனைக்கேற்ற பாத்திரங்களைக் காத்து
வைத்துத்தொகையின்படி அவைகளை உள்ளே
கொண்டுவரவும், வெளியேகொண்டுபோகவும்,
௨௯ நியமிக்கப்பட்டார்கள்.-அவர்களிற் சிலர் பாத்
திரங்களையும், பரிசுத்த ஸ்தானத்திலுள்ள சகல
பாத்திரங்களையும், மெல்லிய மாவையும், திராட்
சரசத்தையும், எண்ணெயையும், குந்துருவையும்,
சுகந்த வருக்கங்களையுங் காக்கும்படி நியமிக்கப்
௩௰ பட்டார்கள்.-ஆசாரியரின் புத்திரரிற் சிலர் சுகந்
ததிரவியத்தினால் தைலத்தை யுண்டுபண்ணுவார்
௩௧ கள்.—கோராகியனான ஷல்லூமின் சேஷ்டபுத்
திரனும், லேவியரிலொருவனுமாகிய மத்திதீயா,
சட்டிகளில் ஆயத்தப்படுத்தப்படும் பதார்த்தங்க
௩௨ ளை விசாரித்துவந்தான்.—கோகாத்திய வமிசத்
தாரின் மற்றச்சகோதரரிற் சிலர், ஓய்வு நாட்கள்
தோறும் சமுகத்தப்பங்களை ஆயத்தப்படுத்த நிய
௩௩ மிக்கப்பட்டார்கள்.—லேவியரின் பிதா வமிசத்
ததிபதிகளாகிய பாடகர், தங்கள் தொழிலை இ
ராப்பகல் நடத்தவேண்டியிருந்தபடியால், மற்ற
௩௪ வேலைகளை நீங்கி அறைகளிலிருந்தார்கள்.—இ
வர்கள் லேவியரின் பிதா வமிசத்துக்குள் பிரதா
னிகளாய்த் தலைமுறைதோறும் யெருஷலேமில்
வாசம்பண்ணினார்கள்.
௩௫ கிபியோனின் பிதாவாகிய யிகியேல் கிபி
யோனில் வாசம்பண்ணினான், அவன் மனைவி
௩௬ யின்பேர் மாகாள்:-அவன் சேஷ்டபுத்திரன் அப்
தோன், பின்பு சூர், கீஷ், பாகால், நெர், நாதாபு,—
௩௭ கிதோர், அகியோ, சகரியா, மிக்லோத்.—
௩௮ மிக்லோத், ஷிமியாமைப்பெற்றான். இவர்கள்யெ
ருஷலேமிலே தங்கள் சகோதரர் சமீபத்தில் தங்
௩௯ கள்சகோதரருடன்வாசம்பண்ணினார்கள்.-நெர்,
கீஷைப்பெற்றான்; கீஷ், ஷவுலைப்பெற்றான்; ஷ
வுல், யோனாதானையும், மல்கிஷூவாவையும், அபீ
௪௰ னாதாப்பையும், எஷ்பாலையும் பெற்றான்.-யோ
னாதானின் புத்திரன் மெரிப்பால்: மெரிப்பால்,
௪௧ மீகாவைப்பெற்றான்.—மீகாவின் புத்திரர் பீத்
௪௨ தோன், மேலேக், தரேயா, ஆகாஸ்.—ஆகாஸ்,
யாராவைப்பெற்றான்; யாரா ஆலெமெத்தையும்,
அஸ்மாவேத்தையும், சிம்றியையும் பெற்றான்;
௪௩ சிம்றி, மோத்சாவைப்பெற்றான்;—மோத்சா, பி
னியவைப்பெற்றான்; இவன்புத்திரன் ரெபாயா,
இவன்புத்திரன் எலீயாசா, இவன்புத்திரன் ஆத்
௪௪ சேல்.—ஆத்சேல் ஆறுபுத்திரரைப் பெற்றான்;
அவர்கள் பேர் அசரீக்காம், பொக்றூ, இஷ்மா
வேல், ஷீகரியா, ஒபதியா, ஆனான், இவர்கள்
ஆத்சேலின்புத்திரர்.

## ௰. அதிகாரம்.

௧. ஷவுல் தோல்வியடைதல்: ௮. பெலிஸ்தியர் செயம்பெறல்: ௰௧. யாபேஸ்கிலியேத் மனுஷர் தயையைக்காட்டல்: ௰௩. ஷவுல் பாவத்தினிமித்தம் தன் இராச்சியத்தை யிழத்தல்.

பெலிஸ்தியர் இஸரவேலரோடே யுத்தம்பண் ௧
ணினபொழுது, இஸரவேல்சனங்கள் பெலிஸ்தி
யர்முன்னின்றுந்தப்பி ஓடி, கில்போவா மலையி
லேகொலையுண்டு விழுந்தார்கள்.—பெலிஸ்தியர் ௨
ஷவுலையும், அவன்புத்திரரையுந் தொடர்ந்துநெ
ருங்கினார்கள்; பெலிஸ்தியர் ஷவுலின்புத்திரரா
கிய யோனாதானையும், அபீனாதாப்பையும், மல்
கிஷூவாவையுங் கொன்றுபோட்டார்கள்.-ஷவு ௩
லுக்குவிரோதமாய்யுத்தம் அதிகரித்தது, வில்வீரர்
அவனைக் கண்டுபிடித்தார்கள், அவன் வில்வீர
ரால் காயப்பட்டான்.—அதினால் ஷவுல் தன்னா ௪
யுததாரியைநோக்கி, விருத்தசேதனமில்லாத இ
வர்கள்வந்து என்னை அவமானம்பண்ணாதபடிக்
கு, நீயே உன்கட்கத்தையுருவி, அதினால் என்
னை யுருவிக்குத்தென்றான். ஆயுததாரி மிகவும்
பயந்ததினால், அவன் ஒரு கட்கத்தை எடுத்து, அ
தின்மேல்விழுந்தான்.-ஷவுல்மரணமடைந்ததை ௫
அவன் ஆயுததாரி கண்டபொழுது, தானுங்கட்
கத்தின்மேல்விழுந்து இறந்துவிட்டான்.-இவ்வி ௬
தமாய்ஷவுலும், அவன்புத்திரர்மூவரும், அவர்கு
டும்பத்தாரெல்லாரோடும் இறந்துபோனார்கள்.—
தாழ்ந்த பூமியிலுள்ள இஸரவேல் சனங்களெல் ௭
லாரும், அவர்கள் தப்பி ஓடினதையும், ஷவுலும்
அவன் புத்திரருமிறந்துபோனதையும் கண்ட
பொழுது, தங்கள் பட்டணங்களைவிட்டோடிப்
போனார்கள்: பெலிஸ்தியர் வந்து அவைகளில்
வாசம்பண்ணினார்கள்.
மற்றநாள் பெலிஸ்தியர் கொலையுண்டவர்க ௮
ளின் வஸ்திரமுதலானவைகளை உரியவந்தபொ
ழுது, ஷவுலும்அவன்புத்திரரும்கில்போவாமலை
யில் விழுந்துகிடக்கக்கண்டார்கள்.-அவன்தலை ௯
யைவெட்டி, அவன் ஆயுதங்களையுமெடுத்துக்
கொண்டு, தங்கள்விக்கிரகங்களுக்குஞ் சனங்க
ளுக்கும்பிரசித்தப்படுத்தும்பொருட்டு, பெலிஸ்
தியர்தேசத்தின் நான்குதிசைகளிலுஞ்செய்தி அ
னுப்பினார்கள்.-அவன் ஆயுதங்களைத்தங்கள் தே ௰
வனுடைய ஆலயத்திலே வைத்தார்கள், அவன்
தலையைத் தாகோன்தேவனுடைய ஆலயத்திலே
தூக்கிவிட்டார்கள்.
பெலிஸ்தியர் ஷவுலுக்குச்செய்ததை, யாபே ௰௧
ஷ் கிலியாத்தூரார்யாவருங் கேள்விப்பட்டபொ
ழுது,—பராக்கிரமசாலிகளெல்லாரும் எழுந்து ௰௨
போய், ஷவுலின் உடலையும் அவன் புத்திரரின்
உடல்களையும் எடுத்து, யாபேஷூக்குக்கொண்டு
வந்து, அவர்கள் எலும்புகளை யாபேஷிலுள்ள
அல்லோன் விருட்சத்தடியிற் புதைத்துவிட்டு, எ
ழுநாள் உபவாசஞ்செய்தார்கள்.
ஷவுல் யெகோவாவுக்கு விரோதமாய்ச் ௰௩

(௩௰) யாத்.௩௰.௨௩. (௩௧) லேவி.௨.௫. (௩௨) லேவி.௨௪.௮. (௩௩) அதி.௬.௩௧.—(௰. அதி. ௧.) ௧.சாமு.௩௧.௧,௨.
(௨) ௧.சாமு.௰௪.௪௯. (௰) ௧.சாமு.௩௧.௰. (௰௩) ௧.சாமு.௰௩.௰௩. ௧.சாமு.௨௮.௭.

செய்த அதிக்கிரமத்தினிமித்தமும், யெகோ
வாவின் வாக்கைப்பேணி நடவாததினிமித்த
மும், காரியத்தை அறியும்படி யெகோவாவி
டத்தில்கேளாமல்பேய்வித்தைக்காரியிடத்தில்ஆ
லோசனை கேட்டதினிமித்தமும், மரணமடைந்
௰௪ தான்.—இவ்விதமாய் அவரிவனைக்கொன்று, இ
வன் இராச்சியத்தை ஈஷாயின் புத்திரனாகிய தா
வீதுக்குக்கொடுத்துவிட்டார்.

## ௰௧. அதிகாரம்.

௧. எப்ரோனில் தாவீது ராசாபிஷேகம் பெறல்: ௪. யெரூஷலேமைப்பிடித்தல்: ௰. தாவீதின் பராக்கிரமசாலிகளின் விபரம்.

பின்பு இஸரவேலர் எல்லாரும் எப்ரோனிலே
தாவீதினிடத்தில்கூடிவந்து, கேளும், நாங்கள் உ
மது எலும்பும், உமதுமாமிசமுமாயிருக்கிறோம்.-
௨ சிலநாளுக்குமுன் ஷவுல் இராசாவாயிருந்தபொ
ழுதும், இஸரவேலரைப் போக்குவரவுசெய்யும்
படி நடத்தினவர் நீரே: உமது தேவனாகிய
யெகோவா உம்மைநோக்கி, நீ என் சனங்க
ளாகிய இஸரவேலரைப் பரிபாலனம்பண்ணு
வாய், என் சனங்களாகிய இஸரவேலருக்கு அ
திபதி யாவாயென்று சொல்லியிருக்கிறாரே.—
௩ இவ்விதமாய் இஸரவேலரின் முதியோர் யாவ
ரும்எப்ரோனுக்கு இராசாவிடத்தில்வந்தார்கள்;
தாவீது எப்ரோனிலே யெகோவாவின் சமு
கத்தில் அவர்களோடும் உடன்படிக்கை செய்
தான்; யெகோவா சாமுவேலைக்கொண்டு
சொல்லிய வாக்கின்படி, அவர்கள் தாவீதை இ
ஸரவேலருக்கு இராசாவாக அபிஷேகம் பண்
ணினார்கள்.
௪ தாவீதும், இஸரவேலரனைவரும், யேபூசென்
னும் யெரூஷலேமுக்குப் போனார்கள்; அத்தே
௫ சத்தில் எபூசியர் வாசம்பண்ணினார்கள்.-யேபூஸ்
குடிகள் தாவீதைநோக்கி, நீ இங்கே வரலாகா
தென்றார்கள். ஆனாலுந் தாவீதுசீயோன்துருக்கத்
௬ தைப்பிடித்தான், அது தாவீதின் நகரம்.—தாவீது,
முதல் முதல் எபூசியரை முறிய அடிக்கிறவனெ
வனோ, அவன் என் பிரதான சேனாபதியாவான்
என்றான். சேருயாவின் புத்திரனாகிய யோவாப்
முதல் ஏறிப்போனபடியால், பிரதான சேனாப
௭ தியானான்.—தாவீது அந்தக்கோட்டையில்வாசம்
பண்ணினான்; அதினால் அதற்குத் தாவீதின்நகர
௮ மென்று பெயரிட்டார்கள்.—அவன் மில்லோ
தொடங்கிச்சுற்றிலும் நகரத்தைக்கட்டுவித்தான்:
யோவாப் நகரத்தின் மற்றஸ்தானங்களைப் புதுப்
௯ பித்தான்.—தாவீது வரவரவிருத்தியடைந்து பெ
ரியவனானான்: சேனாபதியாகிய யெகோவா
அவனோடிருந்தார்.
௰ இஸரவேலரைக்குறித்து யெகோவாசொல்
லிய வாக்கின்படி தாவீதை இராசாவாக்கும்பொ
ருட்டு, இஸரவேலரெல்லாரோடும் அவனுடைய
இராச்சியத்தில் அவனைத்திடப்படுத்தி அவனி
டத்திலிருந்தபராக்கிரமசாலிகளிற்சிறந்தவர்களி
வர்களே,—பிரதான சேனாபதியும்,அக்மோனிய ௰௧
னுமாகிய யாஷொபியாம், இவன் தன் ஈட்டியை
ஓங்கி ஒருமுறை முந்நூறு சனங்களைக்கொன்று
போட்டான்.—இவனுக்குப்பின் பராக்கிரமசா ௰௨
லிகள் மூவரிலொருவனும், அகோயியனாகிய
தோதோவின் புத்திரனுமாகிய எலீயேசார்.—இ ௰௩
வன் பெலிஸ்தியர் யுத்தஞ்செய்யும்படி பஸ்தம்
மீமிலிருந்த வாற்கோதுமை நிறைந்த வயல் நிலத்
தில் கூடி வருகிறபொழுதும், பெலிஸ்தியருக்கு
முன்னின்றுஞ் சனங்கள் தப்பி ஓடுகிறபொழுது
ம்,தாவீதுடன் அங்கேயிருந்தான்.-இவர்கள் அந்நி ௰௪
லத்தின் மத்தியில் நின்று, அதைவிடுவித்துப்பெ
லிஸ்தியரைக்கொன்றார்கள்; யெகோவா அ
வர்களை மகா இரட்சிப்பாக இரட்சித்தார்.
முப்பது பிரதானிகளுக்குள் மூன்று பேர், ௰௫
அதுல்லாம்கெபியிலிருந்ததாவீதினிடத்தில் கன்
மலைக்குப் போனார்கள்; பெலிஸ்திய சேனைகள்
ரெபாயீமென்னுந் தாழ்ந்த பூமியிலே பாளயமி
றங்கினார்கள்.—அப்பொழுதுதாவீது அரணனஸ் ௰௬
தானத்திலிருந்தான். பெலிஸ்தியரின்தாணையம்
பேத்லகேமிலிருந்தது.—தாவீதுதாகங்கொண்டு, ௰௭
பேத்லகேமின் வாசலருகான கிணற்றினின்று
கொஞ்சத் தண்ணீர்குடிக்கக்கொண்டுவரக் கூடி
யவன் யாவனென்று சொல்ல,—அம்மூவரும் ௰௮
பெலிஸ்தியரின் பாளயத்துக்குட்புகுந்துபோய்,
பேத்லகேமின் வாசலுக்கருகான கிணற்றிலே
தண்ணீர்மொண்டு தாவீதினிடத்தில் கொண்டு
வந்தார்கள்: தாவீது அதைப்பானம் பண்ணவில்
லை.-நான் இந்தக்காரியத்தைச்செய்யாமல்என்தே ௰௯
வன் என்னைத்தடைப்படுத்துவாராக: தங்கள் பி
ராணனைப்பேணாமல் போய்வந்த இவர்கள் இரத்
தத்தைக்குடிப்பேனாஎன்றுசொல்லி, அதைப்பா
னம்பண்ணாமல் யெகோவாவுக்கென்று ஊற்
றிப்போட்டான். இந்த மூன்று பராக்கிரமசாலி
கள் இக்காரியங்களைச் செய்தார்கள்.
அபீஷாய்யோவாப்பின்சகோதரன்,இவன்மூ ௨௰
வரிலும் பிரதானி: இவன் தன் ஈட்டியை ஓங்கி
முந்நூறுபேரைமடங்கடித்ததினால்,மூவருக்குள்
ளும் பேர்பெற்றவனானான்.—மூவருக்குள்ளும் ௨௧
இவன் மற்ற இருவரிலும் அதிகமேன்மையுள்ள
வன்;ஆதலால்இவன்அவர்களுக்கதிபதியானான்:
ஆனாலும் முந்தின மூவருக்குஞ் சமானமானவ
னல்ல.—கப்செயேலிலுள்ள ஒரு பராக்கிரமசா ௨௨
லியின் புத்திரனாகிய யோயதாவின் புத்திரனான
பினாயா மகா கிரியைகளைச்செய்தான்; இவன்
சிங்கம்போன்ற மோவாபியர் இருவரைக்கொன்
றதுமன்றி, உறைந்தமழை பெய்ததினத்தில் ஒரு
கெபிக்குள்ளேபோய் ஒருசிங்கத்தையுங் கொன்
றான்.—இவன் ஐந்துமுழஉயரமுள்ளஒரு எகிப்தி ௨௩
யனைக்கொன்றான், நெய்கிறவனுடையபடைம
ரத்தைப்போன்ற ஈட்டி எகிப்தியன்கையிலிருந்

(௰௪) ௧.சாமு.௰௫.௨௮. ௨.சாமு.௩.௯,௰.—(௰௧. அதி. ௧.) ௨.சாமு.௫.௧. (௨) சங்.௭௮.௭௧. (௩) ௨.சாமு.௫.௩. ௧.சாமு.௰௬.௧,௰௨,௰௩. (௪) ௨.சாமு.௫.௬.நியா.௧.௨௧.(௭)௨.சாமு.௫.௭.(௰)௨.சாமு.௨௩.௮. ௧.சாமு.௰௬.௧.(௰௩) ௧.சாமு.௰௭.௧. (௰௫) ௨.சாமு.௨௩.௰௩. (௨௰) ௨.சாமு.௨௩.௰௮,. (௨௧) ௨.சாமு.௨௩.௰௯,.(௨௨)௨.சாமு.௨௩.௨௰.

தது; இவன் ஒருதடியைப்பிடித்துக்கொண்டு,அ
வனிடத்திலிறங்கிப்போய், எகிப்தியன்கையிலி
ருந்தஈட்டியைப்பறித்து, அவனைஅவன்ஈட்டியி
௨௪ னாலேகொன்றுபோட்டான்.–யோயதாவின் புத்
திரனாகிய பெனாயா இக்காரியங்களைச்செய்து, ப
ராக்கிரமசாலிகள்மூவருக்குள்ளும்பேர்பெற்றவ
௨௫ னானான்.–இவன் முப்பதுபேருக்குள்ளும் மேன்
மைபெற்றான்,ஆனாலும் முந்தின மூவருக்குஞ்ச
மானமானவனல்ல: தாவீதுதன்மெய்க்காவற்கார
ருக்கு இவனைஅதிபதியாக ஏற்படுத்தினான்.
௨௬ யோவாப்பின்சகோதரனாகியஅசாகேல்,பேத்
லகேமூரானாகிய தோதோவின்புத்திரனாகிய எல்
௨௭ கானான்,–ஆரோரியனாகிய ஷம்மோத், பெலேர்
௨௮ னியனாகிய ஏலெத்ஸ்,—தெக்கோயனான இக்
கேஷின் புத்திரனான ஈரா, அன்தோத்தியனாகிய
௨௯ அபீயேசர்,—ஊஷாத்தியனாகிய சிபெக்காய், அ
௩௰ கோயியனாகிய ஈலாய்,–நிதோபாத்தியனாகிய மக
ராயி, நிதோபாத்தியனாகிய பானாவின் புத்திரனா
௩௧ னஏலேத்,-பேன்யாமீன்வமிசத்தைச்சேர்ந்தகிபி
யாவூரானாகியரீபாயின்புத்திரனானஇதியா, பிரத்
௩௨ தோனியனாகியபெனாயா.-காகாஷென்னும் நீரோ
௩௩ டைக்குச்சமீபத்திலுள்ள ஊராய்,–அர்பத்தியனா
கிய அபீயேல், பகரூமியனாகியஅஸ்மாவேத், ஷ
௩௪ கல்போனியனாகிய இலியபா,-கிசோனியனாகிய
ஆஷேமின்புத்திரர்,அராரீயனானஷாகியின்புத்தி
௩௫ ரனாகியயோனாதான்,—அராரீயனான சாக்காரின்
புத்திரனாகியஅகியாம், ஊரின் புத்திரனாகியஇலீ
௩௬ பால்.-மிகேராத்தியனாகிய ஏபெர், பெலோனிய
௩௭ னாகியஅகியா,–கர்மேலியனாகிய எத்சரோ, எஸ்
௩௮ பாயின்புத்திரனாகிய நாராயி,-நாதானின்சகோத
ரனாகியயோவேல்,அகரீயனின்புத்திரனாகியமிப்
௩௯ கார்,—அம்மோனியனாகிய செலெக், சேருயா
வின்புத்திரனாகிய யோவாப்பின் ஆயுததாரியும்
௪௰ பெரோத்தியனுமாகிய நகராய்,—இத்ரியனாகிய
௪௧ ஈரா இத்ரியனாகிய காரேப்,—ஏத்தியனாகியஊரி
௪௨ யா, அக்லாயின் புத்திரனாகிய சாபாத்,—ரூபே
னிய சேனாபதியும், ரூபேனியனான ஷீசாவின்
புத்திரனுமாகிய ஆதீனா, இவனோடேகூடிய முப்
௪௩ பதுபேர்,–மாகாவின் புத்திரனாகிய ஆனான், மித்
௪௪ னியனாகிய யோஷாபாத்,—அஸ்திராத்தியனாகி
ய உசீயா, அரோகேரியனாகிய ஓதானின்புத்திரர்
௪௫ ஷாமா, யிகியேல்,–ஷிம்ரீயின்புத்திரனாகிய யெ
தீயேல், அவன் சகோதரனும் தித்சியனுமாகிய
௪௬ யோகா,—மகவீயனாகிய ஈலியேல், எல்னாமின்
புத்திரராகிய எரீபாய், யோஷவ்யா, மோவாபிய
௪௭ னாகிய இத்மா,—ஈலியேல், ஓபெத், மிசோபா
கியனாகிய யாசியேல் என்னும் இவர்கள் வீரரா
யிருந்தார்கள்: தாவீதிடத்திலிருந்த பராக்கிரமவீ
ரரின் தொகை இதுவே.

## ௰௨. அதிகாரம்.

௧. சிக்லாக்கிலே தாவீதினிடத்திற்சேர்ந்த கூட்டத்தார்:௨௩.எப்ரோனிலே அவனிடத்தில்வந்தசேனைகள்.

தாவீது, கீஷின் புத்திரனாகிய ஷவுலின் நிமித் ௧
தம்மறைந்திருந்த காலத்தில்,பேன்யாமீன் கோத்
திரத்தாராகிய ஷவுலின் சகோதரர்களில் வில்வீ
ரரும்,—கவண் எறிவதற்கும், வில்லினின்றும் ௨
அம்பெய்வதற்கும், வலக்கை இடக்கை இரண்
டும் வழங்குகிறவர்களுமாகிய யுத்தத்துக்குதவி
செய்யும் பராக்கிரம சாலிகள் சிக்லாக்கிலே தா
வீதிடத்தில்வந்தார்கள.-இவர்களிற் பிரதானிகள் ௩
கிபியாத்தியனாகிய ஷிமாயாவின்புத்திரனாகிய அ
கியேசெர்;யோவாஷ்,அஸ்மாவேத்தின்புத்திரரா
கிய இசியேல்; பேலேத், பிராகா, அன்தோத்திய
னாகியயெகூ,-முப்பதுபேருக்குள் பராக்கிரமசா ௪
லியும், முப்பதுபேருக்கு அதிபதியும், கிபியோ
னியனுமாகிய இஸ்மாயா, எரேமியா, யாகசி
யேல், யோகானான், கெதேராத்தியனாகிய யோச
பாத்,–இலூசாய்,எரேமோத்,பிகல்யா,ஷிமரியா, ௫
அரூபியனாகியஷிபத்தியா,-கோர்கியராகியஎல்க் ௬
கானா, யேசியா, அசரேல், யோவேசர், யாஷொபி
யாம்,-கெதோரிலுள்ள எரோகாமின் புத்திரர்யோ ௭
வேலா, செபதியா.—காத்தியருக்குள் யுத்தத்துக்கு ௮
யோக்கியராகிய யுத்தவீரரும், பராக்கிரமசாலிக
ளும்,கேடகத்திலும் ஈட்டியிலும்கைப்பரிட்சை
யுள்ளவர்களும், சிங்கமுகம்போன்ற முகமும்,
மலைகளின்மேலுள்ளமான்போலும்வேகமுமுள்
ளவர்களாகிய சிலர், வனாந்தரத்திலுள்ளதுருக்கத்
திலிருந்த தாவீதிடத்தில்சேர்ந்தார்கள்.–முதலாம் ௯
ஆள் எட்சர், இரண்டாம்ஆள் ஒபதியா,மூன்றாம்
ஆள் இலியாப்,—நாலாம்ஆள் மிஷ்மன்னா, ஐந் ௰
தாம்ஆள்எரேமியா,—ஆறாம்ஆள் அத்தாயி,ஏழாம் ௰௧
ஆள்ஈலியேல்,—எட்டாம்ஆள்யோகானான்,ஒன் ௰௨
பதாம்ஆள் இல்சாபாத்,—பத்தாம்ஆள்எரேமியா, ௰௩
பதினோராம்ஆள்மக்பன்னாயி.—காத்சந்ததியாரா ௰௪
கியஇவர்கள்சேனாபதிகள்:இவர்களிற்சிறியவன்
நூறுபேருக்கு அதிபதி, பெரியவன் ஆயிரவருக்
கு அதிபதி.–இவர்கள் யோர்தான்நதி தன்கரைக ௰௫
ளின்மேலெல்லாம்புரண்டுபாய்கிறபொழுது,மு
தன்மாதத்தில் அதைக்கடந்துபோய்த்தாழ்ந்தபூமி
யிலே கீழ்த்திசையிலும் மேற்றிசையிலுமுள்ள
யாவரையுந்துரத்திவிட்டார்கள்.—பேன்யாமீன ௰௬
ரும் யூதாசந்ததியாருமானவர்களிற்சிலர்துருக்கத்
திலே தாவீதிடத்தில்வந்தார்கள்.—தாவீது அவர் ௰௭
களைஎதிர்கொண்டுபோய் அவர்களைநோக்கி, நீங்
கள் எனக்குதவிசெய்யும்படி சமாதானமாய்வந்
தீர்களேயாகில் என்மனம் உங்களோடிசைந்தி
ருக்கும். என் கையில்ஏதாகிலும்கொடுமையில்
லாதிருக்க நீங்கள் என்னை என்சத்துருக்களுக்கு
ஒப்பிக்க வந்தீர்களேயாகில், நம்முடையபிதாக்
களின் தேவன் அதைப்பார்த்துக்கண்டிப்பா
ராக என்றான்.—அப்பொழுது பிரதான சேனாப ௰௮
தியாகிய அமாசாயின்மேல் ஆவிவர, அவன், தா
வீதே,நாங்கள்உம்மோடிருக்கிறோம்,வாழ்க,வா
ழ்க, உமக்கு உதவிசெய்கிறவர்களுங் கூடவாழ்
க. உமது தேவன் உமக்குத்துணைநிற்கிறாரென்

(௨௬)௨.சாமு.௨௩.௨௪. (௨௭) ௨.சாமு.௨௩.௨௫,௨௬. (௩௪) ௨.சாமு.௨௩.௩௨,௩௩.—(௰௨. அதி. ௨.) ௧.சாமு.௨௭.
௨,௬. நியா.௨௰.௰௬. (௮) ௨.சாமு.௨.௰௮. (௰௫) யோசு.௩.௰௫. (௰௮) நியா.௬.௩௪. ௨.சாமு.௰௭.௨௫.

ரன். அப்பொழுது தாவீது அவர்களை அங்கி
கரித்துக்கொண்டு அவர்களைத் தளபதிகளாக்கி
௰௯ ஞன்.—ஷவுலை எதிர்த்துயுத்தஞ்செய்யப்பெலிஸ்
தியருடன் தாவீதுபுறப்பட்டபொழுது மனாஷே
யிலுள்ளசிலர்அவனிடத்தில்வந்தார்கள்:பெலிஸ்
தியரின் அதிபதிகள் ஆலோசனைசெய்து இவன்
எங்கள்தலைகளிஞலே தன் ஆண்டவஞகிய ஷவு
லுடன் சந்திசெய்வானென்றுசொல்லி அவனைய
னுப்பிவிட்டார்கள். அதிஞல் அவர்கள் இவர்க
௨௰ ளுக்கு உதவிசெய்யவில்லை.-அவன் சிக்லாக்குக்
குப்போனபொழுது ஆயிரவருக்கதிபதிகளாகிய
அத்ஞ,யோசாபாத், யெதீயேல், மீகாயேல், யோ
சாபாத், இலியூ,சில்தாய்என்பவர்கள் மனாஷேயி
௨௧ லிருந்து அவனிடத்தில்வந்தார்கள்.—இவர்கள்
மகாவீரரும்சேனபதிகளுமாயிருந்தபடியால்,தா
வீது துஷ்டரின்தளத்தைஎதிர்த்தபொழுது அவ
௨௨ னுக்குதவிசெய்தார்கள்.—அக்காலத்தில் தாவீதுக்
கு உதவிசெய்யும்படி சேனைகள் நாளுக்குநாள்
அவனிடத்தில்சேர, அவர்கள் தேவசேனையைப்
போல மகாசேனையாஞர்கள்.

௨௩ கேடகமும் ஈட்டியுந்தரித்து யுத்தசன்னத்த
ராய்வந்த யூதாவமிசத்தார் ஆருயிரத்தெண்ணூறு
௨௪ பேர்.—ஷிமியோன்வமிசத்தில் பராக்கிரமசாலிக
௨௫ ளாகிய யுத்தவீரர் ஏழாயிரத்தொருநூறுபேர்.—லே
௨௬ விவமிசத்தில் நாலாயிரத்தறுநூறுபேர்.—ஆரோன்
வமிசத்தாருக்கு அதிபதி யோயதா, அவனுடன்
௨௭ மூவாயிரத்தெழுநூறுபேரும்,-பராக்கிரமவீரனும்
வாலிபனுமாகிய சாதோக்கும்,அவன் பிதாவமிச
த்தில் இருபத்திரண்டு சேனபதிகளுமிருந்தார்க
௨௮ ள்.-பேன்யாமீன்வமிசத்தில்ஷவுலின் இனத்தார்
மூவாயிரம்பேர்:அதுவரைக்கும் இவர்களில்மிகு
தியானவர்கள் ஷவுலின்பட்சத்தாராயிருந்தார்க
௨௯ ள்.-எப்ராயீமின்வமிசத்தில்தங்கள்தங்கள்பிதாவ
மிசத்திலேபேர்பெற்ற பராக்கிரமவீரர் இருபதி
௩௰ ஞயிரத்தெண்ணூறுபேர்.—மனாஷேயின் பாதிக்
கோத்திரத்தில்பதினெண்ணுயிரம்பேர்,இவர்கள்
தாவீதை இராசாவாக ஏற்படுத்தும்பொருட்டுத்
தங்கள் தங்கள் நாமத்தின்படிகுறிக்கப்பட்டவர்
௩௧ களாயிருந்தார்கள்.—ஈஷகாரின் வமிசத்தில் இரு
நூறுபிரதானிகள்; இவர்கள்ஞானிகளும்விவேகி
களுமாய்விசேஷசமயங்களில் இஸரவேலர்இன்
னது செய்யவேண்டுமென்று அறிந்தவர்களாயி
ருந்தார்கள்.அவர்கள்சகோதரர்யாவரும்அவர்கள்
௩௨ கட்டளைக் கமைந்திருந்தார்கள்.-செபுலோனின்
வமிசத்தில் யுத்தத்திறகுப் புறபபடுகிறவர்களும்
அணிவகுக்கத்தக்க நிபுணரும்யுத்தத்தின் ஆயுதங்
களைத்தரித்தவரும் ஐம்பதிஞயிரம்பேர்:இவர்கள்
௩௩ இருமனப்பட்டவர்களல்ல.—நப்தாலியின்வமி
சத்தில் ஆயிரஞ்சேனபதிகள், பரிசையும் ஈட்டி
யுந்தரித்து அவர்களுடன்வந்தவர்கள் முப்பத்தே
௩௪ ழாயிரம்பேர்.—தாண்வமிசத்தில் யுத்தநிபுணரா
னவர்கள் இருபத்தெண்ணுயிரத்தறுநூறுபேர்.—
ஆஷேர்வமிசத்தில் யுத்தத்துக்குப் புறப்பட்டுவ ௩௫
ரும்யுத்தநிபுணர் நாற்பதிஞயிரம்பேர்.—யோர்தா ௩௬
னுக்கப்புறத்தில் ரூபேனியர், காத்தியர், மனா
ஷேயின் பாதிக்கோத்திரத்தாரென்னும் இவர்க
ளில் யுத்தத்துக்கு எந்தஆயுதங்களையுந்தரித்தவர்
கள் நூற்றிருபதிஞயிரம் பேர்.—யெகோவா ௩௭
வுடையவாக்கின்படி ஷவுலின்இராச்சியத்தைத்
தாவீதுக்குக்கொடுக்கும்பொருட்டு,யுத்தசன்னத்
தராய் எப்ரோனில் அவனிடத்தில்வந்த தளங்க
ளின்தொகை இதுவே.—அணியாய் நிற்கத்தக்க ௩௮
யுத்தவீரராகிய இவர்கள்சமஸ்தரும் தாவீதைச்சக
லஇஸரவேலருக்கும் இராசாவாக ஏற்படுத்தும்ப
டி நேர்மையான இருதயத்தோடு எப்ரோனுக்கு
வந்தார்கள்: இஸரவேலரில் மற்றயாவருந் தாவீ
தைஇராசாவாக ஏற்படுத்தும்படி ஒருமனப்பட்
டிருந்தார்கள்.—அவர்கள்அங்கே தாவீதிடத்தில் ௩௯
மூன்றுநாளாய்ப் போசனபானம் பண்ணிக்கொ
ண்டிருந்தார்கள்: அவர்கள்சகோதரர் அவர்களுக்
கு ஆயத்தம்பண்ணியிருந்தார்கள்.—இஸரவேல ௪௰
ருக்குள்ளே மகாமகிழ்ச்சி உண்டாயிருந்தபடி
யால் அவர்களுக்குச்சமீபத்திலிருந்த ஈஷகாரிய
ரும்,செபுலோனியரும், நப்தாலியரும் கழுதை
மேலும், ஒட்டகங்களின்மேலும், கோவேறுகழு
தைகளின்மேலும், எருதுகளின்மேலும் ஏற்றின
அப்பமுமன்றி, மாப்பண்டமும், அத்திப்பழவ
டையும்,திராட்சவற்றலும்,திராட்சரசமும்,எண்
ணெயும், ஆடுமாடுகளும், மிகுதியாய்க்கொண்டு
வந்தார்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. உடன்படிக்கைப்பெட்டிகொண்டுவரத் தாவீ
துஆலோசித்தல்: ௯. கொண்டுவந்தசமயத்தில்
ஊசா சங்கரிக்கப்படல்.

பின்புதாவீது ஆயிரவருக்கதிபதிகளோடும், நூ ௧
றுபேருக்கதிபதிகளோடும், மற்றை அதிபதிகள்
யாவரோடும் ஆலோசனைபண்ணிஞன்.—அன்றி ௨
யுந்தாவீது இஸரவேலின் சமஸ்தசபையாரையும்
நோக்கி, உங்களுக்கும் நம்முடைய தேவஞ
கிய யெகோவாவுக்கும் சம்மதமாகில், இஸ
ரவேலின்தேசமெங்கும் மீதியாயிருக்கிற எங்கள்
சகோதரருக்கும், நகரங்களிலும் பேட்டைகளி
லுந்தங்கியிருக்கிற ஆசாரியருக்கும் லேவியருக்
கும்நம்மிடத்திற்கூடிவரும்படி, ஆளனுப்புவோ
ம்.—நம்முடைய தேவனின்பெட்டியை நம் ௩
மிடத்தில்எடுப்பித்துக்கொண்டுவருவோம்:ஷவு
லின்காலத்தில் அதனிடத்தில்விசாரியாமல் விட்
டோமென்ருன்.—சகல சனங்களின் பார்வைக் ௪
கும் அந்தக்காரியம் நலமாய்த் தோன்றினபடியி
ஞல், சமஸ்தசபையாரும் அப்படிச் செய்வோ
மென்ருர்கள்.—சீரியாத் எயாரீமிலிருந்து தேவ ௫
னுடைய பெட்டியைக் கொண்டுவரும்படி, தா
வீது, எகிப்திலுள்ள சீகோர்நதிதொடங்கிஎமாத்
தினெல்லைவரைக்குமுள்ள சகல இஸரவேலரை

(௰௯) ௧.சாமு.௨௯.௨,௪. (௨௧) ௧.சாமு.௩௰.௧. (௨௭) ௨.சாமு.௮.௰௭. (௨௮) ஆதி.௩௧.௨௩. ௨.சாமு.௨.௮,௯.(௩௧) எஸ்த.௧.௩. (௩௨) சங்.௰௨.௨. (௩௭) அதி.௰.௰௪. ௧.சாமு.௰௬.௧,௩.—(௰௩. அதி. ௨.) ௧.சாமு.௩௧.௧. ஏசா.௩௭.௪. (௩) ௧.சாமு.௭.௧,௨. (௫) ௧.சாமு.௭.௫. யோசு.௰௩.௨. ௧.சாமு.௬.௨௧.

௬ யும்கூடிவரச்செய்தான்.—தாவீதும், இஸரவேலர்
யாவரும்,யூதாசுதந்தரத்தைச்சேர்ந்தகீரியாத்எயா
ரீமென்னும் பாலாவிலே,கெரூபியர்மத்தியில்தங்
கியிருந்த யெகோவாவின்நாமந்தரித்த தேவ
னுடையபெட்டியைக் கொண்டுவரும்படி போ
௭ னார்கள்.—அபீனதாப்பின்வீட்டிலிருந்து அவர்
கள் தேவனுடைய பெட்டியைப் புதுவண்டி
யின்மேலேற்றிவந்தார்கள்: ஊசாவும் அகியோ
௮ வும் வண்டிசெலுத்தினார்கள்.—தாவீதும் இஸர
வேலரெல்லாரும், தங்கள்பெலத்துடன், கின்ன
ரங்களையும்தம்புருகளையும் மேளங்களையுங் கைத்
தாளங்களையும் பூரிகைகளையுங்கொண்டு தேவ
னுக்குமுன் கெம்பீரித்துப்பாடினார்கள்.
௯ கீதோனின் தானியக்களத்திற்குச் சமீபமாய்
வந்தபொழுது,மாடுகள்பெட்டியைஅசைத்தபடி
யினால் ஊசா பெட்டியைப்பிடிக்கத்தன்கையை
௰ நீட்டினான்.—அதினால் யெகோவாவின்கோ
பம் ஊசாவின்மேல்மூண்டது; அவன் பெட்டி
யின்மேல் தன்கையைவைத்தபடியினால், அவர்
அவனைத்தண்டிக்க,அங்கேஅவன் தேவனுடை
௰௧ யசமுகத்தில் இறந்துபோனான்.—யெகோவா
ஊசாவைஅடித்ததினிமித்தம், தாவீது விசனப்
பட்டான்: அதினால் இந்நாள்வரைக்கும் அந்த
ஸ்தானத்துக்குப்பெரெஸ்ஊசாவென்னும் பெய
௰௨ ருண்டாயிற்று.—அன்றைத்தினம்தாவீது தேவ
னுக்கஞ்சி, தேவனுடையபெட்டி என்னிடத்
௰௩ திற்கு எப்படிவரப்போகிறதென்றான்.—தாவீது,
பெட்டியைத் தாவீதுநகரத்திலே தன்னிடத்தில்
கொண்டுவராமல், சமீபத்திலுள்ள கித்தியனாகிய
ஓபெத்ஏதோமின்வீட்டிலே கொண்டுபோய்வை
௰௪ த்தான்.—தேவனுடையபெட்டி ஓபெத் ஏதோ
மின்வீட்டிலேமூன்றுமாதந்தங்கிற்று. யெகோ
வா ஓபெத் ஏதோமின் குடும்பத்தாரையும் அவ
னுக்குள்ள யாவற்றையும் ஆசீர்வதித்தார்.

## ௰௪. அதிகாரம்.

௧. ஈராம் தாவீதுக்குத்தயைசெய்தல்: ௩. தாவீதின் புத்திரருடைய நாமங்களை உரைத்தல்: ௮. பெலிஸ்தியரை இரண்டுதரம் செயித்தல்.

தீருவின் இராசாவாகிய ஈராம், தாவீதுக்கு ஒரு
வீடுகட்டும்படி அவனிடத்துக்குத்தூதருடன், ஏ
ரஸ்மரங்களையும்,சிற்பர்களையும், தச்சரையும், அ
௨ னுப்பினான்.—தாவீது,தன்னை யெகோவா இ
ஸரவேலருக்கு இராசாவாக நிலைப்படுத்தியிருக்
கிறாரென்றும், தமக்குரியசனங்களாகிய இஸர
வேலரினிமித்தம், தன் இராச்சியம் உன்னதமா
யிற்றென்றும் அறிந்துகொண்டான்.
௩ தாவீது பின்னும் யெரூஷலேமில் அநேகஸ்
திரிகளை மனைவியராக்கிக்கொண்டான்: தாவீது
பின்னும் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்
௪ றான்.-யெரூஷலேமிலே ஷம்முவா, ஷோபாப்,
நாதான், சலோமோன்.-இபார், இலீஷூவா, இல் ௫
பாலெத்,—நோகா, நெப்பேக், யபீய,—இலீஷா ௬
மா, பில்யாதா, இலீபேலேத்தென்னும் நாமங்க ௭
ளையுடையபிள்ளைகள் இவனுக்குப்பிறந்தார்கள்.
தாவீது இஸரவேலர்யாவருக்கும் இராசாவாக ௮
அபிஷேகம்பண்ணப்பட்டானென்று பெலிஸ்
தியர்கேள்விப்பட்டபொழுது, பெலிஸ்தியர்யா
வருந்தாவீதைத்தேடும்படிவந்தார்கள். தாவீது அ
தைக் கேட்டபொழுது, அவர்களுக்கு விரோத
மாய்ப் புறப்பட்டுப் போனான்.—பெலிஸ்திய ௯
ரும்வந்து ரெபாயீமென்னுந் தாழ்ந்தபூமியிலே
பரந்தார்கள்.—பின்பு தாவீது, நான்பெலிஸ்திய ௰
ருக்கு விரோதமாய்ப் போகலாமா; அவர்களை
என்கையில் ஒப்பிப்பீராவென்று தேவனிடத்
தில் கேட்டபொழுது, யெகோவா அவனை
நோக்கி, போ; அவர்களை உன்கையில் ஒப்பிப்
பேனென்றார்.—அவர்கள் பாகால் பிராத்சீமுக் ௰௧
குவந்தார்கள்; அங்கேதாவீது அவர்களைமுறியஅ
டித்து, தண்ணீர்கள் வடிந்துபோகிறது போல
தேவன் என்கையினால் என்சத்துருக்களை வடிந்
துபோகப்பண்ணினாரென்றான்: அதினால் அந்
தஸ்தானத்துக்குப்பாகால் பிராத்சீமென்று பே
ரிட்டார்கள்.—அங்கே அவர்கள் தங்கள் தேவர் ௰௨
களைவிட்டு ஓடிப்போனார்கள்; தாவீது கற்பித்த
படியே, அவைகள் அக்கினியினாலேசுட்டெரிக்
கப்பட்டன.—பெலிஸ்தியர் திரும்பவும் வந்து ௰௩
தாழ்ந்தபூமியிலே பரந்தார்கள்.—அதினால் தாவீது ௰௪
மறுபடியுந் தேவனிடத்தில்கேட்டதற்குத் தே
வன், நீ அவர்களைத் தொடர்ந்து போகலாகாது;
அவர்களை விட்டுத்திரும்பி, முசுக்கட்டைக்கெ
திர்ப்புறத்தில் அவர்களை எதிர்த்துப்போ.—மு ௰௫
சுக்கட்டைச்செடிகளின் நுனியில் உலாவுஞ்
சத்தங் கேட்கும்பொழுது, யுத்தத்துக்குப் புறப்
பட்டுப்போவாயாக;பெலிஸ்தியரின்சேனைகளை
முறியஅடிக்கும்படிதேவன்உனக்குமுன்புறப்
பட்டுவருவாரென்றார்.-யெகோவா தனக்குக் ௰௬
கட்டளையிட்டபிரகாரந் தாவீதுசெய்தான்: கிபி
யோன்தொடங்கி கேசெர்வரைக்கும் பெலிஸ்தி
யரின்சேனைகளைமுறிய அடித்தார்கள்.-அதினால் ௰௭
தாவீதின்கீர்த்தி சருவதேசங்களிலும் பரம்பிவிட்
டது; சமஸ்ததேசத்தாரும் அவனுக்கஞ்சும்படி
யெகோவா செய்தார்.

## ௰௫. அதிகாரம்.

௧. உடன்படிக்கைப்பெட்டி கொண்டுவரும்படி தாவீது லேவியரை நியமித்தல்: ௨௫. பெட்டியைக் கொண்டுவரல்: ௨௯. மீகாள் தாவீதை நிந்தித்தல்.

பின்பு தாவீது, தாவீதுநகரத்திலே தனக்கு வீடு ௧
களைக்கட்டுவித்தான்; தேவனுடைய பெட்டிக்
காகஒருஸ்தானத்தை ஆயத்தப்படுத்தி, அதினிமி

(௬) யோசு.௰௫.௯,௬௰. ௧.சாமு.௪.௪. (௭) எண்.௪.௰௪. ௧.சாமு.௭.௧. (௮) ௨.சாமு.௬.௫. (௯) ௨.சாமு.௬.௬. (௰) எண்.௪.௰௪. லேவி.௰.௨. (௰௪) ௨.சாமு.௬.௰௧. ஆதி.௩௰.௨௭.—(௰௪. அதி. ௧.) ௨.சாமு.௫.௰௧,. (௪) அதி.௩.௫. (௭) ௨.சாமு.௫.௰௬. (௮) ௨.சாமு.௫.௰௭. (௯) அதி.௰௧.௰௫. (௰௩) ௨.சாமு.௫.௨௨. (௰௪) ௨.சாமு.௫.௨௩. (௰௬) ௨.சாமு.௫.௨௫. (௰௭) யோசு.௬.௨௭. ௨.நாளா.௨௬.௮. உபா.௨.௨௫.—(௰௫. அதி. ௧.) அதி.௰௬.௧.

௨ த்தம் ஒருகூடாரத்தைவிரித்தான்.—அப்பொழுது
தாவீது, லேவியவமிசத்தாரேயன்றித் தேவனு
டையபெட்டியை ஒருவரும் எடுக்கக்கூடாது:
யெகோவாவினுடையபெட்டியையெடுப்பதற்
கும், சதாகாலமும் தமக்குத் தொண்டுசெய்வதற்
கும், அவர்களையே தெரிந்துகொண்டாரென்றா
௩ ன்.—பின்பு தாவீது, யெகோவாவின் பெட்
டியை அதற்காகத் தான் ஆயத்தப்படுத்தின ஸ்தா
னத்தில் கொண்டுவரும்படி, இஸரவேலரெல்
லாரையும் யெரூஷலேமிலே கூடிவரச்செய்
௪ தான்.—தாவீது, ஆரோன் வமிசத்தாரையும், லே
௫ வியரையும்;—கோகாத் வமிசத்தாரில் பிரதானி
யாகிய ஊரியேலையும், அவன் சகோதரர் நூற்றி
௬ ருபது பேரையும்;—மிராரி வமிசத்தாரில் பிர
தானியாகிய அசாயாவையும், அவன் சகோதரர்
௭ இரு நூற்றிருபது பேரையும்;—கெர்ஷோம் வமி
சத்தில் பிரதானியாகிய யோவேலையும், அவன்
௮ சகோதரர் நூற்றுமுப்பது பேரையும்;—இலீச்சா
பான் வமிசத்தாரில் பிரதானியாகிய ஷிமாயியா
வையும், அவன் சகோதரர் இருநூறு பேரையும்.—
௯ எப்ரோன் வமிசத்தாரில் பிரதானியாகிய ஈலி
யேலையும், அவன் சகோதரர் எண்பது பேரை
௰ யும்;—ஊசியேல் வமிசத்தில் பிரதானியாகிய
அம்மினதாபையும், அவன் சகோதரர் நூற்றுப்
பன்னிரண்டுபேரையும் கூடிவரப்பண்ணினா
௰௧ ன்.—அன்றியுந் தாவீது, ஆசாரியர்களாகிய சா
தோக்கையும், அப்பியாதாரையும், லேவியரையும்,
ஊரியேலையும், அசாயாவையும், யோவேலையும்,
ஷிமாயியாவையும், ஈலியேலையும், அம்மினதா
௰௨ பையும் அழைப்பித்து,—அவர்களை நோக்கி, இ
ஸரவேலரின் தேவனாகிய யெகோவாவின்
பெட்டியை அதற்காக நான் ஆயத்தப்படுத்தின
ஸ்தானத்துக்குக்கொண்டுவரும்படி, லேவியரின்
பிதா வமிசத்துப்பிரதானிகளாகிய நீங்கள், உங்க
ளையும் உங்கள் சகோதரரையும் பரிசுத்தப்படுத்
௰௩ திக்கொள்ளுங்கள்.—நீங்கள் அப்படி முன்செய்தி
ருக்கவில்லை; நம்முடைய தேவனாகிய யெ
கோவாவை நியாயமானபடியே தேடவில்லை;
ஆதலால் அவர் நமக்குள்ளே சேதமுண்டாக்கினா
௰௪ ரென்றான்.—பின்பு ஆசாரியரும் லேவியரும் இ
ஸரவேலரின் தேவனாகிய யெகோவாவின்
பெட்டியைக்கொண்டுவரும்படி தங்களைச் சுத்தி
௰௫ செய்தார்கள்.—யெகோவாவின் வாக்கின்ப
டி மோசே கட்டளையிட்ட பிரகாரம், தேவனு
டைய பெட்டியைத் தண்டோடும் தங்கள் தோ
௰௬ ளின் மேல் எடுத்துக்கொண்டுவந்தார்கள்.—லே
வியரின் பிரதானிகள் தங்கள் சகோதரரை, தம்
புருவும், கின்னரமும், கைத்தாளங்களுமாகிய கீ
த வாத்தியங்கள் முழங்க, ஆனந்தத்துடன் உரத்
த சத்தமாய்ப் பாடும் பொருட்டு, ஏற்படுத்தும்ப
௰௭ டி தாவீது கட்டளையிட்டான்.-அதினால் லேவி
யர், யோவேலின் புத்திரனாகிய ஏமானையும், அவ
ன் சகோதரரில் பெரிகாயாவின்புத்திரனாகிய ஆ
சாப்பையும், அவர்கள் சகோதரராகிய மிராரிவ
மிசத்தாரில் குஷாயாவின் புத்திரனாகிய ஏதானை
யும்,—இரண்டாம்வகுப்பிலுள்ள இவர்கள்சகோ ௰௮
தரரும், வாசற் காவலாளருமாகிய சகரியாவை
யும், பேனையும், யாசியேலையும், ஷிமிராமோத்
தையும், யிகியேலையும், உன்னீயையும், இலியாப்
பையும், பினாயாவையும், மாசெயாவையும், மத்
திதீயாவையும், இலீப்பேலேயையும், மிக்கினே
யாவையும், ஒபெத் ஏதோமையும், யெயீயேலை
யும் நியமித்தார்கள்.—பாடகராகிய ஏமானும், ஆ ௰௯
சாப்பும், ஏதானும் வெண்கலத்தினால் செய்த
தொனிக்குங் கைத்தாளம்போடவும்;—சகரியா ௨௰
வும், அசீயேலும், ஷிமிராமோத்தும், யிகியேலும்,
உன்னீயும், இலியாப்பும், மாசெயாவும், பினாயா
வும், அலாமோத்தில் தம்புருகளைவாசிக்கவும்;—
மத்திதீயாவும், இலீப்பேலேகும், ஒபெத் ஏதோ ௨௧
மும், யெயீயேலும், அச்சீயாவும், ஷிமினீத்தி
னால் உயர்ந்ததொனிசெய்து, கின்னரம் வாசிக்
கவும் நியமிக்கப்பட்டார்கள்.—லேவியரில் பிர ௨௨
தானியாகிய கினன்யாவென்னும் பாடகன், நிபு
ணனாதலால் பாடலை நடப்பித்தான்.—பெரிகா ௨௩
யாவும், எல்க்கானாவும் பெட்டிக்குமுன் நிற்கும்
வாசற்காவலாளரானார்கள்.—ஆசாரியராகியஷெ ௨௪
பனியாவும், யோஷாபாத்தும், நிதனேலும், அமா
சாவும், சகரியாவும், பினாயாவும், எலியேசரும்,
தேவனுடைய பெட்டிக்குமுன்பாகப் பூரிகை
ஊதினார்கள்: ஒபெத் ஏதோமும், யிகியாவும்பெட்
டிக்குமுன் நிற்கும் வாசற்காவலாளரானார்கள்.

பின்பு தாவீதும், இஸரவேலரின் முதியோ ௨௫
ரும், ஆயிரவருக்கதிபதிகளும், யெகோவா
வின் உடன்படிக்கைப் பெட்டியை ஒபெத்ஏ
தோமின் வீட்டிலிருந்து ஆனந்தத்துடன் கொண்
டுவரும்படி போனார்கள்.—யெகோவாவின் ௨௬
உடன்படிக்கைப்பெட்டியைச்சுமக்கிற லேவிய
ருக்குத்தேவன் துணை நின்றபடியால், அவர்கள்
ஏழு காளைகளையும் ஏழு ஆட்டுக்கடாக்களையும்
பலியிட்டார்கள்.-தாவீதும், பெட்டியைச் சுமந் ௨௭
த யாவரும், பாடகரும், பாடகருடனிருந்தபாட்
டுத்தலைவனாகிய கினன்யாவும், மெல்லியவஸ்தி
ரத்தையும் தரித்தார்கள்: தாவீது சணல்நூலான
ஏபோத்து வஸ்திரத்தைத்தரித்தான்.-இவ்விதமாய் ௨௮
ஆரவாரத்தோடும், ஊதுகொம்போடும், பூரிகைக
ளோடும், கைத்தாளத்தோடும், தம்புருவும், கின்
னரமும் முழங்க, இஸரவேலரனைவரும் யெ
கோவாவின் உடன்படிக்கைப் பெட்டியைக்
கொண்டுவந்தார்கள்.

யெகோவாவின்உடன்படிக்கைப்பெட்டி ௨௯
தாவீதின் நகரத்தில்பிரவேசிக்கையில், ஷவுலின்
புத்திரியாகிய மீகாள் பலகணி வழியாய்ப்பார்த்
து, தாவீது இராசா நடனம் பண்ணுகிறதைக்
கண்டு, தனதுள்ளத்தில் அவனை அவமதித்தாள்.

(௨) எண்.௪.௨,௰௪. உபா.௰.௮. (௩) க.இரா.௮.௧. (௮) யாத்.௬.௨௨. (௯) யாத்.௬.௰௮. (௰௩) உ.சாமு.௬.௩. அதி.௰௩.௰,௰௧. (௰௫) யாத்.௨௫.௰௪. எண்.௪.௰௫. (௰௭) அதி.௬.௩௩,௩௯,௪௪. (௨௰) வச.௰௮. சங்.௪௬. (௨௧) சங்.௬. (௨௪) எண்.௰.௮. சங்.௮௧.௩. (௨௫) உ.சாமு.௬.௰௨,௰௩,. க.இரா.௮.௧. (௨௮) அதி.௰௩.௮. (௨௯) உ.சாமு.௬.௰௬.

## ௰௬. அதிகாரம்.

௧. தாவீது பலியிடல்: ௪. பாடகரைநியமித்தல்: ௭. ஸ்தோத்திர கீதம் பாடல்: ௩௭. ஊழியக்காரரையும் காவற்காரரையும் ஆசாரியரையும் வாத்தியகாரரையும் ஏற்படுத்தல்.

அவர்கள் தேவனுடையபெட்டியைக்கொண்
டுவந்து, தாவீது ஸ்தாபித்தகூடாரத்தின் மத்தியி
லேவைத்து, தேவனுடையசந்நிதியில் தகனப
லிகளையும் ஸ்தோத்திரபலிகளையுமிட்டார்கள்.—
௨ தாவீதுதகனபலிகளையும்,ஸ்தோத்திரபலிகளையும்
இட்டுமுடித்தபின்பு, யெகோவாவின் நாமத்
௩ தைக்கொண்டு சனங்களை ஆசீர்வதித்தான்.—மே
லும் அவன் இஸரவேலரில் ஒவ்வொரு ஸ்திரி
புருஷர்களுக்கும், ஒவ்வொரு அப்பமும், நல்ல
ஒவ்வொரு இறைச்சித்துண்டும், ஒவ்வொரு பாத்
திர திராட்சரசமும், பகிர்ந்துகொடுத்தான்.
௪ யெகோவாவின் பெட்டிக்குமுன்பாக இ
ஸரவேலரின் தேவனாகிய யெகோவாவை
நினைந்து,துதித்து,ஆராதனைசெய்கிறதற்கு,லேவி
௫ யரிற்சிலரை ஏற்படுத்தினான்.—அவர்களிற்பிர
தானி ஆசாப், மற்றவர்கள் சகரியா, யெயீயேல்,
ஷிமிராமொத், யிகியேல், மத்திதீயா, இலியாப்,
பினாயா,ஒபெத்ஏதோம் என்பவர்கள்:யெயீயேல்
தம்புருகளையுங் கின்னரங்களையும் வாசித்தான்;
ஆசாப் தொனிக்குங்கைத்தாளம் போட்டான்;—
௬ ஆசாரியராகிய பினாயாவும், யாகசியேலும் தே
வனுடைய உடன்படிக்கைப்பெட்டிக்கு முன்
பாக நித்தமும் பூரிகை யூதினார்கள்.
௭ அத்தினத்திலே தாவீது யெகோவாவைத்து
திக்கும்படி ஆசாப்பின்கையிலும் அவன் சகோ
தரரின்கையிலும் முதல்முதல் மேல்வருங் கீதத்
௮ தை ஒப்பித்தான்.—யெகோவாவைத்துதித்து
அவருடைய நாமத்தைச்சொல்லிப் பிரார்த்தனை
பண்ணுங்கள்; அவருடையகிரியைகளைச்சனங்
௯ களுக்குள்ளே பிரசித்தப்படுத்துங்கள்.-அவரைப்
பாடுங்கள்; அவரைக் கீர்த்தனம்பண்ணி அவரு
டைய ஆச்சரியமான கிரியைகளெல்லாவற்றை
௰ யுந் தியானித்துச்சொல்லுங்கள்.—அவருடையப
ரிசுத்தநாமத்தின் மேன்மையைப்பாராட்டுங்கள்;
யெகோவாவைத்தேடுகிறவர்களுடையஇருத
௰௧ யம்மகிழ்வதாக.—யெகோவாவையும்அவரு
டையவல்லமையையுந்தேடுங்கள்; அவருடைய
௰௨ முகத்தை நித்தமுந்தேடுங்கள்.—அவருடையதா
சனாகிய இஸரவேலின்சந்ததியாரே,அவரால்தெ
ரிந்துகொள்ளப்பட்டவர்களாகிய யாக்கோபின்
௰௩ புத்திரரே,—அவர்செய்த அவருடைய ஆச்சரிய
மானகிரியைகளையும், அற்புதங்களையும், அவரு
டைய வாய்சொல்லியநியாயத்தீர்ப்புக்களையும்நி
௰௪ னையுங்கள்.-யெகோவாவே, நம்முடையதே
வன்; பூமிஎங்கும் அவருடையநியாயத்தீர்ப்புக்
௰௫ கள் விளங்குகின்றன.—ஆயிரந்தலைமுறைகளுக்
காக அவர் கட்டளையிட்ட உடன்படிக்கையாகி

ய வாக்கையும்;—ஆபிரகாமுடன்பண்ணின அவ ௰௬
ருடையஉடன்படிக்கையையும் நினையுங்
கள்.—இதை யாக்கோபுக்குப்பிரமாணமாகவும், ௰௭
இஸரவேலுக்கு நித்திய உடன்படிக்கையாகவும்
உறுதிப்படுத்தி,—உங்களுக்குப்பங்கிட்ட சுதந் ௰௮
தரமாகிய கானான்தேசத்தை உனக்குத்தருவே
ன்;—அக்காலத்திலே கானான்தேசத்தில்உங்கள் ௰௯
தொகை அற்பம், மிகவும் அற்பம், பரதேசிக
ளுமாயிருந்தார்கள்என்றுசொன்னார்.—அவர்கள் ௨௰
ஒருதேசத்தைவிட்டு மறுதேசத்திற்கும், ஒரு இ
ராச்சியத்தைவிட்டு மறு இராச்சியத்திற்கும் தி
ரிந்தார்கள்;—ஆனாலும் ஒருவரும் அவர்களை உ ௨௧
பத்திரவப்படுத்த அவர்விடவில்லை: அவர்களி
னிமித்தம் அவர் இராசாக்களையுங்கடிந்துகொண்
டு,—நான் அபிஷேகம் பண்ணினவர்களை நீங் ௨௨
கள் தொடாமலும், என்னுடைய தீர்க்கதரிசிக
ளுக்குத் தீமைசெய்யாமலுமிருங்களென்றார்.—
பூலோகத்தாரே, நீங்கள்யாவரும் யெகோவா ௨௩
வைப்பாடுங்கள்; அவர்செய்த இரட்சிப்பைத்
தினமும் பிரசித்தப் படுத்துங்கள்.—புறத்தேசத் ௨௪
தாருக்குள் அவருடைய மகிமையையும், சகல
சாதியாருக்குள்ளும் அவருடைய ஆச்சரியமான
கிரியைகளையும், வருணித்துச்சொல்லுங்கள்.—
யெகோவாவே பெரியவரும், மிகவுந் துதிக் ௨௫
கப்படத் தக்கவருமாயிருக்கிறார்: எல்லாத்தேவர்
களைப்பார்க்கிலும் அவருக்கே பயப்படவேண்
டும்.—புறத்தேசத்தாருடைய தேவர்களெல்லாம் ௨௬
விக்கிரகங்கள்: யெகோவாவோ வானங்க
ளைச் சிருட்டித்தார்.—அவர் சந்நிதியிலே கன ௨௭
மும் மகிமையும், அவர் வாசஸ்தானத்தில் வல்
லமையும் சௌந்தரியமுமிருக்கின்றன.—மனு ௨௮
ஷசாதியாரே, யெகோவா மகிமையும் வல்
லமையுமுள்ளவரென்று பிரசித்தப்படுத்துங்கள்,
அதையேபிரசித்தப்படுத்துங்கள்.—யெகோவா ௨௯
வுடைய நாமத்தின் மகிமையைப் பிரசித்தப்ப
டுத்தி, காணிக்கைகளைக்கொண்டுவந்து, அவரு
டைய சந்நிதியிற்சேருங்கள்: பரிசுத்தமாகிய அ
லங்காரத்துடனே யெகோவாவைத்தொழுது
கொள்ளுங்கள்.—பூலோகத்தாரே, நீங்கள் யாவ ௩௰
ரும் அவருக்குப்பயப்படுங்கள்; பூமண்டலம்ஸ்
திரப்பட்டு, அசையாதிருக்கும்.—வானங்கள் மகி ௩௰௧
ழும் பூமிபூரிக்கும்: யெகோவா அரசாளுகி
றாரென்று புறத்தேசத்தாருக்குள்ளே சொல்லு
வார்களாக.—சமுத்திரமும், அதிலுள்ளயாவும் மு ௩௰௨
ழங்கி:வெளிகளும்,அவைகளிலுள்ளயாவுங்களி
கூருவதாக.—அப்பொழுது வனத்தின் விருட்சங் ௩௰௩
களும் யெகோவாவின் சந்நிதியில் உயர்ந்த
தொனிசெய்யும்; அவர் பூமிக்கு நியாயந்தீர்க்கவ
ருவார்.—யெகோவாவே தயாபரர்; அவருடை ௩௰௪
யதயை என்றுமுள்ளது; ஆகையால் அவரைத்து
தியுங்கள்.—எங்களுக்கு இரட்சிப்பைக்கொடுக் ௩௰௫
கிற தேவனே, நாங்கள் உமது பரிசுத்த நாமத்

(௰௬. அதி. ௧.) ௨.சாமு.௬.௰௭—௰௯. (௪) சங்.௩௮. சங்.௭௰. (௭) ௨.சாமு.௨௩.௧. (௮) சங்.௱௫.௧—௰௫. (௰௬) ஆதி.௰௭.௨. ஆதி.௨௬.௩. ஆதி.௨௮.௰௩. (௰௯) ஆதி.௩௪.௩௰. (௨௧) ஆதி.௰௨.௰௭. யாத்.௭.௰௫—௰௮. சங்.௱௫.௰௫. (௨௩) சங்.௯௬. (௨௬) லேவி.௰௯.௪. (௩௪) சங்.௱௬.௧. (௩௫) சங்.௱௬.௪௭,௪௮.

தைப்போற்றி, உம்மைத்துதித்து மேன்மைபா
ராட்டும்படிக்கு, நீர் எங்களை இரட்சித்து, புறத்
தேசத்தாரினின்றும் விடுவித்து, எங்களைச்சேர்த்
௩௬ தருளுமென்று சொல்லுங்கள்.—இஸரவேலின்
தேவனாகிய யெகோவா சதாகாலங்களிலுந்
துதிக்கப்படுவாராக. சகல சனங்களும் ஆமென்
என்றுசொல்லி, யெகோவாவைத் துதித்தார்
கள்.

௩௭ அநுதினமுஞ் செய்யவேண்டிய பிரகாரம்,
பெட்டிக்குமுன்பாக நித்தமும் ஆராதனைசெய்
யும்படி, யெகோவாவின் உடன்படிக்கைப்
௩௮ பெட்டிக்கு முன்பாக ஆசாப்பையும்;—ஓபெத்
ஏதோமையும், அவர்கள் சகோதரர் அறுபத்தெட்
டுப்பேரையும், வாசற் காவலாளராக யெதூது
னின்புத்திரனாகிய ஓபெத்ஏதோமையும் ஓசாவை
௩௯ யும்;—யெகோவா இஸரவேலருக்குக் கட்ட
ளையிட்ட நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கி
றயாவற்றின்படிக்கும், தகனபலி வேதிகையின்
மேல் நித்தமும் காலைமாலைகளில் யெகோ
௪௰ வாவுக்குத் தகனபலிகளையிடும்பொருட்டு,—கி
பியோனிலுள்ள உயர்ந்தஸ்தானத்தில் யெகோ
வாவுடைய ஆவாசத்துக்குமுன்பாக, ஆசாரிய
னாகிய சாதோக்கையும், அவன் சகோதரர்களா
௪௧ கிய ஆசாரியர்களையும்;—யெகோவாவின்தயை
என்றுமுள்ளதாதலால் அவரைத்துதிக்கும்படி, அ
வர்களுடன் எமானையும், யெதூதூனையும், பெயர்
பெயராய்க்குறித்து தெரிந்துகொள்ளப்பட்ட மற்
௪௨ றச்சிலரையும்;—பூரிகைகளினாலும், கைத்தாளங்
களினாலும், திவ்வியவாத்தியங்களாகிய மற்றக்
கருவிகளினாலும் தொனிசெய்யும்படி, அவர்க
ளுடன் எமானையும் யெதூதூனையும் ஏற்படுத்தி
னான். யெதூதூனின் புத்திரர் காவலாளர்.—
௪௩ சனங்கள்யாவரும் அவரவர்வீட்டுக்குப்போனார்
கள்: தாவீது தன் குடும்பத்தாரை ஆசீர்வதிக்கத்
திரும்பிப்போனான்.

## ௰௭. அதிகாரம்.

௧. தேவாலயத்தைக் கட்டுகிறதைக்குறித்து நா
தானைக்கொண்டு யெகோவா தாவீதுக்குச்
சொல்லியவாக்கு: ௰௬. தாவீது யெகோவா
வைத்துதித்துப் பிரார்த்தித்தல்.

பின்பு தாவீது தன் வீட்டிலிருந்தபொழுது, அ
வன் தீர்க்கதரிசியாகிய நாதானைநோக்கி, கே
ளும், நான் ஏரஸ்மரங்களினாற் செய்யப்பட்ட
வீட்டிலே வாசம்பண்ணுகிறேன், யெகோ
வாவுடையஉடன்படிக்கையின்பெட்டியோ, தி
௨ ரைகளின் கீழிருக்கின்றது என்றான்.—அதற்கு
நாதான் தாவீதைநோக்கி, உம்முடைய இருதயத்
திலே தோன்றுகிறபடி எல்லாவற்றையுஞ்செய்
யும்; தேவன் உம்மோடிருக்கிறாரென்றான்.
௩ அன்றிரவு நாதானுக்குக்கிடைத்த தேவனு
டையவாக்கு, நீ என்தாசனாகிய தாவீதிடத்தில்
௪ போய், அவனைநோக்கி,—நான் வாசம்பண்ணும்
படி நீ எனக்குவீடுகட்டவேண்டாம்:—நான் இ ௫
ஸரவேல் சந்ததியாரைப் புறப்படச்செய்தநாள்
முதல் இந்நாள்வரைக்கும் ஆலயத்திலே வாசம்
பண்ணினதில்லை; நான் ஒரு கூடாரத்தினின்
று மறுகூடாரத்துக்கும், ஒரு ஆவாசத்தினின்று
மறு ஆவாசத்துக்கும் போனேன்.—இஸரவே ௬
லராகிய என்சனங்களைக்காக்கும்படி நான்விதித்
த இஸரவேலின் நியாயாதிபதிகளில் யாதொரு
வனுடனே, ஏரஸ்மரத்தினால் எனக்கொரு வீடு
கட்டாதிருக்கிறதென்னவென்று, நான் இஸர
வேலரில் ஆரோடும் உலாவித்திரிந்த எவ்விடத்
திலாகிலும், ஒருவாக்கும்சொல்லியிருக்கிறேனா
வென்று யெகோவாசொல்லுகிறதுமன்றி,—
இன்னும் என்தாசனாகிய தாவீதைக்குறித்து, சே ௭
னைகளுக்கதிபதியாகிய யெகோவா, நீ என்ச
னங்களாகிய இஸரவேலருக்கதிபதியாகும்பொ
ருட்டு, ஆடுகளின் பின்நடந்த உன்னை, மந்தை
யைவிட்டுத் தெரிந்துகொண்டு;—நீபோன இட ௮
மெங்கும் உன்னோடிருந்து, உன்சத்துருக்களெல்
லாரையும் உன் முன்னின்றுஞ் சேதித்து, பூமி
யிலுள்ள பெரியோர்களின் நாமத்தைப்போல உ
னக்கும் ஒரு பெரியநாமத்தை உண்டாக்கினே
ன்.-என்சனங்களாகிய இஸரவேலர் தங்கள் சுய ௯
ஸ்தானத்தில் நெடுங்காலம் வாசம்பண்ணி, என்
றும் நீங்காதிருக்கும்பொருட்டு, அவர்களுக்கு
ஒரு ஸ்தானத்தை ஏற்படுத்தி, அதில் அவர்களை
நிலைப்படுத்துவேன்; பூருவகாலத்தில் நடந்தபடி
துஷ்டசனங்கள் அவர்களைத்துன்பப்படுத்தமாட்
டார்கள்.—நான் என்சனங்களாகிய இஸரவேல ௰
ருக்கு நியாயாதிபதிகளை ஏற்படுத்தின காலமு
தல் நடந்ததுபோலாகும். உன் சமஸ்த சத்துருக்
களையுங் கீழ்ப்படுத்துவேன். அன்றியும் யெ
கோவா உனக்கொருவீடுகட்டுவாரென்றுநான்
சொல்லுகிறேன்.
உன் ஆயுள்நாட்கள் ஒழிந்து உன்பிதாக்களு ௰௧
டன்சேர்ந்தபின்பு, நான்உன்சந்ததியாரில், உன்
சுயவமிசத்தான்ஒருவனைத்தோற்றுவிப்பேன்; அ
வனுடையஇராச்சியத்தை நிலைப்படுத்துவேன்.—
அவனே எனக்கு ஒரு ஆலயத்தைக்கட்டுவான்; ௰௨
அவனுடைய சிங்காசனத்தைச் சதாகாலமும் நி
லைப்படுத்துவேன்.—நான் அவனுக்குப் பிதாவா ௰௩
யிருப்பேன்; அவன் எனக்குப் புத்திரனாவான்:
உனக்கு முன்னிருந்தவனிடத்தினின்று நான்
எனது அநுக்கிரகத்தை நீக்கினதுபோல, அவ
னினின்றும் நீக்கமாட்டேன்:—என் வீட்டிலும் ௰௪
என் இராச்சியத்திலும் அவனைச்சதாகாலமும் நி
லைப்படுத்துவேன்: அவன்சிங்காசனம் சதாகால
மும் நிலைப்படுத்தப்படுமென்று சொல்லுகிறாரெ
ன்பதைச்சொல்லச்சொல்லிற்று.-பின்பு நாதான் ௰௫
இந்த வாக்குகளெல்லாவற்றின்படிக்கும், தரிச
னையின்படிக்கும், தாவீதிடத்தில் பேசினான்.
அதினாலே தாவீதுஇராசா உள்ளேவந்து யெ ௰௬

(௩௬) ௧.இரா.௮.௰௫. உபா.௨௭.௰௫. (௩௯) யாத்.௨௯.௩௮. எண்.௨௮.௩.(௪௰)அதி.௨௧.௨௮.௨.நாளா.௧.௩. ௧.இரா.௩.௪. (௪௧) வச.௩௪. ௨.நாளா.௫.௰௩. எஸ்று.௩.௰௧. எரே.௩௩.௰௧. (௪௩) ௨.சாமு.௬.௰௯,௨௰.—(௰௭. அதி. ௧.) ௨.சாமு.௭.௧. (௰௩) ௨.சாமு.௭.௰௩,௰௪. (௰௪) லூக்.௧.௩௩. (௰௬) ௨.சாமு.௭.௰௮.

கோவாவின் சந்நிதியிலிருந்து, தேவனாகிய
யெகோவாவே, நீர் என்னை இவ்வளவுக்குக்
கொண்டுவர, நான் எம்மாத்திரம்; என்குலம் எம்
௰௭ மாத்திரம்;—ஆ தேவனே, உமது பார்வைக்கு
இது ஒரு அற்பகாரியம்; தேவனாகிய யெகோ
வாவே, இனிவருங்காலத்தில் உமது அடியா
னையும் வமிசத்தையுங்குறித்துப்பேசி, உயர்ந்த
௰௮ குலத்தான்போல என்னை மதித்தீர்.—உமதடியா
னின் மேன்மையைக்குறித்துத்தாவீது இனி என்
னசொல்லுவான்; நீர் உமதடியானை அறிவீரே.—
௰௯ யெகோவாவே, உமது அடியானிமித்தமும்,
உமது சித்தத்தின்படியும், இந்த மகிமையை எல்
லாஞ்செய்து, இந்த மகத்துவமானவைகளை எல்
௨௰ லாந்தெரிவித்தீர்.—யெகோவாவே, உமக்கு
நிகர் ஒருவருமில்லை; நாங்கள் எங்கள் காதினால்
கேள்விப்பட்டதெல்லாவற்றின்படிக்கும், நீரே
௨௧ யன்றி வேறு தேவனில்லை.—உமது சனங்க
ளாகிய இஸ்ரவேலரைச் சதாகாலமும் உம்மு
டைய சனங்களாகும்படி செய்தீர்; யெகோ
வாவாகிய நீர் அவர்களுக்குத் தேவனானீர்.—
௨௨ நீர் எகிப்தினின்று மீட்ட உம்முடைய சனங்
கள்முன்னின்று, அந்நியசாதிகளைத்துரத்தி, மகத்
துவமும் பயங்கரமுமான செய்கையினால் உ
மது நாமத்தை விளங்கப்பண்ணினீர்; தேவன்
போய், தம்முடைய சனங்களாகும்படி மீட்டு
இரட்சித்த சனங்களாகிய இஸ்ரவேலருக்கு நிக
௨௩ ராகப்பூமண்டலத்தில் ஒரு சாதியுண்டா;—யெ
கோவாவே, உமது அடியானையும அவன் கு
டும்பத்தையுங்குறித்து நீர்சொன்னவாக்கைச்சதா
காலமும் நிலைப்படுத்தி, நீர் சொல்லியபடி செய்
௨௪ வீராக.—சேனைகளுக்கதிபதியாகிய யெகோ
வா இஸ்ரவேலரின் தேவன்: இஸ்ரவேலரின்
தேவனென்று சொல்லி, உமது நாமம் நித்த
முந்துதிக்கப்படும்படி செய்வீராக: உமது அடி
யானாகிய தாவீதின் வமிசம் உமக்குமுன்பாக
௨௫ நிலைத்திருப்பதாக.—என் தேவனே, நான் உ
மக்கு ஒரு வீடுகட்டுவேனென்று சொல்லி நீர்
உமது அடியானுக்குத்தெரிவித்தீர்: ஆதலால் உ
மது சந்நிதியில் பிரார்த்தனைபண்ணுவதற்கு உ
௨௬ மதடியான் துணிந்துகொண்டான்.—யெகோ
வாவே, நீரே சத்திய தேவன், நீர் உமதடியா
னைக்குறித்து இந்தத்தயையுள்ளவாக்கை அருளி
௨௭ னீர்:-உமதடியானின்வமிசம் சதாகாலமும் நிலை
பெறும்படிஅருளுவீர்: யெகோவாவே, நீர்
ஆசீர்வதித்தீர்; ஆதலால்நித்தமும்ஆசீர்வாதமுண்
டாகும் என்றான்.

## ௰௮. அதிகாரம்.

௧. தாவீது பெலிஸ்தியரையும் மோவாபியரையும் வசப்படுத்தல்: ௩. அதரேசரையும் ஸீரியரையும் செயித்தல்: ௯. தோயி இராசா தாவீதுக்குக் காணிக்கையனுப்பல்: ௰௩. ஏதோமியரைச்செயித்து அவர்கள் தேசத்தில்கோட்டைகளைஸ்தாபித்தல்: ௰௪. தாவீதின் அதிபதிகளுடையநாமங்களை விபரித்தல்.

பின்பு தாவீது, பெலிஸ்தியரை முறிய அடித்து, ௧
அவர்களைத் தன் வசப்படுத்தி, காத் நகரத்தையும்
அதைச்சேர்ந்த கிராமங்களையும் பெலிஸ்தியரின்
கையினின்று நீக்கித் தன் வசமாக்கினான்.—அ ௨
வன்மோவாபியரையும் முறிய அடித்தான்; அதி
னால் மோவாபியர் தாவீதுக்கடிமைகளாகி, அவ
னுக்குக் காணிக்கைகொடுத்துவந்தார்கள்.

தாவீது, பிருத்நதிஓரத்திலுள்ள தன் அதிகாரத் ௩
தை ஸ்தாபிக்கும்படி புறப்பட்டுப்போகையில்,
சோபாவின்இராசாவாகிய அதரேசரை அமாத்வ
ரைக்கும் முறிய அடித்தான்.—தாவீது ஆயிரம் ௪
ரதங்களையும், ஏழாயிரங் குதிரை வீரர்களையும்,
இருபதினாயிரங் காலாட்களையும் பிடித்து, ரதக்
குதிரைகளின் கால் நரம்புகளை அறுத்தான்; நூ
று ரதங்களைமாத்திரம் தனக்குவைத்துக்கொண்
டான்.-சோபாவின் இராசாவாகிய அதரேசருக் ௫
குத்துணைசெய்யும்பொருட்டுத் தமஸ்கு நகரத்தா
ராகியஸீரியர்வந்தபொழுது,தாவீதுஸீரியரில்இ
ருபத்தீராயிரம்பேரைக்கொன்றுபோட்டான்.-த ௬
மஸ்குவைச்சேர்ந்தஸீரியாவிலேதாவீது தானை
யங்களை ஸ்தாபித்தான்;ஸீரியர்தாவீதுக்கடிமை
களாகி, அவனுக்குக் காணிக்கை கொண்டுவந்
தார்கள். தாவீது சென்ற இடமெங்கும் யெகோ
வா அவனைப்பாதுகாத்தார்.—அதரேசரின்பணி ௭
விடைக்காரர் வைத்திருந்த பொற்பரிசைகளைத்
தாவீதுபறித்து,யெருஷலேமுக்குக்கொண்டுவந்
தான்.-அன்றியும் அதரேசரின்பட்டணங்களாகி ௮
ய திபாத்திலும், கூனிலுமிருந்து தாவீது வெகு
பித்தளை எடுத்துவந்தான்; அதினால்சலோமோன்
பித்தளைக்கடல்தொட்டியையும், தூண்களையும்,
பித்தளைப்பாத்திரங்களையுஞ்செய்தான்.

தாவீது சோபாவின் இராசாவாகிய அதரேச ௯
ரின் சேனைகளனைத்தையுமுறிய அடித்தானென்
று, அமாத்தின் இராசாவாகிய தோயிகேள்விப்
பட்டபொழுது;—அந்த அதரேசர் தன்னோடும் ௰
யுத்தஞ்செய்திருந்தபடியால், தாவீது இராசாவி
டத்தில் சுகச்செய்திகளைக்கேட்கவும்,அவன்அத
ரேசருடன்யுத்தம்பண்ணி, அவனைமுறிய அடித்
ததினிமித்தம், அவனுக்குவாழ்த்துதல் சொல்ல
வும், பொன்வெள்ளிகளினாற்செய்யப்பட்டசக
லவித பாத்திரங்களையுங்கொடுத்து, தன்புத்திரனா
கியஆதோராமை அவனிடத்தில் அனுப்பினான்.

அவைகளைத்தாவீதுஇராசா, ஏதோமியர், மோ ௰௧
வாபியர், அம்மோன்சந்ததியார், பெலிஸ்தியர்,
அமலேக்கியரென்னுஞ்சகல சாதிகளிடத்திலுமி
ருந்துகொண்டுவந்த பொன் வெள்ளிகளுடன்,
யெகோவாவுக்கென்றுநிவேதித்தான்.—சேரு ௰௨
யாவின் புத்திரனாகிய அபீஷாய்,உப்புப்பள்ளத்
தில் ஏதோமியரில் பதினெண்ணாயிரம் பேரைக்
கொன்றான்.

(௰௮. அதி. ௧.) ௨.சாமு.௮. (௩) ௨.சாமு.௮.௩. (௪) ௨.சாமு.௮.௪. (௮) ௧.இரா.௭.௰௫,௨௩. ௨.நாளா.௪.௰௨,௰௫, ௰௬. (௯) ௨.சாமு.௮.௯. (௰) ௨.சாமு.௮.௰. (௰௨) ௨.சாமு.௮.௰௩.

௰௩ பின்பு அவன் ஏதோமிலே தாணையங்களை
ஸ்தாபித்தான்; ஏதோமியர்யாவரும் தாவீதுக்கடி
மைகளானார்கள். இப்படித் தாவீதுசென்ற இட
மெங்கும் யெகோவா அவனைப்பாதுகாத்தார்.
௰௪ தாவீது இஸரவேலரனைவரையும்ஆண்டு, தன்ச
கலசனங்களையும்நீதியுடனேவிசாரித்துநியாயஞ்
௰௫ செய்து வந்தான்.—சேருயாவின் புத்திரனாகிய
யோவாப் சேனாபதியானான்; அகிலூத்தின்புத்
திரனாகிய யோஷாபாத் இதிகாசகர்த்தனானான்.—
௰௬ அகிதூப்பின்புத்திரனாகிய சாதோக்கும், அப்யா
தாரின்புத்திரனாகிய அபிமேலேக்கும், ஆசாரியர்
௰௭ களானார்கள்; ஷவ்ஷா லேககனானான்;—யோய
தாவின் புத்திரனாகிய பினாயா, கிரேத்தியருக்கும்
பெலேத்தியருக்கும்தலைவனானான்; தாவீதின்புத்
திரர் இராசாவிடத்தில் பிரதானிகளானார்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. தாவீதின் தூதருடைய வஸ்திரம்சேதப்படல்: ௬. அம்மோனியர் தோல்வியடைதல்: ௰௬. அவர்களுக்குத்துணைசெய்த ஷோபாக் நாசமடைதல்.

அதன் பின்பு அம்மோன்சந்ததியாரின் இராசா
வாகியநாகாஷ் இறந்துபோக, அவனுக்குப்பின்
௨ அவன்புத்திரன் இராசபட்டம்பெற்றான்.—அப்
பொழுது தாவீது அனூனின்பிதாவாகியநாகாஷ்
எனக்குத்தயைசெய்ததுபோல, நானும் அவன்புத்
திரனாகிய இவனுக்குத் தயைசெய்வேனென்று
சொல்லி, இவன்பிதாவைக்குறித்து இவனுக்கா
றுதல்சொல்லும்படி தூதரையனுப்பினான். தாவீ
தின்பணிவிடைக்காரர்அனூனுக்காறுதல் சொல்
லும்படி, அம்மோன் சந்ததியாரின் தேசத்துக்கு
௩ வந்தார்கள்.—அம்மோன் சந்ததியாரின் அதிபதி
கள் அனூனைநோக்கி, தாவீது ஆறுதல் சொல்லு
கிறவர்களை உம்மிடத்தில் அனுப்பி, உம்முடை
யபிதாவைக்கனம்பண்ணுகிறானென்று எண்ணு
கிறீரா; தேசத்தைச்சோதித்துக் கவிழ்க்கும்படி
வேவுபார்க்க அல்லவா, அவன்பணிவிடைக்கா
ரர் உம்மிடத்தில் வந்தார்களென்று சொன்னார்
௪ கள்.—அதினால் அனூன் தாவீதின்பணிவிடைக்
காரரைப்பிடித்து, அவர்கள் தாடியைச் சிரைப்
பித்து, அவர்களிருப்பிடமட்டும் அவர்கள் வஸ்
திரங்களிலேபாதியைவெட்டி, அவர்களை அனுப்
௫ பிவிட்டான்.—பின்புசிலர்போய், அந்த மனித
ருக்கு நடந்ததைத் தாவீதுக்குத் தெரிவித்தார்கள்.
அவர்கள் மிகவும் வெட்கப்பட்டபடியினால், அ
வர்களை எதிர்கொண்டு, நீங்கள் உங்கள் தாடிவ
ளருமளவும் யெரீகோவிலே தங்கியிருந்து, பின்
பு வாருங்களென்று சொல்லும்படி, இராசா, ஆ
ளனுப்பினான்.
௬ அம்மோன் சந்ததியார் தாங்கள் தாவீதுக்குத்
தூர்க்கந்தமானதைக்கண்டு, அனூனும்அம்மோன்
சந்ததியாரும் அரம்நாகாரீமிலும், ஸீரிய மாகாவி
லும், சோபாவிலும், இரதங்களையும் குதிரைவீர
ரையுங்கூலிக்குப்பிடிக்கும்படி, ஆயிரம் கிக்கேர்
வெள்ளி அனுப்பினார்கள்.—அவர்கள் கூலிகொ ௭
டுத்துமுப்பத்தீராயிரம்இரதங்களையும், மாகாவின்
இராசாவையும், அவன்சனங்களையும் அழைக்க,
இவர்கள்வந்து மேதேபாவுக்கெதிராகப் பாளய
மிறங்கினார்கள். அம்மோன் சந்ததியாரும் தங்
கள் தங்கள் நகரங்களினின்றும் புறப்பட்டு ஏக
மாய்க்கூடி, யுத்தத்துக்குவந்தார்கள்.—தாவீது அ ௮
தைக் கேள்விப்பட்டபொழுது, யோவாப்பை
யும், பராக்கிரமசாலிகளாகிய சகல சேனைகளை
யும் அனுப்பினான்.—அம்மோன் சந்ததியார் புறப் ௯
பட்டுவந்து, நகரத்தின் வாசலுக்குச் சமீபத்தில்
போருக்கு அணிவகுத்தார்கள்: வந்த இராசாக்
கள் வெளியிலே தனித்து நின்றார்கள்.—யோ ௰
வாப் தனக்கு முன்னும் பின்னும் படைமுகம்
நிற்கிறதைக்கண்டு, இஸரவேலருக்குள் பரீட்சித்
தசிலரைத்தெரிந்து ஸீரியருக்கெதிராக அணிவ
குத்து,—மற்றச்சனங்களைத் தன் சகோதரனாகிய ௰௧
அபீஷாயின்கையில் ஒப்பிக்க, அவர்கள் அம்
மோன் சந்ததியாருக்கெதிராக அணிவகுத்தார்
கள்.—அப்பொழுது அவன், என்னைப்பார்க்கி ௰௨
லும் ஸீரியர் பெலன்கொண்டால், நீ எனக்குத்
துணைசெய்யவேண்டும்: உன்னைப் பார்க்கிலும்
அம்மோன்சந்ததியார்பெலன்கொண்டால், நான்
உனக்குத்துணைசெய்வேன்.—தைரியமாயிரு; நம் ௰௩
முடைய சனங்கள் நிமித்தமும், நமது தேவனு
டைய நகரங்களினிமித்தமும், ஆண்மையைக்
காட்டுவோம்: யெகோவா தமது பார்வைக்கு
நலமானதைச் செய்வாராகவென்றான்.—பின்பு ௰௪
யோவாபும் அவனோடுகூடிய சனங்களும் ஸீரி
யரை எதிர்த்து யுத்தஞ்செய்யும்படி சமீபிக்க, அ
வர்கள் முன்னின்றுஇவர்கள்தப்பிஓடினார்கள்.—
ஸீரியர் தப்பி ஒடினதை அம்மோன் சந்ததியார் ௰௫
கண்டு, தாங்களும் அவன் சகோதரனாகிய அபீ
ஷாய்முன்னின்று தப்பிஓடி, நகரத்தில் பிரவே
சித்தார்கள். பின்பு யோவாப் யெரூஷலேமுக்
குவந்தான்.
ஸீரியர் தாங்கள்இஸரவேலருக்குமுன்தோல் ௰௬
வியடைந்ததைக்கண்டு, தூதரைஅனுப்பி, நதிக்
கப்புறத்திலுள்ள ஸீரியரை வரவழைப்பித்தார்
கள்: அதரேசரின் சேனைக்கதிபதியாகிய ஷோ
பாக் அவர்களுக்குமுன்சென்றான்.—இது தாவீ ௰௭
துக்குத்தெரிவிக்கப்பட்டபொழுது, அவன்இஸ
ரவேலரனைவரையும் கூட்டிக்கொண்டு, யோர்
தானைக்கடந்து, அவர்களைச்சமீபித்து, அவர்க
ளுக்கெதிராக அணிவகுத்தான். தாவீது ஸீரிய
ருக்கு விரோதமாயுத்தத்துக்கு அணிவகுத்தபொ
ழுது, அவர்கள் அவனோடே யுத்தம்பண்ணினார்
கள்.—ஸீரியர் இஸரவேலருக்கு முன்னின்று ௰௮
தப்பியோட, தாவீது, ஸீரியருக்குள் இரதத்தில்
வந்த ஏழாயிரம்பேரையும், நாற்பதினாயிரங் கா
லாட்களையும் சங்கரித்து, சேனாபதியாகிய ஷோ
பாக்கையுங்கொன்றான்.—அதரேசரின் பணிவி ௰௯
டைக்காரர் தாங்கள்இஸரவேலருக்குமுன்தாழ்ச்

(௰௬) ௨.சாமு.அ.௰௭. ௧.இரா.௪.௩. (௰௭) ௨.சாமு.அ.௰௮.—(௰௯. அதி. ௧.) ௨.சாமு.௰.௧. (௬) அதி.௰௮.௫,௯. (௰௬) ௨.சாமு.௰.௰௬.

சிப்பட்டதைக்கண்டு, தாவீதுடன் சந்திசெய்
து அவனுக்கடிமைகளானார்கள்: பின்பு அம்மோ
ன் சந்ததியாருக்குத் துணைசெய்ய சீரியர்சம்ம
திக்கவில்லை.

## ௨௰. அதிகாரம்.

௧. தாவீதின் சேனைகளுக்கு ரப்பாநகரம் வசப்ப
டல்: ௪. பெலிஸ்தியரிலுள்ள நெடியவர் மூவர்
அதமாதல்.

மறுவருஷம், இராசாக்கள் யுத்தத்துக்குப்புறப்
படுங்காலத்தில், யோவாப் பராக்கிரம சேனை
யைக்கூட்டிக்கொண்டுபோய், அம்மோன்சந்த
தியாரின்தேசத்தை நாசப்படுத்தி, ரப்பாவுக்குச்
சென்று, அதைமுற்றிக்கைசெய்தான். தாவீது
யெருஷலேமிலிருந்தான். யோவாப் ரப்பாவை
௨ அடித்து, அதைச்சங்கரித்தான்.—தாவீது, அவர்
கள் இராசாவின் தலையினின்று ஒருகிக்கேர் நி
றைகொண்டபொன்னினால்செய்தஇரத்தினம்ப
தித்தஅவன்கிரீடத்தைஎடுத்தான். அதுதாவீதின்
தலையிலேதரிக்கப்பட்டது: அவன்நகரத்தினின்
றுவெகு கொள்ளைப்பொருள்களைக்கொண்டுவந்
௩ தான்.-அதிலுள்ளசனங்களைப்புறப்படுத்தி, அவர்
களைவாள்களுக்கும், இருப்புப்பாரைகளுக்கும்,
கோடரிகளுக்கும் கீழ்ப்படுத்தினான். தாவீது
அம்மோன்சந்ததியாரின் சமஸ்த நகரங்களுக்கு
மிப்படியேசெய்தான். பின்பு தாவீதும் அவன்
சகல சனங்களும் யெருஷலேமுக்குத் திரும்பி
னார்கள்.
௪ கேசெரிலே பெலிஸ்தியருடன் யுத்தம்நடந்த
து; அப்பொழுது ஊஷாத்தியனாகிய சிபெக்காய்
ரப்பியர் சந்ததியில் ஒருவனாகிய சிப்பாயியைக்
கொன்றுபோட்டான். அவர்கள்வசப்பட்டார்
௫ கள்.—திரும்பவும் பெலிஸ்தியருடன்யுத்தம்நட
ந்தது; அதினால் யாயீரின் புத்திரனாகிய எல்கா
னான், நெய்கிறவர்களின்படைமரம்போன்றஈட்
டிப்பிடியையுடைய கித்தியனாகிய கொல்யாத்
தின் சகோதரனான லக்மியைக்கொன்று போட்
௬ டான்.—பின்னும் ஒரு யுத்தம் காத்தூரிலேநடந்
தது; அங்கே நெடியவனும், கைகளில் அவ்வாறு
விரலும், கால்களில் அவ்வாறுவிரலுமாக இரு
பத்து நாலு விரல்களையுடையவனும், ரப்பாய
௭ னுக்குப்பிறந்தவனுமாகிய ஒருவன்,—இஸரவே
லரை நிந்தித்தான்; அதினால் தாவீதின் சகோதர
னான ஷிமியாவின் புத்திரனாகிய யோனாதான்அ
௮ வனைக் கொலைசெய்தான்.—இவர்கள் காத்தூரி
லே ரப்பாயனுக்குப் பிறந்தவர்கள்; இவர்கள்தா
வீதின் கையினாலும் அவன் பணிவிடைக்கார
ரின் கையினாலும் விழுந்தார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧. தாவீது சனங்களைத் தொகையிடல்: ௫.தாவீது
கண்டிக்கப்பட்டு மனஸ்தாபப்படல்: ௯. தண்
டனைகள் மூன்றிலொன்றைத் தெரிந்துகொள்
ளும்படி காத் தாவீதுக்குச்சொல்லல்: ௰௪. எழு
பதினாயிரம் சனங்கள் மடிந்தபின் தாவீது யெ
ருஷலேமுக்காகப் பிரார்த்தித்தல்: ௰௮. ஓர்னா
னின் சூட்டுக்களத்தில் அக்கினியினால் தாவீ
துக்குத்தரங்கிடைத்தல்: ௨௮. அவ்விடத்திலே
தாவீது பலியிடல்.

பின்புசாத்தான் இஸரவேலருக்குவிரோதமாயெ ௧
ழுந்து, இஸரவேலரைத் தொகையிடும்படி தாவீ
தை ஏவினான்.—தாவீது யோவாபையும் சனங்க ௨
ளின் பிரதானிகளையும்நோக்கி, நீங்கள்போய்,
தாண்முதல்பேர்ஷேபாபரியந்தமுள்ளஇஸரவே
லரைத்தொகையிட்டு,நான் அறியும்படி அத்தொ
கையை என்னிடத்திற்கொண்டுவாருங்களென்
றான்.—அதற்குயோவாப், யெகோவா சனங் ௩
களை இப்பொழுதிருக்கிறதிலும் நூறுமடங்கு அ
திகமாகவர்த்திக்கச்செய்வாராக: என் ஆண்டவ
னே, இராசாவே, அவர்கள்யாவரும்என் ஆண்ட
வனின் அடியாரல்லவா;என்ஆண்டவன் இந்தக்
காரியஞ்செய்யவேண்டியதென்ன;இஸரவேலர்
குற்றஞ் செய்வதற்குத் தாம்காரணமாயிருப்பதே
தென்றான்:—ஆனாலும்யோவாப்பின்வாக்கிலும் ௪
இராசாவின் வாக்குப் பெலன்கொண்டது; அதி
னால் யோவாப் புறப்பட்டு, இஸரவேலரின்தே
சமெங்கும்போய், யெருஷலேமுக்குத் திரும்பி
னான்.
யோவாப் தான்தொகையிட்ட சனத்தொகை ௫
யைத்தாவீதிடத்தில் ஒப்பித்தான். இஸரவேல
ருக்குள் கட்கமுருவினவர்கள் பதினொருலட்
சம்பேர்: யூதாவமிசத்தாருக்குள்ளேகட்கமுருவி
னவர்கள் நாலுலட்சத்தெழுபதினாயிரம்பேர்.—
இராசாவின்கட்டளை யோவாபுக்கு அரோசிய ௬
மாயிருந்தபடியினாலே,லேவியரையும்பேன்யமீ
னியரையும் அந்தத்தொகையிற்சேர்க்கவில்லை.—
இந்தக்காரியந் தேவனுடையபார்வைக்குத்தீங் ௭
கானபடியினால், இஸரவேலரை வாதித்தார்.—
அப்பொழுது தாவீது தேவனை நோக்கி, நான் ௮
இந்தக்காரியத்தைச்செய்ததினால்மிகவும்பாவஞ்
செய்தேன்: உமதடியான்செய்த பாவத்தைமன்
னித்தருளும்படி வேண்டுகிறேன்; நான் மிகவும்
புத்தியீனமாய்நடந்தேன் என்றான்.
அப்புறம் யெகோவா தாவீதின்தரிசியாகி ௯
யகாத்தைநோக்கி,-நீ தாவீதிடத்தில்போய்,நான் ௰
மூன்றுகாரியங்களை உனக்குமுன்வைக்கிறேன்:
அவைகளிலொன்றைத் தெரிந்துகொள், அதை
நான்உனக்குச்செய்வேனென்று யெகோவா
சொல்லுகிறாரென்று சொல்லென்றார்.-அப்படி ௰௧
யே காத் தாவீதிடத்தில்வந்து, அவனுடனே,
மூன்றுவருஷபஞ்சமோ,—உன் சத்துருக்களின் ௰௨
கட்கம்உன்னைத்தொடர, உன்சத்துருக்கள்செய்
யும் மூன்றுமாதச்சங்காரமோ, இஸரவேலரின்
எல்லையெங்கும்,யெகோவாவின்தூதன்சங்க
ரிக்க, தேசத்திலே மூன்றுநாள் நிற்கும் யெ
கோவாவின்கட்கமாகிய வாதையோ, இவை

(௨௰. அதி. ௧.) ௨.சாமு.௰௧.௧. ௨.சாமு.௰௨.௨௬. (௨) ௨.சாமு.௰௨.௩௰,௩௧. (௪) ௨.சாமு.௨௧.௰௮. அதி.௰௧.௨௯. ௨.சாமு.௨௧.௰௮.(௫)௨.சாமு.௨௧.௰௯.(௬)௨.சாமு.௨௧.௨௰.(௭)௧.சாமு.௰௬.௯.—(௨௧. அதி.௧.)௨.சாமு.௨௪.(௨) அதி.௨௭.௨௩. (௬) அதி.௨௭.௨௪. (௮) ௨.சாமு.௨௪.௰. ௨.சாமு.௰௨.௰௩.(௯)௧.சாமு.௯.௰. (௰௨) ௨.சாமு.௨௪.௰௩.

களிலொன்றைத் தெரிந்துகொள்ளென்று யெ
கோவா சொல்லுகிறார். ஆதலால் என்னைய
னுப்பினவருக்கு நான் போய்ச்சொல்லவேண்
டிய உத்தரமென்ன,நீஆலோசித்துச்சொல்லென்
௰௩ றுசொல்ல,—தாவீது காத்தைநோக்கி, நான்மகா
ஆபத்தில் அகப்பட்டிருக்கிறேன்: நான் இனி
யெகோவாவின் கையில் விழ விரும்புகி
றேன; அவர்தயைஅதிகம்: எப்படியும்நான்மனி
தர்கையில்விழாமலிருப்பேனாகவென்றான்.
௰௪ பின்பு யெகோவா இஸரவேலர்மேல் ஒ
ரு கொள்ளைநோயை வருவிக்க, இஸரவேலரில்
௰௫ எழுபதினாயிரம்பேர் மாய்ந்தார்கள்.—தேவன்
யெரூஷலேமைச்சங்கரிக்கும்படி அதற்கு ஒரு
தூதனையனுப்பினார்: இவன் சங்கரிக்கிறபொழு
து, யெகோவா கண்டு, ஆபத்தைக்குறித்துஅ
னுதாபப்பட்டு, சங்காரஞ்செய்த அந்தத்தூதனை
நோக்கி, இனிப்போதும்,உன்கையையெடுவென்
றார். யெகோவாவின்தூதன் எபூசியனாகிய
ஒர்னானின்போரடிக்குங்களத்துக்குச்சமீபத்தில்
௰௬ நின்றான்.—தாவீது எறிட்டுப்பார்த்தபொழுது,
யெரூஷலேமுக்குமேலாய் வானத்துக்கும்பூமிக்
கும் மத்தியில், உருவினகட்கத்தைக்கையிற்பி
டித்துக்கொண்டு யெகோவாவின்தூதன் நிற்
கக்கண்டான். தாவீதும், மூதியோரும்,இரட்டுப்
போர்த்துக்கொண்டு, முகங்குப்புற விழுந்தார்
௰௭ கள்.—தாவீது தேவனை நோக்கி, சனங்களைத்
தொகையிடக்கட்டளையிட்டவன் நானல்லவா;
நான் பாவஞ்செய்தேன், நான் தீங்குசெய்தேன்;
இந்த ஆடுகளோ, இவைகள் என்னசெய்தன;
என் தேவனாகிய யெகோவாவே, உமது
கை என்மேலும், என்பிதா வமிசத்தார்மேலுமே
யன்றி, உமதுசனங்கள்கிலேசப்படும்படி அவர்
கள்மேல் ஓங்கவேண்டாமென்றான்.
௰௮ பின்பு எபூசியனாகிய ஒர்னானின் போரடிக்
குங்களத்தில்தாவீதுபோய், யெகோவாவுக்கு
ஒரு வேதிகையை உண்டாக்க வேண்டுமென்று
தாவீதுக்குச்சொல்லும்படி யெகோவாவின்
௰௯ தூதன் காத்துக்குக் கட்டளையிட்டான்.—யெ
கோவாவின் நாமத்தைக்கொண்டு காத் சொன்
௨௰ னபடி, தாவீது போனான்.-ஒர்னான் கோதுமைப்
போரடித்துக்கொண்டு நின்றான். இவன் திரும்
பித் தூதனைக்கண்டான்; அதினால் இவனும் இ
வன் நாலு புத்திரரும் ஒளித்துக்கொண்டார்கள்.-
௨௧ தாவீது ஒர்னான் சமீபத்தில்வந்தபொழுது, இவன்
பார்த்துத் தாவீதைக்கண்டு, போரடிக்குங்களத்தி
னின்று புறப்பட்டு, தரைமட்டுங்குனிந்து தா
௨௨ வீதைவணங்கினான்.—அப்பொழுது தாவீது ஒர்
னானை நோக்கி, போரடிக்குங்களமாகிய இந்தஸ்
தானத்தை எனக்குத்தா: நீ அதை, பெறும்விலைக்
குத் தரவேண்டும்: கொள்ளைநோய் சனங்களை
விட்டு நீங்கும்படி, யெகோவாவுக்கு ஒரு
வேதிகையை அதிலுண்டாக்க வேண்டுமென்று
சொல்ல,—ஒர்னான் தாவீதை நோக்கி, இதை ௨௩
நீர் எடுத்துக்கொள்ளும்; என் ஆண்டவனாகிய இ
ராசா தமதுபார்வைக்கு நலமாய்த்தோன்றுகிற பி
ரகாரஞ் செய்யலாம்; பாரும், தகனபலிக்குமா
டுகளையும், விறகுகளுக்குப் போரடிக்குங்கருவி
களையும், போசன பலிக்குக்கோதுமையையுந் த
ருவேன்; எல்லாம் நான் தருவேனென்றான்.—
தாவீது இராசா ஒர்னானை நோக்கி, அல்ல; நான் ௨௪
இதை, பெறும்விலைக்கேவாங்கவேண்டும்: நான்
உன்னுடையவைகளை எடுத்து யெகோவாவுக்
கு ஒப்பிக்கமாட்டேன்; விலைதராமல் தகனபலி
களையிடவுமாட்டேனென்றான்.—அந்த ஸ்தானத் ௨௫
தின் பொருட்டு, தாவீது ஒர்னானுக்கு அறுநூ
று ஷேக்கல்நிறைபொன் கொடுத்தான்.—அங்கே ௨௬
தாவீது யெகோவாவுக்கு ஒரு வேதிகையை
யுண்டாக்கி, தகனபலிகளையும் ஸ்தோத்திரபலிக
ளையுமிட்டு, யெகோவாவை நோக்கிப் பி
ரார்த்தித்தான்; பின்பு அவர்தகனபலி வேதிகை
யின் மேல் வானத்தினின்றும் தோன்றிய அக்கி
னியினால் உத்தரம் அருளினார்.—யெகோவா ௨௭
தூதனுக்குக்கட்டளையிட, அவன் தன் கட்கத்
தை உறையிலிட்டான்.
வனத்தில் மோசேசெய்த யெகோவாவின் ௨௮
ஆவாசமும், தகனபலியின் வேதிகையும், அக்
காலத்திற்கிபியோனிலுள்ள உயர்ந்த ஸ்தானத்தி
லிருந்தன.—தாவீது யெகோவாவுடையதூத ௨௯
னின் கட்கத்துக்குப்பயந்தபடியால், தேவனு
டையசந்நிதியில்உசாவும்படி அங்கேபோகமுடி
யவில்லை;—ஆனாலும் எபூசியனாகிய ஒர்னானின் ௩௰
போரடிக்கும் ஸ்தானத்தில் யெகோவா தனக்
கு உத்தரமருளினாரென்று தாவீது கண்டபொ
ழுது, அவ்விடத்திலே பலியிட்டான்.

## ௨௨. அதிகாரம்.

௧. ஆலயத்தைக்கட்டும்படி தாவீது அநேக திரவி
யங்களை ஆயத்தப்படுத்தல்: ௬. சலோமோனுக்
கு ஆலோசனையையுங் கட்டளையையுங் கொ
டுத்தல்: ௰௭. தன்புத்திரனாகிய சலோமோனுக்
கு உதவிசெய்யும்படி அதிபதிகளுக்குக்கட்ட
ளையிடல்.

பின்பு தாவீது இது தேவனாகிய யெகோ ௧
வாவின் ஆலயம், இது இஸரவேலரின் தகனப
லி வேதிகையென்றான்.—இஸரவேலரின் தே ௨
சத்திலிருந்த புறத்தேசத்தாரைக் கூடிவரும்படி
தாவீது கட்டளையிட்டான்; தேவனுடைய ஆ
லயத்தைக்கட்டும்படி பொளிந்த கற்களைவெட்
டக் கற்சிற்பரை ஏற்படுத்தினான்.—தாவீது வா ௩
சற்கதவுகளின் ஆணிக்கும், அள்ளுக்கும், அள
விடப்படாத இரும்பையும், அளவற்ற பித்தளை
யையும்,—எண்ணிறந்த ஏரஸ்மரங்களையும் சே ௪
கரித்தான்: சீதோனியரும் தீறியரும் தாவீதினி

(௰௫)௨.சாமு.௨௪.௰௬. ஆதி.௬.௬. ௨.சாமு.௨௪.௰௮.(௰௬)௨.நாளா.௩.௧.(௰௮)௨.நாளா.௩.௧. (௨௫) ௨.சாமு.௨௪. ௨௪. (௨௬) லேவி.௯.௨௪. ௨.நாளா.௭.௧. (௨௮) அதி.௰௬.௪௰. (௨௯) ௧.இரா.௩.௪. ௨.நாளா.௧.௩.—(௨௨.அதி.௧.) உபா.௰௨.௫. ௨.சாமு.௨௪.௰௮. ௨.நாளா.௩.௧. (௨) ௧.இரா.௯.௨௧. (௩) வச.௰௪. ௧ இரா.௭.௪௭. (௪) ௧.இரா.௫.௬.

டத்தில் அநேக எரஸ்மரங்களைக் கொண்டுவந்
௫ தார்கள்.-தாவீது, என்புத்திரனாகிய சலோமோன்
இளைஞனும்வாலிபனுமாயிருக்கிறான்; யெகோ
வாவுக்குக் கட்டப்படும் ஆலயம், சகலதேசங்
களிலும் கீர்த்தியும் மகிமையும்பெற்று விளங்கத்
தக்கதாக, மகா பெரிதாயிருக்கவேண்டும்: அதற்
காக நான்இப்பொழுதே ஆயத்தம்பண்ணுவேன்
என்றான். அப்படியே தாவீது தான் மரணமடை
யுமுன் அதற்கு மிகவும் ஆயத்தம்பண்ணினான்.
௬ அவன் தன் புத்திரனாகிய சலோமோனை வர
வழைத்து, இஸரவேலரின் தேவனாகிய யெ
கோவாவுக்காக ஆலயத்தைக் கட்டும்படி அவ
௭ னுக்குக்கட்டளையிட்டான்.-தாவீது சலோமோ
னைநோக்கி, என் புத்திரனே, என் தேவனாகிய
யெகோவாவின்நாமத்துக்கு ஒரு ஆலயங்கட்
௮ ட அபிப்பிராயங்கொண்டேன்.-யெகோவா
வின்வாக்கு என்னிடத்தில், நீ மிகுதியாய் இரத்
தஞ்சிந்தினாய், அநேக யுத்தங்கள்செய்தாய்: நீ பூ
மியில் என்முன்பாக மிகவும் இரத்தஞ்சிந்தினப
டியினால், நீ என் நாமத்துக்கு ஆலயங்கட்டலா
௯ காது.-கேள், உனக்கொருபுத்திரன் பிறப்பான்;
அவன் சமாதானமுள்ள மனுஷனாயிருப்பான்,
நான்கு திசைகளிலுமுள்ள அவன் சகல சத்து
ருக்களினின்றும் நான்அவனுக்குஆறுதலைக்கொ
டுப்பேன்,அவன்நாமம்சலோமோனாகும்;அவன்
காலத்திலேநான் இஸரவேலருக்குச் சமாதானத்
௰ தையும் அமைவையும் அருளுவேன்.-என்னாமத்
துக்கு அவன் ஒரு ஆலயத்தைக்கட்டுவான்; அ
வன்எனக்குப்புத்திரனாவான்,நான் அவனுக்குப்
பிதாவாயிருப்பேன்; இஸரவேலருக்குள் அவ
னுடைய இராசசிங்காசனத்தைச்சதாகாலமும்ஸ்
௰௧ திரப்படுத்துவேனென்று சொல்லிற்று.—என் ம
கனே, யேகோவா உன்னோடிருப்பாராக;
வாழ்ந்திரு; உன் தேவனாகிய யெகோவா
உன்னைக்குறித்துச்சொல்லியபிரகாரம், அவருக்
௰௨ கு ஒரு ஆலயங்கட்டுவாய்:—நீ உன் தேவனா
கிய யெகோவாவின் நியாயப்பிரமாணத்தைக்
காத்து நடக்கும்படிக்கு இஸரவேலரை அரசா
ளும்பொருட்டு, யெகோவா உனக்கு ஞானத்
௰௩ தையும் புத்தியையுந் தருவாராக.—யெகோ
வா இஸரவேலரைக்குறித்து மோசேக்குக் கட்
டளையிட்ட விதிகளையும், பிரமாணங்களையும்,
காத்துக்கொள்ளச் சாவதானமாயிருந்தால், நீ வா
ழ்ந்திருப்பாய்; ஆதலால் திடங்கொண்டு தைரி
யமாயிரு, நீ பயப்படவுங் கலங்கவும் வேண்
௰௪ டாம்.—என் சிறுமையில் நான் யெகோவா
வின் ஆலயத்துக்காக ஒருலட்சம்கிக்கார்பொன்
னும், பத்துலட்சம் கிக்கார்வெள்ளியும் மிகுதி
பற்றி அளவிடப்படாதபித்தளையும் இரும்புஞ்சே
கரித்துவைத்திருக்கிறேன், நான் மரமுங்கல்லும்
ஆயத்தப்படுத்தியிருக்கிறேன். நீயின்னும் அவை
களுக்கதிகமாய்ச் சேகரிக்கலாம்.—கல்வேலையும் ௰௫
மரவேலையுஞ் செய்கிறதற்குக்கற்சிற்பருந் தச்ச
ருமாகிய தொழிற்காரர் அநேகரும் நானாவித
தொழில்களைச்செய்யும் நிபுணரும் உன்னிடத்தி
லிருக்கிறார்கள்.—பொன் வெள்ளி பித்தளை இ ௰௬
ரும்பு இவைகளுக்கு எண்ணில்லை. எழுந்திரு,
சாக்கிரதையாக வேலையை நடப்பி, யெகோ
வா உன்னோடிருப்பாராக என்றான்.
பின்புதாவீது இஸரவேலின் சகல பிரபுகளை ௰௭
யும்நோக்கி,—உங்கள் தேவனாகிய யெகோ ௰௮
வா உங்களோடிருக்கிறாரல்லவா; நான்குதிசை
களிலும் உங்களுக்கு ஆறுதல் தந்தாரல்லவா; தே
சத்தாரை என்கையில் ஒப்பித்தார். தேசம், யெ
கோவாவுக்கு முன்னும் அவர்சனங்களுக்கு
முன்னும்அமைந்திருக்கின்றது.-ஆதலால்நீங்கள் ௰௯
உங்கள் தேவனாகியயெகோவாவைத்தேடும்
படிஉங்கள்இருதயத்தையும்உங்கள்ஆத்துமத்தை
யும்ஸ்திரப்படுத்துங்கள்; எழுந்து தேவனாகிய
யெகோவாவின் பரிசுத்தஸ்தானத்தைக்கட்டி,
யெகோவாவின்நாமத்துக்குக்கட்டப்படும்ஆ
லயத்தில் யெகோவாவின் உடன்படிக்கைப்
பெட்டியையும், தேவனுடைய பரிசுத்தபாத்தி
ரங்களையும் கொண்டுவாருங்களென்றுசொல்லி,
தன்புத்திரனாகிய சலோமோனுக்குத்துணைசெய்
யும்படி கட்டளையிட்டான்.

## ௨௩. அதிகாரம்.

௧. சலோமோன் இராசாவாதல்: ௨. லேவிவமிசத்
தாரை எண்ணிவகுத்தல்: ௭. கெர்ஷோன் வமி
சத்தார்: ௰௨. கோகாத் வமிசத்தார்: ௨௧. மிராரி
வமிசத்தார்: ௨௪. லேவியரின் தொழில்.

தாவீது விருத்தனும் பூரண ஆயுளுள்ளவனுமா ௧
னபொழுது, தன் புத்திரனாகிய சலோமோனை
இஸரவேலருக்கு இராசாவாக ஏற்படுத்தினான்.
ஆசாரியர்களோடும் லேவியரோடும், இஸர ௨
வேலின் அதிபதிகள் யாவரையும் கூடிவரும்ப
டிசெய்தான்.—லேவியரில் முப்பதுவயதுமுதல் ௩
அதற்குமேற்பட்டவர்கள் ஆள் ஆளாக எண்ணப்
பட்டார்கள்: தலைதலையாக எண்ணப்பட்ட அ
வர்கள் தொகை, முப்பத்தெண்ணாயிரம்.—அவர் ௪
களில் இருபத்துநாலாயிரம்பேர் யெகோவா
வின் ஆலயத்தின் வேலையை விசாரிப்பார்கள்;
ஆறாயிரம்பேர் பிரதானிகளும் நியாயாதிபதிகளு
மாவார்கள்:—நாலாயிரம்பேர் வாசற்காவலாள ௫
ராவார்கள்; நாலாயிரம்பேர் துதிக்கும்பொருட்டு
நான்செய்தவாத்தியங்களைக்கொண்டு,யெகோ
வாவைத்துதிப்பார்களென்றுசொல்லி,—தாவீது ௬
லேவியின்புத்திரராகிய கெர்ஷோன், கோகாத்,

(௫) அதி.௨௯.௧. (௭) ௨.சாமு.௭.௨. ௧.இரா.௮.௰௭. உபா.௰௨.௫,௰௧. ௧.இரா.௫.௩. (௯) அதி.௨௮.௫. ௧.இரா.௪.
௨௫. (௰) ௨.சாமு.௭.௰௩. ௧.இரா.௫.௫. எபி.௧.௫. (௰௧) வச.௰௬. (௰௨) ௧.இரா.௩.௯,௰௨. சங்.௭௨.௧.(௰௩)யோசு.
௧.௭,௮. அதி.௨௮.௭. உபா.௩௧.௭,௮. யோசு.௧.௬,௭,௯. அதி.௨௮.௨௰. (௰௪) வச.௩. (௰௬) வச.௰௧. (௰௮) உபா.
௰௨.௰. யோசு.௨௨.௪. ௨.சாமு.௭.௧. அதி.௨௩.௨௫. (௰௯) ௨.நாளா.௨௰.௩. ௧.இரா.௮.௬,௨௧. ௨.நாளா.௫.௭. வச.
௭. ௧.இரா.௫.௩.—(௨௩.அதி.௧.) ௧.இரா.௧.௩௩—௩௯. அதி.௨௮.௫.(௩)எண்.௪.௩,௪௭.(௪)உபா.௰௬.௰௮. ௨.நாளா.
௰௯.௮. (௫) ௨.நாளா.௨௯.௨௫,௨௬. ஆமோ.௬.௫. (௬) யாத்.௬.௰௬. ௨.நாளா.௮.௰௪.

மிராரியென்னுமிவர்களை வகுப்பாய்வகுத்தான்.
௭ கெர்ஷோனியரில் லாதான், ஷிமியிஇருந்தார்
௮ கள்.—லாதானின் புத்திரர், மூத்தவனாகிய யிகி
யேல், சேதாம், யோவேல் என்னு மூன்றுபேர்.—
௯ ஷிமியியின் புத்திரர், ஷிலோமித், அசியேல், ஆ
ரானென்னு மூன்றுபேர். இவர்கள் லாதானின்
௰ பிதாவமிசத்திற் பிரதானிகள்.—ஷிமியியின்புத்
திரர், யகத், சீனா, எயூஷ், பேரீயா இந்தநாலுபே
௰௧ ரும் ஷிமியியின்புத்திரர்.—மூத்தவன் யகத், மற்
றவன் சீசா: எயூஷுக்கும் பேரீயாவுக்கும்புத்தி
ரர் அநேகரில்லாதபடியால், தங்கள் பிதாவமிசப்
படி, ஒரு வகுப்பாய் எண்ணப்பட்டார்கள்.
௰௨ கோகாத்தின் புத்திரர், அம்ராம், இத்சார், எப்
௰௩ ரோன், ஊசியேல் என நாலுபேர்.—அம்ராமின்
புத்திரர், ஆரோன், மோசே; ஆரோனும் அவன்
புத்திரருஞ் சதாகாலமும் மிகவும் பரிசுத்தமுள்
ளவஸ்துக்களைப்பரிசுத்தப்படுத்தவும், யெகோ
வாவின் சந்நிதியில்தூபங்காட்டி, அவரைச்சே
வித்து,அவர்நாமத்தைக்கொண்டு நித்தமும் ஆசீர்
வாதஞ் சொல்லவும், பிரித்தெடுக்கப்பட்டார்
௰௪ கள்.—தேவனுடைய தாசனாகிய மோசேயின்
புத்திரர் லேவியர்வமிசத்தில் எண்ணப்பட்டார்
௰௫ கள்.—மோசேயின் புத்திரர், கெர்ஷோம், எலீ
௰௬ யேசர்.-கெர்ஷோமின்புத்திரரில்மூத்தவன் ஷெ
௰௭ புவேல்.—எலீயேசரின்புத்திரர்,பிரதானியாகிய
ரெகேபியா; எலீயேசருக்குவேறு புத்திரரில்லை.
ரெகேபியாவுக்குப் புத்திரர்மிகவும் பெருகினார்
௰௮ கள்.—இத்சாரின் புத்திரரில் மூத்தவன் ஷிலோ
௰௯ மித்.—எப்ரோனின் புத்திரரில், முதலாம்புத்தி
ரன்எரியா, இரண்டாம்புத்திரன்அமரியா, மூன்
றாம்புத்திரன் யாகசியேல், நான்காம்புத்திரன் இ
௨௰ கம்மியாம்.—ஊசியேலின் புத்திரரில், முதலாம்
புத்திரன் மீகா, இரண்டாம்புத்திரன் யேசியா.
௨௧ மிராரியின் புத்திரர், மாலி, மூஷி. மாலியின்
௨௨ புத்திரர், எலீயேசார், கீஷ்.—எலீயேசார்மரித்த
பொழுது, அவனுக்குப்புத்திரிகளேயன்றி, புத்
திரரில்லை:இவர்களைக்கீஷின்புத்திரராகிய இவர்
௨௩ கள்இனத்தார் விவாகம்பண்ணினார்கள்.—மூஷி
யின் புத்திரர், மாலி, ஏதேர், யெரேமோத்தென
மூன்றுபேர்.
௨௪ பிதாவமிசத்தின் பிரதானிகளாகிய தங்கள்தங்
கள் பிதாவமிசத்தின்படிக்கும், தலை தலையாய்
எண்ணப்பட்ட தங்கள் நாமத்தொகையின்படிக்
கும்,இருபதுவயதுமுதல் அதற்குமேல்யெகோ
வாவின் ஆலயத்தில் பணிவிடைசெய்கிறதற்கு
எண்ணப்பட்ட லேவியின்புத்திரர் இவர்களே.—
௨௫ இஸரவேலரின் தேவனாகிய யெகோவா சதா
காலமும் யெருஷலேமில் வாசம்பண்ணி, தமது
௨௬ சனங்களுக்கு ஆறுதலைக்கொடுத்தார்:—லேவியர்
ஆவாசத்தையும், அதின்தொண்டுசெய்வதற்கேற்
றபாத்திரங்களையும்,இனிச்சுமக்கமாட்டார்களெ
ன்று தாவீது சொல்லியிருந்தான்.—இதினிமித் ௨௭
தம், தாவீதின் கடைசியானவாக்கின்படி, இருப
துவயதுமுதல் அதற்குமேற்பட்ட லேவியர் எண்
ணப்பட்டார்கள்.-அவர்கள், பிராகாரங்களிலும், ௨௮
அறைகளிலும், தேவனுடைய ஆலயத்திலுள்ள
சேவகத்தில், ஆரோன்வமிசத்துக்குத்துணைசெய்
கிறவர்களாகி, சகலபரிசுத்தவஸ்துக்களையும் சுத்
திகரிக்கவும்;—சமுகத்தப்பமும், போசன பலி ௨௯
யின் மெல்லியமாவும், புளிப்பில்லாத அதிரச
மும், சட்டியிலுள்ளதும் பொரிக்கப்பட்டதுமா
கிய இவைகளை ஆயத்தப்படுத்தவும், அளக்கப்
படுவனவும், நிறுக்கப்படுவனவுமாகிய யாவற்
றையுஞ்சோதிக்கவும்;—காலைமாலைதோறும் நின் ௩௰
று யெகோவாவைப் போற்றித்துதிக்கவும்;—
ஓய்வுநாளிலும்,அமாவாசியிலும், நியமிக்கப்பட் ௩௧
ட உற்சவங்களிலும், தொகைப்படி, தங்களுக்
குக்கட்டளையிடப்பட்ட விதிப்பிரகாரம், யெ
கோவாவின் சந்நிதியில் நித்தமும் யெகோ
வாவுக்குச்சகல தகனபலிகளையுமிடவும்,—சபை ௩௨
யின் ஆவாசத்தின்காவலையும், பரிசுத்தஸ்தானத்
தின் காவலையும்செய்து, யெகோவாவின் ஆ
லயத்திலே தங்கள் சகோதரராகிய ஆரோனின்
புத்திரருக்கு ஆராதனைத்தொண்டில் உதவிசெய்
யவும், ஏற்பட்டார்கள்.

## ௨௪. அதிகாரம்.

௧. சீட்டுப்போட்டு ஆரோனின் வமிசத்தாரை இருபத்தினான்கு வகுப்பாய் வகுத்தல்: ௨௰. கோகாத்தின் வமிசத்தாரும் மிராரி வமிசத்தாருஞ் சீட்டுப்போட்டுப் பகுக்கப்படல்.

ஆரோனின் வமிசத்தின் வகுப்புக்கள் வருமா ௧
று: ஆரோனின்புத்திரர், நாதாபு, அபியூ, எலீயே
சார், இதாமார்.—அவர்களில் நாதாபும் அபியூவும் ௨
புத்திரரில்லாமல், தங்கள் பிதாவுக்குமுன் இறந்
துபோனபடியால், எலீயேசாரும் இதாமாரும்
ஆசாரியத்தொழிலைச்செய்தார்கள்.—தாவீது எலீ ௩
யேசாரின்புத்திரரில்சாதோக்கையும்,ஈதாமாரின்
புத்திரரில் அகிமெலெக்கையும், அவரவர்தொழி
லுக்கேற்க, பணிவிடைசெய்யும்படி வெவ்வே
றாக ஏற்படுத்தினான்.—இதாமாரின் புத்திரருக் ௪
குள்ளிருந்தபிரதானிகளைப்பார்க்கிலும், எலீயே
சாரின் புத்திரருக்குள் இருந்த பிரதானிகள் அ
நேகர்; எலீயேசாரின்புத்திரரில் பிதாவமிசத்தி
பதிகள் பதினாறுபேர்: இதாமாரின் புத்திரரில்பி
தாவமிசத்திபதிகள்எட்டுப்பேர்.—பரிசுத்தஸ்தா ௫
னத்தின் அதிகாரிகளும், தேவனுடைய ஆலயத்
தின் அதிகாரிகளும் எலீயேசாரின் வமிசத்தாரி
லும், இதாமாரின் வமிசத்தாரிலுமுள்ளவர்களா
னதினால்,இவர்கள் சீட்டுப்போட்டு, ஒருவரோ
டொருவர் வகுக்கப்பட்டார்கள்.-இராசா, பிரபு ௬

(௭) அதி.௨௬.௨௧. அதி.௬.௰௭. (௰) வச.௰௧. (௰௨) யாத்.௬.௰௮. (௰௩) யாத்.௬.௨௰. யாத்.௨௮.௧. எபி.௫.௪. யாத். ௩௰.௭. ௧.சாமு.௨.௨௮. எண்.௬.௨௩. (௰௫) யாத்.௨.௨௨. (௰௬) அதி.௨௬.௨௪. (௰௯) அதி.௨௪.௨௩. (௨௨) எண். ௩௬.௬,௮. (௨௩) அதி.௨௪.௩௰. (௨௪) எண்.௰.௰௭,௨௧. வச.௨௭. எண்.௧.௩. எஸ்ரு.௩.௮. (௨௫) அதி.௨௨.௰௮. (௨௬) எண்.௪.௪,. நிகி.௰௧.௨௪. (௨௯) யாத்.௨௫.௩௰. லேவி.௬.௨௰. லேவி.௨.௪,௫,௭. லேவி.௰௯.௩௫. (௩௧) எண். ௰.௰. சங்.௮௧.௩. லேவி.௨௩.௪. (௩௨) எண்.௧.௫௩. எண்.௩.௬—௯.—(௨௪.அதி.௧.) லேவி.௰.௧,௬. (௨) எண்.௩.௪.

கள், ஆசாரியனாகிய சாதோக், அப்யாதாரின் புத்
திரனாகிய அகீமெலெக், ஆசாரியர், லேவியரென்
னும் இவர்களுடைய பிதாவமிசத்ததிபதிகளாகி
ய அவர்கள் முன்பாக, லேவியரில் நிதனேலின்
புத்திரனாகிய ஷிமாயியாவென்னும் இலேககன்
அவர்கள்நாமங்களை எழுதினான்: இதாமாருக்கா
கவும் எலீயேசாருக்காகவும் இரண்டுபிதாவமிசத்
௭ ததிபதிகள் எழுதப்பட்டார்கள்.—முதலாஞ்சீட்டு
யோயாரிப்புக்கும், இரண்டாவது யெதாயாவுக்
௮ கும்,-மூன்றுவது ஆரீமுக்கும், நாலாவது சேயோ
௯ ரீமுக்கும்,—ஐந்தாவது மல்கீயாவுக்கும், ஆறுவது
௰ மியாமினுக்கும்,—ஏழாவது அக்கோசுக்கும், எட்
௰௧ டாவது அபீயாவுக்கும்,—ஒன்பதாவது யேஷுவா
௰௨ வுக்கும், பத்தாவது ஷெகனியாவுக்கும்,—பதி
னொராவது இலியாஷீப்புக்கும், பன்னிரண்டா
௰௩ வது யாகீமுக்கும்,—பதின்மூன்றுவது உப்பாவுக்
௰௪ கும், பதினாலாவது இஷிபியாப்புக்கும்,—பதி
னைந்தாவது பில்காவுக்கும், பதினாறுவது இம்மே
௰௫ ருக்கும்,—பதினேழாவது ஏசீருக்கும், பதினெட்
௰௬ டாவது அப்சேசுக்கும்,—பத்தொன்பதாவது பெ
தகியாவுக்கும்,இருபதாவது இயெசிகேலுக்கும்,-
௰௭ இருபத்தொராவது யாகினுக்கும், இருபத்திரண்
௰௮ டாவது கமூலுக்கும்,—இருபத்துமூன்றுவது தி
லாயாவுக்கும், இருபத்துநாலாவது மகசியாவுக்
௰௯ கும விழுந்தது.—இஸரவேலரின் தேவனாகிய
யெகோவா தங்கள் பிதாவாகிய ஆரோனுக்
குக் கட்டளையிட்டபிரகாரம் தங்கள்முறை வரி
சையின்படி, தங்கள் தொழில்செய்வதற்கு யெ
கோவாவின் ஆலயத்தில் பிரவேசிக்கும்வகுப்
புக்கள் இவைகளே.

௨௰ லேவியரின் மற்றச் சந்ததியார்; அம்ராமின்
வமிசத்தாரில்; ஷூபாவேல்: ஷூபாவேலின் வமி
௨௧ சத்தாரில்; யெகதியா.—ரெகேபியாவோ: ரெகே
௨௨ பியாவின் புத்திரரில்; மூத்தவன் இஷியா.—இத்
சாரியரில்; ஷெலோமொத்: ஷெலோமோத்தின்
௨௩ புத்திரரில்; யகத்.—எப்ரோனின் புத்திரர்; மூத்
தவன் எரியா, இரண்டாம் புத்திரன் அமரியா,
மூன்றும் புத்திரன் யாகசியேல், நான்காம் புத்தி
௨௪ ரன் இகம்மியாம்.—ஊசியேலின் புத்திரர்; மீகா:
௨௫ மீகாவின் புத்திரர்; ஷாமீர்.—மீகாவின் சகோத
ரன் இஷியா: இஷியாவின் புத்திரர்; சகரியா.—
௨௬ மிராரியின் புத்திரர்; மாலி, மூஷி: யாசியாவின்
புத்திரரில்; பெனோ.

௨௭ மிராரிக்குப்பிறந்த யாசியாவின் புத்திரர்;பெ
௨௮ னோ, ஷோகாம், சக்கூர், இப்ரீ.—மாலியின்புத்தி
௨௯ ரரில், எலீயேசார்; இவனுக்குப்புத்திரரில்லை.-கீ
௩௰ ஷோ: கீஷின்புத்திரன் இரகமேல்.—மூஷியின்
புத்திரர்; மாலி,ஏதேர், எரேமோத். இவர்கள் தங்
கள் தங்கள் பிதா வமிசத்தின்படி லேவியரின்
௩௰௧ புத்திரர்.—இவர்கள் தங்கள் சகோதரராகிய ஆ
ரோனின் புத்திரர்போலத் தாவீது இராசாவும்,
சாதோக்கும், அகீமெலெக்கும், ஆசாரியர் லேவி
யர் என்பவர்களின் பிதா வமிசத்ததிபதிகளுமா
கிய இவர்களுக்குமுன்பாகச் சீட்டுப்போட்டார்
கள்; இவர்கள் பிதாக்களான பிரதானிகளும்,
இளைய சகோதரரும், அப்படியே செய்தார்கள்.

## ௨௫. அதிகாரம்.

௧. பாடகரின் தொகையையும் தொழிலையும் வி
பரித்தல்: ௮. சீட்டுப்போட்டு அவர்களை இரு
பத்துநான்குவகுப்பாய்ப்பிரித்தல்.

மேலுந்தாவீதும்,பிரதானஆசாரியரும்,சுரமண் ௧
டலங்களையும், தம்புருகளையும், கைத்தாளங்க
ளையுங்கொண்டு, பாடிச்சேவிக்கும்படி, ஆசாப்,
எமான், யெதுதூன் என்பவர்களுடைய சந்ததி
யாரைப் பிரித்து ஏற்படுத்தினார்கள்: அவரவர்
தொழிலின்படி தொழிற்காரருடைய தொகை
வருமாறு.—ஆசாப்பின் புத்திரர், சக்கூர், யோ ௨
சேப்பு, நிதனியா, அசரேலா: இராசாவின் கட்
டளைப்படி தீர்க்கதரிசனஞ்சொல்லுகிற ஆசாப்
பின் புத்திரராகிய இவர்கள், அவனுக்குச் சகா
யஞ்செய்துவந்தார்கள்.—யெதுதூனே: யெது ௩
னின் புத்திரர்; கெதலியா, சேரீ, எஷாயா, அஷ
பியா, மத்திதீயாஎன்னும் ஆறுபேரும் யெகோ
வாவைப்போற்றித் துதிக்கும்படி, சுரமண்ட
லத்தைக்கொண்டு தீர்க்கதரிசனஞ்சொல்லி, தங்
கள் பிதாவாகிய யெதுதூனுக்கு உதவிசெய்தார்
கள்.—எமானோ: எமானேனின்புத்திரர், புக்கியா ௪
வு, மத்தானியா, ஊசியேல், ஷெபுவேல், எரே
மோத், அனனியர், அனனி, இலீயாதா, கித்தல்
தீ, ரோமம்திசயேர், யோஷ்பீகாஷா, மலோதி,
ஒதீர்,மகாசியோத்;-இராசாவின் தரிசியான எமா ௫
னின் புத்திரராகிய இவர்களெல்லாருந் தேவனு
டைய வாக்கின்படி கொம்பூதிவந்தார்கள். தே
வன் எமானுக்குப் பதினாலு புத்திரரையும்மூன்
று புத்திரிகளையும் அருளினார்.—இவர்களெல்லா ௬
ரும் ஆசாப்புக்கும், யெதுதூனுக்கும், எமானுக்
கும், இடப்பட்ட இராசகட்டளையின்படி, தே
வனுடைய ஆலயத்திலேசேவிக்கும்பொருட்டு,
கைத்தாளங்களையும், தம்புருகளையும், சுரமண்ட
லங்களையுங்கொண்டு, யெகோவாவின் ஆ
லயத்தில்பாடி, தங்கள் பிதாவுக்கு உதவிசெய்து
வந்தார்கள்.-யெகோவாவின் பாட்டுக்களில் ௭
அப்பியாசித்த புத்திமான்களாகிய தங்கள் சகோ
தரரோடும், இவர்கள் தொகை இருநூற்றெண்பத்
தெட்டு.

சிறியோரும் பெரியோரும், குருவுஞ் சீஷனு ௮
மாகிய இவர்கள் சீட்டுப்போட்டு, தங்கள் தங்
கள் வகுப்புக்களை நிலைப்படுத்தினார்கள்.—ஆசாப் ௯
பின்புத்திரனாகிய யோசேப்புக்கு முதலாஞ்சீட்டு
விழுந்தது: இரண்டாவது கெதலியாவுக்கு; அவ
னும், அவன் சகோதரரும், அவன் புத்திரரும் ஆ
கப்பன்னிரண்டுபேர்:—மூன்றுவது சக்கூருக்கு; ௰
அவனும், அவன் புத்திரரும், அவன் சகோதர
ரும்,ஆகப்பன்னிரண்டுபேர்:—நாலாவது இஸ்ரீக் ௰௧

(௰) நெகி.௰௨.௪,௰௭. லூக்.௧.௫. (௰௯) அதி.௯.௨௫. (௨௰) அதி.௨௩.௰௬. (௨௧) அதி.௨௩.௰௭. (௨௨) அதி.௨௩.௰௮. (௨௩) அதி.௨௩.௰௯. (௨௬) யாத்.௬.௰௯. அதி.௨௩.௨௧. (௨௮) அதி.௨௩.௨௨. (௩௰) அதி.௨௩.௨௩.—(௨௫. அதி. ௧.) அதி.௬.௩௩,௩௯,௪௪. (௨) வச.௯,௰௪. (௩) வச.௰௧.௰௭. (௪) வச.௰௮,௨௰. (௬) வச.௨. (௮) ௨.நாளா.௨௩.௰௩.

கு; அவனும், அவன் புத்திரரும், அவன் சகோ
௰௨ தரரும், ஆகப்பன்னிரண்டுபேர்.—ஐந்தாவது நித
னியாவுக்கு; அவனும்,அவன்புத்திரரும், அவன்
௰௩ சகோதரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—ஆறாவ
து புகியாவுக்கு; அவனும், அவன் புத்திரரும், அ
வன் சகோதரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—
௰௪ ஏழாவது இஷரேலாவுக்கு; அவனும், அவன் புத்
திரரும், அவன் சகோதரரும், ஆகப்பன்னிரண்
௰௫ டுபேர்:—எட்டாவது எஷாயாவுக்கு; அவனும்,
அவன் புத்திரரும், அவன் சகோதரரும், ஆகப்
௰௬ பன்னிரண்டுபேர்:—ஒன்பதாவது மத்தனியாவுக்
கு; அவனும், அவன் புத்திரரும், அவன்சகோத
௰௭ ரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—பத்தாவது ஷிமி
யிக்கு;அவனும்,அவன் புத்திரரும், அவன் சகோ
௰௮ தரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—பதினொராவ
து அசரேலுக்கு; அவனும், அவன் புத்திரரும்,
அவன் சகோதரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—
௰௯ பன்னிரண்டாவது அஷபியாவுக்கு; அவனும்,
அவன்புத்திரரும், அவன்சகோதரரும், ஆகப்பன்
௨௰ னிரண்டுபேர்.—பதின்மூன்றாவது ஷூபாவேலுக்
கு; அவனும், அவன் புத்திரரும், அவன் சகோத
௨௧ ரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—பதினாலாவது
மத்தித்தியாவுக்கு; அவனும், அவன் புத்திரரும், அ
௨௨ வன் சகோதரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—பதி
னைந்தாவது யெரேமோத்துக்கு;அவனும், அவன்
புத்திரரும், அவன் சகோதரரும், ஆகப்பன்னி
௨௩ ரண்டுபேர்:—பதினாறாவது அனனியவுக்கு; அ
வனும், அவன் புத்திரரும், அவன் சகோதரரும்,
௨௪ ஆகப்பன்னிரண்டுபேர்:—பதினேழாவது யோ
ஷ்பிகாஷாவுக்கு; அவனும், அவன் புத்திரரும்,
அவன் சகோதரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—
௨௫ பதினெட்டாவது அனானிக்கு; அவனும்,அவன்
புத்திரரும்,அவன்சகோதரரும்,ஆகப்பன்னிரண்
௨௬ டுபேர்:—பத்தொன்பதாவது மலோதிக்கு; அவ
னும், அவன் புத்திரரும், அவன் சகோதரரும், ஆ
௨௭ கப்பன்னிரண்டுபேர்:—இருபதாவது இலீயாதா
வுக்கு; அவனும்,அவன் புத்திரரும், அவன்சகோ
௨௮ தரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—இருபத்தொ
ராவது ஒதிருக்கு; அவனும், அவன் புத்திரரும்,
அவன் சகோதரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—
௨௯ இருபத்திரண்டாவது கித்தல்தீக்கு; அவனும், அ
வன்புத்திரரும்,அவன்சகோதரரும்,ஆகப்பன்னி
௩௰ ரண்டுபேர்:—இருபத்துமூன்றாவது மகாசியோத்
துக்கு; அவனும், அவன்புத்திரரும், அவன்சகோ
௩௧ தரரும், ஆகப்பன்னிரண்டுபேர்:—இருபத்துநா
லாவது ரோமம்சதியேருக்கு; அவனும, அவன்
புத்திரரும், அவன் சகோதரரும், ஆகப்பன்னி
ரண்டுபேர்.

## ௨௬. அதிகாரம்.

**௧. வாசற்காவலாளரை வகுத்தல்: ௰௩. சீட்டுப்போட்டு வாசற்காவலாளரை நியமித்தல்: ௨௰. பொக்கிஷங்களைக்காக்கும்படி லேவியரைஏற்படுத்தல்.**

வாசற்காவற்காரரின் வகுப்புக்கள் வருமாறு:
கோர்கியராகிய ஆசாப்பின் புத்திரருக்குள், ஆ
சாப்பின் சந்ததியாரிலுள்ளகோரேயின்புத்திரனா
கிய மிஷெலிமியா.-மிஷெலிமியாவின்புத்திரர், ௨
மூத்தவன் சகரியா, இரண்டாம்புத்திரன் யெதீ
யேல், மூன்றாம்புத்திரன் சிபதியா, நான்காம்புத்
திரன் யத்னியேல்,-ஐந்தாம்புத்திரன் ஏலாம், ஆ ௩
றாம்புத்திரன் யோகானான், ஏழாம்புத்திரன் இலி
யோயேனாய்.—ஓபெத்ஏதோமின் புத்திரர், மூத்த ௪
வன் ஷிமாயியா,இரண்டாம்புத்திரன் யோசாபா
த், மூன்றாம்புத்திரன்யோவா, நான்காம்புத்திரன்
சாக்கார், ஐந்தாம்புத்திரன் நிதனேல்,—ஆறாம்புத் ௫
திரன் அம்மியேல், ஏழாம்புத்திரன் ஈஷகார், எட்
டாம்புத்திரன் யெயுல்தாய்: தேவன் அவனை ஆ
சீர்வதித்திருந்தார்.—அவன் புத்திரனாகிய ஷிமா ௬
யியாவுக்குப்புத்திரர் பிறந்தார்கள்;அவர்கள் பரா
க்கிரமசாலிகளாகித்தங்கள் பிதாவமிசத்தில் அதி
காரம் பெற்றிருந்தார்கள்.—ஷிமாயியாவின் புத் ௭
திரர், ஒதனி, ரெபாயேல், ஒபெத், இல்சாபாத்;
அவன் சகோதரராகிய இலியூவும், செமகியாவும்,
பராக்கிரமசாலிகளாயிருந்தார்கள்.—இவர்களெல் ௮
லாரும் ஓபெத்ஏதோமின் புத்திரர்; இவர்களும்,
இவர்கள் புத்திரரும், இவர்கள் சகோதரரும், ஊ
ழியஞ்செய்யவல்லவர்களும், பராக்கிரமசாலிக
ளுமாயிருந்தார்கள்;ஓபெத்ஏதோமின்வமிசத்தார்
அறுபத்திரண்டுபேர்.—மிஷெலிமியாவுக்குப் புத் ௯
திரருஞ்சகோதரரும் ஆகப்பதினெட்டுப்பேர், அ
வர்கள் பராக்கிரமசாலிகள்.—மிராரிவமிசத்தில், ௰
ஓசாவின்புத்திரரில், ஷிம்ரீபிரதானி; இவன்மூத்
தவனல்லாதிருந்தும், இவன்பிதா இவனைப்பிர
தானியாக்கினான்.—இரண்டாம்புத்திரன் இலகி ௰௧
யா, மூன்றாம்புத்திரன் திபலியா, நான்காம்புத்தி
ரன் சகரியா: ஓசாவின்புத்திரருஞ் சகோதரரும்
ஆகப்பதின்மூன்றுபேர்.—பிரதானிகளாகிய இ ௰௨
வர்கள், யெகோவாவின் ஆலயத்திலே பணி
விடைசெய்கிறதற்குத்தங்கள் சகோதரருக்கொத்
தமுறையாய்,வாசற்காவற்காரராய் வகுக்கப்பட்
டார்கள்.

சிறியோரும்பெரியோருமாகியஇவர்கள், வா ௰௩
சல்ஒவ்வொன்றிற்குஞ்சீட்டுப்போட்டார்கள்.—
கீழ்த்திசைவாசலின்சீட்டு ஷெலேமியாவுக்குவி ௰௪
ழுந்தது. மந்திராலோசனையில் விவேகியும், இ
வன்புத்திரனுமாகிய சகரியாவுக்குச்சீட்டுப்போ
ட, அவன்சீட்டு வடதிசைக்கு விழுந்தது.—
ஓபெத்ஏதோமுக்குத்தென்றிசையிலும்,அவன்பு ௰௫
த்திரருக்குப்பண்டசாலைவீட்டிலும் விழுந்தது.—
சுப்பிமுக்கும், ஓசாவுக்கும், மேற்றிசையில் உ ௰௬
யர்ந்தவழிக்குச்சமீபத்தில் வெளியேபோகிறவா
சலின்சீட்டுவிழுந்தது; அவர்கள் காவல்வகுப்பு
ஒன்றுக்கொன்று எதிர்முகமாயிருந்தது.—லேவி ௰௭
யர்கீழ்த்திசையில் ஆறுபேர், வடதிசையிலே நா
லுபேர், தென்றிசையிலே நாலுபேர், ஒவ்வொ
ருபண்டசாலைக்கு இவ்விரண்டுபேர்.—மேற்றி ௰௮
சையிலுள்ள பேட்டையினுயர்ந்தவழியிலே நா
லுபேர், பேட்டையில் இரண்டுபேர், நாடோ

(௨௬. அதி. ௧.) அதி.௬.௩௭. (இ) அதி.௰௫.௰௪. (ம) அதி.௰௬.௩௮. (௰௪) வச.௧. (௰௬) ௧.இரா.௰.௫. ௨.நாளா.௯.௪.

௰௯ றும்ஏற்பட்டார்கள்.—கோரேவமிசத்தாருக்குள்
ளும், மிராரிவமிசத்தாருக்குள்ளும், ஏற்பட்ட
வாசற்காவற்காரரின்வகுப்புக்கள் இவைகளே.
௨௰ லேவியரில் அகியா தேவனுடைய ஆலயத்
திலுள்ளபொக்கிஷங்களுக்கும் நிவேதிக்கப்பட்
௨௧ ட பொக்கிஷங்களுக்கும் அதிகாரி.—லாதானின்
புத்திரரோ கெர்ஷோனியனாகிய லாதானின்புத்
திரனும், கெர்ஷோனியனாகிய லாதானின் பிதா
வமிசத்துக்குப் பிரதானியுமாகிய யிகியேலி.—
௨௨ யிகியேலின் புத்திரர்; சேதாம், அவன் சகோதரன்
யோவேல்; இவர்கள் யெகோவாவின் ஆல
யத்திலுள்ள பொக்கிஷங்களுக்கு அதிகாரிகள்.—
௨௩ அம்ராமியரிலும், இத்சாரியரிலும், எப்ரோனிய
ரிலும், ஊசியேலரிலும் சிலர் இருந்தார்கள்:—
௨௪ மோசேயின் பௌத்திரனும், கெர்ஷோமின் புத்
திரனுமாகிய செபுவேல் பொக்கிஷவதிகாரி.—
௨௫ எலீயேசாருக்குப்பிறந்த அவன் சகோதரர்; அ
வன் புத்திரன் ரெகேபியா, அவன்புத்திரன் எஷா
யா, அவன் புத்திரன் யோராம், அவன் புத்திரன்
௨௬ சிக்ரி, அவன் புத்திரன் ஷிலோமித்.—தாவீது இ
ராசாவும், பிதாவமிச பிரதானிகளும், ஆயிரவருக்
கதிபதிகளும், நூறுபேருக்கதிபதிகளும், சேனை
களுக்கதிபதிகளும், நிவேதித்திருந்த பரிசுத்த
வஸ்துக்களின் சகல பொக்கிஷங்களுக்கும், ஷி
லோமித்தும் அவன்சகோதரரும் அதிகாரிகள்.—
௨௭ அவர்கள் யெகோவாவின் ஆலயத்தைக்கட்
டும்படி தாங்கள் யுத்தத்தில் கொள்ளையிட்ட சில
௨௮ வற்றைநிவேதனம்பண்ணினார்கள்.—தரிசியாகிய
சாமுவேலும், கீஷின்புத்திரனாகிய ஷவுலும், நே
ரின்புத்திரனாகிய அப்னேரும், செருயாவின்புத்
திரனாகிய யோவாப்பும், நிவேதித்தயாவும், மற்ற
எவரும்நிவேதித்தயாவும், ஷிலோமித்வசமாயும்,
அவன் சகோதரர் வசமாயுமிருந்தன.
௨௯ இத்சாரியருக்குள், கினன்யாவும் அவன் புத்தி
ரரும் இஸரவேலரின்புறம்பான பணிவிடைக்கு
ஏற்பட்டவர்களாகிய அதிபதிகளும் நீதிபதிக
௩௰ ளும்.—எப்ரோனியருக்குள், அஷபியாவும், அ
வன் சகோதரருமாகிய பராக்கிரமசாலிகள் ஆயி
ரத்தெழுநூறுபேர் யெகோவாவின்சகல காரி
யத்திலும், இராசாவின் பணிவிடையிலும், யோர்
தானுக்கிப்புறத்தில் மேற்றிசையிலுள்ள இஸர
௩௧ வேல் சனங்களுக்குள் அதிபதிகள்.—எப்ரோனி
யருக்குள் எரியாவென்பவன் தன் பிதாவமிசத்
தின்படி, எப்ரோனியருக்குள்ளே பிரதானி. தா
வீது அரசாண்டநாற்பதாம்வருஷத்தில் அவர்கள்
சோதிக்கப்பட்டபொழுது, அவர்களுக்குள்கிலி
யாத்யாசேரிலேபராக்கிரமவீரர் காணப்பட்டார்
௩௨ கள்.—பராக்கிரமசாலிகளாகிய அவன் சகோதரர்
இரண்டாயிரத்தெழுநூறுபேர் பிதாவமிசத்ததிப
திகள்; இவர்களைத் தாவீது இராசா தேவனுடை
ய ஒவ்வொருகாரியத்திலும், இராசாவின்காரியங்
களிலும், ரூபேனியருக்கும், காத்தியருக்கும், ம
னாசேயின் பாதிக்கோத்திரத்தாருக்கும், தலைமை
க்காரராக ஏற்படுத்தினான்.

## ௨௭. அதிகாரம்.

மாதந்தோறும் நிற்கும் சேனாபதிகளின் நாமங்க
ளைத்தெரிவித்தல்: ௰௬. பன்னிரண்டுகோத்திரத்
தலைவரைக்குறித்தல்: ௨௩. சனங்களை எண்ணா
தபடிதடுத்தல்: ௨௫. தாவீதின் அதிபதிகள்.

இராசாவிடத்தில் நித்தமுஞ்சேவிக்கும் பிதாவ ௧
மிசத்ததிபதிகளும், ஆயிரவருக்கு அதிபதிகளும்,
நூறுபேருக்கு அதிபதிகளும், அவர்களுக்காதீன
ரும், வருஷந்தோறும் இஸரவேலரின் தொகைப்
படி வகுப்புக்களாய்ப்பிரிக்கப்பட்டு, மாதத்துக்
குமாதம்மாறிமாறிவருவார்கள்; ஒவ்வொருவகுப்
புக்கு இருபத்துநாலாயிரம்பேர்.—முதலாம்மாதத் ௨
துக்கு முதல் வகுப்பிலுள்ளவன் பெரெஸ் வமி
சத்தானாகிய சப்தியேலின் புத்திரனாகிய யாஷொ
பியாம்.—இவன் முதலாம் மாதத்தில் சகல சே ௩
னாபதிகளுக்குள்ளும்பிரதானி: இவன்வகுப்பில்
இருபத்து நாலாயிரம்பேர்.—இரண்டாம் மாதத் ௪
தின்வகுப்பிலுள்ளவன் அகோகியனான தோதா
ய்; இவன் வகுப்பில்மிக்லோத்பிரதானி: இவன்
வகுப்பில் இருபத்திநாலாயிரம்பேர்.—மூன்றாம் ௫
மாதத்தில் பிரதான ஆசாரியனாகியயோயதாவின்
புத்திரன் பெனாயா மூன்றாஞ்சேனாபதி: இவன்வ
குப்பில்இருபத்துநாலாயிரம்பேர்.—பெனாயாவெ ௬
ன்னும் இவன் முப்பதுபேருக்குள்ளே பராக்கிர
மசாலியும், அம்முப்பதுபேருக்குஅதிபதியுமாயி
ருந்தான். இவன்வகுப்பில் இவன் புத்திரனாகி
ய அமீசபாத்சேர்ந்திருந்தான்.—நாலாம்மாதத்தில் ௭
யோவாப்பின் சகோதரனாகிய அசாகேலும், அவ
னுக்குப்பின் அவன் புத்திரனாகிய செபதியாவும்,
நாலாஞ் சேனாபதி: இவன்வகுப்பில் இருபத்
துநாலாயிரம்பேர்.—ஐந்தாம் மாதத்தில் இஸராகி ௮
யனாகிய ஷம்கூத் ஐந்தாஞ்சேனாபதி: இவன் வ
குப்பில் இருபத்துநாலாயிரம்பேர்.—ஆறாம் மா ௯
தத்தில் தெக்கோயனாகிய இக்கேஷின் புத்திரனா
ன ஈரா ஆறாஞ் சேனாபதி: இவன் வகுப்பில்
இருபத்துநாலாயிரம்பேர்.—ஏழாம்மாதத்தில்எப் ௰
ராயீம் வமிசத்தாரிலுள்ள, பெலோனியனாகிய ஏ
லெத்ஸ் ஏழாஞ்சேனாபதி: இவன் வகுப்பில்இரு
பத்துநாலாயிரம்பேர்.—எட்டாம்மாதத்தில் சர்கி ௰௧
யரிலுள்ள, ஊஷாத்தியனாகிய சிபெக்காய் எட்
டாஞ் சேனாபதி: இவன் வகுப்பில் இருபத்து
நாலாயிரம்பேர்.—ஒன்பதாம் மாதத்தில் பேன்ய ௰௨
மீனியரிலுள்ள, ஆன்தோத்தியனாகிய அபீயேஸர்
ஒன்பதாஞ்சேனாபதி: இவன் வகுப்பில் இருபத்
துநாலாயிரம்பேர்.—பத்தாம் மாதத்தில் சர்கியரி ௰௩
லுள்ள, நிதோபாத்தியனாகிய மகராயிபத்தாஞ்சே
னாபதி: இவன் வகுப்பில் இருபத்து நாலாயிரம்
பேர்.—பதினோராம்மாதத்தில் எப்ராயிம் வமிசத் ௰௪

(௨௰) அதி.௨௮.௰௨. மல்.௩.௰. (௨௧) அதி.௨௩.௰௭. அதி.௨௩.௮.(௨௪) அதி.௨௩.௰௬. (௨௫) அதி.௨௩.௰௮. (௨௮) க.சாமு.௯.௰. (௨௯) அதி.௨௩.௪. (௩௧) அதி.௨௩.௰௯. யோசு.௨௧.௩௯. (௩௨) உ.நாளா.௰௯.௰௧.—(௨௭.அதி.௨.) உ.சாமு.௨௩.௮. (௪) உ.சாமு.௨௩.௯.(௫)க.இரா.௪.௫.(௬)உ.சாமு.௨௩.௨௰. அதி.௰௧.௨௨,. (௭)உ.சாமு.௨௩.௨௪.(௮) அதி.௰௧.௨௭.(௰)அதி.௰௧.௨௭.(௰௧)உ.சாமு.௨௧.௰௮.(௰௨)அதி.௰௧.௨௮.(௰௩)உ.சாமு.௨௩.௨௮.(௰௪)அதி.௰௧.௩௧

தாரிலுள்ள,பிரத்தோனியனுகியபினுயாபதிசெ
ராஞ்சேனுபதி: இவன் வகுப்பில் இருபத்து நா
௰௫ லாயிரம்பேர்.—பன்னிரண்டாம் மாதத்தில் ஒத்
னியேல் வமிசத்திலுள்ள, நிதோ பாத்தியனுகிய
எல்தாய் சேனுபதி: இவன் வகுப்பில் இருபத்
துநாலாயிரம்பேர்.
௰௬ மேலும் இஸரவேல் கோத்திரங்களுக்குள்ளே
சிக்ரியின்புத்திரனுகியஎலீயேசர்,ரூபேனியருக்
கும்; மாகாவின் புத்திரனுகிய ஷிபத்தியா,ஷிமி
௰௭ யோனியருக்கும்;—கேமுவேலின் புத்திரனுகிய
அஷபியா, லேவியருக்கும்; சாதோக், ஆரோனி
௰௮ யருக்கும்;—தாவீதின் சகோதரர்களிலொருவனு
கிய இலியூ,யூதாவமிசத்தாருக்கும்; மீகாயேலின்
௰௯ புத்திரனுகிய உம்றி, ஈஷகாருக்கும்;—ஒபதியா
வின் புத்திரனுகியஇஸ்மாயா,செபுலோனியருக்
கும்; அஸரியேலின்புத்திரனுகிய எரேமோத்,நப்
௨௰ தாலியருக்கும்;—அசசீயாவின்புத்திரனுகிய ஓஷி
யா, எப்ராயீமின்வமிசத்தாருக்கும்; பிதாயாவின்
புத்திரனுகிய யோவேல், மனுஷேயின் பாதிக்
௨௧ கோத்திரத்தாருக்கும்;—சகரியாவின்புத்திரனுகி
ய இத்தோ, கிலியாத்திலுள்ள மனுஷேயின் பா
திக்கோத்திரத்தாருக்கும்; அப்னேரின் புத்திரனு
௨௨ கியயாசியேல், பேன்யாமீனியருக்கும்;—எரோ
காமின் புத்திரனுகிய அசரேல், தாணியருக்கும்;
அதிகாரிகளாயிருந்தார்கள். இஸரவேலின்கோத்
திரத்து அதிபதிகள் இவர்களே.
௨௩ இஸரவேலரை வானத்தின் நட்சத்திரங்கள்
போலப்பெருகப்பண்ணுவேனென்றுயெகோ
வா சொல்லியிருந்தபடியால்,தாவீது இருபதுவ
யதுமுதல் அதற்குட்பட்டவர்களைத்தொகையிட
௨௪ வில்லை.—சேருயாவின் புத்திரனுகிய யோவாப்
தொகையிடத்தொடங்கினுன்; அதினிமித்தம் இ
ஸரவேலருக்கு விரோதமாய்க்கோபம் மூண்டதி
னுல், அவன் எண்ணிமுடிக்கவுமில்லை: அவர்க
ளின்தொகை தாவீது இராசாவின் சரித்திரபுத்த
கத்திலெழுதப்படவுமில்லை.
௨௫ அதியேலின்புத்திரனுகியஅஸ்மாவேத் இராசா
வின் பொக்கிஷங்களுக்குக்கண்காணி: ஊசியா
வின் புத்திரனுகிய இகோனுதன் நாடுகளிலும்,
நகரங்களிலும், கிராமங்களிலும், அரமனைகளிலு
௨௬ முள்ளபண்டசாலைகளுக்குக்கண்காணி:-கிலூப்
பின் புத்திரனுகிய எஸ்ரிவயல்வெளியில்பயிரிடு
௨௭ ந்தொழிற்காரருக்குக் கண்காணி:—ராமாத்தியனு
கியஷிமியி திராட்சத்தோட்டத்துக்குக் கண்கா
ணி: ஷிப்மீயனுகியசப்தி திராட்சத்தோட்டங்க
ளிலுள்ளதிராட்சச்சாலைகளிலுண்டாகும்பொரு
௨௮ ளுக்குக் கண்காணி:—கிதேரியனுகிய பாகாலா
னுன் தாழ்ந்த பூமியிலுள்ள சீதவிருட்சங்களுக்
கும், காட்டத்திமரங்களுக்கும் கண்காணி: யோ
௨௯ வாஷ்எண்ணெய்ச்சாலைக்குக்கண்காணி:—ஷா
ரோனியனுகிய ஷித்ராய் ஷாரோனில் மேய்கிற
மாடுகளுக்குக்கண்காணி: அத்லாயின்புத்திரனுகி
ய ஷாபாத்பள்ளங்களிலுள்ள மாடுகளுக்குக்கண்
காணி:—இஷ்மாவேலியனுகிய ஓபீல் ஒட்டகங் ௩௰
களுக்குக்கண்காணி: மேரோனேதியனுகியயெ
கதியா கழுதைகளுக்குக்கண்காணி:—அகரீயனு ௩௧
கிய யாசீஸ் ஆட்டு மந்தைக்குக்கண்காணி: இவர்
களெல்லாருந்தாவீது இராசாவின்பொருள்களுக்
குக்கண்காணிகள்.—தாவீதின்சிறிய பிதாவாகிய ௩௨
யோனுதான் ஞானமுள்ள மந்திரியும், இலேகக
னுமாயிருந்தான்: அக்மோனியின் புத்திரனுகிய
யிகியேல் இராசபுத்திரரோடிருந்தான்.—அகீதோ ௩௩
பேல் இராச மந்திரியாயிருந்தான்: அர்கீயனுகிய
ஊஷாய் இராசாவின் தோழன்.—பினுயாவின்புத் ௩௪
திரனுகிய யோயதாவும், அப்யாதாரும் அகீதோ
பேலுக்கு உதவிக்காரர்: யோவாப் இராசாவின்
சேனுபதி.

## ௨௮. அதிகாரம்.

௧. கூடிவந்த அதிபதிகளுக்குத்தாவீது புத்திபோத
னைசொல்லல்: ௯. தாவீது சலோமோனை ஆல
யத்தைக்கட்டும்படி தைரியப்படுத்தல்: ௰௧. அ
வனிடத்திற் பொன் வெள்ளி முதலியபொரு
ளை ஒப்பித்தல்.

பின்புதாவீது, வகுப்பு வகுப்பாக இராசாவுக் ௧
குப் பணிவிடைசெய்கிற கோத்திரத்தலைவராகி
ய இஸரவேலரின் சமஸ்த பிரபுகளையும், வகுப்
புக்களின் தலைவர்களையும், ஆயிரவருக்கு அதிப
திகளையும், நூறுபேருக்கதிபதிகளையும், தாவீதின்
பொருளுக்கும் அவன்புத்திரரின்பொருளுக்கும்
அதிபதிகளையும், மற்ற அதிபதிகளையும், சகலப
ராக்கிரம சாலிகளையும், சகலவீரரையும், யெரூ
ஷலேமிலே கூடிவரச்செய்தான்.—அப்பொழு ௨
துதாவீது இராசா காலூன்றிநின்று, என்சகோதர
ரே, என்சனங்களே, கேளுங்கள்: யெகோவா
வின் உடன்படிக்கைப்பெட்டியும், நமது தேவ
னுடைய பாதபீடமும், தங்கும்படி ஒருஆலயங்
கட்டஅபிப்பிராயங்கொண்டு, அதைக் கட்டுவத
ற்கு ஆயத்தம்பண்ணியிருந்தேன்.—அப்பொழுது ௩
தேவன் என்னைநோக்கி, நீயுத்தஞ்செய்து இரத்
தஞ்சிந்தினபடியால் என்பேரால் ஆலயங்கட்ட
வேண்டாமென்றார்.—ஆகிலும் இஸரவேலரின் ௪
தேவனுகிய யெகோவா, நித்தமும் இஸர
வேலருக்கு இராசாவாகும்படி என்பிதாவமிசத்
தாரெல்லாரினின்றும், என்னைத்தெரிந்துகொண்
டார்; ஆளுகைசெய்யும்படி யூதாவமிசத்தாரையு
ம், என்பிதாவமிசத்தையுந் தெரிந்துகொண்டார்:
என்பிதாவின் புத்திரருக்குள் என்னை இஸரவே
லரனைவருக்கும் இராசாவாக்கப்பிரியங்கொண்
டார்.—யெகோவா எனக்கு அநேகபுத்திரரை ௫
அருளியிருக்கிறார்; அந்தச்சகல புத்திரருக்குள்
ளும், யெகோவாவினுடையஇராச்சியமாகிய
இஸரவேலரின் சிங்காசனத்தில் வீற்றிருக்கஎன்

(௰௫) அதி.௰௧.௩௰. (௰௭) அதி.௨௬.௩௰.(௰௮)௧.சாமு.௰௬.௬. (௨௩) ஆதி.௰௫.௫. (௨௪) ௨.சாமு.௨௪.௰௫. அதி. ௨௧.௭. (௩௨) ௨.சாமு.௰௫.௰௨. ௨.சாமு.௰௫.௩௭. ௧.இரா.௧.௭.—(௨௮. அதி. ௧.) அதி.௨௭.௧,௨,௰௬,௨௫. அதி. ௰௧.௰. (௨) ௨.சாமு.௭.௨. சங்.௱௩௨.௨,௩௪. சங்.௯௯.௫. (௩) ௨.சாமு.௭.௪,௰௨. ௧.இரா.௫.௩. (௪) ௧.சாமு.௰௬.௭—௰௩. ஆதி.௪௯.௮. சங்.௬௰.௭. ௧.சாமு.௰௬.௧,௰௨,௰௩. (௫)அதி.௩.௧. அதி.௨௨.௯.

புத்திரனாகிய சலோமோனைத் தெரிந்துகொண்
௬ டார்.—அவர் என்னைநோக்கி, உன் புத்திரனாகிய
சலோமோன் என் ஆலயத்தையும் என்பிராகாரங்
களையுங்கட்டுவான்: நான் அவனை என்புத்திரனா
கத்தெரிந்துகொண்டேன்; நான் அவனுக்குப்பி
௭ தாவா யிருப்பேன்.—அன்றியும் இன்றிருக்கிற
படி என் கட்டளைகளையும் விதிகளையுங் காத்துக்
கொள்ளத்திடன் கொண்டிருப்பானாகில், நான்
அவன் இராச்சியத்தைச் சதாகாலமும் நிலைப்ப
௮ டுத்துவேனென்றார்.—ஆதலால் இப்பொழுது யெ
கோவாவின் சபையாராகிய இஸரவேலரனை
வருங் காணவும், நமது தேவனுடைய செவிக்
கேறவுந் தக்கதாக, உங்கள் தேவனாகிய யெ
கோவாவின், சகல கட்டளைகளையும் காத்துக்
கொள்ளும் பொருட்டு முயலுங்கள்: அதினால்
இந்த உத்தம தேசத்தை நீங்கள் சுதந்தரிக்கிறது
மன்றி, உங்களுக்குப்பின் வரும் உங்கள் சந்ததி
யாரும் நித்தமுஞ் சுதந்தரிக்கும்படி வைப்பீர்க
ளென்று சொல்லுகிறேன்.
௯ என் புத்திரனாகிய சலோமோனே, யெகோ
வா சகல இருதயங்களையுஞ் சோதித்து, சிந்தை
களெல்லாவற்றின் தோற்றங்களையும் அறிந்திருக்
கிறார்; ஆகையால் நீ உன் பிதாவின் தேவனை
யறிந்து, உன் சம்பூரண இருதயத்தோடும், மன
விருப்பத்தோடும், அவருக்குத்தொண்டுசெய்: நீ
அவரைத் தேடுவாயாகில் அவரைக்காண்பாய்; நீ
அவரை விட்டு நீங்குவாயாகில் அவர் சதாகால
௰ மும் உன்னைக்கைவிடுவார்.—சாவதானமாயிரு;
பரிசுத்த ஸ்தானத்துக்காக ஒரு ஆலயங் கட்டும்ப
டி யெகோவா உன்னைத்தெரிந்துகொண்டார்;
திடன்கொண்டு அதைச்செய்யென்றான்.
௰௧ பின்பு தாவீது தன் புத்திரனாகிய சலோமோ
னுக்கு மண்டபமும், அதின் எல்லா அறைகளு
ம், பண்டசாலைகளும், மேலறைகளும், உள்
ளறைகளும், கிருபாசய ஸ்தானமுமாகிய இவை
௰௨ களின் சாயலைக்கொடுத்தான்.—யெகோவா
வின் ஆலயத்தின் பிராகாரங்களும், சுற்றியிருக்
கிற எல்லா அறைகளும், தேவனுடைய ஆல
யத்தின் பண்டசாலைகளும், நிவேதிக்கப்பட்ட
௰௩ வஸ்துக்களின்பண்டசாலைகளும்,-ஆசாரியர்லே
வியர் இவர்களுடையவகுப்புக்களும், யெகோ
வாவின் ஆலயத்திலுள்ள ஆராதனையின்சகலகிரி
யையும், யெகோவாவின்ஆலயத்தில்ஆராதனை
செய்கிறதற்குச் சகலபாத்திரங்களுமாகிய இவை
களெல்லாவற்றையுங் குறித்து, ஆவியினால் தன
௰௪ க்குக்கிடைத்த சாயலைக்கொடுத்தான்.—சகலவித
ஆராதனையையுஞ்செய்கிறதற்கு, எல்லாப்பொற்
பாத்திரங்களுக்காகப் பொன்னும், சகலவித ஆ
ராதனையையும் செய்கிறதற்கான, எல்லாவெள்
ளிப் பாத்திரங்களுக்காக வெள்ளியும் நிறுத்
துக்கொடுத்தான்.—பொன் விளக்குத்தண்டுகளுக் ௰௫
காகவும், அவைகளின் பொன் அலகுகளுக்காக
வும், ஒவ்வொருவிளக்குக்கும், அதினதின் அலகு
களுக்கும், வேண்டிய பொன்னையும், வெள்ளி
விளக்குத்தண்டுகளுக்காகவும், அவைகளின் அ
லகுகளுக்காகவும், ஒவ்வொரு விளக்குத்தண்டுக
ளுக்கும், அதினதின் அலகுகளுக்கும், வெள்ளி
யையும், அந்தந்தவிளக்குத்தண்டுக்கேற்கநிறுத்து
க்கொடுத்தான்.-சமுகத்தப்பத்தின் பீடங்களாகி ௰௬
ய ஒவ்வொரு பீடத்துக்காகப் பொன்னையும், வெ
ள்ளிப்பீடங்களுக்காகவெள்ளியையும், நிறுத்துக்
கொடுத்தான்.—முட்கருவிகளுக்காகவும், கிண் ௰௭
ணங்களுக்காகவும், கலங்களுக்காகவும் பசும்
பொன்னையும், பொற்பாத்திரங்களாகிய ஒவ்வொ
ருபாத்திரத்துக்காகப் பொன்னையும், ஒவ்வொ
ரு வெள்ளிப்பாத்திரத்துக்காக வெள்ளியையும்,-
தூபவேதிகைக்காகப் பசும்பொன்னையும், தங்க ௰௮
ளுடைய சிறகுகளைவிரித்து, யெகோவாவு
டைய உடன்படிக்கையின் பெட்டியைமூடும்,
கெருபிகளின் இரதத்துக்காகப்பொன்னையும், நி
றுத்துக்கொடுத்தான்.—யெகோவா என்மேல் ௰௯
கைவைத்து, இந்தச்சகலகிரியைகளின் சாயலை
யும் எழுத்தினால் எனக்குணர்த்தினாரென்று தாவீ
துசொன்னான்.—பின்பு தாவீது, தன்புத்திரனாகி ௨௰
ய சலோமோனைநோக்கி, திடமாகித் தைரியங்
கொண்டு இதைச்செய்: பயப்படவும் வேண்
டாம், கலங்கவும்வேண்டாம்; தேவனாகிய யெ
கோவா என் தேவன்; அவர் உன்னோடிருப்
பார்; நீ யெகோவாவின் ஆலயத்தின் ஆராத
னைக்கேற்ற எல்லாக்கிரியையையும் செய்துமு
டிக்கும்வரைக்கும் அவர் உன்னைத் தாங்காதொ
ழியவுமாட்டார், கைவிடவுமாட்டார்.-தேவனு ௨௧
டைய ஆலயத்தின் எல்லாக்கிரியையையும் செய்
கிறதற்கு ஆசாரியர்களும், லேவியருமாகிய இ
வர்கள் வகுப்புக்கள் உன்னோடிருக்கும்: சகல
வித சிற்பவேலைக்காகவும், எந்தவிதக் கிரியைக்
காகவும், வேண்டிய பூரணமனதையுடைய சா
மர்த்தியவான்கள் உன்னோடிருக்கிறார்கள்: பிர
புகளும் சகலசனங்களும் முழுமையும் உன் கட்
டளைக்கமைந்திருப்பார்களென்றான்.

## ௨௯. அதிகாரம்.

௧. தாவீது சேகரித்த திரவியங்களைத்தொகுத்தல்: ௬. அதிபதிகள் காணிக்கைகளைத்தரல்: ௰. தாவீது துதித்துப்பிரார்த்தித்தல்: ௨௰. சனங்கள் பலிசெய்து சலோமோனை இராசாவாக ஏற்படுத்தல்: ௨௬. தாவீதின் இராச்சியத்தின் காலத்தையும் அவன் மரணத்தையும் காட்டல்.

மேலும் தாவீது இராசா சகல சபையாரையும் ௧
நோக்கி, தேவன் என்புத்திரனாகிய சலோமோ
னைமாத்திரந்தெரிந்துகொண்டார், அவன்வாலிப

(௬) ௨.சாமு.௭.௰௪,௰௫. ௨.நாளா.௧.௯. (௭) அதி.௨௨.௰௩. (௯) எரே.௯.௨௩. யோவா.௰௭.௩. ௨.இரா.௨௰.௩. சங். ௱௩௯.௨. ௧.சாமு.௰௬.௭. ௧.இரா.௮.௩௯. அதி.௨௯.௰௭. சங்.௭.௯. சங்.௱௩௯.௨. நீதி.௰௭.௩. எரே.௰௧.௨௰. எரே.௨௰. ௰௨. வெளி.௨.௨௩. ௨.நாளா.௰௫.௨. (௰) வச.௬. (௰௧) யாத்.௨௫.௪௰. (௰௨) அதி.௨௬.௨௰. (௰௮) யாத்.௨௫.௰௮—௨௨. ௧.இரா.௬.௨௩. (௰௯) யாத்.௨௫.௪௰. வச.௰௧,௰௨. (௨௰) உபா.௩௧.௭,௮. யோசு.௧.௬,௭,௯. அதி.௨௨.௰௩. (௨௧) யோசு.௧.௫. அதி.௨௪. அதி.௩௫.௨௫.—(௨௯.அதி.௧.) ௧.இரா.௩.௭. நீதி.௪.௩.

னும் இளைஞனுமாயிருக்கிறான், கிரியையோபெ
ரிது;அரமனைதேவனாகிய யெகோவாவுக்கே
௨ யன்றி மனிதனுக்கல்ல.—ஆதலால் நான் என்தே
வனாகிய யெகோவாவின் ஆலயத்தினிமித்
தம், என்னால்இயன்றமாத்திரம்பொன் வேலைக்
குப் பொன்னையும், வெள்ளி வேலைக்கு வெள்
ளியையும், பித்தளை வேலைக்குப் பித்தளையை
யும்,இரும்பு வேலைக்கு இரும்பையும், மரவே
லைக்குமரத்தையும், கோமேதகக்கற்களையும், பதி
க்கப்படும்ரத்தினங்களையும்,பலவருணமானபிர
காசமுள்ளஇரத்தினங்களையும்,விலையேறப்பெற்
ற சகலவித இரத்தினங்களையும், வெண் கற்களை
யும், மிகுதியாய் ஆயத்தப்படுத்தியிருக்கிறேன்.—
௩ மேலும் அந்தப் பரிசுத்தஆலயத்தினிமித்தம்நான்
ஆயத்தப்படுத்திய தெல்லாவற்றையுமன்றி, நான்
என் தேவனுடைய ஆலயத்தின்மேல் பிரியம்
வைத்திருப்பதினால்,பொன்வெள்ளியாகிய என்
௪ பொருளினின்று,—ஆலயத்தினுட்சுவரை மூடு
வதற்குஒப்பீரின்பொன்னில்மூவாயிரங்கிக்கேர்
பொன்னையும், எழாயிரங் கிக்கேர் புடமிட்ட
௫ வெள்ளியையும்,—பொன்வேலைக்குப் பொன்
னையும்,வெள்ளி வேலைக்கும், சிற்பர்கள்செய்
யும் சகலவிதவேலைக்கும்,வெள்ளியையும், என்
தேவனுடைய ஆலயத்துக்கே கொடுத்தேன்.
இன்றைத்தினம் தன்கையை நிரப்பி யெகோ
வாவிடத்தில் வர மனதாயிருக்கிறவன் யாவ
னென்றான்.
௬ பின்பு பிதாவமிசத்தின் அதிபதிகளும், இஸ
ரவேல் கோத்திரங்களின் பிரபுகளும், ஆயிர
வருக்கதிபதிகளும், நூறுபேருக்கதிபதிகளும்,
இராசகாரியத்தலைவரும், மனதாரக் காணிக்கை
௭ கொண்டுவந்து,—தேவனுடையஆலயத்தின்கிரி
யைக்காக ஐயாயிரங்கிக்கேரும், பதினாயிரம் அ
தர்கோன் நிறைகொண்ட பொன்னும், பதினா
யிரங் கிக்கேர் வெள்ளியும், பதினெண்ணாயி
ரங் கிக்கேர் பித்தளையும், நூறாயிரங் கிக்கேர் இ
௮ ரும்புங் கொடுத்தார்கள்.—இரத்தினங்களைவைத்த
யாவரும் கெர்ஷோனியனாகிய யிகியேலின்கை
யினால் யெகோவாவின் ஆலயத்திற்பொக்
௯ கிஷசாலைக்குக் கொடுத்தார்கள்.—அவர்கள் பூர
ணமான இருதயத்தோடே யெகோவாவுக்குத்
தங்கள்மனப்பூருவமாய்க்காணிக்கைகொடுத்தார்
கள்: அவர்கள் இஷ்டமாகக்கொடுத்ததினால், ச
னங்கள் சந்தோஷப்பட்டார்கள்:தாவீதுஇராசா
வும் மகாஆனந்தத்துடன் சந்தோஷப்பட்டான்.
௰ பின்புதாவீது எல்லாச்சபையாருக்குமுன்பா
கவும் யெகோவாவைத் துதித்தான்: தாவீது,
எங்கள் பிதாவான இஸரவேலின் தேவனாகிய
யெகோவாவே, நீர் சதாகாலங்களிலும் ஸ்
௰௧ தோத்திரிக்கப் படுவீராக.—யெகோவாவே,
மகத்துவமும், வல்லமையும், மகிமையும், செய
மும், மேன்மையும் உமக்கே உரியவைகள்: வா
னத்திலும் பூமியிலுமுள்ளயாவும் உம்முடைய
வைகள்;இராச்சியம் உம்முடையது; யெகோ
வாவே,நீர்மேலானவராய்எல்லாவற்றிற்குந்தலை
வராயுயர்ந்திருக்கிறீர்.—ஐசுவரியமுங் கனமும் ௰௨
உம்மாலே வருகின்றன, நீர் எல்லாவற்றையும்
ஆண்டுவருகிறீர்;பராக்கிரமமும்வல்லமையும் உ
மதுகையிலிருக்கின்றன; மகிமைப் படுத்தவும்,எ
வர்களுக்கும் வல்லமைஅருளவுந்தக்கஅதிகாரம்
உமதுகையிலிருக்கின்றது.-ஆதலால்எங்கள் தே ௰௩
வனே,நாங்கள் உம்மைத்துதிக்கிறோம்,உமதுமகி
மையுள்ளநாமத்தைக்கீர்த்தனம்பண்ணுகிறோம்.-
இவ்விதமாய் மனப்பூருவமாகக்கொடுக்கிறதற்கு ௰௪
வல்லமைபெறநான் எம்மாத்திரம், என்சனங்கள்
எம்மாத்திரம்; எல்லாப்பொருள்களும் உம்மாலே
வருகின்றன, உமதுகையிலுள்ளதையே நாங்கள்
உமக்குத்தந்தோம்.—நாங்கள் எங்கள் எல்லாப் ௰௫
பிதாக்களையும்போல, உமக்குமுன்பாகப் பரதே
சிகளும், புறவாசிகளுமாயிருக்கிறோம்: பூமியில்
எங்கள் ஆயுள்நாட்கள் நிழலுக்குச்சமம்; நிலைத்
திருக்க நம்பிக்கையில்லை.—எங்களுடையதே ௰௬
வனாகிய யெகோவாவே, உமது பரிசுத்த நா
மத்தினிமித்தம் ஆலயங்கட்டுவதற்கு நாங்கள் ஆ
யத்தப்படுத்திய இந்தப்பொருளெல்லாம் உமது
கையினின்றும்வந்தது,எல்லாம்உம்முடையது.—
என் தேவனே,நீர்இருதயத்தைப்பரிசோதிக்கி ௰௭
றீர், சற்குணத்தில்பிரியமாயிருக்கிறீர், இதுஎனக்
குத்தெரியும்;நானே என்இருதயத்தின்நேர்மைப்
படி மனப்பூருவமாய் இந்த எல்லாப்பொருள்க
ளையுங்கொடுத்தேன்,இங்கேயிருக்கிறஉம்முடை
ய சனங்கள் மனப்பூருவமாக ஆனந்தத்துடன் உ
மக்குக் கொடுக்கிறதைக்கண்டேன்.-ஆபிரகாம், ௰௮
ஈசாக்கு, இஸரவேலென்னும் எங்கள் பிதாக்க
ளின் தேவனாகிய யெகோவாவே, நீர் உம
து சனங்களுடைய இருதயசிந்தனையின் தோற்
றத்தில், சதாகாலமும் இதைக்காத்து, அவர்களு
டைய இருதயத்தை உம்மிலேஸ்திரப்படுத்தியரு
ளும்.—உம்முடையகட்டளைகளையும், சாட்சிப் ௰௯
பிரமாணங்களையும், விதிகளையுங் காத்துக்கொள்
ளவும், இந்தஎல்லாக் கிரியைகளையுஞ் செய்ய
வும்,நான் ஆயத்தம்பண்ணியபொருள்களை எடுத்
து அரமனைகட்டவும், என்புத்திரனாகிய சலோ
மோனுக்கு நேர்மையான இருதயத்தைக்கொடுத்
தருளுமென்றான்.
பின்பு தாவீது, சபையார்யாவரையும்நோக்கி, ௨௰
உங்கள் தேவனாகிய யெகோவாவைத்துதி
யுங்களென்றுசொல்ல, சபையாரனைவரும், தங்
கள்பிதாக்களின் தேவனாகிய யெகோவா
வைத்துதித்து, தலைகுனிந்து யெகோவாவை
யும், இராசாவையும் வணங்கினார்கள்.—அன் ௨௧
றைக்குமறுநாளில் யெகோவாவுக்குப் பலி

(௨)எசா.௬௪.௰௧,௰௨. வெளி.௨௧.௰௮,.(௪)௧.இரா.௯.௨௮.(௬)அதி.௨௭.௧,௨௫. (௮) அதி.௨௬.௨௧. (௯) ௨.கொரி. ௯.௭. (௰௧) மத்.௬.௰௩. ௧.தீமோ.௧.௰௭. வெளி.௫.௰௩. (௰௨) ரோ.௰௧.௩௬. (௰௫) சங்.௩௯.௰௨. எபி.௰௧.௰௩. ௧.பேதுரு.௨.௰௧. யோபு.௰௪.௨. சங்.௯௰.௯. சங்.௱௨.௰௧. சங்.௱௪௪.௪. (௰௭) ௧.சாமு.௰௬.௭. நீதி.௰௧.௨௰. (௰௮) சங். ௰.௰௭. (௰௯) சங்.௭௨.௧. வச.௨. அதி.௨௨.௰௪.

யிட்டார்கள். ஆயிரங்காளைகளையும்,ஆயிரம்ஆட்
டுக்கடாக்களையும், ஆயிரம் ஆட்டுக்குட்டிகளை
யும், சமஸ்த இஸ்ரவேலருக்காகவும் மிகுந்த ப
லிகளையும், பானபலிகளோடு, தகனபலிகளாக
உஉ இட்டார்கள்.—அன்றைத்தினம் யெகோவா
வின் சந்நிதியில் மகாசந்தோஷத்துடன் போச
னபானம்பண்ணினார்கள். அவர்கள்,இரண்டாம்
முறையும் தாவீதின்புத்திரனாகிய சலோமோனை
இராசாவாக ஏற்படுத்தி, அவனை யெகோவா
வுக்காதீனமாய்ப் பிரதான அதிபதியாகவும், சா
தோக்கைஆசாரியனாகவும், அபிஷேகம்பண்ணி
உங னார்கள்.-அதினால் சலோமோன் தன்பிதாவாகிய
தாவீதுக்குப்பின்பு இராசாவாகி, யெகோவா
வின் சிங்காசனத்தில் வீற்றிருந்து, வாழ்வடைந்
தான்;சமஸ்த இஸ்ரவேலரும் அவனுக்கமைந்தார்
உச கள்.—சகலபிரபுகளும், பராக்கிரம சாலிகளும்,
தாவீது இராசாவின் புத்திரர்யாவரும்,சலோமோ
உரு ன் இராசாவின் வசமானார்கள்.—யெகோவா
சமஸ்த இஸ்ரவேலருக்குமுன்பாகவும் சலோ
மோனைமிகவும் உன்னதப்படுத்தி, முன்பு இஸ்ர
வேலரிலுள்ள எந்த இராசாவுக்குங்கிடையாதஇ
ராசமகத்துவத்தை அவனுக்கருளினார்.

இப்படி ஈஷாயின் புத்திரனாகிய தாவீது சக உசு
ல இஸ்ரவேலரையும் அரசாண்டான்.—அவன் உஎ
இஸ்ரவேலரை அரசாண்டகாலம் நாற்பதுவரு
ஷம்; எப்ரோனில் ஏழுவருஷமும், யெருஷ
லேமிலே முப்பத்துமூன்றுவருஷமும் அரசாண்
டான்.—அவன் தீர்க்காயுள்பெற்று, ஐசுவரியங் உஅ
களையும்,மேன்மையையும் உடையவனாயிருந்து
விருத்தனாகிமரித்தான்: அவனுக்குப்பின் அவன்
புத்திரனாகிய சலோமோன் அரசாண்டான்.—
தாவீது இராசாவின் ஆதியந்தமான கிரியைக உகூ
ளும், அரசாண்டவிபரமும், பராக்கிரமமும், அ
வனுக்கும், இஸ்ரவேலருக்கும், புறத்தேசத்துச்
சமஸ்த இராச்சியங்களுக்கும், நடந்த காலசங்க
திகளும்,—தரிசியாகிய சாமுவேலின் புத்தகத்தி கூய
லும், நாதானின் புத்தகத்திலும்,தரிசியாகியகாத்
தின் புத்தகத்திலும் எழுதியிருக்கின்றன.

(உஉ) க.இரா.க.கூரு,சுக. (உச) பிர.அ.உ. ஆதி.உச.ச. உ.நாளா.கூய.அ. எசேக்.யஎ.யஅ. (உரு) க.இரா.கூ.யங. உ.நாளா.க.யஉ. பிர.உ,க. (உஎ) உ.சாமு.ரு.ச. க.இரா.உ.யக. உ.சாமு.ரு.ரு. (உஅ) ஆதி.உரு.அ. அதி.உகூ.க. (உசு) தானி.உ.உக.

# நாளாகமத்தின் இரண்டாம் புத்தகம்.

## க. அதிகாரம்.

*க. சலோமோன் கிபியோனிலே பலியிடல்: எ. புத்தி ஞானமென்னும் வரங்களை வேண்டல்: ௰ச. இரதங்களையுங் குதிரைகளையுஞ்சேர்த்தல்.*

தாவீதின் புத்திரனாகிய சலோமோன் தனது அ
ரசாட்சியில் திடங்கொண்டான், அவன் தேவ
னாகியயெகோவா அவனோடிருந்து, அவனை
உ மிகவும் மகிமைப்படுத்தினார்.—சலோமோன் இ
ஸரவேல் அனைவரும், ஆயிரவருக்கதிபதிகளும்,
நூறுபேருக்கதிபதிகளும், நியாயாதிபதிகளும்,ச
கல இஸரவேலரிலுமுள்ள அதிகாரிகளும், பிதா
வமிசத்தின் பிரதானிகளுமாகிய இவர்களிடத்தி
ங லேபேசினான்.—யெகோவாவின்தாசனாகிய
மோசேவனத்திலேசெய்த தேவனுடைய சபை
யின் ஆவாசம் கிபியோனிலுள்ள உயர்ந்த ஸ்தா
னத்திலிருந்தபடியால், சலோமோனும் அவனோ
டெகூடிய சபையார் யாவரும், அங்கே போனார்
ச கள்.—தாவீது தேவனுடைய பெட்டிக்கு யெ
ருஷலேமில் ஒருகூடாரம் ஸ்தாபித்திருந்தான்:
ஆதலால் தாவீது கீரியாத் எயாரீமிலிருந்து,தான்
ஆயத்தப்படுத்திய ஸ்தானத்துக்கு அதைக்கொண்
ரு டுவந்தான்.—அன்றியும் ஊரின் பௌத்திரனும்,
ஊரீயின்புத்திரனுமாகிய பெத்சலேல்செய்த பித்
தளை வேதிகையும் யெகோவாவின் ஆவாசத்
துக்குமுன்பாகஇருந்தது: சலோமோனுஞ்சபை
சு யாரும் அதனிடத்திலே உசாவினார்கள்.—சலோ
மோன்சபையினாவாசத்திலே யெகோவாவின்
சந்நிதியிலிருந்த பித்தளைவேதிகையிடத்திற்போ
ய், அதின்மேல் ஆயிரந்தகனபலிகளையிட்டான்.
எ அன்றிராத்திரி தேவன் சலோமோனுக்குத்
தரிசனமாகி, நான் உனக்குத் தரவேண்டிய வர
அ மென்ன, கேள் என்றார்.—அதற்குச்சலோமோன்
தேவனைநோக்கி, நீர் என்பிதாவாகிய தாவீதுக்
கு மகாதயையைக்காட்டி, அவனுக்குப்பின் அர
கூ சாளும்படி என்னை ஏற்படுத்தினீர்.—தேவனாகி
ய யெகோவாவே, என்பிதாவாகிய தாவீதுக்
கு நீர்செய்த வாக்குத்தத்தத்தை நிலைப்படுத்திய
ருளும். பூமியின் தூளியைப்போலுந்திரளான
சனங்களுக்கு என்னை இராசாவாக ஏற்படுத்தி
௰ னீர்.—இந்தச்சனங்களுக்கு முன்பாக நான்போக்
குவரவுசெய்யும்படி எனக்குப்புத்தியையும், ஞா
னத்தையுந்தாரும்: உம்முடைய இந்தப்பெரிய ச
னங்களை விசாரிக்கக்கூடியவன் யாவனென்று
௰க ன்.—தேவன் சலோமோனைநோக்கி, நீ இதை
உன்சிந்தையில்வைத்து, ஐசுவரியத்தையாகிலும்,
பொருளையாகிலும், கனத்தையாகிலும், உன் சத்
துருக்களின் பிராணனையாகிலும், தீர்க்கஆயுளை
யாகிலும் வேண்டாமல், நீ என்னால் அரசாளப்
பெற்ற என் சனங்களை விசாரிக்கும்படி, உனக்
காக ஞானத்தையும் புத்தியையும் கேட்டபடியி
னால்,-ஞானமும் புத்தியும் உனக்கு அருளப்பட் ௰உ
டன; உனக்கு முன்னும் பின்னுமுள்ளஇராசாக்
கள் ஒருவருக்குங்கிடையாத ஐசுவரியத்தையும்,
பொருளையும், கனத்தையும் உனக்குத்தருகிறே
னென்றார்.
பின்பு சலோமோன் கிபியோனின் உயர்ந்த ௰ங
ஸ்தானத்திலுள்ளசபையினாவாசத்தினின்றும்யெ
ருஷலேமுக்குவந்து, இஸரவேலரை அரசாண்
டான்.—சலோமோன் இரதங்களையுங் குதிரை ௰ச
வீரர்களையுஞ் சேர்த்தான்; அவனுக்கு ஆயிரத்து
நானூறு இரதங்களும், பன்னீராயிரங்குதிரைவீ
ரர்களுமுண்டு, அவர்களை இராசா இரதங்களின்
பட்டணங்களிலுந் தன்னோடே யெருஷலேமி
லும்வைத்திருந்தான்.—யெருஷலேமில் இராசா, ௰ரு
பொன் வெள்ளிகள் கற்களைப்போலவும், ஏரஸ்
மரங்கள் தாழ்ந்த பூமியிலுள்ள காட்டத்திமரங்
களைப்போலவுமிகுக்கப் பண்ணினான்.—சலோ ௰சு
மோன், எகிப்திலிருந்து குதிரைகளையும் சணல்
நூலையும் வருவித்தான்: இராசாவின் வர்த்தகர்
சணல்நூலை விலைக்குவாங்கிவந்தார்கள்.—எகிப் ௰எ
திலிருந்து, இரதமொன்று அறுநூறுவெள்ளிக்கா
சுக்கும், குதிரைஒன்று நூற்றைம்பது வெள்ளிக்
காசுக்கும் வாங்கிக்கொண்டுவந்தார்கள்: அந்தப்
பிரகாரம் அவர்கள்வழியாய், எத்திய ராசாக்கள்
அனைவருக்கும், ஸீரியராசாக்களுக்கும்,கொண்
டுவரப்பட்டன.

## உ. அதிகாரம்.

*க. ஆலயத்தைக்கட்டும்தொழிற்காரரைத்தொகுத்தல்: ங. சிற்பருக்காக ஈராமிடத்தில் ஆளனுப்பல்: ௰க. ஈராம் அவனிடத்தில் நல்ல உத்தரங்கொடுத்தல்.*

சலோமோன் யெகோவாவின் நாமத்துக்கு
ஒருஆலயத்தையும், தனது அரசாளுகைக்கு ஒரு
அரமனையையுங் கட்டும்படி தீர்மானம் பணணி
னான்.—சுமைசுமக்கஎழுபதினாயிரம்பேரையும், உ
மலையிலே கல்முதலியவைகளை வெட்ட
எண்பதினாயிரம்பேரையும், அவர்களுக்குத்தலை
வர்களாக மூவாயிரத்தறுநூறுபேரையும் ஏற்படுத்
தினான்.

(க. அதி. க.) க.இரா.உ.சசு. க.நாளா.உகூ.உரு. (உ) க.நாளா.உஎ.க. (ங) க.இரா.ங.ச.(ச)உ.சாமு.சு.உ,௰எ.(ரு) யாத்.உஎ.க,உ. யாத்.ஙக.எ. (சு) க.இரா.ங.ச. (எ) க.இரா.ங.ரு,சு. (அ) க.நாளா.உஅ.ரு. (கூ) க.இரா.ங.எ,அ. (௰) க.இரா.ங.கூ. எண்.உஎ.௰எ. (௰க) க.இரா.ங.௰க,௰உ,௰ங. (௰உ) க.நாளா.உகூ.உரு. பிர.உ.கூ. (௰ச) க.இரா.ச.உசு. (௰ரு) க.இரா.௰.உஎ. யோபு.உஉ.உச. (௰சு) க.இரா.௰.உஅ,உகூ.—(உ. அதி.க.) க.இரா.ரு.ரு. (உ) க.இரா.ரு.௰ரு.

௩ சலோமோன் தீருவின்இராசாவாகிய ஈராமி
டத்தில், என்பிதாவாகிய தாவீது வாசம்பண்ண
ஒருவீடுகட்டும்படி நீர் அவருக்கு எரஸ்மரங்கள்
அனுப்பிவந்ததுபோல, எனக்கும்செய்வீரா
௪ க.—நான், என் தேவனாகிய யெகோவா
வின்சந்நிதியில் சுகந்ததிரவியதூபங்காட்டுவதற்
கும், நித்தியசமுகத்தப்பம்வைப்பதற்கும், இஸ
ரவேலருக்கு விதிக்கப்பட்டநித்தியநியமப்படி,
காலைமாலைகளிலும், ஓய்வுநாட்களிலும், அமா
வாசிகளிலும், எங்கள் தேவனாகிய யெகோ
வாவின் உற்சவங்களிலும், தகனபலிகளையிடு
வதற்கும், அவருக்கென்று பிரதிஷ்டைசெய்யும்
பொருட்டு, அவர்நாமத்தினால் ஒரு ஆலயங்கட்
௫ டுகிறேன்.—எங்களுடைய தேவன் சகலதேவர்
களிலும்பெரியவர், ஆதலால் நான்கட்டும் ஆல
௬ யமும்பெரியது.—வானமும், வானங்களுக்குமே
லுள்ள வானமும் அவரைக் கொள்ளமாட்டாதி
ருக்க,அவருக்குஒரு ஆலயங்கட்டவல்லவன்யா
வன்; அவர்சந்நிதியில்தூபங்காட்டுவதற்கேயன்
றி,அவருக்கு ஆலயங்கட்ட நான்எம்மாத்திரம்.—
௭ இப்பொழுது யூதாவிலும், யெருஷலேமிலும்,
என்சமீபத்தில் என்பிதாவாகிய தாவீது ஏற்படுத்
திய புத்திமான்களோடும், பொன், வெள்ளி, பித்
தளை, இரும்பு, தாமிரம்சிவப்புநீலமான வருணத்
தையுடைய பொருள்களென்னுமிவைகளில்வே
லைசெய்கிறதற்கும், கொத்துவேலைசெய்கிறதற்கு
ம் நிபுணனாகிய ஒருவனை என்னிடத்தில் அனுப்
௮ புவீராக.—லிபானோனிலே மரம்வெட்ட உமது
பணிவிடைக்காரர் அதிக நிபுணரென்றறிவேன்,
ஆதலால் லிபானோனினின்றுஎரஸ்மரங்களையும்,
தேவதாருகளையும், அல்முக்மரங்களையும் அனுப்
௯ பும்.—நான் கட்டப்போகிற ஆலயம்பெரியதும்
ஆச்சரியமுள்ளதுமாயிருக்கும், ஆதலால் மிகுதி
யானமரம் ஆயத்தப்படுத்துவதற்கு என் பணிவி
டைக்காரர் உமது பணிவிடைக்காரரோடேயிரு
௰ ப்பார்கள்.-மரம்வெட்டுகிற உமது பணிவிடைக்
காரருக்கு இருபதினாயிரம் கோர் கோதுமைஅரி
சியையும்,இருபதினாயிரம் கோர் வாற்கோதுமை
யையும், இருபதினாயிரம் பாத் திராட்சரசத்தை
யும் இருபதினாயிரம் பாத் எண்ணெயையுங்கொ
டுப்பேனென்று, சொல்லியனுப்பினான்.
௰௧ அதற்குத்தீருவின் இராசாவாகிய ஈராம், யெ
கோவா தமதுசனங்களைநேசித்தபடியினால்,அ
வர் உம்மை அவர்களுக்கு இராசாவாக ஏற்படுத்
௰௨ தினார்.—மேலும் ஈராம், யெகோவாவுக்கு
ஒரு ஆலயத்தையும், தமது இராச்சியத்தினிமித்
தம் ஒரு அரமனையையுங்கட்டும்படி, புத்தியும்வி
வேகமும்பொருந்திய ஒரு ஞானமுள்ள புத்திர
னைத்தாவீது இராசாவுக்கருளினவரும், வானத்
தையும் பூமியையுஞ்சிருஷ்டித்தவரும்,இஸரவே
லின் தேவனுமாகிய யெகோவா துதிக்கப்
படுவாராக.—இப்பொழுது நான் விவேகமுள் ௰௩
ள ஊராமென்னும் ஒரு மனுஷனை அனுப்புகி
றேன்.—அவன்தாணின்வமிசத்திலுள்ள ஒரு ஸ் ௰௪
திரியின்புத்திரன், அவன்பிதாதீருதேசத்தான், அ
வன் உமது புத்திமான்களோடும், என்ஆண்டவ
னும் உமது பிதாவுமாகிய தாவீதின் புத்திமான்க
ளோடும், பொன், வெள்ளி, பித்தளை, இரும்பு,
கல், மரம், தூமிரமும், நீலமும், சிவப்புமாகிய
மெல்லியநூல்என்னுமிவைகளில் வேலைசெய்கி
றதற்கும், யாதொரு கொத்துவேலைசெய்கிறதற்
கும், தனக்குக்கற்பித்த எவ்விதவேலை செய்கிற
தற்கும், அவன் நிபுணன்.—என் ஆண்டவன்கு ௰௫
றித்தகோதுமையையும், வாற்கோதுமையையும்,
எண்ணெயையும், திராட்சரசத்தையும் தமதுப
ணிவிடைக்காரருக்கு அனுப்புவாராக.—லிபா ௰௬
னோனிலே நாங்கள் உமக்குவேண்டியமரங்களை
வெட்டி, அவைகளைக்கடல்வழியாய்த் தெப்பங்
களாக யொப்பாவுக்குக்கொண்டுவருவோம்; நீர்
அவைகளை யெருஷலேமுக்குக்கொண்டுபோக
லாமென்று உத்தரமெழுதிச் சலோமோனுக்கு
அனுப்பினான்.
சலோமோன்தன்பிதாவாகிய தாவீது தொகை ௰௭
யிட்டபின்பு இஸரவேலரின் தேசத்திலுள்ளபர
தேசிகள் அனைவரையுந் தானுந் தொகையிட்
டான்; ஆக அவர்கள் ஒரு இலட்சத்து ஐம்பத்து
மூவாயிரத்தறுநூறுபேர்.—அவர்களில் எழுபதி ௰௮
னாயிரம்பேரைச் சுமைசுமக்கிறவர்களாகவும், எ
ண்பதினாயிரம் பேரை மலையில் கல்முதலிய
வைகளை வெட்டுகிறவர்களாகவும், மூவாயிரத்
தறுநூறுபேரைச்சனங்களுக்குவேலைகற்பிக்கும்
விசாரிப்புக்காரராகவும் ஏற்படுத்தினான்.

## ௩. அதிகாரம்.

௧. ஆலயத்தைக்கட்டும்படி ஸ்தானத்தையுங் கால
த்தையும்நிருபித்தல்: ௩. ஆலயத்தின் பூஷணங்
களைத்தெரிவித்தல்: ௰௧.கெருபிகள்: ௰௪.திரைச்
சீலையும்தூண்களும்.

சலோமோன், யெருஷலேமிலே தன்பிதாவா ௧
கிய தாவீதுக்குக்குறித்துக்காட்டப்பட்டமோரி
யமலையிலே, தாவீது எபூசியனாகிய அறவ்னாவின்
போர்க்களத்தில் ஆயத்தப்படுத்திய ஸ்தானத்தி
லே, யெகோவாவின் ஆலயத்தைக்கட்டத்
தொடங்கினான்.—அவன் தான் அரசாண்ட நா ௨
லாம்வருஷம் இரண்டாமாதம் இரண்டாந்தினத்
தில் கட்டத்தொடங்கினான்.
தேவனுடையஆலயத்தைக்கட்டும்படிசலோ ௩
மோன் போதிக்கப்பட்டபிரகாரம், முன்பிரமா
ணத்திற்கேற்க, நீளம் அறுபதுமுழம், அகலம் இ
ருபதுமுழம்.—ஆலயத்துக்குமுன்னுள்ள மண்ட ௪
பத்தின் நீளம், ஆலயத்தின் அகலம்போல இரு

(௩) ௧.இரா.௫.௧. (௪) யாத்.௩௰.௭. யாத்.௨௫.௩௰. (௫) சங்.௱௩௫.௫. (௬) ௧.இரா.௮.௨௭. எசா.௬௬.௧. (௮) ௧.இரா. ௫.௬. ௧.இரா.௰.௰௧. (௰) ௧.இரா.௫.௰௧. (௰௧) ௧.இரா.௰.௯. (௰௨) ௧.இரா.௫.௭. ஆதி.௧. ஆதி.௨. சங்.௩௩.௬. அப். ௪.௨௪. (௰௪) ௧.இரா.௭.௰௩,௰௪. (௰௫) வச.௰. (௰௬) ௧.இரா.௫.௮,௯. யோசு.௰௯.௪௬. அப்.௯.௩௬. (௰௭) ௧.இரா. ௫.௰௩. அதி.௮.௭,௮. ௧.நாளா.௨௨.௨.—(௩. அதி. ௧.) ௧.இரா.௬. ஆதி.௨௨.௨,௰௪. ௧.நாளா.௨௧.௰௮. ௨.சாமு. ௨௪.௰௮. (௩) ௧.இரா.௬.௨. (௪) ௧.இரா.௬.௩.

பதுமுழம்; அதின்உயரம்,நூற்றிருபது: அதனுட்
௫ புறத்தைப்பசும்பொற்றகட்டால்மூடினான்.—பி
ரதான வீட்டைத்தேவதாருவினால்செய்து, பசும்
பொற்றகட்டால் மூடி,அதின்மேல், பேரீந்துமர
ங்களையும் சங்கிலிவேலையையுஞ்சித்திரித்தான்.–
௬ அந்தஆலயத்துக்குஅலங்காரநிமித்தம்இரத்தினங்
களைப்பதித்தான்; பொன், பர்வாயீமின்பொன்.-
௭ அவன் ஆலயத்தையும், உத்திரங்களையும், தூண்க
ளையும், சுவர்களையும், கதவுகளையும் பொற்றகட்
டால்மூடி, சுவர்களின்மேல் கெருபீகளைச்சித்தி
௮ ரித்தான்.—அவன் மிகவும் பரிசுத்த ஆலயத்தை
யுஞ்செய்தான்; அதின் நீளம் ஆலயத்தின்அகலம்
போல இருபதுமுழம், அகலமும்இருபதுமுழம்;
அதை அறுநூறு கிக்கார்நிறை பசும்பொற்றகட்
௯ டால் மூடினான்.—ஆணியின்பொன் நிறை ஐம்
பதுசேக்கல்: மேல் அறைகளையும் பொற்றகட்
௰ டால் மூடினான்.—மிகவும்பரிசுத்த ஆலயத்தில்,
கொத்துவேலையாக இரண்டு கெருபீகளைச்செய்
து அவைகளைப் பொற்றகட்டால் மூடினான்.
௰௧ கெருபீகளின் சிறகுகளின்நீளம் இருபதுமு
ழம்: வீட்டுச்சுவரைத்தொடத்தக்க ஒரு கெருபீ
யின் ஒருசிறகு ஐந்துமுழம் மற்றக் கெருபீயின்
சிறகைத் தொடத்தக்க மற்றச் சிறகும் ஐந்துமு
௰௨ ழம்.—வீட்டுச்சுவரைத்தொடத்தக்க, மற்றக்கெரு
பீயின், ஒரு சிறகு ஐந்துமுழம், மற்றக் கெருபீ
யின்சிறகைத்தொடத்தக்க மற்றச்சிறகும்ஐந்துமு
௰௩ ழம்.—இந்தக்கெருபீகளின் சிறகுகள் இருபது
முழம் விரிந்திருந்தன: இவைகள் காலூன்றிக்
கொண்டுநின்றன, இவைகளின் முகங்கள் உட்
புறமாயிருந்தன.
௰௪ நீலம்,தூமிரம், சிவப்பு என்னும்வருணங்களை
யுடையமெல்லியநூலினால்திரையையுண்டுபண்
௰௫ ணி, அதில் கெருபீகளை விசித்திரித்தான்.—ஆ
லயத்துக்கு முற்புறத்தில் முப்பத்தைந்துமுழம்
உயரமுள்ள இரண்டுதூண்களைச்செய்தான், அந்
தத்தூண்களின்மேலுள்ள கும்பங்கள் ஐவைந்து
௰௬ முழம்.—வாக்கிய ஸ்தானத்தில் இருந்ததுபோ
லச் சங்கிலிகளைப்பண்ணி, அந்தத்தூண்களின்
தலைகளிலிட்டான்; நூறுமாதுளம் பழங்களைச்
செய்து அவைகளைச் சங்கிலிகளிலிட்டான்.—
௰௭ அந்தத் தூண்களிலொன்றை வலப்புறத்திலும்,
மற்றதை இடப்புறத்திலும் ஆலயத்திற்குமுன் நி
றுத்தினான்; வலப்புறத்துத்தூணுக்கு யாகினென்
றும், இடப்புறத்துத்தூணுக்குப் போவசென்றும்
பெயரிட்டான்.

## ௪. அதிகாரம்.

௧. பித்தளை வேதிகையைச்செய்தல்: உ. சமுத்திர பாத்திரத்தையும் அதின் பாதத்தையுங்குறித்தல்: ௬. ஸ்நானபாத்திரம், செடிவிளக்கு, பீடம் இவைகளைவருணித்தல்: ௯.பிராகாரங்களும் பித்தளைப்பாத்திரங்களும் ௰௯. பொற்பாத்திரங்கள்.

அன்றியும் இருபதுமுழநீளமும், இருபதுமுழ ௧
அகலமும், பத்துமுழ உயரமுமுள்ள ஒரு பித்த
ளைவேதிகையையுண்டாக்கினான்.
ஒரு விளிம்பு தொடங்கிமற்ற விளிம்புவரைக் ௨
கும் பத்துமுழங்கொண்டகோளவடிவான ஒரு
கடல் தொட்டியை வார்ப்பித்தான்; அதின் உய
ரம் ஐந்துமுழம்,அதின் சுற்றளவுமுப்பதுமுழம்.-
அந்தக்கடல்தொட்டியைச்சுற்றி, முழம் ஒன்றுக் ௩
குப்பத்துப்பத்தாக, அதின் கீழ்ப்புறத்தில் சுற்றி
வர எருத்துருபங்களிருந்தன. அதுவார்க்கப்பட்
டபொழுதே, இரண்டு நிரை எருதுகளுமுடன்
வார்க்கப்பட்டன.—அதுபன்னிரண்டு எருதுக ௪
ளின்மேல் ஸ்தாபிக்கப்பட்டது; அவைகளில்
மூன்றுவடக்கையும், மூன்று மேற்கையும், மூன்
று தெற்கையும், மூன்று கிழக்கையும், நோக்கிக்
கொண்டிருந்தன: அந்தக்கடல் தொட்டி அவை
களின்மேல் தங்கிற்று, அவைகளின் பிற்பக்க
மெல்லாம் உட்புறமாயிருந்தது.—அதின் கனம் ௫
நாலுவிரற்கடை, அதின் விளிம்பு பானபாத்திர
விளிம்புபோல, லீஷன் புஷ்ப விசித்திரங்களி
னால் சிங்காரிக்கப்பட்டது, அது மூவாயிரம் பாத்
கொள்ளும்.
கழுவுகிறதற்குப்பத்து ஸ்நானபாத்திரங்களை ௬
யுண்டாக்கி, வலப்புறத்தில் ஐந்தும், இடப்புறத்
திலைந்துமாக வைத்தான்; தகனபலியிடும் வஸ்
துக்களை அவைகளிலே சுத்திசெய்வார்கள்; க
டல்தொட்டி ஆசாரியர்கள் ஸ்நானம்பண்ணுவ
தற்காக இருந்தது.—சாதாரணரூபத்தின்படி பொ ௭
ன்னினால் பத்துவிளக்குத்தண்டுகள்செய்து,ஆல
யத்திலே வலப்புறத்திலைந்தும்,இடப்புறத்திலைந்
துமாகவைத்தான்.—பத்துப்பீடங்களையுஞ்செய் ௮
து, ஆலயத்திலே வலப்புறத்திலைந்தும், இடப்பு
றத்திலைந்துமாகவைத்தான். நூறு பொற்கலங்க
ளையுஞ் செய்தான்.
மேலும் அவன் ஆசாரியரின் பிராகாரத்தை ௯
யும், பெரியபிராகாரத்தையும், பிராகாரத்துக்குக்
கதவுகளையுஞ்செய்து, கதவுகளைப் பித்தளைத்தகட்
டால் மூடினான்.—கடல்தொட்டியைக் கீழ்த்தி ௰
சையிலே வலப்புறத்தில்,தெற்குக்குநேரேவைத்
தான்.-ஊராம் கடாரங்களையும், கரண்டிகளையும், ௰௧
கலங்களையுஞ்செய்தான். பின்பு ஊராம், சலோ
மோன் இராசாவினிமித்தம், தேவனுடைய ஆ
லயத்துக்காக,—இரண்டு தூண்களும், அவ்விரண் ௰௨
டு தூண்களிலுமுள்ள குண்டுகளும், கும்பங்க
ளும், தூண்களின் மேலுள்ள கும்பங்களின்குண்
டுகளிரண்டையும்மூடும்வலைப்பின்னல்களிரண்
டும்;—தூண்களின் மேலுள்ள கும்பங்களின்குண் ௰௩
டுகளிரண்டையும் மூடும் வலைப்பின்னல் ஒவ்
வொன்றுக்கு இவ்விரண்டு நிரைமாதுளம்பழங்
களாக, வலைப்பின்னலிரண்டுக்கும், நானூறுமா
துளம் பழங்களுமாகிய சகலவேலையையுஞ்செய்

(௫) ௧.இரா.௬.௰௭. (௰) ௧.இரா.௬.௨௩. (௰௪) யாத்.௨௬.௩௧. மத்.௨௭.௫௧. எபி.௯.௩. (௰௫) ௧.இரா.௭.௰௫—௨௧. எரே.௫௨.௨௧. (௰௬) ௧.இரா.௭.௨௰. (௰௭) ௧.இரா.௭.௨௧.—(௪. அதி. ௧.) யாத்.௨௭.௧,௨. (௨) ௧.இரா.௭.௨௩.(௩) ௧.இரா.௭.௨௪. (௬) ௧.இரா.௭.௩௮. (௭) ௧.இரா.௭.௪௯. யாத்.௨௫.௩௧,௪௰. (௮) ௧.இரா.௭.௪௮. (௯) ௧.இரா.௬.௩௬. (௰) ௧.இரா.௭.௩௯. (௰௧) ௧.இரா.௭.௪௰. (௰௨) ௧.இரா.௭.௪௧. (௰௩) ௧.இரா.௭.௨௰.

௰௪ து முடித்தான்.—அவன் பீடங்களைச் செய்தது
மன்றி, பீடங்களின் மேல் ஸ்நானபாத்திரங்களை
௰௫ யுஞ் செய்தான்.—கடல்தொட்டி ஒன்றையும், அ
தின் கீழ்ப்புறத்திலுள்ள எருதுகள் பன்னிரண்
௰௬ டையும்,-கடாரங்களையும்,கரண்டிகளையும்,முட்
கருவிகளையும், அவைகளின் சகலகருவிகளையும்,
ஊராம் அபியு யெகோவாவின் ஆலயத்துக்
காகச் சலோமோன் இராசாவினிமித்தம், துலக்
௰௭ கமானபித்தளையினாற்செய்தான்.—இராசாயோர்
தானுக்கடுத்த சமபூமியிலே, சுக்கோத்துக்கும் சி
ரேதாதவுக்கு மிடையிலுள்ள களிமண்தரையில்
௰௮ இவைகளைவார்ப்பித்தான்.—சலோமோன் மிகு
தியானபாத்திரங்களைச்செய்தான்: பித்தளை நிறை
எண்ணுக்கடங்காதிருந்தது.
௰௯ சலோமோன் தேவனுடைய ஆலயத்துக்கு
வேண்டிய சகல கருவிகளாகியபொன்வேதிகை
௨௰ யையும்,சமுகத்தப்பபீடங்களையும்,—விதிப்படி
தேவவாக்கிய ஸ்தானத்துக்கு முன்னெரிவதற்
குப்பசும்பொன் செடிவிளக்குகளையும், அவை
௨௧ களின் அகல்களையும்,—அபரஞ்சியானபுஷ்பங்
௨௨ களையும்,விளக்குகளையும்,குறடுகளையும்,—பசும்
பொன் திரிவெட்டிகளையும், கிண்ணங்களையும்,
கரண்டிகளையும், கலசங்களையுஞ்செய்வித்தான்:
வீட்டின் பிரவேசஸ்தானமும், மிகவும் பரிசுத்த
ஸ்தானத்தின் உட்கதவுகளும், ஆலயமாகிய வீட்
டின்கதவுகளும்,பொன்னினாற் செய்யப்பட்
டன.

## ௫. அதிகாரம்.

௧. நிவேதிக்கப்பட்டபொருள்: ௨. வாக்கிய ஸ்
தானத்தில் பெட்டியைக் கொண்டுவரல்: ௰௧.
யெகோவாவைத் துதித்த சமயத்தில் அவரு
டைய மகிமைப்பிரகாசந்தோன்றல்.

இவ்விதமாய் யெகோவாவின் ஆலயத்துக்கா
கச் சலோமோன்செய்த கிரியைகள்யாவும்நிறை
வேறினபின்பு, சலோமோன், தன்பிதாவாகிய
தாவீது நிவேதித்த சகல பொருளையும்கொண்டு
வந்து, பொன் வெள்ளியையும் சகலபாத்திரங்க
ளையும் தேவனுடைய ஆலயத்தின் பொக்கிஷங்
களுக்குள்சேர்த்தான்.
௨ அப்பொழுது யெகோவாவுடையஉடன்
படிக்கையின் பெட்டியைச் சீயோன் என்னுந்
தாவீதின் நகரத்தினின்றும் கொண்டுவரும்படி,
சலோமோன்இஸரவேலின் முதியோரையும், இ
ஸரவேல்சந்ததியாரின்பிரதானவமிசபிதாக்களா
கிய கோத்திரத்தலைவர் யாவரையும் யெருஷலே
௩ மிலே கூடிவரச்செய்தான்.—அதினால் எழாமா
தத்தின் உற்சவ சமயத்தில், இஸரவேல் சனங்க
ளெல்லாரும்இராசாவிடத்தில்,கூடிவந்தார்கள்.-
௪ இஸரவேலின்முதியோரெல்லாரும்வர,லேவியர்
௫ கள் பெட்டியை எடுத்தார்கள்.—ஆசாரியர்களும்
லேவியரும்பெட்டியையும்,சபையினுவாசத்தை
யும், ஆவாசத்திலுள்ள சகலபரிசுத்த பாத்திரங்க
ளையும்சுமந்துகொண்டுவந்தார்கள்.-சலோமோன் ௬
ராசாவும், பெட்டிக்குமுன்பாக அவனிடத்திற்
கூடின இஸரவேலரின் சமஸ்தசபையாரும், மி
குதிபற்றிச்சொல்லுக்குந் தொகைக்கும் அடங்
காத ஆடுமாடுகளைப் பலியிட்டார்கள்.—ஆசாரி ௭
யர்கள் யெகோவாவுடைய உடன்படிக்கை
யின் பெட்டியை, அதின் ஸ்தானமாகிய ஆலயத்
தினது தேவ வாக்கிய ஸ்தானத்தில், மிகவும்பரி
சுத்தஸ்தானத்துக்குக்கெருபிகளுடைய சிற
குகளின் கீழாகக்கொண்டுவந்து வைத்தார்கள்.—
கெருபிகள்பெட்டியிருக்கிற ஸ்தானத்தின்மேல் ௮
தங்கள்சிறகுகளைவிரித்துக்கொண்டிருந்தன; கெ
ருபிகள் பெட்டியையும் அதின் தண்டுகளையும்
மேலாய்மூடிக்கொண்டன.—தண்டுகளின்நுனி ௯
கள் தேவ வாக்கியஸ்தானத்தின்முன்பாக,பெட்
டிக்குப்புறம்பே காணப்படும்படியாக அவைக
ளை இழுத்துவிட்டார்கள்; அவைகள் வெளியே
காணப்படவில்லை. இந்நாள்வரைக்கும் அவை
கள் அங்கேயிருக்கின்றன.—இஸரவேல் சந்ததி ௰
யார் எகிப்துதேசத்தைவிட்டுப் புறப்பட்டபின்,
யெகோவா அவர்களோடு உடன்படிக்கை
செய்தபொழுது, ஓரேப்பிலே மோசேயிட்டபல
கையிரண்டேயன்றிப் பெட்டியில் வேறொன்று
மில்லை.
அங்கேயிருந்த ஆசாரியர்யாவரும்பரிசுத்தப்ப ௰௧
டுத்தப்பட்டார்கள்: வகுப்புக்களின்படி அவர்
கள் தொண்டுசெய்யவில்லை.—ஆசாரியர்கள் பரி ௰௨
சுத்தஸ்தானத்தைவிட்டுப்புறப்பட்டபொழுது,
பாடகராகிய ஆசாப், எமான், யெதுதூன் என்
னுமிவர்களும், இவர்கள் புத்திரரும், சகோதரரு
மாகிய லேவியர்யாவரும் மெல்லியவெள்ளை வ
ஸ்திரந்தரித்துக்கைத்தாளங்களையும், தம்பூருகளை
யும், சுரமண்டலங்களையும் வைத்துக்கொண்டு
வேதிகைக்குக்கிழக்கேநின்றார்கள்; அவர்களோ
டு எக்காளமூதுகிற ஆசாரியர்கள் நூற்றிருபது
பேர்நின்றார்கள்.—எக்காளமூதுகிறவர்களும்பா ௰௩
டகர்களும் ஒரே சத்தத்துடன் யெகோவா
வைத் துதித்துப் பாடினார்கள்; அவர்கள், எக்கா
ளம் கைத்தாளமுதலியவாத்தியங்களினாலேதொ
னிசெய்து, யெகோவா தயாபரர், அவர்தயை
என்றுமுள்ளதென்றுசொல்லி அவரைத் துதித்த
பொழுது, யெகோவாவின் ஆலயமாகியஅந்
தவீடு மேகத்தினால் நிறைந்தது.—அதினால் ஆசா ௰௪
ரியர்கள் மேகத்தினிமித்தம் ஆராதனைசெய்யநிற்
கக்கூடாமற்போயிற்று: யெகோவாவின் மகி
மைப்பிரகாசம் தேவனுடைய ஆலயத்தைப்பூர
ணப்படுத்திற்று.

## ௬. அதிகாரம்.

௧. சலோமோன் சனங்களை ஆசீர்வதித்தல் யெ
கோவாவைத்துதித்தல்: ௰௨. ஆலயத்தைப்பிர

(௰௪) ௧.இரா.௭.௨௭,௪௩. (௰௬) ௧.இரா.௭.௰௪,௪௫. (௰௭) ௧.இரா.௭.௪௬. (௰௮) ௧.இரா.௭.௪௭. (௰௯) ௧.இரா.௭.௪௮. யாத்.௨௫.௩௰. (௨௰) யாத்.௨௭.௨௰,௨௧. (௨௧) யாத்.௨௫.௩௧,.—(௫. அதி. ௧.) ௧.இரா.௭.௫௧. (௨) ௧.இரா.௮. ௨.சாமு.௬.௰௨. (௩) ௧.இரா.௮.௨. அதி.௭.௮,௯,௰. (௯) ௧.இரா.௮.௮. (௰) ௨பா.௰.௨,௫. (௰௨) ௧.நாளா.௨௫.௧. ௧.நாளா.௰௫.௨௪. (௰௪) யாத்.௪௰.௩௫.—(௬. அதி.)

*திஷ்டை பண்ணினபொழுது சலோமோன்பி*
*ரார்த்தித்தல்.*

அப்பொழுது சலோமோன்,யெகோவா, கா
ரிருளில்வாசம்பண்ணுவேனென்றுசொல்லியிரு
௨ க்கிறார்.—நீர்சதாகாலமும் வசிக்கும்ஸ்தானமாக
வாசம்பண்ணும்படி ஒரு வீட்டை நான் கட்டி
௩ னேனென்றான்.—பின்பு இஸரவேலின் சபை
யாரெல்லாரும் நிற்க, இராசாமுகந்திரும்பி, இ
ஸரவேலின் சபையாரெல்லாரையும் ஆசீர்வதித்
௪ தான்.—என் சனங்களை எகிப்துதேசத்தினின்று
புறப்படச்செய்த நாள்முதற்கொண்டு, என் நா
மத்தை ஸ்தாபிக்கும்படி ஒரு ஆலயங்கட்டுவதற்
கு, இஸரவேலரின்சகலகோத்திரத்துள்ளும் ஒரு
நகரமுந்தெரிந்து கொள்ளவில்லை; என் சனங்க
ளாகிய இஸரவேலருக்கு அதிபதியாயிருக்கும்ப
௫ டி ஒருவனையுந் தெரிந்துகொள்ளவில்லை.—என்
நாமம் இருக்கும்படி யெரூஷலேமைத் தெரிந்து
கொண்டேன், என் சனங்களாகிய இஸரவேல
ருக்கு அதிபதியாயிருக்கத் தாவீதைத்தெரிந்து
௬ கொண்டேனென்று,—என் பிதாவாகிய தாவீதுக்
குச்சொல்லிய வாக்கை, தமதுகையினால் நிறை
வேற்றின இஸரவேலின் தேவனாகிய யெகோ
௭ வாவுக்கு ஸ்தோத்திரம்.—இஸரவேலின் தேவ
னாகிய யெகோவாவுக்கு ஒரு ஆலயங்கட்ட
என் பிதாவாகிய தாவீது அபிப்பிராயங்கொண்
௮ டிருந்தார்.—யெகோவா என் பிதாவைநோக்
கி, என்பேரால் ஒரு ஆலயங்கட்ட நீ அபிப்பி
ராயங்கொண்டாய், நீ கொண்ட அபிப்பிராயம்
நல்லது,ஆனாலும் நீஅந்தஆலயத்தைக்கட்டமாட்
௯ டாய்.—உன்னுதரத்தில்தோன்றும்புத்திரனேஎன்
பேரால் ஒரு ஆலயங்கட்டுவானென்று சொல்லி
௰ யிருந்தார்.—யெகோவா தாம்சொல்லியவாக்
கைநிறைவேற்றினார்: யெகோவா வாக்குத்
தத்தஞ்செய்தபிரகாரம் என்பிதாவாகிய தாவீதுக்
குப்பின்பு நான்தோன்றி, இஸரவேலரின் சிங்
காசனத்தில் வீற்றிருக்கிறேன், இஸரவேலரின்
தேவனாகிய யெகோவாவின் பேரால் ஒரு
௰௧ ஆலயங்கட்டினேன்.—இஸரவேல் சந்ததியாரு
டன்யெகோவா பண்ணின உடன்படிக்கை
வைத்த பெட்டியை அதிலே ஸ்தாபித்தேனென்
றான்.

௰௨ அவன் யெகோவாவின்வேதிகைக்குமுன்,
இஸரவேலரின் சமஸ்த சபையார்சமுகத்திலும்
௰௩ தன்கையைவிரித்துக்கொண்டுநின்றான்.-சலோ
மோன்ஐந்துமுழநீளமும், ஐந்துமுழ அகலமும்,
மூன்றுமுழ உயரமுமான ஒரு பித்தளைப்பீடஞ்
செய்து, பிரகாரத்தின்மத்தியில்வைத்திருந்தான்:
அதின்மேல் அவன்நின்றுகொண்டு, இஸரவேல
ரின் சமஸ்தசபையார்முன்னும் முழங்காற்படி
௰௪ யிட்டு, வானத்துக்கு நேரேகைவிரித்து,—இஸர
வேலின் தேவனாகியயெகோவாவே,வானத்
திலாவது, பூமியிலாவது, உமக்கொப்பான தே
வனில்லை; தங்கள்பூரண இருதயத்தோடும்உமக்
குமுன்பாக நடக்கும் உமதடியாருக்காக உடன்
படிக்கையையும் அனுக்கிரகத்தையும்காத்துவரு
கிறீர்.—என்பிதாவாகிய தாவீதென்னும் உமது ௰௫
தாசனுக்கு நீர் செய்த வாக்குத்தத்தத்தைக் காப்
பாற்றினீர், நீர் உமதுவாயால்வசனித்ததை இன்
றுஇருக்கிறபடிஉமதுகையால்நிறைவேற்றினீர்.-
இஸரவேலின் தேவனாகிய யெகோவாவே, ௰௬
நீர் என்பிதாவாகிய தாவீதென்னும்உமதுதாசனை
நோக்கி,நீ என்சமுகத்தில் நடந்தபிரகாரம்,உன்
சந்ததியாரும் என்பிரமாணத்தின்படி என்சமு
கத்தில் நடக்கத்தக்கதாகத் தங்கள்வழியில் சாவ
தானமாயிருப்பார்களாகில், என் சமுகத்தில் இ
ஸரவேலின் சிங்காசனத்திலே வீற்றிருக்கத்தக்க
உன் வமிசத்தாரொருவன் இல்லாதொழியானெ
ன்றுசொல்லி, நீர் அவருக்குச் செய்தவாக்குத்தத்
தத்தைச் சபலமாக்கும்.—இஸரவேலின் தேவ ௰௭
னாகிய யெகோவாவே,உமது தாசனாகிய தா
வீதுக்கு நீர் சொல்லியவாக்கு மெய்ப்படும்படி
அருள்செய்யும்.—தேவன் நிச்சயமாய்ப்பூமண் ௰௮
டலத்திலே மனிதருடன் வாசம்பண்ணுவாரா;
வானமும் வானங்களுக்குமேலுள்ள வானமும்
உம்மைக்கொள்ளாதே; நான் கட்டினவீடு உம்
மைக்கொள்வதெப்படி.-என் தேவனாகிய யெ ௰௯
கோவாவே, உமதடியான் செய்யும் பிரார்த்த
னையின்மேலும்விண்ணப்பத்தின்மேலும்சிந்தை
வைத்தருளும்; உமதடியான் உமதுசமுகத்தில் இ
டும் ஓலத்தையும்அவன்பிரார்த்தனையையும்கேட்
டருளும்.—எனது நாமம் அதில்நிறுத்தப்படுமென் ௨௰
று நீர்குறித்த இந்தஸ்தானத்துக்குநேரே, உமதடி
யான்செய்யும் பிரார்த்தனையைக்கேட்கும்படி இ
ரவும்பகலும் இந்தவீட்டின்மேல் நீர் கண்திறந்தி
ருப்பீராக.—உமதடியானும், உமது சனமுமாகி ௨௰௧
ய இஸரவேலரும் இந்தஸ்தானத்துக்கு நேராய்ச்
செய்யும் விண்ணப்பங்களைக்கேட்பீராக: உமது
வாசஸ்தலமாகிய வானத்தினின்றுங்கேட்பீராக,
கேட்டு மன்னித்தருளும்.

ஒருவன் தன் அயலானுக்குவிரோதமாகக்குற் ௨௰௨
றஞ் செய்தபொழுது, அவனை ஆணையிடுவிக்க,
அவ்வாணை இவ்வாலயத்தின் வேதிகையின் சமீ
பத்தில்வந்தால்;—நீர் வானத்தினின்றுங்கேட்டு, ௨௰௩
காரியம் நிறைவேற்றி, உமதடியாரைவிசாரித்து,
தீயனைக்குற்றவாளியாக்கி, அவனுக்குத் தண்ட
னைசெய்து, நீதிமானுடைய நீதியை விளங்கப்
பண்ணி, அவனுடைய நீதிக்கேற்கஅவனுக்குப்
பலனளிப்பீராக.

இஸரவேலராகிய உமது சனங்கள் உமக்குவி ௨௰௪
ரோதமாய்ப் பாவஞ்செய்ததினிமித்தம் சத்துரு
வுக்குமுன்முறிய அடிக்கப்படுகிறபொழுது,உம்
மிடத்தில்திரும்பி, உமது நாமத்தைப்புகழ்ந்துபி
ரார்த்தித்து, இவ்வாலயத்துக்குநேராய் உமக்கு
விண்ணப்பஞ்செய்தால்;—நீர் வானத்தினின்று ௨௰௫

(௧) ௧.இரா.௮.௰௨,. லேவி.௰௬.௨. (௫) அதி.௰௨.௰௩. ௧.நாளா.௨௮.௪. (௭) ௨.சாமு.௭.௨. (௰௨) ௧.இரா.௮.௨௨. (௰௪)யாத்.௰௫.௰௨. உபா.௪.௩௯. (௰௫) ௧.நாளா.௨௨.௧. (௰௬) ௨.சாமு.௭.௰௨,௰௫. ௧.இரா.௨.௪. சங்.௱௩௨.௰௨. (௰௮) ஏசா.௬௬.௧. அப்.௭.௪௯.

கேட்டு, இஸரவேலராகிய உமது சனங்களின்
பாவத்தைமன்னித்து, அவர்களுக்கும் அவர்கள்
பிதாக்களுக்கும் நீரளித்த தேசத்துக்கு அவர்களை
மீண்டுகொண்டுவருவீராக.
உசு அவர்கள் உமக்குவிரோதமாய்ப் பாவஞ்செய்
ததினிமித்தம் வானம் அடைபட்டு மழைபெய்
யாதிருக்கிற காலத்தில், தங்களைநீர்கிலேசப்படுத்
துகையில் தங்கள் பாவங்களைவிட்டுத்திரும்பி, உ
மது நாமத்தைப்புகழ்ந்து, இந்தஸ்தானத்துக்கு நே
உஎ ராக அவர்கள் பிரார்த்தனைபண்ணினால்,-நீர் வா
னத்தினின்றும் கேட்டு, உமதடியாரும் உமது ச
னங்களுமாகிய இஸரவேலருடைய பாவத்தை
மன்னித்து, அவர்கள் நடக்கவேண்டிய நன்னெ
றியை அவர்களுக்குப்போதித்து, நீர் உமதுசனங்
களுக்குச் சுதந்தரமாகக்கொடுத்ததேசத்தில்மழை
வருஷிக்கப்பண்ணியருளும்.
உஅ தேசத்திலேபஞ்சமாகிலும், கொள்ளைநோயாகி
லும், வறட்சியாகிலும், சாவியாகிலும், வெட்டுக்
கிளியாகிலும், பச்சைப்புழுவாகிலும் உண்டா
கிறபொழுதும், அவர்கள் சத்துருக்கள் அவர்கள்
தேசத்தின் நகரங்களை முற்றிக்கைசெய்கிறபொ
ழுதும், எவ்விதவாதையாகிலும் எவ்விதரோகமா
உகூ கிலும் வருகிறபொழுதும்;—தன்தன் வாதையை
யும் தன்தன்வியாகுலத்தையுமுணர்ந்து, ஒருவனா
வது, உம்முடைய சனங்களாகிய இஸரவேலர்
சமஸ்தருமாவது இந்த ஆலயத்துக்குநேராய்க்கை
யைவிரித்து, எந்தப் பிரார்த்தனையை யாகிலும்
கூ௰ விண்ணப்பத்தையாகிலும்செய்தால்,—நீர் உமது
வாசஸ்தலமாகிய வானத்தினின்றும் கேட்டுமன்
னித்து, மனுபுத்திரர் சகலருடைய இருதயத்தை
யும் அறிந்தவர்நீரே ஆதலால் அவரவர் இருதயத்
தை யறிந்து, ஒவ்வொருவனுக்கும் அவனவன்
கூக நெறிக்கேற்கப்பலனளிப்பீராக.-அதினால் அவர்
கள், நீர் எங்கள்பிதாக்களுக்களித்ததேசத்தில் வா
சம்பண்ணுங்காலமுழுவதும், உமக்குப் பயந்து
நடப்பார்கள்.
கூஉ மேலும் புறத்தேசத்தார், உமது மகா நாமத்
தையும், உமதுவலிமையான கரத்தையும், ஓங்கி
ய உமது புயத்தையுங்குறித்துக்கேட்டிருப்பார்க
ளே; ஆதலால் உமது சனங்களாகிய இஸரவே
லரிலே சேராத அவர்கள், உமது நாமத்தினிமித்
தம் தூரதேசத்திலிருந்துவந்து, இந்த ஆலயத்துக்
கூகூ குநேராகப் பிரார்த்தனைபண்ணினால்;—நீர்உமது
வாசஸ்தலமாகிய வானத்தினின்றுங்கேட்டு, உம
துசனங்களாகிய இஸரவேலரைப்போலவே, பூ
மண்டலத்திலுள்ளசகலசனங்களும் உமதுநாமத்
தைஅறிந்து உமக்குப்பயப்படும்படிக்கும், நான்
கட்டினஇந்தஆலயத்துக்கு உமது நாமம் இடப்
பட்டதென்றுஅறியும்படிக்கும், அந்தப்புறத்தே
சத்தார் உம்மைநோக்கிப் பிரார்த்திப்ப தெல்லா
கூச வற்றையும் அவர்களுக்குச்செய்தருளும்.—உமது
சனங்கள், சத்துருக்களைஎதிர்த்துயுத்தஞ்செய்யும்
படி நீர் தங்களை அனுப்பும்வழியில் புறப்பட்டு,
நீர்தெரிந்துகொண்ட இந்த நகரத்துக்கும், உமது
பேரால்நான்கட்டின இந்தஆலயத்துக்கும்நேரா
கி, உம்மைநோக்கிப் பிரார்த்தனைபண்ணினால்;—
வானத்தினின்றும் அவர்கள் பிரார்த்தனையையும் கூரு
விண்ணப்பத்தையுங்கேட்டு, அவர்கள் நீதியை
விளங்கப்பண்ணும்.—பாவஞ்செய்யாதவன் ஒ கூசு
ருவனுமில்லையே; ஆனபடியால் அவர்கள் உ
மக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்ததினிமித்தம்
நீர் அவர்கள்மேற் கோபங்கொண்டு, சத்துருக்
கள், தூரத்திலாவது சமீபத்திலாவது இருக்கும்
தங்கள் தேசத்துக்குச்சிறையாகக் கொண்டுபோ
கும்படி சத்துருக்களிடத்தில் அவர்களை ஒப்பித்
தபின்பு;—அவர்கள் தாங்கள் சிறையாய்ப்பிடிக் கூஎ
கப்பட்டுப்போயிருக்குந் தேசத்திலிருந்து, தாங்
களே சிந்தனைபண்ணி மனந்திரும்பி, நாங்கள்
பாவஞ்செய்து குறும்பாய் நடந்து தீங்குசெய்
தோமென்றுசொல்லி, தங்களைச் சிறைபிடித்துப்
போனவர்களுடைய தேசத்தில் உமக்குவிண்ண
ப்பஞ்செய்து, தங்களைச் சிறையாகக் கொண்டு
போன தங்கள்சத்துருக்களுடையதேசத்திலிருந்
துகொண்டு,—தங்கள் பூரண இருதயத்தோடும், கூஅ
தங்கள் பூரண ஆத்துமத்தோடும் உம்மிடத்தில்
திரும்பி, தங்கள் பிதாக்களுக்கு நீர் அளித்த தங்
கள் தேசத்துக்கும், நீர் தெரிந்துகொண்ட நகரத்
துக்கும், உமதுபேரால் நான் கட்டின இந்த ஆல
யத்துக்கும் நேராகப்பிரார்த்தனை பண்ணினால்;—
நீர் உமது வாசஸ்தலமாகிய வானத்தினின்றும் அ கூகூ
வர்கள் பிரார்த்தனையையும்விண்ணப்பத்தையுங்
கேட்டு, அவர்கள் நீதியை விளங்கப்பண்ணி, உம
து சனங்கள் உமக்குவிரோதமாகச்செய்தபாவத்
தை மன்னித்தருளும்.—என்தேவனே, இந்தஸ் ச௰
தானத்தில் செய்யப்படும் பிரார்த்தனைக்குக் கண்
திறந்து செவிசாய்த்தருளும்.-தேவனாகிய யெ சக
கோவாவே, நீர், உமது வல்லமையாகிய பெட்
டியுடன், தங்கத்தக்கஸ்தானத்தில்எழுந்தருளும்;
தேவனாகிய யெகோவாவே, உம்முடைய
ஆசாரியர்கள் இரட்சிப்பென்னும் வஸ்திரம் தரி
க்கக்கடவர்கள், உமது பரிசுத்தவான்களும் நன்
மையில் களிகூர்ந்திருப்பார்களாக.—தேவனா சஉ
கிய யெகோவாவே, உமது அபிஷேகனுக்
குப் பராமுகம் பண்ணாதிரும்: உமதடியானாகிய
தாவீது பெற்றதயவை நினைந்தருளும் என்றான்.

## எ. அதிகாரம்.

க. சலோமோன் பிரார்த்தித்த பின்பு ஆகாயத்தி
னின்று அக்கினி இறங்கல்: ௪. பலியிடல்: அ.
உற்சவம் ஆசரித்தபின்பு சனங்களைஅனுப்பிவி
டல்: ௰உ. யெகோவா சலோமோனுக்குவாக்
குத்தத்தஞ்செய்தல்.

சலோமோன் பிரார்த்தனைசெய்து முடித்தபொ க

(உசு) க.இரா.௰எ.க. (உஅ) அதி.உ௰.கூ. (கூ௰) க.நாளா.உஅ.கூ. (கூஉ) யோவா.௰உ.உ௰. அப்.அ.உஎ. (கூசு) நீதி. உ௰.கூ. பிர.எ.உ௰. யாக்.கூ.உ. க.யோவா.க.அ. (சக) சங்.௱கூஉ.அ,கூ,௰,௰சு. க.நாளா.உஅ.உ. நிகி.கூ.உகூ. (சஉ) சங்.௱கூஉ.க. ஏசா.ருரு.கூ.—(எ. அதி. க.) க.இரா.அ.ருச. லேவி.க.உச. நியா.சு.உக. க.இரா.௰அ.கூஅ. க.இரா. அ.௰,௰க. எசேக்.௰.கூ,ச.

ழுது, ஆகாயத்தினின்று அக்கினி இறங்கி, தக
னபலியையும் மற்றப்பலிகளையுந்தகித்தது; யெ
கோவாவின் மகிமைப்பிரகாசம் ஆலயத்தில்
௨ நிறைந்தது.—யெகோவாவின் மகிமைப்பிர
காசம் யெகோவாவின் ஆலயத்தில் நிறைந்
தபடியால், ஆசாரியர்கள் யெகோவாவின்
ஆலயத்துக்குட் பிரவேசிக்கக்கூடாமற்போயிற்
௩ று.—இஸரவேல் சந்ததியார்யாவரும், அக்கினி
யும் யெகோவாவின் மகிமைப்பிரகாசமும்
யெகோவாவின் ஆலயத்தின்மேல் இறங்குகி
றதைக்கண்டு, தளவரிசைநிலமட்டும் முகங்குப்
புறவணங்கி, யெகோவா தயாபரர்; அவர் த
யையென்றுமுள்ளதென்றுசொல்லிஅவரைத்துதித்
தார்கள்.
௪ பின்பு இராசாவும் சகல சனங்களும் யெ
கோவாவின் சந்நிதியிலே பலிசெலுத்தினார்
௫ கள்.—சலோமோன் இராசா, இருபத்தீராயிரம்
மாடுகளையும் இலட்சத்திருபதினாயிரம் ஆடுகளை
யும் பலியிட்டான்; இராசாவும் சனங்கள்யாவ
ரும் தேவனுடைய ஆலயத்தை இப்படியேபிர
௬ திஷ்டைபண்ணினார்கள்.—ஆசாரியர்கள் தங்கள்
தங்கள் ஆராதனைத்தொண்டுசெய்தார்கள்: யெ
கோவாவின்தயையென்றுமுள்ளது ஆதலால்,யெ
கோவாவைத் துதிக்கிறதற்குத் தாவீது இராசா
செய்தவாத்தியங்களினாலும்,தாவீது தங்களுக்கு
ணர்த்தின கீதங்களினாலும்லேவியர் தங்கள்தொ
ழிலைச்செய்தார்கள்;ஆசாரியர்கள் அவர்களுக்கு
முன்பாக எக்காளமூதினார்கள்,இஸரவேலரெல்
௭ லாருநின்றார்கள்.—மேலும்சலோமோன்செய்
தபித்தளைவேதிகை, தகனபலிகளையும், போசன
பலிகளையும், நிணத்தையுங் கொள்ளக்கூடாததா
யிருந்தபடியால், சலோமோன் யெகோவா
வின் ஆலயத்துக்கு முன்னிருந்த பிராகாரமத்தி
யைப் பரிசுத்தப்படுத்தி, தகனபலிகளையும் ஸ்
தோத்திரபலிகளின் நிணத்தையும் அங்கேயிட்
டான்.
௮ அக்காலத்திலே சலோமோனும், அமாத்தின்
எல்லைதொடங்கி எகிப்துநதிவரைக்குமுள்ள ம
காசபையாராகிய இஸரவேலர் யாவரும், ஏழு
௯ நாளளவும்உற்சவங்கொண்டாடினார்கள்.—அவர்
கள் ஏழுநாள் வேதிகையைப்பிரதிஷ்டை பண்
ணி, மற்ற ஏழுநாள் உற்சவங்கொண்டாடினப
டியினால், எட்டாந்தினத்தில் ஓய்ந்திருந்தார்கள்.-
௰ ஏழாமாசம் இருபத்து மூன்றாந்தினத்தில் யெ
கோவாதாவீதுக்கும்,சலோமோனுக்கும்,தமது
சனங்களாகிய இஸரவேலருக்குஞ் செய்த நன்
மைக்காகச் சந்தோஷப்பட்டு, மனமகிழ்ச்சியோ
டு, தங்கள் தங்கள் கூடாரங்களுக்குப்போகும்
௰௧ படி அவன்சனங்களை அனுப்பிவிட்டான்.-இவ்
விதமாய்ச்சலோமோன் யெகோவாவின் ஆல
யத்தையும், அரமனையையு முடித்தான்: சலோ
மோன் யெகோவாவின் ஆலயத்திலும் தன்
அரமனையிலும் செய்ய அபிப்பிராயம்கொண்ட
யாவற்றையும் அனுகூலமாய் நிறைவேற்றினான்.
பின்பு யெகோவா இரவிலே சலோமோ ௰௨
னுக்குத்தரிசனமாகி, அவனைநோக்கி, நான்உன்
பிரார்த்தனையைக்கேட்டேன், எனக்குப் பலியி
டும் வீடாக இந்தஸ்தானத்தைத் தெரிந்துகொண்
டேன்.—மழைபெய்யாமல் நான் வானத்தை அ ௰௩
டைத்தாலும், தேசத்தை அழிக்கும்படி வெட்டுக்
கிளிகள்வரக் கட்டளையிட்டாலும், நான் என் ச
னங்களுக்குள்ளேகொள்ளைநோயைஅனுப்பினா
லும்;—என் நாமந்தரிக்கப்பெற்ற என்சனங்கள் ௰௪
தங்களைத்தாழ்த்திப் பிரார்த்தனைசெய்து, என் மு
கத்தைத்தேடித்தங்கள் துன்னெறிகளினின்று தி
ரும்புவார்களாகில், நான் வானத்தினின்று கேட்
டு, அவர்கள் பாவத்தைமன்னித்து, அவர்கள் தே
சத்தைஆற்றுவேன்.—இந்தஸ்தானத்திற்செய்யப் ௰௫
படும் பிரார்த்தனைக்குக் கண்திறந்து செவிசாய்ப்
பேன்.—என்நாமஞ்சதாகாலமும் இந்த ஆலயத் ௰௬
திலே தங்கும்படி, நான் இதைத்தெரிந்துகொண்
டுபரிசுத்தப்படுத்தினேன்:என்கண்ணும்என்மன
மும் சதாகாலமும்இதிலேதரித்திருக்கும்.-நீயோ ௰௭
நான் உனக்குக்கட்டளையிட்ட யாவற்றின்படிக்
குஞ்செய்து,உன்பிதாவாகியதாவீதுநடந்தபிரகா
ரம் என்சமுகத்தில்நடந்து, என்விதிகளையும்என்
நியாயப்பிரமாணங்களையுங்காத்துக்கொள்வாயா
கில்;—இஸரவேலருக்குள் அரசாள உன்வமிசத் ௰௮
தில் ஒருவனில்லா தொழியானென்றுசொல்லி
உன் பிதாவாகிய தாவீதுடன் நான்செய்த உடன்
படிக்கையின்படி, உன் இராச்சிய சிங்காசனத்
தை நிலைப்படுத்துவேன்.—நான்உங்களுக்குமுன் ௰௯
னிட்ட என்விதிகளையுங்கட்டளைகளையுஞ்செய்
யாமல் விலகிப்போய், அந்நிய தேவர்களைச்சே
வித்து நமஸ்கரிப்பீர்களாகில்,-நான் அவர்களுக் ௨௰
களித்ததேசத்தினின்று அவர்களை நிருமூலப்ப
டுத்துவேன், என் நாமத்தினிமித்தம்நான் பரிசுத்
தப்படுத்திய இந்த ஆலயத்தை என்சமுகத்தினி
ன்று அகற்றிவிடுவேன், இதுசகலசாதியாருக்
குள்ளும் பழமொழிக்கும் பரியாசமொழிக்கும்
ஏதுவாகும்படி பண்ணுவேன்.—அப்பொழுது ௨௧
உயர்ந்திருக்கிற இந்த ஆலயத்துக்குச்சமீபமாய்ச்
செல்லும்யாவரும்பிரமிப்படைந்து, யெகோ
வா, எதினிமித்தம்இந்தத்தேசத்துக்கும் இந்த ஆ
லயத்துக்கும் இப்படிச்செய்தாரென்று வினாவு
வார்கள்.—அதற்கு அவர்கள் தங்கள் பிதாக்க ௨௨
ளை எகிப்துதேசத்தினின்று புறப்படப்பண்ணி
ன தேவனாகிய யெகோவாவை விட்டு நீங்
கி, அந்நியதேவர்களைப் பற்றிக்கொண்டு, அவர்
களைநமஸ்கரித்துச் சேவித்ததினிமித்தம், அவர்
அவர்கள்மேல் இந்தச்சமஸ்ததீமைகளையும் வரு
வித்தாரென்று சொல்லப்படும்.

(௨)அதி.௫.௰௪. (௩) சங்.௱௩௬.௧. (௪) ௧.இரா.அ.௬௨,௬௩. (௬) ௧.நாளா.௰௫.௰௬. அதி.௫.௰௨. (௭) ௧.இரா.அ.௬௪. (௮) ௧.இரா.அ.௬௫. யோசு.௰௩.௨. (௰) ௧.இரா.அ.௬௬. (௰௧) ௧.இரா.௯. (௰௨) உபா.௰௨.௫. (௰௩) அதி.௬.௨௬, ௨௮. (௰௪) யாக்.௪.௰. அதி.௬.௨௭,௩௰. (௰௫) அதி.௬.௪௰. (௰௬) ௧.இரா.௯.௩. (௰௭)௧.இரா.௯.௪,. (௰௮) அதி.௬.௰௬. (௰௯) லேவி.௨௬.௰௪,௩௩. உபா.௨௮.௰௫,௩௬,௩௭. (௨௧) உபா.௨௯.௨௪. எரே.௨௨.௮,௯.

## ௮. அதிகாரம்.

*௧. சலோமோன் நகரத்தைக்கட்டடல்: ௭. அந்நிய தேசத்தாரிடத்தில் திறைவாங்கல்: ௰௧. தன் ஸ்திரியை அரமனையிற் பிரவேசிப்பித்தல்: ௰௨. சலோமோன் ஆராதனையின் விதியைக்காத்தல்: ௰௪. ஆசாரியரையும் லேவியரையும் நியமித்தல்: ௰௭. ஒப்பீரினின்றுபொன்னைஎடுப்பித்தல்.*

சலோமோன் யெகோவாவின் ஆலயத்தை
யும் தன் அரமனையையும் கட்டிமுடிக்கச்சென்
௨ ற இருபதுவருஷத்தின் பின்பு,—ஈராம் சலோ
மோனுக்குக்கொடுத்த அந்தந்த நகரங்களைச் ச
லோமோன் திரும்பக்கட்டி இஸரவேல் சந்ததி
௩ யாரை அங்கே வசிக்கப்பண்ணினான்.—சலோ
மோன் அமாத் சோபாவுக்குப்போய் அதைச்செ
௪ யித்தான்.-அவன் வனத்திலுள்ள தாத்மோரையும்
அமாத்திலேசகலகளஞ்சியப்பட்டணங்களையுங்
௫ கட்டுவித்தான்.—சுவர்களும்,வாசல்களும்,தாழ்க
ளுமுள்ள அரண்கொண்ட நகரங்களாகிய மேல்
௬ பேதோரோனையும்,கீழ்ப்பேதோரோனையும்,-பா
லாத்தையும், சலோமோனுக்குள்ள களஞ்சியப்
பட்டணங்களையும், இரதப்பட்டணங்களையும்,
குதிரைவீரர்களுடைய பட்டணங்களையும்,யெ
ரூஷலேமிலும், லிபானோனிலும், தான் அரசா
ண்ட சகலதேசத்திலுங் கட்டவிரும்பினயாவற்
றையுங் கட்டுவித்தான்.
௭ இஸரவேல் சந்ததியார் சங்காரம்பண்ணமுடி
யாமல் தேசத்தில் மீந்திருந்தவர்களும், இஸர
௮ வேல் சந்ததியாரிற்சேராதவர்களுமாகிய,—எத்தி
யர்,எமோரியர்,பெரீசியர், ஈவியர், எபூசியரென்
னுமிவர்களில் சேஷமாயிருந்த சகலசனங்களை
யும் சலோமோன் இந்நாள்வரைக்குந் திறைகொ
௯ டுத்துவரும்படி செய்தான்.—சலோமோன் இஸ
ரவேல் சந்ததியாருக்குள்ளே ஒருவரையும் அடி
மையாக்கிக்கொள்ளவில்லை;ஆனாலும் அவர்கள்,
படைஞரும், அவன் பிரதான சேனாபதிகளும்,
௰ சாரதிகளும், குதிரை வீரருமானார்கள்.—இவர்க
ளுக்குள்ளே சலோமோன் இராசாவின் பிரதான
அதிபதிகளாகிச் சனங்களை விசாரித்து வந்தவர்
கள் இருநூற்றைம்பதுபேர்.
௰௧ சலோமோன்,யெகோவாவின்பெட்டிவந்
தஸ்தானங்கள் பரிசுத்தமாதலால், இஸரவே
லின் இராசாவாகிய தாவீதின் வீட்டில் என்ம
னைவி வசிக்கலாகாதென்று சொல்லி, பார்வோ
னின் புத்திரியைத் தாவீதின் நகரத்தினின்று,
தான் அவளுக்குக்கட்டின வீட்டுக்குக்கொண்டு
வந்தான்.
௰௨ பின்பு சலோமோன், மண்டபத்துக்கு முன்
னேதான் கட்டின யெகோவாவின் வேதிகை
௰௩ யின்மேல்,—மோசே விதித்த பிரமாணத்தின்படி
ஓய்வுநாட்களிலும், அமாவாசியிலும், வருஷ
மொன்றில் புளிப்பில்லாத அப்ப உற்சவமும்,
வார உற்சவமும், கூடார உற்சவமுமாகியமூன்
று பிரதான உற்சவங்களிலும் அந்தந்தத்தினங்க
ளில்முறைமையின்படி பலிசெலுத்தி யெகோ
வாவுக்குத்தகனபலிகளையிட்டான்.
மேலும் அவன், தன் பிதாவாகிய தாவீதின் நி ௰௪
யமப்படி ஆராதனைசெய்கிறதற்கு ஆசாரியரின்
வகுப்புக்களையும், நாடோறும் வேண்டிய கட
மைக்கேற்க ஆசாரியர் சமுகத்தில் துதித்துச்சே
விக்கும்படி லேவியரையும், வாசல்களொவ்
வொன்றுக்கும் அவரவர் வகுப்பின்படி வாசற்
காவலாளரையும்ஏற்படுத்தினான்: தேவனுடை
ய தாசனாகிய தாவீது இப்படியே கட்டளையிட்
டிருந்தான்.—பொக்கிஷங்களையு மற்றெந்தக் கா ௰௫
ரியத்தையும் குறித்து இராசா ஆசாரியர்களுக்கும்
லேவியருக்கும் கொடுத்தகட்டளையினின்று அ
வர்கள் தவறவில்லை.—தேவனுடைய ஆலயத் ௰௬
துக்கு அத்திபாரம் போட்டதினமுதல், அது நி
றைவேறும்வரைக்கும், சலோமோனுடைய வே
லைஎல்லாம் நியமிக்கப்பட்டன. இவ்விதமாய்
யெகோவாவின் ஆலயம் நிறைவேறலாயிற்று.
பின்பு சலோமோன், ஏதோமின்தேசத்திலே ௰௭
கடற்கரையிலிருக்கிற எத்சேயோன் கேபெருக்
கும் ஈலோத்துக்கும்போனான்.—ஈராம் இவனுக் ௰௮
குத்தன் பணிவிடைக்காரரைக்கொண்டு கப்பல்
களையும் சமுத்திரயாத்திரையில் நிபுணரையும் அ
னுப்ப,அவர்கள், சலோமோனின் பணிவிடைக்
காரர்களோடும்ஒப்பீருக்குப்போய்,நானூற்றைம்
பது கிக்கார்பொன்னை எடுத்து, சலோமோன்
ராசாவுக்குக்கொண்டுவந்தார்கள்.

## ௯. அதிகாரம்.

*௧. ஷேபாதேசத்து இராசாத்தி சலோமோனின் ஞானத்தை வியத்தல்: ௰௫. சலோமோனுடைய பொன்னை நிறுத்தல்: ௰௭. யானைத்தந்தத்தினால் சிங்காசனத்தைச்செய்வித்தல்: ௨௰. பாத்திரங்களைவருணித்தல்: ௨௩. இராசாக்கள் உபகாரங்களைக்கொண்டுவரல்: ௨௫. இரதங்களையுங் குதிரைகளையுந்தொகுத்தல்: ௨௬. அவன்இராச்சியம் வர்த்திக்க வாழ்வடைதல்: ௨௯. அவன் ஆளுகையின் காலத்தையும் அவன் மரணத்தையுங்குறித்தல்.*

ஷேபா தேசத்தின் இராசாத்தி, சலோமோனு ௧
டைய கீர்த்தியைக்கேள்விப்பட்டு, விடுகதைக
ளினால் அவனைப்பரீட்சிக்கிறதற்கு மிகுந்தசனக்
கூட்டத்தோடும், சுகந்ததிரவியங்களைச்சுமக்கிற
ஒட்டகங்களோடும், மிகுதியான பொன்னும்இ
ரத்தினங்களுங்கொண்டு, யெரூஷலேமுக்குவந்
தாள்: அவள் சலோமோனிடத்தில் வந்தபொழு
து தன்மனதிலுள்ள யாவையும் வெளிப்படுத்திப்
பேசினாள்.—சலோமோன் அவள்கேட்ட சகல ௨
கேள்விகளுக்கும் உத்தரங்கொடுத்தான்: சலோ
மோன் அவளுக்குத்தெரிவிக்கக்கூடாத மறை
பொருளொன்றுமில்லை.—சலோமோனின் ஞா ௩
னத்தையும், அவன் கட்டின வீட்டையும்,—அ ௪

(௮.அதி.௧.) ௧.இரா.௯.௰,. (௪) ௧.இரா.௯.௰௭,. (௮) ௧.இரா.௯.௨௰,. (௰) ௧.இரா.௯.௨௩. (௰௧) ௧.இரா.௩.௧. (௰௩) யாத்.௨௯.௩௮. யாத்.௨௩.௰௪. உபா.௰௬.௰௬. (௰௪) ௧.நாளா.௨௪.௧. ௧.நாளா.௨௫.௧. ௧.நாளா.௯.௰௭. (௰௭)௧.இரா.௯.௨௬. உபா.௨.௮. ௨.இரா.௰௪.௨௨. (௰௮) ௧.இரா.௯.௨௭.—(௯. அதி. ௧.) ௧.இரா.௰. மத்.௰௨.௪௨. லூக்.௰௧.௩௧.

வன் பீடத்திலுள்ள உணவுப்பொருளையும், அ
வன்பணிவிடைக்காரருடைய ஆசனங்களையும்,
அவன்மந்திரிகளின்சபையையும், அவர்கள்வஸ்
திரத்தையும், அவன் பானபாத்திரதாரிகளையும்,
அவர்கள்வஸ்திரத்தையும், அவன் யெகோவா
வின் ஆலயத்துக்குஏறிப்போகிறமார்க்கத்தையும்
ஷேபாவின் இராசாத்திகண்டபொழுது, அவள்
௫ மனமயங்கிவிட்டாள்.—நான் என்சுயதேசத்திலி
ருக்க, உம்முடைய கிரியைகளையும் உமது வித்
தையையுங்குறித்து, நான் கேட்டவாக்கு உண்
௬ மை.—நான்வந்து என் கண்ணினாற்காணும்வ
ரைக்கும் அவர்கள்வாக்கை நம்பவில்லை: உம
து அதிசயமான ஞானத்திற்பாதியாகிலும் எனக்
குத்தெரிவிக்கப்படவில்லை: நான்கேள்விப்பட்
௭ டதிலும் நீர் அதிககீர்த்திமான்.—உமதுசனங்கள்
வாழ்வுடையவர்கள், நித்தமும் உமதுசமுகத்தில்
நின்று உமது ஞானத்தைக்கேட்கிற உம்முடை
ய பணிவிடைக்காரரும் வாழ்வுடையவர்கள்.—
௮ உம்மேற்பிரியங்கொண்டு, உம்முடைய தேவ
னாகிய யெகோவாவினிமித்தம்இராசாவாகும்
பொருட்டுத்தமது சிங்காசனத்தில் உம்மைவீற்றி
ருக்கப்பண்ணின உமது தேவனாகிய யெகோ
வாவுக்கு ஸ்தோத்திரம்: உம்முடைய தேவன்
இஸரவேலரைச்சதாகாலமும் நிலைப்படுத்துகிற
தற்கு அன்புவைத்திருக்கிறபடியால், நியாயத்தை
யும் நீதியையும் நடத்த உம்மை அவர்களுக்கு இ
௯ ராசாவாக ஏற்படுத்தினார் என்றாள்.—அவள், இ
ராசாவுக்கு நூற்றிருபது கிக்கேர் பொன்னும்,
மிகுதியான சுகந்தத்திரவியங்களும், இரத்தினங்க
ளுங்கொடுத்தாள்: ஷேபாவின்இராசாத்தி சலோ
மோன் இராசாவுக்குக்கொடுத்த சுகந்ததிரவியங்
௰ கள்போல வேறொன்றுமில்லை.—ஒப்பீரிலிருந்து
பொன்கொண்டுவந்த ஈராமின் பணிவிடைக்கா
ரரும், சலோமோனின் பணிவிடைக்காரரும்,
அல்முக்மரங்களையும் இரத்தினங்களையுங் கொ
௰௧ ண்டுவந்தார்கள்.—அந்த அல்முக்மரங்களினால்,
யெகோவாவினாலயத்துக்கும் அரமனைக்கும்
சிறு தூண்களையும், பாடகருக்குச் சுரமண்டலங்
களையும் தம்பூருகளையுஞ் செய்தான்: முன் ஒரு
பொழுதும் யூதேயாதேசத்தில் அப்படிப்பட்ட
௰௨ வைகள் காணப்படவில்லை.—சலோமோன் இ
ராசா, ஷேபாவின் இராசாத்தி இராசாவாகிய த
னக்குக் கொண்டுவந்த அளவுக்குமேற்பட அ
வள் விரும்பிக்கேட்ட யாவற்றையும் அவளுக்
குக்கொடுத்தான். பின்பு அவள் தன் பணிவி
டைக்காரரோடும் தன் தேசத்துக்குத் திரும்பிப்
போனாள்.

௰௩ சலோமோனுக்கு வர்த்தகரினாலும் வியாபாரி
களினாலும்வந்தபொன்னையன்றி, ஒரு வருஷத்
தில் அவனுக்குவந்தபொன் அறுநூற்றறுபத்தாறு
௰௪ கிக்கேர் நிறைகொண்ட பொன்.—அரபியாதே
சத்து இராசாக்கள் யாவரும் தேசாதிபதிகளும்
சலோமோனுக்குப் பொன் வெள்ளி கொண்டு
வந்தார்கள்.

சலோமோன் இராசா அடித்தபொன்னினால் ௰௫
இருநூறு பரிசைகளைச்செய்வித்தான், ஒ[illegible]
ருபரிசைக்கு அறுநூறு ஷேக்கல் அடித்[illegible]
சென்றது.—அடித்த பொன்னினால் மு[illegible] ௰௬
கேடகங்களையுஞ்செய்வித்தான், ஒவ்வொரு கே
டகத்துக்கு முந்நூறு ஷேக்கல் பொன் சென்ற
து, அவைகளை இராசா லிபானோன் வனத்தி
லுள்ள வீட்டிலேவைப்பித்தான்.—பின்னும் இ ௰௭
ராசா, யானைத்தந்தத்தினால் ஒருபெரிய சிங்காச
னஞ்செய்வித்து அதைப் பசும்பொற்றகட்டால்
மூடினான்.—அந்தச் சிங்காசனத்துக்கு ஆறுபடி ௰௮
களும், தங்கத்தினாற்செய்யப்பட்ட ஒருபாதபீட
மும் அத்துடன் இசைந்திருந்தன; ஆசனத்தில்
இருபுறத்திலும் ஆதாரங்களிருந்தன, ஆதாரங்க
ளுக்குமுன்பாக இரண்டு சிங்கங்கள் நின்றன:—
ஆறுபடிகளின்மேலும் இரண்டு புறத்திலும் பன் ௰௯
னிரண்டு சிங்கங்கள் நின்றன. எந்த இராச்சியத்
திலும் இப்படிச்செய்யப்பட்டதில்லை.

சலோமோன்இராசாவின்சகலபானபாத்திரங் ௨௰
களும்பொன், லிபானோன் வனத்தின்வீட்டிலுள்
ள சகலபாத்திரங்களும் தங்கம், ஒன்றும் வெள்
ளியல்ல; சலோமோனின்காலத்தில் இது ஒரு
பொருளாய் மதிக்கப்படவில்லை.—ஈராமின்பணி ௨௧
விடைக்காரருடன் இராசாவின் கப்பல் தர்ஷீ
ஷுக்குப்போய்வரும்: மூன்றுவருஷத்தில் ஒரு
தரம் கப்பல்கள் தர்ஷீஷிலிருந்து பொன்னையும்,
வெள்ளியையும், யானைத்தந்தத்தையும், வானரங்
களையும், மயில்களையும்ஏற்றிவரும்.—சலோமோ ௨௨
ன் இராசா, ஐசுவரியத்திலும், ஞானத்திலும், பூம
ண்டலத்திலுள்ளசகல இராசாக்களுக்கும்மேலா
னவனாயிருந்தான்.

தேவன் சலோமோனுக்குஅவனிருதயத்தில் ௨௩
அருளின ஞானத்தைக்கேட்டறியும்படி, பூமியி
லுள்ள சகல இராசாக்களும் அவனைச்சந்திக்க
வகைதேடினார்கள்.—அன்றியும் வருஷந்தோறும் ௨௪
அவரவர் வெள்ளிப் பாத்திரங்களையும், பொற்
பாத்திரங்களையும், வஸ்திரங்களையும், ஆயுதங்க
ளையும், சுகந்ததிரவியங்களையும், குதிரைகளையும்,
கோவேறு கழுதைகளையுங் காணிக்கையாய்க்
கொண்டுவருவார்கள்.

சலோமோனுக்குக்குதிரைகளுக்காகவும், இர ௨௫
தங்களுக்காகவும் நாலாயிரம் வீடுகளும், பன்னீ
ராயிரம் குதிரைவீரருமுண்டு; அவர்களை இராசா
இரதங்களின் பட்டணங்களிலும், தன்னோடே
யெருஷலேமிலும்வைத்தான்.

அவன்நதிதொடங்கிப்பெலிஸ்தியரின்தேசம் ௨௬
வரைக்கும், எகிப்தின் எல்லைவரைக்குமுள்ளசக
ல இராசாக்களையும் அரசாண்டான்.—யெருஷ ௨௭
லேமில் இராசா வெள்ளியைக் கல்லுகள்போல
வும், ஏரஸ்மரங்களைத் தாழ்ந்த பூமியிலுள்ளகாட்

(௰) அதி.௮.௰௮. ௧.இரா.௰.௰௧. (௨௫) ௧.இரா.௪.௨௬. அதி.௧.௰௪. (௨௬) ௧.இரா.௪.௨௧. ஆதி.௰௫.௰௮. சங்.௭௨.
௮. (௨௭) ௧.இரா.௰.௨௭.

டத்திமரங்கள்போலவும் இருக்கும்படிமிருக்கப்
௨௮ பண்ணினான்.—எகிப்தினின்றும் சகல தேசங்க
ளினின்றுங் குதிரைகளைச் சலோமோனிடத்தில்
கொண்டுவந்தார்கள்.
௨௯ சலோமோனின்ஆதியந்தமான மற்றக்கிரியை
கள், நாதான்தீர்க்கதரிசியின் புத்தகத்திலும், ஷீ
லோனியனாகிய அகியாவின் தீர்க்கதரிசனப்புத்
தகத்திலும், நெபாத்தின் புத்திரனாகிய யெரொ
பேயாமுக்குவிரோதமாய் தரிசியாகிய இத்தோ
கண்டதரிசனங்களிலும் அல்லவா எழுதியிருக்
௩௰ கின்றன.—சலோமோன் யெருஷலேமில் இஸ
ரவேலரனைவரையும் நாற்பதுவருஷம் அரசாண்
௩௧ டான்.—சலோமோன் தன்பிதாக்களுடன் மகா
நித்திரையடைந்து, தன்பிதாவாகிய தாவீதின்நக
ரத்தில் அடக்கம்பண்ணப்பட்டான்: அவனுக்
குப்பின் அவன் புத்திரனாகிய ரெகோபேயாம்
இராசாவானான்.

## ௰. அதிகாரம்.

௧. ரெகோபேயாமுக்கு அபிஷேகஞ்செய்யும்படி இஸ்ரவேலர் ஷிகேமுக்குப்போய், அங்கே அவனைப்பிரார்த்தித்தல்: ௬. அவர்கள்பிரார்த்தனையைக்குறித்து முதியோரிடத்திலும் வாலிபரிடத்திலும்வினாவல்: ௰௬. பத்துக்கோத்திரத்தார் ஆதீனத்தைத்தள்ளல்.

ரெகோபேயாமை இராசாவாக ஏற்படுத்தும்ப
டி எல்லா இஸ்ரவேலரும் ஷிகேமுக்குவந்தபடி
யினால், அவனும் ஷிகேமுக்குப்போனான்:—
௨ சலோமோன்இராசாவைவிட்டோடிப்போய் எ
கிப்திலே வாசம்பண்ணின நெபாத்தின் புத்திர
னாகிய யெரொபேயாம் எகிப்தினின்று திரும்பி
௩ னான்.—இவர்கள் ஆளனுப்பி அவனை அழைப்பித்
தார்கள். யெரொபேயாமும் இஸ்ரவேலர்யாவ
௪ ரும்வந்துரெகோபேயாமைநோக்கி,-உமதுபிதா,
தாங்குவதற்கரிய நுகத்தை எங்களுக்கிட்டான்,
உமது பிதாவின் கடினமான ஊழியத்தையும் அ
வன் எங்களுக்கிட்ட பாரமான நுகத்தையும் இ
லகுவாக்கும், நாங்கள் உம்மிடத்தில் சேவிப்
௫ போமென்றார்கள்.—அதற்கவன் அவர்களை நோக்
கி, நீங்கள் மூன்றுநாள்பொறுத்து, என்னிடத்
தில் வாருங்களென்றுசொல்ல, சனங்கள் போய்
விட்டார்கள்.
௬ ரெகோபேயாம் இராசா, தன் பிதாவாகிய ச
லோமோன் உயிரோடிருந்தபொழுது அவன்ச
முகத்தில்நின்ற முதியோர்களுடன் ஆலோசித்
து, நான் இந்தச்சனங்களுக்கு என்ன உத்தரஞ்
சொல்லுவேன், நீங்களிதற்கு என்ன ஆலோச
௭ னை சொல்லுகிறீர்களென்று கேட்க,—அவர்கள்
அவனை நோக்கி, நீர் இந்தச்சனங்களுக்கு நன்
மைசெய்து, அவர்களைப்பிரியப்படுத்தி, அவர்க
ளுக்குநல்லசொற்களைச் சொல்வீராகில், அவர்
கள் நித்தமும் உமக்குப்பணிவிடைக்காரராவார்
௮ களென்றார்கள்.—அவன்தனக்கு அந்தமுதியோர்
சொன்ன ஆலோசனையைத்தள்ளி, தனக்குமுன்
னின்று தன்னோடு வளர்ந்தவாலிபருடன் மந்
திராலோசனைபண்ணி,—உமதுபிதா எங்கள்மே ௯
லிட்ட நுகத்தை இலகுவாக்குமென்று சொல்
லி என்னிடத்தில்பேசின இந்தச் சனங்களுக்கு
நாம் என்ன உத்தரம்சொல்லுவோம், நீங்களி
தற்கென்ன ஆலோசனை சொல்லுகிறீர்களென்று
கேட்க,—அவனோடு வளர்ந்த அந்தவாலிபர் அ ௰
வனைநோக்கி, உமதுபிதா, தாங்குதற்கரிய நுகத்
தை எங்களுக்கிட்டார், நீர் அதை எங்களுக்கு
இலகுவாக்குமென்று உம்முடன் சொன்ன இந்
தச்சனங்களுக்கு, என் சின்னவிரல்என்பிதாவி
னிடையிலும் பருத்திருக்கும்.—என்பிதா பார ௰௧
மான நுகத்தை உங்கள்மேல் ஏற்றினார், நான்
இன்னும் உங்கள் நுகத்தைப் பாரமாக்குவேன்:
என்பிதா உங்களைக்கசைகளினாலேதண்டித்தார்,
நானோதேள்களினால்உங்களைத்தண்டிப்பேன்
என்று சொல்லவேண்டுமென்றார்கள்.—மூன்று ௰௨
நாள்பொறுத்து வாருங்களென்று இராசாசொல்
லியபிரகாரம், யெரொபேயாமும் சனங்களெல்
லாரும்மூன்றாநாள்ரெகோபேயாமிடத்துக்குவந்
தார்கள்.—ரெகோபேயாம் இராசா, தனக்குமு ௰௩
தியோர்சொன்னஆலோசனையைத்தள்ளிவிட்டு,
வாலிபர்சொன்னஆலோசனையின்படி,—சனங் ௰௪
களைநோக்கி, என்பிதா பாரமானநுகத்தை உங்
கள்மேலேற்றினார், நான் இன்னும் அதைப்பா
ரமாக்குவேன்; என்பிதா கசைகளினால் உங்க
ளைத் தண்டித்தார், நானோ உங்களைத் தேள்களி
னாலே தண்டிப்பேனென்றுசொல்லி அவர்க
ளுக்குக் கடினமான உத்தரங் கொடுத்தான்.—
யெகோவா, ஷீலோனியனாகியஅகியாவைக் ௰௫
கொண்டு நெபாத்தின் புத்திரனாகிய யெரொபே
யாமுக்குத் தாம்சொல்லியவாக்கை நிறைவேற்
றவேண்டிய காரணம் தேவனாலுண்டானபடி
யினால், இராசா சனங்களுக்குச் செவிகொடுக்
கவில்லை.
இராசா தங்களுக்குச் செவிகொடுக்கவில்லை ௰௬
யென்று இஸ்ரவேலர் யாவருங்கண்டபொழுது
சனங்கள் இராசாவை நோக்கி, தாவீதினிடத்
தில் எங்களுக்குப்பாகமேது; ஈசாயின் புத்திர
னோடு எங்களுக்குச்சுதந்தரமில்லை: இஸ்ரவே
லரே, உங்கள் கூடாரங்களுக்குப் போய்விடுங்
கள்; தாவீதே, உன் சுயவமிசத்தைப் பார்த்துக்
கொள்ளென்றார்கள். இப்படியே இஸ்ரவேல
ரெல்லாரும் தங்கள் தங்கள் கூடாரங்களுக்குப்
போய்விட்டார்கள்.—யூதாவின்பட்டணங்களில் ௰௭
வாசம்பண்ணின இஸ்ரவேல்சந்ததியாரை, ரெ
கோபேயாம் அரசாண்டான்.—பின்பு ரெகோ ௰௮
பேயாம்இராசா, திறைவாங்குகிறவனாகியஆதோ
ராமை அனுப்ப, அவன் சாகும்படி இஸ்ரவேல்
சனங்கள் யாவரும் கல்லெறிந்தார்கள். ரெகோ
பேயாம் இராசா அதிதீவிரமாய்த்தன் இரதத்தி
லேறிக்கொண்டு யெருஷலேமுக்குத் தப்பிப்
போய் விட்டான்.—இஸ்ரவேலர் இப்படியே ௰௯

(௨௮) ௧.இரா.௰.௨௮. (௨௯) ௧.இரா.௰௧.௪௧. ௧.இரா.௰௧.௨௯. (௩௰) ௧.இரா.௰௧.௪௨,௪௩.—(௰. அதி. ௧.) ௧.இரா.௰௨.௧. (௨) ௧.இரா.௰௧.௪௰. (௰௫) ௧.சாமு.௨.௨௫. ௧.இரா.௰௨.௰௫,௨௪. ௧.இரா.௰௧.௨௯. (௰௯) ௧.இரா.௰௨.௰௯.

இந்நாள்வரைக்கும்தாவீதின் வமிச இராசாதீனத்
தைத்தள்ளிப்போட்டார்கள்.

## ௰௧. அதிகாரம்.

௧. ரெகோபேயாம் யுத்தஞ் செய்யாதபடி யெகோவாவினால் தடுக்கப்படல்: ௫. நகரத்தைத் திடப்படுத்தல்: ௰௩. ஆசாரியரும் லேவியரும் அவனைச்சேர்த்தல்: ௰௮. அவன் புத்திர புத்திரிகளின் நாமங்களைத்தெரிவித்தல்.

ரெகோபேயாம் யெரூஷலேமிற் சேர்ந்தபொ
ழுது ரெகோபேயாம் இராச்சியத்தைத் திரும்பத்
தன் வசமாக்கிக்கொள்ளும்பொருட்டு, இஸர
வேலருக்கு விரோதமா யுத்தஞ்செய்யும்படி, யூ
தாவின் வமிசத்தாருக்குள் பரீட்சிக்கப்பட்ட ஒ
ருலட்சத்து எண்பதினாயிரம் படைஞரைக்கூ
௨ டி வரும்படி செய்தான்.—அப்பொழுது தேவ
னுடைய தாசனாகிய ஷிமாயீயாவுக்குக் கிடைத்
௩ த யெகோவாவின் வாக்கு,—நீ சலோமோனி
ன்புத்திரனும்,யூதாவின் இராசாவுமாகிய ரெகோ
பேயாமிடத்திலும், யூதாவிலும் பேன்யமீனிலு
௪ முள்ள இஸரவேலரெல்லாரிடத்திலும்,-நீங்கள்
போய்உங்கள் சகோதரரைஎதிர்த்துயுத்தஞ்செய்
யவேண்டாம்: இந்தக்காரியம் என்னாலாயிற்று:
நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் உங்கள் வீடுக
ளுக்குப்போய்விடுங்களென்று யெகோவா
சொல்லுகிறாரென்றுசொல்லிற்று. அவர்கள்யெ
கோவாவின் வாக்குகளுக்கமைந்து, யெரோ
பேயாமுக்கு விரோதமாகப்போகாமல் திரும்பி
விட்டார்கள்.
௫ பின்பு ரெகோபேயாம் யெரூஷலேமிலே வா
சம்பண்ணி, யூதாதேசத்தைக்காக்கிறதற்கு அர
௬ ணுள்ள நகரங்களைக்கட்டினான்.—அவன் யூதா
விலும்பேன்யாமீனிலுமுள்ளபேத்லகேமும், ஈத்
௭ தாமும்,தெக்கோயாவும்,—பேத்சூரும், ஷோகோ
௮ வும், அதுல்லாமும்,—காத்தும், மாரேஷாவும்,
௯ சிப்பும்,—அதோராயிமும், லாகீஷும், அசேகா
௰ வும்,—சோராவும், அயாலோனும், எப்ரோனுமா
௰௧ கிய அரணுள்ள நகரங்களைக்கட்டி,—துருக்கங்
களைத்திடப்படுத்தி, அவைகளில் சேனாபதிகளை
யும், சேகரிக்கப்பட்ட உணவுப்பொருளையும்,
எண்ணெயையும், திராட்ச ரசத்தையும் வைத்
௰௨ தான்.—யூதாவமிசத்தாரும் பேன்யாமீன்வமிசத்
தாரும் தன்பட்சத்திலிருக்க, அவன் அந்தநகரங்
களில் கேடகங்களையும் ஈட்டிகளையும்வைத்து,
அவைகளை மிகவுந் திடப்படுத்தினான்.
௰௩ இஸரவேலில் எங்குமுள்ள ஆசாரியர்களும்
லேவியருந் தங்கள் தங்கள் எல்லா எல்லைகளி
௰௪ னின்றும் அவனிடத்தில்வந்தார்கள்.—லேவியர்
யெகோவாவுக்குத் தங்கள் ஆசாரியத்தொழி
லைச்செய்யாதபடி யெரோபேயாமும் அவன்புத்
திரருந் தங்களைத்தள்ளிப்போட்டபடியால், தங்
கள் பேட்டைகளையுஞ் சுதந்தரங்களையும்விட்டு
யூதாவையும் யெரூஷலேமையும்சேர்ந்தார்கள்.—
அவன் உயர்ந்த ஸ்தானங்களுக்காகவும், பூதங்க ௰௫
ளுக்காகவும், தான்செய்த கன்றுகளுக்காகவும்
பூசாரிகளை ஏற்படுத்தினான்.—இஸரவேலரின் ௰௬
எல்லாக்கோத்திரத்துள்ளும் இஸரவேலரின் தே
வனாகிய யெகோவாவைத்தேடும்படி மனம்
வைத்திருந்தவர்கள், தங்கள் பிதாக்களின்தேவ
னாகிய யெகோவாவுக்குப்பலியிடும்படி யெ
ரூஷலேமுக்குவந்தார்கள்.—இவ்விதமாய் அவர் ௰௭
கள்யூதாவின்இராச்சியத்தைத்திடப்படுத்தி,மூன்
றுவருஷம்வரைக்குந் தாவீது சலோமோன் என்
பவர்களின் நெறியில் நடந்து, சலோமோனின்
புத்திரனாகிய ரெகோபேயாமை மூன்றுவருஷ
பரியந்தம் பெலப்படுத்தினார்கள்.
ரெகோபேயாம் தாவீதின் புத்திரனான எரே ௰௮
மோத்தின் புத்திரியாகிய மகலாத்தையும், ஈஷா
யின் புத்திரனான இலியாப்பின் புத்திரியாகிய
அபிகயிலேயும் விவாகம்பண்ணினான்;—இவள் ௰௯
அவனுக்கு எயூஷ், ஷமரிய, சாகம் என்னும்பிள்
ளைகளைப் பெற்றாள்.—அவளுக்குப்பின்பு அப் ௨௰
ஷாலோமின் புத்திரியாகிய மாகாளை விவாகம்
பண்ணினான், இவள்அவனுக்கு அபீயாவையும்,
அத்தாயியையும், சீசாவையும், ஷிலோமித்தை
யும் பெற்றாள்.—ரெகோபேயாம், தன்மனைவிக ௨௧
ளும் வைப்பாட்டிகளுமாகிய எல்லாரிலும்,அப்
ஷாலோமின்புத்திரியாகிய மாகாளைநேசித்தான்:
அவனுக்குப்பதினெட்டு மனைவியரும் அறுபது
வைப்பாட்டிகளுமிருந்தார்கள்; இவன் இருபத்
தெட்டுப்புத்திரரையும் அறுபது புத்திரிகளையும்
பெற்றான்.—ரெகோபேயாம் மாகாளின் புத்திர ௨௨
னாகிய அபீயாவை இராசாவாக்கும்படி அபிப்
பிராயங்கொண்டு அவன் சகோதரருக்குள் அதி
பதியாக்கினான்.—அவன் புத்திபூருவமாய் நடந் ௨௩
து, யூதாபேன்யாமீனென்னுஞ் சகலதேசங்களி
லும் அந்தந்த அரணுள்ள நகரங்களில் தன்புத்தி
ரர்யாவரையும் ஏற்படுத்தினான்: அவர்களுக்குமி
குதியான உணவுப்பொருளைக்கொடுத்து, அவர்
களுக்கு அவன் அநேக ஸ்திரிகளைத்தேடினான்.

## ௰௨. அதிகாரம்.

௧. ரெகோபேயாம் யெகோவாவை நீங்கினதினாலே தண்டனைபெறல்: ௫. பாவத்தினிமித்தம் மனஸ்தாபப்பட்டதினால் அத்தண்டனை லகுவாக்கப்படல்: ௰௩. அவன் ஆளுகையின்காலத்தையும் அவன்மரணத்தையும்குறித்தல்.

பின்புரெகோபேயாம், இராச்சியத்தைஸ்தாபித் ௧
து உன்னதமானபின்பு, அவன்சமஸ்த இஸரவே
லரோடும் யெகோவாவின்வேதப்பிரமாணத்
தைத் தள்ளிவிட்டான்.—அவர்கள், விரோதிக ௨
ளாய் யெகோவாவின் கட்டளையைமீறினப
டியினால், ரெகோபேயாம் இராசா அரசாண்ட
ஐந்தாம்வருஷத்தில் எகிப்து இராசாவாகிய ஷீ
ஷாக், ஆயிரத்திருநூறு இரதங்களோடும் அறுப
தினாயிரங் குதிரைவீரர்களோடும் யெரூஷலே

(௰௧. அதி. ௧.) ௧.இரா.௰௨.௨௧,. (௪) அதி.௰௨.௰௫. (௰௪) எண்.௩௫.௨. அதி.௰௩.௯. (௰௫) ௧.இரா.௰௨.௩௧. ஓசி. ௰௩.௨. லேவி.௰௭.௭. ௧.கொரி.௰.௨௰. ௧.இரா.௰௨.௨௮. (௰௬) அதி.௰௫.௯. (௰௭) அதி.௰௨.௧. (௨௰) ௧.இரா.௰௫. ௨. அதி.௰௩.௨.—(௰௨. அதி. ௧.) அதி.௰௧.௰௭. ௧.இரா.௰௪.௨௨. (௨) ௧.இரா.௰௪.௨௫.

௩ முக்கு விரோதமாகப்புறப்பட்டுவந்தான்.-எகிப்
தினின்றும் அவனுடன்வந்த லூபியர், சூக்கியர்,
௪ கூஷியராகிய சனங்களுக்கு எண்ணில்லை.—யூ
தாதேசத்தின் அரணான நகரங்களை வசப்படுத்தி
யெரூஷலேமுக்குவந்தான்.
௫ அக்காலத்தில் ஷிமாயியாவென்னுந் தீர்க்கத
ரிசி,ரெகோபேயாமிடத்திலும்,ஷீஷாக்கினிமித்
தம் யெரூஷலேமில்வந்து கூடியிருக்கிற யூதா
வின் அதிபதிகளிடத்திலும் வந்து, அவர்களை
நோக்கி, நீங்கள் என்னைவிட்டு நீங்கினபடியால்
நான் உங்களை ஷீஷாக்கின்கையில் ஒப்பித்தே
னென்றுயெகோவாசொல்லுகிறாரென்றான்.-
௬ அதினால் இஸ்ரவேலரின் அதிபதிகளும் இராசா
வும் தங்களைத்தாழ்த்தி யெகோவா நீதியுள்ள
௭ வரென்றார்கள்.-அவர்கள் தங்களைத் தாழ்த்தினார்
களென்று யெகோவா கண்டு, அவர்கள் தங்
களைத்தாழ்த்தினபடியினால் நான்அவர்களைஅழிக்
கமாட்டேன், கொஞ்சக்காலம் அவர்களுக்கு இ
ரட்சிப்பை அருள்செய்வேன்; ஷீஷாக்கின்கை
யினால் யெரூஷலேமின்மேல் என்கோப மூற்ற
௮ மாட்டேன்.—ஆனாலும் என்சேவகமின்னதென்
றும் அந்நியதேச இராச்சியத்தாரின் சேவகமின்
னதென்றும் அறியும்படி, அவர்கள் அவனுக்கு அ
டிமைகளாவார்களென்றுயெகோவாவின்வா
௯ க்கு ஷிமாயியாவுக்குக்கிடைத்தது.-பின்பு எகிப்
து இராசாவாகிய ஷீஷாக் யெரூஷலேமுக்குவி
ரோதமாய்வந்து, யெகோவாவின் ஆலயத்தி
லுள்ள பொக்கிஷங்களையும், அரமனையிலுள்ள
பொக்கிஷங்களையும், முழுமையும் எடுத்துக்கொ
ண்டதுமன்றி, சலோமோன் செய்த பொற்பரி
௰ சைகளையுங்கொண்டுபோனான்.-பின்பு ரெகோ
பேயாம் இராசாஅவைகளுக்குப் பிரதியாகப்பித்
தளைப்பரிசைகளைச்செய்து, அரமனை வாசல்காக்
கும் காவலாளருடைய பிரதானியின்கையில்ஒப்
௰௧ பித்தான்.—இராசா யெகோவாவின் ஆலயத்
தில் பிரவேசிக்கும்பொழுது, காவலாளர் இவை
களைப் பிடித்துக்கொண்டுபோய், திரும்பக்காவ
௰௨ லறையிலே கொண்டுவந்து வைப்பார்கள்.—அ
வன் தன்னைத் தாழ்த்தினபின்பு, யெகோவா
அவனை முழுமையும் அழிக்காதபடிக்கு அவரு
டைய குரோதம் அவனைவிட்டு நீங்கிற்று: யூதா
விலுங்காரியங்கள் நன்றாய் நடந்தன.
௰௩ ரெகோபேயாம் இராசா யெரூஷலேமில் பெ
லன் கொண்டு அரசாண்டான்: ரெகோபேயாம்
அரசாளத்தொடங்கினபொழுது அவனுக்குநாற்
பத்தொருவயது; யெகோவா தமது நாமத்
தைஸ்தாபிக்கும்படி இஸ்ரவேலரின் சகலகோத்
திரங்களுக்குள்ளும்தெரிந்துகொண்ட யெரூஷ
லேம் நகரத்திலே பதினேழு வருஷம் அரசாண்
டான். அம்மோனிய ஸ்திரியாகிய அவன் மா
தாவின் பெயர் நாமாள்.—யெகோவாவைத் ௰௪
தேடுவதற்கு அவன் மனம் நிலைப்படாததினால்
தீமை செய்தான்.—ரெகோபேயாமின் ஆதியந்த ௰௫
மான மற்றக்கிரியைகள்,தீர்க்கதரிசியாகிய ஷிமா
யியாவின் புத்தகத்திலும், தரிசியாகிய இத்தோ
எழுதின வமிச வரலாற்றிலுமல்லவா எழுதியி
ருக்கின்றன. ரெகோபேயாமுக்கும் யெரோபே
யாமுக்கும் யுத்தங்கள் இடைவிடாமல் நடந்த
ன.—ரெகோபேயாம் தன் முன்னோருடன் மகா ௰௬
நித்திரையடைந்து, தாவீதின் நகரத்தில் அடக்
கம்பண்ணப்பட்டான்: அவனுக்குப் பின் அ
வன் புத்திரனாகிய அபியா இராசாவானான்.

## ௰௩. அதிகாரம்.

௧. அபியா யெரோபேயாமுடன் யுத்தஞ்செய்தல்:
௪. அபியாயெரோபேயாமிடத்தில் தன்காரியம்
நியாயமுள்ளதெனக்காட்டல்: ௰௩. யெகோ
வாவை நம்பி யெரோபேயாமைச் செயித்தல்:
௨௧. அபியாவின்ஸ்திரி பிள்ளைகளின் தொகை.

யெரோபேயாம் இராசா அரசாண்ட பதினெட் ௧
டாம் வருஷத்தில் அபியா யூதாவை அரசாளத்
தொடங்கி,—யெரூஷலேமில் மூன்று வருஷம் ௨
இராச்சிய பரிபாலனம் பண்ணினான். அவன் மா
தாவின் பெயர் மீகாயாவு, அவள் இபியாவூரிலுள்
ள ஊரியேலின் புத்திரி. அபியாவுக்கும் யெரோ
பேயாமுக்கும் யுத்தம் நடந்தது.—அபியா, பரீட் ௩
சிக்கப்பட்ட பராக்கிரம் வீரராகிய நாலுலட்சஞ்
சேனைகளைப் போருக்கு அணிவகுக்க, யெரோ
பேயாமும் அவனுக்கு விரோதமாக, பரீட்சிக்
கப்பட்ட பராக்கிரம் வீரராகிய எட்டு லட்சம்
பேரைப்போருக் கணிவகுத்தான்.
அபியா, எப்ராயீம் மலையைச்சார்ந்த செம்ரா ௪
யிம்மலையிலேறிநின்று,யெரோபேயாமே,எல்லா
இஸ்ரவேலரே, என்னைக்கேளுங்கள்.-இஸ்ரவே ௫
லரின் தேவனாகிய யெகோவா, இஸ்ரவேல
ரின் இராச்சியத்தைச்சதாகாலமும் தாவீதுக்கும்
அவன்புத்திரருக்குமாறாத உடன்படிக்கையாகக்
கொடுத்திருக்கிறாரே; இதை நீங்கள் அறியீர்க
ளா:-ஆனாலுந்தாவீதின் புத்திரனாகிய சலோமோ ௬
னின் பணிவிடைக்காரனானெபாத்தின் புத்திர
னாகிய யெரோபேயாம் எழுந்து, தன் ஆண்டவ
னின்கட்டளையைமீறிநடந்தான்.—பேலியாலின் ௭
மக்களாகியவீண்மனிதர் அவனோடுகூடினார்கள்:
ரெகோபேயாம் எதிர்நிற்கக்கூடாத இளைஞனும்
திடனற்ற மனமுள்ளவனுமாயிருந்தகாலத்தில்,
இவர்கள் சலோமோனின் புத்திரனாகிய ரெகோ
பேயாமுக்கு விரோதமாயுறுதிகொண்டிருந்தார்
கள்.—இப்பொழுதுநீங்களும், தாவீதின்வமிசத் ௮
தார்கையிலுள்ள யெகோவாவின் இராச்சியத்
தை மேற்கொள்ள எண்ணுகிறீர்கள்; நீங்கள் அ
நேகர், யெரோபேயாம் உங்களுக்காகத் தேவர்

(௫) அதி.௰௫.௨. (௬) யாக்.௪.௰. யாத்.௯.௨௭. (௮) ஏசா.௨௬.௰௩. உபா.௨௮.௪௭,௪௮. ௧.இரா.௨௧.௨௮,௨௯. (௯) ௧.இரா.௰௪.௨௫,௨௬. ௧.இரா.௰.௰௬,௰௭. (௰) ௨.சாமு.௮.௰௮. (௰௨) ஆதி.௰௮.௨௪. (௰௩) ௧.இரா.௰௪.௨௧. அதி.௬.௫. (௰௫) அதி.௯.௨௯. ௧.இரா.௰௪.௩௰. (௰௬) ௧.இரா.௰௪.௩௧.—(௰௩. அதி. ௧.) ௧.இரா.௰௫. (௨) அதி.௰௧.௨௰. (௪) யோசு.௰௮.௨௨. (௫) ௨.சாமு.௭.௰௨,௰௫. எண்.௰௮.௰௯. (௬) ௧.இரா.௰௧.௨௬. (௭) நியா.௯.௪. (௮) ௧.இரா.௰௨.௨௮. ஓசி.௮.௬.

களாய்ச்செய்த பொற்கன்றுகள் உங்களிடத்திலி
௯ ருக்கின்றன.—நீங்கள் ஆரோனின் வமிசத்தாரா
கிய யெகோவாவின் ஆசாரியர்களையும் லேவியரையும் அகற்றவில்லையா; புறச்சாதியாரைப் போலஉங்களுக்காகப்பூசாரிகளை ஏற்படுத்தவில்லையா; அதினால் ஒரு சிறுகாளையையும் ஏழுஆட்டுக்கடாக்களையும்பிடித்துத்தன்னைப் பரிசுத்தப்படுத்தும்படிவருகிறவன் எவனும், தேவர்களல்லா
௰ தவர்களுக்குப்பூசாரியாக இருக்கலாம்.—நாங்க
ளோ, எங்கள் தேவன் யெகோவா, நாங்கள் அவரைவிட்டுநீங்கவில்லை; யெகோவாவினிடத்தில்ஆராதனைத்தொண்டுசெய்பவர்களாகியஆசாரியர், ஆரோனின்வமிசத்தார், லேவியருந்தங்கள் தங்கள் தொழிலைநடப்பித்துவருகிறார்கள்.—
௰௧ அவர்கள் யெகோவாவுக்குக் காலைமாலைதோ
றும் தகனபலிகளைத் தகிப்பார்கள், சுகந்ததூபத்தைக் காட்டுவார்கள், பரிசுத்தபீடத்தின்மேல் சமுகத்தப்பங்களைச் சேமிப்பார்கள், சாயங்காலந்தோறும் எரியும்படி அகல்களுடன்பொற்செடிவிளக்கைஆயத்தம்பண்ணுவார்கள்; இப்படியே நாங்கள்எங்கள் தேவனாகியயெகோவாவின் கட்டளையைப்பேணி நடக்கிறோம்; நீங்களோ
௰௨ அவரைவிட்டு நீங்கினீர்கள்.—பாருங்கள், தே
வன் எங்களுடைய சேனாபதி, அவர் எங்களோடிருக்கிறார்; உங்களுக்கு விரோதமாய்ப் பயங்கரத்தொனிசெய்யும்படிஎக்காளமூதும்அவருடைய ஆசாரியர்களும் எங்களோடிருக்கிறார்கள். ஆ, இஸ்ரவேல்சந்ததியாரே, நீங்கள் உங்கள் பிதாக்களின் தேவனாகிய யெகோவாவுக்குவிரோதமாயுத்தஞ்செய்யவேண்டாம்; நீங்கள் அனுகூலம் பெறமாட்டீர்களென்றான்.
௰௩ யெரோபேயாம் பதிவிருந்த சிலரை அவர்கள்
பின்புறத்தில் சுற்றிப்போகப்பண்ணினான்: இவர்கள் யூதாவுக்குமுன்னிருந்தார்கள், பதிவிருந்தவர்கள் அவர்கள் பின்புறத்திலிருந்தார்கள்.—
௰௪ யூதா சனங்கள் திரும்பிப்பார்த்து, தங்களுக்கு
முன்னும் பின்னும் யுத்தம் நடக்கிறதைக்கண்டு, யெகோவாவைநோக்கி ஓலமிட்டார்கள். ஆ
௰௫ சாரியர்கள் எக்காள மூதினார்கள்.—அப்பொழுது
யூதாசனங்கள் ஆரவாரம்செய்தார்கள்: அவர்கள் ஆரவாரம்செய்தபொழுது, தேவன் அபீயாவுக்கும் யூதாசனங்களுக்கும் முன்னின்று, யெரோபேயாமையும் எல்லா இஸ்ரவேலரையும் முறிய
௰௬ அடித்தார்.—இஸ்ரவேல் சந்ததியார் யூதா சனங்
களுக்குமுன்னின்று ஓடினார்கள்: தேவன் அ
௰௭ வர்களை இவர்கள்கையில் ஒப்பித்தார்.—அபீயா
வும் அவன் சனங்களும் மகா சங்காரமாக அவர்களைச் சங்கரித்தார்கள்: அதினால் இஸ்ரவேலருக்குள் பரீட்சிக்கப்பட்ட ஐந்துலட்சம் சனங்
௰௮ கள் கொலையுண்டார்கள்.—இஸ்ரவேல் சந்ததி
யார் அக்காலத்தில்வசமாக்கப்பட்டார்கள்; யூதா வமிசத்தாரோ, தங்கள் பிதாக்களின் தேவனாகிய யெகோவாவைச் சார்ந்து நின்றபடியினால்
மேற்கொண்டார்கள்.—பின்பு அபீயா, யெரோ ௰௯
பேயாமைத்தொடர்ந்து, பெத்தேலும் அதின் கிராமங்களும், இஷானாவும் அதின்கிராமங்களும், எப்பிராயீமும் அதின் கிராமங்களுமாகிய பட்ட
ணங்களைப்பிடித்துக்கொண்டான்.—அபீயாவின் ௨௰
காலத்தில் பின்னும் யெரோபேயாம் பெலன் கொள்ளவில்லை: அவன் சாகும்படி யெகோவா அவனைவாதித்தார்.

அபீயாவரவரப்பெலன்கொண்டான்: அவன் ௨௧
பதினாலுஸ்திரிகளைவிவாகஞ்செய்து,இரண்டுபுத்திரரையும் பதினாறு புத்திரிகளையும் பெற்றான்.—
அபீயாவின் மற்றக்கிரியைகளும், அவன் நடை ௨௨
யும், அவன்வாக்கியங்களும், தீர்க்கதரிசியாகிய இத்தோவின் புத்தகத்தில் எழுதியிருக்கின்றன.

## ௰௪. அதிகாரம்.

௧. ஆசா தெய்வபூசையையகற்றல்: ௬.துருக்கங்களினாலுஞ் சேனைகளினாலுந் தன் இராச்சியத்தைஸ்திரப்படுத்தல்: ௯. யெகோவாவின் உதவியினால் சத்துருக்களைச்செயித்தல்.

பின்பு அபீயா தன்முன்னோருடன் மகாநித்தி ௧
ரையடைந்தான், அவர்கள் அவனைத்தாவீதின் நகரத்தில் அடக்கம்பண்ணினார்கள்: அவனுக்குப் பின் அவன் புத்திரனாகியஆசா இராசாவானான். அவன்காலத்தில்தேசம்பத்துவருஷமாக அமைதி
யாயிருந்தது.-ஆசா தன் தேவனாகிய யெகோ ௨
வாவின் பார்வைக்குநன்மையுஞ்செவ்வையுமா
னதைச் செய்தான்.—அந்நிய தேவர்களின் வே ௩
திகைகளையும் உயர்ந்தஸ்தானங்களையும்அகற்றி, விக்கிரகங்களைத்தகர்த்து, அஷேரிமரங்களைச் சே
தித்து,—யூதாவமிசத்தார் தங்கள்பிதாக்களின் தே ௪
வனாகிய யெகோவாவைத்தேடவும், அவர் விதிப்பிரமாணத்திற்கும் கட்டளைக்குமேற்கச் செய்யவும், அவர்களுக்குக்கட்டளையிட்டான்.—
இன்னும் அவன் யூதாவின் சகலநகரங்களினின் ௫
று உயர்ந்தஸ்தானங்களையும் சூரியவிக்கிரகங்களையும் அகற்றிவிட்டான்: அதினால் இராச்சியம் அவனுக்குமுன் அமைதியாயிருந்தது.
யெகோவாஅவனைஇளைப்பாறும்படிசெய் ௬
தபின்பு, அக்காலத்தில்யுத்தமில்லாமல் தேசம்அமைந்திருந்தபடியால், அவன்யூதாவின்மதில்சுற்
றிய நகரங்களைக்கட்டினான்.—அவன் யூதாவமி ௭
சத்தாரைநோக்கி, நாம் நம்முடைய தேவனாகிய யெகோவாவைத்தேடினோம், நாம்தேடினபடியினால் நான்குதிசையிலும் நமக்குஇளைப்பாறுதலையருளினார், ஆதலால்தேசம் நமக்குமுன்அமைந்திருக்கையில் இந்த நகரங்களைக்கட்டி, அவைகளுக்கு மதில்களையும், கோபுரங்களையும், வாசல்களையும், தாழ்களையுஞ்செய்வோமாக என்றான். அப்படியே அவர்கள்கட்டி வாழ்வடைந்

(௯) அதி.௰௧.௰௪,௰௫. யாத்.௨௯.௩௫. யாத்.௨௯.௧. (௰௧) அதி.௨.௪. லேவி.௨௪.௬. யாத்.௨௭.௨௰,௨௧. லேவி.௨௪.௨,௩. (௰௨) எண்.௰.௮. அப்.௫.௩௯. (௰௫) அதி.௰௪.௰௨. (௰௮) ௧.நாளா.௫.௨௰. சங்.௨௨.௫. (௰௯) யோசு.௰௫.௯. (௨௰) ௧.சாமு.௨௫.௩௮. ௧.இரா.௰௪.௨௰. (௨௨) அதி.௰௨.௰௫.—(௰௪. அதி. ௧.) ௧.இரா.௰௫.௮,. (௩) ௧.இரா.௰௫.௰௪. யாத்.௩௪.௰௩. ௧.இரா.௰௧.௭.

௮ தார்கள்.—ஆசாவுக்கு, யூதாவமிசத்தில் பரிசை
யையும் ஈட்டியையும்பிடித்த மூன்றுலட்சஞ்சே
னைகளும், பேன்யமீனியரில்பரிசைகளைப்பிடித்
தவர்களும் வில்வீரருமாகிய இரண்டுலட்சத்து
எண்பதினாயிரஞ்சேனைகளுமிருந்தார்கள்: இவர்
கள் யாவரும் பராக்கிரமவீரர்.
௯ கூஷியனாகிய சேரா, பத்திலட்சஞ்சேனைக
ளோடும் முந்நூறு ரதங்களோடும் இவர்களுக்கு
விரோதமாய்ப்புறப்பட்டு மாரேஷாவரைக்கும்
௰ வந்தான்.—அதினால் ஆசா அவனுக்கு விரோத
மாய்ப்புறப்பட்டு, மாரேஷாவிலுள்ள சிபாத்தா
வென்னுந் தாழ்ந்தபூமியிலே போருக்கணிவகுத்
௰௧ தான்.—ஆசா தன் தேவனாகிய யெகோவா
வைநோக்கி, ஓலமிட்டு, யெகோவாவே பல
வானைக்கொண்டாவது பலவீனனைக்கொண்டா
வது சகாயஞ்செய்வது உமக்கொரு காரியமல்ல;
எங்கள் தேவனாகிய யெகோவாவே, எங்க
ளுக்குச் சகாயஞ்செய்யும்; நாங்கள் உம்மைச்
சார்ந்து, உமது நாமத்தில் இந்தச்சனத்திரளுக்கு
விரோதமாய்ப்போகிறோம். யெகோவாவே,
நீரே எங்கள் தேவன்; மனிதர்உம்மைமேற்கொ
௰௨ ள்ளவிடாதிரும் என்றான்.—பின்பு யெகோ
வா ஆசாவுக்கும்யூதாவமிசத்தாருக்குமுன்னின்
று கூஷியரை முறிய அடித்தபடியினால், கூஷி
௰௩ யர் ஓடிப்போனார்கள்.-ஆசாவும் அவனோடிருந்
தசனங்களும் கேரார்வரைக்கும் அவர்களைத்தொ
டர்ந்தார்கள். கூஷியர் பெலன்கொள்ளாதபடி
முறிய அடிக்கப்பட்டார்கள்: அவர்கள் யெ
கோவாவுக்கும் அவர் சேனைக்குமுன் முறிய
அடிக்கப்பட்டார்கள்; இவர்கள் அவர்களுடை
யபொருளை மிகுதியாகக்கொள்ளையிட்டார்கள்.-
௰௪ கேராவுக்கு நான்குதிசையிலுமுள்ள சகல நக
ரததார்மேலும் யெகோவாவின் பயம்வந்த
படியால், அவர்கள் இவர்களைமுறிய அடித்து,
சகல நகரங்களிலுங் கொள்ளையிட்டார்கள்; அ
வைகளிலுள்ள கொள்ளைப்பொருள் மிகுதியா
௰௫ யிருந்தது.—அவர்கள் அவர்களுடைய மிருகஜீ
வன்களின்கொட்டங்களை அழித்து,மிகுதியான
ஆடுகளையும் ஒட்டகங்களையும் பிடித்துக்கொண்
டு யெரூஷலேமுக்குத்திரும்பினார்கள்.

## ௰௫. அதிகாரம்.

௧. அசரியா என்னுந் தரிசி தேவவாக்குத் தெரி
வித்தல்: அவ்வாக்கியத்தினிமித்தஞ் சனங்கள்
உடன்படிக்கை பண்ணல்: ௰௬. தேவபூசை
செய்ததினிமித்தம் இராசாத்தி தள்ளப்படல்:
௰௮. நிவேதிக்கப்பட்டபொருள் ஆலயத்திலே
கொண்டுவரப்படல்.

ஓதேத்தின் புத்திரனாகிய அசரியாவின்மேல் தே
௨ வனுடைய ஆவி அமர,—அவன் ஆசாவைச் சந்
திக்கும்படிபுறப்பட்டுஅவனைநோக்கி,ஆசாவே,
யூதாவமிசத்தாரே, பேன்யாமீன் வமிசத்தாரே,
நீங்களெல்லாரும் என்னைக்கேளுங்கள்; நீங்கள்
யெகோவாவுடனிருக்கையில் அவர் உங்க
ளுடனிருக்கிறார்;நீங்கள்அவரைத்தேடினால், அ
வரைக்காண்பீர்கள்; நீங்கள் அவரைவிட்டு நீங்
கினால், அவர் உங்களைவிட்டு நீங்குவார்.—முன் ௩
னே நெடுநாளாக இஸரவேலருக்கு மெய்த்தே
வனுமில்லை,போதிக்கிற ஆசாரியனுமில்லை,வே
தப்பிரமாணமுமில்லை.-அவர்கள் தங்கள் ஆபத் ௪
தில் இஸரவேலின் தேவனாகிய யெகோவா
வின் பட்சந்திரும்பி அவரைத் தேடினபொழு
து,அவரை அவர்கள் காணப்பெற்றார்கள்.—அக் ௫
காலங்களிலே போகிறவனுக்காவது வருகிறவ
னுக்காவது ஆறுதல்சற்றுமில்லை; தேசத்தாரனை
வருக்கும் மிகவுங் கிலேசமிருந்தது.-தேவன், ௬
சகலவித ஆபத்தினாலும் அவர்களைக் கிலேசப்ப
டுத்தினபடியினால், ஒரு வமிசத்தார் மற்றவமிசத்
தாரையும், ஒரு நகரத்தார் மற்ற நகரத்தாரையும்
நொறுக்கினார்கள்.-இப்பொழுது நீங்கள் உற்சா ௭
கங்கொள்ளுங்கள், உங்கள்கைகள் பெலவீனமா
யிருக்கவிடாதிருங்கள்,அதினால் உங்கள்கிரியை
கள் சித்தியாகுமென்றான்.-தீர்க்கதரிசியாகிய ஓ ௮
தேத் சொல்லிய தீர்க்கதரிசனமாகிய இவ்வாக்கி
யங்களைக் கேட்டபொழுது ஆசா உற்சாகங்கொ
ண்டு, யூதா பேன்யாமீனின் முழுத்தேசத்தினின்
றும், எப்ராயீம் மலையில் தான்பிடித்த நகரங்களி
னின்றும், அருவருப்பான விக்கிரகங்களை அகற்
றி யெகோவாவின் மண்டபத்துக்கு முன்னி
ருந்த யெகோவாவின் வேதிகையைத்திரும்
பவுமுண்டாக்கினான்.—அவன் யூதா பேன்யாமீ ௯
னின் சனங்களும், எப்ராயீமிலும், மனாசேயி
லும்,ஷிமியோனிலும்இருந்துவந்த புறதேசத்தா
ருமாகிய சகலரையுங் கூடிவரச்செய்தான். அ
வன் தேவனாகிய யெகோவா அவனோடிருக்
கிறதைக்கண்டு, இஸரவேலரினின்று சனங்கள்
திரளாய் அவன் பட்சத்தில் சேர்ந்தார்கள்.-ஆசா ௰
அரசாண்ட பதினைந்தாம்வருஷத்தில் மூன்றாம்
மாதத்திலே யெரூஷலேமில் அவர்கள் கூடிவந்
தார்கள்.-அவர்கள், தாங்கள்கொண்டுவந்தகொள் ௰௧
ளைப்பொருளில்அக்காலத்தில் யெகோவாவுக்
கு எழுநூறுமாடுகளையும் ஏழாயிரம் ஆடுகளையும்ப
லியிட்டு,—தங்கள்பிதாக்களின் தேவனாகிய யெ ௰௨
கோவாவைத் தங்கள் பூரண இருதயத்தோடும்
பூரணஆத்துமத்தோடுந்தேடவேண்டுமென்றும்,-
சிறியோராவது பெரியோராவது, புருஷராவது ௰௩
ஸ்திரியாவது, இஸரவேலரின்தேவனாகிய யெ
கோவாவைத் தேடாதவர் யாவருங் கொலை
செய்யப்படவேண்டுமென்றும்,உடன்படிக்கை
செய்தார்கள்.—அவர்கள் உரத்த சத்தத்தோடும், ௰௪
ஆரவாரத்தோடும், எக்காளங்களோடும், பூரிகை

(௯) அதி.௰௬.௮. யோசு.௰௫.௪௪. (௰௧) யாத்.௰௪.௰. சங்.௨௨.௫. ௧.சாமு.௰௪.௬. ௧.சாமு.௰௭.௪௫. நீதி.௰௮.௰. (௰௨) அதி.௰௩.௰௫. (௰௩) ஆதி.௰.௰௯. (௰௪) ஆதி.௩௫.௫.—(௰௫. அதி. ௧.) எண்.௨௪.௨. நியா.௩.௰. (௨) யாக்.௪.௮. வச.௪,௰௫. ௧.நாளா.௨௮.௯. அதி.௩௩.௰௨,௰௩. எரே.௨௯.௰௩. மத்.௭.௭. அதி.௨௪.௨௰. (௩) ஓசி.௩.௪. லேவி.௰.௰. (௪) உபா.௪.௨௯. (௫) நியா.௫.௬. (௬) மத்.௨௪.௭. (௮) அதி.௰௩.௰௯. (௯) அதி.௰௧.௰௬. (௰௧) அதி.௰௪.௰௫. அதி.௰௪.௰௩. (௰௩) யாத்.௨௨.௨௰. உபா.௰௩.௫,௯,௰௫. ௨.இரா.௨௩.௩. நிகி.௰.௨௯.

களோடும் யெகோவாவுக்கு ஆணையிட்டார்
௰௫ கள்.—அவர்கள் தங்கள் பூரண இருதயத்தோடும்
ஆணையிட்டு; தங்கள்பூரணவாஞ்சையோடு அவ
ரைத்தேடினபடியால் அந்த ஆணையினிமித்தம்
யூதாசனங்கள் யாவருங்களிகூர்ந்தார்கள்: அவ
ரை அவர்கள் காணப்பெற்றார்கள்: யெகோ
வா அவர்களுக்கு நான்குதிசையிலும் இளைப்
பாறுதலை அருளினார்.
௰௬ ஆசா இராசா, தன்மாதாவாகிய மாகாள் அஷரி
மர விக்கிரகத்தைச் செய்தபடியால், அவளையும்
இராசாத்தியாயிராதபடி நீக்கி, அவள் விக்கிர
கத்தையுஞ்சேதித்து, மிதித்து, கீதரோன் ஆற்றங்
௰௭ கரையில் தகித்தான்.—உயர்ந்த ஸ்தானங்கள்மாத்
திரம் இஸரவேலரினின்று அகற்றப்படவில்லை:
ஆனாலும் அவன் ஆயுள்பரியந்தம் ஆசாவின் இ
ருதயம் நேர்மையாயிருந்தது.
௰௮ அவன் தன் பிதா நிவேதித்த பொருளையும்,
தான் நிவேதித்த பொன், வெள்ளி, பாத்திரம் என்
னும் இவைகளையும் தேவனுடைய ஆலயத்தி
௰௯ லே கொண்டுவந்தான்.—ஆசா அரசாண்ட முப்
பத்தைந்தாம் வருஷபரியந்தம் யுத்தமில்லை.

## ௰௬. அதிகாரம்.

௧. ஸீரியரின் உதவியினால் ஆசா, பாஷாவைச்செயித்தல்: ௭. அனானி அவனைக்கண்டித்ததினால் சிறைச்சாலையில் வைக்கப்படல்: ௰௧. காலில் வருத்தமாயிருந்து வைத்தியரிடத்திலேவிசாரித்தல்: ௰௩. அவன் மரணமடைந்து அடக்கம்பண்ணப்படல்.

ஆசா அரசாண்டமுப்பத்தாறாம் வருஷத்தில்,
இஸரவேலரின் இராசாவாகிய பாஷா, யூதாவுக்
கு விரோதமாகப் புறப்பட்டு, யூதாவின் இராசா
வாகிய ஆசா விடத்தில் ஒருவரையும் போக்கு வ
ரவு செய்ய விடாதபடிக்கு ராமாவைக்கட்டி
௨ னான்.—அதினால் ஆசா, யெகோவாவின் ஆ
லயத்திலும் அரமனையிலுமிருந்த பொக்கிஷங்க
ளிலுள்ள பொன் வெள்ளிகளை வெளியேகொண்
டுவந்து, தமஸ்குவில் வசித்த ஸீரிய இராசாவா
௩ கிய பென்னாதத்துக் கனுப்பி,—எனது பிதாவுக்
கும் உமது பிதாவுக்குமிருந்தபிரகாரம் உமக்கும்
எனக்கும் உடன்படிக்கை யிருக்கின்றது: பா
ரும், நான் உமக்குப் பொன் வெள்ளிகளை அ
னுப்புகிறேன்; இஸரவேலரின் இராசாவாகிய
பாஷா என்னை விட்டு நீங்கும்படி, நீர் அவனு
டன் செய்த உடன்படிக்கையைத்தள்ளிப்போடு
௪ மென்று சொல்லுவித்தான்.—பென்னாதத், ஆசா
இராசாவின் சொற்கேட்டுத் தன் சேனாபதிகளை
இஸரவேலரின் நகரங்களுக்கு விரோதமாயனுப்
ப, அவர்கள் ஈயோனையும், தாணையும், ஆபேல்
மாயிமையும், நப்தாலியிலுள்ள சகல களஞ்சியப்
௫ பட்டணங்களையும் நாசப்படுத்தினார்கள்.—பின்
பு பாஷா அதைக்கேள்விப்பட்டபொழுது, ரா
மாவைக்கட்டுவதை நிறுத்தித் தன் வேலையை
விட்டொழிந்தான்.—பின்பு ஆசா இராசா யூதா ௬
முழுவதையும் பிடித்துக்கொண்டான்; அவர்கள்
பாஷா கட்டவைத்த ராமாவின் கற்களையும் ம
ரங்களையுங் கொண்டுபோனார்கள்; அவைகளி
னால் இவன் கேபாவையும் மிஸ்பாவையுங் கட்
டினான்.
அக்காலத்தில் தரிசியாகிய அனானி, யூதாவின் ௭
இராசாவாகிய ஆசா விடத்தில் வந்து, அவனை
நோக்கி, நீர் உமது தேவனாகிய யெகோவா
வைச் சாராமல் ஸீரிய இராசாவைச்சார்ந்து நின்
றபடியால், ஸீரிய இராசாவின் சேனைகள் உம
து கைக்குத் தப்பிவிட்டன.—அநேக இரதங்க ௮
ளோடும் குதிரை வீரர்களோடும் வந்த கூஷிய
ரும், லூபியரும், மகா சேனைகளல்லவா; ஆனா
லும், நீர் யெகோவாவைச் சார்ந்து நின்றப
டியால், அவர், அவர்களை உமது கையிலொப்
பித்தார்.—பூரண இருதயத்தோடு தம்மைப்பற் ௯
றி நிற்பவர்கள் பட்சத்தில் தமது வல்லமையைக்
காட்டுகிறதற்கு யெகோவாவின் கண்கள் பூ
மியெங்கும் உலாவித்திரிகின்றன. நீர் செய்தது
புத்தியீனம், ஆதலால் இதினிமித்தம் இனியுத்தம்
உமக்கு நேரிடுமென்றான்.—அப்பொழுது ஆசா ௰
இந்த வாக்கினாலே கோபமடைந்து, அந்தத் தரி
சியின்மேல் கோபங்கொண்டு, அவனைச் சிறைச்
சாலையில் வைத்தான். ஆசா அச்சமயத்திலே ஜ
னங்களிற்சிலரை உபத்திரவப்படுத்தினான்.
ஆசாவின் ஆதியந்தமான மற்றக்கிரியைகள் யூ ௰௧
தா இஸரவேலென்பவர்களுடைய இராசாக்க
ளின் சரித்திரபுத்தகத்தில் எழுதியிருக்கின்றன.—
ஆசா தான் அரசாண்ட முப்பத்தொன்பதாம்வ ௰௨
ருஷத்தில் பாதரோகமடைந்தான், அந்தரோகம்
வரவரமேற்கொண்டது: அவன் தன் வருத்தத்தி
லும் வைத்தியரையேயன்றி யெகோவாவைத்
தேடவில்லை.
பின்பு ஆசாதான் அரசாண்ட நாற்பத்தோராம் ௰௩
வருஷத்தில் தன்முன்னோருடன் மகாநித்திரை
யடைந்தான்.—அவர்கள், தாவீதின் நகரத்தில் ௰௪
அவன்தனக்காகச்செய்திருந்த அவன் பிரேதவ
றையில்அவனை அடக்கம்பண்ணி, சுகந்தவர்த்த
கருடைய கிரியைகளினால்செய்யப்பட்ட சுகந்
ததிரயவியங்களினாலும், சுகந்ததைலத்தினாலும்
பூரணப்பட்ட மஞ்சத்திலே வளர்த்தினார்கள்:
அவன் நிமித்தம் அநேக சுகந்ததிரவியங்களைத்த
கித்தார்கள்.

## ௰௭. அதிகாரம்.

௧. யோஷாபாத் நன்றாய் இராசரிக்கஞ்செய்தல்: ௭. யூதாசனங்களுக்குப்போதிக்கும்படி லேவியரையும் ஆசாரியரையும் அனுப்பல்: ௰. சனங்

(௰௫) வச.௨. (௰௬) ௧.இரா.௰௫.௨,௰,௰௩. (௰௭) ௧.இரா.௰௫.௰௪,.—(௰௬. அதி. ௧.) ௧.இரா.௰௫.௰௭. அதி.௰௫.௯. (௭) ௧.இரா.௰௬.௪. ஏசா.௩௧.௧. எரே.௰௭.௫. (௮) அதி.௰௪.௯. அதி.௰௨.௩. (௯) யோபு.௩௪.௨௧. நீதி.௫.௨௧. நீதி.௰௫.௩. எரே.௰௬.௰௭. எரே.௩௨.௰௯. சக.௪.௰. ௧.சாமு.௰௩.௰௩. ௧.இரா.௰௫.௩௨. (௰) அதி.௰௮.௨௬. எரே.௨௰.௨. மத்.௰௪.௪. (௰௧) ௧.இரா.௰௫.௨௩. (௰௨) எரே.௰௭.௫. (௰௩) ௧.இரா.௰௫.௨௪. (௰௪) ஆதி.௫௰.௨. மாற்.௰௬.௧. யோவா.௰௯.௩௯,௪௰. அதி.௨௧.௰௯. எரே.௩௪.௫.—(௰௭. அதி.)

கள் இராசாவிடத்தில் காணிக்கை கொண்டுவ
ரல்: ௰௨. அவன்மேன்மையையும் சேனைகளை
யும்வருணித்தல்.

அவனுக்குப்பின்பு அவன்புத்திரனாகிய யோ
ஷாபாத் இராசாவாகி, இஸ்ரவேலருக்கு விரோ
௨ தியாய்த்தன்னைப்பெலப்படுத்தினான்.-யூதாவின்
சகலஅரணான நகரங்களிலும் சேனைகளை வைத்
ததுமன்றி, யூதாதேசத்திலும், தன்பிதாவாகிய ஆ
சாபிடித்த எப்பிராயீமிலுள்ள நகரங்களிலுந்தானை
௩ யங்களையும் ஏற்படுத்தினான்.—யோஷாபாத்,பா
கால்களைத்தேடாமல், தன்பிதாவின் தேவனாகி
ய யெகோவாவைத்தேடி, அவர்கட்டளைக
௪ ளைப்பேணி,–இஸ்ரவேலருடையகிரியைகளின்
படிநடவாமல், தன் பிதாவின்நெறியிலும் தாவீ
தின்நெறிகளிலும் நடந்தபடியால், யெகோ
௫ வா அவனோடிருந்தார்.—ஆதலால் யெகோ
வா அவன்கையில் இராச்சியத்தைத் திடப்படுத்
தினார்; யூதாசனங்கள்யாவரும்யோஷாபாத்தினி
டத்தில் காணிக்கைகளைக் கொண்டுவந்தார்கள்:
அவன் செல்வத்திலுங் கனத்திலும் விருத்திய
௬ டைந்தான்.—யெகோவாவின் நெறிகளில்
அவன் இருதயம் உற்சாகங்கொண்டது; அவன்
யூதாவினின்று உயர்ந்தஸ்தானங்களையும் அஷரி
மரங்களையும் அகற்றினான்.
௭ பின்பு அவன் அரசாண்டமூன்றாம்வருஷத்தி
லே, யூதாநகரங்களிலேபோதிக்கும்படிதன்அதி
பதிகளாகிய பென்னாயில், ஒபதியா, சகரியா,
நிதனேல், மீகாயாவு என்பவர்களுக்குக்கட்ட
௮ ளைஅனுப்பினான்.—அவர்களுடன் ஷிமாயியா,
நிதனியா, சிபதியா, அசாகேல், ஷிமிராமொத்,
இகோனாதன், அதொனியா, தோபியா, தோப்
அதொனியா என்னும் லேவியரையும், அவர்க
ளோடு இலீஷாமா, யெகோராமென்னும் ஆசா
௯ ரியர்களையும் அனுப்பினான்.—அவர்கள் யூதாச
னங்களுக்குப்போதித்தார்கள்; அவர்கள்தங்களி
டத்தில் யெகோவாவின் வேதபிரமாணத்
தின் புத்தகத்தை வைத்துக்கொண்டு, யூதாவெங்
குமுள்ள சகலநகரங்களிலுந்திரிந்துசனங்களுக்
குப்போதித்தார்கள்.
௰ யூதாவைச்சுற்றியிருந்த தேசங்களின்சகல இ
ராச்சியத்தாரும் யோஷாபாத்தை எதிர்த்து யுத்
தஞ்செய்யாதபடி, யெகோவாவின்பயம் அ
௰௧ வர்கள்மேலிருந்தது.—பெலிஸ்தியர் சிலர், யோ
ஷாபாத்துக்குக் காணிக்கைகளையுந் திறையாக
வெள்ளியையுங் கொண்டுவந்தார்கள்: அரபியர்
அவனுக்கு ஏழாயிரத்தெழுநூறு ஆட்டுக்கடாக்
களையும், ஏழாயிரத்தெழுநூறு வெள்ளாட்டுக்க
டாக்களையும், நிரை நிரையாகக் கொண்டுவந்
தார்கள்.
௰௨ யோஷாபாத் விருத்தியடைந்து மிகப்பெரிய
வனானான்; யூதாதேசத்தில் துருக்கங்களையும் கள
௰௩ ஞ்சியப்பட்டணங்களையுங் கட்டினான்.–அவன்
யூதா நகரங்களில் வெகு கிரியைகளை நடப்பித்
தான்: பராக்கிரமசாலிகளாகிய படைஞர் யெரூ
ஷலேமிலே தங்கினார்கள்.—அவரவர் பிதாவமி ௰௪
சப்படி அவர்கள் தொகையாவது: யூதாவமிசத்
தில் ஆயிரவருக்கதிபதிகளுக்குள் அத்னா பிரதா
னி, அவனோடுகூடிய பராக்கிரமவீரர்கள் மூன்
றுலட்சம்பேர்.–அவனுக்குக்கீழ்ச்சேனாபதியோ ௰௫
வானான், அவனுடன்கூடியவர்கள்இரண்டுலட்
சத்தெண்பதினாயிரம்பேர்.–மற்றவன் மனப்பூரு ௰௬
வமாய்த்தன்னைத் தேவனுக்கொப்பித்த சிக்ரியி
ன்புத்திரனாகியஅமசியா,அவனோடுகூடியபராக்
கிரமவீரர்கள் இரண்டு லட்சம்பேர்.—பென்யா ௰௭
மீன்வமிசத்தில் பராக்கிரமவீரன் இலியாதா, அ
வனோடுகூடிய வில்லும் பரிசையுந்தரித்தவர்கள்
இரண்டு லட்சம்பேர்.—மற்றவன் யோசாபாத், ௰௮
அவனோடுகூடிய யுத்தசன்னத்தர்கள் ஒருலட்சத்
து எண்பதினாயிரம்பேர்.—இராசா யூதாதேசமு ௰௯
ழுவதிலுமுள்ள நகரங்களில் வைத்திருந்தவர்க
ளேயன்றி, இவர்கள் இராசாவிடத்தில் பரிசாரக
ராயிருந்தார்கள்.

## ௰௮. அதிகாரம்.

௧. யோஷாபாத் ஆகாப்போடே சம்பந்தங் கலத்
தல்: அவனோடேராமொத்கிலியாத்துக்குப்போ
தல்: ௪. மீகாயாவென்னுந்தீர்க்கதரிசியின்சொற்
படி ஆகாப் யுத்தத்தில்கொல்லப்படல்.

யோஷாபாத்,செல்வத்திலுங்கனத்திலும்விருத் ௧
தியடைந்து, ஆகாப்புடன்சம்பந்தங்கலந்தான்.-
சிலவருஷத்துக்குப்பின் ஷமாரியாவில் ஆகாப் ௨
பிடத்தில்போனான். ஆகாப், அவனுக்கும் அவ
னோடுகூடியசனங்களுக்கும் மிகுதியானஆடுமா
டுகளைஅடித்து, அவனைராமொத்கிலியாத்துக்குத்
தன்னுடன்போகும்படி செய்தான்.—இஸ்ரவே ௩
லரின் இராசாவாகிய ஆகாப், யூதாவின் இராசா
வாகிய யோஷாபாத்தைநோக்கி, நீர் ராமொத்கி
லியாத்துக்கு என்னுடன்வருவீராவென்று கேட்
க, இவன்அவனைநோக்கி, நானேநீர், என்சனங்
களே உம்முடையசனங்கள், ஆதலால் நாங்கள்
யுத்தத்தில் உம்முடனிருப்போம் என்றான்.
பின்னும் யோஷாபாத், இஸ்ரவேலரின் இரா ௪
சாவைநோக்கி, இன்றைக்குயெகோவாவின்
வாக்கு இன்னதென்று கேட்டறியுமென்றான்.–
அப்பொழுது இஸ்ரவேலரின் இராசா, ஏறக்கு ௫
றைய நானூறு தீர்க்கதரிசிகளைக் கூடிவரச்செய்
து, அவர்களைநோக்கி, நான் ராமொத் கிலியாத்
துக்கு விரோதமாயுத்தஞ்செய்யப்போகவேண்டு
மா, பொறுத்திருக்கவேண்டுமாவென்று கேட்க,
அவர்கள், போம், தேவன் இராசாவின்கையில்
ஒப்பிப்பார் என்றார்கள்.–யோஷாபாத், இவர்க ௬
ளேயன்றிஇங்கேயெகோவாவின்தீர்க்கதரிசி
யில்லையா; அவனிடத்தில் கேட்டறியவேண்டு
மென்றான்.-அதற்குஇஸ்ரவேலரின்இராசாயோ ௭
ஷாபாத்தைநோக்கி,இன்னும் இம்லாவின் புத்தி

(௧) ௧.இரா.௰௫.௨௪. (௨) அதி.௰௫.௮. (௪) ௧.இரா.௰௨.௨௮. (௫) ௧.சாமு.௰.௨௭. ௧.இரா.௰.௨௭.(௬)௧.இரா.௨௨.௪௩. (௭) அதி.௰௫.௩. (௯) அதி.௩௫.௩. நெகி.௮.௭. (௰) ஆதி.௩௫.௫. (௰௧) ௨.சாமு.௮.௨. (௰௬) நியா.௫.௨,௯. (௰௯) வச.௨.—(௰௮. அதி. ௧.) அதி.௰௭.௫. ௨.இரா.௮.௰௮. (௨) ௧.இரா.௨௨.௨.(௪)௧.சாமு.௨௩.௨,௪,௯. ௨.சாமு.௨.௧.

ரனாகிய மீகாயா என்றொருவனிருக்கிறான்: அவ
னைக்கொண்டு யெகோவாவிடத்தில் கேட்ட
றியலாம்; அவன் என்னைக்குறித்துத்தீமையையன்
றி நன்மையைத் தீர்க்கதரிசனஞ்சொல்லுகிறதில்
லை: அதினால் அவனை வெறுக்கிறேனென்றுசொல்
ல, யோஷாபாத், இராசா அப்படிச்சொல்லலாகா
௮ தென்றான்.—அப்பொழுது இஸரவேலரின் இரா
சா அதிபதி ஒருவனைக் கூப்பிட்டு, இம்லாவின்
புத்திரனாகியமீகாயாவை விரைவில் அழைத்துவா
௯ வென்றான்.—இஸரவேலரின் இராசாவும் யூதா
தேசத்தின் இராசாவாகிய யோஷாபாத்துந் தன்
தன் இராசவஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு, ஷ
மாரியாவின் வாசலுக்குச் சமீபத்திலுள்ளசமமா
ன ஸ்தானத்திலே தன்தன் ஆசனத்தில் வீற்றிருந்
தார்கள்: தீர்க்கதரிசிகளெல்லாரும் அவர்கள்சமு
௰ கத்தில் தீர்க்கதரிசனஞ்சொன்னார்கள்.—கின்னா
னாவின் புத்திரனாகிய சிதிகியா, இருப்புக்கொம்
புகளையுண்டாக்கி, இவைகளினால் நீர் ஸீரிய
ரை நாசப்படுத்தும்வரைக்கும் முட்டிப்போடுவீ
ரென்றுயெகோவாசொல்லுகிறார் என்றான்.-
௰௧ அவ்வண்ணமே தீர்க்கதரிசிகள்யாவரும், நீர் ரா
மொத் கிலியாத்துக்குப்போம்; அனுகூலமாவதா
க: யெகோவா அதை இராசாவின்கையில்ஒப்
பிப்பாரென்று தீர்க்கதரிசனஞ்சொன்னார்கள்.—
௰௨ மீகாயாவை அழைக்கப்போன தூதன் அவனை
நோக்கி, கேளும், தீர்க்கதரிசிகளின் வாக்குகள்
ஒருமித்து இராசாவுக்கு நன்மையைச்சொல்லு
கின்றன; உம்முடையவாக்கும் அவர்களிலொரு
வன் வாக்குப்போலாவதாக, நீரும்நன்மையைச்
௰௩ சொல்லுமென்றுசொல்ல,—மீகாயா, யெகோ
வா நித்தியரானால், என்தேவன் எனக்குச்சொல்
௰௪ வதையே நான்சொல்லுவேனென்றான்.—அவன்
இராசாவிடத்தில்வந்தபொழுது இராசா அவனை
நோக்கி, மீகாயாவே, நாங்கள்ராமொத் கிலியாத்
துக்கு விரோதமாயுத்தஞ் செய்யப்போகவேண்
டுமா, பொறுத்திருக்க வேண்டுமாவென்று கேட்
க, அவன், போம், உமக்கு அனுகூலமாவதாக; அ
வர்கள் இராசாவின்கையில் ஒப்பிக்கப்படுவார்
௰௫ கள் என்றான்.—இராசா அவனைநோக்கி, நீ யெ
கோவாவின்நாமத்தைக்கொண்டு உண்மையை
யன்றி மற்றொன்றுஞ் சொல்லாதபடிக்கு நான்
எத்தனைதரம் உன்னை ஆணையிடுவிக்கவேண்டு
௰௬ மென்றுசொல்ல,—இவன், மேய்ப்பனில்லாத
ஆடுகளைப்போல இஸரவேலரெல்லாரும் மலை
களின்மேல் சிதறுண்டதைக்கண்டேன்: அப்
பொழுது யெகோவா, இவர்களுக்கு ஆண்
டவனில்லை; இவர்கள்யாவருந் தங்கள் தங்கள்
வீடுகளுக்குச் சுகமே திரும்பிவிடட்டுமென்று
௰௭ சொன்னார் என்றான்.—அதினால் இஸரவேலரின்
இராசா யோஷாபாத்தைநோக்கி, இவன் என்
னைக்குறித்துத் தீமையையன்றி நன்மையைத்தீர்க்
கதரிசனஞ் சொல்லுகிறதில்லையென்று நான் உ
௰௮ மக்குச் சொல்லவில்லையா வென்றான்.—பின்

னும் இவன், யெகோவாவின் வாக்கைக்கே
ளும், நான் யெகோவா தமது ஆசனத்தின்
மேல் வீற்றிருக்கவும், அவர் சமீபத்தில் அவர் வ
லப்புறத்திலும் அவர் இடப்புறத்திலும் வானத்
தின் சமஸ்த சேனைகளும் நிற்கவுங்கண்டேன்.-
அப்பொழுது யெகோவா, ஆகாப், ராமொத் ௰௯
கிலியாத்துக்குப்போய் அங்கேமாளும்படி அவ
னை எவுகிறவன் யாவனென்றுகேட்க, ஒருவன்
இப்படியும் ஒருவன் அப்படியும் சொன்னார்
கள்.—பின்பு ஒரு ஆவிவந்து யெகோவாவுக் ௨௰
கு முன்னின்று நான் அவனை எவுவேனென்றது.
அதற்கு யெகோவா எப்படியென்று கேட்க,-
அது, நான் போய் அவனுடைய சகலதீர்க்கதரிசி ௨௧
களின் வாயிலும் பொய்பிறப்பிக்கும் ஆவியாயி
ருப்பேனென்றது. அதற்கு அவர், நீ அவனை எ
வி மேற்கொள்வாய்; நீ புறப்பட்டுப்போ, அப்
படிச் செய்யென்றார்.—கேளும், இப்பொழுது ௨௨
யெகோவா இந்தத் தீர்க்கதரிசிகளின் வாயி
லும் பொய்பிறப்பிக்கும் ஒரு ஆவியையிட்டார்,
யெகோவா உம்மைக்குறித்துத் தீமையாகிய
வாக்குச்சொன்னாரென்றான்.-அப்பொழுது கின் ௨௩
னானாவின் புத்திரனாகிய சிதிகியா சமீபித்துப்
போய், மீகாயாவின் கன்னத்தில் அடித்து, யெ
கோவாவின் ஆவி உன்னுடனே பேசும்படி
எந்த வழியாய் என்னை விட்டு வந்ததென்றான்.—
அதற்கு மீகாயா, நீ ஒளித்துக்கொள்ளும்படி ஒரு ௨௪
அந்தரங்க அறையில் பிரவேசிக்கும் அத்தினத்
தில் அறிவாயென்றான்.—பின்பு இஸரவேலரின் ௨௫
இராசா, மீகாயாவைப் பிடித்து, நகரத்தின் அ
திபதியாகிய ஆமோனிடத்திலும் இராசாவின்புத்
திரனாகிய யோவாஷிடத்திலுங் கொண்டுபோய்
விட்டு,—இவனைச் சிறைச்சாலையிலே வைத்து, ௨௬
நான் சுகமே திரும்பிவருமளவும் இவனுக்குத்
துக்கத்தின் அப்பமும் துக்கத்தின் சலமுங் கொ
டுத்து ஆதரித்துக்கொள்ளுங்களென்று, இராசா
சொல்லுகிறார்என்பதைச் சொல்லுங்களென்றா
ன்.—அதினால் மீகாயா, நீர் எவ்விதமும் சுக ௨௭
மே திரும்பிவந்தால் யெகோவா என்னைக்
கொண்டு வாக்கிடவில்லையென்றான். பின்னும்
அவன், சனங்களே, நீங்களெல்லாருங்கேட்டுக்
கொள்ளுங்கள்என்றான்.—இஸரவேலரின் இரா ௨௮
சாவும் யூதா தேசத்து இராசாவாகிய யோஷா
பாத்தும் ராமொத் கிலியாத்துக்குப்புறப்பட்டுப்
போகையில்,—இஸரவேலரின் இராசா யோஷா ௨௯
பாத்தை நோக்கி, நான் வேஷமாறிக்கொண்டு
யுத்தத்தில் பிரவேசிப்பேன்; நீரோ உமது இரா
சரிக்க வஸ்திரங்களைத் தரித்துக்கொள்ளுமென்
றான்: இஸரவேலரின் இராசா வேஷமாறிக்
கொண்டு யுத்தத்தில் பிரவேசித்தான்.—ஸீரியா ௩௰
வின் இராசா, தன்னோடுகூடிய ரதங்களின்சேனா
பதிகளைநோக்கி, நீங்கள் இஸரவேலின் இராசா
வோடன்றி, மற்றச்சிறியோர் பெரியோருடன்
யுத்தஞ்செய்யவேண்டாமென்று கட்டளையிட்டி

(௰௩) எண்.௨௨.௰௮,௨௰,௩௫. ௧.இரா.௨௨.௰௪. (௨௰) யோபு.௧.௬. (௨௨) யோபு.௰௨.௰௬. எசா.௰௯.௰௪. எசேக்.௰௪.௯. (௨௩) எரே.௨௰.௨. மாற்.௰௪.௬௫. அப்.௨௩.௨. (௨௬) அதி.௰௬.௰.

௩௧ ருந்தான்.—இரதங்களுக்கு அதிபதிகள் யோஷா
பாத்தைக்கண்டபொழுது, இவனே இஸரவேல
ரின் இராசாவென்றுசொல்லி யுத்தஞ்செய்யும்ப
டி அவனைவளைந்துகொள்ள, யோஷாபாத் குர
லிட்டான்: யெகோவா அவனுக்குத்துணை
செய்தார், தேவன், அவர்கள் அவனைவிட்டுப்
௩௨ போகும்படிபண்ணினார்.—இரதங்களின் அதிப
திகள் அது இஸரவேலரின் இராசாவல்லவென்
றுகண்டபொழுது, அவனைத்தொடராமல் திரும்
௩௩ பினார்கள்.—ஒருவன் இலக்குக்குறியாமல் தன்
வில்லை நாணேற்றி, இஸரவேலரின் இராசாவுக்
குக் கவசமிடப்பட்ட சந்துகளுக்கிடையேபட
எய்துவிட்டான்: அதினால் அவன் தன் இரதசா
ரதியைநோக்கி, எனக்குக்காயம்பட்டது: நீ உன்
கையைத்திருப்பிச்சேனைகளுக்கப்பால் என்னை
௩௪ க்கொண்டுபோய் விடென்றான்.—அன்றைத்தி
னம் யுத்தம் அதிகரித்தது: இஸரவேலரின் இரா
சா ஷீரியருக்கு விரோதமாய்த்தன் இரதத்திலே
சாயங்காலபரியந்தம் தரித்தான்: சூரியன் அஸ்த
மயமாகிறபொழுது அவன் இறந்துபோனான்.

## ௰௯. அதிகாரம்.

க. யோஷாபாத் யெகூவென்னுந் தீர்க்கதரிசியி
னால் கண்டிக்கப்பட்டுத் தன் இராச்சியத்தை
விசாரிக்கப்புறப்படல்: ரு. நியாயாதிபதிகளுக்
கும்லேவியருக்கும் ஆசாரியருக்குமுணர்த்தல்.

யூதாதேசத்து இராசாவாகியயோஷாபாத்,யெரு
ஷலேமிலே தன் வீட்டுக்குச் சுகமே திரும்பின
௨ ன்.-அனனியின் புத்திரனாகியயெகூவென்னுந்த
ரிசி, யோஷாபாத் இராசாவுக்கு எதிர்கொண்டு
போய்அவனைக்கண்டு,பாவிகளுக்குத் துணைசெ
ய்வதும்,யெகோவாவைப்பகைப்பவர்களைநே
சிப்பதும்உமக்குத்தகுதியா; இதினால் யெகோ
வாவினின்று உம்மிடத்தில் கோபம் புறப்பட்
௩ டுவந்தது.—ஆனாலுஞ் சற்கிரியைகள் உம்மிடத்
தில் காணப்படுகின்றன, தேசத்தினின்றுஅஷரி
மரங்களை அகற்றினீர்,தேவனைத்தேடும்படிஉம
து இருதயத்தை ஆயத்தப்படுத்தினீரென்றான்.—
௪ பின்பு யோஷாபாத் யெருஷலேமிலே வாசம்ப
ண்ணினான்: அவன் பேர்ஷேபாவினின்று எப்
ராயீமலைவரைக்கும் சனங்களுக்குள்போய், அ
வர்களை அவர்கள் பிதாக்களின் தேவனாகிய
யெகோவாவின் பட்சத்தில் திருப்பினான்.
௫ அவன் யூதாதேசத்திலுள்ள அரணான நகரங்
களாகிய ஒவ்வொரு நகரத்திலும் நீதிபதிகளை
௬ ஏற்படுத்தி,—அந்த நீதிபதிகளைநோக்கி, நீங்கள்
சாவதானமாய்க்காரியத்தைநடப்பியுங்கள்: மனி
தருக்காகவல்ல, நீங்கள் நியாயம்விசாரிப்பதைப்
பார்த்து உங்களோடிருக்கிற யெகோவாவுக்
௭ காக நியாயம்விசாரிக்கிறீர்கள்.—ஆதலால் யெ
கோவாவின்பயம் உங்களுக்குள் இருப்பதாக;
நீங்கள்சாவதானமாகி, காரியத்தைநடத்துங்கள்:
எங்கள் தேவனாகிய யெகோவாவிடத்தில்
அநியாயமும் முகத்தாட்சணியமும் பரிதானம்
வாங்குதலுமில்லையென்றான்.

பின்னும்யோஷாபாத்யெருஷலேமிலே யெ ௮
கோவாவின் நியாயவிசாரணைக்காகவும், வ
ழக்குத்தீர்ப்புக்காகவும், லேவியரையும், ஆசாரி
யர்களையும்,இஸரவேலரின்பிரதானபிதாக்களிற்
சிலரையும் ஏற்படுத்தினான்.—அவர்கள் யெரு ௯
ஷலேமுக்குத்திரும்பிவந்தபொழுது அவன் அ
வர்களைநோக்கி, இரத்தப்பழியையும், வேதபிர
மாணத்தையும், கட்டளையையும், விதிகளையும்,
நியாயப்பிரமாணங்களையும் பற்றும் எந்தக்காரி
யமும், நகரத்தாராகிய உங்கள் சகோதரருக்குள்
ளேநடக்கும்பொழுது, அவர்கள் யெகோவா
வின் சமுகத்தில் குற்றவாளியாய்ப்போகாதப
டிக்கும், உங்கள்மேலும் உங்கள் சகோதரர்மே
லும் கோபம்வராதபடிக்கும் அவர்களுக்கு உ
ணர்த்துங்கள்.—நீங்கள் யெகோவாவுக்குப் ௰
பயந்து, உண்மையுள்ளவர்களாகி, நேர்மையா
ன இருதயத்துடன் இப்படிச்செய்யுங்கள்: செய்
தால் நீங்கள் குற்றமற்றவர்களாயிருப்பீர்கள்.-கே ௰௧
ளுங்கள், யெகோவாவின் சகலகாரியங்களி
லும் பிரதானஆசாரியனாகிய அமரியாவும், இரா
சாவின் சகலகாரியங்களிலும் இஷ்மாவேலின்
புத்திரனும் யூதாவமிசத்தலைவனுமாகிய சிபதி
யாவும், உங்களுக்கு அதிகாரிகளாவார்கள்: லே
வியரும் உங்களுக்கதீனமாக அதிபதிகளாயிருப்
பார்கள். உற்சாகமாய் நடவுங்கள், யெகோ
வா, நல்லவரோடிருப்பார் என்றுசொல்லிக்கட்
டளையிட்டான்.

## உ௰. அதிகாரம்.

க. யோஷாபாத் பயமடைந்து உபவாசம் பண்
ணும்படிகட்டளையிடல்: ரு. அவன்பிரார்த்தித்
தல்: ௰௪. யாகசியேல் தீர்க்கதரிசனஞ் சொல்
லல். உ௰. யோஷபாத் பாடகரை ஏற்படுத்தல்:
உஉ. சத்துருக்களைவசஞ்செய்தல்: உ௯. சனங்
கள் செயம்பெற்றுத்திரும்பி வரல்: ௩௧. யோ
ஷாபாத்நன்றாய்இராசரிக்கஞ்செய்தல்: ௩௫. அ
வன்செய்தகப்பல்கள் எலீயேசரின்தீர்க்கதரிச
னவாக்கியங்களின்படிசேதமாதல்.

இந்தக்காரியங்கள் நடந்தபின்பு, மோவாபு சந் ௧
ததியாரும்,அம்மோன்சந்ததியாரும்,அவர்களோ
டே அம்மோனியருக்கு அப்புறத்திலுள்ள சில
ரும் யோஷாபாத்துக்கு விரோதமா யுத்தஞ்செய்
யப்புறப்பட்டார்கள்.—அப்பொழுது ஒருவன் ௨
யோஷாபாத்திடத்தில் வந்து, சமுத்திரத்துக்கப்
புறத்துள்ள ஷீரியாவின் இப்புறத்திலிருந்து
உமக்குவிரோதமாக வெகுசனங்கள் வருகிறார்
கள்; பாரும், அவர்கள் ஐன்கெதியாகிய ஆசா
சன்தாமாரிலிருக்கிறார்களென்றான்.—அதினால் ௩
யோஷாபாத் பயந்து, யெகோவாவைத்தே

(௰௯. அதி. உ.) க.சாமு.௯.௰. சங்.௱௯.உக. அதி.௩உ.உரு. (௩) அதி.௰எ.௪,௯. எஸ்று.எ.அ. (௯) உபா.க.௰எ. சங்.அஉ.க. பிர.ரு.அ. (எ) உபா.௩உ.௪. உபா.௰.௰எ. யோபு.௩௪.௰௯. அப்.௰.௩௪. ரோ.உ.௰க. கொலோ.௩.உரு. க.பேதுரு.க.௰எ. (௯) உபா.௰எ.அ,. எண்.௰௯.௪௯. எசேக்.௩.௰அ. (௰) உ.சாமு.உ௩.௩. (௰க) க.நாளா.உ௬.௩௰. அதி.௰ரு.உ.—(உ௰. அதி.உ.) ஆதி.௰௪.எ. யோசு.௰ரு.௬உ.(௩)அதி.௰௯.௩.எஸ்று.அ.உஉ.எரே.௩௬.க.யோனு.௩.ரு.

டமனம் வைத்து, உபவாசம்பண்ணவேண்டு
மென்று யூதாதேசமெங்கும் பிரசித்தப்படுத்தி
௪ ஞன்.—யூதாசனங்கள் யெகோவாவிடத்தில்
உசாவும்படி கூடிவந்தார்கள்: யூதாவின் சகலந
கரங்களினின்றும்அவர்கள் யெகோவாவைத்
தேடவந்தார்கள்.
௫ யோஷாபாத், புதுப்பிராகாரத்துக்குமுன் யெ
கோவாவின் ஆலயத்திலே, யூதாசனங்களும்
யெருஷலேமியருமாகிய சபையாருக்குள் நின்
௬ றுகொண்டு,—எங்கள் பிதாக்களின் தேவனாகி
ய யெகோவாவே, நீரல்லவா பரமண்டலத்
தின் தேவன்; நீர் புறத்தேசத்தாரின் சகல இ
ராச்சியங்களையும் அரசாளுகிறீரல்லவா; உமது
கையிலேவல்லமையும்பராக்கிரமமுமுண்டு,உம்
௭ மை எதிர்க்கவல்லவர்களில்லை.—எங்கள் தேவ
னாகிய நீர், இந்தத்தேசத்தின்குடிகளை உம்முடை
யசனங்களாகிய இஸரவேலரின்முன்னின்று அ
கற்றி, அதை உமதுமித்திரனாகிய ஆபிரகாமின்வ
மிசத்துக்கு என்றைக்குமென்று கொடுத்தீரல்ல
௮ வா.—அவர்கள் இங்கேவசித்து, உமது நாமத்துக்
காக இதில் ஒருபரிசுத்தஸ்தானத்தைச்செய்து,—
௯ கட்கம், நியாயதண்டனை, கொள்ளைநோய், பஞ்
சமுதலியதீமை எங்களுக்குநேரிடுகிறபொழுது,
உமதுநாமம் இந்த ஆலயத்திலிருக்கிறபடியால்,
நாங்கள் இந்த ஆலயத்துக்குநேராய், உமதுசமு
கத்தில்நின்று, எங்கள் ஆபத்தினிமித்தம் உம்மை
நோக்கி ஓலமிட்டால், நீர்கேட்டுச்சகாயஞ்செய்
௰ வீரென்று சொன்னார்கள்.—எகிப்துதேசத்தினின்
று புறப்பட்ட இஸரவேலர் உம்மாலே தடைப்
பட்டபடியால், அம்மோன் சந்ததியாரும், மோ
வாபியரும், சேயீர்மலையிலுள்ளவர்களுமாகிய இ
வர்கள் தேசத்தைச்சருவாமல்விலகி இவர்களை
௰௧ நாசப்படுத்தாமல்விட்டார்கள்.—பாரும், இவர்க
ளும் எங்களுக்குக்கைம்மாறுசெய்து, நாங்கள்சுத
ந்தரிக்கும்படி நீர் எங்களுக்கு அளித்த சுதந்தரத்
தினின்று எங்களை அகற்றிவிடும்படி வந்துவிட்
௰௨ டார்கள்.—ஆ, எங்கள் தேவனே, நீர் அவர்க
ளைத்தண்டிக்கமாட்டீரா; எங்களை எதிர்க்கவருகி
ற இந்தச்சமுதாயசனங்களை எதிர்க்க எங்களுக்
குச்சாமர்த்தியமில்லை;நாங்கள் என்னசெய்வோ
மோ அறியோம்: உம்மைமாத்திரமேநோக்கியிருக்
௰௩ கிறோமென்றான்.—யூதாசனங்களெல்லாரும்தங்
கள்தங்கள் குழந்தைகளோடும், ஸ்திரிகளோடும்,
பாலகரோடும் யெகோவாவின் சமுகத்தில்
நின்றார்கள்.
௰௪ அப்பொழுது சபையின்மத்தியில் ஆசாப்வமி
சத்தாரில் லேவியனும் மத்தனியாவின்புத்திரனா
கிய யெயீயேலின் புத்திரனான பினாயாவின்
பௌத்திரனும் சகரியாவின்புத்திரனுமாகிய யா
கசியேலின்மேலே யெகோவாவின் ஆவி அ
மர,—அவன், யூதாசனங்களே, யெருஷலேமிய ௰௫
ரே, யோஷாபாத் இராசாவே, நீங்கள் எல்லாருங்
கேளுங்கள்; இந்தயுத்தம் தேவனுடையதேயன்
றி உங்களுடையதல்ல; ஆதலால் இந்த மகாசனக்
கூட்டத்தினிமித்தம் பயப்படவும் கலங்கவும்
வேண்டாம்.—நாளைக்குநீங்கள் அவர்களுக்குவி ௰௬
ரோதமாய்ப்புறப்பட்டுப்போங்கள்: அவர்கள்சீத்
ஸ் உச்சியின்வழியாய்வருகிறார்கள்; நீங்கள்எரு
வேல்வனத்துக்கெதிர்ப்புறத்திலுள்ள பள்ளத்தி
ன் கடையாந்தரத்தில் அவர்களைக்காண்பீர்கள்.—
நீங்கள் போர்செய்வது அவசியமில்லை: அணிவ ௰௭
குத்து நின்றுகொள்ளுங்கள், யெகோவா உங்
களுக்குச்செய்யும் இரட்சிப்பை நின்றுபாருங்
கள்: யூதாசனங்களே, யெருஷலேமியரே, பயப்
படவுங்கலங்கவும் வேண்டாம்; நாளைக்கு அவர்
களுக்கு விரோதமாய்ப் புறப்பட்டுப்போங்கள்:
யெகோவா உங்களோடிருப்பார் என்றான்.—
அதினால் யோஷாபாத் தலைகுனிந்து பூமிக்குநே ௰௮
ரே வணங்கினதுமன்றி, யூதாசனங்கள்சகலரும்
யெருஷலேமியரும் யெகோவாவின்சமுகத்
தில்விழுந்து யெகோவாவை வணங்கினார்
கள்.—கோகாத்தியரின் சந்ததியாரும் கோராகிய ௰௯
ரின் சந்ததியாருமாகிய லேவியர் எழுந்துநின்று,
உரத்தசத்தத்தோடே இஸரவேலரின் தேவனாகி
யயெகோவாவைக்கீர்த்தனம்பண்ணினார்கள்.
அதிகாலையில் அவர்கள் எழுந்து தெக்கோயா ௨௰
வனத்துக்குப் புறப்பட்டுப்போனார்கள்: அவர்
கள்போகையில் யோஷாபாத் நின்றுகொண்டு,
யூதாசனங்களே, யெருஷலேமியரே, கேளுங்
கள்; உங்கள் தேவனாகிய யெகோவாவை
விசுவாசியுங்கள், அதினால்நீங்கள் நிலைப்படுவீர்
கள்; அவர் தீர்க்கதரிசிகளின்வாக்கை விசுவாசி
யுங்கள், அதினால் அனுகூலம் பெறுவீர்களென்
றான்.—அவன், சனங்களுடன் ஆலோசித்துச் ௨௰௧
சேனைக்குமுன் செல்லுகிறபொழுது, யெகோ
வாவின்தயை யென்றுமுள்ளது, ஆதலால் அவ
ரைத்துதியுங்களென்றுசொல்லி, பரிசுத்த அலங்
காரமுள்ளவர்களாகித்துதிபாடும்பொருட்டுப்பா
டகரை யெகோவாவுக்கு ஏற்படுத்தினான்.
அவர்கள் பாடித் துதிசெய்யத் தொடங்கின ௨௰௨
பொழுது, யூதாவுக்குவிரோதமாய்வந்த அம்மோ
ன்சந்ததியாருக்கும், மோவாபுசந்ததியாருக்கும்,
சேயீர் மலையிலுள்ளவர்களுக்கும் விரோதமாய்
யெகோவா பதிவிடைக்காரரைவைத்தார்: அ
வர்கள் வெட்டுண்டுவிழுந்தார்கள்.—அம்மோன் ௨௰௩
சந்ததியாரும்,மோவாபுசந்ததியாரும் சேயீர்மலை
யிலுள்ளவர்களை எதிர்த்துநின்று முழுமையுங்
கொன்று நாசப்படுத்தினார்கள். சேயீர்வாசிகளை
அழித்து முடித்தபின்பு, அவர்கள் ஒருவரை ஒரு
வர் சங்கரிக்கத்தொடங்கினார்கள்.—யூதா சனங் ௨௰௪

(௬)உபா.௪.௩௯. யோசு.௨.௰௧. ௧.இரா.௮.௨௩. மத்.௬.௯. சங்.௪௭.௨,௮. தானி.௪.௰௭,௨௫,௩௨. ௧.நாளா.௨௯.௰௨. மத்.௬.௰௩. (௭) ஆதி.௰௭.௭. யாத்.௬.௭. சங்.௪௪.௨. ஏசா.௪௧.௮. யாக்.௨.௨௩. (௯) ௧.இரா.௮.௩௩,௩௭. அதி.௬.௨௰. (௰) உபா.௨.௪,௯,௰௯. எண்.௨௰.௨௧. (௰௧) சங்.௮௩.௰௨. (௰௨) ௧.சாமு.௩.௰௩. சங்.௨௫.௰௫. சங்.௱௪௧.௮. (௰௪) எண்.௰௧.௨௫,௨௬. (௰௫) யாத்.௰௪.௰௩,௰௪. உபா.௧.௨௯,௩௰.(௰௭)யாத்.௰௪.௰௩,௰௪. எண்.௰௪.௯.(௰௮)யாத்.௪.௩௧. (௨௰) ஏசா.௭.௯. (௨௧) ௧.நாளா.௰௬.௨௯,௩௪. சங்.௱௩௬.௧. ௧.நாளா.௰௬.௪௧.(௨௨)நியா.௭.௨௨. ௧.சாமு.௰௪.௨௰.

கள்வனத்தின்எதிர்ப்புறத்திலுள்ள துருக்கத்தைச்
சமீபித்துச்சனக்கூட்டத்தைப் பார்த்தபொழுது,
அவர்கள் ஒருவருந் தப்பாதபடி பூமியிலேசவ
௨௫ மாய்விழுந்து கிடக்கக்கண்டார்கள்.—யோஷா
பாத்தும் அவன் சனங்களும் அவர்கள் பொருள்க
ளைக்கொள்ளையிடவந்தபொழுது, சவங்களுடன்
மிகவுஞ்செல்வத்தையும் இரத்தினங்களையும் அ
வர்களிடத்திற்கண்டு, தங்களுக்காகத்தாங்கள் சு
மக்கக்கூடியதிலுமதிகமாக எடுத்தார்கள்: அவர்
கள் மூன்றுநாளாய்க்கொள்ளையிட்டார்கள். அது
அவ்வளவு மிகுதியாயிருந்தது.
௨௬ நாலாம்நாள் அவர்கள் பிராகாபள்ளத்திலேகூ
டிவந்தார்கள்; அவர்கள் அந்தஸ்தானத்திலே யெ
கோவாவைத்துதித்தார்கள், ஆதலால் அது இந்
நாள்வரைக்கும் பிராகாபள்ளமென்று சொல்லப்
௨௭ படுகின்றது.—பின்பு யூதா சனங்களும் யெரூஷ
லேமியருமாகிய யாவரும், அவர்கள் முன்னணி
யில் யோஷாபாத்தும், தாங்கள், தங்கள் சத்துருக்
களை மேற்கொண்டு களிகூரும்படி யெகோ
வா செய்தபடியால், ஆனந்தத்துடன் யெரூஷ
௨௮ லேமுக்குப்போகும்படி திரும்பினார்கள்.—அவர்
கள், சுரமண்டலங்களோடுந் தம்புருகளோடும் பூ
ரிகைகளோடும் யெரூஷலேமிலுள்ள யெகோ
௨௯ வாவின் ஆலயத்துக்கு வந்தார்கள்.—யெகோ
வா இஸ்ரவேலரின் சத்துருக்களுக்கு விரோதமா
யுத்தஞ்செய்ததை, அந்தத்தேசத்துச்சகல இராச்சி
யத்தாருங்கேள்விப்பட்டபொழுதுதேவனுடை
௩௰ யபயம் அவர்கள்மேல் வந்தது.—இவ்விதமாய்த்
தேவன்யோஷாபாத்துக்கு நான்குதிசையிலும்
இளைப்பாறுதலை அருளினதினிமித்தம், அவன்
இராச்சியம் அமைதியாயிற்று.
௩௧ யோஷாபாத் யூதாவை அரசாண்டான்: அர
சாளத்தொடங்கினபொழுது அவனுக்கு முப்பத்
தைந்துவயது, அவன் யெரூஷலேமில் இருபத்
தைந்துவருஷம் அரசாண்டான். அவன் மாதா
வின்பெயர் அசூபாள், அவள் ஷில்லீயின்புத்
௩௨ திரி.—அவன் தன் பிதாவாகிய ஆசாவின் நெறி
யை விட்டுவிலகாமல், யெகோவாவின்பார்
௩௩ வைக்கு நலமானதைச் செய்துவந்தான்.—ஆனா
லும் உயர்ந்த ஸ்தானங்கள் அகற்றப்படவில்லை:
சனங்கள் தங்கள் முன்னோரின் தேவன் பட்
சத்தில் தங்கள் இருதயங்களை ஆயத்தப்படுத்த
௩௪ வில்லை.—யோஷாபாத்தின் ஆதியந்தமான மற்றக்
கிரியைகள், இஸ்ரவேலருடையஇராசாக்களின்
புத்தகத்திலே குறிக்கப்பட்ட அனானியின் புத்
திரனாகிய யெகூவின் புத்தகத்தில் எழுதியிருக்
கின்றன.
௩௫ பின்பு யூதாவின் இராசாவாகியயோஷாபாத்,
வெகு துர்க்கருமஞ்செய்த இஸ்ரவேலரின் இரா
௩௬ சாவாகிய அகஸ்யாவுடன் கூடினான்.—தர்ஷீ
ஷுக்குப் போகும்படி கப்பல்கள் செய்யும்பொ
ருட்டு அவனுடன்கூடினான்: அவர்கள் எத்சே
யோன் கேபெரிலேகப்பல்களைச்செய்தார்கள்.—
அப்பொழுது மெதிசாவிலுள்ள தோதாவின்புத் ௩௭
திரனாகிய எலீயேசர், நீர் அகஸ்யாவுடன் கூடி
னபடியால் யெகோவா உம்முடைய கிரி
யைகளைச்சேதப்படுத்தினாரென்று, யோஷாபாத்
துக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனஞ் சொன்
னான். அந்தக்கப்பல்கள் உடைந்துபோயின;
அதினால் அவர்கள் தர்ஷீஷுக்குப்போகக்கூடா
மற்போயிற்று.

## ௨௧. அதிகாரம்.

௧. யோஷாபாத் மரித்த பின் யெகோராம் இராசா
வாகித்தன் சகோதரரைக்கொல்லல்: ௫. அவன்
தீமையாய் இராசரிகஞ்செய்தல்: ௮. ஏதோமி
யரும் லிப்னா சனங்களும் அவன் இராசாதிகா
ரத்தைத் தள்ளல்: ௰௨. அவனுக்கு விரோதமாய்
இலீசா தீர்க்கதரிசன வாக்கியங்களைச் சொல்
லல்: ௰௬. பெலிஸ்தியரும் அரபியரும் அவனைக்
கிலேசப்படுத்தல்: ௰௮. மாறாத துன்பத்தை ய
டைந்து மரித்து அடக்கம் பண்ணப்படல்.

யோஷாபாத் தன் முன்னோருடன் மகா நித்தி ௧
ரையடைந்து, தன் பிதாக்களுடன் தாவீதின் நக
ரத்தில் அடக்கம்பண்ணப்பட்டான். அவனுக்
குப் பின்பு அவன் புத்திரனாகிய யெகோராம் இ
ராசாவானான்.—யோஷாபாத்தின் புத்திரராகிய ௨
அசரியாவும், யிகியேலும், சகரியாவும், அசரியா
வும், மீகாயேலும், ஷிபத்தியாவும் அவன் சகோ
தரர்: இவர்களெல்லாரும் இஸ்ரவேலரின் இரா
சாவாகிய யோஷாபாத்தின் புத்திரர்.—இவர்கள் ௩
பிதா, இவர்களுக்கு வெள்ளியையும், பொன்னை
யும், விலையேறப்பெற்ற திரவியங்களையும், யூதா
விலுள்ள அரணான நகரங்களையுங் கொடுத்தான்:
யெகோராம் சேஷ்டபுத்திரனானபடியினால், இ
ராச்சியத்தை அவனுக்குக் கொடுத்தான்.—யெ ௪
கோராம், தன் பிதாவின் இராச்சியத்தைப்பெற்
று ஸ்திரப்பட்டபின்பு அவன் தன் சகோதரரெல்
லாரையும் இஸ்ரவேலின் பிரபுகளிற்சிலரையும்
கட்கத்தினாலே கொலைசெய்தான்.
யெகோராம் அரசாளத்தொடங்கினபொழுது ௫
அவனுக்கு முப்பத்திரண்டுவயது, அவன் யெரூ
ஷலேமில் எட்டுவருஷம் அரசாண்டான்.—ஆ ௬
காப்பின் வமிசத்தார் நடந்த பிரகாரம், அவனும்
இஸ்ரவேலரின் இராசாக்களுடைய நெறியில் ந
டந்தான்: ஆகாப்பின்புத்திரி அவனுக்கு மனைவி:
யெகோவாவின் பார்வைக்கு அவன் தீங்கு
செய்து வந்தான்.—ஆனாலும் யெகோவா, தா ௭
வீதுடன் செய்த உடன்படிக்கையினிமித்தமும்,
அவனுக்கும் அவன் சந்ததியாருக்கும் நித்தமும்
ஒரு விளக்கைத் தருவேனென்று வாக்குத்தத்தஞ்
செய்ததினிமித்தமும், தாவீதின்வமிசத்தாரைநா
சப்படுத்தவில்லை.

(௨௭) நிகி.௰௨.௪௩. (௨௯) அதி.௰௭.௰. (௩௰) அதி.௰௫.௰௫. யோபு.௩௪.௩௰. (௩௧) ௧.இரா.௨௨.௪௧,. (௩௩) அதி.௰௭. ௬. அதி.௰௨.௰௪. (௩௪) ௧.இரா.௰௬.௪,௭. (௩௫) ௧.இரா.௨௨.௪௮,௪௯. (௩௬) ௧.இரா.௨௨.௪௯. (௩௭) ௧இரா.௨௨.௪௮. அதி.௯.௨௧.—(௨௧. அதி. ௧.) ௧.இரா.௨௨.௫௰. (௩) ௨.இரா.௮.௰௬. (௫) ௨.இரா.௮.௰௭. (௬) அதி.௨௨.௨. (௭) ௨.சாமு.௭.௰௩,௰௪. சங்.௱௩௨.௰௧,.

௮ அவன் நாட்களில் ஏதோமியர் யூதாவின் அதி
காரத்தைத் தள்ளித்தங்களுக்கு ஒரு இராசாவை
௯ ஏற்படுத்திக்கொண்டார்கள்.—ஆதலால்யெகோ
ராம், தன் சகலரதங்களோடும் தன் அதிபதிகளைக்
கூட்டிக்கொண்டு புறப்பட்டுப்போனான்: அவ
ன் இரவில் எழுந்து, தன்னைவளைந்த ஏதோமிய
ரையும் இரதங்களுக்கு அதிபதிகளையும் முறிய
௰ அடித்தான்.—ஆனாலும் ஏதோமியர் இந்நாள்வ
ரைக்கும் யூதாவின் அதிகாரத்தைத்தள்ளிவிட்டி
ருக்கிறார்கள். அக்காலத்தில், அவன்தன் முன்
னோருடைய தேவனாகிய யெகோவாவை
விட்டு நீங்கினபடியினால், லிப்னா சனங்களும்
அவன் அதீனத்துவத்தைத்தள்ளிவிட்டார்கள்.—
௰௧ மேலும் அவன், யூதாபருவதங்களில் உயர்ந்தஸ்
தானங்களையுண்டாக்கி, யூதாசனங்களும் யெரு
ஷலேமியரும் விபசாரமார்க்கமாய் நடக்கிறதற்
கேதுவானான்.
௰௨ பின்பு உன்பிதாவாகிய யோஷாபாத்தின் நெ
றிகளிலாவது, யூதாவின் இராசாவாகிய ஆசா
௰௩ வின் நெறிகளிலாவது நடவாமல்,—இஸ்ரவேல
ருடைய இராசாக்களின் நெறியிலே நடந்து, யூ
தாசனங்களையும் யெருஷலேமியரையும் ஆகாப்
பின் வமிசத்தார் விபசாரமார்க்கமாய் நடந்தது
போல விபசாரமார்க்கமாய் நடக்கப்பண்ணி,
உன்னிலும் உத்தமராகிய உன்பிதாவமிசத்திலுள்
ள உன்சகோதரரைக்கொலைசெய்ததினிமித்தம்,-
௰௪ யெகோவா, உன் சனங்களையும், உன் பிள்
ளைகளையும், உன் மனைவியரையும், உன் சகல
பொருள்களையும் மகாவாதையினால் அடிப்பார்.-
௰௫ ரோகத்தினால் உன்குடர்கள் நாளுக்குநாள் வெ
ளிப்படும்வரைக்கும், நீ குடர்நோயினால் வருத்
தப்படுவாயென்று உன்பிதாவான தாவீதின் தே
வனாகிய யெகோவா சொல்லுகிறாரென்று,
எழுதப்பட்ட ஒரு எழுத்து இலீசாதீர்க்கதரிசியி
னின்று, அவனிடத்தில் வந்தது.
௰௬ மேலும் யெகோவா, யெகோராமுக்கு வி
ரோதமாய்ப்பெலிஸ்தியரும், கூஷியருக்குச்சமீ
பித்த அரபியருமாகிய அவர்கள் மனதை ஏவ,—
௰௭ அவர்கள் யூதாவில் வந்து, முற்றிக்கைசெய்து,
அரமனையிலுள்ள சகலபொருளையும், இராசபுத்
திரரையும், அவன் மனைவியரையும் கவர்ந்து
கொண்டுபோனார்கள்: அவன் புத்திரரில் இளை
யவனாகிய யோவாகாசைத் தவிர மற்றப்புத்திரர்
ஒருவருமீந்திருக்கவில்லை.
௰௮ இவைகளெல்லாம் நடந்தபின்பு யெகோ
வா, அவன் குடர்களில் தீராதரோகத்தினால் அ
௰௯ வனைவாதித்தார்.—காலக்கிரமத்தில் இரண்டு வ
ருஷஞ்சென்றபின், ரோகத்தினால் அவன் குடர்
கள் சரிந்துபோயின: அவன் கொடியவியாதியி
னால் மரணமடைந்தான். அவன் முன்னோருக்
காகச் சுகந்தவருக்கங்களைத் தகித்ததுபோல, அ
வன் சனங்கள் அவனுக்குத்தகிக்கவில்லை.—அ ௨௰
வன் அரசாளத்தொடங்கினபொழுது, அவனுக்
கு முப்பத்திரண்டுவயது; அவன் யெருஷலே
மில் எட்டுவருஷம் அரசாண்டான்: அவன் வி
ருப்பப்பட்டிராமல் இறந்துபோனான். ஆனாலும்
அவர்கள் அவனைத் தாவீதின்நகரத்தில் அடக்கம்
பண்ணினார்கள்; இராசாக்களின் பிரேதவறை
களிலல்ல.

## ௨௨. அதிகாரம்.

௧. அகஸ்யா தீமையாய் இராசரிக்கஞ்செய்தல்:
௫. அவன் யெகூவினால் அதமாதல்: ௰. அத்தா
லியாள் யோவாஷையன்றி இராசவமிசமனைத்
தையும் அழித்து இராசாத்தியாதல்.

யெருஷலேமியர், அவனுக்குப்பின் அவன் இ ௧
ளையபுத்திரனாகிய அகஸ்யாவை இராசாவாகஏற்
படுத்தினார்கள்: அரபியருடன் பாளயத்தில் வந்
த தளத்தார் அவன் மூத்தகுமாரர் யாவரையுங்
கொன்றுபோட்டார்கள்; ஆதலால் யூதாவின் இ
ராசாவான யெகோராமின் புத்திரனாகிய அகஸ்
யா இராசாவானான்.—அகஸ்யா அரசாளத்தொ ௨
டங்கினபொழுது அவனுக்கு நாற்பத்திரண்டு
வயது, அவன் யெருஷலேமில் ஒரு வருஷம்
அரசாண்டான். அவன் மாதாவின்பெயர் அத்
தாலியாள், அவள் உம்றியின் புத்திரி.—அவன் ௩
தீமைசெய்யும்படி அவன் மாதா அவனுக்கு ஆ
லோசனைசொல்லிவந்தபடியால், அவன் ஆகாப்
வமிசத்தாரின் நெறியிலே நடந்தான்.—ஆகாப் ௪
வமிசத்தார், அவன் பிதா மரித்தபின்பு அவன்
நாசமடைவதற்கேற்ற ஆலோசனைசொல்லிவந்
தபடியால், அவர்களைப்போல அவனும் யெ
கோவாவின் பார்வைக்குத்தீங்குசெய்தான்.
அவன் அவர்கள் ஆலோசனையின்படிசெய்து, ௫
இஸ்ரவேலரின் இராசாவாகிய ஆகாப்பின் புத்தி
ரனான யெகோராமுடன் கூடிக்கொண்டு, ரா
மொத் கிலியாத்திலே ஓரியாவின் இராசாவாகி
ய அசாவேலைஎதிர்த்துயுத்தஞ்செய்யப்போனான்:
ஓரியர் யோராமைக் காயப்படுத்தினார்கள்.—அ ௬
வன் ஓரியராசாவாகிய அசாவேலுடன் யுத்தஞ்
செய்தபொழுது, ராமாவிலே தான்பட்டகாயங்
களைச்சொஸ்தப்படுத்தும்பொருட்டு யெஸரியே
லுக்குப்போயிருந்தான்.—இப்படி ஆகாப்பின் ௭
புத்திரனை யேகோராம்வருத்தமாயிருந்ததினால்,
யூதாதேசத்து இராசாவாகியயோராமின்புத்திரனா
ன அகஸ்யா, அவனைப்பார்க்கும்படி யெஸரியே
லுக்குப்போனான். இவன் சேர்ந்தபொழுது, ஆ
காப்பின்வமிசத்தைச்சேதிக்கும்படி யெகோ
வாவால்அபிஷேகம்பெற்ற நிம்ஷீயின்புத்திரனா
கிய யெகூவுக்கு விரோதமாகயெகோராமுடன்
புறப்பட்டான்: இப்படி அகஸ்யா, யோராமிடத்
தில் போனபடியால் தேவனால் அவனுக்கு நா
சமுண்டாயிற்று.—யெகூ, ஆகாப் வமிசத்தைத் ௮

(௮)௨.இரா.௮.௨௰,.(௰௧)லேவி.௰௭.௭.(௰௩)யாத்.௩௪.௰௫.௧.இரா.௰௬.௩௧—௩௩. ௨.இரா.௯.௨௨.(௰௫)வச.௰௮,௰௯.
௬. (௰௬) ௧.இரா.௰௧.௰௪,௨௩. (௰௭) அதி.௨௪.௭. (௰௮) ௨.இரா.௯.௨௯. (௰௯) அதி.௰௬.௰௪.(௨௰)எரே.௨௨.௰௮.—
(௨௨. அதி. ௧.) ௨.இரா.௮.௨௪,. அதி.௨௧.௰௭. (௨) ௨.இரா.௮.௨௬. அதி.௨௧.௬.(௫)௨.இரா.௮.௨௮,.(௬)௨.இரா.
௯.௰௫. (௭) அதி.௨௧.௰௭. நியா.௰௪.௪. ௧.இரா.௰௨.௰௫. ௨.இரா.௯.௬,௭,௨௧. (௮) ௨.இரா.௰.௰,௰௧,௰௩,௰௪.

தண்டனைசெய்து, அகஸ்யாவிடத்தில் சேவித்த
யூதாவின் பிரபுகளையும், அகஸ்யாவின் சகோதர
ருடைய புத்திரரையுங்கண்டுபிடித்தபொழுது அ
௯ வர்களைக்கொன்றுபோட்டான்.—பின்பு அகஸ்
யாவையுந்தேடி, ஷமாரியாவில் ஒளித்திருந்த அ
வனைப்பிடித்து யெகூவிடத்திலே கொண்டுவந்
தார்கள். அவனைக்கொலைசெய்தபின்,இவன்தன
து பூரண இருதயத்தோடும் யெகோவாவைத்
தேடின யோஷாபாத்தின் புத்திரனென்றுசொல்
லி, அவனை அடக்கம்பண்ணினார்கள். பின்னும்
அகஸ்யாவின்வமிசம் அரசாளுகிறதற்கு வல்ல
மையில்லாமற்போயிற்று.

௰ அகஸ்யாவின்மாதாவாகிய அத்தாலியாள் தன்
புத்திரன் இறந்துபோனதைக்கண்டு, யூதாவின்
இராசவமிசமனைத்தையும் நாசப்படுத்தினாள்.—
௰௧ இராசாவின்புத்திரியாகிய யோஷபியாத்கொலை
யுண்ட இராசபுத்திரருக்குள், அகஸ்யாவின் புத்
திரனான யோவாஷைத்திருடி எடுத்து, அவனை
யும் அவன்தாதியையும் பள்ளியறையில் வைத்தா
ள். யெகோராம் இராசாவின் புத்திரியும், ஆசா
ரியனாகிய யோயதாவின் மனைவியும், அகஸ்யா
வின்சகோதரியுமாகிய யோஷபியாத், அவனை
அத்தாலியாள் கொன்றுபோடாதபடிக்கு ஒளித்
௰௨ துவைத்தாள்.—அவன், தேவனுடைய ஆலயத்
தில் ஆறுவருஷமாக அவர்களுடன் ஒளித்திருந்
தான்: அத்தாலியாள்தேசத்தை அரசாண்டாள்.

## ௨௩. அதிகாரம்.

௧. யோயதா சேனைகளை நியமித்து யோவாஷை
இராசாவாக ஏற்படுத்தல்: ௰௨. அத்தாலியாளைக்
கொலைசெய்தல்: ௰௬. யோயதா தேவபூசையை
நீக்கிச் சனங்களைத் தேவனிடத்தில்சேர்த்தல்.

ஏழாம் வருஷத்தில் யோயதா தன்னைத்திடப்ப
டுத்தி, எரோகாமின்புத்திரனாகிய அசரியா,யோ
கானானின்புத்திரனாகிய இஷ்மாவேல், ஓபெத்தி
ன்புத்திரனாகியஅசரியா,அதாயாவின்புததிரனாகி
ய மாசெயா,சிக்ரியின்புத்திரனாகியஇலீஷாபாத்
தென்னும்நூறுபேருக் கதிபதிகளைத்தன்னுடனே
உடன்படிக்கைக் குட்படுத்திக்கொண்டான்.—
௨ அவர்கள் யூதாவிலேதிரிந்து, யூதாவிலுள்ள எல்
லாப் பட்டணங்களிலுமிருந்து லேவியரையும்
இஸரவேலரின் பிதாவமிசத்தில் பிரதானிகளை
யும் கூடிவரும்படி செய்து யெரூஷலேமுக்கு
௩ வந்தார்கள்.—சபையார் அனைவரும் தேவனு
டைய ஆலயத்தில் இராசாவோடே உடன்படிக்
கைசெய்தார்கள்: அவன் அவர்களைநோக்கி, கே
ளுங்கள், யெகோவா தாவீதின் வமிசத்தைக்
குறித்துச்சொல்லியிருக்கிற பிரகாரம், இராசபுத்
௪ திரன் அரசாளவேண்டும்.—ஓய்வுநாளில் பிரவே
சிக்கும்லேவியரும் ஆசாரியருமாகிய உங்களில்,
மூன்றிலொருபங்கு வாசற்காவலாளராக இருக்
௫ கவேண்டும்.—மூன்றிலொருபங்கு அரமனையிலு
ம், மூன்றிலொருபங்கு அத்திபாரவாசலிலும் இ
ருக்கவேண்டும்:சகலசனங்களும்யெகோவாவு
டைய ஆலயத்தின் பிராகாரங்களிலிருக்கவேண்
டும்.—ஆசாரியர்களையும், லேவியரில் தொண்டு ௬
செய்பவர்களையுந்தவிர, வேறொருவரும் யெ
கோவாவின்ஆலயத்தில்பிரவேசிக்கவேண்டா
ம்;அவர்கள்பரிசுத்தர்,ஆதலால்பிரவேசிக்கலாம்:
சகலசனங்களும் யெகோவா நியமித்தகாவல்
காத்துக்கொள்ளவேண்டும்.—லேவியர், தங்கள் ௭
தங்கள் ஆயுதங்களைக்கையிற்பிடித்துக்கொண்டு
இராசாவைச் சூழ்ந்து நிற்கவேண்டும்; ஆலயத்
தில் பிரவேசிக்கிறவனெவனோ அவன் கொலை
செய்யப்படுவான்: இராசா உள்ளேவருகிறபொ
ழுதும்வெளியேபோகிறபொழுதும் நீங்கள் அவ
னோடிருக்கவேண்டும்; நீங்கள் செய்யவேண்டி
யகாரியமிதுவேயென்றான்.—அப்படியேலேவி ௮
யரும் யூதாசனங்கள் யாவரும் ஆசாரியனாகிய
யோயதா கட்டளையிட்ட எல்லாவற்றின் படிக்
குஞ்செய்து, அவரவரே ஓய்வுநாளில் உள்ளேவ
ருகிறவர்களையும் ஓய்வுநாளில் வெளியேபோ
கிறவர்களையும் கூட்டிக்கொண்டு போனார்கள்.
ஆசாரியனாகிய யோயதா வகுப்புக்கள் பிரிந்து
போகவிடவில்லை.—ஆசாரியனாகிய யோயதா, ௯
தேவனுடைய ஆலயத்திலிருந்த தாவீது இரா
சாவின் ஈட்டிகளையும், கேடகங்களையும், பரி
சைகளையும் நூறுபேருக்கு அதிபதிகளிடத்தில்
ஒப்பித்தான்.—சனங்களெல்லாரும், தங்கள் தங் ௰
கள் ஆயுதங்களைக்கையிலே பிடித்துக்கொண்டு,
ஆலயத்தின் வலப்புறம் தொடங்கி ஆலயத்தின்
இடப்புறம் வரைக்கும், வேதிகைக்கும் ஆலயத்
துக்கும் அருகே, இராசாவைச்சூழநிற்கும்படி நி
றுத்தினான்.—அவர்கள் இராசபுத்திரனை வெளி ௰௧
யேகொண்டுவந்து, அவனுக்குமுடிசூட்டி,சாட்
சியின் புத்தகத்தை அவனுக்குக்கொடுத்து, அவ
னை இராசாவாக ஏற்படுத்தினார்கள்: யோயதா
வும் அவன்புத்திரரும் அவனுக்கு அபிஷேகஞ்
செய்து, இராசா வாழ்க வென்றார்கள்.

அத்தாலியாள்,சனங்கள்ஓடிவந்து இராசாவை ௰௨
வாழ்த்தும் ஆரவாரத்தைக்கேட்டவுடனே, யெ
கோவாவின் ஆலயத்திலேசனங்களிடத்தில்வ
ந்துபார்த்தபொழுது,—இராசா பிரவேசஸ்தானத் ௰௩
தில் ஒருதூணருகேநிற்கவும், பிரபுகளும், எக்கா
ளக்காரரும், இராசாவுக்குச்சமீபத்தில் நிற்கவும்,
தேசத்தின் சகலசனங்களும் மகிழ்ந்து எக்காளங்
களையூதவும், கீதவாத்தியங்களுடன் பாடகரும்
பாடகத்தலைவருந் துதிக்கவுங் கண்டாள். அத்
தாலியாள் தன்வஸ்திரங்களைக்கிழித்து, இராசத்
துரோகம்,இராசத்துரோகம்என்றாள்.—யெகோ ௰௪
வாவின் ஆலயத்தில் அவளைக் கொல்லலாகா
தென்று ஆசாரியன் சொல்லியிருந்தபடியால்,ஆ
சாரியனாகிய யோயதா, நூறுபேருக்கதிபதிகளா
கிய சேனைத்தலைவரை வெளியே அழைத்து,
அவர்களைநோக்கி, அவளை வெளியே பிடித்துவி

(௯) ௨.இரா.௯.௨௭. அதி.௰௭.௩. (௰) ௨.இரா.௰௧. (௰௧) ௨.இரா.௰௧.௪.—(௨௩. அதி. ௧.) ௨.இரா.௰௧.௪,. (௩) ௨.சாமு.௭.௰௧. ௧.இரா.௨.௪. அதி.௯.௰௬. (௪) ௧.நாளா.௯.௨௬. (௬) ௧.நாளா.௨௩.௨௮,௨௯. (௮) ௧.நாளா.௨௪. ௧.நாளா.௨௫. (௰௧) ௨பா.௰௭.௰௮. (௰௩) ௧.நாளா.௨௫.௮.

ஙகள்: அவளைப்பின்பற்றுகிறவர்களைக் கட்கத்
௰௫ தினாலே கொன்றுபோடுங்களென்றான்.—ஆத
லால் சனங்கள், கையினால் அவளைப்பிடித்து, இ
ராசதானியில் குதிரைவாசற்பிரவேச ஸ்தானத்
தில் அவள் வருகையில், அங்கே அவளைக்கொன்
றுபோட்டார்கள்.
௰௬ பின்பு யோயதா, சகலசனங்களும்யெகோ
வாவின் சனங்களாகும்பொருட்டு, தானும், அ
வர்களும், இராசாவும் ஒரு உடன்படிக்கைபண்
௰௭ ணிக்கொள்ளும்படிசெய்தான்.—பின்பு சனங்க
ளெல்லாரும் பாகாலின் ஆலயத்துக்குப்போய்,
அதை இடித்து, வேதிகைகளையுடைத்து, விக்கி
ரகங்களைத்தகர்த்து, பாகாலின் பூசாரியாகிய மத்
தானை வேதிகைகளுக்கு முன்பாகக் கொன்று
௰௮ போட்டார்கள்.—யோயதா தாவீது கட்டளையிட்
டபிரகாரம் ஆனந்தத்தோடும் பாட்டோடும்,மோ
சேயின் வேதபிரமாணத்தில் எழுதியிருக்கிறப
டி யெகோவாவுக்குத்தகனபலிகளையிடும்பொ
ருட்டுத்தாவீது யெகோவாவின் ஆலயத்தில்
வகுத்து ஏற்படுத்திய ஆசாரியரையும்லேவியரை
யும் யெகோவாவின் ஆலயத்துக்கு அதிபதிக
௰௯ ளாய் ஏற்படுத்தினான்.—எக்காரியத்திலாகிலும்
அசுசியாயிருப்பவர்கள் ஒருவரும் யெகோ
வாவின்ஆலயத்தில்பிரவேசியாதபடிக்கு,அதின்
வாசல்களில் காவலாளர்களை ஏற்படுத்தினான்.—
௨௰ அவன், நூறுபேருக்கு அதிபதிகளையும், பிரபுக
ளையும், சனங்களின் அதிகாரிகளையும், தேசத்
தின் சகலசனங்களையுங் கூட்டிக்கொண்டு இரா
சாவை யெகோவாவின் ஆலயத்தினின்று அ
ழைத்துப்போனான். அவர்கள் உயர்ந்த வாசல்
வழியாய் அரமனையிற் பிரவேசித்து இராசாவை
இராச சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கப் பண்
௨௧ ணினார்கள்.—தேசத்தின் சகல சனங்களுஞ் சந்
தோஷப்பட்டார்கள். அத்தாலியாளைக்கட்கத்தி
னாலேகொன்றபின்பு, நகரம் அமைதியாயிற்று.

## ௨௪. அதிகாரம்.

௧. யோயதா சீவித்திருக்கையில் யோவாஷ் நன்றாய் அரசாளல்: ௪. தேவாலயத்தைப் புதுப்பிக்கக்கட்டளையிடல்: ௰௫. யோயதா மரணமடைந்து அடக்கம் பண்ணப்படல்: ௰௭. யோவாஷ் விக்கிரகாராதனைக்காரனாகி யோயதாவின் புத்திரனாகிய சகரியாவைக் கொலைசெய்தல்: ௨௩. ஸீரியரால் தோல்வியடைந்து தன்தாசரால் அதமாதல்: ௨௭. அமசியா அரசனாதல்.

யோவாஷ் அரசாளத்தொடங்கினபொழுது அ
வனுக்கு எழுவயது, அவன்யெருஷலேமில் நாற்
பதுவருஷம் அரசாண்டான். பேர்ஷேபா ஊரா
ளாகிய அவன் மாதாவின் பெயர் சிபியாள்.—
௨ யோவாஷ், ஆசாரியனாகிய யோயதாவின் ஆயுள்
பரியந்தம் யெகோவாவின் பார்வைக்கு நன்
௩ மைசெய்தான்.—யோயதா அவனுக்கு இரண்டு ஸ்
திரிகளை விவாகஞ்செய்துகொடுத்தான்; அவனுக்
குப்புத்திரர் புத்திரிகள் பிறந்தார்கள்.
பின்பு யோவாஷ் யெகோவாவின் ஆலயத் ௪
தைப் புதுப்பிக்க விரும்பி,—ஆசாரியர்களையும் ௫
லேவியரையும்கூடிவரச்செய்து,அவர்களைநோக்
கி, நீங்கள் யூதாவின்நகரங்களில் எங்கும்போய்,
உங்கள் தேவனாகிய யெகோவாவின் ஆல
யத்தைப் புதுப்பிக்கும்படி, வருஷந்தோறும் இ
ஸரவேலரெல்லாரிடத்திலும் திரவியத்தைச்சே
ருங்கள்: இந்தக்காரியத்தைச் சீக்கிரஞ்செய்வீர்
களாக என்றான். லேவியர் விரைந்து அதைச்
செய்யவில்லை.—பின்பு இராசா, யோயதாவென் ௬
னும் பிரதானியை அழைத்து, அவனைநோக்கி,
நீர் சாட்சியின் ஆவாசத்துக்காக யெகோவா
வின் தாசனாகிய மோசே கட்டளையிட்டதும்,
இஸரவேலரின் சபையார் கொடுக்கவேண்டிய
துமாகியவரியை, யூதாவிலும்யெருஷலேமிலும்
நின்றுகொண்டு வரும்படி லேவியருக்குச்சொல்
லாமல் விட்டதென்ன.—அத்தாலியாளென்னும் ௭
அந்தத்துஷ்ட ஸ்திரியின் புத்திரர் தேவனுடை
ய ஆலயத்தை இடித்து, யெகோவாவின் ஆ
லயத்திலுள்ள சகல பரிசுத்தவஸ்துக்களையும் எ
டுத்துப் பாகால்களுக்குக் கொடுத்துவிட்டார்க
ளென்றான்.—பின்பு அவர்கள், இராசாவின்கட் ௮
டளைப்படி ஒருபெட்டியைச்செய்து யெகோ
வாவின் ஆலயத்தின் வாசலுக்குவெளியேவைத்
தார்கள்.—அன்றியும் அவர்கள் தேவனுடைய ௯
தாசனாகிய மோசே,வனத்திலே திரவியத்தைக்கு
றித்து இஸரவேலருக்கு ஏற்படுத்திய பிரகாரம்,
யெகோவாவுக்குக் கொண்டுவரும்படி யூதா
விலும் யெருஷலேமிலும் பிரசித்தப்படுத்தினார்
கள்.—அதினால் எல்லாப்பிரபுகளும் சகல சன ௰
ங்களும் சந்தோஷப்பட்டு, காரியம் நிறைவே
றும் வரைக்கும் கொண்டுவந்து பெட்டியிலே
போட்டார்கள்.—அந்தப்பெட்டி, லேவியர்கை ௰௧
யினால் இராசாவின் பண்டசாலையில் கொண்
டுவரப்படும்பொழுது, அதிலே வெகுதிரவியம்
இருக்கக்கண்டு, இராசாவின் லேககனும்,பிரதா
ன ஆசாரியன்நியமித்த அதிகாரி ஒருவனும் வந்
து, பெட்டியிலிருந்ததை எடுத்துப்போட்டுத் தி
ரும்பவுங் கொண்டுபோய் அதின் ஸ்தானத்தில்
வைப்பார்கள்.நாளுக்குநாள்இவ்விதமாய்ச்செய்
ததினால் அவர்கள் அநேகதிரவியத்தைச்சேகரித்
தார்கள்.—பின்பு இராசாவும் யோயதாவும் யெ ௰௨
கோவாவின் ஆலயத்தின்வேலை விசாரிப்புக்
காரருக்குக்கொடுத்தார்கள். இவர்கள் யெகோ
வாவின் ஆலயத்தைத்திரும்பக்கட்டும்படி, சிற்
பருக்குந் தச்சருக்கும், யெகோவாவின்ஆல
யத்தைப் புதுப்பிக்கும்படி, இரும்பினாலும் பித்
தளையினாலும் வேலைசெய்யுங்கம்மாளருக்குங்கூ
லிகொடுத்தார்கள்.—தொழிற்காரர் வேலைசெய் ௰௩

(௰௫) நிகி.௩.௨௮. (௰௭) உபா.௰௩.௯. (௰௮) ௧.நாளா.௨௩.௬,௩௰,௩௧. எண்.௨௮.௨. ௧.நாளா.௨௫.௨,௬. (௰௯) ௧.நாளா.௨௬. (௨௰) ௨.இரா.௰௧.௰௯.—(௨௪. அதி. ௧.) ௨.இரா.௰௧.௨௧. (௨) அதி.௨௬.௫. (௫) ௨.இரா.௰௨.௪. (௬) ௨.இரா.௰௨.௭. யாத்.௩௰.௰௨. எண்.௧.௫௰. அப்.௭.௪௪. (௭) அதி.௨௧.௰௭. ௨.இரா.௰௨.௪. (௮) ௨.இரா.௰௨.௯. (௰௧) ௨.இரா.௰௨.௰.

யச்செய்ய அவர்கள்கைவேலை சித்திபெற்றது;
இப்படி அவர்கள் யெகோவாவின் ஆலயத்
தைப்புதுப்பித்து முன்போலத்திடப்படுத்தினார்
௰௪ கள்.—அவர்கள்வேலை முடித்தபின்பு மீந்திருந்த
திரவியத்தை இராசாவுக்கும்யோயதாவுக்குமுன்
பாகக்கொண்டுவந்தார்கள்; அதினால் யெகோ
வாவின் ஆலயத்துக்காக ஆராதனை செய்வதற்
கேற்ற பாத்திரங்களும், பலியிடுவதற்குப்பொன்
வெள்ளிகளினாலுண்டான கரண்டிமுதலிய பாத்
திரகங்ளுஞ்செய்யப்பட்டன. பின்பு யோயதா
வின் ஆயுள்பரியந்தம் யெகோவாவின் ஆல
௰௫ யத்திலே நித்தமும் பலியிட்டுவந்தார்கள்.-யோய
தா பூரண ஆயுள்பெற்று விருத்தனாகி மரித்தான்;
அவன் மரணகாலத்தில் அவனுக்கு நூற்றுமுப்ப
௰௬ துவயது.—அவன் இஸரவேலருக்குள் தேவனுக்
கும் அவர் ஆலயத்துக்கும் ஏற்ற நன்மைசெய்த
படியினால், அவர்கள் அவனைத்தாவீதின் நகரத்
தில் இராசாக்களுக்குள் அடக்கம்பண்ணினார்
௰௭ கள்.—யோயதா மரித்தபின் யூதாவின் பிரபுகள்
வந்து இராசாவை வணங்கினார்கள். இராசா அ
௰௮ வர்களுக்குச்செவிகொடுத்தான்.—பின்பு அவர்
கள் தங்கள் முன்னோரின் தேவனாகிய யெ
கோவாவின் ஆலயத்தைத்தள்ளிவிட்டு, அஷ
ரிமரங்களையும் விக்கிரகங்களையுஞ் சேவித்துவந்
தார்கள். இந்த அபராதத்தினிமித்தம், கோபம்
யூதாவின்மேலும் யெரூஷலேமின்மேலும் வந்த
௰௯ து.—ஆனாலும், யெகோவா அவர்களைத்தமது
பட்சத்தில்திருப்பும்படி அவர்களிடத்தில் தீர்க்
கதரிசிகளையனுப்ப, இவர்கள் அவர்களுக்கு வி
ரோதமாய்ச் சாட்சியிட்டார்கள்: அவர்களோ
௨௰ செவிகொடுக்கவில்லை.—பின்பு யெகோவா
வின் ஆவி, ஆசாரியனாகிய யோயதாவின்புத்திர
னான சகரியாவின்மேல் அமர, அவன், சனங்க
ளுக்குமுன்பாக மேலேநின்று, அவர்களை நோக்
கி, நீங்கள் யெகோவாவின் கட்டளையை மீ
றுகிறதென்ன; இதினால்நீங்கள்வாழ்வுபெறமாட்
டீர்கள்; நீங்கள் யெகோவாவைவிட்டுநீங்கி
னபடியால், அவரும் உங்களைவிட்டு நீங்கினா
௨௧ ரென்று தேவன் சொல்லுகிறாரென்றான்.—அ
தினால் அவர்கள், இராசாவின் கட்டளையின்படி
அவனுக்கு விரோதமாய்த்துராலோசனைசெய்து,
யெகோவாவின் ஆலயத்தின்பிராகாரத்தில் அ
௨௨ வனைக் கல்லெறிந்தார்கள்.—யோவாஷ் இராசா,
அவன் பிதாவாகிய யோயதா தனக்குச்செய்த த
யையை நினையாமல்,அவன்புத்திரனைக்கொன்று
போட்டான்.இவன்,மரணகாலத்தில்,யெகோ
வா இதைப்பார்த்து விசாரிப்பாராக என்றான்.
௨௩ வருஷஞ் சென்றபின், ஸீரியாவின் சேனை
கள் அவனுக்கு விரோதமாக வந்தார்கள்: அவர்
கள் யூதாவிலும் யெரூஷலேமிலும் வந்து, சனங்
கள் மத்தியில் நின்று, சனங்களின் பிரபுகள் யா
வரையுங் கொலைசெய்து, கொள்ளைப் பொருள்க
ளை எல்லாம் தமஸ்குவின் இராசாவுக்கு அனுப்பி
விட்டார்கள்.—ஸீரியரின் சேனைகள் அற்பதொ ௨௪
கையாகவந்தும், அவர்கள்தங்கள் முன்னோரின்
தேவனாகிய யெகோவாவைவிட்டுநீங்கினப
டியினால்யெகோவா,மகாசேனையைஅவர்கள்
கையில் ஒப்பித்தார்; அவர்கள் யோவாஷுக்குத்
தண்டனைசெய்தார்கள்.—அவர்கள் மிகவுங் கா ௨௫
யப்பட்ட அவனைவிட்டுப்புறப்பட்டபின்பு, அ
வன் பணிவிடைக்காரர், அவன் ஆசாரியனாகிய
யோயதாவின் புத்திரரைக் கொலைசெய்தபடியி
னால் அவனுக்கு விரோதமாகத் துராலோசனை
செய்து, அவன் மஞ்சத்தில் அவனைக்கொன்று
போட்டார்கள்: அவன் மரித்தபின்பு அவனைத்
தாவீதின் நகரத்தில் அடக்கம்பண்ணினார்கள்,
ஆனாலும் அவர்கள் இராசாக்களின் பிரேதவறை
களில் அடக்கம்பண்ணவில்லை.—அம்மோனிய ௨௬
ஸ்திரியாகிய ஷிமியாத்தின் புத்திரனான சாபாத்,
மோவாபிய ஸ்திரியாகிய ஷிம்றீத்தின் புத்திரனா
ன யோசாபாத்தென்னும் இவர்களே, அவனுக்கு
விரோதமாகத் துராலோசனை செய்தவர்கள்.
அவன் புத்திரரின் விருத்தாந்தமும்,அவன் ௨௭
ஏற்றின சுமையின் பாரமும், தேவனுடைய ஆ
லயத்தைப்புதுப்பித்தவிபரமும், இராசாக்களின்
சரித்திர புத்தகத்தில் எழுதியிருக்கின்றன. அவ
னுக்குப்பின் அவன் புத்திரனாகிய அமத்சியா இ
ராசாவானான்.

## ௨௫. அதிகாரம்.

௧. அமத்சியா அரசாளல்: ௩. விசுவாசகாதகரைக் கொலைசெய்தல்: ௫. இஸரவேலின் சேனையை அனுப்பிவிடல்: ௰௧. ஏதோம் சனங்களைக்கொலைசெய்தல்: ௰௩. இஸரவேல் சனங்கள் யூதாசனங்களிற் சிலரைக்கொலைசெய்தல்: ௰௪. இராசா ஏதோமியரின் தேவர்களுக்குப்பூசைசெய்தல்: தீர்க்கதரிசியின் வாக்கைஅலட்சியம்பண்ணல்: ௰௭. அவன் தண்டிக்கப்படல்: ௨௫. அவன் ஆளுகையின்காலத்தையும் அவன்மரணத்தையும் குறித்தல்.

அமத்சியா அரசாளத்தொடங்கினபொழுது அ ௧
வனுக்கு இருபத்தைந்துவயது, அவன் யெரூஷ
லேமில் இருபத்தொன்பது வருஷம் அரசாண்
டான். யெரூஷலேம் நகரத்தாளாகிய அவன்மா
தாவின்பேயர் யோவதாள்.—அவன் யெகோ ௨
வாவின் பார்வைக்கு நன்மைசெய்தான், ஆனா
லும் நேர்மையான இருதயத்தோடல்ல.
அவன்,இராச்சியம்தனக்குஸ்திரப்பட்டபின்பு ௩
தன் பிதாவாகிய இராசாவைக்கொலைசெய்ததன்
பணிவிடைக்காரரைக்கொன்றுபோட்டான்.—
பிள்ளைகளினிமித்தம் பிதாக்களையும், பிதாக்களி ௪

(௰௪) ௨.இரா.௰௨.௰௩. (௰௮) ௧.இரா.௰௪.௨௩. நியா.௫.௮. (௰௯) அதி.௩௬.௰௫. எரே.௭.௨௫,௨௬. (௨௰) அதி.௰௫. ௧. நியா.௬.௩௪. எண்.௰௪.௪௧. அதி.௰௫.௨. (௨௧) மத்.௨௩.௩௫. அப்.௭.௫௮,௫௯. (௨௩) ௨.இரா.௰௨.௰௭. (௨௪) லேவி.௨௬.௮. உபா.௩௨.௩௰. ஏசா.௩௰.௰௭. லேவி.௨௬.௨௫. உபா.௨௮.௨௫. அதி.௨௨.௮. ஏசா.௰.௫. (௨௫) ௨.இரா.௰௨.௨௰. வச.௨௧. (௨௬) ௨.இரா.௰௨.௨௧. (௨௭) ௨.இரா.௰௨.௰௮,௨௧.—(௨௫. அதி. ௧.) ௨.இரா.௰௪. (௨) ௨.இரா.௰௪.௪. (௩) ௨.இரா.௰௪.௫,. (௪) உபா.௨௪.௰௬. ௨.இரா.௰௪.௬. எரே.௩௧.௩௰. எசேக்.௰௮.௨௰.

னிமித்தம் பிள்ளைகளையுங் கொலைசெய்யவேண்டாம்; அவனவன் செய்தபாவத்தினிமித்தம் அவனவனே கொலைசெய்யப் படவேண்டுமென்று சொல்லி யெகோவா கட்டளையிட்டபிரகாரம், மோசேயின் நியாயப்பிரமாண புத்தகத்தில் எழுதியிருக்கிறபடி, அவன், அவர்கள் பிள்ளைகளைக்கொலைசெய்யவில்லை.
௫ பின்பு அமத்சியா, யூதா வமிசத்தாரைக் கூடிவரச்செய்து, யூதாவிலும் பேன்யாமீனிலுமெங்கும் அவரவர் பிதாவமிசத்தின்படி ஆயிரவருக்கதிபதிகளாகவும் நூறுபேருக்கதிபதிகளாகவும் ஏற்படுத்தினான்: இருபதுவயதுமுதல் அதற்கு மேற்பட்டவர்களைதொகையிட்டபொழுது, ஈட்டியும் பரிசையும்பிடித்து யுத்தத்துக்குப்போகும்படி தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் மூன்றுலட்
௬ சம்பேர் இருக்கக்கண்டான்.—மேலும் அவன் நூறுகிக்கேர் வெள்ளிகொடுத்து, இஸரவேலரினின்று ஒருலட்சம் பராக்கிரமவீரரைக்கூலிக்கு
௭ அழைத்தான்.—தேவனுடையதாசன் ஒருவன் அவனிடத்தில்வந்து, இராசாவே, இஸரவேலரின் சேனைகள் உம்முடன்வரவிடாதேயும்; யெகோவா இஸரவேலரோடும் இருக்கவில்லை, எப்ராயீம் வமிசத்தாரெல்லாரோடும் இருக்கவில்
௮ லை.—உமக்குப்போகப்பிரியமாகில், யுத்தத்துக்கு உற்சாகங்கொள்ளும்; அல்லாதிருந்தால் தேவன் சத்துருவுக்குமுன் உம்மை விழுத்துவார்: துணைசெய்யவும் விழுத்தவும் தேவனுக்கு வல்
௯ லமையுண்டு என்றான்.—அமத்சியா தேவதாசனைநோக்கி, நான் இஸரவேலரின்சேனைக்கு நூறுகிக்கேர் வெள்ளிகொடுத்தேனே, அதற்கென்னசெய்வேனென்றுகேட்க, தேவனுடையதாசன், யெகோவா அதற்கு அதிகமாக உனக்
௰ குத்தரக்கூடும் என்றான்.—அப்பொழுது அமத்சியா, எப்ராயீமினின்று தன்னிடம்வந்த சேனைகளை அவரவர்வீட்டுக்கனுப்ப அவர்களைப் பிரித்தான்: அதனால் அவர்கள் யூதாவுக்குவிரோதமாகக்கோபமிகவுமூள், மகா குரோதத்துடன் தங்கள் வீடுகளுக்குத்திரும்பிப்போனார்கள்.
௰௧ பின்பு அமத்சியா தன்னைத்திடப்படுத்தி, தன் சேனைகளை வெளியே நடத்திக்கொண்டு, உப்புவெளிக்குப்போய்,சேயீர்வமிசத்தாரிற் பதினாயி
௰௨ ரம்பேரைக் கொலைசெய்தான்.–யூதாவமிசத்தார், மீந்திருந்த பதினாயிரம்பேரைச்சிறைபிடித்து, அவர்களை மலையுச்சிக்குக்கொண்டுபோய், உச்சியினின்று கீழேதள்ளிவிட்டார்கள்: அதினால் அவர்களனைவரும் நொருங்குண்டார்கள்.
௰௩ அமத்சியா தன்னுடன்யுத்தத்திற்கு வரவேண்டாமென்று அனுப்பிவிட்டதளத்தார், ஷமாரியாமுதல் பேதோரோன் வரைக்குமுள்ள யூதாவின் நகரங்கள்மேல்பாய்ந்து, அவைகளில் மூவாயிரம்பேரைக் கொலைசெய்து, வெகுபொருளைக்கொள்ளையிட்டார்கள்.
௰௪ அமத்சியா, ஏதோமியரைக் கொன்றுபோட்டுத்திரும்பிவருகையில், சேயீர்வமிசத்தாரின்தேவர்களைக் கொண்டுவந்து, தனக்கிஷ்டமான தேவர்களாகவைத்து, அவர்களுக்குமுன்பாக நமஸ்காரம்பண்ணி, அவர்களுக்குத் தூபங்காட்
டினான்.—அதினால் அமத்சியாவின்மேல் யெ ௰௫
கோவா தமக்குக்கோபமூள, அவனிடத்தில் ஒருதீர்க்கதரிசியை அனுப்பினார். இவன்அவனை நோக்கி, நீர் அந்தச்சனங்களின் தேவர்களைத்தேடினதேது; அவர்கள்தங்கள்சுயசனங்களையும்உமதுகையினின்றுவிடுவிக்கக்கூடாமற்போயிற்றே
என்றான்.—இப்படி இவன் சொன்னபொழுது, ௰௬
இராசா இவனைநோக்கி, நீ, இராசாவின்மந்திரிகளுள் ஒருவனாய்விட்டாயா, சும்மாஇரு, நீ அடிக்கப்படவேண்டியதென்னவென்றான். அதினால் தீர்க்கதரிசி, நீர் இந்தக்கருமத்தைச்செய்ததுமன்றி, என்னாலோசனையைச் சிந்தையில்வையாமல் விட்டதினால், தேவன் உம்மைச்சங்கரிக்கத்தீர்மானித்தாரென்பதை அறிவேனென்றுசொல்லிச் சும்மாவிருந்தான்.
பின்புயூதாதேசத்து இராசாவாகிய அமத்சியா, ௰௭
ஆலோசனைபெற்று, இஸரவேலரின் இராசாவும் யெகூவின் பௌத்திரனும் யோவாகாசின் புத்திரனுமாகிய யோவாஷிடத்தில் ஆளனுப்பி, நாம் ஒருவரோடொருவர் எதிர்த்துப்பார்ப்போம் வா
என்று சொல்லுவித்தான்.—அதற்கு இஸரவேல ௰௮
ரின் இராசாவாகிய யோவாஷ், யூதா தேசத்து இராசாவாகிய அமத்சியாவுக்கு ஆளனுப்பி, லிபானோனிலுள்ள குருக்கத்தி, லிபானோனிலுள்ள ஏரஸ்மரத்துக்கு, நீ உன் புத்திரியை என் புத்திரனுக்கு விவாகஞ்செய்து தாவென்றுசொல்லியனுப்பிற்று. லிபானோனிலுள்ள ஒரு காட்டுமிருகம் அவ்வழியாய்ச்சென்று அந்தக்குருக்கத்தி
யை மிதித்துப்போட்டது.—நான் ஏதோமியரை ௰௯
அடித்தேனென்று நீ மேன்மைபாராட்ட உன் மனம் கருவமடைந்தது, மேன்மைபாராட்டிக்கொண்டு, உன்வீட்டோடிரு; நீயும் உன்னோடு கூடிய யூதாசந்ததியாரும் விழும்படி என் கேடு
தேடுகிறாயென்று சொல்லியனுப்பினான்.–அமத் ௨௰
சியாவோசெவிகொடுக்கவில்லை: அவர்கள்ஏதோமியரின் தேவர்களைத்தேடினதினால், அவர்கள் சத்துருக்கள்கையில் அகப்படுவதற்கேதுவாய் இ
து தேவனால் நடந்தது.—இஸரவேலரின் இரா ௨௰௧
சாவாகிய யோவாஷ் புறப்பட்டுப்போனான்; யூதாவைச்சேர்ந்த பேத்ஷிமெஷில் அவனும் யூதா தேசத்து இராசாவாகிய அமத்சியாவும் ஒருவரோ
டொருவர் எதிர்த்துப்பார்த்தார்கள்.—யூதாசனங் ௨௰௨
கள் இஸரவேலருக்குத்தோற்றுப்போனார்கள்; அவரவர்தங்கள்தங்கள்கூடாரங்களுக்குஓடிப்போ
னார்கள்.—இஸரவேலரின் இராசாவாகிய யோ ௨௰௩
வாஷ், யோவாகாசின் பௌத்திரனும் யோவாஷின் புத்திரனும் யூதாதேசத்து இராசாவுமாகிய அமத்சியாவைப்பேத்ஷிமெஷிலேபிடித்துக்கொண்டு யெருஷலேமுக்குப்போய், எப்ராயீமின்

(௫) எண்.௧.௩. (௮) அதி.௨௰.௬. (௯) நீதி.௰.௨௨. (௰௧) ௨.இரா.௰௪.௭. (௰௪) அதி.௨௮.௨௨. யாத்.௨௰.௩,௫. (௰௫) சங்.௯௬.௫. வச.௰௧. (௰௬) ௧.சாமு.௨.௨௫. (௨௰) ௧.இரா.௰௨.௰௫.

வாசல்தொடங்கிக் கோடிவாசல்வரைக்கும் யெ
ரூஷலேமின்மதிலைநானூறுமுழநீளமளவுக்கு இ
உச டித்து,—ஒபெத் ஏதோமோடே தேவனுடைய
ஆலயத்திலும், அரமனையின் பொக்கிஷங்களிலு
ம் அகப்பட்ட சகல பொன் வெள்ளிகளையும், ச
கலபாத்திரங்களையும், பிணையாளிகளையும்பற்றிக்
கொண்டு ஷமாரியாவுக்குத்திரும்பினன்.
உரு இஸரவேலரின் இராசாவாகியயோவாகாசின்
புத்திரனன யேவாஷ் மரணமடைந்தபின்பு, யூ
தாதேசத்து இராசாவும் யோவாஷின் புத்திரனு
மாகிய அமத்சீயா பதினைந்துவருஷஞ் சீவித்தி
உசு ருந்தான்.—அமத்சீயாவின் ஆதியந்தமான மற்றக்
கிரியைகள் யூதா இஸரவேல் இராசாக்களின் ச
ரித்திர புத்தகத்திலல்லவா எழுதியிருக்கின்றன.
உஎ அமத்சீயா யெகோவாவைப்பின்பற்றுமல்
திரும்பினபின்பு, அவர்கள், யெரூஷலேமில் அ
வனுக்கு விரோதமாய்த் துராலோசனை செய்த
பொழுது, அவன் லாகீஸுக்கு ஓடிப்போனன்:
அவர்கள் லாகீஸுக்கு அவனைத்தொடர்ந்துபோய்
உஅ அவனைக் கொலைசெய்து,—குதிரைகளின்மேல்
கொண்டுவந்தார்கள்: அவனை அவன் முன்னேரு
டன் யூதாவின் இராசதானியில் அடக்கம்பண்
ணினர்கள்.

## உசு. அதிகாரம்.

க. சகரியா இருக்கையில் ஊசியாநன்றுய் இராச
ரிக்கஞ் செய்தல்: யசு. ஆசாரிய கிரியைசெய்
யத்துணிந்ததினல் குஷ்டரோகியாதல்: உஉ.
அவன் மரித்தல்.

அப்பொழுது யூதா சனங்களெல்லாரும் பதினு
றுபிராயமுள்ள ஊசியாவை அழைத்து, அவன்
பிதாவாகிய அமத்சீயாவுக்குப்பின் அவனை இரா
உ சாவாக ஏற்படுத்தினர்கள்.—இராசாதன் முன்
னேருடன்மகாநித்திரையடைந்தபின்பு, இவன்
ஏலோத்தைக்கட்டித்திரும்பவும் யூதாவுக்கு அதை
௩ அதீனமாக்கிக்கொண்டான்.—ஊசியா அரசாளத்
தொடங்கினபொழுது அவனுக்குப்பதினறுவய
து, அவன் யெரூஷலேமில் ஐம்பத்திரண்டுவரு
ஷம்அரசாண்டான். யெரூஷலேம் நகரத்தாளா
கிய அவன் மாதாவின்பெயர் எக்கோலியாள்.—
ச அவன் தன்பிதாவாகிய அமத்சீயாசெய்த யாவற்
றின்படிக்கும் யெகோவாவின்பார்வைக்குச்
ரு செவ்வையானதைச்செய்தான்.—தேவனுடை
யதரிசனங்களில் புத்திமானுகிய சகரியாவின்கா
லத்தில், அவன் தேவனைத்தேடினன்: அவன்
யெகோவாவைத்தேடினகாலம்வரைக்கும்தே
சு வனல் அனுகூலம்பெற்றுன்.—அவன் புறப்பட்
டுப்போய்ப்பெலிஸ்தியரை எதிர்த்துயுத்தஞ்செய்
து, காத்தின்மதிலையும், யப்னேயின் மதிலையும்,
அஷ்தோத்தின் மதிலையும் இடித்து, அஷ்தோத்
தின் எல்லையிலும் பெலிஸ்தியரின் எல்லையிலும்
எ நகரங்களையுண்டாக்கினன்.—பெலிஸ்தியரையு
ம், கூர் பாகாலில்வசித்த அரபியரையும், மெயூ
னியரையும் மேற்கொள்ளும்படி தேவன் அவ
னுக்குத்துணைநின்றர்.—அம்மோனியர் ஊசியா அ
வுக்குக்காணிக்கைகளைக்கொண்டுவந்தார்கள்: அ
வன் மிகவும் பலவானயிருந்ததினல், அவன் பெ
யர் எகிப்தின் பிரவேசம்வரைக்கும் பரந்தது.—
மேலும் ஊசியா யெரூஷலேமிலுள்ள கோடிவா ௯
சலிலும், தாழ்ந்தபூமியின் வாசலிலும், மதிலின்
கோடியிலும் கோபுரங்களைக்கட்டி, அவைகளைத்
திடப்படுத்தினன்.—அவனுக்குத்தாழ்ந்தபூமிகளி ய
லுஞ்சமபூமிகளிலும் வெகு மிருகசீவன்கள் இ
ருந்தன: அவன் வேளாண்மையில் பிரியம்வைத்
தபடியினல் மலைகளிலுங் கர்மேலிலும் அவனுக்
குப்பயிர்ச்செய்கைக்காரருந் திராட்சத்தோட்ட
க்காரருமிருந்தார்கள்: ஆதலால் அவன்வனதில்
கோபுரங்களையுண்டாக்கி, வெகு கிணறுகளைத்
தோண்டினன்.—மேலும் இராசாவின் சேனுப யக
திகளிலொருவனுகிய அனனியவின் அனுமதிப்
படி, இலேககனுகிய யெயீயேலினலும் அதிகா
ரியாகிய மாசெயாவினலுங்குறிக்கப்பட்டதொ
கைப்பிரகாரம், தளங்களாக யுத்தத்துக்குப்புறப்
படும் யுத்தவீரசேனை ஊசியாவுக்கிருந்தது.—
பராக்கிரம வீரராகிய பிதாவமிசபிரதானிகளின் யஉ
முழுத்தொகை இரண்டாயிரத்தறுநூறு.—பராக் ய௩
கிரம வீரராகியும், சத்துருவுக்குவிரோதமாகியும்,
இராசாவுக்குத்துணைசெய்யும்படி அவர்கள்வசத்
திலுள்ள சேனைகள் மூன்றுலட்சத்து ஏழாயிரத்
தைஞ்ஞூறுபேர்.—ஊசியா, சகலசேனையினிமித் யச
தமும் பரிசைகளையும், ஈட்டிகளையும், தலைக்காப்
புக்களையும், சீராக்களையும், வில்லுகளையும், கல்
லெறிகிறதற்குக் கவண்களையும் ஆயத்தப்படுத்தி
னன்.—கோபுரத்தின்மேலும் மதிலின்மேலும்நின் யரு
று அம்புகளையும் பெரியகற்களையும் பிரயோகிக்
கிறதற்கு நிபுணர் கற்பித்த இயந்திரங்களை யெரூ
ஷலேமில் ஆயத்தப்படுத்தினன். இப்படி ஆச்ச
ரியப்படத்தக்கதாய்த்துணைபெற்றுப்பெரியவனு
னதினல், அவன்பெயர் வெகுதூரம் பரம்பிற்று.
அவன் யெகோவாவின் ஆலயத்திலே தூ யசு
ப வேதிகையின்மேல் தூபங்காட்டப்போகை
யில், தன் தேவனுகிய யெகோவாவின் கட்
டளையைமீறி, இப்படி அவன் பலவானனபொ
ழுது நாசமடைவதற்கேதுவாய் அவன் மனம் க
ருவமடைந்தது.—ஆசாரியனுகிய அசரியா, யெ யஎ
கோவாவின் ஆசாரியர்களாகிய பராக்கிரம
வீரர் எண்பதுபேருடன் அவனுக்குப்பின்னுகப்
பிரவேசித்தான்.—அவர்கள், ஊசியா இராசாவுக் யஅ
கெதிர்த்துநின்று அவனைநோக்கி, ஊசியாவே,
யெகோவாவுக்குத்தூபங்காட்ட உமக்கு அ
திகாரமில்லை, நீர் கட்டளையைமீறினீர்; ஆத
லால் பரிசுத்த ஸ்தானத்துக்கு வெளியே போய்
விடும்; இதினலே தேவனுகிய யெகோவா
வினல் உமக்கு மேன்மையுண்டாகாதென்றர்
கள்.—அப்பொழுது ஊசியா கோபங்கொண்டு, ய௯

(உசு. அதி. ரு.) அதி.உச.உ. ஆதி.சக.யரு. தானி.க.யஎ. (சு) ஏசா.யச.உக. (எ) அதி.உக.யசு. (அ) உ.சாமு.அ.
உ. (௯) உ.இரா.யச.ய௯. நிகி.௩.ய௩,யக,௩உ. சக.யச.ய. (யசு) உபா.௩உ.யரு. உபா.அ.யச. உ.இரா.யக.யஉ,ய௩.
(யஎ) க.நாளா.சு.ய. (யஅ) எண்.யசு.சய. யாத்.௩ய.எ,அ. (ய௯) எண்.யஉ.ய. உ.இரா.ரு.உஎ.

தூபங்காட்டுவதற்குத் தன்கையில் ஒரு கலசத்
தைப்பிடித்திருந்தான்: அவன் ஆசாரியரோடுகோ
பங்கொண்டிருக்க, ஆசாரியர்களுடைய சமுகத்
தில் யெகோவாவின் ஆலயத்திலே தூபவே
திகையினின்று புறப்பட்ட குஷ்டரோகம் அ
௨௰ வன்நெற்றியிலே தோன்றிற்று.—பிரதான ஆசாரி
யனாகிய அசரியாவும் மறற் ஆசாரியரும் பார்த்த
பொழுது, அவன் நெற்றியிலே குஷ்டரோகமி
ருக்கக்கண்டு, அங்கிருந்து அவனை வெளியே
அகற்றிவிட்டார்கள்: யெகோவா அவனை
அடித்ததினால், தானேவிரைந்துவெளியேபோய்
௨௧ விட்டான்.—ஊசியா இராசா தன் மரணகாலப
ரியந்தம் குஷ்டரோகியாயிருந்தான், குஷ்டரோ
கியாயிருந்ததினால் அவன் யெகோவாவினா
லயத்தினின்று தள்ளுண்டவனாகி, தனித்த ஒரு
வீட்டில் வசித்தான்: அவன் புத்திரனாகிய யோ
தாம் இராசகுடும்பத்துக்கு அதிகாரியாகித் தேசத்
தின் சனங்களை நியாயம் விசாரித்தான்.
௨௨ ஊசியாவின் ஆதியந்தமான மற்றக்கிரியைக
ளை ஆமோத்சின்புத்திரனாகிய ஏசாயா தீர்க்கதரிசி
௨௩ எழுதினான்.—ஊசியா தன்முன்னோருடன் மகா
நித்திரையடைந்தபொழுது, சனங்கள் அவனைக்
குஷ்டரோகியென்றுசொல்லி, இராசாக்களின்
மயானஸ்தான நிலத்தில் அவனுடைய முன்னோ
ருடன் அவனை அடக்கம்பண்ணினார்கள்: அவ
னுக்குப்பின், அவன் புத்திரனாகிய யோதாம் இ
ராசாவானான்.

## ௨௭. அதிகாரம்.

௧. யோதாம் நன்றாய் அரசாளல்: ௫. அம்மோனி
யரைச் செயித்தல்: ௭. அவன் ஆளுகையின் கா
லத்தையும் அவன்மரணத்தையுங்குறித்தல்.

யோதாம் அரசாளத் தொடங்கினபொழுது அ
வனுக்கு இருபத்தைந்து வயது, அவன் யெரூஷ
லேமில் பதினாறுவருஷம் அரசாண்டான். சா
தோக்கின் புத்திரியாகிய அவன் மாதாவின் பெ
௨ யர் எருசாள்.—அவன் தன் பிதாவாகிய ஊசியா
செய்தயாவற்றின் படிக்கும் யெகோவாவின்
பார்வைக்குச்செவ்வையானதைச்செய்தான்: அ
வன் யெகோவாவின் ஆலயத்தில் பிரவேசிக்
கவில்லை. சனங்கள் அக்காலத்திலும் துராசார
௩ மாய்நடந்துவந்தார்கள்.—அவன் யெகோவா
வின் ஆலயத்தின் உயர்ந்தவாசலையுண்டாக்கின
துமன்றி, ஓபேலின்மதிலின்மேல்வெகுகிரியைக
௪ ளையுஞ்செய்தான்.—மேலும் அவன் யூதாவின்பரு
வதங்களிலே நகரங்களையும், வனங்களிலேகோ
ட்டைகளையுங்கோபுரங்களையுங்கட்டினான்.
௫ அவன் அம்மோனியரின் இராசாவை எதிர்த்
துயுத்தஞ்செய்து அவர்களைச்செயித்தான். அதி
னால் அம்மோன்வமிசத்தார் அந்த வருஷத்தில்
நூறுகிக்கேர் வெள்ளியையும் பதினாயிரம் கோர்
கோதுமையையும், பதினாயிரம் கோர் வாற்கோ
துமையையும் அவனுக்குக்கொடுத்தார்கள். இர
ண்டாம்மூன்றும் வருஷங்களிலும் அம்மோன்
சந்ததியார் அப்படியே அவனுக்குக்கொடுத்தார்
கள்.—யோதாம் தன் தேவனாகிய யெகோ ௬
வாவின்முன்பாகத் தன்நெறிகளைச் சீர்ப்படுத்தி
னபடியினால் பலவானானான்.
யோதாமின் மற்றக்கிரியைகளும், அவன்சக ௭
லயுத்தங்களும், அவன்நடைகளும் இஸரவேல்
யூதாவென்னும் இவர்களுடையஇராசாக்களின்
சரித்திர புத்தகத்தில் எழுதியிருக்கின்றன.—அ ௮
வன்அரசாளத்தொடங்கினபொழுது அவனுக்கு
இருபத்தைந்துவயது, அவன் பதினாறுவருஷம்
யெரூஷலேமில் இராச்சியபரிபாலனம்பண்ணி
னான்.
யோதாம் தன்முன்னோருடன் மகா நித்திரை ௯
யடைந்தான், அவனைத்தாவீதின்நகரத்தில் அடக்
கம்பண்ணினார்கள்: அவனுக்குப்பின் அவன்புத்
திரனாகிய ஆகாஸ் இராசாவானான்.

## ௨௮. அதிகாரம்.

௧. ஆகாஸ் தீமையாய் இராசரிக்கஞ் செய்ததினி
மித்தம் ஸீரியரால் தண்டிக்கப்படல்: ௬. இஸ
ரவேல்சனங்களால் தண்டிக்கப்படல். சிறை
யிலகப்பட்டவர்கள் விடுதலைபெறல்: ௰௬. அ
ஸீரியசனங்களால்வஞ்சிக்கப்படல்: ௨௨. தே
வ பூசை முதலிய மகா பாவங்களைச் செய்தல்:
௨௬. அவன்மரணமடைதல்.

ஆகாஸ் அரசாளத்தொடங்கினபொழுது அவ ௧
னுக்குஇருபதுவயது, அவன் யெரூஷலேமிலே
பதினாறுவருஷம் அரசாண்டான்.—அவன் தன் ௨
பிதாவாகியதாவீதைப்போல யெகோவாவின்
பார்வைக்குச்செவ்வையானதைச்செய்யாமல்,—
இஸரவேலருடைய இராசாக்களின் நெறிகளி
லேநடந்து, பாகால்களுக்கு வார்ப்புவிக்கிரகங்க
ளைச்செய்தான்.—அவன், இன்னோமின் புத்திர ௩
னுடைய தாழ்ந்த பூமியிலேதூபங்காட்டி, இஸர
வேல்சந்ததியார்முன்னின்று யெகோவா அ
கற்றிவிட்ட புறச்சாதியாரின் அருவருப்புக்க
ளின்படி, தன் பிள்ளைகளை அக்கினியிலே தகித்
தான்.—அவன் உயர்ந்தஸ்தானங்களிலும், மலை ௪
களின்மேலும், பச்சையான ஒவ்வொருவிருட்
சத்தின்கீழும்பலியிட்டுத்தூபங்காட்டினான். ஆ
தலால் அவன் தேவனாகிய யெகோவா, அ
வனை ஸீரியஇராசாவின்கையில் ஒப்பித்தார்.—
அவர்கள் அவனைமுறியஅடித்து, அநேகசனங்க ௫
ளையுஞ் சிறைபிடித்துத் தமஸ்குவுக்குக்கொண்டு
போனார்கள். இஸரவேலரின் இராசாவின்கை
யிலும் ஒப்பிக்கப்பட்டான், இவன் அவனைமகா
சங்காரமாகஅடித்தான்.
சனங்கள், தங்கள்பிதாக்களின் தேவனாகிய ௬
யெகோவாவைவிட்டுவிலகினபடியினாலே,
ரெமலீயாவின் புத்திரனாகிய பெக்கா, யூதாவில்

(௨௰) எஸ்த.௬.௰௨. (௨௧) ௨.இரா.௰௫.௫. லேவி.௰௩.௪௬. எண்.௫.௨.(௨௨)ஏசா.௧.௧.(௨௩) ௨.இரா.௰௫.௭. ஏசா.௬.௧.—(௨௭. அதி. ௨.) ௨.இரா.௰௫.௩௫. (௩) நிகி.௩.௨௬. (௯) ௨.இரா.௰௫.௩௮.—(௨௮. அதி. ௧.) ௨.இரா.௰௬.௨. (௨) யாத்.௩௪.௰௭. லேவி.௰௯.௪. நியா.௨.௰௧. (௩) ௨.இரா.௨௩.௰, லேவி.௰௮.௨௧. ௨.இரா.௰௬.௩. (௫) ஏசா.௭.௧. ௨.இரா.௰௬.௫,௬. (௬) ௨.இரா.௰௫.௨௭.

ஒரேதினத்தில் ஒருலட்சத்து இருபதினாயிரம்பே
ரைக்கொன்றுபோட்டான்; இவர்கள் யாவரும்
௭ மகாவீரர்.—எப்ராயீமின் மகாவீரனாகிய சிக்ரி,
இராசாவின் குமாரனாகியமாசெயாவையும்,வீட்
டதிகாரியாகியஅசரீக்காமையும்,இராசாவுக்குஇ
ரண்டாவதான எல்க்கானாவையுங்கொன்றான்.—
௮ இஸரவேல்சந்ததியார் தங்கள் சந்ததியில் ஸ்திரி
புத்திரர் புத்திரிகள் இரண்டுலட்சம் பேரைச்சி
றைபிடித்துக்கொண்டுபோனது மன்றி, அவர்க
ளுடைய அநேக திரவியங்களையுங் கொள்ளை
யிட்டார்கள்: இவர்கள் அந்தப்பொருளை ஷமா
௯ ரியாவுக்குக்கொண்டுவந்தார்கள்.—அங்கே யெ
கோவாவின் தீர்க்கதரிசியாகிய ஒதேத்தென்னு
மொருவன், ஷமாரியாவுக்குவந்தசேனைகளுக்கு
முன்புறப்பட்டு,அவர்களைநோக்கி, கேளுங்கள்,
உங்கள் பிதாக்களின் தேவனாகிய யெகோ
வா யூதேயரின்மேல் கோபங்கொண்டபடியினா
ல்,அவர் அவர்களை உங்கள்கையில் ஒப்பித்தார்;
நீங்கள் அவர்களை வானத்தையளாவும் கோபாக்
௰ கினியினால் சங்கரித்தீர்கள.—இன்னும் யூதா
வின்வமிசத்தாரையும், யெருஷலேமியரையும்,
அடிமைக்காரராகவும் அடிமைக்காரிகளாகவும்
வைக்கநினைக்கிறீர்கள்: நல்லது, நீங்கள் உங்கள்
தேவனாகிய யெகோவாவுக்கு விரோதமாகச்
செய்தபாவங்கள் உங்களிடத்திலேயல்லவா இ
௰௧ ருக்கின்றன.-யெகோவாவின் உக்கிரகோபம்
உங்கள்மேல்வந்தது; ஆதலால் இப்பொழுது எ
னக்குச்செவிகொடுங்கள், உங்கள்சகோதரரில்நீ
ங்கள் அடிமைப்படுத்தியஅடிமைகளைப்போகவி
௰௨ டுங்கள் என்றான்.—அதினால் எப்ராயீம் வமிசத்
தில்யோகானானின்புத்திரனாகிய அசரியாவும்,மி
ஷில்லேமோத்தின்புத்திரனாகிய பெரிகாயாவும்,
ஷல்லுமின்புத்திரனாகியயெகிஸ்கயாவும், அத்லா
யின்புத்திரனாகிய அமாசாவுமாகியசில பிரதானி
கள் யுத்தத்தைவிட்டுத்திரும்பிவந்தசனங்களுக்கு
௰௩ முன்பாகநின்று,—அவர்களைநோக்கி, நீங்கள்அ
ந்தஅடிமைகளைஇவ்விடத்தில் கொண்டுவரவிட
மாட்டோம், யெகோவாவுக்குவிரோதமாய்க்
குற்றஞ்செய்தோம்; நீங்கள், நம்முடையபாவங்
களையும் குற்றத்தையும் அதிகரிப்பிக்கப்பார்க்கி
றீர்கள்: நம்முடையகுற்றம் பெரிதாயிருக்கின்ற
து, இஸரவேலருக்குவிரோதமாக உக்கிரகோபம்
௰௪ மூளுகின்றதே என்றார்கள்.—அதினால் ஆயுததா
ரிகள், அந்த அடிமைகளையும் கொள்ளையிட்ட
பொருளையும் அதிபதிகளுக்கும் சகலசபையா
௰௫ ருக்கும்முன்பாக விட்டுவிட்டார்கள்.—பின்பு
பெயர்குறிக்கப்பட்ட சனங்கள் எழுந்து, அடி
மைகளை அழைப்பித்து, அவர்களில் நிருவாணிக
ளாயிருந்த யாவருக்கும் கொள்ளையிட்டவஸ்தி
ரங்களை உடுப்பித்து, பாதரட்சைகளைக்கொடுத்
து,போசனபானம்பண்ணுவித்து, அவர்களுக்கு
எண்ணெய்வார்த்து, அவர்களில் பெலவீனராயி
ருந்தவர்களைக் கழுதைகளின்மேலேற்றி, அவர்
கள் சகோதரர் சமீபத்தில் பேரீந்து நகரமாகிய
யெரீகோவுக்குக் கொண்டுவந்துவிட்டு ஷமாரி
யாவுக்குத்திரும்பினார்கள்.

இஸரவேலரின் இராசாவாகிய ஆகாஸ், யூதா ௰௯
வை நிருவாணம்பண்ணி யெகோவாவுக்கு
விரோதமாய் மிகவுங் குற்றஞ்செய்தபடியினால்,
யெகோவா அவனிமித்தம் யூதாவைச் சிறு
மைப்படுத்தினார்.—ஆதலால் திரும்பவும் எதோ ௰௭
மியர் யூதாதேசத்தை அடித்துச் சிறைபிடித்தது
மன்றி,—பெலிஸ்தியரும், தாழ்ந்தபூமியிலும் யூ ௰௮
தாவின் தென்னாட்டிலுமுள்ள நகரங்கள்மேல்
பாய்ந்து, பேத்ஷிமெஷ், அயாலோன், கிதே
ரோத், ஷோகோ, என்பவைகளை அவ்வவற்றின்
கிராமங்களோடும், திம்னாவை அதின் கிராமங்க
ளோடும், கிம்சோவை அதின் கிராமங்களோடும்
பிடித்தார்கள்: அங்கே அவர்கள் வசித்தார்கள்.—
ஆதலால் அந்தச்சமயத்தில், ஆகாஸ் இராசா, த ௰௬
னக்குத் துணைசெய்யவேண்டுமென்று அஷூரிய
இராசாக்களுக்குச் சொல்லியனுப்பினான்.—அ ௨௰
ஷூரிய இராசாவாகிய தில்காத்பில்னேசர் அவ
னிடத்தில்வந்து அவனைக்கிலேசப்படுத்தினதே
யன்றி அவனுக்குச்சகாயஞ்செய்யவில்லை.—அ ௨௧
தினால் ஆகாஸ், யெகோவாவின் ஆலயத்தி
லும், அரமனையிலும், அதிபதிகளிடத்திலும் திர
வியமெடுத்து, அஷூரிய இராசாவுக்குக்கொடுத்
தான்: ஆனாலும் இவன் அவனுக்குத்துணைசெய்
யவில்லை.

அஷூரிய இராசாக்களின்தேவர்கள் அவர்களு ௨௨
க்குத்துணைசெய்கிறார்கள், அப்படியே அவர்கள்
எனக்குத்துணைசெய்யும்படி அவர்களுக்குப்பலி
செலுத்துவேனென்றுசொல்லி, அவன் தன்னை
யடித்த தமஸ்குஊரின் தேவர்களுக்குப்பலியிட்
டான். அவர்களோ அவனும் இஸரவேலரனைவ
ரும் நாசமடைவதற்கு எதுவானார்கள்.—இப்படி ௨௩
இந்த ஆகாஸ் இராசா, தனக்கு ஆபத்துநேரிட்ட
பொழுதுயெகோவாவுக்குவிரோதமாய்அதிக
குற்றஞ்செய்தான்.-பின்பு ஆகாஸ்,தேவனுடை ௨௪
ய ஆலயத்தின்பாத்திரங்களைச்சேர்த்து, தேவனு
டைய ஆலயத்திலுள்ளபாத்திரங்களைத் துண்டது
ண்டாக்கி, யெகோவாவின் ஆலயத்தின்கதவு
களையடைத்து, யெருஷலேமில் ஒவ்வொருகோ
டியிலும் தனக்காக வேதிகைகளையுண்டாக்கி,—
அந்நியதேவர்களுக்குத் தூபங்காட்டும்படி யூதா ௨௫
தேசத்திலுள்ள அந்தந்த நகரங்களில் உயர்ந்தஸ்
தானங்களைச்செய்து, தன் முன்னோரின் தேவ
னாகிய யெகோவாவைக் கோபப்படுத்தினான்.

அவனுடைய ஆதியந்தமான மற்றக்கிரியைக ௨௬
ளும் அவன் நடைகள்யாவும் யூதா இஸரவேல்
இராசாக்களின் புத்தகத்தில் எழுதியிருக்கின்ற

(௮) ஆதி.௰௧.௪. (௯) சங்.௬௯.௨௬. ஏசா.௰.௫. எசேக்.௨௫.௰௨,௰௫. ஒப.௰. சக.௧.௰௫. எஸ்ரு.௯.௬. வெளி.௰௮.௫. (௰) லேவி.௨௫.௩௯. (௰௧) யாக்.௨.௰௩. (௰௫) வச.௰௨. ௨.இரா.௬.௨௨. நீதி.௨௫.௨௧,௨௨. லூக்.௬.௨௭. ரோ.௰௨.௨௰. ௨.பா.௩௪.௩. நியா.௧.௰௬. (௰௬) அதி.௨௧.௨. யாத்.௩௨.௨௫. (௰௮) எசேக்.௰௬.௨௭,௫௭. (௰௯) ௨.இரா.௰௬.௭. (௨௰) ௨.இரா.௰௫.௨௯. (௨௨) அதி.௨௫.௰௪. எரே.௪௪.௰௭,௰௮. (௨௪) அதி.௨௯.௩,௭. (௨௬) ௨.இரா.௰௬.௰௯,௨௰.

௨௭ ன.—ஆகாஸ்தன்முன்னோருடன் மகா நித்திரை
அடைந்தான், அவனை யெருஷலேம் நகரத்தில்
அடக்கம்பண்ணினார்கள்: இஸரவேலருடைய
இராசாக்களின் பிரேதவறையில் அவனைச்சேர்க்
கவில்லை: அவனுக்குப்பின் அவன் புத்திரனாகிய
இஸ்கியா இராசாவானான்.

## ௨௯. அதிகாரம்.

௧. இஸ்கியா நன்றாய் இராசரிக்கஞ்செய்தல்: ௩.
யெகோவாவின் ஆலயத்தைச்சுத்தப்படுத்தக்
கட்டளையிடல்: ௰௨. அவர்கள்அதைச்செய்தவி
தம்தெரிவித்தல்: ௨௰. இஸ்கியா பலியிடல்.

இஸ்கியா இருபத்தைந்து வயதில் அரசாளத்
தொடங்கி, யெருஷலேமில் இருபத்தொன்பது
வருஷம் அரசாண்டான். சகரியாவின் புத்திரி
யாகிய அவன் மாதாவின் பெயர் அபீயாள்.—
௨ அவன் தன் பிதாவாகிய தாவீது செய்த எல்லா
வற்றின்படிக்கும் யெகோவாவின்பார்வைக்
குச்செவ்வையானதைச்செய்தான்.
௩ அவன் தான் அரசாண்ட முதலாம்வருஷத்
தில் முதல்மாதத்திலே யெகோவாவின் ஆல
யத்தின் கதவுகளைத்திறந்து, அவைகளைப் புதுப்
௪ பித்தான்.—ஆசாரியரையும் லேவியரையும் பிர
வேசிக்கப்பண்ணி, கீழ்த்திசையிலுள்ள பிராகா
௫ ரத்தில் அவர்களைக் கூடிவரச்செய்து,—அவர்க
ளைநோக்கி, லேவியரேகேளுங்கள், நீங்கள் உங்
களைப்பரிசுத்தப்படுத்துங்கள், உங்கள் முன்னோ
ரின் தேவனாகிய யெகோவாவின் ஆலயத்
தைப் பரிசுத்தப்படுத்துங்கள், பரிசுத்தஸ்தானத்
தினின்று அழுக்கு முழுவதையும் நீக்கிவிடுங்
௬ கள்.—நம்முடைய முன்னோர்கள் குற்றஞ்செய்
து, நம்முடைய தேவனாகிய யெகோவா
வின் பார்வைக்குத்தீங்குசெய்து, அவரைவிட்
டு நீங்கி, யெகோவாவின்வாசஸ்தலத்திற்குப்
பராமுகம்பண்ணி அவருக்குப்புறங்காட்டினார்
௭ கள்.—அன்றியும் அவர்கள் பரிசுத்தஸ்தானத்தில்
இஸரவேலரின தேவனுக்குத்தகனபலியிடாம
லும், தூபங்காட்டாமலும், விளக்குகளை அணைத்
து மண்டபத்தின் கதவுகளை அடைத்துப்போட்
௮ டார்கள்.—இதினிமித்தம் யூதாவின்மேலும் யெ
ருஷலேமின்மேலும் யெகோவாவின் கோ
பம் வர, நீங்கள் சுய கண்ணினால் பார்க்கிறபடி
அவர்கள்,கிலேசத்தையும்,திகைப்பையும்,வெட்
கத்தையும் அனுபவிக்கும்படி அவர்ஒப்பித்தார்.-
௯ பாருங்கள், அதினால் நம்முடைய பிதாக்கள்கட்
கத்தினாலே விழுந்தார்கள்,நம்முடைய புத்திரர்,
புத்திரிகள், ஸ்திரிகள் அடிமைத்தனத்தில் இருக்
௰ கிறார்கள்.—ஆனபடியினால், இஸரவேலரின் தே
வனாகிய யெகோவாவின் உக்கிர கோபம்
நம்மைவிட்டு நீங்கும்படி, அவரோடும் உடன்
௰௧ படிக்கைபண்ண நான் விரும்புகிறேன்.—யெ
கோவா, தமது சமுகத்தினின்று, தம்மைச்சே
வித்து,தமக்குஆராதனைசெய்து தூபங்காட்டும்ப
டி உங்களைத்தெரிந்துகொண்டார்: ஆதலால்என்
மக்களே, அசதியாயிருக்கவேண்டாமென்றான்.
அப்பொழுது கோகாத்தியவமிசத்திலுள்ள அ ௰௨
மாசாயின் புத்திரனாகிய மாகாத், அசரியாவின்
புத்திரனாகிய யோவேல், மிராரியின் வமிசத்தி
லுள்ள அப்தியின் புத்திரனாகிய கீஷ், யெகல்
லேலின் புத்திரனாகிய அசரியா, கெர்ஷோனிய
ரிலுள்ள சிம்மாவின்புத்திரனாகிய யோவா, யோ
வாசின் புத்திரனாகிய ஏதேன்.—இலீத்சாபானின் ௰௩
வமிசத்திலுள்ள ஷிம்ரீ, யெயீயேல்; ஆசாப்பின்
வமிசத்திலுள்ள சகரியா, மத்தனியா:—ஏமானின் ௰௪
வமிசத்திலுள்ள யிகியேல், ஷிமியி: யெதூது
னின்வமிசத்திலுள்ள ஷிமாயியா, ஊசியேலென்
னும் லேவியர்கள் எழுந்து,—தங்கள் சகோதர ௰௫
ரைக் கூட்டிக்கொண்டு, தங்களைப்பரிசுத்தப்ப
டுத்தி, யெகோவாவின் வாக்கின்படி யெ
கோவாவின் ஆலயத்தைச் சுத்திசெய்யும்பொ
ருட்டு இராசகட்டளைப்பிரகாரம் வந்தார்கள்.-ஆ ௰௬
சாரியர்கள் யெகோவாவின் ஆலயத்தைச் சுத்
திசெய்யும்படி அதற்குள்ளேபோய், யெகோ
வாவின் ஆலயத்திலிருந்த அழுக்கையெல்லாம்
வெளியே யெகோவாவின் ஆலயத்தின் பிரா
காரத்தில் கொண்டுவந்தார்கள். பின்பு லேவியர்
அதை எடுத்துக் கீதரோன் ஆற்றுக்குக்கொண்டு
போனார்கள்.—அவர்கள் முதல்மாதத்திலே முதல் ௰௭
தினத்தில் பரிசுத்தப்படுத்தும்படிதொடங்கி,அம்
மாதத்தின் எட்டாந்தினத்தில் யெகோவாவி
ன்மண்டபத்துக்கு வந்தார்கள்: இவ்விதமாய் அ
வர்கள் எட்டுநாளைக்குள்ளே யெகோவாவின்
ஆலயத்தைப்பரிசுத்தப்படுத்தினார்கள்; முதல்மா
தம் பதினாறாந்தினத்தில் முடித்தார்கள்.—பின்பு ௰௮
அவர்கள் இஸ்கியாவிடத்தில்போய், நாங்கள்
யெகோவாவின் ஆலயமுழுவதையும், தகன
வேதிகையையும், அதின்சகலபாத்திரங்களையும்,
சமுகத்தப்பபீடத்தையும்,அதின் சகல பாத்திரங்
களையுஞ்சுத்தப்படுத்தினோம்.—அன்றியும் ஆகாஸ் ௰௯
இராசா தான் அரசாண்டகாலத்தில் கட்டளைமீ
றி அசுசிப்படுத்திய சகலபாத்திரங்களையும் நாங்
கள் ஆயத்தம்பண்ணிப் பரிசுத்தப்படுத்தினோம்;
அவைகள் யெகோவாவின்வேதிகைக்குமுன்
இருக்கின்றனவென்றார்கள்.
பின்பு இஸ்கியா இராசா அதிகாலையிலெழுந் ௨௰
து, நகரத்தின் அதிபதிகளைக்கூடிவரச்செய்து,
யெகோவாவின் ஆலயத்துக்குப்போனான்.—
அவர்கள், இராச்சியம், பரிசுத்த ஸ்தானம், யூதா ௨௧
தேசம் என்னும்இவைகளினிமித்தம் பிராயச்சித்
தப்பலி செய்யும்பொருட்டு, எழுகாளைகளையும்,
எழு ஆட்டுக்கடாக்களையும், எழு ஆட்டுக்குட்டி
களையும், எழு வெள்ளாட்டுக் கடாக்களையும்
கொண்டுவர, அவன், யெகோவாவின் வேதி
கையின்மேல் அவைகளையிடும்படி, ஆரோன்வ
மிசத்தாராகிய ஆசாரியர்களுக்குக் கட்டளையிட்

(௨௯.அதி.௧.)௨.இரா.௰௮.௧. அதி.௨௬.௫. (௩) அதி.௨௮.௨௪. வச.௭.(௫)௧.நாளா.௰௫.௰௨. அதி.௩௫.௬.(௬)எரே.
௨.௨௭. எசேக்.௮.௰௬.(௭)அதி.௨௮.௨௪.(௮)அதி.௨௪.௰௮. உபா.௨௮.௨௫. ௧.இரா.௯.௮. எரே.௰௮.௰௬. (௰) அதி.
௰௫.௰௨.(௰௧)எண்.௩.௬.(௰௫)வச.௫. அதி.௩௰.௰௨. ௧.நாளா.௨௩.௨௮.(௰௯) அதி.௨௮.௨௪. (௨௧) லேவி.௪.௩,௰௪.

௨௨ டான்.—ஆதலால் அவர்கள் காளைகளை அடித்த
பொழுது, ஆசாரியர் இரத்தத்தை ஏற்று, வேதி
கையிலே தெளித்தார்கள்: அப்படியே ஆட்டுக்க
டாக்களையும் அடித்தபொழுது அவைகளின் இ
ரத்தத்தை வேதிகையின்மேல் தெளித்தார்கள்:
ஆட்டுக்குட்டிகளையும் அடித்து அவைகளின் இ
ரத்தத்தை வேதிகையின்மேல் தெளித்தார்கள்.—
௨௩ பாவபிராயச்சித்தத்துக்காக இராசாவுக்குஞ் ச
பையாருக்குமுன்பாக வெள்ளாட்டுக் கடாக்க
ளைக்கொண்டுவர, அவர்கள் அவைகளின்மேல்
௨௪ கைவைத்தார்கள்.-இராசா, சகல இஸரவேலர் நி
மித்தமும் தகனபலியும் பாவபிராயச்சித்தமும்
செய்யவேண்டுமென்று கட்டளை யிட்டிருந்
தான்; ஆதலால் ஆசாரியர் அவைகளை அடித்து,
சகல இஸரவேலரினிமித்தமும்பலிசெலுத்தி, அ
வைகளின் இரத்தத்தினாலே வேதிகையின்மேல்
௨௫ பிராயச்சித்தஞ்செய்தார்கள்.-அவன்,தாவீதும்,இ
ராசாவின் தரிசியாகிய காத்தும், நாதான்தீர்க்கதரி
சியுமாகிய இவர்களுடைய கட்டளையின்படி,
கைத்தாளங்களையும், தம்புருகளையும், சுரமண்ட
லங்களையும்பிடித்தலேவியரையெகோவாவின்
ஆலயத்தில் ஏற்படுத்தினான்: யெகோவா தமது
தீர்க்கதரிசிகளைக்கொண்டு இப்படிச் செய்யும்ப
௨௬ டிகட்டளையிட்டிருந்தார்.—லேவியர், தாவீது நி
யமித்த வாத்தியங்களையும், ஆசாரியர்கள், எக்
காளங்களையும்வைத்துக்கொண்டு நின்றார்கள்.—
௨௭ பின்பு இஸ்கியா வேதிகையின்மேல் தகனபலி
யிடும்படி கட்டளையிட்டான். தகனபலி ஆரம்
பத்தில், இஸரவேலரின் இராசாவாகிய தாவீது
நியமித்த வாத்தியங்களோடும் எக்காளங்களோ
டும் யெகோவாவின் கீதமும் ஆரம்பித்தது.—
௨௮ தகனபலியின் முடிவுபரியந்தம் சபையார் யாவ
ரும் ஆராதித்தார்கள், பாடகர் பாடினார்கள், எக்
௨௯ காளக்காரர் தொனிசெய்தார்கள்.—அவர்கள் ப
லியிட்டு முடித்தபொழுது, இராசாவும் அவன்
சமீபத்திலுள்ளயாவருந் தலைகுனிந்து வணங்கி
௩௰ னார்கள்.—அன்றியும் இஸ்கியா இராசாவும் பிர
புகளும் தாவீதின்வாக்கியங்களையும் தரிசியாகிய
ஆசாப்பின்வாக்கியங்களையும்எடுத்து, யெகோ
வாவைத்துதித்துப்பாடும்படிலேவியருக்குக்கட்
டளையிட்டார்கள். அவர்கள் மனமகிழ்ச்சியோ
டே துதிபாடித்தலைகுனிந்து வணங்கினார்கள்.—
௩௧ அப்பொழுது இஸ்கியா, நீங்கள் யெகோவா
வுக்கென்று உங்களைப் பரிசுத்தப் படுத்தினீர்
கள்; இப்பொழுது சமீபித்துவந்து ஸ்தோத்திரப
லிகளையும் செய்நன்றிப்பலிகளையும் யெகோ
வாவின் ஆலயத்திலே கொண்டுவாருங்களென்
றான். அதினால் சபையார் ஸ்தோத்திரபலிகளை
யும் செய்நன்றிப்பலிகளையும் கொண்டுவந்தது
மன்றி, உதாரகுணசனங்கள் தகனபலிகளையுங்
கொண்டுவந்தார்கள்.—சபையார் கொண்டுவந்த ௩௨
தகனபலிகளின்தொகை எழுபதுகாளைகளும்,நூ
று ஆட்டுக்கடாக்களும், இருநூறு ஆட்டுக்குட்
டிகளும்: இவைகளெல்லாம் யெகோவாவுக்
குத் தகனபலியாயின.—அறுநூறுகாளைகளும்மூ ௩௩
வாயிரம் ஆடுகளும் பரிசுத்தவஸ்துவாக ஏற்படுத்
தப்பட்டன.—ஆசாரியர்களின் தொகை அற் ௩௪
பமானதினால், தகனபலிமிருகங்கள்யாவையுமு
ரிக்கக்கூடாமற்போயிற்று: ஆதலால் கிரியை நி
றைவேறுமளவும்,மற்றஆசாரியர்கள் தங்களைப்ப
ரிசுத்தப்படுத்தும்வரைக்கும், அவர்கள் சகோதர
ராகிய லேவியர் அவர்களுக்குதவிசெய்தார்கள்:
ஆசாரியர்களிலும் லேவியர் தங்களைப்பரிசுத்தப்
படுத்த அதிக மனப்பிரியமாயிருந்தார்கள்.—தக ௩௫
னபலிகளும், ஸ்தோத்திரபலியின்நிணமும், அந்
தந்தத் தகனபலியின் பானபலியும் மிகுதியாயி
ருந்தன. இவ்விதமாய் யெகோவாவின் ஆல
யத்தின் ஆராதனை கிரமப்படுத்தப்பட்டது.-தே ௩௬
வன் சனங்களை ஆயத்தப்படுத்தியிருந்தார், அதி
னால் இஸ்கியாவுஞ் சனங்களனைவருஞ் சந்தோ
ஷப்பட்டார்கள்: காரியஞ்சடிதியில் நிறைவேற்
றம்பெற்றது.

## ௩௰. அதிகாரம்.

௧. இஸ்கியாபஷ்கா உற்சவத்தை ஆசரிக்கநிருபித்
தல்: ௰௩. சனங்கள்விக்கிரகங்களைத்தகர்த்துப்ப
தினாலுநாள்உற்சவத்தை ஆசரித்தல்: ௨௭. ஆசா
ரியரும் லேவியருஞ்சனங்களை ஆசீர்வதித்தல்.

ஆசாரியர்கள் பூரணமாய்த் தங்களைப் பரிசுத் ௧
தப்படுத்திக்கொள்ளாதபடியினாலும், சனங்கள்
யெருஷலேமில்கூடிவராததினாலும், அச்சமயத்
தில் அவர்கள்பஷ்கா உற்சவத்தை ஆசரிக்கக்கூ
டாமற்போயிற்று.—அதினால் அதை இரண்டா ௨
மாதத்தில் ஆசரிக்கும்படி. இராசாவும்,அவன்பிர
புகளும், யெருஷலேமிலுள்ள சகலசபையாரும்
ஆலோசித்தார்கள்.-அந்தக்காரியம் ராசாவுக்குஞ் ௩
சகலசபையாருக்கும் நலமாகத் தோன்றிற்று.—
அவர்கள், எழுதியவிதிப்பிரகாரம் அதைநெடுங் ௪
காலம் ஆசரியாதபடியால், யெருஷலேமில் வந்
துஇஸரவேலரின் தேவனாகிய யெகோவா
வுக்குப் பஷ்கா உற்சவம் ஆசரிக்கவேண்டுமெ
ன்று, பேர்ஷேபாமுதல் தாண்வரைக்குமுள்ள
இஸரவேலரின் தேசமெங்கும் பிரசித்தஞ்செய்
யத்தீர்மானித்தார்கள்.-அதினால்,இஸரவேலரின் ௫
தேவனாகிய யெகோவாவுக்குப்பஷ்காவை
ஆசரிக்கும்பொருட்டு யெருஷலேமிலுள்ள யெ
கோவாவின் ஆலயத்துக்கு வரவேண்டுமென்
று, இஸ்கியா, இஸரவேலரும் யூதேயருமாகியச
கலருக்கும் ஆளனுப்பினதுமன்றி, எப்ராயீமருக்
கும் மனாஷேயருக்கும் நிருபங்களையும் எழுதி
னான்.—இஸரவேல்சந்ததியாரே, ஆபிரகாம், ஈ ௬

(௨௨) லேவி.௮.௰௪. எபி.௯.௨௧. (௨௩) லேவி.௪.௰௫,௨௪. (௨௪) லேவி.௰௪.௨௰. (௨௫) ௧.நாளா.௰௬.௪. ௧.நாளா. ௨௩.௫. ௨.சாமு.௨௪.௰௧. (௨௬) ௧.நாளா.௨௩.௫. ஆமோ.௬.௫. எண்.௰.௮,௰. ௧.நாளா.௰௫.௨௪. (௨௭) அதி.௨௩. ௰௮. (௨௯) அதி.௨௰.௰௮. (௩௧) அதி.௰௩.௯. லேவி.௭.௰௨. (௩௪) அதி.௩௫.௰௧. அதி.௩௰.௩. சங்.௭.௰.(௩௫)லேவி. ௩.௰௬. எண்.௰௫.௫.—(௩௰. அதி. ௧.) யாத்.௰௨.௬,௰௮. அதி.௨௯.௩௪. (௨) எண்.௯.௰,௰௧.(௬)எரே.௪.௧. யோவே. ௨.௰௩. ௨.இரா.௰௫.௰௯,௨௯.

சாக்கு, இஸரவேலென்பவர்களுடைய தேவ
ஞகிய யெகோவாவிடத்தில் திரும்புங்கள்,
அவர் அஸீரிய ராசாக்களின்கைக்குத்தப்பி மீந்
௭ திருக்கிற உங்களிடத்தில் திரும்புவார்.—உங்கள்
பிதாக்களும் சகோதரரும் தங்கள் முன்ேனாரு
டைய தேவஞகிய யெகோவாவின் கட்ட
ளையைமீறிஞர்கள், அதினிமித்தம் அவர் அவர்
களைநாசத்துக்கு ஒப்பித்தார்; இதைநீங்கள் பார்த்
திருக்கிறீர்கள், நீங்கள் அவர்களைப்போல இருக்
௮ கவேண்டாம்.—இப்பொழுது நீங்கள் உங்கள்
முன்னோரைப்போல உங்கள் கழுத்துக்களைக்க
டினப்படுத்தாமல், யெகோவாவுக்கடிமைப்
பட்டு, அவர் சதாகாலமும் பரிசுத்தப்படுத்திய
அவருடைய பரிசுத்த ஸ்தானத்திற்பிரவேசியுங்
கள்: உங்கள் தேவஞகிய யெகோவாவின்
உக்கிரகோபம் உங்களைவிட்டு நீங்கும்படி அ
௯ வரையேசேவியுங்கள்.—உங்கள் தேவஞகிய
யெகோவா காருண்ணியர்,தயாபரர்,நீங்கள்அ
வரிடத்தில்திரும்பிஞல்,அவர்உங்களுக்குப்பரா
முகமாயிருக்கமாட்டார்; ஆதலால் நீங்கள் யெ
கோவாவிடத்தில் திரும்புவீர்களாகில், உங்
கள் சகோதரரும் பிள்ளைகளும் தங்களைச்சிறைப்
படுத்தினவர்களிடத்திற் கடாட்சம்பெற்று, இந்
தத்தேசத்துக்குமீண்டுவருவார்களென்று,இராசா
வும்அவன்பிரபுகளும் எழுதியநிருபங்களை இரா
சகட்டளைப்படி இஸரவேல், யூதாஎங்கும் அஞ்
௰ சற்காரர் கொண்டுபோஞர்கள்.—அஞ்சற்காரர்,
செபுலோன்வரைக்குமுள்ள எப்ராயீம் மனஷே
யென்பவர்களின் தேசத்தைச்சேர்ந்த சகல நக
ரங்களுக்கும்போஞர்கள்: இவர்கள் அவர்களைப்
௰௧ பரியாசம்பண்ணி நிந்தித்தார்கள்.—ஆகிலும் ஆ
ஷேரிலும், மனஷேயிலும், செபுலோனிலுமுள்
ள சிலர் தங்களைத்தாழ்த்தி, யெரூஷலேமுக்கு
௰௨ வந்தார்கள்.—யூதாவிலும், யெகோவாவின்
வாக்குக்கேற்க, இராசாக்கள் பிரபுக்கள் இவர்க
ளின்கட்டளையைநிறைவேற்ற, தேவனுடைய
கை அவர்களுக்கு ஒருமனந்தந்தது.
௰௩ பின்பு இரண்டாமாதத்தில் புளிப்பில்லாத
அப்பத்தின் உற்சவத்தை ஆசரிக்கிறதற்கு யெரூ
ஷலேமில் அநேகசனங்கள் மகாசபையாய்க்கூ
௰௪ டிஞர்கள்.—அவர்கள் எழுந்து, யெரூஷலேமி
லுள்ளவேதிகைகளையும் சகலதூபவேதிகைகளை
யும் அகற்றி கீதரோனாற்றில் எறிந்துவிட்டார்
௰௫ கள்.—பின்பு இரண்டாமாதம் பதினாலாந்தினத்
தில் பஷ்கா உற்சவபலியிட்டார்கள்: அதிஞல்
ஆசாரியர்களும் லேவியரும்வெட்கப்பட்டு,தங்
களைப்பரிசுத்தப்படுத்தி, யெகோவாவின் ஆ
லயத்திலேதகனபலிகளைக்கொண்டுவந்தார்கள்.-
௰௬ அவர்கள் தேவனுடைய தாசஞகிய மோசே
யின் விதிப்பிரமாணத்தின்படி, தங்கள் தங்கள்
முறைமைக்கேற்க, தங்கள் தங்கள் நிலையில்நின்
ரூர்கள்: ஆசாரியர் தாங்கள் லேவியர்கையில்
ஏற்ற இரத்தத்தைத்தெளித்தார்கள்.—சபையின் ௰௭
மத்தியிலேபரிசுத்தப்படுத்தப்படாதவர்கள்அநே
கரானபடியால், அசுத்தமாயிருந்தவனெவனே,
அவன்தன்னை யெகோவாவுக்கென்றுபரிசுத்
தப்படுத்தும்படி,லேவியர் அவர்களுக்காகப்பஷ்
கா உற்சவத்தின்பலிகிரியைக்கு ஏற்படுத்தப்பட்
டார்கள்.—சனங்கள் மத்தியில் எப்ராயீமரும், ௰௮
மனஷேயரும், இஷகாரியரும்,செபுலோனியரு
மாகிய அநேகர் தங்களைப் பரிசுத்தப்படுத்தவில்
லை;இவர்கள்எழுதியவிதிக்குவிரோதமாய்ப்பஷ்
காஉற்சவத்தின் போசனத்தைப்புசித்தார்கள்.—
இஸ்கியா, தன்முன்னோரின் தேவஞகிய யெ ௰௯
கோவாவைத்தேடும்படிதன்இருதயத்தைஆயத்
தப்படுத்தியிருக்கிற ஒவ்வொருவனும் பரிசுத்
தஸ்தானத்தில் சுத்தப்படுத்தப்படாதிருந்தும், அ
வனைத்தயையுள்ள யெகோவா மன்னிப்பா
ராகவென்று சொல்லி அவர்கள் நிமித்தம்பிரார்த்
தித்தான்.—யெகோவா இஸ்கியாவுக்குச் செ ௨௰
வியைச்சாய்த்துச்சனங்களுக்கு மன்னித்தார்.—
யெரூஷலேமில் வந்த இஸரவேல்சந்ததியார் ஏ ௨௧
ழுநாளளவும் மகா ஆனந்தத்துடன் புளிப்பில்
லாத அப்பத்தின் உற்சவத்தை ஆசரித்தார்கள்:
லேவியர்களும் ஆசாரியர்களும் நாடோறும் உ
ரத்த சத்தம்பொருந்திய வாத்தியத்தோடும்பாடி
யெகோவாவைத்துதித்தார்கள்.—யெகோ ௨௨
வாவைப்பற்றுஞ் சற்போதகத்தைப் போதித்த
லேவியர் யாவரோடும், இஸ்கியா சமாதான
மாய்ப்பேசிஞன்: அவர்கள், உற்சவத்தின் ஏழு
நாளளவும் ஸ்தோத்திரபலிகளையிட்டுப்புசித்துத்
தங்கள் முன்னோரின் தேவஞகிய யெகோ
வாவின் புகழ்ச்சியைப் பிரகாசிக்கப்பண்ணி
ஞர்கள்.—பின்பு சகல சபையாரும், இன்னும் ௨௩
ஏழுநாளளவும் ஆசரிக்கும்படி ஆலோசித்து,வே
றும் ஏழுநாள் ஆனந்தத்துடன் ஆசரித்தார்கள்.—
யூதாதேசத்து இராசாவாகிய இஸ்கியா, சபையா ௨௪
ருக்கு ஆயிரங்காளைகளையும் ஏழாயிரம் ஆடுகளை
யும் கொடுத்தான்; பிரபுகளும், சபையாருக்கு
ஆயிரங்காளைகளையும் பதினாயிரம் ஆடுகளையும்
கொடுத்தார்கள்: ஆசாரியர்களில் அநேகர் தங்க
ளைப் பரிசுத்தப்படுத்திஞர்கள்.—ஆசாரியர்களோ ௨௫
டும் லேவியர்களோடும் யூதாவமிசத்தாராகிய சக
லசபையாரும், இஸரவேல்வமிசத்தாரில்வந்த ச
கல சபையாரும், இஸரவேலரின் தேசத்தினின்
றுவந்து யூதாநாட்டில்வசித்த பரதேசிகளும் களி
கூர்ந்திருந்தார்கள்.-இவ்விதமாகயெரூஷலேமில் ௨௬
மகாஆனந்தமுண்டாயிற்று: இஸரவேலரின்இரா
சாவாகிய தாவீதின்புத்திரஞன சலோமோனின்
காலமுதல்,யெரூஷலேமில் இதைப்போலில்லை.

(௭) எசேக்.௨௰.௰௮. அதி.௨௯.௮. (௮) உபா.௰.௰௬. க.நாளா.௨௯.௨௪. எஸ்ற.௰.௰௧. (௯) சங்.௱௬.௪௬. யாத்.௩௪.௬. ஏசா.௫௫.௭. (௰) அதி.௩௬.௰௬. (௰௧) அதி.௰௧.௰௬. வச.௰௮,௨௧. (௰௨) பிலி.௨.௰௩. அதி.௨௯.௨௫.(௰௪)அதி.௨௮.௨௪. (௰௫) அதி.௨௯.௩௪. (௰௭) அதி.௨௯.௩௪. (௰௮) வச.௰௧. யாத்.௰௨.௪௩,. (௰௯) அதி.௰௯.௩. (௨௧) யாத்.௰௨.௰௫. (௨௨) ஏசா.௪௰.௨. உபா.௩௩.௮. எஸ்ற.௰.௰௧. (௨௩) ௧.இரா.௮.௬௫. (௨௪) அதி.௩௫.௭,௮. அதி.௨௯.௩௪. (௨௫) வச.௰௧,௰௮.

௨௭ பின்பு லேவியராகிய ஆசாரியர்கள் எழுந்துச
னங்களை ஆசீர்வதித்தார்கள்: அவர்கள் சத்தங்கே
ட்கப்பட்டது, அவர்கள்பிரார்த்தனை அவருடை
யபரிசுத்த வாசஸ்தலமாகிய வானத்திலேறிற்று.

## ௩௧. அதிகாரம்.

௧. விக்கிரகங்களைத்தகர்த்தல்: ௨. இஸ்கியா ஆசாரியருடையவகுப்புக்களைநியமித்தல்: ௫. சனங்கள் வெகுமைநைவேத்தியங்களைக்கொண்டுவரல்: ௰௧. ஆசாரியருக்குப்பங்குகொடுக்கும்படி இஸ்கியா அதிபதிகளை ஏற்படுத்தல்: ௨௰. இஸ்கியா சற்கிரியைசெய்து வாழ்வடைதல்.

இவைகளெல்லாமுடிந்தபின்பு, வந்திருந்த இ
ஸரவேலர்யாவரும் யூதாநகரங்களிலே பிரவே
சித்து, விக்கிரகங்களைத்தகர்த்து, அஷரிமரங்க
ளைச்சேதித்து, யூதாவிலும், பேன்யாமீனிலும்,
எப்ராயீமிலும், மனாஷேயிலும் எங்குமுள்ள உ
யர்ந்தஸ்தானங்களையும் வேதிகைகளையும் இடித்
து, சகலத்தையும் முழுமையும் நாசப்படுத்தினார்
கள். பின்பு இஸரவேல்சந்ததியார்யாவரும், தங்
கள் நகரங்களிலே தங்கள் தங்கள் சுதந்தரங்க
ளுக்குத்திரும்பினார்கள்.
௨ பின்புஇஸ்கியா, தகனபலிகளையும் ஸ்தோத்தி
ரபலிகளையுமிடவும், ஆராதனைசெய்யவும், துதிக்
கவும், யெகோவாவின்கூடாரவாசல்களிலே
கீர்த்தனம்பண்ணவும், ஆசாரியரையும் லேவிய
ரையும் அவரவர்தொண்டுக்கேற்ற விதிப்பிரகா
௩ ரம் வகுப்புவகுப்பாய் ஏற்படுத்தினான்.—காலை
மாலைகளில் இடப்படும் தகனபலிகளும், ஓய்வு
நாட்களிலும், அமாவாசிகளிலும், நியமிக்கப்பட்
ட உற்சவங்களிலும் இடப்படும் யெகோவா
வின் வேதப்பிரமாணத்திலெழுதியபடி தகனப
லிகளுமாகிய தகனபலிகள்நிமித்தம், இராசாதன்
பொருளிலேதான் கொடுக்கவேண்டிய பங்குக
௪ ளின்னதென்று நியமித்தான்.—ஆசாரியர்களும்
லேவியரும் யெகோவாவின் வேதப்பிரமா
ணத்தில் ஏவப்படும்பொருட்டு, அவர்களுக்கேற்
றபங்கைக்கொடுக்கும்படி யெரூஷலேமிலுள்ள
சனங்களுக்குக்கட்டளையிட்டான்.
௫ இந்தக்கட்டளைவெளிப்பட்டவுடனே இஸர
வேல்சந்ததியார், தானியத்திலும், திராட்சரசத்தி
லும், எண்ணெயிலும், தேனிலும், வயலில்விளை
யும் மற்றயாவற்றிலும் முதற்பலனைப் பரிபூரண
மாய்க்கொண்டுவந்தார்கள்; சகல திரவியங்களி
லும்பத்திலொன்றைப் பரிபூரணமாய்க்கொண்டு
௬ வந்தார்கள்.—யூதாவின்மற்ற நகரங்களிலேவசித்
தஇஸரவேல்சந்ததியாரும் யூதாவமிசத்தாரும் ஆ
டுமாடுகளில்பத்திலொருபங்கையும் தங்கள் தே
வனாகிய யெகோவாவுக்குநிவேதித்தவஸ்துக்
களாகிய பத்திலொருபங்கையுங்கொண்டுவந்து
௭ குவியல் குவியலாய் வைத்தார்கள்.—மூன்றுமா
தத்தில் அவர்கள் குவியல்செய்யத்தொடங்கி, ஏ
ழாமாதத்தில் முடித்தார்கள்.—பின்பு இஸ்கியா அ ௮
வும் பிரபுகளும்வந்து குவியல்களைப்பார்த்தபொ
ழுது, யெகோவாவையும் அவர்சனங்களாகிய
இஸரவேலரையும் புகழ்ந்தார்கள்.—இஸ்கியா அந் ௯
தக் குவியல்களைக்குறித்து ஆசாரியரிடத்திலும்
லேவியரிடத்திலும்விசாரித்தபொழுது,—சாதோக் ௰
வமிசத்தானாகிய அசரியாவென்னும்பிரதான ஆ
சாரியன் அவனைநோக்கி, சனங்கள் யெகோ
வாவின் ஆலயத்திலே காணிக்கைகளைக்கொண்
டுவரத்தொடங்கினது முதற்கொண்டு யெகோ
வா தமதுசனங்களை ஆசீர்வதித்தபடியினால், உண
வுப்பொருள் நமக்குப்போதும், அளவுக்கு மிஞ்
சியிருக்கின்றது: இந்த மிகுதியானபொருள் அ
வைகளில் மீந்திருக்கின்றது என்றான்.
பின்புஇஸ்கியா, யெகோவாவின்ஆலயத்தி ௰௧
லேபண்டசாலைகளை ஆயத்தப்படுத்தும்படி கட்
டளையிட்டான்; அவர்கள்அவைகளை ஆயத்தப்ப
டுத்தி,—காணிக்கைகளையும், பத்திலொருபாகத் ௰௨
தையும், பரிசுத்தவஸ்துக்களையும் உண்மையாக
உள்ளேசேர்த்தார்கள்: அதற்கு அதிகாரி லேவிய
னாகிய கோனன்யா, அவனுக்குக்கீழ் அவன்ச
கோதரனாகிய ஷிமியி.—இராசாவாகிய இஸ்கி ௰௩
யாவும், தேவனுடைய ஆலயத்துக்கு அதிகாரிக
ளாகிய அசரியாவும், யிகியேலும், அசசீயாவும்,
நாகாத்தும், அசாகேலும், எரேமோத்தும், யோசா
பாத்தும், ஈலியேலும், இஸ்மகியாவும், மாகாத்து
ம், பினாயாவும், கோனன்யாவுக்குக்கீழும் அவன்
சகோதரனாகிய ஷிமியிக்குக் கீழும் விசாரிப்
புக்காரராயிருந்தார்கள்.—லேவியனான இம்னா ௰௪
வின் புத்திரனும் கீழ்வாசற் காவலாளனுமாகி
ய கோரே, யெகோவாவின் காணிக்கைக
ளையும் மிகவும் பரிசுத்தவஸ்துக்களையும் பங்கி
டும்படி தேவனுக்கு மனப்பூருவமாய் இட்ட
பலிகளுக்கு அதிகாரியானான்.—அவனுக்குக் கீழ் ௰௫
ஏதேன், மின்யமீன், யேஷூவா, ஷிமாயியா,
அமரியா, ஷெகனியா என்னுமிவர்கள், ஆசாரி
யருடைய நகரங்களிலே பெரியோர்களுஞ் சிறி
யோர்களுமாகிய தங்கள் சகோதரருக்கு அவர
வர் வகுப்பின்படி உண்மையாய்ப் பங்கிடுவதற்
கு ஏற்படுத்தப்பட்டார்கள்.—அதுவுமன்றி, அ ௰௬
வரவர்வகுப்புக்களின்படிதொண்டுசெய்வதற்கு
நாடோறும் யெகோவாவின் ஆலயத்தில் பிர
வேசிக்கும் மூன்றுவயது முதல் அதற்குமேற்
பட்ட வயதுள்ள ஆண்மக்கள்யாவருக்கும்;—தங் ௰௭
கள் வகுப்புக்களிலுள்ள தொண்டுக்கேற்கத் தங்
கள் தங்கள்பிதா வமிசத்தின்படி உண்மையுள்ள
வர்களாய்த்தங்களைப்பரிசுத்தப்படுத்திய இருபது
வயதுமுதல் அதற்குமேற்பட்டஆசாரியருக்கும்,
லேவியருக்கும்,—அவர்கள் எல்லாக்குழந்தைக ௰௮
ளுக்கும், ஸ்திரிகளுக்கும், புத்திரருக்கும், புத்தி
ரிகளுக்கும்,—அந்தந்த நகரங்களையும் பேட்டை ௰௯

(௨௭) எண்.௬.௨௩. சங்.௬௮.௫.—(௩௧. அதி. ௧.) ௨.இரா.௰௮.௪. அதி.௩௰.௰௪. (௨) ௧.நாளா.௨௩.௬,௩௰,௩௧. (௩) எண்.௨௮. எண்.௨௯. (௪) எண்.௰௮.௮,. நிகி.௰௩.௰. மல்.௨.௭. (௫) யாத்.௨௨.௨௯. நிகி.௰௩.௰௨. (௬) லேவி.௨௭.௩௰. உபா.௰௪.௨௮. (௰) மல்.௩.௰. (௰௨) நிகி.௰௩.௰௩. (௰௫) யோசு.௨௧.௰. ௧.நாளா.௬.௨௨. (௰௭) ௧.நாளா.௨௩.௨௪,௨௭. (௰௯) லேவி.௨௫.௩௪. எண்.௩௫.௨.

களையும் சொந்த வயல்வெளிகளிலேயிருந்த ஆ
ரோன் வமிசத்தாராகிய ஆசாரியர்களுக்கும் இவ்
விதமாய்ப் பங்குகொடுக்கப்பட்டது: முன் கு
றிக்கப்பட்ட சனங்கள் ஆசாரியர் மத்தியிலே
யிருந்த சகல புருஷருக்கும் வமிசவரலாற்றின்
படி தொகையிடப்பட்ட லேவியர் சகலருக்கும்
பங்குகொடுத்தார்கள்.
௨௰ இஸ்கியா, யூதா எங்கும்இப்படிச்செய்து தன்
தேவனாகிய யெகோவாவின் சமுகத்தில்
நன்மையுஞ் செவ்வையும் உண்மையுமானவைக
௨௧ ளை நடப்பித்துவந்தான்.—அவன் தேவனுடைய
ஆலயத்தின் கிரியையும், வேதப்பிரமாணமும்,
கட்டளையுமாகிய இவைகளினால் தன் தேவ
னைத் தேடும்படி செய்யத்தொடங்கின ஒவ்வொ
ருகிரியையையுந் தன் பூரண இருதயத்தோடுஞ்
செய்து வாழ்வடைந்தான்.

## ௩௨. அதிகாரம்.

*௧. சனகெரிப் யெருஷலேமை முற்றிக்கைசெய்தல். இஸ்கியா தன்னைஸ்திரப்படுத்தல்: ௯. சனகெரிப் தேவனை நிந்தித்தல்: ௨௰. இஸ்கியாவின் பிரார்த்தனையையும் யெகோவாவின் உத்தரத்தையுந் தெரிவித்தல்: ௨௪. இஸ்கியா வருத்தமடைந்து பின்பு சொஸ்தம்பெறல்: ௨௭. அவன்செல்வத்தைக்குறித்தல்: ௩௨. அவன் மரணமடைதல்.*

இக்காரியங்கள் உண்மையுடன் நிறைவேறின
பின்பு, அஷீரிய இராசாவாகிய சனகெரிப் வந்
து, யூதாதேசத்தில் பிரவேசித்து, அரணான சக
லநகரங்களையும் விரோதித்துப் பாளயம் இறங்
௨ கி அவைகளைத் தன் வசமாக்க எண்ணினான்.—ச
னகெரிப்வந்து யெருஷலேமுக்குவிரோதமாயுத்
தஞ்செய்ய அபிப்பிராயங்கொள்ளுகிறதை இஸ்
௩ கியாகண்டு,—நகரத்துக்குப் புறம்பாயுள்ள ஊற்
றுநீரைத்தடைப்படுத்தத்தன் பிரபுகளோடும் பரா
க்கிரம சனங்களோடும் ஆலோசிக்க, அவர்கள்
௪ சம்மதித்தார்கள்.—பின்பு அநேகசனங்கள் கூடி
வந்து, அஷீரிய இராசாக்கள்வந்து மிகுதியான
சலம் கண்டுபிடிப்பதேதென்று சொல்லி, சகல
ஊற்றுக்களையும் தேசத்துக்குள்ளே பாய்கிற ஆற்
௫ றையுந் தூர்த்தார்கள்.—அவன் திடங்கொண்டு,
இடிந்தமதில்களனைத்தையும் கோபுரங்கள் அள
வு உயரக்கட்டினதுமன்றிப்புறமதிலையுஞ் செய்
து, தாவீதின் நகரத்திலுள்ள பிரவேசஸ்தானத்
தைப்புதுப்பித்து, மிகுதியான ஆயுதங்களையும்
௬ பரிசைகளையும் ஆயத்தப்படுத்தினான்.—சனங்க
ளுக்குச்சேனாபதிகளை ஏற்படுத்தி, அவர்கள் நக
ரவாசலின்வீதியில் கூடிவரும்படிசெய்து, அவர்
௭ களைநோக்கி,—நீங்கள் திடமாகித்தைரியங்கொள்
ளுங்கள், அஷீரியராசாவின் நிமித்தமும் அவ
னோடிருக்கிற சனக்கூட்டத்தினிமித்தமும் நீங்
கள் பயப்படவுங் கலங்கவும் வேண்டாம்: அவ
னோடிருக்கிற சனக்கூட்டங்களிலும் நம்மோடி
ருக்கிறவர்கள் அநேகர்.—மாமிசபுயம் அவனோ ௮
டிருக்கின்றது; நமக்குத்துணைநின்றுயுத்தஞ்செய்
யத தேவனாகிய யெகோவா நம்மோடிருக்கி
றாரென்றுசொல்லி அவர்களைத்தேற்றினான். அதி
னால் சனங்கள்யூதாவின் இராசாவாகியஇஸ்கியா
வுடைய வாக்குகளைச்சார்ந்துகொண்டார்கள்.
பின்பு அஷீரிய இராசாவாகியசனகெரிப், லா ௯
கீஸுக்கு விரோதமாகத்தன் முழுப்பராக்கிரமத்
துடன் முற்றிக்கைசெய்தபொழுது, யூதாவின்
இராசாவாகிய இஸ்கியாவுக்கும் அவனோடேயெ
ருஷலேமிலுள்ள யூதாவமிசத்தார் யாவருக்கும்
தன்பணிவிடைக்காரரையெருஷலேமுக்கனுப்
பி, அஷீரிய இராசாவாகிய சனகெரிப்,—நீங் ௰
கள் அரணான நகரமாகிய யெருஷலேமிலே தங்
குவீர்களென்பதற்கு என்ன நம்பிக்கை;—நம்மு ௰௧
டைய தேவனாகிய யெகோவா அஷீரிய ரா
சாவின் கையினின்று நம்மை விடுவிப்பார் என்
று சொல்லி, இஸ்கியா பசிதாகங்களினால் நீங்
கள் நாசமடைவதற்கு உங்களை மயக்குவிக்கிறா
னல்லவா.—இந்த இஸ்கியா, அவர் உயர்ந்த ஸ் ௰௨
தானங்களையும் வேதிகைகளையும் அகற்றினனல்
லவா; அவன் யூதா சனங்களையும் யெருஷலேமி
யரையும் நோக்கி, நீங்கள் இந்த வேதிகையின்
முன் ஆராதனைசெய்து, இதின்மேல் தூபங்காட்
டவேண்டுமென்று சொல்லிக்கட்டளையிடவில்
லையா.—நானும் என் பிதாக்களும் அந்நிய தே ௰௩
சத்தின் சனங்களனைவருக்கும் இன்னது செய்
தோமென்று உங்களுக்குத்தெரியவில்லையா; அத்
தேசத்தாருடைய தேவர்கள் எந்தவிதமும் என்
கையினின்று தங்கள் தங்கள் தேசங்களை விடு
விக்கவல்லவர்களா;—எங்கள் பிதாக்கள் நாசப் ௰௪
படுத்திய அந்தச் சாதியாரின் தேவர்கள் சமஸ்த
ருக்குள்ளும் என் கையினின்று தன் சனங்களை
விடுவிக்க வல்லவன் யாவன்; உங்கள் தேவன்
என் கையினின்று உங்களை விடுவிப்பாரோ;—
இப்பொழுது இஸ்கியா உங்களை வஞ்சித்து மயக் ௰௫
காதபடி சாவதானமாயிருங்கள்; அவனை நம்ப
வேண்டாம்: எந்தத்தேசத்திலும் எந்த இராச்சி
யத்திலுமுள்ள எந்தத்தேவனும் என்கையினின்
றும் என்பிதாக்கள்கையினின்றும் தன்சனங்களை
விடுவிக்கக்கூடாமல் போயிற்று: இனி உங்கள்
தேவன் என்கையினின்றுஉங்களைவிடுவிக்கவல்
லவனோவென்று, அஷீரியராசாவாகிய சனகெரிப்
சொல்லுகிறானென்பதைச்சொல்லுவித்தான்.—
அவன் பணிவிடைக்காரரும், தேவனாகிய யெ ௰௬
கோவாவுக்கும் அவர்தாசனாகிய இஸ்கியாவுக்
கும் விரோதமாக அதிகம்பேசினார்கள்.—அன்றி ௰௭
யும் இஸரவேலரின் தேவனாகிய யெகோவா
வை நிந்திக்கவும், அந்நிய தேசத்தாருடைய தே
வர்கள்தங்கள்தங்கள் சனங்களை என்கையினின்

(௨௰) ௨.இரா.௨௰.௩.—(௩௨. அதி. ௧.) ௨.இரா.௰௮.௰௩,. ஏசா.௩௬.௧,.(௫)ஏசா.௨௨.௯,௰. அதி.௨௫.௨௩. ௨.சாமு. ௫.௯. ௧.இரா.௯.௨௪. (௬) அதி.௩௰.௨௨. ஏசா.௪௰.௨. (௭) உபா.௩௧.௬. அதி.௨௰.௰௫. ௨.இரா.௬.௰௬. (௮) எரே. ௰௭.௫. ௧.யோவா.௪.௪. ரோ.௮.௩௧. (௯) ௨.இரா.௰௮.௰௭. (௰௧) ௨.இரா.௰௮.௩௰. (௰௨) ௨.இரா.௰௮.௨௨. (௰௩) ௨.இரா.௰௮.௩௩,௩௪,௩௫. (௰௫) ௨.இரா.௰௮.௰௯,௨௯. (௰௭) ௨.இரா.௰௯.௯,௰௨.

று விடுவிக்கக்கூடாமற்போனதுபோல, இஸ்கி
யாவின்தேவனும்தன்சனங்களைஎன்கையினின்
று விடுவிக்கமாட்டாரென்று அவருக்குவிரோத
௰௮ மாய்வசனிக்கவும்நிருபங்களை எழுதினான்.-அப்
பொழுதுஅவர்கள், நகரத்தைவசப்படுத்தும்பொ
ருட்டு, மதிலின்மேலுள்ள யெருஷலேமியரைப்
பயப்படுத்தவும் கலங்கச்செய்யவும் யூதேயபா
ஷையில் அவர்களோடு உரத்தசத்தத்துடன் சத்
௰௯ தமிட்டார்கள்.—பூமண்டலத்திலுள்ள சனங்க
ளுடையவைகளும் மனிதர்கையினால் செய்யப்
பட்டவைகளுமாகிய தெய்வங்களுக்கு விரோத
மாய்ப்பேசுவதுபோல,யெருஷலேமின் தேவ
௨௰ னுக்கு விரோதமாய்ப்பேசினார்கள்.—இதினிமித்
தம் இஸ்கியா இராசாவும், ஆமோத்சின் புத்திரனா
கிய எசாயா தீர்க்கதரிசியும் வானத்தைப்பார்த்து
ஓலமிட்டுப்பிரார்த்தித்தார்கள்.
௨௧ பின்பு யெகோவா, தூதன்ஒருவனையனுப்
ப, அவன் அஷூரியராசாவின் பாளயத்திலே யி
ருந்தசமஸ்தபராக்கிரமவீரரையும், பிரதானிகளை
யும், சேனாபதிகளையுஞ் சேதித்தான். அதினால்
சனகெரிப் முகம்நாணித்தன் சுயஸ்தானத்துக்
குத்திரும்பினான். பின்புஅவன்தன்தேவர்களின்
ஆலயத்தில்பிரவேசித்தபொழுது, அவன் உதரத்
தில்தோன்றியவர்களே கட்கத்தினால் அந்தஸ்தா
னத்தில் அவனைக் கொன்றுபோட்டார்கள்.—
௨௨ இவ்விதமாய் யெகோவா, அஷூரிய இராசா
வாகிய சனகெரிப்பின்கையினின்றும் மற்றச்
சகலரின் கையினின்றும் இஸ்கியாவையும் யெ
ருஷலேமியரையும் விடுவித்தும் நான்கு திசை
௨௩ யிலும் அவர்களை இரட்சித்தும் வந்தார்.—அதி
னால்அநேகர்யெருஷலேமில் யெகோவாவுக்
குக்காணிக்கைகளையும் யூதாவின் இராசாவாகிய
இஸ்கியாவுக்கு விலையேறப்பெற்ற திரவியங்க
ளையுங் கொண்டுவந்தார்கள்: அதுமுதல் சகல
சாதியாருக்குள்ளும் அவன் மாட்சிமையுள்ளவ
னென்றுமதிக்கப்பட்டான்.
௨௪ அக்காலத்தில்இஸ்கியா,மரணத்துக்கேதுவாய்
வருத்தமடைந்திருக்கையில் யெகோவாவைப்
பிரார்த்திக்க, அவர் உத்தரமருளிஅவனுக்கு ஒரு
௨௫ அடையாளத்தைக் கற்பித்தார்.—இஸ்கியாபெற்
ற உபகாரத்துக்கேற்கப்பிரதிச்செய்யாமல் மனம்
கருவமடைந்தான்: ஆதலால் அவன் மேலும்,
யூதாவின்மேலும், யெருஷலேமின்மேலுங்கோ
௨௬ பம்வந்தது.—பின்பு இஸ்கியாவும் யெருஷலே
மியரும் தங்கள் மனக்கருவத்தினிமித்தம் தங்
களைத்தாழ்த்தினார்கள்; அதினால் யெகோவா
வின் கோபம் இஸ்கியாவின்காலத்தில் அவர்
கள்மேல்வரவில்லை.
௨௭ இஸ்கியாவுக்கு மிகவுஞ் செல்வமுங் கனமு
மிருந்தன: அவன், பொன், வெள்ளி, ரத்தினம்,
சுகந்தத்திரவியம், பரிசைகள், சகலவிதமான அ
ரும்பொருள்களொன்னுமிவைகளை வைக்கிறதற்
குப் பண்டசாலைகளையும்,—தானியம், திராட்சஉ ௨௮
ரசம், எண்ணெய் இவைகளை வைக்கிறதற்குக்க
ளஞ்சிய வீடுகளையும், நானாவித மிருகங்களுக்
குச்சாலைகளையும், மந்தைகளுக்கு ஆட்டுக்கிடை
களையும் உண்டாக்கினான்.—அவன் நகரங்களை ௨௯
யும் மிகுதியான ஆடுமாடுகளையுமுடையவனாயி
ருந்தான்: தேவன் அவனுக்கு மிகுதியானபொ
ருளைக்கொடுத்தார்.—இந்த இஸ்கியா, கீயோனின் ௩௰
மேற்சாலகத்தையடைத்து, நேராகத்தாவீதின்நக
ரத்தின்மேற்புறத்துக்குவரும்படி செய்தான். இ
ஸ்கியா தனதெல்லாக்காரியங்களிலும் வாழ்வ
டைந்தான்.
அவனுடைய தேசத்தில்செய்யப்பட்ட ஆச்ச ௩௧
ரியமான கிரியைகளின் விவரம் விசாரிக்கிறதற்
கு அனுப்பப்பட்ட பாபேலின் பிரபுகளாகிய
தூதர்களால் அவனைப்பரீட்சிக்கவும், அவன் ம
னதிலுள்ள யாவையுந் தெரிவிக்கவுந் தக்கதாகத்
தேவன் அவனைவிட்டு நீங்கினார்.
இஸ்கியாவின்மற்றக்கிரியைகளும் அவன்நன் ௩௨
மைகளும், ஆமோத்சின் புத்திரனாகிய எசாயா
வின் தீர்க்கதரிசனபுத்தகத்திலும், யூதாஇஸரவே
லர் என்பவர்களுடைய இராசாக்களின் சரித்
திரபுத்தகத்திலும் எழுதியிருக்கின்றன.—இஸ்கி ௩௩
யா தன் பிதாக்களுடன் மகாநித்திரையடைந்
தான், அவனைத் தாவீதின் வமிசத்தாருடையமுக்
கிய மயானஸ்தானத்தில் அடக்கம்பண்ணினார்
கள்: யூதாசனங்கள் யாவரும் யெருஷலேமிய
ரும் அவன் மரணகாலத்தில் அவனைக்கனம்பண்
ணினார்கள். அவனுக்குப்பின் அவன்புத்திரனாகி
ய மனாசே இராசாவானான்.

## ௩௩. அதிகாரம்.

௧. மனாசே தீமையாய் இராசரிக்கஞ் செய்தல்: ௩. தேவபூசைகளைச்செய்தல்: ௰௧.அவன்சிறையிலகப்படல். சுயதேசத்துக்குத் திரும்பிவந்து யெகோவாவைச் சேவித்தல்: ௰௮. அவன்கிரியைகளை விவரித்தல்: ௨௰.அவன் புத்திரனாகிய ஆமோன் மரணமடைதல்.

மனாசே அரசாளத்தொடங்கினபொழுது அவ ௧
னுக்குப்பன்னிரண்டுவயது, அவன் யெருஷலே
மில் ஐம்பத்தைந்துவருஷம் அரசாண்டான்.—
அவன், யெகோவா இஸரவேல்சந்ததியார் ௨
முன்னின்று அகற்றிவிட்ட அந்நிய தேசத்தார்
செய்த அருவருப்புக்கள்போல, யெகோவா
வின் பார்வைக்குத் தீமைசெய்தான்.
அவன் தன்பிதாவாகிய இஸ்கியா நாசப்படுத் ௩
தின உயர்ந்தஸ்தானங்களைத்திரும்பக்கட்டி, பா
கால்களுக்கு வேதிகைகளையுண்டாக்கி,அஷரிம
ரங்களை நாட்டி, வானத்திலுள்ள சகல சேனைக

(௰௮) ௨.இரா.௰௮.௨௬,௨௭,௨௮. (௰௯) ௨.இரா.௰௯.௰௮. (௨௰) ௨.இரா.௰௯.௨,௰௫. (௨௧) ௨.இரா.௰௯.௩௫. (௨௩) அதி.௰௭.௫. அதி.௧.௧. (௨௪) ௨.இரா.௨௰.௧. எசா.௩௮.௧. (௨௫) சங்.௱௰௬.௰௨. அதி.௨௬.௰௬. அபகூ.௨.௪. அதி. ௨௪.௰௮. (௨௬) எரே.௨௬.௰௮,௰௯. ௨.இரா.௨௰.௰௯. (௨௯) ௧.நாளா.௨௯.௰௨. (௩௰) எசா.௨௨.௯,௰௧.(௩௧)௨.இரா. ௨௰.௰௨. எசா.௩௯.௧. உபா.௮.௨.(௩௨)எசா.௩௬. எசா.௩௭. எசா.௩௮. எசா.௩௯. ௨.இரா.௰௮. ௨.இரா.௰௯. ௨.இரா. ௨௰. (௩௩) நீதி.௰.௭.—(௩௩. அதி. ௨.) உபா.௰௮.௯. (௩) ௨.இரா.௰௮.௪. உபா.௰௬.௨௧. உபா.௰௭.௨.

ளேயுந் தொழுதுகொண்டு சேவித்து வந்தான்.—
ச யெகோவா, என் நாமத்தைச் சதாகாலமும்
யெரூஷலேமிலே ஸ்தாபிப்பேனென்று சொல்
லிய யெகோவாவின் ஆலயத்திலே, வேதி
ரு கைகளை யுண்டாக்கினான்.—யெகோவாவின்
ஆலயத்தின் இரண்டு பிராகாரங்களிலும் வானத்
திலுள்ள சகல சேனைகளுக்கும் வேதிகைகளை
சு யுண்டாக்கினான்.—அவன்தன் பிள்ளைகளை இன்
னோமின் புத்திரருடைய தாழ்ந்தபூமியில் அக்
கினியிற்பிரவேசிக்கப்பண்ணினான்: அவன்நாள்
பார்த்து, மோகனஞ்செய்து, மாயாவிகள், பேய்
வித்தைக்காரர், சகுனிகள் இவர்களுடைய கரு
மங்களையும் நடத்திவந்தான்: யெகோவாவை
க்கோபப்படுத்த யெகோவாவின் பார்வைக்
எ கு வெகு தீமைசெய்தான்.—இந்தவீட்டிலும், இ
ஸரவேலின் சகல கோத்திரங்களுள்ளும் நான்
தெரிந்துகொண்ட யெரூஷலேமிலும் சதாகால
மும் என்நாமத்தைஸ்தாபிப்பேன்: இஸரவேலர்
நான் தங்களுக்குக்கட்டளையிட்ட யாவற்றின்ப
டிக்கும், என் தாசனாகிய மோசே கட்டளையிட்
ட சகல வேதப்பிரமாணத்தின்படிக்கும், விதிக
ளின்படிக்கும், முறைமைகளின்படிக்கும் நடப்
பார்களாகில், உங்கள்பிதாக்களுக்கு நான் அளித்
ததேசத்தினின்று அவர்கள் கால்சரியாதபடி செ
அ ய்வேனென்று,—தாவீதுக்கும் அவன்புத்திரனாகி
ய சலோமோனுக்கும் தேவன் சொல்லிய தே
வனுடைய ஆலயத்திலே, தான் தொழிற்படுத்தி
யபிரதிரூபமாகிய விக்கிரகத்தை ஸ்தாபித்தான்.—
கூ இப்படியே மனாசே, யூதாசனங்களையும் யெரூ
ஷலேமியரையும், யெகோவா இஸரவேல்சந்
ததியார் முன்னின்று சேதித்த சாதிகளைப் பார்க்
கிலும் அதிகதீங்குசெய்யும்படிதுன்னெறிப்படுத்
ய தினான்.—யெகோவா மனாசேக்கும் அவன்
சனங்களுக்கும் வாக்கருளினார்: ஆனாலும் அவர்
கள் செவிகொடுக்கவில்லை.

யக ஆதலால் யெகோவா, அவர்கள்மேல்அசூ
ரிய ராசாவின் சேனாபதிகளைவருவிக்க, அவர்க
ள், முட்செடிகளில் மனாசேயைப்பிடித்து, வில
ங்கிட்டு அவனைக்கட்டிப் பாபேலுக்குக்கொண்
யஉ டுபோனார்கள்.—அவன் கிலேசமடைந்த காலத்
தில் தன் தேவனாகிய யெகோவாவுக்குவிண்
ணப்பஞ்செய்து, தன் பிதாக்களின் தேவனு
டையசமுகத்தில் மிகவுந்தன்னைத்தாழ்த்தி அவ
யங ரைப்பிரார்த்தித்தான்:—அதினால் அவர், அவன்
பிரார்த்தனையையும் விண்ணப்பத்தையுங் கேட்
டுத்திரும்பவும் அவனை அவன் இராச்சியமாகிய
யெரூஷலேமுக்குக் கொண்டுவந்தார். ஆனது
கொண்டு மனாசே யெகோவாவே தேவ
யச னென்று உணர்ந்தான்.—பின்பு அவன், தாவீ
தின் நகரத்துக்குப்புறம்பே கீயோனின் மேற்றி
சையில் தாழ்ந்தபூமியில் மச்சவாசல்மட்டும் ஒரு
மதிலைக்கட்டி, அதை ஓபேலைசுற்றிநடத்தி மிக
வுமுயரமாய் உயர்த்தி, யூதாவிலுள்ள அரணான
சகலநகரங்களிலும் யுத்தத்துக்குச்சேனாபதிகளை
ஏற்படுத்தினான்.—அவன் புறச்சாதியாருடைய யரு
தெய்வங்களையும், யெகோவாவின் ஆலயத்தி
னின்று விக்கிரகத்தையும், யெகோவாவின்
ஆலயமுள்ள மலையிலும்யெரூஷலேமிலுந்தான்
செய்த சகல வேதிகைகளையும் நீக்கி, நகரத்தி
னின்று அகற்றினான்.—யெகோவாவின் வே யசு
திகையைப்புதுப்பித்து, அதின்மேல் ஸ்தோத்திர
பலிகளையும் செய்நன்றிப்பலிகளையும் இட்டு, இ
ஸரவேலரின் தேவனாகிய யெகோவாவைச்
சேவிக்கும்படிக்குயூதாசனங்களுக்குக்கட்டளை
யிட்டான்.—சனங்கள் பின்னும் உயர்ந்தஸ்தா யஎ
னங்களிலே பலியிட்டும், தங்கள் தேவனாகிய
யெகோவாவுக்குமாத்திரமே இட்டார்கள்.
மனாசேயின் மற்றக்கிரியைகளும, அவன்தன் யஅ
தேவனுக்குச்செய்தபிரார்த்தனையும், இஸரவேல
ரின் தேவனாகிய யெகோவாவின்நாமத்தைக்
கொண்டு தரிசிகள் அவனுக்குச்சொன்னவாக்
குகளும், இஸரவேலின் இராசாக்களின் சரித்திர
புத்தகத்தில் எழுதியிருக்கின்றன.—அவன்பிரார்த் யகூ
தனையும், அதின் அங்கீகாரமும், அவனுடைய
சகலபாவங்களும், கட்டளைமீறலும், அவன்தா
ழ்த்தப்படுமுன் உயர்ந்த ஸ்தானங்களைக்கட்டி,
தொழில்படுத்திய அஷரிமர விக்கிரகங்களையும்
ஸ்தாபித்தலுமாகிய இவைகள், தரிசிகளின்புத்த
கத்தில் எழுதியிருக்கின்றன.
பின்புமனாசேதன்முன்னோருடன் மகா நித் உய
திரையடைந்தான், அவனை அவன் சுயவீட்டில்
அடக்கம்பண்ணினார்கள்: அவனுக்குப்பின் அ
வன் புத்திரனாகிய ஆமோன் இராசாவானான்.
ஆமோன் அரசாளத்தொடங்கினபொழுது அ உக
வனுக்கு இருபத்திரண்டுவயது, அவன் யெரூஷ
லேமில் இரண்டுவருஷம் அரசாண்டான்.—அ உஉ
வன் தன்பிதாவாகிய மனாசேயைப்போல, யெ
கோவாவின் பார்வைக்குத் தீங்குசெய்தான்:
ஆமோன், தன்பிதாவாகிய மனாசேசெய்த தொ
ழிற்படுத்திய விக்கிரகங்களனைத்துக்கும்பலியிட்
டு அவைகளைச்சேவித்தான்.—அவன் பிதாவாகிய உங
மனாசே தன்னைத்தாழ்த்தினதுபோல, அவன்
யெகோவாவின் சமுகத்தில்தன்னைத்தாழ்த்த
வில்லை; ஆமோன்அதிகமதிகமாய்க்கட்டளைமீறி
நடந்தான்.—அவன்பணிவிடைக்காரர்அவனுக் உச
குவிரோதமாய்த் துராலோசனைசெய்து, அவன்
வீட்டில் அவனைக்கொன்றுபோட்டார்கள்.
தேசத்தின் சனங்கள், ஆமோன் இராசாவுக்கு உரு
விரோதமாய்த் துராலோசனைசெய்த யாவரையுங்
கொன்றுபோட்டார்கள்; அவனுக்குப்பின் தே
சத்துச் சனங்கள் அவன்புத்திரனாகிய யோஷி
யாவை இராசாவாக ஏற்படுத்தினார்கள்.

(ச) உபா.யஉ.யக. க.இரா.அ.உக. (சு) லேவி.யஅ.உக. உபா.யஅ.ய. உ.இரா.உ௩.ய. எசேக்.உ௩.௩எ,௩௯. உபா.யஅ.ய,யக. உ.இரா.உக.சு. (எ) சங்.௱௩உ.யச. உ.சாமு.எ.௯. (அ) உ.இரா.உக.அ. (யக) உபா.உஅ.௩௬. யோபு.௩௬.அ. சங்.௱எ.ய,யக. (யஉ) க.பேதுரு.ரு.சு. (ய௩) க.நாளா.ரு.உய. சங்.௯.ய௬. தானி.ச.உரு. (யச) க.இரா.க.௩௩. அதி.உஎ.௩. (யரு) வச.௩,ரு,அ. (யசு) லேவி.எ.யஉ. (யஎ) அதி.௩உ.யஉ. (யஅ) க.சாமு.௯.ய. (உச) உ.இரா.உக.உ௩,உச.

## ௩௪. அதிகாரம்.

௧. யோஷியா நன்றாய் ஆளுகைசெய்தல்: ௩. தேவபூசையையகற்றல்: ௮. ஆலயத்தைப்புதுப்பிக்கச் சனங்களை ஏற்படுத்தல்: ௰௪. வேதபுத்தகத்தைக்கண்டு இராசாவிடத்தில் அனுப்பல்: ௨௩. உல்தாள் தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௨௯. புத்தகத்தைவாசித்தல். தேவனோடு உடன்படிக்கைசெய்தல்.

யோஷியா அரசாளத்தொடங்கினபொழுது அ
வனுக்கு எட்டுவயது, அவன் யெருஷலேமிலே
௨ முப்பத்தொருவருஷம் அரசாண்டான்.—அவன்
யெகோவாவின்பார்வைக்குச்செவ்வையான
தைச்செய்து, தன்பிதாவாகிய தாவீதின்நெறிகள்
யாவற்றிலும், வலப்புறம் இடப்புறம் திரும்பா
மல் நடந்தான்.
௩ அவன், அரசாண்ட எட்டாம்வருஷத்தில் இ
ளைஞனாயிருந்தும், தன் பிதாவாகிய தாவீதின் தே
வனைத் தேடத் தொடங்கினான்: அவன் பன்னி
ரண்டாம் வயதில் உயர்ந்த ஸ்தானங்களையும், அ
ஷேரிமரங்களையும், தொழிற்படுத்திய விக்கிரகங்
களையும்வார்ப்புவிக்கிரகங்களையும்அகற்றி, யூதா
வையும் யெருஷலேமையுஞ் சுத்திசெய்வதற்குக்
௪ கட்டளையிட்டான்.—அவன்சமுகத்தில் அவர்கள்
பாகால்களின் வேதிகைகளையும் இடித்தார்கள்:
அதற்குமேலே ஸ்தாபிக்கப்பட்ட சூரிய விக்கிர
கங்களையும்சேதித்தான். அஷேரிமரங்களையும்தொ
ழிற்படுத்திய விக்கிரகங்களையும், வார்ப்புவிக்கிர
கங்களையும்தகர்த்து, தூளாக்கி, அவைகளுக்குப்
பலியிட்டவர்களுடைய பிரேதக்குழிகளிலே வீ
௫ சினான்.—அவன் ஆசாரியர்களின் வேதிகையின்
மேல் அவர்களுடைய எலும்புகளைத்தகித்தான், யூ
தாவையும் யெருஷலேமையும் சுத்திசெய்தான்.—
௬ மனாசே, எப்பிராயீம், ஷிமியோன் என்னும் இவர்
களின் பட்டணங்களிலெங்கும் நப்தாலிவரைக்
௭ கும் வீடுதோறுஞ்சோதித்தான்.—அவன் வேதிகை
களையும் அஷேரிமரங்களையும் அழித்து, தொழிற்ப
டுத்தியவிக்கிரகங்களைப்பொடிபடுத்தி, இஸரவே
லின் தேசமெங்குமுள்ள சமஸ்த விக்கிரகங்களை
யுஞ்சேதித்து, யெருஷலேமுக்குத்திரும்பினான்.
௮ அவன் அரசாண்ட பதினெட்டாம் வருஷத்
தில் தேசத்தையும் ஆலயத்தையும் சுத்தி செய்த
பின்பு, தன் தேவனாகிய யெகோவாவின்
ஆலயத்தைப்புதுப்பிக்கும்படி, அத்சல்லியாவின்
புத்திரனாகிய ஷாபானையும், நகரத்துக்கு அதி
காரியாகிய மாசெயாவையும், இதிகாச கர்த்த
னாகிய யோகாசின் புத்திரனான யோவாகையும்
௯ அனுப்பினான்.—அவர்கள், பிரதான ஆசாரியனா
கிய இல்கியாவிடத்தில் சமீபித்து, தேவனுடை
ய ஆலயத்திலே கொண்டுவரப்பட்டதும், மனா
சேயர், எப்பிராயீமர், மீந்திருந்த சகல யூதாசனங்
கள், பேன்யாமீனியர் என்னும் இவர்கள்கையில்,
வாசற்காவலாளராகிய லேவியர், சேர்த்ததுமாகி
ய திரவியத்தை ஒப்பித்து யெருஷலேமுக்குத்தி
ரும்பினார்கள்.—அவர்கள் யெகோவாவின் ௰
ஆலயத்தை விசாரிக்கும் பணிவிடைக்காரர்கை
யில் ஒப்பிக்க, இவர்கள் ஆலயத்திலுள்ள இடிவு
களைப் புதிதாக்கிச் சீர்படுத்தும்படி, யெகோ
வாவின் ஆலயத்தின் வேலைகாரராகிய தச்சருக்
குங்கற்சிற்பருக்குங்கொடுத்தார்கள்.—யூதாவின் ௰௧
இராசாக்கள் நாசப்படுத்தின அந்தந்த அறைக
ளுக்குப்பொளிந்தகல்லுகளையும், இசைக்குந் தீ
ராந்திகளையும் வாங்கவும், பலகைப்பரவவும் அ
தைக்கொடுத்தார்கள்.—சனங்கள் உண்மையுடன் ௰௨
வேலையைச்செய்து வந்தார்கள்: அதைத் துரித
மாய் நடப்பிப்பதற்கு, மிராரிவமிசத்தில் லேவி
யராகிய யகத்தும், ஒபதியாவும், கோகாத்வமிசத்
தில் சகரியாவும், மிஷுல்லாமும், லேவியரில்
வாத்தியஞ்செய்ய நிபுணராகிய மற்றயாவரும் அ
வர்களுக்கு அதிகாரியாயிருந்தார்கள்.—அவர்கள், ௰௩
சுமைகாரருக்கும் சகலவிதவேலைசெய்பவர்களு
க்கும் அதிகாரிகளாயிருந்தார்கள்: லேவியரில்
சிலர் லேககரும், அதிபதிகளும், வாசற்காவலா
ளருமாயிருந்தார்கள்.
அவர்கள் யெகோவாவின் ஆலயத்திலே ௰௪
கொண்டுவரப்பட்ட திரவியத்தை வெளியே
கொண்டுவந்தபொழுது, ஆசாரியனாகிய இல்கி
யா, மோசேஎழுதிய யெகோவாவின்வேதப்
பிரமாணத்தின் புத்தகத்தைக்கண்டான்.—அப் ௰௫
பொழுது இல்கியா லேககனாகிய ஷாபானை
நோக்கி, யெகோவாவின்ஆலயத்திலேவேதப்
பிரமாணத்தின் புத்தகமொன்றைக் கண்டெடுத்
தேன் என்றான்.—ஷாபான், அந்தப்புத்தகத்தை ௰௬
இராசாவிடத்திலேகொண்டுபோய், உமது அடி
யார்நீர்கட்டளையிட்ட யாவற்றையுஞ்செய்கிறார்
கள்.—யெகோவாவின்ஆலயத்திலே கண்டெ ௰௭
டுத்ததிரவியத்தைக்கூட்டி, விசாரிப்புக்காரரிடத்
திலும் வேலைக்காரரிடத்திலும் கொடுத்தார்க
ளென்றுசொல்லி இராசாவுக்குக்காரியத்தை வி
வரித்தான்.—பின்னும் லேககனாகிய ஷாபான் ௰௮
இராசாவை நோக்கி, ஆசாரியனாகிய இல்கியா
இந்தப்புத்தகத்தை எனக்குக்கொடுத்தானென்று
சொல்லி, ஷாபான் இராசாவின்சமுகத்தில் அ
தை வாசித்தான்.—இராசா, வேதப்பிரமாணத் ௰௯
தின்வாக்கியங்களைக்கேட்டபொழுது, தன்வஸ்
திரத்தைக் கிழித்தான்.—இராசா, இல்கியாவை ௨௰
யும், ஷாபானின்புத்திரனாகிய அகீகாமையும், மீ
காவின்புத்திரனாகிய அப்தோனையும், லேககனா
கிய ஷாபானையும், இராசதாசருள் ஒருவனாகிய
அசாயாவையும்நோக்கி,—எங்கள்பிதாக்கள் இந் ௨௧
தப்புத்தகத்தில்எழுதியிருக்கிற எல்லாவற்றின்ப
டிக்கும் செய்யும்படி யெகோவாவின் வாக்
கைப்பேணிக்கொள்ளாமல் இருப்பதினால், நமக்
குவிரோதமாக யெகோவாவின்கோபம்மூளு
கின்றது: ஆதலால் நீங்கள்போய், என்னிமித்த

(௩௪. அதி. ௧.) ௨.இரா.௨௨.௧,. (௩) அதி.௰௫.௨. ௧.இரா.௰௩.௨. அதி.௩௩.௰௭,௨௨. (௪) லேவி.௨௬.௩௰. ௨.இரா. ௨௩.௪,௬. (௫) ௧.இரா.௰௩.௨. (௭) உபா.௯.௨௧. (௮) ௨.இரா.௨௨.௩. (௯) ௨.இரா.௰௨.௪,. (௰௩) ௧.நாளா.௨௩.௪,௫. (௰௪) ௨.இரா.௨௨.௮,. (௨௰) ௨.இரா.௨௨.௰௨.

மும், இஸரவேலருக்குள்ளும்யூதாசனங்களுக்கு
ள்ளும் மீந்திருக்கிறவர்களினிமித்தமும், கண்
டெடுத்த இந்தப்புத்தகத்தின் வாக்கியங்களைக்கு
றித்து யெகோவாவிடத்தில் கேட்டறியுங்க
௨௨ ளென்றுசொல்லிக் கட்டளை யிட்டான்.—அதி
னால்இல்கியாவும் இராசாவினால் நியமிக்கப்பட்
டவர்களும், வஸ்திரசாலைக்குஅதிகாரியாகியஅர்
காசின்பௌத்திரனும் திக்பாத்தின் புத்திரனுமா
கியஷல்லூமின் மனைவியான உல்தாளென்னுந்
தீர்க்கதரிசியிடத்தில்போனார்கள்; அக்காலத்தில்
அவள்வித்தியாலயத்தில் யெரூஷலேமில் வசித்
தாள்: அவர்கள் அவளுடன் சம்பாஷித்தார்கள்.
௨௩ அவள் அவர்களைநோக்கி, இவ்விடத்திலுள்ள
சனங்கள் என்னைவிட்டுநீங்கித் தங்கள்கைத்தொ
ழில்கள் யாவற்றினாலும் என்னைக்கோபப்படுத்
தும்படி அந்நியதேவர்களுக்குத் தூபங்காட்டி
வந்தபடியால், இந்தஸ்தானத்தின்மேல் என்கோ
௨௪ பம்மூற்றப்படும், அதுதணியமாட்டாது:—யூதா
தேசத்துஇராசாவுக்கு முன்வாசிக்கப்பட்டபுத்த
கத்தில்குறித்தசாபங்களாகிய எல்லாத்தீமைகளை
யும், இந்தஸ்தானத்தின்மேலும் இதின்சனங்கள்
மேலும்வருவிப்பேனென்று யெகோவாசொ
ல்லுகிறாரென்று உங்களை என்னிடத்தில் அனுப்
௨௫ பின மனிதனுக்குச்சொல்லுங்களென்றும்,—யெ
கோவாவிடத்தில்கேட்டறியும்படி உங்களைஅ
னுப்பின யூதாதேசத்தின் இராசாவைப்பார்த்து,
இந்தஸ்தானத்துக்கும் இதின் குடிகளுக்கும் வி
ரோதமாய் வசனித்த அவர்வாக்குகளை நீகேட்ட
பொழுது என்சமுகத்தில் உன்னைத்தாழ்த்தி, உன்
வஸ்திரத்தைக்கிழித்து, எனக்குமுன்பாக அழுத
படியால் நான் உனக்குச்செவிகொடுத்தேன்.—
௨௬ கேள், உன்பிதாக்களோடும் உன்னைச்சேர்த்துக்
கொள்ளுவேன், நீசமாதான சௌக்கியத்துடன்
௨௭ உன்மயானஸ்தானத்தில்சேர்க்கப்படுவாய்.—இந்
தஸ்தானத்தின்மேலும் இதின்குடிகளின்மேலும்
நான்வருவிக்குந்தீமையை உன்கண்காணமாட்
டாதென்று நீகேட்டவாக்குகளைக்குறித்து இஸர
வேலரின் தேவனாகிய யெகோவா சொல்லு
௨௮ கிறாரென்பதைச் சொல்லுங்களென்றும்,—இஸர
வேலரின் தேவனாகிய யெகோவா சொல்லு
கிறார் என்றாள். பின்பு அவர்கள்திரும்பிவந்து இ
ராசாவுக்கு இந்தவாக்குகளைத்தெரிவித்தார்கள்.
௨௯ அப்பொழுது இராசாஆட்களையனுப்பி, யூதா
விலும் யெரூஷலேமிலுமிருந்த முதியோர்யாவ
௩௰ ரையும் கூடிவரும்படிசெய்தான்.—இராசாவும்,
யூதாவமிசத்தார் சகலரும், யெரூஷலேமியரும்,
ஆசாரியர்களும், லேவியரும், சிறியோர்பெரி
யோராகியசகலசனங்களும் யெகோவாவின்
ஆலயத்துக்குப்போனார்கள்: அவன் யெகோ
வாவின் ஆலயத்தில் அகப்பட்ட உடன்படிக்
கைப்புத்தகத்தின் சகலவாக்குகளையும் அவர்கள்
௩௧ செவிக்கேறவாசித்தான்.—இராசா, தன்சுயஸ்தா
னத்தில் நின்றுகொண்டு, யெகோவாவைப்
பின்பற்றிநடக்கவும், தன்பூரணஇருதயத்தோடும்
ஆத்துமத்தோடும் அவர்கட்டளைகளையும், சாட்சி
களையும், விதிகளையும்பேணிக்கொள்ளவும், அப்
புத்தகத்தில் எழுதப்பட்ட அவ்வுடன்படிக்கை
யின் வாக்குகளைக் காத்துக்கொள்ளவும், யெ
கோவாவின்சமுகத்தில் ஒரு உடன்படிக்கை
பண்ணினான்.—யெரூஷலேமிலும் பேன்யமீனி ௩௨
லும்காணப்பட்ட சனங்கள்யாவரையும் அதற்கு
இசையும்படிஏவினான். யெரூஷலேமியர்தங்கள்
முன்னோரின் தேவனாகிய அந்தத்தேவனுடை
ய உடன்படிக்கையின்படி செய்தார்கள்.—யோ ௩௩
ஷியா, இஸரவேல்சந்ததியாருக்கு அதீனமாயி
ருந்த சகலதேசங்களிலுமின்று சகல அருவருப்
புக்களையும் அகற்றி, இஸரவேலருக்குள்ளே கா
ணப்பட்ட யாவரையும் அவர்கள் தேவனாகிய
யெகோவாவைச்சேவிக்கும்படி பண்ணினா
ன். அவர்கள், அவன் ஆயுள்பரியந்தம் தங்கள்
முன்னோரின் தேவனாகிய யெகோவாவை
விட்டு நீங்காமல் பின்பற்றினார்கள்.

## ௩௫. அதிகாரம்.

௧. பஷ்கா உற்சவத்தை ஆசரித்தல்: ௨௰. யோஷி
அதமாதல். அடக்கம்பண்ணப்படல்: ௨௫.அவ
னுக்காகச்சனங்கள் துக்கித்துப்புலம்பல்.

பின்புயோஷியா, யெரூஷலேமிலே யெகோ ௧
வாவுக்குப்பஷ்கா உற்சவத்தை ஆசரித்தான்: மு
தல்மாதம் பதினாலாந்தினத்தில்பஷ்கா உற்சவத்
தின் பலியிட்டார்கள்.—அவன், ஆசாரியர்களை ௨
அவர்கள் தொழிலிலேற்படுத்தி, யெகோவா
வின் ஆலயத்தில் ஆராதனைத்தொண்டுசெய்யும்ப
டி அவர்களைத்தைரியப்படுத்தினான்.—இஸரவே ௩
லரெல்லாரையும்போதிக்கிறவர்களும்யெகோ
வாவுக்குப்பரிசுத்தமுள்ளவர்களுமாகிய லேவிய
ரைநோக்கி, இஸரவேலரின் இராசாவாகிய தா
வீதின் புத்திரனான சலோமோன் கட்டின ஆல
யத்தில் நீங்கள் பரிசுத்தப்பெட்டியைவைத்து
விடுங்கள்; அதின்பாரம் உங்கள் தோளின்மேலி
ருக்கலாகாது: இப்பொழுது நீங்கள் உங்கள் தே
வனாகிய யெகோவாவையும் இஸரவேலரா
கிய அவர் சனங்களையும் சேவியுங்கள்:—உங் ௪
கள் பிதாவமிசத்தின்படி இஸரவேலரின் இரா
சாவாகிய தாவீதும் அவன் புத்திரனாகிய சலோ
மோனும் எழுதிய எழுத்துநியமிக்கும்வகுப்புக்க
ளுக்கேற்றபடி உங்களை ஆயத்தப்படுத்துங்கள்.—
உங்கள் சகோதரருடைய பிதா வமிசத்தின்பிரி ௫
வின்படிக்கும் லேவியரின் பிரிவின்படிக்கும்
பரிசுத்தஸ்தானத்திலேதரித்துநில்லுங்கள்.—உங் ௬
கள்சகோதரர், மோசேயைக்கொண்டு யெகோ
வாசொல்லிய கட்டளையைக்காக்கும்படி அவர்
களை ஆயத்தப்படுத்தி, பஷ்கா உற்சவத்தின்பலி
யிட்டு உங்களைப் பரிசுத்தப்படுத்துங்கள்.—பின் ௭
பு அவ்விடத்திலிருந்த எல்லாரின் நிமித்தமும்

(௨௨)௨.இரா.௨௨.௰௪.(௨௯)௨.இரா.௨௩.௧,. (௩௧) ௨.இரா.௰௧.௰௪.(௩௩)௧.இரா.௰௧.௫. எரே.௩.௰.—(௩௫.அதி.௧.) யாத்,௰௨.௬. (௩) ௨பா.௩௩.௮. மல்.௨.௭. அதி.௩௪.௰௪. ௧ நாளா.௨௩.௨௬. (௪) ௧.நாளா.௯.௰. அதி.௮.௰௪.(௫)சங்,௱௩௪.௧. (௬) எஸ்ரு.௬.௰௯. (௭) அதி.௩௰.௨௪.

பஷ்கா உற்சவபலியிடும்படிக்கு, யோஷியா, மந்
தையினின்றும் பதினாயிரம் ஆட்டுக்குட்டிகளை
யும் வெள்ளாட்டுக்குட்டிகளையும், மூவாயிரங்
காளைகளையுஞ் சனங்களுக்குக் கொடுத்தான்: இ
௮ வைகளெல்லாம் இராசாவின்பொருள்.—அவன்
பிரபுகளும் மனப்பூருவமாய்ச் சனங்களுக்கும்,
ஆசாரியர்களுக்கும், லேவியர்களுக்கும் கொடுத்
தார்கள்: தேவனுடைய ஆலயத்தின் அதிகாரி
களாகிய இல்கியாவும், சகரியாவும், யிகியேலும்
பஷ்கா உற்சவபலியிடும்பொருட்டு இரண்டா
யிரத்தறுநூறு ஆடுகளையும், முந்நூறு எருதுகளை
௯ யும் ஆசாரியர்களுக்குக்கொடுத்தார்கள்.—கோனா
னியாவும், அவன் சகோதரராகிய ஷிமாயியா
வும், நிதனேலும், லேவியரில் பிரதானிகளாகி
ய அஷபியாவும், யெயீயேலும், யோசாபாத்
தும் பஷ்கா உற்சவபலியிடும்பொருட்டு ஐயா
யிரம் ஆடுகளையும் ஐஞ்ஞூறு எருதுகளையும் லே
௰ வியருக்குக்கொடுத்தார்கள்.—இப்படி ஆராதனை
க்கு ஆயத்தமானபொழுது, இராசாவின் கட்ட
ளைப்படி ஆசாரியர்கள் தங்கள் தங்கள் ஸ்தா
னத்திலும், லேவியர் தங்கள் தங்கள் வகுப்பி
௰௧ லும் நின்றார்கள்.—அவர்கள் பஷ்கா உற்சவத்
தின் பலியிட்டார்கள்; ஆசாரியர்கள் தங்கள் தங்
கள் கையினால் இரத்தத்தைத்தெளித்தார்கள், லே
௰௨ வியர் தோல்களையுரித்தார்கள்.—சனங்களுடைய
பிதா வமிசப்பிரிவுகளின்படி மோசேயின் புத்
தகத்தில் எழுதியபிரகாரம், யெகோவாவுக்
குப் பலியிடுவதற்கு இடம் விடும்படி அவர்கள்
தகனபலிகளை அகற்றிவிட்டார்கள். எருதுகளை
௰௩ யும் அப்படியேசெய்தார்கள்.—அவர்கள் விதிப்
பிரகாரம் பஷ்கா உற்சவபலியை அக்கினியில்
பொரித்தார்கள்: மற்றப்பரிசுத்த வஸ்துக்களைப்
பானைகளிலும், கொப்பரைகளிலும், சட்டிகளி
லும் சமைத்துச் சீக்கிரமாய்ச்சனங்கள் யாவருக்
௰௪ கும் பங்கிட்டுக்கொடுத்தார்கள்.—பின்பு அவர்
கள் தங்களுக்கும் ஆசாரியர்களுக்கும் ஆயத்தப்
படுத்தினார்கள்: ஆரோன் வமிசத்தாராகிய ஆசா
ரியர்கள் இராத்திரிவரைக்கும் தகனபலிகளை
யும் நிணத்தையுந் தகித்துக் கொண்டிருந்தார்
கள்; ஆதலால் லேவியர் தங்களுக்கும் ஆரோன்
வமிசத்தாராகிய ஆசாரியர்களுக்கும் ஆயத்தப்
௰௫ படுத்தினார்கள்.—தாவீது, ஆசாப், எமான, இ
ராசாவின் தரிசியாகிய யெதுதூனென்னும் இ
வர்களுடைய கட்டளைப்படி, ஆசாப்பின் புத்
திரராகிய பாடகர்கள் தங்கள் தங்கள் ஸ்தானத்
திலிருந்தார்கள், வாசற் காவலாளர் ஒவ்வொரு
வாசலையுங்காத்துநின்றார்கள்; அவர்கள் தங்கள்
காரியத்தை விடக்கூடாது; லேவியராகிய அவர்
கள் சகோதரர் அவர்களுக்காக ஆயத்தப்படுத்தி
௰௬ னார்கள்.—இவ்விதமாய் யோஷியா இராசாவின்
கட்டளைப்படி பஷ்கா உற்சவம் ஆசரிக்கவும்,
யெகோவாவின் வேதிகையின்மேல்தகனபலி
யிடவும், அந்தத்தினத்திலே யெகோவாவின்
ஆராதனைக்கேற்றயாவும் ஆயத்தப்படுத்தப்பட்ட
ன.—அத்தினத்திலேவந்த இஸ்ரவேல்சந்ததியார் ௰௭
பஷ்கா உற்சவத்தை ஆசரித்தார்கள், ஏழுநாளள
வும் புளிப்பில்லாத அப்பத்தின் உற்சவத்தை ஆ
சரித்தார்கள்.—இஸ்ரவேலருக்குள், தீர்க்கதரிசி ௰௮
யாகிய சாமுவேலின்காலமுதல், இப்படி ஒரு
பஷ்கா உற்சவம் ஆசரிக்கப்படவில்லை; யோஷி
யாவும், ஆசாரியர்களும், லேவியரும், வந்திருந்த
யூதேயர் இஸ்ரவேலர்யாவரும், யெருஷலேமிய
ரும் ஆசரித்த பஷ்கா உற்சவம்போல, இஸ்ரவே
லரின் இராசாக்கள் ஒருவரும் ஆசரித்ததில்லை.—
யோஷியா அரசாண்ட பதினெட்டாம்வருஷம் ௰௯
இந்தப்பஷ்கா உற்சவம் ஆசரிக்கப்பட்டது.

இவைகளெல்லாம் நடந்தபின்பு, யோஷியா ௨௰
ஆலயத்தை ஆயத்தப்படுத்தினபொழுது, எகிப்து
இராசாவாகிய நேகோ, பிராத் நதியோரத்திலுள்
ள கர்கிமீஸுக்கு விரோதமா யுத்தஞ்செய்யவந்
தான்: யோஷியா அவனுக்கு விரோதமாயுத்தஞ்
செய்யப்புறப்பட்டான்.—அவன் தூதரையனுப் ௨௧
பி, யூதாவின் ராசாவே, உமக்கும் எனக்குமென்
ன; நான் இன்றைத்தினம் உமக்கு விரோதமாய்
வரவில்லையே, என்னுடன் யுத்தஞ்செய்கிற வமி
சத்தாருக்குவிரோதமாய்வந்தேன்: நான்சீக்கிரஞ்
செய்யும்படி தேவன் எனக்குக் கட்டளையிட்
டார்: ஆதலால் என்னுடனிருக்கிற தேவனை
விட்டுவிலகிவிடும், அல்லாதிருந்தால் அவர் உம்
மை அழிப்பாரென்றுசொல்லுவித்தான்.—ஆனா ௨௨
லும் யோஷியா அவனுக்குப்பராமுகம்பண்ணச்
சம்மதியாமலும், அவனுடன் தேவனின் வாய்
சொல்லிய நேகோவின் வாக்குகளைக் கேளாம
லும், அவனை எதிர்த்து யுத்தஞ்செய்யும்படி வே
ஷமாறி, மெகிதோவின் தாழ்ந்த பூமியிலேபோர்
செய்யப்போனான்.—வில்வீரர் யோஷியா இரா ௨௩
சாவின்மேல் எய்ய, இராசா தன் பணிவிடைக்
காரரைநோக்கி, எனக்குமிகவுங்காயப்பட்டது,
என்னை அப்புறம் கொண்டுபோய்விடுங்களென்
றான்.—அதினால் அவன் பணிவிடைக்காரர் அ ௨௪
வனை அந்த இரதத்தினின்று தூக்கி, அவனுடைய
வேறொரு இரதத்திலேற்றி, யெருஷலேமுக்குக்
கொண்டுவர, அவன் இறந்து தன்முன்னோரின்ம
யானஸ்தானத்தில் அடக்கம்பண்ணப்பட்டான்.
யூதா யெருஷலேமின் சனங்கள் யாவரும் யோ
ஷியாவுக்காகத்துக்கங்கொண்டாடினார்கள்.

எரேமியா யோஷியாநிமித்தம் புலம்பினான்: ௨௫
இந்நாள்வரைக்கும் எல்லாப்பாடகரும் பாடி
னிகளும் இஸ்ரவேலிலுண்டான வழக்கத்தின்
படி, தங்கள் தங்கள்புலம்பல்பாட்டுகளில் யோ
ஷியாவைக்குறித்துப் பேசுவார்கள்: அவைகள்
புலம்புதலின் புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கின்

(௰) எஸ்றா.௬.௰௮. (௰௧) அதி.௨௯.௨௨,௩௪. (௰௨) லேவி.௩.௩. (௰௩) யாத்.௰௨.௮,௯. ௧.சாமு.௨.௰௩. (௰௬) ௧.நாளா. ௨௬.௧,. ௧.நாளா.௯.௰௭. (௰௭) யாத்.௰௨.௰௬. (௰௮) ௨.இரா.௨௩.௨௨,௨௩. (௨௰) ௨.இரா.௨௩.௨௯. எரே.௪௬.௨. (௨௨) ௧.இரா.௨௨.௩௰. (௨௩) ௧.இரா.௨௨.௩௪. (௨௪) ௨.இரா.௨௩.௩௰. சக.௰௨.௰௧. (௨௫) புல.௪.௨௰. மத்.௯.௨௩. எரே.௨௨.௨௰.

௨௬ றன.—யோஷியாவின் மற்றக்கிரியைகளும், யெ
கோவாவின் வேதப்பிரமாணத்தில் எழுதிய
௨௭ பிரகாரம் அவன்செய்தநன்மைகளும்,—ஆதியந்
தமான அவன்செய்கைகளும் இஸரவேலர் யூதே
யருடைய இராசாக்களின் சரித்திரபுத்தகத்தில்
எழுதப்பட்டிருக்கின்றன.

## ௩௬. அதிகாரம்.

௧. யோவாகாஸ் ஆளுகை செய்தல். இராசாதிகாரங்கெடல்: ௫. தீதாய் ஆளுகைசெய்ததினிமித்தம் யோயாகீம் பாபேலுக்குக்கொண்டுபோகப்படல்: ௰௧. சிதிகியாஇராசாவாதல். துஷ்டகருமஞ்செய்தல்: ௰௪. பாவத்தினிமித்தந் தண்டிக்கப்பட்டு நாசமடைதல்: ௨௨. கோரெஷ் பிரசித்தஞ்செய்தல்.

பின்பு தேசத்தின் சனங்கள், யோஷியாவின்
புத்திரனாகிய யோவாகாசை அழைத்து, அவன்
பிதாவுக்குப்பின்பு யெரூஷலேமில் அவனை இ
௨ ராசாவாக ஏற்படுத்தினார்கள்.—யோவாகாஸ் அ
ரசாளத் தொடங்கினபொழுது அவனுக்கு இரு
பத்துமூன்றுவயது, அவன் யெரூஷலேமிலே
௩ மூன்றுமாதம் அரசாண்டான்.—எகிப்தின் இரா
சா, யெரூஷலேமில் அவனைக்கீழ்ப்படுத்தி, நூ
றுகிக்கார் வெள்ளியையும் ஒருகிக்கார் பொன்
னையுந் தண்டமாகத் தரும்படி தேசத்தாருக்குக்
௪ கட்டளையிட்டான்.—எகிப்தின் இராசா, அவன்
சகோதரனாகிய இலீயகீமை யூதாவுக்கும் யெரூ
ஷலேமுக்கும் இராசாவாக ஏற்படுத்தி, அவனுக்
குயோயாகீமென்னுமறுநாமந்தரித்தான். நேகோ
அவன் சகோதரனாகிய யோவாகாசைப்பிடித்து,
எகிப்துக்குக்கொண்டுபோனான்.
௫ யோயாகீம் அரசாளத் தொடங்கினபொழுது
அவனுக்கு இருபத்தைந்துவயது, அவன் யெரூ
ஷலேமில் பதினொருவருஷம் அரசாண்டான்:
அவன்தன் தேவனாகிய யெகோவாவின்பார்
௬ வைக்குத்தீமைசெய்தான்.—பாபேலின் இராசா
வாகியநெபுகத்நெத்சர், இவனுக்குவிரோதமாய்ப்
புறப்பட்டுவந்து, இவனைப் பாபேலுக்குக்கொ
௭ ண்டுபோகும்படி சங்கிலியினால்கட்டினான்.-நெ
புகத்நெத்சர்யெகோவாவின் ஆலயத்திலுள்ள
பாத்திரங்களைப் பாபேலுக்குக் கொண்டுபோய்,
பாபேலிலுள்ள தன்னுடைய ஆலயத்தில்வைத்
௮ தான்.—யோயாகீமின் மற்றக்கிரியைகளும், அ
வன்செய்தஅருவருப்புக்களும், அவனிடத்திலே
காணப்பட்ட தோஷமும், இஸரவேல் யூதா
இவர்களுடைய இராசாக்களின் சரித்திரபுத்தகத்
தில் எழுதியிருக்கின்றன: அவனுக்குப்பின் அ
வன் புத்திரனாகிய யோயாகீன் இராசாவானான்.
௯ யோயாகீன் அரசாளத்தொடங்கினபொழுது
அவனுக்கு எட்டுவயது, அவன்யெரூஷலேமில்
மூன்றுமாதமும் பத்துநாளும் அரசாண்டான்: அ
வன் யெகோவாவின் பார்வைக்குத் தீமை
செய்தான்.—அந்தவருஷமுடிந்த பின்பு, நெபு ௰
கத்நெத்சர் இராசா ஆளனுப்பி, யெகோவா
வின் ஆலயத்திலுள்ள திவ்விய பாத்திரங்களோ
டே அவனைப்பாபேலுக்குக்கொண்டுவரும்படி
செய்து, அவன் சகோதரனாகிய சிதிகியாவை யூ
தாவுக்கும் யெரூஷலேமுக்கும் இராசாவாக ஏற்
படுத்தினான்.
சிதிகியாஅரசாளத்தொடங்கினபொழுது அவ ௰௧
னுக்கு இருபத்தொருவயது, யெரூஷலேமில் அ
வன் பதினொருவருஷம் அரசாண்டான்.—அ ௰௨
வன்தன் தேவனாகிய யெகோவாவின் பார்
வைக்குத்தீமைசெய்தான், யெகோவாவின்
வாக்கைச்சொல்லிய தீர்க்கதரிசியாகிய எரேமி
யாவின் சமுகத்தில் தன்னைத் தாழ்த்தவில்லை.-அ ௰௩
வன், தன்னைத் தேவனுடையநாமத்தைக்கொண்
டு ஆணையிடுவித்த நெபுகத்நெத்சர் இராசாவின்
அதிகாரத்தை விரோதித்து, தன்கழுத்தைக்கருவ
மாக்கி, இஸரவேலரின் தேவனாகிய யெகோ
வாவுக்குப்பராமுகமாகி, தன்இருதயத்தைக்கடி
னப்படுத்தினான்.
மேலும்ஆசாரியரில் பிரதானிகள் சமஸ்தரும், ௰௪
சனங்களும், அந்நியதேசத்தாருடையஅருவருப்
பான கிரியைகள் யாவற்றின்படிக்கும் மிகவும்
அதிகமாய்க்குற்றஞ்செய்து, யெகோவா யெ
ரூஷலேமிலே சுத்தப்படுத்திய அவருடையஆல
யத்தைஅசுசிப்படுத்தினார்கள்.—ஆனாலும் அவர் ௰௫
கள் முன்னோரின் தேவனாகிய யெகோவா,
தமதுசனங்கள்மேலும் தமதுவாசஸ்தலத்தின்மே
லுந்தயைவைத்து, விரைந்தெழுந்து, தமதுதூதர்க
ளைஅவர்களிடத்தில் அனுப்பினார்.—அவர்களோ ௰௬
தேவனுடையதூதர்களைப்பரிகாசஞ்செய்து, அ
வருடையவாக்குகளை அலட்சியம்பண்ணி, அவ
ருடையதீர்க்கதரிசிகளை நிந்தித்தார்கள்; அதினி
மித்தம் அவர்கள்மேல் தேவனுடைய கோபம்
வந்தது, சகாயம் இல்லாமற்போயிற்று.—அவர் ௰௭
கல்தேயரின் இராசாவைவரும்படிபண்ண, அ
வன்அவர்களுடைய பரிசுத்தஸ்தானத்தில் அவர்
களுடைய வாலிபரைக்கட்கத்தினாலே கொலை
செய்தான்; வாலிபனையாகிலும், கன்னியையா
கிலும், விருத்தனையாகிலும், நரைத்த வயோதிக
னையாகிலும் கடாட்சிக்கவில்லை: எல்லாரையுந்
தேவன் அவன் கையில் ஒப்பித்தார்.—தேவ ௰௮
னுடையஆலயத்திலுள்ள சிறியபெரியபாத்திரங்
களனைத்தையும், யெகோவாவின் ஆலயத்தி
லுள்ள பொக்கிஷங்களையும், இராசா, அவன்பி
ரபுகளானவர்களின் சகல பொக்கிஷங்களையும்
அவன் பாபேலுக்குக்கொண்டுபோனான்.—அவர் ௰௯

(௩௬. அதி. ௧.) ௨.இரா.௨௩.௩௰,. (௫) ௨.இரா.௨௩.௩௬,௩௭.(௬)௨.இரா.௨௪.௧. அபகூ.௧.௬. ௨.இரா.௨௪.௬. எரே. ௨௨.௰௮,௰௯. (௭) ௨.இரா.௨௪.௰௩. தானி.௧.௧,௨. தானி.௫.௨. (௮) ௧.நாளா.௩.௰௬. எரே.௨௨.௨௪. (௯) ௨.இரா. ௨௪.௮.(௰) ௨.இரா.௨௪.௰—௰௭. தானி.௧.௧,௨. தானி.௫.௨. (௰௩) எரே.௫௨.௩. எசேக்.௰௭.௰௫,௰௮. ௨.இரா.௰௭. ௰௪. (௰௫) எரே.௨௫.௩,௪. (௰௬) எரே.௫.௰௨,௰௩. நீதி.௧.௨௫.௩௰. எரே.௩௨.௩. மத்.௨௩.௩௪. சங்.௭௪.௧.(௰௭)உபா. ௨௮.௫௰. ௨.இரா.௨௫.௧,. எஸ்ரு.௯.௭. சங்.௭௪.௨௰. (௰௮) ௨.இரா.௨௫.௰௩. (௰௯) ௨.இரா.௨௫.௯. சங்.௭௪.௬,௭. சங்.௭௯.௧,௭.

கள் தேவனுடைய ஆலயத்தைத் தகித்தார்கள்,
யெரூஷலேமின் மதில்களை இடித்தார்கள், அதி
லுள்ள சகல அரமனைகளையும் அக்கினியினாலே
தகித்து, அதிலேயிருந்த சகல திவ்வியபாத்திரங்
௨௰ களையும் நாசப்படுத்தினார்கள்.–கட்கத்துக்குத்தப்
பியிருந்தவர்களைப் பாபேலுக்குக் கொண்டுபோ
னான்; பாரஸ் இராச்சியம் ஸ்தாபிக்கப்படும்வ
ரைக்கும் அங்கே அவனுக்கும் அவன் வமிசத்தா
ருக்கும் அவர்கள் அடிமைகளாயிருந்தார்கள்.—
௨௧ எரேமியாவைக்கொண்டு யெகோவா சொல்
லிய வாக்கு நிறைவேறுகிறதற்கு, தேசம் தன்
இளைப்பாறுதலை அனுபவித்தது: அவர்கள் தே
சம் எழுபதுவருஷம் பாழாகி, இளைப்பாறுதலை
அடைந்தது.
௨௨ எரேமியாவைக்கொண்டு யெகோவா சொ
ல்லியவாக்கு நிறைவேறும்படி, பாரஸ் இராசா
வாகிய கோரேஷ்அரசாண்ட முதல்வருஷத்தில்,
யெகோவா, பாரஸ் இராசாவாகிய கோரே
ஷின்மனதை ஏவ,–அவன், பரமண்டலத்திலுள் ௨௩
ள தேவனாகிய யெகோவா பூமண்டலத்தி
லுள்ள சகல இராச்சியங்களையும் எனக்குத்தந்து
விட்டார்; யூதாதேசத்திலுள்ள யெரூஷலேமில்
அவர் தமக்கு ஒரு ஆலயத்தைத்திரும்பவும் கட்
டும்படி எனக்குக்கட்டளையிட்டிருக்கிறார். ஆத
லால் அவருடைய சனங்களில் உங்களுக்குள்
எவன் இருக்கிறானோ, அவன் தேவனாகிய யெ
கோவா, அவனோடிருப்பாராக, அவன் அங்
கே போகக்கடவனென்று பாரஸ் இராசாவாகிய
கோரேஷ் சொல்லுகிறாரென்று, தன் இராச்சி
யமெங்கும் எழுதியனுப்பிப் பிரசித்தம்பண்ணி
னான்.

---

(௨௰) ௨.இரா.௨௫.௰௧. எரே.௨௭.௭. (௨௧) எரே.௨௫.௯. எரே.௨௯.௰. லேவி.௨௬.௩௪,௩௫,௪௩. தானி.௯.௨. லேவி. ௨௫.௪,௫. (௨௨) எஸ்ரா.௧.௧. எரே.௨௫.௰௨,௰௩. (௨௩) ஏசா.௪௪.௨௮. எஸ்ரா.௧.௨,௩.

# எஸ்றுவின் புத்தகம்.

## க. அதிகாரம்.

*க. கோரெஷ்ராசா பிரசித்தஞ்செய்தல்: ரு. யெரூஷலேமுக்குத்திரும்பிப்போகச்சனங்கள்ஆயத்தப்படுத்தல்: எ. கோரெஷ் தேவாலயத்தின் பாத்திரங்களை இஸரவேல் சனங்களுக்கொப்பித்தல்.*

எரேமியாவைக்கொண்டு யெகோவாசொல்
லியவாக்குநிறைவேறும்படி,பாரஸ் இராசாவாகி
யகோரெஷ் அரசாண்ட முதல்வருஷத்தில்,யெ
கோவா, பாரஸ் இராசாவாகிய கோரெஷின்
உ மனதை எவ,—அவன், பரமண்டலத்திலுள்ள
தேவனாகிய யெகோவா, பூமண்டலத்திலுள்
ள சகல இராச்சியங்களையும் எனக்குத்தந்துவிட்
டார்; யூதாதேசத்திலுள்ளயெரூஷலேமிலேதமக்
கு ஒரு ஆலயத்தைக்கட்டும்படி எனக்குக்கட்ட
ங ளை இட்டிருக்கிறார்.—அவருடைய எல்லாச்சன
ங்களிலும் எவன் உங்களுக்குள்ளிருக்கிறானோ,
அவன் தேவனாகிய யெகோவா, அவனோடி
ருப்பாராக, அவன் யூதாதேசத்திலுள்ள யெரூஷ
லேமுக்குப்போய், அவருக்கு ஒரு ஆலயத்தைக்
கட்டுவானாக. யெரூஷலேமிலிருக்கிறஇஸரவே
லரின்தேவனாகிய யெகோவாவேதேவன்,-
ச எவ்விடத்தாரும் யெரூஷலேமிலுள்ள தேவனு
டைய ஆலயத்துக்கு உச்சாகமாய்க் காணிக்கை
கொடுப்பதுமன்றி, தங்களுக்குள்ளே தங்குகிறஅ
வனுக்குப்பொன்வெள்ளிமுதலியதிரவியங்களை
யும், மிருகசீவன்களையுங்கொடுத்து உதவிச்செய்
யவேண்டுமென்று, பாரஸ் இராசாவாகிய கோ
ரெஷ்சொல்லுகிறாரென்று, தன் இராச்சியமெங்
கும் எழுதி அனுப்பி, பிரசித்தம்பண்ணினான்.
ரு அதினால் யெரூஷலேமிலே யெகோவா
வின் ஆலயத்தைத்திரும்பவுங் கட்டும்படி, யூதா
வமிசத்திலும் பேன்யாமின் வமிசத்திலுமுள்ள
தலைவர்களும்,ஆசாரியர்களும், லேவியருமன்றி,
தேவனால்மனம் எவப்பட்டயாவரும்எழுந்தார்
சு கள்.-அவர்களைச்சுற்றியிருந்த சகலரும் உச்சாக
மாய்க்காணிக்கைகளைக்கொடுத்ததுமன்றி, வெள்
ளிப்பாத்திரங்களையும், பொன்னையும், மற்றப்
பொருள்களையும், மிருகசீவன்களையும்,விலையே
றப்பெற்ற பொருள்களையுங்கொடுத்து, அவர்க
ளுக்குதவிசெய்தார்கள்.
எ நெபுகத்நெத்சர் யெரூஷலேமினின்று எடுப்
பித்துவந்து, தன்தேவர்களின்ஆலயத்தில்வைத்
திருந்த யெகோவாவின் ஆலயத்தின் பாத்தி
ரங்களை, கோரெஷ் இராசா வெளியேகொண்
அ டுவந்தான்.—இவைகளைப்பாரஸ் இராசாவாகிய
கோரெஷ், பொக்கிஷத்துக்கதிகாரியாகிய மித்
திரேதாத்தைக்கொண்டு எடுப்பித்து, யூதாதேசத்
து அதிபதியாகியஷெஷ்பச்சாரிடத்தில்எண்ணி
ஒப்பித்தான்.—பொற்பாத்திரம் முப்பது, வெள் கூ
ளிப்பாத்திரம்ஆயிரம், கத்தி இருபத்தொன்பது,—
பொற்கிண்ணம் முப்பது, இரண்டாவது வெள் ய
ளிக்கிண்ணம் நானூற்றுப்பத்து, மற்றைப் பாத்தி
ரங்கள் ஆயிரம்: இதுவே அவைகளின்தொகை.-
ஆகப்பொன்வெள்ளிப்பாத்திரங்கள் ஐயாயிரத்து யக
நானூறு. பாபேலினின்று யெரூஷலேமுக்குப்
போக விடுதலைபெற்றசிறைகளோடு ஷெஷ்பச்
சார் இவைகளெல்லாவற்றையுங் கொண்டுபோ
னான்.

## உ. அதிகாரம்.

*க. சிறையினின்று யெரூஷலேமுக்கு மீண்டசனங்களைத்தொகையிடல்: ஙசு. ஆசாரியர்: சய. லேவியர்: சக. பாடகர்: சஉ.வாசற்காவலாளர்: சங. நிதீனியர்: ருரு. சலோமோனுடைய பணிவிடைக்காரரின்வமிசத்தார்: சுக. ஆசாரியரின் வமிசத்தார்: சுச. சமஸ்தரின் தொகையையும் அவர்கள்பொருளையும் எடுத்துக்காட்டல்: சுஅ. அவர்கள் காணிக்கைகள்.*

பாபேலின் இராசாவாகிய நெபுகத்நெத்சரால் க
பாபேலுக்குக் கொண்டுபோகப்பட்டவர்களுக்
குள்ளே, சிறையினின்றுயெரூஷலேமுக்கும், யூ
தாவிலுள்ளதங்கள்தங்கள்பட்டணங்களுக்கும்,-
சிருபப்பெல், யேஷுவா, நிகிமியா, செராயா, உ
ரெலாயா, மோர்திகாயி, பில்ஷான், மிஸ்பார்,
பிக்வாய், ரேகூம், பானா என்னுமிவர்களுடன்
திரும்பின மாகாணத்துச் சனங்களாவார்;—பா ங
ரோஷின் சந்ததியார், இரண்டாயிரத்தொருநூற்
றெழுபத்திரண்டுபேர்.—ஷிபத்தியாவின் சந்த ச
தியார், முந்நூற்றெழுபத்திரண்டுபேர்.—ஆராகின் ரு
சந்ததியார், எழுநூற்றெழுபத்தைந்துபேர்.—யே சு
ஷுவா, யோவாப்பென்னுமிவர்களின் வமிசத்
தாராகிய பாகாத்மோவாபின் சந்ததியார்,இரண்
டாயிரத்தெண்ணூற்றுப் பன்னிரண்டுபேர்.—எ எ
லாமின் சந்ததியார், ஆயிரத்திருநூற்றைம்பத்து
நாலுபேர்.—சத்தூவின் சந்ததியார், தொளாயி அ
ரத்து நாற்பத்தைந்துபேர்.—சக்காயின் சந்ததி கூ
யார், எழுநூற்றறுபதுபேர்.—பானியின் சந்ததி ய
யார், அறுநூற்று நாற்பத்திரண்டுபேர்.—பேபா யக
யின் சந்ததியார்,அறுநூற்றிருபத்துமூன்றுபேர்.—
அஸ்காத்தின் சந்ததியார், ஆயிரத்திருநூற்றிருபத் யஉ
திரண்டுபேர்.—அதொனிகாமின் சந்ததியார், அ யங
றுநூற்றறுபத்தாறுபேர்:—பிக்வாயின் சந்ததியார், யச

---

(க. அதி. க.) உ.நாளா.ஙசு.உஉ,உங. எரே.உரு.யஉ. (உ) எசா.சச.உஅ. (ங) தானி.சு.உசு. (ரு) பிலி.உ.யங. (எ) உ.இரா.உச.யங. உ.நாளா.ஙசு.எ. (அ) அதி.ரு.யச.—(உ. அதி. க.) நிகி.எ.சு,. உ.இரா.உச.யச,யரு,யசு. உ.நாளா. ஙசு.உய. (உ) நிகி.எ.எ. (ரு) நிகி.எ.ய. (சு) நிகி.எ.யக. (ய) நிகி.எ.யரு.

௰௫ இரண்டாயிரத்தைம்பத்தாறு பேர்.—ஆதீனின் சந்
௰௬ ததியார், நானூற்றைம்பத்துநாலுபேர்.—இஸ்கியா
வமிசத்தாராகிய ஆற்றேரின்சந்ததியார், தொண்
௰௭ ணூற்றெட்டுப்பேர்.—பேத்சாயின்சந்ததியார்முந்
௰௮ நூற்றிருபத்துமூன்றுபேர்.—யோராகின் சந்ததி
௰௯ யார், நூற்றுப்பன்னிரண்டுபேர்.—அஷூமின்சந்
௨௰ ததியார்,இருநூற்றிருபத்துமூன்றுபேர்.—கிப்பா
௨௧ ரின்சந்ததியார், தொண்ணூற்றைந்துபேர்.—பேத்
லகேமின்சந்ததியார்,நூற்றிருபத்துமூன்றுபேர்.-
௨௨ நிதோபாவின் சனங்கள ஐம்பத்தாறுபேர்.—
௨௩ அனாதோத்தின் சனங்கள், நூற்றிருபத்தெட்டுப்
௨௪ பேர்.—அஸ்மாவேத்தின் சந்ததியார், நாற்பத்தி
௨௫ ரண்டுபேர்.—கீரியதாரீம், கிபீரா, பெரோத்தென்
பவர்களின் சந்ததியார், எழுநூற்று நாற்பத்து
௨௬ மூன்றுபேர்.—ராமா, காபா என்பவர்களின் சந்
௨௭ ததியார், அறுநூற்றிருபத்தொரு பேர்.—மிக்மா
௨௮ சின் சனங்கள், நூற்றிருபத்திரண்டுபேர்.—பெத்
தேல் ஆயியென்பவைகளின்சனங்கள், இருநூற்
௨௯ றிருபத்துமூன்றுபேர்.—நேபோவின் சந்ததியார்
௩௰ ஐம்பத்திரண்டுபேர்.—மக்பீஷின்சந்ததியார், நூற்
௩௧ றைம்பத்தாறுபேர்.—மற்ற எலாமின்சந்ததியார்,
௩௨ ஆயிரத்திருநூற்றைம்பத்தி நாலுபேர்.—ஆரீமின்
௩௩ சந்ததியார்,முந்நூற்றிருபதுபேர்.—லோது, ஆதீத்,
ஒனோ என்பவர்களின்சந்ததியார், எழுநூற்றிரு
௩௪ பத்தைந்துபேர்.—யெரிகோவின் சந்ததியார்,முந்
௩௫ நூற்றுநாற்பத்தைந்துபேர்.—சேனாகின் சந்ததி
யார், மூவாயிரத்தறுநூற்றுமுப்பதுபேர்.

௩௬ ஆசாரியராவார்: யேஷூவாவின் வமிசத்தார்,
யெதாயாவின் சந்ததியார், தொளாயிரத்தெழுபத்
௩௭ திமூன்றுபேர்.—இம்மேரின் சந்ததியார், ஆயிரத்
௩௮ தைம்பத்திரண்டுபேர்.—பஷ்கூரின் சந்ததியார்,
௩௯ ஆயிரத்திருநூற்றுநாற்பத்தேழுபேர்.—ஆரீமின் சந்
ததியார், ஆயிரத்துப்பதினேழுபேர்.

௪௰ லேவியராவார்: ஒதாவியாவின் வமிசத்தாரா
கிய யேஷூவா, கத்மியேல் என்பவர்களின் சந்த
தியார், எழுபத்திநாலுபேர்.

௪௧ பாடகராவார்: ஆசாப்பின் சந்ததியார், நூற்றி
ருபத்தெட்டுப்பேர்.

௪௨ வாசற்காவலாளரின் சந்ததியாராவார்: ஷல்லு
மின் சந்ததியாரும், ஆற்றேரின் சந்ததியாரும்,
தல்மோனின் சந்ததியாரும், அக்கூப்பின்சந்ததி
யாரும், அற்றீற்றாவின் சந்ததியாரும், ஷோபா
யின் சந்ததியாருமாகிய நூற்றுமுப்பத்தொன்பது
பேர்.

௪௩ நிதீனியராவார்: சீகாவின்சந்ததியார், அசுபா
வின்சந்ததியார், தப்பாகோத்தின்சந்ததியார்,—
௪௪ கேரோசின் சந்ததியார், சீயாகாவின்சந்ததியார்,
௪௫ பாதோனின் சந்ததியார்,—லிபானாகின் சந்ததி
யார், அகாபாவின் சந்ததியார், அக்கூப்பின் சந்
௪௬ ததியார்,—அகாப்பின் சந்ததியார், ஷல்மாயின்
சந்ததியார், ஆனானின் சந்ததியார்,—கித்தேலின் ௪௭
சந்ததியார், காகாரின் சந்ததியார், ராயாகின்சந்
ததியார்,—ரேத்சீனின்சந்ததியார், நெகோதாவின் ௪௮
சந்ததியார், காசாமின்சந்ததியார்,—ஊசாவின் ௪௯
சந்ததியார், பசேயாக்கின்சந்ததியார், பேசாயின்
சந்ததியார்,—அஸ்னாவின் சந்ததியார், மெயூனி ௫௰
மின்சந்ததியார், நிபூசிமின்சந்ததியார்,—பக்பூக் ௫௧
கின் சந்ததியார், அகுபாவின் சந்ததியார், அர்கூ
ரின் சந்ததியார்,—பஸ்லூத்தின் சந்ததியார், மெ ௫௨
கிதாவின் சந்ததியார், அர்ஷாவின் சந்ததியார்,—
பர்கோசின் சந்ததியார், சிசெராவின்சந்ததியார், ௫௩
தாமாகின்சந்ததியார்,—நெத்சியாகின் சந்ததியார், ௫௪
அத்திபாவின் சந்ததியாராகிய இவர்களே.

சலோமோனுடையபணிவிடைக்காரரின் சந் ௫௫
ததியாராவார்: சோதாயின் சந்ததியார், சோபே
ரேதின் சந்ததியார், பிரூதாவின் சந்ததியார்,—
யாலாகின் சந்ததியார், தர்கோனின் சந்ததியார், ௫௬
கித்தேலின் சந்ததியார்,—ஷிபத்தியாவின் சந்த ௫௭
தியார், அற்றீலின் சந்ததியார், சிபேயிமிலுள்ள
பொகேரேத்தின் சந்ததியார், ஆமீயின் சந்ததி
யார்.—நிதீனியரும், சலோமோனுடைய பணி ௫௮
விடைக்காரரின் சந்ததியாரும், ஆகமுந்நூற்றுத்
தொண்ணூற்றிரண்டுபேர்,—தெல் மேலாகிலும், ௫௯
தெலர்ஷாவிலும், கெரூபிலும், அட்டானிலும்,
இம்மேரிலும்இருந்து புறப்பட்டவர்களும், தாங்
கள் இஸரவேலரோவென்று, தங்கள் பிதா வமி
சத்தையும், கோத்திரவரலாற்றையும் தெரிவிக்க
முடியாதவர்களுமாகிய சனங்களாவார்:—திலா ௬௰
யாவின் சந்ததியாரும், தோபியாவின் சந்ததியா
ரும், நெகோதாவின் சந்ததியாரும், ஆக அறுநூற்
றைம்பத்திரண்டுபேர். இஸரவேலின் சனத்தொ
கை இதுவே.

ஆசாரிய வமிசத்தில்: அபாயவின் சந்ததியார், ௬௧
கோசுவின்சந்ததியார், பர்சில்லாயின்சந்ததியார்;
இவன்கிலியாத்தியனான பர்சில்லாயின் புத்திரிக
ளில் ஒருத்தியை விவாகம் பண்ணி, அவர்கள் நா
மத்தைத்தரித்தான்:—இவர்கள் தங்கள் வமிசவர ௬௨
லாற்றைத் தேடி, அதைக் கண்டடையாமையி
னால், ஆசாரியபட்டத்தைவிட்டு நீங்க அசுத்தமா
னவர்களாய்த் தள்ளுண்டார்கள்.—அதிகாரி ஒரு ௬௩
வன் இவர்களைக்குறித்து, ஊரீம்தூமீம்பெறும் ஆ
சாரியன்தோன்றும் வரைக்கும் இவர்கள் பரிசுத்
த வஸ்துக்களைப் புசிப்பது தகாதென்று சொன்
னான்.

ஏகமாய்க்கூடியசமஸ்தசபையாரும், ஆக நாற் ௬௪
பத்தீராயிரத்து முந்நூற்றறுபதுபேர்.—இவர்கள் ௬௫
பணிவிடைக்காரரும் பணிவிடைக்காரிகளும்,
ஆக எழாயிரத்துமுந்நூற்றுமுப்பத்தேழுபேர்: இ
வர்களுக்குள்ளே பாடகரும் பாடினிகளும், இ
ருநூறுபேர்.—இவர்கள் குதிரைகள் எழுநூற்று ௬௬

(௰௮) நிகி.௭.௨௪. (௨௰) நிகி.௭.௨௫. (௨௪) நிகி.௭.௨௮. (௩௧) வச.௭. (௩௬) ௧.நாளா.௨௪.௭. (௩௭) ௧.நாளா.௨௪.௰௪. (௩௮) ௧.நாளா.௯.௰௨. (௩௯) ௧.நாளா.௨௪.௮. (௪௰) அதி.௩.௯. நிகி.௭.௪௩. (௪௩) ௧.நாளா.௯.௨. (௫௨) நிகி.௭.௫௪. (௫௫) ௧.இரா.௯.௨௧. நிகி.௭.௫௭. (௫௭) நிகி.௭.௫௯. (௫௮) யோசு.௯.௨௧,௨௭. ௧.நாளா.௯.௨. ௧.இரா.௯.௨௧. (௫௯) நிகி.௭.௬௧. (௬௨) ௨.சாமு.௰௭.௨௭. எண்.௩.௰. (௬௩) நிகி.௮.௯. லேவி.௨௨.௨,௰,௰௫,௰௬. யாத்.௨௮.௩௰. எண்.௨௭.௨௧. (௬௪) நிகி.௭.௬௬.

முப்பத்தாறு: இவர்கள் கோவேறுகழுதைகள் இ
௬௭ ருநூற்றுநாற்பத்தைந்து;—ஒட்டகங்கள் நானூற்
றுமுப்பத்தைந்து; கழுதைகள் ஆறுயிரத்தெழுநூ
ற்றிருபது.
௬௮ பிதாவமிச பிரதானிகளிற்சிலர், யெரூஷலே
மிலுள்ள யெகோவாவின் ஆலயஸ்தானத்தில்
வந்தபொழுது, தேவனுடைய அந்தஆலயத்தைச்
சுயஸ்தானத்திலே ஸ்தாபிக்கும்படி மனப்பூருவ
௬௯ மாய்க்காணிக்கைகளைக் கொடுத்தார்கள்:—அவர்
கள் தங்கள் தங்கள் வல்லமைக்கேற்கக்கிரியை
யின்பொக்கிஷத்துக்கு அறுபத்தோராயிரம் தர்
கிமோன் பொன்னையும், ஐயாயிரம் இருத்தல்
வெள்ளியையும், நூறு ஆசாரியவஸ்திரங்களையும்
௭௰ கொடுத்தார்கள்.—ஆசாரியர்களும், லேவியரும்,
மற்றைச்சனங்கள்சிலரும், பாடகரும், வாசற்
காவலாளரும், நிதீனியரும், தங்கள்தங்கள் பட்
டணங்களிலும், இஸ்ரவேலரனைவரும் தங்கள்
தங்கள்பட்டணங்களிலும், வசித்தார்கள்.

## ௩. அதிகாரம்.

௧. தேவனுடைய வேதிகையைத்திரும்பவும் ஸ்தாபித்தல்: ௮. மகிழ்ந்தும் அழுதும் யெகோவாவின் ஆலயத்துக்கு அஸ்திபாரம்போடல்.

பின்பு ஏழாமாதமானபொழுது, நகரத்தாராகிய
இஸ்ரவேல்சந்ததியார் யெரூஷலேமில் ஒருவர்
௨ போலக்கூடினார்கள்.—யோசாதாக்கின் புத்திர
னாகிய யேஷுவாவும் அவன் சகோதரராகிய ஆ
சாரியர்களும், ஷியல்தியேலின் புத்திரனாகிய
சிருபப்பெலும் அவன் சகோதரரும் எழுந்து,
தேவனுடைய தாசனாகிய மோசேயின் வேதப்
பிரமாணத்தில் எழுதப்பட்டபிரகாரம் தகனப
லிகளிடும்பொருட்டு, இஸ்ரவேலரின் தேவனு
டையவேதிகையைத் திரும்பக்கட்டினார்கள்.—
௩ அவர்கள் அத்தேசத்தின் சனங்களுக்குப்பயந்து,
வேதிகையை அதின் பாதத்தின்மேல் ஸ்தாபித்
து, அதின்மேல் யெகோவாவுக்குத்தகனபலி
யிட்டார்கள், காலையிலும் மாலையிலுந் தகனபலி
௪ யிட்டார்கள்.—எழுதியிருக்கிறபடி அவர்கள்கூ
டார உற்சவத்தையும் ஆசரித்தார்கள், விதிப்பி
ரகாரம் இலக்கத்தின்படி தினக்கட்டளைக் கேற்
க, நாடோறும் தகன பலிகளை யிட்டார்கள்.—
௫ பின்பு ஒவ்வொருதினத்திலும், அமாவாசியிலும்,
யெகோவா தமக்குப்பரிசுத்தமாக ஏற்படுத்தி
யசகல உற்சவங்களிலும், உற்சாகமாய் எவரும்
யெகோவாவுக்குக் காணிக்கைசெலுத்துஞ்ச
மயத்திலும், வேண்டிய தகன பலிகளையிட்டார்
௬ கள்.—ஏழாமாதத்தின் முதல் தினந்தொடங்கி,
யெகோவாவுக்குத் தகனபலிகளையிடத் தொ
டங்கினார்கள். ஆனாலும் யெகோவாவின் ஆ
௭ லயத்திற்கு அத்திபாரம்போடப்படவில்லை.—பா
ரஸ் இராசாவாகிய கோரெஷிடத்தில்பெற்றகட்
டளையினால் அவர்கள் கற்சிற்பருக்குந் தச்சருக்
குந்திரவியத்தையும், லிபானோனிலிருந்து கடல்
வழியாய் யொப்பாவுக்கு ஏரஸ்மரங்களைக்கொ
ண்டுவரும்படி சீதோனியருக்குந் தீறியருக்கும்
போசனபானத்தையும், எண்ணெயையுங் கொ
டுத்தார்கள்.
பின்பு அவர்கள் யெரூஷலேமில் யெகோ ௮
வாவின் ஆலயத்தினிடத்திலேவந்த இரண்டாம்
வருஷம் இரண்டாமாதம், ஷியல்தியேலின்புத்
திரனாகிய சிருபப்பெலும், யோசாதாக்கின்புத்
திரனாகிய யேஷுவாவும், அவர்கள் சகோதரரில்
மீந்திருந்தஆசாரியர்களும், லேவியரும், சிறையி
னின்று யெரூஷலேமுக்குவந்த யாவரும் ஆரம்
பஞ்செய்து, யெகோவாவின் ஆலயத்தின்கி
ரியையைச்செய்விக்கும்படி, இருபது வயதுமு
தல் அதற்குமேற்பட்ட லேவியரை ஏற்படுத்தி
னார்கள்.—அப்பொழுது ஓதாவியா வமிசத்தைச் ௯
சேர்ந்த யேஷுவாவும், அவன்புத்திரரும், சகோ
தரரும், கத்மியேலும், அவன்புத்திரரும், எனாதத்
தின்புத்திரரும், அவர்கள்புத்திரரும், அவர்கள் ச
கோதரராகிய லேவியரும், தேவனுடைய ஆல
யத்தில் வேலைக்காரரை ஏற்படுத்தும்படி எழுந்து
நின்றார்கள்.—சிற்பர்கள் யெகோவாவின் ஆ ௰
லயத்துக்கு அத்திபாரம்போட்டபொழுது, இஸ
ரவேலரின் இராசாவாகிய தாவீது நியமித்தபிர
காரம், யெகோவாவுக்குக் கீர்த்தனஞ்செய்யும்
பொருட்டுத் தங்கள் தங்கள் வஸ்திரங்களைத்தரித்
து, எக்காளம்பிடித்த ஆசாரியர்களையும், கைத்தா
ளம்பிடித்த ஆசாப்பின் புத்திரராகிய லேவியரை
யும், நிறுத்தினார்கள்.—யெகோவாவே தயாப ௰௧
ரர்; இஸ்ரவேலருக்கு அவர்செய்கிற அனுக்கிர
கம் என்றுமுள்ளதென்று சொல்லி, அவர்கள் யெ
கோவாவைத்துதித்தும், அவர்செய்த நன்மை
யைப்பாராட்டியும், வகுப்புகளின்படிஏகமாய்ப்
பாடினார்கள். யெகோவாவுடையஆலயத்தின்
அத்திபாரம்போட்டசமயத்தில், யெகோவா
வைத்துதித்துத் துதித்துச் சகலசனங்களும், உரத்
தசத்தத்தோடு ஆரவாரம்பண்ணினார்கள்.—மூந் ௰௨
தின ஆலயத்தைக்கண்டிருந்த முதியோராகிய ஆ
சாரியர்களும், லேவியரும், வமிசத்தலைவருமான
இவர்களில் அநேகரோ, தங்கள்கண்ணுக்குமுன்
இந்த ஆலயத்துக்கு அத்திபாரம் போடப்பட்ட
பொழுது மிகவுங்குரலிட்டழுதார்கள்; அநேகர்
உட்களிப்புடன் உரத்தசத்தமாய் ஆரவாரித்தார்
கள்:—சத்தம் தூரத்திற்கேட்கும்படி சனங்கள் ௰௩
உரத்தசத்தமாய் ஆரவாரித்தபடியால், சனங்களு
டைய உள்ளக்களிப்பின் சத்தம் இது என்றும்,
அழுகையின் சத்தம் இது என்றும், சனங்களால்
நிச்சயிக்கக்கூடாதிருந்தது.

(௬௮)நிகி.௭.௭௰. ௧.நாளா.௨௬.௨௰. (௭௰) அதி.௬.௰௬,௰௭. நிகி.௭.௨௩.—(௩.அதி.௨.) ஆகா.௧.௧. சக.௩.௧. மத்.௧.௰௨. லூக்.௩.௨௭. உபா.௰௨.௫. (௩) எண்.௨௮.௩,௫.(௪)நிகி.௮.௰௪,௰௭. சக.௰௪.௰௬,௰௭. யாத்.௨௩.௰௬. எண்.௨௯.௰௨,. (௫) யாத்.௨௯.௩௮. (௭) ௧.இரா.௫.௬,௯. அப்.௰௨.௨௰. ௨.நாளா.௨.௰௬. அப்.௯.௩௬. அதி.௬.௩.(௮) ௧.நாளா.௨௩.௨௪,௨௭. (௯) அதி.௨.௪௰. (௰) ௧.நாளா.௰௬.௫,௬,௪௨. ௧.நாளா.௬.௩௧. (௰௧) யாத்.௰௫.௨௧. நிகி.௰௨.௨௪. ௧.நாளா.௰௬.௩௪. சங்.௱௩௬.௧. ௧.நாளா.௰௬.௪௧. எரே.௩௩.௰௧. (௰௨) ஆகா.௨.௩.

## ௪. அதிகாரம்.

௧. யூதரினின்று விரோதிகள் அகற்றப்பட்டமையால் வேலையைத்தடுத்தல்: ௰௧. இராசாவிடத்தில் அவர்கள் அனுப்பின பிரதிபத்திரத்தைக் காட்டல்: ௰௭. இராசா அவர்களுக்குக்கட்டளையிடல்: ௨௪. வேலை தடுக்கப்படல்.

சிறைநீங்கின சனங்கள்,இஸரவேலரின் தேவனாகிய யெகோவாவுக்கு ஆலயங்கட்டுகிறார்களென்று, யூதா, பேன்யாமீனியராகிய இவர்
௨ கள்சத்துருக்கள் கேள்விப்பட்டபொழுது;-சிருபப்பெலிடத்திலும், வமிசத்தலைவர்களிடத்திலும்வந்து, அவர்களுடனே, உங்களைப்போலநாங்களும் உங்கள் தேவனையே தேடுகிறோம்; இவ்விடத்தில்எங்களைக்கொண்டுவந்த அசூரின்இராசாவாகிய ஏசரத்தோன் அரசாண்டகாலமுதல் நாங்கள் அவருக்குப் பலியிட்டுவருகிறோம்; ஆதலால் உங்களுடன்நாங்களுங்கட்ட உத்தரவுதா
௩ ருங்களென்றார்கள்.—அதற்குச்சிருபப்பெலும், யேஷூவாவும், இஸரவேலரின் மற்றைவமிசத்தலைவர்களும், அவர்களிடத்தில், எங்களுடைய தேவனுக்கு எங்களுடன் ஆலயங்கட்ட உங்களுக்கு அதிகாரமில்லை; பாரஸ் இராசாவாகிய கோரெஷ் இராசா எங்களுக்குக் கட்டளையிட்டபிரகாரம், நாங்கள் மாத்திரம் இஸரவேலரின் தேவனாகிய யெகோவாவுக்குக் கட்டுவோ
௪ மென்றார்கள்.—அதினால் தேசத்தின் சனங்கள், யூதா சனங்களின் கை மெலியும்படி செய்யவும், அவர்கள் கட்டும்பொழுது அவர்களைக் கி
௫ லேசப்படுத்தவுந் தொடங்கினார்கள்.—பாரஸ் இராசாவாகிய கோரெஷின்காலமுழுவதும், அவனுக்குப்பின் பாரஸ்இராசாவாகியதாரியாவெஷ் அரசாண்ட காலம்வரைக்கும், இவர்களுடைய அபிப்பிராயத்தை விருதாவாக்கும்படி, இவர்களுக்கு விரோதமாக ஆலோசனைக்காரருக்குத் தி
௬ ரவியங் கொடுத்துவந்தார்கள்.—அகஷ்வேரோஷ் அரசாண்டபொழுது, அவனரசாளுகையினாரம்பத்தில், அவர்கள் யூதரையும் யெரூஷலேமியரையும் விரோதித்து, அபாண்டமாக ஒரு பத்திரத்தை எழுதினார்கள்.
௭ அர்தக்ஷஷ்தாவின்காலத்திலே பிஷ்லாம்,மித்திரேதாத், தபேல என்னு மிவர்களும், இவர்கள் கூட்டத்தாரும், பாரஸ் இராசாவாகிய அர்தக்ஷஷ்தாவுக்கு ஒருநிருபம் எழுதினார்கள்; அது அராமிய எழுத்தில் எழுதப்பட்டதுமன்றி, அதின்கருத்தும் அராமிய பாஷையிலே தெரிவிக்
௮ கப்பட்டது.—இவ்விதமாக ரேகூம் என்னும் அதிகாரியும், ஷிம்ஷாயென்னும் இலேககனும் யெரூஷலேமுக்கு விரோதமாய், அர்தக்ஷஷ்தா என்னும் இராசாவுக்கு ஒரு நிருபம் எழுதினார்கள்:-
௯ அப்பொழுது ரேகூம் என்னும் அதிகாரியும்,ஷிம்ஷாயென்னும் இலேககனும், அவர்களுடைய மற்றக் கூட்டத்தாராகிய தீனீயர், அபர்சத்கியர், தர்பிலியர், அபர்சியர், அர்கீவியர், பாபேல் நகரத்தார், ஷூஷன்கியர், தெகாவேயர், ஏலாமியர் என்பவர்களும்,—மகாமகிமைபொருந்திய அஸ் ௰
னப்பர் கொண்டுவந்து, ஷமாரியாவிலுள்ள பட்டணங்களிலே ஸ்தாபித்த மற்றைச்சாதியாரும், நதிக்கிப்புறத்திலுள்ள பிறரும், இவ்வண்ணமே எழுதினார்கள்.
அவர்கள் அர்தக்ஷஷ்தா இராசாவுக்கு எழுதி ௰௧
யனுப்பின நிருபத்தின் பிரதியாவது; நதிக்கிப்புறத்திலுள்ள உமது அடியார் முதலானவர்கள்.—
இராசாவுக்குத் தெரிவிப்பதாவது, உம்மிடத்தி ௰௨
லிருந்து எங்களிடத்தில் வந்த யூதர் யெரூஷலேமிலே வந்து, அந்தக்கெட்ட இராசதுரோக நகரத்தைக்கட்டுகிறார்கள்; அவர்கள் அத்திபாரம் போட்டு, மதிலை எழுப்ப ஆயத்தமாயிருக்கிறார்
கள்.—இந்த நகரங்கட்டப்பட்டு, இதின் மதில் ௰௩
கள் ஸ்தாபிக்கப்படுமாகில், அவர்கள் பகுதியும், இறையும், தீர்வையுந் தரமாட்டார்கள், அதினால் இராசாக்களின் வரத்துக்கு நஷ்டமுண்டாகுமென்று, நாங்கள் இராசாவிடத்தில் இதை அறி
விக்கிறோம்.—நாங்கள் அரமனையின் உப்பை ௰௪
அனுபவிக்கிறோம்,இராசாவுக்குவரும்நஷ்டத்தை நாங்கள் காண்பதுசரியல்ல, ஆதலால் அனுப்பி இராசாவுக்குக் காரியத்தைத் தெரிவித்திருக்கி
றோம்;—உமது முன்னோரின் சரித்திர புத்தகத் ௰௫
தில் ஆராய்ந்து பாரும்: அதினால் இந்த நகரந்துரோக நகரமென்றும், இராசாக்களுக்குந் தேசத்துக்குங் கேடுசெய்வதென்றும், பூருவகாலத்தில் இந்த நகரத்தார்கட்டளை மீறிநடந்து வந்தார்களென்றும்,இதினிமித்தம் அது நாசப்பட்டதென்
றும், அச்சரித்திர புத்தகத்திலே காண்பீர்.—இந் ௰௬
த நகரந்திரும்பவுங்கட்டப்பட்டு, இதின் மதில்கள் ஸ்தாபிக்கப்படுமாகில், நதிக்கிப்புறத்தில் உமக்குச்சற்றும்அதிகாரம்இருக்கமாட்டாதென்று, இராசாவுக்குத்தெரிவிக்கிறோமென்பதேயாம்.
பின்பு இராசா, ரேகூம் என்னும் அதிகாரிக் ௰௭
கும், ஷிம்ஷாய் என்னும்இலேககனுக்கும், சமாரியாவில் வசிக்கிற மற்றைக்கூட்டத்தாருககும், நதிக்கிப்புறத்திலுள்ள பிறருக்கும் உத்தரமாக, நீங்களுஞ் சகலரும்வாழ்க.—நீங்கள்எனக்கனுப் ௰௮
பிய நிருபம் நான்தெளியும்படி, என்சமுகத்திலே வாசிக்கப்பட்டது.—நான் கட்டளையிட்டு ௰௯
ஆராய்ந்து பார்ப்பித்தேன், பூருவகாலத்தில் இந்தநகரம் இராசாக்களுக்கு விரோதமாய் எழுந்ததென்றும், இதிலேகட்டளைமீறலும் இராசதுரோகமும்நடந்தனவென்றுங் காணப்பட்டது.—யெ ௨௰
ரூஷலேமிலிருந்த பராக்கிரம இராசாக்கள் நதிக்கப்புறத்திலுள்ள சகலதேசங்களையும் ஆண்டுவந்தார்கள்;பகுதியும், இறையும்,தீர்வையும், அவர்களுக்குக்கொடுக்கப்பட்டன.—ஆதலால் என்னால் ௨௧
வேறுகட்டளை கிடைக்கும்வரைக்கும் இந்த நகரத்தைக்கட்டாமல்விடும்படி, இந்தச்சனங்களுக்குக்கட்டளையிடுங்கள்.—இதைத்தவறின்றிச்செய் ௨௨
யும்படிசாவதானமாயிருங்கள்: இராசாக்களுக்கு

(௪. அதி. ௧.) வச.௭,௮,௯. (௨) ௨.இரா.௰௭.௨௪. (௩) நிகி.௨.௨௰. அதி.௧.௨,௩,௪. (௪) அதி.௩.௩. (௬) ௨.இரா.௰௭.௩௰,௩௧. (௰) வச.௧,௰௧,௰௭. (௰௩) அதி.௭.௨௪. (௨௰) ௧.இரா ௪.௨௧. சங்.௭௨.௮. ஆதி.௰௫.௰௮. யோசு.௧.௪.

நட்டம்அதிகரிப்பதென்னவென்று எழுதியனுப்பினான்.

௨௩ அர்தக்ஷஷ்தா இராசாவின்நிருபம ரேகூமுக்கும், இலேககனாகிய ஷிம்ஷாயிக்கும், அவர்கள் கூட்டத்தாருக்குமுன்பாக வாசிக்கப்பட்டபொழுது, அவர்கள் யெருஷலேமில் யூதரிடத்தில் விரைந்துசென்று, கைவல்லமையினால், அ
௨௪ வர்களைத்தடைப்படுத்தினார்கள்.—அதினால் யெருஷலேமிலுள்ள தேவனுடைய ஆலயத்தின்கிரியை நின்றுவிட்டது. பாரஸ் இராசாவாகிய தாரியாவெஷ் அரசாண்ட இரண்டாம்வருஷம் வரைக்கும் நின்றுவிட்டது.

## ௫. அதிகாரம்.

௧. யூதர் ஆலயந் திரும்பவுங் கட்டத்தொடங்கல்: ௩. விரோதிகள் அவர்களைத்தடைப்படுத்தவகை தேடல்: ௬. அவர்கள் தாரியாவெஷ்ராசாவிடத்தில் அனுப்பியபத்திரத்தின் பிரதிபத்திரத்தைக் காட்டல்.

பின்பு தீர்க்கதரிசியாகிய ஆகாய், இத்தோவின் புத்திரனாகியசகரியா என்னுந்தீர்க்கதரிசிகள், யூதாவிலும்யெருஷலேமிலுமுள்ளயூதர்களுக்கு இஸரவேலரின்தேவனுடையநாமத்தைக்கொண்
௨ டுதீர்க்கதரிசனஞ் சொன்னார்கள்.-அப்பொழுது ஷியல்தியேலின் புத்திரனாகிய செருபப்பெலும், யோசாதாக்கின் புத்திரனாகிய யேஷுவாவும் எழுந்து, யெருஷலேமிலுள்ள தேவனுடையஆலயத்தைக் கட்டத்தொடங்கினார்கள்: தேவனுடையதீர்க்கதரிசிகள் அவர்களுக்குத்துணைசெய்து, அவர்களோடிருந்தார்கள்.
௩ அக்காலத்திலே நதிக்கிப்புறத்திலுள்ள அதிகாரியாகியதத்னாயும், ஷேதார்பொஸ்னாயும், அவர்கள் கூட்டத்தாரும்வந்து,அவர்களைநோக்கி,இந்த ஆலயத்தைக்கட்டவும், இந்தமதிலை எழுப்பவும் உங்களுக்குக்கட்டளையிட்டவன் ஆர் என்
௪ றார்கள்.—அப்பொழுது நாங்கள் கட்டுகிறவர்களின் நாமங்கள் இன்னவைகளென்று சொல்லி,
௫ ஏற்றஉத்தரங்கொடுத்தோம்.—யூதரின் முதியோர்மேல் தேவனுடைய கடாட்சமிருந்தபடியால், அவர்கள் தாரியாவெஷுவின் கட்டளையின்றி இவர்களைத்தடைப்படுத்த முடியாமற்போயிற்று: பின்பு அவர்கள் இதைக்குறித்து உத்தரமாக எழுதியனுப்பினார்கள்.
௬ நதிக்கிப்புறத்தில் அதிகாரியாகிய தத்னாயும், ஷேதார்பொஸ்னாயும், நதிக்கிப்பாலிருக்கிற அவன் கூட்டத்தாராகிய அபர்சிகியரும், தாரியா
௭ வெஷ்இராசாவுக்கனுப்பிய பத்திரமாவது:—தாரியாவெஷ்இராசாவுக்குச்சகலநன்மையுமுண்டா
௮ வதாக.—நாங்கள் யூதேயதேசத்திலுள்ள மகாதேவனுடைய ஆலயத்துக்குவந்தோம், அதுபெரியகற்களால்கட்டப்படுகின்றது, சுவர்களின்மேல் உத்திரங்கள் வைக்கப்படுகின்றன, இந்தவேலை விரைவாய்நடக்கின்றது, அவர்கள்கையினால் அதுசித்திபெறப்போகின்றது.—அப்பொழுது நாங் ௯
கள் அந்த முதியோரைநோக்கி, இந்த ஆலயத்தைக்கட்டவும், இந்தமதிலை எழுப்பவும், உங்களுக்குக் கட்டளையிட்டவனாரென்று வினவி
னோம்.—அவர்களுடையசனத்தலைவரின்நாமங் ௰
களை உமக்கெழுதி அறிவிக்கும்படியாக, அவர்கள்நாமங்கள் என்னவென்றுங் கேட்டோம்.—
அதற்குஅவர்கள், இஸரவேலின்பெரிய இராசா ௰௧
ஒருவன் அநேகவருஷத்துக்குமுன் ஒருஆலயத்தைக்கட்டி ஸ்தாபித்தான்; அந்தஆலயத்தைப்பரமண்டலத்துக்கும் பூமண்டலத்துக்கும் தேவனுடைய அடியாராகிய நாங்கள் திரும்பவுங்கட்டு
கிறோம்.—எங்கள் முன்னோர் பரமண்டலத்தி ௰௨
லுள்ளதேவனைக்கோபப்படுத்தினபின்பு,அவர், அவர்களைப்பாபேல் இராசாவுங்கல்தேயனுமாகிய நெபுகத்நெத்சரின்கையில்ஒப்பித்தார், அவன் இந்த ஆலயத்தைநாசப்படுத்தி, சனங்களைப் பா
பேலுக்குக்கொண்டுபோனான்.—பாபேல் இரா ௰௩
சாவாகிய கோரெஷ் அரசாண்ட முதலாம்வருஷத்திலே,கோரெஷ்இராசாதேவனுடையஇந்த
ஆலயத்தைக்கட்டும்படி கட்டளையிட்டான்.-யெ ௰௪
ருஷலேமிலிருந்த ஆலயத்தினின்று நெபுகத்நெத்சர் எடுத்து, பாபேலின் ஆலயத்திலேகொண்டுபோய்வைத்ததேவனுடைய ஆலயத்தின்பொன் வெள்ளிப்பாத்திரங்களையும், கோரெஷ் இராசா பாபேலின் ஆலயத்தினின்றுஎடுத்து, தான்அதிகாரியாகஏற்படுத்தியஷெஷ்பச்சார் என்னும் நா
மமுள்ள ஒருவனிடத்தில் ஒப்பித்து;—அவனை ௰௫
நோக்கி, நீ இந்தப்பாத்திரங்கள் எல்லாவற்றையும்எடுத்து, யெருஷலேமிலுள்ள ஆலயத்துக்குக் கொண்டுபோ, தேவனுடையஆலயம் அதின்ஸ்தானத்திலே கட்டப்படவேண்டுமென்றான்.—
அப்பொழுது ஷெஷ்பச்சார்வந்து, யெருஷலே ௰௬
மிலுள்ளதேவனுடைய ஆலயத்துக்கு அஸ்திபாரம்போட்டான்: அதுமுதல் இதுவரைக்கும் அதுகட்டப்படுகின்றது, இன்னும் நிறைவேறவில்லையென்று உத்தரஞ்சொன்னார்கள்; இதை இரா
சாவுக்குத்தெரிவிக்கிறோம்.—ஆதலால் இப்பொ ௰௭
ழுது இராசாவுக்குப் பிரியமானால், கோரெஷ் இராசா, யெருஷலேமிலுள்ள தேவனுடைய ஆலயத்தைக்கட்டும்படி கட்டளைகொடுத்தாரோவென்று, பாபேலிலுள்ள இராசாவின் பொக்கிஷசாலையில் ஆராய்ந்துபார்க்கலாம், பின்பு இந்தக்காரியத்தைக்குறித்து இராசா தமது கட்டளையை எங்களுக்கனுப்புவாராகவென்று, ஒரு நிருபம் எழுதியனுப்பினார்கள்.

## ௬. அதிகாரம்.

௧. ஆலயத்தைக்கட்டும்படி தாரியாவெஷ் இராசாபுதுக்கட்டளை அனுப்பல்: ௰௩. ஆலயத்தைக் கட்டி முடித்தல்: ௰௬. ஆலயத்தைப் பிரதிஷ்டைசெய்தல்: ௰௯. பஷ்கா உற்சவத்தைப் பாலித்தல.

(௫. அதி. ௧.) ஆகா. ௧. ௧. சக. ௧. ௧. (௨) அதி. ௩. ௨. (௩) வச. ௬, ௯. (௪) வச. ௰. (௫) அதி. ௭. ௬, ௨௮. சங். ௩௩. ௰௮. அதி. ௬. ௬. (௬) அதி. ௪. ௯. (௯) வச. ௩. ௪. (௰௧) ௧. இரா. ௬. ௧. (௰௨) ௨. நாளா. ௩௬. ௰௬, ௰௭. ௨. இரா. ௨௪. ௨. (௰௩) அதி. ௧. ௧. (௰௪) அதி. ௧. ௭, ௮, ஆகா. ௧. ௰௪. ஆகா. ௨. ௨, ௨௧. (௰௬) அதி. ௩. ௮, ௰. அதி. ௬. ௰௫. (௰௭) அதி. ௬. ௧, ௨.—(௬. அதி.)

தாரியாவெவ்ஷ் இராசா கட்டளையிட்டபொழு
து, பாபேலின் பொக்கிஷங்கள் வைக்கப்பட்ட
ஸ்தானத்திலுள்ள பத்திரிகைச்சாலையிலே தேடி
௨ ஞர்கள்.—மேதியதேசத்தில் அக்மேதா நகரத்தி
லுள்ள அரமனையில் ஒருபத்திரிகைகாணப்பட்
௩ டது.—அதில்கோரெவ்ஷ் இராசா அரசாண்டமு
தல்வருஷத்தில், கோரெவ்ஷ் இராசா யெரூஷலே
மிலுள்ள தேவனுடைய ஆலயம் சனங்கள் பலி
யிட்ட ஸ்தானத்திலே கட்டப்படுவதாக, அதற்
கு அத்திபாரந் திறமாகப்போடப்படவேண்டும்;
அதினுயரம் அறுபதுமுழமும், அதின் விசாலம்
௪ அறுபதுமுழமுமாயிருக்கவேண்டும்.-மூன்றுவரி
சை பெரியகற்களினாலும், ஒருவரிசை புதுமரங்
களினாலுஞ்செய்யப்படவேண்டும்: செலவு அர
௫ மனையினின்று கொடுக்கப்படவேண்டும்:—அன்
றியும்,நெபுகத்நெத்சார் யெரூஷலேமிலுள்ள ஆல
யத்தினின்று எடுத்து, பாபேலுக்குக்கொண்டுவந்
த தேவனுடைய ஆலயத்தின் பொன்வெள்ளிப்
பாத்திரங்களைத்திரும்பக்கொடுக்கவேண்டும், அ
வைகள் யெரூஷலேமிலுள்ள ஆலயத்துக்குக்
கொண்டுபோய், தேவனுடைய ஆலயத்தில்
அததற்கேற்ற ஸ்தானத்திலேவைக்கப்படவேண்
டுமென்று, அந்த ஆலயத்தைக்குறித்துக் கட்ட
௬ ளையிட்டானென்பது, எழுதியிருந்தது.-ஆதலால்
நதிக்கப்புறத்திலுள்ள தத்னாயும், ஷேதார்பொஸ்
னாயுமாகிய நீங்களும்,நதிக்கப்புறத்திலுள்ள உங்
கள் கூட்டத்தாராகிய அபர்சிகியரும், அந்தஸ்
௭ தானத்துக்கு விலகித் தூரமாயிருங்கள்.—தேவ
னுடைய ஆலயத்தின் கிரியையைத் தடைப்ப
டுத்தவேண்டாம்; யூதரின் அதிபதியும், யூதேய
ரின் முதியோர்களும், தேவனுடைய ஆல
யத்தை அதின் சுயஸ்தானத்திலே கட்டக்கடவர்
௮ கள்.—மேலும் தேவனுடைய இந்த ஆலயத்
தைக்கட்டும்படி, யூதரின் முதியோருக்கு நீங்கள்
செய்யவேண்டியதின்னதென்று கட்டளையிடுகி
றேன்: அவர்கள் தடைப்படாதபடி, நதிக்கப்
புறத்திலுள்ள இறையாகிய இராசாவின் திரவி
யத்திலே சனங்களுக்குச் செலவுகொடுக்கவே
௯ ண்டும்.—அவர்கள் பரமண்டலத்திலுள்ள தே
வனுக்குச் சுகந்தகாணிக்கைசெலுத்தி, இராசா
வும் அவன்புத்திரருமாகிய இவர்களின் பிராண
இரட்சிப்புக்காகப்பிரார்த்தனைசெய்து, பரமண்
டலத்திலுள்ள தேவனுக்குத் தகனபலிகளையி
௰ டும்பொருட்டு,—யெரூஷலேமிலுள்ள ஆசாரி
யர்கள்செய்யும் நியமத்திற்கேற்க, அவர்களுக்கு
வேண்டிய இளங்காளைகளையும், ஆட்டுக்கடாக்
களையும், ஆட்டுக்குட்டிகளையும், கோதுமை,உப்
பு, திராட்சரசம், எண்ணெய் என்னும் இவைக
ளையும், தவறின்றித்தினந்தினம் அவர்களுக்குக்
௰௧ கொடுக்கவேண்டும்.—இன்னும்யாவனாகிலும்இந்

தக்கட்டளையை மாற்றுவானாகில், அவன் தன்
வீட்டினின்றுபிடுங்கிநாட்டப்பட்டமரத்தில் அ
றையப்படக்கடவன்; அவன் வீடுஎருக்களமாக்
கப்படக்கடவதென்று கட்டளையிடுகிறேன்.—
இதை மாற்றுகிறதற்கும், யெரூஷலேமிலுள்ள ௰௨
தேவனுடைய ஆலயத்தைக்கெடுக்கிறதற்கும்,
தங்கள்கையைநீட்டுகிற சகல இராசாக்களையும்,
சனங்களையும் அவ்விடத்திலேதம்முடைய நாம
த்தை ஸ்தாபித்த தேவன் நாசப்படுத்துவாராக.
தாரியாவெவ்ஷாகிய நான் கட்டளையிடுகிறேன்;
இதுசீக்கிரஞ்செய்யப்படவேண்டுமென்றான்.

பின்பு நதிக்கிப்புறத்திலுள்ள அதிகாரியாகிய ௰௩
தத்னாயும், ஷேதார்பொஸ்னாயும், அவர்கள்கூட்
டத்தாரும், தாரியாவெவ்ஷ் இராசாஅனுப்பியகட்
டளையின்படி சீக்கிரமாய்ச் செய்தார்கள்.—யூத ௰௪
ரின் முதியோர்கள் கட்டினார்கள், தீர்க்கதரிசி
யாகிய ஆகாமும், இத்தோவின்புத்திரனாகிய சக
ரியாவும்சொல்லியதீர்க்கதரிசனங்களினால் அது
சித்தியாயிற்று. அவர்கள் இஸரவேலரின் தேவ
னுடைய கட்டளைப்படிக்கும், கோரெவ்ஷ், பா
ரஸ் தாரியாவெவ்ஷ், இராசாவாகிய அர்தக்ஷவ்ஷ்தா
என்னும் இவர்களின்கட்டளைப்படிக்கும், செய்
துமுடித்தார்கள்.—இந்த ஆலயம், தாரியாவெவ்ஷ் ௰௫
இராசா அரசாண்ட ஆறும்வருஷத்தின் ஆதாமா
தம் மூன்றாந்தினத்தில் நிறைவேறிற்று.

பின்புஇஸரவேல்சந்ததியாரும், ஆசாரியரும், ௰௬
லேவியரும், சிறைமீண்ட மற்றைச்சனங்களும்,
ஆனந்தத்துடன் தேவனுடைய ஆலயத்தைப்பி
ரதிஷ்டைபண்ணினார்கள்.—தேவனுடையஆல ௰௭
யப்பிரதிஷ்டையிலே நூறுகாளைகளையும், இரு
நூறுஆட்டுக்கடாக்களையும், நானூறு ஆட்டுக்குட்
டிகளையும், இஸரவேல் கோத்திரங்களின் தொ
கைக்கேற்க, எல்லா இஸரவேலர் நிமித்தமும்பா
வபிராயச்சித்தமாகப் பன்னிரண்டு வெள்ளாட்
டுக்கடாக்களையும், பலியிட்டார்கள்.—மோசே ௰௮
யின்புத்தகத்தில்எழுதியிருக்கிறபடி,யெரூஷலே
மிலே தேவனுடைய ஆராதனைக்காக ஆசாரியர்
களை, அவர்கள்பிரிவின்படிக்கும்,லேவியரை,அ
வர்கள்வகுப்பின்படிக்கும், எற்படுத்தினார்கள்.—
ஆசாரியரும்லேவியரும்எகமாய்ச்சுத்தப்படுத்தப் ௰௯
பட்டார்கள், எல்லாரும் சுசியானவர்களாய், சி
றைமீண்ட சனங்கள் சகலருக்கும், தங்கள் ச
கோதரராகிய ஆசாரியர்களுக்கும, தங்களுக்கு
மாக, பஷ்கா ஆட்டுக்குட்டியை அடித்தார்கள்.—
இப்படிச் சிறைமீண்டசனங்கள், முதல் மாதம் ௨௰
பதினாலாந்தினத்தில் பஷ்கா உற்சவத்தை ஆச
ரித்தார்கள்.—சிறைமீண்ட இஸரவேல்சந்ததியா ௨௧
ரும், இஸரவேலரின் தேவனாகிய யெகோ
வாவைத் தேடும்படி, அந்த ஸ்தானத்திலுள்ள
அந்நிய தேசத்தாருடைய அசுசிக் கிரியைகளை

(௧) அதி.௫.௰௭. ௧.இரா.௩௬.௬. (௫) அதி.௧.௭,௮. (௬) அதி.௫.௩. (௯) அதி.௭.௨௩. எரே.௨௯.௭. ௧.தீமோ.௨.௧,௨. (௰௧) தானி.௨.௫. தானி.௩.௨௯. (௰௨) ௧.இரா.௯.௩. (௰௪) அதி.௫.௧,௨. அதி.௧.௧. வச.௩. அதி.௪.௨௪. அதி.௭.௬. (௰௬) ௧.இரா.௮.௬௩. (௰௭) அதி.௮.௩௫. (௰௮) ௧.நாளா.௨௪.௧. ௧.நாளா.௨௩.௬. எண்.௩.௬. (௰௯) ௨.நாளா.௩௰.௰௫. ௨.நாளா.௩௫.௰௧. (௨௰) யாத்.௰௨.௬. (௨௧) அதி.௯.௰.

௨௨ விட்டு நீங்கிய சகலரும் புசித்தார்கள்.—இஸர
வேலரின் தேவனுடைய ஆலயத்தின் கிரியை
யில் அவர்கள் கையைத்திடப்படுத்தும்படி, யெ
கோவா அவர்கள் பட்சத்தில் அஷூரியாவின்
இராசாவுடைய மனதைத் திருப்பி, அவர்களைச்
சந்தோஷப்படுத்தினபடியினால், அவர்கள் ஆனந்
தத்துடன் ஏழுநாளளவும் புளிப்பில்லாத அப்பத்
தின் உற்சவத்தை ஆசரித்தார்கள்.

## ௭. அதிகாரம்.

௧. எஸ்ரு முதலானவர்கள் யெரூஷலேமுக்குப் போகப்புறப்படல்: ௰௧. அர்தக்ஷஷ்தா எஸ்ருவுக்குக்கட்டளையிடல்: ௨௭. எஸ்ரு யெகோவாவைத்துதித்தல்.

பிரதான ஆசாரியனாகிய ஆரோனின் புத்திரன்
எலீயேசார், இவன் புத்திரன் பீனிகாஸ், இவன்
௨ புத்திரன் அபீஷூவா,—இவன் புத்திரன் புகீ, இ
வன் புத்திரன் ஊசீ, இவன் புத்திரன் சிரகிய,—
௩ இவன் புத்திரன் மிராயோத், இவன் புத்திரன் அ
௪ சரியா, இவன் புத்திரன் அமரியா,—இவன் புத்
திரன் அகீதூப், இவன் புத்திரன் சாதோக், இ
௫ வன் புத்திரன் ஷல்லும்,—இவன் புத்திரன் இல்
கியா, இவன் புத்திரன் அசரியா, இவன் புத்தி
௬ ரன் செராயா, இவன் புத்திரன் எஸ்ரு:—இந்த
எஸ்ரு, இஸரவேலின் தேவனாகிய யெகோ
வா அருளிய மோசேயின்வேதப்பிரமாணத்தில்
நிபுணபோதகனாயிருந்தான்: முன்சொல்லப்பட்
ட காரியங்கள் நடந்தபின்பு, பாரஸ் இராசா
வாகிய அர்தக்ஷஷ்தா அரசாண்டகாலத்தில் பா
பேலினின்று புறப்பட்டான்; அவன் தேவ
னாகிய யெகோவாவின் அனுக்கிரகம் அவன்
மேலிருந்தபடியால், இராசா அவன்கேட்டயா
௭ வற்றையுங் கொடுத்தான்.—அர்தக்ஷஷ்தா அர
சாண்ட ஏழாம்வருஷத்தில் இஸரவேல்சந்ததி
யாரிலும், ஆசாரியர்களிலும், லேவியரிலும், பா
டகரிலும், வாசற்காவலாளரிலும், நிதீனியரி
லும், சிலர் யெரூஷலேமுக்குப் போனார்கள்.—
௮ இவன் யெகோவாவின்வேதப்பிரமாணத்தை
ஆராய்ந்தறிந்து நடக்கவும், இஸரவேலருக்குள்
ளே கட்டளைகளையும் நியாயப்பிரமாணங்களை
யும் போதிக்கவும் தன்மனதை நிலைப்படுத்தி,—
௯ முதலாமாதம் முதலாந்தினத்தில் பாபேலினின்
று பிரயாணமாய்ப் புறப்பட்டு, தன் தேவன்
தன்மேல் அனுக்கிரகம் வைத்தபடியினால், ஐந்
தாமாதமுதல்தினத்தில் யெரூஷலேமிற் சேர்ந்
௰ தான்.—இராசா அரசாண்ட ஏழாம்வருஷம் ஐந்
தாமாதத்தில் எஸ்ரு யெரூஷலேமுக்குவந்தான்.
௰௧ யெகோவாவின் கட்டளையாகிய வாக்குக
ளையும், இஸரவேலருக்கு அவர்அருளியவிதிகளை
யும் எழுதுகிற இலேககனும், ஆசாரியனும், வேத
பாரகனுமாகிய எஸ்ருவுக்கு அர்தக்ஷஷ்தா இரா
சாகொடுத்த பத்திரத்தின்விபரமாவது:-இராசாதி ௰௨
ராசாவாகிய அர்தக்ஷஷ்தா பரமண்டலத்திலுள்
ள தேவனுடைய வேதப்பிரமாணத்தைப் போ
திக்கிற வேதபாரகனாகிய எஸ்ருவென்னும்ஆசா
ரியன் வாழ்க;—இக்காலத்தில் எனதிராச்சியத் ௰௩
தில் இஸரவேல்சனங்களிலும், ஆசாரியர்களி
லும், லேவியரிலும், மனப்பூருவமாக யெரூஷ
லேமுக்குப்போகப்பிரியங்கொண்டிருக்கும்யா
வரும் உம்முடன்போகும்படி உத்தரவு தருகி
றேன்.—நீர், உமதுகையிலுள்ள உமது தேவனு ௰௪
டைய வேதப்பிரமாணத்தின்படி, யூதாவையும்,
யெரூஷலேமையும் குறித்துவிசாரிப்பதற்கும்;—
யெரூஷலேமிலேவாசஸ்தானத்தையுடையஇஸ ௰௫
ரவேலரின் தேவனுக்கு, மனப்பூருவமாகஇரா
சாவும் அவன்மந்திரிமாரும் தந்த வெள்ளியை
யும், பொன்னையும்,—சனங்களும், ஆசாரியர்க ௰௬
ளும், மனப்பூருவமாக யெரூஷலேமிலுள்ளதங்
கள் தேவனுடைய ஆலயத்துக்காகத் தருங்கா
ணிக்கையுடன், பாபேல்தேசமெங்கும்பெறக்கூ
டிய சகலபொன்வெள்ளிகளையும் கொண்டுபோ
வதற்கும்; இராசாவினாலும், அவனுடைய மந்தி
ரிமார் ஏழுபேரினாலும் அனுப்பப்படுகிறீர்.-இந் ௰௭
தத்திரவியத்தைக்கொண்டு நீர்காளைகளையும், ஆட்
டுக்கடாக்களையும், ஆட்டுக்குட்டிகளையும், உப
யோகமான போசனபலிகளையும், பானபலிகளை
யும், தாமதமின்றிவாங்கி, யெரூஷலேமிலுள்ள
உங்கள்தேவனுடையஆலயத்தின்வேதிகையின்
மேல்அவைகளை யிடுங்கள்.-மீந்திருக்கும்பொன் ௰௮
வெள்ளிகளினால் நீரும், உம்முடைய சகோதர
ரும் செய்யவிரும்புகிறதெதுவோ, அதைஉங்கள்
தேவனுடைய சித்தத்தின்படி செய்யுங்கள்.-உ ௰௯
மது தேவனுடைய ஆராதனையினிமித்தம் உம்மி
டத்தில் தந்த அந்தந்தப்பாத்திரங்களை, யெரூஷ
லேமிலுள்ள தேவனுடையசமுகத்தில் ஒப்பித்து
விடும்.-உமது தேவனுடைய ஆலயத்திற்கு அதி ௨௰
லுமதிகமாய்வேண்டியதெதுவோ, அதைஇராசா
வின்பொக்கிஷசாலையில் எடுத்துக்கொள்ளும்.-
அன்றியும் அர்தக்ஷஷ்தா இராசாவாகிய நான், ௨௧
நதிக்கப்புறத்திலுள்ளபொக்கிஷகாரராகிய உங்க
ள்அனைவருக்கும், வெள்ளியிலே நூறுகிக்கேருக்
கும், கோதுமையிலேநூறுகோருக்கும், திராட்ச
ரசத்திலே நூறுபாத்துக்கும், எண்ணெயிலேநூறு
பாத்துக்கும் உள்படவும், உப்பிலே இஷ்டப்ப
டிக்கும்,-பரமண்டலத்திலுள்ள தேவனுடைய ௨௨
வேதப்பிரமாணத்தைப் போதிக்கும் வேதபாரக
னாகிய எஸ்ரு ஆசாரியன், உங்களிடத்தில் கேட்
கிறபிரகாரம் சீக்கிரங்கொடுக்கும்படிகட்டளையி
டுகிறேன்.-பரமண்டலத்திலுள்ளதேவனுடைய ௨௩
ஆலயத்திற்கு, பரமண்டலத்திலுள்ளதேவன்கட்

(௨௨) யாத்.௰௨.௰௫. ௨.நாளா.௩௰.௨௧. நீதி.௨௧.௧. ௨.இரா.௨௩.௨௧. அதி.௧.௧,௬.—(௭. அதி. ௧.)௧.நாளா.௬.௰௪. (௬) நிகி.௨.௧. வச.௰௧,௰௨,௨௧. வச.௯. அதி.௮.௨௨,௩௧. (௭) அதி.௮.௧,௰௫,. அதி.௨.௪௩.(௮)சங்.௱௰௯.௪௫. வச.௬,௨௫. ௨பா.௩௩.௰. மல்.௨.௭. (௯) வச.௬. நிகி.௨.௮,௰௮. (௰௨) எசேக்.௨௬.௭. தானி.௨.௩௭. (௰௩) அதி.௪.௰. (௰௫) ௨.நாளா.௬.௨. சங்.௱௩௫.௨௧. (௰௬) எஸ்த.௧.௰௩. அதி.௮.௨௫. ௧.நாளா.௨௯.௬,௯. (௰௭) எண்.௰௫.௪—௰௩. ௨பா.௰௨.௫,௰௧.

டளையிடுகிறயாவும் சாக்கிரதையுடன் செய்யப்
படவேண்டும்: இராசாவும், அவன்புத்திரருமா
னவர்களுடைய இராச்சியத்திற்குவிரோதமாய்க்
௨௪ கோபம்வரவேண்டியதென்ன.—இன்னும் ஆசா
ரியரும், லேவியரும், பாடகரும்,வாசல்காவலா
ளரும், நிதீனியரும், தேவனுடைய அந்த ஆல
யத்தின்மற்றவேலைக்காரருமாகிய இவர்களில்யா
வரிடத்திலாகிலும் பகுதியும், இறையும், தீர்வை
யும் வாங்குவது முறைமையல்லவென்று, உங்க
௨௫ ளுக்குத் தெரிவிக்கிறோம்.—எஸ்றாவே, உம்மு
டையதேவனால் உமக்குக்கிடைத்தஞானத்தின்
படி, நதிக்கப்புறத்திலுள்ள சகல சனங்களையும்
நியாயம்விசாரிக்கிறதற்கு, உமது தேவனுடைய
நியாயப்பிரமாணங்களை உணரப்பெற்றயாவரை
யும் அதிகாரிகளாகவும், நீதிபதிகளாகவும் ஏற்ப
டுத்தும்; அவைகளைஉணராதவர்களுக்கு அவைக
௨௬ ளைப்போதியும்.—உமது தேவனுடைய வேதப்பி
ரமாணத்தையும், இராசாவின்நியாயப்பிரமாணத்
தையும் காத்துக்கொள்ளாத யாவரையும் தாமத
மின்றி நியாயம்விசாரித்து, மரணதண்டனையை
யாகிலும், சுதேசவிலக்கையாகிலும், அபராதத்
தையாகிலும், சிறைப்படுத்தலையாகிலும் விதித்
துத்தண்டிக்கவேண்டுமென்பதேயாம்.
௨௭ யெருஷலேமிலுள்ள யெகோவாவின் ஆ
லயத்தைச் சிங்காரிப்பதற்கேற்ற இந்த எண்ணத்
தை இராசாவின் இருதயத்திலே தோற்றுவித்து,
இராசசமுகத்திலும், அவன்மந்திரிமார் சமுகத்தி
லும், இராசாவின் பராக்கிரம பிரபுகள் சமஸ்தர்
சமுகத்திலும் எனக்குத் தயைவருவித்த நம்மு
டைய முன்னோரின் தேவனாகிய யெகோ
௨௮ வாவுக்கு ஸ்தோத்திரம்.—என்தேவனாகியயெ
கோவாவின் அனுக்கிரகம் எனக்குக்கிடைத்த
படியே நான் திடங்கொண்டேன், பின்பு என்
னுடன் புறப்படும்பொருட்டு இஸரவேலரின்
பிரதானிகளை ஒருமிக்கக்கூடும்படி செய்தேன்.

## ௮. அதிகாரம்.

௧. பாபேலினின்று மீண்டசனங்களின் நாமங்கள்: ௰௫. ஆலயத்திலே தொண்டுசெய்பவர்களுக்காக இத்தோவிடத்தில் ஆளனுப்பல்: ௨௧. உபவாசித்தல்: ௨௪. பொருளை ஆசாரியர்கையில்ஒப்பித்தல்: ௩௧. அகவாவினின்று யெருஷலேமுக்குச்செல்லல்: ௩௩. ஆலயத்தின்பொன் வெள்ளிகளை நிறுத்தல்: ௩௬. இராசாவின் பத்திரத்தை அதிபதிகளிடம் சேர்வித்தல்.

அர்தக்ஷஷ்தா இராசா அரசாண்டகாலத்தில்,
பாபேலினின்று என்னுடன் புறப்பட்ட பிதாவ
௨ மிச அதிபதிகளின் வரலாறு.—பீனிகாசின் சந்
ததியாரில்; கெர்ஷோம்: இதாமாரின் சந்ததியா
ரில்; தானியேல்: தாவீதின் சந்ததியாரில்; அற்
௩ றூஷ்.—பாரோஷின்சந்ததியாரிலுள்ள ஷெகனி
யாவின்சந்ததியாரில் சகரியா: அவனுடன் வமி
சவரலாற்றில் குறிக்கப்பட்ட ஆண்மக்கள் நூற்
றைம்பதுபேர்.—பாகாத்மோவாபின் சந்ததியா ௪
ரில்; சிரகியாவின் புத்திரனாகிய இலியோவேனாய்,
அவனோடுகூடிய ஆண்மக்கள் இருநூறுபேர்.—
ஷெகனியாவின் சந்ததியாரில்; யாகசியேலின் ௫
புத்திரன்,அவனோடுகூடிய ஆண்மக்கள்முந்நூறு
பேர்.-ஆதீன்சந்ததியாரில்;யோனத்தானின்புத்திர ௬
னாகியஎபேத், அவனோடுகூடிய ஆண்மக்கள் ஐம்
பதுபேர்.—எலாமின்சந்ததியாரில்; அத்தாலியா ௭
வின் புத்திரனாகிய எஷாயா, அவனோடுகூடிய
ஆண்மக்கள் எழுபதுபேர்.—ஷிபதியாவின் சந் ௮
ததியாரில்; மீகாயேலின் புத்திரனாகிய சிபதியா,
அவனோடுகூடிய ஆண்மக்கள் எண்பதுபேர்.—
யோவாப்பின் சந்ததியாரில்; யிகியேலின் புத் ௯
திரனாகிய ஒபதியா, அவனோடுகூடிய ஆண்மக்
கள் இருநூற்றுப் பதினெட்டுப்பேர்.—ஷிலோ ௰
மித்தின் சந்ததியாரில், யோசிப்பியாவின் புத்தி
ரன், அவனோடுகூடிய ஆண்மக்கள் நூற்றறுபது
பேர்.—பேபாயின் சந்ததியாரில்; பேபாயின் ௰௧
புத்திரனாகிய சகரியா, அவனோடுகூடிய ஆண்
மக்கள் இருபத்தெட்டுப்பேர்.—அஸ்காத்தின் சந் ௰௨
ததியாரில்; அகாத்தானின் புத்திரனாகிய யோகா
னான், அவனோடுகூடிய ஆண்மக்கள் நூற்றுப்பத்
துப்பேர்.-அதோனிகாமின் பிற்சந்ததியாரில்; இ ௰௩
லீப்பேலேத், யெயீயேல், ஷிமாயியா என்னும்
இந்தநாமங்களையுடையவர்கள், அவர்களோடுகூ
டிய ஆண்மக்கள் அறுபதுபேர்.—பிக்வாயின்சந் ௰௪
ததியாரிலும்; ஊதாயி, சபூத், அவர்களோடுகூடி
ய ஆண்மக்கள் எழுபதுபேர்.
இவர்களை நான், அகவாநதியின் சமீபத்தில் ௰௫
கூடிவரும்படிசெய்தேன்; அவ்விடத்தில் நாங்
கள் கூடாரங்களில் மூன்றுநாள் தங்கினோம்:
சனங்களையும், ஆசாரியர்களையும் நான் பார்த்த
பொழுது, லேவியர்புத்திரர் ஒருவரும் அங்கே
காணப்படவில்லை.—அப்பொழுது நான் எலீ ௰௬
யேசர், அரீயேல், ஷிமாயியா, எல்னாதான், யா
ரீப், எல்னாதான், நாதான், சகரியா, மிஷுல்லா
மென்னும்பிரதானிகளையும்; யோயாரீப், எல்னா
தான் என்னும் புத்திமான்களையும் அழைப்பித்
தேன்.—பின்பு கசிப்பியாவென்னும் ஸ்தானத் ௰௭
தில் இருந்த இத்தோவுக்கும், அவன்சகோதரரா
கிய நிதினியருக்கும், எங்களுடைய தேவனின்
ஆலயத்திற்குப் பணிவிடைக்காரரைக் கொண்டு
வரவேண்டுமென்று சொல்லி, கசிப்பியா ஸ்தா
னத்திலிருந்தபிரதானியாகியஇத்தோவுக்குக்கட்
டளையிடும்படி, அவர்களை அனுப்பினேன்.—
நமது தேவன் எங்கள்மேல்வைத்த அனுக்கிர ௰௮
கத்தினால்,இஸரவேல்வமிசத்திலுள்ளலேவியின்
பௌத்திரனும், மாலியின் வமிசத்தானுமாகிய ஒ
ருபுத்திமானையும், ஷேரெபியாவும், அவன்புத்தி
ரரும், சகோதரருமாகிய பதினெட்டுப் பேரை
யும்,—அஷபியாவையும், அவனுடன் மிராரியின் ௰௯
வமிசத்தானான எஷாயாவும்,அவன்சகோதரரும்,

(௨௫) யாத். ௰௮. ௨௧,௨௨. உபா. ௰௬. ௰௮. வச. ௮. ௨. நாளா. ௰௭. ௭. மல். ௨. ௭. மத். ௨௩. ௨,௩. (௨௭) ௧. நாளா. ௨௯. ௰. அதி. ௬. ௨௨. அதி. ௯. ௯. (௨௮) அதி. ௫. ௫.—(௮. அதி. ௨.) ௧. நாளா. ௩. ௨௨. (௩) அதி. ௨. ௩. (௰௫) அதி. ௭. ௭. (௰௭) ௨. சாமு. ௰௪. ௩, ௰௩. (௰௮) நெகி. ௮. ௭.

அவர்கள் புத்திரருமாகிய இருபதுபேரையும்;—
௨௰ தாவீதும் பிரபுகளும் லேவியரின்பணிவிடைக்
காக ஏற்படுத்திய நிதீனியரில் இருநூற்றிருபது
நிதீனியரையுங்கொண்டுவந்தார்கள்: இவர்களெ
ல்லாரும் பேர்பேராய்க்குறிக்கப்பட்டவர்கள்.
௨௧ எங்கள் தேவனுடைய அனுக்கிரகம், அவ
ரைத்தேடுகிற யாவருக்கும் நன்மைசெய்ய அவர்
கள் மேலிருக்கும், அவருடைய பராக்கிரமமும்
கோபமும் அவரைவிட்டுநீங்குகிற யாவருக்கும்
விரோதமாயிருக்குமென்றும், நாங்கள் இராசா
விடத்தில் சொல்லியிருந்தபடியால், வழியிலே
சத்துருவுக்கு விரோதமாக எங்களுக்குத் துணை
செய்யும்படி, இராசாவிடத்தில் ஒருவகுப்புச்
சேனைகளையும் குதிரைவீரரையும் கேட்க, நான்
௨௨ வெட்கப்பட்டேன்.—ஆதலால் நாங்கள் எங்க
ளுக்காகவும், எங்கள் பிள்ளைகளுக்காகவும், எங்
கள் எல்லாப்பொருள்களுக்காகவும், ஒருசெவ்
வையான வழியைத்தேடுகிறதற்கும் எங்கள் தே
வனின் சமுகத்தில் எங்களைக் கிலேசப்படுத்து
வதற்காக, நான் அகவாநதிசமீபத்தில் உபவா
சஞ் செய்யவேண்டுமென்று பிரசித்தம்பண்ணி
௨௩ னேன்.—அப்படியே நாங்கள் உபவாசஞ்செய்
து இதினிமித்தம் எங்கள் தேவனைப்பிரார்த்தித்
தோம்: அவர் எங்கள்பிரார்த்தனையைக் கேட்ட
ருளினார்.
௨௪ பின்புநான் ஆசாரியர்களில் பிரதானிகளாகிய
ஷெரெபியாவும், அஷபியாவும், அவர்கள் சகோ
தரர் பத்துப்பேருமாகிய பன்னிரண்டுபேரைப்
௨௫ பிரித்து,—இராசாவும், அவன் மந்திரிமாரும், அ
திபதிகளும், அங்கேயிருந்த எல்லா இஸரவேல
ரும் எங்கள் தேவனின் ஆலயத்துக்காகத்தந்த
பொன் வெள்ளிகளையும், பாத்திரங்களையும் அ
௨௬ வர்களிடத்தில் நிறுத்துக்கொடுத்தேன்.—வெள்
ளி அறுநூற்றைம்பது கிக்கோர், வெள்ளிப் பாத்
திரங்கள் நூறுகிக்கோர், பொன் நூறுகிக்கோர்,—
௨௭ ஆயிரம் அதர்கோன்பெறும் இருபது பொற்கிண்
ணங்கள், பொன்னைப்போல விலையேறப்பெற்
ற இரண்டு நல்ல செம்புப்பாத்திரங்களென்னும்
இவைகளை அவர்கள் கையில் நிறுத்துக்கொடுத்
௨௮ தேன்.—பின்பு நான் அவர்களைநோக்கி, நீங்கள்
யெகோவாவுக்குப்பரிசுத்தர்; பாத்திரங்களும்
பரிசுத்தமுள்ளவைகள்; பொன்வெள்ளிகள் உங்
கள் முன்னோரின் தேவனாகிய யெகோவா
வுக்குமனப்பூருவமாய்இடப்பட்டகாணிக்கை.-
௨௯ யெருஷலேமில் யெகோவாவின் ஆலயத்தின்
அறைகளில் பிரதான ஆசாரியர்களுக்கும், லே
வியருக்கும், இஸரவேலரின் வமிசத் தலைவர்க
ளுக்குமுன்பாக, நீங்கள் இவைகளை நிறுத்துக்
கொடுக்கும் வரைக்கும், நீங்கள் விழிப்பாய்க்
காத்துக்கொள்ளுங்களென்றேன்.—ஆசாரியரும் ௩௰
லேவியரும் அந்தப்பொன்வெள்ளிகளையும், பாத்
திரங்களையும், யெருஷலேமில் எங்கள் தேவ
னுடைய ஆலயத்துக்குக்கொண்டுபோகும்படி
எடுத்தார்கள்.

பின்பு நாங்கள் முதல்மாதம் பன்னிரண்டாந் ௩௧
தினத்தில் யெருஷலேமுக்குப்போகும்படி அக
வா நதியைவிட்டுப் புறப்பட்டோம்: தேவனு
டையஅனுக்கிரகம் எங்களுடனிருந்தது, அவர்,
வழியில் சத்துருவின் கைக்கும் பதிவிருந்தவர்
களுடைய கைக்கும் எங்களைத்தப்புவித்தார்.—
நாங்கள் யெருஷலேமிற்சேர்ந்து அங்கேமூன்று ௩௨
நாள்தங்கினோம்.

நாலாந்தினத்தில் பொன்வெள்ளிகளும், பாத் ௩௩
திரங்களும், நம்முடைய தேவனுடைய ஆல
யத்தில் ஊரியாவென்னும் ஆசாரியனுடையபுத்
திரனாகிய மிரேமோத்தின் கையினால் நிறுக்கப்
பட்டன; அவனோடே பீனிகாசின் புத்திரனா
கிய எலீயேசார் இருந்தான்; அவர்களோடே
யேஷுவாவின் புத்திரனாகிய யோசாபாத், பின்
னுவியின் புத்திரனாகியநோவதியா என்னும் லே
வியர்இருந்தார்கள்.—இவ்விதமாயெல்லாந்தொ ௩௪
கையிட்டு நிறுத்துக்கொடுக்கப்பட்டன: அக்கா
லத்தில் எல்லாவற்றின் நிறையும் எழுதப்பட்ட
ன.–சிறைப்பட்டுமீண்டவர்களின் சந்ததியாரா ௩௫
கிய எல்லா இஸரவேலர் நிமித்தமும், பாவபிரா
யச்சித்தபலியாகப் பன்னிரண்டு காளைகளையும்,
தொண்ணூற்றாறு ஆட்டுக்கடாக்களையும், எழு
பத்தேழு ஆட்டுக்குட்டிகளையும், பன்னிரண்டு
வெள்ளாட்டுக் கடாக்களையும், இஸரவேலரின்
தேவனுக்குத்தகனபலியாயிட்டார்கள்: இவை
களெல்லாம் யெகோவாவுக்குத்தகனபலியா
யின.

பின்பு அவர்கள், இராசபிரதிநிதியாருக்கும், ௩௬
நதிக்கிப்புறத்திலுள்ள அதிகாரிகளுக்கும் இரா
சாவின் பிரமாணபத்திரத்தை ஒப்பித்தார்கள்: அ
தினால் இவர்கள், சனங்களுக்கும் தேவனுடை
ய ஆலயத்துக்குந்துணைநின்றார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. யூதேயர்அந்நியஸ்திரிகளுடன் சம்பந்தங்கலந்
ததினால் எஸ்றாபுலம்பல்: ௫. அவர் பிரார்த்த
னைபண்ணல்.

இவைகள் செய்து முடிந்தபின்பு அதிபதிகள் ௧
என்னிடத்தில்வந்து, இஸரவேல்சனங்களும் ஆ
சாரியர்களும்லேவியரும், கானானியர், எத்தியர்,
பெரீசியர், எபூசியர், அம்மோனியர், மோவாபி
யர், எகிப்தியர், எமோரியராகிய இவர்களின் அ
ருவருப்பானகிரியைகளைச்செய்துவருகிறார்கள்,
அவர்கள் இத்தேசங்களின் சனங்களினின்றுதங்

(௨௰) அதி.௨.௪௩. (௨௧) ௧.கொரி.௯.௰௫. அதி.௭.௬,௯,௨௮. சங்.௩௩.௰௮,௰௯. ரோ.௮.௨௮. சங்.௩௪.௰௬. (௨௨) ௨.நாளா.௨௰.௩. லேவி.௰௬.௨௧. ஏசா.௫௮.௩,௫. சங்.௫.௮. ௨.நாளா.௰௫.௨. (௨௩) ௧.நாளா.௫.௨௰. ௨.நாளா.௩௩.௰௩. ஏசா.௰௯.௨௨. (௨௫) அதி.௭.௰௫,௰௬. (௨௮) லேவி.௨௧.௬,௭,௮. உபா.௩௩.௰. லேவி.௨௨.௨,௩. எண்.௪.௰௪,௰௫,௰௯,௨௰. (௩௧) அதி.௭.௬,௯,௨௮ (௩௨) நிகி.௨.௰௧. வச.௨௯,௩௰. (௩௫) அதி.௬.௰௭. (௩௬) அதி.௭.௨௧.—(௯. அதி.௧.) அதி.௬.௨௧. நீதி.௩.௨. உபா.௰௨.௩௰,௩௧.

௨ களை வேறுபடுத்தவில்லை.—அவர்கள் தங்களுக்
கும், தங்கள் புத்திரருக்கும் இவர்களிடத்தில்
பெண்கொள்ளுகிறார்கள்: இவ்விதமாய்ப்பரிசுத்
தவமிசத்தார் இந்தத்தேசத்தாருடன் கலந்திருக்
கிறார்கள்: அதிபதிகளும், அதிகாரிகளும் இந்தக்
குற்றத்துக்குமூலமாயிருக்கிறார்களென்றார்கள்.-
௩ இந்தவாக்கை நான் கேட்டபொழுதுஎன்வஸ்தி
ரத்தையும்என்மேலங்கியையுங்கிழித்தேன்; என்
தலைமயிரையும், என் தாடியையும் பிடுங்கி, வித
௪ னப்பட்டுக்கொண்டிருந்தேன்.-அப்பொழுது சி
றைப்பட்டு மீண்டவர்களுடைய அதிக்கிரமத்தி
னிமித்தம், இஸ்ரவேலரின் தேவனுடையவாக்
குகளுக்குஅஞ்சி நடுங்கினயாவரும், என்னிடத்
தில்வந்து கூடினார்கள்; நான் மாலைப்பலியிடும்
வரைக்கும்விதனப்பட்டுக்கொண்டிருந்தேன்.
௫ மாலைப்பலியிடுகிறசமயத்தில் நான்துக்கத்தை
விட்டெழுந்து, என்வஸ்திரத்தையும் மேலங்கி
யையும்கிழித்து,முழங்காற்படியிட்டு,என்தேவ
னாகிய யெகோவாவின் சமுகத்தில் என்கை
௬ யைவிரித்து,-என்தேவனே,என்தேவனே,எங்
கள்பாவங்கள் எங்கள் தலைக்குமேலே பெருகி
விட்டன, எங்கள்அதிக்கிரமம் வானமளவும் வ
ளர்ந்துவிட்டது:என்முகத்தை உமக்குமுன் ஏறி
௭ ட வெட்கப்பட்டுக் கலங்கியிருக்கிறேன்.—எங்
கள்முன்னோரின்காலமுதல் இந்நாள்வரைக்கும்,
நாங்கள் மகா அதிக்கிரமங்களைச்செய்துவந்தோ
ம்;எங்கள்பாவத்தினிமித்தம் நாங்களும், எங்கள்
இராசாக்களும், ஆசாரியர்களும் இன்றிருக்கிற
துபோல முகவாட்டத்துக்கும், கொள்ளைக்கும்,
அடிமைத்தனத்துக்கும், கட்கத்துக்கும், புறத்தே
சங்களின் இராசாக்களின்கைக்கும் ஒப்பிக்கப்
௮ பட்டோம்.—இப்பொழுது எங்களில்மீந்திருக்
கிறவர்கள்தப்பிஇரட்சிப்படையவும்,தேவன்த
மது பரிசுத்தஸ்தலத்தில் ஒருநிலையுள்ளஸ்தானத்
தை எங்களுக்குத்தரவும், எங்கள்கண்களைத் தே
வன் பிரகாசிப்பிக்கவும்,அடிமைத்தனத்தில் சிறி
தாவது நாங்கள் குளிர்ச்சியடையவுந்தக்கதாக,
எங்கள்தேவனாகிய யெகோவாசொற்பகால
௯ ம் அனுக்கிரகஞ்செய்தார்.—நாங்கள்அடிமைகளா
யிருந்தோம்; ஆனாலும் எங்கள் தேவன்எங்கள்
அடிமைத்தனத்தில் எங்களைக் கைவிடவில்லை,
எங்கள் தேவனுடைய ஆலயத்தை ஸ்தாபிக்க
வும், அதின் இடிவுகளைப் புதுப்பிக்கவும், யூதா
விலுமுள்ள யெருஷலேமிலும்எங்களுக்குஒரும
திலைத்தரவும், நாங்கள் குளிர்ச்சியடையவும் தக்
கதாக,அவர்,பாரஸ்இராசாக்களின் பார்வையில்
எங்களுக்குக் கடாட்சங் கிடைக்கும்படிசெய்
௰ தார்.—எங்கள் தேவனே, நீர், நீங்கள் சுதந்தரிக்
கப்போகிறதேசம், அதில்வசிக்கும் சனங்களின்
அசுசியினாலும், எத்திசையிலும்நிறைந்திருக்கின்
ற அவர்களுடைய அருவருப்பான அசுசியினா
லும், அவர்கள்செய்து வருகிற அருவருப்பான
கிரியைகளினாலும், அவர்களுடைய அசுத்தத்தி
னாலும் அசுத்தமாயிருக்கின்றது.—ஆதலால் நீங் ௰௧
கள் அவர்கள் புத்திரருக்கு உங்கள் புத்திரிகளைக்
கொடுக்கவும், உங்கள் புத்திரருக்கு அவர்கள்புத்
திரிகளைக்கொள்ளவும், அவர்கள் வாழ்வையாகி
லும், சௌக்கியத்தையாகிலுந் தேடவும்வேண்
டாம்: அதினால் நீங்கள் பலவான்களாகி, அத்தே
சத்தின் நல்லபொருள்களை அனுபவித்து, உங்
கள் வமிசத்தாருக்கும் நித்தியசுதந்தரமாகக்கொ
டுத்துவிடுவீர்களென்று, உமது அடியாராகியதீர்க்
கதரிசிகளைக்கொண்டு கட்டளையிட்டிருக்க,—உ ௰௨
மது கட்டளைகளை விட்டுவிட்டோம்: இனி ஏ
தைச்சொல்லுவோம்.—நாங்கள்செய்த துர்க்கிரி ௰௩
யைகளினாலும், மகா அதிக்கிரமத்தினாலும் எங்
கள்மேல் இவை எல்லாம் வந்தன; ஆனாலும் எங்
கள் தேவனே, நீர் எங்கள் பாவத்திற்குத்தக்க
தண்டனையிலும் அற்பதண்டனையை விதித்தீர்,
எங்களுக்கிப்படி ஒரு இரட்சிப்பையும் அருளி
னீர்.—இதைக்கண்டிருந்தும்,நாங்கள் திரும்பவும் ௰௪
உமது கட்டளையைமீறி இந்த அருவருப்பான
வைகளைச்செய்யும்சாதியாருடன் சம்பந்தங்கலந்
தோமாகில், எங்களில் ஒருவரும் மீந்திராமலும்,
இரட்சிப்படையாமலும் போகும்படி எங்களைச்
சங்கரிக்கும்வரைக்கும், எங்கள்மேல் கோபமா
யிருப்பீரே.—ஆ, இஸரவேலரின் தேவனாகிய ௰௫
யெகோவாவே,நீர்நீதிபரர்:அதனால்இன்றிருக்
கிறபடி, நாங்கள் இரட்சிப்படைந்து தப்பிவிட்
டோம்: பாரும்,உமது சமுகத்திலே குற்றவாளி
களாயிருக்கிறோம்: அதினிமித்தம் உமது சமுகத்
திலே நாங்கள் நிற்கலாகாதென்று சொன்னேன்.

## ௰. அதிகாரம்.

௧. ஷெகனியா எஸ்றாவை உற்சாகப்படுத்தல்: ௬. எஸ்றாதுக்கமடைந்து சனங்களைக்கூடிவரச்செய்தல்: ௯. குற்றத்தை உணர்ந்துசொல்லி அதைத் தள்ளச் சம்மதித்தல்: ௰௫. அந்நியசாதிஸ்திரிகளைத்தள்ளும்படி விதித்தல்: ௰௮. குற்றவாளிகளின் நாமங்களைவிபரித்தல்.

எஸ்றா இவ்விதமாய்ப் பிரார்த்தித்து, பாவத்தை ௧
உணர்ந்துசொல்லி,கண்ணீர்விட்டழுது, தேவ
னுடைய ஆலயத்துக்கு முன்னேவிழுந்து கிடந்
தபொழுது, இஸரவேல் தேசத்தினின்று புருஷ
ரும், ஸ்திரிகளும், பிள்ளைகளுமாகிய ஒருமகா
சபை அவனிடத்தில் வந்துகூடிற்று: சனங்கள்
மிகவும் அழுதார்கள்.—அப்பொழுது ஏலாம் வ ௨

(௨) யாத்.௩௪.௰௬. உபா.௭.௩. நிகி.௰௩.௨௩. யாத்.௰௧.௬. யாத்.௨௨.௩௧. உபா.௭.௬. உபா.௰௪.௧. ௨.கொரி.௬.௰௪.
(௩) யோபு.௧.௨௰. சங்.௱௪௩.௪. (௪) அதி.௰.௩. ஏசா.௬௬.௨. யாத்.௨௧.௩௧. (௫) யாத்.௯.௨௯,௩௩. (௬) தானி.௯.௭,
௮. சங்.௩௮.௪.௨. நாளா.௨௮.௯. வெளி.௰௮.௫. (௭) சங்.௱௬.௬. தானி.௯.௫,௬,௮. உபா.௨௮.௩௬.௬௪. நிகி.௯.௩௰.
தானி.௯.௭,௮. (௮) ஏசா.௨௨.௨௩. சங்.௰௩.௩. சங்.௩௪.௫. (௯) நிகி.௯.௩௬. சங்.௱௩௬.௨௩. அதி.௭.௨௭. ஏசா.௫.௨.
(௰) அதி.௬.௨௧. ௨.இரா.௨௧.௰௬. (௰௧) யாத்.௨௩.௩௨. உபா.௭.௪. உபா.௨௩.௬. நீதி.௰௩.௨௨. (௰௩) சங்.௱௩௰.
(௰௪) யோவா.௫.௰௪. ௨.பேதுரு.௨.௨௰,௨௧. வச.௨. நிகி.௰௩.௨௩,௨௭. உபா.௯.௮.(௰௫)நிகி.௯.௩௩. தானி.௯.௰௪.
ரோ.௩.௰௯. ௧.கொரி.௰௫.௰௭. சங்.௱௩௰.௩.—(௰. அதி. ௧.) தானி.௯.௨௰. ௨.கொரி.௨௰.௯. (௨) நிகி.௰௩.௨௭.

மிசத்தாரில் யிகியேலின் புத்திரனுகிய ஷெகனி
யா, எஸ்ருவை நோக்கி, நாங்கள் எங்கள் தேவ
னுடைய கட்டளையை மீறினோம், தேசத்துச் ச
னங்களுக்குள் புறச்சாதியில் ஸ்திரிகளை விவா
கஞ் செய்தோம்: ஆனாலும் இதைக்குறித்து இஸ
௩ ரவேலருக்குள்ளே நம்பிக்கையுண்டு.—ஆதலால்
இப்பொழுது என் பிரபுவின் ஆலோசனையின்ப
டிக்கும், எங்கள் தேவனுடைய கட்டளைக்கஞ்
சி நடுங்கினவர்களுடைய ஆலோசனையின்படிக்
கும், அந்த ஸ்திரிகளையும், அவர்களிடத்திற் பி
றந்த பிள்ளைகளையுந்தள்ளிவிடும்படி, நாம்நம்மு
டைய தேவனிடத்தில் ஒரு உடன்படிக்கை
பண்ணுவோம்வாரும்;இக்காரியம்வேதப்பிரமா
௪ ணத்தின்படி செய்யப்படுவதாக.—எழுந்திரும்;
இந்தக்காரியம் உம்முடையது: நாங்களும் உம்
முடன் கூடுவோம்:நீர் உற்சாகங்கொண்டு இ
௫ தைச்செய்யுமென்ருன்.—அப்பொழுது எஸ்ரு
எழுந்து, அந்தவாக்கின்படி செய்யும்பொருட்டு,
பிரதான ஆசாரியர்களையும், லேவியரையும், இ
ஸரவேலர் சகலரையும் ஆணையிடவேண்டுமென்
ருன். அவர்கள் ஆணையிட்டார்கள்.

௬ பின்பு எஸ்ரு தேவனுடைய ஆலயத்தின்
சந்நிதியிலிருந்தெழுந்து, இலியாஷீப்பின் புத்
திரனுகிய யோகானனுடைய அறையிற் பிரவே
சித்தான்: அவன் சிறைபிடிக்கப்பட்டவர்களு
டைய அதிக்கிரமத்தினிமித்தம் துக்கமடைந்தப
டியினுல், அங்கே அப்பம் புசிக்கவுமில்லை, சல
௭ பானம் பண்ணவுமில்லை.—பின்பு சிறை மீண்ட
சனங்கள் யெருஷலேமில் கூடிவரவேண்டு
௮ மென்றும்;—அதிபதிகள் முதியோர்களென்னும்
இவர்களின் ஆலோசனைப்படிக்கு மூன்று தினத்
துக்குள்ளே வராதவனெவனே, அவனுடைய
பொருள்கள்யாவும் அபராதமாய் ஒப்பிக்கப்பட
வும், அவன் சிறைமீண்டசனங்களின் சபையி
னின்றுதள்ளப்படவும்வேண்டுமென்றும், யூதா,
யெருஷலேமெங்கும்பிரசித்தம்பண்ணினுர்கள்.

௯ அதனுல் யூதாவிலும் பேன்யாமீனிலுமுள்ள
சகல சனங்களும், மூன்றுதினத்துக்குள் யெரு
ஷலேமில்கூடினுர்கள். அந்தத்தினம் ஒன்பதா
மாதத்தின்இருபதாந்தினம்; எல்லாச்சனங்களும்
இந்தக் காரியத்தினிமித்தமும், பெருமழையினி
மித்தமும் நடுநடுங்கி, தேவனுடைய ஆலயவீதி
௰ யில் இருந்தார்கள்.—ஆசாரியனுகிய எஸ்ருஎழுந்
து, அவர்களைநோக்கி, நீங்கள்கட்டளையை மீறி
னீர்கள்,இஸரவேலருடையஅதிக்கிரமத்தை அதி
கரிப்பிக்கும்படி, நீங்கள் அந்நியசாதிகளில்ஸ்தி
௰௧ ரிகளைவிவாகஞ்செய்தீர்கள்.—ஆதலால் இப்பொ
ழுது உங்கள் பிதாக்களின் தேவனுகிய யெ
கோவாவிடத்தில்உங்கள் பாவத்தைஉணர்ந்
துசொல்லி, அவரைப்பிரியப்படுத்தி, தேசத்துச்
சனங்களினின்றும் அந்நியதேசத்து ஸ்திரிகளி
னின்றும் உங்களைவேறுபடுத்துங்களென்ருன்.—
அப்பொழுது சகலசபையாரும்உரத்தசத்தத்தோ ௰௨
டே உத்தரமாய், நீர்சொன்னபடி நாங்கள்செய்
வோம்.—ஆனாலும் சனங்கள் அநேகர், இதுமா ௰௩
ரிகாலம், ஆதலால்நாம்வெளியேநிற்கக்கூடாது,
இது இரண்டொருநாளில் செய்யப்படும் காரிய
மல்ல: இந்தக்காரியத்திலே கட்டளைமீறினவர்க
ளாகிய நாங்கள் அநேகர்.—ஆதலால்சகல சபை ௰௪
யாரின் அதிபதிகளும்நிற்க, நம்முடைய நகரங்
களில் அந்நியதேசஸ்திரிகளை விவாகஞ்செய்த
வர்கள் எவர்களோ, அவர்கள் அந்தநகரத்துமுதி
யோரோடும்,நீதிபதிகளோடும், நியமிக்கப்படுஞ்
சமயங்களிலே வருவார்களாக, இப்படி இந்தக்
காரியத்தினிமித்தம் எங்களுக்கு விரோதமாகமூ
ளுகிற தேவனுடைய கோபம் நிவிர்த்தியாகு
மென்ருர்கள்.

இந்தக்காரியத்தில் அசாகேலின் புத்திரனுகிய ௰௫
யோனத்தானும், திக்பாவின் புத்திரனுகிய யாகசி
யவுமாத்திரம் ஏற்படுத்தப்பட்டார்கள்: மிஷூல்
லாமும், லேவியனுகிய ஷப்பிதாயியும், அவர்
களுக்குதவி செய்தார்கள்.—சிறைமீண்ட சனங் ௰௬
கள் விதிப்படி செய்தார்கள். ஆசாரியனுகிய
எஸ்ருவும், தங்கள் தங்கள் பிதாவமிசத்தின்ப
டிக்கும், தங்கள்தங்கள் நாமத்தின்படிக்கும் வே
றுபடுத்தப்பட்ட வமிசத்தலைவர்சிலரும், பத்தா
மாத முதல்தினத்தில் இந்தக்காரியத்தை விசாரிக்
கத்தொடங்கினுர்கள்.—முதல்மாத முதல் தினத் ௰௭
தில் அந்நியசாதியில் ஸ்திரிகளைக்கொண்டபுரு
ஷரின் விசாரணையை முடித்தார்கள்.

ஆசாரியவமிசத்தில் அந்நியசாதியில் ஸ்திரிக ௰௮
ளைவிவாகஞ்செய்தவர்கள் யோசாதாக்கின்புத்தி
ரனுகிய யேஷூவாவின் புத்திரரிலும், அவன்ச
கோதரரிலும்; மாசெயா, எலீயேசர், யாறீப், கி
தலியா.-இவர்கள், தங்கள்தங்கள்ஸ்திரிகளைத்தள் ௰௯
ளிப்போடுவோமென்று கையெழுத்துக்கொடுத்
ததுமன்றி, குற்றவாளிகளாயிருந்தபடியால் தங்
கள் குற்றத்தினிமித்தமந்தையில் ஒவ்வொருஆட்
டுக்கடாவையும், பலியிட்டார்கள்.—இம்மேர் ௨௰
சந்ததியாரில்; அனனியும், சிபதியாவும்.—ஆரீ ௨௰௧
மின்சந்ததியாரில்; மாசெயா, இலீசா, ஷிமாயி
யா, யிகியேல், ஊசியா.—பஷ்கூரின் சந்ததியா ௨௰௨
ரில்; இலியோயேனய்,மாசெயா,இஷ்மாவேல்,
நிதனேல், யோசாபாத், ஏலாசா.—லேவியரில்; ௨௰௩
யோசாபாத், ஷிமியி, கேலித்தாவென்னும் பெ
யர்க்கொண்ட கேலாயா, பெதகியா, யூதா, எலீ
யேசர்.-பாடகரில்;இலியாஷீப்:வாசற்காவலாள ௨௰௪
ரில்; ஷல்லும், தெலெம்,ஊரி.—மற்ற இஸரவே ௨௰௫
லருக்குள்: பாரோஷின்சந்ததியாரில்; ரமீயா,இ
சியா, மல்கியா, மியமின், எலீயேசார், மல்கீ
யா, பெனயா.—எலாமின்சந்ததியாரில்; மத்தனி ௨௰௬
யா, சகரியா, யிகியேல், அப்தி, யெரேமோத்,
இலியா.—சத்தூவின் சந்ததியாரில்; இலியோ ௨௰௭
யேனய், இலியாஷீப்,மத்தனியா, யெரேமோத்,

(௩) ௨.நாளா.௩௪.௩௧. அதி.௯.௪. உபா.௭.௨,௩. (௪) ௧.நாளா.௨௮.௰. (௫) நிகி.௫.௰௨. (௬) உபா.௯.௰௮. (௯) ௧.சாமு.௰௨.௰௮. (௰௧) யோசு.௭.௰௯. நீதி.௨௮.௰௩. வச.௩. (௰௪) ௨.நாளா.௩௰.௮. (௰௯) ௨.இரா.௰.௰௫. ௧.நாளா.௨௯.௨௪. ௨.நாளா.௩௰.௮. லேவி.௬.௪,௬.

௨௮ சாபாத்,அசீசா.—பேபாயின்சந்ததியாரில்;யோ
௨௯ காஞன், அஞனிய, சாபாயி, அத்லாய்.—பானீ
யின்சந்ததியாரில்; மிஷேல்லாம், மல்லூக், அதா
௩௰ யா, யாஷூப்,ஷேயால், ராமொத்.—பாகாத்மோ
வாபின்சந்ததியாரில்; அத்ஞ, கிலால், பிஞயா,
மாசெயா, மத்தனியா, பெத்சலேல், பின்ஞவி,
௩௧ மஞஷே.—ஆரீமின் சந்ததியாரில்; எலீயேசர்,
இஷியா, மல்கியா, ஷிமாயியா, ஷிமியோன்,–
௩௨ ௩௩ பேன்யாமீன்,மல்லூக்,ஷிமரியா.-அஷூமின்
சந்ததியாரில்; மத்ஞயி, மத்ததா, சாபாத், இலீப்
௩௪ பேயேத், யெரிமாய், மஞஷே,ஷமியி.—பானீ
யின் சந்ததியாரில்; மாதாய்,அமராம்,யூவேல்,—
பிஞயா,பேதியா,கிலூகூ,—வனியா, மிரே ௩௫ ௩௬
மோத், இலியாஷீப்,—மத்தனியா,மத்ஞயி, யா ௩௭
சாய்,–பானீ,பின்ஞவி,ஷிமியி,–ஷெலேமி ௩௮ ௩௯
யா, நாதான், அதாயா,—மக்ஞத்பாயி, ஷாஷா ௪௰
யி, ஷாராய்,—அசரேல், ஷெலேமியா, ஷிமரி ௪௧
யா,-ஷல்லூம்,அமரியா,யோசேப்பு.-நேபோ ௪௨ ௪௩
வின்சந்ததியாரில்; யெயீயேல், மத்திதியா, சா
பாத், சிபீஞ, யதாய், யோவேல், பிஞயா.—இ ௪௪
வர்கள் எல்லாரும் அந்நியசாதியில் ஸ்திரிகளை
விவாகம்பண்ணியிருந்தார்கள்: இவர்களில் சில
ருக்கு அவரவர்ஸ்திரிகள் பிள்ளைகள்பெற்றிருந்
தார்கள்.

# நிகிமியாவின் புத்தகம்.

---

## க. அதிகாரம்.

*க. நிகிமியா யெரூஷலேமின் சீர்கேட்டையறிந்து துக்கித்து உபவாசஞ்செய்தல்: ரு. அவன் பிரார்த்தித்தல்.*

அகலியாவின் புத்திரனாகியநிகிமியாவின் வாக்
குகள். இருபதாம்வருஷம், கெஷ்லேயு மாதத்தி
லே, நான் ஷூஷான் என்னும் இராசதானியிலி
உ ருந்தேன்.—அப்பொழுது என்சகோதரரில் ஒரு
வனாகிய அனானியும், யூதாசனங்களிற் சிலரும்
வந்தார்கள்;சிறைப்பட்டோரில்மீந்திருந்துமீண்
டுவந்த யூதரையும், யெரூஷலேமையுங்குறித்து
ங அவர்களிடத்தில் விசாரித்தேன்.—அதற்கு அவர்
கள், என்னைநோக்கி, அந்தத்தேசத்தில் வசித்து
மீந்திருக்கிற சிறைமீண்ட சனங்கள், மிகவுந்
துயரமும் அவமானமுமுள்ளவர்களாயிருக்கிறார்
கள்: யெரூஷலேமின் மதிலிடிந்துபோயிற்று,
அதின் வாசற்கதவுகள் அக்கினியினால் சுட்டெ
ரிக்கப்பட்டனவென்றார்கள்.
ச இந்தச்சொற்களைக்கேட்டபொழுது, நான் சி
லநாள் உளுக்காந்திருந்து கண்ணீர்விட்டழுது,
துக்கித்து, உபவாசஞ்செய்து, பரமண்டலத்திலு
ரு ள்ளதேவனைநோக்கிப்பிரார்த்தித்து,—பரமண்
டலத்திலுள்ளதேவனாகியயெகோவாவே,
நீர மகத்துவமும்பயங்கரமுமான தேவன், உம்
மை நேசித்து உமது கட்டளைகளுக்கமைந்து ந
டக்கிறவர்களுக்காக உடன்படிக்கையைக்காத்
சூ துக் கிருபைசெய்துவருகிறீர்.—நான் இப்பொ
ழுது உமதடியாராகிய இஸரவேல் சந்ததியாருக்
காக, இரவும் பகலும் உம்மைநோக்கிப் பிரார்த்
தனைசெய்கிறேன், இஸரவேல் சந்ததியாரும்,
நானும், என் பிதாவமிசத்தாரும் உமக்கு விரோ
தமாய்ச்செய்த பாவங்களை உணர்ந்துசொல்லுகி
றேன்: இப்பொழுதுஉமதடியானாகியநான்செய்
கிற பிரார்த்தனைக்கு உமது செவியைச்சாய்த்து,
எ உம்முடையகண்களைத்திறந்தருளும்.—நாங்கள்
உமக்கு விரோதமாய்த் துற்கிரியையைச்செய்
தோம், நீர்உமது தாசனாகிய மோசேக்கிட்டகட்
டளைகளையாகிலும், விதிகளையாகிலும், நியாயப்
பிரமாணங்களையாகிலும் நாங்கள் காக்கவில்
அ லை.—நீங்கள் கட்டளையைமீறினால், புறத்தேசத்
கூ தாருக்குள் உங்களைச் சிதற அடிப்பேன்:—என்
னிடத்தில் திரும்பி, என் கட்டளைகளைக்காத்து
அவைகளின்படி நடப்பீர்களாகில், ஆகாயத்
தின்கடைசி எல்லையில் உங்களிற்சிலர்தள்ளுண்
டுபோயிருந்தாலும், அவர்களையும் நான் அவ்வி
டத்தினின்றுஞ்சேர்த்து, என் நாமத்தைஸ்தாபிக்
கும்படி நான் தெரிந்துகொண்ட ஸ்தானத்துக்
குக் கொண்டுவருவேனென்று, நீர் உமது தாச
னாகிய மோசேக்குச் சொல்லியவாக்கை நினைந்
தருளும்.—நீர் உமது மகாபராக்கிரமத்தினாலும், ய
வலிமையான கரத்தினாலும் மீட்டருளிய உமத
டியாருஞ் சனங்களும் இவர்களே.—யெகோ யக
வாவே, உமதடியான்செய்கிறபிரார்த்தனைக்கும்,
உமது நாமத்துக்குப் பயப்படவிரும்பும் உமதடி
யார்செய்கிற பிரார்த்தனைக்கும், செவிசாய்த்தரு
ளும்படி கெஞ்சுகிறேன்: இன்றைத்தினம் உமத
டியானுக்கு அனுகூலஞ்செய்து, இந்த மனிதனு
டைய பார்வையில் அடியேன் கடாட்சம்பெற
அருளுமென்று வேண்டிக்கொள்ளுகிறேனென்
றேன்: நான் இராசாவின் பானபாத்திரதாரியா
யிருந்தேன்.

## உ. அதிகாரம்.

*க. அர்தக்ஷஷ்தா நிகிமியாவுடைய முகவிசனத்தின்காரணத்தை யறிந்து அவனை யெரூஷலேமுக்கு அனுப்பல்: கூ. அவன் அங்கே சேரும்பொழுது அவன்சத்துருக்கள் துக்கித்தல்: யஉ. அவன் இராத்திரியில் இடிந்தமதிலை உற்றுப்பார்த்தல்: யஎ. இடிந்த மதிலைத்திரும்பக்கட்டும்படி அவன் யூதரை ஏவல்.*

அர்தக்ஷஷ்தா இராசா அரசாண்ட இருபதாம் க
வருஷம் நிசான்மாதத்தில் இராசாவின் சமுகத்
தில் திராட்சரசமிருந்தபொழுது நான் அந்தத்
திராட்ச ரசத்தை எடுத்து இராசாவிடத்திற்கொ
டுத்தேன். முன் ஒருபொழுதும் நான் அவன் ச
முகத்தில்விசனமாயிருந்ததில்லை.—ஆனபடியால் உ
இராசா என்னுடனே,உன்முகம்விசனமாயிருக்
கிறதென்ன,வருத்தம்போலக்காணவில்லை; இது
மனத் துக்கமேயன்றி வேறொன்றுமல்லவென்
றான். அப்பொழுது நான்மிகவும்பயமடைந்து,—
இராசாவைநோக்கி, இராசா சதாகாலமும்வாழ் ங
க: என்பிதாக்களுடைய பிரேதவறைகள் இருக்
கிறஸ்தானமாகிய நகரம் பாழ்பட்டு,வாசற்கதவு
கள் அக்கினியினால்தகிப்புண்டுகிடக்க, என்மு
கம் விசனமில்லாமல் இருப்பதெப்படி யென்
றேன்.—அதற்கு இராசா என்னிடத்தில், உனக் ச
கென்னவேண்டுமென்றுகேட்க, நான்பரமண்ட
லங்களிலுள்ளதேவனைப்பிரார்த்தித்துக்கொண்
டு,—இராசாவை நோக்கி, இராசாவுக்குப் பிரிய ரு
மும் உமதுசமுகத்தில் உமதடியானுக்குக்கடாட்
சமுங்கிடைத்ததுண்டானால், யூதாவில் என்பி

---

(க. அதி. க.) அதி.ய.க. (ங) அதி.உ.யஎ. உ.இரா.உரு.ய. (ரு) தானி.கூ.ச. யாத்.உய.சூ. (சூ) க.இரா.அ.உஅ,உகூ. தானி.கூ.உய. (எ) சங்.ஙகூ.சூ. தானி.கூ.ரு. உபா.உஅ.யரு. (அ) லேவி.உசூ.ஙங. உபா.உஅ.சூச. (கூ) லேவி.உசூ. ஙகூ,. உபா.ச.உகூ. உபா.ஙய.ச. (ய) உபா.கூ.உகூ. தானி.கூ.யரு. (யக) வச.சூ. ஏசா.உசூ.அ. எபி.யங.யஅ. அதி. உக.—(உ. அதி. க.) எஸ்றா.எ.சூ. அதி.க.யக. (உ) நீதி.யரு.யங. க.இரா.க.ஙக. தானி.உ.ச.அதி.க.ங.

தாக்களுடைய பிரேதவறைகளிருக்கிற நகரத்
தைத்திரும்பக்கட்டும்படி அவ்விடத்துக்கு என்
௬ னை அனுப்பவேண்டுமென்றேன்.—அதற்குஇரா
சாவும் அவன்பக்கத்திலிருந்த அவன்மனைவியும்
என்னைநோக்கி, உன்பிரயாணத்துக்கு எத்தனை
நாள்செல்லும்; எப்பொழுது திரும்பிவருவாய்
என்றுகேட்டார்கள். இராசா என்னை அனுப்பப்
பிரியங்கொண்டபடியால், நான்ஒருசமயத்தைக்
௭ குறித்தேன்.—மேலும் நான் இராசாவைநோக்
கி, இராசாவுக்குச்சம்மதமுண்டானால், நான் யூ
தாவுக்குப்போய்ச்சேருமட்டும்என்னைவழிவிட்
டனுப்பும்படி, நதிக்கப்புறத்திலுள்ள அதிகாரிக
௮ ளுக்குப்பத்திரங்கள்தரவேண்டும்.—தேவாலயத்
தைச்சேர்ந்த அரணின் வாசல்களுக்கும், நகரத்
தின் மதிலுக்கும், நான்பிரவேசித்திருக்கும் வீட்
டுக்கும் உத்திரங்கள்செய்யும்பொருட்டு, இராசா
வின் வனம்பாலிப்பவனாகிய ஆசாப், மரங்களைத்
தரும்படி அவனுக்கும் ஒரு பத்திரந்தரவேண்டு
மென்றேன். தேவன் என்மேல்வைத்தகடாட்
சத்தின்படி இராசா இவையெல்லாம் எனக்குத்
தந்தார்.
௯ இராசா சேனாபதிகளையும் குதிரைவீரரையும்
என்னுடன் அனுப்பினார். நான் நதிக்கப்புறத்
திலுள்ளஅதிகாரிகளிடத்தில்வந்து, இராசாவின்
பத்திரங்களை அவர்களிடத்திற்கொடுத்தேன்.—
௰ இஸரவேல் சந்ததியாருக்கு நன்மைசெய்யும்படி
ஒருமனிதன் வந்திருக்கிறானென்னுஞ் செய்தி
யை, ஓரோனியனாகிய சன்பல்லாத்தும் அம்
மோனியனாகிய தோபியாவென்னும் அடிமை
யுங்கேட்டபொழுது மிகவும் விசனப்பட்டார்
௰௧ கள்.—நான் யெருஷலேமிலேசேர்ந்தேன்.
௰௨ யெருஷலேமிலே நான்செய்யும்படி என்தே
வன் என் இருதயத்திலின்னதை யுணர்த்தினா
ரென்று நான் ஒருவருக்கும் தெரிவிக்கவில்லை:
மூன்றுநாள்சென்றபின், நானும் என்னுடன் இ
ருந்தசிலரும்இராத்திரியில்எழுந்தோம்; நான்ஏறி
னமிருகமேயன்றி வேறொருமிருகமும் என்னி
௰௩ டத்திலில்லை.—நான் அன்றிராத்திரியிலே தாழ்ந்த
பூமிக்குப் போகிறவாசல்வழியாய்ப் புறப்பட்டு,
வலுசருப்பத்துரவைக்கடந்து, குப்பைவாசல்வ
ரைக்கும்போய், இடிக்கப்பட்ட யெருஷலே
மின்மதில்களையும்அக்கினியினாற்சுட்டெரிக்கப்
பட்ட வாசற் கதவுகளையும் பார்த்துக்கொண்
௰௪ டேன்.—நீரூற்றின்வாசலுக்கும் இராசாவின்கு
ளத்துக்கும்போனேன்: அவ்விடத்திலே நான் ஏ
௰௫ றிப்போன மிருகஞ்செல்ல வழியில்லை.—அதி
னால் நான் இராத்திரியிலே சிற்றாற்றின் கரையி
லேபோய், மதிலைப்பார்த்துக்கொண்டு திரும்பி,
௰௬ தாழ்ந்தபூமிவாசலாலேவந்துவிட்டேன்.—நான்
எங்கேபோனேனென்றும் என்னசெய்தேனென்
றும்அதிகாரிகளுக்குத்தெரியவில்லை; இதைநான்
அதுவரைக்கும் ஆசாரியர்களுக்காகிலும், பிரபுக
ளுக்காகிலும், அதிகாரிகளுக்காகிலும், மற்றவே
லைக் காரருக்காகிலும், யூதரில் எவர்களுக்காகி
லும்சொல்லவுமில்லை.
பின்புநான்அவர்களைநோக்கி, நாம்சீர்கெட்ட ௰௭
நிலைமையில் அகப்பட்டோம், யெருஷலேம்பா
ழாய்ப்போயிற்று, அதின்வாசற்கதவுகள் அக்கி
னியினாற்சுட்டெரிக்கப்பட்டன, இது கண்டி
ருக்கிறீர்கள்: ஆதலால் இனிநமக்கு நிந்தனைவரா
தபடி யெருஷலேமின் மதிலைக்கட்டுவோம் வா
ருங்களென்றேன்.—மேலும் எனக்கு நன்மை ௰௮
செய்யும்படிதேவன்செய்த அனுக்கிரகத்தையும்
இராசா எனக்குச்சொன்ன வாக்குகளையும் விப
ரித்தேன். அப்பொழுது அவர்கள், நாம் எழுந்து
கட்டுவோம்வாருங்களென்றார்கள். இவ்விதமாய்
அவர்கள் இந்த நற்கிரியையினிமித்தந்தங்கள்கை
களைத் திடப்படுத்தினார்கள்.—ஓரோனியனாகிய ௰௯
சன்பல்லாத்தும், அம்மோனியனாகிய தோபியா
வென்னும் அடிமையும், அரபியனாகிய கேஷே
மும் இதைக்கேள்விப்பட்டபொழுது, நீங்கள்
செய்கிறகாரியமென்ன, இராசதுரோகஞ் செய்
யப்போகிறீர்களாவென்றுசொல்லி, எங்களைப்ப
ரிகாசஞ்செய்து, அலட்சியம்பண்ணினார்கள்.—
அப்பொழுது நான் அவர்களுக்கு உத்தரமாய், ௨௰
பரமண்டலத்திலுள்ள தேவனானவர் எங்களை
அனுகூலப்படுத்துவார்; ஆதலால் அவருடைய
பணிவிடைக்காரராகிய நாங்கள் எழுந்து கட்டு
வோம்: உங்களுக்கோ யெருஷலேமிலே பங்கு
மில்லை, அதிகாரமுமில்லை, ஞாபகக்குறியுமில்
லையென்றேன்.

## ௩. அதிகாரம்.

௧. மதிலைக்கட்டுகிறவர்களுடைய நாமத்தையும் அவரவர்களுக்கு ஏற்படுத்தப்பட்ட ஸ்தானங்களையும் விவரித்தல்.

பின்பு பிரதான ஆசாரியனாகிய இலியாஷீப்பும் ௧
அவன்சகோதரராகிய ஆசாரியர்களும் எழுந்து,
ஆட்டுவாசலைக்கட்டி, அவர்கள் அதின் கதவுக
ளைநிறுத்திப் பிரதிஷ்டைபண்ணினார்கள்; மே
யாகோபுரந்தொடங்கி அனனேல் கோபுரம் வ
ரைக்குமே பிரதிஷ்டைபண்ணினார்கள்.—அவ ௨
னருகே யெரிகோசனங்கள்கட்டினார்கள். அவர்
களருகே இம்ரீயின் புத்திரனாகிய சக்கூர்கட்டி
னான்.—அசேனா வமிசத்தார் மச்சவாசலைக்கட் ௩
டி, அதற்கு உத்திரங்களைவைத்து, கதவுகளும்,
அவைகளுக்குப்பூட்டுக்களுந் தாழ்களுமிட்டார்
கள்.—அவர்களருகே கோசுவின் பௌத்திரனு ௪
ம் ஊரியாவின் புத்திரனுமாகிய மிரேமோத்புது
ப்பித்தான். அவர்களருகே மிஷெஷபேலின்
பௌத்திரனும் பெரிகாயாவின் புத்திரனுமாகிய
மிஷுல்லாம்புதுப்பித்தான். அவர்களருகேபானா
வின்புத்திரனாகிய சாதோக் புதுப்பித்தான்.—அ ௫

(௬) அதி.௫.௰௪. (௮) அதி.௩.௭. எஸ்றா.௫.௫. வச.௰௮. (௰௧) எஸ்றா.௮.௩௨. (௰௩) உ.நாளா.௨௬.௯. அதி.௧.௩. (௰௪) அதி.௩.௰௫. (௰௫) உ.சாமு.௰௫.௨௩. எரே.௩௧.௪௰. (௰௭) அதி.௧.௩. சங்.௪௪.௰௩. எரே.௨௪.௯. எசேக்.௫.௰௪,௰௫. (௰௮) உ.சாமு.௨.௭. (௰௯) சங்.௭௯.௪. (௨௰) எஸ்றா.௪.௩.—(௩. அதி. ௧.) அதி.௰௨.௰. யோவா.௫.௨. அதி.௰௨.௩௯. எரே.௩௧.௩௮. சக.௰௪.௰. (௨) எஸ்றா.௨.௩௪. (௩) உ.நாளா.௩௩.௰௪. செப்.௧.௰. (௫) நியா.௫.௨௩.

வர்களருகே தெக்கோயர் புதுப்பித்தார்கள்; அவர்
கள் பிரபுகளோ தங்கள் ஆண்டவரின் கிரியைக்
௬ குத்தங்கள் கழுத்தைக்கொடுக்கவில்லை.—பசேயா
க்கின்புத்திரனாகிய யோயதாவும்பிசொதீயாவின்
புத்திரனாகிய மிஷுல்லாமும் பழையவாசலைப்
புதுப்பித்து, அதற்கு உத்திரங்கள்வைத்து, அதற்
குக் கதவுகளையும் பூட்டுக்களையும்தாழ்களையுமிட்
௭ டார்கள்.—அவர்களருகே கிபியோனியனாகிய
மிலத்தியாவும், மேரோனோத்தியனாகிய யாதோ
னும், நதிக்கிப்புறத்திலுள்ள அதிகாரருக்கு அதீ
னராகிய கிபியோனியரும், மிஸ்பாவியரும் பு
௮ துப்பித்தார்கள்.—அவனருகே தட்டாரில் ஒரு
வனாகிய அராயாவின் புத்திரனான ஊசியேல்
புதுப்பித்தான். அவனருகே கந்தவர்த்தகரில் ஒ
ருவனுடைய புத்திரனாகிய அனனியபுதுப்பித்
தான், அவர்கள் விசாலமதில்வரைக்கும் யெரு
௯ ஷலேமைத் திடப்படுத்தினார்கள்.—அவர்களரு
கே யெருஷலேம் நகரத்தின் பாதிப்பங்குக்கு
அதிகாரியாகிய ஊரின் புத்திரனான ரெபாயா பு
௰ துப்பித்தான்.—அவர்களருகே அருமாப்பின்புத்
திரனாகிய யெதாயா தன்வீட்டிற்கு எதிராயுள்ள
தைப்புதுப்பித்தான். அவனருகே அஷப்னிய
௰௧ வின்புத்திரனாகியஅற்றூஷ் புதுப்பித்தான்.—ஆ
ரீமின் புத்திரனாகிய மல்கீயாவும்,பாகாத்மோவா
பின் புத்திரனாகிய அஷூப்பும் மற்றப்பங்கையும்
சூளைகளின்கொத்தளத்தையும்புதுப்பித்தார்கள்.-
௰௨ அவனருகே யெருஷலேமின் பாதிப்பங்குக்கு
அதிகாரியாகிய அலோகேஷின்புத்திரனான ஷல்
லூமும் அவன்புத்திரிகளும் புதுப்பித்தார்கள்.—
௰௩ அனூனும் சனோகாவாசிகளும் தாழ்ந்தபூமியின்
வாசலைப்புதுப்பித்தார்கள்; அவர்கள்அதைக்கட்
டி, அதற்குக்கதவுகளையும் பூட்டுக்களையும், தாழ்
களையுமிட்டுக்குப்பை வாசல்மட்டும்சுவரில் ஆ
௰௪ யிரமுழம் புதுப்பித்தார்கள்.—பேதக்கேரேமின்
ஒருபங்குக்கதிகாரியாகிய ரேகாப்பின்புத்திரனா
கிய மல்கியாகுப்பைவாசலைப்புதுப்பித்தான்; அ
வன் அதைக்கட்டி, அதற்குக்கதவுகளையும், பூட்
௰௫ டுக்களையுந்தாழ்களையுமிட்டான்.-மிஸ்பாவின்ஒ
ருபங்குக்கதிகாரியாகிய கொல்லோசெயின்புத்
திரனானஷல்லுன்நீரூற்றின்வாசலைப்புதுப்பித்
தான். அவனதைக்கட்டி,மூடி, அதின் கதவுகளை
யும், அதின்பூட்டுக்களையும், அதின் தாழ்களையு
மிட்டான்; தாவீதின்நகரத்தைவிட்டு இறங்குகி
றபடிகள்மட்டும் இராசாவின் சிங்காசனத்தைச்
சேர்ந்த சிலோவாவென்னுங்குளத்தின் மதிலைப்
௰௬ புதுப்பித்தான்.—அவனருகேபேத்சூரின்பாதிப்
பங்குக்கு அதிகாரியாகிய அஸ்பூக்கின்புத்திரனா
கிய நிகிமியா, தாவீதின் பிரேதவறைகளுக்கு
முற்புறத்திலுள்ள இடமட்டாகவும்,உண்டுபண்
ணப்பட்ட குளமட்டாகவும் வீரவான்களுடை
௰௭ ய வீடுமட்டாகவும் புதுப்பித்தான்.—அவனரு
கே லேவியரில் பானீயின்புத்திரனாகிய ரேகூம்
புதுப்பித்தான். அவனருகே கேயிலாவின் பா
திப்பங்குக்கதிகாரியாகிய அஷபியா தன் பங்
கைப்புதுப்பித்தான்.—அவனருகே அவன்சகோ ௰௮
தரனும் கேயிலாவின் பாதிப்பங்குக்கு அதிகாரி
யாகிய எனாதத்தின் புத்திரனுமாகிய பாவாய்பு
துப்பித்தான்.—அவனருகே மிஸ்பாவின் அதி ௰௯
காரியாகிய யேஷுவாவின்புத்திரனான எட்சர்,
மதிலின் கோடியிலுள்ள ஆயுத சாலைக்குப்போ
கிறவழிக்குஎதிர்ப்புறத்திலுள்ள மற்றப்பங்கைப்
புதுப்பித்தான்.—அவனருகே சாபாயியின் புத் ௨௰
திரனாகிய பாருக், மதிலின் கோடியினின்றுபிர
தான ஆசாரியனாகிய இலியாஷீப்பின் வீட்டு
வாசல்வரைக்குமுள்ள மற்றொரு பங்கைப்புதுப்
பித்தான்.—அவனருகே கோசுவின் பௌத்திர ௨௧
னும் ஊரியாவின் புத்திரனுமாகிய மிரேமோத்,
இலியாஷீப்பின்வீட்டுவாசற்படிதொடங்கிஅவ
னுடைய வீட்டின் கோடிமட்டுமிருக்கிற பின்
னொருபங்கைப் புதுப்பித்தான்.-அவனருகே சம ௨௨
பூமியிலுள்ள சனங்களாகிய ஆசாரியர்கள் புதுப்
பித்தார்கள்.-அவனருகே பேன்யாமீனும் அஷூப் ௨௩
பும் தங்கள்வீட்டில் எதிர்ப்புறத்திலுள்ளதைப்
புதுப்பித்தார்கள். அவனருகே அனனியாவின்
பௌத்திரனும் மாசேயாவின் புத்திரனுமாகிய
அசரியா தன்வீட்டுக்குச் சமீபத்திலுள்ளதைப் பு
துப்பித்தான்.—அவனருகே எனாதத்தின் புத்திர ௨௪
னாகிய பின்னுவி, அசரியாவின் வீடுதொடங்கி
மதிலின்கோடியின் வளைவுவரைக்குமுள்ள மற்
றஸ்தானத்தைப் புதுப்பித்தான்.—பின்பு ஊசா ௨௫
யின் புத்திரனாகிய பாலால், வளைவின் சமீபத்தி
லும், சிறைச்சாலையின் பிராகாரத்துக்குச் சமீ
பத்திலும், இராசாவின் உயர்ந்தவீட்டிற்கு வெ
ளியேயிருக்கிற கோபுரத்திலுமுள்ள மதிலைப்
புதுப்பித்தான். அவனருகே பாரோஷின்புத்
திரனாகிய பிதாயா புதுப்பித்தான்.-நிதினியர், ௨௬
கீழ்த்திசைக்குநேரே தண்ணீர் வாசலுக்கெதிர்ப்
புறத்திலும்வெளியே இருக்கிற கோபுரம்வரைக்
குமுள்ள ஓபேலிலே வாசம்பண்ணி,அதைக்கட்
டினார்கள்.—அவர்களருகே தெக்கோயர், வெ ௨௭
ளிப்புறத்திலுள்ள பெரிய கோபுரத்தைச்சேர்ந்த
மற்றஸ்தானத்தை ஓபேலின் மதில் வரைக்கும்
புதுப்பித்தார்கள்.—குதிரைவாசலுக்கப்பால் ஆ ௨௮
சாரியர்கள் ஒவ்வொருவரும், தம் தம் வீட்டுக்
கெதிர்ப்புறத்திலுள்ளதைப் புதுப்பித்தார்கள்.—
அவர்களருகே இம்மேரின் புத்திரனாகிய சா ௨௯
தோக் தன் வீட்டுக்கெதிர்ப்புறத்திலுள்ளதைப் பு
துப்பித்தான். அவனருகே கீழ்த்திசைவாசற் கா
வலாளனாகிய ஷெகனியாவின் புத்திரனாகிய ஷி
மாயியா புதுப்பித்தான்.—அவனருகே ஷெலேமி ௩௰
யாவின் புத்திரனாகிய அனனியவும் சேலாப்பின்
புத்திரனாகிய அனூனும் வேறொருபங்கைப் பு
துப்பித்தார்கள். பின்பு பெரிகாயாவின் புத்திரனா
கிய மிஷுல்லாம் தன் அறைக் கெதிர்ப்புறத்தி

(௬) அதி.௰௨.௩௯. (௭) அதி.௨.௮. (௮) அதி.௰௨.௩௮. (௰௧) அதி.௰௨.௩௮. (௰௩) அதி.௨.௰௩. (௰௫) அதி.௨.௰௪. யோவா.௯.௭. (௰௬) ௨.இரா.௨௰.௨௰. ஏசா.௨௨.௰௧. (௰௯) ௨.நாளா.௨௬.௯. (௨௫) எரே.௩௨.௨. (௨௬) எஸ்று.௨.௪௩. ௨.நாளா.௨௭.௩. அதி.௮.௧,௩. அதி.௰௨.௩௭. (௨௮) ௨.இரா.௰௧.௰௬. எரே.௩௧.௪௰.

௩௧ லுள்ளதைப் புதுப்பித்தான்.—அவனருகே தட்டா
ளின் புத்திரனாகிய மல்கியா, நிதீனியரும் வர்த்
தகருமானவர்களுடைய ஸ்தானமட்டும் மிப்
காட் வாசலுக்கெதிர்ப் புறத்திலுள்ள கோடியின்
௩௨ மேல் வீடுமட்டாகவும் புதுப்பித்தான்.—கோடி
யிலுள்ள மதிலுக்கும் ஆட்டுவாசலுக்கும் இடை
யிலுள்ள எற்றத்தைத் தட்டாரும் வர்த்தகரும் பு
துப்பித்தார்கள்.

## ௪. அதிகாரம்.

௧. சத்துருக்களின் நிந்தையைக்காட்டல்: ௭. சத்
துருக்களினிமித்தம் காவலாளரை நியமித்தல்:
௰௩. தொழிற்காரருடைய கையில் ஆயுதங்க
ளைக்கொடுத்தல்: ௰௯. நிகிமியாசனங்களுக்கு
ஆலோசனைசொல்லல்.

**நா**ங்கள்மதில் கட்டுகிறதைச்சன்பல்லாத் கேள்
விப்பட்டபொழுது கோபித்து, மிகவுங்குரோ
௨ தங்கொண்டு,—தன் சகோதரருக்கும் ஷமாரியா
வின் சேனைகளுக்குமுன்பாக, பெலவீனமான
இந்த யூதர்கள் எதைச்செய்கிறார்கள்; இவர்கள்
தங்களுக்குக் கோட்டை கட்டிக்கொள்ளுவார்க
ளா; இவர்கள் பலியிடுவார்களா; ஒருநாளிலே
வேலைகளைச்செய்து முடிப்பார்களா; மண்மேடு
களிலிருந்துஎரிக்கப்பட்ட கற்களைச்சீர்ப்படுத்து
வார்களாஎன்றுசொல்லியூதேயரைநிந்தித்தான்.—
௩ அவனருகேநின்ற அம்மோனியனாகிய தோபி
யா, அவர்கள் கட்டினாலும், அதின்வழியாய் ஒ
ருநரி ஏறிப்போனால் அவர்கள் கல்மதில் இடிந்
௪ துவிழுமென்றான்.—எங்களுடைய தேவனே,
எங்களுக்குச் செவிதந்தருளும், நாங்கள் அவ
மதிக்கப்பட்டிருக்கிறோம்: இவர்கள்செய்த அவ
மானத்தை இவர்கள்மேற் திருப்பிவிடும், சிறை
பிடிக்குந் தேசத்தாரிடத்தில் இவர்களைக்கொள்
௫ ளைப்பொருளாக ஒப்பித்துவிடும்.—இவர்கள் கட்
டுகிறவர்களின்முன்பாக உம்மைக் கோபப்
படுத்தினார்கள்: ஆதலால் இவர்களுடைய பாவத்
தைமறைக்கவேண்டாம், இவர்கள் குற்றத்தை
உமதுபார்வைக்குத்துடைக்கப்படவிடாதிரும்.-
௬ இப்படி நாங்கள்மதிலைக்கட்டினோம்,சனங்கள்
வேலையைச்செய்யவிரும்பினபடியினால்,எல்லா
மதிலையும் பாதிஉயரங் கட்டிமுடித்தோம்.
௭ யெருஷலேமின் மதில்கள் கட்டிஎழுப்பப்
பட்டதையும்இடிவுகள்அடைபட்டதையும் சன்
பல்லாத், தோபியா, அரபியர், அம்மோனியர்,
அஷ்தோத்தியர் என்னும் இவர்கள்கேள்விப்பட்
௮ டபொழுது மிகவுங் குரோதங்கொண்டு,—யெ
ருஷலேமுக்கு விரோதமாயுத்தஞ்செய்வதற்கும்
வேலையைத் தடைப்படுத்துவதற்கும் வரும்படி,
எல்லாருமாகக்கூடி ஒப்பந்தம்பண்ணினார்கள்.—
௯ அதினால் நாங்கள் எங்கள் தேவனைநோக்கிப்பி
ரார்த்தித்து, இரவும் பகலும் அவர்கள் நிமித்தம்
௰ காவலாளரை ஏற்படுத்தினோம்.—யூதேயர்,சுமை
காரர்மெலிவடைந்திருக்கிறார்கள், பாழ்மேடுமி

குதியாயிருக்கின்றது, எங்களாலே மதில்கட்ட
முடியாதென்றார்கள்.—எங்களுடைய சத்துருக் ௰௧
களோ, நாங்கள் அவர்களுக்குள்வந்து அவர்க
ளைக்கொலைசெய்து அவர்கள்வேலையை ஒழியப்
பண்ணும்வரைக்கும், அவர்களறியாமலும் பாரா
மலுமிருப்பார்கள் என்றார்கள்.—அவர்களுக்குள் ௰௨
ளேவசித்த யூதர்கள் எங்களிடத்தில்வந்து, எங்
களுடனே, அவர்களிருக்கிற சகல இடங்களி
னின்றும் உங்களுக்கு விரோதமாய்ப் புறப்படு
வார்களென்று பத்துமுறைசொன்னார்கள்.
ஆதலால் நான், மதிலுக்குப்பின்னே கீழ்ப்பு ௰௩
றத்திலும் மேற்புறத்திலும், சனங்களை அவரவர்
குடும்பத்தின்படி கட்கத்தோடும், ஈட்டியோடும்,
வில்லோடும்ஏற்படுத்தினேன்.—நான்பார்த்தபின் ௰௪
பு எழுந்து, பிரபுகளையும், அதிபதிகளையும், மற்
றச்சனங்களையும்நோக்கி,நீங்கள் அவர்களுக்குப்
பயப்படவேண்டாம்: மகத்துவமும் பயங்கரமு
முள்ள யேகோவாவை நினைந்துகொள்ளுங்
கள், உங்கள்சகோதரர்,புத்திரர்,புத்திரிகள், மனை
வியர், குடும்பத்தார் இவர்களுக்காகயுத்தஞ்செய்
யுங்களென்றேன்.—நாங்கள் அவர்களுடைய அ ௰௫
பிப்பிராயத்தைஅறிந்தோமென்றும், தேவன் அ
வர்களுடைய ஆலோசனையை அபத்தமாக்கினா
ரென்றும் எங்கள் சத்துருக்கள் கேள்விப்பட்ட
பொழுது, நாங்கள் அனைவரும் எங்கள் எங்களு
டையவேலையைச்செய்ய மதிலினிடத்துக்குத்தி
ரும்பினோம்.—அந்நாள்முதற்கொண்டு என்பணி ௰௬
விடைக்காரரில் பாதிப்பேர்வேலைசெய்தார்கள்,
மற்றைப்பாதிப்பேர் ஈட்டிகளையும்,பரிசைகளை
யும், விற்களையும், போர்க்கவசங்களையுந் தரித்தி
ருந்தார்கள்; அதிபதிகள் யூதாவமிசத்தாருக்குப்
பிற்புறத்தில் நின்றார்கள்.—மதிலின்மேற் கட்டி ௰௭
னவர்களும், சுமைசுமந்தவர்களும், சுமை ஏற்றி
னவர்களுமாகிய யாவரும், ஒருகையினால்வேலை
யைச்செய்து, மற்றக்கையினால் ஆயுதம்பிடித்தி
ருந்தார்கள்.—கட்டுகிறவர்கள் ஒவ்வொருவரும் ௰௮
தங்கள் தங்கள் கட்கத்தை அரையிலே கட்டிக்
கொண்டுகட்டுவார்கள். எக்காளமூதினவன்என்
சமீபத்தில்நின்றான்.
நான், பிரதானிகளையும், அதிபதிகளையும், மற் ௰௯
றச்சனங்களையும் நோக்கி, வேலை பாரமும் பெ
ரிதுமாயிருக்கின்றது, நாம் மதிலின் மேல் ஒருவ
ருக்கொருவர் சிதறுண்டு தூரமாயிருக்கிறோம்.—
ஆதலால் நீங்கள் எக்காளத்தொனியை எவ்விடத் ௨௰
திலே கேட்பீர்களோ, அவ்விடத்தில் எங்களிடத்
திலே கூடிவாருங்கள், நம்முடைய தேவன் ந
மக்காக யுத்தஞ்செய்வார் என்றேன்.—இவ்வித ௨௧
மாய் நாங்கள் வேலையைச் செய்திருந்தோம்: வி
டியற்காலமுதல் நட்சத்திரந் தோன்றும் வரைக்
கும் பாதிப்பேர் ஈட்டிகளைப்பிடித்துக்கொண்டு
நிற்பார்கள்.—பின்னும் அந்தச் சமயத்தில் நான் ௨௨
சனங்களைநோக்கி, சனங்கள் இரவிலே நமக்குக்

(௪. அதி. ௧.) அதி.௨.௰.௰௯. (௩) அதி.௨.௰,௰௯. (௪) சங்.௱௨௩.௩,௪. சங்.௭௯.௰௨. நீதி.௩.௩௪. (௫) சங்.௬௯.௨௭, ௨௮. எரே.௰௮.௨௩. (௮) சங்.௮௩.௩,௪,௭. (௯) சங்.௫௰.௰௫. (௰௪) எண்.௰௪.௯. உபா.௧.௨௯. உபா.௰.௰௭. ௨.சாமு.௰.௰௨. (௰௫) யோபு.௫.௰௨. (௨௰) யாத்.௰௪.௰௪,௨௫. உபா.௧.௩௰. யோசு.௨௩.௰.

காவல்பண்ணுவதற்கும்,பகலிலேவேலைசெய்வ
தற்கும், ஒவ்வொருவனுந்தன்தன் பணிவிடைக்
காரருடன் யெரூஷலேமில் இராத்தங்கவேண்டு
உரு மென்றேன்.—ஆதலால் நானும், என் சகோதர
ரும், என் பணிவிடைக்காரரும், என்னைப்பின்
பற்றியகாவலாளரும் வஸ்திரங்களைக்களையவில்
லை, தோய்க்கமாத்திரம் களைந்தோம்.

## ரு. அதிகாரம்.

க. சனங்கள் கலகஞ்செய்தல்: சு. நிகெமியா பறிகா
ரரைக்கண்டித்து உத்தரவாதம்செய்யும்படி கட்
டளையிடல்: யச. அவன் அதிபதிக்குரிய சம்ப
ளத்தை வாங்காமலிருந்தும் தன்பொருளினால்
அநேகசனங்களை யாதரித்தல்.

சனங்களுக்குள்ளும் அவர்கள்மனைவியருக்குள்
ளும் அவர்கள் சகோதரராகிய யூதருக்கு விரோ
உ தமாக ஒருபெரிய கலகமுண்டாயிருந்தது.—அ
வர்களிற்சிலர், எங்களுடையபுத்திரரும் புத்திரி
களும் அநேகர், ஆதலால் நாங்கள் புசித்துச் சீ
விக்கும்படி தானியத்தை வாங்குகிறோமென்றார்
ங கள்.—வேறுசிலர், நாங்கள் பஞ்சகாலத்தில் எங்க
ளுடைய வயல்நிலம், திராட்சத்தோட்டம், வீடு
இவைகளை ஈடாகக்கொடுத்துத்தானியத்தைவாங்
ச கிக்கொண்டோமென்றார்கள்.—இன்னுஞ்சிலர்,
இராசாவின் இறையினிமித்தம் எங்களுடையவ
யல்களையும் திராட்சத்தோட்டங்களையும் ஈடா
ரு கக்கொடுத்துத் திரவியம்வாங்கினோம்.—எங்கள்
சரீரங்கள் எங்கள்சகோதரர்சரீரங்கள்போலிருக்
கின்றன, எங்கள்பிள்ளைகள் அவர்கள்பிள்ளைகள்
போலிருக்கின்றன: பாருங்கள், எங்கள்புத்திரர்
புத்திரிகளை அடிமைத்தனத்துக்கு உட்படுத்துகி
றோம், எங்கள்புத்திரிகளிற்சிலர் இப்பொழுதும்
சிறைப்பட்டார்கள்: எங்களுடைய வயல்களும்
திராட்சத்தோட்டங்களும் மற்றவர்கள்வசத்திலி
ருக்கின்றன; ஆதலால் அவர்களைவிடுதலையாக்க
எங்களால்முடியாதுஎன்றார்கள்.
சு அவர்களுடைய கலகத்தையும் இந்தச்சொற்
களையும் நான் கேள்விப்பட்டபொழுது மிகவுங்
எ கோபங்கொண்டேன்.—நான் எனக்குள் ஆலோ
சனை பண்ணினபின்பு, பிரதானிகளையும் அதிகா
ரிகளையுங்கடிந்து, அவர்களைநோக்கி, நீங்கள்யா
வரும் உங்கள் சகோதரரிடத்தில் அநியாயவட்
டிவாங்குகிறீர்கள் என்று சொன்னதுமன்றி, அ
வர்களுக்கு விரோதமாய் ஒரு பெரியசபைகூட
அ வும்செய்தேன்.—பின்பு அவர்களைநோக்கி, நாங்
கள் புறத்தேசத்தார்கையில் விற்கப்பட்ட யூதரா
கிய எங்களுடையசகோதரரை எங்களால் இயன்
றமாத்திரம் விடுதலையாக்கினோம்; இனி நீங்கள்
உங்கள் சகோதரரையும் விற்கப்போகிறீர்களா;
அவர்கள் எங்களுக்கு விலைப்படுத்தப்படலாமா
வென்றேன்: அதற்குஅவர்கள்ஒருமறுமொழியும்
சொல்லவகையில்லாமல் பேசாதிருந்தார்கள்.—
பின்னும்நான்,நீங்கள்செய்கிறது நல்லதல்ல;அந் கூ
நியதேசத்தாராகிய எங்கள் சத்துருக்களின் நிந்த
னையைக்கேட்டு எங்கள் தேவனுக்குப்பயந்து
நடப்பதுஉங்கள்கடமையல்லவா.—நானும், என் ய
சகோதரரும், பணிவிடைக்காரரும் அவர்களி
டத்தில் திரவியத்தையும் தானியத்தையும் பெற்
றுக்கொள்ளவும் கூடும்: இந்த அநியாய வட்டி
வாங்குவதைத் தள்ளிவிடும்படி நான் உங்களை
வேண்டுகிறேன்.—நீங்கள் அவர்களிடத்தில்வாங் யக
கினவயல்களையும்,திராட்சத்தோட்டங்களையும்,
சீதவிருட்சத் தோப்புக்களையும், அவர்கள் வீடுக
ளையும், திரவியம்,தானியம்,திராட்சரசம், எண்
ணெய் என்னும் இவைகளில் நூற்றிலொருபங்
கையும், இன்றைத்தினம் அவர்களுக்கு மீண்டுங்
கொடுத்துவிடும்படி கேட்கிறேனென்றேன்.—
அப்பொழுது அவர்கள், நாங்கள் மீண்டுங்கொ யஉ
டுப்போம்,அவர்களிடத்தில்ஒன்றுங்கேட்கமாட்
டோம்; நீர் சொல்லியபடி செய்வோமென்றார்
கள். பின்பு நான் ஆசாரியர்களை வரவழைத்து,
இந்த வாக்குத்தத்தத்தின்படி செய்யும்பொருட்டு
அவர்களிடத்தில் ஆணைவாங்கினேன்.—பின்பு யங
நான் என்வஸ்திரத்தையுதறி, இந்தவாக்குத்தத்தத்
தைக் காத்துக்கொள்ளாமலிருக்கிறவனெவனோ,
அவனைத் தேவன் அவனுடையவீட்டிலும் அவ
னுடைய பிரயாசப்பலனிலும் நின்று இவ்விதமா
யுதறிவிடுவாராக, அவனிப்படியே உதறப்பட்டு
வெறுமையாயிருப்பான் என்றேன். அதற்குச் ச
பையார்யாவரும் ஆமென் என்றுசொல்லி, யெ
கோவாவைத் துதித்தார்கள். சனங்கள் அந்த
வாக்குத்தத்தத்தின்படி செய்தார்கள்.
நான் யூதாதேசத்தில் அவர்களுக்கு அதிகாரி யச
யாக ஏற்படுத்தப்பட்ட இருபதாம் வருஷந்தொ
டங்கி அர்தக்ஷஷ்தா இராசா அரசாண்டமுப்
பத்திரண்டாம் வருஷம்வரைக்குமுள்ள பன்னி
ரண்டுவருஷம், நானும் என்சகோதரரும் தேசா
திபதிக்கேற்ற ஆகாரத்தைப் புசிக்கவில்லை.—எ யரு
னக்குமுன்னிருந்த அதிகாரிகளோ சனங்களுக்
குப்பாரமாயிருந்து, அவர்களிடத்தில் நாற்பது
ஷேக்கல் வெள்ளியையேயன்றிப் போசனப
தார்த்தத்தையும்திராட்சஇரசத்தையும்வாங்கினார்
கள்; அவர்கள் வேலைக்காரருஞ் சனங்களைஆண்
டுவந்தார்கள்: நான் தேவனுக்குப் பயந்தபடி
யால் அப்படிச்செய்யவில்லை.—நான் நித்தமும் யசு
இந்த மதிலின்வேலையிலே முயன்று நின்றேன்,
கொஞ்சநிலமும்நாங்கள்கிரயத்துக்குவாங்கவில்
லை: என் பணிவிடைக்காரரெல்லாரும் அவ்வி
டத்தில்வேலையிலேகூடியிருந்தார்கள்.—அன்றி யஎ
யும் எங்களுக்கு நான்குதிசையிலுமுள்ள அந்நி
யதேசத்தார்மத்தியினின்றும் எங்களிடத்தில் வந்
தவர்கள்தவிர, யூதாசனங்களும் அதிகாரிகளுமா
கிய நூற்றைம்பதுபேர் என் போசனபீடத்திலி

(உரு) நியா.ரு.யக.—(ரு. அதி. க.) ஏசா.ரு.எ.லேவி.உரு.ஙரு,ஙசு,ஙஎ. உபா.யரு.எ. (ரு) ஏசா.ருஅ.எ.யாத்.உக.எ.
லேவி.உரு.ஙக. (எ) யாத்.உஉ.உரு. லேவி.உரு.ஙசு. எசேக்.உஉ.யஉ. (அ)லேவி.உரு.சஅ.(கூ)லேவி.உரு.ஙசு. உ.
சாமு.யஉ.யச. ரோ.உ.உச. க.பேதுரு.உ.யஉ.(யஉ)எஸ்றா.ய.ரு. எரே.ஙச.அ,கூ.(யங)மத்.ய.யச. அப்.யங.ருக. உ.
இரா.உங.ங.(யச)அதி.யங.சு. க.கொரி.கூ.ச,யரு. (யரு) க.கொரி.யக.கூ.வச.கூ.(யஎ)உ.சாமு.கூ.எ.க.இரா.யஅ.யக

௰௮ ருந்தார்கள்.—தினமும் என்னிமித்தம் ஒருகாளை
யும், புஷ்டியானஆறு ஆடுகளும், கோழிகளுஞ்ச
மைக்கப்பட்டன; பத்துநாளைக்கொருதரம்நானா
விததிராட்சரசம்வரும்: ஆனாலும் சனங்களுடை
யஅடிமைத்தனம்பாரமாயிருந்தபடியினால், அதி
காரிக்கேற்ற போசனபதார்த்தத்தை நான் வாங்க
௰௯ வில்லை.—என் தேவனே, இந்தச்சனங்கள் நி
மித்தம் நான்செய்தயாவற்றின்படிக்கும் எனக்கு
நன்மையுண்டாக என்னை நினைந்தருளும்.

## ௬. அதிகாரம்.

*௧. சன்பல்லாத் சூதுசெய்து பொய்க்கதையினாலும்கூலிபெற்ற தீர்க்கதரிசிகளினாலும் சனங்களைப்பயமுறுத்தும்படி வகைதேடல்: ௰௫. வேலைமுடிந்ததினாற் சத்துருக்கள் விசனப்படல்: ௰௭.சத்துருக்கள் பிரதான யூதர் இவர்கள் மத்தியில் இரகசிய வாக்குச்செல்லல்.*

நான் மதிலைக்கட்டி முடித்தேனென்றும் கட்
டாமலிடம்விடப்படவில்லையென்றும் சன்பல்
லாத்தும், தோபியாவும், அரபியனாகிய கெஷே
மும், மற்றச்சத்துருக்களுங்கேள்விப்பட்டபின்
பு, நான் வாசல்களுக்குக் கதவுகளை இடுமுன்,—
௨ சன்பல்லாத் கெஷேம் இவர்கள் எனக்குத்தீங்
குசெய்ய எண்ணங்கொண்டு, என்னிடத்தில்,
ஓனோவென்னும் அந்தரவெளியிலுள்ள ஒருகிரா
மத்தில் நாம் ஒருவரை ஒருவர்சந்திப்போம்வா
௩ ருமென்றுசொல்லி ஆளனுப்பினார்கள்.—அதி
னால் நான், அவர்களிடத்தில், பெரிய வேலை
யைச்செய்கிறேன், நான் வரமுடியாது: வேலை
நிறுத்தப்படுவதற்கேதுவாக நான் அதைவிட்டு
உங்களிடத்தில் வரவேண்டியதென்னவென்று
௪ தூதரையனுப்பிச் சொல்லுவித்தேன்.—இந்தப்
பிரகாரமே அவர்கள் நாலுதரம் எனக்குச்சொல்
லியனுப்ப, நானும் அந்தப்பிரகாரமே உத்தரஞ்
௫ சொன்னேன்.—பின்பு சன்பல்லாத், ஐந்தாமு
றை தன் பணிவிடைக்காரன்கையில் முத்திரி
யாதபடி ஒரு நிருபங்கொடுத்து என்னிடத்தில்
௬ அனுப்பினான்.—அதிலே நீயும் யூதரும் இராச
துரோகஞ்செய்ய அபிப்பிராயங்கொண்டீர்கள்:
இந்த வாக்குகளின்படி நீ இராசாவாகும்பொ
௭ ருட்டு மதிலைக்கட்டுகிறாய்.—அன்றியும் யூதா
வில் ஒரு இராசா இருக்கிறானென்று உன்னைக்
குறித்து யெருஷலேமிலே பிரசித்தம்பண்ணத்
தீர்க்கதரிசிகளைஏற்படுத்தியிருக்கிறாய்: இதுபுறத்
தேசத்தாருக்குள்ளே பிரசித்தமாய்விட்டது,கஷ்
முவும் அப்படிச்சொல்லுகிறான்: இந்த வாக்கு
களின்படி இராசாவுக்குத் தெரிவிக்கப்படுமே,
ஆதலால் நாம் கூடி ஆலோசனைபண்ணுவோம்
௮ வாருமென்றெழுதியிருந்தது.—அதற்கு நான், நீ
சொல்லுகிற காரியங்கள் மெய்யல்ல, இவை
யெல்லாம் உன்சுயமனதிலே கருதிக்கொண்டா
௯ யென்று சொல்லியனுப்பினேன்.—அந்தவேலை
நடந்தேறாதபடி இவர்கள்கைகள் மெலிந்துபோ
மென்றுசொல்லி அவர்கள் எல்லாரும் எங்களைப்
பயப்படுத்தினார்கள். ஆதலால் என் தேவனே
நீர் என்கையைப்பெலப்படுத்தியருளும்.—பின் ௰
பு மெகேதாபேயெலின்பௌத்திரனும், திலாயா
வின் புத்திரனுமாகிய ஷிமாயியாதன்வீட்டில் அ
டைபட்டிருந்தபொழுது நான் அங்கே போனே
ன்; அவன், அவர்கள் உம்மைக்கொலைசெய்யும்
படி வருவார்கள், இந்தஇராத்திரியிலேதான் உம்
மைக்கொன்றுபோடும்படிவருவார்கள்,ஆதலால்
ஆலயமாகிய தேவனுடைய வீட்டில் நாமிருவ
ருங் கூடிப்போய் ஆலயத்தின் கதவைப்பூட்டிக்
கொண்டிருப்போம் வாருமென்றான்.—அதற்கு ௰௧
நான், என்னைப்போன்றவன் ஓடிப்போவானா;
என்னைப்போன்றவன்தன்பிராணஇரட்சிப்பின்
பொருட்டுஆலயத்துக்குள்போவானா; நான்போ
கமாட்டேனென்றேன்.—தேவன் அவனைய ௰௨
னுப்பவில்லையென்றும், தோபியாவும் சன்பல்
லாத்தும்அவனுக்குக்கூலிகொடுத்தபடியினால் அ
வன் எனக்கு விரோதமாய் இந்தத்தீர்க்கதரிசன
வாக்கியங்களைச் சொன்னானென்றும் அறிந்து
கொண்டேன்.—நான்பயமடைந்து,அப்படியே ௰௩
செய்து, பாவத்திலகப்படுவதற்கும், என்னைநிந்
திக்கும்பொருட்டெனக்குத்துற்கீர்த்தியைவருவி
க்கிறதற்கும், அவன் கூலிபெற்றிருந்தான்.—என் ௰௪
தேவனே, இந்தக்கிரியைகளினால் என்னைப்ப
யப்படுத்துகிறதற்கு வகைதேடின தோபியாவை
யும், சன்பல்லாத்தையும், நோவதியாவென்னுந்
தீர்க்கதரிசியானவளையும், மற்றத்தீர்க்கதரிசிகளை
யும்நினைத்துக்கொள்ளும்.

மதில், இலூல் மாதம் இருபத்தைந்தாந்தினத் ௰௫
தில்முடிந்தது, அதற்கு ஐம்பத்திரண்டுநாள்சென்
றது.-எங்கள்சத்துருக்களெல்லாரும்அதைக்கேள் ௰௬
விப்பட்டபொழுதும், நான்கு திசையிலுமுள்ள
அந்நியதேசத்தார் யாவருங் கண்டபொழுதும்,
இந்தக்கிரியை தேவனால் நடப்பிக்கப்பட்ட
தென்றுணர்ந்து மிகவும் விசனப்பட்டார்கள்.

தோபியா ஆராகின் புத்திரனாகிய ஷெகனியா ௰௭
வுக்கு மருமகனாயிருந்ததினாலும், அவன் புத்திர
னாகிய யோகானான் பெரிகாயாவின் புத்திரனாகி
ய மிஷுல்லாமின் புத்திரியை விவாகஞ்செய்த
வனாயிருந்ததினாலும், யூதா சனங்களில் அநே
கர் அவன்பட்சத்தில் ஆணையிட்டிருந்தார்கள்.—
ஆதலால் அந்த நாள்களில் யூதாவின் பிரதானி ௰௮
களிற் சிலர் தோபியாவிடத்துக்கு அநேக நிரு
பங்களை அனுப்பினார்கள், அவனும் அவர்களுக்
கு நிருபங்களை அனுப்பினான்.—அவர்கள் என் ௰௯
சமுகத்தில்அவனைப்போற்றிக்கொண்டிருப்பார்
கள், என்வாக்குகளை அவனுக்குத் தெரிவிப்பார்
கள். தோபியா என்னைப்பயப்படுத்துகிறதற்கு நி
ருபங்களை அனுப்புவான்.

(௰௮) க.இரா.௪.௨௨. வச.௰௪,௰௫. (௰௯)அதி.௰௩.௨௨.—(௬. அதி. க.) அதி.௨.௰,௰௧. வச.௬. அதி.௩.௧,௩. (௨) நீதி.௨௬.௨௪,௨௫. க.நாளா.௮.௰௨. சங்.௩௭.௰௨,௩௨. (௬) வச.௧. அதி.௨.௰௯. (௰௨) எசேக்.௰௩.௨௨. (௰௪) அதி. ௰௩.௨௯. எசேக்.௰௩.௰௭. (௰௬) அதி.௨.௰. சங்.௱௨௬.௨.

## ௭. அதிகாரம்.

*௧. நிகிமியா, அனானி அனானிய என்னுமிருவர் கையிலும் யெருஷலேமை ஒப்பித்தல்: ௫. பாபேலினின்று மீண்டசிறைப்பட்டோருடைய நாமங்கள்: ௩௯. ஆசாரியர் லேவியர் பாடகர் வாசற்காவலாளர் நிதீனியர் சலோமோனின் தாசரென்னும் இவர்களுடைய வமிசவரலாற்றையும், தங்கள் வமிசவரலாற்றையறியாத ஆசாரியரின் விருத்தாந்தத்தையுந் தெரிவித்தல்: ௬௬. முழுச்சனங்களின் தொகையையும் மிருகமுதலியவைகளின் தொகையையும் பிரதானிகளிட்ட காணிக்கைகளையும் தொகுத்துக்காட்டல்.*

மதில்கட்டப்பட்டபின்புகதவுகளையிட்டேன்,
வாசற்காவலாளரும் பாடகரும் லேவியரும் ஏற்
௨ படுத்தப்பட்டார்கள்.-அப்பொழுது என் சகோத
ரனாகிய அனானியையும்,உண்மையுள்ளவனும்அ
நேகரிலுந் தேவனுக்கு அதிகமாய்ப்பயப்பட்ட
வனுமாயிருந்த அரமனைக்கதிகாரியாகிய அனானி
யவையும்யெருஷலேமைக்காக்கும்படி ஏற்படுத்
௩ தி,—அவர்களைநோக்கி, வெயிலேறுமட்டும் யெ
ருஷலேமின் வாசல்கள் திறக்கப்படலாகாது;
அவர்கள் நிற்கும்பொழுதே, கதவுகளைச்சார்த்தித்
தாழிடுவார்களாக: நீங்கள் யெருஷலேமதிற்கா
வலாளர் ஒவ்வொருவரையும், அவரவர் காவற்
சாமத்தில்அவரவர்வீட்டுக்கெதிர்ப்புறத்தில்ஏற்ப
௪ டுத்துங்களென்றுசொன்னேன்.—நகரம்பெரிதும்
விஸ்தாரமுமாயிருந்தது: சனங்களோகொஞ்சப்
பேராயிருந்தமையால் வீடுகட்டப்படவில்லை.
௫ பிரதானிகளும், அதிபதிகளும், சனங்களும்
வமிசவரலாற்றின்படி தொகையிடப்படும்பொ
ருட்டு, அவர்களைக்கூட்டிக்கொள்ளும்படிசெய்
௬ ய, என் தேவன் என்மனதை ஏவினார்.—பாபே
லின் இராசாவாகிய நெபுகத்நெத்சரால்கொண்டு
போகப்பட்டவர்களுக்குள் சிறைத்தனத்தினின்
று யெருஷலேமுக்கும் யூதாவிலுள்ள தங்கள்தங்
கள் நகரத்துக்கும் முதல்முதல் புறப்பட்டுவந்த
சனங்களின் வமிசவரலாற்றின் பத்திரத்தைக்கா
௭ ணப்பெற்றேன்.—அதிலே சிருபப்பெல், யேஷூ
வா,நிகிமியா, அசரியா, ராமியா, நகமானி,மோர்
திகாயி,பில்ஷான்,மிஸ்பேரெத்,பிக்வாய்,நிகூம்,
பானா என்னும் இவர்களுடனேதிரும்பின பட்
௮ டணத்துச் சனங்களின் கணக்காவது:—பாரோ
ஷின்சந்ததியார்,இரண்டாயிரத்தொருநூற்றெழு
௯ பத்திரண்டுபேர்.—ஷிபத்தியாவின் சந்ததியார்,
௰ மூந்நூற்றெழுபத்திரண்டுபேர்.—ஆராகின் சந்ததி
௰௧ யார், அறுநூற்றைம்பத்திரண்டுபேர்.—யேஷூவா
யோவாப் பென்னுமிவர்களின் வமிசத்தாராகிய
பாகாத்மோவாபின் சந்ததியார், இரண்டாயிரத்
௰௨ தெண்ணூற்றுப்பதினெட்டுப்பேர்.-ஏலாமின்சந்
ததியார், ஆயிரத்திருநூற்றைம்பத்துநாலுபேர்.—
௰௩ சத்தூவின் சந்ததியார், எண்ணூற்றுநாற்பத்தைந்
௰௪ துபேர்.—சக்காயின் சந்ததியார்,எழுநூற்றறுபது
பேர்.—பின்னுவியின்சந்ததியார், அறுநூற்றுநாற் ௰௫
பத்தெட்டுப்பேர்.—பேபாயின்சந்ததியார், அறு ௰௬
நூற்றிருபத்தெட்டுப்பேர்.—அஸ்காத்தின்சந்ததி ௰௭
யார், இரண்டாயிரத்து மூந்நூற்றிருபத்திரண்டு
பேர்.—அதொனிகாமின்சந்ததியார், அறுநூற்றறு ௰௮
பத்தேழுபேர்.—பிக்வாயின்சந்ததியார், இரண் ௰௯
டாயிரத்தறுபத்தேழுபேர்.—ஆதீனின்சந்ததியார், ௨௰
அறுநூற்றைம்பத்தைந்துபேர்.—இஸ்கியாவமிசத் ௨௧
தாராகிய ஆற்றேரின் சந்ததியார், தொண்ணூற்
றெட்டுப்பேர்.—அஷூமின்சந்ததியார், மூந்நூற் ௨௨
றிருபத்தெட்டுப்பேர்.—பேத்சாயின்சந்ததியார், ௨௩
மூந்நூற்றிருபத்துநாலுபேர்.—ஆரீப்பின் சந்ததி ௨௪
யார், நூற்றுப்பன்னிரண்டுபேர்.—கிபியோனின் ௨௫
சந்ததியார், தொண்ணூற்றைந்துபேர்.—பேத்ல ௨௬
கேம்ஊராரும்நிதோபாஊராரும், நூற்றெண்பத்
தெட்டுப்பேர்.—அனாதோத்தின் சனங்கள், நூற் ௨௭
றிருபத்தெட்டுப்பேர்.-பேதஸ்மாவேத்தின்சனங் ௨௮
கள், நாற்பத்திரண்டுபேர்.—கீரியாத்எயாரீம், கி ௨௯
பீரா, பெரோத்தென்பவைகளின்சனங்கள்,எழு
நூற்றுநாற்பத்துமூன்றுபேர்.—ராமா, காபா என் ௩௰
பவர்களின் சனங்கள், அறுநூற்றிருபத்தொரு
பேர்.—மிக்மாசின்சனங்கள், நூற்றிருபத்திரண்டு ௩௧
பேர்.—பெத்தேல், ஆயிஎன்பவைகளின்சனங்க ௩௨
ள், நூற்றிருபத்துமூன்றுபேர்.—வேறெருநேபோ ௩௩
வின்சனங்கள், ஐம்பத்திரண்டுபேர்.—மற்ற எலா ௩௪
மின்சந்ததியார், ஆயிரத்திருநூற்றைம்பத்துநாலு
பேர்.-ஆரீமின்சந்ததியார்,மூந்நூற்றிருபதுபேர்.- ௩௫
யெரீகோவின் சந்ததியார், மூந்நூற்று நாற்பத் ௩௬
தைந்துபேர்.—லோது, ஆதீத், ஓனோஎன்பவங்க ௩௭
ளின்சந்ததியார், எழுநூற்றிருபத்தொருபேர்.—
சேனாகின் சந்ததியார், மூவாயிரத்துத் தொளாயி ௩௮
ரத்துமுப்பதுபேர்.

ஆசாரியர்களாவார்: யேஷூவாவின் வமிசத்தா ௩௯
ராகிய யெதாயாவின்சந்ததியார்,தொளாயிரத்தெ
ழுபத்துமூன்றுபேர்.—இம்மேரின்சந்ததியார்,ஆ ௪௰
யிரத்தைம்பத்திரண்டுபேர்.—பஷ்கூரின் சந்ததி ௪௧
யார், ஆயிரத்திருநூற்று நாற்பத்தேழுபேர்.—ஆரீ ௪௨
மின்சந்ததியார் ஆயிரத்துப்பதினேழுபேர்.

லேவியராவார்: ஒதீவாவின் வமிசத்தாராகிய ௪௩
யேஷூவா, கத்மியேல் என்பவர்களின் சந்ததி
யார், எழுபத்துநாலுபேர்.

பாடகராவார்: ஆசாப்பின்சந்ததியார், நூற்று ௪௪
நாற்பத்தெட்டுப்பேர்.

வாசற்காவலாளரின் சந்ததியாராவார்: ஷல்லு ௪௫
மின்சந்ததியாரும், ஆற்றேரின்சந்ததியாரும்,தல்
மோனின்சந்ததியாரும், அக்கூப்பின்சந்ததியா
ரும், அற்றீற்றாவின்சந்ததியாரும், ஷோபாய்சந்
ததியாருமாகிய நூற்றுமுப்பத்தெட்டுப்பேர்.

நிதீனியராவார்: சீகாவின்சந்ததியாரும், அசூ ௪௬
பாவின்சந்ததியாரும், தப்பாகோத்தின்சந்ததியா
ரும்,—கேரோசின்சந்ததியாரும், சீயாவின்சந்த ௪௭
தியாரும், பாதோனின் சந்ததியாரும்,—லிபானா ௪௮

(௭. அதி. ௧) அதி.௬.௧. (௨) அதி.௨.௮. யாத்.௰௮.௨௧. (௬) எஸ்றா.௨.௧,. (௭) எஸ்றா.௨.௨. (௩௯) ௧.நாளா.௨௪.௭. (௪௰) ௧.நாளா.௨௪.௰௪. (௪௧) ௧.நாளா.௯.௰௨. (௪௨) ௧.நாளா.௨௪.௮. (௪௩) எஸ்றா.௨.௪௰. எஸ்றா.௩.௯.

வின்சந்ததியாரும், அகாபாவின் சந்ததியாரும்,
௪௯ ஷல்மாயின் சந்ததியாரும்,—ஆனானின் சந்ததி
யாரும், கித்தேலின்சந்ததியாரும், காகாரின்சந்த
௫௰ தியாரும்,—ராயாவின்சந்ததியாரும், ரேத்சீனின்
சந்ததியாரும், நெகோதாவின் சந்ததியாரும்,—
௫௧ காசாமின் சந்ததியாரும், ஊசாவின் சந்ததியா
௫௨ ரும், பசேயாக்கின் சந்ததியாரும்,—பேசாயின்
சந்ததியாரும், மியூனிமின்சந்ததியாரும், நெபீஷ
௫௩ சீமின்சந்ததியாரும்,—பக்பூக்கின்சந்ததியாரும்,
அகுபாவின்சந்ததியாரும், அர்கூரின் சந்ததியா
௫௪ ரும்,—பஸ்லீத்தின்சந்ததியாரும், மெகிதாவின்
௫௫ சந்ததியாரும், அர்ஷாவின் சந்ததியாரும்,—பர்
கோசின் சந்ததியாரும், சிசெராவின் சந்ததியா
௫௬ ரும், தேமக்கின் சந்ததியாரும்,—நெத்சியாகின்
சந்ததியாரும், அத்திபாவின்சந்ததியாரும்.
௫௭ சலோமோனுடையபணிவிடைக்காரரின் சந்
ததியாராவார்: சோதாயின் சந்ததியாரும், சொ
பேரேத்தின் சந்ததியாரும், பிரீதாவின்சந்ததியா
௫௮ ரும்,—யாலாகின் சந்ததியாரும், தர்கோனின்சந்
௫௯ ததியாரும், கித்தேலின்சந்ததியாரும்,—ஷிபத்தி
யாவின்சந்ததியாரும், அற்றீலின் சந்ததியாரும்,
சிபேயிமிலுள்ள பொகேரேத்தின் சந்ததியாரும்,
௬௰ ஆமோனின் சந்ததியாரும்,-நிதினியரும், சலோ
மோனுடையபணிவிடைக்காரரும் ஆக முந்நூற்
௬௧ றுத் தொண்ணூற்றிரண்டு பேர்.—தெல்மேலாகி
லும், தெல்கர்ஷாவிலும், கெரூபிலும், அதோனி
லும், இம்மேரிலும் இருந்துபுறப்பட்டவர்களும்,
தாங்கள் இஸரவேலரோவென்று தங்கள் பிதா
வின்வமிசத்தையும் கோத்திரவாலாற்றையுந்தெ
ரிவிக்கமுடியாதவர்களுமாகிய சனங்களாவார்.-
௬௨ திலாயாவின்சந்ததியாரும், தோபியாவின்சந்ததி
யாரும், நெகோதாவின் சந்ததியாரும், ஆக அறு
நூற்று நாற்பத்திரண்டுபேர்.
௬௩ ஆசாரியவமிசத்தில்அபாயவின்சந்ததியாரும்,
கோசுவின் சந்ததியாரும், பர்சில்லாயின் சந்ததி
யாரும், இவன்கிலியாத்தியன் பர்சில்லாயின்புத்
திரிகளில் ஒருத்தியை விவாகம்பண்ணி, அவர்
௬௪ கள் நாமந்தரிக்கப்பெற்றான்.—இவர்கள் தங்கள்
வமிச வரலாற்றைத்தேடி அதைக் கண்டடை
யாமையினால், ஆசாரியபட்டத்தினின்று தள்ளு
௬௫ ண்டார்கள்.—திர்ஷாத, இவர்களைக்குறித்து ஊ
ரீம் தூமீம்பெறும ஆசாரியன் தோன்றும்வரைக்
கும் இவர்கள் பரிசுத்த வஸ்துக்களைப் புசிக்கத்த
காதென்றுசொன்னான். இஸரவேலரின் சனத்
தொகை இதுவே.
௬௬ ஆகக்கூடிய சமஸ்தசபையாரும் நாற்பத்தீரா
௬௭ யிரத்து முந்நூற்றறுபதுபேர்.—இவர்கள்பணிவி
டைக்காரரும் பணிவிடைக்காரிகளும் ஆகஏழா
யிரத்துமுந்நூற்றுமுப்பத்தேழுபேர்: இவர்களுக்
குள்ளேபாடகரும்பாடினிகளும் இருநூற்றுநாற்
௬௮ பத்தைந்துபேர்.—இவர்கள் குதிரைகள் எழுநூற்
றுமுப்பத்தாறு: இவர்கள் கோவேறுகழுதைகள்
இருநூற்றுநாற்பத்தைந்து:-ஒட்டகங்கள் நானூற் ௬௯
றுமுப்பத்தைந்து: கழுதைகள் ஆறாயிரத்தெழு
நூற்றிருபது.
வமிசங்களின்தலைவர்களிற் சிலர் வேலைக்கா ௭௰
கத் தானங்கொடுத்தார்கள். திர்ஷாத, பொக்கி
ஷத்துக்கு ஆயிரம் தர்கிமோன பொன்னையும்,
ஐம்பது, கிண்ணங்களையும், ஐந்நூற்றுமுப்பது ஆ
சாரியவஸ்திரங்களையுங் கொடுத்தான்.—வமிசங் ௭௧
களின்தலைவரிற்சிலர் அந்தவேலையின் பொக்கி
ஷத்துக்கு இருபதினாயிரம் தர்கிமோன் பொன்
னையும், இரண்டாயிரத்திருநூறு இறாத்தல் வெள்
ளியையுங் கொடுத்தார்கள்.—மற்றச் சனங்கள் ௭௨
இருபதினாயிரம் தர்கிமோன பொன்னையும் இ
ரண்டாயிரம் இறாத்தல் வெள்ளியையும் அறுபத்
தேழுஆசாரியவஸ்திரங்களையுங்கொடுத்தார்கள்.-
ஆசாரியர்களும், லேவியரும், வாசற்காவலாள ௭௩
ரும், பாடகரும், சனங்களிற் சிலரும், நிதினி
யரும், இஸரவேலர்யாவரும் தங்கள் தங்கள் நக
ரங்களிலே வாசம்பண்ணினார்கள்; ஏழாமாதமா
னபொழுது இஸரவேல் சந்ததியார் தங்கள் நக
ரங்களிலிருந்தார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. வேதப்பிரமாணத்தைவாசிக்கக்கேட்டல்: ௯. அவர்கள் சனங்களைத்தேற்றல்: ௰௩. சனங்கள் உபதேசத்தைக்கேட்கவிரும்பல்: ௰௬. கூடார உற்சவம் ஆசரித்தல்.

பின்புசனங்கள்எல்லாரும்தண்ணீர்வாசலுக்கெ ௧
திர்ப்புறத்திலுள்ள வீதியில், ஒருவனைப்போலக்
கூடிக்கொண்டு யெகோவா இஸரவேலருக்
குக்கட்டளையிட்ட மோசேயின் வேதப்பிரமா
ணபுத்தகத்தைக் கொண்டுவரும்படி வேதபாரக
னாகிய எஸ்றாவிடத்திற் சொன்னார்கள்.—அதி ௨
னால் ஏழாமாத முதல்தினத்தில் ஆசாரியனாகிய
எஸ்றா ஸ்திரி புருஷர்களும் புத்திபூருவமாய்க்
கேட்கக்கூடியவர்களுமாகிய சபைக்குமுன்பா
கவேதப்பிரமாணபுத்தகத்தைக்கொண்டுவந்து,—
தண்ணீர்வாசலுக்கெதிர்ப்புறமாயுள்ளவீதியிலே ௩
ஸ்திரி புருஷர்களுக்கும் புத்திபூருவமாய்க்கேட்
கக்கூடியமற்றவர்களுக்குமுன்பாக உதயகாலந்
தொடங்கி மத்தியானம்வரைக்கும் வாசித்தான்;
சகலசனங்களும் வேதப்பிரமாணத்தைக்கேட்கி
றதற்குத்தங்கள்செவியைச்சாய்த்தார்கள்.-அந்தக் ௪
காரியத்துக்காகச்செய்யப்பட்ட ஒருபீடத்தின்
மேல் எஸ்றாவென்னும் வேதபாரகன் நின்றான்;
அவனுக்குச்சமீபமானவலப்புறத்தில்மத்தித்தியா,
ஷிமா, அனாயா, ஊரியா, இல்கியா, மாசெயா
என்பவர்களும், இடப்புறத்தில் பிதாயா, மீஷா
யேல், மல்கீயா, அஷூம், அஷ்பதானா, சகரியா,
மிஷூல்லாம் என்பவர்களும் நின்றார்கள்.—எஸ் ௫
றாசனங்கள் எல்லாருக்கு மேலாகநின்று சகலச
னங்களின்முன்பாகவும் புத்தகத்தை விரித்தான்:
அவன்அதைவிரித்தபொழுது சனங்கள் எல்லா

(௬௧) எஸ்றா.௨.௫௯. (௬௫) அதி.௮.௯. (௭௰) அதி.௮.௯. (௭௧) எஸ்றா.௨.௬௯. (௭௩) எஸ்றா.௩.௧.—(௮. அதி. ௧.) எஸ்றா.௩.௧. அதி.௩.௨௬. எஸ்றா.௭.௬. (௨) உபா.௩௧.௰௧,௰௨. லேவி.௨௩.௨௪. (௫) நியா.௩.௨௰.

௬ ரும் எழுந்துநின்றார்கள்:—பின்பு எஸ்றா மகத்து
வ தேவனாகிய யெகோவாவைத்துதித்தான்.
சனங்களெல்லாரும் கையை உயர்த்தி, ஆமென்
ஆமென் என்றுசொல்லித்தலைகுனிந்து, பூமிக்கு
நேரே யெகோவாவை வணங்கினார்கள்.—
௭ யேஷுவா, பானீ, ஷெரெபியா, யாமின், அக்
கூப், ஷப்பிதாயி, ஓதியா,மாசெயா, கேலித்தா,
அசரியா, யோசாபாத், ஆனான், பெலாயா என்
பவர்களும் லேவியரும் சனங்களுக்குவேதப்பிர
மாணத்தை உணர்த்தினார்கள் சனங்கள் தங்கள்
௮ நிலையினின்றார்கள்.—இவ்விதமாய் அவர்கள் தெ
ளிந்த உச்சாரணத்துடன் தேவனுடைய வே
தப்பிரமாணபுத்தகத்தைவாசித்து, அதின் அருத்
தத்தைச்சொல்லித்தாங்கள் வாசித்ததை அவர்கள்
உணரும்படிசெய்தார்கள்.
௯ சனங்களெல்லாரும்வேதப்பிரமாணத்தின்வா
க்கியங்களைக் கேட்டபொழுது அழுதபடியால்,
நிகிமியாவென்னுந் தேசாதிபதியும், ஆசாரியனா
கிய எஸ்றாவென்னும் வேதபாரகனும், சனங்க
ளுக்குப்போதித்த லேவியரும், சகல சனங்களை
யும்நோக்கி, இந்தத்தினம் உங்கள் தேவனாகிய
யெகோவாவின் பரிசுத்ததினம்; ஆதலால்நீங்
கள் துக்கிக்கவும் வேண்டாம், அழவும் வேண்
௰ டாமென்றார்கள்.—பின்னும் அவன் அவர்களை
நோக்கி, நீங்கள்போய்ப் புஷ்டியானதைப்புசித்
து, மதுரமானதைக் குடித்து, ஒன்றும் ஆயத்தம்
செய்யாதவர்களுக்குப்பங்குகளை அனுப்புங்கள்:
யெகோவாவிலே களிகூருவது உங்கள்பெல
ம்,ஆனபடியால் நீங்கள் துக்கப்படவேண்டாம்;
இந்தத்தினம் யெகோவாவுக்கேற்ற பரிசுத்த
௰௧ தினம்.-லேவியரும்,இத்தினம் பரிசுத்தம்,நீங்கள்
துக்கிக்கவேண்டாம், மௌனமாயிருங்களென்
றுசொல்லி இவ்விதமாகச் சனங்களை அமைந்தி
௰௨ ருக்கச்செய்தார்கள்.—அப்பொழுது சனங்கள்
எல்லாரும் தங்களுக்குச் சொல்லப்பட்ட வாக்
கியங்களை உணர்ந்தபடியினால், புசிக்கவும், கு
டிக்கவும், பங்குகளை அனுப்பவும், மகிழ்ந்து
கொண்டாடவும் புறப்பட்டார்கள்.
௰௩ இரண்டாந்தினத்தில் சகலசனவமிசங்களின்
தலைவரும், ஆசாரியர்களும், லேவியரும்கூடி நி
யாயப்பிரமாணத்தின் வாக்கியங்களை உணரும்ப
டி எஸ்றாவென்னும் வேதபாரகனிடத்தில் வந்
௰௪ தார்கள்.—இஸரவேல்சந்ததியார்ஏழாமாதத்தின்உ
ற்சவத்தில் கூடாரங்களிலே வாசம்பண்ணவே
ண்டுமென்று மோசேயைக்கொண்டு யெகோ
வா கட்டளையிட்ட நியாயப்பிரமாணத்தில் எழு
௰௫ தியிருக்கிறதைக் கண்டார்கள்.—அப்பொழுது அ
வர்கள் எழுதியிருக்கிறபடி நீங்கள் குடிசைக
ளைச்செய்யும்பொருட்டு மலைகளுக்குப்போய்ச்
சீதவிருட்சங்களின் கிளைகளையும், காட்டுச்சீத
விருட்சங்களின்கிளைகளையும், அதவிவிருட்சங்
களின் கிளைகளையும், பேரீந்துமட்டைகளையும்,
நெருங்கிய மரக்கிளைகளையுங் கொண்டுவாருங்
கள் என்றுசொல்லி, அவர்கள் தங்கள் சகலநக
ரங்களிலும் யெருஷலேமிலும் பிரசித்தம்பண்
ணித் தெரிவித்தார்கள்.
அதனால் சனங்கள்புறப்பட்டுப்போய் அவை ௰௬
களைக்கொண்டுவந்து ஒவ்வொருவரும் தங்கள்
தங்கள் வீடுகள்மேலும், தங்கள் தங்கள் பிராகா
ரங்களிலும், தேவனுடைய ஆலயத்தின்பிராகா
ரங்களிலும், தண்ணீர் வாசல்வீதியிலும், எப்பிரா
யீமின்வாசல் வீதியிலும் தங்களுக்குக்குடிசைக
ளைச்செய்தார்கள்.—சிறைமீண்டுவந்த சகலசபை ௰௭
யாரும் குடிசைகளைச் செய்து அவைகளிலிருந்
தார்கள்: நூனின்புத்திரனாகிய யோசுவாவின் கா
லமுதல் அந்நாள்வரைக்கும் இஸரவேல் சந்ததி
யார் அப்படிச்செய்ததில்லை. அவர்கள் மிகவும்
சந்தோஷப்பட்டார்கள்.—முதல்நாள் தொடங்கி ௰௮
கடைசிநாள்வரைக்கும் நாடோறும் அவன் தே
வனுடைய நியாயப்பிரமாணபுத்தகத்தை வாசித்
தான். அவர்கள் ஏழுநாள் உற்சவத்தை ஆசரித்
தார்கள்; எட்டாந்தினத்தில் முறைமையின்படி
மகா சபைகூடிற்று.

## ௯. அதிகாரம்.

௧. உபவாசம்செய்து மனஸ்தாபப்படல்: ௪. லேவியர் யெகோவாவின் அனுக்கிரகத்தையும் தங்கள் பாவத்தையும் உணர்ந்துசொல்லல்.

அந்தமாதத்தின் இருபத்துநாலாந்தினத்தில், இ ௧
ஸரவேல்சந்ததியார் உபவாசஞ்செய்து, இரட்டு
டுத்து, புழுதியைத் தலையின்மேல் போட்டுக்
கொண்டுகூடினார்கள்.—இஸரவேல் சந்ததியார் ௨
அந்நியதேசத்தாரைவிட்டுநீங்கி, தங்கள் பாவங்
களையும் தங்கள்பிதாக்களுடைய அக்கிரமங்க
ளையும் உணர்ந்துசொன்னார்கள்.—அவர்கள்,தங் ௩
கள்தங்கள் ஸ்தானங்களிலேநின்றுகொண்டுஒரு
சாமமட்டும்தங்கள் தேவனாகிய யெகோவா
வின்நியாயப்பிரமாண புஸ்தகத்தை வாசித்தார்
கள்; மற்றைச்சாமத்தில் தங்கள் பாவங்களை உ
ணர்ந்துசொல்லித் தங்கள் தேவனாகிய யெ
கோவாவைவணங்கினார்கள்.
லேவியரில் யேஷுவாவும், பானீயும், கத்மி ௪
யேலும், ஷெபனாயாவும், புன்னீயும், ஷெரெபி
யாவும், பானீயும், கினானியும் பீடத்தின்மேல்
நின்றுகொண்டுதங்கள் தேவனாகிய யெகோ
வாவைநோக்கிஉரத்தசத்தத்துடன்ஓலமிட்டார்
கள்.—பின்பு லேவியரும், யேஷுவாவும், கத்மி ௫
யேலும், பானீயும், அஷப்னியவும், ஷெரெபி
யாவும், ஓதியாவும், ஷெபனாயாவும், பெதகியா

(௬) ௧.கொரி.௰௪.௰௬. புல.௩.௪௧. ௧.தீமோ.௨.௮ யாத்.௪.௩௧. ௨.நாளா.௨௰.௰௮. (௭) லேவி.௰.௰. உபா.௩௩.௮. ௨.நாளா.௰௭.௭. மல்.௨.௭. (௯) எஸ்றா.௨.௬௩. ௨.நாளா.௩௫.௩. லேவி.௨௩.௨௪. எண்.௨௯.௧. உபா.௰௬.௰௪,௰௫. பிர.௩.௪. (௰) எஸ்த.௯.௰௯,௨௨. வெளி.௰௧.௰. (௰௨) வச.௭,௮,௰. (௰௪) லேவி.௨௩.௩௪,௪௨. உபா.௰௬.௰௩. (௰௫) லேவி.௨௩.௪,௪௰. உபா.௰௯.௰௬. (௰௬) உபா.௨௨.௮. ௨.இரா.௰௪.௰௩. (௰௭) ௨.நாளா.௩௰.௨௧. (௰௮) உபா.௩௧. ௰,. லேவி.௨௩.௩௬. எண்.௨௯.௩௫.—(௯. அதி. ௧.) அதி.௮.௨. யோசு.௭.௬. ௧.சாமு.௪.௰௨. ௨.சாமு.௧.௨. யோபு.௨.௰௨. (௨) எஸ்றா.௰.௰௧. (௩) அதி.௮.௭,௮. (௫) ௧.நாளா.௨௯.௰௩.

வும் நீங்கள் எழுந்திருந்து சதாகாலமும் உங்கள்
தேவனாகிய யெகோவாவைத் துதியுங்க
ளென்றுசொல்லி, எந்தத்துதியிலும் கீர்த்தனத்
திலும் அதிகமேன்மைபொருந்திய உமது நாமந்
௬ துதிக்கப்படுவதாக.—நீர் மாத்திரமே யெகோ
வா, நீர் வானத்தையும், வானங்களின்மேலா
னவானத்தையும், அவைகளின் சமஸ்தசேனைக
ளையும், பூமியையும் அதிலுள்ள யாவையும், ச
முத்திரங்களையும் அவைகளிலுள்ள யாவையுஞ்
சிருஷ்டித்தீர்; அவைகளெல்லாவற்றையுங் காத்
துவருகிறீர்; வானத்திலுள்ளசேனைகள் உம்மை
௭ வணங்குகின்றன.—தேவனும் யெகோவா
வுமாகிய நீர், ஆபிராமைத்தெரிந்து, கல்தேயரின்
ஊர் நகரத்தினின்றுபுறப்படப்பண்ணி, அவனு
௮ க்குஆபிரகாமென்றுபெயரிட்டீர்.–உமதுசமுகத்
தில்அவன்இருதயம் உண்மையுள்ளதென்றுகண்
டு,கானானியர்,எத்தியர்,எமோரியர்,பெரீசியர்,எ
பூசியர், கிர்காஷியர் என்பவர்களுடைய தேசத்
தைஅவனுடையசந்ததியாருக்கு அளிக்கும்படி
அவனோடேஒருஉடன்படிக்கைசெய்தீர்;நீர் நீதி
பரரானபடியால், உம்முடையவாக்குகளைநிறை
௯ வேற்றினீர்.–நீர்எகிப்தில் எங்கள்பிதாக்கள்அனு
பவித்த உபத்திரவத்தைக்கண்டீர், செங்கடற்க
௰ ரையில்அவர்களிட்ட ஓலத்தைக்கேட்டீர்;–பார்
வோனும், அவனுடைய எல்லாப்பணிவிடைக்
காரரும், அவன்தேசத்திலுள்ள சகலசனங்களும்
அவர்களுக்குவிரோதமாய் அகங்காரத்தைக்காட்
டினதையறிந்து,இவர்களிடத்தில் அடையாளங்
களையும் அற்புதங்களையும்காட்டினீர். இந்நாளி
௰௧ லிருக்கிறபடி கீர்த்திபெற்றீர்.–நீர் அவர்களுக்கு
முன்பாகச்சமுத்திரத்தைப்பிரிக்க, அவர்கள் ச
முத்திரமத்தியில் உலர்ந்ததரைவழியாகக்கடந்து
போனார்கள்; அவர்களைத் துயரப்படுத்தினவர்க
ளை,சலராசியில் எறியப்படுகிற ஒருகல்லைப்போ
௰௨ ல ஆழங்களிலே வீழ்த்தினீர்.—நீர் பகலிலே மே
கத்தூணினாலும், அவர்கள்செல்லும் வழியில் அ
வர்களுக்கு ஒளிகொடுக்க இரவிலே அக்கினித்
௰௩ தூணினாலும் அவர்களை நடத்தினீர்.—நீர் சீனாய்
மலையிலிறங்கி, வானத்தினின்று அவர்களுடன்
பேசி, நியாயத்தீர்ப்புக்களையும்,யதார்த்தப்பிரமா
ணங்களையும், உத்தமமானவிதிகளையும் கட்டளை
௰௪ களையுமளித்தீர்.—உமது பரிசுத்த ஓய்வுநாளை அ
வர்களுக்குத்தெரிவித்தீர், உமது தாசனாகிய மோ
சேயைக்கொண்டு அவர்களுக்கு நியாயமொழிக
ளையும், விதிகளையும், வேதப்பிரமாணங்களையும்
கட்டளையிட்டீர்:—அவர்கள் பசிக்கு வானத்தி ௰௫
னின்று ஆகாரங்கொடுத்தீர், அவர்கள் தாகத்துக்
குக் கன்மலையினின்று சலத்தைப் புறப்படச்
செய்தீர், அவர்களுக்களிப்பேனென்று நீர்ஆணை
யிட்டதேசத்தை அவர்கள்போய்ச் சுதந்தரிக்கும்
பொருட்டு அவர்களுக்கு வாக்குத்தத்தஞ்செய்
தீர்.—எங்கள்பிதாக்களாகிய அவர்களோ அகங் ௰௬
காரங்கொண்டு உம்முடைய கட்டளைகளுக்குச்
செவிகொடாமல் தங்கள்கழுத்துக்களைக் கடினப்
படுத்தினார்கள்.—அவர்கள், செவிகொடுக்க மன ௰௭
மில்லாமலும், தங்களுக்குள் நீர்செய்த அற்புதங்
களைச் சிந்தியாமலும் இப்படித்தங்கள் கழுத்துக்
களைக் கடினப்படுத்திக் கட்டளைமீறித் தங்கள்அ
டிமைத்தனத்துக்குத் திரும்பும்படி ஒரு சேனாப
தியை எற்படுத்திக்கொண்டார்கள்: ஆனாலும் நீர்
மன்னிக்கச்சித்தமுள்ளவரும், கிருபையும்,இரக்
கமும், நீடியபொறுமையும், மகாதயையுமுள்ள
தேவனுமாயிருக்கிறீர், நீர் அவர்களைக் கைவிட
வில்லை.—அவர்கள் தங்களுக்கு ஒரு வார்ப்புக் ௰௮
கன்றைச்செய்துகொண்டு, எகிப்தினின்று உன்
னைப்புறப்படுத்தின தேவன் இதுவே என்றுசொ
ல்லிக் கோபப்படுத்துவதற்கேதுவானவைகளைச்
செய்தும்,–நீர் உமதுமிகுதியான தயையினிமித் ௰௯
தம் வனத்தில் அவர்களைக் கைவிடவில்லை: பக
லில் அவர்களுக்கு வழிகாட்டும் மேகத்தூணும்,
அவர்கள் செல்லும் வழியைக்காட்டும்படி இர
வில் அவர்களுக்கு ஒளிகொடுக்கும்அக்கினித்தூ
ணும் அவர்கள்முன்னின்றுநீங்கவில்லை.-அவர்க ௨௰
ளுக்குப்போதிக்கும்படி நீர் உமதுதயையுள்ள ஆ
வியையுமருளினீர்,உமதுமன்னாவை அவர்கள்வா
யினின்று நீர் விலக்கவில்லை, அவர்கள் தாகத்துக்
கு நீரை அளித்தீர்.-நாற்பதுவருஷமாகவனத்தில் ௨௧
அவர்களைப்பரிபாலித்துவந்தீர்; அதினால்அவர்க
ளுக்கு ஒரு குறைவுமில்லை,அவர்கள்வஸ்திரம்ப
ழையதாகவில்லை,அவர்கள்கால்வீங்கவுமில்லை.-
நீர் இராச்சியங்களையும் அந்நியசாதியாரையும்அ ௨௨
வர்களுக்கு ஒப்பித்துவிட்டுஎல்லாத்திசைகளிலு
ம்அவர்களைப்பகுத்துவைத்தீர்: அதினால் அவர்க
ள்எஷ்போனின் இராசாவாகிய சீகோனின்தே
சத்தையும் பாஷானின் இராசாவாகிய ஓகுவின்
தேசத்தையும் சுதந்தரித்துக்கொண்டார்கள்.-அ ௨௩
வர்கள்சந்ததியாரை வானத்தின் நட்சத்திரங்கள்
போலப்பெருகப்பண்ணி அவர்கள்போய்ச்சுதந்
தரிப்பார்களென்று நீர் அவர்கள் பிதாக்களுக்கு
வாக்குத்தத்தஞ்செய்ததேசத்தில் அவர்களைப்பிர

---

(௬) ௨.இரா.௰௯.௰௫,௰௯. சங்.௮௬.௰. ஏசா.௩௭.௰௬,௨௰. ஆதி.௧.௧. யாத்.௨௰.௰௧. வெளி.௰௪.௭. உபா.௰.௰௪. ௧.இரா.௮.௨௭. ஆதி.௨.௧. சங்.௱௬.௬. (௭) ஆதி.௰௨.௧. ஆதி.௰௭.௫. (௮) ஆதி.௰௫.௬. ஆதி.௰௨.௭. யோசு.௨௩.௰௪. (௯) யாத்.௨.௨௫. யாத்.௰௪.௰. (௰) யாத்.௭. யாத்.௮. யாத்.௯. யாத்.௰. யாத்.௰௨. யாத்.௰௪. யாத்.௰௮.௰௧. யாத்.௯.௰௬. ஏசா.௬௩.௰௨,௰௪. எரே.௩௨.௨௰. தானி.௯.௰௫. (௰௧) யாத்.௰௪.௨௧,௨௨,௨௭,௨௮. யாத்.௰௫.௬,௰. (௰௨) யாத்.௰௩.௨௧. (௰௩) யாத்.௰௯.௨௰. சங்.௰௯.௮.௯. ரோ.௭.௰௨. (௰௪) ஆதி.௨.௩. யாத்.௨௰.௮,௰௧. (௰௫) யாத்.௰௬.௰௪,௰௫. யோவா.௬.௩௧. யாத்.௰௭.௬. எண்.௨௰.௯,. உபா.௧.௮. எண்.௰௪.௩௰.(௰௬)சங்.௱௬.௬. உபா.௩௧.௨௭. ௨.இரா.௰௭.௰௪. எரே.௰௯.௰௫. (௰௭) சங்.௭௮.௰௧,௪௨,௪௩. எண்.௰௪.௪. யாத்.௩௪.௬. எண்.௰௪.௰௭. சங்.௮௬.௫,௰௫. யோவே.௨.௰௩. (௰௮) யாத்.௩௨.௪. (௰௯) சங்.௱௬.௪௫. யாத்.௰௩.௨௧,௨௨. எண்.௰௪.௰௪. ௧.கொரி.௰.௧.(௨௰)எண்.௰௧.௰௭. ஏசா.௬௩.௰௧. யாத்.௰௬.௰௫. யோசு.௫.௰௨. யாத்.௰௭.௬. (௨௧) உபா.௨.௭. உபா.௮.௪.(௨௨)எண்.௨௧.௨௧,. (௨௩) ஆதி.௨௨.௰௭.

உச வேசிப்பித்தீர்.—அவர்கள் வமிசத்தார்பிரவேசித்
து,தேசத்தைச்சுதந்தரித்தார்கள்,நீர் அவர்களுக்கு
முன் அத்தேசத்தாராகிய கானானியரைக் கீழ்ப்ப
டுத்தி,அவர்கள்தங்கள்இஷ்டப்படிசெய்யும்பொ
ருட்டுஅவர்களையும், அவர்கள்இராசாக்களையும்,
தேசத்தின் சனங்களையும் அவர்கள்கையில் ஒப்
உரு பித்தீர்.—அவர்கள், அரணானநகரங்களையும் கொ
ழுத்த பூமியையும்பிடித்துச் சகலவிதபொருள்க
ளாலும்நிறையப்பட்ட வீடுகளையும், தோண்டப்
பட்டகிணறுகளையும், திராட்சத்தோட்டங்களை
யும்,சீதவிருட்சத்தோப்புக்களையும், கனிகொடுக்
கிறமிகுதியான விருட்சங்களையும் சுதந்தரித்தார்
கள்:அதனால் அவர்கள்போசனம்பண்ணித்திருத்
தியடைந்துபுஷ்டியானவர்களாய் உமதுபெரியத
உசு யையிலே சுகித்துவாழ்வடைந்தார்கள்.-ஆனாலும்
அவர்கள் உம்மைக்கோபப்படுத்தி, உமதுகட்ட
ளையைமீறி, உமது வேதப்பிரமாணத்தைத் தங்க
ளுக்குப்புறம்பேதள்ளி, உமதுபட்சத்தில் அவர்
களைத்திருப்பும்படி அவர்களுக்குவிரோதமாய்ச்
சாட்சியிட்ட உம்முடையதீர்க்கதரிசிகளைக்கொ
லைசெய்தார்கள், இப்படி உம்மைக்கோபப்படுத்
துவதற்கேதுவானவைகளைச்செய்துவந்தார்கள்.-
உஎ பின்பு நீர் அவர்களை அவர்கள் சத்துருக்கள்கை
யில் ஒப்பிக்க, இவர்கள் அவர்களைக் கிலேசப்
படுத்தினார்கள்: கிலேசம் அடைந்தசமயத்தில்அ
வர்கள் உம்மைநோக்கிப் பிரார்த்தனைபண்ண,
நீர்வானத்தினின்று அதைக்கேட்டு, உமது மிகுந்
ததயையினிமித்தம் அவர்கள் சத்துருக்கள்கையி
னின்று அவர்களை விடுவிக்கும் இரட்சகர்களை
உஅ அவர்களுக்குக்கொடுத்தீர்.—பின்னும் அவர்கள்
இளைப்பாறுதலையடைந்து திரும்பவும் உமது ச
முகத்தில் தீமைசெய்யத்தொடங்கினார்கள்: அதி
னால் நீர் அவர்களைச்சத்துருக்கள்கையில் ஒப்பிக்
க, இவர்கள் அவர்களை ஆண்டுகொண்டார்கள்:
அவர்கள்திரும்ப உம்மைநோக்கி ஓலமிட்டபொ
ழுது, நீர்வானத்தினின்று அதைக்கேட்டு உமது
பூரணதயையின்படி அநேகந்தரம் அவர்களைவிடு
உக வித்தீர்.—நீர் திரும்பவும் உமது கட்டளைக்கு அ
வர்களை அமைவிக்கும்பொருட்டு அவர்களுக்கு
விரோதமாய்ச் சாட்சியிட்டீர்: ஆனாலும் அவர்
கள் உமது கட்டளைக்குச் செவிகொடாமல் அ
கங்காரங்கொண்டு, கைக்கொள்பவர்களெவர்க
ளுக்குஞ் சீவனைத்தரும் உமது நியாயப்பிரமா
ணங்களுக்கு விரோதமாகப் பாவஞ்செய்து,தோ
ளை இடாமல் தங்கள் கழுத்தைக்கடினப்படுத்திச்
ஙய செவிகொடாமல் விட்டுவிட்டார்கள்.—நீர் அநே
கவருஷம்வரைக்கும் பொறுமையாயிருந்து, உம
து தீர்க்கதரிசிகளை ஏவின உமதாவியைக்கொண்
டு அவர்களுக்கு விரோதமாகச் சாட்சியிட்டீர்:
அவர்களோ சிந்திக்கவில்லை, ஆதலால் நீர் அவர்க
ளைப்புறத்தேசத்தின் சனங்கள்கையில் ஒப்பித்து
விட்டீர்.—ஆகிலும் நீர் கிருபையுமிரக்கமுமுள் ஙக
ளதேவனாயிருக்கிறபடியால், உமதுமகாதயையி
னிமித்தம் அவர்களை முழுமையும் நாசப்படுத்தா
மலும் கைவிடாமலுமிருந்தீர்.—எங்கள் தேவ ஙஉ
னே, நீர் உடன்படிக்கையையுங்கிருபையையுங்
காத்துவருகிற மகத்துவமும்பராக்கிரமமும்பயங்
கரமுமுள்ள தேவனுமாய் இருக்கிறீர், அசீரிய
இராசாக்களின் காலமுதல் இந்நாள்வரைக்கும்
எங்கள் இராசாக்களுக்கும், பிரபுகளுக்கும், ஆ
சாரியர்களுக்கும், தீர்க்கதரிசிகளுக்கும், உம்மு
டைய சனங்களனைவருக்கும்நேரிட்ட எல்லா
ஆபத்தையும் நீர் அற்பமென்றெண்ணாதிரும்.—
எங்களுக்குநடந்த தெல்லாவற்றிலும் நீர் நீதிப ஙங
ரர், நீர்செய்தது நியாயம், நாங்கள் பாவஞ்செய்
தோம்.—எங்கள் இராசாக்கள், பிரபுகள், ஆசாரி ஙச
யர்கள், பிதாக்களென்னுமிவர்கள் உமதுநியாயப்
பிரமாணத்தைக் காத்துநடக்கவுமில்லை, அவர்க
ளுக்குவிரோதமாய் நீர் சாட்சியிட்ட கட்டளைக
ளுக்குஞ் சாட்சிகளுக்கும் செவிகொடுக்கவுமில்
லை.—நீர் உமது மிகுந்த அனுக்கிரகத்தினால் தங்க ஙரு
ளுக்களித்த விசாலமாகிய கொழுத்த பூமியிலும்
தங்கள் இராச்சியத்திலும் உம்மைச்சேவிக்கவில்
லை,அவர்கள்தங்கள்பாவக்கிரியைகளுக்குப்பரா
முகம்பண்ணவுமில்லை.—பாரும், இன்றைக்கு ஙசு
நாங்கள் அடிமைகள், எங்கள் பிதாக்கள் உத்தம
திரவியங்களை அனுபவிக்கும்படி நீர் அவர்களுக்
குக்கொடுத்ததேசத்தில் நாங்கள் அடிமைகளே.—
நீர் எங்களுடைய பாவங்களினிமித்தம் எங்களை ஙஎ
அரசாளும்படி ஏற்படுத்திய இராசாக்களுக்கு அ
து மிகுந்தபலனை விளைவிக்கின்றது: அவர்கள்
தங்கள் இஷ்டப்படிக்கு எங்கள் சரீரங்களையும்
எங்கள் மிருகசீவன்களையும் அடிமைப்படுத்துகி
றார்கள்,நாங்கள்மிகவும்வியாகுலப்படுகிறோம்.—
ஆதலால் நாங்கள் இவை எல்லாவற்றையுங்கு ஙஅ
றித்து ஒரு திடமான உடன்படிக்கைசெய்து அ
தை எழுதுவோம்; எங்களுடைய அதிபதிகளும்,
லேவியர்களும், ஆசாரியர்களும் அதற்குமுத்தி
ரைபோடுவார்கள்.

## ய. அதிகாரம்.

க. உடன்படிக்கைக்குமுத்திரைபோட்டவர்களு
டைய நாமங்களைத்தெரிவித்தல்: உஅ. உடன்
படிக்கையின்பொருளைக்காட்டல்.

முத்திரையிட்டவர்களுடைய நாமங்களாவன, க
அகலியாவின்புத்திரனாகியநிகிமியாஎன்னும் திர்

(உச)யோசு.க.உ,. சங்.சச.உ,ங. (உரு) வச.ஙரு. எண்.யங.உஎ. உபா.அ.எ,அ. எசேக்.உய.சு. உபா.சு.யக. உபா. ஙஉ.யரு. ஓசி.ங.ரு. (உசு) நியா.உ.யக,யஉ. எசேக்.உய.உக. க.இரா.யச.க. க.இரா.யஅ.ச. மத்.உங.ஙஎ. அப்.எ. ருஉ. (உஎ) நியா.உ.யச. சங்.ாசு.சக,சஉ. சங்.ாசு.சச. நியா.உ.யஅ. (உஅ) நியா.ங.யக,யஉ,ஙய. சங்.ாசு.சங. (உக)வச.யசு. லேவி.யஅ.ரு. எசேக்.உய.யக. ரோ.ய.ரு. கலா.ங.யஉ. சக.எ.யக. (ஙய) உ.இரா.யஎ.யங. உ.நாளா. ஙசு.யரு. எரே.எ.உரு. அப்.எ.ருக. க.பேதுரு.க.யக. உ.பேதுரு.க.உக. ஏசா.ரு.ரு. (ஙக) எரே.ச.உஎ. (ஙஉ) யாத்.ஙச.சு,எ. உ.இரா.யஎ.ங. (ஙங) சங்.ாயக.ாஙஎ. சங்.ாசு.சு. தானி.க.ரு,சு,அ,யச. (ஙரு) உபா.உஅ.சஎ. (ஙசு) உபா.உஅ.சஅ. எஸ்று.க.க. (ஙஎ) உபா.உஅ.ஙங,ருக. உபா.உஅ.சஅ. (ஙஅ) உ.இரா.உங.ங. எஸ்று.ய.ங.அதி.ய. க.—(ய. அதி. க.) அதி.க.ஙஅ. அதி.அ.க. அதி.க.க.

௨ ஷாத, சிதிகியா,—செராயா, அசரியா, எரேமி
௩,௪ யா,—பஷ்கூர், அமரியா, மல்கியா,—அற்றூஷ்,
௫ ஷெபனியா, மல்லூக்,—ஆரீம், மிரேமோத், ஒப
௬ தியா,—தானியேல், கின்னிதோன், பாருக்,—
௭,௮ மிஷுல்லாம், அபீயா, மியாமின்,-மகசியா, பில்
காய், ஷிமாயியா: இவர்களே ஆசாரியர்கள்.—
௯ லேவியராகிய அத்சனியாவின்புத்திரன் யேஷு
வா, எனாதத்தின் புத்திரரில் ஒருவனாகிய பின்னு
௰ வி, கத்மியேல்;—அவர்கள் சகோதரராகிய ஷெப
னியா, ஒதியா, கேலித்தா, பெலாயா, ஆனான்,—
௰௧ ௰௨ மீகா, ரேகோப், அஷபியா,-சக்கூர், ஷேரெ
௰௩ பியா, ஷெபனியா,—ஒதியா, பானீ, பினீனு.—
௰௪ சனத்தின் தலைவராகிய பாரோஷ், பாகாத், மோ
௰௫ வாபு, எலாம், சத்தூ, பானீ,—புன்னீ, அஸ்காத்,
௰௬ ௰௭ பேபாய்,-அதொனியா, பிக்வாய், ஆதீன்,-ஆற்
௰௮ றேர், இஸ்கியா, அசூர்,—ஒதியா, அஷும், பேத்
௰௯ ௨௰ சாய்,-ஆரீப், அனாதோத், நெபாயி,—மக்பீயா
௨௧ ஷ், மிஷுல்லாம், எசீர்.-மிஷெஷபேல், சாதோக்,
௨௨ ௨௩ யதுவா,-பெலத்தியா, ஆனான், அனாயா,-ஒஷி
௨௪ யா, அனனிய, அஷூப்,—அலோகேஷ், பிலகா,
௨௫ ௨௬ ஷோபேக்.-ரேகூம், அஷப்னா, மாசெயா,-அ
௨௭ கியா, கனான், ஆனான்,—மல்லூக், ஆரீம், பானா.
௨௮ சனங்களில் மற்றவர்களாகிய ஆசாரியர்களும்,
லேவியரும், வாசற்காவலாளரும், பாடகரும்,
நிதீனியரும், அந்நியதேசத்தவர்களினின்று தே
வனுடையவேதப்பிரமாணத்துக்குத்தங்களைவே
றுபடுத்தின மற்றச்சனங்களும், அவர்கள் மனை
வியரும், புத்திரரும், புத்திரிகளுமாகிய ஞான
௨௯ மும் புத்தியுமுள்ள யாவரும்,—தங்கள் சகோதர
ரையும் தங்கள் அதிபதிகளையும் சார்ந்து, தேவ
னுடைய தாசனாகிய மோசேயினால் அளிக்கப்
பட்ட தேவனுடைய நியாயப்பிரமாணத்தின்
படி நடந்து, தங்கள் தேவனாகிய யெகோ
வாவின் சகலகட்டளைகளையும், நியாயப்பிரமா
ணங்களையும், விதிகளையும்காத்து நிறைவேற்றும்
௩௰ படி,—நாங்கள் தேசத்தின் சனங்களுக்கு எங்
கள்புத்திரிகளைக்கொடாமலும் எங்கள்புத்திருக்
கு அவர்கள் புத்திரிகளைக்கொள்ளாமலும் இருப்
௩௧ போமென்றும்,—தேசத்தின் சனங்கள் ஓய்வுநாட்
களில் யாதொரு பண்டத்தையாகிலும் உணவுப்
பொருளையாகிலும் விற்கக்கொண்டுவந்தால், ஓய்
வுநாளிலும் மற்றத்திருநாளிலும் அவர்களிடத்
தில் அதைக்கொள்ளமாட்டோமென்றும், எழாம்
வருஷத்தில் வேளாண்மைசெய்யாமலும்
கடன்வாங்காமலும்இருப்போமென்றும், சபதஞ்
௩௨ சொல்லி ஆணையிட்டார்கள்.—மேலும் நமதுதே
வனுடைய ஆலயத்தில்ஆராதனைத்தொண்டுநடக்
கும்படி சமுகத்தப்பமும், நித்தியபோசனபலி
யும், நித்தியதகனபலியும் ஓய்வுநாட்களிலும், அ
மாவாசிகளிலும், நியமித்த உற்சவங்களும் பரி
சுத்த வஸ்துக்களும், இஸரவேலர் நிமித்தம் பி
ராயச்சித்தஞ்செய்யும்பாவபலிகளும், நமது தே
வனுடைய ஆலயத்தின்சகலகிரியையுமாகிய,—
இவைகளினிமித்தம் வருஷந்தோறும் ஷேக்க ௩௩
லின்மூன்றில் ஒருபங்குகொடுக்கும்படிக்கு எங்
கள்மேல் ஒருகடனை ஏற்றிக்கொண்டோம்.—
வேதப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடி நம ௩௪
து தேவனாகிய யெகோவாவின் வேதிகை
யின்மேல் தகிக்கும்பொருட்டு, பிதாக்களின்வ
மிசப்படி வருஷந்தோறும் நியமித்தகாலத்தில்
நமது தேவனுடைய ஆலயத்தில் விறகுகொண்
டுவரும்படிக்கு, ஆசாரியர் லேவியர் சனங்கள்
என்னும் இவர்களைக்குறித்துச் சீட்டுப்போட்
டோம்.—நாங்கள் எங்களுடைய நிலத்தின்மு ௩௫
தற்பலனையும் சமஸ்தவிருட்சத்துச் சகல கனி
களின் முதற்பலனையும் வருஷந்தோறும் யெ
கோவாவின் ஆலயத்துக்குக்கொண்டுவரவும்,—
நியாயப்பிரமாணத்தில்எழுதியபிரகாரம் எங்கள் ௩௬
முதற்பேறான புத்திரரையும், மிருகசீவன்களை
யும், எங்கள் ஆடுமாடுகளின் தலையீற்றுக்களையும்,
நம்முடைய தேவனுடைய ஆலயத்தில் ஆராத
னைசெய்யும் ஆசாரியர்களிடத்தில் கொண்டுவர
வும்,—நாங்கள் எங்கள் பிசைந்தமாவின் முதற் ௩௭
பங்கையும், நானாவித விருட்சத்தின் கனியை
யும், திராட்சரசமும் எண்ணெயுமாகிய எங்கள்
காணிக்கைகளையும் நம்முடைய தேவனுடைய
ஆலயத்தின்அறைகளில்ஆசாரியர்களிடத்திலும்,
லேவியர் எங்கள் வேளாண்மை படடணங்கள்
யாவற்றிலும் பத்திலொருபங்கைப் பெறுகிறதற்
கு, அந்நிலத்தில் பத்தில் ஒருபாகத்தை லேவிய
ரிடத்திலுங் கொண்டுவரவும் சங்கற்பம்பண்ணி
னோம்.—லேவியர் பத்தில் ஒருபாகத்தைப்பெ ௩௮
றுஞ் சமயத்தில் ஆரோனின் புத்திரனாகிய ஆசா
ரியன் லேவியருடன் நிற்கவேண்டும்: லேவி
யர், நம்முடைய தேவனுடையஆலயத்திலுள்ள
பண்டசாலைகளின் அறைகளில் அந்தப் பத்தி
லொருபாகத்தில் பத்திலொருபங்கைக்கொண்டு
வரவேண்டும்.—பரிசுத்த ஸ்தானத்தின் பாத்திரங் ௩௯
களும், ஆராதனைசெய்கிற ஆசாரியர்களும், வா
சற்காவலாளரும், பாடகரும் இருக்கும் அறைக
ளில், இஸரவேல் சந்ததியாரும் லேவியசந்ததி
யாரும்தானியம், திராட்சரசம், எண்ணெயாகிய
காணிக்கைகளைக் கொண்டுவரவேண்டும்: நாங்
கள் நம்முடைய தேவனுடைய ஆலயத்தைக்
கைவிடமாட்டோம்.

## ௰௧. அதிகாரம்.

௧. சீட்டுப்போட்டுயெருஷலேமிலே வாசம்பண்ணும்படி நியமித்தல்: ௩. அந்தச்சனங்களின் நாமங்களைவிவரித்தல்: ௨௰. மீதியானசனங்கள் கிராமங்களிலே வாசஞ்செய்தல்.

---

(௰௪)எஸ்ரு.௨.௩,. அதி.௭.௮,.(௨௮)எஸ்ரு.௨.௩௬—௪௩. எஸ்ரு.௯.௧.(௨௯)உபா.௨௯.௰௧,௰௫. சங்.௱௰௯.௱௬. ௨.இரா.௨௩.௩. ௨.நாளா.௩௪.௩௧.(௩௰)யாத்.௩௪.௰௬. உபா.௭.௪. எஸ்ரு.௯.௰௨,௰௪.(௩௧)யாத்.௨௰.௰. லேவி.௨௩.௩,உபா.௫.௰௨. யாத்.௨௩.௰,௰௧. லேவி.௨௫.௪. உபா.௰௫.௧,௨.(௩௨)லேவி.௨௪.௫,. ௨.நாளா.௨.௪.(௩௪)அதி.௰௩.௩௧. ஏசா.௪௰.௰௬. லேவி.௬.௰௩. (௩௫) யாத்.௨௩.௰௯. லேவி.௰௯.௨௩. உபா.௨௬.௨. (௩௬) யாத்.௰௩.௨,௰௨,௰௩. (௩௭) லேவி.௨௩.௰௭. உபா.௰௮.௪. லேவி.௨௭.௩௰. (௩௮) எண்.௰௮.௨௬. ௧.நாளா.௯.௨௬. (௩௯) உபா.௰௨.௬,௰௧.—(௰௧.அதி.)

சனங்களின் அதிபதிகள் யெரூஷலேமிலேவா
சம்பண்ணினார்கள்: மற்றச்சனங்களும்,பரிசுத்த
நகரமாகிய யெரூஷலேமிலே வாசஞ்செய்யும்ப
டி பத்துப்பேரில் ஒருவனையும், மற்றப்பட்ட
ணங்களில் வாசஞ்செய்யும்படி ஒன்பதுபேரை
யுங் கொண்டுவரும்பொருட்டுச்சீட்டுப் போட்
௨ டார்கள்.—மனப்பூருவமாக யெரூஷலேமில் வா
சஞ்செய்யும்படிவந்த யாவரையும் சனங்கள் ஆ
சீர்வதித்தார்கள்.

௩ இஸரவேலரும், ஆசாரியர்களும்,லேவியரும்,
நிதீனியரும், சலொமோனுடைய தாசரின்சந்த
தியாரும் யூதாவின்பட்டணங்களுக்குள்ளே தங்
கள்தங்கள் சுதந்தரமாகிய பட்டணங்களில் வா
சஞ்செய்தார்கள்:யூதாவின்சந்ததியாரிலும்பேன்
யாமீன் சந்ததியாரிலுஞ் சிலர்யெரூஷலேமிலே
௪ வாசஞ்செய்தார்கள்.—யெரூஷலேமில் வாசஞ்
செய்த நாட்டுக்கதிபதிகளாவார், யூதாசந்ததியா
ரில்பெரெசின்புத்திரருக்குள் மகலாலேயேலின்
புத்திரனாகிய ஷிபத்தியாவின்புத்திரனான அமரி
யாவின்புத்திரனாகியசகரியாவின்பௌத்திரனும்
௫ ஊசியாவின்புத்திரனுமாகிய அத்தாயா;—ஷீலோ
னிபெற்ற சகரியாவின்புத்திரனாகிய யோயாரீப்
பின்புத்திரனாகிய அதாயாவின்புத்திரனான அசா
யாவின்புத்திரனாகிய கொல்லோசெயின்பௌத்
திரனும் பாருக்கின் புத்திரனுமாகிய மாசெயா.—
௬ யெரூஷலேமில் வாசஞ்செய்த பெரெசின்புத்தி
ரர் ஆக நானூற்றறுபத்தெட்டுப்பேர் பராக்கிரம
௭ சாலிகள்.—பேன்யாமீன்சந்ததியாராவார்; எஷா
யாபெற்ற ஈதியேலின் புத்திரனாகிய மாசெயா
வின்புத்திரனாகிய கொலாயாவின் புத்திரனான
பிதாயாவின் புத்திரனாகிய யோவேத்தின்பௌத்
திரனும் மிஷூல்லாமின்புத்திரனுமாகிய சல்லூ.—
௮ அவனுக்குப்பின் கப்பாய், சல்லாயி முதலான
௯ வர்கள் தொளாயிரத்திருபத்தெட்டுப்பேர்.-அவர்
களுக்கு அதிகாரியாகிய சிக்ரியின்புத்திரன்யோ
வேல்: நகரத்துக்கு இரண்டாம் அதிகாரியாகிய
௰ சினுவாவின் புத்திரன் யூதா.—ஆசாரியர்களில்
யோயாரீப்பின்புத்திரனாகிய யெதாயா,யாகின்.—
௰௧ தேவனுடைய ஆலயத்துக்குஅதிகாரியும்அகீது
ப்பின்புத்திரனாகிய மிராயோத்தின் புத்திரனான
சாதோக்கின்புத்திரனாகியமிஷூல்லாமின்பௌத்
திரனும்இல்கியாவின்புத்திரனுமாகியசெராயா.—
௰௨ ஆலயத்தில் பணிவிடைசெய்கிற அவர்கள் ச
கோதரர் எண்ணூற்றிருபத்திரண்டுபேர்: மல்கி
யாபெற்றபஷ்கூரின் புத்திரனாகியசகரியாவின்
புத்திரனான அம்சீயின்புத்திரனாகிய பெலலியா
வின் பௌத்திரனும் எரோகாமின் புத்திரனு
௰௩ மாகிய அதாயா.—பிதாவமிச பிரதானிகளாகிய
அவனுடையசகோதரர் இருநூற்றுநாற்பத்திரண்
டுபேர்: இம்மேரின்புத்திரனானமிஷில்லேமோத்
தின்புத்திரனாகிய ஆகசாயின் பௌத்திரனும் அ
௰௪ சரேலின் புத்திரனுமாகிய அமஷாய்.—அவர்க
ளுடையசகோதரராகிய பராக்கிரமசாலிகள்நூற்
றிருபத்தெட்டுப்பேர்: அகெடோலீமின் புத்தி
ரன்சப்தியேல் இவர்களுக்கு அதிகாரியாயிருந்
தான்.-லேவியரில் புன்னியின்புத்திரனான அஷ ௰௫
பியாவின் புத்திரனாகிய அசரீக்காமின்பௌத்தி
ரனும் அஷூப்பின்புத்திரனுமாகிய ஷிமாயியா;—
லேவியரிற்பிரதானிகளாகியஷப்பிதாயியும்யோ ௰௬
சாபாத்துந் தேவனுடைய ஆலயத்தின் வெளி
வேலைகளைவிசாரித்தார்கள்.—ஆசாப்பின்புத்திர ௰௭
னானசப்தியின் பௌத்திரனும் மீகாவின்புத்திர
னுமாகிய மத்தனியாபிரார்த்தனைசெய்து துதிக்கத்
தொடங்கும் பிரதானியாயிருந்தான்: தன்சகோ
தரரில் இரண்டாவதான பக்பூகியா, யெதூது
னின்புத்திரனான காலாலின்பௌத்திரனும்ஷம்
முவாவின்புத்திரனுமாகியஅப்தா.—பரிசுத்தநக ௰௮
ரத்தில் இருந்தலேவியர் ஆக இருநூற்றெண்பத்தி
னாலுபேர்.-வாசல்காப்பவர்கள் அக்கூப்பும் தல் ௰௯
மோனும், வாசல்காக்கும் அவர்கள் சகோதரர்
நூற்றெழுபத்திரண்டுபேர்.

மற்ற இஸரவேலரும், ஆசாரியரும், லேவிய ௨௰
ரும், யூதாவின்சகலநகரங்களிலும் அவர்கள் தங்
கள் சுதந்தரத்தி லிருந்தார்கள்.—நிதீனியர் ஓபே ௨௧
லிலேவாசஞ் செய்தார்கள்: சீகாவுங்கிஸ்பாவும்
அவர்களுக் கதிகாரிகளாயிருந்தார்கள்.—யெரூ ௨௨
ஷலேமிலுள்ள லேவியருக்கதிகாரிமீகாவின்புத்
திரனாகிய மத்தனியாவின்புத்திரனான அஷபியா
வின்பௌத்திரனும் பானீயின் புத்திரனுமாகிய
ஊசீ. ஆசாப்பின் புத்திரருக்குள்பாடகர்கள் தே
வனுடையஆலயத்தின்கிரியைக்கு அதிகாரிகளா
யிருந்தார்கள்.-பாடகர்களுக்குத்தினந்தோறும்நி ௨௩
யமிக்கப்பட்டபங்குகிடைக்கும்படி இராசாகட்
டளையிட்டிருந்தான்.-யூதாவின் புத்திரனாகியசே ௨௪
ராகின் புத்திரரில் மிஷெஷபேலின் புத்திரன்
பெதகியா, சனங்களின் சகலகாரியங்களிலும்
இராசாவுக்கு உதவிசெய்தான்.-தங்கள் நாட்டுப் ௨௫
புறங்களான கிராமங்களில் இருக்கிறவர்களுக்
குள்ளே யூதாவின்புத்திரரில்சிலர், கீரியாத்அர்பா
விலும் அதின்கிராமங்களிலும், தீபோனிலும் அ
தின்கிராமங்களிலும், இகப்சேலிலும் அதின்கி
ராமங்களிலும்,—யேஷூவாவிலும், மோலாதாவி ௨௬
லும், பேத்பாலெத்திலும்,—அத்சர்ஷூவாவிலும் ௨௭
பேர்ஷேபாவிலும் அதின் கிராமங்களிலும்,—சிக் ௨௮
லாக்கிலும், மெகோனாகிலும் அவைகளின்கிராம
ங்களிலும்,-ஐன்ரிம்மோனிலும், சாரேயாகிலும், ௨௯
யர்மூத்திலும்,—சனோகாவிலும், அதுல்லாமிலும் ௩௰
அவைகளின்கிராமங்களிலும், லாகீஷிலும் அதி
ன் வயல்வெளிகளிலும், அசேகாவிலும்அதின்கி
ராமங்களிலும் பேஷேர்பா தொடங்கி இன்னோ
மின் தாழ்ந்த பூமிவரைக்கும் வாசஞ்செய்தார்
கள்.—கேபாவில்வாசஞ்செய்தபேன்யாமீன்புத் ௩௧
திரர் மிக்மாஷ், ஆயா, பெத்தேல் ஊர்களிலும்அ
வைகளின்கிராமங்களிலும்.—அனதோத், நோப், ௩௨
அனனியா,-ஆத்சோர், ராமா, கித்தாயிம்,-ஆதீ ௩௩ ௩௪
த், சேபோயிம், நெபல்லாத்,-லோது, ஓனோஎன் ௩௫

(௧) மத்.௪.௫. (௨) நியா.௫.௯. (௩) ௧.நாளா.௯.௨,௩. எஸ்று.௨.௪௩,௫௫. (௪) ௧.நாளா.௯.௩,. ஆதி.௩௮.௨௯. (௰) ௧.நாளா.௯.௰,. (௰௬) ௧.நாளா.௨௬.௨௯. (௨௧) அதி.௩.௨௬. (௨௩) எஸ்று.௬.௮,௰. (௨௪) ஆதி.௩௮.௩௰.

கிற ஊர்களிலுஞ் சிற்பாசாரிகளின் தாழ்ந்தபூமி
௩௬ யிலும் வாசஞ்செய்தார்கள்.—லேவியரிற் சிலர் யூ
தாவிலும் பேன்யாமீனிலும்வாசஞ்செய்தார்கள்.

## ௰௨. அதிகாரம்.

௧. ஆசாரியர் லேவியர் என்னுமிவர்களின் நாமங்களைத்தெரிவித்தல்: ௰. பிரதான ஆசாரியருடையநாமங்களை விவரித்தல்: ௨௨. பிரதான லேவியரின் நாமங்களைக்காட்டல்: ௨௭. மதிலைப்பிரதிஷ்டைசெய்யும்படி உற்சவமாசரித்தல்: ௪௪. ஆசாரியரும் லேவியரும் தேவாலயத்தில் செய்யவேண்டிய வேலைகள் இன்னதின்னதென்று ஏற்படுத்தல்.

ஷியல்தியேலின்புத்திரனாகிய சிருபப்பெலோ
டும் யேஷுவாவோடும் ஏறிவந்த ஆசாரியர்களும்
லேவியருமாவார்: செராயா, எரேமியா, எஸ்ரு.—
௨,௩ அமரியா, மல்லூக், அற்றூஷ்,—ஷெகனியா,ரே
௪ கூம், மிரேமோத்,—இத்தோ, கின்னிதோ, அபீ
௫,௬ யா,—மியமின், மாதியா, பில்கா,—ஷிமாயியா,
௭ யோயாரீப், யெதாயா,—சல்லூ, ஆமோக், இல்
கியா, யெதாயா. இவர்கள் யேஷுவாவின்காலத்
தில் ஆசாரியர்களுக்குந் தங்கள் சகோதரருக்கும்
௮ பிரதானிகளாயிருந்தார்கள்.—லேவியராவார்: யே
ஷுவா, பின்னுவி,கத்மியேல்,ஷேரெபியா,யூதா,
மத்தனியா, இவனும் இவன் சகோதரரும் துதி
௯ செய்தலைவிசாரித்தார்கள்.—பக்பூகியா, உன்னீ
என்ற அவர்கள் சகோதரர் அவர்களுக்கெதிரே
காவல்காத்திருந்தார்கள்.
௰ யேஷுவா யொயகீமைப்பெற்றான், யொய
கீம் இலியாஷீப்பைப்பெற்றான், இலியாஷீப்
௰௧ யோயாதாவைப்பெற்றான்,—யோயாதா யோனு
தானைப்பெற்றான், யோனுதான் யதுவாவைப்
௰௨ பெற்றான்,—யொயகீமின் காலத்தில் பிதாவமி
சங்களின் பிரதான ஆசாரியர்களாவார்: செரா
யாவின் சந்ததியாரில் மிராயா, எரேமியாவின்
௰௩ சந்ததியாரில் அனனியா,—எஸ்ருவின்சந்ததியா
ரில் மிஷுல்லாம், அமரியாவின் சந்ததியாரில்
௰௪ யோகானான்,—மிலீகுவின் சந்ததியாரில் யோ
னுதான், ஷெபனியாவின் சந்ததியாரில் யோ
௰௫ சேப்பு,—ஆரீமின்சந்ததியாரில்அத்னா,மிராயோத்
௰௬ தின்சந்ததியாரில் எல்காய்,—இத்தோவின் சந்ததி
யாரில் சகரியா, கின்னிதோனின் சந்ததியாரில்
௰௭ மிஷுல்லாம்,—அபீயாவின் சந்ததியாரில் சிக்ரி,
மின்யமீன், மோவதியாசந்ததியாரில் பில்தாயி,—
௰௮ பில்காவின்சந்ததியாரில் ஷம்முவா, ஷிமாயியா
௰௯ வின் சந்ததியாரில் இகோனாதன்;—யோயாரீப்
பின்சந்ததியாரில் மத்னாயி, யெதாயாவின்சந்ததி
௨௰ யாரில் ஊசீ,—சல்லாயியின் சந்ததியாரில் கல்
௨௧ லாயி, ஆமோக்கின் சந்ததியாரில் ஏபேர்,—இல்
கியாவின் சந்ததியாரில் அஷபியா, யெதாயா
வின்சந்ததியாரில் நிதனேல்.
௨௨ இலியாஷீப்,யோயாதா,யோகானான், யதுவா
என்பவர்களுடையகாலத்தில் லேவியரும், பார்
சியனாகிய தாரியாவெவஷின் ஆளுகைவரைக்கும்
ஆசாரியர்களும் பிதாவமிசங்களின் தலைவராகஎ
ழுதப்பட்டார்கள்.—லேவிபுத்திரராகிய பிதாவ ௨௩
மிசங்களின்தலைவர்கள் இலியாஷீப்பின்புத்திர
னாகிய யோகானானின்காலம்வரைக்கும் நாளா
கமபுத்தகத்தில் எழுதப்பட்டிருந்தார்கள்.-லேவி ௨௪
யபிரதானிகளாகிய அஷபியாவும், ஷேரெபியா
வும், கத்மியேலின் புத்திரனாகிய யேஷுவாவும்,
அவர்களுக்கு எதிரேநிற்கும் அவர்கள் சகோதர
ரும் தேவ னுடைய தாசனாகிய தாவீதின்கட்ட
ளைப்படிகீர்த்தனமுந்துதியும்பண்ணும்பொருட்
டு எதிர்முகவகுப்பாகஏற்படுத்தப்பட்டார்கள்.-
மத்தனியா, பக்பூகியா, ஒபதியா, மிஷுல்லாம், ௨௫
தல்மோன், அக்கூப்பென்னும்வாசற்காவலாளர்
பண்டகசாலையின்வாசல்களைக்காவல்பண்ணிக்
கொண்டிருந்தார்கள்.—இவர்கள் யோசாதாக்கின் ௨௬
பௌத்திரனும் யேஷுவாவின் புத்திரனுமாகிய
யொயகீம்அரசாண்டகாலத்திலும்,அதிகாரியாகி
ய நிகிமியா,வேதபாரகனாகியஎஸ்ரு ஆசாரியன்
என்பவர்களுடைய காலத்திலும் இருந்தார்கள்.
யெருஷலேமின்மதில் பிரதிஷ்டைசெய்தகா ௨௭
லத்தில் துதியினாலும், பாடலினாலும், கைத்தா
ளம் தம்புரு சுரமண்டலம்என்பவைகளினாலும்,
ஆனந்தமாகி, பிரதிஷ்டை உற்சவத்தைக்கொண்
டாடும்படி லேவியரை யெருஷலேமுக்குக்கொ
ண்டுவரும்பொருட்டு அவர்களுடைய சகலஸ்
தானங்களிலும் அவர்களைத்தேடினார்கள். பாட
கர்யெருஷலேமின் நான்குதிசைகளிலும் தங்க
ளுக்குக்கிராமங்களை உண்டாக்கியிருந்தார்கள்:-
ஆதலால் பாடகரின் வமிசத்தார் யெருஷலே ௨௮
மின் நான்குதிசைகளிலுமுள்ள சமபூமியினின்
றும், நிதோபாத்தியரின்கிராமங்களினின்றும்,—
பேத்கில்காலினின்றும், கேபா அஸ்மாவேத் என் ௨௯
னும் வயல்களினின்றும்கூட்டங்கூடினார்கள்.—
ஆசாரியர்களும் லேவியரும் தங்களைச்சுத்தப்ப ௩௰
டுத்தினார்கள், சனங்களையும் வாசல்களையும் மதி
லையும் சுத்தப்படுத்தினார்கள்.—பின்பு நான்யூதா ௩௧
வின்அதிபதிகளை மதிலின்மேற்கொண்டுபோய்த்
துதிக்கிறவர்களாகிய இரண்டுபெரியகூட்டத்தா
ரை ஏற்படுத்தினேன், ஒருகூட்டத்தார் குப்பை
வாசலுக்குநேரே மதிலின்மேல் வலப்புறத்திற்
போனார்கள்.—அவர்களுக்குப்பின் ஒஷாயாவும், ௩௨
யூதா அதிபதிகளிற்பாதிப்பேரும்,—அசரியாவும், ௩௩
எஸ்ருவும், மிஷுல்லாமும்,—யூதாவும்,பேனயா ௩௪
மீனும், ஷிமாயியாவும், எரேமியாவும்,—ஆசாரி ௩௫
யபுத்திரரில் எக்காளத்தோடு ஆசாப் பெற்ற சக்
கூரின்புத்திரனாகிய மீகாயாவின்புத்திரனான மத்
தனியாவின்புத்திரனாகியஷிமாயியாவின்பௌத்
திரனும் யோனாதானின்புத்திரனுமாகிய சகரியா
வும்;—தேவ னுடையதாசனாகிய தாவீது ஸ்தா ௩௬
பித்தகீதவாத்தியங்களோடு அவன் சகோதரராகி
யஷிமாயியா, அசாரயேல், மிலாலாய், கிலலாய்,
மாகாயி, நிதனேல், யூதா, அனானி என்பவர்க
ளும்போனார்கள், வேதபாரகனாகிய எஸ்ருஇவர்

(௰௨. அதி. ௨௬.) அதி.௮.௧. எஸ்ரு.௭.௬,௰௧. (௨௭) ௨பா.௨௰.௫. சங்.௩௰. ௧.நாளா.௨௧.௬. ௨.நாளா.௫.௰௩.(௩௫) எண்.௰.௨,௮. (௩௬) ௨.நாளா.௨௯.௫.

௩௭ களுக்குமுன் நடந்தான்.—அவர்கள் தங்களுக்கு எதிர்ப்புறத்திலுள்ள நீரூற்றுவாசலாலே தாவீது நகரத்தின் மதிலின் படிகளிலேறித் தாவீதின்வீட்டிலே கீழ்த்திசையிலுள்ளதண்ணீர் வா
௩௮ சல்மட்டும் போனார்கள்.—துதிக்கிறவர்களாகிய மற்றக்கூட்டத்தார் மதிலின்மேல் மற்றத்திசையிலேபோனார்கள்; நானும் சனங்களிற்பாதிப்பேரும் அவர்களுக்குப்பின் மதிலின்மேலாக ஆப்சோ கோரந்தொடங்கி விசாலமதில்வரைக்கும்
௩௯ போய்,-எப்ராயீமின்வாசலிலும், பழையவாசலிலும், மச்சவாசலிலும்நின்று அனனேல் கோபுரவழியாயும், மேயாகோபுரவழியாயும் ஆட்டுவாசல்வரைக்குஞ் சென்றோம்: அவர்கள் சிறைச்
௪௰ சாலையின் வாசலில் நின்றுவிட்டார்கள்.-துதிக்கிறவர்களாகிய இரண்டுகூட்டத்தாரும், நானும்,
௪௧ என்னோடே அதிபதிகளிற்பாதிப்பேரும்;—எக்காளங்களோடே இலியகீம், மாசெயா, மின்யமீன், மீகாயாவு, ஈலியோயேனாய், சகரியா, அ
௪௨ னனிய என்னும் ஆசாரியர்களும்;—மாசெயா, ஷிமாயியா, எலீயேசார், ஊசீ, யோகானான், மல்கீயா, எலாம், எட்சர் என்பவர்களும் தேவனுடைய ஆலயத்திலே நின்றுவிட்டோம். பாடகர்கள் தங்கள் அதிகாரியாகியயெஸரேகியவோடும்
௪௩ உரத்தசத்தத்துடன் பாடினார்கள்.—தேவன் அவர்களை மிகுந்த ஆனந்தத்துடன் களிகூரப்பண்ணினபடியினால், அன்றைத்தினம் அவர்கள் மிகுதியான பலியிட்டுச் சந்தோஷப்பட்டார்கள்: அவர்கள் மனைவியரும்பிள்ளைகளுஞ்சந்தோஷப்பட்டார்கள்: வெகுதூரமட்டும்யெரூஷலேமின் ஆனந்தத்தொனிகேட்கப்பட்டது.

௪௪ அந்தச்சமயத்தில் யூதாசனங்கள் அங்கேநின்ற ஆசாரியர்மேலும் லேவியர்மேலுஞ் சந்தோஷமாயிருந்தபடியினால், பொக்கிஷம், படைப்புகள், முதற்பலன், பத்திலொருபாகம், நகரவாசல்களிலிருந்து ஆசாரியர்கள்லேவியர்கள் என்பவர்களுக்காக விதிக்கப்பட்ட பங்குமானவைகளை அறைகளிலேசேர்க்கும்படிசிலர்ஏற்படுத்தப்பட்
௪௫ டார்கள்.—தாவீதும் அவன்புத்திரனாகிய சலோமோனும் இட்டகட்டளைப்படி பாடகரும் வாசற்காவலாளருந் தங்கள் தேவனுக்கேற்ற காவலையும் பரிசுத்தம்பண்ணுதலின் காவலையும் காத்
௪௬ துவந்தார்கள்.-பூருவத்திலே தாவீது, ஆசாப் என்பவர்களுடையகாலத்திலேபிரதானபாடகர் தேவனைக்கீர்த்தனம்பண்ணித்துதித்துப் பாடும்படி
௪௭ ஏற்படுத்தப் பட்டிருந்தார்கள்.-அன்றியுஞ் சிருப்பபெலின்காலத்திலும், நிகிமியாவின் காலத்திலும் இஸரவேலரனைவரும், பாடகருக்கும் வாசற்காவலாளருக்கும் தினந்தோறும் அவரவர்பங்கைக்கொடுத்தார்கள்: அவர்கள்லேவியருக்காகப் பொருள்களைப் பரிசுத்தப்படுத்தினார்கள்; லேவியர் ஆரோன்வமிசத்தினிமித்தம் அதைப்பரிசுத்தப்படுத்தினார்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. கலந்தசனங்களினின்றும்கட்டளைப்படி யூதேயரைப் பிரித்தல்: ௪. நிகிமியா ஆலயத்தின் அறைகளைச் சுத்திசெய்தல்: ௰. தேவனுடைய ஆலயத்தின் ஊழியத்தைச் சீர் திருத்தல்: ௰௫. ஓய்வுநாளை ஆசரிக்கக்கட்டளையிடல்: ௨௩. அந்நிய தேசத்து ஸ்திரிகளை விலக்கும்படி விதித்தல்.

அன்றைத்தினம் சனங்களுடைய செவிக்கேற ௧
மோசேயின் புத்தகத்தை வாசித்தார்கள்; அதில் அம்மோனியனும் மோவாபியனும் இஸரவேல் சந்ததியாரைச் சந்தித்துப் போசனபானங்கொடாமையாலும், அவர்களைச் சபிக்கும்படி பிலியாமுக்குப் பணங்கொடுத்து அழைத்தபடியினா
லும்,—அவர்கள் ஒருபொழுதும் தேவனுடைய ௨
சபையில் பிரவேசிக்கப்படாது; ஆகிலும் நம்முடைய தேவன் அந்தச்சாபத்தை ஆசீர்வாதமாக
முடியச்செய்தாரென்று எழுதியிருந்தது.—அவர் ௩
கள் இந்தக்கட்டளையைக் கேட்டபொழுது, கலந்தசனங்கள் எல்லாரையும் இஸரவேலரினின்று பிரித்து விட்டார்கள்.

இதற்குமுன்னே தேவனுடைய ஆலயத்தின் ௪
அறைக்கதிகாரியாகிய இலியாஷீப்பென்னும் ஆசாரியன், தோபியாவுடன் சம்பந்தங் கலந்திருந்
தான்.—பூருவகாலத்தில் அவர்கள் நிவேதிக்கும் ௫
வஸ்துக்களையும், குந்துருவையும், பாத்திரங்களையும், லேவியருக்கும் பாடகருக்கும் வாசற்காவலாளருக்கும் விதிக்கப்பட்ட தானியம் திராட்சரசம் எண்ணெய்என்னும் இவைகளில்பத்திலொருபாகத்தையும், ஆசாரியர்களின் காணிக்கைகளையும் வைத்த ஒருபெரிய அறையை அவனுக்
காக ஆயத்தம் பண்ணியிருந்தான்.-இதெல்லாம் ௬
நடந்தகாலத்தில் நான் யெரூஷலேமில் இல்லை: பாபேலின் இராசாவாகிய அர்தக்ஷஷ்தா அரசாண்ட முப்பத்திரண்டாம் வருஷத்தில், நான் இராசாவிடத்திற் போயிருந்தேன், சிலகாலஞ் சென்றபின் இராசாவிடத்தில் உத்தரவுபெற்றுக்
கொண்டு,—யெரூஷலேமுக்குவந்தபொழுதுஇ ௭
லியாஷீப் தேவனுடைய ஆலயத்தின் பிராகாரங்களில் தோபியாவினிமித்தம் ஒரு அறையை ஆயத்தப்படுத்திச்செய்த அந்தத்தீமையான காரி
யத்தை அறிந்துகொண்டேன்.—அதனால் நான் ௮
மிகவுந்துக்கப்பட்டேன்: அன்றியும் அறையினின்று தோபியாவுடைய பரிசனங்களின் சகல பொருள்களையும் அகற்றிவிட்டேன். நான் கட்டளையிட அவர்கள் அந்த அறைகளைச்சுத்திசெய்
தார்கள்.—அந்த ஸ்தானத்தில் தேவனுடைய ஆ ௯
லயத்தின் பாத்திரங்களையும், போசனபலிகளையும், குந்துருவையும் திரும்பவும் கொண்டுவந்து வைத்தேன்.

லேவியரின் பங்குகள் அவர்களுக்குக்கொடுக் ௰
கப்படாமையினால், தொண்டுசெய்தலேவியரும்

(௩௭) அதி.௨.௰௪. அதி.௩.௰௫,௨௬. (௪௪) ௨.நாளா.௩௧.௰௧,௰௨. (௪௬) ௧.நாளா.௨௫.௧,. (௪௭) எண்.௰௮.௨௧,௨௪, ௨௬.—(௰௩. அதி. ௧.) உபா.௩௧.௰௧,௰௨. ௨.இரா.௨௩.௨. எசா.௩௪.௰௬. உபா.௨௩.௩௪. எண்.௨௨.௬. (௨) எண். ௨௩.௰௧. (௫) அதி.௰௧.௪௪. எண்.௰௮.௨௧,௨௪. (௮) ௨.நாளா.௨௯.௫,௰௫,௰௬,௰௮. (௰) மல்.௩.௮. எண்.௩௫.௨.

பாடகரும் தங்கள் தங்கள் வயல்வெளிக்கு ஓடி
௰௧ விட்டார்களென்றறிந்தேன்.—நான், தேவனு
டையஆலயங்கைவிடப்பட்டதேதென்றுசொல்
லிஅதிகாரிகளைக்கடிந்தேன்; பின்புநான் அவர்க
ளைக்கூடிவரும்படிசெய்து, அவரவர் நிலையில் அ
௰௨ வரவர்களைஸ்தாபித்தேன்.—அப்பால்யூதேயர்யா
வரும் தானியம், புதுத்திராட்சரசம், எண்ணெய்
என்னு மிவைகளில் பத்திலொரு பாகத்தைப்
பொக்கிஷ சாலைகளுக்குக் கொண்டுவரத் தொ
௰௩ டங்கினார்கள்.—ஆசாரியனாகியஷெலேமியாவும்,
வேதபாரகனாகிய சாதோக்கும், லேவியரில்பிதா
யாவும், அவர்களேயன்றி மத்தனியாவின்பௌத்
திரனும் சக்கூரின் புத்திரனுமாகிய ஆனானும்,
உண்மையுள்ளவர்களென்று மதிக்கப்பட்டபடி
யால்; அவர்களைப்பண்டசாலைகளுக்கு அதிகாரி
களாக ஏற்படுத்தினேன்: அவர்கள் தங்கள்சகோ
தரருக்குப் பகிர்ந்துகொடுக்கும் அதிகாரம் பெற்
௰௪ றார்கள்.—என்தேவனே, இதைக்குறித்து என்
னை நினைந்தருளும், என்தேவனுடைய ஆலயத்
துக்காகவும் அதின்முறைமைகளுக்காகவும்நான்
செய்த நற்கிரியைகளை ஒழியவிடாதிரும்.
௰௫ அக்காலத்திலே நான், யூதாவில்சிலர் ஓய்வுநா
ளிலே திராட்சஆலைமிதிப்பதையும்,அரிக்கட்டுக்
கொண்டுவருவதையும்,கழுதைகளிற்சுமைஏற்று
வதையும், ஓய்வுநாளிலே திராட்சரசம்திராட்சப்
பழம் அத்திப்பழமுதலியசகலசுமைகளையும்யெ
ரூஷலேமுக்குக் கொண்டுவருகிறதையுங் கண்
டேன்: அவர்கள்உணவுப்பொருளைவிற்கிற அத்
தினத்தில் அவர்களுக்கு விரோதமாய்ச் சாட்சி
௰௬ யிட்டேன்.—யெரூஷலேமில் குடியிருக்கிற தீரு
வின் சனங்களிற்சிலர், மீனையும் சகலவிதபண்
டங்களையும் ஓய்வுநாளிலே யூதாசனங்களுக்குக்
௰௭ கொண்டுவந்து விற்றார்கள்.—அபபொழுதுநான்,
நீங்கள் ஓய்வுநாளை அவமதிக்கிறீர்கள், நீங்கள்
௰௮ செய்கிறஇந்தத்தீமையென்ன.-உங்கள்பிதாக்கள்
இப்படிச்செய்தபடியால்,நமதுதேவன் இந்தச்ச
கலதீமைகளையும் நம்மேலும் இந்தநகரத்தின்மே
லும்வருவித்தாரல்லவா;இன்னும்நீங்கள்ஓய்வுநா
ளைஅவமதிப்பதினால் இஸ்ரவேலர்மேல் அதிககு
ரோதத்தை வருவிக்கிறீர்களே யென்றுசொல்லி,
யூதாவின் பிரதானிகளைக்கடிந்துகொண்டேன்.-
௰௯ ஓய்வுநாளுக்குமுதல்நாள் யெரூஷலேமின்வாச
லில் இருளடையும்பொழுது வாசல்களைப்பூட்
டும்படிகட்டளையிட்டு, ஓய்வுநாள் கழியுமட்டும்
அவைகளைத் திறக்கப்படாதென்று விதித்தேன்:
அன்றியும் ஓய்வுநாளில் ஒருசுமையும் உள்ளே
கொண்டுவாராதபடி, என்பணிவிடைக்காரரிற்
௨௰ சிலரைவாசலில் நிறுத்தினேன்.—அதினால் வர்த்
தகரும் பலபண்டங்களைவிற்கிறவர்களும்இரண்
டொருதரம் யெரூஷலேமுக்குப்புறத்தில் இராத்
௨௧ தங்கினார்கள்.—அப்பொழுது நான் அவர்களுக்கு
விரோதமாகச்சாட்சியிட்டு, நீங்கள் மதிலுக்குப்
புறத்தில் இராத்தங்குவதேது; திரும்பவும் இப்ப
டிச்செய்வீர்களாகில்உங்கள்மேல் கைவைப்பே
னென்றேன். அதுமுதல் அவர்கள் ஓய்வுநாளில்
வந்ததில்லை.-பின்புலேவியர்ஓய்வுநாளைப்பரிசுத் ௨௨
தப்படுத்தும்பொருட்டுத் தங்களைப் பரிசுத்தப்ப
டுத்திக்கொண்டுவந்துவாசல்களைக்காக்கவேண்டு
மென்றுஅவர்களுக்குக்கட்டளையிட்டேன். என்
தேவனே, இதைக்குறித்தும் என்னை நினைந்தரு
ளும், உமது அளவில்லாத தயையின்படி எனக்
கிரங்கும்.
அக்காலத்தில் அஷ்தோத்தியர், அம்மோனி ௨௩
யர், மோவாபியர் என்னும்ஸ்திரிகளை விவாகஞ்
செய்திருந்த யூதர்களையுங் கண்டேன்.—அவர் ௨௪
கள் பிள்ளைகள் பேசினதில் பாதி அஷ்தோத்
தின்பாஷை, அவர்கள் அந்தந்தச்சாதியின் பா
ஷையையன்றி, யூதபாஷையைப்பேச அறியார்
கள்.—அதினால்நான் அவர்களுடன்விவாதம்பண் ௨௫
ணி,அவர்களைக்கடிந்தேன்,சிலரைநான்அடித்து,
அவர்கள்மயிரைப்பிடுங்கி,நீங்கள்உங்கள்புத்திரி
களை அவர்கள்புத்திரருக்குக்கொடாமலும்,அவர்
கள் புத்திரிகளை உங்கள்புத்திரருக்காவது உங்க
ளுக்காவது கொள்ளாமலும், இருங்கள்.—இஸ்ர ௨௬
வேலரின் இராசாவாகிய சலோமோன் இவ்வித
காரியங்களினாலேபாவஞ் செய்யவில்லையா; அ
நேக சாதியாருக்குள்ளும் அவனுக்கு நிகரான
இராசா ஒருவனுமில்லை, அவன் தன் தேவ
னால் நேசிக்கப்பட்டிருந்தான், தேவன் இஸ்ர
வேலரனைவருக்கும் அவனை இராசாவாக ஏற்ப
டுத்தினார்: அவனையும் அந்நியதேசத்து ஸ்திரிகள்
பாவஞ்செய்யப்பண்ணினார்களே.—இனிஅந்நி ௨௭
யதேசஸ்திரிகளைவிவாகஞ் செய்து, நம்முடைய
தேவனுடையகட்டளையைமீறுவதற்கேதுவாக
இந்தப்பெரியபாவத்தைச்செய்யும்படிநாங்கள்உ
ங்களுக்குச்செவிகொடுக்கலாமாஎன்றுசொல்லி,
அவர்களைத் தேவனைக்கொண்டு ஆணையிடுவித்
தேன்.-பிரதான ஆசாரியனாகிய இலியாஷீப்பின் ௨௮
புத்திரனான யோயாதாவின் புத்திரரிலொருவன்,
ஒரோனியனாகிய சன்பல்லாத்துக்கு மருமகனா
னான்: ஆதலால்நான் அவனை எனக்குமுன்னின்
று துரத்திவிட்டேன்.-என் தேவனே,அவர்கள் ௨௯
ஆசாரியபட்டத்தையும்,ஆசாரியர்களின்தொண்
டுக்கும் லேவியருக்குமேற்ற உடன்படிக்கை
யையும் அசுசிப்படுத்தினபடியினால் அவர்களை நி
னைத்துக்கொள்ளும்.—இவ்விதமாய் நான் மறு ௩௰
சாதியார்யாவரையும்நீக்கி,அவர்களைச்சுத்திசெய்
தேன்; ஆசாரியரும் லேவியருமாகிய ஒவ்வொ
ருவரையும் அவரவர்தொழிலில்ஏற்படுத்தி,-ஸ்தா ௩௧
பித்தகாலத்தில், விறகுகளையும் முதற்பலன்களை
யும் கொண்டுவரும்படி சனங்களை ஏற்படுத்தி
னேன். என் தேவனே, நன்மைக்கென்றுஎன்
னை நினைந்தருளும்.

(௰௧) நீதி.௨௮.௪. யாத்.௨௰.௰. (௰௫) எரே.௰௭.௨௧,௨௨. (௰௮) எரே.௰௭.௨௧,௨௨,௨௩. வச.௰௧. (௰௯) லேவி.௨௩.௩௨. எரே.௰௭.௨௧,௨௨. (௨௫) நீதி.௨௮.௪.(௨௬)௧.இரா.௰௧.௧,. ௧.இரா.௩.௰௩. ௨.நாளா.௧.௰௨. ௨.சாமு.௰௨.௨௪. ௧.இரா.௰௧.௪,. (௨௯) மல்.௨.௪.

# எஸ்தரின் புத்தகம்.

## ௧. அதிகாரம்.

*௧. அகஷ்வேரோவ்ஷ் இராசாவிருந்துசெய்தல்: ௰. வஷ்திகட்டளை மீறல்: ௰௩. மெமுகானுடைய ஆலோசனைக்கேற்க ஸ்திரிகள் தங்கள்நாயகமாரை மதிக்கும்படி இராசாகட்டளை பிரஸ்தாபம் பண்ணல்.*

அகஷ்வேரோஷ், இந்துதேசந்தொடங்கிக்கூ
ஷ்தேசம்வரைக்குமுள்ள நூற்றிருபத்தேழு உப
௨ ராச்சியங்களை அரசாண்டான்.—அந்த அகஷ்வே
ரோஷ் இராசா, ஊஷானென்னும் இராசதானி
யில் தனது இராச்சிய சிங்காசனத்தின்மேல் வீற்
றிருந்து, இராச்சியபரிபாலனம்பண்ணின மூன்
௩ றும்வருஷத்தில்,—அவன்தனக்கு ஆதீனமாயிருந்
தசகல பிரபுகளுக்கும் தாசருக்கும் ஒருவிருந்து
செய்தான்; பாரசிலும் மேதியவிலுமுள்ள பராக்
கிரம சனங்களும், உபராச்சியப்பிரதானிகளும்,
பிரபுகளும் அவன்சமுகத்தில் இருந்தார்கள்.—
௪ அவன் மகிமைபொருந்திய தன் இராச்சியத்தின்
ஐசுவரியங்களையும், தன் மேன்மைபொருந்திய
மகத்துவத்தின் பிரஸ்தாபத்தையும், நெடுநாளா
கிய நூற்றெண்பது நாளளவுக்கு விளங்கச்செய்
௫ தான்.—அந்நாள்கள்சென்றபின் இராசா, ஊஷா
னென்னும் இராசதானியிலிருந்த சிறியோர்பெ
ரியோராகிய சனங்கள் யாவருக்கும், அரமனை
யின்நந்தவனத்துப்பிராகாரத்துக்குள் ஏழுநாள்வி
௬ ருந்துசெய்தான்.—வெண்மையும், பச்சையும்,நீ
லமுமாகியதொங்குதிரைகள், தூமிரவருணமுள்
ளமெல்லிய நூலினாற் செய்யப்பட்ட கயிறுகளி
னால், வெண்கற்றூண்களின் வெள்ளிவளையங்க
ளிலே தூக்கப்பட்டன: செம்மையும், நீலமும்,
வெண்மையும்,கருமையுமானகற்கள்பதித்ததளவ
ரிசையின்மேல் பொன், வெள்ளிகளினால் அல
௭ ங்கரிக்கப்பட்ட மஞ்சங்கள் இருந்தன.—அவர்
கள் குடிக்கும்படி பலவிதமான பொற்பாத்திரங்
களில் இராசமேன்மைக்கேற்க, இராச்சியத்தின்
௮ திராட்சரசங் கொடுக்கப்பட்டது.—எவர்களுந்
தங்கள் தங்கள் இஷ்டப்படி செய்யலாமென்று,
இராசா தன் வீட்டதிகாரிகள் சகலருக்குங் கட்
டளையிட்டிருந்தபடியினால், முறைப்படி பா
னம் பண்ணினார்கள்; ஒருவரும் வலாற்காரம்
௯ பண்ணவில்லை.—இராசாத்தியாகிய வஷ்தியும்,
அகஷ்வேரோஷ் இராசாவின் அரமனையில் ஸ்தி
ரிகளுக்கு விருந்து செய்தாள்.
௰ ஏழாம் நாளில் இராசா திராட்சரசத்தினால் ம
னங்களித்திருக்கிறபொழுது, இராசாத்தியாகிய
வஷ்தி பார்வைக்கு அழகுள்ளவளாயிருந்தபடி
யால், அவள் சௌந்தரியத்தைச் சனங்களுக்கும்
பிரபுகளுக்குங் காட்டும்பொருட்டு, இராசகிரீ
டத்தோடு இராச சமுகத்தில் அவளை அழைத்து
வரும்படி,—அகஷ்வேரோஷ் இராசா, தன் ச ௰௧
முகத்தில்சேவிக்கிற அண்ணகராகிய மிகுமான்,
பிஸ்தா, அர்போனா, பிக்தா, அபக்தா, சேதார்,
கர்காஸ் என்னும் ஏழுபேருக்குங் கட்டளையிட்
டான்.— இராசாத்தியாகிய வஷ்தியோ, அண் ௰௨
ணகர்கள் சொல்லிய இராசகட்டளையின்படி வ
ரச்சம்மதிக்கவில்லை: அதனால் இராசா மிகவுங்
கோபங்கொண்டான்,அவனுக்குக்குரோதமூண்
டது.
அச்சமயத்தில் இராசசமுகத்தில் நின்று இராச் ௰௩
சியத்தில் மேன்மையுள்ளவர்களாகிய பாரசிலும்,
மேதியவிலும் இருந்த அதிகாரிகளான கர்ஷே
னா, ஷேதார், அத்மாதா, தர்ஷீஷ், மேரேஸ்,
மர்சேனா, மெமுகான் என்னும் ஏழுபேரும் அ
வன் சமீபத்தில் இருந்தார்கள்.—அப்பொழுது இ ௰௪
ராசா, நியாயப் பிரமாணத்தையும் இராச நீதியை
யும் அறிந்தவர்களிடத்தில் பேசுவது தனக்கு வ
ழக்கமாதலால், காலங்களை யுணர்ந்த அந்த வித்
துவான்களை நோக்கி,—அகஷ்வேரோஷ் இரா ௰௫
சா அண்ணகர்களைக்கொண்டு இட்டகட்டளை
யை இராசாத்தியாகிய வஷ்தி மீறினதினிமித்
தம் நியாய சாஸ்திரத்தின்படி நாம் அவளுக்
குச் செய்யவேண்டியதென்னவென்றுகேட்க,—
மெமுகான், இராசாவின் சமுகத்திலும், பிரபு ௰௬
களின் சமுகத்திலும் அதற்கு உத்தரமாக, இரா
சாத்தியாகிய வஷ்தி இராசாவுக்குமாத்திரமல்ல,
சகல பிரபுகளுக்கும், அகஷ்வேரோஷ் இரா
சாவின் சகல உபராச்சியங்களிலுமுள்ள சகல
சனங்களுக்கும், இந்தத்தீமையைச்செய்தாள்.—
அகஷ்வேரோஷ் இராசா இராசாத்தியாகியவஷ் ௰௭
தியைத்தமது சமுகத்தில்வரும்படி கட்டளையிட்
டபொழுது, அவள் வரவில்லையென்று, இரா
சாத்தியின் இந்தச்செய்தி சகலஸ்திரிகளுக்குள்
ளும் பரம்பிவிடும், அதினால் அவர்களுந் தங்
கள் தங்கள் கணவரை அவமதிப்பார்கள்.—பார ௰௮
சிலும், மேதியவிலுமுள்ள ஸ்திரிகள், இராசாத்
தியின் இந்தச்செய்தியைக்கேள்விப்பட்டு, இன்
றைத்தினமே இராசாவின் சகல பிரபுகளிடத்தி
லும் இப்படிச்சொல்லுவார்கள். அதினால்மிகுந்த
அவமானமுங்குரோதமும்விளையும்.—ஆகையால் ௰௯
இராசாவுக்குப்பிரியமானால், வஷ்தி அகஷ்வே
ரோஷின்சமுகத்தில் வரலாகாதென்றும், இரா
சா, அவளுடைய இராச்சியமேன்மையை அவ
ளிலும் உத்தமியாகிய வேறொருஸ்திரிக்குக்கொ
டுப்பாராகவென்றும்,ஒருஇராசகட்டளைகொடுக்

(௧. அதி. ௧.) எஸ்று.௪.௬. தானி.௯.௧. தானி.௬.௧. (௨) ௧.இரா.௧.௪௬. நிகி.௧.௧. (௩) ஆதி.௪௰.௨௰.மாற்.௬.௨௧. (௬) எசேக்.௨௩.௪௧. ஆமோ.௨.௮. (௰௩) எஸ்று.௭.௰௪. ௨.இரா.௨௫.௰௯. (௰௪) எரே.௰.௭. தானி.௨.௰௨. மத்.௨.௧. (௰௭) எபே.௫.௩௩. (௰௯) தானி.௬.௮,௰௨,௰௫.

கப்படவும், அது மாறுபடாதபடிக்குபார்சியரும்
மேதியருமாகிய இவர்களுடைய நியாயப்பிரமா
௨௰ ணங்களில் எழுதப்படவும்வேண்டும்.—இராசா
செய்யுங்கட்டளை, விஸ்தாரமாகிய அவருடைய
இராச்சியமெங்கும் பிரசித்தமானபின்பு, ஸ்திரி
கள்யாவரும் பெரியோர் சிறியோராகிய தங்கள்
தங்கள் கணவரைக் கனம்பண்ணுவார்களென்
௨௧ றான்.—அந்தவாக்கு இராசாவுக்கும், அவன்பிர
புகளுக்கும் நலமாய்த்தோன்றினபடியினால், இ
ராசா மெமுகானுடைய வாக்கின்படியே செய்
௨௨ தான்.—எந்தப்புருஷருந்தங்கள்தங்கள்வீட்டை
ஆளவேண்டுமென்றும், இதை அந்தந்தச்சனங்க
ளுடைய பாஷையிலேபிரசித்தம்பண்ணவேண்
டுமென்றும், உபராச்சியங்களில்வழங்கும்எழுத்
துக்களால், அவரவர்பாஷைகளில், தமக்காதீன
மான சகல உபராச்சியங்களிலுமுள்ள எல்லாச்
சனங்களுக்கும் பத்திரங்களைஅனுப்பினான்.

## ௨. அதிகாரம்.

*௧. அநேகங்கன்னியர்களை சேர்த்தல்: ௫. எஸ்தரும் அவள்பாலகபிதாவுமாகியஇவர்களுடைய சரித்திரந்தொடங்கல்: ௮. எஸ்தர், ஸ்திரிபாலகனிடத்தில்கடாட்சம்பெறல்: ௰௨. சுத்திசெய்து இராசாவினிடத்தில் போகுமுறைமைதெரிவித்தல்: ௰௫. இராசாஎஸ்தரின்மேற்பிரீதிவைத்தல்: ௨௧. இராசதுரோகத்தைத்தெரிவித்தநிமித்தம் மோர்திகாயியின் நாமம் நாளாகமத்திற்பதிக்கப்படல்.*

இவைகளின் பின்பு அகஸ்வேரோஸ் இராசா
கோபந்தணிந்து, வஷ்தியையும், அவள் செய்த
காரியத்தையும், அவளுக்கு விரோதமாய் இட்ட
௨ கட்டளையையும்சிந்தித்தான்.—அப்பொழுது இ
ராசாவிடத்தில்சேவித்த அவன் பணிவிடைக்கா
ரர்கள், இராசாவுக்குச் சௌந்தரியமுள்ள கன்
௩ னியர்களைத்தேடவேண்டும்:—சௌந்தரியமுள்
ள சகல கன்னியர்களையும், ஷூஷானென்னும்
இராசதானியில் அந்தப்புரத்தில் ஸ்திரிகளைக்கா
வல்பண்ணும் இராசாவின் அண்ணகனாகிய ஏ
கேயின்வசத்தில் கூடிவரச்செய்யவேண்டுமென்
று, தனது இராச்சியத்திலுள்ள சகல உபராச்சி
யங்களிலும் அதிகாரிகளை நியமிக்கவேண்டும்;
அவர்களைச் சுத்திகரிப்பதற்கு வேண்டியவைகள்
௪ அவர்களுக்குக் கொடுக்கப்படவேண்டும்:—இ
ராசாவுக்குப் பிரியமானகன்னி, வஷ்திக்குப்பி
ரதியாய் இராசாத்தியாகக் கடவளென்றார்கள்.
அந்தவாக்கு இராசாவுக்கு நலமாய்த்தோன்றின
படியால் அதின்படிசெய்தான்.
௫ அப்பொழுது பேன்யமீனின் வமிசத்தானும்,
கீஷின்புத்திரனாகிய ஷிமியியின்பௌத்திரனும்,
யாயீரின்புத்திரனுமானமோர்திகாயி என்னும்பெ
யர்கொண்ட யூதனொருவன், ஷூஷானென்னும்
௬ இராசதானியிலிருந்தான்.—இவன், பாபேலின்
இராசாவாகிய நெபுகத்நெத்சார், யூதாவின் இரா
சாவாகிய யெகொனியவோடே யெரூஷலேமி
னின்று சிறைபிடித்துப்போன சனங்களுடன்
கொண்டுபோகப்பட்டான்.—இவன், தன் சிறி ௭
யபிதாவின் புத்திரியாகிய எஸ்தரென்னும் அத
சாளைவளர்த்தான்: அவளுக்குப் பிதாமாதா இல்
லை, அந்தக்கன்னி ரூபவதியும், சௌந்தரியமு
டையவளுமாயிருந்தாள்; அவளுடைய பிதாமா
தாக்கள் மரித்தபொழுது, மோர்திகாயி அவளைத்
தன் புத்திரியாக ஏற்றுக்கொண்டான்.
இராசாவின்கட்டளையும், தீர்மானமும்பிரசித் ௮
தமானகாலத்தில், ஷூஷானென்னும்இராசதானி
யில்ஏகேயினிடத்தில் அநேககன்னியர்கூட்டப்
பட்டார்கள், அப்பொழுது எஸ்தரும் அரமனை
யில் ஸ்திரிகளைப் பாலிக்கும் ஏகேயினிடத்தில்
கொண்டுவரப்பட்டாள்.—அந்தக்கன்னி அவன் ௯
பார்வைக்குப் பிரியமானவளாயிருந்ததினால், அ
வளுக்கு அவன்கடாட்சங் கிடைத்தது; ஆகை
யால் அவன் அவளைச்சுத்திகரிப்பதற்குவேண்டி
யவைகளையும், அவளுக்கேற்றபங்குகளையும், இ
ராச அரமனையிலிருந்து அவளுக்குக்கொடுப்ப
தற்கு யோக்கியமுள்ள எழுபணிவிடைக்காரிக
ளையும் விரைவில்அவளுக்குக்கொடுத்தான்: அந்
தப்புரத்தின் உத்தமஸ்தானத்திலே,பணிவிடைக்
காரிகளுடன் அவளையிருக்கச்செய்தான்.—எஸ் ௰
தர்தன்குடும்பத்தையும் இனத்தையுந் தெரிவிக்க
வில்லை: மோர்திகாயி அதைத்தெரிவிக்க வேண்
டாமென்று சொல்லியிருந்தான்.—எஸ்தருடைய ௰௧
சுகசெய்திகளையும், அவளுக்கு என்னசம்பவிக்
குமென்பதையும் அறியும்பொருட்டு, மோர்திகா
யி நாடோறும் அந்தப்புரத்தின்பிராகாரத்துக்குள்
உலாவிவருவான்.
ஒவ்வொரு கன்னியரும் பன்னிரண்டுமாதம் ௰௨
அவ்விடத்திலே தங்கினபின்பு, ஸ்திரிகளின்மு
றைப்படிகிரமங்கிரமமாக அகஸ்வேரோஸ்இரா
சாவிடத்திற்கொண்டுவரப்பட்டார்கள், ஆறுமா
தம் வெள்ளைப்போளத் தைலத்தினாலும், ஆறுமா
தம்சுகந்தத்திரவியங்களினாலும், ஸ்திரிகளைச்சுத்தி
கரிப்பதற்கேற்ற மற்றவஸ்துக்களினாலும், அவர்
களைச்சுத்திசெய்வதற்கு இத்தனைநாள்செல்லும்.-
இராசாவினிடத்தில் போகும்பொழுது, அந்தப் ௰௩
புரத்தினின்று அரமனைக்குப்போகிறசமயத்தில்,
தன்னோடேபோகிறதற்கு அந்தக்கன்னிகேட்கு
மெதுவும்அவளுக்குக்கொடுக்கப்படும்.—சாயங் ௰௪
காலத்தில் அவள் போய், விடியற்காலத்தில் இ
ரண்டாம் அந்தப்புரத்திலே வைப்பாட்டிகளைக்
காவல்பண்ணும் இராச அண்ணகனாகிய ஷாஷ்
காஸ் இடத்தில்திரும்பிவருவாள்: அவள்மேல் இ
ராசாவிருப்பங்கொண்டு, அவளைப்பெயர்சொல்
லி அழைத்தாலொழிய அவள் பின்னொருபொ
ழுதும் இராசாவினிடத்திற்போகமாட்டாள்.
மோர்திகாயிதனக்குபுத்திரியாகஏற்றுக்கொண் ௰௫
ட அவன் சிறியபிதாவாகியஅபிகயிலின் புத்திரி
யாகிய எஸ்தர், இராசாவிடத்திற் போனபொழு
து,ஸ்திரிகளைக்காவல்பண்ணும்இராச அண்ணக

(௨௰) கொலோ.௩.௰௮. ௧.பேதுரு.௩.௧. (௨௨) எபே.௫.௨௨. ௧.தீமோ.௨.௰௨.—(௨. அதி. ௬.) ௨.இரா.௨௪.௰௪, ௰௫. (௭) எபே.௬.௪.

ஞகிய எகேய் தனக்கு ஏற்படுத்தினதையேயன்
றி, வேறொன்றையும் விரும்பிக்கேட்கவில்லை.
எஸ்தர் தன்னைப்பார்த்தவர்கள் யாவரிடத்திலும்
௰௬ தயைபெற்றாள்.—அகஷ்வேரோஷ் இராசா அர
சாண்ட ஏழாம்வருஷத்தில் பத்தாமாதமாகிய தெ
பெத்மாதத்தில், எஸ்தர் அரமனைக்கு இராசாவி
னிடத்திற் கொண்டுபோகப்பட்டாள், இராசா
மற்றஸ்திரிகளனைவரிலும் எஸ்தரை அதிகமாய்
௰௭ நேசித்தான்.—அவள் எல்லாக்கன்னியரிலும் அ
வனுடையசமுகத்தில் அதிக தயையும், கிருபையை
யும்பெற்றாள்; அதினால் அவன் அவளுடைய
தலையின்மேல் இராச கிரீடத்தைத் தரித்து, அ
வளை வஷ்திக்குப் பிரதியாக இராசாத்தியாக்கி
௰௮ னான்.—இராசா தன் சகல பிரபுகளுக்குந் தாச
ருக்கும் எஸ்தரினிமித்தம் ஒரு பெரிய விருந்து
செய்தான்; உபராச்சியங்களில் இறையைச்
சகாயப்படுத்தினான், அவன் தன் ஐசுவரியத்தின்
௰௯ படி தானங்களைக்கொடுத்தான்.—கன்னியர் இ
ரண்டாந்தரமும் ஏகமாய்க் கூட்டப்பட்டபொ
ழுது, மோர்திகாயி இராசவாசலில் இருந்தான்.—
௨௰ எஸ்தர் மோர்திகாயி தனக்குக்கட்டளையிட்டிருந்
தபடியால், இன்னுந் தன்குடும்பத்தையுஞ் சனத்
தையுந் தெரிவிக்கவில்லை; எஸ்தர்மோர்திகாயி
னால் வளர்க்கப்பட்டபொழுது செய்தபிரகார
மே அவன்கட்டளைப்படி செய்துவந்தாள்.

௨௧ அந்நாட்களில் மோர்திகாயி இராசவாசலில்
இருந்தபொழுது, இராசாவின் அண்ணகர்களும்,
வாசற் காவலாளருமானவர்களுக்குள்ளே பிக்
தான், தேரேஷ் என்னும் இருவர் கோபித்து, அ
கஷ்வேரோஷ் இராசாவைக் கொலைசெய்ய வ
௨௨ கைதேடினார்கள்.—அதை அறிந்த மோர்திகாயி,
இராசாத்தியாகிய எஸ்தருக்குச்சொல்ல, எஸ்தர்
மோர்திகாயியின் நாமத்தைச்சொல்லி, இராசா
௨௩ வுக்குத்தெரிவித்தாள்.—பின்பு அந்தக்காரியம்வி
சாரிக்கப்பட்டபொழுது, அதுவெளிப்பட்டது;
அதினால் அவ்விருவரும் ஒருமரத்தில் தூக்கப்
பட்டார்கள்: அந்தக்காரியம் இராசசமுகத்திலே
நாளாகமத்திலெழுதப்பட்டது.

## ௩. அதிகாரம்.

௧. ஆமான்உன்னதம்பெற்று யூதரைநாசப்படுத்துந் தினத்தைச்சீட்டுப்போட்டு நியமித்தல்: அ. யூதரை அழிக்கிறதற்கு ஆமான், இராசாவிடத்தில் கட்டளைபெற்று எங்கும்பிரசித்தப்படுத்தல்.

இக்காரியங்கள்நடந்தபின்பு, அகஷ்வேரோஷ்
இராசா, அமீதாதாவின் புத்திரனும் அகாகியனு
மாகிய ஆமானை மேன்மைப்படுத்தி, தன்னிடத்
திலுள்ள சகலபிரபுகளுக்குமேலாக அவன் ஆச
௨ னத்தைஸ்தாபித்தான்.—அதினால் இராசவாசலி
லிருந்த சகலபணிவிடைக்காரரும் ஆமானைவ
ணங்கி, நமஸ்கரித்துவந்தார்கள்: அவனைக்குறித்
துஇராசா அப்படியே கட்டளையிட்டிருந்தான்.
மோர்திகாயியோ, பூமிக்குநேரே தாழவுமில்லை,
௩ அவனைவணங்கவுமில்லை.—அதினால் இராசவா
சலிலுள்ள இராசாவின்பணிவிடைக்காரர்மோர்
திகாயியைநோக்கி, நீ இராசகட்டளையை மீறுகி
றதென்னவென்றார்கள்.—இப்படியே அவர்கள் ௪
நாடோறுஞ் சொல்லிச்சொல்லிவந்தும் அவன்
அவர்களுக்குச் செவிகொடுக்கவில்லை; அவன்
தான்யூதனென்று அவர்களுக்குச்சொல்லியிருந்
தபடியால், மோர்திகாயியின் காரியம் அனுகூல
மாகுமோ ஆகாதோவென்று அறியும்படி ஆமா
னுக்குத்தெரிவித்தார்கள்.—பின்பு ஆமான், மோர் ௫
திகாயிதாழ்ந்து தன்னை வணங்கவில்லையென்று
கண்டு, மிகவுங்குரோதங்கொண்டான்.—அவர் ௬
கள் மோர்திகாயியின் சாதியின்னதென்று அவ
னுக்குத்தெரிவித்திருந்தார்கள்; ஆதலால்ஆமான்
மோர்திகாயியின்மேல்கைவைக்கிறது எளிதென்
றெண்ணி, அகஷ்வேரோஷின் சகல இராச்சி
யத்திலுமுள்ள மோர்திகாயியின் சனங்களாகிய
சகலயூதரையும் நாசப்படுத்தவகைதேடினான்.

அகஷ்வேரோஷ்இராசா அரசாண்ட பன்னி ௭
ரண்டாம்வருஷத்தில், முதல்மாதமாகிய நிசான்
மாதந்தொடங்கிப் பன்னிரண்டாமாதமாகிய அ
டார்மாதம்வரைக்கும், மாதத்துக்கு மாதம், நா
ளுக்குநாள், ஆமானின்சமுகத்தில் பூர்என்னுஞ்
சீட்டுப்போட்டுவந்தார்கள்.

ஆமான் அகஷ்வேரோஷ் இராசாவைநோக் ௮
கி, உமது இராச்சியத்தைச்சேர்ந்த சகல உபராச்
சியங்களிலுமுள்ள சனங்களுக்குள் ஒருவிதச
னங்கள்சிதறுண்டுபரம்பியிருக்கிறார்கள்; மற்றச்
சனங்களுடைய நியாயப்பிரமாணங்களுக்கு அ
வர்கள் பிரமாணங்கள் வேறுபாடாயிருக்கின்ற
ன; அவர்கள் இராசாவின்கட்டளைகளைக்கைக்
கொள்ளவில்லை: ஆதலால்அவர்கள்மேற் பொறு
மையாயிருப்பது இராசாவுக்குத்தகுதியல்ல.—இ ௯
ராசாவுக்குப்பிரியமானால், அவர்களைநாசப்படுத்
தும்படி எழுதவேண்டும்: நான் அந்தக்காரியத்
தைநடத்தினவர்களுடையகையில், இராசாவின்
பொக்கிஷசாலைக்குக்கொண்டுவரும்படி பதினா
யிரங் கிக்கேர் வெள்ளிகொடுப்பேனென்றான்.—
அப்பொழுது இராசா தன்கையினின்று மோதி ௰
ரத்தைக்கழற்றி, யூதரின்சத்துருவும் அகாகியனா
கிய அமீதாதாவின் புத்திரனுமான ஆமானிடத்
திலே கொடுத்தான்.—பின்பு இராசா ஆமானை ௰௧
நோக்கி, இந்தவெள்ளிஉனக்குக்கொடுக்கப்பட்
டது, அந்தச்சனங்களும் உனக்குக்கொடுக்கப்
பட்டார்கள், அவர்களுக்கு நீ உன் இஷ்டப்படி
செய்யலாமென்றான்.—முதல்மாதம் பதின்மூன் ௰௨
றாந்தினத்தில் இராசாவின்இலேககர்அழைக்கப்
பட்டார்கள், அந்தந்த உபராச்சியங்களிலுள்ள
இராசபிரதிநிதிகளுக்கும், அதிபதிகளுக்கும், அந்
தந்தச்சனங்களின் அதிகாரிகளுக்கும், ஒவ்வொ
ரு உபராச்சியத்தின் சகலசனங்களுக்கும் அந்தந்
தப்பாஷையில், அந்தந்த எழுத்தில், ஆமான் கட்
டளையிட்டபடியெல்லாம் எழுதப்பட்டது; அ
கஷ்வேரோஷ் இராசாவின்பேரால் எழுதி, இரா

(௩. அதி. ௧.) ௧.சாமு.௰௫.௮. (௨) சங்.௰௫.௪. (௫) தானி.௩.௰௯. (௬) சங்.அ௩.௪. (௭) அதி.௯.௨௪. (௮) ஏஸ்ரா.௪. ௰௩. அப்.௰௬.௨௰. (௰) ஆதி.௪௧.௪௨. (௰௨) ௧.இரா.௨௧.௮.

௰௩ சாவின்மோதிரத்தால்முத்திரிக்கப்பட்டது.-பன்
னிரண்டாமாதமாகிய அடார்மாதத்தின் பதின்
மூன்றாந்தினத்தில், ஒரேதினத்துக்குள்ளே வாலி
பரும், விருத்தரும், பாலகரும், ஸ்திரிகளுமாகிய
சமஸ்த யூதர்களையுஞ்சங்கரித்து, வதைத்து, அழி
த்து, அவர்கள் பொருளைக் கொள்ளையிடும்பொ
ருட்டு, பத்திரங்கள் அஞ்சல்காரர்வழியாய் இரா
சாவின்சகல உபராச்சியங்களுக்கும் அனுப்பப்
௰௪ பட்டன.-அந்தத்தினத்தில் சகலசனங்களும் ஆ
யத்தமாயிருக்கவேண்டுமென்று ஒவ்வொரு உப
ராச்சியங்களிலுங்கட்டளையிடும்பொருட்டு, அந்
தப்பத்திரிகையின்பிரதி பிரசித்தஞ்செய்யப்பட்
௰௫ டது.—அஞ்சல்காரர் இராசாவின் கட்டளையினா
லே தீவிரமாகப்புறப்பட்டார்கள், அந்தக்கட்ட
ளை சூஷானென்னும் இராசதானியிலுங்கொடுக்
கப்பட்டது. இராசாவும் ஆமானும்பானம்பண்
ணும்பொருட்டுப்பந்தியிருந்தார்கள்; சூஷானெ
ன்னும் இராசதானி கலங்கிற்று.

## ௪. அதிகாரம்.

௧. மோர்திகாயியும் மற்ற யூதரும் துக்கமடைதல்: ௪. அதைக்கேட்டு எஸ்தர் மோர்திகாயினிடத்தில்ஆளனுப்பிஉத்தரம்பெறல்:௰.எஸ்தர்இரண்டாந்தரம்ஆளனுப்பி மோர்திகாயியின் உத்தரம் பெறல்: ௰௫. எஸ்தர் உபவாசஞ்செய்யும்படி வேண்டல்.

நடந்தயாவற்றையும் மோர்திகாயி அறிந்தபொ
ழுது தன்வஸ்திரங்களைக்கிழித்து, இரட்டு உடுத்
து, சாம்பலை அள்ளிப்போட்டுக்கொண்டுநகரத்
தின் மத்தியிலேபோய், துயரமுள்ள மகாசத்தத்
௨ தோடேஅலறி,—இரட்டு உடுத்தவனாய் ஒருவ
னும்இராசவாசலிற்பிரவேசிக்கக்கூடாததினால்,
அவன்இரட்டுஉடுத்து இராசவாசலுக்குமுன்வந்
௩ தான்.—இராசாவின் கட்டளையும் தீர்மானப்பத்
திரிகையும் போய்ச்சேர்ந்த எந்த உபராச்சியத்
திலுமுள்ள யூதருக்குள்ளே மகாவிதன்மும், உ
பவாசமும், அழுகையும், புலம்பலும் உண்டா
யின; அநேகர் இரட்டு உடுத்துச்சாம்பலிலே கி
டந்தார்கள்.
௪ எஸ்தரின் பணிவிடைக்காரிகளும் அண்ண
கரும்வந்து அவளுக்கு இதைத்தெரிவித்தார்கள்.
அதினால் இராசாத்தி மிகவும் விதனப்பட்டு,
மோர்திகாயி தன் இரட்டை உரிந்துவிட்டு, உ
டுக்கும்படி ஒருவஸ்திரம் அனுப்பினாள்: அதை
௫ அவன்வாங்கவில்லை.—அப்பொழுதுஎஸ்தர்தன்
னிடத்தில்சேவிக்கும்படி இராசா ஏற்படுத்திய
அண்ணகருக்குள் ஒருவனாகிய அதாகுவை அ
ழைத்து, அது என்னகாரியமென்றும், அதற்குஏ
து என்னவென்றும் மோர்திகாயியினிடத்திற்
௬ கேட்டறியும்படிகட்டளையிட்டாள்.—அப்படி
யே அதாகு, இராசவாசலுக்குமுன்னுள்ள நகர
வீதியிலே மோர்திகாயியினிடத்திற்போனான்.—
௭ மோர்திகாயி, தனக்குச் சம்பவித்ததெல்லாவற்
றையும், யூதர்களை நாசப்படுத்தும்படி இராசா
வின்பொக்கிஷசாலைகளுக்குக்கொடுக்கஆமான்
வாக்குத்தத்தம்பண்ணின திரவியத்தின் தொகை
யையும், அவனுக்குச்சொன்னான்.—அதுவுமன் ௮
றி இதை எஸ்தருக்குக்காண்பித்து, அவளுக்கு
இதைத் தெரிவித்து, அவள் இராசாவிடத்தில்
போய், தன்சனங்கள் நிமித்தம் அவனைப்பிரார்த்
தித்து, அவன் சமுகத்தில் வேண்டுதல்பண்ண
வேண்டுமென்றுஅவளுக்குக்கட்டளையிடும்படி,
சூஷானிலே யூதரைச் சங்கரிக்கிறதற்கு இடப்
பட்ட தீர்மானநிருபத்தின்பிரதியையும் அவனி
டத்திற்கொடுத்தான்.—அதாகு போய், மோர்தி ௯
காயியின்வாக்குகளைஎஸ்தருக்குத்தெரிவித்தான்.
பின்பு எஸ்தர்அதாகுவை நோக்கி,-அழைக் ௰,௰௧
கப்படாமல் உட்பிராகாரத்தில்இராசாவிடத்தில்
பிரவேசிக்கும் ஸ்திரிபுருஷர்யாவராகிலும், தாம்
பிழைக்கும்படிதம்மிடத்தில் இராசாபொற்செங்
கோலை நீட்டினாலொழிய, மற்றப்படிகொல்லப்
படவேண்டுமென்று ஒருபிரமாணம் இருக்கின்
றதென்று, இராசாவின் சகல பணிவிடைக்கார
ரும், இராசாவின் உபராச்சியங்களிலுள்ளசனங்
களும் அறிவார்கள்: நான்முப்பது நாளாக இரா
சாவிடத்தில் வரும்படி அழைக்கப்படவில்லை
யென்று, மோர்திகாயிக்குச்சொல்லென்று கட்
டளையிட்டாள்.—அவர்கள் எஸ்தரின் வாக்குக ௰௨
ளைமோர்திகாயிக்குத்தெரிவித்தார்கள்.—அப்பொ ௰௩
ழுது மோர்திகாயி, எல்லா யூதருக்குள்ளும், நீஅ
ரமனையிலேதங்கிஇரட்சிப்பைப்பெற்றுக்கொள்
ளுவாயென்று நினைக்கவேண்டாம்.—நீ இப்பொ ௰௪
ழுதுபேசாமலிருந்தாயாகில், வேறொரு இடத்தி
லிருந்து யூதர்களுக்குத்துணையும் இரட்சிப்புந்
தோன்றும்; நீயும் உன்பிதாவின் குடும்பத்தாரும்
நாசமாக்கப்படுவீர்கள்: இப்படிப்பட்ட ஒருசம
யத்துக்காகவே நீ இராச்சியத்தில் வந்திருக்கிறா
யோ ஆருக்குத்தெரியும் என்று எஸ்தருக்கு உத்
தரஞ்சொல்லும்படி கட்டளையிட்டான்.
அப்போழுது எஸ்தர், நீர்போய் சூஷானிலுள் ௰௬
ள யூதர்கள் எல்லாரையுங்கூட்டி, நீங்கள்மூன்று
நாள் அல்லும்பகலும்போசனம்பண்ணாமல் என்
னிமித்தம் உபவாசமாயிருங்கள்: நானும் என்ப
ணிவிடைக்காரிகளும் அப்படியே உபவாசம்
பண்ணுவோம்; இப்படி நான் கட்டளையைமீறி
இராசாவிடத்திற்போவேன், மடிந்தாலும்மடிவே
னென்று,—மோர்திகாயிக்கு உத்தரஞ்சொல்லும் ௰௫
படி அவர்களுக்குக் கட்டளையிட்டாள்.—பின்பு ௰௭
மோர்திகாயிபுறப்பட்டுப்போய், எஸ்தர்தனக்குக்
கட்டளையிட்டபடியெல்லாம்செய்தான்.

## ௫. அதிகாரம்.

௧. இராசாவினிடத்திற்போய்க் கடாட்சம்பெற்ற பின்பு எஸ்தர்அவனையும்ஆமானையும்விருந்துக்குஅழைத்தல்: ௬. திரும்பவும்விருந்துக் கழைத்தல்: ௯. ஆமான் மோர்திகாயியை அலட்சியம் பண்ணல்: ௰௪. அவனுக்காகத் தூக்குமரத்தை ஆயத்தப்படுத்தல்.

(௰௩) நீதி.௨௩.௨.—(௪. அதி. ௧.) ௨.சாமு.௧.௰௧. யோசு.௭.௬. எசேக்.௨௭.௩௰. ஆதி.௨௭.௩௪. (௩) ஏசா.௫௮.௫. தானி.௯.௩. (௰௧) தானி.௨.௯. (௰௪) யோபு.௯.௰௮. (௰௫) அதி.௫.௧. ஆதி.௪௩.௰௪.—(௫. அதி.)

பின்புமூன்ருந்தினத்தில் எஸ்தர் இராசரிகவஸ்
திரந்தரித்துக்கொண்டு,அரமனையின் உட்பிராகா
ரத்தில அரமனைக்கெதிரே நின்ருள்: இராசா,அ
ரமனையில் வீட்டுவாசலுக்கெதிரே இராசசிங்கா
உ சனத்தில்வீற்றிருந்தான்.—இராசா, பிராகாரத்தில்
இராசாத்தியாகிய எஸ்தர் நிற்கக்கண்டான், அ
வன்சமுகத்தில்அவள்கடாட்சம்பெற்ருள்: அதி
ஞல் இராசாதன் கையிலிருந்த பொற்செங்கோ
லைஎஸ்தரிடத்தில்நீட்டிஞன். எஸ்தர்சமீபித்துப்
போய், செங்கோலின் நுனியைத்தொட்டாள்.—
ரு அப்பொழுது இராசா அவளைநோக்கி, எஸ்தர்இ
ராசாத்தியே, உனக்கென்ன வேண்டும்; உன்
பிரார்த்தனை என்ன; இராச்சியத்தின் பாதியள
வுக்காயினும்,அதுஉனக்கு அளிக்கப்படுமென்று
ச சொல்ல,-எஸ்தர், இராசாவுக்கு நலமாகத்தோன்
றிஞல், இன்றைத்தினம் நான் ஆயத்தப்படுத்தி
னவிருந்துக்கு இராசாவும் ஆமானும்வரவேண்டு
ரு மென்று உத்தரஞ்சொன்ஞள்.—அப்பொழுது இ
ராசா, எஸ்தர் சொல்லியபிரகாரம்செய்ய ஆமா
னைத் தீவரிக்கப்பண்ணுங்கள் என்ருன். பின்பு
இராசாவும் ஆமானும் எஸ்தர் ஆயத்தப்படுத்திய
விருந்துக்குவந்தார்கள்.
சு திராட்சரசவிருந்தில் இராசா எஸ்தரைநோக்
கி, உன் விண்ணப்பம் என்ன; அதின்படி உனக்
குக்கொடுக்கப்படும்: உன்பிரார்த்தனைஎன்ன;இ
ராச்சியத்தின்பாதியளவுக்காயினும் அதுஉனக்கு
எ அளிக்கப்படுமென்றுசொல்ல,—எஸ்தர், நான்இ
ராசாவின்சமுகத்தில் கடாட்சம்பெற்றேஞகில்,
என் விண்ணப்பத்தின்படி எனக்கு அளித்து,
என் பிரார்த்தனையை நிறைவேற்ற இராசாவுக்
குப்பிரியமாயிருந்தால்,நான் அவர்களுக்குஆயத்
தப்படுத்தும் விருந்துக்கு இராசாவும் ஆமானும்
வரவேண்டும், இதுவே என் விண்ணப்பம், என்
அ பிரார்த்தனை:—இராசா சொல்லியபிரகாரம் நா
ளைக்குச்செய்வேன்என்ருள்.
கூ பின்பு ஆமான் அத்தினத்தில் சந்தோஷப்பட்
டு மனக்களிப்புடன் புறப்பட்டான்: இராசவா
சலிலே மோர்திகாயி எழுந்து நில்லாததையும்,
தன்னை நமஸ்கரியாததையுங்கண்டு, மோர்திகா
யிக்கு விரோதமாய் மிகவுங் குரோதங்கொண்
ய டான்.-ஆஞலும் ஆமான் அதைஅடக்கிக்கொண்
டு வீட்டுக்குப்போனபின்பு, தன் சிநேகிதருக்
கும், தன் மனைவியாகிய செரெஷூக்கும் ஆள
யக ஞப்பி அவர்களை அழைப்பித்து,—தன்ஐசுவரிய
மேன்மையையும், தன் சந்தானவிருத்தியையும்,
இராசா தன்னைமேன்மையாக்கி, இராசாவின் ஆ
தீனத்திலுள்ள பிரபுகளுக்கும் தாசருக்கும்மேற்
படுத்திய யாவற்றையும் அவர்களுக்கு விவரித்
யஉ தான்.—மேலும் ஆமான், எஸ்தர் இராசாத்திதான்
ஆயத்தப்படுத்திய விருந்துக்கு என்னையன்றி, இ
ராசாவுடன் வேருருவரையும்பிரவேசிக்கவிட
வில்லை; நாளைக்கு நான் இராசாவுடன் விருந்
துக்குவரும்படி அழைக்கப்பட்டிருக்கிறேன்.—
யரு ஆகிலும் இராசவாசலிலே யூதஞகிய மோர்திகா
யி இருப்பதை நான்கண்டால், இவைகள் ஒன்றி
ஞலும் எனக்குப் பலனில்லையென்ருன்.
அப்பொழுது அவன் மனைவியாகிய செரெ யச
ஷூம், அவன்சிநேகிதர்யாவரும் அவனைநோக்கி,
ஐம்பதுமுழ உயரமான ஒருதூக்குமரஞ் செய்
யப்படட்டும், மோர்திகாயி அதிலே தூக்கப்பட
வேண்டுமென்று, நாளைக்கு இராசாவிடத்திலே
பேசும்: பின்பு விருந்துக்கு இராசாவுடன் சந்
தோஷமாய்ப்போம் என்ருர்கள். இந்தக்காரியம்
ஆமானுக்குப் பிரியமாயிருந்தது; அந்தப்பிரகா
ரம் அவன் தூக்குமரஞ்செய்வித்தான்.

## சூ. அதிகாரம்.

க. நாளாகமத்திலே மோர்திகாயியினது நற்செய்
தியின் விபரத்தை வாசித்து, இராசா அவனுக்
கு நலஞ்செய்ய விரும்பல்: ச. மோர்திகாயி
யைக் கொல்லும்படி இராசாவிடம் பிரார்த்திக்
கையில், புத்திமோசத்திஞல்மோர்திகாயியைக்
கனம்பண்ணும்படி மந்திராலோசனை சொல்
லல்: யஉ. ஆமான் தன் பந்துசனங்களுக்குத்
தன் கிலேசத்தைத்தெரிவிக்க, இவனுக்கு நேரி
டும் நாசத்தை அவர்கள் முன்னுரைத்தல்.

அன்றிரவு இராசாவுக்கு நித்திரைவரவில்லை,அ க
திஞல் அவன் ஞாபக நிமித்தம் எழுதப்பட்டநா
ளாகம புத்தகத்தைக் கொண்டுவரும்படி கட்ட
ளையிட்டான்; அவைகள் இராசசமுகத்தில் வா
சிக்கப்பட்டன.-அதில் வாசற்காவலாளராகியஇ உ
ராசாவின் அண்ணகரில் பிக்தான்தேரேஷ், என்
னும் இருவர், அகஷ்வேரோஷ் இராசாவைக்
கொலைசெய்ய வகைதேடிஞர்களென்னும் அந்
தச்செயதியை மோர்திகாயி தெரிவித்தானென்று
எழுதப்பட்டிருந்தது.—இராசா, இதினிமித்தம் ரு
மோர்திகாயிக்கு என்னகனமும் மேன்மையும்
செய்யப்பட்டனவென்றுகேட்க, இராசாவிடத்
தில்சேவித்த தாசர்கள் அவனுக்கொன்றுஞ்செய்
யப்படவில்லையென்ருர்கள்.
பின்பு ஆமான், தான்ஆயத்தப்படுத்திய தூக்கு ச
மரத்திலேமோர்திகாயியைத்தூக்கிப் போடும்படி
இராசாவிடத்தில்பேசும்பொருட்டுஅரமனையின்
வெளிப்பிராகாரத்தில்வந்தான்; அப்பொழுது இ
ராசா, பிராகாரத்தில்வந்தவர்யாவரென்றுகேட்க-
இராசாவின்தாசர்கள் அவனைநோக்கி, பிராகாரத் ரு
தில் ஆமான் நிற்கிருனென்ருர்கள். இராசா, அவ
னுள்ளேவரட்டுமென்ருன்.—அந்தப்படி ஆமான் சு
உள்ளேவந்தான். இராசா அவனைநோக்கி, இரா
சாகனஞ்செய்யவிரும்புகிற மனுஷனுக்குஎன்ன
செய்யவேண்டுமென்றுகேட்டான்; அப்பொழு
து ஆமான், என்னையன்றி வேருரைக்கனம்பண்
ண இராசா விரும்புவானென்று தன் மனதிலே
சிந்தித்து,—ஆமான் இராசாவைநோக்கி, இராசா எ
கனம்பண்ணவிரும்புகிற மனுஷனுக்கு,-இராசா அ
தரிக்கும் இராசவஸ்திரமும், இராசா ஏறுங் குதி
ரையும், அவர் சிரசிலேதரிக்கப்படும் இராசமகு
டமும்கொண்டுவரப்படவேண்டும்:—அந்த வஸ் கூ
திரமுங்குதிரையும் இராசாவின் மேன்மைபொ

(க) அதி.ச.யசு. (உ) நீதி.உக.க. (ரு) மாற்.சு.உரு.—(சு. அதி. க.) ஆதி.சக.சரு.

ருத்தியபிரபுகளில் ஒருவனிடத்தில் ஒப்பிக்கப்ப
டவேண்டும், அவர்கள், இராசாகனம்பண்ணவி
ரும்புகிறமனுஷனை அலங்கரித்து, குதிரைமே
லேற்றி நகரவீதியில் உலாவிவரும்படிசெய்து,
அவனுக்கு முன், இராசாகனம்பண்ண விரும்
புகிறமனுஷனுக்கு இப்படிச்செய்யப்படுமென்
௰ று கூறி வருவார்களாகவென்றான்.—அப்பொ
ழுது இராசா ஆமானைநோக்கி, தீவரித்து,நீசொல்
லியபிரகாரமே வஸ்திரத்தையுங் குதிரையையுங்
கொண்டுபோய், இராசவாசலிலிருக்கிற யூதனா
கிய மோர்திகாயிக்கு அப்படியேசெய்: நீசொல்
லியயாவற்றிலும் ஒன்றாகிலுந் தவறலாகாதென்
௰௧ றான்.—பின்பு ஆமான்வஸ்திரத்தையுங் குதிரை
யையுங்கொண்டுபோய், மோர்திகாயியை அலங்
கரித்து, குதிரையின்மேலேற்றி நகரவீதியில் உ
லாவிவரும்படிசெய்து, அவனுக்குமுன்னே, இ
ராசாகனம்பண்ணவிரும்புகிறமனுஷனுக்கு இப்
படிச் செய்யப்படுமென்று கூறிக்கொண்டுபோ
னான்.
௰௨ மோர்திகாயி திரும்ப இராசவாசலுக்கு வந்
தான். ஆமான் துக்கித்துத்தலையைமூடிக்கொண்
௰௩ டு, தன்வீட்டுக்குவிரைந்துசென்றான்.—ஆமான்
தனக்குநேரிட்ட யாவற்றையும், தன்மனைவியா
கிய செரெஷுக்கும் தன்னுடைய எல்லாச்சிநே
கிதருக்கும் தெரிவித்தான். அப்பொழுது அவனி
டத்திலுள்ள புத்திமான்களும் அவன்மனைவியாகிய
செரெஷும் அவனைநோக்கி, நீர்மோர்திகாயினால்
விழப்போகிறீர், அவன் யூதாவமிசத்திற்சேர்ந்த
வனாகில் அவனைச்செயிக்கமாட்டீர், நிச்சயமாய்
௰௪ அவனுக்குமுன் விழுவீரென்றார்கள்.—இப்படி
அவர்கள் அவனோடுசம்பாஷித்துக்கொண்டிருக்
கையில், இராச அண்ணகர்கள் எஸ்தர் ஆயத்தப்
படுத்தின விருந்துக்கு ஆமானை அழைத்துக்கொ
ண்டுபோகத்துரிதப்படுத்தினார்கள்.

## ௭. அதிகாரம்.

௧. எஸ்தர் தன் மனவிருப்பத்தை வெளிப்படுத்
தல்: ௫. ஆமான் குற்றஞ் சாற்றப்படல்: ௭. ஆ
மானைத் தூக்க இராசா கட்டளையிடல்.

இராசாவும் ஆமானும்இராசாத்தியாகிய எஸ்தரி
௨ டத்தில் விருந்துண்ணும்படிவந்தார்கள்.—இரண்
டாந்தினத்திலே திராட்சரசவிருந்தில் இராசா
எஸ்தரை நோக்கி, இராசாத்தியாகிய எஸ்தரே,
உன்விண்ணப்பமென்ன, அதின்படி உனக்கு அ
ளிக்கப்படும்;உன்பிரார்த்தனையென்ன, இராச்சி
யத்தின்பாதியளவுக்காயினும் அது அளிக்கப்படு
௩ மென்றுசொல்ல,-எஸ்தராகியஇராசாத்தி,இராசா
வே, நானும்என்சனங்களும்சங்கரிக்கப்படுவதற்
கும், கொல்லப்படுவதற்கும், நாசமாவதற்கும்வி
௪ லைப்பட்டோம்:-நான் உமதுசமுகத்தில் கடாட்
சம்பெற்றதும், இராசாவுக்குப்பிரியமுமுண்டா
னால், என்விண்ணப்பத்தின்படி என் பிராணனு
ம், என் பிரார்த்தனையின்படி என் சனங்களின்
பிராணனும், அளிக்கப்படவேண்டும்: நானும்
என்சனங்களும்அடிமைகளாகவும்வெள்ளாட்டி
களாகவும்விலைப்பட்டோமாகில் சத்துருஇராசா
வுக்குண்டாகும்நஷ்டத்துக்கு உத்தரவாதம்பண்
ணக்கூடாதிருந்தாலும்நான்பேசாமலிருப்பேன்
என்றாள்.
அப்பொழுது அகஷ்வேரோஷ் இராசா எஸ் ௫
தரை நோக்கி, இப்படிச் செய்ய மனந்துணிந்த
வன் யாவன்; அவன் எங்கேயென்றுகேட்க,—
அந்தப் பகைஞனும், சத்துருவும், துஷ்டனுமா ௬
னவன் இந்த ஆமான் தான் என்றாள். அதினால்
இராசாவுக்கு முன்பாகவும் இராசாத்திக்கு முன்
பாகவும் ஆமான் திகிலடைந்தான்.
இராசா திராட்சரசவிருந்தைவிட்டு, கோபத் ௭
துடன் எழுந்து, அரமனைச்சிங்காரவனத்துக்குப்
போனான்: ஆமான் தனக்கு இராசாவினாலேதீங்
குவருமென்றுகண்டு நிச்சயித்தபடியால், எஸ்தர்
இராசாத்தியிடத்தில் தன் பிராணனைக் காக்கும்
பொருட்டுப்பிரார்த்திக்கும்படிநின்றான்.—பின் ௮
பு இராசா, அரமனைச்சிங்காரவனத்தினின்று தி
ராட்சரசவிருந்துசெய்த ஸ்தானத்திற்குத்திரும்பி
வருகையில், எஸ்தர் இருந்தசயனத்தில் ஆமான்
விழுந்துகிடந்தான். அதினால் இராசா, அரமனை
யில் என்சமுகத்தில் இராசாத்தியையும் பலாற்கா
ரஞ்செய்வானோ என்றான்; இந்தவாக்கு இராசாவி
ன்வாயினின்று புறப்பட ஆமானின் முகத்தை
மூடிப்போட்டார்கள்.—அண்ணகரில் ஒருவனா ௯
கிய அர்போனாஇராசாவைநோக்கி,இராசாவினி
மித்தம் நன்மைபேசிய மோர்திகாயிக்கு ஆமான்
செய்த ஐம்பதுமுழ உயரமுள்ள ஒரு தூக்குமரம்
ஆமான்வீட்டிலேநிற்கின்றதென்றான்.-அப்பொ ௰
ழுது இராசா, அதில் அவனைத்தூக்கிவிடுங்க
ளென்றான். அப்படியே அவர்கள்ஆமானைமோர்
திகாயிக்கு இவன் ஆயத்தப்படுத்தியிருந்த தூக்கு
மரத்திலே தூக்கிப்போட்டார்கள். பின்பு இரா
சாவின்கோபந் தணிந்தது.

## ௮. அதிகாரம்.

௧. மோர்திகாயி உன்னதம்பெறல்:௩.ஆமான் எழு
திய கடிதத்தை வேறுபடுத்தும்படி அந்நியதே
சத்தாருக்கு அனுப்பப்பிரார்த்தித்தல்: ௭. சத்து
ருக்களை எதிர்த்து யுத்தஞ்செய்யும்படி இராசா
யூதர்களுக்கு உத்தரவுகொடுத்தல்: ௰௫. மோர்தி
காயி உன்னதம் பெற்றதினால் யூதர் மகிழ்தல்.

அன்றைத்தினம் அகஷ்வேரோஷ் இராசா,எஸ் ௧
தராகிய இராசாத்திக்கு யூதரின்சத்துருவாகிய ஆ
மானின்வீட்டைக்கொடுத்தான். மோர்திகாயித
னக்கு இன்ன உறவினனென்று எஸ்தர்தெரிவித்
திருந்தபடியால்,அவன் இராசாவின் சமுகத்தில்
வந்தான்.—இராசா ஆமானிடத்தில் தான்வாங் ௨
கினமோதிரத்தைமோர்திகாயிக்குக்கொடுத்தான்.
எஸ்தர்மோர்திகாயியை ஆமானின் பரிவாரத்துக்
கு அதிகாரியாக ஏற்படுத்தினாள்.
எஸ்தர், இராசாவின் சமுகத்தில் திரும்பவும் ௩
பிரார்த்தித்து, அவன்பாதத்தில்விழுந்து கண்ணீர்

(௰௨) ௨.நாளா.௨௬.௨௰. ௨.சாமு.௰௫.௩௰. எரே.௰௪.௩,௪.—(௭. அதி. ௮) யோபு.௯.௨௪. (௯) அதி.௫.௰௪.சங்.௭.
௰௬. நீதி.௰௧.௫,௬. (௰) சங்.௩௭.௩௫,௩௬. தானி.௬.௨௪.—(௮. அதி.)

விட்டு, அகாகியனாகிய ஆமானின் தீங்கையும், அ
வன் யூதருக்குவிரோதமாகச்சொல்லிய துராலோ
சனையையும் அவமாக்கும்படி அவனைவேண்டிக்
௪ கொண்டாள்.—அப்பொழுது இராசாபொற்செங்
கோலை எஸ்தருக்கு நேராகநீட்ட, எஸ்தர் எழுந்
௫ து, இராசாவின் சமுகத்தில்நின்று,—நான் எப்
படி என்சனங்களுக்கு நேரிடுந் தீமையைக் கா
ணச்சகிப்பேன்; நான் எப்படி என்குடும்பத்தா
௬ ருடைய நாசத்தைக்காணச் சகிப்பேன்.—இரா
சாவுக்குப்பிரியமாகியும், அவர்சமுகத்தில் எனக்
குக்கடாட்சங் கிடைத்தும், இராசாவின்சமுகத்
தில் இந்தக்காரியம் நியாயமுள்ளதாகியும், நான்
அவர் கண்ணுக்குப் பிரியமுள்ளவளாகியுமிருந்
தால்; இராசாவின் சகலஉபராச்சியங்களிலுமுள்
ள யூதர்களை நாசப்படுத்துவதற்கு, அமீதாதாவின்
புத்திரனாகிய ஆமான் துராலோசனைபண்ணி எழு
தியபத்திரங்கள் வியர்த்தமாகும்பொருட்டு, எழு
தப்படவேண்டும் என்றாள்.
௭ அப்பொழுது அகஷ்வேரோஷ் இராசா எஸ்
தர் இராசாத்தியையும், யூதனாகிய மோர்திகாயி
யையும்நோக்கி, நான் எஸ்தருக்கு ஆமானின்பரி
வாரத்தைக் கொடுத்துவிட்டேன், அவன் யூதர்
மேல் கைகளைவைக்கத் துணிந்தபடியால், அவ
௮ னைத்தூக்குமரத்திலே தூக்கினார்கள்.—நீங்கள் யூ
தர் நிமித்தம் இராசாவின்பேரால் உங்கள் இஷ்
டப்படி ஒருபத்திரமெழுதி, அதற்கு இராசாவின்
முத்திரைமோதிரத்தால் முத்திரையிடுங்கள்: இ
ராசாவின்பேரால் எழுதி, இராசாவின் மோதிர
முத்திரை பதிக்கப்பட்ட எந்தப்பத்திரிகையை
யும் ஒருவனும் வேறுபடுத்தப்படாதென்றான்.—
௯ பின்பு மூன்றுமாதமாகிய சிவான்மாதம் இருபத்
துமூன்றாந்தினத்தில், இராசாவின் இலேககர் அ
ழைக்கப்பட்டபொழுது, மோர்திகாயி கட்டளை
யிட்டயாவற்றின்படிக்கும், இந்தியதொடங்கிக்
கூஷ்தேசம்வரைக்குமுள்ள நூற்றிருபத்தேழு உ
பராச்சியங்களிலுமிருக்கிறயூதருக்கும், பிரதிநி
திகளுக்கும், அதிபதிகளுக்கும், உபராச்சிய அ
திகாரிகளுக்கும், ஒவ்வொரு உபராச்சியத்துக்
கும் அந்தந்த எழுத்திலும், சகல சனங்களுக்கும்
அவரவர் பாஷையிலும், யூதருக்கு அவர்கள் பா
௰ ஷையில் அந்த எழுத்திலும் எழுதப்பட்டது.—அ
வன் அகஷ்வேரோஷ் இராசாவின்பேராலெழு
தி, இராசாவின் மோதிரத்தினாலேமுத்திரையிட்
டு, குதிரையிலேறினவர்களும், கோவேறுகழு
தை, ஒட்டகம், இரமாக்குட்டிகள் என்னும் இ
வைகளில் ஏறினவர்களுமாகிய அஞ்சல்கார
ரிடத்தில், அப்பத்திரங்களைக் கொடுத்தனுப்பி
௰௧ னான்.—அகஷ்வேரோஷ் இராசாவின் சகலஉப
ராச்சியங்களிலும், பன்னிரண்டாமாதமாகிய அ
டார்மாதத்திலே பதின்மூன்றாந்தினமாகிய ஒரே
நாளுக்குள் அந்தந்தநகரத்திலுள்ள யூதர்களனை
௰௨ வருமொன்றாய்க்கூடி,—தங்கள் தங்கள் பிராண
இரட்சிப்பினிமித்தம் நிற்கவும், தங்களை விரோ
திக்கும் எந்தச்சாதியையும், எந்த உபராச்சியத்
தின்சனங்களையும், பிள்ளைகள் ஸ்திரிகள்யாவ
ரையும் சங்கரித்து, வதைத்து, நாசமாக்கவும், அ
வர்கள்பொருள்களைக்கொள்ளையிடவும், இராசா
உத்தரவுகொடுக்கிறாரென்று அவைகளில்எழுதப்
பட்டது.—அன்றைத்தினம் யூதர்கள் தங்கள் சத் ௰௩
துருக்களிடத்திலே பழிவாங்கும்படி ஆயத்தமா
யிருக்கவேண்டுமென்று, ஒவ்வொரு உபராச்சி
யத்திலுங்கொடுக்கப்படும் கட்டளைப் பத்திரத்
தின்பிரதியும் சகலசனங்களுக்கும் பிரசித்தமாக்
கப்பட்டது.—கோவேறுகழுதைகளிலும் ஒட்ட ௰௪
கங்களிலும் ஏறின அஞ்சல்காரர், இராசாவின்
கட்டளையினால் ஏவப்பட்டு, துரிதமாய்ப் போ
னார்கள். கட்டளை ஷூஷானென்னும் இராசதா
னியில்கொடுக்கப்பட்டது.
பின்புமோர்திகாயி, நீலம்வெள்ளையென்னும் ௰௫
வருணங்களையுடைய இராசவஸ்திரத்தை உடுத்
து, பெரியபொற்கிரீடத்தைத்தரித்து, தூமிரவரு
ணத்தையுடைய மெல்லியநூலினாற்செய்தவஸ்தி
ரம்போர்த்து, இராசசமுகத்தினின்று புறப்பட்
டான்: அதினால் ஷூஷானென்னும் இராசதானி
ஆனந்தங்கொண்டு களிப்படைந்தது.—யூதர்பிர ௰௬
காசமும், ஆனந்தமும், சந்தோஷமும், கனமும
டைந்தார்கள்.—இராசாவின்கட்டளையும் தீர்மா ௰௭
னபத்திரிகையும் பரந்தஒவ்வொரு உபராச்சியத்
திலும், ஒவ்வொருநகரத்திலும், யூதர்சந்தோஷ
மும் ஆனந்தமும்பெற்று, விருந்துசெய்து, சுபதி
னங்கொண்டாடினார்கள். தேசத்துச்சனங்களில்
அநேகர், யூதர்களாலே பயமடைந்தபடியால்யூத
மார்க்கத்தாரானார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. யூதர்சத்துருக்களையும் ஆமானின் பத்துப்புத்தி
ரரையுங்கொலைசெய்தல்: ௰௨. இரண்டாந்தினத்
தில் சத்துருக்களைக்கொன்று ஆமானின்புத்திர
ரைத் தூக்குமரத்திலேதூக்கல்: ௨௰. பூரீம்தினத்
தின் உற்சவத்தை ஏற்படுத்தல்.

இவ்வண்ணமே பன்னிரண்டாமாதமாகிய அ ௧
டார்மாதத்தில், யூதருடைய சத்துருக்கள் அவர்
களைமேற்கொள்வோமென்று எண்ணினதினமா
கிய பதின்மூன்றாந்தினத்தில், இராசாவின் கட்
டளையும் தீர்மானமும் நிறைவேறுஞ் சமயம்வந்
தபொழுது, யூதர்கள் தங்களைப்பகைத்தவர்களை
அரசாளுவதற்கேதுவாய் முடிந்தது;—தங்களுக் ௨
குத்தீங்குசெய்ய வகைதேடினவர்கள்மேலே கை
களைவைக்கும்படி, அகஷ்வேரோஷ்இராசாவின்
உபராச்சியங்கள் எங்குமுள்ள தாங்களிருந்த சக
லநகரங்களிலும் யூதர்கள் ஏகமாய்க்கூடினார்கள்.
சனங்கள் எல்லாரும் யூதர்களைக்குறித்துப் பயம
டைந்ததினால் ஒருவரும் அவர்களை எதிர்க்கவில்
லை.-மோர்திகாயி அரமனையிலேமகத்துவம்பெற்ற ௩
படியால் அவன்கீர்த்தி உபராச்சியங்களெங்கும்
பரம்பிற்று; மோர்திகாயி வரவரமேன்மையுள்ள
வனானான்.—உபராச்சியங்களின் அதிகாரிகளும், ௪

(௰௫) நீதி.௨௯.௨. (௰௬) சங்.௯௭.௰௧. (௰௭) ௧.சாமு.௨௫.௮. சங்.௰௮.௪௩. ஆதி.௩௫.௫. யாத்.௰௫.௰௬. உபா.௨.௨௫.—(௯. அதி.)

பிரதிநிதிகளும், அதிபதிகளும், இராசாவின் ப
ணிவிடைக்காரரும் மோர்திகாயிக்குப் பயந்தப
௩ டியால், யூதருக்குத்துணைநின்றார்கள்.—யூதர்கள்
தங்கள் சத்துருக்கள் எல்லாரையும் கட்கத்தினால்
வெட்டி, வதைத்து, நாசப்படுத்தி, இவ்விதமாய்த்
தங்களைப் பகைத்தவர்களுக்குத் தாங்கள் செய்
௬ ய விரும்பினபடியெல்லாம் செய்தார்கள்.—யூ
தர்கள் ஷூஷானென்னும் இராசதானியில் ஐஞ்
ஞூறுபேரைக்கொன்று, நாசப்படுத்தினார்கள்.—
௭ அமீதாதாவின் புத்திரனும், யூதரின் சத்துருவுமா
௮ ன ஆமானின் புத்திரராகிய,—பர்ஷான்தாத்தா,
௯ தல்போன், அஸ்பாதா—போராதா, அதலியா, அ
௰ ரீதாதா—பர்மஷ்தா, அரீசாய், அரீதாய, வாய்சா
தா என்னும் பத்துப்பேரையுங் கொன்றுபோட்
டார்கள்; ஆனாலும் அவர்கள் இவர்கள் பொரு
௰௧ ளைக்கொள்ளையாடவில்லை.—அத்தினத்திலே ஷூ
ஷானென்னும் இராசதானியிலே கொலையுண்ட
வர்களின் தொகை இராசாவின் சமுகத்தில்
கொண்டுவரப்பட்டது.
௰௨ இராசா எஸ்தர் இராசாத்தியை நோக்கி, யூதர்
கள் ஷூஷானென்னும் இராசதானியில் ஐஞ்ஞூ
று பேரையும், ஆமானின் புத்திரர் பத்துப்பேரை
யுங் கொன்று நாசப்படுத்தினார்கள்; இராசாவின்
மற்ற உபராச்சியங்களிலும் என்னசெய்திருப்
பார்களோ, இன்னும் உன் விண்ணப்பமென்ன,
அதின்படி உனக்கு அளிக்கப்படும். உன் பிரா
ர்த்தனையென்ன, அதின்படி செய்யப்படுமென்
௰௩ றான்.—அப்பொழுது எஸ்தர், இராசாவுக்குப்பி
ரியமானால், இன்றைத்தினத்தின் கட்டளைப்படி
யே நாளைக்குஞ்செய்ய ஷூஷானிலிருக்கிற யூதர்
களுக்குக் கட்டளையிடவேண்டும்; அன்றியும் ஆ
மானின் பத்துப்புத்திரருந் தூக்குமரத்திலே தூக்
௰௪ கப்படவேண்டுமென்றாள்.—அப்படியே செய்
யும்படி இராசாகட்டளையிட்டான்: அந்தக் கட்
டளை ஷூஷானிலேகொடுக்கப்பட்டது; அவர்
கள் ஆமானின் பத்துப்புத்திரரையும் தூக்கிப்
௰௫ போட்டார்கள்.—ஷூஷானிலிருந்த யூதர்கள் அ
டார்மாதம் பதினாலாந் தினத்திலும் ஏகமாய்க்கூ
டி, அன்றைக்கு ஷூஷானிலே முந்நூறுபேரைக்
கொன்றார்கள்; ஆகிலும் இவர்கள் அவர்கள் பொ
௰௬ ருளைக்கொள்ளையிடவில்லை.—இதற்குள்ளாக இ
ராசாவின் உபராச்சியங்களிலிருந்த மற்ற யூதர்
கள் ஒருமிக்கக்கூடி, தங்கள் பிராண இரட்சிப்
பின்பொருட்டு எதிர்த்துநின்று, தங்கள் சத்துருக்
களுக்கு நீங்கி இளைப்பாறி, தங்கள் பகைஞரில்
எழுபத்தையாயிரம்பேரைக் கொன்றார்கள்; ஆனா
லும் அவர்கள்பொருளைக் கொள்ளையிடவில்லை.-
௰௭ இப்படி அடார்மாதம் பதின்மூன்றாந்தினம்செல்
ல, பதினாலாந்தினத்தில் அவர்கள் இளைப்பாறி,
ஆனந்தத்துடன் விருந்துசெய்கிறதற்கு அந்த நா
௰௮ ளை ஏற்படுத்தினார்கள்.—ஷூஷானிலிருந்த யூதர்க
ளோ, பதின்மூன்றாந் தினத்திலும் பதினாலாந்தி
னத்திலும் ஏகமாய்க்கூடி, பதினைந்தாந்தினத்தில்
இளைப்பாறி, ஆனந்தத்துடன்விருந்துசெய்கிறதற்
கு அந்த நாளை ஏற்படுத்தினார்கள்.—ஆதலால் ம ௰௯
தில் இல்லாதபட்டணங்களில்வசிக்கிற கிராமத்
தாராகிய யூதர்கள், அடார்மாதம்பதினாலாந்தினத்
தில் ஆனந்தத்துடன்விருந்துசெய்து, சுபதினங்
கொண்டாடி, ஒருவருக்கொருவர் காணிக்கைக
ளை அனுப்பினார்கள்.
மோர்திகாயிஇந்தச்சங்கதிகளை எழுதி, அகஷ் ௨௰
வேரோஷ் இராசாவின் சகல உபராச்சியங்களி
லும் சமீபத்திலும் தூரத்திலுமுள்ள எல்லா யூ
தர்களுக்கும்,—தங்கள் சத்துருக்களுக்கு விலகி ௨௧
இளைப்பாறுதலை அடைந்ததினங்களாகவும், துக்
கம்சந்தோஷமாய் மாறினமாதமாகவும், அழுகை
நீங்கினசுபதினமாகவும், வருஷந்தோறும்அடார்
மாதத்தின் பதினாலாந்தினத்தையும் அந்தமாதத்
தின்பதினைந்தாந்தினத்தையும் ஆசரிக்கிறதற்காக
வும்;—அத்தினங்களில் விருந்துசெய்து, சந்தோ ௨௨
ஷமாய் ஒருவருக்கொருவர் காணிக்கைகளை அ
னுப்பி, தரித்திரருக்குத்தானங்களைச் செய்கிறதற்
காகவும், அவர்களுக்குள்இதைஸ்தாபிக்கும்பொ
ருட்டு, யூதர்களுக்கு நிருபங்களையனுப்பினான்.-
அமீதாதாவின் புத்திரனும், அகாகியனும், எல்லா ௨௩
யூதருக்குஞ்சத்துருவுமாகிய ஆமான், யூதர்களைநா
சப்படுத்தும்படி அவர்களுக்கு விரோதமாய்த்து
ராலோசனைபண்ணி, அவர்களைச்சங்கரித்துநருக்
கும்படி பூரென்னுஞ்சீட்டுப்போட்டான்.—எஸ் ௨௪
தர் இராசசமுகத்தை யடைந்தபொழுது அவன்,
யூதர்களுக்கு விரோதமாய்ச்செய்த அவனுடைய
துராலோசனை அவன்தலையிலே திரும்பவேண்டு
மென்றும், அவனும்அவன்புத்திரரும் தூக்குமரத்
திலே தூக்கப்படவேண்டுமென்றும் நிருபங்க
ளைக்கொண்டுகட்டளையிட்டான்.—அதினால் அ ௨௫
வர்கள் பூரென்னும்பெயர்பற்றி அத்தினங்களுக்
குப்பூரீம் என்றுபெயரிட்டார்கள். அன்றியும் அ
வர்கள் அந்தப்பத்திரத்தின் சகல வாக்குகளினி
மித்தமும், இந்தக்காரியத்தைக்குறித்துத்தாங்கள்
கண்டவைகளும் தங்களுக்கு நேரிட்டவைகளு
மானவைகளினிமித்தமும்,—பத்திரிகையின்படி ௨௬
க்கு, வருஷந்தோறும்நியமிக்கப்பட்டசமயத்தில்
தாங்களும், தங்கள்சந்ததியாரும், தங்கள்மார்க்கத்
திலேசேர்ந்தயாவரும், இரண்டுநாள்களைத்தவறா
தபடி ஆசரிக்கவேண்டுமென்றும்,—இந்தத்தினங் ௨௭
கள், எந்தத்தலைமுறையிலும், எந்தவமிசத்திலும்,
எந்தஉபராச்சியத்திலும், எந்தநகரத்திலும்நினைந்
து ஆசரிக்கப்படவேண்டுமென்றும்; இந்தப்பூரீம்
என்னுந்தினங்கள்ஒழிந்துபோகலாகாதென்றும்;
அவைகளின் ஞாபகம் அவர்கள் வமிசத்தினின்
று அழிந்துபோகலாகாதென்றும்; யூதர்கள் நிரு
பணம்பண்ணி, தங்கள்மேற் கடனை ஏற்றினார்
கள்.—யூதர்கள் தாங்கள்ஆரம்பித்தபடிக்கும், தங் ௨௮
களுக்குமோர்திகாயி எழுதியபடிக்கும் செய்ய
அங்கிகரித்தார்கள்.—அபிகயிலின் புத்திரியாகி ௨௯
யஎஸ்தர் இராசாத்தியும், யூதனாகிய மோர்திகாயி

(௰௮) வச.௰௧,௰௫. (௰௯) உபா.௰௬.௰௧,௰௪. (௨௧) சங்.௩௰.௰௧. (௨௪) சங்.௭.௰௬. (௨௬) ஏசா.௫௬.௩,௬. சக.௨.௰௧. (௨௯) அதி.௨.௰௫. அதி.௮.௰.

யும்பூரீம்தினத்தைப்பற்றும் இரண்டாம்பத்திரத்
தை ஸ்திரப்படுத்தும்பொருட்டு, சம்பூரண அதி
௩௰ காரத்துடன் எழுதினார்கள்.—யூதனாகிய மோர்தி
காயியும் எஸ்தர் இராசாத்தியும் அவர்களுக்குக்
கட்டளையிட்டபடிக்கும், உபவாசங்களுக்கும்
ஓலத்துக்குமேற்ற காரியங்களைக்குறித்துத் தீர்மா
னித்தபடிக்கும் இந்தப்பூரீம்தினங்களை நியமித்த
௩௧ காலங்களிலே ஸ்திரப்படுத்தும்பொருட்டு,—அ
வன் அகஷ்வேரோஷ் இராச்சியத்தைச்சேர்ந்த
நூற்றிருபத்தேழு உபராச்சியங்களிலுள்ளசமஸ்த
யூதருக்கும், சமாதானமும் சத்தியமுமானவாக்கி
௩௨ யங்களையுடையநிருபங்களையனுப்பினான்.—எஸ்
தரின்கட்டளையினாலே பூரீமின்காரியங்கள்நிலை
கொண்டன; அதுபுத்தகத்திலே பதிந்திருந்தது.

## ௰. அதிகாரம்.

௧. அகஷ்வேரோஷ் இராசாவின் மகிமையையும்
மோர்திகாயியின்உன்னதத்தையும்வருணித்தல்.

அந்தஅகஷ்வேரோஷ்இராசா, தேசத்திலும் ச ௧
முத்திரத்திலுள்ள தீவுகளிலும் இறையேற்படுத்
தினான்.—அவனுடைய பராக்கிரமமும், வல்ல ௨
மையான சகல கிரியைகளும், இராசா உன்ன
தப்படுத்தின மோர்திகாயினுடைய மகத்துவவி
ருத்தாந்தமும், மேதிய, பாரஸ்என்னுந் தேசங்க
ளின்இராசாக்களுடையசரித்திரபுத்தகத்தில் அல்
லவா எழுதியிருக்கின்றன.—யூதனாகிய மோர்தி ௩
காயி, அகஷ்வேரோஷ் இராசாவின்பிரதான மந்
திரியும், யூதர்களுக்குள்ளே சிரேஷ்டனும், தன்
சகோதரருக்குள்அங்கிகரிக்கப்பட்டவனும்,தன்
சனங்களுக்குச்செல்வத்தைநாடி,தன்வமிசத்தார்
யாவருக்கும் சுபவாக்குகளைச் சொல்லுகிறவனு
மானான்.

(௩௰) அதி.௪.௩,௰௫. (௩௧) அதி.௧.௧.—(௰. அதி. ௧.) சங்.௭௨.௰. ஏசா.௨௪.௰௫. (௩) ஆதி.௪௧.௪௰. ௨.நாளா.௨௮.
௭. நெகி.௨.௰. சங்.௱௨௨.௮,௯.

# யோபுடைய சரித்திர புத்தகம்.

## ௧. அதிகாரம்.

*௧. யோபின் செல்வத்தையும் பத்தியையுங் குறித்தல்: ௬. சாத்தான் யோபைச்சோதிக்க விடைபெறல்: ௰௩. யோபு ஆபத்தைச்சகித்துப் புலம்பியுந் தேவனைத்துதித்தல்.*

ஊத்சுதேசத்தில்சற்குணனும், சன்மார்க்கனும்,
தேவனுக்குப்பயந்து தீமையை விலக்குகிறவ
னுமாகிய யோபென்னும் பெயர்கொண்ட ஒரு
௨ மனுஷனிருந்தான்.—அவனுக்கு ஏழுபுத்திரரும்
௩ மூன்று புத்திரிகளும் பிறந்தார்கள்.—அவனுக்கு
மிருகசீவன்களாகிய ஏழாயிரம் ஆடுகளும், மூ
வாயிரம் ஒட்டகங்களும், ஐஞ்ஞூறு ஏர்மாடுக
ளும்,ஐஞ்ஞூறுபெண்கழுதைகளும்,மிகவும் அதி
கபரிசனமுமிருந்தன; இப்படி அவன் கீழ்த்தி
சையிலுள்ளஎல்லாமனுஷரிலும்பெரியவனாயிரு
௪ ந்தான்.—அவன் புத்திரர், அவனவன் தன் தன்
நாளில்தன்தன்வீட்டிலேவிருந்துசெய்து,தங்கள்
சகோதரிகள்மூவரையுந்தங்களுடன்போசனபா
னம்பண்ணும்படி ஆளனுப்பி அழைப்பிப்பார்
௫ கள்.—அவர்களுடையவிருந்துநாள் முறைமுடிகி
றபொழுது, யோபு, என் புத்திரர்பாவஞ்செய்து,
தங்கள்சிந்தையில்தேவனைத்தூஷிக்கவுங்கூடும்
என்றுசொல்லி, ஆளனுப்பி அவர்களைப்பரிசுத்த
ஞ்செய்து, அதிகாலையிலெழுந்து, அவர்களெல்
லாருடையதொகைக்குமேற்கத் தகனபலிகளை
யிடுவான். யோபு எப்பொழுதும் இப்படிச்செய்
துவருவான்.
௬ ஒருதினத்திலே தேவபுத்திரர் யெகோவா
வின் சமுகத்தில் வந்தபொழுது, சாத்தானும் அ
௭ வர்களுக்குள்ளே வந்தான்.—யெகோவா சாத்
தானைநோக்கி, நீ எங்கேயிருந்து வருகிறாயென்
றுகேட்க, சாத்தான் யெகோவாவுக்கு உத்
தரமாக, பூமியில் உலாவி அதில் அங்குமிங்குந்
௮ திரிந்து வருகிறேனென்றான்.—யெகோவா
சாத்தானுடனே, என் தாசனாகிய யோபின்மேல்
சிந்தைவைத்தாயா,சற்குணனும்சன்மார்க்கனும்,
தேவனுக்குப்பயந்து தீமையை விலக்குகிற
வனுமாகிய அவனைப்போலப் பூமியில் ஒருவனு
௯ மில்லையென்றார்.—அதற்குச்சாத்தான், யெகோ
வாவை நோக்கி, யோபு பலன் குறியாமல் தே
௰ வனுக்குப்பயப்படுகிறானா.—நீர் அவனையும்,
அவன் பரிசனத்தையும், அவனுக்குண்டானயா
வற்றையும் சுற்றிவேலியடைத்தீரல்லவா, நீர் அ
வன் கைத்தொழிலைப் பலிக்கப்பண்ணினீர்; அ
வன் மிருகசீவன்கள் தேசத்திலே பெருகின.—
நீர் உமதுகையை நீட்டி, அவனுக்குள்ள யாவற் ௰௧
றையுந் தொட்டால், அவன் உமது சமுகத்தில்
உம்மைத் தூஷிப்பானென்றான்.—யெகோவா ௰௨
சாத்தானைநோக்கி, கேள், அவனுக்குள்ளயாவும்
உன்கையிலிருக்கின்றன; அவன் மேல்மாத்திரம்
கை வைக்கவேண்டாமென்றார். அப்பொழுது
சாத்தான் யெகோவாவின்சமுகத்தைவிட்டுப்
புறப்பட்டுப்போனான்.
பின்பு ஒருதினத்தில் அவனுடைய புத்திரரும் ௰௩
புத்திரிகளும் மூத்தசகோதரன்வீட்டிலே போச
னஞ்செய்து, திராட்சரசம் பானம்பண்ணுகிற
பொழுது,—ஒரு ஆள் யோபினிடத்தில் வந்து, ௰௪
எருதுகள் உழுகிறபொழுது, கழுதைகள் அவை
களின் சமீபத்தில் மேய்ந்துகொண்டிருந்தன:—
சபேயர் அவைகள்மேற்பாய்ந்து, அவைகளைக் ௰௫
கவர்ந்துகொண்டு,பணிவிடைக்காரரைக்கட்கத்
தின் வாயினால் கொலைசெய்தார்கள்; நான் ஒரு
வன் மாத்திரந் தப்பி உமக்குச் சொல்லவந்தே
னென்றான்.—இவன் இப்படிப்பேசிக்கொண் ௰௬
டிருக்கையில், வேறொருவன்வந்து, ஆகாயத்தி
னின்று தேவாக்கினிவிழுந்து, ஆடுகளையும், ப
ணிவிடைக்காரரையுஞ் சுட்டெரித்துப் பட்சித்
தது; நான்மாத்திரந்தப்பி உமக்கிதைத்தெரிவிக்
க வந்தேனென்றான்.—இவன் இப்படிப்பேசிக் ௰௭
கொண்டிருக்கையில், வேறொருவன்வந்து, கல்
தேயர் மூன்று தளங்களைவகுத்து, ஒட்டகங்கள்
மேற்பாய்ந்து, அவைகளைக்கவர்ந்துகொண்டு, ப
ணிவிடைக்காரரைக் கட்கத்தின்வாயினால் கொ
லைசெய்தார்கள்; நான்மாத்திரந்தப்பிஉமக்கிதைத்
தெரிவிக்க வந்தேனென்றான்.—இவன் பேசிக் ௰௮
கொண்டிருக்கையில், இன்னும் ஒருவன்வந்து,
உம்முடையபுத்திரரும்புத்திரிகளும்தங்கள்மூத்
த சகோதரனுடைய வீட்டிலே போசனம்பண்
ணித்திராட்சரசம் பானம்பண்ணுகிறபொழுது,-
வனத்தின்வழியாய்ப் பெருங்காற்றுவந்து, வீட் ௰௯
டின்நாலுகோடிகளிலும்அடிக்க, அதுபிள்ளைகள்
மேல் விழுந்ததினால், அவர்கள் இறந்துபோனார்க
ள்; நான் ஒருவன் மாத்திரம்தப்பி உமக்கிதைத்தெ
ரிவிக்க வந்தேனென்றான்.—அப்பொழுது யோபு ௨௰
எழுந்து, தன் வஸ்திரத்தைக்கிழித்து, தலையைச்
சிரைப்பித்து, தரையில் விழுந்து, நமஸ்கரித்து,-
நான் என்மாதாவின்கருப்பத்தினின்று நிருவாணி ௨௧
யாய் வந்தேன், நிருவாணியாய் அவ்விடத்திற்குத்
திரும்பிப்போவேன்: யெகோவா தந்தார், யெ
கோவா எடுத்தார்; யெகோவாவின் நாமந்

(௧. அதி. ௧.) ஆதி.௨௨.௨௰,௨௧. எசேக்.௰௪.௰௪. யாக்.௫.௰௧. ஆதி.௬.௯. அதி.௨.௩. நீதி.௮.௰௩. (௫) ஆதி.௮.௨௰. ௧.இரா.௨௧.௰,௰௩. (௬) அதி.௨.௧. ௧.இரா.௨௨.௰௯. ௧.நாளா.௨௧.௧. வெளி.௰௨.௯,௰. (௭) மத்.௰௨.௪௩. ௧.பேதுரு.௫.௮. (௰) சங்.௩௪.௭. ஏசா.௫.௨. சங்.௱௨௮.௧,௨. நீதி.௰.௨௨. (௰௧) அதி.௰௯.௨௧. ஏசா.௮.௨௧. மல்.௩.௰௩,௰௪. (௰௩) பிர.௯.௰௨. (௰௮) வச.௪,௰௩. (௨௰) ஆதி.௩௭.௨௯. எஸ்றா.௯.௩. ௧.பேதுரு.௫.௬. (௨௧) சங்.௪௯.௰௭. பிர.௫.௰௫, ௰௬. ௧.தீமோ.௬.௭. யாக்.௧.௰௭. மத்.௨௰.௰௫. எபே.௫.௨௰. ௧.தெச.௫.௰௮.

௨௨ துதிக்கப்படக்கடவதென்றான்.—இவையெல்லா
வற்றிலும்யோபு பாவஞ்செய்யவுமில்லை, தேவ
னுக்குத் தகாததை எண்ணவுமில்லை.

## ௨. அதிகாரம்.

௧. சாத்தான் இரண்டாந் தரம் விடைபெறல்: ௭. யோபைத்திரும்பவும் துயரப்படுத்தல்: ௯. யோபு தன்ஸ்திரியைக்கடிந்துகொள்ளல்: ௰௧. யோபைத்தேற்றும்படி சிநேகிதர் மூவரும் வரல்.

பின்னும்ஒருதினத்தில் தேவ புத்திரர் யெகோ
வாவின் சமுகத்தில் வந்த பொழுது, சாத்தானும்
அவர்களுக்குள்ளே யெகோவாவின் சமுகத்
௨ தில் வந்தான்.—அப்பொழுது யெகோவா சாத்
தானை நோக்கி, நீ எங்கிருந்து வருகிறாயென்று
கேட்க, சாத்தான் யெகோவாவுக்கு உத்தர
மாக, பூமியில் உலாவி, அதில் அங்குமிங்குந்தி
௩ ரிந்துவருகிறேனென்றான்.—யெகோவா சாத்
தானுடன், என் தாசனாகிய யோபின்மேல் சிந்
தைவைத்தாயா, சற்குணனும், சன்மார்க்கனும்,
தேவனுக்குப்பயந்து தீமையைவிலக்குகிறவனு
மாகிய அவனைப்போலப் பூமியில் ஒருவனுமில்
லை. காரணமின்றி அவனை நாசப்படுத்தும்படி
என்னை ஏவினாய், ஆகிலும் இதுவரைக்கும் அ
வன் தன்நேர்மையைவிடாமல் நிற்கிறானென்று
௪ சொன்னார்.—சாத்தான் யெகோவாவுக்குத்தர
மாக, தோலுக்காகத்தோலையும், ஒருவன் தன் பி
ராணனிமித்தம் தனக்குண்டான யாவற்றையுங்
௫ கொடுப்பானே.—எப்படியும் நீர் இப்பொழுது
உமதுகையைநீட்டி, அவன் எலும்பையும் மாமி
சத்தையுந்தொட்டால், அவன் உமதுசமுகத்தில்
௬ உம்மைத்தூஷிப்பானென்றான்.—யெகோவா
சாத்தானுடனே, பார், அவன் உன்கையிலிருக்
கிறான்; அவன் பிராணனைமாத்திரந் தப்பவிடு
என்று சொன்னார்.
௭ பின்பு சாத்தான் யெகோவாவின் சமுகத்
தைவிட்டுப் புறப்பட்டுப்போய், உள்ளங்கால்
தொடங்கி உச்சந்தலைவரைக்கும் யோபைக்கொ
௮ டிய பருக்களினாலே வாதித்தான்.—அவன் ஒரு
ஓட்டை எடுத்துத் தன்னைச் சுறண்டிக்கொண்டு
சாம்பலிலிருந்தான்.
௯ அப்பொழுது அவன்மனைவி அவனைநோக்கி,
நீர்இன்னும்உமதுநேர்மையில்நிலைத்திருக்கிறீரா;
தேவனைத்தூஷித்து, மரித்துவிட்டால்நலமென்
௰ றாள்.—அவன் அவளைநோக்கி, நீ பேதைமையுள்
ளஸ்திரிகளில் ஒருத்தி பேசுகிறதுபோலப் பேசு
கிறாய். நாம் தேவனுடைய கையினின்று நன்
மையைமாத்திரம் பெறுவோமா, தீமையையும்
பெறவேண்டாமாவென்றான். இவைகளெல்லா
வற்றிலும் யோபுதன்உதட்டினாலும்பாவஞ்செய்
யவில்லை.

அப்பொழுது தேமானியனாகிய எலீபாஸ், சூ ௰௧
கியனாகிய பில்தாத், நாமாத்தியனாகிய சோபா
ரென்னும்யோபின் சிநேகிதர் மூவர், அவனுக்கு
நேரிட்ட தீமைகள்யாவையுங் கேள்விப்பட்டு,
அவனுடன் துக்கங்கொண்டாடவும் அவனைத்
தேற்றவும்வரும்படி ஒருவரோடொருவர் தீர்மா
னித்திருந்ததினால், தங்கள் ஸ்தானங்களினின்று
புறப்பட்டுவந்தார்கள்.—அவர்கள் தூரத்தில் தங் ௰௨
கள்கண்களை ஏறிட்டுப்பார்த்தபொழுது, அவனை
அறியாததினால்குரலிட்டழுது, ஒவ்வொருவருந்
தங்கள் வஸ்திரங்களைக் கிழித்து, வானத்தைப்
பார்த்து, தங்கள் தலைகளின்மேல் புழுதியைத்
தூவிக்கொண்டு,—நிலத்தில் அவனுடன் ஏழுபக ௰௩
லும் ஏழுஇரவும் இருந்தார்கள், அவன் துக்கம்
மகா மிகுதியாயிருக்கக்கண்டபடியால், அவனு
டன் ஒருவனும் ஒருசொல்லுஞ்சொல்லவில்லை.

## ௩. அதிகாரம்.

௧. யோபுதன்சென்மதினத்தைச்சபித்தல்: ௰௩. மரணத்தைவிரும்பல்: ௨௰. சீவிப்பதைவெறுத்தல்.

அதன் பின்பு யோபு தன்வாயைத்திறந்து, தன் ௧
சென்மதினத்தைச் சபிக்கும்பொருட்டு,—நான் ௨
பிறந்த நாளும், புத்திரன் உற்பவித்தானென்று
சொல்லப்பட்ட இரவும்அழியக்கடவன.—அந் ௩
தநாள் என் மாதாவின் கருப்பவாசலை அடைக்க
வுமில்லை, என் கண்ணுக்குத் துக்கத்தை மறைக்
கவுமில்லை.—ஆதலால் அந்தநாள் அந்தகாரமய ௪
மாயிருப்பதாக; தேவன் உயரத்திலிருந்து அ
தைநோக்காதிருப்பாராக, அதின்மேல் ஒளிபிர
காசியாதிருப்பதாக.—அந்தகாரமும் மரண நிழ ௫
லும் அதைமீட்டுக்கொள்ளக்கடவன; மேகம் அ
தை மூடுவதாக; தினத்தின் காரிருள் அதற்குப்
பயங்கரம் வருவிப்பதாக.—அந்த இரவையோ ௬
அந்தகாரம் பிடித்துக்கொள்வதாக; அதுவருஷத்
தின்தினங்களோடுசேராதிருப்பதாக, அதுமாதத்
தின் தொகையில் கணிக்கப்படாதிருப்பதாக.—
அன்றிரவுதனிமையாயிருப்பதாக, அதில் ஆனந் ௭
தத் தொனியுமில்லாதொழிவதாக.—லிவியாதனை ௮
எழுப்பவல்லவர்களின் தினத்தைச் சபிக்கிறவர்
கள், அதைச் சபிப்பார்களாக.—அதின் அஸ்தம ௯
னத்தில் தோன்றிய நட்சத்திரங்கள் இருளக்கட
வன; அத்தினம் ஒளியை எதிர்பார்த்தாலும், அ
தற்கில்லாதொழிவதாக; அது அருணோதயத்தைக்
காணாதிருப்பதாக:—நான் கருப்பத்தைநீங்கின ௰
பொழுது ஏன் மரிக்கவில்லை;நான் கருப்பத்தில்
தோன்றியவுடனே ஏன்என்பிராணன்நீங்கிவிட
வில்லை.-மடியானது என்னைத்தாங்கிக்கொண்ட ௰௧
தென்ன. நான் பாலுண்ண ஸ்தனம் உண்டாயி
ருந்ததென்ன.—அப்படியில்லாதிருந்தால் நான் ௰௨
படுத்துஅமர்ந்திருப்பேன்: நான்நித்திரையடைந்

(௨. அதி. ௩.) அதி.௨௭.௫,௬. அதி.௯.௰௬. (௫) அதி.௰௯.௨௰. (௭) ஏசா.௧.௬. (௮) ௨.சாமு.௰௩.௰௯. அதி.௪௨.௬. எசேக்.௨௭.௩௰. மத்.௰௧.௨௧. (௯) அதி.௨௧.௰௫. (௰) ரோ.௰௨.௰௨. யாக்.௫.௰,௰௧. சங்.௩௯.௧. (௰௧) நீதி.௰௭.௰௭. ஆதி.௩௬.௰௧. எரே.௪௯.௭. ஆதி.௨௫.௨. அதி.௪௨.௰௧. ரோ.௰௨.௰௫. (௰௨) நிகி.௯.௧. புல.௨.௰. எசேக்.௨௭.௩௰. (௰௩) ஆதி.௫௰.௰.—(௩. அதி. ௨.) அதி.௰.௰௮. எரே.௰௫.௰. (௫) அதி.௰.௨௧. சங்.௨௩.௪. எரே.௰௩.௰௬. ஆமோ. ௫.௮. ஆமோ.௮.௰. (௮) எரே.௯.௰௭,௰௮. (௯) அதி.௪௧.௰௮. (௰) அதி.௰.௰௮. (௰௧) ஆதி.௩௰.௩. ஏசா.௬௬.௰௨.

௰௩ து இளைப்பாறுவேன்.—பூமண்டலத்தில் தங்கள்
நிமித்தம் பாழானஸ்தலங்களைக்கட்டின நரபதிக
ளும் மந்திரிகளுமாகிய இவர்களோடாகிலும்,—
௰௪ வெள்ளியினால் தங்கள்வீடுகளை நிரப்பினவர்க
ளும் பொன்னைச்சேகரித்தவர்களுமாகிய பிரபுக
௰௫ ளோடாகிலுந் தங்குவேன்.—அல்லாவிட்டால்
கருப்பஞ்சிதைந்துமறைக்கப்பட்டபிண்டமும்,
ஒளியைக்காணாத சிசுக்களும் போலாவேன்.—
௰௬ அந்த ஸ்தானத்திலே துன்மார்க்கர் கிலேசப்படுத்
துவதைவிட்டுஒய்ந்திருக்கிறார்கள்; அங்கேஇளை
௰௭ த்தோர் இளைப்பாறுவார்கள்.-சிறைப்பட்டோர்
ஏகமாய் அமர்ந்திருப்பார்கள்; உபத்திரவப்படுத்
௰௮ துகிறவனுடைய சத்தத்தைக் கேளார்கள்.—சிறி
யோர்பெரியோர் யாவரும் அங்கே சமமாயிருக்கி
றார்கள்;அடிமை, எசமானனைவிட்டு விடுதலையா
௰௯ வான்.—கிடையாத மரணத்தைவிரும்பி, புதை
பொருளுக்காகத் தோண்டுவதைப்பார்க்கிலும்,
௨௰ அதற்காகத்தோண்டி,-மயானஸ்தானம் அகப்பட்
டால், மகிழ்ந்து மிகவுஞ் சந்தோஷப்பட்டு,—
௨௧ தான் அறியாதவழியில்நடந்து, சுற்றித்தேவனால்
௨௨ வேலியடைக்கப்பட்ட,-துயரமுள்ளவனுக்கு ஒ
ளியும், மனக்கிலேசமடைந்தவனுக்குச் சீவனும்
௨௩ அளிக்கப்படுகிறதென்ன.—எனது ஆகாரத்துட
னே என்பெருமூச்சுவருகின்றது, என் அழுகை
௨௪ நீரைப்போல ஊற்றப்படுகின்றது.-என்னை மிக
வும் பயங்கரப்படுத்தினது எனக்கு நேரிட்டது,
௨௫ நான் அஞ்சினது எனக்கு வந்தது.—எனக்குச்
சௌக்கியமும், இளைப்பாறுதலும், அமைதியுமில்
௨௬ லை; உபத்திரவமே நேரிட்டதென்று,-யோபு வச
னித்துச்சொன்னான்.

# ௪. அதிகாரம்.

௧. யோபுக்கு எலீபாஸ் உத்தரஞ்சொல்லல்: ௰௨. அவன்தன் சொப்பனந் தெரிவித்தல்.

அப்பொழுது தேமானியனாகிய எலீபாஸ் உத்
௨ தரமாக,—நாங்கள் உம்முடன் பேசத்துணிந்தால்
உமக்கு விசனமுண்டாகுமா: பேசாமல் அடக்
௩ கக்கூடியவன்யாவன்.—கேளும், நீர் அநேகருக்
குப்போதித்தீர், இளைத்தகைகளைத் திடப்படுத்தி
௪ னீர்.—விழுகிறவனை உம்முடைய வாக்குகளி
னால்தாங்கினீர், தள்ளாடும் முழங்கால்களைப்பெ
௫ லப்படுத்தினீர்.—ஆகிலும் இப்பொழுது அது உ
மக்குநேரிட்டது, அதினால் நீர்தளர்ந்துபோனீர்;
அது உம்மைத்தொட்டது, நீர் வியாகுலப்படுகி
௬ றீர்.—உமது பயபத்தி அல்லவா, உமது மனத்
திடம், உம்முடைய நன்னெறிகளே, உமது நம்
௭ பிக்கை.—குற்றமில்லாதவன் நாசமடைந்ததுண்
டா, நீதிமான்கள் எங்கேசேதிக்கப்பட்டார்கள்;
௮ இதை நினைத்துப்பாரும்.-அநியாயத்தை உழுது,
தீமையை விதைக்கிறவர்கள் அதையே அறுக்கி
றார்கள். இதை நானே கண்டேன்.—அவர்கள் ௯
தேவனுடையசுவாசத்தினால் அழிந்துபோகிறா
ர்கள், அவருடைய நாசியின் காற்றினால் நாசம
டைகிறார்கள்.—சிங்கத்தின் கருச்சிப்பும், துஷ் ௰
டசிங்கத்தின்தொனியும், பாலசிங்கத்தின் பற்க
ளும், சிதைந்துபோகின்றன.—கிழச்சிங்கம் இ ௰௧
ரையில்லாமல் இறந்துபோகின்றது, சிங்கக்குட்
டிகள் சிதறுண்டுபோகின்றன.-இராத்திரிகாலத் ௰௨
தில் மனுஷர் அயர்ந்து நித்திரைகொள்ளுஞ்சம
யத்தில், சொப்பனத்தில் தோன்றிய சிந்தனைகளி
னால்,—ஒருவாக்கு என்னிடத்தில் அந்தரங்க ௰௩
மாய்த்தோன்றிற்று, அதிற்சிறிது என்செவிக்கே
ற்றிற்று.—என் எல்லா எலும்புகளும்நடுங்கத்தக்க ௰௪
பயமும் நடுக்கமும் என்னைப்பிடித்தன.-என்மு ௰௫
கத்தின்முன் ஒரு ஆவிகடந்தது; அதினால் என்
சருவாங்கரோமமும் சிலிர்த்தன:-அது நின்றது, ௰௬
ஆனாலும் அதின் உருவம் இன்னதென்று நான்
அளவிடவில்லை: ஒரு உருவம் என்கண்களுக்கு
முன்னிருந்தது, அப்பொழுது மிருதுவான ஒலி
யுண்டாக,—அழிகிறமனுஷனா தேவனுடைய ௰௭
சமுகத்தில் நீதியுள்ளவன், ஒருமனுஷன் தன்சி
ருஷ்டிகர்த்தாவின் சமுகத்தில் சுத்தமாயிருக்கமு
டியுமா.—கேள், அவர் தமதுதாசரில் நம்பிக்கை ௰௮
வைப்பதில்லை; அவர், தேவதூதரிடத்திலும்புத்
தியீனத்தைப்பாரிப்பார்:-பொட்டுப்பூச்சிகளால் ௰௯
அரிக்கப்பட்டவர்களும், புழுதியில் அஸ்திபார
மிடப்பட்ட மண்வீடுகளில் வாசமாயிருப்பவர்
களுமானவர்கள் எவ்வளவதிகம்.—விடியற்கால ௨௰
முதல் சாய்ங்காலம் வரைக்கும் நொறுக்கப்படு
வார்கள்: அவர்கள் எந்நாளும் ஒழிந்துபோகிறார்
கள், அதைச்சிந்திப்பார் ஒருவருமில்லை.-அவர் ௨௧
கள்மேன்மை ஒழிவதில்லையா, அவர்கள்ஞானம்
பெறாமல் இறந்துபோகிறார்கள் என்றொருவாக்
கைக்கேட்டேன்.

# ௫. அதிகாரம்.

௧. எலீபாஸ் யோபுக்கு உபதேசித்து ஆலோசனை சொல்லல்: ௰௭ தேவதண்டனையின் பலன் நிருணயித்தல்.

உமக்குத்தரங் கொடுப்பவன் உண்டாவென்று ௧
இப்பொழுது நீர்கூப்பிடும்; பரிசுத்தர்களில் எவ
னைநோக்கிப்பார்ப்பீர்.—குரோதம் மதிகேடனைக் ௨
கொல்லும், பொறாமை புத்தியீனனை நாசப்படுத்
தும்.—மதிகேடன்வேரூன்றியிருப்பதைக்கண்டி ௩
ருக்கிறேன், உடனே அவன் வீட்டைச்சபித்தே
ன்.-அவன்சந்ததியார்வாழ்வுக்குத்தூரமாயிருக்கி ௪
றார்கள், அவர்கள்வாசலிலேநொறுக்கப்பட்டார்
கள், அவர்களைத்தப்புவிப்பார் ஒருவருமில்லை.-
பசியுள்ளவன்அவர்கள்வயலின்விளைவைப்புசித் ௫
தான், முள்ளுள்ள இடத்தினின்று பறித்தான்,

(௰௩) அதி.௰௫.௨௮. சங்.௫௮.௮. (௰௭) அதி.௩௯.௭. (௰௯) வெளி.௯.௬. நீதி.௨.௪. (௨௧) புல.௩.௭. (௨௨) எரே.௨௰.௰௮. ௧.சாமு.௧.௰. நீதி.௩௧.௬.—(௪. அதி. ௩.) ஏசா.௩௫.௩. (௪) ஏசா.௩௫.௩. எபி.௰௨.௰௨. (௬) நீதி.௩.௨௬. (௭) சங்.௩௭.௨௫.(௮) சங்.௭.௰௪. நீதி.௨௨.௮. கலா.௬.௭,௮. (௯) ஏசா.௩௰.௩௩. யாத்.௰௫.௮. ஏசா.௰௧.௪. ௨.தெச.௨.௮. (௰௨) அதி.௩௩.௰௪. (௰௪) அபகூ.௩.௰௬. (௰௮) அதி.௰௫.௰௫. ௨.பேதுரு.௨.௪. (௰௯) அதி.௰௫.௰௬. ௨.கொரி.௫.௧. (௨௰) சங்.௯௰.௫,௬. (௨௧) சங்.௩௯.௰௧.—(௫. அதி. ௩.) சங்.௩௭.௩௫,௩௬. எரே.௰௨.௨,௩. (௪) சங்.௱௰௯.௱௨௫. சங்.௱௯.௰௨.

பறிகாரன் அவர்கள் பொருளை விழுங்கினன்.—
௬ புழுதியினின்று தீமை விளையாமலும், மண்ணி
௭ னின்றுவருத்தந்தோன்றாமலுமிருந்தும்;—அக்கி
னிப்பொறிகள் மேலேபறக்கிறதுபோல, மனு
ஷன்வருத்தம் அனுபவிக்கப்பிறந்திருக்கிறான்.—
௮ ஆதலால் நான் தேவனிடத்தில் வேண்டிக்
கொண்டு, என்வழக்கைத் தேவனுக்கு ஒப்பிக்
௯ கிறதுதகுதி.-அவரோ புத்திக்குஎட்டாத மகாகிரி
யைகளையும், எண்ணிறந்த ஆச்சரியங்களையுஞ்
௰ செய்துவருகிறார்.—தாழ்ந்தோரை உயரத்தில் நி
றுத்தவும், துக்கித்தோர் இரட்சிப்படைந்து உய
௰௧ ரவும்,—அவர் பூமியில் மழையை வருஷிப்பிக்
கிறார், வெளிநிலங்களில் சலத்தை வருவிக்கி
௰௨ றார்;—வஞ்சகர் நினைக்கும் உபாயங்கள் அவர்
கள்கைகளினால்சித்தியாகாதபடி, அவர்களுடை
௰௩ ய எண்ணங்களை விருதாவாக்குகிறார்.—அவர் ஞா
னிகளை அவாகள் தந்திரத்தினால் அகப்படுத்துகி
றார்: மாறுபாடுள்ளவர்களுடைய ஆலோசனை க
௰௪ விழ்க்கப்படுகின்றது.—அவர்கள் பகலிலும் அந்
தகாரத்தைச்சந்தித்து, இரவைப்போல மத்தியா
௰௫ னத்திலுந் தடவித்திரிகிறார்கள்.—அவர் தரித்திர
ரைஅவர்கள்வாயிலிருக்கிறகட்கத்திற்கும்,பராக்
கிரமசாலியின்கைக்கும்விலக்கிஇரட்சிக்கிறார்.—
௰௬ அதினால்தரித்திரருக்கு நம்பிக்கையுண்டு, தீமை
௰௭ யானதுதன்வாயைமூடும்.-கேளும்,தேவன்தண்
டிக்கிறமனுஷன் வாழ்வுடையவன்: ஆதலால்ச
ருவவல்லவருடைய கண்டனையைஅவமதிக்கா
௰௮ திரும்:—அவர்காயப்படுத்திக்' கட்டுவார்: நோ
யுண்டாக்கித் தமதுகைகளினால் சொஸ்தப்படுத்
௰௯ துவார்.—அவர் ஆறுஉபத்திரவங்களினின்றுஉம்
மைவிடுவிப்பார்: ஏழிலும் ஒருதீமையும் உம்மை
௨௰ த்தொடாது.—அவர் பஞ்சகாலத்தில் மரணத்திற்
கும், யுத்தகாலததில் கட்கத்தின் வல்லமைக்கும்
௨௰௧ உம்மைவிலக்கி மீட்பார்.-நாவாகியகசைக்கு நீர்
மறைந்திருப்பீர்: நாசம் நேரிட்டாலும் அதற்கு
௨௰௨ அஞ்சமாட்டீர்.—நாசத்திலும் பஞ்சத்திலும் ந
கைப்பீர்: காட்டுமிருகங்களுக்கும் அஞ்சமாட்
௨௰௩ டீர்.—நீர் வெளியிலுள்ள கற்களோடும் உடன்
படிக்கைசெய்வீர்: காட்டுமிருகங்கள் உமக்கு அ
௨௰௪ மைந்திருக்கும்.—உமதுகூடாரம்வாழ்வடையக்
காண்பீர்; உமது வாசஸ்தானத்தை விசாரிக்கும்
௨௰௫ பொழுது குறைவைக்காணமாட்டீர்.—உமது வ
மிசம் விருத்தியாயிருக்கும், உமது சந்ததியார் பூ
மியின் புல்லுக்கொப்பாவார்களென்பதை அறிந்
௨௰௬ துக்கொள்வீர்.—பருவகாலத்திலே தானியத்தின்
அரிக்கட்டுச்சேர்க்கப்படுவதுபோல, நீர் பூரண
௨௰௭ ஆயுள்பெற்றுப்பிரேதவறையில் சேருவீர்.—கே
ளும், இவைஎல்லாம் நாங்கள் ஆராய்ந்துபார்த்
தோம், காரியம் இப்படித்தான்; நீரும் இதிற்சிந்
தைவைத்து, உமக்குநன்மையுண்டாக இதை உ
ணர்ந்துகொள்ளுமென்றான்.

## ௬. அதிகாரம்.

௧. யோபு தன் துக்கத்தை எலீபாசுக்கு விவரித்
தல்: ௮. திரும்பவும்மரணத்தை அபேட்சித்துப்
பிரார்த்தித்தல்: ௰௪. தன்சிநேகிதருடைய சிநே
கத்தை வற்றின ஓடைக்கு உவமித்தல்.

யோபு, பிரதிஉத்தரமாக,—ஐயோ, என்துக்கத் ௧,௨
தைநிறுப்பதுநலம், என்ஆபத்தைத்தராசிலிடுவது
தகுதி,-அதுகடற்கரைமணலிலும்அதிகபாரமுள் ௩
ளது: ஆகையால் என்வாக்குகள் உள்ளடங்கிப்
போகின்றன.-சருவவல்லவருடைய அம்புகள்எ ௪
னக்குள்ளேதைத்திருக்கின்றன, அவைகளின்வி
ஷம்என்பிராணனைக்குடிக்கின்றது: தேவனால்
வந்தபயங்கரங்கள் என்னை எதிர்த்துஅணிவகுக்
கின்றன.-புல்லுள்ளஇடத்தில் காட்டுக்கழுதைக ௫
தறுமா;தனக்குத்தீனிகிடைத்தால்எருதுஅழுமா;-
சுவையில்லாதபதார்த்தத்தை உப்பில்லாமல்புசிக் ௬
கலாமா;முட்டையின்வெள்ளைக்கருவிலேசுவை
யுண்டா;-எனதுஆத்துமம்முன்அரோசிக்கத்தக்க ௭
வைகள் எனக்குத்துக்கத்தையுண்டாக்கும்ஆகார
மாயின.-ஆ,நான்அபேட்சிப்பதைத்தேவன்அரு ௮
ளி, என்விண்ணப்பத்துக்குச்செவிகொடுத்து,—
தேவன் என்னை நொறுக்கத்திருவுளமாகி, என் ௯
னைச்சேதிக்கத் தமது கையைநீட்டினால் நலமா
கும்.-அப்பொழுது நான் ஆறுதலையடைவேன்; ௰
நான்துக்கத்தில் என்னைக்கடினப்படுத்துவேன்:
பரிசுத்தமுள்ளவருடைய வாக்குகளை நான் மறு
க்கவில்லை; அவர்என்னைத்தப்பவிடாராக.—நான் ௰௧
நம்பியிருக்கிறதற்கு என் பெலன் எம்மாத்திரம்;
என்ஆயுள்நாள் நீடித்திருக்கிறதற்கு என்முடிவே
து.-என்பெலன் கற்களின்பெலனோ; என்மாமிசம் ௰௨
பித்தளையா.—எனக்குள்ளே துணையில்லையா; வி ௰௩
வேகம் என்னைவிட்டு நீங்கிற்று.—மனங்கரைந் ௰௪
தவனுக்குத் தயைசெய்வது சிநேகிதனுக்குக்கட
மை; அவனோ சருவவல்லவருக்குப் பயப்படா
மல் விலகினான்.—என்சகோதரர் சிற்றாறுபோல ௰௫
என்னை வஞ்சகமாய் நடத்தினார்கள்,தாழ்ந்தபூமி
யின் ஆறுகள்போல அவர்கள் அகன்றுபோகிறார்
கள்;—உறைந்தநீரினால் கருமையேகொண்டன, ௰௬
அவைகளில் பனிக்கட்டி உருகியிருக்கின்றது:—
அவைகள் உஷ்டணங்கண்டவுடனே ஒழிந்து ௰௭
போகின்றன: வெப்பமாகும்பொழுது தமது ஸ்
தானத்தைவிட்டு அகன்றுபோகின்றன.—அவை ௰௮
கள் ஓடும் வழிகள் வளைந்துபோகின்றன; அவை

(௭) ஆதி.௩.௰௭,௰௮,௰௯. ௧.கொரி.௰.௰௩. (௯) சங்.௪௰.௫. ரோ.௰௧.௩௩. (௰) அதி.௨௮.௨௬. சங்.௬௫.௯. எரே.௫.௨௪. அப்.௰௪.௰௭. (௰௧) ௧.சாமு.௨.௭.(௰௨)நிகி.௪.௰௫. ஏசா.௮.௰. (௰௩) சங்.௯.௰௫. ௧.கொரி.௩.௰௯.(௰௪)உபா.௨௮.௨௮. ஏசா.௫௯.௰. ஆமோ.௮.௯. (௰௫) சங்.௩௫.௰. (௰௬) ௧.சாமு.௨.௯. சங்.௱௭.௪௨. (௰௭) சங்.௯௪.௰௨. எபி.௰௨.௫. (௰௮) உபா.௩௨.௩௯. ௧.சாமு.௨.௬. ஏசா.௩௰.௨௬. ஓசி.௬.௧. (௰௯) சங்.௩௪.௰௯. சங்.௯௧.௩. ௧.கொரி.௰.௰௩. சங்.௯௧.௰. (௨௰) சங்.௩௩.௰௯. (௨௧) சங்.௩௧.௨௰. (௨௨) ஏசா.௰௧.௯. எசேக்.௩௪.௨௫. (௨௩) சங்.௯௧.௰௨. ஓசி.௨.௰௮. (௨௫) சங்.௱௰௨.௨. சங்.௭௨.௰௬. (௨௬) நீதி.௯.௰௧. (௨௭) சங்.௱௰௧.௨. நீதி.௯.௰௨.—(௬. அதி. ௩.) நீதி.௨௭.௩. (௪) சங்.௩௮.௨. சங்.௮௮.௰௫,௰௬. (௯) ௧.இரா.௰௯.௪.(௰)அப்.௨௰.௨௰. லேவி.௰௯.௨. ஏசா.௫௭.௰௫. ஓசி.௰௧.௯. (௰௪) நீதி.௰௭.௰௭. (௰௫) சங்.௩௮.௰௧. எரே.௰௫.௰௮.

௰௯ கள் அகன்று ஒழிந்துபோகின்றன.—தேமாவின்
வழிப்போக்கர் தேடினார்கள், ஷேபாவின் பிர
யாணக்கூட்டத்தார் அவைகளைக் காத்திருந்தார்
௨௰ கள்.—அவர்கள் நம்பியிருந்தபடியால் வெட்கப்
படுகிறார்கள்; அங்கேசென்றுகலங்குகிறார்கள்.—
௨௧ இப்பொழுது நீங்களும் ஒன்றுக்கும் உதவாமற்
போனீர்கள்; என் ஆபத்தைக்கண்டு பயப்படுகி
௨௨ றீர்கள்.—ஏதாகிலும் கொண்டுவாருங்கள் என்
றேனா; உங்கள்பொருளில்எனக்குவெகுமானஞ்
௨௩ செய்யுங்கள் என்றேனா.—சத்துருவின் கைக்கு
என்னைத் தப்புவியுங்களென்றேனா; பராக்கிரம
சாலியின் கையினின்று என்னை மீட்டுவிடுங்க
௨௪ ளென்றேனா.-எனக்குப்போதகம்பண்ணுங்கள்;
நான் பேசாமலிருப்பேன்: நான் எதிலேதவறிப்
போனேனென்பதை எனக்கு அறியப்படுத்துங்
௨௫ கள்.—தகுந்தசொற்கள் எவ்வளவு உறுதி: உங்கள்
௨௬ கடிந்துகொள்வதில்என்னபலன்.-நீங்கள்வாக்கு
களைக் கற்பித்துக்கடிந்துகொள்ள, திறனற்றவனு
டைய வாக்குகள் காற்றுப்போன்றவைகளா.—
௨௭ நீங்கள் அநாதமானவன்மேல் பாய்கிறீர்கள், உங்
கள் சிநேகிதனிமித்தம் ஒரு குழியைத்தோண்டு
௨௮ கிறீர்கள்.—இப்பொழுது நீங்கள் தயைசெய்து
என்மேல் நோக்கம்வையுங்கள்; அதினால் நான்
பொய்யனோ என்பது உங்களுக்குப் பிரத்தியட்
௨௯ சமாய் விளங்கும்.—திரும்புங்கள், குற்றம்பாரிக்
கவேண்டாம்; திரும்புங்கள், என்நீதி அதில்வி
௩௰ ளங்கும்.—என்நாவிலே தோஷமுண்டா; என்
உண்ணாக்குச்சுவையில்லாதவைகளை அறியாதா.

## ௭. அதிகாரம்.

௧. யோபு மரணத்தை அபேட்சிப்பது நியாயமெ
னச்சாதித்தல்: ௰௨. அவன் தன் சஞ்சலத்தைக்
குறித்துப்பேசல்: ௰௭. தேவ பரிபாலனத்தைக்
குறித்து வசனித்தல்.

பூலோகத்திலே மனுஷனுக்கல்லவா போராட்
டமுண்டு; அவன் ஆயுள்நாள்கள் ஒரு கூலிக்கா
௨ ரனுடையநாள்கள்போலல்லவா.—பணிவிடைக்
காரனொருவன் நிழலை அபேட்சிக்கிறது போல
வும், கூலியாள்தன்வேலையின்பலனை எதிர்பார்க்
௩ கிறதுபோலவும்:—நான் மாயையான மாதங்களை
அனுபவிக்கிறேன், கிலேசமான இராத்திரிகள்
௪ எனக்குக்குறிக்கப்பட்டன.—நான்படுக்கும்சம
யத்தில் எப்பொழுது எழுந்திருப்பேன், இராஎப்
பொழுது விடியுமென்பேன், அருணோதயம் வ
ரைக்கும் புரண்டுபுரண்டு இளைப்படைவேன்.—
௫ புழுக்களினாலும், மண்கட்டியினாலும என்சரீரம்
உடுக்கப்பட்டது; என்தோல் வெடித்து, அருவ
௬ ருப்பாயிருக்கின்றது.—நெய்கிறவன் எறிகிற நா
டாவிலும் என் ஆயுள்நாள்கள் மிகவும்விரைந்து
செல்லுகின்றன, அவை நம்பிக்கையில்லாமல் ஒ
௭ ழிவுபெறும்.—என்பிராணன் சுவாசமென்று நி
னைத்துக்கொள்ளும்: என்கண் இனி ஒருபொழு
துதும் நன்மையைக் காணமாட்டாது.—என்னைக் ௮
காண்கிறவனுடைய கண் இனி என்னைக் காண
மாட்டாது: நீர் உமதுகண்ணை என்மேல்வைக்க,
நான் இராதொழிகிறேன்.—மேகம் சிதைந்து ஒ ௯
ழிந்துபோவதுபோல, மயானஸ்தானத்தில்இறங்
குகிறவன் இனி எழுந்திரான்.—அவன்தன்வீட் ௰
டுக்குத்திரும்பிவரான், அவன்வாசஸ்தானம்பின்
னொருபொழுதும் அவனை அறியாது.—ஆதலால் ௰௧
நான் என்வாயை அடக்கமாட்டேன்; என்மனோ
வேதனையில்பேசுவேன்; என் ஆத்துமத்தின்கசப்
பினாலே புலம்புவேன்.—நீர் என்மேற் காவல் ௰௨
வைக்க நான்சமுத்திரமா, திமிங்கலமா.—என் ௰௩
கட்டில் என்னைத்தேற்றும், என்படுக்கை என்ம
னோதுக்கத்தை ஆற்றுமென்றுசொல்வேனாகில்;—
நீர் சொப்பனங்களினால் என்னைப்பயப்படுத்து ௰௪
கிறீர், தரிசனங்களினால் என்னைத் திடுக்கிடப்
பண்ணுகிறீர்:—ஆதலால் என்னாத்துமம் சீவிக்கிற ௰௫
தைப்பார்க்கிலும் நெருக்குண்டு சாகிறதையும்,
மரணத்தையும் விரும்புகின்றது.—நான் அதை ௰௬
அரோசிக்கிறேன்; நான் சதாகாலமும் சீவிக்கவி
ரும்புகிறதில்லை: என்நாட்கள்மாயமாதலால்; என்
னைவிட்டுவிடும்.—எளிய மனுஷனை நீர் உயர்த் ௰௭
தவும், அவன்மேல் சிந்தைவைக்கவும்,—காலை ௰௮
தோறும் அவனைவிசாரிக்கவும், நிமிஷந்தோறும்
அவனைப்பரீட்சிக்கவும் அவன் எம்மாத்திரம்.—
நான் என் உமிழ்நீர் விழுங்கவிடாமலும், என் ௰௯
னை விலகாமலும் நீர் எவ்வளவுகாலம் இருப்பீர்.-
நான் பாவஞ்செய்தேனே; மனுஷரைக் காப்ப ௨௰
வரே, நான் உமக்குச்செய்யவேண்டியதென்ன,
நான் எனக்குத்தானே ஒரு பாரமாயிருக்க, நீர்
என்னை உமக்கு இலக்காக வைத்ததென்ன.—
நீர் என் அதிக்கிரமத்தை மன்னிக்காமல் இருக் ௨௧
கிறதென்ன, என் பாவத்தை நீக்காமல் விட்ட
தென்ன, நான் அதிசீக்கிரமாய்ப் புழுதியில் மகா
நித்திரையடைவேன்; நீர் உதயத்தில் என்னைத்
தேடுவீர், நானோ இரேனென்றான்.

## ௮. அதிகாரம்.

௧. பில்தாத்யோபுக்கு உத்தரஞ்சொல்லல்: ௮. பா
வமே துன்பத்துக்குக் காரணமென்றுரைத்தல்:
௨௰. யோபின்மேல் குற்றம்பாரித்தல்.

அப்பொழுது ஷூகியனாகிய பில்தாத் உத்தரமா ௧
க,—நீர் எதுவரைக்கும் இவைகளைவசனிப்பீர்; எ ௨
துவரைக்கும் உமது வாய்மொழிகள் உரத்தகாற்
றைப்போலிருக்கும்.—தேவன் நியாயத்தைப் ௩
புரட்டுவாரா; சருவவல்லவர்நீதியைப்புரட்டுவா
ரா.—உம்முடையபிள்ளைகள் அவருக்குவிரோத ௪
மாய்ப் பாவஞ்செய்திருந்தாலும் அவர்களுடைய
அதிக்கிரமத்தினிமித்தம்அவர்களை அவர்கைவிட்
டாலும்;—நீர் சாக்கிரதையோடே தேவனைத்தே ௫

(௨௰) எரே.௰௪.௩. (௨௧) அதி.௰௩.௪. சங்.௩௮.௰௧. (௨௭) சங்.௫௭.௬. (௨௯) அதி.௰௭.௰.—(௭. அதி.௧.) அதி.௰௪.
௫,௰௩,௰௪. சங்.௩௯.௪.(௩)அதி.௨௯.௨. (௪) உபா.௨௮.௬௭. (௫) ஏசா.௰௪.௰௧. (௬) சங்.௯௰.௬. சங்.௱௩.௰௫. ஏசா.
௩௮.௰௨. யாக்.௪.௰௪. (௭) சங்.௭௮.௩௯. (௮) அதி.௨௰.௯. (௯) ௨.சாமு.௰௨.௨௩. (௰) அதி.௮.௰௮. சங்.௱௩.௰௬.
(௰௧) சங்.௩௯.௧,௯. ௧.சாமு.௧.௰. (௰௬) அதி.௰.௨௰. சங்.௩௯.௰௩. சங்.௬௨.௯.(௰௭)சங்.௮.௪. எபி.௨.௬.(௨௰)சங்.
௩௬.௯. சங்.௨௧.௰௨. புல.௩.௰௨.—(௮. அதி. ௩.) ஆதி.௰௮.௨௫. ௨.நாளா.௰௯.௭. தானி.௯.௰௪. ரோ.௩.௫.

டி, சருவவல்லவரிடத்தில் விண்ணப்பஞ்செய்
௬ து,—சுத்தமுநேர்மையுமுள்ளவனாயிருந்திரேயா
கில் அவர் உமக்காகவிழித்து, உமதுநீதியின் வா
௭ சஸ்தானம் வாழ்வடையப்பண்ணுவார்.—உமது
முந்தினநிலைமை அற்பமாயினும், உமதுபிந்தின
௮ நிலைமை மிகவும் அதிகரிக்கும்.-நாம்நேற்றுப்பிற
ந்தவர்கள், ஒன்றும் அறியோம்,பூலோகத்திலேநம்
௯ முடையநாள்கள் நிழலுக்குச்சமானம்:-ஆதலால்
நீர் முந்தினதலைமுறையாரிடத்தில்கேட்டு,அவர்
களுடைய முன்னோர்களின் ஆலோசனையைச்
௰ சிந்தித்துக்கொள்ளும்.-அவர்கள் உமக்குப்போத
கம்பண்ணார்களா, தெரிவிக்கமாட்டார்களா, ம
௰௧ னப்பூருவமாய்ச் சொல்லார்களா.-சேறில்லாமல்
நாணல் ஓங்கிவளருமா; நீரில்லாமல் கோரைப்
௰௨ புல்செழிக்குமா.—அது பச்சையாயிருக்கையில்
அறுக்கப்படாதிருந்தாலும், மற்றச்செடிகளுக்கு
௰௩ முன்னே வாடிப்போம்.—தேவனை மறக்கும்
எல்லாருடையநெறிகளும் அப்படியேபோய்வி
டும்; கபடியின் வாழ்வும் அப்படியே ஒழிந்து
௰௪ போம்:-அவன்நம்பிக்கைசேதிக்கப்படும்,அவன்
௰௫ தஞ்சம் சிலந்தியின்கூட்டுக்குச்சமானம்.-அவன்
தன் வீட்டின்மேலே சாய்ந்துகொள்ளுவான், அ
து நிலைக்கமாட்டாது: அதைத் திடமாய்ப்பிடித்
துக்கொள்ளுவான், அதுவோ ஒழிந்துபோம்.—
௰௬ அவன் பசுமை சூரியபிரகாசத்தில் விளங்கும்,
தோட்டத்தில் அவன் கிளை தழைத்துப்படரும்.—
௰௭ அவன் வேர்கள் கற்களில் நுழையும், கற்பாறை
௰௮ யைக்கண்டு கொள்ளும்.—அவர் அவனைத் தன்
னுடைய ஸ்தானத்தினின்று நிருமூலப்படுத்தும்
பொழுது, அந்தஸ்தானம், நான் உன்னைக்கண்ட
௰௯ தில்லையென்று மறுத்துவிடும்.-கேளும், இதுவே
அவன் வாழ்வின்மகிழ்ச்சி, அவனுக்குப்பின்மற்
௨௰ றவர்களும் புழுதியினின்று எழும்புவார்கள்.-கே
ளும், தேவன் உண்மையுள்ளவனைவெறுக்கார்,
௨௧ தீமையுள்ளவர்களுக்குத்துணைசெய்யார்:—இனி
அவர் உமதுவாயை நகைப்பினாலும், உம்முடை
௨௨ ய உதடுகளை ஆனந்தத்தினாலும் நிரப்புவார்.-உம்
மைப் பகைக்கிறவர்கள் வெட்கத்தைப் போர்த்
துக்கொள்ளுவார்கள்; பாவியின் வாசஸ்தானம்
அற்றுப்போமென்றுசொன்னான்.

## ௯. அதிகாரம்.

௧. யோபு தேவநீதியையுணர்ந்து அவரை எதிர்க்கக்கூடாதென்றுசொல்லல்: ௨௨. நல்லோருக்கும் தீயோருக்கும் உண்டாகும் பலனைக்காட்டல்.

௨ அதற்கு உத்தரமாக யோபு,—அதுமெய்யென்று
நான் அறிவேன்: மனுஷன் தேவனுடையசமு
௩ கத்தில் நீதிமானாயிருப்பதெப்படி.—அவர் இவ
னோடே வழக்காடச்சித்தங்கொண்டால், இவன்
அவருக்கு ஆயிரத்திலொன்றுக்காகிலும் உத்தரங்
கொடுக்கமாட்டானே.—அவர்புத்திமான், அவர் ௪
பராக்கிரமசாலி: அவரை எதிர்த்துப்போராடிவா
ழ்வடைந்தவனார்.—அவர் சடிதியில் மலைகளைப் ௫
பேர்க்கிறார்: அவர் தமது கோபத்திலே அவைக
ளைப்புரட்டுகிறார்.—அவர் பூமியை அதினுடைய ௬
ஸ்தானத்தினின்று அசைத்துவிலக்குகிறார், அதி
னுடைய தூண்கள் அசைகின்றன.—அவர் கட் ௭
டளையிட்டால்சூரியனும்உதிக்கமாட்டாது; நட்
சத்திரங்களுக்கு முத்திரையிடுகிறார்.—அவர் ஒ ௮
ருவரே ஆகாயத்தை விரிக்கிறார், அவர் சமுத்தி
ரத்திரைகளின்மேல் உலாவுகிறார்.—அவர் சுவா ௯
தியையும், மிருகசீரிடத்தையும், கார்த்திகையை
யும், தெட்சணந்தரத்தையும் சிருஷ்டிக்கிறார்.—
அவர் ஆராய்ந்துமுடியாத மகா காரியங்களையும் ௰
எண்ணிறந்த அற்புதங்களையுஞ் செய்கிறார்.—
கேள், அவர் என் சமீபத்திற்சென்றும், நான் அ ௰௧
வரைக்காணவில்லை: அவர் என்வழியாய்க்கடந்
தும், நான் அவரை அறியவில்லை.—அவர் கவர்ந் ௰௨
துகொண்டுபோனால், தடுப்பவன் ஆர்; என்ன
செய்கிறீரென்று, அவரைக்கேட்பவன்யாவன்.-
தேவன் தமது கோபத்தை நீக்கார், அகங்காரிக ௰௩
ளாகிய சகாயக்காரரும் அவர் சமுகத்திலே தாழ்
வார்கள்.—அப்படியிருக்க உத்தரங்கொடுக்கவும், ௰௪
அவருடன்பேசஎன்வாக்குகளைத்தெரிந்துகொள்
ளவும், நான் எம்மாத்திரம்.—நான் நீதிமானாயிருந் ௰௫
தாலும், உத்தரங்கொடுக்கமாட்டேன், என் நியா
யாதிபதியிடத்தில் விண்ணப்பஞ் செய்வேன்.—
அவர்பெருங்காற்றினால் என்னைமுறிக்கிறார், கா ௰௬
ரணமின்றி என்காயங்களை மிகுதியாக்குகிறார்.—
நான்மூச்சுவிட இடந்தரார், கசப்பினால் என்னை ௰௭
நிரப்புகிறார்:-ஆதலால்,நான்விண்ணப்பஞ்செய் ௰௮
யும்பொழுது அவர் எனக்கு உத்தரந்தந்தாலும்,
அவர் என் வாக்குக்குச்செவிகொடுத்தாரென்று
விசுவாசிப்பதரிது.—பலத்தைப்பார்த்தால், அவ ௰௯
ரேபலவான்: நியாயத்தைப்பார்த்தால், எனக்குக்
காலங்குறிக்கிறவன்யாவன்.—நான் என்னை நீதி ௨௰
மானாக்கினால், என்வாய் என்மேல் குற்றஞ்சுமத்
தும்: நான் சற்குணனென்றுசொன்னால், அது
வே நான் மாறுபாடுள்ளவனென்பதற்குச்சாட்சி
கொடுக்கும்.—நான் சற்குணனென்று என்னை ௨௧
யறியேன்: என் பிராணனை அவமதிப்பேன்.—
ஒருகாரியமுண்டு, அதைச்சொல்லுகிறேன், அ ௨௨
வர் சன்மார்க்கரையுந்துன்மார்க்கரையும்சங்கரிக்
கிறார்.—வாதைசடிதியில் சங்கரிக்கும்பொழுது, ௨௩
அவர் குற்றமற்றவர்கள பரீட்சிக்கப்படுவதைப்
பார்த்து நகைப்பார்.—பூமி துன்மார்க்கரின்கை ௨௪
யில் ஒப்பிக்கப்பட்டது: அவர்அதின் நியாயாதி
பதிகளுடையமுகத்தைமூடுகிறார்; அவர் இதைச்

---

(அ) ஆதி.௪௭.௯. ௧நாளா.௨௯.௰௫. சங்.௩௯.௫. (௯) ௨பா.௪.௩௨. (௰௨) சங்.௱௨௩.௬. எரே.௰௭.௬. (௰௩) சங்.௱௰௨. ௰. நீதி.௰.௨௮. (௰௪) ஏசா.௫௯.௫,௬. (௰௮) சங்.௩௭.௩௬. (௰௯) சங்.௱௰௩.௭. (௨௨) சங்.௩௫.௨௬.—(௯. அதி. ௧.) சங்.௱௪௩.௨. ரோ.௩.௨௰. (௬) ஏசா.௨.௰௯,௨௧. ஆகா.௨.௬,௨௧. எபி.௰௨.௨௬. (௮) ஆதி.௧.௬. சங்.௱௪.௨,௩. (௯) ஆதி.௧.௰௬. ஆமோ.௫.௮. (௰) சங்.௭௧.௰௫. (௰௧) அதி.௨௩.௮,௯. அதி.௩௫.௰௪. (௰௨) ஏசா.௪௫.௯. எரே.௰௮.௬. ரோ.௯.௨௰. (௰௩) அதி.௨௬.௰௨. ஏசா.௩௰.௭. (௰௬) அதி.௨.௩. (௨௨) பிர.௯.௨,௩. எசேக்.௨௧.௩. (௨௪) ௨.சாமு. ௰௫.௩௰. எரே.௰௪.௪.

செய்கிறதில்லையென்றால், செய்கிறவர் ஆர், அவ
௨௫ ரெங்கே.—என் நாள்கள் ஓடுகிற அஞ்சல்காரனி
லும் துரிதமாயிருக்கின்றன: அவைகள் விரைந்
துசெல்லுகின்றன, அவைகள் நன்மை காண்ப
௨௬ தில்லை.—துரிதமான கப்பல்கள் போலவும், இ
ரைமேல் விரைந்துபாயுங் கழுகுபோலவுங் க
௨௭ டக்கின்றன.-நான் என் புலம்புதலைமறந்து, என்
முகத்தின் விசனத்தைமாற்றி, ஆறுதல் அடை
௨௮ வேனென்றுசொன்னால்:—என் துக்கங்கள் எல்
லாவற்றிற்கும் பயப்படுகிறேன், என்னைச்சுத்த
௨௯ னாக எண்ணமாட்டீரென்று அறிவேன்.—நான்
பாவியானால், நான்விருதாவாகப் பிரயாசப்பட
௩௰ வேண்டியதென்ன.—நான் உறைந்த நீரிலேமு
ழுகி, என்கைகளை மிகவும் சுத்திசெய்தாலும்,—
௩௧ நீர் என்னைச்சேற்றில் அமிழ்த்துவீர், என் சொந்
௩௨ தவஸ்திரங்களும் என்னை அருவருக்கும்.—நான்
அவருக்கு உத்தரங்கொடுக்கவும், நாங்களிருவ
ரும் ஒருமிக்க நியாயஸ்தலத்திலே சேரவும், அ
௩௩ வர் என்னைப்போல் ஒருமனுஷனல்ல.-எங்கள்
இருவர்மேலுங் கை வைக்கத்தக்க, ஒருமத்தியஸ்
௩௪ தன் எங்களுக்கில்லை.—அவர் தமது தண்டத்தை
யென்னைவிட்டகற்றுவாராக, அவரால் வரும்ப
யங்கரம் என்னைப் பயப்படுத்தாதிருப்பதாக:—
௩௫ அப்பொழுது நான் பயப்படாமல் பேசுவேன்;
எனக்கோ அப்படியில்லை.

## ௰. அதிகாரம்.

௧. யோபு தேவனைப்பார்த்துப் பிரார்த்தித்துப்புலம்பல்: ௰௮. மரணத்துக்குமுன்சற்று ஆறுதலை வேண்டல்.

நான் உயிரோடிருக்குதலை என் ஆத்துமம் அரு
வருக்கின்றது; ஆதலால் நான் என் துக்கத்தை
வெளிப்படுத்துவேன்; என் மனக்கசப்பினாலே
௨ வசனிப்பேன்.—நான் தேவனை நோக்கி, என்
னைக்குற்றவாளியென்று தீர்க்கவேண்டாம்; நீர்
என்னுடன் வழக்காடுங்காரணமின்னதென்றுஎ
௩ னக்குத்தெரிவியும்.-உபத்திரவப்படுத்துகிறதும்,
உமதுகையின் சிருஷ்டியைவெறுக்கிறதும், துன்
மார்க்கரின் ஆலோசனைக்குப் பிரசன்னமாகிற
௪ தும் உமக்குத்தகுதியா.-உமக்குமாமிசக்கண்களு
ண்டா; மனுஷன் பார்க்கிறவிதமாய்ப் பார்க்கிறீ
௫ ரா.—நீர் என் அக்கிரமத்தையாராய்ந்து, என்பாவத்
௬ தைவிசாரிக்கிறதற்கு,-உம்முடைய நாள்கள்மனு
ஷருடையநாள்களுக்கு ஒப்பானவைகளா; உம்
முடையவருஷங்கள் மனுஷருடையநாள்களைப்
௭ போலஇருக்கின்றவைகளா.—நான் துன்மார்க்க
னல்லவென்று உமக்குத்தெரியும்; உமதுகையி
௮ னின்றுவிடுவிக்கவல்லவர் ஒருவருமில்லை.-உம்
முடையகைகள்என்னையுண்டாக்கி, என்னைமு
ழுவதும்உருவாக்கின; ஆகிலும்நீர்என்னைஅழிக்
௯ கிறீர்.—களிமண்போல் நீர்என்னை உருவாக்கினீ
ரென்பதை நினைந்தருளும்; புழுதியினிடத்தில்
என்னைமறுபடியும்சேர்ப்பீரா.-நீர்என்னைப்பால் ௰
போல்ஊற்றினீரல்லவா, தயிர்க்கட்டிபோல்என்
னை உறையப்பண்ணினீரல்லவா.—நீர்எனக்குத் ௧௧
தோலையுமாமிசத்தையும் தரித்து, எலும்புகளி
லும் நரம்புகளினாலும் என்னை ஸ்திரப்படுத்தி
னீர்.—நீர்சீவிப்பையும்தயையையும் எனக்கு அ ௧௨
னுக்கிரகித்தீர், உமதுபரிபாலனம் என்ஆவியை
இரட்சித்தது.-ஆனாலும்நீர் இவைகளைஉமதுஉள் ௧௩
ளத்தில்மறைத்தீர்: இதுஉம்மிடத்தில்உண்டென
றுநான்அறிகிறேன்.—நான்பாவஞ்செய்தால்,நீர் ௧௪
என்னைவிசாரித்து,என்அதிக்கிரமத்தைஎன்மேல்
சுமத்தாமல்விடீர்.—நான்துன்மார்க்கனானால், ஐ ௧௫
யோ, ஆபத்துவரும்; நான் நீதிமானாயிருந்தாலும்,
என்தலையை உயர்த்தமாட்டேன். நான் அவமா
னத்தினால் நிரப்பப்பட்டேன், நீர் என் துக்கத்
தைப்பார்த்தருளும்.—உக்கிரசிங்கத்தைப்போல ௧௬
என்னைத்தொடருகிறீர்: என்மேல்உமது அதிசய
மான கிரியைகளைக் காண்பிக்கிறீர்.—நீர் எனக் ௧௭
குவிரோதமாய் உம்முடைய வாதைகளைப்பெரு
கப்பண்ணுகிறீர், என்மேல் உமது குரோதத்தை
மூளச்செய்கிறீர்; தீமையும்போராட்டமும் என்
னை விரோதிக்கின்றன.—நீர் கருப்பத்தினின்று ௧௮
என்னைப் புறப்படுத்தினதென்ன; ஆ, ஒருகண்
ணும் என்னைக்காணாதபடி, நான் அப்பொழுதே
உயிரைவிட்டேனானால் நலமாகும்.—நான் ஒரு ௧௯
காலமும் இல்லாதவன்போலிருப்பேன்; கருப்
பத்தினின்று பிரேதவறைக்குக்கொண்டுபோகப்
படுவேன்.—என் நாள்கள் அற்பமல்லவா; என் ௨௰
னைவிடும்,—காரிருளும் மரணநிழலுமுள்ள தே ௨௧
சத்துக்கு நான் மீண்டுவராதபடிபோகுமுன் சற்
றிளைப்பாறும்படிக்கு என்னைவிட்டுவிடும்.-அச் ௨௨
தேசம் இருள்போலும் அந்தகாரமும், மரணநி
ழலும், ஒழுங்கின்மையுமுள்ளது, அதின்ஒளியும்
இருளென்றுசொல்வேனென்றான்.

## ௰௧. அதிகாரம்.

௧. சோபார் யோபைக்கண்டித்தல்: ௫. தேவனுடைய இலட்சணத்தை விளக்கல்: ௰௩. யோபு சீர்ப்படுவதற்கு அவனுக்குணர்த்தல்.

பின்பு நாமாத்தியனாகிய சோபார் உத்தரமாக,- ௧
இத்தனைதிரளானவாக்குகளுக்கு உத்தரஞ்சொல் ௨
லப்படவேண்டாமா; வாய்ச்சாலகன் சுத்தமுள்
ளவனென்று எண்ணப்படுவானா.—உமது வீம்பு ௩
வாக்குகள் மனுஷரைப்பேசாமலிருக்கச் செய்யு
மா; நீர் நிந்திக்கும்பொழுது ஒருவரும் உம்மை
வெட்கப்படுத்தமாட்டாரா.-என்னுடையபோத ௪
னைசுத்தமென்றும், உமதுபார்வைக்கு நான் சுத்த
முள்ளவனென்றும்சொன்னீர்.-ஆ, தேவன்பே ௫
சி, உமக்கு விரோதமாய்வசனித்து,-புத்திக்கெட் ௬
டாதஞானத்தின் மறைபொருள்களைத் தெரிவித்

(௨௫) அதி.௭.௬,௭.(௨௬) அப௯.௧.௮. (௨௭) அதி.௭.௰௩. (௨௮) சங்.௱௰௯.௱௨௰. (௩௰) எரே.௨.௨௨.(௩௨)பிர.௬.௰. ஏசா.௪௫.௯. (௩௩) வச.௰௯. ௧.சாமு.௨.௨௫. (௩௪) அதி.௩௩.௭.சங்.௩௯.௰.—(௰. அதி. ௧.) ௧.இரா.௰௯.௪. யோனா.௪.௩,௮. அதி.௭.௰௧. (௩) சங்.௱௩௮.௮. ஏசா.௬௪.௮. (௪) ௧.சாமு.௰௬.௭. (௭) சங்.௱௩௯.௧,௨. (௮) சங்.௱௰௯.௭௩. (௯) ஆதி.௨.௭. ஏசா.௬௪.௮. (௰) சங்.௱௩௯.௰௪,௰௫,௰௬. (௰௪) சங்.௱௩௯.௧. (௰௫) ஏசா.௩.௰௧. சங்.௨௫.௰௮. (௰௬) ஏசா.௩௮.௰௩. புல.௩.௰. (௨௰) சங்.௩௯.௫,௰௩.(௨௧)சங்.௮௮.௰௨. சங்.௨௩.௪.—(௰௧.அதி.௬.) ஏஸ்ற.௯.௰௩.

தால் நலமாகும்; அவைகள் அறிந்தவைகளிலும்
இரட்டிப்பாயிருக்கும். ஆகையால் தேவன் உம
துபாவத்தைஇலகுவாய்த்தண்டிக்கிறார், இதைச்
எ சிந்தித்துக்கொள்ளும்.-நீர் தேவனை ஆராய்ந்து அ
றியக்கூடுமோ; சருவவல்லவருடைய முழுத்தத்து
அ வத்தையும் அறியக்கூடுமோ.-அதுவானம்போல உ
யரம்;நீர் என்னசெய்வீர். பாதாளத்திலும் ஆழம்,
கூ நீர் என்னத்தை அறிவீர்.—அது பூமியிலும் நீளம்,
ய சமுத்திரத்திலும் விசாலமானது.—அவர் அறுத்து
அடைத்துச்சேர்த்துக்கொண்டால், ஆர் அவரைத்
யக தடைபடுத்தக்கூடும்.—அவர் வீண் மனுஷரை அ
றிவார்: அவர் பாவத்தையும் பார்க்கிறார்; அவர்
யஉ அதை விசாரிக்காரா.—மனுஷன் கழுதைக்குட்
டியைப்போலப் பிறந்திருந்தும், புத்திகெட்ட
அம்மனுஷன், தான் புத்திமானாய் எண்ணப்பட
யங விரும்புகிறான்.—நீர் உமது மனதை ஆயத்தப்ப
டுத்தி, அவருக்குநேரே உமது கையைவிரித்து,—
யச உமது கையிலிருக்கிற பாவத்தை விட்டுவிலகி,
உமது வாசஸ்தானத்திலே பாவந் தங்கவிடாமல்
யரு இருப்பீராகில்,—களங்கமில்லாமல் உமது முகத்
தை ஏறெடுத்து, பயப்படாமல் திடங்கொண்டி
யசு ருப்பீர்.—உமது துக்கத்தைமறப்பீர், ஓடிவிட்ட
யஎ நீரைப்போல் அதை நினைப்பீர்:—உமது ஆயுள்
காலம் மத்தியானத்திலும் துலக்கமாயிருக்கும்;
நீர் பிரகாசித்து, விடியற்காலத்தைப்போலிருப்
யஅ பீர்.—நம்பிக்கை யுண்டாயிருக்கிறதினால், நிரு
விக்கினமாயிருப்பீர்; தோண்டியவிடத்தில் நீர்
யகூ வாழ்வடைந்து படுத்துக்கொள்வீர்.—நீர் படுக்
கும்பொழுது ஒருவரும் உம்மைப்பயப்படுத்தமா
ட்டார்; அநேகர் உமது முகத்தைத்தேடுவார்கள்.-
உய துன்மார்க்கருடைய கண்கள் பூத்துப்போம், அ
வர்களுக்குப் புகலிடமில்லாதொழியும், அவர்
கள் நம்பிக்கை உயிர்விடுவதற்கொப்பாயிருக்கு
மென்றான்.

## யஉ. அதிகாரம்.

க. யோபு தன் சிநேகிதருக்கு நியாயங்காட்டல்:
எ. தேவனுடைய சருவ கர்த்தத்துவத்தை உ
ணர்த்தல்.

உ அதற்கு உத்தரமாக யோபு,—நீங்களே சனம்,
ங உங்களோடே ஞானமும் இறந்துபோகும்.-உங்
களைப்போலவேஎனக்கும்புத்தியுண்டு; உங்களி
லும் நான்சிறியவனல்ல: இப்படிப்பட்டவைக
ச ளை அறியாதவனார்.—அயலவனால் நிந்திக்கப்பட்
டவனும், தேவனைப் பிரார்த்தித்து உத்தரம்
பெற்றவனுமாயிருக்கிறேன்: நீதியுஞ்செவ்வையு
ரு முள்ளவன் பரிகாசம் பண்ணப்படுகிறான்.—ஆ
பத்தில் அகப்பட்டவன் சுகித்திருக்கிறவனுடை
யநினைவில் அணைந்துபோகிற விளக்குப்போலி
ருப்பான்.-திருடருடைய கூடாரங்கள் சௌக்கி சு
யமாகும், தேவனைக் கோபப்படுத்துகிறவர்கள்
ஆபத்தில்லாமலிருக்கிறார்கள், அவர்கள் கையில்
தேவன் மிகுதியாய் அருளுகிறார்.—இனி மிருக எ
சீவன்களைக்கேட்டுப்பார், அவைகள் உனக்குப்
போதிக்கும்; ஆகாயத்துப்பறவைகளைக்கேள், அ
வைகள்உனக்குத்தெரிவிக்கும்:-பூமியுடனேபே அ
சு,அதுஉனக்குஉபதேசிக்கும்:சமுத்திரத்தின்மச்
சங்கள் உனக்கு அறிவிக்கும்.—இவைகளெல்லா கூ
வற்றினாலும் யெகோவாவின் கரமே இதைச்
செய்ததென்பது தெரியாதவனார்.—சகலபிராணி ய
களின் உயிரும், சகலமனுஷரின் ஆவியும், அ
வர்கையிலிருக்கின்றன.—காது வாக்குகளைப்ப யக
ரீட்சிக்கின்றதல்லவா; அண்ணம்போசனத்தைச்
சுவைக்கின்றதல்லவா.—ஞானம் முதியோனிடத் யஉ
திலிருக்கின்றது; புத்தி தீர்க்காயுளிலிருக்கின்ற
து.—அவரிடத்தில் ஞானமும் பெலமுமுண்டு, யங
அவரிடத்தில் ஆலோசனையும் புத்தியுமுண்டு.—
கேள், அவர் இடித்தால், திரும்பக்கட்ட முடி யச
யாது: அவர் ஒருமனுஷனை அடைத்தால், விடு
விக்கமுடியாது.—கேள், அவர் நீர்களை அடக்கி யரு
னால், அவைகள் வற்றிப்போம்: அவர் அவைக
ளைவிடுவித்தால், அவை பூமியைக் கீழ்மேலாக்
கும்.—பெலமும் ஞானமும் அவருடையவை யசு
கள்: வஞ்சிக்கப்பட்டவனும் வஞ்சிக்கிறவனும்
அவருக்காதீனம்.-அவர்மந்திரிமாரைக் கொள்ளை யஎ
யிடப்பட்டவர்களாகக் கொண்டுபோகிறார், நீ
திபதிகளை மதியீனராக்குகிறார்.—அவர்இராசாக் யஅ
களின் பந்தங்களை அவிழ்க்கிறார், அரைக்கச்சுக்
களினால் அவர்கள் இடைகளைக்கட்டுகிறார்.—பிர யகூ
புகளைக் கொள்ளையிடப்பட்டவர்களாகக் கொ
ண்டுபோகிறார், பலவான்களைக் கவிழ்த்துவிடுகி
றார்.—அவர்நம்பிக்கையுள்ளவர்களின்வாக்கைவி உய
லக்குகிறார், முதியோரின்புத்தியைநீக்குகிறார்.—
அவர்பிரபுகளின்மேல்இகழ்ச்சியையூற்றுகிறார், உக
பெலவான்களுடைய பெலத்தைக் குறைக்கி
றார்.—அந்தகாரத்தினின்று மறைபொருளை வெ உஉ
ளிப்படுத்துகிறார், மரணநிழலினின்று ஒளியைத்
தோற்றுவிக்கிறார்.-அவர் சாதியாரைப் பெருகப் உங
பண்ணி, அவர்களை அழிக்கிறார்: அவர் சாதிக
ளைப்பெருகவும்குறையவும்பண்ணுகிறார்.-அவர் உச
பூமண்டலத்திலுள்ளதலைவர்களுடையமனதைக்
கவர்ந்துகொள்ளுகிறார், அவர்களை வழியில்லாத
வனத்தில்திரியப்பண்ணுகிறார்.—அவர்கள் இரு உரு
ளில்ஒளியில்லாமல்தடவித்திரிகிறார்கள்,வெறிய
னைப்போலஅவர்களைத்தள்ளாடப்பண்ணுகிறார்.

## யங. அதிகாரம்.

க. யோபு தன் சிநேகிதரைக் கடிந்துகொள்ளல்:

(எ) பிர.ங.யக. ரோ.யக.ஙங. (ய) அதி.கூ.யஉ. வெளி.ங.எ. (யக) சங்.ஙரு.உஉ. பிர.ங.யஅ.(யங)க.சாமு.எ.ங. சங்.
அஅ.கூ. (யச) சங்.ாக.ங. (யரு) க.யோவா.ங.உக. (யசு) ஏசா.சுரு.யசு. (யஎ) சங்.ஙஎ.சு. ஏசா.ருஅ.அ,ய. (யஅ)
லேவி.உசு.ரு,சு. நீதி.ங.உச. சங்.சரு.யஉ. (உய) லேவி.உசு.யசு. உபா.உஅ.சுரு. நீதி.யக.எ.—(யஉ. அதி. ச.)
சங்.கூக.யரு. (ரு) நீதி.யச.உ. (சு) அதி.உக.எ. சங்.ஙஎ.க,ஙரு. மல்.ங.யரு.(ய)எண்.யசு.உஉ. தானி.ரு.உங. அப்.
யஎ.உஅ. (யச) ஏசா.உஉ.உஉ. வெளி.ங.எ. (யரு) க.இரா.அ.ஙரு. ஆதி.எ.யக,. (யஎ) உ.சாமு.யரு.ஙக. ஏசா.உகூ.
யச. க.கொரி.க.யகூ. (உய) ஏசா.ங.க. (உக) சங்.ாஎ.சய. தானி.உ.உக. (உஉ) தானி.உ.உஉ. மத்.ய.உசு. க.கொ
ரி.ச.ரு. (உங) சங்.ாஎ.ஙஅ. ஏசா.கூ.ங. (உச) சங்.ாஎ.ச. (உரு) உபா.உஅ.உஅ.—(யங. அதி.)

௰௪. அவன் தான் தேவனை நம்புகிறதென்று சொல்லல்: ௨௰.அவன் தன்பாவங்களையும் தேவனுடைய அபிப்பிராயத்தையும்உணரவேண்டல்.

கேளுங்கள், இவையெல்லாம் நான் என் கண்
ணிஞற்கண்டுங் காதிஞற்கேட்டும் அறிந்திருக்கி
௨ றேன்.—உங்களுக்குத் தெரிந்தது எனக்குந்தெரி
௩ யும்: உங்களிலும் நான்குறைந்தவனல்ல.—சருவ
வல்லவருடன் நான்பேசவும், தேவனோடே
௪ வாக்குவாதம்பண்ணவும் விரும்புகிறேன்.—நீங்
கள் எல்லாரும் பொய் கற்பிக்கிறவர்கள், நீங்கள்
௫ எல்லாரும் காரியமில்லாத வைத்தியர்.—நீங்கள்
பேசாமலிருந்தால் நலமாகும், அதுவே உங்களுக்
௬ குஞானம்.—இப்பொழுது என் நியாயத்தைக்கே
ளுங்கள், என் உதடுகளின் வழக்குகளுக்குச்செ
௭ விகொடுங்கள்.—நீங்கள் தேவன் பட்சத்திலும்
நியாயக்கேடுபேசுவீர்களா; அவர்பட்சத்தில்வஞ்
௮ சகமாய் வசனிப்பீர்களா.—நீங்கள் அவர்முகத்
தைப்பார்ப்பீர்களா; தேவன் நிமித்தம் வழக்கா
௯ டுவீர்களா.—அவர் உங்களைப் பரீட்சிப்பது உங்
களுக்கு நலமா; மனுஷன் மனுஷனைப்பரிகாசம்
பண்ணுகிறதுபோல் அவரையும் பரிகாசம் பண்
௰ ணுகிறீர்களா.—நீங்கள் இரகசியமாக முகத்தைப்
பார்த்தால், நிச்சயமாய் அவர் உங்களைக் கடிந்து
௰௧ கொள்வார்.—அவர் மகத்துவம் உங்களைக்கலங்
கப்பண்ணமாட்டாதா; அவரால்வரும்பயங்கரம்
௰௨ உங்களைப்பிடிக்கமாட்டாதா.—உங்கள்ஞாபகக்
குறி சாம்பலுக்குச்சரி, உங்கள் மேட்டிமைகள்
௰௩ சேற்றுக்குவியல்களுக்குச்சரி.—நீங்கள்மௌன
மாயிருங்கள், நான்பேசுகிறேன், எனக்குவருகி
௰௪ றதுவரட்டும்.—நான் என் மாமிசத்தைப் பல்லி
ஞல்பிடுங்கி, என்பிராணனை என்கையில் வைக்
௰௫ கிறதேது.—அவர் என்னைக்கொலைசெய்தாலும்,
நான் அவர்மேல் நம்பிக்கையாயிருப்பேன்: அ
வர் சமுகத்தில் என்நெறிகளைச் சாதிப்பேன்.—
௰௬ அவரே என் இரட்சிப்பு: கபடனொருவனும் அ
௰௭ வர் சந்நிதியிற் சேரான்.—என்வாக்கில் சிந்தை
வைத்து என்வசனிப்பை நீங்கள்செவிசாய்த்துக்
௰௮ கேளுங்கள்.—இனிப்பாருங்கள், என் நியாயகா
ரியத்தை நான்கிரமப்படுத்தினேன்; நான் நீதிமா
௰௯ னக்கப்படுவேனென்று எனக்குத்தெரியும்.—என்
னோடேவழக்காடுபவனூர்; இப்பொழுது நான்
௨௰ மௌனமாயிருந்தால், உயிரைவிடுவேன்.—உம
துகையை என்னைவிட்டுத் தூரப்படுத்தும்: உம்
மால்வரும்பயங்கரம் என்னைப்பயப்படுத்தவிடா
௨௧ திரும்.—இவ்விரண்டு காரியங்களையும் எனக்கு
விரோதமாய்ச்செய்யாதிரும்: அப்பொழுதுநான்
௨௨ உமக்கு ஒளிக்கமாட்டேன்.—நீர்கூப்பிடும்,நான்
உத்தரஞ்சொல்வேன்: அல்லது நான் வசனிப்
பேன், நீர் எனக்கு உத்தரஞ்சொல்லும்.—என் ௨௩
அதிக்கிரமங்களும் பாவங்களும் எத்தனை; நான்
என்குற்றமும் பாவமும் இன்னதென்று அறியும்
படி எனக்குணர்த்தும்.—நீர் உமது முகத்தைம ௨௪
றைத்து என்னைச்சத்துருவென்று எண்ணுவதே
து.—பறக்கடிக்கப்பட்ட இலையை நொறுக்கிக் ௨௫
காய்ந்த துரும்பைத்தொடருவீரா.—எனக்கு வி ௨௬
ரோதமாய் நீர் கசப்பானதீர்ப்புகளைஎழுதுகிறீர்,
என்வாலிபவயதின்பாவப்பலனை அனுபவிக்கச்
செய்கிறீர்.—என்கால்களைத்தொழுவிலடித்துவிடு ௨௭
கிறீர்,நான்செல்லும்எல்லாநெறிகளையும் உற்றுப்
பார்க்கிறீர்; என்காலடியில் அடையாளங்குறிக்
கிறீர்.—இப்படிப்பட்டவன் அழுகிப்போனவன் ௨௮
போலவும், பொட்டரித்த வஸ்திரம்போலவுங்
கேடடைவான்.

## ௰௪. அதிகாரம்.

௧. மனிதருக்கு ஆயுள் அற்பமெனக்காட்டல்: ௭. நியாயத்தீர்ப்பு வரைக்கும் உயிர்த்தெழாரென்று சொல்லல்: ௰௬. துக்கமும் மரணமும் பாவத்தால் உற்பத்தியாகுமெனல்.

ஸ்திரியினிடத்திற் பிறந்த மனுஷன் அற்பாயு ௧
ளும், நிறைந்த சஞ்சலமுமுள்ளவனுயிருக்கிறு
ன்.—அவன் பூவைப்போலத்தோன்றிக் கொய் ௨
யப்படுகிறுன்: நிலைத்து நில்லாமல் நிழலைப்போ
ல அகன்று போகிறுன்.—இப்படிப்பட்டவன் ௩
மேல் நீர் கண் வைக்கிறீரோ,என்னை உம்முடன்
நியாய ஸ்தலத்திற்குக்கொண்டுபோவீரோ.—அ ௪
சுத்தமானதினின்று சுத்தமானதைத்தோற்றுவிக்க
வல்லவர் யாவர்; ஒருவராலுமுடியாது.—அவன் ௫
ஆயுளின் எல்லைகுறிக்கப்பட்டது, அவன் மாதங்
களின் தொகை உம்மிடத்திலிருக்கின்றது, அ
வன் கடந்துபோகாதபடி அவனுக்கு எல்லையை
ஏற்படுத்தினீர்.—ஆதலால் அவன் ஒருகூலிக்கா ௬
ரனைப்போலத் தன் நாளைப்போக்கிச்சந்தோஷத்
தோடே இளைப்பாறும்வரைக்கும் அவனைவிட்
டுவிலகிப்போம்.—ஒரு விருட்சந் தறிக்கப்பட் ௭
டால் அதுதிரும்பவுந்தழைக்குமென்றும், அதின்
துளிர் அகன்றுபோகாதென்றும் நம்பிக்கையுண்
டு.—அதின் வேர் நிலத்தில் பழையதாகி, பூமி ௮
யில் அதின் அடியுக்கிப்போனாலும்,—அது நீரினீ ௯
ரத்திஞல் துளிர்த்து, நட்டமரம் போலக் கிளை
கொண்டெழும்பும்.—மனுஷனோ மரித்து அழு ௰
கிப்போகிறுன்: மனுஷன் உயிரைவிட்டபின்
அவன் எங்கே.—நீர்கள் ஏரியினின்றுவடிந்து ௰௧
போவதுபோலவும், ஆறுவற்றிச்சுவறிப்போவது
போலவும்,—மனுஷனும் வானங்கள்ஒழிந்துபோ ௰௨
கும்வரைக்கும் சயனிப்பான், எழுந்திருக்கமாட்
டான்: மகா நித்திரைவிட்டுத்தெளிந்து எழுந்தி
ரான்.—ஆ, நீர் என்னைப் பிரேதவறையில் ஒளித் ௰௩

(௨.) அதி.௰௨.௩. (௩) அதி.௨௩.௩. (௪) அதி.௬.௨௧. (௫) நீதி.௰௭.௨௮. (௭)அதி.௰௭.௫. (௰௪)அதி.௰௮.௪. ௧.சாமு. ௨௮.௨௧. (௰௫) சங்.௨௩.௪. அதி.௨௭.௫. (௰௯) அதி.௩௩.௬. ஏசா.௫௰.௮. (௨௰) அதி.௯.௩௪. (௨௧) சங்.௩௯.௰.(௨௪) ௨பா.௩௨.௨௰. சங்.௰௩.௧. ஏசா.௮.௰௭. ௨பா.௩௨.௪௨. ரூத்.௧.௨௧. புல.௨.௫.(௨௫)ஏசா.௪௨.௩.(௨௬)அதி.௨௰.௰௧. சங்.௨௫.௭.(௨௭)அதி.௩௩.௰௧.—(௰௪. அதி. ௧.) பிர.௨.௨௩.(௨) அதி.௮.௮. சங்.௯௰.௫. சங்.௱௩.௰௫. ஏசா.௪௰.௬. யாக்.௧.௰,௰௧. ௧.பேதுரு.௧.௨௪. (௩) சங்.௱௪௪.௩. சங்.௱௪௩.௨.(௪)ஆதி.௫.௩. சங்.௫௧.௫.ரோ.௫.௰௨.(௬)அதி.௰. ௨௰. சங்.௩௯.௰௩. (௰௨) சங்.௱௨.௨௬. ஏசா.௫௧.௬. அப்,௩.௨௧. ரோ.௮.௨௰.௨.பேதுரு.௩.௭,௰,௰௧.வெளி.௨௰.௰௧.

து உமது கோபம் நீங்கும்வரைக்கும் என்னை ம
றைத்து வைத்திருந்து, எனக்கு ஒருகுறித்தகாலத்
தைஏற்படுத்தி, என்மேல்சிந்தைவைத்தால்நலம்.-
௰௪ மனுஷன் மரித்தால்திரும்பவும்சீவிப்பானு; என
க்குமாறுதல்வரும்வரைக்கும் என் போராட்டத்
௰௫ தின்நாளெல்லாம் நான் காத்திருக்கிறேன்.—நீர்
என்னைக்கூப்பிடுவீர், நான் உமக்கு உத்தரங்கொ
டுப்பேன்: உமதுகைக்கிரியையின்மேல் விருப்ப
௰௬ மாயிருப்பீர்.—நீர் இப்பொழுதுஎன் அடிச்சுவடுக
ளைத்தொகையிடுகிறீர்: என்பாவத்தின்மேல்நோக்
௰௭ கம்வைக்கிறீரல்லவா.—நீர் என் அதிக்கிரமத்தைக்
கட்டாகக்கட்டி முத்திரிக்கிறீர், என்பாவத்தைக்
௰௮ கட்டாகக்கட்டுகிறீர்.—மலையானதும்விழுந்துக
ரையும்; கன்மலைதன்னுடைய ஸ்தானத்தைவிட்
௰௯ டுப்பேர்ந்துபோம்.—சலம்கற்களைக்குடையும்: நீர்
பிரவாகிப்பிக்கும் வெள்ளத்தினால்பூமியின்மண்
கரைந்துபோகின்றது; நீர் மனுஷனுடைய நம்
௨௰ பிக்கையை அழித்துவிடுகிறீர்.—நீர் எப்பொழு
தும் அவனை எதிர்த்து மேற்கொள்வதினால் அ
வன்போகிறான்: அவனுடைய முகத்தோற்றத்
தை மாறப்பண்ணி, அவனைஅனுப்பிவிடுகிறீர்.—
௨௧ அவன்புத்திரர் மேன்மை பெற்றாலும், அவனறி
யான்; அவர்கள் சிறுமைப்பட்டாலும், அவன்
௨௨ உணரான்.—அவன் மாமிசம் அவன்மேல் வேத
னைப்படும், அவன் ஆத்துமம் அவனுக்குள்ளே
துக்கிக்குமென்றான்.

## ௰௫. அதிகாரம்.

௧. எலீபாஸ் யோபுக்கு உத்தரஞ்சொல்லி அவன்
மேற் குற்றம்பாரித்தல்: ௰௭. துக்கம்பாவத்தின்
பலனென்று சரித்திரப் பிரமாணத்தால் தெரி
வித்தல்.

அதற்கு உத்தரமாக தேமானியனாகிய எலீ
௨ பாஸ்,—ஞானவான்காற்றைப்போன்ற வாக்குக
ளைவசனித்து, தன்வயிற்றைக் கொண்டற் காற்
௩ றினால் நிரப்பி,—பொருளற்ற சொல்லினாலும்,
பலனற்ற வாக்கியங்களினாலும் விவாதம்பண்
௪ ணுவது தகுதியா.—பயபத்தியைத் தள்ளுகிறீர்,
தேவனுடைய சமுகத்தில் பிரார்த்திப்பதைவி
௫ டுகிறீர்.—உம்முடையவாயே உமது அதிக்கிரமத்
தை விளக்குகின்றது, நீர் தந்திரமுள்ளவர்களு
௬ டைய வாக்குகளைத் தெரிந்துகொள்ளுகிறீர்.—நா
னல்ல, உமதுவாயேஉம்மேல் குற்றஞ்சுமத்துகின்
றது: உம்முடைய உதடுகளே உமக்குவிரோத
௭ மாய்ச்சாட்சியிடுகின்றன.—நீர்தானு முதற்பிறந்
தமனுஷன்; நீர் பருவதங்களுக்குமுன் உருவாக்
௮ கப்பட்டீரா.—நீர் தேவனுடைய இரகசிய ஆ
லோசனையைக்கேட்டீரா; ஞானத்தை உமக்குள்
௯ ளேதானே அடக்கிக்கொள்வீரா.—எங்களுக்குத்
தெரியாதகாரியம் ஏதாகிலும் உமக்குத்தெரியுமா;
எங்களுக்கு விளங்காதது ஏதாகிலும் உமக்கு வி
ளங்குமா.—உமது பிதாவைப் பார்க்கிலும் வய ௰
துமுதிர்ந்தவர்களாகிய நரைத்தோரும் விருத்தாப்
பியரும் எங்களிடத்திலிருக்கிறார்கள்.—தேவன் ௰௧
அருளிய தேற்றரவுகளையும் மிருதுவான வாக்கு
களையும் அற்பமென்றெண்ணுகிறீரா;—உமது ௰௨
மனம் உம்மைக் கவர்ந்துகொண்டு போகிறதே
து; உமதுகண் இமைக்கிறதென்ன.—தேவனுக் ௰௩
கு விரோதமாய் உமது ஆவியை எழுப்பி, உமது
வாயினின்று வாக்குகளைப்புறப்படுத்துகிறீர்.—சுத் ௰௪
தனாயிருக்கிறதற்கு மனுஷன் எம்மாத்திரம்; ஸ்தி
ரியினிடத்திற்பிறந்தவன் நீதிமானாகிறதற்கு எம்
மாத்திரம்.—கேளும், அவர் தமது பரிசுத்தவான் ௰௫
களிடத்தில் நம்பிக்கைவைப்பதில்லை; வானங்
களும் அவர்கண்ணுக்குச் சுத்தமுள்ளவைகளல்
ல.—சலத்தைப்போலப் பாவத்தைக்குடிக்கிறம ௰௬
னுஷன் எவ்வளவு அருவருப்பும் அசுத்தமுமா
யிருக்கிறான்.—நான்உமக்குத்தெரிவிப்பேன், செ ௰௭
விகொடும்.—ஞானிகள் தங்கள்பிதாக்கள்சொல் ௰௮
லக்கேட்டுமறைக்காமல் தெரிவித்தபடி, நான்
கண்டதைஉமக்குச்சொல்லுவேன்.—அவர்களுக் ௰௯
குமாத்திரம் பூமிஅளிக்கப்பட்டது, அவர்களுக்
குள்பரதேசி ஒருவனும்உலாவினதில்லை.—துன் ௨௰
மார்க்கன்தன்ஆயுள்பரியந்தம்தன்னாலேகிலேசம்
அனுபவிக்கிறான், உபத்திரவப்படுத்துகிறவனுக்
கு அவன்வருஷத்தொகைமறைந்திருக்கின்றது.—
பயங்கரமானசத்தம் அவன்காதில் தொனிக்கின் ௨௧
றது: அவன்வாழ்வடைந்திருக்கையிலும் நாசன்
அவனுக்குநேரிடுவான்.—தான் இருளினின்று தி ௨௨
ரும்புவானென்று அவனுக்கு நம்பிக்கையில்லை,
கட்கமேஅவனைஎதிர்பார்க்கின்றது.—ஆகாரமெங் ௨௩
கேயென்றுதிரிகிறான்; அந்தகாரநாள்அவன்கைக்
குச்சமீபித்ததென்பது அவனுக்குத் தெரியும்.—
அவன்தேவனுக்குவிரோதமாய்க்கைநீட்டி, சரு ௨௪
வவல்லவருக்கு விரோதமாய்த்தன்னைப் பெலப்
படுத்தினான்.—ஆதலால் துக்கமுங் கிலேசமும் ௨௫
அவனைப்பயப்படுத்தும்; அவைகள்யுத்தசன்னத்
தமான இராசாவைப்போல அவனைமேற்கொள்
ளும்.—அவன் தன்முகத்தைக் கொழுப்பினால்மூ ௨௬
டி, அவன் தன்னிடையைக் கொழுக்கப்பண்ணு
கிறான்.—அவன், அவருக்குவிரோதமாக அவரு ௨௭
டைய கழுத்தின்மேலும் அவருடைய கேடகத்
தின் பெருங்குமிழின் மேலும் பாய்கிறான்.—அ ௨௮
வன் பாழான நகரங்களில், வசிப்பாரில்லாமல்
மேடாவதற்கேற்ற வீடுகளில் வாசம்பண்ணுகிறா
ன்.—அவன்செல்வனாகான், அவனுடைய பொ ௨௯
ருள்நிலைத்திராது, பூமியில் அவன்சம்பூரணம் நீ
டித்திருக்கமாட்டாது.—அவன்அந்தகாரத்தினின் ௩௰
றுநீங்கமாட்டான். அக்கினிச்சுவாலைஅவன்இள
ங்கிளைகளைவறட்டும், அவருடையவாயின் சுவா
சத்தினால் அகன்றுபோவான்.—வஞ்சிக்கப்பட்ட ௩௧

(௰௪) அதி.௰௯.௫. (௰௬) அதி.௰.௫,௰௪. சங்.௱௩௯.௧,௨,௩. நீதி.௫.௨௧. எரே.௩௨.௰௯. (௰௭) உபா.௩௨.௩௪. ஓசி. ௰௩.௰௨. (௨௧) பிர.௯.௫. ஏசா.௬௩.௰௬.—(௰௫.அதி.௭.) சங்.௯௰.௨. நீதி.௮.௨௫. (௮) ரோ.௰௧.௩௪. ௧.கொரி. ௨.௰௧. (௰௪) ௧.இரா.௮.௪௬. ௨.நாளா.௬.௩௬. அதி.௰௪.௪. பிர.௭.௨௰. ௧.யோவா.௧.௮,௰. (௰௬) சங்.௫௩.௩. நீதி. ௰௧.௨௮. (௨௰) சங்.௯௰.௰௨. (௨௧) ௧.தெச.௫.௩. (௨௩) சங்.௫௯.௰௫. (௨௭) சங்.௰௭.௰. (௩௰) அதி.௪.௯. (௩௧) ஏசா.௫௯.௪.

வன்மாயத்திலேநம்பிக்கைவைக்கலாகாது: மாய
௩௨ மே அவனுக்குப்பலனாய் முடியும்.—அவனுடை
யபிராயத்துக்குமுன் அதுபலிக்கும், அவன்கிளை
௩௩ யின் பசுமையில்லாது.—திராட்சக்கொடிபோலத்
தன் பக்குவமற்ற கனிகளை உதிர்ப்பான், சீதவி
ருட்சத்தைப்போலத் தன் புட்பங்களை உதிர்ப்
௩௪ பான்.—அவர்கள் அநியாயத்தைக்கருப்பந்தரிக்கி
றார்கள், அவர்கள்வயிறு வஞ்சகத்தை ஆயத்தப்ப
டுத்துகின்றது, பாவத்தைப் பிரசவிக்கிறார்கள்.—
௩௫ கபடிகளின் சபை வெறுமையாகும், அக்கினி,
பரிதானம் வாங்கினவர்களுடைய வீட்டைப்
பட்சிக்குமென்றான்.

## ௰௬. அதிகாரம்.

௧. யோபு தன்பந்துசனங்களைக் கண்டித்தல்: ௭. அவன் தன்துக்கத்தை வருணித்தல்: ௰௭. தேவன் சாட்சியாகத்தான் கபடியல்லவெனல்.

௨ அதற்கு உத்தரமாகயோபு,-நான் இப்படிப்பட்
ட அநேககாரியங்களைக் கேட்டிருக்கிறேன்: நீங்
௩ கள் எல்லாரும் அலட்டுகிறதேற்றரவுகாரர்.—காற்
றைப்போன்ற வாக்குகளுக்கு முடிவுவராதா; நீ
௪ உத்தரங்கொடுக்கத் துணிகிறதென்ன.—நானும்
உங்களைப்போல வசனிக்கக்கூடும்: என் ஆத்து
மத்தின் நிலைமையில் உங்கள் ஆத்துமமிருக்குமா
கில், உங்களுக்கு விரோதமாய் நான் வாக்குக
ளைக்குவிக்கவும், உங்களுக்கெதிரே என் தலை
௫ யைத்துலுக்கவுங்கூடும்.—என் வாயினால் நான்
உங்களைப் பெலப்படுத்துவேன், என் உதடுக
ளின் அசைவு உங்களுக்கு ஆறுதல்செய்யும்.—
௬ நான் வசனித்தாலும் என்துக்கம் ஆறுவதில்லை:
நான் மௌனமாயிருந்தாலும் எனக்குச் சௌக்
௭ கியமுண்டா.—அவர் என்னை இளைத்துப்போ
கும்படி பண்ணினார்: என்கூட்டத்தார் யாவரை
௮ யும் பாழாக்கினீர்.—நீர் என்னைத் திரைந்துபோ
கச்செய்தீர், இதுவே சாட்சி: என்மெலிவு எனக்
குவிரோதமாயெழும்பி என்முகத்தின்முன் சாட்
௯ சியிடுகின்றது.—தமது கோபத்தினால் அவர் என்
னைப்பீறுகிறார், என்னைவெறுக்கிறார்: என்னைக்
குறித்துப் பற்கடிக்கிறார்; என் சத்துரு என்னைக்
௰ குரோதமாய்ப்பார்க்கிறான்.—அவர்கள் எனக்கு
விரோதமாகவாயைத்திறந்தார்கள்; அவமானமாக
என்னைக்கன்னத்தில் அடித்தார்கள்; எனக்குவி
ரோதமாக ஏகமாய்க் கூட்டங்கூடியிருக்கிறார்
௰௧ கள்.—தேவன் என்னைத்துன்மார்க்கர்வசம் ஒப்
பித்தார், பாவிகளுடையகையில் என்னை அகப்
௰௨ படுத்தினார்.—நான் சுகவாழ்வடைந்தேன், அவர்
என்னை நருக்கினார்: என் பிடரியைப் பிடித்து
என்னைநொறுக்கினார், தமக்கு இலக்காக என்னை
௰௩ நிறுத்தினார்.—அவருடைய வில்வீரர் என்னைவ
ளைந்துகொள்ளுகிறார்கள், அவர் இரங்காமல் என்
ஈரலைப்பிளந்தார்; தரையில் என்பித்தத்தை ஊற்
௰௪ றுகிறார்.—நொறுக்குதலின்மேல் நொறுக்குதல் எ
னக்கு வருவிக்கிறார், அவர் ஒரு வீரனைப்போல
என்மேற் பாய்கிறார்.—நான் இரட்டுப்புடைவை ௰௫
யைத்தைத்து என்தோலின்மேல் போர்த்துக்கொ
ண்டேன், என்கொம்பைப்புழுதியில் அசுசிப்ப
டுத்தினேன்.—அழுகையினாலென்முகம் அழுக்க ௰௬
டைந்தது, மரணநிழல் என்கண்ணிமைகளில்தங்
குகின்றது.—இது என்கையிலுள்ள அநியாயத்தி ௰௭
னால்விளையவில்லை: என்பிரார்த்தனையுஞ்சுத்தம்.-
பூமியே, என் இரத்தத்தைமூடிவிடாதே, எனது ௰௮
ஓலத்துக்கு இடமுண்டாகாதிருப்பதாக.—கேள், ௰௯
இப்பொழுது என்சாட்சி வானத்திலிருக்கின்ற
து, என்னைஅறிந்தவர் உன்னதத்தில்இருக்கிறார்.-
என் சிநேகிதர் என்னைநிந்தனைபண்ணுகிறார்கள்: ௨௰
தேவனைநோக்கி என் கண்ணீர் சொரிகின்ற
து.—ஒருமனுஷன் தன் சிநேகிதனுக்காகச்செய் ௨௧
வதுபோல, ஒருவன் மனுஷன்நிமித்தந் தேவ
னுடன் வழக்காடக்கூடுமேயாகில் நலமாகும்.—
அற்ப ஆயுள்சென்றபொழுது, ஒருபொழுதுந்தி ௨௨
ரும்பி வராதவழியே நான்போவேன்.

## ௰௭. அதிகாரம்.

௧.யோபுதேவனைநோக்கிப்புலம்பல்: ௯.பிறரால் துயரப்பட்டாலும் நீதிமான் உற்சாகங்கொள்ளல்: ௰௧. மரணத்தை அபேட்சித்தல்.

என்ஆவிஒழிகின்றது, என்நாள்கள் கழிகின்ற ௧
ன, பிரேதவறைகள்என்னைக்காத்திருக்கின்றன.-
நிந்தனைக்காரர் என்சமீபத்தில் இல்லையா; அவர் ௨
கள் கடுஞ்சொற்களில் என்கண்வைக்கப்பட
வில்லையா.—உம்மிடத்தில் எனக்காக ஒருபிணை ௩
யாளை ஏற்படுத்தும், அதற்குக்கைகொடுப்பவன்
யாவன்.—நீர்இவர்கள் இருதயத்தை ஞானத்திற் ௪
கு மறைத்தீர்: ஆதலால் இவர்களை உயர்த்தமாட்
டீர்.—தன்சிநேகிதரிடத்தில் இச்சகம்பேசுகிறவ ௫
னெவனோ, அவனுடைய பிள்ளைகளின்கண்கள்
பூத்துப்போம்.—அவர் சனங்களுக்குள்ளே என் ௬
னைப் பழிமொழியாக்கிவைத்தார்; அவர்களுக்
குமுன் அருவருப்பானேன்.—என் கண் துக்கத் ௭
தினால் இருண்டுபோயிற்று, என் சருவாங்கமும்
நிழல்போலாயிற்று.—நேர்மையுள்ளவர்கள் இதி ௮
னிமித்தம் பிரமிப்பார்கள், குற்றமற்றவன் கப
டிக்குவிரோதமாகத் தன்னைஎழுப்புவான்.—நீதி ௯
மான் தன்வழியில்விலகாமல்செல்லுவான், சுத்த
கரமுடையவன்வரவரப்பெலன்கொள்வான்.—
இப்பொழுது நீங்களெல்லாரும் திரும்பிப்போ ௰
ய்வாருங்கள்: உங்களுக்குள்ளே ஞானவானொ
ருவனையும் நான் காணவில்லை.—என் நாள்கள் ௰௧
போயின, என்இருதயத்தின் எண்ணங்களாகிய
அபிப்பிராயங்கள் அற்றுப்போயின.—பகலுக்கு ௰௨
இராநியமித்திருக்கின்றது: ஒளி இருளைச்சேரு
கின்றது.-நான் காத்திருந்தால், பிரேதவறை என் ௰௩
வீடாகும்: அந்தகாரத்தில்என்படுக்கையைவிரித்
தேன்.-நான்அழிவைப்பார்த்து, நீஎன்பிதாவென் ௰௪

---

(௩௨) அதி.௨௨.௰௬. சங்.௫௫.௨௩. (௩௫) சங்.௭.௰௪. ஏசா.௫௯.௪. ஓசி.௰.௰௩.—(௰௬.அதி.௪.) சங்.௨௨.௭. புல.௨.௰௫.(௰)சங்.௨௨.௰௩. புல.௩.௩௰. மீகா.௫.௧. சங்.௩௫.௰௫.(௰௫)அதி.௰௩.௰௯. சங்.௭.௫.(௰௮)அதி.௨௭.௯. சங்.௯௯.௰௮,௰௯.(௰௯)ரோ.௧.௯. (௨௧) அதி.௩௧.௩௫. பிர.௬.௰. ஏசா.௪௫.௯. ரோ.௯.௨௰. (௨௨) பிர.௰௨.௫.—(௰௭.அதி.௧.) சங்.௮௮.௩,௪. (௩) நீதி.௬.௧. (௬) அதி.௩௰.௯. (௭) சங்.௬.௭. (௯) சங்.௨௪.௪.(௰)அதி.௬.௨௯.(௰௧)அதி.௭.௬.

றேன்: புழுவைப்பார்த்து, நீஎன்மாதாவும் என்
௰ரு சகோதரியுமென்றேன்.—இப்பொழுது என் நம்
பிக்கை எங்கே; என் நம்பிக்கையை ஆர்காண்
௰சு பான்.–அது பிரேதக்குழியில் இறங்கிவிடும்,என்
னுடன்தூளியில் ஏகமாய்த்தங்குமென்ருன்.

## ௰அ. அதிகாரம்.

க. பில்தாத் யோபுக்கு உத்தரஞ்சொல்லி அவன் மேல் குற்றம்பாரித்தல்: ரு. பாவத்தின் பலன் விபத்தெனக்காட்டல்.

உ பின்பு ஊகியனுகிய பில்தாத் உத்தரமாக,—நீங்
கள் எதுவரைக்கும் பேச்சைமுடிக்காமலிருப்
பீர்கள்; தெளியுங்கள், பின்பு நாங்கள் உத்தரஞ்
ங சொல்லுவோம்.—நாங்கள் மிருகங்கள்போல
வும், உங்கள் கண்ணுக்கு நீசர் போலவும் மதிக்
ச கப்படவேண்டியதேது.–அவர் குரோதத்தினுல்
தன்னைப் பீறுகிருர்: உமக்காகப் பூமிவிடப்படு
மா; கன்மலை தன் இடத்தைவிட்டுப்பேர்க்கப்
ரு படுமா.—துன்மார்க்கனுடைய ஒளி அணைக்கப்
படும், அவன் அக்கினியின் பொறி பிரகாசிக்
சு கமாட்டாது.—அவன் கூடாரத்தில்ஒளி இருளா
கும், அவன் விளக்கு அவனுடனே அணைந்து
எ போகும்.–அவன்பராக்கிரமத்தின் நடைகள் நெ
ருக்கப்படும், அவனுடைய ஆலோசனை அவனை
அ விழப்பண்ணும்.—அவன் தன் கால்களினுல் வ
லையில் அகப்பட்டான், அவன் கண்ணியில் உ
கூ லாவுகிருன்.—கண்ணி அவன் குதிங்காலைப்பி
டிக்கும், பறிகாரர் அவனை மேற்கொள்ளுவார்
௰ கள்.—சுருக்கு அவனிமித்தந் தரையில் மறைக்
கப்பட்டது, அவனுக்காகப்படுகுழிவழியிலிருக்
௰க கின்றது.—நான்கு புறத்திலும் பயங்கரங்கள் அ
வனைத்திடுக்கிடப்பண்ணி, அவனைக்கால்நடை
௰உ யாய்அலைந்து ஓடப்பண்ணும்.-அவன் பெலம்ப
சியினுல் அரிக்கப்படும், அவன் பக்கத்தில் கேடு
௰ங ஆயத்தப்பட்டிருக்கும்.-அது அவன்தோலின்பெ
லத்தைப்பட்சிக்கும்: மரணத்திற்குமுதற் பிறந்
௰ச தது அவனுடையபெலத்தைப்பட்சிக்கும்.–அவ
ன் நம்பிக்கை அவன்கூடாரத்தினின்று நிருமூல
மாக்கப்படும், அதுபயங்கர இராசாவிடத்தில் அ
௰ரு வனைக்கொண்டுபோம்.—அது,கூடாரம் அவனு
டையதல்லாததினுல் அதில் வசிக்கும்: அவன்வா
௰சு சஸ்தானத்தில் கெந்தகம் வீசப்படும்.—கீழே அ
வன் வேர்பட்டுப்போகும், மேலே அவன் கிளை
௰எ சேதிக்கப்படும்.—அவனைப்பற்றும் நினைவு பூமி
யைவிட்டு ஒழிந்துபோகும், அவன் பேர் வீதிக
௰அ ளில் இல்லாதொழியும்.—அவன் ஒளியைவிட்டு
இருளிலே துரத்தப்படுவான், அவன் பூலோகத்
௰கூ தினின்று தள்ளுண்டுபோவான்.—சனங்களுக்
குள்ளே அவனுக்குப்புத்திரனுமில்லை பௌத்தி
ரனுமில்லை, அவன் வீட்டில் மீந்தவர் ஒருவரு
மில்லை.–அவனேடிருந்தவர்கள் அவன் நாளைக் உ௰
குறித்துத்திடுக்கிட்டதுபோல், அவனுக்குப்பின்
வருபவர்களும் பிரமிப்படைவார்கள்.–பாரும், உக
இப்படிப்பட்டவைகளே துன்மார்க்கருடைய
வாசஸ்தலங்கள், தேவனை அறியாதவனுடைய
ஸ்தானம் இதுவே என்ருன்.

## ௰கூ. அதிகாரம்.

க. யோபு பில்தாத்துக்கு உத்தரஞ் சொல்லித் தன் சிநேகிதரின் கொடூரத்தைக் குறித்துக்குறை கூறல்: உரு. மயானத்தைவிட்டு உத்தானம் உண்டாகுமெனல்.

அப்பொழுது யோபு உத்தரமாக,—நீங்கள் எ உ
துவரைக்கும்என்மனதைக்கிலேசப்படுத்தி,வாக்
குகளைக்கொண்டுஎன்னைநெருக்குவீர்கள்.—நீங் ங
கள் பத்துமுறை என்னை நிந்தித்தீர்கள்: இப்படி
என்னை அறியாதவர்களாக நீங்களுங்களைக்காண்
பிப்பதினுல், உங்களுக்கு வெட்கமில்லையா.—
நான் குற்றஞ்செய்ததுமெய்யாயினும், என்குற் ச
றம் என்மேலேதங்கும்.—நீங்கள் எனக்கு விரோ ரு
தமாக உங்களைப்பெருமைப்படுத்தி, எனக்கு வி
ரோதமாய் என்னுடைய அவமானத்தைஎன்மேல்
சுமத்தினுல்,—தேவன் என்னைக்கவிழ்த்துவிட் சு
டாரென்றும், தமது வலையினுல் என்னை வளைந்து
கொண்டாரென்றும் அறிந்துகொள்ளுங்கள்.—
பாருங்கள்,அநியாயத்தினிமித்தம் நான் ஓலமிடு எ
கிறேன்; கேட்பார் ஒருவருமில்லை: நான் கூப்பி
டுகிறேன், நியாயவிசாரணையில்லை.—நான்கடந் அ
து போகாதபடி என் வழியில் வேலியடைத்தார்,
என் பாதையில் அவர் இருளை நிறுத்தினுர்.–அவர் கூ
என்னிலிருந்து என்மகிமையை உரிந்துகொண்
டார், என் தலையினின்று முடியை எடுத்துவிட்
டார்.—நான்குபுறத்திலும் என்னைநாசப்படுத்தி ௰
னுர், நான் அற்றுப்போனேன்: ஒருவிருட்சத்
தைப்போல என் நம்பிக்கையைப்பேர்த்தார்.—
எனக்கு விரொதமாகத்தமது கோபத்தைமூளப் ௰க
பண்ணினுர், என்னைத்தமக்கொருசத்துருவைப்
போல மதிக்கிருர்.—அவருடைய சேனைத்தளத் ௰உ
தார்ஏகமாய்க்கூடி,எனக்குவிரோதமாகத் தங்கள்
வழியைமேடாக்கி, என் கூடாரத்தின் நான்குபு
றத்திலு முற்றிக்கைபோட்டார்கள்.—அவர் என் ௰ங
சகோதரரைத்தூரமாய்விலக்கிவைத்தார்,எனக்கு
அறிமுகமானவர்களும்அந்நியர்போலானுர்கள்.-
என் பந்துசனங்கள் ஒழிந்துபோனுர்கள், என் ௰ச
பிராண நேசரோ என்னைமறந்துவிட்டார்கள்.—
என் வீட்டுச்சனங்களும் என்தாதிமார்களும்என் ௰ரு
னை அந்நியனுகப்பாவிக்கிருர்கள்:நான் அவர்கள்
பார்வைக்குப்பரதேசியானேன்.—நான் என்வே ௰சு
லைக்காரனைக்கூப்பிடுகிறபொழுது,அவன் எனக்
கு உத்தரங்கொடான்; என் வாயினுல் நான் அவ

(௰சு) அதி.௰அ.௰ங. அதி.ங.௰சு,௰எ,௰அ.—(௰அ. அதி. ங.) சங்.எங.உஉ. (ச) அதி.௰ங.௰ச. (ரு) நீதி.௰ங.கூ. (சு) சங்.௰அ.உஅ. (எ) சங்.கூ.௰ரு. (கூ) அதி.ரு.ரு. (௰க) அதி.௰ரு.உக. எரே.சு.உரு. (௰உ) அதி.௰ரு.உங. (௰ச) அதி.அ.௰ச. சங்.ஙா௰உ.௰. நீதி.௰.உஅ. (௰சு) ஏசா.ரு.உச. ஆமோ.உ.கூ. மல்.ச.க. (௰எ) சங்.ஙச.௰சு. நீதி.உ.உஉ. (௰கூ) ஏசா.௰ச.உஉ. எரே.உஉ.ங௰. (உ௰) சங்.ஙஎ.௰ங. (உக) எரே.கூ.ங. க.தெச.ச.ரு. உ.தெச.க.அ. தீத்.க.௰சு.—(௰கூ. அதி. ங.) ஆதி.ஙக.எ. லேவி.உசு.உசு. (ரு) சங்.ஙஅ.௰சு. (அ) அதி.ங.உங. சங்.அஅ.அ. (கூ) சங்.அகூ.சசு. (௰உ) புல.உ.ரு. (௰ங) சங்.ஙக.௰க.

௰௭ னைக்கெஞ்சினேன்.-என்வயிற்றிற் பிறந்தபிள்ளை
களினிமித்தம்நான்கெஞ்சினாலும், என்சுவாசம்
என் மனைவிக்கு அருவருப்பாயிருக்கின்றது.—
௰௮ சிறுபிள்ளைகளும் என்னைநிந்திக்கிறார்கள்; நான்
எழுந்தால் அவைகள் எனக்கு விரோதமாய்ப்பே
௰௯ சுகின்றன.—என் சகலபிராணநேசரும் என்னை
வெறுக்கிறார்கள்: என்னால் நேசிக்கப்பட்டவர்
௨௰ கள் எனக்குவிரோதிகளானார்கள்.—என்எலும்பு
கள் என்தோலோடும் என்மாமிசத்தோடும் ஒட்
டிக்கொண்டன, என் பற்களுக்கடுத்ததோலுட
௨௧ னேதப்பினேன்.—தேவனுடையகைஎன்னைத்
தொட்டது; ஆதலால் என்சிநேகிதரே என்மேல்
௨௨ இரங்குங்கள், என்மேல் இரங்குங்கள்.-நீங்கள்
தேவனைப்போலஎன்னைத்துயரப்படுத்துகிறதே
து, என்மாமிசத்தைப்பட்சித்துந் திருத்தியில்லை
௨௩ யா.-ஆ,என்வாக்குகள்எழுதப்பட்டால்நலம், அ
௨௪ வைகள் ஒருபுத்தகத்தில் பதிக்கப்பட்டு,-இருப்
புஎழுத்தாணியினாலும் ஈயத்தினாலும்கல்லிலேவ
ரையப்பட்டுச் சதாகாலமுமிருக்குமாகில் நலமா
௨௫ கும்.—என்மீட்பர்சீவித்திருக்கிறார், அவர்கடை
சிநாளில்புழுதியின்மேல் நிற்பார்: இதைநான்அ
௨௬ றிவேன்.—என்தோல் நீங்கியபின்பு என்மாமி
சங்கேடாய்ப்போனாலும், நான் சரீரத்தையுடை
௨௭ யவனாகித் தேவனைத்தரிசிப்பேன்.—எனக்குள்
ளே என் இந்திரியங்கள் கேடாய்ப்போனாலும்,
நான் என்னிமித்தம் அவரைக்காண்பேன். அந்
நியன் கண்ணல்ல, என்சுயகண்ணினாலே காண்
௨௮ பேன்.-காரியத்தின் வேர் எனனில் காணப்பட்
டதனால் நாங்கள் அவனைத்துயரப்படுத்துகிறதே
௨௯ தென்று நீங்கள் சொல்லவேண்டும்.—நியாயத்
தீர்ப்புவருமென்று நீங்கள் உணரும்பொருட்டுக்
குரோதங்கட்கத்தின்தண்டனையைவருவிக்கும்:
ஆதலால் நீங்கள் கட்கத்துக்குப் பயப்படுங்க
ளென்றான்.

## ௨௰. அதிகாரம்.

௧. சோபார் யோபுக்கு உத்தரமாய்ப் பாவத்தின்க
டுமையையுணர்த்தல்.

பின்பு நாமாத்தியனாகிய சோபார்அதற்கு உத்தர
௨ மாக,—என்சிந்தனைகள் என்னைஏவுகிறபடியால்
௩ நான் உத்தரஞ்சொல்ல விரைகிறேன்.—என்னை
அவமானஞ்செய்யுங்கண்டிதங்கேட்டேன், ஆத
லால் என்னுடையஆவி, உணர்வினால் உத்தரஞ்
௪ சொல்லும்படி என்னை ஏவுகின்றது.-பூமியிலே
மனுஷர் ஸ்தாபிக்கப்பட்டபூருவகாலந்தொடங்
௫ கி,-துன்மார்க்கருடைய கெம்பீரம்குறுகினதும்,
கபடியின்சந்தோஷம் ஒரு நிமிஷமாத்திரமுள்ள
௬ துமென்று உமக்குத்தெரியாதா.—அவன் மகத்து
வம் வானபரியந்தம்எழும்ப, அவன்தலை மேகத்
௭ திற்கு எட்டினாலும்,—அவன் தனது மலத்தைப்
போல என்றுங்கெட்டுப்போவான்: அவனை மு
ன்னே கண்டிருந்தவர்கள் அவன் எங்கேயென்
பார்கள்.-அவன் சொப்பனத்தைப்போல ஒழிந் ௮
து காணப்படமாட்டான்: அவன்இரவிற்றோன்
றுந் தரிசனத்தைப்போலத் துரத்தப்படுவான்.—
அவனை முன்கண்டிருந்தகண் பின்னொருபொ ௯
ழுதும் அவனைக்காணாது; அவன் வாசஸ்தானம்
இனி அவனை அறியாது.—அவன் பிள்ளைகளைத் ௰
தரித்திரர்நெருக்குவார்கள், அவர்களுடையபொ
ருளை அவன்கைகள் திரும்பக்கொடுக்கும்.—அ ௰௧
வன் எலும்புகள் அவனுடைய அந்தரங்கபாவங்
களினால் நிறைந்தன, அவைகள் அவனுடன் தூ
ளியிலே படுத்துக்கொள்ளும்.—துர்க்கருமம் அ ௰௨
வன்வாய்க்கு இனிமையாகிறதினால், அவன் அ
தை நாவின்கீழ் மறைத்து,—அதைவிடாமல் பத ௰௩
னம்பண்ணித் தன்வாய்க்குள்ளே வைத்திருந்தா
லும்,-அவன் ஆகாரம் அவன் குடல்களில்போய் ௰௪
விகாரப்பட்டு அவனுக்குள் விரியன்பாம்புகளி
ன்பித்தாகும்.-அவன் செல்வத்தை விழுங்கி, அ ௰௫
தை வாந்திசெய்வான்: தேவன் அவன்வயிற்றி
னின்று வெளிப்படுத்திவிடுவார்.—அவன் விரி ௰௬
யன்பாம்பின்விஷத்தை உறிஞ்சுவான்: விரியன்
நாக்கு அவனைக்கொல்லும்.—தேனும் நெய்யும் ௰௭
பெருகுகிற சிற்றாறுகளாகிய வெள்ளங்களையும்
நதிகளையும் அவன் காண்பதில்லை; அவன் தன்
பிரயாசத்தின்பலனை அனுபவியாமல் திரும்பக்
கொடுப்பான்.—தான் பிரயாசப்பட்டுத் தேடின ௰௮
தை அவன்விழுங்காமல் திரும்பக்கொடுப்பான்,
அவன்பெற்றபொருள் எவ்வளவோ அவ்வளவுந்
திரும்பக்கொடுப்பான்; அதை அவன் அனுபவி
யான்.-அவன் உபத்திரவஞ்செய்துதரித்திரரைக் ௰௯
கைவிட்டபடியினாலும், தான்கட்டாதவீட்டை
அபகரித்தபடியினாலும்,—அவன் வயிற்றுக்குத் ௨௰
தணிவில்லையே, அவன் இச்சித்தவைகளிலொன்
றையும்கைக்கொள்ளான்.-அவன் போசனத்தில் ௨௧
ஒன்றும்மீதியானதில்லை; ஆகையால்அவன்பொ
ருளை அபேட்சிப்பார் ஒருவருமில்லை.—அவன் ௨௨
வாழ்வின்பரிபூரணத்திலும் நெருக்கப்படுவான்:
உபத்திரவப்படுத்துகிறவர்களுடையகைகளெல்
லாம் அவன்மேல்விழும்.—அவன்தன்வயிற்றை ௨௩
நிரப்புஞ்சமயத்தில் தேவன் அவன்மேல் கோ
பாக்கினியைவீசுவார், அவன்போசனம்பண்ணு
கையிலும் அவர்அதைச்சொரியப்பண்ணுவார்.-
அவன் இருப்பாயுதத்துக்குத் தப்பி ஓடினாலும், ௨௪
பித்தளைவில்லினால் உருவ எய்யப்படுவான்.—
அது அவன்சரீரத்தினின்று இழுக்கப்பட வெ ௨௫
ளிப்படும்; ஒளிவீசுங்கட்கம் அவன்பித்தினின்
றுபுறப்படும்: பயங்கரங்கள் அவன்மேல்வரும்.-
முழு அந்தகாரமே அவன் ஒளிக்குமிடங்களில் ௨௬
சேர்க்கப்படும்: அவியாத அக்கினி அவனைத்த

(௰௮) ௨.இரா.௨.௨௩. (௰௯) சங்.௪௧.௯. (௨௰) அதி.௩௰.௩௰. (௨௧) சங்.௩௮.௨. (௨௨) சங்.௬௯.௨௬. (௨௬) சங். ௰௭.௰௫. ௧.கொரி.௰௩.௰௨. ௧.யோவா.௩.௨. (௨௯) சங்.௫௮.௰,௰௧.—(௨௰. அதி. ௫.) சங்.௩௭.௩௫,௩௬. (௬) ஏசா. ௰௪.௰௩,௰௪. ஒப.௩.௪. (௭) சங்.௮௩.௰. (௮) சங்.௯௰.௫. (௯) சங்.௩௭.௩௬. (௰) வச.௰௮. (௰௧) சங்.௨௫.௭. அதி. ௨௧.௨௬. (௰௭) சங்.௩௬.௮. எரே.௰௭.௬. (௨௰) பிர.௫.௰௩,௰௪. (௨௩) எண்.௰௧.௩௩. சங்.௭௮.௩௰,௩௧. (௨௪) ஏசா. ௨௪.௰௮. ஆமோ.௫.௰௯.

கிக்கும்; அவன்வாசஸ்தானத்தில் மீந்திருக்கிறவ
௨௭ னுக்குத் தீமைநேரிடும்.—வானம் அவன்பாவத்
தை வெளிப்படுத்தும்; பூமி அவனுக்கு விரோத
௨௮ மாய் எழும்பும்.—அவன் குடும்பத்தின் விளைவு
நீங்கிவிடும், குரோதத்தின்தினத்தில் பாய்ந்துவி
௨௯ டும்.—இதுவே தேவனால் பாவிக்குக்கிடைக்
கும்பங்கு, தேவனால் அவனுக்கு ஏற்படுத்தப்
பட்ட சுதந்தரமென்றான்.

## ௨௧. அதிகாரம்.

௧. யோபுசோபாருக்குப்பிரதியுத்தரம்சொல்லல்: ௭. பாவிகள்வாழ்வடைதல்: ௰௬. அவர்கள்தாழ்வுமடைதல்: ௨௨. நல்லோருக்குந் தீயோருக்குமுண்டாகும் ஆபத்துக்காட்டல்: ௨௭. துன்மார்க்கருக்குப் பரலோகத்தில் நியாயத்தீர்ப்புண்டாகுமெனல்.

௨ யோபு அதற்குத்தரமாக,—நீங்கள்கருத்தாய் என்
வாக்குக்குச் செவிகொடுங்கள், இதுவே என்
னால் உங்களுக்குக்கிடைக்கும் ஆறுதலாகக்கட
௩ வது.—நான் வசனிக்கப்போகிறேன். பொறுத்
துக்கொள்ளுங்கள்; நான்வசனித்தபின்பு நீங்கள்
௪ பரிகாசம்பண்ணுங்கள்.—நான் மனுஷனுக்கு ஓ
லமிடுகிறேனா; அப்படியானால் என் ஆத்துமம்
௫ வியாகுலப்படாமல்போவதென்ன.—என்னைப்
பார்த்துப் பிரமிப்பாயிருங்கள், உங்கள்வாயைக்
௬ கையினாற் பொத்திக்கொள்ளுங்கள்.—நான் நினை
வுகூரும்போது பயப்படுகிறேன், நடுக்கம் என்
௭ மாமிசத்தைப் பிடிக்கின்றது.—துன்மார்க்கர் சீ
வித்துவிருத்தராகிப் பராக்கிரமத்திற் பெருகுவ
௮ தென்ன.—அவர்கள் சந்ததியார் அவர்கள்சமுகத்
தின்முன்பாகவும், அவர்கள்பிள்ளைகள் அவர்கள்
பார்வைக்குமுன்பாகவும் நிலைப்பட்டிருக்கிறார்
௯ கள்.—அவர்கள் குடும்பங்கள்பயமில்லாமல்வாழ்
வடைகின்றன, தேவ தண்டம் அவர்கள்மேலி
௰ ருக்கவில்லை.—அவர்களுடைய எருது தவறாமல்
பொலிகின்றது; அவர்கள் பசு, சினை அழியா
௰௧ மல் ஈனுகின்றது.—அவர்கள் தங்கள் குழந்தை
களை மந்தையைப்போல் வெளியேவிடுவார்கள்,
அவர்கள் பிள்ளைகள் நடனம்பண்ணுகிறார்கள்.—
௰௨ அவர்கள் மேளத்தையுஞ் சுரமண்டலத்தையும் எ
டுத்துக் கின்னரத்தொனியினால் களிகூருகிறார்
௰௩ கள்.—அவர்கள் சுக அனுபவத்தில் தங்கள் நாள்
களைப்போக்கி ஒரு நிமிஷத்திலே பிரேதக்குழி
௰௪ யிலிறங்குகிறார்கள்.—அவர்கள் தேவனைநோக்
கி, எங்களைவிட்டு விலகிவிடும்; உமதுநெறிகளை
௰௫ நாங்கள் அறியவிரும்பமாட்டோம்,—சருவவல்
லவரை நாம் சேவிக்க அவர் ஆர், அவரிடத்தில்
நாம் பிரார்த்தனை பண்ணுவதினால் நமக்கென்ன
௰௬ லாபம் என்கிறார்கள்.—கேளுங்கள், அவர்கள்
வாழ்வு அவர்கள் கையிலுள்ளதல்ல: துன்மார்க்
கருடைய ஆலோசனை எனக்குத் தூரமாயிருப்ப
தாக.—பாவிகளுடைய விளக்கு எத்தனைதரம் அ ௰௭
ணைந்துபோகின்றது; அவர்கள்மேல் எத்தனைத
ரம் நாசம்வருகின்றது; தேவன் குரோதங்கொ
ண்டு அவர்களுக்குக் கிலேசங்களைப் பகுத்துக்
கொடுக்கிறார்.—அவர்கள் காற்றுக்குமுன் அகப் ௰௮
பட்ட துரும்பைப்போலவும், பெருங்காற்றுக்
கவர்ந்துகொண்டுபோகும் பதரைப்போலவுமி
ருக்கிறார்கள்.—தேவன் அவன் சந்ததியார் நி ௰௯
மித்தம் அவன் பாவத்தைப்பதனம்பண்ணிவைக்
கிறார்: அவர் அவனுக்குப் பலனளிக்கும்பொழு
து அவன் அதை அறிவான்.—அவன் சுயகண்த ௨௰
னது நாசத்தைக்காணும், சருவவல்லவருடைய
குரோதத்தைப்பானம்பண்ணுவான்.—அவன் மா ௨௧
தத்தின்தொகை இடையிலேசேதிக்கப்படும்பொ
ழுது, அவனுக்குப் பின்பு மீந்த அவனுடையகு
டும்பத்தில் அவனுக்கென்னசௌக்கியம்.—தே ௨௨
வனுக்கு ஞானத்தைப்போதிக்கிறவன் யாவன்;
அவர்பெரியோர்களையும்நியாயம்விசாரிக்கிறார்.-
ஒருவன்வாழ்வடைந்து விக்கினமின்றிச் சம்பூர ௨௩
ணபராக்கிரமத்தை யுடையவனாய் இறந்துபோ
கிறான்.—அவனுடைய பாத்திரங்கள்பாலினால் நி ௨௪
ரப்பப்பட்டன, அவன் எலும்புகள் ஊனினால்
பசுமைகொண்டன.—வேறொருவன் ஒருபொ ௨௫
ழுதும் திருத்தியாகப்போசனம்பண்ணாமல்மனக்
கசப்பையுடையவனாய் இறந்துபோகிறான்.—
இவ்விருவரும் சமானமாய்ப்புழுதியில் படுத்துக் ௨௬
கொள்ளுகிறார்கள், புழுக்கள் இவர்களைமூடும்.—
கேளுங்கள், நான் உங்கள் சிந்தனைகளையும் நீங் ௨௭
கள் எனக்கு அநியாயமாய்க்கொண்டிருக்கிற
ஆலோசனைகளையும் அறிவேன்.—பிரபுவினுடை ௨௮
ய வீடு எங்கே; துன்மார்க்கருடைய வாசஸ்தா
னங்கள் எங்கேயென்கிறீர்கள்.—நீங்கள் வழிப் ௨௯
போக்கரைக்கேட்கவில்லையா; அவர்களுடைய
குறிப்புக்களை நீங்கள் அறியவில்லையா.—நாசத் ௩௰
தின் தினத்துக்காகத் துன்மார்க்கர் காக்கப்படுகி
றார்கள்; அவர்கள் குரோதத்தின் தினத்தில் வெ
ளியே கொண்டுவரப்படுவார்கள்.—ஆனாலும் அ ௩௧
வன் முகத்தின் முன் அவன்குற்றத்தைவிவரிப்
பவன் யாவன்; அவன்செய்கையின்பலனை அ
வனுக்களிப்பவன்யாவன்.—அவன் பிரேதக்கு ௩௨
ழிக்குக்கொண்டுவரப்படுவான், அவன் கோரி
காக்கப்படும்.—பள்ளத்தின் கழிபத்தைகள் அவ ௩௩
னுக்கு இனிமையாயிருக்கும், அவனுக்குமுன்
னாக எண்ணிறந்த சனங்கள் போனதுபோல அ
வனுக்குப்பின்னாக ஒவ்வொருவனுங்கொண்டு
போகப்படுவான்.—உங்கள் உத்தரங்களில் தோ ௩௪
ஷமிருக்க, நீங்கள் விருதாவாக எனக்கு ஆறுதல்
சொல்லுகிறதேதென்றான்.

## ௨௨. அதிகாரம்.

௧. எலீபாஸ் யோபுக்கு உத்தரஞ்சொல்லி அவன்

---

(௨௧) அதி.௨௭.௰௩.—(௨௧. அதி. ௩.) அதி.௰௬.௰. (௫) நியா.௰௮.௰௯. சங்.௩௯.௯. (௭) சங்.௭௩.௩,௰௨. எரே.௰௨.௧. அபகூ.௧.௰௬. (௯) சங்.௭௩.௫. (௰௪) அதி.௨௨.௰௭. (௰௫) யாத்.௫.௨. மல்.௩.௰௪. (௰௬) சங்.௧.௧. நீதி.௧.௰, (௰௭) அதி.௰௮.௬. லூக்.௰௨.௪௬. (௰௮) சங்.௧.௪. ஏசா,௨௯.௫. ஓசி.௰௩.௩. (௰௯) யாத்.௨௰.௫. (௨௰) சங்.௭௫.௮. ஏசா.௫௧.௰௭. எரே.௨௫.௰௫. வெளி.௰௯.௰௫. (௨௨) ஏசா.௪௰.௰௩. ரோ.௰௧.௩௪. ௧.கொரி.௨.௰௬. (௨௬) பிர.௯, ௨. (௩௰) நீதி.௰௬.௪. ௨.பேதுரு.௨.௯. (௩௧) கலா.௨.௰௧. (௩௩) எபி.௯.௨௭.—(௨௨. அதி.)

மேல் குற்றஞ்சுமத்தல்: ௨௧. யோபுக்கு ஆலோசனைசொல்லல்.

பின்பு தேமானியனுகிய எலீபாஸ் உத்தரமாக,—
௨ ஒருவன், விவேகியாயிருந்து தனக்குப்பலன் வ
ருவிக்கிறதுபோல, தேவனுக்குப் பலன்விளை
௩ விக்கக்கூடுமோ.—நீர் நீதிமானுயிருந்தால் சருவ
வல்லவருக்குச்சௌக்கியமாகுமா; நீர் உமதுநெ
றிகளைச் சீர்ப்படுத்துவதிஞல் அவருக்கு லாப
௪ முண்டா.—அவர்உமக்குப்பயந்து உம்மைக்கடிந்
துகொள்வாரா; உம்மோடே நியாய ஸ்தலத்தில்
௫ பிரவேசிப்பாரா.—உமது பாவமல்லவா மிகுதி;
உமது அதிக்கிரமங்களல்லவா அளவிறந்தன.—
௬ நீர் நிமித்தமில்லாமல் உமதுசகோதரனிடத்தில் ஈ
டுவாங்கினீர்;நிருவாணமானவர்களிடத்தில்வஸ்
௭ திரம் பறித்தீர்.—விடாய்த்தவனுக்குக் குடிக்கச்
சலபானந்தராமலும், பசியுள்ளவனுக்கு போச
௮ னங் கொடாமலும் விட்டீர்.—புயபெலமுள்ளவ
னுக்குப்பூமிகிடைத்தது; மேன்மகன் அதில்வா
௯ சம்பண்ணினுன்.—விதவைகளை வெறுமையாய்
அனுப்பிவிட்டீர், அநாதபிள்ளைகளின் புயங்கள்
௰ முறிக்கப்பட்டன.—இதினிமித்தங் கண்ணிகள்
உம்மைச்சூழ்ந்திருக்கின்றன, சடிதியில்பயம்வந்
௰௧ து உம்மைவியாகுலப்படுத்துகின்றது.—கண் நு
ழையாத அந்தகாரமும் சலப்பிரளயமும் உம்மை
௰௨ மூடுகின்றன.—தேவன்வானத்தின் உயர்ந்தஸ்
தானத்திலிருக்கிறூரல்லவா; நட்சத்திரங்களின்
உயரத்தைப்பார், அவைகள் எவ்வளவு உயரமா
௰௩ யிருக்கின்றன.—தேவன் எப்படிஅறிவார்,கார்
மேகத்தின்வழியாய் அவர்நியாயம்விசாரிக்கவல்
௰௪ லவரா.—அவர் பார்க்கக்கூடாதபடி கார்மேகங்
கள் அவருக்குமறைவாயிருக்கின்றன, அவர் ஆ
காயமண்டலத்தில் உலாவுகிறூரென்றுசொல்லு
௰௫ கிறீர்.—பூருவகாலத்தில் துராத்துமாக்கள் நடந்த
மார்க்கத்தை நீர்உற்றுப்பார்த்தீரா;பூரணகாலம்வ
ராததற்குமுன்னே அவர்கள் சேதிக்கப்பட்டார்
௰௬ கள்.—அவர்கள் அஸ்திபாரங்கள் சலப்பிரளயத்தி
௰௭ ஞல்சிதைந்துபோயின.-அவர்கள்தேவனைநோ
க்கி, எங்களைவிட்டுவிலகுமென்றும், சருவவல்
லவரென்பவர் எங்களுக்கு என்னசெய்வாரென்
௰௮ றுஞ்சொன்ஞர்கள்.—ஆகிலும் அவர்நன்மையால்
அவர்கள்வீடுகளைப்பூரணப்படுத்தினுர்: ஆ, துன்
மார்க்கனுடைய ஆலோசனை எனக்குத்தூரமாயி
௰௯ ருப்பதாக.—எங்கள் பொருள் சேதிக்கப்படாம
லிருக்க, அக்கினி அவர்கள்ஐசுவரியத்தைப்பட்
௨௰ சித்தது.—சன்மார்க்கர்கண்டு சந்தோஷப்படுகி
றூர்கள்: குற்றமற்றவர்கள் அவர்களைப்பரிகாசம்
௨௧ பண்ணுகிறூர்கள்.—நீர் அவரோடேபழகிச்சமா
தானமாயிரும்: அதினுல் உமக்குநன்மைவரும்.-
௨௨ நீர் அவர்வாயினின்று வேதப்பிரமாணத்தை ஏற்
றுக்கொண்டு, அவர்வாக்குகளை உமது மனதில்
வைத்துக்கொள்ளும்படி வேண்டுகிறேன்.—நீர் ச ௨௩
ருவவல்லவரிடத்தில் திரும்பினுல் சீர்ப்படுவீர்,
தீமையை உமது கூடாரங்களுக்குத் தூரமாகவி
லக்கிவிடும்.—அதினுல் புழுதிபோலப்பொன்னை ௨௪
யும், நதியிலுள்ளகற்களைப்போல ஒப்பீரின் தங்
கத்தையுஞ் சேர்த்துவைப்பீர்.—சருவவல்லவ ௨௫
ரே உமக்குத் தங்கமாவார், வெள்ளிக்குவியல்
கள் உமக்குண்டாகும்.—சருவவல்லவரைச்சார்ந் ௨௬
துமகிழ்ந்திருப்பீர், தேவனுக்குமுன் உமது மு
கத்தை ஏறெடுப்பீர்.—நீர் அவரிடத்தில் பிரார்த் ௨௭
தனைபண்ணும்பொழுது உமக்குச்செவிகொடுப்
பார், நீர் உமது சங்கற்பங்களைநிறைவேற்றுவீர்.-
நீர் யாதாவதொன்றைச்செய்ய அபிப்பிராயங் ௨௮
கொள்ளும்பொழுது அது உமக்குச்சித்தியாகும்:
உமதுபாதைகளில் ஒளி பிரகாசிக்கும்.—சனங் ௨௯
கள் விழுமிடத்தில் நீர் உன்னதமாவதாகவென்
றுசொல்ல, அவர் தாழ்ந்தசிந்தையுள்ளவனை இ
ரட்சிப்பார்.—அவர் குற்றமற்றவனல்லாதவனை ௩௰
யும் இரட்சிப்பார். உமது கைகளுடைய சுத்தத்
தினுல் இரட்சைபெறுவானென்றுன்.

## ௨௩. அதிகாரம்.

௧. யோபு தேவன் தன்னைநியாயம்விசாரிக்கவேண்டித் தான் குற்றமற்றவனென்றுசொல்லல்: ௰௩. தேவனுக்கஞ்சிநிற்றல்.

பின்புயோபு உத்தரமாக,-இன்றைத்தினம் என ௧,௨
துபுலம்பல் மிகவுங்கிலேசமுள்ளது:என்தவிப்பி
லும் என்வாதைமிகவுங்கடியது.—ஆ,நான் அவ ௩
ரைச் சந்திக்கும்வகை அறிந்தேனுகில், அவரு
டையசிங்காசனத்தின்சமீபத்தில்சேருவேனே.-
என்நியாயத்தை அவர்சமுகத்தில் விளங்கக்காட் ௪
டி, யுத்திநியாயங்களினுல் என்வாயைப்பூரணப்
படுத்துவேன்.—அவர்எனக்குச்சொல்லும் உத்த ௫
ரமாகிய வாக்குகளை அறிவேன், அவர்எனக்குத்
தெரிவிப்பதையும் தூக்கிப்பார்ப்பேன்.—அவர் ௬
தமது மகாபராக்கிரமத்துடனே எனக்குவிரோத
மாகவழக்காடுவாரோ; இல்லையே, என்பட்சமா
யிருப்பார்.—அந்தஸ்தானத்தில் நீதிமான் அவரோ ௭
டேவழக்காடலாம், அப்பொழுதுநான் என்நியா
யாதிபதியினின்று சதாகாலமும் விடுவிக்கப்படு
வேன்.—கேள், நான்முன்னேபோகிறேன், அ ௮
வர் அங்கேஇல்லை; பின்னேபோகிறேன், நான்
அவரைக்காணேன்.—அவர்கிரியைசெய்கிற இ ௯
டப்பக்கத்திலும் நான் அவரைத் தரிசிக்கவில்
லை: அவர் தம்மை நான்காணுதபடி வலப்பக்கத்
தில் ஒளித்துக்கொள்ளுகிறூர்.—ஆனுலும் நான் ௰
செல்லும்பாதை அவருக்குத்தெரியும்: அவர்என்
னைச் சோதித்தபின் தங்கத்தைப்போல வெளிப்

(௨) அதி.௩௫.௭. சங்.௰௬.௨. லூக்.௰௭.௰. (௬) யாத்.௨௨.௨௬,௨௭. எசேக்.௰௮.௰௨. (௭) உபா.௰௫.௭,. ஏசா.௫௮.௭. மத்.௨௫.௪௨. (௯) ஏசா.௰.௧. எசேக்.௨௨.௭. (௰௧) சங்.௬௯.௧,௨. புல.௩.௫௪. (௰௩) சங்.௰.௰௧. (௰௪) சங்.௱௩௯.௰௧,௰௨. (௰௬) அதி.௰௫.௩௨. சங்.௫௫.௨௩. பிர.௭.௰௭. ஆதி.௭.௰௧. ௨.பேதுரு.௨.௫. (௰௭) அதி.௨௧.௰௪. சங்.௪.௬. (௨௧) ஏசா.௨௭.௫. (௨௨) சங்.௱௰௯.௰௧. (௨௩) அதி.௮.௫,௬. (௨௪) ௨.நாளா.௧.௰௫. (௨௬) அதி.௨௭.௰. ஏசா.௫௮.௰௪. அதி.௰௧.௰௫,௨௭. சங்.௫௰.௰௪,௰௫. ஏசா.௫௮.௯. (௨௯) நீதி.௨௯.௨௩. யாக்.௪.௬. ௧.பேதுரு.௫.௫. (௩௰) ஆதி.௰௮.௨௬,.—(௨௩. அதி. ௩.) அதி.௰௩.௩. (௬) ஏசா.௨௭.௪,௮. (௰) சங்.௱௩௯.௧,௨,௩. சங்.௰௭.௩. யாக்.௧.௰௨.

௰௧ படுவேன்.—அவருடைய அடிச்சுவடுகளில்நான்
காலவைத்து நடந்தேன், அவர்நெறிகளைவிட்டு
௰௨ வழுவாமல் நிலைகொண்டேன்.—அவர் உதடுக
ளின் கட்டளையை நான் மீறவில்லை; எனக்கு
அவசியமானதைப் பார்க்கிலும் அவர் வாயின்
௰௩ வாக்குகளை ஒளித்துவைத்தேன்.—அவர் ஒரேமன
முள்ளவர், அவரைத்திருப்பவல்லவன்யாவன்;
அவர் சித்தங்கொள்வதெதுவோ அதைச் செய்
௰௪ வார்.—எனக்குக்குறித்திருக்கிறதை அவர் நிறை
வேற்றுவார்: இப்படிப்பட்டவைகள் அநேகம்
௰௫ இன்னும் அவரிடத்தில் உண்டு.—நான் அந்தகா
ரத்துக்குமுன் சேதிக்கப்படாமலும், அவர் அந்
தகாரத்தை எனக்குவிலக்கி மறைக்காமலுமிருக்
௰௬ கிறபடியால்,—நான் அவர் சமுகத்தில்கலங்குகி
றேன்: நான் சிந்திக்கும்பொழுது அவருக்குப்ப
௰௭ யப்படுகிறேன்.—தேவன் என்மனதைமெலிவ
டையப்பண்ணுகிறார், சருவவல்லமையுள்ளவர்
என்னைக்கலங்கப்பண்ணுகிறார்.

## ௨௪. அதிகாரம்.

௧. துன்மார்க்கர் தண்டனைபடார்களெனக்காட்டல்: ௭. துன்மார்க்கருடைய நிலைமையை யுணர்த்தல்.

சருவவல்லவருக்குக்காலங்கள் மறைக்கப்படா
மலிருந்தால்,அவரை அறிந்தவர்கள் அவருடைய
௨ தினங்களை அறியாமல் போகிறதென்ன.—சிலர்
பூமியின் எல்லைக்குறிப்புக்களை நீக்குகிறார்கள்:
பலாற்காரமாய்மந்தைகளைக்கவர்ந்து,அவைகளை
௩ மேய்க்கிறார்கள்.—அவர்கள் அநாதபிள்ளைகளு
டையகழுதைகளைஒட்டிக்கொண்டுபோகிறார்கள்;
௪ விதவையின் எருதை ஈடாகவாங்குகிறார்கள்.—அ
வர்கள் ஏழைகளை வழியினின்று விலக்குகிறார்க
ள்: தேசத்திலுள்ள திக்கற்றவர்கள் ஏகமாய் ஒளித்
௫ துக்கொள்ளுகிறார்கள்.—கேளுங்கள், அவர்கள்
காட்டுக் கழுதையைப்போலத் தங்கள் வேலைக்
குப் புறப்பட்டுப்போகிறார்கள்,சாக்கிரதையாய்
இரையைத்தேடுகிறார்கள்; வனமே அவர்களுக்
கும் அவர்கள்பிள்ளைகளுக்கும் ஆகாரத்தைவிளை
௬ விக்கின்றது.—அவர்கள் வயல்வெளியிலே தங்
கள் தங்கள் தானியத்தை அறுக்கிறார்கள்: துன்
மார்க்கருடையதிராட்சப்பழங்களைப் பறிக்கிறார்
௭ கள்.—நிருவாணிகளை வஸ்திரமில்லாமல் படுக்
கப்பண்ணுகிறார்கள், சீதளகாலத்தில் மூடும்வஸ்
௮ திரம் அவர்களுக்கில்லை.—அவர்கள் பருவதங்க
ளில் மழையினால்நனைந்து, புகலிடமின்றிக்கன்
௯ மலையை அணைத்துக்கொள்ளுகிறார்கள்.—சிலர்
அநாதபிள்ளையை முலையைவிட்டுப் பறிக்கிறார்
கள், தரித்திரரிடத்தில் ஈடு வாங்குகிறார்கள்.—
௰ சிலரை வஸ்திரமில்லாமல் நிருவாணிகளாய்த்தி
ரியப்பண்ணுகிறார்கள், அவர்கள் பட்டினியிருந்
௰௧ து அரிக்கட்டுக்களைச்சுமக்கிறார்கள்.—தங்கள் ம
தில்களுக்குள்ளே செக்காடவும் தாகமாய் ஆலை
யாடவும்பண்ணுகிறார்கள்.—நகரத்தில் மனிதர் த ௰௨
விக்கிறார்கள், குற்றுயிருள்ளவர்களும் ஓலமிடு
கிறார்கள்: ஆகிலுந் தேவன் அவர்கள்குற்றத்தை
அவர்கள்மேற் சுமத்துவதில்லை.—அவர்கள்ஒளிக் ௰௩
குவிரோதமாக நடக்கிறார்கள்; அதின்நெறிகளை
அறியவுமாட்டார்கள், அதின் பாதைகளில்செல்
லவு மாட்டார்கள்.—கொலைபாதகன் பொழு ௰௪
துவிடிய எழுந்து, தரித்திரனையும் திக்கற்றவனை
யுங் கொல்லுகிறான், இராத்திரியிலே திருட
னைப்போலஇருக்கிறான்.—விபசாரனுடையகண் ௰௫
மாலைக்காலத்தை எதிர்பார்க்கின்றது, என்னை
ஒருகண்ணுங் காண்பதில்லையென்று முக்காடு
போட்டுக்கொள்ளுகிறான்.—அவர்கள்தங்களுக் ௰௬
கென்று பகலில்குறித்த வீடுகளை இருட்டிலே
கன்னமிடுகிறார்கள்: ஒளியைக்காணவிரும்பார்
கள்.—அவர்களுக்கு விடியற்காலமும் மரண நி ௰௭
ழலைப்போலிருக்கின்றது: ஒருவன் அறிந்தால் ம
ரணநிழலின்பயங்கரம்அவர்களுக்குண்டாகும்.-
அவன் நீரோட்டத்தைப்போலத் தீவரிக்கிறான்; ௰௮
தேசத்தில் அவர்கள் சுதந்தரம் சபிக்கப்படுகின்
றது: அவன் திராட்சத்தோட்டத்தின் வழியைக்
காண்கிறதில்லை.—வறட்சியும் உஷ்டணமும் ௰௯
உறைந்தமழை நீரையும், பிரேதக்குழியானதுபா
விகளையுங் கவருகின்றன.—கருப்பம் அவனை ௨௰
மறக்கும்; புழு அவனை இனிதாகப்பட்சிக்கும்;
அவன் ஒருபொழுதும் ஒருவராலும் நினைக்கப்
படான்; கொடுமைவிருட்சத்தைப்போல முறிந்
துபோகும்.—மக்கட்பேறில்லாத மலடியைப்பட் ௨௧
சிக்கிறான். விதவைக்கு நன்மைசெய்யான்.—
அவன் தன்பெலத்தினால் பெலவான்களை வசப் ௨௨
படுத்துகிறான்: அவன் எழும்புகிறபொழுது பிரா
ணன்தப்புமென்று நம்பிக்கை ஒருவனுக்குமில்
லை.—அவன்வாழ்ந்திருக்கவரம்பெற்று, அதைச் ௨௩
சார்ந்துகொள்ளுகிறான்; ஆனாலும் அவர்கள்
நெறிகளில் அவர் கண்வைக்கிறார்.—அவர்கள் ௨௪
சொற்பகாலம் உன்னதம்பெறுகிறார்கள், பின்பு
இராதொழிந்து தாழ்த்தப்பட்டு,யாவரையும்போ
ல அகற்றப்படுகிறார்கள்; தானியக்கதிர்களின்
நுனிகளைப்போலச் சேதிக்கப்படுகிறார்கள்.—
அப்படியில்லாவிட்டால் என்னைப்பொய்யனாக் ௨௫
கி, என்வாக்கை வியர்த்தமாக்க வல்லவன் யாவ
னென்றான்.

## ௨௫. அதிகாரம்.

மனுஷன் தேவனிடத்தில் நீதிமானாதல் கூடாதெனப்பில்தாத் காட்டல்.

அதற்குத்தரமாக ஸூகியனாகிய பில்தாத்,-இரா ௧,௨
சத்துவமும் பயங்கரமும் அவரிடத்திலுள்ளன,
அவர் தம்முடைய உன்னத ஸ்தானங்களில்சமா
தானத்தையுண்டாக்குகிறார்.—அவருடைய சே ௩
னைகளுக்குத் தொகையுண்டா; அவருடைய ஒ
ளி ஆர்மேல் உதிக்காமலிருக்கின்றது.—மனுஷன் ௪

(௰௧) சங்.௪௪.௰௮. (௰௨) யோவா.௪.௩௨,௩௪. (௰௩) ரோ.௯.௰௯. சங்.௱௰௫.௩. (௰௪) ௧.தெச.௩.௩. (௰௬) சங்.௨௨.௰௪.—(௨௪.அதி.௧.) அப்.௧.௭. (௨) உபா.௰௯.௰௪. நீதி.௨௨.௨௮. ஓசி.௫.௰. (௩) உபா.௨௪.௬. (௪) நீதி.௨௮.௨௮. (௭) யாத்.௨௨.௨௬,௨௭. உபா.௨௪.௰௨,௰௩. (௰௪) சங்.௰.௮. (௰௫) நீதி.௭.௯. சங்.௰.௰௧. (௰௬) யோவா.௩.௨௰.(௨௰) நீதி.௰.௭. (௨௩) சங்.௰௧.௪. நீதி.௰௫.௩.—(௨௫. அதி. ௩.) யாக்.௧.௰௭. (௪) அதி.௪.௰௭,. சங்.௱௩௰.௩.

தேவனுடையசமுகத்தில் நீதிமானாவதெப்படி;
ஸ்திரியிடத்திற்பிறந்தவன் சுத்தமாவதெப்படி.—
௫ கேளும், அவர் சமுகத்தில்சந்திரனும் பிரகாச
மில்லாதிருக்கின்றது; அவர் பார்வையில் நட்
௬ சத்திரங்களும் சுத்தமுள்ளனவல்ல.—புழுவாயி
ருக்கிற மனுஷனும் பூச்சியாயிருக்கிற மனுபுத்
திரனும் எம்மாத்திரமென்றான்.

## ௨௬. அதிகாரம்.

யோபு பில்தாத்துக்கு உத்தரஞ்சொல்லித் தேவ
னுடைய மகிமையை விளங்கக்காட்டல்.

௨ யோபு உத்தரமாக,—நீ எவ்விதமாகப் பெலவீ
னனுக்குச்சகாயஞ்செய்தாய்; எவ்விதமாய்ப்பெ
௩ லனற்ற கையை ஆதரித்தாய்.—நீ எவ்விதமாய்
ஞானமில்லாதவனுக்குப் போதித்தாய்; எவ்வி
தமாய் உள்ளபொருளைச் சம்பூரணமாக விளக்கி
௪ னாய்.—ஆருக்குவாக்குகளை வசனித்தாய்; உன்
௫ னிடத்தில்தோன்றிய ஆவி ஆருடையது.—சலத்
தின்கீழ்மரித்தோர்களும், அவர்களுடனேஇருக்
௬ கிறவர்களும் நடுங்குகிறார்கள்.—அவர்சமுகத்தில்
நரகமுந் திறக்கப்பட்டிருக்கின்றது, நாசத்தின்
௭ ஸ்தானமும் மூடப்படாததாயிருக்கின்றது.—அ
வர் சூனியத்தில் வடக்கைவிரித்திருக்கிறார், அந்
௮ தரத்தில் பூமியைத்தொங்கப்பண்ணுகிறார்.—கார்
மேகங்களில்சலத்தைக்கட்டுகிறார்; அதின்பாரத்
௯ தினால் மேகங்கிழியவில்லை.—அவர் தமது சிங்
காசனத்தின் முகத்தை மூடுகிறார், அதின்மேல்
௰ மேகத்தைவிரிக்கிறார்.—ஒளியும் இருளும் ஒழி
யும்வரைக்கும் அவர் சலத்தைச்சுற்றி அணைகட்
௰௧ டுகிறார்.—அவர் கடிந்துகொள்ளும்பொழுது ஆ
காயமண்டலத்தின் தூண்கள் அதிர்ந்து பிரமித்
௰௨ துக்கொண்டிருக்கின்றன.—அவர் தமது பராக்
கிரமத்தினால் சமுத்திரத்தைப் பிரிக்கிறார், தமது
புத்தியினால் அகங்காரிகளைச் சங்கரிக்கிறார்.—
௰௩ அவர் தமது ஆவியினால் ஆகாயத்தை அலங்கரித்
திருக்கிறார், அவர் கரம் வளைவான சருப்பத்தை
௰௪ உருவாக்கிற்று.—கேளுங்கள், இவைகள் அவர்
கிரியையில் மிகவுஞ் சொற்பமாகும்: அவரைக்
குறித்து நாம்கேட்டது எவ்வளவு அற்பம்; அவ
ருடையபராக்கிரமத்தின் முழக்கத்தைஅறியவல்
லவன்யாவனென்றான்.

## ௨௭. அதிகாரம்.

௧. யோபு தான்குற்றமற்றவனென்று சொல்லல்: ௮. தன்கபடின்மையைவெளிப்படுத்தல்: ௰௧. இம்மையில் துன்மார்க்கருக்குண்டாகும் நன்மைகள் சாபமாய்முடிதல்.

யோபுதிரும்பவுந்தன்பிரசங்கத்தை எடுத்து,—
௨ என்நியாயத்தைவிலக்கிவிட்ட தேவனும் என்
பிராணனைக் கிலேசப்படுத்தின சருவவல்லவரு
௩ மாயிருப்பவர் நித்தியரானால்,—என்சுவாசம் என்
னிலும், தேவனுடைய ஆவிநாசியிலும் இருக்
கும்வரைக்கும்,—என் உதடுகள்தீமையைவசனிப் ௪
பதுமில்லை, என் நாக்குக்கபடம் பேசுவதுமில்
லை.—உங்களை நீதிமான்களென்றெண்ணுவது எ ௫
னக்குத்தூரமாயிருப்பதாக: என்ஆயுள்பரியந்தம்
என்யதார்த்தத்தைவிட்டுவிலகமாட்டேன்.-நான் ௬
என்நீதியைக் காத்துக்கொள்வேன், அதை ஒரு
பொழுதும்விடேன்: என் ஆயுள்நாளளவும் என்
மனம் என்னைநிந்திப்பதில்லை.—என் சத்துருபா ௭
பிஷ்டருக்குள்ளும், எனக்கு விரோதமாயெழும்
புகிறவன் துன்மார்க்கருக்குள்ளும் எண்ணப்படு
வார்களாக.—கபடி பொருளைக்குவித்து வைத்தா ௮
லுந் தேவன்அவன்பிராணனைக்கவர்ந்துகொள்
ளும்பொழுது அவன் நம்பிக்கையென்ன.—அவ ௯
னுக்குக்கிலேசம் நேரிடுஞ்சமயத்தில் தேவன்
அவனிடும் ஓலத்தைக்கேட்பாரா.—அவன் சருவ ௰
வல்லவர்மேல் மகிழ்ச்சியாயிருப்பானோ; அவன்
நித்தமுந் தேவனிடத்தில் பிரார்த்தனைபண்ணு
வானோ.—நான் தேவனுடையசகாயத்தினால் உங் ௰௧
களுக்குப்போதகம்பண்ணுவேன்:சருவவல்லவ
ரிடத்திலுள்ளதை நான் மறைக்கமாட்டேன்,—
கேளுங்கள்,நீங்களெல்லாரும்இதைக்கண்டிருக் ௰௨
கிறீர்கள்; நீங்கள் வீண் எண்ணங்கொள்வதென்
ன.—துன்மார்க்கன் தேவனிடத்தில் பெறும் ௰௩
பாகமும், உபத்திரவப்படுத்துகிறவர்கள் சருவ
வல்லவரிடத்தில்பெறுஞ் சுதந்தரமும்இதுவே.—
அவன் பிள்ளைகள் வர்த்தித்தால் கட்கத்துக்கு இ ௰௪
ரையாவார்கள்: அவன்சந்ததியார் ஆகாரத்தினால்
திருத்தி பெறார்கள்.—அவனுக்கு மீதியானவர் ௰௫
கள் சாகுமிடத்தில் கிடப்பார்கள்: அவன் வித
வைகள் அழார்கள்.—அவன் புழுதியைப்போல ௰௬
வெள்ளியைக்குவித்து, மண்ணைப்போலவஸ்தி
ரத்தை ஆயத்தப்படுத்தினாலும்,—ஆயத்தப்படுத்த ௰௭
லாம்,நீதிமானேதரிப்பான்,குற்றமற்றவன்வெள்
ளியைப் பகிர்ந்துகொள்வான்.—அவன்பொட்டு ௰௮
ப்பூச்சிபோலவும் காவலாளன்செய்யுங் குடிசை
யைப்போலவும், வீடுகட்டுகிறான்,—செல்வன் ௰௯
மகாநித்திரையடைவான், அவன்சேர்க்கப்படா
ன்: அவன் தன்கண்திறப்பதற்குள்ளே ஒழிந்து
போகிறான்.—சலப்பிரளயம்போலப் பயங்கரம் ௨௰
அவனை அமிழ்த்தும், இராக்காலத்தில்பெருங்கா
ற்று அவனைக்கவர்ந்து கொண்டுபோய்விடும்.—
கீழ்க்காற்று அவனைக்கொண்டுபோக, அவன் அ ௨௧
கன்றுபோகிறான்: பெருங்காற்று அவனைஅவன்
ஸ்தானத்தினின்றுவீசிவிடும்.—அவர் இரங்காமல் ௨௨
அவன்மேல் வீசச்செய்வார்: அவன் அவர்கைக்
குத் தப்பியோடத்தேடுவான்.—சனங்கள் அவ ௨௩
னைப்பார்த்துக் கைகொட்டிச் சீச்சீயென்று, அ
வனை அவனுடைய ஸ்தானத்தினின்று துரத்தி
விடுவார்கள்.

---

(௬) சங்.௨௨.௬.—(௨௬. அதி. ௩.) சங்.௱௩௯.௮,௰௧. நீதி.௰௫.௰௧. எபி.௪.௰௩. (௭) சங்.௨௪.௨. (௮) நீதி.௩௰.௪. (௰) சங்.௩௩.௭. நீதி.௮.௨௯. எரே.௫.௨௨. (௰௨) யாத்.௰௪.௨௧. சங்.௭௪.௰௩. ஏசா.௫௧.௰௫. எரே.௩௧.௩௫. (௰௩) சங்.௩௩.௬. ஏசா.௨௭.௧.—(௨௭. அதி. ௨.) அதி.௩௪.௫. ரூத்.௧.௨௰. (௩) ஆதி.௨.௭. (௫) அதி.௨.௩. (௬) அப்.௨௪.௰௬. (௮) மத்.௰௬.௨௬. லூக்.௰௨.௨௰,௩. சங்.௰௮.௪௧. நீதி.௧.௨௮. ஏசா.௧.௰௫. எசேக்.௮.௰௮. யோவா.௯.௩௧. யாக்.௪.௩. (௰௪) உபா.௨௮.௪௧. ஓசி.௯.௰௩. (௰௫) சங்.௭௮.௬௪. (௰௭) நீதி.௨௮.௮. பிர.௨.௨௬. (௰௮) ஏசா.௧.௮. புல.௨.௬.

## ௨௮. அதிகாரம்.

௧. மனுஷர் லௌகீககாரியங்களில் அறிவுடையவர்களெனக்காட்டல்: ௰௨. தெய்வீக ஞானம் பெறுவது அரிதென்பதை விவரித்தல்.

வெள்ளிக்குச் சுரங்கமுண்டு, பொன்னுக்குப்
௨ புடமிடப்படும்ஸ்தானமுமிருக்கின்றது.—பூமி
யினின்று இரும்பு எடுக்கப்படும்; பித்தளை கல்
௩ லில் உருக்கி எடுக்கப்படும்.—அவர் அந்தகா
ரத்துக்கு ஒரு எல்லைப்படுத்தி, எவ்விடத்திலும்
பூரணமாகக்காரிருளிலும் மரணநிழலிலு முள்ள
௪ கற்களைத்தேடுகிறார்.—கால்நடமாடாத வெள்ளம்
தேசத்தானிடத்திற் புரண்டுவற்றி, மனுஷரை
௫ விட்டு நீங்கிப்போகின்றது.—பூமியில்நின்று ஆ
காரம்விளையும்: பூமியின்கீழ்நின்று அக்கினிமய
௬ மான திரவியங்கள்தோற்றுவிக்கப்படும்.—அதின்
கற்களினின்று நீலரத்தினம் விளையும்: அங்கே
௭ பொற்பொடிதங்கும்.—அந்தப்பாதை எந்தப்பற
வைக்குந்தெரியாது, இராசாளியின்கண் அதைக்
௮ கண்டிராது.—சிங்கக்குட்டிகள் அதை மிதித்தி
௯ ராது, உக்கிரசிங்கம்அதிற்சென்றிராது.—அவன்
கற்பாறையின்மேல் தமதுகையைவைத்து, மலை
௰ களை வேருடன் பேர்த்துவிடுவான்.—மலைகளுக்
குள்ளே நீர்க்கால்களைவெட்டுவான்; அவன்கண்
விலைமதிக்கப்படாத எந்தத்திரவியத்தையுங் கா
௰௧ ணும்.—அவன் நீரோடைகளைக்கட்டுகிறான்; ம
றைபொருள்களை வெளியிலே கொண்டுவருகி
௰௨ றான்.—ஞானமோ, அது எங்கே கண்டடையப்
௰௩ படும்; புத்தியின்ஸ்தானமெங்கே.—மனுஷன் அ
தின்விலையறியான்; சீவனுள்ளோர்வசிக்கிறபூமி
௰௪ யில் அதுகாணப்படாது.—ஆழமானது, அது என்
னிடத்தில் இல்லையென்கின்றது: சமுத்திரமும்,
௰௫ என்னிடத்திலில்லையென்கின்றது.—அதைத் தங்
கத்தினால் சம்பாதிக்கமுடியாது, அதற்குக் கிரய
௰௬ மாகவெள்ளியை நிறுக்கவுங்கூடாது.—ஓப்பீரின்
தங்கமும், விலையேறப்பெற்ற கோமேதகமும்,
நீலரத்தினமும் அதைப்போல விலையுள்ளவை
௰௭ களல்ல.—தங்கமும் பளிங்கும் அதற்கொப்பல்
ல: அதற்கு ஈடாகப் பசும்பொன்னாபரணங்க
௰௮ ளுங்கொடுக்க முடியாது.—புட்பராகத்திலும் ஞா
னம் விலையேறப்பெற்றதாதலால், பவளத்தை
௰௯ யும் முத்தையும் அதற்கொப்பிடலாகாது.—கூஷ்
தேசத்தில் விளையும் புட்பராகமும் அதற்கொப்
பல்ல, அபரஞ்சிப்பொன்னும் அதனுடன் ஒப்
௨௰ பிடப்படலாகாது.—ஆதலால் சருவ பிராணிக
ளின்கண்ணுக்குமறைந்திருப்பதும்ஆகாயத்தின்
பறவைகளுக்குத்தெரியாததுமாகிய ஞானம்,—
௨௧ எங்கிருந்து வருகின்றது; புத்திக்கு வாசஸ்தான
௨௨ மெங்கே.—நாசமும் மரணமும், நாங்கள் அதின்
கீர்த்தியை எங்கள்காதினால் கேட்டிருக்கிறோம்
௨௩ என்கின்றன.—தேவன் அதின்வழியை அறி
வார், அதின்வாசஸ்தானமும் அவருக்கேவிளங்
கும்.—அவர் பூமியின் எல்லைபரியந்தம் தரிசிக் ௨௪
கிறார், ஆகாய மண்டலத்தின் கீழெங்குங்காண்
கிறார்.—அவர் காற்றின்நிறையைஏற்படுத்தி, அ ௨௫
ளவையினாலே சலத்தை அளந்து,—மழைக்கு ௨௬
முறைமையையும், மின்னல் முழக்கத்துக்கு வ
ழியையும் ஏற்படுத்தினசமயத்தில்,—அவர் அ ௨௭
தைக்கண்டு பிரசித்தப்படுத்தினார்; அவர் அதை
ஏற்படுத்திப் பரீட்சைபண்ணினார்.—அவர் மனு ௨௮
ஷனைநோக்கி, கேள், கடவுளுக்குப்பயப்படுவ
தேஞானம்; தீமையைவிட்டு விலகுவதே புத்தி
என்பதைச்சொன்னாரென்றான்.

## ௨௯. அதிகாரம்.

யோபுதனக்கிருந்தவாழ்வை நினைத்துப்புலம்பல்.

பின்னும்யோபு தன்பிரசங்கத்தொடர்ச்சியாக,- ௧
ஆ, சென்றுபோன மாதங்களில், தேவன் என் ௨
னை இரட்சித்த காலத்திலிருந்த நிலைமை மீண்ட
துண்டானால் நலமே;—அப்பொழுது அவர்தீபம் ௩
என்தலையின்மேல்பிரகாசித்தது, அவர் ஒளியினா
ல்நான் அந்தகாரத்தின்வழியாய்ச்சென்றேன்;—
நான்வாழ்வடைந்தகாலத்தில் தேவனுடையஇ ௪
ரகசியச்செயல் என்கூடாரத்தில்தங்கிற்று;—அப் ௫
பொழுது சருவவல்லமையுள்ளவர் என்னோடே
யிருந்தார், என்பிள்ளைகள் என்னைச்சுற்றியிருந்
தார்கள்;—நான் வெண்ணெயினாற் கால் அலம் ௬
பினேன், என்னிமித்தம் கன்மலை எண்ணெய்ந
தியைப் பெருகச்செய்தது;—நான் நகரவீதியால் ௭
வாசலுக்குச்சென்று, வீதியிலென்ஆசனத்தை ஆ
யத்தப்படுத்தினபொழுது,—வாலிபர் என்னைக் ௮
கண்டு ஒளித்துக்கொள்வார்கள்: முதியோர் எ
ழுந்துநிற்பார்கள்.—அதிபதிகள் சம்பாஷித்தலை ௯
விட்டுத்தங்கள்வாயின்மேல் கைவைப்பார்கள்.—
பிரபுகளின் வாக்கு அடங்கிவிடும், அவர்கள் ௰
நா அண்ணத்தோடு ஒட்டியிருக்கும்.—நான் ௰௧
ஓலமிடுந் தரித்திரரையும், அநாதபிள்ளைகளையும்
திக்கற்றவர்களையும்விடுவித்தபடியினால்,—காது ௰௨
கேட்டவுடனே என்னை ஆசீர்வதிக்கும்; கண்
பார்த்தவுடனே எனக்குச்சாட்சிகொடுக்கும்:—
நாசமடையப்போகிறவனுடைய ஆசீர்வாதம் எ ௰௩
னக்குக்கிடைத்தது: விதவையின்மனதைக்கெம்
பீரிக்கப்பண்ணினேன்.—நான் நீதியைத்தரித்துக் ௰௪
கொண்டேன், அது எனக்கு வஸ்திரமாயிற்று:
நான்செய்த நியாயத்தீர்ப்பு எனக்கு இராசவஸ்
திரமுங் கிரீடமுமாயிருந்தது.—நான் குருட ௰௫
னுக்குக்கண்ணும், முடவனுக்குக்காலுமாயிருந்
தேன்.—தரித்திரருக்குப்பிதாவாயிருந்தேன்: நான் ௰௬
அறியாத வழக்கைச் சோதித்துப்பார்த்தேன்.—
நான்துன்மார்க்கனுடையகடைவாய்ப்பற்களைத் ௰௭
தகர்த்து, அவன்பற்களினின்று கொள்ளைப்பொ
ருளை மீட்டுக்கொண்டேன்.—அப்பொழுது, நான் ௰௮
என்கூட்டில் இறந்துபோவேன், என் நாள்கள்
மணலைப்போல வருத்திக்கச் செய்வேனென்

(௨௮.அதி.௰௨.) பிர.௭.௨௪. (௰௩) நீதி.௩.௰௫.(௰௪)ரோ.௰௧.௩௩,௩௪. (௰௫) நீதி.௩.௰௩.(௨௮)உபா.௪.௬. சங்.௱௰௧. ௰. நீதி.௧.௭. பிர.௰௨.௰௩.—(௨௯.அதி.௩.) அதி.௰௮.௬. சங்.௰௮.௨௮.(௪)சங்.௨௫.௰௪.(௬)ஆதி.௪௯.௰௧. உபா.௩௨. ௰௩. சங்.௮௧.௰௬.(௰)சங்.௱௩௭.௬.(௰௧)சங்.௭௨.௰௨. நீதி.௨௧.௰௩.(௰௪)உபா.௨௪.௰௩. சங்.௱௩௨.௯. ஏசா.௫௯.௰௭. எபே.௬.௰௪,. ௧.தெச.௫.௮.(௰௫)எண்.௰.௩௧. (௰௬) நீதி.௨௯.௭. (௰௭) சங்.௫௮.௬. நீதி.௩௰.௰௪. (௰௮) சங்.௩௰.௬.

௰௯ றேன்.—சலத்தின் ஓரத்தில் என்வேர் படர்ந்த
து, இராமுழுவதும் என்கிளையில் பனி தங்கிற்
௨௰ று.—என் மகிமை செழித்தோங்கிற்று, என் வில்
௨௧ என்கையில் பெலன்கொண்டது.—அப்பொழு
து சனங்கள் எனக்குச் செவிகொடுத்து, காத்து,
என் ஆலோசனைக்கு மௌனமாயிருப்பார்கள்.—
௨௨ என்வாக்குக்குஇரட்டிக்காமலிருப்பார்கள்; என்
வாக்குத் துளிதுளியாய் அவர்கள்மேல் பொழிந்
௨௩ தது.—அவர்கள் மழைக்கு எதிர்பார்ப்பதுபோல
எனக்கு எதிர்பார்ப்பார்கள்; அவர்கள்பின் ம
ழைக்கு ஆசையுள்ளவர்கள்போல எனக்காகத்
௨௪ தங்கள்வாயை அவாவுடன் திறந்தார்கள்.—நான்
அவர்களைப்பார்த்து நகைத்தபொழுது அவர்கள்
அதைநம்பவில்லை; என் முகபிரசன்னத்தை அற்
௨௫ றுப்போகப் பண்ணினதுமில்லை.—நான் அவர்
களுக்கு வழியைத் தெரிந்துகொண்டு பிரதானி
யைப்போலிருந்தேன், சேனைகளில் இராசாவை
ப்போல வாசம்பண்ணி, துக்கப்படுகிறவர்களை
ஆற்றுகிறவனைப்போலவுமிருந்தேன்.

## ௩௰. அதிகாரம்.

௧. யோபின் சம்பிரமம்நிந்தனையாய்முடிதல்: ௰௫. அவன்வாழ்வு தாழ்வாய்மாறல்.

இப்பொழுது என்னைப்பார்க்கிலும் இளவயதா
னவர்கள் என்னை நிந்தனைபண்ணுகிறார்கள், இ
வர்களுடையபிதாக்களை நான் என்மந்தையைக்
காக்கும் நாய்களுடன்சேர்க்க அரோசித்துவிட்
௨ டிருப்பேன்.—முதிர்வயதாய்க்கெட்ட அவர்களு
௩ டையகைவல்லமையினால் எனக்கென்ன.—ஈனத்
தினாலும் பஞ்சத்தினாலும்வறுமைப்பட்டு, முன்
னேவெறுமையும் பாழுமாயிருந்த வனத்திற்குத்
௪ தப்பிஓடி,—துத்திச்செடிகளுக்குள்ளிருக்கிற த
ழைகளைப் பிடுங்குவார்கள், சூரைச்செடிகளின்
வேர்களும் அவர்களுக்கு ஆகாரமாயிருக்கும்.—
௫ அவர்கள் மனுஷரினின்று தள்ளுண்டவர்களா
ய்ப்போக, சனங்கள் திருடரைக் கூப்பிடுவது
போல அவர்கள் பின்னாகக்கூப்பிட்டார்கள்.—
௬ அவர்கள் பள்ளங்களின் பிளப்புக்களிலும், பூமி
யின் குகைகளிலும், கன்மலைகளிலும் வசித்தார்
௭ கள்.—அவர்கள் செடிகளுக்குள்ளேயிருந்து கத
றி, காஞ்சொறிகளின்கீழ் ஒதுங்குவார்கள்.—
௮ மூர்க்கரும் நீசருமானவர்களுடைய சந்ததியாரா
கிய இவர்கள், தேசத்தினின்று துரத்திவிடப்பட்
௯ டார்கள்.—நான் இப்பொழுது அவர்கள் பாட்
௰ டின்பொருள், நான் அவர்கள் பழிமொழி.—அ
வர்கள் என்னை வெறுக்கிறார்கள், எனக்கு வில
கித்தூரத்தில் நிற்கிறார்கள், அவர்கள் என்னைப்
பார்த்து என்முகத்தில் துப்புகிறதற்கு அஞ்சார்
௰௧ கள்.—அவர் என்பந்தத்தை அவிழ்த்து, என்னைத்
துன்பப்படுத்தினபடியால், அவர்களும் எனக்கு
முன்பாகக் கடிவாளத்தை விட்டுவிடுகிறார்கள்.—
௰௨ என் வலக்கரத்தினின்று வாலிபர் எழுந்து, என்
பாதத்தைத்தள்ளி, தங்கள் கேடானவழிகளை உ
யர்த்துகிறார்கள்.—அவர்கள் ஏவப்படாமலிருந் ௰௩
தும் என் பாதையைக்கெடுத்து, என் ஆபத்தை
வருத்திக்கப் பண்ணுகிறார்கள்.—அவர்கள் தண் ௰௪
ணீரின் பெரும்பாய்ச்சல்போல என்மேல் புரண்
டுவந்தார்கள், சங்காரத்தில்தங்களை உருளச்செய்
கிறார்கள்.—பயங்கரங்கள் என்மேல் திரும்பிவ ௰௫
ருகின்றன: என் மேன்மையைக்காற்றைப்போ
லப் பின்தொடருகின்றன: மேகத்தைப்போல
என்வாழ்வு ஒழிந்துபோகின்றது.—இப்பொழுது ௰௬
என் ஆத்துமம் என்னில் சிந்தப்பட்டது; துக்க
நாள்கள் என்னைப்பிடித்தன.—இராத்திரிகாலத் ௰௭
தில் என் எலும்புகள் துளைக்கப்பட்டன: என்
நரம்புகளுக்கு இளைப்பாறுதலில்லை.—என் வஸ் ௰௮
திரம் என் அங்கியின் கழுத்துப்பட்டைபோல
என்னை நெருக்குகிறபடியால், மிகுந்தபெலத்து
டனே அதைக்கழற்றவேண்டியிருக்கின்றது.—
அவர் என்னைச்சேற்றில் அமிழ்த்தினார், தூளி ௰௯
யுஞ் சாம்பலும்போலானேன்.—உம்மை நோக் ௨௰
கி ஓலமிடுகிறேன், நீர் செவிகொடுக்கிறதில்லை:
நான் நிற்கிறேன், நீர் என்னைக் கடாட்சிக்கிற
தில்லை.—நீர் எனக்குக் குரூரமாயிருக்கிறீர்: நீர் ௨௧
உமது கை வல்லபத்துடன் என்னை எதிர்த்து வி
ரோதிக்கிறீர்.—என்னை நீர் எடுத்துக்காற்றின்மே ௨௨
லேற்றிவைக்கிறீர்; நீர் என்சத்துவத்தை உருகப்
பண்ணுகிறீர்.—நீர் மரணத்திற்கும், சீவனுள் ௨௩
ளோர் யாவருக்கும் நியமிக்கப்பட்ட வீட்டிற்
கும் என்னைக்கொண்டுபோய் விடுவீரென்றறி
வேன்.—அவர் பிரேதவறைக்குத் தமதுகையை ௨௪
ஓங்கமாட்டார்; அதின்சங்காரத்தில் காக்கப்படு
வேன்.—உபத்திரவப்பட்டவன் நிமித்தம் நான் ௨௫
அழவில்லையா; திக்கற்றவனிமித்தம் என்னுள்
ளந்துக்கிக்கவில்லையா;—நான் நன்மைக்குக்காத் ௨௬
திருக்கத் தீமைநேரிட்டது: நான் ஒளியை அ
பேட்சிக்க இருள்வந்தது.—என்குடல்கள்பொங் ௨௭
கின, அவைகளுக்கு அமைதியில்லை: துக்கநாள்
கள் எனக்குநேரிட்டன.—நான் வியாகுலப்பட் ௨௮
டுச்சூரியனில்லாமல் திரிந்தேன்: நான் எழுந்து
சபையிலே புலம்பினேன்.—நான் நாகங்களுக் ௨௯
குச் சகோதரனும், கோட்டானுக்குத் தோழனு
மாயிருக்கிறேன்.—என்தோல் கறுத்திருக்கின்ற ௩௰
து, என் எலும்புகள் உஷ்டணத்தினாலே தகிக்
கப்பட்டன.—என் சுரமண்டலம் புலம்பலாக ௩௧
வும், என் கின்னரம் அழுகிறவர்களுடைய சுர
மாகவுமாறிவிட்டன.

## ௩௧. அதிகாரம்.

௧. யோபு தன் சுத்தநடைகாட்டல்.

நான் என் கண்களுடன் உடன்படிக்கைபண் ௧
ணினேன்; இனி நான் ஒருகன்னிகைமேல் சிந்
தைவைப்பதேது.—உன்னதத்திலுள்ள தேவனி ௨
டத்தினின்று என்னபங்கு, உன்னதத்திலிருக்கி

(௰௯) அதி.௰௮.௰௬. சங்.௧.௩. எரே.௰௭.௮. (௨௰) ஆதி.௪௯.௨௪. (௨௩) சக.௰.௧.—(௩௰.அதி.௯.) அதி.௰௭.௬. சங்.௩௫.௰௫. புல.௩.௰௪,௬௩. (௰) உபா.௨௫.௯. மத்.௨௬.௬௭. (௰௬) சங்.௪௨.௪. (௨௩) எபி.௯.௨௭. (௨௫) சங்.௩௫.௰௩, ௰௪. ரோ.௰௨.௰௫. (௨௬) எரே.௮.௰௫. (௨௮) சங்.௩௮.௬. (௨௯) சங்.௱௨.௬. (௩௰) சங்.௱௰௯.௮௩. சங்.௱௨.௩.—(௩௧. அதி. ௧.) மத்.௫.௨௮.

ற சருவவல்லவரிடத்தில் என்ன சுதந்தரம்.—
௩ துன்மார்க்கருக்கு நாசம் வராதா; துர்க்கிரியைக்
காரருக்குப் பயங்கரமான தண்டனையுண்டாகா
௪ தா.—அவர் என் நெறிகளைப்பார்த்து, என் கால
௫ டிகளையெல்லாம் எண்ணுகிறாரல்லவா.—நான்
வஞ்சகனாய் நடந்தாலும், என் கால் கபடஞ்
௬ செய்யவிரைந்தாலும்,—தேவன் நீதியுள்ளதரா
சில் என்னை நிறுத்து, என் நேர்மையை அறிவா
௭ ராக.—என்நடை நெறிதப்பிச்சரிந்து, என் இரு
தயம் என் கண்வழியேசென்று, என்கையில்யா
தாகிலும் ஒட்டிக்கொண்டிருந்ததுண்டானால்,—
௮ நான் விதைத்ததை மற்றவன் அனுபவிக்கக்கட
௯ வன்; என்விளைவு நாசமாகக்கடவது.—என ம
னம் ஸ்திரியினால்மயங்கி, என் அயலான் வாச
லிடத்தில் நான் மறைந்திருநததுண்டானால்,—
௰ என் மனைவி பிறருக்கு மா அரைப்பாளாக, பிறர்
௰௧ அவளை அனுபவிப்பார்களாக.—இதுவேபெரிய
துரோகம்; நியாயாதிபதிகள் தண்டிக்கத்தக்க அ
௰௨ திக்கிரமம்.—இது நாசம்வரைக்கும் பட்சித்து,
என் சகலபொருளையுஞ்சங்கரிக்கும் அக்கினி.—
௰௩ என் பணிவிடைக்காரனாகிலும் என் பணிவி
டைக்காரியாகிலும் என்னுடன் விவாதஞ் செய்
தபொழுது, நான் அவர்கள் நியாயத்தைத்தள்ளி
௰௪ யிருந்ததுண்டானால்,—தேவன் எழுந்திருக்கும்
பொழுது நான் என்னசெய்வேன்; அவர் விசா
ரிக்கும்பொழுது நான் என்ன உத்தரங்கொடுப்
௰௫ பேன்.—என்னைக் கருப்பத்தில் சிருஷ்டித்தவர்
அல்லவாஅவனையுஞ்சிருஷ்டித்தார்; ஒருவர்அல்
லவா எங்களைக்கருப்பத்தில் உருவாக்கினார்.—
௰௬ தரித்திரர் வேண்டினதைக் கொடாமல் மறுத்து,
விதவையின் கண்களைப் பூத்துப்போகப்பண்
௰௭ ணி,—அநாதபிள்ளைகளுக்குப் புசிக்கக்கொடா
மல் என் ஆகாரத்தை நான்மாத்திரம்புசித்தேனா.—
௰௮ என் சிறுவயதுமுதல் பிதாவைப்போலான என்
னுடன் அவன் வளர்ந்தானே, என் மாதாவின்க
ருப்பத்திற்றோன்றிய நாள்முதல் அவளைக் காப்
௰௯ பாற்றினேனே.—வஸ்திரமில்லாமல் நாசமடைகி
றவனையும், உடுப்பில்லாத ஏழையையுங் கண்ட
௨௰ பொழுது,—அவன் இடை என்னைப்புகழாமல்,
அவன் என் ஆட்டுமயிரினால் அனல்கொள்ளாம
௨௧ லிருந்ததும்,—நியாயஸ்தலத்தில் எனக்கு அதிகா
ரம்உண்டென்றறிந்து, அநாதபிள்ளைக்குவிரோத
௨௨ மாய் என்கைஓங்கினதுமுண்டானால்,—என்தோ
ளின் எலும்பு முறிந்துபோவதாக, தோளின் சந்
௨௩ தைவிட்டு என் கை சரிந்துபோவதாக.—தேவ
னால்வரும்நாசம் எனக்குப்பயங்கரமாய்த்தோன்
றிற்று,அவருடையமகத்துவத்தைத்தாங்க என்னா
௨௪ லே முடியாது.—பொன்னில் நான் நம்பிக்கை
வைத்து, நீயே என்தஞ்சமென்று நான் பொன்
னுக்குச் சொன்னதும்,—என் பொருள் மிகுதி ௨௫
யென்றும், என்கைமிகவுஞ்சம்பாதித்துக்கொண்
டதென்றும் நான்களிகூர்ந்ததும்,—பிரகாசிக்கிற ௨௬
சூரியனையும், ஒளியோடு உலாவுகிற சந்திரனை
யும் நான்காண்கிறபொழுது,—என்மனம் இரகசி ௨௭
யமாய் மயங்க, என்வாய் என்கையை முத்தஞ்
செய்ததுமுண்டானால்,—இதுவும் நியாயாதிபதி ௨௮
கள் தண்டிக்கத்தக்க துரோகமாயிருக்கும்: அதி
னால் உன்னதத்திலிருக்கிற தேவனை நான்மறு
தலிப்பேன்.—என்சத்துருவின் ஆபத்திலேநான் ௨௯
சந்தோஷப்பட்டேனா; தீமை அவனுக்கு நே
ரிட்டசமயத்தில் நான்களிகூர்ந்தேனா.—அவன் ௩௰
பிராணனுக்குச் சாபங்கொடுக்கவிரும்பிஎன்வா
ய்பாவஞ்செய்ய நான்விடவில்லை.—ஆ, அவன் ௩௧
மாமிசத்தைப் புசிக்கக்கிடைத்தால் நலம், நமக்
குத்திருத்தியில்லையேயென்று என் குடும்பத்தார்
சொல்வதுண்டா.—பரதேசி வீதியில் இராத்தங் ௩௨
காதபடி, நான் வழிப்போக்கனுக்கு என்வாச
லைத்திறந்துவிட்டேன்.—என்னெஞ்சத்தில் என் ௩௩
அதிக்கிரமத்தை ஒளித்ததினால் நான் ஆதாமைப்
போல என்பாவத்தை மூடினேனா.—நான்பெரி ௩௪
ய சனக்கூட்டத்தாருக்குப் பயந்தும், அந்தந்த
வமிசத்தாருடைய எச்சினிமித்தம் வியாகுலப்
பட்டும் இருப்பதினால், நான் மௌனமாகி என்
வாசலினின்று புறப்படாமல் இருந்தேனா.—ஆ, ௩௫
ஒருவன் என் வழக்கைக்கேட்டால் நலமாகும்,
கேளுங்கள், சருவவல்லமையுள்ளவர் எனக்கு
உத்தரங்கொடுப்பதும், என் எதிராளி என் தோ
ஷபத்திரம் எழுதுவதும் எனக்கு விருப்பம்.—
நான் அதை என் தோளின்மேல்வைத்து, ஒருமு ௩௬
டியைப்போல என்தலையின்மேல்தரித்துக்கொள்
வேன்.—அவருக்கு என் நடைகளின் தொகை ௩௭
யைத் தெரிவிப்பேன்; ஒருபிரபுவைப்போல் அ
வர்சமீபத்தில்போவேன்.—என்நிலம்எனக்குவி ௩௮
ரோதமாய் ஓலமிடுவதும், அதின் உழவுசால்கள்
அழுவதும்,—நான்பணங்கொடாமல்அதின்பல ௩௯
னை அனுபவித்ததும்,அதின்காரியக்காரரின் பிரா
ணனை நான்கவர்ந்துகொண்டதுமுண்டானால்,—
கோதுமைக்குப்பிரதியாகக்குருக்கும், வாற்கோ ௪௰
துமைக்குப் பிரதியாகக்களையும் முளைக்கக்கட
வனவென்றான். யோபின்வாக்குகள்முடிந்தன.

## ௩௨. அதிகாரம்.

௧. இலியூவின் விருத்தாந்தந் தெரிவித்தல்: ௬. அவன் பிரசங்கத்தின் ஆரம்பம்: ௰௧. இவன் யோபையும்அவன்சிநேகிதரையுங்கண்டித்தல்: ௰௬. தானும் பேசவிரும்பல்.

யோபு தன் பார்வைக்கு நீதிமானாயிருந்தபடி ௧
யினால், அந்த மூன்றுமனுஷரும் அவனுக்கு உத்
தரஞ்சொல்வதைவிட்டுவிட்டார்கள்.—அதினால் ௨

(௪) ௨.நாளா.௰௬.௯. நீதி.௫.௨௧. எரே.௩௨.௰௯. (௭) எண்.௰௫.௩௯. பிர.௰௧.௯. எசேக்.௬.௯. மத்.௫.௨௯. (௮) லேவி.௨௬.௰௬. உபா.௨௮.௩௰,. (௰) ௨.சாமு.௰௨.௰௧. எரே.௮.௰. (௰௧) ஆதி.௩௮.௨௪. உபா.௨௨.௨௨. (௰௪) சங்.௪௪.௨௧. (௰௫) நீதி.௰௪.௩௧. மல்.௨.௰. (௨௩) ஏசா.௰௩.௬. யோவே.௧.௰௫. (௨௪) மாற்.௰.௨௪. ௧.தீமோ.௬.௰௭. (௨௫) சங்.௬௨.௰. நீதி.௰௧.௨௮. (௨௬) உபா.௪.௰௯. எசேக்.௮.௰௬. (௨௯) நீதி.௰௭.௫. (௩௰) மத்.௫.௪௪. ரோ.௰௨.௰௪. (௩௨) ஆதி.௰௯.௨,௩. ரோ.௰௨.௰௩. எபி.௰௩.௨. ௧.பேதுரு.௪.௯. (௩௩) ஆதி.௩.௮,௰௨. நீதி.௨௮.௰௩. ஓசி.௬.௭.(௩௪) யாத்.௨௩.௨. (௩௯) யாக்.௫.௪. ௧.இரா.௨௧.௰௮. (௪௰) ஆதி.௩.௰௮.—(௩௨. அதி. ௨.) ஆதி.௨௨.௨௧.

ராமின் வமிசத்திலுள்ள பூசியனாகிய பரகேலின்
புத்திரனான இலியூவின் கோபமூண்டது: யோபு
தேவனைப்பார்க்கிலும் தன்னை அதிக நீதியுள்ள
வனாக நினைத்தபடியினால் அவன்மேல் இவன்
௩ கோபமூண்டது.—யோபின் சிநேகிதர் மூவரும்
அவன் வாக்குக்கு உத்தரம் கொடுக்கவல்லவரல்
லாதிருந்தும் அவனைக்குற்றவாளியென்று தீர்த்த
படியினால், அவர்கள்மேலும் இவன்கோபமூண்
௪ டது.—அவர்கள் தன்னிலும் அதிக வயதுள்ளவர்
களானபடியினால் யோபு பேசிமுடியும்வரைக்
௫ கும் இலியூ பொறுத்திருந்தான்.—அம்மூன்றுபே
ருடையவாயிலும் உத்தரமில்லையென்று இவன்
௬ கண்டபொழுது, இவன் கோபமூண்டது.—ஆத
லால் பூசியனாகிய பரகேலின் புத்திரனான இலியூ
உத்தரமாக, நான்கொஞ்ச வயதுள்ளவன், நீங்க
ளோமிகவும்முதிர்ந்தவர்கள்; அதினிமித்தம்நான்
பயந்துஉங்களிடத்தில்என்மனதைவெளிப்படுத்
௭ த அஞ்சினேன்.—முதியோர்பேசவும், அதிகவ
யதுள்ளவர்கள் ஞானம் போதிக்கவும் வேண்டு
௮ மென்றேன்.—ஆனாலும் மனுஷனுக்கு ஒரு ஆவி
யுண்டு: சருவவல்லவருடைய சுவாசம் அவர்க
௯ ளுக்கு ஞானங்கொடுக்கின்றது.—பெரியோர்கள்
எவரும் ஞானமுள்ளவர்களல்ல: முதியோர்எவ
௰ ரும் நியாயந்தீர்க்கவல்லவர்களல்ல.—ஆதலால்,
என்வாக்குக்குச்செவிகொடுங்கள், நானும்என்க
௰௧ ருத்தை வெளிப்படுத்துவேனென்றேன்.—நான்
உங்களுடைய வாக்குகளுக்குக் காத்திருந்தேன்;
நீங்கள் உத்தரங்கொடுக்கும்படி முயலுகையில்
நான் உங்கள் நியாயங்களுக்குச் செவிகொடுத்
௰௨ தேன்.—நான் உற்றுக்கேட்டேன், கேளுங்கள்,
நாங்கள் ஞானத்தைப்பெற்றோமென்று நீங்கள்
௰௩ சொல்லாதபடி,—யோபின்மேல் குற்றஞ்சுமத்த
வும், அவர்வாக்குகளுக்கு உத்தரஞ்சொல்லவும்,
உங்களில் ஒருவராலும்முடியாமற்போயிற்று: ம
னுஷனல்ல, தேவனே அவரைவீழ்த்தினார்.—
௰௪ அவர் எனக்கு விரோதமாய்த் தமதுவாக்குகளைப்
பிரயோகிக்கவில்லை: நான் உங்கள்வாக்குகளி
னால் அவருக்கு உத்தரங்கொடுக்கமாட்டேன்.—
௰௫ அவர்கள்பிரமித்து, பின்னும் உத்தரங்கொடுக்க
வில்லை: அவர்கள் வசனிப்பைவிட்டுவிட்டார்
௰௬ கள்.—நான் எதிர்பார்த்தேன், அவர்கள்உத்தரங்
௰௭ கொடாமல் பேசாதிருந்தபொழுது,—நான்வாக்
குகளினால் நிறைந்திருக்கிறேன், என்னுள்ளத்
திலுள்ள ஆவியே என்னை நெருக்கி ஏவுகின்ற
௰௮ து.—ஆதலால் நான் என்பட்சத்தில் உத்தரங்கொ
டுப்பேன், நானும் என் மனதை வெளிப்படுத்து
௰௯ வேன்.—கேளுங்கள், என்னுள்ளம் அடைக்கப்
பட்ட திராட்சரசம்போலிருக்கின்றது; புதுத்து
ருத்திகளைப்போலப் பீறுண்டுபோகப்பார்க்கின்
௨௰ றது.—எனக்காறுதலாகும்படி நான்வசனிப்பே
ன், என்னுதடுகளைத்திறந்து உத்தரங் கொடுப்
௨௧ பேன்.—நான், ஒருவனுடைய முகத்தைப்பாரா
மலும், மனுஷனுக்கு இச்சகமாய் ஸ்துதிபேசாம
லும், இருப்பேனாக.—நான் முகஸ்துதிசெய்ய அ ௨௨
றியேன்; என் சிருஷ்டிகர்த்தா என்னைச்சீக்கிர
மாய் எடுத்துக்கொள்ளுவார்.

## ௩௩. அதிகாரம்.

௧. இலியூ தேவனுக்குப் பிரதிநிதியாய் யோபுக்கு நியாயங்காட்டல்: ௮. தேவன் மகத்துவமுள்ளவராதலால்தமது அபிப்பிராயத்தை மனிதனுக்குக்காட்டுவது தகாதென்று சொல்லல்: ௰௪. தேவன் தரிசனங்களினாலும், உபத்திரவங்களினாலும் வேதோபதேசத்தினாலும், மனுஷனை யுணர்த்தல்: ௩௧. யோபை உற்றுக்கேட்க ஏவல்.

யோபே, என் வாக்கைக்கேளும், என் சகல ௧
வாக்கியங்களுக்குஞ் செவிகொடுக்கும்படி வே
ண்டுகிறேன்.—கேளும், நான் இப்பொழுது வச ௨
னிக்கத்தொடங்குகிறேன், என் வாயிலுள்ள நா
சொல்லுகின்றது.—என்வாக்குகள் என்மனச்சுத் ௩
தத்தின்படிபிறக்கும்: என்னுதடுகள் ஞானத்தை
வெளிப்படையாகப் போதிக்கும்.—தேவனு ௪
டைய ஆவி என்னைச்சிருஷ்டித்தது, சருவவல்
லவருடைய சுவாசம் எனக்குயிரைத்தந்தது.—
உம்மாற்கூடுமாகில் எனக்குத்தரம்சொல்லும், நீர் ௫
ஆயத்தமாகி எனக்குமுன்நின்றுகொள்ளும்.—கே ௬
ளும், நானும் உம்மைப்போலத் தேவனாலுண்
டானவன், நானும்மண்ணினால் உருவாக்கப்பட்
டேன்.—கேளும், என்பயங்கரம் உம்மைப் பயப் ௭
படுத்தமாட்டாது, என் கரம் உம்மேற் பாரமாயி
ராது.—நான்கட்டளைமீறுதசுத்தமுள்ளவன், நான் ௮
குற்றமற்றவன்; என்னிடத்தில் அதிக்கிரமமில்
லை.—கேளும், என்னிடத்திலேகுற்றம்பிடிக்கப் ௯
பார்க்கிறார், என்னைத்தமக்குச் சத்துருவாக எண்
ணிக்கொள்ளுகிறார்.—அவர் என்காலைத்தொழு ௰
விலேமாட்டி, என்னுடையஎல்லாநெறிகளையும்
உற்றுப்பார்க்கிறாரென்று,-என்காதிலேறநீர்சொ ௰௧
ன்னீர், உமது வாக்கின் சத்தத்தை நான் கேட்
டேன்.—கேளும், நீர் இதிலே நீதியுள்ளவரல்ல: ௰௨
நான் உத்தரமாக, மனுஷனிலும் தேவன் பெ
ரியவரென்று உமக்குச்சொல்லுகிறேன்.—நீர் அ ௰௩
வரோடே என் வாதுபண்ணுகிறீர்; அவர் தமது
கிரியைகளின் காரணங்களைச் சொல்லுகிறதில்
லை.—படுக்கையிலே தூங்கும் மனுஷர்மேல் கன ௰௪
நித்திரைவர, சொப்பனத்திலும், இராத்தரிசனத்
திலும்,—தேவன் ஒருமுறை இருமுறை பேசு ௰௫
கிறார், மனுஷனோ அதைக் கிரகிக்கிறதில்லை.—
அவர் மனுஷன் தன்னை ஏவுங்காரியத்தை விட் ௰௬
டுத்திரும்பி, அவனிடத்திலுள்ள அகங்காரத்தை
நீக்கும்படிக்கு,—அவர் மனுஷருடைய காதைத் ௰௭
திறந்து, அவர்கள் உபதேசத்துக்கு முத்திரையி
டுகிறார்,—அவன் பிராணனைப் பாதாளத்துக்கு ௰௮
விலக்கி, அவன் சீவனைப்பட்டயத்திற்குத்தப்பு
விக்கிறார்.-அவன் படுக்கையிலேவருத்தத்தினால் ௰௯

---

(௬) அதி.௰௫.௰. (௮) ௧.இரா.௩.௰௨. நீதி.௨.௬. பிர.௨.௨௬. தானி.௧.௰௭. மத்.௰௧.௨௫. யாக்.௧.௫. (௯) ௧.கொரி.௧.௨௬. (௰௨) எரே.௯.௨௩. ௧.கொரி.௧.௨௯. (௨௧) லேவி.௰௯.௰௫. உபா.௧.௰௭. நீதி.௨௪.௨௩. மத்.௨௨.௰௬.—(௩௩. அதி.௪.) ஆதி.௨.௭. (௰) அதி.௰௩.௨௭. (௰௩) ஏசா.௪௫.௯. (௰௪) எண்.௰௨.௬. (௰௫) சங்.௬௨.௰௧. (௰௬) அதி.௩௬,௰,௰௫.

வாதைப்படுகிருன், அவன் எலும்புகள் முழுவ
௨௰ தும்வேதனைப்படுகின்றன.-அதினல்அவன்பிரா
ணன்ஆகாரத்தையும்,அவன் ஆத்துமம் சுவையுள்
௨௧ ளபதார்த்தத்தையும்அரோசிக்கும்.-அவன் மாமிச
ம்அழிந்துகாணப்படாமற்போகின்றது;மறைவா
யுள்ள அவன் எலும்புகள் வெளிப்படுகின்றன.—
௨௨ அவன் ஆத்துமம் பாதாளத்திற்கும், அவன் பிரா
௨௩ ணன் நாசருக்கும் சமீபிக்கின்றன.—அப்பொழு
து அவருடைய நீதியை மனுஷனுக்குத்தெரிவிக்
கிறதற்கு ஆயிரவருக்குள்ளே போதகனுகிய தூ
௨௪ தனொருவன் காணப்படுவானுகில்,—அவர் தயை
செய்து,பாதாளத்திலிறங்காதபடி இவனை விடுவி
யும்,நான் பிராயச்சித்தங் கண்டுபிடித்தேனென்று
௨௫ சொல்லுவார்.—அதினல் அவன்மாமிசம்பிள்ளை
யுடைய மாமிசத்தைப்பார்க்கிலும் செழுமையுள்
ளதாகும்: திரும்பவும் சிறுவயதுள்ளவனுவான்:—
௨௬ அவன் தேவனிடத்திற்பிரார்த்திக்கும்பொழுது
அவர் அவனுக்குத்தயைசெய்வார்:அவன் மகிழ்ச்
சியோடும் அவர் முகத்தைக்காண்பான்: அவர் ம
னுஷனுக்குஅவன்நீதிக்கேற்கப்பலனளிப்பார்.-
௨௭ அவர்மனுஷரை நோக்கிப்பார்க்கிருர், அவர்க
ளில் யாவனொருவன் நான் பாவஞ்செய்தேன், நீ
தியைப்புரட்டினேன், அதினல் எனக்கு ஒருபல
௨௮ னுமில்லையென்றுசொல்லுவானுகில்,—அவர் அ
வன் ஆத்துமம்பாதாளத்தில் இறங்காதபடி இரட்
சிப்பார்,அவன் பிராணன் ஒளியைத்தரிசிக்கும்.-
௨௯ கேளும்,மனுஷனுடைய ஆத்துமம் சீவனுள்ளோ
ரின் ஒளியினல் பிரகாசம் பெறும்பொருட்டு அ
௩௰ தைப் பாதாளத்திற்கு விலக்கும்படி,—தேவன்
மனுஷனுக்கு அடிக்கடி இவைகளெல்லாவற்றை
௩௧ யுஞ் செய்துவருகிருர்.—ஆ, யோபே, சிந்தித்து,
எனக்குச்செவிகொடும்: நான் பேசப்போகிறே
௩௨ ன், மௌனமாயிரும்.—நீர் நீதிமானென்பதை வி
ளங்கப்பண்ண நான் விரும்புகிறேன்: சொல்ல
௩௩ எதாயினும் இருந்தால் உத்தரஞ்சொல்லும்.—இல்
லையெனில், மௌனமாயிருந்து எனக்குச்செவி
கொடும், நான் உமக்கு ஞானத்தைப் போதிப்
பேன் என்ருன்.

## ௩௪. அதிகாரம்.

௧. இலியூ தேவனுக்குப்பிரதிநிதியாகி யோபின் குற்றத்தைவெளிப்படுத்தல்: ௰. சருவவல்லமையுள்ள தேவன் அநியாயஞ்செய்யக்கூடாதெனக்காட்டல்: ௩௧. மனுஷன் தேவனுக்குமுன் தன்னைத்தாழ்த்துவது கடமையெனக்காட்டல்: ௩௪. இலியூ யோபைக்கடிந்துகொள்ளல்.

௨ பின்பு இலியூ வசனிக்கத்தொடங்கி,—புத்தி
மான்களே, என்வாக்குகளைக்கேளுங்கள்; ஞா
௩ னவான்களே, எனக்குச்செவிகொடுங்கள்.—நா
உணவுப்பொருளை ருசிப்பதுபோலக் காதுவாக்
குகளைப் பரீட்சிக்கும்.—நமக்குள்ளே நியாயம் ௪
விசாரிப்போம்: நன்மை யின்னதென்று நிச்ச
யிப்போமாக.—நான்நீதிமான்: தேவன் என்நி ௫
யாயத்தைவிலக்கினர்.—நான் என் நியாயத்துக் ௬
கு விரோதமாகப்பொய்சொல்வேனு; பாவமின்
றி நான் அகோரகிலேசம் அனுபவிக்கிறேனென்
று யோபு சொன்னரே.—யோபுக்கு ஒப்பானவ ௭
னர், அவர் சலத்தைப்போலப் பரிகாசத்தைக்
குடிக்கிருர்.-அவர் துர்க்கிரியைக்காரரோடுகூட் ௮
டங்கூடி, துன்மார்க்கரோடு திரிகிருர்.—மனு ௯
ஷன் தேவனைப் பிரியப்படுத்துவதினல் அவ
னுக்கு இலாபமென்னவென்றுசொன்னர்.—ஆ ௰
கையால் புத்திமான்களே, எனக்குச்செவிகொ
டுங்கள்: துர்க்கிரியை தேவனுக்கும் பாவம்,
சருவவல்லவருக்கும் தூரம்.—மனுஷனுடைய ௰௧
கிரியைக்கேற்க அவர் அவனுக்குப்பலன் அளிப்
பார், ஒவ்வொரு மனுஷருந் தங்கள் தங்கள் நெ
றிக்கேற்கப்பலன் அனுபவிக்கும்படிசெய்வார்.-
தேவன் ஒருபொழுதும் பாவஞ்செய்யார், சரு ௰௨
வவல்லமையுள்ளவர் அநியாயஞ் செய்யமாட்
டார்.—பூமண்டலத்தின் கர்த்தத்துவபாரத்தை அ ௰௩
வருக்குக் கொடுத்தவன் யாவன்; பூலோகமுழு
வதையும் ஒழுங்குபடுத்தினவன் யாவன்.—அ ௰௪
வர் மனுஷனுக்கு விரோதமாய்த் தமதுமனதைத்
திருப்பி, அவன் ஆவியையும் சுவாசத்தையுந்தம்
மிடத்திலேசேர்த்துக்கொண்டால்,-மாமிசமெல் ௰௫
லாம் ஏகமாய் அழிந்துபோம், மனுஷன் திரும்
பவுமண்ணுவான்.—உமக்குப்புத்தியுண்டானல் ௰௬
இதைக்கேளும்: என் வாக்குகளின் சத்தத்துக்
குச்செவிகொடும்.—நியாயத்தை வெறுக்கிறவன் ௰௭
அரசாளலாமா; மகா நீதிபரர்மேல் குற்றஞ்சுமத்
துவீரா.—அரசனைநோக்கித் துன்மார்க்கனேயெ ௰௮
ன்றும், பிரபுகளைநோக்கி அவபத்தரேயென்றுஞ்
சொல்லத்துணியலாகுமா.—அப்படியிருக்க, பிர ௰௯
புகளின் முகத்தைப்பாராமலும் ஏழையிலும் ஐ
சுவரியவானை அதிகமாய் எண்ணுமலுமிருக்கிற
வரைநோக்கி இப்படிச்சொல்லலாமா; இவர்க
ளெல்லாரும் அவர் கைக்கிரியையாயிருக்கிருர்
கள்.—அவர்கள் சடிதியில் சாவார்கள், சனங்கள் ௨௰
யாவரும் நடுச்சாமத்தில் வியாகுலப்பட்டு ஒழிந்
துபோவார்கள்: தோன்ருத கையினல் பராக்கிர
மசாலிகளும் எடுத்துக்கொள்ளப்படுவார்கள்.—
மனுஷனுடைய நெறிகளில் அவர் கண்ணேட் ௨௧
டமாயிருக்கிருர், அவனுடைய எல்லா நெறிக
ளையுங் காண்கிருர்.—துர்க்கருமக்காரர் ஒளித்துக் ௨௨
கொள்ளும்படிக்கு ஒரு இருளும் மரண நிழலு
மில்லை.—மனுஷன் தம்மோடு வழக்காடும்படி ௨௩

(௨௰) சங்.௱௭.௰௮. (௨௭) ௨.சாமு.௰௨.௰௩. நீதி.௨௮.௰௩. லூக்.௰௫.௨௧. ௧.யோவா.௧.௯. ரோ.௬.௨௧. (௨௯) சங்.௫௬.௰௩. (௩௰) எசா.௩௮.௰௭. (௩௩) சங்.௩௧.௰௧.—(௩௪. அதி. ௩.) அதி.௰௨.௰௧. (௬) அதி.௯.௰௬. அதி.௰௬.௰௩. அதி.௰௫.௰௬. (௯) அதி.௯.௨௨,௨௩,௩௰. மல்.௩.௰௪. (௰) ஆதி.௰௮.௨௫. சங்.௯௨.௰௪. ரோ.௯.௰௪. (௰௧) சங்.௬௨.௰௨. நீதி.௨௪.௰௨. எசேக்.௩௩.௨௰. மத்.௰௬.௨௭. ரோ.௨.௬. ௨.கொரி.௫.௰. ௧.பேதுரு.௧.௰௭. வெளி.௨௨.௰௨. அதி.௮.௩. (௰௪) சங்.௱௪.௨௯. (௰௫) ஆதி.௩.௰௯. பிர.௰௨.௭. (௰௭) ஆதி.௰௮.௨௫. ௨.சாமு.௨௩.௩. (௰௮) யாத்.௨௨.௨௮. (௰௯) உபா.௰.௰௭. அப்.௰.௩௪. ரோ.௨.௰௧. கலா.௨.௬. எபே.௬.௯. கொலோ.௩.௨௫. ௧.பேதுரு.௧.௰௭. (௨௧) சங்.௩௪.௰௫. நீதி.௫.௨௧. எரே.௰௬.௰௭. (௨௨) சங்.௱௩௯.௰௨. ஆமோ.௯.௨,௩. எபி.௪.௰௩.

தேவன் அவனுக்குஇடங்கொடுக்கமாட்டார்.-
௨௪ அவர் எண்ணிறந்த பராக்கிரம சனங்களைக்கண்
டதுண்டமாக்கி, அவர்கள் ஸ்தானத்தில் வேறு
௨௫ சனங்களை நிலைப்படுத்துவார்.—அவர்களுடை
ய கிரியைகளை அவர் அறிவார், இராக்காலத்தில்
அவர்களைக் கவிழ்த்துவிடுகிறார், அதினால் அவர்
௨௬ கள் நொறுக்கப்படுவார்கள்.—அவர்கள் அவரு
டைய நெறிகளில் ஒன்றையும் எண்ணாமல் அ
௨௭ வரைவிட்டுத் திரும்பினபடியினால்,-எவர்களும்
காணத் துன்மார்க்கரைப்போல அவர்களை அ
௨௮ டிக்கிறார்.-அவர்கள் எளியவர்களுடைய ஓலம்
அவரிடத்திற் சேரும்படி பண்ணுகிறார்கள், அ
வர் உபத்திரவப்படுகிறவர்களிடும் ஓலத்தைக்கே
௨௯ ட்கிறார்.—சனங்கள் உபத்திரவப்படுவதற்கேது
௩௰ வாய், துன்மார்க்கர் அரசாளாதபடிக்கு,-அவர்,
ஒரு சாதியாருக்காகிலும் மனுஷன் ஒருவனுக்கா
கிலும்,அவர் சௌக்கியத்தைத்தந்தால், கிலேசப்
படுத்துகிறவன் யாவன்; அவர் தமது முகத்தை
மறைக்கும்பொழுது, அவரைத் தரிசிக்கக்கூடிய
௩௧ வன் யாவன்.-நான் தண்டனை பெற்றேன், இ
னிப் பாவஞ்செய்யமாட்டேன், நான் அறியாத
௩௨ தை எனக்குப் போதித்தருளும்.—நான் பாவஞ்
செய்திருந்தும் இனிச் செய்யமாட்டேனென்று
இப்படித் தேவனை நோக்கிச்சொல்வது தகு
௩௩ மல்லவா.—உமது மனதின்படியே வாய்க்குமா;
நீர் சம்மதித்தாலும் சம்மதியாதிருந்தாலும் நான்
அல்ல,அவரேஉமதுகிரியைக்கேற்கப்பலனளிப்
பார்;ஆதலால்உமக்குத்தெரிந்ததைச்சொல்லும்.-
௩௪ புத்திமான்கள்எனக்குச்சொல்லுவார்களாக,ஞா
னவான்கள் என்வாக்கைச் சிந்திப்பார்களாக.—
௩௫ யோபு புத்தியீனமாய்ப்பேசினார், அவர் வாக்குக
௩௬ ளிலே ஞானசாரமில்லை.—யோபு தமது பாவத்
துடனே மீறுதலைக்கூட்டிக்கொண்டார், எங்கள்
மத்தியில் கைகொட்டித் தேவனுக்கு விரோத
௩௭ மாய் அநேக வாக்குகளை வசனித்தார்.-ஆதலால்
பாவிகள் பட்சத்திற்சொல்லிய உத்தரங்களினி
மித்தம், முடிவுகாணும்வரைக்கும், அவர் பரீட்
சிக்கப்படும்படி விரும்புகிறேனென்றான்.

## ௩௫. அதிகாரம்.

௧. தேவ மகிமையையுணர்த்தல்: ௯. மனஸ்தாபத்
தினாற் பாவமன்னிப்புக் கிடையாதெனல்.

௨ பின்னும் இலியூ,—பாவம் நீங்குவதினால் எனக்
கென்ன பலன் எனக்கு வரும் இலாபமென்ன
௩ வென்று சொன்னீர்.-இன்னுந் தேவனுடைய
நீதியைப்பார்க்கிலும் உமதுநீதி அதிகமென்று நீர்
௪ சொன்னது நலமென்று எண்ணுகிறீரா.—நான்
உமக்கும், உம்மோடிருக்கிற உமது தோழருக்
௫ கும் உத்தரங்கொடுப்பேன்.—ஆகாயமண்டலங்
களை அண்ணாந்துபாரும்; உம்மைப்பார்க்கிலும்
உயர்ந்திருக்கிற மேகங்களைநோக்கும்.—நீர் பா ௬
வஞ்செய்தால் அவருக்கு என்னநஷ்டஞ்செய்
யக்கூடும்; உமது அதிக்கிரமங்கள் பெருகினால்
அவருக்கென்ன செய்வீர்.—நீர் நீதிமானாயிருந் ௭
தால் அவருக்கென்னகொடுக்கிறீர்; அவர் உம
து கையினின்று என்ன வாங்குகிறார்.—உம்மு ௮
டைய தூர்க்கிரியை உமக்கொப்பான ஒரு மனு
ஷனுக்குத் தீமையாய் முடியவுங்கூடும்; உம்மு
டைய் நீதி மனுபுத்திரனுக்குப் பலன்தரவுங்கூ
டும்.—உபத்திரவமிகுதியினால் ஓலமிடச்செய்கி ௯
றார்கள்: பெலவான்களின்கையினிமித்தம்புலம்
புகிறார்கள்.—பூமியிலுள்ள மிருக சீவன்களைப் ௰
பார்க்கிலும் நம்மை ஞானவான்களும், ஆகாயப்
பறவைகளைப்பார்க்கிலும்நம்மை அதிகபுத்தியுள்
ளவர்களுமாக்கி,-இரவிலுங் கீதம்பாட அருள் ௰௧
செய்கிற என் தேவனாகிய சிருஷ்டிகர் எங்கே
யென்றுகேட்பவனில்லை.-அங்கே அவர்கள்ஓல ௰௨
மிடுகிறார்கள், அவரோ மனுஷருடைய அகங்
காரத்தினிமித்தம் உத்தரங் கொடுக்கிறதில்லை.-
தேவன் ஒருபொழுதும் வீண்வாக்குக்கேளார், ௰௩
சருவவல்லமையுள்ளவர் அதைமதியார்.—நான் ௰௪
அவரைத் தரிசிக்கமுடியாதென்று நீர்சொன்னா
லும், உமது நியாயத்தீர்ப்பு அவரிடத்திலிருக்கின்
றது, ஆதலால் அவரை எதிர்பார்த்துக்கொண்டி
ரும்.—அவர் இப்பொழுதோ கோபத்துடன் வி ௰௫
சாரிக்கிறதில்லை; அவர்மிகுதியான அகங்காரத்
தைப்பார்க்கிறதில்லை.-ஆதலால் யோபு விருதா ௰௬
வாக வாய்திறக்கிறார்; அநேக அஞ்ஞானவாக்
குகளையும் வசனிக்கிறாரென்றான்.

## ௩௬. அதிகாரம்.

௧. தேவன் தமது சகலகிரியைகளிலும் நீதிமா
னெனக்காட்டல்: ௰௬. யோபின்பாவம் தே
வன் ஆசீர்வதிப்பதற்குத் தடையெனக்காட்
டல்: ௨௪. தேவனுடையகிரியைகளைஆராய்ந்
துபார்ப்பது தகுதியெனக்கூறல்.

மேலும் இலியூ,—எனக்குச்சற்றே இடங்கொ ௧
டும், தேவன்பட்சத்தில்நியாயங்களுண்டென் ௨
று உமக்குக்காண்பிப்பேன்.-நான் தூரத்தினின் ௩
று என்ஞானத்தைவருவிப்பேன், என் சிருஷ்டி
கர் நீதியுள்ளவரென்பதைப்பிரஸ்தாபம்பண்ணு
வேன்.—நிச்சயமாய் என்வாக்குப் பொய்யற்றி ௪
ருக்கும்: பூரணஅறிவுபெற்றவனொருவன் உம்
மோடிருக்கிறானே.—கேளும், தேவனே வல் ௫
லமையுள்ளவர், ஒருவரையும் அவமதிக்கிறதில்
லை: அவர்பெலத்திலும் புத்தியிலும் பெரியவர்.-
அவர் துன்மார்க்கனுடைய பிராணனைக்காக்க ௬
மாட்டார்: திக்கற்றவர்கள்பட்சத்தில்நியாயந்தீர்
ப்பார்.-அவர் நீதிமான்கள்மேல் கண்களைவிலக் ௭
கார், சிங்காசனத்திலுள்ள இராசாக்களுடன்

(௨௪) தானி.௨.௧. (௨௬) ௧.சாமு.௰௫.௰௧. சங்.௨௮.௫. எசா.௫.௰௨. (௨௮) அதி.௩௫.௯. யாக்.௫.௪. யாத்.௨௨.௨௩. (௨௯) ௨.இரா.௨௧.௯. (௩௧) தானி.௯.௭—௰௪.—(௩௫. அதி. ௨.) அதி.௨௧.௰௫. (௬) நீதி.௮.௩௬. எரே.௭.௰௯. (௭) அதி.௨௨.௨,௩. சங்.௰௬.௨. நீதி.௯.௰௨. ரோ.௰௧.௩௫. (௰) சங்.௪௨.௮. அப்.௰௬.௨௫. (௰) சங்.௯௪.௰௨. (௰௧) எசா.௫௧.௰௩. (௰௨) நீதி.௧.௨௮. (௰௩) அதி.௨௭.௯. நீதி.௰௫.௨௯. எசா.௧.௰௫. எரே.௰௧.௰௧. (௰௪) அதி.௯.௰௧. சங்.௩௭.௫,௬. (௰௫) சங்.௮௯.௩௨. (௰௬) அதி.௩௪.௩௫,௩௭.—(௩௬. அதி. ௫.) அதி.௯.௪. சங்.௯௯.௪. (௭) சங்.௩௩.௰௮. சங்.௱௰௩.௮.

அவைகள் இருக்கின்றன; அவர்சதாகாலமும்அ
வர்களை நிலைப்படுத்த, அவர்கள் உயர்ந்திருக்கி
அ றார்கள்.—அவர்கள் விலங்குகளில் பூட்டப்பட்
டு, உபத்திரவத்தின் கயிறுகளினால் கட்டப்பட்
கூ டிருந்தாலும்,—அவர், அவர்கள்கிரியைகளையும்,
அவர்கள்செய்தமிகுதியான அதிக்கிரமங்களையும்
ய அவர்களுக்குத் தெரிவிக்கிறார்.—கடிந்துகொள்
ளுதல் நுழையும்படி அவர்கள்செவியைத்திறக்
கிறார், பாவத்தைத்தள்ளிவிடும்படி அவர்களுக்
யக குக்கட்டளையிடுகிறார்.—அவர்கள் கட்டளைக்க
மைந்து அவரைச்சேவிப்பார்களாகில், தங்கள்
நாள்களை வாழ்வோடும், தங்கள் வருஷங்களைச்
யஉ சௌக்கியத்தோடும் போக்குவார்கள்.—அவர்கள்
கட்டளைக்கமையாமலிருப்பார்களாகில், கட்கத்
தினால் ஒழிந்துபோவார்கள், ஞானமில்லாமல்சா
யங வார்கள்.—கபடமுள்ள இருதயத்தையுடையவர்
கள் குரோதத்தைக் குவிக்கிறார்கள்: அவர்களை
அவர் கட்டுகிறபொழுது கெஞ்சிக் கூப்பிடார்
யச கள்.—அவர்கள் பாலபருவத்தில் மாண்டுபோ
வார்கள், அவர்கள் பிராணன் அசுத்தர்களுக்குள்
யரு ளே இருக்கும்.—அவர் ஏழைகளை அவர்கள்சிறு
மையினின்று விடுவித்து, உபத்திரவத்தில் அவர்
யசு கள் காதைத்திறக்கிறார்.—அப்படியே அவர் உம்
மையும் நெருக்கத்தினின்று நீக்கி நெருக்கமில்
லாத ஒரு விசாலமானஸ்தானத்தில் வைத்திருப்
பார், அதினால் உமதுபோசனபீடம் அறுசுவைப்
யஎ பதார்த்தங்களினாலே நிறைந்திருக்கும்.—நீர் துன்
மார்க்கருடைய வழக்கை நிலைப்படுத்தினீர்: ஆ
கிலும் நியாயமுள்ள காரியம் ஸ்திரப்படுத்தப்ப
யஅ டும்.—கோபமிருக்கிறபடியால் உம்மை ஒருசங்
காரத்தினால் அகற்றிவிடாதபடி எச்சரிக்கையா
யிரும்: அப்பொழுது மகா பிராயச்சித்தஞ்செய்
யகூ தாலும் விடுதலைபெறமாட்டீர்.—உமது செல்வத்
தைமதிப்பாரா; உமதுபொன்னையும், பூரணபரா
உய க்கிரமத்தையும் மதிக்கமாட்டாரே.—சனங்கள்
தங்களுடைய ஸ்தானத்தினின்று கவர்ந்துகொ
உக ண்டுபோகப்படும் இரவை விரும்பாதேயும்.—பா
வத்திற்குத் திரும்பாதபடி சாவதானமாயிரும், உ
பத்திரவத்தினால் அதையேதெரிந்துகொண்டீர்.—
உஉ கேளும், தேவன் தமதுவல்லமையினால் மேன்
மைப்படுத்துகிறார்: அவரைப்போலப்போதிக்கி
உங றவன் யாவன்.—அவர்செல்லும் வழியை அவ
ருக்குக்கட்டளையிடுகிறவன்யாவன்; நீர் அநியா
யஞ் செய்தீரென்பதைச் சொல்லத்தக்கவன் யா
உச வன்.—மனுஷர்நோக்கிப்பார்க்கிற அவருடைய
உரு கிரியையை நீர் மகிமைப்படுத்த நினையும்.—எந்த
மனுஷனும் அதைக்காணலாகும்; தூரத்தினின்று
உசு பார்க்கலாம்.—கேளும், தேவன் மகத்துவமுள்
ளவர், நம்முடைய புத்திக்கெட்டாதவர், அவரு
டைய வருஷங்களின்தொகை அறியமுடியாது.—
அவர்நீர்த்துளிகளைச்சூட்சுமமாக்குகிறார்: அவரு உஎ
டையமூடுபனிமேகத்திலிருந்து மழையாகச்சொ
ரிகின்றது.—மேகங்கள் சொரிகிறதினால் மனுஷர்உ உஅ
மேல் மிகுதியாக மழைவிழுகின்றது.—மேகங்க உகூ
ளின்விரிவையும் அவர் கூடாரத்தின் ஆரவாரத்
தையும்அறியவல்லவன்யாவன்.—கேளும், அதின் ஙய
மேல் அவர் தமது ஒளியைப்பரப்புகிறார், சமுத்
திரத்தின் ஆழங்களை மூடுகிறார்.—அவைகளினால் ஙக
அவர் சனங்களுக்குநியாயத்தீர்ப்புச்செய்கிறார்;
ஆகாரத்தைப் பூரணமாய் விளைவிக்கிறார்.—அவர் ஙஉ
மின்னல்களைத் தமது கைகளினாலே மறைத்து,
இன்னாரின்னாரை அடிக்கவேண்டுமென்று கட்
டளையிடுகிறார்.—தமது சிநேகிதர் இன்னாரென்ப ஙங
தை அதற்குத்தெரிவிக்கிறார், அது நெருங்கியகு
ரோதந்துஷ்டருக்குநேரிடப்பண்ணும்.

## ஙஎ. அதிகாரம்.

க. அவருடையமகாகிரியைகளினிமித்தம் தேவ
னுக்குப்பயப்படுவதுகடமையெனக்காட்டல்:
யரு. அவருடைய ஞானம் ஆராயமுடியாதெ
னக்கூறல்.

இதினால் என்னிருதயந்தத்தளித்து, தனதுஸ்தா க
னத்தில்நின்றுந் துடித்தெழும்புகின்றது.—அவர் உ
சத்தத்தையும், அவர் வாயினின்று புறப்படுகிற
தொனியையும்கேட்டுச் சிந்தித்துக்கொள்.—ஆகா ங
ய மண்டலத்தின்கீழ் எங்கும் அவர் அதைச்செ
லுத்துகிறார், அவருடையமின்னல் பூமியின் எல்
லைபரியந்தஞ்செல்லும்.—அதற்குப்பின்பு ஒருசத் ச
தம்முழங்குகின்றது: அவர் தமது பயங்கர சத்
தத்தோடே குமுறுகிறார்; அவர்சத்தங் கேட்கப்
படும்பொழுது அவர் அதைத்தடுக்கமாட்டார்.—
தேவன் தமது சத்தத்தோடே ஆச்சரியமாகமு ரு
ழங்குகிறார்; நம்முடையபுத்திக்கு எட்டாதமகத்
துவக்கிரியைகளைச்செய்துவருகிறார்.—அவர் உ சு
றைந்த மழையையும், சிறுமழையையும், தமது ப
ராக்கிரமத்தின் பெருமழையையும், பூமியின்மே
ல் பெய்யுங்களென்று கட்டளையிடுகிறார்.—சகல எ
மனிதரும் தமது கிரியைகளை உணரும்படிக்கு
எல்லாருடைய கைகளையுமுத்திரிக்கிறார்.—அப் அ
பொழுது மிருகசீவன்கள் குகைகளில்புகுந்து,
தங்கள் தங்கள்ஸ்தானங்களில் தங்குகின்றன.—
தெற்கிலிருந்து சூறைக்காற்றும், வடக்கிலிருந்து கூ
குளிரும்வருகின்றன.—தேவனுடைய சுவாசத் ய
தினின்று உறைந்த பனிக்கட்டிபிறக்கும்: விஸ்
தாரமான சலம் உறைந்துபோகின்றது.—மழை யக
யினால் கார்மேகத்தை அவர் மெலியப்பண்ணு
கிறார்: ஒளியினாலே தமது மேகத்தைச் சிதற அ
டிக்கிறார்.—அவைகள் பூச்சக்கரத்தில் அவர் அ யஉ
வைகளுக்குக் கட்டளையிடும்யாவற்றையுஞ் செ

(அ) சங்.௱எ.யக. (ய) அதி.ஙங.யசு,உங. (யக) அதி.உக.யங. ஏசா.க.யகூ,உய. (யங) ரோ.உ.ரு. (யச) அதி.யரு.ஙஉ. சங்.ருரு.உங. (யரு) உபா.உங.யஎ.(யசு)சங்.யஅ.யகூ. (யஅ) சங்.சகூ.எ. (யகூ) நீதி.யக.ச. (உக) சங்.கூசு.யஅ.எபி. யக.உரு. (உஉ) ஏசா.சய.யங,யச. ரோ.யக.ஙச. க.கொரி.உ.யச. (உச) சங்.கூஉ.ரு. வெளி.யரு.ங.(உசு)க.கொரி. யங.யஉ. சங்.கூய.உ. எபி.க.யஉ. (உஎ) சங்.௱சஎ.அ. (உகூ) நீதி.ங.உய. (ஙக) அதி.ஙஎ.யங. சங்.௱ஙசு.உரு. அப். யச.யஎ. (ஙஉ) சங்.௱சஎ.அ. (ஙங) க.இரா.யஅ.சக,சரு.—(ஙஎ. அதி. ச.) சங்.உகூ.ங. (ரு) வெளி.யரு.ங. (சு) சங். ௱சஎ.யசு,யஎ. (எ) சங்.௱கூ.உஎ.(அ)சங்.௱ச.உஉ. (ய) அதி.ஙஅ.உகூ,ஙய. சங்.௱சஎ.யஎ,யஅ. (யஉ) சங்.௱சஅ.அ.

ய்யும்படி அவர்தமது ஆலோசனையினால் அவை
௰௩ களைச் சுற்றித்திரியப்பண்ணுகிறார்.— அவர்தண்
டனைக்காகிலும், தமது பூமிக்காகிலும், தயைக்
௰௪ காகிலும் அவைகளை நடத்திவருகிறார்.—ஆ,யோ
பே, இதற்குச் செவிகொடும், நின்று, தேவனு
டைய ஆச்சரியமான கிரியைகளைச் சிந்தித்துக்
௰௫ கொள்ளும்.—தேவன் அவைகளை ஒழுங்குபடுத்
தி, தமதுமேகத்தின் மின்னல்பிரகாசிக்கும்படி
௰௬ செய்தவிதம் உமக்குத்தெரியுமா.—மேகங்களைச்
சமப்படுத்தும் வகையையும், சம்பூரண ஞான
முள்ளவருடைய ஆச்சரியமான செய்கைகளை
௰௭ யும்,—தென்றலினால் பூமியை அமையப்பண்
ணும்பொழுது உமது வஸ்திரங்கள் உஷ்டண
௰௮ மாயிருக்கும்வகையையும் அறிவீரா.—வார்க்கப்
பட்ட கண்ணாடியை ஒத்த திடமான ஆகாயத்
௰௯ தை அவருடன் கூடிவிரித்தீரா.—இருளினிமித்
தம் நாங்கள் வாக்கியங்களை வரிசையாகவசனிக்
கக்கூடாமையால், நாங்கள் அவரிடத்திற்சொல்
௨௰ லத்தக்கதை எங்களுக்குணர்த்தும்.—அவருடன்
சம்பாஷணை பண்ணுவேனென்று அவருடன்
சொல்லலாகுமா; ஒருவன்பேசினால் நாசமடை
௨௧ வானே.—இப்பொழுதுகாற்று ஆகாயத்தின்வழி
யாய்உலாவி அவைகளைவிளக்கினதினால், சனங்
கள் மேகங்களிலேதுலங்கும்ஒளியின்மேல் கண்
௨௨ வைக்கக்கூடாது—.வடக்கினின்று தங்கத்தைப்
போன்றபிரகாசம்தோற்றுகின்றது: தேவனிடத்
௨௩ தில் பயங்கரமான மகிமையிருக்கின்றது.—சரு
வவல்லமையுள்ளவர் நம்முடைய புத்திக்கெட்
டாதவர்: அவர்பராக்கிரமத்திலும்,நியாயத்திலும்,
மிகுதியானநீதியிலும்மேன்மையானவர்: உபத்தி
௨௪ ரவப்படுத்தார்.—ஆதலால் மனிதர்அவருக்குப்பய
ப்படவேவேண்டும்: சுயஎண்ணத்தில் ஞானவா
ன்களாகிய எவர்களையும் அவர் பாராரென்றான்.

## ௩௮. அதிகாரம்.

௧. தேவன் சுழல்காற்றினின்று யோபுக்கு உத்
தரஞ்சொல்லித் தமது கிரியையின் மகிமையி
னால் யோபின் பெலவீனத்தைக்காட்டல்.

பின்பு சுழல்காற்றினின்று யெகோவா யோ
௨ புக்குஉத்தரமாக,—அஞ்ஞானவாக்குகளினால் ஆ
லோசனையைக் கருகலாகப்பண்ணுகிறவனாகிய
௩ இவன்யாவன்.—நீ பெலவானைப்போல இடை
கட்டிக்கொள்; நான்உன்னைவினவுவேன், எனக்
௪ கு உத்தரஞ்சொல்லு.—நான் பூமியின்மூலத்தை
நிலைப்படுத்தினகாலத்திலே நீ எங்கேயிருந்தாய்;
௫ நீ புத்திமானானால் சொல்லு.—விடியற்காலத்து
நட்சத்திரங்கள் ஏகமாய்ப் பாடினதும், தேவ
புத்திரர்யாவரும் ஆனந்தத்துடன் ஆரவாரம்பண்
௬ ணினதுமானகாலத்தில்,—அதற்கு அளவுகுறித்த
வன்யாவன்; அதின்மேல் நூல்பிடித்தவன் யா
வன்.—அதின்பாதங்கள் எதின்மேல் ஊன்றிநிற் ௭
கின்றன, அதின் மூலைக்கல்லை வைத்தவன் யா
வன்; அதுஉனக்குத்தெரிந்திருந்தால்சொல்லு.—
கருப்பத்தினின்று சமுத்திரம்வெளிப்பட்டசம ௮
யத்தில், அதற்குக் கதவிட்டு அதை அடைத்த
வன்யாவன்.—அந்தக்காலத்தில் நான் மேகத்தை ௯
அதற்குவஸ்திரமாக்கி, காரிருளைஅதற்குப்புடை
வையாகக்கட்டினேன்.—அதின்மேல் என் நிய ௰
மத்தை ஏற்படுத்தினேன், அதற்குத் தாழ்களை
யுங் கதவுகளையுமிட்டு,—நீ இதுவரைக்கும் வர ௰௧
லாம், மிஞ்சலாகாது: உன்னுடைய திரைக
ளின் கருவம் இங்கே அடங்கவேண்டுமென்று
சொன்னேன்.—துஷ்டர் பூமியினின்று உதறி ௰௨
விடப்படும்பொருட்டு, அதின் கடையாந்தரங்
களைப் பிடிக்கும்படி,—நீ உன் சென்மமுதல் ௰௩
அருணோதயத்துக்குக்கட்டளையிட்டாயா; சூரிய
னுக்கு அதினுதயஸ்தானத்தைத்தெரிவித்தாயா.—
அதினால்பூமி, முத்திரையிடப்பட்ட மண்போல ௰௪
வேறுபடும்; வஸ்திரம்போலப் பொலிவாயிருக்
கும்.—பாவிகளின்ஒளி அவர்களைநீங்கஅகற்றப்ப ௰௫
டும், ஓங்கினபுயம் முறிக்கப்படும்.—நீ சமுத்திரத் ௰௬
தின் ஊற்றின்கண்ணில் பிரவேசித்தாயா, ஆழத்
தைப்பார்க்க உலாவினாயா.—மரண வாசல்கள் ௰௭
உன்னிமித்தந் திறக்கப்பட்டனவா; மரணநிழ
லின் வாசல்களைக் கண்டாயா.—பூமியின் விஸ் ௰௮
தாரத்தை அறிவாயா; இவையெல்லாம் உனக்
குத்தெரிந்திருந்தால் சொல்லு.—ஒளியின் வாசஸ் ௰௯
தானத்தின்வழி எங்கே; இருள் தங்கும் ஸ்தான
மெங்கே.—நீ அதை அதின் எல்லைக்கு நடத்திப் ௨௰
போகக்கூடுமோ, அதின் வீட்டுக்குப்போகிற பா
தை உனக்குத்தெரியுமா.—நீ அக்காலத்தில் பிறந் ௨௧
து, மிகுவயதுள்ளவனாயிருந்ததினால் அது உனக்
குத் தெரியவந்ததா.—நீ உறைந்தமழையின் பண் ௨௨
டசாலைகளில் பிரவேசித்தாயா; ஆபத்துக்காலத்
துக்கும், கலகமும் யுத்தமும் நடக்குந் தினத்துக்
கும்,—நான் சேகரித்த கல்மழையின் பண்டசா ௨௩
லைகளைக் கண்டாயா.—ஒளி பிரிக்கப்படும்வழி ௨௪
யேது, கீழ்காற்றுப் பூமியின்மேல் வியாபிப்ப
தெப்படி.—பூமியிலே மனிதரில்லாத இடத்தி ௨௫
லும் குடியில்லாதவனத்திலும் மழை பெய்விக்
கவும்,—பாழும் அவாந்தரமுமான பூமியைத்தி ௨௬
ருத்திப் படுத்தவும், பூண்டுகளின் முளையை மு
ளைபபிக்கவும்,—பெருமழையின் சலதாரைகளை ௨௭
யும், முழக்கத்தின் மின்னலுக்கு வழியையும் வ
குத்தவன் யாவன்.—மழைக்குப் பிதா உண்டா; ௨௮
பனியைச்செனிப்பித்தவன்யாவன்.—ஆருடைய ௨௯
கருப்பத்தினின்று பனிக்கட்டிபிறந்தது; ஆகா
யத்தின் உறைந்த பனியைப் பிறப்பித்தவன்யா
வன்.—சலம் கல்லைப்போல மறைக்கப்பட்டி ௩௰

(௰௩) யாத்.௯.௰௮,௨௩. ௧.சாமு.௰௨.௰௮,௰௯. எஸ்றா.௰.௯. அதி.௩௮.௨௬,௨௭. (௰௪) சங்.௱௰௧.௨. (௰௮) ஆதி.௧.௬. ஏசா.௪௪.௨௪. (௨௩) ௧.தீமோ.௬.௰௬. (௨௪) மத்.௰.௨௮. மத்.௰௧.௨௫. ௧.கொரி.௧.௨௬.—(௩௮. அதி. ௧.) யாத்.௰௯.௰௬,௰௮. ௧.இரா.௰௯.௰௧. எசேக்.௧.௪. நாகூ.௧.௩. (௨) ௧.தீமோ.௧.௭. (௪) சங்.௱௪.௫. நீதி.௮.௨௯. (௫) அதி.௧.௬. (௮) ஆதி.௧.௯. சங்.௩௩.௭. நீதி.௮.௨௯. எரே.௫.௨௨. (௰௧) சங்.௮௯.௯. (௰௨) சங்.௭௪.௰௬. (௰௩) சங்.௱௪.௩௫. (௰௬) சங்.௭௭.௰௯. (௰௭) சங்.௯.௰௩. (௨௨) சங்.௱௩௫.௭. யாத்.௯.௰௮. யோசு.௰.௰௧. ஏசா.௩௰.௩௰. வெளி.௰௬.௨௧. (௨௬) சங்.௱௭.௩௫. (௨௮) சங்.௱௪௭.௮. எரே.௰௪.௨௨. (௨௯) சங்.௱௪௭.௰௬. (௩௰) அதி.௩௭.௰.

ருக்கின்றது, ஆழத்தின்முகம் உறைந்திருக்கின்
௩௧ றது.—கார்த்திகை நட்சத்திரத்தின் சுகிர்தகுணத்
தை நீ கட்டக்கூடுமா; நீ மிருகசீரிடத்தின் இ
௩௨ டைக்கட்டுக்களை அவிழ்க்கவல்லவனா.–இராசி
களை அவ்வவற்றின் காலத்தில் வெளியே நடத்தி
வரக்கூடுமோ; சுவாதிக்கும் அதின்புத்திரருக்கும்
௩௩ வழிகாட்டக்கூடுமோ.—ஆகாய மண்டலத்தின் நி
யமங்கள் உனக்குத்தெரியுமா; பூமியின்மேல்அ
வைகளின் கர்த்தத்துவத்தை நிரூபணம்பண்ண
௩௪ உன்னாலேமுடியுமா.—சலம் மிகுதியாய் உன்
மேற்சொரியும்படி நீ மேகங்களுக்கு எட்டும்சத்
௩௫ தங் கேட்கப்பண்ணக் கூடுமோ.—நீ மின்னல்க
ளையழைத்தனுப்ப அவைகள் புறப்பட்டுவந்து
இங்கேயிருக்கிறோமென்று சொல்லும்படி செய்
௩௬ யக்கூடுமோ.—அந்தரங்கத்தில் ஞானத்தையும், இ
ருதயத்திற் புத்தியையும் இட்டவன் யாவன்.—
௩௭ ஞானத்தினால் மேகங்களைத்தொகையிடக்கூடிய
௩௮ வன்யாவன்.-தூளானதுகடினமாகத்தடிக்க,மண்
கட்டிகள் ஒன்றோடொன்று இசைந்திருக்குஞ்
சமயத்தில், ஆகாயத்திலுள்ள துருத்திகளைத் தடுக்
௩௯ கத்திராணியுள்ளவன்யாவன்.–சிங்கமும் சிங்கத்
தின்குட்டிகளும் தங்கள் தங்கள் ஸ்தானங்களில்
கிடந்து, தங்கள் தங்கள் ஒளிப்பிடங்களில் பா
௪௰ யும்படி பதிவிருக்கும்பொழுது,–நீ சிங்கத்துக்கு
இரைதேடி, சிங்கக்குட்டியைத் திருத்திப்படுத்
௪௧ துவாயா.–காக்கைக்குஞ்சுகள் தேவனிடத்தில்
ஓலமிட்டுக்கொண்டு ஆகாரம்பெறாமல் திரியும்
பொழுது, அவைகளுக்கு ஆகாரத்தைக் கூட்டி
வைப்பவனார்.

## ௩௯. அதிகாரம்.

௧. காட்டாட்டின் விசேஷம்: ௫. காட்டுக்கழுதை
யின் விசேஷம்: ௯. காண்டாமிருகத்தின் விசே
ஷம்: ௰௩. ஒட்டகப்பட்சியின் விசேஷம்: ௰௯.
குதிரையின்விசேஷம்: ௨௬.பருந்து,கழுகுஎன்
னுமிவைகளின் விசேஷம்.

பருவதத்திலுள்ள காட்டாடுகள் ஈனும்காலம் உ
னக்குத்தெரியுமா; மான்கள் ஈனுமுறைமையை
௨ நிதானித்தாயா.-அவைகள் சினைப்பட்டிருந்து வ
ருகிற மாதங்களைத்தொகையிட்டறிய உன்னாலே
௩ கூடுமா.–அவைகள் குனிந்து குட்டிகளை ஈனும்,
௪ தங்கள் வாதைகளை அகற்றிவிடும்.–அவைகளின்
குட்டிகள் புஷ்டியாகித்தானியம் விளையுமிடத்
தில்வளர்ந்து புறப்பட்டுப்போய், அவைகளிடத்
௫ தில் திரும்பாமல் நிற்கும்.–என்னால் வனம் வீடா
கவும்பாழ்நிலம் வாசஸ்தானங்களாகவும்பெற்ற,-
௬ காட்டுக்கழுதையைச் சுயாதீனமாக்கினவனார்;
௭ அதின் கட்டுக்களை அவிழ்த்தவனார்.–அது நகரத்
தின் இரைச்சலை அலட்சியம் பண்ணுகின்றது,
ஒட்டுகிறவனுடைய சத்தத்தைமதிப்பதில்லை.—
௮ மலைகள் எம்மட்டோ அம்மட்டும் அதின்மேய்ச்
சல், அதுபசும் பூண்டுயாவையும் ஆகாரமாகத்தே
௯ டும்.—காண்டாமிருகம் உன்னிடத்தில் சேவிக்
கச்சம்மதிக்குமா, அது உன் தொட்டினருகே
இராத்தங்குமா.—படைச்சால்களில் உழநீகாண் ௰
டாமிருகத்தைக் கயிற்றினால் ஏரிலே பிணைக்க
லாமா; அது உன்னைத்தொடர்ந்து தாழ்ந்த பூமி
களில் பரம்படிக்குமா;—அது மிகவும் பலமுள் ௰௧
ளதாயிருக்கிறதினால் நீ அதை நம்புவாயா.—உன் ௰௨
வேலையை அதற்கு ஒப்பிப்பாயா; அது தானியத்
தை உன்வீட்டிற்சேர்த்துக் களஞ்சியத்திற் சேக
ரிக்குமென்று நீ நம்புவாயா.—மயிலுக்குச்சிறந்த ௰௩
சிறகுகளையும், ஒட்டகப்பட்சிக்குச் சிறகுகளை
யும் இறகுகளையும் கொடுத்தாயா.—இது தன்னு ௰௪
டைய முட்டைகளைத் தரையிலிட்டு, புழுதியில்
அவைகளை உஷ்டணமாக்குகின்றது.—காலால் ௰௫
மிதித்து உழக்கக்கூடுமென்பதையும், காட்டுமி
ருகம் அவைகளை உடைத்துவிடக்கூடுமென்ப
தையும் சிந்திப்பதில்லை.—தன் குஞ்சுகளைத்தன் ௰௬
னுடையவைகளல்லாதவைகளைப்போலப் பாவி
த்து, அவைகள்மேல் தயையில்லாதிருக்கின்றது:
அவைகளினிமித்தம் அதற்குக் கவலையில்லாதப
டியால் அது பட்டவருத்தம் விருதா,–தேவன் ௰௭
அதற்குப்புத்திகொடாமல் அதைஞானவீனமாக்
கினார்.–அது தன் சிறகைவிரித்து எழும்புஞ்சம ௰௮
யத்தில், குதிரையையும் குதிரையாளனையும் பரி
காசம்பண்ணும்.—நீ குதிரைக்கு வீரத்தைக்கொ ௰௯
டுத்தாயா; அதின்கழுத்தில் முழக்கத்தைத் தரிப்
பித்தாயா.–ஒரு வெட்டுக்கிளியைப்போல நீ அ ௨௰
தைத்தத்திப் பாயப்பண்ணக்கூடுமா, அதின் நா
சியின்மகிமை மகாபயங்கரமுள்ளது.-அதுதாழ்ந் ௨௧
த பூமியைத்தோண்டி, தன் பராக்கிரமத்துடன்
மகிழ்ந்து யுத்தசன்னத்தரை எதிர்த்துச்செல்லும்.-
அது கலங்காமல் பயங்கரத்தை நகைக்கும், அ ௨௨
தற்குப் பயமில்லை, கட்கத்துக்கஞ்சித்திரும்பா
து.—அப்பருத்தூணியும், ஒளிவீசும் ஈட்டியும், ௨௩
கேடகமும் அதற்கெதிராக இரைகிறபொழுது,-
கருவமுங் குரோதமுங்கொண்டு, பூமியை உறி ௨௪
ஞ்சுகின்றது: எக்காளத்தொனிகேட்டுஉற்சாகங்
கொள்ளும்.—எக்காளங்கள் தொனிக்கையில் ஆ ௨௫
கா, ஆகாவென்று சத்தமிட்டு, வெகுதூரத்தினி
ன்று சேனாபதிகளின் ஆரவாரத்தையும், கெம்பீ
ரிப்பையும், யுத்தத்தையும் மோப்பம்பிடிக்கின்
றது.—பருந்து தென்றிசைக்குநேரே தன் சிறகு ௨௬
களைவிரித்துப்பறப்பது உன் புத்தியினாலா.-கழு ௨௭
கு உன் கட்டளைக்காகவா உயர ஏறி உயரத்தி
லே தன் கூட்டைக்கட்டுவது–அது கல்மலையில் ௨௮
நிலைத்து, கல்மலையின் சிகரத்திலும் துருக்கஸ்தா
னத்திலுந் தங்கி,—அங்கேநின்று இரையை உற் ௨௯
றுப்பார்க்கின்றது, அதின் கண்கள் அதிதூரத்தி
னின்று காணுகின்றன.–அதின் குஞ்சுகள் இரத் ௩௰
தத்தை உறிஞ்சிவிடும்: பிரேதங்கள்எங்கேயோ,
அங்கே அது சேருமென்றார்.

## ௪௰. அதிகாரம்.

௧. தேவன் பின்னும்யோபுக்கு உத்தரஞ்சொல்

(௩௧)ஆமோ.௫.௮.(௩௩)எரே.௩௧.௩௫.(௩௬)சங்.௫௧.௬.பிர.௨.௨௬.(௪௰)சங்.௱௪.௨௧. சங்.௱௪௫.௰௫.(௪௧)சங்.௱௪௭.௯. மத்.௬.௨௬.—(௩௯.அதி.௧.) சங்.௨௯.௯. (௫) அதி.௨௪.௫. எரே.௨.௨௪. ஒசி.௮.௯.(௯) எண்.௨௩.௨௨. உபா.௩௩.௰௭. (௰௬) புல.௪.௩. (௨௧) எரே.௮.௬. (௨௭) எரே.௪௯.௰௬. ஒப.௪.(௩௰)மத்.௨௪.௨௮. லூக்.௰௭.௩௭.—(௪௰.அதி.)

லல்: ௩. தேவன் தமது ஆச்சரியமான கிரியை
களினால் யோபின் அஞ்ஞானத்தை வெளிப்ப
டுத்தல்: ௰௫. பிகேமோத்மிருகத்தின்விசேஷம்.

௨ பின்னும் யெகோவா யோபை நோக்கி,-சரு
வவல்லவருக்குவிரோதஞ்செய்கிறவன் அவருக்
குப்போதகம்பண்ணுவானா; தேவனைக்கடிந்து
கொள்ளுகிறவன் உத்தரஞ் சொல்வானாகவென்
றார்.
௩ அதற்கு யோபு யெகோவாவை நோக்கி,-
௪ நானோ நீசன், உமக்கென்ன உத்தரங்கொடுப்
பேன்; நான் என்கையினால் வாயைப்பொத்து
௫ வேன்.—நான் ஒருதரம்பேசினேன்; இனி உத்
தரங்கொடேன்: இருதரமும்பேசினேன்; திரும்
பவசனிக்கமாட்டேனென்றான்.
௬ அப்பொழுது யெகோவா சுழல்காற்றினின்
௭ றுயோபுக்குஉத்தரமாக,-பெலவானைப்போல இ
டைகட்டிக்கொள்: நான்உன்னைவினாவுவேன்,எ
௮ னக்கு உத்தரம்சொல்லு.—என்னுடையநியாயத்
தீர்ப்பைநீஅவமாக்குவாயா;நீஉன்னைத்தான் நீதி
மானாக்கும்பொருட்டு என்மேல் குற்றம்சுமத்து
௯ வாயா.—தேவனுடையபுயம்போல உனக்குப்
புயமுண்டா,அவரைப்போலச்சத்தமாய்முழங்க
௰ உன்னாலே கூடுமா.—மகத்துவத்தினாலும் மாட்
சிமையினாலும் உன்னைச் சிங்காரித்துக்கொள்;
சௌந்தரியத்தையும் மகிமையையும் வஸ்திரம்
௰௧ போலத்தரித்துக்கொள்.—உன்கோபத்தின் உக்
கிரத்தைவீசி,அகங்காரமுள்ளவர்கள்யாவரையும்
௰௨ பார்த்துத்தாழ்த்திவிடு.—அகங்காரமுள்ளவர்கள்
யாவரையுங்கண்டு அவர்களைத்தாழ்ச்சிப்படுத்து;
துன்மார்க்கரை அவர்கள் இருக்கிற இடத்தில்மி
௰௩ தித்துவிடு.—தூளியில் அவர்களை ஒளித்துவை;
௰௪ அவர்கள் முகங்களை அந்தரங்கத்தில்கட்டு.-அப்
பொழுது உன் வலதுகை உன்னையிரட்சிக்கக்
கூடுமென்றுசொல்லி ஒத்துக்கொள்வேன்.
௰௫ நான் உன்னுடன் சிருஷ்டித்த பிகேமோத்
மிருகத்தை நோக்கிப்பார்; அது எருதுபோலப்
௰௬ புல்லைத் தின்னும்.—அதினுடைய பெலன் அ
தின் இடுப்பிலும், அதின்சத்துவம் அதின்வயிற்
௰௭ றின் நாபியிலுமிருக்கின்றன.—அது தன் வா
லை ஏரஸ்மரத்தைப்போலவளைக்கின்றது: அதின்
இடையின்நரம்புகள்ஒன்றோடொன்றுபின்னிக்
௰௮ கொண்டிருக்கின்றன.—அதின் எலும்புகள் பித்
தளைத்தாழ்கள் போலிருக்கின்றன; அதின் எலும்
புகள் இரும்புக் கம்பிகள்போலிருக்கின்றன.—
௰௯ அது தேவனுடைய சிருஷ்டிகளுக்குள்ளே பிர
தானமானது: அதின் சிருஷ்டி கர்த்தர் அதற்குக்
௨௰ கட்கத்தையிட்டார்.—காட்டுமிருகங்கள் யாவும்
விளையாடும் பருவதங்கள் அதற்கு ஆகாரத்தை
௨௧ விளைவிக்கின்றன.—அது நிழலிடும்விருட்சங்க
ளின்கீழும், நாணலின்மறைவிலும், உளையிலும்
௨௨ கிடக்கும்.—விருட்சங்களெல்லாம் தங்கள் நிழ
லினால் அதைமறைக்கும்; நதியின் அலரிகள் அ
தைச்சூழ்ந்திருக்கும்.—நதி வேகமாய்ப் பாய்ந்தா ௨௩
லும் அதுபயந்தோடாது: தான் யோர்தான் நதி
யையும் தன்வாயில் உறிஞ்சலாமென்றுநம்பும்.—
அது பார்க்கும்பொழுது அதைப்பிடிக்கக்கூடிய ௨௪
வன் யாவன், அதின்மூக்கிலே கயிற்றைமாட்
டக்கூடியவன்யாவன்.

## ௪௧. அதிகாரம்.

### லிவியாதனின் விசேஷம்.

நீ தூண்டிலினால் லிவியாதனைப் பிடிக்கக்கூடு ௧
மா; அதின் நாவை நீ விடுங்கயிற்றினால் அடங்
கப்பண்ணுவாயா.—அதின்மூக்கில் ஒருகயிற்றை ௨
மாட்டக்கூடுமோ; முள்ளினால் அதினுதடுகளைத்
துளைக்கமுடியுமா.—அது உன்னைநோக்கிமிகுதி ௩
யானவிண்ணப்பஞ்செய்யுமா; உன்னுடன்இனி
யவாக்குகளைப்பேசுமா.—அது உன்னோடே உ ௪
டன்படிக்கைபண்ணுமா; நித்தமும் அதைஉனக்
கு அடிமையாக ஏற்றுக்கொள்வாயா.—ஒரு குரு ௫
வியோடே விளையாடுகிறதுபோல அதனுடன்வி
ளையாடுவாயா; உன்பெண்களினிமித்தம்அதைக்
கட்டுவாயா.—அதில் உன் பந்து சனங்கள் வி ௬
ருந்து செய்வார்களா; அதை வியாபாரிகளுக்
குப்பங்கிடுவார்களா.—அதின் தோலைக் கருவு ௭
ள்ள அம்புகளினாலும், அதின் தலையை மச்ச
ஈட்டிகளினாலும் நீ துளைக்கக்கூடுமா.—அதின் ௮
மேல் உன் கையை வை, ஆனாலும் யுத்தத்தைச்
சிந்தித்து, இனிச்செய்யவேண்டாம்.—கேள்,அ ௯
தைப்பிடிக்கும் எண்ணம் வீண்: ஒருவன் அ
தைக்கண்டவுடனே கீழே திகைத்துவிழானா.—
அதை எழுப்புவதற்கு தைரியமுள்ளவன் ஒருவ ௰
னில்லாதிருக்க, என்சமுகத்தில் நிற்கக்கூடியவ
ன் யாவன்.-பிரதி உபகாரஞ்செய்வது எனக்குக் ௰௧
கடமையாகும்படி, எனக்கு உபகாரஞ் செய்த
வன்யாவன்; வானத்தின்கீழ்எங்குமுள்ளவைகள்
என்னுடையவைகள்.—அதின் அங்கங்களையும், ௰௨
அதின்பெலத்தையும், அதின் அங்கத்தின் லட்ச
ணத்தையும் நான் சொல்லாமல் மறைக்கமாட்
டேன்.—அதின் வஸ்திரத்தைக் கிளப்பக்கூடிய ௰௩
வன்யாவன்; அதின் இரண்டுகன்னங்களின் நடு
வேகடிவாளம் போடுகிறவன் யாவன்.—அதின் ௰௪
முகத்தின் துவாரங்களைத்திறக்கக்கூடியவன் யா
வன்; அதின் தந்தங்கள் சுற்றிலும்பயங்கரமுள்ள
வைகள்.—முத்திரைப்பதிப்பாய் அழுத்தமாகிய ௰௫
அடர்த்தியானஅதின்பரிசைகளின்அரணிப்பு ம
காமுக்கியமுள்ளது.—அவைகள்காற்றும் இடை ௰௬
யேவீசாதபடி ஒன்றுக்கொன்று நெருக்கமாய் இ
ணைக்கப்பட்டிருக்கின்றன.—அந்தப்பரிசைகள் ௰௭
ஒன்றோடொன்று இசைந்துகூடியிருப்பதினால்,
அவைகளைவேறுபடுத்தமுடியாது.—அது தும்மு ௰௮
கையில் ஒளிவீசும், அதின்விழிகள் அருணோத
யத்தின் புருவங்களைப்போலிருக்கின்றன.—அ ௰௯
தின்வாயினின்று எரிகிறதீபங்கள் புறப்படுகின்
றன, அக்கினிப்பொறிகள் பறக்கின்றன.—கொ ௨௰

(௪) எஸ்றா.௯.௬. சங்.௫௧.௪. சங்.௩௯.௯. (௮) சங்.௫௧.௪. ரோ.௩.௪. (௯) சங்.௨௯.௩,௪.(௰)சங்.௯௩.௧. (௰௨) ஏசா. ௨.௰௨. தானி.௪.௩௭. (௨௰) சங்.௱௪.௰௪. (௨௪) அதி.௪௧.௧,௨.—(௪௧. அதி. ௧.) சங்.௱௪.௨௬. ஏசா.௨௭.௧. (௰) ஏசா.௩௭.௨௯. (௰௧) ரோ.௰௧.௩௫. யாத்.௰௯.௫. உபா.௰.௰௪. சங்.௨௪.௧.

இக்கிற சட்டியிலாகிலும் பானையிலாகிலும்நின்
றுகிளர்வதுபோல அதின் நாசியினின்று புகை
௨௧ கிளரும்.—அதின் சுவாசம் கரிகளைக் கொளுத்
தும், அதின் வாயினின்று சுவாலைபுறப்படுகின்
௨௨ றது.—அதின்கழுத்தில் பெலந்தங்கும், அதின்
௨௩ முன்பாகப்பயங்கரம் நடனம்பண்ணும்.–அதின்
மாமிசபடலம் ஒன்றின்மேலொன்ருக இசைந்தி
ருக்கின்றன: அவைகள் மகாதிடமாயிருக்கின்ற
௨௪ ன; அவைகளை அசைக்கமுடியாது.—அதின்
நெஞ்சு கல்லைபபோலத்திடமுள்ளது; எந்திரத்
௨௫ தின் அடிக்கல்லைப்போலத் திடமானது.—அது
எழும்புகிறபோது பராக்கிரமசாலிகள் அஞ்சி ந
௨௬ டுங்குவார்கள்: பயத்தினல் மயங்குவார்கள்—அ
தை எதிர்ப்பவனுடைய கட்கம், ஈட்டி, வல்லை
௨௭ யம், கவசமென்பவைகள் விருதாவாகும்.—அது
இரும்பை வைக்கோலைப்போலவும், பித்தளை
௨௮ யை உளுத்தமரம்போலவுமதிக்கும்.—அம்பு அ
தை ஓட்டமாட்டாது: கவண்கற்கள் அதற்குத்
௨௯ துரும்பாகும்.–அத்திரங்களை அடித்தாளைப்போல்
மதிக்கும், ஈட்டி அசைவதைப்பார்த்து நகைக்
௩௰ கும்.–அதின்கீழேகூர்மையானகற்கள்கிடக்கும்:
அது சேற்றிலே கருக்கானவைகளைப்பரப்பிவி
௩௧ டும்.—அது ஆழத்தை, கொதிக்கிற பானையைப்
போலப் பொங்கப்பண்ணும்: அது சமுத்திரத்
தைத்தைலபாத்திரத்தைப்போலாக்குகின்றது.—
௩௨ அதுதனக்குப்பின்பாதையைத்துலங்கப்பண்ணு
௩௩ கின்றது; ஆழம்நரைமயிர்போலாகும்.—பயமில்
லாத அதற்கொப்பிடப்பூமியின்மேல் வேறென்
௩௪ றுமில்லை.—அது சகல பிரதான பிராணிகளையும்
அலட்சியம்பண்ணுகின்றது: அகங்காரிகள் யா
வருக்கும் அதுவே இராசா என்றார்.

## ௪௨. அதிகாரம்.

௧. யோபு தேவன் குற்றமற்றவரென்றும் தான் குற்றமுள்ளவனென்றும் உணர்ந்துசொல்லல்: ௭. தன் சிநேகிதரினிமித்தம் பிராயச்சித்தஞ் செய்தல்: ௰. யோபுக்குவாழ்வுமீண்டுவரல்: ௰௬. யோபின் ஆயுளையும்மரணத்தையுங்கூறல்.

அதன் பின்பு யோபு யெகோவாவை நோக்
௨ கி, உத்தரமாக,–நீரெல்லாவற்றையுஞ் செய்யவல்
லவர், உமது எண்ணமொன்றுஞ் சித்திபெருமல்
௩ போகாது, அதை அறிவேன்.—அஞ்ஞானவாக்
குகளினல் ஆலோசனையைக் கருகப்பண்ணுகி
றவனுகிய இவன்யாவன்; ஆதலால் எனக்குத்தெ
ரியாதவைகளையும் எனக்கெட்டாதவைகளாகிய
௪ ஆச்சரியமானவைகளையும்வசனித்தேன்.–எனக்
குச்செவியைச்சாய்த்தருளும், நான் வசனிப்பே
ன்: நான் உம்மிடத்திலேவினவுவேன், எனக்கு
௫ உத்தரந்தந்தருளும்.–உம்மைக்குறித்து என்செவி
யினல்கேள்விப்பட்டேன்: இப்பொழுதோ என்
௬ கண் உம்மைக்கண்டது.—இதினிமித்தம் நான்
என்னைவெறுத்துத்தூளிலுஞ் சாம்பலிலுமிருந்து
அனுதாபப்படுகிறேனென்ருன்.
யெகோவா யோபிடத்தில் வாக்குகளைவ ௭
சனித்தபின்பு, யெகோவா தேமானியனுகிய
எலீபாசை நோக்கி, நீயும் உன்சிநேகிதர் இருவ
ரும் என்தாசனுகியயோபைப்போல் என்னைக்கு
றித்துநியாயம்பேசாததினல், உங்களுக்குவிரோ
தமாய் என்கோபம் மூளுகின்றது.–ஆதலால் என் ௮
தாசனுகிய யோபைப்போல் என்னைக்குறித்து நி
யாயம்பேசாத உங்கள் அஞ்ஞானத்துக்குத்தக்க
பலன்நான்அளியாதபடி, நீங்கள் ஏழுகாளைகளை
யும் ஏழு ஆட்டுக்கடாக்களையும் தெரிந்துகொண்
டு, என்தாசனுகிய யோபினிடத்திற்போய், உங்
கள்நிமித்தம் ஒருதகனபலியிடுங்கள்; பின்பு என்
தாசனுகிய யோபு உங்களுக்காகப் பிரார்த்தனை
பண்ணுவான்: அவனையே அங்கிகரிப்பேன் என்
ருர்.–அதினலே தேமானியனுகியஎலீபாசும், ஊ ௯
கியனுகியபில்தாத்தும், நாமாத்தியனுகிய சோபா
ரும்போய், யெகோவாவின் கட்டளைப்படி
செய்தார்கள்: யெகோவா யோபை அங்கிக
ரித்தார்.–யோபுதன் சிநேகிதர் நிமித்தம்வேண்டு ௰
தல்பண்ணினபொழுது, யெகோவா அவனு
டைய சிறைத்தனத்தை மாற்றினர்: அன்றியும்
யெகோவா யோபுக்கு முன்னிருந்ததிலும் இ
ருமடங்கதிகம் கொடுத்தார்.–அப்பொழுது அவ ௰௧
ன் எல்லாச்சகோதரரும், அவன்சகோதரிகளனை
வரும், அவனுக்கு அறிமுகமானவர்கள் யாவரும்
அவனிடத்தில்வந்து அவன்வீட்டில்அவனுடன்
போசனம்பண்ணினர்கள்: யெகோவா அவ
னுக்குநேரிடப்பண்ணின எல்லாத்தீமைகளையும்
குறித்துப்பரிதபித்து, அவனுக்கு ஆறுதல்சொன்
னர்கள்: ஒவ்வொருவரும் ஒவ்வொரு துண்டுக்
காசையும் ஒவ்வொரு பொற்காதணியையும் அ
வனுக்குக்கொடுத்தார்கள்.–இவ்வண்ணமே யெ ௰௨
கோவா யோபின் முந்தின வாழ்விலும் பிந்
தினவாழ்வை அதிகமாக்கினர்: பதினலாயிரம்
ஆடுகளும், ஆறாயிரம்ஒட்டகங்களும், ஆயிரம்ஏர்
மாடுகளும், ஆயிரம்பெண்கழுதைகளும் அவனுக்
கிருந்தன.–அவனுக்கு ஏழுபுத்திரரும்மூன்றுபுத் ௰௩
திரிகளும்பிறந்தார்கள்.—இவர்களில் மூத்தபுத்தி ௰௪
ரிக்கு இமீமாளென்றும், இரண்டாம்புத்திரிக்குக்
கேசியாளென்றும், மூன்ரும்புத்திரிக்குக் கேரே
னப்பூக்கென்றும் பெயரிட்டான்.—முழுத்தேச ௰௫
த்திலுமுள்ளஸ்திரிகளுக்குள்ளும் யோபின்புத்தி
ரிகளைப்போலரூபவதிகள்ஒருவருமில்லை: அவர்
கள்பிதா அவர்கள்சகோதரர்மத்தியில்அவர்களுக்
குச்சுதந்தரங்கொடுத்தான்.—இதன்பின்புயோபு ௰௬
நூற்றிநாற்பதுவருஷம் இருந்து, புத்திரரும்பௌ
த்திரருமாக நாலுதலைமுறைகண்டான்.-யோபுவி ௰௭
ருத்தனுகிச்சம்பூரணஆயுள்பெற்று மரணமடைந்
தான்.

(௪௨. அதி. ௨.) ஆதி.௰௮.௰௪. மத்.௰௯.௨௬. லூக்.௰௮.௨௭. (௩) அதி.௩௮.௨. சங்.௪௰.௫. (௮) எண்.௨௩.௧. மத்.௫.௨௪. ஆதி.௨௰.௰௭. யாக்.௫.௰௫,௰௬. ௧.யோவா.௫.௰௬. ௧.சாமு.௨௫.௩௫. மல்.௧.௮. (௰) சங்.௰௪.௭. ஏசா.௪௰.௨. (௰௧) அதி.௰௯.௰௩. (௰௨) அதி.௮.௭. யாக்.௫.௰௧. அதி.௧.௩. (௰௩) அதி.௧.௨. (௰௬) அதி.௫.௨௬. நீதி.௩.௰௬.

# சங்கீத புத்தகம்.

## ௧. சங்கீதம்.

௧. பத்தரின்வாழ்வு: ௪. அவபத்தரின்தாழ்வு.

துன்மார்க்கருடைய ஆலோசனையில் நடவாம
லும், பாவிகளுடையவழியில் நில்லாமலும், நிந்
௨ தனைக்காரரிருக்கிற ஆசனத்திலிராமலும்,—யெ
கோவா அருளியவேதத்திற்பிரியம்வைத்து,இ
ரவும்பகலும் அவ்வேதத்தைத்தியானித்துவருகிற
௩ மனுஷன், வாழ்வுடையவன்.—அவன் நீர்க்கால்
களின் ஓரமாய்நடப்பட்டு, பருவகாலத்திலே க
னிகொடுத்து,இலைவாடாதிருக்கிறவிருட்சத்திற்
கொப்பாயிருப்பான்; அவன்செய்வதெல்லாம்ப
௪ லிக்கும்.—துன்மார்க்கரோ அப்படியல்ல: அவர்
கள் காற்றுப்பறக்கஅடிக்கிற பதருக்கொப்பாயி
௫ ருக்கிறார்கள்.—ஆதலால் துன்மார்க்கர் நியாயத்
தீர்ப்பிலும், பாவிகள் நீதிமான்களின் சபையி
௬ லும் நிற்கமாட்டார்கள்.—யெகோவா நீதி
மான்களின்வழியைஅறிந்திருக்கிறார்:துன்மார்க்
கரின்வழியோ அழியும்.

## ௨. சங்கீதம்.

௧. கிறிஸ்துவின் இராச்சியம்: ௰. அதைக்குறித்து இராசாக்களுக்கு ஆலோசனையுணர்த்தல்.

புறத்தேசத்தார் கலகம்பண்ணுகிறதேது; சனங்
௨ கள் வீணானகாரியத்தைச்சிந்திக்கிறதேது.—யெ
கோவாவுக்கும் அவரால்அபிஷேகம்பெற்றவ
ருக்கும் விரோதமாய்ப்பூமண்டலத்திலுள்ளஇரா
சாக்கள் எழுந்து, அதிபதிகளும் ஏகமாய் ஒருவ
௩ ரோடொருவர் ஆலோசனைபண்ணி,—அவர்கள்
கட்டுக்களைஅறுத்து, அவர்கள்கயிறுகளை நம்மை
விட்டெறிந்து விடுவோம் வாருங்களென்கிறார்
௪ கள்.—பரமண்டலங்களிலே வீற்றிருக்கிறவர் ந
கைப்பார்: கடவுள் அவர்களைப்பரிகாசம்பண்
௫ ணுவார்.—அவர் கோபங்கொண்டு அவர்களுட
னே பேசுவார், அவர்களைத் தமது உக்கிரகோபத்
௬ தினால் கிலேசப்படுத்துவார்.—நான்என்னுடைய
பரிசுத்தசீயோன்மலையின்மேல் என்இராசனைஅ
௭ பிஷேகம்பண்ணிவைத்தேனென்கிறார்.-நான்
நியமத்தைத்தெரிவிப்பேன்: யெகோவா என்
னைநோக்கி, நீ என்சுதன்; இந்நாளில் உன்னைச்
௮ செனிப்பித்தேன்.—என்னிடத்தில் விண்ணப்
பஞ்செய், நான்புறத்தேசத்தாரை உனக்குச்சுதந்
தரமாகவும், பூமண்டலத்திலுள்ள சனங்கள்யாவ
ரையும் உனக்காதீனமாகவுந் தருவேன்.—நீஇருப் ௯
புக்கோலினால் அவர்களைநொறுக்கி, குயக்கலத்
தைப்போல அவர்களைத்தகர்ப்பாயென்றார்.—ஆத ௰
லால்இராசாக்களே, இப்பொழுதுநீங்கள்புத்திபூ
ருவமாய்நடவுங்கள்: பூமியிலுள்ள நியாயாதிபதி
களே, போதகத்தைஏற்றுக்கொள்ளுங்கள்.—பயத் ௰௧
துடனே யெகோவாவைச் சேவியுங்கள், ந
டுக்கத்துடனேகளிகூருங்கள்.-அவருடையகோ ௰௨
பஞ்சற்றேபற்றியெரியும்பொழுது, நீங்கள் வழி
யில் அழியாமலும், சுதனானவர் கோபங்கொள்
ளாமலும், அவரைமுத்தஞ்செய்யுங்கள். அவரை
நம்புகிறயாவரும் வாழ்வுடையவர்கள்.

## ௩. சங்கீதம்.

தேவனே தஞ்சமெனக்கூறல்.

தாவீது தன்புத்திரனாகிய அப்ஷாலோமுக்குத் தப்பி யோடினபொழுது பாடினசங்கீதம்.

யெகோவாவே, என்சத்துருக்கள் எவ்வள ௧
வு பெருகியிருக்கிறார்கள், எனக்கு விரோதமா
யெழும்புகிறவர்கள் அநேகர்.—தேவனால் அவ ௨
னுக்கு இரட்சிப்பில்லையென்று, என்னைக்குறித்
துப்பேசுகிறவர்கள்அநேகர். சேலா.—யெகோ ௩
வாவே, நீர் எனக்குக்கேடகமும், என்மகிமை
யும், என் தலையை உயர்த்துகிறவருமாயிருக்கி
றீர்.—நான் யெகோவாவை நோக்கிக்குரலெ ௪
டுத்துக் கூப்பிட்டேன், அவர் தமது பரிசுத்தம
லையினின்று எனக்கு உத்தரமருளினார். சேலா.-
யெகோவா என்னைத்தாங்கினபடியால்,நான் ௫
படுத்து நித்திரைகொண்டேன்; திரும்பவும் வி
ழித்தேன்.—சுற்றிலும் எனக்கு விரோதமாய்ப்பா ௬
ளயமிறங்குகிறபதினாயிரம்பேருக்கும்நான்பயப்
படேன்.-என்சகலபகைவருடைய கன்னங்களி ௭
லும்அடித்து,துன்மார்க்கருடையபற்களைத்தகர்த்
தீர்; யெகோவாவே, எழுந்தருளும்; என்
தேவனே, என்னையிரட்சித்துக்கொள்ளும்.—
இரட்சிப்பு யெகோவாவினால்வரும்: உம் ௮
முடைய ஆசீர்வாதம் உம்முடைய சனங்கள்
மேல் தங்குகின்றது. சேலா.

## ௪. சங்கீதம்.

௧. தாவீது தேவனிடத்தில் பிரார்த்தித்தல்: ௨. தன்சத்துருக்களைக்கண்டித்தல்: ௬. மனுஷனுக்

(௧. சங். ௧.) நீதி.௪.௰௪,௰௫. சங்.௨௬.௪. எரே.௰௫.௰௭.(௨) சங்.௱௰௯.௩௫. யோசு.௧.௮. சங்.௱௰௯.௧,௯௭.(௩)எரே.௰௭.௮. ஆதி.௩௯.௩,௨௩. (௪) யோபு.௨௧.௰௮. ஓசி.௰௩.௩. (௬) யோவா.௰.௰௪. ௨.தீமோ.௨.௰௯.—(௨.சங்.௧.)சங்.௪௬.௬. அப்.௪.௨௫,௨௬.(௨)சங்.௪௫.௭. யோவா.௧.௪௧. (௩)எரே.௫.௫. (௪) சங்.௩௭.௰௩. நீதி.௧.௨௬.(௬)௨.சாமு.௫.௭. (௭) அப்.௰௩.௩௩. எபி.௧.௫. (௮) சங்.௭௨.௮. தானி.௭.௰௩,௰௪. (௯) சங்.௮௯.௨௩. வெளி.௨.௨௭.(௰௧)எபி.௰௨.௨௮. பிலி.௨.௰௨. (௰௨) ஆதி ௪௧.௪௰. வெளி.௬.௰௬,௰௭. சங்.௮௪.௰௨. நீதி.௰௬.௨௰. ஏசா.௩௰.௰௮. ரோ.௯.௩௩. ௧.பேது.௨.௬.—(௩. சங். ௧.) ௨.சாமு.௰௫.௰௨. (௨) ௨.சாமு.௰௬.௮.(௩)ஆதி.௰௫.௧. சங்.௨௮.௭. சங்.௨௭.௬. (௪) சங்.௩௪.௪. சங்.௨.௬. (௫) லேவி.௨௬.௬. நீதி.௩.௨௪.(௬)சங்.௨௭.௩. (௭) யோபு.௰௬.௰. சங்.௫௮.௬. புல.௩.௰௩. (௮) நீதி.௨௧.௩௧. ஏசா.௪௩.௰௧. யோனா.௨.௯. வெளி.௭.௰.—(௪. சங்.)

குவேண்டிய நன்மை தேவனால் வருமெனக் காட்டல்.

நிகிநோத் வாத்தியத்தில் வாசிக்கும்பொருட்டுப் பாடகத்தலைவனிடத்தில்தாவீது ஒப்பித்தசங்கீதம்.

என் நீதியின் தேவனே, நான்கூப்பிடுகையில்
எனக்கு உத்தரந்தந்தருளும்: நான் வியாகுலப்ப
டுஞ்சமயத்தில் என்னைவிடுதலையாக்கினீர்; என்
மேலிரங்கி, என் விண்ணப்பத்தைக் கேட்டரு
௨ ளும்.—மனுபுத்திரரே, எதுவரைக்கும்என்மகிமை
யை அவமானம்பண்ணுவீர்கள், எதுவரைக்கும்
வீணானதைவிரும்பிப்பொய்யைநாடுவீர்கள். சே
௩ லா.—யெகோவா தமக்காகத்தேவபத்தனைத்தெ
ரிந்துகொண்டாரென்று அறிந்துகொள்ளுங்கள்:
நான் பிரார்த்தனைசெய்யும்பொழுது யெகோ
௪ வா கேட்பார்.—பாவமில்லாமற் கோபங்கொள்
ளுங்கள்: உங்கள் படுக்கையில் மனோதியானம்
௫ பண்ணி மவுனமாயிருங்கள். சேலா.—நீதியின்
பலிகளையிடுங்கள், யெகோவாவில் நம்பிக்
௬ கையாயிருங்கள்.—எங்களுக்கு நன்மையைக்கா
ண்பிப்பவர் யாவரென்று சொல்லுகிறவர்கள் அ
நேகர்; யெகோவாவே, உமது முகத்தின்
ஒளியை எங்கள்மேல் பிரகாசிக்கப்பண்ணும்.—
௭ அவர்களுக்குத்தானியமும் திராட்சரசமும் பெ
ருகியிருக்கிற காலத்தின்சந்தோஷத்திலும் அதிக
௮ சந்தோஷத்தைஎன்மனதிலேதந்தீர்.—யெகோ
வாவே, நீர் ஒருவரே என்னை நம்பிக்கையாய்த்
தங்கப்பண்ணுகிறபடியால் நான் சமாதானத்து
டன் படுத்துநித்திரைசெய்வேன்.

## ௫. சங்கீதம்.

௧. தாவீது தேவனிடத்தில்பிரார்த்தித்தல்: ௮. சத்துருக்களுக்கு விரோதமாகவும் நீதிமான்கள் நிமித்தமாகவும் விண்ணப்பஞ்செய்தல்.

நிகிலோத்தென்னும் வாத்தியத்தில் வாசிக்கும்பொருட்டுப் பாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்த சங்கீதம்.

யெகோவாவே, நீர் என் வாக்குகளுக்குச்
செவிகொடுத்தருளும், என்தியானத்தை உணர்ந்
௨ துகொள்ளும்.—நான் உம்மிடத்தில் விண்ணப்
பம்பண்ணுவேன்; என் அரசனே, என் தேவ
னே, என் வேண்டுதலின் சத்தத்தைக்கேட்டரு
௩ ளும.—யெகோவாவே, காலையில் என்சத்தத்
தைக்கேட்பீர்; காலையில்நான்உம்மிடத்தில்என்
பிரார்த்தனையைச்செலுத்திக்காத்திருப்பேன்.—
௪ நீர்தீமையிற்பிரியப்படுகிற தேவனல்ல: தீயன்
௫ உம்மிடத்திலேதங்கமாட்டான்.—வீம்புக்காரர் உ
மதுசமுகத்தில் நிற்கமாட்டார்கள்: நீர் தூர்க்கிரி
யைசெய்கிறவர்கள் யாவரையும் வெறுக்கிறீர்.—
௬ பொய்பேசுகிறவர்களை நாசப்படுத்துவீர்: இரத்த
ப்பிரியனையும், கபடனையும் யெகோவா வெ
றுக்கிறார்.-நான் உமதுதயையின் மிகுதியினால் உ ௭
மது ஆலயத்திற்சேர்ந்து, உமது பரிசுத்தசந்நிதான
த்துக்கு நேராகப்பயபத்தியுடன் நமஸ்காரம்பண்
ணுவேன்.—யெகோவாவே, என்சத்துருக்க ௮
ளினிமித்தம் உமது நீதிப்படி என்னைநடத்தி, எ
னக்கு முன் உமது நெறியை நேர்மையாக்கும்.—
அவர்கள் வாயிலே நிலையுள்ள வாக்கில்லை; அ ௯
வர்கள் உள்ளங்கேடு; அவர்கள் தொண்டைதி
றக்கப்பட்ட பிரேதவறை; அவர்கள் தங்கள் நா
வினால் முகஸ்துதி பேசுகிறார்கள்.—தேவனே, ௰
அவர்கள் உமது கட்டளையை மீறினபடியினால்
அவர்களைத்தண்டியும்; அவர்கள் தங்கள் ஆலோ
சனைகளிலே விழுவார்களாக; அவர்களுடைய
மிகுந்த அதிக்கிரமத்தினிமித்தம் அவர்களை அகற்
றிவிடும்.—உம்மைநம்புகிறயாவரும் சந்தோஷப் ௰௧
பட்டு, களிப்புடன் நித்தமும் ஆரவாரம்பண்ணு
வார்களாக: நீர் அவர்களைக்காப்பாற்றுவீர், உம
துநாமத்தில் அன்பாயிருக்கிறயாவரும் உம்மிற்க
ளிகூர்ந்திருப்பார்களாக.—யெகோவாவே, ௰௨
நீர் நீதிமானை ஆசீர்வதித்து, அனுக்கிரகமென்னு
ங்கேடகத்தால் அவனைச்சூழ்விப்பீர்.

## ௬. சங்கீதம்.

ஆபத்துக்காலத்தில் தாவீது புலம்பல்.

ஷிமினித்தில் வாசிக்கும்பொருட்டு நிகிநோத்வாத்தியத்தில் வல்ல பாடகத் தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்த சங்கீதம்.

யெகோவாவே, உமது கோபத்தினால் என் ௧
னைக்கடிந்துகொள்ளாதிரும், உமது உக்கிரத்தினா
ல் என்னைத்தண்டியாதிரும்.-யெகோவாவே, ௨
நான் தளர்ந்துபோனேன், எனக்கிரங்கும்: யெ
கோவாவே, என் எலும்புகள்நடுங்குகின்றன,
என்னைச்சொஸ்தப்படுத்தியருளும்.-என் ஆத்தும ௩
ம் மிகவும்வியாகுலப்படுகின்றது: யெகோவா
வே, நீரோ எதுவரைக்கும்.-யெகோவாவே, ௪
திரும்பிவாரும், என் ஆத்துமத்தை விடுவித்தருளு
ம்: ஆ, உமதுதயையினிமித்தம் என்னையிரட்சித்த
ருளும்.—மரித்தோருக்குள் உம்மை நினைப்பாரில் ௫
லை: மரித்தோர் ஸ்தலத்தில் உம்மைத்துதிப்பவன்
யாவன்.—நான்என்பெருமூச்சினால்இளைத்தேன்; ௬
இராமுழுவதும் என்படுக்கையை ஈரிக்கச்செய்
கிறேன்; என் கண்ணீரால் என் கட்டிலைநனைக்கி
றேன்.—வியாகுலத்தினால் என் கண்மழுங்கியி ௭
ருக்கின்றது; என் சத்துருக்கள் எல்லாரினிமித்த
மும் அதுகுழிந்துபோயிற்று.—தூர்க்கிரியைசெய் ௮
கிறவர்களாகிய நீங்கள் எல்லாரும் என்னைவிட்டு
அகன்றுபோங்கள்; யெகோவா என் அழுகை
யின்சத்தத்தைக்கேட்டருளினார்.—யெகோவா ௯

(௩) ௨.தீமோ.௨.௰௯. ௨பேதுரு.௨.௯. (௪) எபே.௪.௨௬. சங்.௭௭.௬. ௨.கொரி.௰௩.௫. (௫) ௨பா.௩௩.௰௯. சங்.௫௰.௰௪. ௨.சாமு.௰௫.௰௨. சங்.௩௭.௩. (௬) எண்.௬.௨௫. சங்.௮௰.௩. (௭) ஏசா.௯.௩. (௮) யோபு.௰௧.௰௮,௰௯. சங்.௩.௫. ௨பா.௰௨.௰.—(௫. சங். ௨.) சங்.௩.௪. சங்.௬௫.௨. (௩) சங்.௩௰.௫. (௫) அபகூ.௧.௰௩. (௬) வெளி.௨௧.௮. சங்.௫௫.௨௩. (௭) ௧.இரா.௮.௨௯. (௮) சங்.௨௫.௪௫. சங்.௨௭.௰௧. (௯) லூக்.௰௧.௪௪. ரோ.௩.௰௩. சங்.௬௨.௪. (௰) ௨.சாமு.௰௫.௩௧. (௰௧) ஏசா.௬௫.௰௩. (௰௨) சங்.௯௰௫.௰௩.—(௬. சங். ௧.) சங்.௩௮.௧. எரே.௰.௨௪. (௨) சங்.௪௧.௪. ஓசி.௬.௧. (௩) சங்.௧௰.௰௩. (௫) சங்.௩௰.௮. ஏசா.௩௮.௰௮. (௭) யோபு.௰௭.௭. சங்.௩௧.௧. புல.௫.௰௭.(௮)சங்.௯௰௧.௯௰௫. மத்.௨௫.௪௧. சங்.௩.௪.

என்விண்ணப்பத்தைக்கேட்டார்; யெகோவா
௰ என் பிரார்த்தனையை அங்கிகரிப்பார்.—என் சத்
துருக்கள் எல்லாரும் வெட்கப்பட்டு மிகவும் க
லங்கிப்போவார்கள்: அவர்கள் புறங்காட்டிச் ச
டிதியில் வெட்கப்படுவார்கள்.

## ௭. சங்கீதம்.

*௧. தாவீது தன் சத்துருக்களின் புறங்கூறுதலைக்கு றித்துத் தான் குற்றமற்றவனென்று சொல்லிப் பிரார்த்தித்தல்: ௮. தன் சத்துருக்களுக்கு நாசம் வருமெனத்தெரிவித்தல்.*

பென்யமீனியனாகிய கூஷின்வாக்கைக்குறித்துத் தா
வீது தேவனுக்குச் சொல்லிய சங்கீதம்.

என் தேவனாகிய யெகோவாவே, நான்
உம்மை நம்பியிருக்கிறேன்: என்னைவிடுவிக்க ஒ
ருவருமில்லாதிருக்கையில், சிங்கம்போல்அவன்
௨ என்னாத்துமத்தைப்பிடித்துப் பீறுதபடிக்கு,-என்
னைத்துயரப்படுத்துகிறவர்கள் யாவருக்கும் என்
௩ னைவிலக்கி இரட்சித்தருளும்.—என் தேவனாகி
ய யெகோவாவே, நான் இதைச்செய்ததும்,
௪ என்கையிலே துர்க்கிரியையிருக்கிறதும்,-காரண
மின்றி எனக்குச் சத்துருவானவனைத் தப்பவே
பண்ணின நான், என்னோடே சமாதானமாயிருந்
௫ தவனுக்குத்தீமைசெய்ததுமுண்டானால்,—சத்து
ருஎன்னைத்துயரப்படுத்திப்பிடித்து, என் பிராண
னைத்தரையில் உழக்கி, என்மகிமையை மண்ணி
௬ லேதாழ்த்துவானாக. சேலா.-யெகோவாவே,
உமது கோபத்தோடே எழுந்தருளும், என்சத்து
ருக்களின் குரோதத்தினிமித்தம் உம்மை உயர்த்
தி, எனக்காகக்கற்பித்தநியாயத்தீர்ப்புக்கு நீர் வி
௭ ழித்துக்கொள்ளும்.—சனக்கூட்டம் உம்மைச்
சூழ்ந்துகொள்ளும்: ஆதலால் அவர்களுக்காகத்தி
ரும்பவும் உயர்ந்தஸ்தானத்தில் எழுந்தருளும்.—
௮ யெகோவா சனங்களுக்கு நியாயத்தீர்ப்புச்செ
ய்வார்: யெகோவாவே, என்னீதியின்படிக்
கும், என்னிடத்திலுள்ள நேர்மையின்படிக்கும்
௯ எனக்கு நியாயஞ்செய்தருளும்.—துன்மார்க்கர்
செய்கிற துர்க்கிரியையை ஒழியப்பண்ணும்; நீ
திமானைஸ்திரப்படுத்தும்: நீதியுள்ள தேவன் இ
ருதயத்தையும் அந்தக்கரணங்களையும் சோதிக்கி
௰ றார்.—என் கேடகம் செவ்வையான இருதயமுள்
ளவர்களை இரட்சிக்கிற தேவனிடத்திலிருக்
௰௧ கின்றது.-தேவன் நீதிமான்களுக்குநியாயஞ்செ
ய்கிறார், தேவன் நாடோறும் பாவியின்மேல்
௰௨ கோபங்கொள்ளுகிறார்.—அவன் திரும்பாவிட்
டால் அவர் தமது பட்டயத்தைக் கருக்காக்கு
வார்; அவர் தமது வில்லில்நாணேற்றி அதை ஆ
௰௩ யத்தப்படுத்தியிருக்கிறார்.—அவன் நிமித்தம் அ
வர் மரணாயுதங்களையும் ஆயத்தப்படுத்தினார்; து
யரப்படுத்துகிறவர்களுக்கு விரோதமாய்த் தமது
அம்புகளைப் பிரயோகிக்கிறார்.—கேள், அவன் ௰௪
அநீதியைப்பெறக் கருப்பவேதனைப்படுகிறான்,
தீமையைக்கருப்பந்தரித்து, பொய்யைப் பிரச
வித்தான்.-ஒருகுழியைவெட்டி, அதைத்தோண் ௰௫
டி, தான்வெட்டினகுழியில்தானேவிழுந்தான்.-
அவன் செய்ததீமை அவன் சிரசின்மேலேதிரும் ௰௬
பும், அவன் கொடுமை அவன் உச்சியில் இறங்
கும்.-நான் யெகோவாவை அவர்நீதிப்படி, ௰௭
துதிப்பேன்: சருவத்துக்குமேலான யெகோ
வாவின் நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுவேன்.

## ௮. சங்கீதம்.

*தேவனுடைய லட்சணத்தையும் அவர்மனுஷ ருக்குச்செய்தஅனுக்கிரகத்தையும் புகழ்தல்.*

கித்தித்வாத்தியத்தில் வாசிக்கும்பொருட்டுப்பாடகத்
தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்தசங்கீதம்.

ஆ, எங்கள் ஆண்டவராகிய யெகோவா ௧
வே, பூமண்டலமெங்கும்உமதுநாமம் எவ்வளவு
மேன்மையுள்ளது, ஆகாயமண்டலங்களின்மேல்
உமதுமகிமையை ஸ்தாபித்தீர்.-நீர்உமதுசத்துருக் ௨
களினிமித்தம் பகைவனையும் பழிகாரனையும் அ
மைவிக்கும்பொருட்டு, பாலருங் குழந்தைகளு
மாகிய இவர்களுடையவாயினின்று வல்லமை
யைவெளிப்படுத்தினீர்.—உம்முடைய விரல்களி ௩
னால் செய்யப்பட்ட ஆகாயமண்டலங்களையும்,
நீர் ஸ்தாபித்த சந்திரனையும் நட்சத்திரங்களையும்
நான் உற்றுப்பார்க்கிறபொழுது,—நீர் அவனை ௪
நினைக்கிறதற்குமனுஷனும், நீர் அவனைச்சந்திக்
கிறதற்கு மனுபுத்திரனும், எம்மாத்திரமென்கி
றேன்.—நீர் அவனைத் தேவதூதரிலும் சற்றேசி ௫
றியவனாக்கி, மகிமையினாலும் கனத்தினாலும் அ
வனைமுடிசூட்டினீர்.-உமதுகையினாற் செய்யப் ௬
பட்ட கிரியைகளுக்குமேலாக அவனுக்கு ஆளு
கையை அருளினீர்.—ஆடுமாடுமுதலிய வெளியி ௭
லுள்ள மிருகங்கள்யாவும்,-ஆகாயத்துப்பறவைக ௮
ளும், சமுத்திரமச்சங்களும், மற்ற நீர்வாழ்வனவு
மாகிய யாவற்றையும் அவனுக்கு அடிப்படுத்தி
னீர்.-எங்கள் ஆண்டவராகிய யெகோவா ௯
வே, பூமண்டலமெங்கும் உமது நாமம் எவ்வள
வு மேன்மையுள்ளது.

## ௯. சங்கீதம்.

*௧. செயத்தினிமித்தந் தேவனைத்துதித்தல்: ௰௩. சகாயம்பெறப்பிரார்த்தித்தல்.*

முத்லாப்பேன் வாத்தியத்தில்வாசிக்கும் பொருட்
டுப்பாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்தசங்
கீதம்.

யெகோவாவே, நான்என் பூரணஇருதயத் ௧
தோடும் உம்மைத்துதிப்பேன்; உமதுசகலஆச்ச
ரியமான கிரியைகளையும் விவரிப்பேன்.—உம் ௨

(௭. சங். ௧.) ஏசா.௩௮.௰௩. சங்.௫௰.௨௨. (௨) சங்.௩௧.௰௫. (௩) ௨.சாமு.௰௬.௭,௮. ௨.சாமு.௨௪.௰௧.(௪)௧.சாமு.௨௪.௭. (௬) சங்.௩௪.௨. சங்.௪௪.௨௩. (௮) சங்.௰௮.௧. (௯) ௧.சாமு.௰௬.௭ ௨.நாளா.௨௮.௯. சங்.௱௩௯.௧. வெளி.௨.௨௩. (௰) சங்.௱௨௫.௪. (௰௨) உபா.௩௨.௪௧. (௰௩) உபா.௩௨.௨௩,௪௨.(௰௪)யோபு.௰௫.௩௫. ஏசா.௩௩.௰௧. யாக்.௧.௰௫. (௰௫) எஸ்த.௭.௰. நீதி.௫.௨௨. பிர.௰.௮. (௰௬) ௧.இரா.௨.௩௨. எஸ்த.௯.௨௪.—(௮.சங்.௧.) சங்.௱௪௮.௰௩. சங்.௱௰௩.௪. (௨) மத்.௰௧.௨௫. ௧.கொரி.௧.௨௭. சங்.௪௪.௰௬. (௩) சங்.௱௰௧.௨. (௪) யோபு.௭.௰௭. சங்.௱௪௪.௩. எபி.௨.௬. (௬) ஆதி.௧.௨௬.௨௮. (௮) ௧.கொரி.௰௫.௨௭. எபி.௨.௮.—(௯. சங். ௨.) சங்.௫.௰௧. சங்.௮௩.௰௮.

மில்மகிழ்ந்து களிகூருவேன்: சருவத்துக்கு மே
லானவரே, உமது நாமத்தைக் கீர்த்தனம்பண்ணு
௩ வேன்.—நீர் நீதியுள்ள நியாயாதிபதியாய்ச்சிங்கா
சனத்தில்வீற்றிருந்து, என்நியாயத்தையும் வழக்
௪ கையுந்தீர்த்தீர்.—ஆதலால் என்சத்துருக்கள்புறங்
காட்டியிடறிவிழுந்து, உமது சமுகத்தில் நாசம
௫ டைவார்கள்.—அந்நியதேசத்தாரைக்கடிந்து, பா
விகளைச்சங்கரித்து, அவர்கள்நாமத்தை ஒருபொ
௬ ழுதுமில்லாதபடி அழித்தீர்.—சத்துருசெய்யும் அ
ழிவுகள் ஒருபொழுதும் இல்லாமல் தொலைந்து
போயின: அவர்கள்நகரங்களை அழித்துவிட்டீர்;
அவர்கள்பேரும் அவர்களோடே ஒழிந்துபோ
௭ யிற்று.-யெகோவாவோ சதாகாலமுமிருப்
பார்: அவர் நியாயந்தீர்ப்பதற்குத் தமது ஆசனத்
௮ தைஆய்த்தப்படுத்தியிருக்கிறார்.—அவர் பூலோகத்
தாருக்குநீதிப்படிநியாயத்தீர்ப்புக்கொடுப்பார்,நி
யாயத்துக்கேற்கச்சனங்களுக்குநீதிசெய்வார்.—
௯ யெகோவாநெருக்கப்பட்டவர்களுக்குப் புக
லிடமும், இடர்ப்படுங்காலங்களில் அவர்களுக்
௰ குத்தஞ்சமுமாயிருக்கிறார்.-யெகோவாவே,
நீர் உம்மைத் தேடுகிறவர்களைக்கைவிடாமலிருக்
கிறபடியால், உமதுநாமத்தைஅறிந்தவர்கள் உம்
௰௧ மையேநம்பியிருப்பார்கள்.-சீயோனிலேவாசமா
யிருக்கிற யெகோவாவைக்கீர்த்தனம்பண்
ணுங்கள்: அவர் கிரியைகளைச் சனங்களுக்குள்
௰௨ ளேதெரிவியுங்கள்.—இரத்தப்பழிகளை அவர்விசா
ரிக்கிறபொழுது அவர்களைநினைக்கிறார்:வருத்தப்
௰௩ படுகிறவர்களிடுமோலத்தை மறவார்.—மரணவா
சல்களினின்றுஎன்னைத்தூக்கிவிடுகிறயெகோ
வாவே, என்மேலிரங்கும்;என்னைப்பகைக்கிற
வர்களால்வரும் என் உபத்திரவத்தைப்பார்த்தரு
௰௪ ளும்.-அதினால்நான்சீயோன்குமாரத்திகளின்வா
சலில், உம்முடைய கீர்த்தனங்களைஎல்லாம்விவ
ரிப்பேன்: நீர்செய்த இரட்சிப்பைநினைந்துமகிழ்
௰௫ ந்திருப்பேன்.—அந்நியதேசத்தார் தாங்கள் வெட்
டினகுழியில் தாங்களேவிழுந்தார்கள்: அவர்கள்
மறைத்துவைத்தவலையில் அவர்களுடையகாலே
௰௬ அகப்பட்டுக்கொண்டது.—யெகோவா தாம்
செய்கிற நியாயத்தினால் அறியப்படுகிறார்: பாவி
தான் தன் கையினாற் செய்யப்பட்ட செய்கை
யிலே சிக்கிக்கொண்டிருக்கிறான். இகாயோன்.
௰௭ சேலா.-பாவிகளும், தேவனைமறக்கிறசாதியார்
௰௮ யாவரும் நரகத்திலே தள்ளப்படுவார்கள்.—எளி
யவர்கள் எப்பொழுதும் மறக்கப்படுவதில்லை: து
யரப்படுகிறவர்களின் நம்பிக்கை எப்பொழுதும்
௰௯ அழிந்துபோவதில்லை.-யெகோவாவே, எழு
ந்தருளும்; மனுஷன் மேற்கொள்ள விடாதிரும்:
அந்நியதேசத்தார் உமது சமுகத்தில் நியாயத்தீர்ப்
௨௰ பை அடைவார்கள்.-யெகோவாவே, அந்நிய
தேசத்தார், தங்களைமனுஷர்மாத்திரமென்றுணரு
ம்பொருட்டு அவர்களைப்பயப்படுத்தும். சேலா.

## ௰. சங்கீதம்.

௧. பாவிகள்செய்யும் அநியாயத்தைக்குறித்துத்தாவீது ஓலமிடல்: ௰௨. அவர்களுக்குத்தன்னைவிலக்கும்படி தேவனைப்பிரார்த்தித்தல்.

யெகோவாவே,நீர்தூரத்தில்நிற்கிறதென்ன, ௧
ஆபத்துநேரிடுகிற சமயங்களில் நீர் மறைந்திருக்
கிறதென்ன.—துன்மார்க்கன் இருமாப்பினால் உ ௨
பத்திரவப்படுகிறவர்களைத்துயரப்படுத்துகிறான்.
அவர்கள்செய்த துராலோசனையில் அவர்களே
அகப்படுவார்கள்.-துன்மார்க்கன் தன் மன ஆசை ௩
யைக்குறித்துமேன்மைபாராட்டி, யெகோவா
வெறுக்கிற பொருளாசைக்காரனைப் போற்றுகி
றான்.-துன்மார்க்கன்தனதுஅகங்காரத்தினால் தே ௪
வனைத்தேடான்: தேவனைப்பற்றும்சிந்தனை அ
வனுக்கில்லை.—எக்காலத்திலும் அவனுடையவ ௫
ழிகள் கேடுள்ளவைகள்; உம்முடைய நியாயத்
தீர்ப்புக்கள் அவன் காட்சிக்கெட்டாமல் மேற்
பட்டிருக்கின்றன: அவன் தனதெல்லாச் சத்து
ருக்கள்மேலுஞ் சீறுகிறான்.—நான் அசைக்கப்ப ௬
டேன், எக்காலத்திலும் எனக்கு ஆபத்துநேரிடா
தென்று தன்மனதில் எண்ணியிருக்கிறான்.—அ ௭
வன்வாய் திட்டும், கபடும், கொடுமையுமாகியஇ
வைகளால்நிறைந்திருக்கின்றது: அவன் அடிநா
விலேதீவினையும்,அநியாயமுமுண்டு.-கிராமங்க ௮
ளின் ஒளிப்பிடங்களிலே பதிவிருக்கிறான்: ம
றைவிடங்களிலே குற்றமற்றவனைக் கொல்லுகி
றான்: அவன் கண்கள் ஏழைகளைக்குறிப்பாய்ப்
பார்க்கின்றன.—குகையிலுள்ள சிங்கத்தைப்போ ௯
ல்ஒளிப்பிடத்தில் பதிவிருக்கிறான்: எளியவனை
ப்பிடிக்கும்படி பதிவிருக்கிறான்: அவனைத் தன்
வலையில் இழுத்துப் பிடித்துக்கொள்ளுகிறான்.—
அவனைநொறுக்கியும்நெருக்கியுமிருக்கிறான், ஏ ௰
ழைகளைத் தன்வல்லமைக்குள் விழப்பண்ணுகி
றான்.—தேவன் இதைமறந்துவிட்டார்:பராமு ௰௧
கமாயிருக்கிறார்; ஒருக்காலும் இதைக்காணமாட்
டாரென்றெண்ணிக்கொண்டிருக்கிறான்.—யெ ௰௨
கோவாவே,எழுந்தருளும்;தேவனே,உமது
கையை ஓங்கும்: உபத்திரவப்படுகிறவர்களைமற
வாதிரும்.—இதை விசாரிக்கமாட்டாரென்றெண் ௰௩
ணித்துன்மார்க்கன் தேவனைஅவமதிக்கவேண்
டியதென்ன.—இதைக்கண்டிருக்கிறீர்; நீர்உபத் ௰௪
திரவத்தையுங் கிலேசத்தையும் நோக்குகிறீர், அ
தற்கு உமது கை பலனளிக்கும்: ஏழையான
வன் தன்னை உமக்கொப்பிக்கிறான்; அநாதபிள்
ளைகளுக்கு நீரே துணை.—துன்மார்க்கனும் துஷ் ௰௫
டனுமானவனுடைய புயத்தை முறித்துவிடும்:

---

(௫) உபா.௯.௰௪. (௭) சங்.௱௨.௰௨,௨௬. எபி.௧.௰௧. (௮) சங்.௯௬.௰௩. (௯) சங்.௩௨.௭. சங்.௪௬.௧. சங்.௯௧.௨.(௰) சங்.௯௧.௰௪. (௰௨) ஆதி.௯.௫. (௰௪) சங்.௨௰.௫. (௰௫) சங்.௭.௰௫,௰௬. நீதி.௫.௨௨. (௰௬) யாத்.௭.௫.(௰௭)யோபு.௮.௰௩. சங்.௫௰.௨௨. (௰௮) நீதி.௨௩.௰௮.—(௰. சங். ௨.) சங்.௭.௰௬. நீதி.௫.௨௨.(௩)சங்.௯௪.௪. நீதி.௨௮.௪. ரோ ௧.௩௨. (௪) சங்.௰௪.௧,௨. (௫) நீதி.௨௪.௭. ஏசா.௨௬.௰௧. சங்.௰௨.௫. (௬) சங்.௩௰.௬. பிர.௮.௰௧. ஏசா.௫௬.௰௨. வெளி.௰௮.௭. (௭) ரோ.௩.௰௪. யோபு.௨௰.௰௨. சங்.௰௨.௨.(௮)அபகூ.௩.௰௪. சங்.௰௭.௰௧.(௯)சங்.௰௭.௰௨.(௰௧) யோபு.௨௨.௰௩. எசேக்.௮.௰௨.(௰௨)மீகா.௫.௯. (௰௪) ௨.தீமோ.௧.௰௨. சங்.௬௮.௫. ஓசி.௰௪.௩.(௰௫)சங்.௩௭.௰௭.

அவனுடைய தீமைஒழியுமட்டும் அதைவிசாரித்
௰௬ தருளும்.—யெகோவா நித்திய இராசா: அந்
நியதேசத்தார்அவர்தேசத்தைவிட்டு ஒழிந்துபோ
௰௭ னார்கள்.-யெகோவாவே, தாழ்மையுள்ளவர்
களுடைய விண்ணப்பத்தைக் கேட்டீர்: அவர்
௰௮ கள் இருதயத்தை உறுதிப்படுத்துவீர்.—மண்ணி
னாலாகியமனுஷன் இனி அதிகமாய்ப்பயங்கரத்
தை உண்டாக்காதபடி, நீர் அநாதபிள்ளைகளுக்
கும் உபத்திரவப்படுகிறவர்களுக்கும் நீதியைச்
செய்கிறதற்கு, உமதுசெவியைச்சாய்த்துக்கேட்
டருளுவீர்.

## ௰௧. சங்கீதம்.

௧. தாவீது சத்துருக்களால் துயரப்படல்: ௪. தேவனை தனக்குப் புகலிடமென்றுதேடல்.

பாடகத்தலைவனிடத்தில் தாவீதுஒப்பித்தசங்கீதம்

நான்யெகோவாவில் நம்பிக்கைவைக்கிறே
ன்: அப்படியிருக்க,ஒருபறவையைப்போல்உங்
கள் மலைக்கு ஓடிப்போங்களென்று நீங்கள் எ
௨ னக்குச் சொல்லவேண்டியதென்ன:-பார், துன்
மார்க்கர் செவ்வையான இருதயமுள்ளவர்களை
இரகசியத்தில் எய்யும்படி வில்லைவளைத்து, அம்
௩ புகளை நாணிலேபூட்டுகிறார்கள்.—அஸ்திபாரங்
கள் பெயர்க்கப்படும்பொழுது நீதிமான் என்ன
௪ செய்வான்.—யெகோவா தமது பரிசுத்த ஆல
யத்திலிருக்கிறார், யெகோவாவின் சிங்காச
னம் வானத்திலிருக்கின்றது: அவர்கண்கள் உற்
றுப்பார்க்கின்றன, அவருடையகண்ணிமைகள்
௫ மனுபுத்திரரைப் பரீட்சிக்கின்றன.—யெகோ
வா நீதிமானைப்பரிசோதிக்கிறார்: துன்மார்க்க
னையும் கொடுமையிற்பிரியமுள்ளவனையும்அவர்
௬ திருவுள்ளம் வெறுக்கின்றது.—கண்ணிகளையும்,
அக்கினியையும், கந்தகத்தையுந் துன்மார்க்கர்
மேல்சொரியப்பண்ணுவார்: எரிகாற்றுஅவர்கள்
௭ பாத்திரத்திற்குப்பங்கு.-யெகோவா நீதியுள்
ளவர், அவர்நீதியின்மேற்பிரியமுள்ளவராயிருக்
கிறார்; அவர்முகம் சன்மார்க்கன்மேல்நோக்கமா
யிருக்கின்றது.

## ௰௨. சங்கீதம்.

௧. தாவீது புலம்பல்: ௩. தேவனைத்தஞ்சமெனக்கொள்ளல்.

ஷிமினித்தில் வாசிக்கும்பொருட்டுப் பாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்தசங்கீதம்.

யெகோவாவே, உதவிசெய்யும்; தேவபத்
தியுள்ளவன் அகன்றுபோகிறான்; உண்மையுள்
ளவர்கள் மனுபுத்திரரினின்று ஒழிந்துபோனார்
௨ கள்.—ஒவ்வொருவருந் தங்கள் தங்கள் அயலா
ருடன் பொய்பேசுகிறார்கள்: அவர்கள் இரும
னமுள்ளவர்களாய் இனியஉதடுகளினால் முகஸ்
துதி பேசுகிறார்கள்.—யெகோவா முகஸ்துதி ௩
பேசும் உதடுகளெல்லாவற்றையும், அகங்காரம்
பேசும்நாவையுஞ்சேதிப்பார்.-அவர்கள், எங்கள் ௪
நாவினால் மேற்கொள்வோம்; எங்கள் உதடுகள்
எங்கள் வசம்: ஆர் எங்களுக்கு ஆண்டவரென்று
சொல்லுகிறார்கள்.—உபத்திரவப் படுகிறவர்கள் ௫
சகிக்குந்துயரத்தினிமித்தமும், எளியவர்கள் வி
டும்பெருமூச்சினிமித்தமும், நான் இப்பொழுது
எழுந்து, அடைக்கலஸ்தானத்தை ஆவலுடன்வி
ரும்புகிறவனை அதிலே வைப்பேனென்று யெ
கோவா சொல்லுகிறார்.-யெகோவாவின் ௬
வாக்குகள் மண்குகையில்எழுதரம்உருக்கிப்புட
மிடப்பட்ட வெள்ளிக்கொப்பானபரிசுத்தவாக்
குகள்.-யெகோவாவே, நீர் அவர்களைக்காத் ௭
துக்கொள்வீர், நீர் அவர்களை இந்தச்சந்ததியாரி
னின்றுவிலக்கி, என்றுங்காப்பாற்றுவீர். நீசராகி
யமனுஷர் உயர்ந்திருக்கும்பொழுது, துன்மார்க்
கர்சுற்றித்திரிவார்கள்.

## ௰௩. சங்கீதம்.

தாவீதுபுலம்பிப் பிரார்த்தித்தல்.

பாடகத்தலைவனிடம் தாவீது ஒப்பித்தசங்கீதம்.

யெகோவாவே, எதுவரைக்கும் நீர் என்னை ௧
நினையாமலிருப்பீர், எப்பொழுதுமா; எதுவரைக்
கும் உமதுமுகத்தை எனக்குமறைப்பீர்.—எதுவ ௨
ரைக்கும்நான்தினமும்என் இருதயத்தில்விசனப்
பட்டு, என்மனதில்ஆலோசனைபண்ணுவேன்; எ
துவரைக்கும் என்சத்துரு எனக்குமேலாய்த்தன்
னைஉயர்த்துவான்.-என் தேவனாகிய யெகோ ௩
வாவே, என்மேற்சிந்தைவைத்துஎன்னைக்கேட்
டருளும்: நான்மகாநித்திரையடையாதபடி என்
கண்களை விளக்கியருளும்.—இல்லாவிட்டால் ௪
என்விரோதி, நான் அவனைச்செயித்தேனென்பா
ன்; நான்தள்ளாடும்பொழுது என்சத்துருக்கள்க
ளிகூருவார்கள்.-நான் உமது தயையின்மேல் நம் ௫
பிக்கையாயிருந்தேன்; என் இருதயம்உமதுஇரட்
சிப்பினால் மகிழ்ந்திருக்கும்.-யெகோவா அ ௬
னுக்கிரகஞ்செய்தார், ஆதலால் நான் அவரைப்
பாடுவேன்.

## ௰௪. சங்கீதம்.

பாவிகள் செய்யுந்தீமையும் அவர்கள் படுந்தண்டனையும்.

பாடகத்தலைவனிடம் தாவீது ஒப்பித்த சங்கீதம்.

தேவன் இல்லையென்று அஞ்ஞானமுள்ள ௧
வன் தன்மனதில் எண்ணியிருக்கிறான். அவர்
கள்துஷ்டர், அரோசிகமான கிரியைகளைச்செய்

(௰௬) சங்.உ௯.௰. எரே.௰.௰. புல.௫.௰௯. தானி.௪.௩௪. ௧.தீமோ.௧.௰௭. (௰௭) ௧.நாளா.உ௯.௰௮. (௰௮) சங்.௮உ.௩. ஏசா.௰௧.௪.—(௰௧. சங். ௧.) ௧.சாமு.உ௬.௰௯,உ௰. (உ) சங்.உ௧.௰உ. (௪) அபகூ.உ.உ௰. சங்.உ.௪. ஏசா.௬௬.௧. மத்.௫.௩௪. அப்.௭.௪௯. வெளி.௪.உ. சங்.௩௩.௰௩. (௫) ஆதி.உஉ.௧. யாக்.௧.௰உ. (௬) ஆதி.௰௯.உ௪. எசேக்.௩௮.உஉ. ஆதி.௪௩.௩௪. ௧.சாமு.௧.௪. சங்.௭௫.௮. (௭) சங்.௪௫.௭. யோபு.௩௬.௭. சங்.௩௩.௰௮. ௧.பேதுரு.௩.௰உ.—(௰உ. சங். ௧.) ஏசா.௫௭.௧. மீகா.௭.உ. (உ) சங்.௰.௭. சங்.உ௮.௩. எரே.௯.௮. ரோ.௰௬.௰௮. ௧.நாளா.௰உ.௩உ. (௩) ௧.சாமு.உ.௩. (௫) யாத்.௩.௭,௮. சங்.௰.௫. (௬) உ.சாமு.உஉ.௩௧. சங்.௰௯.௮. நீதி.௩௰.௫.—(௰௩. சங். ௧.) உபா.௩௧.௰௭. யோபு.௰௩.உ௪. ஏசா.௫௯.உ. (௩) எஸ்றா.௯.௮. எரே.௫௧.௩௯. (௪) சங்.உ௫.உ. (௫) சங்.௩௩.உ௧. (௬) சங்.௱௰௬.௭.—(௰௪. சங். ௧.) சங்.௰.௪. ஆதி.௬.௰௧,௰உ.

கிறார்கள், நற்கிரியைசெய்பவர்ஒருவருமில்லை.—
௨ தேவனைத்தேடுகிறஞானவானுண்டோஎன்றறி
யும்படி யெகோவா வானத்தினின்றுமனுபுத்
௩ திரரை உற்றுப்பார்த்தார்.—எல்லாரும் நெறிதவ
றிவகமாய்க்கேடுள்ளவர்களானார்கள்: நற்கிரியை
௪ செய்பவனொருவனுமில்லை.—ஆகாரத்தைப்புசிப்
பதுபோலஎன்சனங்களைப்பட்சித்து, யெகோ
வாவைப் பிரார்த்திக்காமலிருக்கிறஇந்தத்துர்க்
கிரியைக்காரரெல்லாரும் அறிவில்லாதிருக்கிறார்
௫ களா.—தேவன் நீதிமானுடைய சந்ததியாருட
னிருக்கிறபடியால் அவர்கள் மிகவும் பயந்தார்
௬ கள்.—யெகோவா அவனுக்குப்புகலிடமாயி
ருக்கிறதினால், சிறுமைப்படுகிறவனுடைய ஆ
௭ லோசனையைநீங்கள்அவமதித்தீர்கள்.—ஆ, இஸர
வேலை இரட்சிக்கும் இரட்சிப்புச்சீயோனினின்
று தோன்றினால் நலமாகும்; யெகோவா தம்
முடைய சனங்களைச் சிறைமீட்கும்பொழுது,
யாக்கோபு களிகூருவான், இஸரவேல் மகிழ்ந்
திருப்பான்.

## ௰௫. சங்கீதம்.

சீயோன் நகரத்தாரை வருணித்தல்.

தாவீது பாடின சங்கீதம்.

யெகோவாவே, யாவன்உமதுகூடாரத்தில்
தங்குவான், யாவன் உமதுபரிசுத்தமலையிலேவா
௨ சம்பண்ணுவான்.—நேர்மையாய் நடந்தும், நீதி
யைநடப்பித்தும், மனதாரச்சத்தியத்தைப்பேசி
௩ யும்,—தன்நாவினால்புறங்கூறாமலும், தன் அயலா
னுக்குத்தீங்குசெய்யாமலும்,தன்சிநேகனுக்குவி
௪ ரோதமாக அவதூறுபேசாமலும்,-துன்மார்க்கனை
அலட்சியம்பண்ணியும்,யெகோவாவுக்குப்
பயப்படுகிறவர்களைக்கனப்படுத்தியும், தனக்கு
நட்டம்வந்தாலும் ஆணையிட்டு அதில் தவறிப்
௫ போகாமலும்,—தன்திரவியத்தை அநியாயவட்
டிக்குக்கொடாமலும், குற்றமற்றவனுக்குவிரோ
தமாகப்பரிதானம்வாங்காமலும்இருக்கிறவனே.
இவைகளைச்செய்கிறவன் என்றும் அசைக்கப்ப
டான்.

## ௰௬. சங்கீதம்.

௧. தாவீது தேவனைத் தஞ்சமென்று கொள்ளல்:
௫. நித்திய சீவனை அபேட்சித்தல்.

தாவீதுபாடின மிக்தாம் என்னுஞ் சங்கீதம்.

தேவனே, உம்மை நம்பியிருக்கிறேன்: ஆத
௨ லால்என்னைக்காத்தருளும்.-என் நெஞ்சமே,
யெகோவாவை நோக்கி, நீரே என் ஆண்ட
வர், என்நன்மை உமக்குச்செல்லாதென்றாய்.-
௩ பூமியிலுள்ள பரிசுத்தர்களுக்கும் மாட்சிமையுள்
ளவர்களுக்குமே அதுசெல்லும், அவர்கள்மேல்
நான்முழுமையும் பிரியமாயிருக்கிறேன்.—அந்நி ௪
யதேவனைவிரைந்துபின்பற்றுகிறவர்களுக்குத்து
க்கங்கள்பெருகும்: அவர்களுடைய இரத்த பா
னபலிகளை நான் ஊற்றவுமாட்டேன், அவர்கள்
நாமங்களை என் உதடுகளினால் சொல்லவுமாட்
டேன்.—யெகோவா தாமேஎன்சுதந்தரம்,என் ௫
பாத்திரத்தின் பங்கு: என்பாகத்தை நிலைப்படுத்
துகிறீர்.—இனிய ஸ்தானத்தில் எனக்கு அள ௬
வுநூல் விழுந்தது; உத்தம சுதந்தரமே எனக்குக்கி
டைத்தது.—எனக்கு ஆலோசனை தந்தவராகிய ௭
யெகோவாவைத்துதிப்பேன்: இராத்திரிகா
லத்தில்என்அந்தக்கரணங்களும்எனக்குணர்த்து
கின்றன.—நான் இடைவிடாதபடி யெகோ ௮
வாவை எனக்குமுன்பாக வைத்திருக்கிறேன்:
அவர் என் வலப்பாரிசத்திலிருக்கிறபடியால்
நான் அசைக்கப்படேன்.—அதினிமித்தம் என் ௯
மனம் மகிழ்ந்திருக்கின்றது, என்னுள்ளங்களி
கூருகின்றது: என்சரீரமும் நம்பிக்கையோடே
சயனிக்கும்.—நீர் என்ஆத்துமத்தைமரித்தோர்ஸ்த ௰
லத்தில்விடவுமாட்டீர்; உம்முடைய பரிசுத்தன்
அழிவைக்காணவிடீர்.—சீவனின்பாதையை எ ௰௧
னக்குத்தெரியப்படுத்துவீர். உமது சமுகத்தில்பூ
ரணஆனந்தமிருக்கின்றது; நித்தியமான பேரின்
பம் உமதுவலப்பாரிசத்தில் உண்டு.

## ௰௭. சங்கீதம்.

தாவீது தான் குற்றமற்றவனென்று சாதித்தல். அ
வன்தன்னைநிந்தித்தவர்களுக்கு விரோதமாய்ப்
பிரார்த்தித்தல்.

தாவீதின் பிரார்த்தனை.

யெகோவாவே, நீதியைக் கேட்டருளும், ௧
நான்இடும்ஓலத்தைச்சிந்தித்துக்கொள்ளும், வஞ்
சகமற்ற உதடுகளினின்றுபிறக்கும் என் பிரார்த்
தனைக்குச் செவிகொடுத்தருளும்.—எனது நியா ௨
யத்தீர்ப்பு உமது சந்நிதியினின்று வருவதாக; நி
யாயமானவைகளை உமதுகண்கள்நோக்கக்கடவ
ன.—நீர் என் இருதயத்தைப்பரிசோதித்து, இராத் ௩
திரிகாலத்தில் என்னை விசாரித்து என்னைப்பரீட்
சித்தும்ஒருதோஷமுங்காணமாட்டீர்; நான்வாய்
தவறிப்பேசாதபடி தீர்மானம்பண்ணினேன்.—
உமதுவாயின்வாக்குகளால் நான்மனுஷருடைய ௪
செய்கைகளைக்குறித்து, நாசனுடைய பாதைக்
குவிலகியிருந்தேன்.—என்கால்கள் வழுவாதபடி, ௫
உமதுநெறியில் என் நடையை ஸ்திரப்படுத்திய
ருளும்.—தேவனே, நீர் என்னைக்கேட்டருளு ௬
வீர்: ஆதலால் உம்மிடத்தில் பிரார்த்தனைபண்
ணினேன், எனக்குச் செவிசாய்த்து என் வாக்

(௨) சங்.௩௩.௰௩. (௩) ரோ.௩.௰,௰௧,௰௨. (௪) எரே.௰.௨௫. ஆமோ.௮.௪. சங்.௭௯.௬. ஏசா.௬௪.௭. (௬) சங்.௯.௯. (௭) சங்.௫௩.௬. யோபு.௪௨.௰. சங்.௱௨௬.௧.—(௰௫. சங். ௧.) சங்.௨௩.௩. சங்.௨.௬. (௨) ஏசா.௩௩.௰௫. ௪௧.௮.௰௬. எபெ.௪.௨௫. (௩) லேவி.௰௯.௰௬. சங்.௩௪.௰௩. யாத்.௨௩.௧. (௪) நியா.௰௧.௩௫. (௫) யாத்.௨௨.௨௫. யாத்.௨௩.௮. ௨.பேதுரு.௧.௰.—(௰௬. சங். ௧.) சங்.௨௫.௨௰. (௨) யோபு.௨௨.௨,௩. சங்.௫௰.௯. ரோ.௰௧.௩௫. (௪) யாத்.௨௩.௰௩. ஓசி.௨.௰௬,௰௭. (௫) உபா.௩௨.௮. சங்.௱௪௨.௫. எரே.௰.௰௬. புல.௩.௨௪. சங்.௰௧.௬. (௭) சங்.௰௭.௩. (௮) சங்.௭௩.௨௩. சங்.௰௫.௫. (௯) சங்.௩௰.௰௨. (௰) சங்.௪௯.௰௫. அப்.௨.௨௭,௩௧. (௰௧) மத்.௭.௰௪. சங்.௰௭.௰௫. மத்.௫.௮. ௧.யோவா.௩.௨. சங்.௩௬.௮.—(௰௭. சங். ௩.) சங்.௰௬.௭. யோபு.௨௩.௰. சங்.௱௩௯.௨. ௪௧.௰௩.௯. ௧.பேதுரு.௧.௭. (௫) சங்.௱௰௯.௱௩௩. (௬) சங்.௱௰௬.௨.

௭ கைக்கேட்டருளும்.—உம்மை நம்புகிறவர்களை
அவர்களுக்கு விரோதமாயெழுகிறவர்களினின்
று உமது வலக்கரத்தினால் இரட்சிக்கிறவராகிய
நீர், உமது ஆச்சரியமான அனுக்கிரகத்தைப் பிர
௮ காசிக்கப்பண்ணும்.-கண்மணியைப்போல என்
௯ னைக்காத்தருளும்.—என்னை அழிக்கத்தேடுகிற
துன்மார்க்கருக்கும், என்னைச் சூழ்ந்துகொள்ளு
கிற பிராணசத்துருக்களுக்கும் மறைவாக உமது
சிறகுகளின்நிழலில் என்னை இரட்சித்தருளும்.-
௰ அவர்கள் புஷ்டியாகித்தங்கள் வாயினால் வீம்பு
௰௧ பேசுகிறார்கள்.—நாங்கள் செல்லும்வழியில் இப்
பொழுது அவர்கள் எங்களை வளைந்துகொண்
டார்கள்: தரையில் எங்களைத் தாழ்த்தப்பார்க்கி
௰௨ றார்கள்.—பீறுவதற்கு அபேட்சிக்கிற சிங்கத்துக்
கும்,ஒளிப்பிடங்களில்பதிவிருக்கிறசிங்கக்குட்
௰௩ டிக்கும் அவர்கள் ஒப்பாயிருக்கிறார்கள்.—யெ
கோவாவே, எழுந்திருந்து அவனுக்குமுந்திக்
கொண்டு,அவனைமடங்கப்பண்ணும்:யெகோ
வாவே,உமதுகட்கமாகியதுன்மார்க்கனுக்கும்,
உமதுகரமாகியமனிதருக்கும் என்ஆத்துமாவைத்
௰௪ தப்புவியும்.—யெகோவாவே இப்பிரபஞ்சத்
தாரும், இச்சீவியத்தில்மாத்திரம் வாழ்வுடைய
வர்களுமாகிய இவர்களுடைய வயிற்றை உமது
மறைபொருளினால் பூரணப்படுத்துகிறீர்: இவர்
கள் புத்திரபாக்கியத்தினால் திருத்தியடைந்து,
தங்களுக்கு மிஞ்சுகிறபொருளைத் தங்கள் குழந்
௰௫ தைகளுக்கு வைத்துவிடுகிறார்கள்.—நானோ, நீதி
யோடே உமது முகத்தைத் தரிசிப்பேன்: நான்
உமது சாயலையுடையவனாக விழிக்கும்பொழு
து, திருத்தியடைவேன்.

## ௰௮. சங்கீதம்.

தேவன் செய்கிறமிகுதியும், ஆச்சரியமுமான ஆசீர்வாதங்களினிமித்தம் தாவீது அவரைத்துதித்தல்.

பாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்த சங்கீதம். யெகோவாவின் தாசனாகிய இவன்தன்சகல சத்துருக்கள் கையினின்றும் ஷவுலின் கையினின்றும்தன்னை யெகோவா விடுவித்தகாலத்தில்மேல்வரும்பாட்டை யெகோவாவின் மேல் பாடினான்.

என் பெலமாகிய யெகோவாவே,நான்உம்
௨ மைநேசிப்பேன்.—யெகோவாவே என் கன்
மலை, என் கோட்டை, என் இரட்சகர், என் தே
வன், நான் நம்பும் என் தஞ்சம், என் கேடகம்,
என்னை இரட்சிக்குங்கொம்பு,என்உயர்ந்ததுருக்
௩ கம்.—துதிக்கப்படும் யெகோவாவை நான்
நோக்கிப் பிரார்த்திப்பேன்: அதனால் என் சத்து
௪ ருக்களினின்று இரட்சிக்கப்படுவேன்.—மரண
சஞ்சலங்கள் என்னைச்சூழ்ந்துகொண்டன,துஷ்
டராகியவெள்ளம் என்னைப்பயப்படுத்திற்று.—
௫ நரகபந்தங்கள் என்னைச்சூழ்ந்தன: மரணக்கண்
ணிகள் எனக்குநேரிட்டன.—நான் வியாகுலப் ௬
பட்டபொழுது யெகோவாவைப் பிரார்த்
தித்தேன், என் தேவனுக்கு ஓலமிட்டேன்:அ
வர்தமது ஆலயத்தினின்று என் சத்தத்தைக்கேட்
டார், நான் இட்ட ஓலம் அவர்செவிக்கேறிற்று.—
அப்பொழுது அவர் கோபித்தபடியால் பூமி அ ௭
சைந்து அதிர்ந்தது; மலைகளின் அஸ்திபாரங்கள்
அசைந்து குலுங்கின.—அவருடைய நாசியிலி ௮
ருந்து புகை எழுந்தது, அவர் வாயினின்று அக்
கினி புறப்பட்டுப்பட்சித்தது: தழல் அதினால்
மூண்டது.—அவர் வானத்தைத்தாழும்படிசெய்து ௯
இறங்கினார்: காரிருள் அவர் பாதத்தின் கீழிருந்
தது.—அவர் கெரூபியின்மேலேறிப் பறந்தார்: ௰
காற்றின் சிறகுகளின்மேற் பறந்தார்.—அவர் ச ௰௧
லராசியையும் ஆகாயத்தின் கார்மேகங்களையும்
தம்மைச் சூழும் கூடாரமாக்கிக்கொண்டு, அந்த
காரத்தில் வாசம்பண்ணினார்.—அவர்சந்நிதிப்பி ௰௨
ரகாசத்தினால் அவருடைய மேகங்கள் அகன்று
போக, கன்மழையுந் தழலுஞ்சொரிந்தன.—யெ ௰௩
கோவா வானத்தில் முழக்கமிட்டார், சருவத்
துக்குமேலானவர் தொனிசெய்தார்; கன் ம
ழையுந் தழலுஞ்சொரிந்தன.—அவர் தமது அம் ௰௪
புகளைப்பிரயோகித்து அவர்களைச்சிதற அடித்
தார்; மின்னல்களைத் தோற்றுவித்து அவர்களைக்
கிலேசப்படுத்தினார்.—யெகோவாவே,உமது ௰௫
முழக்கத்தினாலும், உமது நாசியின்சுவாசவேகத்
தினாலும், சமுத்திரத்தின் நீர்க்கால்கள் வெளிப்
பட்டன, பூமியின்அஸ்திபாரங்கள்தோன்றின.-
அவர் உயரத்தினின்று கைநீட்டி என்னைப்பிடித் ௰௬
து, மிகுந்த சலத்தினின்று என்னை நீக்கிவிட்
டார்.—என்னிலும் அதிக பலவான்களாயிருந்த ௰௭
வல்லமையுள்ள என் சத்துருவுக்கும் என் பகை
வர்களுக்கும் என்னைத் தப்புவித்தார்.—எனக்கு ௰௮
ஆபத்து நேரிட்டநாளில் அவர்கள் என்மேல்
பாய்ந்தார்கள்: அப்பொழுது யெகோவா எ
னக்கு ஆதரவாயிருந்தார்.—அவர் என்மேல் பிரி ௰௯
யங்கொண்டபடியினால் என்னைவிடுவித்து,விஸ்
தார ஸ்தானத்துக்குக் கொண்டுவந்துவிட்டார்.—
யெகோவா அருளிய நெறிகளை நான் காத்து ௨௰
நடந்தேன், நான்பாவஞ்செய்து தேவனைவிட்
டு விலகவில்லை;—ஆதலால் யெகோவா என் ௨௰௧
நீதியின்படி எனக்குப் பலனளித்தார்; என் கை
யின்சுத்தத்துக்கேற்க எனக்கு நன்மைசெய்தார்.-
அவருடைய நியாயத்தீர்ப்புக்கள்யாவும் என்மு ௨௰௨
ன்னிருந்தன, அவருடையபிரமாணங்களை நான்
விட்டுவிலகவில்லை.—நான் அவர்சமுகத்துக்கு ௨௰௩
நேரானவனாயிருந்தேன், என் பாவத்துக்கென்
னை விலக்கிக்காத்துக்கொண்டேன்;—ஆதலால் ௨௰௪
யெகோவா என் நீதிக்கும், தமது பார்வைக்
குத்தோன்றிய என்கையின் சுத்தத்துக்குமேற்க,
எனக்குப் பலனளித்தார்.—நீர் தயையுள்ளவனுக் ௨௰௫

(௭) சங்.௩௧.௨௧. (௮) உபா.௩௨.௰. சக.௨.௮. (௯) ரூத்.௨.௰௨. சங்.௩௬.௭. சங்.௯௧.௧,௪. மத்.௨௩.௩௭. (௰) உபா. ௩௨.௰௫. யோபு.௰௫.௨௭. ௧.சாமு.௨.௩. (௰௧) ௧.சாமு.௨௩.௨௬.(௰௩)எசா.௰.௫. (௰௪) சங்.௭௩.௰௨. லூக்.௰௬.௨௫. (௰௫) ௧.யோவா.௩.௨. சங்.௰௬.௰௧.—(௰௮. சங். ௧.)சங்.௱௪௪.௧. (௩) சங்.௭௬.௪. (௪) சங்.௱௰௬.௩. (௰௪) யோசு. ௰.௰. (௰௫) யாத்.௰௫.௯. (௨௧) ௧.சாமு:௨௪.௰௯. (௨௪) ௧.சாமு.௨௬.௨௩. (௨௫) ௧.இரா.௮.௩௨.

குத் தயையுள்ளவராகவும், உத்தமனுக்கு உத்தம
௨௬ ராகவும்,—சுத்தனுக்குச் சுத்தராகவும், மாறுபாடுள்
ளவனுக்குத் திரிபுள்ளவராகவுந் தோன்றுவீர்.—
௨௭ நீர்துக்கமுள்ளவர்களை இரட்சிப்பீர்; அகங்காரி
௨௮ களைத் தாழ்த்துவீர்.—நீரேஎன்விளக்கை ஏற்றுவீர்:
என் தேவனுகிய யெகோவா என் இருளை
௨௯ ஒளியாக்குவார்.—உம்மால் ஒரு சேனையை நான்
ஊடறுத்துச்சென்றேன்; என் தேவனுல் ஒரு
௩௰ மதிலைத்தாண்டினேன்.—தேவனுடைய நெ
றி உத்தமம்: யெகோவாவின் வாக்குப் பரீ
ட்சிக்கப்பட்டது: அவர் தம்மை நம்புகிறயாவ
௩௧ ருக்குங்கேடகம்.—யெகோவாவேயன்றிவே
றே தேவனுர்; நம்முடைய தேவனேயன்றி
௩௨ க்கன்மலையானவரார்.—தேவன் எனக்கு வல்ல
மையென்னும் இடைக்கச்சுக்கட்டி, என் வழி
௩௩ யைச்செவ்வைப்படுத்துகிறுர்.—என் காலை மான்
கால்போலாக்குகிறுர், என் உயர்ந்த ஸ்தானங்க
௩௪ ளில் என்னை ஸ்தாபித்தார்.—வெண்கலவில்லும்
என்புயத்தால் வளையத்தக்கதாக, என்கையுத்தஞ்
௩௫ செய்யும்படி பயிற்றினுர்.—நீர் இரட்சிப்புச்செய்
யுங்கேடகத்தையும் எனக்குத்தந்தீர்: உமது வலக்
கரம் என்னைத்தாங்கிற்று, உமதுகாருணியம் என்
௩௬ னைமேன்மைப்படுத்திற்று.—என்கால்கள் தவருத
௩௭ படி என்நெறிகளை விசாலமாக்கினீர்.—என் சத்
துருக்களைத்தொடர்ந்து அவர்களை நாசப்படுத்தி
னேன்: அவர்களைச்சங்கரிக்கும்வரைக்கும்நான்
௩௮ திரும்பவில்லை.—அவர்கள் எழுந்திருக்கத்திராணி
யில்லாதபடிக்கு அவர்களை அடித்தேன்: அவர்கள்
௩௯ என் காலின்கீழ் விழுந்தார்கள்.—யுத்தஞ்செய்கிற
தற்கு எனக்கு வல்லமையென்னுங் கச்சுக்கட்
டி, எனக்கு விரோதமாயெழுந்தவர்களை நீர்எனக்
௪௰ குக் கீழ்ப்படுத்தினீர்.—நான் என் பகைவரைச்
சங்கரிக்கும்படி, என் சத்துருக்களின் பிடரை
௪௧ எனக்கொப்பித்தீர்.—அவர்கள் ஓலமிட்டார்கள்,
ஆனுலும் அவர்களை இரட்சிப்பார் ஒருவருமில்
லை: யெகோவாவுக்கே, அவர் உத்தரங்கொ
௪௨ டுக்கவில்லை.-அப்பொழுது நான்காற்றில்பறக்கி
ற தூளாகநருக்கி,தெருக்களின்சேற்றைப்போல
௪௩ அவர்களை வழித்துப்போட்டேன்.—சனங்களின்
விரோதத்துக்குஎன்னைவிலக்கிவிட்டு,அந்நியதே
சத்தாருக்கு என்னைத்தலைபோல ஏற்படுத்தினீர்:
நான் அறியாத சனங்கள் என்னைச் சேவிப்பார்
௪௪ கள்.-அவர்கள் என்னைக்குறித்துக் கேள்விப்பட்
டமாத்திரத்தில் எனக்கமைவார்கள்: பரதேசிகள்
௪௫ தாமே எனக்குக் கீழ்ப்படிவார்கள்.—அந்நியர்
மெலிவடைந்து, தங்கள் ஒளிப்பிடங்களில் பய
௪௬ ந்துமிருக்கிறுர்கள்.—யெகோவா நித்தியர்;
என் கன்மலைதுதிக்கப்படுவதாக; என்னை இரட்
௪௭ சிக்குந் தேவன் உன்னதமாயிருப்பாராக.-என்
னிமித்தம்பழிவாங்கி, சனங்களை எனக்குக்கீழ்ப்
படுத்தி,—என்னை என்சத்துருக்களினின்று விடு ௪௮
விக்கிறவர், தேவனே: எனக்கு விரோதமாயெ
ழுந்தவர்கள்மேல் நீர் என்னை உன்னதப்படுத்து
கிறீர்: கொடியமனுஷனுக்கு என்னைத் தப்புவித்
தீர்.—யெகோவாவே, இதினிமித்தம் அந்நிய ௪௯
தேசத்தாருக்குள் உம்மைக் கீர்த்தனம் பண்ணு
வேன், உமது நாமத்திற்குத் துதிபாடுவேன்.—
அவர்தாம் ஏற்படுத்திய இராசாவுக்கு மகாஇரட் ௫௰
சிப்பைத்தந்து, தம்மாலே அபிஷேகம் பெற்றவ
னுகிய தாவீதுக்கும் அவன் சந்ததிக்குஞ் சதாகா
லமும் அனுக்கிரகஞ்செய்கிறவராயிருக்கிறுர்.

## ௰௯. சங்கீதம்.

௧. சிருட்டிவஸ்துக்கள் தேவனுடைய மகிமை
யைப்பிரகாசிப்பித்தல்: ௭. வேதமோ அவர் அ
ருளைவிளக்கல்.

பாடகத்தலைவனிடத்தில்தாவீது ஒப்பித்தசங்கீதம்

ஆகாயமண்டலங்கள் தேவனுடையமகிமை ௧
யைவெளிப்படுத்துகின்றன; ஆகாயவிரிவு அவர்
கரங்களின் கிரியைகளைத்தெரிவிக்கின்றது.—பக ௨
லுக்குப்பகலும்வாக்குகளைப்பொழிகின்றது,இர
வுக்குஇரவும் ஞானத்தைவிளக்குகின்றது.—வாக் ௩
கியமுமில்லை, பாஷையுமில்லை, அவைகளின்
சத்தங்கேட்கப்படுவதுமில்லை.—பூமியெங்கும்அ ௪
வைகளின்நூலும்,பூமண்டலத்தின்எல்லைவரைக்
கும் அவைகளின்வாக்குகளுஞ்செல்லுகின்றன.
அவைகளின் மத்தியில் சூரியனுக்கு ஒரு கூடா
ரம்ஸ்தாபித்தார்.—அவன் மணவறையினின்று பு ௫
றப்படுகிறமணவாளனைப்போலிருக்கிறுன், பல
வானைப்போலப் பாதையில் ஓட மகிழ்ச்சியாயி
ருக்கிறுன்.—அவன் ஆகாயத்தின் ஒரு முனையினி ௬
ன்றுபுறப்பட்டு, அதின் மறு முனை வரைக்கும்
ஓடுகிறுன்: அவன் உஷ்டணத்துக்குமறைவான
தொன்றுமில்லை.—யெகோவா அருளியவேதம் ௭
பரிபூரணம், ஆத்துமத்தைச்சீர்ப்படுத்தும்: யெ
கோவாவின் உபதேசம் நிச்சயம், பேதைக்கு
ஞானத்தைத்தரும்.—யெகோவாவின் பிரமா ௮
ணங்கள்செவ்வையுள்ளவைகள், அவைகள் இரு
தயத்தைச் சந்தோஷப்படுத்தும்: யெகோவா
வின் கட்டளை தூய்மை, கண்களைத் தெளிவிக்
கும்.-யெகோவாவுக்குப் பயப்படும்பயம்சுத் ௯
தம்,சதாகாலமும்நிலைக்கும்: யெகோவாவின்
நியாயத்தீர்ப்புக்கள் சத்தியமும் முழுவதும் நீதியு
மாகும்.—அவைகள் பொன்னிலும், மிகுந்த ப ௰
சும்பொன்னிலும் விரும்பப்படத்தக்கவைகள்:
தேனிலும், கூட்டிலிருந்தொழுகுந் தேனிலும்
மதுரமாயிருக்கின்றன.—அன்றியும் அவைகளி ௰௧
னுல் உமதடியான் உணர்த்தப்பட்டிருக்கிறுன்:
அவைகளைக் கைக்கொண்டுவருவதினுல் மிகுந்த

(௨௬) நீதி.௩.௩௪. (௨௭) நீதி.௬.௰௭. (௨௮) யோபு.௰௮.௬. (௩௰) உபா.௩௨.௪. தானி.௪.௩௭. வெளி.௰௫.௩. நீதி. ௩௰.௫. சங்.௰௭.௭. (௩௧) உபா.௩௨.௩௧,௩௯. ௧.சாமு.௨.௨. ஏசா.௪௫.௬. (௩௨) சங்.௯௧.௨ (௩௩) ௨.சாமு.௨.௰௮. உபா.௩௨.௰௩. (௩௬) நீதி.௪.௰௨. (௪௧) யோபு.௨௭.௯. நீதி.௧.௨௮. ஏசா.௧.௰௫. (௪௨) சக.௰.௫. (௪௩) ௨.சாமு.௨. ௯,௰. ௨.சாமு.௮. ஏசா.௫௨.௰௫. (௪௪) உபா.௩௩.௨௯. (௪௫) மீகா.௭.௰௭.(௪௭)சங்.௪௭.௩. (௪௮) சங்.௫௯.௧.(௪௯) ரோ.௰௫.௯. (௫௰) ௨.சாமு.௭.௰௨.—(௰௯. சங். ௧.) ஆதி.௧.௬. ஏசா.௪௰.௨௨. ரோ.௧.௰௯,௨௰. (௪) ரோ.௰.௰௮, (௫)பிர.௧.௫. (௭) சங்.௱௰௧.௭. (௮) சங்.௰௨.௬. சங்.௰௩.௩. (௰) சங்.௱௰௯.௰௩.(௰௧)நீதி.௨௯.௰௮.

௰௨ பலனுண்டு.—தன் தவறுகளை உணருகிறவன்யா
வன்; அந்தரங்கமான குற்றங்களைநீக்கி, என்
௰௩ னைச் சுத்திகரித்தருளும்.—துணிவான குற்றங்
களுக்கு உமதடியானைவிலக்கிக் காத்துக்கொள்
ளும், அவைகளென்னை ஆண்டுகொள்ள விடா
திரும்: அப்பொழுது நான்நேர்மையுள்ளவனாகி,
௰௪ மகாபாவத்துக்கு நீங்கலாவேன்.—என் கன்மலை
யும்என்மீட்பருமாகிய யெகோவாவே, என்
வாய்மொழியும், என் மனோதியானமும், உமது
சமுகத்தில் அங்கிகரிக்கப்படும்படி செய்யும்.

## ௨௰. சங்கீதம்.

௧. இராசாவுக்காகச் சபையார் பிரார்த்தித்தல்: ௭. தேவனே தஞ்சமெனல்.

பாடகத்தலைவனிடத்தில்தாவீது ஒப்பித்தசங்கீதம்
நீர் வியாகுலப்படுந்தினத்தில் யெகோவா உ
மக்குச்செவிகொடுப்பாராக; யாக்கோபின் தே
வனுடைய நாமம் உம்மை உன்னதப்படுத்துவ
௨ தாக;—அவர் தமது பரிசுத்தஸ்தானத்தினின்று உ
மக்குச்சகாயம்வருவிப்பாராக; சீயோனினின்று
௩ உம்மை ஸ்திரப்படுத்துவாராக;—உமது நைவேத்
தியங்களெல்லாவற்றையும் நினைப்பாராக; உம
துதகனபலிகளை அங்கிகரிப்பாராக. சேலா.—
௪ அவர் உமது மனவிருப்பத்தின்படி உமக்கருள்
செய்து, உம்முடைய ஆலோசனைகள் யாவை
௫ யும் நிறைவேற்றக்கடவர்.—நாங்கள் உமது இரட்
சிப்பைக்குறித்து மகிழ்ந்து, நம்முடைய தேவ
னுடைய நாமத்திலே விருதுக்கொடி ஏற்று
வோம்: யெகோவா உம்முடைய விண்ணப்
பங்களெல்லாவற்றையும் நிறைவேற்றுவாராக.—
௬ யெகோவா தம்மால் அபிஷேகம்பெற்றவனை
இரட்சிப்பார்; அவர் தமது பரிசுத்தவானங்களி
னின்று அவனுக்கு உத்தரம் அருளுவார், தமது
வலக்கரத்தினால் அவனை இரட்சிப்பாரென்று
௭ நான் இப்பொழுது அறிவேன்.—சிலர் இரதங்க
ளையும், சிலர்குதிரைகளையுஞ் சார்ந்துகொள்
ளுகிறார்கள்: நாங்களோ நம்முடைய தேவ
னாகிய யெகோவாவின் நாமத்தைப் புக
௮ ழுவோம்.—அவர்கள் முறிந்துவிழுந்தார்கள்: நா
௯ ங்களோ எழுந்து நிமிர்ந்து நிற்கிறோம்.—யெ
கோவாவே, இரட்சியும்: நாங்கள் பிரார்த்திக்
குஞ்சமயத்தில் இராசா எங்களுக்கு உத்தரமரு
ளுவாராக.

## ௨௧. சங்கீதம்.

௧. செயத்தினிமித்தம் தேவனைத்துதித்தல்: ௮. உதவியைப்பெற அவரை எதிர்பார்த்தல்.

பாடகத்தலைவனிடத்தில்தாவீதுஒப்பித்தசங்கீதம்
யெகோவாவே, உமது பராக்கிரமத்தில் இ
ராசா மகிழ்ச்சியாயிருப்பான்; உம்மால்வரும் இ
ரட்சிப்பினால் மிகவுஞ் சந்தோஷப்படுவான்.—
நீர் அவன் மனவிருப்பத்தின்படி அவனுக்களித் ௨
தீர், அவன் உதடுகளின் விண்ணப்பத்தைத்தள்
ளாதிருக்கிறீர். சேலா.—நீர் உத்தம ஆசீர்வாதங் ௩
களுடன் அவனுக்கு முற்பட்டு, அவன் சிரசில்
பசும்பொற்கிரீடத்தைத் தரிப்பிக்கிறீர்.—அவன் ௪
உம்மிடத்தில் ஆயுளைக்கேட்டான், நீர் அவனுக்
கு என்றென்றைக்குமிருக்கும்படி அருளினீர்.—
உம்மால் இரட்சிப்புப்பெற்று மகா மகிமையை ௫
யுடையவனாயிருக்கிறான்: மேன்மையையும் ம
கத்துவத்தையும் அவன்மேல் சூட்டினீர்.—சதா ௬
காலமும் ஆசீர்வாதமுள்ளவனாக அவனை ஏற்ப
டுத்தினீர்: உமது முகப்பிரசன்னத்தினால் அவ
னை மிகவுஞ் சந்தோஷப்படுத்துகிறீர்.—இராசா ௭
யெகோவாவின்மேல் நம்பிக்கையாயிருக்கி
றான், சருவத்துக்கும் வல்லவருடைய அனுக்கி
ரகத்தினால் அசையாதிருப்பான்.—உமது கை உம் ௮
முடைய எல்லாச்சத்துருக்களையுங் கண்டுபிடிக்
கும்: உமது வலக்கரம் உம்முடையபகைவரைக்
கண்டுபிடிக்கும்.—நீர் கோபிக்குஞ்சமயத்தில் அ ௯
வர்களை அக்கினிச் சூளையைப்போலாக்குவீர்;
யெகோவா தமது கோபத்தினால் அவர்களை
விழுங்குவார், அக்கினிஅவர்களைப்பட்சிக்கும்.—
பூமியினின்று அவர்கள் கனியையும், மனுபுத்தி ௰
ரர் மத்தியினின்று அவர்கள் வமிசத்தையும் நிரு
மூலப்படுத்துவீர்.—அவர்கள் உமக்கு விரோத ௰௧
மாய்த்தீங்குசெய்யக் கருதி, நிறைவேற்றக்கூடா
த தீவினையைச்செய்ய நினைத்தார்கள்.—ஆதலால் ௰௨
நீர் அவர்களை இலக்காகவைத்து, அவர்களு
டையமுகத்துக்கு நேரே உமது அம்புகளை நா
ணேற்றிவிடுகிறீர்.—யெகோவாவே, நீர் உ ௰௩
மது பலத்தில் உயர்ந்திருப்பீராக: அதினால் நாங்
கள் உமது வல்லமையைப்பாடிக் கீர்த்தனம்பண்
ணுவோம்.

## ௨௨. சங்கீதம்.

௧. தாவீதுவியாகுலப்பட்டுப்புலம்பல்: ௯. பிரார்த்தித்தல்: ௨௩. துதிசெய்தல்.

ஆயெலேத்து ஷக்காரில்வாசிக்கும்பொருட்டுப்பாட
கத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்தசங்கீதம்.
என்தேவனே,என்தேவனே,ஏன்என்னைக் ௧
கைவிட்டீர்; எனக்குதவிசெய்யாமலும்,நான்கத
றிச்சொல்லுகிற வாக்கைக்கேளாமலும், நீர்தூர
மாயிருக்கிறதேது.—என் தேவனே, நான்பக ௨
லில் ஓலமிடுகிறேன், நீர் உத்தரந்தருகிறதில்லை;
இரவிலும் எனக்கு ஓய்வில்லை.—இஸ்ரவேல ௩
ரின்துதிகளுக்குப்பாத்திரமுள்ளவரே, நீர்பரிசுத்
தர்.—எங்கள்முன்னோர் உம்மில்நம்பிக்கைவைத் ௪
தார்கள்: நம்பினவர்களாகிய அவர்களைநீர் விடு
வித்தீர்.—அவர்கள் உம்மைநோக்கிக்கூப்பிட்டு, ௫
இரட்சிக்கப் பட்டார்கள்: உம்மில் நம்பிக்கை

(௰௨) சங்.௪௰.௰௨. (௰௩) ஆதி.௨௰.௬. ரோ.௬.௰௨,௰௪. (௰௪) சங்.௫௧.௰௫. சங்.௰௮.௧. ஏசா.௪௩.௰௪. ௧.தெச.௧.௰.—(௨௰. சங். ௧.) நீதி.௰௮.௰. (௨) ௧.இரா.௬.௰௬. (௫) யாத்.௰௭.௰௫. (௬) சங்.௨.௨.—(௨௧. சங். ௪.) சங்.௯௧. ௫,௬. ௨.சாமு.௭.௰௩. சங்.௯௧.௰௬. (௬) சங்.௰௬.௰௧. அப்.௨.௨௮. (௭) சங்.௰௬.௮. (௮) ௧.சாமு.௩௧.௩. (௯) மல். ௪.௧. சங்.௫௬.௧,௨. ஏசா.௨௬.௰௧.(௰)௧.இரா.௰௩.௩௪. சங்.௩௭.௨௮.(௰௧)சங்.௨.௧.(௰௨)புல.௩.௰௨.—(௨௨.சங்.௧.) மத்.௨௭.௪௬. எபி.௫.௭. (௫) ஏசா.௪௯.௨௩. ரோ.௯.௩௩.

௬ வைத்துவெட்கமடையாதிருந்தார்கள்.—நானோ
ஒரு புழு, மனுஷனல்ல; மனுஷரால் நிந்திக்கப்
பட்டும், சனங்களால் அவமதிக்கப்பட்டுமிருக்
௭ கிறேன்.—என்னைப்பார்க்கிறயாவரும்என்னைப்
பரிகாசம்பண்ணி, உதட்டைப் பிதுக்கி, தலை
௮ யைக்குலுக்கி,—இவன்யெகோவாவின்மேல்
நம்பிக்கையாயிருந்தானே, அவர் இவனை விடுவி
ப்பாராக: அவர் இவன்மேற் பிரியமாயிருந்தால்,
௯ இவனைஇரட்சிப்பாராகவென்கிறார்கள்.—நீர்
என்னை என்மாதாவின்கருப்பத்தினின்றுபுறப்ப
டச்செய்தீர்: நான் என்மாதாவின் மடிமேலிருக்
௰ கையிலும்நீர் எனக்கு ஆதரவாயிருந்தீர்.—மாதா
வின்கருப்பமுதல் உம்மிடத்தில் ஒபபிக்கப்பட்
டேன்: என்மாதாவின்கருவிலுண்டானதுமுதற்
௰௧ கொண்டு நீர் என் தேவனாயிருக்கிறீர்.-துக்கஞ்
சமீபித்துவந்தது; சகாயஞ்செய்வார்ஒருவருமில்
லை; ஆகையால் என்னைவிட்டுத்தூரத்திற்போகா
௰௨ திரும்.—அநேகங்காளைகள் என்னைச்சூழ்ந்திருக்
கின்றன: பாஷானின் பெலத்த எருதுகள் என்
௰௩ னைவளைந்துகொண்டன.—அவர்கள் பீறுகிறதும்
கருச்சிக்கிறதுமான ஒருசிங்கம்போல் என்மேல்
௰௪ தங்கள் வாய்களைத் திறக்கிறார்கள்.—சலம்போல
ஊற்றுண்டேன், என் எலும்புகளெல்லாங்கழன்
றுபோயின: என்இருதயம்மெழுகுபோலாயிற்று;
அது என்குடல்களுக்குள்ளே உருகுகின்றது.—
௰௫ என்பெலம் ஓடுபோலக்காய்ந்துபோயிற்று; என்
நா அண்ணத்துடன் ஒட்டிக்கொண்டிருக்கின்ற
து; நீர் என்னை மரணத்தின் தூளிலே சேர்த்தீர்.-
௰௬ நாய்கள் என்னைச் சூழ்ந்திருக்கின்றன: துன்மா
ர்க்கருடையகூட்டம் என்னை வளைந்துகொண்
டது: என்கைகளையுங்கால்களையும் உருவக்குத்தி
௰௭ னார்கள்.—நான் என் எலும்புகள்யாவையும் எண்
ணக்கூடும்: அவர்கள் என்னைநோக்கியிருந்து உற்
௰௮ றுப்பார்க்கிறார்கள்.—என் வஸ்திரங்களைத் தங்க
ளுக்குள்ளேபங்கிடுகிறார்கள், என் உடைக்குச்
௰௯ சீட்டுப்போடுகிறார்கள்.—யெகோவாவே, நீர்
என்னைவிட்டுத்தூரத்திற்போகாதிரும்: நீரே என்
பெலம், எனக்கு உதவிசெய்யவிரைந்தருளும்.—
௨௰ என்பிராணனைக்கட்கத்துக்கும், என்அருமையா
௨௧ னதை நாய்க்குந்தப்புவித்தருளும்.—சிங்கத்தின்
வாய்க்கும் காட்டெருமைகளின் கொம்புகளுக்
௨௨ கும் என்னைவிலக்கி இரட்சித்தருளும்.—உமது
நாமத்தை என் சகோதரருக்குத் தெரிவிப்பேன்:
௨௩ சபையின்மத்தியில் உம்மைத்துதிப்பேன்.—யெ
கோவா, உபத்திரவப்படுகிறவனுடைய உபத்
திரவத்தைஅற்பமாயெண்ணாமலும், அரோசிக்கா
மலும், அவனுக்குத்தமதுமுகத்தைமறைக்காமலு
மிருந்து, அவர் தம்மைநோக்கிஓலமிட்டபொழு
து அதைக்கேட்டருளினார்.—ஆதலால் அவருக் ௨௪
குப்பயப்படுகிறவர்களே, அவரைத்துதியுங்கள்;
யாக்கோபின் சந்ததியாராகிய நீங்கள் யாவரும்
அவரைக்கீர்த்தனம்பண்ணுங்கள்; இஸரவேலின்
வமிசத்தாராகிய நீங்கள்யாவரும் அவருக்கஞ்சி
நடவுங்கள்.—நான் மகாசபையில் உம்மைத்துதிப் ௨௫
பேன்: அவருக்குப்பயப்படுகிறவர்களுடைய ச
முகத்தில் நான்செய்த சங்கற்பங்களைநிறைவேற்
றுவேன்.—சிறுமையானவர்கள்புசித்துத்திருத்திய ௨௬
டைவார்கள்: யெகோவாவைத் தேடுகிறவர்
கள் அவரைத்துதிப்பார்கள்: உங்கள் இருதயம் ச
தாகாலமும் வாழ்வடையும்.—இராச்சியம் யெ ௨௭
கோவாவினுடையது: அவர் தேசத்தாருக்
குள்ளே கர்த்தத்துவஞ்செய்கிறார்;—ஆதலால் பூமி ௨௮
யின்எல்லையிலுள்ளயாவரும் யெகோவாவை
நினைந்து அவரிடத்தில் திரும்புவார்கள்: அந்நிய
தேசத்திலுள்ளசகலசாதியாரும் உமதுசமுகத்தில்
தொழுதுகொள்வார்கள்.—பூமியிலே புஷ்டியுள்ள ௨௯
வர்கள் யாவரும் புசித்துத் தொழுதுகொள்வார்
கள்: தங்கள்தங்கள்பிராணனைச்சீவிப்பிக்கவல்ல
மையில்லாமல் தூளிலிறங்குகிற யாவரும் அவர்
சமுகத்தில் வணங்குவார்கள்.—ஒரு வமிசத்தார் ௩௰
அவரைச்சேவிப்பார்கள்; அவர்கள் யெகோ
வாவின் சனங்களென்றுமதிக்கப்படுவார்கள்.—
அவரே இதைச்செய்தபடியால் அவர்கள் சமீபத் ௩௧
துவந்து, அவர்செய்த நீதியைப்பின்வருஞ்சனங்
களுக்குத்தெரிவிப்பார்கள்.

## ௨௩. சங்கீதம்.

தாவீது தேவ கிருபையில் தன் நம்பிக்கைகூறல்.

தாவீதின் சங்கீதம்.

யெகோவாவே என்மேய்ப்பர்; எனக்குக் ௧
குறைவில்லை.—அவர் என்னைப்பசும்புல் நிலங்க ௨
ளிலே படுக்கப்பண்ணி, அமர்ந்த சலசமீபத்தில்
என்னைக்கொண்டுபோய்விடுகிறார்.—அவர் என் ௩
ஆத்துமத்தைச்சீர்ப்படுத்தி, தமது நாமத்தினிமித்
தம் நீதிநெறிகளில் என்னைநடத்துகிறார்.—நான் ௪
மரண நிழலின் பள்ளத்தின்வழியாய்ச் செல்லும்
பொழுதும், நீர்என்னோடிருக்கிறதினாலும்; உமது
கோலும், உமது தண்டமும் என்னைத்தேற்றுகிற
தினாலும், நான் எந்தத்தீமைக்கும்பயப்படேன்.—
நீர் என்சத்துருக்களுக்குமுன்பாகஎனக்குப்போ ௫
சனபீடத்தை ஆயத்தப்படுத்தினீர்: என் தலைக்கு
எண்ணெயிடுகிறீர்; என் பானபாத்திரம் நிரம்பி
வழிகின்றது.—என் ஆயுள்பரியந்தம் நன்மை ௬
யுந்தயையும் என்னைத்தொடருமே: நான் யெ
கோவாவின் ஆலயத்தில் நெடுநாள் வசித்தி
ருப்பேன்.

(௬)யோபு.௨௫.௬. ஏசா.௫௩.௩.(௭)லூக்.௨௩.௩௫. யோபு.௰௬.௪. சங்.௱௯.௨௫. (௮) மத்.௨௭.௪௩. சங்.௯௧.௰௪. (௯) சங்.௭௧.௬.(௰௩)யோபு.௰௬.௰. (௰௪) தானி.௫.௬. யோசு.௭.௫.யோபு.௨௩.௰௬. (௰௫) நீதி.௰௭.௨௨. யோபு.௨௯.௰. (௰௬)வெளி.௨௨.௰௫. மாற்.௰௫.௨௪.(௰௭)லூக்.௨௩.௨௭,௩௫.(௰௮)லூக்.௨௩.௩௪.(௨௰)சங்.௩௫.௰௭.(௨௧)௨.தீமோ.௪.௰௮. ஏசா.௩௪.௭.(௨௨)எபி.௨.௰௨. யோவா.௨௰.௰௭. ரோ.௮.௨௯. (௨௩) எபி.௫.௭.(௨௬)யோவா.௬.௫௰.(௨௭) ஏசா.௪௯.௬. (௨௮) மத்.௬.௰௩. (௨௯) சங்.௪௫.௰௨. ஏசா.௨௬.௰௯. பிலி.௨.௰.(௩௰)சங்.௮௭.௬.(௩௧)ஏசா.௬௰.௩.—(௨௩. சங். ௧.) ஏசா.௪௰.௰௧. எரே.௨௩.௪. யோவா.௰.௰௧. ௧.பேதுரு.௨.௨௫. பிலி.௪.௰௯. (௨) எசேக்.௩௪.௰௪. வெளி.௭.௰௭. (௩) நீதி.௮.௨௰. (௪) சங்.௱௰௮.௬. ஏசா.௪௩.௩. (௫) சங்.௱௪.௰௫. சங்.௯௨.௰.

## ௨௪. சங்கீதம்.

௧. யெகோவாவின் இராசத்துவம்: ௩. அவரு
டைய சனங்களைவருணித்தல்: ௭. அவரை ஏற்
றுக்கொள்ளும்படி ஏவல்.

தாவீதின் சங்கீதம்.

பூமியும் அதிலுள்ள எல்லாவஸ்துக்களும், உல
கமும் அதில்வசிப்பவர்களும், யெகோவா
௨ வுக்கு ஆதீனம்.-அவரேஅதைச்சமுத்திரங்களுக்
குமேலாக அஸ்திபாரப்படுத்தி, வெள்ளங்களுக்
௩ குமேலாய் அதை ஸ்தாபித்தார்.—யெகோவா
வின் மலையில்ஏறுகிறவன்யாவன்; அவருடைய
பரிசுத்த ஸ்தானத்தில் நிலைத்திருக்கிறவன் யா
௪ வன்:—சுத்தமானகைகளையும்,சுத்த இருதயத்தை
யுமுடையவனும், மாயத்தை நாடாதமனதுள்ள
வனும், பொய்யாணையிடாதவனுமாயிருக்கிறவ
௫ னே.—அவன்யெகோவாவிடத்தில்ஆசீர்வா
தத்தையும்,தன்இரட்சகராகிய தேவனிடத்தில்
௬ நீதியையும் பெறுவான்.—அவரைத்தேடுகிற சந்
ததியார் இவர்களே,யாக்கோபின் தேவனே, உ
மதுமுகத்தைத்தேடுகிறவர்கள் இவர்களே.சே
௭ லா.—வாசல்களே, உங்கள் தலைகளை உயர்த்துங்
கள்; நித்தியமான கதவுகளே, உயருங்கள்; மகி
௮ மையின் இராசா உட்பிரவேசிப்பார்.—மகிமை
பொருந்தியஇந்தஇராசாயாவர்; வல்லமையும் ப
ராக்கிரமமுமுள்ள யெகோவா, யுத்தத்தில் ப
௯ ராக்கிரமமுள்ள யெகோவாவே.—வாசல்க
ளே, உங்கள் தலைகளை உயர்த்துங்கள்; நித்தியமா
னகதவுகளே, உயருங்கள்; மகிமையின் இராசா
௰ உட்பிரவேசிப்பார்.—மகிமை பொருந்திய இந்
த இராசா யாவர்; சேனைபதியாகிய யெகோ
வா,அவரே மகிமைபொருந்தியஇராசா. சேலா.

## ௨௫. சங்கீதம்.

தாவீது பாவமன்னிப்பையும் தனக்குவேண்டிய
சகாயத்தையும்வேண்டல்.

தாவீதின் சங்கீதம்.

யெகோவாவே, உம்மிடத்தில் என்ஆத்து
௨ மத்தைஉயர்த்துகிறேன்.—என் தேவனே, உம்
மில் நம்பிக்கையாயிருக்கிறேன்: நான் வெட்க
மடையாதபடிசெய்யும், என் சத்துருக்கள் என்
௩ னை மேற்கொண்டு மகிழவிடாதிரும்.—உம்மை
நோக்கிக்காத்திருப்பவர்களிலொருவரும் வெட்
கமடையாதபடிசெய்யும்: காரணமின்றித்துரோ
கஞ் செய்கிறவர்கள் வெட்கப்படுவார்களாக.—
௪ யெகோவாவே, உம்முடையநெறிகளைஎனக்
குத்தெரியக்காட்டும்; உம்முடைய பாதைகளை
௫ எனக்குப்போதித்தருளும்.—உமது சத்தியத்தில்
என்னைநடத்தி, எனக்குப்போதித்தருளும்: நீரே
என் இரட்சிப்பின் தேவன்; நாடோறும் உம்
மைநோக்கிக் காத்திருக்கிறேன்.—யெகோவா ௬
வே, ஆதிமுதலிருக்கிற உமது இரக்கங்களையும்
தயைகளையும் நினைந்தருளும்.—நான் இளமையிற் ௭
செய்த பாவங்களையும் அதிக்கிரமங்களையும்நினை
யாதிரும்: யெகோவாவே, நீர் தயாபரராகை
யால் உமதுதயையினிமித்தம் என்னை நினைந்தரு
ளும்.—யெகோவா,நன்மையுஞ்செவ்வையுமா ௮
னவர்: ஆதலால் பாவிகளுக்கு நெறியிலே போ
திப்பார்.—சாந்தமுள்ளவர்களை நியாயவழியிலே ௯
நடத்துகிறார்: சாந்தமுள்ளவர்களுக்குத் தமதுநெ
றியைப்போதிக்கிறார்.—யெகோவாவின் உ ௰
டன்படிக்கையையும் அவருடையபிரமாணங்க
ளையுங்கைக்கொள்ளுகிறவர்களுக்கு, அவருடை
யநெறிகளெல்லாந்தயையுஞ் சத்தியமுமானவை
கள்.—யெகோவாவே, என்பாவம்பெரிது; உ ௰௧
மதுநாமத்தினிமித்தம் அதைமன்னித்தருளும்.—
யெகோவாவுக்குப்பயப்படுகிறமனுஷன் எ ௰௨
வனோ, அவனுக்குத்தாம்தெரிந்துகொள்ளும்வழி
யைப்போதிப்பார்.—அவன் ஆத்துமம்சௌக்கி ௰௩
யத்துடனேதங்கும்; அவன்சந்ததிபூமியைச்சுதந்
தரித்துக்கொள்ளும்.-யெகோவாவின் இரகசி ௰௪
ய ஆலோசனை அவருக்குப் பயப்படுகிறவர்களி
டத்திலிருக்கின்றது;அவர் தமதுஉடன்படிக்கை
யை அவர்களுக்கு உணர்த்துவார்.—யெகோ ௰௫
வா என் கால்களைவலையினின்றுவிடுவிப்பார்; ஆ
தலால்என்கண்கள்எப்பொழுதும்அவர்மேலிருக்
கின்றன.—நான்துணையற்றவனும் உபத்திரவப்ப ௰௬
டுகிறவனுமாயிருக்கிறேன்; ஆதலால் என்னிடத்
தில் திரும்பி எனக்குத்தயைசெய்யும்.—என் இ ௰௭
ருதயவியாகுலங்கள்பெருகியிருக்கின்றன: என்
கிலேசங்களினின்று என்னை விடுவித்தருளும்.—
என்கிலேசத்தையும் என்வருத்தத்தையும்பாரும்; ௰௮
என் பாவங்களெல்லாவற்றையும் மன்னித்தரு
ளும்.—என்சத்துருக்களைப்பாரும்; அவர்கள்அநே ௰௯
கர்; என்னைக்கொடியபகையோடேபகைக்கிறார்
கள்.—என் ஆத்துமத்தைக்காப்பாற்றி என்னை இ ௨௰
ரட்சியும்: நான் உம்மைநம்புகிறேன், ஆதலால்
நான்வெட்கமடையாதபடி செய்யும்.—உம்மைக் ௨௧
காத்திருக்கிறேன்; ஆதலால் உண்மையும் நேர்
மையும்என்னைக்காக்கக்கடவன.—தேவனே, ௨௨
இஸரவேலை அவன்சகலநெருக்கங்களும்நீங்கவி
டுவித்தருளும்.

## ௨௬. சங்கீதம்.

தாவீது தன் மனநேர்மையைச்சொல்லிப் பிரார்த்
தித்தல்.

தாவீதின் சங்கீதம்.

யெகோவாவே, நான் நேர்மையாய் நடந்த ௧
படியால்எனக்குநியாயஞ்செய்வீராக: யெகோ
வாவை நம்பியிருக்கிறேன், ஆதலால் நான்தள்
ளாடேன்.—யெகோவாவே, என்னைப்பரீட் ௨

(௨௪. சங். ௧.) யாத்.௰௯.௫. உபா.௰.௰௪. யோபு.௪௧.௰௧. சங்.௫௰.௰௩. (௨) ஆதி.௧.௯. யோபு.௩௮.௭. ௨.பேதுரு.௩.௫. (௪) யோபு.௰௭.௯. ௧.தீமோ.௨.௮. மத்.௫.௮. சங்.௰௫.௪. (௭) ஏசா.௨௬.௨. சங்.௯௭.௬. ஆகா.௨.௭. மல்.௩.௧. ௧.கொரி.௨.௮.—(௨௫. சங். ௧.) புல.௩.௪௧. (௨) சங்.௨௨.௫. ஏசா.௨௮.௰௬. ரோ.௰.௰௧. சங்.௰௩.௪. (௪)யாத்.௩௩.௰௩. (௬) சங்.௱௩.௰௭. ஏசா.௬௩.௰௫. (௭) யோபு.௰௩.௨௬. எரே.௩.௨௫. சங்.௫௧.௧. (௰௧) சங்.௩௧.௩. (௰௨) சங்.௩௭.௨௩. (௰௩) நீதி.௰௯.௨௩. (௰௪) நீதி.௩.௩௨. (௰௫) சங்.௱௪௧.௮. (௰௬) சங்.௬௯.௰௬. (௰௮) ௨.சாமு.௰௬.௰௨.—(௨௬. சங். ௧.) ௨.இரா.௨௰.௩. நீதி.௨௰.௭. சங்.௨௮.௭. நீதி.௨௯.௨௫. (௨) சங்.௭.௯. சங்.௱௩௯.௨௩. சக.௰௩.௯.

சித்துச்சோதித்தருளும்; என் அந்தக்கரணங்களை
௩ யும்என் இருதயத்தையும்புடமிட்டுப்பாரும்.—உ
மதுதயையென்கண்கள்முன்னிருக்கின்றதே:நான்
உமது சத்தியத்தில் நடந்துகொள்ளுகிறேன்.—
௪ நான் வீணரோடேயிருக்கவில்லை, கபடிகளோ
௫ டே நான் சஞ்சரிக்கவில்லை.—துன்மார்க்கருடை
யசபையைவெறுக்கிறேன்; துஷ்டருடன்இருக்
௬ கமாட்டேன்.—யெகோவாவே, நான் ஆனந்
தப்பாட்டுப்பாடி, உமது ஆச்சரியமான கிரியை
களெல்லாவற்றையும்விவரித்துச்சொல்லும்பொ
௭ ருட்டு,—நான் குற்றமில்லாமல் என் கைகளைக்க
௮ ழுவி, உமது வேதிகையைச்சூழுவேன்.—யெ
கோவாவே, நான் உமது ஆலயமாகிய வாசஸ்
தானத்தையும், உமது மகிமையின் கூடாரத்தை
௯ யும்நேசித்தேன்.—என்ஆத்துமத்தைப்பாவிகளோ
டும், என் சீவனை இரத்தப்பிரியரோடுஞ் சேராதி
௰ ரும்.—அவர்கள் கையில் தீவினையிருக்கின்றது,
அவர்களுடைய வலதுகை பரிதானங்களாலேநி
௰௧ றைந்திருக்கின்றது.—நானோ, நேர்மையாய்நடப்
பேன்: என்னைமீட்டு எனக்குத் தயைசெய்யும்.—
௰௨ என்கால்செவ்வையான இடத்திலேநிலைநிற்கின்
றது: சபைகளுக்குள்ளே நான் யெகோவா
வைக்கீர்த்தனம் பண்ணுவேன்.

## ௨௭. சங்கீதம்.

*தாவீது தேவனுடைய வல்லமையையும் தன்னுடைய நேசத்தையும் நினைத்துப் பிரார்த்தித்துத்தன் விசுவாசத்தைத்திடப்படுத்தல்.*

தாவீதின் சங்கீதம்.

யெகோவா என்ஒளி,என்இரட்சிப்பு;நான்
ஆருக்குப்பயப்படுவேன்; யெகோவா என்சீ
௨ வனின்பெலம்,நான் ஆருக்கஞ்சுவேன்.—என்சத்
துருக்களும் பகைவருமாகிய துன்மார்க்கர் என்
மாமிசத்தைப் பட்சிக்க என்னை எதிர்த்துவந்த
௩ பொழுது, அவர்கள் இடறிவிழுந்தார்கள்.—ஒரு
சேனை எனக்குவிரோதமாகப் பாளயமிறங்கினு
லும் என் இருதயம்பயப்படாது: எனக்குவிரோ
தமாயுத்தம் எழும்பினாலும் இதில் உற்சாகமாயி
௪ ருப்பேன்.—ஆபத்துக்காலத்திலே யெகோவா
தமது ஆலயத்தில் என்னைமறைப்பார்: அவர்தம
துகூடாரத்தின் உள்ளறையில் என்னை ஒளித்து
வைப்பார்; கன்மலையின்மேல் என்னை உயர்த்தி
௫ வைப்பார்;-ஆதலால் யெகோவாவின்சௌந்
தரியத்தைப் பார்க்கவும், அவருடைய ஆலயத்
தில் ஆராயவும், என்ஆயுள்பரியந்தம் அவருடை
யஆலயத்தில் தங்குவதொன்றையே ஆசையோ
௬ டேஅவரிடத்தில் கேட்டுக்கொண்டேன்.—இப்
பொழுது என்னைச்சூழ்ந்திருக்கிற என்சத்துருக்
களுக்குமேலாகஎன்தலைஉயர்த்தப்படும்: நான்அ
வருடைய ஆவாசத்தில் ஆனந்தமென்னும் பலிக
ளையிட்டுப்பாட்டுப்பாடி, யெகோவாவைக்
கீர்த்தனம்பண்ணுவேன்.—யெகோவாவே, ௭
நான் ஓலமிட்டுப்பிரார்த்திக்கும்பொழுது என்
விண்ணப்பத்தைக்கேட்டருளும்: என்மேலிரங்
கி எனக்கு உத்தரந்தந்தருளும்.—என் முகத்தைத் ௮
தேடுங்களென்றுநீர்சொல்ல,என் இருதயம், யெ
கோவாவே, உம்முடையமுகத்தைத் தேடுவே
னென்றது.—உமதுமுகத்தை எனக்குமறையாதி ௯
ரும்; நீர்கோபத்துடன் உமதடியானை விலக்கா
திரும்: என் இரட்சிப்பின் தேவனே, நீரே
என்துணை; என்னைநெகிழவிடாமலும் என்னைக்
கைவிடாமலுமிரும்.—என் பிதாவும் மாதாவும் ௰
என்னைக்கைவிட்டாலும், யெகோவா என்
னைச் சேர்த்துக்கொள்வார்.—யெகோவாவே, ௰௧
உமதுவழியையெனக்குப்போதித்தருளும்,என்சத்
துருக்களினிமித்தம் சமபாதையில் என்னைநடத்
தியருளும்.—என்சத்துருக்களினிடத்துக்கு என் ௰௨
னை ஒப்பியாதிரும்: பொய்ச்சாட்சிக்காரரும், சீ
றிக்கொடுமைபேசுகிறவர்களும் எனக்குவிரோத
மா யெழும்பினார்கள்.—சீவனுள்ளோரின் பூமியி ௰௩
லே யெகோவாவினால்வரும்நன்மையைக்கா
ண்பேனென்று நான்விசுவாசியாதிருந்தாலோ.—
யெகோவாவை நோக்கிக்காத்திரு: திடங் ௰௪
கொள், அவர் உன் மனதை ஸ்திரப்படுத்துவார்:
யெகோவாவையே காத்திருவென்கிறேன்.

## ௨௮. சங்கீதம்.

*௧. தாவீதுதனக்காகவும் தன் சனங்களுக்காகவும் பிரார்த்தனைசெய்தல்: ௬. யெகோவாவைத் துதித்தல்.*

தாவீதின் சங்கீதம்.

என்கன்மலையாகிய யெகோவாவே, நான் ௧
உம்மைநோக்கிக்கூப்பிடுகிறேன்; எனக்கு மவு
னமா யிருக்கவேண்டாம்: நீர் மவுனமாயிருந்
தால் நான்குழியிலிறங்குகிறவர்களுக் கொப்பா
வேன்.—நான்பிரார்த்திக்கையில் உமதுபரிசுத்த ௨
வாக்கியஸ்தானத்துக்கு நேரே என்கைகளை நீட்
டும்பொழுது, என்விண்ணப்பத்தின் சத்தத்தைக்
கேட்டருளும்.—பிறருக்குச் சமாதானவாழ்த்து ௩
தல் வாயினாற்சொல்லி, தங்கள் இருதயத்தில்துர்ச்
சிந்தனைகொள்ளுந்துன்மார்க்கருடனும், துர்க்கி
ரியைகளைச் செய்பவர்களுடனும் என்னை இ
ழுத்துக்கொள்ளாதிரும்.—அவர்களுடைய கிரி ௪
யைகளுக்கும் அவர்களுடைய தீமுயற்சிகளுக்
குமேற்க அவர்களுக்குச்செய்யும்: அவர்கள் கை
களின் செய்கைக்கேற்க அவர்களுக்கு நீதிப்படி
செய்யும்.—அவர்கள் யெகோவாவின் கிரி ௫
யைகளையும்அவருடையகைகளின்செய்கையை

(௩) ௨.இரா.௨௰.௩. (௪) சங்.௧.௧. (௫) சங்.௩௧.௬. சங்.௧.௧. (௭) யாத்.௩௰.௰௯,௨௰. ௧.தீமோ.௨.௮. (௮) சங்.௨௭.௪. (௯) சங்.௨௮.௩. (௰) யாத்.௨௩.௮. (௰௨) சங்.௨௭.௰௧. சங்.௨௨.௨௨.—(௨௭.சங்.௧.) சங்.௮௪.௰௧. ஏசா.௬௰.௰௯,௨௰. யாத்.௰௫.௩. ஏசா.௰௨.௨. (௪) சங்.௩௧.௨௰. சங்.௯௧.௧. (௫) சங்.௨௬.௮. சங்.௬௫.௪. லூக்.௨.௩௭. சங்.௯௰.௰௭. (௮) சங்.௨௪.௬. (௯) சங்.௯௯.௰௭. சங்.௱௪௩.௭. (௰) ஏசா.௪௯.௰௫. ஏசா.௪௰.௰௧. (௰௧) சங்.௨௫.௪.சங்.௫.௮. (௰௨) ௧.சாமு.௨௨.௯. ௨.சாமு.௰௬.௭,௮. அப்.௯.௧.(௰௩)எரே.௰௧.௰௯. எசேக்.௨௬.௨௰.(௰௪)ஏசா.௨௫.௯. அப௯. ௨௯.—(௨௮. சங். ௧.) சங்.௮௩.௧. (௨) ௧.இரா.௬.௨௨,௨௩. ௧.இரா.௮.௨௮,௨௯. சங்.௫.௭. (௩) எரே.௯.௮. (௪) ௨.தீமோ.௪.௰௪. வெளி.௰௮.௬. (௫) யோபு.௩௪.௨௬. ஏசா.௫.௰௨.

யும் மதிக்கிறதில்லை, ஆதலால் அவர் அவர்களை
௬ இடிப்பார், திரும்பக் கட்டமாட்டார்.—யெ
கோவா ஸ்தோத்திரிக்கப்படக்கடவர், அவர்
என் விண்ணப்பசத்தத்தைக்கேட்டிருக்கிறார்.—
௭ யெகோவா என்பெலம், என்கேடகம்; என்
நெஞ்சம் அவரில்நம்பிக்கைவைத்தது, நான்சகா
யம்பெற்றேன்: ஆதலால் என் இருதயமிகவும்க
ளிகூருகின்றது; நான்கீதத்தினால் அவரைக்கீர்த்
௮ தனம் பண்ணுவேன்.—யெகோவா அவனு
டையபெலம், தம்மால் அபிஷேகம்பெற்றவனை
௯ இரட்சிக்கிறபெலம்.—உம்முடைய சனங்களை
இரட்சித்து, உமது சுதந்தரத்தை ஆசீர்வதித்தரு
ளும் அவர்களைப்பரிபாலனம்பண்ணி, என்றும்
அவர்களை உயர்த்தியருளும்.

## ௨௯. சங்கீதம்.

*தாவீது யெகோவாவின் மகத்துவத்தைப்போதித்தல்.*

தாவீதின் சங்கீதம்.

பராக்கிரமசாலிகளே, யெகோவா மகிமை
யும் வல்லமையுமுள்ளவரென்று பிரசித்தப்படுத்
௨ துங்கள், அதையே பிரசித்தப்படுத்துங்கள்.—யெ
கோவாவின் நாமத்தின் மகிமையை வெளிப்
படுத்துங்கள்; பரிசுத்தமாகிய அலங்காரத்துட
னே யெகோவாவைத்தொழுது கொள்ளுங்
௩ கள்.—சமுத்திரத்தின்மேல் யெகோவாவின்
தொனிசெல்லுகின்றது: மகிமைபொருந்தியதே
வன் முழக்கஞ்செய்கிறார்: யெகோவா சலப்
௪ பெருக்கின்மேலிருக்கிறார்.-யெகோவாவின்
தொனி வல்லமையுள்ளது; யெகோவாவின்
௫ தொனி மகத்துவமுமுள்ளது.—யெகோவா
வின் தொனி ஏரஸ்மரங்களை முறிக்கின்றது; லி
பானோனின் ஏரஸ்மரங்களை யெகோவா மு
௬ றிக்கிறார்.-அவைகளைக் கன்றைப்போலவும், லி
பானோனும் சிரியோனும் காண்டாமிருகக்குட்
௭ டியைப்போலவும் துள்ளப்பண்ணுகிறார்.—யெ
கோவாவின் தொனி அக்கினிச்சுவாலைகளைவீ
௮ சுகின்றது.—யெகோவாவின் தொனிவனத்
தை அதிரப்பண்ணுகின்றது; யெகோவா கா
௯ தேஷ்வனத்தைஅதிரப்பண்ணுகிறார்.-யெகோ
வாவின் தொனிபிணைமான்களை ஈனப்பண்ணி,
சோலைகளைவெளியாக்குகின்றது: அவருடைய
ஆலயத்திலுள்ள யாவரும் அவர்மகிமையை வெ
௰ ளிப்படுத்துகிறார்கள்.—யெகோவா சலப்பிர
வாகத்தினமேல் வீற்றிருக்கிறார்; யெகோவா
௰௧ என்றும் இராசாவாய் வீற்றிருக்கிறார்.—யெ
கோவா தமது சனங்களுக்கு வல்லமையை அ
ருளுவார்; யெகோவா சமாதானத்தை அரு
ளித் தமதுசனங்களை ஆசீர்வதிப்பார்.

## ௩௰. சங்கீதம்.

*௧. ஆபத்தினின்றும் இரட்சிப்புப்பெற்றதினிமித்தம் துதிசெய்தல்: ௪. அனுக்கிரகம் பெற்றதினிமித்தம் தேவனுக்கு வாழ்த்துதல் சொல்லல். பிரார்த்தித்தல்.*

தாவீதின்வீட்டுப்பிரதிஷ்டைக்காகச் செய்யப்பட்ட
கானமாகிய சங்கீதம்.

யெகோவாவே, என்சத்துருக்கள் என்னை ௧
மேற்கொண்டுமகிழ நீர் விடாமல் என்னைக் கை
தூக்கி எடுத்தபடியினால், நான் உம்மைப்போற்
றுவேன்.-என் தேவனாகிய யெகோவாவே, ௨
நான் உம்மைநோக்கி ஓலமிட, நீர் என்னைச்
சொஸ்தப்படுத்தினீர்.—யெகோவாவே, நீர் ௩
என் பிராணனை மரித்தோர் ஸ்தலத்தினின்றுவி
டுவித்தீர்: நான் குழியிலிறங்காதபடி உயிரோடு
என்னைக்காப்பாற்றினீர்.—யெகோவாவின் ௪
பரிசுத்தர்களே, அவரைப்பாடுங்கள், அவருடை
யபரிசுத்தத்தைநினைந்து அவரைக்கீர்த்தனம்பண்
ணுங்கள்.—அவருடையகோபம் ஒருநிமிஷமாத் ௫
திரமிருக்கும்; அவர் தயையோ சீவனைத்தரும்:
சாயங்காலத்தில் அழுகை தங்கும், விடியற்கா
லத்தில் களிப்புண்டாகும்.— ஒருகாலமும் அ ௬
சைக்கப்படேனென்று நான் என் வாழ்விலே
சொன்னேன்.—யெகோவாவே, நீர் உமது ௭
அனுக்கிரகத்தினால் என் மலையை ஸ்திரப்படுத்
தினீர்: உமதுமுகத்தைமறைத்தபொழுதுநான்வி
யாகுலப்பட்டேன்.-யெகோவாவே, நான் ௮
உம்மைநோக்கி, நான் குழியில் இறங்குகையில்
என் இரத்தத்தினால் என்னலாபம், புழுதி உம்
மைத்துதித்து உமது சத்தியத்தைப்பிரகாசிப்பிக்
குமா.—யெகோவாவே, என்மேலிரங்கி எ ௯
னக்குச்செவிகொடும், யெகோவாவே, என
க்குச்சகாயராயிருமென்று சொல்லிப்பிரார்த்தித்
து,—யெகோவாவுக்கு விண்ணப்பஞ்செய் ௰
தேன்.—அப்பொழுது எனக்குஆனந்தக்களிப்பு ௰௧
வரத்தக்கதாக என் புலம்பலைமாற்றினீர்: என்
நா மவுனமாயிராமல் உம்மைப்பாடும்படி நீர்
என் இரட்டுப்போர்வையை எடுத்துவிட்டு, ம
கிழ்ச்சியென்னும் இடைக்கட்டினால் என்னைக்
கட்டினீர்.—என் தேவனாகிய யெகோவா ௰௨
வே, நான் என்றும் உம்மைக்கீர்த்தனம்பண்ணு
வேன்.

## ௩௧. சங்கீதம்.

*௧. சகாயம் பெறும்படி தேவனிடத்தில் பிரார்த்தித்தல்: ௰௯. தயைபெற்றதினிமித்தம் அவரைத் துதித்தல்.*

பாடகத்தலைவனிடத்தில்தாவீதுஒப்பித்தசங்கீதம்

யெகோவாவே, நான் உம்மில் நம்பிக்கை

---

(௭) சங்.௰௮.௨. சங்.௨௨.௪. (௯) உபா.௯.௨௯. ௧.இரா.௮.௪௯,௫௨. சங்.௭௮.௭௧. எஸ்ற.௧.௪.—(௨௯. சங். ௧.) ௧.நாளா.௰௬.௨௮,௨௯. சங்.௯௬.௭,௮,௯. (௨) ௨.நாளா.௨௰.௨௧. (௩) யோபு.௩௭.௪,௫. (௫) ஏசா.௨.௰௩. (௬) சங்.௱௰௪.௪. உபா.௩.௯. (௮) எண்.௰௩.௨௬. (௯) யோபு.௩௯.௧,௨,௩. (௰) ஆதி.௬.௰௭. யோபு.௩௮.௮,௨௭. சங்.௰.௰௬. (௰௧) சங்.௨௮.௮.—(௩௰. சங். ௧.) சங்.௨௮.௯. சங்.௨௫.௨. சங்.௩௫.௰௯,௨௪. (௨) சங்.௬.௨. சங்.௱௩.௩. (௩) சங்.௮௬.௰௩. சங்.௨௮.௧. (௪) ௧.நாளா.௰௬.௪. சங்.௯௭.௰௨. (௫) சங்.௱௩.௯. ஏசா.௨௬.௨௰. ஏசா.௫௪.௭,௮. ௨.கொரி.௪.௰௭. சங்.௬௩.௩. சங்.௱௨௬.௫. (௬) யோபு.௨௯.௰௮. (௭) சங்.௱௪.௨௯. (௮) சங்.௬.௫. சங்.௮௮.௰௧. சங்.௱௰௫.௰௭. சங்.௱௰௮.௰௭. ஏசா.௩௮.௰௮. (௰௧) ௨.சாமு.௬.௰௪. ஏசா.௬௧.௩. எரே.௩௧.௪. (௰௨) ஆதி.௪௯.௬. சங்.௰௬.௯. சங்.௫௭.௮.—(௩௧. சங். ௧.) சங்.௨௨.௫. சங்.௨௫.௨. சங்.௭௧.௧. ஏசா.௪௯.௨௩. சங்.௱௪௩.௧.

யாயிருக்கிறேன்; நான் ஒருபொழுதும்வெட்கம
டையாதபடி செய்யும்: உமது நீதியினிமித்தம்
௨ என்னை விடுவித்தருளும்.—உமதுசெவியை எனக்
குச்சாய்த்து, விரைவில் என்னை இரட்சித்தரு
ளும்: நீர் எனக்குத்திடமான கன்மலையும், என்
௩ னை இரட்சிக்குங்கோட்டையுமாயிரும்.—நீர்என்
கன்மலையுங்கோட்டையுமாயிருக்கிறீர்; ஆதலால்
உமதுநாமத்தினிமித்தம் என்னை நடத்திக்கொண்
௪ டுபோய்விடும்.—நீர்என்பெலம்: ஆதலால் மறை
வாக அவர்கள் எனக்குவைத்திருக்கிற வலையி
௫ னின்றுஎன்னைநீக்கிவிடும்.—உமதுகையில் என்
ஆவியை ஒப்பிக்கிறேன்: சத்திய தேவனாகிய
யெகோவாவே, நீரேஎன்னைமீட்டுக்கொண்
௬ டீர்.—அபத்தமானவைகளைப் பற்றிக்கொள்ளுகிற
வர்களைநான்வெறுத்து, யெகோவாவில் நம்
௭ பிக்கைவைத்திருக்கிறேன்.—உமது தயையினால்
நான் மகிழ்ந்துகளிகூருவேன்: நீர் என் உபத்திர
வத்தைப்பார்த்துநெருக்கங்களில் என் ஆத்துமத்
௮ தை அறிந்துகொண்டு,—சத்துருவின் கையில்என்
னை ஒப்பியாமல் விசாலஸ்தானத்தில் என்கால்
௯ களைநிலைக்கச்செய்தீர்.—யெகோவாவே,என்
மேலிரங்கும், நான்உபத்திரவப்படுகிறேன்: துக்
கத்தினால்என்கண்ணும்,என்பிராணனும்,என்னு
௰ தரமுங் கருகிப்போயினவே.—துக்கத்தினால் என்
பிராணனும், தவிப்பினால் என்ஆயுளுங் கழிந்து
போயின: என் பாவத்தினால் என்வல்லமை கு
றைந்துபோகின்றது, என் எலும்புகள் கரிந்து
௰௧ போகின்றன.—நான் என் சத்துருக்களுக்குள்,
விசேஷமாய், என் அயலாருக்குள் நிந்திக்கப்
பட்டு, எனக்கறிமுகமானவர்களுக்குப் பயங்க
ரத்துக்குக்காரணமாயிருந்தேன்: வழியில் என்
௰௨ னைக்கண்டவர்கள் விலகி ஓடினார்கள்.—முழுவ
தும் மறக்கப்பட்டமரித்தவனுக்கும்,தகர்ந்தபாத்
௰௩ திரத்திற்கு மொப்பானேனே.—அநேகர் என்னை
நிந்திக்கக்கேட்டேன், அவர்கள் ஏகமாய் எனக்
குவிரோதமாகஆலோசனைபண்ணி, என்பிராண
னைவாங்க எண்ணங்கொண்டபடியினாலேபயம்
௰௪ என்னைச் சூழ்ந்துகொண்டது.—யெகோவா
வே, நான் உம்மில்நம்புகிறேன்: நீரே என் தே
௰௫ வனென்று நான் சொல்லுகிறேன்.—என்காலங்
கள் உமது கையிலிருக்கின்றன: என் சத்துருக்க
ளுடைய கைக்கும், என்னைத்துயரப்படுத்துகிற
வர்களின் கைக்கும் என்னைவிடுவித்தருளும்.—
௰௬ நீர் உமதடியானுக்கு உமது முகத்தினொளியைத்
தோன்றப்பண்ணும்: உமது தயையினிமித்தம்
௰௭ என்னைஇரட்சித்தருளும்.—யெகோவாவே,
நான்உமக்குப்பிரார்த்தனைபண்ணினேன்; நான்
வெட்கமடையாதபடி செய்யும்: துன்மார்க்கர்
வெட்கமடைந்து, மரித்தோர்ஸ்தலத்தில் மவுன
மாயிருப்பார்களாக.—இறுமாப்புடனேயும், இ ௰௮
கழ்ச்சியுடனேயும், நீதிமானுக்கு விரோதமாய்ப்
பேசுகிறபொய் உதடுகள்மவுனமாயிருக்கக்கடவ
ன.—மனுபுத்திரருக்குமுன்பாகநீர் உமக்குப்பயப் ௰௯
படுகிறவர்களினிமித்தம்வைத்ததும், உம்மில் நம்
பியிருக்கிறவர்களினிமித்தம் நீர் ஏற்படுத்தினது
மாயிருக்கிற நன்மை எவ்வளவுமிகுதி.—மனுஷர் ௨௰
செய்யுந்துராலோசனைகளுக்கு அவர்களை உமது
சமுகத்தின்மறைவில்வைப்பீர்: நாவின்பழிமொ
ழிக்கு அவர்களை உமது கூடாரத்தில் ஒளித்துக்
காப்பாற்றுவீர்.—யெகோவா அரணான நகரத் ௨௧
தில் எனக்குத்தமது ஆச்சரியமான தயைசெய்தப
டியினால், அவருக்கு ஸ்தோத்திரம்.—உமதுகண்க ௨௨
ளுக்கு முன்னிராதபடிசேதிக்கப்பட்டேனென்
று நான் மனத்தீவிரத்தோடேசொன்னேன்: ஆகி
லும் நான் உம்மைநோக்கிக்கூப்பிட்டபொழுது
நீர் என் விண்ணப்பத்தின் சத்தத்தைக்கேட்டீர்.—
யெகோவாவின்பரிசுத்தர்களாகியநீங்களெல் ௨௩
லாரும்அவரில் அன்புகூருங்கள்: யெகோவா
உண்மையானவர்களைக் காப்பாற்றுகிறார், அகங்
காரிகளுக்கோ பூரணமாய்ப் பிரதிபலனளிக்கி
றார்.—யெகோவாவைக்காத்திருக்கிற நீங்க ௨௪
ளெல்லாருந்திடங்கொள்ளுங்கள், அவர் உங்கள்
இருதயத்தைத்திடப்படுத்துவார்.

## ௩௨. சங்கீதம்.

௧. பாவமன்னிப்பினாலுண்டாகும் ஆனந்தம்: ௩. பாவமுணர்ந்துசொல்வது பாவமன்னிப்புக்கு பயோகமெனல்: ௮. தேவனுடைய வாக்குத் தத்தம் வாழ்வுதருமெனல்.

தாவீதின் போத சங்கீதம்.

கட்டளைமீறுதல் மன்னிக்கப்பட்டும், பாவம் ம ௧
றைக்கப்பட்டு மிருக்கிறவனே வாழ்வுடையவ
ன்.-யெகோவாவினால்பாவஞ்சுமத்தப்படா ௨
மலும், ஆத்துமத்தில் வஞ்சகமில்லாமலுமிருக்கி
றமனுஷன் வாழ்வுடையவன்.—நான் மவுனமா ௩
யிருந்தகாலத்தில் நாள்முழுவதும்அழுதபடியால்
என்எலும்புகளெல்லாம் உலர்ந்துபோயின.—இர ௪
வும்பகலும் என்மேல்உமதுகைபாரமாயிருந்தது:
உஷ்ணகாலவறட்சிபோல் என் சத்துவம் வற
ண்டுபோயிற்று. சேலா.—நான் என்பாவத்தை ௫
உமக்குமறைக்காமல், உமக்கு என்பாவத்தை உ
ணர்ந்துசொன்னேன். யெகோவாவிடத்தில்
என்மீறுதல்களை உணர்ந்துசொல்லுவேனென்று
நான்சொல்ல, நீர் என்பாவத்தின் தோஷத்தை

(௨)சங்.௭௧.௨.. (௩) சங்.௰௮.௨. சங்.௨௩.௩. சங்.௨௫.௰௧. (௫) லூக்.௨௩.௪௬. அப்.௭.௫௯. (௬) யோனா.௨.௮. (௭) யோவா.௰.௨௭. (௮) உபா.௩௨.௩௰. ௧.சாமு.௰௭.௪௬. ௧.சாமு.௨௪.௰௮. சங்.௪.௧. சங்.௰௮.௰௯. (௯) சங்.௬.௭.(௰) சங்.௩௨.௩. சங்.௱௨.௩. (௰௧) சங்.௪௧.௭. ஏசா.௫௩.௪. யோபு.௰௯.௰௩. சங்.௩௮.௰௧. சங்.௮௮.௮,௰௮. சங்.௬௪.௮. (௰௨) சங்.௮௮.௪,௫. (௰௩) எரே.௨௰.௰. எரே.௬.௨௫. எரே.௨௰.௩. புல.௨.௨௨. மத்.௨௭.௧. (௰௬) எண்.௬.௨௫,௨௬. (௰௭) சங்.௨௫.௨. ௧.சாமு.௨.௯. சங்.௱௰௫.௰௭. (௰௮) சங்.௰௨.௩. (௰௯) ஏசா.௬௪.௪. ௧.கொரி.௨.௯. (௨௰) சங்.௨௭.௪. யோபு.௫.௨௧. (௨௧) சங்.௰௭.௭. ௧.சாமு.௨௩.௭. (௨௨) ௧.சாமு.௨௩.௨௬. ஏசா.௩௮.௰௧,௰௨. புல.௩.௫௪. யோனா.௨.௪.—(௩௨. சங். ௧.) ரோ.௪.௬,௭,௮. (௨) ௨.கொரி.௫.௰௯. யோவா.௧.௪௭. (௪) யோபு.௩௩.௭. (௫) நீதி. ௨௮.௰௩. ஏசா.௬௫.௨௪. லூக்.௰௫.௰௮,௨௧,. ௧.யோவா.௧.௯.

௬ மன்னித்தீர். சேலா.—இதினிமித்தம் தேவபத்
தன் எவனும் உம்மைக்கண்டடையுஞ்சமயத்தில்
உம்மைநோக்கி விண்ணப்பம்பண்ணுவான்: மி
குந்த சலப்பிரளயமாகும்பொழுதும் அது அவனை
௭ அணுகாதே.—நீர்என்புகலிடம்; உபத்திரவத்திற்
கு விலக்கி என்னை விடுவிக்கிறீர்; இரட்சிப்பின்
ஆரவாரங்களால்என்னைச்சூழ்விக்கிறீர். சேலா.—
௮ நான் உனக்குப்போதித்து, நீநடக்கவேண்டியவ
ழியை உனக்குக்காட்டுவேன்: நான் உனக்கு ஆ
லோசனையைக்கொடுப்பேன், என்கண் உன்மே
௯ லிருக்கும்.—வாரினாலுங்கடிவாளத்தினாலும்வாய்
கட்டப்பட்டாலொழிய உன்னை அணுகாதபுத்தி
யில்லாத குதிரையைப்போலவுங் கோவேறுகழு
௰ தையைப்போலவும் இருக்கவேண்டாம்.—துன்
மார்க்கனுக்கு அநேகதுக்கங்களுண்டாகும்: யெ
கோவாவை நம்புகிறவனெவனோ அவனை அ
௰௧ னுக்கிரகஞ்சூழ்ந்துகொள்ளும்.—நீதிமான்களே,
யெகோவாவில்மகிழ்ந்துகளிகூருங்கள்:நேர்
மையான இருதயமுள்ளவர்களாகிய நீங்களெல்
லாரும் ஆனந்தமுழக்கமிடுங்கள்.

## ௩௩. சங்கீதம்.

௧. தயையும் வல்லமையுமாகியஇவைகளினிமித்தம் யெகோவாவைத்துதித்தல்: ௰௨.தேவ பரிபாலனத்தை நன்குமதித்தல்.

நீதிமான்களே, யெகோவாவில் களிகூருங்
கள்: துதிசெய்வதுநேர்மையானவர்களுக்குத்தகு
௨ தி.—கின்னரத்தினாலேயெகோவாவைத்துதி
யுங்கள்: பத்துநரம்புள்ள வீணையினால் அவரைப்
௩ பாடுங்கள்.—அவருக்குப்புதியபாட்டைப்பாடுங்
கள். ஆனந்தமுழக்கத்துடனே சாமர்த்தியமாய்
௪ வாசியுங்கள்.—யெகோவாவின் வாக்கியம் ய
தார்த்தம்; அவருடைய சகலகிரியைகளுஞ்சத்தி
௫ யம்.—நீதியிலும் நியாயத்திலும் பிரியமாயிருக்கி
றார்: யெகோவாவின் அனுக்கிரகத்தினால்பூமி
௬ பூரணப்பட்டது.—யெகோவாவின் வாக்கி
னால் ஆகாயமண்டலங்களும், அவருடைய வா
யின்சுவாசத்தினால் அவைகளிலுள்ளசகலசேனை
௭ யும் உருவாக்கப்பட்டன.—அவர் சமுத்திரத்தின்
சலத்தைக்குவியலாகக்கூட்டி, அதின்வெள்ளங்
௮ களைக்களஞ்சியங்களில் சேர்க்கிறார்.—பூமண்ட
லமுழுவதும் யெகோவாவுக்குப்பயப்படுவ
தாக: பூமண்டலத்தில் வசிப்பவர்கள்யாவரும்அ
௯ வருக்கஞ்சுவார்களாக.—அவர்சொல்லச்சிருஷ்டி
யுண்டாயிற்று; அவர்கட்டளையிட அதுநிலைத்தி
௰ ருந்தது.—யெகோவா அந்நியதேசத்தாருடை
ய ஆலோசனையை விருதாவாக்குகிறார்: சனங்க
௰௧ ளின் உபாயங்களை அபத்தமாக்குகிறார்.—யெ
கோவாவுடைய ஆலோசனை சதாகாலமும்நிற்
கும், அவருடைய உள்ளத்தின்நினைவுகள்தலைமு
றைதோறும் நிலைப்படும்.—யெகோவாவை ௰௨
யே தங்கள் தேவனென்று கொண்ட தேசத்தா
ரும், அவர்தமக்குச்சுதந்தரமாகத்தெரிந்துகொண்
டசனங்களும்வாழ்வுடையவர்கள்.—யெகோ ௰௩
வாவானத்தினின்றுநோக்குகிறார்: அவர்மனுபுத்
திரரனைவரையும் உற்றுப்பார்க்கிறார்.—அவர்தமது ௰௪
வாசஸ்தானத்தினின்று பூமண்டலத்தில் வசிப்ப
வர்கள் யாவரையும் நோக்கிப்பார்க்கிறார்.—அவர் ௰௫
அவர்களுடையஇருதயங்களை ஒரேவகையாக உ
ருவாக்கி,அவர்களுடையகிரியைகள்யாவையுஞ்
சிந்தித்துப்பார்க்கிறார்.—எந்த இராசாவுந்தன்சே ௰௬
னைமிகுதியினால்இரட்சிப்புப்பெறான்; பராக்கிர
மவீரன் வல்லபமிகுதியினால் இரட்சிக்கப்படா
ன்.—இரட்சிக்கிறதற்குக்குதிரைவிருதா: அதுதன ௰௭
து மிகுந்த பலத்தினால் இரட்சிக்கமாட்டாது.—
கேள், யெகோவாவுக்குப்பயந்துஅவருடை ௰௮
ய அனுக்கிரகத்தைக் காத்திருக்கிறவர்களுடைய
பிராணனை மரணத்திற்கு விலக்கிப் பஞ்சகாலத்
தில் அவர்களை உயிரோடேகாத்துக்கொள்ளும்ப
டிக்கு,—அவர்கண்அவர்கள்மேலிருக்கின்றது.— ௰௯
நம்முடைய ஆத்துமம் யெகோவாவையே ௨௰
குறித்துக்காத்திருக்கின்றது: அவரே நமக்குத்து
ணை, நம்முடையகேடகம்.—அவருடையபரிசுத் ௨௧
த நாமத்தை நாம் நம்புகிறபடியினால், நமது இரு
தயம் அவரில்களிகூருகின்றது.—யெகோவா ௨௨
வே, நாங்கள் உம்மில் நம்புகிறபடியே உமதுத
யை எங்கள்மேலிருக்கக்கடவது.

## ௩௪. சங்கீதம்.

௧. தாவீது இரட்சிப்புப்பெற்றதினிமித்தம் யெகோவாவைத் துதித்தல்: ௰௧. உபதேசஞ் சொல்லல்.

தாவீது அபிமேலேக்குக்குமுன்பாக வேஷமாற அவனால்துரத்தி விடப்பட்டுப் புறப்பட்ட சமயத்தில் செய்த சங்கீதம்.

நான்எப்பொழுதும்யெகோவாவைவாழ்த் ௧
துவேன்: இடைவிடாதபடி அவர்துதி என்வாயி
லிருக்கும்.—என் ஆத்துமம் யெகோவாவின் ௨
மேன்மையைஎடுத்துப்பாராட்டும்: சிறுமைப்படு
கிறவர்கள் அதைக்கேட்டு மகிழுவார்கள்.—என் ௩
னோடே யெகோவாவின் மகிமையைவிளங்
கப்பண்ணுங்கள், நாம் ஏகமாய் அவர்நாமத்தைக்
கீர்த்தனம்பண்ணுவோம் வாருங்கள்.—நான் யெ ௪
கோவாவைத் தேடினேன், அவர் உத்தரந்தந்
து என்பயம் எல்லாவற்றிற்கும் என்னைநீங்கலாக்
கிவிட்டார்.—அவர்கள் அவரைநோக்கி ஒளிபெற் ௫

(௬) ௧.தீமோ.௧.௰௬. ஏசா.௫௫.௬. யோவா.௭.௩௪. (௭) சங்.௯.௯. யாத்.௰௫.௨. நியா.௫.௧. ௨.சாமு.௨௨.௧.(௯)நீதி. ௨௬.௩. யாக்.௩.௩. யோபு.௩௫.௰. (௰) நீதி.௰௩.௨௧. ரோ.௨.௯. சங்.௮௪.௰௨. நீதி.௰௬.௨௰. (௰௧) சங்.௬௪.௰.—(௩௩. சங். ௧.) சங்.௯௭.௰௨. சங்.௱௪௭.௧. (௨) சங்.௯௨.௨. (௩) சங்.௯௬.௧. ஏசா.௪௨.௰. வெளி.௫.௯.(௫)சங்.௪௫.௭. சங்.௱௰௯.௬௪. (௬) ஆதி.௧.௬,௭. எபி.௰௧.௩. ஆதி.௨.௧. (௭) ஆதி.௧.௯. யோபு.௨௬.௰.(௯)ஆதி.௧.௩. (௰) ஏசா.௮.௰. (௰௧) யோபு.௨௩.௰௩. நீதி.௰௯.௨௧. ஏசா.௪௬.௰.(௰௨)சங்.௬௫.௪. யாத்.௰௯.௫.(௰௩)௨.நாளா.௰௬.௯. யோபு.௨௮.௨௪. (௰௫) யோபு.௩௪.௨௧. எரே.௩௨.௰௯. (௰௭) நீதி.௨௧.௩௧. (௰௮) யோபு.௩௬.௭. ௧.பேதுரு.௩.௰௨. (௰௯) யோபு.௫.௨௰. (௨௧) சங்.௰௩.௫. யோவா.௰௬.௨௨.—(௩௪. சங். ௧.) எபே.௫.௨௰. ௧.தெச.௫.௰௮. (௨) எரே.௯.௨௩. ௧.கொரி.௧.௩௧. (௩) லூக்.௧.௪௬. (௪) மத்.௭.௭.

றார்கள்: அவர்கள் முகங்கள் வெட்கப்படவில்
௬ லை.—எளியவனாகிய இவன் ஓலமிட யெகோ
வா கேட்டு, இவன் உபத்திரவங்களெல்லாவற்
௭ றையும்நீக்கி இவனை இரட்சித்தார்.—யெகோ
வாவின் தூதன் அவருக்குப்பயப்படுகிறவர்க
௮ ளைச்சூழ்ந்துபாளயமிறங்கி இரட்சிக்கிறார்.—யெ
கோவா நல்லவராயிருக்கிறதை ருசித்துப்பா
ருங்கள்: அவரை நம்புகிறமனுஷன் வாழ்வுடை
௯ யவன்.—யெகோவாவின் பரிசுத்தர்களே, அ
வருக்குப்பயப்படுங்கள்: அவருக்குப்பயப்படுகி
௰ றவர்களுக்குக்குறைவில்லை.—சிங்கக்குட்டிகள்
தாழ்ச்சியடைந்து பட்டினியாயிருக்கும்: யெ
கோவாவைத்தேடுகிறவர்களுக்கு ஒருநன்மை
௰௧ யுங்குறைவுபடாது:—பிள்ளைகளே, வந்து எனக்
குச்செவிகொடுங்கள்: நான் யெகோவாவுக்
குப்பயப்படுதலை உங்களுக்குப்போதிப்பேன்.—
௰௨ சீவனைவிரும்பி, நன்மைஅனுபவிக்கும்படி நீர்க்
௰௩ காயுளை அபேட்சிக்கிற மனுஷன்யாவன்.—உன்
நாவைத்தீங்குக்கும், உன்னுதடுகளைக்கபடவாக்
௰௪ குக்கும் விலக்கிக்காத்துக்கொள்.—தீமையைவிட்
டு நன்மையைச்செய்; சமாதானத்தைத்தேடி அ
௰௫ தைத் தொடர்ந்துகொள்.—யெகோவாவின்
கண்கள்நீதிமான்கள்மேலிருக்கின்றன, அவர்செ
விகள்அவர்கள்பிரார்த்தனையைக்கேட்கின்றன.-
௰௬ துன்மார்க்கருடையநாமத்தைப்பூமியில் ஒழிவிக்
கும்படி, அவர்களுக்கு விரோதமாய் யெகோ
௰௭ வாவின் முகம்இருக்கின்றது.—நீதிமான்கள்ஓல
மிடுகிறார்கள், யெகோவா கேட்டுச்சகல உ
பத்திரவங்களையும்நீக்கிஅவர்களைஇரட்சிப்பார்.-
௰௮ யெகோவா நொறுங்குண்டஇருதயமுள்ளவர்
களுக்குச்சமீபமாயிருக்கிறார்; நருங்குண்டமன
௰௯ முள்ளவர்களை இரட்சிக்கிறார்.—நீதிமானுக்கு அ
நேகதுயரங்கள்வரும்: யெகோவா அவைக
ளெல்லாவற்றிலும் நின்று அவனைவிடுவிப்பார்.—
௨௰ அவர்அவனுடையஎலும்புகளெல்லாவற்றையுங்
காப்பாற்றுகிறார்: அவைகளிலொன்றும் முறிக்
௨௧ கப்படாது.—தீமை பாவியைக்கொல்லும்: நீதி
மானைவெறுக்கிறவர்கள்தண்டனைக்குட்படுவார்
௨௨ கள்.—யெகோவா தமது தாசரின் பிராணனை
மீட்டுக்கொள்ளுகிறார்: அவரை நம்புகிறவர்களி
ல் ஒருவனுந்தண்டனைக்குட்படான்.

## ௩௫. சங்கீதம்.

௧. தாவீது சத்துருக்களைக்குறித்துப்பிரார்த்தித்தல்: ௰௭. சுயரட்சையினிமித்தம் தேவனிடத்தில் விண்ணப்பஞ்செய்தல்.

தாவீதின் சங்கீதம்.

யெகோவாவே, என்னோடே வழக்காடுகி
றவர்களுடன் வழக்காடும்: என்னோடே யுத்தம்
பண்ணுகிறவர்களுடன்யுத்தம்பண்ணும்.—நீர்கே ௨
டகத்தையும் பரிசையையும் பிடித்து, எனக்குத்து
ணைநிற்க எழுந்திரும்.—ஈட்டியை ஓங்கி, என் ௩
னைத் துன்பப்படுத்துகிறவர்களுக்கெதிராக வழி
யைத்தடுத்து, நான் உன்இரட்சகரென்றுஎன்ஆத்
துமத்துக்குச்சொல்லும்.-என்பிராணனைவாங்கத் ௪
தேடுகிறவர்கள் வெட்கப்பட்டுக் கலங்குவார்க
ளாக: எனக்குத்தீங்குசெய்யநினைக்கிறவர்கள் பி
ன்னிட்டு இலச்சையடைவார்களாக.—காற்றுக்கு ௫
முற்பட்டபதர்போலாவார்களாக: யெகோவா
வின் தூதன் அவர்களை ஓட்டுவானாக.—அவர்களு ௬
டையவழி இருளுஞ் சறுக்கலுமாயிருப்பதாக:
யெகோவாவின் தூதன் அவர்களைத்துயரப்ப
டுத்துவானாக.—அவர்கள் என்னிமித்தங் காரண ௭
மின்றித்தங்கள்வலையைக்குழியில் ஒளித்துவைத்
தார்கள்; காரணமின்றி என் பிராணனுக்குக்குழி
வெட்டினார்களே.—அவனுக்குத்தெரியாதபடி அ ௮
வனுக்குஅழிவுவருவதாக; அவன் ஒளித்துவைத்
தவலை அவனையேபிடிப்பதாக: அவனேஅந்த அ
ழிவில்விழுவானாக.—என் ஆத்துமம் யெகோ ௯
வாவிற் களிகூர்ந்து, அவர்செய்யும் இரட்சிப்
பில்மகிழும்.—யெகோவாவே, உபத்திரவப் ௰
படுகிறவனை அவனிலும்பெலவானுக்கும், உபத்
திரவப்படும் எளியவனைக் கொள்ளைக்காரனுக்கு
ம் விடுவிப்பவராகிய உமக்கொப்பானவர் யாவ
ரென்று, என் எலும்புகளெல்லாஞ்சொல்லும்.—
பொய்ச்சாட்சிக்காரர்எனக்குவிரோதமாயெழுந் ௰௧
து, நான் அறியாதகாரியங்களை என்மேற்சுமத்தி
னார்கள்.—நான்செய்தநன்மைக்கு என்ஆத்துமத் ௰௨
தைக்கெடுக்கஅவர்கள்தீமையைச்செய்தார்கள்.—
அவர்கள் வருத்தமாயிருந்தபொழுது நான் இரட் ௰௩
டுச்சீலையைத்தரித்துஉபவாசஞ்செய்து, என்ஆத்
துமத்தைத்துயரப்படுத்தினேன்: என் விண்ணப்
பம் என்நெஞ்சில் அடுத்தடுத்துண்டாயிற்று.—
நான் என் சிநேகிதனையுஞ்சகோதரனையும்போல் ௰௪
அவனைநடத்தினேன்: மாதாவினிமித்தந்துக்கிக்
கிறவனைப்போலத் துக்கவஸ்திரந்தரித்துத்தலைகு
னிந்திருந்தேன்.-ஆகிலும்அவர்கள் என்ஆபத்துக் ௰௫
குச்சந்தோஷப்பட்டுக்கூட்டங்கூடினார்கள்: எ
னக்குத்தெரியாதபடி நீசரும் எனக்கு விரோத
மாய்க்கூட்டங்கூடி, ஓயாமல் என்னைப்பீறினார்
கள்.—விருந்துகளில் கபடபரிகாசக்காரரும் என் ௰௬
மேல் பற்கடிக்கிறார்கள்.—ஆண்டவரே, எது ௰௭
வரைக்கும் பார்ப்பீர்; என்பிராணனை அவர்கள்
அழிவுகளுக்கும், என்அருமையானதைச்சிங்கங்
களுக்கும்தப்புவித்தருளும்.—மகாசபையில் நான் ௰௮
உம்மைத்துதிப்பேன்: திரளான சனங்களுக்குள்

(௬) சங்.௩௪. ௨.சாமு.௨௨.௧. (௭) தானி.௬.௨௨. எபி.௧.௰௪. ஆதி.௩௨.௧,௨. ௨.இரா.௬.௰௭. சக.௯.௮.(௮)௧.பேதுரு.௨.௧.(௰)யோபு.௪.௰,௰௧. (௰௧) சங்.௩௨.௮.(௰௩)௧.பேதுரு.௨.௨௨.(௰௪)எசா.௧.௰௬,௰௭. ரோ.௰௨.௰௮. எபி.௰௨.௰௪. (௰௫) யோபு.௩௬.௭. ௧.பேதுரு.௩.௰௨. (௰௬) ஆமோ.௯.௪. நீதி.௰.௭. (௰௭) சங்.௱௪௫.௰௯,௨௰.(௰௮)சங்.௱௪௫.௰௮. சங்.௫௧.௰௭. எசா.௫௭.௰௫. எசா.௬௧.௧. எசா.௬௬.௨. (௰௯) நீதி.௨௪.௰௬. ௨.தீமோ.௩.௰௧,௰௨. (௨௰) யோவா.௰௯.௩௬.(௨௨)௨.சாமு.௪.௯. ௧.இரா.௧.௨௯. புல.௩.௫௮.—(௩௫.சங்.௧.)சங்.௪௩.௧. புல.௩.௫௮. யாத்.௰௪.௨௫. (௨) எசா.௪௨.௰௩. (௫) யோபு.௨௧.௰௮. சங்.௧.௪. எசா.௨௯.௫. ஓசி.௰௩.௩. (௮) நீதி.௫.௨௨. (௰) சங்.௫௧.௮. யாத்.௰௫.௰௨.(௰௨)எரே.௰௮.௨௰. யோவா.௰.௩௨.(௰௩)யோபு.௩௰.௨௫. சங்.௬௯.௰,௰௧. மத்.௰.௰௩. லூக்.௰.௬.(௰௫. சங்.௩௮.௰௭. யோபு.௩௰.௧.௮. (௰௬) யோபு.௰௬.௯. சங்.௩௭.௰௨. புல.௨.௰௬. (௰௭) ஆப.௧.௰௩. சங்.௨௨.௨௰.

௰௯ உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.—என் சத்து
ருக்கள் காரணமின்றி என்னைக்குறித்து மகிழ
வும்,காரணமின்றிஎன்னைவெறுக்கிறவர்கள்கண்
௨௰ சிமிட்டவும் விடாதிரும்.—அவர்கள் சமாதான
மாய்ப்பேசாமல், தேசத்தில்அமைதியாயிருக்கிற
வர்களுக்குவிரோதமாய் வஞ்சகமான காரியங்க
௨௧ ளைக்கருதிக்கொண்டு,-எனக்குவிரோதமாய்த்தங்
கள்வாயை விரியத்திறந்து, ஆ, ஆ, எங்கள் கண்
௨௨ கண்டதென்கிறார்கள்.-யெகோவாவே, நீர்
கண்டீர்: மவுனமாயிராதேயும்: ஆண்டவரே,
௨௩ எனக்குத்தூரமாயிராதேயும்.—என் தேவனே,
என் ஆண்டவரே, சாக்கிரதையாகி, என்வழக்
கிலே நியாயத்தீர்ப்புச்செய்ய விழித்து எழுந்தி
௨௪ ரும்.-என் தேவனாகிய யெகோவாவே, உ
மதுநீதியின்படி எனக்குநியாயஞ்செய்யும்;அவர்
௨௫ கள் என்னைக்குறித்து மகிழவிடாதிரும்.-ஆ, எங்
கள் மனவிருப்பமென்று அவர்கள் எண்ணுதப
டிக்கும், நாங்கள் அவனைவிழுங்கினோமென்று
௨௬ அவர்கள் சொல்லாதபடிக்குஞ் செய்யும்.-எனக்
கு நேரிட்டதீமையைக்கண்டுசந்தோஷிக்கிறவர்
கள் ஏகமாய் வெட்கப்பட்டு முகங்கவிழ்ந்திருப்
பார்களாக: எனக்கு விரோதமாக மேன்மைபா
ராட்டுகிறவர்கள் வெட்கத்தாலுங் கனவீனத்தா
௨௭ லும் மூடப்படுவார்களாக.-என் நீதியிற் பிரிய
மாயிருக்கிறவர்கள் ஆனந்தமுழக்கமிட்டுமகிழ்ந்
து, தமது தாசன்வாழ்வடையவிரும்புகிற யெ
கோவா மிகவும்புகழப்படக்கடவரென்றுஎப்
௨௮ பொழுதுஞ்சொல்வார்களாக.-அதினால் என்நா
உமது நீதியைப்பேசி, நாள்முழுவதும் உமது
துதியைப்பிரகாசிக்கப்பண்ணும்.

## ௩௬. சங்கீதம்.

௧. மனுஷருடைய தீங்கை எடுத்துக்காட்டல்: ௫. தேவனுடைய தயையை வருணித்தல்.

பாடகத்தலைவனிடத்தில் யெகோவாவின் தாசனாகிய தாவீது ஒப்பித்த சங்கீதம்.

துன்மார்க்கன் செய்துவருகிற அதிக்கிரமத்தி
னால், அவனுடைய கண்ணுக்குமுன் தேவ பய
மில்லையென்று என்னுள்ளத்தில் தெரியவருகின்
௨ றது.-அவன் தன் அதிக்கிரமம் அரோசிகமுள்ள
தென்றுகாணப்படுமளவும்தன்னைப்பிரியப்படுத்
௩ துகிறான்.-அவன்வாய்மொழிகள் தீமையும் வஞ்
சனையுமுள்ளன: அவன் விவேகியாய்நடப்பதை
யும் நன்மைசெய்வதையும் ஒழிந்துவிட்டான்.-
௪ தன்படுக்கையின்மேல்தீமைகளைச்சிந்திக்கிறான்;
உத்தமமல்லாத வழியில் நிலைகொள்ளுகிறான்;
௫ துர்க்கிரியையைவெறுக்கிறதில்லை.—யெகோ
வாவே, உமது தயை வானபரியந்தமும்,உமது
சத்தியம் ஆகாயபரியந்தமும் எட்டுகின்றன.—
உமது நீதி மகத்தான மலைகளைபபோலிருக்கின் ௬
றது; உம்முடைய நியாயத்தீர்ப்புக்கள் மிகவும்
ஆழமானவைகள்: யெகோவாவே, நீர்மனு
ஷரையும்மிருகங்களையும்பரிபாலித்துவருகிறீர்.-
தேவனே, உமது அன்பு எவ்வளவு அருமை. ௭
மனுபுத்திரர் உமதுசிறகுகளின் நிழலின்கீழ்வந்து
நம்பிக்கையாய்த்தங்குவார்கள்.-அவர்கள் உமது ௮
வீட்டிலுள்ள சம்பூரணத்தினால் திருத்தி அடை
வார்கள்; நீர் உமதுஆனந்த நதியின்சலத்தை அ
வர்கள் பானம்பண்ணுவிப்பீர்.—சீவ ஊற்றின் ௯
கண் உம்மிடத்திலிருக்கின்றது: நாங்கள் உமது
ஒளியினால் ஒளியைக்காண்போம்.—உம்மை அ ௰
றிந்தவர்களிடத்தில் உமதன்பையும்,உத்தமஇரு
தயமுடையவர்களிடத்தில் உமது நீதியையும் நி
லைப்படுத்தியருளும்.-அகங்காரிகளுடைய கால் ௰௧
என்னை அணுகவும்,துன்மார்க்கருடையகை என்
னை அகற்றவும் விடாதிரும்.—அங்கேதுன்மார்க் ௰௨
கர் விழுந்தார்கள்: அவர்கள் தள்ளுண்டார்கள்,
எழுந்திருக்கமாட்டார்கள்.

## ௩௭. சங்கீதம்.

சன்மார்க்கர் துன்மார்க்கர் என்னும் இருவருடைய நிலைமையைப்பார்த்துத் தேவனைச்சார்ந்து பொறுதியாயிருப்பது நலமென்று தாவீதுதெரிவித்தல்.

தாவீதின் சங்கீதம்.

நீ துன்மார்க்கர்நிமித்தம் விசனப்படாதிரு,துர்க் ௧
கிரியைசெய்பவர்கள்மேல் பொறாமைகொள்ளா
திரு.—அவர்கள் சீக்கிரமாய்ப் புல்லைப்போலச் ௨
சேதிக்கப்படுவார்கள்,பசும்பூண்டுபோலவாடிப்
போவார்கள்.—யெகோவாவில் நம்பிக்கை ௩
வைத்துநன்மைசெய், அதினால் நீ சுயதேசத்தில்
வசித்துவாழ்வடைவாய்; இதுநிச்சயம்.—நீ யெ ௪
கோவாவிடத்தில் களிகூர்ந்திரு; அவர்உன்ம
னோவாஞ்சை முழுவதையும் பூரணப்படுத்துவா
ர்.-உன்பாதையை யெகோவாவுக்கு ஒப்பு ௫
வி; அவர்மேல்நம்பிக்கையாயிரு; அவர் அவை
களைச் சித்திக்கப்பண்ணுவார்.—ஒளியைப்போ ௬
லஉன்நீதியையும், மத்தியானத்தைப்போல உன்
நியாயத்தையும் பிரகாசிக்கப் பண்ணுவார்.-யெ ௭
கோவாவுக்கமைந்து,அவரைக்காத்துக்கொண்
டிரு: தன்வழியிலேசித்திபெற்றுத்துராலோசனை
செய்பவனிமித்தம் விசனப்படாதிரு.—கோபத் ௮
தை நீங்கிக் குரோதத்தைவிடு: தீங்குசெய்யும்ப
டி எவ்விதத்திலும்விசனத்தால் ஏவப்படவேண்
டாம்.—துர்க்கிரியைசெய்பவர்கள் சேதிக்கப்ப ௯
டுவார்கள்:யெகோவாவைக்காத்திருப்பவர்க
ளோ பூமியைச் சுதந்தரித்துக்கொள்வார்கள்.—
அற்பகாலத்துக்குப்பின் துன்மார்க்கனிரான்: அ ௰

(௰௯) சங்.௰௩.௪. சங்.௩௮.௰௯. யோபு.௰௫.௰௨. நீதி.௬.௰௩. புல.௩.௫௨. யோவா.௰௫.௨௫.(௨௧)சங்.௨௨.௰௩.(௨௨) யாத்.௩.௭. அப்.௭.௩௪. (௨௪) உ.தெச.௧.௬. (௨௫) சங்.௨௭.௰௨. புல.௨.௰௬. (௨௭) ரோ.௰௨.௰௫. சங்.௱௪௯.௪.—(௩௬.சங்.௧.) ரோ.௩.௰௮. (௨) உபா.௨௯.௰௯.(௩)அதி.௰௨.௨. எரே.௪.௨௨.(௪)நீதி.௪.௰௬. ஏசா.௬௫.௨.(௬)யோபு.௰௧.௮. ரோ.௰௧.௩௩. ௧.தீமோ.௪.௰.(௭)சங்.௩௧.௰௯.ரூத்.௨.௰௨.சங்.௯௧.௪.(௮)௬௫.௪. யோபு.௨௰.௰௭. வெளி.௨௨.௧. சங்.௰௬.௰௧.(௯)எரே.௨.௰௩. யோவா.௪.௰,௰௪. ௧.பேதுரு.௨.௯.(௰)எரே.௨௨.௰௬.—(௩௭. சங். ௧.) சங்.௭௩.௩. நீதி.௨௩.௰௭. (௨) சங்.௯௰.௫,௬. (௪) ஏசா.௫௮.௰௪.(௫)சங்.௫௫.௨௨. நீதி.௰௬.௩. மத்.௬.௨௫. லூக்.௰௨.௨௨. ௧.பேதுரு.௫.௭. மீகா.௭.௯. (௭) சங்.௬௨.௧. ஏசா.௩௰.௰௫. புல.௩.௨௬. (௮) எபே.௪.௨௬.(௯) ஏசா.௫௭.௰௩.

வன் ஸ்தானத்தை நீ தேடுவாய், அது இராது.—
௰௧ தாழ்ந்தசிந்தையுள்ளவர்களோ பூமியைச் சுதந்த
ரித்துக்கொண்டு, சமாதானத்தின்மிகுதியினால்ஆ
௰௨ னந்தத்தை அனுபவிப்பார்கள்.—துன்மார்க்கன்
நீதிமானுக்கு விரோதமாய்த் துராலோசனைசெய்
௰௩ து, அவனைக்குறித்துப் பற்கடிக்கிறான்.—ஆண்
டவர் அவனைநகைக்கிறார்: அவன் நாள்வருகிற
௰௪ தென்று கண்டறிந்திருக்கிறார்.—சிறுமைப்படுகிற
வர்களும், எளியவர்களுமாயிருக்கிறவர்களை வி
ழுத்தும்படிக்கும், நீதிநெறியுள்ளவர்களைக்கொ
லைசெய்யும்படிக்குந்துன்மார்க்கர் கட்கத்தையுரு
௰௫ வித்தங்கள் வில்லை வளைக்கிறார்கள்.—அவர்கள்
கட்கம் அவர்கள் சுயநெஞ்சத்தையுருவும், அவர்
௰௬ கள் வில்லுமுறிந்துபோம்.—துன்மார்க்கர் பலர்அ
டைந்தசெல்வத்திலும், நீதிமான் ஒருவனுக்குண்
௰௭ டாகிய அற்பபொருள் உத்தமம்.—துன்மார்க்க
ருடையபுயங்கள்முறிந்துபோகும்:நீதிமான்களை
௰௮ யோ யெகோவா தாங்குகிறார்.—நேர்மையுள்
ளவர்களுடைய நாள்களை யெகோவா அறிந்
திருக்கிறார்: அவர்களுடைய சுதந்தரம் என்றும்நி
௰௯ லைப்படும்.—அவர்கள் ஆபத்துக்காலத்தில்வெட்
கமடையார்கள்: பஞ்சகாலத்தில் திருத்திபெற்றி
௨௰ ருப்பார்கள்.—துன்மார்க்கர் அழிந்துபோவார்கள்,
யெகோவாவின் சத்துருக்கள் ஆட்டுக்குட்டி
யின் நிணத்தைப்போல் ஒழிந்து போவார்கள்:
௨௧ புகையாய் ஒழிந்துபோவார்கள்.—துன்மார்க்கன்
கடன்வாங்கினால் பின்புசெலுத்துகிறதில்லை: நீ
௨௨ திமானோ தயைசெய்து கொடுக்கிறான்.—அவரால்
ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் தேசத்தைச்சுதந்தரித்
துக்கொள்ளுவார்கள்; அவரால் சபிக்கப்பட்ட
௨௩ வர்கள் சேதிக்கப்படுவார்கள்.—யெகோவா
நல்லமனுஷனுடைய நடைகளைநிலைப்படுத்துகி
றார்: அவன்வழியை அனுகூலப்படுத்துகிறார்.—
௨௪ அவன்விழுந்தாலும் முழுமையும் நாசமாகான்:
யெகோவா தமதுகையினால் அவனைத்தாங்கு
௨௫ கிறார்.—நான் இளைஞனாயிருந்தேன் விருத்தனா
னேன்; ஆனாலும் நீதிமான் கைவிடப்பட்டதை
யும், அவன்சந்ததி அன்னம் இரக்கிறதையும்நான்
௨௬ காணவில்லை.—அவன் தினமுந் தயைசெய்துக
டன்கொடுப்பான்: அவன்சந்ததி ஆசீர்வதிக்கப்
௨௭ படும்.—தீமையைவிட்டு நன்மைசெய்; நெடுநாள்
௨௮ தேசத்தில் வசித்திருப்பாய்.—யெகோவா நியா
யத்திற்பிரியப்படுகிறார், அவர்தமது பத்தரைக்கை
விடார்; அவர்கள் என்றும் இரட்சிக்கப்படுவார்
கள்: துன்மார்க்கருடைய சந்ததியோ சேதிக்கப்
௨௯ படும்.—நீதிமான்கள்தேசத்தைச்சுதந்தரித்துக்கொ
ண்டு, அதில் எப்பொழுதும் வாசம்பண்ணுவார்
௩௰ கள்.—நீதிமானுடையவாயினின்றுஞானம்புறப்
படும், அவனுடைய நா நியாயத்தை வசனிக்
கும்.—அவன் தேவன் அருளிய வேதப்பிரமா ௩௧
ணம் அவன் இருதயத்திலிருக்கின்றது; அவன்
நடைகள் சறுக்கமாட்டாது.—துன்மார்க்கன்நீதி ௩௨
மானைக்காத்திருந்து, அவனைக் கொலைசெய்யவ
கைதேடுகிறான்.—இவன்கையில் யெகோவா ௩௩
அவனைஒப்பிக்கமாட்டார், அவர்கள் இவனை ஆக்
கினைக்குள்ளாகத்தீர்க்கவும் விடார்.—யெகோ ௩௪
வாவைக்காத்து அவர்வழியில் நட, நீ தேசத்
தைச்சுதந்தரித்துக்கொள்ளும்படி அவர் உன்னை
உயர்த்துவார்: துன்மார்க்கர் சேதிக்கப்படுவார்
கள், அதைக்காண்பாய்.—துன்மார்க்கன் மிகப்ப ௩௫
லத்தவனும், தனக்கேற்றநிலத்தில்நிற்கிற பச்சை
மரத்தைப்போலத் தழைத்தவனுமாயிருக்கக்கண்
டேன்.—ஆனாலும்அவன் அகன்றுபோனான், அவ ௩௬
னில்லை: பாருங்கள், அவனைத் தேடினேன், அ
வன் காணப்படவில்லை.—சற்குணனை நோக்கி, ௩௭
நேர்மையானவனைப்பார், அவன்முடிவு சமாதா
னம்.—அதிக்கிரமஞ்செய்கிறவர்கள் ஏகமாய் நா ௩௮
சமடைவார்கள்: சேதிக்கப்படுவதே துன்மார்க்க
ருடைய முடிவு.—நீதிமான்களுக்கு இரட்சிப்பு ௩௯
யெகோவாவினால்வரும்: ஆபத்துக்காலத்தில்
அவரே அவர்கள்பெலம்.—யெகோவா அவர்க ௪௰
ளுக்குத்துணைநின்று அவர்களைவிடுவிப்பார்: அ
வர்கள் அவரைச்சார்ந்துகொள்ளுகிறார்கள், ஆத
லால் அவர்அவர்களைத்துன்மார்க்கருக்கு விலக்கி
இரட்சிப்பார்.

## ௩௮. சங்கீதம்.

தாவீது தன்துக்கத்தினிமித்தம் தேவனிடத்திற்
புலம்பல்.

நினைவுகூரும்படி தாவீது செய்த சங்கீதம்.

யெகோவாவே, கோபங்கொண்டுஎன்னைக் ௧
கடிந்துகொள்ளாதிரும்.—நீர் உக்கிரங்கொண்டு ௨
என்னைத்தண்டியாதிரும்: உம்முடைய அம்புகள்
எனக்குள்ளேதைத்திருக்கின்றன, உமதுகை என்
மேலிறங்கிற்று.—உமது கோபத்தினிமித்தம் என் ௩
மாமிசத்தில் சொஸ்தமில்லை; என் பாவத்தினால்
என் எலும்புகளில் அமைதியில்லை.—என் பாவங் ௪
கள் என் தலைக்குமேலாகப்பாய்ந்துபோயின: அ
வைகள் பாரச்சுமையாயிருக்கின்றன, என்னாலே
தாங்கமுடியாது.—என் மதிகேட்டினிமித்தம் என் ௫
னிலுள்ள புண்கள்அழுகித்தூர்க்கந்தமெடுத்தன.—
நான் மடங்கி, மிகவுங்குனிந்து, எப்பொழுதுந் ௬
துக்கத்தோடேதிரிகிறேன்.—என் குடல்கள் தண ௭
லினால் நிறைந்திருக்கின்றன: என் மாமிசத்தில்
சொஸ்தஞ்சற்றுமில்லை.—நான் மெலிவடைந்து ௮
மிகவும்நொறுக்கப்பட்டிருக்கிறேன்: என் இரு
தயத்தின் கொந்தளிப்பினிமித்தம் நான் கதறுகி
றேன்.—ஆண்டவரே, என்வாஞ்சைமுழுவதும் ௯
உமக்குமுன்பாக இருக்கின்றது; என் தவிப்பு உ

(௰௧)மத்.௫.௫. (௰௫) மீகா.௫.௬.(௰௬)நீதி.௰௫.௰௬. ௧.தீமோ.௬.௬.(௰௭)எசேக்.௩௰.௨௧,.(௰௮)சங்.௧.௬. ஏசா.௩௰.௨௧. (௰௯) யோபு.௫.௨௰. (௨௩) ௧.சாமு.௨.௯. நீதி.௰௬.௩. (௨௪) சங்.௩௪.௰௯,௨௰. நீதி.௨௪.௰௬. ௨.கொரி.௪.௯. (௨௬) உபா.௰௫.௮,௰. (௨௭) ஏசா.௧.௰௬,௰௭. (௨௮) நீதி.௨.௨௨. ஏசா.௰௪.௨௰. (௨௯) நீதி.௨.௨௧. (௩௰) மத்.௰௨.௩௫. (௩௧) உபா.௬.௬. ஏசா.௫௧.௭. (௩௩) ௨.பேது௫.௨.௯. (௩௪) சங்.௨௭.௰௪. சங்.௯௧.௮.(௩௫)யோபு.௫.௩(௩௬) யோபு.௨௰.௫,. (௩௭) ஏசா.௫௭.௨. (௪௰) தானி.௩.௰௭,௨௮.—(௩௮. சங். ௧.) சங்.௬.௧. (௨) யோபு.௬.௪. சங்.௩௨.௪.(௪)எஸ்ரா.௯.௬. மத்.௰௧.௨௮.(௬)யோபு.௩௰.௨௮.(௭)யோபு.௭.௫. (௮) யோபு.௩.௨௩. சங்.௨௨.௧. ஏசா.௫௯.௰௧.

௰ மக்குமறைவாயிருக்கவில்லை.—என் இருதயங்கு
ழம்பிஅலைகின்றது, என்பெலம் என்னைவிட்டுப்
௰௧ போயிற்று: என் கண்களின் ஒளிநீங்கிற்று.–என்
நேசரும் என் பந்துசனங்களும் என்வாதையைக்
கண்டுவிலகுகிறார்கள்; என்அயலாரும்தூரத்தில்
௰௨ நிற்கிறார்கள்.–என் பிராணனைவாங்க வகைதேடு
கிறவர்கள் எனக்குக்கண்ணிகளைவைக்கிறார்கள்;
தீமைவருவிக்கத்தேடுகிறவர்கள், தீமொழிகளைப்
பேசி நாள்முழுவதும் வஞ்சனைகளைநினைக்கிறார்
௰௩ கள்.–ஆனாலும் நான் செவிடனைப்போல்அதைக்
கேட்கவில்லை;வாய்திறவாமல் ஊமைபோலிருந்
௰௪ தேன்.—காது கேளாதவனும், வாயால் கடிந்து
௰௫ கொள்ளாதவனும் போலிருந்தேன்.—யெகோ
வாவே,உம்மைக்காத்திருக்கிறேன்; ஆண்டவ
ரே, என் தேவனே, நீரே உத்தரங்கொடுப்பீர்.–
௰௬ அவர்கள் என்னைக்குறித்துச்சந்தோஷப்படாதப
டி அப்படிச் சொன்னேன்: என் கால்சறுக்கி
னால் எனக்கு விரோதமாய்ப் பெருமைபாராட்டு
௰௭ வார்கள்.—நான்தடுமாறிவிழப்போகிறேன், என்
துக்கம்எப்பொழுதும் என்முன்னிருக்கின்றது.–
௰௮ நான் என் அக்கிரமத்தை உணர்ந்துசொல்வேன்,
௰௯ என் பாவத்தினிமித்தந் துக்கப்படுகிறேன்.—
என்சத்துருக்கள் துணிவும் பலமுமுள்ளவர்கள்:
நியாயமின்றி என்னைப்பகைக்கிறவர்கள் அநே
௨௰ கர்.—நான் நன்மைசெய்யத் தேடுகிறதினிமித்
தம் நன்மைக்குத் தீமைசெய்கிறவர்களும் என்
௨௧ னை விரோதிக்கிறார்கள்.–யெகோவாவே, எ
ன்னைக்கைவிடாதிரும்: என் தேவனே, என
௨௨ க்குத் தூரமாயிராதிரும்.—என் இரட்சிப்பாகிய
ஆண்டவரே, எனக்குச்சகாயஞ்செய்ய வி
ரைந்தருளும்.

## ௩௯. சங்கீதம்.

௧. தாவீது தன் சிந்தனைகளைக்காத்தல்: ௪. மனுஷ
ருடைய வாழ்வு நிலையற்றதும் மாயையுமெனச்
சிந்தித்தல்: ௭. தாவீது பிரார்த்தித்தல்.

---

பாடகத்தலைவனாகிய யெதூதூனிடத்தில் தாவீது
ஒப்பித்த சங்கீதம்.

நான், என்நாவினால் பாவஞ்செய்யாதபடிக்கு
என்நெறிகளைக்காப்பேன்: துன்மார்க்கன் என்
முன்னிற்கையில் நான் என்வாயைக் கடிவாள
மிட்டாற்போலடக்கிக்கொண்டிருப்பேனென்
௨ றேன்.—நான் மவுனமாகி ஊமைபோலிருந்தே
ன், நான் நன்மையாயினும்பேசவில்லை; அதி
௩ னால் என்துக்கம் அதிகரித்தது.—என் இருதயம்
எனக்குள்ளே எரிந்தது, நான்தியானித்திருக்கை
யில் அக்கினிவேகிற்று: என்நாவினால்பேசினே
௪ ன்.–யெகோவாவே, என் ஆயுளின் அளவை
நான் அறியும்படி என்முடிவையும் என்வாழ்நா
௫ ளின் அளவையும் எனக்குணர்த்தியருளும்.–பா
ரும், என்ஆயுளைநாலுவிரற்கடையளவாக்கினீர்;
என்ஆயுள் உமதுபார்வைக்கு இல்பொருள்போல
விருக்கின்றது: தங்கள் தங்கள்வாழ்விலும் மனு
ஷர்யாவரும் மாயை, இது நிச்சயம். சேலா.–ஒவ் ௬
வொருமனுஷனும் நிழலைப்போல் செல்லுகிறா
னே: அவர்கள் விருதாவாகச்சஞ்சலப்படுகிறார்
கள்: அவன் குவிக்கிறான், சேர்ப்பவன் இன்னா
னென்று அறியான்.—ஆண்டவரே, இப்பொ ௭
ழுது எதை நான் எதிர்பார்த்திருக்கிறேன்; உம்மி
டத்தில் எனக்கு நம்பிக்கையுண்டு.—என் சகல ௮
அதிக்கிரமங்களினின்றும் என்னை விடுவித்தரு
ளும்: மதிகேடனால் நிந்திக்கப்பட என்னை ஒப்
பியாதிரும்.—இது உம்மால்வந்தபடியால் நான் ௯
வாய்திறவாமல் மவுனமாயிருந்தேன்.—என்னி ௰
லிருந்து உமது வாதையை அகற்றிவிடும்: உமது
கையின் அடியினால் நான்சோர்ந்துபோனேன்.–
பாவத்தினிமித்தம் நீர் மனுஷனைக்கடிந்துதண்டி ௰௧
க்கும்பொழுதுபொட்டைப்போலஅவன்சௌந்
தரியத்தை அழியப்பண்ணுகிறீர்: மனுஷர் யாவ
ரும் மாயை, இதுநிச்சயம். சேலா.—யெகோ ௰௨
வாவே, என்விண்ணப்பத்தைக்கேளும், என்பி
ரார்த்தனைக்குச்செவிசாய்த்தருளும்; என்கண்ணீ
ரைக்கண்டு மவுனமாயிராதேயும்: நான் உமக்
குமுன்பாகப்பரதேசியும், என் முன்னோரெல்
லாரையும்போலப்புறவாசியுமாயிருக்கிறேன்.—
நான் இனியிராமல்ஒழிந்துபோகுமுன்திடம்பெ ௰௩
றும்படி எனக்கிடந்தாரும்.

## ௪௰. சங்கீதம்.

௧. தேவனுடைய தயையை நிருணயித்தல்: ௬.
கட்டளைக்கமைதலே பிரதானபலி: ௰௩.பிரார்த்
தனைசெய்தல்.

---

பாடகத்தலைவனிடத்தில் ஒப்பிக்கப்பட்ட தாவீ
தின் சங்கீதம்.

நான் யெகோவாவைக் காத்துக்கொண்டி ௧
ருந்தேன்; அவர் என் மேல்சிந்தைவைத்து, என்
கூப்பிடுதலைக்கேட்டார்.–பயங்கரமான குழியி ௨
லும் உளைச்சேற்றிலும் நின்று என்னைத்தூக்கி,
கன்மலையின்மேல் என்காலைநிறுத்தி, என்நடை
களை ஸ்திரப்படுத்தி,—நம்முடைய தேவனுக் ௩
குத்துதியாக என்வாயிலே புதுப்பாட்டை அவர்
தந்தார்: இதைக்கண்டு அநேகர்பயந்து, யெகோ
வாவில் நம்பிக்கைவைப்பார்கள்.—அகங்காரி ௪
களையும் பொய்யைச்சார்ந்திருக்கிறவர்களையும்
நோக்காமல் யெகோவாவை நம்புகிற மனு
ஷன் வாழ்வுடையவன்.—என் தேவனாகிய ௫
யெகோவாவே, நீர் எங்கள்நிமித்தம் நிறை
வேற்றின உமது அற்புதகிரியைகளும் சிந்தனை
களும் அநேகம், அவைகளை நான் விவரித்து மு
யன்றால் உமக்குமுன்பாகத்தொகைப்படுத்தமு

---

(௰௧) சங்.௩௧.௰௧. லூக்.௰.௩௧,௩௨. லூக்.௨௩.௪௯. (௰௫) ௨.சாமு.௰௬.௰௨. (௰௬) உபா.௩௨.௩௫. (௰௮) சங்.௩௨.௫. நீதி.௨௮.௰௩. ௨.கொரி.௭.௯,௰. (௰௯) சங்.௩௫.௰௯. (௨௰) ௧.யோவா.௩.௰௨.—(௩௯. சங். ௧.) யாக்.௩.௨. கொலோ.௪.௫. (௩) எரே.௨௰.௯. (௪) சங்.௯௰.௰௨. (௫) சங்.௯௰.௪. சங்.௬௨.௯. (௬) ௧.கொரி.௭.௩௧. யாக்.௪.௰௪. பிர.௨.௰௮,௨௧. லூக்.௰௨.௨௰,௨௧. (௯) யோபு.௨.௰. (௰) யோபு.௯.௩௪. (௰௧) யோபு.௪.௰௯. ஏசா.௫௰.௯. ஓசி.௫.௰௨. (௰௨) லேவி.௨௫.௨௩. ௨.கொரி.௫.௬. எபி.௰௧.௰௩. ௧.பேதுரு.௧.௰௭. ஆதி.௪௭.௯.—(௪௰.சங்.௧.) சங்.௨௭.௰௪. (௨) சங்.௬௯.௨,௰௪. (௪) சங்.௩௪.௮. எரே.௰௭,௭. (௫) யாத்.௰௫.௰௨. ஏசா.௫௫.௮.

௬ டியாது: அவைகள் எண்ணிறந்தவைகள்.—பலி
யிலும் நைவேத்தியத்திலும் உமக்குப்பிரியமில்
லை; என் செவிகளைத்திறந்தீர்: தகனபலியையும்
பிராயச்சித்தபலியையும் நீர் கேட்கவில்லை.—
௭ அப்பொழுது நான், பாரும், வருகிறேன்: வேத
புத்தகத்தில் என்னைக்குறித்து இப்படி எழுதப்
௮ பட்டிருக்கின்றது.—என் தேவனே, உமது
சித்தத்திற்கேற்கச்செய்யப் பிரியப்படுகிறேன்:
உமதுகட்டளை என்னுள்ளத்திலிருக்கின்றது.—
௯ நான்மகாசபையில் உமதுநீதியைப் பிரசித்தப்ப
டுத்தினேன்: பாரும், என் உதடுகளைநான்தடுக்க
௰ வில்லை, யெகோவாவே, நீர் அறிவீர்.—உ
மதுநீதியை நான் என் இருதயத்துக்குள் மறைக்
கவில்லை; உமது சத்தியத்தையும் உமது இரட்
சிப்பையுந் தெரிவித்தேன்: உமது தயையையும்
உண்மையையும் மகாசபைக்கு ஒளிக்கிறதில்லை
௰௧ யென்றேன்.—யெகோவாவே,உம்முடைய
இரக்கங்களை என்னிலிருந்துநீக்காதிரும்: உமது
தயையும்உண்மையும் இடைவிடாமல்என்னைக்
௰௨ காக்கக்கடவன.—எண்ணிறந்த தீமைகள் என்
னைச் சூழ்ந்துகொண்டன: என் அக்கிரமங்கள்
என்னைப்பிடித்துக்கொண்டன, என்னால் நிமிர
முடியாது; அவைகள் என் தலைமயிரிலும் அதி
கம். ஆதலால் என் இருதயம்சோர்ந்துபோகின்
௰௩ றது.—யெகோவாவே, என்னை இரட்சிக்கப்
பிரியங்கொள்ளும்: யெகோவாவே, எனக்
௰௪ குச்சகாயஞ்செய்ய விரைந்தருளும்.—என் பிரா
ணனை அழிக்க வகைதேடுகிறவர்கள் ஏகமாய்
வெட்கப்பட்டு முகங்கவிழ்ந்திருப்பார்களாக;
என்மேல்தீமைவருவிக்கவிரும்புகிறவர்கள் பின்
௰௫ னிட்டு இலச்சையடைவார்களாக.—என்மேல்
ஆ, ஆ, என்பவர்கள் தங்கள் வெட்கத்தின்பல
னை அனுபவித்துச் சேதிக்கப்படுவார்களாக.—
௰௬ உம்மைத்தேடுகிறவர்கள் உம்மில் மகிழ்ந்து சந்
தோஷப்படுவார்களாக: உமது இரட்சிப்பைவி
ரும்புகிறவர்கள் யெகோவா மகத்துவமான
வரென்று எப்பொழுதுஞ் சொல்வார்களாக.—
௰௭ நான் எளியவனுந்தரித்திரனுமானவன்; ஆனா
லும் யெகோவா என்மேற்சிந்தைவைப்பார்.
நீரே என்துணை, என் இரட்சகர். என் தேவ
னே, தாமதியாதிரும்.

## ௪௧. சங்கீதம்.

௧. தயாளரை வாழ்த்தல்: ௪. நம்பிக்கைத்துரோ
கத்தைக்குறித்துத்தாவீது துக்கித்தல்: ௰. பிரார்த்
தித்தல்.

பாடகத்தலைவனிடத்தில் ஒப்பிக்கப்பட்ட தாவீ
தின் சங்கீதம்.

சிறுமைப்பட்டவன்மேல் சிந்தைவைக்கிறவன்
வாழ்வுடையவன்: ஆபத்துக்காலத்தில் யெகோ
௨ வா அவனை இரட்சிப்பார்.—யெகோவா அவ
னைப்பாதுகாத்து உயிரோடேவைப்பார்; அவன்
பூமியில்வாழ்வடைவான்: அவன்சத்துருக்களின்
இஷ்டத்துக்கு நீர் அவனை ஒப்பிக்கமாட்டீர்.—வி ௩
யாதியாய்ப்படுக்குமிடத்தில் யெகோவா அ
வனைப் பெலப்படுத்துவார்: அவன்வருத்தமாயி
ருக்கையில் நீர் அவன் படுக்கையையெல்லாம்
ஆயத்தப்படுத்துவீர்.—நான், யெகோவாவே, ௪
என்மேல் இரங்கும்: என் ஆத்துமத்தைச்சொஸ்
தப்படுத்தும்; உமக்குவிரோதமாகப்பாவஞ்செய்
தேனென்றேன்.—அவன் எப்பொழுது சாவான், ௫
அவன்பெயர் எப்பொழுதொழியுமென்று, என்
சத்துருக்கள் என்னைக்குறித்துத் தீமொழிகளைப்
பேசுகிறார்கள்.—என்னைப்பார்க்கும்படி அவன் ௬
வந்தால்பொய்பேசுவான்: அவன் இருதயம் தீங்
குகளைச் சேகரிக்கின்றது; வெளியேபுறப்படும்
பொழுது தெரிவிக்கிறான்.—கொடியநோய் அ ௭
வனை ஒட்டிக்கொண்டது: கிடக்கிறான், இனி
எழும்பமாட்டானென்றுசொல்லி,—என் பகை ௮
வரெல்லாரும் ஏகமாய் என்னைக்குறித்து முணு
முணென்று, என்மேல் தீமைவருவிக்கப்பார்க்
கிறார்கள்.—நான் நம்பினவனும் என் ஆகாரத் ௯
தைப்புசித்தவனுமாகிய என்நெருங்கிய சிநேகி
தனும் எனக்கு விரோதமாகக்குதிங்காலைத் தூக்
கினான்.—யெகோவாவே, என்மேல் இரங் ௰
கும், நான் அவர்களுக்குப்பிரதிபலன் செய்யும்
படி என்னை எழுந்திருக்கச்செய்யும்.—என்சத்து ௰௧
ரு என்னை மேற்கொள்ளாததினால் நீர் என்மேல்
பிரியமாயிருக்கிறீரென்றறிந்துகொண்டேன்.—
நீர் என்னை உண்மையுள்ளவனாகத்தாங்கி, என் ௰௨
றும் உமதுசமுகத்தில் என்னைநிலைப்படுத்துவீர்.-
இஸரவேலின் தேவனாகிய யெகோவா ௰௩
சதாகாலங்களிலும் ஸ்தோத்திரிக்கப்படக் கட
வர். ஆமென், ஆமென்.

## ௪௨. சங்கீதம்.

௧. தாவீது தேவாலயத்தை நினைந்து துக்கித்தல்:
௬. அதற்குத்திரும்பிப்போக அபேட்சித்தல்.

போதகஞ்செய்யும் பொருட்டுக் கோராகின் புத்திரரி
லுள்ள பாடகத்தலைவனிடத்தில் ஒப்பிக்கப்பட்ட
சங்கீதம்.

தேவனே, மானானது நீரோடைகளைவாஞ்சித் ௧
துக்கதறுகிறதுபோல, என் ஆத்துமம் உம்மை
அபேட்சித்துக் கதறுகின்றது.—என் ஆத்துமம் சீ ௨
வனுள்ள தேவனாகிய கடவுள்மேலே தாகமாயி
ருக்கின்றது:எப்பொழுதுநான் தேவனுடைய
சந்நிதியில் போய் வெளிப்படுவேன்.—உன் தே ௩
வன் எங்கேயென்று அவர்கள் நாடோறும் என்
னிடத்தில்கேட்கிறபடியால்,இரவும்பகலும்என்
கண்ணீரே எனக்கு உணவாயிற்று.—முன்னே ௪
நான் சனங்களோடேநடந்து, உற்சவத்தை ஆச

(௬) ௧சாமு.௰௫.௨௨. சங்.௫௰.௮. சங்.௫௧.௰௬. ஏசா.௧.௰௧. மத்.௯.௰௩. எபி.௰.௫. யாத்.௨௧.௬.(௭)லூக்.௨௪.௪௪.
(௮) யோவா.௪.௩௪. ரோ.௭.௨௨. சங்.௩௭.௩௧. எரே.௩௧.௩௩. ௨கொரி.௩.௩. (௯) சங்.௨௨.௨௨,௨௫. (௰) அப்.௨௰,
௨௭. (௰௬) சங்.௭௰.௪. சங்.௩௫.௨௭. (௰௭) சங்.௭௰.௫. ௧பேதுரு.௫.௭.—(௪௧. சங். ௧.) நீதி.௰௪.௨௧. (௬) நீதி.
௨௬.௨௪. (௯) ௨சாமு.௰௫.௰௨. யோபு.௰௯.௰௯. எரே.௨௰.௰. (௰௩) சங்.௱௬.௪௮.—(௪௨. சங். ௨.) சங்.௮௪.௨.
யோவா.௭.௩௭. ௧தெச.௧.௯. (௪) யோபு.௩௰.௰௬. ஏசா.௩௰.௨௧.

ரிக்குங்கூட்டத்தின் களிப்பும் துதியுமுள்ளசத்
தத்துடனே தேவாலயத்துக்குப்போய்வந்தேன்:
இவைகளை நான் சிந்திக்கும்பொழுது என் மனம்
௫ உருகுகின்றது.—என் ஆத்துமாவே, நீ என் விச
னப்படுகிறாய்; எனக்குள் ஏன் கலங்குகிறாய்;
தேவனைக்காத்துக்கொண்டிரு: இன்னும் அவர்
சமுகத்தின் இரட்சிப்புக்களினிமித்தம் அவரைத்
௬ துதிப்பேன்.-என் தேவனே, என் ஆத்துமம் எ
னக்குள்ளேவிசனப்படுகின்றது: ஆதலால் யோர்
தான் நதியைச்சார்ந்ததேசத்திலும், எர்மோன் ம
லையிலும்,இந்தமிற்சார் மலையிலுமிருந்து உம்மை
௭ நினைக்கிறேன்.-உமது அருவிகளின் இரைச்சலி
னால்ஆழத்தைஆழம்கூப்பிடுகின்றது;உமதுவெள்
ளங்களும் உமது அலைகளுமெல்லாம்என்மேற்பு
௮ ரளுகின்றன.-ஆகிலும் யெகோவா பகலிலே
தமதுதயையை எனக்கு அருளிச்செய்வார், இர
வில் அவரைத்துதிப்பேன், என் சீவனைத்தரும்
என் தேவனை நோக்கிப் பிரார்த்திப்பேன்.—
௯ நான் என் கன்மலையாகிய தேவனை நோக்கி,
ஏன் என்னைமறந்தீர்,நான் ஏன் சத்துருவினால்நெ
ருக்கப்பட்டுத் துக்கத்துடனே திரியவேண்டு
௰ மென்றுசொல்லுகிறேன்.-உன் தேவன் எங்கே
யென்று என் சத்துருக்கள் நாடோறும் என்னு
டன்சொல்லி என்னைநிந்திப்பது, என் எலும்புக
௰௧ ளைநொறுக்குகிறதுபோல இருக்கின்றது.—என்
ஆத்துமாவே, ஏன் விசனப்படுகிறாய், எனக்குள்
ஏன் கலங்குகிறாய்; தேவனை நோக்கிக்காத்துக்
கொண்டிரு: இன்னும் நான் என்முகத்திற்கு இ
ரட்சிப்பைச்செய்கிறவரும், என் தேவனுமாயி
ருக்கிறவரைத் துதிப்பேன்.

## ௪௩. சங்கீதம்.

௧. தாவீது தேவாலயத்துக்குத் திரும்பிவருஞ்சமயத்தில் களிப்புடனே தேவனைத் துதிப்பேனென்று தீர்மானித்தல்: ௫. தேவனை நம்புவதற்குத் தன்னைத்தேற்றல்.

தேவனே, என் நியாயத்தை விசாரித்து, குரூ
ரமான சாதியாருடன் எனக்குண்டான வழக்
கை நடத்தும்: கபடமும் அநியாயமுமுள்ள ம
௨ னுஷனுக்கு என்னைத்தப்புவியும்.-நீர் என் வல்
லமையின் தேவன்: ஏன் என்னைத் தள்ளிவிடு
கிறீர், சத்துருவினால் நெருக்கப்பட்டு ஏன் நான்
௩ துக்கத்துடன் திரியவேண்டும்.-உமது ஒளியை
யும் சத்தியத்தையும் அனுப்பியருளும்: அவை
கள் என்னை நடத்தி, உமது பரிசுத்த மலைக்கும்
உமது வாசஸ்தலங்களுக்குங் கொண்டுபோய் வி
௪ டக்கடவன.-அப்பொழுது நான் என் தேவனு
டைய வேதிகையினிடத்திற்கும், எனக்குப் பர
மானந்தந்தருகிற வஸ்துவாகிய தேவனிடத்திற்
கும்போவேன்: தேவனே, என் தேவனே,
உம்மைக் கின்னரத்தைக்கொண்டுதுதிப்பேன்.-
என் ஆத்துமாவே, ஏன் விசனப்படுகிறாய், எனக் ௫
குள் ஏன் கலங்குகிறாய்; தேவனை நம்பிக்காத்
துக்கொண்டிரு: இன்னும் என்முகத்திற்குஇரட்
சிப்புச்செய்கிறவரும் என் தேவனுமாயிருக்கி
றவரைத்துதிப்பேன்.

## ௪௪. சங்கீதம்.

சபையார்புலம்பல்: அவர்கள்பிரார்த்தித்தல்.

போதகஞ் செய்யும் பொருட்டுக் கோராகின்புத்திரரிலுள்ள பாடகத்தலைவனிடத்தில் ஒப்பிக்கப்பட்ட சங்கீதம்.

தேவனே, நீர் பூருவகாலத்தில் உமது கையி ௧
னால் அந்நியரைத்துரத்தி, எங்கள் பிதாக்களைநாட்
டி, சனங்களைத்துயரப்படுத்தி அவர்களைத்தள்ளி
விட்டு, நீர் எங்கள் பிதாக்களுடைய நாள்களில்—
நடப்பித்தகிரியை இன்னதென்று,எங்கள் பிதாக் ௨
கள்சொல்ல, நாங்கள் எங்கள் காதினால் கேட்டி
ருக்கிறோம்.-அவர்கள் தங்கள் கட்கத்தினால்தேச ௩
த்தைவசப்படுத்தவில்லை; அவர்களுடையபுயமு
ம் அவர்களை இரட்சிக்கவில்லை.நீர் அவர்கள்மேற்
பிரியமாயிருந்தபடியால் உமது வலக்கரமும், உ
மது புயமும், உமது முகப்பிரசன்னமுமே அவர்
களை இரட்சித்தன.—தேவனே, நீரே என் இரா ௪
சா: யாக்கோபுக்கு இரட்சிப்பைக் கட்டளையி
டும்.-பின்பு நாங்கள் உம்மால் எங்களுடையசத் ௫
துருக்களைக்கோலியெறிவோம்: எங்களுக்கு வி
ரோதமாயெழும்புகிறவர்களை உமது நாமத்தை
முன்னிட்டுக் கீழேமிதிப்போம்.-நான் என்வில் ௬
லைநம்பேன்,என்கட்கம் என்னை இரட்சிக்கமாட்
டாது.—நீரே எங்கள் சத்துருக்களினின்று எங் ௭
களை இரட்சித்தீர், எங்கள் பகைவரைவெட்கப்ப
டுத்தினீர்.—நாடோறுந் தேவனைக் கீர்த்தனம்
பண்ணுவோம், உமது நாமத்தை நித்தமுந்துதிப் ௮
போம். சேலா.—நீர் எங்களைத்தள்ளி வெட்கப்ப ௯
டுத்தினீர்: எங்களுடையசேனைகளுடன்செல்லா
திருக்கிறீர்.-நாங்கள் எங்கள்சத்துருக்களுக்குப்பு ௰
றங்காட்டும்படிசெய்கிறீர்: எங்களுடைய பகை
வர் தங்களுக்காக எங்களைக்கொள்ளை யிடுகிறார்
கள்.-நீர் எங்களை ஆடுகளைப்போல் இரையாகஒப் ௰௧
பித்து, அந்நியருக்குள்ளே சிதறப்பண்ணினீர்.-
நீர்உம்முடைய சனங்களைக்கிரயமில்லாமல்விற் ௰௨
கிறீர், அவைகளுடைய விலையினால் உமக்குப்ப
லனில்லை.—எங்கள் அயலார் நிந்திக்கவும், எங் ௰௩
கள் சுற்றுப்புறத்தார் பரிகாசஞ்செய்து இகழவும்,
எங்களைவைக்கிறீர்.-நாங்கள் அந்நியருக்குள்ளே ௰௪
பழிமொழியாயிருக்கவும், சனங்கள் தலை துலுக்
கவும் எங்களைவைக்கிறீர்.—நிந்தித்துத்தூஷணிக் ௰௫
கிறவனுடைய சத்தத்தினிமித்தமும், சத்துருக்க
ளினிமித்தமும், பழிவாங்குகிறவனிமித்தமும்,
நாடோறும் என் கலக்கம் எனக்குமுற்படுகின்ற

---

(௫) சங்.௪௩.௫. புல.௩.௨௪. (௬) சங்.௱௩௩.௩. (௭) எரே.௪.௨௰. சங்.௮௮.௭. யோனா.௨.௩. (௮) உபா.௨௮.௮. (௯) சங்.௩௮.௬. (௰) யோவே.௨.௰௭. மீகா.௭.௰.—(௪௩. சங். ௨.) சங்.௨௮.௭. சங்.௪௨.௯. (௩) சங்.௪௰.௰௧. (௫) சங்.௪௨.௫,௰௧.—(௪௪. சங். ௧.) யாத்.௰௫.௰௮. (௨) யாத்.௰௨.௨௬,௨௭. (௩) உபா.௮.௰௭. யோசு.௨௪.௰௨. (௭) சங்.௪௰.௰௪. (௮) சங்.௩௪.௨. (௯) லேவி.௨௬.௰௭. யோசு.௭,௮.௰௨. (௰௧) ரோ.௮.௩௬. உபா.௨௮.௬௪. (௰௨) ஏசா.௫௨.௩,௪. எரே.௰௫.௰௩. (௰௩) உபா.௨௮.௩௭. (௰௪) எரே.௨௪.௯. ௨.இரா.௰௯.௨௧.

௰௬,௰௭ து;-வெட்கம் என்முகத்தை மூடுகின்றது.-இ
வையெல்லாம் எங்கள்மேல் வந்திருந்தும், நாங்
கள் உம்மைமறக்கவில்லை;உமதுஉடன்படிக்கை
௰௮ யை நாங்கள்மீறவுமில்லை.—நீர் எங்களைவலியச
ருப்பங்களுள்ளஸ்தானத்தில் நசுக்கி,மரணநிழலி
௰௯ னால் எங்களை மூடியிருந்தும்;—எங்கள் இருதயம்
பின்வாங்கவுமில்லை, எங்கள் நடைகள் உமதுபா
௨௰ தையைவிட்டுவிலகவுமில்லை.—நாங்கள் எங்கள்
தேவனுடைய நாமத்தைமறந்து, அந்நிய தே
வனிடத்தில் எங்கள்கைகளை நீட்டினோமாகில்,-
௨௧ தேவன் அதை ஆராய்ந்துவிசாரிக்கமாட்டாரா;
இருதயத்தின்அந்தரங்கங்களைஅவர் அறிவாரே.—
௨௨ உமது நிமித்தம் நாங்கள் நாடோறும்கொலைசெய்
யப்படுகிறோம்; அடிக்கப்படும் ஆடுகளைப்போல்
௨௩ எண்ணப்பட்டிருக்கிறோம்.-ஆண்டவரே, வி
ழித்துக்கொள்ளும், என் நித்திரைசெய்கிறீர்; எ
ழுந்தருளும்,சதாகாலமும் எங்களைத்தள்ளிவிடா
௨௪ திரும்.—நீர் என் உமது முகத்தை மறைத்து,எங்
களுக்குநேரிட்ட உபத்திரவத்தையும் நெருக்கத்
௨௫ தையும் மறந்து விடுகிறீர்.-எங்கள் ஆத்துமம் தரை
மட்டுந்தாழ்ந்திருக்கின்றது: எங்கள் வயிறு தரை
௨௬ யோடே ஒட்டியிருக்கின்றது.—எங்களுக்குத்து
ணையாய் எழுந்தருளும், உமதுதயையினிமித்தம்
எங்களைவிடுவித்தருளும்.

## ௪௫. சங்கீதம்.

கிறிஸ்துவின்சௌந்தரியத்தையும்,சயத்தையும்,இ
ராச்சியத்தையும்,தீர்க்கதரிசனமாய்வருணித்தல்.

ஞானத்தையும்நேசத்தையும்வருணிக்கும்படிஷோ
ஷன்னிமென்னும் வாத்தியத்தில் வாசிக்கும்பொரு
ட்டு, கோராகின் புத்திரரிலுள்ள பாடகத்தலைவனி
டத்தில் ஒப்பிக்கப்பட்ட சங்கீதம்.

என்னுள்ளம் உத்தமப்பொருளினால் பொங்க,
நான்இராசாவைக்குறித்துவருணித்ததைவசனிக்
௨ கிறேன்.-என்நாவு துரிதமாயெழுதுகிறவனுடை
ய எழுதுகோல். நீர்மனுபுத்திரரிலும்சௌந்தரிய
முள்ளவர்: உம்முடைய உதடுகளில் அருள் ஊற்
றப்பட்டிருக்கின்றது: அதினிமித்தந் தேவன்
௩ என்றும் உம்மைஆசீர்வதிக்கிறார்.—பராக்கிரமசா
லியே, நீர் உமக்குமேன்மையும் மகிமையுமாக உ
மது கட்கத்தை உமது அரையில் கட்டிக்கொள்
௪ ளும்.—சத்தியம், தாழ்மை, நீதியென்னும்இவை
கள் நிமித்தம் மகிமையுடன் வாகனமேறிச்சென்
று செயங்கொள்ளும்; உமது வலக்கரம்அதிசயங்
௫ களை உமக்குவிளக்கும்.—இராசாவின் சத்துருக்
களுடைய நெஞ்சத்தில் உமது அம்புகள்கூர்மை
யாயிருப்பதினால், சனங்கள் உமக்குக்கீழேவிழு
௬ வார்கள்.—தேவனே, உமது சிங்காசனம் என்
றுமுள்ளது: உமது இராசரிகத்தின்கோல் செங்
கோல்.—நீர் நீதியை விரும்புகிறீர், அநியாயத்தை ௭
வெறுக்கிறீர்: ஆதலால் தேவன், உம்முடை
ய தேவன், உமது தோழரிலும் உமக்கு ஆனந்த
தைலத்தினால் அபிஷேகம்பண்ணினார்.-யானைத் ௮
தந்த அரமனைகளினின்றுவந்த உமது வஸ்திரங்க
ளில்சுகந்தம்வீசுகின்ற வெள்ளைப்போளம், கரிய
போளம், இலவங்கப்பட்டை என்னுமிவைகள்
உம்மைக்களிகூரப்பண்ணும்.—இராச குமாரத்தி ௯
கள் உமது பிரதான ஸ்திரிகளுக்குள்ளிருக்கிறார்
கள்: ஒப்பீரின்பொன்னினால் சிங்காரிக்கப்பட்
ட இராசாத்தி உமதுவலப்பாரிசத்தில்நிற்கிறாள்.-
மகளே, கேள், செவியைச்சாய்த்துச் சிந்தித்துக் ௰
கொள்; உன்சனத்தையும்உன்பிதாவின்குடும்பத்
தையும் மறந்துவிடு.—இராசா உன்சௌந்தரியத் ௰௧
தில் மிகவும் பிரியப்படுவார்: அவரே உன் ஆண்
டவர்; அவரையேநமஸ்காரம்பண்ணு.-தீறின் கு ௰௨
மாரத்தி காணிக்கை கொண்டுவருவாள்; ஐசுவரி
யமுள்ள சனங்களும் உமது தயையை வேண்டு
வார்கள்.—உள்ளத்தில் இராசகுமாரத்தி பூரணமகி ௰௩
மையானவள்: அவள் உடை விசித்திர பீதாம்ப
ரம்.—சித்திரத்தையலாடையைத்தரித்து இராசாவி ௰௪
னிடத்திற்குக் கொண்டுவரப்படுவாள்: அவளுக்
குப்பின்னாகச்செல்லும் அவளுடைய தோழிமா
ராகியகன்னியர்கள் உன்னிடத்தில் கொண்டுவ
ரப்படுவார்கள்.-அவர்கள்மகிழ்ச்சியோடும்களிப் ௰௫
போடுங்கொண்டுவரப்பட்டு,இராசஅரமனையில்
பிரவேசிப்பார்கள்.—உன் பிதாக்களுக்குப்பிரதி ௰௬
யாக உன் பிள்ளைகள் இருப்பார்கள், நீ அவர்
களைப் பூமியெங்கும் அதிபதிகளாக ஏற்படுத்த
லாம்.-நான் உனது நாமத்தை எல்லாத்தலைமுறை ௰௭
களிலும் நினைக்கும்படிசெய்வேன்: அதினால் ச
னங்கள் இடைவிடாமல்சதாகாலங்களிலும் உன்
னைத்துதிப்பார்கள்.

## ௪௬. சங்கீதம்.

தேவன் பத்தருக்குத் தஞ்சமெனக்கூறல்.

அலாமோத்தென்னும்வாத்தியத்தில்வாசிக்கும்பொ
ருட்டு, கோராகின்புத்திரரிலுள்ளபாடகத்தலைவனி
டத்தில் ஒப்பிக்கப்பட்ட சங்கீதம்.

தேவனே நமக்குப்புகலிடம்,வல்லமை,ஆபத் ௧
துக்காலத்தில் மிகவுஞ் சமீபமானதுணை.—ஆத ௨
லால்பூமிநிலைபேர்ந்தாலும், மலைகள்சமுத்திரமத்
தியில்தள்ளப்பட்டாலும்,-அதின்சலங்கள்கொந் ௩
தளித்துப்பொங்கி, அதின்பெருக்கத்தினால் மலை
கள்அதிர்ந்தாலும், நாம் பயப்படோம். சேலா.—
நதியின்நீரோட்டங்கள்,சருவத்துக்குமேலானவ ௪
ரின்வாசஸ்தலங்கள்பொருந்திய பரிசுத்தஸ்தான
மாகிய தேவனுடைய நகரத்தைச்சந்தோஷப்
படுத்துகின்றன.-தேவன் அதின்மத்தியிலிருக்கி ௫

(௰௮) ஏசா.௩௪.௰௩. சங்.௨௩.௪. (௯௯) யோபு.௨௩.௰௧. (௨௰) யோபு.௰௧.௰௩. சங்.௬௮.௩௧. (௨௧) யோபு.௩௧.௰௪. சங்.௱௩௯.௧. எரே.௰௭.௰. (௨௨) ரோ.௮.௩௬. (௨௪) யோபு.௰௩.௨௪. (௨௫) சங்.௱௰௯.௨௫.—(௪௫. சங். ௨.) லூக். ௪.௨௨. (௩) ஏசா.௪௯.௨. எபி.௪.௰௨. வெளி.௧.௰௬. வெளி.௰௯.௰௫. ஏசா.௯.௬. (௪) வெளி.௬.௨. (௬) சங்.௯௩. ௨. எபி.௧.௮. (௭) சங்.௩௩.௫. ஏசா.௬௧.௧. ௧.இரா.௧.௩௯,௪௰. (௰௧) சங்.௯௫.௬. ஏசா.௫௪.௫. (௰௨) சங்.௭௨.௰. ஏசா.௪௯.௨௩. (௰௩) வெளி.௰௯.௭,௮. (௰௬) ௧.பேதுரு.௨.௯. வெளி.௧.௬. (௰௭) மல்.௧.௰௧.—(௪௬. சங். ௧.) சங். ௯௧.௨. உபா.௪.௭. சங்.௱௪௫.௰௮. (௩) சங்.௯௩.௩,௪. மத்.௭.௨௫. (௪) சங்.௪௮.௧,௮. ஏசா.௬௰.௰௪. (௫) உபா.௨௩. ௰௪. ஏசா.௰௨.௬. யோவே.௨.௨௭.

ளூர்; அது அசையாது: விடியற்காலம்வர அதற்குச்
௬ சகாயஞ்செய்வார்.—புறத்தேசத்தார் கலகம்பண்
ணி இராச்சியங்கள் அசைந்தன: அவர் சத்தமிடப்
௭ பூமி கரைந்துபோயிற்று.—சேனைபதியாகிய யெ
கோவா நம்மோடேயிருக்கிறார்; யாக்கோபின்
௮ தேவன் நமது உயர்ந்தபுகலிடம். சேலா.—பூமி
யில் அழிவுகளைச்செய்கிற யெகோவாவின்
௯ கிரியைகளைவந்துபாருங்கள்.—பூமியின் கடை எ
ல்லைவரைக்கும் யுத்தங்களை ஓயப்பண்ணுகிறார்;
வில்லை ஒடிக்கிறார், ஈட்டியைமுறிக்கிறார், இர
௰ தங்களை அக்கினியினாலே தகிக்கிறார்.—நானே
தேவன்: புறத்தேசத்தாருக்குள் உன்னதமாயி
ருப்பேன், பூமியிலெங்கும் உன்னதமாயிருப்பே
௰௧ ன். இதை உணர்ந்து அமைதியாயிருங்கள்.—சே
னைபதியாகிய யெகோவா நம்மோடேயிருக்
கிறார்; யாக்கோபின் தேவன் நமது உயர்ந்த
புகலிடம். சேலா.

## ௪௭. சங்கீதம்.

தேவனுக்கமைந்து அவரைக்கீர்த்தனம்பண்ணுவது கடமையெனக்காட்டல்.

கோராகின் புத்திரரிலுள்ள பாடகத்தலைவனிடத்தில் ஒப்பிக்கப்பட்ட சங்கீதம்.

சனங்களே, நீங்களெல்லாருந் தேவனுக்கு
முன்பாகக்கைகொட்டி, ஆனந்த முழக்கத்தோ
௨ டே ஆரவாரம்பண்ணுங்கள்.—சருவத்துக்குமே
லான யெகோவா பயமுறுத்துகிறவர்; பூமி
௩ முழுவதற்கும் மகா இராசா.—சனங்கள் நமக்கு
வசமாகவும், புறத்தேசத்தார் நமதுகாலின்கீழாக
௪ வுஞ்செய்வார்.—தமதுபிரியமுள்ள யாக்கோபின்
உத்தமதேசத்தை நமக்குச்சுதந்தரமாகத் தெரிந்த
௫ ளிப்பார். சேலா.—தேவன் ஆரவாரத்தோடும்,
யெகோவா எக்காளசத்தத்தோடும்எழுந்தருளி
௬ னார்.—தேவனைப்பாடுங்கள், பாடுங்கள்: நமது
௭ இராசாவைப்பாடுங்கள், பாடுங்கள்.—தேவன்
பூமிமுழுவதற்கும் இராசா: தெளிந்தபுத்தியுடன்
௮ அவரைப்பாடுங்கள்.—தேவன் புறத்தேசத்தாரை
அரசாளுகிறார்: தேவன் தமதுபரிசுத்தசிங்காச
௯ னத்தில் வீற்றிருக்கிறார்.—சனங்களின் அதிபதி
கள், ஆபிரகாமின் தேவனுடைய சனங்களாக
க்கூடியிருக்கிறார்கள்: பூமியின்கேடகங்கள் தே
வனுடையவைகள்: அவர்மிகவும் உயர்ந்தவர்.

## ௪௮. சங்கீதம்.

சபையின் மகிமையும் ஆனந்தமுங்கூறல்.

கோராகின்புத்திரரிடத்தில்ஒப்பிக்கப்பட்டசங்கீதம்

யெகோவா மகத்துவமானவர், நமது தேவ
னுடைய பரிசுத்த மலையாகிய தமது நகரத்தில்
௨ மிகவுந்துதிக்கப்படத்தக்கவர்.—மகாராசாவின் இ
ராசதானியிருக்கிற வடதிசையிலுள்ள சீயோன்
மலை, தேசமுழுவதற்கும் மகிழ்ச்சிதரும் அழகிய
விசேஷஸ்தானம்.—அதின்மாளிகைகளிலே தே ௩
வன் உயர்ந்த புகலிடமாய் விளங்குகிறார்.—பா ௪
ருங்கள், இராசாக்கள் ஏகமாய்க்கூடிக்கடந்து
போனார்கள்.—அதைக்கண்டபொழுதுபிரமித்துக் ௫
கலங்கிவிரைந்தோடினார்கள்.—அங்கே நடுக்கங் ௬
கொண்டு, பிரசவஸ்திரியைப்போல வேதனைப்
பட்டார்கள்.—நீர், கீழ்காற்றினால் தர்ஷீஷின்கப் ௭
பல்களை உடைக்கிறீர்.—நமது தேவனுடைய ௮
நகரத்தைக்குறித்து நாம் கேள்விப்பட்டபடியே,
சேனைபதியாகிய யெகோவாவின் நகரத்திற்
கண்டோம்: தேவன் சதாகாலமும் அதைஸ்தி
ரப்படுத்துவார். சேலா.—தேவனே, உமது ஆ ௯
லயத்தின் மத்தியில் உமது அனுக்கிரகத்தைக்கு
றித்துச் சிந்தித்துக்கொண்டோம்.—தேவனே, ௰
உமது நாமத்துக்கேற்க உமது புகழ்ச்சி பூமியி
னெல்லைவரைக்குஞ்செல்லும்: உமது வலக்கரம்
நீதியினாலே பூரணப்பட்டிருக்கின்றது.—உம்மு ௰௧
டைய நியாயத்தீர்ப்புக்களைக்குறித்துச் சீயோன்
மலைமகிழ்வதாக, யூதாவின்குமாரத்திகள் களிகூ
ருவார்களாக.—சீயோனைச்சுற்றி, அதை வளைந் ௰௨
து, அதின்கோபுரங்களைஎண்ணுங்கள்.—அதின் ௰௩
பலத்தமதில்கள்மேற் சிந்தைவைத்து, அதின்அர
மனைகளை உற்றுப்பார்த்து, நீங்கள்பின்வருஞ்சந்
ததியாருக்கு அறிவியுங்கள்.—இந்தத் தேவன் ச ௰௪
தாகாலமும் நம்முடைய தேவனாகி, மரணபரி
யந்தம் நம்மைநடத்துவார்.

## ௪௯. சங்கீதம்.

இவ்வுலகவாழ்வு அநித்தியமெனக்காட்டல்.

கோராகின் புத்திரரிலுள்ள பாடகத்தலைவனிடத்தில் ஒப்பிக்கப்பட்டசங்கீதம்.

சனங்களே, நீங்களெல்லாரும் இதைக்கேளுங் ௧
கள்.—சிறியோரும்பெரியோரும், செல்வருந் த ௨
ரித்திரருமாகியஉலகத்தாரே, செவிகொடுங்கள்:—
என்வாயினால் ஞானத்தைவசனிப்பேன்; என்ம ௩
னசிந்தனை புத்தியுள்ளதாகும்.—திருஷ்டாந்த ௪
வாக்குக்கு என்செவியைச்சாய்ப்பேன்: கின்ன
ரத்தில் என் மறைபொருளை வெளிப்படுத்துவே
ன்.—தங்கள் செல்வத்தை நம்பி, தங்கள் மிகு ௫
ந்த ஐசுவரியத்தினாலே பெருமை பாராட்டுகி
ற,—என் பகைவரின் தீங்கு என்னைச் சூழ்ந்து ௬
கொள்ளும் ஆபத்துக்காலத்தில் நான் பயப்பட
வேண்டியதென்ன.—அவர்களில் ஒருவனுந் த ௭
ன் சகோதரனை மீட்டுக்கொள்ளமாட்டான்.—
தங்கள் ஆத்துமத்தை மீட்டுக்கொள்வது மிகவும் ௮
அருமை, அது ஒருபொழுதும் நடவாது.—ஆத ௯
லால் அவன் அழிவைக்காணாமல் என்றென்றை
க்குஞ் சீவித்திருக்கும்படி, ஒருவனும் அவனி
மித்தம் மீட்கும்பொருளைத் தேவனுக்குக் கொ

(௬) சங்.௨.௧. யோசு.௨.௯,௨௪. (௯) ஏசா.௨.௪. (௰) ஏசா.௨.௰௧,௰௭.—(௪௭. சங். ௧.) ஏசா.௫௫.௰௨. (௨) உபா.
௭.௨௧. மல்.௧.௰௪. (௩) சங்.௰௮.௪௭. (௪) ௧.பேதுரு.௧.௪. (௫) சங்.௬௮.௨௪,௨௫. (௭) சக.௰௪.௯. ௧.கொரி.௰௪.
௰௫,௰௬. (௮) சங்.௯௩.௧. வெளி.௰௯.௬. (௯) ரோ.௪.௰௧,௰௨.—(௪௮. சங். ௧.) சங்.௪௬.௪. ஏசா.௨.௨,௩. (௨) சங்.
௫௰.௨. புல.௨.௰௫ தானி.௮.௯. மத்.௫.௩௫. (௪) ௨.சாமு.௰.௬. (௬) யாத்.௰௫.௰௬. ஓசி.௰௩.௰௩. (௭) எசேக்.௨௭.
௨௬ (௮) ஏசா.௨.௨. மீகா.௪.௧. (௰) உபா.௨௮.௫௮. மல்.௧.௰௧,௰௪. (௰௪) ஏசா.௫௮.௰௧.—(௪௯. சங். ௪.) மத்.௰௩.௩௫.
(௫) யோபு.௩௧.௨௪,௨௫. மாற்.௰.௨௪. ௧.தீமோ.௬.௰௭. (௮) யோபு.௩௬.௰௮,௰௯. (௯) சங்.௮௯.௪௮. மத்.௰௬.௨௬.

௰ டுக்கமாட்டான்.—அஞ்ஞானியும் மிருகத்தன்மை
யுள்ளவனும்மாத்திரமா, ஞானிகளும் இறந்தழிந்
து, தங்கள் செல்வத்தை மற்றவர்களுக்கு விடுகி
௰௧ றார்கள்; இது அவனுக்குத்தெரியும்.—தங்கள் வீடு
கள் சதாகாலங்களிலும், தங்கள் வாசஸ்தலங்கள்
எல்லாத்தலைமுறைகளிலும்நிலைநிற்கும்என்பதே
அவர்களுடைய அபிப்பிராயம்; அவர்கள் நிலங்
௰௨ களுக்குத் தங்கள் நாமங்களையிடுகிறார்கள்.—ஆனா
லும் மனுஷன் மகிமையிலே நிலைநில்லான்: அ
ழிந்துபோகிற மிருகங்களுக்கு ஒப்பாயிருக்கிறா
௰௩ ன்.-அவர்களுடைய இந்த நடக்கை புத்தியீனமா
யிருந்தும், அவர்கள் சந்ததியார் அவர்கள் வாக்கு
௰௪ களிற் பிரியப்படுகிறார்கள். சேலா.—ஆடுகளைப்
போல் அவர்கள் மரித்தோர் ஸ்தலத்தில் அடக்கப்
பட்டிருக்கிறார்கள்; மரணம் அவர்களைப்பட்சிக்
கும்; விடியற்காலத்தில் நீதிமான்கள் அவர்களை ஆ
ளுவார்கள்; மரித்தோர் ஸ்தலமாகிய அவர்கள் வா
சஸ்தலத்தில் அவர்கள்சௌந்தரியம்ஒழிந்துபோ
௰௫ கும்.—ஆனாலும் தேவன் மரித்தோர் ஸ்தலத்தி
னின்று என்பிராணனைமீட்டு ஏற்றுக்கொள்வார்:
௰௬ சேலா.—ஒருவன் செல்வத்தைப்பெறும் பொழு
தும், அவன் குடும்பத்தின்மகிமைவிருத்தியடை
௰௭ யும்பொழுதும், நீ விசனப்படவேண்டாம்;—அ
வன்மரிக்கும்பொழுது ஒன்றுங்கொண்டுபோவ
தில்லை: அவன் மகிமை அவனுக்குப்பின்செல்ல
௰௮ மாட்டாது.—அவன் உயிரோடிருக்கையில் தன்
னைத்தான் புகழ்ந்துகொண்டான்: நீ உன்நன்மை
யைநாடினால் சனங்கள் உன்னைவாழ்த்துவார்
௰௯ கள்.—அவன்தன்பிதாவமிசத்தாரைச்சேருவான்;
அவர்கள் ஒருபொழுதும் ஒளியைக்காணார்கள்.—
௨௰ மகிமைபெற்றிருந்தும் அறிந்துகொள்ளாத மனு
ஷன் அழிந்து மிருகங்களுக்குச்சமமாவான்.

## ௫௰. சங்கீதம்.

௧. யெகோவா நியாயம்விசாரித்தல்: ௭. பலிகளிலும்பத்தி உத்தமமெனக்காட்டல்: ௰௬. பாவிகளைக்கண்டித்தல்.

ஆசாப்பின் சங்கீதம்.

தேவாதிதேவனாகிய யெகோவா பேசி,
சூரியன் உதிக்கிறதிசைதொடங்கி அஸ்தமிக்கி
ற திசைவரைக்குமுள்ள பூமியை வரவழைக்கி
௨ றார்.—பூரணசௌந்தரியமுள்ள சீயோனிலிருந்து
௩ தேவன் பிரகாசிக்கிறார்.-நம்முடைய தேவன்
வருவார், மவுனமாயிருக்கமாட்டார்: அவருக்
குமுன் அக்கினி எரியும், மிகுந்தபெருங்காற்று
௪ அவரைச்சூழ்ந்துவீசும்.—அவர்தம்முடையசனங்
களுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்படி உயரத்
திலிருந்து வானங்களையும் பூமியையும் அழைக்
௫ கிறார்.—பலியினால் என்னோடே உடன்படிக்கை
செய்த என்னுடைய பரிசுத்தவான்களை என்னி
டத்தில் ஏகமாய்க்கூட்டுங்கள்.—வானங்கள் அவ ௬
ருடையநீதியைவிளக்கும்: தேவனே நியாயா
திபதி: சேலா.—நான்பேசுவேன், என்சனங்க ௭
ளே, செவிகொடுங்கள்; இஸரவேலே, உன்னைக்
குறித்துச் சாட்சியிடுவேன்: நானே தேவன்,
உன் தேவன்.—என்சமுகத்தில் நீ நித்தமுமிடுகி ௮
றபலிகளினிமித்தமும்,உன்தகனபலிகளினிமித்
தமும் நான் உன்னைக்கடிந்துகொள்ளமாட்டே
ன்.—நான் உன்வீட்டினின்று காளையையும், உன் ௯
தொழுவங்களினின்று ஆட்டுக்கடாக்களையும்வா
ங்கமாட்டேன்.—எல்லாக்காட்டுமிருகங்களும், ௰
ஆயிரமலைகளின்மேல்திரிகிறமிருகங்களும் என்
னுடையவைகள்.—மலைகளிலுள்ள எல்லாப்பற ௰௧
வைகளையும்அறிந்திருக்கிறேன்: வெளியிலுள்ள
எல்லாமிருகங்களும் என்னுடையவைகள்.—எ ௰௨
னக்குப்பசியுண்டானால்உனக்குச்சொல்லமாட்
டேன்.—பூமண்டலமும் அதிலுள்ளசமஸ்த வஸ் ௰௩
துக்களும் என்னுடையவைகள். நான் எருதுக
ளின் மாமிசம்புசிப்பேனா; ஆட்டுக்கடாக்களின்
இரத்தம் குடிப்பேனா.-தேவனுடைய சமுகத் ௰௪
தில்ஸ்தோத்திரத்தைச்செலுத்தி, சருவத்திற்குமே
லானவருக்கு உன்சங்கற்பங்களைநிறைவேற்று.—
ஆபத்துக்காலத்தில் என்னைநோக்கிக் கூப்பிடு: ௰௫
நான் உன்னைவிடுவிப்பேன், நீஎன்மகிமையைப்
பிரகாசிக்கப்பண்ணுவாயென்றார்.—தேவன் ௰௬
துன்மார்க்கனைநோக்கி, நீ என்விதிப்பிரமாணங்
களைத்தெரிவிப்பதற்கும், என் உடன்படிக்கை
யை உன்வாயில் எடுப்பதற்கும் உனக்கென்ன நி
யாயம்.—நீ உபதேசத்தைவெறுக்கிறாய், என்வாக் ௰௭
குகளை உனக்குப்பின்னாகத் தள்ளிவிடுகிறாய்.—நீ ௰௮
திருடனைக்கண்டு அவனோடிசைந்தாய், விபசார
ரோடும்பங்குபெற்றாய்.—உன்வாயினால் தீமொ ௰௯
ழி பேசிவருகிறாய், உன் நாவு வஞ்சகத்தைப்பி
ணைக்கின்றது.—நீ இருந்து உன் சகோதரனுக் ௨௰
கு விரோதமாகப்பேசுகிறாய்; உன் மாதாவின்புத்
திரனைநிந்தனைபண்ணுகிறாய்.-இவைகளைநீசெய் ௨௧
ய நான் மவுனமாயிருந்தேன்; அதினால் நானும்
உனக்கொப்பாயிருக்கிறேனென்றுநீநினைத்தாய்:
நான் உன்னைக்கடிந்துகொள்வேன், எல்லாவற்
றையும் உன்கண்ணுக்குமுன் வரிசையாய் நிறுத்
துவேன்.-தேவனை மறக்கிறவர்களே,இதைச்சிந் ௨௨
தித்துக்கொள்ளுங்கள், இல்லாவிட்டால் நான்
உங்களைப்பீறிப்போடுவேன்,ஒருவனும்உங்களை
இரட்சியான்.—தோத்திரத்தைச்செலுத்துகிறவன் ௨௩
என்னைக்கனம்பண்ணுகிறான்: சன்மார்க்கத்தை
நாடுகிறவனுக்குத் தேவன் தரும்இரட்சிப்பை
வெளிப்படுத்துவேனென்றார்.

---

(௰)பிர.௨.௰௬. நீதி.௰௧.௪. பிர.௨.௰௮,௨௧. (௰௧) ஆதி.௪.௰௭. (௰௨) சங்.௩௯.௫. (௰௩) லூக்.௰௨.௨௰.(௰௪)தானி.௭.௨௨. மல்.௪.௩. லூக்.௨௨.௩௰. ௧.கொரி.௬.௨. யோபு.௪.௨௧. (௰௯) ஆதி.௰௫.௰௫. (௨௰) பிர.௩.௰௯.—(௫௰.சங்.௧.) நிகி.௯.௩௨. ஏசா.௯.௬. (௨) உபா.௩௩.௨. (௩) எண்.௰௬.௩௫. தானி.௭.௰.(௪)உபா.௪.௨௬. ஏசா.௧.௨. மீகா.௬.௧,௨. (௫) உபா.௩௩.௩. ஏசா.௰௩.௩.யாத்.௨௪.௭. (௬) சங்.௯௭.௬. (௭) யாத்.௨௰.௨. (௮) ஏசா.௧.௰௧. ஓசி.௬.௬.(௯)மீகா.௬.௬. அப்.௰௭.௨௫.(௰௨)யாத்.௰௯.௬.(௰௪)ஓசி.௰௪.௨. எபி.௰௩.௰௫. உபா.௨௩.௨௧. பிர.௫.௪,௫.(௰௫)யோபு.௨௨.௨௭. சங்.௯௧.௰௫. சக.௰௩.௯. (௰௭) ரோ.௨.௨௧,௨௨. நிகி.௯.௨௬. (௰௮) ரோ.௧.௩௨. ௧.தீமோ.௫,௨௨. (௨௧) பிர.௮.௰௧,௰௨. ஏசா.௨௬.௰. ரோ.௨.௪. சங்.௯௰.௮. (௨௨) யோபு.௮.௰௩. ஏசா.௫௧.௰௩. (௨௩) ரோ.௰௨.௧. கலா.௬.௰௬.

## ௫௧. சங்கீதம்.

௧. தன்பாவத்தினிமித்தந் தாவீது துக்கித்துப்புலம்பல்: ௬. பரிசுத்தத்துக்காகப்பிரார்த்தித்தல்: ௰௬. தேவன் பலிகளிலல்ல,உண்மையிற்பிரியப்படல்: ௰௮. சபைக்காகவேண்டல்.

பத்ஷேபாளிடத்தில் பிரவேசித்தபின்பு அவனிடத்தில் தீர்க்கதரிசியாகிய நாதான் வந்தபொழுது, தாவீது செய்த சங்கீதம்.

தேவனே,உமதுதயையின்படிஎன்மேல்இரங்
கும்: உமதுமிகுந்தஇரக்கங்களின்படிஎன்அதிக்
௨ கிரமங்களைத்துடைத்தருளும்.—என் அதிக்கிரமம்
நீங்கும்படிமுழுமையும் என்னைக்கழுவும், என்
௩ பாவமற என்னைச்சுத்திகரித்தருளும்.—நான் என்
அதிக்கிரமங்களை உணர்ந்து சொல்லுகிறேன்:
என்பாவம் எப்பொழுதும் எனக்குமுன்பாகநிற்
௪ கின்றது.—உமக்கே விரோதமாக நான் பாவஞ்
செய்து, உமது பார்வைக்குமுன் இந்தத்துர்க்கரு
மத்தைச்செய்தேன்: ஆதலால் நீர் வாக்குகளிலே
நீதிபரராயும்,நியாயத்தீர்ப்பிலேசுத்தராயும்இருப்
௫ பீர்.—பாரும், நான்துர்க்குணத்தில் உருவாக்கப்
பட்டேன், பாவத்தில் என்மாதா என்னைக்கருப்
௬ பந்தரித்தாள்.—பாரும், நீர் உள்ளத்திலிருக்கிற
உண்மையில்பிரியப்படுகிறீர்: அந்தக்கரணத்தில்
௭ எனக்கு ஞானத்தைத் தெரியப்படுத்துவீர்.—ஈ
சோப்புப்பூண்டினால் என்னைச்சுத்திகரித்தருளு
ம், அதினால் நான்சுத்தனாவேன்: என்னைக்கழுவி
யருளும்,அப்பொழுதுநான்உறைந்தமழையிலும்
௮ வெண்மையாவேன்.—சந்தோஷத்தையும் மகிழ்ச்
சியையும் நான்கேட்கப்பண்ணும்; அதினால் நீர்
௯ நொறுக்கின எலும்புகள் களிகூரும்.—நீர் என்
பாவங்களுக்கு உமது முகத்தை மறைத்து, என்
அதிக்கிரமங்களெல்லாவற்றையும் துடைத்தரு
௰ ளும்.—தேவனே, சுத்த இருதயத்தை எனக்குள்
ளே சிருஷ்டித்தருளும்; எனக்குள்ளேநிலையான
௰௧ ஆவியைப்புதிதாக்கியருளும்.—உமது சமுகத்தி
னின்று என்னைத்தள்ளிவிடாதிரும்; என்னிடத்
தினின்று உமது பரிசுத்த ஆவியைநீக்காதிரும்.—
௰௨ நீர்தரும் இரட்சிப்பினாலாகுஞ் சந்தோஷத்தைத்
திரும்பவும் எனக்குத்தாரும்; உமது உற்சாகமான
௰௩ ஆவியினால் என்னைத் தாங்கிக்கொள்ளும்.—அப்
பொழுது பாதகருக்கு உமது வழிகளை உபதே
சிப்பேன்; பாவிகள் உம்மிடத்தில் மனந்திரும்பு
௰௪ வார்கள்.—தேவனே, என்னை இரட்சிக்குந்தே
வனாகியநீரே, இரத்தப்பழிகளுக்கு என்னை நீக்
கிவிடும்: அப்பொழுது என்நாவு உமது நீதியைக்
௰௫ கெம்பீரித்துப்பாடும்.—ஆண்டவரே, என் உ
தடுகளைத்திறந்தருளும்; அப்பொழுது என்வாய்
௰௬ உமது துதியைஅறிவிக்கும்.—பலியை நீர் விரும்
புகிறதில்லை; விரும்பினால் தருவேன்: தகனபலி
உமக்குப்பிரியமுள்ளதல்ல.—தேவனுக்கேற்ற ௰௭
பலிநொறுங்கிய ஆவிதான்: தேவனே, நொ
றுங்கியதும் நருங்கியதுமான இருதயத்தை நீர்பு
றக்கணியீர்.—உமது தயையின்படி சீயோனுக்கு ௰௮
நன்மைசெய்யும்: யெருஷலேமின் மதில்களைக்
கட்டுவீராக.—அப்பொழுது நீர் தகனபலியும், ச ௰௯
ருவாங்கதகனபலியுமாகிய நீதியுள்ள பலிகளின்
மேல் சந்தோஷப்படுவீர்: அப்பொழுது உமது
வேதிகையின்மேற் காளைகளைப்பலியிடுவார்கள்.

## ௫௨. சங்கீதம்.

தோவேக்கின் தோஷத்தையும் நாசத்தையுந் தெரிவித்தல்.

தாவீது அகீமெலேக்கின்வீட்டுக்குவந்தானென்று ஏதோமியனாகிய தோவேக்வந்து ஷவுலுக்குஅறிவித்தபின்புபோதகஞ்செய்யும்பொருட்டுப்பாடகத்தலைவனிடத்தில் ஒப்பிக்கும்படி தாவீதுசெய்தசங்கீதம்.

பலவானாகிய மனுஷனே, துர்க்கருமத்தில் நீ ௧
என் மேன்மைபாராட்டுகிறாய், தேவனுடைய
தயைஎந்நாளுமுள்ளது.—கூரிய சவுரக்கத்தியைப் ௨
போல், கபடுகள் செய்யும் உன்நாவு கேடுகளைச்
செய்யப் பார்க்கின்றது.—நன்மையைப்பார்க்கி ௩
லுந் தீமையையும், மெய்மையைப் பார்க்கிலும்
பொய்மையையும் விரும்புகிறாய். சேலா.—கப ௪
டமுள்ள நாவே, நீ சருவசங்காரவாக்குகளை வி
ரும்புகிறாய்.—தேவன் உன்னை முழுமையுஞ் சங் ௫
கரிப்பார், அவர் உன்னைப்பிடித்து, உன் வாசஸ்
தலத்தினின்று பிடுங்கி, சீவனுள்ளோருக்கிடமா
கிய பூமியினின்று நிருமூலமாகப்பண்ணுவார்.
சேலா.—நீதிமான்கள் அதைக்கண்டு,இவனே தே ௬
வனைத் தனக்கு ஒரு அரணென்று எண்ணாமல்
தன் ஐசுவரியப்பெருக்கத்தைநம்பி,—தன் தீவி ௭
னையில் பலத்துக்கொண்ட மனுஷன்; இவனைப்
பாருங்களென்றுசொல்லி, பயந்து, அவனைக்கு
றித்து நகைப்பார்கள்.—நான் பச்சையான சீதவி ௮
ருட்சத்தைப்போலத் தேவனுடைய ஆலயத்
திலிருந்து, தேவனுடையதயையை இடைவி
டாமல் சதாகாலமும் நம்புகிறேன்.—நீரே இதைச் ௯
செய்தீர், ஆதலால் நான் நித்தமும் உம்மைத் து
திப்பேன்: உமது நாமத்தைக்காத்திருப்பேன்; அ
து பரிசுத்தவான்களுக்கு நன்றாயிருக்கின்றதே.

## ௫௩. சங்கீதம்.

பாவிகளுடையதுர்க்கருமத்தையும் அவர்களுக்கு வருந்துக்கத்தையுந்தெரிவித்தல்.

போதகஞ் செய்யும்பொருட்டு மகலாத்தென்னும்வாத்தியத்தில்வாசிக்கும்படிபாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்த சங்கீதம்.

தேவனில்லையென்று அஞ்ஞானி தன் சிந்தை ௧

(௫௧. சங். ௧.) ஏசா.௪௪.௨௨. கொலோ.௨.௰௪. (௨) எபி.௯.௰௪. ௧.யோவா.௧.௭,௯. வெளி.௧.௫. (௪) ஆதி.௨௰.௬. லேவி.௫.௰௯. ௨.சாமு.௰௨.௰௩. லூக்.௰௫.௨௧. ரோ.௩.௪. (௫) யோபு.௰௪.௪. யோவா.௩.௬. ரோ.௫.௰௨. எபே.௨.௩. (௭) லேவி.௰௪.௪,௬,௪௯. எபி.௯.௰௯. ஏசா.௧.௰௮. (௮) மத்.௫.௪. (௯) எரே.௰௬.௰௭. (௰) அப்.௰௫.௯. எபே.௨.௰. (௰௧) ஆதி.௪.௰௩. ரோ.௮.௯. எபே.௪.௩௰. (௰௨) ௨.கொரி.௩.௰௭. (௰௪) ௨.சாமு.௰௧.௰௭. (௰௬) எண்.௰௫.௨௭,௩௰. ஏசா.௧.௰௧. எரே.௭.௨௨. ஓசி.௬.௬. (௰௭) ஏசா.௫௭.௰௫. (௰௯) மல்.௩.௩.—(௫௨. சங். ௧.) ௧.சாமு.௨௧.௭. (௩) எரே.௯.௪,௫. (௫) நீதி.௨.௨௨. (௭) யோபு.௨௨.௰௯. சங்.௩௭.௩௪. மல்.௧.௫. சங்.௫௮.௰. (௮) எரே.௰௧.௰௬. ஓசி.௰௪.௬. (௯) சங்.௫௪.௬.—(௫௩. சங். ௧.) ரோ.௩.௰.

யுடன் சொல்லுகிறான். அவர்கள் துஷ்டர்கள்,
அரோசிகமான கருமத்தைச் செய்கிறார்கள்: நன்
௨ மைசெய்பவனில்லை.-ஞானவானுந் தேவனைத்
தேடுகிறவனும் உண்டோவென்றறியும்படி, தே
வன் வானத்தினின்று மனுபுத்திரரை உற்றுப்பா
௩ ர்த்தார்.—அவர்கள் எல்லாரும் நெறிதப்பி, ஏக
மாய்அசுத்தரானார்கள்; நன்மைசெய்கிறவன் ஒரு
௪ வனாகிலுமில்லை.—ஆகாரத்தைப் புசிப்பதுபோல்
என்சனங்களைப்பட்சிப்பவர்களாகியதுஷ்டருக்
கு அறிவில்லையா; அவர்கள் தேவனை நோக்கிப்
௫ பிரார்த்தனைபண்ணுகிறதில்லை.—உன்னைவளைந்
துகொண்டவனுடைய எலும்புகளைச் சிதறப்
பண்ணினபடியால், பயமில்லாத இடத்திலும் மி
கவும் பயப்பட்டார்கள்: தேவன் அவர்களை அ
லட்சியம்பண்ணினபடியால் நீ அவர்களை வெட்
௬ கப்படுத்தினாய்.—ஆ, இஸரவேலின் இரட்சிப்
புச்சீயோனினின்றுதோன்றினால்நலமாகும்.தே
வன் தம்முடையசனங்களைச்சிறைமீட்கும்பொ
ழுது யாக்கோபு சந்தோஷப்படுவான், இஸர
வேல் மகிழ்ந்திருப்பான்.

## ௫௪. சங்கீதம்.

*சீப்பூராரினின்று தன்னை ரட்சிக்கும்படி தாவீது பிரார்த்தித்தல்.*

போதகஞ் செய்யும்பொருட்டு நிகினோத் வாத்தியத்தில் வாசிக்கும்படி பாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்தசங்கீதம். சீப்பூரார்வந்து ஷவுலைநோக்கி, தாவீது எங்கள் மத்தியில் ஒளித்திருக்கிறானல்லவாவென்று சொன்ன சமயத்தில் செய்யப்பட்டது

தேவனே, உமது நாமத்தினால் என்னை இரட்
சியும், உமதுவல்லமையினால் எனக்கு நியாயஞ்
௨ செய்யும்.—தேவனே, என்விண்ணப்பத்தைக்
கேளும்; என்வாய்மொழிகளுக்குச் செவிகொ
௩ டுத்தருளும்.—அந்நியர் எனக்கு விரோதமாய் எ
ழும்புகிறார்கள், துயரப்படுத்துகிறவர்கள் என்பி
ராணனைவாங்க வகைதேடுகிறார்கள்: தேவன்
தங்களுக்குமுன்னிற்கிறாரென்று அவர்கள் எண்
௪ ணவில்லை: சேலா.—பாரும், தேவனே என்
துணை: ஆண்டவர் என்பிராணனை ஆதரிப்ப
௫ வர்களோடேயிருக்கிறார்.—அவர் என்சத்துருக்
களின் தீமைக்குப் பிரதிசெய்வார்: உமது சத்தி
௬ யத்தின்படி அவர்களைச் சேதித்துவிடும்.—யெ
கோவாவே, உற்சாகத்துடன் நான் உமக்குப்
பலியிடுவேன்: உமதுநாமம் உத்தமம், ஆதலால்
௭ அதைத்துதிப்பேன்.—அவர் எனது உபத்திரவங்
களெல்லாவற்றையும் நீக்கி என்னைவிடுவித்தார்:
என்கண் என்சத்துருக்களைக்கண்டது.

## ௫௫. சங்கீதம்.

*ஆபத்துக்காலத்திலே துஷ்டசனங்களுக்குவிரோதமாய்த் தாவீது பிரார்த்தித்தல்.*

போதகஞ் செய்யும்பொருட்டு நிகினோத் வாத்தியத்தில் வாசிக்கும்படி பாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்த சங்கீதம்.

தேவனே, என்பிரார்த்தனைக்குச் செவிகொ ௧
டுத்தருளும்; நான்விண்ணப்பஞ்செய்யுஞ்சமயத்
தில் மறைந்திராதேயும்.—என்மேற்சிந்தைவைத் ௨
து எனக்குஉத்தரந்தாரும்: சத்துருவின்கலகத்தி
னிமித்தமும் துன்மார்க்கரின் உபத்திரவத்தினி
மித்தமும்,-என்துயரத்தில்வியாகுலப்பட்டுநான் ௩
மிகவுங்கலங்குகிறேன்: அவர்கள் என்மேல் பா
வத்தையேற்றி, குரோதத்தினால் என்னை விரோ
திக்கிறார்கள்.—என் இருதயம் எனக்குள்ளேவேத ௪
னைப்படுகின்றது: மரணத்தின்பயங்கள்என்மேற்
பாய்ந்தன.—பயமும்நடுக்கமும் என்னைப்பிடித்த ௫
ன, பயங்கரம்என்னைமூடிற்று.—ஆ, புறாப்போல் ௬
எனக்குச் சிறகுண்டானால், நான் பறந்துபோய்
இளைப்பாறுவேன்.-நான் திரிந்துதூரத்திற்போய் ௭
வனத்திலேதரிப்பேன்: சேலா.—பெருங்காற்றுக் ௮
குஞ் சூறைக்கும் விலகித் துரிதமாய்ப் போவே
னென்றேன்.—ஆண்டவரே, நீர் அவர்களைப் ௯
பட்சித்து, அவர்களுடைய நாக்களைப்பிரித்துவி
டும்: நகரத்திலேகொடுமையையும் கலகத்தையுங்
கண்டேன்.—அவைகள் இரவும்பகலும் அதின் ௰
மதில்களின்மேற் சுற்றித்திரிகின்றன: அநியாய
முங்கிலேசமும் அதின்மத்தியிலிருக்கின்றன.—
தீங்கு அதின்மத்தியிலிருக்கின்றது: கள்ளமும் ௰௧
வஞ்சகமும்அதின்வீதியைவிட்டுவிலகவில்லை.—
என்னைநிந்தித்தவன்சத்துருவல்ல; அப்படியிருந் ௰௨
தால் சகிப்பேன்: எனக்குவிரோதமாகப் பெரு
மைபாராட்டினவன் என்பகைவனல்ல; அப்ப
டியிருந்தால் அவனுக்குமறைந்திருப்பேன்.—எ ௰௩
னக்கு இணையானவனும், என்வழிகாட்டியும்,
என்தோழனுமாகிய நீயே அதைச்செய்தாய்.—
நாம் ஏகமாய்க்கூடி இனிதாய் ஆலோசனைபண் ௰௪
ணிவந்தோம், சனக்கூட்டத்துடன் தேவனு
டைய ஆலயத்துக்குப்போய்வந்தோம்.-அவர்க ௰௫
ளுடைய வாசஸ்தலங்களிலும் உள்ளங்களிலுந்
தீங்குஇருக்கிறபடியால், சடிதியில்மரணம்அவர்
களைப்பிடிக்கும், அவர்கள் உயிருடன் பாதாளத்
தில் இறங்குவார்கள்.-நானோ, தேவனை நோக் ௰௬
கிக்கூப்பிடுவேன்; யெகோவா என்னைஇரட்
சிப்பார்.—சாயங்காலத்திலும், விடியற்காலத்தி ௰௭
லும், மத்தியானகாலத்திலும் நான்தியானம்பண்
ணிஓலமிடுகையில், அவர்என்விண்ணப்பத்தைக்
கேட்பார்.—அநேகர் என்னைவிரோதித்தார்கள்: ௰௮
அவர் யுத்தத்தினின்று என்பிராணனைச் சமாதா
னத்துடன்விடுவித்தார்.—அநாதியாயிருக்கிற தே ௰௯
வன் என்விண்ணப்பத்தைக்கேட்டு அவர்களைக்
கிலேசப்படுத்துவார். சேலா. அவர்களுக்கு விக்
கினங்களில்லை, அதினிமித்தம் அவர்கள் தேவ
னுக்குப்பயப்படுகிறதில்லை.—அவன் தன்னுடன் ௨௰
சமாதானமாயிருந்தவர்களுக்கு விரோதமாய்த்த
ன்கையை நீட்டி, தன் உடன்படிக்கையைத்தள்
ளிவிட்டான்.—அவனுடைய வாய்மொழிகள் ௨௧
வெண்ணெயிலுமிருது,யுத்தமேஅவன்எண்ணம்:

(௨) சங்.௩௩.௰௩.(௪)எரே.௪.௨௨.(௫)லேவி.௨௬.௰௭,௩௬. நீதி.௨௮.௧. எசேக்.௬.௫.—(௫௫.சங்.௩.) ஏசா.௩௮.௰௪. ௨.சாமு.௰௬.௭,௮.(௰௨)சங்.௪௧.௯. சங்.௩௫.௨௬.(௰௩)௨.சாமு.௰௫.௨. (௰௫) எண்.௰௬.௩௰.(௰௭)தானி.௬.௰. லூக்.௰௮.௧. அப்.௩.௧. ௧.தெச.௫.௰௭.(௰௯)உபா.௩௩.௨௭.(௨௰)அப்.௰௨.௧.(௨௧)சங்.௨௮.௩. நீதி.௫.௩,௪.

அவன் வாக்குகள் எண்ணெயிலும் மென்மை
யாயிருந்தும், அவைகள் உருவின கட்கங்கள்
௨௨ போலிருந்தன.—உன் பாரத்தை யெகோவா
வின் மேல்வைத்துவிடு, அவர் உன்னைக் காப்
பாற்றுவார்: நீதிமானை ஒருபொழுதுந் தள்ளாட
௨௩ விடார்.—தேவனே, நீர் அவர்களை அழிவாகி
யகுழியில் இறங்கப்பண்ணுவீர்: இரத்தப்பிரிய
ருங்கபடரும் தங்கள் ஆயுளிற்பாதிவரைக்காயி
னும் இருக்கமாட்டார்கள்; நானோ உம்மை நம்
புகிறேன்.

## ௫௬. சங்கீதம்.

*சத்துருவினின்றுஇரட்சைபெறும்படி தாவீது பி ரார்த்தித்தல்.*

யோனத்தீரம் ரேகோகீமென்னும் வாத்தியத்தில்வா சிக்கும்படிபாடகத்தலைவனிடத்தில்தாவீதுஒப்பித் த சுவர்ண சங்கீதம். பெலிஸ்தியர் காத் நகரத்தில் அவனைப்பிடித்தபொழுதுசெய்யப்பட்டது.

தேவனே, எனக்குத்தயைசெய்யும்:மனுஷன்
என்னைவிழுங்கப்பார்க்கிறான்; தினமும் யுத்தஞ்
௨ செய்து,என்னைஉபத்திரவப்படுத்துகிறான்.—என்
சத்துருக்கள் நாடோறும் என்னைவிழுங்கப்பார்க்
கிறார்கள்: சருவத்துக்குமேலானவரே, எனக்கு
௩ விரோதமாக யுத்தஞ்செய்பவர்கள் அநேகர்.—எ
னக்குப்பயம் நேரிடுகிறபொழுது உம்மை நம்பு
௪ வேன்.—தேவனைச்சார்ந்து அவர் வாக்கைப் பு
கழுவேன், தேவன்மேல் நம்பிக்கை வைத்தே
ன்; பயப்படேன், மாமிசம் எனக்கென்னசெய்
௫ யும்.—எப்பொழுதும் என் வாக்குகளைப்புரட்டு
கிறார்கள்: எனக்குத்தீங்குசெய்வதே அவர்களு
௬ டைய முழுஎண்ணம்.—அவர்கள் ஏகமாய்க்கூடி
ஒளித்துக்கொள்ளுகிறார்கள்,என் பிராணனுக்கா
கக்காத்திருக்கும்பொழுது என் அடிச்சுவடுகளைத்
௭ தொடருகிறார்கள்.—அவர்கள் அக்கிரமத்தினாலே
தப்புவார்களா, தேவனே, கோபத்தில் சனங்
௮ களைக்கீழேதள்ளிவிடும்.—நீர் என் அலைவுகளை
எண்ணுகிறீர்: என் கண்ணீரை உமது துருத்தியி
லிடும்: இவைகள் உமது புத்தகத்திலில்லையா.—
௯ நான் பிரார்த்தனைபண்ணும்பொழுது என் சத்து
ருக்கள்புறங்காட்டுவார்கள்: தேவன் என் பட்
௰ சத்திலிருக்கிறார்; இது எனக்குத்தெரியும்.—தே
வனைச்சார்ந்து அவர்வாக்கைப்புகழுவேன்: யெ
கோவாவைச்சார்ந்து அவர் வாக்கைப் புகழு
௰௧ வேன்.-தேவனில் நம்பிக்கையாயிருக்கிறேன்:
மனுஷர்எனக்குச்செய்வதற்குப்பயப்படேன்.—
௰௨ தேவனே, நான் உமக்குச் சொன்ன சங்கற்
பங்கள் என்மேலிருக்கின்றன: நான் உமக்கு ஸ்
௰௩ தோத்திரங்களைச்செலுத்துவேன்.—நீர் என்பிரா
ணனை மரணத்திற்குத்தப்புவித்தீர்: நான் தேவ
னுடையசமூகத்தில் சீவனுள்ளோருடைய ஒளி
யில் நடக்கும்படி, நீர் என் கால்கள் இடறாமல்
தப்புவிக்கமாட்டீரா.

## ௫௭. சங்கீதம்.

*சவுலின் கையினின்று இரட்சைபெறும்படி பி ரார்த்தித்தல்: ௭. தேவனைத்துதித்தல்.*

அல்தாசெத்தென்னும் வாத்தியத்தில் வாசிக்கும்ப டிபாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்தசுவர் ணசங்கீதம். அவன் சவுலுக்குத் தப்பிப்போய்க் குகையிலிருந்த சமயத்தில் செய்யப்பட்டது.

தேவனே, எனக்கு இரங்கும்,எனக்கு இரங் ௧
கும்:என் ஆத்துமம்உம்மைச்சார்ந்துகொள்ளும்:
ஆபத்து நீங்குமளவும் உமது சிறகுகளின் நிழ
லாகிய சார்பிலிருப்பேன்.—சருவத்துக்குமே ௨
லான தேவனும், எனக்கு எல்லாவற்றையும்
நிறைவேற்றுகிற தேவனுமாயிருக்கிறவரை
வேண்டிக்கொள்வேன்.-என்னைவிழுங்கப்பார்க் ௩
கிறவனுடைய நிந்தையினின்று என்னைவிடுவிக்
கும்பொருட்டு, அவர் வானத்தினின்று கைநீட்
டுவார். சேலா. தேவன் தமது தயையையும் சத்
தியத்தையும் வெளிப்படுத்துவார்.—என் ஆத்து ௪
மம் சிங்கங்களுக்குள்ளே இருக்கின்றது: அக்கி
னியை வீசுகிற மனு புத்திரருக்குள்ளே கிடக்
கிறேன்; அவர்கள் பற்கள் ஈட்டிகளையும் அம்பு
களையும்போலவும், அவர்கள் நாவு கூரிய கட்
கத்தைப்போலவும் இருக்கின்றன.—தேவனே, ௫
வானங்களுக்குமேலாய் உயர்ந்தருளும், பூமிமு
ழுவதின்மேலும் உமதுமகிமைபிரகாசிக்கப்பண்
ணும்.—அவர்கள் என்கால்களை அகப்படுத்துகிற ௬
தற்குக் கண்ணிவைத்திருக்கிறார்கள்; என்மனந்
தளர்ந்துபோயிற்று: எனக்காக அவர்கள் வெட்
டினகுழியில் அவர்களேவிழுந்தார்கள். சேலா.—
தேவனே, என் இருதயம் உறுதியாயிருக்கின்ற ௭
து; என்இருதயம் உறுதியாயிருக்கின்றது: நான்
பாடித்துதிசெய்வேன்.—என்மகிமையே விழித் ௮
துக்கொள்; வீணையே, கின்னரமே, விழித்துக்
கொள்ளுங்கள்: நானே அதிகாலையிலேவிழிப்பே
ன்.—ஆண்டவரே, சனங்களுக்குள் உம்மைக் ௯
கீர்த்தனம்பண்ணுவேன்: தேசத்தாருக்குள் உம
து நாமத்தைப்பாடுவேன்.—வானங்கள் பரியந்தம் ௰
உமதுதயையும், மேகங்கள் பரியந்தம் உமது சத்
தியமும் உயரமுள்ளன.—தேவனே, வானங்க ௰௧
ளுக்குமேலாய் உயர்ந்தருளும்: பூமிமுழுவதின்
மேலும் உமது மகிமைபிரகாசிக்கப்பண்ணும்.

## ௫௮. சங்கீதம்.

*பாரபட்சமுள்ள நீதிபதிகளின் தோஷமும் நாச முந் தெரிவித்தல்.*

அல்தஷ் கேத்தென்னும் வாத்தியத்தில் வாசிக்கும் படி பாடகத் தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்த சு வர்ண சங்கீதம்.

மனுபுத்திரரே, நீங்கள் மவுனமாயிருக்கையில் ௧
நீதியைப் பேசுகிறீர்களா: நியாயமாய்த் தீர்ப்புக்
கொடுக்கிறீர்களா.—மனதார நியாயக்கேடு செய் ௨
கிறீர்கள்; தேசத்தில் உங்கள் கைகளின் கொடு

(௨௨) சங்.௩௭.௫. மத்.௬.௨௫. லூக்.௰௨.௨௨. ௧.பேதுரு.௫.௭. (௨௩) யோபு.௰௫.௩௨. நீதி.௰.௨௭. பிர.௭.௰௭.—(௫௬. சங். ௪.) சங்.௱௰௮.௬. எசா.௩௧.௩. எபி.௰௩.௬. (௮) மல்.௩.௰௬. (௯) ரோ.௮.௩௧. (௰௩) சங்.௱௰௬.௮.—(௫௭. சங். ௧.) சங்.௫௬.௧. எசா.௨௬.௨௰. (௩) சங்.௪௰.௰௧. (௪) நீதி.௩௰.௰௪. சங்.௫௫.௨௧. (௮) சங்.௰௬.௯. (௰) சங்.௱௩.௰௧.—(௫௮. சங். ௨.) எசா.௰.௧.

௩ மையை நிறுத்துக்கொடுக்கிறீர்கள்.—துன்மார்க்
கர் சென்மமுதல் நெறிதப்பி நடக்கிறார்கள்: பிர
சவித்ததுமுதற்கொண்டு பொய்சொல்லித்திரிகி
௪ றார்கள்.—அவர்கள் விஷம் சருப்பத்தின்விஷம்
௫ போலிருக்கின்றது.-பாம்பாட்டிகளும் விந்தை
யான ஸ்தம்பனவித்தைக்காரரும் சொல்லுகிற
தீட்சையின் சத்தத்திற்குச்செவிகொடாமல் தன்
காதை அடைக்கிற செவிடான விரியன்பாம்
௬ பைப்போலிருக்கிறார்கள்.—தேவனே, அவர்
கள் வாயிலுள்ள பற்களைத் தகர்த்துவிடும்: யெ
கோவாவே, சிங்கக்குட்டிகளுடைய கடை
௭ வாய்ப் பற்களைப் பிடுங்கிவிடும்.-கடந்து ஓடுகிற
சலம்போல் அவர்கள் கரைந்துபோவார்கள்: அ
வன் தன்அம்புகளைத்தொடுக்கும்பொழுது அவை
௮ கள்சின்னபின்னமாய்ப்போகக்கடவன.-கரைந்
துபோகிற நத்தையைப்போலப்போவார்களாக:
ஸ்திரியின் முதிராதபிண்டத்தைப்போலச் சூரிய
௯ னைக்காணுதிருப்பார்களாக.-முள்ளுகளை உங்கள்
பானைகள் உணருமுன்னமே,அவர்பசுமையான
தையும் எரிந்துபோனதையும் சுழல்காற்றினால்
௰ சிதற அடிப்பார்.-பழிவாங்குதலை நீதிமான்கண்
டுமகிழுவான்: அவன் தன்கால்களைத் துன்மார்க்
௰௧ கனுடைய இரத்தத்திலே கழுவுவான்.-அப்பொ
ழுதுமனுஷன்மெய்யாய்நீதிமானுக்குப்பலனுண்
டென்றும், மெய்யாய்ப் பூமியிலேநியாயம் விசா
ரிக்கிற தேவன் ஒருவர் இருக்கிறாரென்றுஞ்
சொல்லுவான்.

## ௫௯. சங்கீதம்.

தாவீது பிராணரட்சைதேடிப்பெற்றபின் தேவ
னைத் துதித்தல்.

அல்தஷ்கேத்தென்னும் வாத்தியத்தில் வாசிக்கும்ப
டி பாடகத்தலைவனிடத்தில் தாவீதொப்பித்த சுவர்
ண சங்கீதம். ஷவுல் அனுப்பிய ஆட்கள் தாவீதிருந்த
வீட்டைக்காவல்பண்ணி அவனைக்கொலைசெய்ய
வகைதேடின சமயத்தில் செய்யப்பட்டது.

என் தேவனே, என்சத்துருக்களுக்கு என்
னைத்தப்புவியும்: எனக்குவிரோதமாய் எழும்புகி
றவர்களுக்கு என்னைவிலக்கி உயர்த்தியருளும்.-
௨ தீங்குசெய்கிறவர்களினின்று என்னைவிடுவித்து,
இரத்தப்பிரியரினின்று என்னை இரட்சித்தருளு
௩ ம்.-பாரும், அவர்கள் என் பிராணனைச்சேதிக்
கும்படி பதிவிருக்கிறார்கள்: யெகோவாவே,
பலவான்கள் எனக்குவிரோதமாய்க்கூட்டங்கூ
டினார்கள். என்அதிக்கிரமங்களும்பாவங்களுமா
௪ கிய இவைகளினிமித்தமோ, அல்ல.-என்னிலே
குற்றமில்லாதிருந்தும் ஓடித்திரிந்து ஆயத்தமாகி
றார்கள்: எனக்குத்துணையாய்விழித்துப்பாரும்.-
௫ சேனாபதியுந் தேவனுமாகிய யெகோவா
வே, இஸ்ரவேலரின் தேவனே, புறத்தேசத்
தார்யாவரையும் நியாயம் விசாரிக்கும்படிவிழித்
திருந்து, துரோகஞ்செய்யுந் தீயோர் ஒருவருக்
குந் தயைசெய்யாதிரும். சேலா.—அவர்கள் சா ௬
யங்காலத்தில் திரும்பிவந்து நாய்களைப்போலக்
குலைத்து, ஊரைச் சுற்றித்திரிகிறார்கள்.-பாரும், ௭
தங்கள்வாயினால் வாதாடுகிறார்கள்: அவர்கள் உ
தடுகளிற் கட்கங்கள் உண்டு: கேட்கிறவன் யா
வனென்கிறார்கள்.-யெகோவாவே, நீர் அ ௮
வர்களை நகைப்பீர்; புறத்தேசத்தார் யாவரையும்
பரிகாசம் பண்ணுவீர்.—அவன் வல்லமையினி ௯
மித்தம் உம்மை எதிர்பார்த்திருக்கிறேன்: தேவ
னே என் உயர்ந்ததுருக்கம்.—எனக்குத் தயை ௰
செய்கிற தேவன் எனக்கு முன்னிற்பார்: தே
வன் என்சத்துருக்களுக்கு வருவதை எனக்குக்
காட்டுவார்.—அவர்களைக்கொலைசெய்யாதிரும், ௰௧
என்சனங்கள் மறந்துபோவார்களே: எங்கள் கே
டகமாகிய ஆண்டவரே, நீர் உமது வல்லமை
யினால் அவர்களைச் சிதற அடித்து, அவர்களைக்கீ
ழேதள்ளிவிடும்.—அவர்கள், தங்கள்வாயின் பா ௰௨
வமும், தங்கள் உதடுகளின்வாக்குகளும், அவர்
களிட்டசாபமும், சொல்லியபொய்யுமாகிய இ
வைகளினிமித்தம் தங்கள் அகந்தையில் அகப்ப
டுவார்களாக.—நீர் கோபத்தினால்அவர்களைச்சங் ௰௩
கரித்துவிடும், தேவன் யாக்கோபின்வமிசத்துக்
குள் பூமியினெல்லைவரைக்கும் அரசாளுகிறாரெ
ன்பதை அவர்களறியும்பொருட்டு அவர்களைச்
சங்கரித்துவிடும். சேலா.—அவர்கள் சாயங்கா ௰௪
லத்திலேதிரும்பிவந்து,நாய்களைப்போலக்குலைத்
து, ஊரைச்சுற்றித் திரிவார்களாக.—ஆபத்தினி ௰௫
மித்தம் அவர்கள் அலைந்துதிரிந்தாலுந் திருத்தி
யடையாமல் இராமுழுவதுந் தங்குவார்களாக.—
ஆபத்துக்காலத்தில் நீர் எனக்கு உயர்ந்ததுருக்க ௰௬
மும் புகலிடமுமாயிருந்தபடியினால்,நான் உமது
வல்லமையைப்பாடுவேன்; விடியற்காலத்தில் உ
மதுதயையைமகிழ்ச்சியோடுபுகழுவேன்.—என் ௰௭
பெலமே,உம்மைப்பாடுவேன்: தேவனே என்
உயர்ந்த துருக்கம், தேவனே என் தயாபரர்.

## ௬௰. சங்கீதம்.

௧. யுத்தகாலத்தில் தாவீது சகாயத்தை எதிர்பார்த்
தல்: ௯. அவன்பிரார்த்தித்தல்.

போதிக்கத்தக்கதாக ஷூஷான் எதூத்தென்னும்
வாத்தியத்தில்வாசிக்கும்படி பாடகத்தலைவனிடத்
தில் தாவீது ஒப்பித்தசங்கீதம். தாவீது அராம்நகரயீ
மியரோடும் அராம் சோவாபியரோடும் யுத்தம்பண்
ணுகையில் யோவாப் உப்புப்பள்ளத்தில் ஏதோமி
யரில் பன்னீராயிரம் பேரைக்கொலைசெய்து திரும்
பியபொழுதுசெய்யப்பட்டது.

தேவனே, நீர் எங்களைத்தள்ளிவிட்டீர், எங்க ௧
ளைச்சிதறஅடித்தீர், எங்கள்மேற் கோபங்கொண்
டீர்; ஆ, திரும்பவும் எங்களிடத்தில் வாரும்.-நீர் ௨
பூமியை அதிரப்பண்ணினீர்; அதைவெடிப்பாக்
கினீர்: அதின் வெடிப்புக்களைச் சீர்ப்படுத்தும்,
அது அசைகின்றது.—உம்முடைய சனங்களுக் ௩

(௩) சங்.௫௧.௫. ஏசா.௪௮.௮. (௪) சங்.௱௪௰.௩. பிர.௰.௰௧. (௫) எரே.௮.௰௭. (௭) யோசு.௭.௫. (௮) யோபு.௩.௰௬.
பிர.௬.௩. (௯) நீதி.௰.௨௫. (௰) சங்.௬௮.௨௩. (௰௧) ஏசா.௩.௰.—(௫௯. சங். ௧.) சங்.௰௮.௪௮. (௩) ௧.சாமு.௨௪.௰௧.
(௭) சங்.௫௭.௪. நீதி.௰௨.௰௮. (௮) ௧.சாமு.௰௯.௰௬. (௰) சங்.௨௪.௩. (௰௨) நீதி.௰௨.௰௩. (௰௫) யோபு.௰௫.௨௩.—
(௬௰. சங். ௩.) ஏசா.௫௧.௰௭,௨௨.

குக்கடினமானதைக்காண்பித்தீர்: தத்தளிப்பின்
திராட்சரசத்தை நாங்கள் குடிக்கப்பண்ணினீர்.—
௪ சத்தியத்தினிமித்தம் ஏற்றும்படியாக உமக்குப்ப
யந்துநடக்கிறவர்களுக்கு ஒருகொடியைக் கொ
௫ டுத்தீர். சேலா.—உமது பிரியர் விடுவிக்கப்படும்
பொருட்டு, உமதுவலக்கரத்தினால் இரட்சித்து எ
௬ னக்கு உத்தரந்தந்தருளும்.—தேவன் தமது ப
ரிசுத்தஸ்தானத்தினின்றுபேசினார்; நான் களிகூ
ருவேன், ஷிகேமைப்பங்கிடுவேன், சுக்கோத்
௭ தின் பள்ளத்தை அளப்பேன்.—கிலியாத்தென்னு
டையது, மனாசேஎன்னுடையது, எப்பிராயீம் என்
தலையின்பெலம்; யூதா என் நியாயசாஸ்திரி.—
௮ மோவாபு என் ஸ்நானபாத்திரம்; ஏதோமின்மேல்
என் செருப்பை எறிந்துவிடுவேன்: பெலிஸ்தி
௯ யாவே, நீ என்னிமித்தங்களிகூரு.—அரணான நக
ரத்தில் என்னை நடத்திக்கொண்டுபோகிறவன்
யாவன்; ஏதோமில் என்னைப்பிரவேசிக்கச்செய்
௰ பவன்யாவன்.—தேவனே, எங்களைத்தள்ளிவிட்
டவர் நீரல்லவா, தேவனே, எங்கள்சேனைகளு
௰௧ டன்புறப்படாமல்விட்டவர் நீரல்லவா.—இலே
சத்தில் எங்களுக்கு உதவிசெய்யும்: மனுஷனு
௰௨ டைய உதவி விருதா.—தேவன் மூலமாய்ப்ப
ராக்கிரமத்தைக்காட்டுவோம்: அவரே எங்கள்சத்
துருக்களைமிதித்துவிடுவார்.

## ௬௧. சங்கீதம்.

தாவீது தேவனைத்தனக்குப் புகலிடமென்று
தெரிந்துகொள்ளல்.

———

நிகினோதென்னும் வாத்தியத்தில் வாசிக்கும்படிபாட
கத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்த சங்கீதம்.

தேவனே, நான் இடும் ஓலத்தைக்கேட்டரு
ளும்; என் விண்ணப்பத்தைச் சிந்தையில் வை
௨ யும்.—எனதுள்ளந் துக்கத்தில் அமிழ்ந்திருக்கும்
பொழுது தேசத்தின் எல்லையினின்று உமக்கு
ஓலமிடுவேன்: எனக்கெட்டாத கன்மலையில்
௩ கொண்டுபோய்விடும்.—நீர் என்புகலிடமும், சத்
துருவுக்கு என்னைத்தப்புவிக்கும்திடமானதுருக்
௪ கமுமாயிருந்தீர்.—நான் உமதுகூடாரத்தில் என்
றும்வசிப்பேன்: உமதுசிறகுகளின்கீழே அடைக்
௫ கலம் புகுவேன். சேலா.—தேவனே, நான்
சொன்னசங்கற்பங்களைக்கேட்டீர்: உமது நாமத்
துக்குப்பயப்படுகிறவர்களுக்கேற்றசுதந்தரத்தை
௬ எனக்குத்தந்தீர்.—நீர் இராசாவின் ஆயுளாகிய அ
வன்வருஷங்களை அநேகந்தலைமுறைவரைக்கும்
௭ நீடிக்கப்பண்ணுவீர்.—அவன் என்றுந் தேவனு
டைய சமுகத்திலிருப்பான்: தயையுஞ் சத்திய
௮ மும் அவனைக்காப்பாற்றும்படி செய்யும்.—அதி
னால் நான்என்றும் உமது நாமத்துக்கு ஸ்துதிபாடு
வேன், நாடோறும்என்சங்கற்பங்களைநிறைவேற்
றுவேன்.

## ௬௨. சங்கீதம்.

தேவனுடைய நிலையையும் மனுஷனுடைய நி
லையாமையையுந் தெரிவித்தல்.

———

பாடகத்தலைவனாகிய யெதுதூனிடத்தில் தாவீது
ஒப்பித்த சங்கீதம்.

என் ஆத்துமந் தேவனையே எதிர்பார்த்து அ ௧
மைந்திருக்கின்றது: அவரால் எனக்கு இரட்சிப்
புவரும்.—அவரே என் கன்மலை, என் இரட்சிப் ௨
பு, என் உயர்ந்ததுருக்கம்; நான்மிகவும் அசைக்
கப்படேன்.—நீங்கள் எதுவரைக்கும் ஒருமனுஷ ௩
னுக்குத்தீங்குசெய்யநினைப்பீர்கள்; நீங்கள்யாவ
ருங் கொலைசெய்யப்படுவீர்கள்: சாய்ந்தமதிலுக்
கும் இடிந்தசுவருக்கும் ஒப்பாவீர்கள்.—அவனு ௪
டைய மேன்மையினின்று அவனைத்தள்ளும்படி
அவர்கள் ஆலோசனைசெய்கிறார்கள்: அவர்கள்
பொய்யைவிரும்புகிறார்கள்; தங்கள் வாயினால்
ஆசீர்வதிக்கிறார்கள், உள்ளத்திற் சபிக்கிறார்கள்.
சேலா.—என் ஆத்துமாவே, நீ தேவனை மாத்தி ௫
ரம் காத்துக்கொண்டிரு; நான் நம்புகிறது அவரா
லேவரும்.—அவரே என் கன்மலை, என் இரட் ௬
சிப்பு, என் உயர்ந்ததுருக்கம்; நான் அசைக்கப்
படேன்.—என்இரட்சிப்பும் என்மகிமையும் தே ௭
வனால் வரும்: பெலனான என்கன்மலையும், என்
புகலிடமுந் தேவனிடத்திலிருக்கின்றன.—
எல்லாக்காலங்களிலும் அவரை நம்புங்கள்; ஜ ௮
னங்களே, அவர்சமுகத்தில் உங்கள்இருதயத்தை
வெளிப்படுத்துங்கள்: தேவன் நமக்குப்புகலி
டம். சேலா.—கீழ்மக்கள் வீண், மேன்மக்களும் ௯
பொய்: தராசிலே வைக்கப்பட்டால் அவ்விரு
வரும் அற்பத்திலும் அற்பமாவார்கள்.—கொடு ௰
மையை நம்பாதிருங்கள், கொள்ளையினால் மேன்
மைபாராட்டாதிருங்கள்: செல்வம் விருத்திய
டைந்தால் அதில் மனம்வையாதிருங்கள்.—தே ௰௧
வன் ஒருதரம்பேசினார்; வல்லமை தேவனுக்
கேயுண்டென்று இரண்டுதரம் கேட்டிருக்கிறே
ன்.—ஆண்டவரே, தயையும் உம்முடையது: ௰௨
நீர் மனுஷர்யாவருக்கும் அவரவர் கிரியைக்கேற்
கப்பலனளித்துவருகிறீர்.

## ௬௩. சங்கீதம்.

தேவனுடைய தயையை அவாவிச் சத்துருக்
களின் தோல்வியை அபேட்சித்தல்.

———

யூதாவனத்திலே சஞ்சரிக்கையில் தாவீது செய்த
சங்கீதம்.

தேவனே, நீர் என் தேவன்; அதிகாலையில் ௧
உம்மைத்தேடுவேன்: பரிசுத்தஸ்தானத்தில் உம்
மைத்தரிசித்ததுபோல, உமதுவல்லமையையும்ம
கிமையையும்தரிசிக்கும்படிக்கு,—நீரில்லாத வற ௨
ண்டு இளைத்தபூமியில்என்னாத்துமம்உம்மிடத்தில்

———

(௪) சங்.௨௰.௫. (௭) ஆதி.௪௯.௰. (௮) ௨.சாமு.௮.௧,௨,௰௪. ௨.சாமு.௰௧.௧. (௰) சங்.௪௪.௯. யோசு.௭.௰௨. (௰௧) சங்.௱௪௬.௩. (௰௨) ஏசா.௬௩.௩.—(௬௧. சங். ௩.) நீதி.௰௮.௰. (௪) சங்.௨௭.௪. (௭) நீதி.௨௰.௨௮.—(௬௨. சங். ௧.) சங்.௩௩.௨௰. (௩) ஏசா.௩௰.௰௩. (௭) எரே.௩.௨௩. (௮) ௧.சாமு.௧.௰௫. சங்.௪௨.௪. புல.௨.௰௯. (௯) ஏசா.௪௰.௰௫, ௰௭. ரோ.௩.௪. (௰) லூக்.௰௨.௰௫. ௧.தீமோ.௬.௰௭. (௰௧) வெளி.௰௯.௧. (௰௨) தானி.௯.௯. யோபு.௩௪.௰௧. நீதி. ௨௪.௰௨. எரே.௩௨.௰௯. மத்.௰௬.௨௭. ரோ.௨.௬. ௧.கொரி.௩.௮. ௨.கொரி.௫.௰. எபே.௬.௰. கொலோ.௩.௨௫. ௧.பேதுரு.௧.௰௭. வெளி.௨௨.௰௨.—(௬௩. சங். ௧.) சங்.௨௭.௪.

தாகமாயிருக்கின்றது; என்மாமிசம்வாஞ்சிக்கின்
௩ றது.—உமதுதயைசீவனிலும்அருமை,அதினிமித்
௪ தம் என் உதடுகள் உம்மைத்துதிக்கும்.—என் சீவ
னுள்ளமட்டும் உம்மைவாழ்த்துவேன்: உமது நா
௫ மத்தைச்சொல்லி என்கைகளை நீட்டுவேன்.-என்
படுக்கையின்மேல் உம்மை நினைக்கும் பொழு
தும், சாமங்களில் உம்மைத் தியானிக்கும்பொ
௬ ழுதும்,-வெண்ணெயையும்நிணத்தையும்உண்ட
துபோல என் ஆத்துமந் திருத்தியடையும்; என்
வாய் ஆனந்தக்களிப்புள்ள உதடுகளால்துதிசெய்
௭ யும்.—நீர் எனக்குத் துணையாயிருந்தபடியால்உம
து சிறகுகளின் நிழலிலே கெம்பீரிப்பேன்.—
௮ என் ஆத்துமம் உம்மைப் பின்தொடருகின்றது:
௯ உமது வலக்கரம் என்னைத்தாங்குகின்றது.—என்
பிராணனைச்சேதிக்க வகைதேடுகிறவர்கள் பூமி
௰ யின்பாதாளங்களில் இறங்குவார்கள்.—அவர்கள்
கட்கத்தினால் விழுவார்கள்: நரிகளுக்குப்பங்கா
௰௧ வார்கள்.—இராசாவோ, தேவனிடத்திற் களி
கூருவான்; அவர்மேல் ஆணையிடுகிறவர்கள் யா
வரும் மேன்மைபாராட்டுவார்கள்: பொய்பேசு
கிறவர்களுடைய வாய் அடைக்கப்படும்.

## ௬௪. சங்கீதம்.

சத்துருவின்தோஷமும் நாசமுந்தெரிவித்தல்.

பாடகத்தலைவனிடத்தில்தாவீதுஒப்பித்தசங்கீதம்

தேவனே,என்விண்ணப்பத்தில்,நானிடுமோ
லத்தைக்கேட்டருளும்: என் சத்துருவின் பயத்
திற்கு என்பிராணனைவிலக்கிரட்சித்தருளும்.—
௨ துன்மார்க்கர்செய்யும்இரகசியஆலோசனைக்கும்,
தீங்குசெய்பவர்களின் திரளுக்கும் என்னைவில
௩ க்கிமறைத்தருளும்.—அவர்கள் தங்கள் நாவைக்
௪ கட்கத்தைப்போற்கூர்மையாக்கி,—மறைவுகளி
லிருந்து உத்தமன்மேல் எய்யும்பொருட்டாய்க்க
சப்பானவாக்குகளாகிய தங்கள் அம்புகளை நா
ணேற்றுகிறார்கள்: சற்றும் பயமின்றிச்சடிதியில்
௫ அவன்மேல் எய்கிறார்கள்.—தீதான காரியத்தில்
தைரியங்கொண்டு, மறைவாகக்கண்ணிகளைவை
க்க ஆலோசனைபண்ணி, அதைக்காண்பவன்யா
௬ வனென்கிறார்கள்.—அவர்கள் அநியாயங்களைச்
செய்யத்தேடுகிறார்கள்; அவர்கள் தங்கள் முயற்
சியைச் சித்திக்கப்பண்ணுகிறார்கள்: அவர்கள்
எல்லாருடையமனமும், இருதயமும் ஆழமாயி
௭ ருக்கின்றன.—ஆனாலும் தேவன் அம்பை அவர்
கள்மேல் பிரயோகிப்பார்; சடிதியில் அவர்கள்
௮ காயப்படுவார்கள்.-அவர்கள்நாவுஅவர்களுக்குப்
பிரதிபலன்கொடுக்கும்: அவர்களைக்கண்டயாவ
௯ ருந்தப்பி ஓடுவார்கள்.—எல்லாமனுஷரும் பயந்
து, தேவனுடைய கிரியையைப்பிரசித்தப்ப
டுத்துவார்கள்; அவர்கள் அவர்கிரியையைக்கருத்
௰ தாய் உணர்ந்துகொள்வார்கள்.—நீதிமான் யெ
கோவாவில் மகிழ்ந்து அவரை நம்புவான்;
செவ்வையான இருதயமுள்ளவர்கள் யாவருந்து
திசெய்வார்கள்.

## ௬௫. சங்கீதம்.

தேவனுடைய தயையையும் ஆசீர்வாதத்தை
யுந் தாவீது வருணித்தல்.

பாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்தகானமா
கிய சங்கீதம்.

தேவனே, துதியானது சீயோனில் உமக்கு ௧
அமைந்து காத்திருக்கின்றது: சங்கற்பம் உமக்கு
நிறைவேற்றப்படும்.—விண்ணப்பத்தைக் கேட் ௨
பவரே, மாமிசமுள்ள யாவரும் உம்மிடத்தில் வ
ருவார்கள்.—தீங்கானகாரியங்கள் என்னை மேற் ௩
கொண்டன: நீர் எங்கள் அதிக்கிரமங்களை மன்
னிப்பீர்.—நீர் தெரிந்து உமது சமுகத்திற்சேர்க் ௪
கிற மனுஷன் வாழ்வுடையவன், அவன் உமது
பிராகாரங்களில்வாசம்பண்ணுவான்:பரிசுத்தஆ
லயமாகிய உமது வீட்டிலுள்ள உத்தமபதார்த்தங்
களாலே நாங்கள் திருத்திபெறுவோம்.—எங்கள் ௫
இரட்சிப்பின் தேவனே,நீதிப்படிஆச்சரியமா
ன கிரியைகளினால் எங்களுக்கு உத்தரந்தருவீர்,
பூமியின் எல்லா எல்லைகளிலும், தூரமானசமுத்
திரத்திலுமுள்ளவர்களுக்குப் புகலிடம் நீரே.—
வல்லமையைக்கச்சாகக்கட்டி, அவர்தமதுவல்ல ௬
மையினாலே தம்முடைய மலைகளைநிலைப்படுத்து
கிறார்.—சமுத்திரங்களின் இரைச்சலையும்,அதின் ௭
அலைகளின் இரைச்சலையும், சனங்களின்ஆரவா
ரத்தையும் அடக்குகிறார்.—பூமியின்கடைப்புறங் ௮
களில் வசிக்கிறவர்கள்உமது அடையாளங்களுக்
குப்பயப்படுகிறார்கள்: விடியற்காலமும் சாயங்
காலமுங்களிகூரப்பண்ணுகிறீர்.—நீர் பூமியைவி ௯
சாரித்து அதற்கு நீர்ப்பாய்ச்சுகிறீர்: சலம்நிறைந்
த தேவநதியினால்அதைமிகவுஞ் செழிப்பாக்குகி
றீர்: இப்படிநீர்அதை ஆயத்தப்படுத்தினபின்பு அ
வர்களுக்குத்தானியத்தைவிளைவிக்கிறீர்.—அதின் ௰
சாலடிமேடுகள் தணியத்தக்கதாகச் சால்களுக்கு
நீரைஇறைத்து, அவைகளைமழைகளாற்கரைத்து,
அவைகளின்முளையை ஆசீர்வதிக்கிறீர்.—நீர் வரு ௰௧
ஷத்திற்கு உமது நன்மையாகிய முடியைச்சூட்
டுகிறீர்; உமதுபாதைகள் நெய்பொழிகின்றன.—
வனத்தின் மைதானங்களிலும் நெய்பொழிகின் ௰௨
றது: மேடுகள்சுற்றிலும் பூரிக்கின்றன.—மேய்ச் ௰௩
சலுள்ளவெளிகளில் ஆடுகள்பரந்திருக்கின்றன;
பள்ளங்களுந் தானியத்தால் மூடப்படுகின்றன;
அவைகள் ஆரவாரத்தோடே பாடுகின்றன.

## ௬௬. சங்கீதம்.

௧. தயைபெற்றதினிமித்தந்தாவீது தேவனைத்து
தித்தல்: ௰௨. சங்கற்பஞ்செய்தல்.

பாடகத்தலைவனிடத்தில் ஒப்பிக்கப்பட்டகானமா
கிய சங்கீதம்.

பூலோகத்தாரே, தேவனுடைய சமுகத்தில்ஆ ௧

(௪) சங்.௱௪௬.௨.(௫)சங்.௪௨.௮.(௭)சங்.௬௧.௪.(௰)எசேக்.௩௫.௫.(௰௧)உபா,௬.௰௩. ஏசா.௪௫.௨௩.—(௬௪.சங்.௪.) எரே.௯.௩. (௮) நீதி.௰௨.௰௩. எரே.௫௰.௨௮.—(௬௫. சங். ௨.) ஏசா.௬௬.௨௩.(௩)சங்.௪௰.௰௨. சங்.௫௧.௨. ஏசா.௬.௭. எபி.௯.௰௪. ௧.யோவா.௧.௭,௯. (௪) சங்.௮௧.௪. (௫) சங்.௨௨.௨௮ (௬)சங்.௯௩.௧. (௭) சங்.௮௯.௯. மத்.௮.௨௬. ஏசா.௰௭.௰௨,௰௩. (௯) உபா.௰௧.௰௨. சங்.௱௪.௰௩. எரே.௫.௨௪. சங்.௪௬.௪. (௰௩) ஏசா.௫௫.௰௨.—(௬௬. சங்.)

௨ ரவாரம்பண்ணுங்கள்.—அவருடையநாமத்தின் ம
கிமையைப்பாடுங்கள்: அவர் துதியின் மகிமை
௩ யைப்பிரகாசிக்கப்பண்ணுங்கள்.-நீங்கள் தேவ
னை நோக்கி, உமதுகிரியைகள் எவ்வளவு பயங்க
ரமுள்ளவைகள், உமது மகத்துவமானவல்லமை
யினிமித்தம் உம்முடைய சத்துருக்கள்மாயமாக
௪ உமக்குக் கீழ்ப்படிவார்கள்.—பூலோகத்தார் யாவ
ரும்உம்மைப்பணிந்து உம்மைப்பாடுவார்கள்; உ
மது நாமத்தைப் பாடுவார்களென்று சொல்லுங்
௫ கள். சேலா.—தேவனுடைய கிரியைகளைவந்
துபாருங்கள்: அவர்மனுபுத்திரரிடத்தில்நடப்பிக்
௬ கிற கிரியைகளினாலே பயங்கரமுள்ளவர்.—கட
லை உலர்ந்ததரையாக்கினார்: அவர்கள்கால்நடை
யாய் நதியைக்கடந்தார்கள்: அங்கேஅவரில்களி
௭ கூர்ந்தோம்.—அவர்தமதுபராக்கிரமத்தினால் நித்த
மும் அரசாளுகிறார்; அவர் கண்கள் தேசத்தாரை
யுற்றுப்பார்க்கின்றன: கட்டளை மீறுகிறவர்கள்
௮ தங்களைஉயர்த்தாதிருப்பார்களாக. சேலா.—சனங்
களே, நம்முடைய தேவனை வாழ்த்துங்கள், அ
வரைத்துதிக்குஞ் சத்தத்தைத் தொனிக்கப்பண்
௯ ணுங்கள்.—அவர் நம்முடைய கால்களைத்தள்ளா
டவிடாமல் உயிருடனேநம்மைத்தாங்கிக்கொள்
௰ ளுகிறார்.—தேவனே, எங்களைப்பரிட்சித்தீர்:
வெள்ளியைப்புடமிடுவதுபோல எங்களைச்சோ
௰௧ தித்தீர்.—எங்களைவலையில் அகப்படுத்தினீர்; எங்க
௰௨ ளிடுப்பிலேவேதனைவருவித்தீர்.—மனுஷரை எங்
கள் தலைமேலேறிப்போகப்பண்ணினீர்; நாங்கள்
அக்கினியின் வழியாகவும் சலத்தின் வழியாகவு
ஞ்சென்றோம்: நீர்எங்களைச்செழித்தவிடத்திலே
௰௩ கொண்டுவந்துவிட்டீர்.—தகனபலிகளுடன் உ
மதுஆலயத்திற்பிரவேசிப்பேன்: எனக்கு ஆபத்
௰௪ துவந்தகாலத்தில்,—நான் என் உதடுகளைத்திறந்து,
என்வாயினாற்சொல்லியஎன்சங்கற்பங்களைஉமக்
௰௫ குநிறைவேற்றுவேன்.-நிணமுள்ளதகனபலிகளை
உமக்கு இடுவேன், தூபத்தோடேவெள்ளாட்டுக்
கடாக்களையும், காளைகளையும், செம்மறியாட்டுக்
௰௬ கடாக்களையும் பலியிடுவேன். சேலா.—தேவ
னுக்குப் பயப்படுகிறவர்களே, நீங்கள் எல்லா
ரும் வந்துகேளுங்கள், அவர் என் ஆத்துமாவுக்
௰௭ குச்செய்ததைத்தெரிவிப்பேன்.-என்வாயினாலே
நான் அவருக்கு ஓலமிட்டேன், என் நாவினால்
௰௮ அவர் மேன்மையைப் பாராட்டினேன்.—நான்
என் இருதயத்தில் பாவத்துக்கிடங்கொடுத்தேனா
னால், ஆண்டவர் எனக்குச்செவிகொடார்.—
௰௯ தேவன் எனக்குச்செவிகொடுத்தாரே; என் வி
ண்ணப்பத்தின்வாக்கிலே சிந்தை வைத்தார்.—
௨௰ என்விண்ணப்பத்தைத்தள்ளாமலும், தமதுதயை
யை என்னைவிட்டு விலக்காமலுமிருக்கிற தே
வன் வாழ்த்தப்படக்கடவர்.

## ௬௭. சங்கீதம்.

சகலருக்கும் நன்மைகிடைக்கும்படி தாவீதுபி
ரார்த்தித்தல்.

நிகினோத் வாத்தியத்தில் வாசிக்கும்படி பாடகத்த
லைவனிடத்தில் ஒப்பித்த சங்கீதம்.

தேவன் எங்களுக்குத்தயைசெய்து, எங்களை ௧
ஆசீர்வதிப்பாராக; தமது முகப்பிரசன்னம் எங்
கள்மேற் பிரகாசிக்கப்பண்ணுவாராக. சேலா.—
அதினாலே பூமியில் உமதுவழியும், சருவதேசத் ௨
தாருக்குள்ளும்உமதுஇரட்சிப்புந்தெரியவரும்.-
தேவனே, சனங்கள்உம்மைத்துதிப்பார்களாக; ௩
சனங்கள்யாவரும் உம்மைத் துதிப்பார்களாக.—
நீர் நீதிப்படி சனங்களை நியாயம்விசாரிக்கிறீர், ௪
பூமியிலுள்ள தேசத்தாரை அரசாளுகிறீர்: ஆத
லால் தேசத்தார் மகிழ்ந்து ஆனந்தமுழக்க மிடு
வார்களாக. சேலா.-தேவனே, சனங்கள் உம் ௫
மைத் துதிப்பார்களாக; சனங்கள் யாவரும் உம்
மைத் துதிப்பார்களாக.—அப்பொழுது பூமிதன் ௬
பலனைத்தரும்; தேவனாகிய நம்முடைய தே
வன் நம்மை ஆசீர்வதிப்பார்.—தேவன் நம்மை ௭
ஆசீர்வதிப்பார்; பூமியின் எல்லைகளிலுள்ளயாவ
ரும் அவருக்குப்பயப்படுவார்கள்.

## ௬௮. சங்கீதம்.

௧. தாவீது பிரார்த்தித்தல்: ௪. தயையினிமித்தந்து
தித்தல்: ௰௫. சபைக்குக்கிடைத்தஇரட்சையை
யுணர்ந்துசொல்லல்: ௰௯. ஆச்சரியகிரியையினி
மித்தந் தேவனை வாழ்த்தல்.

பாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்த கான
மாகிய சங்கீதம்.

தேவன் எழுந்தருள்வார், அவருடைய சத்து ௧
ருக்கள் சிதற அடிக்கப்படுவார்கள்: அவரைப்
பகைக்கிறவர்கள் அவர் முகத்துக்குவிலகி ஓடிப்
போவார்கள்.—புகை அகற்றப்படுவதுபோல அ ௨
வர்களை அகற்றிவிடுவீர்: மெழுகு அக்கினிக்கு
முன் உருகுவதுபோலத் துன்மார்க்கர் தேவனு
டைய சமுகத்தில் நாசமாவார்கள்.—நீதிமான்கள் ௩
மகிழ்ந்து, தேவனுடைய சமுகத்தில்களிகூர்ந்
து, ஆனந்தசந்தோஷமடைவார்கள்.—நீங்கள் தே ௪
வனைத் துதியுங்கள், அவர்நாமத்தைப்பாடுங்கள்:
வானத்திலேறிவருகிறவருக்குவழியை ஆயத்தப்
படுத்துங்கள், யா என்னும் நாமத்தையுடையவ
ரின் சமுகத்தில் களிகூருங்கள்.—தமது பரிசுத்த ௫
ஸ்தானத்திலுள்ள தேவன் அநாதபிள்ளைகளுக்
குப்பிதா, விதவைகளுக்குநியாயாதிபதி.—துணை ௬
யில்லாதவர்களுக்குத்தேவன் வாசஸ்தானத்தை
ஏற்படுத்துகிறார்: கட்டப்பட்டவர்களைப் பொரு
ளோடேபுறப்படப்பண்ணுகிறார்: கட்டளைமீறு
கிறவர்கள் வறண்டஸ்தலத்திலே தங்குவார்கள்.—
தேவனே, நீர்உம்முடைய சனங்களுக்கு முன் ௭

(௫) சங். ௪௬. ௮. (௬) யாத். ௰௪. ௨௧. யோசு. ௩. ௰௪, ௰௬. (௰) ஏசா. ௪௮. ௰. சக. ௰௩. ௯. ௧. பேதுரு. ௧. ௬, ௭. (௰௧) புல. ௧. ௰௩. (௰௨) ஏசா. ௫௧. ௨௩. ஏசா. ௪௩. ௨. (௰௪) பிர. ௫. ௪. (௰௬) சங். ௩௪. ௰௧. (௰௮) யோபு. ௨௭. ௯. நீதி. ௰௫. ௨௯. நீதி. ௨௮. ௯. புல. ௧. ௰௫. யோவா. ௯. ௩௧. யாக். ௪. ௩. (௰௯) சங். ௱௰௬. ௧, ௨.—(௬௭. சங். ௧.) எண். ௬. ௨௫. (௨) அப். ௰௮. ௨௫. லூக். ௨. ௩௰, ௩௧. தீத். ௨. ௰௧. (௬) லேவி. ௨௬. ௪. எசேக். ௩௪. ௨௭.—(௬௮. சங். ௧.) எண். ௰. ௩௫. ஏசா. ௩௩. ௩. (௨) ஏசா. ௯. ௰௮. ஓசி. ௰௩. ௩. மீகா. ௧. ௪. (௪) உபா. ௩௩. ௨௬. யாத். ௬. ௩. (௬) ௧. சாமு. ௨. ௫. சங். ௱௰௩. ௯. சங். ௱௪௬. ௭. அப். ௰௨. ௬. (௭) யாத். ௰௩. ௨௧. நியா. ௪. ௰௪. அபகூ. ௩. ௰௩.

சென்று, வனத்திலே நடந்துவருகிறபொழுது,—
௮ பூமிஅதிர்ந்தது, தேவனாகிய உமக்குமுன்பாக
வானமும்பொழிந்தது: இஸரவேலரின்தேவனா
யிருக்கிறதேவனுடைய சமுகத்தில் சீனாய்ம
௯ லையும் அசைந்தது.-தேவனே, நீர்சம்பூரண
மழைவருஷிக்கப்பண்ணினீர், இளைத்துப்போன
௰ உமதுசுதந்தரத்தை அதினால் ஆதரித்தீர்.—உம்மு
டையசபை அதிலேதங்கியிருந்தது: தேவனே,
நீர் தயைகாட்டி உபத்திரவப்பட்டவர்கள் நி
௰௧ மித்தம்பொருளை ஆயத்தப்படுத்தினீர்.-ஆண்ட
வர் வாக்கைத்தந்தார்: அதைப் பிரசித்தப்படுத்
௰௨ தினவர்களின் கூட்டம் மிகுதி.—சேனைகளின்
இராசாக்கள் தப்பி ஓடினார்கள்: வீட்டோடி
ருந்த ஸ்திரியுங் கொள்ளைப்பொருளைப்பங்கிட்
௰௩ டாள்.—நீங்கள் அடுப்புக்குள்ளே கிடந்தீர்கள்,
ஆனாலும்வெள்ளியால்மூடப்பட்ட புறாக்களின்
சிறகுகள்போலவும், தங்கவருணமுள்ள அதினி
௰௪ றகுகள் போலவும் இருப்பீர்கள்.—சருவவல்ல
மையுள்ளவர் அதில் இராசாக்களைச் சிதற அடித்
தபொழுது, சல்மோன் மலையிலுள்ள இமம்போ
௰௫ ல்சுத்த மகிழ்ச்சியுண்டாயிற்று.—தேவனுடை
ய மலை பாஷான் மலைபோலாயிற்று; பாஷான்
௰௬ மலைஉயர்ந்தமலை.-உயர்ந்தமலைகளே, நீங்களேன்
துள்ளுகிறீர்கள்; தேவன் தாம்வாசம்பண்ணும்
பொருட்டு இந்த மலையையே தெரிந்துகொண்
டார்; யெகோவா சதாகாலமும் இதில்வாசம்
௰௭ பண்ணுவார்.-தேவனுடைய இரதங்கள் ஆயி
ரம் பதினாயிரம், லட்சாதிலட்சம்: ஆண்டவர்
பரிசுத்தஸ்தானமாகிய சீனாயில் இருந்தபிரகாரம்
௰௮ அவர்களுக்குள் இருக்கிறார்.-நீர் உயரத்திலேறிச்
சிறைப்படுத்தினதைச்சிறையாக்கினீர்: தேவனா
கிய யெகோவா மனுஷர்களுக்குள் வாசம்
பண்ணும்பொருட்டு, கட்டளைமீறினவர்களாகி
யஅவர்களுக்காகநீரே ஈவுகளைப்பெற்றுக்கொண்
௰௯ டீர்.—நாடோறும் எங்கள்மேல் தயையைச்சுமத்
தும் ஆண்டவரும், நமது இரட்சிப்பின் தேவ
னுமாயிருக்கிறவர் வாழ்த்தப்படத்தக்கவர். சே
௨௰ லா.—நம்முடைய தேவன் இரட்சிப்பின் தே
வன்; மரணம் ஆண்டவராகிய தேவனுக்
௨௧ காதீனம்.-தேவன் தமதுசத்துருக்களின் சிரசை
யும், தன் குற்றங்களில்நடக்கத்துணிகிறவனின்
௨௨ மயிருள்ளமண்டையையும்நருக்குவார்.-நான்பா
ஷானினின்றுதிரும்பிவர அழைப்பேன், சமுத்
திரத்தின் ஆழங்களினின்று என் சனங்களைத்
௨௩ திரும்பிவர அழைப்பேன்.—உன் கால்கள்சத்து
ருக்களின் இரத்தத்தில் தோய்க்கப்படும், உன்நா
ய்களின் நாவு அதை நக்குமென்று ஆண்டவர்
௨௪ சொன்னார்.—தேவனே, உமது நடைகளை, என்
தேவனும் என் இராசாவுமானவருடைய ந
டைகளைப்பரிசுத்தஸ்தானத்தில் கண்டார்கள்.—
முன்னாகப்பாடுகிறவர்களும், பின்னாகமேளவாத் ௨௫
தியமுழக்குகிற கன்னியர்களுக்குள்ளே வீணை
களை வாசிக்கிறவர்களும் நடந்தார்கள்.—இஸர ௨௬
வேலூற்றிலிருந்து தோன்றினவர்களே, சபையா
ருக்குள்ளே நீங்கள் தேவனை வாழ்த்துங்கள்.—
அங்கே அவர்களைஆளுகிறசிறியபென்யாமீனும், ௨௭
யூதாவின் பிரபுகளும், அவர்கள் சங்கத்தாரும்,
செபுலோனின் பிரபுகளும், நப்தாலியின் பிரபு
களும் இருக்கிறார்கள்.—உன் தேவன் உன் ௨௮
வல்லமையைஏற்படுத்தியிருக்கிறார்: தேவனே,
நீர் எங்களினிமித்தஞ்செய்ததைத்திடப்படுத்திய
ருளும்.-யெருஷலேமிலுள்ள உமதுஆலயத்தினி ௨௯
மித்தம் இராசாக்கள் உமக்குக்காணிக்கைகளைக்
கொண்டுவருவார்கள்.—ஒவ்வொருவனும்வெள் ௩௰
ளித் துண்டுகளைக்கொண்டுவந்து தன்னைத்தாழ்த்
தும்படி, நாணலிலுள்ள காட்டு மிருகத்தையும்,
சனங்களின் கன்றுகளோடே பலத்த காளைகளி
ன்கூட்டத்தையுங் கடிந்துகொள்ளும்: யுத்தங்க
ளைப் பிரியப்படுகிற சனங்களைச் சிதறப்பண்
ணும்.—எகிப்தினின்று பிரபுகள் வருவார்கள்; ௩௧
கூஷென்னுந்தேசம் தேவனுக்குத்தன்கைகளை
விரைந்து நீட்டும்.—பூமியிலுள்ள இராச்சியத்தா ௩௨
ரே, தேவனைத் துதிசெய்யுங்கள்; ஆண்டவ
ரைப் பாடுங்கள்; சேலா.—ஆதிமுதல் வானங் ௩௩
களுக்கு மேலுள்ள வானங்களிலேறியிருக்கிற
வரைப்பாடுங்கள்; பாருங்கள், அவர் சத்தத்தோ
டே, வலிமையுள்ள சத்தத்தோடே முழங்குகி
றார்.—தேவனுடைய பராக்கிரமத்தைப் பிர ௩௪
சித்தப்படுத்துங்கள்: இஸரவேலின்மேல் அவர்
மகிமையும் வானங்களில் அவர் வல்லமையும்
தோன்றுகின்றன.—தேவனே, நீர் உமதுபரிசுத் ௩௫
தஸ்தலங்களிலே பயங்கரமானவர்: இஸரவேலி
னுடைய தேவன் தம்முடைய சனங்களுக்கு
வல்லமையையும் பராக்கிரமத்தையும் அருளுகி
றார். தேவன் வாழ்த்தப்படக்கடவர்.

## ௬௯. சங்கீதம்.

௧. ஆபத்துக்காலத்தில் தாவீது பிரார்த்தித்தல்: ௨௯. அதின்பலனைக்காட்டல்.

---

ஷோஷன்னீம் வாத்தியத்தில் வாசிக்கும்படி பாடகத்தலைவனிடத்தில் தாவீது ஒப்பித்த சங்கீதம்.

தேவனே, என்னை இரட்சித்தருளும்; என்பி ௧
ராணபரியந்தம் வெள்ளங்கள் வந்துவிட்டன.—
நான் நிலையில்லாத ஆழமான சேற்றில் அமிழ்ந்தி ௨
ருக்கிறேன், ஆழமான சலத்திலேவந்திருக்கிறே
ன், வெள்ளங்கள் என்மேற்பாய்கின்றன.—நான் ௩

---

(௮) யாத். ௰௯. ௰௬, ௰௮. நியா. ௫. ௪. ஏசா. ௬௪. ௧, ௩. (௯) உபா. ௰௧. ௰௧, ௰௨. (௰) உபா. ௨௬. ௫, ௯. (௰௨) எண். ௩௧. ௮. யோசு. ௰. ௰௬. (௰௪) எண். ௨௧. ௯. யோசு. ௰. ௰. (௰௬) சங். ௱௰௪. ௪, ௬. உபா. ௰௨. ௫, ௰௧. (௰௭) உபா. ௩௩. ௨. ௨. இரா. ௯. ௰௬, ௰௭. தானி. ௭. ௰. எபி. ௰௨. ௨௨. வெளி. ௯. ௰௬. (௰௮) அப். ௧. ௯. எபே. ௪. ௮. நியா. ௫. ௰௨. அப். ௨. ௪, ௩௩. ௧. தீமோ. ௧. ௰௩. (௨௰) உபா. ௩௨. ௩௯. நீதி. ௪. ௨௩. வெளி. ௧. ௰௮. (௨௧) அபகூ. ௩. ௰௩. (௨௨) எண். ௨௧. ௩௩. யாத். ௰௪. ௨௨. (௨௩) ௧. இரா. ௨௧. ௰௯. (௨௫) ௧. நாளா. ௰௩. ௮. (௨௬) உபா. ௩௩. ௨௮. ஏசா. ௪௮. ௧. (௨௭) ௧. சாமு. ௯. ௨௧. (௨௯) ௧. இரா. ௰. ௨. நாளா. ௩௨. ௨௩. ஏசா. ௬௰. ௰௬, ௰௭. (௩௰) எரே. ௫௧. ௩௨, ௩௩. ௨. சாமு. ௮. ௨, ௬. (௩௧) ஏசா. ௰௯. ௰௯, ௨௧. ஏசா. ௪௫. ௰௪. செப். ௩. ௰. அப். ௮. ௨௭.—(௬௯. சங். ௧.) யோனா. ௨. ௫. (௨) சங். ௪௰. ௨. (௩) சங். ௱௰௯. ௮௨, ௱௨௩. ஏசா. ௩௮. ௰௪.

ஓலமிட்டு இளைத்தேன்: என்தொண்டை வறண்
டுபோயிற்று: என் தேவனை எதிர்பார்த்ததினுல்
௩ என் கண்கள் பூத்துப்போயின.—காரணமின்றி
என்னைப்பகைக்கிறவர்கள் என்தலைமயிரிலும் அ
திகம்: நியாயமில்லாமல் எனக்குச் சத்துருக்களா
கி என்னைச்சேதிக்க வகைதேடுகிறவர்கள் பலத்
திருப்பதினுல், நான் அபகரியாததை ஒப்பித்
௫ தேன்.—தேவனே, நீர் என் புத்தியீனத்தை அ
றிந்திருக்கிறீர்; என்குற்றங்கள் உமக்கு மறைந்தி
௬ ருக்கவில்லை.-சேனைகளுக்கு ஆண்டவராகிய
யெகோவாவே, உம்மை எதிர்பார்த்திருப்ப
வர்கள் என்னிமித்தம்வெட்கப்படவிடாதிரும்:
இஸரவேலின் தேவனே, உம்மைத்தேடுகிறவர்
கள் என்னிமித்தம் நாணமடையவிடாதிரும்.—
௭ உமது நிமித்தமே நான் நிந்தையைச்சுமந்தேன்;
௮ இலச்சை என் முகத்தை மூடிற்று.—என் சகோ
தரருக்கு அறிமுகமில்லாதவனும், என் மாதா
வின்பிள்ளைகளுக்கு அந்நியனும்போலானேன்.-
௯ உமது ஆலயத்தினிமித்தம் நான் கொண்ட வை
ராக்கியம் என்னைப்பட்சித்தது; உம்மை நிந்திக்
கிறவர்கள்நிந்திக்கும் நிந்தைகள் என்மேல்விழுந்
௰ தன.-என் ஆத்துமம் உபவாசஞ்செய்கையில் அ
ழுதேன், அதுவும் எனக்கு நிந்தையாய் முடிந்த
௰௧ து.—இரட்டுடுத்தேன்; அப்பொழுதும்நான்அவர்
௰௨ களுக்குப் பழமொழியானேன்.—வாசலில் உட்
காந்திருப்பவர்கள் எனக்கு விரோதமாய்ப் பேசு
கிருர்கள்; மதுபானம் பண்ணுகிறவர்களுக்குப்
௰௩ பாட்டானேன்.—ஆனுலும் யெகோவாவே,
சுபகாலத்தில் உம்மைநோக்கி விண்ணப்பஞ்செ
ய்கிறேன், தேவனே, உமதுஇரட்சிப்பின்சத்தி
யத்துக்கேற்க உமதுதயையினுல் எனக்கு உத்தரந்
௰௪ தந்தருளும்.—நான் அமிழ்ந்து போகாதபடிக்குச்
சேற்றினின்று என்னைத்தூக்கிவிடும்:என்னைப்ப
கைக்கிறவர்களினின்றும், ஆழமானசலத்தினின்
௰௫ றும் நான் நீங்கும்படிசெய்யும்.—வெள்ளம் என்
மேல்பாயவிடாதிரும், ஆழம் என்னைவிழுங்கவி
டாதிரும், குழி என்மேல்தன்வாயைமூடவிடா
௰௬ திரும்.—யெகோவாவே, எனக்கு உத்தரந்
தந்தருளும்; உமதுதயை உத்தமம்: உமதுமிகுந்த
இரக்கங்களின்படிஎன்னைக்கடாட்சித்தருளும்.-
௰௭ உமதுமுகத்தை உமது அடியானுக்கு மறையாதி
ரும்; நான் கிலேசப்படுகிறேன்: எனக்குச்செவி
௰௮ கொடுக்க விரைந்தருளும்.—நீர் சமீபித்துவந்து
என்ஆத்துமத்தைமீட்டுவிடும்:எனக்குச்சத்துருக்
களிருக்கிறபடியால் என்னைவிடுவித்தருளும்.—
௰௯ எனக்குவந்த நிந்தையும், நாணமும், அவமான
மும் உமக்குத்தெரியுமே: என்சத்துருக்களெல்
௨௰ லாரும் உமக்கு முன்னிருக்கிருர்கள்.—நிந்தை
என் நெஞ்சத்தைப்பிளந்தது; நான் மிகவும்வி
சனப்படுகிறேன்:எனக்காகப்பரதபிக்கிறவனைக்
காத்திருந்தேன், ஒருவனுமில்லை; என்னைத்தேற்
றுகிறவர்களைக் காத்திருந்தேன், ஒருவனையுங்கா
ணவில்லை.—நான் உண்ணும்படி பித்துத்தந்தார் ௨௧
கள்; என்தாகத்துக்குக் காடியைத்தந்தார்கள்.—
அவர்கள்போசனபீடம் அவர்களுக்குக்கண்ணி ௨௨
யும், அவர்கள் ஸ்தோத்திரபலிகள் அவர்களுக்
குவலையுமாயிருக்கக் கடவன.—அவர்கள் கண் ௨௩
கள் பார்க்கக் கூடாதபடி இருளடையும்; அவர்
கள்இடுப்புக்களில் எப்பொழுதும்நடுக்கம்பிடிக்
கும்.—அவர்கள்மேல் உமது உக்கிரத்தைவருஷிக் ௨௪
கப்பண்ணும், உமது கோபாக்கினி அவர்களைப்
பிடிக்கும்.—அவர்கள் மாளிகைகள் பாழாகும்;அ ௨௫
வர்களுடைய கூடாரங்களில் ஒருவரும்வாசஞ்
செய்யார்.—உம்மால் அடிக்கப்பட்டவனை அ ௨௬
வர்கள் துயரப்படுத்துகிருர்கள்; உம்மால் காயப்
பட்டவர்களுடைய வேதனையை வர்த்திக்கப்ப
ண்ணுகிருர்கள்.—நீர் அவர்களுடையகுற்றத்துக் ௨௭
கேற்கத்தண்டனைகொடுப்பீராக:அவர்கள்உம்மா
லேநீதிமான்களென்றெண்ணப்படார்களாக.-அ ௨௮
வர்கள் சீவியபுத்தகத்தினின்று கிறுக்கப்படுவார்
களாக,நீதிமான்களோடும்எழுதப்படார்களாக.—
நான் தரித்திரமுந் துக்கமுமுள்ளவனுயிருக்கி ௨௯
றேன்: ஆனுலும் என் தேவனே, நீர் செய்யும்
இரட்சிப்பு என்னை உன்னதப்படுத்தும்.—நான் ௩௰
பாட்டைக்கொண்டு தேவனுடைய நாமத்
தைக்கீர்த்தனம்பண்ணி, அவர் மகிமையைப் பிர
காசிக்கப் பண்ணுவேன்.-கொம்பும் விரிகுளம்பு ௩௧
முள்ளகாளைமாட்டிலும் அதுவே யெகோவா
வுக்கு அதிகபிரியமுள்ளதாகும்.-தாழ்ந்தசிந்தை ௩௨
யுள்ளவர்கள் அதைப்பார்த்து மனமகிழ்ந்திருப்
பார்கள்: தேவனைத்தேடுகிற உங்களுடையஇ
ருதயம் சீவிக்கும்.—யெகோவா தரித்திரருக்கு ௩௩
ச்செவிகொடுக்கிருர், கட்டுண்டவர்களை அலட்
சியம்பண்ணுர்.—வானங்களும், பூமியும், சமுத்தி ௩௪
ரங்களும், அவைகளிலேசஞ்சரிக்கிறயாவும்அவ
ரைத்துதிக்கக்கடவன.-தேவன் சீயோனைஇரட் ௩௫
சித்து, யூதாவின்நகரங்களைக்கட்டுவார்:அவர்கள்
அதில்வாசம்பண்ணி அதைச்சுதந்தரித்துக்கொள்
வார்கள்.-அவர்பணிவிடைக்காரரின்வமிசத்தார் ௩௬
அதில்சுதந்தரம்பெறுவார்கள்: அவர்நாமத்தில்பி
ரியப்படுகிறவர்கள் அதில்வாசமாயிருப்பார்கள்.

## எ௰. சங்கீதம்.

சத்துருக்கள் மெலிவடையவும் மித்துருக்கள் சந்
தோஷப்படவுந்தாவீது பிரார்த்தித்தல்.

நினைவுகூரும்படி பாடகத்தலைவனிடத்தில் தாவீது
ஒப்பித்த சங்கீதம்.

---

(௪) சங்.௩௫.௰௯. யோவா.௰௫.௨௫. (௮) ஏசா.௫௩.௩. யோவா.௧.௰௧.(௯)யோவா.௨.௰௭. ரோ.௰௫.௩.(௰௧)௧.இரா.௯.௭. எரே.௨௪.௯. (௰௨) யோபு.௩௰.௯. (௰௩) ஏசா.௫௫.௬. ௨.கொரி.௬.௨. (௰௫) எண்.௰௬.௩௩. (௰௭) சங்.௨௭.௯. (௰௯) சங்.௨௨.௬,௭. ஏசா.௫௩.௩. எபி.௰௨.௨. (௨௰) ஏசா.௬௩.௫. யோபு.௰௬.௨. (௨௧) மத்.௨௭.௩௪,௪௮. யோவா.௰௯.௨௯. ரோ.௰௧.௯,௰. (௨௩) ஏசா.௬.௯,௰. யோவா.௰௨.௩௯,௪௰. ரோ.௰௧.௰. ௨.கொரி.௩.௰௪.(௨௪)௧.தெச.௨.௰௬. (௨௫) மத்.௨௩.௩௮. அப்.௧.௨௰. (௨௬) சக.௧.௰௫. ஏசா.௫௩.௪. (௨௭) ரோ.௧.௨௮. ஏசா.௨௬.௰. ரோ.௯.௩௧. (௨௮) யாத்.௩௨.௩௨. பிலி.௪.௩. வெளி.௩.௫. வெளி.௰௩.௮. எசேக்.௰௩.௯. லூக்.௰.௨௰. எபி.௰௨.௨௩. (௩௩) எபே.௩.௧. (௩௪) ஏசா.௪௪.௨௩. ஏசா.௫௫.௰௨. (௩௫) சங்.௫௧.௰௮. ஏசா.௪௪.௨௬.—(எ௰. சங்.)

தேவனே,என்னைஇரட்சிக்கவும்; யெகோ
வாவே, எனக்குச்சகாயஞ்செய்யவும் விரைந்த
௨ ருளும்.—என் பிராணனை அழிக்கவகைதேடுகிற
வர்கள் வெட்கப்பட்டு நாணமடைவார்களாக:
என்மேல் தீமைவருவிக்கவிரும்புகிறவர்கள்பின்
௩ னிட்டு இலச்சையடைவார்களாக.—ஆ, ஆ, என்
பவர்கள் பின்னிட்டுத் தங்கள்வெட்கத்தின்பல
௪ னை அனுபவிப்பார்களாக.—உம்மைத்தேடுகிறயா
வரும் உம்மில்மகிழ்ந்து சந்தோஷப்படுவார்களா
க: உமது இரட்சிப்பை விரும்புகிறவர்கள் தே
வன் மகத்துவமானவரென்று எப்பொழுதுஞ்
௫ சொல்வார்களாக.—நான் துக்கமுந் தரித்திரமு
முள்ளவன்: தேவனே, என்னிடத்திற் சீக்கிர
மாய்வந்தருளும்: நீரே என் துணை, என் இரட்ச
கர்: யெகோவாவே, தாமதியாதிரும்.

## ௭௧. சங்கீதம்.

யெகோவாபுகலிடமெனத் தாவீதுகொள்ளல்.

யெகோவாவே, நான் உம்மை நம்பியிருக்
கிறேன்: ஒருபொழுதும் நான் வெட்கப்படவி
௨ டாதிரும்.—உமது நீதிப்படி என்னைவிடுவித்துத்
தப்புவித்தருளும்: உமது செவியைச் சாய்த்து,
௩ என்னை இரட்சித்தருளும்.—நான் நித்தமும் வந்
தடையும்படிநீரேஎனக்குமலையாயிரும்: நீர் என்
கன் மலையும் துருக்கமுமாயிருக்கிறபடியினால்,
௪ என்னை இரட்சிக்கும்படிகட்டளையிட்டீர்.—என்
தேவனே, துன்மார்க்கனுடைய கைக்கும், நி
யாயக்கேடுங்கொடுமையுமுள்ளவனுடையகைக்
௫ கும் என்னைத்தப்புவியும்.—ஆண்டவராகிய
யெகோவாவே, நீரே என்நோக்கம்: என்
௬ சிறுபிராயந்தொடங்கிநீரேஎன்நம்பிக்கை.—நான்
கருப்பத்தினின்று தோன்றினது முதற்கொண்டு
உம்மால் ஆதரிக்கப்பட்டேன்: நீரேஎன்னைஎன்
மாதாவின் கருப்பத்திலிருந்து எடுத்தவர்: நான்
நித்தமும் உம்மைக்கீர்த்தனம் பண்ணுவேன்.—
௭ அநேகருக்கு நான் ஒரு அற்புதம்போலானேன்;
௮ நீர் என்வலிமையானஅடைக்கலஸ்தானம்.—என்
வாய் உமக்கேற்றதுதியினாலும் புகழ்ச்சியினாலும்
௯ நாடோறும்நிறைந்திருப்பதாக.—முதிர்ந்தவயதில்
நீர் என்னைத்தள்ளாதிரும்; என்பலம் ஒடுங்கும்
௰ பொழுது என்னைக்கைவிடாதிரும்.—என் சத்து
ருக்கள் எனக்குவிரோதமாய்ப் பேசுகிறார்கள்;
என்பிராணனைத்தேடுகிறவர்கள்ஏகமாய்ஆலோச
௰௧ னைபண்ணி,—தேவன்அவனைக்கைவிட்டார்:அ
வனை இரட்சிப்பார்ஒருவருமில்லை,அவனைத்தொ
டர்ந்து பிடியுங்களென்று சொல்லுகிறார்கள்.—
௰௨ தேவனே, எனக்குத்தூரமாய்ப் போகாதிரும்:
என்தேவனே, எனக்குச்சகாயஞ்செய்யும்படி
௰௩ விரைந்தருளும்.—என்பிராணவிரோதிகள் வெட்
கப்பட்டு அழிக்கப்படுவார்களாக; எனக்குத்தீங்
குவருவிக்க வகைதேடுகிறவர்கள் நிந்தையினா
லும் இலச்சையினாலும் மூடப்படுவார்களாக.—
நான் இடைவிடாமல் உம்மை எதிர்பார்த்து, ௰௪
மென்மேலும் உம்மைத்துதிப்பேன்.—நாள்முழுவ ௰௫
தும் என்வாய் உமதுநீதியையும் உம்மால்வரும்
இரட்சிப்பையும்அறிவிக்கும்; அவைகளின் தொ
கையை அறியேன்.—ஆண்டவராகிய யெ ௰௬
கோவாவின் மகா வல்லமையைக்கொண்டுந
டப்பேன்: உமது நீதியைமாத்திரமே நினைத்துக்
கொள்வேன்.—தேவனே, நீர் என் சிறுபிராயந் ௰௭
தொடங்கி எனக்குப் போதித்துவந்தீர்: இதுவ
ரைக்கும் உம்முடைய அற்புதங்களை அறிவித்து
வந்தேன்.—தேவனே, இந்தச்சந்ததிக்கு உமது ௰௮
வல்லமையையும், இனிவருகிற யாவருக்கும் உ
மது பராக்கிரமத்தையும் நான் பிரசித்தப்படுத்து
கிறவரைக்கும், நரைதிரைமூப்புவரைக்கும் என்
னைக்கைவிடாதிரும்.—தேவனே, உம்முடை ௰௯
ய நீதிமிகவும் உயர்ந்தது, நீர் மகாகிரியைகளைச்
செய்தீர்: தேவனே, உமக்குநிகர்யாவர்.—அநே ௨௰
கக்கிலேசங்களையும் ஆபத்துக்களையும் எனக்குக்
காண்பித்தநீர் திரும்பவும்என்னைஉயிர்ப்பிப்பீர்,
பூமியின் ஆழங்களினின்றுதிரும்ப என்னைஏறப்
பண்ணுவீர்.—நீர் என்மேன்மையைப் பெருகப் ௨௰௧
பண்ணி, மேலும் மேலும் என்னைத் தேற்றுவீர்.—
என் தேவனே, நான் வீணையைக்கொண்டுஉம் ௨௰௨
மையும் உமது சத்தியத்தையும்போற்றுவேன்: இ
ஸ்ரவேலின் பரிசுத்தரே, கின்னரத்தைக்கொண்
டு உம்மைப்பாடுவேன்.—நான் உம்மைப்பாடும் ௨௰௩
பொழுது என் உதடுகளும், நீர்மீட்டுக்கொண்ட
என் ஆத்துமாவும்கெம்பீரிக்கும்.—எனக்குத்தீங் ௨௰௪
குவருவிக்கவகைதேடுகிறவர்கள்வெட்கப்பட்டு
இலச்சையடைந்தபடியினால், என்நாவு நாடோ
றும் உமது நீதியை அறிவிக்கும்.

## ௭௨. சங்கீதம்.

கிறிஸ்துவின் இராச்சியத்தைக்குறித்துத் தாவீது தீர்க்கதரிசனஞ்சொல்லல்.

---

சலோமோனிடத்தில் ஒப்பிக்கப்பட்டசங்கீதம்.

தேவனே, நீர் இராசாவுக்கு உம்முடைய நி ௧
யாயத்தீர்ப்புக்களையும், இராசபுத்திரனுக்கு உம்
முடைய நீதியையுங்கொடுத்தருளும்.—அவர் உ ௨
மதுசனங்களைநீதியோடும்,உபத்திரவப்படும்உம்
முடையவர்களை நியாயத்தோடும்விசாரிப்பார்.—
மலைகள் சமாதானத்தையும், மேடுகள் நீதியை ௩
யும்சனங்களுக்கு விளைவிக்கும்.—அவர்சனங்க ௪
ளில் உபத்திரவப்படுகிறவர்களை நியாயம் விசா
ரித்து, எளியவனுடைய பிள்ளைகளை இரட்சிப்
பார். உபத்திரவப்படுத்துகிறவனை நொறுக்கு
வார்.—சந்திரசூரியருள்ளமட்டுந் தலைமுறை த ௫
லைமுறையாக உமக்குப்பயப்படுவார்கள்.—புல் ௬
லறுப்புண்டவெளியிற் பெய்யுமழையைப்போ
லவும்,பூமியைச்செழிப்பிக்கும்மழைத்தூறலைப்
போலவு மிறங்குவார்.—அவருடையகாலத்தில் ௭

---

(௧) சங்.௪௰.௰௩,.—(௭௧. சங். ௧.) சங்.௨௫.௨,௩. (௫) எரே.௰௭.௭,௰௭. (௬) ஏசா.௪௬.௩. (௭) ஏசா.௮.௰௮. ௪௧.௩. ௮. ௧.கொரி.௪.௯. (௰) ௨.சாமு.௰௭.௧. மத்.௨௭.௧. (௰௨) சங்.௨௨.௰௮,௰௯. சங்.௭௰.௧. (௨௰) ஓசி.௬.௧,௨. (௨௨) ௨.இரா.௰௯.௨௨. ஏசா.௬௰.௯. (௨௩) சங்.௱௩.௪.—(௭௨. சங். ௨.) ஏசா.௰௧.௨,௩.(௩)ஏசா.௫௨.௭. (௪) ஏசா.௰௧.௪. (௫) சங்.௮௯.௩௬,௩௭. (௬) ௨.சாமு.௨௩.௪. ஓசி.௬.௩. (௭) ஏசா.௨.௪. தானி.௨.௪௪. லூக்.௧.௩௩.

நீதிமான் வாழ்ந்திருப்பான்; சந்திரன் நிலைநிற்
அ குமளவும் சமாதானம்பெருகும்.-ஒரு சமுத்திரந்
தொடங்கி மற்றச்சமுத்திரம்வரைக்கும், நதிதொ
டங்கிப்பூமியின் எல்லைகள்வரைக்கும் அவர் அ
கூ ரசாளுவார்.—வனவாசிகள் அவர் சமுகத்திற்கு
னிந்துவணங்குவார்கள்; அவருடைய சத்துருக்
ய கள் தூளை நக்குவார்கள்.-தர்ஷீஷிலும் தீவுகளிலு
முள்ள இராசாக்கள்காணிக்கைகளைக்கொண்டுவ
ருவார்கள்: ஷேபாவிலும் சேபாவிலுமுள்ள இ
ராசாக்கள் நன்கொடைகளைக்கொடுப்பார்கள்.—
யக சகலஇராசாக்களும் அவரைநமஸ்காரம் பண்ணு
வார்கள்: சருவதேசத்தாரும் அவரைச்சேவிப்பார்
யஉ கள்.—ஓலமிடுந்தரித்திரனையும்,உபத்திரவப்படுகி
றவனையும், துணையற்றவனையும் அவர் விடுவிப்
யரு பார்.—திக்கற்றவனுக்குந் தரித்திரனுக்குந் தயை
செய்வார், தரித்திரருடையபிராணன்களை இரட்
யச சிப்பார்.-அவர் வஞ்சகத்துக்குங்கொடுமைக்கும்
அவர்களுடைய ஆத்துமங்களைத்தப்புவிப்பார்: அ
வர்களுடைய இரத்தம் அவர் பார்வைக்கு அரு
யரு மையாயிருக்கும்.—அவர் சீவித்திருப்பார், ஷே
பாவின் பொன் அவருக்குக்கொடுக்கப்படும்: அ
வர் நிமித்தம் இடைவிடாமல் பிரார்த்தனைசெய்
யசு யப்படும்; நாடோறும் வாழ்த்தப்படுவார்.—பூமி
யிலே மலைகளினுச்சிகளில் ஒருபிடி தானியமி
ருக்கும்; அதின்விளைவு லிபானோனைப்போல் அ
சையும்: நகரத்தார் பூமியின் புல்லைப்போல் செ
யஎ ழித்தோங்குவார்கள்.—அவர் நாமம் என்றும் நிற்
கும்: சூரியனுள்ளமட்டும் அவர் நாமம் பிரஸ்தா
பமாகும்: மனுஷர் அவர் மூலமாக ஆசீர்வாதம்
பெறுவார்கள்: சருவதேசத்தாரும் அவரைவாழ்த்
யஅ துவார்கள்.—இஸரவேலின் தேவனாயிருக்கிற
தேவனாகிய யெகோவா வாழ்த்தப்படக்க
டவர், அவர் மாத்திரம் ஆச்சரியமான கிரியைக
யகூ ளைச்செய்து வருகிறார்.—மகிமைபொருந்திய அ
வருடையநாமம் சதாகாலமும் வாழ்த்தப்படக்க
டவது: பூமண்டலமுழுவதும் அவருடைய மகி
மையினால் நிறைந்திருப்பதாக; ஆமென், ஆமெ
உய ன்.—ஈஷாயின் புத்திரனாகிய தாவீதின் விண்
ணப்பங்கள் முடிந்தன.

## எரு. சங்கீதம்.

க. ஆசாப் துன்மார்க்கருடைய வாழ்வைக்கண்டு பொறாமைகொள்ளல்: யஅ. அதினால் அவனுக்குக்கிடைத்தபலனைக்காட்டல்.

---

ஆசாப்பின் சங்கீதம்.

சுத்த இருதயமுள்ளவர்களாகிய இஸரவேலருக்
உ குத் தேவன் நன்மைசெய்கிறவரே.—என் கால்
கள் தள்ளாடுதலுக்கும், என் அடிகள் சறுக்குத
ரு லுக்கும் சற்றேதப்பின.—துன்மார்க்கரின் வாழ்
வை நான் பார்த்தபொழுது அகங்காரிகளாகிய அ
வர்கள்மேற் பொறாமைகொண்டேன்.—மரணத் ச
தில் அவர்களுக்குயாதனையில்லை: அவர்கள்பெ
லம்நிறைவுள்ளது.—மற்ற மனுஷர்போல இவர் ரு
கள் கிலேசப்படுகிறதில்லை; மற்றமனுஷர்போ
லஉபத்திரவப்படுகிறதுமில்லை.—அதினிமித்தம் சு
அகங்காரஞ் சரப்பணியைப்போல் இவர்களைச்
சூழ்ந்துகொண்டிருக்கின்றது; கொடுமை ஒரு ஆ
டையைப்போல் அவர்களைமூடுகின்றது.—நிணத் எ
தினால் அவர்கள் கண்கள் செழித்துமேலேநிற்
கின்றன: அவர்கள் மனவிருப்பத்திற்கு அதிகம்
பெற்றிருக்கிறார்கள்.—அவர்கள் இகழ்ச்சிபண் அ
ணுவார்கள், தீங்குபேசுகிறார்கள்: கொடுமையை
க்குறித்து அகந்தையாய்ப் பேசுகிறார்கள்.—அவர் கூ
கள் வானங்களுக்கு விரோதமாய் வாய் திறக்கி
றார்கள், அவர்கள் நாவு பூமியெங்கும் உலா
வுகின்றது.—அதினால் அவருடைய சனங்கள் ய
அங்கே திரும்பிப்போகிறார்கள்: சலங்கள் அவர்
களுக்குநிறைவாய்ச்சுரந்துவரும்.—தேவனுக் யக
கு இது எப்படித் தெரியும், சருவத்துக்குமே
லானவருக்கு அறிவுண்டாவென்று சொல்லுகி
றார்கள்.—பாருங்கள், துன்மார்க்கராகிய இவர்கள் யஉ
உலகத்திலே வாழ்வுபெற்று, செல்வத்தில் விருத்
தியடைந்திருக்கிறார்கள்.—நாடோறும் நான்வா யரு
திக்கப்பட்டும், காலைதோறும் தண்டிக்கப்பட்டு
மிருக்கிறேன்.—நான் மனதைச்சுத்தம்பண்ணிக் யச
குற்றமற்றவனாய் என் கைகளைக் கழுவினதுவி
ருதாவேயென்றேன்.—இவ்விதமாய்ப் பேசுவே யரு
னென்று நான்சொன்னால் உம்முடைய சனங்க
ளின் சந்ததிக்குத்துரோகியாவேன்.—இதைஅறி யசு
யும்பொருட்டு நான் சிந்தித்துப்பார்த்தேன், தே
வனுடைய பரிசுத்த ஸ்தானத்திற்குப்போய்,—
அவர்கள்முடிவை அறியுமளவும் இது எனக்குமி யஎ
கவும் அரிதாயிருந்தது.—நீர் அவர்களைச் சறுக்குவ யஅ
தற்கேற்ற இடங்களில்வைத்து, அழிவுக்கேற்ற இ
டங்களில் விழப்பண்ணுகிறீர், இது நிச்சயம்.—
ஒரு நிமிஷத்துக்குள் அவர்கள் எப்படி அழிந்து யகூ
போகிறார்கள்; அவர்கள்பயங்கரத்தினால் நாசமா
கிறார்கள்.—ஆண்டவரே, நித்திரை தெளியும் உய
பொழுது சொப்பனம்போல அவர்கள் வடிவை
அழியப்பண்ணுவீர்.—இவ்விதமாய் என் மனம் உக
துக்கிக்க என்உள்ளிந்திரியங்களிலேகுத்தப்பட்
டேன்.—நான்காரியமறியாதமூடன், உமதுசமு உஉ
கத்தில் மிருகத்தைப்போலிருந்தேன்.—ஆனாலும் உரு
நான் இடைவிடாமல் உம்மோடிருக்கிறேன்: நீர்
என்வலக்கையைப்பிடித்துத் தாங்கினீர்.—நீர் உ உச
மது ஆலோசனையின்படி என்னைநடத்தி, முடி
வில் என்னை மகிமையில் ஏற்றுக்கொள்வீர்.—
பரமண்டலத்தில் உம்மையன்றிஎனக்குவேறார், உரு

---

(அ) க.இரா.ச.உக,உச. சங்.உ.அ. சக.கூ.ய. (கூ) ஏசா.சகூ.உரு. மீகா.எ.யஎ. (ய) உ.நாளா.கூ.உக. சங்.சரு. யஉ. ஏசா.சகூ.எ. (யக) ஏசா.சகூ.உஉ,உரு. (யச) சங்.ாயசு.யரு. (யசு) க.இரா.ச.உல. (யஎ) சங்.அகூ.ருசு. லூக்.க.சஅ. (யஅ) யாத்.யரு.யஉ. (யகூ) நிகி.கூ.ரு.எண்.யச.உக. சக.யச.கூ.—(எரு.சங்.ரு.) யோபு.உக.எ.சங்.ருஎ.க. எரே.யஉ.க. (எ) யோபு.யரு.உஎ. எரே.ரு.உஅ. (அ) ஓசி.எ.யசு. உ.பேதுரு.உ.யஅ. யூதா.யசு. (கூ) வெளி.யரு.சு. (ய) சங்.எரு.அ. (யக) யோபு.உஉ.யரு. (யச) யோபு.ருரு.ரு. மல்.ரு.யச.சங்.உசு.சு. (யசு) சங்.எஎ.யரு. (யஎ) பிர.அ.யஎ. (உய) யோபு. உய.அ. சங்.கூய.ரு. ஏசா.உகூ.எ,அ. (உஉ) சங்.கூஉ.எ. நீதி.ருய.உ. (உச) சங்.ருஉ.அ. ஏசா.ருஅ.அ. (உரு) பிலி.ரு.அ.

பூமண்டலத்தில்உம்மைத்தவிரவேறென்றையும்
உசு விரும்பேன்.—என் மாமிசமும் எனதுள்ளமும்
மாளுகின்றன: ஆனாலுந் தேவன் என்மனதுக்
கு ஆதரவுஞ் சதாகாலமும் என்பங்குமாயிருக்கி
உஎ றார்.–பாரும், உமக்குத்தூரமாய்ப்போகிறவர்கள்
நாசமடைவார்கள்: காமுகராய் உம்மைவிட்டுப்
உஅ போகிற யாவரையுஞ் சங்கரிப்பீர்.–நான்தேவ
னைச்சமீபித்துவருவது எனக்கு நலம்; நான் உம்
முடைய சகலகிரியைகளையுந் தெரிவிக்கும்படி
ஆண்டவராகியயெகோவாவைப் புகலி
டமாகக்கொண்டேன்.

## எச. சங்கீதம்.

க. தேவாலயத்தைக்குறித்துப் புலம்பல்: ய. தேவனைப் பிரார்த்தித்தல்.

ஆசாப்பின்போதக சங்கீதம்.

தேவனே, நீர்நெடுங்காலமாக எங்களை என்
தள்ளிவிட்டீர்; உமது மேய்ச்சலின் ஆடுகளின்
உ மேல்உமதுகோபாக்கினி என்புகைகின்றது.–நீர்
பூருவகாலத்தில் கிரயத்துக்குவாங்கின உமது ச
பையையும், நீர்மீட்டுக்கொண்ட உமது சுதந்தர
மானகோத்திரத்தையும், உமது வாசஸ்தலமாகிய
இந்தச்சீயோன் மலையையும் நினைந்தருளும்.—
ங நெடுங்காலம் பாழாய்க்கிடக்கிற ஸ்தானங்களில்
உம்முடைய பாதங்கள் எழுந்தருளச்செய்யும்;
சத்துருபரிசுத்தஸ்தானத்திற்பலதீங்குகளைச்செய்
ச தான்.—உம்முடைய சத்துருக்கள் உமதுசபைக
ளுக்குள்ளேகருசித்து, அடையாளங்களாகத்தங்
ரு கள் கொடிகளை நாட்டுகிறார்கள்.–கோடாரியை
ஓங்கிச்சோலையிலே மரங்களைத்தறிப்பவன் பேர்
சு பெற்றிருப்பான்.—இப்பொழுதோ அவர்கள்அ
தின் விசித்திரவேலைகள்முழுவதையும்வாய்ச்சிக
ளினாலும், சம்மட்டிகளினாலுஞ் சிதைக்கிறார்க
எ ள்.-உமதுபரிசுத்தஸ்தானத்தைஅக்கினிக்குஇரை
யாக்கினார்கள், உமதுநாமத்தின்வாசஸ்தலத்தைத்
தரைமட்டும் இடித்து அசுசிப்படுத்தினார்கள்.—
அ நாங்கள் அவைகளை முழுமையுஞ் சங்கரிப்போ
மாகவென்று தங்கள் மனதிலே சிந்தித்தார்கள்:
தேசத்திலுள்ள தேவாலயங்கள் யாவையும் அவர்
கூ கள் சுட்டெரித்தார்கள்.–எங்களுக்கிருந்தஅடை
யாளங்களைக்காணோம்: இப்பொழுது தீர்க்கதரிசி
ஒருவருமில்லை: இது எதுவரைக்குமென்றுஅறிந்
ய தவன் எங்களுக்குள்ளே யில்லை.—தேவனே,
எதுவரைக்கும் சத்துருநிந்திப்பான், பகைவன்
உமது நாமத்தைஎப்பொழுதுந்தூஷணிப்பானோ.–
யக வலக்கையாகியஉமதுகையைஎன்முடக்குகிறீர்;
யஉ அதை உமதுமார்பினின்று நீட்டும்.—பூருவகால
முதல்பூமியில்இரட்சிப்புக்களைச்செய்துவருகிற
யங தேவன் என் இராசா.—நீர் உமது பராக்கிரமத்
தினாலே சமுத்திரத்தைப்பிரித்துவிட்டீர்: சலத்தி
லுள்ளநாகங்களின்தலைகளைஉடைத்துவிட்டீர்.–
நீர் லிவியாதனின்தலைகளைநசுக்கி, அவைகளைவ யச
னவாசிகளாகிய சனங்களுக்கு உணவாகக்கொ
டுத்தீர்.–நீர், ஊற்றையும்வெள்ளத்தையும்பிளந்து யரு
விட்டீர்: நீர்மகாநதிகளைவற்றும்படிசெய்தீர்.–ப யசு
கல் உம்முடையது, இரவும்உம்முடையது:ஒளி
யையுஞ்சூரியனையும் ஏற்படுத்தினீர்.–பூமியின்ச யஎ
கல எல்லைகளையும்நிலைப்படுத்தினீர்: கோடைகா
லத்தையும்மாரிகாலத்தையும்ஏற்படுத்தினீர்.–யெ யஅ
கோவாவே, சத்துரு உம்மைநிந்தித்தான்,அஞ்
ஞானசனங்கள் உமதுநாமத்தைஅலட்சியம்பண்
ணினார்கள், இதைநினைத்துக்கொள்ளும்.-உமதுபு யகூ
றாவின் பிராணனைக் காட்டுமிருகத்துக்கு ஒப்பி
யாதிரும்: உபத்திரவப்படுகிற உமது சபையை
எப்பொழுதும் மறவாதிரும்.—உமது உடன்ப உய
டிக்கையை நினைந்தருளும்: பூமியின் அந்தகார
மான இடங்கள் கொடுமையுள்ள குடிகளால் நி
றைந்திருக்கின்றன.—கிலேசப்பட்ட சனங்கள் உக
வெட்கத்தோடே திரும்பவிடாதிரும்: உபத்திர
வப்படுகிறவனும், திக்கற்றவனும் உமது நாமத்
தைத்துதிக்கும்படிசெய்யும்.–தேவனே, எழுந் உஉ
தருளும், உம்முடையவழக்கை நடத்தும்: அஞ்
ஞானி நாடோறும் உம்மைநிந்திக்கிறான், இதை
நினைத்துக்கொள்ளும்.—உம்முடைய சத்துருக்க உங
ளின் ஆரவாரத்தை மறவாதிரும்: உம்மைவிரோ
திக்கிறவர்களுடைய கலகம் இடைவிடாமல்பெ
ருகுகின்றது.

## எரு. சங்கீதம்.

தேவனைத்துதித்தல். போதகம்பண்ணல்.

அல்தஷ்கேத் வாத்தியத்தில் வாசிக்கும்படிபாடகத்
தலைவனிடத்தில் ஆசாப் ஒப்பித்த சங்கிதம்.

தேவனே, நாங்கள் உம்மைத்துதிக்கிறோம், க
நாங்கள் உம்மைத்துதிக்கிறோம்: உமதுநாமம்சமீ
பமாயிருக்கிறதென்று உமது ஆச்சரியமான கிரி
யைகள்தெரிவிக்கின்றன.—நியமிக்கப்பட்டகா உ
லத்திலே யதார்த்தமாக நியாயம்விசாரிப்பேன்.–
பூமி அதின்சகலகுடிகளோடுங்கரைந்துபோகின் ங
றது: நான்அதின்தூண்களை நிலைநிறுத்துகிறேன்.
சேலா.–நான் அஞ்ஞானிகளைப்பார்த்து, நீங்கள் ச
அஞ்ஞானமாய் நடவாதிருங்களென்றும், துன்
மார்க்கரைப்பார்த்து, நீங்கள்கொம்பைஉயர்த்தா
திருங்கள்:–அதியுயரத்தில் உங்கள்கொம்பை உ ரு
யர்த்தாதிருங்கள்: வணங்காதகழுத்துடன்பேசா
திருங்களென்றுஞ் சொன்னேன்.—கிழக்கிலும், சு
மேற்கிலும், தெற்கிலுமிருந்து வாழ்வுவராது.—
தேவனே நியாயாதிபதி: அவர் ஒருவனைத்தா எ
ழ்த்துகிறார்,ஒருவனைஉயர்த்துகிறார்.–கலந்தசெந் அ

(உசு)சங்.அச.உ.(உஎ)யாத்.ஙச.யரு. எண்.யரு.ஙகூ. யாக்.ச.ச. எபி.ய.உஉ. (உஅ) சங்.௱எ.உஉ.—(எச. சங். க.) சங்.சச.கூ,உங. எரே.ஙக.ஙஎ. உபா.உகூ.உய. (உ) யாத்.யரு.யஎ. உபா.கூ.உகூ. உபா.ஙஉ.அ. எரே.ய.யசு.(ச) புல.உ.எ. தானி.சு.உஎ. (சு) க.இரா.சு.யஅ. (எ) உ.இரா.உரு.கூ. (கூ) க.சாமு.ங.க. ஆமோ.அ.யக. (யக) புல.உ.ங. (யங) யாத்.யச.உக. ஏசா.ருக.கூ,ய. எசேக்.உகூ.ங. (யச) எண்.யச.கூ. (யரு) யாத்.யஎ.ரு,சு. யோசு. ங.யஉ. (யசு) ஆதி.க.யச,. (யஎ) அப்.யஎ.உசு. ஆதி.அ.உஉ. (யஅ) வெளி.யசு.யகூ. (யகூ) உன்.உ.யச. (உய) ஆதி.யஎ.எ,அ. லேவி.உசு.சச,சரு. எரே.ஙங.உக.—(எரு. சங். ச.) சக.க.உக. (எ) சங்.ருய.சு. க.சாமு.உ.எ. தானி.உ.உக. (அ) யோபு.உக.உய. எரே.உரு.யரு. வெளி.யச.ய. வெளி.யசு.யகூ.

நிற மதுபானம் நிறைந்த ஒருபாத்திரம் தேவ
னுடைய கையிலிருக்கின்றது; அதிலுள்ளதை
வார்க்கிறார்: பூமியிலுள்ள துன்மார்க்கர்யாவரும்
அதை வண்டல்களுடன் உறிஞ்சிக்குடிப்பார்
௯ கள்.—நான் யாக்கோபின் தேவனைப்பாடி, என்
௰ றும் பிரஸ்தாபம் பண்ணுவேன்.—துன்மார்க்கரு
டையகொம்புகள் யாவையும் சேதிப்பேன்; சன்
மார்க்கருடையகொம்புகள் உயர்த்தப்படும்.

## ௭௬. சங்கீதம்.

செயத்தினிமித்தம் தேவனைப் பாராட்டல்.

---

நிகிநோத் வாத்தியத்தில் வாசிக்கும்பொருட்டுப் பாடகத்தலைவனிடத்தில் ஆசாப் ஒப்பித்தசங்கீதம்.

யூதாவில் தேவன் அறியப்பட்டிருக்கிறார்: இ
௨ ஸரவேலில் அவர் நாமம் பெரியது.—ஷாலேமில்
அவருடைய கூடாரமும், சீயோனில் அவர் வா
௩ சஸ்தலமுமிருக்கின்றன.—அங்கே அவர் வில்
லின் அம்புகளையும், கேடகத்தையும், கட்கத்தை
யும், யுத்த அணிகளையுந் தகர்த்துவிட்டார். சே
௪ லா.—கொள்ளையுள்ள மலைகளைப்பார்க்கிலும் நீ
அதிக மகிமையும் மேன்மையுமுள்ளதாயிருக்கி
௫ றாய்.—வன்னெஞ்சுடையவர்கள் கொள்ளையிடப்
பட்டு, மகாநித்திரையடைந்தார்கள்: பராக்கிரம
சாலிகளில் ஒருவரும் தமது கைகளைக்காணவில்
௬ லை.—யாக்கோபின் தேவனே, நீர் கடிந்துகொள்
ள இரதமுங்குதிரையும்மகாநித்திரையில்விழுந்த
௭ ன.—நீர், நீரேபயங்கரமானவர்: நீர் கோபங்கொள்
ளுகையில், உமதுசமுகத்தில் நிற்கவல்லவன்யா
௮ வன்.—நீர் வானத்தினின்று நியாயத்தீர்ப்புக்கேட்
௯ கும்படிபண்ணினீர்.—நியாயம் விசாரிக்கவும்பூ
மியில் உபத்திரவப்படுகிறவர்கள் யாவரையும்
இரட்சிக்கவும் தேவன் எழுந்தருளினபொழு
௰ து, பூமிபயந்து அமைந்தது. சேலா.—மனுஷரு
டைய கோபம் உமக்குத் துதியாய் முடியும்: மி
௰௧ ஞ்சுங் கோபத்தை அடக்குவீரே.—சங்கற்பம்
பண்ணிஅதைஉங்கள் தேவனாகிய யெகோ
வாவுக்கு நிறைவேற்றுங்கள்: அவரைச்சூழ்ந்
திருக்கிற யாவரும் பயங்கரமானவருக்குக் கா
௰௨ ணிக்கைகளைக்கொண்டு வருவார்கள்.—அவர் பிர
புகளின் மனதைச் சேதிக்கிறார்: அவர் பூமியி
லுள்ள இராசாக்களுக்கும் பயங்கரமானவர்.

## ௭௭. சங்கீதம்.

௧. ஆபத்துக்காலத்தில் புலம்பல்: ௰. தேவனைப் புகலிடமாகக்கொள்ளுதல்.

---

பாடகத்தலைவனாகிய யெதுதூனிடத்தில் ஆசாப் ஒப்பித்த சங்கீதம்.

நான் குரலிட்டுத் தேவனை நோக்கிக் கூப்பிட்
டேன், என்சத்தந் தேவனிடத்தில்செல்ல, அவர்
எனக்குச்செவிகொடுத்தார்.—என் ஆபத்துக்காலத் ௨
தில் ஆண்டவரைத் தேடினேன்: இரவிலும்
என்கை ஓயாமல் நீட்டப்பட்டிருந்தது: என் ஆத்
துமம் ஆறுதலைமறுத்தது.—நான் தேவனை நினைத் ௩
துக்கலங்கினேன்: நான் சிந்திக்கையில் என் ஆவி
அமிழ்ந்துபோயிற்று. சேலா.—நீர் என் கண்ணுக் ௪
கு நித்திரையைவிலக்குகிறீர்: நான் பேசக்கூடா
தபடி விசனப்பட்டேன்.—பூருவகாலத்தின் நாள் ௫
களையும் ஆதிகாலங்களின் வருஷங்களையுஞ் சிந்
தித்தேன்.—இராக்காலத்திலும்எனக்குக்கிடைத் ௬
தபாட்டை நினைக்கிறேன்: என் சிந்தையிலுள்ள
வைகளைத்தியானிக்கிறேன்: என் ஆவி ஆலோசிக்
கின்றது.—ஆண்டவர் எப்பொழுதுந்தள்ளிவிடு ௭
வாரா, இனிப்பிரியங்காட்டாரா.—அவருடைய ௮
தயை முழுவதும் அற்றுப்போயிற்றா, தலைமுறை
தலைமுறைவரைக்கும் உண்டாயிருக்கும் வாக்
குத்தத்தம் ஒழிந்துபோயிற்றா.—தேவன் தயை ௯
செய்ய மறந்தாரா, அவர்கோபங்கொண்டு தமது
இரக்கங்களை அடைத்துவிட்டாரா. சேலா.—
பின்பு இதுவே என்பலவீனம்: சருவத்துக்குமே ௰
லானவருடைய வலக்கரம் மாறுதல்செய்யுமென்
றேன்.—நான் யெகோவாவின் கிரியைகளை ௰௧
நினைப்பேன்: பூருவத்திலுள்ள உமது அதிசயங்க
ளைநினைத்துக்கொள்வேன்.-உமதுகிரியைகளெல் ௰௨
லாவற்றையுஞ்சிந்தித்து, உமது செயல்களைக் கு
றித்துப்பேசுவேன்.—தேவனே, உமதுபாதை ப ௰௩
ரிசுத்தஸ்தானத்திலிருக்கின்றது: தேவனாகிய
உம்மைப்போலப்பெரிய தேவன் யாவன்.—நீர் ௰௪
அற்புதகிருத்தியங்களைச்செய்கிற தேவன்: சன
ங்களுக்குள்ளே உமது பராக்கிரமத்தைவிளங்கக்
காட்டினீர்.—யாக்கோபு, யோசேப்பு என்பவர் ௰௫
களுடைய புத்திரராகிய உம்முடையசனங்களை
உமது புயத்தினால் மீட்டீர். சேலா.—தேவனே, ௰௬
சலங்கள் உம்மைக்கண்டன, சலங்கள் உம்மைக்
கண்டுதத்தளித்தன: ஆழிகளுங்கலங்கின.—மே ௰௭
கங்கள் சலத்தைப்பொழிந்தன: ஆகாயமண்ட
லங்கள் முழக்கமிட்டன: உம்முடைய அம்பு
கள் பிரயோகிக்கப்பட்டன.—உமது முழக்கத் ௰௮
தின் தொனி ஆகாயத்திலிருந்தது: மின்னல்கள்
பூமண்டலத்தைப் பிரகாசிப்பித்தன: பூமிகுலுங்
கி அதிர்ந்தது.—உமது பாதை கடலிலும், உமது ௰௯
மார்க்கம் சமுத்திரத்திலும் இருக்கின்றன: உ
மது அடிச்சுவடுகள் தெரியப்படவில்லை.—மோ ௨௰
சே, ஆரோன் என்பவர்களால் உமது சனங்களை
ஆட்டுக்கூட்டங்களைப்போல வழிநடத்தினீர்.

## ௭௮. சங்கீதம்.

இஸரவேலருக்குத் தேவன் செய்ததண்டனைகளையும் அற்புத கிரியைகளையுந் தெரிவித்தல்.

---

(௰) எரே.௪௮.௨௫.—(௭௬. சங். ௧.) சங்.௪௮.௧,. (௩) சங்.௪௬.௯. எசேக்.௩௯.௯.(௪)எசேக்.௩௮.௰௨,௰௩. (௫) எசா.௪௬.௰௨. எரே.௫௧.௩௯. (௬) யாத்.௰௫.௨,௨௧. எசேக்.௩௯.௨௰. நாகூ.௨.௰௩. சக.௰௨.௪.(௭)நாகூ.௧.௬.(௮)எசேக்.௩௮.௨௰. (௯) ௨.நாளா.௨௯.௩௰. (௰) யாத்.௯.௰௬. யாத்.௰௮.௰௧. (௰௧) பிர.௫.௪,௫,௬. ௨.நாளா.௩௨.௨௨,௨௩.—(௭௭. சங். ௨.) சங்.௫௰.௰௫. எசா.௨௬.௯,௰௬. (௫) உபா.௩௨.௭. எசா.௫௧.௯. (௮) ரோ.௯.௬. (௯) எசா.௪௯.௰௫. (௰௩) யாத்.௰௫.௰௨. (௰௫) யாத்.௬.௬. உபா.௯.௨௯. (௰௬) யாத்.௰௪.௨௧. யோசு.௩.௰௫,௰௬. அபகூ.௩.௮,. (௰௭) ௨.சாமு.௨௨.௰௫. அபகூ.௩.௰௧. (௰௮) ௨.சாமு.௨௨.௮. (௰௯) அபகூ.௩.௰௫. யாத்.௰௪.௨௮. (௨௰) யாத்.௰௩.௨௧. ஏசா.௬௩.௰௧,௰௨. ஓசி.௰௨.௰௩.—(௭௮. சங்.)

ஆசாப்பின் போதக சங்கீதம்.
என் சனங்களே, என் உபதேசத்தைக்கேளுங்
கள்: என்வாய்மொழிகளுக்கு உங்கள் செவிக
௨ ளைச்சாயுங்கள்.-நான் ஒரு உவமையோடே என்
வாயைத்திறந்து, பூருவீகப் புதைபொருள்களை
௩ வெளிப்படுத்துவேன்.-அவைகளை நாம்கேள்விப்
பட்டு அறிந்தோம், நம்முடையபிதாக்கள்அவை
௪ களை நமக்குத்தெரிவித்தார்கள்.—அவர்களுடைய
பிள்ளைகளுக்கு நாம் அவைகளை மறைக்கமாட்
டோம், பின்வருஞ் சந்ததியாருக்கு யெகோ
வாவின் துதிகளையும், பராக்கிரமத்தையும், அ
வர்செய்த ஆச்சரியமான கிரியைகளையும் வெளி
௫ ப்படுத்துவோம்.—இனிப்பிறக்கும் பிள்ளைகளாகி
யபின்சந்ததியார்அவைகளைஅறிந்துகொண்டுதங்
௬ கள் பிள்ளைகளுக்குச்சொல்லும்படிக்கும்,—தே
வன்மேல் நம்பிக்கைவைக்கும்படிக்கும், தே
வனுடைய கிரியைகளை மறவாமல் அவருடை
௭ யகட்டளைகளைக் கைக்கொள்ளும்படிக்கும்,—நி
லையில்லாதமனதையும் தேவனைப்பற்றும் விசு
வாசமில்லாத ஆவியையுமுள்ளவர்களாகிக் கரு
வங்கொண்டுகட்டளைமீறினவர்களாகிய தங்கள்
௮ பிதாக்களுக்கு ஒப்பாகாதபடிக்கும்,—அவர்தாம்
யாக்கோபின்வமிசத்தில் எற்படுத்தியசாட்சியை
யும், இஸரவேல்வமிசத்தில் ஸ்தாபித்த கட்டளை
யையும்நம்முடைய பிதாக்கள் தங்கள் பிள்ளைக
ளுக்கு அறிவிக்கும்படி அவர்களுக்குக்கட்டளை
௯ யிட்டார்.—யுத்தசன்னத்தராய் வில்லுகளைத் தரித்
த எப்ராயீம் சந்ததியார்யுத்தகாலத்தில்புறங்காட்
௰ டினார்கள்.—அவர்கள் தேவனுடைய உடன்
படிக்கையைக்கைக்கொள்ளாமலும், அவருடை
ய கட்டளையின்படி நடக்கச்சம்மதியாமலும்,—
௰௧ தங்களுக்கு அவர் காண்பித்த கிரியைகளையும்,
௰௨ அற்புதங்களையும் மறந்துவிட்டார்கள்.—எகிப்து
தேசத்திலுள்ள சோவான்வெளியில் அவர்களு
டைய பிதாக்களுக்குமுன்பாக அவர் ஆச்சரிய
௰௩ மான கிரியைகளைச்செய்தார்.—அவர் கடலைப்பி
ரித்து அதை அவர்கள் கடக்கப்பண்ணினார்; ச
௰௪ லம்குவிந்துநிற்கச்செய்தார்.—பகலிலேமேகத்தி
னாலும், இராமுழுவதிலும் அக்கினிப்பிரகாசத்தி
௰௫ னாலும் அவர்களுக்கு வழிகாட்டினார்.—வனத்
திற்கன்மலைகளைப்பிளந்து, மகா ஆழத்தினின்று
கொடுப்பதுபோலப் பானம்பண்ணக் கொடுத்
௰௬ தார்.—கன்மலையினின்று நீரோடைகளைத்தோற்
றுவித்தார், நதிபோலச்சலம் ஓடச்செய்தார்.—
௰௭ பின்பு அவர்கள் சருவத்துக்குமேலானவரைக்
கோபப்படுத்தி, வனத்தில் அவருக்கு விரோத
௰௮ மாய் மேன்மேலும் பாவஞ்செய்தார்கள்.—அவர்
கள்தங்கள் இஷ்டப்படிபோசனங்கேட்டுத் தே
வனைப்பரீட்சித்தார்கள்.—அவர்கள தேவனுக் ௰௯
குவிரோதமாகப்பேசி, தேவன் வனத்திலே ந
மக்குப்போசனத்தை ஆயத்தப்படுத்தித் தரக்கூடு
மா;—பாருங்கள், அவர்கள்கன்மலையை அடிக்க ௨௰
அதினின்று சலம் ஊறிப்புறப்பட்டு, ஓடைக
ளாய்ப்புரண்டுவந்தது; அதைப்போலப்போசன
முங் கொடுப்பாரா; தமதுசனங்களுக்கு மாமிசத்
தை ஆயத்தப்படுத்துவாரா வென்றார்கள்.—அதை ௨௰௧
யெகோவா கேட்டுக்கோபங்கொண்டார்.—
அவர் உயரத்திலுள்ள மேகங்களுக்குக் கட்டளை ௨௰௨
யிட்டு, வானங்களின் கதவுகளைத்திறந்து,—மன் ௨௰௩
னாவை அவர்களுக்குஆகாரமாகவருஷிக்கப்பண்
ணி, வானத்தின் தானியங்களைக்கொடுக்க,-மனு ௨௰௪
ஷர்பெரியோருக்கேற்றபோசனத்தைப்புசித்தார்
கள், அவர்கள்திருத்திபெறும்படிஅவர்போசனத்
தைஅனுப்பினார்.-யாக்கோபுவமிசத்துக்குவிரோ ௨௰௫
தமாகஅக்கினிபற்றி எரிந்தது, இஸரவேலருக்கு
விரோதமாக அவருடைய கோபமூண்டது. ஆகி
லும்அவர்கள் தேவனை விசுவாசியாமலும்,அவ
ருடையஇரட்சிப்பை நம்பாமலுமிருந்தார்கள்.—
அவர்தமதுவல்லமையினால் ஆகாசத்தில் கீழ்காற் ௨௰௬
று உலாவச்செய்து, தென்றலையும் வரப்பண்ணி
னார்.—தூளைப்போலமாமிசத்தையும், கடற்கரை ௨௰௭
மணலைப்போலப்பறவைகளையும் அவர்கள்மேல்
வருஷிக்கப்பண்ணி,—அவர்களுடையபாளயத் ௨௰௮
தில் அவர்கள்கூடாரங்களைச்சுற்றியிறங்கச்செய்
தார்.-அவர்கள் நிறையப்புசித்தார்கள்: அவர்களு ௨௰௯
டைய மனோவாஞ்சையைத் திருத்திப்படுத்தினா
ர்.-அவர்கள்தங்கள்இச்சையைஅரோசிக்குமுன், ௩௰
அவர்கள் போசனம் அவர்கள் வாயிலிருக்கை
யில்,—தேவனுடையகோபம் அவர்களுக்குள் ௩௰௧
ளே தோன்றி, அவர்களில் புஷ்டியானவர்களைச்
சங்கரித்து, இஸரவேலரில் வலிய வாலிபரான
வர்களை மடியப்பண்ணிற்று.—இவையெல்லாம் ௩௰௨
நடந்தும், அவர்கள் அவருடைய ஆச்சரியமான
கிரியைகளில் நம்பிக்கைவையாமல் பின்னும்பா
வஞ்செய்தார்கள்.-ஆதலால்அவர்களுடையநாள் ௩௰௩
களை விருதாவாகவும், அவர்களுடைய வருஷங்
களைத்துயரமாகவுங் கழியப்பண்ணினார்.—அவர் ௩௰௪
களைக்கொலைசெய்கிறபொழுது, அவர்கள் அவ
ரைத்தேடி மனந்திரும்பி விரைந்து தேவனை
நாடினார்கள்.—தேவன் தங்கள் கன்மலையென் ௩௰௫
றும், சருவத்துக்குமேலான தேவன் தங்கள்
மீட்பரென்றுஞ் சிந்தித்தார்கள்.—ஆனாலும் அவர் ௩௰௬
கள் தங்கள் வாயினால் அவருக்கு இச்சகம்பேசி,
தங்கள் நாவினால் அவரிடத்தில் பொய்சொன்
னார்கள்.—அவர்கள் இருதயம் அவர்மேல் நிலை ௩௰௭
கொள்ளவில்லை, அவர்கள் அவருடைய உடன்

(௧) ஏசா.௫௧.௪. (௨) மத்.௰௩.௩௫. (௪) உபா.௪.௰. யோவே.௧.௩. யாத்.௰௨.௨௬. யோசு.௪.௬,௭. (௭) உ.இரா.௰௭.௰௪. எசேக்.௨௰.௰௮. யாத்.௩௨.௯. உபா.௯.௬,௰௩. உ.நாளா.௨௰.௩௩.௮. (௮) உபா.௬.௭. (௰) உ.இரா.௰௭.௰௫. (௰௨) யாத்.௭. யாத்.௰௨. எண்.௰௩.௨௨. (௰௩) யாத்.௰௪.௨௧. யாத்.௰௫.௧. (௰௪) யாத்.௰௩.௨௧. யாத்.௰௪.௨௪. (௰௫) யாத்.௰௭.௬. ௧.கொரி.௰.௪. (௰௭) உபா.௯.௨௨. எபி.௰.௰௬. (௰௮) யாத்.௰௬.௨. (௰௯) எண்.௰௧.௪. (௨௧) எண். ௰௧.௧,௰. (௨௨) ஆதி.௭.௰௧. மல்.௩.௰. (௨௩) யாத்.௰௬.௪,௰௩. யோவா.௬.௩௧. ௧.கொரி.௰.௩. (௨௫) எபி.௩.௰௮. யூதா.௫. (௨௬) எண்.௰௧.௩௧. (௩௩) எண்.௰௪.௨௧,௩௫. (௩௪) ஓசி.௫.௰௫. (௩௫) உபா.௩௨.௪,௰௫,௩௧. யாத்.௰௫.௰௪. உபா.௭.௮.

படிக்கைக்கேற்க உண்மையாய் நடக்கவில்லை.—
௩௮ ஆனாலும் அவர் தயையுள்ளவராய் அவர்களை நா
சப்படுத்தாமல் அவர்களுடைய பாவத்தை மன்
னித்தார்: அவர்கள்மேல் தமது கோபமூளவிடா
மல் பலமுறை தமது கோபத்தை விலக்கிவிட்
௩௯ டார்.-அவர்கள் மாமிசமென்றும்,விரைந்துசென்
று திரும்பி வராதகாற்றுக்குச்சமமென்றும் நினைந்
௪௰ தார்.—வனாந்தரத்தில் அவர்கள் எத்தனைதரம் அவ
ருக்குக்கோபம் வருவித்து வனத்தில் அவரை வி
௪௧ சனப்படுத்தினார்கள்.—அவர்கள் திரும்பித்தேவ
னைப்பரீட்சித்து, இஸ்ரவேலின் பரிசுத்தரைக்
௪௨ கோபப்படுத்தினார்கள்.—அவர்கள் அவருடைய
கரத்தையும், அவர் தங்களைச் சத்துருவுக்குத் தப்
௪௩ புவித்ததினத்தையும் சிந்திக்கவில்லை.—அவர் எ
கிப்தில்அடையாளங்களையும், சோவான் வெளி
யில் ஆச்சரியமான கிரியைகளையும் வெளிப்ப
௪௪ டுத்தினார்.-அவர்களுடைய நதிகளையும்,அவர்கள்
பானஞ் செய்யாதபடி அவர்கள் நீரோடைகளை
௪௫ யும் இரத்தமாக்கினார்.—அவர்களை அரிக்கும்படி
வண்டுகளையும்,அவர்களைக்கெடுக்கும்படிதவளை
௪௬ களையும்அவர்களுக்குள்அனுப்பி,-அவர்களுடை
யநிலத்தின்விளைவைப்பச்சைப்புழுக்களுக்கும்,
அவர்களுடையசெய்கையின்பலனைவெட்டுக்கி
௪௭ ளிகளுக்குங் கொடுத்துவிட்டார்.—கல்மழையி
னால்அவர்களுடையதிராட்சக்கொடிகளையும்,ஆ
லாங்கட்டியினால் அவர்களுடைய அத்திமரங்க
௪௮ ளையும் அழித்து,—அவர்களுடைய மிருகசீவன்க
ளைக்கல்மழைக்கும்அவர்களுடையஆடுமாடுகளை
௪௯ மின்னுக்கும் ஒப்பித்தார்.—அவர் தீமைசெய்யுந்
தூதர்களையனுப்பி, தமது அகோரகோபத்தையும்,
சாபத்தையும், வேதனையையும், உபத்திரவத்தை
௫௰ யும் அவர்கள்மேல் வருவித்தார்.—அவர்களுடை
யபிராணனை மரணத்துக்கு விலக்காமல், அவர்க
ளுடைய சீவனைப்பெருவாரிக்காய்ச்சலுக்குஒப்
௫௧ பித்து, தமதுகோபத்துக்குஇடங்கொடுத்தார்.—அ
வர்காமின் கூடாரங்களுக்குள் எகிப்தின் பிரதா
னபலமாகிய முதற்பேறானவர்கள் யாவரையும்
௫௨ நாசப்படுத்தினார்.—தம்முடைய சனங்களை ஆடு
களைப்போலப்புறப்படுத்தி, வனத்தில்அவர்களை
௫௩ மந்தைபோல நடத்தி,—அவர்கள்பயப்படாதபடி
அவர்களை விக்கினமின்றிக் கூட்டிக்கொண்டு
போய்விட்டார்: கடல் அவர்களுடைய சத்து
௫௪ ருக்களைமூடிற்று.—அவர் தம்முடையசனங்களைத்
தமது பரிசுத்தஸ்தானமும், தமது வலக்கரமீட்ட
இந்தமலையுமாகிய எல்லையில் அழைத்துவந்து,—
௫௫ அவர்களுக்கு முன்னின்று சாதியாரைத்துரத்தி,
தேசத்தை அவர்களுக்கு நூலாலேபங்கிட்டு, அ
வர்களுடைய கூடாரங்களில்இஸ்ரவேலருடை
ய கோத்திரங்களை வசிக்கப்பண்ணினார்.—ஆனா ௫௬
லும் அவர்கள்சருவத்துக்குமேலான தேவனை
ப்பரீட்சித்து, அவரைக் கோபப்படுத்தினார்கள்;
அவருடையபிரமாணவாக்கியங்களைக்கைக்கொ
ள்ளாமல்,-தங்கள் பிதாக்களைப்போலப்பின்வாங் ௫௭
கித்துரோகஞ்செய்து,மோசஞ்செய்கிறவில்லைப்
போலத்துவண்டார்கள்.—அவர்கள் தங்கள்உயர்ந் ௫௮
தஸ்தானங்களினால் அவரைக்கோபப்படுத்தினார்
கள், தங்கள் தொழிற்படுத்திய விக்கிரகங்களி
னால்அவருக்குக்கோபம் எழுப்பினார்கள்.—தே ௫௯
வன் இதைக்கேட்டு உக்கிரங்கொண்டு, இஸ்ர
வேலரை மிகவும் வெறுத்து,—தாம் மனுஷருக் ௬௰
குள் ஷீலோவில் ஸ்தாபித்தகூடாரமாகிய ஆவா
சத்தைவிட்டு,—தமது பலத்தைச்சிறையிருப்புக் ௬௧
கும்,தமதுமகிமையைச்சத்துருவின்கைக்கும்ஒப்
பித்து,—தம்முடைய சனங்களைக் கட்கத்துக்கு ௬௨
இரையாக்கி, தமது சுதந்தரத்தின்மேற் கோபங்
கொண்டார்.—அவர்கள் வாலிபரைஅக்கினிபட் ௬௩
சித்தது; அவர்கள் கன்னியர்கள் விவாகமில்லா
திருந்தார்கள்.—அவர்கள் ஆசாரியர்கள் கட்கத்தி ௬௪
னால் விழுந்தார்கள்; இவர்கள் விதவைகள் அழ
வில்லை.—அப்பொழுது ஆண்டவர் நித்திரை ௬௫
தெளிந்தவனைப்போலவும் திராட்ச ரசத்தினால்
கெம்பீரிக்கிறபராக்கிரமசாலியைப்போலவும்வி
ழித்து,—தம்முடைய சத்துருக்களைப்பின்புறமாக ௬௬
அடித்து, அவர்களை நித்திய நிந்தனைக்கு ஒப்பித்
தார்.—பின்னும் அவர் யோசேப்பின் கூடாரத் ௬௭
தைவெறுத்து, எப்ராயீம் கோத்திரத்தைத்தெரிந்
துகொள்ளாமல்,—தமக்குப்பிரியமான சீயோன் ௬௮
மலையிலுள்ள யூதா கோத்திரத்தைத்தெரிந்துகொ
ண்டார்.—உன்னதவீட்டைப் போலவும், நித்த ௬௯
மும்நிற்கும்படி தாம் அஸ்திபாரப்படுத்தின பூமி
யைப்போலவும் தமதுபரிசுத்தஸ்தானத்தைக்கட்
டினார்.—தம்முடைய தாசனாகிய தாவீதைத் தெ ௭௰
ரிந்து, ஆட்டுத்தொழுவங்களிலிருந்து அவனை எ
டுத்தார்.—கறவை ஆடுகளின் பின்னாகத்திரிந்தவ ௭௧
னைத்தமது சனங்களாகிய யாக்கோபின் சந்ததி
யாரையும், தம்முடைய சுதந்தரமாகிய இஸ்ரவே
லரையும் மேய்ப்பதற்காக அழைத்துக்கொண்டு
வந்தார்.—இவன் உண்மையுள்ள இருதயத்துடன் ௭௨
அவர்களைமேய்த்து, தன்கைத்திறமையினால் அ
வர்களைநடத்தினான்.

## ௭௯. சங்கீதம்.

௧. யெருஷலேமைக்குறித்துப்புலம்பல்:௯.தேவனைப் பிரார்த்தித்தல். ——

ஆசாப்பின் சங்கீதம்.

---

(௩௮) எண்.௰௪.௰௭,௨௰. ஏசா.௪௮.௯. (௩௯) சங்.௱௩.௰௪,௰௬. ஆதி.௬.௩. யோவா.௩.௬. யோபு.௭.௭,௰௬. யாக்.௪.௰௪. (௪௰) வச.௰௭. எபே.௪.௩௰. (௪௪) யாத்.௭.௨௰. (௪௫) யாத்.௮.௬,௨௪. (௪௬) யாத்.௰.௰௩,௰௫. (௪௭) யாத்.௯.௨௩,௨௫. (௪௮) யாத்.௯.௨௩,௨௪,௨௫. (௫௧) யாத்.௰௨.௨௯. (௫௩) யாத்.௰௪.௰௯,௨௰,௨௭,௨௮. யாத்.௰௫.௰௯. (௫௪) யாத்.௰௫.௰௭. (௫௫) யோசு.௰௩.௭. (௫௬) நியா.௨.௰௧,௰௨. (௫௭) எசே.௨௰.௨௭,௨௮. ஓசி.௭.௰௬. (௫௮) உபா.௩௨.௰௬,௨௧. நியா.௨.௰௨,௨௰. எசேக்.௨௰.௨௮. உபா.௰௨.௨,௪. ௧.இரா.௰௧.௭. (௬௰) ௧.சாமு.௪.௰௧. எரே.௭.௰௨,௰௪. (௬௧) நியா.௰௮.௩௰. (௬௨) ௧.சாமு.௪.௰. (௬௩) எரே.௭.௩௪. (௬௪) ௧.சாமு.௪.௰௧. ௧.சாமு.௨௨.௰௮. யோபு.௨௭.௰௫. எசேக்.௨௪.௨௩. (௬௫) ஏசா.௪௨.௰௩. (௬௬) ௧.இரா.௬. (௭௰) ௧.சாமு.௰௬.௰௧,௰௨. (௭௧) ஆதி.௩௩.௰௩. ஏசா.௪௰.௰௧. ௨.சாமு.௫.௨. ௧.நாளா.௰௧.௨. (௭௨) ௧.இரா.௯.௪.—(௭௯. சங்.)

தேவனே, அந்நியதேசத்தார் உமதுசுதந்தரத்
தில்பிரவேசித்து, உமதுபரிசுத்த ஆலயத்தை அ
சுசிப்படுத்தி, யெரூஷலேமைப் பாழ்மேடாக்கி
௨ னார்கள்.—உமதுதாசருடைய பிரேதங்களை ஆகா
யத்துப்பறவைகளுக்கும், உம்முடைய பத்தரின்
மாமிசத்தைப்பூமியின் காட்டு மிருகங்களுக்கும்
௩ இரையாகக்கொடுத்தார்கள்.—யெரூஷலேமைச்
சுற்றி இவர்கள் இரத்தத்தைச்சலம்போலச்சிந்தி
னார்கள்; இவர்களை அடக்கம்பண்ணுவார் ஒருவ
௪ ருமில்லை.—அயலாரால்நாங்கள் நிந்திக்கப்பட்டு,
சுற்றுப்புறத்தாருக்கு நாங்கள் பரிகாசமும் சிரிப்
௫ புமாயிருக்கிறோம்.—யெகோவாவே, எதுவ
ரைக்கும்; நீர் என்றுங் கோபங்கொள்வீரா; உம
து எரிச்சல் அக்கினியைப்போலச் சுவாலிக்கு
௬ மா.—உம்மை அறியாத அந்நியதேசத்தார்மேலும்,
உமது நாமத்தைச்சொல்லித்தொழுதுகொள்ளாத
இராச்சியத்தார்மேலும் உமது கோபத்தை ஊற்றி
௭ விடும்.—அவர்கள் யாக்கோபைப் பட்சித்து, அ
௮ வன் வாசஸ்தானத்தைப் பாழாக்கினார்கள்.—முந்
தின பாவங்களை எங்களுக்குவிரோதமாக நினை
யாதிரும்: நாங்கள் மிகவுந்தாழ்த்தப்பட்டதினால்
உமது இரக்கங்களைச் சீக்கிரமாய் எங்களுக்கு
௯ முன்செல்லப்பண்ணும்.—எங்கள் இரட்சிப்பின்
தேவனே, உமது நாமத்தின் மகிமையினிமித்
தம் எங்களுக்குச்சகாயஞ்செய்யும்: உமது நாமத்
தினிமித்தம் எங்களைவிடுவித்து எங்கள் பாவங்
௰ களை மன்னித்தருளும்.—அவர்களுடைய தே
வன் எங்கேயென்று அந்நியதேசத்தார் சொல்ல
வேண்டியதென்ன; சிந்தப்பட்ட உமது தாசரு
டைய இரத்தத்தின் பழிவாங்குதலினால் எங்களு
டையகண்களுக்குமுன் அந்நியதேசத்தாருக்குள்
௰௧ அவர் தெரியப்படுவாராக.—கட்டுண்டவனுடை
ய பெருமூச்சு உமது சமுகத்தில் வரவிடுவீராக;
உமது மகா புயத்தினால் மரணமடையப்போகிற
௰௨ வர்களைக் காத்துக்கொள்ளும்.—ஆண்டவரே,
எங்கள் அயலார் உமக்குச்செய்த அவமானத்தை
ஏழுமடங்காக அவர்கள்மடியில் திரும்பப்பண்
௰௩ ணும்.—அப்பொழுது உம்முடைய சனங்களும்,
நீர்மேய்க்கும் ஆடுகளுமாயிருக்கிறநாங்கள், என்
றும் உம்மைக்கீர்த்தனம் பண்ணுவோம்: தலைமு
றை தலைமுறையாக உமதுபுகழ்ச்சியைவிளங்கச்
செய்வோம்.

## ௮௰. சங்கீதம்.

௧. இஸ்ரவேலரை ஒரு சிறுதிராட்சக்கொடிபோ
லப்பாவித்து அதைக்குறித்துப்புலம்பல்: ௰௪.
தேவனைப் பிரார்த்தித்தல்.

ஷோஷன்னிம் எதூத்வாத்தியத்தில்வாசிக்கும்பொ
ருட்டுப் பாடகத்தலைவனிடத்தில் ஆசாப் ஒப்பித்த
சங்கீதம்.

இஸ்ரவேலின் மேய்ப்பரே, ஆட்டுக்கூட்டத் ௧
தைப்போல் யோசேப்புவமிசத்தாரை நடத்துகி
றவரே, செவிகொடுத்தருளும்; கேருபீகளின்மத்
தியில் வசிப்பவரே, பிரகாசியும்.—எப்பிராயீம்,பெ ௨
ன்யாமீன், மனாசே என்பவர்களுக்குமுன்பாக
உமதுபராக்கிரமத்தைஎழுப்பி எங்களை இரட்சிக்
கவாரும்.—தேவனே, எங்களைத்திருப்பி, உமது ௩
முகப்பிரசன்னம் எங்கள்மேற்பிரகாசிக்கப்பண்
ணும்; அப்பொழுது நாங்கள் இரட்சிக்கப்படு
வோம்.—சேனைபதியும் தேவனுமாகிய யெ ௪
கோவாவே, எதுவரைக்கும் உமது சனங்க
ளின் விண்ணப்பத்துக்குக்கோபங்கொள்வீர்.—
அவர்களுக்கு ஆகாரமாகக் கண்ணீரைக்கொடுக் ௫
கிறீர்; குடிக்கவும் கண்ணீரைமிகுதியாகக் கொ
டுக்கிறீர்.—எங்கள்அயலாருக்குஎங்களை ஒருவழக் ௬
குப்பொருளாகும்படி செய்கிறீர்: எங்கள்சத்து
ருக்கள் ஒருவரோடொருவர் பரிகாசம்பண்ணு
கிறார்கள்.—சேனைபதியாகிய தேவனே, எங்க ௭
ளைத்திருப்பி, உமதுமுகப்பிரசன்னம் எங்கள்மே
ற்பிரகாசிக்கப்பண்ணும்; அப்பொழுது நாங்கள்
இரட்சிக்கப்படுவோம்.—நீர் எகிப்திலிருந்து ஒரு ௮
திராட்சக்கொடியைக் கொண்டுவந்து, அந்நிய
ரைத்துரத்தி,நாட்டினீர்.—அதற்குஇடமுண்டாக் ௯
கிவேரூன்றச்செய்தீர்; அதுதேசமெங்கும்படர்ந்
தது.—அதின் நிழலினால் மலைகள் மூடப்பட்ட ௰
ன, அதின் கொடிகள் பெலத்த எரஸ்விருட்சங்
களுக்கொப்பாயின.—சமுத்திரபரியந்தம் அதின் ௰௧
கிளைகளும், நதிபரியந்தம் அதின் கவடுகளும் ப
டர்ந்தன.—வழிப்போக்கர்யாவரும் அதைஒடிக் ௰௨
கத்தக்கதாக அதின்வேலிகளை நீர் பிடுங்கினதென்
ன.—காட்டுப்பன்றி அதை உழுது போட்டது, ௰௩
காட்டுமிருகங்கள் அதைமேய்ந்தன.—சேனைபதி ௰௪
யாகிய தேவனே, திரும்பிவாரும்: நீர்வானத்தி
னின்று நோக்கி, இந்தத் திராட்சக்கொடியைப்
பார்த்து விசாரித்து,—நீர் உமக்காகத்திடப்படுத்தி ௰௫
ன கிளையினிமித்தம் உமது வலக்கரம் நாட்டின
தைக்காத்துக்கொள்ளும்.—அது அக்கினியினாற் ௰௬
சுடப்பட்டும்வெட்டுண்டும்போயிற்று: உமதுமு
கத்தின் கோபத்தினால் அழிந்துபோகிறார்களே.—
உமதுவலதுபாரிசத்தானும், நீர் உமக்காகப்பலப் ௰௭
படுத்தினமனுபுத்திரனுமாகிய அவன்மேல் உமது
கரம்வைக்கப்படுவதாக.—அப்பொழுதுநாங்கள் ௰௮
உம்மைவிட்டுவிலகாமலிருப்போம்: எங்களை உ
யிர்ப்பித்தருளும்,அப்பொழுது உமதுநாமத்தைச்
சார்ந்து பிரார்த்தனைபண்ணுவோம்.—சேனைபதி ௰௯
யும் தேவனுமாகிய யெகோவாவே, எங்
களைத்திருப்பி உமது முகப்பிரசன்னம் எங்கள்
மேல் பிரகாசிக்கப்பண்ணும்;அப்பொழுது நாங்
கள் இரட்சிக்கப்படுவோம்.

(௧) யாத்.௰௫.௰௮. சங்.௭௪.௭. ௨.இரா.௨௫.௯,௰. மீகா.௩.௰௨. (௨) எரே.௩௪.௨௰. (௩) எரே.௰௪.௰௬. வெளி.௰௧.௯. (௫) செப்.௧.௰௮. (௬) எரே.௰.௨௫. வெளி.௰௬.௧. ஏசா.௪௫.௪,௫. ௨.தெச.௧.௮. (௮) ஏசா.௬௪.௯. உபா.௨௮.௪௩. (௯) ௨.நாளா.௰௪.௰௧. எரே.௰௪.௭,௨௧. (௰௨) ஆதி.௪.௰௫. ஏசா.௬௫.௬,௭. எரே.௩௨.௰௮. லூக்.௬.௩௮. (௰௩) ஏசா.௪௩.௨௧.—(௮௰. சங். ௧.) யாத்.௨௫.௨௰,௨௨. ௧.சாமு.௪.௪. உபா.௩௩.௨. (௨) எண்.௨.௰௮—௨௩. (௩)புல.௫.௨௧. எண்.௬.௨௫. (௫) ஏசா.௩௰.௨௰. (௮) ஏசா.௫.௧,௭. எரே.௨.௨௧. எசேக்.௰௫.௬. (௯) யாத்.௨௩.௨௮. யோசு.௨௪.௰௨. (௰௨) ஏசா.௫.௫. நாகூ.௨.௨. (௰௪) ஏசா.௬௩.௰௫. (௰௫) ஏசா.௪௯.௫. (௰௭) சங்.௮௯.௨௧.

## ௮௧. சங்கீதம்.

௧. அருள் பெற்றதினிமித்தம் தேவனைத் துதிக்கும்படி உணர்த்தல்: ௮. கட்டளையைக் கைக்கொள்வதினால் விளையும்பலன்.

கித்தித்வாத்தியத்தில்வாசிக்கும்பொருட்டுப்பாடகத் தலைவனிடத்தில் ஆசாப் ஒப்பித்த சங்கீதம்.

நம்முடையபலமாகிய தேவனுக்கு முன்பாக
ஆனந்தமுழக்கமிடுங்கள்: யாக்கோபின் தேவ
௨ னைக்குறித்து ஆரவாரம்பண்ணுங்கள்.-மேளத்தை
யும், இனியநாதம்பொருந்திய கின்னரத்தையுங்
௩ கொண்டுவந்து சங்கீதத்தைப்பாடுங்கள்.—அமா
வாசியிலும் நம்முடைய உற்சவதினத்திலே நிய
௪ மித்தகாலத்திலும் எக்காளத்தை ஊதுங்கள்.–இது
வே இஸரவேலருக்குண்டானவிதியும், யாக்கோ
பின் தேவனுடைய கட்டளையுமாயிருந்தது.-
௫ நான் அறியாதபாஷையைக்கேட்ட எகிப்துதே
சத்துக்குவிரோதமாய் அவர்சென்றசமயத்தில்,அ
வர்யோசேப்புவமிசத்தாருக்கு இந்தப்பிரமாணத்
௬ தைவிதித்தார்.–அவனுடைய தோளைச் சுமைக்கு
விலக்கினேன்: அவனுடைய கை கூடையினி
௭ ன்று நீங்கிற்று.—நீ ஆபத்துக்காலத்தில் ஓலமிட
நான் உன்னைவிடுவித்தேன்; இடிமுழக்கந்தோன்
றும்மறைவிடத்தினின்றுஉனக்குத்தரந்தந்தேன்:
மேரிபாவின்நீர்களருகேநான்உன்னைப்பரீட்சித்
௮ தேன். சேலா.–என்சனங்களே,கேளுங்கள், உங்
களைக்குறித்துச்சாட்சியிடுவேன்:இஸரவேலரே,
௯ நீங்கள் எனக்குச்செவிகொடுத்தால்,—உங்களுக்
குள் ஒருஅந்நியதேவன்இரான்; அந்நியதேவனை
௰ நமஸ்கரிக்கவுமாட்டீர்கள்.–நானே உங்கள் தே
வனாகிய யெகோவா, எகிப்துதேசத்தினின்
று உங்களைப் புறப்படச்செய்து கொண்டுவந்தே
ன்: உங்கள் வாயைவிரியத்திறவுங்கள், அப்பொ
௰௧ ழுது நான் அதை நிரப்புவேன்.–ஆனாலும் என்ச
னங்கள் என்வாக்குக்குச்செவிகொடுக்கவில்லை;
இஸரவேல் என்மேற்பிரியங்கொள்ளவில்லை.—
௰௨ அதினால்நான் அவர்களை அவரவர் இருதயத்தின்
இச்சைக்குஒப்பித்தேன்:அவர்கள்தங்கள் ஆலோ
௰௩ சனைப்படியே நடந்தார்கள்.–ஆ, என்சனங்கள்
எனக்குச்செவிகொடுத்ததும் இஸரவேலர் என்
௰௪ நெறிகளில் நடந்ததுமுண்டானால் நலம்.—நான்
துரிதமாய்அவர்கள்சத்துருக்களைத்தாழ்த்தி, அவர்
களுடைய பகைவருக்கு விரோதமாய் என் கை
௰௫ யைத்திருப்புவேன்.—அப்பொழுது யெகோ
வாவை வெறுப்பவர்கள்அவர்களுக்குஇதம்பே
சிஅடங்குவார்கள்: அவர்களுடைய காலம்நித்த
௰௬ மும் நிற்கும்.—அதியுத்தமமான கோதுமையைப்
புசிக்கக்கொடுப்பார்: மலையில் ஒழுகுந்தேனால்
உங்களைத்திருத்திப்படுத்துவேன்.

## ௮௨. சங்கீதம்.

நியாயாதிபதிகளைக் கண்டித்தல்.

ஆசாப்பின்சங்கீதம்.

தேவன் தேவ சபையிலே நிற்கிறார்; அவர் ௧
பெரியோர்களுக்குள் நியாயம் விசாரிக்கிறார்.—
எதுவரைக்கும் நீங்கள் துன்மார்க்கருடைய மு ௨
கத்தைப்பார்த்து அநியாயத்தீர்ப்புச் செய்வீர்கள்.
சேலா.—தரித்திரனுக்கும் அநாதபிள்ளைக்கும் நி ௩
யாயஞ் செய்யுங்கள்: உபத்திரவப்படுகிறவனுக்
கும் ஏழைக்கும் நீதிசெய்யுங்கள்.—தரித்திரனை ௪
யும் எளியவனையும் விடுவித்து, துன்மார்க்கரு
டையகைக்கு அவர்களைத் தப்புவியுங்கள்.—
அவர்கள் அறியாமலும் உணராமலும் அந்தகாரத் ௫
திலே திரிகிறார்கள்: தேசத்தில் அஸ்திபாரங்க
ளெல்லாம் அசைகின்றன.—நீங்கள் தேவர்கள்; ௬
நீங்கள் எல்லாருஞ் சருவத்துக்குமேலானவரு
டைய பிள்ளைகளென்று நான் சொல்லியிருந்
தேன்.–ஆனாலும்நீங்கள்மனுஷரைப்போல இறந் ௭
துபோவீர்கள், பிரபுகளில் ஒருவனைப்போலவி
ழுந்துபோவீர்கள்.—தேவனே, எழுந்தருளும், ௮
பூமிக்கு நியாயத்தீர்ப்புச்செய்யும்: நீரே சருவ
தேசத்தாருக்கும் அதிகாரி.

## ௮௩. சங்கீதம்.

துஷ்டருக்கு விரோதமாய்ப் பிரார்த்தித்தல்.

ஆசாப்பின் கானமாகிய சங்கீதம்.

தேவனே, நீர்மவுனமாயிராதேயும்: உத்தரஞ் ௧
சொல்லாமலிராதேயும், தேவனே, அமைதி
யாயிராதிரும்.—பாரும், உம்முடைய சத்துருக் ௨
கள் கலகஞ்செய்கிறார்கள்: உமது பகைவர் தலை
யெடுக்கிறார்கள்.—உம்முடைய சனங்களுக்கு ௩
விரோதமாக உபாயதந்திரங்களைச்செய்து, உமது
மறைவிலிருக்கிறவர்களுக்கு விரோதமாகத் துரா
லோசனைபண்ணி,—அவர்கள் ஒரு சாதியாயிரா ௪
மலும் இஸரவேலின்நாமம் இனி ஒருபொழுதும்
நினைக்கப்படாமலுமிருக்கும்படி அவர்களைச்சே
தித்து விடுவோம் வாருங்களென்று சொல்லியி
ருக்கிறார்கள்.–இப்படிக் கூடாரவாசிகளாகிய ஏ ௫
தோமியரும், இஷ்மாவேலரும், மோவாபியரும்,
அகரீயரும்,–கிபாலரும், அம்மோனியரும், அம ௬
லேக்கியரும், பெலிஸ்தியரும், தீருவாசிகளும்,–
ஒருமனப்பட்டு ஆலோசனைசெய்து, உமக்கு வி ௭
ரோதமாய் உடன்படிக்கை பண்ணிக்கொண்டி
ருக்கிறார்கள்.—அஷீரும் அவர்களுடன் ஐக்கப் ௮
பட்டு, லோத்தின்புத்திரருக்குத்துணைசெய்கிறார்
கள். சேலா.—மீதியானியருக்கும், சீசோனென் ௯
னும் ஆற்றினருகான ஐன்தோரின் அழிக்கப்பட்

(௮௧. சங். ௪.) லேவி.௨௩.௨௪. எண்.௰.௰. (௬) ஏசா.௯.௪. யாத்.௧.௰௫. (௭) யாத்.௨.௨௩. யாத்.௰௪.௰. சங்.௫௰.௰௫. யாத்.௰௯.௰௯. யாத்.௰௭.௬,௭. எண்.௨௰.௰௩.(௯)யாத்.௨௰.௩,௫. உபா.௩௨.௰௨. ஏசா.௪௩.௰௨. (௰) யாத்.௨௰.௨. யோவா.௰௫.௭. எபே.௩.௨௰. (௰௧) யாத்.௩௨.௧. உபா.௩௨.௰௫,௰௮.(௰௨)அப்.௭.௪௨. ரோ.௧.௨௪,௨௬.(௰௩)உபா.௫.௨௯. ஏசா.௪௮.௰௮. (௰௫) ரோ.௧.௩௰. (௰௬) உபா.௩௨.௰௩,௰௪. யோபு.௨௯.௬.—(௮௨. சங். ௧.) ௨.நாளா.௰௯.௬. பிர.௫.௮. யாத்.௨௧.௬. (௨) உபா.௧.௰௭. நீதி.௰௮.௫. (௩) எரே.௨௨.௩. (௪) யோபு.௨௯.௰௨. நீதி.௨௪.௰௧.(௫) மீகா.௩.௧. (௬) யாத்.௨௨.௯,௨௮. யோவா.௰.௩௪. (௭) யோபு.௨௧.௩௨. எசேக்.௩௧.௰௪. (௮) மீகா.௭.௨,௭. சங்.௨.௮. வெளி.௰௧.௰௫.—(௮௩. சங். ௨.) அப்.௪.௨௫.(௩)சங்.௨௭.௪. (௪) எரே.௰௧.௰௯.(௯)எண்.௩௧.௭. நியா.௭.௨௨.

௰ டு,—நிலத்துக்கு எருவாய்ப்போன சிசெரா, யா
பீன் என்பவர்களுக்குஞ் செய்ததுபோல அவர்க
௰௧ ளுக்குச்செய்யும்.—அவர்களுடைய பிரபுகளை ஓ
ரேப்புக்கும், சேப்புக்கும் சமானமாகவும், அவர்
களுடைய அதிபதிகளெல்லாரையும் சேபாவுக்
கும், சல்முனாவுக்குஞ்சமானமாகவுஞ்செய்யும்.-
௰௨ தேவனுடையவாசஸ்தலங்களைச்சுதந்தரித்துக்
௰௩ கொள்வோம் வாருங்களென்றார்கள்.—என் தே
வனே, அவர்களை உருளைபோலவுங் காற்றுக்கு
௰௪ முன் துரும்பைப்போலவும்செய்யும்.—காட்டை
அக்கினிபட்சிப்பதுபோலவும், மலைகளை அக்கி
௰௫ னிச்சுவாலை எரிப்பதுபோலவும்,—நீர் உமது பெ
ருங்காற்று அவர்களைமோதவும், சுழல்காற்று அ
௰௬ வர்களைச்சுழற்றவும்பண்ணும்.—யெகோவா
வே, அவர்கள் உமது நாமத்தைத்தேடும்படிக்கு
அவர்களுடையமுகங்களைவெட்கத்தினால்நிறை
௰௭ யப்பண்ணும்.—யெகோவாவென்னும் நாமத்
தையுடைய நீர்மாத்திரம் பூமியிலுள்ளசருவத்துக்
குமேலானவராயிருக்கிறீரென்று விளங்கும்பொ
௰௮ ருட்டு,—அவர்கள் என்றும்வெட்கப்பட்டுக்கலங்
கி நாணமடைந்து அழிந்துபோவார்களாக.

## ௮௪. சங்கீதம்.

௧. தேவாராதனைசெய்ய விரும்பல்: ௪. அதின் மேன்மையை வருணித்தல்: ௮. அதின்நன்மையை அனுபவிக்கும்படி வேண்டல்.

---

கித்தித்வாத்தியத்தில் வாசிக்கும்பொருட்டுக் கோராகின் புத்திரரிலுள்ள பாடகத்தலைவனிடத்தில் ஒப்பித்த சங்கீதம்.

சேனைபதியாகிய யெகோவாவே, உம்மு
டையவாசஸ்தலங்கள் எவ்வளவுபிரியமானவை
௨ கள்.—என் ஆத்துமம் யெகோவாவின் ஆல
யப்பிராகாரங்களை அவாவிச்சோருகின்றது; என்
னுள்ளமும் என்மாமிசமும் சீவனுள்ள தேவ
௩ னிமித்தம் ஓலமிடுகின்றன.—சேனைபதியாகிய
யெகோவாவே, என் இராசாவே, என் தே
வனே, உம்முடையவேதிகைகளில் அடைக்க
லான்குருவி புகலிடத்தையும், காட்டுப்புறா தன்
குஞ்சுகளை வைக்குங் கூட்டையும் பெற்றிருக்
௪ கின்றன.—உமது ஆலயத்தில் வாசம்பண்ணுகிற
வர்கள் வாழ்வுடையவர்கள்: அவர்கள் நித்தமும்
௫ உம்மைத்துதிக்கிறார்கள். சேலா.—நீரேதன்பெல
மென்றுகொண்டமனுஷன் வாழ்வுடையவன்.—
௬ அவர்கள் மனதில் வழிகளைவைத்துப்பாகா பள்
ளத்தைக்கடந்து செல்லுகையில், கிணறுகளைத்
௭ தோண்டுகிறார்கள்; மழைதுரவுகளைநிரப்பும்.-அ
வர்கள்வரவரப்பெலத்தில்அதிகரித்து, சீயோனி
ல் தேவனுடைய சந்நிதியில் சேருகிறார்கள்.—
௮ சேனைபதியுந் தேவனுமாகிய யெகோவா
வே, என்விண்ணப்பத்தைக்கேட்டருளும்:யாக்
கோபின் தேவனே, செவி கொடுத்தருளும்.
சேலா.-எங்கள்கேடகமாகிய தேவனே, நோக் ௯
கியருளும், நீர் அபிஷேகம் பண்ணிவைத்தவரு
டைய முகத்தைப்பாரும்.—உமது ஆலயப்பிராகா ௰
ரங்களிற்செல்லும் ஒருநாள், ஆயிரத்திலும் உத்த
மம். துன்மார்க்கருடையகூடாரங்களில்வசிப்ப
திலும் என் தேவனுடைய ஆலயத்தின்வாசற்
படியிலிருப்பது நலமென்றுதெரிந்துகொண்டே
ன்.—யெகோவாவாகிய தேவன் சூரிய ௰௧
னும், கேடகமுமாயிருக்கிறார்: யெகோவா
கிருபையையும் மகிமையையும்அருளுவார்: நேர்
மையாய் நடக்கிறவர்களுக்கு எந்த நன்மையை
யுஞ் செய்யாதொழியார்.—சேனைபதியாகிய யெ ௰௨
கோவாவே, உம்மில்நம்பியிருக்கிறமனுஷன்
வாழ்வுடையவன்.

## ௮௫. சங்கீதம்.

௧. பரம நன்மைகளுக்காகத் தேவனைப் பிரார்த்தித்தல்: ௮. அவைகள் கிடைக்குமென்று எதிர்பார்த்தல்.

---

கோராகின்புத்திரரிலுள்ள பாடகத்தலைவனிடத்தில் ஒப்பிக்கப்பட்ட சங்கீதம்.

யெகோவாவே, நீர் உமது தேசத்தின்மேற் ௧
கடாட்சம்வைத்து, யாக்கோபை அடிமைத்தனத்
தினின்று மீட்டருளினீர்.—உமது சனங்களின் ௨
அதிக்கிரமத்தை மன்னித்தீர், அவர்கள் பாவங்க
ளையெல்லாமூடினீர். சேலா.—உமது உக்கிரமு ௩
ழுவதையும் அடக்கிக்கொண்டு, உமது கோபத்
தின் எரிச்சலைவிட்டுத்திரும்பினீர்.-எங்கள்இரட் ௪
சிப்பின் தேவனே, எங்களைத்திருப்பி,எங்கள்
மேற்கொண்டஉமதுகோபம்ஒழியப்பண்ணும்.-
நீர் நித்தமும் எங்கள்மேல் கோபமாயிருப்பீரோ; ௫
தலைமுறைதலைமுறையாக உமது கோபம் எங்க
ளைத்தொடரப்பண்ணுவீரோ.—உமது சனங்களா ௬
கிய நாங்கள் உம்மிடத்தில் மகிழ்ந்திருக்கும்படி
நீர்திரும்பவும்எங்களைஉயிர்ப்பிக்கமாட்டீரோ.—
யெகோவாவே, உமது கிருபையை எங்கள் ௭
மேல்விளக்கி, உமது இரட்சிப்பை எங்களுக்கு
அனுக்கிரகித்தருளும்.—தேவனாகிய யெகோ ௮
வா சொல்வதைக்கேட்பேன்: அவர்தம்முடைய
சனங்களோடும் தம்முடையபத்தரோடும் சமாதா
னமாய்ப்பேசுவார், ஆனாலும் அவர்கள் மீளவும்
அஞ்ஞானத்துக்குத்திரும்பார்களாக.-அவருடை ௯
யஇரட்சிப்பு அவருக்குப் பயப்படுகிறவர்களுக்
குச் சமீபமாய் இருக்கின்றதே: அதினால் நம்மு
டைய தேசத்தில் அவர் மகிமை தங்கும்.—தயையு ௰
ஞ்சத்தியமும் ஒன்றையொன்று சந்தித்தன; நீதி
யுஞ் சமாதானமும் ஒன்றையொன்றுமுத்தஞ்செ
ய்தன.—சத்தியம் பூமியினின்று முளைக்கும்; நீதி ௰௧

---

(௰) நியா.௪.௰௫,௨௪. ௨.இரா.௯.௩௬. செப்.௧.௰௭. (௰௧) நியா.௭.௨௫. நியா.௮.௰௨,௨௧. (௰௩) ஏசா.௰௭.௰௩,௰௪. (௰௪) உபா.௩௨.௨௨. (௰௫) யோபு.௯.௰௭. (௰௮) யாத்.௬.௩.—(௮௪. சங். ௧.) சங்.௨௭.௫. (௨) சங்.௪௨.௧,௨. (௪) சங்.௬௫.௪. (௬) ௨.சாமு.௫.௨௨,௨௩. (௭) நீதி.௪.௰௮. ௨.கொரி.௩.௰௮. உபா.௰௬.௰௬. சக.௰௪.௰௬. (௯) ஆதி.௰௫.௧. (௰௧) ஏசா.௬௰.௰௯. ஆதி.௰௫.௧. நீதி.௨.௭. சங்.௩௪.௯,௰.—(௮௫. சங். ௧.) சங்.௭௭.௭. எஸ்றா ௧.௰௧. எரே.௩௧.௨௩. எசேக்.௩௯.௨௫. யோவே.௩.௧. (௪) உபா.௰௩.௰௭. (௫) சங்.௭௪.௧. (௬) அபகூ.௩.௨. (௮) அபகூ.௨.௧. சக.௯.௰. ௨.பேதுரு.௨.௨௰,௨௧. (௯) ஏசா.௪௬.௰௩. சக.௨.௫. யோவா.௧.௰௪. (௰) சங்.௭௨.௩. ஏசா.௩௨.௰௭. லூக்.௨.௰௪. (௰௧) ஏசா.௪௫.௮.

௰௨ வானத்திினின்று கண்ணோக்கும்.—யெகோவா
நன்மைதருவார்; நம்முடையதேசமுந் தன் பல
௰௩ னைக்கொடுக்கும்.—நீதி அவருக்கு முன்னே செ
ன்று, அவருடைய அடிச்சுவடுகளின்நெறியிலே
நம்மை நிறுத்தும்.

## ௮௬. சங்கீதம்.

*தாவீது தன்பத்தியையும் தேவனுடைய தயை யையும்வல்லமையையும்நினைத்துத்தன்னை ஸ்திரப்படுத்திப் பிரார்த்தித்தல்.*

---

தாவீதின் பிரார்த்தனை.

யெகோவாவே, நான் சிறுமையும்எளிமை
யுமானவன் ஆதலால் நீர் உமது செவியைச் சா
௨ ய்த்து எனக்கு உத்தரந்தாரும்.—நான் உமக்குப்
பிரியனாயிருக்கிறபடியால் என்பிராணனைஇரட்
சியும்: என் தேவனே, உம்மை நம்புகிற உமத
௩ டியானை நீர் இரட்சித்தருளும்.—ஆண்டவரே,
எனக்கு இரங்கும்:நாடோறும் உம்மைநோக்கிப்
௪ பிரார்த்திக்கிறேன்.—ஆண்டவரே, நான் உம்
மிடத்தில் என்சிந்தையை ஏற்றுகிறேன்: உமதடி
யானுடைய மனதைச் சந்தோஷப்படுத்தியரு
௫ ளும்.-ஆண்டவரே, உம்மைநோக்கிப் பிரார்த்
திக்கும் யாவருக்கும் நன்மைசெய்பவரும், மன்
னிப்பவரும், பூரண தயாபரருமாயிருக்கிறீர்.—
௬ யெகோவாவே, என் பிரார்த்தனைக்குச் செ
விகொடுத்தருளும்; என் விண்ணப்பத்தின் வாக்
௭ கைச் சிந்தித்துக்கொள்ளும்.—நீர் எனக்கு உத்
தரந்தருவீர்; ஆதலால் நான் ஆபத்துக்காலத்தில்
௮ உம்மைநோக்கிப் பிரார்த்திப்பேன்.—ஆண்டவ
ரே, தேவர்களில் உமக்கு நிகர் ஒருவருமில்லை;
௯ உமதுகிரியைகளுக்கு ஒன்றும் ஒப்பல்ல.—ஆண்
டவரே, நீர் சிருட்டித்த சருவதேசத்தாரும்
வந்து உமது சமுகத்தில் உம்மைநமஸ்காரம்பண்
௰ ணி, உமது நாமத்தைப்புகழுவார்கள்.—நீர் மகத்
துவமுள்ளவர், ஆச்சரியமான கிரியைகளைச்செ
௰௧ ய்கிறீர்: நீர் ஒருவரே தேவன்.—யெகோ
வாவே, உமது நெறியை எனக்குப்போதித்தரு
ளும்;நான்உம்முடையசத்தியத்தில் நடப்பேன்:
நான் உமது நாமத்துக்குப்பயப்படும்படிஎன்னி
௰௨ ருதயத்தை ஒருமைப்படுத்தும்.—ஆண்டவரே,
என் தேவனே, நான்பூரணமனதோடும்உம்மை
த்துதிப்பேன்: நான்உமதுநாமத்தை என்றும் புக
௰௩ ழுவேன்.—நீர்எனக்கு மிகுந்ததயையைச்செய்து
என் ஆத்துமத்தைத்தாழ்ந்த மரித்தோர்ஸ்தலத்துக்
௰௪ குத் தப்புவித்தீர்.—தேவனே, அகங்காரிகள் எ
னக்கு விரோதமாயெழும்பியிருக்கிறார்கள், துய
ரப்படுத்துகிறவர்களுடைய கூட்டத்தார் என்பி
ராணனைத் தேடுகிறார்கள்; உம்மைத் தங்களுக்கு
௰௫ முன் நிறுத்துகிறதில்லை.—ஆனாலும் ஆண்டவ
ரே, நீர் இரக்கமும்,கிருபையும்,நீடியபொறுமை
யும், பூரணதயையும்,சத்தியமுமுள்ள தேவன்.-
நீர் என்னிடத்தில்திரும்பி எனக்கு இரங்கும்;உ ௰௬
மதடியானுக்கு உமதுவல்லமையை அருளும், உ
மதடியாளுடைய புத்திரனை இரட்சியும்.—யெ ௰௭
கோவாவே, நீர் எனக்குத்துணைசெய்து என்
னைத்தேற்றுகிறதை என்பகைவர்கண்டுவெட்கப்
படும்படிக்கு, ஒரு அனுகூலமான அடையாளத்
தை எனக்குக்காண்பித்தருளும்.

## ௮௭. சங்கீதம்.

*சபையின் மேன்மையைப்பாராட்டல்.*

---

கோராகின்புத்திரரிடத்தில்ஒப்பிக்கப்பட்டகானமாகிய சங்கீதம்.

அவர் அஸ்திபாரம் பரிசுத்தம் பொருந்திய மலை ௧
களிலிருக்கின்றது.-யெகோவா,யாக்கோபின் ௨
வாசஸ்தலங்களெல்லாவற்றிலும் சீயோனின்வா
சல்களில் அதிக பிரியமாயிருக்கிறார்.—தேவனு ௩
டைய நகரமே,உன்னைக்குறித்து மகிமைபொரு
ந்தியவிசேஷங்கள்வசனிக்கப்பட்டன. சேலா.-
என்னறிமுகமானவர்களுக்கு இராகாப்பையும் ௪
பாபேலையும் ஞாபகப்படுத்துவேன்: பாருங்கள்,
பெலிஸ்தியரிலும், தீரியரிலும், கூஷியரிலும் இ
ன்னான் பிறந்தானென்றும்,—சீயோனைக்குறித்து ௫
அதில் இன்னான் இன்னான் பிறந்தானென்றுஞ்
சொல்லப்படும்; சருவத்துக்குமேலானவர்தாமே
அதைஉறுதிப்படுத்துவார்.—யெகோவா சனங் ௬
களைத் தொகையிடும்பொழுது அதில் இன்னான்
பிறந்தானென்று எழுதுவார். சேலா.—பாடுவா ௭
ரும் வாத்தியகாரரும், நம்முடைய எல்லா நீரூற்
றுகளும்உன்னிலிருக்கின்றனவென்பார்கள்.

## ௮௮. சங்கீதம்.

*வியாகுலப்படுகிறவன் புலம்பல்.*

---

மகலாத்லேயனோத் வாத்தியத்தில் வாசிக்கும்பொருட்டுக் கோராகின்புத்திரரிலுள்ள பாடகத்தலைவனிடத்தில் எஸ்ரகியனாகிய ஏமான்ஒப்பித்த கானமாகிய போதக சங்கீதம்.

என்இரட்சிப்பின்தேவனாகியயெகோவா ௧
வே, இரவும்பகலும் உம்மைநோக்கிப் பிரார்த்த
னைபண்ணினேன்.-என்விண்ணப்பம்உமதுபார் ௨
வைக்குமுன்வருவதாக: நான் இடும் ஓலத்துக்கு
உமதுசெவியைச்சாயும்.—என் ஆத்துமம் துக்கங்க ௩
ளால் நிறைந்திருக்கின்றது: என்பிராணன்மரித்
தோர்ஸ்தலத்துக்குச்சமீபித்துச்செல்லுகின்றது.-
நான்குழியிலிறங்குகிறவர்களோடுஎண்ணப்பட் ௪
டேன்: பெலமற்ற மனுஷனுக்கொப்பானேன்.—
நீர் இனி ஒருபொழுதும் என்னை நினையாதபடி ௫
உமது கையினால் சேதிக்கப்பட்டு பிரேதக்குழி
களிற்சேர்ந்து, வெட்டுண்டவர்களில் நின்று நா
ன்விடுவிக்கப்பட்டேன்.—மிகத்தாழ்ந்தகுழியா ௬
கிய அந்தகாரமுள்ள ஆழங்களில்என்னைவைத்து
விட்டீர்.—என்மேல் உமதுகோபம் பாரமாயிருக் ௭

---

(௰௨) சங்.௮௪.௰௧. யாக்.௧.௰௭. (௰௩) சங்.௮௫.௰௪.—(௮௬. சங். ௨.) ஏசா.௨௬.௩.(௪)சங்.௨௫.௧. (௫) சங்.௱௪௫.௯. யோவே.௨.௰௩. (௭) சங்.௫௰.௰௫. (௮) யாத்.௰௫.௰௧. உபா.௩.௨௪. (௯) சங்.௨௨.௩௧. ஏசா.௬௬.௭. வெளி.௰௫.௪. (௰) யாத்.௰௫.௰௧. உபா.௯.௪. ஏசா.௪௪.௯. மாற்.௰௨.௨௯. ௧.கொரி.௮.௪. எபே.௪.௬. (௰௧) சங்.௱௰௯.௮.(௰௪) சங்.௫௪.௩. (௰௫) யாத்.௩௪.௬. எண்.௰௪.௰௭. நிகி.௯.௰௭. சங்.௱௩௮. யோவே.௨.௰௩.—(௮௭. சங். ௧.) சங்.௪௮:௧. (௩) ஏசா.௬௰. (௪) ஏசா.௫௧.௯. (௬) எசேக்.௰௩.௯.—(௮௮.சங்.௧.) சங்.௫௧.௰௪. லூக்.௰௮.௭. (௫) ஏசா.௫௩.௮.

கின்றது, நீர் உம்முடைய எல்லா அலைகளினாலு
௮ ம் என்னைத்துயரப்படுத்தினீர். சேலா.—எனக்கறி
முகமானவர்களை எனக்குத்தூரமாக விலக்கி, அ
வர்கள் என்னைவெறுக்கும்படிசெய்தீர்: நான் அ
டைக்கப்பட்டவனாயிருக்கிறேன், புறப்பட மு
௯ டியாது.—துக்கத்தினால் என்கண் சோர்ந்துபோ
யிற்று: யெகோவாவே, நாடோறும் நான் உம்
௰ மிடத்தில் கைநீட்டிப்பிரார்த்திக்கிறேன்.-நீர் மரி
த்தோருக்கு அற்புதகிரியைகளைக்காட்டுவீரா; ம
ரித்தோர் எழுந்து உம்மைக்கீர்த்தனம்பண்ணுவா
௰௧ ர்களா. சேலா.—உமது தயை மரித்தோர் ஸ்தலத்
திலும், உமது சத்தியம் நாசஸ்தானத்திலும் விவ
௰௨ ரிக்கப்படுமோ.—அந்தகாரத்தில் உமது அற்புதங்
களும், நினைவில்லாத தேசத்தில் உமது நீதியும்
௰௩ அறியப்படுமோ.—யெகோவாவே, உம்மை
நோக்கி ஓலமிட்டேன்; காலையில் என்பிரார்த்த
௰௪ னை உமக்குமுற்படும்.-யெகோவாவே, என்
ஆத்துமத்தை ஏன்தள்ளுகிறீர்; உமதுமுகத்தை எ
௰௫ னக்கு ஏன்மறைக்கிறீர்.—சிறுபிராயந்தொடங்கி
நான் உபத்திரவப்பட்டு மரிக்கப்போகிறவனாயி
ருக்கிறேன்: உமதுபயங்கரங்களைச்சுமந்துமனங்
௰௬ கலங்குகிறேன்.—உமது உக்கிரகோபம் எனக்கு
மேலாகப்பாய்ந்துபோகின்றது:உமது பயங்கரங்
௰௭ கள்என்னைச்சேதித்தன.—அவைகள் நாடோறுஞ்
சலத்தைப்போலஎன்னைச்சூழ்ந்தன;அவைகள்ஏ
௰௮ கமாய்என்னைவளைந்துகொண்டன.—நேசனையுந்
தோழனையும்எனக்குவிலக்கி,எனக்கறிமுகமான
வனை எனக்குத்தூரமாக அந்தகாரத்தில்வைத்தீர்.

## ௮௯. சங்கீதம்.

௧. முகவுரை: ௫. யெகோவாவை வாழ்த்தல்: ௰௯. தாவீதுக்குத் தேவனிட்ட வாகுத்தத்தங்களைக் காட்டல்: ௩௮. துக்கத்தைக்குறித்துப்புலம்பல்: ௪௯. பிரார்த்தனைசெய்தல்.

---

எஸ்ராகியனாகிய ஏதானின் போதக சங்கீதம்.

நான் என்றும் யெகோவாவின் தயையைப்
பாடுவேன்: தலைமுறை தலைமுறை வரைக்கும்
என்வாயினால் உமது சத்தியத்தைத்தெரிவிப்பே
௨ ன்.—இரக்கம்சதாகாலமும்ஸ்திரப்பட்டிருக்கும்:
உமது சத்தியத்தை வானங்களிலே ஸ்தாபிப்பீ
௩ ரென்றேன்.—என்னால் தெரிந்துகொள்ளப்பட்ட
வனோடே உடன்படிக்கைபண்ணினேன், என்
௪ தாசனாகிய தாவீதுக்கு,—என்றென்றைக்கும்உன்
சந்ததியை நிலைப்படுத்துவேன், தலைமுறைதலை
முறையாக உனது சிங்காசனத்தை ஸ்தாபிப்பே
௫ னென்று ஆணையிட்டேன். சேலா.—யெகோ
வாவே, வானங்களில் உமது அற்புதங்களும்,
பரிசுத்தர்களின் சபையில்உமதுசத்தியமுந்துதிக்
கப்படும்.—ஆகாயமண்டலத்தில் யெகோவா ௬
வுக்கு நிகர் யாவர்; பலவான்களுடைய புத்தி
ரருக்குள் யெகோவாவுக்கு ஒப்பானவர்
ஆர்.—தேவன், பரிசுத்தர்களுடைய சபையில் ௭
பயங்கரமானவர், தம்மைச் சூழ்ந்திருக்கிற அ
னைவராலும் அஞ்சப்படத்தக்கவர்.—சேனாபதி ௮
யும் தேவனுமாகிய யெகோவாவே, உ
மக்குநிகரானவர்யாவர்; யெகோவாவே, நீர்
வல்லமையுடையவர், உமது சத்தியம் உம்மைச்
சூழ்ந்திருக்கின்றது.—நீர் சமுத்திரத்தின் உக்கிரத் ௯
தை அடக்கி, அதின் அலைகள் எழும்புகிறபொ
ழுது அவைகளை அடங்கப்பண்ணுகிறீர்.—கொ ௰
லையுண்ட ஒருவனைப்போல இராகாப்பை நீர்
நொறுக்கினீர்; உமது வலியபுயத்தினால் உமது
சத்துருக்களைச் சிதற அடித்தீர்.—வானம் உம்மு ௰௧
டையது, பூமியும் உம்முடையது: பூலோகத்தை
யும் அதிலுள்ள யாவையும் நிலைப்படுத்தினீர்.—
நீர் வடக்குத் தெற்குத் திசைகளையும் சிருஷ்டித் ௰௨
தீர்: தாபோரும் எர்மோனும் உமது நாமத்தில் ஆ
னந்தமுழக்கமிடுகின்றன.-உமதுபுயம்வல்லமை ௰௩
யுள்ளது: உமது கரம் பராக்கிரமமுள்ளது, உம
து வலக்கரம் உயர்ந்தது.—நீதியும் நியாயமும் உ ௰௪
மதுசிங்காசனத்தின்ஆதாரம்: இரக்கமுஞ்சத்திய
மும் உமக்குமுன்பாகச்செல்லுகின்றன.—ஆனந் ௰௫
தத்தொனியை அறிகிறசனங்கள்வாழ்வுடையவர்
கள்: யெகோவாவே, அவர்கள் உமதுமுகப்
பிரசன்னத்தில் நடக்கிறார்கள்.—நாடோறும் உ ௰௬
மது நாமத்தில் மகிழ்ந்து, உமது நீதியினால் உயர்ந்
திருப்பார்கள்.—நீரே அவர்கள் பலத்திற்கு மகி ௰௭
மை: உமது அருளினால் எங்கள்கொம்புஉயரும்.—
யெகோவா எங்கள் கேடகம்; இஸரவே ௰௮
லின் பரிசுத்தர் எங்கள் இராசா.—அப்பொழுது ௰௯
நீர் உமது பத்தியுள்ளவனுக்குத்தரிசனங்கொடுத்
து அவனைநோக்கி, சகாயஞ்செய்யத்தக்க பலத்
தை நான் பலவான்மேல் ஏற்றிவைத்து, சனங்க
ளில்தெரிந்துகொள்ளப்பட்டவனை உயர்த்தினே
ன்.—என்தாசனாகியதாவீதைக்கண்டு, என்பரிசுத் ௨௰
த தைலத்தினால் அவனுக்குஅபிஷேகம் பண்ணி
னேன்.—என் கரம் அவனோடே உறுதியாயிருக் ௨௧
கும்: என்புயமும்அவனைப்பலப்படுத்தும்.—சத்து ௨௨
ரு அவனைமேற்கொள்ளான்: பாவத்தின்மகன்அ
வனைநெருக்கான்.—அவனுடைய சத்துருக்களை ௨௩
அவனுக்குமுன் முறியஅடித்து, அவன் பகைவ
ரைவாதிப்பேன்.—என்சத்தியமும்இரக்கமும்அ ௨௪
வனோடேதங்கும்: என் நாமத்தினால் அவனுடை
ய கொம்பு உயரும்.—அவன் கையைச் சமுத்தி ௨௫
ரத்திலும், அவனுடைய வலக்கரத்தை நதிகளி
லும் நிலைப்படுத்துவேன்.—அவன் என்னைநோக் ௨௬

---

(௮) யோபு.௰௯.௰௩,௰௯. புல.௩.௭. (௯) யோபு.௰௧.௰௩. (௰) ஏசா.௩௮.௰௮. (௰௨) யோபு.௰.௨௧. பிர.௯.௫. (௰௪) யோபு.௰௩.௨௪. (௰௫) யோபு.௬.௪. (௰௭) சங்.௨௨.௰௬. (௰௮) யோபு.௰௯.௰௩.—(௮௯. சங். ௩.) ௧.இரா.௮.௰௬. ஏசா.௪௨.௧. ௨.சாமு.௭.௰,. எரே.௩௰.௯. எசேக்.௩௪.௨௩. ஓசி.௩.௫. (௪) லூக்.௧.௩௨,௩௩. (௫) சங்.௰௯.௧. சங்.௯௭.௬. வெளி.௭.௰,௰௧,௰௨. (௭) சங்.௭௬.௭,௰௧. (௮) யாத்.௰௫.௰௧. ௧.சாமு.௨.௨. (௯) யாத்.௰௪.௨௧,௨௭,௨௮. ஏசா.௫௧.௯. (௰௧) ஆதி.௧.௧. ௧.நாளா.௨௯.௰௧. சங்.௫௰.௰௨. (௰௨) யோபு.௨௬.௭. யோசு.௰௯.௨௨. யோசு.௰௨.௧. (௰௫) எண்.௨௩.௨௧. (௰௯) ௧.இரா.௰௧.௩௪. (௨௰) ௧.சாமு.௰௬.௧,௰௨. (௨௨) ௨.சாமு.௭.௰௨. (௨௩) ௨.சாமு.௭.௯. (௨௪) சங்.௬௧.௭. (௨௫) சங்.௭௨.௮. (௨௬) ௨.சாமு.௭.௰௪. ௨.சாமு.௨௨.௪௭.

கி, நீரே என் பிதா, என் தேவன், என் இரட்
சிப்பாகிய கன்மலையென்று சொல்லிப் பிரார்த்
௨௭ திப்பான்.—நான் அவனை முதற்பேறானவனும்,
பூமியிலுள்ள இராசாக்களைப்பார்க்கிலும் உயர்ந்
௨௮ தவனுமாக்குவேன்.—என் இரக்கஞ் சதாகாலமும்
அவனிடத்தில் தங்கச்செய்வேன், என் உடன்
படிக்கை அவனிடத்தில்ஸ்திரப்பட்டிருக்கும்.—
௨௯ அவன்சந்ததியைச்சதாகாலமும், அவன்சிங்காச
னத்தை ஆகாயமண்டலங்களுள்ளமட்டும்நிலைப்
௩௰ படுத்துவேன்.—அவன் சந்ததியார் என்நியாயப்
பிரமாணத்தைவிட்டு நீங்கி, என்நியாயத்தீர்ப்புக
௩௧ ளுக்கேற்கநடவாமலும்,—என்விதிகளைமீறிஎன்
௩௨ கட்டளைகளைக்காத்து நடவாமலுமிருந்தால்,—அ
வர்களுடைய மீறுதலினிமித்தம் கோலினாலும்,
அவர்கள்பாவத்தினிமித்தம்அடிகளினாலும்அவர்
௩௩ களைத்தண்டிப்பேன்.—ஆனாலும் என்தயைமுழு
வதும் அவனைவிட்டு நீங்கவும், என்சத்தியம்ஒழி
௩௪ யவும்விடேன்.—என் உடன்படிக்கையை மீற
மாட்டேன்,என் உதடுகளின்வாக்கியத்தைவேறு
௩௫ படுத்தமாட்டேன்.—நான் ஒருதரம் என் பரிசுத்
தத்தைக்கொண்டு ஆணையிட்டேன். தாவீதுக்கு
௩௬ நான்பொய்சொல்லமாட்டேன்.—அவன்வமிசம்
சதாகாலமுமிருக்கும், அவன்சிங்காசனம் என்ச
௩௭ முகத்தில் சூரியனைப்போலத் தங்கும்.—சந்திர
னைப்போலச்சதாகாலமும்ஸ்திரப்பட்டிருக்கும்,
ஆகாயத்திலுள்ள மெய்ச்சாட்சியைப்போல் வி
௩௮ ளங்குமென்றுசொன்னீரே. சேலா.—ஆனாலும் நீர்
உமது அபிஷேகன்மேல் கோபங்கொண்டு,அவ
௩௯ னைத்தள்ளி அரோசித்தீர்.—உமதடியானுடன் நீர்
செய்த உடன்படிக்கையை ஒழியப்பண்ணினீர்:
அவனுடைய கிரீடத்தைத்தரையிலெறிந்து அசு
௪௰ சிப்படுத்தினீர்.—அவன் வேலிகள் எல்லாவற்றை
யும்பிடுங்கினீர்;அவனுடைய அரணனஸ்தானங்
௪௧ களைப்பாழாக்கினீர்.—வழிப்போக்கர் யாவரும்
அவனைக்கொள்ளையிடுகிறார்கள்: அயலாரால் அ
௪௨ வன் நிந்திக்கப்படுகிறான்.—அவன் சத்துருக்க
ளின் வலக்கரத்தை உயர்த்தினீர்; அவனுடைய
சத்துருக்கள்யாவரும் சந்தோஷப்படும்படிசெய்
௪௩ தீர்.—அவன் பட்டயத்தின் கருக்கையும் மழுக்கி,
யுத்தத்தில் அவன் நிற்கும்படி செய்யாமல்விட்
௪௪ டீர்.—அவனுடைய மகிமையை ஒழிவித்து, அ
௪௫ வன்சிங்காசனத்தைத்தரையில்விழுத்தினீர்.—அவ
னுடைய இளம்பிராயத்தைக்குறுக்கினீர்: வெட்
௪௬ கத்தினால் அவனைமூடினீர். சேலா.—யெகோ
வாவே, எதுவரைக்கும் மறைந்திருப்பீர்; எப்
பொழுதும் உமதுகோபம்அக்கினியைப்போல்சு
௪௭ வாலிக்குமா.—என் ஆயுள் எவ்வளவு அற்பமென்
று நினைந்தருளும்:மனுபுத்திரர் யாவரையும்வீணா
கவன் சிருட்டித்தீர்.—உயிருள்ளோரில் சாவாம ௪௮
லிருப்பவன்யாவன்; அவன் மரித்தோர் ஸ்தலத்
திலிருந்துதன்பிராணனைவிலக்குவானோ. சேலா.—
ஆண்டவரே, நீர் உமது சத்தியத்தினால் தாவீ ௪௯
துக்கு ஆணையிட்டுக்கொடுத்தஉமதுமுந்தின இரக்
கங்கள் எங்கே.—ஆண்டவரே, வலியசனங்க ௫௰
ளாகிய உம்முடையசத்துருக்கள்உமக்குச்செய்த
நிந்தனையும், உம்முடையஅபிஷேகனுடைய கா
ல்சுவடுகளுக்குச்செய்த நிந்தனையுமாகிய சகலத்
தையும்என்நெஞ்சத்திலேதாங்கிக்கொள்ளுகிறே
ன்.—யெகோவாவே,உமதுதாசருக்குவந்தநிந் ௫௧
தையை நினைந்தருளும்.—யெகோவா சதாகா ௫௨
லமும் வாழ்த்தப்படக்கடவர். ஆமென்,ஆமென்.

## ௯௰. சங்கீதம்.

௧. மனுஷருடைய நிலையாமையைக் காட்டல்:
௰௨. தேவனுடையதயையைப்பிரார்த்தித்தல்.

தேவனுடையதாசனாகியமோசேயின்பிரார்த்தனை

ஆண்டவரே, தலைமுறை தலைமுறையாக நீ ௧
ரே எங்களுக்குப்புகலிடம்.—பருவதங்கள்தோன் ௨
றுமுன்னும், நீர்பூமியையும்உலகத்தையுஞ்சிருட்
டிக்குமுன்னும் நீரேஅநாதியாய் சதாகாலங்களி
லுங் கடவுளாயிருக்கிறீர்.—உமது பார்வைக்கு ௩
ஆயிரம் வருஷங்கள், நேற்றுக்கழிந்தநாள்போல
வும்,இரவின்ஒருசாமம்போலவுமிருக்கின்றன.—
நீர் மனுஷனைத்திரும்பவுந் தூளாக்குகிறீர்;மனுபு ௪
த்திரரே, திரும்பிவாருங்கள்என்கிறீர்.—வெள்ளம் ௫
போல அவர்களைவாரிக்கொள்ளுகிறீர்; அவர்கள்
நித்திரைக்குச்சமானம்: விடியற்காலத்திலே மா
றிப்போகிற புல்லுக்கொப்பாயிருக்கிறார்கள்.—
அது காலையில் தழைத்தோங்கும், மாலையில் சே ௬
திக்கப்பட்டுவாடிப்போம்.—நாங்கள் உமதுகோ ௭
பத்தினால் அழிகிறோம், உமது உக்கிரத்தினால் க
லங்குகிறோம்.—நீர் எங்கள் அக்கிரமங்களை உமக் ௮
குமுன்பாகவும், எங்கள்இரகசியங்களைஉமதுமு
கத்தின் ஒளியிலும் வைத்திருக்கிறீர்.—எங்கள்நாள் ௯
களெல்லாம்உமதுகோபத்திலேசெல்லுகின்றன:
ஒரு நினைவைப்போல எங்கள் வருஷங்களைக்க
ழிக்கிறோம்.—எங்கள்ஆயுள் நாள்கள் எழுபதுவ ௰
ருஷம், பலமிகுதியால் எண்பதுவருஷமாயிருந்
தாலும், அவைகள் பலம் பிரயாசமுந் துக்கமுமா
கும்; அது சீக்கிரஞ்சேதிக்கப்படும், நாங்கள்ப
றந்துவிட்டோம்.—உமதுகோபத்தின்வல்லமை ௰௧
யை அறிந்தவன்யாவன்; உம்மால்வருகிற பயங்
கரம் எப்படியோ, அப்படியே உம்முடையகோ
பம்.—எங்கள் மனம் ஞானத்திலேமுதிரும்பொ ௰௨
ருட்டு, நாங்கள் எங்கள் ஆயுள் நாள்களை எண்
ணும்படி போதித்தருளும்.—யெகோவாவே, ௰௩

(௨௭)கொலோ.௧.௰௫,௰௮. எண்.௨௪.௭. (௨௮) ஏசா.௫௫.௩. (௨௯) ஏசா.௯.௭. எரே.௩௩.௰௭. ௨பா.௰௧.௰௮.(௩௰) ௨.சாமு.௭.௰௩. எரே.௯.௰௩. (௩௨) ௨.சாமு.௭.௰௩. ௧.இரா.௰௧.௩௩. (௩௩) ௨.சாமு.௭.௰௨.(௩௫)ஆமோ.௪.௨.(௩௬) ௨.சாமு.௭.௰௫. லூக்.௧.௩௩. யோவா.௰௨.௩௪. சங்.௭௨.௫,௰௭. எரே.௩௩.௨௰. (௩௮) ௧.நாளா.௨௮.௯. ௨பா.௩௨.௰௯. புல.௫.௰௬. (௪௰) சங்.௮௰.௰௨. (௪௬) சங்.௭௯.௫. (௪௭) யோபு.௰௪.௧. சங்.௩௯.௫. (௪௮) எபி.௰௧.௫.(௪௯) ௨.சாமு.௭.௰௪. ஏசா.௫௫.௩. சங்.௫௪.௫.—(௯௰.சங்.௧.) ௨பா.௩௩.௨௭. எசேக்.௰௧.௰௬. (௨) நீதி.௮.௨௫,௨௬.(௩) ௨.பேதுரு.௩.௮.(௪)ஆதி.௩.௰௧. பிர.௰௨.௭. (௫) சங்.௭௩.௰௫. ஏசா.௪௰.௬. (௬) யோபு.௰௪.௨. (௮) சங்.௫௰.௨௧. எரே.௰௬.௰௭. சங்.௰௯.௰௨. (௰௨) சங்.௩௯.௪. (௰௩) ௨பா.௩௨.௩௬.

திரும்பிவாரும்,எதுவரைக்கும். உமதடியார்மேல்
௰௪ இரங்கும்.—நாங்கள் எங்கள்வாழ்நாள்முழுவதும்
ஆனந்தக்களிப்புடன் மகிழும்படி உமதுதயையி
னால் விரைவில் எங்களைத் திருத்திப்படுத்தியரு
௰௫ ளும்.—நீர் எங்களைத்துக்கப்படுத்தின நாள்களுக்
கும், நாங்கள் தீமை அனுபவித்த வருஷங்களுக்
௰௬ குமீடாக எங்களுக்கு மகிழ்ச்சிதந்தருளும்.—உம
துகிரியை உமதடியாரிடத்திலும், உமது மகி
மை அவர்கள் பிள்ளைகளிடத்திலும்பிரகாசிக்கப்
௰௭ பண்ணும்.—எங்கள் தேவனாகிய யெகோ
வாவே, உமதுகடாட்சம் எங்கள்மேல் இருப்
பதாக: எங்கள்கைகளின்கிரியையை எங்களி
டத்தில் உறுதிப்படுத்தியருளும்; எங்கள்கைக
ளின்கிரியையை எங்களிடத்தில் உறுதிப்படுத்
தியருளும்.

## ௯௧. சங்கீதம்.

௧. யெகோவாவைப் புகலிடமாய்க்கொண்டு சனங்கள் விக்கினமின்றி வாழ்ந்திருத்தல்: ௰௪. தேவன் அவர்களைக்கடாட்சித்தல்.

சருவத்திற்குமேலானவருடைய மறைவில் வா
சஞ்செய்கிறவன் சருவவல்லவருடைய நிழலி
௨ லேதங்குவான்.-நான் யெகோவாவைநோக்
கி,என்புகலிடம்,என்கோட்டை,என் தேவன்,
௩ அவரை நான் நம்புகிறேனென்கிறேன்.—அவர்
உன்னை வேடனுடையகண்ணிக்கும், பெருவா
௪ ரிக்காய்ச்சலுக்குந் தப்புவிப்பார்.—அவர் தமது
சிறகுகளினால் உன்னைமூடுவார், அவருடையசி
றைகளின்கீழ்அடைக்கலம்புகுவாய்:அவருடை
யசத்தியம் உனக்குப்பரிசையுங் கேடகமுமாயி
௫ ருக்கும்.—இராத்திரிகாலத்தின்பயங்கரத்துக்கும்,
௬ பகலில்பறக்கும் அம்புக்கும்,—அந்தகாரத்திலுலா
வும்பெருவாரிக்காய்ச்சலுக்கும், மத்தியானத்தில்
நாசப்படுத்துஞ் சங்காரத்துக்கும் பயப்படாமலி
௭ ருப்பாய்.—உன் பக்கத்தில் ஆயிரம்பேரும், உன்
வலப்புறத்தில் பதினாயிரம்பேரும் விழுவார்கள்;
௮ அதுஉன்னை அணுகாது.-துன்மார்க்கருக்குவரும்
௯ பலனை உன்கண்ணினால் காண்பாய்.—எனக்குப்
புகலிடமுஞ் சருவத்திற்குமேலானவருமாகிய
யெகோவாவை உனக்குவாசஸ்தலமாய் ஏற்
௰ றுக்கொண்டபடியினால்,—ஆபத்து உனக்குநேரி
டாது, எந்தவாதையும் உன்கூடாரத்தை அணு
௰௧ காது.—உன்வழிகளெல்லாவற்றிலும் உன்னைப்
பாதுகாக்கும்படி அவர் தமதுதூதர்களுக்குக்கட்
௰௨ டளையிடுவார்.—உன்கால் கல்லில்இடறாதபடிக்
கு அவர்கள் உன்னைக்கையில் ஏந்திக்கொண்டு
௰௩ போவார்கள்.—சிங்கத்தின் மேலும் விரியன்மே
லும்நடப்பாய்: சிங்கக்குட்டியையும்வலியசருப்
௰௪ பத்தையும் உழக்குவாய்.—அவன் என்னிடத்தில்
அன்புவைத்தபடியால் அவனை விடுவிப்பேன்:
அவன் என் நாமத்தை அறிந்திருக்கிறபடியால்
அவனை உயர்ந்தஸ்தானத்திலே வைப்பேன்.—அ ௰௫
வன் என்னைநோக்கி ஓலமிடும்பொழுது நான்அ
வனுக்கு உத்தரங்கொடுப்பேன்: துக்கத்தில் அ
வனைத்தாங்குவேன்: அவனை இரட்சித்துஅவனை
மகிமைப்படுத்துவேன்.—தீர்க்காயுளினால் அவ ௰௬
னைத்திருத்திசெய்து, என்னிரட்சிப்பை அவனுக்
குக்காட்டுவேன்.

## ௯௨. சங்கீதம்.

௧. தேவனைத் துதித்தல்: ௬. துன்மார்க்கர் ஆக்கினைப்படல்: ௰௨. சன்மார்க்கர் வாழ்வடைதல்.

ஓய்வுநாளிற் பாடத்தக்க கானமாகிய சங்கீதம்.

பத்துநரம்பு வீணையினாலும், தம்புருவினாலும், ௧
மந்த ஓசை பொருந்திய கின்னரத்தினாலும்,—
யெகோவாவைத் துதிப்பதும், சருவத்திற்கு ௨
மேலானவரே, உமது நாமத்தைப்பாடுவதும்,—
விடியற்காலத்தில் உமது தயையையும் சாயங் ௩
காலத்தில் உமது சத்தியத்தையும் பிரகாசிக்கப்
பண்ணுவதும் உத்தமம்.—யெகோவாவே, ௪
நீர் உமதுகிரியையினால் என்னைச் சந்தோஷப்ப
டுத்தினீர்: உமதுகரங்களின் கிரியையினிமித்தம்
ஆனந்த முழக்கமிடுவேன்.—யெகோவாவே, ௫
உம்முடைய கிரியைகள்எவ்வளவுமகத்துவமுள்
ளவைகள்; உம்முடைய ஆலோசனை அதிக ஆ
ழம்.—துன்மார்க்கர் புல்லைப்போல முளைத்தா ௬
லும், அக்கிரமக்காரர் யாவருஞ் செழித்தாலும்
நித்திய நாசமடைவார்கள்.—மிருகம்போன்றம ௭
னுஷன் இதை அறியான்: மூடன் இதை உண
ரான்.—யெகோவாவே, நீர் நித்தமும்உன்ன ௮
தமானவர்.—யெகோவாவே, பாரும், உமது ௯
சத்துருக்கள் சகலரும் நாசமடைவார்கள்; அக்கி
ரமக்காரர் யாவருஞ்சிதற அடிக்கப்படுவார்கள்.—
என் கொம்பைக் காண்டாவினுடையதைப்போ ௰
ல உயர்த்துவீர்: புதிய எண்ணெயினால் அபிஷே
கம்பண்ணப்படுவேன்.—என் கண் என் சத்து ௰௧
ருக்களுக்கு நேரிடுவதைக்காணும், எனக்குவி
ரோதமாயெழும்புகிற துன்மார்க்கர்களுக்கு நே
ரிடுவதை என் செவிகேட்கும்.—நீதிமான் பனை ௰௨
போலச்செழிப்பான்: லிபானோனின் ஏரஸ் வி
ருட்சத்தைப்போல வளருவான்.—யெகோ ௰௩
வாவின் வீட்டிலேநாட்டப்பட்டவர்கள் நம
து தேவனுடைய பிராகாரங்களிற்செழித்தி
ருப்பார்கள்.—என் கன்மலையாகிய யெகோ ௰௪
வா நீதியுள்ளவர்; அநீதி அவரிடத்திலில்லையெ
ன்று காண்பிக்கும்படி,—அவர்கள் முதிர்ந்தவய ௰௫
தில் கனிகொடுத்து, சாரங்கொண்டு பசுமையா
யிருப்பார்கள்.

## ௯௩. சங்கீதம்.

௧. தேவனுடைய இராச்சியத்தின் சௌந்தரியத்தையும் சௌக்கியத்தையும் வருணித்தல்.

(௰௬) அபகூ.௩.௨. (௰௭) சங்.௨௭.௫. ஏசா.௨௬.௰௨.—(௯௧. சங். ௧.)சங்.௨௭.௪. சங்.௰௭.௯. (௨)சங்.௱௪௨.௫.(௩) சங்.௱௨௪.௭.(௫)யோபு.௫.௰௯. நீதி.௩.௨௩,௨௪. ஏசா.௪௩.௩. (௮) சங்.௩௭.௩௪. மல்.௧.௫.(௰)நீதி.௰௨ ௨௧.(௰௧)சங். ௩௪.௭. சங்.௭௧.௩. மத்.௪.௬. எபி.௧.௰௪. (௰௨)யோபு.௫.௨௩. (௰௫)ஏசா.௪௩.௨. ௧.சாமு.௨.௩௰ (௰௬) நீதி.௩.௨.—(௯௨. சங். ௩.)௧.நாளா.௨௩.௫. (௫) ஏசா.௨௮.௨௯. ரோ.௰௧.௩௩,௩௪.(௬)யோபு.௰௨.௬. எரே.௰௨.௧,௨. மல்.௩.௰௫. (௰)சங்.௨௩.௫.(௰௨)சங்.௫௨.௮. ஏசா.௬௫.௨௨. ஓசி.௰௪.௫,௬.(௰௪)உபா.௩௨ ௪. ரோ.௯.௰௪.—(௯௩. சங்.)

யெகோவா மகத்துவத்தைத்தரித்து இராச்சி
யபரிபாலனம் பண்ணுகிறார்; யெகோவா ப
ராக்கிரமத்தை அணிந்து அரையிற்கச்சுக்கட்டிக்
கொண்டிருக்கிறார்: பூமண்டலம் நிலைப்படுத்தப்
௨ பட்டது, அதை அசைக்கமுடியாது.—யெகோ
வாவே, நீர் அநாதி. உமதுசிங்காசனம் ஆதிமு
௩ தல் ஸ்தாபிக்கப்பட்டது.—நதிகள் பெருமுழக்
கம் இடுகின்றன, நதிகள் பெருமுழக்கமிடுகின்
௪ றன; நதிகள் திரை எறிகின்றன.—சலத்திரளின்
முழக்கத்திலும் சமுத்திரத்தின் உரத்ததிரைகளி
லும்உன்னதத்திலுள்ள யெகோவா அதிகவல்
௫ லமையுள்ளவர்.—உம்முடைய சாட்சிப்பிரமா
ணங்கள் மிகவுந்திடமுள்ளவைகள்: யெகோ
வாவே, பரிசுத்தமானது சதாகாலமும் உமதுஆ
லயத்துக்குத்தகுதியாயிருக்கின்றது.

## ௯௪. சங்கீதம்.

௧. பாவிகளுக்குவிரோதமாகப்பிரார்த்தித்தல்: ௮. அவர்களைக் கண்டித்தல்: ௰௬. நீதிமான்களின் சௌக்கியத்தைவருணித்தல்.

பழிவாங்குகிற தேவனாகிய யெகோவா
வே,பழிவாங்குகிற தேவனே,பிரகாசியும்.—
௨ பூலோகநியாயாதிபதியே,நீர் எழுந்து அகங்காரி
௩ களுக்குப் பிரதிசெய்யும்.—யெகோவாவே,
துன்மார்க்கர் எதுவரைக்கும்,எதுவரைக்குந்துன்
௪ மார்க்கர் மகிழ்ந்திருப்பார்கள்.—அக்கிரமக்காரர்
யாவரும் கடுஞ்சொற்களைச்சொல்லி வெளிப்ப
டுத்தி,தங்கள்மேன்மையைப்பாராட்டுகிறார்கள்.-
௫ யெகோவாவே,அவர்கள்உம்முடையசனங்
களைநொறுக்கி, உமது சுதந்தரத்தைக்கிலேசப்ப
௬ டுத்துகிறார்கள்.—அவர்கள், விதவையையும் பர
தேசியையும் வதைத்து, அநாதபிள்ளைகளைக்கொ
௭ லைசெய்து,—யெகோவா காணமாட்டார்,யாக்
கோபின் தேவன் விசாரிக்கமாட்டாரென்று
௮ சொல்லுகிறார்கள்.—சனங்களில்மிருகம்போன்
றவர்களே,உணர்ந்துகொள்ளுங்கள்: அஞ்ஞானி
௯ களே, எப்பொழுதுஞானிகளாவீர்கள்.—காதைச்
சிருட்டித்தவர் கேளாரா; கண்ணையுருவாக்கின
௰ வர் காணாரா.—புறத்தேசத்தாரைத்தண்டித்து, ம
னுஷருக்கு ஞானத்தைஉணர்த்துகிறவர் கடிந்து
௰௧ கொள்ளாரா.—மனுஷருடைய எண்ணங்கள் வீ
ணென்பது யெகோவாவுக்குத்தெரியும்.—
௰௨ யெகோவாவே,துன்மார்க்கனுக்குக்குழிவெ
ட்டப்படும் வரைக்குமுள்ள தீமையான நாள்க
௰௩ ளில் இளைப்பாறுதலைத்தரும்படிக்கு,—உம்மால்
தண்டிக்கப்பட்டும் உமதுவேதப்பிரமாணத்தினா
லே போதிக்கப்பட்டும் இருக்கிறமனுஷன்வாழ்
௰௪ வுடையவன்.—யெகோவா தம்முடையசனங்
களை நெகிழவிடார், தமது சுதந்தரத்தைத் தள்
ளார்.—நியாயத்தீர்ப்பு நீதியாயிருக்கும்: மனநேர் ௰௫
மையுள்ளவர்கள்யாவரும் அதற்குப்பின்செல்லு
வார்கள்.—என்னிமித்தம் துர்க்கருமக்காரருக்கு ௰௬
விரோதமாயெழும்புகிறவன்யாவன்; என்னிமித்
தம்அதிக்கிரமக்காரருக்கு விரோதமாய் நிற்பவன்
யாவன்.—யெகோவா எனக்குத்துணையாயி ௰௭
ராவிட்டால் என்ஆத்துமம் மவுனஸ்தானத்தில்
வாசம்பண்ணும்.—என்கால் சறுக்குகின்றதென் ௰௮
று நான் சொன்னபொழுது யெகோவாவே,
உமது தயை என்னைத்தாங்கிற்று.—என் உள்ளத் ௰௯
திற் பலசிந்தனைகள் உண்டாயிருக்கையில், உம
து தேற்றுதல்களினால் என் மனம் மகிழ்ச்சியடை
கின்றது.—கட்டளையைமீறித்தீமைசெய்யுமஅதிக் ௨௰
கிரமக்காரருடைய சிங்காசனம் உமக்கு இசைந்
திருக்குமா.—அவர்கள் நீதிமானுடைய பிராண ௨௧
னுக்கு விரோதமாகக் கூட்டங்கூடி, குற்றமில்
லாதவனைக்குற்றமுள்ளவனாகத் தீர்க்கிறார்கள்.-
ஆனாலும் யெகோவா என்துருக்கம்; என் ௨௨
தேவன், எனக்குப்புகலிடமாகிய கன்மலை.—
அவர் அவர்களுடைய பாவத்தின்பலனை அவர் ௨௩
கள்மேலேவருவித்து, அவர்களுடைய தீங்கில்
அவர்களைச்சேதிப்பார்; நம்முடைய தேவனா
கியயெகோவா அவர்களைச்சேதிப்பார்.

## ௯௫. சங்கீதம்.

௧. தேவனைத்துதிக்கும்படிபுத்திசொல்லல்: ௬. கட்டளையைக் கைக்கொள்ளவேண்டுமென்று எச்சரிக்கைப்படுத்தல்.

யெகோவாவைப் பாடுவோம் வாருங்கள்: ௧
நம்முடைய இரட்சிப்பின்கன்மலையை ஆனந்த
மாய்ப்பாடுவோம்.—நாம் அவருடையசந்நிதிக்கு ௨
முன்வந்து துதிசெய்து, ஆர்ப்பரித்து அவர்மேற்
சங்கீதங்களைப்பாடுவோம்.—யெகோவா மகா ௩
தேவன், சகலதேவர்களின்மேலும் மகாராசா.-
பூமியின்ஆழமானஇடங்கள்அவர்கைவசம்: மலை ௪
களின் உயர்ந்த ஸ்தானங்களும்அவருடையவை
கள்.—சமுத்திரம் அவருடையது, அவர் அதைச் ௫
சிருஷ்ட்டித்தார்: அவர் கரங்கள் உலர்ந்த தரை
யை யுண்டாக்கின.—நம்மைச் சிருட்டித்த யெ ௬
கோவாவை நாம் நமஸ்கரித்து முழங்காற்ப
டியிட்டு ஆராதனைசெய்வோம்வாருங்கள்.—அவர் ௭
நம்முடைய தேவன்; நாம் அவர் மேய்ச்சலின்
சனம், அவர்கையின்ஆடு.—இன்று நீங்கள் அவ ௮
ருடையவாக்கைக்கேட்கவிரும்பினால், உங்கள்
பிதாக்கள், என்கிரியையைக்கண்டும் என்னைச்
சோதித்துப்பரீட்சைபண்ணின வனத்தின்விவா
தஸ்தானத்தில் பரீட்சை நாளில் நடந்ததுபோ
ல,—உங்கள் இருதயத்தைக்கடினப்படுத்தாதிருங் ௯
கள்.—நான் நாற்பதுவருஷபரியந்தம் அந்தச்சந் ௰

(௧) ஏசா.௫௨.௭. வெளி.௰௯.௬.(௨)சங்.௪௫.௬.—(௯௪. சங். ௧.)உபா.௩௨.௩௫. நாகூ.௧.௨. (௨)ஆதி.௰௮.௨௫.(௩) யோபு.௨௰.௫. (௪) யூதா.௰௫.(௯)யாத்.௪.௰௧. நீதி.௨௰.௰௨.(௰)யோபு.௩௫.௰. ஏசா.௨௮.௨௬. (௰௧) ௧.கொரி.௩.௨௰. (௰௨) யோபு.௫.௰௭. நீதி.௩.௰௧. ௧.கொரி.௰௧.௩௨. எபி.௰௨.௫,. (௰௪) ௧.சாமு.௰௨.௨௨. ரோ.௰௧.௧,௨. (௨௰) ஆமோ.௬.௩. ஏசா.௰.௨. (௨௧) மத்.௨௭.௧ யாத்.௨௩.௭. நீதி.௰௭.௰௫. (௨௩) நீதி.௨.௨௨.—(௯௫. சங். ௧.) உபா.௩௨.௰௫. ௨.சாமு.௨௨.௪௭. (௫) ஆதி.௧.௯,௰. (௬) ௧.கொரி.௬.௨௰. (௮) எபி.௩.௭,௰௫. யாத்.௰௭.௨,௭. உபா.௯.௰௬. ௧.கொரி.௰.௯. எண்.௰௪.௨௨.

ததியைக்குறித்துவிசனப்பட்டு, இந்தச்சனங்கள்
மனமயக்கங் கொண்டிருக்கிறார்கள், என் வழி
௰௧ களை உணரார்களென்றேன்.—அதினிமித்தம் நா
ன் கோபங்கொண்டு அவர்களை என்னிளைப்பா
றுதலில் இளைப்பாற விடேனென்று ஆணையிட்
டேன்.

## ௯௬. சங்கீதம்.

தமதுமகிமையையும், இராச்சியத்தையும் நியாயத்
தீர்ப்பையுங் குறித்துத் தேவனைத் துதிப்பது
கடமையெனக்கூறல்.

யெகோவாவின் மேல் புதுப்பாட்டைப்
பாடுங்கள்: பூலோகத்தாரே, நீங்கள் யாவரும்
௨ யெகோவாவைப் பாடுங்கள்.—யெகோ
வாவைப்பாடுங்கள், அவருடைய நாமத்தை
வாழ்த்துங்கள்; நாடோறும் அவர்செய்யும் இ
௩ ரட்சிப்பைப் பிரசித்தப் படுத்துங்கள்.—அந்நிய
தேசத்தாருக்குள் அவருடைய மகிமையையும்,
சகல சாதியாருக்குள்ளும் அவருடைய அற்பு
௪ தங்களையும் பிரசித்தப்படுத்துங்கள்.—யெகோ
வா மகத்துவமுள்ளவரும்,மிகவுந்துதிக்கப்படத்
தக்கவருமாயிருக்கிறார்: எல்லாத் தேவர்களிலும்
௫ அவருக்கே பயப்படவேண்டும்.—அந்நிய தே
சத்தாருடைய தேவர்களெல்லாம் அபத்தமான
வர்கள்: யெகோவா வானங்களைச் சிருட்டித்
௬ தார்.—அவர்சந்நிதியில்கனமும்மகிமையும்,அவரு
டையபரிசுத்தஸ்தானத்தில்வல்லமையுஞ்சௌந்
௭ தரியமும் இருக்கின்றன.—அந்நியசனங்களின்
சந்ததியாரே, யெகோவா மகிமையும் வல்ல
மையுமுள்ளவரென்று பிரசித்தப்படுத்துங்கள்.—
௮ யெகோவாவின் நாமத்தின் மகிமையைப்பி
ரசித்தப்படுத்தி, காணிக்கைகளைக்கொண்டுவந்து
அவருடைய பிராகாரங்களில்பிரவேசியுங்கள்.—
௯ அலங்காரமானபரிசுத்தஸ்தானத்தில் யெகோ
வாவைத்தொழுதுகொள்ளுங்கள்: பூலோகத்தா
ரே, நீங்கள் யாவரும் அவருக்கு முன்பயப்ப
௰ டுங்கள்.—யெகோவா இராச்சிய பரிபால
னம்பண்ணுகிறார்: பூமண்டலம் உறுதிப்பட்டு
அசையாதிருக்கும்: அவர்சனங்களுக்கு யதார்த்த
மாக நியாயத்தீர்ப்புக்கொடுப்பாரென்று புறத்தே
௰௧ சத்தாருக்குள்ளே சொல்லுங்கள்.—வானங்கள் ம
கிழக்கடவன, பூமிபூரிப்பதாக; சமுத்திரமும்அ
௰௨ திலுள்ளயாவுங்கொந்தளிக்கக்கடவன —நாடும்
அதிலுள்ள யாவுங் களிகூரக்கடவன: சோலையி
லுள்ளசகலவிருட்சங்களும்யெகோவாவின்
௰௩ சமுகத்தில் ஆனந்தமுழக்கமிடக்கடவன.—அ
வர் வருகிறார், பூமிக்கு நியாயந்தீர்க்கவருகிறார்:
அவர் பூலோகத்திற்கு நீதியோடுஞ் சனங்களுக்
குச்சத்தியத்தோடும்நியாயத்தீர்ப்புக்கொடுப்பார்.

## ௯௭. சங்கீதம்.

தேவனுடைய இராச்சியத்தின் மகிமையையும்
அவர்விக்கிரகாராதனைக்காரருக்குச்செய்கிற நி
யாயத்தீர்ப்பையுங்குறித்துச்சபைதுதித்தல்.

யெகோவா இராச்சியபரிபாலனம்பண்ணு ௧
கிறார், பூமிமகிழ்வதாக; திரளானதீவுகள்சந்தோ
ஷப்படக்கடவன.—மேகங்களும் அந்தகாரமும் ௨
அவரைச்சூழ்ந்திருக்கின்றன: நீதியினாலும்நியா
யத்தினாலும் அவருடைய சிங்காசனம் ஸ்திரப்ப
டும்.—அவரைச் சூழ்ந்திருக்கிற சத்துருக்களைப் ௩
பட்சிக்கும் அக்கினி அவர் சமுகத்துக்கு முன்
செல்லுகின்றது.—அவருடைய மின்னல்கள் பூ ௪
மண்டலத்தைப்பிரகாசிப்பிக்கின்றன: பூமிகண்
டுஅதிர்ந்தது.—யெகோவாவின் சமுகத்தில் ௫
மலைகள் மெழுகுபோல உருகிப்போகின்றன, பூ
மிமுழுவதற்கும்அதிபதியாயிருப்பவருக்குமுன்
பாக உருகுகின்றன.—ஆகாயமண்டலங்கள் ௬
அவர்நீதியைவெளிப்படுத்துகின்றன, சகல சன
ங்களும்அவர் மகிமையைக்காண்கிறார்கள்.—தொ ௭
ழிற்படுத்திய விக்கிரகங்களுக்குத்தொண்டுசெய்
து, பிரதிமைகளை மேன்மைபாராட்டும் யாவரும்
வெட்கப்படுவார்களாக: தேவர்களே, நீங்களனை
வரும் அவருக்கு நமஸ்காரம்பண்ணுங்கள்.—இ ௮
தைக்கேட்டுச்சீயோன்மகிழ்ச்சியடைந்தது; யெ
கோவாவே, உமது நியாயத்தீர்ப்புகளினிமித்
தம் யூதாவின் குமாரத்திகள் சந்தோஷப்படுகி
றார்கள்.—யெகோவாவே, நீர் பூமிமுழுவதற் ௯
கும் மேலானவர்: எல்லாத்தேவர்களிலும் உன்
னதமாயிருக்கிறீர்.—யெகோவாவை நேசிப் ௰
பவர்களே, நீங்கள் தீமையைவெறுப்பீர்களாக:
அவர்தமதுபரிசுத்தவான்களின்பிராணனைக்காப்
பாற்றுகிறார்; அவர்களைத் துன்மார்க்கர்கைக்குத்
தப்புவிக்கிறார்.—நீதிமானுக்காக ஒளியும்,நேர்மை ௰௧
யானஇருதயத்தையுடையவர்களுக்காகமகிழ்ச்சி
யும்விதைக்கப்பட்டன.—நீதிமான்களே,யெகோ ௰௨
வாவில் களிகூருங்கள்; அவருடையபரிசுத்தத்
தை நினைந்து அவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்.

## ௯௮. சங்கீதம்.

தேவனைத் துதிக்கும்படி யாவருக்கும் புத்தி
சொல்லல்.

சங்கீதம்.

யெகோவாவின்மேல் புதுப்பாட்டைப் ௧
பாடுங்கள்; அவர் ஆச்சரியமானவைகளைச்செய்
தார்: அவர் தமது வலக்கரத்தினாலும் பரிசுத்த பு
யத்தினாலுஞ் செயங்கொண்டார்.—யெகோ ௨
வா தாம்செய்த இரட்சிப்பை விளங்கக்காட்டி
னார்: அந்நியதேசத்தாருக்குப் பிரத்தியட்சமாகத்
தமது நீதியைப் பிரகாசிக்கப்பண்ணினார்.—அ ௩

(௯௬. சங். ௪.) சங்.௱௪௫.௩.(௫) எரே.௰.௰௧,௰௨. சங்.௱௰௫.௰௫. ஏசா.௪௨.௭. (௰) சங்.௯௭.௧. வெளி.௰௧.௰௫. (௰௩) சங்.௯௭.௪. வெளி.௰௯.௰௧.—(௯௭. சங். ௧.) சங்.௯௬.௰. ஏசா.௬௰.௯. (௨) ௧.இரா.௮.௰௨. (௩) சங்.௫௰.௩. தானி.௭.௰. அபகூ.௩.௫. (௪) யாத்.௰௯.௰௮. (௫) நியா.௫.௫. மீகா.௧.௪. நாகூ.௧.௫. (௬) சங்.௰௯.௧. (௭) யாத்.௨௰.௪. லேவி.௨௬.௧. எபி.௧.௬. (௯) யாத்.௰௮.௰௧. (௰) ஆமோ.௫.௰௫. ரோ.௰௨.௯. சங்.௱௪௫.௨௰. நீதி. ௨.௮. தானி.௩.௨௮. (௰௧) யோபு.௨௨.௨௮. நீதி.௪.௰௮.—(௯௮. சங். ௧.) ஏசா.௪௨.௰. யாத்.௰௫.௬,௰௨. ஏசா. ௫௯.௰௬. (௨) ஏசா.௫௨.௰.லூக்.௨.௩௰,௩௧. ஏசா.௬௨,௨. ரோ.௩.௨௫,௨௬. (௩) லூக்.௧.௫௪,௫௫,௭௨. ஏசா.௫௨. ௰. லூக்.௨.௩௰,௩௧. அப்.௰௩.௪௭. அப்.௨௮.௨௮.

வர் தாம் இஸரவேல் வமிசத்துக்கு வாக்குத்தத்
தஞ்செய்த தமதுதயையையும் சத்தியத்தையும் நி
னைந்திருக்கிறார்: பூமியின் எல்லைகளிலுள்ள யா
வரும் நமது தேவன் செய்த இரட்சிப்பைக்க
௪ ண்டார்கள்.—பூலோகத்தாரே, நீங்களெல்லாரும்
யெகோவாவை நோக்கி ஆனந்தமுழக்கமி
டுங்கள்: நீங்கள்உரத்ததொனிசெய்துமகிழ்ந்து து
௫ திபாடுங்கள்.-கின்னரத்தினாலும்,கின்னரத்தோடு
கீதத்தின் ஓசையினாலும் யெகோவாவைப்
௬ பாடுங்கள்.—தாரையினாலும், எக்காளத்தினாலும்
இராசாவாகிய யெகோவாவின் சமுகத்தில்
௭ ஆனந்தத்தொனி செய்யுங்கள்.—சமுத்திரம் தன்
னிடத்துள்ளவைகளோடும், பூமண்டலம் தன்
னிற் குடியிருக்கிறவர்களோடும் ஆரவாரஞ் செ
௮ ய்யக்கடவன.—நதிகள் கைகொட்டக்கடவன:
மலைகள் ஏகமாய் யெகோவாவுக்கு முன்
௯ பாக மகிழக்கடவன.—அவர் பூலோகத்துக்கு
நியாயந்தீர்க்க வருகிறார்: அவர் பூலோகத்துக்கு
நீதியோடும், சனங்களுக்கு யதார்த்தத்தோடும் நி
யாயத்தீர்ப்புக்கொடுப்பார்.

## ௯௯. சங்கீதம்.

*சீயோனிலுள்ள அவருடைய இராச்சியத்தினி
மித்தந் தேவனைத் துதிக்கும்படி ஏவல்.*

யெகோவா இராச்சியபரிபாலனம்பண்ணு
கிறார்; சனங்கள் நடுங்குவார்களாக: அவர் கெ
ரூபிகளின் மத்தியில் வீற்றிருக்கிறார்; பூமி அ
௨ சைவதாக.—யெகோவா சீயோனிலே மகத்
துவமானவர்; அவர்சருவசனங்களுக்குமேலான
௩ வர்.—மகத்துவமும்பயங்கரமுமான உமதுநாமத்
தை அவர்கள்துதிப்பார்களாக; அது பரிசுத்தமு
௪ ள்ளது.—இராசாவின் வல்லமை நீதியிற்பிரியப்
படுகின்றது; நீர் நியாயத்தை ஸ்திரப்படுத்துகி
றீர், நீர் யாக்கோபில் நியாயத்தீர்ப்பையும் நீதி
௫ யையுஞ் செய்துவருகிறீர்.—நம்முடைய தேவ
னாகிய யெகோவாவை மேன்மைபாராட்
டுங்கள், அவருடைய பாதபீடத்தில் நமஸ்காரம்
௬ பண்ணுங்கள்; அவர் பரிசுத்தமுள்ளவர்.—ஆ
சாரியரில் மோசேயும் ஆரோனும், அவர் நா
மத்தைப் பிரார்த்திப்பவரில் சாமுவேலும், யெ
கோவாவை நோக்கிப் பிரார்த்திக்க, அவர்
௭ அவர்களுக்கு உத்தரமருளினார்.—மேகத்தூணி
னின்று அவர்களோடு பேசினார்: அவர்கள் அ
வருடைய சாட்சிப்பிரமாணங்களையும், அவர்
௮ கொடுத்த விதியையுங் காத்துநடந்தார்கள்.—எங்
கள் தேவனாகிய யெகோவாவே, நீர் அ
வர்களுக்கு உத்தரம் அருளினீர்: நீர் அவர்க
ளுடைய துர்க்கருமத்தினிமித்தம் பழிவாங்கியு
ம், அவர்களுக்குத் தயைசெய்யுந் தேவனாகியு
௯ மிருந்தீர்.-நம்முடையதேவனாகிய யெகோ
வாவைக்குறித்துமேன்மைபாராட்டுங்கள்,அவ
ருடைய பரிசுத்தமலையில் நமஸ்காரம்பண்ணுங்
கள்; நம்முடைய தேவனாகிய யெகோவா
பரிசுத்தர்.

## ௱. சங்கீதம்.

*மகிமை, பராக்கிரமம், அனுக்கிரகமென்னும் இ
வைகளினிமித்தம் தேவனைத்துதித்தல்.*

ஸ்தோத்திர சங்கீதம்.

பூலோகத்தாரே, நீங்களனைவரும் யெகோ ௧
வாவை நோக்கி, ஆனந்தமுழக்கமிடுங்கள்.—ம ௨
கிழ்ச்சியோடே யெகோவாவுக்குஆராதனை
செய்யுங்கள்: துதிபாடிப்பாடி அவர் சந்நிதியிற்
செல்லுங்கள்.—யெகோவாவே தேவன், ௩
நம்மைச்சிருட்டித்தவர் அவர், நாமல்ல; நாம் அ
வர் சனம், அவர்மேய்க்கும் ஆடு: இதையுணர்ந்
துகொள்ளுங்கள்—துதியுடனே அவர்வாசல்களி ௪
லும்,வாழ்த்துதலுடனேஅவர்பிராகாரங்களிலும்
பிரவேசியுங்கள்:-யெகோவாவே தயாபரர்; ௫
அவர் தயை என்றுமுள்ளது; அவர் சத்தியந்தலை
முறைதோறும் நிற்கும்; ஆதலால் அவரைத்துதித்
து அவருடைய நாமத்தைவாழ்த்துங்கள்.

## ௱௧. சங்கீதம்.

*தாவீதின் சங்கற்பமும் வாக்குத்தத்தமும்.*

தாவீதின் சங்கீதம்.

நான் தயையையுந் தண்டனையையுங்குறித்துப் ௧
பாடுவேன்: யெகோவாவே, உம்மைப்பாடு
வேன்.—நான் நன்னெறியில் நிதானமாய் நடப் ௨
பேன். ஆ, எப்பொழுது நீர் என்னிடத்தில்வரு
வீர்; நான் என்வீட்டிலே மனநேர்மையோடே
நடப்பேன்.—எந்தத்தீங்கான காரியத்தையும்என் ௩
கண்ணுக்குமுன் வைக்கமாட்டேன்: துஷ்டரு
டையசெய்கையை அரோசிக்கிறேன்; அதுஎன்
னைச்சாராது.—மாறுபாடான இருதயமுள்ளவனை ௪
என்னைவிட்டகற்றுவேன்: நான் துன்மார்க்கனை
அறியேன்.—அந்தரங்கத்திலே பிறனை அவதூறு ௫
பண்ணுகிறவனைச் சேதிப்பேன்: இறுமாந்தகண்
ணுள்ளவனையும் அகங்கார மனமுள்ளவனையும்
நான் சகிக்கமாட்டேன்.—தேசத்திலுள்ள உண் ௬
மையானவர்கள் என்னுடன்வசிக்கும்படிக்கு அ
வர்கள்மேற் கண்ணோட்டமாயிருப்பேன், சன்
மார்க்கனாய் நடக்கிறவன் என்னிடத்திற்சேவிப்
பான்.-வஞ்சகனை என்வீட்டில்வசிக்கவிடேன்: ௭
பொய்யனை எனக்குமுன்பாகத்தரிக்கவிடேன்.-
நான் யெகோவாவின் நகரத்தினின்று துர்க் ௮
கிரியைக்காரர் யாவரையுஞ்சேதிக்கும்படி, தே
சத்திலுள்ள துன்மார்க்கர்யாவரையுந்துரிதமாய்ச்
சங்கரிப்பேன்.

---

(௬) ௧.நாளா.௰௫.௨௮. (௮) ஏசா.௫௫.௰௨.—(௯௯. சங். ௧.) யாத்.௨௫.௨௨. (௨) சங்.௯௭.௯. (௩) உபா.௨௮.௫௮. வெளி.௰௫.௪. (௪) யோபு.௩௬.௫,௬,௭. (௫) ௧.நாளா.௨௮.௨. லேவி.௰௯.௨. (௬) எரே.௰௫.௧. யாத்.௰௪.௰௫. யாத்.௰௫.௨௫. ௧.சாமு.௭.௯. ௧.சாமு.௰௨.௰௮. (௭) யாத்.௩௩.௯. (௮) எண்.௰௪.௨௰. எரே.௪௬.௨௮. செப்.௩.௭. எண்.௨௰.௰௨,௨௪. (௯) யாத்.௰௫.௨.—(௱. சங். ௩.) எசேக்.௩௪.௩௰,௩௧.—(௱௧. சங். ௨.) ௧.சாமு.௰௮.௰௪. ௧.இரா.௯.௪. (௩) சங்.௯௭.௰. யோசு.௨௩.௬. ௧.சாமு.௰௨.௨௰,௨௧. (௪) மத்.௭.௨௩. ௨.தீமோ.௨.௰௯. (௫) நீதி.௬.௰௬. (௮) எரே.௨௧.௰௨.

## ௱௨. சங்கீதம்.

*துக்கிக்கிறபத்திமான் தேவனுடைய மாருதகி ருபையைச்சார்ந்து தன்னைத்திடப்படுத்தல்.*

துயரப்படுகிறவன் துக்கத்தில் அமிழ்ந்தி யெகோ வாவிடத்தில் தன் வியாகுலத்தைத் தெரிவித்துச் செய்யும் விண்ணப்பம்.

யெகோவாவே, என்பிரார்த்தனையைக் கே
ட்டருளும், நானிடும் ஓலம் உமது சமுகத்தில்வ
௨ ருவதாக.—ஆபத்துக்காலத்தில் உமதுமுகத்தை எ
னக்கு மறையாதிருப்பீராக; எனக்கு உமதுசெ
வியைச்சாய்த்தருளும்: நான் ஓலமிடுகிறநாளில்
௩ எனக்குத்தரஞ் சொல்ல விரைந்தருளும்.—என்
நாள்கள்புகைபோல ஒழிந்துபோகின்றன, என்
எலும்புகள் கொள்ளியைப்போல எரிந்துபோ
௪ கின்றன.—என் இருதயம் புல்லைப்போலச்சே
திக்கப்பட்டு உலர்ந்துபோனதினால், போசனம்
௫ பண்ண மறந்துபோகிறேன்.—நான் பெருமூச்சு
விடுகிறபுலம்பலினால் என் எலும்புகள் என்தோ
௬ லுடன் ஒட்டிக்கொண்டிருக்கின்றன.—நான் பா
லைவனத்திலுள்ளநாரைக்கு ஒப்பாயிருக்கிறேன்:
பாழிடங்களிலே தங்கும் ஆந்தையைப்போலி
௭ ருக்கிறேன்.—வீட்டின்மேலே தனித்திருக்கிற
அடைக்கலான்குருவியைப்போல நித்திரையில்
௮ லாமலிருக்கிறேன்.—என் சத்துருக்கள் நாடோ
றும் என்னைநிந்திக்கிறார்கள்; என்மேற்குரோதங்
கொண்டவர்கள் என்னைக்குறித்து ஆணையிடுகி
௯ றார்கள்.—நீர் என்னை உயர்த்தினீர், கீழேதள்ளி
னீர். ஆதலால் நான் உமதுமுனிவினாலும் உமது
௰ உக்கிரத்தினாலும்,—அப்பத்தைப்போலச் சாம்ப
௰௧ லைப் புசிக்கிறேன்,—என் பானத்தைக் கண்ணீ
ரோடே கலக்கிறேன், என்நாள்கள்சாய்ந்துபோ
கிறநிழல்போலிருக்கின்றன; நான்புல்லைப்போ
௰௨ ல உலர்ந்து போகிறேன்.—யெகோவாவே,
நீர் என்றென்றைக்குமிருக்கிறீர்; தலைமுறைதோ
௰௩ றும் நீர் ஞாபகப்பொருளாயிருப்பீர்.—நீர்எழுந்து
சீயோன்மேல் தயைசெய்வீர்: அதற்குத்தயைசெ
ய்யத்தக்கதும் நியமிக்கபப்பட்டதுமான காலமா
௰௪ யிற்று.—உம்முடைய தாசர் அதின் கல்லுகளிற்
பிரியப்பட்டு, அதின் தூளைக் கடாட்சிக்கிறார்
௰௫ கள்.—யெகோவா சீயோனைக்கட்டும்பொழு
௰௬ து மகிமையோடும்வெளிப்படுவார்.—திக்கற்றவர்
களுடைய பிரார்த்தனையை அங்கிகரிப்பார், அ
வர்கள்பிரார்த்தனையை அலட்சியம்பண்ணார்.—
௰௭ அப்பொழுது அந்நியர் யெகோவாவின் நா
மத்துக்கும், பூமியிலுள்ள சகலஇராசாக்களும் உ
௰௮ மதுமகிமைக்கும் பயப்படுவார்கள்.—பின் சந்ததி
யார் நிமித்தம் இது எழுதப்படும்: சிருட்டிக்கப்
படும்சனங்கள் யெகோவாவைத் துதிப்பார்
கள்.—சீயோனில் யெகோவாவின் நாமத் ௰௯
தையும், யெருஷலேமில் அவர்துதியையுஞ்சொ
ல்லுகிறதற்கு,—சனங்களும் இராச்சியத்தாரும் ௨௰
யெகோவாவைச்சேவிக்கும்படி ஏகமாய்க்
கூடியிருக்கும்பொழுது,—கட்டுண்டவனுடைய ௨௧
பெருமூச்சைக்கேட்கவும், கொலைக்கு நியமிக்
கப்பட்டவர்களைவிடுவிக்கவும்,—யெகோவா ௨௨
தமது உயர்ந்தபரிசுத்த ஸ்தானமாகிய வானத்தி
னின்று பூமியை நோக்கிப்பார்த்தார்.—வழியில் ௨௩
என்பெலம்மெலிவடைந்தது; என் நாள்களைக்கு
றுகப்பண்ணினார்.—என் தேவனே, பாதிவய ௨௪
தில் என்னை அகற்றிவிடாதிரும்: உமதுவருஷங்
கள்தலைமுறைதோறும் இருக்கின்றன.-பூருவத்தி ௨௫
லே நீர்பூமியை அஸ்திவாரப்படுத்தினீர்: வானங்
கள் உமதுகைகளின்கிரியை.—அவைகள் அழிந் ௨௬
துபோம், நீரோ நிலைநிற்பீர்: அவைகளெல்லாம்
வஸ்திரத்தைப் போலப் பழையவையாய்ப் போ
கும்: ஒரு உத்தரீயம்போல அவைகளை நீர் மாற்
றும்பொழுது அவைகள்மாறிப்போகும்.—நீர் ஒரே ௨௭
தன்மையாயிருக்கிறீர், உமதுவருஷங்களுக்குமு
டிவில்லை.—உமதடியாருடைய பிள்ளைகள் நிலை ௨௮
கொண்டிருப்பார்கள்; அவர்கள் சந்ததி உமதுச
முகத்தில் ஸ்திரப்பட்டிருக்கும்.

## ௱௩. சங்கீதம்.

*இரக்கமுங்கிருபையுமாகிய இவைகளினிமித்தம் யெகோவாவைத்துதிக்கும்படி உணர்த்தல்.*

தாவீதின் சங்கீதம்.

என்ஆத்துமாவே, நீயெகோவாவை வாழ்த் ௧
துதல்செய்: என் பூரண உள்ளமே, அவருடைய
பரிசுத்த நாமத்தை வாழ்த்துதல்செய்.—என் ஆத் ௨
துமாவே, நீ யெகோவாவை வாழ்த்துதல்
செய், அவர்செய்த நன்மைகளிலொன்றையு
மறவாதே.—அவர் உன் சகல பாவங்களையுமன் ௩
னித்து, உன் எல்லாநோய்களையுமாற்றி,—நாசத் ௪
தினின்று உன்பிராணனைமீட்டு, தயையினாலும்
இரக்கங்களினாலும் உனக்கு முடிசூட்டி,—நன் ௫
மையினால் உன்வாயைத் திருத்திப்படுத்துகிறார்;
அதினால்உன்இளம்பிராயம் கழுகினுடையதைப்
போலப் புதியதாயிற்று.—யெகோவா உபத் ௬
திரவப்படுகிறயாவருக்கும் நீதியையும் நியாயத்
தீர்ப்பையுஞ்செய்துவருகிறார்.—அவர்மோசேக் ௭
குத் தமது நெறிகளையும், இஸரவேல் சந்ததியா
ருக்குத் தமதுகிரியைகளையுந் தெரிவித்தார்.—யெ ௮
கோவா இரக்கமும், கிருபையும், நீடியபொறு
மையும், மகாதயையுமுள்ளவர்.—அவர் என்றுங் ௯
கோபமாயிருக்கமாட்டார்: இடைவிடாமற்கடிந்

(௱௨. சங். ௧.) யாத்.௨.௨௩. ௧.சாமு.௯.௰௬. (௩) யாக்.௪.௰௪. யோபு.௩௰.௩௰. புல.௧.௰௩. (௪) சங்.௩௭.௨. (௫) யோபு.௰௯.௨௰. புல.௪.௮. (௬) யோபு.௩௰.௨௯. ஏசா.௩௪.௰௧. செப்.௨.௰௪. (௭) சங்.௭௭.௪. சங்.௩௮.௰௧. (௮) அப்.௨௬.௰௧. அப்.௨௩.௰௨. (௰) சங்.௩௰.௭. (௰௧) யோபு.௰௪.௨. பிர.௬.௰௨. ஏசா.௪௰.௬,௭,௮. யாக்.௧.௰. (௰௨) புல.௫.௰௯. (௰௩) ஏசா.௬௰.௰. சக.௧.௰௨. ஏசா.௪௰.௨. (௰௪) சங்.௭௯.௧. (௰௫) ஏசா.௬௰.௧,௨. (௰௬) நெகெ.௧.௬, ௰௧. (௰௭) ௧.இரா.௮.௪௩. ஏசா.௬௰.௩. (௨௨) உபா.௨௬.௰௫. (௨௩) யோபு.௨௧.௨௧. (௨௪) ஏசா.௩௮.௰. சங்.௯௰.௨. அபகூ.௧.௰௨. (௨௫) ஆதி.௧.௧. எபி.௧.௰. (௨௬) ஏசா.௩௪.௪. ரோ.௮.௨௧. (௨௭) மல்.௩.௬. எபி.௰௩.௮. யாக்.௧.௰௭.—(௱௩. சங். ௩.) ஏசா.௩௩.௨௪. மத்.௯.௨,௬. லூக்.௭.௪௭. யாத்.௰௫.௨௬. எரே.௰௭.௰௪. (௫) ஏசா.௪௰.௩௧. (௮) யாத்.௩௪.௬,௭. நெகெ.௯.௰௭. எரே.௩௨.௰௮. (௯) ஏசா.௫௭.௰௬. எரே.௩.௫. மீகா.௭.௰௮.

௰ துகொள்ளவுமாட்டார்.—அவர் நம்முடைய பா
வங்களுக்கேற்க நம்மை நடத்தவுமில்லை; நம்மு
டைய அதிக்கிரமங்களுக்கேற்கநம்மைத்தண்டிக்
௰௧ கவுமில்லை.—பூமிக்கு வானம் எப்படி உயரமோ,
அப்படியே அவருக்குப் பயப்படுகிறவர்களுக்
௰௨ கு அவர் தயை பெரிதாயிருக்கின்றது.—மேற்றி
சைக்குக் கீழ்த்திசை எவ்வளவு தூரமோ, அவ்வ
ளவு தூரமாக நமக்கு நம்முடைய பாவங்களை
௰௩ விலக்கினார்.—பிதாவானவன் தன் பிள்ளைகளுக்
கு இரங்குவதுபோல, யெகோவா தம்மில்
௰௪ பயபக்தியுள்ளவர்களுக்கு இரங்குகிறார்.—அவர்
நமமுடைய சுபாவத்தை அறிந்திருக்கிறார்; நாம்
௰௫ தூளென்று அவர் நினைந்திருக்கிறார்.—மனுஷனு
டைய ஆயுள் புல்லுக்குச்சமானம்: அவன் வெ
ளியிலுள்ள புஷ்பத்தைப்போலச் செழித்திருக்
௰௬ கிறான்.—காற்று அதின்மேல்வீச அது இல்லா
தொழியும்; அப்புறம் அதுநின்றஇடமும் அதை
௰௭ அறியாது.—யெகோவாவின் தயையோ, அவ
ரிற்பயபக்தியாயிருக்கிறவர்களுக்கு அநாதியாய்
௰௮ ச்சதாகாலமும் நிற்கும்.—அவருடைய நீதி, அ
வருடைய உடன்படிக்கையைக்கைக்கொண்டு,
அவருடையகட்டளைகளின்படிசெய்யச் சிந்திக்
கிறவர்களின் புத்திரர் பௌத்திரர்களிடத்திலும்
௰௯ நிற்கும்.—யெகோவாவானங்களில்தமதுசிங்
காசனத்தைஸ்தாபித்திருக்கிறார்; அவருடைய இ
௨௰ ராசரிகம் எல்லாவற்றையும் ஆளுகின்றது.—யெ
கோவாவின் கட்டளைகளுக்கமைந்து அவரு
டைய வாக்கியத்தின் சத்தத்தைக்கேட்கும் மகா
பராக்கிரமதூதரே, நீங்கள் அவருக்குவாழ்த்துதல்
௨௧ செய்யுங்கள்.—யெகோவாவுக்குப் பணிவி
டைக்காரராகி அவருக்குப்பிரியமானதைச்செய்
கிறசேனைகளே, நீங்களெல்லாரும் அவரைவாழ்
௨௨ த்துங்கள்.—யெகோவா ஆளும்இடங்களெங்கு
முள்ள அவருடைய எல்லாக்கிரியைகளும் அவ
ரைவாழ்த்தக்கடவன: என் ஆத்துமாவே, யெ
கோவாவை வாழ்த்துதல்செய்.

## ௱௪. சங்கீதம்.

தேவனுடைய லட்சணத்தையுங் கிரியைகளை
யும் வருணித்துத்துதித்தல்.

**எ**ன் ஆத்துமாவே, நீ யெகோவாவை வாழ்த்
துதல்செய். என் தேவனாகிய யெகோவா
வே, நீர் மிகவும் மகத்துவமுள்ளவர்; கனத்தை
௨ யுமகிமையையுந் தரித்துக்கொண்டீர்.—ஒளியை
ஒருவஸ்திரமாகப்போர்த்து, ஆகாயத்தைத்திரைச்
௩ சீலையைப்போல விரித்திருக்கிறீர்.—அவருடை
யமேல்அறைகளுக்குச் சலங்களில் மச்சுப்பரவு
கிறார்: மேகங்களை இரதமாக்கிக் காற்றின் சிறகு
களின்மேலேறி உலாவுகிறார்.—அவர் காற்றுக் ௪
களைத் தூதர்களாகவும், அக்கினிச்சுவாலைகளை
அவருடைய பணிவிடைக்காரராகவுஞ் செய்கி
றார்.—பூமி ஒருபொழுதும் நிலைபேராதபடி அ ௫
தற்கு அஸ்திபாரம்போட்டார்.—போர்வையாக ௬
ஆழத்தினால் அதைமூடினீர்: சலம் மலைகளுக்கு
மேலாகநின்றது.—உமதுகண்டிதத்தினால் அவை ௭
கள்விலகியோடிவிட்டன; உமது முழக்கத்தின்
தொனியினால் விரைந்துசென்றன.—அவைகள் ௮
மலைகளிலேறிப்பள்ளங்களிலிறங்கி நீர் ஏற்படுத்
திய ஸ்தானத்தில் செல்லுகின்றன.—அவைகள் ௯
திரும்பவும்வந்து பூமியை மூடிக்கொள்ளாதபடி
கடக்கமுடியாத எல்லையை அவைகளுக்கு ஏற்
படுத்தினீர்.—அவர் பள்ளங்களில் நீரூற்றுக்களை ௰
அனுப்ப, அவைகள் மலைகளுக்குள் பாய்கின்ற
ன.—வெளியிலுள்ள சீவசெந்துக்களெல்லாம் அ ௰௧
வைகளில் குடிக்கின்றன: அங்கே காட்டுக்கழு
தைகள் தங்கள் தாகத்தைத்தீர்த்துக்கொள்ளுகின்
றன.—அவைகளின் ஓரத்தில் ஆகாயத்துப்பறவை ௰௨
கள்சஞ்சரித்துக்கிளைகளிலிருந்து பாடுகின்றன.—
அவர் தமதுமேல்அறைகளினின்று மலைகளுக்கு ௰௩
நீரை இறைக்கிறார்: உமது செய்கையின் பலனா
லே பூமி திருத்திப்படுகின்றது.—அவர் மிருகங்க ௰௪
ளுக்குப்புல்லையும், மனுஷருக்குஉபயோகமான
பயிர்வகைகளையும் முளைப்பிக்கிறார்.—பூமியிலி ௰௫
ருந்து உணவையும், மனுஷருக்குமனமகிழ்ச்சித
ருந் திராட்சரசத்தையும், முகத்தைப் பிரகாசிப்
பிக்கும் எண்ணெயையும், மனுஷனுடைய இரு
தயத்தைத்திடப்படுத்தும் ஆகாரத்தையும் விளைவி
க்கிறார்.—யெகோவா நட்ட லிபானோனின் ௰௬
ஏரஸ்களாகிய அவருடையவிருட்சங்கள் இரசத்
தினால்நிறைந்திருக்கின்றன.—அங்கே குருவிகள் ௰௭
கூடுகட்டுகின்றன: கொக்குகளுக்குஇருப்பிடந்
தேவதாருக்கள்.—உயர்ந்த மலைகள் காட்டாடுக ௰௮
ளுக்கும், கொடுமுடிகள் குழிமுயல்களுக்கும் பு
கலிடம்.—காலங்களை வகுக்கும்பொருட்டுச்சந் ௰௯
திரனை ஏற்படுத்தினார்: சூரியன் தான் அஸ்தமிக்
குஞ்சமயத்தை அறிகிறான்.—நீர் அந்தகாரத்தினால் ௨௰
இரவை வருவிக்க, அதில் காட்டுமிருகங்களெல்
லாம் புறப்பட்டுப்போகின்றன.—சிங்கக்குட்டி ௨௧
கள் இரைக்காகக்கருச்சித்து, தேவனால் தங்க
ளுக்கு ஆகாரத்தைத்தேடிக்கொள்ளுகின்றன.—
சூரியனுதிக்கஅவைகள் ஒதுங்கித்தங்கள்குகைக ௨௨
ளிலே படுத்துக்கொள்ளுகின்றன.—மனுஷன் சா ௨௩
யங்காலபரியந்தந் தன் வேலைக்கும், தன் தொழி
லுக்கும் புறப்படுகிறான்.—யெகோவாவே, உ ௨௪
மதுகிரியைகள் எவ்வளவு திரளாயிருக்கின்றன;

(௰) எஸ்றா.௯.௰௩. (௰௧) எபே.௩.௰௮. (௰௨) ஏசா.௪௩.௨௫. மீகா.௭.௰௮. (௰௩) மல்.௩.௰௭. (௰௪) சங்.௭௮.௩௯. ஆதி.௩.௰௯. பிர.௰௨.௭. (௰௫) சங்.௯௰.௫,௬. ௧.பேதுரு.௧.௨௪. யோபு.௰௪.௧,௨. யாக்.௧.௰,௰௧. (௰௬) யோபு.௭.௰. (௰௮) யாத்.௨௰.௬. உபா.௭.௯. (௰௯) தானி.௪.௨௫,௩௪. (௨௰) மத்.௬.௰. எபி.௧.௰௪. (௨௧) ஆதி.௩௨.௨. யோசு.௫.௰௪. தானி.௭.௯,௰. எபி.௧.௰௪.—(௱௪. சங். ௨.) தானி.௭.௯. ஏசா.௪௰.௨௨. (௩) ஆமோ.௯.௬. ஏசா.௰௯.௧. (௪) எபி.௧.௭. ௨.இரா.௨.௰௧. (௫) பிர.௧.௪. (௬) ஆதி.௭.௰௯. (௭) ஆதி.௮.௧. (௮) ஆதி.௮.௫. (௯) யோபு.௨௬.௰. எரே.௫.௨௨. ஆதி.௯.௰௧,௰௫. (௰௩) எரே.௰.௰௩. (௰௪) ஆதி.௧.௨௯,௩௰. (௰௫) யோபு.௨௮.௫. நியா.௯.௰௩. சங்.௨௩.௫. நீதி.௩௧.௬,௭. (௰௬) எண்.௨௪.௬. (௰௮) நீதி.௩௰.௨௬. (௰௯) ஆதி.௧.௰௪. யோபு.௩௮.௰௩. (௨௰) ஏசா.௪௫.௭. (௨௧) யோபு.௩௮.௨௯. யோவே.௧.௨௰. (௨௩) ஆதி.௩.௰௯. (௨௪) நீதி.௩.௰௯.

ஞானத்தினுல் அவைகளெல்லாவற்றையும் சிரு
ஷ்டித்தீர்: பூமி உம்முடையஐசுவரியங்களினுல்
௨௫ நிறைந்திருக்கின்றது.—சிறிதும்பெரிதுமானஎண்
ணிறந்தசெந்துக்கள் நீந்துகிற ஆழமும்விசாலமு
௨௬ மானசமுத்திரமும் அப்படியே.—அதிலே கப்பல்
கள் ஓடுகின்றன: அதில் விளையாடும்படி நீர் சிரு
௨௭ ஷ்டித்த லிவியாதனும் இருக்கும்.—அவைகளெல்
லாம் தங்களுக்கு நீர்ஏற்றவேளையில்உணவுதரும்
௨௮ படிஉம்மைநோக்கிக்காத்திருக்கின்றன.—நீர்கொ
டுப்பதை அவைகள்சேர்த்துக்கொள்ளுகின்றன:
நீர் உமதுகையைவிரிக்க அவைகள் நன்மையினு
௨௯ லேதிருத்திபடுகின்றன.—நீர் உமது முகத்தை ம
றைக்க அவைகள்வியாகுலப்படும்:அவைகளின்
சுவாசத்தை நீர்வாங்க அவைகள்மாண்டு,திரும்ப
௩௰ வும் மண்ணோடேசேருகின்றன.—நீர் உமது ஆவி
யை அனுப்ப அவைகள் சிருட்டிக்கப்படுகின்ற
ன: மேலுமேலும் நீர்பூமியின்முகத்தைப்புதிதாக்
௩௧ குகிறீர்.-யெகோவாவின் மகிமைஎன்றுமுள்
ளது: யெகோவா தமது கிரியைகளைக்குறித்து
௩௨ மகிழுவார்.—அவர் பூமியைநோக்க, அது அதி
ரும்: அவர் மலைகளைத்தொட, அவைகள் புகை
௩௩ யும்.—நான் உயிரோடிருக்குமளவும் யெகோ
வரவைப் பாடுவேன்: நான் உயிரோடிருக்கு
மளவும் என் தேவனைக் கீர்த்தனம்பண்ணுவே
௩௪ ன்.—அவரைத்தியானிக்குந்தியானம் இனிதாயி
ருக்கும்: நான் யெகோவாவில் மகிழ்ந்திருப்
௩௫ பேன்.—பாவிகள் பூமியைவிட்டு ஒழிந்துபோ
வார்கள், துன்மார்க்கர் இனி இரார்கள். என் ஆத்
துமாவே, யெகோவாவை வாழ்த்துதல்செய்.
நீங்கள் யெகோவாவை வாழ்த்துங்கள்.

## ௱௫. சங்கீதம்.

இஸரவேலருக்குத் தேவன் செய்தகிரியைகளை வருணித்தல்.

யெகோவாவைத்துதித்து,அவர்நாமத்தைப்
பிரார்த்தனைபண்ணுங்கள்:அவருடையசெய்கை
களைச் சனங்களுக்குள்ளே பிரசித்தப்படுத்துங்
௨ கள்.-அவரைப்பாடுங்கள், அவர்மேற்சங்கீதம்பா
டுங்கள்:அவருடைய ஆச்சரியமானகிரியைகளெ
௩ ல்லாவற்றையும்எடுத்துப்பேசுங்கள்.-அவருடை
யபரிசுத்தநாமத்தைக்குறித்து மேன்மை பாராட்
டுங்கள்: யெகோவாவைத் தேடுகிறவர்களு
௪ டையஇருதயம்மகிழ்வதாக.-யெகோவாவை
யும்அவருடைய வல்லமையையுந்தேடுங்கள்; அ
௫ வருடையமுகத்தை நித்தமுந்தேடுங்கள்.—அவரு
டையதாசனுகிய ஆபிரகாமின்சந்ததியாரே,அவ
ரால்தெரிந்துகொள்ளப்பட்ட யாக்கோபின் சந்
௬ ததியாரே,—அவர்செய்த ஆச்சரியமானகிரியை
களையும், அற்புதங்களையும்,அவருடையவாயின்
௭ நியாயத்தீர்ப்புக்களையும் நினையுங்கள்.—அவர்நம்
முடைய தேவனுகிய யெகோவா: அவரு
டைய நியாயத்தீர்ப்புக்கள் பூமியெங்கும் விளங்
குகின்றன.—ஆயிரந்தலைமுறை நிமித்தம் அவர் ௮
கட்டளையிட்டவாக்கையும்,—ஆபிரகாமுடன் அ ௯
வர்பண்ணினஉடன்படிக்கையையும், அவர் ஈ
சாக்குக்குஇட்டஆணையையும் என்றும் நினைந்த
ருளுகிறுர்.—அதையாக்கோபுக்குப்பிரமாணமா ௰
கவும், இஸரவேலுக்கு நித்திய உடன்படிக்கை
யாகவும் உறுதிப்படுத்தி,—உங்களுக்குப்பங்கிட் ௰௧
டசுதந்தரமான கானுன்தேசத்தை உனக்குத்தரு
வேனென்றுர்.—அக்காலத்தில் அவர்கள் சிறு ௰௨
தொகைக்குட்பட்டவர்களும் பரதேசிகளுமாயி
ருந்தார்கள்.—அவர்கள் ஒருதேசத்தைவிட்டுமறு ௰௩
தேசத்திற்கும், ஒருஇராச்சியத்தைவிட்டு மறுஇ
ராச்சியத்துக்கும்போனுர்கள்.—ஆனுலும் ஒருவ ௰௪
ரும் அவர்களை உபத்திரவப்படுத்துகிறதற்கு அ
வர்விடவில்லை: அவர்கள் நிமித்தம் இராசாக்க
ளைக்கடிந்து,—நான் அபிஷேகம்பண்ணினவர்க ௰௫
ளை நீங்கள்தொடவேண்டாம், என்தீர்க்கதரிசிக
ளுக்கு ஒருதீங்குஞ்செய்யாதிருங்களென்றுர்.—
பின்புஅவர், தேசத்திலே பஞ்சத்தைவருவித்து, ௰௬
ஆகாரமென்னுங்கோலை முழுவதும்முறித்துவிட்
டார்.—சிறையாகவிற்கப்பட்டயோசேப்பென் ௰௭
னும் ஒருவனை அவர்களுக்குமுன்பாக அனுப்பி
னுர்.—அவர்வாக்கு நிறைவேறும்வரைக்கும் அ ௰௮
வர்கள் அவனுடையகால்களுக்கு விலங்கிட்டுக்
கிலேசப்படுத்தினுர்கள்: இரும்புஅவன்ஆத்துமா
வை ஊடுருவிற்று.-யெகோவாவின் வாக் ௰௯
கு அவனைப்பரீட்சித்தது.—இராசா ஆளனுப்பி ௨௰
அவனைக்கட்டவிழ்ப்பித்தான்; சனங்களுக்குஅ
திபதி அவனைவிடுதலைசெய்தான்.—தன்னிடத் ௨௧
திலுள்ளபிரபுகளை அவன் இஷ்டப்படிநடத்தி,
தன்னிடத்திலுள்ளமுதியோருக்கு ஞானத்தைப்
போதித்து வரும்படிக்கு,—அவனைத்தன்குடும் ௨௨
பத்துக்கு அதிகாரியாகவும், தன் ஆஸ்திகள் எல்
லாவற்றிற்கும் அதிபதி யாகவும் ஏற்படுத்தினு
ன்.—இஸரவேலும் எகிப்துக்குப்போனுன்; யாக் ௨௩
கோபு காமுடைய தேசத்தில் புறவாசியாயிருந்
தான்.—அவர் தமதுசனங்கள் மிகவும்விருத்திய ௨௪
டையவும், தங்கள்சத்துருக்களிலும் அதிகபலங்
கொள்ளவும் பண்ணினுர்.-அவர்தம்முடையசன ௨௫
ங்களை வெறுக்கவும், தம்முடைய பணிவிடைக்
காரரைவஞ்சிக்கவும்அவர்கள் இருதயத்தை மாற்
றினுர்.-அவர்தமதுதாசனுகியமோசேயையும், தா ௨௬
ம்தெரிந்துகொண்டஆரோனையும் அனுப்பினுர்.-
இவர்கள் அவர்களுக்குள் அவருடைய அடை ௨௭
யாளங்களையும், காமின்தேசத்தின் அற்புதங்களை
யுங்காட்டினுர்கள்.—அவர் இருளை அனுப்பி அந் ௨௮
தகாரத்தை யுண்டாக்கினுர்; அவருடைய வாக்

---

(௨௬) யோபு.௪௧.௧. (௨௯) யோபு.௩௪.௰௪,௰௫. பிர.௰௨.௭. ஏசா.௩௨.௰௫. எசேக்.௩௭.௯. (௩௧) ஆதி.௧.௩௧. (௩௨) அபகூ.௩.௰. (௩௫) நீதி.௨.௨௨.—(௱௫. சங். ௧.) ஏசா.௰௨.௪. (௭) ஏசா.௨௬.௯. (௮) லூக்.௧.௭௨. (௯) ஆதி.௰௭.௨. லூக்.௧.௭௩. எபி.௬.௰௭. (௰௧) ஆதி.௰௩.௰௫. (௰௨) ஆதி.௩௪.௩௰. உபா.௭.௭. எபி.௰௧.௯. (௰௪) ஆதி.௰௨.௰௭. ஆதி.௨௰.௩,௭. (௰௬) ஆதி.௪௧.௫௪. லேவி.௨௬.௨௬. ஏசா.௩.௧. எசேக்.௪.௰௬. (௰௭) ஆதி.௪௫.௫. ஆதி.௨௭.௨௮, ௩௬. (௰௮) ஆதி.௩௯.௨௰. (௰௯) ஆதி.௪௧.௨௫. (௨௰) ஆதி.௪௧.௰௪. (௨௨) ஆதி.௪௧.௪௰. (௨௩) ஆதி.௪௬.௬. (௨௪) யாத்.௧.௭. (௨௫) யாத்.௧.௮,. (௨௬) யாத்.௩.௰. எண்.௰௬.௫. யாத்.௭. யாத்.௰௨. (௨௮) யாத்.௰.௨௨.

௨௯ கை எதிர்ப்பாரில்லை.—அவர் அவர்களுடைய
சலங்களை இரத்தமாக்கி, அவர்களுடையமச்சங்
௩௰ களை அழித்தார்.-அவர்களுடையதேசம்பிறப்பித்
த திரளான தவளைகள் அவர்களுடைய இராசாக்
௩௧ களின் அறைகளிலிருந்தன.—அவர் கட்டளையி
ட, அவர்களுடைய எல்லையெங்கும் நாலுவித
௩௨ வண்டுகளும் கொசுகுகளும்பரம்பின.-அவர்கள்
தேசத்தில் அவர்களுக்கு மழைக்குப்பிரதியாகக்
கன்மழையையும், சுவாலிக்கிற அக்கினியையும்
௩௩ வருஷிக்கப் பண்ணினார்.—அவர்களுடைய தி
ராட்சக்கொடிகளையும் அத்திமரங்களையும் அழித்
து, அவர்கள் எல்லைகளிலுள்ள மற்றவிருட்சங்
௩௪ களையும் முறித்தார்.-அவர் கட்டளையிட எண்ணி
றந்த வெட்டுக்கிளிகளும்பச்சைப்புழுக்களும்வ
௩௫ ந்து,—அவர்களுடைய தேசத்திலுள்ள பூண்டுகள்
யாவையும் அரித்து, அவர்களுடைய நிலப்பல
௩௬ னைப்பட்சித்தன.-அவர்கள்தேசத்தில்அவர்கள்பி
ரதானபலமாகிய முதற்பேறனயாவரையுஞ் சங்
௩௭ கரித்தார்.—பின்பு அவர் அவர்களைப்பொன்வெள்
ளிகளோடும் புறப்படப்பண்ணினார்: அவர்கள்
கோத்திரங்களிற் பலவீனன் ஒருவனுமில்லை.—
௩௮ எகிப்தியர் அவர்களுக்குப்பயந்ததினால் அவர்
கள் புறப்பட்டபொழுது மகிழ்ச்சி அடைந்தார்
௩௯ கள்.—அவர் மறைவாக மேகத்தையும், இரவில்
ஒளிகொடுக்கும்படி அக்கினியையும்விரித்தார்.-
௪௰ அவர்கள் வேண்டிக்கொண்டபொழுது காடைக
ளைவருவித்தார், வானத்தின் ஆகாரத்தினால்அவர்
௪௧ களைத்திருத்திப்படுத்தினார்.—அவர் கன்மலையைப்
பிளக்க, சலம் ஊறிற்று; வறண்டஸ்தானங்களில்
௪௨ நதியாய் ஓடிற்று.—அவர் தமது பரிசுத்த வாக்குத்
தத்தத்தையுந் தமது தாசனாகிய ஆபிரகாமையும்
௪௩ நினைந்து,-மகிழ்ச்சியோடே தம்முடைய சனங்
களையும், ஆனந்தமுழக்கத்தோடே தாம் தெரிந்
௪௪ துகொண்டவர்களையும் புறப்படப்பண்ணி,-தம
து விதிகளைக்காத்துநடக்கும்படிக்கும், தமது நி
யாயப்பிரமாணங்களைக் காத்துக்கொள்ளும்படி
௪௫ க்கும்,-அந்நியருடைய தேசங்களை அவர்களுக்
குக்கொடுத்தார். அவர்கள் பட்டபிரயாசத்தின்
பலனை அனுபவித்தார்கள். நீங்கள் யெகோ
வாவை வாழ்த்துங்கள்.

## ௱௬. சங்கீதம்.

தேவனை அவமதித்து இஸ்ரவேலர் செய்தகிரி
யைகளைக்கூறல்.

யெகோவாவைத் துதியுங்கள்: யெகோ
வாவைக் கீர்த்தனம்பண்ணுங்கள்; அவர் தயா
௨ பரர்: அவர் தயை என்றுமுள்ளது.—யெகோ
வாவின் மகத்துவமானகிரியைகளைச் சொல்லி,
அவருடைய கீர்த்தனமுழுவதையும் பிரஸ்தாபப்
படுத்தத்தக்கவன்யாவன்.—நியாயத்தைக் காப்ப ௩
வர்களும், எப்பொழுதும் நீதியைச்செய்பவனும்
வாழ்வுடையவர்கள்.—யெகோவாவே, நீர் ௪
தெரிந்துகொண்டவர்களின் நன்மையை நான்
கண்டு, உமது சனங்களுடைய மகிழ்ச்சியினால்
மகிழ்ந்து, உம்முடைய சுதந்தரருடனே மேன்
மைபாராட்டும்படிக்கு,—உமது சனங்களுக்குக் ௫
கிடைத்த தயையின்படி என்னை நினைந்து, உமது
இரட்சிப்போடும் என்னைச்சந்தித்தருளும்.—நாங் ௬
களும் எங்கள் பிதாக்களும் பாவஞ்செய்தோம்,
அதிக்கிரமம்பண்ணினோம், தீங்குசெய்தோம்.—
எங்கள் பிதாக்கள் எகிப்தில் உம்முடைய ஆச்ச ௭
ரியமான கிரியைகளைச்சிந்தியாமலும், உமது மி
குந்த இரக்கங்களை நினையாமலும், செங்கடலா
கிய சமுத்திரத்தில்கலகம்பண்ணினார்கள்.—ஆனா ௮
லும் அவர் தமது மகிமையுள்ளவல்லமையை வெ
ளிப்படுத்தும்பொருட்டுத் தமது நாமத்தினிமித்
தம்அவர்களை இரட்சித்தார்.—அவர் செங்கடலை ௯
யுங்கடிந்ததினால் அது வற்றிப்போயிற்று. வனத்
தின்வழியாய் நடக்கிறதுபோல ஆழிகளின்வழி
யாயும் அவர்களை நடத்தினார்.—பகைவனுடைய ௰
கையினின்று அவர்களை இரட்சித்தார், சத்துருவி
ன் கையினின்றுஅவர்களை மீட்டார்.—சலங்கள் ௰௧
அவர்களுடைய சத்துருக்களை மூடிக்கொண்ட
ன: அவர்களில் ஒருவனாகிலுமீந்திருக்கவில்லை.-
அப்பொழுது அவர்கள்அவர்வாக்கைவிசுவாசித் ௰௨
து, அவரைத் துதித்துப்பாடினார்கள்.-விரைவில் ௰௩
அவர்கள் அவர் கிரியைகளை மறந்தார்கள்; அவர்
கள் அவருடைய ஆலோசனைக்குக்காத்திராமல்,-
வனத்திலே துராசையுள்ளவர்களாகி, பாலைவனத் ௰௪
தில் தேவனைப் பரீட்சித்தார்கள்.—அவர்கள் ௰௫
இச்சித்தத்தை அவர்களுக்கு அவர் கொடுத்தார்;
ஆனாலும்அவர்கள்மனம்மெலிவடையப்பண்ணி
னார்.—பாளயத்தில் அவர்கள் மோசேயின்மேலும் ௰௬
யெகோவாவின் பரிசுத்தனாகிய ஆரோனின்
மேலும் பொறாமைகொண்டார்கள்.—பூமி பிளந் ௰௭
து தாதானைவிழுங்கி, அபிராமினுடையகூட்டத்
தை மூடிற்று.—அவர்கள் கூட்டத்துக்குள் அக் ௰௮
கினி சுவாலித்தபொழுது, சுவாலை துன்மார்க்க
ரைத்தகித்தது.—அவர்கள் ஓரேபில் ஒரு கன்றைச் ௰௯
செய்து, வார்க்கப்பட்ட விக்கிரகத்தை நமஸ்க
ரித்தார்கள்.-புல்லைத்தின்னுகிறஎருத்துரூபமாகத் ௨௰
தங்கள் மகிமையை மாற்றினார்கள்.—எகிப்திலே ௨௧
பெரிய கிரியைகளையும், காமின்தேசத்தில் ஆச்
சரியமானவைகளையும்,—செங்கடலினிடத்தில் ௨௨

(௨௯) யாத்.௭.௨௰. (௩௰) யாத்.௮.௬. (௩௧) யாத்.௮.௰௭,௨௪. (௩௨) யாத்.௯.௨௩,௨௫. (௩௪) யாத்.௰.௪. (௩௬) யாத்.௰௨.௨௯. ஆதி.௪௯.௩. (௩௭) யாத்.௰௨.௩௫. (௩௮) யாத்.௰௨.௩௩. (௩௯) யாத்.௰௩.௨௧. நெகி.௯.௰௨. (௪௰) யாத்.௰௬.௰௨,. (௪௧) யாத்.௰௭.௬. எண்.௨௰.௰௧. ௧.கொரி.௰.௪. ஆதி.௰௫.௰௪. (௪௪) உபா.௪.௧,௪௰. (௪௫) உபா.௬.௰,௰௧. யோசு.௰௩.௭,.—(௱௬. சங். ௩.) அப்.௨௪.௰௬. கலா.௬.௯. (௬) லேவி.௨௬.௪௰. ௧.இரா.௮.௪௭. தானி.௯.௫. (௭) யாத்.௰௪.௰௧,௰௨. (௮) எசேக்.௨௰.௰௪. யாத்.௯.௰௬. (௯) யாத்.௰௪.௨௧. நாகூ.௧.௪. (௰) யாத்.௰௪.௩௰. (௰௧) யாத்.௰௪.௨௭,௨௮. (௰௨) யாத்.௰௪.௩௧. (௰௩) யாத்.௰௫.௨௪. யாத்.௰௭.௨. (௰௪) எண்.௰௧.௪,௩௩. ௧.கொரி.௰.௬. (௰௫) எண்.௰௧.௩௧. ஏசா.௰.௬. (௰௬) எண்.௰௬.௧,. (௰௭) எண்.௰௬.௩௧,௩௨. உபா.௰௧.௬. (௰௮) எண்.௰௬.௩௫,௪௬. (௰௯) யாத்.௩௨.௪. (௨௰) எரே.௨.௰௧. ரோ.௧.௨௩.

பயங்கரமானவைகளையுஞ்செய்த தங்கள் இரட்
௨௩ சகராகிய தேவனை மறந்தார்கள்.—அப்பொழு
து அவர் தெரிந்துகொண்ட மோசே அவர்களை
அவர் நாசப்படுத்தாதபடிக்கு அவருடைய கோ
பமாற்றும்பொருட்டு, இடிவில் நில்லாதிருந்தா
௨௪ ணுகில் அவர்களைச் சங்கரிக்கச்சொல்லுவார்.-அ
வர்கள் உத்தமதேசத்தை அலட்சியம்பண்ணி,
௨௫ அவருடைய வாக்கை விசுவாசிக்கவில்லை.—அ
வர்கள் தங்கள் கூடாரங்களில் மொறுமொறுத்
து, யெகோவா சொல்லிய வாக்குக்குச் செ
௨௬ விகொடாமலிருந்தார்கள்.—ஆதலால் அவர்கள்
வனத்தில் மடியவும், அவர்கள் சந்ததியார் புறத்
௨௭ தேசத்தாருக்குள் மடியவும்,—தேசந்தோறும் அ
வர்களைச் சிதற அடிக்கவும், அவர்களுக்கு வி
௨௮ ரோதமாகத் தமது கையை ஓங்கினார்.—அவர்கள்
பாகால் பேயோரைப்பற்றிக்கொண்டு மரித்தவர்
களுக்கு இடப்பட்ட பலிகளைப்புசித்தார்கள்.—
௨௯ இப்படி அவர்கள் தங்கள் கிரியைகளினால் அவ
ரைக் கோபப்படுத்தினார்கள்: அதினிமித்தம் அ
௩௰ வர்களில் வாதை தோன்றிற்று.—அப்பொழுது
பீனிகாஸ் எழுந்து தண்டனை செய்தான்: அந்
௩௧ தவாதை நின்றது.—அது அவனுக்குச்சதாகால
ங்களிலும் தலைமுறைதோறும் நீதியாக எண்
௩௨ ணப்பட்டது.-மேரிபாஸ்தானத்தில் அவருக்குக்
கோபமூளப்பண்ணினதினால், அவர்கள் நிமித்
௩௩ தம் மோசேக்குத் தீங்குநேரிட்டது.—அவர்கள் அ
வனுடைய மனதை விசனப்படுத்தினதினிமித்
தம் அவன் தன்னுதடுகளினால் தவறிப்பேசினா
௩௪ ன்.—தங்களுக்கு யெகோவா கட்டளையிட்
டபிரகாரம் அந்தச்சந்ததியாரை அவர்கள் சங்க
௩௫ ரிக்கவில்லை.—அந்நியருடன் கலந்து அவர்களு
டைய கிரியைகளைச்செய்யக் கற்றுக்கொண்டு,-
௩௬ அவர்களுடையவிக்கிரகங்களைச்சேவித்தார்கள்,
௩௭ அவைகள் அவர்களுக்குக்கண்ணியாயின.-அவர்
கள் தங்கள் புத்திரரையும் புத்திரிகளையும் பசா
௩௮ சுக்களுக்குப் பலியிட்டார்கள்.—அவர்கள் கா
னான் தேசத்தின் விக்கிரகங்களுக்குப் பலியிட்
டு, தங்கள் புத்திரர் புத்திரிகளுடைய குற்றமில்
லாத இரத்தத்தைச்சிந்தினார்கள்: அந்த இரத்தத்
௩௯ தினால் தேசம் அசுசியாயிற்று.—அவர்கள் தங்
கள் கிரியைகளினால் அசுத்தமாகி, தங்கள் செய்
௪௰ கைகளினால் காமுகரானார்கள்.—அதினால் யெ
கோவாவின் கோபந் தமது சனங்களுக்கு
விரோதமாக மூள, தமது சுதந்தரத்தை அரோ
௪௧ சித்தார்.—அவர்களை அந்நிய தேசத்தாருடைய
கைக்கு ஒப்பித்தார்; அவர்களுடைய பகைவர்
௪௨ அவர்களை ஆண்டார்கள்.—அவர்கள் சத்துருக்க
ளும் அவர்களை உபத்திரவப்படுத்தினார்கள், அ
வர்களுக்குக் கைவசப்பட்டார்கள்.—அவர் பல ௪௩
முறை அவர்களை விடுவித்தார்; ஆனாலும் அவர்
கள் தங்கள் தங்கள் ஆலோசனையினால் அவரைக்
கோபப்படுத்தி, தங்கள் பாவத்தினால் தாழ்ச்சி
யடைந்தார்கள்.—அப்பொழுது அவர்களுடைய ௪௪
ஓலத்தை அவர்கேட்டு, அவர்கள் துக்கத்தைக்
கண்டிரங்கி,—அவர்கள் நிமித்தந் தமது உடன் ௪௫
படிக்கையை நினைந்து, தமது இரக்கங்களின்மி
குதியினால் இரங்கினார்.—அன்றியும் அவர்களைச் ௪௬
சிறைபிடித்தவர்கள் யாவரும் அவர்களைக்கடா
ட்சிக்கும்படிசெய்தார்.—எங்களுடைய தேவ ௪௭
னாகிய யெகோவாவே, நாங்கள் உம்மு
டைய பரிசுத்தநாமத்துக்குவாழ்த்துதல்சொல்லி,
உம்மைத்துதித்து மேன்மைபாராட்டும்பொருட்
டு எங்களை இரட்சித்து, அந்நியதேசத்தாரினின்
று எங்களைச்சேர்த்தருளும்.—இஸரவேலின் தேச ௪௮
வனாகிய யெகோவா அநாதியாய், சதாகா
லங்களிலும் வாழ்த்தப்படக்கடவர்: சகலசனங்
களும் ஆமென் என்றுசொல்லுவார்களாக. யெ
கோவாவை வாழ்த்துங்கள்.

## ௱௭. சங்கீதம்.

*பிரயாணக்காரரும், ௰, சிறைப்பட்டவர்களும்,*
*௰௭,உபத்திரவப்பட்டவர்களும், ௨௩,கடல்யாத்*
*திரைக்காரரும் மற்றவர்களுமாகிய இவர்கள்*
*மேல் தேவன் செய்யுந் தயையைக்கூறல்.*

யெகோவா தயாபரர்: அவருடைய தயை ௧
என்றுமுள்ளது, ஆதலால்அவரைத்துதியுங்கள்.—
யெகோவாவினால் மீட்கப்பட்டவர்கள்அப் ௨
படிச்சொல்லக்கடவர்கள்.—அவர்களை அவர் சத் ௩
துருவின்கையினின்று மீட்டு, கிழக்கிலும், மேற்
கிலும், வடக்கிலுந் தெற்கிலுமுள்ள தேசங்களி
லிருந்துசேர்த்தார்.—அவர்கள் பாலைவனத்தில் ௪
அவாந்தரவழியாய் அலைந்துதிரிந்து, வாசம்பண்
ணும்படிக்கான பட்டணத்தைக் காணாதிருந்தார்
கள்.—பசியும் தாகமுமுள்ளவர்களானதினால், ௫
அவர்கள் ஆத்துமம் அவர்களுக்குள்ளேசோர்ந்
தது.—அவர்கள் தங்களுக்குண்டான ஆபத்தில் ௬
யெகோவாவை நோக்கி ஓலமிட்டபொழு
து, அவர்களை அவர்கள் கிலேசங்களினின்று
அவர்விடுவித்தார்.—அவர்கள் வாசஞ்செய்வதற் ௭
கேற்ற நகரத்தில்போய்ச் சேரும்படி அவர்க
ளை நேர்வழியாக நடத்தினார்.—ஆதலால் அவர் ௮
கள் யெகோவாவை அவர் தயையினிமித்த
மும், மனுபுத்திரருக்கு அவர்செய்துவருகிறஅற்
புதங்களினிமித்தமுந் துதிப்பார்களாக.—அவர் ௯
தாகமுள்ளவனைத்திருத்தியாக்கி, பசியுள்ளவனை

(௨௩) யாத்.௩௨.௰. உபா.௯.௰௯,௨௫. எசேக்.௨௰.௰௩. (௨௪) உபா.௮.௭. எரே.௩.௰௯. எசேக்.௨௰.௬. எபி.௩.௰௪. (௨௫) எண்.௰௪.௨,௨௭. (௨௬) லேவி.௨௬.௩௩. (௨௭) எபி.௩.௰௧,௰௮. யாத்.௬.௮. உபா.௩௨.௪௰. (௨௮) எண்.௨௫.௨. உபா.௪.௩. உபா.௩௨.௰௭. ஓசி.௯.௰. (௩௰) எண்.௨௫.௭,௮. (௩௧) எண்.௨௫.௰௧,௰௨,௰௩. (௩௨) எண்.௨௰.௰௨. (௩௩) எண்.௨௰.௰ (௩௪) நியா.௧.௨௧,௨௭,௨௮,௨௯,. உபா.௭.௨,௰௬. (௩௫) நியா.௨.௨. ஏசா.௨.௬. ௧.கொரி.௫.௬. (௩௬) யாத்.௨௩.௩௩. (௩௭) ௨.இரா.௰௬.௩. எசேக்.௰௬.௨௰. உபா.௩௨.௰௭. ௧.கொரி.௰.௨௰. (௩௮) எண்.௩௫.௩௩. (௩௯) எண்.௰௫.௩௯. (௪௰) உபா.௯.௨௯. (௪௧) நியா.௨.௰௪. (௪௩) நிகி.௯.௨௭,. (௪௪) நியா.௩.௯. (௪௫) நியா.௨.௰௮. (௪௬) எஸ்றா.௯.௯.—(௱௭. சங். ௧.) மத்.௰௯.௰௭. (௩) ஏசா.௪௩.௫,௬. எரே.௨௯.௰௪. எசேக்.௩௯.௨௭,௨௮. (௪) உபா.௩௨.௰. (௬) ஓசி.௫.௰௫. (௭) எஸ்றா.௮.௨௨. (௯) லூக்.௧.௫௩.

௰ நன்மையினாலே நிரப்பினார்.—அவர்கள், தேவ
னுடைய வாக்கியங்களை மீறி, சருவத்திற்குமே
லானவருடைய ஆலோசனையை அவமதித்தபடி
௰௧ யினால்,—இருளிலும் மரண நிழலிலுமிருந்து இ
ருப்புச்சங்கிலியிலும் துக்கத்திலும் கட்டப்பட்
௰௨ டார்கள்.—அவர்களுடைய இருதயத்தை அவர்
கிலேசத்தினாலே தாழ்த்தினார்; அவர்கள் விழுந்
௰௩ தார்கள், துணைசெய்வார்ஒருவருமில்லை.—அவர்
கள் தங்கள் ஆபத்துக்காலத்தில் யெகோவா
வை நோக்கி ஓலமிட்டபொழுது, அவர்களை அ
வர்கள் இக்கட்டுகளினின்று அவர் நீங்கலாக்கி
௰௪ னார்.—அவர்களுடைய கட்டுகளை அறுத்து, அந்
தகாரத்திலும் மரண நிழலிலும்நின்று அவர்களைப்
௰௫ புறப்படப்பண்ணினார்.—அவர்கள் யெகோ
வாவை அவர்தயையினிமித்தமும், மனுபுத்திர
ருக்கு அவர்செய்த அதிசயங்களினிமித்தமுந்து
௰௬ திப்பார்களாக.-அவர்பித்தளைக்கதவுகளைஉடைத்
௰௭ து, இருப்புத்தாழ்களைமுறித்தார்.—அஞ்ஞானிகள்
தங்கள்அதிக்கிரமங்களினிமித்தமும், தங்கள் பா
௰௮ வங்களினிமித்தமுங் கிலேசப்படுகிறார்கள்.—அ
வர்கள் ஆத்துமஞ்சகல உணவுகளையும்அரோசிக்
க, அவர்கள் மரணவாசலின்சமீபத்தில் சேருகி
௰௯ றார்கள்.-ஆபத்துக்காலத்தில்யெகோவாவை
நோக்கிஓலமிட்டபொழுது அவர்களை அவர்கள்
௨௰ இக்கட்டுகளினின்றுஅவர்இரட்சிக்கிறார்.-அவர்
தமதுவாக்கை அனுப்பி அவர்களைச்சொஸ்தப்
படுத்தி, அவர்கள்நாசங்களினின்று அவர்களைவி
௨௧ டுவித்தார்.—அவர்கள் யெகோவாவை அவர்
தயையினிமித்தமும் மனுபுத்திரருக்குஅவர்செய்
துவருகிறஅதிசயங்களினிமித்தமுந்துதிசெய்வா
௨௨ ர்களாக.—அவர்கள் ஸ்தோத்திரபலிகளையிட்டு ஆ
னந்தமுழக்கத்தோடும்அவர்கிரியைகளை அறிவிப்
௨௩ பார்கள்.—கப்பலேறிச்சமுத்திரத்தில் யாத்திரைப
ண்ணி, ஏராளமானநீர்களிலே தொழில்செய்கிற
௨௪ வர்கள்,—ஆழத்திலே யெகோவாவின் கிரி
யைகளையும் அவர் அதிசயங்களையுங் காண்பார்
௨௫ கள்.—அவர்கட்டளையிடப் பெருங்காற்றெழும்
௨௬ பி அலைகளை எழுப்புகின்றது.—அவர்கள் ஆகா
யத்திலேறி ஆழங்களிலிறங்க, ஆபத்தினிமித்தம்
௨௭ அவர்கள் மனங்கரைந்துபோகின்றது.—வெறி
கொண்டவனைப்போல் அலைந்து தடுமாறுகிறார்
கள், அவர்களுடைய விவேகமுழுவதும் முழு
௨௮ கிப்போகின்றது.—ஆபத்துக்காலத்தில் யெகோ
வாவை நோக்கி ஓலமிட,அவர்அவர்களை அவர்
௨௯ கள் இக்கட்டுகளினின்று விடுவிக்கிறார்.—அவர்
பெருங்காற்றை அமையச்செய்ய, அலைகள் அ
௩௰ டங்கியிருக்கின்றன.—அவர்கள் அமைச்சலைப்
பெற்றதினிமித்தஞ் சந்தோஷப்படுகிறார்கள்; அ
வர்களை அவர்கள் விரும்பியதுறைமுகத்துக்கு அ
வர் கொண்டுவருகிறார்.—அவர்கள் யெகோ ௩௧
வாவை அவர்தயையினிமித்தமும், மனுபுத்திர
ருக்கு அவர்செய்துவருகிற அதிசயங்களினிமித்
தமுந்துதிசெய்வார்களாக.—சனக்கூட்டத்தில்அ ௩௨
வர்கள் அவரை மேன்மைபாராட்டி, முதியோ
ரின் சங்கத்தில் அவரைத்துதிப்பார்களாக.—அ ௩௩
வர் நதிகளைவனமாகவும், நீரூற்றின்கண்களை உ
லர்ந்ததரையாகவும்,—செழிப்பானதேசத்தை அ ௩௪
தின்குடிகளுடையதுராசாரத்தினிமித்தம்உவர்நி
லமாகவுஞ்செய்கிறார்.-வனத்தைக் குளமாகவும், ௩௫
உலர்ந்ததரையை நீரூற்றின்கண்களாகவுஞ்செய்
கிறார்.-அங்கேபசியுள்ளவர்களைவாசம்பண்ணும் ௩௬
படிசெய்கிறார், அவர்கள் வசிக்கத்தக்கநகரத்தை
யுண்டாக்கி,—பலன் விருத்தியாகும்படி வயல் ௩௭
களில்விதைத்து, திராட்சத்தோட்டங்களை நாட்
டுகிறார்கள்.—அவர்களை அவர் ஆசீர்வதிக்கிறப ௩௮
டியால் அவர்கள்மிகவும்பெருகுகிறார்கள்; அவர்
களுடைய மிருகசெந்துக்கள் குறையவிடார்.—
பின்பு அவர்கள் உபத்திரவத்தினாலும்,ஆபத்தினா ௩௯
லும், துக்கத்தினாலுங் குறைவுபட்டுத் தாழ்ச்சிய
டைகிறார்கள்.—பிரபுகள்மேல் நிந்தைகளைச்சொ ௪௰
ரிந்து, வழியில்லாதவனத்தில் திரியப்பண்ணுகி
றார்.—எளியவனையோ,துக்கத்துக்குவிலக்கி உன் ௪௧
னதத்தில்வைத்து, மந்தையைப்போல அவர்கள்
குடும்பவிருத்தி யடையும்படிபண்ணுகிறார்.—அ ௪௨
தைக்கண்டு நேர்மையுள்ளவர்கள் சந்தோஷப்ப
டுகிறார்கள்: பாவமெல்லாந் தன் வாயைமூடும்.—
ஞானவான்கள் எவர்களோ அவர்கள்இவைகளை ௪௩
உற்றுப்பார்த்து யெகோவாவின் தயையை
உணர்ந்துகொள்வார்கள்.

## ௱௮. சங்கீதம்.

தேவனைத்துதித்து அவர் சகாயஞ்செய்யும்படி
பிரார்த்தித்து அவரைக்காத்தல்.

தாவீதின்கானமாகிய சங்கீதம்.

தேவனே, என் இருதயம் நிலைத்திருக்கின் ௧
றது; நான் என் மகிமையுடன்பாடித் துதிசெய்
வேன்.—வீணையே, கின்னரமே, விழியுங்கள்: ௨
நான் அதிகாலையில்விழிப்பேன்.—யெகோவா ௩
வே, சனங்களுக்குள் உம்மைத்துதிப்பேன்: தே
சத்தாருக்குள் உம்மைப்பாடித்துதிப்பேன்.—வா ௪
னபரியந்தம் உமதுதயையும்,மேகபரியந்தம் உம
துசத்தியமும் உயரமுள்ளன.—தேவனே, நீர் ௫
வானங்களுக்குமேலாய் எழுந்தருளும்: பூமிமு
முவதின்மேலும் உமது மகிமை உயர்வதாக.—
உமது பிரியமானவன்விடுவிக்கப்படும்பொருட் ௬
டு உமதுவலக்கரத்தினால் என்னைஇரட்சித்து உத்
தரந்தந்தருளும்.—தேவன் தமது பரிசுத்தஸ்தா ௭
னத்தினின்று பேசினார்; நான் களிகூருவேன்,

---

(௰) புல.௩.௪௨. லூக்.௭.௩௰. அப்.௨௰.௨௬. (௰௧) லூக்.௧.௨௭. யோபு.௩௬.௮. (௰௨) ஏசா.௬௩.௫. (௰௬) ஏசா.௪௫.௨. (௰௭) புல.௩.௩௯. (௰௮) யோபு.௩௩.௨௰,௨௨. (௨௰) ௨.இரா.௨௰.௪,௫. மத்.௮.௮. சங்.௱௩.௩. யோபு.௩௩.௨௮,௨௯. (௨௨) லேவி.௭.௰௨. சங்.௫௰.௰௪. எபி.௰௩.௰௫. (௨௫) யோனா.௧.௪. (௨௬) நாகூ.௨.௰. (௨௯) மத்.௮.௨௬. (௩௩) ௧.இரா.௰௭.௧,௭. (௩௪) ஆதி.௰௩.௰. (௩௫) ஏசா.௪௧.௰௮. (௩௮) ஆதி.௰௭.௰௬,௨௰. யாத்.௧.௭. (௩௯) ௨.இரா.௰.௩௨. (௪௰) யோபு.௰௨.௨௧,௨௪. (௪௧) ௧.சாமு.௨.௮. (௪௨) யோபு.௨௨.௰௯. சங்.௫௨.௬. யோபு.௫.௰௬. சங்.௬௩.௰௧. நீதி.௰.௰௧. ரோ.௩.௰௯. (௪௩) எரே.௯.௰௨. ஓசி.௰௪.௯.—(௱௮. சங்.)

ஷிகேமைப்பங்கிடுவேன், சுக்கோத்தின் பள்ளத்
௮ தை அளப்பேன்.—கிலியாத் என்னுடையது; ம
னாஷே என்னுடையது; எப்ராயீம் என்தலையின்
௯ பெலம்; யூதா என்நியாயசாஸ்திரி.-மோவாபு என்
ஸ்நானபாத்திரம்; ஏதோமின்மேல் என்செருப்
பை எறிந்துவிடுவேன்; பெலிஸ்தியவை மேற்
௰ கொண்டு களிகூருவேன்.—அரணான நகரத்தில்
என்னை நடத்திக்கொண்டுபோகிறவன் யாவன்;
ஏதோமில் என்னைப்பிரவேசிக்கச்செய்பவன்யா
௰௧ வன்.—தேவனே, எங்களைத்தள்ளிவிட்டவரா
கிய நீரல்லவா; தேவனே, எங்கள் சேனைகளு
௰௨ டன் புறப்படாமலிருப்பீரா.—கிலேசத்தில் எங்
களுக்கு உதவிசெய்யும்: மனுஷருடைய உதவி
௰௩ விருதா.—ஆனாலுந் தேவன் மூலமாகப்பராக்கி
ரமத்தைக்காட்டுவோம். அவர் எங்கள்சத்துருக்க
ளைமிதித்து உழக்குவார்.

## ௱௯. சங்கீதம்.

௧. சத்துருக்களுக்கு விரோதமாகத் தாவீதுபிரார்த்
தித்தல்: ௨௧. யெகோவாவைப் புகலிடமெ
னக்கொள்ளல்.

பாடகத்தலவனிடத்தில் தாவீது ஒப்பித்தசங்கீதம்

**நா**ன் துதிக்குந் தேவனே, மவுனமாயிராதி
௨ ரும்.—துன்மார்க்கனுடைய வாயும் வஞ்சகனு
டைய வாயும் எனக்குவிரோதமாகத் திறந்திருக்
கின்றன: பொய் நாவினால் என்னுடன் பெசுகி
௩ றார்கள்.—பகையானவாக்குகளினால் என்னைச்
சூழ்ந்துகொண்டு, காரணமின்றி என்னுடன்யுத்
௪ தஞ்செய்கிறார்கள்.—என் அன்புக்குப் பிரதியாக
என்னைவிரோதிக்கிறார்கள்; ஆனாலும் நான் பி
௫ ரார்த்தனைபண்ணுகிறேன்.—அவர்கள் என் நன்
மைக்குத் தீமையும், என் அன்புக்குப் பகையும்
௬ ஈடளிக்கிறார்கள்.—அவனுக்குமேலாகத் துஷ்
டனை ஏற்படுத்தும்: சாத்தான் அவனுக்கு வலப்
௭ பக்கத்தில் நிற்கக்கடவன்.—அவன் நியாயம் வி
சாரிக்கப்படும்பொழுது குற்றவாளியாகக் கட
வன்: அவன்விண்ணப்பம் பாவமாகக்கடவது.—
௮ அவனுடைய நாள்கள் அற்பமாகக்கடவன; அ
வனுடைய உத்தியோகத்தை வேறொருவன் பெ
௯ றக்கடவன்.—அவன் பிள்ளைகள் அநாதபிள்ளை
களாகக்கடவன, அவன் மனைவி விதவையாகக்
௰ கடவள்.—அவனுடைய பிள்ளைகள் அலைந்து தி
ரிந்து நித்தமும் பிச்சைகேட்கக்கடவன: பாழா
ன இடங்களில் தங்கள் உணவுகளைத் தேடக்க
௰௧ டவன.—அவனுக்குண்டான யாவற்றையுங் க
டன்காரன் அபகரித்துக்கொள்ளக்கடவன்: அ
வனுடைய பிரயாசத்தின் பலனை அந்நியர் ப
௰௨ றித்துக்கொள்ளக்கடவர்கள்.—அவனுக்கு ஒரு
வரும் இரக்கஞ்செய்யாமலும், அவனுடைய அ
நாதபிள்ளைகளுக்கு ஒருவருந்தயைசெய்யாமலும்
௰௩ போகக்கடவர்கள்.—அவன் சந்ததியார்சேதிக்கப்
படக்கடவர்கள்; அடுத்த தலைமுறையில் அவர்

கள்பேர்அற்றுப்போகக்கடவது.—அவன் தயை ௰௪
செய்ய நினையாமல் சிறுமையும் எளிமையுமுள்
ளவனைத் துயரப்படுத்தி, நருங்கிய இருதயமுள்
ளவனைக்கொலைசெய்யத்தேடினான்:—ஆதலால் ௰௫
அவர்கள் பூமியிலே பேரற்றவர்களாகும்படி அ
வன் பிதாக்களின் அக்கிரமம் யெகோவா
வின் நினைவில் வைக்கப்படக்கடவது; அவன்
மாதாவின் பாவம் ஒழிந்துபோகாமலிருக்கக்கட
வது.—அவைகள்நித்தமும் யெகோவாவின் ௰௬
சமுகத்தில்இருக்கக்கடவன.—சாபத்தை விரும் ௰௭
பினான், அதுவே அவனுக்குவரும்: அவன் ஆசீர்
வாதத்தைவிரும்பாததினால் அது அவனுக்குத்தூர
மாயிருக்கக்கடவது.—அவன் வஸ்திரம்போலச் ௰௮
சாபத்தைத்தரித்தான், அது அவனுள்ளத்திற்சலத்
தைப்போலவும், எலும்பில் எண்ணெயைப்போ
லவும்பாயக்கடவது.-அது அவன்போர்க்கும்வஸ் ௰௯
திரம்போலவும், நித்தமுங்கட்டுகிறகச்சுப்போல
வுமிருக்கக்கடவது.-என்விரோதிகளுக்கும், என் ௨௰
ஆத்துமாவுக்கு விரோதமாகத்தீங்குபேசும் என்ச
த்துருக்களுக்கும்இந்தப்பலன் யெகோவாவி
னின்றுவரும்.-ஆண்டவராகிய யெகோவா ௨௧
வே, நீர் உமது நாமத்தினிமித்தம் என்னை நடத்
தியருளும்: உமது தயை உத்தமம், என்னை இரட்
சித்தருளும்.—நான்சிறுமையும் எளிமையுமானவ ௨௨
னாயிருக்கிறேன், எனக்குள்ளே என்னிருதயங்
குத்துண்டிருக்கின்றது.—நான் சாய்கிறநிழல்போ ௨௩
ல அகற்றப்பட்டேன்: வெட்டுக்கிளிபோலப்ப
றக்கடிக்கப்படுகிறேன்.—உபவாசத்தினால் என் ௨௪
முழந்தாள்கள் தடுமாறுகின்றன; நிணமின்றிஎன்
மாமிசங்காய்ந்துபோகின்றது.-அவர்கள்நிந்தனை ௨௫
க்கும் நான்ஏதுவானேன்: அவர்கள்என்னைக்கண்
டுதலையைத்துலுக்குகிறார்கள்.—என் தேவனாகி ௨௬
ய யெகோவாவே, எனக்குதவிசெய்யும்: உம
து தயையின்படிஎன்னை இரட்சித்தருளும்,—அதி ௨௭
னால் இதுவே உமதுகரம்; யெகோவாவாகிய
நீரே இதைச்செய்தீரென்றறிவார்கள்.—அவர்கள் ௨௮
சபிக்கட்டும், நீரோ ஆசீர்வதித்தருளும்: அவர்கள்
எழும்பவெட்கப்படுவார்களாக. உமதடியானோ
களிகூருவானாக.—என் விரோதிகள் இலச்சை ௨௯
யை வஸ்திரம்போலத் தரிப்பார்களாக, வெட்
கத்தை உத்தரீயம்போலத் தரிப்பார்களாக.—நா ௩௰
ன் என்வாயினால் யெகோவாவை மிகவுந்
துதிப்பேன்; அநேகருக்குள் அவரைக் கீர்த்தன
ம்பண்ணுவேன்.—ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப் ௩௰௧
பார்க்கிறவர்களினின்று தரித்திரனுடைய பிரா
ணனை இரட்சிக்கும்படி அவர் அவன் வலப்பு
றத்தில் நிற்பார்.

## ௱௰. சங்கீதம்.

கிறிஸ்துவின் இராச்சியத்தையும், ஆசாரியத்துவத்
தையும், செயத்தையும், யாதனையையுங்குறித்
துத் தீர்க்கதரிசனமுரைத்தல்.

---

(௮) ஆதி.௪௯.௰.—(௱௯. சங். ௩.) யோவா.௰௫.௨௫. (௬) சக.௩.௧. (௭) நீதி.௨௮.௯. (௮) அப்.௧.௨௰. (௯) யாத்.௨௨.௨௪. (௰௩) யோபு.௰௮.௰௯. நீதி.௰.௭. (௰௫) யாத்.௨௰.௫. நிகி.௪.௫. எரே.௰௮.௨௩. யோபு.௰௮.௰௭. (௰௭) நீதி.௰௪.௰௪. எசேக்.௩௫.௬. (௰௮) எண்.௫.௨௨. (௨௪) எபி.௰௨.௰௨. (௨௫) மத்.௨௭.௩௯. (௨௭) யோபு.௩௭.௭. (௨௮) ௨.சாமு.௰௬.௰௧,௰௨. ஏசா.௬௫.௰௪.—(௱௰. சங்.)

தாவீதின் சங்கீதம்.

யெகோவா என் ஆண்டவரைநோக்கி,
நான் உம்முடைய சத்துருக்களை உமது பாதபீ
டமாக்கும்வரைக்கும் நீர் என் வலப்பாரிசத்தி
௨ ல்வீற்றிருமென்றார்.—யெகோவா சீயோனி
னின்று உமது வல்லமையுள்ள கோலை அனுப்
புவார்: நீர் உமது சத்துருக்களுக்குள்ளே ஆளு
௩ கைசெய்யும்.—உமது பராக்கிரமம் விளங்கும்நா
ளில் உம்முடைய சனங்கள் பூரணமனதோடே
பரிசுத்த அலங்காரத்தினால் சிங்காரிக்கப்பட்டு,
ஆயத்தமாயிருப்பார்கள்: விடியற்காலத்தின் க
ருப்பத்தில் தோன்றும் பனியிலும் உமது வமிச
௪ விருத்தி அதிகம்.-மெல்கிசெதேக்கின்முறைமை
யின்படி நீர் சதாகாலங்களிலும் ஆசாரியரென்று
யெகோவா ஆணையிட்டார்,அதைமாற்றமாட்
௫ டார்.-உமது வலப்பாரிசத்திலுள்ள ஆண்டவர்
தாம் கோபங்கொள்ளுந்தினத்தில் இராசாக்களை
௬ அடிப்பார்.—அவர் புறத்தேசத்தாரை நியாயம்
விசாரித்துப் பிரேதங்களினாலே தேசங்களைநிரப்
புவார்; அநேகதேசங்களின் தலைவர்களை அடிப்
௭ பார்.—அவர்வழியிலுள்ள நதியின்சலத்தைப்பா
னம்பண்ணுகிறபடியினால் தலைநிமிருவார்.

## ௱௰௧. சங்கீதம்.

தேவன் செய்த தயையுமகிமையுமுள்ள கிரியை
களினிமித்தம் அவரைத்துதிக்கும்படி ஏவல்.

யெகோவாவை வாழ்த்துங்கள், நான் நேர்
மையானவர்களுடையசங்கத்திலுஞ்சபையிலும்
என்பூரணஇருதயத்தோடும் யெகோவாவை
௨ த்துதிப்பேன்.—யெகோவாவின் கிரியைகள்
மகத்துவமானவைகள், அவைகள் அவைகளின்
மேல் பிரியப்படுகிறவர்களால் தீர ஆராயப்படு
௩ கின்றன.—அவருடையகிரியை கனமும் மகிமை
யுமுள்ளது: அவருடையநீதிநித்தமும்நிலைக்கும்.-
௪ அவர்தம்முடைய ஆச்சரியமான கிரியைகளை நி
னைவுகூரப்பண்ணினார். யெகோவா கிருபை
௫ யும்பூரணஇரக்கமுமுள்ளவர்.—அவர் தம்மிடத்
தில் பயபத்தியாயிருக்கிறவர்களுக்கு ஆகாரங்
கொடுத்தார்: அவர் என்றுந் தமது உடன்படிக்
௬ கையின்மேல் சிந்தைவைக்கிறார்.—அந்நியதேசத்
தாருடையசுதந்தரத்தைத்தம்முடைய சனங்களு
க்குக்கொடுக்கும்படி தமதுகிரியைகளின் பெலத்
௭ தை அவர்களுக்குத்தெரிவித்திருக்கிறார்.—அவரு
டையகரத்தின்கிரியைகள் சத்தியமும் நியாயமு
மானவைகள்; அவருடைய எல்லாக்கட்டளை
௮ களும் உறுதியானவைகளும்,—என்றும் நிலைநிற்
பவைகளும், சத்தியத்தோடும் நேர்மையோடும்
௯ ஏற்படுத்தப்பட்டவைகளுமாயிருக்கின்றன.—அ
வர் தம்முடைய சனத்திற்கு மீட்பை அனுப்பி,
தமது உடன்படிக்கையை நித்தமுநிற்கும்படி
கட்டளையிட்டார்: அவருடைய நாமம்பரிசுத்த
மும்பயங்கரமுமுள்ளது.—யெகோவாவைப் ௰
பற்றும் பயம் ஞானத்தின்ஆரம்பம்: அவருடை
ய கட்டளையைக்காத்துநடக்கிறவர்கள் எல்லா
ரும் சுபுத்திமான்கள்: அவருடைய துதி சதாகா
லமும் நிலைத்திருக்கும்.

## ௱௰௨. சங்கீதம்.

தேவபத்தியின் மேன்மையைப்பாராட்டல்.

யெகோவாவை வாழ்த்துங்கள். யெகோ ௧
வாவுக்குப் பயந்து அவருடைய கட்டளைக
ளின்மேல் மிகவும் பிரியப்படுகிற மனுஷனே
வாழ்வுடையவன்.—பூமியில் அவன் சந்ததிபலத் ௨
திருக்கும், நேர்மையுள்ளவர்களுடைய வமிசம்
ஆசீர்வதிக்கப்படும்.—அவனுடைய வீட்டிலே ௩
பொருளுஞ் செல்வங்களுமுண்டு: அவனுடை
ய நீதி என்றும் நிலைத்திருக்கும்.—நேர்மையா ௪
னவனுக்கு இருளிலும் ஒளி உதிக்கும்: அவன்
தயையும் இரக்கமும் நீதியுமுள்ளவன்.—நல்ல ௫
வன் தயைகாட்டிக்கடன்கொடுப்பான்: தன்கா
ரியங்களை நியாயத்துக்கேற்க நடப்பிக்கிறான்.—
அவன் ஒருபொழுதும் அசைக்கப்படானே: நீதி ௬
மான் என்றும் நினைக்கப்படுவான்.—துர்ச்செய்தி ௭
யைக்கேட்டாலும் பயப்படான்: யெகோவா
வை நம்பி அவனுடைய இருதயம் நிலைத்திருக்
கின்றது.—அவன் இருதயம் நிலைத்திருக்கின்றது, ௮
அவன் தன்சத்துருக்களுக்குக்கிடைப்பதைக்கா
ணும்பொழுது பயப்படான்.—அவன் வாரியி ௯
றைக்கிறான், தரித்திரருக்குக்கொடுக்கிறான்; அ
வன் நீதி என்றும் நிற்கும். அவனுடைய கொம்பு
மகிமையாய் உயர்த்தப்படும்.—துன்மார்க்கன் அ ௰
தைக்கண்டு விசனப்பட்டுத் தன் பற்களைக்கடித்
துக் கரைந்துபோவான்; துன்மார்க்கனுடையஆ
சை அழியும்.

## ௱௰௩. சங்கீதம்.

தயையினிமித்தம் தேவனைத் துதித்தல்.

யெகோவாவை வாழ்த்துங்கள். யெகோ ௧
வாவின் தாசரே,வாழ்த்துங்கள்,யெகோவா
வின் நாமத்தை வாழ்த்துங்கள்.—இன்றுமுதல் ௨
என்றும் யெகோவாவின் நாமம் வாழ்த்தப்
படுவதாக.—சூரியோதயந் தொடங்கிஅஸ்தமன ௩
பரியந்தம் யெகோவாவின் நாமம் வாழ்த்தப்
படுவதாக.—யெகோவா சருவ தேசத்தாருக் ௪
குமேலானவர், அவருடைய மகிமை வானங்க
ளுக்குமேலாயிருக்கின்றது.—உயர்ந்த ஸ்தானத்தி ௫
ல் வாசம்பண்ணுகிறநம்முடைய தேவனாகிய
யெகோவாவுக்கு நிகர் யாவர்.—வானத்தி ௬
லும் பூமியிலுமுள்ளவைகளைப்பார்க்கும்படி அ

(௧)மத்.௨௨.௪௩. அப்.௨.௩௪. ௧.கொரி.௰௫.௨௫. எபி.௧.௰௩. ௧.பேதுரு.௩.௨௨. (௩) நியா.௫.௨. (௪) எண்.௨௩.௰௧. எபி.௫.௬. எபி.௬.௨௰. எபி.௭.௰௭,௨௧. சக.௬.௰௩.(௫)சங்.௨.௫,௰௨. ரோ.௨.௫. வெளி.௰௧.௰௮.(௬)சங்.௬௮.௨௧. அபகூ.௩.௰௩.(௭)நியா.௭.௫,௬. ஏசா.௫௩.௰௨.—(௱௰௧.சங்.௨.)யோபு.௩௮. வெளி.௰௫.௩. (௫) மத்.௬.௨௬,௩௩.(௭) வெளி.௰௫.௩.(௮)ஏசா.௪௰.௮. மத்.௫.௰௮. வெளி.௰௫.௩.(௯)மத்.௧.௨௧.(௰)உபா.௪.௬. யோபு.௨௮.௨௮. நீதி.௧.௭. பிர.௰௨.௰௩. நீதி.௩.௪.—(௱௰௨.சங்.௩.)மத்.௬.௩௩.(௪)யோபு.௰௧.௰௭.(௫)லூக்.௬.௩௫. எபே.௫.௰௫. கொலோ.௪.௫. (௬) நீதி.௰.௭.(௭)நீதி.௧.௩௩.(௮)நீதி.௧.௩௩. (௯) ௨.கொரி.௯.௯. உபா.௨௪.௰௩.(௰)லூக்.௰௩.௨௮. நீதி.௰.௨௮.—(௱௰௩. சங். ௨.) தானி.௨.௨௰. (௩) ஏசா.௫௯.௰௯. மல்.௧.௰௧. (௪) சங்.௮.௧. (௬) சங்.௱௩௮.௬. ஏசா.௫௭.௰௫.

௭ வர்தம்மைத் தாழ்த்துகிறூர்.—அவர் ஏழையைத்
தூளினின்று தூக்கிவிடுகிறூர், திக்கற்றவனைக்
௮ குப்பையினின்று உயர்த்துகிறூர்.-தம்முடைய
சனங்களின் அதிபதிகளோடும் பிரபுகளோடும்
௯ அவனை இருக்கப்பண்ணுகிறூர்.-மலடியைப்பிள்
ளைகளைப்பெற்றுச் சந்தோஷிக்கிற தாயாக வீட்
டில் வசிக்கும்படி செய்கிறூர். யெகோவா
வை வாழ்த்துங்கள்.

## ௱௰௪. சங்கீதம்.

சிருஷ்டிப்புகளுக்குள்ளே நடந்தவைகளைச்சார்ந்
து சபையார் தேவனுக்குப் பயப்படும்படி
ஏவல்.

இஸரவேலர் எகிப்திலும், யாக்கோபின் குடும்
பத்தார் அந்நியபாஷைக்காரரிலும் நின்று புறப்
௨ பட்டபொழுது,-யூதாஅவருக்குப் பரிசுத்தஸ்தா
னமும், இஸரவேல் அவருக்கு இராச்சியமுமா
௩ யிருந்தன.—கடல் கண்டுவிலகியோடிற்று: யோர்
௪ தான் திரும்பிப் பின்னிட்டது.—மலைகள் ஆட்
டுக்கடாக்களைப்போலவும், குன்றுகள் ஆட்டுக்
௫ குட்டிகளைப்போலவும் குதித்தன.—ஓ, கடலே,
நீ ஓடிப்போகிறதற்கும், யோர்தானே, நீ திரும்
௬ பிப் பின்னிடுகிறதற்கும்,—மலைகளே, நீங்கள்
ஆட்டுக்கடாக்களைப்போலவும், குன்றுகளே,நீங்
கள் ஆட்டுக்குட்டிகளைப்போலவுந் துள்ளுகிற
௭ தற்கும் காரணம்யாது.—பூமியே, நீ ஆண்டவ
ருக்குமுன்பாகவும், யாக்கோபின் தேவனுக்
௮ கு முன்பாகவும் நடுங்கு.—அவர் கன்மலையைக்
குளமாகவும், கற்பாறை நீரூற்றின் கண்களாகவு
ஞ்செய்தார்.

## ௱௰௫. சங்கீதம்.

விக்கிரகங்கள் அபத்தமென்று கண்டு மெய்த்தே
வனை நம்பி அவர் செய்த தயையினிமித்தம் அ
வரைத்துதிக்கும்படி ஏவல்.

யெகோவாவே, எங்களுக்கல்ல, எங்களுக்
கல்ல; உமது தயையினிமித்தமுஞ் சத்தியத்தினி
மித்தமும் உமது நாமத்துக்கே மகிமையுண்டாவ
௨ தாக.—அவர்களுடைய தேவன் இப்பொழுது
எங்கேயென்றுஅந்நியர்சொல்லவேண்டியதென்
௩ ன.-நம்முடைய தேவன் வானங்களிலிருக்கிறூ
ர்: தமக்குப்பிரியமானயாவையுஞ் செய்கிறூர்.—
௪ அவர்களுடைய விக்கிரகங்கள் பொன்னும் வெ
ள்ளியும் மனுஷருடையகைக்கிரியையுமாயிருக்
௫ கின்றன.—அவைகளுக்கு வாயிருந்தும்பேசவில்
௬ லை: கண்களிருந்துங்காணவில்லை.—காதுகளிருந்
துங் கேட்கவில்லை: மூக்கிருந்தும் மோக்கவில்
௭ லை: கைகளிருந்தும் பரிசிக்கவில்லை.—கால்களி
ருந்தும் நடக்கவில்லை: தங்கள் தொண்டையினூ
௮ லுஞ் சத்தமிடவில்லை.—அவைகளை உண்டாக்கு
கிறவர்களும்,அவைகளைநம்புகிறவர்கள்யாவரும்
அவைகளுக்கொப்பாயிருக்கிறூர்கள்.—இஸரவே ௯
லரே, யெகோவாவை நம்புங்கள்: அவரேஅ
வர்களுக்குத்துணையுங்கேடகமுமாயிருக்கிறூர்.—
ஆரோன் குடும்பத்தாரே யெகோவாவை நம் ௰
புங்கள்: அவர் அவர்களுக்குத் துணையுங்கே
டகமுமாயிருக்கிறூர்.—யெகோவாவுக்குப் ௰௧
பயப்படுகிறவர்களே, நீங்கள் யெகோவா
வை நம்புங்கள்: அவர் அவர்களுக்குத்துணை
யுங் கேடகமுமாயிருக்கிறூர்.—யெகோவா ௰௨
நம்மை நினைந்திருக்கிறூர்: நம்மை ஆசீர்வதிப்
பார்; இஸரவேலின் குடும்பத்தாரை ஆசீர்வதித்
தார்;ஆரோனின்குடும்பத்தாரைஆசீர்வதிப்பார்.-
யெகோவாவுக்குப் பயப்படுகிற சிறியோ ௰௩
ரையும்பெரியோரையும் ஆசீர்வதிப்பார்.—யெ ௰௪
கோவா மேன்மேலும் உங்களையும் உங்கள்சந்
ததியாரையும்பெருகப்பண்ணுவார்.—நீங்கள் வா ௰௫
னத்தையும் பூமியையுஞ் சிருஷ்டித்த யெகோ
வாவினூல் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.—வா ௰௬
னங்கள், வானங்களே யெகோவாவினுடை
யவைகள், பூமியையோ மனுபுத்திரருக்குக்கொ
டுத்தார்.—மரித்தோரும் மவுன ஸ்தானத்தில் பிர ௰௭
வேசிப்போரும் யெகோவாவை வாழ்த்த
முடியாது.—நாமோ இன்றுமுதல் என்றும் யெ ௰௮
கோவாவை வாழ்த்துவோம். யெகோவா
வை வாழ்த்துங்கள்.

## ௱௰௬. சங்கீதம்.

இரட்சிப்பினிமித்தந் தேவனைத் துதித்தல்.

யெகோவா என்சத்தத்தையும்என்விண்ணப் ௧
பத்தையுங் கேட்டபடியினூலே, நான் அவரை
நேசிப்பேன்.—அவர் எனக்குத் தமதுசெவியைச் ௨
சாய்த்தபடியினூல், என் ஆயுள்பரியந்தம்அவரை
நோக்கி ஓலமிடுவேன்.—மரணத்தின் பந்தங்கள் ௩
என்னைச் சுற்றிக்கொண்டன; நரகவேதனைகள்
என்னைப்பிடித்துக்கொண்டன: நான்கிலேசத்தி
லுந்துக்கத்திலும் அகப்பட்டேன்.-அப்பொழுது ௪
நான், யெகோவாவே, என்பிராணனைவிடு
வித்தருளும்படி உம்மை வேண்டிக்கொள்ளுகி
றேனென்று யெகோவாவின் நாமத்தைச்
சொல்லிக் கூப்பிட்டேன்.—யெகோவா த ௫
யையும் நீதியுமுள்ளவர்; நம்முடைய தேவன்
இரக்கமுமுள்ளவர்.—யெகோவா பேதை ௬
யைக்காக்கிறூர்: நான் மெலிவடைந்தபொழுது
என்னை இரட்சித்தார்.—என் ஆத்துமாவே, யெ ௭
கோவா உனக்குநன்மை செய்தார்; ஆதலால்
நீ உன் இளைப்பாறுதலுக்குத்திரும்பு.—என் ஆத் ௮
துமத்தைமரணத்துக்கும், என்கண்ணை அழுகைக்
கும், என்காலை இடறுதலுக்குந் தப்புவித்தீர்.—
நான் யெகோவாவின் சமுகத்திலே சீவ ௯
னுள்ளோருடையதேசத்தில்நடப்பேன்.—நான் ௰

(௭) ௧.சாமு.௨.௮. (௮) யோபு.௩௬.௭. (௯) ௧.சாமு.௨.௫. ஏசா.௫௪.௧. கலா.௪.௨௭.—(௱௰௪. சங். ௧.) யாத்.௰௩.
௩. (௨) யாத்.௬.௭. உபா.௨௭.௯. (௩) யாத்.௰௪.௨௧. யோசு.௩.௰௨,௰௬. (௪) அபகூ.௩.௬. (௫) அபகூ.௩.௮. (௮)
யாத்.௰௭.௬.—(௱௰௫. சங். ௧.) ஏசா.௪௮.௰௧. எசேக்.௩௬.௩௨.(௨)யோவே.௨.௰௭. (௩) ௧.நாளா.௰௬.௨௬. தானி.
௪.௩௫. (௪) உபா.௪.௨௮. எரே.௰.௩. (௮) ஏசா.௪௪.௯,௰,௰௧. யோனா.௨.௮. அபகூ.௨.௰௮.௰௯. (௯) நீதி.௩௰.௫.
(௰௫) ஆதி.௰௪.௰௯. ஆதி.௧.௧. (௰௭) ஏசா.௩௮.௰௮. (௰௮) தானி.௨.௨௰.—(௱௰௬. சங். ௫.) எஸ்றா.௯.௰௫. நெகி.௯.
௮. (௭) எரே.௬.௰௬. மத்.௰௧.௨௯. (௰) ௨.கொரி.௪.௰௩.

விசுவாசித்தேன், ஆதலால் நான்பேசுகிறேன்:
௰௧ நான் மிகவும்வருத்தப்பட்டேன்.—சகலமனுஷ
ரும்பொய்யரென்று நான் மனவேகத்தினுல்சொ
௰௨ ன்னேன்.—யெகோவா எனக்குச்செய்த ச
கல நன்மைகளுக்காகவும், நான் அவருக்கென்
௰௩ னகைம்மாறுசெய்வேன்.—நான் இரட்சிப்பின்
பாத்திரத்தையெடுத்து, யெகோவாவின்நா
௰௪ மத்தைச்சொல்லிக் கூப்பிடுவேன்.—யெகோ
வாவிடத்தில் நான் அவருடைய சனங்களெல்
லாருக்குமுன்பாக இப்பொழுது என்சங்கற்பங்
௰௫ களை நிறைவேற்றுவேன்.—யெகோவாவின்
பார்வைக்குத் தேவபத்தரின்மரணம் அருமை.—
௰௬ யெகோவாவே, நான் உமதடியான்; உமத
டியாளுடையபுத்திரனும், உமதடியானுமாயிருக்
கிறேனே: நீர் என்கட்டுக்களை அவிழ்த்துவிட்
௰௭ டீர்.—நான் ஸ்தோத்திரபலியிட்டு, யெகோ
வாவின் நாமத்தைச்சொல்லிச் சொல்லிக்கூப்
௰௮ பிடுவேன்.—யெகோவாவின் ஆலயப்பிரா
காரங்களில், யெரூஷலேமே, உன்மத்தியில் அ
வருடைய சனங்களெல்லாருக்கு முன்நின்று,—
௰௯ யெகோவாவிடத்தில் இப்பொழுது நான்
என் சங்கற்பங்களை நிறைவேற்றுவேன். யெ
கோவாவை வாழ்த்துங்கள்.

## ௱௰௭. சங்கீதம்.

*தயை சத்தியம் என்பவைகளினிமித்தம் யெகோவாவைத் துதித்தல்.*

சருவதேசத்தாரே, நீங்கள் யெகோவாவை
வாழ்த்துங்கள்: சனங்களே, நீங்கள்யாவரும் அ
௨ வரைத்துதியுங்கள்.—அவர்நம்மேல்வைத்ததயை
பெரிது: யெகோவாவின் சத்தியம் என்று
முள்ளது. யெகோவாவை வாழ்த்துங்கள்.

## ௱௰௮. சங்கீதம்.

*௧. தேவனைத்துதித்தல்: ௫. ஆபத்தினின்றுஇரட்சைபெற்றுத் தேவனை மேன்மைபாராட்டல்: ௰௯. கிறிஸ்துவைக் குறித்துத் தீர்க்கதரிசன முரைத்தல்.*

யெகோவாவைத் துதியுங்கள்; அவர்தயா
௨ பரர்: அவருடைய இரக்கம் என்றுமுள்ளது.—அ
வருடைய இரக்கம் என்றுமுள்ளதென்று இஸர
௩ வேலர் இப்பொழுது சொல்வார்களாக.—அவரு
டைய இரக்கம் என்றுமுள்ளதென்றுஆரோனின்
குடும்பத்தார் இப்பொழுது சொல்வார்களாக.—
௪ அவருடைய இரக்கம் என்றுமுள்ளதென்று யெ
கோவாவுக்குப் பயப்படுகிறவர்கள்இப்பொ
௫ ழுது சொல்வார்களாக.—நான் ஆபத்துக்காலத்
தில் யெகோவாவைநோக்கி ஓலமிட யெ
கோவா உத்தரந்தந்து, விஸ்தாரமானஸ்தானத்
௬ தில் என்னைவைத்தார்.—யெகோவா என்பட்
சத்திலிருக்கிறார்; நான்பயப்படேன்: மனுஷன்
௭ எனக்கென்ன செய்யக்கூடும்.—யெகோவா
எனக்குதவிசெய்பவர்களுடன் என்பட்சத்திலி
ருக்கிறார்: ஆதலால் என்பகைவருக்கு நேரிடுவ
தை நான்காண்பேன்.—மனுஷனைநம்புவதிலும் ௮
யெகோவாவைச் சார்ந்துகொள்வதே நலம்.—
அதிபதிகளைநம்புவதிலும்யெகோவாவைச் ௯
சார்ந்துகொள்வதே உத்தமம்.—சகல சாதியா ௰
ரும் என்னை வளைந்துகொண்டார்கள்: ஆனாலும்
நான் யெகோவாவின் நாமத்தினால் அவர்
களைச்சங்கரிப்பேன்.—அவர்கள் என்னைவளைந்து ௰௧
கொண்டார்கள்; திரும்பவும் என்னை வளைந்து
கொண்டார்கள்: ஆனாலும் யெகோவாவின்
நாமத்தினால் அவர்களைச்சங்கரிப்பேன்.—தேனீக் ௰௨
களைப்போல் என்னைவளைந்துகொண்டார்கள்; ஆ
னாலும் முட்செடிகளின் அக்கினியைப்போல
அவிந்துபோனார்கள்: நான் யெகோவாவின்
நாமத்தினால் அவர்களைச்சங்கரிப்பேன்.—நான் ௰௩
விழும்படி நீ என்னை மிகவுந்தள்ளினாய்: யெ
கோவாவோ எனக்குதவிசெய்தார்.—யெகோ ௰௪
வாவே என்வல்லமை, என்பாட்டு, என் இரட்
சிப்புமானார்.—நீதிமான்களுடைய கூடாரங்களி ௰௫
ல்மகிழ்ச்சியும், இரட்சிப்புமுள்ளசத்தமிருக்கின்
றது: யெகோவாவின் வலக்கரம் பராக்கிர
மத்தைச் செய்கின்றது.—யெகோவாவின் ௰௬
வலக்கரம்உயர்ந்தது: யெகோவாவின் வலக்
கரம் பராக்கிரமத்தைச்செய்கின்றது.—நான் இறந் ௰௭
துபோகாமல் உயிரோடிருந்து, யெகோவா
வின் கிரியைகளைவிவரிப்பேன்.—யெகோவா ௰௮
என்னை மிகத் தண்டித்தும், மரணத்திற்கு என்
னை ஒப்பிக்கவில்லை.—எனக்கு நீதியின்வாசல்க ௰௯
ளைத்திறந்துவிடுங்கள்: நான் அவைகளில்பிரவே
சித்து யெகோவாவைத்துதிப்பேன்.—யெ ௨௰
கோவாவின் வாசல் இதுவே, இதில் நீதிமான்
கள் பிரவேசிப்பார்கள்.—நீர்எனக்கு உத்தரந்தந் ௨௧
து, என்இரட்சிப்பானபடியால் நான்உம்மைத்து
திப்பேன்.—கட்டுகிறவர்கள் தள்ளிவிட்டகல்லே ௨௨
கோடிக்குத்தலைக்கல்லாயிற்று.—இது யெகோ ௨௩
வாவால் நடந்தது. இதுஎங்கள்பார்வைக்குஆச்
சரியமாயிருக்கின்றது.—இது யெகோவா நிய ௨௪
மித்தநாள்; நாம் இதில்களிகூர்ந்து மகிழ்ந்திருப்
போம்.—யெகோவாவே, இப்பொழுதுஇரட் ௨௫
சித்தருளும்படி உம்மை வேண்டுகிறேன்: யெ
கோவாவே, இப்பொழுதுகாரியஞ்சித்திக்கப்
பண்ணும்படி உம்மை வேண்டுகிறேன்.—யெ ௨௬
கோவாவின் நாமத்தினாலேவருகிறவர்வாழ்த்
தப்படக்கடவர்: நாங்கள் யெகோவாவின்
ஆலயத்தினின்று உங்களை வாழ்த்துகிறோம்.—
யெகோவாவே தேவன், அவர் நமக்கு ஒ ௨௭
ளிதோன்றப்பண்ணினார்: நீங்கள்பலியை வேதி
கையின்கொம்புகளில் கயிறுகளினால் கட்டுங்க
ள்.—நீர் என் தேவன், நான் உம்மைத்துதிப் ௨௮

---

(௰௧) ரோ.௩.௪. (௰௪) யோவ.௨.௯. (௰௫) சங்.௭௨:௰௪. (௰௭) லேவி.௭.௰௨. சங்.௫௰.௰௪.—(௱௰௭.சங்.௧.) ரோ.௰௫.௰௧. (௨) சங்.௱.௫.—(௱௰௮. சங். ௧.) ௧.நாளா.௰௬.௮,௩௪. (௬) ஏசா.௫௧.௰௨. எபி.௰௩.௬.(௮)எரே.௰௭.௫,௭. (௰௨) உபா.௧.௪௪. பிர.௭.௬. நாகூ.௧.௰. (௰௪) யாத்.௰௫.௨. ஏசா.௰௨.௨. (௰௬) யாத்.௰௫.௭. (௰௭) அபகூ.௧.௰௨. (௰௮) ௨.கொரி.௬.௯. (௰௯) ஏசா.௨௬.௨. (௨௰) ஏசா.௩௫.௮. வெளி.௨௧.௨௭. (௨௨) மத்.௨௧.௪௨. அப்.௪.௰௧. எபே.௨.௨௰. ௧.பேதுரு.௨.௪,௭. (௨௮) யாத்.௰௫.௨. ஏசா.௨௫.௧.

பேன்: என் தேவனே, நான்உம்மைமேன்மை
௨௯ பாராட்டுவேன்.—யெகோவாவை வாழ்த்
துங்கள்; அவர் தயாபரர்: அவருடைய இரக்கம்
என்றுமுள்ளது.

## ௱௰௯. சங்கீதம்.

பிரார்த்தனை துதிமுதலிய கடமைகளைக்கூறல்.

ℵ ஆலெப்.

யெகோவாவின் வேதத்தின்படி நடக்கிற
௨ சன்மார்க்கர் வாழ்வுடையவர்கள்.—அவருடை
யசாட்சிப்பிரமாணங்களைக்காத்துப் பூரண இரு
தயத்தோடே அவரைத்தேடுகிறவர்கள் வாழ்வு
௩ டையவர்கள்.—அவர்கள் அநியாயஞ் செய்யார்
௪ கள்: அவருடையவழிகளில்நடக்கிறார்கள்.-உம்
முடைய கட்டளைகளைக் கருத்தாய்க்கைக்கொள்
௫ ளும்படிவிதித்தீர்.—ஆ, என்நடைகள்உமதுவிதிப்
பிரமாணங்களைக்காக்க ஸ்திரப்பட்டால் நலம்.—
௬ நான் உம்முடைய சகலகட்டளைகளையும் நோக்
௭ கிநடந்தால்வெட்கப்படேன்.—உமது நீதியின்நி
யாயத்தீர்ப்புக்களை நான்கற்றுக்கொண்டால்நேர்
மையான இருதயத்தோடே உம்மைத் துதிப்பே
௮ ன்.—உமது விதிப்பிரமாணங்களைக்காத்துநடப்
பேன்: ஒருபொழுதும் என்னைக்கைவிடாதிரும்.

ב பேத்.

௯ வாலிபன்யாதினாலே தன்பாதையைச் சுத்தம்
பண்ணுவான்; உமதுவாக்கின்படி எச்சரிக்கை
௰ யாய் நடக்கிறதினாலேதான்.—நான் என் பூரண
இருதயத்தோடும் உம்மைத் தேடியிருக்கிறேன்:
நான் உமது கட்டளைகளைவிட்டு வழுவவிடாதி
௰௧ ரும்.—நான் உமக்குவிரோதமாய்ப்பாவஞ்செய்
யாதபடிக்கு, உமதுவாக்கை என் இருதயத்தில்
௰௨ ஒளித்து வைத்திருக்கிறேன்.—யெகோவா
வே, நீர் வாழ்த்தப்படத்தக்கவர்: உம்முடைய
விதிப்பிரமாணங்களை எனக்குப்போதித்தருளு
௰௩ ம்.—நான் என் உதடுகளினால் உமதுவாயின் நியா
யத்தீர்ப்புக்களெல்லாவற்றையும்விவரித்துச்சொ
௰௪ ல்லுகிறேன்.—நான் எல்லாச்செல்வத்திலும் உம
து சாட்சிப்பிரமாணங்களின் வழியில் சந்தோ
௰௫ ஷப்படுகிறேன்.—உமதுகட்டளைகளைத்தியானித்
௰௬ து, உமதுநெறிகளைக்கண்ணோக்குகிறேன்.-நான்
உம்முடைய விதிப்பிரமாணங்களிற்சந்தோஷப்
படுவேன்: உமது வாக்கியத்தை மறவேன்.

ג கீமேல்.

௰௭ நான் சீவித்துஉமது வாக்கைக் காத்துக்கொள்
ளும்படி, உமதுஅடியானுக்குஅருள்செய்யும்.—
௰௮ என் கண்களைத்திறந்தருளும், அப்பொழுது உம
துவேதத்திலுள்ள ஆச்சரியமானவைகளைக்காண்
௰௯ பேன்.—பூமியில் நான் பரதேசியாயிருக்கிறேன்:
உம்முடைய கட்டளைகளை எனக்கு மறையாதி
௨௰ ரும்.—உம்முடைய நியாயத்தீர்ப்புக்களின்மேல்
இடைவிடாமல் வைத்தவாஞ்சையினால் என்ஆத்
துமாநொறுங்குகின்றது.—உம்முடைய கட்டளை ௨௧
களைமீறிச்சபிக்கப்பட்ட அகங்காரிகளைநீர் கடிந்
துகொள்ளுகிறீர்.—நான்உம்முடையசாட்சிப்பி ௨௨
ரமாணங்களைக் காத்துக்கொண்டபடியால், நிந்
தையையும்அவமானத்தையும் எனக்குவிலக்கிவி
டும்.—பிரபுகள்வீற்றிருந்து எனக்குவிரோதமாய்ப் ௨௩
பேசுகிறார்கள்: அடியேன் உமது விதிப்பிரமா
ணங்களைத்தியானிக்கிறேன்.—உம்முடைய பிர ௨௪
மாணவாக்கியங்கள் எனக்கு இன்பம், என் ஆ
லோசனைக்காரர்.

ד டாலெத்.

என்ஆத்துமாதூளோடேசார்ந்துகொள்ளுகின் ௨௫
றது: உமது வாக்கின்படி என்னை உயிர்ப்பித்தரு
ளும்.—நான் என் நடைகளை விவரித்தபொழு ௨௬
து நீர் எனக்குத்தரந்தந்தீர்: உம்முடைய விதிப்
பிரமாணங்களை எனக்குப்போதித்தருளும்.—உ ௨௭
மது கட்டளைகளின்வழியை எனக்குணர்த்தியரு
ளும்: அப்பொழுது நான் உமது ஆச்சரியமான
கிரியைகளைத்தியானிப்பேன்.—என் ஆத்துமம் ௨௮
துக்கத்தினாலேகரைந்துபோகின்றது: உமதுவாக்
கின்படி என்னைநிலைநிறுத்தும்.—பொய்நெறியை ௨௯
எனக்குவிலக்கிவிடும்: உமதுவேதத்தை எனக்கு
அருளிச்செய்யும்.—நான்மெய்நெறியைத்தெரிந் ௩௰
துகொண்டேன்: உமதுநியாயத்தீர்ப்புக்களைஎன்
முன் வைக்கிறேன்.—உம்முடையசாட்சிப்பிர ௩௧
மாணங்களை ஒட்டிக்கொண்டிருக்கிறேன்: என்
னைவெட்கப்படுத்தாதிரும்.—நீர் என் மனதைவி ௩௨
ரியப்பண்ணும்பொழுது, உமது கட்டளைகளின்
வழியாக ஓடுவேன்.

ה ஏ.

யெகோவாவே, உம்முடைய விதிப்பிர ௩௩
மாணங்களின் வழியை எனக்குப் போதித்தரு
ளும்; நான்முடிவுபரியந்தம் அதைக்காத்துக்கொ
ள்வேன்.—எனக்குஞானத்தை அருளிச்செய்யும்; ௩௪
அப்பொழுது நான் உமது வேதத்தைப் பற்றிக்
கொண்டு என் பூரண இருதயத்தோடும் அதைக்
காத்துநடப்பேன்.—உமதுகட்டளைகளின்பாதை ௩௫
யில் என்னைநடத்தும்; நான் அதிற்சந்தோஷப்ப
டுகிறேன்.—என் இருதயம் லோபத்துக்கல்ல,உம் ௩௬
முடையசாட்சிப்பிரமாணங்களுக்கேசாயும்படி
செய்யும்.—மாயத்தைப்பாராதபடி என் கண்களை ௩௭
விலக்கி, உமதுநெறியில் என்னை உயிர்ப்பித்தரு
ளும்.—உமக்குப்பயப்படுகிற அடியேனுக்கு உம ௩௮
துவாக்கை நிலைப்படுத்தும்.—என்னைப்பயப்படுத் ௩௯
தும்நிந்தனையை விலக்கியருளும். உம்முடைய
நியாயத்தீர்ப்புக்கள்நல்லவைகள்.-பாரும்,நான்உ ௪௰
ம்முடைய கட்டளைகள்மேல் ஆவலாயிருக்கிறே
ன். உமதுநீதியினால் என்னைஉயிர்ப்பித்தருளும்.

ו வோ.

யெகோவாவே, உம்முடைய இரக்கங்க ௪௧

(௱௰௯. சங். ௧.) சங். ௱௨௮.௧. (௩) ௧.யோவா.௩.௯. (௬) யோபு.௨௪.௨௬. ௧.யோவா.௨.௨௮. (௭) வச.௱௭௧. (௰) ௨.நாளா.௰௫.௰௫. (௰௧) லூக்.௨.௰௯,௫௧. (௰௩) சங்.௩௪.௰௧. (௰௭) சங்.௱௰௬.௭. (௰௯) ஆதி.௪௭.௯. ௧.நாளா.௨௯.௰௫. ௨.கொரி.௫.௬. எபி.௰௧.௰௩. (௩௨) ௧.இரா.௪.௨௯. ஏசா.௬௰.௫. ௨.கொரி.௬.௰௧. (௩௩) மத்.௰.௨௨. வெளி.௨.௨௬. (௩௪) நீதி.௨.௬. யாக்.௧.௫. (௩௬) எசேக்.௩௩.௩௧. லூக்.௰௨.௰௫. ௧.தீமோ.௬.௰. (௩௭) ஏசா.௩௩.௰௫. நீதி.௨௩.௫. (௩௮) ௨.சாமு.௭.௨௫.

ளும், உமதுவாக்கின்படி நீர்செய்யும் இரட்சிப்
௪௨ பும் எனக்குவரக்கடவன.—அப்பொழுது என்
னை நிந்திக்கிறவனுக்கு உத்தரஞ்சொல்லுவேன்:
௪௩ உமதுவாக்கை நம்பியிருக்கிறேன்.—நான் உம்
முடைய நியாயத்தீர்ப்புக்களை காத்திருக்கிறப
டியால் சத்தியவாக்கு ஒருபொழுதும் என்வாயி
௪௪ னின்று நீங்கவிடாதிரும்.—அதினால் நான் இ
டைவிடாமல் என்றும் உமது வேதத்தைக்காத்துக்
௪௫ கொள்வேன்.—நான் உமது கட்டளைகளைத் தே
டுகிறபடியினால் விடுதலையாய் நடக்கிறேன்.—
௪௬ நான் வெட்கமில்லாமல் உம்முடைய சாட்சிப்
பிரமாணங்களைக்குறித்து இராசாக்களின் சமு
௪௭ கத்திலும் பேசுகிறேன்.—நான் விரும்பியிருக்
௪௮ கிற உமது கட்டளைகளில் மகிழுவேன்.—நான்
விரும்பியிருக்கிற உமது கட்டளைகளுக்குக் கை
குவிப்பேன்;உமதுவிதிப்பிரமாணங்களைத் தியா
னிப்பேன்.

௭ சாயின்.

௪௯ நீர் உமது அடியானை நம்பப்பண்ணினவாக்
௫௰ கை நினைந்தருளும்.—உமது வாக்கு என்னை உ
யிர்ப்பித்தது: நான் உபத்திரவப்படுகையில் இது
௫௧ வே எனக்கு ஆறுதலாயிருக்கின்றது.—அகங்காரி
கள் மிகவும்என்னை நிந்தித்தாலும் உமது வேதத்
௫௨ தைவிட்டு நான்விலகேன்.—யெகோவாவே,
பூருவீகமான உமது நியாயத்தீர்ப்புக்களை நான்நி
௫௩ னைந்து ஆறுதலடைகிறேன்.—உமது வேதத்தை
விட்டுவிலகுகிற துன்மார்க்கர்நிமித்தம் பயங்க
௫௪ ரம் என்னைப்பிடித்தது.—நான் புறவாசியாயிருக்
கிற வீட்டில் உமது விதிப்பிரமாணங்கள் எனக்
௫௫ குக் கீதங்களாயின.—யெகோவாவே, நான்
இரவில்உமது நாமத்தைநினைத்து,உமது நியாயப்
௫௬ பிரமாணத்தைக் காத்துக்கொள்ளுகிறேன்.-நான்
உம்முடைய கட்டளைகளைக் காத்துக்கொண்ட
படியினால் இது எனக்குக்கிடைத்தது.

௮ கேத்.

௫௭ யெகோவாவே,நீர் என்பங்கு:உமது வாக்
௫௮ குகளைக் காத்துக்கொள்வேனென்றேன்.—நான்
என் பூரணஇருதயத்தோடும் உமது முகத்தை அ
பேட்சித்துக் கெஞ்சுகிறேன்: உமது வாக்கின்
௫௯ படி எனக்கு இரங்கும்.—என்வழிகளைச் சிந்தித்
துக்கொண்டு,உம்முடைய சாட்சிப்பிரமாணங்க
ளின்வழியாக என்கால்களைத் திருப்பினேன்.—
௬௰ உம்முடையகட்டளைகளைக்கைக்கொள்ள விரை
௬௧ ந்தேன், நான் தாமதிக்கவில்லை.—துன்மார்க்க
ரின் கூட்டங்கள் என்னைச் சுற்றிக்கொண்டன:
ஆனாலும் உமதுவேதத்தை நான் மறக்கவில்லை.—
௬௨ உமது நீதியானநியாயத்தீர்ப்புக்களினிமித்தம் உ
ம்மைத் துதிக்கும்படி அத்தராத்திரியில் எழும்பு
௬௩ கிறேன்.-உமக்குப்பயந்து,உமது விதிப்பிரமாண
ங்களைக் காத்துக்கொள்ளும் யாவருக்கும் நான்
௬௪ தோழன்.-யெகோவாவே, பூமி உமது தயை
யினால் நிறைந்திருக்கின்றது: உமது விதிப்பிர
மாணங்களை எனக்குப்போதித்தருளும்.

௯ தேத்.

யெகோவாவே, நீர் உமது வாக்கின்படி ௬௫
உமது அடியானுக்கருள்செய்தீர்.—எனக்கு உத் ௬௬
தமபோதகத்தையும் ஞானத்தையும் போதித்தரு
ளும்: உம்முடைய கட்டளைகளை விசுவாசிக்கி
றேன்.—நான் உபத்திரவப்படுவதற்குமுன் வழு ௬௭
வி நடந்தேன்: இப்பொழுது உமது வாக்கைக்
காத்து நடக்கிறேன்.—நீர் நல்லவர், நன்மைசெய் ௬௮
பவர்; உமது விதிப்பிரமாணங்களை எனக்குப்
போதித்தருளும்.-அகங்காரிகள் எனக்கு விரோ ௬௯
தமாய்ப் பொய்களைத்தொடுக்கிறார்கள்:நான் என்
பூரண இருதயத்துடன் உமது விதிப்பிரமாணங்
களைக் காத்துக்கொள்ளுகிறேன்.—அவர்கள் இ ௭௰
ருதயம் நிணம்போல ஸ்தூலித்திருக்கின்றது; நா
ன்உமது வேதத்தில் மகிழுகிறேன்.—நான் உபத் ௭௧
திரவப்பட்டது நலம்;அதினால் உம்முடைய வி
திப்பிரமாணங்களைக் கற்றுக்கொண்டேன்.—அ ௭௨
நேகமாயிரம் பொன்வெள்ளிகளிலும்,உமது வா
யின்வேதமே எனக்கு உத்தமம்.

௰ யோட்.

உம்முடைய கரங்கள் என்னைச்சிருஷ்டித்து ௭௩
உருவாக்கின: நான்உம்முடையகட்டளைகளைக்
கற்றுக்கொள்ளும்படி எனக்கு ஞானத்தையரு
ளும்.—நான் உமது வாக்கைக் காத்திருக்கிறபடி ௭௪
யினால் உமக்குப் பயப்படுகிறவர்கள்என்னைக்கா
காணும்பொழுது சந்தோஷப்படுவார்கள்.—யெ ௭௫
கோவாவே; உம்முடையநியாயத்தீர்ப்புக்கள்
நீதியுள்ளன, என்னை நீர் துயரப்படுத்தினது நீதி;
இது எனக்குத்தெரியும்.—உமது அடியேனுக்குக் ௭௬
கிடைத்தஉமது வாக்கின்படி உமது தயை எனக்
கு ஆறுதல்செய்வதாக.—நான் சீவித்திருக்கும் ௭௭
படி உம்முடைய இரக்கங்கள் எனக்குக்கிடைக்
கக்கடவன: உம்முடைய வேதமே என் மன
மகிழ்ச்சி.—அகங்காரிகள் காரணமின்றிமாறுபா ௭௮
டாய் என்னைநடத்தினபடியால் வெட்கப்படுவா
ர்களாக: நான் உம்முடைய விதிப்பிரமாணங்க
ளைத்தியானிப்பேன்.—உமக்குப் பயப்படுகிறவர் ௭௯
களும், உமது சாட்சிப்பிரமாணங்களை உணர்ந்த
வர்களும் என் பட்சத்திலிருப்பார்களாக.—நான் ௮௰
வெட்கப்படாதபடி உமது விதிப்பிரமாணங்க
ளில் என்னிருதயஞ் செவ்வையாயிருப்பதாக.

௰௧ காப்.

உமது இரட்சிப்பினிமித்தம்என் ஆத்துமாசோ ௮௧
ருகின்றது: உமது வாக்கின்மேல் நம்பிக்கையா
யிருக்கிறேன்.—எப்பொழுது என்னைத் தேற்று ௮௨
வீரென்று, உமதுவாக்கின்மேல் நோக்கமாய் என்
கண்கள் பூத்துப்போகின்றன.—புகையிலுள்ள ௮௩
துருத்தியைப்போலானேன்; ஆனாலும் உமது வி
திப்பிரமாணங்களை மறக்கமாட்டேன்.—உமது ௮௪

(௪௬) மத்.௰.௰௮,௰௯. அப்.௨௬.௧,௨. (௫௰) ரோ.௰௫.௪.(௫௧)எரே.௨௰.௭. யோபு.௨௩.௰௧.(௫௩)எஸ்ரா.௯.௩.(௫௭) எரே.௰.௰௬. புல.௩.௨௪. (௫௮) யோபு.௰௧.௰௯. (௫௯) லூக்.௰௫.௰௭,௰௮.(௬௨)அப்.௰௬.௨௫. (௬௭) எரே.௩௧.௰௮, ௰௯. எபி.௰௨.௰௧. (௬௮) மத்.௰௯.௰௭. (௬௯) யோபு.௰௩.௪. (௭௰) ஏசா.௬.௰. அப்.௨௮.௨௭. (௭௧) எபி.௰௨.௰,௰௧. (௭௨)நீதி.௮.௰,௰௧,௰௯. (௭௩) யோபு.௰.௮. (௭௫) எபி.௰௨.௰. (௮௩) யோபு.௩௰.௩௰. (௮௪)சங்.௩௯.௪.வெளி.௬.௰.

அடியேனின் ஆயுள் நாள்கள் எவ்வளவு; என்
னைத் துயரப்படுத்துகிறவர்களுக்கு நீர்எப்பொழு
௮௫ து நியாயத்தீர்ப்புச்செய்வீர்.–உம்முடையவேதத்
துக்கு விரோதமாய் அகங்காரிகள் எனக்குக் கு
௮௬ ழிகளைத் தோண்டுகிறார்கள்.—உம்முடைய கட்
டளைகளெல்லாஞ் சத்தியம்: அவர்கள் அநியாய
மாய் என்னைத்துயரப்படுத்துகிறார்கள்; நீர் எனக்
௮௭ குதவிசெய்யும்.—அவர்கள் பூமியினின்று என்
னைநீக்கிவிட்டது சற்றே தப்பிற்று; ஆனாலும் நா
ன் உம்முடைய விதிப்பிரமாணங்களை விட்டுவி
௮௮ டவில்லை.-உமது தயையின்படி என்னை உயிர்ப்
பித்தருளும்; அப்பொழுது நான் உமது வாயின்
சாட்சிப்பிரமாணத்தைக் காத்துக்கொள்வேன்.

ל லாமேட்.

௮௯ யெகோவாவே, உமது வாக்கு வானங்க
௯௰ ளில் என்றும்நிலைத்திருக்கின்றது.—உமது உண்
மைதலைமுறைதலைமுறையாக இருக்கும்: நீர்பூமி
௯௧ யைஸ்தாபித்தீர், அதுநிலைநிற்கின்றது.-உமது தீர்
மானத்தின்படி அவைகள் இந்நாள்வரைக்கும்நிற்
௯௨ கின்றன: சகலமும்உமதடிமைகள்.-உம்முடைய
வேதம் எனக்கு மகிழ்ச்சிதராதிருந்தால்நான்என்
௯௩ துக்கத்தில் அழிந்துபோவேன்.—நான் ஒருபொ
ழுதும் உம்முடைய விதிப்பிரமாணங்களை மறக்
கமாட்டேன்: அவைகளினால் நீர் என்னைஉயிர்ப்
௯௪ பித்தீர்.—நான் உம்முடையவன், என்னை இரட்
சித்தருளும்; உமதுகட்டளைகளைத்தேடினேன்.–
௯௫ துன்மார்க்கர் என்னை அழிக்கக் காத்திருக்கிறார்
கள்: நான்உமதுசாட்சிப்பிரமாணங்களைஉணர்ந்
௯௬ துகொள்வேன்.—எந்த நிறைவுக்கும்முடிவுவரக்
கண்டேன்: உம்முடையகட்டளையோ மிகவும்
விஸ்தாரமுள்ளது.

מ மேம்.

௯௭ நான் உமதுவேதத்தில் எவ்வளவு பிரியமாயி
ருக்கிறேன்: முழுநாளும் அது என்தியானம்.—
௯௮ நித்தமும் என்னுடனிருக்கிற உம்முடையகட்
டளைகளினால் என்னை என்சத்துருக்களிலும் அ
௯௯ திகஞானவானாக்கினீர்.—உம்முடைய சாட்சிப்
பிரமாணங்களை நான் தியானம்பண்ணுகிறேன்:
அதினால் என்போதகர்களெல்லாரிலும்அதிகஞா
௱ னவானாயிருக்கிறேன்.—நான் உம்முடைய வி
திப்பிரமாணங்களைக் காத்துக்கொள்ளுகிறபடியி
னால் விருத்தாப்பியரிலும் ஞானவானாயிருக்கி
௱௧ றேன்.–உம்முடையவாக்கைநான்காத்துக்கொள்
ளும்படிதுன்னெறிகளெல்லாவற்றிற்கும் என்கா
௱௨ ல்களை விலக்குகிறேன்.—நீர் எனக்குப் போதித்
தீர்: ஆதலால் நான் உம்முடையநியாயத்தீர்ப்புக்
௱௩ களை விட்டுவிலகவில்லை.—உம்முடையவாக்கு
கள் என்நாவுக்கு எவ்வளவுஇனிமை; என்வாய்க்
௱௪ குத்தேனிலும் இனிமையாயிருக்கின்றன.—உம்
முடைய கட்டளைகளினால் நான் ஞானம்பெற்
றிருக்கிறேன்: ஆதலால்பொய்யானவழிகள் எல்
லாவற்றையும் வெறுக்கிறேன்.

נ நூன்.

உம்முடையவாக்குஎன்நடைக்குத்தீபம், என் ௱௫
பாதைக்குஒளி.—உம்முடைய நீதியானநியாயத் ௱௬
தீர்ப்புக்களைக்காத்துக்கொள்ளும்படி நான்ஆணை
யிட்டேன்; அதைநிறைவேற்றுவேன்.–நான்மிக ௱௭
வும்உபத்திரவப்படுகிறேன்: யெகோவாவே,
உமதுவாக்கின்படி என்னை உயிர்ப்பித்தருளும்.-
யெகோவாவே, என்வாயின்இஷ்டப்பலிக ௱௮
ளை நீர் அங்கிகரித்து, உம்முடைய நியாயத்தீர்ப்
புக்களை எனக்குப்போதித்தருளும்.—என்பிரா ௱௯
ணன் எப்பொழுதும் என்கையிலிருக்கின்றது;
ஆனாலும்உம்முடையவேதத்தைமறவேன்.–துன் ௱௰
மார்க்கர் எனக்குக்கண்ணியை வைக்கிறார்கள்;
ஆனாலும் நான் உம்முடைய விதிப்பிரமாணங்க
ளைவிட்டுத்தவறவில்லை.—உம்முடைய சாட்சிப் ௱௰௧
பிரமாணங்கள் என் இருதயத்துக்கு மகிழ்ச்சிதரு
கிறபடியால், அவைகளை நித்திய சுதந்தரத்தைப்
போல் ஏற்றுக்கொள்ளுகிறேன்.—முடிவுபரியந் ௱௰௨
தம் இடைவிடாதபடி உம்முடையவிதிப்பிரமா
ணங்களைக்காத்துக்கொள்ள என் மனதை ஏவிவி
டுகிறேன்.

ס சாமேக்.

நான் துர்ச்சிந்தனைகளை வெறுக்கிறேன்: உம் ௱௰௩
முடையவேதத்தை விரும்புகிறேன்.—நீர் எனக் ௱௰௪
குப்புகலிடம், என் கேடகம்: உமது வாக்கைக்
காத்திருக்கிறேன்.—துன்மார்க்கரே, என்னைவி ௱௰௫
ட்டுப்போங்கள்: நான் என் தேவனுடைய
கட்டளைகளைக்காத்துநடப்பேன்.–நான் பிழைக் ௱௰௬
கும்பொருட்டு உமது வாக்கின்படி என்னைத்
தாங்கிக்கொள்ளும்: என் நம்பிக்கையைக் குறித்
து நான்வெட்கப்படவிடாதிரும்.–என்னைத்தாங் ௱௰௭
கிக்கொள்ளும், அதினால் நான் இரட்சிக்கப்படு
வேன்: நான் எப்பொழுதும் உம்முடைய விதிப்
பிரமாணங்களைக் கண்ணோக்குவேன்.—உம்மு ௱௰௮
டைய விதிப்பிரமாணங்களை விட்டுத்தவறினயா
வரையும் மிதித்துவிட்டீர்: அவர்களுடைய கப
டம்விருதா.—பூமியிலுள்ள துன்மார்க்கர் எல்லா ௱௰௯
ரையுங் களிம்பைப்போல் அகற்றிவிடுகிறீர்: ஆ
தலால் நான் உமது சாட்சிப்பிரமாணங்களை வி
ரும்புகிறேன்.—உமக்குப்பயப்படுவதினால் என் ௱௨௰
சரீரஞ்சிலிர்க்கின்றது; உம்முடைய நியாயத்தீர்ப்
புக்களுக்கு நான் பயப்படுகிறேன்.

ע அயின்.

நான்நியாயத்தையும்நீதியையுஞ்செய்கிறேன்: ௱௨௰௧
என்னைத் துயரப்படுத்துகிறவர்களுக்கு என்னை
ஒப்பியாதிரும்.—நன்மையினிமித்தம்உமது அடி ௱௨௰௨
யேனுக்கு உத்தரவாதியாயிரும்: அகங்காரிகள்
என்னைஉபத்திரவப்படுத்தவிடாதிரும்.–நீர்செய் ௱௨௰௩

(௮௫) நீதி.௰௬.௨௭. (௮௯) மத்.௨௪.௩௪,௩௫. ௧.பேதுரு.௧.௨௫. (௯௧) எரே.௩௩.௨௫. (௯௬) மத்.௫.௰௮. மத்.௨௪.௩௫. (௯௮) உபா.௪.௬,௮. (௯௯) ௨.தீமோ.௩.௰௫. (௱) யோபு.௩௨.௭,௮,௯. (௱௧) நீதி.௧.௰௫. (௱௩) சங்.௰௯.௰. நீதி.௮.௰௧. (௱௫) நீதி.௬.௨௩. (௱௬) நிகி.௰.௨௯. (௱௮) ஓசி.௰௪.௨. எபி.௰௩.௰௫. (௱௯) யோபு.௰௩.௰௪. (௱௰௧) உபா.௩௩.௪. (௱௰௪) சங்.௯௧.௧. (௱௰௫) மத்.௭.௨௩. (௱௰௬) ரோ.௫.௫. (௱௰௯) எசேக்.௨௨.௰௮. (௱௨௰) அபகூ.௩.௰௬. (௱௨௨) எபி.௭.௨௨.

யும்இரட்சிப்பினிமித்தமும்உமதுநீதியின்வாக்கி
னிமித்தமும்என்கண்கள் பூத்துப்போகின்றன.—
௱௨௪ உமது தயையின்படிஉமதுஅடியேனைநடத்தி, உ
மதுவிதிப்பிரமாணங்களை எனக்குப்போதித்தரு
௱௨௫ ளும்.—நான்உமதடியான்;உம்முடையசாட்சிப்
பிரமாணங்களைஅறியும்படி எனக்குப்புத்தியைத்
௱௨௬ தந்தருளும்.—யெகோவாவே, நீர் கிரியை
செய்வதற்குக்காலம்வந்தது: அவர்கள்உமதுநியா
௱௨௭ யப்பிரமாணத்தை மீறினார்கள்.—அதைக்கண்டு
நான் பொன்னிலுந் தங்கத்திலும் அதிகமாய் உம்
௱௨௮ முடையகட்டளைகளிற்பிரியப்படுகிறேன்.—அ
ன்றியும் எல்லாவற்றையும்பற்றி நீர் அருளியவி
திப்பிரமாணங்களை நன்றாய்மதிக்கிறேன்;பொய்
யானவழிகள் எல்லாவற்றையும் வெறுக்கிறேன்.

פ பே.

௱௨௯ உம்முடைய சாட்சிப்பிரமாணங்கள் ஆச்சரி
யமுள்ளவைகள்: ஆதலால் என்ஆத்துமம் அவை
௱௩௰ களைக் காத்துக்கொள்ளுகின்றது.—உம்முடைய
வாக்குகளின் விரிவு ஒளியைத்தருகின்றது;அது
௱௩௧ பேதையருக்குப் புத்தியைத்தருகின்றது.—நான்
உம்முடைய கட்டளைகளின்மேல் வாஞ்சையா
யிருப்பதினால் என் வாயைத்திறந்து அவாவுகி
௱௩௨ றேன்.—உமது நாமத்தில் அன்பாயிருக்கிறவர்க
ளுக்கு நீர் செய்வதுபோல என்மேல் கடாட்
௱௩௩ சித்து எனக்குத் தயைசெய்யும்.—உமது வாக்கின்
படி என் நடைகளை ஸ்திரப்படுத்தியருளும்: எந்
௱௩௪ தப்பாவமும் என்னை ஆளவிடாதிரும்.—மனு
ஷர் செய்யும் உபத்திரவத்தினின்று என்னை இ
ரட்சித்தருளும்: அதினால் நான் உமது விதிப்பிர
௱௩௫ மாணங்களைக்காத்துக்கொள்வேன்.—உமதடியா
ன்மேல் உமது முகம்பிரகாசிக்கப்பண்ணி, உம
துவிதிப்பிரமாணங்களை எனக்குப் போதித்தரு
௱௩௬ ளும்.—உம்முடையவேதத்தை அவர்கள்காத்துக்
கொள்ளாததினால் என் கண்களினின்று சலதா
ரைகள் ஓடுகின்றன.

צ த்சாடே.

௱௩௭ யெகோவாவே, நீர் நீதிபரர், உமதுநியா
௱௩௮ யத்தீர்ப்புக்கள் செவ்வையானவைகள்.—நீர்கட்
டளையிட்ட சாட்சிப்பிரமாணங்கள் நீதியும் ம
௱௩௯ காசத்தியமுமுள்ளவைகள்.—என் சத்துருக்கள்
உம்முடையவாக்குகளை மறந்துவிட்டார்கள்; எ
ன்பத்திவைராக்கியம் என்னைச்சேதிக்கின்றது.—
௱௪௰ உம்முடைய வாக்கு அதிசுத்தமுள்ளது: ஆதலால்
௱௪௧ அடியேன் அதில்பிரியப்படுகிறேன்.—நான்அற்
பனும் அவமதிக்கப்பட்டவனுமாயிருக்கிறேன்:
ஆனாலும் நான் உம்முடையகட்டளைகளைமறக்கி
௱௪௨ றதில்லை.—உமதுநீதி நித்தியநீதி, உம்முடையவே
௱௪௩ தஞ் சத்தியம்.—கிலேசமுந் துக்கமும் என்னைப்
பிடித்தன: ஆனாலும்உமதுகட்டளைகள் என்மகிழ்
௱௪௪ ச்சி.—உம்முடைய சாட்சிப் பிரமாணங்களின்
நீதி நித்தியம்: எனக்கு ஞானத்தையருளும், அப்
பொழுது நான் சீவிப்பேன்.

ק கோப்.

நான்பூரண இருதயத்தோடும்ஓலமிடுகிறேன்; ௱௪௫
யெகோவாவே, எனக்குஉத்தரந்தந்தருளும்:
நான் உம்முடைய விதிப்பிரமாணங்களைக்காத்
துக்கொள்வேன்.—நான் உம்மைநோக்கி ஓலமிட் ௱௪௬
டேன்; என்னைஇரட்சித்தருளும், அப்பொழுது
நான் உமது சாட்சிப்பிரமாணங்களைக் காத்துக்
கொள்வேன்.—அருணோதயத்துக்குமுன் உம்மை ௱௪௭
நோக்கிஓலமிட்டு,உமதுவாக்குக்குக்காத்திருக்கி
றேன்.—நான் உம்முடைய வாக்கைத்தியானிக் ௱௪௮
கும்படி என்கண்கள்விடியற்சாமத்துக்குமுன்ன
மேவிழிக்கும்.—உமதுதயையின்படி என்சத்தத் ௱௪௯
தைக்கேட்டருளும்: யெகோவாவே, உமது
நியாயத்தீர்ப்பின்படி என்னை உயிர்ப்பித்தருளு
ம்.—தீமையைப்பின்பற்றுகிறவர்கள் சமீபித்துவ ௱௫௰
ருகிறார்கள்: அவர்கள்உமதுவேதத்துக்குத்தூரமா
யிருக்கிறார்கள்.—யெகோவாவே, நீர்சமீபமா ௱௫௧
யிருக்கிறீர்; உம்முடைய கட்டளைகளெல்லாஞ்
சத்தியம்.—நீர் உம்முடையசாட்சிப்பிரமாணங்க ௱௫௨
ளை நித்தியமாக ஸ்தாபித்தீர், இதை நான் ஆதிமு
தல் அறிந்திருக்கிறேன்.

ר ரேஷ்.

என் உபத்திரவத்தைப்பார்த்து என்னை இரட் ௱௫௩
சியும்: உமதுவேதத்தை மறக்கமாட்டேன்.—என் ௱௫௪
வழக்கைப்பேசி,உமதுவாக்கின்படி என்னைமீட்
டுக்கொள்ளும்.—துன்மார்க்கர்உம்முடையவிதிப் ௱௫௫
பிரமாணங்களைத்தேடாதிருக்கிறபடியினால், இ
ரட்சிப்பு அவர்களுக்குத்தூரமாயிருக்கின்றது.—
யெகோவாவே, உம்முடைய இரக்கங்கள் ௱௫௬
மிகுதி: உமதுநியாயத்தீர்ப்புக்களின்படிஎன்னை
உயிர்ப்பித்தருளும்.—என்னைத் துயரப்படுத்துகிற ௱௫௭
வர்களும், என்சத்துருக்களும்அநேகர்; ஆனாலும்
உம்முடையசாட்சிப்பிரமாணங்களை விட்டுவில
கேன்.—துரோகிகள் உம்முடையவாக்கைக்காத் ௱௫௮
துக்கொள்ளாததினால், அவர்களைக்கண்டுநான்மி
கவும் விசனப்பட்டேன்.—யெகோவாவே, ௱௫௯
உம்முடைய விதிப்பிரமாணங்களை நான் இவ்வ
ளவுவிரும்புகிறேனென்றுநினைந்தருளும்: உமது
தயையின்படி என்னை உயிர்ப்பித்தருளும்.—ஆதி ௱௬௰
தொடங்கி உமது வாக்குச் சத்தியமாயிருக்கின்ற
து: உம்முடைய நீதியின் நியாயத்தீர்ப்புக்களெல்
லாம் சதாகாலமும்நிலைநிற்கும்.

ש ஷீன்.

பிரபுகள் காரணமின்றி என்னைத்துயரப்படுத் ௱௬௧
துகிறார்கள்: ஆனாலும் என் இருதயம் உமதுவாக்
குக்குப் பயப்படுகின்றது.—மிகுந்தகொள்ளைப் ௱௬௨
பொருளைக் கண்டுபிடிக்கிறவனைப்போல் உமது
வாக்கினால் நான் மகிழுகிறேன்.—நான் பொய் ௱௬௩

(௱௨௫) சங்.௱௰௬.௰௬. (௱௨௭) சங்.௰௯.௰. நீதி.௮.௰௧. (௱௩௰) சங்.௰௯.௭. நீதி.௧.௪. (௱௩௨) ௨.தெச.௧.௬,௭. (௱௩௩) சங்.௰௯.௰௩. ரோ.௬.௰௨. (௱௩௪) லூக்.௧.௭௪. (௱௩௬) எரே.௰௪.௰௭. (௱௩௭) எஸ்றா.௯.௰௫. நிகி.௯.௩௩. எரே.௰௨.௧. தானி.௯.௭. (௱௩௯) யோவா.௨.௰௭. (௱௪௰) நீதி.௩௰.௫. (௱௪௨) சங்.௰௯.௯. யோவா.௰௭.௰௭. (௱௪௭) சங்.௫.௩. (௱௪௮) சங்.௬௩.௧,௫. (௱௫௧) சங்.௱௪௫.௰௮. (௱௫௨) லூக்.௨௧.௩௩. (௱௫௩) புல.௫.௧. (௱௫௪) ௧.சாமு.௨௪.௰௫. மீகா.௭.௯. (௱௫௫) யோபு.௫.௪. (௱௫௭) சங்.௪௪.௰௯. (௱௫௮) எசேக்.௯.௪. (௱௬௧) ௧.சாமு.௨௪.௰௧;௰௪.

யைவெறுத்து, அரோசித்து, உமது வேதத்திற் பி
௱௬௪ ரியப்படுகிறேன்.—உம்முடைய நீதியான நியா
யத்தீர்ப்புக்கள் நிமித்தம்ஒருநாளில்ஏழுதரம் உம்
௱௬௫ மைவாழ்த்துகிறேன்.—உமது வேதத்திற் பிரியப்
படுகிறவர்கள் மிகுந்த சமாதானத்தைப் பெறுகி
௱௬௬ றார்கள்: அவர்கள் தவறுகிறதில்லை.—யெகோ
வாவே, உமது இரட்சிப்புக்குக் காத்திருக்கி
றேன், உம்முடைய கட்டளைகளின்படி நடக்கி
௱௬௭ றேன்.—என் ஆத்துமம் உமது சாட்சிப் பிரமா
ணங்களைக் காத்துக்கொள்ளுகின்றது; அவைக
௱௬௮ ளில் மிகவும் பிரியப்படுகிறேன்.—உமதுபோத
கங்களையும் உமது சாட்சிப் பிரமாணங்களையுங்
காத்துக்கொள்ளுகிறேன்: என் வழிகளெல்லாம்
உம்முடைய பார்வைக்குமுன்னிருக்கின்றன.

ת தௌ.

௱௬௯ யெகோவாவே, என்னுடைய விண்ணப்
பம் உமது சந்நிதியில் வருவதாக:உமது வாக்கின்
௱௭௰ படி எனக்குஞானத்தைத்தந்தருளும்.—என் விண்
ணப்பம் உமது சந்நிதியில் வருவதாக:உமதுவாக்
௱௭௧ கின்படி என்னை இரட்சித்தருளும்.—நீர் உம்மு
டையவிதிகளைப் போதிக்கும்பொழுது என் உத
௱௭௨ டுகள் உம்மை வாழ்த்தும்.—உமது கட்டளைக
ளெல்லாம்நீதியுள்ளவைகளாயிருப்பதினால்,என்
நாவு உமது வாக்கைப் பிரஸ்தாபப்படுத்தும்.—
௱௭௩ நான் உமது விதிப் பிரமாணங்களைத் தெரிந்து
கொண்டபடியினால், உமதுகரம்எனக்குத்துணை
௱௭௪ யாயிருப்பதாக.—யெகோவாவே, நீர் செய்
யும் இரட்சிப்பின்மேல் ஆவலாயிருக்கிறேன்;
௱௭௫ உமது வேதம் என்மகிழ்ச்சி.—என் ஆத்துமத்தை
உயிர்ப்பித்தருளும்,அதுஉம்மைத்துதிக்கும்; உம்
முடைய நியாயத்தீர்ப்புக்கள் எனக்குத் துணை
௱௭௬ யாயிருக்கக்கடவன.—காணாத ஆட்டைப்போல்
நான் கலைந்துபோனேன்; அடியேனைத் தேடிக்
கொள்ளும்; நான் உம்முடைய கட்டளைகளை ம
றக்கமாட்டேன்.

## ௱௨௰. சங்கீதம்.

நிந்தனைப்படுங் காலத்தில் மனஞ் சிந்தனை பண்
ணல்.

சோபான சங்கீதம்.

எனக்குநேரிட்டஆபத்தில்யெகோவாவை
நோக்கி ஓலமிட்டேன், அவர் என் வாக்கைக்
௨ கேட்டருளினார்.—யெகோவாவே, பொய்
யருடைய உதடுகளுக்கும், கபடநாவுக்கும் என்
௩ பிராணனைவிலக்கியருளும்.—ஓ, கபடநாவே, உ
னக்கென்ன கொடுக்கப்படும், உனக்கென்ன
௪ செய்யப்படும்.—ரிதாமீம் மரத்தணல்களினாற்கூர்
மையாக்கப்பட்ட பலவானுடைய அம்புகள் கி
௫ டைக்கும்.-ஐயோ, நான் மேஷெக்கிலேவாசமா
யிருக்கிறேன்,கேதாரின்கூடாரங்களில் தங்குகி
றேன்.—சமாதானத்தைவெறுக்கிறவனுடன் என் ௬
ஆத்துமம்நெடுங்காலம்வாசம்பண்ணிற்று.—நான் ௭
சமாதானமுள்ளவன்: ஆனாலும் நான்பேசுகை
யில் அவர்கள் யுத்தஞ்செய்யப்பார்க்கிறார்கள்.

## ௱௨௰௧. சங்கீதம்.

அடைக்கலம்புகுந்தவர்களை யெகோவா இர
ட்சைசெய்தல்.

சோபானசங்கீதம்.

எனக்குச்சகாயந்தோன்றும் மலைகளின்மேல் எ ௧
ன்கண்களைஏறிடுவேன்.-வானத்தையும் பூமியை ௨
யுமுண்டாக்கின யெகோவாவினின்று எ
னக்குச்சகாயம்வரும்.—அவர் உன்கால் அசை ௩
யவிடார்: உன்னைக்காக்கிறவர் தூங்கார்.-கேள், ௪
இஸ்ரவேலைக் காப்பவருக்குத் தூக்கமுமில்லை,
நித்திரையுமில்லை.—யெகோவாவே உன் இ ௫
ரட்சகர்; உன் வலப்பக்கத்தில் உன் நிழல்.—
பகலில்சூரியனும், இரவில்சந்திரனும் உன்னைச் ௬
சேதப்படுத்தமாட்டார்கள்.—யெகோவா உன் ௭
னை எல்லாத் தீங்குக்கும்விலக்கிக்காப்பார்:அவர்
உன்பிராணனை இரட்சிப்பார்.—யெகோவா ௮
இன்றுமுதல் என்றும் உன்போக்கையும் உன்
வரவையுங்காப்பார்.

## ௱௨௰௨. சங்கீதம்.

தாவீது சபையை நினைந்து மகிழ்ந்து, அதின் சமா
தானத்திற்குப் பிரார்த்தித்தல்.

தாவீதுசெய்தசோபானசங்கீதம்.

நாம் யெகோவாவின் ஆலயத்துக்குப்போ ௧
வோம் வாருங்களென்று, அவர்கள் என்னுடன்
சொன்னபொழுது நான்சந்தோஷப்பட்டேன்.-
யெருஷலேமே, உன் வாசல்களில் எங்கள்கால் ௨
நிற்கும்.—யெருஷலேம் இசையக்கட்டப்பட்ட ௩
நகரமாயிருக்கின்றது.—அங்கே யெகோவா ௪
வின் வமிசத்தாராகிய கோத்திரத்தார், இஸ்ரவே
லின்சாட்சியாகயெகோவாவின் நாமத்தைக்
கீர்த்தனம்பண்ணும்படி ஏறிப்போகிறார்கள்.—
அங்கேதாவீதின் வமிசத்தாருடையசிங்காசனங் ௫
கள், நியாயாசனங்களாக ஸ்தாபிக்கப்பட்டிருக்
கின்றன.—யெருஷலேமின் சமாதானத்தினிமித் ௬
தம் பிரார்த்தனைபண்ணுங்கள்: உன்னில் அன்பு
வைத்திருப்பவர்கள் வாழ்வடைவார்கள்.—உன் ௭
மதில்களுக்குள்ளே சமாதானமும்,உன்அரமனை
களுக்குள்ளே சௌக்கியமுமிருக்கக்கடவன.—
என்சகோதரர் நிமித்தமும், என் தோழர் நிமித்த ௮
மும், இப்பொழுது உன்னிலே சமாதானமிருக்
கக்கடவதென்று சொல்லுவேன்.—நம்முடைய ௯
தேவனாகியயெகோவாவின் ஆலயத்தினி
மித்தம் உனக்கு நன்மையுண்டாகத் தேடுவேன்.

(௱௬௫) நீதி.௩.௨. ஏசா.௩௨.௰௭. (௱௬௬) ஆதி.௪௯.௰௮. (௱௬௮) நீதி.௫.௨௧. யோசு.௨௪.௨௨. நீதி.௧.௨௯. லூக்.௰.௪௨. (௱௭௬) ஏசா.௫௩.௬. லூக்.௰௫.௪,. ௧.பேதுரு.௨.௨௫.—(௱௨௰. சங். ௧.) யோனா.௨.௨. (௫) ஆதி.௰.௨. எசேக்.௨௭.௰௩. ஆதி.௨௫.௰௩. ௧.சாமு.௨௫.௧. எரே.௪௯.௨௮,௨௯.—(௱௨௰௧. சங். ௩.) ௧.சாமு.௨.௯. நீதி.௩.௨௩,௨௬. ஏசா.௨௭.௩.(௫)ஏசா.௨௫.௪. (௬) சங்.௯௧.௫. ஏசா.௪௯.௰. வெளி.௭.௰௬. (௮) உபா.௨௮.௬. நீதி.௨.௮. நீதி.௩.௬.—(௱௨௰௨. சங். ௧.) ஏசா.௨.௩. சக.௮.௨௧. (௩) ௨.சாமு.௫.௯. (௪) யாத்.௨௩.௰௭. உபா.௰௬.௰௬. யாத்.௰௬.௩௪. (௫) உபா.௰௭.௮. ௨.கொரி.௰௯.௮. (௬) சங்.௫௧.௰௮.(௯) நிகி.௨.௰.

## ௱௨௩. சங்கீதம்.

தேவபத்தர் தேவனைத் தஞ்சமெனக்கொள்ளல்.

சோபானசங்கீதம்.

பரமண்டலங்களில் வாசமாயிருப்பவரே, உம்
௨ மிடத்தில்என்கண்களைஏறிடுகிறேன்.-பாரும், ப
ணிவிடைக்காரருடைய கண்கள் அவர்கள் எச
மானரின் கைகளின்மேலும், பணிவிடைக்காரி
யின்கண்கள் அவளுடைய எசமானியின் கை
யின்மேலும் இருப்பதுபோல,எங்கள் தேவனா
கிய யெகோவா எங்களுக்குத் தயைசெய்
யும்வரைக்கும் அவர்மேல் எங்கள் கண்களிருக்
௩ கின்றன.—யெகோவாவே, நாங்கள் நிந்
தனையினால் மிகவும் நிறைந்திருக்கிறபடியால் எ
ங்கள்மேல் இரங்கும், எங்கள்மேல் இரங்கும்.—
௪ சௌக்கியமுள்ளவர்களா யிருப்பவர்களுடைய
நிந்தனையினாலும் அகங்காரிகளுடைய நிந்தனை
யினாலும் எங்கள் ஆத்துமம்மிகவும் நிறைந்திருக்
கின்றது.

## ௱௨௪. சங்கீதம்.

இரட்சையினிமித்தம் யெகோவாவைத்துதி
த்தல்.

தாவீது செய்த சோபான சங்கீதம்.

மனுஷர் நமக்கு விரோதமாய்எழும்பினபொழு
து யெகோவா நமதுபக்கத்திலிராவிட்டால்,-
௨,௩யெகோவா நம்முடனிராவிட்டால்,—அவர்
கள் குரோதம் நம்மேல்மூள நம்மை உயிருடன்
விழுங்கி விடுவார்களென்று, இஸரவேலர் இப்
௪ பொழுது சொல்லலாம்.—நீர்கள் நம்மேற்புரளும்,
நீரோடை நம்முடையபிராணன்மேற்பாயும்.—
௫ கொந்தளிக்கிற நீர்கள் எங்கள்ஆத்துமத்தின்மேற்
௬ பாயும்.—நம்மை அவர்கள் பற்களுக்கு இரையா
க ஒப்புக்கொடாதிருக்கிற யெகோவா வாழ்
௭ த்தப்படுவாராக.—நம்முடையபிராணன் வேடரு
டைய கண்ணிக்குத்தப்பின குருவியைப்போ
லத்தப்பிற்று: கண்ணிதெறித்தது, நாம்தப்பினோ
௮ ம்.—வானத்தையும் பூமியையுஞ் சிருட்டித்த யெ
கோவாவின் நாமத்தில் நமக்குத்துணையுண்டு.

## ௱௨௫. சங்கீதம்.

யெகோவாவிடத்தில் அடைக்கலம் புகுந்த
வர்கள் பெறும் வாழ்வு.

சோபான சங்கீதம்.

யெகோவாவை நம்புகிறவர்கள் அசையா
மல் என்றும்நிலைநிற்கிறசீயோன்மலைக்கொப்பா
௨ யிருப்பார்கள்.—மலைகள் யெருஷலேமைச்சூழ்ந்
திருக்கிறதுபோல, இன்றுமுதல் என்றும் யெ
கோவா தம்முடைய சனங்களைச் சூழ்ந்திருப்
௩ பார்.—நீதிமான்கள் அநியாயஞ்செய்வதற்குக்கை
யிடாதபடி, துன்மார்க்கருடையகோல் நீதிமான்
௪ களுடைய சுதந்தரத்தில்நிலைத்திராது.-யெகோ
வாவே, நல்லவர்களுக்கும் மனநேர்மையுள்ள
வர்களுக்கும் நன்மைசெய்தருளும்.—யெகோ ௫
வா தங்கள் கோணலானவழியில் சாய்கிறவர்க
ளைத்துன்மார்க்கருடன்கொண்டுபோய்விடுவார்:
இஸரவேலுக்கோ சமாதானமுண்டாகும்.

## ௱௨௬. சங்கீதம்.

பாபேலினின்று விடுதலைபெற்றதினிமித்தம் யெ
கோவாவைத் துதித்தல்.

சோபான சங்கீதம்.

யெகோவா சீயோனைச்சிறையினின்றுமீட் ௧
டபின்பு நாம் சொப்பனங் கண்டவர்கள்போ
லிருந்தோம்.—அப்பொழுது நம்முடையவாய் ந ௨
கைப்பினாலும், நம்முடைய நாவு ஆனந்தமுழக்
கத்தினாலும் நிறைந்திருந்தன: யெகோவா இ
வர்கள் நிமித்தம் பெரியகாரியங்களைச் செய்
தாரென்று புறத்தேசத்தாருக்குள்ளே சொல்லியி
ருந்தார்கள்.—யெகோவா எங்கள் நிமித்தம் ௩
பெரியகாரியங்களைச்செய்ததுமெய்;நாம் மகிழ்ந்
திருக்கிறோம்.-யெகோவாவே, தெற்கின்சிற் ௪
றாறுகளைப்போல எங்களுடைய அடிமைத்தனத்
தை நீக்கிவிடும்.—கண்ணீரோடே விதைக்கிற ௫
வர்கள் ஆரவாரத்தோடே அரிவார்கள்.—விதை ௬
க்கூடையை எடுத்து அழுது புறப்படுகிறவன்,
அரிக்கட்டுகளைச்சுமந்து ஆரவாரத்தோடேதிரும்
பிவருவானே.

## ௱௨௭. சங்கீதம்.

தேவனுடைய தயை யெல்லாமேன்மைகளுக்
கும் நன்மைகளுக்குங்காரணமெனக்காட்டல்.

சலோமோனின் சோபான சங்கீதம்.

யெகோவாவீட்டைக்கட்டாவிட்டால்கட் ௧
டுகிறவர்களுடைய பிரயாசம்விருதா: யெகோ
வா நகரத்தைக் காவல்பண்ணாவிட்டால்காவலா
ளர் விழித்திருப்பதுவீண்.—நீங்கள் அதிகாலையில் ௨
எழுந்து, படுக்கத்தாமதித்து, மனக்கவலையுடன்
போசனம்பண்ணுவது விருதா: அவரேதமக்குப்
பிரியமானவனுக்கு நித்திரை அளிப்பார்.—பாரு ௩
ங்கள், பிள்ளைகள் யெகோவாவினாலுண்
டான சுதந்தரம், கருப்பத்தின்கனி அவராலுண்
டாகிறபலன்.—வாலிப பிராயத்தில்பெற்ற புத்தி ௪
ரர் பலவான் கையிலுள்ள அம்புகளுக்கொப்பா
யிருக்கிறார்கள்.—அவைகளால் நிறைந்த அம்பு ௫
றாத்தூணியுள்ளவன் வாழ்வுடையவன், அவர்கள்
வெட்கமில்லாமல் வாசலில்நின்று சத்துருக்களு
டனே பேசுவார்கள்.

## ௱௨௮. சங்கீதம்.

யெகோவாவிடத்தில் அடைக்கலம்புகுந்தவர்
களின் சௌக்கியத்தை வருணித்தல்.

சோபானசங்கீதம்.

யெகோவாவுக்குப்பயந்து அவருடையவ ௧
ழிகளில் நடக்கிறவன்எவனோ, அவன் வாழ்வு

(௱௨௪. சங். ௩.) நீதி.௧.௰௨. (௭) சங்.௯௧.௩. நீதி.௬.௫. (௮) ஆதி.௧.௧.—(௱௨௫. சங். ௩.) நீதி.௨௨.௮. எசா.௰௪.௫. (௫) நீதி.௨.௰௫. கலா.௬.௰௬.—(௱௨௬. சங். ௧.) ஓசி.௬.௰௧. யோவே.௩.௧. அப்.௰௨.௯. (௨) யோபு.௮.௨௧. (௫) எரே.௩௧.௯,.—(௱௨௭. சங். ௨.) ஆதி.௩.௰௭,௰௯. (௩) ஆதி.௩௩.௫. யோசு.௨௪.௩,௪. உபா.௨௮.௪. (௫) யோபு.௫.௪. நீதி.௨௭.௰௧.—(௱௨௮. சங்.)

௨ டையவன்.—நீ உன் கைப்பிரயாசத்தின்பலனை
அனுபவிப்பாய்:நீவாழ்வடைவாய், உனக்குநன்
௩ மை உண்டாகும்.—உன்மனைவி, வீட்டோரங்க
ளில்காய்க்குந் திராட்சக்கொடிக்கு ஒப்பாவாள்:
உன்பிள்ளைகள் உன் போசனபீடத்தைச்சுற்றிச்
௪ சிதமரக்கன்றுகள்போலிருக்கும்.-பார்,யெகோ
வாவுக்குப்பயப்படுகிறமனுஷன் இப்படியே
௫ ஆசீர்வதிக்கப்படுவான்.-யெகோவாசீயோனி
லின்றுஉன்னைஆசீர்வதிப்பார்: நீ உன்ஆயுள்பரி
யந்தம் யெருஷலேமின் நன்மையைக்காண்பா
௬ ய்.—நீஉன்பிள்ளைகளின்சந்ததியையும், இஸரவே
லுக்குண்டாகுஞ் சமாதானத்தையுங்காண்பாய்.

## ௱௨௯. சங்கீதம்.

உபத்திரவப்படுகிறவர்களைக் குறித்துப் புலம்பிப்
பிரார்த்தித்தல்.

சோபான சங்கீதம்.

என் சிறுவயதுதொடங்கிப் பலமுறை அவர்கள்
௨ என்னைத்துயரப்படுத்தினார்கள்.—என் சிறுவயது
தொடங்கிப் பலமுறை என்னைத்துயரப்படுத்தி
யும், என்னைமேற்கொள்ளவில்லையென்று இஸர
௩ வேல் இப்பொழுது சொல்லலாம்.—உழுகிறவர்
கள் என்முதுகின்மேல்உழுது தங்கள்படைச்சா
௪ ல்களை நீளமாக்கினார்கள்.—யெகோவா நீதி
யுள்ளவர்: அவர் துன்மார்க்கருடையகயிறுகளை
௫ அறுத்தார்.—சீயோனைவெறுக்கும்யாவரும் வெட்
௬ கமடைந்து பின்னிட்டு விலகுவார்கள்.—வளரு
முன் காய்ந்துபோகிறவீட்டின்மேலுள்ளபுல்லுக்
௭ கொப்பாவார்களாக.—அதினால் அறுக்கிறவன்
தன்கையையும்,அரிகளைக்கட்டுகிறவன் தன்மடி
௮ யையும் நிரப்பமுடியாது.—வழிப்போக்கர், யெ
கோவாவின் ஆசீர்வாதம் உங்களுக்குண்டா
வதாகவென்றும், யெகோவாவின் நாமத்தி
னால் உங்களை ஆசீர்வதிக்கிறோமென்றுஞ்சொல்
லமாட்டார்கள்.

## ௱௩௰. சங்கீதம்.

யெகோவாவை எதிர்பார்த்தல்.

சோபான சங்கீதம்.

யெகோவாவே, நான் ஆழங்களினின்று
௨ உம்மைநோக்கிஓலமிட்டேன்.-ஆண்டவரே,
என்சத்தத்தைக்கேளும்: என்விண்ணப்ப சத்தம்
௩ உமதுசெவியிலேறவிடும்.—ஆண்டவராகிய
யெகோவாவே, நீர் அக்கிரமத்தை உற்றுப்
௪ பார்த்தால் ஆர் நிற்கக்கூடும்.—உமக்குப்பயப்ப
௫ டும்படிக்கு உம்மிடத்தில்மன்னிப்புண்டு.—நான்
யெகோவாவைக்காத்திருக்கிறேன்,என் ஆத்
துமம் காத்திருக்கின்றது, அவருடைய வாக்கில்
௬ நம்பிக்கைவைக்கிறேன்.-விடியற்காலத்தைஎதிர்
பார்க்கிறவர்கள் விடியற்காலத்தை அபேட்சிப்ப
திலும், என் ஆத்துமம் ஆண்டவரை அபேட்
சிக்கின்றது.—யெகோவாவிடத்தில் தயை ௭
யும்பூரணமீட்புமிருக்கிறபடியினால்,இஸரவேல்
அவரை நம்புவானாக.—அவர் இஸரவேலைஅவன் ௮
சகல பாவங்களினின்று மீட்டுக்கொள்வார்.

## ௱௩௧. சங்கீதம்.

மனத்தாழ்மையைவருணித்தல்.

தாவீது செய்த சோபான சங்கீதம்.

யெகோவாவே, என் இருதயம் அகங்கார ௧
முள்ளதல்ல, என்பார்வை மேட்டிமையுள்ளதல்
ல: பெருங்காரியங்களையும் எனக்கெட்டாதவை
களையும்செய்ய நான் துணிகிறதுமில்லை.—தா ௨
யின்முலைமறந்த குழந்தையைப்போல், நான் சா
ந்தமாய் அமைந்து நடந்தேனே: என் ஆத்துமம்
முலைமறந்த குழந்தைக்கொப்பாயிருக்கின்றது.—
இஸரவேல்,இன்றுமுதல்என்றும்யெகோவா ௩
வை நம்பிக்கொள்ளக்கடவன்.

## ௱௩௨. சங்கீதம்.

௧. யெகோவாவைச்சேவிக்கத்தாவீதுமுயன்
று பிரார்த்தித்தல்: ௰௧. தேவன் அவனுக்கு
வாக்குத்தத்தஞ் செய்தல்.

சோபான சங்கீதம்.

யெகோவாவே, தாவீதையும்அவனுக்குண் ௧
டான சகலகிலேசங்களையும் நினைந்தருளும்.—
யெகோவாவுக்கு ஒருஸ்தானத்தையும்,யாக் ௨
கோபின் பராக்கிரமதேவனுக்கு ஒருவாசஸ்
தலத்தையுங் கண்டடையும் வரைக்கும்,—என் ௩
வீடாகிய கூடாரத்தில் பிரவேசியாமலும், என்
மஞ்சத்தின்மேல் ஏறாமலும்,—என் கண்ணுக்கு ௪
நித்திரையும்,என் இமைக்குஉறக்கமும்வரவிடா
மலுமிருப்பேனென்று,—யாக்கோபின் பராக்கிர ௫
மதேவனாகியயெகோவாவுக்குச்சங்கற்
பஞ்செய்து ஆணையிட்டான்.—பாருங்கள், எப் ௬
பிறாத்தாவில் அதின் சமாசாரத்தைக்கேட்டு, யா
ரின் வெளியில் அதைக்கண்டோம்.—நாம் அவ ௭
ருடைய ஆவாசங்களிற்போவோம்: நாம் அவ
ருடைய பாதபீடத்தில் நமஸ்காரம் பண்ணு
வோம்.—யெகோவாவே,நீர் உமது பராக்கிர ௮
மம் விளங்கும் பெட்டியுடன் உமது இளைப்பா
றும் ஸ்தானத்தில் எழுந்தருளும்.—உம்முடையஆ ௯
சாரியர்கள்நீதியென்னும்வஸ்திரந்தரிப்பார்களா
க;உமக்குப்பத்தியுள்ளவர்கள் ஆனந்தமுழக்கமி
டுவார்களாக.—உமது தாசனாகிய தாவீதினிமித் ௰
தம், உம்மால் அபிஷேகம்பெற்றவனிடத்தில் ப
ராமுகமாகாதிரும்.-யெகோவா தாவீதினிடத் ௰௧
தில், உன் உதரத்திற் பிறந்தவனை உன் சிங்காச
னத்தின்மேல் ஏற்படுத்துவேன்:—மேலும் உன் ௰௨

(௨) ஏசா.௩௰. (௩) எசேக்.௰௯.௰. (௬) ஆதி.௫௰.௨௩. யோபு.௪௨.௰௬.—(௱௨௯. சங். ௧.) எசேக்.௨௩.௩. ஓசி.௨.௰௫. (௮) ரூத்.௨.௪.—(௱௩௰. சங். ௧.) புல.௩.௫௫. யோனா.௨.௨. (௪) யாத்.௩௪.௭. ௧.இரா.௮.௪௰. எரே.௩௩.௮,௯. (௫) ஏசா.௮.௰௭. (௭) ஏசா.௫௫.௭. (௮) சங்.௱௩௩,௪. மத்.௧.௨௧.—(௱௩௧. சங். ௧.) ரோ.௰௨.௰௬. யோபு.௪௨.௩. (௨) மத்.௰௮.௩. ௧.கொரி.௰௪.௨௰.—(௱௩௨. சங். ௨.) அப்.௭.௪௬. (௪) நீதி.௬.௪. (௫) ஆதி.௪௯.௨௪. (௬) ௧.சாமு.௰௭.௰௨. ௧.நாளா.௰௩.௫. ௧.சாமு.௭.௧. (௮) எண்.௰.௩௫. ௨.நாளா.௬.௪௧,௪௨. (௯) யோபு.௨௯.௰௪. ஏசா.௬௧.௰. (௰௨) ௨.சாமு.௭.௰௧. ௧.இரா.௮.௨௫. ௨.நாளா.௬.௰௬. லூக்.௧.௭௧. அப்.௨.௩௰.

சந்ததியார் என் உடன்படிக்கையையும், நான்
போதிக்கும் என்பிரமாணங்களையுங்கைக்கொள்
வார்களாகில், அவர்கள் சந்ததியாரும் சதாகால
மும் உன் சிங்காசனத்தில் வீற்றிருப்பார்களென்
௰௩ று மெய்யாணையிட்டார்; அவர் தவருர்.—யெ
கோவா, சீயோனைத்தெரிந்துகொண்டு அதைத்
௰௪ தமக்கு வாசஸ்தானமாக்க விரும்புகிருர்.—சதா
காலமும்இதுஎன்னிளைப்பாறும் ஸ்தானம்: இதை
நான் விரும்பினபடியினுல் இங்கே வாசம் பண்
௰௫ ணுவேன்.—அதிலுள்ள உணவுப்பொருளை மிக
வும் ஆசீர்வதிப்பேன்: அதின் தரித்திரரை ஆகா
௰௬ ரத்தினுல் திருத்திப்படுத்துவேன்.—அதின் ஆசா
ரியர்களுக்கு இரட்சிப்பென்னும் வஸ்திரத்தைத்
தரிப்பேன்: அதிலிருக்கும்பத்தியுள்ளவர்கள் மி
௰௭ குந்த ஆனந்தமுழக்கமிடுவார்கள்.—அங்கேதாவீ
துக்கு ஒரு கொம்பை முளைக்கப்பண்ணுவேன்:
நான் என்னுல் அபிஷேகம்பெற்றவனுக்கு ஒரு
௰௮ விளக்கை ஏற்படுத்தினேன்.—அவன் சத்துருக்க
ளுக்கு இலச்சையென்னும் வஸ்திரத்தைத் தரிப்
பேன்: அவன்கிரீடம் அவன் மேற்சிறக்கும்.

## ௱௩௩. சங்கீதம்.

பரிசுத்தவான்களின் ஐக்கத்தின் மேன்மையைக்
காட்டல்.

தாவீதுசெய்த சோபான சங்கீதம்.

பாருங்கள், சகோதரர் ஐக்கத்துடன்வாசம்பண்
ணுவது, எவ்வளவு உத்தமமும் இன்பமுமாயிரு
௨ க்கின்றது.—அது, ஆரோனின் சிரசின்மேலூற்
றப்பட்டு, அவனுடைய தாடியில் வடிந்து, அங்
கிகளின்மேல் விழுகிற சுகந்ததைலத்தைப்போ
௩ லவும்,-எர்மோனின்மேலும் சீயோன்மலைகளின்
மேலும் பெய்த பனியைப்போலவும் இருக்கின்
றது: அதில் யெகோவா நித்திய சீவனுகிய
ஆசீர்வாதத்தைக் கட்டளையிட்டார்.

## ௱௩௪. சங்கீதம்.

யெகோவாவைத் துதிக்கும்படி ஏவல்.

சோபான சங்கீதம்.

கேளுங்கள், இராத்திரிகாலத்தில் யெகோ
வாவின் ஆலயத்தில் நிற்கும் யெகோவாவி
ன் பணிவிடைக்காரரே, நீங்களெல்லாரும் யெ
௨ கோவாவை வாழ்த்துங்கள்.—பரிசுத்த ஸ்தா
னத்தில் உங்கள்கைகளை உயர்த்தி, யெகோ
௩ வாவை வாழ்த்துங்கள்.—வானத்தையும் பூமி
யையுஞ் சிருட்டித்த யெகோவா சீயோனி
னின்று உன்னை ஆசீர்வதிப்பாராக.

## ௱௩௫. சங்கீதம்.

தயையினிமித்தம் தேவனைத் துதித்தல்: விக்கி
ரகங்கள் மாயையெனக்காட்டல்.

யெகோவாவை வாழ்த்துங்கள். யெகோ
வாவின் நாமத்தை வாழ்த்துங்கள்; யெகோ
வாவின் தாசரே, நீங்கள் அவரை வாழ்த்துங்
கள்.—யெகோவாவின் ஆலயத்திலும் நமது ௨
தேவனுடைய ஆலயப்பிராகாரங்களிலும்நிற்
கிறவர்களே, யெகோவாவை வாழ்த்துங்
கள்.—யெகோவா நல்லவர்; அவர்நாமத்தின் ௩
மேல்துதிபாடுங்கள்; அதுவேயின்பம்.-யெகோ ௪
வா தமக்காக யாக்கோபையும், தமக்கு ஒரு
விசேஷப்பொருளாக இஸரவேலையுந் தெரிந்
து கொண்டார்.—யெகோவா பெரியவர், ௫
நம்முடைய ஆண்டவர் சகலதேவர்களிலும்
மேலானவர், இதை அறிந்து கொண்டேன்.—
வானத்திலும், பூமியிலும், சமுத்திரங்களிலும், ௬
சகல பாதலங்களிலும் யெகோவா தமக்கிஷ்
டமானவைகளைச் செய்கிருர்.—பூமியின் எல் ௭
லையினின்று மேகங்களை எழும்பப்பண்ணி, ம
ழையுடனே மின்னலையும் உண்டாக்கி, தமது
பண்டசாலைகளினின்று காற்றுப் புறப்படப்
பண்ணுகிருர்.—அவர், எகிப்திலே மனுஷருடை ௮
ய தலைப்பிள்ளைகளையும் மிருகத்தின் தலையீற்றுக்
களையும் அடித்தார்.—எகிப்தே, யெகோவா ௯
உன் மத்தியில் பார்வோன் மேலும், அவனுடை
ய பணிவிடைக்காரர் யாவர்மேலும் அடையா
ளங்களையும் அற்புதங்களையும் அனுப்பினுர்.-அ ௰
வர் பெரியசாதியாரை அடித்து,—எமோரியரு ௰௧
டைய இராசனுகிய சீகோன், பாஷானுடைய
இராசனுகிய ஓகு என்னும் பராக்கிரம இராசாக்
களையும், கானுனிய இராச்சியத்தார் சமஸ்தரை
யும் அழித்துவிட்டார்.—அவர்களுடைய தேசத் ௰௨
தைத் தம்முடைய சனங்களாகிய இஸரவேலருக்
குச் சுதந்தரமாக அளித்தார்.-யெகோவாவே, ௰௩
உமது நாமம் நித்தியம்; யெகோவாவே, உம்
மைப் பற்றும்நினைவு தலைமுறை தலைமுறைதோ
றுமுள்ளது.—யெகோவா தமது சனங்களை நி ௰௪
யாயம்விசாரிப்பார், தமதுதாசர்மேலிரங்குவார்.-
அந்நியதேசத்தாருடைய பொன் வெள்ளிகளினு ௰௫
லாகிய விக்கிரகங்கள் மனுஷருடைய கைக்கிரி
யை.—அவைகளுக்குவாயிருந்தும்பேசவில்லை; ௰௬
கண்களிருந்துங் காணவில்லை.-காதுகளிருந்துங் ௰௭
கேட்கவில்லை; அவைகளின் வாயிற் சுவாசமில்
லை.—அவைகளை உண்டாக்குகிறவர்களும், அ ௰௮
வைகளை நம்புகிறவர்கள் யாவரும் அவைகளுக்
கொப்பாயிருக்கிருர்கள்.-இஸரவேலின் குடும்ப ௰௯
த்தாரே, யெகோவாவை வாழ்த்துங்கள்: ஆ
ரோனின் குடும்பத்தாரே, யெகோவாவை
வாழ்த்துங்கள்.—லேவியின்குடும்பத்தாரே, யெ ௨௰
கோவாவை வாழ்த்துங்கள்: யெகோவா
வுக்குப் பயப்படுகிறவர்களே, யெகோவா
வைவாழ்த்துங்கள்.-யெருஷலேமில்வாசம்பண் ௨௰௧
ணுகிற யெகோவா சீயோனினின்றுவாழ்த்த
ப்படுவாராக. யெகோவாவைவாழ்த்துங்கள்.

---

(௰௬) ௨.நாளா.௬.௪௧. ஓசி.௰௧.௰௨ (௰௭) எசேக்.௨௯.௨௧. லூக்.௧.௭௧. ௧.இரா.௰௧.௩௬. ௨.நாளா.௨௧.௭.—(௱௩௩. சங். ௧.) ஆதி.௰௩.௮. எபி.௰௩.௧. (௨) யாத்.௩௰.௨௫,௩௰. (௩)உபா.௪.௪௭. லேவி.௨௫.௨௧. உபா.௨௮.௮.—(௱௩௪. சங். ௧.) ௧.நாளா.௯.௩௩. (௨) ௧.தீமோ.௨.௮.—(௱௩௫. சங். ௨.) லூக்.௨.௩௭. (௪) யாத்.௰௯.௫. உபா.௭.௬,௭. (௭) எரே.௰.௰௩. யோபு.௨௮.௨௫,௨௬. ௪௧.௰.௰௧. யோபு.௩௮.௨௨. (௮) யாத்.௰௨.௰௨,௨௯.(௯)யாத்.௭. யாத்.௰௪. (௰) எண்.௨௧.௨௪,௨௫. (௰௧) யோசு.௰௨.௭. (௰௩) யாத்.௩.௰௫. (௰௪) உபா.௩௨.௩௬.

## ௱௩௬. சங்கீதம்.

தேவன் பூருவகாலத்தில் செய்த அருளினிமித்
தம் அவரைத்துதித்தல்.

யெகோவாதயாபரர்,அவருடையதயையென்
௨ றுமுள்ளது: ஆதலால் அவ்வரைத்துதியுங்கள்.—தே
வாதிதேவனுடையதயையென்றுமுள்ளது:ஆ
௩ தலால் அவரைத்துதியுங்கள்.—கர்த்தாதிகர்த்த
ருடையதயையென்றுமுள்ளது:ஆதலால்அவரை
௪ த்துதியுங்கள்.-தாமேஆச்சரியமானகிரியைகளைச்
செய்பவருடையதயையென்றுமுள்ளது: ஆதலா
௫ ல் அவரைத்துதியுங்கள்.—ஞானத்தினால்வா
னங்களைஉண்டாக்கினவருடையதயையென்றுமு
ள்ளது: ஆதலால் அவரைத்துதியுங்கள்.—
௬ நீர்களுக்குமேலே பூமியைப்பரப்பினவருடைய
தயையென்றுமுள்ளது: ஆதலால் அவரைத்து
௭ தியுங்கள்:—பெரியசுடர்களைஉண்டாக்கினவ
ருடையதயை என்றுமுள்ளது: ஆதலால் அவ
௮ ரைத்துதியுங்கள்:—பகலையாளும்படி சூரிய
னைஉண்டாக்கினவருடைய தயை என்றுமுள்ள
௯ து: ஆதலால் அவ்வரைத்துதியுங்கள்.—இர
வைஆளும்படிசந்திரனையும் நட்சத்திரங்களையும்
உண்டாக்கினவருடைய தயை என்றுமுள்ளது:
௰ ஆதலால் அவரைத்துதியுங்கள்.—எகிப்தி
யரை,அவர்கள்தலைப்பிள்ளைகளை நீக்கி, அடித்த
வருடையதயையென்றுமுள்ளது:ஆதலால் அவ
௰௧ ரைத்துதியுங்கள்:—அவைகளினின்று இஸ
ரவேலரைப் புறப்படப்பண்ணினவருடைய த
யையென்றுமுள்ளது: ஆதலால் அவரைத்து
௰௨ தியுங்கள்:—வலிமையுள்ளகையினாலும் ஓங்கி
ய புயத்தினாலும் அப்படிச்செய்தவருடைய
தயையென்றுமுள்ளது: ஆதலால் அவரைத்து
௰௩ தியுங்கள்.—செங்கடலை இருபிரிவாகப் பிரித்த
வருடைய தயை என்றுமுள்ளது: ஆதலால் அ
௰௪ வரைத்துதியுங்கள்:—அதின் மத்தியின்வழி
யாய் இஸரவேலரைக் கடக்கப்பண்ணினவரு
டைய தயை என்றுமுள்ளது: ஆதலால் அவ
௰௫ ரைத்துதியுங்கள்.-பார்வோனையும்அவன்சே
னைகளையும் செங்கடலில்அமிழ்த்தினவருடைய
தயை என்றுமுள்ளது: ஆதலால் அவரைத்து
௰௬ தியுங்கள்.—தம்முடையசனங்களைவனாந்தரவ
ழியாய் நடத்தினவருடைய தயை என்றுமுள்ள
௰௭ து: ஆதலால் அவரைத்துதியுங்கள்.—பெ
ரிய இராசாக்களைச்சங்கரித்தவருடைய தயை எ
ன்றுமுள்ளது: ஆதலால் அவரைத்துதியுங்
௰௮ கள்:—பராக்கிரமசாலிகளாகியஇராசாக்களை நா
சப்படுத்தினவருடைய தயை என்றுமுள்ளது: ஆ
௰௯ தலால் அவரைத்துதியுங்கள்:—எமோரிய
ருடையஇராசனாகியசீகோனைநாசப்படுத்தினவ
ருடைய தயையென்றுமுள்ளது: ஆதலால் அவ
ரைத்துதியுங்கள்:—பாஷானின் இராசாவாகி ௨௰
யஓகுவைநாசப்படுத்தினவருடைய தயையென்று
முள்ளது:ஆதலால் அவரைத்துதியுங்கள்:-
அவர்கள் தேசத்தைச் சுதந்தரமாக அளித்தவரு ௨௧
டையதயையென்றுமுள்ளது:ஆதலால் அவரை
த்துதியுங்கள்:—தமதுதாசனாகிய இஸரவேலுக் ௨௨
கு அவைகளைச் சுதந்தரமாக அளித்தவருடையத
யை என்றுமுள்ளது: ஆதலால் அவரைத்து
தியுங்கள்.—நமக்குவந்ததாழ்வில் நம்மேற் சிந் ௨௩
தைவைத்தவருடையதயையென்றுமுள்ளது: ஆத
லால் அவரைத்துதியுங்கள்:—நம்முடைய ௨௪
சத்துருக்களினின்று நம்மைவிடுவித்தவருடைய
தயையென்றுமுள்ளது: ஆதலால் அவரைத்து
தியுங்கள்.—மாமிசம்எல்லாவற்றிற்கும் ஆகாரத் ௨௫
தைக்கொடுக்கிறவருடையதயையென்றுமுள்ளது:
ஆதலால் அவரைத்துதியுங்கள்.-வானங்க ௨௬
ளின் தேவனுடைய தயை என்றுமுள்ளது:
ஆதலால் அவரைத்துதியுங்கள்.

## ௱௩௭. சங்கீதம்.

௧. பாபேலின்காலத்தில் யூதேயர் தாழ்வடைதல்:
௭. எதோமியருக்கும்பாபேல்நகரத்தாருக்குந்த
ண்டனைவருமென்று தீர்க்கதரிசனமுரைத்தல்.

பாபேலின்ஆறுகளருகேநாங்கள்இருந்துசீயோ ௧
னைநினைந்துஅழுதோம்.—அதின்மத்தியில் அலரி ௨
கள்மேல் நம்முடையகின்னரங்களைத்தொங்கவி
ட்டோம்.-எங்களைச்சிறைப்படுத்தினவர்கள்அங் ௩
கே ஒருபாட்டைக்கேட்டார்கள்; எங்களைஉபத்
திரவப்படுத்தினவர்கள் இனியபாட்டைக்கேட்
கவிரும்பி,எங்களுக்குச்சீயோனின்பாட்டில் ஒ
ன்றுபாடுங்களென்றார்கள்.—நாங்கள் அந்நியதே ௪
சத்தில் யெகோவாவின் பாட்டைப்பாடலா
மா.—யெருஷலேமே,நான்உன்னைமறந்தால், எ ௫
ன்வலதுகை தன் தொழிலை மறக்கும்.—நான் ௬
உன்னைநினையாமலும், என்முக்கியமான மகிழ்ச்
சியிலும்யெருஷலேமைஅதிகமாய்விரும்பாமலு
மிருந்தால்,என்நாவுமேல்வாயுடன் ஒட்டிக்கொ
ள்வதாக.—யெகோவாவே, யெருஷலேமின் ௭
நாளில்எதோமின்புத்திரரைநினையும்; அவர்கள்,
அதைஇடித்துவிடுங்கள்,அஸ்திபாரமட்டும்இடித்
துவிடுங்களென்றார்கள்.—நாசமடையப்போகி ௮
றபாபேலின்குமாரத்தியே, நீ எங்களை நடத்தின
பிரகாரம் உன்னை நடத்துகிறவன் வாழ்வுடைய
வன்.—உன் குழந்தைகளைப்பிடித்துக் கல்லோ ௯
டேமோதியடிக்கிறவனே வாழ்வுடையவன்.

## ௱௩௮. சங்கீதம்.

தயை சத்தியமென்னும் இவைகளினிமித்தம் யெ
கோவாவைத்துதித்தல்.

தாவீதுசெய்த சங்கீதம்.

---

(௱௩௬. சங். ௧.) ௨.நாளா.௨௰.௨௧. (௨) உபா.௰.௰௭. (௫) ஆதி.௧.௧. நீதி.௩.௰௯. எரே.௫௧.௰௫. (௬) ஆதி.௧.௯. எரே.௰.௰௨. (௭) ஆதி.௧.௰௪. (௮) ஆதி.௧.௰௬. (௰) யாத்.௰௨.௨௯. (௰௧) யாத்.௰௨.௫௧. (௰௨) யாத்.௬.௬. (௰௩) யாத்.௰௪.௨௧,௨௨. (௰௫) யாத்.௰௪.௨௭. (௰௬) யாத்.௰௩.௰௮. உபா.௮.௰௫. (௰௮) உபா.௨௯.௭. (௰௯) எண்.௨௧. ௨௰. (௨௰) எண்.௨௧.௩௩. (௨௧) யோசு.௰௨.௧,. (௨௩) ஆதி.௮.௧. உபா.௩௨.௩௬.—(௱௩௭. சங். ௯.) எசேக்.௩.௨௯. (௭) எரே.௪௯.௭,. புல.௪.௨௨. எசேக்.௨௫.௰௨. ஒப.௰,. (௮) ஏசா.௰௩.௧,௬,. எரே.௫௰.௨,௰௫,௨௯. வெளி.௰௮.௬. (௯) ஏசா.௰௩.௰௬.—(௱௩௮. சங்.)

நான் என் பூரண இருதயத்தோடும் உம்மைத்து
திப்பேன்: தேவர்களுடைய சமுகத்தில் உம்
௨ மைத் துதித்துப்பாடுவேன்.-உம்முடைய பரிசுத்
த ஆலயத்துக்குநேரே நமஸ்காரம்பண்ணுவேன்:
நீர் உமது சகல கீர்த்தியைப்பார்க்கிலும் உமது
வாக்கை மகிமைப்படுத்தினபடியினால், உமது த
யையினிமித்தமும் உமது சத்தியத்தினிமித்தமும்
௩ உமது நாமத்தைத் துதிப்பேன்.-நான் கூப்பிட்ட
நாளில் எனக்கு உத்தரந்தந்தீர், என் ஆத்துமத்தில்
பெலம் அதிகரிக்க, என்னைப் பலப்படுத்தினீர்.—
௪ யெகோவாவே, பூமியிலுள்ளசகல இராசாக்
களும் உமதுவாயின்வாக்குகளைக் கேட்கும்பொ
௫ ழுது உம்மைத் துதிப்பார்கள்.—யெகோவா
வின் மகிமை பெரிதாயிருப்பதினால், அவர்கள்
யெகோவாவின் வழிகளில் பாடுவார்கள்.—
௬ யெகோவா உயர்ந்தவராயிருந்தும் தாழ்ந்தோ
ரைக்கடாட்சிக்கிறார்: அகங்காரிகளையோ, தூ
௭ ரத்தில்பார்க்கிறார்.—நான் ஆபத்துக்குள்ளேநடந்
தாலும் நீர் என்னை உயிர்ப்பிப்பீர்: என் சத்துரு
க்களின்கோபத்துக்குவிரோதமாய் உமதுகையை
ஓங்குவீர், உமது வலக்கரம் என்னை இரட்சிக்
௮ கும்.—யெகோவா எனக்கேற்றவைகளைச்செ
ய்து முடிப்பார்: யெகோவாவே, உமது த
யை என்றுமுள்ளது: உம்முடைய சுய கைகள்
செய்த கிரியைகளைவிட்டுவிடாதிரும்.

## ௱௩௯. சங்கீதம்.

௧. யெகோவா சருவவியாபகரென்றுணர்த்தல்: ௰௩. சிருஷ்டிகிருத்தியத்தின் ஆச்சரியத்தைவருணித்தல்: ௰௯. துன்மார்க்கரைப்பயமுறுத்தல்.

பாடகத்தலைவனிடத்தில்தாவீதுஒப்பித்தசங்கீதம்

யெகோவாவே, நீர் என்னை ஆராய்ந்து அ
௨ றிந்திருக்கிறீர்.—நான் உட்காந்திருப்பதையும்எ
ழுந்திருப்பதையும் அறிந்திருக்கிறீர், என் மனோ
௩ சிந்தனையைவெகுதூரத்தில்நின்று அறிவீர்.—நீர்
என்நடையையும் என்படுக்கையையும் பரிசோ
திக்கிறீர், என்வழிகளெல்லாம் உமக்கு வழக்க
௪ மாய்த்தெரியும்.—யெகோவாவே, என்நாவி
லொருவாக்குத்தோன்றுமுன் அதுமுழுவதையும்
௫ நீர்அறிகிறீர்.—நீர் எனக்கு முன்னும் பின்னுஞ்
௬ சூழ்ந்துஉமதுகையைஎன்மேல்வைத்தீர்.-இந்தஅ
றிவு எனக்கு ஆச்சரியமுள்ளது; அதுஉயரமாயி
௭ ருப்பதினால்எனக்கெட்டாது.—உம்முடைய ஆ
விக்குமறைவாகநான்எங்கேபோவேன்;உமதுச
௮ முகத்துக்குவிலகிஎங்கேஓடுவேன்.-நான்வானத்
துக்குஏறினாலும்நீர்அங்கே இருப்பீர்: நான்பா
தாளத்தில் என்படுக்கையைவிரித்தாலும் ஆ,அதி
௯ லும் நீர் இருப்பீர்.—நான் அருணோதயத்தின் சி
றகுகளிலேறிச் சமுத்திரத்தின்கடையெல்லையிற்
௰ சென்று வசித்தாலும்,—அங்கேயும் உமதுகை எ
ன்னைநடத்தும், உமதுவலக்கை என்னைப்பிடிக்
கும்.—இருள் என்னைமூடுமேயென்றாலும், இராத் ௰௧
திரியும்என்னைச்சுற்றி ஒளியாயிருக்கும்.—இருள் ௰௨
உமக்கென்னை மறைக்கமாட்டாது; இரவும் பக
லைப்போலப்பிரகாசிக்கின்றது: இருள் ஒளி இர
ண்டும் உமக்குச்சரி.—நீர்என்உள்இந்திரியங்களை ௰௩
ஆளுகிறீர்: நீர்என்தாயின்கருப்பத்திலென்னைமூ
டினீர்,—நான், பிரமிக்கத்தக்க ஆச்சரியமாக உண் ௰௪
டாக்கப்பட்டபடியினால் உம்மைத்துதிப்பேன்:
உமதுகிரியைகள் அதிசயமானவைகளென்பதுஎ
ன் ஆத்துமாவுக்குப் பிரத்தியட்சமாய் விளங்குகி
ன்றது.—நான்ஒளிப்பிடத்தில்உண்டாக்கப்பட் ௰௫
டுப்பூமியின்தாழ்ந்தஇடங்களில்விசித்திரமாய் உ
ருவாக்கப்பட்டபொழுது, என்பிண்டம்உமக்கு
மறைந்திருக்கவில்லை.-உம்முடையகண்கள்என் ௰௬
பிண்டத்தன்மையைக்கண்டன; என் அவயவங்
கள் கிரமமாகவளரவளர, அவைகளில் ஒன்றாகி
லும் உற்பவிக்குமுன் அவைகளெல்லாம் உம்மு
டையபுத்தகத்தில்எழுதப்பட்டன.-தேவனே, ௰௭
உம்முடைய ஆலோசனைகள் எனக்கு எவ்வளவு
அருமை; அவைகளின் தொகை எவ்வளவு அதி
கம்.—நான் எண்ணினால்மணலிலும்அதிகம்:நான் ௰௮
விழிக்கும்பொழுது உம்மோடிருக்கிறேன்.—தே ௰௯
வனே, நீர்துன்மார்க்கரைஅழிப்பீரே: இரத்தப்
பிரியரே, நீங்கள் என்னைவிட்டுஅகன்றுபோங்க
ள்.—அவர்கள் உமக்குவிரோதமாய்க்கபடவாக்கு ௨௰
களைப்பேசுகிறார்கள், உமதுசத்துருக்கள் உமது
நாமத்தைவீணாய் வழங்குகிறார்கள்.—உம்முடை ௨௧
யபகைவரை நான்வெறுக்கிறேனல்லவா; உமக்
குவிரோதமாய் எழும்புகிறவர்களை நான் அரோ
சிக்கிறேனல்லவா.—நான் அவர்களைமுழுமையும்௨௨
வெறுத்துஎனக்குச்சத்துருக்களாகப்பாவிக்கிறே
ன்.—தேவனே, என்னைஆராய்ந்து என் இருத ௨௩
யத்தை அறிந்துகொள்ளும்: என்னைச்சோதித்து
என்சிந்தனைகளை அறிந்துகொள்ளும்.—துன்மார்க் ௨௪
கம்என்னிடத்திலுண்டாவென்றுபார்த்துநித்திய
வழியிலென்னைநடத்தும்.

## ௱௪௰. சங்கீதம்.

சத்துருவினின்று இரட்சைபெறும்படி பிரார்த்தித்தல்.

பாடகத்தலைவனிடத்தில்தாவீதுஒப்பித்தசங்கீதம்

யெகோவாவே, துஷ்டனினின்றுஎன்னை ௧
விடுவித்தருளும்: கொடியவனினின்றுஎன்னைஇ
ரட்சித்தருளும்.—அவர்கள் தங்கள்மனதில்துர்ச் ௨
சிந்தனைகளைக்கொண்டு யுத்தஞ் செய்யும்படி நா
டோறுங்கூடுகிறார்கள்.—சருப்பத்தைப்போலத் ௩
தங்கள் நாவைக் கூர்மையாக்குகிறார்கள்; அவர்
களுடைய உதடுகளின்கீழேவிரியன்பாம்பின்வி
ஷமிருக்கின்றது. சேலா.—யெகோவாவே, ௪

(௨) ௧.இரா.௮.௨௯,௩௰. ஏசா.௪௨.௨௧. (௬) சங்.௱௰௩.௫,௬. ஏசா.௫௭.௰௫. நீதி.௩.௩௪. யாக்.௪.௬. ௧.பேதுரு.௫.௫. (௮) பிலி.௧.௬. யோபு.௰.௩,௮.—(௱௩௯. சங். ௧.) எரே.௰௨.௩. (௨) ௨.இரா.௰௯.௨௭. மத்.௯.௪. யோவா.௨.௨௪,௨௫. (௩) யோபு.௩௧.௪. (௪) எபி.௪.௰௩. (௬) யோபு.௪௨.௩. (௭) எரே.௨௩.௨௪. யோனா.௧.௩. (௮) ஆமோ.௯.௨,௩,௪. யோபு.௨௬,௬. நீதி.௰௫.௰௧. (௰௨) யோபு.௨௬.௬. தானி.௨.௨௨. எபி.௪.௰௩. (௰௫) யோபு.௰.௮,௯. பிர.௰௧.௫. (௰௯) ஏசா.௰௧.௪. (௨௰) யூதா.௰௫. (௨௧) ௨.நாளா.௰௯.௨. (௨௩) யோபு.௩௧.௬.—(௱௪௰. சங். ௩.) ரோ.௩.௰௩.

துன்மார்க்கனுடையகையினின்று என்னை இரட்
சித்தருளும்; கொடியவனுக்குவிலக்கி என்னைக்
காத்தருளும்; அவர்கள் என் நடைகளைக்கவிழ்க்
௫ கப்பார்க்கிறார்கள்.—அகங்காரிகள்எனக்குக்கண்
ணியையுங்கயிறுகளையும் மறைவாய் வைக்கிறார்
கள்; வழியருகேவலையைவிரித்துஎனக்குப்பொ
௬ றிகளை வைக்கிறார்கள். சேலா.—நான் யெகோ
வாவை நோக்கி,நீரேஎன் தேவனென்றேன்:
யெகோவாவே, என் விண்ணப்பத்தின் சத்
௭ தத்தைக்கேட்டருளும்.—என் ஆண்டவரும்
என்இரட்சிப்பின் பலமுமாகிய யெகோவா
வே, நீர்யுத்தசமயத்தில் என்தலையைமூடினீர்.—
௮ யெகோவாவே, துன்மார்க்கருடைய வாஞ்
சை சித்தியாகவிடாதிரும்: அவர்கள் தங்களை
மேன்மைபாராட்டாதபடி அவன்துராலோசனை
௯ அனுகூலமாக முடியவிடாதிரும். சேலா.—என்
னை வளைந்துகொள்பவர்களுடைய உதடுகளின்
௰ தோஷம் அவர்கள்தலையையேமூடும்.-தீக்கொள்
ளிகள் அவர்கள்மேல்விழக்கடவன: அவர்கள்தி
ரும்பவும்எழும்பாதபடி அக்கினியிலும்ஆழமான
௰௧ குழிகளிலுந் தள்ளப்படுவார்களாக.—தீமையான
நாவுள்ளவன் பூமியிலே நிலைபெறான்: ஆபத்து,
கொடியவனை நாசப்படுத்தும்படி தொடரும்.—
௰௨ யெகோவா உபத்திரவப்படுகிறவனுடையவ
ழக்கைநடத்தி, எளியவனுக்கு நியாயஞ்செய்வா
௰௩ ரென்றறிவேன்.—நீதிமான்கள் உமது நாமத்தை
மெய்யாய்த் துதிப்பார்கள்: நேர்மையானவர்கள்
உமதுசமுகத்தில் வாசம்பண்ணுவார்கள்.

## ௱௪௧. சங்கீதம்.

சத்துருவினின்று இரட்சைபெறும்படி தாவீது பிரார்த்தித்தல்.

தாவீதுசெய்த சங்கீதம்.

யெகோவாவே, நான் உம்மைநோக்கி ஓ
லமிடுகிறேன்: விரைந்து என்னிடத்தில்வாரும்;
நான் உமக்குஓலமிடுகிறபொழுது என்சத்தத்துக்
௨ குச்செவிகொடுத்தருளும்.-உமதுசமுகத்தில்என்
பிரார்த்தனை சுகந்ததூபமாகவும், என்கையேற்
பு சாயங்காலத்து நைவேத்தியமாகவுமிருக்கக்க
௩ டவன.—யெகோவாவே, என் வாயினிடத்
தில் காவலை வையும்; என்உதடுகளின் வாசலைக்
௪ காத்துக்கொள்ளும்.—துர்க்கிரியைகளைச்செய்ப
வர்களுடன் நானுந்துர்க்கிரியைகளைச் செய்யாத
படி என்இருதயத்தைத்தடைப்படுத்தும்: நான்அ
வர்களுடைய அறுசுவைப்பதார்த்தத்தைப் புசிக்
௫ கவிடாதிரும்.—நீதிமானேஎன்னை அடிக்கட்டும்;
அது ஒருதயை: அவன் என்னைக்கடிந்துகொள்ள
ட்டும்; அது உத்தமஎண்ணெய்,என்தலையை அது
நொறுக்காது: அவர்களுடைய ஆபத்துச்சமயத்
௬ தில் நான்பிரார்த்தனைபண்ணுவேன்.—அவர்களு
டையநியாயாதிபதிகள்மலைச்சாரல்களில் தள்ளு
ண்டார்கள்,என்வாக்குகள் இனியவைகளென்று
கேட்டார்கள்.—நிலத்தின்மேல்ஒருவன்மரத்தை ௭
வெட்டிப்பிளக்கிறதுபோல, நம்முடைய எலும்
புகள்மரித்தோர் ஸ்தலவாசலில் சிதறஅடிக்கப்ப
ட்டன.—என் ஆண்டவராகிய யெகோவா ௮
வே, என்கண்கள் உம்மைநோக்குகின்றன: உம்
மை நம்பியிருக்கிறேன்; என்ஆத்துமம்துணையில்
லாதிருக்கவிடாதிரும்.—அவர்கள்எனக்குவைத் ௯
தகண்ணிகளுக்கும்துர்க்கருமக்காரருடையபொ
றிகளுக்கும் என்னைவிலக்கியருளும்.—துன்மார்க் ௰
கர்தங்கள்வலைகளில்அகப்படுவார்களாக,நானோ
கடந்துபோவேன்.

## ௱௪௨. சங்கீதம்.

ஆபத்துக்காலத்தில் தாவீது பிரார்த்தித்தல்.

குகையிலிருந்தபொழுது தாவீது செய்த போதக சங்கீதமாகிய பிரார்த்தனை.

நான் யெகோவாவை நோக்கிச் சத்தமிட் ௧
டுக்கூப்பிடுகிறேன்; யெகோவாவை நோக்
கிச்சத்தமிட்டுவிண்ணப்பஞ்செய்கிறேன்.—அ ௨
வர் சமுகத்தில் என் மனச்சஞ்சலத்தைவெளிப்
படுத்துகிறேன்; அவர்சமுகத்தில் என்ஆபத்தைத்
தெரிவிக்கிறேன்.—என் ஆவி துக்கத்தில் அமிழ்ந் ௩
தியபொழுது நீர் என்பாதையை அறிந்தீர். நான்
நடந்தவழியில் மறைவாக அவர்கள் எனக்குக்
கண்ணிவைத்தார்கள்.—நான் என் வலப்புறமா ௪
கக் கண்ணோக்கிப்பார்த்தபொழுது என்னை அறி
வார் ஒருவருமில்லை:எனக்குப்புகலிடம் இல்லா
தொழிந்தது, என் ஆத்துமத்தை விசாரிப்பார் ஒ
ருவருமில்லை.—யெகோவாவே, நான் உம் ௫
மைநோக்கி ஓலமிடுகிறேன்;நீரே என்புகலிடம்,
சீவனுள்ளோருடையதேசத்தில் என்பங்கு என்
றேன்.—நானிடும் ஓலத்தைச் சிந்தித்துக்கொள் ௬
ளும்;நான்மிகவுந்தாழ்ச்சிப்பட்டேன்:என்னைத்
துயரப்படுத்துகிறவர்கள் என்னிலும் பலவான்
கள்; ஆதலால் அவர்களினின்று என்னை இரட்
சித்தருளும்.—நான் உமது நாமத்தைத்துதிக்கும் ௭
படி என் ஆத்துமத்தைச்சிறைச்சாலையினின்றுபு
றப்படப்பண்ணும்: நீர் எனக்குநன்மைசெய்யும்
பொழுது, நீதிமான்கள் என்னைச்சூழ்ந்துகொள்
வார்கள்.

## ௱௪௩. சங்கீதம்.

இரட்சைபெறும்படி யெகோவாவைப்பிரார்த்தித்தல்.

தாவீது செய்த சங்கீதம்.

யெகோவாவே, என்பிரார்த்தனையைக்கே ௧
ளும், என்விண்ணபங்களுக்குச் செவிகொடுத்த
ருளும்: உமது சத்தியத்துக்கும் நீதிக்கும் ஏற்க
எனக்கு உத்தரந்தந்தருளும்.—சீவனுள்ளோரில் ௨
ஒருவனும் உமதுசமுகத்தில் குற்றமற்றவனாயி
ரான்: ஆதலால் உமதடியானை நியாயத்தீர்ப்புக்
குட்படுத்தாதிரும்.—சத்துரு என் ஆத்துமாவைத் ௩

(௫) எரே.௰௮.௨௨. (௮) உபா.௩௨.௨௯. நீதி.௰௨.௰௩. (௰௨) ௧.இரா.௮.௪௫.—(௱௪௧. சங். ௨.) வெளி.௫.௮. வெளி.௮.௩. ௧.தீமோ.௨.௮. யாத்.௨௯.௩௯. (௪) நீதி.௨௩.௬. (௫) நீதி.௯.௮. கலா.௬.௧. (௭) ௨.கொரி.௧.௯. (௮) ௨.நாளா.௨௰.௰௨.—(௱௪௨. சங். ௨.) ஏசா.௨௬.௰௬. (௫) சங்.௪௬.௧. சங்.௯௧.௨. புல.௩.௨௪.—(௱௪௩. சங். ௨.) யோபு.௰௪.௩. யாத்.௩௪.௭. யோபு.௪.௰௭. பிர.௭.௨௰. ரோ.௩.௨௰. கலா.௨.௰௬.

துயரப்படுத்தி, என் சீவனைத்தரையில்விழும்படி
அடித்து, வெகுகாலம் மரித்தோர்போல அந்தகா
௪ ரத்தில் வாசம்பண்ணும்படிசெய்கிறான்.—அதி
னால் என்ஆவி துக்கத்தில் அமிழ்ந்திருக்கின்றது;
என் இருதயம் எனக்குள்சோர்ந்துபோயிற்று.—
௫ பூருவகாலத்தை நினைக்கிறேன்; உமது கிரியை
கள்யாவையுந்தியானிக்கிறேன்; உமதுகைசெய்
௬ தகிரியையைச்சிந்திக்கிறேன்.—நான்உமக்குநே
ராய்க்கைநீட்டுகிறேன்: வறண்டநிலத்தைப்போ
லஎன்ஆத்துமாஉம்மைஅவாவுகின்றது. சேலா.—
௭ யெகோவாவே, விரைந்து எனக்குத்தரந்தா
ரும்: என்ஆவி சோர்ந்துபோகின்றது: உமதுமு
கத்தை எனக்கு மறையாதிரும், குழியிலிறங்குகி
௮ றவர்களுக்கொப்பாகிறேனே.—நான் உம்மைநம்
பியிருக்கிறபடியினால் அதிகாலையில் உமதுதயை
யுள்ளவாக்கைக்கேட்கப்பண்ணும்; நான் நடக்
கவேண்டியவழியை எனக்குத்தெரிவியும்: என்
ஆத்துமத்தை உமக்கு நேரேசெலுத்துகிறேன்.—
௯ யெகோவாவே, என்சத்துருக்களினின்று எ
ன்னைவிடுவித்தருளும்: நான் உம்மிடத்திலொதுங்
௰ குகிறேன்.—நீரே என் தேவன், ஆகையால்உமக்
கு இஷ்டமானதைச்செய்யும்படி எனக்குப்போ
தித்தருளும்: உம்முடைய தயையுள்ளஆவிசெவ்
௰௧ வையானதேசத்தில்என்னைநடத்துவாராக.—யெ
கோவாவே, உமதுநாமத்தினிமித்தம் என்னை
உயிர்ப்பித்தருளும்: உமது நீதியினிமித்தம் என்
ஆத்துமத்தை ஆபத்தினின்று விடுவித்தருளும்.—
௰௨ தயைசெய்து என்சத்துருக்களைச்சேதியும், என்
ஆத்துமத்தைத் துயரப்படுத்துகிறவர்கள் யாவரை
யும் நாசப்படுத்தும்: நான் உமதடியான்.

## ௱௪௪. சங்கீதம்.

இரட்சை சயமென்னும்இவைகளினிமித்தம் யெ
கோவாவைத் துதித்தல்.

---

தாவீதுசெய்த சங்கீதம்.

என் கைகள் யுத்தஞ்செய்யவும், என் விரல்கள்
போர்செய்யவும் பயிலுவிக்குங் கன்மலையாகிய
௨ யெகோவா வாழ்த்தப்படக்கடவர்.—அவர்,
என்தயாபரரும்,என்கோட்டையும்,என்உயர்ந்த
புகலிடமும், என்னைவிடுவிக்கும் இரட்சகரும்,
என் கேடகமும், நான் நம்பினவருமாகி என்
௩ சனங்களை என்வசப்படுத்துகிறார்.—யெகோ
வாவே, நீர் மனுஷனைச் சந்திப்பதற்கு அவன்
எம்மாத்திரம்; நீர் மனுபுத்திரனை விசாரிப்பதற்
௪ கு அவன் எம்மாத்திரம்.—மனுஷன் மாயைக்
கொப்பாயிருக்கிறான்: அவன் நாள்கள் ஒழிந்து
௫ போகிற நிழலுக்குச் சமானம்.—யெகோவா
வே, நீர் வானங்களைத்தாழ்த்தி இறங்கிவாரும்:
௬ நீர் மலைகளைத்தொட அவைகள் புகையும்.—மின்
னல்களைவீசி அவர்களைச் சிதறப்பண்ணும்: உம்
முடைய அம்புகளைப்பிரயோகித்து, அவர்களை
௭ அழித்துவிடும்.—உயரத்தினின்று உமது கையை
நீட்டி என்னை விடுதலைபண்ணி மிகுந்த சலத்
திற்கும் அந்நியபுத்திரருடைய கைக்கும் என்
னைத்தப்புவியும்.—அவர்களுடையவாய்வீணான ௮
வைகளைப்பேசுகின்றதே,அவர்களுடைய வலக்
கை கள்ளக்கையாயிருக்கின்றதே.—தேவனே, ௯
நான் உமக்கு ஒரு புதியபாட்டைப்பாடுவேன்:
பத்துநரம்பு வீணையைக்கொண்டுஉம்மைத்துதித்
துப்பாடுவேன்.—அவர் இராசாக்களின் இரட்ச ௰
கர்: அவர்தமதுதாசனாகிய தாவீதைக்கொடியகட்
கத்துக்குத் தப்புவிக்கிறார்.—வீணானதைப்பேசும் ௰௧
வாயையும், கள்ளவலக்கரத்தையுமுடைய அந்
நிய புத்திரரின் கையினின்று என்னை மீட்டுவி
டுவித்தருளும்.—அப்பொழுது நம்முடையபுத்தி ௰௨
ரர் தங்கள் தங்கள் இளம்பருவத்தில் ஓங்கி வள
ருகிற விருட்சக்கன்றுகளைப்போலிருப்பார்கள்;
நம்முடைய புத்திரிகள் மாளிகைக்காகப் பொ
ளிந்த மூலைக்கற்களுக் கொப்பாவார்கள்.—நம் ௰௩
முடையகளஞ்சியங்கள் நிரப்பப்பட்டு, நானாவி
தபொருள்களைக்கொடுக்கும்: வெளிகளில்நம்மு
டைய ஆடுகள் ஆயிரம் பதினாயிரம் ஈனும்.—நம் ௰௪
முடைய எருதுகள் பலங்கொண்டு சுமைசுமக்
கும்; அபகரித்தலும்,சிதறஅடித்தலும்,நம்முடை
யவீதிகளில்அழுகையும் இராதொழியும்.—இவ்வி ௰௫
தமான சீர்பெற்றசனங்கள்வாழ்வுடையவர்கள்:
யெகோவாவைத் தங்களுக்குத் தேவனென்
று கொண்ட சனங்கள் வாழ்வுடையவர்கள்.

## ௱௪௫. சங்கீதம்.

தேவனிடத்தில் அடைக்கலம் புகுந்த சனங்
கள் பெறும் நன்மையை வருணித்தல்.

---

தாவீதுசெய்த ஸ்தோத்திர சங்கீதம்.

இராசனாகிய என் தேவனே, நான் உம்மை ௧
மேன்மை பாராட்டுவேன்; சதாகாலங்களிலும்
உமது நாமத்தை வாழ்த்துவேன்.—நாடோறும் ௨
உம்மைவாழ்த்துவேன்; சதாகாலமும் உமது நா
மத்தைத் துதிப்பேன்.—யெகோவா பெரிய ௩
வர், அவர் மிகவும் புகழப்படத்தக்கவர்; அவரு
டைய மகத்துவம் புத்திக்கெட்டாது.—தலைமு ௪
றை தலைமுறையாக உம்முடைய கிரியைகளைத்
துதித்து, உமது வல்லமையுள்ள கிரியைகளை அ
றிவிப்பார்கள்.—நான் கனம்பொருந்திய உமது ௫
மகிமையின் பிரஸ்தாபத்தையும் உமது ஆச்சரி
யமான கிரியைகளையுங் குறித்துப்பேசுவேன்.—
சனங்கள் உம்முடைய பயங்கரமான கிரியை ௬
களின் வல்லமையைப் பிரசித்தப் படுத்துவார்
கள்: நான் உமதுமகத்துவத்தைவிவரிப்பேன்.—
நீர் அருளிய பூரண நன்மையின் ஞாபகத்தை அ ௭
றிவித்து, உமது நீதியைக்குறித்து ஆனந்தமுழக்
கமிடுவார்கள்.—யெகோவா கிருபையுள்ளவர், ௮
இரக்கம்நிறைந்தவர்; நீடிய பொறுமையுள்ளவர்,
மகாதயாபரர்.—யெகோவா யாவருக்குந் தயா ௯
பரர்: அவருடைய இரக்கங்கள் அவருடைய

---

(௰) நிகி.௯.௨௰. ஏசா.௨௬.௰.—(௱௪௪.சங்.௧.) ௨.சாமு.௨௨.௩௫.(௩)யோபு.௭.௰௭. சங்.௮.௪. எபி.௨.௬.(௪)யோபு.௰௪.௨. (௫) ஏசா.௬௪.௧. (௮) மல்.௨.௰௧. (௯) சங்.௪௰.௩. (௰௨) சங்.௱௨௮.௩.(௰௫)உபா.௩௩.௨௯. சங்.௱௪௬.௫.—(௱௪௫. சங். ௩.) யோபு.௯.௰. ரோ.௰௧.௩௩. (௪) ஏசா.௩௮.௰௯. (௮) யாத்.௩௪.௬,௭. எண்.௰௪.௰௭. (௯) நாகூ.௧.௭.

௰ கிரியைகளெல்லாவற்றின்மேலுமுள்ளன.—யெ
கோவாவே, உமதுகிரியைகளெல்லாம் உம்
மைத்துதிக்கின்றன; உம்முடைய பரிசுத்தர்கள்
௰௧ உம்மைவாழ்த்துகிறார்கள்.-மனுபுத்திரருக்கு அவ
ருடையபராக்கிரமங்களையும்அவருடைய இராச்
சியத்தின் கனம்பொருந்தியமகிமையையுந்தெரி
௰௨ விக்கும்படிக்கு,-அவர்கள் உமது இராச்சியத்தின்
மகிமையை அறிவித்து, உமது வல்லமையைக்கு
௰௩ றித்துப்பேசுவார்கள்.—உமது இராச்சியம் நித்தி
யமான இராச்சியம், உமதுகர்த்தத்துவம் தலைமு
௰௪ றைதோறுமுள்ளது.-யெகோவா விழுகிறயா
வரையுந்தாங்குகிறார், தாழ்த்தப்பட்ட யாவரை
௰௫ யுந்தூக்கிவிடுகிறார்.—எல்லாவற்றின்கண்களும்
உம்மைக்காத்திருக்கின்றன; நீர்தகுந்தசமயத்தில்
௰௬ அவைகளுக்கு உணவைக்கொடுக்கிறீர்.—உமது
கையைவிரித்துச்சகலபிராணிகளின் வாஞ்சை
௰௭ யையும்பூரணப்படுத்துகிறீர்.—யெகோவா தம
துஎல்லாநெறிகளிலும் நீதியுள்ளவர், தமதுசகல
௰௮ கிரியைகளிலுந்தயாபரர்.-யெகோவா தம்மை
நோக்கிக்கூப்பிட்டு உண்மையாய்வேண்டுதல்
௰௯ செய்கிறயாவருக்குஞ் சமீபமாயிருக்கிறார்.—அ
வர் தமக்குப்பயப்படுகிறவர்களுடைய மனோ
வாஞ்சையை நிறைவேற்றுகிறார்: அவர்களிடும்
௨௰ ஓலத்தைக்கேட்டு அவர்களைஇரட்சிப்பார்.—யெ
கோவா தம்மிடத்தில் அன்புவைக்கிற யாவ
ரையும்பாதுகாக்கிறார்: துன்மார்க்கர்யாவரையும்
௨௧ அழிப்பார்.—என்வாய் யெகோவாவைத்து
திக்கும்: சகலபிராணிகளுஞ் சதாகாலமும் அவ
ருடையபரிசுத்தநாமத்தை வாழ்த்தக்கடவன.

## ௱சசு. சங்கீதம்.

யெகோவாவை அவருடைய இலட்சணங்க
ணிமித்தந்துதித்தல்.

யெகோவாவை வாழ்த்துங்கள். என் ஆத்
௨ துமாவே, யெகோவாவை வாழ்த்து.—என்சி
வனுள்ளவரைக்கும் யெகோவாவை வாழ்த்
துவேன்: என்பிராணன் இருக்கும்வரைக்கும்
௩ என்தேவனைப் பாடுவேன்.—பிரபுகளையும் ம
னுபுத்திரரையும் நம்பாதிருங்கள், அவர்களால்
௪ இரட்சிப்புக்கிடையாது.—அவனுடைய ஆவி
நீங்க அவன் மண்ணோடேசேருகிறான்; அந்நா
ளில்தான்அவன்எண்ணங்கள் அழிந்துபோகின்
௫ றன.-யாக்கோபின் தேவனைத் தனக்குத்துணை
யாகக்கொண்டு, தன் தேவனாகிய யெகோ
வாவில் நம்பிக்கைவைக்கிறவன் எவனோ,அவ
௬ னேவாழ்வுடையவன்.—அவர் வானத்தையும்,பூ
மியையும், சமுத்திரத்தையும், அவைகளிலுள்ள
யாவையுஞ்சிருஷ்டித்தார்: அவர் சதாகாலமுஞ்
௭ சத்தியத்தைக்காத்துக்கொள்வார்.—அவர்உபத்தி
ரவப்படுகிறவர்களுக்கு நியாயஞ்செய்கிறார்: பசி
யாயிருக்கிறவர்களுக்கு ஆகாரத்தைக் கொடுக்கி
றார். யெகோவா கட்டுண்டவர்களை விடுவிக்
கிறார்.—யெகோவா குருடருக்குப் பார்வை ௮
கொடுக்கிறார்: யெகோவா தாழ்த்தப்பட்டவர்
களைத்தூக்கிவிடுகிறார்: யெகோவா நீதிமான்
களை நேசிக்கிறார்:—யெகோவா பரதேசிகளை ௯
இரட்சிக்கிறார்; அவர் அநாத பிள்ளைக்கும் வித
வைக்குந்துணைசெய்கிறார்: துன்மார்க்கருடைய
நெறியைக்கவிழ்க்கிறார்.—யெகோவா சதாகா ௰
லங்களிலும்,சீயோனே, உன் தேவன், தலைமு
றைதோறும் அரசாளுகிறார். யெகோவாவை
வாழ்த்துங்கள்.

## ௱சஎ. சங்கீதம்.

யெகோவாவை அவருடையகிரியைகணிமித்
தந் துதித்தல்.

யெகோவாவை வாழ்த்துங்கள்: நம்முடை ௧
ய தேவனைத்துதிபாடுவது உத்தமம்; அது இன்
பமுள்ளது; துதியே யோக்கியம்.—யெகோவா ௨
யெரூஷலேமைக்கட்டுகிறார்: சிதறஅடிக்கப்பட்
ட இஸரவேலரைக் கூட்டிச்சேர்க்கிறார்.—நொ ௩
றுங்குண்ட இருதயமுள்ளவர்களைச் சொஸ்தப்ப
டுத்துகிறார், அவர்களுடையகாயங்களைக்கட்டுகி
றார்.—அவர்நட்சத்திரங்களைத்தொகையிட்டு, அ ௪
வைகள் எல்லாவற்றிற்கும் பெயரிடுகிறார்.—நம் ௫
முடைய கடவுள் பெரியவர், மகாவல்லமையுள்
ளவர்: எல்லையில்லாதபுத்தியுள்ளவர்.—யெகோ ௬
வா தாழ்ந்தசிந்தையுள்ளவர்களை உயர்த்துகிறார்:
துன்மார்க்கரைத்தரைமட்டுந்தாழ்த்துகிறார்.—யெ ௭
கோவாவைத்துதித்துப்பாடுங்கள்; நம்முடை
ய தேவனை நோக்கிக் கின்னரத்தைக்கொண்டு
துதித்துப்பாடுங்கள்.—அவர்மேகங்களினால் ஆகா ௮
யத்தைமூடி, பூமிக்காக மழையை ஆயத்தப்படுத்
தி, மலைகளிலே புல் தழைக்கப்பண்ணுகிறார்.—அ ௯
வர்மிருகஜீவன்களுக்குங் கதறுகிறகாக்கைக்குஞ்
சுகளுக்கும் உணவைக்கொடுக்கிறார்.—அவர்கு ௰
திரைகளின்பலத்தில் பிரியப்படார்: மனுஷரு
டையகால்களில்பிரியப்படார்.—யெகோவா ௰௧
தமக்குப்பயந்து தமதுதயையைக்காத்திருப்பவர்
கள்மேற்பிரியப்படுகிறார்.—யெரூஷலேமே, யெ ௰௨
கோவாவைத்துதி; சீயோனே, உன்தேவனை
த்துதி.-அவர்உன்வாசல்களின்தாழ்களைப்பலப்ப ௰௩
டுத்தி,உன்னிலுள்ள உன்பிள்ளைகளை ஆசீர்வதிக்
கிறார்.—அவர் உன் எல்லைகளைச் சமாதானப்படுத் ௰௪
துகிறார், அவர் உன்னை உத்தம கோதுமையினால்
திருத்திப்படுத்துகிறார்.—அவர் பூமியில்தமது கட் ௰௫
டளையை அனுப்புகிறார்: அவர் வாக்கு வேக
மாய்ச்செல்லுகின்றது.—பஞ்சுபோல உறைந்த ௰௬
மழையைவருஷிக்கப்பண்ணுகிறார்: சாம்பலைப்
போல உறைந்தபனியைத் தூவுகிறார்.—துணிக் ௰௭

(௰௩) சங்.௱சசு.௰. ௧.தீமோ.௧.௰எ. (௰அ) உபா.௪.எ. யோவா.௪.௨௪.—(௱சசு. சங். ௧.) சங்.௱௩.௧. (௩) ஏசா.௨.௨௨. (௪) பிர.௰௨.எ. ஏசா.௨.௨௨. ௧.கொரி.௨.௬. (௫) எரே.௰எ.எ. (௬) ஆதி.௧.௧. வெளி.௰௪.எ. (அ) மத்.௯.௩௰. யோவா.௯.எ—௩௨. லூக்.௰௩.௰௨. (௯) உபா.௰.௰அ. (௰) யாத்.௰௫.௰௯. வெளி.௰௧.௰௫.—(௱சஎ. சங். ௨.) உபா.௩௰.௩. (௩) ஏசா.௬௧.௧. லூக்.௪.௰அ.(௪)ஆதி.௰௫.௫. ஏசா.௪௰.௨௬. (௫) ௧.நாளா.௰௬.௨௫.நாகூ.௧.௩. ஏசா.௪௰.௨அ. (அ) யோபு.௩அ.௨௫,௨௬. (௯) யோபு.௩அ.௪௧. மத்.௬.௨௬.(௰)ஓசி.௧.எ. (௰௪) ஏசா.௬௰.௰எ,௰அ. உபா.௩௨.௰௪. (௰௫) யோபு.௩எ.௰௨. (௰௬) யோபு.௩எ.௬.

கைகளைப்போலக் கன்மழையை அனுப்புகிறார்:
அவருடைய சீதளத்திற்குமுன் நிற்கவல்லவன்
௰௮ யாவன்.-அவர் தமது வாக்கை அனுப்பி அவைக
ளை உருகப்பண்ணுகிறார்: அவர் காற்றுவீசும்படி
௰௯ செய்யநீர்கள் ஓடுகின்றன.-யாக்கோபுக்குத்தமது
வாக்கையும், இஸரவேலுக்குத்தமது விதிகளையும்
௨௰ நியாயத்தீர்ப்புக்களையுந் தெரிவிக்கிறார்.—அவர்
வேறெந்தச் சந்ததியாரையும் அப்படிநடத்தவில்
லை: அவர்கள் அவருடைய நியாயத்தீர்ப்புக்களை
அறியார்கள். யெகோவாவை வாழ்த்துங்கள்.

## ௱௪௮. சங்கீதம்.

யெகோவாவைத் துதிக்கும்படி ஆகாயவிரி
வுமுதலியவைகளை ஏவல்.

யெகோவாவை வாழ்த்துங்கள். ஆகாய
மண்டலங்களிலுள்ளவைகளே, யெகோவா
வை வாழ்த்துங்கள்: உயர்ந்தஸ்தானங்களில் அ
௨ வரை வாழ்த்துங்கள்.—தூதர்களே, நீங்கள்யாவ
ரும் அவரைவாழ்த்துங்கள்: அவருடையசேனை
களே, நீங்கள்யாவரும் அவரைவாழ்த்துங்கள்.-
௩ சந்திர சூரியரே, அவரைவாழ்த்துங்கள்: பிரகா
சமுள்ள நடசத்திரங்களே, நீங்களெல்லாம் அ
௪ வரை வாழ்த்துங்கள்.—வானங்களின் வானங்க
ளே, ஆகாயங்களுக்குமேலுள்ள சலங்களே, நீங்
௫ கள் அவரை வாழ்த்துங்கள்.—அவைகள் யெ
கோவாவின் நாமத்தைவாழ்த்தக்கடவன: அ
வர் கட்டளையிட அவைகள்சிருஷ்டிக்கப்பட்ட
௬ ன.—அவைகளைச் சதாகாலமும் நிலைக்கும்படி
செய்தார்: மீறக்கூடாதவிதியை அவர் கற்பித்தி
௭ ருக்கிறார்.-பூமியிலுள்ளமகாமச்சங்களே,சகலஆ
௮ ழங்களே;-அக்கினியே, கன்மழையே, உறைந்
தமழையே, நீரணுக்களே, அவர் வாக்கைநிறை
௯ வேற்றும் பெருங்காற்றே;—மலைகளே, சகல
குன்றுகளே, காய்க்கும் விருட்சங்களே, சகல
௰ ஏரஸ்மரங்களே;—காட்டுமிருகங்களே, எல்லா
நாட்டுமிருகங்களே,ஊர்வனவே,பறவைகளே;-
௰௧ பூபதிகளே, சமஸ்த பிரசைகளே, பிரபுகளே, பூ
௰௨ மியிலுள்ளசகல நியாயாதிபதிகளே;-வாலிபரே,
கன்னியரே, விருத்தாப்பியரே, இளைஞரே, யெ
௰௩ கோவாவை வாழ்த்துங்கள்.—யெகோவா
வின் நாமஞ்சிரேஷ்டமானது; அவருடையமகி
மை பூமிக்கும் வானத்துக்கும் மேலாகப் பிரகா
சிக்கின்றது; ஆதலால் அவர்கள் யெகோவா
௰௪ வின் நாமத்தைவாழ்த்துவார்களாக.-தமது சமீபத்
திலுள்ள சனங்களும் இஸரவேல் சந்ததியாருமா
கிய தம்முடையபரிசுத்தர்கள் யாவருந்துதிக்குங்
கொம்பைத் தமதுசனங்களினிமித்தம் உன்னதப்
படுத்தினார். யெகோவாவை வாழ்த்துங்கள்.

## ௱௪௯. சங்கீதம்.

செயத்தினிமித்தம்யெகோவாவைத்துதித்தல்.

யெகோவாவை வாழ்த்துங்கள். யெகோ ௧
வாவை நோக்கிப் புதியபாட்டைப்பாடுங்கள்;
பரிசுத்தர்களின் சபையில் அவர் துதி இருப்ப
தாக.—இஸரவேல் தன் சிருஷ்டிகரில் மகிழ்ந்தி ௨
ருப்பானாக: சீயோனின்பிள்ளைகள் தங்கள் இரா
சாவில் களிகூருவார்களாக.—தீங்குழலினால் அ ௩
வர்கள் அவருடைய நாமத்தைத்துதித்து, மேளத்
தையுங் கின்னரத்தையுங்கொண்டு அவரைப்பா
டுவார்களாக.-யெகோவா தம்முடைய சனங் ௪
களிற் பிரியப்படுகிறார்: தாழ்ந்தசிந்தையுள்ளவர்
களை இரட்சிப்பினால் சிங்காரிப்பார்.-பத்தியுள் ௫
ளவர்கள் மகிமையோடே களிகூர்ந்து தங்கள் ச
யனங்களில் ஆனந்த முழக்கமிடுவார்களாக.—
அந்நியதேசத்தாரிடத்தில் பழிவாங்கிச் சனங்க ௬
ளைத் தண்டிக்கும்பொருட்டு,—சங்கிலிகளினால் ௭
அவர்கள் இராசாக்களையும், இருப்பு விலங்குக
ளினால் அவர்கள் மேன்மக்களையுங்கட்டி,—எ ௮
ழுதப்பட்ட நியாயத்தீர்ப்பைச்செலுத்தும்படிக்
கு அவர்கள் வாயில் தேவனுடைய உயர்ந்த
துதியும், அவர்களுடைய கையில் இருபுறமுங்
கூரிய கட்கமுமிருக்கும்.—அவருடைய பரிசுத் ௯
தவான்கள் யாவரும் இந்தமேன்மையைப்பெறு
வார்கள். யெகோவாவை வாழ்த்துங்கள்.

## ௱௫௰. சங்கீதம்.

நானாவிதவாத்தியங்களால் யெகோவாவைத்
துதிக்கும்படிவேண்டல்.

யெகோவாவைவாழ்த்துங்கள். தமதுபரிசு ௧
த்தஸ்தானத்திலுள்ள தேவனை வாழ்த்துங்கள்.
அவருடையவல்லமை விளங்குகிற ஆகாயவிரி
வைப்பார்த்து அவரை வாழ்த்துங்கள்.—அவரு ௨
டையமகாகிரியைகளினிமித்தம் அவரை வாழ்த்
துங்கள்: அவருடைய மாட்சிமைபொருந்திய ம
கத்துவத்தினிமித்தம் அவரைவாழ்த்துங்கள்.-எக் ௩
காளத்தொனியோடே அவரைவாழ்த்துங்கள்: வீ
ணையோடுங்கின்னரத்தோடும் அவரைவாழ்த்துங்
கள்.—மேளத்தோடுந் தீங்குழலோடும் அவரை ௪
வாழ்த்துங்கள்:யாழோடும்நாயகசுரத்தோடும்அவ
ரைவாழ்த்துங்கள்.-ஓசையுள்ள கைத்தாளத்தோ ௫
டே அவரை வாழ்த்துங்கள்: பேரோசையுள்ள
கைத்தாளத்தோடே அவரை வாழ்த்துங்கள்.—
சமஸ்தபிராணிகளும்யெகோவாவை வாழ்த் ௬
தக்கடவன. யெகோவாவை வாழ்த்துங்கள்.

---

(௰௮) யோபு.௩௭.௰. (௰௯) உபா.௩௩.௨,௩,௪. மல்.௪.௪. (௨௰) ரோ.௩.௧,௨.—(௱௪௮. சங். ௪.) ௧.இரா.௮.௨௭. ௨.கொரி.௰௨.௨. ஆதி.௧.௭. (௫) ஆதி.௧.௧,௬,௭. (௬) எரே.௩௧.௩௫,௩௬. (௭) ஏசா.௪௩.௨௰. (௯) ஏசா.௪௪.௨௩. (௰௩) ஏசா.௰௨.௪. (௰௪) எபே.௨.௰௭.—(௱௪௯. சங். ௧.) எரே.௪௨.௰. (௨) யோபு.௩௫.௰௧. ஏசா.௫௪.௫. சக.௯.௯. மத்.௨௧.௪. (௫) யோபு.௩௫.௰௧. (௬) எபி.௪.௰௨. வெளி.௧.௰௬. உபா.௭.௧,௨.—(௱௫௰. சங். ௨.) உபா.௩.௨௪. (௪) யாத்.௰௫.௨௰. ஏசா.௩௮.௨௰.

# நீதிமொழிகள்.

## ௧. அதிகாரம்.

௧. நூனுதலிய பொருள்: ௭. ஞானத்தைவிளக்க
ல்: ௰. துன்மார்க்கருக்கு விலகும்படி ஏவல்:
௨௰. ஞானம் வாய்மலர்தல்: ௨௪. ஞானங்கண்
டித்தல்.

ஞானத்தையும்போதகத்தையும் அறிவித்து, வி
வேகத்துக்கேற்ற வாக்கியங்களைத்தெரிவித்து,—
௨ ஞானத்தையும், நீதியையும், நியாயத்தையும், ந
டுத்தீர்ப்பையுங்குறித்துப் புத்தியுணர்த்தும் உப
௩ தேசத்தை அங்கிகரிக்கப்பண்ணி,—பேதையருக்
குவிவேகத்தையும், வாலிபருக்கு ஞானத்தையும்
௪ ஆலோசனையையுங் கொடுப்பதற்கு,—தாவீதின்
புத்திரனும், இஸரவேலின் இராசாவுமாகிய ச
௫ லோமோன்செய்த நீதிமொழிகள்.—நீதிமொழி
யையும், அதின் அருத்தத்தையும், ஞானவான்க
ளின் வாக்கியங்களையும், அவர்களுடைய புதை
௬ பொருள்களையும் அறியும்பொருட்டு,-புத்திமான்
செவிசாய்த்து அறிவில் அதிகரிப்பான்; விவே
கி நல்ல ஆலோசனையில் தேர்ச்சிபெறுவான்.
௭ யெகோவாவைப்பற்றும்பயமே ஞானத்
தின் ஆரம்பம்: மூடர் ஞானத்தையும் போதகத்
௮ தையும் அலட்சியம்பண்ணுகிறார்கள்.—என்மக
னே, உன் பிதாவின் உபதேசத்தைக்கேள், உன்
௯ மாதாவின்போதகத்தைத்தள்ளாதே:—அவைகள்
உன்சிரசுக்குச்சிறந்தமுடியும், உன்கழுத்துக்குச்
சரப்பணியுமாகும்.
௰ என்மகனே, பாவிகள் நயத்தைக்காட்டி உன்
௰௧ னை ஏவினால் நீ அதற்குச் சம்மதியாதே.—எங்க
ளோடேவா, நாம் இரத்தஞ்சிந்தும்படி பதுங்கி
யிருப்போம், குற்றமற்றவர்களைக் காரணமின்
௰௨ றிப்பிடிக்கும்படி ஒளித்திருப்போம்:—பிரேதக்
குழியைப்போல உயிரோடே விழுங்குவோம்;
குழியிலிறங்குகிறவர்களைப்போல முழுமையும்
௰௩ அவர்களை விழுங்குவோம்.—நாம் அருமையான
சகலவித பொருள்களையுங் கண்டடைவோம்,
கொள்ளைப்பொருளினால் நம்முடைய வீடுகளை
௰௪ நிரப்புவோம்:—எங்களுடன் பங்காளியாயிரு;
எங்களனைவருக்கும் ஒரே பை இருக்கட்டுமென்
௰௫ று அவர்கள் சொல்வார்களாகில்,—என்மகனே,
அவர்களோடேவழிநடவாமல் உன்காலை அவர்
௰௬ கள் பாதைக்கு விலக்குவாயாக.—அவர்கள் கால்
கள் தீங்குசெய்ய ஓடுகின்றன, அவர்கள் இரத்
௰௭ தஞ்சிந்தவிரைகிறார்கள்.—பறவையின்கண்களுக்
௰௮ குமுன்வலைவிரிப்பதுவிருதா.—அவர்களோதங்
கள் இரத்தத்தைச்சிந்துவதற்கே பதிவிருக்கிறார்
கள்; தங்கள் பிராணனைப் பிடிப்பதற்கே ஒளித்
திருக்கிறார்கள்.—பொருளாசையுள்ள எல்லாரு ௰௯
டைய வழியும் இதுவே; அது பொருளையுடைய
வர்களின் உயிரைக்கெடுக்கும்.
ஞானம் வெளியேநின்று கூப்பிடுகின்றது; ௨௰
அது வீதிகளில்நின்று உரத்தசத்தமிடுகின்றது.—
அதுபிரதான சந்தைகளில் கூப்பிடுகின்றது, நக ௨௧
ரவாசலிலே நின்றுகொண்டு,—பேதையரே, எ ௨௨
துவரைக்கும் அஞ்ஞானத்தை விரும்புவீர்கள்;
நிந்தனைக்காரர், எதுவரைக்கும் நிந்தனையிற்
சந்தோஷப்படுவீர்கள்; மதியீனரே, எதுவரைக்
கும் ஞானத்தை வெறுப்பீர்கள்.—என் கண்டி ௨௩
தத்தினால் மனந்திரும்புங்கள்: கேளுங்கள், என்
மனதை வெளிப்படுத்துவேன், என் வாக்குகளை
உங்களுக்குத்தெரிவிப்பேன்.
நான் கூப்பிட, நீங்கள் உத்தரந்தரவில்லை; ௨௪
நான் என் கையை நீட்ட, ஒருவரும் மதிக்கவில்
லை;—என் ஆலோசனையை எல்லாம் அவமதித்தீர் ௨௫
கள், என் கண்டிதத்தைக் கேட்க நீங்கள் விரும்
பவில்லை:-அதினிமித்தம் உங்கள் ஆபத்துக்காலத் ௨௬
தில்நான் நகைப்பேன்; பயம்உங்களுக்குநேரிடு
ம்பொழுதும்;-சூறைக்காற்றுப்போல் உங்களுக் ௨௭
குப் பயம்வரும்பொழுதும், சுழல்காற்றுப்போல
உங்களுக்கு ஆபத்துநேரிடும்பொழுதும், துக்க
முங்கிலேசமும் உங்கள் மேல்வரும்பொழுதும்
நான் பரிகாசம்பண்ணுவேன்.—அப்பொழுது அ ௨௮
வர்கள் என்னைநோக்கிஓலமிடுவார்கள், நான் உத்
தரங்கொடுக்கமாட்டேன்; அவர்கள் அதிகாலை
யில் என்னைத்தேடுவார்கள், என்னைக் காணமாட்
டார்கள்:—அவர்கள் ஞானத்தைவெறுத்தார்கள், ௨௯
யெகோவாவைப்பற்றும் பயத்தை விரும்ப
வில்லை:—என் ஆலோசனையிலொன்றையும் அவர் ௩௰
கள் விரும்பவில்லை: என் கண்டிதத்தை எல்லாம்
அலட்சியம்பண்ணினார்கள்.—ஆதலால் அவர்கள் ௩௧
தங்கள் தங்கள் கிரியையின் பலனை அனுபவிப்
பார்கள், தங்கள் சூழ்ச்சிகளினால் திருத்திப்படு
வார்கள்.—பேதையரின் மாறுபாடு அவர்களைக் ௩௨
கொல்லும், மூடரின்நிருவிசாரம் அவர்களைநாசப்
படுத்தும்.—என் வாக்கைக் கேட்கிறவனோ, விக் ௩௩
கினமின்றிவசித்திருப்பான், ஆபத்தின்பயம் நீங்
கி அமைதியாயிருப்பானென்று வசனிக்கின்றது.

## ௨. அதிகாரம்.

௧. ஞானத்தின்பலனைஎடுத்துக்காட்டல்: ௰. துன்

(௧. அதி. ௪.) ௧.இரா.௪.௩௨. அதி.௰.௧. அதி.௨௫.௧. பிர.௰௨.௯. (௫) சங்.௭௮.௨. (௭) யோபு.௨௮.௨௮. பிர.௰௨. ௰௩. (௮) அதி.௪.௧. (௯) அதி.௩.௨௨. (௰) ஆதி.௩௯.௭. சங்.௧.௧. எபே.௫.௰௧. (௰௧) எரே.௫.௨௬. (௰௨) சங்.௨௮. ௧. (௰௫) சங்.௧.௧. சங்.௱௰௯.௱௧. (௰௬) ஏசா.௫௯.௭. ரோ.௩.௰௫. (௰௯) அதி.௰௫.௨௭. ௧.தீமோ.௬.௰. (௨௰)அதி. ௮.௧,. யோவா.௭.௩௭.(௨௧)யோவே.௨.௨௮. (௨௪) ஏசா.௬௫.௰௨. எரே.௭.௰௩. சக.௭.௰௧.(௨௫)லூக்.௭.௩௰.(௨௬) சங்.௨.௪. (௨௭) அதி.௰.௨௪. (௨௮) யோபு.௩௫.௰௨. ஏசா.௧.௰௫. எரே.௰௧.௰௧. எசேக்.௮.௰௮. மீகா.௩.௪. சக.௭. ௰௩. யாக்.௪.௩. (௨௯) யோபு.௨௧.௰௪.(௩௰)சங்.௮௧.௰௧. (௩௧) யோபு.௪.௮. ஏசா.௩.௰௧. எரே.௬.௰௯.—(௨. அதி.)

மார்க்கரினின்றுவிலக்கப்படல்: ௨௰. நன்னெறியில் ஒழுகல்.

என்மகனே,ஞானத்திற்குஉன்செவியைச்சாய்த்
து, புத்திக்கு உன்மனதை அமையப்பண்ணும்
௨ பொருட்டு,–என்வாக்குகளை அங்கிகரித்து, என்
௩ கட்டளைகளைச் சிந்தையில்வைத்து,–ஞானத்தை
நோக்கிக்கூப்பிட்டு, புத்திக்காகச்சத்தமிட்டு,—
௪ வெள்ளியைப்போல அதை நாடி, புதையல்க
௫ ளைப்போல அதைத்தேடினையாகில்,–அப்பொழு
து நீ யெகோவாவைப் பற்றும் பயமின்ன
தென்று உணருவாய், தேவனைப் பற்றும் ஞா
௬ னத்தைக் கண்டறிவாய்.–யெகோவா ஞானத்
தைத்தருகிறார்: ஞானமும் புத்தியும் அவர்வாயி
௭ னின்றுபுறப்படுகின்றன.–அவர் நீதிமான்களுக்
கென்று மெய்ஞ்ஞானத்தைவைக்கிறார்: நேர்மை
யாய் நடக்கிறவர்கள் நீதிநெறிகளைக்கைக்கொள்
ளும்படி அவர்களுக்குக் கேடகமாயிருக்கிறார்.–
௮ அவர் தம்முடைய பரிசுத்தசனங்களின் பாதை
௯ யைக் காப்பாற்றுகிறார்.—அப்பொழுது நீதியை
யும், நியாயத்தையும், நடுத்தீர்ப்பையும், எல்லா
நன்னெறிகளையும் அறிந்துகொள்வாய்.

௰ ஞானம் உன் இருதயத்தில்பிரவேசித்து, அறி
௰௧ வுஉன்மனதுக்கு இன்பந்தரும்பொழுது,-ஆலோ
சனை உன்னைக்காப்பாற்றும், புத்தி உன்னைப்பா
௰௨ துகாக்கும்:-அதினால்நீதுன்மார்க்கருடையவழிக்
௰௩ கும்,மாறுபாடுபேசுகிறவர்களுக்கும்,–நன்னெறி
களைவிட்டு அந்தகாரநெறிகளில்நடப்பவர்களுக்
௰௪ கும்,–தீமைசெய்யவிரும்பித் துன்மார்க்கருடை
ய மாறுபாடுகளிற் களிகூருகிறவர்களுக்கும்,—
௰௫ மாறுபாடான பாதையில் நடக்குங்கோணல்வ
௰௬ ழியுள்ளவர்களுக்குந் தப்புவிக்கப்படுவாய்.–தன்
இளம்பிராயத்திலுள்ள நாயகனைவிட்டு, தன் தே
௰௭ வனுடைய உடன்படிக்கையைமறந்து,–இன்
சொற்களைவசனிக்கும் விபசாரியானபரஸ்திரிக்
௰௮ குத்தப்புவிக்கப்படுவாய்.—அவளுடையவீடு ம
ரணத்துக்கும், அவளுடையபாதைகள் மரித்தோ
௰௯ ரினிடத்திற்குஞ் சாய்கின்றன.—அவளிடத்தில்
போகிறவர்களில் ஒருவருந்திரும்புகிறதில்லை,அ
௨௰ வர்கள் சீவபாதைகளிற்சேரார்கள்.–ஆதலால் நீ
நல்லோருடைய நெறியில்நடந்து, நீதிமான்களு
௨௧ டைய பாதைகளைக்காத்துக்கொள்வாயாக.-நேர்
மையானவர்கள் தேசத்தில்வசிப்பார்கள், பூரண
௨௨ சற்குணர் அதில்தங்குவார்கள்.–துன்மார்க்கரோ
தேசத்தினின்று சேதிக்கப்படுவார்கள், துரோகி
கள் அதினின்று பிடுங்கப்படுவார்கள்.

## ௩. அதிகாரம்.

௧. கட்டளையைப் பேணும்படி ஏவல்: ௫. யெகோவாவை விசுவாசிக்க வேண்டுமெனல்: ௭. தேவனைச்சேவிக்கும்படிபுத்திசொல்லல்: ௰௧. தேவன்செய்யுந் தண்டனைக்குஅமையும்படிசொல்லல்: ௰௩. ஞானத்தினால்வரும் லாபத்தைக்காட்டல்: ௨௧. அஞ்ஞானத்தின்பலனைத் தெரிவித்தல்: ௨௭. பல உபதேசங்களையுணர்த்தல்.

என் மகனே, என் போதகத்தைமறவாதே;உன் ௧
இருதயம்என்கட்டளைகளைக்காக்கக்கடவது.–அ ௨
வைகள் உனக்குநெடுநாள்களையும், தீர்க்காயுளை
யும், சமாதானத்தையும் வருத்திக்கச்செய்யும்.—
தயையுஞ் சத்தியமும் உன்னைவிடாதபடிஅவை ௩
களை உன் கழுத்தில் பூண்டுகொள்;உன் இருதய
பீடத்தில் அவைகளை எழுதிக்கொள்.—அதினால் ௪
தேவனுடைய பார்வையிலும், மனுஷனுடை
யபார்வையிலுந் தயையும் புகழும்பெறுவாய்.

நீ உன் பூரண இருதயத்தோடும்யெகோவா ௫
வில் நம்பிக்கையாயிரு; உன்சுயபுத்தியைச்சாரா
தே.—உன் வழிகள் எல்லாவற்றிலும் அவரைஅ ௬
றிந்துகொள், அப்பொழுது அவர் உன் பாதைக
ளைச் செவ்வைப்படுத்துவார்.

நீ உன்னைஞானியென்றுமதியாதே: யெகோ ௭
வாவுக்குப்பயந்துதீமையைவிட்டுவிலகு.—அ ௮
து உன் தொப்புளுக்கு ஆரோக்கியமும், உன் எ
லும்புகளுக்கு நிணமுமாகும்.–உன்பொருளினா ௯
லும்,உன்விளைவெல்லாவற்றிலுமுள்ளமுதற்பல
னினாலும்யெகோவாவைக்கனம்பண்ணு.-
அப்பொழுது உன்களஞ்சியங்கள் பூரணப்படும், ௰
உன் ஆலைகளில் திராட்சரசம் புரண்டிருக்கும்.

என்மகனே, யெகோவா செய்யுந் தண்ட ௰௧
னையை அற்பமாயெண்ணாதே; அவர் கடிந்து
கொள்ளும்பொழுது தளர்ந்துபோகாதே.—பிதா ௰௨
வானவன் தான்நேசிக்கிற புத்திரனைத்தண்டிக்கி
றதுபோல, யெகோவாவுந் தாம்நேசிக்கிற
எவனையுந் தண்டிக்கிறார்.

ஞானத்தைக்கண்டடைந்த மனுஷனும் புத்தி ௰௩
பெற்றமனுஷனும் வாழ்வுடையவர்கள்.–அதின் ௰௪
வர்த்தகம் வெள்ளிவர்த்தகத்திலும் உத்தமம், அ
தின் லாபம் அபரஞ்சியிலுஞ்சிரேஷ்டம்.—அது ௰௫
முத்துக்களைப்பார்க்கிலும் விலையேறப்பெற்றது:
நீ விரும்பும் எந்தப்பொருள்களும் அதற்கொப்
பல்ல.—அதின் வலக்கையில் தீர்க்காயுளும், இ ௰௬
டக்கையில் செல்வமுங் கனமுமிருக்கின்றன.–
அதின் வழிகள் இனியவழிகள், அதின்பாதை ௰௭
களெல்லாஞ்சமாதானமுள்ளன.–அது தன்னைஅ ௰௮
டைந்தவர்களுக்குச் சீவவிருட்சம்: அதைப்பற்
றிக்கொள்ளும்யாவரும் வாழ்வுடையவர்கள்.—

(௨) அதி.௪.௨௧. (௪) அதி.௩.௰௪. மத்.௰௩.௪௪. (௬) ௧.இரா.௩.௯,௰௨. யாக்.௧.௫. (௭) சங்.௮௪.௰௧. (௮) ௧.சாமு. ௨.௯. சங்.௬௬.௯. (௰௧) அதி.௬.௨௨. (௰௩) யோவா.௩.௰௯,௨௰. (௰௪) எரே.௰௧.௰௫. ரோ.௧.௩௨. (௰௫) சங்.௱௨௫. ௫. (௰௬) மல்.௨.௰௪,௰௫. (௰௭) அதி.௫.௩. (௰௮) அதி.௭.௨௭. (௨௧) சங்.௩௭.௨௯. (௨௨) யோபு.௰௮.௰௭. சங்.௩௭. ௨௮.—(௩. அதி. ௧.) உபா.௮.௧. (௨) சங்.௱௰௯.௱௬௫. (௩) யாத்.௰௩.௯. உபா.௬.௮. எரே.௰௭.௧. ௨.கொரி.௩.௩. (௪) சங்.௱௰௧.௰. லூக்.௨.௫௨. அப்.௨.௪௬. ரோ.௰௪.௰௮. (௫) சங்.௩௭.௩,௫. எரே.௯.௨௩. (௬) ௧.நாளா.௨௮.௯. எரே.௰.௨௩. (௭) ரோ.௰௨.௰௬. யோபு.௧.௧. (௮) யோபு.௨௧.௨௪. (௯) யாத்.௨௨.௨௯. உபா.௨௬.௨,. மல்.௩.௰,. லூக்.௰௪.௰௩. (௰) உபா.௨௮.௮. (௰௧) யோபு.௫.௰௭. சங்.௯௪.௰௩. எபி.௰௨.௫,௬. வெளி.௩.௰௯. (௰௨) உபா.௮.௫. (௰௩) அதி.௮.௩௪,௩௫. (௰௪) யோபு.௨௮.௰௩,. சங்.௰௯.௰. அதி.௮.௰௧,௰௯. (௰௫) மத்.௰௩.௪௪. (௰௬) அதி.௮.௰௮. ௧.தீமோ.௪.௮. (௰௭) மத்.௰௧.௨௯,௩௰. (௰௮) ஆதி.௨.௯.

௰௯ யெகோவா ஞானத்தினாலே பூமியை அஸ்தி
பாரப்படுத்தி, புத்தியினாலே வானங்களை உண்
௨௰ டாக்கினார்.—அவருடைய ஞானத்தினால் ஆழங்
கள் பிரிக்கப்படுகின்றன, அதினால் ஆகாயம் ப
னியைச்சொரிகின்றது.
௨௧ என்மகனே, இவைகள் உன்பார்வைக்கு ம
றையவிடாதிரு: மெய்ஞ்ஞானத்தையும் நல்ல ஆ
௨௨ லோசனையையுங்காத்துக்கொள்.-அவைகள்உன்
மனதுக்குச்சீவனும், உன்கழுத்துக்கு அலங்கார
௨௩ முமாகும்.—நீ பயமின்றிவழியில்நடப்பாய்,உன்
௨௪ காலிடறாது.—நீ படுக்கும்பொழுது பயப்படாய்:
௨௫ நீ படுப்பாய், உன்நித்திரையினிதாகும்.—சடிதி
யில் ஆபத்துவரும்பொழுதும்,துன்மார்க்கருக்கு
அழிவுநேரிடும்பொழுதும்நீஅஞ்சவேண்டாம்.—
௨௬ யெகோவாவே உன்நம்பிக்கை, உன்காலைக்
கண்ணிக்குவிலக்குவார்.
௨௭ நன்மைசெய்வதற்கு உனக்குக்கைப்பெலமி
ருக்கையில், பாத்திரனுக்கு அதைச்செய்யாதொ
௨௮ ழியாதே.—உன்னிடத்தில் பொருள் இருக்கை
யில், போய்த்திரும்பிவா,நாளைக்குத்தருவேனெ
௨௯ ன்று உன்அயலானுக்குச்சொல்லாதே.—பயமின்
றி உன்சமீபத்தில்வாசம்பண்ணுகிறஉன்அயலா
னுக்கு விரோதமாகத் தீங்குசெய்ய நினையாதே.
௩௰ ஒருவன் உனக்குத்தீங்குசெய்யாதிருக்க, கார
ணமின்றி அவனோடே வழக்காடவேண்டாம்.
௩௧ கொடியவன்மேற்பொறாமைகொள்ளாதே, அ
வனுடையநெறிகளில் ஒன்றையுந்தெரிந்துகொ
௩௨ ள்ளாதே.-நெறிதவறினவன் யெகோவாவுக்
கு அரோசியமானவன்: அவருடைய இரகசிய
ஆலோசனைநீதிமான்களோடேயிருக்கின்றது.
௩௩ துன்மார்க்கருடையவீட்டிலே யெகோவா
வின் சாபமிருக்கின்றது: நீதிமான்களுடையவா
௩௪ சஸ்தலத்தையே அவர் ஆசீர்வதிக்கிறார்.—இகழ்
வோரைஅவர்இகழுகிறாரே: தாழ்மையுள்ளவர்க
௩௫ ளுக்கோ தயைசெய்கிறார்.-ஞானவான்கள் கனத்
தைச் சுதந்தரிப்பார்கள்: கனவீனமோ மதிகேட
ரை உயர்த்துகின்றது.

## ௪. அதிகாரம்.

௧. சலோமோன்புத்திபோதித்தல்: ௩. தான்பெற்றாரால் போதிக்கப்பட்டதைக்குறித்தல்: ௰௪. பாவிகளினின்று விலகும்படி ஏவல்: ௨௰. சாவதானமாயிருக்கவேண்டுமெனல்.

பிள்ளைகளே, நீங்கள் பிதாவின் போதகத்தைக்
கேளுங்கள், புத்தியைப்பெறும்படி சிந்தித்துக்
௨ கொள்ளுங்கள்.—நான் உங்களுக்கு நற்போதகத்
தைத் தருகிறேன், என்பிரமாணத்தைத் தள்ளாதி
௩ ருங்கள்.—நான் என்பிதாவுக்கு இளமையும்என்
மாதாவின் பார்வைக்கு மிகவும் அருமையுமான
பிள்ளையாயிருந்தேன்.—அவர் என்னைநோக்கி, நீ ௪
உன்சிந்தையில்என்வாக்குகளைக்காத்துக்கொள்:
என்கட்டளைகளைக்கைக்கொண்டு சீவித்திரு.—
நீ ஞானத்தைச்சம்பாதித்துக்கொள், புத்தியைச் ௫
சம்பாதித்துக்கொள்: அதைமறவாதே; என்வா
யின்வாக்குகளைவிட்டுவிலகாதே.—அதைவிடா ௬
தே; அது உன்னைக்காக்கும்; அதின்மேற் பிரிய
மாயிரு, அப்பொழுது அது உன்னைக்காப்பாற்
றும்.—ஞானமே முக்கியம்; ஞானத்தைச் சம் ௭
பாதித்துக்கொள்: உனக்குவரும் இலாபங்கள்யா
வற்றோடும் புத்தியையுஞ்சம்பாதித்துக்கொள்.—
அதைமேன்மைபாராட்டு,அப்பொழுது அதுஉன் ௮
னை மேன்மைப்படுத்தும், நீ அதை அணைத்துக்
கொண்டால் அது உன்னைக்கனம்பண்ணும்.—அ ௯
து உன்தலைக்குச்சௌந்தரியபூஷணமாகும்: அது
ஒருஅலங்கார கிரீடத்தை உனக்குத்தருமென்று
சொல்லி எனக்குப்போதித்தார்.—என் மகனே, ௰
கேள்,என்வாக்குகளை ஏற்றுக்கொள்; அதினால்
உன் ஆயுளின்வருஷங்கள் அதிகமாகும்.—ஞானத் ௰௧
தின்மார்க்கத்தைநான்உனக்குப்போதிக்கிறேன்;
செவ்வையான பாதைகளில் உன்னை நடத்துகி
றேன்.—அவைகளில் நீ நடக்கும்பொழுதுஉன் ௰௨
நடை நெருங்கலாகாது; ஓடினாலும் இடறமாட்
டாய்.—போதகத்தை உறுதியாய்ப்பற்றிக்கொள்; ௰௩
அதைவிட்டுவிடாதே: அதைக்காத்துக்கொள்; அ
துவே உன்சீவன்.
துன்மார்க்கருடைய பாதையிற் பிரவேசியா ௰௪
தே, தீயருடைய வழியில் நடவாதே.—அதற்கு ௰௫
விலகிவிடு, அதை அணுகாதே, அதற்குவிலகிப்
போய்விடு.-அவர்கள் துர்க்கிரியை செய்தாலொ ௰௬
ழிய நித்திரைகொள்ளார்கள்; அவர்கள் யாவரை
யாகிலும் விழப்பண்ணாதிருந்தால் அவர்களுக்கு
நித்திரைவராது.—அவர்கள் பாவத்தின் ஆகாரத் ௰௭
தைப்புசிக்கிறார்கள்,கொடுமையின்திராட்சரசத்
தைக்குடிக்கிறார்கள்.—நீதிமான்களுடையபாதை ௰௮
மத்தியானம்வரைக்கும் அதிகமதிகமாய்வளர்ந்து
பிரகாசிக்கிற ஒளியைப்போலிருக்கின்றது.—
துன்மார்க்கருடைய பாதையோ, இருளைப்போ ௰௯
லிருக்கின்றது: தாங்கள் இடறுவது இன்னதினா
லென்றறியார்கள்.
என்மகனே, என்வாக்குகளைச்சிந்தித்துக்கொ ௨௰
ள்; என்வாக்கியங்களுக்குச்செவியைச்சாய்.-அ ௨௧
வைகள் உன்பார்வைக்கு விலகவிடாதே; உன்
இருதயத்துக்குள் அவைகளைக்காத்துக்கொள்.—
அவைகளைக்கண்டுபிடிக்கிறவர்களுக்கு அவைக ௨௨
ள்சீவனும், அவர்களுடையசருவாங்கத்துக்குஞ்
சௌஸ்தமுமாகும்.
சீவன்தோன்றுகிற உன் இருதயத்தைமிகவுஞ் ௨௩

---

(௰௯) அதி.௮.௨௭. எரே.௫௧.௰௫. (௨௰) ஆதி.௧.௯. உபா.௩௩.௨௮. யோபு.௩௬.௨௮. (௨௪) லேவி.௨௬.௬. சங்.௩.௫. (௨௫) சங்.௯௧.௫. (௨௭) ரோ.௰௩.௭. கலா.௬.௰.(௨௮)லேவி.௰௯.௰௩. உபா.௨௪.௰௫. (௩௰) ரோ.௰௨.௰௮. (௩௧) சங்.௩௭.௧. சங்.௭௩.௩. அதி.௨௪.௨. (௩௨) சங்.௨௫.௰௪. (௩௩) லேவி.௨௬.௰௪,. சங்.௩௭.௨௨. சக.௫.௪. மல்.௨.௨. சங்.௧.௩. (௩௪) யாக்.௪.௬. ௧.பேதுரு.௫.௫.—(௪. அதி.௧.) சங்.௩௪.௰௧. அதி.௧.௮. (௪) ௧.நாளா.௨௯.௧. ௧.நாளா.௨௮.௯. எபே.௬.௪. (௬) ௨.தெச.௨.௰. (௭) மத்.௰௩.௪௪. லூக்.௰.௪௨. (௮) ௧.சாமு.௨.௩௰. (௰௨) சங்.௯௧.௰௧,௰௨. (௰௪) சங்.௧.௧. அதி.௧.௰,௰௫. (௰௬) சங்.௩௬.௪. ஏசா.௫௭.௨௰. (௰௮) மத்.௫.௰௪,௪௫. பிர.௨.௰௫. ௨.சாமு.௨௩.௪. (௰௯) ௧.சாமு.௨.௯. யோபு.௰௮.௫,௬. ஏசா.௫௯.௯,௰. எரே.௨௩.௰௨. யோவா.௰௨.௩௫.

உச சாக்கிரதையோடே காத்துக்கொள்.—வாயின்தா
றுமாறுகளை உன்னை விட்டகற்றி, உதடுகளின்
உரு மாறுபாட்டை உனக்குத்தூரப்படுத்து.—உன் க
ண்கள் நேராய்நோக்கக்கடவன, உன் கண்ணி
மைகள் உனக்கு முன்னே பார்க்கக்கடவன.—
உசு உன்கால்நடக்கும்வழியைஉற்றுப்பார்,அப்பொ
உஎ ழுது உன் நடைகள்யாவும் ஸ்திரப்படும்.–வலப்
புறமாவது இடப்புறமாவது சாயாதே: தீமைக்கு
உன்காலைவிலக்கிவிடு.

## ரு. அதிகாரம்.

க. சலோமோன்புத்திபோதித்தல்: ங. வேசையை விலக்கவேண்டுமெனல்: யரு. விவாகத்தைப்புகழ்தல்: உஉ. துன்மார்க்கர் பாவத்தினால் நாசமடைதல்.

என்மகனே,என்ஞானத்தைச்சிந்தித்துக்கொண்
உ டு, என்புத்திக்குச்செவிசாய்.–அப்பொழுது நீவி
வேகத்தைப்பேணிக்கொள்வாய். உன்னுதடுகள்
அறிவைக்காத்துக்கொள்ளும்.
ங பரஸ்திரியின் உதடுகள்தேன்கூடுபோலொழு
கும், அவளுடையவாய் எண்ணெயிலும்மிருது.-
ச முடிவில் அவள் எட்டியைப்போலக் கசப்பும்,
இருபுறமுங்கருக்குள்ள கட்கம்போலக்கூர்மை
ரு யுமாவாள்.—அவளுடைய காலடிகள் மரணத்து
க்கிறங்குகின்றன; அவளுடைய நடைகள்நரகத்
சு தைப்பற்றுகின்றன.–நீ சீவமார்க்கத்தைச்சிந்தித்
துக்கொள்ளாதபடிக்கு, அவளுடைய உபாய ந
டைகள் வேற்றுமைகொள்ளும், அவைகளை
எ அறியமுடியாது.—ஆதலால் பிள்ளைகளே, இப்
பொழுதுஎனக்குச்செவிகொடுத்து, என்வாயின்
அ வாக்குகளைவிட்டுநீங்காதிருங்கள்.—அவளுக்கு
உன்பாதையைத்தூரப்படுத்து,அவளுடையவீட்
கூ டின் வாசலைக்கிட்டிச்சேராதே.-சேர்ந்தால்உன்
கனம் மற்றவர்களுக்கும், உன் ஆயுளின்காலம்
ய கொடியவர்களுக்குங் கொடுக்கப்படும்.—அந்நி
யர்உன்பொருளினால்திருத்திபெறுவார்கள்;உன்
பிரயாசத்தின்பலன் அந்நியருடைய வீட்டிலே
யக சேரும்.—முடிவுகாலத்தில்உன்மாமிசமுஞ்சரீர
யஉ முங்கெடும்பொழுதுநீபுலம்பி,-ஐயோ, போதகத்
தை நான் ஏன் வெறுத்தேன், என்மனம், கண்ட
யங னையை ஏன் அலட்சியம்பண்ணிற்று.–என்போ
தகரின்வாக்கை, நான்ஏன்கேட்டுநடக்கவில்லை,
எனக்குப் போதித்தவர்களுக்கு நான் ஏன் என்
யச செவியைச்சாய்க்கவில்லை.-சபைக்குள்ளுஞ்சங்
கத்துக்குள்ளுங் கொஞ்சங்குறையஎல்லாத்தீமை
களிலும் அகப்பட்டேன் என்பாய்.
யரு உன்தொட்டியிலுள்ளசலத்தையும்,கிணற்றிலூ
யசு றுகிற சலத்தையும் பானஞ்செய்.–உன்னுடைய
ஊற்றுக்கள் வெளியிலும், நீரோடைகள் வீதிக
யஎ ளிலும்பாயக்கடவன.—அவைகள் அந்நியருக்
கும் உரியவைகளாயிராமல், உனக்கு மாத்திர
யஅ மே உரியவைகளாயிருக்கவேண்டும்.—உன்னு
டைய ஊற்று ஆசீர்வதிக்கப்படுவதாக: உன் இ
ளம்பிராயத்திலுள்ளமனைவியுடன் சந்தோஷப்ப
டு.–பெண்மான்போற்பிரியமும், காட்டாடுபோ யகூ
லச்சௌந்தரியமுமுள்ளவளாகிய அவளுடைய
அன்பு எப்பொழுதும் உன்னைத்திருத்திப்படுத்து
வதாக; அவளுடைய அன்பினால் நீ எப்பொழு
தும் மகிழ்ச்சியாயிரு.—என்மகனே, பரஸ்திரியி உய
னால் உன்மனம் கவரப்படவேண்டியதென்ன,
அந்நிய ஸ்திரியின் மார்பைத் தழுவவேண்டிய
தென்ன.—மனுஷனுடைய வழிகள் யெகோ உக
வாவின் பார்வைக்குமுன்னிருக்கின்றன. அ
வர் அவனுடைய வழிகளெல்லாவற்றையுஞ்சீர்
தூக்கிப்பார்க்கிறார்.
துன்மார்க்கன் தன் அக்கிரமங்களினாலேபிடிக் உஉ
கப்படுவான்,தன் பாவக்கயிறுகளினாலேகட்டப்
படுவான்.—அவன் புத்தி கேளாமல் தன்அறியா உங
மையின் மிகுதியினாலே வழிதப்பினபடியினால்
இறந்துபோவான்.

## சு. அதிகாரம்.

க. பிணைநிற்றலும்சோம்பேறியாயிருத்தலும் தகாதெனவிலக்கல்: யஉ. துன்மார்க்கரைக்கண்டித்தல்: யசு.வெறுக்கத்தகும்ஏழுவிஷயங்களிவையெனக்காட்டல்: உய. கட்டளைபேணுவதுநயமென்றுரைத்தல்: உரு. பரதாரகமனத்தினால் வருங்கேடுரைத்தல்.

என்மகனே, உன் சிநேகிதனுக்குப்பிணைப்பட் க
டு,அந்நியனுடைய காரியத்திலேகையிட்டால்,–
உன்வாயின் வாக்குகளாகிய கண்ணியில் அகப் உ
பட்டாய், உன்வாயின் வாக்குகளால் பிடிக்கப்
பட்டாய்.—ஆதலால் என் மகனே, ஒன்றுசெய், ங
உன்சிநேகிதனுடையகையில் அகப்படும்பொழு
து,—உன்கண்ணுக்கு நித்திரையும் உன் கண்ணி ச
மைக்குத்தூக்கமும்வரவிடாமல் உன்சிநேகிதனி
டத்தில்போய்உன்னைத்தாழ்த்தி அவனை வருந்திக்
கேள்.—வெளிமானும் பறவையும் வேட்டைக் ரு
காரனுடையகைக்குத்தப்புவதுபோல் நீ உன்னை
விடுவிப்பாயாக.
சோம்பேறியே, நீ எறும்பிடத்திற்போய் அ சு
தின் வழிகளைப்பார்த்து, ஞானத்தைக் கற்றுக்
கொள்.—அதற்கு நாயன், அதிபதி, பிரபு ஒரு எ
வரும் இல்லாதிருந்தும்,–கோடைகாலத்தில்தன அ
து ஆகாரத்தைச் சேகரித்துக்கொள்ளும், அறுப்
புக்காலத்தில் தானியத்தைச்சேர்க்கும்.—சோம் கூ
பேறியே, நீ எதுவரைக்கும் படுப்பாய்; எப்பொ
ழுது நித்திரை விட்டெழும்புவாய்.—இன்னுங் ய
கொஞ்ச நித்திரைகொள்ளப்போகிறேன், சற்றுத்
தூங்கப்போகிறேன், கைகட்டிக்கொண்டு நித்தி
ரை கொள்வேனென்றால்,—வழிப்போக்கனைப் யக
போல உன் வறுமையும், ஆயுதமணிந்தவனைப்
போல உன்குறைபாடும்வரும்.
பேலியாலின் மனிதனாகிய ஒருதுன்மார்க்கன் யஉ

(உஎ) உபா.ரு.கூஉ. யோசு.க.எ. எசா.க.யசு. ரோ.யஉ.கூ.—(ரு. அதி. உ.) மல்.உ.எ. (ங) அதி.உ.யஎ. சங்.ருரு. உக. (ச) பிர.எ.உசு. எபி.ச.யஉ. (யஉ) அதி.க.உரு,உகூ. (யஅ) மல்.உ.யச. (யகூ) உன்.உ.கூ. (உய) அதி.எ.ரு. (உக) உ.நாளா.யசு.கூ. யோபு.ஙக.ச. எரே.யசு.யஎ. ஓசி.எ.உ. எபி.ச.யங. (உஉ) சங்.கூ.யரு. (உங) யோபு.ஙச. யஉ.—(சு. அதி. க.) அதி.யக.யரு. அதி.யஎ.யஅ.(ச)சங்.ளஙஉ.ச. (சு) யோபு.யஉ.எ. (கூ) அதி.உச.ஙங,ஙச.

௰௩ கடுஞ்சொற்களைச் சொல்லிவருகிறான்.—அவன்
தன்கண்களால் சைகைசெய்கிறான், தன்கால்க
ளினாலே குறிப்பிக்கிறான், தன்விரல்களினால் உ
௰௪ ணர்த்துகிறான்.—அவன் இருதயத்திலே கொடு
மையுண்டு,இடைவிடாதபடிதுராலோசனைபண்
௰௫ ணுகிறான்; அவன்வழக்கை இறைக்கிறான்.—ஆ
தலால் சடிதியில் அவனுக்கு ஆபத்துவரும்;சகா
யமின்றிச் சடிதியில் நாசமடைவான்.
௰௬ ஆறுவிஷயங்களை யெகோவா வெறுக்கி
றார்: ஏழும் அவருக்கு அருவருப்பானவைகள்.-
௰௭ அகந்தையானபார்வை, பொய் நாவு, குற்றமற்ற
௰௮ வர்களுடையஇரத்தத்தைச்சிந்துங்கைகள்,—துரா
லோசனைகளைப் பிணைக்கும் இருதயம், தீங்கு
௰௯ செய்வதற்கு விரைந்தோடுங்கால்,—பொய்சொல்
லும் பொய்ச்சாட்சி, சகோதரருக்குள்விரோதத்
தை இறைப்பவன் என்பவைகளே.
௨௰ என்மகனே, உன்பிதாவின்கட்டளையைக்காத்
துக்கொள், உன்மாதாவின் பிரமாணத்தைவிட்டு
௨௧ விடாதே.—அவைகளை எப்பொழுதும் உன் இ
ருதயத்தின்மேல்கட்டு, உன்கழுத்தில் அவைக
௨௨ ளை அணிந்துகொள்.—நீ நடக்கும்பொழுது அது
உனக்கு வழிகாட்டியாகும்; நீ படுக்கும்பொழு
து உன்னைக்காப்பாற்றும்; நீ விழிக்கும்பொழு
௨௩ து அது உன்னோடே சம்பாஷிக்கும்.—தன்மா
ர்க்கஸ்திரிக்கும், இன்சொற்சொல்லும் நாவை
யுடைய பரஸ்திரிக்கும் உன்னை விலக்கிக்காப்ப
௨௪ தற்கு,—கட்டளையே விளக்கு; நியாயப்பிரமாண
மே வெளிச்சம்; போதகத்தின்கண்டனையேசீவ
௨௫ மார்க்கம்.—நீ உன் இருதயத்தில்அவள்சௌந்தரி
யத்தை இச்சியாதே; அவள் தன்கண்ணிமைகளி
௨௬ னால் உன்னைப்பிடிக்கவிடாதே.—வேசையினி
மித்தம் ஒருதுண்டப்பமும் இரக்கவரும்: விபசா
ரியானவள்விலையுயர்ந்தபிராணனைவேட்டையா
௨௭ டுகிறாள்.—ஒருவன் தன் வஸ்திரம் வெந்துபோ
காமல் தன் மடியில் அக்கினியை வைக்கமுடியு
௨௮ மா.—ஒருவன் தன்காலில்சுடாமல்தழலின்மேல்
௨௯ உலாவலாமா.—பிறனுடைய மனைவியிடத்தில்
பிரவேசிப்பவனும், அப்படியே அவளைத் தொ
௩௰ டுகிற எவனுங் குற்றமற்றவனாயிரான்.—கள்ளன்
பசிவருகிறபொழுது திருடினாலும், சனங்கள் அ
௩௧ வனை இகழார்கள்.—அவன் கண்டுபிடிக்கப்பட்
டால்ஏழுமடங்கு பிரதியாகக்கொடுப்பான்.-தன்
வீட்டிலுள்ள பொருளெல்லாங் கொடுப்பான்.—
௩௨ ஸ்திரியுடனே விபசாரம்பண்ணுகிற புருஷன்
மதியீனனே: அவன் தன்பிராணனைத்தானே நா
௩௩ சப்படுத்துகிறான்.—வாதையையும் இலச்சையை
யும் அடைவான்; அவன் நிந்தை துடைக்கப்ப
௩௪ டமாட்டாது.—ஸ்திரியைப்பற்றும் எரிச்சல் புரு
ஷனுக்குக்குரோதம் வருவிக்கும்: ஆதலால் அ
வன் பழிவாங்கும்நாளில் இரங்கமாட்டான்.—
அவன் எந்தமீட்கும்பொருளையும் வாங்கான்; நீ ௩௫
அநேகம் பொருள்களைக்கொடுத்தாலும் சந்தோ
ஷப்படான்.

## ௭. அதிகாரம்.

௧. சலோமோன் புத்தி போதித்தல்: ௬. வேசை
யின்நடக்கையைக்குறித்தல்: ௨௪. அவளைவிட்
டுவிலகுவதுமிக அவசியமெனக்காட்டல்.

என் மகனே, என் வாக்குகளைக்காத்துக்கொள், ௧
என் கட்டளைகளை உன் சிந்தையில்வை.—என் ௨
கட்டளைகளைக்கைக்கொள்; சீவித்திரு; என்பிர
மாணத்தை உன்கண்மணியைப்போலக்காத்துக்
கொள்.—அவைகளை உன் விரல்களிலேகட்டிக் ௩
கொள், உன்னிருதயபத்திரத்தில் அவைகளை எ
ழுது.—இன்சொற்களை வசனிக்கும் அந்நியளா ௪
கியபரஸ்திரிக்கு உன்னைவிலக்கும்படிக்கு,-ஞா ௫
னத்தைநோக்கி, நீ என்சகோதரியென்று சொல்
லு; புத்தியைப்பார்த்து, நீ என் இனத்தாளென்று
பெயரிடு.

நான் என்வீட்டின் பலகணிஅருகேநின்று அ ௬
தின்வழியாய்ப் பார்த்தபொழுது,—பேதையர்க ௭
ளைப்பார்த்து, வாலிபருக்குள்ளே புத்தியீனவாலி
பனொருவனைக்கண்டேன்.-சாயங்காலத்தில் கரு ௮
குமாலையில்இருளும் இரவுந்தொடங்கினபொழு
து,—அவன்விபசாரியினுடைய வீட்டின் மூலைக் ௯
குச்சமீபமாகத் தெருவிற்சென்று, அவளுடைய
வீட்டுவழியேநடந்துபோகையில்,—சூதுள்ளஸ்தி ௰
ரிவேசையின்வேஷந்தரித்துக்கொண்டு அவனுக்
குஎதிர்ப்பட்டாள்.—அவள் கலகமும் அடங்கா ௰௧
மையுமுள்ளவள்; அவளுடையகால் அவள்வீட்
டிலேதரியாது.—சிலவேளை வெளியிலிருப்பாள், ௰௨
சிலவேளைவீதியிலிருப்பாள், சந்திகள்தோறும்எ
திர்பார்த்து நிற்பாள்.—அந்த ஸ்திரி அவனைத்த ௰௩
ழுவி முத்தஞ்செய்து, முகம் நாணாமல் அவனை
நோக்கி,—இன்றுநான் ஸ்தோத்திரபலிகளையிட் ௰௪
டு,என்சங்கற்பங்களைநிறைவேற்றினேன்.—நான் ௰௫
உன்னைச்சந்திக்கும்படி புறப்பட்டு, உன்முகத்
தைத்தேடித்தேடிக்கண்டுகொண்டேன்.—நான் ௰௬
விசித்திர வஸ்திரங்களினாலும், எகிப்துதேசத்து
விசித்திரமான மெல்லிய புடவையினாலும் என்
கட்டிலைச்சிங்காரித்தேன்.—வெள்ளைப்போளத்தி ௰௭
னாலுஞ் சந்தனத்தினாலும் கறுவாவினாலும் என்
சயனத்துக்குவாசனை ஊட்டினேன்.—என் புரு ௰௮
ஷன் வீட்டிலேயில்லை,அவன் தூரப்பிரயாணம்
போய்விட்டான்.—பணப்பையைத் தன் கையி ௰௯
லேகொண்டுபோனான், அவன் அமாவாசியிலே
வீட்டுக்குத் திரும்பிவருவான்.-நீவா, விடியற்கா ௨௰
லம்வரைக்குஞ் சம்போகத்தினால் திருத்தியடை
வோம்: சம்போகத்தினால் பூரித்துக்கொள்வோ
மென்றுசொல்லி,-தன்மிகுதியான இனியசொற் ௨௧
களினால் அவனைத்தன்வசப்படுத்தினாள், தன்னு

(௰௩) யோபு.௰௫.௰௨. சங்.௩௫.௰௯. (௰௪) மீகா.௨.௧. (௰௫) எரே.௰௯.௰௧. ௨.நாளா.௩௬.௰௬. (௰௭) சங்.௰௮.௨௭.
சங்.௱௨௰.௨,௩. ஏசா.௧.௰௫. (௰௮) ஆதி.௬.௫. ஏசா.௫௯.௭. ரோ.௩.௰௫. (௰௯)சங்.௨௭.௰௨.(௨௰)அதி.௧.௮. எபே.
௬.௧. (௨௪) சங்.௰௯.௮. சங்.௱௰௯.௱௫. (௨௫) மத்.௫.௨௮. (௨௬) அதி.௨௯.௩. ஆதி.௩௯.௰௪. எசேக்.௰௩.௰௮. (௩௧)
யாத்.௨௨.௧,௪. (௩௨) அதி.௭.௭.—(௭. அதி. ௨.) லேவி.௰௮.௫. ஏசா.௫௫.௩. உபா.௩௨.௰. (௩) உபா.௬.௮. (௯)
யோபு.௨௪.௰௫. (௰௧) ௧.தீமோ.௫.௰௩. (௰௬) ஏசா.௰௯.௯. (௨௧) சங்.௰௨.௨.

தடுகளின்மதுரவாக்கினால் அவனை வசீகரம்பண்
௨௨ ணினாள்.—உடனே அவன் அவளுக்குப் பின்
சென்றான், ஒருமாடு அடிக்கப்படும்படி செல்வ
துபோலவும், ஒருவன்விலங்கிடப்பட்டு மூடன்
௨௩ பெறுந்தண்டனைக்குப்போவதுபோலவும்,—ஒரு
குருவி தன் பிராணனை நாசப்படுத்துங் கண்
ணியை அறியாமல் அதில்விழும்படி விரைவது
போலவும், அம்பு தன்னீரலைப் பிளக்கும்வரைக்
கும் அவளுக்குப்பின்செல்லுகிறான்.
௨௪ ஆதலால் பிள்ளைகளே, எனக்குச் செவிகொ
டுங்கள், என்வாயின் வாக்குகளைச் சிந்தித்துக்
௨௫ கொள்ளுங்கள்.—அவள் அநேகரைக் காயப்ப
டுத்தி விழுத்தினாள்: பலவான்கள் அநேகரைக்
௨௬ கொலைசெய்தாள்.—அவள் வீடே பாதாளத்துக்கு
வழி, அது மரித்தோர்ஸ்தலங்களுக்குக் கொண்
௨௭ டுபோய்விடும்.—ஆதலால் உன் இருதயம் அவள்
வழியிலே சாயவிடாதே, நீ அவளுடைய பாதை
யில் அலைந்து திரியாதே.

## ௮. அதிகாரம்.

௧. ஞானத்தின் கீர்த்தியையும் மேன்மையையுங் காட்டல்: ௰௨. ஞானத்தினாலேபராக்கிரமமுஞ் செல்வமும் வருமெனவுரைத்தல்: ௨௨. ஞானம் அநாதியென விளக்கல்: ௩௨. ஞானத்தினால் வருஞ் சௌக்கியத்தை வருணித்தல்.

ஞானம் கூப்பிடுகிறதில்லையோ; புத்தி சத்தமி
௨ டுகிறதில்லையோ.—அது வழியருகேயுள்ள உயர்ந்
த ஸ்தானங்களிலும், நாற்சந்திகளிலும் நிற்கின்
௩ றது.—அதுநகரத்தின் பிரவேசவாசற்கதவடியில்
௪ நின்று சத்தமிடுகின்றது.—மனுஷரே, உங்களை
நோக்கிக் கூப்பிடுகிறேன்; மனுபுத்திரருக்கே
௫ நான்சத்தமிடுகிறேன்.-அஞ்ஞானிகளே, ஞானத்
தை யுணர்ந்துகொள்ளுங்கள்: பேதையரே, புத்
௬ தியுள்ள சிந்தையைத்தேடுங்கள்.—கேளுங்கள்;
நான் உயர்ந்தபொருளைப்பேசுவேன்; என்னுத
டுகள்செவ்வையான காரியங்களை வசனிக்கும்.—
௭ என்வாய் சத்தியத்தைவிளம்பும்; தீமை என்னுத
௮ டுகளுக்கு அரோசியமாயிருக்கின்றது.—என்வா
யின் எல்லாவாக்குகளும் நீதிக்கேற்றவைகள்; அ
௯ வைகளில் புரட்டும்விபரீதமுமில்லை.—அவைக
ளெல்லாம்புத்தியுள்ளவனுக்குவிளக்கம், ஞானத்
௰ தைப் பெற்றவர்களுக்கு யதார்த்தம்.—வெள்ளி
யையல்ல என் உபதேசத்தையும், தங்கத்தையல்
லஞானத்தையும்அங்கிகரித்துக்கொள்ளுங்கள்.—
௰௧ ஞானம் முத்துக்களிலும்உத்தமம்;வாஞ்சிக்கப்ப
௰௨ டும்எப்பொருள்களும் அதற்கொப்பல்ல.—ஞான
மாகிய நான் ஆராய்ச்சியோடே வாசம்பண்ணி,
நல்லாலோசனையின் அறிவைக் கண்டுகொள்ளு
௰௩ கிறேன்.—தீமையை வெறுப்பது யெகோவா
வைப் பற்றும்பயம்: அகங்காரத்தையும், அகந்
தையையும், துன்னெறியையும்,புரட்டும்வாயை
யும்நான்வெறுக்கிறேன்.-ஆலோசனையும்மெய்ஞ் ௰௪
ஞானமும் என்னுடையவைகள்: நானே புத்தி;
பெலம் என்னுடையது.—என்மூலமாக இராசாக் ௰௫
கள் அரசாளுகிறார்கள், பிரபுகள் நீதியைத்திட்
டப்படுத்துகிறார்கள்.—அதிகாரிகளும், பிரபுக ௰௬
ளும், பூமியிலுள்ள சகலநியாயாதிபதிகளும் என்
னால் ஆளுகைசெய்துவருகிறார்கள்.—என்னைவி ௰௭
ரும்புகிறவர்களை நான் விரும்புகிறேன்; அதிகா
லையில் என்னைத் தேடுகிறவர்கள் என்னைக்கண்
டடைவார்கள்.—ஐசுவரியமும், கனமும், ஒழி ௰௮
யாத பொருளும், நீதியும் என்னோடேயிருக்கின்
றன.—என்பலன் பொன்னிலுந் தங்கத்திலும் அ ௰௯
தியுத்தமம்; விசேஷித்த வெள்ளியைப் பார்க்கி
லும் என் ஆதாயம் உத்தமம்.—என்னை விரும்புகி ௨௰
றவர்கள் பொருளைச் சுதந்தரிக்கும்படி,—அவர்க ௨௧
ளை நீதியின் வழியிலும் நியாயபாதைகளுக்குள்
ளும்நடத்துகிறேன், அவர்களுடையகளஞ்சியங்
களைநிரப்புகிறேன்:-யெகோவா தமதுகிரியை ௨௨
களுக்குமுன் என்னை அவர் வழியினாரம்பமாகக்
கொண்டிருந்தார்.-அநாதிகாலந்தொடங்கிப்பூமி ௨௩
உண்டாகுமுன் நான் அபிஷேகம்பெற்றேன்.—
சலம்நிறைந்த ஊற்றின்கண்களும், ஆழங்களும் ௨௪
இல்லாத காலத்தில் நான் சனிப்பிக்கப்பட்
டேன்.—மலைகள் நிலைபெறுவதற்கும், குன்று ௨௫
கள் உண்டாவதற்குமுன்னும்,—பூமியும், அதின் ௨௬
வெளிகளும்,பூமியிலுள்ள மண்ணின் முதன்மை
யான அணுவும் சிருஷ்டிக்கப்படாத காலத்தில்
நான் தோன்றியிருந்தேன்.—அவர்ஆகாய மண்ட ௨௭
லங்களை ஸ்தாபித்தசமயத்தில் நான் அங்கேயிருந்
தேன்: அவர் சமுத்திரத்துக்குக் கரையைஏற்படு
த்தி,-உயரத்திலுள்ளமேகங்களைஸ்தாபித்து, சமு ௨௮
த்திரத்தின் ஊற்றின்கண்களை அடைத்து,—சமுத் ௨௯
திரசலந் தம்முடைய விதியை மீறாதபடி அவ்வி
தியைக்கட்டளையிட்டுப் பூமியின் அஸ்திபாரங்
களை நிலைப்படுத்தியகாலத்தில்,—நான்அவரருகே ௩௰
தொழிற்காரனாயிருந்தேன்: நாடோறும் அவருக்
குப்பிரியமுள்ளவனாகி, நித்தமும் அவர் சமுகத்
தில் மகிழ்ந்திருந்தேன்.—அவருடைய பூமண்ட ௩௧
லத்திலுள்ள வாசஸ்தானங்களிலே சந்தோஷப்
பட்டு,மனுபுத்திரருடனேகளிகூர்ந்திருந்தேன்.-
ஆதலால் பிள்ளைகளே, இப்பொழுது எனக்குச் ௩௨
செவிகொடுங்கள்: என் வழிகளைக்காத்து நடக்
கிறவர்கள் வாழ்வுடையவர்கள்.—நீங்கள் போ ௩௩
தகத்தைக்கேட்டு, ஞானவான்களாவீர்களாக, அ
தை விட்டுவிலகாதிருங்கள்.—என் வாசற்படி ௩௪
யில்நாடோறும்விழித்திருந்து, என்கதவுநிலையரு
கேகாத்திருந்து, எனக்குச்செவிகொடுக்கிறமனு
ஷன் வாழ்வுடையவன்.—என்னைக்கண்டடைகி ௩௫
றவன்சீவனைக்கண்டடைகிறான்,யெகோவா
வின்தயையைப்பெற்றுக்கொள்ளுவான்.—எனக் ௩௬

(௨௩) பிர.௯.௰௨. (௨௫) நிகி.௰௩.௨௬. (௨௬) அதி.௨.௰௮.—(௮. அதி. ௧.) அதி.௧.௨௰. (௬) அதி.௨௨.௨௰. (௰௧) யோபு.௨௮.௰௫,. சங்.௰௯.௰. (௰௪) பிர.௭.௰௯. (௰௫) தானி.௨.௨௧. ரோ.௰௩.௧. (௰௭) ௧.சாமு.௨.௩௰. சங்.௯௧.௰௪. யோவா.௰௪.௨௧. யாக.௧.௫. (௰௮) மத்.௬.௩௩.(௨௨)அதி.௩.௰௯. யோவா.௧.௧. (௨௩) சங்.௨.௬. (௨௫) யோபு.௰௫.௭,௮. (௨௬) ஆதி.௧.௯,௰. யோபு.௩௮.௰,௰௧. எரே.௫.௨௨. யோபு.௩௮.௪. (௩௰) யோவா.௧,௧,௨,௰௮. மத்.௩.௰௭. கொலோ.௧.௰௩. (௩௧) சங்.௰௬.௩. (௩௨) லூக்.௰௧.௨௮.

கு விரோதமாகப்பாவஞ்செய்கிறவனோ அவன்
தன் பிராணனைச் சேதப்படுத்துகிறான்: என்னை
வெறுக்கிறவர்கள் யாவரும் மரணத்தை விரும்பு
கிறார்களென்றுசொல்லுகின்றது.

## ௯. அதிகாரம்.

௧. ஞானம் விருந்துக்கழைத்தல்: ௭. உபதேசஞ்
சொல்லல்: ௰௩. அஞ்ஞானத்தின் இலட்சண
மும் பலனுமின்னதென்றுரைத்தல்.

ஞானம் தன் வீட்டைக்கட்டித் தன் எழுதூண்
௨ களைத் தொழிற்படுத்திற்று.—அது புஷ்டியான
செந்துக்களை அடித்து, திராட்சரசத்தைக்கலந்து
வைத்து, தன்போசன பீடத்தை ஆயத்தப்படுத்
௩ திற்று.—அதுதன்பணிவிடைக்காரிகளை அனுப்
பி நகரத்தின் உயர்ந்தஸ்தானங்களினின்று கூப்
௪ பிட்டு,—பேதை எவனோ அவன் இவ்விடத்தில்
௫ வரக்கடவன்.—புத்தியீனனைநோக்கி, நீ வந்து
என் ஆகாரத்தைப் போசனம்பண்ணு, நான் க
லந்துவைத்ததிராட்சரசத்தைப்பானம்பண்ணு,—
௬ நீ அஞ்ஞானிகளைவிட்டுச் சீவித்து, போதகத்
௭ தின் வழியில் நட,—நிந்தனைக்காரனைக்கண்டிக்
கிறவன் இலச்சைபெறுவான்: துன்மார்க்கனைக்
கண்டிக்கிறவன் தன்னைக்கறைப்படுத்துவான்.—
௮ நிந்தனைக்காரனைக் கடிந்துகொள்ளாதே, அவன்
உன்னை வெறுப்பான்: ஞானமுள்ளவனைக்கடிந்
௯ துகொள், அவன் உன்னைநேசிப்பான்.—ஞானவா
னுக்குப்போதி, அவன் ஞானத்திலே தேறுவான்:
நீதிமானுக்குப்போதி, அவன் ஞானவிருத்திய
௰ டைவான்.—யெகோவாவைப் பற்றும் பயம்
ஞானத்தின் ஆரம்பம்: பரிசுத்தரைப்பற்றுமஅறி
௰௧ வு ஞானம்.—என்னால் உன் ஆயுள் நாள்கள்பெரு
கும், உன் ஆயுளின்வருஷங்கள்விருத்தியாகும்.—
௰௨ நீ ஞானியானால் உனக்காக ஞானியாவாய்: நீ
நிந்தனைசெய்தால் நீயே அதை அனுபவிப்பா
யென்று சொல்லுகின்றது.
௰௩ மதியற்றஸ்திரி கலகமும், அவிவேகமும், ஒ
௰௪ ன்றும் அறியாதவளாகி,—நகரத்தின் உயர்ந்தஸ்
தானத்திலுள்ள தன் வீட்டுவாசலருகே ஆசனத்
௰௫ திலிருந்து,—செவ்வையாய் நடக்கும் வழிப்
௰௬ போக்கரைநோக்கி,—பேதை எவனோ அவன்
௰௭ இவ்விடத்திலே வரக்கடவன்:—புத்தியீனனை
நோக்கி, சோர நீர்கள் மதுரமுள்ளன, அந்தரங்
கத்தின் ஆகாரம் சுவையுள்ளதென்றுசொல்லிக்
௰௮ கூப்பிடுகிறாள்.—அவ்விடத்தில் மரித்தோர்இருக்
கிறார்களென்றும், அவளுடைய விருந்தாளிகள்
நரகத்தின் ஆழங்களில்கிடக்கிறார்களென்றும்அ
வன் அறியான் என்றான்.

## ௰. அதிகாரம்.

இது முதல் இருபத்தைந்தாம் அதிகாரம் வரைக்
கும் நீதிநெறிகளுக்கேற்கப் புத்திகளைச் சொல்
லல்.

சலோமோனின் நீதிமொழிகள். ஞானமுள்ள ௧
புத்திரன் தன் பிதாவைச் சந்தோஷப்படுத்துகி
றான்: மூடபுத்திரனோ தன் மாதாவுக்குவிசனம்.—
தீதானபொக்கிஷங்கள் உதவுவதில்லை: நீதியோ ௨
மரணத்துக்குத் தப்புவிக்கும்.—யெகோவா நீ ௩
திமான்களைப் பசியினால் வருந்தவிடார்: துன்
மார்க்கருடைய பொருளையோ அகற்றிவிடுகிறா
ர்.—சோம்பல் கையால் வேலைசெய்கிறவன் ஏ ௪
ழையாவான்: பிரயாசியின் கையோ செல்வத்
தைத்தரும்.—கோடைகாலத்தில் சேர்க்கிற புத்தி ௫
ரன் விவேகமுள்ளவன்: அறுப்புக்காலத்தில் தூங்
குகிறபுத்திரனோ இலச்சைக்குக்காரணம்.—ஆசீர் ௬
வாதங்கள்நீதிமானுடையசிரசின்மேலேதங்கும்:
கொடுமையோ துன்மார்க்கனுடைய வாயை அ
டைக்கும்.—நீதிமானுடைய நாமம் ஞாபகத்திலி ௭
ருந்து வாழ்த்தப்படும்: துன்மார்க்கனுடைய நா
மமோ அழுகிப்போம்.—ஞானசிந்தையுள்ளவன் ௮
கட்டளைகளை ஏற்றுக்கொள்வான்: வாயாடும்மூ
டனோவிழுவான்.—நேர்மையாய்நடக்கிறவன் ப ௯
யமின்றிநடப்பான்: தாறுமாறான வழிகளில் ந
டக்கிறவனோ, அறியப்படுவான்.—கண்சாடை ௰
காட்டுகிறவன் துக்கத்தைவருவிப்பான்: வாயா
டும்மூடன் விழுவான்.—நீதிமானுடையவாய்சீவ ௰௧
ஊற்று: கொடுமையோ துன்மார்க்கனுடையவா
யைஅடைக்கும்.—பகைவிரோதங்களை மூட்டும்: ௰௨
நேசமோ சகல மீறுதல்களையு மூடும்.—புத்திமா ௰௩
னுடையஉதடுகளில்ஞானம்விளங்கும்: மூடனு
டையமுதுகுக்கு ஆக்கினைகிடைக்கும்.—ஞான ௰௪
வான்கள் அறிவைச்சேகரிக்கிறார்கள்: அஞ்ஞா
னியின்வாய் நாசத்தைச்சேருகின்றது.—செல்வ ௰௫
னுடையபொருள் அவனுக்கு அரணுள்ளநகரம்:
ஏழைகளின்வறுமையோ அவர்களுக்கு நாசம்.—
நீதிமானுடையபிரயாசஞ் சீவனைத் தரும்: துன் ௰௬
மார்க்கனுடைய விளைவோ பாவமாய்முடியும்.—
போதகத்தைக் காத்துக்கொள்ளுகிறவன் சீவபா ௰௭
தையில் செல்லுகிறான்: கண்டனையைச்சிந்தியா
தவனோ தவறுவான்.—பொய்யுதட்டினால் பகை ௰௮
யை மறைக்கிறவனும், புறங்கூறுகிறவனும் மதி
யீனர்.—சொற்களின் மிகுதியில் பாவமில்லாமற் ௰௯
போகாது: தன்னுதடுகளை அடக்குகிறவனோபுத்
திமான்.—நீதிமானுடைய நாவு சுத்தவெள்ளி: ௨௰
துன்மார்க்கனுடையமனதுக்குவிலைஅற்பமேயா
கும்.—நீதிமானுடைய உதடுகள் அநேகரைப்போ ௨௧
ஷிப்பிக்கும்: மூடரோ மதியீனத்தினால் மாளு
வார்கள்.—யெகோவாவின் ஆசீர்வாதஞ்செல் ௨௨
வத்தைத்தரும், அவர் அதனுடன்துக்கத்தைக்கூட்

(௯. அதி. ௧.) மத். ௰௬. ௰௮. ௧ பேதுரு. ௨. ௫. (௨) மத். ௨௨. ௩,. (௩) ரோ. ௰. ௰௫. அதி. ௮. ௧,௨. (௪) அதி. ௬. ௩௨. மத். ௰௧. ௨௫. (௫) உன். ௫. ௧. ஏசா. ௫௫. ௧. யோவா. ௬. ௨௭. (௮) மத். ௭. ௬. (௯) மத். ௰௩. ௰௨. (௰) யோபு. ௨௮. ௨௮. (௰௨) யோபு. ௩௫. ௬,௭. அதி. ௰௬. ௨௬. (௰௭) அதி. ௨௰. ௰௭.—(௰. அதி. ௧.) அதி. ௰௫. ௨௰. (௨) சங். ௪௯. ௫,. லூக். ௰௨. ௰௯,௨௰. தானி. ௪. ௨௭. (௩) சங். ௰. ௰௪. (௪) அதி. ௰௯. ௰௫. அதி. ௨௧. ௫. (௫) அதி. ௰௨. ௪. (௬) எஸ்த. ௭. ௮. (௭) பிர. ௮. ௰. (௯) சங். ௨௩. ௪. ஏசா. ௩௩. ௰௫,௰௬. (௰) அதி. ௬. ௰௩. (௰௧) சங். ௩௭. ௩௰. (௰௨) ௧ கொரி. ௰௩. ௪. ௧ பேதுரு. ௪. ௮. (௰௪) அதி. ௨௧. ௨௩. (௰௫) யோபு. ௩௧. ௨௪. சங். ௫௨. ௭. ௧ தீமோ. ௬. ௰௭. (௰௮) சங். ௰௫. ௩. (௰௯) பிர. ௫. ௩ யாக். ௩. ௨. (௨௨) ஆதி. ௨௪. ௩௫. சங். ௩௭. ௨௨.

௨௩ டார்.—தீவினைசெய்வதில் மூடனுக்கும், விவேக
மாய்நடப்பதில் புத்திமானுக்கும் பிரியமுண்டா
௨௪ கும்.—துன்மார்க்கன் பயப்படுவது அவன்மேல்
வரும்: நீதிமானுடைய வாஞ்சையோ அருளப்ப
௨௫ டும்.—சுழல்காற்றுவீசி ஒழிவதுபோலத்துன்மார்க்
கனும் ஒழிந்துபோவான்: நீதிமானோ என்றும்
௨௬ நிலைகொள்வான்.—காடி பற்களுக்கும், புகைகண்
களுக்குமிருப்பதுபோல, சோம்பேறிதன்னை அ
௨௭ னுப்புகிறவர்களுக்கு இருக்கிறான்.—யெகோ
வாவைப்பற்றும் பயம் ஆயுள் நாள்களைப் பெ
ருகப்பண்ணும்: துன்மார்க்கருடைய வருஷங்க
௨௮ ளோகுறுக்கப்படும்.—நீதிமான்களின் நம்பிக்கை
மகிழ்ச்சியாகும்: துன்மார்க்கருடைய அபேட்
௨௯ சையோ அழியும்.—யெகோவாவின் வழி
நேர்மையானவர்களுக்கு அரண்: துர்க்கருமக்கா
௩௰ ரருக்கோ நாசம்.-நீதிமான் என்றும் அசைக்கப்
படான்: துன்மார்க்கரோ தேசத்தில் வசிப்பதில்
௩௧ லை.—நீதிமானுடையவாய் ஞானத்தைப்பிறப்பிக்
கும்: மாறுபாடுள்ள நாவோ சேதிக்கப்படும்.—
௩௨ நீதிமான்களுடைய உதடுகள் பிரியமானவைக
ளைப்பேச அறியும்: துன்மார்க்கருடைய வாயோ
மாறுபாடுள்ளது.

## ௰௧. அதிகாரம்.

கள்ளத் தராசு யெகோவாவுக்கு வெறுப்பா
னது:யதார்த்தநிறைகல்லோஅவருக்குப்பிரியமா
௨ னது.—அகங்காரத்துடன் இலச்சையும் வரும்:
தாழ்ந்த சிந்தையுள்ளவர்களிடத்தில் ஞானமுண்
௩ டு.—நேர்மையானவர்களுடைய நீதி அவர்களை
நடத்தும்: துரோகிகளின் மாறுபாடோ அவர்க
௪ ளைக்கெடுக்கும்.—குரோதத்தின்தினத்தில் ஐசுவ
ரியம்உதவாது: நீதியோ மரணத்துக்குத்தப்புவிக்
௫ கும்.—சற்குணனுடைய நீதி அவன் வழியைச்
செவ்வைப்படுத்தும்: துன்மார்க்கனோ தன் துன்
௬ மார்க்கத்தினால்விழுவான்.-நேர்மையானவர்களு
டைய நீதி அவர்களைத்தப்புவிக்கும்: அதிக்கிரமக்
காரரோ தங்கள் துர்க்கருமத்தினால் அகப்படுவார்
௭ கள்.-துன்மார்க்கன் மரிக்கும்பொழுது, அவன்அ
பேட்சைஒழிந்துபோம். அதிக்கிரமக்காரரின்நம்
௮ பிக்கை அழிந்துபோம்.-நீதிமான் துக்கத்தினின்
றுவிடுவிக்கப்படுவான், அவனுக்குப் பிரதியாகத்
௯ துன்மார்க்கன் வருவான்.—கபடி தன்வாயினால்
௰ தன் அயலானைக்கெடுக்கிறான்:—நீதிமானோ தன்
அறிவினால் விடுவிக்கப்படுவான். நீதிமான்கள்
வாழ்வடைந்தால் நகரம் மகிழும்: துன்மார்க்கர்
௰௧ அழிந்தால் ஆரவாரமுண்டாகும்.—நேர்மையான
வர்களுடைய ஆசீர்வாதத்தினால் நகரம் உன்ன
தம்பெறும்: துன்மார்க்கருடையவாயினாலோ இ
டிந்துவிழும்.—மதியீனன் பிறனை அவமதிக்கி ௰௨
றான்: புத்திமானோமவுனமாயிருப்பான்.—புறங் ௰௩
கூறித்திரிகிறவன் இரகசியத்தைவெளிப்படுத்து
கிறான்; ஆவியில் உண்மையுள்ளவனோ காரியத்
தை அடக்கிவைப்பான்.-ஆலோசனையில்லாதஇ ௰௪
டத்தில் சனங்கள் விழுவார்கள்: அநேகஆலோச
னைக்காரருண்டானால்சௌக்கியமுண்டாகும்.—
அந்நியனுக்குப்பிணையாயிருப்பவன் கிலேசப்ப ௰௫
டுவான்: பிணையிருப்பதைவெறுப்பவன்நஷ்டம்
பெறான்.—ஒழுக்கமுள்ள ஸ்திரி மானத்தைக்காப் ௰௬
பாள்:பராக்கிரமசாலிகள் செல்வத்தைக்காப்பார்
கள்.—தயையுள்ளமனுஷன் தன் பிராணனுக்கு ௰௭
நன்மைவருவிக்கிறான்:கொடூரமுள்ளவனோதன்
மாமிசத்தைக்கிலேசப்படுத்துகிறான்.-துன்மார்க் ௰௮
கன் பயன்படாதகிரியைசெய்கிறான்:நீதியை வி
தைக்கிறவனோ மெய்ப்பலனைப் பெறுவான்.—
நீதி சீவனுக்கேதுவாகிறதுபோல், தீமையைப் ௰௯
பின்தொடருகிறவன் தன் மரணத்துக்குத்தீவரிக்
கிறான்.—மாறுபாடுள்ள இருதயத்தையுடையவர் ௨௰
கள் யெகோவாவுக்கு அருவருப்பானவர்
கள். சன்மார்க்கரோ அவருக்குப் பிரியர்.—கை ௨௧
யோடுகைகூடினாலும், தீயன் தண்டனைக்குத்தப்
பான். நீதிமான்களுடைய சந்ததியோ விடுவிக்
கப்படும்.-மதிகேடாக நடக்கிற அழகுள்ள ஸ்தி ௨௨
ரி,பன்றியின்மூக்கிலுள்ளபொன்மூக்குத்திக்குச்
சமானம்.—நீதிமான்களுடைய வாஞ்சை முழுவ ௨௩
தும் நலமாகும்: துன்மார்க்கருடைய அபேட்
சையோ குரோதமாய் முடியும்.—சிலர் வாரியி ௨௪
றைத்தாலும், விருத்தியடைவார்; சிலர் அநியா
யத்தினால் கொடாமல் மறுத்து, வறுமையடை
வார்.—உதாரகுணமுள்ள ஆத்துமா செழிக்கும்: ௨௫
நீர்ப்பாய்ச்சுகிறவன் நீர்ப்பாய்ச்சப்படுவான்.-தா ௨௬
னியத்தைக்கொடாமற் கட்டிவைக்கிறவனைச் ச
னங்கள் சபிப்பார்கள்: அதைவிற்கிறவனுடைய
தலையின்மேல் ஆசீர்வாதந்தங்கும்.—சாக்கிரதையு ௨௭
டன் நன்மையைத் தேடுகிறவன் தயையைப்பெ
றுவான்: தீமையைத்தேடுகிறவனுக்கோ அதுவே
வரும்.—தன் செல்வத்தை நம்புகிறவன் விழு ௨௮
வான்: நீதிமான்களோ கிளையைப்போலச் செ
ழிப்பார்கள்.—தன் வீட்டைக் கலைக்கிறவன்காற் ௨௯
றைச்சுதந்தரிப்பான். மதியீனன் புத்திமானுக்க
டிமையாவான்.—நீதிமானுடைய பலன் சீவவி ௩௰
ருட்சம்; ஆத்துமாக்களை ஆதாயப்படுத்துகிறவன்
ஞானமுள்ளவன்.—பாரும், நீதிமான் பூமியிலே ௩௧
பிரதிபலன் பெறுவான். துன்மார்க்கனும் பாவி
யும் எவ்வளவு அதிகம்.

---

(௨௪) யோபு.௰௫.௨௧. சங்.௱௪௫.௰௯. மத்.௫.௬. ௧.யோவா.௫.௰௪,௰௫.(௨௫)சங்.௩௭.௯,௰. சங்.௰௫.௫. மத்.௭.௨௪, ௨௫.(௨௭)பிர.௭.௰௭. (௨௮) யோபு.௮.௰௩. சங்.௱௰௨.௰.(௨௯)சங்.௧.௬. (௩௧) சங்.௩௭.௩௰.—(௰௧.அதி.௧.)லேவி. ௰௯.௩௫,௩௬. உபா.௨௫.௰௩—௰௬. (௨) தானி.௪.௩௰,௩௧. (௪) எசேக்.௭.௰௯. செப்.௧.௰௮. ஆதி.௭.௧.(௬)பிர.௰.௮. (௭) அதி.௰.௨௮. (௮) அதி.௨௧.௰௮. (௯) யோபு.௮.௰௩. (௰) எஸ்த.௮.௰௫. (௰௧) அதி.௨௯.௮. (௰௩) லேவி.௰௯. ௰௬. (௰௪) ௧.இரா.௰௨.௧,. (௰௫) அதி.௬.௧. (௰௬) அதி.௩௧.௩௰. (௰௭) மத்.௫.௭. (௰௮) ஓசி.௰.௰௨. கலா.௬.௮,௯. யாக்.௩.௰௮. (௨௧) சங்.௱௰௨.௨. (௨௩) ரோ.௨.௮,௯. (௨௪) சங்.௱௰௨.௯. (௨௫) ௨.கொரி.௯.௬,௭. மத்.௫.௭.(௨௬) ஆமோ.௮.௫,௬. யோபு.௨௯.௰௩. (௨௭) எஸ்த.௭.௰. (௨௮)யோபு.௩௧.௨௪. சங்.௫௨.௬. மாற்.௰.௨௪. லூக்.௰௨.௨௧. ௧.தீமோ.௬.௰௭. சங்.௧.௩. எரே.௰௭.௮. (௨௯) பிர.௫.௰௬. (௩௰) தானி.௰௨.௩. ௧.கொரி.௯.௰௯,. யாக்.௫.௨௰.(௩௧) எரே.௨௫.௨௯. ௧.பேதுரு.௪.௰௭,௰௮.

## ௰௨. அதிகாரம்.

போதகத்தை விரும்புகிறவன் அறிவை விரும்
புகிறான்: கண்டனையை வெறுக்கிறவனோ மிரு
௨ கத்தைப்போன்றவன்.—நல்லவன் யெகோ
வாவிடத்தில் தயை பெறுவான்: துர்ச்சிந்த
னைகளையுடையவனை ஆக்கினைக்குள்ளாகத்தீர்ப்
௩ பார்.—துன்மார்க்கத்தினால் ஒருவனும் நிலைப்ப
டான்: நீதிமான்களுடையவேரோ அசையாது.-
௪ சற்குணமுள்ளஸ்திரி தன்புருஷனுக்குக்கிரீடம்:
இலச்சை வருவிப்பவளோ,அவனுக்கு எலும்பு
௫ ருக்கியைப்போலிருக்கிறாள்.—நீதிமான்களுடை
யசிந்தனைகள் செவ்வையானவைகள்: துன்மார்க்
கருடையஆலோசனைகளோகபடமானவைகள்.-
௬ துன்மார்க்கர்இரத்தஞ் சிந்தும்படி பதிவிருக்கிறத
ற்கு வாக்குகளைப்பேசுகிறார்கள்: நீதிமான்களு
௭ டைய வாயோ அவர்களைத் தப்புவிக்கும்.—துன்
மார்க்கர்கவிழ்ந்துஒழிந்துபோகிறார்கள்;நீதிமான்
௮ களுடையவீடோ நிலைநிற்கும்.-மனிதன் தன்ஞா
னத்துக்கேற்கப்புகழப்படுவான்:மாறுபாடானஇ
௯ ருதயமுள்ளவனோஇகழப்படுவான்.-தற்புகழ்ச்சி
செய்துகொண்டு ஆகாரமில்லாதிருப்பவனிலும்,
பணிவிடைக்காரருள்ளவனாகிய கனமற்றவன்உ
௰ த்தமன்.—நீதிமான்தன்மிருகத்தின் பிராணனைக்
காப்பாற்றுகிறான்: துன்மார்க்கருடையஇரக்கங்
௰௧ களோ கொடூரமுள்ளன.—தன் நிலத்தைச்செய்
கைபண்ணுகிறவன் ஆகாரத்தினால்திருத்தியடை
வான்: வீணரைப் பின்பற்றுகிறவனோ புத்தியீ
௰௨ னன்.—துன்மார்க்கன் துஷ்டருடைய வலை
யை விரும்புகிறான்: நீதிமானுடையவேர் கனி
௰௩ கொடுக்கும்.—துன்மார்க்கன் தன் உதடுகளின்
தோஷத்தினாற் கண்ணியிலகப்படுவான்: நீதிமா
௰௪ னோ நெருக்கத்தை நீங்குவான்.—மனுஷன்தன்
வாயின்பலனைக்கொண்டுநன்மையினால் திருத்தி
யடைவான்: மனுஷனுடைய கைக்கிரியையின்
௰௫ பலன் அவனுக்குக் கிடைக்கும்.—மதியீனனு
டையவழி தன் பார்வைக்குச் செவ்வை: ஆ
லோசனைக்குச் செவிகொடுக்கிறவனோ, ஞான
௰௬ முள்ளவன்.-மூடனுடையகோபம் சீக்கிரத்தில்
வெளிப்படும்: விவேகியோ இலச்சையை மூடு
௰௭ வான்.—சத்தியவாதி நீதியையும், பொய்ச்சாட்
சியோ வஞ்சகத்தையும் வெளிப்படுத்துவார்க
௰௮ ள்.—கட்கங் குத்துவதுபோலப் பேசுகிறவர்
களுமுண்டு: ஞானமுள்ளவர்களுடைய நாவோ
௰௯ ஆரோக்கியம்.—சத்திய உதடு என்றும் ஸ்தாபிக்
கப்படும்: பொய் நாவோ ஒரு நிமிஷமாத்திரம்
௨௰ இருக்கும்.—துர்ச்சிந்தனையுள்ளவர்களுடையஇ
ருதயத்தில் கபடமுண்டு: சமாதானமான ஆலோ
௨௧ சனைக்காரருக்கோ சந்தோஷமுண்டாகும்.—நீ
திமானுக்கு எந்த ஆபத்தும்நேரிடாது: துன்மார்க்
கரோ தீமையினால் நிரப்பப்படுவார்கள்.—கள் ௨௨
ள உதடுகள் யெகோவாவுக்கு அருவருப்
பானவைகள்:சத்தியத்தைநடப்பிக்கிறவர்களோ
அவருக்குப் பிரியமானவர்கள்.-விவேகமுள்ளம ௨௩
னுஷன்அறிவை அடக்குகிறான்: மூடருடையஇ
ருதயமோ அஞ்ஞானத்தைப்பிரசித்தப்படுத்தும்.-
சாக்கிரதையுள்ளவர்களுடைய கை ஆளுகை செ ௨௪
ய்யும்: சோம்பேறியோ திறைகொடுப்பான்.—ம ௨௫
னுஷனுடையஇருதயத்திலுள்ள துக்கம் அதைஒ
டுக்கும்: நல்ல வாக்கோ அதற்கு மகிழ்ச்சிதரும்.-
நீதிமான்தன்அயலானிலும்மேன்மையுள்ளவன்: ௨௬
துன்மார்க்கருடைய வழியோஅவர்களை வஞ்சிக்
கும்.—சோம்பேறி தான்வேட்டையாடிப் பிடித் ௨௭
ததைச் சமைக்கிறதில்லை; சாக்கிரதையுள்ளவனு
டையபொருளோ அருமையானது.—நீதியின்பா ௨௮
தையில் சீவனுண்டு; அந்தப்பாதையில் மரண
மில்லை.

## ௰௩. அதிகாரம்.

ஞானமுள்ளபுத்திரன் பிதாவின் போதகத்தைக் ௧
கேட்கிறான்: நிந்தனைக்காரனோ கண்டனைக்குச்
செவிகொடான்.—மனுஷன் தன்வாயின் கனி ௨
யினால் நன்மையைப்புசிப்பான்: துரோகிகளின்
ஆத்துமமோ கொடுமையை அனுபவிக்கும்.—
தன்வாயைக்காக்கிறவன் தன்பிராணனைக் காப் ௩
பான்: தன்னுதடுகளை விரியத்திறக்கிறவனோ நா
சமடைவான்.—சோம்பேறியுடையஆத்துமம்வி ௪
ரும்பியும் ஒன்றும்பெறாது: சாக்கிரதையுள்ளவர்
களுடைய மனமோ புஷ்டியாகும்.—நீதிமான் ௫
பொய்யை வெறுக்கிறான்: துன்மார்க்கனோ அ
ரோசிக்கப்பட்டுவெட்கமடைவான்.—நீதி சன் ௬
மார்க்கனைக் காக்கும்: பாவமோ பாவியைக்க
விழ்க்கும்.—ஒன்றுமில்லாதிருக்கத்தன்னைச்செல் ௭
வனாகப் பாராட்டுகிறவனுண்டு: மிகுந்த செல்வ
மிருக்கத்தன்னைத்தரித்திரனாகப் பாராட்டுகிறவ
னுமுண்டு.—ஐசுவரியமுள்ளவன் தன்செல்வத் ௮
தினால் தன்பிராணனைமீட்டுக்கொள்வான்: தரித்
திரனோகண்டனையைக்கேளான்.—நீதிமானுடை ௯
யஒளிபிரகாசிக்கும்: துன்மார்க்கனுடைய விளக்
கோ அணைந்துபோம்.—அகங்காரத்தினால்மாத்தி ௰
ரம் விவாதமுண்டாகும்: ஆலோசனையை ஏற்
றுக்கொள்ளுகிறவர்களிடத்தில் ஞானமுண்டு.—
மாயையால் தேடின பொருள் குறைந்துபோம்: ௰௧
பிரயாசத்தினால் சேர்க்கிறவனோ விருத்தியடை
வான்.—நம்பிக்கை சித்தியாவதற்குத் தாமதித் ௰௨
தால் மனத்துயரமுண்டாகும்: வாஞ்சை நிறை
வேறினால் அது சீவவிருட்சமாம்.—வாக்கியத் ௰௩
தை அவமதிக்கிறவன் நாசமடைவான்: பிரமா

---

(௰௨. அதி. ௨.) அதி.௮.௩௫. (௩) அதி.௰.௨௫. (௪) அதி.௩௧.௨௩. ௧.கொரி.௰௧.௭. அதி.௰௪.௩௰. (௬) அதி.௧.௰௧, ௰௮. அதி.௰௪.௩. (௭) மத் ௭.௨௪,௨௭. (௮) ௧.சாமு.௨௫.௰௭. (௯) அதி.௰௩.௭. (௰) உபா.௨௫.௪. (௰௧) ஆதி.௩. ௰௯. (௰௩) உ.பேதுரு.௨.௯. (௰௪) அதி.௰௩.௨. ஏசா.௩.௰,௰௧. (௰௫) லூக்.௰௮.௰௧. (௰௬) அதி.௨௯.௰௧. (௰௮) சங். ௱௭.௪. (௰௯) சங்.௫௨.௫. (௨௨) அதி.௬.௰௬. வெளி ௨௨.௰௫. (௨௩) அதி.௰௩.௰௬. (௨௪) அதி.௰.௪. (௨௫) அதி. ௰௫.௰௩. ஏசா.௫௰.௪.—(௰௩. அதி. ௧.) ௧.சாமு.௨.௨௫. (௨) அதி.௰௨.௰௪. (௩) சங்.௩௯.௧. அதி.௨௧.௨௩. யாக்.௩. ௨. (௪) அதி.௰.௪. (௬) அதி.௰௧.௩,௫,௬. (௭) அதி.௰௨.௯. (௯) யோபு.௰௮.௫,௬. அதி.௨௪.௨௰.(௰௧)அதி.௨௰.௨௧. (௰௩) உ.நாளா.௩௬.௰௬.

ணத்துக்குப்பயப்படுகிறவனே சௌக்கியம் பெ
௰௪ றுவான்.—மரணக் கண்ணிகளுக்குத் தப்புவிக்
கும் ஞானவான்களுடைய பிரமாணம் சீவஊற்
௰௫ று.—நற்புத்தி தயையைத் தரும்: துஷ்டருடை
௰௬ ய வழியோ கடினம்.—விவேகி எவனும் அறி
வைச்சார்ந்துகிரியையைச்செய்வான்: மூடனே
௰௭ தன் அஞ்ஞானத்தைவெளிப்படுத்துவான்.-தீமை
யுள்ள தூதன் ஆபத்தில் அகப்படுவான்: உண்
௰௮ மையான தானுபதியோ ஆரோக்கியம்.—போத
கத்தைத் தள்ளுகிறவன் தரித்திரத்தையும் இலச்
சையையுமடைவான்: கண்டனையை மதிக்கிற
௰௯ வனே மேன்மைபெறுவான்.—ஆசை நிறைவே
றுவது ஆத்துமாவுக்கு இனிமையாம்; தீமையை
விட்டு விலகுவது மூடர்களுக்கு அருவருப்பா
௨௰ கும்.—ஞானவான்களோடே நடக்கிறவன்ஞான
வானுவான்: மூடர்களுக்குத் தோழனே நாசம
௨௧ டைவான்.—தீமைபாவிகளைத் தொடருகின்றது:
நீதிமான்களுக்கோ நன்மை பிரதியாகக்கொடுக்
௨௨ கப்படும்.—நல்லவன் தன்புத்திரபௌத்திரருக்
குச்சுதந்தரம்வைத்துப்போகிறுன்:பாவியின்செ
௨௩ ல்வம் நீதிமானிமித்தங்கூட்டிவைக்கப்படும்.—ஏ
ழைகளுடையபயிர்ச்செய்கையினுல் மிகுதியா
னதானியம்விளையும்: சிலர் புத்தியீனத்தினுல் கு
௨௪ றைவுபடுவார்.—மிலாறு இடாதவன்தன்புத்திரனை
வெறுக்கிறுன்: அவன்மேல் அன்பாயிருக்கிறவ
௨௫ னே அவனைத்தாமதமின்றித்தண்டிக்கிறுன்.—நீதி
மான் திருத்தியாகும்படிபுசிக்கிறுன்: துன்மார்க்
கருடைய வயிற்றிலோ பசியுண்டாகும்.

## ௰௪. அதிகாரம்.

ஞானமுள்ள ஸ்திரி எவளும் தன்வீட்டைக்கட்
டுகிறுள்: அஞ்ஞானமுள்ளஸ்திரியோ தன்கை
௨ களினுல் அதைஇடிக்கிறுள்.-நேர்மையாய் நடக்
கிறவன் யெகோவாவுக்குப்பயப்படுகிறுன்:
கோணலானவழிகளில்நடக்கிறவனே அவரை
௩ அலட்சியம்பண்ணுகிறுன்.—அஞ்ஞானிகளின்
வாயில்அகந்தைக்கேற்றகோலுண்டு:ஞானவான்
களுடைய உதடுகளோ அவர்களைக் காப்பாற்
௪ றும்.—எருதுகளில்லாதவிடத்தில் பசுவின்தொட்
டி சுத்தமாயிருக்கும்: எருதுகளின் பெலத்தினு
௫ லோ பொருள் பெருகும்.—மெய்ச்சாட்சிபொய்
சொல்லான்: பொய்ச்சாட்சியோ மெய்சொல்
௬ லான்.-நிந்தனைக்காரன்ஞானத்தைத்தேடியும்பெ
றமாட்டான்: புத்திமானே ஞானத்தைப்பெறுவ
௭ து எளிது.—ஞானமுள்ள உதடுகளைக்காணுவிட்
௮ டால் புத்தியீனனுக்கு நீ விலகிவிடு.—தன்வழி
யைச் சிந்தித்துக்கொள்வது, விவேகியின் ஞா
னம்:மூடர்களுடைய மூடத்தனமோவஞ்சனை.-
௯ புத்தியீனர் பாவத்தைக்குறித்துப்பரிகாசம் பண்
ணுகிறுர்கள்: நீதிமான்களுக்குள்ளே தயையுண்
டு.—தன் மனக்கசப்புத் தன்நெஞ்சுக்கேதெரியும்: ௰
அந்நியன் அதின் சந்தோஷத்துக்குஉடந்தையா
யிரான்.—துன்மார்க்கனுடைய வீடுநாசமாகும்: ௰௧
நேர்மையானவனுடைய கூடாரமோ செழிக்
கும்.—மனுஷனுக்குநேர்மையாய்த்தோன்றும்வ ௰௨
ழியுண்டு, அதின்முடிவோ மரணவழிகள்.—ந ௰௩
கைக்கும்பொழுது மனேதுக்கமுண்டு; அந்தம
கிழ்ச்சியின்முடிவுவிசனம்.—இருதயத்திலேநெ ௰௪
றிதவறியிருக்கிறவன்தன்நடைகளினுல்நிரப்பப்
படுவான்: நல்லமனுஷனே தன்னுலேதிருத்திய
டைவான்.—பேதை எந்தவாக்கையும்நம்புவான்: ௰௫
விவேகியோதன்நடையைஉற்றுப்பார்க்கிறுன்.-
ஞானமுள்ளவன் பயமடைந்து தீமைக்குவிலகு ௰௬
கிறுன்: மதியீனனே மூர்க்கங்கொண்டுதுணிந்தி
ருக்கிறுன்.—முற்கோபி மதிகேட்டைச் செய் ௰௭
வான்: துராலோசனைக்காரன் வெறுக்கப்படு
வான்.—பேதையர் புத்தியீனத்தைச் சுதந்தரிக்கி ௰௮
றுர்கள்: விவேகிகளோஅறிவினுல் முடிசூட்டப்
படுகிறுர்கள்.—தீயோர் நல்லோருக்குமுன்பாக ௰௯
வும், துன்மார்க்கர் நீதிமான்களுடைய வாசல்க
ளிலுங் குனிவார்கள்.—தரித்திரன் தன் அயலா ௨௰
னுலும் வெறுக்கப்படுகிறுன்: ஐசுவரியவானுக்
கோ அநேக சிநேகிதருண்டு.—தன் அயலானை ௨௧
அலட்சியம்பண்ணுகிறவன்பாவஞ்செய்கிறுன்:
தரித்திரனுக்குத் தயைசெய்பவனே வாழ்வுடை
யவன்.—தீமையைப்பிணைக்கிறவர்கள் தவறுகி ௨௨
றுர்களல்லவா; நன்மையைப் பிணைக்கிறவர்க
ளுக்கோ தயையுஞ் சத்தியமுமுண்டு.—பிரயாச ௨௩
மெல்லாம் பலனை விளைவிக்கும்: உதடுகளின்
பேச்சோ வறுமையை மாத்திரம் வருவிக்கும்.—
ஞானிகளுக்கு முடி அவர்கள்செல்வம்: மதியீ ௨௪
னரின் மதியீனம் மதியீனமே.—மெய்ச்சாட்சி ௨௫
ஆத்துமாக்களை விடுவிக்கிறுன்: கபடனேபொய்
சொல்லுகிறுன்.—யெகோவாவைப் பற்றும் ௨௬
பயத்தினுல் திடநம்பிக்கையுண்டு: அவன் பிள்
ளைகளுக்கும் புகலிடங்கிடைக்கும்.—யெகோ ௨௭
வாவைப் பற்றும் பயம் மரணக்கண்ணிகளுக்
கு விலக்குஞ் சீவ ஊற்று.—சனத்திரட்சி இரா ௨௮
சாவின் மகிமை: சனக்குறைவோ தலைவனின்
முறிவு.—நெடும்பொறுமையுள்ளவன் மகாபுத்தி ௨௯
மான்: முற்கோபியோ புத்தியீனத்தை அதிகப்ப
டுத்துகிறுன்.—சொஸ்த மனம் உடலின் சீவன்: ௩௰
பொறுமையோ எலும்புருக்கி.—தரித்திரனை உ ௩௧
பத்திரவப்படுத்துகிறவன் தன் சிருஷ்டிகர்த்தா
வை நிந்திக்கிறுன்: தரித்திரனுக்குத் தயைசெய்
கிறவனே அவரைக் கனம்பண்ணுகிறுன்.—துன் ௩௨
மார்க்கன் தன் தீமையிலே துரத்தப்படுவான்: நீ
திமானே தன் மரணத்திலும் நம்பிக்கையுள்ள

(௰௪) அதி.௰.௰௧. ௨.சாமு.௨௨.௬.(௰௬)அதி.௰௨.௨௩.(௰௭)அதி.௨௫.௰௩. (௰௮) அதி.௰௫.௫,௩௧.(௨௧)சங்.௩௨.௰.
(௨௨)யோபு.௨௭.௰௬,௰௭. பிர.௨.௨௬. (௨௩) அதி.௰௨.௰௧.(௨௪)அதி.௰௯.௰௮. (௨௫) சங்.௩௪.௰.—(௰௪. அதி. ௧.)
அதி.௨௪.௩. ரூத்.௪.௰௧. (௨) யோபு.௰௨.௪.(௩)அதி.௰௨.௬. (௫) யாத்.௨௰.௰௬. அதி.௰௨.௰௭.(௬)அதி.௰௭.௨௪.(௯)
அதி.௰.௨௩.(௰௧)யோபு.௮.௰௫.(௰௨)அதி.௰௬.௨௫. ரோ.௬.௨௧. (௰௩) பிர.௨.௨.(௰௪)அதி.௧.௩௧.(௰௬)அதி.௨௨.௩.
(௨௰) அதி.௰௯.௭. (௨௧) சங்.௪௧.௧. (௨௭) அதி.௰௩.௰௪. (௨௯) அதி.௰௬.௩௨. யாக்.௧.௰௯. (௩௰) சங்.௱௰௨.௰.
(௩௧) மத்.௨௫.௪௰,௪௫. யோபு.௩௧.௰௫,௰௬. (௩௨) யோபு.௰௩.௰௫. சங்.௨௩.௪. ௨.கொரி.௫.௮. ௨.தீமோ.௪.௰௮.

௩௩ வன்.—ஞானம் புத்திமானுடைய இருதயத்தில்
தங்கும்: மதியீனரிலுள்ளதோ வெளிப்படும்.—
௩௪ நீதி இராச்சியத்தாரை உயர்த்தும்: பாவமோ எந்
௩௫ தச் சனங்களுக்கும் இகழ்ச்சி.—இராசாவின் த
யை விவேகமுள்ள பணிவிடைக்காரனுக்கும்,
அவனுடைய கோபமோ இலச்சையுண்டாக்கு
கிறவனுக்கு முண்டாகும்.

## ௰௫. அதிகாரம்.

சாந்தமானஉத்தரங்குரோதத்தைமாற்றும்: கடுஞ்
௨ சொற்களோ கோபத்தைஎழுப்பும்.—புத்திமான்க
ளின்நாவு உத்தமஞானத்தைக்காண்பிக்கும்:மதி
௩ யீனரின் வாயோ அஞ்ஞானத்தைக்கக்கும்.—யெ
கோவாவின் கண்கள் எவ்விடத்திலுமிருந்து
௪ தீயோரையும் நல்லோரையுங்காணுகின்றன.—ஆ
ரோக்கியமுள்ள நாவு சீவவிருட்சம்: அதிலுள்ள
௫ மாறுபாடோ ஆவியின்நொறுக்குதல்.—மூடன்த
ன் பிதாவின்போதகத்தை அவமதிக்கிறான்:கண்
௬ டனையைமதிக்கிறவனேவிவேகி.-நீதிமானுடை
யவீட்டில் அதிக பொக்கிஷமுண்டு: துன்மார்க்
௭ கனுடையவரவிலோ கிலேசமுண்டு.—ஞானிக
ளின் உதடுகள் அறிவையிறைக்கும்: மூடரின்இ
௮ ருதயமோ அப்படியல்ல.-துன்மார்க்கருடையப
லி யெகோவாவுக்குஅருவருப்பானது:நேர்
மையானவர்களின் பிரார்த்தனையோஅவருக்குப்
௯ பிரியம்.-துன்மார்க்கருடையவழி யெகோவா
வுக்கு அருவருப்பானது: நீதியைப்பின்பற்றுகி
௰ றவனையோ அவர்நேசிக்கிறார்.—வழியை விட்டு
விலகுகிறவனுக்குக்கடுந்தண்டனை கிடைக்கும்:
௰௧ கண்டனையை வெறுக்கிறவன் சாவான்.—மரித்
தோர் ஸ்தலமும் நாசஸ்தானமும் யெகோவா
வின் பார்வைக்குமுன்னிருக்க, மனுபுத்திரரு
௰௨ டைய இருதயம் எவ்வளவு அதிகம்.—நிந்தனை
க்காரன்தன்னைக் கடிந்துகொள்ளுகிறவனை நே
சியான், ஞானவான்களிடத்திற் போகான்.—
௰௩ மனமகிழ்ச்சி முகமலர்ச்சியைத்தரும்: மனோதுக்
௰௪ கத்தினாலோ ஆவி விசனப்படும்.—புத்திமானு
டையமனம் அறிவைத்தேடும்: மதியீனரின்வா
௰௫ யோ அஞ்ஞானத்தைமேயும்.—சிறுமைப்பட்ட
வனின் நாள்களெல்லாந்தீங்குள்ளன: மகிழ்ச்சி
௰௬ யானமனமோ நித்திய விருந்து.—கவலையோடே
கூடியஅதிகபொருளிலும், யெகோவாவைப்
பற்றும் பயத்தோடேகூடியஅற்பபொருளே உத்
௰௭ தமம்.—பகையோடே புஷ்டியான எருதைப்பு
சிப்பதிலும், அன்புடனே கீரையைமாத்திரம்பு
௰௮ சிப்பதுநலம்.—உக்கிரன் விரோதத்தை யெழுப்
புவான், நெடும்பொறுமையுள்ளவனேவிரோதத்
தை ஆற்றுவான்.—சோம்பேறியின்வழி முள்வே ௰௯
லிக்குச்சமம்:நீதிமானுடையவழியோஇராசவீதி
யாகும்.—ஞானமுள்ள புத்திரன் பிதாவைச்சந் ௨௰
தோஷப்படுத்துகிறான்: மதியற்றமனுஷனோதன்
மாதாவை அலட்சியம் பண்ணுகிறான்.—மூடத் ௨௧
தனம், புத்தியீனனுக்குச் சந்தோஷம்: புத்திமா
னோ நேர்மையாய் நடப்பான்.—ஆலோசனையி ௨௨
ல்லாமல் அபிப்பிராயங்கள் சித்திப்பதில்லை: ஆ
லோசனைக்காரர் அநேகரிருந்தாலோ அவைகள்
சித்திக்கும்.—மனுஷன்தன்வாயினுத்தரத்தினால் ௨௩
சந்தோஷமடைவான்: தகுந்தசமயத்திற் சொல்
லப்படும்வாக்கு எவ்வளவு உத்தமம்.—கீழான ௨௪
பாதாளத்தை விட்டு விலகும்பொருட்டு, விவே
கியின் சீவவழி மேலேயிருக்கின்றது.-யெகோ ௨௫
வா அகங்காரியின் வீட்டை நாசப்படுத்துவார்:
விதவையின் எல்லையையோநிலைப்படுத்துவார்.—
துன்மார்க்கருடைய நினைவுகள் யெகோவா ௨௬
வுக்கு அருவருப்பானவைகள்: சுத்தருடைய
வாக்குகளோ இனிமை.—பொருளாசைக்கா ௨௭
ரன் தன் சுயகுடும்பத்தாரைக்கிலேசப்படுத்துகி
றான்; பரிதானங்களை வெறுக்கிறவனே சீவித்
திருப்பான்.—நீதிமானுடைய மனம் உத்தரஞ் ௨௮
சொல்லுகிறதற்கு ஆலோசிக்கும்: துன்மார்க்கனு
டைய வாயோ தீமைகளைக்கக்கும்.—யெகோ ௨௯
வா துன்மார்க்கருக்குத் தூரமாயிருக்கிறார்: நீதி
மான்களின் பிரார்த்தனையையோ கேட்கிறார்.—
கண்களின்ஒளி மனதைச் சந்தோஷப்படுத்தும்: ௩௰
நற்செய்தி எலும்புகளைப்புஷ்டியாக்கும்.—சீவ ௩௧
னுக்கேற்றகண்டனையைக்கேட்குங்காது ஞானி
களுக்குள்ளேதங்கும்.—கண்டனையைத் தள்ளுகி ௩௨
றவன்தன்ஆத்துமத்தைவெறுக்கிறான்: கண்டனை
யைக்கேட்கிறவனே ஞானத்தைப்பெறுவான்.—
யெகோவாவைப் பற்றும் பயம் ஞானத்தி ௩௩
ன்போதகம்; மேன்மைக்குமுன் தாழ்மையுண்டு.

## ௰௬. அதிகாரம்.

மனுஷனுடைய இருதயத்தின் ஆலோசனையும், ௧
நாவின்உத்தரமும் யெகோவாவினாலாகும்.-
மனுஷனுடைய வழிகளெல்லாம் அவன்சுயபார் ௨
வைக்குச் சுத்தமானவைகள்; யெகோவா ஆ
விகளைப்பரீட்சிக்கிறார்.—உன்செய்கைகளை யெ ௩
கோவாவுக்கு ஒப்பி, அப்பொழுது உன்நினை
வுகள் ஸ்திரப்படும்.—யெகோவா தமக்காகச் ௪
சகலத்தையும், ஆபத்துநாளுக்காகத் துன்மார்க்க
ரையுஞ் சிருஷ்டித்தார்.—மன அகங்காரிகள் யா ௫
வரும் யெகோவாவுக்கு அருவருப்பானவர்
கள்: கையோடேகைகூடினாலும் அவர்கள் தண்

(௩௫) மத். ௨௪. ௪௫, ௪௭.—(௰௫. அதி. ௧.) நியா. ௮. ௧, ௨, ௩. ௧ சாமு. ௨௫. ௰,. (௨) அதி. ௰௨. ௨௩. (௩) யோபு. ௩௪. ௨௧. எரே. ௰௬. ௰௭. எபி. ௪. ௰௩. (௫) அதி. ௰௩. ௰௮. (௮) அதி. ௨௮. ௯. ஏசா. ௧. ௰௧. எரே. ௭. ௨௨. ஆமோ. ௫. ௨௨. (௯) ௧ தீமோ. ௬. ௰௧. (௰) ௧ இரா. ௨௨. ௮. அதி. ௫. ௰௨. (௰௧) யோபு. ௨௬. ௬. சங். ௱௩௯. ௮. உ. நாளா. ௬. ௩௰. சங். ௭. ௯. யோவா. ௨. ௨௪, ௨௫. அப். ௧. ௨௪. (௰௨) ஆமோ. ௫. ௰. ௨ தீமோ. ௪. ௪. (௰௬) சங். ௩௭. ௰௬. ௧ தீமோ. ௬. ௬. (௰௮) அதி. ௨௬. ௨௧. (௰௯) அதி. ௨௨. ௫. (௨௰) அதி. ௰. ௧. (௨௧) அதி. ௰. ௨௩. எபே. ௫. ௰௫. (௨௨) அதி. ௰௧. ௰௪. (௨௩) அதி. ௨௫. ௰௧. (௨௪) பிலி. ௩. ௨௰. கொலோ. ௩. ௧, ௩. (௨௫) அதி. ௰௪. ௰௧. சங். ௬௮. ௫. ௬. (௨௬) சங். ௩௭. ௩௰. (௨௭) அதி. ௰௧. ௰௯. ஏசா. ௫. ௮. எரே. ௰௭. ௰௧. (௨௮) ௧ பேதுரு. ௩. ௰௫. (௨௯) சங். ௱௪௫. ௰௮, ௰௯. (௩௩) அதி. ௰௮. ௰௨.—(௰௬. அதி. ௧.) அதி. ௰௯. ௨௧. எரே. ௰. ௨௩. மத். ௰. ௰௯, ௨௰. (௨) ௧ சாமு. ௰௬. ௭. (௩) சங். ௩௭. ௫. மத். ௬. ௨௫. லூக். ௰௨. ௨௨. பிலி. ௪. ௬. ௧ பேதுரு. ௫. ௭. (௪) ஏசா. ௪௩. ௭. ரோ. ௰௧. ௩௬. யோபு. ௨௧. ௩௰. ரோ. ௯. ௨௨.

௬ டனைக்குத்தப்பார்கள்.—தயை, சத்தியம் இவை
களினால் பாவம் மூடப்படும்: யெகோவா
வைப் பற்றும் பயத்தினால்மனுஷர்தீமையைவி
௭ ட்டுவிலகுவார்கள்.-ஒருவனுடையவழிகள் யெ
கோவாவுக்குப் பிரியமாயிருந்தால், அவர்அ
வனுடைய சத்துருக்களும் அவனுடன் சமாதா
௮ னமாயிருக்கச் செய்கிறார்.—அநியாயத்துடன்வ
ந்த அதிகபொருளிலும், நீதியோடே வந்த அ
௯ ற்பபொருளே உத்தமம்.—மனுஷனுடைய ம
னம் அவனுடைய வழியை ஆலோசித்து ஏற்ப
டுத்தும்: அவனைநடத்துவது யெகோவாவின்
௰ செயல்.-இராசாவின் உதடுகளில் திவ்வியவாக்
௰௧ குண்டு: நியாயத்தில் அவன்வாய்தவறாது.-சரியா
னநிறைகல்லும் தராசும் யெகோவாவுடை
யன:பையிலிருக்குங்கற்களெல்லாம் அவருடை
௰௨ யசெய்கை.—துர்க்கிரியைகளைச் செய்வது இ
ராசாக்களுக்கு அருவருப்பு: நீதியினால் சிங்காச
௰௩ னம்ஸ்தாபிக்கப்படும்.-நீதியுள்ள உதடுகள் இரா
சாக்களுக்குப்பிரியம்: நியாயம் பேசுகிறவனில்
௰௪ அவர்கள் பிரியமாயிருக்கிறார்கள்.-இராசாவின்
கோபம் மரணத்தின் தூதருக்குச்சமானம்: ஞா
௰௫ னமுள்ளவனோ அதைஆற்றுவான்.-இராசாவின்
முகப்பிரசன்னமே சீவன்; அவனுடைய தயை
பின்மாரியில் மழைபெய்யுமேகத்திற்குச்சமான
௰௬ ம்.—பொன்னைச்சம்பாதிப்பதிலும்ஞானத்தைச்
சம்பாதிப்பது எவ்வளவு உத்தமம்: வெள்ளியி
௰௭ லும் புத்தியைச்சம்பாதிப்பது முக்கியம்.—துர்க்
கிரியையை விட்டுவிலகுவதே நேர்மையானவர்
களுக்குச் சமனானபாதை: தன் நடையைக்காக்
௰௮ கிறவன் தன் பிராணனையுங் காக்கிறான்.—அழி
வுக்குமுன் இறுமாப்பும், விழுதலுக்குமுன்மன
௰௯ க்கருவமும் உண்டாகும்.-அகங்காரிகளோடே
கொள்ளைப்பொருளைப்பங்கிடுவதிலும், சிறுமை
யானவர்களுடனே மனத்தாழ்மையாயிருப்பதே
௨௰ நலம்.—விவேகத்துடன் காரியத்தை நடப்பிக்கி
றவன் நன்மைபெறுவான்: யெகோவாவை
௨௧ நம்புகிறவன் வாழ்வுடையவன்.—ஞானசிந்தை
யுள்ளவன்விவேகியென்றெண்ணப்படுவான்: உ
தடுகளின் மதுரம் உபதேசத்தைப்பெருகப்பண்
௨௨ ணும்.-புத்திதன்னையுடையவனுக்குச்சீவஊற்று:
௨௩ மதியீனரின்போதகம் பைத்தியம்.-ஞானியுடை
ய இருதயம் அவன்வாய்க்கு அறிவூட்டுகின்றது,
அவனுதடுகளுக்கு மேன்மேலும்போதனையைக்
௨௪ கொடுக்கின்றது.—இனியசொற்கள் தேன்கூட்
டைப்போல ஆத்துமாவுக்கு மதுரமும், எலும்
௨௫ புகளுக்குச் சௌக்கியமுமாயிருக்கின்றன.—ம
னுஷனுடைய பார்வைக்குச் செவ்வையாய்க் க
ண்டும், முடிவில் மரணத்திற்குக் கொண்டுபோ
கிறதற்கான வழியுண்டு.—பிரயாசப்படுகிறவன் ௨௬
தனக்காகப் பிரயாசப்படுகிறான். அவன் வாய்
அதை அவனிடத்தில் வருந்திக்கேட்கும்.—பீலி ௨௭
யாலின் மகன் கிண்டித் தீங்கை எடுக்கிறான்: அ
வனுதடுகளில் அக்கினித்தழல்களிருக்கின்றன.-
மாறுபாடுள்ளவன் வழக்கை விதைக்கிறான்: பு ௨௮
றங்கூறுகிறவன் நெருங்கியசிநேகிதரைப்பேதப்
படுத்துகிறான்.—கொடுமையானவன் தன் அய ௨௯
லானுக்குநயங்காட்டி, அவனைத் துன்னெறியில்
நடத்துகிறான்.—அவன் தாறுமாறானவைகளை ௩௰
யோசிக்கும்படி தன் கண்களைமூடி, உதடுகளை
ஆட்டித் தீமைகளை நடத்துகிறான்.—நீதியின் வ ௩௧
ழியிலுண்டாகும் நரைமயிர், மகிமையுள்ள கிரீ
டம்.-பராக்கிரமசாலியிலும் பொறுமையுள்ளவ ௩௨
னும், நகரத்தைப்பிடிக்கிறவனிலும் தன்மனதை
அடக்கிக்கொள்பவனும் உத்தமர்.-திருவுளச்சீட் ௩௩
டுமடியிலே போடப்படும்; அதற்குத்தீர்மானஞ்
செய்வது யெகோவாவின் செயல்.

## ௰௭. அதிகாரம்.

விரோதத்தோடே வீடுநிறைய இருக்கும் பலிப ௧
தார்த்தங்களிலும், சாந்தத்துடன் கூடிய ஒருவெ
று அப்பத்துணிக்கை உத்தமம்.-புத்தியுள்ளபணி ௨
விடைக்காரன் இலச்சையுண்டாக்குகிற புத்திர
னை ஆண்டு, சகோதரருக்குள்ள சுதந்தரத்தில்பங்
கடைவான்.—குகை வெள்ளியையும், புடம் ௩
பொன்னையுஞ்சோதிக்கும்: யெகோவாவோ
இருதயங்களைச்சோதிக்கிறார்.—துஷ்டன்பொய் ௪
சொல்லுகிற உதடுகளைஉற்றுக்கேட்கிறான்;பொ
ய்யன்தீயநாவுக்குச்செவிகொடுக்கிறான்.—தரித்தி ௫
ரனைப் பரிகாசம்பண்ணுகிறவன் தன் சிருஷ்டி
கர்த்தாவை நிந்திக்கிறான்: ஆபத்துக்களினி
மித்தம் சந்தோஷப்படுகிறவன் தண்டனைக்குத்
தப்பான்.—பிள்ளைகளின் பிள்ளைகள் முதியோ ௬
ருக்குக் கிரீடம்; பிள்ளைகளின் மேன்மை அவர்
கள் பிதாக்கள்.—சிறந்த வாக்கு மூடனுடைய ௭
வாயிலே சிறக்காது: அப்படியே பொய்பேசும்
உதடு இராசாவுக்குத்தகாது.-பரிதானம் அதைப் ௮
பெற்றவன் பார்வைக்கு இரத்தினம்: அதுசெல்
லும் இடமெங்குஞ் சித்தியாகும்.—தோஷத்தை ௯
மறைக்கிறவன் நேசத்தை நாடுகிறான்: கேட்ட
செய்தியைச் சொல்லுகிறவன் நெருங்கிய சிநே
கிதரைப்பிரிக்கிறான்.-மதியீனனுக்கு நூறடி அ ௰
டிப்பதிலும்,புத்திமானைக்கண்டிப்பதே அதிகமா
யுறைக்கும்.—தீயன் கலகத்தையே தேடுகிறான்: ௰௧
அவனுக்குவிரோதமாகக்குரூரதூதன் அனுப்பப்
படுவான்.—தன்பேதைமையில் அமிழ்ந்திய மதி ௰௨
யீனனைச் சந்திப்பதிலும், குட்டிகளைப்பறிகொ

(௬) தானி.௪.௨௭. லூக்.௰௧.௪௧. (௮) சங்.௩௭.௰௬. (௯) அதி.௰௯.௨௧. சங்.௩௭.௨௩. அதி.௨௰.௨௪. எரே.௰.௨௩. (௰௧) லேவி.௰௯.௩௬. (௰௨) அதி.௨௫.௫. (௰௩) அதி.௰௪.௩௫. (௰௪) அதி.௨௰.௨. (௰௫) யோபு.௨௯.௨௩. ௪௧.௰. ௧. (௰௬) அதி:௮.௰௧,௰௯. (௰௮) அதி.௰௮.௰௨. (௨௰) சங்.௨.௰௨. எசா.௩௰.௰௮. எரே.௰௭.௭. (௨௨) அதி.௰௪. ௨௭. (௨௩) சங்.௩௭.௩௰. மத்.௰௨.௩௪. (௨௬) பிர.௬.௭. (௨௮) அதி.௬.௰௪,௰௮. அதி.௰௭.௯. (௨௯) அதி.௧.௰,.(௩௧) அதி.௨௰.௨௯. (௩௨) அதி.௰௯.௰௧.—(௰௭. அதி. ௧.)அதி.௰௫.௰௭. (௨) அதி.௰௯.௨௬. (௩) சங்.௨௬.௨. எரே.௰௭. ௰. மல்.௩.௩. (௫) யோபு.௩௧.௨௯. ஒப.௰௨. (௬) சங்.௱௨௭.௩. (௮) அதி.௰௮.௰௬. (௯) அதி.௰.௰௨. அதி.௰௬.௨௮. (௰௨) ஓசி.௰௩.௮.

௰௩ டுத்தகராடியைச்சந்திப்பது நலம்.-நன்மைக்குத் தீ
மைசெய்கிறவனுடையவீட்டைத் தீமை நீங்கா
௰௪ து.—விவாதத்தின் ஆரம்பம் ஒருவன் நீர்வரம்
பை வெட்டுகிறதுபோலிருக்கின்றது: ஆதலால்
௰௫ விவாதம் எழும்புமுன் அதை விட்டுவிடு.—துன்
மார்க்கனை நீதிமானென்று தீர்க்கிறவனும், நீதி
மானைக் குற்றவாளியென்று தீர்க்கிறவனுமாகிய
இவ்விருவரும் யெகோவாவுக்கு அருவருப்
௰௬ பானவர்கள்.—ஞானம் பெறும்படி கிரயம் மதி
௰௭ யீனனுக்கேது, அவனுக்கு மனமேயில்லை.—சி
நேகிதன் எப்பொழுதும் நேசிக்கிறான், உபத்
திரவகாலத்துக்காகச் சகோதரன் பிறக்கிறான்.—
௰௮ புத்தியீனன் தன் சிநேகிதனுக்கு முன்பாகப்பி
௰௯ ணைபட்டுக்கைபோடுவான்.—வாதப்பிரியன், பா
தகப்பிரியன்: தன் வாசலை உயர்த்துகிறவன் அ
௨௰ ழிவைநாடுகிறான்.—மாறுபாடான இருதயமுள்
ளவன் சௌக்கியத்தைப்பெறான்: புரட்டுநாவுள்
௨௧ ளவன் தீமையில் விழுவான்.—மூடபுத்திரனைப்
பெறுகிறவன் துக்கத்தை அடைவான்:மதியீன
௨௨ னுடைய பிதா மகிழான்.—மனமகிழ்ச்சி ஔஷ
தம்போற் சொஸ்தஞ்செய்யும்: நொறுங்கிய ஆவி
௨௩ யோ எலும்புகளை உலரப்பண்ணும்.—துன்மார்க்
கன் நியாயநெறிகளைப் புரட்டும்படி மடியினின்
௨௪ று பரிதானம் வாங்குவான்.—புத்திமானுக்குமுன்
பாக ஞானமுண்டு; மூடனுடையகண்ணோபூமி
௨௫ யின்கடைஎல்லையிற்செல்லுகின்றது.-மூடபுத்தி
ரன் தன் பிதாவுக்குத் துக்கமும், தன்னைப்பெற்
௨௬ றவளுக்குக்கசப்புமாவான்.-நீதிமானைத்தண்டிப்
பதும், நியாயஞ்செய்கிற பிரபுகளை அடிப்பதுந்
௨௭ தகுதியல்ல.—அறிவையுடையவன் தன் வாக்குக
ளை அடக்குகிறான்: விவேகி குளிர்ந்தமனமுள்ள
௨௮ வன்.—பேசாதிருந்தால்மூடனும்ஞானவானென்
றெண்ணப்படுவான்:தன்னுதடுகளைமூடுகிறவன்
புத்திமானென்றெண்ணப்படுவான்.

## ௰௮. அதிகாரம்.

பிரிந்த மனுஷன் தான் இச்சித்தவைகளைநாடி
௨ எல்லாஞானத்திலுங் கையிடுகிறான்.—மூடன்ஞா
னத்திற்பிரியம்வைக்காமல் தன்மனதிலுள்ளவை
களை வெளிப்படுத்தப் பிரியங்கொள்ளுகிறான்.—
௩ துன்மார்க்கன்வரஅவமானமும், அவமானத்தோ
௪ டே நிந்தையும்வரும்.—மனுஷருடைய வாய்
மொழிகள், ஆழமான சலம்போலிருக்கின்றன;
ஞானத்தினூற்று, பாய்கிற ஆற்றைப்போலிருக்
௫ கின்றது.—வழக்கிலே நீதிமானைத்தோற்கடிக்கிற
தற்குத் துன்மார்க்கனுக்கு இடங்கொடுப்பது த
௬ காது.—மூடனுடையஉதடுகள்விவாதத்தில்நுழை
௭ யும், அவன்வாய் அடிகளைவரஅழைக்கும்.—மூ
டனுடைய வாய்அவனைக்கெடுக்கும், அவன் உ
தடுகள் அவன்பிராணனுக்குக்கண்ணி.—புறங்கூ ௮
றுகிறவனுடையவாக்குகள்காயங்கள்போலிருக்
கின்றன, அவைகள்உள்ளத்திற் பதியும்.—தன் கி ௯
ரியையிற் சோம்பேறியானவன் வீண்செலவுக்
காரனுக்குச் சகோதரன்.—யெகோவாவின் ௰
நாமம் வலியதுருக்கம்: அதற்கோடி நீதிமான் இ
ரட்சிப்புப்பெறுவான்.—செல்வனுடைய பொ ௰௧
ருள் அவன் அரணானநகரம், அது அவன் எண்
ணத்தில் உயர்ந்தமதில்போலிருக்கின்றது.-அழி ௰௨
வுவருமுன் மனுஷனுடைய இருதயம் இறுமாப்
பாயிருக்கின்றது, மேன்மைவருமுன் தாழ்மை
யுண்டு.-காரியங்கேட்குமுன் உத்தரஞ்சொல்லு ௰௩
கிறவனுக்கு அது புத்தியீனமும் வெட்கமுமாயி
ருக்கின்றது.—மனுஷனுடைய ஆவி அவன்பெல ௰௪
வீனத்தைத்தாங்கும்; நொறுங்கிய ஆவியையோ
தாங்குபவன்யாவன்.-புத்திமானுடைய மனம் அ ௰௫
றிவைச்சம்பாதிக்கும்;ஞானியின்செவி அறிவை
நாடும்.—ஒருவனுடைய காணிக்கை அவனுக்கு ௰௬
இடமுண்டாக்கிப் பெரியோர்களுக்குமுன்பாக
அவனைக்கொண்டுபோய்விடும்.—தன் வழக்கிலே ௰௭
முதல்பேசுகிறவன் நீதிமான்போற்காணப்படுகி
றான்; அவன் அயலானோ வந்து அவனைப்பரீட்
சிப்பான்.—திருவுளச்சீட்டு விரோதங்களை யொ ௰௮
ழித்துப்பலவான்களுக்குள்ளேபங்கிடுகின்றது.-
அரணான நகரத்தைப்பார்க்கிலுங் கோபங்கொ ௰௯
ண்ட சகோதரனை வசப்படுத்துவதரிது: அவர்
களுடைய விரோதங்கள் கோட்டைத்தாழ்ப்பா
ள்போலிருக்கின்றன.—மனுஷனுடைய வயிறு ௨௰
அவன்வாயின் பலனால் திருத்தியடையும்; தன்
உதடுகளின் விளைவினால் அவன் நிரப்பப்படு
வான்.—மரணமுஞ் சீவனும் நாவுக்காதீனம்: அ ௨௧
திற்பிரியமானவர்கள்அதின்கனியைப்புசிப்பார்
கள்.—மனைவியைக் கொள்ளுகிறவன் நன்மை ௨௨
பெற்று, யெகோவாவின் தயையைப்பெறு
கிறான்.-தரித்திரன் கெஞ்சிக்கேட்கிறான், செல் ௨௩
வனோ கடிய உத்தரங்கொடுக்கிறான்.—நேசமுள் ௨௪
ள சிநேகிதருண்டு; சகோதரனிலும் நேசமுள்ள
சிநேகிதனுமுண்டு.

## ௰௯. அதிகாரம்.

மாறுபாடுள்ள உதடுகளையுடைய மூடனிலும், ௧
நேர்மையாய்நடக்கிறதரித்திரன் நல்லவன்.—ஆத் ௨
துமா அறிவில்லாமலிருப்பதுநல்லதல்ல, காலில்
துரிதமானவன் பாவஞ்செய்வான்.—மதியீனம் ௩
மனுஷனுடைய வழியைக்கோணலாக்கும்: அ
வன் மனம் யெகோவாவுக்கு விரோதமாய்
விசனங்காட்டுகின்றது.-செல்வம் சிநேகிதரைப் ௪
பெருகச்செய்யும்: தரித்திரனோ தன் அயலவ
னால் நெகிழப்பட்டிருக்கிறான்.—பொய்ச்சாட் ௫

(௰௩) எரே.௰௮.௨௰. ௧.பேது௫.௩.௯. (௰௪) ௧.தெச.௪.௰௧. (௰௫) யாத்.௨௩.௭. ஏசா.௫.௨௩. (௰௭) ரூத்.௧.௰௬. அதி.௰௮.௨௪. (௰௮) அதி.௬.௧. (௰௯) அதி.௰௬.௰௮. (௨௰) யாக்.௩.௮. (௨௧) அதி.௰.௧. (௨௨) அதி.௰௨.௨௫. சங்.௨௨.௰௫. (௨௩) யாத்.௨௩.௮. (௨௪) அதி.௰௪.௬. பிர.௨.௰௪. (௨௫) அதி.௰.௧. (௨௬) வச.௰௫. அதி.௰௮.௫. (௨௭) யாக்.௧.௰௯.(௨௮)யோபு.௰௩.௫.—(௰௮. அதி. ௧.) யூதா.௰௯. (௪) அதி.௰.௰௧. சங்.௭௮.௨. (௫) லேவி.௰௯.௰௫. உபா.௧.௰௭. (௭) அதி.௰.௰௪. பிர.௰.௰௨. (௮) அதி.௰௨.௰௮. (௯) அதி.௨௮.௨௪. (௰) ௨.சாமு.௨௨.௩,௫௧. சங்.௰௮.௨. (௰௧) அதி.௰.௰௫. (௰௨) அதி.௰௧.௨. (௰௩) யோவா.௭.௫௧. (௰௬) ஆதி.௩௨.௨௰. ௧.சாமு.௨௫.௨௭. (௨௰) அதி.௰௨.௰௪. (௨௧) மத்.௰௨.௩௭. (௨௩) யாக்.௨.௩.—(௰௯. அதி. ௧.) அதி.௨௮.௬. (௩) சங்.௩௭.௭. (௫) யாத்.௨௩.௧.

சிதண்டனைப்படாமலிரான், பொய்யன் தப்பா
௬ ன்.-அநேகர் பிரபுவின் தயையைவருந்திக்கேட்
பார்கள்: கொடையாளிக்கு எவனுஞ் சிநேகி
௭ தன்.—தரித்திரனுடைய சகோதரர் எல்லாரும்
அவனைவெறுக்கிறார்கள்: அவனுடைய சிநேகி
தர் எவ்வளவு அதிகமாக அவனுக்குத் தூரமாயி
ருக்கிறார்கள்; அவன் வாக்குகளைச்சொல்லியும்,
௮ அவனுக்கு ஒன்றுமில்லை.—ஞானத்தைத்தேடிப்
பெறுகிறவன்தன்ஆத்துமத்தைநேசிக்கிறான்: புத்
தியைக் காக்கிறவன் நன்மை அடைவான்.—
௯ பொய்ச்சாட்சி தண்டனைக்குத்தப்பான், பொய்
௰ யன் நாசமடைவான்.—சம்பிரமம் மூடனுக்குத்த
காது; பணிவிடைக்காரன் பிரபுகளை ஆண்டு
௰௧ கொள்வது எவ்வளவு அதிகம்.—மனுஷன்விவே
கத்தினால் தன் கோபத்தை அடக்குவான்; குற்
௰௨ றத்தைமன்னிப்பது அவனுக்கு மகிமை.—இரா
சாவின் கோபஞ்சிங்கத்தின் ஆரவாரத்திற்குச் ச
மானம்; அவனுடைய தயை புல்லின்மேற்பெய்
௰௩ கிற பனியைப்போலாகும்.—மதியீன புத்திரன்
தன் பிதாவுக்குத் துக்கமாயிருப்பான்: மனைவி
௰௪ யின் கலகம் ஒழியாத ஒழுக்கு.—வீடும் செல்வ
மும் பிதாக்களால்வருஞ்சுதந்தரம்: பத்தியுள்ளம
௰௫ னைவியோ யெகோவா அருளும் ஈகை.-சோம்
பல் கனநித்திரையைக்கொடுக்கும்; அசதியான
௰௬ ஆத்துமா பசியினால் வருந்தும்.—கட்டளையைக்
காத்துக்கொள்ளுகிறவன் தன் பிராணனைக்காக்
கிறான்; தன் நெறிகளை அவமதிக்கிறவன் இறந்
௰௭ துபோவான்.-தரித்திரனுக்குத் தயைசெய்பவன்
யெகோவாவுக்குக்கடன்கொடுக்கிறான்; அ
௰௮ வன்செய்ததற்கு அவர்பிரதி அளிப்பார்.-நம்பிக்
கையிருக்கையில் உன்புத்திரனைக்கடிந்துகொள்,
௰௯ நீ அவன் கெட்டுப்போகும்படி விடாதே.—மி
குந்தகோபமுள்ளவன் தண்டனைபெறுவான்: நீ
அவனை விடுவித்தால் திரும்பவும் அதைச்செய்ய
௨௰ வேண்டும்.—முடிவில் நீ ஞானமுள்ளவனாயிருக்
கும்படி ஆலோசனையைக்கேட்டு, போதகத்தை
௨௧ ஏற்றுக்கொள்.—மனுஷனுடைய இருதயத்திலுள்
ள எண்ணங்கள் மிகுதி; ஆனாலும் யெகோவா
௨௨ வின் ஆலோசனையே ஸ்திரப்படும்.—மனுஷனு
டைய தயை அவனை மதிக்கப்படச்செய்யும்:
௨௩ பொய்யனிலுந்தரித்திரன் நல்லவன்.—யெகோ
வாவைப் பற்றும்பயம் சீவனைத்தரும்: அதைப்
பெற்றவன் திருத்தியடைவான்; தீமை அவனை
௨௪ அணுகாது.—சோம்பேறி தன் கையை மார்பில்
வைத்துத்திரும்பத் தன் வாயண்டைக்கு எடுக்க
௨௫ மாட்டான்.-நிந்தனைக்காரனை அடித்தால் பேதை

சாவதானமாயிருப்பான்: புத்திமானைக் கடிந்து
கொண்டால் மென்மேலும் அவன்புத்தி அதிக
ரிக்கும்.—தன்பிதாவைக் குறைவடையப்பண் ௨௬
ணி, தன்மாதாவைத்துரத்தினபுத்திரன், இலச்சை
யையும் அவமானத்தையும் வருவிப்பான்.—என் ௨௭
மகனே, அறிவைத்தரும் வாக்குகளைவிட்டு வில
கும்படிசெய்யும்போதகங்களைக்கேளாமல்விடு.-
பேலியாலின் சாட்சி நியாயத்தை நிந்திக்கிறான்: ௨௮
துன்மார்க்கருடைய வாய் பாவத்தைப் பட்சிக்
கும்.—நிந்தனைக்காரருக்குத்தண்டனைகளும், மூ ௨௯
டருடைய முதுகுக்கு அடிகளும் ஆயத்தமாயி
ருக்கின்றன.

## உ௰. அதிகாரம்.

திராட்சரசம் பரியாசகன்; மதுபானம் உக்கிரகு ௧
ரோதி: இவைகளினால் மயங்குகிறவன்ஞானவா
னல்ல.—இராசபயம் சிங்கத்தின்கருச்சிப்புக்குச் ௨
சமானம்: அவனைக்கோபப்படுத்துகிறவன் தன்
பிராணனுக்கு விரோதமாகப் பாவஞ்செய்
கிறான்.—விவாதத்தைவிட்டு விலகுவது மனுஷ ௩
னுக்குமேன்மை: மூடர்யாவருங் கோபமூட்டு
வார்கள்.-சோம்பேறி குளிரினிமித்தம் உழமாட் ௪
டான்: ஆதலால் அறுப்பில் பிச்சைகேட்டா
லும் அவனுக்கொன்றுங் கிடையாது.—மனுஷ ௫
னுடைய மனதின் ஆலோசனை ஆழமானசலம்
போலிருக்கின்றது; புத்திமானோ அதைமொண்
டுகொள்வான்.—அநேகர் தங்கள் தங்கள் உதார ௬
தயையைப் பிரசித்தப்படுத்துவார்கள்: உண்மை
யான மனுஷனைக்கண்டவன் யாவன்.-நீதிமான் ௭
தன்நேர்மையிலேநடக்கிறான்: அவனுக்குப்பின்
அவன்சந்ததியார் வாழ்த்தப்படுவார்கள்.-நியாயா ௮
சனத்தில்வீற்றிருக்கும் இராசா தன்கண்களினால்
தீமையை எல்லாஞ் சிதறப்பண்ணுகிறான்.—என் ௯
னிருதயத்தைச் சுத்தமாக்கினேன், என் பாவம
றச்சுத்திகரிக்கப்பட்டேனென்று சொல்லத்தக்க
வன்யாவன்.—நானாவித நிறைகல்லும், நானாவி ௰
தமுகத்தலளவைக் கருவிகளுமாகிய இரண்டும்
யெகோவாவுக்கு அருவருப்பானவைகள்.-
பிள்ளையின்செய்கையும் சுத்தமோசெவ்வையோ ௰௧
வென்பது அவன் நடக்கைகளினால் அறியப்ப
டும்.-கேட்கிறசெவியும், காண்கிறகண்ணுமாகிய ௰௨
இவ்விரண்டையும் யெகோவா சிருஷ்டித்
தார்.-நீ நித்திரையைவிரும்பாதே, விரும்பினால்த ௰௩
ரித்திரனாவாய்; உன்கண்களைத்திறந்துவிடு, அப்
பொழுது ஆகாரத்தினால் திருத்தி அடைவாய்.—
கொள்ளுகிறவன் நல்லதல்ல, நல்லதல்லவென்கி ௰௪

(௬) அதி.௰௭.௮. (௭) அதி.௰௪.உ௰. சங்.௩௮.௰௧. (௮) அதி.௰௬.உ௰. (௰) அதி.௩௰.௨௨. பிர.௰.௬,௭. (௰௧) அதி.௰௪.௨௯. யாக்.௧.௰௯. (௰௨) ஓசி ௰௪.௰௫. (௰௩) அதி.௰.௧. அதி.௨௧.௯,௰௯. (௰௪) உ.கொரி.௰௨.௰௪. (௰௫) அதி.௬.௯. அதி.௰.௪. (௰௬) லூக்.௰.௨௮. (௰௭) பிர.௰௧.௧. மத்.௰.௪௨. உ.கொரி.௯.௬,௭,௮. எபி.௬.௰. (௰௮) அதி.௰௩.௨௪. (௨௰) சங்.௩௭.௩௭. (௨௧) யோபு.௨௩.௰௩. சங்.௩௩.௰,௰௧. ஏசா.௰௪.௨௬,௨௭. அப்.௫.௩௯. எபி.௬.௰௭. (௨௩) ௧.தீமோ.௪.௮. (௨௪) அதி.௰௫.௰௯. (௨௫) அதி.௨௧.௰௧. உபா.௰௩.௰௧. (௨௮) யோபு.௰௫.௰௬.(௨௯) அதி.௰.௰௩.—(உ௰. அதி. ௧.) ஆதி.௯.௨௧. அதி.௨௩.௨௯,௩௰. ஏசா.௨௮.௭. ஓசி.௪.௰௧. (௨) அதி.௰௯.௰௨. (௪) அதி.௰.௪. அதி.௰௯.௰௫. (௫) அதி.௰௮.௪. (௬) மத்.௬.௨. லூக்.௰௮.௰௧. சங்.௰௨.௧. லூக்.௰௮.௮. (௭) உ.கொரி.௧.௰௨.(௯)௧.இரா.௮.௪௬. யோபு.௰௪.௪. சங்.௫௧.௫. பிர.௭.உ௰. ௧.கொரி.௪.௪. ௧.யோவா.௧.௮. (௰) உபா.௨௫.௰௩,. மீகா.௬.௰,௰௧. (௰௧) மத்.௭.௰௬. (௰௨) யாத்.௪.௰௧. (௰௩) அதி.௬.௯. ரோ.௰௨.௰௧.

றான்: கொண்டுபோனபின்போ, மெய்ச்சிக்கொ
௰௫ ள்ளுகிறான்.-பொன்னும் மிருதியானமுத்துகளு
முண்டு: ஞானம்பொருந்திய உதடுகளோ விலே
௰௬ யேறப்பெற்ற ஆபரணம்.—அந்நியனுக்காகப்பி
ணைபட்டவனுடைய வஸ்திரத்தை எடுத்துக்கொ
ள்: அந்நிய ஸ்திரியினிமித்தம் அவன்கையிலீடு
௰௭ வாங்கிக்கொள்.-வஞ்சனையினால்வந்தபோசனம்
மனுஷனுக்குச்சுவையுள்ளது; பின்போ அவனு
௰௮ டையவாய் மணலினால் நிரப்பப்படும்.—அபிப்
பிராயம் ஆலோசனையினால் ஸ்திரப்படும்: நல்
௰௯ ல ஆலோசனையோடே யுத்தம்பண்ணு.—புறங்
கூறித் திரிகிறவன் இரகசியங்களை வெளிப்படுத்
துவான்: ஆதலால்தன்னுதடுகளினால் நயங்காட்
௨௰ டுகிறவனோடே கலவாதே.—தன் பிதாவையாகி
லும் மாதாவையாகிலும் தூஷிக்கிறவனுடையதீ
௨௧ பம் அகோர அந்தகாரத்திலணைந்துபோம்.-ஆரம்
பத்தில் துரிதமாகக்கிடைத்த சுதந்தரம்முடிவில்
௨௨ அநுகூலப்படாது.—தீமைக்குப் பிரதிசெய்வே
னென்று சொல்லாதே; யெகோவாவையே
௨௩ காத்திரு, அவர் உன்னை இரட்சிப்பார்.-நானாவித
நிறைகற்கள் யெகோவாவுக்கு அருவருப்பா
௨௪ னவைகள்; கள்ளத்தராசு நல்லதல்ல.—மனுஷனு
டையநடைகள் யெகோவாவினால் உண்டா
னவைகள்; ஆகையால் மனுஷன் எவ்விதமாய்த்
௨௫ தானே தன் வழியை அறிவான்.—பரிசுத்தமான
தைவிழுங்கிச்சங்கற்பஞ்செய்தபின்புவிசாரணை
௨௬ செய்வது மனுஷனுக்குக் கண்ணியாகும்.—ஞா
னமுள்ள இராசா துன்மார்க்கரைச்சிதற அடித்
து, அவர்கள்மேலுருளையைச் செலுத்துவான்.—
௨௭ அந்தரங்கத்திலுள்ளவைகளை ஆராய்ந்துபார்க்கிற
யெகோவாவின் தீபம் மனுஷனுடையஆவி.-
௨௮ தயையுஞ் சத்தியமும் இராசாவைக்காக்கும்: அ
வன் சிங்காசனம் தயையினால் ஸ்தாபிக்கப்ப
௨௯ டும்.—வாலிபருடையபெலம் அவர்கள் மேன்
மை: விருத்தருடையநரைமயிர் அவர்களுடைய
௩௰ சௌந்தரியம்.-காயத்தின் தழும்புகளும், உள்ளத்
திலுறைக்கும் அடிகளும், தீமையைப்பரிகரிக்கு
ம்ஔஷதம்.

## ௨௧. அதிகாரம்.

இராசாவின் இருதயம் யெகோவாவின்
கையிலிருக்கின்றது: நீர்க்கால்களைப்போல அ
வர் தமது சித்தத்தின்படி அதைத் திருப்புகி
௨ றார்.—மனுஷனுடைய எந்தவழியும் அவன் பார்
வைக்கு நேர்மையாகத் தோன்றுகின்றது: யெ
௩ கோவா இருதயங்களைப் பரீட்சிக்கிறார்.—ப
லியைப் பார்க்கிலும் நீதியையும் நியாயத்தையு
ஞ் செய்வது யெகோவாவுக்குப் பிரியமா
௪ னது.—மேட்டிமையான பார்வையும், அகந்தை
யுள்ளமனமும், துன்மார்க்கருடைய ஒளியும்
அவர்கள் பாவத்தை வெளிப்படுத்தும்.—
சாக்கிரதையுள்ளவனுடையசிந்தனைகள் செல்வ ௫
த்துக்கும், பதறுகிறவர்களுடையவைகளோ, தரி
த்திரத்துக்கும்ஏதுவாகும்.—பொய்நாவினால்பொ ௬
ருளைச் சம்பாதிப்பது மரணத்தைத் தேடுகிறவர்
களுடைய சஞ்சலமுள்ளமாயை.—துன்மார்க்கர் ௭
கொள்ளையாடுதல் அவர்களைக்கெடுக்கும்; அவர்
கள் நியாயஞ்செய்யாமல் மறுக்கிறார்கள்.—மனு ௮
ஷனுடையவழி கோணலும் வேற்றுமையுமுள்
ளது: சுத்தனோ, அவன் கிரியை செவ்வையான
து.—கலகக்காரியோடே ஒரு பெரிய வீட்டில் ௯
வாசம்பண்ணுவதிலும், வீட்டின்மேல் ஒரு மூ
லையில் தங்குவது நலம்.—துன்மார்க்கனுடைய ௰
மனந் தீமையை விரும்பும்: அவன் அயலான்
அவன்பார்வையில் தயைபெறமாட்டான்.—நிந் ௰௧
தனைக்காரன் தண்டிக்கப்பட்டால், பேதை ஞா
னம்பெறுவான்: ஞானவான் போதிக்கப்பட்
டால், அறிவில் அதிகரிப்பான்.—நீதிமான் துன் ௰௨
மார்க்கருடைய வீட்டைச்சிந்தனையோடே பார்
க்கிறான்:கடவுள்துன்மார்க்கரைத்தீமையினிமித்
தங்கவிழ்க்கிறார்.—தரித்திரன் ஓலமிடும்பொழுது ௰௩
தன்செவியைஅடைத்துக்கொள்ளுகிறவன், தா
னும் ஓலமிடும்பொழுது கேட்கப்படான்.-அந்த ௰௪
ரங்கமானகாணிக்கைகோபத்தையும், மடியிலுள்
ளபரிதானங்குரோதத்தையும் ஆற்றும்.-நியாயஞ் ௰௫
செய்வது நீதிமான்களுக்குச் சந்தோஷம்: துர்க்
கிரியைக்காரருக்கோ அழிவு.—ஞான நெறியை ௰௬
விட்டுத்திரிகிறவன்மரித்தோரின் சபையில்தரிப்
பான்.-சிற்றின்பப்பிரியன் தரித்திரனாவான்: தி ௰௭
ராட்சரசத்தையும் எண்ணெயையும் விரும்புகிற
வன்செல்வனாகான்.—நீதிமானுக்குத்துன்மார்க் ௰௮
கனும், நேர்மையானவனுக்கு அதிக்கிரமக்கார
னும் மீட்கும்பொருளாவார்கள்.—கலகமுங்கோ ௰௯
பமுமுள்ள ஸ்திரியுடன்வாசம்பண்ணுவதிலும்,
வனத்தில்வாசம்பண்ணுவது நலம்.-ஞானவானு ௨௰
டைய ஸ்தலத்தில்விரும்பப்படத்தக்க திரவிய
மும்எண்ணெயுமுண்டு: மூடனோ அதைச்செல
வழிப்பான்.-நீதியையுந்தயையையும் பின்பற்று ௨௧
கிறவன் சீவனையும், நீதியையும், கனத்தையும்
பெறுவான்.—ஞானவான் பெலவான்களுடைய ௨௨
நகரத்திற்பிரவேசித்து, அவர்களுடைய நம்பிக்
கைக்கிடமாகிய அரணையிடிக்கிறான்.—தன்வா ௨௩
யையும் நாவையுங் காக்கிறவன், ஆபத்துகளுக்
குத் தன் பிராணனைவிலக்குகிறான்.—அகந்தை ௨௪
யாய் எல்லாஞ்செய்கிறவனுக்கு, இறுமாப்பும்
அகங்காரமுமுள்ள நிந்தனைக்காரனென்று பெ
யர்.—சோம்பேறியின் கைகள் வேலைசெய்ய இ ௨௫
சையாததினால், அவன்விருப்பம் அவனைநாசப்

(௰௫) யோபு.௨௮.௰௨,௰௬. அதி.௩.௰௫. (௰௭) அதி.௯.௰௭. (௰௮) அதி.௰௫.௨௨. லூக்.௰௪.௩௧. (௰௯) ரோ.௰௬.௰௮. (௨௰) யாத்.௨௧.௰௭. மத்.௰௫.௪. யோபு.௰௮.௫,௬. (௨௧) அபகூ.௨.௬. (௨௨) உபா.௩௨.௩௫. ரோ.௰௨.௰௭,௰௯. ௧.தெச.௫.௰௫. ௧.பேதுரு.௩.௯. ௨.சாமு.௰௬.௰௨. (௨௪) சங்.௩௭.௨௩. (௨௫) பிர.௫.௪,௫. (௨௭) ௧.கொரி.௨.௰௧. (௨௯) அதி.௰௬.௩௧.—(௨௧. அதி. ௨.) லூக்.௰௬.௰௫. (௩) ௧.சாமு.௰௫.௨௨. சங்.௫௰.௮. ஏசா.௧.௰௧,. ஓசி.௬.௬. மீகா.௬.௭,௮. (௯) அதி.௰௯.௰௩. (௰) யாக்.௪.௫. (௰௩) யாக்.௨.௰௩. (௰௮) ஏசா.௪௩.௨,௪. (௨௰) மத்.௨௫.௩,௪. (௨௧) மத்.௫.௬. (௨௨) பிர.௯.௰௪,. (௨௩) யாக்.௩.௨.

உசு படுத்தும்.-அவன்நாடோறும் ஆவலுடன் இச்சிக்
கிறான்: நீதிமானே மறுக்காமற் கொடுக்கிறான்.—
உஎ துன்மார்க்கருடைய பலி அருவருப்பானது: அ
தைத்துர்ச்சிந்தையோடே செலுத்தினாலோஎவ்வ
உஅ ளவதிகம்.—பொய்ச்சாட்சிநாசமடைவான்: கே
ட்கத்தக்கமனுஷனேஎப்பொழுதும்பேசலாம்.—
உகூ துன்மார்க்கன் தன்முகத்தைக் கடினப்படுத்துகி
றான்: நேர்மையானவனே தன்வழியைச் செவ்
௩௰ வைப்படுத்துகிறான்.-யெகோவாவுக்கு வி
ரோதமான ஞானமுமில்லை, புத்தியுமில்லை, ஆ
௩க லோசனையுமில்லை.—குதிரையுத்ததினத்திற்காக
ஆயத்தமாக்கப்படும்: செயமோ யெகோவா
வினால் வரும்.

## உஉ. அதிகாரம்.

மிகுதியான செல்வத்திலும் நற்கீர்த்தி உத்தமம்,
உ பொன் வெள்ளியிலுந் தயையே நலம்.-செல்வ
ருந்தரித்திரரும்ஒருவரோடொருவர் எதிர்ப்படுகி
றார்கள்: யெகோவாவே அவர்கள்யாவருக்
௩ கும் சிருஷ்டிகர்த்தா.—விவேகி ஆபத்தைக்கண்
டு மறைகிறான், பேதையரோ எதிர்சென்றுதண்
ச டிக்கப்படுகிறார்கள்.—தாழ்ந்த சிந்தையினாலும்,
யெகோவாவை ப்பற்றும்பயத்தினாலும்,செல்
ரு வமும், மேன்மையும், சீவனும்வரும்.-மாறுபா
டுள்ளவனுடைய வழியிலே முள்ளுக்களுங்கண்
ணிகளுமுண்டு: தன்பிராணனைக்காக்கிறவன் அ
சு வைகளுக்குத்தூரமாவான்.—அவன் நடக்கவே
ண்டியவழியிலே பிள்ளையைநடத்து: அவன் மு
எ திருங்காலத்தில் அதை விடான்.—செல்வன்தரி
த்திரனை ஆளுகிறான், கடன்வாங்கினவன் கடன்
அ கொடுத்தவனுக்கு அடிமை.—அநியாயத்தை வி
தைக்கிறவன்கிலேசத்தைஅறுப்பான்:அவன்உக்
கூ கிரமிலாறுஒழியும்.—நற்கண்ணன்வாழ்த்தப்படு
வான்; அவன்தன் ஆகாரத்தைத்தரித்திரனுக்குக்
௰ கொடுக்கிறான்.—நிந்தனைக்காரனைத்துரத்திவிட்
டால் விவாதம் நீங்கும்; விரோதமும் அவமான
௰க மும் ஒழிந்துபோம்.—மனச்சுத்தத்தைவிரும்புகி
றவனெவனோ அவனுடைய உதடுகளின் இனி
மையினிமித்தம் இராசாஅவனுக்குச்சிநேகிதனா
௰உ வான்.—யெகோவாவின் கண்கள் ஞானத்
தைக்காப்பாற்றும், அவர்அதிக்கிரமக்காரனுடை
௰௩ ய வாக்குகளைத் தடுமாறச்செய்வார்.—வெளியி
லே சிங்கம் நிற்கின்றது, வீதியிலே கொலைசெய்
யப்படுவேனென்று சோம்பேறிசொல்லுவான்.-
௰ச வேசையின்வாய்ஆழமானகுழி: யெகோவாவி
னால்வெறுக்கப்பட்டவன் அதிலேவிழுவான்.—
௰ரு பிள்ளையின்மனதில் மதியீனங்கட்டப்பட்டிருக்
கின்றது; தண்டனைமிலாறு அதை அகற்றித்து
௰சு ரப்படுத்தும்.—தனக்குச்செல்வம் அதிகரிக்கும்
படி தரித்திரனை உபத்திரவப்படுத்துகிறவனும்,
செல்வனுக்குத்தானஞ்செய்கிறவனும் நிச்சயமா
ய்த்தரித்திரராவார்கள்.—உன் செவியைச்சாய்த் ௰எ
து ஞானிகளுடைய வாக்குகளைக்கேட்டு, என்
போதகத்தை உன் இருதயத்தில் வை.—அவை ௰அ
களை உன்னுள்ளத்தில்காத்துக்கொண்டால் இன்
பங்கிடைக்கும்; அவைகள் உன்னுதடுகளிற்சி
றக்கும்.—நீ யெகோவாவின் மேல் நம்பிக் ௰கூ
கையாயிருக்கும்படி, இன்றைத்தினம் நான் உ
னக்கு, உனக்கே அறிவித்தேன்.—நான் சத்திய உ௰
வாக்குகளின் சத்தியத்தை உனக்குத்தெரிவிக்
கும்படிக்கும், உனக்குஅனுப்பினவர்களுக்கு நீ
சத்தியவாக்குகளை உத்தரமாகச் சொல்லும்படிக்
கும்,—யுத்தியிலும் ஞானத்திலும் நான் உனக்கு உக
முக்கியமான பொருள்களை எழுதவில்லையா.—
அவன் தரித்திரமுள்ளவனாயிருப்பதினால்தரித்தி உஉ
ரனிடத்தில் களவெடுக்கப்படாது: சிறுமையா
னவனை நியாயஸ்தலத்தில் உபத்திரவப்படுத்தா
தே.—யெகோவா அவர்கள் வழக்கை நடத் உ௩
துவார், அவர்களைக்கொள்ளையிடுகிறவர்களுடை
யபிராணனைக்கொள்ளையிடுவார்.—கோபியுடன் உச
சிநேகங்கொள்ளாதே; உக்கிரமுள்ள மனுஷனு
டனே நடவாதே.-நீஅவனுடையநெறிகளைக்கற் உரு
றுக்கொண்டு, உன்பிராணனுக்குக் கண்ணியை
வருவிக்கவுங்கூடும்.—கைபோடுகிறவர்களிடத் உசு
திலும், கடனுக்காகப் பிணைநிற்கிறவர்களிடத்
திலுஞ்சேராதே.—கடனிறுக்க உனக்கு ஒன்று உஎ
மில்லாதிருந்தால், உன்கீழிருக்கும்படுக்கையை
அவன் எடுத்துக்கொள்ளவேண்டியதென்ன.-பி உஅ
தாக்கள்ஸ்தாபித்த பூருவ எல்லையைமாற்றாதே.—
ஒருவன்தன்கிரியையில் சாக்கிரதையுள்ளவனாயி உகூ
ருக்க நீ கண்டாலோ, அவன் நீசருக்குமுன்பாக
நில்லாமல் இராசாக்களின் சமுகத்தில்நிற்பான்.

## உ௩. அதிகாரம்.

நீ புசிக்கும்படி அதிபதியோடே இருந்தால், உ க
னக்குமுன்னிருக்கிறவனின்னானென்று நன்றா
கச் சிந்தித்துக்கொள்.—நீ போசனப்பிரியனாயி உ
ருந்தால், உன்தொண்டையிலே கத்தியைவை,—
அவனுடைய சுவையுள்ள பதார்த்தங்களை நீ இச் ௩
சிக்கலாகாது: அவைகள் மயக்கும் ஆகாரம்.—நீ ச
செல்வனாயிருக்கப் பிரயாசப்படாதே; உன்சுய
புத்தியைச்சாராதே.-இல்பொருளின்மேல்நீகண் ரு
வைப்பாயா; அதுகழுகைப்போலச் சிறகுகளைக்
கொண்டு ஆகாயமார்க்கமாய்ப் பறந்துபோகும்.-
வன்கண்ணனுடைய ஆகாரத்தைப்புசியாதே, அ சு
வனுடைய சுவையுள்ளபதார்த்தங்களை இச்சிக்க
வும்வேண்டாம்.—அவன் தன்மனதிலெண்ணுகி எ
றபடியே இருக்கிறானே: நீபோசனபானம்பண்

(உசு) சங்.௩எ.உசு. (உஎ) சங்.ரு௰.கூ. ஏசா.சுசு.௩. எரே.சு.உ௰. ஆமோ.ரு.உஉ. (௩௰) ஏசா.அ.கூ,௰. எரே.கூ.உ௩. அப்.ரு.௩கூ. (௩க) சங்.உ௰.எ. ஏசா.௩க.க.—(உஉ. அதி. க.) பிர.எ.க. (உ) க.கொரி.௰உ.உக. யோபு.௩க.௰ரு.(௩) அதி.உஎ.௰உ. (ச) மத்.சு.௩௩. (ரு) க.யோவா.ரு.௰அ. (சு) எபே.சு.ச. உ.தீமோ.௩.௰ரு. (எ) யாக்.உ.சு. (அ) யோபு.ச.அ. ஓசி.௰.௰௩. (கூ) உ.கொரி.கூ.சு. (௰௩) அதி.உசு.௰௩. (௰ச) அதி.உ.௰எ. பிர.எ.உசு. (உ௰) லூக்.க.௩,ச. க.பேதுரு.௩.௰ரு. (உக) அதி.அ.சு. (உஉ) யாத்.உ௩.சு. சக.எ.௰. மல்.௩.ரு. (உ௩) க.சாமு.உச.௰உ. எரே.ருக.௩சு. (உசு) அதி.சு.க. (உஅ) உபா.௰கூ.௰ச. அதி.உ௩.௰.—(உ௩. அதி. ச.) க.தீமோ.சு.கூ,௰. ரோ.௰உ.௰சு. (சு) உபா.௰ரு.கூ.

ணென்று உன்னுடன்சொன்னாலும்அவன்மனம்
அ உன்னேடிராது.—நீ புசித்ததுண்டத்தை வாந்தி
பண்ணி, உன் இனியசொற்களை இழந்துபோ
கூ வாய்.—மூடனுடைய செவிக்கேறப் பேசாதே:
அவன் உன்வாக்கில் அடங்கும்ஞானத்தை அவ
ய மதிப்பான்.—பூருவ எல்லையைமாற்ருதே; திக்கற்
றவர்களுடைய நிலங்களில் பிரவேசியாதே.—
யக அவர்களுடையமீட்பர்வல்லவர். அவர் உனனு
டன் அவர்களுடைய வழக்கை நடத்துவார்.—
யஉ போதகத்தில் சிந்தைவைத்து ஞானமுள்ளவாக்
ய௩ குகளுக்குச் செவிகொடு.—பிள்ளையைத் தண்டி
யாமல் விடாதே: அவனை அடித்தால் அவன்மரி
யச யான்.—நீ மிலாற்றினுல் அவனை அடித்து, நரகத்
திற்கு அவன் ஆத்துமத்தைத் தப்புவிப்பாய்.—
யரு என்மகனே, உன் இருதயம்ஞானமுள்ளதாயிருந்
தால் என் இருதயம், என்னுடையதே, மகிழ்ந்தி
யசு ருக்கும்.—உன் உதடுகள் நேர்மையானவைகளைப்
யஎ பேசினுல் என்னுள்ளம் மகிழும்.—உன்மனதைப்
பாவிகள்மேற்பொருமைகொள்ளவிடாதே: நீ நா
டோறும் யெகோவாவைப் பற்றும் பயத்
யஅ தோடிரு.—மெய்யாய்முடிவுவரும்; உன் அபேட்
யகூ சை அபத்தமாகாது.—என்மகனே, நீசெவிகொ
டுத்து, ஞானமடைந்து, உன்மனதை நன்னெறி
உய யில்நடத்து.—மதுபானப் பிரியரையும், மாமிச
உக போசனப்பிரியரையுஞ்சேராதே.—வெறியனும்
போசனப் பிரியனும் தரித்திரராவார்கள்: நித்தி
உஉ ரைகந்தைகளைஉடுப்பிக்கும்.—நீ உன்னைப்பெற்
ற உன்பிதாவுக்குச்செவிகொடு, உன்மாதா வய
துசென்றவளாகும்பொழுது அவளை அவமதியா
உ௩ தே.—சத்தியத்தையும், ஞானத்தையும், உபதேசத்
உச தையும், புத்தியையும்வாங்கு, விற்காதே.—நீதிமா
னுடைய பிதா மிகவுங் களிகூருவான்: ஞான
முள்ள பிள்ளையைப்பெற்றவன் அவனுல் மகிழு
உரு வான்,—உன்பிதாவும் மாதாவும் மகிழுவார்கள்,
உசு உன்னைப்பெற்றவள் சந்தோஷப்படுவாள்.—என்
மகனே, உன்இருதயத்தை எனக்குத்தா,உன்கண்
உஎ கள் என்வழிகளை உற்றுப்பார்க்கக்கடவன.—வே
சை ஆழமான படுகுழி; பரஸ்திரி நெருக்கமான
உஅ துரவு.—அவள்கொள்ளைக்காரனைப்போலப்பதுங்
கியிருந்து,மனுஷருக்குள்ளே பாதகரைவருத்திக்
உகூ கப்பண்ணுகிருள்.—ஆருக்குவேதனை, ஆருக்குத்
துக்கம், ஆருக்குவிவாதங்கள், ஆருக்குக்கலகம்,
ஆருக்குக் காரணமில்லாத காயங்கள், ஆருக்குச்
௩ய சிவந்தகண்கள்.—மதுபானமிருக்குமிடத்தில்வெ
குகாலந் தரிப்பவர்களுக்கும், கலப்புள்ள சாரா
௩க யந்தேடப்போகிறவர்களுக்குமேயுண்டு.-மதுபா
னம், இரத்தவருணமாய்ப் பாத்திரத்தில்தன்நிறத்

தைக்காட்டிப்பக்குவமாகும்பொழுது, நீ அதை
நோக்காதே.—அது முடிவிலேபாம்பைப்போலக் ௩உ
கடிக்கும், விரியனைப்போலக்குத்தும்.—உன்கண் ௩௩
கள்பரஸ்திரிகளைநோக்கும், உன் இருதயம் மாறு
பாடுகளைப்பிறப்பிக்கும்.—சமுத்திரமத்தியில் ப ௩ச
டுக்கிறவனுக்கும் பாய்மரத்தின் நுனியிற் படுக்
கிறவனுக்கும் ஒப்பாவாய்.—அவர்கள் என்னை அ ௩ரு
டித்தார்கள், எனக்குநோகவில்லை: அவர்கள்என்
னை அறைந்தார்கள், நான் உணரவில்லை: நான்
விழிக்கும்பொழுது அதைப்பின்னுந் தேடுவே
னென்பாய்.

## உச. அதிகாரம்.

துஷ்டமனுஷர் உபத்திரவத்தைச் செய்யும்படி க
தங்கள் இருதயத்தில்ஆலோசித்து, தங்களுடைய
உதடுகளினுற்கிலேசத்தைக்குறித்துப்பேசியிருக்
கிறபடியால்,—நீ அவர்கள்மேற்பொருமைகொள் உ
ளாதே;அவர்களைச்சேரவும்விரும்பாதே.-ஞானத் ௩
தினுலேவீடுகட்டப்பட்டு,புத்தியினுல்ஸ்திரமாக்
கப்படும்.-ஞானமூலமாக அதின் அறைகள் அரு ச
மையுமஇனிமையுமானசகலவிதபொருள்களினு
லும் நிரப்பப்படும்.-ஞானமுள்ளவன் பலவான்; ரு
அறிவுள்ள மனுஷன் பராக்கிரமத்தில் அதிகரிப்
பான்.-நல்ல ஆலோசனையோடே யுத்தஞ்செய்: சு
ஆலோசனைக்காரர் அநேகரால் செயங்கிடைக்
கும்.—ஞானம் மூடனுக்கு எட்டாமல் உயரமாயி எ
ருக்கின்றது: அவன் நியாயஸ்தலத்தின் வாச
லில் தன் வாயைத்திறக்கமாட்டான்.-தீமையைச் அ
செய்ய ஆலோசனை செய்கிறவன் தீயனென்றெ
ண்ணப்படுவான்.-அஞ்ஞானத்தின்நோக்கம் பா கூ
வம்:நிந்தனைக்காரன்மனுஷனுக்கு அருவருப்பா
னவன்.—ஆபத்துக்காலத்தில் நீ தளர்ந்தாயானுல் ய
உன்பெலம் அற்பம்.—மரணத்துக்கு ஒப்பிக்கப் யக
பட்டவர்களையும் கொலையுண்ணப்போகிறவர்க
ளையும் விடுவியாமல்,—அதை அறியோமென்ரு யஉ
யாகில், இருதயங்களைச்சோதிக்கிறவர் சிந்தியா
ரா; உன் ஆத்துமத்தைக்காக்கிறவர் அதை அறி
யாரா; அவர் மனுஷருக்கு அவரவர் கிரியையின்
படி பலனளியாரா.—என் மகனே, தேனை உண் ய௩
ணு, அது நல்லது; கூட்டினின்றெழுகுந்தேன்
சுவைத்தலுக்கு எப்படிமதுரமாயிருக்குமோ,—
அப்படியே ஞானத்தின் அறிவு உன் மனதுக் யச
குமதுரமாயிருக்கும்: அதைப்பெற்ருல் பலன்வ
ரும், உன் அபெட்சை அபத்தமாகாது.—துஷ் யரு
டனே, நீ நீதிமானுடைய வாசஸ்தலத்துக்கு வி
ரோதமாகப் பதுங்கியிருக்கலாகாது; அவன் தங்
குமிடத்தை நாசப்படுத்தாதே.—நீதிமான் எழுத யசு

(கூ) மத்.எ.சு. (ய) உபா.யகூ.யச. (யக) யோபு.௩க.உக. அதி.உஉ.உ௩. (யச) க.கொரி.ரு.ரு. (யஎ) சங்.௩எ.க. சங்.
எ௩.௩. (யஅ) சங்.௩எ.௩எ. லூக்.யசு.உரு. (யகூ) அதி.ச.உ௩. (உய) ஏசா.ரு.உஉ. மத்.உச.சகூ. லூக்.உக.௩ச. ரோ.
ய௩.ய௩. எபே.ரு.யஅ. (உக) அதி.யகூ.யரு. (உஉ) அதி.க.அ. எபே.சு.க,௩. (உ௩) மத்.ய௩.சச. (உச) அதி.ய.க.
(உஎ) அதி.உஉ.யச. (உஅ) பிர.எ.உசு. (உகூ) ஏசா.ரு.யக,உஉ. ஆதி.சகூ.யஉ. (௩ய) அதி.உய.க. எபே.ரு.யஅ.
(௩ரு) அதி.உஎ.உஉ. எரே.ரு.௩. எபே.ச.யகூ. உபா.உகூ.யகூ. ஏசா.ருசு.யஉ.—(உச. அதி. க.) சங்.ய.எ. (உ)சங்.
௩எ.க,. சங்.எ௩.௩. நீதி.க.யரு. (ரு) அதி.உக.உஉ. பிர.கூ.யசு. (சு) லூக்.யச.௩க. (அ) ரோ.க.௩ய. (யக) சங்.அஉ.
ச. ஏசா.ருஅ.சு,எ. க.யோவா.௩.யசு. (யஉ) யோபு.௩ச.யக. சங்.சுஉ.யஉ. எரே.௩உ.யகூ. ரோ.உ.சு. வெளி.உஉ.
யஉ. (யசு) யோபு.ரு.யகூ. மீகா.எ.அ. எஸ்த.எ.ய. ஆமோ.ரு.உ. வெளி.யஅ.உக.

ரம்விழுந்தாலுந் திரும்பவும் எழும்புவான்: துன்
மார்க்கரோ தீங்கில் அமிழ்ந்திருப்பார்கள்.—
௰௭ உன்சத்துரு விழும்பொழுது சந்தோஷப்படா
தே, அவன் இடறும்பொழுது மனம்பூரிக்கலாகா
௰௮ து.-யெகோவாகாண்பார், பிரியவீனங்கொ
ள்வார், அவனினின்று தமது கோபத்தை நீக்கி
௰௯ விடுவார்.-தீயோரைக்குறித்து விசனப்படலாகா
து, துன்மார்க்கர்மேற்பொருமைகொள்ளாதே.-
௨௰ துன்மார்க்கனுக்குவரும்பலனில்லை;துன்மார்க்க
௨௧ னுடையவிளக்கு அணைந்துபோம்.-என்மகனே,
நீ யெகோவாவுக்கும் இராசாவுக்கும்பய
௨௨ ப்படு: மாறுபாடுள்ளவர்களைச் சேராதே.-அவர்
களுக்கு ஆபத்துச்சடிதியில் எழும்பும்; அவ்வி
ருவராலும் வரும் நாசத்தை அறிபவன்யாவன்.-
௨௩ இவைகள்ஞானிகளின் வாக்குகள்: நியாயத்
௨௪ தில் முகம்பார்ப்பதுநல்லதல்ல.-துன்மார்க்கனை
ப்பார்த்து, நீநீதிமானென்றுசொல்லுகிறவனைச்ச
னங்கள் சபிப்பார்கள்; தேசத்தாரும் அவனைவெ
௨௫ றுப்பார்கள்.—அவனைக் கடிந்துகொள்ளுகிறவர்
கள்மேல் பிரியமுண்டாகும், அவர்களுக்கு உத்
௨௬ தமஆசீர்வாதங்கிடைக்கும்.-செவ்வையானஉத்த
ரஞ்சொல்லுகிறவனுடையஉதடுகள்முத்தமிடப்
௨௭ படும்.—வெளியில் உன்வேலையை ஆயத்தப்படுத்
து, வயலில் அதை ஆயத்தப்படுத்தியபின் உன்
௨௮ வீட்டைக்கட்டு.—காரணமின்றி உன் அயலா
னுக்கு விரோதமாகச் சாட்சிசொல்லாதே; உன்
௨௯ னுதடுகளினால்வஞ்சகஞ் செய்யாதே.—அவன் எ
னக்குச்செய்தபிரகாரம்நானும் அவனுக்குச்செய்
வேன்: அவன்செய்தசெய்கைக்கேற்கநான்செய்
௩௰ வேனென்று நீ சொல்லாதே.-சோம்பேறியின்வ
யலையும், புத்தியீனனுடையதிராட்சத்தோட்டத்
௩௧ தையுங் கடந்துபோனேன்.—அவைகளில் முள்
ளுக்கள் எங்கும் நெருங்கின, காஞ்சொறிகள் நி
லத்தின்முகத்தைமூடின, அதின் கற்சுவர் இடிந்
௩௨ துபோயிற்று.—அதைக்கண்டு, நான் அப்பொழு
துநன்றாகச்சிந்தித்துக்கொண்டேன்: அதை நோ
க்கிப்போதகத்தைப் பெற்றுக்கொண்டேன்.—
௩௩ இன்னுங்கொஞ்சநித்திரை கொள்ளப்போகிறே
ன், சற்றுத்தூங்கப்போகிறேன், கைகட்டிக்கொ
௩௪ ண்டு நித்திரைகொள்வேனென்றாலோ:—வழிப்
போக்கனைப்போல உன்வறுமையும், யுத்தசன்
னத்தனைப்போல உன் குறைவும் வரும்.

## ௨௫. அதிகாரம்.

௧. இராசாக்களைக்குறித்துப்புத்திசொல்லல்: அ. க
லகம் முதலியவைகளைக்குறித்து நாநாவிதபோ
தகங்களையுரைத்தல்.

யூதா தேசத்து இராசாவாகிய இஸ்கியாவின்ச
னங்கள்பேர்த்தெழுதினசலோமோனுடைய நீதி
௨ மொழிகள்.—காரியத்தை மறைப்பது தேவனுக்
கு மகிமை: காரியத்தை ஆராய்வதோ இராசாக்க
ளுக்கு மேன்மை.—வானத்தின் உயரமும், பூமி ௩
யின்ஆழமும், இராசாக்களின்இருதயமும்புத்திக்
கெட்டாதவைகள்.—வெள்ளியினின்று களிம் ௪
பைநீக்கிவிடு, அப்பொழுது தட்டானால் பாத்தி
ரமுண்டாக்கப்படும்.—இராசாவின் முன்னின் ௫
று துஷ்டரைத் தூரப்படுத்து, அப்பொழுது அ
வனுடைய சிங்காசனம் நீதியினால் ஸ்திரப்ப
டும்.—நீ இராசாவின் சமுகத்தில்உன்னை மேன் ௬
மைபாராட்டாதே, பெரியோர்களுடைய ஸ்தா
னத்தில் நில்லாதே.—நீ உன்கண்கள்கண்ட பி ௭
ரபுவின் சமுகத்தில் தாழ்ச்சிப்படுவது நல்லதல்
ல; அவன் உன்னைப்பார்த்து மேலேவாவென்
றால் உனக்குமேன்மையாகும்.—சடிதியில்வழக் ௮
காடலாகாது, உன் அயலான் உன்னை வெட்
கப்படுத்தினபின் முடிவில் என்ன செய்வாய்.-
உன் அயலானுடன் உன்வழக்கை நடத்து; மற் ௯
றவனுக்கு இரகசியத்தை நீ வெளிப்படுத்தாதே.-
கேட்கிறவன் உன்னை நிந்திப்பான், உன் அவ ௰
மானம்விட்டுநீங்காது.—சமயத்துக்கேற்றசொல் ௰௧
வெள்ளிப்பாத்திரங்களில்வைக்கப்பட்டபொற்
பழங்களுக்குச்சமானம்.—பொற்கடுக்கனும், பசு ௰௨
ம்பொன் ஆபரணமும் எப்படியோ, அப்படியே
கட்டளைக்கிணங்குஞ் செவிக்குப்புத்திபூருவமா
கக் கண்டிக்கிறவனிருப்பான்.-அறுப்புக் காலத் ௰௩
தில் உறைந்தமழையின் குளிர்ச்சி எப்படியோ,
அப்படியே உண்மையான தாதுபதி தன்னை அ
னுப்பினவனுக்குஇருப்பான்: அவன்தன் எசமா
னருடைய ஆத்துமாவைக் குளிரப்பண்ணுவா
ன்.—கள்ள ஈவுகளைக்குறித்துத் தன்னைப் பெரு ௰௪
மைபாராட்டுகிறவன், மழையில்லாத மேகமுங்
காற்றும்போலிருக்கிறான்.—நெடும்பொறுமையி ௰௫
னால் இராசாவைச்சம்மதிக்கப்பண்ணலாம், இ
னிய நாவு எலும்பை நொறுக்கும்.-தேனைக்கண் ௰௬
டால் மட்டாய் உண்ணு, திருத்திப்பட்டால்
வாந்திசெய்வாயே.—உன்அயலான்சலித்து உன் ௰௭
னைவெறுக்காதபடி நீ அவன்வீட்டுக்குஉன்காலை
விலக்கிவிடு.-பிறனுக்கு விரோதமாய்ப் பொய்ச் ௰௮
சாட்சி சொல்லுகிற மனுஷன் சுத்தியலுக்கும்,
கட்கத்துக்கும், கூரியஅம்புக்கும் ஒப்பாவான்.-
ஆபத்துக்காலத்தில் துரோகியை நம்புவது, உ ௰௯
டைந்தபல்லுக்கும் சுளுக்கிய காலுக்குஞ் சமா
னம்.—குளிர்காலத்தில் வஸ்திரத்தைக்களைகிறவ ௨௰
னும், வெடியுப்பின்மேல் காடியை வார்ப்பவ
னும் எப்படியோ, அப்படியே மனத்துக்கமுள்
ளவனிடத்தில் பாட்டுப்பாடுவோனிருப்பான்.-
உன்சத்துருவுக்குப்பசியுண்டானால், புசிக்கஅவ ௨௧
னுக்குஆகாரத்தைக்கொடு; அவனுக்குத் தாகமு
ண்டானால், குடிக்கச்சலத்தைக்கொடு;-அதினால் ௨௨

(௰௭) யோபு.௩௧.௨௯. ஒப.௰௨. (௨௰) யோ.௰௮.௫,௬. (௨௧) ரோ.௰௩.௭. ௧.பேதுரு.௨.௰௭. (௨௩) லேவி.௰௯.௰௫. யோவா.௭.௨௪. (௨௪) ஏசா.௫.௨௩. (௨௭) ௧.இரா.௫.௰௭,௰௮. லூக்.௰௪.௨௮. (௨௮) எபே.௪.௨௫. (௨௯) மத்.௫. ௩௯,௪௪. ரோ.௰௨.௰௭,௰௯. (௩௧) ஆதி.௩.௰௮. (௩௩) அதி.௬.௯,.—(௨௫. அதி. ௧.) ௧.இரா.௪.௩௨. (௨) உபா.௨௯. ௨௯. ரோ.௰௧.௩௩. யோபு.௨௯.௰௬. (௪) ௨.தீமோ.௨.௨௧. (௭) லூக்.௰௪.௮,௯,௰. (௮) மத்.௫.௨௫. (௯) மத்.௫.௨௫. மத்.௰௮.௰௫. (௰௧) ஏசா.௫௰.௪. (௰௪) யூதா.௰௨. (௰௫) ஆதி.௩௨.௪,. ௧.சாமு.௨௫.௨௪,. (௰௬) வச.௨௭. (௰௮) சங்.௫௭.௪. (௨௰) தானி.௬.௰௮. ரோ.௰௨.௰௫. (௨௧) யாத்.௨௩.௪,௫. மத்.௫.௪௪. ரோ.௰௨.௨௰. (௨௨) ௨.சாமு.௰.௬,௰௨.

நீ அவன்தலையின்மேல்எரிகிறதழல்களைக்குவிப்
பாய், யெகோவா உனக்குப்பலனளிப்பார்.-
உங வாடைக்காற்று மழையையும், புறங்கூறுகிற நா
உச வு குரோதமுகத்தையும் உண்டாக்கும்.—கலகக்
காரியோடே ஒருபெரியவீட்டில் வசிப்பதிலும்,
உரு வீட்டின்மேல் ஒருமூலையில்தங்குவதுநலம்.-தூ
ரதேசத்திலிருந்துவந்தநற்செய்தி, விடாய்த்தஆத்
துமாவுக்குக்கிடைக்குங் குளிர்ந்த நீர்களுக்குச்
உசு சமானம்.-துன்மார்க்கருக்குமுன்பாக நீதிமான்த
வறுவது,கலங்கினகிணற்றுக்கும்சீர்கெட்டஊற்
உஎ றுக்குமொப்பாகும்.-மிகுதியானதேனை உண்ணு
கிறதுநல்லதல்ல: அப்படியே தற்புகழைத்தேடுகி
உஅ றது புகழல்ல.-தன்மனதை அடக்காத மனுஷன்
மதிலில்லாமல் இடிந்தநகரம்போலிருக்கிறான்.

## உசு. அதிகாரம்.

க. மூடனைக்குறித்தல்: யங. சோம்பேறியைக் கு
றித்தல்: யஎ. கலகக்காரனைக்குறித்தல்.

உஷ்டணகாலத்தில் உறைந்த மழையும், அறுப்
புக்காலத்தில் மழையும் எப்படியோ, அப்படி
உ யே மகிமை மூடனுக்குத்தகாது.—குருவி அலை
வதும் அடைக்கலான் குருவிபறப்பதும்போல,
ங காரணமின்றிச் சாபம்வராது.—குதிரைக்குக் க
சையும்,கழுதைக்குக் கடிவாளமும்,மூடனுடை
ச ய முதுகுக்குப் பிரம்புந் தகுதி.-மூடனுக்கு அ
வன் மதியீனத்தின்படி உத்தரங்கொடாதே, கொ
ரு டுத்தால் நீயும் அவனைப்போலாவாய்.—மூடன்
தன்பார்வைக்கு ஞானியாகாதபடி அவன்மதியீ
சு னத்தின்படி அவனுக்கு உத்தரங்கொடு.-மூடன்
வழியாய்ச் செய்தி அனுப்புகிறவன் தன்கால்க
ளைச்சேதித்து, நஷ்டத்தைஉட்கொள்ளுகிறான்.-
எ நொண்டியின் கால்கள் இணையானவைகளல்ல:
மூடனுடைய வாயில் உவமையும் அப்படியே.-
அ மூடனுக்குமேன்மைகொடுக்கிறவன் கவணிலே
கூ கல்லை வைக்கிறவன்போலிருப்பான்.—மூடன்
வாயிலுள்ள பழமொழி, வெறியன் கையிலுள்ள
ய முள்ளு.—சருவத்தையுஞ் சிருஷ்டித்த கடவுள்மூ
டனுக்குங் கட்டளைமீறுகிறவர்களுக்கும் பலன்
யக அளிக்கிறார்.-நாய் தான் கக்கினதற்குத் திரும்புவ
துபோல,மூடனுந்தன்பைத்தியத்துக்குத்திரும்பு
யஉ கிறான்.-தன் பார்வைக்கு ஞானியாயிருப்பவனை
க்கண்டாயானால்; அவனைப்பார்க்கிலும்மூடனை
யங க்குறித்து அதிகநம்பிக்கையுண்டு.-வழியிலே சிங்
கம் நிற்கின்றது; வீதியின் மத்தியிலேசிங்கம்நிற்
யச கின்றதென்று சோம்பேறிசொல்லுவான்.-தன்ப
டுக்கையிலிருக்கிற சோம்பேறி முளையாணியிலி
யரு ருக்கிற கதவு ஆடுவதுபோலிருக்கிறான்.-சோம்
பேறி மார்பில்வைத்தகையைத் தன்வாயில்வைப்
யசு பதரிது.—புத்தியுள்ள உத்தரஞ்சொல்லும் எழு
பேரிலும் சோம்பேறி தன் பார்வைக்கு அதிக
யஎ ஞானவான்.-வழியேபோய்த் தனக்கடாத வழக்
கில்கையிடுகிறவன், நாயின்காதுகளைப்பிடிக்கிற
வனைப்போலிருக்கிறான்.—பிறனை வஞ்சித்தபின் யஅ
புவிளையாட்டுக்கல்லவோவென்று சொல்லுகிற
வன்,—நெருப்புத்தழல்களையும், அம்புகளையும்,ம யகூ
ரணத்துக்கேதுவானவைகளையும் வீசும்மதிகேட
னைப்போலிருக்கிறான். — விறகில்லாதிருந்தால் உய
நெருப்பு அவிந்துபோம்: கோட்சொல்லுகிறவ
னில்லாதிருந்தால் விவாதம் ஒழிந்துபோம்.-கரி உக
கள் தழலுக்கும், விறகுநெருப்புக்கும் எப்படி
யோ, அப்படியே விவாதிவிரோதங்களை எழுப்
புவதற்கிருப்பான்.—புறங் கூறுகிறவனுடைய உஉ
வாக்குகள் காயங்கள்போலிருக்கின்றன, அவை
கள் உள்ளத்தில் பதியும்.-நேச அனல்பொருந்தி உங
ய உதடுகளோடேகூடிய தீதுள்ளநெஞ்சு, வெள்
ளித்தகட்டினால்மூடிய ஓட்டைப்போலாகும்.—
பகைவன்தன்னுள்ளத்தில் கபடத்தைமறைக்கத் உச
தன்உதடுகளினாற்சூதுபேசுகிறான்.-அவன் இதம் உரு
பேசினாலும்அவனைநம்பாதே:அவன்இருதயம்ஏ
ழு அருவருப்புக்களினால்நிறைந்திருக்கின்றது.—
சூதினால் தன் பகையை மறைக்கிறவனுடைய உசு
தோஷம், சமஸ்தசபையாரிடத்திலும் பிரசித்தப்
படும்.—குழியைவெட்டுகிறவன் தானேஅதில்வி உஎ
ழுவான்: கல்லைப்புரட்டுகிறவன்மேல்அந்தக்கல்
திரும்பும்.-கள்ளநாவு தன்னால் கிலேசப்பட்டவ உஅ
னைவெறுக்கும்; இனியசொற்களைச் சொல்லும்
வாய் அழிவைச்செய்யும்.

## உஎ. அதிகாரம்.

க. தற்புகழ்ச்சியையும் குரோதத்தையும் குறித்தல்
ரு. சுத்தஅன்பைத்தெரிவித்தல்: யக. விக்கினங்
கள்முதலியவற்றைக்குறித்துப்புத்திசொல்லல்.
உங. வீட்டுக்காரியத்தைக் குறித்துச் சாவதான
மாயிருக்கவேண்டுமெனல்.

ஒருநாளுக்குள் இன்னது சம்பவிக்குமென்று நீ க
அறியாதபடியால், நாளைத்தினத்தைக் குறித்துப்
பெருமை பாராட்டவேண்டாம்.-உன்வாயல்ல, உ
பிறனும், உன்உதடல்ல,அந்நியனுமே உன்னைப்
புகழக்கடவர்.-கல்லுப்பாரம்,மணலும்பாரம்,மூ ங
டனுடைய சினமோ இவ்விரண்டிலும் அதிகபா
ரம்.—உக்கிரம்நிஷ்டூரம்,கோபம்பிரளயம்; எரிச் ச
சலோ,அதற்கு முன்னிற்க வல்லவன்யாவன்.—
மறைவானஅன்பிலும், வெளிப்படையானகண் ரு
டனைஉத்தமம்.—சிநேகிதனுடைய அடிகள் உண் சு
மையானவைகள்; சத்துருஇடும்முத்தங்கள் வஞ்
சனை யுள்ளவைகள்.—திருத்திபெற்றவன் தேன் எ
கூட்டையும் உழக்குவான்; பசியுள்ளவனுக்கு
எந்தக் கசப்பானவைகளும் இனிமை.—தன்னு அ
டையஸ்தானத்தைவிட்டுஅலைகிறமனிதன்,கூட்
டைவிட்டு அலைகிற குருவியைப் போலிருக்கி
றான்.—பரிமளதைலமுஞ் சுகந்ததூபமும் இரு கூ
தயத்தைக் களிப்பாக்குவதுபோல, உட்கருத்தா

(உகூ) யோபு.கூஎ.உஉ. (உஎ) அதி உஎ.உ. (உஅ) அதி.யசு.கூஉ.—(உசு. அதி. க.) க.சாமு.யஉ.யஎ. (உ) எண். உகூ.அ. உபா.உகூ.ரு. (ரு) மத்.யசு.க—ச. மத்.உக.உச—உஎ. (யச) உ.பேதுரு.உ.உஉ. யாத்.அ.யரு. (யஉ) லூக். யஅ.யக. ரோ.யஉ.யசு. வெளி.கூ.யஎ. (யரு) அதி.யகூ.உச. (யஅ) எபே.ரு.ச. (உய) அதி.உஉ.ய. (உஉ) அதி.யஅ. அ. (உரு) சங்.உஅ.கூ. எரே.கூ.அ. (உஎ) சங்.எ.யரு,யசு. பிர.ய.அ.—(உஎ. அதி. க.) லூக்.கூஉ.யகூ,உய. யாத்.ச. யகூ,. (உ) அதி.உரு.உஎ. (ச) க.யோவா.கூ.யஉ.(ரு)அதி.உஅ.உகூ. கலா.உ.யச.(சு)சங்.௱சக.ரு. (எ) யோபு.சு.எ.

ன ஆலோசனையினால் ஒருவனுடைய சிநேகித
௰ னின் இனிமைகளிப்பாகும்.—உன் சிநேகித
னையாகிலும், உன் பிதாவின் சிநேகிதனையாகி
லும்விட்டுவிடாதே; உன் ஆபத்துக்காலத்தில் உ
ன்சகோதரனுடையவீட்டிற் பிரவேசியாதே: தூ
ரத்திலுள்ள சகோதரனிலுஞ்சமீபத்திலுள்ள அய
௰௧ லான் உத்தமன்.—என்மகனே, நான், என்னை
நிந்திக்கிறவனுக்கு உத்தரங்கொடுக்கத்தக்கதாக,
நீ ஞானவானாகி, என்இருதயத்தைச்சந்தோஷப்
௰௨ படுத்து.-விவேகி ஆபத்து நேரிடுவதைக் கண்டு ம
றைகிறான், பேதைகளோ எதிர்சென்று தண்ட
௰௩ னை பெறுகிறார்கள்.—அந்நியனுக்காகப்பிணை நிற்
கிறவனுடையவஸ்திரத்தை எடுத்துக்கொள்,அந்
௰௪ நியஸ்திரிக்காக ஈடுவாங்கிக்கொள்.—ஒருவன் அ
திகாலையில் எழுந்து உரத்தசத்தத்தோடே தன்
சிநேகிதனுக்குச்செய்யும் ஆசீர்வாதம் அவனுக்
௰௫ குச்சாபமென்றெண்ணப்படும்.—மழைபெய்யுங்
காலத்தில் ஒழியாத ஒழுக்கும், கலகமுள்ள ஸ்தி
௰௬ ரியுஞ்சரி.—அவளைமறைக்கிறவன், காற்றையும்,
தன்னைவெளிப்படுத்தும் தன்வலதுகையில்பூசிய
௰௭ சுகந்த தைலத்தையும் மறைப்பான்.—இரும்பை
இரும்புகூர்மையாக்குவதுபோல, ஒருமனுஷன்
தன் சிநேகிதனுடைய முகத்தை மலரச்செய்
௰௮ வான்.—அத்திமரத்தைக்காக்கிறவன் அதின்கனி
யைப்புசிப்பான்: அப்படியேதன்எசமானனைக்
௰௯ காக்கிறவன் கனம்பெறுவான்.—முகமும்,சலத்தி
லேபிரதிவிம்பிக்கும் முகமுஞ்சமமாயிருக்கிறது
போல, ஒருவனுடைய இருதயமும்வேறொருவ
௨௰ னுடைய இருதயமுஞ்சமம்.—மரித்தோர்ஸ்தலமு
ம்பாதாளமும்திருத்தியாகிறதில்லை;அதுபோலம
னுஷனுடைய கண்களுந் திருத்தியடைகிறதில்
௨௧ லை.-குகையினால்வெள்ளியும்புடத்தினால்பொன்
னுஞ் சோதிக்கப்படுகிறதுபோல, ஒருமனுஷன்
தன்னைப்புகழும்வாயினால் பரீட்சிக்கப்படு
௨௨ கிறான்.—கோதுமையோடே உரலிலிட்டு உலக்
கையினால் மூடனைக்குத்தினாலும், அவனுடைய
௨௩ பேதைமை அவனைவிட்டுநீங்காது.—செல்வம்நித்
தியமுள்ளதல்ல: கிரீடந் தலைமுறை தலைமுறை
௨௪ தோறும்நிலைக்கிறதில்லை.—ஆதலால் நீ உன் ஆட்
டுக்கூட்டங்களின் நிலைமையை நன்றாய் அறிந்
௨௫ துகொள், உன் மந்தைகளை உற்றுப்பார்.—புல்
லுமுளைக்கும், பச்சையிலைகள் தோன்றும், மலை
௨௬ களின்கீரைகள் சேர்க்கப்படும்.—ஆட்டுக்குட்டி
கள்உனக்குவஸ்திரத்தையும், கடாக்கள்வயலைச்
௨௭ சம்பாதிப்பதற்கான விலையையுந்தரும்.—வெள்
ளாடுகள் உன் ஆகாரத்துக்கும், உன் குடும்பத்
தின் ஆகாரத்துக்கும், உன் பணிவிடைக்காரிக
ளுக்கும் வேண்டியபாலைத்தரும்.

## உஅ. அதிகாரம்.

சன்மார்க்கரையுந் துன்மார்க்கரையுங்குறித்து நா
னாவிதபுத்திசொல்லல்.

தொடர்பவன் ஒருவனுமில்லாதிருந்தும் துன் ௧
மார்க்கர் ஓடிப்போகிறார்கள்: நீதிமான்களோ சி
ங்கத்தைப்போலப்பயமில்லாதிருக்கிறார்கள்.—
தேசத்தின் தோஷத்தினிமித்தம் அதின் அதிகாரி ௨
கள் அநேகர் இருக்கிறார்கள்: புத்தியும் அறிவு
முள்ளமனுஷரால் இராச்சியம்ஸ்திரப்பட்டிருக்
கும்.—தரித்திரரை உபத்திரவப்படுத்துகிற தரித் ௩
திரன், ஆகாரம்விளையாதபடி வெள்ளம் ஓடப்
பெய்யுமழையைப் போலிருக்கிறான்.—நியாயப் ௪
பிரமாணத்தைவிட்டுவிலகுகிறவர்கள் துன்மார்க்
கரைப் புகழுவார்கள்: நியாயப்பிரமாணத்தைக்
கைக்கொள்ளுகிறவர்களோஅவர்களைவிரோதிப்
பார்கள்.-துஷ்டர்நியாயத்தை அறியார்கள்: யெ ௫
கோவாவைத் தேடுகிறவர்களோ சகலத்தை
யும் உணருவார்கள்.—மாறுபாடான வழிகளில் ௬
நடக்கிறசெல்வனிலும், நேர்மையாய் நடக்கிறத
ரித்திரன்உத்தமன்.-வேதப்பிரமாணத்தைக்கைக் ௭
கொள்ளுகிற புத்திரன் ஞானமுள்ளவன்: போச
னப்பிரியனுக்குச் சிநேகிதனாயிருக்கிறவனோ த
ன்பிதாவை அவமானம்பண்ணுகிறான்.-அநியாய ௮
வட்டியினாலும் அநீதியானஆதாயத்தினாலுந்தன்
பொருளைப் பெருகப்பண்ணுகிறவன், தரித்திர
ருக்குத்தயைசெய்பவனுக்காகச்சேகரிக்கிறான்.-
வேதத்தைக்கேளாதபடி தன்செவியைவிலக்குகி ௯
றவனுடையபிரார்த்தனையும் அருவருப்பானது.—
நேர்மையானவர்களை மோசப்படுத்தி, துன்னெ ௰
றியில் நடத்துகிறவன் தன்குழியில் தானே விழு
வான்: நேர்மையானவர்களோநன்மையைச்சுதந்
தரிப்பார்கள்.—செல்வன்தன்பார்வைக்கு ஞான ௰௧
வான்;புத்தியுள்ளதரித்திரனோஅவனைப்பரீட்சிப்
பான்.—நீதிமான்கள்களிகூரும்பொழுது மகாம ௰௨
கிமையுண்டாகும்: துன்மார்க்கர் எழும்பும்பொ
ழுதோ ஒருமனுஷனுங் காணப்படான்.-தன் பா ௰௩
வங்களைமறைக்கிறவன்வாழ்வடையான்: அவை
களை உணர்ந்துசொல்லி விட்டுவிடுகிறவனோ த
யைபெறுவான்.-எப்பொழுதும்பயப்படுகிறவன் ௰௪
வாழ்வுடையவன்:தன்இருதயத்தைக்கடினப்படு
த்துகிறவனோ ஆபத்தில் அகப்படுவான்.—தரித்திர ௰௫
முள்ளசனங்களைஆளுந்துஷ்டஅதிகாரிகருச்சிக்
கிறசிங்கத்துக்கும், சுற்றித்திரிகிறகரடிக்கும் ஒப்
பாயிருக்கிறான்.-புத்தியீனமுள்ளபிரபுமிகவும்உ ௰௬
பத்திரவப்படுத்துகிறான்: பொருளாசையைவெ
றுக்கிறவன் தீர்க்காயுளைப்பெறுவான்.—ஆத்துமா ௰௭
வின் இரத்தப்பழிக்காக வியாகுலப்படுகிறவன்,
தான்பிடிக்கப்படப்பயந்து குழிக்கு ஓடிப்போ

---

(௰) அதி.௰௭.௰௭. (௰௧) அதி.௰.௧. (௰௨) அதி.௨௨.௩.(௰௩)யாத்.௨௨.௨௬. (௰௮) ௧.கொரி.௯,௭,௰௩. (௨௰) அபகூ. ௨.௫. பிர.௧.௮. (௨௧) அதி.௰௭.௩ (௨௨)அதி.௨௩.௩௫. ஏசா.௧.௫. எரே.௫.௩. (௨௫) சங்.௱௪.௰௪.—(௨௮ அதி. ௧.) லேவி.௨௬.௰௭,௩௬. (௩) மத்.௰௮.௨௮.(௪)ரோ.௧.௩௨. ௧.இரா.௰௮.௰௮,௨௧. மத்.௩.௭. எபே.௫.௰௧. (௫) யோவா. ௭.௰௭. ௧.கொரி ௨.௰௫. ௧.யோவா.௨.௨௰,௨௭. (௮) யோபு.௨௭.௰௬,௰௭. பிர.௨.௨௬. (௯) சக.௭.௰௧. (௰) அதி. ௨௬.௨௭. மத்.௬.௩௩. (௰௨) பிர.௰.௬. (௰௩) ௧.யோவா.௧.௮,௯,௰. (௰௪) சங்.௰௬.௮. ரோ.௨.௫. (௰௫) ௧.பேதுரு. ௫.௫.௮. யாத்.௧.௰௫. (௰௬) ௧.பேதுரு.௫.௮. யாத்.௧.௰௫. மத்.௨.௰௬. (௰௭) ஆதி.௯.௬. யாத்.௨௧.௰௪.

௰௮ கிறான்;—நேர்மையாய் நடக்கிறவன் இரட்சிப்
புப்பெறுவான்: மாறுபாடானவழிகளில்நடக்கி
௰௯ றவனோ சடிதியில் விழுவான்.—தன் நிலத்தைப்
பயிரிடுகிறவன் அதிக ஆகாரத்தைப்பெறுவான்:
வீணரைப்பின்பற்றுகிறவனோ வறுமையினால்நி
௨௰ றைந்திருப்பான்.—நேர்மையானமனுஷன் மிகுந்
தஆசீர்வாதங்களை அனுபவிப்பான்: செல்வனாகி
றதற்குத் தீவரிக்கிறவனோ குற்றமற்றவனாயிரா
௨௧ ன்.-முகம்பார்க்கிறது நல்லதல்ல: அப்படிப்பட்
டவன் ஒருதுண்டப்பத்தினிமித்தம் அநியாயஞ்
௨௨ செய்வான்.—வன்கண்ணன் செல்வனாகிறதற்கு
த்தீவரிக்கிறான், வறுமை தனக்கு வருமேயென்
௨௩ றுநினையான்.—தன்நாவினால் முகஸ்துதிபேசுகி
றவனிலும், கடிந்துகொள்ளுகிறவன் முடிவில்
௨௪ அதிகதயை பெறுவான்.—தன் பிதாவிடத்திலாவ
து தன் மாதாவிடத்திலாவது களவெடுத்து, அது
பாவமல்லவென்றுசொல்லுகிறவன் அழிவுசெய்
௨௫ பவனுக்குத்தோழன்.—அகங்காரி விரோதத்தை
யெழுப்புவான்: யெகோவாவில் நம்புகிறவ
௨௬ னோ புஷ்டியாவான்.—தன்இருதயத்தை நம்புகி
றவன்மூடன்:புத்திபூருவமாய்நடக்கிறவனோ இ
௨௭ ரட்சிப்படைவான்.—தரித்திரருக்குக்கொடுப்ப
வன் குறைவுபடான்: தன்கண்களை விலக்குகி
௨௮ றவனுக்கோ அநேக சாபங்கள்கிடைக்கும்.-துன்
மார்க்கர் எழும்பும்பொழுது மனுஷர் மறைகிறார்
கள்: அவர்கள் அழியும்பொழுதோ நீதிமான்கள்
வருத்திக்கிறார்கள்.

## ௨௯. அதிகாரம்.

*௧. அரசாளுகையைக்குறித்தல்: ௰௫. குடும்பவி சாரிப்பைக்குறித்தல்: ௨௨. கோபத்தையும், செருக்கையும்,களவையும்,இளநெஞ்சையும்,கேட்டையுங்குறித்தல்.*

அடிக்கடி கடிந்துகொள்ளப்பட்டுந் தன்பிடரி
யைக்கடினப்படுத்துகிறவன்,சகாயமில்லாமல் ச
௨ டிதியில் சேதிக்கப்படுவான்.—நீதிமான்கள் உன்
னதம்பெற்றால் சனங்கள் சந்தோஷப்படுவார்
கள்: துன்மார்க்கர் ஆளுகைசெய்தாலோ சனங்
௩ கள் துக்கிப்பார்கள்.—ஞானத்தை நேசிக்கிறவன்
தன் பிதாவைச் சந்தோஷப்படுத்துகிறான்: வே
சைகளைச்சேருகிறவனோ தன் பொருளை அழிக்
௪ கிறான்.-இராசா நியாயத்தினால் தேசத்தைநிலைப்
படுத்துகிறான்: பரிதானம் வாங்குகிறவனோ அ
௫ தைக் கவிழ்க்கிறான்.—தன் அயலானைக்குறித்து
முகஸ்துதிபேசுகிறவன் அவன் கால்களுக்குவ
௬ லையைவிரிக்கிறான்.—துஷ்டன் அதிக்கிரமத்தி
னால் கண்ணியில் அகப்படுவான்: நீதிமானோபா
௭ டிமகிழுகிறான்.—நீதிமான் தரித்திரனுடைய வ
ழக்கின்மேற்சிந்தைவைப்பான்:துன்மார்க்கனோ
அதை அறிய விரும்பான்.—நிந்தனைக்காரர் நக ௮
ரத்தில் நெருப்பைக்கொளுத்துகிறார்கள்: ஞானி
களோ அதினின்று குரோதத்தை விலக்குகிறார்
கள்.—ஞானி மூடனுடன் வழக்காடுகையில்கோ ௯
பித்தாலும் நகைத்தாலும அவனுக்கு அமைதியில்
லை.—இரத்தப்பிரியர் நேர்மையானவனைவெறுக் ௰
கிறார்கள்: நீதிமான்களோ அவனுடைய பிராண
னை விசாரிக்கிறார்கள்.—மூடன் தன் மனமுழு ௰௧
வதையும் வெளிப்படுத்துகிறான்: ஞானியோ அ
தைப்பின்பேசஅடக்குகிறான்.—அதிபதிபொய் ௰௨
களுக்குச்செவிகொடுத்தால், அவனுடையபணி
விடைக்காரர் யாவருந் துன்மார்க்கராவார்கள்.—
தரித்திரனும் உபத்திரவப்படுகிறவனும்ஒருவரை ௰௩
யொருவர் சந்திக்கிறார்கள்: யெகோவா அவ்
விருவருடைய கண்களையும் பிரகாசிக்கப்பண்
ணுகிறார்.—தரித்திரருடைய நியாயத்தை உண் ௰௪
மையாக விசாரிக்கிற இராசாவின் சிங்காசனம்
என்றும் நிலைப்படும்.—மிலாறுந் தண்டனையும் ௰௫
ஞானத்தை விளைவிக்கும்: தன் இஷ்டத்திற்குவி
டப்பட்டபிள்ளையோ தன்மாதாவுக்கு இலச்சை
யைவருவிக்கும்.-துன்மார்க்கர்பெருகினால் துர்க் ௰௬
கிரியையும் பெருகும்: நீதிமான்களோ அவர்கள்
விழுவதைக் காண்பார்கள்.—நீ உன்புத்திரனைத் ௰௭
தண்டித்தால்அவன்உன்னைஆற்றித்தேற்றுவான்;
உன்மனதுக்குமிகவும் மகிழ்ச்சியைத்தருவான்.—
தீர்க்கதரிசனமில்லாதசனங்கள்சீர்கெட்டுப்போ ௰௮
வார்கள்: வேதப்பிரமாணத்தைக்கைக்கொள்பவ
னோ வாழ்வுடையவன்.-அடிமையானவன் வாக் ௰௯
குகளினால் அடங்கான்: அவைகளை அவன் உ
ணர்ந்தும் உத்தரங்கொடான்.—வாக்குகளிற்பத ௨௰
றுகிறவனைக்கண்டாயானால் அவனிலும் மூடன்
மேல் அதிக நம்பிக்கைவைக்கலாம்.—தன்பணி ௨௧
விடைக்காரனைச் சிறுபிராயமுதல் இளக்கரமாக
வளர்த்தால், முடிவில் அவன் தன்னைப்புத்திரனா
கப்பாராட்டுவான்.—குரோதக்காரன் விரோதங் ௨௨
களைத்தோற்றுவிக்கிறான், மூர்க்கன் அதிக்கிரமத்
தில் அதிகரிப்பான்.—மனிதனுடைய அகந்தை ௨௩
அவனைத் தாழ்த்தும்: தாழ்ந்த சிந்தையுள்ளவனோ
கனம் பெறுவான்.—திருடனோடே பங்கிட்டுக் ௨௪
கொள்ளுகிறவன் தன் ஆத்துமத்தை வெறுக்கி
றான்: அவன் ஆணையிடுவிக்கப்பட்டாலும் வெ
ளிப்படுத்தமாட்டான்.—மனிதனைப்பற்றும் பயம் ௨௫
கண்ணியை வருவிக்கும்: யெகோவாவை
நம்புகிறவனோ இரட்சிப்பைப் பெறுவான்.—
ஆளுகைசெய்கிறவனுடைய முகத்தை அநேகர் ௨௬
தேடுகிறார்கள்; அவனவனுக்கு நியாயத்தீர்ப்போ
யெகோவாவினால் வரும்.-பாவி நீதிமானுக் ௨௭

(௰௯) அதி.௰௨.௰௧. (௨௰) அதி.௰௩.௰௧. ௧.தீமோ.௬.௯. எசேக்.௰௩.௰௯. (௨௩) அதி.௨௭.௫,௬. (௨௫) ௧.தீமோ.௬.௬. (௨௭) உபா.௰௫.௭,. அதி.௰௯.௰௭. (௨௮) யோபு.௨௪.௪.—(௨௯. அதி. ௧.) ௧.சாமு.௨.௨௫. ௨.நாளா.௩௬.௰௬. (௨) எஸ்த.௮.௰௫. எஸ்த.௩.௰௫. (௩) அதி.௰.௧. அதி.௫.௯,௰. லூக்.௰௫.௰௩,௩௰. (௭) யோபு.௨௯.௰௬. சங்.௪௧.௧. (௮) எசேக்.௨௨.௩௰. (௯) மத்.௰௧.௰௭. (௰) ஆதி.௪.௫,௮. ௧.யோவா.௩.௰௨. (௰௧) நியா.௰௬.௰௭. (௰௩) மத்.௫.௪௫. (௰௫) வச.௰௭. (௰௮) ௧.சாமு.௩.௧. ஆமோ.௮.௰௧,௰௨. யோவா.௰௩.௰௭. யாக்.௧.௨௫. (௨௰) அதி.௨௬.௰௨. (௨௨) அதி.௰௫.௰௮. (௨௩) யோபு.௨௨.௨௯. ஏசா.௬௬.௨. தானி.௪.௩௰,௩௭. மத்.௨௩.௰௨. லூக்.௰௪.௰௧. அப்.௰௨.௨௩. யாக்.௪.௬,௰. ௧.பேதுரு.௫.௫. (௨௪) லேவி.௫.௧. (௨௫) ஆதி.௰௨.௰௨.

கு அருவருப்பானவன்: நேர்மையாய் நடக்கிற
வனும் துன்மார்க்கனுக்கு அருவருப்பானவன்.

## ௩௰. அதிகாரம்.

௧. ஆகூர் தன்மனதை வெளிப்படுத்தல்: ௭. அவன்பிரார்த்தித்தல்: ௰. நாலுவிதபோதனை போதித்தல்.

யாகேயின் புத்திரனாகிய ஆகூர் ஈதியேலுக்கு
வசனித்து, ஈதியேலுக்கும் ஊகாலுக்கும் உரைத்
௨ த உபதேச வாக்கியங்களாவன.—மனுஷரெல்
லாரிலும் நானே மூடன், மனுஷருக்கேற்றபுத்தி
௩ எனக்கில்லை.—நான்கல்வியிலேபயிலவுமில்லை,
௪ நான் ஞானத்தையும் அறியேன்.-வானத்துக்கேறி
இறங்கினவர் யாவர்; காற்றைக்கைப்பிடிகளுக்
குள் அடக்கினவர் யாவர்; வஸ்திரத்தில் நீர்க
ளைக்கட்டினவர்யாவர்; பூமியின் எல்லைகள் எல்
லாவற்றையும்ஏற்படுத்தினவர்யாவர்; அவருடை
யநாமம் யாது, அவர் சுதனுடையநாமம் யாது,
௫ அதை அறிவாயா.—தேவனுடைய வாக்கி
யம் ஒவ்வொன்றும் நிருமலம்: அவர் தம்மில் நம்
௬ பிக்கை வைப்பவர்களுக்குக் கேடகம்.—அவர்
வாக்குடனே ஒன்றையுங் கூட்டாதே, கூட்டி
னால் அவர் உன்னைக்கடிந்துகொள்ள, நீ பொய்
௭ யனாவாய்.-தேவனே, உம்மிடத்தில் இரண்டுவ
ரங்களை வேண்டுகிறேன்; நான் மரிக்குமுன் அ
௮ வைகளைமறுமல்தாரும்.—மாயையையும பொய்
௯ மையையும் எனக்குத் தூரப்படுத்தும்.—தரித்திரத்
தையாகிலுஞ் செல்வத்தையாகிலும் எனக்குத்தர
வேண்டாம்: தந்தால்நான்திருத்தியடைந்துமறுத்
து யெகோவா யாவரென்று சொல்லுவேன்;
அல்லது, தரித்திரனாகிக்களவெடுத்து என் தேவ
னுடைய நாமத்தை வீணில்வழங்குவேன், வே
ண்டியஆகாரத்தைத்தந்து என்னைஆதரித்துக்கொ
௰ ள்ளும்.—ஒருபணிவிடைக்காரன்மேல் அவனு
டையஎசமானனுக்குமுன்பாகக்குற்றஞ்சுமத்தா
தே, அவன் உன்னைச்சபிப்பான், நீ குற்றவாளி
௰௧ யாகக்காணப்படுவாய்.—தங்கள் பிதாவைச ச
பித்து, தங்கள் மாதாவை ஆசீர்வதியாத சந்ததி
௰௨ யுண்டு.—தாங்கள் அழுக்கறக்கழுவப்படாதிருந்
தும், தங்கள் பார்வைக்குச் சுத்தமாகத்தோன்று
௰௩ கிற சந்ததியுண்டு.—ஆ, அதிக இறுமாப்புள்ள
கண்களையும், நெறிக்குமிமைகளையுமுடைய சந்
௰௪ ததியுண்டு.—பூமியினின்று தரித்திரரையும், மனு
ஷரினின்றுதிக்கற்றவர்களையும் பட்சிப்பதற்குக்
கட்கங்களையொத்தபற்களையும், கத்திகளை ஒத்த
கடைவாய்ப் பற்களையுமுடைய சந்ததியுண்டு.—
௰௫ தா, தா, என்றுசொல்லுகிற இரண்டு புத்திரிகள்
அட்டைக்குண்டு.திருத்தியடையாதவஸ்துக்கள்
மூன்றுண்டு, போதுமென்றுசொல்லாதநாலுவஸ்
௰௬ துக்களுண்டு.-மரித்தோர் ஸ்தலமும், மலடியும்,ச
லத்தினால்திருத்திப்படாதநிலமும், போதுமென்
௰௭ றுசொல்லாத அக்கினியுமே.—பிதாவைப்பரியா
சம்பண்ணி,மாதாவின்கட்டளையை அலட்சியம்
பண்ணுகிறகண்ணைநீர்க்காக்கைகள்கொத்தும்,க
ழுகின்குஞ்சுகள் அதைத்தின்னும்.—மூன்றுகாரி ௰௮
யங்கள் எனக்குமிகவும் ஆச்சரியமானவைகள்,
நாலுகாரியங்களும் என்புத்திக்கெட்டாதவைக
ள்.—ஆகாயத்தில்கழுகினுடையவழியும்,கன்மலை ௰௯
யின்மேல்சருப்பத்தின்வழியும்,சமுத்திரத்தின்ம
த்தியில்கப்பலின்வழியும், கன்னிகையைநாடிய
புருஷனுடையவழியுமாகிய இவைகளே.—விப ௨௰
சாரியானவளுடையமார்க்கமும்அப்படியே; அ
வள்புசித்துத்தன்வாயைத்துடைத்துவிட்டு,நான்
ஒருபாவமுஞ்செய்யவில்லையெனகிறாள்.—மூன் ௨௧
றுகாரியங்களினால் பூமிவிசனப்படுகின்றது, நா
லுகாரியங்களையுந்தாங்குவதரிது.-ஆளுகைசெய் ௨௨
யும் பணிவிடைக்காரனும், போசனத்தினால் தி
ருத்தியடைந்தமூடனும்,—விவாதஞ்செய்த அரு ௨௩
வருப்பான ஸ்திரியும், தன் எசமானியின் பொ
ருளுக்குச்சுதந்தரகாரியாகும் பணிவிடைக்காரி
யுமே.—பூமியிலுள்ள நாலுவஸ்துக்கள் அதிகஅற் ௨௪
பமாகிலும் அவை அதிகஞானமுள்ளவைகள்.—
எறும்புகள் பெலவீனமான கூட்டமாயிருந்தும், ௨௫
கோடைகாலத்தில் தங்கள் ஆகாரத்தைக்கூட்டி
வைக்கின்றன.—குழிமுயல்கள் பெலமில்லாத ௨௬
கூட்டமாயிருந்தும், கல்மலையில் தங்கள் வீடுக
ளைச்செய்கின்றன.—வெட்டுக்கிளிகளுக்கு இரா ௨௭
சாவில்லாதிருந்தும், அவையெல்லாம் கூட்டங்
கூடிப்புறப்படுகின்றன.—சிலந்திப் பூச்சிதன்கை ௨௮
களினால்வவ்விப்பிடித்து இராச அரமனைகளிலி
ருக்கின்றது; இவைகளே.—அழகிய நடையுள்ள ௨௯
பொருள்கள்மூன்றுண்டு, நாலும்நடையில்சௌ
ந்தரியமுள்ளவைகள்.—மிருகங்களுக்குள் பெல ௩௰
முள்ளதாகி எதற்கும்புறங்காட்டாத சிங்கமும்,-
போர்க்குதிரையும், கடாவும்,ஆருமெதிர்க்கக்கூ ௩௧
டாத இராசாவுமே.—நீ அகங்காரியாய் அஞ்ஞா ௩௨
ன கிரியையைச்செய்தாயாகிலும், துர்ச்சிந்தனை
கொண்டாயாகிலும் உன்கையைவாயில் வை.—
பாலைக்கடைதல் வெண்ணெயைப் பிறப்பிக்கு ௩௩
மே, மூக்கைப்பிசைதல் இரத்தத்தை வெளிப்ப
டுத்தும்: அப்படியே கோபத்தை மூட்டுதல் வி
ரோதத்தையுண்டாக்கும்.

## ௩௧. அதிகாரம்.

௧. லெமுவேல் இராசாவின் மாதா புத்திசொல்லல்: ௰. உத்தம ஸ்திரியை வருணித்தல்.

இராசாவாகிய லெமுவேலின் மாதா அவனுக் ௧
குப்போதித்த உபதேசவாக்குகளாவன:-ஆ, என் ௨
மகனே,ஆ, என் கருப்பத்தில்பிறந்தமகனே, ஆ,
என் சங்கற்பத்துக்கேற்ற மகனே, எது சொல்
லுவேன்.-உன்பெலனை ஸ்திரிகளுக்கும், உன் ௩
வழிகளை இராசாக்களைச் சங்கரிப்பவைகளுக்
குங் கொடாயாக.—லெமுவேலே, திராட்சர ௪
சத்தைக்குடிப்பது இராசாக்களுக்குத் தகுதியல்

(௩௰.அதி.௧.) அதி.௩௧.௧.(௨)சங்.௭௩.௨௨.(௪)யோவா.௩.௰௩. யோபு.௩௮.௪. ஏசா.௪௰.௰௨.(௬)உபா.௪.௨. வெளி.௨௨.௰௮,௰௯.(௯)மத்.௬.௰௧. உபா.௮.௰௨,௰௪,௰௭. நீதி.௯.௨௫,௨௬. ஓசி.௰௩.௬.(௰௨)லூக்.௰௮.௰௧.(௰௪)யோபு.௨௯.௰௭. ஆமோ.௮.௪.(௰௬)அபகூ.௨.௫.(௰௭)ஆதி.௯.௨௨. லேவி.௨௰.௯.(௨௨)பிர.௰.௭.(௩௨)யோபு.௪௰.௪. பிர.௮.௩. மீகா.௭.௰௬.—(௩௧.அதி.௧.)அதி.௩௰.௧.(௨)ஏசா.௪௯.௰௫.(௩)உபா.௰௭.௰௭.நீதி.௰௩.௨௬.ஓசி.௪.௰௧.(௪)பிர.௰.௰௭.

ல, மதுபானம் பண்ணுவது நரபதிகளுக்குத்த
௫ குதியல்ல.—பானஞ்செய்தால் வேதப்பிரமாணத்
தை மறுப்பார்கள், உபத்திரவப்படுகிற யாவரு
௬ டைய நியாயத்தையும் புரட்டுவார்கள்.—மரண
மடையப் போகிறவனுக்கு மதுபானத்தைக்கொ
டு, மனக்கசப்புள்ளவர்களுக்குத்திராட்சரசத்தை
௭ க்கொடு.—அவன் பானம்பண்ணித்தன் எளிமை
யைமறந்து, தன் வருத்தத்தைப்பின் ஒருபொழு
௮ தும் நினையான்.—ஊமையின் பட்சத்திலும், திக்
கற்றவர்களெல்லாருடைய நியாயவிசாரணையிலு
௯ ம் உன் வாயைத்திற.—உன் வாயைத்திறந்து, நி
யாயத்தைக்காண்பித்து, தரித்திரருந் திக்கற்றவர்
களுமாகிய இவர்களுடைய நியாயத்தை நடத்து.
௰ சற்குண ஸ்திரியைக் கண்டடைந்தவன் யா
வன்; அவள் பதுமராகத்திலும் விலையுயர்ந்த
௰௧ வள்.—அவளுடைய புருஷன் மனதார அவளைந
ம்புகிறான், அவனுக்குக்கொள்ளைவேண்டுவதில்
௰௨ லை.—அவள் தன் ஆயுள்பரியந்தம் அவனுக்குத்
௰௩ தீமையையல்ல, நன்மையையேசெய்வாள்.—ஆட்
டுமயிரையுஞ் சணலையுந்தேடித் தன் கையினால்
௰௪ உச்சாகத்துடன் வேலை செய்கிறாள்.—வியாபா
ரியின் கப்பல்களைப்போல அவள் தூரத்தினின்
௰௫ று தனதாகாரத்தைக்கொண்டுவருவாள்.—அவள்
இருட்டோடே எழுந்து தன் குடும்பத்தாருக்கு
ஆகாரத்தையும், தன்தாதிகளுக்கு வேலையையுங்
௰௬ கொடுப்பாள்.—ஒருவயலைவிசாரித்து அதைவாங்
குகிறாள், தன் கையின் பலன்களினால் ஒரு தி
௰௭ ராட்சத்தோட்டத்தை உண்டாக்குவாள்.—தன்
இடையிலே பலத்தைக்கட்டி, தன்தோள்களைப்
௰௮ பலப்படுத்துகிறாள்.—தன் வியாபாரம் உத்தமப
லன் தருகிறதென்பதும் அவளுக்குத் தெரியும்:

இராக்காலத்தில் அவள்விளக்கு அணைவதில்லை.—
தன்கைகளை இராட்டினத்தில் நீட்டுகிறாள், அவ ௰௯
ளுடைய கரங்கள் கதிரைப்பிடிக்கும்.—தரித்தி ௨௰
ரருக்குத் தன்கைகளைவிரித்து, திக்கற்றவர்களுக்
குத் தன்கைகளை நீட்டுகிறாள்.—தன் குடும்பத் ௨௧
தாரெல்லாரும் இரட்டைவஸ்திரமுள்ளவர்களா
தலால், தன் குடும்பத்தாரைக் குறித்து உறைந்
த மழைக்குப் பயப்படாள்.—தனக்கு விசித்திர ௨௨
மான மேல் அங்கியைச் செய்துகொள்ளுகிறாள்;
வெள்ளைப்பட்டும் இரத்தாம்பரமும் உடுப்பாள்.—
அவள் புருஷன் தேசத்து முதியோருடன் நியா ௨௩
யவாசல்களில் இருக்கும் பொழுது மதிக்கப்ப
டுவான்.—அவள் மெல்லிய புடைவைகளை உ ௨௪
ண்டாக்கிக் கிரயத்துக்குக் கொடுப்பாள்; கச்
சுக்களை வியாபாரிக்கு விலைப்படுத்துவாள்.—
பெலமும் மகிமையுமே அவளுக்கு வஸ்திரம்; வ ௨௫
ருங்காலத்திலும் சந்தோஷப்படுவாள்.—தன்வா ௨௬
யைத்திறந்துஞானத்தைஅறிவிப்பாள்; தயையுள்
ளசட்டனை அவள்நாவிலுண்டு.—அவள் தன்கு ௨௭
டும்பத்தின் நடக்கைகளை உற்றுப்பார்க்கிறாள்,
சோம்பேறியாகப்போசனம்பண்ணாள்.—அவள் ௨௮
பிள்ளைகள் எழும்பி அவளைவாழ்த்துவார்கள்; அ
வள் புருஷனும் அவளைநோக்கி,—அநேகங்கன் ௨௯
னியர் நன்மைசெய்ததுமெய், நீயோ எல்லாரி
லும் சிரேஷ்டமுள்ளவளென்று அவளைவாழ்த்து
வான்.—அழகு வஞ்சனையுள்ளது, சௌந்தரியம் ௩௰
வீண்: யெகோவாவுக்குப்பயப்படுகிறஸ்தி
ரீயோ வாழ்த்தப்படத்தக்கவள்.—அவள் கையின் ௩௰௧
பலனை அவளுக்குக்கொடு; அவளுடைய கிரி
யைகள் நியாயவாசல்களில் அவளைப்போற்றக்
கடவன.

(௫) ஓசி.௪.௰௧. (௬) க.சாமு.௧.௰. (௮) க.சாமு.௰௯.௪. எஸ்த.௪.௰௬. (௯) லேவி.௰௯.௰௫. உபா.௧.௰௬. ஏசா.௧.௰௭. எரே.௨௨.௰௬. (௰௫) ரோ.௰௨.௰௧. லூக்.௰௨.௪௨. (௨௰) எபே.௪.௨௮. எபி.௰௩.௰௬. (௨௩) அதி.௰௨.௪.

# பிரசங்கி.

## ௧. அதிகாரம்.

௧. முகவுரை: ௪. சகல வஸ்துக்களும் மாயையெனக்காட்டல்: ௰௨. எல்லாத்தொழில்களும்பலனற்றவையெனத் தெரிவித்தல்.

யெருஷலேமின் இராசாவும், தாவீதின் புத்திர
௨ னுமாகிய பிரசங்கியின்வாக்குகளாவன:—மாயை
யே மாயை, மாயையேமாயை; எல்லாம் மாயை
௩ என்று பிரசங்கிசொல்லுகிறான்.—சூரியன் கீழ்
தான்படுகிற பிரயாசமெல்லாவற்றிலும் மனுஷ
௪ னுக்குப் பலன் என்ன.—ஒருசந்ததிபோக, மறு
சந்ததிவருகின்றது: பூமியோ என்றுமுள்ளது.—
௫ சூரியன்உதிக்கிறான், சூரியன் அஸ்தமிக்கிறான்,
தான் உதித்த ஸ்தானத்திற்கே விரைந்துசெல்லு
௬ கிறான்.—அவன் தட்சணாயனத்துக்குப்போய்,
உத்தராயணத்துக்குத் திரும்புகிறான்; காற்று இ
டைவிடாமல்சுற்றி உலாவிவருகின்றது,தன்சுற்
௭ றெல்லைக்கேற்கத் திரும்புகின்றது.—சகல நதிக
ளும் சமுத்திரத்துக்கோடுகின்றன; ஆனாலும் ச
முத்திரம் நிரம்பவில்லை; நதிகள் தாங்கள்தோன்
௮ றியஸ்தானத்துக்கேதிரும்புகின்றன.—எல்லாஞ்
சஞ்சலத்தினால் நிறைந்திருக்கின்றன; அதைவி
வரிப்பதுமனுஷனுக்கரிது: காண்கிறதினால்கண்
திருத்தி அடைவதில்லை,கேட்கிறதினால் செவிக்
௯ குப் பூர்த்தியுமில்லை.—முன் நடந்த காரியமே,
பின்னும்நடக்கும்:முன்செய்யப்பட்டதே, பின்
னுஞ் செய்யப்படும்: சூரியனுக்குக்கீழேபுதுமை
௰ ஒன்றுமில்லை.-பாருங்கள்,இது நூதனமானதென்
றுசொல்வதற்கு ஏதாகிலும் ஒன்றுண்டா; அது
நமக்கு முன்னுள்ள பூருவகாலத்திலிருந்தது.—
௰௧ பூருவத்தில் நடந்தவைகள் நினைவிலுமில்லை; வ
ருங்காரியங்களும் பின்னேவருபவர்களுக்கு நி
னைவிலே இராதொழியும்.
௰௨ பிரசங்கியாகிய நான் யெருஷலேமில் இஸர
௰௩ வேலருக்குஇராசாவாயிருந்தேன்.—ஆகாயமண்
டலத்தின் கீழ்நடக்குஞ் சகலத்தையும் ஞானத்
தினால் ஆராய்ந்து அறிகிறதற்கு மனஞ்செலுத்தி
னேன்: மனுபுத்திரர் அதிலே முயலும்படி தே
வன் இந்தக்கிலேசமுள்ளகாரியமெல்லாம்அவர்
௰௪ களுக்குக்கொடுத்திருக்கிறார்.—சூரியனுக்குக் கீ
ழேசெய்யப்படுகிற சகல கிரியைகளையும் நான்
உற்றுப்பார்த்தேன்; பாருங்கள், எல்லாம் மாயை
௰௫ யும் மனக்கிலேசமுமுள்ளது.-வளைவானதை நே
ராக்கக்கூடாது: குறைவானதைஎண்ணக்கூடா
௰௬ து.—பாருங்கள்,நான்பெரியவனாயிருக்கிறேன்,
யெருஷலேமிலிருந்தமுன்னோரெல்லாரிலும் அ
திகஞானம் பெற்றேனென்று என் இருதயத்தோ
டே சம்பாஷித்தேன்: என் மனம் ஞானத்தை
யும் புத்தியையும் மிகவும் பரீட்சித்துக்கொண்
டது.—ஞானத்தையும், அஞ்ஞானத்தையும், மதி ௰௭
யீனத்தையும் ஆராய்ந்து பார்ப்பதற்கு என் மன
தைச் செலுத்தினேன்: இதுவும் மனக் கிலேச
மென்று கண்டேன்.—அதிகஞானத்தில் அதிக ௰௮
துக்கமுண்டு: அறிவை அதிகரிப்பிக்கிறவன் துக்
கத்தை அதிகரிப்பிக்கிறான்.

## ௨. அதிகாரம்.

௧. இம்மை இன்பந் துன்பந் தருமெனல்: ௰௨. மனுஷனுடையபிரயாசம் பலனற்றதெனக்காட்டல்.

நான் என்னெஞ்சத்தில், இப்பொழுதுவா, இன் ௧
பத்தில் உன்னைப்பரீட்சிப்பேன், சிற்றின்பத்
தை அனுபவியென்றேன்: பாருங்கள், அதுவும்
மாயை.—நகையைப்பார்த்து, நீ பைத்தியமென் ௨
றும், அக்களிப்பைப்பார்த்து, நீ எதைச்செய்யக்
கூடுமென்றுஞ்சொன்னேன்.—ஆகாயமண்டலத் ௩
தின் கீழ் மனுபுத்திரர் தங்கள் ஆயுள்பரியந்தம்
பெற்றனுபவிக்கும் நன்மையின்னதென்று அறி
யும்பொருட்டு, நான் என்மனதுக்கு ஞானத்தை
உணர்த்துகையிலும், திராட்சரசத்தைச்சுவைக்க
வும், அஞ்ஞானத்தைப் பற்றிக்கொள்ளவும் சிந்
தையில்வகைதேடினேன்.—நான் என்னிமித்தம் ௪
மகாகிரியைகளை நடப்பித்தேன்; என்னிமித்தம்
வீடுகளைக் கட்டுவித்தேன்; திராட்சத்தோட்டங்
களை உண்டாக்கினேன்.—நான் நந்தனவனங்க ௫
ளையுஞ் சிங்காரத்தோப்புக்களையுஞ் செய்து, நா
னாவித கனிகளைத்தரும் விருட்சங்களை நாட்டி
னேன்.—விருட்சங்கள் உண்டாகுந்தோப்புக்கு ௬
நீர்ப்பாய்ச்சுகிறதற்குக் குளங்களைத் தோண்டி
னேன்.—அநேகபணிவிடைக்காரரையும்பணிவி ௭
டைக்காரிகளையுங் கிரயத்துக்குக்கொண்டேன்,
என்வீட்டிலும் பணிவிடைக்காரர்பிறந்தார்கள்;
யெருஷலேமிலிருந்த என் முன்னோரெல்லாரி
லும் நான் அநேகஆடுமாடுமுதலிய மிருகசீவன்க
ளையுடையவனாயிருந்தேன்.-நான் பொன்வெள் ௮
ளிகளையும், இராசாக்களுக்குரிய மாகாணங்களி
லுள்ள விசேஷ பொருள்களையுங் கூட்டிவைத்
தேன்: பாடகர்களையும், பாடினிகளையும், மனு
புத்திரருக்கு இன்பமாகிய பலவிதகீதவாத்தியங்
களையுமுடையவனாயிருந்தேன்.—இப்படிநான் ௯
பெரியவனாகி, யெருஷலேமிலுள்ள என் முன்
னோரெல்லாரிலும் அதிக மேன்மைபெற்றேன்:
என் ஞானமும் நீங்காமல் என்னோடிருந்தது.—
என்முயற்சிகள் எல்லாவற்றிலும் என்மனம் மகி ௰
ழ்ச்சியடைந்ததினால், நான் என்கண்கள்இச்சித்
ததொன்றையும் அவைகள் காணாதபடி விலக்க

(௧. அதி. ௧) அதி.௭.௨௭. (௨) சங்.௩௯.௫,௬. ரோ.௮.௨௰.(௫)சங்.௰௯.௫,௬.(௬)யோவா.௩.௮. (௭) யோபு.௩௮.௰. (௮) நீதி.௨௭.௨௰. (௰௩) ஆதி.௩.௰௯. (௰௬)௧.இரா.௩.௰௨,௰௩.(௰௭)அதி.௨.௩,௰௨. ௧.தெச.௫.௨௧. அதி.௰௨.௰௨.—(௨. அதி. ௧.) லூக்.௰௨.௰௯. ௭சா.௫௰.௰௧. (௩) அதி.௧.௰௭. (௮) ௧.இரா.௯.௨௮.

வில்லை; என்மனதுக்கு எந்தச்சந்தோஷத்தையும்
தடைப்படுத்தவில்லை: அதுவேஎன்பிரயாசங்கள்
௰௧ எல்லாவற்றினாலும் வந்தபலன்.—அப்பொழுது
என்கைகள்செய்த சகல கிரியைகளையும், நான்
பட்டபிரயாசத்தையும் உற்றுப்பார்த்தேன்: கே
ள், சகலமும் மாயை, மனதுக்குக்கிலேசத்தைத்
தந்தது, சூரியனுக்குக்கீழே ஒருலாபமுமில்லை.
௰௨ பின்புஞானத்தையும், மதியீனத்தையும்,மூர்க்
கத்தையும் அறியும்படி முயன்றேன்: இராசாவுக்
குப்பின்வரும் மனுஷன் என்னசெய்யக்கூடும்;
௰௩ செய்ததைமாத்திரந்தான்.—இருளிலும் ஒளி எவ்
வளவு உத்தமமோ, மதியீனத்திலும் ஞானம் அவ்
௰௪ வளவு உத்தமமென்று கண்டேன்.—ஞானியு
டைய கண்கள் அவன்தலையிலே; அஞ்ஞானிஇ
ருளிலேநடக்கிறான்: அவர்களனைவருக்குஞ்சம்
பவிப்பது ஒரேவிதமென்று நானேகண்டேன்.—
௰௫ அஞ்ஞானிக்குச் சம்பவிக்கிறதுபோல, எனக்
குஞ்சம்பவிக்கும்;அப்படியானால்நான்அதிகஞா
னத்தை அடைவதென்னவென்று சிந்தித்தேன்;
பின்பு என்மனதிலேஇதுவும்மாயையென்றெண்
௰௬ ணினேன்.-ஞானியாவதுஅஞ்ஞானியாவது என்
றும்நினைவில்இருப்பதில்லை;நிகழ்காலத்தில் நட
க்கிறவைகளெல்லாம் வருங்காலத்தில்மறக்கப்ப
டும். அஞ்ஞானி இறந்துபோவதுபோலவே, ஞா
௰௭ னியும் இறந்துபோவான்.—ஆதலால்நான் இந்தச்
சீவனை வெறுக்கிறேன்;சூரியனுக்குக்கீழேசெய்
யப்படுகிறகிரியையெல்லாம்எனக்குத்துக்கமுள்
ளன: எல்லாம் மாயை, மனதுக்குக்கிலேசம்.
௰௮ சூரியனுக்குக்கீழ் நான் பட்டபிரயாசங்கள்
எல்லாவற்றையும் வெறுத்தேன்: எனக்குப்பின்
வரப்போகிறவனுக்கு அவைகளை ஒப்பித்துப்
௰௯ போகவேண்டும்.—அவன்புத்திமானோ, பேதை
யோ, ஆருக்குத்தெரியும்; எப்படியும் நான்சூரி
யனுக்குக்கீழ் என்ஞானத்தைவிளக்கி,பிரயாசப்
பட்டுச்செய்த சகலகிரியைகளின் பலனுக்கும்
௨௰ அவன் அதிகாரியாவான். இதுவும் மாயை.—அ
தினால் நான் சூரியனுக்குக்கீழ்ப்பிரயாசப்பட்டு
ச்செய்தகிரியையில்வைத்த ஆசையைவிடத்தக்க
௨௧ வகைபார்த்தேன்.—ஒருவன் புத்தி, அறிவு, நடு
த்தீர்ப்பு என்னுமிவைகளுடன் பிரயாசப்படுகி
றான்; அதில் சற்றும் பிரயாசப்படாத வேறொரு
வனுக்கு அதைப் பங்காகக் கொடுத்துவிடுவான்.
௨௨ இதுவும் மாயை,பெரியதாழ்ச்சி.-மனுஷன் தான்
சூரியனுக்குக்கீழ்ப் பிரயாசப்பட்டு, மனக்கிலே
சத்துடன்செய்தகிரியைகள் எல்லாவற்றினாலும்
௨௩ அவனுக்கு என்ன பலன்.—அவன் நாள்களெல்
லாந்துக்கமுள்ளன, அவன்பிரயாசம் மனஸ்தாப
முள்ளது; இராக்காலத்தில் அவன்மனம் இளைப்
பாறவில்லை. இதுவும் மாயை.
௨௪ மனுஷன் போசனபானம் பண்ணி, தன்னு
டையபிரயாசத்தின் நன்மையினாலே தன்ஆத்து
மாவைச்சந்தோஷப் படுத்துவதிலும் அவனுக்கு
ஒருநன்மையுமில்லை. இதுவும் தேவனுடைய
கையினின்றுவந்ததென்றுகண்டேன்.—என்னி ௨௫
லும் அதிகமாகப் புசிக்கக்கூடியவன்யாவன்;
என்னிலும் அதற்குமுயலக்கூடியவன்யாவன்.-
அவர் தமது பார்வைக்கு நல்லவனாயிருக்கிறவ ௨௬
னுக்கு ஞானத்தையும், புத்தியையும், மகிழ்ச்சி
யையும்அருளுகிறார்: தேவன், தமது பார்வைக்
கு நல்லவனாயிருக்கிற மனுஷனுக்கு அளிப்ப
தைச்சேர்த்துக்குவிக்கும்பொருட்டு, பாவியைப்
பிரயாசப்படும்படிசெய்கிறார். இதுவும் மாயை,
மனதுக்குக்கிலேசம்.

## ௩. அதிகாரம்.

௧. காலபேதத்தினால் இவ்வாழ்வு மாயையெனக்
காட்டல்: ௰௬. தேவன் நியாயம்விசாரித்தல்,
மனுஷனுடைய வாழ்வு அநித்தியமெனல்.

எவ்வெவற்றிற்குஞ் சமயமுண்டு, வானத்தின் ௧
கீழ்எந்த அபிப்பிராயத்திற்குங் காலமுண்டு:—ச ௨
னிக்க ஒருகாலம், மரிக்க ஒருகாலம்; நட ஒருகா
லம்,நட்டதைப்பிடுங்க ஒருகாலம்;-கொலைசெய் ௩
யஒருகாலம்,சொஸ்தஞ்செய்ய ஒருகாலம்;இடிக்
கஒருகாலம், கட்ட ஒருகாலம்;—அழ ஒருகாலம், ௪
நகைக்கஒருகாலம்; புலம்ப ஒருகாலம், நடனஞ்
செய்ய ஒருகாலம்;-கற்களை எறியஒருகாலம்,கற் ௫
களைக்குவிக்க ஒருகாலம்; தழுவஒருகாலம், தழு
வுதலைவிட ஒருகாலம்;—தேட ஒருகாலம், இழக் ௬
க ஒருகாலம்; பேண ஒருகாலம், தள்ள ஒருகா
லம்;—கிழிக்க ஒருகாலம், தைக்க ஒருகாலம்; ம ௭
வுனமாயிருக்கஒருகாலம், பேசஒருகாலம்;—நே ௮
சிக்க ஒருகாலம், பகைக்க ஒருகாலம்; யுத்தஞ்
செய்ய ஒருகாலம், சமாதானப்பட ஒருகாலம்.—
ஒருவன் பிரயாசப்பட்டுச் செய்யுங் கிரியையி ௯
னால் அவனுக்கென்னலாபம்.-மனுபுத்திரர் படும் ௰
படி தேவன் அவர்களுக்கு விதித்தபிரயாசத்
தைக்கண்டேன்.—அவர்சகலத்தையும் அதினதி ௰௧
ன்காலத்தில் அலங்காரமாகச் செய்துவருகிறார்:
அவர்கள் உள்ளத்தில்உலக காரியங்களைத்தோன்
றப்பண்ணினார், ஆனாலும்ஆதிதொடங்கி அந்தம்
வரைக்கும் தேவன் செய்துவருகிறகிரியையை
ஒருவராலும் அறியமுடியாது.—தன் ஆயுள் பரி ௰௨
யந்தம் மனமகிழ்ந்து, நற்கிரியைசெய்வதிலும் ம
னுஷனுக்கு அதிக நன்மையு மில்லையென்று,
நான் அறிந்திருக்கிறேன்.—மனுஷர்யாவரும்போ ௰௩
சனபானம்பண்ணித் தங்கள் சகலகிரியையின்
பலனையும் அனுபவிப்பது, தேவனுடைய ஈ
வு.—தேவன் செய்வதெதுவோ அதுநித்தியம்: ௰௪
அதனுடன் ஒன்றுங்கூட்டவுங்கூடாது, அதில்
ஒன்றுங்குறைக்கவுங் கூடாது: தேவன் தமது
சமுகத்தில் மனுஷர் பயப்படும்படி தமது கிரி
யையைச்செய்துவருகிறார்,இதுஎனக்குத்தெரி
யும்.—முன்நடந்ததே இப்பொழுதும் நடக்கின் ௰௫
றது. இப்பொழுதுநடக்கிறதுமுன்னும்நடந்தது;
நடந்ததைத் தேவன் விசாரிப்பார்.

(௰௪) நீதி.௰௭.௨௪. சங்.௪௯.௰. (௰௮) சங்.௪௯.௰. (௨௩) யோபு.௰௪.௧. (௨௬) ஆதி.௭.௧. லூக்.௧.௬. யோபு.௨௭.௰௬,௰௭. நீதி.௨௮.௮.—(௩. அதி. ௨.) எபி.௯.௨௭. (௫) யோவே.௨.௰௬. ௧.கொரி.௭.௫. (௭) ஆமோ.௫.௰௩. (௮) லூக்.௰௪.௨௬. (௰௧) ரோ.௰௧.௩௩. (௰௪) யாக்.௧.௰௭.

௰௬ சூரியனுக்குக் கீழே நான் நியாயஸ்தலத்தைக்
கண்டேன், அங்கேயுந் தீமையுண்டு; நீதிஸ்தா
னத்தையுங்கண்டேன், அங்கேயும்பாவமுண்டு.-
௰௭ சகல அபிப்பிராயங்களுக்குஞ் சகல கிரியை
களுக்குமேற்றகாலம் ஒன்றிருக்கிறபடியினாலே
தேவன் நீதிமான்களையும், துன்மார்க்கரையும்,
நியாயம் விசாரிப்பாரென்று என்னிருதயத்திலே
௰௮ சிந்தித்தேன்.—மனுஷர் தாங்கள் மிருகங்களைப்
போலிருக்கிறார்களென்பதை அவர்கள் காணும்
படிக்குத் தேவன் அவர்களைச்சோதிக்கிறாரென்
று நான் மனுஷருடைய நிலைமையைக்குறித்து
௰௯ என்மனதிலே நினைத்தேன்.—மனுபுத்திரருக்குச்
சம்பவிப்பது மிருகங்களுக்குஞ் சம்பவிக்கின்ற
து; சம்பவிக்குங்காரியம் ஒரேவிதம்: அவர்கள்
இறந்துபோவதுபோலவே இவைகளும் இறந்து
போகின்றன; எல்லாச் சீவன்களுக்கும் ஒரேசு
வாசம்; மிருகத்திலும் மனுஷன் மேன்மையுள்ள
௨௰ வனல்ல: எல்லாம் மாயை.—எல்லாம் ஒரு ஸ்தா
னத்துக்கேபோவதுண்டு; எல்லாந் தூளினின்று
தோன்றின, திரும்பவுந் தூளோடேசேருவதுமு
௨௧ றைமை.-உயர ஏறுகிற மனுஷனுடைய ஆவியை
யும் தாழப்பூமியிலிறங்குகிற மிருகங்களின் ஆவி
௨௨ யையும் அறிகிறவன்யாவன்.—ஆதலால் தன் கிரி
யைகளிலே சந்தோஷப்படுவதைப்பார்க்கிலும்
மனுஷனுக்கு அதிகமான நன்மை ஒன்றுமில்லை
யென்று நான்கண்டேன்; இது அவன் பங்கு: த
னக்குப்பின்வருங் காரியங்களைக் காணும்படி அ
வனைக்கொண்டுவருகிறவன் யாவன்.

## ௪. அதிகாரம்.

உபத்திரவம், பொறாமை, சோம்பல், உலோபம்,
தனித்திருத்தல், மூர்க்கம் என்னுமிவைகளினா
லே இவ்வாழ்வு மாயையெனக்காட்டல்.

பின்பு நான் திரும்பி, சூரியனுக்குக்கீழேசெய்
யப்படுகிற உபத்திரவங்கள் யாவற்றையுஞ் சிந்
தித்துப்பார்த்தேன்: பாருங்கள், உபத்திரவப்பட்
டவர்கள்கண்ணீர்விடுகிறார்கள், அவர்களைத்தேற்
றுவாரில்லை; உபத்திரவப்படுத்துகிறவர்கள் பட்
சத்தில்பெலமுண்டு; அவர்களையோ தேற்றுவா
௨ ரில்லை.—ஆதலால் சீவித்திருக்கிற சீவனுள்ளோ
ரைப்பார்க்கிலும், இறந்துபோன மரித்தோரைப்
௩ புகழ்ந்தேன்.—இதுவரைக்கும் பிறவாமலும், சூ
ரியனுக்குக்கீழ்ச் செய்யப்படுகிற துர்க்கிரியைக
ளைக் காணாமலும் இருக்கிறவன் அவ்விருதிறத்
தாரிலும் உத்தமன்.
௪ ஒருவன் படும்பிரயாசமுழுவதையும், அவன்
செய்யுஞ்செவ்வையான கிரியைகளையும் நான்
ஆலோசித்தேன், அவையின்நிமித்தமும் அவன்அ
யலான் அவன்மேற் பொறாமைகொள்ளுகிறான்.
௫ இதுவும் மாயை, மனதுக்குக்கிலேசம்.—பேதை
தன்கையைக் கட்டிக்கொண்டு சுயமாமிசத்தைப்
௬ புசிக்கிறான்.—பிரயாசத்தோடும் மனக்கிலேசத்
தோடுங்கிடைக்கும்இரண்டுகைபிடிநிறைவிலும்
அமைதியோடு கிடைக்கும் ஒருகைபிடி நிறை
வே உத்தமம்.
பின்னும் நான் திரும்பிச் சூரியனுக்குக்கீழி ௭
ருக்கிற மாயையை உற்றுப்பார்த்தேன்.-ஒருவன் ௮
தனித்திருக்கிறான், வேறொருவனுமில்லை; அ
வனுக்குப்பிள்ளையுமில்லை, சகோதரனுமில்லை:
ஆனாலும் அவன்படும் எந்தப்பிரயாசத்துக்குமோ
ஒருமுடிவில்லை; ஐசுவரியங்களினால்அவன்கண்
திருத்திபெறவுமில்லை; நான் ஒரு நன்மையும் அ
னுபவிக்கவில்லையே, ஆருக்காக நான் பிரயாசப்
படுகிறேனென்று அவன் சிந்திக்கிறதுமில்லை;
இதுவும் மாயை, மிகுந்த சஞ்சலம்.
தனிமையாயிருப்பதிலும் இருவராயிருப்பது ௯
உத்தமம்; தங்கள் பிரயாசத்தினால் நல்லபலனைப்
பெறுவார்கள்.-அவர்களில் ஒருவன் விழுந்தால் ௰
மற்றவன் தூக்கிவிடுவான்: தனித்திருக்கும்பொ
ழுது விழுகிறவன்வருத்தமடைவான்; அவனைத்
தூக்கி விட ஒருவருமில்லையே.—இருவருங் கூ ௰௧
டப்படுத்தால் சூடுகொள்வார்கள்: தனித்திருக்கி
றவன் சூடுகொள்வதெப்படி.—யாவனாகிலும் அ ௰௨
வர்களில் ஒருவனை மேற்கொள்ள வந்தால் இரு
வரும் அவனை எதிர்க்கலாம்; முப்புரிநூல் சீக்கி
ரம் அறாது.
ஆலோசனையைக்கேளாத விருத்தனாகியமதியீ ௰௩
னமுள்ள இராசாவிலும், தரித்திரமும் ஞானமு
முள்ள பாலகன் மிகவும் நல்லவன்.—சிறைச்சா ௰௪
லையினின்று இவன் அரசாளவருகிறான்; ஆளு
கைக்குரிமையாய்ப் பிறந்தவன் தரித்திரனாகிறா
ன்.—சூரியனுக்குக்கீழே சீவனுள்ளோர் யாவ ௰௫
ரும் அவனுக்குப் பிரதியாக அரசாளவருகிறபால
கனோடு மனமொத்திருக்கக் கண்டேன்.—அவர் ௰௬
களுக்கு முன்னிருந்த அந்தச்சனக்கூட்டத்துக்
குத் தொகையில்லை: பின்வருபவர்கள் அவனில்
களிகூரமாட்டார்கள். இதுவும்மாயையே, மன
துக்குக்கிலேசம்.

## ௫. அதிகாரம்.

௧. சன்மார்க்கத்திலுள்ள குறைபாட்டைத் தெரி
வித்தல்: ௮. பராக்கிரமத்தின் நிலையின்மையை
விளக்கல்: ௰. செல்வத்தின் நிலையாமையைக்
காட்டல்: ௰௮. பொருள்இன்னதென்றுநிருண
யித்தல்.

நீ தேவாலயத்துக்குப்போகிறபொழுது உன் ந ௧
டையைக்காத்துக்கொள், மதியீனர்கள் செலுத்
தும் பலியிலும் உபதேசத்தைக்கேட்பதே நல
மென்றெண்ணு: அவர்கள் தாங்கள் செய்கிறது
தீமையென்றுணரார்கள்.—நீ துணிகரமாய் உன் ௨
வாயினால் பேசாதே, தேவனுடைய சமுகத்
தில் எந்தவாக்கையுஞ்சொல்லும்படி உன் மன
தைத் துரிதப்படுத்தாதே: தேவன் வானத்திலி
ருக்கிறார், நீ பூமியிலிருக்கிறாய்: ஆதலால் உன்

(௰௭) ரோ.௨.௬,௭,௮. ௨.கொரி.௫.௰. ௨.தெச.௧.௬,௭. (௰௯) சங்.௭௩.௨௨. (௨௰) ஆதி.௩.௰௯. (௨௧) அதி.௰௨.௭.—(௪. அதி. ௨.) யோபு.௩.௰௭. (௫) நீதி.௬.௰. (௬) நீதி.௰௫.௰௬,௰௭. (௮) நீதி.௨௭.௨௰. ௧.யோவா.௨.௰௬. சங்.௩௯.௬.—(௫. அதி. ௧.) யாத்.௩.௫. எசா.௧.௰௨. ௧.சாமு.௰௫.௨௨. சங்.௫௰.௮. நீதி.௰௫.௮. ஓசி.௬.௬. (௨) நீதி.௰.௰௯. மத்.௬.௭.

௩ வாக்குச்சொற்பமாயிருப்பதாக.-வேலையின்மிகு
தியினல்சொப்பனம் உண்டாகும்; சொற்களின்
௪ மிகுதியினல் மூடன் அறியப்படுவான்.—தேவ
னிடத்தில் சங்கற்பம்பண்ணினல் அதை நிறை
வேற்றத்தாமதிக்கவேண்டாம்; அவர் மதியீனர்க
ளில் பிரியப்படுகிறதில்லை: நீ சங்கற்பம்பண்ணி
௫ னதைச்செலுத்து.-சங்கற்பம்பண்ணி நிறைவேற்
ருமல் விடுவதிலும், சங்கற்பம்பண்ணுமலிருப்ப
௬ தே நலம்.—உன்வாய் உன்மாமிசத்தைப்பாவஞ்
செய்யும்படி ஏவவிடாதே; அது புத்திகேடென்
று தூதன் சமுகத்தில் சொல்லாதே: தேவன்
உன்வாக்கினிமித்தங்கோபங்கொண்டு, உன்கை
யின் கிரியையை அழிக்கவேண்டியதென்ன.—
எ அநேகசொப்பனங்களிலே மாயையுண்டு, அநே
கவாக்குகளிலும் அப்படியே: நீ தேவனுக்குப்
பயப்படு.
அ நீ தேசத்திலே தரித்திரர் உபத்திரவப்படுவதை
யும், நீதி விசாரணையைப்புரட்டுவதையுங் கண்
டால் ஆச்சரியப்படாதே: உன்னதமானவரைப்
பார்க்கிலும் உன்னதமானவரும், அவர்களிலும்
பிரதானியுமாயிருக்கிறவர் அதைப்பார்க்கிருர்.
௯ பூமிவிளைவிக்கும்பலன் யாவருக்கும் உரியது:
இராசாவும் வயலினல் ஆதரிக்கப்படுகிருன்.
௰ வெள்ளியை விரும்புகிறவன் வெள்ளியின
லும், தனவிருத்தியை விரும்புகிறவன் சம்பாத்
தியத்தினலுந்திருத்திபெருன்: இதுவும்மாயை.-
௰௧ பொருள் பெருகும்பொழுது அதை அனுபவிக்
கிறவர்களும் பெருகுவார்கள்: தங்கள் கண்களி
னல் அவைகளைக்காண்பதேயன்றி, உடையவர்
௰௨ களுக்கு என்னலாபம்.—அதிகம் புசித்தாலுஞ்
சொற்பம்புசித்தாலும், வேலைசெய்கிறவனுடை
யநித்திரைஇனிது: செல்வனுடையதிருத்தியோ
௰௩ அவனை நித்திரை கொள்ளவொட்டாது.—செல்
வம், அதை உடையவர்களுக்குக்கேடுண்டாகும்
படி சேகரித்துவைக்கப்படும்; சூரியனுக்குக்கீ
ழேஇந்தப்பெரியதீமையைக்கண்டிருக்கிறேன்.-
௰௪ அந்தச்செல்வம் கொடியவிக்கினத்தினல் அழி
யும்: பெற்றபுத்திரனுக்குக் கொடுக்க ஒன்றுமில்
௰௫ லை.—அவன் தன் மாதாவின் கருப்பத்தினின்
று நிருவாணியாய் வந்தான், வந்தது போலவே
நிருவாணியாய்ப்போவான், தன் பிரயாசத்தின
லே கிடைத்த எந்தப் பொருளையும் தன் கையி
௰௬ லேகொண்டுபோகான்.—அவன்வந்தபிரகாரமா
கவே போவான், இது மிகவுங்கிலேசமுள்ளது:
காற்றுக்குப் பிரயாசப்படுகிறவனுக்கு என்னப
௰எ லன்.—அவன் தன் ஆயுள்பரியந்தம் இருளிலே
புசித்து, தன் துன்பத்தோடுமிகுந்தநோயுங்கொ
டுமையும் அனுபவிக்கிருன்.
௰அ பாருங்கள், தனக்குத் தேவன் கொடுக்குந்
தன் ஆயுள்பரியந்தம் ஒருவன் போசனபானம்
பண்ணுவதும், தான் சூரியனுக்குக் கீழேபடும்
எந்தப் பிரயாசத்தின் பலனை அனுபவிப்பதும்,
உத்தமமும் முறைமையுமாயிருக்கின்றனவென்
று நான் கண்டேன்: இது அவனுக்குரிய பங்கு.—
தேவன் செல்வத்தையும் சம்பத்தையும் எவ ௰௯
னுக்குக் கொடுத்திருக்கிருரோ, அவன் தன் பங்
கைப்பெற்று அனுபவிக்கவும், தன் பிரயாசத்
திலே சந்தோஷப்படவும் அவனுக்கு அதிகாரத்
தைக் கொடுப்பதே, தேவனுடைய அருள்.—
தேவன் அவனுடைய இருதயத்திலே விருப் ௨௰
பத்தை அளிக்கிறதினல், தன் ஆயுளின் நாள்க
ளைமிகவுஞ் சிந்திக்கமாட்டான்.

## ௬. அதிகாரம்.

௧. அனுபவியாதபொருள் பலனற்றதெனக்காட்டல்: எ. சுகானுபவம் நிலையற்றதெனக்காட்டல்: ௰. சீவனின் நிலையாமையைக்காட்டல்.

சூரியனுக்குக்கீழே நான் ஒருதீமையைக் கண் ௧
டேன், அது மனுஷருக்குள்பெரும்பாலும் நடந்
துவருகின்றது.—தன்மனம் விரும்பும் எந்தப்பொ ௨
ருள்களிலுங் குறைவுபடாதபடி, ஒருவனுக்குத்
தேவன் செல்வத்தையும், சம்பத்தையும், கனத்
தையுங்கொடுக்கிருர், அவைகளை அனுபவிக்குஞ்
சத்துவத்தை அவனுக்குக் கொடுக்கவில்லை, அந்
நியன் அதைப்புசிக்கிருன்: இதுவும்மாயை, கொ
டியநோய்.
ஒருவன் நூறுபிள்ளைகளைப் பெற்று, அநேக ௩
வருஷஞ் சீவித்து, தீர்க்காயுள் அடைந்தாலும்,
சௌக்கியத்தினல் மனத்திருத்திபெருமலும், பி
ரேதவறையிற் சேர்க்கப்படாமலும் போவான
கில், அவனிலும் கருவழிந்த சிசு நல்லதென்று
நான்சொல்லுகிறேன்.—அது வீணிலேவந்து இரு ௪
ளிலேசெல்லும், அதின்நாமம் அந்தகாரத்தில் மூ
டப்படும்.—அது சூரியனைக்கண்டதுமில்லை, ஒன் ௫
றையும் அறிந்ததுமில்லை: அதற்கு அவனிலும் அ
திக ஒய்வுண்டு.
அவன் ஈராயிரம்வருஷஞ் சீவித்திருந்தாலும், ௬
ஒருநன்மையும்அனுபவிக்கிறதில்லை: எல்லாரும்
ஒரேஸ்தானத்திற்குப் போவார்களல்லவா.—மனு எ
ஷன்படுமெல்லாப்பிரயாசமும் தன்வாயினிமித்
தமாயிருந்தும், அவன்மனதுக்குத்திருத்தியேயில்
லை.—பேதையிலும்ஞானிக்குஎன்னலாபம்; சீவ அ
னுள்ளோருக்குமுன்பாக நடக்கஅறிந்த தரித்திர
னுக்குவந்த மேன்மையென்ன.
மனோவாஞ்சைக்கு இடங்கொடுப்பதிலும், க ௯
ண்கண்டதை அனுபவிப்பதேநலம்: இதுவும் மா
யை, மனதுக்குக்கிலேசம்.—இருக்கிறவன் எவனு ௰
ம்தோன்றுமுன்னமே பெயரிடப்பட்டான், அவ
ன்மனுஷனென்றறிந்தோம்: அவன் தன்னிலும்
வல்லவருடனே விவாதம் பண்ணுவது தகாது.
மாயையைப்பெருகப்பண்ணுவதற்கு அநேக ௰௧
வகைகளிருக்கின்றன, அதினல் மனுஷனுக்கு
என்னபலன்.—நிழலைப்போன்றமாயையானதன் ௰௨

(௩) நீதி.௰.௰௯. (௪) எண்.௩௰.௨. சங்.௫௰.௰௪. சங்.௬௬.௰௩.௰௪. (௫) நீதி.௨௰.௨௫. அப்.௫.௪. (௬) ௧.கொரி.௰௧.௰. (அ) சங்.௰௨.௫. (௰௫) யோபு.௧.௨௧. சங்.௪௯.௰எ. ௧.தீமோ.௬.எ.(௰௬)நீதி.௰௧.௨௯. (௰எ) சங்.௱௨எ.௨.(௰அ) ௧.தீமோ.௬.௰எ.—(௬. அதி. ௨.) யோபு.௨௧.௰. லூக்.௰௨.௨௰. (௩) ௨.இரா.௯.௩௫. ஏசா.௰௪.௰௯,௨௰. யோபு.௩.௰௫. (எ) நீதி.௰௬.௨௬. (௰) யோபு.௯.௩௨. ஏசா.௪௫.௯. எரே.௪௯.௰௯. (௰௨) சங்.௱௨.௰௧. யாக்.௪.௰௪. சங்.௩௯.௬.

சீவகாலத்தைப் போக்குகிறமனுஷனுக்கு இச்சீ
வியத்தில் எதுநன்மை, அது ஆருக்குத்தெரியும்;
தனக்குப்பின்பு சூரியனுக்குக்கீழேசம்பவிக்குங்
காரியமின்னதென்று மனுஷனுக்கு அறிவிக்கக்
கூடியவன் யாவன்.

## ௭. அதிகாரம்.

௧. நற்கீர்த்தி, துக்கம், பொறுமை, ஞானம்முதலிய வைகள் மாயையானவைகளெனக் காட்டல்: ௨௰. ஞானம்பெறுவதரிதெனக்காட்டல்.

நற்கீர்த்தி சுகந்ததைலத்திலும் நலம்; சென்மதி
னத்திலும் மரணதினமேநலம்.
௨ விருந்து வீட்டுக்குப் போவதிலும், புலம்பல்
வீட்டுக்குப்போவது நலம்: இதுவே எல்லாமனி
தருக்குமுடிவு; சீவனுள்ளோன் இதைத் தன்ம
௩ னதில் சிந்திப்பான்.—நகையைப்பார்க்கிலுந்துக்
கமே நலம்: முகவிசனத்தில் இருதயஞ் சீர்ப்ப
௪ டும்.—ஞானவானுடைய இருதயம்புலம்பல்வீட்
டிலே தங்கும்; மதியீனருடையஇருதயங் களிப்
௫ புவீட்டிலே தங்கும்.—மதியீனர்பாடும்பாட்டைக்
கேட்பதிலும், ஞானியினுடையகண்டனையைக்
௬ கேட்பதே ஒருவனுக்கு நலம்.—மதியீனனுடை
யநகை பானையின்கீழெரிகிற முள்ளுகளின்பட
படப்புப்போலிருக்கின்றது: இதுவும் மாயை.
௭ உபத்திரவம் ஞானியையுஞ்சஞ்சலப்படுத்து
மே; பரிதானம் இருதயத்தை நாசப்படுத்தும்.—
௮ ஒருகாரியத்தின் ஆரம்பத்திலும் அதின்முடிவு ந
லம்: அகங்காரங்கொண்ட சிந்தையுள்ளவனிலு
௯ ம், தாழ்ந்த சிந்தையுள்ளவன் உத்தமன்.—சீக்கி
ரமாக மனதிலே கோபங்கொள்ளாதே: கோபம்
மதியீனருடைய இருதயத்திலே தங்குகின்றது.—
௰ இந்தநாள்களைப் பார்க்கிலும் முன்னாள்கள் நல
மென்றுசொல்லாதே; நீ இதைக்குறித்து விவேக
மாய் விசாரிக்கவில்லை.
௰௧ சுதந்திரத்திலும் ஞானமே நல்லது: இதினால்
௰௨ சூரியனைக்காண்பவர்களுக்குப் பலனுண்டு.-ஞா
னம் புகலிடம், செல்வமும் புகலிடம்: ஞானம்,
தன்னைப்பெற்றவர்களுக்குச் சீவனைத்தருகின்ற
௰௩ து, இதோஅறிவின்மேன்மை.—தேவனுடைய
கிரியையைச்சிந்தித்துக்கொள்: அவர்கோணலாக்
௰௪ கினதை நேர்மையாக்கவல்லவன்யாவன்.—வாழ்
வுவந்தகாலத்தில் மகிழ்ந்திரு, தாழ்வு வந்தகாலத்
தில் சிந்தித்துப்பார்: மனுஷன் தனக்கு நேரிடுங்
காரியமின்னதென்றறியாதபடிக்கு, தேவன் அ
வைகளை ஒன்றுக்கொன்று மாறாகச்செய்தார்.—
௰௫ நான் மாயையான என் சீவகாலத்தில்சகலத்தை
யுங்கண்டேன்: தன் நீதியிலே கெட்டுப்போகும்
நீதிமானுமுண்டு, தன்பாவத்திலே நீடித்திருக்கும்
௰௬ பாவியுமுண்டு.—நீ உன்னை அதிக நீதிமானாகக்
காட்டாதே; உன்னை அதிக ஞானவானென்றும்
எண்ணாதே: என் உன்னைக்கெடுத்துக்கொள்ளுகி
றாய்.—நீ அதிக நியாயமாயிராதே, பேதையுமாயிரா ௰௭
தே: உன்ஆயுள்நிறைவேறுமுன் நீ மரிக்கவேண்
டியதென்ன.—நீ இதைப்பற்றிக்கொள்வதேநலம்; ௰௮
இதைக்கைவிடாதே: தேவனுக்குப் பயப்படு
கிறவன் எல்லாவற்றினின்றும் விடுவிக்கப்படு
வான்.—நகரத்திலுள்ள பராக்கிரமசாலிகள் பத் ௰௯
துப்பேரிலும், ஞானம் ஞானவானை அதிகமாகப்
பெலப்படுத்துகின்றது.—பாவஞ்செய்யாமல் நன் ௨௰
மையையேசெய்கிற நீதிமான் பூமியிலில்லை.—
சொல்லப்படும் எல்லாவாக்குகளையும் நம்பாதே; ௨௧
நம்பினால்உன்பணிவிடைக்காரனும் உன்னைநிந்
திப்பதைநீகேட்பாய்.-அநேகந்தரம் நீயும்பிறரை ௨௨
நிந்தித்தாயே, இதுஉன்இருதயத்துக்குத்தெரியும்.
நான் ஞானத்தினால் இவையெல்லாவற்றை ௨௩
யும் பரீட்சித்தேன்: நான் ஞானவானாவேனென்
றேன்; அது எனக்குத்தூரமாயிருந்தது.—தூரமு ௨௪
ம் மகா ஆழமுமாயிருக்கிறதைக் கண்டடைகிற
வன்யாவன்.—ஞானத்தையும் புத்தியையும் அறி ௨௫
யவும், ஆராயவும், தேடவும், பேதைமையின் தீ
மையையும் மதியீனத்தின் பைத்தியத்தையும் அ
றியவும்,என் மனதைச்செலுத்தினேன்.—கண்ணி ௨௬
களும்வலைகளும்போன்ற உள்ளத்தையும், விலங்
குகள்போன்றகைகளையுமுடைய ஸ்திரி மரணத்
திலும் அதிக கசப்புள்ளவளென்று கண்டேன்:
தேவனுடையபார்வைக்குச்சற்குணனாயிருக்
கிறவன் அவளுக்குத்தப்புவான்; பாவியோ அவ
ளாற்பிடிக்கப்படுவான்.-பாருங்கள்,காரியத்தின் ௨௭
தாற்பரியத்தைக்கண்டறிகிறதற்கு, ஒன்றின்பின்
னொன்றாக ஒவ்வொன்றையும் உற்றுப்பார்ப்பதி
னால் இதை அறிந்தேனென்று பிரசங்கி சொல்லு
கிறான்.—என்மனம் இன்னுமொன்றைத்தேடுகின் ௨௮
றது,அதைநான்கண்டடையவில்லை: ஆயிரவருக்
குள் ஒருபுருஷனைக்கண்டேன்; இவர்களெல்லா
ருக்குள்ளும் ஒருஸ்திரியைநான்காணவில்லை.—
பாருங்கள், தேவன் மனுஷனைநேர்மையுள்ளவ ௨௯
னாகச்சிருஷ்டித்தார்; அவர்களோ அநேகஉபாய
ங்களைத்தேடினார்கள், இதுமாத்திரங் கண்டேன்.

## ௮. அதிகாரம்.

௧. இராசாமுதலானவர்களைக்கனம்பண்ணுவதுக டமையெனக்காட்டல்: ௬. உபயோகமானசம யத்தில்தொழிற்செய்வது முறைமையெனத்தெ ரிவித்தல்: ௰௧. செல்வத்தையுடைய துன்மார்க்கர்களின்நிலைமையிலுந்தரித்திரத்தையுடைய சன்மார்க்கரின் நிலைமை உத்தமமெனக் காட் டல்: ௰௬. தேவனுடைய கிரியை புத்திக் கெட்டாதெனவிளக்கல்.

ஞானமுள்ளவனுக்கொப்பானவன் யாவன்;கா ௧
ரியத்தின் தாற்பரியத்தை அறிந்தவன் யாவன்;

(௭. அதி. ௧.) நீதி.௰௫.௩௰. நீதி.௨௨.௧. (௩) ௨.கொரி.௭.௰. (௫) நீதி.௰௩.௰௮. (௬) சங்.௱௰௮.௰௨. (௭) யாத்.௨௩.௮. உபா.௰௬.௰௯. (௮) நீதி.௰௪.௨௯.(௯)நீதி.௰௪.௰௭. யாக்.௧.௰௯. (௰௩) ஏசா.௰௪.௨௭. (௰௪) உபா.௨௮.௪௭.(௰௬) நீதி.௨௫.௰௬. ரோ.௰௨.௩. (௰௭) யோபு.௰௫.௩௨. சங்.௫௫.௨௩. நீதி.௰.௨௭. (௰௯) நீதி.௨௧.௨௨. அதி.௯.௰௬,௰௮. (௨௰) ௧.இரா.௮.௪௬. ௨.நாளா.௬.௩௬. நீதி.௨௰.௯. ரோ.௩.௨௧. ௧.யோவா.௧.௮. ரோ.௧.௨௨. (௨௪) யோபு.௨௮.௰௨,௨௧. ௧.தீமோ.௬.௰௫. ரோ.௰௧.௩௩. (௨௬) நீதி.௫.௩,௪. (௨௮) யோபு.௩௩.௨௩. சங்.௰௨.௧. (௨௯) ஆதி.௧.௨௭. ஆதி.௩.௬,௭.—(௮. அதி. ௧.) நீதி.௪.௮,௯. அப்.௬.௰௫. உபா.௨௮.௫௰.

ஞானம், மனுஷனுடைய முகத்தைப் பிரகாசிப்
பிக்கும், அது அவன் பார்வையின் கடினத்தை
உ மாற்றும்.—தேவனிடத்தில் இட்ட ஆணையி
னிமித்தம் நீ இராசாவின் கட்டளையைக்காத்துக்
ங கொள் என்கிறேன்.—அவன் சமுகத்தினின்று
தீவிரமாய்ப் போகாதே: ஒரு தீமையுள்ளகாரியத்
தில் நில்லாதே. அவன் தனதிஷ்டப்படிசெய்யக்
ச கூடும்.—இராசாவின் வாக்கு எங்கேயோ அங்
கே அதிகாரமுண்டு: நீர் என்னசெய்கிறீரென்று
ரு அவனுக்குச் சொல்லுகிறவன் யாவன்.—கட்ட
ளையைக் கைக்கொள்ளுகிறவன் எந்த ஆபத்தை
யுமறியான்: ஞானவானுடைய இருதயம் சமயத்
தையும், நீதியையும் உற்றுப்பார்க்கின்றது.
சு ஒவ்வொரு அபிப்பிராயத்திற்குஞ்சமயமும் நி
யாயத்தீர்ப்புமுண்டு, அதினால் மனுஷருக்குநே
எ ரிடுஞ்சஞ்சலம் மிகுதி.-சம்பவிக்குங்காரியத்தை
அவன்அறியான்:அதின்னவிதமாய்நடக்குமென்
று அவனுக்குச்சொல்லக்கூடியவன் யாவன்.—
அ ஆவியைத்தடைப்படுத்துகிறதற்கு ஆவியின்மேல்
அதிகாரம் ஒருவருக்குமில்லை; மரணவேளையில்
வல்லமை ஒருவருக்குமில்லை: அந்த யுத்தத்தில்
விடுதலை இல்லை: துர்க்கிரியை செய்பவர்கள்
துர்க்கிரியையினாலே விடுவிக்கப்படார்கள்.—
கூ சூரியனுக்குக்கீழே செய்யப்படும் ஒவ்வொரு கி
ரியையையுங் கண்டேன்; அதற்கென்மனதைச்
செலுத்தினேன்: ஒருவன்தனக்குக்கேடுண்டாகி
ய றதற்கு வேறொருவனை ஆளுங்காலமுண்டு.-பரி
சுத்த ஸ்தானத்திற்குப் போக்குவரவுசெய்ததுன்
மார்க்கர் அடக்கம்பண்ணப்பட்டார்கள், அவர்
கள் அப்படிச்செய்துவந்தநகரத்திலே பின்புமறக்
கப்பட்டார்கள், இதைக்கண்டேன்: இதுவும்மா
யக யை.—துர்க்கிரியையின் தண்டனை சீக்கிரம் பலிக்
காமலிருப்பதினிமித்தம், மனுபுத்திரருடைய இ
ருதயம், அவர்களுக்குள்ளே துர்க்கிரியைசெய்
யத் துணிந்துக்கொள்ளுகின்றது.
யஉ பாவிநூறுதரந்துர்க்கிரியைசெய்து தீர்க்காயுள்
பெற்றாலும், தேவனுக்குப் பயந்து அவருக்
குப்பயபத்தியுள்ளவர்களாயிருக்கிறவர்களுக்கே
நன்மையுண்டாகுமென்று நிச்சயித்தறிந்திருக்கி
யங றேன்.—துன்மார்க்கனுக்கு நன்மையுண்டாகா
து, அவன் தேவனுக்குப் பயப்படாமலிருக்
கிறபடியினால்நிழலைப்போன்ற அவன்ஆயுள் நீடி
யச க்கமாட்டாது.—பூமியிலேநடக்கும்வேறொருமா
யையுண்டு;துன்மார்க்கனுடையகிரியையின்பய
னின்படி நீதிமானுக்காகும்; நீதிமான்களுடை
யகிரியையின் பயனின்படி துன்மார்க்கனுக்கு
யரு மாகும்: இதுவும்மாயையென்றேன்.-அப்பொழு
துநான்களிப்பைமேன்மைபாராட்டினேன்,சூரி
யனுக்குக்கீழேபோசனபானம்பண்ணிச்சந்தோ
ஷப்படுவதைப்பார்க்கிலும் மனுஷனுக்கு வே
றொருநன்மையுமில்லை: சூரியனுக்குக்கீழே தே
வன் தந்த ஆயுள்பரியந்தம்படும் பிரயாசத்தின்
இந்தப்பலன் நிற்கும்.
இரவும்பகலுங் கண் உறங்காமல் இருக்கிறவர் யசு
களுண்டு: நான் ஞானத்தைப்பெறவும், பூமியி
லே மனுஷர் செய்யுங் கிரியையைப்பார்க்கவும்
என்மனதைச் செலுத்தினபொழுது,—தேவன் யஎ
செய்யுஞ் சகல கிரியையையும் பார்த்து, சூரிய
னுக்குக்கீழேசெய்யப்படுங்கிரியையை ஒருமனு
ஷன்அறியக்கூடாதென்றுநான்கண்டேன்: மனு
ஷன்அதை அறியும்படிஅதிகமாய்ப்பிரயத்தினம்
பண்ணினாலும் அதின்தாற்பரியம் அறியமுடியா
து; ஞானவான் அறியவேண்டுமென்றுநினைந்தா
லும் அதை அறியமாட்டான்.

## கூ. அதிகாரம்.

க. மனுஷர் மரணத்தின் வசமாதல்: ய. தேவனுடைய கிரியைசிரேஷ்டமெனக்காட்டல்:யங. பராக்கிரமத்திலும் ஞானம் உத்தமமெனவிளக்கல்.

நான் என்மனதைச் செலுத்தி இவையெல்லா க
வற்றையும் உற்றுப்பார்த்தேன், நீதிமான்களும்
ஞானிகளுந் தங்கள்தங்கள்கிரியைகளுடன் தே
வன் கைவசமாயிருக்கிறார்கள்: தனக்கு முன்
னிருந்தவைகளினால் விருப்போ வெறுப்போ
என்பது ஒருவனும் அறியான்.—சகலமுஞ்சகல உ
ருக்குஞ் சமமாய்நேரிடும்: நீதிமானுக்காகிலும்,
துன்மார்க்கனுக்காகிலும், நல்லவனுக் காகிலும்
சுத்தனுக்காகிலும், அசுத்தனுக்காகிலும்; பலியி
டுகிறவனுக்காகிலும்,பலியிடாதவனுக்காகிலும்;
ஒரேவிதமாய்ச்சம்பவிக்கும்: நல்லவன் எப்படி
யோ, பாவியும் அப்படியே; ஆணையிடுகிறவனுக்
கும், ஆணையிடப்பயப்படுகிறவனுக்கும் ஒன்றே
சம்பவிக்கும்.—சகலருக்கும் நேரிடுங்காரியம் ஒ ங
ன்றே:சூரியனுக்குக்கீழேசெய்யப்படுங்காரியங்
களுக்குள் இதுவே அதிகதுக்கம்: மனுபுத்திரரு
டைய இருதயம்பாவத்தினாலேநிறைந்திருக்கின்
றது, அவர்கள் ஆயுள்பரியந்தம் அவர்கள் இருத
யத்தில் மதியீனந்தங்கும், பின்பு அவர்கள் மரித்
தோரைச் சேருவார்கள்.
சீவனுள்ளோர்யாவரிடத்திலுஞ்சேர்ந்தவனுக் ச
கு நம்புவதற் கிடமுண்டு: செத்தசிங்கத்திலும் உ
யிருள்ளநாய்நல்லது.—சீவனுள்ளோர் தாங்கள்மர ரு
ணமடையவேண்டுமென்று அறிவார்கள்: மரித்
தோர் ஒன்றுமறியார்கள், பின்னும்அவர்களுக்கு
ஒருபலனுமில்லை; அவர்கள் பெயர்மறக்கப்பட்
டது.—அவர்களுடையநேசமும், பகையும், பொ சு
றாமையும் ஒழிந்துபோயின; சூரியனுக்குக்கீழே
செய்யப்படும் எந்தக்காரியத்திலும் இனி அவர்க
ளுக்கு ஒருபொழுதும் பங்கில்லை.
போ, சந்தோஷத்துடன் உன்ஆகாரத்தைப்பு எ
சித்து, மனரம்மியத்துடன்உன்திராட்சரசத்தைக்
குடி; இப்பொழுது தேவன் உன்கிரியைகளை

(உ) க.நாளா.உக.உச. எசேக்.யஎ.யஅ. ரோ.யங.ரு. (ச) யோபு.ஙச.யஅ. (எ) நீதி.உச.உஉ. (அ) சங்.சக.ரு,எ. யோபு.யச.ரு. (யக) சங்.ருய.உக. எசா.உசு.ய. (யஉ) எசா.சுரு.உய. ரோ.உ.ரு. நீதி.க.ஙஉ,ஙங. எசா.ஙய,யக. மத். உரு.ஙச,சக.(யச)சங்.எங.யங. (யஎ) யோபு.ரு.கூ. ரோ.யக.ஙங. சங்.எங.யச.—(கூ. அதி. உ.) யோபு.உக.எ. சங். எங.௯,யஉ,யச. மல்.ங.யரு. (ரு) யோபு.யச.உக. எசா.சுங.யசு. யோபு.எ.அ,கூ,ய. எசா.உசு.யச.

அ அங்கிகரிக்கிறார்.—உன்வஸ்திரங்கள்எப்பொழு
தும் வெண்மையாயிருக்கக்கடவன; உன்தலை
கூ யில் எண்ணெய்குறையாதிருக்கக்கடவது.—சூரி
யனுக்குக்கீழே அவர் தந்தமாயையான உன்சீவி
யநாளெல்லாவற்றிலும்,உன்மாயையுள்ள எல்லா
நாட்களிலும், நீ உன்பிரியமனைவியுடன்சந்தோ
ஷமாய் நாள்விடு: சூரியனுக்குக்கீழே இவ்வாழ்
விலே நீ படும் பிரயாசத்தின் பலன் இதுவே.—
௰ நீ கையிடுகிற எந்தக்கிரியையையும்முயற்சியோ
டேசெய்; நீ போகிற பிரேதவறையிலே செய்
கையும், உபாயமும், அறிவும், ஞானமுமில்லை.
௰க வேகமுள்ளவர்களுக்குப் பந்தயமில்லை, ப
ராக்கிரமசாலிகளுக்குச் செயமில்லை, ஞானி
களுக்கு அன்னமும், புத்திமான்களுக்குச் செல்
வமும், வித்துவான்களுக்குத் தயையு மில்லை;
நான்திரும்பிச் சூரியனுக்குக்கீழே இதைக்கண்
டேன்,சகலருக்குஞ்சமயமுந்தேவசெயலுமுண்
௰உ டு.—மனுஷன்தன்காலத்தை அறியான்: மச்சங்
கள்தீயவலையில் பிடிக்கப்படுவதும், பறவைகள்
கண்ணியில் அகப்படுவதும்போல, மனுபுத்திர
ரும்சடிதியில்தங்களுக்குநேரிடும்ஆபத்தில்அகப்
படுகிறார்கள்.
௰௩ சூரியனுக்குக்கீழே நான்ஞானமுள்ளகாரியத்
தைக் கண்டேன், அது எனக்குப் பெரிதாகத்
௰௪ தோன்றிற்று:—கொஞ்சச்சனம்வசித்த ஒருசி
று நகரத்துக்குவிரோதமாக ஒருபெரிய இராசா
வந்து,அதைவளைத்துக்கொண்டு, அதற்கெதிராக
௰௫ ப்பெரியகொத்தளங்களைக் கட்டினான்.—அதிலே
தரித்திரனான ஒரு ஞானவானிருந்தான், அவன்
தன்ஞானத்தினால் அந்தநகரத்தையிரட்சித்தான்;
ஆனாலும் அந்தத்தரித்திரனை ஒருவரும் நினைக்க
௰௬ வில்லை,—அந்தத்தரித்திரனுடைய ஞானம் அவ
மதிக்கப்படாமலும், அவன் வாக்குகள் கேட்கப்
படாமலுமிருந்தும், வல்லமையிலும் ஞானமே
௰எ உத்தமமென்றேன்.—மதியீனருக்குள் ஆளுகிற
வன்இடும் உரத்தசத்தத்திலும்,ஞானவானுடைய
அமைந்தவாக்குகள் மதிக்கப்படத்தக்கவைகள்.-
௰அ யுத்த ஆயுதங்களிலும் ஞானமே உத்தமம்:ஒருபா
வியோ மிகுந்தநன்மையைக் கெடுப்பான்.

## ௰. அதிகாரம்.

க. ஞானத்தையும்அஞ்ஞானத்தையும்பற்றிப்புத்தி
போதித்தல்: ௰௬. இராசாக்களைக்குறித்துச் சில
விசேஷந்தெரிவித்தல்.

செத்த ஈகள்தைலக்காரனுடைய சுகந்ததைலந்
துர்க்கந்தம்வீசப்பண்ணும். ஞானத்திலும்கீர்த்தி
யிலும்பேர்பெற்றவனை அற்பமதியீனமும் அப்ப
உ டியேசெய்யும்.-ஞானியின்இருதயம்அவனுடை
ய வலப்பக்கத்திலும், மூடனுடையஇருதயமோ
அவனுடையஇடப்பக்கத்திலும்இருக்கின்றன.-
௩ மூடன்வழியிலேசெல்லும்பொழுது அவனுடை
யபுத்தி அற்றுப்போகும், நான் மூடனென்று அ
வன் எவர்களுக்குஞ் சொல்லுகிறான்.—அதிபதி ௪
யுடையமனம் உன்மேற்கோபங்கொண்டாலும்,
நீ உன்ஸ்தானத்தைவிடாதே; இணங்குதல்பெரி
யகுற்றங்களைமாற்றும்.-அதிபதியிடத்தில்தோன் ௫
றும்பிழை ஒருதீமையாகும்: சூரியனுக்குக்கீழே
நான் அதைக்கண்டேன்.—மூடர் மகா உயரங்க ௬
ளில் உயர்த்தப்படுகிறார்கள், செல்வருந் தாழவி
ருக்கிறார்கள்.—பணிவிடைக்காரர் குதிரைகள் எ
மேல் ஏறிப்போகவும், பிரபுகள் பணிவிடைக்
காரரைப்போலப் பூமியின்மேல் கால்நடையாய்
நடக்கவுங்கண்டேன்.—குழியைத்தோண்டுகிற அ
வன் அதிலேவிழுவான்; வேலியைப் பிடுங்குகி
றவனைச்சருப்பங்கடிக்கும்.—கற்களைப்பேர்க்கி கூ
றவன்அவைகளினாற்காயப்படுவான்; மரத்தைப்
பிளக்கிறவன் அதினால்மோசப்படுவான்.-மழுங் ௰
கலான இருப்பாயுதத்தைத்தீட்டாமல்விட்டால்
அதிகபெலத்தைப்பிரயோகிக்கவேண்டும்:வகை
யுணர்த்துவதற்குஞானமேஉத்தமம்.—மந்திரவித் ௰க
தையில்லாதிருந்தாலுஞ் சருப்பங்கடிக்குமே; அ
திலும் அலப்புவாயன் நல்லவனல்ல.—ஞானவா ௰உ
னுடைய வாயின் வாக்குகள் தயைபொழியும்;
பேதையின் உதடுகளோ அவனைவிழுங்கும்.—
அவன்வாயின் வாக்கின் ஆரம்பம் பேதைமை: ௰௩
அவன்வாக்கின்முடிவு தீமை மூட்டுகிற மதியீ
னம்.—மூடன்பிதற்றுகிறான், பின் சம்பவிக்குங் ௰௪
காரியமின்னதென்று ஒருவனும் அறியான்; த
னக்குப்பின்வருங்காரியமின்னதென்றுஅவனுக்
குத்தெரிவிக்கிறவன் யாவன்.—அஞ்ஞானியின் ௰௫
கிரியை யாவரையும் இளைக்கப்பண்ணும், நகரத்
திற்குப்போகும்வழியை அவன் அறியான்.
ஆ, தேசமே, உன் இராசா பாலகனாகவும், ௰௬
உன்அதிபதிகள்அதிகாலையிற்புசிக்கிறவர்களாக
வுமிருந்தால், உனக்குத்தாழ்ச்சிவரும்.—தேசமே, ௰எ
உன் இராசா குலமகனும், உன்அதிபதிகள் வெ
றிக்காகவல்ல, பலத்தினிமித்தந் தகுந்தசமயத்
திலே புசிக்கிறவர்களுமாயிருந்தால் நீவாழ்வுபெ
றுவாய்.
சோம்பலின் மிகுதியினால் மேல்மச்சு உக்கிப் ௰அ
போகும்;கைகளின்நெகிழ்வினாலேவீடுஒழுகும்.
சந்தோஷத்திற்குவிருந்துபண்ணுகிறார்கள்,தி ௰கூ
ராட்சரசம்சீவனுள்ளோரைக்களிப்பிக்கும்,பண
மோ எல்லாவற்றிற்கும் நிருவாகஞ்செய்யும்.
உன்மனதிலும் இராசாவை நிந்திக்கலாகாது; உ௰
உன்பள்ளியறையிலுஞ் செல்வரைப்பழிக்கலா
காது:ஆகாயத்துப்பறவை அந்தச்சத்தத்தைக்கொ
ண்டுபோகும்,சிறகுகளையுடையது அந்தவாக்கை
த்தெரிவிக்கும்.

## ௰க. அதிகாரம்.

க. சாவதானமும், உதாரகுணமும்வேண்டுமெனக்
காட்டல்: எ. வாலிபப்பிராயம் மாயையென
விளக்கல்.

(௰க) ஆமோ.உ.௰௪,௰௫. எரே.கூ.உ௩. (௰உ) அதி.அ.எ. நீதி.உகூ.௬. லூக்.௰உ.உ௰,௩கூ. க.தெச.௫.௩. (௰௬) நீதி. உக.உஉ. மாற்.௬.உ. (௰அ) யோசு.எ.௰,௰க,௰உ.—(௰. அதி. ௩.) நீதி.௰௩.௰௬. (௪) க.சாமு.உ௫. உ௪,. நீதி.உ௫.௰௫. (௬) எஸ்த.௩.க. (எ) நீதி.௰கூ.௰. (அ) சங்.எ.௰௫. நீதி.உ௬.உஎ.(௰க)சங்.௫அ.௪,௫. எரே.அ.௰எ. (௰உ) நீதி.௰.௩உ. நீதி.௰.௰௪.(௰௪)நீதி.௰௫.உ.(௰௬) ஏசா.௩.௪,௫,௰உ.(௰எ)நீதி.௩க.௪.(உ௰)யாத்.உஉ.உஅ. அப்.உ௩.௫.—(௰க.அதி.)

சலமுகத்தின்மேல்,உன்ஆகாரவிதையைவிதை:
நெடுநாளைக்குப்பின் அதின்பலனைக்காண்பாய்.-
௨ ஏழுபேருக்கும் எட்டுப்பேருக்கும் பங்குகொடு;
பூமியின்மேல்வரும் ஆபத்து இன்னதென்று நீ
௩ அறியாய்.—மேகங்கள் நீர் நிறைந்திருந்தால்பூமி
யின்மேற் சொரியும்: மரம் தென்றிசையிலாவ
து, வடதிசையிலாவது விழுந்தால் விழுந்த இ
௪ டத்திலே கிடக்கும்.—காற்றைப் பார்க்கிறவன்
விதைக்கமாட்டான்;மேகங்களைநோக்குகிறவன்
௫ அறுக்கமாட்டான்.–நீ ஆவியின்தன்மையையும்,
கருப்பவதியின்கருப்பத்திலுள்ளஎலும்புகள்வள
ரும் விதத்தையும் அறியாததுபோல, எல்லாவற்
றையுஞ் சிருஷ்டிக்கிற தேவனுடைய கிரி
௬ யைகளை நீ அறியமாட்டாய்.—காலையில்உன்வி
தையைவிதை, மாலையில் உன் கை நெகிழவிடா
தே: இதோ அதோ பலிக்குமென்றும், இரண்டும்
நலமாகுமோவென்றும் நீ அறியாய்.
௭ ஒளியே இனிமை, சூரியனைக்காண்பது கண்
௮ களுக்குப்பிரியம்.—ஒருவன் அநேகவருஷஞ் சீ
வித்து, அவைகளெல்லாவற்றிலும் மகிழ்ச்சியா
யிருந்தாலும், அவன் இருளின் நாட்களை நினைக்
கக்கடவன்; அவைகள் அநேகம். வருவதெல்
லாம் மாயை.
௯ வாலிபனே, உன்வாலிபத்தில் சந்தோஷப்
படு; உன் இளம்பிராயத்தில் உன் இருதயம் உன்
னைக் களிகூரப்பண்ணட்டும், உன் மனதின்வழி
யிலும்,உன் கண்காட்சிக்குரியவைகளிலும்நட:
ஆனாலும்இவையெல்லாவற்றையுங்குறித்துத்தே
வன் உன்னை நியாயம்விசாரிப்பாரென்றறி.—
௰ உன் இருதயத்தினின்று சஞ்சலத்தைநீக்கு, உன்
மாமிசத்தினின்று தீமையை அகற்றிவிடு: சிறுபி
ராயமும் வாலிபமும் மாயை.

## ௰௨. அதிகாரம்.

௧. விருத்தாப்பியத்தில் வருந்துக்கத்தை வருணித்
தல்: ௮. தேவனைப் பற்றும்பயம் முக்கியமெ
னத்தெரிவித்தல்.

நீ உன்வாலிபப்பிராயத்தில்உன்சிருஷ்டிகர்த்தா
வைநினைத்துக்கொள்,ஆபத்துக்காலம்வருமே,இ
தில் எனக்கு ஒருசந்தோஷமுமில்லையென்று நீ
சொல்லத்தக்கவருஷங்களுஞ் சமீபித்துவருகின்
௨ றன.—அக்காலத்திற்சூரியனும், ஒளியும், சந்திர
னும்,நட்சத்திரங்களும் இருண்டுபோகும், மழை
க்குப்பின்பு மேகங்கள் திரும்பிவரும்:—அந்நா ௩
ளில்வீட்டுக்காவலாளர் நடுங்குவார்கள், பராக்கி
ரமசாலிகள் குனிவார்கள்,அரைக்கிறவர்கள் சில
ரானபடியால் ஓய்ந்திருப்பார்கள், பலகணிவழி
யாய்ப்பார்க்கிறவர்கள் இருண்டிருப்பார்கள்.—
தெருவாசற்கதவுகள் அடைக்கப்படும், அரைக்கி ௪
றவர்களின் சத்தந் தணிந்துபோகும், குருவியி
ன்சத்தத்துக்கு எழுந்திருப்பான், வாத்தியத்தின்
கன்னியர் எல்லாரும்மெலிவடைவார்கள்;—உ ௫
யர்ந்தஸ்தானத்திற்குப் பயப்படுவார்கள், வழியி
லே பயமிருக்கும், வாதுமைவிருட்சங்கள் புஷ்
பிக்கும், வெட்டுக்கிளியுஞ்சுமையாகும், போச
னப்பிரியம்அற்றுப்போகும்: மனுஷன்தன் நித்தி
யவாசஸ்தானத்துக்குப்போகிறான்,புலம்புவோர்
வீதியிலே திரிவார்கள்.—அச்சமயத்தில் வெள் ௬
ளிநூல்இளகிவிடும்,பொற்கிண்ணி தகர்ந்துபோ
கும்,ஊற்றின்கண்ணருகேகலசம்உடைந்துபோ
கும், நீர்நிலையருகே சக்கரம் முறிந்துபோகும்.—
தூள்முன்போல் மண்ணோடேசேரும்: ஆவிதன் ௭
னைத்தந்ததேவனிடத்தில்திரும்பிச்செல்லும்.
மாயையே மாயை; எல்லாமாயையென்று பிர ௮
சங்கி சொல்லுகிறான்.—பின்னும் பிரசங்கி ஞா ௯
னத்தில்அதிகரித்து, நித்தமுஞ்சனங்களுக்கு ஞா
னத்தைப்போதித்தான்; அவன் நன்றாய் ஆலோ
சித்துக்கேட்டாராய்ந்து, அநேகநீதிமொழிகளைத்
தொடுத்தான்.—பிரசங்கி இன்சொற்களைத்தேடி ௰
னான்: எழுதப்பட்டவாக்குகள் நேர்மையுஞ்சத்
தியமுமுள்ளன.—ஞானவானுடைய வாக்கியங் ௰௧
கள்தாற்றுக்கோலும், சங்கத்தலைவர்களாலேதைக்
கப்பட்ட ஆணியும்போலிருக்கின்றன; அவை
கள்ஒரேமேய்ப்பனால்அளிக்கப்பட்டன.-என்ம ௰௨
கனே, நீ இவைகளைக்கேட்டுச்சாவதானமாயிரு:
அநேகம்புத்தகங்களைச்செய்வதற்குமுடிவில்லை;
வித்தையில் அதிகமாக அப்பியாசித்தல் மாமிசத்
துக்குப்பிரயாசம்.
தேவன் சகலகிரியைகளையும், அந்தரங்கமா ௰௩
னஎந்தக்காரியத்தையும்,நன்மையானாலும் தீமை
யானாலும்,நியாயம்விசாரிப்பார்.-ஆதலால் கேட் ௰௪
டகாரியத்தின்அடக்கத்தையெல்லாங்கேட்போ
மாக: தேவனுக்குப் பயந்து, அவர்கட்டளைக
ளைக்காத்துக்கொள்ளுங்கள்: இதிலே மனுஷனு
டைய கடமை எல்லாம் அடங்கும்.

---

(௧) ஏசா.௩௨.௨௰. உபா.௰௫.௰. நீதி.௰௯.௰௭. மத்.௰.௪௨. ௨.கொரி.௯.௮. கலா.௬.௯,௰. எபி.௬.௰. (௨) சங்.௱௰௨.௯. லூக்.௬.௩௰. ௧.தீமோ.௬.௰௮,௰௯. மீகா.௫.௫. எபே.௫.௰௬. (௫) யோவா.௩.௮. சங்.௱௩௯.௰௪,௰௫. (௯) எண்.௰௫.௩௯. ரோ.௨.௬—௰௧. (௰) ௨.கொரி.௭.௧. ௨.தீமோ.௨.௨௨. சங்.௩௯.௫.—(௰௨. அதி. ௧.) நீதி.௨௨.௬. புல.௩.௨௭. (௪) ௨.சாமு.௰௯.௩௫. (௫) யோபு.௰௭.௰௩. எரே.௯.௰௭. (௭) ஆதி.௩.௰௯. யோபு.௩௪.௰௫. சங்.௯௰.௩. எண்.௰௬.௨௨. யோபு.௩௪.௰௪. ஏசா.௫௭.௰௬. சக.௰௨.௧. (௯) ௧.இரா.௪.௩௨. (௰௩) மத்.௰௨.௩௬. அப்.௰௭.௩௰,௩௧. ரோ.௨.௰௬. ௧.கொரி.௪.௫. ௨.கொரி.௫.௰. (௰௪) உபா.௬.௧.

# சலோமோனின் உன்னதகீதம்.

## ௧. அதிகாரம்.

கிறிஸ்துவில்சபைவைக்கிறஅன்பைவருணித்தல்
௨ சலோமோனின் உன்னதகீதம்.—அவர்தமதுவா
யினுல் என்னை முத்தமிடக்கடவர்: உமது அன்
௩ புதிராட்சரசத்திலும்அதிக இன்பமானது.-உமது
நாமம், உமது பரிமளதைலத்தின்வாசனைபோலி
ருக்கின்றது; அது ஊற்றப்பட்டபரிமளதைலமா
னபடியால் கன்னியர் உம்மைநேசிக்கிருர்கள்.-
௪ என்னை இழுத்துக்கொள்ளும், நாங்கள் உம்மைப்
பின்தொடருவோம்: இராசா என்னைத்தமது அந்
தரங்கமான அறையில் அழைத்துவந்திருக்கிருர்:
நாங்கள் உம்மைப்பற்றி மகிழ்ந்து களிகூரு
வோம், திராட்சரசத்தைப்பார்க்கிலும் உமதன்
பைப்புகழுவோம்: நேர்மையானவர்கள்உம்மை
நேசிக்கிருர்கள்.
௫ யெருஷலேமின் கன்னியரே, நான் கறுப்பா
னவளாயினும், கேதாரின் கூடாரங்களைப்போல
வும், சலோமோனின்தொங்குதிரைகளைப்போல
௬ வும் அழகுள்ளவளாயிருக்கிறேன்.-என்மேல்வெ
யிலெறிக்க, நான்கறுப்பாயிருக்கிறபடியினுல் எ
ன்னைப்பார்க்கவேண்டாம்: என் மாதாவின்பிள்
ளைகள் என்மேற்கோபங்கொண்டு,திராட்சத்தோ
ட்டங்களைக்காக்கும்படி வைத்தார்கள்; என்சுய
திராட்சத்தோட்டத்தையோ நான்காக்கவில்லை.
௭ என் ஆத்துமம் நேசிக்கிறவரே, உமதுமந்தை
யை எங்கேமேய்க்கிறீர்:அதைமத்தியானத்தில் எ
ங்கேமடக்குகிறீர்:எனக்குச்சொல்லும்:உமது கூ
ட்டத்தாருடைய மந்தைகளினருகே அலைந்து தி
ரிகிறவளைப்போலநான் இருக்கவேண்டியதேது.
௮ ஸ்திரிகளில் ரூபவதியே, உனக்குத்தெரியாதி
ருந்தால் மந்தையின் காலடிகளைப்பிடித்துத்தொ
டர்ந்துபோய், மேய்ப்பருடையகூடாரங்களண்
௯ டையில் உன் ஆட்டுக்குட்டிகளைமேயவிடு.—என்
பிரியமானவளே, நான் உன்னைப்பார்வோனின்
இரதத்திலேபூண்டகுதிரைக்கு ஒப்பிடுகிறேன்.—
௰ மாலைகளினுல்உன்கன்னங்களும்,சரப்பணிகளி
௰௧ னுல் உன்கழுத்தும் அழகாயிருக்கின்றன.—நாங்
கள் உமக்காக வெள்ளிப்பொட்டுப் பொருந்திய
பொன்மாலையை ஆயத்தப்படுத்துவோம்.
௰௨ இராசாதமதுபந்தியிலிருக்குஞ்சமயத்தில் என்
னுடைய நர்த்துதைலம் தன்வாசனையைவீசுகின்
௰௩ றது.—என்நேசர்வெள்ளைப்போளத்தின்செண்டு;
அவர் இராமுழுவதும் என்ஸ்தனங்கள் மத்தியில்
௰௪ சயனிப்பார்.—என்நேசர் எனக்கு ஐன்கெதித்தி
ராட்சத்தோட்டத்திலுள்ள கொப்பேர்க்கொத்து.
௰௫ கேள், என்பிரியமானவளே,நீரூபவதி;கேள்,
நீசௌந்தரியவதி; புருக்கண்ணையுடையவள்.
௰௬ கேளும், என் நேசரே, நீர் சௌந்தரியமுள்ள
வர்,இன்பகாரணர்; நம்முடையசயனம் பசுமை
௰௭ யானது.-நம்முடைய வீட்டின்உத்திரங்கள்எரஸ்
மரங்கள், நம்முடையவிசித்திரமச்சுத்தேவதாரு.

## ௨. அதிகாரம்.

கிறிஸ்துவுக்கும் அவர் சபையாருக்கும் உண்டா
னசம்பந்தத்தைத் தெரிவித்தல்.

நான்ஷாரோனின் கபத்சலெத்பூ,வெளியிலுள் ௧
ள ஓஷன்புஷ்பம்.
ஓஷன்புஷ்பம் முட்களுக்குள்ளே எபபடித் ௨
தோன்றுகின்றதோ, அப்படியே என்பிரியமான
வள் குமாரத்திகளுக்குள்ளேதோன்றுகிருள்.
வனவிருட்சங்களுக்குள்ளே தபுகாவிருட்சம் ௩
எப்படியிருக்கின்றதோ, அப்படியே குமாரர்க
ளுக்குள்ளே என் நேசர் இருக்கிருர். நான்மிகவு
மகிழ்ந்து அதின்நிழலில்இருந்தேன், அதின்கனி
என்வாய்க்குமதுரமாயிருக்கின்றது.—அவர் என் ௪
னைவிருந்துச்சாலையிற்கொண்டுபோய்விட்டார்,
அன்பென்னும் அவருடையகொடி எனக்குமே
லாகப்பறந்தது.—திராட்ச அதிரசங்களினுல் என் ௫
னைஆற்றுங்கள், தபுகாவிருட்சக்கனிகளைத்தந்து
என்னை ஆற்றுங்கள்: நான் அன்பினுற்சோர்ந்து
போகிறேன்.—அவர்இடக்கை என்தலையின்கீழ் ௬
வைக்கப்பட்டிருக்கின்றது, அவர்வலக்கை என்
னைத்தழுவிக்கொள்ளுகின்றது.—யெருஷலேமி ௭
ன்கன்னியரே, வெளிமான்களையும் வெளியின்
மறிகளையுங்கொண்டு நான் உங்களை ஆணையிடு
விக்கிறேன், என்அன்பர் பிரியங்கொள்ளுமுன்
நீங்கள் அவரையெழுப்பவும், விழிக்கப்பண்ண
வும் வேண்டாம்.
என் நேசரின்சத்தம்: அவர்மலைகள்மேல்குதித் ௮
தும், குன்றுகள்மேல் ஓடியும்வருகிருர், பாருங்
கள்.—என் நேசர்வெளிமானுக்கு, அல்லதுமரைக் ௯
குட்டிக்கொப்பாயிருக்கிருர்: பாருங்கள், எங்க
ள்மதிலுக்குப்புறம்பாக நிற்கிருர், பலகணிவழி
யாய்ப்பார்க்கிருர், சாலேகத்தின் வழியாய்த்தம்
மைக்காண்பிக்கிருர்.—என் நேசர்பேசத்தொடங் ௰
கினுர், என்பிரியமானவளே,என்ரூபவதியே, எ
ழுந்துவா.—பாருங்கள், சீதளகாலஞ் சென்றது, ௰௧
மாரி ஒழிந்துபோயிற்று.-நிலத்திலே புஷ்பங்கள் ௰௨
காணப்படுகின்றன; பறவைகள் பாடுங்காலம்
வந்தது, காட்டுப்புருவின்சத்தம் நம்முடையதே
சத்திற்கேட்கப்படுகின்றது.-அத்திமரங்காய்காய் ௰௩
க்கின்றது, பூத்துப்பிஞ்சுபிடித்ததிராட்சக்கொடி
வாசனைவீசுகின்றது. என்பிரியமானவளே,என்
ரூபவதியே, நீ எழுந்துவா.—என்புருவே, மலை ௰௪
களின் புகலிடங்களிலும், சிகரங்களின்மறைவி
லும் உன் முகதரிசனந்தா, நான் உன் வாக்கை
க்கேட்கப்பண்ணு; உன்வாக்கேயினிமை, உன்
முகமழகுள்ளது.—குழிநரிகளும், சிறுநரிகளும் ௰௫
திராட்சக்கொடிகளை நாசப்படுத்துகின்றன, எங்
களுக்காகஅவைகளைப்பிடியுங்கள்: நம்முடைய
திராட்சக்கொடிகள் பிஞ்சுபிடிக்கின்றன.
என் நேசர் என்னுடையவர், நான்அவருடை ௰௬
யவள்: அவர்ஓஷன்புஷ்பங்களுக்குள்ளேபுசிக்

---

(௧. அதி. ௧.) ௧.இரா.௪.௩௨.(௪)ஒசி.௰௧.௪. யோவா.௬.௪௪. பிலி.௩.௰௨,௰௩,௰௪. சங்.௪௫.௰௪,௰௫.யோவா.௰௪.௨. எபே.௨.௭. (௯) யோவா.௰௫.௰௪,௰௫. (௰) எசேக்.௰௬.௰௧,௰௨,௰௩.—(௨. அதி.௩.) வெளி.௨௨.௧,௨. (௬) அதி.௮.௩. (௰௫) சங்.௮௰.௰௩. எசேக்.௰௩.௪. லூக்.௰௩.௨.

௰௭ கிருர்.—என்நேசரே, சிகரங்களையுடைய மலைக
ளின்மேலுள்ள கலைமானையும் மரைக்குட்டியை
யும்போலத்திரும்பிவந்து, இராவிடிந்துநிழல்கள்
ஒழிந்துபோகும்வரைக்கும் என்னிடத்திலிரும்.

## ௩. அதிகாரம்.

*சபையாரின் துக்கத்தையும் கிறிஸ்துவின் சலாக்கியத்தையும் விளங்கக்காட்டல்.*

இரவிலே என்சயனத்தில்என்பிராணநேசரைத்
தேடினேன்: தேடியும் நான் அவரைக்காணவில்
௨ லை.—நான் எழுந்து நகரத்தின்வீதிகளிலும் சந்திக
ளிலுஞ் சுற்றித்திரிந்து, என்பிராணநேசரைத்தே
டுவேன்: நான் அவரைத்தேடினேன், காணவில்
௩ லை.—நகரத்தில்உலாவுங்காவலாளர்என்னைக்கண்
௪ டார்கள்.—நான் அவர்களைநோக்கி, என்பிராண
நேசரைக் கண்டீர்களாவென்றுகேட்டேன்: நா
ன்அவர்களைவிட்டுக் கொஞ்சந்தூரம்போனபின்
புஎன்பிராணநேசரைக்கண்டேன்: போகவிடா
மல்நான் அவரைப்பிடித்து, என்மாதாவின்வீட்
டில் என்சென்மஅறைக்குக்கொண்டுவந்தேன்.—
௫ யெருஷலேமின் கன்னியரே, வெளிமான்களை
யும் வெளியின்மறிகளையுங்கொண்டு நான் உங்க
ளைஆணையிடுவிக்கிறேன், என்நேசர்பிரியங்கொ
ள்ளுமுன்நீங்கள்அவரை எழுப்பவும், விழிக்கப்
பண்ணவும்வேண்டாம்.
௬ வெள்ளைப்போளமும், குந்துருவும்,வர்த்தகரு
டைய சகலவித வாசனைப்பொடிகளுமாகிய இ
வைகளினுற் செய்யப்பட்டதூபஸ்தம்பங்களைப்
போலவனத்தினின்றுவருகிறவர்யாவர்.
௭ பாருங்கள், அதுசலோமோனுடையசிவிகை;
இஸரவேலராகிய சௌரியவான்களில் அறுபது
பேர்பராக்கிரமசாலிகள் அதைச்சூழ்ந்திருக்கிருர்
௮ கள்.—அவர்களெல்லாருங் கட்கம் பிடிக்கிறவர்
கள், யுத்தத்தில்நிபுணர்: இரவிலேபயத்தினுல் அ
வர்கள்யாவருந்தங்கள்தங்கள்கட்கத்தை அரையி
௯ லேகட்டிக்கொள்ளுகிருர்கள்.—சலோமோன் இ
ராசா தனக்குலிபாேனுனின்மரத்தினுல் ஒருஇர
௰ தத்தைச் செய்வித்தான்.—அதின் ஸ்தம்பங்களை
வெள்ளியினுலும்,அதின்பாதங்களைத்தங்கத்தினு
லும், அதின்ஆசனத்தை இரத்தாம்பரத்தினுலுஞ்
செய்தான்; அதின் உட்புறத்திலேயெருஷலேம்
கன்னியரால் அன்புவிரிக்கப்பட்டிருக்கின்றது.
௰௧ சீயோன் கன்னியரே, நீங்கள் புறப்பட்டுப்
போய்,விவாகதினமாகியமனமகிழ்ச்சியின்நாளி
லே தன்மாதாவினுற் சூட்டப்பட்ட முடியோடி
ருக்கிற சலோமோன் இராசாவைப்பாருங்கள்.

## ௪. அதிகாரம்.

*கிறிஸ்துசபையில்வைக்குமன்பைவருணித்தல்.*

கேள், என்பிரியமானவளே, நீரூபவதி; கேள்,
நீ சௌந்தரியவதி; கூந்தல்மத்தியிலுள்ள உன்
கண்கள் புருக்கண்கள்போலிருக்கின்றன: உன்
தலைமயிர் கிலியாத் மலையில்மேயும்வெள்ளாட்டு
மந்தையைப்போலிருக்கின்றது.—உன் பற்கள் ம ௨
யிர்கத்திரிக்கப்பட்டு நீராடிவந்தவைகளும், ஒன்
ருயினும் மலடாகாமல்இரட்டைக்குட்டியீன்ற
வைகளுமான ஆட்டுமந்தையைப்போலிருக்கின்
றன.—உன்னுதடுகள் சிவப்பு நூலைப்போலிருக் ௩
கின்றன, உன்வாக்கு இனிது: உன்கூந்தலின்கீ
ழுள்ள கன்னங்கள் மாதுளம்பழத்துண்டங்கள்
போலிருக்கின்றன.—உன்கழுத்து ஆயுதவீடாகக் ௪
கட்டப்பட்டு,ஆயிரம்பராக்கிரமசாலிகளுடைய
கேடகங்களைக்கொண்ட தாவீதின்கோபுரம்போ
லிருக்கின்றது.-உன்னிரண்டு ஸ்தனங்களும்,ஓ ௫
ஷன்புஷ்பங்களில்மேயும்இரட்டைப்பேருகிய
இரண்டு வெளிமான் குட்டிகளுக்குச்சமானம்.—
இராவிடிந்துநிழல்கள் ஒழிந்துபோகும்வரைக்கு ௬
ம், வெள்ளைப்போளமலைக்கும்குந்துருமலைக்கும்
போவேன்.-என்பிரியமானவளே, நீபூரணசௌ ௭
ந்தரியவதி; உன்னில்ஒருமாசுமில்லை.-என்மனை ௮
வியே, லிபாேனுனின்று என்னுடன்வா, அ
மாணு சிகரங்களினின்று, ஷினீர் எர்மோன் எ
ன்னும் மலையுச்சிகளின் கெபிகளினின்று, சி
விங்கிகளின் மலைகளினின்றுபார்.—என் ச ௯
கோதரியே, என் மனைவியே, நீ என் மனதைக்க
வர்ந்துகொண்டாய்; உன் கண்களிலொன்றினு
லும், உன் கழுத்திலுள்ள ஒருசரப்பணியினுலும்
என் இருதயத்தைக் கவர்ந்துகொண்டாய்.—ஆ, ௰
என் சகோதரியே, என் மனைவியே, உன் அன்
பு எவ்வளவு சிறந்தது; அது திராட்சரசத்திலும்
எவ்வளவு அதிகமதுரமுள்ளது; உன் தைலத்தி
ன் வாசனை சகல சுகந்ததிரவியங்களிலும் சிறந்
தது.—என் மனைவியே, உன்னுதடுகள்தேன்கூட் ௰௧
டின் ஒழுகலாயிருக்கின்றன: உன் நாவடியிலே
தேனும் பாலும் இருக்கின்றன; உன்வஸ்திரங்க
ளின்வாசனைலிபாேனுனின் வாசனைக்கொப்பா
யிருக்கின்றது.-என்சகோதரி, என் மனைவி, வே ௰௨
லிசூழ்ந்ததோட்டம்; அடைக்கப்பட்ட ஊற்று,
முத்திரையிடப்பட்ட நீரூற்றின்கண்.—உன்தோ ௰௩
ட்டம் மாதுளையும்,இனியகனியும், கர்ப்பூரமும்,
நர்த்தும்,—நர்த்துடன்குங்குமமும்; வசம்பும், க ௰௪
றுவாவும், சகலவிதசுகந்தவிருட்சங்களும்,வெள்
ளைப்போளமும், கரியபோளமும் முக்கியமான
சகல திரவியங்களுமுள்ள நந்தனவனமாயிருக்
கின்றது.—இந்தத்தோட்டத்தின்கிணறு சீவநீரூற் ௰௫
றின்கண்,அதின்நீரோடைகள்லிபாேனுனின்
றுவருகின்றன.
வாடையே, எழும்பு; தென்றலே, நீவா; என் ௰௬
தோட்டத்தில் வீசு, அப்பொழுது அதின் சுகந்தப்
பொருள்கள் வாசனைவீசும். என்நேசர் தமதுதோ
ட்டத்தில்தமது இனியகனிகளைப்புசிக்கக்கடவர்.

## ௫. அதிகாரம்.

*கிறிஸ்துவின்சபைதன்குறைவையுணர்ந்துசொல்லல்: கிறிஸ்துவின்சௌந்தரியத்தைவருணித்தல்.*

என்சகோதரியே, என்மனைவியே, நான் என் ௧

(௩. அதி. ௧.) ஏசா.௨௬.௯.—(௪. அதி. ௪.) நிகி.௩.௰௯. (௭) எபே.௫.௨௭. (௮) உபா.௩.௯. (௰௧) நீதி.௨௪.௰௩,௰௪. ஆதி.௨௭.௨௭. ஓசி.௰௪.௬,௭.(௰௫)யோவா.௪.௰.—(௫.அதி.௧.) லூக்.௰௫.௭,௰. யோவா.௰௫.௰௪.

தோட்டத்தில் வந்துவிட்டேன், என்வெள்ளைப்
போளத்தையும் சுகந்தரவியத்தையுஞ்சேர்த்துக்
கொண்டேன்; தேன்கூட்டோடே என்தேனை
உட்கொண்டேன்; என்திராட்சரசத்தையும்என்
பாலையுங்குடித்தேன்.
நேசரே, போசனம்பண்ணுங்கள்; என்பிரிய
மானவர்களே, நீங்கள் பூர்த்தியாய்ப்பானம்பண்
ணுங்கள்.
௨ நான் நித்திரைகொண்டேன், என்மனமோ வி
ழித்திருந்தது: என் நேசருடைய சத்தத்தைக்கே
ட்டேன், அவர் கதவைத்தட்டிஎன்சகோதரியே,
என்பிரியமானவளே, என் புறாவே, என்மாசற்ற
வளே,கதவைத்திற:என்தலை பனியினாலும், என்
தலைமயிர் இரவில் சொரிந்த தூறலினாலும்நிறைந்
௩ தனவென்றார்.—என் அங்கியைக் கழற்றினேன்;
இனி நான்எப்படித்திரும்பவும்உடுப்பேன்; என்
கால்களைச்சுத்திசெய்தேன்; திரும்பவும் அவைக
௪ ளைஎப்படி அசுசிப்படுத்துவேனென்றேன்.—என்
நேசர் தமது கையைக்கதவின் துவாரத்தால் உள்
ளேநீட்டினார்,அப்பொழுதுஎன்குடல்கள் குழம்
௫ பின.—என் நேசர் நிமித்தங்கதவுதிறக்க எழும்பி
னேன்; என்கைகள்வெள்ளைப்போளத்தைச்சொ
ரிந்தன, என் விரல்களினின்று வாசனைபொருந்
தியவெள்ளைப்போளம் பூட்டின்கைப்பிடியிலே
௬ சொரிய,—என்நேசருக்குக்கதவைத்திறந்தேன்;
என் நேசரோ புறப்பட்டுப்போய்விட்டார்: அ
வர்வாக்கை நினைந்துஎன்ஆத்துமம்சோர்ந்துபோ
யிற்று: அவரைத்தேடினேன்,காணவில்லை; அவ
ரைக்கூப்பிட்டேன், அவர் உத்தரங்கொடுக்கவி
௭ ல்லை.—நகரத்தில் உலாவிவருங் காவலாளர் எ
ன்னைக்கண்டு என்னை அடித்தார்கள், அவர்கள்
என்னைக்காயப்படுத்தினார்கள்; மதிற்காவலாளர்
என் முக்காட்டைப் பறித்துக்கொண்டுபோனார்
௮ கள்.—யெருஷலேமின் கன்னியரே, நீங்கள் என்
நேசரைக்கண்டால், நான் அன்பினால் சோர்ந்து
போகிறேனென்றுநீங்கள்அவருக்குச்சொல்லும்
படி உங்களைஆணையிடுவிக்கிறேனென்றேன்.
௯ ஸ்திரிகளுக்குள்ளே ரூபவதியே, மற்ற நேசரி
லும் உன் நேசர்எதினாலேவிசேஷப்பட்டவர்; நீ
எங்களைஆணையிடுவிக்க உன்நேசர்மற்றநேசரிலு
ம்எதினாலே விசேஷப்பட்டவரென்றார்கள்.
௰ என் நேசர் வெண்மையும் செம்மையுமான
௰௧ வர், பதினாயிரவரில் மாட்சிமையுள்ளவர்.—அ
வர் தலை தங்கம், அவர் தலைமயிர் சுருள்சுருளா
யிருக்கின்றது, அண்டங்காக்கையைப்போற் க
௰௨ றுத்தது.—அவர் கண்கள் பாலில்தோய்க்கப்பட்டு
நதியோரங்களில் பூரித்தமைந்து நிற்கும் புறாக்க
௰௩ ளின் கண்களுக்குச் சமானமாகின்றன.—அ
வர்கன்னங்கள்சம்பாரப்பாத்திகளைப்போலவும்,
வாசனையான புஷ்பங்களைப்பொலவுமிருக்கின்
றன: அவர் உதடுகள்லீலிபுஷ்பம்போலவாச
னைபொருந்திய வெள்ளைப்போளத்தைச் சொரி
௰௪ யும்.—அவர்கரங்கள்பத்மராகம்பதித்தபொன்மோ
திரங்களுக்குச்சமானமானவைகள்: அவர்வயிறு
நீலமணி பதித்த பிரகாசமான யானைத்தந்தத்துக்
குச்சமானம்.—அவர்கால்கள் பசும்பொற்பாதங்க ௰௫
ளின்மேல் நிற்கின்ற வெண்கற்றூண்களுக்குச்ச
மானமானவைகள்: அவர் முகப்பார்வை லிபா
னோனைப்போலவும், கேதுருமரங்களைப்போலவும்
உத்தமம்.—அவர்வாய் அதிமதுரம்: அவர்மிகவுஞ் ௰௬
சௌந்தரியமுள்ளவர். யெருஷலேமின்கன்னி
யரே, இவ்வண்ணமே என்நேசர், இவ்வண்ண
மே என் நண்பரென்றாள்.

## ௬. அதிகாரம்.

சபையின் மேன்மையைக்காட்டல்.

ஸ்திரிகளில்ரூபவதியே, உன்நேசர் எவ்விடத் ௧
திற்குப்போனார், உன் நேசர் எங்கேபோனார்;
நாங்களும் உன்னோடேகூடிஅவரைத்தேடுவோ
மென்றார்கள்.
நந்தனவனத்திற்போசனம்பண்ணவும், லீலி ௨
ன் புஷ்பங்களைக்கொய்யவும், என்நேசர் சுகந்த
விருட்ச புஷ்பங்கள் நிறைந்த தமது தோட்டத்
திற்குஞ் சம்பாரப்பாத்திகளுக்கும் போய்விட்
டார்.—நான் என் நேசருடையவள், என்நேசர் ௩
என்னுடையவர்: அவர் லீலிபுஷ்பத்துக்குள்
ளேபோசனம்பண்ணுகிறாரென்றாள்.
என்பிரியமானவளே, நீ திர்சாவைப்போலச் ௪
சுந்தரி, யெருஷலேமைப்போல ரூபவதி, கொ
டிப்படைபோலப் பயங்கரமானவள்.—என்னி ௫
லிருந்து உன்கண்களை மீட்டுக்கொள், அவைக
ளால்வசப்பட்டேன்: உன்தலைமயிர் கிலியாத்ம
லையில்மேயும் வெள்ளாட்டுமந்தையைப்போலி
ருக்கின்றது.—உன்பற்கள்,மயிர்கத்திரிக்கப்பட்டு ௬
நீராடிவந்தவைகளும், ஒன்றாயினும் மலடாகா
மல்இரட்டைக்குட்டியீன்றவைகளுமானஆட்டு
மந்தையைப்போலிருக்கின்றன.—உன் கூந்த ௭
லின்கீழுள்ளகன்னங்கள்மாதுளம்பழத்துண்டங்
கள்போலிருக்கின்றன.—இராசாத்திகள் அறுபது ௮
பேர், மறுமனையாட்டிகள்எண்பதுபேர், கன்னி
யருக்கோ தொகையில்லை.—என்புறாவோ, என் ௯
மாசற்றவளோ ஒருத்தி; அவள் தன்மாதாவுக்கு
ஒரே பிள்ளை, அவள் தன்னைப்பெற்றவளுடைய
அன்புக்குப் பாத்திரமானவள். கன்னியர் அவ
ளைக்கண்டு அவளைவாழ்த்தினார்கள்; இராசாத்திக
ளும்மறுமனையாட்டிகளும் அவளைப்போற்றினார்
கள்.—சந்திரனைப்போலச் சுந்தரியும், சூரியனைப் ௰
போலப் பிரகாசமுள்ளவளும், கொடிப்படை
யைப்போலப் பயங்கரமானவளுமாகி, விடியற்
காலத்தைப்போலஉதித்தவளாகியஇவள்யாவள்.
தாழ்ந்தபூமியிலுள்ள கனிகளைப்பார்க்கவும்,தி ௰௧
ராட்சக்கொடிசெழித்ததா, மாதளைபூத்ததாவென்
றறியவும் நான்வாதுமைத்தோட்டத்திற்குப்போ
னேன்.—அதினால் என்மனஞ்சடிதியில்என்னைஅ ௰௨
மீனாதிப்பின் இரதங்களைப்போலாக்கிற்று.—திரு ௰௩
ம்பு,திரும்பு,சூலாமித்தியே, நாங்கள் உன்னைப்
பார்க்கும்படி திரும்பு, திரும்பு. சூலாமித்தியில்
நீங்கள் என்னத்தைப் பார்க்கிறீர்கள்; இரண்டு
சேனையின் கூட்டத்துக்குச் சமானமானவள்.

(உ) வெளி.௩.௨௰.—(௬.அதி.௰௩.) ஆதி.௩௨.௨.

## எ. அதிகாரம்.

*சபையின் சௌந்தரியத்தை வருணித்தல்: கிறிஸ்துவில்வைக்கிற அன்பைக்காட்டல்.*

இராசகுமாரத்தியே, செருப்பிட்ட உன் பாதங்
கள் எவ்வளவு அழகாயிருக்கின்றன; உன் இ
டைநெளிவுவிசித்திரத்தொழிற்காரன்கைவேலை
௨ யாகிய பூஷணமாயிருக்கின்றது.—உன் தொப்
புள், திராட்சரசங் குறையாத வட்டமான பாத்
திரத்துக்குச் சமானம்: உன் உதரம்லீஷன் புஷ்
பங்கள் சூழ்ந்த கோதுமைக்குவியல்போலிருக்
௩ கின்றது.—உன்னிரண்டு ஸ்தனங்களும் இரட்
டைப்பேருகிய வெளிமான் குட்டிகளுக்குச் ச
௪ மானம்.—உன்கழுத்து யானைத்தந்தத்தினுற்செய்
தகோபுரம்; உன்கண்கள் பத்ரப்பீம்வாசலுக்குச்
சமீபமாயுள்ள எஷ்போனின் குளங்களுக்குச்
சமானம்: உன் மூக்குத்தமஸ்குவின் எதிர்ப்புறத்
திலுள்ள லிபானோனின் கோபுரத்தைப்போலி
௫ ருக்கின்றது.—உன்சிரசு கர்மேல் மலையைப்போ
லிருக்கின்றது, உன் கொண்டை தூமிரத்தினுல்
கட்டப்பட்டிருக்கின்றது; இராசாகொண்டைச்
சொருகிலே பரவசப்பட்டிருக்கிறுர்.
௬ இன்பத்தைத்தருகிறதற்கேற்ற என்பிரியமான
வளே, நீ எவ்வளவுசௌந்தரியவதி, எவ்வளவு இ
௭ ன்பகாரணி.—பனைமரம்போலஉன்னுயரம், திரா
௮ ட்சக் குலைகள்போல உன் ஸ்தனங்கள்.—நான்
பனைமரத்தில் ஏறுவேன், அதின் மடல்களைப்பி
டிப்பேன் என்றேன்: இப்பொழுது உன்னுடை
யஸ்தனங்கள் திராட்சக் குலைகள்போலிருக்கின்
றன, உன்மூக்கின் வாசனை தபுகாகனிக்குச்ச
௯ மானம்.—உன்மேல்வாய் என்நேசருக்காகவைத்
தநல்லதிராட்சரசம், அதுகுடிப்பவர்களுக்கு ரம்
மியத்தைத்தந்து, தூங்குகிறவர்களுடைய உதடு
களைப்பேசுவிக்கும்.
௰ நான் என் நேசருடையவள், அவர்விருப்பம்
௰௧ என்மேலிருக்கின்றது.—என்நேசரே, வயல்வெ
ளிக்குப்போவோம்வாரும்; கிராமங்களிலே தங்
௰௨ குவோம்.—திராட்சத்தோட்டத்திற்குப்போக அ
திகாலையில் எழும்புவோம்; திராட்சக்கொடிசெ
ழிக்கின்றதோ, அது காய்க்கின்றதோ, மாதளை
புஷ்பிக்கின்றதோ, பார்ப்போம்: அங்கே உமக்
௰௩ கு என்அன்பின் உசிதங்களைத்தருவேன்.—என்
நேசரே, தூதாயிம்கனிவாசனைவீசுகின்றது, எங்
கள் வாசலின் சமீபத்தில் பழயவைகளும் புதிய
வைகளுமாகிய அருமையான சகலவிதகனிகளை
யும் உமது நிமித்தம வைத்திருக்கிறேன்.

## அ. அதிகாரம்.

*சபைகிறிஸ்துவில்வைக்கிற அன்பையும்அவரிடத்தில்செய்கிற பிரார்த்தனையையுந்தெரிவித்தல்.*

நீர் என் மாதாவின் முலைகுடித்த என் சகோ
தரனைப் போலிருந்தீராஞல், நான் வெளியில்
உம்மைக்கண்டு முத்தமிட்டாலும் நிந்திக்கப்ப
டேன்.—நான் உம்மை நடத்தி எனக்குப் போ ௨
திக்கும்என் மாதாவின்வீட்டிலேகொண்டுபோய்
விடுவேன்: சுகந்த திரவியங்கலந்த திராட்சரசத்
தையும், என் மாதுளம்பழரசத்தையுங் குடிக்கத்த
ருவேன்.—அவருடைய இடதுகை என் தலையின் ௩
கீழிருக்க அவர் வலதுகை என்னைத்தழுவிக்கொ
ள்ளும்.—யெரூஷலேமின் கன்னியரே, என்நே ௪
சர் பிரியங்கொள்ளுமுன், நீங்கள் அவரைஎழுப்
பவும், விழிக்கப்பண்ணவும் வேண்டாமென்று
உங்களை ஆணையிடுவிக்கிறேன்.
தன்நேசர்மேற்சாய்ந்துகொண்டுவனத்தினின் ௫
றுவருகிறஇவள்யாவள்; நான் தபுகா விருட்சத்
தின் கீழ் உன்னை எழுப்பினேன்: அங்கே உன்
மாதா உன்னைப்பெற்ருள்: அங்கேபெறவாதைப்
பட்டு உன்னைப்பெற்ருள்.
நீர் உமது இருதயத்தில் முத்திரையாகவும், உ ௬
மது புயத்தில்முத்திரையாகவும் என்னைவைத்துக்
கொள்வீராக: அன்புமரணத்தைப்போல வல்ல
மையுள்ளது; அன்பின் குரோதம் மயானஸ்தா
னத்தைப்போலக் கடினமுள்ளது: அதின் தணல்
அக்கினித்தணல்போலவும், அதின் சுவாலை ஆ
காயத்தின் மின்னலைப்போலவுமிருக்கின்றது.
மிகுந்த சலங்களும் அன்பைத் தணிக்கமாட் ௭
டாது, வெள்ளங்களும் அதை அமிழ்த்தமுடியா
து: ஒருவன் அன்பினிமித்தம் தன்வீட்டிலுள்ள
எல்லாப்பொருள்களையும் செலவழித்தாலும் அ
வன்அலட்சியம் பண்ணப்படுவான்.
நமக்கு ஸ்தனமில்லாதசிறிய ஒரு சகோதரியு ௮
ண்டு: நம்முடைய சகோதரிக்காகப்பேசும் நா
ளில் அவளுக்கு என்னசெய்வோம்.
அவள் அஸ்திபாரமானுல், அவள்மேல் வெள் ௯
ளிஅரமனை கட்டுவோம்: அவள் வாசலானுல், ஏ
ரஸ்மரத்தினுற்செய்த ஒரு கதவையிடுவோம்.
நானே அஸ்திபாரம், என்ஸ்தனங்கள்கோபுரங் ௰
கள்: ஆதலால் அவருடைய கடாட்சம் பெற்
றேன்.—பாகால்ஏமோனில் ஆட்களிடத்தில் ஒப் ௰௧
பிக்கப்பட்ட ஒரு திராட்சத்தோட்டஞ் சலோ
மோனுக்குண்டு; அதின்பலனுக்காக ஒவ்வொரு
வன் ஆயிரம்வெள்ளிக்காசுகொண்டுவருவான்.—
என்திராட்சத்தோட்டம் எனக்குமுன்பாகஇருக் ௰௨
கின்றது: சலோமோனே, உமக்கு அந்த ஆயிர
மும், அதின்பலனைக்காக்கும் ஆட்களுக்கு இரு
நூறுங்கிடைக்கும்.
தோட்டங்களில்வாசம்பண்ணுகிறவளே, தோ ௰௩
ழர்கள்உன்வாக்குக்குச்செவிகொடுப்பார்கள்: நா
னும்அதைக்கேட்கப்பண்ணு.
என் நேசரே, விரைந்து வாரும், சுகந்ததிரவி ௰௪
யங்களையுடைய மலைகள்மேலுள்ள வெளிமானை
யும்மரைக்குட்டியையும்போல விரைந்துவாரும்.

---

(எ. அதி. ௧.) சங்.௪௫.௰௩. (௰) சங்.௪௫.௰௧. (௰௩) ஆதி.௩௰.௰௪. மத்.௰௩.௫௨.—(அ. அதி. ௨.) நீதி.௯.௨. (௬) ஏசா. ௪௯.௰௬. எரே.௨௨.௨௪. ஆகா.௨.௨௩. (௭) நீதி.௬.௩௫. (௮) எசேக்.௨௩.௩௩. (௰௧) மத்.௨௧.௩௩. (௰௩) அதி.௨.௰௪. (௰௪) வெளி.௨௨.௰௭,௨௰.

# ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகம்.

## க. அதிகாரம்.

க. யூதாவின் பாவத்தைக்குறித்துப் புலம்பல்: ரு. பாவத்தால் வருந் தண்டனை யிதுவெனக்காட்டல்: ய. கள்ளமானபத்திவேஷத்தைக்கண்டித்தல்: யசு. பாவத்தைவிட்டுத்திரும்பும்படிஏவல்: உக. சனங்கள்செய்த பாவங்களை விவரித்தல்: உரு. நல்லோர்வாழ்வுந்தீயோர்தாழ்வுமடைவார்களென்று காட்டல்.

யூதாதேசத்து இராசாக்களாகிய ஊசியா, யோ
தாம், ஆகாஸ், இஸ்கியாவென்னுமிவர்கள்காலத்
தில், ஆமோத்சின்புத்திரனாகிய ஏசாயா, யூதாவை
யும் யெருஷலேமையுங் குறித்துக்கண்ட தரிச
உ னம்.—வானமே, கேள், பூமியே, செவிகொடு;
யெகோவா வசனிக்கிறார், நான் பிள்ளைகளை
ஆதரித்துவளர்த்தேன்,அவர்கள் என்கட்டளைக்க
௩ மையாமல்வழுவினார்கள்.—மாடு, தன்னையுடைய
வனையும், கழுதை,தன் எசமானன்வைத்ததொட்
டியையும் அறியும்: இஸரவேலோ என்னை அறி
யான், என் சனம்மாத்திரஞ்சிந்திக்கிறதில்லை.—
௪ ஆ, பாவமுள்ளசாதி, பாவப்பாரஞ்சுமந்த சனங்
கள், துர்க்கருமஞ்செய்கிற சந்ததி, கெட்டபுத்
திரர்:அவர்கள் யெகோவாவைவிட்டார்கள்,
இஸரவேலின் பரிசுத்தரைக் கோபப்படுத்தினார்
கள், அவரிடத்தில் பராமுகமானார்கள்.
ரு இன்னும் நீங்கள் அடிக்கப்படவேண்டியதெ
ன்ன; பின்னும் நீங்கள் அதிகம்விலகிப்போவீர்
கள்: தலையெல்லாம் நோய்படுகின்றது, இருதய
௬ மெல்லாஞ் சோர்ந்துபோயிற்று.—உள்ளங்கால்
தொடங்கித் தலைமட்டும் அதிலே சொஸ்தமில்
லை; அது காயமும், வீக்கமும், அழுகியபுண்ணு
முள்ளது: அது சீபிதுக்கப்படாமலும், கட்டப்
படாமலும், எண்ணெயினால் ஆற்றப்படாமலும்
எ இருக்கின்றது.—உங்கள் தேசம் பாழாய்க்கிடக்
கின்றது, உங்கள் பட்டணங்கள்அக்கினியினால்
சுடப்பட்டன: உங்கள் நாடோ, அந்நியர் அ
தை உங்களுக்குமுன் பட்சிக்கிறார்கள், அந்நிய
ராற் கவிழ்க்கப்பட்ட பாழ்ந்தேசம்போலிருக்கி
அ ன்றது.—சீயோன்குமாரத்தி, திராட்சத்தோட்டத்
திலுள்ளகுடிலும், வெள்ளரித்தோட்டத்திலுள்ள
குடிசையும், முற்றிக்கைபோடப்பட்ட நகரமு
௯ ம்போலக் கைவிடப்பட்டாள்.—சேனைபதியா
கிய யெகோவா நமக்குச் சிலர் மீந்திருக்கவி
டாமலிருந்தாராகில், நாம் சோதோமைப்போல
இருப்போம், கொமோராவுக் கொப்பாவோம்.
சோதோமின் அதிபதிகளே, யெகோவா ௰
வின் வாக்கைக்கேளுங்கள்; கொமோராவின் ச
னங்களே, நமது தேவனுடைய பிரமாணத்
துக்குச்செவிகொடுங்கள்.—உங்கள் பலிகளின் ௰க
திரள் எனக்கேதென்று யெகோவா சொல்லு
கிறார்: நீங்கள் தகனிக்கும் ஆட்டுக்கடாக்களினா
லும், புஷ்டியான மிருகத்தின்நிணத்தினாலும் எ
னக்கு அரோசியமுண்டாயிற்று; காளைகள், ஆட்
டுக்குட்டிகள், ஆட்டுக்கடாக்கள் என்னுமிவை
களினிரத்தத்தில் எனக்குப்பிரியமில்லை.-நீங்கள் ௰உ
என்சந்நிதியில் காணப்படும்பொழுது என் பிரா
காரங்களில்வரவேண்டுமென்று உங்களிடத்தில்
அதைக்கேட்டவர்யாவர்.—இனிவீண் நைவேத் ௰௩
தியங்களைக்கொண்டுவரவேண்டாம்; தூபம் எ
னக்கருவருப்பானது; அமாவாசியையும், ஓய்வு
நாளையும், வரவழைக்கப்பட்ட சபையையும் நா
ன்சகிக்கமாட்டேன்; ஆசரிப்புநாளும்விசனம்.—
உங்கள் அமாவாசிகளையும் நியமிக்கப்பட்டஉங் ௰௪
கள் உற்சவங்களையும் எனதுள்ளம் வெறுக்கின்ற
து: அவைகள்எனக்குவருத்தமாயிருக்கின்றன;அ
வைகளைச்சுமந்து இளைத்தேன்.-நீங்கள்உங்கள்கை ௰ரு
களை விரிக்கும்பொழுது நான் உங்களுக்கு என்
கண்களைமூடுவேன்:நீங்கள்மிகுந்தபிரார்த்தனைக
ளைப்பண்ணினாலும் நான்செவிகொடேன்: உங்
கள் கைகள் இரத்தத்தினால்நிறைந்திருக்கின்றன.
நீங்கள் ஸ்நானம்பண்ணி உங்களைச்சுத்திசெய் ௰௬
யுங்கள்;என்பார்வையினின்றுஉங்கள்பாவக்கிரி
யையை அகற்றி,துர்க்கிரியையைத்தள்ளிவிடுங்க
ள்.-நன்மைசெய்யும்படிபயிலுங்கள்;நியாயத்தை ௰எ
த்தேடி, உபத்திரவப்பட்டவர்களுக்குத் துணைநி
ன்று, அநாதபிள்ளைகளுக்குநியாயஞ்செய்து,வித
வையின்வழக்கைவிசாரியுங்கள்.—நாம் வழக்கா ௰அ
டுவோம்,வாருங்களென்று யெகோவா சொல்
லுகிறார்: உங்கள் பாவங்கள் இரத்தவருணமாயி
ருந்தாலும்உறைந்தமழையைப்போல்வெண்மை
யாகும்; அவைகள் இரத்தாம்பரத்தைப்போலச்சி
வப்பாயிருந்தாலும்பஞ்சியைப்போலாகும்.—நீங் ௰௯
கள் மனம்பொருந்திக்கட்டளைக்கமைந்தால்,தே
சத்தின் நன்மையை அனுபவிப்பீர்கள்:—உடன் உ௰
படாமலும் கட்டளைக்கமையாமலும் இருப்பீர்க
ளானால் கட்கத்திற்கிரையாவீர்கள்: யெகோ
வாவின் வாய் இவ்வாக்கை வசனித்தது.

(க. அதி. க.) எண்.௰உ.௬. (உ) உபா.௩உ.க. எரே.உ.௰உ. மீகா.க.உ. அதி.ரு.க,உ. (௩) எரே.அ.எ. எரே.௯.௩,௬. (௪) அதி.ருஎ.௩,௪. மத்.௩.எ. சங்.ருஅ.௩. (ரு) அதி.௯.௰௩. எரே.உ.௩௰. (௬) எரே.அ.உஉ.(எ)உபா.உஅ.ருக,ருஉ. (அ) யோபு.உஎ.௰அ. புல.உ.௬. எரே.௪.௰எ.(௯)புல.௩.உஉ. ரோ.௯.உ௯. ஆதி.௰௯.உ௪.(௰)உபா.௩உ.௩உ. எசேக். ௰௬.௪௬. (௰க) க.சாமு.௰ரு.உஉ. சங்.ரு௰.அ,௯. நீதி.உக.உஎ. எரே.எ.உக. ஆமோ.ரு.உக,உஉ. மீகா.௬.எ. (௰உ) யாத்.உ௩.௰எ. (௰௩) மத்.௰ரு.ரு. யோவே.க.௰௪. (௰௪) எண்.உஅ.௰க. புல.உ.௬. (௰ரு) யோபு.உஎ.௯. நீதி.க.உஅ. எரே.௰௪.௰உ. மீகா.௩.௪. க.தீமோ.உ.அ. (௰௬) எரே.௪.௰௪. சங்.௩௪.௰௪. ஆமோ.ரு.ரு. ரோ.௰உ.௯. க.பேதுரு.௩. ௰க. (௰எ) எரே.உஉ.௩,௰௬. மீகா.௬.அ. சக.எ.௯. (௰அ) அதி.௪௩.உ௬. மீகா.௬.உ. சங்.ருக.எ. வெளி.எ.௰௪.(உ௰) எண்.உ௩.௰௯. தீத்.க.உ.

௨௧ ஆ, உண்மையுள்ளநகரி எப்படிவேசையாயிற்
று, அதுநியாயத்தினால் நிறைந்திருந்தது; அதிலே
நீதி தங்கியிருந்தது; இப்பொழுதோ கொலைபா
௨௨ தகர்.—உன் வெள்ளி களிம்பாயிற்று, உன்திராட்
௨௩ சரசம் சலத்தோடேகலக்கப்பட்டது.—உன் அதி
பதிகள் கட்டளையைமீறித் திருடருக்குக்கூட்
டாளிகளானார்கள்: எவனும் பரிதானத்திலே பி
ரியப்படுகிறான், கைக்கூலியை நாடுகிறான்: அ
வர்கள் அநாதபிள்ளைகளுக்கு நியாயஞ்செய்கிற
தில்லை, விதவையின் வழக்கு அவர்களைஅணுகு
௨௪ வதில்லை.—ஆதலால் சேனைபதியாகிய யெகோ
வாவும் இஸ்ரவேலின்வல்லவருமான ஆண்ட
வர் ஆ, நான் என்விரோதிகளைத்தண்டித்து ஆறி
யிருப்பேன், என் சத்துருக்களிடத்திற்பழிவாங்
குவேன்.

௨௫ நான் திரும்பவும் என்கையை உன்மேல்வைத்
து, உன்னைப்புடமிட்டுக் களிம்பைநீக்கி, உன்க
௨௬ லப்புமுழுவதையும் அகற்றுவேன்.—உனக்குப்
பூருவகாலத்திலிருந்ததுபோல நியாயாதிபதிகளை
யும், ஆதியிலிருந்ததுபோல உனக்கு ஆலோசனை
க்காரரையும் திரும்பவுந்தருவேன்: பின்பு நீ த
ருமபுரமென்றும்,சத்தியநகரமென்றும்பெயர்பெ
௨௭ றுவாய்.—சீயோன் நியாயத்தினாலும், அதின்மீண்
டுவருபவர்கள் நீதியினாலுமீட்கப்படவேண்டும்.
௨௮ அதிக்கிரமக்காரரும்,பாவிகளும் ஏகமாய்அழி
வார்கள், யெகோவாவுக்கு விலகினவர்கள்
௨௯ சேதிக்கப்படுவார்கள்.—நீங்கள் விரும்பின அல்
லோன் விருட்சத்தைக்குறித்து இலச்சையடை
வீர்கள், நீங்கள் தெரிந்துகொண்ட தோட்டங்க
௩௰ ளினிமித்தம் நாணுவீர்கள்.—இலைவாடின அல்
லோன்விருட்சத்திற்கும்,நீரில்லாத தோட்டத்தி
௩௧ ற்குமொப்பாவீர்கள்.-பராக்கிரமசாலிசணற்கூள
மாவான், அவன்செய்கை நெருப்புப்பொறிபோ
லாகும், இரண்டும் ஏகமாகவெந்துபோகும்,அவி
ப்பார் ஒருவருமில்லையென்றுசொல்லுகிறார்.

## ௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் இராச்சியத்தைக் குறித்தல்: ௬. யெகோவாவை விட்டு விலகினதினாலுண்டானதோஷத்தைக்காட்டல்: ௰. அவருடைய மகிமையினிமித்தம் அவருக்குப் பயப்படவேண்டுமெனவுணர்த்தல்.

ஆமோத்சின் புத்திரனாகிய ஏசாயாவிடத்தில்
யூதாவையும் யெருஷலேமையுங்குறித்து இந்த
௨ வாக்கியந் தெரிவிக்கப்பட்டது.—பின்வருங்கா
லத்தில் யெகோவாவுடைய வீடாகியமலை,
மலைகளின் உச்சியில் ஸ்தாபிக்கப்பட்டுக்குன்று
களுக்குமேலாய் உயர்த்தப்படும்; சருவதேசத்தா
ரும் அதற்கு ஓடுவார்கள்.—அநேகசனங்கள்புறப் ௩
பட்டு, யாக்கோபின் தேவனுடைய ஆலய
மிருக்கிற யெகோவாவின் மலைக்குப்போ
வோம், வாருங்கள்; அவர் தம்முடைய நெறிக
ளை நமக்குப்போதிப்பார், நாம் அவர்பாதைகளி
லே நடப்போம்: சீயோனினின்றுவேதப்பிரமா
ணமும், யெருஷலேமினின்று யெகோவா
வின் வாக்கியமும்வெளிப்படுமென்பார்கள்.—
அவர் புறத்தேசத்தாரை நியாயம் விசாரிப்பார், ௪
அநேகசனங்களைக்கடிந்துகொள்வார்: அதினால்
அவர்கள் தங்கள் கட்கங்களைக் கொழுக்களும்,
தங்கள் ஈட்டிகளை அரிவாள்களுமாக்குவார்கள்:
ஒருதேசத்தார் மறுதேசத்தாருக்கு விரோதமாகக்
கட்கத்தை ஓங்கார்கள், இனி அவர்கள் யுத்தப்
பயிற்சிசெய்யார்கள்.—யாக்கோபின் வமிசத்தா ௫
ரே, யெகோவாவின் ஒளியில் நடப்போம்,
வாருங்கள்.

யாக்கோபின் வமிசத்தாராகிய உம்முடைய ச ௬
னங்கள்கிழக்கினின்றுபூர்த்தியடைந்து,பெலிஸ்
தியரைப்போலநிமித்தம்பார்க்கிறவர்களாய், அந்
நியரின் சந்ததியாரோடும் உடன்படிக்கைசெய்
திருக்கிறார்கள், ஆதலால் நீர் அவர்களைக் கை
விட்டீர்.-பொன் வெள்ளிகளினால் அவர்கள்தே ௭
சம் நிறைந்திருக்கின்றது, அவர்கள்பொக்கிஷங்
களுக்கு முடிவில்லை, அவர்கள் தேசம் குதிரை
களினால் நிறைந்திருக்கின்றது, அவர்களுடைய
இரதங்களுக்கு முடிவில்லை:—விக்கிரகங்களால் ௮
அவர்கள்தேசம் நிறைந்திருக்கின்றது; தங்கள்வி
ரல்களினாற் செய்யப்பட்ட தங்கள்கைக்கிரியை
களையே நமஸ்கரிக்கிறார்கள்:-சிறியவனும் பணி ௯
கிறான், பெரியவனும் தாழுகிறான்: ஆதலால் நீர்
அவர்களை மன்னிக்கமாட்டீர்.

யெகோவாவின் பயங்கரத்திற்கும் அவரு ௰
டைய மகிமைப் பிரகாசத்திற்கும் விலகி, நீ கன்
மலையில் புகுந்து தூளிலே மறைந்திரு.—மனுஷ ௰௧
ருடைய கருவமுள்ளபார்வை தாழ்த்தப்படும், ம
னுஷருடையஇறுமாப்பு அடங்கிப்போகும்,அந்
நாளில் யெகோவா ஒருவரே உயர்ந்திருப்
பார்.—அகந்தையும்,மேட்டிமையுமுள்ள யாவும், ௰௨
உன்னதமான யாவுந் தாழ்த்தப்படும்பொருட்டு,
சேனைபதியாகிய யெகோவாவின் நாளான
து,—லிபானோனிலுள்ள உயரமும் உன்னதமுமா ௰௩
ன ஏரஸ்மரங்களெல்லாவற்றிற்கும் விரோதமாக
வும், பாஷானிலுள்ள சகல அல்லோன் விருட்
சங்களுக்கும் விரோதமாகவும்,—எல்லா உயர்ந் ௰௪
தமலைகளுக்கும் விரோதமாகவும், உன்னதமான
குன்றுகளுக்கு விரோதமாகவும்,—ஒவ்வொரு உ ௰௫

(௨௧) எரே.௨.௨௰,௨௧. (௨௨) எரே.௬.௨௮,௩௰. (௨௩) ஓசி.௯.௰௫. நீதி.௨௯.௨௪. எரே.௨௨.௰௭. ஓசி.௪.௰௮. மீகா.௯.௰௧. எரே.௫.௨௮. சக.௭.௰. (௨௪) உபா.௨௮.௬௩. எசேக்.௫.௰௩. (௨௫) எரே.௬.௨௯. மல்.௩.௩. (௨௬) எரே.௩௩.௭. சக.௮.௩. (௨௮) யோபு.௩௧.௩. சங்.௧.௬. (௨௯) அதி.௫௭.௫. அதி.௬௫.௩. (௩௧) எசேக்.௩௨.௨௧. அதி.௪௩.௰௭.—(௨. அதி. ௨.) மீகா.௪.௧,. ஆதி.௪௯.௧. எரே.௨௩.௨௰. சங்.௬௮.௰௫,௰௬. சங்.௭௨.௮. அதி.௨௭.௰௩. (௩) எரே.௩௧.௬. சக.௮.௨௧. லூக்.௨௪.௪௭. (௪) சங்.௪௬.௯. ஓசி.௨.௰௮. சக.௯.௰. சங்.௭௨.௩,௭. (௫) எபே.௫.௮. (௬) எண்.௨௩.௭. உபா.௰௮.௰௪. சங்.௱௬.௩௫. எரே.௰.௨. (௭) உபா.௰௭.௰௬,௰௭. (௮) எரே.௨.௨௩. (௰) வெளி.௬.௰௫. (௰௧) அதி.௪.௧. எரே.௩௰.௭,௮. எசேக்.௩௮.௰௪,௰௯. யோவே.௩.௰௮. சக.௯.௰௬. (௰௩) அதி.௰௪.௮. எசேக்.௩௧.௩. சக.௰௧.௧,௨. (௰௪) அதி.௩௰.௨௫.

யர்ந்த அரணுக்கு விரோதமாகவும், அரணுள்ள
௰௬ ஒவ்வொரு மதில்களுக்கு விரோதமாகவும்,—தர்
ஷீஷ் கப்பல்கள் எல்லாவற்றிற்கும் விரோதமா
கவும், அருமையான விசித்திரவேலைகளெல்லா
௰௭ வற்றிற்கும் விரோதமாகவும் வரும்.—மனுஷரு
டைய உயர்ச்சி தாழ்ச்சியாகும், மனுஷருடைய
மேட்டிமைதாழ்த்தப்படும்: அந்நாளில் யெகோ
௰௮ வா ஒருவரே உயர்ந்திருப்பார்.—விக்கிரகங்கள்
௰௯ முழுமையும் ஒழிந்துபோகும்.—யெகோவா
தேசத்தைப்பயங்கரமாக அதிரப்பண்ணும்படி எ
ழுந்திருக்கும்பொழுது, அவருடைய பயங்கரத்
திற்கும் அவருடை யமகிமைப்பிரகாசத்திற்கும்
விலகி மலைக்குகைகளிலும் பூமியின் கெபிகளி
௨௰ லும் ஒதுங்குவார்கள்.—யெகோவா பயங்கர
மாகத்தேசத்தை நடுங்கப்பண்ணும்படி எழுந்தி
ருக்கும் நாளில், மனுஷர், பூசிப்பதற்குப்பொன்
வெள்ளிகளினாலே தாங்கள் தாங்கள் செய்தவிக்
கிரகங்களை அகழெலியிடத்திலும, துரிஞ்சிலிடத்
௨௧ திலும்எறிந்துவிட்டு,-யெகோவாவின் பயங்
கரத்திற்கும் அவருடைய மகிமைப்பிரகாசத்திற்
கும்விலகிக்கற்பிளப்புகளிலும் கன்மலைவெடிப்
௨௨ புகளிலும் புகுந்துகொள்வார்கள்.—நாசியிலே
சுவாசமுள்ள மனுஷன்மேல் வைத்த நம்பிக்கை
யை விட்டுவிடு: அவன் மதிக்கப்படுவதற்கு எம்
மாத்திரம்.

## ௩. அதிகாரம்.

௧. பாவத்தினிமித்தஞ் சனங்கள் வருந்தல்: ௰௨. சனங்களின் இறுமாப்பு அதிபதிகளின் கொடுமையைக் கூறல்: ௰௬. ஸ்திரிகளின் அகங்காரத்தையும் அதினால்வருந் தண்டனையையுந் தெரிவித்தல்.

பாருங்கள், சேனைபதியும் யெகோவாவுமா
கிய கடவுள், யெருஷலேமினின்றும் யூதாவி
னின்றும் ஆதரவும்கோலுமாகிய ஆகார ஆதரவை
௨ யுஞ் சலஆதரவையும்,—பராக்கிரமசாலியையும்,
யுத்தவீரனையும், நியாயாதிபதியையும், தீர்க்கதரி
சியையும், சாஸ்திரியையும், முதியோனையும்,—
௩ ஐம்பதுபேருக்கதிபதியையும், கனம்பொருந்திய
வனையும், ஆலோசனைக்காரனையும், தொழில்க
ளில் நிபுணனையும், வாய்ச்சாலகனையும் அகற்று
௪ வார்.—பாலகரை அவர்களுக்கு அதிபதிகளாக
ஏற்படுத்துவேன், பிள்ளைகள் அவர்களை அரசா
௫ ளுவார்கள்.—சனங்கள் ஒருவராலொருவர் உபத்
திரவப்படுவார்கள், ஒவ்வொருவனுந் தன் அய
லானால் உபத்திரவப்படுவான்: பாலகன்விருத்த
னுக்கும், கீழ்மகன்மேன்மகனுக்கும்விரோதமாக
௬ அகங்காரங்கொள்வார்கள்.—இதினிமித்தம் ஒரு
வன்தன்பிதாவமிசத்தானாகிய தன்சகோதரனைப்
பிடித்து, உனக்குவஸ்திரமிருக்கின்றது, நீ வந்து
எங்களுக்கு அதிபதியாயிரு, இந்தக்கேடு உன்
௭ கையின்கீழாகக்கடவதென்றுசொல்ல,—அவன்
அந்நாளில் கையுயரவெடுத்து, நான்சொஸ்தப்ப
டுத்துகிறவனாயிருக்கமாட்டேன்; என் வீட்டில்
அன்னவஸ்திரமொன்றுமில்லை: ஆதலால் சனங்
களுக்கு அதிபதியாக என்னை ஏற்படுத்தவேண்
டாமென்பான்.—யெருஷலேம்பாழ்பட்டது, யூ ௮
தாவிழுந்தது: யெகோவாவின் மகிமையுள்ள
கண்களைக்கோபமூட்டுவதற்கு அவர்கள் நாவுஞ்
செய்கையும்அவருக்குவிரோதமாயிருக்கின்றன.
அவர்களுடைய முகத்தோற்றமே அவர்களுக் ௯
கு விரோதமாகச் சாட்சியிடுகின்றது; அவர்கள்
சோதோமைப்போலத்தங்கள்பாவத்தைவெளிப்
படுத்துகிறார்கள், அவர்கள் மறைக்கிறதில்லை: ஐ
யோ, அவர்களுக்குவேதனைவரப்போகின்றதே;
அவர்கள் தங்கள்ஆத்துமாவுக்கே ஆபத்துவருவித்
தார்கள்.—நீங்கள் நீதிமான்களைநோக்கி, உங்க ௰
ளுக்கு வாழ்வுகிடைக்குமென்று சொல்லுங்கள்:
அவர்கள் தங்கள் தங்கள் கிரியையின் பலனை அ
னுபவிப்பார்கள்.—ஐயோ, துன்மார்க்கருக்குத் ௰௧
தாழ்வுவரும்: அவர்கள் தங்கள் தங்கள் கைப்பல
னை அனுபவிப்பார்கள்.
பிள்ளைகளும் என்சனங்களை உபத்திரவப்ப ௰௨
டுத்துகிறார்கள், ஸ்திரிகளும் அவர்களை அரசாளு
கிறார்கள். ஆ, என்சனமே, உன்னை நடத்துகிற
வர்கள்உன்னைமோசப்படுத்தி, நீநடக்கவேண்டி
யபாதையைநாசப்படுத்துகிறார்கள்.—யெகோ ௰௩
வா நியாயம் விசாரிக்கும்படி எழுந்திருக்கிறார்,
சனங்களோடே வழக்காடநிற்கிறார்.—யெகோ ௰௪
வா தம்முடைய சனங்களின் முதியோரையும்
அதிபதிகளையும் நியாயம்விசாரிக்கவருவார்: நீங்
கள்என்திராட்சத்தோட்டத்தைப்பட்சித்தீர்கள்;
தரித்திரரிடத்திற் கொள்ளையிட்டபொருள் உங்
கள் வீடுகளிலிருக்கின்றது.—நீங்கள் என்சனங் ௰௫
களைநொறுக்கித்தரித்திரருடையமுகத்தைநெரிக்
கிறதேதென்று, சேனைபதியும் யெகோவாவு
மாகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
மேலும் யெகோவா, சீயோனின் கன் ௰௬
னியர் அகங்காரிகளாகி, கழுத்தைநீட்டி நடந்
து, கண்களைப்புரளச் செய்து, தத்தித்தத்தி நடந்
து, தங்கள் கால்களிற் சிலம்பொலிக்க உலாவுகி
றார்கள்:-ஆதலால் ஆண்டவர் சீயோன்கன்னி ௰௭
யரின உச்சந்தலையை மொட்டையாக்குவார்:
யெகோவா அவர்களை நிருவாணமாக்குவார்.-
அந்நாளிலே ஆண்டவர் சிலம்புகளும், சுட்டி ௰௮
களும், சந்திர ஆரங்களும்,-காதணிகளும், காப் ௰௯
புகளும், சிரமுக்காடுகளும்,-சிரபூஷணங்களும், ௨௰
பாதசரங்களும், மார்க்கச்சுகளும், சுகந்த பாத்தி
ரங்களும், இரட்சாபந்தனங்களும்,—மோதிரங் ௨௧
களும், மூக்குத்திகளும்,—விசித்திர வஸ்திரங்க ௨௨
ளும், மேலங்கிகளும், மேற்போர்வைகளும், சிறு
பைகளும்,-கண்ணாடிகளும், உள்ளாடைகளும், ௨௩
குல்லாக்களும், முக்காட்டாடைகளுமாகிய இ

(௰௬) ௧.இரா.௰.௨௨. (௰௯) ஓசி.௰.௮. லூக்.௨௩.௩௰. வெளி.௬.௰௬. ௨.தெச.௧.௯. ஆகா.௨.௬,௨௧. எபி.௰௨.௨௬. (௨௨) எரே.௰௭.௫. யோபு.௨௭.௩.—(௩. அதி. ௧.) எரே.௩௭.௨௧. லேவி.௨௬.௨௬. (௭) ஆதி.௰௪.௨௪. (௮) மீகா. ௩.௰௨. (௯) ஆதி.௰௮.௨௰,௨௧. (௰) பிர.௮.௰௨. (௰௧) பிர.௮.௰௩. (௰௩) மீகா.௬.௨. (௰௪) அதி.௫.௭. மத்.௨௧.௩௩. (௰௫) அதி.௰௮.௪. மீகா.௩.௨,௩.(௰௭)உபா.௨௮.௨௭. அதி.௪௭.௨,௩. எரே.௰௩.௨௨. நாகூ.௩.௫.(௰௮) நியா.௮ ௨௧.

வைகளின் அலங்காரத்தை நீக்கிவிடுவார்.—
உச அப்பொழுது சுகந்தத்துக்குப் பிரதியாகத் துர்க்
கந்தமுண்டாகும்; கச்சுக்குப் பிரதியாகக் கயி
றும்,அழகியமயிர்ச்சுருளுக்குப்பிரதியாகமொட்
டையும், பொலிவான வஸ்திரங்களுக்குப்பிர
தியாகஇரட்டுக்கச்சும், சௌந்தரியத்துக்குப்பிர
உரு தியாகக் களங்கமுமுண்டாகும்.—உன் புருஷர்
கட்கத்தினாலும், உன்பராக்கிரமசாலிகள் யுத்தத்
உசு தினாலும் விழுவார்கள்.—அவள் வாசல்கள் துக்
கித்துப் புலம்பும்; அவள் வெறுமையாய் நிலத்
தில் உட்காந்திருப்பாள்.

## ச. அதிகாரம்.

ஆபத்துக்காலத்திற் கிறிஸ்துவினிராச்சியம் புகலி
டமாதல்.

அந்நாளில் ஏழுஸ்திரிகள் ஒருபுருஷனைப்பி
டித்து, நாங்கள் எங்கள் ஆகாரத்தைப்புசிப்போ
ம், எங்கள் வஸ்திரத்தைத் தரிப்போம்: எங்கள்
நிந்தையை நீக்கும்படிக்கு உமது நாமமாத்திரம்
எங்கள்மேல் தரிக்கப்படத்தாரும் என்பார்கள்.-
உ அந்நாளில் யெகோவாவின் கிளை சௌந்த
ரியமும் மகிமைப்பிரகாசமுமுள்ளதாயிருக்கும்,
இஸரவேலரில் மீந்திருப்பவர்களுக்குப் பூமி
யின்பலன் முக்கியமும் இலட்சணமுமுள்ள
ங தாகும்.—சீயோனிலும் யெரூஷலேமிலுமீந்து,
யெரூஷலேமிலுள்ள சீவனுள்ளோருக்குள்பெ
யர் குறிக்கப்பட்ட ஒவ்வொருவனும் பரிசுத்த
ச னென்னும் பெயர்பெறுவான்.—நியாயத்தின் ஆ
வியினாலும்,எரிக்கும்ஆவியினாலும் ஆண்டவர்
சீயோன் குமாரத்திகளின்அழுக்கறக்கழுவி, யெ
ரூஷலேமின் இரத்தத்தை அதின் மத்தியினின்று
ரு அகற்றுவார்.—அப்பொழுது யெகோவா சீ
யோன்மலையிலுள்ள ஒவ்வொரு வாசஸ்தலத்தின்
மேலும், அதின்எல்லாச்சபைகளின்மேலும் பக
லில் மேகத்தையும் புகையையும், இரவில் எரிகி
றஅக்கினியின் பிரகாசத்தையும் சிருஷ்டிப்பார்:
மகிமைப்பிரகாசமே எல்லாவற்றிற்குங் காவலா
சு யிருக்கும்.—அதுபகலிலே வெயிலுக்குநிழலும்,
சூறைக்கும்மழைக்கும் மறைவும், அடைக்கலஸ்
தானமுமாகிய ஒருகூடாரமாகும்.

## ரு. அதிகாரம்.

க. யெகோவாவின் திராட்சத்தோட்டத்தைவ
ருணித்தல்: அ. பொருளாசைக்காரருக்குவருந்
தண்டனை: யக. சுகபோகிகளுக்குவருந்தண்ட
னை: யங. அவபத்தர்முதலானவர்களுக்குவருந்
தண்டனை: உங. தண்டனை செய்வோருடைய
இலட்சணத்தைவிவரித்தல்.

இப்பொழுது நான் என் நேசருக்காக அவரு
டைய திராட்சத்தோட்டத்தைக்குறித்து என்நே
சருக்கேற்றஒருபாட்டுப்பாடுவேன். மிகவுஞ்செ
ழித்தமேட்டில் என் நேசருக்கு ஒரு திராட்சத்
தோட்டமிருக்கின்றது.—அவர் அதற்குவேலி அ உ
டைத்து, அதிலுள்ள கற்களைப்பொறுக்கி, அதில்
ஒரு உத்தம திராட்சக்கொடியை நட்டு, அதின்
மத்தியில் ஒருகோபுரத்தைக்கட்டி, அதில் ஒரு
தொட்டியையும்உண்டாக்கி,திராட்சந்தருமென்
று காத்திருந்தார், அது நச்சுக்கனிதந்தது.—யெரூ ங
ஷலேமியரே, யூதாசனங்களே, இப்பொழுது
எனக்கும் என் திராட்சத்தோட்டத்திற்கும் நியா
யத்தீர்ப்புப் பண்ணுவீர்களாக.—என் திராட்சத் ச
தோட்டத்தில் நான்செய்ததற்கு அதிகம் என்ன
செய்யலாம்; அதுதிராட்சந்தருமென்றுநான்காத்
திருக்க, நச்சுக்கனி தந்ததென்ன.—பாருங்கள், ரு
இனி நான் என் திராட்சத்தோட்டத்திற்குச்செய்
வதை உங்களுக்குத்தெரிவிப்பேன்: அதின்வே
லியைப்பிடுங்குவேன், அது பட்சிக்கப்படும்;அ
தின்மதிலையிடிப்பேன், அது மிதித்து உழக்கப்ப
டும்:—அதைப்பாழாக்குவேன்: அதின் கிளை நறுக் சு
கப்படாமலும், களை களையப்படாமலுமிருப்பதி
னால்முட்செடியும்நெரிஞ்சிலும் அதிலேமுளைக்
கும்: மேகங்களும் அதிலே மழைபெய்யாதபடி
கட்டளையிடுவேன்.—இஸரவேலின்வமிசமேசே எ
னைபதியாகிய யெகோவாவின் திராட்சத்
தோட்டம், யூதாவின்சனங்களே அவருக்கின்ப
மானநாற்று: அவர்நியாயத்துக்குக்காத்திருந்தார்,
இரத்தம் சிந்தப்பட்டதையோ கண்டார்; நீதிக்
குக்காத்திருந்தார், ஓலமிடுதலையோ கேட்டார்.
ஐயோ, தாங்கள் மாத்திரந் தேசத்தின் மத்தியி அ
லேதங்கும்படி,மற்றவர்களுக்குவாசஸ்தானமில்
லாதொழியும்வரைக்கும்வீட்டோடேவீட்டைச்
சேர்த்து, வயலோடேவயலைக்கூட்டிக்கொள்ளு
கிறவர்களுக்குவேதனைவரும்.—அநேகம் வீடுகள் கூ
பாழாகுமே, பெரியவைகளும் அழகியவைகளு
மாகிய வீடுகள்குடியில்லாதிருக்கும்.—பத்து ஏர் ய
நிலங்கொண்டதிராட்சத்தோட்டம் ஒரு பாத்ர
சம் தரும், ஒரு ஓமர் விதை ஒரு ஏபாவைத்தரு
மென்று சேனைபதியாகிய யெகோவா, என்
செவிக்கேறச்சொன்னார்.
ஐயோ, மதுபானத்தைத்தேடும்படி அதிகாலை யக
யில் எழுந்து,திராட்சரசத்தினால் சூடுண்டாகும்
படி இராமட்டுந்தரித்து,—தங்கள் விருந்துகளில் யஉ
வீணை, தம்புரு, மேளம், நாயகசுரம், திராட்சரச
மாகியஇவைகளிருக்க, யெகோவாவின் கிரி
யையை மதியாமலும் அவருடைய கரங்களின்
செய்கையைச் சிந்தியாமலுமிருக்கிறவர்களுக்கு
ஆபத்துவரும்.
என்சனங்களுக்கு ஞானமில்லாததினால், அ யங
வர்கள் சிறையில் அகப்படப்போகிறார்கள்: அ
வர்களுக்குள்ளேசம்பிரமமுள்ளவர்கள்பட்டினி
யிருக்கிறார்கள், அவர்கள் சனத்திரளுக்குத்தாகத்
தினாலே நாவறண்டது.—அதினிமித்தம் பாதா யச

(உச) அதி.உஉ.யஉ. மீகா.க.யசு. (உசு) எரே.யச.உ. புல.க.ச. புல.உ.ய.—(ச.அதி.க.) அதி.உ.யக,யஎ. உ.தெச. ங.யஉ. லூக்.க.உரு. (உ) எரே.உங.ரு. சக.ங.அ. (ங) அதி.சுய.உக. பிலி.ச.ங. வெளி.ங.ரு. (ச) மல்.ங.உ,ங. (ரு) யாத்.யங.உக. சக.உ.ரு. அதி.அ.யச. (சு) அதி.உரு.ச.—(ரு. அதி. க.) சங்.அய.அ. உன்.அ.யஉ. எரே.உ.உக. மத். உக.ஙங. (உ) உபா.ஙஉ.சு. (ங) ரோ.ங.ச. (ரு) சங்.அய.யஉ. (அ) மீகா.உ.உ. (யக) நீதி.உங.உக,ஙய. பிர.ய.யசு. (யஉ) ஆமோ.சு.ரு,சு. யோபு.ஙச.உசு. (யங) ஓசி.ச.சு. லூக்.யசு.சச.

ளம் தன் ஆசையை அதிகப்படுத்தி, அளவுக்குமேற்
படத் தன்வாயைத்திறக்க, மகிமையும், சனத்திர
ளும், ஆரவாரமும், களிக்கிறவர்களும் அதில்இ
௰௫ றங்குகிறார்கள்.—சிறியவன் தாழ்த்தப்படுவான்,
பெரியவனும் தாழ்ச்சியடைவான், அகங்காரிக
௰௬ ளுடையபார்வை தாழ்த்தப்படும்.—சேனைபதியா
கிய யெகோவா நியாயத்தினால் உன்னதமா
வார், பரிசுத்தமுள்ள தேவன் நீதியினால்பரிசுத்
௰௭ தராய் விளங்குவார்.—அப்பால் ஆட்டுக்குட்டி
கள்தடையின்றிமேயலாம், புஷ்டியானவர்களுக்
கிருந்து பாழாய்ப்போன நிலங்களை அந்நியர்அ
௰௮ னுபவிப்பார்கள்.—ஐயோ, மாயையென்னுங்க
யிறுகளால் தீமையையும், பண்டியின் வடங்க
௰௯ ளால்பாவத்தையும் இழுத்துக்கொண்டு,—அவர்வி
ரைந்து நாம்பார்க்கும்படி தமது கிரியையைச்
செய்யக்கடவரென்றும், இஸரவேலின் பரிசுத்த
ருடைய ஆலோசனையை நாம் அறியும்படிக்குஅ
துசேர்ந்து வரட்டுமென்றுஞ்சொல்லிக்கொள்ளு
கிறவர்களுக்கு ஆபத்துவரும்.
௨௰ ஐயோ, தீமையை நன்மையென்றும், நன்மை
யைத்தீமையென்றுஞ்சொல்லி, ஒளியை இருளா
கவும், இருளை ஒளியாகவும்பாவித்து, இனிப்புக்
காகக் கசப்பையும், கசப்புக்காக இனிப்பையு
௨௧ மிடுகிறவர்களுக்கு ஆபத்துவரும்.—ஐயோ, தங்
கள் பார்வைக்கு ஞானவான்களும், தங்கள் எண்
ணத்துக்குப் புத்திமான்களுமாயிருக்கிறவர்களுக்
௨௨ கு ஆபத்துவரும்.—ஐயோ, திராட்சரசத்தைக் கு
டிப்பதற்கு வீரரும், மதுபானத்தைக்கலந்து ஆ
௨௩ யத்தப்படுத்துவதற்கு வல்லருமாகி,—பரிதானத்
துக்காகத் துன்மார்க்கரை நீதிமான்களாகத்தீர்த்
து, நீதிமானுடையநியாயத்தைநீக்குகிறவர்களுக்
௨௪ கு ஆபத்துவரும்.—அவர்கள்சேனைபதியாகிய யெ
கோவா அருளியவேதத்தைத்தள்ளி, இஸரவே
லின் பரிசுத்தருடைய வாக்கை அவமதித்தபடி
யால் அக்கினி நாவு அடித்தாளைநக்கினாற்போல
வும், அக்கினிச்சுவாலைபதரைப்பட்சித்தாற்போ
லவும், அவர்களுடையவேர்அழுகிப்போகும், அ
வர்களுடைய புஷ்பந் தூளைப்போற்பறந்துபோ
௨௫ கும்.-இதினிமித்தந் தமது சனங்களுக்குவிரோத
மாக யெகோவாவின் கோபம்மூண்டது, அ
வர்தமதுகையைஅவர்களுக்குவிரோதமாகநீட்டி
மலைகளும் அதிர, அவர்களைஅடித்தார்: அவர்கள்
பிரேதங்கள்வீதிகளின்மத்தியில் குப்பைபோலக்
கிடக்கின்றன. இவையெல்லாவற்றினாலும்அவர்
கோபம் நீங்கவில்லை, அவருடைய கரம் இன்
னும் ஓங்கினபடியே இருக்கின்றது.
௨௬ தூரதேசத்தார்நிமித்தம் ஒருகொடியை ஏற்று
வார், பூமியின் எல்லையிலுள்ளவர்களுக்குப் ப
யில்காட்டுவார்: பாருங்கள், அவர்கள் துரிதப்
பட்டு விரைந்துவருவார்கள்.—அவர்களில் ஆ ௨௭
யாசப்படுகிறவனும் இடறுகிறவனும் இல்லை;
தூங்குகிறவனும் உறங்குகிறவனும் இல்லை; அ
வர்களுடைய இடைக்கச்சு அவிழ்க்கப்படுவது
மில்லை, அவர்களுடைய செருப்புவார் அறுவது
மில்லை:—அவர்களுடைய அம்புகள் கூரியவைக ௨௮
ள், அவர்கள்வில்லுகளெல்லாம் நாணேற்றப்பட்
டவைகள், அவர்களுடைய குதிரைகளின் குளம்
புகள் தீதட்டிக்கற்போல் மதிக்கப்படும், அவர்
களுடையஉருள்கள்சுழல்காற்றுக்குச்சமானம்:—
அவர்களுடைய ஆரவாரம் சிங்கத்தின் ஆரவா ௨௯
ரம்போலிருக்கின்றது, அவர்கள்சிங்கக்குட்டிக
ளைப்போலக் கருச்சிக்கிறார்கள்: ஆரவாரம்பண்
ணி இரையைப்பிடித்துக்கொண்டுபோவார்கள்,
தப்புவிப்பார் ஒருவருமில்லை.—அந்நாளில்அவர் ௩௰
களுக்கு விரோதமாகச் சமுத்திரம்இரைவதுபோ
லஇரைவார்கள்: அப்பொழுது தேசத்தைப்பார்ப்
பவன் அந்தகாரத்தையும் ஆபத்தையுங் காண்
பான், ஒளியும் மேகங்களினால் இருளாகும்.

## ௬. அதிகாரம்.

௧. ஏசாயா தரிசனம்பெறல்: ௫. கொடியசனங்க
ளிடத்தில் அனுப்பப்படல்: ௰௨. எஞ்சினச
னங்களுக்கு இரட்சிப்புக்கிடைத்தல்.

உசியா இராசா மரணமடைந்த வருஷத்தில் ௧
ஆண்டவர் உயரமும்உன்னதமுமான ஒருசிங்
காசனத்தில் வீற்றிருக்க நான் கண்டேன், அவ
ருடைய வஸ்திரத்தின்தொங்கலினால் ஆலயம்நி
றைந்தது.—சேராபியர் அவர் சமீபத்தில்நின்றார் ௨
கள்: அவர்களில்ஒவ்வொருவருக்குஅவ்வாறுசிற
குகள்இருந்தன; அவைகளில்இரண்டினால்முகத்
தையும், இரண்டினால்கால்களையும்மூடிக்கொண்
டு, இரண்டினால் பறந்தார்கள்.-ஒருவருக்கொருவ ௩
ர்கூப்பிட்டுச்சேனைபதியாகிய யெகோவா பரி
சுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர்: பூமிமுழுவதும் அவ
ருடைய மகிமையினால் நிறைந்திருக்கின்றதென்
றார்கள்.-கூப்பிட்டவரின் சத்தத்தினால்கதவுநிலை ௪
கள்அசைந்தன, ஆலயம்புகையினாலேநிறைந்தது.
அப்பொழுது என் உதடுகள் அசுத்தம், நான் ௫
அசுத்தமான உதடுகளையுடைய சனங்களுக்குள்
வாசமாயிருக்கிறேன். சேனைபதியும் யெகோ
வாவுமாகியஇராசாவை என்கண்கள்கண்டன:
ஐயோ, நான்நாசமானேனென்றேன்.—சேராபி ௬
யரில் ஒருவன் வேதிகையினின்று குறட்டினால்
எடுத்த எரிகிறதணலைக் கையிற்கொண்டு என்னி
டத்திற் பறந்துவந்து,—அதை என் வாயிலேவைத் ௭
து, பார், இது உன் உதடுகளைத்தொட்டது; உன்
அக்கிரமம் நீங்கிற்று, உன்பாவம் நிவாரணமா
யிற்றென்றான்.—பின்பு, நான் ஆரை அனுப்பு ௮
வேன், நமது நிமித்தம் ஆர்போவாரென்று ஆண்

(௰௯) எரே.௰௭.௰௫. ஆமோ.௫.௰௮. ௨.பேதுரு.௩.௩,௪. (௨௧) நீதி.௩.௭. ரோ.௧.௨௨. ரோ.௰௨.௰௬. (௨௩) நீதி.௰௭.௰௫. (௨௪) யாத்.௰௫.௮. யோபு.௰௮.௰௬. ஆமோ.௨.௯. (௨௫) ௨.இரா.௨௨.௰௩,௰௭. எரே.௪.௨௪. லேவி.௨௬.௰௪,. (௨௬) அதி.௭.௰௮. ௨பா.௨௮.௫௰. சங்.௭௨.௮. மல்.௧.௰௧. யோவே.௨.௭. (௨௭) தானி.௫.௬. (௨௮) எரே.௫.௰௬. (௩௰) எரே.௪.௨௩. புல.௩.௨. எசேக்.௩௨.௭,௮—(௬. அதி. ௧.) ௨.இரா.௰௫.௭. ௧.இரா.௨௨.௰௯. யோவா.௰௨.௪௧. வெளி.௪.௨. (௨) எசேக்.௧.௰௧. (௩) வெளி.௪.௮. (௪) யாத்.௪௰.௩௪. ௧.இரா.௮.௰. (௫) யாத்.௪.௰. நியா.௬.௨௨. எரே.௧.௬. (௬) வெளி.௮.௩. (௭) எரே.௧.௯. தானி.௰.௰௬. (௮) ஆதி.௧.௨௬.

டவர் சொல்லுகிறவாக்கைக்கேட்டேன்: அப்
பொழுது நான், அடியேன் இருக்கிறேன், என்
னை அனுப்புமென்றேன்.
கூ அதற்கு அவர், நீபோய் இந்தச்சனங்களைநோக்
கி, நீங்கள்கேட்டும் உணராமலும், கண்டும் அறி
ய யாமலுமிருங்கள்.—இந்தச்சனங்கள்தங்கள்கண்
ணினுற் காணுமலும், காதினுற்கேளாமலும், தங்
களிருதயத்தினுலுணர்ந்து மனந்திரும்பாமலும்,
சொஸ்தமடையாமலும் இருக்கும்பொருட்டு, நீ
அவர்கள் மனதைக்கடினமாக்கி, அவர்கள் காது
களை மந்தப்படுத்தி, அவர்கள் கண்களைமூடென்
யக ருர்,—அதற்கு நான், ஆண்டவரே, எதுவரைக்
குமென்று கேட்க, அவர் உத்தரமாய், நகரங்கள்
குடியில்லாமலும், வீடுகள் மனுஷரில்லாமலும்
பாழாக்கப்பட்டும், தேசமுழுமையும் வெறுமை
யஉ யாக்கப்பட்டும்,—மனுஷர்யெகோவாவால்
அகற்றப்படுவதினுலே தேசமத்தி வெறுமையாக்
கப்பட்டும்போகும்வரைக்கும் இருக்கும்.
யங தேசத்தில் பத்திலொருபங்கு மீந்துநின்ருலும்
இதுவும் அடிக்கடிமேயப்படும்; ஆனுலும் ஏலா
விருட்சமும்அல்லோன்விருட்சமும்விழும்பொ
ழுது அவைகளில் அடிமரமிருப்பதுபோல, ப
ரிசுத்தவித்து இவர்களுக்கு அடிமரமாயிருக்கு
மென்ருர்.

## எ. அதிகாரம்.

க. ஏசாயா ஆகாஸ் ராசாவைத்தேற்றல்:ய.ஆகாசுக்
காச்சரியமான அடையாளந் தெரிவித்தல்: யஎ.
அஸீரியரால் வருந்தண்டனையைவெளிப்படுத்
தல்.

யூதா தேசத்துராசாவாகிய ஊசியாவின் பௌத்
திரனும் யோதாமின் புத்திரனுமாகிய ஆகாஸ் அ
ரசாண்ட காலத்தில் ரேத்சீனென்னும் ஸீரியரா
சாவும், ரெமலீயாவின் புத்திரனுகிய பெக்கா
வென்னும் இஸரவேலிராசாவும் யெரூஷலே
மை எதிர்த்து யுத்தம் பண்ணும்படி வந்தார்கள்,
அவர்களால் அது மேற்கொள்ளக்கூடாமற் போ
உ யிற்று.—ஸீரியர் எப்ராயீமருக்குத்துணைநிற்கிருர்
களென்று தாவீதின் வமிசத்தானுகிய இராசா
வுக்குத்தெரிவிக்கப்பட்டபொழுது, அவன் மன
மும், அவன் சனங்களின் மனமும், காட்டுமரங்
ங கள் காற்றினுல் அலைவதுபோலஅலைந்தன.—அப்
பொழுது யெகோவா ஏசாயாவை நோக்கி,
நீயும் உன்புத்திரனுகியஷேயார்யாஷீப்பும்,மேற்
குளத்து வாய்க்காலின் முடிவில் வண்ணன்நிலத்
துவழியில் ஆகாசை எதிர்கொண்டுபோய் அவ
ச னைப்பார்த்து,—ஸீரியர், எப்ராயீமோடும்ரெமலீ
யாவின்புத்திரனேடும் உனக்குவிரோதமாகத் து
ரு ராலோசனைசெய்து,-நாம் போய் யூதா தேசத்தை
எதிர்த்து, அதைக்கிலேசப்படுத்தி இடித்து,அதை
நமக்காகப்பிடித்து, அதற்குத் தபீயாலின்புத்திர
னை இராசாவாகஏற்படுத்துவோம்வாருங்களென்
றுசொன்னதினிமித்தம்நீபயப்படவேண்டாம்.—
நீ சாவதானமாகி அமைந்திரு: புகைகிற இரண்டு சு
கடைக்கொள்ளிகளாகிய ஸீரியருடைய ரேத்சீ
னும், ரெமலியாவின் புத்திரனுங்கொண்ட மகா
குரோதத்தினிமித்தம் நீ பயப்படவேண்டாம்,
உன் மனஞ் சோரவிடாதே.-ஆண்டவராகிய எ
யெகோவா, அந்த ஆலோசனை நிலைநிற்பதில்
லை, அதுசித்திபெருது.—ஸீரியவுக்குத்தலை தமஸ் அ
கு,தமஸ்குவுக்குத்தலை ரேத்சீன்; எப்ராயீமுக்குத்
தலைஷமாரியா, ஷமாரியாவுக்குத்தலை ரெமலீயா
வின்புத்திரன்.—அறுபத்தைந்துவருஷத்துக்குள் கூ
ளே எப்ராயீம் ஒருசாதியாய் இராதபடிசேதிக்கப்
படும். நீங்கள்விசுவாசியாதிருந்தால் ஸ்திரப்பட
வேமாட்டீர்களென்றுசொல்லுகிருரென்பதைச்
சொல்லென்ருர்.
பின்னும் யெகோவா ஆகாசைநோக்கி,— ய
நீஉன்தேவனுகியயெகோவாவிடத்தில் யக
ஒரு அடையாளத்தைவேண்டிக்கொள்; ஆழத்தி
லாகிலும் உயரத்திலாகிலும் அதைக்கேளென்று
சொல்ல,—ஆகாசோ, நான்கேட்கமாட்டேன், யஉ
நான் யெகோவாவைப்பரீட்சிக்கமாட்டே
னென்ருன்.—அவன், தாவீதின் வமிசத்தாரே, யங
கேளுங்கள்; நீங்கள் மனுஷரை விசனப்படுத்து
வது கொஞ்சமா, என்னுடைய தேவனையும்விச
னப்படுத்தப்பார்க்கிறீர்களா.—ஆதலால் ஆண்ட யச
வர் தாமே உங்களுக்கு ஒரு அடையாளத்தை
அருளுவார்; பாருங்கள், ஒருகன்னிகை கருப்ப
வதியாகி ஒருபுத்திரனைப் பிரசவித்து அவருக்கு
இம்மானுவேலென்று பெயரிடுவாள்.—அவன் தீ யரு
மையைவெறுத்து நன்மையை விரும்பும்வகை
யைஅறியும்பொழுது, வெண்ணெயையும்தேனை
யும் உண்பான்.—அந்தப்பாலகன்தீமையை வெ யசு
றுத்துநன்மையை விரும்பும் வகையை அறிவதற்
குமுன்,உன்னைக்கிலேசப்படுத்துகிறஅவ்விரண்
டு இராசாக்களின்தேசமும் பாழாய்க்கிடக்கும்.
எப்ராயீம் யூதாவைவிட்டுப் பிரிந்தகாலந்தொ யஎ
டங்கிவராதநாள்களை, அஸீரியராசாவினுல் உ
னக்கும், உன்சனங்களுக்கும், உன்பிதாவின் வ
மிசத்தாருக்கும்விரோதமாக யெகோவாவரு
விப்பார்.—அந்நாளிலே யெகோவா, எகிப் யஅ
தின்கடையான நீரோடைகளிலுள்ள ஈயையும்,
அஸீரியதேசத்திலுள்ள தேனீயையும்பயில்காட்
டி அழைப்பார்.-அவையெல்லாம்வந்து பாழான யகூ
பள்ளங்களிலும், கன்மலையின் வெடிப்புக்களி
லும்,முட்செடியாவற்றிலும், சகல மைதானங்க
ளிலுந்தங்கும்.—அந்நாளில் ஆண்டவர் நதி உய
யின் அக்கரையிலுள்ள அஸீரியராசாவென்னும்
கூலிக்குவாங்கின சவுரக்கத்தியினுல்தலைமயிரை
யும் கால்மயிரையுஞ்சிரைப்பார்:தாடியுஞ்சேதிக்

(கூ) மத்.யங.யச. யோவா.யஉ.சய. அப்.உஅ.உசு. ரோ.யக.அ. (ய) எரே.ரு.உய. (யக) மீகா.ங.யஉ. (யஉ) உ.இரா. உரு.உக. (யங) எஸ்ரு.கூ.உ. மல்.உ.யரு. ரோ.யக.ரு.—(எ. அதி. க.) உ.இரா.யசு.ரு. உ.நாளா.உஅ.ரு,சு. (அ) உ.சாமு.அ.சு. (கூ) உ.நாளா.உய.உய. (யக) நியா.சு.ஙசு,. மத்.யஉ.ஙஅ. (யச) மத்.க.உஉ. அதி.கூ.சு. க.சாமு.ச. உக. அதி.அ.அ. (யசு) அதி.அ.ச. உ.இரா.யரு.ஙய. (யஎ) உ.நாளா.உஅ.யசு. க.இரா.யஉ.யசு. (யகூ) எரே.யசு. யசு. (உய) உ.இரா.யசு.எ,அ. எசேக்.ரு.க.

௨௧ கப்படும்.—அக்காலத்தில் ஒருவன் ஒரு இளம்ப
சுவையும் இரண்டு ஆடுகளையும் வளர்ப்பான்.—
௨௨ அவைகள் பூரணமாகப் பால் கொடுக்கிறபடியி
னால் வெண்ணெயை உண்பான்: தேசமத்தியில்
மீந்திருக்கிறவர்கள் யாவரும்வெண்ணெயையும்
௨௩ தேனையும் உண்பார்கள்.—அக்காலத்தில் ஆயிரம்
வெள்ளிக்காசுபெறும் ஆயிரந் திராட்சச்செடிக
ளிருந்தநிலங்கள் எல்லாவற்றிலும் முட்செடியும்
௨௪ நெரிஞ்சிலும் இருக்கும்.—தேசமெங்கும் முட்
செடியும் நெரிஞ்சிலும் உண்டாயிருப்பதினால்,
சனங்கள் அம்புகளையும் விற்களையுங்கொண்டு
௨௫ அந்தஸ்தானத்துக்கு வருவார்கள்.—முட்செடிக
ளையும் நெரிஞ்சில்களையும்பற்றியபயம் ஒருபொ
ழுதும்வராது;மண்வெட்டியினாலேகொத்தப்பட்
ட குன்றுகளெல்லாம் மாடுகள் திரிவதற்கும் ஆடு
கள்மிதிப்பதற்கும் எற்ற ஸ்தானமாகுமென்றான்.

## ௮. அதிகாரம்.

௧. அஷீரியரால் இஸரவேலருக்குவருந் தண்டனை: ௫. யூதேயருக்கு வருந்தண்டனை: ௯. தண்டனையினால்நாசமடையாமல் தேவன் அவர்களைக்காத்தல்: ௰௧.நல்லோரை ஆற்றல்: ௰௯.விக்கிரகாராதனைக்காரருக்குத் துக்கம் வருமெனல்.

மேலும் யெகோவா என்னைநோக்கி, நீ ஒரு
பெரியபத்திரத்தை எடுத்து, மனுஷர் எழுதும்எ
ழுதுகோலினால் மகேர்ஷாலலஷ்பஷென்று அ
௨ தில் எழுதென்றார்.—பின்பு நான் சாட்சிக்காக
ஆசாரியனாகிய ஊரியாவையும், யெபெரேகியா
வின் புத்திரனாகிய சகரியாவையும்உண்மைக்குச்
சாட்சிகளாய் என்னிடத்தில் வரவழைத்தேன்.—
௩ நான் தீர்க்கதரிசனஸ்திரியைச்சேர, அவள்கருப்
பவதியாகி ஒருபுத்திரனைப் பிரசவித்தாள். அப்
௪ பொழுது யெகோவா என்னை நோக்கி,—இந்
தப்பாலகன் என்பிதாவே, என்மாதாவே யென்
றுகூப்பிடப் பயிலுமுன்னே தமஸ்குவின் செல்
வமும், ஷமாரியாவின்கொள்ளைப்பொருளும் அ
ஷீரியராசாவுக்குமுன்கொண்டுபோகப்படும்:ஆ
தலால்இவனுக்குமகேர்ஷாலலஷ்பஷென்றுபெ
யரிடுவாயாகவென்றார்.
௫ பின்னும் யெகோவா என்னைநோக்கி,—
௬ பார், இந்தச்சனம் மெல்லென ஓடும் ஷீலோ
வாவின் நீர்களைத்தள்ளி, ரேத்சீனையும் ரெமலி
யாவின் புத்திரனையுஞ் சார்ந்து களிகூர்ந்திருப்
௭ பதினால்,—ஆண்டவர் வல்லமையுள்ள திரளா
ன ஆற்றுநீரைப்போன்ற அஷீரியவின் இரா
சாவையும், அவனுடைய சகல மகிமையையும்
அவர்கள்மேற் புரளப்பண்ணுவார்: அவன் தன்
நீர்க்கால்களில் தேங்கி, தன் கரைகள்மேலெங்
௮ கும் புரண்டு,—யூதாதேசத்தைக்கடந்து, புரண்
டு மேலேபெருகி, கழுத்துமட்டும் பிரவாகிப்
பான்; இம்மானுவேலே, அவன்சிறகுகள் விரிந்
து உன் தேசத்தின் அகலத்தை மூடுமென்றார்.
சனங்களே, நீங்கள் கூட்டங்கூடுங்கள், முறி ௯
ய அடிக்கப்படுவீர்கள்; தூரதேசத்தாராகிய நீங்
களெல்லாரும் செவிகொடுங்கள்: இடைக்கட்
டுக்கட்டுங்கள், முறிந்தோடுவீர்கள்.—ஆலோச ௰
னைசெய்யுங்கள், அது அபத்தமாகும்; வாக்கைச்
சொல்லுங்கள், அதுசித்தியாகாது: தேவன் எங்
களோடேயிருக்கிறார்.
பின்பு யெகோவா வலியகையோடும் என் ௰௧
னை ஏவி, நான் இந்தச்சனங்களுடைய வழியி
லே நடவாதபடி எனக்குணர்த்தினபொழுது,—
இந்தச்சனங்கள் கட்டுப்பாடென்றுசொல்லுகிற ௰௨
படியே நீங்களும் கட்டுப்பாடென்று சொல்லா
மலும், அவர்கள் பயப்படுவதுபோலப் பயப்ப
டாமலும், அஞ்சாமலும்,—சேனைபதியாகிய யெ ௰௩
கோவாவைப் பரிசுத்தரென்றெண்ணுங்கள்;
அவரே உங்கள் பயமும் அச்சமுமாயிருக்கக்கட
வர்.—அவர் பரிசுத்த ஸ்தானமாவார்; இஸரவே ௰௪
லின் இரண்டு வமிசத்திற்குமோ தடுக்கிறதற்
கேதுவானகல்லும், இடறிவிழுவதற்கேதுவான
கன்மலையும், யெரூஷலேமியருக்கோ ஒருசுருக்
குங் கண்ணியுமாயிருப்பார்.—அவர்களில் அ ௰௫
நேகர் இடறிவிழுந்து, நொறுங்கி, சிக்குண்டு,
பிடிக்கப்படுவார்கள்.—சாட்சியைக்கட்டு, என் ௰௬
சீஷருக்குள்ளே பிரமாணத்துக்கு முத்திரையிடு
வென்றார்.—யாக்கோபின் குடும்பத்துக்குத் தம ௰௭
து முகத்தை மறைக்கிற யெகோவாவைக்
காத்திருப்பேன், அவரையே எதிர்பார்ப்பேன்.—
பாருங்கள், நானும், யெகோவா எனக்குத்தந் ௰௮
த பிள்ளைகளும் சீயோன் மலையிலே வாசமாயி
ருக்கிற சேனைபதியாகிய யெகோவாவினால்
இஸரவேலருக்கு அடையாளங்களாகவும் அற்பு
தங்களாகவும் இருக்கிறோம்.
அவர்கள்உங்களைநோக்கி,நிமித்தம்பார்ப்பவர் ௰௯
களிடத்திலும் முணுமுணென்று செபிக்கிறமா
யாவித்தைக்காரர்களிடத்திலுந் தேடுங்களென்று
சொல்லும்பொழுது,சனங்கள் தங்கள் தேவனி
டத்தில் உசாவவேண்டுமல்லவா; சீவனுள்ளோ
ருக்காக மரித்தோரிடத்தில் உசாவவேண்டுமோ
வென்று சொல்லுங்கள்.—வேதமும் சாட்சியும் ௨௰
பிரதானம்: இந்தவாக்கின்படி அவர்கள் பேசாதி
ருந்தால் அருணோதயம் அவர்களுக்குத்தோன்ற
வில்லை.—துக்கமும்பசியுமுள்ளவர்களாய்த் தே ௨௧
சத்தைக்கடப்பார்கள்:அவர்கள் பசியாயிருக்கும்
பொழுது மூர்க்கங்கொண்டு,தங்கள் இராசாவை
யும்தங்கள் தேவனையுந் தூஷிப்பார்கள்.-அவர் ௨௨
கள் மேல் நோக்குவார்கள், கீழேபூமியைப்பார்ப்
பார்கள்; ஆனாலும் பாருங்கள், துக்கமும், அந்த
காரமும், வியாகுலமுமடைந்தவர்களாய் அந்த
காரத்திலே துரத்திவிடப்படுவார்கள்.

---

(௮. அதி. ௧.) அதி.௩௰.௮. அபகூ.௨.௨. (௨) ௨.இரா.௰௬.௰. (௪) அதி.௭.௰௬. ௨.இரா.௰௫.௨௧. (௬) நிகி.௩.௰௫. யோவா.௯.௭. (௮) அதி.௩௰.௨௮. (௯) யோவே.௩.௯,௰௧. (௰) யோபு.௫.௰௨. அப்.௫.௩௮,௩௯. ரோ.௮.௩௧. (௰௨) ௧.பேதுரு.௩.௰௪,௰௫. (௰௩) எண்.௨௰.௰௨. சங்.௭௬.௭. லூக்.௰௨ (௰௪) எசேக்.௰௧.௰௬. லூக்.௨.௩௪. ரோ.௯.௩௩. ௧.பேதுரு.௨.௮. (௰௫) மத்.௨௧.௪௪. ரோ.௯.௩௨. (௰௭) அபகூ.௨.௩. (௰௮) எபி.௨.௰௩. சங.௩.௮,௰௧. ௧.சாமு. ௨௮.௮. (௨௰) லூக்.௰௬.௨௯. மீகா.௩.௬, (௨௧) வெளி.௰௬.௰௧.

## கூ. அதிகாரம்.

க. ஆபத்துக்காலத்திற் கிறிஸ்துவின் சென்மத்தினால் சனங்களுக்குக்கிடைக்குஞ் சௌக்கியத்தைவருணித்தல்: அ. இஸரவேலருக்கு வருந் தண்டனை விளங்கக்காட்டல்: யகூ. அவர்களுடைய கபடந்துராசாரம் என்னுமிவைகளினிமித்தந் தண்டனைவருமெனல்.

வியாகுலந்தங்கின ஸ்தானத்தில் அந்தகாரந்தரித்
திராது, பூருவகாலத்தில் அவர் செபுலோன், நப்
தாலிதேசங்களைத் தாழ்ச்சிப்படுத்தினார்; பின்பு
யோர்தானுக்கு அக்கரையிலுள்ள அந்நியதேசத்
தாருடையகலிலேயாவைமகிமைப்படுத்துவார்.-
உ இருளில் அலைந்துதிரிந்த சனங்கள் மகா ஒளி
யைக்கண்டார்கள்: மரணநிழல்பொருந்திய தே
சத்திலே வாசமாயிருந்தவர்கள்மேல் ஒளிபிரகா
கூ சித்தது.-தேசத்தாரைவருத்திக்கச்செய்தீர், அவர்
கள் மகிழ்ச்சியைப்பெருகப்பண்ணினீர்: அதி
னால் அவர்கள் உமதுசமுகத்தில் அறுப்புக்காலத்
தில் மகிழ்வதுபோலவும், மனுஷர் கொள்ளையிட்
டபொருளைப்பங்கிட்டுமகிழ்வதுபோலவும் மகி
ச ழுகிறார்கள்.—நீர் மீதியானின் நாளிற்செய்தபிர
காரம் அவர்கள் சுமந்தநுகத்தையும், அவர்கள்
தோளின்மேல் இருந்த தடியையும்,அவர்களை உ
பத்திரவப்படுத்தினவர்களுடைய கோலையும் மு
ரு றித்தீர்.—யுத்தசன்னத்தர் ஒவ்வொருவருடைய
பாதரட்சையும் இரத்தம் புரண்டவஸ்திரமுந் த
சு கிக்கப்படும், அக்கினிக்கு இரையாகும்.—நமக்
கு ஒரு பாலகர் பிறந்தார், நமக்கு ஒருசுதன் அ
ருளப்பட்டார்: கர்த்தத்துவம் அவர்தோளின்மே
லிருக்கும்: அவருடைய நாமம் அற்புதமானவர்,
ஆலோசனைக்காரர்,வல்லமையுள்ள தேவன்,நித்
எ தியபிதா, சமாதானபிரபு என்னப்படும்.-அவரு
டைய கர்த்தத்துவம், சமாதானமென்னுமிவைக
ளின்விருத்திக்குமுடிவில்லை,அவர்தாவீதின்சிங்
காசனத்தில்வீற்றிருந்து, நியாயத்தினாலும் நீதியி
னாலும் இன்றுமுதலென்றும் அதைஸ்தாபித்துஸ்
திரப்படுத்துவார். சேனைபதியாகிய யெகோ
வாவின் அன்பின்ஊக்கம்இதைச்சித்தியாக்கும்.
அ ஆண்டவர்யாக்கோபுக்கு ஒருவாக்குஅனுப்
க பினார், அது இஸரவேலின்மேல்தங்கிற்று.-செங்
கற்கள்விழுந்தன,நாம்பொளிந்தகல்லினாற்கட்டு
வோம்: காட்டத்திமரங்கள் சேதிக்கப்பட்டன,
அவைகளை ஏரஸ்விருட்சங்களாக மாற்றுவோ
ய மென்று,—தங்கள் அகங்காரத்தினாலும் மனப்பெ
ருமையினாலும்சொல்லுகிற எப்பிராயீமியரும் ஷ
மாரியருமாகிய சகலசனங்களும் இதை அறிந்து
யக கொள்வார்கள்.—ஆதலால் யெகோவா, ரேத்
சீனுடைய சேனைகளை அவர்களுக்கு விரோதமா
யெழுப்பி, அவர்களுடைய மற்றச்சத்துருக்களை
யஉ யும் கூட்டிக்கலப்பார்.—முற்புறத்திலே ஆரிய
ரும் பிற்புறத்திலே பெலிஸ்தியரும் வந்து, திறந்த
வாயால்இஸரவேலரைப்பட்சிப்பார்கள். இவை
யெல்லாவற்றினாலும் அவர் கோபம் நீங்கவில்
லை, அவருடைய கரம் இன்னும் ஓங்கினபடியே
யிருக்கின்றது.
சனங்கள் தங்களை அடிக்கிறவரிடத்தில்திரும் யகூ
பாமலும்,சேனைபதியாகிய யெகோவாவைத்
தேடாமலும் இருக்கிறார்கள்.—ஆதலால் யெ யச
கோவா ஒரேநாளில் இஸரவேலின் தலையை
யும் வாலையும், கிளையையும் நாணலையுஞ் சேதிப்
பார்.—முதியோனுங் கனம் பொருந்தினவனு யரு
மே தலை;பொய்ப்போதகம்பண்ணுகிறதீர்க்கதரி
சியே வால்.-இந்தச்சனங்களுக்குவழிகாட்டுகிற யசு
வர்கள் இவர்களைத் தவறச்செய்கிறார்கள்; அ
வர்களால் நடத்தப்படுகிறவர்கள் நாசமடைகி
றார்கள்.—ஆதலால் யெகோவா அவர்கள் வா யஎ
லிபரிற் பிரியமாயிரார், அவர்களிலிருக்கிறஅநா
தபிள்ளைகள் மேலும், விதவைகள் மேலும் இரங்
கார்:அவர்கள்யாவருங்கபடிகளும்,தூர்க்கிரியை
செய்கிறவர்களுமாயிருக்கிறார்கள், ஒவ்வொரு
வாயுந்தீமைபேசும். இவையெல்லாவற்றினாலும்
அவர்கோபம் நீங்கவில்லை, அவர்கரம் இன்னும்
ஓங்கினபடியேயிருக்கின்றது.
பாவம் அக்கினியாய் எரிகின்றது: அதுமுட் யஅ
செடியையும் நெரிஞ்சிலையும் பட்சிக்கும், நெ
ருங்கிய சோலையிலே பற்றி எரியும், அவைகள்
புகையாய்த்திரண்டு எழும்பும்.—சேனைபதியாகி யகூ
ய யெகோவாவின் கோபத்தினிமித்தந் தே
சம் அந்தகாரப்பட்டது, சனங்கள் அக்கினிக்கு
இரையாயிருக்கிறார்கள்: ஒருவனுந் தன் சகோத
ரன்மேலிரங்கான்.-வலப்பக்கத்திற்பறிக்கிறவன் உய
பசியாயிருக்கிறான்; இடப்பக்கத்திற் புசிக்கிற
வன் திருத்தியடையான்: ஒவ்வொருவனுந் தன்
தன் புயத்தின் மாமிசத்தைத் தின்பான்.—மனா உக
ஷே எப்பிராயீமையும், எப்பிராயீம் மனாஷேயையும்
பட்சிப்பார்கள்: இருவரும் யூதாவைவிரோ
திப்பார்கள். இவையெல்லாவற்றினாலும் அவர்
கோபம் நீங்கவில்லை, அவர் கரம் இன்னும் ஓங்
கினபடியேயிருக்கின்றது.

## ய. அதிகாரம்.

க. அநியாயஞ்செய்பவர்களுக்குவருந்தண்டனை: ரு. அகங்காரமுள்ள அஸீரியராசாவுக்குவருவதைத் தெரிவித்தல்: யஉ. அவன் நாசமடைதல்: உய. இஸரவேலரின் மீந்திருக்கிற சனங்கள் இரட்சிப்பைப்பெறல்: உச. அஸீரிய ராசாவின் சேனையின்வரவைவருணித்தல்: கூகூ. அவர்கள் நாசமடைதல்.

ஐயோ, தரித்திரருக்கு நியாயத்தை விலக்கவும், க
என்சனங்களிற் சிறுமையானவர்களுடையநியா
யத்தைப்புரட்டவும், விதவைகளைச் சூறையாட

(கூ. அதி. க.) உ.இரா.யரு.உக. உ.நாளா.யசு.ச. லேவி.உசு.உச. உ.இரா.யஎ.ரு,சு. (உ) மத்.ச.யரு. எபே.ரு.அ, யச. (கூ) நியா.ரு.கூய. (ச) நியா.எ.உஉ. (சு) லூக்.உ.யக. யோவா.கூ.யசு. மத்.உஅ.யஅ. க.கொரி.யரு.உரு. நியா. யகூ.யஅ. தீத்.உ.யஉ. எபே.உ.யச. (எ) தானி.உ.சச. லூக்.க.கூஉ,கூகூ. உ.இரா.யகூ.கூய. (யஉ) எரே.ச.அ. (யகூ) எரே.ரு.கூ. ஓசி.எ.ய. (யச) வெளி.யஅ.அ. (யஎ) மீகா.எ.உ. (யஅ) மல்.ச.க. (யக) மீகா.உ.கூ. (உய) லேவி.உசு. உசு. எரே.யக.க.—(ய. அதி.)

வும், அநாதபிள்ளைகளின் பொருளை அபகரிக்க
௨ வும்,—அநீதியான கட்டளைகளைத் தீர்மானித்து,
விசனப்படுத்தும் பிரமாணங்களை எழுதுகிறவர்
௩ களுக்கு ஆபத்துவரும்.—நியாயம் விசாரிக்குந்தி
னத்திலும், தூரத்தினின்றுவருஞ்சங்காரத்திலும்
என்னசெய்வீர்கள்; உதவிபெறும்படி ஆரிடத்
தில்தப்பி ஓடுவீர்கள்; உங்கள் மகிமையை எங்
௪ கே வைத்துவிடுவீர்கள்.—நானில்லாவிட்டால் அ
வர்கள் சிறைப்பட்டவர்களுக்குள்தாழ்ச்சிப்படு
வார்கள்,கொலைசெய்யப்பட்டவர்கள்கீழேவிழு
வார்கள். இவையெல்லாவற்றினாலும் அவர் கோ
பம் நீங்கவில்லை, அவர்கரம் இன்னும் ஓங்கின
படியேயிருக்கின்றது.
௫ ஐயோ, என் கோபத்தண்டமாகிய அஷூரிய
னுக்கு ஆபத்துவரும்,அவன் கையிலுள்ள கோல்
௬ என்கோபம்.—கொள்ளைப்பொருளைச் சேர்க்க
வும், சூறையாடவும், தெருக்களின் சேற்றைப்
போல அவர்களை உழக்கவும் கபடமுள்ளசனங்
களுக்கு விரோதமாய் அவனை அனுப்புவேன்;
என்கோபத்துக்குரிய சனங்களுக்குவிரோதமாக
௭ ஒருகட்டளை கொடுப்பேன்.—அவனுடைய அ
பிப்பிராயமோ அதல்ல, அவன்மனம் அப்படிச்
சிந்திக்கவுமில்லை; பலதேசத்தாரைநாசப்படுத்து
வதும் சேதிப்பதுமே அவன்மனோவாஞ்சை.—
௮,௯ என்பிரபுக்களனைவரும் இராசாக்களல்லவா;-கல்
னோ, கார்கேமீசைப்போலல்லவா; அமாத், அர்
பாத்துக்குச்சமானமல்லவா; ஷமாரியா, தமஸ்கு
௰ வைப்போலல்லவா;—ஷமாரியாவிலும் யெரூ
ஷலேமிலுமுள்ள விக்கிரகங்களைப் பார்க்கிலும்
தொழிற்படுத்திய விசேஷித்த விக்கிரகங்களையு
டைய அந்தந்தத்தேசத்தை என் கைக்கண்டதில்
௰௧ லையா;-ஷமாரியாவுக்கும்அதின்விக்கிரகங்களுக்
குஞ்செய்ததுபோல,யெரூஷலேமுக்கும்அதின்
விக்கிரகங்களுக்குஞ் செய்யமாட்டேனோ என்கி
௰௨ றான்.—அஷூரிய இராசா, நான் என்கைவல்லபத்
தினாலும் என்விவேகத்தினாலும் அப்படிச்செய்
தேன்; நான்புத்திமான்: சனங்களின்எல்லைகளை
மாற்றி,அவர்கள் பொக்கிஷங்களைக் கொள்ளையி
ட்டு, பராக்கிரமசாலியைப்போலக் குடிகளைத்
௰௩ தாழ்ச்சிப்படுத்தினேன்.-ஒருகுருவிக்கூட்டைப்
போலச் சனங்களின் செல்வத்தைக்கண்டேன்,
அதை என்கைபற்றிற்று: விடப்பட்டமுட்டை
களை ஒருவன்வாரிக்கொள்வதுபோல நானும்தே
சமுழுவதையும் வாரிக்கொண்டேன்; ஒருவரும்
சிறகு விரிக்கவில்லை, வாய்திறக்கவுமில்லை, கீச்
௰௪ சிடவுமில்லையென்கிறான்.—ஆகையால் ஆண்ட
வர் சீயோன்மலையிலும் யெரூஷலேமிலுந் தம
துகிரியைகளெல்லாவற்றையுஞ்சித்திசெய்தபின்
பு, அவன் அகங்காரமனதின் கனியையும் அவ
னுடைய இறுமாப்பான கண்பார்வையையும்

நான்விசாரிப்பேன்.—கோலானது தன்னை எடுத்த ௰௫
வனைச்சுழற்றுகிறேனென்றும், கோலானது தன்
னை எடுத்தவனை அசைக்கிறேனென்றுஞ் சொல்
வதுபோலிருக்கும்; கோடரி தன்னைக்கொண்டு
வெட்டுகிறவனுக்குவிரோதமாக மேன்மைபாரா
ட்டலாமா; வாள் தன்னை இயக்குகிறவனுக்குவி
ரோதமாகப் பெருமைபாராட்டலாமா.-ஆண்ட ௰௬
வர், சேனைபதியாகிய ஆண்டவர் அவனைச்சே
ர்ந்த புஷ்டியான சனங்களுக்குள்ளே மெலிவை
அனுப்புவார்; அவனுடைய மகிமைப்பிரதாபத்
தின்கீழ், பட்சிக்கும்அக்கினியைப்போலும்ஒரு
அக்கினியைக் கொளுத்துவார்.—இஸரவேலின் ௰௭
ஒளியானவர் அக்கினியும், அவனுடைய பரிசுத்
தர் சுவாலையுமாகி,ஒருநாளில் அவனுடையமுட்
களையும் நெரிஞ்சில்களையுந் தகித்துப்பட்சிப்
பார்.-அவனுடையவனமும்செழித்தநிலமுமான ௰௮
வைகளை முழுவதுமாய் நாசப்படுத்துவார்: அவை
கள் கொடிபிடிக்கிறவன் சோர்ந்துவிழுவதுபோ
லாகும்.—சோலையில் அவனுக்கு மீந்திருக்கும் ௰௯
மரங்கள் கொஞ்சம், ஒருபாலகனும் அவைகளை
யெண்ணியெழுதலாம்.
அக்காலத்தில் இஸரவேலரில் மீந்திருக்கிறவர் ௨௰
களும், யாக்கோபின்வமிசத்திலேதப்பியிருக்கிற
வர்களும் பின்னொருபொழுதுந் தங்களை அடித்
தவனைச்சாராமல், இஸரவேலரின் பரிசுத்தராகி
ய யெகோவாவை உண்மையாய்ச் சார்ந்து
கொள்வார்கள்.-மீந்திருப்பவர்கள்,யாக்கோபின் ௨௧
மீந்திருப்பவர்களே வல்லமையுள்ள தேவனி
டத்தில் திரும்புவார்கள்.—இஸரவேலே, உன் ச ௨௨
னங்கள் சமுத்திரத்தின் மணலைப்போலிருந்தா
லும் அவர்களில் மீந்திருப்பவர்கள் மாத்திரந் தி
ரும்புவார்கள்: தீர்மானிக்கப்பட்டமுடிவு பெரு
கிவரும் நீதி.—சேனைபதியாகிய யெகோவா ௨௩
வென்னும் ஆண்டவர் குறித்தநாசந்தேசமெங்
கும் பலிக்கப்பண்ணுவார்.
சீயோனில் வாசமாயிருக்கிற என்சனமே, அ ௨௪
ஷூரியனுக்குப்பயப்படாதே: அவன் தன் தண்
டத்தினால் உன்னை அடிப்பான், எகிப்தியர்செய்
வதுபோல் உனக்குவிரோதமாய்த்தன்கோலைஓங்
குவான்.—ஆனாலும்மிகவுங்கொஞ்சக்காலத்துக் ௨௫
குள்ளே என்உக்கிரமும், அவர்கள்சங்கரிக்கப்ப
டுவதினால் என்கோபமும் ஒழியுமென்றுசேனைப
தியாகிய யெகொவாவென்னும் ஆண்டவர்
சொல்லுகிறார்.—ஒரேபென்னுங் கன்மலையிலே ௨௬
மீதியானியரின் சங்காரத்துக்கேற்கச் சேனைபதி
யாகிய யெகோவா அவன்மேல் ஒருகசையை
ஓங்குவார்: எகிப்தியருக்குவிரோதமாகத் தமது
கோலைச்சமுத்திரத்தின்மேல்ஓங்கினதுபோல அ
தைஅவன்மேலும் ஓங்குவார்.-அந்நாளில்அவன் ௨௭
உன் தோளில் வைத்தசுமையும், உன்கழுத்தில்

(௩) ஓசி.௯.௭. லூக்.௰௯.௪௪. (௫) எரே.௫௧.௨௰. (௬) அதி.௯.௰௭. எரே.௩௪.௨௨. (௭) ஆதி.௫௰.௨௰. மீகா.௪.௰௨. (௮) ௨.இரா.௰௮.௨௪,௩௩. (௯) ஆமோ.௬.௨. ௨.நாளா.௩௫.௨௰. ௨.இரா.௰௬.௯. (௰௨) அதி.௩௭.௨௪. தானி.௪.௩௰. (௰௪)௨.இரா.௰௯.௨௯. எரே.௫௰.௰௮. (௰௫) எரே.௫௧.௨௰. (௰௮) ௨.இரா.௰௯.௨௩. (௨௨) ரோ.௯.௨௭.(௨௩)தானி.௯.௨௭. ரோ.௯.௨௮. (௨௪) அதி.௩௭.௬. யாத்.௰௪.(௨௫)தானி.௰௧.௩௬. (௨௬) ௨.இரா.௰௯,௩௫. நியா.௭.௨௫. யாத்.௰௪.௨௬,௨௭. (௨௭) தானி.௯.௨௪. ௧.யோவா.௨.௨௰.

வைத்தநுகமும்நீக்கப்படும்,அபிஷேகத்தினிமித்
உ அ தம் நுகம் முறிந்துபோம்.—அவன் ஆயாத்துக்கு
வந்துவிட்டான்,மிக்ரோனைக்கடந்துவிட்டான்;
தன் பிரயாணப் பொருள்களை மிக்மாஷிலே
உகூ வைத்துவிட்டான்.—துறையைக் கடந்தார்கள்:
கேபாவில் இராத்தங்கினார்கள்; ராமா பயப்ப
டுகின்றது; ஷவுலின் ஊராகியகிபியா தப்பியோ
ஙய டிற்று.—கலீம் குமாரத்தியே, நீ பெருஞ்சத்தமிடு:
ஆ, எளிய அனதோத்தே, லாயீஷ் அதைக்கேட்
ஙக கப்பண்ணு.—மத்மேனா தப்பியோடிற்று; கெ
ஙஉ பீம் வாசிகள் தப்பியோடத்திரண்டார்கள்.—இன்
றுமாத்திரம் நோப்பிலே தங்குவான்: பின்பு சீ
யோன் குமாரத்தியின் மலையென்னும் யெருஷ
லேமின் குன்றுக்கு விரோதமாகத் தன்கை
ஙங யை அசைப்பான்.—பாருங்கள், சேனாபதியாகிய
யெகோவாவென்னும் ஆண்டவர் பயங்க
ரத்தோடே கிளையைவெட்டுவார்:உயர்ந்தவிருட்
சங்கள் சேதிக்கப்படும், உன்னதமானவர்கள்
ஙச தாழ்ச்சி அடைவார்கள்.—அவர் இருப்பாயுதத்தி
னாலே காட்டுச்சோலைகளை வெட்டுவார், லிபா
னோன் பராக்கிரமக்கையினாலே விழும்.

## யக. அதிகாரம்.

க. கிறிஸ்துவின் ஆளுகையைநிருணயித்தல்: கூ. அவருடைய நன்மையையெடுத்துக்காட்டல்: ய. அந்நியதேசத்தாருக்குச் செயமும் யூதேயருக்கு இரட்சிப்பும் உண்டாதல்.

ஈஷாயென்னும் அடிமரத்தினின்று ஒரு முளை
தோன்றும், அவன் வேரினின்று ஒருகிளை யெ
உ ழும்பிச்செழிக்கும்.—ஞானத்தையும் புத்தியை
யுந் தருகிறதும், ஆலோசனையையும்பராக்கிரமத்
தையுந் தருகிறதும், யெகோவாவைப் பற்
றும்அறிவையும்பயத்தையுந்தருகிறதுமாகிய யெ
ங கோவாவின் ஆவி அவர்மேல்தங்கும்;—அவர்
யெகோவாவைப் பற்றும்பயத்தைக் குறித்து
மிகவும் உணர்வுள்ளவராயிருப்பார்: அவர்தமது
கண்கண்டபடி நியாயம்விசாரிக்காமலும், தமது
ச காதுகேட்டபடி கண்டியாமலும்,—தரித்திரரை
நீதிப்படி நியாயம்விசாரித்துப் பூமியிலிருக்கிற
தாழ்ந்த சிந்தையுள்ளவர்கள் நிமித்தம் நீதிப்படி
கண்டிப்பார்: தமதுவாயின் தண்டத்தினாலே பூ
மியை அடித்து, தமது உதடுகளின் ஆவியினால்
ரு துன்மார்க்கரைநாசப்படுத்துவார்.—நீதி அவருக்
கு அரைக்கச்சு, சத்தியம் அவருக்கு இடைக்கச்
சு சு.—கோனாய் ஆட்டுக்குட்டியோடே தங்கும்,
சிவிங்கிவெள்ளாட்டுக்குட்டியோடே படுக்கும்;
கன்றும், சிங்கக்குட்டியும், புஷ்டியான மிருக
மும் ஏகமாய்க்கூடும்: ஒரு சிறுபாலகன் அவைக
எ ளைநடத்துவான்.-பசுவும்கரடியுங்கூடிமேயும்;அ
வைகளின் குட்டிகள் ஏகமாய்ப்படுத்துக்கொள்
ளும்: சிங்கம் மாடுபோலவைக்கோல்தின்னும்.—
முலைகுடிக்குங் குழந்தை விரியன்பாம்பின் அ அ
ளையின்மேலே விளையாடும், முலைமறந்த பிள்ளை
கட்டுவிரியன் புற்றிலேகையைவைக்கும்.—கட கூ
லானது நீர்களினால் நிறைந்திருக்கிறதுபோலப்
பூமி யெகோவாவைப் பற்றும் அறிவினால்
நிறைந்திருக்கும்: ஆதலால் பரிசுத்தம்பொருந்தி
ய என்மலையெங்கும் தீமையாவது, நாசமாவது
செய்வார் ஒருவருமில்லை.
அக்காலத்திலே சனங்களுக்குக் கொடியாக ஈ ய
ஷாயின்வேரிருக்கும்; அதனிடத்தில்புறத்தேசத்
தார் சேருவார்கள்: அவருடைய இளைப்பாறுதல்
மகிமையுள்ளதாகும்.—அக்காலத்திலே ஆண்ட யக
வர், அசீரியவிலும்,எகிப்திலும்,பத்ரோசிலும்,
கூஷிலும், எலாமிலும், ஷீனியாரிலும், அமாத்
திலும், சமுத்திரத் தீவுகளிலும் தமக்குரியசனங்
களில் மீந்திருக்கிறவர்களை மீட்டுக்கொள்ளும்ப
டி இரண்டாந்தரந் தமது கையை நீட்டுவார்.—
அந்நியதேசத்தாருக்கு ஒருகொடியை ஏற்றி,பூமி யஉ
யின்நான்குதிசையிலுனின்று இஸரவேலரில்தள்
ளுண்டவர்களைச்சேர்த்து, யூதாவிற் சிதறஅடிக்
கப்பட்டவர்களை ஏகமாய்க் கூட்டுவார்.—எப்ரா யங
யீமின் பொறாமை நீங்கும், யூதாவின் பகைவர்
சேதிக்கப்படுவார்கள்: எப்ராயீம் யூதாவின்மேற்
பொறாமைகொள்ளான், யூதா எப்ராயீமைக்கிலே
சப்படுத்தான்.—அவர்கள் ஏகமாய் மேற்கேயிருக் யச
கிற பெலிஸ்தியருடையதோளின்மேற்பாய்வார்
கள்; ஏகமாய்க்கூடிக் கீழ்த்திசையிலுள்ளவைக
ளைக் கொள்ளையிடுவார்கள்: ஏதோமின்மேலும்
மோவாபின்மேலுங் கையைவைப்பார்கள்; அம்மோ
ன்சந்ததியார்அவர்களுக்கமைந்திருப்பார்கள்.—
யெகோவா எகிப்து சமுத்திரத்தின்நாவைமு யரு
ழுமையாய் நாசப்படுத்தி, பெருங்காற்றுடன் தம
துகையை நதியின்மேல் அசைத்து, ஏழுநீர்க்கால்
களாகப்பிரித்து, சனங்கள் கால்நனையாமல்க
டந்துபோகும்படி பண்ணுவார்.—எகிப்துதேசத் யசு
தினின்று புறப்பட்டபொழுது இஸரவேலருக்
குஇருந்ததுபோல, அவருடைய சனங்களில் அ
சீரியவில் மீந்திருப்பவர்களுக்கு ஒரு பெரும்
பாதையிருக்கும்.

## யஉ. அதிகாரம்.

இரட்சிப்பினிமித்தம் தேவனைத் துதித்தல்.

நீ அந்நாளில், யெகோவாவே, நான் உம் க
மைவாழ்த்துவேன்: நீர் என்மேற்கோபங்கொண்
டீர், இப்பொழுதோ உம்முடையகோபம் நீங்
கிற்று, நீர் என்னைத் தேற்றுகிறீர்.—பாருங்கள், உ

(உகூ) க.சாமு.யக.ச. (ஙய) க.சாமு.உரு.சச. நியா.யஅ.அ. யோசு.உக.யஅ. (ஙக) யோசு.யரு.ஙக.(ஙஉ)க.சாமு. உக.க. நிகி.யக.ஙஉ. (ஙங) ஆமோ.உ.கூ.—(யக. அதி. க.) அதி.ருங.உ. சக.சு.யஉ. வெளி.ரு.ரு. அப்.யங.உங. எரே.உங.ரு.(உ)அதி.சுக.க. மத்.ங.யசு. யோவா.க.ஙஉ,ஙங. (ச) சங்.எஉ.உ,ச. வெளி.யகூ.யக. யோபு.ச.கூ. மல். ச.சு. உ.தெச.உ.அ. வெளி.க.யசு.(ரு)எபே.சு.யச. (சு) அதி.சுரு.உரு. எசேக்.ஙச.உரு. ஓசி.உ.யஅ. (கூ) யோபு. ரு.உங. அபகூ.உ.யச. (ய) ரோ.யரு.ய,யஉ. (யக) சக.ய.ய. (யஉ) யோவா.எ.ஙரு. யாக்.க.க. (யங) எரே.ங.யஅ. எசேக்.ஙஎ.யசு,யஎ,உஉ. ஓசி.க.யக. (யச) தானி.யக.சக. அதி.சுய.யச. (யரு) சக.ய.யக.(யசு)அதி.யகூ.உங. யாத். யச.உகூ.—(யஉ. அதி. உ.) சங்.அங.யஅ. யாத்.யரு.ங.

தேவனே என்னிரட்சிப்பு; நான் அவரை நம்
பிப்பயப்படேன்: இராசாவென்னும் யெகோ
வா என்பெலம், என் கீதம்; அவரே என்னிரட்
௩ சிப்பென்பாய்.—நீங்கள் இரட்சிப்பின் ஊற்றின்
கண்களிலிருந்து சந்தோஷமாய்ச்சலம்மொண்டு
௪ கொள்வீர்கள்.—அக்காலத்தில், யெகோவா
வைத்துதியுங்கள், அவருடைய நாமத்தைப்பி
ரசித்தப்படுத்துங்கள், அவருடையகிரியைகளைச்
சனங்களுக்குத் தெரிவியுங்கள், அவருடையநா
மம் உன்னதமுள்ளதென்று பிரசித்தம் பண்ணுங்
௫ கள்.—யெகோவாவைப் பாடுங்கள்; அவர்
மகத்துவமான கிரியையைச்செய்தார்: இது பூமி
௬ யெங்கும் அறியப்படக்கடவதென்பாய்.—சீயோ
னில் வசிப்பவளே, இஸரவேலின்பரிசுத்தர்உன்
மத்தியில் மகிமையுள்ளவராயிருக்கிறபடியினால்
நீ உரத்தசத்தமிட்டு ஆனந்தமுழக்கமிடு.

## ௰௩. அதிகாரம்.

௧.பாபேலுக்கு நேரிடுந்தண்டனையை நிருணயித்தல்: ௬. சனங்களின்துக்கத்தைக்குறித்தல்: ௰௯. பாபேலின் சருவநாசத்தை முன்தெரிவித்தல்.

பாபேலைக்குறித்து ஆமோத்சின்புத்திரனாகிய ஏ
௨ சாயாவுக்குத்தெரிவிக்கப்பட்ட வாக்கியம்.—ச
னங்கள் பிரபுகளின் வாசல்களிற் பிரவேசிக்
கும்பொருட்டு, நீங்கள் உயர்ந்த மலையின்மேற்
கொடியை எற்றுங்கள், அவர்கள்நிமித்தம் உரத்த
௩ சத்தமிடுங்கள், கைகாட்டுங்கள்.—என் கோபம்
பலிக்கும்படிசெய்ய நான் நியமித்தவர்களுக்குக்
கட்டளையிட்டேன், என் மகத்துவத்தை நினைந்
து களிகூரும் பராக்கிரமசாலிகளையும் அழைத்
௪ தேன்.—மலைகளிலே திரளானசனங்களின் ஆர
வாரம்இருக்கின்றது;ஏகமாய்க்கூடியஅநேகராச்
சியத்திலுள்ளசனங்களின் கலகத்தின் ஆரவாரம்
இருக்கின்றது: சேனைப்தியாகிய யெகோவா
யுத்தத்தினிமித்தஞ்சேனையை அணிவகுக்கிறார்.-
௫ யெகோவாவும், அவர்கோபத்தின் ஆயுதங்க
ளும் முழுத்தேசத்தையும் சேதிக்கும்படி வானத்
தின் கடையெல்லையிலுள்ள தூரமான தேசத்தி
னின்றுவருகின்றன.
௬ யெகோவாவின் நாள் சமீபமாய்வந்தது;
அது சருவவல்லவரினின்று மகா சங்காரத்தைப்
௭ போலவரும்; நீங்கள் அலறுங்கள்.—அதினால்எல்
லாக்கைகளுஞ்சலிக்கும், எல்லாமனுஷருடைய
௮ மனமுங்கரைந்துபோம்.—அவர்கள் நடுங்குவார்
கள்: நோய்களும், வேதனைகளும் அவர்களைப்பி
டிக்கும்; பிள்ளையைப்பிரசவிக்கும் ஸ்திரியைப்
போல வேதனைப்படுவார்கள்: அவர்கள் ஆச்சரி
யத்தோடே ஒருவரையொருவர் பார்ப்பார்கள்;
அவர்கள்முகங்கள் அக்கினிச்சுவாலைகளாகும்.-
௯ பாருங்கள், தேசத்தைப்பாழாக்க அகோர உக்கி
ரத்தோடும்,மூளுகிறகுரோதத்தோடும் யெகோ
வாவின் நாள் வருகின்றது: அவர் அதினின்று
பாவிகளைச்சேதிப்பார்.—வானத்தின் நட்சத்திரங் ௰
களும் இராசிகளும் தங்கள்ஒளியைக் கொடுப்ப
தில்லை: சூரியன்தான்புறப்படுகையில் இருண்டி
ருப்பான், சந்திரன் தன்ஒளியைக்கொடான்.—
நான் பாவத்தினிமித்தம் உலகத்தையும், அநீதியி ௰௧
னிமித்தந் துன்மார்க்கரையுந் தண்டிப்பேன்; அ
கங்காரிகளுடைய இறுமாப்பைஒழியப்பண்ணு
வேன், பயங்கரமானவர்களுடைய அகங்காரத்
தைத்தாழ்த்துவேன்.—ஒருமனுஷனைத் தங்கத்தி ௰௨
லும், ஒருபுருஷனைஒப்பீரின்பொற்பாளத்திலும்
அதிக அருமையாயிருக்கச்செய்வேன்.—இதினி ௰௩
மித்தஞ் சேனைபதியாகிய யெகோவாவின்
கோபமும், அவருடைய உக்கிரகோபமுமுள்ள
தினத்தில் ஆகாயமண்டலங்களை அதிரப்பண்ணு
வேன்.—பூமிதன்னிடத்தைவிட்டுநீங்கும்; அப் ௰௪
பொழுது துரத்தப்பட்டமான்போலவும்,மேய்ப்
பரில்லாத ஆட்டுக்கூட்டம்போலவும்இருப்பார்
கள்: ஒவ்வொருவனும் தன் தன் சனங்களிடத்
தில்திரும்பி, தன்தன் தேசத்திற்குத் தப்பியோடு
வான்.-அகப்படுகிற எவனும்,உருவக்குத்தப்படு ௰௫
வான்; சேர்ந்தவன் எவனும், கட்கத்தினால்விழு
வான்.—அவர்களுடையபிள்ளைகளும் அவர்கள் ௰௬
கண்களுக்கு முன்பாக மோதப்படுவார்கள்; அ
வர்கள்வீடுகள் கொள்ளையாடப்படும், அவர்களு
டைய மனைவியர் மானபங்கப்படுவார்கள்.—பா ௰௭
ருங்கள்,வெள்ளியைமதியாமலும்,பொன்னிலே
பிரியப்படாமலும் இருக்கிற மேதியரை அவர்க
ளுக்குவிரோதமாக ஏவுவேன்.—அவர்கள் விற்க ௰௮
ளால் வாலிபரைக் கொலைசெய்வார்கள்; கருப்
பத்தின்கனியின்மேல் இரங்கார்கள்; அவர்கள்
குழந்தைகள்மேல் கண்ணோட்டம்வையார்கள்.
இராச்சியங்களுக்குள் அலங்காரமும், கல்தே ௰௯
யரின் மகிமையின் பூஷணமுமாகிய பாபேல்,
சோதோமையுங் கொமோராவையும்போலத் தே
வனுடைய கையினால் கவிழ்க்கப்படும்.—இனி ௨௰
ஒருபொழுதும் அதில் ஒருவரும் வசியார், தலை
முறைதோறும் அதில் ஒருவனுங்குடியிரான்: அ
ரபியசனங்கள் அங்கேகூடாரம்போடார்கள்,மே
ய்ப்பர்கள் அங்கேஆட்டுக்கிடை கட்டார்கள்.—
காட்டுமிருகங்கள் அங்கே படுத்துக்கொள்ளும்; ௨௧
ஊளையிடுகிறபிராணிகள் அவர்கள்வீடுகளை நிரப்
பும்; கோட்டான்கள் அங்கே வசிக்கும்,காட்டா
டுகள் அங்கேகூத்தாடும்.—கோணாய்கள் அவர்கள் ௨௨
மாளிகைகளிலே அலறும், வலியசருப்பங்கள் அ
வர்களுக்கு மகிழ்ச்சிதருகிற அரமனைகளில் ஏக
மாய்க்கூடும்:அதின்காலஞ்சீக்கிரம்வரும்,அதின்
நாள் தாமதியாமல்வரும்.

(௩) யோவா.௪.௰,௰௪. (௪) ௧.நாளா.௰௬.௮. சங்.௱௫.௧. சங்.௱௪௫.௪,௫,௬. (௫) யாத்.௰௫.௨,௨௧. (௬) செப்.௩.௰௪. சங்.௭௧.௨௨.—(௰௩. அதி. ௧.) அதி.௨௧.௧. (௨) அதி.௫.௨௬. எரே.௫௰.௨. எரே.௫௧.௨௫. அதி.௰.௩௨. (௩) யோவே.௩௰.௧. (௬) செப்.௧.௭. வெளி.௰௬. ௭.யோபு.௩௧.௨௩. யோவே.௧.௰௫. (௯) மல்.௪.௧. சங்.௱௪.௩௫. நீதி.௨.௨௨. (௰) அதி.௨௪.௨௧,௨௩. எசேக்.௩௨.௭. யோவே.௨.௩௧. மத்.௨௪.௨௯. (௰௩) ஆகா.௨.௬. சங்.௱௰.௫. புல.௧.௰௨. (௰௪) எரே.௫௧.௯. (௰௬) நாகூ.௩.௰. சக.௰௪.௨. (௰௭) எரே.௫௧.௰௧,௨௮. தானி.௫.௨௮,௩௧. (௰௯) ஆதி.௰௯.௨௪,௨௫. உபா.௨௯.௨௩. எரே.௪௯.௰௮. (௨௰) எரே.௫௰.௩,௩௯. (௨௧) வெளி.௰௮.௨. (௨௨) எரே.௫௧.௩௩.

## ௰௪. அதிகாரம்.

௧. தேவன் இஸ்ரவேலர்மேலிரங்கல்: ௪. இஸ்ரவேலர் பாபேலைக்குறித்து வீம்புபாராட்டல்: ௨௪. அசீரியருக்குவருந்தண்டனைகூறல்: ௨௯. பெலிஸ்தியருக்குவருந்தண்டனைகாட்டல்.

யெகோவா யாக்கோபின்மேல் இரங்குவார், பின்னும் இஸ்ரவேலரைத் தெரிந்துகொள்ளுவார், அவர்களை அவர்கள் தேசத்திலே நிலைப்படுத்துவார்: அந்நியர் அவர்களோடே சேருவார்கள், அவர்கள் யாக்கோபின் வமிசத்துடனே இ
௨ சைந்திருப்பார்கள்.—சனங்கள் அவர்களுடைய தேசத்திற்கு அவர்களைக்கொண்டுபோய்விடுவார்கள்: இஸ்ரவேல் வமிசத்தார் யெகோவாவுடைய தேசத்தில் அவர்களைப் பணிவிடைக்காரராகவும் பணிவிடைக்காரிகளாகவுஞ் சுதந்தரித்துக்கொள்வார்கள்: அவர்கள் தங்களைச் சிறைப்படுத்தினவர்களைச் சிறைப்படுத்தி, தங்களைக் கி
௩ லேசப்படுத்தினவர்களை ஆளுவார்கள்.-யெகோவா உன் துக்கத்தையும், உன்பயத்தையும், உன்மேல் சுமத்தப்பட்ட கடினமான ஊழியத்தையும் நீக்கி உன்னை ஆறுதல் செய்யுங்காலத்தில்,
௪ நீ,பாபேலின்இராசாவைக்குறித்து ஓ,ஓ,உபத்திரவஞ்செய்தவன் ஒழிந்துபோனானே; பொன்
௫ னைக்கவர்ந்த நகரி ஒழிந்துபோயிற்று.—துஷ்டருடைய தண்டத்தையும் அரசாண்டவர்களுடைய
௬ கோலையும் யெகோவா முறித்தார்.-குரோதங்கொண்டு இடைவிடாதபடி சனங்களை அடித்து, கோபத்தோடே பலதேசத்தாரை அரசாண்டவன், தடுப்பாரில்லாமல் துயரப்படுத்தப்படுகி
௭ றான்.—பூமிமுழுவதும் இளைப்பாறி அமைதியாயிற்று: அவர்கள் ஆனந்தமுழக்கமிடுகிறார்கள்.—
௮ தேவதாருக்களும், லிபானோனின் எரஸ்விருட்சங்களும் உன்னைக்குறித்துமகிழ்ந்து, நீ விழுந்துகிடந்ததுமுதற்கொண்டு தறிக்கிறவன் எங்களை அணுகவில்லையென்று சொல்லுகின்றன.—
௯ நீ போய்ச்சேருகையில், உன்னைச் சந்திக்கும்படி கீழுள்ளபாதாளம் அதிர்ந்து, உன்னிமித்தம் மரித்தோரையும், பூமியிலிருந்த பெரியோர்யாவரையும் எழுப்புகின்றது; மறுதேசத்து ராசாக்களை அவரவர் சிங்காசனத்தை விட்டெழும்பப்பண்
௰ ணுகின்றது.—அவர்களெல்லாரும் உன்னைநோக்கி, ஓ, ஓ, நீயும் எங்களைப்போலப்பலவீனனானாயா; நீயும் எங்களுக்குச்சமானனானாயாவென்பார்
௰௧ கள்.—உன் அகங்காரமும் உன்வாத்தியங்களின் இனியசத்தமும் மரித்தோர் ஸ்தானத்திலேதாழ்த்தப்பட்டன: புழுவே உன் சயனம், பூச்சிகளே
௰௨ உன்போர்வை.—ஆ, அதிகாலையின்புத்திரனாகிய விடிவெள்ளியே, நீ எப்படிவானத்தினின்று விழுந்தாய்; பலதேசத்தாரையும் ஈனப்படுத்தினவனாகிய நீ எப்படிப் பூமிவரையில் சேதிக்கப்பட்
௰௩ டாய்.—நீ உன்மனதிலே, நான் வானத்துக்கேறுவேன், தேவனுடைய நட்சத்திரங்களிலும் அதிக உயரத்தில் என் சிங்காசனத்தை ஸ்தாபிப்பேன்: வடபுறத்திலுள்ளசபையின்மலையின்மேல்வீ
ற்றிருப்பேன்.-நான்மேகங்களுக்குமேலாய் உன் ௰௪
னதங்களில் ஏறுவேன்; நான் சருவத்திற்குமேலானவருக்கு நிகராவேனென்றெண்ணினாய்.—
ஆனாலும் நீ மரித்தோர்ஸ்தலத்திலே குழியின்பக் ௰௫
கமட்டுந் தாழ்த்தப்பட்டாய்.—உன்னைக் காண் ௰௬
பவர்கள் உன்னைஉற்றுப்பார்த்து, உன்னைக்குறித்துச் சிந்தித்து, பூமி நடுங்கவும் இராச்சியங்கள்
அதிரவுஞ்செயதும்,—உலகத்தைக் காடாக்கியும், ௰௭
அதிலுள்ள நகரங்களைச்சிதைத்தும், சிறைப்பட்டவர்களை அவரவர் வீடுகளுக்குப்போகவிடாமலுமிருந்தமனுஷன் இவனோவென்பார்கள்.—தே ௰௮
சத்திராசாக்களில் ஒவ்வொருவனும் மகிமையோடே தன்தன் ஸ்தலத்திலேபடுத்திருக்கிறான்.—நீ ௰௯
யோ பிரேதக்குழியினின்று நீக்கப்பட்டு வெறுக்கப்படத்தக்க கொம்பைப்போலானாய், கட்கத்தினால் குத்தப்பட்டுக்கொலையுண்டு, குழியிலே போய்மூடப்படுகிறவர்களுடையவஸ்திரம்போலிருக்கிறாய்; காலால் மிதிக்கப்பட்டபிணத்திற்
கொப்பானாய்.—நீ உன் தேசத்தைநாசப்படுத்தி, ௨௰
உன் சனங்களைக்கொன்றாய்: ஆதலால் நீ அவர்களோடே அடக்கம்பண்ணப்படாய், தீமைசெய்பவர்களுடைய சந்ததி ஒருபொழுதும் மேன்மைபெறாதென்னும் இந்தத் திருஷ்டாந்த வாக்கியத்
தைச்சொல்லு.—அவனுடைய புத்திரர் எழும்பித் ௨௧
தேசத்தைப் பிடித்துப் பட்டணங்களினால் உலகத்தை நிரப்பாதபடி, அவரவருடைய பிதாக்களின்பாவத்தினிமித்தம் அவர்களைக்கொலைசெய்
ய ஆயத்தப்படுத்துங்கள்.—அவர்களுக்கு விரோ ௨௨
தமாயெழும்புவேனென்று சேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறார்; நான் பாபேலின் நாமத்தையும், மீந்தவனையும், புத்திரனையும், பௌத்திரனையுஞ் சேதிப்பேனென்று யெகோவா
சொல்லுகிறார்.—அதுமுள்ளம்பன்றிக்குச்சுதந்தர ௨௩
மும், நீர்த்தடாகங்களுமாகும்படி செய்வேன்: சங்காரமென்னுந் துடைப்பத்தினால் அதைத் துடைத்துவிடுவேனென்று சேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறார்.

நான்நினைத்தபிரகாரம் நடக்குமே; நான்கொ ௨௪
ண்ட அபிப்பிராயத்தின்படிசித்திக்குமே:—அசீ ௨௫
ரியனை என்தேசத்திலேமுறித்து, என்மலைகளின் மேல்அவனைமிதித்துவிடுவேன்: அதினால்அவனுடையநுகம் அவர்களைவிட்டு நீங்கும், அவன்ஏற்றியசுமை அவர்கள்மேல்நீங்கி அகன்றுபோம்.—
முழுத்தேசத்தையும்பற்றும்நியமம் இதுவே: அந் ௨௬
நியதேசத்தார்யாவர்மேலுமோங்கிய கை இதுவேயென்று சேனாபதியாகிய யெகோவா ஆணையிட்டார்.—சேனாபதியாகிய யெகோவா நிய ௨௭
மித்ததை விருதாவாக்க வல்லவன்யாவன்; அவர்

(௰௪. அதி. ௧.) சக.௧.௰௭. எபே.௨.௰௨,௰௩. (௨) அதி.௬௰.௰௪. (௪) அப௬.௨.௬. வெளி.௰௮.௰௬.(௮)எசேக்.௩௧.௰௬. (௯) எசேக்.௩௨.௨௧. (௰௩) மத்.௰௧.௨௩. தானி.௮.௰. சங்.௪௮.௨. (௰௪) அதி.௪௭.௮. ௨.தெச.௨.௪. (௰௫)மத்.௰௧.௨௩. (௨௰) யோபு.௰௮.௰௯. (௨௧) யாத்.௨௰.௫. மத்.௨௩.௩௫. (௨௨) நீதி.௰.௭. எரே.௫௧.௬௨. ௧.இரா.௰௪.௰. யோபு.௰௮.௰௯. (௨௩) அதி.௩௪.௰௧. செப்.௨.௰௪. (௨௫) அதி.௰.௨௭. (௨௭) தானி.௪.௩௧,௩௫.

உஅ நீட்டியகையை முடக்கவல்லவன் யாவன்.—ஆ
காஸ் இராசாமரணமடைந்தவருஷத்தில் இந்தப்
பாரமானவாக்குக்கிடைத்தது.
உகூ ஓ, பெலிஸ்தியரே, உங்களேயடித்த தண்டம்
முறிந்துபோனதிஞல் நீங்கள் ஒருமனப்பட்டுக்
களிகூராதிருங்கள்: பாம்பின் வேரினின்று விரி
யன்தோன்றும், அதின்கனி பறக்கிற எரிசருப்
௩ய பம்.—திக்கற்றவர்களுடையதலைப்பிள்ளைகள்பு
சிப்பார்கள்,தரித்திரர் விக்கினமின்றிப்படுப்பார்
கள்: உங்கள் வேரைப்பஞ்சத்திஞலே கெடுத்து
விடுவேன், உங்களில் மீந்திருப்பவர்களை அவன்
௩க கொலைசெய்வான்.—வாசலே, அலறு; நகரமே,
கதறு; பெலிஸ்தியரே, நீங்களெல்லாருங் கரைந்
துபோவீர்கள்: வடக்கினின்று புகைவருகின்ற
து, அவனுடைய கூட்டங்களில் ஒருவனுகிலும்
௩உ மீந்திரான்.—அந்நியதேசத்தாருடைய தூதருக்
குக் கொடுக்கத்தகும் உத்தரம் யாது; யெகோ
வா சீயோனை அஸ்திபாரப்படுத்தினுர், அவரு
டைய சனங்களில் தரித்திரர் அதில் அடைக்க
லம் புகுந்திருப்பார்கள்.

## ய௫. அதிகாரம்.

மோவாபின் சீர்கேட்டைக்கூறல்.

மோவாவைப்பற்றும் வாக்கியம். இராக்காலத்
தில் மோவாபிலுள்ள அரென்னும்நகரம் பாழாக்
கப்பட்டது, அது சேதமாயிற்று; இராக்காலத்தி
லேமோவாபிலுள்ள கீர்நகரம் பாழாக்கப்பட்ட
உ து,அதுசேதமாயிற்று.-ஆதலால்அழும்படி உயர்ந்
தஸ்தானங்களாகியபாயித்துக்கும் தீபோனுக்கும்
அவன்போய்விட்டான்:நேபோவினிமித்தமும்,
மேதேபாவினிமித்தமும்மோவாபியர் ஊளையிடு
கிருர்கள்:எல்லாருடையதலைகளுமொட்டையா
யின, ஒவ்வொருவருடைய தாடிகளுஞ்சிரைக்
௩ கப்பட்டன.—அவர்கள் அதின்வீதிகளில்இரட்
டைக்கட்டிக்கொள்வார்கள்: எல்லாருந் தங்கள்
வீடுகள்மேலுந்தங்கள் வீதிகளிலும் ஊளையிட்டு
ச மிகவும்புலம்புவார்கள்.—எஷ்போனும், எலியா
லேயும் ஓலமிடும்: யாகாஸ்பரியந்தம் அவர்கள்சத்
தங்கேட்கின்றது: ஆதலால் மோவாபின்போர்ச்
சேவகர் அலறுவார்கள்; அவனவன் பிராணன்
௫ அவனவனுக்குப் பாரக்கிலேசமாகும்.-என்னிரு
தயம் மோவாபினிமித்தம் ஓலமிடுகின்றது;மூன்
றுவயதுள்ள கடாரியைப்போலத்தப்பியோடுகிற
வர்கள் சோவார்வரைக்கும் போய்க் கதறுகி
ருர்கள்:அவர்கள் அழுது அழுது லூகித்தின் உ
யர்ந்தஸ்தானத்தில்ஏறுகிருர்கள்; ஒரோனயிமின்
வழியிலே நாசத்தினிமித்தஞ்சத்தமிடுகிருர்கள்.-
சு நிம்ரீமின்சலங்கள் வற்றிப்போம்: அதிஞற் புல்
லு உலரும், முளை அழியும், பசுமை ஒன்றுமிரா
எ து.—ஆதலால் அவர்கள்பெற்றபொருளையும், கு
வித்த திரவியங்களையும், அலரிச்செடியின் பள்
ளத்துக்குக் கொண்டுபோவார்கள்.-அழுகைச்சத் அ
தம் மோவாபின் எல்லையெங்குஞ்சுற்றுகின்றது;
எக்லாயிம்வரைக்கும், அவன் ஊளையிடுதலும்,
பேரேலீம்வரைக்கும், அவன் புலம்பலுந் தொ
னிக்கும்.-தீமோனின்சலங்கள் நிறைந்த இரத்தத் கூ
தால் கலக்கப்பட்டிருக்கும்: ஆனுலும் நான் தீ
மோன்மேல் இன்னுந்துக்கத்தை வருவிப்பேன்,
மோவாபில் தப்பி ஓடினவர்கள்மேலும், தேசத்
தில் மீந்திருப்பவர்கள்மேலுஞ் சிங்கங்களை வரு
விப்பேன்.

## யசு. அதிகாரம்.

க. மோவாபியருக்கு ஆலோசனைசொல்லல்: கூ.
அவர்கள் இறுமாப்பினிமித்தம் தண்டனைவரு
மெனக்காட்டல்: கூ. அதைநினைத்து தீர்க்கதரி
சி புலம்பல்: யஉ. மோவாபின்தண்டனை.

சேலாவினின்றுவனத்தின்வழியாய்ச் சீயோன் க
குமாரத்தியின் மலையிலுள்ள தேசாதிபதிக்கு ஒரு
ஆட்டுக்குட்டியை அனுப்புங்கள்.—மோவாபின் உ
குமாரத்திகள்,கூட்டைவிட்டுத்துரத்தப்பட்டு அ
லைகிற பறவையைப்போல் அர்னேன் நதியின்
துறைகளிடத்திலிருப்பார்கள்.—ஆலோசனைசொ ௩
ல்லுங்கள், நியாயத்தீர்ப்புச்செய்யுங்கள்;மத்தியா
னத்திலும்உன்நிழலை இராக்காலத்தைப்போலாக்
கி துரத்தப்பட்டவர்களை மறைத்துக்கொள்; தப்
பியோடுகிறவனைக் காட்டாதிரு.—மோவாபே, ச
துரத்திவிடப்பட்ட என் சனங்கள் உன்னிடத்
தில்தங்கவிடு; நாசனுடையமுகத்துக்குத்தப்ப நீ
அவர்களுக்குப் புகலிடமாயிரு: உபத்திரவப்ப
டுத்துகிறவன் ஒடுங்கினுன், நாசன் ஒழிந்துபோ
னுன்,மிதிக்கிறவர்கள்தேசத்தினின்றுசேதிக்கப்
படுவார்கள்.—இரக்கத்திஞலே சிங்காசனம் ஸ்தா ௫
பிக்கப்படும்: நியாயம்விசாரித்துத் துரிதமாய்நீதி
யைச்செலுத்தும்ஒருவன், தாவீதின்கூடாரத்தில்
அதின்மேல் உண்மையோடே வீற்றிருப்பான்.
நாம்,மோவாபின் இறுமாப்பையும்,கருவத்தை சு
யும், அகங்காரத்தையும், கோபத்தையுங் குறித்
துக்கேள்விப்பட்டோம்; அவன்மிகவும்அகங்கா
ரமுள்ளவன்: அவன்வீம்புவிருதா.—மோவாபியர் எ
மோவாபியர் நிமித்தம் அலறுவார்கள், அவர்கள்
யாவரும் அலறுவார்கள்: கீர் அராசேத்தின்அஸ்
திபாரங்களினிமித்தம் நீங்கள்ஓலமிடுவீர்கள்; அ
வைகள் நிச்சயமாகச்சேதிக்கப்பட்டன.-எஷ் அ
போனின்வயல்கள் வாடிப்போயின, சமுத்திர
மட்டும் படர்ந்த கிளைகளையுடையசிப்மாவிலுள்
ள திராட்சக்கொடிகளில் சிறந்தகிளைகளைத் தே
சாதிபதிகள் நறுக்கி, யாசேர்வரைக்குஞ்சென்
று, வனத்திலே சுற்றித்திரிகிருர்கள்.
ஆதலால்சிப்மாவிலுள்ளதிராட்சக்கொடியினி கூ
மித்தம் யாசேருக்காக அழுததுபோலக்கண்ணீர்

(உஅ) உ.இரா.யசு.உய. (உகூ) உ.நாளா.உசு.சு. உ.இரா.யஅ.அ. (௩உ) செப்.௩.யஉ. சக.யக.யக.—(ய௫. அதி. க.) எரே.சஅ.க,. எசேக்.உ௫.அ—யக. ஆமோ.உ.க. எண்.உக.உஅ. (உ) அதி.யசு.யஉ. எரே.சஎ.௫. எசேக்.எ.யஅ. (௩) எரே.சஅ.௩அ. (௫) எரே.சஅ.௫,௩க. (சு) எண்.௩உ.௩சு. (கூ) உ.இரா.யஎ.உ௫,—(யசு. அதி. க.) உ.இரா.௩ச. உ.இரா.யச.எ. (உ) எண்.உக.ய௩. (௫) தானி.எ.யச,உஎ. மீகா.ச.எ. லூக்.க.௩௩. சங்.எஉ.உ. (சு) எரே.சஅ.உகூ. செப்.உ.உய. (எ) எரே.சஅ.உய. உ.இரா.௩.உ௫. (கூ) எரே.சஅ.௩உ.

விட்டழுவேன்: ஆ, எஷ்போனே, எலியாலே, நான் கண்ணீரால் உன்னை நனையச்செய்வேன்: உன் கனிகளைச் சேர்க்குங்காலத்திலும், உன்திராட்சக்குலைகளை அறுக்குங்காலத்திலும்உண்டா
௰ கும்ஆரவாரம்விழுந்தது.—செழிப்பான வயலினின்று மகிழ்ச்சியும் சந்தோஷமுமற்றுப்போயின; திராட்சத்தோட்டங்களில்பாட்டுமில்லை, ஆனந்தமுழக்கமுமில்லை: தொட்டிகளில் திராட்சத்தை மிதிக்கிறவனுமில்லை; ஆரவாரம் ஒழியப்
௰௧ பண்ணினேன்.—ஆதலால் மோவாபினிமித்தம் என் உதரமும், கிர் அரேஷினிமித்தம் எனதுள்ளமும் வீணைபோலத்தொனிக்கின்றன.
௰௨ மோவாபு உயர்ந்தஸ்தானத்தில்இளைப்படைந்தவனாகக் காணப்படும்பொழுது, பிரார்த்தனை பண்ணும்பொருட்டுப் பரிசுத்த ஸ்தானத்திற்பிர
௰௩ வேசித்தாலும் அவன்மேற்கொள்ளான்.—மோவாபைக்குறித்துப்பூருவகாலத்திலே யெகோவா
௰௪ சொல்லியவாக்கு இதுவே.—கூலிக்காரனுடைய வருஷங்களைப்போல மூன்றுவருஷங்களுக்குள்ளே மோவாபின் மகிமைப்பிரதாபமும், அந்த மகாசனமுந்தாழ்ச்சியடையும், அதில் மீந்திருப்பது மிகவும் அற்பமும் பெலவீனமுமாகுமென்று, இப்பொழுது யெகோவா சொல்லுகிறார்.

## ௰௭. அதிகாரம்.

௧. தமஸ்குவையும் ஷமாரியாவையுங் குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௯. மீந்த சனம் தேவ பூசையைத்தள்ளல்: ௰௨. இஸரவேலரின் சத்துருக்களுக்கு ஆபத்து நேரிடல்.

தமஸ்குவைப் பற்றும் வாக்கியம். பாருங்கள், தமஸ்கு நகரமாயிராமல் இடிந்து பாழானமேடா
௨ கும்.-அரோவேரின்நகரங்கள்பாழாய்விடப்பட்டு, ஆட்டுக்கூட்டங்களுக்கு இடமாயிருக்கும்: அவைகள் தங்களைவெருட்டுவோரின்றி அங்கேப
௩ டுத்துக்கொள்ளும்.—எப்பிராயீமிலுள்ள அரணும், தமஸ்கு இராச்சியமும், ஷீரியவிலுள்ள மற்றஸ்தானங்களும் ஒழிந்துபோம்: அவைகள் இஸரவேல்சந்ததியாரின் மகிமைபோலிருக்குமென்று சேனைபதியாகிய யெகோவா சொல்லுகிறார்.-
௪ அக்காலத்திலே யாக்கோபின் மகிமைகுறைந்து
௫ போம், அவன்மாமிசபுஷ்டிகுன்றும்.—ஒருவன் தானியத்தைச்சேர்க்கும்படி தன்கையினால் கதிர்களைஅரிந்து, ரெபாயீம் பள்ளத்திலேகதிர்களை ஒருவன் சேர்ப்பதுபோலிருக்கும்.
௬ சீதவிருட்சத்தை உதிர்க்கும்பொழுது நுனிக்கொம்பில் இரண்டுமூன்றுகாய்களும், பக்கத்தில் செழித்தகொம்புகளில் நாலைந்துகாய்களும் மீந்திருப்பதுபோல, அதிலே கொஞ்சம் மீந்திருக்குமென்று இஸரவேலின் தேவனாகிய யெ
௭ கோவா சொல்லுகிறார்.—அக்காலத்திலே மனுஷன்தன்சிருஷ்டிகர்த்தாவை நோக்குவான், அவன்கண் இஸரவேலின் பரிசுத்தரைவிரும்பி
௮ நோக்கும்.—அவன் தன்கைசெய்த கிரியைகளாகிய வேதிகைகளைநோக்கமாட்டான், தன்விரல்கள் உண்டாக்கியகிரியைகளை யாகிலும், சோலைகளையாகிலும், சூரியவிக்கிரகங்களையாகிலும் நோக்கமாட்டான்.
௯ அக்காலத்தில் அவனுடைய அரணனநகரங்கள் இஸரவேல்சந்ததியாருக்கு முன்பாக மீந்த தழையையும், நுனிக்கொம்பையும் போலிருக்
௰ கும்; அவைகள் பாழாய்க்கிடக்கும்.—நீ உனக்கு இரட்சிப்புச்செய்யுந் தேவனை மறந்தாய், உன்பெலமாகிய கன்மலையை நீ நினையாமற்போனாய், ஆதலால் நீ கண்ணுக்கினிய நாற்றுக்களை
௰௧ நடுவாய், அந்நியகிளைகளைப்பதிப்பாய்:—பகற்காலத்தில் உன் நாற்றுக்களை வளர்ப்பாய், விடியற்காலத்தில்உன்முளைதழைக்கப்பண்ணுவாய்: ஆனாலும்அதின்விளைவு வேதனையுங்கடுந்துக்கமுமுள்ளநாளில் அற்றுப்போம்.
௰௨ ஐயோ, அநேகசனங்கள் ஆரவாரம்பண்ணுகிறார்கள், அவர்கள் கடல்களைப்போல ஆரவாரம் பண்ணுகிறார்கள்; அந்நிய தேசத்தாரின் இரைச்சலிருக்கின்றது, அவர்கள் மகாசமுத்திரம்போல
௰௩ இரைகிறார்கள்.—தேசத்தார் பிரவாகிக்கிறவெள்ளம்போல இரைந்தாலும் தேவன் அவர்களைக் கடிந்துகொள்வார்: அவர்கள் தூரமாய் ஓடுவார்கள், மலைகளில்பதர்காற்றினால்பறக்கடிக்கப்படுவதுபோலவும், சுளம்சுழல்காற்றினால்கொண்டுபோகப்படுவதுபோலவுந் துரத்தப்படுவார்கள்.—
௰௪ பாருங்கள், சாயங்காலத்திலே பயமுண்டாகும்; விடியற்காலத்துக்குமுன் அவன் ஒழிந்தான். இதுவே நம்மைக்கொள்ளையிடுகிறவர்களுடைய பங்கு, இதுவே நம்மைச் சூறையாடுகிறவர்களுடைய பாகம்.

## ௰௮. அதிகாரம்.

தேவனுடைய சத்துருக்களின் நாசத்தையும் அவருடைய இராச்சியத்தின் விருத்தியையுந்தெரிவித்தல்.

௧ ஐயோ, கூஷ்தேசத்தின் நதிகளுக்கு அப்புறத்திலுள்ள சிறகின்சத்தம்பொருந்தி, நாணல்தெப்பங்களினாலே சமுத்திரத்தின் வழியாக தூதர்
௨ களை அனுப்புகிறதேசமே,—வேகமுள்ள தூதர்களே, விஸ்தாரமும், சமமும், ஆதிமுதல் இதுவரைக்கும் பயங்கரமுமுள்ளதாக நூலால் அளக்கப்பட்டதும், மிதிக்கப்பட்டதும், நதிகளினால் கெடுக்கப்பட்ட தேசத்தையுடையதுமாயிருக்கி
௩ ற ஒரு சாதியிடத்திற்போங்கள்.—உலகத்தாரே, பூலோகத்திலுள்ளவர்களே, மலைகளின்மேல் அவர் கொடியேற்றும்பொழுது நீங்களெல்லாரும் பாருங்கள்; அவர் எக்காளம் ஊதும்பொழுது கேளுங்கள்.—மழைபெய்த பின்பு உண்டாகும்
௪ உக்கிரவெயிலைப்போலவும், அரியரியும் உஷ்டண காலத்திலுண்டாகும் பனி மேகத்தைப்போலவும் நான் என்வாசஸ்தானத்தில் அமர்ந்திருந்
௫ து கண்ணோக்குவேன்.—திராட்சங்களைச்சேர்க்

(௰) எரே.௪௮.௩௩. (௰௧) எரே.௩௮.௪௬. (௰௨) அதி.௰௫.௨. (௰௪) அதி.௨௧.௰௬.—(௰௭. அதி. ௧.) எரே.௪௯.௨௩. ஆமோ.௧.௩. ௪௧.௯.௧. ௨.இரா.௰௬.௯. (௨) எரே.௭.௩௩. (௫) எரே.௫௧.௩௩. (௯) அதி.௨௪.௰௩. (௭) மீகா.௭.௭. (௰௨) எரே.௬.௨௩. (௰௩) சங்.௮௩.௰௩. ஓசி.௰௩.௩.—(௰௮. அதி. ௧.) அதி.௨௰.௪,௫. எசேக்.௩௰.௪,௫,௯. செப்.௨.௰௨.

குமுன் அரும்பு பூரணமாகி, புஷ்பத்தினின்று
முற்றிய திராட்சம் பழுக்குங்காலத்தில் அவர்
அரிவாட்களினாலேகொப்புக்களை அறுத்து, கிளை
௬ களை அரிந்து அகற்றுவார்.-அவைகள் மலைகளின்
பறவைகளுக்கும், பூமியிலுள்ள மிருகங்களுக்
கும்விடப்படும்: பறவைகள் அவைகளின்மேலி
ருந்து கோடைகாலத்தைப்போக்கும், பூமியின்
மிருகங்களெல்லாம் அவைகளின்மேலே தங்கி
மாரிகாலத்தைப்போக்குமென்று யெகோவா
எனக்குச்சொன்னார்.
௭ அக்காலத்திலே விஸ்தாரமும், சமமும், ஆதி
முதல் இதுவரைக்கும்பயங்கரமுமுள்ளதாகி, நூ
லால் அளக்கப்பட்டதும், மிதிக்கப்பட்டதும்,ந
திகளினால்பாழ்க்கடிக்கப்பட்டதேசத்தையுடை
யதுமாயிருக்கிற ஒருசாதியினின்று சேனாபதி
யாகிய யெகோவாவினிடத்தில், சேனாப
தியாகிய யெகோவாவின் நாமந்தரிக்கப்பெ
ற்றஸ்தானமாகிய சீயோன்மலையில் காணிக்கை
கொண்டுவரப்படும்.

## ௰௯. அதிகாரம்.

௧. எகிப்துதேசத்தின் துக்கத்தைக்குறித்தல்: ௰௧. இராசாவின்மூர்க்கத்தைஎடுத்துக்காட்டல்:௰௮. சபையைப்பற்றுந் தீர்க்கதரிசனமுரைத்தல்.

எகிப்தைப்பற்றும் வாக்கியம். பாருங்கள், யெ
கோவா வேகமான மேகத்திற்சென்று எகிப்து
தேசத்துக்குவருவார்: எகிப்தின் விக்கிரகங்கள்
அவர்சமுகத்தில் நடுங்குகின்றன, எகிப்தினிரு
௨ தயம்தனக்குள்ளே கரைந்துபோம்.—சகோதரன்
சகோதரனுக்கும், அயலான் அயலானுக்கும்,நக
ரம்நகரத்திற்கும், இராச்சியம் இராச்சியத்திற்கும்
விரோதமாயுத்தஞ்செய்யும்படி எகிப்தியர் எகிப்
தியருக்கு விரோதமாகப் போர்கலக்கப்பண்ணு
௩ வேன்.—எகிப்தியரின் ஆவி தன்னிலே சோர்ந்து
போம்; அதின் ஆலோசனையை நான்கேடாக்கு
வேன்: அவர்கள் விக்கிரகங்களையும், மாயாவித்
தைக்காரரையும், பேய்வித்தைக்காரரையும், ச
௪ குனக்காரர்களையும் விசாரிப்பார்கள்.—நான் எ
கிப்தியரைக்கொடூரமான அதிபதிகளின்கையில்
ஒப்பிப்பேன்; கொடுமையான இராசா அவர்க
ளைஅரசாளுவானென்றுசேனாபதியும் யெகோ
வாவுமாகிய ஆண்டவர் சொல்லுகிறார்.—
௫ சமுத்திரத்தின் சலம் வற்றிப்போம், நதியுங்கு
௬ றைந்துவற்றிப்போம்.—நதிகளைத்தூரத்தில் திருப்
பிவிடுவார்கள்; அரணிப்பான அகழ்கள் வெறு
மையாகிவறண்டுபோம்: கொறுக்கையும் நாண
௭ லும்வாடும்.—நீர்க்காலோரத்திலும் நீர்க்கால் மு
கங்களிலுமுள்ள மடற்கோரைகளும், நீர்க்காலரு
ருகே விதைக்கப்பட்டயாவும்வாடி அகன்று ஒ
௮ ழிந்துபோம்.—மீன்பிடிக்கிறவர்கள் துக்கிப்பார்
கள், நதியிலேதூண்டில்போடுகிறயாவரும்புலம்
புவார்கள், சலமுகத்தில் வலைவீசுகிறவர்கள்சோ
ர்ந்துபோவார்கள்.—மெல்லியசணலினால் வேலை ௯
செய்து, சல்லாக்களை நெய்கிறவர்கள் கலங்கு
வார்கள்.—மீன்களைப்பரிபாலிக்கும்படி நீர்க்கால் ௰
களைவெட்டி, அணைகட்டுகிறவர்கள்யாவரும் ம
னக்கிலேசப்படுவார்கள்.
சோவானின் பிரபுகள் மூடர், பார்வோனு ௰௧
டைய விவேகமுள்ளமந்திரிமார்களின் ஆலோச
னைமதியீனம்: நான் ஞானியின்புத்திரன், பூருவீ
க இராசாக்களின் புத்திரனென்று பார்வோனுக்
கு எப்படிச்சொல்லுகிறீர்கள்.—அவர்கள் எங்கே; ௰௨
உன் ஞானிகள் எங்கே; சேனாபதியாகிய யெ
கோவா எகிப்தைக்குறித்துச்செய்த நிருணய
மின்னதென்று இப்பொழுது வந்து தெரிவிக்கக்
கடவர்கள்.—சோவானின் பிரபுகள் மதியீனரா ௰௩
னார்கள், நோப்பின் பிரபுகள் வஞ்சிக்கப்பட்
டார்கள்; கோத்திரபரிபாலர்கள் எகிப்தை மரு
ளப்பண்ணினார்கள்.—யெகோவா அதின் மத் ௰௪
தியில் விபரீத ஆவியையூற்றினார்: வெறிகொண்
டவன் தன் வாந்தியில் தள்ளாடுவதுபோல், எ
கிப்தியரைத்தங்கள் கிரியைகளெல்லாவற்றிலும்
மயங்கச்செய்தார்கள்.—எகிப்துதேசத்தில் தலை ௰௫
யாகிலும் வாலாகிலும், கிளையாகிலும் நாணலா
கிலுஞ் செய்யும் வேலை ஒன்றுமில்லை.—அக்கா ௰௬
லத்தில் எகிப்தியர் ஸ்திரிகள் போலிருப்பார்கள்:
சேனாபதியாகிய யெகோவா தமதுகையைஓங்
கி, உறுக்குமுறுக்கலுக்கு அஞ்சி நடுங்குவார்கள்.-
சேனாபதியாகிய யெகோவா அவர்களுக்குவி ௰௭
ரோதமாகத்தீர்மானித்த ஆலோசனையினிமித்தம்
யூதேயாதேசம்எகிப்தியருக்குப்பயங்கரமாயிருக்
கும், அதைக்குறித்துப்பேசுகிறவன் எவனுந் த
னக்குள்பயப்படுவான்.
அக்காலத்தில் எகிப்துதேசத்திலிருக்கும் ஐந் ௰௮
துபட்டணங்கள் கானான் பாஷைபேசி,சேனாப
தியாகியயெகோவாவின் நாமத்தைச்சொல்
லி ஆணையிடும்; அவைகளிலொன்று சூரியநகர
மென்னப்படும்.—அக்காலத்தில் எகிப்து தேசமத் ௰௯
தியில் யெகோவாவுக்கென்று ஒருவேதிகை
யும், அதின்எல்லையில் யெகோவாவுக்கென்
று ஒருதூணுமிருக்கும்.—அவர்கள் தங்களை உபத் ௨௰
திரவப்படுத்துகிறவர்களினிமித்தம் யெகோ
வாவைநோக்கிப்பிரார்த்திக்க,அவர்மகிமையுள்
ள ஒரு இரட்சகனை அனுப்பி அவர்களைவிடுவித்
தபடியினால், அந்தத் தூண் எகிப்து தேசத்திலே
சேனாபதியாகிய யெகோவாவுக்கென்று ஒ
ருஅடையாளமுஞ் சாட்சியுமாகும்.—அக்காலத் ௨௧
தில் எகிப்தியருக்கு யெகோவா அறியப்படு
வார், எகிப்தியர் யெகோவாவை அறிந்து,
பலிகளும்நைவேத்தியங்களுமிடுவார்கள்; அவர்
கள் யெகோவாவுக்குச்சங்கற்பஞ்செய்து,

(௭) சங்.௭௨.௰. செப்.௩.௰. மல்.௧.௰௧.—(௰௯. அதி. ௧.) எரே.௪௬.௰௩. சங்.௰௮.௰. யாத்.௰௨.௰௨. எரே.௪௩.௰௨. (௨) நியா.௭,௨௨. ௧.சாமு.௰௪.௰௬,௨௰. (௪) எரே.௪௬.௨௬. எசேக்.௨௯.௰௯. (௫) எரே.௫௧.௩௬. எசேக்.௩௰.௰௨. (௬) ௨.இரா.௰௯.௨௪. (௯) ௧.இரா.௰.௨௮. நீதி.௭.௰௬. (௰௧) எண்.௰௩.௨௨. (௰௨) ௧.கொரி.௧.௨௰. (௰௩) எரே.௨. ௰௬. (௰௪) ௧.இரா.௨௨.௨௨. (௰௬) எரே.௫௧.௩௰. நாகூ.௩.௰௩. (௰௮) செப்.௩.௯. (௰௯) ஆதி.௨௮.௰௮. யோசு. ௨௨.௰,௨௬,௨௭. (௨௰) யோசு.௪.௨௰. (௨௧) மல்.௧.௰௧.

௨௨ அதை நிறைவேற்றுவார்கள்.-யெகோவா எ
கிப்தியரை அடிப்பார்: அடித்தபின்பு சொஸ்தப்
படுத்துவார்: அவர்கள் யெகோவாவிடத்தில்
திரும்புவார்கள், அவர் அவர்களுடையவிண்ணப்
பத்தை அங்கிகரித்து, அவர்களைச்சொஸ்தப்படுத்
துவார்.
௨௩ அக்காலத்தில்எகிப்தினின்று அஸீரியவுக்குப்
போகும்பெரும்பாதையுண்டாகும், அஸீரியர் எ
கிப்துக்கும், எகிப்தியர் அஸீரியவுக்கும் பிரயா
ணஞ் செய்வார்கள், எகிப்தியர் அஸீரியருடன்
௨௪ ஆராதனை செய்வார்கள்.-அக்காலத்தில் எகிப்து
வோடும் அஸீரியவோடும்இஸரவேல், மூன்றாவ
தாகத்தேசமத்தியில்நன்மைக்குக்காரணமாயிருக்
௨௫ கும்.—சேனாபதியாகிய யெகோவா, என் ச
னங்களாகிய எகிப்தியரும், என்கையின்கிரியை
யாகிய அஸீரியரும், என் சுதந்தரமாகிய இஸர
வேலரும்வாழ்கவென்றுசொல்லியவர்களையாசீர்
வதிப்பார்.

## ௨௰. அதிகாரம்.

### எகிப்தியருக்குவருந் தண்டனை.

தர்தான், அஸீரியராசாவாகிய சர்கோனால் அ
னுப்பப்பட்டு, அஷ்தோத்துக்குச்சென்று, அஷ்
தோத்தை எதிர்த்துயுத்தஞ்செய்து, அதைப்பிடித்
துக்கொண்ட வருஷமாகிய அக்காலத்திலே,—
௨ யெகோவா, நீபோய் உன்னரையினின்று இ
ரட்டைநீக்கி, உன்கால்களிலுள்ள செருப்புக்க
ளைக் கழற்றென்று ஆமோத்சின் புத்திரனாகிய ஏ
சாயாவுடன்சொல்ல, அவன்அப்படியேசெய்து,
நிருவாணமும் வெறுங்காலுமாய் நடந்தான்.—
௩ யெகோவா, எனது தாசனாகிய ஏசாயா நிரு
வாணமும்வெறுங்காலுமுள்ளவனாகி, எகிப்தை
யுங் கூஷையுங்குறித்து மூன்றுவருஷம் அடை
௪ யாளமும் ஆச்சரியமுமாக நடந்ததுபோல,—பி
டிக்கப்படும் எகிப்தியரும், துரத்தப்படுங்கூஷி
யருமாகிய பாலியரையும் விருத்தரையும், எகிப்
துக்குவெட்கமுண்டாக, நிருவாணமும்வெறுங்
காலுமுடையவர்களாய், சகனம்மூடப்படாமல்
அஸீரிய இராசா நடத்திக்கொண்டுபோவான்.-
௫ அவர்கள்பயந்து, தாங்கள் நம்பின கூஷையும்,
தாங்கள் மேன்மைபாராட்டின எகிப்தையுங் கு
௬ றித்து வெட்கப்படுவார்கள்.-இத்தேசத்தான் அந்
நாளில், அஸீரியராசாவினின்று இரட்சிப்பைப்
பெறும் பொருட்டுச் சகாயம் பெறும்படி தப்பி
யோடினோமே; நாங்கள் நம்பினது இவ்வளவு
தான், பாருங்கள், இனிநாங்கள் எப்படித்தப்பு
வோமென்பானென்றார்.

## ௨௰௧. அதிகாரம்.

௧. பாபேலுக்குவருந் தண்டனையுரைத்தல்: ௰௧. தூமாவைக்குறித்துத் தீர்க்கதரிசன முரைத்தல்: ௰௩. அரபியாவுக்கு வருந் தண்டனையுரைத்தல்.

கடல் வனத்தைப்பற்றும் வாக்கியம். சுழல்காற் ௧
றுத்தென்றிசையினின்று வீசுவதுபோல, வனமா
கியபயங்கரதேசத்தினின்றுவருகின்றது.-கொடி ௨
யதரிசனம் எனக்குத்தெரிவிக்கப்பட்டது; கொ
ள்ளைக்காரன்கொள்ளையாடுகிறான், நாசன்நாசப்
படுத்துகிறான். ஏலாமே, நீ எழும்பு: மேதியவே,
நீமுற்றிக்கைசெய்; அதின்புலம்பல் எல்லாவற்
றையும் ஒழியப்பண்ணினேன்.—ஆகையால் என் ௩
இடுப்புக்கள் நோயினாலே நிறைந்திருக்கின்றன:
ஸ்திரியின் பிரசவவேதனைபோன்ற வேதனைகள்
என்னைப்பிடித்தன: கேட்டதினால் உளைவுகொ
ண்டு, கண்டதினாற் கலங்கினேன்.—என் மனம் ௪
மயங்கிவிட்டது, பயங்கரம் என்னைப்பிடித்தது:
எனக்குஇன்பந்தந்த இரவு பயங்கரமாய் முடிந்த
து.-போசனபீடத்தை ஆயத்தப்படுத்துங்கள், கா ௫
வலாளரை ஏற்படுத்துங்கள், புசியுங்கள், பானம்
பண்ணுங்கள்: அதிபதிகளே, எழுந்திருங்கள்,
உங்களுங்கள் பரிசைகளை அபிஷேகஞ்செய்
யுங்கள்.-ஆண்டவர் என்னைநோக்கி, நீபோய்க் ௬
காவலாளனொருவனை வைப்பாயாக, அவன்
காண்பதைத் தெரிவிக்கக்கடவனென்றார்.-பின் ௭
பு அவன், ஒருஇரதத்தையும், சோடுசோடானகுதி
ரை வீரரையும், கழுதைகளின்மேல் ஏறினவர்க
ளையும், ஒட்டகத்தின்மேல்ஏறினவர்களையுங்கண்
டு, சாவதானமாய் உற்றுக்கேட்டு,-என் ஆண்ட ௮
வனே, நான் பகல்தோறும் என்காவலில் நிற்கி
றேன், இராத்திரிதோறும் நான் என்சாமத்திலே
தரித்துநிற்கிறேன்.—பாரும், இரதவீரரும், சோ ௯
டானகுதிரைவீரரும் வருகிறார்களென்றும், ஒரு
வன் பாபேல்விழுந்தது, விழுந்தது, அதின்தொ
ழிற்பட்ட விக்கிரகங்களெல்லாம் உடைபட்டுத்
தரையிலேகிடக்கின்றனவென்றுஉத்தரஞ்சொல்
லுகிறானென்றும், ஒரு சிங்கம்போலக்கூப்பிட்
டான்.-ஐயோ, என்போரடியே, நான்போரடிக் ௰
குங்களத்தின்தானியமே, இஸரவேலின் தேவ
னும், சேனாபதியுமாகிய யெகோவாவிடத்
தில் நான்கேள்விப்பட்டதைஉங்களுக்குத்தெரி
வித்தேன்.

தூமாவைப்பற்றும் வாக்கியம். சேயீரினின்று ௰௧
ஒருவன் என்னைநோக்கி, காவலாளனே, இராத்
திரியிலே தோன்றியதென்ன; காவலாளனே, இ
ராத்திரியிலே தோன்றியதென்னவென்று கூப்பி
ட,—காவலாளன், விடியற்காலமும் இராக்கால ௰௨
மும் வருகின்றன: நீங்கள் வினவவிரும்பினால்
வினவுங்கள்: திரும்பவும்வாருங்களென்றான்.

அரபியாவைப்பற்றும் வாக்கியம். தேதானீமி ௰௩
யராகிய வழிப்போக்கரே, நீங்கள் அரபியாவின்
காடுகளில் இராத்தங்குவீர்கள்.—தேமாதேசத்தா ௰௪
ரே, தாகமாயிருக்கிறவனுக்கு நீங்கள் தண்ணீ
ரைக்கொண்டுவாருங்கள், தப்பியோடுகிறவர்க

(௨௩) அதி.௰௧.௰௬. (௨௫) சங்.௱.௩. ஓசி.௨.௨௩. எபே.௨.௰.—(௨௰. அதி. ௧.) ௨.இரா.௰௮.௰௭. (௨) சக.௰௩.௪. ௧.சாமு.௰௯.௨௪. மீகா.௧.௮,௰௧. (௪) ௨.சாமு.௰.௪. எரே.௰௩.௨௨,௨௬. மீகா.௧.௰௧. (௫) ௨.இரா.௰௮.௨௧. (௬) எரே.௪௭.௪.—(௨௰௧. அதி. ௧.) சக.௯.௰௪. (௨) அதி.௩௩.௧. எரே.௪௯,௩௪. (௪) உபா.௨௮.௬௭. (௫) தானி.௫.௫. (௮) அபகூ.௨.௧. (௯) எரே.௫௧.௮. வெளி.௰௪.௮. அதி.௪௬.௧. எரே.௫௰.௨. (௰) எரே.௫௧.௩௩. (௰௩) எரே.௪௯. ௨௮. ௧.நாளா.௯.௩௨.

௰௫ ளுக்கு முற்பட்டு அப்பத்தைக்கொடுங்கள்.—அ
வர்கள் கட்கங்களுக்கும், உருவின கட்கத்திற்
கும், நாணேற்றின வில்லுக்கும், யுத்தத்தின்கொ
௰௬ டுமைக்குந் தப்பியோடிஞர்கள்.—ஆண்டவர்
என்னைநோக்கி, ஒரு கூலிக்காரனுடைய வரு
ஷத்தைப்போல, ஒரே வருஷத்துக்குள்ளே கே
௰௭ தாரின் மகிமையெல்லாம் ஒழிந்துபோகும்.—கே
தார்வமிசத்தாருக்குள் மீந்திருக்கிற பராக்கிரம
வில்வீரர் குறைந்துபோவார்களென்ருர்: இஸ்ர
வேலின் தேவனுகிய யெகோவா இவ்
வாக்கைச்சொன்ஞர்.

## ௨௨. அதிகாரம்.

௧. யெருஷலேமுக்குவருந்துக்கமுரைத்தல்:௰௫. சிப்ஞ விழுமென்றுணர்த்தல்: ௨௰. இலீயகீம் உன்னதம்பெறுமெனத்தெரிவித்தல்.

தரிசனப்பள்ளத்தைப்பற்றும்வாக்கியம். ஆரவா
ரத்தால் நிறைந்தகலகம்பொருந்திய நகரமே, ஆ
னந்தமுள்ளநகரமே, இப்பொழுதுஉன்னில்என்
ன நடந்தது, உன்னில்வசிக்கிறசனங்களெல்லா
௨ ரும் வீடுகள்மேல் எறிப்போகிறதென்ன.—உன்
மரித்தோர் கட்கத்தினுல் மாண்டுபோகவில்லை,
௩ யுத்தத்தில் உயிர்விடவுமில்லையே.—உன்அதிபதி
களனைவரும் ஏகமாயோடிப்போகிருர்கள், வில்
வீரரால் கட்டப்படுகிருர்கள்: தூரத்தினின்று ஓ
டிவந்து உன்னிடத்தில் அகப்பட்டயாவரும் ஏ
௪ கமாய்க் கட்டப்படுகிருர்கள்.—இதினிமித்தம் ம
னங்கசந்து அழுவேன்; என் சனங்களின் குமா
ரத்தி நாசமடைந்தாள், என்னை ஆற்ற நினையாதி
ருங்கள்; நீங்கள் என்னைநோக்காமல் விடுங்க
௫ ளென்கிறேன்.—சேனுபதியும், யெகோவாவு
மாகிய ஆண்டவரால், தரிசனப்பள்ளத்தில்
கலகமும், மிதிப்பும், சஞ்சலமுமுள்ளநாள் இது
வே, மதில் இடிபடுகின்றது, அழுகைச்சத்தம் ம
௬ லைகள்மட்டுஞ் செல்லுகின்றது.—ஏலாம் அம்பு
றாத்தூணியை யெடுத்துக்கொண்டு, மனுஷர் நி
றைந்த இரதங்களோடும், குதிரைவீரரோடும்வரு
கிருன்; கீர் கேடகத்தைவெளிப்படுத்துகிருன்.—
௭ அதியுத்தமமான உன் தாழ்ந்தபூமிகள் இரதங்க
ளால் நிரப்பப்படும், குதிரைவீரர் வாசலையெ
திர்த்து அணிவகுக்கிருர்கள்.
௮ அவன் யூதாவின்திரைநீக்குவான், அச்சமயத்
திலே வனவீடென்னும் ஆயுதசாலையை நோக்கி
௯ னுய்.—தாவீதின்நகரத்தில் இடிவுகள்அநேகம்இ
ருப்பதைக்கண்டு, கீழ்க்குளத்தின்நீர்களைச்சேர்த்
௰ து,—யெருஷலேமின்வீடுகளைத்தொகையிட்டு,ம
திலைப்பெலப்படுத்துகிறதற்கு அந்த வீடுகளை இ
௰௧ டித்து,—பழைய அகழின் சலஞ் சேரத்தக்கதாக
இரண்டுமதில்களுக்கும் இடையில் அகழையுண்
டுபண்ணுவீர்கள்: ஆனுலும் அதைச்செய்தவரை
நீங்கள்நோக்கவில்லை, பூருவகாலத்தில் ஏற்படுத்
௰௨ தினவரை நீங்கள் மதிக்கவில்லை.—நீங்கள் அழ
வும், புலம்பவும், தலையைச்சிரைப்பிக்கவும், இ
ரட்டு உடுக்கவும்வேண்டுமென்று, சேனுபதியும்
யெகோவாவுமாகிய ஆண்டவர் அக்கா
லத்தில் உங்களை அழைத்தும்,—நீங்கள் மகிழ்ச்சி ௰௩
யடைந்து, களிகூர்ந்து, ஆடுமாடுகளை அடித்து,
மாமிசத்தைப்புசித்து,திராட்சரசத்தைக்குடித்து,
நாளைக்குச்சாவோம்; ஆதலால் நாம் போசனபா
னம்பண்ணுவோம் வாருங்களென்றுசொல்லியி
ருந்தீர்கள்.—மரணகாலபரியந்தம் உங்களுடைய ௰௪
இந்தக்குற்றம்நிவாரணமாய்ப்போகாதேயென்று
சேனுபதியும் யெகோவாவுமாகிய ஆண்
டவர் சொல்லுகிருரென்னும் இவ்வாக்கு என்
செவிக்கேறும்படி சேனுபதியாகிய யெகோ
வாவினுல் தெரிவிக்கப்பட்டது.
நீ வீட்டிற்கு அதிகாரியாகிய ஷெப்னுவென் ௰௫
னும் பொக்கிஷகாரனிடத்திற்போய், உயரத்
தில்தனக்கென்று ஒருபிரேதவறைதோண்டி,கன்
மலையில் தனக்கென்று ஒருவாசஸ்தானத்தைவெ
ட்டுகிறவன்போல,-உனக்கு நீ இங்கே பிரேதவ ௰௬
றையைத்தோண்டும்படிஉனக்கிங்கேயிருப்பதெ
ன்ன;இங்கேஉனக்காரிருக்கிருர்கள்.—பார், யெ ௰௭
கோவா உன்னைப்பலாற்காரமாய்ச் சிறைப்ப
டுத்திக்கொண்டுபோவார், அவர்நிச்சயமாய்உன்
னைமூடுவார்.—நிச்சயமாய் அவர் ஒரு உண்டை ௰௮
யைப்போலச்சுழற்றிச்சுழற்றி, ஒரு விஸ்தாரதே
சத்தில் உன்னைவீசிவிடுவார்: நீ அங்கேசாவாய்,
உன்மகிமையின் இரதங்கள் அவ்விடத்தில் உன்
ஆண்டவனுடையவீட்டுக்குஇலச்சையாகும்.—
நான் உன்னை உன் நிலையினின்றுதுரத்திவிடுவே ௰௯
ன்,உன்னுடையஸ்தானத்தினின்றுஉன்னைவீழ்த்
துவேனென்றுசொல்லென்பதாக, சேனுபதியும்
யெகோவாவுமாகிய ஆண்டவர் சொல்
லுகிருர்.
அக்காலத்திலே நான் இல்கியாவின் புத்திரனு ௨௰
கிய இலீயகீமென்னும் என்தாசனை அழைத்து,
உன் அங்கியை அவனுக்குத்தரித்து, உன்கச்சி ௨௧
னுல் அவனைப்பலப்படுத்தி, உன் ஆளுகையை
அவன்கையில் ஒப்பித்துவிடுவேன்: அவன்யெரு
ஷலேமியருக்கும் யூதாவமிசத்தாருக்கும் பிதா
வாயிருப்பான்.—தாவீதுடையவமிசத்தின்திறவு ௨௨
கோலை அவன் தோளின்மேல் வைப்பேன்; அ
வன்திறப்பான்,ஒருவனும்பூட்டமாட்டான்; அ
வன்பூட்டுவான், ஒருவனுந்திறக்கமாட்டான்.—
பொறுப்பானவிடத்தில் ஆணிகடாவுகிறதுபோ ௨௩
ல, நான்அவனை யுறுதிப்படுத்துவேன்; அவன்
தன்பிதாவமிசத்துக்கு மகிமைபொருந்திய ஒரு
சிங்காசனம்போலிருப்பான்.—அவர்கள் அவன் ௨௪
மேல் அவனுடைய பிதாவின் குடும்பத்திலே
தோன்றும் மகிமையுள்ளபெரியோர் சிறியோர்க
ளையும், பெரியபாத்திரங்கள்முதல் சிறியபாத்தி
ரங்கள்மட்டுமுள்ள சகலபாத்திரங்களையுந்தங்கச்

---

(௰௬) சங்.௱௨௰.௫.—(௨௨. அதி. ௧.) அதி.௩௨.௰௩. (௪) எரே.௪.௰௯. (௫) அதி.௩௭.௩.புல.௧.௫. (௬) எரே.௪௯.௩௫. (௮) ௧.இரா.௭.௨. (௯) ௨.இரா.௨௰.௨௰.(௰௧)நிகி.௩.௰௬.(௰௨)யோவே.௧.௰௩. எஸ்று.௯.௩. மீகா.௧.௰௬.(௰௩) ௧.கொரி.௰௫.௩௨. (௰௪)௧.சாமு.௩.௰௪. எசேக்.௨௪.௰௩. (௰௫) ௨.இரா.௰௮.௩௭. ௧.இரா.௪.௬. (௰௬) ௨.சாமு.௰௮.௰௮. மத்.௨௭.௬௰.(௰௭)எஸ்த.௭.௮. (௨௰) ௨.இரா.௰௮.௰௮. (௨௨) யோபு.௰௨.௰௪. வெளி.௩.௭.(௨௩)எஸ்று.௯.௮.

உ௫ செய்வார்கள்.—பொறுப்பான இடத்திலே கடா
வப்பட்ட ஆணி அக்காலத்திலே பிடுங்கப்பட்டு
முறிந்துவிழும்; அதின்மேலுள்ளபாரம்சேதிக்கப்
படுமென்று சேனைபதியாகிய யெகோவா
சொல்லுகிறார்: யெகோவா இவ்வாக்கைச்
சொன்னார்.

## உ௩. அதிகாரம்.

க. கல்தேயரால் தீருநகரம் நாசமடையுமென்றுரைத்தல்: யரு. திரும்பவும் வாழ்வடையுமென்று தெரிவித்தல்.

தீருவைப்பற்றும் வாக்கியம். தர்ஷீஷின் கப்
பல்களே, அலறுங்கள்; அதுசேதமாய்ப்போயிற்
று, அதில் வீடுமில்லை, அதிற்பிரவேசிப்பாரொ
ருவனுமில்லை: இந்தச்சமாசாரம் கித்தீம்தேசத்
தினின்று அவர்களுக்குத்தெரிவிக்கப்பட்டது.—
உ சமுத்திரத்தைக்கடந்த சீதோன் வர்த்தகர்கள்பூர
ணப்படுத்தின தீவில் வசிப்பவர்களே, மவுனமா
௩ யிருங்கள்.—சீகோரின்மிகுந்த சலங்கள் விளை
விக்குந்தானியமும், அந்த நதி தோற்றுவிக்கும்
பொருள்களும் அதற்கு வருமானமாயிருந்தன;
ச அதுபலதேசத்தாருக்குச் சந்தை.—சீதோனே, நீ
வெட்கப்படு: நான் கருப்பவேதனைப்படவில்
லை, பிரசவிக்கவில்லை, வாலிபரைப்பாலிக்கவும்,
கன்னியரை வளர்க்கவுமில்லையென்று சமுத்திர
௫ மாகியகடற்கோட்டைசொல்லிற்று.—எகிப்தைக்
குறித்தசமாசாரத்தைக்கேள்விப்பட்டதினாலுண்
டானதுபோல், அவர்கள் தீருவின்செய்தியினால்
௬ வாதிக்கப்படுவார்கள்.—நீங்கள் கடந்து தர்ஷீ
ஷுக்குப் போங்கள்; தீவாரே, நீங்கள் புலம்புங்
எ கள்.—பூருவகாலத்திலுண்டான ஆனந்தமுள்ள
நகரியா இது; தூரதேசத்தில் வாசம்பண்ணுவதற்
அ கு அவள்கால்கள் அவளைக்கொண்டுபோம்.—பிர
புகளாகிய வர்த்தகரும், பூமியின்மேன்மையுள்ள
வர்களாகிய வியாபாரிகளும் பொருந்திய முடி
சூட்டுந்தீருநகரத்துக்குவிரோதமாக இந்தஆலோ
௯ சனைசெய்தவனார்.—சமஸ்தசௌந்தரியத்தின் அ
கங்காரத்தை அசுசிப்படுத்துகிறதற்கும், பூமண்
டலத்திலுள்ள எல்லாப்பெரியோர்களையும் அவ
மானம்பண்ணுகிறதற்கும் சேனைபதியாகிய யெ
ய கோவாவே இந்த ஆலோசனைசெய்தார்.—தர்
ஷீஷின் குமாரத்தியே, நதியைப்போல் நீ உன்
தேசத்தின்மேல்பாய்ந்துசெல்லு: உனக்கு அணை
யக யில்லை.—அவர் தமது கையைச்சமுத்திரத்தின்
மேல்நீட்டினார், இராச்சியங்களைக்குலுங்கப்பண்
ணினார்: வர்த்தகரைக்குறித்து அதின் அரண்களைச்
சங்கரிக்கும்படி யெகோவா கட்டளைகொ
யஉ டுத்து,—அவமானமாக்கப்பட்ட சீதோனின்குமா
ரத்தியே, நீ இனிக்களிகூரமாட்டாய்: எழுந்து,
கித்தீமுக்குப்புறப்பட்டுப்போ; அங்கேயும் உ
ய௩ னக்குஇளைப்பாறுதலில்லை.-கல்தேயருடையதே
சத்தைப்பார்; அந்தச்சனங்கள் முன்னேயில்லை,
அஷூரியர் வனவாசிகளுக்காக அதை அஸ்திபா
ரப்படுத்தினார்கள்: அவர்கள் கோபுரங்களையுண்
டாக்கி அதின் அரமனைகளைக்கட்டியிருந்தார்கள்;
அவர் அதைப்பாழாக்கினார்.—தர்ஷீஷின்கப்பல் யச
களே, அலறுங்கள்; உங்கள் அரண்சேதமாயிற்று.-
அக்காலத்தில்தீருநகரம்ஒருஇராசாவினுடையஇ ய௫
ராசரிககாலத்துக்கேற்க எழுபதுவருஷம்வரைக்
கும் மறக்கப்படும்: எழுபதுவருஷமுடிந்தபின்
தீரு ஒருவேசையைப்போலப்பாட்டுப்பாடும்.-ம ய௬
றக்கப்பட்டவேசையே, நீ வீணையெடுத்து நகரத்
தைச்சுற்றித்திரி; நீ நினைக்கப்படும்பொருட்டு இ
னிதாகத்தட்டிப்பலபாட்டுக்களைப்பாடென்றார்.
எழுபதுவருஷமுடிந்தபின் யெகோவா தீ யஎ
ருவை விசாரிப்பார், பின்பு அதுதிரும்பவுந்தன்
பணயத்திற்குவந்து, பூமியின்மேலுள்ள தேசங்க
ளில் சகல இராச்சியங்களோடும் வேசைத்தனம்
பண்ணும்.—ஆனாலும் அதினுடைய வியாபார யஅ
மும் பணயமும்சேர்க்கப்படாமலும், சேமிக்கப்
படாமலும் யெகோவாவுக்குப் பரிசுத்தமாக்
கப்படும்: அதின்வியாபாரம் யெகோவாவின்
சமுகத்தில் வாசம்பண்ணுகிறவர்கள் திருத்தி
யாய்ப்புசிக்கவும், உத்தம வஸ்திரந்தரிக்கவும் ஏ
துவாகும்.

## உச. அதிகாரம்.

க. இஸ்ரவேலருக்கு வருந்தண்டனையை யுரைத்தல்: ய௩. மீந்திருக்கிறவர்களின்சௌக்கியமும் சத்துருக்களின் நாசமுமாகிய இவைகளைத்தெரிவித்தல்.

பாருங்கள், யெகோவா தேசத்தைவெறுமை க
யும் பாழுமாக்கி, அதைக்கவிழ்த்து, அதில்வசிக்கி
றவர்களைச்சிதறஅடிக்கிறார்.—சனங்கள் எப்படி உ
யோ, ஆசாரியனுமப்படியே; பணிவிடைக்காரன்
எப்படியோ, அவன் எசமானனும் அப்படியே;
பணிவிடைக்காரி எப்படியோ, அவள்எசமானி
யும் அப்படியே; கொண்டவனெப்படியோ, விற்
றவனுமப்படியே; கடன்கொடுத்தவன் எப்படி
யோ, கடன்வாங்கினவனுமப்படியே; வட்டி
வாங்கினவன் எப்படியோ, வட்டிகொடுத்தவனு
மப்படியே.—தேசமுழுவதும் வெறுமையாகும், ௩
முழுமையுங் கொள்ளையிடப்படும்: இதுவே யெ
கோவா சொல்லியவாக்கு.-தேசம்புலம்புகின் ச
றது, அது வாடுகின்றது, உலகஞ்சோர்ந்துவாடிப்
போகின்றது, தேசத்தின்சனங்களில் மேன்மக்
கள் மெலிவடைகிறார்கள்.—தேசந் தன்னில்வா ௫
சம்பண்ணுகிறவர்களால் அசுசியாயிற்று; அவர்
கள் நியாயப்பிரமாணங்களைக்கடந்தார்கள், கட்
டளையைமாற்றினார்கள், நித்திய உடன்படிக்கை
யை மீறினார்கள்.—இநினிமித்தஞ் சாபமே தேசத் ௬
தைப்பட்சித்தது, அதில்வசிக்கிறவர்கள் தண்ட
னைக்குட்பட்டார்கள்: தேசத்தார் தகிக்கப்பட்
டார்கள், சிலர்மாத்திரம் அதில் மீந்திருக்கிறார்
கள்.—புதுத்திராட்சரசந்துக்கங்கொண்டாடுகின் எ
றது, திராட்சக்கொடிசோருகின்றது, மனக்களிப்

(உ௩. அதி. க.) எரே.உ௫.உஉ. ஆமோ.க.௯. சக.௯.உ,ச.(௩) எசேக்.உஎ.௩. (அ) எசேக்.உஅ.உ,யஉ.(யஉ) வெளி.யஅ.உஉ. (ய௩) சங்.எஉ.௯.(யச) எசேக்.உஎ.உ௫,௩ய.(யஎ) வெளி.யஎ.உ. (யஅ) சக.யச.உய,உக.—(உச. அதி.உ.) ஓசி.ச.௯. எசேக்.எ.யஉ,ய௩. (௫) ஆதி.௩.யஎ. எண்.௩௫.௩௩. (௬) மல்.ச.௬. (எ) யோவே.க.ய,யஉ.

௮ புள்ளசகலரும் பெருமூச்சுவிடுகிறார்கள்.—மே
ளங்களின் ஆனந்தத்தொனி ஒழிந்தது, களிகூரு
கிறவர்களுடையசத்தம் முடிந்தது,சுரமண்டலக்
௯ களிப்புநின்றுபோயிற்று.-பாட்டுப்பாடித்திராட்
சரசங்குடியார்கள்;மதுபானம்,அதைஉட்கொள்
௰ ளுகிறவர்களுக்குக் கசக்கும்.—பாழாய்ப்போன
நகரம்மனுஷரில்லாமல்வெறுமையாய்ப்போயிற்
று: ஒருவரும் பிரவேசியாதபடி வீடுகளெல்லாம்
௰௧ அடைபட்டிருக்கின்றன.—திராட்சரசத்துக்காக
வீதிகளில்புலம்பலுண்டு; மகிழ்ச்சியெல்லாம் ஒ
ழிந்துபோயிற்று,அக்களிப்புதேசத்தினின்று நீங்
௰௨ கிவிட்டது.-சங்காரமேநகரத்தில்தங்கியிருக்கின்
றது, வாசல்நாசமாகும்படிதகர்க்கப்படுகின்றது.
௰௩ சீதவிருட்சத்தைஉதிர்க்கும்பொழுதும்,திராட்
சப்பழங்களையறுக்கும்பொழுதுங் கொஞ்சமீந்தி
ருப்பதுபோல, தேசத்தின்மத்தியில் சனங்களுக்
௰௪ குள் சிலர் மீந்திருப்பார்கள்.—அவர்கள்
சத்தமிட்டு யெகோவாவின் மகத்துவத்தினி
மித்தம்பாடிச்சமுத்திரத்தினின்று ஆனந்தமுழக்
௰௫ கமிடுவார்கள்.—ஆதலால் நீங்கள் கீழ்த்தேசத்தி
னின்று யெகோவாவின் மகிமையைப்பிர
காசிக்கப்பண்ணுங்கள், சமுத்திரதீவுகளினின்
று இஸரவேலின் தேவனாகிய யெகோவா
வின் நாமத்தைத்துதியுங்கள்.
௰௬ நீதிபரர் வாழ்த்தப்படக்கடவர் என்னும்வாக்
கியம் பூமியின் எல்லையிலே பாடக்கேட்டோம்.
தாழ்ச்சிப்படுகிறேன், தாழ்ச்சிப்படுகிறேன், ஐ
யோ, என்றேன்; கொள்ளைக்காரர்கொள்ளையிடு
கிறார்கள்; கொள்ளைக்காரர் அதிகமாய்க்கொள்
௰௭ ளையிடுகிறார்கள்.—தேசத்தானே, பயமும், குழி
௰௮ யும், கண்ணியும் உனக்குநேரிடுகின்றன.—ஒரு
வன் பயத்தினிமித்தம் தப்பும்படி ஓடினால்குழி
யில்விழுவான்; குழியினின்று ஏறுகிறவன்கண்
ணியில்அகப்படுவான்: உயரத்திலுள்ள மதகுக்
கண்கள்திறக்கப்பட்டன, பூமியின்அஸ்திபாரங்
௰௯ கள்அதிருகின்றன.—பூமி மிகவும்நொறுங்குகின்
றது, பூமிமுழுவதும் இடிகின்றது, பூமி மிகவும்
௨௰ அசைந்து பெயருகின்றது.—பூமி வெறிகொண்
டவனைப்போல மிகவுந் தடுமாறி ஒரு குடிசை
யைப்போலஅசைக்கப்படும்; அதின் அக்கிரமம்
அதின்மேற்பாரமாயிருப்பதினால் அதுவிழும்; தி
௨௧ ரும்பவும் எழும்பாது.—அக்காலத்தில் யெகோ
வா உயர்ந்தசேனைகளை உயரத்திலும், தேசத்
தின் இராசாக்களைத் தேசத்திலும் விசாரிப்பார்.-
௨௨ குழியில் சேர்க்கப்படுஞ் சிறைகளைப்போலச்சி
றைச்சாலையில் அடைக்கப்படுவார்கள், நெடு
௨௩ நாள்சென்றபின்பு விசாரிக்கப்படுவார்கள்.-சே
னாபதியாகியயெகோவாசீயோன்மலையிலும்,
யெருஷலேமிலும், தம்முடையமுதியோருக்கு
முன்பாக, மகத்துவமாய் இராச்சியபரிபாலனம்
பண்ணும்பொழுது சந்திரன்கலங்கும், சூரியன்
நாணமடையும்.

## ௨௫. அதிகாரம்.

௧.செயத்தினிமித்தம்யெகோவாவைத்துதித்
தல்: ௬. கிறிஸ்துவின் இராச்சியம்ஸ்தாபித்தல்:
௯. அவர்சனம்வாழ்வடைதல்.

யெகோவாவே, நீரே என் தேவன்; நீர் ௧
அற்புதங்களைச்செய்தபடியினால் நான் உமதுமே
ன்மையைப்பாராட்டுவேன்; உமது நாமத்தைக்
கீர்த்தனம்பண்ணுவேன்; பூருவீகத்தில்நீர்செய்த
ஆலோசனைகள் உறுதியுஞ் சத்தியமுமுள்ளன.—
நீர் நகரத்தை மேடாக்கி, அரணான நகரத்தைப் ௨
பாழ்ப்படுத்தினீர்; அந்நியர்களுடைய அரமனை
நகரமாயிராமலும், திரும்பவுங்கட்டப்படாமலு
மிருக்கச்செய்தீர்.—அதினிமித்தம் பராக்கிரமச ௩
னங்கள் உம்மைக்கனம்பண்ணுவார்கள், பயங்
கரசாதியாரின் நகரம் உமக்குப்பயப்படும்.—நீர் ௪
தரித்திரருக்குப் புகலிடமும், உபத்திரவப்படுந்
திக்கற்றவர்களுக்குப்பெலமுமாயிருந்தீர்; பயங்
கரமானவர்களுடைய உக்கிரம் மதில் மேல்வி
ழும் பெரிய மழையைப்போலிருக்கையில், நீர்
பெருமழைக்கு அடைக்கலஸ்தானமாகவும்,வெ
யிலுக்கு நிழலாகவுமிருந்தீர்.—வறட்சியான தே ௫
சத்தின் உஷ்டணத்தைப்போல அந்நியருடைய
கலகத்தைத் தணியப்பண்ணுவீர்; மேகத்தின் நி
ழலினால் வெயில் தணிவதுபோலப் பயங்கரமா
னவர்களுடையவீம்புப்பாட்டுத்தாழ்த்தப்படும்.
சேனாபதியாகிய யெகோவா, இந்தமலையில் ௬
எல்லாச்சனங்களுக்கும்சுவையுள்ளபொருளும்,
பழைய திராட்சரசமும், ஊனம்நிறைந்த நிண
முள்ள பதார்த்தமும், தெளிவிக்கப்பட்ட பழை
ய திராட்சரசமுமான ஒருவிருந்து ஆயத்தப்படுத்
துவார்.—சகலசனங்களின்முகத்தின்மேலுமுள் ௭
ள முக்காட்டையும் சருவதேசத்தார்மேலும் வி
ரிக்கப்பட்ட மூடியையும் இந்தமலையின்மேல்
நாசப்படுத்துவார்.—அவர்மரணத்தைச்செயித்து ௮
விழுங்குவார்; ஆண்டவராகிய யெகோவா
எல்லாருடைய முகங்களிலுமுள்ள கண்ணீரைத்
துடைப்பார்;பூமிமுழுதிலும்நின்று தமது சனங்
களின் அவமானத்தை அகற்றுவார்: யெகோ
வாவே இவ்வாக்கைச்சொன்னார்.
அக்காலத்தில், பாருங்கள், இவரே நம்முடை ௯
ய தேவன்; இவரை எதிர்பார்த்தோம், இவர் நம்
மை இரட்சித்தார்: இவரே யெகோவா; இவ
ரை எதிர்பார்த்தோம், இவர்செய்த இரட்சிப்பி
னால் மகிழ்ந்துகளிகூருவோமென்று சொல்லப்
படும்.—யெகோவாவின் கை இந்தமலையில் ௰
தங்கும், வைக்கோல் எருக்களத்தில்மிதிக்கப்படு

(௮) எரே.௭.௩௪. எரே.௰௬.௯. எரே.௨௫.௰. எசேக்.௨௬.௰௩. ஓசி.௨.௰௧. வெளி.௰௮.௨௨. (௰௫) மல்.௧.௰௧. (௰௬) எரே.௫.௰௧. (௰௭) ௧.இரா.௰௯.௰௭. எரே.௪௮.௪௩,௪௪. ஆமோ.௫.௰௯. (௰௮) ஆதி.௭.௰௧. (௰௯) எரே.௪.௨௩.(௨௩) அதி.௰௬.௰௯. எசேக்.௩௨.௭. யோவே.௩.௰௫. வெளி.௰௯.௪,௬. எபி.௰௨.௨௨.—(௨௫. அதி. ௧.) யாத்.௰௫.௩. எண். ௨௩.௰௯. எரே.௫௧.௩௭. (௩) வெளி.௰௧.௰௩. (௬) அதி.௨.௨,௩. நீதி.௯.௨. மத்.௨௨.௪. தானி.௭.௰௪. மத்.௮.௰௧.(௭) ௨.கொரி.௩.௰௫. எபே.௪.௰௮. (௮) ஓசி.௩.௰௪. ௧.கொரி.௰௫.௫௪. வெளி.௨௰.௰௪. வெளி.௭.௰௭. வெளி.௨௧.௪. (௯) ஆதி.௪௯.௰௮. தீத்.௨.௰௨.

கிறதுபோல,மோவாபு அவர்கீழ் மிதிக்கப்படும்.—
௰௧ நீந்துகிறவன் நீந்தத் தன்கைகளை விரிப்பதுபோ
லஅவர்தமதுகைகளை அவர்களுக்குள்ளேவிரித்து
அவர்களுடையபெருமையையும் அவர்களுடை
யகைகளின் கொள்ளைப் பொருளையுந் தாழ்த்து
௰௨ வார்.-அவர் உன்மதில்களின் உயர்ந்தஅரணைத்தா
ழ்த்தித் தூளாகியதரையில்கிடக்கப்பண்ணுவார்.

## உ௬. அதிகாரம்.

௧. சத்துருக்களைத் தண்டித்ததினிமித்தந் தேவனைத்துதித்தல்: ௰உ. அவர்தமதுசனங்களுக்குத்தயைசெய்தல்: உ௰. தேவனை எதிர்பார்க்கவவல்.

அக்காலத்தில் யூதாதேசத்துச்சனங்கள்பாட்டா
௧ க, வலியநகரம் நமக்குண்டு; அதற்கு மதிலும்அர
௨ ணுமாக இரட்சிப்பை ஏற்படுத்துவார்.—சத்தியத்
தைக்கைக்கொள்ளுகிற நீதியுள்ளசனங்கள் பிர
௩ வேசிக்கும்படிநீங்கள்வாசலைத்திறவுங்கள்.-ஸ்தி
ரப்பட்டமனதையுடையவன் உம்மேல் நம்பிக்
கையாயிருக்கிறபடியால், சம்பூரணசமாதானத்
௪ துடன் காத்துக்கொள்வீர்.—யாவென்னும் யெ
கோவா நித்தியகன்மலை; ஆதலால்நீங்கள்சதா
காலங்களிலும் யெகோவா விடத்தில்நம்பிக்
கையாயிருங்கள்.
௫ உயரத்தில் வாசமாயிருக்கிறவர்களை அவர் கீ
ழேதள்ளினார்; உயர்ந்த நகரத்தைத் தாழ்த்தினார்;
அவர் அதைத்தரைமட்டுந்தாழ்த்தி, அது தூளிலி
௬ ருக்கும்படிசெய்தார்.—கால் அதைமிதிக்கும், த
ரித்திரருடைய காலும் திக்கற்றவர்களின் அடி
௭ யுமே மிதிக்கும்.—நீதிமானுடையபாதை மிக
வும்நேர்மை:நேர்மையுள்ளவராகிய நீர்,நீதிமானு
௮ டையபாதையைச் சமமாக்குகிறீர்.—யெகோ
வாவே, உம்முடைய நியாயத்தீர்ப்புக்களின்வ
ழியில் உம்மை எதிர்பார்த்தோம்; உமதுநாமத்
தைக்குறித்துஉம்மைச்சிந்தித்துக்கொண்டிருப்ப
௯ துஎங்கள்மனோவாஞ்சை.-இராக்காலத்தில் நான்
மனதுடன் உம்மை அவாவினேன்; என் அந்த
ரங்கமானஆவியினால் நான் அதிகாலையிலும் உம்
மைத்தேடுகிறேன்: உம்முடையநியாயத்தீர்ப்புக்
கள்தேசத்தில் வெளிப்படும்பொழுது உலகவாசி
௰ கள்நீதியில்பயிற்சிகொள்வார்கள்.—துன்மார்க்க
னுக்குத்தயைசெய்தாலும்அவன் நீதியைப்பயின்
றுகொள்ளான்: நேர்மைபொருந்தியதேசத்திலும்
அநியாயஞ்செய்வான், அவன் யெகோவா
௰௧ வின் மகிமையைக்கண்ணோக்கமாட்டான்.-யெ
கோவாவே,உம்முடையகைஓங்கியிருக்கின்
றது, அவர்கள்அதைக்காண்கிறதில்லை; ஆனாலும்
உம்முடையசனங்களுக்காக நீர் கொண்டஅன்
பின்வைராக்கியத்தைக்கண்டு வெட்கப்படுவார்கள்:அ
க்கினி உம்முடைய சத்துருக்களைப்பட்சிக்கும்.
௰௨ யெகோவாவே, நீர் எங்கள் நிமித்தம் எங்
களுடைய கிரியைகளெல்லாவற்றையுஞ் செய்
தீர்: எங்கள் நிமித்தம் நீரேசமாதானசௌக்கியத்
தை ஏற்படுத்துவீர்.—எங்கள் தேவனாகிய யெ ௰௩
கோவாவே, உம்மையன்றி வேறு தேவர்கள்
எங்கள்மேல்அரசாண்டார்கள்:இனிநாங்கள்உம்
மைமாத்திரஞ் சார்ந்து உமது நாமத்தைக் கீர்த்த
னம்பண்ணுவோம்.—அவர்களோ மரித்தார்கள், ௰௪
சீவிக்கமாட்டார்கள்; இறந்துபோனார்கள், எழுந்
திருக்கமாட்டார்கள்: ஆதலால் நீர் அவர்களை வி
சாரித்து அவர்களைச்சங்கரித்தீர், அவர்களுடை
ய பேரும் ஒழியப்பண்ணினீர்.—யெகோவா ௰௫
வே, நீர் இந்தத் தேசத்தாரை வருத்திக்கப்பண்
ணினீர்: நீர் இந்தச்சாதியைப் பெருகப்பண்ணி
மகிமையிற் சிறந்தீர்: தேசத்தின் எல்லை எல்லா
வற்றையும் நெடுந்தூரத்தில் தள்ளிவைத்தீர்.—
யெகோவாவே, ஆபத்துக்காலத்தில் அவர் ௰௬
கள் உம்மைத்தேடினார்கள், உம்முடைய தண்ட
னை தங்கள்மேல் வந்தபொழுது உம்மை மிகவும்
பிரார்த்தித்தார்கள்.—பிரசவிக்குங்காலம்வரும் ௰௭
பொழுது கருப்பவதி வாதைப்பட்டுத் தன்வேத
னைகளினால் அலறுவாளே; யெகோவாவே,
நாங்களும், உமதுசமுகத்துக்குத்தூரமாய்நிற்கை
யில், அப்படியிருந்தோம்.—நாங்கள் கருப்பவ ௰௮
திகளாகி வாதைப்பட்டோம்,வாயுவைமாத்திரம்
பிரசவித்தோம்; தேசத்தில்நாங்கள் ஒரு இரட்
சிப்பையுஞ் சித்திக்கப்பண்ணவில்லை; உலகவா
சிகள் விழவுமில்லை.—உமது மரித்தோர் உயிர்த் ௰௯
தெழும்புவார்கள், அவர்கள் பிரேதங்கள் எழும்
பும். தூளில்வாசமாயிருக்கிறவர்களே,விழித்துக்
களிகூருங்கள்: உம்முடையபனி விடியற்காலத்
தின் பனியைப்போலிருக்கின்றது, பூமி மரித்
தோரை அகற்றிவிடுமென்று பாடினார்கள்.
என் சனங்களே, வாருங்கள், உங்கள் அந்த உ௰
ரங்கஅறைகளிற் பிரவேசியுங்கள், உங்கள் கத
வுகளைப்பூட்டி, கோபம்அகன்றுபோகும்வரைக்
குங்கொஞ்சநேரம் ஒளித்துக்கொள்ளுங்கள்.—
பாருங்கள், யெகோவா, பூலோகவாசிகளின் உ௧
பாவத்துக்கேற்க அவர்களைத்தண்டிக்கும்படி தம
து ஸ்தானத்தினின்று புறப்பட்டுவருகிறார்: பூமி
தன்னிலுள்ள இரத்தத்தைவெளிப்படுத்தும்,அது
தன்னிடத்தில் கொலைசெய்யப்பட்டவர்களை இ
னிமூடாது.

## உ௭. அதிகாரம்.

௧. தேவன் தமது திராட்சத்தோட்டத்தைக் காத்தல்: ௭. அவர்செய்யுந் தண்டனையின் அபிப்பிராயங்காட்டல்: ௰உ. அவர் இராச்சியம் வர்த்தித்தல்.

அக்காலத்தில் யெகோவா, நன்றாய்த்துவை ௧
யலிடப்பட்டதும்,பெரியதும்,வலியதுமானகட்
கத்தினால் விவியாதனென்னும் வக்கிரசருப்பத்
தை, விவியாதனென்னும் சருப்பத்தையே தண்

(௰உ) அதி.உ௬.௫.—(உ௬. அதி. ௧.) அதி.உ.௰௧. அதி.௬௰.௰௮. (௩) அதி.௫௭.௰௯. (௪) அதி.௪௫.௰௭. உபா.௩௨.௪. (௭) சங்.௩௭.உ௩. (௮) அதி.௬௪.௫. (௯) சங்.௬௩.௫. உன்.௩.௧. (௰) பிர.௮.௰உ. ரோ.உ.௪. (௰௧) யோபு.௩௪.உ௬. சங்.உ௮.௫. (௰௩) உ.நாளா.௰உ.௮. ஓசி.௫.௰௫. (௰௭) யோவா.௰௬.உ௧. (௰௮) சங்.௰௭.௰௪. (௰௯) எசேக்.௩௭.௧,. தானி.௰உ.உ.(உ௰)யாத்.௰உ.உஉ,உ௩. சங்.௩௰.௫. அதி.௫௪.௭,௮. உ.கொரி.௪.௰௭. மீகா.௧.௩. நியா.௰௫.—(உ௭. அதி. ௧.) அதி.௫௧.௯. எசேக்.உ௯.௩.

டிப்பார்; சமுத்திரத்திலுள்ள துஷ்டமிருகத்தைக்
௨ கொல்லுவார்.—அக்காலத்தில் சிவந்த ரசந்தரும்
திராட்சத்தோட்டத்தைக்குறித்து நீங்கள் பாட்
௩ டிப்பாடுங்கள்.—யெகோவாவாகிய நான்
அதைக்காத்துக் கொள்ளுகிறேன்; நிமிஷந்தோ
றும் அதற்குநீர்ப்பாய்ச்சுவேன்: ஒருவரும் அ
தைச்சேதப்படுத்தாதபடி நான் அதை இரவும்பக
௪ லுங் காத்துக்கொள்ளுவேன்.—குரோதம் என்னி
டத்திலில்லை: யுத்தத்தில் எனக்குவிரோதமாகமு
ட்செடியையும் நெரிஞ்சிலையுஞ் சேர்ப்பவனார்;
நான் அவைகளின்மேற்பாய்ந்து ஏகமாய்த்தகிப்
௫ பேன்.—அப்படிவராதபடி என்னிடத்தில் அ
டைக்கலம்புகுவது நலம், என்னுடன்சமாதான
மாகக்கடவன்; அவன் என்னுடன் சமாதானமா
௬ யிருப்பானே.—யாக்கோபினால்வருபவர்களைவே
ரூன்றச்செய்வார்: இஸ்ரவேல் பூத்துக் காய்த்து
உலகத்தைக்கனிகளால் நிரப்புவான்.
௭ அவர் அவனைஅடித்தவர்களை அடித்ததுபோல
அவனையும் அடித்தாரா; அவனால்கொலையுண்ட
வர்களைப்போல அவனுங் கொலையுண்டானா.—
௮ நீர் இவனை அனுப்புகையில் அளவாகவழக்காடி
னீர்: கீழ்காற்றடிக்கும் நாளில் தமது கடுங்காற்றி
௯ னால் தூரப்படுத்தினார்.—இதினால் யாக்கோபின்
அக்கிரமம் நிவாரணமாயிற்று; அவன், விக்கிரக
வேதிகையின் கற்களெல்லாவற்றையும் நொறுக்
கப்பட்ட சுண்ணாம்புக் கற்களைப்போலாக்கும்
பொழுது, சோலைகளுஞ் சூரியவிக்கிரகங்களும்
நிற்கமாட்டாது; அவன் பாவம் நீங்குவதே அவ
௰ னுக்குக் கிடைக்கும்பலன்.—அரணான நகரம்வ
னாந்தரத்தைப்போலமனுஷரில்லாமல் அவாந்தர
மாகவெறுமையாயிருக்கும்:கன்று அங்கேமேய்ந்
து படுத்துக்கொள்ளும், அதின் மரத்தின்தழைக
௰௧ ளைமேயும்.—கொப்புக்கள் உலரும்பொழுதுஒடிந்
துபோம்: ஸ்திரிகள்வந்து அவைகளைச் சுட்டெ
ரித்தார்கள்: அவர்கள் சற்றுமயினும் புத்திமான்க
ளல்ல; ஆதலால் அவர்களுடைய சிருஷ்டிகர்த்
தாவும்அவர்கள்மேலிரங்கார்: அவர்களைஉருவாக்
கினவரும் அவர்களுக்குத்தயைசெய்யார்.
௰௨ அக்காலத்தில் யெகோவா நதியின் நீர்க்
கால் தொடங்கி எகிப்தின் நதிவரைக்கும் உதிர
அடிப்பார்; இஸ்ரவேல்சந்ததியாரே, நீங்கள் ஒவ்
௰௩ வொருவராகச் சேர்க்கப்படுவீர்கள்.—அக்காலத்
தில் பெரியஎக்காளம் ஊதப்படும், அசீரியதே
சத்தில் சாவாமல் தப்பினவர்களும், எகிப்து தே
சத்தில் துரத்திவிடப்பட்டவர்களும் வந்து, யெ
ரூஷலேமிலே பரிசுத்தமலையில் யெகோவா
வின் சமுகத்தில் நமஸ்காரம் பண்ணுவார்கள்.

## ௨௮. அதிகாரம்.

௧. இஸரவேலருக்கு வருந்தண்டனை உரைத்தல்: சனங்கள்மயக்கமடைதல்: ௰௬.மெய் அஸ்திபாரம்போடல்: ௨௩. ஆராய்தல் கடமையெனக் காட்டல்.

ஐயோ, எப்ராயீமின் வெறியருடைய அகங்கார ௧
கிரீடமே, மதுபானத்தினால்மயக்கமடைந்தவர்க
ளுக்குரிய செழிப்பான தாழ்ந்த பூமியின் கொ
டு முடிமேலிடப்பட்ட மகிமைபொருந்தியஅழ
குள்ள புஷ்பம் வாடிப்போமே.—பாருங்கள், ௨
ஆண்டவர் வசத்திலுள்ள திராணியும் அதிபல
முமுடைய ஒருவன் கன்மழைபோலவும், நா
சப்படுத்தும் பெருங்காற்றைப்போலவும், புரண்
டுவருகிற பெரியவெள்ளத்தைப்போலவும் வந்
து, கையினால் அதைத்தரையில் விழுத்துவான்.—
எப்ராயீமின் வெறியருடைய அகங்கார கிரீடம் ௩
காலால் உழக்கப்படும்.—உஷ்டணகாலத்துக்கு ௪
முன்னே முற்றிய கனியை மனுஷர்கண்டுபறித்
து, கையிலகப்பட்டமாத்திரத்தில் விழுங்கிவிடு
வார்கள்; செழிப்பான தாழ்ந்த பூமியின் கொடு
முடிமேலுள்ள மகிமைபொருந்திய வாடிப்போ
கத்தக்க புஷ்பமும் அப்படியேயிருக்கும்.
அக்காலத்தில்சேனைபதியாகிய யெகோவா, ௫
தம்முடைய சனங்களில் மீந்திருப்பவர்களுக்
குச் சௌந்தரியமுள்ளமுடியும் மகிமைபொருந்
திய கிரீடமுமாயிருப்பார்.—நியாயம் விசாரிக் ௬
கும்படி வீற்றிருப்பவர்களுக்கு நியாயத்தின் ஆ
வியும், வாசல்வரைக்கும் யுத்தத்தைத் திருப்புகி
றவர்களுக்குப்பலமுமாயிருப்பார்.
ஆனாலும் இவர்களுந் திராட்சரசத்தினால் ம ௭
யங்கி, மதுவினால் வழுவிப்போனார்கள்; ஆசாரி
யனுந் தீர்க்கதரிசியும் மதுவில் மயங்கியிருக்கி
றார்கள், அவர்கள் திராட்சரசத்தில் அமிழ்ந்து,
மதுவினால் வழுவிப்போனார்கள். தீர்க்கதரிசனத்
தில் மோசப்படுகிறார்கள், நியாயவிசாரணையில்
இடறுகிறார்கள்.—போசன பீடங்களெல்லாம் ௮
வாந்தியினாலும்அழுக்கினாலும் நிறைந்திருக்கின்
றன, சுத்தமான இடமில்லை..
அவர் யாருக்கு ஞானத்தை உணர்த்துவார்; ௯
யாருக்குப் புத்திகொடுப்பார்; முலைமறந்த பால
கருக்கா, ஸ்தனத்தை நீங்கினவர்களுக்கா.—கட் ௰
டளையின்மேல்கட்டளை, கட்டளையின்மேல்கட்
டளை; பிரமாணத்தின்மேல் பிரமாணம், பிரமா
ணத்தின்மேல் பிரமாணம்; இங்கே சொற்பம்,
அங்கே சொற்பம்:—கொன்னை உதடுகளினாலும் ௰௧
வேறு பாஷைகளினாலும் இந்தச்சனங்களுடன்
பேசுவார்.—அவர் அவர்களைநோக்கி, இதுவே ௰௨
இளைப்பாறுதல், இளைத்தவர்களை ஆற்றுங்கள்; இ
துவே சாந்தமென்றுசொல்லியும் அவர்களுக்குக்
கேட்கமனதில்லை.—இதினிமித்தம் யெகோவா ௰௩
வின் வாக்கு, அவர்களுக்குக்கட்டளையின்மேல்
கட்டளையும்,கட்டளையின்மேல்கட்டளையும், பி
ரமாணத்தின்மேற் பிரமாணமும், பிரமாணத்தின்

(௨) அதி.௫.௧. சங்.௮௰.௮. எரே.௨.௨௧. (௩) சங்.௱௨௧.௪,௫. (௪) ௨.சாமு.௨௩.௬. (௫) அதி.௨௫.௪. யோபு.௨௨.௨௧. (௬) அதி.௩௭.௩௰. ஓசி.௰௪.௫,௬. (௮) யோபு.௨௩.௬. எரே.௰.௨௪. ௧.கொரி.௰.௰௩. சங்.௭௮.௩௮. (௰௧) உபா.௩௨.௰௮,௨௮. எரே.௮.௭. (௰௩) மத்.௨௪.௩௧. வெளி.௰௧.௰௫.—(௨௮. அதி. ௨.) அதி.௩௰.௩௰. எசேக்.௰௩.௰௧. (௩) வச.௧. (௪) வச.௧. (௭) நீதி.௨௰.௧. ஓசி.௪.௰௧. அதி.௫௬.௰,௰௨. (௯) எரே.௬.௰. (௰௧) ௧.கொரி.௰௪.௨௧.

மேற் பிரமாணமும், இங்கே சொற்பமும், அங்
கே சொற்பமுமாயிருக்கும்; அதினால் அவர்கள்
மல்லாக்கவிழுந்து, நொறுங்கி, கண்ணியில் அ
கப்பட்டுப் பிடிக்கப்படுவார்கள்.
௰௪ ஆதலால் நிந்தனைக்காரரே, யெருஷலேமில்
இந்தச்சனங்களை ஆண்டுவருகிறவர்களே, யெ
௰௫ கோவாவின் வாக்கைக் கேளுங்கள்.-நீங்கள்,
நாங்கள்மரணத்தோடே உடன்படிக்கையையும்,
பாதாளத்தோடே பொருத்தத்தையும் பண்ணி
னோம்; நாங்கள் பொய்யையே புகலிடமாய்க்
கொண்டோம், கபடத்தில் மறைந்தோம்; ஆத
லால் புரளும்வாதை இவ்விடத்தின்வழியாய்வ
ரும்பொழுது எங்களை அணுகாதென்றீர்களே:
௰௬ ஆதலால் ஆண்டவராகிய யெகோவா,
இவ்வாக்கைச்சொல்லுகிறார்: பாருங்கள், நான்
அஸ்திபாரத்தினிமித்தம் ஒருகல்லை, பரீட்சிக்கப்
பட்டதும், கோடிக்கேற்றதும், மிகுந்தவிலையுள்
ளதுமாகிய கல்லை உறுதியான அஸ்திபாரமாகச்
சீயோனிலேஸ்தாபிப்பேன்: விசுவாசிக்கிறவன்
௰௭ இலச்சைப்படான்.—நான் நியாயத்தை நூலினா
லும் நீதியைத்தூக்குநூலினாலும் அளந்தேற்படுத்
துவேன்: கன்மழை பொய்யென்னும் புகலிடத்
தைஅழித்துவிடும், சலங்கள் ஒளிப்பிடத்தைஅ
மிழ்த்திவிடும்.
௰௮ நீங்கள்மரணத்தோடேசெய்தஉடன்படிக்கை
மீறப்படும், நீங்கள் பாதாளத்தோடேசெய்தபொ
ருத்தம் நிலைப்படாது; புரளும்வாதை கடந்து
போகும்பொழுது நீங்கள் அதினால் மிதிக்கப்ப
௰௯ டுவீர்கள்.—அது புறப்பட்டமாத்திரத்தில் உங்க
ளைப்பிடிக்கும்; விடியற்காலந்தோறும் இரவும்ப
கலுங் கடந்துபோகும்; அதைத்தொட்டுப் பிறக்
௨௰ குஞ்செய்திகேட்பதே கிலேசம்.—கால்நீட்டுகிற
தற்குக் கட்டிலின்நீளம்போதாது: போர்க்கிறதற்
௨௧ குப்போர்வையின் அகலம்போதாது.-அவர்தமக்
குரியகிரியையாகிய அபூருவமான கிரியையை
யேசெய்வதற்கும், அவர் தமக்குரியகிரியையாகி
யதமது அபூருவமானகிரியையையே நிறைவேற்
௨௨ றுவதற்கும்,-யெகோவா, பிராத்சீமலையில் எ
ழுந்ததுபோல எழுந்திருப்பார்; கிபியோனின்தா
ழ்ந்தபூமியிலுண்டானதுபோலக்கோபங் கொள்
வார்; தேசமுழுவதையுங்குறித்து நியமிக்கப்பட்
டசங்காரத்தின்சத்தத்தை,சேனாபதியும் ஆண்ட
வருமாகிய யெகோவாவிடத்தில் கேள்
விப்பட்டேன்: இனிநிந்தனைசெய்யாதிருங்கள்,
நிந்தித்தால்உங்கள்பந்தங்கள் உறுதியாக்கப்படும்
௨௩ நீங்கள்செவிகொடுத்துஎன்சத்தத்தைக்கேளுங்
௨௪ கள்; சிந்தித்து என்வாக்கைக்கேளுங்கள்.—வே
ளாளன் விதைக்கும்படிநாடோறும் உழுது, தன்
௨௫ நிலத்தைக்கொத்திப்பரம்படிப்பானா.-அவன் அ
தைச்சமமாக்கினபின், அதற்கேற்ற இடம்பார்த்
து உழுந்தைவிதைத்து, சீரகத்தைத்தூவி, முதற்
றரமான கோதுமையையும், நல்லசாதியானவாற்
கோதுமையையும், கம்பையும் விதைப்பானல்ல
வா.—அவனுடைய தேவன் அவனைநன்றாய்ப் ௨௬
போதித்து, அவனுக்குணர்த்துகிறார்.—உழுந்து ௨௭
யந்திரத்தினால் போரடிக்கப்படமாட்டாது, சீர
கத்தின்மேல் உருள்சுற்றப்படமாட்டாது;உழுந்
துகோலினாலும் சீரகந் தண்டத்தினாலும் அடிக்
கப்படும்.—அப்பத்துக்குத் தானியம் இடிக்கப் ௨௮
படும்;இடைவிடாமல்அவன்அதைப்போரடிக்க
மாட்டான், அவன்தன்னுருளையினால்நசுக்கவும்,
தன் குதிரைகளினால் நொறுக்கவுமாட்டான்.—
இதுவுஞ்சேனாபதியாகிய யெகோவாவிடத் ௨௯
தில்தோன்றுகின்றது, அவர் ஆலோசனையில்ஆச்
சரியமானவர், செய்கையில் மகா நிபுணர்.

## ௨௯. அதிகாரம்.

௧. யெருஷலேமுக்குவருந் தண்டனையுரைத்தல்:
௯. சனங்களின் அஞ்ஞானத்தைத்தெரிவித்தல்:
௰௩. சனங்களின் துர்க்கருமத்தைக் காட்டல்:
௰௮. சன்மார்க்கர் வாழ்வடைதல்.

தாவீது வாசம்பண்ணின நகரமாகிய அரீயே ௧
லே, அரீயேலே, ஐயோ, உனக்கு ஆபத்துநேரி
டப்போகின்றது; நீங்கள்வருஷத்துக்குவருஷம்
அநேக உற்சவங்களை ஆசரித்துவந்தாலும்,-நான் ௨
அரீயேலைக் கிலேசப்படுத்துவேன்; அதினால் பு
லம்பலுந் துக்கமுமுண்டாகும்: அது என்பார்
வைக்கு அரீயேலேயாகும்.—நான் உன்னைச்சூ ௩
ழப்பாளயமிறங்கச்செய்வேன்,மேட்டையுண்டு
பண்ணி, உன்னைவளைத்து, உனக்குவிரோதமா
கக் கொத்தளங்களைக்கட்டுவேன்.—அப்பொழு ௪
தே நீ தாழ்த்தப்பட்டுத்தரையினின்றுபேசுவாய்,
உன்பேச்சுத் தாழ்ந்ததாய்த் தூளினின்று மெல்
லெனப்புறப்படும், பேய்வித்தைக்காரனுடைய
சத்தம்போல உன்சத்தந் தூளினின்றுகசுகுசென்
று புறப்படும், தூளிற்றோன்றும் உன்குரல்மெல்
லியதாயிருக்கும்.-உன் அந்நியரின் கூட்டஞ்சிறு ௫
தூளைப்போலிருக்கும்,பயங்கரமானவர்களுடை
யதிரள்பறக்கும்பதரைப்போலிருக்கும்:இதுஒரு
நிமிஷத்தில்சடிதியில் நடக்கும்.-இடியினாலும், ௬
பூமிஅதிர்தலினாலும், பெரியஇரைச்சலினாலும்,
பெருங்காற்றினாலும், சண்டமாருதத்தினாலும்,
பட்சிக்கிறஅக்கினிச்சுவாலையினாலும், சேனாப
தியாகிய யெகோவாவினால் நீ தண்டிக்கப்
படுவாய்.
அரீயேலை எதிர்த்து யுத்தஞ்செய்கிற சகல சா ௭
தியாரின் திரளும், அதின்மேலும் அதின் அ
ரண்மேலும் யுத்தஞ்செய்து அதைக்கிலேசப்ப
டுத்தும் சமஸ்தரும், இராத்தரி சனத்தில்தோன்
றுஞ் சொப்பனம்போலிருப்பார்கள்.-பசியுள்ள ௮
வன் சொப்பனத்தில் புசித்தாலும், விழித்தபின்
திருத்தியில்லாதிருப்பான்: தாகங்கொண்டவன்
சொப்பனத்தில் பானம்பண்ணினாலும், விழித்த

(௰௫) ஆமோ.௨.௪. (௰௬) ஆதி.௪௯.௨௫. சங்.௱௰௮.௨௨. மத்.௨௧.௪௨. அப்.௪.௰௧. ரோ.௯.௩௩. ரோ.௰.௰௧. எபே.௨.௨௰. ௧.பேதுரு.௨.௬,௭,௮. (௰௭) வச.௰௫. (௨௧) புல.௩.௩௩. (௨௨) தானி.௯.௨௭. ௨.சாமு.௫.௨௰,௨௫. யோசு.௰.௰,௰௨. (௨௯) எரே.௩௨.௰௯.—(௨௯. அதி. ௧.) எசேக்.௪௩.௰௫,௰௬. ௨.சாமு.௫.௯. (௫) அதி.௨௫.௫. யோபு.௨௧.௰௮. அதி.௩௰.௰௩. (௬) அதி.௨௮.௨. (௭) அதி.௩௭.௩௬. யோபு.௨௰.௮. (௮) சங்.௭௩.௨௰.

பின் ஆயாசப்பட்டுப்பானத்தில் மனோவாஞ்சை
யுள்ளவனாவான்: சீயோன்மலையை எதிர்த்து யுத்
தஞ்செய்யுஞ்சமஸ்தசாதியாருக்கும் அப்படியே
நடக்கும்.
௯ தரித்துநின்று ஆச்சரியப்படுங்கள்; ஒருவரை
ஒருவர் பார்த்து அலறுங்கள்: அவர்கள் வெறியா
யிருக்கிறார்கள், திராட்சரசத்தினாலல்ல: அவர்
௰ கள்தடுமாறுகிறார்கள்,மதுவினாலல்ல.-யெகோ
வா உங்களுக்குக் கனநித்திரைமயக்கத்தை வ
ருவித்தார், அவர் உங்கள் கண்களைக்கட்டினார்:
தீர்க்கதரிசிகளையும் தரிசிக்கிற உங்கள்தலைவரை
௰௧ யும் மூடினார்.—ஆதலால் தரிசனங்களெல்லாம்
உங்களுக்கு முத்திரையிடப்பட்ட புத்தகத்தின்
வாக்கியங்கள்போலிருக்கின்றன, வாசிக்கவல்ல
வனொருவனிடத்தில் அதைக்கொடுத்து நீ இதை
வாசியென்றால், அவன்இதுமுத்திரைஇடப்பட்
௰௨ டிருக்கிறதினால்என்னால்முடியாதென்பான்.-வா
சிக்கத்தெரியாதவனிடத்தில் புத்தகத்தைக்கொ
டுத்து நீ இதை வாசியென்றால், எனக்கு எழுத்துத்
தெரியாதென்பானென்றார்.
௰௩ ஆண்டவர், இந்தச்சனங்கள் தங்கள் வாயி
னால்என்னிடத்தில்சேருகிறார்கள், தங்கள் உதடு
களினால் என்னைக்கனம்பண்ணுகிறார்கள், அவர்
களுடைய இருதயமோ எனக்குத்தூரமாயிருக்
கின்றது,என்னைப்பற்றும் அவர்கள் பயம் மனுஷ
ருடையகற்பிதத்தினால்போதிக்கப்படுகின்றது.-
௰௪ ஆனபடியால் பாருங்கள், நான் திரும்பவும் அற்
புதமும் ஆச்சரியமுமாக இந்தச்சனங்களுக்குள்
அபூருவமான கிரியையைச்செய்வேன்: அவர்க
ளிலுள்ள ஞானிகளின் ஞானங்கெட்டு, அவர்க
ளிலுள்ள புத்திமான்களின் புத்தி ஒழிந்துபோ
௰௫ கும்.-ஐயோ, தங்கள் ஆலோசனையை யெகோ
வாவுக்கு மறைக்கும்படி மறைவிடங்களில் ஒ
ளித்து, அந்தகாரத்தில் தங்கள் கிரியைகளை நடப்
பித்து, நம்மைக்காண்கிறவர்கள் யாவர், நம்மை
அறிகிறவர்கள்யாவரென்கிறவர்களுக்கு ஆபத்து
௰௬ வரும்.—ஆ, நீங்கள் எவ்வளவுமாறுபாடுள்ளவர்
கள், குயவன்களிமண்போல் எண்ணப்படலா
மா: சிருஷ்டிக்கப்பட்ட வஸ்து சிருஷ்டிகர்த்
தாவை நோக்கி, நீர் என்னைச் சிருஷ்டிக்க
வில்லையென்றுசொல்லலாமா; உருவாக்கப்பட்
ட வஸ்து தன்னை உருவாக்கினவரைநோக்கி, உ
மக்குப் புத்தியில்லையென்று சொல்லலாமா.—
௰௭ சொற்பகாலத்துக்குள்ளல்லவா லிபானோன் செ
ழிப்புள்ளவயலாகும்,செழிப்புள்ளவயல்காடாய்
எண்ணப்படும்.
௰௮ அக்காலத்தில்செவிடர்புத்தகத்தின்வாக்கியங்
களைக்கேட்பார்கள், இருளிலும் அந்தகாரத்திலு
மிருக்கையில் குருடருடைய கண்கள்காணும்.-
தாழ்ந்த சிந்தையுள்ளவர்கள் யெகோவாவி ௰௯
னால் வரும் ஆனந்தத்தில் அதிகரிப்பார்கள்,மனி
தருக்குள் தரித்திரர் இஸரவேலின் பரிசுத்தரைச்
சார்ந்து களிகூருவார்கள்.-கொடியவன் அற்றுப் ௨௰
போவான், நிந்தனைக்காரன்சேதிக்கப்படுவான்.-
ஒருவாக்கினிமித்தம் ஒருவன்மேற் குற்றஞ்சுமத் ௨௰௧
தி, நியாயவாசலில் கடிந்துகொள்பவனுக்காகக்
கண்ணியை வைத்து, நிமித்தமில்லாமல் நீதிமா
னைவிலக்கி, இப்படிப்பாவஞ்செய்யவகைதேடு
கிறயாவரும்சேதிக்கப்படுவார்களென்றார்.-ஆபி ௨௰௨
ரகாமைமீட்டருளிய யெகோவா, இனி யாக்
கோபு வெட்கப்படான், இனி அவன் முகம் வா
டாது.—அவன் சந்ததியார் என்கையின் கிரியை ௨௰௩
யைக்காணும்பொழுது தங்களுக்குள்என்னுடை
ய நாமத்தைப் பரிசுத்தப்படுத்துவார்கள், யாக்
கோபின்பரிசுத்தரைப்பரிசுத்தரென்று மதிப்பார்
கள், இஸரவேலின் தேவனுக்குப் பயப்படு
வார்கள்.-மனதிலே மருள்கொண்டவர்கள் புத்தி ௨௰௪
தெளிந்திருப்பார்கள், மொறுமொறுக்கிறவர்கள்
போதகத்தையுட்கொள்வார்களென்று, யாக்கோ
பின் வமிசத்தைக்குறித்துச்சொல்லுகிறார்.

## ஙω. அதிகாரம்.

க. துணைக்காக எகிப்துக்குப் போனவர்களுக்கு வருந்தண்டனை யுரைத்தல்: அ. தேவனுடைய வாக்கை அவமதித்ததினாலுண்டாகும் நட்டத்தைக்காட்டல்: ωஅ. தேவனுடைய அனுக்கிரகத்தை வருணித்தல்: உஎ. அசீரிய இராசா நாசமடைதல்.

ஐயோ, பாவத்துடன்பாவத்தைச்சேர்க்கும்படி ௧
என்னையன்றி ஆலோசனைபண்ணி,என் ஆவியை
விட்டு உடன்படிக்கைகளைச்செய்து,—என்வாக் ௨
கைக்கேளாமல் பார்வோனுடைய பராக்கிரமத்தி
னால் பராக்கிரமம்பெறும்படி எகிப்துக்குப்போ
கப்புறப்பட்டு, எகிப்தின்நிழலில் ஒதுங்கிகட்ட
ளைமீறுகிறவமிசத்தாருக்கு ஆபத்துவருமென்று,
யெகோவா சொல்லுகிறார்.—பார்வோனின் ௩
வல்லமை உங்களுக்கு வெட்கமாகும்,எகிப்தின்
நிழலில் ஒதுங்கியிருப்பது கலக்கமாகும்.—அவர் ௪
கள் பிரபுகள் சோவானிலிருக்கிறார்கள், அவர்க
ளுடையதானாபதிகள்ஆனேசைச்சேர்ந்தார்கள்.-
அவர்கள் சமஸ்தருந் தங்களுக்குத்துணையும் நன் ௫
மையுஞ்செய்யாமல், தங்களுக்குவெட்கமும் அ
வமானமுமாயிருந்தஅப்பிரயோசனமானஅந்தச்
சனங்கள்நிமித்தம் வெட்கப்பட்டார்கள்.—தென் ௬
றிசைக்குச்செல்லும் மிருகங்களைப்பற்றும் வாக்
கியம்: தங்கள் கழுதைகளுடையமுதுகின்மேல்
தங்கள்பொருள்களையும்,ஒட்டகங்களுடையமு

(௯) அதி.உஅ.எ,அ. அதி.ருக.உக.(ω)ரோ.ωக.அ. அதி.ஙஉ. எரே.உசு.அ. க.சாமு.க.ω.(ωக)அதி.அ.ωசு. தானி.ωஉ.ச,க. வெளி.ரு.க—ரு. (ωங) எசேக்.ஙங.ஙக. மத்.ωரு.எ,அ. மாற்.எ.எ,அ. கொலோ.உ.உஉ. (ωச) அபகூ.க.ரு. எரே.சக.எ. ஒப.அ. க.கொரி.க.ωகூ. (ωசு) அதி.சரு.கூ. ரோ.கூ.உω. (ωஎ) அதி.ஙஉ.ωரு. (ωஅ) அதி.ஙரு.ரு. (ωகூ) அதி.சுக.க. யாக்.உ.ரு. (உω) அதி.உஅ.ωச,உஉ. மீகா.உ.க. (உக) ஆமோ.ரு.ω,ωஉ. நீதி.உஅ.உக. (உஉ) யோசு.உச.ங. (உங) அதி.சரு.ωக. அதி.கூω.உக. எபே.உ.ω. (உச) அதி.உஅ.எ.—(ஙω. அதி. க.) அதி.உக.ωரு. உபா.உகூ.ωகூ. (உ) எண்.உஎ.உக. யோசு.கூ.ωச. க.இரா.உஉ.எ. எரே.உக.உ. (ங) எரே.ஙஎ.ரு,எ. (ரு) எரே.உஙசு. (சு) அதி.ருஎ.கூ. ஓசி.அ.கூ. உபா.அ.ωரு.

துகின்மேல் தங்கள் பொக்கிஷங்களையும்ஏற்றிக்
கொண்டு, ஆண்சிங்கமும்,பெண்சிங்கமும்,விரி
யன்பாம்பும், பறவைநாகமுந்தோற்றுவிக்குங் கி
லேசமுந் துக்கமும் பொருந்திய தேசத்திலுள்ள
அப்பிரயோசனமானசனங்களிடத்தில்போவார்
எ கள்.-எகிப்தின்உதவி மாயை, அதுவிருதா: அதி
னால் அதற்குச்சோம்பேறியாகிய இராகாப்பென்
று பெயரிட்டேன்.

அ இப்பொழுது நீபோய், இனிஎன்றுஞ்சாட்சி
யாகும்படிக்கு அவர்களுக்குமுன்பாக அதை ஒ
ருபலகையின்மேலெழுதி, ஒருபுத்தகத்திலும் வ
கூ ரை.—அவர்கள்கட்டளைமீறுகிற சனங்கள், கள்
ளச்சந்ததியார், யெகோவா அருளியவேதத்
ய தைக்கேட்கமனமில்லாதசந்ததியார்:—அவர்கள்
தரிசிக்கிறவர்களைநோக்கி,தரிசிக்கவேண்டாமெ
ன்றும், தீர்க்கதரிசிகளிடத்தில்நீங்கள்சத்தியதீர்க்
கதரிசனவாக்கியங்களை எங்களுக்குச் சொல்லா
மல் இனியவாக்கியங்களைச் சொல்லுங்கள், மா
யக யமானவைகளைஉரையுங்கள்:—நீங்கள் வழியை
விட்டுநீங்கி,பாதைக்குவிலகி,எங்கள்முன்னிரா
தபடி இஸரவேலின்பரிசுத்தரைத் தூரப்படுத்துங்
யஉ களென்றுச்சொல்லுகிறபடியால்,-இஸரவேலின்
பரிசுத்தர், நீங்கள் இந்தவாக்கை அவமதித்து,
உபத்திரவத்தையும் மாறுபாட்டையும் நம்பி, அ
யகூ வைகளையேசார்ந்துகொள்ளுகிறீர்கள்:—இதினி
மித்தஞ்சடிதியாய்ஒருநிமிஷத்தில்விழப்போகிற
உயர்ந்து பிதுங்கினசுவரின் வெடிப்புப்போல்
யச இந்தப்பாவம் உங்களுக்கு முடியும்.—குயவனு
டையபாண்டத்தைச் சில்லபொல்லப் படுத்துவ
துபோல் அதைத்தகர்ப்பார்; இரங்கார், நொறுக்
காமல்விடார்: அடுப்பிலே நெருப்பெடுக்கிறதற்
குங்குளத்திலே சலம் மொள்ளுகிறதற்கும் நொ
றுங்கினதுண்டுகளில் ஒரு ஓடாகிலும்அகப்படா
யரு தென்கிறார்.—நீங்கள் மனந்திரும்பி அமைந்திருந்
தால் இரட்சிக்கப்படுவீர்கள்; சாந்தத்தினாலும்
விசுவாசத்தினாலும் பெலமுங்களுக்குண்டாகு
மென்று இஸரவேலரின் பரிசுத்தரும் ஆண்ட
யசு வருமாகியயெகோவாசொன்னார்.—நீங்க
ளோ, அதற்கு இசையாமல், அப்படியல்ல; குதி
ரைகளின்மேலேறி ஓடிப்போவோமென்கிறீர்க
ள்; அப்படியேஓடிப்போவீர்கள்:வேகமானவாக
னங்களின்மேலேறிப் போவோமென்கிறீர்கள்;
உங்களைத்துரத்துகிறவர்கள் வேகமாய்ச்செல்லு
யஎ வார்கள்.—ஒருவன் பயமுறுத்த ஆயிரவர் ஓடுவீர்
கள்; ஐந்துபேர்பயமுறுத்த நீங்கள் ஓடிப்போ
வீர்கள்:அப்பொழுதுநீங்கள் மலையுச்சியின்மேல்
ஒருகம்பத்தைப்போலவும், மேட்டின்மேல் ஒரு
கொடியைப்போலவும் இருப்பீர்கள்.

யஅ ஆனாலும் யெகோவா உங்களுக்குத் தயை
செய்யும்படி காத்திருப்பார்,உங்களுக்கு அனுக்
கிரகஞ்செய்யும்படி எழுந்திருப்பார்: யெகோ
வாவே நீதியைச்செய்கிற தேவன்: அவரைக்
காத்திருக்கிறவர்கள் யாவரும் வாழ்வுடையவர்
கள்.—சீயோனைச்சேர்ந்தசனங்கள் யெருஷலே யகூ
மில் வசிப்பார்கள்: நீங்கள் ஒருபொழுதும் அழ
மாட்டீர்கள்: நீங்கள் அலறுஞ் சத்தத்தைக்கேட்
டவுடனே தயைசெய்வார்; அவர் அதைக்கேட்
டபொழுது உத்தரமருளுவார்.—ஆண்டவர் உய
உங்களுக்குத் துக்கத்தின்போசனமும் உபத்திர
வத்தின்பானமுந்தந்தாலும், உங்கள்போதகர்கள்
இனி ஒருபொழுதும் மறைந்திருக்கமாட்டார்க
ள், உங்கள் கண்கள் உங்கள் போதகர்களைக் கா
ணும்.—நீங்கள் வலப்புறத்திற்சாயும்பொழுதும் உக
இடப்புறத்திற்சாயும்பொழுதும், வழி இதுவே,
இதில்நடவுங்களென்றுஉங்களுக்குப்பின்னாலே
சொல்லும் வாக்கை உங்கள் காதுகள்கேட்கும்.—
தொழிற்பட்ட உங்கள் விக்கிரகங்களின் வெள் உஉ
ளிப்போர்வைகளையும்,வார்ப்பித்தஉங்கள்விக்கி
ரகங்களின்பொன்ஆடையாபரணங்களையும்அசு
சியென்றெண்ணி, அசுசியான வஸ்திரத்தைப்
போலெறிந்துவிடுவீர்கள்;விலகிப்போங்களென்
பீர்கள்.—அப்பொழுது அவர், நீங்கள்நிலத்தில்வி உங
தைக்குந்தானியத்துக்குமழையையும், பூமிவிளை
விக்கும்ஆகாரத்தையுந்தருவார்;அதுபுஷ்டியும்மி
குதியுமாயிருக்கும்: அக்காலத்தில் உங்கள் ஆடு
மாடுகள்மேய்ச்சலுள்ள விஸ்தாரமான இடங்க
ளில்மேயும்.-நிலத்தைஉழுகிறமாடுகளும்கழுதை உச
களும், முறத்தினாலும், தூற்றுக்கூடையினாலும்
தூற்றப்பட்ட நல்லதானியங்களைத்தின்னும்.—
கோபுரங்கள் விழுகிற மகாசங்காரதினத்தில் உ உரு
யர்ந்தமலைகளெல்லாவற்றின்மேலும் உயர்ந்தமே
டுகள் எல்லாவற்றின்மேலும் அருவிகளும்நீரோ
டைகளுமுண்டாகும்.—யெகோவா தம்மு உசு
டையசனங்களின் முறிந்த அவயவங்களைக்கட்
டி,அவர்கள்பட்டகாயத்தைச்சொஸ்தப்படுத்தும்
நாளில், சந்திரனுடைய ஒளி சூரியனுடைய
ஒளியைப்போலிருக்கும், சூரியனுடையஒளி ஏ
ழுபகலின்ஒளியைப்போல ஏழுமடங்காகும்.

பாருங்கள், யெகோவாவின் நாமந்தூரத் உஎ
தில்நின்று வருகின்றது, அவருடைய குரோதம்
மூளுகின்றது,அதின்சுவாலைமிகவுங்கொடியது:
அவருடைய உதடுகள் கோபத்தினால் நிறைந்தி
ருக்கின்றன, அவருடையநாவுப்பட்சிக்கும்அக்
கினி.—அவருடையசுவாசம் கரைபுரண்டுகழுத் உஅ
துமட்டும் பாய்கிற ஆற்றுக்குச்சமானம், அவர்
அந்நியதேசத்தாரை நாசமென்னுஞ் சல்லடை
யில்அரிப்பார்:மோசப்படுத்துங்கடிவாளம்சனங்
களின் வாயிலிருக்கும்.—உற்சவங் கொண்டா உகூ
டும் இராத்திரியிலே பாடுகிறதுபோலப்பாட்டுப்
பாடுவீர்கள்; இஸரவேலின்கன்மலையாகிய யெ

(எ)எரே.௩எ.எ. (அ) அபகூ.உ.உ.(கூ)உபா.௩உ.உய. (ய) எரே.யக.உக. ஆமோ.உ.யஉ. மீகா.உ.௬. க.இரா.உஉ.
ய௩. மீகா.உ.யக. (ய௩) சங்.௬உ.௩. அதி.உகூ.ரு.(யச)சங்.உ.கூ. எரே.யகூ.யக.(யரு)மத்.உ௩.௩எ. (யஎ) லேவி.உ௬.
அ. உபா.உஅ.உரு. யோசு.உ௩.ய. (யஅ) சங்.உ.யஉ. நீதி.ய௬.உய. எரே.யஎ.எ.(உய)க.இரா.உஉ.உஎ. சங்.௱உஎ.
உ. சங்.எச.கூ. ஆமோ.அ.யக. (உக) யோசு.க.எ. (உஉ) உ.நாளா.௩க.க. ஒசி.யச.அ. (உ௩) மத்.௬.௩௩. க.தீமோ.
ச.அ. (உ௬) அதி.௬ய.யகூ,உய. (உஅ) உ.தெச.உ.அ. அதி.௩எ.உகூ. (உகூ) சங்.சஉ.ச. உபா.௩உ.ச.

கோவாவின் மலைக்குப்போகும்படி நாயகசு
ரத்தோடே புறப்படும்பொழுதுமகிழ்ந்ததுபோல
௩௰ மகிழுவீர்கள்.-யெகோவா தமதுமகத்துவமுள்
ளசத்தத்தைக்கேட்கப்பண்ணி, தமது உக்கிர
கோபத்தினாலும், பட்சிக்கும் அக்கினிச்சுவாலை
யினாலும், வெள்ளம், சண்டமாருதம், கன்மழை
இவைகளினாலும் தமதுகைஇறங்குவதைப் பிரத்
௩௧ தியட்சமாய்க் காட்டுவார்.—அப்பொழுது தண்
டத்தினால்அடிக்கும் அஸ்ஸீரியன் யெகோவா
௩௨ வின் நாதத்தினால் அடிபட்டுவிழுவான்.—யெ
கோவா அவன்மேற்சுமத்தும் ஆக்கினைத்தண்
டம்போகும் இடமெங்கும் மேளங்களும்வீணைக
ளும் அதனுடன்போகும்: கொடிய யுத்தங்களி
௩௩ னால் அவனைஎதிர்த்துயுத்தஞ் செய்வார்.—தொப்
பேத்பூருவகாலத்தில் ஏற்படுத்தப்பட்டது; இரா
சாவினிமித்தம் ஆயத்தப்படுத்தப்பட்டது; ஆழ
மும் விசாலமுமாகச்செய்தார்: வேகும்படி அக்
கினியும் மிகுந்த விறகுமுண்டு; யெகோவா
வின் சுவாசம், சொரிகிறகந்தகம்போல்அதைக்
கொளுத்தும்.

## ௩௧. அதிகாரம்.

௧. எகிப்தியரை எதிர்பார்த்ததினிமித்தஞ் சனங்க
ளைக்கண்டித்தல்: ௬. தேவனிடத்தில் திரும்
பும்படி ஏவல். அஸ்ஸீரியர் நாசமடைதல்.

ஐயோ, துணையைப் பெற்றுக்கொள்ளும்படிக்
கு இஸரவேலின்பரிசுத்தரைநோக்காமலும் யெ
கோவாவைச் சாராமலும் எகிப்துக்குச்சென்
று, குதிரைகளைநம்பி, இரதங்கள்அநேகமாயிருப்
பதினாலும் குதிரைவீரர் பராக்கிரமசாலிகளாயி
ருப்பதினாலும் அவைகளில் நம்பிக்கைவைப்ப
௨ வர்களுக்கு ஆபத்துவரும்.—அவருஞ்ஞானமுள்
ளவர், அவர்கள்மேல் தீமையைவருவிப்பார், அ
வர்தம்முடையவாக்குகளைவிட்டுவிலகாமல்துன்
மார்க்கருடைய வமிசத்துக்கும், துர்க்கிரியை
செய்பவர்களுக்குத் துணைநிற்பவர்களுக்கும் வி
௩ ரோதமாயெழுந்திருப்பார்.-எகிப்தியர் மனுஷர்,
தெய்வமல்ல; அவர்களுடைய குதிரைகள்மா
மிசம், ஆவியல்ல. யெகோவா தமதுகையை
நீட்டுவார், அப்பொழுது துணைநிற்பவன் இடறு
வான், துணைபெற்றவன்விழுவான், அவர்களெல்
௪ லாரும் ஏகமாய் விழுவார்கள்.—யெகோவா
என்னிடத்தில், சிங்கக்குட்டியுடன் சிங்கந்தன்
இரையைப்பிடித்துக்கருச்சித்து, தனக்குவிரோ
தமாய் அழைக்கப்பட்டுவரும் மேய்ப்பர் கூட்
டத்தின்சத்தத்தினால்பயப்படாமலும், அவர்களு
டையகூக்குரலினால் தாழாமலுமிருக்கிறதுபோ
ல, சேனாபதியாகிய யெகோவா தமது குன்றா
கிய சீயோன்மலைக்காக யுத்தஞ்செய்ய இறங்கு
௫ வேனென்றுசொன்னார்.—பறக்கிற பறவைகள்
போல, சேனாபதியாகிய யெகோவா யெரூ
ஷலேமைக்காத்து அதை விடுவிப்பார்; அதின்
மேல் இரங்கி அதை இரட்சிப்பார்.
இஸரவேலின்வமிசத்தாரே, உங்களால் முழு ௬
வதும் விடப்பட்டவரிடத்தில் நீங்கள்திரும்புங்
கள்.—அந்நாளில் ஒவ்வொருவனும், நீங்கள் உங் ௭
கள்உங்கள்கைசெய்தபாவம் வருவிக்கும் தன்
தன்வெள்ளிவிக்கிரகங்களையும், தன்தன் பொன்
விக்கிரகங்களையும்வெறுத்து எறிந்துவிடுவீர்கள்.
அப்பொழுது அஸ்ஸீரியன் கட்கத்தினால் விழு ௮
வான், அதுவீரனுடையதல்ல; கட்கம் அவனைப்
பட்சிக்கும், அதுநீசனுடையதல்ல: அவன்கட்க
முனையினின்று ஓடுவான், அவனுடைய வாலி
பர் அடிமைகளாவார்கள்.—அவன் பயத்தினாலே ௯
தன்கன்மலைக்கு அப்பாற்செல்லுவான், அவன்அ
திபதிகள்கொடியைக்கண்டு நடுங்குவார்களென்
று, சீயோனில் அக்கினியையும் யெரூஷலே
மில் சூளையையுமுண்டாக்குகிற யெகோவா
சொல்லுகிறார்.

## ௩௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் இராச்சியத்தைக்குறித்துத்தீர்க்க
தரிசனமுரைத்தல்: ௯. தேசந்தாழ்வடைந்தபின்
வாழ்வடைதல்.

பாருங்கள், இராசனொருவன் நீதியோடே அர ௧
சாளுவான், பிரபுகளும்நியாயத்தோடே ஆளுகை
செய்வார்கள்.—அந்தப்புருஷன் பெருங்காற்றில் ௨
மறைவிடமாகவும், பெருமழையிலேபுகவிடமா
கவும், வறண்ட ஸ்தானத்தில்நீர்க்கால்களாகவும்,
விடாய்த்தபூமிக்குப்பெரியகன்மலையின் நிழலா
கவுமிருப்பான்.—காண்பவர்களுடைய கண்கள் ௩
இருளாதிருக்கும், கேட்கிறவர்களுடைய காது
கள் உற்றுக்கேட்கும்.—பதறும்மனமுள்ளவர்கள் ௪
அறிவை யுணர்ந்துகொள்வார்கள், கொன்னைய
ருடைய நாவுத்தடையின்றித் தெளிவாய்ப் பே
சும்.—நீசன் இனிமேன்மையானவனென்றுமதிக் ௫
கப்படான், உலோபி இனி உதாரகுணனென்
னும் பெயர்பெறான்.—மூர்க்கன் மூர்க்கமான ௬
தைப்பேசுவான், யெகோவாவைக்குறித்து
விபரீதமாய்ப்பேசும்படிக்கும், பசியுள்ளவர்களு
டைய ஆகாரத்தையும் தாகமுள்ளவர்களுடைய
சலத்தையும் விலக்கும்படிக்கும், அவனுடைய
மனங்கபடஞ்செய்து அவபத்தியானதை நடப்
பிக்கும்.—உலோபியின் கருவிகளுந் தீயவைகள்: ௭
தரித்திரர் நியாயம்பேசும்பொழுது அவன்பொய்
வாக்குகளினால் தாழ்ந்த சிந்தையுள்ளவர்களைக்
கெடுக்கும்படி தீவினைகளைக்கருதுகிறான்.—உதா ௮
ரகுணனோ உதாரகிரியைகளைக்கருதுகிறான்; உ
தாரகிரியைகளினால் நிலைத்துமிருக்கிறான்.
சுகசீவிகளாகிய ஸ்திரிகளே, நீங்கள் எழுந் ௯
து என் வாக்குகளைக் கேளுங்கள்; விசாரமில்
லாதகுமாரத்திகளே, என் வாக்கியத்தைச் சிந்

(௩௰) அதி.௨௯.௬. (௩௧) அதி.௩௭.௩௬. அதி.௰.௫,௨௪. (௩௨) அதி.௰௧.௰௫. (௩௩) எரே.௭.௩௧.—(௩௧. அதி. ௧.) அதி.௩௰.௨. எசேக்.௰௭.௰௫. சங்.௨௰.௭. அதி.௩௬.௯. தானி.௯.௰௩. ஓசி.௭.௭. (௨) எண்.௨௩.௰௯. (௩) சங்.௱௪௬.௩,௫. (௪) ஓசி.௰௧.௰. ஆமோ.௩.௮. அதி.௪௨.௰௩. (௫) உபா.௩௨.௰௧. சங்.௩௭.௪௰. (௬) ஓசி.௯.௯. (௭) ௧.இரா.௰௨.௩௰. (௮) ௨.இரா.௰௯.௩௫,௩௬. (௯) அதி.௩௭.௩௭.—(௩௨. அதி. ௧.) சங்.௪௫.௧,. எரே.௨௩.௫. ஓசி.௩.௫. சக.௯.௯. (௩) அதி.௨௯.௰௮. (௯) ஆமோ.௬.௧.

௰ த்துக்கொள்ளுங்கள்.—விசாரமில்லாத ஸ்தி
ரிகளே, நீங்கள் வருஷமுஞ் சிலநாள்களும் தி
கைப்பீர்கள்: திராட்சப்பலன் அற்றுப்போகும்,
௰௧ பலனைச் சேர்க்குஞ் சமயம்வராது.—சுகசீவிக
ளாகிய ஸ்திரிகளே, நடுங்குங்கள்: விசாரமில்
லாத ஸ்திரிகளே, திகையுங்கள்: உடையைக்க
ளைந்து நிருவாணிகளாயிருங்கள், அரையில் இ
௰௨ ரட்டைக் கட்டிக்கொள்ளுங்கள்.—உத்தமவ
யல்களினிமித்தமும், செழிப்புள்ள திராட்சக்
கொடிகளினிமித்தமும்மார்படித்துப்புலம்புவார்
௰௩ கள்.—என்சனங்களுடைய நிலத்திலும், களி
கூர்ந்த நகரத்திலுள்ள ஆனந்தம் நிறைந்த சகலவீ
டுகளிலும் முட்செடியும் நெரிஞ்சிலும் முளைக்
௰௪ கும்.—அரமனைகள் விடப்படும்; சனம் நிறைந்
தநகரம் வெறுமையாகும்; துருக்கங்களுங் கோ
புரங்களும் என்றும் காட்டுக்கழுதைகளுக்குக்
களிக்குங் குகைகளும், மந்தைகளுக்கு மேய்ச்
௰௫ சல்ஸ்தானங்களுமாகும்.—உன்னதத்தினின்று
ஆவி நம்மேல் ஊற்றப்பட்டபின்பு வனஞ் செ
ழிப்புள்ள வயலாகும், செழிப்புள்ளவயல் சோ
௰௬ லையாக எண்ணப்படும்.—வனத்தில் நியாயம்வா
சமாயிருக்கும், நீதி செழிப்புள்ளவயலில் வாசம்
௰௭ பண்ணும்.-நீதியின்கிரியை சமாதானமேயாகும்;
நீதியின்பலன் என்றுமுள்ள சாந்தமும் திடநம்
௰௮ பிக்கையுமே.—என்சனங்கள் சமாதானவாசஸ்த
லங்களிலும்,ஸ்திரமானஸ்தானங்களிலும்,அமை
தியானஇடங்களிலும் வாசமாயிருப்பார்கள்.—
௰௯ கன்மழை சொரியும்பொழுதுகாடுவிழும்;நகரஞ்
௨௰ சமபூமியோடே தாழ்ந்துபோம்.—நீருள்ள சகல
ஸ்தானங்களிலும் விதைக்கிறவர்களும், மாட்
டையுங் கழுதையையும்நடத்துகிறவர்களுமாகிய
நீங்கள் வாழ்வுடையவர்கள்.

## ௩௩. அதிகாரம்.

௧. சத்துருவுக்குவருந் தண்டனையுரைத்தல்: ௰௩. நல்லோருக்குவரும் நன்மையைத்தெரிவித்தல்.

ஐயோ, கொள்ளையிடப்படாதிருந்தும் கொள்
ளையிடுகிறவனும், வஞ்சிக்கப்படாதிருந்தும்வஞ்
சிக்கிறவனுமாகிய உனக்கு ஆபத்துவரும்; நீ
கொள்ளையிட்டு முடித்தபின்பு கொள்ளையிடப்ப
டுவாய்; நீ வஞ்சித்துமுடித்தபின்பு வஞ்சிக்கப்ப
௨ டுவாய்.—யெகோவாவே, எங்களுக்கு அ
ருள்செய்யும்; உம்மை எதிர்பார்த்தோம்: விடி
யற்காலந்தோறும் அவர்களுக்குப்புயமும், ஆபத்
துக்காலத்தில் எங்களுக்கு இரட்சிப்புமாயிரும்.—
௩ அமளியின்சத்தத்தினால் சனங்கள் அலைந்து ஓடு
கிறார்கள்; நீர் எழுந்திருக்கும்பொழுது சாதியார்
௪ சிதறஅடிக்கப்படுவார்கள்.—வெட்டுக்கிளிகள்
சேர்க்கிறதுபோல நீங்கள் கொள்ளையிட்டபொ
ருள் சேர்க்கப்படும்: பச்சைப்புழு அங்குமிங்
குந் தத்தித்திரிவதுபோல மனுஷர் அதின்மேற்
பாய்வார்கள்.-யெகோவா உன்னதமானவர்; ௫
அவர் உன்னதத்தில் வசிக்கிறார்: நியாயத்தினா
லும் நீதியினாலும் சீயோனைப் பூரணப்படுத்துகி
றார்.-ஞானமும் அறிவுமாகிய பூரண இரட்சிப்பு ௬
உன் காலத்திற்குஸ்திரம்: யெகோவாவைப்
பற்றும் பயம் உன் பொக்கிஷம்.—பாருங்கள், ௭
அவர்களுடைய பலவான்கள் வெளியே அலறு
வார்கள்:சமாதானத்தின்தூதர் மனங்கசந்து அழு
வார்கள்.-இராசவீதிகள் பாழாயின, வழிப்போக் ௮
கரில்லை: உடன்படிக்கையை மீறுகிறான், நக
ரங்களை அவமதிக்கிறான், எந்த மனுஷனையுமதி
யான்.—தேசம்புலம்பிச் சோர்ந்துபோகின்றது: ௯
லிபானோன் வெட்கப்பட்டு வாடிப்போகின்ற
து: ஷாரோன் வனத்தைப்போலாயிற்று; பாஷா
னுங் கர்மேலும் உதிர்ந்தன.-இப்பொழுதுநான் எ ௰
ழுந்திருப்பேன்,இப்பொழுதுஉன்னதமாவேன்;
இப்பொழுது என்னைமேன்மைப்படுத்துவேன்.-
நீங்கள் பதரைக் கருப்பந்தரித்துத் தாளை ஈனுவீர் ௰௧
கள்: உங்கள் சுவாசம் உங்களைப்போல் உங்க
ளைப்பட்சிக்கும்.—சனங்கள் சுண்ணாம்புபோலச் ௰௨
சுடப்படுவார்கள்: வெட்டப்பட்ட முட்செடிக
ளைப்போலஅக்கினியில்தகிக்கப்படுவார்களென்
று யெகோவா சொல்லுகிறார்.

தூரத்திலுள்ளவர்களே, நான் செய்ததைக்கே ௰௩
ளுங்கள்; சமீபத்திலுள்ளவர்களே, நீங்கள் என்
பராக்கிரமத்தை உணர்ந்துசொல்லுங்களென்று
யெகோவா சொல்லுகிறார்.—சீயோனிலுள் ௰௪
ள பாவிகள்பயப்படுகிறார்கள்; நடுக்கம் அவபத்
தரைப்பிடிக்கின்றது. நம்மில், பட்சிக்கும் அக்
கினியில் வசிக்கக்கூடியவன் யாவன்; நம்மில்,
நித்தியசுவாலையில் தரிக்கவல்லவன் யாவன்.—
நீதியாய் நடக்கிறவனும், உண்மை பேசுகிறவ ௰௫
னும், இடுக்கத்தால்வரும் ஆதாயத்தை வெறுக்கி
றவனும், பரிதானங்களைவாங்காதபடி தன் கை
யை உதறுகிறவனும், இரத்தஞ்சிந்துவதற்கு ஆ
லோசனைகளைக்கேளாதபடி தன் செவியை அ
டைக்கிறவனும்,தீமையைக்காணாதபடிதன்கண்
களை மூடுகிறவனுமாகிய இவனே உன்னதத்தில்
வசிப்பான்.—கன்மலைகளிலுள்ள துருக்கம்அவ ௰௬
னுக்குப் புகலிடமாகும்: நித்தமும் அவனுக்கு ஆ
காரங்கொடுக்கப்படும்; அவனுக்கு வேண்டிய ச
லம் ஒருபொழுதும் அற்றுப்போகாது.-உன்கண் ௰௭
கள், அவர் சௌந்தரியத்துடன் இராசாவையும்,
தூரத்திலுள்ள தேசத்தையுங்காணும்.-உன்மனஞ் ௰௮
சென்றபயங்கரத்தை நினைக்கும். எழுதுவோன்
எங்கே, தண்டற்காரனெங்கே, கோபுரங்களை
எண்ணினவனெங்கே.-அறிகிறதற்கரியகடினமா ௰௯
ன பாஷையையும், புத்திக்கெட்டாதவாக்கியங்
களையுமுடையசனங்களாகிய அந்தக்குரூரசனங்
களை நீ இனிக்காணாய்.—நம்முடைய மகோற்சவ ௨௰

(௰௩) அதி.௩௪.௰௩. ஓசி.௯.௬. (௰௪) அதி.௨௭.௰. (௰௫) யோவே.௨.௨௮. அதி.௩௫.௨. (௰௭) யாக்.௩.௰௮. (௰௯) அதி.௩௰.௩௰. சக.௰௧.௨. (௨௰) அதி.௩௰.௨௪.—(௩௩. அதி. ௧.) அதி.௨௧.௨. அபகூ.௨.௮. வெளி.௰௩.௰.(௨)அதி.௨௫.௯. (௫) சங்.௯௭.௯. (௭) ௨.இரா.௰௮.௰௮,௩௭. (௮) நியா.௫.௬. ௨.இரா.௰௮.௰௪,௰௭. (௯) அதி.௨௪.௪. (௰) சங்.௰௨.௫. (௰௧) சங்.௭.௰௪. அதி.௫௯.௪. (௰௨) அதி.௯.௰௮. (௰௩) அதி.௪௯.௧. (௰௫) சங்.௰௫.௨.(௰௮)௧.கொரி.௧.௨௰. (௰௯) ௨.இரா.௰௯.௩௨. ௨பா.௨௮.௪௯,௫௰. எரே.௫.௰௫. (௨௰) சங்.௪௮.௰௨. சங்.௪௬.௫.

வங்கள் பொருந்திய சீயோன் நகரத்தைப்பார்:
முளை ஒருபொழுதும் பிடுங்கப்படாமலும், கயி
றுகளிலொன்றும் அறுமலுமிருக்கிற சாந்தமுள்
ள வாசஸ்தலமும், என்றும் பெயர்க்கப்படாத
௨௧ கூடாரமுமாக யெருஷலேமைக்காண்பாய்.-நம்
முடையபட்சத்தில்மகாமகிமையுள்ள யெகோ
வா, ஆறுகளையும் விசாலநதிகளையும்போலிருப்
பார்; அங்கேவலிக்கிறபடகும்,பெரியகப்பலும்
௨௨ ஓடுவதில்லை.—யெகோவா நம்முடையநியா
யாதிபதி, யெகோவா நமக்குப் பிரமாணங்க
ளைக் கொடுக்கிறவர், யெகோவா நம்முடை
௨௩ ய இராசா; அவர் நம்மை இரட்சிப்பார்.—உன்
கயிறுகள் தளர்ந்துபோயின; பாய்மரத்தை ஸ்தி
ரப்படுத்தவும், பாயைவிரிக்கவும், அவர்களால்
கூடாமற்போயிற்று:இப்பொழுதுமிகுந்தகொள்
ளைப்பொருள் பங்கிடப்படும்; சப்பாணிகளுங்
௨௪ கொள்ளைப்பொருளை எடுப்பார்கள்.—நகரத்தாரி
லொருவனும் நான் வருத்தமாயிருக்கிறேனென்
று சொல்லான்: அதில் வசிக்கிற சனங்கள் பா
வமன்னிப்புப்பெற்றூர்கள்.

## ௩௪. அதிகாரம்.

சத்துருக்களுக்குவருந் தண்டனையுரைத்தல்.

அந்நியதேசத்தாரே, நீங்கள் சமீபித்துவந்துகே
ளுங்கள்; சாதியாரே, சிந்தித்துக்கொள்ளுங்கள்:
பூமியும்,அதிலுள்ளயாவும், உலகமும்,அதில்தோ
௨ ன்றும்யாவுங்கேட்கக்கடவன.-சாதியாரெல்லார்
மேலும், யெகோவாவின் கோபமும், அவர்
களுடைய சேனைகளெல்லாவற்றின்மேலும், அ
வருடைய உக்கிரகோபமும்மூளும்:அவர் அவர்
களை முழுமையும்நாசப்படுத்தினூர், அவர்களைக்
௩ கொலைக்கு ஒப்பித்தார்.-அவர்களிற்கொலைசெய்
யப்பட்டவர்கள் வெளியேதள்ளப்பட்டுக்கிடக்
கிறூர்கள், அவர்களுடையபிரேதங்கள்நாற்றமெ
டுக்கும், அவர்களுடைய இரத்தத்தினுல் மலைக
௪ ளுங்கரைந்துபோகும்.—ஆகாயத்திலுள்ள சமஸ்
தசேனைகளும் கரைந்துபோகும், ஆகாயமண்ட
லம் ஒருசுருள்புத்தகத்தைப்போலச் சுருட்டப்ப
டும்: திராட்சக்கொடியின் இலையும் அத்திமரத
தின் காய்களும் உதிர்ந்து விழுவதுபோல, அதி
௫ லுள்ள சமஸ்த நட்சத்திரங்களும் விழும்.—வா
னத்தில் என் கட்கம் வெறிகொண்டது: பாருங்
கள், சங்காரதண்டனை, என்னுல் சங்காரத்திற்
கொப்பிக்கப்பட்டசனங்கள்மேல்,விசேஷமாய்
௬ இதூமியாமேல் விழும்.—போத்ஸ்ருவில் யெ
கோவாவுக்குப் பலிசெலுத்தலுண்டு,இதூமி
யாதேசத்தில்மகாசங்காரமுண்டு: ஆதலால் யெ
கோவாவின் கட்கம் இரத்தத்தினுல் திருத்தி
பெற்று நிணத்தினுல்பூரிக்கின்றது, ஆட்டுக்குட்
டிகள் கடாக்களாகிய இவைகளின் இரத்தத்தினு
லும், ஆட்டுக்கடாக்களின் குண்டிக்காய்களின்
நிணத்தினுலுந் திருத்திபெறும்.—அவைகளோ ௭
டே காண்டாமிருகங்களும்,எருதுகளோடே கா
ளைகளும்விழும்; அவர்களுடையதேசம் இரத்தத்
தினுல்வெறிகொள்ளும்,பூதூள்நிணத்தினுல்புஷ்
டியாகும்.—அதோ யெகோவா பழிவாங்கும் ௮
நாள், சீயோனின்வழக்கினிமித்தம் ஈடுகொடுக்
கும்வருஷம்.—அதின்நீரோடைகள் பிசினுகும், ௯
அதின்தூள்கெந்தகமாகும்,அதின்நிலமுழுவதும்
எரிகிறபிசினுகும்.—இரவிலாகிலும் பகலிலாகி ௰
லும்ஒருபொழுதும்அவியாது;அதின்புகையென்
றுமெழும்பும்: தலைமுறைதோறும் அதுபாழாய்க்
கிடக்கும்; அதின்வழியாய் ஒருவனும் ஒருபொ
ழுதும்போகமாட்டான்.
நாரையும்முட்பன்றியும் அதைச்சுதந்தரித்துக் ௰௧
கொள்ளும்; ஆந்தையுங் காக்கையும் அதிலேதங்
கும்:அவர்சங்காரமென்னும்நூலைஅதின்மேலிழு
த்து, வெறுமை யென்னுந்தூக்கைப்பிடிப்பார்.-
அரசாளும்பொருட்டு அழைக்கும்பொழுது அங் ௰௨
கேஒருபிரபுவுமில்லை;அதிபதிகள்யாவரும்ஒழிந்
துபோவார்கள்.-அதின் அரமனைகளில்முட்செடி ௰௩
யும், அதின் கோட்டைகளில் காஞ்சொறிகளும்,
முட்பூண்டுகளும் முளைக்கும்: அதுசருப்பங்க
ளுக்குவாசஸ்தலமும்,ஒட்டகப்பட்சிகளுக்குவீ
டுமாகும்.-அங்கே காட்டுமிருகங்களும் நரிகளும் ௰௪
ஒன்றையொன்று சந்திக்கும், உரோமமுள்ளமி
ருகந் தன்தோழனைக்கூப்பிடும்; அங்கே லீலித்
துத்தங்கி, இளைப்பாறும் ஸ்தானத்தைக் கண்ட
டையும்.—அங்கே வல்லூறுங்கூடுகட்டி, முட் ௰௫
டையிட்டு,குஞ்சுபொரித்து,தன்நிழலிலே கூட்
டிக்கொள்ளும்: அங்கே பருந்துஞ் சோடுசோ
டாகச்சேரும்.
இவைகளிலொன்றும்அற்றுப்போகாது,இவை ௰௬
களிலொன்றுந் தன் இணையில்லாதிராது: யெ
கோவாவின் புத்தகத்தில்ஆராய்ந்துவாசித்துப்
பாருங்கள்: அவருடையவாய் இதைச்சொல்லிற்
று,அவருடைய ஆவி அவைகளைஎகமாய்ச்சேர்க்
கும்.—அவர் அவைகளுக்காகச் சீட்டுப்போட் ௰௭
டார், அவருடைய கை நூலினுல் அவைகளுக்
குப்பங்களந்துகொடுத்தது: அவைகள்அதை என்
றுஞ்சுதந்தரித்து, தலைமுறைதோறும் அந்தஸ்தா
னத்தில் வாசம்பண்ணும்.

## ௩௫. அதிகாரம்.

கிறிஸ்துவின் இராச்சியத்தின் மேன்மையையும்
அதிலுள்ள வாழ்வையும் வருணித்தல்.

வனமும்வறண்டபூமியும்,இவைகளினிமித்தம் ௧
வனுந்தரமுங்களிகூர்ந்து, கபெத்செலைத் புஷ்
பம்போலமலரும்.-அதுமிகவுஞ்செழித்து,ஆனந் ௨
தக்களிப்புடனேபாடிச் சந்தோஷிக்கும்: லிபா
னேனின்மகிமையும், கர்மேல் ஷாரோன் என்ப
வைகளின் சௌந்தரியமும் அதற்குக்கொடுக்கப்

(௨௨) யாக்.௪.௰௨. சங்.௮௯.௰௮. (௨௪) எரே.௫௰.௨௰.—(௩௪. அதி. ௧.) சங்.௪௯.௧. உபா.௩௨.௧. (௩) யோவே. ௨.௨௰. (௪) யோவே.௨.௩௧. மத்.௨௪.௨௯. ௨.பேதுரு.௩.௰. வெளி.௬.௰௩,௰௪. (௫) எரே.௪௬.௰. எரே.௪௯.௭,. மல். ௧.௪. (௬) அதி.௬௩.௧. எரே.௪௯.௰௩. செப்.௧.௭. (௮) அதி.௬௩.௪. (௰) வெளி.௰௪.௰௧. மல்.௧.௪. (௰௧) செப்.௨. ௰௪. வெளி.௰௮.௨. ௨.இரா.௨௧.௰௨. புல.௨.௮. (௰௩) ஓசி.௯.௬. (௰௬) மல்.௩.௰௬.—(௩௫. அதி. ௧.) அதி.௫௫. ௰௨. (௨) அதி.௩௨.௰௫.

படும், அவர்கள் யெகோவாவின் மகிமையை
யும் நமது தேவனுடைய முக்கியத்தையுங்
காண்பார்கள்.
௩ தளர்ந்தகைகளைத்திடப்படுத்துங்கள், தள்ளாடு
௪ கிற முழங்கால்களை ஸ்திரமாக்குங்கள்.—சோர்ந்த
மனமுள்ளவர்களைப்பார்த்து, நீங்கள்திடங்கொள்
ளுங்கள், பயப்படாதிருங்கள்: உங்கள் தேவ
னைப்பாருங்கள், பழிவாங்கல், தேவனுடைய
பழிவாங்கலேவரும்; அவரே வந்து உங்களை இ
௫ ரட்சிப்பாரென்று சொல்லுங்கள்.—அப்பொழு
துகுருடருடைய கண்கள் திறக்கப்படும், செவி
௬ டருடையசெவிகள் திறப்புண்ணும்.—முடவன்
மான்போலத் துள்ளுவான், ஊமையுடைய நாவு
பாடும்: வனத்தில்நீரூற்றுக்களும், வனாந்தரத்தில்
௭ நீரோடைகளும் ஊறிப்பாயும்.—கானல்கிளம்புமி
டங் குளமாகும், வறண்டநிலத்தில் நீரூற்றுண்
டாகும்: வலியசருப்பங்கள் தங்கிக்கிடந்த இ
டங்களில் கொறுக்கைகளும், நாணல்களுமுண்
௮ டாகும்.—அந்த ஸ்தானத்தில்பரிசுத்தவழியென்
னும் பெயர்பெற்ற ஒரு பெரும்பாதையிருக்கும்;
அசுசியுள்ளவன் அதிற்செல்லான்; வழிப்போக்
கர் பேதையராயினும் வழுவிப்போகமாட்டார்
௯ கள், அவர் அவர்களோடே இருப்பார்.—அங்கே
சிங்கமில்லை, எந்தத்துஷ்டமிருகமும் அதிலே
போகாது, அதிலே காணப்படமாட்டாது, மீட்
கப்பட்டவர்கள் மாத்திரம் அதிலேசெல்லுவார்
௰ கள்.—யெகோவாவினால் மீட்கப்பட்டவர்
கள் திரும்பி, பாடிப்பாடிச்சத்தமிட்டு, சீயோ
னுக்கு மீண்டுவருவார்கள், அவர்கள் தலையின்
மேல் நித்தியானந்தஞ் சூட்டப்படும்: அவர்கள்
சந்தோஷமும் மகிழ்ச்சியும்பெறுவார்கள், துக்க
முந் தவிப்பும் விலகிஓடும்.

## ௩௬. அதிகாரம்.

௧. சனகெரிப்பென்னும்இராசா யெருஷலேமை வளைத்தல்: ௰௧. ரப்ஷாக்கே நிந்தனை செய்தல். அவர்களதை இஸ்கியாவுக்குத்தெரிவித்தல்.

இஸ்கியா இராசா அரசாண்ட பதினாலாம் வரு
ஷத்தில், அஷ்ஷூரிய இராசாவாகிய சனகெரிப் யூ
தாவிலுள்ள அரணான சமஸ்தநகரங்களுக்கும் வி
ரோதமாய்வந்து, அவைகளைப் பிடித்துக்கொண்
௨ டான்.—அன்றியும் அஷ்ஷூரிய இராசா, லாகீஷி
னின்று பெரிய சேனையோடே ரப்ஷாக்கேயை
யெருஷலேமிலுள்ள இஸ்கியாவிடத்தில் அனுப்
பினான். அவன்வந்து சேர்ந்தபொழுது மேற்கு
ளத்தின் சாலகசமீபத்தில் வண்ணான் துறைக்
௩ குப்போகும்வழியில் நின்றான்.—அப்பொழுது
வீட்டதிகாரியும் இல்கியாவின் புத்திரனுமாகிய
இலியாக்கீமும், இலேககனாகியஷெப்னாவும், இதி
காச கர்த்தனான ஆசாப்பின் புத்திரனாகியயோ
வாகும்புறப்பட்டுஅவனிடத்தில்வந்தார்கள்.
௪ அப்பொழுது ரப்ஷாக்கே அவர்களைநோக்கி,
நீங்கள் இஸ்கியாவிடத்தில், நீ கொண்டிருக்கிற
இந்தநம்பிக்கையென்ன.—யுத்தத்துக்கு மந்திரா ௫
லோசனையும், வலிமையும் எனக்குண்டென்று
சொல்லுகிறாய்: அது வாய்ப்பேச்சேயன்றிவே
றல்ல, நீ என்னைவிரோதிக்கும்படி ஆர்மேல் நம்
பிக்கைவைத்திருக்கிறாய்.—பார், நெரிந்த நாணற் ௬
கோலாகிய எகிப்தின்மேல் நீ நம்பிக்கைவைத்
திருக்கிறாய்; அது தன்மேல்ஒருவன்ஊன்றினால்
அவன் உள்ளங்கையிற்பட்டு அதை ஊடுருவிவி
டும்: எகிப்திய இராசாவாகிய பார்வோன், தன்
னிடத்தில் அடைக்கலம்புகும்யாவருக்கும் இப்
படியே இருப்பான்.—நீ என்னிடத்தில், நாங் ௭
கள் எங்களுடைய தேவனாகிய யெகோவா
வையே நம்புகிறோமென்று சொல்வாயாகில்,
இஸ்கியாஅவருடைய உயர்ந்தஸ்தானங்களையும்,
வேதிகைகளையுமல்லவாஅகற்றிவிட்டு, யூதாசன
ங்களையும் யெருஷலேமியரையும்நோக்கி, இந்த
வேதிகையிடத்தில்மாத்திரம்ஆராதனைசெய்யவே
ண்டுமென்றான்.—இப்பொழுது என்ஆண்டவனா ௮
கியஅஷ்ஷூரியஇராசாவுக்குப்பிணைதா, குதிரைமே
ல்ஏறத்தக்கவர்கள்இரண்டாயிரவர் உன்னிடத்தி
லுண்டானால் அத்தனை குதிரைகளை நான் உனக்
குத்தருவேன்.—அப்படிமுடியாதிருந்தால், இரதங் ௯
களுக்காகவும், குதிரைகளுக்காகவும் எகிப்திலே
நம்பிக்கைவைத்து, என் ஆண்டவனின் கீழ்த்தர
மானபணிவிடைக்காரருக்குள்ளேயிருக்கும்ஒரு
தலைவனையாகிலும்புறங்காட்டப்பண்ணுவதெப்
படி.—நான் இப்பொழுது இந்தத்தேசத்தை அழிக் ௰
கும்படி யெகோவாவின் கட்டளையில்லா
மல்வந்தேனா; யெகோவா என்னைநோக்கி, நீ
அந்தத்தேசத்துக்கு விரோதமாகப்போய் அதை
அழித்துப்போடென்று சொன்னாரென்று, அஷ்ஷூ
ரிய இராசாவாகிய மகாராசாசொல்லுகிறாரென்
பதை நீங்கள் சொல்லுங்களென்றான்.
அப்பொழுது இலியாக்கீமும், ஷெப்னாவும், யோ ௰௧
வாகும் ரப்ஷாக்கேயைநோக்கி, உமதடியாருட
னே ஸீரியபாஷையில் பேசும்படி வேண்டுகி
றோம்; அது எங்களுக்குத்தெரியும்: மதிலின்மே
லிருக்கிற சனங்களுடைய செவியிலேறத்தக்க
தாகயூதபாஷையில்பேசவேண்டாமென்றார்கள்.
ரப்ஷாக்கே அவர்களைநோக்கி, இந்தவாக்கு ௰௨
களை என் ஆண்டவர் உன் ஆண்டவருக்கும் உ
னக்குமாத்திரமா, தங்கள் மலத்தைத்தின்று, தங்
கள் சிறுநீரைக்குடிக்கப்போகிற மதிலின்மேலி
ருக்கிறசனங்களுக்குமல்லவாசொல்வதற்கு என்
னை அனுப்பினாரென்றான்.—பின்பு ரப்ஷாக்கே ௰௩
நின்றுகொண்டு, அஷ்ஷூரியஇராசாவாகிய மகா இ
ராசாவின் வாக்கைக்கேளுங்கள்.—இஸ்கியா உங் ௰௪
களை வஞ்சியாதபடிசாவதானமாயிருங்கள்: என்
கையினின்று அவன்உங்களைவிடுவிக்கத்திராணி
யுள்ளவனல்ல.—யெகோவா நிச்சயமாய் எங் ௰௫

(௩) யோபு.௪.௩,௪. எபி.௰௨.௰௨. (௫) அதி.௪௨.௭. மத்.௯.௨௭. யோவா.௯.௬,௭. மத்.௰௧.௫. (௬) மத்.௰௧.௫. யோவா.௫.௮,௯. அப்.௩.௨,. மத்.௯.௩௨,௩௩. அதி.௪௩.௰௯. யோவா.௭.௩௮,௩௯. (௮) அதி.௫௨.௧. யோவே.௩.௰௭. வெளி.௨௧.௨௭. (௯) லேவி.௨௬.௬. எசேக்.௩௪.௨௫. (௰) அதி.௫௧.௰௧. அதி.௨௫.௮. வெளி.௭.௰௭. வெளி.௨௧.௪.—(௩௬. அதி. ௧.) ௨.இரா.௰௮.௰௩,௰௭. (௪) ௨.இரா.௰௮.௰௯,. (௬) எசேக்.௨௯.௬,௭.

களை இரட்சிப்பார்: இந்தநகரம் அஷீரிய இரா
சாவின்கையில் ஒப்பிக்கப்படமாட்டாதென்று
சொல்லி, இஸ்கியாஉங்களை யெகோவாவை
நம்பச்சொல்லுவான், அதற்கு இடங்கொடாதி
௰௬ ருங்களென்று இராசா சொல்லுகிறுர்.—நீங்கள்
இஸ்கியாவுக்குச்செவிகொடாமல்,வெகுமானங்
கொண்டுவந்து, என்னுடன் சந்திசெய்யுங்கள்:
நான்வந்து உங்கள் தேசத்தைப்போலத் தானிய
மும், திராட்சரசமும், போசனபதார்த்தங்களும்,
திராட்சத்தோட்டங்களுமுள்ளதேசத்துக்கு உங்
௰௭ களைக்கொண்டுபோகும்பரியந்தம்,—உங்களுங்
கள் திராட்சத்திலும், உங்களுங்கள் அத்திமரத்
திலுமுள்ளதைப்புசித்து, உங்களுங்கள் கிணற்
௰௮ றுச்சலத்திற் குடித்துக்கொண்டிருங்கள்.—யெ
கோவா நம்மை இரட்சிப்பாரென்றுசொல்லி,
இஸ்கியா உங்களைவஞ்சியாதபடி சாவதான
மாயிருங்கள். அந்நியதேசத்தாரின் தேவர்க
ளில் தன் தேசத்தை அஷீரிய இராசாவின்கை
௰௯ யினின்று விடுவித்தவன் யாவன்.—அமாத் அர்
பாத்தென்னும் இவைகளின் தேவர்களெங்கே;
செப்பார்வாயிமின் தேவர்களெங்கே; அவர்கள்
ஷமாரியாவை என்கையினின்று விடுவித்ததுண்
௨௰ டா.—அந்நிய தேசங்களின் சமஸ்ததேவர்களுக்
குள்ளுந் தங்கள்தங்கள்தேசத்தைஎன்கையினின்
று விடுவித்துக்கொண்டவர்கள் யாவர்; இனி,
யெகோவா என்கையினின்றுயெருஷலேமை
விடுவிக்கப்போகிறுராவென்பதை, அஷீரிய இ
ராசாசொல்லுகிறுரென்றுயூதபாஷையில் உரத்த
௨௧ சத்தத்துடன்பேசினுன்.-அவனுக்குத்தரஞ்சொல்
லவேண்டாமென்று இராசா கட்டளையிட்டிருந்
தபடியினுல், அவர்கள்உத்தரமாக அவனுக்கு ஒ
ருவாக்குஞ்சொல்லாமல் மவுனமாயிருந்தார்கள்.
௨௨ பின்பு இல்கியாவின்புத்திரனுகிய இலீயகீ
மென்னும் வீட்டதிகாரியும்,ஷெப்னுவென்னும்
இலேககனும், ஆசாப்பின் புத்திரனுகிய யோவா
கென்னும் இதிகாசகர்த்தனும் தங்கள் வஸ்திரத்
தைக்கிழித்துக்கொண்டு இஸ்கியாவிடத்தில் வந்
து,ரப்ஷாக்கேயின்வாக்குகளைஅவனுக்குத்தெரி
வித்தார்கள்.

## ௩௭. அதிகாரம்.

௧.இஸ்கியா ஏசாயாவிடத்தில் ஆளனுப்பல்: ௮. ஏ
சாயா இஸ்கியாவுக்குத்தரஞ்சொல்லல்: ௰௪. இ
ஸ்கியாஆலயத்தில்பிரார்த்தித்தல்: ௨௧.ஏசாயாச
னகெரிப்பைக்குறித்துத் தீர்க்கதரிசன முரைத்
தல்: ௩௫. சனகெரிப்பும்அவன்சேனையும்நாசம
டைதல்.

இஸ்கியா இராசா அதைக்கேள்விப்பட்டபொ
ழுது தன் வஸ்திரத்தைக்கிழித்து, இரட்டினுல்
போர்த்து, யெகோவாவின் ஆலயத்தில்போ
௨ ய்,-இரட்டினுல்போர்த்துக்கொண்ட வீட்டதிகா
ரியாகிய இலீயகீமையும், இலேககனுகிய ஷெப்
னுவையும், ஆசாரியர்களின் முதியோரையும் ஆ
மோத்சின் புத்திரனுகிய ஏசாயாவென்னுந்தீர்க்க
௩ தரிசியினிடத்தில் அனுப்பினுன்.—இவர்கள் அ
வனைநோக்கி, இன்றைத்தினங்கிலேசமும், கண்
டிதமும், நிந்தனையுமுள்ளதினம்: பிள்ளை பிரச
விக்குங்காலம்வந்தது, பிரசவிக்கிறதற்குப்பெல
னில்லை.—சீவனுள்ள தேவனை நிந்திக்கும்படிஅ ௪
ஷீரிய இராசாவாகிய தன் ஆண்டவனுல் அ
னுப்பப்பட்ட ரப்ஷாக்கேயின் சகலவாக்குக
ளையும் உமது தேவனுகிய யெகோவா கேட்
டு, உமது தேவனுகிய யெகோவா தாம்
கேட்டவாக்குகளினிமித்தந் தண்டனைசெய்ய
வுங்கூடும்: ஆதலால்மீந்திருக்கிறவர்கள்நிமித்தம்
பிரார்த்தனைபண்ணுமென்று இஸ்கியாசொல்லு
கிறுரென்ருர்கள்.—இவ்விதமாய் இஸ்கியா இரா ௫
சாவின் தாசர்கள் ஏசாயாவிடத்தில் வந்தார்கள்.
ஏசாயா அவர்களைநோக்கி, நீங்கள் உங்கள் ௬
ஆண்டவனிடத்தில், அஷீரிய இராசாவின்பணி
விடைக்காரர்கள் என்னைநிந்திக்கக்கேட்டவாக்
குகளைக்குறித்து நீ பயப்படவேண்டாம்.—கேள், ௭
நான் அவனுக்குள் ஒரு ஆவியைப்பிரவேசிப்பிப்
பேன், அவன் ஒருசத்தங்கேட்டுத் தன் தேசத்திற்
குத்திரும்பிவிடுவான்; பின்பு நான் அவனைஅவன்
சுயதேசத்தில் கட்கத்தினுல் விழப்பண்ணுவே
னென்று யெகோவா சொல்லுகிறுரென்ப
தைச் சொல்லுங்களென்றுன்.
பின்பு அஷீரிய இராசா லாகீஷ் நகரத்தினின் ௮
று புறப்பட்டுப்போனுனென்று கேள்விப்பட்ட
படியினுல் ரப்ஷாக்கேதிரும்பிப்போய், அவன்
லிப்னுவை எதிர்த்துயுத்தஞ்செய்யக்கண்டான்.-
அப்பொழுது கூஷ் இராசாவாகிய திராகாஉமக் ௯
குவிரோதமாயுத்தஞ்செய்யப்புறப்பட்டானென்
றுசொல்லக் கேள்விப்பட்டான்.—அதினுல் அ ௰
வன், நீங்கள் யூதாதேசத்து இராசாவாகிய இஸ்
கியாவிடத்தில், யெருஷலேம் அஷீரிய இராசா
வின்கையில் ஒப்பிக்கப்படமாட்டாதென்று, நீ
நம்பியிருக்கிற உன் தேவன் உன்னைவஞ்சியா
தபடி சாவதானமாயிரு.—கேள், அஷீரிய இரா ௰௧
சாக்கள் சமஸ்த தேசங்களையும் இன்ன இன்ன
பிரகாரஞ்சங்கரித்தார்களென்று நீ கேள்விப்பட்
டிருக்கிறுய்; இனி நீயா தப்புவாய்.—என் முன் ௰௨
னோர் சங்கரித்த கோஷானையும், ஆரானையும்,
ரேத்சேப்பையும், தீலத்சாரில் வசித்த ஏதேன்
சந்ததியாரையும் அந்நியதேசத்தாரின் தேவர்கள்
விடுவித்தார்களா.—அமாத்தின் இராசாவும் அர் ௰௩
பாத்தின் இராசாவும் செப்பார்வாயிம், ஐனு, ஈ
வாவென்னும் நகரங்களின் இராசாக்களுமெங்
கேயென்பதைச் சொல்லுங்களென்று, திரும்ப
வும் இஸ்கியாவிடத்தில்தூதர்களைஅனுப்பினுன்.
இஸ்கியா தூதர்கள் கையினின்று காகிதத்தை ௰௪
வாங்கி வாசித்தான்: பின்பு இஸ்கியா யெகோ
வாவின் ஆலயத்திற்கேறிப்போய், யெகோ
வாவின் சந்நிதியில் அதைவிரித்துவைத்தான்.-
இஸ்கியா யெகோவாவை நோக்கி,—கெரூபி ௰௫
களின் மத்தியில் வாசமாயிருக்கிறவரும், இஸர ௰௬
வேலின் தேவனும் சேனுபதியுமாகிய யெ
கோவாவே, பூமண்டலத்திலுள்ளசகலஇராச்

(௰௭) ௪௧.௩.௰.—(௩௭. அதி. ௧.) ௨.இரா.௰௯.௧,. (௰௩) ௭ரே.௪௯.௨௩.

சியங்களுக்கும் நீர் ஒருவரே தேவன்: வானத்
௰௭ தையும் பூமியையுஞ்சிருஷ்டித்தீர்.—யெகோ
வாவே, உமது செவியைச்சாய்த்துக்கேட்டரு
ளும்; யெகோவாவே, கண்திறந்து பார்த்த
ருளும்: சீவனுள்ள தேவனை அவமானம்பண்
ணும்படி சனகெரிப் அனுப்பினவாக்குகளையெல்
௰௮ லாங் கேட்டருளும்.—யெகோவாவே, அ
ஸீரிய இராசாக்கள் சமஸ்த சாதியாரையும் அ
வர்கள் தேசங்களையும் நாசப்படுத்தினதுமெய்.–
௰௯ அவர்கள், இவர்களுடைய தேவர்களை அக்கினி
யிலே வீசினார்கள்: மனிதர்கையினால் தொழிற்
பட்டமரமுங் கல்லுமேயன்றி அவர்கள் தேவர்க
ளல்லவே: ஆதலால் அவர்களை நாசப்படுத்தினார்
௨௰ கள்.–எங்கள் தேவனாகிய யெகோவாவே,
அவன்கையினின்று எங்களை விடுவித்தருளும்,
அதினால் நீர் ஒருவரே தேவனாகிய யெகோ
வாவென்பது, பூமண்டலத்திலுள்ள சமஸ்த இ
ராச்சியத்தாருக்குந் தெரியவருமென்று சொல்
லிப் பிரார்த்தித்தான்.
௨௧ பின்பு ஆமோத்சின்புத்திரனாகியஎசாயா இஸ்
கியாவிடத்தில், அஸீரிய இராசாவாகிய சன
கெரிப்பைக் குறித்து நீ செய்த பிரார்த்தனை எ
னக்குக் கேட்டதென்று, இஸரவேலின் தேவ
௨௨ னாகிய யெகோவா சொல்லுகிறார்.–மேலும்
அவனைக்குறித்து யெகோவா, சீயோன் குமா
ரத்தியாகியகன்னி உன்னை அவமதித்துப் பரிகா
சம்பண்ணுகிறாள், யெரூஷலேமின் குமாரத்தி
௨௩ உன்னைக்குறித்துத்தலையைத்துலுக்குகிறாள்.—நீ
ஆரைநிந்தித்து அவமானம்பண்ணினாய்; ஆருக்
குவிரோதமாய் உரத்தசத்தமெடுத்துப்பார்வையெ
லுத்தினாய்; இஸரவேலரின்பரிசுத்தருக்கு விரோ
௨௪ தமாயல்லவா.—உன்பணிவிடைக்காரரைக்கொ
ண்டு யெகோவாவை நிந்தித்தாய், நான் அநே
க ரதங்களோடும், லிபானோனின் சாரல்மேலாய்
மலைகளின் உச்சிகளில்ஏறிவந்தேன்; அதிலுள்ள
நெடியஎரஸ்விருட்சங்களையும், அதிலுள்ள உத்த
மதேவதாருக்களையுந்தறித்தேன்: அதின்எல்லையி
லுள்ள இராத்தங்கும் ஸ்தானங்களிலும், உத்தம
௨௫ வனத்திலும் பிரவேசித்தேன்;—என்னுள்ளங்கா
லால் அரணுள்ள நகரங்களின் சகல ஓடைகளை
யும் வற்றப்பண்ணினேனென்றாயே; நீ அரணான
நகரங்களை நாசப்படுத்திப்பாழான மேடுகளாக்
குவாயென்று நான் நெடுங்காலத்துக்குமுன்கு
௨௬ றித்தேன்.-இதைக்கேட்கவில்லையா, பூருவகாலத்
தில் அதை நிலைப்படுத்தினேன்; இப்பொழுது
௨௭ அதைச்சித்தியாக்கினேன்.—அதினிமித்தம் அங்
குள்ள பிரசைகள் பெலவீனராகி, பயந்து கலங்
கினார்கள்: வெளியிற்புல்லுக்கும், பசும்பூண்டுக்
கும், நிலாமுற்றங்களின் புல்லுக்கும், விளைவுக்
குமுன் தீய்ந்துபோன தானியத்துக்குஞ் ச
௨௮ மானமானார்கள்.–உன்வாசஸ்தலமும், உன்போக்
குவரவும், எனக்குவிரோதமான உன்குரோதமும்
௨௯ நான் அறிவேன்.—எனக்குவிரோதமாகிய உன்
கோபமும் உன் அகங்காரமும் என்செவிக்கேறி
னபடியினால், நான் உன்மூக்கில் என்தூண்டிலை
யும், உன்னுதடுகளில் என்கடிவாளத்தையும் இடு
வேன், நீ வந்தவழியே உன்னைத் திருப்பிவிடு
வேன்.—யெரூஷலேமினின்று மீந்திருக்கிறவர் ௩௰
களும், சீயோன்மலையினின்று தப்பி ஓடினவர்க
ளும்புறப்பட்டுப்போவார்கள்: ஆதலால்யூதாவமி
சத்தில் தப்பி மீந்திருக்கிறவர்கள் இன்னுங்கீழே
வேரூன்றி, மேலே கனிகொடுப்பார்கள்.—யெ ௩௧
கோவாவுடைய அன்பின்ஊக்கம்இதைச்சித்
திசெய்யும்.—இந்தவருஷத்தில் தானாய்விளைந்தி ௩௨
ருப்பதையும், இரண்டாம்வருஷத்தில் அதினின்
று தோன்றியிருப்பதையும் புசிப்பீர்கள்: மூன்
றாம்வருஷத்தில் நீங்கள் விதைத்து அறுப்பீர்கள்,
திராட்சத்தோட்டங்களை உண்டாக்கி அவைக
ளின்கனிகளைப்புசிப்பீர்கள், இதுவே உங்களுக்
கடையாளமாகுமென்று சொல்லியவாக்கு இது
வே.—அன்றியும் யெகோவா, அஸீரிய இ ௩௩
ராசாவைக்குறித்து, அவன் இந்த நகரத்தில் பிர
வேசிக்கவுமாட்டான், இதற்கு ஒருஅம்பு எய்யவு
மாட்டான், இதற்குஒருபரிசையையுங்காட்டவு
மாட்டான், இதற்குவிரோதமாய் ஒருகொத்தளம்
போடவுமாட்டானென்கிறார்.-நான் என்னிமித் ௩௪
தமும், என்தாசனாகிய தாவீதினிமித்தமும் இந்
த நகரத்தைக்காத்து இரட்சிப்பேன்.—ஆதலால் ௩௫
அவன் இந்த நகரத்தில் பிரவேசியாமல், தான்
வந்தவழியேதிரும்பிவிடுவானென்று, யெகோ
வா சொல்லுகிறாரென்பதைச் சொல்லியனுப்பி
னான்.-அப்பொழுது யெகோவாவின் தூதன் ௩௬
புறப்பட்டுப்போய், அஸீரியரின் பாளயத்தில்
ஒரு லட்சத்து எண்பத்தையாயிரஞ்சனங்களை வ
தைத்தான்: அவர்கள் அதிகாலையிலெழுந்திருந்த
பொழுது, இவர்களெல்லாருஞ்செத்த பிரேதங்க
ளாய்க் கிடக்கக்கண்டார்கள்.
அதினால் அஸீரிய இராசாவாகிய சனகெரிப் ௩௭
புறப்பட்டுத் திரும்பிப்போய், நினிவேயில் வா
சம்பண்ணினான்.–பின்பு அவன் தன் தேவனாகி ௩௮
ய நிஸ்ரோக்கின்ஆலயத்தில்பூசைசெய்துகொண்
டிருக்கையில், அவன் புத்திரராகியஅத்ரமிலெக்
கும், ஷரேத்சரும் அவனைக்கட்கத்தினால் வெட்
டிப்போட்டு, அரராத்தென்னுந்தேசத்துக்குத்தப்
பி ஓடிவிட்டார்கள்; அவனுக்குப்பின் அவன்
புத்திரனாகிய எசரத்தோன்இராசாவானான்.

## ௩௮. அதிகாரம்.

௧. தனக்குமரணஞ் சமீபித்ததென்றறிந்து இஸ்கி
யா பிரார்த்தனைபண்ணி ஆயுள் நீடிக்கப்பெற்ற
தற்கு ஓரடையாளங்காணல்: ௯. அதினிமித்தம்
இஸ்கியா பாட்டுப்பாடித் துதித்துவணங்கல்.

அக்காலத்தில் இஸ்கியா மரணத்துக்கேதுவான ௧
வருத்தமடைந்திருக்கையில், ஆமோத்சின்புத்திர
னாகிய எசாயாதீர்க்கதரிசி அவனிடத்தில்வந்து அ
வனைநோக்கி, நீ இறந்துபோவாய், இனிச்சீவிக்
கமாட்டாய்: ஆதலால் நீ உன்வீட்டை ஒழுங்கு

(௰௭) தானி.௯.௰௮. (௨௬) ௨.இரா.௰௯.௨௫. (௨௯) எசேக்.௩௮.௪. (௩௧) ௨.இரா.௰௯.௩௰. (௩௪) ௨.இரா.௨௰.௬.
(௩௬) ௨.இரா.௰௯.௩௫.—(௩௮. அதி. ௧.) ௨.இரா.௨௰.௧,. ௨.சாமு.௰௭.௨௩.

பண்ணெனன்று யெகோவா சொல்லுகிறாரென்
௨ றான்.—அதினால் இஸ்கியா சுவர்ப்புறமாகத் தன்
முகத்தைத் திருப்பிக்கொண்டு, யெகோவா
௩ வை நோக்கி,—யெகோவாவே, நான் உமக்
கு முன்பாக உண்மையாய்ப் பூரணஇருதயத்தோ
டேநடந்து, உமது சமுகத்திற்கு நலமானதைச்
செய்துவந்தேன், அதை நினைந்தருளுமென்று
சொல்லிப் பிரார்த்தித்தான். இஸ்கியா மிகவும்
அழுதான்.
௪ அப்பொழுது ஏசாயாவுக்குக்கிடைத்த யெ
௫ கோவாவின் வாக்கு,—நீபோய் இஸ்கியாவு
டனே, நான் உன்பிரார்த்தனையைக்கேட்டேன்,
உன் கண்ணீரைக்கண்டேன்: உன் ஆயுளுக்குப்
௬ பதினைந்துவருஷங் கூட்டுவேன்.-நான் உன்னை
யும் இந்த நகரத்தையும் அஸீரிய இராசாவின்
கைக்குத்தப்புவிப்பேன்: நான் இந்த நகரத்தைக்
௭ காத்துக்கொள்வேன்.-யெகோவா தாம்சொல்
லிய வாக்கை நிறைவேற்றுவாரென்றதற்கு இது
உனக்கு யெகோவாவினால் ஒரு அடையா
௮ ளமாகும்.—பார், ஆகாசுடைய சூரியகடிகாரத்
தில் வரிக்குவரி இறங்கின நிழலைப்பத்துவரிபின்
னிட்டுத்திருப்புவேன். இதுவே உனக்கு அடை
யாளமாயிருக்குமென்று உன்பிதாவாகிய தாவீ
தின் தேவனாகிய யெகோவா சொல்லுகிறா
ரென்பதைச்சொல்லென்றது: அப்படியே கடி
காரத்தில் இறங்கிய சூரியனிழல் பத்துவரி திரும்
பிற்று.
௯ வருத்தமடைந்து சொஸ்தம்பெற்றசமயத்தில்,
யூதாவின் இராசாவாகிய இஸ்கியா எழுதியஎழுத்
௰ தாவது:-என் ஆயுளின்மத்தியில் நான் மரித்தோர்
ஸ்தானத்தின் வாசல்களில் பிரவேசிக்கப்போகி
றேன்: மீந்திருக்குமென் ஆயுளின்வருஷங்கிடை
௰௧ யாமற்போமென்றேன்.—சீவனுள்ளோரின் வா
சஸ்தானத்தில்யாவென்னும் யெகோவாவை
இனிக்காணேன்; நான் இனி பூலோகத்தாருடனி
௰௨ ருந்து மனுஷரைக்காணேன்.-என்வாசஸ்தானம்
பெயர்ந்து, மேய்ப்பனுடையகூடாரத்தைப்போ
ல என்னைவிட்டு நீங்கிற்று: நெய்கிறவன்பாவை
அறுக்கிறதுபோல என் ஆயுளைச்சேதித்து விட்
டேன்: அவர் என்னைத்தரையினின்று நீக்கிவிட்
டார்: இன்றைப்பகலுக்குள்என்னைஒழியப்பண்
௰௩ ணுவீரே.—விடியற்காலம் நான் அமைந்துகாத்தி
ருந்தேன், அப்பொழுது அவர் ஒருசிங்கம்போல்
என்எலும்புகளெல்லாவற்றையும்நொறுக்கினார்:
இன்றைப்பகலுக்குள் என்னை ஒழியப்பண்ணு
௰௪ வீரென்றேன்.—அகூரென்னுந் தகைவில்லான்
குருவியைப்போலக் கீச்சிடுகிறேன்: ஒரு புறா
வைப்போலப்புலம்புகிறேன்: மேலே நோக்கி
நோக்கி என்கண்கள் பூத்துப்போயின: யெ
கோவாவே, நான் உபத்திரவப்படுகிறேன்; எ
௰௫ னக்குதவிசெய்யும்.-நான் என்னசொல்லுவேன்;
அவர் எனக்குத் தந்தவாக்கை நிறைவேற்றுவா
ரே: என் ஆத்துமாவின் கசப்பினிமித்தந் தாழ்ந்
தசிந்தையோடே மீந்த வருஷஞ் சகலத்தையும்
போக்கிக்கொள்வேன்.—ஆண்டவரே, இவை ௰௬
களினால் எவர்களுஞ் சீவிக்கிறார்கள், இவை
களெல்லாவற்றினாலும் என் ஆவி சீவிக்கின்றது:
நீர் என்னைச் சொஸ்தப்படுத்தினீர், சீவிக்கவும்
பண்ணினீர்.—பாரும், என்மனோவியாகுலஞ்சாந் ௰௭
தமாயிற்று: நீர்என்பிராணனைநேசித்து, நாசமென்
னுங்குழியினின்று என்னை விடுவித்தீர்: என்
பாவங்களெல்லாவற்றையும் உமது முதுகுக்குப்
பின்னாக எறிந்துவிட்டீர்.—மரித்தோர் ஸ்தானம் ௰௮
உம்மைத்துதிசெய்யாது, மரணம் உம்மைக்கீர்த்
தனம்பண்ணாது: குழியிலிறங்கினவர்கள் உமது
சத்தியத்தை எதிர்பார்க்கமுடியாது.—நான் இன் ௰௯
றைத்தினஞ் செய்கிறபிரகாரஞ் சீவனுள்ளோர்,
சீவனுள்ளோரே உமக்குத் துதிசெய்வார்கள்: பி
தா, பிள்ளைகளுக்கு உமதுசத்தியத்தைத்தெரிவிப்
பான்.—யெகோவாவே என்னை இரட்சித் ௨௰
தார்: ஆதலால்எங்கள்ஆயுள்பரியந்தம் யெகோ
வாவின் ஆலயத்தில் வீணைவாசித்துப் பாட்டுப்
பாடுவோமென்பதே.—அத்திப்பழக்குழம்பை எ ௨௧
டுத்துவந்து பருவில்வையுங்கள், அதினால்சொஸ்
தம் பெறுவானென்று ஏசாயா சொல்லியிருந்
தான்.—அதற்கு இஸ்கியா நான் யெகோவா ௨௨
வின் ஆலயத்துக்குப்போவேனென்பதற்கு அ
டையாளமென்னவென்று கேட்டிருந்தான்.

## ௩௯. அதிகாரம்.

௧. இஸ்கியாவின் அகங்காரத்தைத்தெரிவித்தல்: ௩.
தேசத்துக்குவருந் தண்டனையையுரைத்தல்.

அக்காலத்தில் பலதனின் புத்திரனாகிய மிரோ ௧
தக் பலதனென்னும் பாபேல் நகரத்து இராசா,
இஸ்கியா வருத்தமாயிருந்து சொஸ்தம் பெற்ற
தைக்கேள்விப்பட்டு, காகிதமும் வெகுமானமும்
அவனிடத்திற்கு அனுப்பினான்.—இஸ்கியா அ ௨
வர்கள்மேற் பிரியம்வைத்து, தன்பண்டசாலையி
லுள்ள பொன்வெள்ளிகளும், சுகந்தவருக்கங்க
ளும், விலையுயர்ந்த தைலமுமாகிய தன் சமஸ்த
திரவியங்களையும், தன் ஆயுதசாலையையும், தன்
பொக்கிஷங்களிலுள்ள சமஸ்தபொருள்களையும்
அவர்களுக்குக் காண்பித்தான்: இஸ்கியா தன்
வீட்டிலும், தன் சமஸ்த இராச்சியத்திலும் அவர்
களுக்குக்காண்பியாதபொருளொன்றுமில்லை.
பின்பு ஏசாயா தீர்க்கதரிசி இஸ்கியா இராசா ௩
விடத்தில்வந்து அவனைநோக்கி, அந்த மனுஷர்
என்னசொன்னார்கள்; எங்கேயிருந்து வந்தார்க
ளென்றுகேட்க, இஸ்கியா தூரதேசமாகியபாபே
லினின்று வந்தார்களென்றான்.—அப்பொழுது ௪
அவன் உன் வீட்டில் அவர்கள் என்னபார்த்தார்
களென்றுகேட்க, இஸ்கியா என் வீட்டிலுள்ள
தெல்லாவற்றையும் அவர்கள் பார்த்தார்கள்: என்
பொக்கிஷங்களுக்குள்ளே நான் அவர்களுக்குக்
காண்பியாதபொருளொன்றுமில்லையென்றான்.-

(௩) நிகி.௰௩.௰௪. (௬) அதி.௩௭.௩௪. (௭) உ.இரா.௨௰.௮,.(௰௧)சங்.௱௰௬.௧. (௰௨)யோபு.௭.௬. (௰௪) அதி.௫௯.௰௧.
(௰௫) யோபு.௭.௰௧. (௰௮) சங்.௱௰௫.௰௭. பிர.௯.௰. (௰௯) உபா.௪.௰. சங்.௭௮.௩௪. (௨௧) உ.இரா.௨௰.௭. (௨௨)
உ.இரா.௨௰.௮.—(௩௯. அதி. ௧.) உ.இரா.௨௰.௰௨,. (௨) உ.நாளா.௩௨.௩௧.

ரு அப்பொழுது ஏசாயா இஸ்கியாவைநோக்கி,சே
ஞபதியாகிய யெகோவாவின் வாக்கைக்
சு கேள்.—உன் முன்னேரின் காலமுதல் இந்நாள்
வரைக்குஞ்சேகரிக்கப்பட்ட உன் வீட்டிலுள்ள
சகலமும் பாபேலுக்குக் கொண்டுபோகப்படுங்
காலம்வரும்:ஒன்றும்மிஞ்சமாட்டாதென்று யெ
எ கோவா சொல்லுகிறார்.-உன்வழியாய்த்தோன்
றுஞ்சந்தியாரில் சிலர் கொண்டுபோகப்பட்டு,
பாபேல் இராசாவின் அரமனையில் அண்ணகர்க
அ ளாவார்களென்றான்.—அப்பொழுது இஸ்கியா
ஏசாயாவைநோக்கி, நீர்சொன்ன யெகோவா
வின் வாக்கு உத்தமமென்றான். பின்னும்அவன்,
எனது இராசரிககாலத்தில் சமாதானமுஞ்சத்திய
முமிருக்குமென்றான்.

## சய. அதிகாரம்.

க. நற்செய்தியின் பொருளை வருணித்தல்: கூ. அதைப்பிரசித்தப்படுத்தல்: யஉ. யெகோவாவுக்கு ஒப்பில்லையெனல்: யஅ. தேவதைகள் இல்பொருளெனல்: உஎ. யெகோவாவின் சனங்களையாற்றல்.

நீங்கள் என் சனங்களைத்தேற்றுங்கள், தேற்றுங்
உ கள்.—நீங்கள் யெருஷலேமுடன் ஆறுதலாய்ப்
பேசி யுத்தம்முடிந்ததென்றும், அதின்பாவம் நி
வாரணமாயிற்றென்றும், யெகோவாவின்
கையினின்று அது தன் எல்லாப்பாவங்களுக்கும்
இருமடங்காய்ப்பெற்றதென்றுங் கூறுங்களென்
பதை உங்கள் தேவன் சொல்லுகிறார்.
௩ யெகோவாவின் வழியை ஆயத்தப்படுத்
துங்கள்,வனத்தில்நமது தேவனுக்குப் பாதை
ச யைச் செவ்வைப்பண்ணுங்கள்.-ஒவ்வொருபள்
ளமும் உயர்த்தப்படும், ஒவ்வொருமலையுங் குன்
றுந்தாழ்த்தப்படும்: கோணல்நேர்மையாகும், மே
டும் பள்ளமுமாகிய ஸ்தானங்கள் சமமாகும்.—
ரு யெகோவாவின் மகிமை வெளிப்படுத்தப்ப
டும், சகலபிராணிகளும்ஏகமாய் அதைக்காணும்:
யெகோவாவின் வாயே இதைவசனிக்கின்ற
தென்று வனத்தில் கட்டியக்காரனுடைய வாக்
சு குண்டாயிற்று.—பின்னுங் கூறென்று ஒருசத்த
முண்டாக,நான்எதைக்கூறுவேனென்றான்; சம
ஸ்தபிராணிகளும்புல்லு, அவர்களுடையசௌந்
தரியமெல்லாம் வெளியிலுள்ள புஷ்பத்துக்கே
எ சமானம்.-யெகோவாவின் சுவாசம் அவை
களின்மேல்வீச, புல்உலரும், புஷ்பங்குவியும்:
அ சனமே புல்.-புல்லுஉலருகின்றது, புஷ்பம் வா
டுகின்றது:நமது தேவனுடையவாக்கோ என்
றும் நிலைநிற்கும்.
கூ சீயோனுக்கு நற்செய்தியைப் பிரசித்தப்படுத்
துகிறவனே, உயர்ந்தமலையிலேறு; யெருஷலே

முக்குமங்களசமாசாரந்தெரிவிக்கிறவனே,நீபெ
லத்துடன் உரத்தசத்தமிடு; பயப்படாதே; சத்த
மிட்டு யூதாபட்டணங்களைநோக்கி, நீங்கள் உங்
கள் தேவனைத் தரிசியுங்களென்று சொல்லு,—
பாருங்கள், ஆண்டவராகிய யெகோவா ய
பராக்கிரமத்துடன் வருவார், அவர் தமது புயத்தி
னால் அரசாளுவார்: பாருங்கள், அவரளிக்கும்ப
லன் அவரோடேயிருக்கின்றது, அவர் தரும்பிர
திபலன் அவருக்குமுன்னிருக்கின்றது.—அவர் யக
மேய்ப்பனைப்போலத்தமது ஆட்டுக்கூட்டத்தை
மேய்ப்பார்: ஆட்டுக்குட்டிகளைத் தமது புயத்தி
னால்சேர்த்துத்தமதுமடியில்வைத்துத்தாங்குவார்,
பாலாடுகளைமிருதுவாக நடத்துவார்.
நீர்களைத்தமதுகைபிடியால்அளந்து,ஒருசாணி யஉ
னால் ஆகாயமண்டலங்களைப் பிரமாணித்து, பூ
தூளை மரக்காலில் அடக்கி, மலைகளைத் துலாக்
கோலாலும், குன்றுகளைத் தராசினாலும் நிறுப்ப
வர்யாவர்.-யெகோவாவின் ஆவிக்குஆலோ ய௩
சனைசொன்னவன்யாவன்; அவருக்கு ஆலோச
னைக்காரனாகிஅவருக்குப்போதித்தவன்யாவன்.-
அவர் தமக்குப்புத்திகளைக்கொடுக்கவும், நியாய யச
நெறியைக்காட்டவும், ஞானத்தை உணர்த்தவும்,
அறிவின்பாதையைத் தமக்குத்தெரிவிக்கவும் யா
ருடன் ஆலோசனைசெய்வார்.-பாருங்கள், சருவ யரு
தேசத்தாரும் ஏற்றச்சாலில்துளியைப்போலிருக்
கிறார்கள், தராசில் ஒட்டியதூளாக எண்ணப்ப
டுகிறார்கள்:பாருங்கள், அவர் தீவுகளை ஒருஅணு
வைப்போலத்தூக்குகிறார்.—லிபானோன் அக்கி யசு
னிக்குப்போதாது, அதிலுள்ள சீவசெந்துக்கள்
தகனபலிக்கும்போதாது.—சகல சாதியாரும் அ யஎ
வர்சமுகத்தில் இல்பொருள்போலிருக்கிறார்கள்;
இல்பொருளிலும் சிறுமையும் வெறுமையுமாக
அவரால் எண்ணப்படுகிறார்கள்.
நீங்கள் தேவனை ஆருக்கு ஒப்பிடுவீர்கள்;அ யஅ
வருக்கு எவ்விதச்சாயலை உவமிப்பீர்கள்.-தொ யகூ
ழிற்காரன்ஒருசுரூபத்தைவார்க்கிறான்,தட்டான்
பொற்றகட்டால் அதைமூடி, வெள்ளிச்சங்கிலி
யைவார்க்கிறான்.-விலையுயர்ந்த நைவேத்தியந்த உய
ரத் திராணியில்லாதவன் உளுத்துப்போகாதமரத்
தைத்தெரிந்து, அசையாத ஒருசுரூபத்தைச்செய்
யும்படி ஒருநிபுண சிற்பாசாரியைத்தேடுவான்.—
நீங்கள் அறியீர்களா, கேட்கவில்லையா, பூருவ உக
காலமுதல் உங்களுக்குத்தெரிவிக்கப்படவில்லை
யா; பூமியின் சிருஷ்டிகாலந்தொடங்கி இதை
நீங்கள் உணரவில்லையா.—அவர்பூச்சக்கரத்தின் உஉ
மேல்வீற்றிருக்கிறார், அதில்வசிக்கிற சனங்கள்
அவர்சமுகத்தில் வெட்டுக்கிளிகளைப்போலிருக்
கிறார்கள்;அவர்வானங்களைமெல்லியதிரையைப்

(சு) எரே.உய.ரு. (எ) தானி.க.உ,௩,எ. (அ) க.சாமு.௩.யஅ.—(சய. அதி. உ.) யோபு.சஉ.ய. அதி.சுக.எ. (௩) மல்.௩.க. சங்.சுஅ.ச. அதி.சக.யக. (ச) அதி.சரு.உ. (ரு) மத்.௩.௩. யோவா.க.உ௩. (சு) யோபு.யச.உ. சங்.கூய. ரு. சங்.௱௩.யரு. யாக்.க.ய. க.பேதுரு.க.உச.(எ)சங்.௱௩.யசு. (அ) யோவா.யஉ.௩ச. க.பேதுரு.க.உரு. (கூ) அதி. ருஉ.எ. (ய) அதி.ருக.யசு. அதி.சுஉ.யக. வெளி.உஉ.யஉ. அதி.சக.ச.(யக)அதி.சக.ய. எசேக்.௩ச.உ௩. யோவா. ய.யக. எபி.ய௩.உய. க.பேதுரு.உ.உரு. வெளி.எ.யஎ. (யஉ) நீதி.௩ய.ச. (ய௩) யோபு.௩சு,உஉ,உ௩. ரோ.யக.௩ச. க.கொரி.உ.யசு. (யஎ) தானி.ச.௩ரு. (யஅ) அப்.யஎ.உக. (யக) அதி.சச.யஉ,. எரே.ய.௩,. (உய) எரே.ய.ச.(உக) சங்.யக.க. அப்.யச.யஎ. ரோ.க.யக,உய. (உஉ) யோபு.கூ.அ. சங்.௱ச.உ. அதி.சச.உச. எரே.ய.யஉ.

போலப் பரவச்செய்கிறார், வசிக்கும்படிகூடா
௨௩ ரத்தைப்போல் அவைகளை விரிக்கிறார்.—பிரபு
களை இல்லாமையாக்குகிறார்; பூமியிலுள்ளநியா
௨௪ யாதிபதிகளை வெறுமையாக்குகிறார்.—அவர்கள்
நாட்டப்படார்கள்; விதைக்கப்படார்கள்: அவர்
களுடைய அடிநிலத்தில்வேரூன்றாது: அவர்கள்
மேல்அவர்ஊத, அவர்கள்பட்டுப்போவார்கள்,சு
ழல்காற்று அவர்களை அடித்தாளைப்போற்கொண்
௨௫ டுபோம்.—அந்தப்பரிசுத்தர், ஆரை எனக்கு ஒப்
பிடுவீர்கள்; ஆருக்கென்னை உவமிப்பீர்களென்
௨௬ கிறார்.—நீங்கள் கண்ணேறிட்டுப்பாருங்கள், அ
வைகளைச்சிருஷ்டித்தவர்யார்; சேனைகளாக அ
வைகளை எண்ணிப்புறப்படப்பண்ணுகிறார்: அ
வையெல்லாவற்றையும் பேர்பேராக அழைக்கி
றார், அவருக்கு மகாபெலமும் மிகுதியான ப
ராக்கிரமமுமிருப்பதினால்அவைகளிலொன்றுங்
௨௭ காணாமற்போகாது.—யாக்கோபே, என்வழி யெ
கோவாவின் பார்வைக்கு மறைந்திருக்கிற
தென்றும்; என் தேவன் என் நியாயத்தில் சிந்
தைவைக்கிறதில்லையென்றும் நீ சொல்வதேது;
இஸ்ரவேலே, நீ இப்படிப்பேசுகிறதென்ன.
௨௮ யெகோவா நித்திய தேவன், பூமியின்
எல்லைகளைச்சிருஷ்டித்தவர், இதை நீ அறியவில்
லையா; நீ கேட்கவில்லையா; அவர்இளைத்துப்போ
வதுமில்லை, சோர்ந்துபோவதுமில்லை; அவரு
டையபுத்தி நமக்கு எட்டாததாயிருக்கின்றது.—
௨௯ அவர்சோர்ந்துபோனவர்களுக்குப் பெலங்கொ
டுக்கிறார்; பெலவீனருக்குப் பெலனைப் பெரு
௩௰ கப்பண்ணுகிறார்.—இளைஞர்களும் இளைத்துச்
சோர்ந்துபோவார்கள், வாலிபரும் இடறிவிழு
௩௧ வார்கள்.—யெகோவாவைக் காத்திருக்கிற
வர்களோ மென்மேலும் புதுப்பெலம் பெறுவார்
கள்; சிறகுகளை விரிக்குங் கழுகுகளைப்போல்
எறுவார்கள்; அவர்கள் ஓடினாலும் இளைக்கமாட்
டார்கள்; நடந்தாலும் சோர்ந்துபோகார்கள்.

## ௪௧. அதிகாரம்.

௧. தேவன் தமதுசனங்களுக்குணர்த்தல்: ௰. தே
வனுக்குரியசனங்கள்பயப்படலாகாதெனக்
காட்டல்: ௨௧. விக்கிரகங்கள் இல்பொருளெ
னக்காட்டல்.

தீவுகளே, என்சமுகத்தில் மவுனமாகிச் செவி
கொடுங்கள்; சாதியாரே, புதுப்பெலங் கொள்
ளுங்கள்: அவர்கள் என்னிடத்திற் சமீபித்துவந்
துபேசுவார்களாக:நாம்ஏகமாய்க்கூடிநியாயம்வி
௨ சாரிக்கக்கடவோம்.—கீழ்த்திசையினின்று நீதி
மானை எழுப்பினவர்யாவர், தமது அடியைத்தொ
டரும்படி அவனை அழைத்து, அந்நிய தேசத்தா
ரை அவனுக்குமுன்பாக வசப்படுத்தி, அவனை
இராசாதிஇராசாவாக்கினவர்யாவர்; சனங்கள்அ
வன் கட்கத்துக்குத் தூளைப்போலவும், அவன்
வில்லுக்குப்பறக்கடிக்கப்பட்ட பதரைப்போல
வுமிருக்கும்படிசெய்தவர்யாவர்.—அவன் அவர் ௩
களைத்தொடர்ந்து ஓடினான்; அவன்தன்கால்ஒரு
பொழுதுஞ்செல்லாதபாதையில்இடையூறில்லா
மல் நடந்துபோனான்.—இக்காரியங்களைச்செய் ௪
து நிறைவேற்றினவர் யாவர், ஆதிமுதல் சருவ
கோத்திரத்தாரையும் தோற்றுவிக்கிறவரும், ஆதி
யிலும் அந்தத்திலுமுள்ள யெகோவாவுமா
கிய நானே அவர்.—தீவுகள்கண்டுபயப்பட்ட ௫
ன; பூமியின்கடையெல்லைகள் அஞ்சிநடுங்கின;
அவர்கள்சமீபத்தில் வந்து கூடினார்கள்.—கூட் ௬
டாளிக்குக் கூட்டாளி உதவிசெய்து, ஒருவரை
ஒருவர்பார்த்துத்திடங்கொள்ளென்றுசொன்னார்
கள்.—தச்சன் தட்டானையும், சுத்தியலாலே சம ௭
மாக்குகிறவன்அடையலின்மேல்அடிக்கிறவனை
யுந்தைரியப்படுத்தி, இசைவுநல்லதென்றுசொல்
லி, அதுஅசையாதபடிக்கு அவன்ஆணிகளினால்
அதைத்தைத்துவிடுவான்.—என்தாசனாகிய இஸ ௮
ரவேலே, நான் தெரிந்துகொண்ட யாக்கோபே,
நீயே என் நேசனாகிய ஆபிரகாமின் சந்ததி.—பூ ௯
மியின் கடையெல்லையினின்று நான் உன்னைக்
கொண்டுவந்தேன், அதின்பிறபக்கங்களினின்று
உன்னை வரவழைத்து, நீ என் தாசன்; நான் உன்
னைத்தெரிந்துகொண்டேன், நான் உன்னைத்தள்
ளிவிடேனென்றேன்.
நீபயப்படவேண்டாம்;நான்உன்னுடனிருக் ௰
கிறேன்: நீ கலங்காதிரு; நான் உன் தேவன்:
நான் உனக்குப்பெலந் தருவேன்; உனக்குதவி
செய்வேன்; நீதிசெய்யும் என் வலக்கரத்தினால்
நான் உன்னைத்தாங்குவேன்.—பார், உன் மேற் ௰௧
கோபமாயிருந்த யாவரும் வெட்கப்பட்டு இலச்
சையடைவார்கள்: உனக்குவிரோதமானவர்கள்
இல்பொருளைப் போலாவார்கள், உன்னோடே
போராடினவர்கள் நாசமாவார்கள்.—உன்னோ ௰௨
டே போராடினவர்களை நீ தேடுவாய், ஆனாலுங்
காணமாட்டாய்: உன்னோடேயுத்தம்பண்ணின
மனுஷர் இல்பொருளாகி ஒழிந்துபோவார்கள்.—
உன் வலக்கையைப்பிடித்து, நீ பயப்படாதிரு; ௰௩
நான் உனக்குதவிசெய்வேனென்று சொல்லும்
யெகோவாவாகிய நான் உன் தேவன்.—இ ௰௪
ருமியாகிய யாக்கோபே, சிறுகூட்டமாகிய இஸ
ரவேலே, நீ பயப்படாதிரு; நான் உனக்குதவி
செய்வேனென்று யெகோவா சொல்லுகிறார்,
இஸரவேலின் பரிசுத்தரே, உன் மீட்பர்.—பார், ௰௫
போரடிக்கிறதற்கு நான் உன்னைக் கூரிய பற்க
ளுள்ளபுதியஇயந்திரமாக்குவேன்: நீ மலைகளைமி
தித்துப்பொடிபடுத்தி, குன்றுகளைப்பதரைப்போ
லாக்குவாய்.—நீ அவைகளைத்தூற்றுவாய், காற்று ௰௬
அவைகளைக்கொண்டுபோம், சுழல்காற்று அவை
களைப்பறக்கடிக்கும்: நீ யெகோவாவினாற்

(௨௩) யோபு.௰௨.௨௧. சங்.௱௭.௪௰. (௨௫) உபா.௪.௰௫,. (௨௬) சங்.௱௪௭.௪. (௨௮) சங்.௱௪௭.௫. ரோ.௰௧.௩௩. (௩௧) சங்.௱௩.௫.—(௪௧. அதி. ௧.) ௪௧.௨.௰௩. (௨) அதி.௪௬.௰௧. ஆதி.௰௪.௰௪,. அதி.௪௫.௧. (௪) அதி.௪௪.௬,௭. வெளி.௧.௰௭. (௬) அதி.௪௪.௰௨. (௭) அதி.௪௰.௰௯,௨௰. (௮) உபா.௭.௬. அதி.௪௪.௧. ௨.நாளா.௨௰.௭. யாக்.௨. ௨௩. (௰) உபா.௩௧.௬.௮. (௰௧) யாத்.௨௩.௨௨. ௪௧.௰௨.௩. (௰௫) மீகா.௪.௰௩. ௨.கொரி.௰.௪,௫. (௰௬) எரே.௫௧. ௨. அதி.௪௫.௨௫.

களிகூருவாய், இஸரவேலின்பரிசுத்தரைநினைங்
௰௭ து ஆனந்தமுழக்கமிடுவாய்.—திக்கற்றவர்களுந்
தரித்திரரும் சலத்தைத்தேடுகிறார்கள், அதுகிடை
யாது, அவர்களுடைய நாவு தாகத்தினால் வறளு
கின்றது, யெகோவாவாகிய நான் அவர்க
ளுக்கு உத்தரமருளுவேன், நான் இஸரவேலின்
௰௮ தேவன், அவர்களைக்கைவிடேன்.—உயர்ந்தநி
லங்களில்நதிகளையும், தாழ்ந்தபூமியில் ஊற்றின்
கண்களையுந்தோற்றுவிப்பேன்: வனத்தைக்குள
மாகவும், வறண்ட பூமியை நீரூற்றுக்களாகவுஞ்
௰௯ செய்வேன்.-வனத்தில்நான்ஏரஸ், ஷித்தார், அதா
சென்னும்விருட்சங்களையும்எண்ணெய்தரும்வி
ருட்சங்களையும் நடுவேன்; வனத்தில்தேவதாரு,
திதார், தாஷூர்மரங்களையுங்கூடநாட்டுவேன்.—
௨௰ அதினால் யெகோவாவின் கரம் இதுசெய்த
தென்றும், இஸரவேலின்பரிசுத்தர்இதைச்சிருஷ்
டித்தாரென்றும் அவர்கள் கண்டுணர்ந்து சிந்தித்
௨௧ து அறிவார்கள்.—உங்கள் வழக்கைப்பேசவா
ருங்களென்று யெகோவா சொல்லுகிறார்; உங்
கள் திடமான நியாயங்களை வெளிப்படுத்துங்
களென்று யாக்கோபின் இராசா சொல்லுகிறார்.—
௨௨ அவர்கள் நம்மிடத்தில் வந்து, வருங்காலத்தில்
நிகழுங்காரியங்களைத் தெரிவிப்பார்களாக: பூரு
வகாலங்களின் தீர்க்கதரிசனவாக்கியங்களென்
ன, அவைகளைநமக்குத்தெரிவிப்பார்களாக; அப்
பொழுது நாம் அவைகளின்மேல்சிந்தைவைத்து
அவைகளின் தாற்பரியமின்னதென்றறிந்துகொ
ள்வோம், அவர்கள்வருங்காலங்களை நமக்குத்தெ
௨௩ ரிவிப்பார்களாக.—பிற்காலத்தில்நடப்பவைகளை
நமக்குத்தெரிவியுங்கள், அப்பொழுதுநீங்கள்தே
வர்களென்பதுநமக்கு விளங்கும்: நீங்கள்நன்மை
யாவது தீமையாவதுசெய்யுங்கள், அதினால் நாம்
௨௪ கலங்கி ஏகமாய்ப்பார்ப்போம்.—பாருங்கள், நீங்
கள் இல்பொருளிலும் அற்பம், உங்கள் கிரியை
யும் இல்பொருளைப்பார்க்கிலும்அற்பம்: உங்களை
௨௫ விரும்புகிறவன் வெறுக்கப்படத்தக்கவன்.-நான்
வடதிசையினின்று ஒருவனை எழுப்பினேன், அ
வன்வருவான்: சூரியோதயதிசையினின்று என்
நாமத்தைப்பிரார்த்திப்பான்: அவன்வந்து அதிப
திகளைச் சேற்றைப்போலவும், குயவன்களிமண்
௨௬ ணைமிதிப்பதுபோலவும் மிதிப்பான்.—நாம் அறி
யும்படிக்குப் பூருவத்தில் இதை அறிவித்தவன்
யாவன், இதுமெய்யென்று நாம் சொல்லத்தக்கதா
கமுன்னறிவித்தவன்யாவன்; ஒருவரும் அறிவிக்
கவில்லையே, ஒருவருந்தெரிவிக்கமுடியாது, உங்
கள் வாக்கியங்களை ஒருவருங்கேட்கவில்லை.—
௨௭ முதலாவது நான் சீயோனை நோக்கி, அவைக
ளைப்பார், பாரென்றேன்: மங்களசமாசாரத்தைப்
பிரசித்தப்படுத்துகிறவனை யெருஷலேமுக்கு அ
௨௮ னுப்பினேன்.—நான் பார்த்தேன், அவர்களிலொ
ருவருமில்லை; அவர்களில் ஆலோசனைசெய்கிற
வன் ஒருவனுமில்லை, நான் அவர்களிடத்தில்வினு
வும்பொழுது உத்தரஞ்சொல்ல ஒருவருமில்லை.—
பாருங்கள், அவர்கள் சகலரும்வீணர்; அவர்களு ௨௯
டைய கிரியைவிருதா: அவர்களுடைய வார்ப்பு
விக்கிரகங்கள்காற்றும்வெறுமையுமாகும்.

## ௪௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துவையும் அவர் கிரியையையுங் குறித்துத் தீர்க்கதரிசனஞ் சொல்லல்: ௫. யெகோவா அவரோடும் உடன்படிக்கை செய்தல்: ௰. தேவனைத்துதிக்கும்படிவேண்டல்: ௰௭. அவிசுவாசத்தினிமித்தம் யூதேயரைக்கண்டித்தல்.

நான் தாங்கிவருகிற என் தாசனைப்பாருங்கள்; ௧
என்மனதைப்பிரியப்படுத்துகிறவராகிய அவரை
நான்தெரிந்துகொண்டேன்; அவர்மேல் என் ஆ
வியை அமரப்பண்ணினேன்: அவர் அந்நியதே
சத்தாரிடத்தில் நீதியைப்பிரசித்தப்படுத்துவார்.—
கலகமாகிலும் உரத்த சத்தமாகிலுஞ் செய்யார், ௨
அவர்வீதியில் தமது குரல்கேட்கப்பண்ணார்.—
நெரிந்தநாணலைமுறியார், மங்கிஎரிகிற திரியை ௩
அவியார்: சத்தியமாய் நீதியைவிளங்கப்பண்ணு
வார்.—நீதியைப்பூமியில் நிலைப்படுத்தும் வரைக் ௪
கும், அவர் இளையாமலுஞ்சோராமலுமிருப்பார்:
தீவுகள் அவருடைய நியாயப்பிரமாணத்தைக்
காத்திருக்கும்.

நீர் குருடருடைய கண்களைத்திறக்கவும், கட் ௫
டுண்டவர்களைக்காவலினின்றும், இருளிலிருக்கி
றவர்களைச் சிறைச்சாலையினின்றும் விடுவிக்க
வும்,—யெகோவாவாகிய நான் நீதியின்படி ௬
உம்மைவரவழைத்தேன், உமதுகையைப்பிடித்
து உம்மைக்காப்பாற்றுவேன், நான் உம்மைச்ச
னங்களுக்கு உடன்படிக்கையாகவும் அந்நியதே
சத்தாருக்கு ஒளியாகவும் ஏற்படுத்துவேனென்
னும் இவ்வாக்கை,—வானங்களைச்சிருஷ்டித் ௭
து அவைகளைவிரித்து, பூமியையும் அதில் தோன்
றும் யாவற்றையும் பரப்பி, அதிலுள்ள சனங்க
ளுக்குச் சுவாசத்தையும் அதில் உலாவுகிறவர்க
ளுக்கு ஆவியையுங்கொடுக்கிற தேவனாகிய
யெகோவாவே சொல்லுகிறார்.—நானே யெ ௮
கோவா: இதுவே என் நாமம்: என்மகிமையை
வேறொருவனுக்கும், என் துதியைத் தொழிற்
பட்ட விக்கிரகங்களுக்கும் நான்கொடேன்.—
பாருங்கள், பூருவகாலத்தில் தெரிவிக்கப் ௯
பட்டவைகள் நிறைவேறலாயின, இப்பொ
ழுதுபுதியவைகளைத் தெரிவிக்கிறேன்: அவை
கள் தோன்றுகிறதற்குமுன்னே அவைகளை உங்
களுக்குச்சொல்லுகிறேன்.—சமுத்திரத்தில்யாத் ௰
திரைபண்ணுகிறவர்களே, அதிலுள்ளவைகளே,
தீவுகளே, அவைகளில் வசிப்பவர்களே, நீங்கள்
யெகோவாவுக்குப் புதுப்பாட்டுப் பாடுங்

---

(௰௮)அதி.௪௪.௩. சங்.௱௭.௩௫.(௨௰)யோபு.௰௨.௯.(௨௨)அதி.௪௫.௨௧.(௨௩)அதி.௪௪.௭,௮. யோவா.௰௩.௰௯. எரே. ௰.௫.(௨௪)அதி.௪௪.௯. ௧.கொரி.௮.௪.(௨௫)எஸ்றா.௧.௨. (௨௬) அதி.௪௩.௯.(௨௭)அதி.௪௰.௯.(௨௮)அதி.௬௩.௫.— (௪௨. அதி. ௧.) அதி.௪௩.௰. அதி.௫௩.௰௧. மத்.௰௨.௰௭,௰௮,௰௯. பிலி.௨.௭. மத்.௩.௰௭. மத்.௰௭.௫. எபே.௧.௫. யோவா.௩.௩௪. (௪) ஆதி.௪௯.௰.(௫)அதி.௩௫.௫. அதி.௬௧.௧. லூக்.௪.௰௮. ௨.தீமோ.௨.௨௬. எபி.௨.௰௪,௰௫. அதி. ௯.௨. (௬) அதி.௪௩.௧. அதி.௪௯.௬,௮. லூக்.௨.௩௰. அப்.௰௩.௪௭. (௭) ௪௧.௰௨.௧. அப்.௰௭.௨௫.(௮)அதி.௪௮.௰௧.

கள்; பூமியின் கடைஎல்லையினின்றும் அவ
௰௧ ரைக் கீர்த்தனம் பண்ணுங்கள்.—வனமும் அதின்
பட்டணங்களும், கேதாரியர் வசிக்குங்கிராமங்
களும் உரத்தசத்தஞ்செய்யக்கடவன: கன்மலை
யில் வாசம்பண்ணுகிறவர்கள் பாடக்கடவர்கள்,
மலைகளின் உச்சிகளினின்று ஆரவாரிக்கக்கட
௰௨ வர்கள்.—அவர்கள் யெகோவாவின் மேன்
மையைப் பாராட்டுவார்களாக, தீவுகளில் அ
௰௩ வர்துதியைப்பிரகாசிப்பிக்கக்கடவர்கள்.—யெ
கோவா பராக்கிரமவீரனைப்போலப்புறப்பட்
டு, யுத்தவீரனைப்போலத் தமது குரோதத்தை எ
ழுப்பிவிடுவார்: அவர் சத்தமிடுவார், மகாமுழக்
கஞ்செய்வார்; தமது சத்துருக்களுக்கு விரோத
௰௪ மாய்த் தமது பராக்கிரமத்தைக் காட்டுவார்.-நான்
நெடுங்காலம் பேசாமலிருந்தேன்; நான் என்னை
அடக்கி மவுனமாயிருந்தேன்: இனிப்பிரசவிக்கி
ற ஸ்திரியைப்போல அலறுவேன்; அவர்களைப்
௰௫ பாழாக்கி விழுங்குவேன்.—நான் மலைகளையுங்
குன்றுகளையும் வெறுமையாக்கி, அவைகளிலுள்
ள பூண்டுகளையெல்லாம் வாடப்பண்ணி, நதிக
ளைத் திட்டுகளாக்கி, குளங்களை வற்றப்பண்ணு
௰௬ வேன்.—நான் குருடரை, அவர்களுக்கு முன்
தெரியாத பாதையின்வழியாகக் கொண்டுபோ
வேன்; அவர்களுக்குத்தெரியாதபாதைகளில் அ
வர்களை நடத்துவேன்: அவர்களுக்குமுன் இரு
ளை ஒளியாகவும், கோணலை நேர்மையாகவுஞ்
செய்வேன். இவையெல்லாம் அவர்களுக்குச்
செய்வேன், அவர்களைவிடேன்.
௰௭ தொழிற்பட்ட விக்கிரகங்களை நம்பி, வார்ப்
பான சொரூபங்களைநோக்கி, நீங்கள் எங்கள் தே
வர்களென்று சொல்லுகிறவர்கள் பின்னிட்டுவி
௰௮ ழுந்து மிகவும் வெட்கப்படுவார்கள்.—செவிட
ரே, கேளுங்கள்; குருடரே, நீங்கள் காணும்ப
௰௯ டி விழியுங்கள்.—என்தாசனையன்றிக் குருடன்
யாவன், நான் அனுப்பிய தூதனைப்போலச்செ
விடன் யாவன், சற்குணனைப்போலக்குருடன்
யாவன்; யெகோவாவின் தாசனைப்போலக்
௨௰ குருடன்யாவன்.—நீ அநேகங்காரியங்களைக்கண்
டுஞ் சிந்திக்கிறதில்லை; செவிகளைத்திறந்தும் அ
௨௧ வன் கேட்கவேயில்லை.—தமது நீதியினிமித்தம்
யெகோவா மிகவும் பிரியமாயிருக்கிறார்; அ
வர் பிரமாணத்தை மகிமைப்படுத்திச் சிறப்பாக்
௨௨ குவார்.—இந்தச் சனங்களோ, கொள்ளையிடப்
பட்டும் சூறையாடப்பட்டுமிருக்கிறார்கள்; அ
வர்களுடைய வாலிபர் கண்ணியிலகப்பட்டும்,
சிறைச்சாலையில் தள்ளப்பட்டுமிருக்கிறார்கள்:
அவர்கள்கொள்ளைப்பொருளாவார்கள், விடுவிப்
பார் ஒருவருமில்லை; அவர்கள் சூறையிடப்படு
கையில் திரும்பக்கொடுவென்றுசொல்ல ஒரு
௨௩ வருமில்லை.—உங்களுக்குள் இதற்குச்செவிகொ
டுத்துப் பின்வருவதைக் கருதிக்கேட்கிறவன் யா
வன்.—யாக்கோபைக் கொள்ளையாகவும், இஸ்ர ௨௪
வேலைக்கொள்ளைக்காரருக்கும் ஒப்பித்தவன் யா
வன், யெகோவா அல்லவா; அவர்கள் அவ
ருக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தார்கள், அவ
ருடைய வழிகளில்நடக்க விரும்பாமலும் அவ
ருளியநியாயப்பிரமாணத்துக்குச்செவிகொடா
மலுமிருந்தார்கள்.—அவர் அவர்களுக்குத் தமது ௨௫
கோபத்தின் உக்கிரத்தையும்,யுத்தத்தின்பலத்தை
யுஞ் சொரியப்பண்ணினார்: அது அவனிற்பற்றி
எரிந்தும் உணரான்; அது அவனைத்தகித்தும் அ
வன் சிந்தியான்.

## ௪௩. அதிகாரம்.

௧. தேவன் தமது சபையாருக்கு அனுக்கிரகித்தல்: ௮. தேவனுக்குரிய சனங்கள் அவருக்குச்சாட்சிகளாதல்: ௰௪. பாபேல்விழுதல்: ௰௮. தேவன் தமதுசனங்களை இரட்சித்தல்: ௨௨. அவர்களைக்கண்டித்தல்.

யாக்கோபே, உன் சிருஷ்டிகர்த்தாவும், இஸ்ர ௧
வேலே, உன்னை உருவாக்கினவருமாகிய யெ
கோவா இவ்வாக்குச்சொல்லுகிறார், நீ பயப்
படாதே: நான் உன்னைமீட்டுக்கொண்டேன்,
நான் உனக்குப்பெயரிட்டேன்;நீ என்னுடைய
வன்.-நீ நீர்கள்மத்தியில் செல்லும்பொழுதுநான் ௨
உன்னோடிருப்பேன்; நீ நதிகள்மத்தியில் செல்
லும்பொழுது அவைகள் உன்மேல்புரளுவ
தில்லை: நீ அக்கினியில்நடக்கும்பொழுது நீ த
கிக்கப்படாய்; அக்கினிச்சுவாலை உன்னில்பற்
றாது.—யெகோவாவாகிய நான் உன் தே ௩
வன், இஸ்ரவேலரின்பரிசுத்தராகிய நான் உன்
இரட்சகர்: உன்னைமீட்கும்பொருளாக நான் எ
கிப்தையும், உனக்குப்பிரதியாகக்கூஷையும்சே
பாவையுங் கொடுத்தேன்.—நீஎன்பார்வைக்குமி ௪
கவும் அருமையானவனானபடியினால் மேன்மை
பெற்றாய்,நான் உன்னைநேசிக்கிறேன்: ஆதலால்
நான் உனக்குஈடாகமனுஷரையும், உன்பிராண
னுக்கு ஈடாகச் சனங்களையுங் கொடுத்தேன்.—
நான்உன்னோடிருக்கிறேன்:ஆனபடியால் நீ பய ௫
ப்படாதிரு:கீழ்த்திசையினின்று உன்சந்ததியை
வரப்பண்ணுவேன், மேற்றிசையினின்று உன்
னைச்சேர்ப்பேன்.—நான்வடதிசையைநோக்கி,நீ ௬
ஒப்புக்கொடுவென்றும்,தென்திசையைநோக்கி,
வைத்துக்கொள்ளாதேயென்றும்,என்புத்திரரைத்
தூரதேசத்தினின்றும்என்புத்திரிகளைப் பூமியின்
கடையினின்றுங்கொண்டு வாருங்களென்றுஞ்
சொல்லுவேன்.—என்நாமத்தைத்தரித்த யாவரும் ௭
என்மகிமையைப்பிரகாசிப்பிக்கும்படி என்னால்
சிருஷ்டிக்கப்பட்டும், உருவாக்கப்பட்டும்,செய்
யப்பட்டுமிருக்கிறார்கள்.
கண்களிருந்துங்குருடரும், காதுகளிருந்துஞ் ௮
செவிடருமாகிய சனங்களைப் புறப்படப்பண்
ணுங்கள்.—சருவதேசத்தாரும் ஏகமாய்க்கூடிவரு ௯

(௰௭)சங்.௯௭.௭.(௰௯)அதி.௪௩.௮. எசேக்.௰௨.௨.(௨௰)ரோ.௨.௨௧.(௨௫)௨.இரா.௨௫.௯.ஓசி.௭.௯.—(௪௩.அதி.௧.) அதி.௪௪.௨,௬,௨௧,௨௪. அதி.௪௨.௬. (௨) சங்.௯௧.௩,. உபா.௩௧.௬,௮. தானி.௩.௨௫,௨௭. (௩) நீதி.௰௧.௮. (௫) அதி.௪௪.௨. எரே.௩௰.௰,௰௧. (௭) அதி.௬௩.௰௯. யாக்.௨.௭. சங்.௱.௩. யோவா.௩.௩,௫. ௨.கொரி.௫.௰௭. எபே.௨.௰. அதி.௪௨.௰௯. எசேக்.௰௨.௨.

வார்களாக, சகல சாதியாருங் கூடுவார்களாக:
அவர்களுக்குள் இதைத்தெரிவிக்க வல்லவன்யா
வன்; இனிச்சம்பவிக்கும் முதற்காரியத்தை நமக்
குவெளிப்படுத்தவல்லவன் யாவன்; தாங்கள்குற்
றமற்றவர்களென்று விளங்கும்படி தங்கள்சாட்
சிகளை ஏற்படுத்தக்கடவர்கள்: இல்லாவிட்டால்
அவர்கள்கேட்டு, இதுசத்தியமென்றுசொல்வார்க
௰ ளாக.—நீங்கள் உணர்ந்து என்னைவிசுவாசித்து, நா
னே தேவனென்று அறியும்படி, நான்தெரிந்
துகொண்டஎன்தாசனும், நீங்களும் என்சாட்சிக
ளென்று யெகோவா சொல்லுகிறார்: எனக்கு
முன்பு ஒருதேவனும் உண்டானதுமில்லை, பின்
௰௧ பு உண்டாவதுமில்லை:—நானே யெகோவா;
௰௨ என்னையன்றி இரட்சகரில்லை.—அந்நிய தேவன்
உங்களுக்குள்ளில்லாதபொழுது நான் தெரிவித்
தேன், இரட்சித்தேன், அதைவெளிப்படுத்தினே
ன்: நானே தேவனென்பதற்கு நீங்களே என்
சாட்சிகளென்றுயெகோவாசொல்லுகிறார்.-
௰௩ காலந்தோன்றுமுன்னும்நானே தேவன்; என்
கையினின்று விடுவிக்க வல்லவனில்லை: நான்எ
ன்கிரியையைச்செய்கிறேன், தடுப்பவன்யாவன்
௰௪ உங்கள்மீட்பரும், இஸ்ரவேலின் பரிசுத்தரு
மாகிய யெகோவா, உங்கள்நிமித்தம் நான்பா
பேலுக்குச் சேனையை அனுப்பி, அங்குள்ள
சகலதாழ்ப்பாள்களையும்சந்தோஷக் கப்பல்களி
லுள்ள கல்தேயரையுந் தாழப்பண்ணுவேன்.—
௰௫ நான் யெகோவா, உங்கள்பரிசுத்தர், இஸ்ர
வேலின்சிருஷ்டிகர்த்தா, உங்கள் இராசாவென்
௰௬ றுசொல்லுகிறார்.—அவர்கள் எழுந்திராதபடிக்கு
ஏகமாய்விழுந்துகிடந்தார்கள்: ஒரு திரி அவிந்
துபோகிறதுபோல அவிந்துபோனார்களேயென்
௰௭ று,-சமுத்திரத்தில் மார்க்கத்தையும் வலியநீர்களி
லேபாதையையுமுண்டாக்கி, இரதத்தையும், குதி
ரையையும், பராக்கிரமசேனையையும்புறப்படப்
பண்ணிவந்த யெகோவா சொல்லுகிறார்.
௰௮ நீங்கள் முந்தினவைகளைநினையாதிருங்கள், ப
௰௯ ழையவைகளைச் சிந்தியாதிருங்கள்.—பாருங்கள்,
நான் புதியகாரியத்தைச்செய்கிறேன்; இப்பொ
ழுதே அதுதோன்றும்; நீங்கள் அதைமதிக்கமாட்
டீர்களா; நான் வனத்தில்வழியையும், வனாந்தரத்
௨௰ தில்நதிகளையுமுண்டாக்குவேன்.-நான்தெரிந்து
கொண்டஎன்சனங்களுடையதாகத்துக்குவனத்
தில்சலத்தையும், வனாந்தரத்தில்நதிகளையுந்தோற்
றுவிக்கிறபடியினால்காட்டுமிருகங்களும், வலிய
சருப்பமும், ஒட்டகப்பட்சிகளும் என்னைக்க
௨௧ னம்பண்ணும்.—நான்என்னிமித்தஞ்சிருஷ்டித்
த இந்தச்சனங்கள் என்மகிமையைப் பிரகாசிக்
கப்பண்ணுவார்கள்.

யாக்கோபே, நீ என்னிடத்தில் பிரார்த்தனை ௨௨
பண்ணவில்லை; இஸ்ரவேலே, நீ என்னைப்பார
மென்று பாவித்தாய்.—தகனபலியிடுவதற்கு நீ ௨௩
உன் ஆடுகளை என்னிடத்தில் கொண்டுவரவில்
லை; நீ உன் பலிகளினால் என்னைக்கனம்பண்ண
வில்லை. நான்நைவேத்தியபாரத்தைஉன்மேலேற்
றவில்லை, தூபங்காட்டும்படி நான் உன்னைத்து
யரப்படுத்தவில்லை.—நீ என்னிமித்தம்விலைகொ ௨௪
டுத்துச் சுகந்தபட்டையைக் கொள்ளவில்லை, ப
லிநிணத்தினால் என்னைத் திருத்திப்படுத்தவுமில்
லை: உன்பாவங்களினால் என்மேற் பாரமேற்றி
னாய், உன்குற்றங்களினால் நீ என்னைத் துயரப்
படுத்தினாய்.—ஆகிலும் நானே என்னிமித்தம் ௨௫
உன்மீறுதல்களைத் துடைக்கிறேன், உன்பாவங்
களை நான் நினையேன்.—இப்பொழுது உன்வழக் ௨௬
கை நான் நினைக்கும்படிபண்ணுவாய்: நாம் கூ
டிவந்துநியாயம்விசாரிப்போம்: நீ நீதிமானாகவி
ளங்கும்படி உன்காரியத்தைச்சொல்லு.—உன் ஆ ௨௭
திபிதாபாவஞ்செய்தான், உன்போதகர்கள்கட்ட
ளைமீறி என்னை விரோதித்தார்கள்.—ஆகையால் ௨௮
நான்பரிசுத்தஸ்தானத்தின்அதிபதிகளை அசுத்தப்
படுத்தினேன், யாக்கோபைச்சாபத்துக்கும், இ
ஸ்ரவேலை நிந்தனைக்கும் ஒப்பித்தேன்.

## ௪௪. அதிகாரம்.

௧. தேவன் சபையாருக்கு வாக்குத்தத்தஞ்செய்
தல்: ௯. பிரதிமைகள் இல்பொருளெனக்காட்
டல்: ௯. பிரதிமைகளைச் செய்பவர்களின்அஞ்
ஞானத்தைத்தெரிவித்தல்: ௨௧. தேவனைத்து
திக்கும்படி வேண்டல்.

என் தாசனாகிய யாக்கோபே, நான் தெரிந்து ௧
கொண்ட இஸ்ரவேலே, நீ இப்பொழுதுகேள்.—
உன்னைச்சிருஷ்டித்து, உன் மாதாவின்கருப்பத் ௨
தில் உன்னை உருவாக்கி உனக்குத் துணைசெய்கி
ற யெகோவா, என்தாசனாகிய யாக்கோபே,
நான்தெரிந்துகொண்ட யெசூரனே, நீபயப்படா
திரு.—தாகங்கொண்டவன்மேல் சலத்தையும், வ ௩
றண்டபூமியின்மேல் நீர்த்தாரைகளையும் ஊற்று
வேன்: உன் சந்ததியின்மேல் என் ஆவியையும்,
உன்வமிசத்தின்மேல் என் ஆசீர்வாதத்தையுஞ்
சொரிவேன்.—அதினால் அவர்கள் புல்லிலுள்ள ௪
வைகளையும், நீர்க்கால்களினோரத்திலுள்ள அல
ரிச்செடிகளையும்போலவளருவார்கள்.-ஒருவன், ௫
நான்யெகோவாவினுடையவனென்பான்;
ஒருவன் தனக்கு யாக்கோபின் பெயரைத்தரித்
துக்கொள்ளுவான்; ஒருவன் யெகோவாவுக்
கென்று கையெழுத்துவைத்து, இஸ்ரவேலின்
நாமத்தைச்சூட்டிக்கொள்ளுவானென்று சொல்
லுகிறார்.—இஸ்ரவேலின் இராசாவாகிய யெ ௬

(௰) அதி.௪௨.௧. அதி.௪௧.௪. (௰௧) அதி.௪௫.௨௰. ஓசி.௰௩.௪. (௰௨) உபா.௩௨.௰௬. அதி.௪௪.௮. (௰௩) சங்.௯௰.௨. யோவா.௮.௫௮. யோபு.௯.௰௨. (௰௭) யாத்.௰௪.௰௬,௨௨. யோசு.௩.௰௨,௰௬. யாத்.௰௪.௪—௯. (௰௮) எரே.௰௬.௰௪. (௰௯) ௨.கொரி.௫.௰௭. வெளி.௨௧.௫. யாத்.௰௭.௬. எண்.௨௰.௰௧. (௨௰) அதி.௪௮.௨௧. (௨௧) லூக்.௧.௭௨,௭௩. எபே.௧.௫,௬. மல்.௧.௰௩. (௨௩) ஆமோ.௫.௨௫. (௨௪) மல்.௨.௰௭. (௨௫) அதி.௪௮.௯. எரே.௫௰.௨௰. அப்.௩.௰௯. எசேக்.௩௬.௨௨,. அதி.௧.௰௮. எரே.௩௧.௩௪. (௨௭) மல்.௨.௭,௮. (௨௮) புல.௨.௨,௬,௭. எரே.௨௪.௯. தானி.௯.௰௧. சக.௮.௰௩.—(௪௪. அதி. ௧.) அதி.௪௩.௧. எரே.௩௰.௰. (௨) அதி.௪௩.௧,௭. உபா.௩௨.௰௫. (௩) யோவே.௨.௨௮. யோவா.௭.௩௮. அப்.௨.௰௮. (௬) அதி.௪௩.௧,௰௪. அதி.௪௧.௪. வெளி.௧.௮,௰௭.

கோவா, அவனை மீட்குஞ் சேனைபதியாகிய
யெகோவா வாக்கையருளிச்செய்கிறார்; நா
னே ஆதி, நானே அந்தம்; என்னையன்றித் தேவ
௭ னில்லை.—ஆதிகாலத்திலுள்ள சனங்களை நான் ஸ்
தாபித்ததுமுதல் என்னைப்போலவருங்காரியங்க
ளை வரவழைத்து வெளிப்படுத்தி, என்னிமித்தங்
கிரமப்படுத்துகிறவன்யாவன்; அவர்கள்நிகழுங்
காரியங்களையும் வருங்காரியங்களையும் வெளிப்
௮ படுத்தக்கடவர்கள்.—நீங்கள் பயப்படவும்வேண்
டாம், கலங்கவும்வேண்டாம்: அக்காலமுதல் நா
னல்லவாஅதைஉங்களுக்குத்தெரிவித்துவெளிப்
படுத்தினேன், நீங்களே என்சாட்சிகள். என்னை
யன்றித் தேவனுண்டா; வேறொரு கன்மலை
யில்லையே; ஒருவனையும் அறியேன்.
௯ விக்கிரகங்களைத்தொழிற்படுத்துகிறவர்கள்யா
வரும் வீணர்; அவர்கள் விரும்பும் பொருள்
பலன்தராது; அவைகள் தங்களுக்கே சாட்சி;
அவைகள் காணுமலும் அறியாமலுமிருக்கிறபடி
௰ யால் அவர்கள் வெட்கப்படுவார்கள்.—தேவனை
உருவாக்கிப் பலன் தராத விக்கிரகத்தை வார்க்
௰௧ கிறவன்யாவன்.—பாருங்கள், அவன் கூட்டா
ளிகள் யாவரும் வெட்கப்படுவார்கள்: தொழிற்
காரர்மனுஷர்,அவர்களெல்லாருங்கூடிவந்துநிற்
கக்கடவர்கள்; அவர்கள் ஏகமாய்அச்சங்கொண்
௰௨ டு வெட்கப்படுவார்கள்.—கொல்லன் கோடாரி
யைச்செய்வதற்கு இரும்புத்துண்டெடுத்து, தழ
லிலே வேலைசெய்து அதைச்சுத்தியலால் உரு
வாக்கி, தன் புயபெலத்தினுல் அதைச்செப்ப
மிட்டுவருகையில் அவன்பசிகொண்டுபெலனற்
றுப்போகிறான்: நீர் குடியாமல்இளைத்துப்போகி
௰௩ றான்.—தச்சன் நூல்பிடித்து ஆயுதத்தினுல்ரூபத்
தைக்குறித்து, உளிகளினுல் வேலைசெய்து, கவ
ராசத்தினுல் அதைவகுத்து, ஒரு ஆலயத்தில்வாச
மாயிருக்கும்படி மனுஷனுடைய சாயலாகமனு
௰௪ ஷலட்சணத்துக்கிசைய உருவாக்குகிறான்.—அ
வன்தனக்காகஏரஸ்விருட்சங்களைத்தறிக்கிறான்,
திர்சா அல்லோன்விருட்சங்களைத் தேடுகிறான்,
காட்டுமரங்களுக்குள்ளே வலிமையானமரத்தை
த் தெரிந்துகொள்வான்: ஒரென்விருட்சத்தைநடு
௰௫ கிறான்,மழையினுல்செழித்தோங்கும்.—மனுஷன்
அவைகளில் நெருப்புமூட்டுவான்: அவைகளை
யெடுத்துக் குளிர்காய்வான்; நெருப்பைமூட்டி
அப்பஞ்சுடுவான்; அதினுல் ஒரு தேவனை உரு
வாக்கி அதை நமஸ்கரிப்பான்; தொழிற்பட்ட
விக்கிரகத்தை யுண்டாக்கி நமஸ்காரம்பண்ணு
௰௬ வான்.—அதிற்சிலதுண்டை அடுப்பிலெரிக்கி
றான்; சிலதுண்டினுல் இறைச்சியைச்சமைத்துப்
புசிக்கிறான்; பொரிக்கவேண்டியதைப்பொரித்
துத் திருத்தியாய்ப்புசிக்கிறான்: குளிருங்காய்ந்
துகொண்டு, ஆ ஆ, சுடுகின்றது, நான் நெருப்புக்

கண்டேனென்கிறான்.—மீந்ததுண்டைத்தொழிற் ௰௭
பட்ட விக்கிரகதேவனுகச்செய்து, அதினிடத்
தில் விழுந்துவணங்கி, அதற்குப் பூசைசெய்
வான்: அதைநோக்கி, நீர் என் தேவன்; என்னை
இரட்சியுமென்றுசொல்லிப்பிரார்த்தனைபண்ணு
வான்.—அவர்களறியார்கள், உணரார்கள்: அவர் ௰௮
கள்காணுதபடி அவர்கள்கண்களையும், அவர்கள்
உணராதபடி அவர்களுடைய இருதயங்களையும்
மூடினுர்.—அதிற்சிலதுண்டை அடுப்பிலெரித் ௰௯
தேன்; அதின் தழலின்மேல் அப்பத்தையுஞ்சுட்
டு இறைச்சியையும்பொரித்துப் புசித்தேன்; மீந்
ததுண்டைஅரோசியமாக்கலாமா, ஒருமரத்துண்
டுக்குமுன்பாக நமஸ்காரம்பண்ணலாமாவென்
றுசொல்லச்சிந்தனையும், அறிவும், புத்தியும்அவர்
களுக்கில்லை.—இவன் சாம்பலைப்புசிக்கிறான்: ம ௨௰
ருள்கொண்ட இவன்மனம் இவனைமோசப்படுத்
துகின்றது, இவன் தன்பிராணனை விடுவிக்கவு
மாட்டான், என்வலக்கையில் பொய்மையில்லை
யோவென்று சொல்லவுமாட்டான்.
யாக்கோபே, இஸரவேலே, இவைகளைநினை; ௨௧
நீ என்தாசன்: நான் உன்னைச்சிருஷ்டித்தேன்;
நீ என் தாசன்: இஸரவேலே, நீ என்னுல் மறக்
கப்படமாட்டாய்.—உன் மீறுதல்களைக் கார்மே ௨௨
கம்போல் ஒழியப்பண்ணினேன், மேகம்போல்
உன் பாவங்களை நிவாரணஞ்செய்தேன்: நான்
உன்னைமீட்டுக்கொண்டேன்; ஆதலால் நீ என்
னிடத்தில் திரும்பு.—வானங்களே, யெகோ ௨௩
வா இதைச்செய்தார்;ஆதலால்நீங்கள்பாடுங்கள்:
யெகோவா யாக்கோபைமீட்டு இஸரவேல
ருக்குள்ளே புகழ்ச்சிபெற்றார்: ஆதலால் பூமியி
லுள்ள தாழ்ந்த ஸ்தானங்களே, ஆனந்தமுழக்க
மிடுங்கள், மலைகளே, சோலைகளே, அவைகளி
லுள்ள விருட்சங்களே, நீங்கள் கெம்பீரமாய்ப்
பாடுங்கள்.—எல்லாவற்றையுஞ்செய்து, தானுக ௨௪
வானங்களைவிரித்து, பூமியைப்பரப்புகிற யெ
கோவா நானேயென்று, உன்னைமீட்டு உன்
மாதாவின் கருப்பத்தில் உன்னை உருவாக்கின
வராகிய யெகோவா சொல்லுகிறார்.—அவர் ௨௫
பொய்யருடைய குறிகளை அபத்தமாக்குகிறார்,
குறிசொல்லுகிறவர்களை மூடராக்குகிறார்; ஞா
னிகளுடைய புத்தியை விபரீதமாக்குகிறார், அ
வர்களுடைய ஞானத்தை மூடமாக்குகிறார்.—அ ௨௬
வர் தமது பணிவிடைக்காரனுடைய வாக்கைநி
லைப்படுத்தி, தமதுதூதருடையஆலோசனையைச்
சித்திக்கச்செய்கிறார்; அவர்யெருஷலேமைநோ
க்கி, நீ குடியேற்றப்படுவாயென்றும், யூதாநகரங்
களைப்பார்த்து, நீங்கள் கட்டப்படுவீர்களென்
றுஞ்சொல்லி, அதின் பாழான ஸ்தானங்களைத்தி
ரும்பவுஞ் சீர்ப்படுத்துவேனென்றுஞ்சொல்லுகி
றார்.—அவர் ஆழியைநோக்கி, வற்றிப்போவென் ௨௭

(எ) அதி.சக.ச,உஉ. (அ) உபா.ச.ருரு,ருகூ. க.சாமு.உ.உ. உ.சாமு.உஉ.ருஉ. உபா.ருஉ.ச. (கூ) அதி.சக.உச,உகூ. சங்.ாயரு.ச,. (ய) எரே.ய.ரு. அபகூ.உ.யஅ. (யஉ) அதி.சய.யகூ. எரே.ய.ரு,. (யஅ) அதி.சரு.உய. உ.தெச.உ.யக. (யகூ) அதி.சகூ.அ. (உய) ஓசி.ச.யஉ. ரோ.க.உக. உ.தெச.உ.யக. (உஉ) அதி.சரு.க,உரு. க.கொரி.கூ.உய. க.பேதுரு.க.யஅ,யகூ. (உரு) சங்.கூகூ.யக,யஉ. எரே.ருக.சஅ. வெளி.யஅ.உய. (உச) யோபு.கூ.அ. (உரு) அதி.சஎ.யரு. எரே.ருய.ருகூ. க.கொரி.க.உய. (உகூ) சக.க.கூ. (உஎ) எரே.ருய.ருஅ.

றும், உன்நதிகளைவற்றப்பண்ணுவேனென்றுஞ்
உ௮ சொல்லுகிறார்.—அவர், கோரேஷ் என் மேய்ப்
பன், என்னுள்ளத்தை நிறைவேற்றுவான்: அ
வன் யெருஷலேமை நோக்கி, நீகட்டப்படுவா
யென்றும், ஆலயத்தை நோக்கி, உன் அஸ்திபா
ரம் ஸ்தாபிக்கப்படுமென்றுஞ்சொல்லுவானென்
பதை அவனைக்குறித்துச்சொல்லுகிறார்.

## சரு. அதிகாரம்.

௧. தேவன் தமது சனங்களை இரட்சிக்கவும் பாபேலைச் சங்கரிக்கவும் கோரேஷை ஏற்படுத்தல்: ௮. கோரேஷ் இரட்சைசெய்து தன் கிரியையைச்சித்தியாக்கல்: உ௰. தேவதைகள் இல்பொருளெனக்காட்டல்.

யெகோவாவாகிய நான்அபிஷேகம்பண்
ணின கோரெஷுக்கு முன்பாகச் சாதியாரைக்
கீழ்ப்படுத்தி, இராசாக்களின் இடைக்கட்டுகளை
யவிழ்த்து, பின்பு அவன் வலக்கையைப் பிடித்
துக்கொண்டுஅவனைநோக்கி, அடைக்கப்படாத
படி இருக்கிற குள்ளக்கதவுகளைத் திறக்கும்பொ
உ ருட்டு,—நான் உனக்குமுன்னேபோய்க் கோண
லை நேர்மையாக்குவேன்: வெண்கலக்கதவுக
ளை உடைத்து இருப்புத்தாழ்களைமுறித்துப்போடு
௩ வேன்.-அந்தகாரத்திலுள்ளபொக்கிஷங்களையும்,
மறைவிடங்களில்புதைக்கப்பட்ட திரவியங்க
ளையும் உனக்குத்தருவேன், அதினால் உன்பெயர்
சொல்லி அழைத்த யெகோவாவாகிய நான்
இஸரவேலின் தேவனாயிருக்கிறேனென்று
௪ அறிவாய்.—என் தாசனாகிய யாக்கோபினிமித்த
மும், நான்தெரிந்துகொண்ட இஸரவேலினிமித்
தமும், நீ என்னை அறியாதிருக்கையில் நான் உன்
நாமத்தைச்சொல்லி உனக்குப்பெயரைக்கொடுத்
தேன்.
௫ நானேயெகோவா, வேறில்லை, என்னையன்
௬ றி வேறுதேவனில்லை:—என்னையன்றி வேறுதே
வனில்லையென்று சூரியனுதிக்கிற திசையிலும்
அஸ்தமிக்கிறதிசையிலுமுள்ள யாவரும் அறியும்
படிக்கு, நீ என்னை அறியாதிருக்கையில் நான் உ
னக்கு இடைக்கட்டுக்கட்டினேன். நானே யெ
௭ கோவா, வேறில்லை.-நான் ஒளியை உண்டாக்
குகிறேன், இருளைத்தோற்றுவிக்கிறேன்: சமாதா
னத்தை உண்டாக்குகிறேன், தீமையைத்தோற்
றுவிக்கிறேன்: யெகோவாவாகிய நானே
௮ இவைகளெல்லாவற்றையுஞ் செய்கிறேன்.—ஆ,
வானங்களே, நீங்கள் மேலேநின்றுசொரியுங்
கள், ஆகாயமண்டலங்கள் நீதியைவருஷிக்கக்க
டவன: பூமிதிறக்க, அவைகள் இரட்சிப்பைத்
தோற்றுவிக்கக்கடவன, நீதியுங்கூட விளைவதா
க; யெகோவாவாகிய நான் இவைகளைச்
௯ செய்தேன்.—பூமியிலிருக்கிற ஓடுகளில் ஒரு ஓடு
தன்னைஉருவாக்கினவரோடேவழக்காடலாமா;
ஐயோ,அவனுக்கு ஆபத்துவரும்; களிமண்குயவ
னைநோக்கி, நீ என்னசெய்தாயென்றுசொல்லத்
தகுமா; உன்கிரியையானது,இவனுக்குக்கையில்
லையென்று சொல்லலாமா.—ஐயோ, தன் பிதா ௰
வைநோக்கி, நீஎதைச்சனிப்பித்தாயென்றும், மா
தாவைநோக்கி நீ எதைப்பிரசவித்தாயென்றுஞ்
சொல்லுகிறவனுக்கு ஆபத்துவரும்.—இஸரவே ௰௧
லின் பரிசுத்தரும், அவன் சிருஷ்டிகர்த்தாவு
மாகிய யெகோவா, நீங்கள் என் பிள்ளைக
ளைக்குறித்துவருங்காரியங்களைஎன்னிடத்தில்வி
னவுங்கள், என்கைக்கிரியையைக்குறித்து எனக்
குக்கட்டளையிடுங்கள்.—நானே பூமியைச்சிருஷ் ௰௨
டித்தேன், அதில் வசிக்கும் மனுஷனை உருவாக்
கினேன்: என் கரங்கள் வானங்களை விரித்தன,
அதிலுள்ளசேனைகளனைத்திற்கும் நான் கட்டளை
யிட்டேனென்றார்.—நான் அவனை நீதியின்படி ௰௩
எழுப்பினேன், அவனுடைய வழிகளெல்லாவற்
றையுஞ்செவ்வைப்படுத்துவேன்: அவன் என் ந
கரத்தைக்கட்டுவான், சிறைப்பட்ட என்னுடை
யவர்களைக் கிரயமில்லாமலும் பரிதானமில்லாம
லும் விடுவிப்பானென்று சேனைபதியாகிய யெ
கோவா சொல்லுகிறார்.—எகிப்தின் செல்வ ௰௪
மும், கூஷின் வியாபாரமும் நெடியவர்களா
கிய சபேயருடன் உன்கையிலகப்பட்டு, உனக்
கு ஆதீனமாகும்: அவர்கள் உன்பின்னே நடப்
பார்கள்; விலங்குபூட்டப்பட்டு உன்னிடத்திற்
சேர்ந்து, உன்னுடனேமாத்திரந் தேவன் இருக்
கிறாரென்றும், அவரேயல்லாமல் வேறு தேவ
னில்லையென்றுஞ்சொல்லி, உன்னிடத்தில் நம
ஸ்காரம்பண்ணிப் பிரார்த்தனைசெய்வார்களென்
று யெகோவா சொல்லுகிறார்.-இஸரவேலின் ௰௫
தேவனே, இரட்சகரே, நீரே புத்திக்கெட்
டாத தேவன், இது சத்தியம்.—விக்கிரகங்களை ௰௬
உண்டுபண்ணுகிறவர்கள்யாவரும்வெட்கப்பட்
டு இலச்சையடைந்து ஏகமாய்க் கலங்குவார்
கள்.—இஸரவேலோ, யெகோவாவினால் நித் ௰௭
திய இரட்சிப்பைப்பெறுவான்: நீங்கள் வெட்
கப்படவுமாட்டீர்கள், என்றும் இலச்சையடை
யவுமாட்டீர்கள்.-வானங்களைச் சிருஷ்டித்த யெ ௰௮
கோவா, பூமியை வெறுமையாயிருப்பதற்குச்
சிருஷ்டியாமல் குடியேறும்படி அதையுருவாக்
கி ஸ்தாபித்த தேவன், நானே யெகோவா;
வேறில்லையென்று சொல்லுகிறார்.—நான் அந்த ௰௯
ரங்கத்திலும், பூமியின் அந்தகாரமான இடத்தி
லுஞ் சொல்லவில்லை: என்னைத் தேடுங்களென்
று நான் யாக்கோபின் சந்ததியாருக்கு வீணாகச்
சொல்லவில்லை: யெகோவாவாகிய நான்
நீதியைப்பேசுகிறேன், உண்மையானவைகளைத்
தெரிவிக்கிறேன்.

(உ௮) உ.நாளா.௩௬.உ௨,உ௩. எஸ்ரா.௧.௧,.—(சரு. அதி. ௧.) அதி.௪௪.௰௩. தானி.௫.௩௰.(௩)யாத்.௩௬.௰௨,௰௭.(௪) அதி.௪௪.௧. ௧.தெச.௪.௫. (௫) உபா.௪.௩௫,௩௯. வச.௰௪,௰௮,உ௧,உ௨. (௬) மல்.௧.௰௧. (௭) ஆமோ.௩.௬.(௮)சங். ௭௨.௩. (௯) எரே.௰௮.௬. ரோ.௯.உ௰. (௰௧) எரே.௩௧.௯. ஏசா.உ௯.உ௩.(௰௨)எரே.உ௭.௫. ஆதி.௧.உ௬,உ௭. ஆதி. உ.௧. (௰௩) உ.நாளா.௩௬.உ௨,உ௩. எஸ்ரா.௧.௧,. அதி.௪௪.உ௮. அதி.௫௰௨.௩. (௰௪) சங்.௭௨.௰,௰௧. ௪௧.௮.உ௨,உ௩. ௧.கொரி.௰௪.உ௫. (௰௫) சங்.௪௪.உ௪. (௰௬) அதி.௪௪.௰௧. (௰௭) ரோ.௰௧.உ௬. (௰௯) உபா.௩௰.௰௧. சங்.௰௯.௮.

௨௰ அந்நிய தேசத்தாரினின்று தப்பினவர்களே,
கூட்டங்கூடிவாருங்கள்; ஏகமாய்ச்சமீபித்துவா
ருங்கள், தங்கள்கையிலுல்தொழிற்பட்டவிக்கிர
கத்தின் மரத்தைச்சுமந்து இரட்சிக்கத் திராணி
யில்லாத தேவனைநோக்கிப் பிரார்த்தனைசெய்ப
வர்கள் அறிவில்லாதவர்களாயிருக்கிறார்கள்.—
௨௧ நீங்கள் அறியப்படுத்துங்கள், அவர்களைச்சமீ
பமாய்க் கொண்டுவாருங்கள்; அவர்கள் ஒருவ
ரோடொருவர் ஆலோசனைபண்ணக்கடவர்கள்:
பூருவகாலத்தில் இதைப் பிரசித்தம் பண்ணின
வன்யாவன், ஆதிமுதற்கொண்டு இதைத்தெரிவித்
தவன் யாவன், யெகோவாவாகிய நானல்
லவா; நீதியுள்ள தேவனும் இரட்சகருமா
கிய என்னையன்றிவேறுதேவனில்லை; என்னைத்
௨௨ தவிரவேறொருவருமில்லையே.—பூமியின்கடை
யெல்லை எங்குமுள்ளவர்களே, என்னைநோக்
கி இரட்சிப்புப்பெற்றுக்கொள்ளுங்கள்: நானே
௨௩ தேவன், வேறில்லை.—முழங்கால்கள்யாவும் எ
னக்கு முன்பாக முடங்குமே, ஒவ்வொரு நா
வும் ஆணையிடுமென்று நான் என்னைக்கொண்டு
ஆணையிடுகிறேன், இவ்வாக்கு நீதியின்படி என்
௨௪ வாயினின்று புறப்பட்டது, இதுமாறாது.—யெ
கோவாவிடத்தில் மாத்திரம் நீதியும் வல்லமை
யுமுண்டென்று அவனவனே சொல்லுவான்: அ
வரிடத்தில் வருவார்கள்; அவரை அரோசிக்கிற
௨௫ வர்கள் யாவரும் வெட்கப்படுவார்கள்.—இஸர
வேல் சந்ததியார் சமஸ்தரும் யெகோவாவி
னால் நீதிமான்களாக்கப்பட்டு மேன்மைபாராட்
டுவார்கள்.

## ௪௬. அதிகாரம்.

௧. பாபேலும் அதிலுள்ள பிரதிமைகளும் நாசமடைதல்: ௩. தேவனுக்குரிய சனங்கள் இரட்சிப்புப்பெறல். பிரதிமைகள்இல்பொருளெனக்காட்டல்: ௮. ஆராய்ந்துபார்க்கும்படிஏவல்: ௰௨. இரட்சிப்பைத்தெரிவித்தல்.

பேல் தாழுகிறான், நேபோ குனிகிறான், அவர்
களுடைய விக்கிரகங்கள் காட்டு மிருகங்களுக்
கும், நாட்டுமிருகங்களுக்குஞ்சுமையாயிருக்கின்
றன: ஏற்றப்பட்ட உங்கள்சுமைகள் இளைப்புள்
௨ ளமிருகத்துக்குப் பாரமாயிருக்கின்றன.—அவர்
கள் ஏகமாய்க்குனிந்து தாழுகிறார்கள்; அவர்கள்
சுமைகளை விடுவிக்கக்கூடாது, தாங்களுஞ் சி
றைப்பட்டுப்போகிறார்கள்.
௩ யாக்கோபின் வமிசத்தாரே, இஸரவேல் வமி
சத்தில் மீந்திருக்கிற சனங்களே, எனக்குச்செ
விகொடுங்கள், உதரத்தில்தோன்றினதுமுதல்உங்
களைத்தாங்கினேன், கருப்பத்தில் தோன்றினகா
௪ லமுதல் உங்களைச்சுமந்தேன்:—நீங்கள் விருத்த
ராகும்வரைக்கும் அப்படிச்செய்வேன்; உங்கள்
மயிர்நரைக்கும்வரைக்கும்உங்களைச்சுமப்பேன்:
நான் உங்களைச் சிருஷ்டித்தேன், தாங்குவேன்;
சுமந்து உங்களை இரட்சிப்பேன்.
நீங்கள்என்னைஆருக்குச்சமானமாக்குவீர்கள், ௫
இருவருஞ் சமமென்று நீங்கள் என்னை ஆருக்கு
ஒப்பிடுவீர்கள்.—பையினின்றுபொன்னைக்கொ ௬
ட்டி, வெள்ளியைத்தராசில்நிறுத்து, தேவனைச்
செய்யும்படி தட்டானுக்குக் கூலிகொடுக்கிறார்
கள்; அவர்கள்தாழ்ந்து நமஸ்காரம்பண்ணுகிறார்
கள்.—அவனைத் தோளின்மேலேற்றிக்காவி, அ ௭
வன்ஸ்தானத்தில்அவனைவைக்க, அவனங்கேநிற்
பான்; அவன்தன் ஸ்தானத்தைவிட்டுநீங்கான்:
ஒருவன் அவனைநோக்கி ஓலமிட்டாலும்அவன்
உத்தரங்கொடுக்கிறதில்லை, ஆபத்தினின்று அவ
னைஇரட்சிக்கமாட்டான்.—இதைநினைந்து உங் ௮
கள் ஆண்மையைக்காட்டுங்கள்: பாவிகளே, இ
தைமனதில் வையுங்கள்.-பூருவகாலத்தில்நடந்த ௯
வைகளை நினையுங்கள்: நானே தேவன், வே
றில்லை; நானே தேவன், எனக்கு நிகரில்லை.-
என் ஆலோசனைநிலைநிற்கும், என்சித்தம்முழுவ ௰
தும் நிறைவேற்றுவேனென்றுசொல்லி, அந்தத்தி
லுள்ளவைகளை ஆதியிலுமறிவிக்கிறேன், இன்
னுந்தோன்றாதவைகளைப் பூருவகாலத்திலுந்தெரி
விக்கிறேன்.-நான் கீழ்த்திசையினின்று கழுகை ௰௧
யும், தூரதேசத்தினின்று எனது ஆலோசனையை
யும், மனுஷனையும் வரவழைக்கிறேன்: நான்சொ
ன்னேன், அதைச்சித்தியாக்குவேன்; நான் அ
பிப்பிராயங்கொண்டேன், அதைமுடிப்பேன்.
முருடான இருதயமுள்ளவர்களே, நீதிக்குத் ௰௨
தூரமானவர்களே, என்வாக்கைக்கேளுங்கள்.-
என் நீதி சமீபிக்கச்செய்வேன்; அது தூரத்தில் ௰௩
நில்லாது, என் இரட்சிப்புத்தாமதியாது: நான்
என்மகிமைப் பிரகாசமாகிய இஸரவேலினிமித்
தம் சீயோனில் இரட்சிப்பை ஏற்படுத்துவேன்.

## ௪௭. அதிகாரம்.

பாபேலுக்குவருந் தண்டனையையும் அதின்நானாவித பாவங்களையும் வருணித்தல்.

பாபேல்குமாரத்தியாகிய கன்னிகையே, நீ இ ௧
றங்கிப்புழுதியிலிரு: கல்தேயரின்குமாரத்தியே,
சிங்காசனமில்லாமல் தரையிலிரு: இனி நீ மெல்
லியலென்றும்சுகச்செல்வியென்றும் அழைக்கப்
படமாட்டாய்.-திரிகைஎடுத்துமாவைத்திரி:உன் ௨
முக்காட்டைநீக்கு, உன்தொடை தெரியும்படி
உன் வஸ்திரத்தின் தொங்கலைத்தூக்கியெடுத்
து ஆறுகளைக்கடந்துபோ.—உன்நிருவாணம்வெ ௩
ளிப்படும், உன் இலச்சை காணப்படும்: நான்
பழிவாங்குவேன், எந்த மனுஷனையும் இரட்
சியேன்.—இஸரவேலரின் பரிசுத்தருஞ் சேனாப ௪
தியுமாகிய யெகோவாவென்னும் நாமத்தை

(௨௰) அதி.௪௬.௭. ரோ.௧.௨௨,௨௩.(௨௧)அதி.௪௧.௨௨. அதி.௪௪.௮. (௨௩) ஆதி.௨௨.௰௮. எபி.௬.௰௩. ரோ.௰௪.௰௧. பிலி.௨.௯. ஆதி.௩௧.௫௩. உபா.௬.௰௩.(௨௪)எரே.௨௩.௫. ௧.கொரி.௧.௩௰. (௨௫) ௧.கொரி.௧.௩௧.—(௪௬. அதி. ௧.) எரே.௫௰.௨. எரே.௰.௫. (௨) எரே.௪௮.௭. (௩) யாத்.௰௯.௪. சங்.௭௧.௬. (௪) மல்.௩.௬. (௬) அதி.௪௰.௰௯. எரே.௰.௩. (௭) எரே.௰.௫. அதி.௪௫.௨௰. (௮) அதி.௪௪.௰௯. (௯) உபா.௩௨.௭. அதி.௪௫.௫,௨௧. (௰) அதி.௪௫.௨௧. சங்.௩௩.௰௧. நீதி.௰௯.௨௧. அப்.௫.௩௯. எபி.௬.௰௭. (௰௧) அதி.௪௪.௨௮. எண்.௨௩.௰௯. (௰௨) ரோ.௰.௩. (௰௩) ரோ.௧.௰௭. அபகூ.௨.௩.—(௪௭.அதி.௧.)எரே.௪௮.௰௮.(௨)யாத்.௰௧.௫. (௩) எரே.௰௩.௨௨,௨௬. நாகூ.௩.௫. ரோ.௰௨.௰௯.

௫ யுடையவரே, எங்கள்மீட்பர்.—கல்தேயரின் கு
மாரத்தியே, நீ அந்தகாரத்தில்போய் மவுனமாயி
ரு: இனி நீ இராச்சியங்களின் நாயகியென்று
பெயர்பெறமட்டாய்.
௬ நான் என் சனங்கள்மேல் கோபங்கொண்
டேன், என்சுதந்தரத்தை அசுசிப்படுத்தி உன்கை
யில் ஒப்பித்தேன்: நீ அவர்கள்மேற் சற்றும் இ
ரங்கவில்லை; முதிர்ந்தவயதுள்ளவன்மேல் மிக
வும் பாரமான நுகத்தைவற்றினாய்.
௭ நான் சதாகாலமும் நாயகியாயிருப்பேனென்
ருய்: நீ இக்காரியங்களைச்சிந்தையில்வைக்கவில்
லை, முடிவில் உனக்கு நேரிடுங்காரியத்தை நி
௮ னைக்கவில்லை.—சுகியானவளே, விசாரமில்லா
மல்வசிப்பவளே, என்னையன்றி ஒருவருமில்லை;
நான் விதவையாகேன், புத்திரவீனத்தையறியே
னென்று உன் இருதயத்தில் சிந்தித்து வருகிறவ
ளே, இப்பொழுதுஎன்வாக்குக்குச்செவிகொடு.-
௯ நீ அநேகமந்திர தந்திரங்களையும், நானாவிதமோ
கனவித்தைகளையுஞ்சார்ந்தும், சந்தானசேதமும்
விதவைத்தன்மையுமாகிய இவ்விரண்டுஞ் சடிதி
யாக ஒருநாளில் உனக்குவரும்: அவைகள் துரி
தமாய்வரும்.
௰ நீ உன்துன்மார்க்கத்தில் நம்பிக்கைவைத்தாய்:
என்னைப்பார்க்கிறவன் ஒருவனுமில்லை யென்
ருய். உன்ஞானமும் உன் அறிவும் உன்னைமரு
ளப்பண்ணின; நான்தான், என்னைத்தவிர ஒருவ
ருமில்லையென்றுஉன் இருதயத்தில்எண்ணினாய்.
௰௧ ஆதலால் ஆபத்து உன்மேல்வரும்; அதின்உற்
பத்தியை அறியாய்: வியாகுலம் உன்னையமிழ்த்
திவிடும்: அதற்குப்பிராயச்சித்தஞ்செய்யஉன்னா
லேமுடியாமற்போம்: உனக்குத் தெரியாமல்சங்
௰௨ காரஞ்சடிதியாய் உன்மேல்வரும்.—நீ உன்சிறு
வயதுமுதல் பிரயாசப்பட்டுப் பயின்றுவருகிற
மந்திரதந்திரங்களையும் அநேகமோகன வித்தைக
ளையும் இனிச்சார்ந்துநில்; ஆருக்குத்தெரியும், அ
வைகள் உனக்குச்சகாயஞ்செய்யவுங்கூடும், நீ
௰௩ பெலன்கொள்ளவுங்கூடும்.—உன் ஆலோசனைக
ளின் மிகுதியினால் நீ இளைத்துப்போனாய். ஆத
லால் சோதிடரும், நட்சத்திரதரிசிகளும், அமா
வாசிதோறும் வருங்காரியங்களைச் சொல்பவர்க
ளும் எழும்பி, உனக்கு நேரிடுபவைகளினின்று
௰௪ உன்னை இரட்சிக்கக்கடவர்கள்.—பார், அவர்கள்
அரிதாளைப்போலிருப்பார்கள்; அக்கினி அவர்
களைப்பட்சிக்கும்; அவர்கள் அக்கினிச்சுவாலை
யினின்று தங்கள்பிராணனை விடுவிக்கமாட்டார்
கள்: அதில் குளிர்காய்கிறதற்கு ஏற்றதழலிராது,
அதில் எதிரேயிருக்கத்தகும் அக்கினியிராது.—
௰௫ அப்படியேஉன்சிறுவயதுமுதல் நீ பிரயாசப்பட்
டு எவர்களுடனேவியாபாரம்பண்ணினாயோ, அ
வர்கள் உனக்கிருப்பார்கள்: அவர்கள் தங்கள் தங்
கள் வழியேபோய்அலைவார்கள். ஒருவனும் உன்
னை இரட்சிக்கமாட்டான்.

## ௪௮. அதிகாரம்.

யெகோவா தமக்குரிய சனங்களைக் கண்டித்தல்: ௰௨. தாம் தயாபரரெனக்காட்டல்: ௰௭. அவர்களுக்குணர்த்தல்: ௨௰. வரப்போகிற இரட்சிப்பைத் தெரிவித்தல்.

இஸ்ரவேலென்னும் பெயர்பெற்று, யூதாவின் நீ ௧
ரூற்றுகளினின்றுதோன்றி, யெகோவாவின்
பெயரைக்கொண்டு ஆணையிட்டு, உண்மையும்
நீதியுமில்லாமல் இஸ்ரவேலின் தேவனை அறிக்
கையிடுகிற யாக்கோபின் வமிசத்தாரே, இதைக்
கேளுங்கள்.—அவர்கள் தங்களைப்பரிசுத்தநகரத் ௨
தாரென்றுசொல்லி, சேனைபதியாகிய யெகோ
வா வென்னும் நாமமுள்ள இஸ்ரவேலின் தே
வனைச் சார்ந்திருக்கிறார்கள்.—பூருவகாலத்தில் ௩
நடந்தவைகளை ஆதிமுதல் நான் அறிவித்தேன்;
அவைகள் என்வாயினின்றுபுறப்பட்டன, நான்
அவைகளை வெளிப்படுத்தினேன்; நான் சடிதி
யாய்ச்செய்தேன், அவைகள் நடந்தன.—நீ கடி ௪
னமுள்ளவனென்றும், இரும்பு நரம்புள்ள கழுத்
துடையவனென்றும், உன்நெற்றி பித்தளையென்
றுமறிந்தேன்.—ஆதலால் என்விக்கிரகம் அவை ௫
களைச்செய்ததென்றும், என்தொழிற்பட்ட சுரூ
பமும் என்வார்ப்பான சுரூபமும் அவைகளைக்
கட்டளையிட்டனவென்றும் நீ சொல்லாதபடிக்
கு, நான் ஆதிமுதல் அவைகளைத்தெரிவித்தேன்;
அவைகள் நிகழ்வதற்குமுன்னே அவைகளை உ
னக்கு வெளிப்படுத்தினேன்.—நீ கேட்டாயே, ௬
இவையெல்லாவற்றையும்பார்; பிரசித்தப்படுத்த
மாட்டீர்களா; இதுமுதல்புதியவைகளையும்உனக்
குத்தெரியாத மறைபொருள்களையும் உனக்குத்
தெரிவிக்கிறேன்.—அவைகள் ஆதிமுதற்கொண் ௭
டல்ல, இப்பொழுதே தோற்றுவிக்கப்பட்டன;
அவைகளை நான் அறிந்தேனென்று நீ சொல்லா
தபடிக்கு இதற்கு முந்தினகாலத்தில் நீ அவை
களைக்கேள்விப்படவில்லை, நீ கேட்கவுமில்லை,
அறியவுமில்லை.—ஆதிமுதல் உன்செவிதிறந்தி ௮
ருக்கவுமில்லை: நீ துரோகம்பண்ணுவதை நான
றிந்திருந்தேன், உன்மாதாவின்கருப்பந்தொடங்
கி நீ அக்கிரமக்காரனென்று பெயர்பெற்றாய்.
எனது நாமத்தினிமித்தம் என்கோபத்தை அ ௯
டக்கிக்கொள்வேன், உன்னைச்சேதித்துவிடாத
படிக்கு என்புகழ்ச்சியினிமித்தம் உன்மேற்பொ
றுமையாயிருப்பேன்.—பார், உன்னைப்புடமிட் ௰
டேன், வெள்ளியைப்போலல்ல; உபத்திரவமா
கியகுகையில் உன்னைச்சோதித்தேன்.—என்னி ௰௧
மித்தம், என்னிமித்தமே அப்படிச்செய்வேன்:

(௫) ௧.சாமு.௨.௯. தானி.௨.௩௭. (௬) ௨.சாமு.௨௪.௰௪. ௨.நாளா.௨௮.௯. ௪௧.௧.௰௫. அதி.௪௩.௨௮. உபா.௨௮.௪௯. (௭) வெளி.௰௮.௭. உபா.௩௨.௨௯. (௮) செப்.௨.௰௫. வெளி.௰௮.௭. (௯) ௧.தெச.௫.௩. நாகூ.௩.௪. (௰) எசேக்.௮.௰௨. (௰௧) ௧.தெச.௫.௩. (௰௩) அதி.௫௭.௰. அதி.௪௪.௨௫. தானி.௨.௨. (௰௪) நாகூ.௧.௰. மல்.௪.௧. (௰௫) வெளி.௰௮.௰௧.—(௪௮. அதி. ௧.) உபா.௬.௰௩. செப்.௧.௫. எரே.௪.௨. (௨) அதி.௫௨.௧. மீகா.௩.௰௧. ரோ.௨.௰௭. (௩) அதி.௪௧.௨௨. யோசு.௨௧.௪௫. (௪) யாத்.௩௨.௯. (௯) சங்.௭௮.௩௮. எசேக்.௨௰.௯,௰௪,௨௨,௪௪. சங்.௭௮.௩௮. (௰௧) உபா.௩௨.௨௭. எசேக்.௨௰.௯.

அசுத்தத்திற்குஇடங்கொடுக்கலாமா,என்னுடை
யமகிமையைவேறொருவருக்குங்கொடேன்.
௰௨ யாக்கோபே,என்னால் அழைக்கப்பட்ட இஸ
ரவேலே, எனக்குச்செவிகொடு; நானே அவர்;
௰௩ நானே ஆதி,நானே அந்தம்.—என்கை பூமியின்
அஸ்திபாரத்தைவைத்தது, என்வலக்கரம்வானங்
களைவிரித்தது: நான் அவைகளைக்கூப்பிட, உட
௰௪ னே அவைகளனைத்தும்நிற்கும்.—நீங்களெல்லா
ருங்கூட்டங்கூடிக்கேளுங்கள்; அவர்களில் யா
வன் இதைத்தெரிவித்தான்; யெகோவா அவ
னை நேசித்தார்: அவன் அவருடைய சித்தத்தைப்
பாபேலின்மேல் நிறைவேற்றுவான்,அவனுடை
யபுயம் கல்தேயருக்கு விரோதமாயிருக்கும்.—
௰௫ நானே பேசினேன்; நானே அவனை அழைத்
தேன்: நானேஅவனை வரப்பண்ணினேன், அ
வன் வழி அனுகூலமாகும்.
௰௬ நீங்கள் என்சமீபத்தில்வந்து இதைக்கேளுங்
கள்; நான் ஆதிதொட்டு ஒருபொழுதும் அந்தரங்
கத்திலே பேசவில்லை; அது உண்டானகாலந்
தொட்டு அங்கேயிருக்கிறேன்: இப்பொழுது
ஆண்டவராகிய யெகோவாவும் அவரு
௰௭ டைய ஆவியும் என்னை அனுப்புகிறார்.—இஸர
வேலின் பரிசுத்தரும், உன் மீட்பருமாகிய யெ
கோவா சொல்லுகிறார்; பலன்தரும்போதனை
யைப்போதித்து, நீ நடக்கவேண்டிய வழியில்
உன்னை நடத்துகிற உன் தேவனாகிய யெ
௰௮ கோவா நானே.—ஆ, நீஎன் கட்டளைகளுக்குச்
செவிகொடுத்தாயாகில் உன்சமாதானம்நதியைப்
போலப்பாயும், உன் நீதிசமுத்திரத்தின் திரைக
௰௯ ளைப்போலாகும்:—உன்சந்ததியும் மணலைப்போ
லாகும், உன் வயிற்றில் உற்பத்தியானவைகள் அ
தின்பொடிக்கற்களைப்போலிருக்கும்;அதின்பெ
யர் அற்றுப்போகாது, எனக்கு முன்பாக ஒழிந்
துபோகாது.
௨௰ பாபேலினின்று புறப்படுங்கள், கல்தேயரை
விட்டு ஓடிப்போங்கள், யெகோவா தமதுதா
சனாகிய யாக்கோபை மீட்டுக்கொண்டாரென்று
சொல்லி ஆனந்தமுழக்கத்துடன் இதைப்பிரசித்
தமாகத்தெரிவித்து, பூமியின் கடையெல்லைவ
௨௧ ரைக்கும் அறிவியுங்கள்.—அவர் அவர்களைவனத்
திலும்நடத்திக்கொண்டுவருகையில், அவர்களுக்
குத்தாகமில்லை: அவர்கள் நிமித்தங் கன்மலையி
னின்று சலஞ் சுரக்கப்பண்ணினார்: அவர் மலை
௨௨ யைப்பிளக்க நீர் பாய்ந்தது.—துன்மார்க்கருக்குச்
சமாதானமில்லையென்று யெகோவா சொல்
லுகிறார்.

## ௪௯. அதிகாரம்.

௧. கிறிஸ்து யூதேயரால் அவமதிக்கப்படல்: ௭. அந்நிய தேசத்தாரால் மதிக்கப்படல்: ௰௩. யெகோவா சபையின் மேலன்புவைத்தல்: ௨௨. அதுவாழ்வடைதல்: ௨௪. சத்துருக்கள் அழிதல்.

தீவுகளே, எனக்குச்செவிகொடுங்கள்: தூரத்தி ௧
லுள்ள சனங்களே, சிந்தித்துக்கொள்ளுங்கள்;க
ருப்பந்தொடங்கி யெகோவா என்னையழைத்
தார்; என் மாதாவின் வயிற்றில் தரித்தபொழுது
எனக்கு நாமந்தரித்தார்.—அவர் என் வாயைக்கூர் ௨
மையான கட்கம்போலாக்கி, தமதுகையின் நிழ
லினாலென்னைமறைத்து, என்னைத் துலக்கமான
அம்பாக்கி, என்னைத் தமது அப்புறாத்தூணியில்
ஒளித்துவைத்தார்.—அவர் என்னைநோக்கி, இஸ ௩
ரவேலே, நீ என் தாசன், உன்னால் என் மகிமை
பிரகாசிக்குமென்றார்.—அதற்குநான் வீணாகவ ௪
ருத்தப்படுகிறேன், விருதாவாகவும் வீணாகவும்
என் பெலனை ஒழித்தேன்: ஆனாலும் என் நியா
யவிசாரணை யெகோவாவினிடத்திலும்,என்
கிரியையின்பலன் என் தேவனிடத்திலுமிருக்
கின்றனவென்றேன்.
தம்மிடத்தில்யாக்கோபைத்திரும்பவுங்கொண் ௫
டுவரும்படி என்னைத் தமது தாசனாகக்கருப்பந்
தொடங்கி உருவாக்கின யெகோவா, இஸர
வேல் சேர்க்கப்படாதிருந்தும் நான் யெகோ
வாவின் பார்வையில் கனம்பெறுவேன். என்
தேவன் என் பலமாயிருப்பாரென்றார்.—யாக் ௬
கோபின் கோத்திரங்களை எழுப்பவும்,இஸரவே
லரில் இரட்சிக்கப்பட்டவர்களைச் சீர்ப்படுத்த
வும் நீ எனக்குத்தாசனாயிருப்பது அற்பகாரியம்:
நான் உன்னைப்புறத்தேசத்தாருக்குஒளியாகவும்,
பூமியின் கடையெல்லைவரைக்கும் என்னால்வ
ரும்இரட்சிப்பாகவும்ஏற்படுத்துவேனென்றார்.—
இஸரவேலின் பரிசுத்தரும் அவனைமீட்கிறவரு ௭
மாகிய யெகோவா, மனுஷரால் நிந்திக்கப்
பட்டும்,புறத்தேசத்தாரால்அரோசிக்கப்பட்டும்,
அதிபதிகளுக்குத் தாசனாகியும் இருப்பவனை
நோக்கி, இஸரவேலின் பரிசுத்தரும், உண்மை
யுள்ளவரும் உன்னைத்தெரிந்தவருமாகிய யெ
கோவாவினிமித்தம் இராசாக்கள் கண்டுஎ
ழுந்திருப்பார்கள், பிரபுகளும் நமஸ்காரம்பண்
ணுவார்களென்றார்.—பின்னும் யெகோவா, ௮
நற்சமயத்தில் நான்உன்னைக்கேட்டேன், இரட்
சிப்பின்தினத்தில்உனக்குச்சகாயஞ்செய்தேன்:
பூமியைச் சீர்ப்படுத்துகிறதற்கும், பாழானஸ்தா
னங்களைச்சுதந்தரிக்கப்பண்ணுகிறதற்கும்,-நீ,சி ௯
றைப்பட்டவர்களைநோக்கி, புறப்பட்டுப்போங்
களென்றும், அந்தகாரத்திலுள்ளவர்களை நோக்
கி,வெளிப்படுங்களென்றும்சொல்லுகிறதற்கும்,
நான் உன்னை இரட்சித்து, சனங்களுக்குஉடன்
படிக்கைப்பொருளாகஉன்னைஏற்படுத்தினேன்.
அவர்கள்வழியருகேமேய்வார்கள், சகலஉயர்ந்த

(௰௨) உபா.௩௨.௩௯. வெளி.௧.௰௭. (௰௪) அதி.௪௧.௨௨. அதி.௪௫.௧. அதி.௪௪.௨௮. (௰௫) அதி.௪௫.௧,௨,. (௰௬) அதி.௪௫.௰௯. சக.௨.௮,௯,௰௧. (௰௮) உபா.௩௨.௨௯. (௰௯) ஆதி.௨௨.௰௭. ஓசி.௧.௰. (௨௰) எரே.௫௰.௮. சக.௨.௬, ௭. வெளி.௰௮.௪. யாத்.௰௯.௪,௫,௬. (௨௧) அதி.௪௧.௰௭,௰௮. யாத்.௰௭.௬. (௨௨) அதி.௫௭.௨௧.—(௪௯. அதி. ௧.) அதி.௪௧.௧. எரே.௧.௪. மத்.௧.௨௰,௨௧. யோவா.௰.௩௬. கலா.௧.௰௫. (௨) ஓசி.௬.௫.எபி.௪.௰௨. வெளி.௧.௬. அதி. ௫௧.௰௬. சங்.௪௫.௫. (௩) சக.௩.௮. யோவா.௰௫.௮. எபே.௧.௫. (௫) மத்.௨௩.௩௭. (௬) லூக்.௨.௩௰. அப்.௰௩.௪௭. அப்.௨௬.௰௮. (௭) மத்.௨௬.௬௭. சங்.௭௨.௰,௰௧. (௮) ௨.கொரி.௬.௨. (௯) சக.௯.௰௨.

ஸ்தானங்களிலும் அவர்கள் மேய்ச்சலுண்டா
௰ கும்.—அவர்களுக்குப்பசியுமில்லை, தாகமுமில்
லை; உஷ்டணமாவது வெயிலாவது அவர்களைவ
ருத்துவதுமில்லை: அவர்களுக்குத்தயைசெய்தவர்
அவர்களை நடத்துவார், நீரூற்றுக்களின் சமீபத்
தில் அவர்களைக் கூட்டிக்கொண்டுபோவார்.—
௰௧ என்மலைகளெல்லாவற்றையும்வழியாக்குவேன்,
௰௨ என் வீதிகள் உயர்த்தப்படும்.—பாருங்கள், இ
வர்கள் தூரத்தினின்றுவருகிறார்கள்: பாருங்கள்,
இவர்கள் வடக்கிலும்மேற்கிலுமினின்று வருகி
றார்கள்; இவர்கள் சீனிம்தேசத்தினின்று வரு
கிறார்கள்.
௰௩ வானங்களே, பாடுங்கள்; பூமியே, களிகூரு
வாயாக; மலைகளே, கெம்பீரமாய்ப் பாடுங்கள்:
யெகோவா தமது சனங்களுக்கு ஆறுதலைச்
செய்தார்; சிறுமைப்பட்டவர்களாகியதம்முடை
௰௪ யவர்கள்மேல்தயைசெய்தார்.—சீயோனோ, யெ
கோவா என்னைக்கைவிட்டார், என் ஆண்ட
வர் என்னைமறந்தாரென்று சொல்லுகின்றது.—
௰௫ ஸ்திரியானவள் தன் கருப்பத்தின் பிள்ளைக்கிரங்
காமல் தன்குழந்தையைமறப்பாளா; அவர்கள்ம
௰௬ றக்கவுங்கூடும், நானோ உன்னைமறவேன்.—பார்,
என்னுள்ளங்கைகளில் நானுன்னை எழுதியிருக்
கிறேன்; உன்மதில்கள் எப்பொழுதும்என்முன்
௰௭ னிருக்கின்றன.—உன் சந்ததியார்தீவரமாய்வருகி
றார்கள்; உன்னை இடித்தவர்களும், உன்னைப்பா
ழாக்கினவர்களும் உன்னைவிட்டுப்போவார்கள்.
௰௮ உன்கண்களை ஏறிட்டுச் சுற்றிப்பார்: அவர்க
ளெல்லாரும் ஏகமாய்க்கூடி உன்னிடத்தில் கூ
டிவருகிறார்கள். நீ அவர்களெல்லாரையும் பூரண
மாகத்தரித்துக்கொள்வாய்,மணமகள்போல்அவர்
களை உடுத்துக்கொள்வாயென்று யெகோவா
வாகிய நான் என் நித்தியத்துவத்தைக்கொண்
௰௯ டு சொல்லுகிறேனென்றார்.—அப்பொழுது சே
தமும் வெறுமையுமான உன்னுடைய ஸ்தானங்
களும், நாசமாய்ப்போன உன் தேசமும் இனி
வசிக்குஞ் சன மிகுதியினால் உனக்கு நெருக்
கமாயிருக்கும், உன்னை விழுங்கினவர்கள் தூரத்
௨௰ தில் அகன்றுபோவார்கள்.—நீ இழந்துபோன
உன்சந்ததியார்திரும்பவும்வந்து, இடம் மிகநெ
ருக்கம்: வாசம்பண்ணுவதற்கு இடந்தாவென்று
௨௧ உன் செவிக்கேறச்சொல்லுவார்கள்.—அப்பொ
ழுது, நீ இவர்களை எனக்குச்சனிப்பித்தவர்யா
வர்; நான்சந்தானமிழந்து, தனித்து, சிறைப்பட்
டு, நிலையற்றலைந்தேனே, இவர்களை வளர்த்தவர்
யாவர்; பார், நான் ஒன்றியாய்விடப்பட்டிருந்
தேன்; இவர்களெங்கே இருந்தார்களென்று
௨௨ உன்இருதயத்தில் எண்ணுவாய்.—பார், புறத்தே
சத்தாருக்கும் என்கையைஉயர்த்துவேன், சனங்
களுக்கு என்கொடியைஏற்றுவேன்: அவர்கள்
உன்புத்திரரைக் கொடுங்கையால் ஏந்திக்கொள்
வார்கள், உன்புத்திரிகள்அவர்கள்தோளின்மேல்
சுமக்கப்படுவார்கள்.—இராசாக்கள் உன்னை வ ௨௩
ளர்க்குந்தந்தைகளும், இராசஸ்திரிகள் உன்கைத்
தாயர்களுமாவார்கள்: அவர்கள் தரைமட்டுங்கு
னிந்துஉன்னைநமஸ்கரிப்பார்கள்,உன்பாததூளை
நக்குவார்கள்; நானே யெகோவாவென்றும்,
என்னைக் காத்திருப்பவர்கள் வெட்கப்படார்க
ளென்றும் அறிந்துகொள்வாயென்று ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறார்.
பலவானிடத்தில்கொள்ளைப்பொருளைப்பறிக் ௨௪
கமுடியுமா, பராக்கிரமவீரனிடத்தினின்று சி
றைப்பட்டவனை விடுவிக்கமுடியுமா.—பராக்கி ௨௫
ரமசாலியினால் சிறைப்படுத்தப்பட்டவர்கள்விடு
விக்கப் படுவார்கள், பயங்கரமுள்ளவனிடத்தி
லேகொள்ளைப்பொருள்பறிக்கப்படும்: உன்னை
விரோதிப்பவர்களை நான் எதிர்த்துவிரோதித்து,
உன்பிள்ளைகளைஇரட்சிப்பேன்.—உன்னைஉபத் ௨௬
திரவப்படுத்தினவர்கள் தங்கள் தங்கள் மாமிசத்
தைத்தின்னப்பண்ணுவேன்; புதுத்திராட்சரசத்
தைப்போலத்தங்கள்தங்கள் இரத்தத்தைப்பானம்
பண்ணிவெறிகொள்ளுவார்கள்: யெகோவா
வும் யாக்கோபின்வல்லவருமாகிய நானே,உன்
இரட்சகரும் உன் மீட்பருமாயிருக்கிறேனென்
பதை மாமிசமுள்ளயாவரும் அறிந்துகொள்வார்
களென்று யெகோவா சொல்லுகிறார்.

## ௫௰. அதிகாரம்.

௧. அவிசுவாசத்தினிமித்தங் கிறிஸ்து யூதேயரைக்
கைவிடல்,தமதுகிரியையைக்காட்டல்: ௰. தே
வனை விசுவாசிக்கும்படி ஏவல்.

யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்,நான் ௧
உங்கள் மாதாவை அனுப்பிவிட்டபொழுது அ
வளுக்குக்கொடுத்த தொடராமுறிஎங்கே; என்
கடன்காரரில் எவனுக்கு உங்களைவிற்றேன்; பா
ருங்கள்,உங்கள்பாவங்களினிமித்தம்நீங்கள்விற்
கப்பட்டீர்கள், உங்கள்மாதாஉங்கள்குற்றங்களி
னிமித்தம் அனுப்பிவிடப்பட்டாள்.—நான்வந்த ௨
பொழுது ஒருவனுமில்லை, நான்கூப்பிட்டபொ
ழுதுஒருவரும் உத்தரங்கொடுக்கவில்லை;மீட்புச்
செய்யாதபடிக்குஎன்கைகுறுகிற்றோ;விடுவிக்கிற
தற்குவல்லமை என்னிடத்திலில்லையா; பாருங்
கள், என்கண்டனையினாலே சமுத்திரத்தை வற்
றப்பண்ணுகிறேன், நதிகளைவறண்ட நிலமாக்
குகிறேன்: அவைகளிலுள்ள மச்சங்கள்நீரில்லா
மல்தாகத்தால்மரித்து நாறுகின்றன.-நான்வானங் ௩
களுக்குக்காரிருளையுடுத்தி, இரட்டினால்அவைக
ளைமூடுகிறேன்.—நான், இளைத்தவனோடே சம ௪
யத்திற்கேற்றசொல்லைச்சொல்ல வல்லவனுக்கும்

(௰) வெளி.௭.௰௬. சங்.௱௨௧.௬. சங்.௨௩.௨. (௰௧) அதி.௪௰.௪. (௰௨) அதி.௪௩.௫,௬. (௰௩) அதி.௪௪.௨௩. (௰௫) சங்.௱௩.௰௩. மல்.௩.௰௭. மத்.௭.௰௧. ரோ.௰௧.௨௯. (௰௬) உன்.௮.௬. (௰௮) நீதி.௰௭.௬. (௰௯) சக.௨.௪. (௨௰) மத்.௩.௯. ரோ.௰௧.௰௧,௰௨. (௨௩) சங்.௭௨.௰௧. அதி.௫௨.௰௫. சங்.௭௨.௯. மீகா.௭.௰௭. ரோ.௫.௫. (௨௪) மத்.௰௨.௨௯. லூக்.௰௧.௨௧,௨௨. (௨௬) வெளி.௰௪.௨௰.—(௫௰. அதி. ௧.) உபா.௨௪.௧. எரே.௩.௮. ஓசி.௨.௨. மத்.௰௮.௨௫. (௨) நீதி.௧.௨௪. எரே.௭.௰௩. எண்.௰௧.௨௩. சங்.௱௬.௯. நாகூ.௧.௪. யாத்.௰௪.௨௧. யோசு.௩.௰௬. யாத்.௭.௰௮,௨௧. (௩) யாத்.௰.௨௧. வெளி.௬.௰௨. (௪) யாத்.௪.௰௧. மத்.௰௧.௨௮.

படி, ஆண்டவராகிய யெகோவா வித்து
வானின் நாவை எனக்கருளினார்: காலைதோறும்
என்னை எழுப்புகிறார், கற்றுக்கொள்ளுகிறவர்க
ளைப்போல நான்கேட்கும்படி என்செவியைத்
திறக்கிறார்.
௫ ஆண்டவராகிய யெகோவா என்செ
வியைத்திறந்தார், அவர்கட்டளையை நான்தள்ள
௬ வில்லை, பராமுகம்பண்ணவுமில்லை.—அடிக்கிற
வர்களுக்கு என்முதுகையும்,மயிரைப்பிடுங்குகி
றவர்களுக்கு என்கன்னங்களையுங்கொடுத்தேன்:
அவமானத்துக்கும், உமிழ்நீருக்கும் என்முகத்
தைமறைக்கவில்லை.
௭ ஆண்டவராகிய யெகோவா எனக்குத்
துணையாயிருக்கிறார்;ஆதலால்வெட்கப்படேன்,
நான் வெட்கமடையாமல் இருப்பதை யறிந்
திருக்கிறபடியால் நான் என்முகத்தைத் தீத்தட்
௮ டிக்கல்லைப்போலவைக்கிறேன்.-என்னை நீதிமா
னாக்குகிறவர் சமீபமாயிருக்கிறார்; என்னோடே
விவாதம்பண்ணுகிறவன் யாவன்; ஏகமாய்நிற்
போமாக: என்சத்துரு யாவன்; அவன்என்சமீப
௯ மாய்வருவானாக.—பாருங்கள், ஆண்டவராகி
யயெகோவா எனக்குத்துணையாயிருக்கிறார்;
என்மேற் குற்றஞ்சுமத்துகிறவன் யாவன்; பா
ருங்கள், அவர்கள் எல்லாரும் ஒருவஸ்திரத்தைப்
போலப் பழையவராவார்; பொட்டுப்பூச்சி அ
வைகளையுண்டுவிடும்.
௰ யெகோவாவுக்குப் பயந்து, அவருடை
யதாசனின் வாக்குக்கமைந்திருக்கிற உங்களுக்
குள், ஒளியில்லாமல் இருளிலே நடக்கிறவன்
யாவன்; அவன் யெகோவாவின் நாமத்தில்
நம்பிக்கைவைத்துத் தன் தேவனைச் சார்ந்து
௰௧ கொள்ளக்கடவன்.—பாருங்கள், நெருப்பைக்
கொளுத்தி, அக்கினிப்பொறிகளைச் சுற்றிவைத்
துக்கொண்டிருக்கிற நீங்கள்அனைவரும்,உங்கள்
அக்கினிப்பொறியையும் நீங்கள்கொளுத்தின தீ
வர்த்தியின் சுவாலையையும் பார்த்துநடவுங்கள்.
என்கையினால் இதைப்பெறுவீர்கள்; நீங்கள்துக்
கத்திற்படுப்பீர்கள்.

## ௫௧. அதிகாரம்.

௧. ஆபிரகாமைக்குறித்துத்திஷ்டாந்தங்காட்டல்:
௪. சனங்கள் சிந்திக்கும்படி ஏவல். ௭. இரட்
சிப்பு நிலையுள்ளதெனக்காட்டல்: ௯. சனங்க
ளைத்தைரியப்படுத்தல்: ௰௨. அவர்களையாற்றல்:
௰௭.ஆபத்தையுமிரட்சிப்பையுந்தெரிவித்தல்.

நீதியைப்பின்பற்றி, யெகோவாவைத்தே
டுகிற நீங்கள் எனக்குச்செவிகொடுங்கள்: நீங்கள்
வெட்டி எடுக்கப்பட்டகன்மலையையும், நீங்கள்
தோண்டி எடுக்கப்பட்ட துரவாகிய பள்ளத்தை
௨ யும் நோக்கிப்பாருங்கள்.—உங்கள் ஆதிபிதாவா
கிய ஆபிரகாமையும், உங்களைப்பெற்ற சாராளை
யும் நோக்கிப்பாருங்கள்: அவன்தனித்திருக்கை
யில் நான் அவனையழைத்து, அவனை ஆசீர்வதித்
து, அவனைவருத்திக்கப்பண்ணினேன்.—அப்ப ௩
டியே யெகோவா சீயோனுக்கு ஆறுதலைச்
செய்வார்:அதின்பாழானஸ்தானங்களெல்லாவற்
றையும் ஆற்றுவார்; அதின்வனத்தை ஏதேனைப்
போலவும்,அதின்காட்டை யெகோவாவின்
தோட்டம்போலவுமாக்குவார்; சந்தோஷமும்,ம
கிழ்ச்சியும்,துதியும்,கீதத்தொனியும்உண்டாகும்.
என் சனங்களே, என்வாக்கைச் சிந்தித்துக் ௪
கொள்ளுங்கள்; என்சாதியாரே, எனக்குச்செவி
கொடுங்கள்: வேதம் என்னால் அருளப்படும். ச
னங்களுக்கு ஒளியுண்டாகும்படி நான் என்வி
திப்பிரமாணத்தைஸ்தாபிப்பேன்.—என் நீதிசமீ ௫
பமாயிருக்கின்றது; என் இரட்சிப்பு வெளிப்ப
டுகின்றது, என்புயங்கள் சனங்களுக்கு நியாயத்
தீர்ப்புச்செய்யும்;தீவுகள்என்னைக்காத்திருக்கும்,
அவைகள் என்புயத்தின்மேல்நம்பிக்கையாகும்.-
உங்கள்கண்களைவானங்களுக்கு ஏறிட்டு,கீழேபூ ௬
மியைப்பாருங்கள்: வானங்கள் புகையைப்போ
ல ஒழிந்துபோம், பூமி ஒருவஸ்திரத்தைப்போ
லப்பழையதாகும், அதில்வசிப்பவர்களும் அப்
படியே ஒழிந்துபோவார்கள்: என் இரட்சிப்போ
என்றும் நிலைக்கும், என் நீதி ஒருபொழுதும் ஒ
ழிந்துபோகாது.
நீதியை அறிந்தவர்களே, என் நியாயப்பிரமா ௭
ணம் இருதயத்தில் பதிந்திருக்குஞ் சனங்களே,
எனக்குச்செவிகொடுங்கள்; மனுஷனுடையநிந்
தனைக்குப்பயப்படாமலும், அவர்களுடைய தூ
ஷணங்களால் கலங்காமலுமிருங்கள்.—பொட் ௮
டுப்பூச்சி அவர்களை வஸ்திரம்போலஅரிக்கும்,கி
ருமி அவர்களைஆட்டுமயிரைப்போலத்தின்னும்:
என்னுடைய நீதியோ சதாகாலமும் நிலைக்கும்,
என்னிரட்சிப்புத் தலைமுறைதோறும் நிற்கும்.
யெகோவாவின் கரமே, விழி,விழி,பலத் ௯
தைத்தரி;முன்னோருக்குள்ளேபூருவகாலத்தைப்
போலவிழி. இராகாப்பைத்துண்டித்ததும், பெரி
யமுதலையை வதைத்ததும்நீரல்லவா.—மகாஆழி ௰
யின் நீர்களாகிய சமுத்திரத்தை வற்றப்பண்ணி
னதும், சிறைமீட்கப்பட்டவர்கள் கடந்துபோ
கும்படிசமுத்திரத்தின்பள்ளங்களைவழியாக்கின
தும் நீரல்லவா.—யெகோவா மீட்குஞ்சனங் ௰௧
கள், அப்படியே திரும்பிப்பாடிப்பாடிச் சீயோ
னுக்குவருவார்கள்; நித்தியானந்தம் அவர்கள் த
லையிலே சூட்டப்படும் சந்தோஷமும் மகிழ்ச்சி
யும் அவர்களுக்குக் கிடைக்கும்; துக்கமும் பெ
ருமூச்சும்நீங்கிப்போம்.—நானே உங்களுக்குஆ ௰௨
றுதலைச்செய்கிறேன்: மரிக்கிறமனுஷனுக்கும்,

(௫) சங்.௪௰.௬,௭,௮. மத்.௨௬.௩௯. யோவா.௰௪.௩௧. பிலி.௨.௮. எபி.௰.௫,. (௬) மத்.௨௬.௬௭. யோவா.௰௮.௨௨ புல.௩.௩௰. (௭) எசேக்.௩.௮,௯. (௮) ரோ.௮.௩௨,௩௩,௩௪. (௯) யோபு.௰௩.௨௮. (௰) அதி.௨௩.௪. (௰௧) யோவா.௯. ௩௯. சங்.௰௬.௪.—(௫௧. அதி. ௧.) ரோ.௯.௩௰,௩௧,௩௨. (௨) ரோ.௪.௧,௰௬. எபி.௰௧.௰௧,௰௨. ஆதி.௰௨.௧,௨. ஆதி. ௨௪.௧,௩௫. (௩) சங்.௱௨.௰௩.௨௪.௰௨. ஆதி.௰௩.௰. யோவே.௨.௩. (௫) அதி.௪௬.௰௩. ரோ.௧.௰௬,௰௭. (௬) மத்.௨௪. ௩௫. ௨.பேதுரு.௩.௰,௰௧. (௭) மத்.௰.௨௮. அப்.௫.௪௧.(௯)சங்.௪௪.௧,௨௩. சங்.௯௩.௧. வெளி.௰௧.௰௭. யோபு.௨௬. ௰௨. (௰) யாத்.௰௪.௨௧. (௰௨) ௨.கொரி.௧.௩. ௧.பேதுரு.௧.௨௪.

புல்லைப்போல வாடுகிற மனுபுத்திரனுக்கும் நீ ப
௰௩ யப்படவேண்டியதென்ன.—வானங்களை விரித்
து, பூமிக்கு அஸ்திபாரம்போட்டு, உன்னைச்சி
ருஷ்டித்த யெகோவாவை மறக்கிறதென்ன;
உபத்திரவப்படுத்துகிறவன் அழிவுசெய்ய ஆயத்
தமாயிருக்கிறனென்று நினைந்து, அவனுடைய
கோபத்தைக்குறித்துநாடோறும்இடைவிடாமல்
நீ பயப்படுகிறதென்ன; உபத்திரவப்படுத்துகிற
௰௪ வனுடையஉக்கிரம் எங்கே.-சிறைப்பட்டுப்போ
னவன் விடுதலைபெறும்படி தீவரிப்பான், அவன்
சிறைச்சாலையில்மரியான், அவனுடைய புசிப்
௰௫ புக்குறைவுபடாது.-சேனைபதியாகிய யெகோ
வாவென்னும் பெயர்பெற்றவர், கொந்தளித்
த சமுத்திரத்தின்திரைகளைக்கடிந்தார், உன் தே
வனும்யெகோவாவுமாகிய அவர்நானே.-
௰௬ நான் வானங்களை நிலைப்படுத்தும்பொருட்டும்,
பூமியை அஸ்திபாரப்படுத்தும்பொருட்டும், சீ
யோனுடனே நீ என்சனமென்றுசொல்லும்பொ
ருட்டும், நான் என்வாக்குகளை உன்வாயிலிட்டு,
என்கையின்நிழலினால் உன்னை மூடினேன்.
௰௭ யெரூஷலேமே, விழி, விழி, எழுந்துநில், நீ
யெகோவாவின் கையில் அவர் குரோதபாத்
திரத்திற் குடித்தாய்; நடுங்கச்செய்யும் பாத்திரத்
௰௮ தின்வண்டல்களையும் உறிஞ்சிக்குடித்தாய்.—அ
வள்பெற்ற புத்திரர்யாவரிலும் அவளைநடத்துகி
றதற்கு ஒருவருமில்லை; அவள்வளர்த்தபுத்திரரில்
அவள்கையைப்பிடிப்பதற்கு ஒருவருமில்லை.—
௰௯ இவ்விரண்டும் உனக்குநேரிட்டன: உன்னிமித்
தம் புலம்புகிறவன் யாவன்; பாழும், நாசமும்,
பஞ்சமும், கட்கமும்வந்தன: ஆரைக்கொண்டு
௨௰ உன்னை ஆற்றுவேன்.—உன்புத்திரர், யெகோ
வாவின் கோபத்தினாலும் உன் தேவனுடை
ய கண்டனையினாலும் நிறைந்து, வலையிலகப்பட்
டகலைமானைப்போல் எல்லாவீதிகளின் முனைக
ளிலுஞ் சோர்ந்துகிடக்கிறார்கள்.
௨௧ துக்கமுள்ளவனும், திராட்சரசமில்லாமல்வெ
௨௨ றிகொண்டவனுமாகிய நீ இதைக்கேள்.—உன்
ஆண்டவராகிய யெகோவாவும், தம்மு
டைய சனங்களுக்காக வழக்காடுகிற தேவனு
மானவர், பார், நடுங்கச்செய்யும் பாத்திரமா
கிய என் குரோதத்தின்பாத்திரத்தை உன்கையி
னீக்கி எடுத்தேன்; இனி ஒருபொழுதும் என் கு
ரோதத்தின்பாத்திரத்திலுள்ள வண்டல்களைக் கு
௨௩ டிக்கமாட்டாய்.—உன்னைநோக்கி, உன்னைநாங்
கள் கடக்கும்படி நீ குனியென்றுசொல்லி, உன்
னைக்கடந்தவர்களுக்கு உன்முதுகைத்தரையும்வீ
தியுமாக்கும்படி, உன்னைஉபத்திரவப்படுத்துகிற
வர்களின்கையில் அதைக்கொடுப்பேனென்றார்.

## ௫௨. அதிகாரம்.

௧. தேவன் சபையையெழுப்பல்: ௩. இரட்சிப்பைத் தெரிவித்தல்: ௭. நற்செய்தியைப் பிரசித்தப்படுத்தல்: ௯. அதினால் வாழ்வுவிளைதல்: ௰௧. மீட்சிபெறல்: ௰௩. கிறிஸ்துவையும் அவர் கிரியையையும் விளங்கக்காட்டல்.

சீயோனே, விழி, விழி; வல்லமையைத்தரித்துக் ௧
கொள்; யெரூஷலேமே, பரிசுத்த நகரியே, உன்
சௌந்தரியவஸ்திரங்களைத்தரித்துக்கொள்: உன்
னிடத்தில் இனி ஒருபொழுதும் விருத்தசேதன
மில்லாதவனும், அசுசியுள்ளவனும் பிரவேசிப்ப
தில்லை.—யெரூஷலேமே, புழுதியை உதறிவிடு; ௨
எழுந்து வீற்றிரு, சிறைப்பட்ட சீயோன் குமா
ரத்தியே, உன் கழுத்தின் கட்டுகளை அவிழ்த்து
விடு.—கைம்மாறின்றி விற்கப்பட்டீர்கள்: பண ௩
மின்றி மீட்கப்படுவீர்களென்று யெகோவா
சொல்லுகிறார்.-ஆதியில்என்சனங்கள்எகிப்திலே ௪
தங்கும்படிபோனார்கள்; அஷூரியன் அவர்களை
நியாயமில்லாமல்துயரப்படுத்தினானென்றுஆண்
டவராகியயெகோவா சொல்லுகிறார்.—
யெகோவா, கைம்மாறின்றி என் சனங்கள் ௫
கொண்டுபோகப்பட்டார்கள், இனி இவ்விடத்
தில் எனக்கென்னவென்றுசொல்லுகிறார்; அவர்
களைஆளுகிறவர்கள் அவர்களைஅலறப்பண்ணுகி
றார்கள், நாடோறும் இடைவிடாமல் என்நாமம்
நிந்திக்கப்படுகின்றது.—ஆதலால் என்சனங்கள் ௬
என்நாமத்தை அறிவார்கள்: வாக்குத்தத்தம்பண்
ணினவர்நானேயென்று அந்நாளில்அறிவார்கள்:
இருக்கிறேன், பாருங்களென்று யெகோவா
சொல்லுகிறார்.
சமாதானத்தை வெளிப்படுத்தி, நற்சேதியைத் ௭
தெரிவித்து, இரட்சிப்பைப் பிரசித்தப்படுத்தி,
உன் தேவன் அரசாளுகிறாரென்று சீயோனுக்
குச்சொல்லிவருகிற சுவிசேஷகனுடையபாதங்
கள், மலைகளின்மேல் எவ்வளவுச் சிறந்திருக்
கின்றன.—உன் காவலாளர் சத்தமிடுவார்கள்; ஏ ௮
கமாய்க் கூடிப்பாடுவார்கள்: யெகோவா சீ
யோனை மீண்டுவரப்பண்ணும்பொழுது, அவர்
கள்முகமுகமாய்ப் பார்ப்பார்கள்.
யெரூஷலேமின்பாழானஸ்தானங்களே, யெ ௯
கோவா தம்முடைய சனங்களுக்கு ஆறுதல்
செய்து யெரூஷலேமை மீட்கிறபடியினால் ஆ
னந்தமுழக்கமிட்டு, ஏகமாய்ப் பாடுங்கள்.—யெ ௰
கோவா சருவதேசத்தாரின் பார்வைக்குமுன்
பாகத்தமதுபரிசுத்தபுயத்தைவெளிப்படுத்தினார்;
பூமியின்எல்லைகளிலுள்ளயாவரும் நமது தேவ
னுடைய இரட்சிப்பைக்காண்பார்கள்.
புறப்படுங்கள், புறப்படுங்கள், இவ்விடம்நீங் ௰௧

(௰௩) யோபு.௯.௮. யோபு.௨௰.௭. (௰௪) சக.௯.௰௧. (௰௫) யோபு.௨௬.௰௨. எரே.௩௧.௩௫. (௰௬) உபா.௰௮.௰௮. யோவா.௩.௩௪. (௰௭) அதி.௫௨.௧. யோபு.௨௧.௨௰. எரே.௨௫.௰௫,௰௬. சங்.௬௰.௩. எசேக்.௨௩.௩௨,௩௩,௩௪. சக.௰௨.௨. வெளி.௰௪.௰. (௰௯) ஆமோ.௭.௨. (௨௰) புல.௨.௰௧,௰௨. (௨௧) புல.௩.௰௫. (௨௨) எரே.௫௰.௩௪. (௨௩) எரே.௨௫.௰௭,௨௬,௨௮. சக.௰௨.௨.—(௫௨. அதி. ௧.) நிகி.௰௧.௧. மத்.௪.௫. வெளி.௨௧.௨. அதி.௬௰.௨௧. நாகூ.௧.௰௫. வெளி.௨௧.௨௭. (௨) அதி.௩.௨௬. சக.௨.௭. (௩) எரே.௰௫.௰௩. (௪) ஆதி.௪௬.௬. அப்.௭.௰௪. (௫) எசேக்.௩௬.௨௰,௨௩. ரோ.௨.௨௪. (௭) நாகூ.௧.௰௫. ரோ.௰.௰௫. (௯) அதி.௪௮.௨௰. (௰) லூக்.௩.௫. (௰௧) எரே.௫௧.௯,௪௫. சக.௨.௬,௭. ௨.கொரி.௬.௰௭. வெளி.௰௮.௪. லேவி.௨௨.௨,.

கிப் புறப்பட்டுப்போங்கள், அசுத்தமானதைத்
தொடாதிருங்கள்; இதின்நடுவினின்று புறப்ப
டுங்கள்; யெகோவாவின் பாத்திரங்களைச்சு
யஉ மக்கிறவர்களே, நீங்கள் சுத்தமாயிருங்கள்.-நீங்க
ள்விரைந்துபுறப்படீர்கள்,தப்புகிறவர்கள்போற்
செல்லமாட்டீர்கள்: யெகோவா உங்களுக்கு
முன் போவார்; இஸ்ரவேலின் தேவன் உங்கள்
பிற்புறத்திலுள்ளவர்களைக் கூட்டிக்கொள்வார்.
ய௩ பாருங்கள், என்தாசன்வாழ்வடைவான்,உன்
னதப்பட்டு மேன்மையைப்பெற்று, மகத்துவஞ்
யச சிறந்திருப்பான்.—அவருடையமுகம், மற்றெந்
த மனுஷருடையமுகத்திலும், அவருடைய உரு
வம், மனுபுத்திரருடைய உருவத்திலும் அவலட்
சணமாயிருப்பதினால் அவரைக்கண்ட அநேகர்
யரு பிரமிப்படைந்தார்கள்.-அப்படியே அவர் அநே
கசாதியார்மேலேதெளிப்பார்;இராசாக்களும் அ
வர்நிமித்தம் வாயை மூடுவார்கள்: அவர்கள் தங்
களுக்குத்தெரிவிக்கப்படாததைக்காண்பார்கள்;
கேள்விப்படாததைக் கண்டுணருவார்கள்.

## ரு௩. அதிகாரம்.

*கிறிஸ்துவின் நானாவித துக்கமும் அதின்பலனு
மின்னதின்னதெனக்காட்டல்.*

எங்கள்போதனையைக்கேட்டு விசுவாசித்தவன்
யாவன், யெகோவாவின் புயம் ஆருக்குவெ
உ ளிப்பட்டது.-அடிமுளையைப்போலவும்,வறண்
டநிலத்தினின்று தோன்றும் வேரைப்போலவும்
அவருக்கு முன்பாகவளர்ந்தார்: ரூபமும்சௌந்
தரியமும் அவருக்கில்லை; நாம் அவரைப்பார்க்
கும்பொழுது அவர்மேல்பிரியம்வைப்பதற்குவ
௩ டிவில்லை.-அவர் அவமானம் பெற்றவரும், மனு
ஷருக்குள்ளே புறக்கணிக்கப்பட்டவரும், துக்
கத்தையடைந்து மனவேதனையை அனுபவித்த
வருமாயிருந்தார்: நம்முடையமுகத்தை அவருக்
குமறைத்தோம்; அவர்அலட்சியம்பண்ணப்பட்
டார், நாம் அவரைமதிக்கவில்லை.
ச மெய்யாய் அவர்நம்முடைய நோய்களைத்தாங்
கினார், நம்முடைய துக்கங்களைச் சுமந்தார்: நா
மோ, அவர்தண்டிக்கப்பட்டும், தேவனால் அ
ரு டிபட்டும், வருந்தினாரென்றெண்ணினோம்.—நம்
முடைய மீறுதல்களினிமித்தம் அவர் காயப்பட்
டார்: நம்முடையபாவங்களினிமித்தம் நொறுக்
கப்பட்டார்: நமக்குச்சமாதானத்தைத் தருந்தண்
டனை அவர்மேல்வந்தது; அவர்பட்ட காயங்களி
சு னால் நமக்குச் சொஸ்தங்கிடைத்தது.—நாமனை
வரும் ஆடுகளைப்போலவழுவி, அவனவன்வழி
யிலேபோனோம்; யெகோவா நம்மெல்லாரு
டைய பாவங்களையும்அவர்மேலேற்றினார்.—அ எ
வர் நெருக்கப்பட்டும், உபத்திரவப்பட்டும்வாய்
திறவாமலிருந்தார்: அடிக்கப்படும்படிகொண்டு
போகப்படுகிற ஆட்டுக்குட்டியும், தன்மயிரைக்
கத்திரிக்கிறவனிடத்திலுள்ளஆடுஞ் சத்தமிடாம
லிருக்கிறபிரகாரம், அவர் தமதுவாயைத்திறவாம
லிருந்தார்.—தாழ்ச்சிப்பட்டு, நியாயமில்லாமல் அ
சேதிக்கப்பட்டார்: அவருடையசந்ததியை வெ
ளிப்படுத்த வல்லவன்யாவன்; அவர் சீவனுள்
ளோரின் தேசத்தினின்றுஞ் சேதிக்கப்பட்டார்:
என் சனங்களின் பாவத்தினிமித்தம் வதைக்கப்
பட்டார்.-துன்மார்க்கருடன் அவருடையபிரே கூ
தக்குழியை நியமித்தார்கள், அவர் மரித்தபின்பு
செல்வனைச் சேர்ந்தார்;அவர்கொடுமைசெய்
யவேயில்லை,அவருடையவாயிலேகபடமில்லை.
ஆனாலும் யெகோவா அவரை நொறுக்கும் ய
படிதிருவுளங்கொண்டார்; அவரே அவரைவே
தனைக்கு ஒப்பித்தார்: அவருடைய ஆத்துமாபி
ராயச்சித்தபலியை ஒப்பித்தபின்பு, அவர் தமது
சந்ததியைக்காண்பார்,தீர்க்காயுளுள்ளவராவார்,
யெகோவாவுக்குப் பிரியமானவைகள் அ
வர்கையினாலே சித்தியாகும்.—அவர் தமது ஆத் யக
துமாஅனுபவித்தவேதனையின்பலனைக்கண்டு தி
ருத்தியாவார்: நீதிமானாகிய என்தாசனானவர்தம்
மைப்பற்றும் அறிவினால் அநேகரை நீதிமான்க
ளாக்குவார்; அவர்களுடையபாவங்களைத்தாமே
சுமப்பார்.-அவர்மரணமடையத்தமதுபிராணனை யஉ
ஊற்றினார், அவர்பாவிகளுடன் எண்ணப்பட்
டார்; அநேகருடையபாவத்தைச்சுமந்து,பாவிக
ளுக்காகப் பிரார்த்தனைபண்ணினார்: இதினிமித்
தம்நான்பெரியவர்களுக்குள்அவருக்குப் பங்கு
கொடுப்பேன்; அவர் பராக்கிரமசாலிகளோடே
கொள்ளைப்பொருளைப்பங்கிட்டுக்கொள்ளுவார்

## ருச. அதிகாரம்.

*க. அந்நியதேசத்தாராலேசபைவிருத்தியடைதல்:
யக. அதின் சௌந்தரியத்தையும் சௌக்கியத்
தையும் வருணித்தல்.*

பிள்ளைபெறாதமலடியே,நீசந்தோஷமாய்ப்பாடு; க
பிரசவவேதனைப்படாதவளே, நீ கெம்பீரமாய்ப்
பாடி ஆனந்தமுழக்கமிடு: விவாகஞ்செய்த ஸ்தி
ரிக்குள்ள பிள்ளைகளிலும், அநாதஸ்திரிக்குள்ள
பிள்ளைகள் அநேகரென்று யெகோவா சொல்
லுகிறார்.-நீ உன்கூடாரத்தின் ஸ்தானத்தைவிசா உ
லமாக்கு;அவர்கள்உன்வாசஸ்தலங்களின்தொங்
கு திரைகளை விரிப்பார்களாக.—நீ வலப்புறத்தி ௩
லும் இடப்புறத்திலும்பெருகுவாய்; உன்சந்ததி

(யஉ) மீகா.உ.ய௩. எண்.ய.உரு. யாத்.யச.யக. (ய௩) அதி.ருக௩.ய. எரே.உ௩.ரு. பிலி.உ.கூ. (யச) சங்.உஉ.சு,எ. அதி.ரு௩.உ,௩. (யரு) எசேக்.௩சு.உரு. அப்.உ.௩௩. எபி.கூ.ய௩,யச. அதி.சக.எ,உ௩. ரோ.யரு.உய. எபே.௩.ரு,சு, க.—(ரு௩. அதி. க.) யோவா.யஉ.௩அ. ரோ.ய.யசு. ரோ.க.யசு. க.கொரி.க.யஅ. (உ) மாற்.கூ.யஉ. (௩) சங்.உஉ. சு. எபி.ச.யரு.(ச)யோவா.க.ய,யக. மத்.அ.யஎ. எபி.கூ.உஅ. க.பேதுரு.உ.உச. (ரு) ரோ.ச.உச. க.கொரி.யரு.௩ க.பேதுரு.௩.யஅ. க.பேதுரு.உ.உச. (சு) க.பேதுரு.உ.உரு. (எ) மத்.உசு.சு௩. மத்.உஎ.யஉ,யச. க.பேதுரு.உ உ௩. அப்.அ.௩உ. (அ) தானி.கூ.உசு. (கூ) மத்.உஎ.ருஎ. க.பேதுரு.உ.உஉ. க.யோவா.௩.ரு. (ய) உ.கொரி.ரு.உக. க.பேதுரு.உ.உச. ரோ.சு.கூ. எபே.க.சு,ய. உ.தெச.க.யஉ. (யக) யோவா.யஎ.௩. உ.பேதுரு.க.௩. க.யோவா.உ. க. ரோ.ரு.யஅ,யகூ. (யஉ) சங்.உ.அ. பிலி.உ.கூ. கொலோ.உ.யரு. லூக்.உஉ.௩எ. லூக்.உ௩.௩ச. ரோ.அ.௩ச. எபி. எ.உரு. எபி.கூ.உச. க.யோவா.உ.க.—(ருச. அதி. க.) செப்.௩.யச. கலா.ச.உஎ. க.சாமு.உ.ரு. (௩) அதி.ருரு.ரு.

யார் அந்நியதேசங்களைச் சுதந்தரிப்பார்கள், அ
வர்கள் பாழான நகரங்களில் வாசமாயிருப்பார்
களாக: ஆதலால் குறையாதபடிசெய், உன்கயி
றுகளைநீளமாக்கி,உன்முளைகளைப்பலப்படுத்து,-
௪ நீ பயப்படாதிரு; நீ வெட்கப்படமாட்டாய்: நீ
கலங்காதே; நீ இலச்சையடையமாட்டாய்:உன்
வாலிபத்தின்வெட்கத்தை மறப்பாய், உன்வித
வைத்தன்மையின்நிந்தையை இனிநினையாய்.—
௫ சேனாபதியாகிய யெகோவாவென்னும்பெ
யர்பெற்றஉன்சிருஷ்டிகர்த்தாவே,உன்நாயகன்;
சருவலோகத்திற்குந் தேவனென்று பெயர்
பெற்ற இஸரவேலின்பரிசுத்தரே, உன்மீட்பர்.-
௬ கைவிடப்பட்டு மனம்நொந்தவளாகிய ஒரு ஸ்தி
ரியைப்போலவும், இளம்பிராயத்தில் விவாகஞ்
செய்து தள்ளப்பட்ட மனைவியைப்போலவும்
யெகோவா உன்னைஅழைக்கிறாரென்று,உன்
௭ தேவன் சொல்லுகிறார்.-சற்றுநேரம் நான்உன்
னைக்கைவிட்டேன்; ஆனாலும் மகாஇரக்கங்களு
௮ டனே உன்னைச்சேர்ப்பேன்.-சொரிகிறகோபத்
தில் நான்சற்றுநேரம் என்முகத்தை உனக்கும
றைத்தேன்; ஆனாலும் நித்தியதயையுடன் உன்
மேலிரக்கம்வைப்பேனென்று, உன்மீட்பராகிய
௯ யெகோவாசொல்லுகிறார்.-இது எனக்குநோ
வாவின் சலப்பிரளயம்போலாகும்: இனி ஒரு
பொழுதும் நோவாவின்சலப்பிரளயம் பூமியின்
மேல்வரவிடேனென்று ஆணையிட்டேன்; அப்
படியேஉன்மேற்கோபங்கொள்ளேன்;உன்னைக்
கடிந்துகொள்ளமாட்டேனென்றுஆணையிட்டே
௰ ன்.-மலைகள் விலகினாலும், குன்றுகள்பெயர்ந்தா
லும் என் தயை உன்னைவிட்டுப்பிரியாமலும்,
நான்செய்தசமாதானத்தின் உடன்படிக்கைவில
காமலுமிருக்குமென்று, உன்மேலிரக்கம்வைத்த
யெகோவா சொல்லுகிறார்.
௰௧ துக்கமுள்ளவளே, பெருங்காற்றினால் அடிக்
கப்பட்டு ஆறுதலற்றவளே, பார், நான் சிந்தூரத்
தினால் உன் கற்களைப்பதிப்பேன், நீலரத்தினத்
தினால் உன் அஸ்திபாரங்களைப்போடுவேன்.—
௰௨ பதுமராகத்தினால் உன் உப்பரிகைகளையும், சூ
ரியகாந்தத்தினால் உன் வாசல்களையும், விலையே
றப்பெற்றகற்களினால் உன்மதில்கள் எல்லாவற்
௰௩ றையுஞ் செய்வேன்.—உன்சந்ததியார் சகலரும்
யெகோவாவினாலே போதிக்கப்பட்டிருப்
பார்கள்; உன்சந்ததியாருக்கும் மகா சமாதானம்
௰௪ உண்டாகும்.—நீதியினாலேஸ்திரப்பட்டிருப்
பாய்: கொடுமைக்குத்தூரமாவாய்; நீ பயப்பட
மாட்டாய்: திகிலுக்குத் தூரமாவாய்; அது உன்
௰௫ னை அணுகாது.-பார், அவர்கள் உனக்குவிரோத
மாய்க் கூட்டங்கூடுவார்கள், என்னாலேயல்ல:
உனக்குவிரோதமாய்க்கூட்டங்கூடுகிறவர்களெ
வர்களோ, அவர்கள் உன் பட்சத்தில் வருவார்
கள்.—பார், கரியிலே நெருப்பையூதி, தன் கிரி ௰௬
யைக்காக ஆயுதத்தையுண்டுபண்ணுகிறகொல்ல
னை நான் சிருஷ்டித்தேன்; நாசப்படுத்தும்பொ
ருட்டு நாசனை நான் உற்பத்தியாக்கினேன்.
உனக்குவிரோதமாக உருவாக்கப்பட்ட எந்த ௰௭
ஆயுதமும் பலிக்கமாட்டாது; நியாயவிசாரணை
யில் உனக்குவிரோதமாயெழும்பும் எந்தநாவின்
மேலும் நீ குற்றஞ் சுமத்துவாய். இதுவே யெ
கோவாவின் தாசரின் சுதந்தரம், அவர்களுக்
குக்கிடைக்கும் நீதி என்னாலேவருமென்று யெ
கோவா சொல்லுகிறார்.

## ௫௫. அதிகாரம்.

௧. பாவிகள்விசுவாசிக்கும்படிஅழைக்கப்படல்: ௬. தேவனைத்தேடும்படி ஏவல்: ௮. பத்தரின் வாழ்வை வருணித்தல்.

ஓ, தாகமாயிருக்கிறவர்களே,நீங்களெல்லாருஞ் ௧
சலசமீபத்தில்வாருங்கள்,பணமில்லாதவர்களே;
நீங்கள்வந்துவாங்கிப்புசியுங்கள்; நீங்கள்வந்துப
ணமின்றித் திராட்சரசத்தையும், கிரயமின்றிப்
பாலையுங்கொள்ளுங்கள்.—உணவல்லாதபொரு ௨
ளினிமித்தம் பணத்தையும், திருத்திசெய்யாத
பொருளினிமித்தம்உங்கள்பிரயாசப்பலனையுஞ்
செலவழிக்கிறதென்ன; நீங்கள் என்வாக்கைக்
கேட்டு, சிந்தித்து நலமானதைப்புசியுங்கள், அப்
பொழுதுஉங்கள்ஆத்துமம்புஷ்டியானபதார்த்தத்
தினாலே பூரிக்கும்.—உங்கள் செவியைச்சாய்த் ௩
து, என்னிடத்தில்வாருங்கள்: கேளுங்கள், அப்
பொழுது உங்கள்ஆத்துமா சீவிக்கும்; தாவீதுக்கு
நிச்சயிக்கப்பட்ட கிருபைகளையுடைய நித்திய
உடன்படிக்கையை உங்களுக்கு ஏற்படுத்துவே
ன்.—பாருங்கள், நான் அவரைச்சனங்களுக்குச் ௪
சாட்சியாகவும், சாதியாருக்கு அதிபதியாகவும்,
நியாயப்பிரமாணிகனாகவும் ஏற்படுத்தினேன்.—
பார், நீ அறியாதசாதியாரை அழைப்பாய், உன் ௫
னை மேன்மைப்படுத்தும் உன் தேவனாகிய
யெகோவாவினிமித்தமும், இஸரவேலின்
பரிசுத்தரினிமித்தமும் உன்னை அறியாத தேசத்
தார் உன்னிடத்தில் ஓடிவருவார்கள்.
யெகோவாவைக்கண்டடையத்தக்க சம ௬
யத்தில் அவரைத் தேடுங்கள்,அவர்சமீபமாயிருக்
கையில் அவரைநோக்கிக்கூப்பிடுங்கள்:—பாவி ௭
தன்நெறியையும்,துன்மார்க்கன் தன்எண்ணங்க
ளையும்விட்டு, யெகோவாவினிடத்திலே
திரும்பக்கடவன், அவர் அவன்மேலிரங்குவார்;
நம்முடைய தேவன் மன்னிக்கிறதற்கு மிகவும்
பிரியமுள்ளவர், ஆதலால் அவன் அவரிடத்தில்
திரும்பக்கடவன்.

(௫) எரே.௩.௰௪. லூக்.௧.௩௨. சக.௰௪.௯. ரோ.௩.௨௯. (௭) ௨.கொரி.௪.௰௭. (௯) எரே.௩௧.௩௫,௩௬. (௰) சங்.௪௬.௨. மத்.௫.௰௮. (௰௧) வெளி.௨௧.௰௮,. (௰௩) எரே.௩௧.௩௪. யோவா.௬.௪௫. ௧.கொரி.௨.௰. ௧.தெச.௪.௯. ௧.யோவா.௨.௨௰. (௰௭) அதி.௪௫.௨௩,௨௪.—(௫௫.அதி.௧.) யோவா.௪.௰௪. யோவா.௭.௩௭. வெளி.௨௧.௬. வெளி.௨௨.௰௭. மத்.௰௩.௪௪,௪௬. வெளி.௩.௰௮.(௩)மத்.௰௧.௨௮. எரே.௩௨.௪௰. ௨.சாமு.௭.௭,. அப்.௰௩.௩௪.(௪)யோவா.௰௮.௩௭. வெளி.௧.௫. எரே.௩௰.௯. எசேக்.௩௪.௨௩. தானி.௯.௨௫. ஓசி.௩.௫.(௫)எபே.௨.௰௧,௰௨. அப்.௩.௰௩.(௬) மத்.௫.௨௫. மத்.௨௫.௰௧. யோவா.௭.௩௪. யோவா.௮.௨௧. ௨.கொரி.௬.௧,௨. எபி.௩.௰௩.(௭) சக.௮.௰௭. எரே.௩.௰௨.

௮ என் நினைவுகள் உங்கள் நினைவுகளல்ல, உங்
௯ கள்வழிகள் என் வழிகளல்ல.-பூமியிலும்வானங்
கள் எவ்வளவு உயரமோ, அவ்வளவு என் வழி
கள் உங்கள் வழிகளிலும், என் நினைவுகள் உங்
௰ கள் நினைவுகளிலும் உயரமாயிருக்கின்றன.—ம
ழையும்,உறைந்தமழையும்ஆகாயத்தினின்றுசொ
ரிந்தபின்பு, திரும்பி அங்கேபோகாமல் பூமியை
நனைத்து அதில்முளைகிளம்பி விளையும்படிசெய்
து, விதைக்கிறவனுக்கு விதையையும், புசிக்கிற
வனுக்கு ஆகாரத்தையுங்கொடுக்கிறபிரகாரம்,—
௰௧ என் வாயினின்று புறப்படும்வாக்கும் ஆகும்: அ
து சித்தியாகாமல் என்னிடத்தில் திரும்பாது,
எனக்குப்பிரியமானதை நிறைவேற்றி, நான் நி
னைத்தனுப்பிய காரியத்தைப் பலிக்கச்செய்யும்.—
௰௨ ஆதலால் நீங்கள் மகிழ்ச்சியுடன்புறப்பட்டு, ச
மாதானத்தோடே நடத்திக்கொண்டுபோகப்படு
வீர்கள்:மலைகளுங்குன்றுகளும்உங்களுக்குமுன்
பாகக்கெம்பீரமாய்ப்பாடும்,வெளியிலுள்ளமரங்
௰௩ களெல்லாங் கைகொட்டும்.—முட்செடிக்குப்பிர
தியாகத் தேவதாரு உண்டாகும், காஞ்சொறிக்
குப்பிரதியாக அதேச்செடிமுளைக்கும் அது யெ
கோவாவுக்கு ஒருநாமமாகவும், சேதிக்கப்ப
டாத நித்திய அடையாளமாகவுமிருக்குமென்று
யெகோவா சொல்லுகிறார்.

## ௫௬. அதிகாரம்.

௧. சற்கிரியைசெய்யும்படி ஏவி அதினால் விளையும் பலனைக்காட்டல்: ௯. குருடராகிய காவலாளரைக் கண்டித்தல்.

நான் செய்யும் இரட்சிப்புவருவதற்கும், என்
னுடைய நீதி வெளிப்படுவதற்குஞ் சமீபமான
படியால், நீங்கள் நியாயத்தைக்காத்துநடந்து, நீ
௨ தியைச்செய்யுங்கள்.—இப்படிச்செய்கிற மனுஷ
னும், இதையே பற்றிக்கொண்டு, ஓய்வுநாளை
அசுத்தப்படுத்தாமல் அதைக்காத்து, எந்தத் தீமை
யையுஞ்செய்யாமல் தன் கையைத்தடுக்கிற மனு
புத்திரனும் வாழ்வுடையவர்களென்று யெகோ
வா சொல்லுகிறார்.
௩ யெகோவாவைச்சேர்ந்த அந்நிய புத்தி
ரன், யெகோவா என்னைத்தம்முடையசனங்
களினின்று தீரப்பிரித்தாரென்றுஞ் சொல்லலா
காது: அண்ணகன்,பாரும், நான்பட்டமரமென்
௪ றுஞ்சொல்லலாகாது.—யெகோவா, என் ஓய்
வுநாளைக்காத்து, எனக்கு இஷ்டமானவைகளைத்
தெரிந்துகொண்டு,என்உடன்படிக்கையைப்பற்
௫ றிக்கொள்ளுகிற அண்ணகர்களைக்குறித்து,-நான்
என்ஆலயத்திலும் என்மதில்களுக்குள்ளும் புத்தி
ரர்புத்திரிகளிலும் உத்தமஅதிகாரத்தையும் நாமத்
தையும் அவர்களுக்குக்கொடுப்பேன்:என்றும் ஒ
ழியாத நித்தியநாமத்தை அவர்களுக்கு அருளு
வேன்.—யெகோவாவுக்குத்தொண்டுசெய் ௬
யவும், யெகோவாவின் நாமத்தின்மேல்அன்
பாயிருக்கும்படி அவருக்குத் தாசராயிருக்கவும்
அவரைச்சேர்ந்து, ஓய்வுநாளை அசுத்தப்படுத்தா
மற்காத்து, என்னுடைய உடன்படிக்கையைப்
பற்றிக்கொள்ளுகிற அந்நியபுத்திரரையும்,—என் ௭
னுடைய பரிசுத்த மலையிற்கொண்டுவந்து என்
பிரார்த்தனையின்வீட்டில்அவர்களைச்சந்தோஷப்
படுத்துவேன்:அவர்கள்இடுந்தகனபலிகளும்,மற்
றப்பலிகளும் என்னுடைய வேதிகையின்மேல்
அங்கிகரிக்கப்படும்; என்னுடையவீடு சமஸ்த
சனங்களுக்கும் பிரார்த்தனையின் வீடென்னப்ப
டுமென்று சொல்லுகிறார்.—இஸரவேல் சனங்க ௮
ளுக்குள்ளே துரத்தப்பட்டவர்களைச் சேர்க்கிற
ஆண்டவராகிய யெகோவா, அவர்களோ
டேசேர்க்கப்பட்டவர்களையல்லாமல் மற்றவர்க
ளையும் அவர்களோடே சேர்ப்பேனென்கிறார்.
வெளியிலேசஞ்சரிக்கிறமிருகங்களே,காட்டு ௯
மிருகங்களே, நீங்களெல்லாம்வந்து பட்சியுங்
கள்.—அவனுடைய காவலாளர் குருடர்: அவர்க ௰
ளனைவரும் மதியீனர்,அவர்களெல்லாருங்குலைக்
கமாட்டாத ஊமை நாய்கள்; கனாக்காண்கிறவர்
கள், படுக்கிறவர்கள்,நித்திரைப்பிரியர்.—திருத்தி ௰௧
யடையாமல் பட்சிக்கிற நாய்கள், அந்த மேய்ப்
பர்ஒன்றுமறியார்கள்: சகலருந்தங்கள்தங்கள் இ
லாபத்தை எவ்விடத்திலுந் தேடி, தங்கள்தங்கள்
வழியேசரிந்துபோய்,-திராட்சரசத்தைக்கொண் ௰௨
டுவருவேன், மதுவைப்பானம்பண்ணுவோம்வா
ருங்கள்; இன்றுபோல நாளைக்குமிருக்கும், இதி
லும் அதிகபூர்த்தியாகுமேயென்றார்கள்.

## ௫௭. அதிகாரம்.

௧. நீதிமான்களுடைய நன்மையைத்தெரிவித்தல்: ௩. யூதேயரின் துஷ்டகருமத்தைக் காட்டல்: ௰௪. தாழ்ந்தசிந்தையுள்ளவர்களுக்கு இரட்சிப்புக்கிடைத்தல்.

நீதிமான்மடிந்துபோகிறான், ஒருவனும் அதை ௧
மனதில் வைக்கிறதில்லை: இரக்கமுள்ளவர்கள்
கொண்டுபோகப்படுகிறார்கள்,நீதிமான்ஆபத்துக்
குத் தப்பும்படி கொண்டுபோகப்படுகிறான், இ
தை ஒருவனுஞ் சிந்திக்கிறதில்லை.—அவன்சமா ௨
தானத்திற்பிரவேசிக்கிறான்: நேர்மையாய் நடக்
கிறவர்கள் தங்கள்சயனங்களின்மேல் இளைப்பா
றுதலையடைகிறார்கள்.
மாயாவித்தைக்காரியின்புத்திரரே,விபசாரியும் ௩
வேசையும்பெற்ற சந்ததியாரே, நீங்கள் சமீபித்
துவாருங்கள்.-நீங்கள் ஆரைப்பரிகாசம்பண்ணு ௪
கிறீர்கள், யாவனுக்குவிரோதமாய் வாயைவிரித்
துநாவைநீட்டுகிறீர்கள்.—பச்சையான ஒவ்வொ ௫
ருமரத்தின்கீழும் விக்கிரகங்களோடே காமமூட்

(௮) ௨.சாமு.௭.௰௯. (௯) சங்.௱௩.௰௧. (௰) உபா.௩௨.௨. (௰௩) மீகா.௭.௪. எரே.௰௩.௰௧.—(௫௬. அதி. ௧.) மத்.௩.௨. ரோ.௰௩.௰௧,௰௨. (௨) அதி.௫௮.௰௩. (௩) அப்.௮.௨௭. ௧.பேதுரு.௧.௨. (௫) ௧.தீமோ.௩.௰௫. யோவா.௧.௰௨. ௧.யோவா.௩.௧. (௭) ௧.பேதுரு.௧.௧,௨. ரோ.௰௨.௧. எபி.௰௩.௰௫. ௧.பேதுரு.௨.௫. மத்.௨௧.௰௩. மல்.௧.௰௧. (௮) யோவா.௰.௰௬. எபே.௧.௯. (௯) எரே.௰௨.௯.(௰)மத்.௰௫.௰௪. பிலி.௩.௨. (௰௧) மீகா.௩.௰௧. எசேக்.௩௪.௨,௩. (௰௨) நீதி.௨௩.௩௫. லூக்.௰௨.௰௯. ௧.கொரி.௰௫.௩௨.—(௫௭. அதி. ௧.) மீகா.௭.௨. ௧.இரா.௰௪.௰௩. (௨) லூக்.௨.௨௯. ௨.நாளா.௰௬.௰௪. (௩) மத்.௰௬.௪.(௫)௨.இரா.௰௬.௩,௪. எரே.௨.௨௰. லேவி.௰௮.௨௧. எரே.௭.௩௧. எசேக்.௰௬.௨௰.

டி, மலைவெடிப்புகளின்கீழே தாழ்ந்தபூமிகளில்
பிள்ளைகளைக்கொல்லுகிறநீங்கள் கட்டளைமீறுகி
றபிள்ளைகளும், கள்ளச்சந்ததியாருமல்லவா.—
௬ நீர்க்கால்களிலுள்ள மிருதுவான சிலைகளே
உன்பங்கு; அவைகளேஉன்பாகம்:அவைகளுக்
கே பானபலியைஊற்றி, காணிக்கையையுமிட்
௭ டாய். இவைகளால் ஆறுதலடைவேனோ.—அதி
உன்னதமும் உயரமுமான மலையின்மேல் உன்
படுக்கையை வைத்தாய்: பலியிடும்படி அங்கே
௮ யும் ஏறினாய்.—கதவுகளுக்கும், நிலைகளுக்கும்
பின்னாக உன்ஞாபகக்குறியைவைத்தாய்: எனக்
கல்ல, நீ உன்னை மற்றவர்களுக்கு வெளிப்படுத்
தினாய், நீ ஏறினாய்; நீ உன் படுக்கையை விஸ்
தாரமாக்கினாய், அவர்களோடும் உடன்படிக்
கையைப் பண்ணினாய்; அவர்களுடையபடுக்
கையைவிரும்பி,அதற்குஇடத்தை ஆயத்தப்படுத்
௯ தினாய்.-தைலத்தை எடுத்துக்கொண்டு இராசாவி
டத்தில்போனாய்,சுகந்ததிரவியங்களைமிகுதியாக்
கி; உன்தூதரைத் தூரதேசத்துக்கனுப்பி, பாதாள
௰ பரியந்தம் உன்னைத் தாழ்ச்சிப்படுத்தினாய்.—வ
ழியின்தூரத்தினிமித்தம் இளைத்துப்போனாய்; ஆ
கிலும் அதுவிருதாவென்று நீ சொல்லவில்லை:
உன்கைப்பலத்தை நீகண்டடைந்தபடியினால் நீ
௰௧ ஆயாசப்படவில்லை.—நீ பொய்யாய்நடந்து என்
னைநினையாமலும் உன் மனதிற்பதியாமலும் இ
ருக்கும்படி,யாவர்நிமித்தம் கலங்கிப்பயப்படுகி
றாய்; பூருவகாலமுதல் நான்மவுனமாகிக் கண்சா
டையாயிருக்கவில்லையா, அதினால்அல்லவா நீ எ
௰௨ னக்குப் பயப்படவில்லை.-உன் நீதியையும்,உன்
கிரியைகளையும் நான்வெளிப்படுத்துவேன்; நீ அ
வைகளினால் பலன்பெறமாட்டாய்.
௰௩ நீ அலறும்பொழுது உன் திரளாகிய தெய்வங்
கள் உன்னை விடுவிக்கக்கடவன; காற்று அவை
களெல்லாவற்றையும் பறக்கடிக்கும்; ஒரு சுவா
சம் அவைகளைக் கொண்டுபோய்விடும்: என்
மேல்நம்பிக்கையாயிருக்கிறவன்தேசத்தில்வசித்
து, என் பரிசுத்தமலையைச் சுதந்தரித்துக்கொள்
௰௪ வான்.—வழியை ஆயத்தப்படுத்துங்கள், உயர்த்
துங்கள், உயர்த்துங்கள், இடறுகட்டையை என்
சனங்களின் வழியினின்று நீக்கிவிடுங்களென்
௰௫ றுஒருவன்சொல்லுவான்.-பரிசுத்தரென்னும்பெ
யருள்ள நித்தியவாசியாகிய மகத்துவமும் உன்
னதமுமுள்ளவர், நான் உன்னதத்திலும்பரிசுத்
தத்திலும், தாழ்ந்தசிந்தையுடையவர்களை உயிர்ப்
பிப்பதற்காகவும், நொறுங்கியமனதுள்ளவர்களை
உயிர்ப்பிப்பதற்காகவும்,நொறுங்கியதும்தாழ்ந்த
துமாகியசிந்தையுள்ளவனிடத்திலும்வாசம்பண்
௰௬ ணுகிறேனென்று சொல்லுகிறார்.—நான்சதாகா
லமும்வழக்காடேன், இடைவிடாதபடிகோபங்
கொள்ளேன்: ஆவியும், நான் சிருஷ்டித்த ஆத்து
மாக்களும் என்சமுகத்தில் சோர்ந்துபோமே.—
அவனுடைய பொருளாசையென்னும் பாவத்தி ௰௭
னிமித்தம் நான்கோபங்கொண்டு,அவனைஅடித்
தேன்: அவன் தன் மனம் தெரிந்துகொண்டவழி
யில் மாறுபாடாய் நடந்தபடியால் நான்கோபங்
கொண்டு, என் முகத்தை மறைத்தேன்.—அவ ௰௮
னுடையவழிகளை நான் பார்த்தேன், அவனைச்
சொஸ்தப்படுத்துவேன், அவனைநடத்தித்திரும்
பவும் அவனுக்கும், அவனிடத்திலிருக்குந் துக்
கமுள்ளவர்களுக்கும் ஆறுதல்செய்வேன்.—உத ௰௯
டுகளின்பலனைப் படைக்கிறேன்; தூரத்திலுள்
ளவர்களுக்கும் சமீபத்திலுள்ளவர்களுக்கும் ச
மாதானம், சமாதானம், நான் அவனைச் சொஸ்
தப்படுத்துவேனென்று யெகோவா சொல்லு
கிறார்.—துன்மார்க்கர் அலையுங் கடலைப்போலி ௨௰
ருக்கிறார்கள், அதின் நீர்கள் சேற்றையும் அழுக்
கையும் ஒதுக்குகின்றன; அதற்கு அமைதியில்
லை.-துன்மார்க்கனுக்குச் சமாதானமில்லையென் ௨௧
று என் தேவன் சொல்லுகிறார்.

## ௫௮. அதிகாரம்.

௧. யூதேயசனங்களின் கபடத்தைக்கண்டித்தல்: உபவாசத்தின்தன்மையை நிருணித்தல்: ௮.சற்கிரியையின்பலனைக் காட்டல்: ௰௩. ஓய்வுநாளைக் கைக்கொள்ளுவதினாலுண்டாகும் பலனைத் தெரிவித்தல்.

நீ உரத்துக்கூப்பிடு, அடக்கிக்கொள்ளாதே,எக் ௧
காளத்தொனியைப்போல உன்சத்தத்தை உயர்த்
தி, என்சனங்களுக்குஅவர்கள்மீறுதலையும்,யாக்
கோபின்வமிசத்தாருக்குஅவர்களுடையபாவங்
களையுந்தெரிவி.-நீதியைச்செய்து தங்கள் தேவ ௨
னுடைய விதிகளைவிட்டுவிலகாமலிருக்கிறசா
தியாரைப்போல, அவர்கள்நாடோறும்என்னிட
த்தில்உசாவி, என்வழிகளைஅறியவிரும்புகிறார்க
ள்;நீதியுள்ளநியமங்களைக்குறித்துஎன்னிடத்தில்
விசாரித்து, தேவனைச் சேரவிரும்புகிறார்கள்.
நாங்கள்உபவாசம்பண்ணும்பொழுதுநீர்நோக் ௩
காமலிருக்கிறதென்ன, நாங்கள்எங்கள் ஆத்துமத்
தைத் துக்கப்படுத்தும்பொழுது நீர்பாராமல் போ
கிறதேதென்கிறார்கள்: பாருங்கள், நீங்கள்உ
பவாசிக்கும்நாளில் சுக அனுபவத்தை நாடுகிறீர்
கள், நீங்கள் நியமித்தவேலைகளையெல்லாம் கட்
டாயமாய்நடத்துகிறீர்கள்.—பாருங்கள், நீங்கள்க ௪
லகமும்விவாதமுஞ் செய்கிறதற்கும்,பாவமென்
னும்முஷ்டியினால் தாக்குகிறதற்கும் ஏதுவாக உ
பவாசஞ்செய்கிறீர்கள்: இன்றுபோலஉங்கள்சத்
தத்தைஉயரத்திலேகேட்கப்பண்ணுவதற்கு உப
வாசஞ்செய்யாதிருங்கள்.-ஒருவன்தன்ஆத்துமத் ௫
தைத்துக்கப்படுத்துகிறதும், நாணலைப்போலத்த

(௭) எசேக்.௰௬.௰௬,௨௫. எசேக்.௨௩.௪௧.(௮)எசேக்.௰௬.௨௬,௨௮. (௯) எசேக்.௰௬.௩௩. ஓசி.௭.௰௧. எரே.௨.௨௫. (௰௧) சங்.௫௰.௨௧. (௰௪) அதி.௪௰.௩. (௰௫) யோபு.௬.௰. லூக்.௧.௪௧. ௪௧.௨.௰௩. சங்.௱௪௭.௩. அதி.௬௬.௧. (௰௬) சங்.௮௫.௫. சங்.௱௩.௯. மீகா.௭.௰௮. எண்.௰௬.௨௨. யோபு.௩௪.௰௪. எபி.௰௨.௯. (௰௭) எரே.௬.௰௩. அதி.௮.௰௭. அதி.௪௫.௰௫. அதி.௯.௰௩. (௰௮) எரே.௩.௨௨. அதி.௬௬.௨. (௰௯) எபி.௰௩.௰௫. அப்.௨.௩௯. எபே.௨.௰௭. (௨௰) யோபு.௰௫.௨௰,. நீதி.௪.௰௬. (௨௧) அதி.௪௮.௨௨.—(௫௮. அதி. ௩.) மல்.௩.௰௪. லேவி.௰௬.௨௯,௩௧. லேவி.௨௩. ௨௭.(௪)௧.இரா.௨௧.௯,௰௨,௰௩. (௫) சக.௭.௫. லேவி.௰௬.௨௯. எஸ்த.௪.௩. யோபு.௨.௮. தானி.௯.௩. யோனா.௩.௬.

லவணங்குகிறதும், இரட்டிலுஞ் சாம்பலிலும்
படுக்கிறதுமாகிய இவைகளா எனக்குப்பிரியமா
ன உபவாசம்; இதையாஉபவாசமென்றும் யெ
கோவா அங்கிகரிக்கும் நாளென்றுஞ்சொல்ல
௬ லாம்.—பாவபந்தங்களை அவிழ்க்கிறதும், நுகத்
தின் கட்டுகளை அவிழ்க்கிறதும், உபத்திரவப்
பட்டவர்களைவிடுவிக்கிறதும், நுகம் ஒவ்வொன்
௭ றையும் நீங்கள்முறிக்கிறதும்,-பசியுள்ளவனுக்கு
உன் ஆகாரத்தைக்கொடுக்கிறதும், தள்ளுண்ட த
ரித்திரரை உன்வீட்டிலேசேர்க்கிறதும், வஸ்திர
மில்லாதவனைக்கண்டு அவனுக்கு வஸ்திரத்தைக்
கொடுக்கிறதும், உன்மாமிசத்தைப் போன்ற
வர்களுக்கு உன்னைமறைத்துக்கொள்ளாமலி
ருக்கிறதுமாகிய இவைகளல்லவா எனக்குப்பிரி
யமானஉபவாசம்.
௮ அப்பொழுது அருணோதயத்தைப்போல உன்
ஒளிபிரகாசிக்கும், உன்வாழ்வுஅதிசீக்கிரத்திலே
தோன்றும்: உன் நீதி உனக்குமுன்பாகச் செல்
லும்; யெகோவாவின் மகிமை உனக்குப்
௯ பின்னணியாகும்.—அப்பொழுது நீ கூப்பிடு
வாய், யெகோவா உத்தரமருளுவார்; நீசத்த
மிடுவாய், அவர், நானிருக்கிறேனென்பார். நீ
உன்மத்தியினின்றுநுகத்தையும், விரல்நீட்டுதலை
௰ யும்,தீச்சொற்களையுமகற்றி,—பசியுள்ளவன்மேல்
மனமுருகி, துயரப்படும்ஆத்துமாவைத்திருத்திப்
படுத்தினால்அந்தகாரத்திலும்உன்ஒளிதோன்றும்,
உன் இருளும் மத்தியானத்தைப்போலாகும்.—
௰௧ யெகோவா நித்தமும்உன்னைநடத்திக்கொள்
வார், மிகவும்வறட்சியானகாலத்தில் உன் ஆத்து
மாவைத் திருத்திப்படுத்துவார், உன் எலும்புக
ளைப்புஷ்டியாக்குவார்: நீ நீர்ப்பாய்ச்சப்படுகிற
தோட்டத்திற்கொப்பாவாய், வற்றாதநீர் ஊற்றுப்
௰௨ போலாவாய்.-உன்னாலேதோன்றுபவர்கள் பூரு
வகாலத்திற் பாழாய்ப்போன ஸ்தானங்களைத் தி
ரும்பப் புதுப்பிப்பார்கள்: பூருவகாலத்திலுள்ள
அஸ்திபாரங்கள்மேல் கட்டுவார்கள்; நீ இடிந்த
தைத் திரும்பக்கட்டுகிறவனென்றும், வாசஞ்
செய்கிறவர்களுக்குப் பாதைகளைச் செவ்வைப்
படுத்துகிறவனென்றும் பெயர்பெறுவாய்.
௰௩ என்பரிசுத்தநாளாகியஓய்வுநாளில்உனக்கிஷ்
டமான கிரியைகளைச்செய்யாதபடிக்கு உன்கா
லைத்தடுத்து,ஓய்வுநாளைஇனியநாளென்றும், யெ
கோவாவின் பரிசுத்தநாள்மகிமையுள்ளதென்
றும்சொல்லி, உன்வழிகளிலேநடவாமலும்,உன்
னிஷ்டத்தைச்செய்யாமலும், வீண்சொற்களைப்
பேசாமலும்,அந்தநாளைக்கனஞ்செய்தால் நீ யெ
௰௪ கோவாவில் மகிழ்ந்திருப்பாய்.—நீ பூமியின்
உயர்ந்தஸ்தானங்களில் ஏறியிருக்கும்படிக்கும்,
உன் பிதாவாகிய யாக்கோபின் சுதந்தரத்தை அ
னுபவிக்கும்படிக்குஞ் செய்வேன்; யெகோ
வாவின்வாயே இவ்வாக்கை வசனித்தது.

## ௫௯. அதிகாரம்.

௧. பாவத்தையும் அதின்பலனையுங்காட்டல்:௰௬. தேவன் மாத்திரம் பாவத்தினின்றுமிரட்சிக்க வல்லவரெனக்காட்டல்.

பாருங்கள்,இரட்சிக்கக்கூடாதபடி யெகோ ௧
வாவின் கை குறுகிப்போகவில்லை; கேட்கக்
கூடாதபடி அவருடைய செவிமந்தமாகவுமில்
லை.—உங்கள் குற்றங்கள் உங்களுக்கும் உங்கள் ௨
தேவனுக்கும் பிரிவுண்டாக்கின, அவர்உங்க
ளுக்குச்செவிகொடாதபடி உங்கள் பாவங்களே
அவருடையமுகத்தை உங்களுக்கு மறைக்கின்
றன.—உங்கள்கைகள்இரத்தத்தினாலும், உங்கள் ௩
விரல்கள்குற்றத்தினாலும் அசுசிப்பட்டிருக்கின்
றன; உங்கள் உதடுகள்பொய்பேசுகின்றன, உங்
கள் நாவு தீங்கானவைகளை வசனிக்கின்றது.—
நீதியின்பட்சத்திற்பேசுகிறவன்ஒருவனுமில்லை, ௪
சத்தியத்தைச்சாதிக்கிறவன் ஒருவனுமில்லை: வீ
ணானதை நம்பிப் பொய்பேசுகிறார்கள்; தீமை
யைக் கருப்பந்தரித்துப் பாவத்தைப் பிரசவிக்கி
றார்கள்.—கட்டுவிரியன் முட்டைகளை அவயங் ௫
காக்கிறார்கள், அவைகளுடைய முட்டையைத்
தின்றவன் சாவான்: ஒன்றைமிதித்தால்,விரியன்
புறப்படுகின்றது, சிலந்தியின்நூல்களால்நெய்கி
றார்கள்.—அவைகளின் நெசவுகள் வஸ்திரங்க ௬
ளுக்கேற்றவைகளல்ல, அவர்கள்தங்கள்கிரியை
யினால் தங்களை மூடமாட்டார்கள்: அவர்களு
டையகிரியைகள் அநியாயக்கிரியைகள், கொ
டுஞ்செய்கை அவர்கள்கைகளிலிருக்கின்றது.—
அவர்களுடையகால்கள் தீங்குசெய்யும்படி ஓடு ௭
கின்றன, அவைகள்குற்றமில்லாதவனுடைய இ
ரத்தத்தைச்சிந்தவிரைந்துசெல்லுகின்றன: அவர்
களுடைய சிந்தனைகள் பாவமானசிந்தனைகள்;
அவர்கள்வழிகளிலேநாசமுஞ்சேதமுமிருக்கின்
றன.—சமாதானமானவழியைஅவர்கள்அறியார் ௮
கள்; அவர்களுடையநடைகளில் நியாயமில்லை:
அவர்கள் தங்களுடையபாதைகளைத் தாங்களே
கோணலாக்குகிறார்கள்: அவைகளில்நடக்கிறவ
னெவனோ அவன்சமாதானத்தையறியான்.
ஆதலால் நியாயம் நமக்குத்தூரமாய் நிற்கின்ற ௯
து, நீதி எங்களை அணுகவில்லை: நாம் ஒளியைக்
காத்திருக்கிறோம், பார், இருளைக்காண்கிறோம்;
பிரகாசத்தைக் காத்திருக்கிறோம், அந்தகாரத்தி
லேநடக்கிறோம்.—நாம் குருடரைப்போலச் சுவ ௰
ரைப் பிடிக்கும்படி தடவுகிறோம்,கண்ணில்லா
தவர்கள்போலவே தடவுகிறோம்: இரவில் இட
றுவதுபோலவே மத்தியானத்திலும்நாங்கள் இட
றுகிறோம்; பாழ்நிலங்களிலே செத்தவர்களைப்
போலிருக்கிறோம்.—நாம் அனைவருங்கரடிகளைப் ௰௧
போல உறுமி,புறாக்களைப்போலக்கூவுகிறோம்:

(௬) நிகி.௫.௰,௰௧,௰௨. எரே.௩௪.௮. (௭) எசேக்.௰௮.௭,௰௬. மத்.௨௫.௩௫. யோபு.௩௧.௰௯. ஆதி.௨௯.௰௪. நிகி.௫.௫. (௮) யோபு ௰௧.௰௭. யாத்.௰௪.௰௯. அதி.௫௨.௰௨. (௯) சங்.௰௨.௨. (௰௨) அதி.௬௧.௪. (௰௩) அதி.௫௬.௨. யோபு. ௨௨.௨௬. (௰௪) உபா.௩௨.௰௩. உபா.௩௩.௨௯. அதி.௧.௨௰. அதி.௪௰.௫. மீகா.௪.௪.—(௫௯. அதி. ௧.) எண்.௰௧. ௨௩. அதி.௫௰.௨. (௩) அதி.௧.௰௫. (௪) யோபு.௰௩.௩௫. சங்.௭.௰௪. (௬) யோபு.௮.௰௪,௰௫. (௭) நீதி.௧.௰௬. ரோ. ௩.௰௫. (௮) நீதி.௨.௰௫. (௯) எரே.௮.௰௫. (௰) உபா.௨௮.௨௯. யோபு.௫.௰௪. ஆமோ.௮.௯. (௰௧) எசேக்.௭.௰௬.

நியாயத்துக்குக்காத்திருக்கிறோம், அதில்லை; இ
ரட்சிப்புக்குக்காத்திருக்கிறோம், அது நமக்குத்தூ
௰௨ ரமாய் நிற்கின்றது.-உம்முடையசமுகத்தில் எங்
கள் மீறுதல்கள் பெருகியிருக்கின்றன, எங்கள்
குற்றங்கள் எங்களுக்குவிரோதமாகச்சாட்சியிடு
கின்றன: எங்கள்மீறுதல்கள் எங்களோடேயிருக்
கின்றன; எங்கள்பாவங்களோ, அவைகளை நாங்
௰௩ கள் அறிந்திருக்கிறோம்.-நாம் யெகோவாவுக்
கு விரோதமாய்ப் பாவஞ்செய்துபொய்பேசி, ந
மது தேவனை விட்டுப்பராமுகமானோம், கொ
டுமைக்கும் கட்டளைமீறுவதற்கு மேற்றவாக்குக
ளைப்பேசினோம், நாம் சிந்தித்துக்கருப்பந்தரித்
௰௪ து, பொய்யானவைகளைப் பிரசவித்தோம்.-நியா
யம்பின்னிட்டுத்திரும்பிப்போயிற்று, நீதிதூரமா
கநிற்கின்றது: சத்தியம்வீதியில் இடறுகின்றது,
௰௫ உண்மை அதிற்பிரவேசிப்பதுகூடாது.-சத்தியம்
ஒழிகின்றது; தீங்கை விடுகிறவன் கொள்ளைப்
பொருளாகிறான்: யெகோவா பார்த்து நியா
யத்தைக்காணாததினால்பிரியவீனமானார்.
௰௬ ஒருவரும் வெளிப்படவில்லையென்று கண்
டார், மத்தியஸ்தனில்லாததினிமித்தம் பிரமித்
தார்: அப்பொழுது அவருடையகரம்அவருக்காக
இரட்சிப்பைச்சித்தியாக்கிற்று; அவருடையநீதி
௰௭ யேஅவரைத்தாங்கிற்று.—அவர்நீதியைமார்பின்
கவசமாக அணிந்தார், தலையில் இரட்சிப்பென்
னுஞ்சீராவைத்தரித்துக்கொண்டார்; பழிவாங்க
லென்னும் வஸ்திரத்தைத்தரித்தார், வைராக்கிய
மென்னும் உத்தரீயத்தினாலே போர்த்துக்கொண்
௰௮ டார்.—அவர்கிரியைகளின்படியே பிரதிபலன
ளிப்பார், தமது சத்துருக்களுக்குக் குரோதத்தை
யும், தமதுபகைவருக்குப் பிரதிபலனையுங் கொ
டுப்பார்; தீவுகளுக்குப் பிரதிபலன்கொடுப்பார்.—
௰௯ அப்பொழுதுமேற்குத்திசையிலுள்ளவர்கள் யெ
கோவாவின் நாமத்துக்கும், சூரியோதயதிசை
யிலுள்ளவர்கள் அவருடையமகிமைக்கும் பயப்
படுவார்கள். சத்துருவெள்ளம்போல வரும்பொ
ழுது யெகோவாவின் ஆவி அவனுக்கு வி
ரோதமாகக்கொடியை ஏற்றும்.
௨௰ சீயோனுக்கும், யாக்கோபிலேபாவத்தைவிட்
டுத்திரும்புகிறவர்களுக்கும் மீட்பர்வருவாரென்
௨௧ று யெகோவா சொல்லுகிறார்.-மேலும் யெ
கோவா, உன்மேலுள்ளஎன்னுடையஆவியும்,
நான் உன்வாயிலிட்ட என்னுடைய வாக்குக
ளும்; இன்றுமுதலென்றும் உன்வாயினின்றும்,
உன்சந்ததியின் வாயினின்றும், உன்சந்ததியின்
சந்ததியார்வாயினின்றும் நீங்குவதில்லையென்று
சொல்லுகிறார்; அவர்களோடேபண்ணின என்
னுடைய உடன்படிக்கை இதுவேயென்று யெ
கோவா சொல்லுகிறார்.

## ௬௰. அதிகாரம்.

௧. அந்நியதேசத்தாரால் சபை விருத்தியடைதல்:
அ. கொஞ்சக்காலந்துக்கப்பட்டுச் சௌக்கியத்
தைப்பெறல்.

எழும்பு, பிரகாசமாயிரு; உன்ஒளிவந்துவிட்ட ௧
து, யெகோவாவின் மகிமைப்பிரகாசம்உன்
மேல் உதயமாயிற்று.—பார், இருள்பூமியையும், ௨
காரிருள்தேசத்தாரையும் மூடுகின்றன: ஆனாலும்
யெகோவா உன்மேல் உதிக்கிறார், அவரு
டையமகிமை உன்மேல் காணப்படுகின்றது.—
அந்நியர் உன்ஒளியையும், இராசாக்கள் உன்மே ௩
லுதிக்கும் உன் பிரகாசத்தையுங் கிட்டிவருவார்
கள்.—உன்கண்களைஏறிட்டுச்சுற்றிப்பார்: அவர் ௪
களெல்லாரும் ஏகமாய்க்கூடுகிறார்கள், உன்னி
டத்தில் வருகிறார்கள்: உன்புத்திரர்தூரத்தினின்
றுவருவார்கள், உன்புத்திரிகள் உன் பக்கத்தில்
வளர்க்கப்படுவார்கள்.—அப்பொழுது நீ அதைக் ௫
கண்டுமகிழ்ந்திருப்பாய், உன் மனம் அதிசயப்
பட்டு விசாலமாகும்; சமுத்திரத்தின் செல்வம்
உன்வசமாகத்திரும்பும், அந்நியதேசத்தாரின் சக
லசம்பத்தும் உன்னிடத்தில்சேரும்.—ஒட்டகங் ௬
களும், மீதியான் ஏபா என்னும் தேசங்களின்தீ
விரமான ஒட்டகங்களும் வெள்ளம்போலவந்து
உன்னைமூடும்; ஷேபாவில் வசிக்கும் யாவரும்
பொன்னையுங் குந்துருவையும் சுமந்துகொண்டு
வந்து, யெகோவாவின் கீர்த்தனத்தைப் பிர
சித்தப்படுத்துவார்கள்.—கேதாரின் ஆடுகளெல் ௭
லாம் உன்னிடத்தில் சேர்க்கப்படும், நெபா
யோத்தின் கடாக்களும் உன்னைச்சேவிக்கும்: அ
வைகள் என்வேதிகையின்மேலேறி அங்கிகரிக்
கப்படும், மகிமைபொருந்திய என் ஆலயத்தைச்
சிறப்பிப்பேன்.
மேகத்தைப்போலவும், தங்கள் கூடுகளின் து ௮
வாரங்களுகருத் தீவரிக்கிற புறாக்களைப்போல
வும்பறக்கிறஇவர்கள் யாவர்.—தீவுகள்என்னைக் ௯
காத்திருக்குமே, தர்ஷீஷின்கப்பல்கள் முற்பட்
டுஉன்தேவனாகியயெகோவாவின் நாமத்
தினிமித்தமும், உன்னைச்சிறப்பித்துவருகிறஇஸ
ரவேலின் பரிசுத்தரினிமித்தமும், தங்கள்பொன்
வெள்ளிகளோடும் உன்புத்திரரைத்தூரத்தினின்
றுங்கொண்டுவரும்.—அந்நியரின் புத்திரர் உன் ௰
மதில்களைக்கட்டுவார்கள், அவர்களுடைய இரா
சாக்கள் உன்னைச்சேவிப்பார்கள்: நான்கோபங்
கொண்டு உன்னை அடித்தேன், அனுக்கிரகத்தி
னால் உன்மேலிரங்கினேன்.—அந்நியதேசத்தா ௰௧
ரின்சகலசம்பத்தும் உன்னிடத்திற் கொண்டுவ
ரும்படிக்கும், அவர்களுடையஇராசாக்கள்உன்
னிடத்தில் கொண்டுவரப்படும்படிக்கும், உன்
வாசல்கள் இரவும்பகலும் பூட்டப்படாமல் எப்

(௰௩) மத்.௰௨.௩௪.(௰௬)எசேக்.௨௨.௩௰. மாற்.௬.௬.(௰௭)எபே.௬.௰௪,௰௭. ௧.தெச.௫.௮. (௰௮) அதி.௬௩.௬. (௰௯) மல்.௧.௰௧. வெளி.௰௨.௰௫. (௨௰) ரோ.௰௧.௨௬. (௨௧) எபி.௮.௰.—(௬௰. அதி. ௧.) எபே.௫.௰௪. மல்.௪.௨. (௩) அதி.௪௯.௬,௨௩. வெளி.௨௧.௨௪. (௪) அதி.௪௯.௰௮,௨௰,௨௧,௨௨. அதி.௬௬.௰௨. (௫) ரோ.௰௧.௨௫. அதி.௬௧.௬. (௬) ஆதி.௨௫.௪. சங்.௭௨.௰. அதி.௬௧.௬. மத்.௨.௰௧. (௭) ஆதி.௨௫.௰௩. ஆகா.௨.௭,௯. (௯) சங்.௭௨.௰. கலா.௪. ௨௬. சக.௰௪.௰௪. எரே.௩.௰௭. அதி.௫௫.௫. (௰) சக.௬.௰௫. அதி.௪௯.௨௩. வெளி.௨௧.௨௪. (௰௧) வெளி.௨௧.௨௫.

௰௨ பொழுதுந்திறந்திருக்கும்.—உன்னைச்சேவிக்கா
தசாதியும் இராச்சியமும், அழிந்துபோகும்; அந்
தச்சாதியாரனைவருஞ் சங்கரிக்கப்படுவார்கள்.—
௰௩ என்னுடையபரிசுத்தஸ்தானத்தைச்சிறப்பிக்கும்
படி லிபாநோனின் மகிமையும், தேவதாருக்க
ளும்,புன்னை,பாய்மரவிருட்சங்கள் உன்னிடத்திற்
சேரும்; நான் என் பாதஸ்தானத்தைச் சிறப்பிப்
௰௪ பேன்.—உன்னைத்துயரப்படுத்தினவர்களுடைய
பிள்ளைகளும் குனிந்து உன்னிடத்தில் வருவார்
கள்; உன்னை அவமதித்தயாவரும் உன்னுள்ளங்
காலருகேபணிந்துஉனக்கு யெகோவாவின்
நகரமென்றும், இஸ்ரவேலின் பரிசுத்தருக்குரிய
௰௫ சீயோனென்றும் பெயரிடுவோர்கள்.—ஒருவரும்
உன் வழியாய்ப் போகாதபடி நீ கைவிடப்பட்
டும், வெறுக்கப்பட்டுமிருந்தாய்,ஆகிலும் நீ நித்தி
யமாட்சிமையும் அநேகந்தலைமுறையாய்மகிழ்ச்
௰௬ சியுமாகும்படி செய்வேன்.—நீ அந்நியதேசத்தா
ரின் பாலைக்குடிப்பாய், இராசாக்களின்ஸ்தனங்
களையுண்பாய்:யெகோவாவாகிய நான்உன்
இரட்சகரென்றும், யாக்கோபின் வல்லவர் உன்
௰௭ மீட்பரென்றும் அறிந்துகொள்வாய்.—நான்பித்
தளைக்குப்பிரதியாகப் பொன்னையும், இரும்புக்
குப் பிரதியாகவெள்ளியையும், மரங்களுக்குப்
பிரதியாகச்செம்பையும், கற்களுக்குப்பிரதியாக
இரும்பையுங்கொண்டுவருவேன்: உன் அதிபதி
கள் சமாதானமும், திறைவாங்குகிறவர்கள் நீதி
௰௮ யுமுள்ளவர்களாகும்படி செய்வேன்.-உன்தேசத்
தில் உபத்திரவமும், உன் எல்லைகளில் சேதமும்
நாசமுமாகிய இவைகளின் சத்தம் இனி ஒருபொ
ழுதும் கேளாது; உன் மதில்களுக்கு இரட்சிப்
பென்றும், உன்வாசல்களுக்குப் புகழ்ச்சியென்
௰௯ றும் பெயரிடுவாய்.-பகலில்உனக்கொளிகொடுக்
கும்படிசூரியன்இனிவேண்டுவதில்லை;சந்திரன்
தன் பிரகாசத்தை இனி உனக்குத்தரவேண்டுவ
தில்லை:யெகோவாவே உன்நித்தியஒளி,உன்
௨௰ தேவனே உன்மகிமை.—உன் சூரியன் இனி
அஸ்தமியான்; உன்சந்திரன் மறையான்: யெ
கோவாவே உனக்கு நித்திய ஒளியாவார்,உன்
௨௧ துக்கத்தின் நாள்கள் ஒழிந்துபோம்,—உன்சனங்
கள் யாவரும் நீதிமான்களாயிருப்பார்கள்: அவர்
கள் சதாகாலமும் தேசத்தைச்சுதந்தரிப்பார்கள்,
என்னைப்புகழும்படிக்கு நான் நட்டகிளைகளும்,
௨௨ என்கைகள்செய்த கிரியையுமாயிருப்பார்கள்.-சி
றியவன் ஆயிரவராவான், அற்பன்வலியசாதியா
வான்: யெகோவாவாகிய நான் ஏற்றகாலத்
தில் இதைத் தீவரமாக நடப்பிப்பேன்.

## ௬௧. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் கிரியையைவருணித்தல்: ௪. அ
தின்பலனைக்காட்டல்:௰. நீதிமான்களின்சௌ
க்கியத்தைத் தெரிவித்தல்.

ஆண்டவராகியயெகோவாவின் ஆவி ௧
என்மேல் இருக்கின்றது;தாழ்ந்தசிந்தையுள்ளவர்
களுக்குச்சுவிசேஷத்தைத்தெரிவிக்கும்பொருட்
டு யெகோவா எனக்கு அபிஷேகஞ்செய்தார்;
நொறுங்கியஇருதயமுள்ளவர்களுடையகாயத்
தைக் கட்டவும், சிறைப்பட்டவர்களுக்குவிடு
தலையையும், கட்டப்பட்டவர்களுக்குக் கட்ட
விழ்ப்பையும் அறிவிக்கவும்,-யெகோவா அங் ௨
கிகரிக்கத்தக்கவருஷத்தையும், நம்முடைய தே
வன் பழிவாங்கும் நாளையும் பிரசித்தப்படுத்த
வும், துயரப்படுகிறயாவருக்கும் ஆறுதலைச்செய்
யவும்,—சீயோனிலேதுயரப்படுகிறவர்களைச்சந் ௩
தோஷப்படுத்தும்படி சாம்பலுக்குப் பிரதியாகச்
சுந்தர முடியையும், துக்கத்துக்குப் பிரதியாக ம
கிழ்ச்சியென்னுந்தைலத்தையும்,மனவிசாரத்துக்
குப் பிரதியாகத் துதியென்னும் வஸ்திரத்தையுங்
கொடுக்கவும் என்னை அனுப்பினார்; அவர்கள்
யெகோவாதமதுமகிமைவிளங்கும்படிவைத்
த சோலையென்றும், நீதியுள்ளவிருட்சங்களென்
றும் பெயர் பெறுவார்கள்.

நெடுங்காலம் பாழானவைகளைக் கட்டுவார் ௪
கள், பூருவகாலத்தில் இடிந்தவைகளை எழுப்பு
வார்கள், தலைமுறை தலைமுறையாய் இடிந்து
கிடந்த வெறுமையான நகரங்களைப் புதுப்பிப்
பார்கள்.—அந்நியர் நின்று உங்கள் மந்தைகளை ௫
மேய்ப்பார்கள், அந்நிய புத்திரர் உங்கள் பண்
ணைக்காரரும், உங்கள் திராட்சத் தோட்டக்கார
ருமாயிருப்பார்கள்.—நீங்களோ, யெகோவா ௬
வின் ஆசாரியரென்னும் பெயர் பெறுவீர்கள்:
உங்களை நமது தேவனுடைய தாசரென்பார்
கள்: நீங்கள் அந்நியதேசத்தாருடைய செல்வத்
தை அனுபவித்து, அவர்களுடைய மகிமையைக்
கொண்டு மேன்மை பாராட்டுவீர்கள்.

உங்கள்வெட்கத்துக்கு இருமடங்குகிடைக் ௭
கும்; நிந்தைக்குப் பிரதியாக அவர்கள் தங்
கள் பாகத்தினாற் சந்தோஷப்படுவார்கள்: ஆத
லால் அவர்கள் தங்கள்தேசத்தில் இருமடங்குப
லனைச்சுதந்தரிப்பார்கள்: அவர்கள் நித்திய சந்
தோஷத்தை அனுபவிப்பார்கள்.—யெகோவா ௮
வாகிய நான் நியாயத்திலேபிரியப்படுகிறேன்,
கொள்ளைப்பொருளின் தகனபலியை வெறுக்கி
றேன்; நான் உண்மையாய் அவர்களுடையகிரி
யைக்குப் பலனைக்கொடுத்து, அவர்களோடும்
நித்திய உடன்படிக்கையைப்பண்ணுவேன்.—
அவர்களுடைய வமிசத்தார் அந்நியசாதியாருக் ௯
குள்ளும்,அவர்களுடையசந்ததியார்சனங்களுக்

(௰௨) சக.௰௪.௰௭,௰௯. மத்.௨௧.௪௪. (௰௩) அதி.௩௫.௨. ௧.நாளா.௨௮.௨. (௰௪) வெளி.௩.௯. எபி.௰௨.௨௨. வெளி.௰௪.௧. (௰௬) அதி.௪௯.௨௩. அதி.௪௩.௨. (௰௮) அதி.௨௬.௧. (௰௯) வெளி.௨௧.௨௩. சக.௨.௫. (௨௰) ஆமோ.௮.௯. (௨௧) அதி.௫௨.௧. வெளி.௨௧.௨௭. மத்.௫.௫. அதி.௬௧.௩. மத்.௰௫.௰௩. யோவா.௰௫.௨. எபே.௨.௰. (௨௨) மத்.௰௩.௩௧,௩௨.—(௬௧. அதி. ௧.) லூக்.௪.௰௮. யோவா.௧.௩௨. சங்.௪௫.௭. எரே.௩௪.௮. (௨) லேவி.௨௫.௯. மல்.௪.௧,௩. ௨.தெச.௧.௬,௮,௯. அதி.௫௭.௰௮. மத்.௫.௪. (௩) அதி.௬௰.௨௧. யோவா.௰௫.௮. (௪) அதி.௪௯.௮. எசேக்.௩௬.௩௩—௩௬. (௫) எபே.௨.௰௨. (௬) யாத்.௰௯.௬. ௧.பேதுரு.௨.௫,௯. வெளி.௧.௬. அதி.௬௰.௫,௰௧,௰௬. (௭) அதி.௪௰.௨. சக.௯.௰௨. (௮) அதி.௧.௰௧,௰௩. அதி.௫௫.௩.

குள்ளும் அறியப்படுவார்கள்: அவர்களைப்பார்க்
கும் யாவரும் அவர்களை யெகோவாவினி
டத்தில் ஆசீர்வாதம்பெற்றசந்ததியென்றுணர்ந்
௰ துகொள்வார்கள்.—நான் யெகோவாவில் மி
கவும்மகிழுவேன், என் ஆத்துமா தேவனிடத்
திற் களிகூருகின்றது; மணவாளன் ஆசாரியன
டைவாயத்தன்னைச் சிங்காரிப்பதுபோலவும், ம
ணவாட்டி ஆபரணங்களினாலே தன்னை அலங்
கரிப்பதுபோலவும் அவர் இரட்சிப்பென்னும்
வஸ்திரங்களை எனக்குத்தரித்து, நீதியென்னும்
௰௧ உத்தரீயத்தினாலென்னைப்போர்த்தார்.—பூமிதன்
முளைகளைத் தோற்றுவிப்பதுபோலவும், தோட்
டம் தன்னில் விதைக்கப்பட்டவைகளை விளை
விப்பதுபோலவும், ஆண்டவராகிய யெ
கோவா சகல சாதியாருக்குமுன்பாக நீதியை
யும், துதியையுந் தோற்றுவிப்பார்.

## ௬௨. அதிகாரம்.

௧. தீர்க்கதரிசி சபை ஸ்திரமாகும்படி பிரார்த்தித்
தல்: ௬. காவலாளரின் கிரியையைக்குறித்தல்.

நான் சீயோனைக்குறித்து மவுனமாயிரேன், அ
தின் நீதி பிரகாசத்தைப்போலவும், அதின் இ
ரட்சிப்பு எரிகிறதீவர்த்தியைப்போலவுந்தோன்
றும்வரைக்கும், யெருஷலேமைக்குறித்து அ
௨ மைதியாயிருக்கமாட்டேன்.—அந்நியதேசத்தார்
உன் நீதியையும்; இராசாக்களனைவரும் உன்ம
கிமைப்பிரகாசத்தையும் காண்பார்கள்: நீ யெ
கோவாவின் வாய்சொல்லும்புதுநாமத்தினால்
௩ அழைக்கப்படுவாய்.—நீ யெகோவாவின்
கையிலுள்ள மகிமைபொருந்திய கிரீடமும்,உன்
தேவனுடைய கரத்திலுள்ள இராசமுடியுமா
௪ வாய்.—நீ இனிக்கைவிடப்பட்டவளென்னப்ப
டாய்;உன்தேசம்பாழானதென்னப்படாது: யெ
கோவா உன்மேற் பிரியப்படுவதினாலும், உன்
தேசம் வாழ்க்கைப்படுவதினாலும் நீ எப்சிபா
பகாரணியென்று பெயர்பெறுவாய், உன் தேசம்
வாழ்க்கைப்பட்டவளென்று பெயர்பெறும்.
௫ வாலிபன் ஒருகன்னிகையை விவாகம்பண்
ணுவதுபோல, உன்குமாரர்கள்உன்னைவிவாகம்
பண்ணுவார்கள்: மணவாளன் மணவாட்டியின்
மேல் மகிழ்ச்சியாயிருப்பதுபோல, உன் தே
௬ வன் உன்மேல் மகிழ்ச்சியாயிருப்பார்.—யெரு
ஷலேமே, நான்உன்மதில்களின்மேலேகாவலா
ளரை ஏற்படுத்தினேன், அவர்கள் பகல்முழுவ
தும், இராமுழுவதும் மவுனமாயிருக்கமாட்டார்
கள்: யெகோவாவைக்குறித்து நினைப்பூட்
டுகிறவர்களே, நீங்கள் அமைதியாயிருக்கவேண்
௭ டாம்;—அவர் யெருஷலேமை ஸ்திரப்படுத்தி,
அதைப் பூமியிலே புகழ்ச்சியாக்கும்வரைக்கும்
௮ அவருக்குமுன் அமைதியாயிராதிருங்கள்.—இ
னி நான்உன் தானியத்தைச் சத்துருக்களுக்கு ஆ
காரமாகக்கொடேன்; நீ பிரயாசத்தினாற்பெற்ற
திராட்சரசத்தை அந்நியபுத்திரர் குடிப்பதில்லை
யென்று யெகோவா தமது வலக்கையைக்
கொண்டும், வல்லமையுள்ள புயத்தைக்கொண்
டும் ஆணையிட்டார்.—அதைச்சேர்த்தவர்கள் அ ௯
தைப்புசித்து யெகோவாவைத் துதிப்பார்
கள்; இதைக்கூட்டிவைத்தவர்கள் என்னுடைய
பரிசுத்தஸ்தானத்தின்பிராகாரங்களில் இதைக்கு
டிப்பார்கள்.
நீங்கள் பிரவேசியுங்கள், வாசல்களின் வழி ௰
யாய்ப்பிரவேசியுங்கள்;சனங்களுக்குவழியைச்
செவ்வைப்பண்ணுங்கள்; உயர்த்துங்கள், வீதி
யை உயர்த்துங்கள்; அதிலுள்ள கற்களைப்பொ
றுக்கி எறியுங்கள்; சனங்களுக்காகக் கொடியை
ஏற்றுங்கள்.-கேளுங்கள், யெகோவா, நீங்கள் ௰௧
சீயோனின்குமாரத்தியைநோக்கி, உன் இரட்ச
கர்வருகிறார்; பார்,அவர்தரும்பலன் அவரோடே
யிருக்கின்றது, பார், அவர்செய்யும் பிரதிபலன்
அவருக்குமுன்பாக வருகிறதென்பதைச் சொல்
லுங்களென்று, பூமியின் கடையெல்லைவரைக்
கும்பிரசித்தப்படுத்துகிறார்.-அவர்கள்அவர்களுக் ௰௨
குப் பரிசுத்த சனங்களென்றும், யெகோவா
வினால் மீட்கப்பட்டவர்களென்றும் பெயரிடு
வார்கள்:நீ,தேடிக்கொள்ளப்பட்டதென்றும்கை
விடப்படாத நகரமென்றும் பெயர் பெறுவாய்.

## ௬௩. அதிகாரம்.

௧. கிறிஸ்துவையும் அவர்சயத்தையும் வருணித்
தல்: ௮. சபையின்மேல் அருள் விளக்கல்: ௰௫.
அவரில் அவர் சனங்கள் அடைக்கலம்புகுதல்.

ஏதோமிலுள்ள போஸ்றாவிலின்று இரத்த வ ௧
ருணவஸ்திரத்தைத் தரித்துவருபவரும், சிறந்த
வஸ்திரத்தினால் சிங்காரிக்கப்பட்டு, மகத்துவம்
பொருந்திய தமது வல்லபத்தில் வருபவருமாகிய
இவர் யாவர்; நீதியை வெளிப்படுத்துகிறவரும்,
இரட்சிக்கவல்லவருமாகிய நானே அவர்.—உம் ௨
முடைய உடை சிவப்பாயிருப்பதேது, உம்மு
டையவஸ்திரங்கள் திராட்சத்தொட்டியைமிதிக்
கிறவனுடைய வஸ்திரங்கள்போலிருக்கிறதே
து.—நான் தனியே திராட்சத்தொட்டியில்மிதித் ௩
தேன்; சனங்களில் ஒருவனும் என்னோடிருக்க
வில்லை: நான் என் கோபத்தினால் அவர்களை மி
தித்தேன், எனது உக்கிரகோபத்தினால் அவர்க
ளை உழக்கினேன்; அதினால் அவர்களுடைய இ
ரத்தம் என்வஸ்திரங்களின்மேல் தெறித்தது, என்
அங்கி முழுவதையுங் கறைப்படுத்திக் கொண்
டேன்.-பழிவாங்கும் நாள்என்சிந்தையில் வைக் ௪
கப்பட்டது,என்சனங்களைமீட்கத்தக்க வருஷம்
வந்துவிட்டது.—நான் பார்த்தேன், துணைசெய் ௫
வார் ஒருவருமில்லை; தாங்குவார்ஒருவருமில்லை
யென்று கண்டு ஆச்சரியப்பட்டேன்: அப்பொ

(௰) அப௬.௩.௰௮. அதி.௪௯.௰௮. வெளி.௨௧.௨. (௰௧) சங்.௭௨.௩. அதி.௬௰.௰௮.—(௬௨. அதி. ௨.) அதி.௬௰.௩. (௩) ௪௧.௯.௰௬. (௪) ஓசி.௧.௰. ௧.பேதுரு.௨.௰. அதி.௪௯.௰௪. அதி.௫௪.௧. (௫) அதி.௬௫.௰௯. (௬) எசேக்.௩.௰௭. (௭) அதி.௯௧.௰௧. செப்.௩.௨௰. (௮) உபா.௨௮.௩௧,. எரே.௫.௰௭. (௰) அதி.௪௰.௩. (௰௧) ௪௧.௯.௯. மத்.௨௧.௫. யோவா.௰௨.௰௪. வெளி.௨௨.௰௨.—(௬௩. அதி. ௨.) வெளி.௰௯.௰௩. (௩) புல.௧.௰௫. வெளி.௰௪.௰௯,௨௰. (௪) அதி.௩௪.௮. (௫) அதி.௪௧.௨௮. யோவா.௰௬.௩௨. சங்.௯௮.௧. அதி.௫௯.௰௬.

ழுது என் புயமே எனக்கு இரட்சிப்பைவருவித்
தது; என் அன்பினூக்கமே என்னைத்தாங்கிற்று.—
௬ நான் என்கோபத்தினாற் சனங்களை மிதித்து,என
து உக்கிரகோபத்தினால் அவர்களை வெறியாக்கி,
அவர்களுடைய இரத்தத்தைத் தரையிலே சொ
ரியப்பண்ணுவேன்.
௭ யெகோவா நமக்கருளிய எல்லாவற்றின்ப
டிக்கும், தமது இரக்கங்களுக்கும் தமதுமிகுந்த
தயவுகளுக்குமேற்கத் தாம் இஸ்ரவேல்வமிசத்தா
ருக்கு அனுக்கிரகித்தமகாநன்மையின்படிக்கும்,
நான் யெகோவாவின் தயவுகளையும் யெ
கோவாவுக்குரிய துதிகளையும் பிரசித்தம்
௮ பண்ணுவேன்.—அவர், நிச்சயமாய் இவர்கள்
என்னுடையசனங்கள், பொய் சொல்லாதசந்த
தியாரென்றுசொல்லி, அவர்களுக்கு இரட்சகரா
௯ ஞர்.—அவர்களுக்குண்டான எல்லாத்துக்கத்தி
லும் அவரும் துக்கப்பட்டார், அவருடைய சந்
நிதானத்திலுள்ள தூதனவர் அவர்களை இரட்
சித்தார்: அவர்தமது அன்பினாலும்தயையினாலும்
அவர்களைமீட்டருளினர்;பூருவகாலத்தின்சமஸ்
த நாள்களிலும் அவர்களைத் தூக்கிச் சுமந்தார்.
௰ ஆகிலும் அவர்கள்கட்டளைமீறி, அவருடைய
பரிசுத்த ஆவியைவிசனப்படுத்தினர்கள்: அதி
னால் அவர்அவர்களுக்குச்சத்துருவாகி, அவர்க
௰௧ ளுக்குவிரோதமாயுத்தஞ்செய்தார்.—அப்பொழு
து அவர் பூருவநாள்களையும், மோசேயையும், தம்
முடைய சனங்களையும் நினைந்து, அவர்களையும்
தமது மந்தையின் மேய்ப்பரையும் சமுத்திரத்தி
னின்றுகொண்டுவந்தவர் எங்கே; தமக்கு நித்திய
புகழ்ச்சியுண்டாகத் தம்முடைய பரிசுத்த ஆவி
௰௨ யை அவர்களுள்ளத்தில் பிரவேசிப்பித்து,—மோ
சேயின் வலப்பக்கத்தில் தமது மகிமையுள்ளகரத்
தினால் அவர்களை நடத்தி, அவர்களுக்குமுன்பா
௰௩ கச் சலத்தைப்பிரித்தார்.—ஒரு குதிரை சமமான
பூமியிலே நடக்கிறதுபோல, அவர்கள் இடறு
மல் நடக்கத்தக்கதாக ஆழியின்வழியாய் அவர்க
௰௪ ளை நடத்தி,—மிருகசீவன் தாழ்ந்தபூமியில் இறங்
குகிறதுபோல, யெகோவாவின் ஆவி அவர்
களை இளைப்பாறப்பண்ணிற்று: இப்படியே உம
து நாமத்தை மகிமைப்படுத்த,உம்முடையசனங்
களை நடத்தினீர்.
௰௫ நீர்வானத்தினின்று நோக்கியருளும், பரிசுத்
தமும் மகிமையுமுள்ள உமது வாசஸ்தானத்தி
னின்றுபாரும்:உம்முடையஅன்பினூக்கமும்,உ
மது மகாபராக்கிரமமும் எங்கே; என்மேல்வைத்
த உம்முடைய மன உருக்கமும் இரக்கமும்நின்
௰௬ றுவிட்டனவா.—நீர் எங்கள்பிதா, இதுநிச்சயம்;
ஆபிரகாம் எங்களைப்பாராமலும்,இஸ்ரவேல் எங்
களை அங்கிகரியாமலுமிருந்தும், யெகோவா
வாகிய நீரே எங்கள் பிதா, எங்கள் மீட்பர்; உ
மது நாமமே நித்தியம்.
யெகோவாவே, எங்களை உமதுவழிகளை ௰௭
விட்டுவழுவும்படிசெய்ததேது, நாங்கள் உமக்
குப் பயப்படாதபடி நீர் எங்கள் இருதயத்தைக்
கடினப்படுத்தினதேது; உமக்குரிய சுதந்தரத்தி
லுள்ள கோத்திரத்தாராகிய உமது தாசர்நிமித்தம்
திரும்பிவாரும்.—பரிசுத்தமுள்ள உமது சனங் ௰௮
கள் அற்பகாலமாத்திரம் அதைச் சுதந்தரித்தார்
கள்: எங்கள்சத்துருக்கள் உம்முடைய பரிசுத்த
ஸ்தானத்தை மிதிக்கிறார்கள்.—நாங்களே உம் ௰௯
முடையவர்கள்: ஒருபொழுதும் நீர் அவர்க
ளை ஆளவில்லை; அவர்கள் உமது நாமந்தரிக்கப்
படவுமில்லை.

## ௬௪. அதிகாரம்.

### சபை பிரார்த்தித்துப் புலம்பல்.

பருவதங்கள் உமது சமுகத்தில் உருகும்படி, ௧
வானங்களைக்கிழித்து இறங்கிவருவீராக.—உருக் ௨
கும் அக்கினிபோலவும், சலத்தைக்கொதிக்கப்
பண்ணும்நெருப்புப்போலவும் புறச்சாதியாருஉ
மது சமுகத்தில் நடுங்கும்பொருட்டு, உமதுசத்து
ருக்களுக்கு உமது நாமத்தைப் பிரசித்தப்படுத்
தும்.—நாங்கள் எதிர்பாராத பயங்கரமானகிரி ௩
யைகளை நீர்செய்தபொழுது, நீர்இறங்க உமது ச
முகத்திலே மலைகள்உருகின.—உமமைக் காத்தி ௪
ருப்பவர்கள் நிமித்தம் உம்மையன்றி இப்படிச்
செய்யும் வேறொரு தேவனை ஆதிமுதல் ஒருவ
ரும் கண்ணினாற்காணவுமில்லை, காதினாற்கேட்
கவுமில்லை, உணரவுமில்லை.—நாங்களோ பா ௫
வஞ்செய்ததினால்நீர்மிகவுங்கோபங்கொண்டீர்:
சந்தோஷப்பட்டு நீதியைச்செய்கிறவர்களையும்,
உம்முடையவழிகளில் உம்மை நினைக்கிறவர்க
ளையுஞ்சந்திக்கிறீர்: அவைகள் என்றுமுள்ளவை
கள், நாங்களிரட்சிக்கப்படுவோம்.—நாங்களனை ௬
வரும் அசுசிப்பட்ட வஸ்துவைப்போலிருக்கி
றோம்,எங்கள்நீதிகளெல்லாம் அழுக்காடைபோ
லிருக்கின்றன; நாங்களனைவரும் இலைபோல
வாடுகிறோம்; எங்கள்பாவங்கள்காற்றைப்போல
எங்களை அடித்துக்கொண்டுபோய்விடுகின்றன.-
ஒருவரும் உமதுநாமத்தைப் பிரார்த்தனைபண்ணு ௭
வதில்லை, உம்மைச்சார்ந்துகொள்ளும்படி ஒருவ
ரும் முயலுவதில்லை: ஆதலால் நீர் உம்முடைய
முகத்தை எங்களுக்கு மறைத்து, எங்கள் அக்கிர
மத்தினால் எங்களைக் கரையப்பண்ணினீர்.—யெ ௮
கோவாவே, நீர் எங்கள்பிதா; நாங்கள் களி

(௬) வெளி.௰௯.௰௫. (௯) நியா.௰.௰௬. யாத்.௰௪.௰௯. யாத்.௩௩.௰௪. மல்.௩.௧. அப்.௰௨.௰௧. உபா.௭.௭,௮. யாத்.௰௯.௪. (௰) யாத்.௰௫.௨௪. அப்.௭.௫௧. எபே.௪.௩௰. யாத்.௨௩.௨௧. (௰௧) யாத்.௰௪.௩௰. எரே.௨.௫. எண்.௰௧.௰௭,௨௫. நிகி.௯.௨௰. தானி.௪.௮. ஆகா.௨.௫. (௰௨) யாத்.௰௫.௭. யாத்.௰௪.௨௧. யோசு.௩.௰௬. (௰௪) ௨.சாமு.௭.௨௩. (௰௫) உபா.௨௬.௰௫. எரே.௩௧.௨௰. ஓசி.௰௧.௮. (௰௬) உபா.௩௨.௬. யோபு.௰௪.௨௧. பிர.௯.௫.(௰௭)அதி.௬.௰. யோவா.௰௨.௪௰. ரோ.௯.௰௮. எண்.௰.௩௬. சங்.௯௰.௰௩. (௰௮) தானி.௮.௨௪. (௰௯) அதி.௬௫.௧.—(௬௪. அதி. ௧.) நியா.௫.௫. மீகா.௧.௪.(௩)யாத்.௩௪.௰. நியா.௫.௪,௫. சங்.௬௮.௮. அபகூ.௩.௩,௬. (௪) சங்.௩௧.௰௯. ௧.கொரி.௨.௯. (௫) அப்.௰.௩௫. மல்.௩.௬. (௬) பிலி.௩.௯. சங்.௯௰.௫,௬. (௭) ஓசி.௭.௭. யோபு.௮.௪. (௮) அதி.௬௩.௰௬. அதி.௨௯.௰௬. எரே.௰௮.௬. ரோ.௯.௨௰,௨௧. எபே.௨.௰.

மண், நீர் எங்களை உருவாக்குகிறவர்; நாங்களனை
வரும் உமது கையின் கிரியை.
௯ யெகோவாவே, அதிக கோபங்கொள்ளா
திரும், என்றும் எங்கள் பாவத்தைச் சிந்தையில்
வையாதிரும்: பாரும், நாங்களனைவரும் உம்
முடைய சனங்கள், எங்களைக் கடாட்சித்தருளு
மென்று உம்மை வேண்டிக்கொள்ளுகிறோம்.—
௰ உம்முடைய பரிசுத்த நகரங்கள் வனமாயின, சீ
யோன் வனமாயிற்று, யெருஷலேமும் பாழாயிற்
௰௧ று.—எங்கள் முன்னோர் உம்மைக் கீர்த்தனம்பண்
ணின பரிசுத்தமும், சௌந்தரியமுமுள்ள எங்
கள் ஆலயம் அக்கினியினாலே தகிக்கப்பட்டது:
எங்கள் இனியபொருள்களெல்லாம் அழிந்தன.—
௰௨ யெகோவாவே, இவைகளைக்கண்டும் அடக்
கிக்கொள்வீரா; மவுனமாகி, அதிகமாய் எங்களைத்
துக்கப்படுத்தப்பார்க்கிறீரா.

## ௬௫. அதிகாரம்.

௧. அந்நியதேசத்தாரை அங்கிகரித்து யூதேயரை அங்கிகரியாமல்விடல்: ௮. எஞ்சுஞ்சனங்களை இரட்சித்தல்: ௰௧. துன்மார்க்கரைத் தண்டித்தல்: ௰௬. சன்மார்க்கரை ஆசீர்வதித்தல்.

என்னைக்குறித்துக் கேளாதவர்களால் தேடப்ப
ட்டேன்; என்னைத்தேடாதவர்களுக்குக் காணப்
பட்டேன்: என் நாமந்தரியாதசாதியாரிடத்தில்,
என்னைப் பாருங்கள், என்னைப் பாருங்களென்
௨ றேன்.—தங்கள்சுயஎண்ணங்களுக்கேற்கத்துன்
னெறியில் நடந்துவந்த முருட்டுச்சனங்களுக்கு
நேரேநாள்முழுவதும் என்கைகளைவிரித்தேன்.—
௩ அந்தச்சனங்கள்நித்தமும் என்சமுகத்தில் என்
னைக் கோபப்படுத்துகிறார்கள்; அவர்கள் தோட்
டங்களிலே பலியிட்டு, செங்கற்களின்மேல் தூ
௪ பங்காட்டுகிறார்கள்.—அவர்கள் பிரேதக்குழிக
ளிலிருந்து, சமாதிகளில் இராத்தங்கி, பன்றியி
றைச்சியைத்தின்று, தங்கள் பாத்திரங்களில் அ
ரோசியமான ஆணத்தைவைத்துக்கொள்ளுகிறார்
௫ கள்.—நீ உன்மட்டில் நின்றுகொள், என்சமீபத்
தில்வராதே; உன்னிலும் நான் சுத்தனாயிருக்கி
றேனென்று சொல்லுகிறார்கள். அவர்கள்என்னு
டையநாசியிலே புகையும், நாள்முழுவதும் எரி
௬ கிற அக்கினியுமாயிருக்கிறார்கள்.—பாருங்கள்,
அது எனக்குமுன்பாக எழுதியிருக்கின்றது:
நான்மவுனமாயிருக்கமாட்டேன், அவர்கள்மடி
௭ யிலேபிரதிபலன்அளிப்பேன்.—உங்கள்பாவங்
களுக்கும், மலைகளில் தூபங்காட்டிக் குன்றுக
ளின்மேல் என்னை அவமதித்துவந்த உங்கள்பி
தாக்களின் பாவங்களுக்கும் ஏற்க, உங்கள்மடி
யிலே பிரதிபலன்அளிப்பேன்: அவர்களுடைய
முந்தினசெய்கைக்கேற்கப் பலனை அளந்து த
ருவேனென்று யெகோவா சொல்லுகிறார்.
ஒருதிராட்சக்குலையில்ரசங்காணப்படும்பொ ௮
ழுது அதிலே நலமுண்டு, அதை நாசப்படுத்தா
தேயென்று சொல்வதுபோல, அவர்களை முற்
றும்நாசப்படுத்தாதபடி, என்தாசரினிமித்தம் அப்
படியேசெய்வேன்.—நான்யாக்கோபினின்று ஒ ௯
ருவமிசத்தையும், யூதாவினின்று என்மலைகளைச்
சுதந்தரிப்பவனையும் வரப்பண்ணுவேன்: நான்
தெரிந்துகொண்டவர்கள் அதைச்சுதந்தரிப்பார்
கள், என்தாசர் அங்கேவாசம்பண்ணுவார்கள்.—
என்னைத்தேடுகிற என்சனங்கள்நிமித்தம்ஷாரோ ௰
ன் மந்தையின் தொழுவமாகவும், அக்கோரென்
னுந் தாழ்ந்தபூமிமாட்டுக்கிடை கட்டுமிடமாகவு
ம்இருக்குமென்று யெகோவாசொல்லுகிறார்.
நீங்களோ, யெகோவாவைவிட்டுவிட்டீர் ௰௧
கள், என் பரிசுத்த மலையை மறந்துவிட்டீர்கள்,
நீங்கள் காத்தினிமித்தம் போசனபீடத்தை ஆயத்
தம்பண்ணினீர்கள், மேனிக்குப் பானபலியை
இட்டீர்கள்.—ஆதலால் நான் உங்களைக்கட்கத் ௰௨
துக்கென்று எண்ணிக்கொடுப்பேன், நீங்கள் அ
னைவரும் சங்காரத்துக்குக் குனிவீர்கள்: நான்
கூப்பிட்டபொழுது நீங்கள் உத்தரங்கொடுக்க
வில்லை; நான்பேசினபொழுது நீங்கள் கேட்க
வில்லை; என் பார்வைக்குத் தீங்கானதைச்செய்
து, எனக்குப்பிரியமல்லாததைத் தெரிந்துகொண்
டீர்கள்.-ஆதலால் தேவனாகிய யெகோவா, ௰௩
பாருங்கள், என்தாசர் புசிப்பார்கள், நீங்களோ
பசியுள்ளவர்களாவீர்கள்: பாருங்கள், என்தாசர்
குடிப்பார்கள், நீங்களோ தாகமாயிருப்பீர்கள்:
பாருங்கள், என்தாசர் சந்தோஷப்படுவார்கள்,
நீங்களோ வெட்கப்படுவீர்கள்.—பாருங்கள், என் ௰௪
தாசர் மனமகிழ்ச்சியினாலே கெம்பீரிப்பார்கள்,
நீங்களோமனவிசனத்தினால் அலறி, மனக்கிலே
சத்தினால் புலம்புவீர்கள்.—நான்தெரிந்துகொண் ௰௫
டசனங்களுக்கு, நீங்கள் உங்கள் நாமத்தைச்சா
பமொழியாகவைத்துப்போவீர்கள்: ஆண்டவ
ராகிய யெகோவா உன்னைக்கொலைசெய்
வார், தமதுதாசருக்குவேறுநாமத்தைத்தரிப்பார்.—
பின்பு பூருவகாலத்தின்துக்கம்மறக்கப்படும், அ ௰௬
வைகள் என்பார்வைக்கு மறைந்துபோய்விடும்;
பூமியிலேதன்னைவாழ்த்துகிறவன் சத்திய தேவ
னைக்கொண்டு தன்னை வாழ்த்துவான்; பூமியில்
ஆணையிடுகிறவன் சத்திய தேவனைக்கொண்டு
ஆணையிடுவானென்றுசொல்லுகிறார்.
பாருங்கள், நான்புதியவானங்களையும், புதிய ௰௭
பூமியையும் சிருஷ்டிக்கிறேன்: முந்தினவைகள்
நினைவிலிருப்பதுமில்லை, சிந்தையிலே வருவது
மில்லை.—பாருங்கள், நான் யெருஷலேமை ஆ ௰௮

(௯) சங். ௭௯.௰௩. (௰) சங். ௭௯.௧. (௰௧) ௨. இரா. ௨௫.௯. ௨. நாளா. ௩௬.௰௯. சங். ௭௪.௭. எசேக். ௨௪.௨௧,௨௫ (௰௨) அதி. ௪௨.௰௪. சங். ௮௩.௧.—(௬௫. அதி. ௧.) ரோ. ௯.௨௪,௨௫,௨௬,௩௰. எபே. ௨.௰௨,௰௩. (௨) ரோ. ௰.௨௧. (௩) ௨ பா. ௩௨.௨௧. (௪) ௨ பா. ௰௮.௰௧. (௫) மத். ௯.௰௧. யூதா. ௰௯. ௨ பா. ௩௨.௩௪. மல். ௩.௰௬. (௬) எரே. ௰௬.௰௮. (௭) யாத். ௨௰.௫. எசேக். ௰௮.௬. (௮) யோவே. ௨.௰௪. (௯) மத். ௨௪.௨௨. ரோ. ௰௧.௫,௭. (௰) யோசு. ௭.௨௪,௨௬. ஓசி. ௨.௰௫. (௰௧) எசேக். ௨௩.௪௧. ௧ கொரி. ௰.௨௧. (௰௨) ௨. நாளா. ௩௬.௰௫,௰௬. நீதி. ௧.௨௪,. எரே. ௭.௰௩. ௪௧.௭.௭. மத். ௨௧. ௩௪—௪௩. (௰௪) மத். ௮.௰௨. லூக். ௰௩.௨௮. (௰௫) எரே. ௨௯.௨௨. ௪௧.௮.௰௩. அப். ௰௧.௨௬. (௰௬) எரே. ௪.௨. ௨ பா. ௩.௰௩. சங். ௬௩.௰௧. செப். ௧.௫. (௰௭) அதி. ௫௧.௰௬. ௨ பேது. ௩.௰௩. வெளி. ௨௧.௧.

னர்த்தமாகவும், அதிலுள்ள சனங்களைச்சந்தோஷ
மாகவுஞ் சிருஷ்டிக்கிறேன்: நான் சிருஷ்டித்த
தைக்குறித்து நீங்கள் என்றும் மகிழ்ந்து சந்தோ
௰௯ ஷப்படுங்கள்.–நான் யெருஷலேமைக்குறித்துச்
சந்தோஷப்படுவேன், என் சனங்களின்மேல் ம
கிழ்ச்சியாயிருப்பேன்: அதில் அழுகையின் சத்த
முெம்,அலறுதலின் சத்தமும்இனி ஒருபொழுதுங்
௨௰ கேட்கப்படுவதில்லை.–அவ்விடத்தில் இனி அற்
பாயுளுள்ள பாலகனும், தன் நாட்களைப் பூரண
மாகப் பெருத விருத்தனுமிரார்கள்: நூறுவயது
பெற்று மரிக்கிறவன் பாலகன்போல் எண்ணப்
படுவான், நூறுவயதுபெற்றபாவியோ சபிக்கப்
௨௧ படுவான்.—அவர்கள் வீடுகளைக்கட்டி அவைக
ளிலே வாசம்பண்ணுவார்கள்; திராட்சத்தோட்
டங்களைநாட்டி அவைகளின்பலனைப்புசிப்பார்
௨௨ கள்.—அவர்கள் கட்டிய வீட்டில் வேறொருவ
னும் வசியான்; அவர்கள் நட்ட திராட்சக்கொ
டியின் பலனை வேறொருவனும் புசியான்: ஒரு
விருட்சத்தின் நாட்களைப்போலவே என் சனங்
களின் நாட்களுமிருக்கும்,நான்தெரிந்துகொண்
டவர்கள் தங்கள் கைகளின் கிரியைகளை நெடு
௨௩ நாள் அனுபவிப்பார்கள்.–அவர்கள் வீணாகப்பிர
யாசப்படுவதில்லை,நாசத்துக்காகப் பிரசவிப்பது
மில்லை; அவர்களும் அவர்கள்சந்ததியாரும் யெ
கோவாவின் வரப்பிரசாதம்பெற்ற வமிசத்தா
௨௪ ராயிருப்பார்கள்.–அவர்கள் பிரார்த்தனைபண்ணு
முன் நான்உத்தரங்கொடுப்பேன்;அவர்கள்பேசி
௨௫ னமாத்திரத்தில் நான் கேட்பேன்.—சோனாயும்
ஆட்டுக்குட்டியும் ஏகமாய் மேயும், சிங்கம் மாட்
டைப்போலவைக்கோலைத்தின்னும்: தூள் சருப்
பத்துக்கு இரையாகும். என் பரிசுத்த மலையில்அ
வைகள் தீங்குசெய்வதுமில்லை,கேடுண்டாக்குவ
துமில்லையென்று யெகோவா சொல்லுகிறார்.

## ௬௬. அதிகாரம்.

௧. யெகோவா தயாபரரெனக்காட்டல்: ௩. க
படமுள்ளவர்களைக்கண்டித்தல்: ௫. தாழ்ந்தசிந்
தையுள்ளவர்கள்ஆறுதலடைதல்:௭.சபைவருத்
தித்துவாழ்தல்: ௰௫. துன்மார்க்கர்நாசமடைதல்.

வானம் என் சிங்காசனம், பூமி என்பாதபீடம்:
நீங்கள் எனக்காகக் கட்டினவீடெங்கே; நானி
ளைப்பாறும் ஸ்தானம் எங்கேயென்று யெகோ
௨ வா சொல்லுகிறார்.—என்கரமே இவைகளெல்
லாவற்றையுஞ்சிருஷ்டித்தது,இவைகளெல்லாம்
இருந்தன: தாழ்ந்ததும் நொறுங்கியதுமான ஆவி
யையுடையவனாகி, என்வாக்கைக்குறித்து நடுங்
௩ குகிறவனையே நோக்கிப் பார்ப்பேன்.—மாட்
டைக்கொல்லுகிறவன் மனுஷனைக்கொல்லுகிற
வனாகவும், ஆட்டுக்குட்டியைப் பலியிடுகிறவன்
நாயின்கழுத்தை அறுக்கிறவனாகவும், நைவேத்தி
யம் படைக்கிறவன் பன்றியின் இரத்தத்தைப்ப
டைக்கிறவனாகவும், தூபங்காட்டுகிறவன் விக்

கிரகத்தை வாழ்த்துகிறவனாகவும் இருக்கிறான். இ
வர்கள் தங்கள் வழிகளைத் தெரிந்துகொள்ளுகி
றார்கள், இவர்களுடைய ஆத்துமாக்கள் தங்கள்
அரோசியமானவைகளிலே திருத்தியாயிருக்கின்
றன.—நான் கூப்பிட்டபொழுது அவர்கள் உத் ௪
தரந்தரவில்லையே; நான்பேசினபொழுது அவர்
கள் கேட்கவில்லையே: அவர்கள் என்பார்வைக்
குத் தீங்கானதைச் செய்து, எனக்குப்பிரியமில்
லாததைத் தெரிந்துகொண்டார்கள்: ஆகையால்
நான் அவர்களுக்குத்தக்க தீமைகளைத்தெரிந்து
கொண்டு, அவர்களைப் பயப்படுத்துங்காரியங்க
ளை அவர்களுக்குநேரிடும்படி பண்ணுவேனென்
று யெகோவா சொல்லுகிறார்.

யெகோவாவின் வாக்குக்கு, நடுநடுங்கு ௫
கிறவர்களாகிய நீங்கள் அவர் வாக்குக்குச் செவி
கொடுங்கள்; என் நாமத்தினிமித்தம் உங்களை
வெறுத்து, உங்களைத்துரத்தின உங்கள் சகோத
ரர், யெகோவாவின் மகிமை விளங்குவதா
கவென்றார்கள்: ஆதலால் அவர் உங்கள் மகிழ்ச்
சிக்காகப் பிரத்தியட்சமாவார், அவர்களோ இ
லச்சையடைவார்கள்.—நகரத்தினின்று கலகத் ௬
தின்சத்தமும், தேவாலயத்தினின்றுஒருசத்தமும்
கேட்கிறேன்; அது தமது சத்துருக்களுக்குப் பிர
திபலன் செய்யும் யெகோவாவின் சத்தமே.-
வேதனைப்படுமுன் பிரசவிக்கிறாள்; கருப்பவே ௭
தனைவருமுன் புத்திரனைப்பெற்றாள்.-இப்படிப் ௮
பட்டதைக் கேள்விப்பட்டவன் யாவன், இப்ப
டிப்பட்டவைகளைக் கண்டவன் யாவன், ஒரு
தேசம் ஒருதினத்தில் உற்பத்தியாகுமா, ஒருதேச
சனம் ஒருமிக்கப்பிறக்குமா; கருப்பவேதனைப்
பட்டமாத்திரத்திலே சீயோன் தன்னுடைய சந்
ததியைப்பிரசவித்தாள்.-கருப்பந்தரிப்பித்த நான் ௯
பிரசவிப்பிக்க மாட்டேனோவென்று யெகோ
வா சொல்லுகிறார்: பிரசவிக்கச்செய்கிற நான்
பிரசவத்தைத் தடுப்பேனோவென்று உன் தே
வன் சொல்லுகிறார்.—யெருஷலேமைநேசிப்ப ௰
வர்களாகிய நீங்களெல்லாரும் அவளோடே சந்
தோஷப்படுங்கள், அவளைக்குறித்துக்களிகூருங்
கள்: அவள்நிமித்தந் துக்கிப்பவர்களாகிய நீங்க
ளனைவரும் மிகவுஞ் சந்தோஷப்படுங்கள்.—
நீங்கள் ஆறுதல்தரும் அவளுடைய ஸ்தனங்களி ௰௧
னாலே திருத்தியாய், பாலையுண்டு, அவளுடை
ய மகிமையின் பூரணத்தினாலே மகிழ்ச்சியாயி
ருப்பீர்கள்.—பாருங்கள், நான் சமாதானத்தை ௰௨
ஒருநதியைப்போலவும், அந்நியதேசத்தின்செல்
வத்தைப்பாயும் வெள்ளத்தைப்போலவும் அவ
ளுக்குப்பிரவாகிக்கச்செய்வேன்: அப்பொழுது
நீங்கள் முலைப்பால் குடிப்பீர்கள், அவளுடைய
இடையிலே தாங்கப்படுவீர்கள், முழங்காலில்
வைத்துத்தாலாட்டப்படுவீர்களென்று யெகோ
வா சொல்லுகிறார்.—மாதா ஒருத்தி தன் புத்தி ௰௩

(௰௯) அதி.௬௨.௫. வெளி.௭.௰௭. (௨௰) பிர.௮.௰௨. (௨௧) லேவி.௨௬.௰௬. உபா.௨௮.௩௰. ஆமோ.௯.௰௪. (௨௩) உபா.௨௮.௪௧. ஓசி.௯.௰௨. (௨௪) சங்.௩௨.௫. தானி.௯.௨௧. (௨௫) அதி.௰௧.௬,௭,௯. ஆதி.௩.௰௪.—(௬௬.அதி.௧.) ௧.இரா.௮.௨௭. ௨.நாளா.௬,௰௮. மத்.௫.௩௪,௩௫. அப்.௭.௪௮,௪௯. அப்.௰௭.௨௪.(௨)எஸ்றா.௯.௪. நீதி.௨௮.௰௪. (௩) உபா.௨௩.௰௮. (௪) நீதி.௧.௨௪. எரே.௭.௰௩. (௫) ௨.தெச.௧.௰. தீத்.௨.௰௨. (௰௨) அதி.௪௮.௰௮.

ரனைத் தேற்றுவதுபோல, நான் உங்களைத்தேற்
றுவேன்; நீங்கள் யெரூஷலேமிலே தேற்றப்ப
௰௪ டுவீர்கள்.—நீங்கள் அதைக் காணும்பொழுது
உங்கள் இருதயம் பூரிக்கும், உங்கள் எலும்புகள்
பசிய முளையைப்போலச்செழிக்கும்: அப்பொ
ழுது யெகோவாவின் தாசரிடத்தில் அவரு
டையகரமும், அவருடையசத்துருக்களிடத்தில்
௰௫ அவர் சினமும் அறியப்படும்.—பாருங்கள், எரி
கிற அக்கினியோடே தமது குரோதத்தையும்,
மூளும் அக்கினியோடே தமது கண்டனையை
யுஞ் செலுத்தும்படி, யெகோவா அக்கினிப்
பிரகாசத்தோடும் வருவார்; அவருடைய இரதங்
௰௬ கள் சூறைக்காற்றுப்போலிருக்கும்.—யெகோ
வா அக்கினியினாலும், தமது கட்கத்தினாலும் ச
மஸ்தபிராணிகளொடும்போராடுவார்: யெகோ
வாவினாற் கொல்லப்பட்டவர்கள் அநேகர்.—
௰௭ பன்றியிறைச்சியையும், அரோசியமானதையும்,
எலியையுந்தின்று, தோப்புகளில் வரிசையாய்த்
தங்களைப் பரிசுத்தமாக்கிச் சுத்திகரிப்பவர்கள்
ஏகமாய்நாசமடைவார்களென்று யெகோவா
௰௮ சொல்லுகிறார்.—அவர்களுடைய கிரியைகளை
யும், நினைவுகளையும் அறிந்திருக்கிறேன்:
நான் சமஸ்ததேசத்தாரையும், பாஷைக்காரரை
யும் கூட்டிச்சேர்க்கிறதற்கேற்றகாலம்வரும்; அ
வர்கள்வந்து என்மகிமையைத் தரிசிப்பார்கள்.—
௰௯ நான் அவர்களுக்கு ஒரு அடையாளத்தைக்கொ
டுப்பேன், அவர்களில் மீந்திருப்பவர்களை என்
கீர்த்தியைக்கேளாமலும், என்மகிமையைக்காணா
மலும் தர்ஷீஸுக்கும், வில்வீரராகிய பூலுக்கும்,
லூத்துக்கும், தூரமாயுள்ள தீவாராகிய தூபாலுக்
கும், யாவானுக்கும் அனுப்புவேன்; அவர்கள்
அந்நியதேசத்தாருக்குள் என் மகிமையைப் பிர
சித்தப் படுத்துவார்கள்.—அவர்கள் இஸரவேல் ௨௰
சந்ததியார் பரிசுத்தமான பாத்திரத்தில் நைவேத்
தியத்தை யெகோவாவின் ஆலயத்துக்குக்
கொண்டுவருகிறதுபோலக் குதிரைகளின் மே
லும்,* இரதங்களின்மேலும், தோளாக்களின்மே
லும், கோவேறுகழுதைகளின்மேலும், ஒட்டகங்
களின்மேலும் சருவ தேசத்தாரினின்றும் என்ப
ரிசுத்த மலையைச்சேர்ந்த யெரூஷலேமில் யெ
கோவாவுக்கு நைவேத்தியமாக, உங்கள் ச
கோதரர்எல்லாரையுங்கொண்டுவருவார்களென்
று சொல்லுகிறார்கள்.—அவர்களிலும் சிலரை ௨௧
ஆசாரியர்களாகவும், லேவியராகவுந் தெரிந்து
கொள்வேனென்று யெகோவா சொல்லுகி
றார்.—நான் சிருஷ்டிக்கும் புதுவானங்களும், ௨௨
புதுப்பூமியும் என்சந்நிதியில் நித்தமும் நிற்பது
போல, உங்கள்வமிசமும் உங்கள்நாமமும் நிற்
குமென்று யெகோவா சொல்லுகிறார்.—அ ௨௩
மாவாசிதோறும், ஓய்வுநாள்தோறும் சகல பிரா
ணிகளும் என்சந்நிதியில் ஆராதனைசெய்யவரு
வார்கள்.—இவர்கள்புறப்பட்டு என்கட்டளையை ௨௪
மீறின மனுஷருடைய பிரேதங்களைப்பார்ப்பார்
கள்: இவர்களுடைய புழுச்சாவாது, இவர்களு
டைய அக்கினி அவியாது; இவர்கள்சமஸ்தபிரா
ணிகளுக்கும் அரோசியமாயிருப்பார்களென்று
யெகோவா சொல்லுகிறார்.

(௰௫) ௨.தெச.௧.௮. (௰௬) அதி.௨௭.௧. (௰௭) அதி.௬௫.௩,௪. (௰௯) லூக்.௨.௩௫. மல்.௧.௰௧ (௨௰) ரோ.௰௫.௰௬. (௨௧) யாத்.௰௯.௬. ௧.பேதுரு.௨.௯. வெளி.௧.௬. (௨௨) ௨.பேதுரு.௩.௰௩. வெளி.௨௧.௧. (௨௩) சக.௰௪.௰௬. (௨௪) மாற்.௯.௪௪,௪௬,௪௮.

# எரேமியா தீர்க்கதரிசியின்புத்தகம்.

## க. அதிகாரம்.

க. எரேமியாவின் காலத்தைக்குறித்தல்: ச. எரேமியா தீர்க்கதரிசியாக ஏற்படல்: யக. அவன் வாதுமை விருட்சத்தையும் பானையையுந் தரிசனத்தில்கண்டபின்பு யெகோவா அவனைத் தைரியப்படுத்தல்: யரு. யூதாவுக்குப் பயங்கர செய்தியைத் தெரிவித்தல்: யஎ. தேவன் அவனைத்தேற்றல்.

பென்யாமீன்தேசத்திலுள்ள அனதோத் ஊரில்
வசித்த ஆசாரியர்களில் ஒருவனாகிய இல்கியா
வின் புத்திரனான எரேமியாவினுடைய வாக்கி
உ யங்கள்:-ஆமோனின் புத்திரனும யூதாதேசத்திரா
சாவுமாகியயோஷியாவின் நாள்களிலும், அவன்
அரசாண்ட பதின்மூன்றும் வருஷத்திலும்,—
ங யோஷியாவின் புத்திரனும் யூதாதேசத்திராசாவு
மாகிய யோயாகீம் அரசாண்டகாலத்திலுமன்றி,
யோஷியாவின்புத்திரனும் யூதாதேசத்து இராசா
வுமாகிய சிதேக்கியா அரசாண்டபதினொராம் வரு
ஷம்வரைக்குமுள்ள அவன் காலத்தின் முடி
வில்யெருஷலேம்சிறையாகப் பிடித்துக்கொண்
டு போகப்பட்ட ஐந்தாமாதம்வரையிலும், யெ
கோவாவின்வாக்கு அவனுக்குக்கிடைத்தது.-
ச கருப்பத்தில் நான் உன்னை உற்பவிக்கச்செய்யு
முன் உன்னைஅறிந்தேன்; நீ பிறக்கு முன் நான்
உன்னைப்பரிசுத்தப்படுத்தி, சாதிகளுக்குத் தீர்க்
ரு கதரிசியாக உன்னை ஏற்படுத்தினேனென்று,—எ
னக்குக்கிடைத்த யெகோவாவின் வாக்குச்
சா சொல்லிற்று.—அப்பொழுது நான், ஆ, ஆண்ட
வராகிய யெகோவாவே, நான்பேச அறி
யாத பாலகனென்றுசொல்ல,
எ யெகோவா என்னைநோக்கி, நான் பாலக
னென்று நீசொல்லலாகாது:நான் உன்னை அனுப்
புகிற யாவரிடத்திலும் நீபோய், நான்உனக்குக்
கட்டளையிடும் எலலாவற்றையும்பேசுவாயென்
அ றார்.—நீ அவர்களுக்குப் பயப்படவேண்டாம்:
நான் உன்னை இரட்சிக்கும்படி உன்னோடேயி
ருக்கிறேனென்று யெகோவா சொன்னார்.—
கூ மேலும்யெகோவா தமதுகையை நீட்டி, என்
வாயைத்தொட்டார். யெகோவா என்னிடத்
தில், பார், என்வாக்குகளை உன்வாயிலிட்டேன்.-
ய பார், நிர்மூலப்படுத்தவும், கீழேதள்ளவும், நா
சமாக்கவும், கவிழ்க்கவும், கட்டவும், நாட்ட
வும் சாதிகளின்மேலும் இராச்சியங்களின் மே
லும் உன்னை இன்றைத்தினம் ஏற்படுத்தினே
னென்றார்.

பின்பு எனக்குக் கிடைத்த யெகோவா யக
வின் வாக்கு, எரேமியாவே, நீ எதைக்காண்கிறா
யென்றுகேட்க, நான் ஒருவாதுமவிருட்சக்கிளை
யைக் காண்கிறேனென்றேன்.—அப்பொழுது யஉ
யெகோவா என்னைநோக்கி, நீநன்றாய்க்கண்
டாய்: நான்விரைந்து என்வாக்கியத்தை நிறை
வேற்றுவேனென்றார்.—இரண்டாந்தரமும் யெ யங
கோவாவின் வாக்குஎன்னிடத்தில், நீ எதைக்
காண்கிறாயென்றுகேட்க, நான் பொங்குகிறபா
னையைக்காண்கிறேன்; அது வடக்குநோக்கியி
ருக்கின்றதென்றேன்.—அப்பொழுது யெகோ யச
வா என்னுடனே, வடக்கினின்று இந்தத்தேசத்
தாரனைவர்மேலுந் தீமைபுறப்பட்டுவருமென்று
சொன்னார்.-பார், நான் வட இராச்சியங்களிலுள் யரு
ள குலத்தாரனைவரையும் வரவழைப்பேன்; அ
வர்கள்வந்து யெருஷலேமின் பிரவேச வாசஸ்
தானத்திலும், அதைச்சூழ்ந்த மதில்களெல்லாவற்
றின்மேலும், யூதேயா தேசத்து எல்லாநகரங்களி
லும் தங்கள் தங்கள் சிங்காசனங்களை ஸ்தாபிப்
பார்களென்று யெகோவாசொல்லுகிறார்.—
என்னைவிட்டு அந்நிய தேவர்களுக்குத் தூபங் யசா
காட்டி, தங்கள் கைகளின் கிரியைகளை நமஸ்
கரித்தவர்கள்செய்த சகல தீமைகளினிமித்தமும்
நான் அவர்களுக்குவிரோதமாகஎன்நியாயத்தீர்ப்
புக்களை வெளிப்படுத்துவேன்.
ஆதலால் நீ இடைக்கச்சுக்கட்டி, எழுந்து, யஎ
நான் உனக்குக் கட்டளையிடுகிற எல்லாவற்றை
யும் அவர்களுக்குச்சொல்லு: நீ அவர்கள்முகத்
துக்கு அஞ்சாதே, அஞ்சினால் நான்உன்னைக்
கலங்கவைப்பேன்.—பார், நான் உன்னைஇன் யஅ
றைத்தினந் தேசமனைத்திற்கும் விரோதமாகவும்,
யூதாதேசத்துஇராசாக்களுக்கும், பிரபுகளுக்கும்,
ஆசாரியர்களுக்கும், தேசத்துச்சனங்களுக்கும்வி
ரோதமாகவும், மதில்சூழ்ந்தநகரமும், இருப்புத்
தூணும், பித்தளைமதிலுமாக்கினேன்.—அவர்கள் யகூ
உனக்குவிரோதமாக யுத்தஞ்செய்வார்கள்; உன்
னைமேற்கொள்ளமாட்டார்கள், நான் உன்னைஇ
ரட்சிக்கும்படிஉன்னோடிருக்கிறேனென்று யெ
கோவா சொல்லுகிறார்.

## உ. அதிகாரம்.

க. தேவன் சனங்களுக்கு அனுக்கிரகஞ்செய்தும் அவர்கள்அவருக்குவிரோதமாகத் தேவ பூசைமுதலிய பாவங்களைச்செய்தல்: யச. அதினிமித்தந் தேவன் அவர்களைத்தண்டித்தல்.

பின்பு எனக்குக்கிடைத்த யெகோவாவின் க

(க. அதி. க.) யோசு.உக.யஅ. (உ) அதி.உரு.ங. (ங) அதி.ஙக.உ. அதி.ருஉ.யஉ,யரு. உ.இரா.உரு.அ. (ச) ஏசா. சக.க,ரு. யாத்.ஙங.யஉ,யஎ. லூக்.க.யரு,சக. கலா.க.யரு,யசா. (சா) யாத்.ச.ய. ஏசா.சா.ரு. (எ) எண்.உஉ.உய,ஙஅ. மத்.உஅ.உய. (அ) எசேக்.உ.சா. வச.யஎ. யாத்.ங.யஉ. யோசு.க.ரு. அப்.உசா.யஎ. எபி.யங.சா. ஏசா.கூ.எ.(கூ)ஏசா. சா.எ. ஏசா.ருக.யசா. (ய) உ.கொரி.ய.ச,ரு. (யங) எசேக்.யக.ங,எ. (யசா) உபா.உஅ.உய. (யஎ) க.இரா.யஅ.சக. யோபு.ஙஅ.ங. லூக்.யஉ.ஙரு. க.பேதுரு.க.யங. யாத்.ங.யஉ. (யஅ) ஏசா.ருய.எ.—(உ. அதி.)

௨ வாக்கு,—நீ போய், விதைக்கப்படாத தேசமா
கிய வனத்தில் நீ என்னைப்பின்பற்றினபொழு
து உன் இளம்பிராயத்தில் உண்டாகிய பத்தி
யையும், உன் விவாக சமயத்திலுண்டான அன்
பையும் நான் நினைந்திருக்கிறேனென்று யெ
கோவா சொல்லுகிறாரென்பதை,யெரூஷலே
௩ மின் செவிக்கேறப் பிரசித்தப்படுத்து.—இஸர
வேல் யெகோவாவுக்குப் பரிசுத்தமும்,அவ
ருடையவிளைவின் முதற்பலனுமாயிருக்கிறான்:
அவனைப்பட்சிப்பார்யாவருங் குற்றமுள்ளவர்க
ளாவார்கள்; அவர்கள்மேல் தீமை வருமென்று
௪ யெகோவா சொல்லியிருந்தார்.—யாக்கோ
பின்வமிசமே, இஸரவேல்வமிசத்திலுள்ள சகல
குடும்பங்களே,நீங்களெல்லாரும் யெகோவா
வின் வாக்கைக்கேளுங்கள்.

௫ நம்மை எகிப்துதேசத்தினின்று புறப்படப்
பண்ணின மனுஷர் செல்லாததும் ஒருவர் வசி
யாததுமாகிய வெறுவெளியும், பள்ளமும், நீரில்
லாததும், மரண நிழலுமாயிருக்கிற வனத்தின்
வழியாக நம்மைநடத்தின யெகோவா எங்
௬ கேயென்று உங்கள்முன்னோர்கேளாமல்,—என்
னைவிட்டுத்தூரத்திற்போய், வீணானவைகளைப்
பின்பற்றி வீணராவதற்கு,என்னிடத்தில்என்ன
௭ அநியாயத்தைக்கண்டார்கள்.—செழிப்பானதே
சத்திலுள்ள பலனையும் நலத்தையும் நீங்கள்
அநுபவிக்கும்படி அதிலே நான் உங்களைக்
கொண்டுவந்தேன்; ஆனாலும் நீங்கள்பிரவேசித்
து என் தேசத்தை அசுத்தப்படுத்தினீர்கள், என்
னுடைய சுதந்தரத்தை அரோசியமாக்கினீர்கள்.-
௮ யெகோவா எங்கேயென்று ஆசாரியர்கள்சொ
ல்லவில்லை, வேதப்பயிற்சியுள்ளவர்கள் என்னை
அறியார்கள்: மேய்ப்பர்என்கட்டளையைமீறினார்
கள், தீர்க்கதரிசிகள் பாகாலின் நாமத்தைக்குறித்
துத் தீர்க்கதரிசனஞ்சொல்லி, பலன்தராதவை
களைப் பின்பற்றினார்களென்று யெகோவா
சொல்லுகிறார்.

௯ ஆதலால் பின்னும் நான் உங்களோடுவழக்கா
டுவேன், உங்கள் சந்ததியாரின் சந்ததியாரோடும்
வழக்காடுவேனென்று யெகோவா சொல்லுகி
௰ றார்.-நீங்கள் கித்தீமின் தீவுகளைக்கடந்துபோய்ப்
பாருங்கள்; கேதாருக்கு அனுப்பி இப்படி ஒ
ரு காரியம் நடந்ததோவென்று நன்றாய்விசாரித்
௰௧ துப்பாருங்கள்.—எந்தச்சாதியாராகிலும் தேவர்
களல்லாத தங்கள் தேவர்களை மாற்றினதுண்
டா; என் சனங்களோ பலன் தராதவைகளினி
மித்தந் தங்கள் மகிமையை மாற்றினார்களென்று
௰௨ யெகோவா சொல்லுகிறார்.—வானங்களே, இ
தினிமித்தம் பிரமிப்படையுங்கள், மிகவும்பயப்
படுங்கள், அவாந்தரமாயிருங்களென்று யெ
கோவா சொல்லுகிறார்.—என்சனங்கள் இரண் ௰௩
டு தீமைகளைச் செய்தார்கள்; சீவ நீரூற்றின்கண்
ணாகிய என்னைவிட்டுவிட்டார்கள், நீர்கொள்ளா
தஉடைந்த நீர்த்தொட்டிகளைத்தங்களுக்கு உண்
டாக்கினார்கள்.

இஸரவேல் பணிவிடைக்காரனா, வீட்டிற் பி ௰௪
றந்த அடிமையா; என் கொள்ளைப்பொருளா
னான்.-சிங்கக்குட்டிகள் அவனுக்கு விரோதமா ௰௫
கக்கருச்சித்துச் சத்தமிட்டு, அவனுடையதேசத்
தைப்பாழாக்கின: அவனுடைய பட்டணங்கள்
வசிப்பார் ஒருவருமில்லாதபடி எரிக்கப்பட்ட
ன.-நோப் தக்பானேசென்னும் நகரங்களின்புத் ௰௬
திரரும் உன் உச்சந்தலையை நொறுக்கினார்கள்.-
யெகோவாவாகிய உன் தேவன் உன்னை ௰௭
வழியிலே நடத்திக்கொண்டுபோன காலத்தில்,
அவரை விட்டுவிலகினதினாலல்லவா இதை உ
னக்கு நேரிடப்பண்ணினாய்.—இப்பொழுது சீ ௰௮
கோரின் சலத்தைக்குடிப்பதற்கு எகிப்துக்குப்
போகிற வழியிலிருப்பதென்ன; பிராத் நதியின்
சலத்தைக்குடிப்பதற்கு அசீரியவுக்குச் செல்
லும் வழியிலே நீபோகவேண்டியதென்ன.—
உன்தீமையே உன்னைத்தண்டிக்கும், உன்மாறு ௰௯
பாடுகள் உன்னைக்கண்டிக்கும்: நீ உன் தேவ
னாகிய யெகோவாவைவிட்டு நீங்கின
தும், என்னைப்பற்றும்பயம் உன்னிடத்தில் இல்
லாதிருப்பதும், தீமையும் கசப்புமுள்ளதென்ப
தை உணர்ந்துகொள்ளென்று ஆண்டவரும்
சேனாபதியுமாகிய யெகோவா சொல்லுகிறார்.

பூருவகாலத்திலே நான் உன் நுகத்தைமுறித் ௨௰
து, உன் கட்டுகளை அறுத்தேன்; நீ, நான் தவ
றேனென்றாய்; ஆனாலும் உயர்ந்தகுன்றுகள் ஒவ்
வொன்றின்மேலும், ஒவ்வொரு பசுமையான ம
ரத்தின்கீழும் விபசாரமார்க்கமாய்த்திரிகிறாய்.—
உயர்குலவித்தினின்றுதோன்றிய உத்தமதிராட் ௨௧
சக்கொடியாக உன்னை நாட்டினேன்: நீ எனக்
குமுன் எவ்வளவு வேறுபட்டுஅந்நியதிராட்சக்
கொடியின்கிளையானாய்.—நீ உன்னைச்சாம்பலுப் ௨௨
பினால்கழுவி, அதிக சவுக்காரத்தைஇட்டாலும்,
உன்பாவம் என்பார்வையில் ஒருகறையாகவே
இருக்குமென்று தேவனாகிய யெகோவா
சொல்லுகிறார்.—நான் அசுசிப்படவில்லை,நான் ௨௩
பாகால்களைப் பின்பற்றவேயில்லையென்று நீ
சொல்வதெப்படி; தாழ்ந்த பூமியில் உன் அடிச்
சுவட்டைப்பார், நீ செய்ததை யுணர்ந்துசொல்
லு: நீ தன்வழிகளிலே திரிகிற வேகமான ஒட்

(௨) எசேக்.௰௬.௮,௨௨,௬௰. ஓசி.௨.௰௫. உபா.௨.௭. (௩) யாத்.௰௯.௫,௬. யாக்.௧.௰௮. வெளி.௰௪.௪. அதி.௫௰.௭.
(௫) ஏசா.௬௩.௯,௰௧,௰௩. ஓசி.௰௩.௪. உபா.௮.௰௫. (௬) ஏசா.௫.௪. மீகா.௬.௩. ௨.இரா.௰௭.௰௫. யோனா.௨.௮. (௭)
எண்.௰௩.௨௭. உபா.௮.௭,௮,௯. லேவி.௰௮.௨௫,௨௭,௨௮. எண்.௩௫.௩௩,௩௪. அதி.௩.௧. அதி.௰௬.௰௮. (௮) மல்.௨.
௬,௭. ரோ.௨.௨௰. அபகூ.௨.௰௮. (௯) எசேக்.௨௰.௩௫,௩௬. மீகா.௬.௨. யாத்.௨௰.௫. (௰௧) மீகா.௪.௫. சங்.௱௰௫.௪.
ஏசா.௩௭.௰௯. ரோ.௧.௨௩. (௰௨) ஏசா.௧.௨. (௰௩) யோவா.௪.௰௪. (௰௫) ஏசா.௧.௭. (௰௬) அதி.௪௩.௭,௮,௯. உபா.௩௩.
௨௰. ஏசா.௮.௮. (௰௭) உபா.௩௨.௰. (௰௮) ஏசா.௩௰.௧,௨. யோசு.௰௩.௨. (௰௯) ஏசா.௩.௯. ஓசி.௫.௫. (௨௰) யாத்.௰௯.
௮. ௧.சாமு.௰௨.௰. உபா.௰௨.௨. யாத்.௩௪.௰௫,௰௬. (௨௧) யாத்.௰௫.௰௮. ஏசா.௫.௧,. மத்.௨௧.௩௩. லூக்.௨௰.௯.
உபா.௩௨.௩௨. ஏசா.௧.௨௪. (௨௨) யோபு.௯.௩௰. உபா.௩௨.௩௪. யோபு.௰௪.௰௭. ஓசி.௰௩.௰௨. (௨௩) நீதி.௩௰.௰௨.

௨௪ டகம்.—வனத்திலேபழகித்தனதிஷ்டப்படி காற்
றையுட்கொள்ளுகிற காட்டுக்கழுதையைப்போ
லிருக்கிறாய்; அதின் வேகத்தில் அதைத்தடைப்
படுத்துகிறவன்யாவன்; ஒருவரும் அதைத்தேடி
இளையார், அதின்மாசத்தில் அதைப்பிடித்துக்
௨௫ கொள்ளலாம்.—உன் கால் வெறுங்காலாகாதப
டிக்கும், உன் தொண்டை தாகமடையாதபடிக்
கும் அடங்கியிரு: நீயோ, நம்பிக்கையில்லை: வி
ருதா; நான் அந்நியரைநேசித்தேன், அவர்களைப்
௨௬ பின்பற்றுவேனென்றாய்.—திருடன் அகப்பட்
டபொழுது வெட்கப்படுவதுபோல, மரத்தைப்
பார்த்து, நீ என்பிதாவென்றும், கல்லைப்பார்த்து,
நீ என்னைச்சனிப்பித்தாயென்றுஞ்சொல்லுகிற—
௨௭ இஸரவேல்வமிசத்தாரும், அவர்கள் இராசாக்க
ளும், பிரபுகளும், ஆசாரியர்களும், தீர்க்கதரிசிக
ளும் வெட்கப்படுகிறார்கள், அவர்கள் எனக்கு
எதிர்முகமாயிராமல் பராமுகமானார்களே: ஆனா
லும் ஆபத்துக்காலத்தில், எழுந்து எங்களைஇரட்
௨௮ சியுமென்பார்கள்.—ஆ, யூதாவே, நீ உனக்கென்
று உண்டாக்கின உன் தேவர்களெங்கே; அவர்
கள்ஆபத்துக்காலத்தில் உன்னைஇரட்சிக்கவல்ல
வர்களானால் எழும்பக்கடவர்கள்: உன் பட்ட
ணங்கள் எவ்வளவோ, அவ்வளவே உன் தேவர்
௨௯ கள்.—நீங்கள் என்னோடே வழக்காடுகிறதேது;
நீங்கள்அனைவரும்என்கட்டளையைமீறினீர்கள்.-
௩௰ நான் உங்கள்சந்ததியாரை விருதாவாகத்தண்டித்
தேன்; அவர்கள்தண்டனைக்கிணங்கவில்லை:உங்
கள் கட்கம், நாசப்படுத்துஞ் சிங்கத்தைப்போல
உங்கள் தீர்க்கதரிசிகளைப்பட்சித்ததென்று யெ
கோவா சொல்லுகிறார்.
௩௧ சந்ததியாரே,நீங்கள் யெகோவாவின்வாக்
கைக்கேளுங்கள். நான் இஸரவேலுக்குவனாந்
தரமும், இருண்டபூமியுமாயிருந்தேனா; நாங்க
ளே அரசாளுகிறோம்; இனிஉம்மைச் சேரமாட்
டோமென்று என்சனங்கள் சொல்வதென்ன.—
௩௨ ஒருகன்னி தன்பூஷணங்களையும்,ஒருமணவாட்
டி தன்வஸ்திராபரணங்களையும் மறக்கக்கூடுமா;
என் சனங்களோ,எண்ணிறந்தநாளாய் என்னைம
௩௩ றந்தார்கள்.—நீ அன்பைத்தேடும்படி உன்வழி
யை நயப்படுத்துகிறதேது; பிறருக்கும் உன்நெ
௩௪ றிகளைப் பயிற்றினாய்.—உன் வஸ்திரவிளிம்புக
ளில் குற்றமில்லாத எழை ஆத்துமாக்களுடைய
இரத்தங் காணப்படுகின்றது: தோண்டப்பட்ட
குழிகளிலல்ல,இவைகளெல்லாவற்றின்மேலுங்
௩௫ கண்டேன்.—ஆனாலும் நீ, நான் குற்றமில்லாம
லிருக்கிறேன், ஆதலால் அவருடைய கோபம்
என்னைவிட்டு விலகுமேயென்கிறாய். பார்,நான்
பாவஞ்செய்யவில்லையென்று நீசொல்லுகிறபடி
௩௬ யினால், நான் உன்னோடேவழக்காடுவேன்.—நீ
உன்வழியை மாற்றும்படி இவ்வளவாய்த் திரிகி
றதென்ன; நீ அசீரியவைக்குறித்து இலச்சை
அடைந்ததுபோல எகிப்தையுங்குறித்து இலச்
சை அடைவாய்.-நீ உன் கைகளை உன்தலையின் ௩௭
மேல் வைத்துக்கொண்டு, இவ்விடத்தினின்று பு
றப்பட்டுப்போவாய்: யெகோவா உன்விசுவா
சப்பொருள்களைப்புறக்கணித்தார், அவைகளால்
நீ அனுகூலம்பெறமாட்டாய்.

## ௩. அதிகாரம்.

௧. யூதேயசனங்களை வேசைக்கொப்பாக்கல்: ௬.
இஸரவேல் சனங்களும் அப்படியாதல்: ௰௨.
தேவன் அவர்களுக்கு அறிவுகொளுத்திவாக்
குத்தத்தஞ்செய்தல்: ௨௧. சனங்கள் தங்கள்குற்
றத்தை யுணர்ந்து துக்கித்துப்புலம்பல்.

ஒருவன்தன்னுடைய ஸ்திரியைத்தள்ளிவிட்ட ௧
பின்பு, அவள்அவனைவிட்டுநீங்கி, மற்றொருவ
னைவிவாகஞ்செய்தால், திரும்பஅவன் அவளைச்
சேர்த்துக்கொள்வானா; அந்தத்தேசம்மிகவும் அ
சுசிப்படாதாவென்றுபேசிக்கொள்ளுகிறார்கள்;
நீயோ அநேகநேசரோடே விபசாரமார்க்கமாய்
நடந்தாய்; ஆனாலும் நீ என்னிடத்தில் திரும்பி
வாவென்று யெகோவா சொல்லுகிறார்.—நீ ௨
உன்கண்களை எறிட்டு உயர்ந்தஸ்தானங்களைப்
பார், நீ புணர்ச்சிசெய்யாதஇடம் ஒன்றுண்டா.
நீ வனத்திலுள்ள அரபியரைப்போல நேசருக்
காகவழியருகே காத்திருந்து, விபசாரங்களினா
லும் துர்க்கிரியையினாலும் தேசத்தை அசுசிப்ப
டுத்தினாய்.—அதினிமித்தம் மழைபெய்யாமல்த ௩
டைப்பட்டது, பின்மழையுமில்லாமற் போயிற்
று; உனக்கோவேசையின்நெற்றியுண்டு,நீவெட்
கப்படாதிருக்கிறாய்.—என்பிதாவே, நீரே என் ௪
இளம்பிராயத்தில் நாயகனென்று நீஇன்றுமுதல்
சொல்லமாட்டாயா.—அவர்சதாகாலமுங் கோ ௫
பங்கொள்வாரா, முடிவுபரியந்தந் தணியா
திருப்பாரா. பார், நீ உன்னாலியன்றளவு தீமொ
ழிகளைப்பேசினாய், தீவினைகளைச்செய்தாய்.
யோஷியாஇராசாஅரசாண்டகாலத்தில், யெ ௬
கோவா என்னைநோக்கி, மாறுபாடான இஸர
வேல் செய்ததை நீ கண்டாயா; அவள்ஒவ்வொ
ரு உயர்ந்தமலையின்மேலும், ஒவ்வொருபசியவி
ருட்சத்தின் கீழும்போய் விபசாரஞ்செய்தாள்.—
இக்காரியங்களெல்லாவற்றையும் அவள் ௭
செய்தபின்பு, நீ என்னிடத்திலே திரும்பிவா
வென்றேன். அவளோ திரும்பவில்லை. கபட
முள்ளஅவள்சகோதரியாகியயூதா இதைக் கண்
டாள்.—மாறுபாடானஇஸரவேல்செய்த விபசா ௮
ரங்களெல்லாவற்றினிமித்தமும் நான் அவளுக்
குத்தொடராமுறியைக்கொடுத்து அவளைத்தள்ளி
விட்டிருக்கவும், கபடமுள்ளஅவள்சகோதரியா

(௨௫) உபா.௩௨.௰௬. (௨௭) நியா.௰.௰. எசா.௨௬.௰௬. (௨௮) உபா.௩௨.௩௭. நியா.௰.௰௪. எசா.௪௫.௨௰. (௩௰) மத்.
௨௩.௨௯,. அப்.௭.௫௨. ௧.தெச.௨.௰௫. (௩௧) உபா.௩௨.௰௫. (௩௨) ஒசி.௮.௰௪. (௩௫) நீதி.௨௮.௰௩. ௧.யோவா.௧.
௮,௰. (௩௬) ஒசி.௫.௰௩. எசா.௩௰.௩. ௨.நாளா.௨௮.௰௧,௨௰,௨௧. (௩௭) ௨.சாமு.௰௩.௰௯.—(௩. அதி. ௧.) உபா.௨௪.
௪. எசேக்.௰௬.௨௬,௨௮,௨௯. ௪௧.௧.௩. (௨) ஆதி.௩௮.௰௪. எசேக்.௰௬.௨௪,௨௫.(௩)லேவி.௨௬.௰௯. உபா.௨௮.௨௩,
௨௪. எசேக்.௩.௭. செப்.௩.௫ (௪) நீதி.௨.௰௬. ஒசி.௨.௰௫. (௫) எசா.௫௭.௰௬. (௭) ௨.இரா.௰௭.௰௩. எசேக்.௰௬.
௪௬. (௮) எசேக்.௨௩.௯. ௨.இரா.௰௭.௬,௰௮.

கிய யூதா பயப்படாமல் தானும்போய்விபசாரஞ்
௯ செய்தாள்; இது நான் கண்டேன்.—விபசாரஞ்
செய்வது தனக்கு எளிதாயிருந்தபடியால் அவள்
தேசத்தை அசுசிப்படுத்தினாள், கற்களோடும் ம
௰ ரங்களோடும் சோரமாய்ப் போனாளென்றார்.—இ
வைகளெல்லாவற்றினாலும் கபடமுள்ள அவள்
சகோதரியாகிய யூதா கள்ளத்தனமாயல்லாமல்,
பூரண இருதயத்தோடே என்னிடத்தில் திரும்ப
வில்லையென்று யெகோவா சொல்லுகிறார்.—
௰௧ பின்னும் யெகோவா என்னைநோக்கி, கப
டமுள்ள யூதாவிலும் மாறுபாடான இஸரவேல்
தான் நீதியுடையவளென்றுகாட்டினாளென்றார்.
௰௨ நீ போய் வடக்கைநோக்கி, மாறுபாடான இ
ஸரவேலே, நீ திரும்பிவாவென்று யெகோ
வா சொல்லுகிறாரென்பதைப்பிரசித்தப்படுத்து;
நான்தயாபரர், சதாகாலமும்நான்கோபங்கொள்
ளேன்: ஆதலால் நான் உங்கள்மேல்கோபக்கண்
வையேனென்று யெகோவா சொல்லுகிறார்.-
௰௩ நீ என்வாக்குக்கு அமையாமல் பசுமையானவி
ருட்சங்கள் ஒவ்வொன்றின்கீழும் அந்நியரோ
டேசோரமார்க்கமாய்நடந்து, உன் தேவனாகி
ய யெகோவாவின் கட்டளையைமீறினதினா
லுண்டான உன் பாவத்தை நீ உணர்ந்துசொல்
௰௪ லென்று யெகோவா சொல்லுகிறார்.—மாறு
பாடானசனங்களே, திரும்பிவாருங்கள்; நானே
உங்கள்மணவாளன்: நான்நகரத்திலிருந்து ஒருவ
னையும், வமிசத்திலிருந்து இருவரையுந்தெரிந்து
உங்களைச் சீயோனுக்குக்கொண்டுவருவேன்.—
௰௫ நான் உங்கள்நிமித்தம் என்மனதிற்கேற்றமேய்ப்
பர்களை ஏற்படுத்துவேன், அவர்கள் உங்களைஞா
னத்தோடும் புத்தியோடும் போஷிப்பார்களென்
௰௬ று யெகோவா சொல்லுகிறார்.—நீங்கள்தேசத்
திலே பெருகிப் பல்கியிருக்கும் நாள்களிலே,
யெகோவாவின் உடன்படிக்கைப்பெட்டி
யென்றுஇனிச்சொல்லமாட்டார்கள்: அது அவர்
கள்சிந்தையிலேவராது: அவர்கள் அதை நினைக்
கமாட்டார்கள்; விசாரிக்கமாட்டார்கள்; இனி
ஒருபொழுதும் அதைச் செப்பமிடவுமாட்டார்
௰௭ கள்.—அக்காலத்தில்யெரூஷலேமை யெகோ
வாவின் சிங்காசனமென்பார்கள்; சகலசாதி
யாரும் யெரூஷலேமிலே யெகோவாவின்
நாமத்திற்கென்று ஏகமாய்க்கூடுவார்கள், அவர்
கள்தங்கள் துஷ்டஇருதயத்தின் துர்ச்சிந்தனைப்
௰௮ படிநடவார்கள்.—அக்காலத்தில் யூதா வமிசத்
தார் இஸரவேல்வமிசத்தாருடன் நடப்பார்கள்,
உங்கள் முன்னோர்கள் சுதந்தரிக்கும்படி நான்
கொடுத்ததேசத்திற்கு அவர்கள்வடதேசத்தினின்
௰௯ று ஏகமாய்வருவார்கள்.—ஆனாலும் நான் உன்
னைப்புத்திரர்களுக்குள்ளேவைத்து, புறச்சாதியா
ருடையசேனைகளின் மகிமைபொருந்திய சுதந்
தரமாகிய அந்தத்தேசத்தை உனக்குக்கொடுப்ப
தெப்படியென்றேன்; அப்பொழுதுநான், நீ என்
பிதாவே என்றென்னை அழைப்பாய்; நீ என்னைப்
பின்பற்றுதொழியமாட்டாயென்பதைச்சொன்
னேனென்று யெகோவா சொல்லுகிறார்.
இஸரவேல்வமிசத்தாரே, மனைவியானவள் து ௨௰
ரோகமாய்த்தன்புருஷனைவிடுவதுபோல், நீங்கள்
எனக்குத்துரோகஞ்செய்தீர்களென்று யெகோ
வாசொல்லுகிறார்.-இஸரவேல்சந்ததியார்தங்கள் ௨௧
நெறிகளைக் கெடுத்து, தங்கள் தேவனாகிய
யெகோவாவை மறந்தார்கள்: இதினிமித்தம்
உயர்ந்த ஸ்தானங்களினின்று அவர்கள் அழுது
புலம்புஞ் சத்தங் கேட்கப்பட்டது.—மாறுபா ௨௨
டானசந்ததியாரே, திரும்புங்கள், உங்கள்மாறு
பாடுகளை நீக்கி உங்களைச் சீர்ப்படுத்துவேனென்
றார். பாரும், நாங்கள் உம்மிடத்தில் வருகிறோம்.
நீரே எங்கள் தேவனாகிய யெகோவா.—
குன்றுகளும், திரளானமலைகளும் விருதாவே: ௨௩
நம்முடைய தேவனாகிய யெகோவாவி
னாலே இஸரவேலின் இரட்சிப்புவரும்.—அந் ௨௪
த இலச்சையானது எங்கள் இளம்பிராயமுதற்
கொண்டு எங்கள்முன்னோரின் பிரயாசத்தின் ப
லனாகிய அவர்கள் ஆடுமாடுகளையும், அவர்கள்
புத்திரர்களையும், புத்திரிகளையும்பட்சித்தது.—எங் ௨௫
களுடைய இலச்சையில் கிடக்கிறோம், எங்கள்
அவமானம்எங்களைமூடிற்று: நாங்களும் எங்கள்
முன்னோரும் எங்கள் இளம்பிராயமுதற்கொண்
டு இந்நாள்வரைக்கும் எங்கள் தேவனாகிய
யெகோவாவுக்கு விரோதமாய்ப் பாவஞ்
செய்து வந்தோம், எங்களுடைய தேவனாகிய
யெகோவாவின் வாக்குக்கு அமையாமல்
நடந்தோம்.

## ௪. அதிகாரம்.

௧. தேவன் வாக்குத்தத்தஞ்செய்தல்: ௩. யூதேய
ருக்குணர்த்தி அவர்களுக்கு நேரிடும் ஆபத்துக்
களைத் தெரிவித்தல்: ௰. எரேமியா உத்தரஞ்
சொல்லல்: ௰௯. அதை நினைந்து எரேமியாதுக்
கித்தல்.

இஸரவேலே, நீ திரும்பப் பிரியப்பட்டால், ௧
என்னிடத்தில் திரும்பி வா: நீ உன் அரோசிய
மானவைகளை என்பார்வையினின்று அகற்றி
விட்டால் இனி அலைந்து திரியமாட்டாய்.—நீ ௨
உண்மையோடும், நியாயத்தோடும், நீதியோடும்
சீவனுள்ள யெகோவாவைக் கொண்டு ஆ
ணையிடுவாய்; புறச்சாதியாரும் அவரைக்கொண்
டு ஆசீர்வாதஞ்சொல்லி, அவருடைய மேன்மை
யைப் பாராட்டுவார்களென்று யெகோவா
சொல்லுகிறார்.

(௰) ௨.நாளா.௩௪.௩௩. ஓசி.௭.௰௪. (௰௧) எசேக்.௰௯.௫௧. (௰௨) ௨.இரா.௰௭.௯. (௰௩) லேவி.௨௯.௪௰,. உபா.௩௰.௧,௨,. நீதி.௨௮.௰௩. உபா.௰௨.௨. (௰௪) ஓசி.௨.௰௯,௨௰. ரோ.௰௧.௫.(௰௫) எசேக்.௩௪.௨௩. எபே.௪.௰௯. அப்.௨௰.௨௮. (௰௬) ஏசா.௬௫.௰௭. (௰௭) ஏசா.௬௰.௯. (௰௮) ஓசி.௧.௰௧. அதி.௩௧.௮. ஆமோ.௯.௰௫. (௰௯) எசேக்.௨௰.௬. ஏசா.௬௩.௰௬. (௨௰) ஏசா.௪௮.௮. (௨௧) ஏசா.௰௫.௨. (௨௨) ஓசி.௰௪.௧. ஓசி.௬.௧. (௨௩) சங்.௱௨௧.௧,௨.(௨௪)ஓசி.௯.௰. (௨௫) எஸ்றா.௯.௭.—(௪. அதி. ௧.) யோவே.௨.௰௨. (௨) உபா.௰.௨௰. ஏசா.௪௫.௨௩. ஏசா.௪௮.௧. ௪௧.௮.௮. ௧லா.௩.௮. ஏசா.௪௫.௨௪.

௩ யூதாவிலும் யெருஷலேமிலுமுள்ளசனங்களி
டத்தில், நீங்கள் உங்கள்நிலங்களைப் பண்படுத்
துங்கள், முள்ளுக்களுக்குள்ளே விதையாதிருங்
௪ கள்.—யூதாசனங்களே, யெருஷலேமியரே, உங்
கள் இருதயத்தின் அக்கிரசருமத்தை நீக்கி, உங்
களை யெகோவாவுக் கென்று விருத்தசேத
னம்பண்ணுங்கள்: இல்லாவிட்டால் உங்கள் கி
ரியைகளின் தீமையினிமித்தம் என்கோபம் அக்
கினியைப்போல எழுந்து, ஒருவரும் அவிக்கக்
௫ கூடாதபடி எரியும்.—நீங்கள் ஏகமாய்க்கூடி அ
ரணுள்ள நகரங்களிலே போவோம் வாருங்க
ளென்றுசொல்லி யூதாவில் அறிவித்து, யெருஷ
லேமிலேபிரசித்தப்படுத்தி, தேசத்தில் எக்காளத்
௬ தை யூதுங்களென்று சொல்லுங்கள்.—சீயோன்
திசையில் கொடியேற்றுங்கள்: தப்பியோடுங்
கள்: நான் வடதேசத்தினின்று ஆபத்தையும்,
௭ மகா சங்காரத்தையும் வருவிப்பேன்.—சிங்கம்
தன்காட்டினின்று வருகின்றது, தேசத்தாரைநா
சப்படுத்துகிறவன் உன்தேசத்தைச் சேதப்படுத்
தும்படி தன்னுடைய ஸ்தானத்தைவிட்டுப்புறப்
பட்டுவருகிறான்; உன்பட்டணங்கள் சனமில்
லாதபடி நாசமாக்கப்படுமென்று யெகோவா
௮ சொல்லுகிறார்.—இதினிமித்தம்நீங்கள் இரட்டுக்
களைக்கட்டிக்கொள்ளுங்கள், புலம்பி அலறுங்
கள்: யெகோவாவின் உக்கிரகோபம் நம்
௯ மைவிட்டுத் திரும்பவில்லை.-அந்நாளில் இராசா
வின் இருதயமும், பிரபுகளினிருதயமுஞ்சோர்ந்
துபோகும்; ஆசாரியர்கள்பிரமிப்பார்கள், தீர்க்க
தரிசிகள்ஆச்சரியப்படுவார்களென்று யெகோ
௰ வா சொல்லுகிறார்.—அப்பொழுது நான், ஆ,
ஆண்டவராகிய யெகோவாவே, உங்க
ளுக்குச்சமாதானமுண்டென்று சொல்வதினால்,
நீர் இந்தச்சனங்களையும் யெருஷலேமையும் மி
கவும் வஞ்சித்தீரே, கட்கம்பிராணன்வரைக்கும்
௰௧ உருவிக்குத்தியிருக்கின்றதென்றேன்.-அக்காலத்
தில் தூற்றுகிறதற்குமல்ல, சுத்திசெய்கிறதற்குமல்
ல, வனத்தின்உயர்ந்தஸ்தானங்களினின்று வெம்
மையான காற்று என்சனங்களின் குமாரத்திக்கு
௰௨ நேரே வருகின்றது.—அந்தப் பெலத்தகாற்று அ
வைகளினின்று என்னிடத்தில் வீசும்: இப்பொ
ழுது அவர்களுக்கு விரோதமாய் நியாயத்தீர்ப்புக்
கொடுப்பேனென்று இந்தச்சனங்களுக்கும், யெ
௰௩ ருஷலேமுக்குஞ் சொல்லப்படும்.—பாருங்கள்,
மேகங்களைப்போல எழுந்துவருகிறான், அவனு
டையஇரதங்கள்சூறைக்காற்றுக்குச்சமானம்: அ
வன் குதிரைகள் கழுகுகளிலும் வேகமுள்ள
௰௪ வைகள். ஐயோ, நாம் நாசப்படுகிறோம்.—ஆ,
யெருஷலேமே, நீ இரட்சிக்கப்படும்படி உன்
இருதயத்தைத் தீமையறக்கழுவு. எதுவரைக்கும்
பாவசிந்தனைகள் உன்னுள்ளத்திலே தங்கும்.—
தாணிலிருந்துஒருசத்தம்பிரசித்தம்பண்ணுகின்ற ௰௫
து, எப்பிராயீம் மலையினின்று ஆபத்தை அறிவிக்
கின்றது.—நீங்கள் அந்நியதேசத்தாருக்குப் பிர ௰௬
சித்தம்பண்ணுங்கள்; பாருங்கள், காவற்காரர்
தூரதேசத்தினின்று வருகிறார்கள், யூதா நகரங்
களுக்கு விரோதமாய் உரத்த சத்தமிடுகிறார்க
ளென்று யெருஷலேமுக்கு விரோதமாய்ப் பிர
சித்தப்படுத்துங்கள்.—அது எனக்கு விரோதமா ௰௭
கக்கலகஞ்செய்தபடியால் வாசற்காவலாளரைப்
போல அவர்கள் அதற்கு விரோதமாய்ச் சுற்றி
லும் நிற்கிறார்களென்று யெகோவா சொல்
லுகிறார்.—உன் நெறியும் உன் செய்கைகளும் ௰௮
இவைகளை உனக்கு நேரிடப்பண்ணின; இப்
படி உனக்குவந்த உன்தீமைமிகக்கசப்புள்ளது,
அது உன்னிருதயத்தையும் உருவக்குத்தும்.
ஐயோ, என் குடல்களே, என் குடல்களே; ௰௯
என் நெஞ்சத்திலும் வேதனைப்படுகிறேன்; என்
இருதயம் எனக்குள்பதறுகின்றது; என்ஆத்துமா
வே, நீ எக்காளத்தொனியையும், போர்க்கறைகூ
வலையுங்கேட்டாய், இதினிமித்தம் நான் அமை
தலாயிருக்கக்கூடாது.—நாசத்துக்குமேல் நாசம் ௨௰
வருகின்றது; தேசமுழுவதுஞ் சேதமாயிற்று:
என் கூடாரங்களும், என் திரைகளும் சடிதி
யாக ஒரு நிமிஷத்திலே நாசமாயின.—நான் எது ௨௧
வரைக்குங் கொடியைக்கண்டு எக்காளத்தொனி
யைக்கேட்பேன்.—என் சனங்கள் மதியீனர், ௨௨
அவர்கள் என்னை அறியார்கள்; மயக்கங்கொண்
ட சந்ததியார், அவர்களுக்குப் புத்தி சற்றுமில்
லை: தீமைசெய்யப் புத்திமான்கள், நன்மைசெய்
யவோ விவேகமில்லாதவர்கள்.-பூமியைப்பார்த் ௨௩
தேன், அது ஒழுங்கின்மையும், வெறுமையுமா
யிருந்தது; வானங்களையும் பார்த்தேன், அ
வைகளுக்கு ஒளியில்லை, பாருங்கள்.—மலைக ௨௪
ளையும்பார்த்தேன், அவைகள் நடுநடுங்கின, பா
ருங்கள், குன்றுகளெல்லாம் குலுங்கி அசைந்த
ன.—உற்றுப்பார்த்தேன், மனுஷர் ஒருவருமில் ௨௫
லை, பாருங்கள், ஆகாயத்துப்பறவைகளெல்லாம்
பறந்துபோயின.—பின்பு பார்த்தேன், கேளுங் ௨௬
கள், யெகோவாவின் சந்நிதியில் அவரு
டைய உக்கிரகோபத்தினாலேசெழிப்புள்ள பூமி
வனமாயிற்று, எல்லாப்பட்டணங்களும் இடிந்
துபோயின.-சருவதேசமும் பாழாய்ப்போகும்; ௨௭
ஆனாலும் ஒழிவிக்கமாட்டேனென்று யெகோ
வா சொல்லுகிறார்.—இதினிமித்தம் பூமி புலம் ௨௮
பும், மேலுள்ளவானங்கள் இருளும்: நான் வச
னித்தேன், நான்தீர்மானம்பண்ணினேன், நான்
மனந்திரும்பேன், பின்னிடேன்.—குதிரைவீரர் ௨௯
வில்வீரரென்னும் இவர்களுடைய உரத்தசத்தத்
தினிமித்தம் நகரத்தாரெல்லாரும் ஓடி அடர்ந்த
காட்டிற்பிரவேசித்து, கன்மலைகளின்மேலேறு

(௩)ஓசி.௰.௰௨. மத்.௰௩.௭,௨௨. (௪) ரோ.௮.௨௮,௨௯. கொலோ.௨.௰௧. (௭) ௨.இரா.௨௪.௧. தானி.௭.௪. அதி.௨௫.௯. ஏசா.௧.௭. (௮) ஏசா.௨௨.௰௨. (௰) எசேக்.௰௪.௯. ௨.தெச.௨.௰௧. (௰௧)ஓசி.௰௩.௰௫. (௰௩) ஏசா.௫.௨௮. உபா.௨௮.௪௯. அபகூ.௧.௮. (௰௪) ஏசா.௧.௰௬. யாக்.௪.௮. (௰௮) ஏசா.௫௰.௧. (௰௯) ஏசா.௰௫.௫. (௨௰) எசேக்.௭.௨௬. (௨௨) ரோ.௰௬.௰௯. (௨௩) ஏசா.௨௪.௰௯. ஆதி.௧.௨. (௨௪) ஏசா.௫.௨௫. எசேக்.௩௮.௨௰. (௨௫) செப்.௧.௩. (௨௮) ஓசி.௪.௩. ஏசா.௫.௩௰. எண்.௨௩.௰௯. ௨.இரா.௯.௩௰. எசேக்.௨௩.௪௰. புல.௧.௨,௰௯.

வார்கள்: ஒவ்வொருபட்டணமுங் கைவிடப்ப
௩௰ டும், அவைகளில் ஒருவனும்வசியான்.–நீ சேத
மானபின்பு என்னசெய்வாய்; நீ இரத்தாம்பரந்
தரித்து, பொன்னுபரணங்களால் உன்னைச்சிங்
காரித்து, உன் கண்ணுக்கு மையிட்டு உன்னை
அலங்கரித்தாலும் விருதாவாகும்; உன் நேசர்க
ளும் உன்னை அலட்சியம்பண்ணுவார்கள், உன்
௩௧ பிராணனைச்சேதிக்க வகைதேடுவார்கள்.—ஸ்தி
ரியுடைய பிரசவகாலத்தின்சத்தமாகியமுதற்பிர
சவகாலத்தின்வேதனைச் சத்தத்தைப்போல நான்
சீயோன்குமாரத்தியின் சத்தத்தைக்கேட்டேன்,
அவள்பெருமூச்சுவிட்டுத் தன்கைகளை விரித்து,
ஐயோ, இப்பொழுது எனக்கு ஆபத்துவந்துவிட்
டது, கொலைபாதகர் நிமித்தம் என்பிராணன்
சோர்ந்துபோகின்றதென்கிறாள்.

## ௫. அதிகாரம்.

௧. பாவத்தினிமித்தந் தண்டனைவருமென்றுமுன்
னுரைத்தல்: ௰. அத்தண்டனையைக்குறித்தல்:
௨௰. சனங்களின்பாவத்தைச்சுட்டிக்காட்டல்:
௩௰. கள்ளத்தீர்க்கதரிசிகளைக்குறித்துப் பிரமிப்
படைதல்.

யெருஷலேமின் தெருக்களில் நியாயத்தைச்
செய்து, சத்தியத்தைத்தேடிவருகிறவன் ஒருவன்
அகப்படக்கூடுமோ; அங்குமிங்குமோடி அதின்
விசால வீதிகளிலே பார்த்துத்தேடுங்கள், அகப்
பட்டால், நான் அதற்குமன்னிப்புத்தருவேன்.-
௨ யெகோவாவின் நித்தியத்துவத்தைக்கொண்
டென்று அவர்கள்சொன்னாலும் அவர்கள்பொய்
௩ யாணையிடுகிறவர்கள்.–யெகோவாவே, உம்
முடைய பார்வை சத்தியத்தின்மேலல்லவா இ
ருக்கின்றது; நீர் அவர்களைத்தண்டித்தீர், அவர்
களோ துக்கப்படவில்லை; நீர் அவர்களைக் கெ
டுத்தீர், அவர்கள் கண்டனையை எதிர்த்து,ஏற்றுக்
கொள்ளவில்லை: அவர்கள் தங்கள் முகங்களைக்
கல்லிலும் கடினப்படுத்துகிறார்கள்; திரும்புவ
௪ தற்குச் சம்மதிக்கிறதில்லை.—அப்பொழுதுநான்
இவர்கள் நீசர்; புத்தியீனர்: யெகோவாவின்
வழியையும் தங்கள் தேவனுடைய நீதியை
௫ யும் அறியார்கள்.—நான் பெரியோர்களிடத்தில்
போவேன், அவர்களோடே பேசுவேன்; அவர்
கள் யெகோவாவுடைய வழியையும், தங்
கள் தேவனுடையநீதியையும்அறிவார்களென்
றேன்: அவர்களும் முழுமையாய் நுகத்தை மு
௬ றித்தார்கள்,கட்டுகளையும் அறுத்தார்கள்.—அவர்
கள் மீறுதல்கள் அதிகரித்ததினாலும், அவர்களு
டைய மாறுபாடுகள் மிகுதியானதினாலும்,வனத்
தினின்று ஒரு சிங்கம்வந்து அவர்களைக் கொல்
லும், வனாந்தரத்தின் ஓநாய்கள் அவர்களைப்
பீறும், ஒருசிவிங்கி அவர்கள் பட்டணங்களின்
மேல் காவலாய்நிற்கும்: அவைகளினின்று பு
றப்படும் ஒவ்வொருவரும் பீறப்படுவார்கள்.
இவைகளை நான் உனக்கு மன்னிக்கிறதெப் ௭
படி; உன்சந்ததியார்என்னைவிட்டுநீங்கினார்கள்,
அவர்கள், தேவர்களல்லாதவர்களைக்கொண்டு ஆ
ணையிடுகிறார்கள்:நான்அவர்களைத்திருத்திப்படுத்
தியபின்பு அவர்கள்விபசாரமார்க்கமாய்நடந்து,
வேசைகளின் வீடுகளில் அணியணியாய்க் கூடு
கிறார்கள்.–அவர்கள் யாவரும் விடியற்காலத்திற் ௮
புஷ்டியான குதிரைகள்போலத் தங்கள் தங்கள்
அயலானுடைய மனைவியைக்குறித்துக் கனைக்கி
றார்கள்.—இவைகளினிமித்தந்தண்டியாமல்விடு ௯
வேனு; இப்படிப்பட்ட சாதியாரிடத்தில் என்
ஆத்துமா பழிவாங்காதாவென்று யெகோவா
சொல்லுகிறார்.
அதின் மதில்களின்மேலேறி இடியுங்கள்; மு ௰
ழுவதையுஞ் சங்கரிக்கவேண்டாம்: அதின் அ
லங்கங்களைநீக்கிவிடுங்கள்;அவைகள் யெகோ
வாவுடையவைகளல்ல.–இஸரவேல் வமிசத் ௰௧
தாரும்,யூதாவமிசத்தாரும்எனக்குவிரோதமாகமி
கவும் நம்பிக்கைத்துரோகமாய் நடந்தார்களென்
று யெகோவா சொல்லுகிறார்.—அவர்கள், ௰௨
யெகோவா அல்லவென்றும், ஆபத்து எங்க
ளுக்கு நேரிடாது; கட்கத்தையாகிலும் பஞ்சத்
தையாகிலும் நாங்கள்காண்பதில்லை:—தீர்க்கதரி ௰௩
சிகள் காற்றைப்போலாவார்கள், அவர்களுக்கு
வாக்குக்கிடைக்கவில்லை: அவர்களுக்கே இப்ப
டியாகக்கடவதென்றுஞ்சொல்லிஅவரைமறுக்கி
றார்கள்.—நீங்கள் இந்தவாக்கைப் பேசினபடியி ௰௪
னாலே, பாருங்கள், நான் உன்வாயிலிட்ட என்
வாக்குகளைஅக்கினியும்,இந்தச்சனங்களைவிறகு
களுமாக்குவேன், அது இவர்களைப் பட்சிக்கு
மென்று சேனைபதியும் தேவனுமாகிய யெ
கோவா சொல்லுகிறார்.—இஸரவேல் வமிசத் ௰௫
தாரே, பாருங்கள், நான்தூரதேசத்திலிருந்துஉங்
களுக்குவிரோதமாக ஒருசாதியாரைக்கொண்டு
வருவேனென்று யெகோவா சொல்லுகிறார்:
அவர்கள் பலத்தசாதி, பூருவகாலத்துச்சாதி, நீ அ
றியாதபாஷையைப்பேசுஞ்சாதி, அவர்களுடை
யபேச்சு உனக்கு விளங்காது.–அவர்களுடைய ௰௬
அம்புறாத்தூணி திறந்தபிரேதக்குழி,அவர்கள்யா
வரும் பராக்கிரமவீரர்கள்.—அவர்கள்வந்து உன் ௰௭
புத்திரரும் புத்திரிகளும் புசிக்கவேண்டிய உன்
விளைவையும், உன்ஆகாரத்தையும் பட்சிப்பார்
கள்: உன்ஆடுமாடுகளையும் பட்சிப்பார்கள்:உன்
திராட்சக்கொடிகளையும்,அத்திமரங்களையும் பட்
சிப்பார்கள்: நீ நம்பின உன்அரணான நகரங்க
ளைக்கட்கத்தினாலே வெறுமையாக்குவார்கள்.—
ஆனாலும்அந்தச்சமயத்திலே நான் உங்களைமுழு ௰௮
மையும்நாசப்படுத்தமாட்டேனென்றுயெகோ
வா சொல்லுகிறார்.

(௩௧) ஏசா.௧.௰௫. புல.௧.௰௭.—(௫. அதி. ௧.) எசேக்.௨௨.௩௰. ஆதி.௰௮.௨௩,. (௨) தீத்.௧.௰௬. (௩) ௨.நாளா.௰௬.௯. ஏசா.௧.௫. செப்.௩.௨. (௫) மீகா.௩.௧. (௬) அபகூ.௧.௮. செப்.௩.௩. ஓசி.௰௩.௭. (௭) யோசு.௨௩.௭. செப்.௧.௫. உபா.௩௨.௨௧. சலா.௪.௮. உபா.௩௨.௰௫. (௮) எசேக்.௨௨.௰௧. (௯) அதி.௪௪.௨௨. (௰௨) ௨.நாளா.௩௬.௰௬. ஏசா.௨௮.௰௫. (௰௫) உபா.௨௮.௪௯. ஏசா.௫.௨௬. ஏசா.௩௯.௩. (௰௭) லேவி.௨௬.௰௬. உபா.௨௮.௩௧,௩௩.

௰௯ நம்முடைய தேவனாகிய யெகோவா இ
வைகளெல்லாவற்றையும் எங்களுக்கு எதற்கா
கச்செய்கிறாரென்று நீங்கள் கேட்டால், நீங்கள்
என்னைவிட்டுச் சுயதேசத்தில் அந்நிய தேவர்க
ளைச்சேவித்ததுபோலப் பரதேசத்தில் அந்நியர்க
ளைச்சேவிக்கவேண்டுமென்று நீ அவர்களிடத்
௨௰ தில்சொல்லுவாய்.—அஞ்ஞானமுள்ள சனங்க
ளே,கண்ணிருந்துங்காணாமலும்,காதிருந்துங்கே
ளாமலுமிருக்கிற அவிவேகிகளே,கேளுங்கள்,—
௨௧ நீங்கள் எனக்குப்பயப்படமாட்டீர்களா; சமுத்
திரந்தன்எல்லையைக்கடவாதபடிக்கும்,அதின்தி
ரைகள் மோதினாலும் மேற்கொள்ளாதபடிக்கும்,
அவைகள் இரைந்தாலும்மேலேபாயாதபடிக்கும்
நித்திய நியமமாய் மணலை எல்லையாக ஏற்படுத்
தினவருடைய சந்நிதானத்தில் நீங்கள் நடுங்க
மாட்டீர்களாவென்று யெகோவா சொல்லு
௨௨ கிறாரென்பதை,—யாக்கோபின் வமிசத்தாரிடத்
தில் தெரிவித்து, யூதா வமிசத்தாருக்குப் பிரசித்
௨௩ தம்பண்ணுங்கள்.—இந்தச்சனங்களோ கீழ்ப்ப
டியாமல் கலகஞ்செய்யும் இருதயமுள்ளவர்கள்;
௨௪ இவர்கள் நிலைமாறிப்போனார்கள்.—அந்தந்தப்ப
ருவத்தில் முன்மாரியும் பின்மாரியுமாக மழை
யைக்கொடுத்து, அறுப்புக்காலத்தின் நியமித்த
வாரங்களை வருவிக்கும் நம்முடைய தேவனா
கிய யெகோவாவுக்கு இனிப்பயப்படுவோ
மென்று சிந்திக்கிறதில்லை.

௨௫ உங்கள் அக்கிரமங்கள் இவைகள் எல்லாவற்
றையும் விலக்கின, உங்கள் பாவங்கள் உங்க
௨௬ ளுக்கு நன்மைவராமல் தடுத்தன.-குருவிபிடிக்கி
றவர்கள் பதுங்குகிறதுபோல மனுஷரைப்பிடிக்
கும்படி கண்ணிகளைவைத்துப்பதுங்குந் துன்
மார்க்கர் என் சனங்களுக்குள்ளே காணப்படுகி
௨௭ றார்கள்.—கூடு குருவிகளால் நிறைந்திருப்பது
போல அவர்கள் வீடுகள் கபடத்தினால் நிறைந்
திருக்கின்றன: ஆதலால் அவர்கள் பெரியவர்க
௨௮ ளாகி ஐசுவரியவான்களாயிருக்கிறார்கள்.-அவர்
கள் புஷ்டியாகி மினுமினுப்பாயிருக்கிறார்கள்:
துன்மார்க்கருடைய செய்கைகளிலும் அவர்கள்
செய்கை அதிகரித்தது: அநாதபிள்ளைகளின் நி
யாயத்தை விசாரிக்கிறதில்லை; தாங்களேவாழுகி
றார்கள்; தரித்திரருடைய காரியத்தை விசாரிக்
௨௯ கிறதில்லை.—இவைகளினிமித்தம் நான் தண்டி
யாமல் விடுவேனா; இப்படிப்பட்ட சாதியாரி
டத்தில் என் ஆத்துமா பழிவாங்காதாவென்று
யெகோவா சொல்லுகிறார்.

௩௰ பிரமிப்பும் பயங்கரமுமான ஒருகாரியந் தே
௩௧ சத்திலே செய்யப்படுகின்றது.—தீர்க்கதரிசிகள்
கள்ளத்தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறார்கள், ஆசா
ரியர்கள் அவர்கள் வழியாய் ஆளுகைசெய்கிறார்
கள்; அப்படியிருப்பது என் சனங்களுக்குப்பி
ரியம்: நீங்கள்முடிவில்என்னசெய்வீர்கள்.

## ௬. அதிகாரம்.

௧. சனங்களின்பாவத்தைத்தெரிவித்தல்: ௰௬.பா
வத்தினின்றுந் திரும்பும்படி ஏவல், திரும்பா
ததினால்வரும் ஆபத்தை முன்னுரைத்தல்: ௨௭.
தேவன் எரேமியாவுக்கு அருளல்.

பென்யாமீனின் சந்ததியாரே, நீங்கள் ஏக ௧
மாய்க்கூடி யெருஷலேமினின்று தப்பியோடுங்
கள்,தெக்கோயாவில் எக்காளமூதுங்கள், பேதக்
கேரேமில்அக்கினிக்குறிகாட்டுங்கள்: தீமையும்
மகாசங்காரமும் வடக்கினின்று தோன்றுகின்ற
ன.—சௌந்தரியமுள்ள சுசியான ஸ்திரிக்குச் ௨
சீயோன்குமாரத்தியை ஒப்பிட்டேன்.—மேய்ப் ௩
பர் தங்கள் ஆட்டுக்கூட்டத்தோடும் அவளிடத்
தில் வருவார்கள்; அவர்கள்சுற்றிலும் அவளுக்
குவிரோதமாய்ப் பாளயமிறங்குவார்கள்; அவர்
கள் தங்கள்தங்களுடைய ஸ்தானத்தில் மேய்ப்
பார்கள்.—அவளுக்குவிரோதமாக யுத்தஞ்செய்ய ௪
ஆயத்தப்படுத்துங்கள்; நாம் மத்தியானகாலத்திற்
போவோம், எழுந்துவாருங்கள். ஐயோ, நமக்
குஆபத்துவருமே, பொழுதுசாய்கின்றது,சாயங்
காலநிழல்கள் நீடிக்கின்றன.—எழுந்திருங்கள், ௫
நாம் இராத்திரியிலே போவோம், அவளுடைய
அரமனைகளைநாசப்படுத்துவோம்.

மரங்களைவெட்டி யெருஷலேமுக்கு விரோ ௬
தமாகக்கொத்தளம்போடுங்கள்: அதுவேதண்டிக்
கப்படத்தக்கநகரம்; அதின்நடுவில் சகலவிதமா
னகொடுமையுமுண்டு.—ஊற்றின் கண்ணிடத் ௭
தில் நீரூறுகிறதுபோல அதுதன்தீங்கைச்சுரக்கப்
பண்ணுகின்றது: அதிலேகொடுமையும் கொள்
ளையும் கேட்கப்படுகின்றன; துக்கமும் காயங்
களும் நித்தமும் என்சமுகத்தில்வெளிப்படுகின்
றன.—யெருஷலேமே, நீ உபதேசத்தைக்கேள், ௮
இல்லாவிட்டால் என்மனம் உன்னைப்பிரிந்துவி
ட, நான் உன்னைப்பாழ்ப்படுத்தி, குடியில்லாத
தேசமாக்குவேனென்று சேனைபதியாகிய யெ
கோவா சொல்லுகிறார்.

இஸரவேலரில் மீந்த சனங்களைத்திராட்சப்ப ௯
ழம்போல முழுமையும் பொறுக்குவார்கள்: தி
ராட்சப்பழங்களைச் சேகரிக்கிறவனைப் போலத்
திரும்பவும் உன்கையைக்கூடைகளில்போடெ
ன்று சேனைபதியாகிய யெகோவா சொல்லு
கிறார்.-அவர்கள்கேட்கும்படி நான்யாருடன்பே ௰
சிச்சாட்சியிடுவேன், பார்,அவர்கள்காதுவிருத்த
சேதனமில்லாத காது,அவர்கள்கேட்கமாட்டார்
கள்: பாரும், யெகோவாவின் வாக்கு அவர்
களுக்குநிந்தையாயிருக்கின்றது; அதில்அவர்கள்
பிரியப்படவில்லை.—ஆதலால் நான் யெகோ ௰௧

(௰௯) உபா.௨௯.௨௪,. ௧.இரா.௯.௮,௯. உபா.௨௮.௪௮. (௨௰) ஏசா.௬.௯. எசேக்.௰௨.௨. மத்.௰௩.௰௪. அப்.௨௮.௨௬. ரோ.௰௧.௮. ஓசி.௭.௰௧. வெளி.௰௫.௪. (௨௧) யோபு.௩௮.௰,௰௧. நீதி.௮.௨௯. (௨௪) மத்.௫.௪௫. அப்.௰௪.௰௭. உபா.௰௧.௰௪. யோவே.௨.௨௩. ஆதி.௮.௨௨. (௨௬) நீதி.௧.௰௧,௰௭,௰௮. அபகூ.௧.௰௫. (௨௮) உபா.௩௨.௰௫. ஏசா.௧.௨௩. சக.௭.௰. சங்.௭௩.௰௨. (௨௯) மல்.௩.௫. (௩௰) ஓசி.௬.௰. (௩௧) எசேக்.௰௩.௬. மீகா.௨.௰௧.—(௬. அதி. ௧.) நெகி.௩.௰௪. (௩) ௨.இரா.௨௫.௧,௪. (௪) அதி.௫௧.௨௭. யோவே.௩.௯. (௭) ஏசா.௫௭.௨௰. எசேக்.௭.௰௧,௨௩. (௮) எசேக்.௨௩.௰௮. ஓசி.௯.௰௨. (௰) அப்.௭.௫௧.

வாவின் கோபத்தினால் நிறைந்திருக்கிறேன்;
அடக்கி இளைத்தேன்: வீதியிலுள்ள குழந்தைகள்
மேலும், வாலிபருடைய சங்கத்தின்மேலும் அ
தை யூற்றுவேன்: புருஷனும், மனைவியும்,விருத்
தனும், பூரண ஆயுளுள்ளவனுங் கூடப்பிடிக்கப்
௰௨ படுவார்கள்.—அவர்களுடையவீடுகளும்நிலங்க
ளும்ஸ்திரிகளுடன் பிறருக்குக்கொடுக்கப்படும்:
தேசத்தாருக்கு விரோதமாய் நான் என்கையை
ஓங்குவேனென்று யெகோவா சொல்லுகி
௰௩ றார்.—அவர்கள் சிறியோர் பெரியோர்யாவரும்
பொருளாசைக்காரர்; தீர்க்கதரிசி ஆசாரியன்முத
௰௪ லாகியயாவரும்கபடஞ்செய்கிறார்கள்-சமாதான
மில்லாதகாலத்தில், சமாதானம், சமாதானமென்
றுசொல்லி, என்சனங்களின்காயங்களைமேற்பூச்
௰௫ சாகச்சொஸ்தப்படுத்தினார்கள்.-அவர்கள் அரோ
சியமான கிரியையைச்செய்தபின்பு இலச்சைய
டைந்தார்களா; இல்லை, சற்றும் இலச்சையடை
யவில்லை, அவர்கள்நாணங்கொள்வதில்லை: ஆத
லால் விழுகிறசனங்களுக்குள்ளே விழுவார்கள்:
நான் அவர்களைத்தண்டிக்குங்காலத்தில் கீழேவி
ழுவார்களென்று யெகோவா சொல்லுகிறார்.-
௰௬ நீங்கள் வழிகளிலே நின்றுபாருங்கள், பூருவ
பாதைகளெங்கே, செவ்வையான வழியெங்கே
யென்றுகேட்டு விசாரியுங்கள், அதிலே நடவுங்
கள், அப்பொழுது உங்கள் ஆத்துமங்களுக்கு ஆ
றுதல்கிடைக்குமென்று யெகோவா சொல்லு
கிறார். அவர்களோ நடக்கமாட்டோமென்றார்
௰௭ கள்.—அன்றியும்நான்உங்கள்மேற்காவலாளரை
ஏற்படுத்தி, எக்காளசத்தத்துக்குச்செவிகொடுங்க
ளென்றுசொல்ல,அவர்கள், நாங்கள்கேட்கமாட்
டோமென்றார்கள்.
௰௮ ஆதலால் சாதியாரே,கேளுங்கள், கூட்டமே,
அவர்களுக்குள் இருக்கிறதை அறிந்துகொள்.—
௰௯ பூமியே, கேள்: இந்தச்சனங்கள் என்வாக்குக்
குச் செவிகொடுக்கிறதில்லை, என் நியாயப்பிர
மாணத்தைக் கேளாமல் அதை அவமானம்
பண்ணினார்கள், ஆதலால் பார், அவர்களுடை
ய துர்ச்சிந்தனைகளின் கனியாகிய தீமையை அ
௨௰ வர்கள்மேல் வருவிப்பேன்.—ஷேபாவினின்று
என்னிடத்தில் தூபம் வருவதேது, தூரதேசத்தி
னின்று வருகிறவசம்பு எனக்கேன்; உங்கள் தக
னபலிகள் என்னால் அங்கிகரிக்கப்படவில்லை,
௨௧ உங்கள் பலிகள் எனக்கினியவைகளல்ல.—பா
ருங்கள், நான் இந்தச் சனங்களுக்கு முன்பாக
இடறுகட்டைகளை வைப்பேன், அவைகளினா
லேபிதாக்களும் புத்திரரும் இடறிவிழுவார்கள்;
அயலானும் அவன்சிநேகனும் ஏகமாய் நாசமா
வார்களென்று யெகோவா சொல்லுகிறார்.-
௨௨ பாருங்கள், வடதேசத்தினின்று சனங்கள்வரு
கிறார்கள், பூமியின்கடையெல்லைகளினின்று ஒ
௨௩ ருபிரதானசாதியார் எழுப்பப்படுவார்கள்.-அவர்
கள்வில்லையுமீட்டியையும்பிடித்துக்கொள்வார்
கள்; அவர்கள் இரங்காமல்கொடியவர்களாயிருக்
கிறார்கள்; அவர்கள் சத்தஞ்சமுத்திரத்தினிரைச்ச
லுக்குச்சமானம்; சீயோன்குமாரத்தியே, அவர்
கள்யுத்தத்திற்கு அணிவகுக்கப்பட்டவர்களாகி,
குதிரைகளின்மேல் உனக்குவிரோதமாய் வருகி
றார்களென்று யெகோவா சொல்லுகிறார்.—
அவர்களுடையகீர்த்தியைக்கேட்டோம்: நம்மு ௨௪
டையகைகள்சோர்ந்துபோயின: யாதனையும்,ஸ்
திரியின்பிரசவவேதனைபோன்றவேதனையும்நம்
மைப்பிடித்தன.-வயல்வெளியிலே புறப்படாதி ௨௫
ருங்கள், வீதியிலும் நடவாதிருங்கள்; சத்துருவி
ன்கட்கமும்பயங்கரமும் சுற்றிலுமிருக்கின்றன.
என்சனங்களின்குமாரத்தியே, நீ இரட்டைத் ௨௬
தரித்துக்கொண்டு, சாம்பலிலேபுரண்டு, ஏகபுத்
திரன்இறந்ததினிமித்தம்உண்டான துக்கத்தைப்
போன்ற துக்கமடைந்து, மனங்கசந்து புலம்பு:
நாசப்படுத்துகிறவன் விரைவில் எங்கள்மேல்வ
ருவான்.—அவர்களுடையவழியை நீ சோதித்த ௨௭
றியும்படி என் சனங்களுக்குள்ளே கோட்டை
யாகவும் அரணாகவும் உன்னைநான்வைத்தேன்.—
அவர்களெல்லாரும் விசுவாசகாதகர், தூற்றித்தி ௨௮
ரிகிறவர்கள்: அவர்கள் பித்தளை, இரும்பு; அவர்
கள்யாவருங் கேடுள்ளவர்கள்.—துருத்தி அக்கினி ௨௯
யினாலெரிந்து ஈயம்அழிந்துபோயிற்று; புடமிடு
கிறவனுடையபிரயாசம் விருதா.-பொல்லாதவர் ௩௰
கள்நீக்கப்படவில்லை, யெகோவா அவர்களை
ப்புறக்கணித்தார்:ஆதலால்அவர்கள் தள்ளப்பட்
டவெள்ளியென்றுபெயர்பெறுவார்களென்றது.

## எ. அதிகாரம்.

க. பாவத்தினிமித்தம் மனஸ்தாபப்படும்படி தேவன் சனங்களை ஏவல்: ௰௬. மனஸ்தாபப்படாதிருந்தவர்களுக்குவருந் துக்கத்தைக்குறித்தல்: ௨௧. அவர்கள் பலிமுதலியவைகளைத் தேவன் அங்கிகரியாமல் விடல்: ௩௰. தொப்பேத்தையும் சனங்களின் பாவத்தையும் அதற்குவருந் தண்டனையையுமுரைத்தல்

எரேமியாவுக்குக்கிடைத்தயெகோவாவின் க
வாக்கு:—நீ, யெகோவாவின் ஆலயத்தின் ௨
வாசலிலேநின்று, யெகோவாவுக்கு ஆராத
னைசெய்யும்படி இந்தவாசல்களிலே பிரவேசிக்
கிறயூதாசனங்களாகிய நீங்களெல்லாரும்யெ
கோவாவின் வாக்கைக்கேளுங்கள்.-உங்கள் ௩
வழிகளையும் உங்கள் கிரியைகளையுஞ் சீர்ப்படுத்
துங்கள், அப்பொழுது நான் உங்களை இந்தஸ்தா
னத்திலேவசிக்கப்பண்ணுவேனென்று இஸரவே
லின் தேவனும் சேனைபதியுமாகிய யெகோ
வா சொல்லுகிறாரென்னும்இவ்வாக்கைச்சொல்
லிப் பிரசித்தப்படுத்து.—யெகோவாவின் ஆ ௪
லயம், யெகோவாவின் ஆலயம், யெகோ
வாவின் ஆலயம் இவைகளேயென்றுசொல்லி,

(௰௨) உபா.௨௮.௩௰. (௰௩) ஏசா.௫௬.௰௧. மீகா.௩.௫,௰௧. (௰௪) எசேக்.௰௩.௰. (௰௬) ஏசா.௮.௨௰. மல்.௪.௪. லூக். ௰௬.௨௯. மத்.௰௧.௨௯. (௰௭) ஏசா.௨௯.௰௧. எசேக்.௩.௰௭. அபகூ.௨.௧. (௰௯) ஏசா.௧.௨. நீதி.௧.௩௧. (௨௰) சங். ௫௰.௯. ஏசா.௧.௰௧. ஆமோ.௫.௨௧. மீகா.௬.௬,. ஏசா.௬௰.௬. (௨௩) ஏசா.௫.௩௰. (௨௬) மீகா.௧.௰. சக.௰௨.௰.(௨௮) எசேக்.௨௨.௰௮. (௩௰) ஏசா.௧.௨௨.—(எ. அதி. ௪.) மீகா.௩.௰௧.

ரு நீங்கள் பொய்வாக்குகளைநம்பாதிருங்கள்.—நீங்
கள் உங்கள்வழிகளையும் உங்கள்கிரியைகளையும்
முழுவதுஞ் சீர்ப்படுத்தி, ஒருவனுக்கும் அவன்
அயலானுக்கும் உண்மையாக நியாயஞ்செய்து,-
சு பரதேசியையும், அநாதபிள்ளையையும், விதவை
யையும் உபத்திரவப்படுத்தாமலும், இவ்விடத்தி
லேகுற்றமில்லாத இரத்தத்தைச்சிந்தாமலும், உங்
களுக்குக் கேடுவருவிக்க அந்நிய தேவர்களைப்
எ பின்பற்றாமலும் நடந்தால்,—நான் உங்கள்முன்
னோருக்குக்கொடுத்த தேசத்திலுள்ள இந்தஸ்தா
னத்தில்சதாகாலங்களிலும்உங்களைவாசமாயிருக்
கும்படிசெய்வேன்.
அ பாருங்கள், பலன்தராத பொய்யானவாக்குக
கூ ளை நீங்கள் நம்புகிறீர்கள்.—நீங்கள் திருடி, கொ
லைசெய்து, விபசாரம்பண்ணி,பொய்யாணையிட்
டு, பாகாலுக்குத்தூபங்காட்டி, நீங்கள் அறியாத
ய அந்நியதேவர்களைப்பின்பற்றி,—பின்புவந்து என்
நாமந்தரிக்கப்பட்ட இந்தஆலயத்தில்என்சந்நிதா
னத்தினின்று, இந்த அரோசியமானவைகளெல்
லாவற்றையுஞ் செய்வதற்கு, நாங்கள் விடுதலை
யக பெற்றோமென்றுசொல்வது தகுமா.—என்நாமந்
தரிக்கப்பட்ட இந்த ஆலயம் உங்கள்பார்வைக்
குக்கள்ளருடைய குகையாயிற்றோ; பாருங்கள்,
நான்கண்டேனென்று யெகோவா சொல்லு
யஉ கிறார்.-பூருவகாலத்தில் நான்என்நாமம்வாசமாயி
ருக்கச்செய்த ஷீலோவிலுள்ள என்னுடைய ஸ்
தானத்திற்கு நீங்கள்போய், என்சனங்களாகியஇ
ஸரவேலர்செய்த தீமையினிமித்தம் நான்செய்த
யங தின்னதென்றுபாருங்கள்.-நீங்கள் இந்தக்கிரியை
களெல்லாவற்றையுஞ் செய்தும், நான் மிகவுஞ்
சாக்கிரதையாய் உங்களுக்குணர்த்தினேன், நீங்
களோகேட்கவில்லை; நான் உங்களைக்கூப்பிட்
யச டாலும் நீங்கள் உத்தரங்கொடுக்கவில்லை;—ஆத
லால்நான், என்நாமந்தரிக்கப்பட்டதும், நீங்கள்
நம்பிக்கொள்வதுமாகிய இந்த ஆலயத்திற்கும்,
உங்களுக்கும்உங்கள்முன்னோருக்கும்நான்கொ
டுத்தஇந்தஸ்தானத்திற்கும், நான் ஷீலோவுக்குச்
யரு செய்ததுபோலச்செய்து,—எப்பிராயீம் வமிசத்தா
ராகிய உங்கள்சகோதரர்சமஸ்தரையும் நான் தள்
ளிவிட்டதுபோல, உங்களையும் என்பார்வையி
னின்று தள்ளிவிடுவேனென்று யெகோவா
யசு சொல்லுகிறார்.—நீ இந்தச்சனங்களுக்காகஎன்னி
டத்தில் பிரார்த்தனைபண்ணவேண்டாம், அவர்
கள்நிமித்தம் ஓலமிட்டுக்கெஞ்சவும்வேண்டாம்,
என்னைநோக்கி விண்ணப்பஞ்செய்யாதே:நான்
உனக்குச்செவிகொடேன்.
யஎ யூதா நகரங்களிலும், யெருஷலேமின் வீதி
களிலும் அவர்கள்செய்வது இன்னதென்பதை
யஅ நீ காணவில்லையா.—என்னைக்கோபமூட்டும்படி
வானத்தின் இராசஸ்திரிக்குப் பணிகாரங்களைச்
சுடும்படிக்கும், அந்நிய தேவர்களுக்குப் பானப
லிகளைச்சொரியும்படிக்கும் புத்திரர்விறகுகளைப்
பொறுக்குகிறார்கள், பிதாக்கள் நெருப்பு மூட்டு
கிறார்கள், ஸ்திரிகள் மாவைப்பிசைகிறார்கள்.—
அவர்கள் என்னைக்கோபமூட்டுகிறார்களா; அ யகூ
வர்கள் தங்கள் முகங்கள் இலச்சையடையும்ப
டிதங்களையே கிலேசப்படுத்துகிறார்களல்
லவாவென்று யெகோவா சொல்லுகிறார்.—
ஆதலால் பார், இந்தஸ்தானத்தின்மேலும், மனு உய
ஷன்மேலும், மிருகசெந்துக்கள்மேலும், வெளி
யிலுள்ள விருட்சங்கள்மேலும், பூமியின் விளை
வின்மேலும் என் கோபமும் என் உக்கிரகோப
மும் ஊற்றப்படும்; அவியாமல் எரிந்துபோமெ
ன்று ஆண்டவராகிய யெகோவா சொல்
லுகிறார்.
நீங்கள் மற்றப்பலிகளோடே தகனபலிகளைக் உக
கூட்டி மாமிசத்தைப்புசியுங்கள்.—நான் உங்கள் உஉ
முன்னோரை எகிப்து தேசத்தினின்று அழைத்
துவந்தகாலத்தில், தகனபலிகளையாவது மற்றப்
பலிகளையாவது குறித்து நான் அவர்களிடத்திற்
பேசவுமில்லை, கட்டளையிடவுமில்லை.—என் உங
வாக்குக்குஅமைந்திருங்கள், அப்பொழுதுநான்
உங்களுக்குத் தேவனாவேன், நீங்களோ எனக்
குச்சனங்களாவீர்கள்: உங்களுக்கு நன்மையுண்
டாகும்படி நான் உங்களுக்குக் கட்டளையிட்
ட எல்லாநெறிகளிலும் நடவுங்களென்றுசொல்
லி, நான்அவர்களுக்குக் கட்டளையிட்டேன்.—
அவர்கள் அதைக்கேளாமலும்,செவிசாயாமலும் உச
தங்கள் ஆலோசனைகளுக்கும் தங்கள் கேடுள்ள
இருதயத்தின் கடினத்துக்குமேற்கடந்து,முன்
னிடாமல் பின்னிட்டார்கள்.—உங்கள் முன் உரு
னோர் எகிப்துதேசத்தினின்று புறப்பட்ட நாள்
முதல் இந்நாள்வரைக்கும் நான் நித்தமுஞ்சாக்கி
ரதையோடே என்தாசராகிய சகலதீர்க்கதரிசிக
ளையும் உங்களிடத்தில் அனுப்பினேன்.—ஆனா உசு
லும் அவர்கள்எனக்குச்செவிகொடாமலும், செ
விசாயாமலும்போய், தங்கள் கழுத்தைக்கடினப்
படுத்தினார்கள்: அவர்கள் தங்கள்முன்னோரிலும்
அதிக தீமைசெய்தார்கள்.—நீ இவைகளெல்லா உஎ
வற்றையும் அவர்களுக்குச் சொன்னாலும் உன்
வாக்கைக் கேட்கமாட்டார்கள்: நீ அவர்களை
நோக்கிக் கூப்பிட்டாலும், உனக்கு உத்தரங்
கொடார்கள்.-ஆதலால் நீ அவர்களைநோக்கி,இந் உஅ
தச்சாதியார் தங்கள் தேவனாகிய யெகோ
வாவின் வாக்கைக்கேளாமலும்,கண்டனையை
ஏற்றுக்கொள்ளாமலுமிருக்கிறார்கள்: சத்தியம்அ
ழிந்துபோயிற்று, அது அவர்கள் வாயினின்று
சேதிக்கப்பட்டதென்பதைச் சொல்லென்று இ

(சு) உபா.௲.யச,யரு. (எ) உபா.ச.சய.(கூ)க.இரா.யஅ.உக. ஓசி.ச.க,உ. செப்.க.ரு. யாத்.உய.௩. (ய) எசேக்.உ௩. யக. (யக) எசா.ருசு.எ. மத்.உக.ய௩. (யஉ) யோசு.யஅ.க. நியா.யஅ.௩க. உபா.யஉ.யக. க.சாமு.ச.ய,யக. (ய௩) உ.நாளா.௩௬.யரு. நீதி.க.உச. எசா.சுரு.யஉ. (யச) க.சாமு.ச.ய,யக. (யரு) உ.இரா.யஎ.உஉ. (யசு) யாத்.௩உ.ய. (யகூ) உபா.௩உ.யசு,உக. (உக) எசா.க.யக. ஆமோ.ரு.உக. (உஉ) க.சாமு.யரு.உஉ. ஓசி.௬.௬. (உ௩) யாத்.யரு. உ௬. உபா.௬.௩. யாத்.யகூ.ரு. லேவி.உ௬.யஉ.(உச)உபா.உகூ.யகூ. ஓசி.ச.யசு. (உரு) உ.நாளா.௩௬.யரு.(உசு)நெ கி.கூ.யஎ,உகூ. (உஎ) எசேக்.உ.எ.

ஸ்ரவேலின் தேவனும் சேனைபதியுமாகிய யெ
கோவா சொல்லுகிறார்.
உ௯ நீ உன்தலைமயிரைச்சிரைத்து அதை எறிந்துவி
டு, உயர்ந்தஸ்தானங்களிலே புலம்பிக்கொண்டி
ரு; யெகோவா தமது கோபத்தின் சந்ததியா
௩௰ ரைத்தள்ளிக் கைவிட்டார்.—யூதாவின் சந்ததி
யார் என் சமுகத்தில் தீங்குசெய்தார்களென்று
யெகோவா சொல்லுகிறார்: என்னுமந்தரிக்
கப்பட்ட ஆலயத்தை அசுசிப்படுத்தும்படி அதில்
தங்கள் அரோசியமானவைகளை வைத்தார்கள்.—
௩௧ அவர்கள் தங்கள்புத்திரரையும் புத்திரிகளையும்
அக்கினியினாலே தகிக்கும்படி இன்னோமின்புத்
திரனுடையதாழ்ந்தபூமியிலுள்ள தொப்பேத்தின்
உயர்ந்தஸ்தானங்களைக் கட்டினார்கள்: இப்படி
நான்கட்டளையிடவுமில்லை, இது என்னால் அங்
கிகரிக்கப்படவுமில்லை.
௩௨ பாருங்கள், இடங்கிடையாதபடி தொப்பேத்
திலே பிரேதங்களை அடக்கம்பண்ணுவார்கள்: ஆ
தலால் அது தொப்பேத்தென்றாகிலும் இன்னோ
மின்புத்திரனுடைய தாழ்ந்த பூமியென்றாகிலும்
பெயர்பெறாமல் சங்காரத்தின் தாழ்ந்தபூமியென்
௩௩ று பெயர்பெறுங்காலம் வரும்.—இந்தச்சனங்க
ளின் பிணங்கள் ஆகாயத்துப் பறவைகளுக்கும்,
பூமியின்மிருகங்களுக்குமிரையாகும்; அவைக
௩௪ ளைவெருட்டுவார் ஒருவருமில்லை.—அப்பொழு
து நான் யூதாவின்நகரங்களுக்குள்ளும் யெருஷ
லேமின் வீதிகளுக்குள்ளும்களிப்பின்சத்தமும்,
மகிழ்ச்சியின்சத்தமும், மணவாளனுடைய சத்த
மும், மணவாட்டியின்சத்தமும் ஒழியப்பண்ணு
வேன்: தேசம்பாழாகுமென்று யெகோவா
சொல்லுகிறார்.

## அ. அதிகாரம்.

௧. சீவிப்போர் மரித்தோர் என்னுமிவர்களின் கேட்டைத்தெரிவித்தல்: ௪. கடினத்தினிமித்தம் சனங்களைக் கண்டித்தல்: ௰௪. துக்கநிலைமையைஉணர்ந்துசொல்லல்: ௰௮. சனங்களுடைய துக்கத்தினிமித்தம் எரேமியா புலம்பல்.

அக்காலத்திலே அவர்கள் யூதாதேசத்து இரா
சாக்களின்எலும்புகளையும், அவர்களுடைய பிர
புகளின் எலும்புகளையும், ஆசாரியர்களுடைய
எலும்புகளையும், தீர்க்கதரிசிகளின் எலும்புகளை
யும், யெருஷலேமியரின்எலும்புகளையும் அவர்
களுடைய பிரேதக்குழிகளினின்று வெளியே
உ கொண்டுவந்து,—அவர்கள்தேடி, நேசித்து, சே
வித்து, பின்பற்றிநடந்து, நமஸ்கரித்தசூரியனுக்
கும், சந்திரனுக்கும், ஆகாயத்திலுள்ள சமஸ்த
சேனைகளுக்குமுன்பாகப் பரப்பிவைப்பார்கள்:
அவைகள் இனி ஏகமாய்ச்சேர்க்கப்படாமலும்,
புதைக்கப்படாமலும் பூமியின்முகத்தின்மேல்எ
ருவாகுமென்று யெகோவா சொல்லுகிறார்.—
இந்தத்துஷ்டவமிசத்தில் மீந்து, என்னால் துரத் ௩
துண்டு, எந்தஸ்தானங்களிலும் தங்கும் மீதியா
னவர்கள்யாவரும் சீவனிலும் மரணத்தையே வி
ரும்புவார்களென்று சேனைபதியாகிய யெகோ
வா சொல்லுகிறார்.
மேலும் நீ அவர்களை நோக்கி, விழுந்தவர்கள் ௪
இனி எழுந்திருக்கமாட்டார்களா; வழியைவிட்
டு விலகினவன் திரும்பமாட்டானா.—யெருஷ ௫
லேமிலுள்ள இந்தச்சனங்கள் என்றும் மீளாதப
டி விலகிப்போவதென்ன; அவர்கள் கபடத்தை
யுறுதியாகப்பிடிக்கிறார்கள், திரும்பச்சம்மதிக்கி
றதில்லை.—நான் உற்றுக்கேட்டேன், அவர்கள் ௬
யதார்த்தமாய்ப்பேசவில்லை: ஐயோ என்னசெய்
தேனென்றுசொல்லி அவர்களில் ஒருவனும்தன்
தீமையைக்குறித்து மனஸ்தாபப்படுகிறதில்லை;
குதிரை யுத்தத்திலே பாய்வதுபோல அவர்கள
னைவரும் தங்கள் தங்கள் வழியிலே திரும்பி
னார்கள்.—ஆகாயத்திலுள்ள செங்காலுநாரையும் த ௭
னக்கு நியமித்தசமயங்களை அறிந்துகொள்ளும்;
காட்டுப்புறாவும், நிமிடும், தகைவிலான் குரு
வியும் தாங்கள் வரத்தக்க காலங்களை அறியும்;
என்சனங்களோ யெகோவாவின் நியாயமு
றைமையை அறியார்களென்று யெகோவா
சொல்லுகிறேனென்பதைச்சொல்லு.—நாங்கள்ஞா ௮
னிகள், யெகோவா அருளியவேதம் எங்களி
டத்தில் உண்டென்று நீங்கள்சொல்வதெப்படி;
பாருங்கள், இலேககருடைய கள்ளமான எழு
துகோல் இதைப் பொய்யாக்கிவிட்டது.-ஞானி ௯
கள் பிரமிப்படைந்து கலங்கிப் பிடிக்கப்படுகி
றார்கள்: பாருங்கள், அவர்கள் யெகோவா
வின் வாக்கைத்தள்ளினார்கள்;அவர்களிடத்தில்
ஞானமுண்டா.—ஆதலால் அவர்களுடைய ம ௰
னைவிகளைப்பிறருக்கும், அவர்களுடைய வயல்
களை அவைகளைச் சுதந்தரிப்பவர்களுக்கும்
கொடுப்பேன்: அவர்கள் சிறியோர் பெரியோர்
யாவரும் பொருளாசைக்காரராயிருக்கிறார்கள்,
தீர்க்கதரிசி, ஆசாரியன்முதலாகிய யாவருங் கப
டஞ்செய்கிறார்கள்.—சமாதானமில்லாதிருந்தும், ௰௧
சமாதானம், சமாதானமென்றுசொல்லி, என்ச
னங்களுடைய குமாரத்தியின் காயங்களை மேற்
பூச்சாய்ச் சொஸ்தப்படுத்தினார்கள்.—அவர்கள் ௰௨
அரோசியமானகிரியைகளைச்செய்தும் இலச்சை
யடைந்தார்களா; இல்லை,சற்றும்இலச்சையடை
யவேயில்லை, அவர்கள் நாணங்கொள்வதில்லை:
ஆனபடியால் விழுகிற சனங்களுக்குள்ளே வி
ழுவார்கள்: நான் அவர்களைத்தண்டிக்குங்காலத்
திலே கீழேவிழுவார்களென்று யெகோவா
சொல்லுகிறார்.

(உ௯) யோபு.௧.உ௰. எசா.௰௫.உ. மீகா.௧.௰௬. (௩௰) உ.இரா.உ௧.௪,௮. உ.நாளா.௩௩.௪,௫,௮. எசேக்.௭.உ௰. தானி.௯.உ௭. (௩௧) உ.இரா.உ௩.௰. உபா.௰௭.உ. (௩௨) உ.இரா.உ௩.௰. எசேக்.௬.௫. (௩௩) உபா.உ௮.உ௬. (௩௪) எசா.உ௪.௭,௮. எசேக்.உ௬.௰௩. ஓசி.உ.௰௧. வெளி.௰௮.உ௩. லேவி.உ௬.௩௩. எசா.௧.௭.—(அ. அதி. உ.) உ.இரா.உ௩.௫. எசேக்.௮.௰௬. உ.இரா.௯.௩௬. (௩) யோபு.௩.௰௧,உ௰. வெளி.௯.௬. (௬) உ.பேது௫.௩௯. (௭) எசா.௧.௩. உன்.உ.௰உ. (௮) ரோ.உ.௰௭. எசா.௰.உ. (௰) உபா.உ௮.௩௰. ஆமோ.௫.௰௧. செப்.௧.௰௩. எசா.௫௬.௰௧. (௰௧) எசேக்.௰௩.௰.

௰௩ நான் அவர்களைச் சேதப்படுத்துவேனே: தி
ராட்சக்கொடியிலே பழமில்லை, அத்திமரத்திலே
பழமில்லை, அவைகளினிலையும் வாடிப்போம்;
நான் அவர்களுக்குக்கொடுத்தவைகள் அவர்களை
விட்டு நீங்குமென்று யெகோவா சொல்லு
௰௪ கிறார்.—நாம் சும்மா உட்காந்திருக்கிறதென்ன;
கூடிவாருங்கள், நாம் அரணான நகரங்களிற் பிர
வேசித்து அமைதியாயிருப்போம்: நாம் யெகோ
வாவுக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தபடியி
னால் நம்முடைய தேவனாகிய யெகோவா
நம்மை மவுனமாக்கி, நமக்குப் பித்தநீரைக் கு
௰௫ டிக்கக்கொடுத்தார்.—சமாதானத்தைக் காத்திருந்
தோம், நன்மையில்லை; சௌக்கியசமயத்துக்குக்
௰௬ காத்திருந்தோம், பாருங்கள், ஆபத்து.—தாணி
னின்று அவர்களுடைய குதிரைகளின் சீறுதல்
கேட்டது: அவனுடைய வலிய குதிரைகள் க
னைக்குஞ்சத்தத்தினாலே தேசமுழுவதும் அதிர்ந்த
து; அவர்கள் வந்து தேசத்தையும் அதின்விளை
வெல்லாவற்றையும், நகரத்தையும் அதில்வசிக்கி
௰௭ றவர்களையும் பட்சித்தார்கள்.—பாருங்கள், கட்
டப்படாத சருப்பங்களையும், கட்டுவிரியன்களை
யும் உங்களுக்குள் அனுப்புவேன், அவைகள்
உங்களைக்கடிக்குமென்று யெகோவா சொல்
லுகிறார்.

௰௮ ஆறாத துக்கம் என்மேல்வந்தது, என்னிருதய
௰௯ முள்ளே சோர்ந்துபோயிற்று.—பாருங்கள், தூர
தேசத்தினின்று என்சனங்களின்குமாரத்தி அல
றுஞ்சத்தங்கேட்கின்றது: யெகோவா சீயோ
னிலில்லையோ, அதின் அரசன் அங்கேயில்லை
யோ; அவர்கள் தங்கள்தொழிற்பட்டவிக்கிரகங்
களினாலும் அந்நியருடைய மாயப்பொருள்களி
௨௰ னாலும்என்னை என் கோபப்படுத்தினார்கள்.—அ
றுப்புக்காலஞ்சென்றது, கோடைக்காலம்முடிந்
௨௧ தது, நாங்கள் இரட்சிக்கப்படவில்லை.—என்ச
னங்களின் குமாரத்திக்குப்பட்ட காயத்தினிமித்
தம்என்நெஞ்சம் பிளந்தது; நான் கறுத்துப்போ
௨௨ னேன்; திகைப்பு என்னைப்பிடித்தது.—கிலியாத்
திலே தைலமில்லையோ; அங்கே வைத்தியனில்
லையோ; பின்னை என்என்சனங்களின்குமாரத்தி
சொஸ்தமடையவில்லை.

## ௯. அதிகாரம்.

௧. யூதேயரின்குற்றத்தைவெளிப்படுத்தல்: ௰. அதி
னால் வருந்தண்டனையின்னதென்று தெரிவித்
தல்: ௰௨. கட்டளைமீறுவதே அந்தத்தண்டனைக்
குக்காரணமென்று காட்டல்: ௰௭. நாசத்தினி
மித்தந்துக்கப்படும்படி ஏவல்: ௨௩. யெகோ
வாவை மேன்மைபாராட்டுவதுகடமையென்
றுசொல்லல்: ௨௫. யூதருக்கும் புறத்தேசத்தா
ருக்குந் தண்டனைவருமெனக்கூறல்.

ஐயோ, என்தலை நீர்களும், என்கண் நீரூற்றின்
கண்ணுமாயிருந்தால், நலம்; அப்பொழுது நான்கு
மாரத்தியென்னும் என்சனங்களில் கொலையுண்
டவர்கள்நிமித்தம் இரவும் பகலும் அழுவேன்.—
ஆ, வனத்திலே வழிப்போக்கருக்காகக் கட்டுங் ௨
குடிசை எனக்குண்டானால் நலம்; அப்பொழு
து நான் என்சனங்களைவிட்டுப்பிரிவேன், அவர்
கள் யாவரும் விபசாரிகள், நம்பிக்கைத்துரோகி
கள்.-அவர்கள் பொய்களைப் பிரயோகிக்கத் ௩
தங்கள் நாவென்னும் வில்லை வளைக்கிறார்கள்:
மெய்மையினாலேயல்ல பொய்மையினாலே
தேசத்தில் பலவான்களானார்கள்; தீமையுடன் தீ
மையைக்கூட்டிக்கொள்ளுகிறார்கள், என்னை அ
றியார்களென்று யெகோவா சொல்லுகிறார்.-
நீங்கள் உங்கள் உங்கள் அயலானைக்குறித்துச்சா ௪
வதானமாயிருங்கள், சகோதரனையும்நம்பவேண்
டாம்: எந்தச்சகோதரனும் நிச்சயமாய்க்கபடஞ்
செய்வான், அயலான் ஒவ்வொருவனுந் தூற்றித்
திரிகிறான்.—அவர்கள் தங்கள் தங்கள் சிநேகனை ௫
வஞ்சிக்கிறார்கள், அவர்கள்மெய்மைபேசார்கள்:
அவர்கள் தங்கள் நாவைப்பொய்பேசும்படி பயி
லுவிக்கிறார்கள், தீமைசெய்து இளைத்துப்போனார்
கள்.—கபடத்தின்மத்தியில் உன் வாசஸ்தலமுண் ௬
டு; அவர்கள்வஞ்சகஞ்செய்பவர்களாதலால் என்
னை அறியவிரும்புகிறதில்லையென்று யெகோ
வா சொல்லுகிறார் -ஆதலால் பார், நான் அவர்க ௭
ளை உருக்கிப்பரீட்சிப்பேன்; என் சனமாகியகு
மாரத்திக்குவேறென்ன செய்வேனென்று சேனா
பதியாகிய யெகோவா சொல்லுகிறார்.-அவர் ௮
கள் நாவு, பிரயோகித்த அம்பு; அது கபடம்பே
சுகின்றது: அவர்கள் தங்கள் அயலாருடன் சமா
தானமாய்ப்பேசுவார்கள், ஆனாலும் நினைவிலே
பதிவிருக்கிறார்கள்.

இவைகளினிமித்தம் நான்விசாரிக்கமாட்டே ௯
னா; இப்படிப்பட்டசாதியாரிடத்தில் என் ஆத்
துமா பழிவாங்கமாட்டாதாவென்று யெகோ
வா சொல்லுகிறார்.—நான் மலைகளைக்குறித்து ௰
அழுதுபுலம்புவேன், வனத்தின் வாசஸ்தலங்க
ளைக்குறித்துப்புலம்புவேன், அவைகளின் வழி
யாய் ஒருவனும்போகாதபடிக்கு அவைகள்தகிக்
கப்பட்டன; ஆடு மாடுகளின் சத்தங் கேளாமற்
போயிற்று, ஆகாயத்துப்பறவைகளும் மிருகங்க
ளும் ஓடின. அவைகள்போயின.—நான் யெரூ ௰௧
ஷலேமை மண்மேடுகளும், வலியசருப்பங்களு
டைய ஸ்தானமுமாக்குவேன்; யூதாவின் நகரங்
களிற்குடியிராதபடி அவைகளைவெறுமையாக்கு
வேன்.

தேசம்வனம்போல் அழிந்து, அதின்வழியாய் ௰௨
ஒருவரும்போகாதபடி தகிக்கப்பட்டதற்குக்கா
ரணம் இன்னதென்று உணரத்தக்க ஞானவான்
யாவன்; யெகோவாவின் வாய் சொல்லக்
கேட்டு, இதைஎங்களுக்குத்தெரிவிக்கத்தக்கவன்
யாவன்.—நான் தங்களுக்குவிதித்த என்கட்ட ௰௩

(௰௩) ஏசா.௫.௧,. யோவே.௧.௭. மத்.௨௧.௰௯. (௰௬) நியா.௫.௨௨. (௰௭) பிர.௰.௰௧. (௰௯) ஏசா.௩௯.௩. உபா.௩௨.
௨௧. ஏசா.௧.௪. (௨௧) யோவே.௨.௬. நாகூ.௨.௰. (௨௨) ஆதி.௩௭.௨௫.—(௯. அதி. ௧.) ஏசா.௨௨.௪. புல.௨.௰௧.
(௩) ஏசா.௫௯.௪,௰௩,௰௫. ௧.சாமு.௨.௰௨. ஓசி.௪.௧. (௪) மீகா.௭.௫,௬. (௭) ஏசா.௧.௨௫. மல்.௩.௩. ஓசி.௰௧.௮.(௮)
சங்.௨௮.௩. (௰) ஓசி.௪.௩. (௰௧) ஏசா.௨௫.௨. ஏசா.௰௩.௨௨. (௰௨) ஓசி.௰௪.௯.

௰௪ ளையைத்தள்ளி, என்வாக்கைக்கடந்து,—அதின்
படிநடவாமல் தங்கள்இருதயத்தின் வீண்சிந்த
னைக்கேற்கநடந்து, தங்கள் முன்னோர்போதித்த
பிரகாரம் பாகால்களைப்பற்றிக்கொண்டார்களே
௰௫ யென்று யெகோவா சொல்லுகிறார்.—ஆத
லால் பாருங்கள், நான்இந்தச்சனம் எட்டியைப்
புசிக்கவும், பித்துநீரைக் குடிக்கவும்பண்ணி,—
௰௬ இவர்களும் இவர்கள்முன்னோரும்அறியாத அந்
நியதேசத்தாருக்குள் இவர்களைச்சிதறப்பண்ணு
வேன்: நான் இவர்களைச்சங்காரஞ்செய்யும்வ
ரைக்குங் கட்கம்இவர்களைப்பின்தொடரச்செய்
வேனென்று, இஸரவேலின் தேவனும் சேனு
பதியுமாகிய யெகோவா சொல்லுகிறார்.
௰௭ நீங்கள் சிந்தித்துக்கொண்டு ஒப்புச்சொல்லிய
ழும்ஸ்திரிகளைவரவழைத்துக்கொள்ளுங்கள்;ஒப்
புச்சொல்ல வல்லவரைக்கூப்பிடும்படி ஆளனுப்
புங்களென்று சேனுபதியாகிய யெகோவா
௰௮ சொல்லுகிறார்.—அவர்கள்விரைந்து, நம்முடை
யகண்கள் நீரைச்சொரியவும், நம்முடைய கண்
ணிமைகளின்வழியாய்ச் சலஞ்சுரக்கவும் அவர்
௰௯ கள் நம்மைக்குறித்துப்புலம்பக்கடவர்கள்.—ஆ,
நாம் எவ்வளவாகக் கொள்ளையாடப்பட்டோம்,
நாம்தேசத்தைவிட்டுவிட்டோம்,நம்முடையவா
சஸ்தலம் நம்மைத்தள்ளிவிட்டது, நாம் மிகவுங்
கலங்குகிறோமென்று புலம்புகிறசத்தஞ் சீயோ
உ௰ னினின்றுகேட்கின்றது.—ஸ்திரிகளே, நீங்கள்
யெகோவாவின் வாக்கைக்கேளுங்கள், அ
வர்வாய்மொழி உங்கள் செவிக்கேறவிடுங்கள்,
உங்கள்புத்திரிகள்அலறவும், உங்கள்உங்கள்அய
லார்புலம்பவும் நீங்களனைவரும் பயிற்றுங்கள்.—
உக மரணம்நம்முடையபலகணிகளின்வழியாய்ஏறி
வந்தது, நம்முடைய அரமனைகளில்பிரவேசித்த
து, வெளியினின்றுபாலகரையும் வீதிகளினின்
உஉ று வாலிபரையும் சங்கரித்தது.—மனுஷருடைய
பிணம்எருவைப்போலவும், வாருகிறவர்கள்இல்
லாதவேளை அறுக்கிறவனுக்குப்பின்னாலேகிடக்
கும் அரியைப்போலவும் வெளியிலே கிடக்கு
மென்று யெகோவாசொல்லுகிறாரென்பதைச்
சொல்லு.
உ௩ ஞானவான் தன் ஞானத்தைக்குறித்து மேன்
மைபாராட்டவேண்டாம், பலவான் தன்பலத்
தைக்குறித்து மேன்மை பாராட்டவேண்டாம்,
செல்வன்தன்செல்வத்தைக்குறித்துமேன்மைபா
உ௪ ராட்டவேண்டாம்.-மேன்மைபாராட்டுகிறவன்,
பூமியிலே தயையையும், நியாய விசாரணையை
யும், நீதியையுஞ் செய்கிற யெகோவாவாகி
ய என்னை அறிந்து உணர்ந்திருப்பதைக்குறித்தே
மேன்மைபாராட்டக்கடவனென்று யெகோ
வா சொல்லுகிறார்: இவைகளில் நான் பிரியப்ப
டுகிறேனென்று யெகோவா சொல்லுகிறார்.
பாருங்கள், எகிப்தியரும், யூதேயரும், ஏதோ உ௫
மியரும், அம்மோன்புத்திரரும், மோவாபியரும்,
கடையெல்லைகளிலுள்ள வனவாசிகளுமாகியவி
ருத்தசேதனமில்லாதவர்களோடும் விருத்தசேத
னம்பெற்றயாவரையும் நான்விசாரிக்குங்காலம்
வரும்.—அந்நியதேசத்தாராகிய இவர்களெல்லா உ௬
ரும் விருத்தசேதனமில்லாதவர்கள், இஸரவேல்
வமிசத்தார்யாவரும் இருதயத்திலேவிருத்தசேத
னமில்லாதவர்கள்.

## ௰. அதிகாரம்.

க. விக்கிரகங்களை யெகோவாவுக் கொப்
பிடல்: ௰எ. தீர்க்கதரிசி சனங்களை மனந்திரும்
பும்படி ஏவல்: ௰௯. மெய்ப்பருக்குத்தண்டனை
வருமெனமுன்னுரைத்தல்: உ௩. எரேமியாபி
ரார்த்தித்தல்.

இஸரவேல்வமிசத்தாரே, யெகோவா உங் க
களுக்குச்சொல்லுகிற வாக்கைக்கேளுங்கள்.—
அந்நியதேசத்தாருடைய மார்க்கத்தில் பயிலாதி உ
ருங்கள், அந்நியதேசத்தார்வானத்தின் அடையா
ளங்களுக்கு அஞ்சுகிறார்கள்; நீங்களோஅவைக
ளுக்கு அஞ்சவேண்டாம்.—புறத்தேசத்தாருடை ௩
யவிதிகள்விருதா:அவர்கள்வனத்திலுள்ளவிருட்
சத்தைவெட்டுவார்கள்,வாய்ச்சியினாலேதொழிற்
காரன் ரூபப்படுத்துவான்.—பின்பு வெள்ளியினா ௪
லும்பொன்னினாலும் அதை அலங்கரித்து, அது
அசையாதபடிக்குச்சுத்தியலால் ஆணிதைப்பார்
கள்.—அவைகள் பனைமரத்தைப்போலநிமிர்ந்து ௫
நிற்கும், அவைகள்பேசக்கூடாது: அவைகள் ந
டக்கக்கூடாததினால் காவப்படவேண்டும். அ
வைகளுக்குப்பயப்படவேண்டாம்; அவைகள்
தீமைசெய்யவுங்கூடாது, நன்மைசெய்யவுங்கூ
டாது.—யெகோவாவே, உமக்கு நிகர் ஒருவ ௬
ருமில்லை; நீரேபெரியவர், உமது நாமமும்வல்ல
மையிற்பெரியது.—சாதிகளின் இராசாவே,உமக் எ
குப்பயப்படாதவன்யாவன்; அது உமக்கே ஏற்
றதாகும்: சாதியாரின் வித்துவான்களுக்குள்ளும்
அவர்களுடைய சமஸ்த இராச்சியங்களுக்குள்
ளும் உமக்குநிகர் ஒருவருமில்லை.—அவர்கள்மு அ
ழுமையும்மிருகத்தின்தன்மையானவர்கள், மதியீ
னர்:அந்தமரந்தானே மாயைகளைக்கடிந்துகொள்
ளுகின்றது.—தொழிற்காரனால் தகடாக்கப்பட் ௯
டவெள்ளி தர்ஷீஷிலும், தட்டானுடையகையி
னால் புடமிடப்பட்ட பொன் ஊபாசிலுமி
ருந்து கொண்டுவரப்படும்: அவைகளின் வஸ்தி
ரம் நீலமும்தூமிரமுமாயிருக்கும்: அவைகளெல்
லாம் நிபுணருடையசெய்கை.—யெகோவா ௰
வே சத்தியதேவன், அவர்சீவனுள்ளதேவன்,
நித்திய இராசா: அவருடையகோபத்தினால் பூமி

(௰௪) கலா.க.௰௪. (௰௫) புல.௩.௰௫,௰௯. (௰௬) லேவி.உ௬.௩௩. உபா.உ௮.௬௪. எசேக்.௫.உ,௰உ. (௰எ) உ.நாளா.
௩௫.உ௫. யோபு.௩.௮. பிர.௰உ.௫. ஆமோ.௫.௰௬. மத்.௯.உ௩. (உ௩) பிர.௯.௰க. (உ௪) க.கொரி.க.௩க. உ.கொரி.
௰.௰எ. மீகா.௬.௮. மீகா.எ.௰௮. (உ௫) ரோ.உ.௮,௯. (உ௬) லேவி.உ௬.௪க. எசேக்.௪௪.எ. ரோ.உ.உ௮,உ௯.—
(௰. அதி. உ.) லேவி.௰௮.௩. (௩) ஏசா.௪௰.௰௯,உ௰. (௪) ஏசா.௪க.எ. (௫) சங்.௱௰௫.௫,எ. அபகூ.உ.௰௯. க.கொரி.
௰உ.உ. ஏசா.௪௬.க,எ. ஏசா.௪க.உ௩. (௬) யாத்.௰௫.௰உ. (எ) வெளி.௰௫.௪. (௮) சங்.௱௰௫.௮. ஏசா.௪க.உ௯.
அபகூ.உ.௰௮. ௪க.௰.உ. ரோ.க.உக,உஉ. (௯) தானி.௰.௫. சங்.௱௰௫.௪. (௰) க.தீமோ.௬.௰எ.

நடுநடுங்குகின்றது, சாதியார் அவருடைய கோ
௰௧ பத்தைச் சகிக்கக்கூடாது.—வானத்தையும் பூ
மியையுஞ் சிருஷ்டிசெய்யாத தேவர்கள், பூமி
யினின்றும், இவ்வானங்களின் கீழ்நின்றும் அ
ழிந்துபோவார்களென்பதையே அவர்களுக்குச்
௰௨ சொல்லுங்கள்.—அவர் தமது வல்லமையினாலே
பூமியைச்சிருஷ்டித்தார், அவர் தமது ஞானத்தி
னாலே பூலோகத்தை ஸ்தாபித்தார், தமது புத்தியி
௰௩ னால் ஆகாயமண்டலங்களை விரித்தார்.—அவர்சத்
தமிட ஆகாயமண்டலங்களிலே சலம் மிகுதியா
யுண்டாகும், அவர் பூமியினெல்லைகளினின்று
மேகம் எழும்பப்பண்ணுகிறார்; மழைபெய்யும்ப
டி மின்னலையுண்டாக்குகிறார், தமது பண்டசா
௰௪ லையினின்று காற்றைப்புறப்படுத்துகிறார்.—எந்த
மனுஷனும் அறிவிலே மிருகத்துக்குச்சமானம்:
தொழிற்படுத்திய சுரூபத்தைவார்க்கிறவனெவ
னும் அதினால் இலச்சையடைவான்: அவன்
வார்த்தசுரூபம் பொய், அவைகளுக்குச்சுவாச
௰௫ மில்லை.—அவைகள் மாயை, பிராந்திகளின்கிரி
யை: தண்டனைவருங்காலத்தில் நாசமடையும்.—
௰௬ யாக்கோபின்பங்கு அவைகளைப்போலல்ல: அ
வர் சருவசிருஷ்டிகர்த்தா; இஸரவேல் அவர்சு
தந்தரிக்கும்பங்கு: அவர்நாமம் சேனைபதியாகிய
யெகோவா.
௰௭ அரணில் வாசஞ்செய்கிறவளே, நீ தேசத்தி
௰௮ னின்று உன் பொருளைச் சேர்த்துக்கொள்.-பார்,
நான் இப்பொழுது தேசத்தாரைக் கவண்கொண்
டெறிவேன், அவர்கள் சிந்தித்துணரும்பொருட்
டு நான் அவர்களைக் கிலேசப்படுத்துவேனென்
று யெகோவா சொல்லுகிறார்.
௰௯ ஐயோ, நான்காயப்பட்டேன், என்காயங்கொ
டுமையானது: மெய்யாய்இது துக்கம், ஆனாலும்
௨௰ நான் அதைச்சகிக்கவேண்டுமென்றேன்.—என்
கூடாரம் அழிந்துபோயிற்று, என் கயிறுகளெல்
லாம் அறுந்துபோயின: என் பிள்ளைகள் என்னை
விட்டுநீங்கிப்போனார்கள், அவர்களில்லை: இனி
என் கூடாரத்தைவிரித்து, என் திரைகளைத்தூக்
௨௧ கிக்கட்டுவார் ஒருவருமில்லை.—மேய்ப்பர் மிரு
கத்துக்குச்சரி, அவர்கள் யெகோவாவைத்
தேடவில்லை: ஆதலால் அவர்கள்வாழவடையார்
கள், அவர்கள்மந்தைகளெல்லாஞ்சிதறஅடிக்கப்
௨௨ படும்.—கேளுங்கள், மிருகத்தின் ஆரவாரமும்,
யூதாவின்நகரங்களைப் பாழ்படுத்தி, துஷ்டமிரு
கங்களின்வாசஸ்தானமாக்கும்படி வடதேசத்தி
னின்று மகாகலகமும்வந்துவிட்டன.
௨௩ யெகோவாவே, மனுஷனுடைய வழி
அவனாலேயல்ல: நடக்கிறவன் தன்னைநடத்து
கிறதற்கு அதிகாரமுள்ளவனல்ல, அது நான்அறி
௨௪ வேன்.—யெகோவாவே, என்னைத் தண்டி
யும், என்னை அழிக்காதபடி மட்டாகத்தண்டி

யும்.—உமது கோபத்தினாலல்ல, உம்மை அறியாத ௨௫
புறத்தேசத்தார்மேலும், உமது நாமத்தைச்சொல்
லிப்பிரார்த்தியாத வமிசத்தார்மேலும் உமதுகோ
பத்தைச்சொரியும்: அவர்கள்யாக்கோபைப்பட்
சித்தார்கள், அவனை நொறுக்கிவிழுங்கினார்கள்,
அவனுடையவாசஸ்தலத்தைப்பாழாக்கினார்கள்.

## ௰௧. அதிகாரம்.

௧. பூருவகாலத்தில்யெகோவாசெய்தஉடன்
படிக்கையையெடுத்துக்காட்டல்: ௯. அந்தஉ
டன்படிக்கையை மீறினதினிமித்தஞ் சனங்க
ளைக்கண்டித்து அவர்களுக்குவருந் தண்டனை
யைமுன்னுரைத்தல்: ௰௮. அனதோத்திலுள்ள
சனங்கள் எரேமியாவுக்கு விரோதமாய்த்துரா
லோசனை செய்ததினிமித்தம் அவர்களுக்குத்
தண்டனைவருமெனக்காட்டல்.

யெகோவாவினால் எரேமியாவுக்குக் கி ௧
டைத்தவாக்கு,—நீங்கள்இந்தஉடன்படிக்கையி ௨
ன்வாக்கியங்களைக்கேளுங்கள், இவைகளை யூதா
சனங்களிடத்திலும்யெருஷலேமியரிடத்திலும்
பேசி,—இன்றைத்தினமிருக்கிறபடி, பாலுந்தே ௩
னும்பெருகுகிற ஒருதேசத்தை உங்கள்முன்னோ
ருக்குக்கொடுப்பேனென்றும், நான் அவர்களுக்
கிட்ட ஆணையைச் சித்தியாக்கும்பொருட்டு,—
நான் உங்கள்முன்னோரைஇருப்புச்சூளையாகிய ௪
எகிப்துதேசத்தினின்றுபுறப்படுத்தினகாலத்தில்
அவர்களைநோக்கி, என்வாக்குக்கமைந்து, நான்
கட்டளையிடுகிறதெல்லாவற்றின் படிக்குஞ்செய்
யுங்கள்: அப்பொழுது நீங்கள் என்சனங்களா
வீர்கள், நான்உங்களுக்குத்தேவனாவேனென்
றும்,—நான் அவர்களுக்குக்கட்டளையிட்ட இந் ௫
தஉடன்படிக்கையின் வாக்குகளைக் கேளாத ம
னுஷன் சபிக்கப்படுவானாகவென்றும், இஸர
வேலின் தேவனாகிய யெகோவா சொல்
லுகிறாரென்பதைச் சொல்லச்சொல்லிற்று. அ
தற்கு நான் பிரதியுத்தரமாக, ஆண்டவரே,
அப்படியாகக் கடவதென்றேன்.—அப்பொழுது ௬
யெகோவா என்னைநோக்கி, இவ்வாக்குக
ளெல்லாவற்றையும் நீ யூதாநகரங்களிலும் யெரு
ஷலேமின்வீதிகளிலும் பிரசித்தப்படுத்தி, இந்த
உடன்படிக்கையின் வாக்குகளை நீங்கள்கேட்டு
இவைகளைக் காத்து நடவுங்கள்.—நான் உங்கள் ௭
முன்னோரை எகிப்துதேசத்தினின்றுபுறப்படப்
பண்ணின நாள்முதல் இந்நாள்வரைக்குஞ்சாக்
கிரதையாய் அவர்களுக்குணர்த்தி, என் வாக்குக்
கமைந்து நடவுங்களென்றுசொல்லிப் போதித்
துப்போதித்துவந்தேன்.—ஆனாலும் அவர்கள் அ ௮
தற்கமையாமலும், செவிகொடாமலுந்தங்கள்தங்
கள் தீமையுள்ள இருதயத்தின் சிந்தனைக்கேற்க
நடந்தார்கள்: ஆதலால் நான் கட்டளையிட்டும்
அவர்கள் செய்யாமல்விட்ட இந்த உடன்படிக்

(௰௧) எசா.௨.௰௮. ௪௧.௰௩.௨. (௰௨) ஆதி.௧.௧,௬,௯. யோபு.௯.௮. எசா.௪௰.௨௨.(௰௩)யோபு.௩௮.௩௪. சங்.௱௩௫.௭.
(௰௪)நீதி.௩௰.௨. எசா.௪௨.௰௭. அபகூ.௨.௰௮. (௰௬) புல.௩.௨௪. உபா.௩௨.௮. எசா.௪௭.௪. (௰௭) எசேக்.௰௨.௩.
(௰௮) ௧.சாமு.௨௫.௨௯. எசேக்.௬.௰. (௰௯) மீகா.௭.௯. (௨௩) நீதி.௰௬.௧. (௨௫) யோபு.௰௮.௨௧. ௧.தெச.௪.௫.
௨.தெச.௧.௮.—(௰௧. அதி. ௩.) உபா.௭.௰௨,௰௩. (௪) உபா.௪.௨௰. ௧.இரா.௮.௪௧. லேவி.௨௬.௩,௰௨. (௫) உபா.
௨௭.௨௬. கலா.௩.௰. உபா.௨௭.௰௫—௨௬. (௬) ரோ.௨.௰௪. யாக்.௧.௨௨.

கையின் வாக்குகளெல்லாவற்றையும் அவர்களி
டத்தில் பலிக்கும்படிசெய்வேனென்று சொல்
௯ லென்றார்.-பின்னும் யெகோவா, யூதாசனங்
களுக்குள்ளும் யெருஷலேமியருக்குள்ளும் ஒரு
கட்டுப்பாடு உண்டாயிற்றென்று என்னிடத்திற்
௰ சொன்னார்.—அவர்கள் என்வாக்குகளைக்கேளா
மல்மறுத்து, தங்கள்முன்னோரின் பாவங்களுக்
குத் திரும்பிவிட்டார்கள்; அந்நியதேவர்களைச்
சேவிக்கும்படி அவர்களைப் பின்பற்றி நடந்தார்
கள்: இஸரவேல் வமிசத்தாரும் யூதாவமிசத்தா
ருந் தங்கள்முன்னோரோடே நான்செய்த உடன்
படிக்கையைத்தள்ளினார்கள்.
௰௧ ஆதலால்,பார்,அவர்கள்எவ்விதத்தாலுந்தப்பித்
துக்கொள்ளக்கூடாததீங்கைநான்அவர்கள்மேல்
வருவிப்பேன்; அவர்கள் என்னைநோக்கி ஓல
மிட்டாலும் நான்கேட்கமாட்டேனென்று யெ
௰௨ கோவா சொல்லுகிறார்.—அப்பொழுது யூதா
பட்டணத்தாரும், யெருஷலேமியரும் தாங்கள்
தூபங்காட்டிவணங்கின தேவர்களைநோக்கி ஓல
மிடுவார்கள்: இவர்களோ அவர்களுடைய ஆபத்
துக்காலத்தில் அவர்களைஎவ்வகையினாலும்இரட்
௰௩ சிப்பதில்லை.-யூதாவே, உன்பட்டணங்கள் எத்த
னையோ உன் தேவர்களுமத்தனை; யெருஷலே
மின் வீதிகளெத்தனையோ, பாகாலுக்குத்தூபங்
காட்டும்படி அந்த இலச்சையுள்ளபொருளுக்கு
௰௪ நீங்கள் ஸ்தாபித்த வேதிகைகளுமத்தனை.—ஆத
லால் நீ இந்தச்சனங்கள் நிமித்தம் பிரார்த்தனை
பண்ணவேண்டாம், அவர்களுக்காக நீ ஓலமிட்
டுவிண்ணப்பஞ் செய்யவேண்டாம்: அவர்கள்
தங்கள்ஆபத்துக்காலத்தில் என்னைநோக்கிஓலமி
௰௫ டும்பொழுதுநான்கேளேன்.—என் அன்பானவள்
என்வீட்டிலிருக்கிறதென்ன, அவள் அநேகரு
டன் தீவினைசெய்தாள், நீ நைவேத்தியஞ்செய்
யும் மாமிசம் அங்கிகரிக்கப்படுமோ; நீ தீங்கைச்
௰௬ செய்யும்பொழுதுஞ் சந்தோஷப்படுகிறாய்.—நல்
லகனிதரும் அழகுள்ள பசுமையான 'சீதவிருட்
சமென்னும்பெயரை யெகோவா உனக்கிட்
டார்: மிகவும் ஆரவாரத்தோடே அதின்மேல்நெ
ருப்பைக்கொளுத்தினார், அதின்கொப்புகளெல்
௰௭ லாம் முறிந்தன.-என்னைக்கோபப்படுத்தும்படி
பாகாலுக்குத் தூபங்காட்டி,இஸரவேல் வமிசத்
தாரும்யூதா வமிசத்தாரும் தங்களுக்கு விரோத
மாய்ச்செய்த தீங்கினிமித்தம், உன்னைநாட்டின
சேனாபதியாகிய யெகோவா உனக்கு விரோ
தமாய்இந்தத்தீமையுள்ள வாக்குகளைச் சொல்
லியிருக்கிறார்.
௰௮ யெகோவா எனக்கதைத்தெரிவித்ததினால்
அறிந்துகொண்டேன்: அப்பொழுது அவர்களு
டைய செய்கைகளை நீர் எனக்குத்தெரியக்காட்
டினீர்.—நான் அடிக்கப்படுவதற்குக் கொண்டு ௰௯
போகப்படுகிற சாதுவான ஆட்டுக்குட்டியைப்
போலிருந்தேன்; மரத்தை அதின் கனியோடே
அழித்துப்போடுவோம், அவன்பெயரும்அற்றுப்
போகும்படிசீவனுள்ளோரின்தேசத்தினின்றுஅ
வனைச்சேதிப்போம் வாருங்களென்று சொல்
லி, எனக்கு விரோதமாய்த் துராலோசனைசெய்
தார்களென்பதை நான் அறியவில்லை.—உள்ளிந் ௨௰
திரியங்களையும்இருதயத்தையுஞ்சோதித்து, நியா
யத்தீர்ப்புச்செய்யும்சேனாபதியாகிய யெகோ
வாவே, நான் உமக்கு என்காரியத்தைத் தெ
ரிவித்தேன்: நீர் அவர்களுக்குச்செய்யுந் தண்ட
னையைநான்பார்க்கும்படிசெய்யுமென்றேன்.—
ஆதலால் யெகோவா இவ்வாக்குச்சொல்லு ௨௧
வார், நீ எங்கள்கையினால்மரிக்கவுங்கூடும்,யெ
கோவாவின் நாமத்தைக்கொண்டு எங்களுக்
குத் தீர்க்கதரிசனஞ் சொல்லவேண்டாமென்று
சொல்லி, உன் பிராணனைவாங்க வகைதேடுகிற
அனாதோத்தின் மனுஷரைக்குறித்து,-பார்,நான் ௨௨
அவர்களைத்தண்டிப்பேன்: அவர்களுடைய வா
லிபர் கட்கத்தினாலே சாவார்கள்; அவர்கள் புத்
திரரும்புத்திரிகளும் பஞ்சத்தினாலேசாவார்கள்.-
அனாதோத்தின் மனுஷர் தண்டனை பெறத்தக்க ௨௩
வருஷத்தில் நான் அவர்கள்மேல் ஆபத்தை வரு
விப்பேன்: அவர்களில் ஒருவரையும் மீதியாக
விடேனென்று சேனாபதியாகிய யெகோவா
சொல்லுகிறார்.

## ௰௨. அதிகாரம்.

௧. எரேமியா தேவனிடத்தில் முறையிடல்: ௫. அவன் சகோதரர் அவனுக்கு விரோதமாய்க் கபடஞ்செய்தல்: ௭. யூதேயரின் தேசம் பாழாதல்: ௰௫. மனந்திரும்புகிறவர்களுக்குத் தயை கிடைக்குமென்று வாக்குத்தத்தஞ்செய்தல்.

யெகோவாவே, நீர் நீதியுள்ளவர், ஆனா ௧
லும் நான் உம்முடனே வழக்காட இடங்கொ
டுப்பீராக: நான் தண்டனையைக்குறித்து உம்மி
டத்தில் பேசத்துணிகிறேன்: துன்மார்க்கர் தங்
கள்வழியில்வாழ்வடைவதென்ன; கபடஞ்செய்
யும்யாவருஞ் சௌக்கியமாயிருப்பதேது.—நீர் அ ௨
வர்களைநாட்ட அவர்கள்வேரூன்றினார்கள்: அ
வர்கள் வளர்ந்தோங்கிக் கனிகொடுக்கிறார்கள்:
நீர் அவர்கள்வாய்க்குச்சமீபமும், அவர்கள் மன
துக்கோ தூரமுமாயிருக்கிறீர்.—யெகோவா ௩
வே, நீர் என்னை அறிவீர்: நீர் என்னைக்கண்டு
உம்மைப்பற்றும்என்மனதைச்சோதித்தீர்: அவர்
களை அடிக்கப்படும் ஆடுகளைப்போல இழுத்து,
கொலையின்நாளுக்காக அவர்களை ஆயத்தப்படுத்
தக்கடவீர்.—தேசம் தன்குடிகளின் தீமையினி ௪
மித்தம் எதுவரைக்கும் துக்கங்கொள்ளும், ஓவ்

(௯) எசேக்.௨௨.௨௫. ஓசி.௬.௯. (௰) எசேக்.௨௰.௰௮. (௰௧) நீதி.௧.௨௮. ஏசா.௧.௰௫. எசேக்.௮.௰௮. மீகா.௩.௪. சக.௭.௰௩. (௰௨) உபா.௩௨.௩௭,௩௮. (௰௩) ஓசி.௯.௰. (௰௪) யாத்.௩௨.௰. ௧.யோவா.௫.௰௬. (௰௫) ஏசா.௧.௰௧,. எசேக்.௰௬.௨௫,. ஆகா.௨.௰௨,௰௩,௰௪. தீத்.௧.௰௫. நீதி.௨.௰௪. (௰௬) ரோ.௰௧.௰௭. (௰௭) ஏசா.௫.௨. (௨௰) ௧.சாமு.௰௬.௭. ௧.நாளா.௨௮.௯. வெளி.௨.௨௩. (௨௧) ஏசா.௩௰.௰. ஆமோ.௨.௰௨. மீகா.௨.௬. (௨௩) லூக்.௰௯.௪௪.— (௰௨. அதி. ௧.) சங்.௫௧.௪. யோபு.௰௨.௬. சங்.௭௩.௩,. அபகூ.௧.௪. மல்.௩.௰௫. (௨) ஏசா.௨௯.௰௩. மத்.௰௫.௮. (௩) அதி.௰௧.௨௰. யாக்.௫.௫. (௪) ஓசி.௪.௩.

வொரு வெளியிலுமுள்ளபுல்லு எதுவரைக்கும்
வாடிப்போம்; அவன் எங்கள்முடிவைக் காண
மாட்டானென்று அவர்கள் சொல்லுகிறபடியி
னால்மிருகங்களும் பறவைகளும் அழிந்துபோ
யின.
௫ நீ காலாள்களுடனே ஓடுகையில் அவர்கள் உன்
னை இளைப்படையப்பண்ணினார்களாகில் குதி
ரைகளுடனே எப்படி ஓடுவாய்; நீ சமாதானதேசத்
தில் புகலிடந்தேடினால், யோர்தான் நதி பெரு
௬ கிப்பாயும்பொழுது என்னசெய்வாய்.—உன் ச
கோதரரும் உன் பிதாக்களின்வமிசத்தாரும் உன்
னைவஞ்சிக்கிறார்கள்; அவர்களும் உன்னைப்பின்
தொடர்ந்து மகா ஆரவாரம் பண்ணினார்கள்: அ
வர்கள் உன்னிடத்தில் இனியவாக்குகளைப்பேசி
னாலும் அவர்களைநம்பவேண்டாம்.
௭ நான் என்வீட்டைவிட்டுவிட்டேன், என்சுதந்
தரத்தை நெகிழவிட்டேன்; என் பிராணனுக்கு
மிகவும் பிரியமானவளை அவள்சத்துருக்கள் கை
௮ யில் ஒப்பித்தேன்.—என்சுதந்தரம் எனக்குக்காட்
டிலுள்ளசிங்கத்தைப்போலாயிற்று; அது எனக்கு
விரோதமாய்க்கருச்சிக்கின்றது: ஆதலால்நான் அ
௯ தைவெறுக்கிறேன்.-என்சுதந்தரம்எனக்குஉராஞ்
சுகிற பறவை, சுற்றிலுமுள்ளபறவைகள் அதற்
குவிரோதமாயிருக்கின்றன; காட்டுமிருகங்க
ளே, நீங்கள் எல்லாம் ஏகமாய்க்கூடிப்பட்சிக்கும்
௰ படிவாருங்கள்.–அநேகமேய்ப்பர் என்திராட்சத்
தோட்டத்தைநாசப்படுத்தினார்கள், என்சுதந்தரத்
தைக்காலால்மிதித்தார்கள், என் இஷ்டமானசுதந்
௰௧ தரத்தைப் பாழ்வனமாக்கினார்கள்.—அதைப் பா
ழாக்கிவிட்டார்கள், அது பாழாய்க்கிடந்து என்
னைநோக்கிப்புலம்புகின்றது; தேசம்முழுவதும்
பாழாயிற்று, ஆனாலும் ஒருவரும் அதைச்சிந்தை
௰௨ யில்வைக்கிறதில்லை.-கொள்ளையாடுகிறவர்கள் வ
னத்திலுள்ள எல்லா உயர்ந்தஸ்தானங்களின்மே
லும்வந்துவிட்டார்கள்: யெகோவாவின் கட்
கம் தேசத்தின் முதல்எல்லைதொடங்கிக் கடை
யெல்லைவரைக்கும் யாவையும்பட்சிக்கும்: எந்
௰௩ தமாமிசபிராணிக்குஞ் சமாதானமில்லை.–கோது
மையைவிதைத்தார்கள், முள்ளுக்களை அறுப்பார்
கள்: அவர்கள் மிகவும்பிரயாசப்பட்டாலும் ஒரு
பலனும்பெறவில்லை: யெகோவாவின் உக்
கிரகோபத்தினிமித்தம் வருமானத்தைக்குறித்து
இலச்சை அடைவார்கள்.
௰௪ பாருங்கள், என்சனமாகிய இஸரவேலர்சுதந்
தரிக்கும்படி நான்கொடுத்தசுதந்தரத்தைத்தொடு
கிறதுஷ்டராகிய என்னுடைய சகல அயலாருக்
கும்விரோதமாகி, அவர்களை அவர்கள் தேசத்தி
னின்று நிருமூலமாக்குவேன்; அவர்களினின்று
யூதா வமிசத்தாரைப் பேர்ப்பேனென்று யெ
௰௫ கோவா சொல்லுகிறார்.—அவர்களை நிருமூல
மாக்கினபின்பு நான் திரும்பவும் அவர்கள்மேல்
தயைசெய்து, அவர்களை அவர்கள்தேசத்தில் அவ
ரவர் சுதந்தரத்துக்குக்கொண்டுவருவேன்.-அவர் ௰௬
கள் என்சனங்களுக்குப் பாகாலைக்கொண்டு ஆ
ணையிடும்படிபோதித்ததுபோல, யெகோவா
வின் நித்தியத்துவத்தைக்கொண்டென்றுசொல்
லி என்நாமத்தைக்கொண்டு ஆணையிட்டு, என்ச
னங்கள் நடக்கவேண்டியவழிகளைச்சாக்கிரதை
யோடேகற்றுக்கொள்வார்களாகில் என்சனங்க
ளுக்குள்கட்டப்படுவார்கள்.—அவர்கள் கீழ்ப்ப ௰௭
டியாதிருந்தால் நான் அந்தச்சாதியாரைவேரோ
டே நிருமூலப்படுத்தி அழித்துவிடுவேனென்று
யெகோவா சொல்லுகிறார்.

## ௰௩. அதிகாரம்.

௧. இடைக்கச்சையுவமித்தல்: ௰௨. திராட்சரசபூ
ரணபாத்திரத்தையுவமித்தல்: ௰௫. பாவத்தினி
மித்தம் வரப்போகிறதண்டனையைக்குறித்து ம
னஸ்தாபப்படும்படி ஏவல்: ௨௨. பாவமே ஆ
பத்துக்குக்காரணமெனக்காட்டல்.

யெகோவா என்னைநோக்கி, நீ போய் ஒரு ௧
சணற்கச்சு விலைக்குவாங்கி, அதை உன் அரை
யில்கட்டிக்கொள், அதைச் சலத்திலேபோடா
தேயென்றார்.—அப்படியே நான் யெகோ ௨
வாவுடைய வாக்கின்படி ஒரு கச்சுவாங்கி,
என் அரையிலேகட்டினேன்.—நீ விலைக்குவாங் ௩
கி உன் அரையில்கட்டியிருக்கிற அந்தக்கச்சை
எடுத்துக்கொண்டு, எழுந்து, பிறாத்துக்குப்போய்,
அதை ஒருகன்மலையின்வெடிப்பில் ஒளித்துவை
யென்று,—யெகோவாவின் வாக்கு இரண் ௪
டாந்தரம் எனக்குக்கிடைத்தது.–யெகோவா ௫
எனக்குக்கட்டளையிட்டபிரகாரம் நான்போய்,
பிறாத்தின்சமீபத்தில் அதைஒளித்துவைத்தேன்.–
அநேகநாள் சென்றபின்பு யெகோவா என் ௬
னைநோக்கி, எழுந்து பிறாத்துக்குப்போய், என்
கட்டளைப்படி நீ ஒளித்துவைத்த அந்தக்கச்சை
எடுத்துவாவென்றுசொல்ல,–நான் பிறாத்துக்குப் ௭
போய்க்கச்சு ஒளித்துவைத்த இடத்தைத்தோண்
டி அதைஎடுத்தேன்: கச்சுப்பழுதாய்ப்போயிற்று,
பார், அது ஒன்றுக்குமுதவாது.—அப்பொழுது ௮
யெகோவாவின் வாக்கு என்னிடத்தில்,—
இவ்விதமாக நான் யூதாவின்கருவத்தையும், யெ ௯
ரூஷலேமின் மிகுந்தவீம்பையுந் தாழ்ச்சிப்படுத்
துவேன்.—என் வாக்குகளுக்குச் செவிகொடா ௰
மல் மறுத்து, தங்கள் தங்கள் இருதயத்தின் சிந்த
னைக்கேற்க நடந்து, அந்நியதேவர்களைச்சேவிக்
கவும், அவர்களை வணங்கவும் அவர்களைப்பின்
பற்றிவருகிற இந்தத்துஷ்டசனங்கள், ஒன்றுக்கு
முதவாத இந்தக்கச்சுப்போலாவார்கள்.—இஸர ௰௧
வேல்வமிசத்தார் யாவரும், யூதாவமிசத்தார் அ
னைவரும் எனக்குச்சனங்களாகவும், புகழ்ச்சியா
கவும், கீர்த்தியாகவும், மகிமையாகவுமிருக்கும்
பொருட்டு, கச்சுமனுஷனுடையஇடையில்ஒட்

(௫) யோசு.௩.௰௫. ௧.நாளா.௰௨.௰௫. (௬) நீதி.௨௬.௨௫. (௯) ஏசா.௫௬.௯. (௰) ஏசா.௫.௧,௫. ஏசா.௬௩.௰௮. (௰௧) ஏசா.௪௨.௨௫. (௰௩) உபா.௨௮.௩௮. மீகா.௬.௰௫. ஆகா.௧.௬. (௰௪) சக.௨.௮. உபா.௩௰.௩. (௰௫) எசேக்.௨௮.௨௫. ஆமோ.௯.௰௪. (௰௬) எபே.௨.௨௰,௨௧. ௧.பேதுரு.௨.௫. (௰௭) ஏசா.௬௰.௰௨.—(௰௩. அதி. ௯.) லேவி.௨௬.௰௯. (௰௧) யாத்.௰௯.௫.

டுவதுபோல,அவர்களை என்னிடத்தில் ஒட்டப்
பண்ணினேன்: ஆனாலும்அவர்கள்என்வாக்கைக்
கேட்கமாட்டார்களென்று யெகோவாசொல்
லுகிறாரென்பதைச்சொல்லிற்று.
௰௨ ஆதலால் நீ அவர்களைநோக்கி, சகல துருத்தி
களுந் திராட்சரசத்தினாலே நிரப்பப்படுமென்
று இஸ்ரவேலின் தேவனாகிய யெகோவா
சொல்லுகிறாரென்னும் இவ்வாக்கைச்சொல்லு:
அதற்கு அவர்கள்சகலதுருத்திகளுந்திராட்சரசத்
தினால் நிரப்பப்படுமென்று நாங்கள் நிச்சயமாய்
௰௩ அறியோமாவென்பார்கள்.—அப்பொழுது நீ அ
வர்களுடனே, பாருங்கள், தாவீதின்சிங்காசனத்
தில் வீற்றிருக்கும் இராசாக்களும், ஆசாரியர்க
ளும், தீர்க்கதரிசிகளும், மற்றயெருஷலேமியரு
மாகிய தேசத்தார் சமஸ்தரையும் வெறியினாலே
நிரப்புவேனென்று யெகோவாசொல்லுகிறா
௰௪ ரென்பதைச்சொல்லு.—பிதாக்களும் புத்திரருமா
கிய அவர்களை ஒருவர்மேலொருவர்ஏசமாய்மோ
தப்பண்ணுவேனென்றும், நான்அவர்களைநாசப்
படுத்துவதேயன்றித் தயைசெய்யேன், மன்னி
யேன்,இரங்கேனென்றும் யெகோவாசொல்
லுகிறார்.
௰௫ யெகோவாபேசுகிறார், ஆதலால் நீங்கள்
செவிகொடுத்துக்கேளுங்கள்; அகங்காரங்கொள்
௰௬ ளாதிருங்கள்.—அவர் அந்தகாரத்தைத்தோற்றுவிப்
பதற்குமுன்னும், இருள்மூடும் மலைகளின்மேல்
உங்கள் கால்கள் இடறுவதற்கு முன்னும், நீங்
கள் ஒளியைஎதிர்பார்த்திருக்கையில்அவர்அதை
மரணநிழலாகவும் அகோர இருளாகவும்மாற்றுவ
தற்கு முன்னும், நீங்கள் உங்கள் தேவனாகிய
யெகோவாவின் மகிமையைப் பிரசித்தப்ப
௰௭ டுத்துங்கள்.—நீங்கள் இதைக்கேளாமற்போனால்
என் ஆத்துமம் ஒளிப்பிடங்களில் உங்கள் அ
கங்காரத்தினிமித்தந் துக்கிக்கும்; யெகோவா
வின் மந்தை சிறைபிடித்துக்கொண்டு போகப்
பட்டதினிமித்தம்என்கண்மிகவும்நீர்சொரியும்,
௰௮ கண்ணீர் தாரைதாரையாய்ப் பொழியும்.—நீங்
கள் இராசாவையும் இராசாத்தியையும் நோக்
க, சௌந்தரியமுள்ள உங்கள் முடிவிழும்: ஆத
லால் உங்களைத் தாழ்த்தி, உட்காருங்களென்று
௰௯ சொல்லுங்கள்.—தெற்கிலுள்ளநகரங்கள் அடைக்
கப்பட்டன, அவைகளை ஒருவருந் திறக்கிற
தில்லை: யூதாமுழுவதுஞ்சிறைபிடித்துக்கொண்டு
போகப்படும், முழுமையுஞ்சிறைகொண்டுபோ
௨௰ கப்படும்.—உங்கள் கண்களை ஏறிட்டு, வடக்கி
னின்று வருகிறவர்களைப் பாருங்கள்: உன் மந்
தையெங்கே, உனக்கு அளிக்கப்பட்ட சௌந்த
௨௧ ரியமுள்ள உன்மந்தை எங்கே.—அவர் உன்னை
விசாரிக்கும்பொழுது எதைச்சொல்லுவாய்; அ
வர்கள் உன்மேல்தலைவரும் பிரதானிகளுமாகும்
படி நீதானே அவர்களைப்பயிலுவித்தாய்: பிரச
விக்கும் ஸ்திரியைப்போலவேதனைகள் உன்னை
யும் பிடிக்கமாட்டாதா.
இவைகளெல்லாம்எதினிமித்தம் என்மேல்வந் ௨௨
ததென்றுநீஉனதுள்ளத்தில்சிந்தித்துப்பார்த்தால்,
உன்வஸ்திரத்தின்ஓரம்விலக்கப்பட்டதும், உன்
குதிங்கால் வெளியாக்கப்பட்டதும் உன்பாவ
மிகுதியினிமித்தமேயென்று விளங்கும்.—கூஷ் ௨௩
தேசத்தான் தன்தோலையும், சிவிங்கிதன்புள்ளிக
ளையும்மாற்றக்கூடுமோ; கூடுமேயாகில்,தீமைசெய்
யப்பயின்றவர்களாகிய நீங்களும் நன்மைசெய்
யக்கூடும்.—ஆதலால்வனத்தின்காற்றினால் பறக் ௨௪
கடிக்கப்படும் துரும்பைப்போல, அவர்களைச்சி
தறஅடிப்பேன்.—நீ என்னை மறந்துவிட்டாய், ௨௫
பொய்யைநம்பினாய்; இதினிமித்தம்இதுவேஉன்
பாகம், என்னால்அளக்கப்பட்டபங்கென்று யெ
கோவாசொல்லுகிறார்.—ஆதலால் உன்இலச் ௨௬
சைகாணப்படும்படி நான் உன்வஸ்திரத்தினோ
ரத்தை உன்முகத்தளவும் விலக்குவேன்.—வெ ௨௭
ளியிலுள்ள குன்றுகளின்மேல் உன்விபசாரங்க
ளையும், கனைப்புக்களையும், அரோசியமான உன்
வேசைமார்க்கங்களையும்,உன்அருவருப்புக்களை
யும் நான்கண்டேன். ஆ, யெருஷலேமே, ஐ
யோ, உனக்கு ஆபத்துவரும்: நீசுத்திகரிக்கப்ப
டாயா; இனிஎப்பொழுதோவென்று யெகோ
வா சொல்லுகிறாரென்பதைச்சொல்லிற்று.

## ௰௪. அதிகாரம்.

௧. பஞ்சம்வருமென்று முன்னுரைத்தல்: ௭.எரே
மியா பிரார்த்தித்தல்: ௰. யெகோவா அவன்
பிரார்த்தனையைஅங்கிகரியாமல் போதல். கள்
ளத்தீர்க்கதரிசிகளின்தோஷத்தைஎடுத்துக்காட்
டல்: ௰௩. எரேமியா விண்ணப்பஞ்செய்தல்.

பஞ்சத்தைக்குறித்து எரேமியாவுக்குக்கிடைத் ௧
த யெகோவாவின் வாக்கு:-யூதாபுலம்புகின் ௨
றது, அதின்வாசல்கள் மெலிவடைந்தன; அவர்
கள்தேசத்தினிமித்தங்கறுத்துப்போனார்கள்; யெ
ருஷலேமின்ஓலம்மேலேசென்றது.-பெரியோர் ௩
தங்கள் சிறியோரைச்சலத்துக்கு அனுப்புகிறார்
கள்: இவர்கள்துரவுகளுக்குப்போய்ச் சலத்தைக்
காணாமல் வெறும்பாத்திரங்களோடே திரும்பிவ
ருகிறார்கள்; வெட்கித்திகைத்துத்தங்கள்தலையை
மூடுகிறார்கள்.—தேசத்தில் மழையில்லாததினால் ௪
நிலம்வெடித்திருக்கின்றது, பயிர்செய்கிறவர்கள்
இலச்சையடைந்து தங்கள் தங்கள் தலையைமூடு
கிறார்கள்.—வெளியிலே பெண்மான் குட்டியின் ௫
று, புல்லில்லாததினால் அதை விட்டுவிடும்.—
காட்டுக்கழுதைகள் உயர்ந்த ஸ்தானங்களினின் ௬
று,வலியசருப்பங்களைப்போலக்காற்றை உறிஞ்
சுகின்றன;புல்லில்லாததினால்அவைகளின்கண்
கள்பூத்துப்போகின்றன.
யெகோவாவே, எங்கள் பாவங்கள் எங் ௭
களுக்கு விரோதமாய்ச்சாட்சியிடுகின்றன, உம

(௰௩) ஏசா.௫௧.௰௭,௨௧. (௰௬) யோசு.௭.௰௯. ஏசா.௫.௩௰. ஆமோ.௮.௯. ஏசா.௫௯.௯. சங்.௪௪.௰௮. (௰௭) புல.௧.௨,௰௬. (௨௨) ஏசா.௩.௰௭. எசேக்.௰௬.௩௭,௩௮,௩௯. நாகூ.௩.௫. (௨௪) சங்.௧.௪. ஓசி.௰௩.௩.(௨௫)யோபு.௨௰.௨௯. (௨௬)புல.௧.௮. எசேக்.௰௬.௩௭. ஓசி.௨.௰. (௨௭) ஏசா.௬௫.௭. எசேக்.௬.௰௩.—(௰௪. அதி. ௨.) ஏசா.௩.௨௬. (௩) ௨.சாமு.௰௫.௩௰.

துநாமமேவிளங்கும்படிசெய்யும்: எங்களுடைய
நிலைமாறுதல்கள்மிகுதியாயின; உமக்குவிரோத
௮ மாய்ப்பாவஞ்செய்தோம்.—இஸரவேலின்நம்பிக்
கையே, ஆபத்துக்காலத்தில்அதினிரட்சகரே, நீர்
தேசத்தில்ஒருபரதேசியைப்போலவும், இராத்தங்
கும்வழிப்போக்கனைப்போலவும்இருக்கிறதென்
௯ ன.—இரட்சிக்கச் சாமர்த்தியமில்லாதவனைப்
போலவும், இரட்சிக்க இயலாதபராக்கிரமசாலி
யைப்போலவும்இருக்கிறதென்ன, யெகோவா
வே, நீர் எங்களுக்குள் இருக்கிறீர், உமது நா
மத்தைத்தரித்திருக்கிறோம்; எங்களைவிடாதிரும்.
௰ இந்தச்சனங்களைக்குறித்து யெகோவா, இ
வர்கள் அலைந்துதிரியவிரும்புகிறார்கள், தங்கள்
கால்களைத்தடுக்கமாட்டார்களென்கிறார், இதினி
மித்தம் யெகோவா இவர்களை அங்கிகரியார்;
அவர் இவர்களுடையபாவத்தை நினைப்பார், இ
௰௧ வர்களுடைய பாவங்களை விசாரிப்பார்.—பின்
னும் யெகோவா என்னைநோக்கி, இந்தச்ச
னங்களுக்கு நன்மையுண்டாக, நீ பிரார்த்தனை
௰௨ பண்ணவேண்டாம்.-இவர்கள் உபவாசித்தாலும்
நான் இவர்களிடும் ஓலத்தைக்கேளேன்; தகனப
லியையும், நைவேத்தியத்தையும் இட்டாலும்
நான் இவர்களைஅங்கிகரியேன்: கட்கத்தினாலும்,
பஞ்சத்தினாலும், பெருவாரிக்காய்ச்சலினாலும்
நான் இவர்களை அழியப்பண்ணுவேனென்றார்.
௰௩ அப்பொழுது நான், ஆ, ஆண்டவராகிய
யெகோவாவே, கேளும், நீங்கள்கட்கத்தைக்
காணமாட்டீர்கள், உங்களுக்குப்பஞ்சம்வராது,
இவ்விடத்தில் ஒழியாதவாழ்வு உங்களுக்குக்கி
டைக்குமென்று தீர்க்கதரிசிகள் அவர்களுக்குச்
சொல்லியிருக்கிறார்களேயென்று சொல்ல,—
௰௪ யெகோவா என்னைநோக்கி, தீர்க்கதரிசிகள்
என் நாமத்தைக்கொண்டு பொய்வாக்குகளைச்
சொல்லுகிறார்கள்: நான் அவர்களைஅனுப்பவில்
லை, அவர்களுக்குக்கட்டளையிடவில்லை, அவர்
களுடன் பேசவுமில்லை: அவர்கள் உங்களிடத்
தில்வந்து பொய்த்தரிசனத்தையும், குறிகளையும்,
இல்பொருளையும், தங்கள் இருதயவஞ்சகத்தை
௰௫ யும் வெளிப்படுத்துகிறார்களென்றார்.—பின்னும்
யெகோவா, நான் அனுப்பாதிருந்தும் இந்தத்
தேசத்திலேகட்கமும்பஞ்சமும்வராதென்றுஎன்
நாமத்தைக்கொண்டு தீர்க்கதரிசனஞ் சொல்லுந்
தீர்க்கதரிசிகளைக்குறித்து, அவர்கள் கட்கத்தினா
௰௬ லும்பஞ்சத்தினாலும்நாசமாவார்கள்.—அவர்களி
டத்தில் தீர்க்கதரிசனங் கேட்குஞ் சனங்களும்
பஞ்சங்கட்கம் இவைகளினிமித்தம்யெருஷலே
மின்வீதிகளிலேதள்ளப்படுவார்கள்; அவர்களை
யும், அவர்களுடையஸ்திரிகளையும், புத்திரபுத்தி
ரிகளையும் அடக்கம்பண்ணுவார் ஒருவருமில்
லை: அவர்களுடைய தீமையை நான் அவர்கள்
மேல் ஊற்றுவேனென்கிறார்.

நீ அவர்களிடத்தில், இரவும்பகலும் ஓயாமல் ௰௭
என்கண்களினின்று நீர் தாரையாய்ச்சொரியக்க
டவது: என்சனகுமாரத்தியென்னுங்கன்னிகை
கொடூரமான முறிவினாலும், மகா வேதனைதரும்
அடியினாலும் நொறுக்கப்பட்டாள்.-நான்வெளி ௰௮
களிலேபோனால் அங்கேகட்கத்தினாலே கொல்
லப்பட்டவர்களையும்; நான் நகரத்திற்பிரவேசித்
தால் அங்கே பஞ்சத்தினால் மெலிவடைந்தவர்க
ளையுங்காண்கிறேன்; தீர்க்கதரிசியும் ஆசாரியனு
மோதாங்கள்அறியாததேசத்தில்திரிகிறார்களென்
னும் இவ்வாக்கைச்சொல்லு.-நீர் யூதாவை முழு ௰௯
மையுந் தள்ளிவிட்டீரா, உமது மனதுக்குச்சீ
யோன் அரோசியமாயிற்றா, நீர் ஏன் எங்களை அ
டித்தீர், எங்களுக்குச்சொஸ்தங்கிடையாதா; நாங்
கள்சமாதானத்தை எதிர்பார்த்தோம், ஒருநன்மை
யுங்காணவில்லை; சொஸ்தமுள்ளகாலத்தைக்காத்
திருந்தோம், பாரும், ஆபத்து.—யெகோவா ௨௰
வே, எங்கள் தீமையையும், எங்கள்முன்னோரின்
பாவத்தையுமுணர்ந்துசொல்லுகிறோம்: நாங்கள்
உமக்குவிரோதமாய்ப்பாவஞ்செய்தோம்.-உமது ௨௧
நாமத்தினிமித்தம் எங்களை வெறுக்காதிருப்பீரா
க, மகிமைபொருந்திய உமது சிங்காசனத்தை அ
வமானம் பண்ணாதிருப்பீராக: நினைத்தருளும்,
எங்களோடிருக்கிற உமது உடன்படிக்கையை
மீறாதிருப்பீராக.—அந்நியரின் வீண்தேவர்களுக் ௨௨
குள் ஒருவர் மழைபெய்விக்க வல்லவருண்டா,
ஆகாயம் மழையைக்கொடுக்குமா; எங்கள் தே
வனாகிய யெகோவாவே, நீரல்லவா அதற்
குக்காரணர், ஆதலால் நாங்கள் உம்மைக்காத்தி
ருக்கிறோம்: நீரே இவையெல்லாவற்றிற்குஞ் சி
ருஷ்டிகர்த்தா.

## ௰௫. அதிகாரம்.

௧. யூதேயசனங்களுக்குவருந்தண்டனையைமுன்
னுரைத்தல்: ௰. அவைகளைக்குறித்து எரேமியா
புலம்பல்: ௰௨. தேவன் தமது சத்துருக்களைக்
கண்டித்தல்: ௰௫. எரேமியா தேவனிடத்
தில் விண்ணப்பஞ்செய்தல்: ௰௯. தேவன்
வாக்குத்தத்தஞ்செய்தல்.

பின்னும் யெகோவா என்னைநோக்கி, மோ ௧
சேயுஞ் சாமுவேலும் என் முன்னாகநின்றாலும்,
என் மனம் இந்தச்சனங்களின் பட்சமாய்ச்சா
ராது: நீ என் பார்வையினின்று இவர்களை அ
கற்று, இவர்களைப்போகவிடு.—எங்கே போவோ ௨
மென்று இவர்கள் கேட்டால், கொலைக்குத்தக்க
வர்கள் கொலைக்கும், கட்கத்துக்குத்தக்கவர்கள்
கட்கத்துக்கும், பஞ்சத்துக்குத்தக்கவர்கள் பஞ்
சத்துக்கும், சிறைக்குத்தக்கவர்கள் சிறைக்கு
மென்று யெகோவா சொல்லுகிறாரென்பதை
இவர்களுக்குச் சொல்லு.—கொலைசெய்யும்படி ௩
கட்கமும், பிடித்துக்கிழிக்கும்படி நாய்களும்,
பட்சித்து அழிக்கும்படி ஆகாயத்துப்பறவைக

(௯)ஏசா.௫௯.௧ யாத்.௨௯.௪௫,௪௬. லேவி.௨௬.௰௧,௰௨. தானி.௯.௰௮,௰௯.(௰)ஓசி.௮.௰௩.(௰௧)யாத்.௩௨.௰.(௰௨)நீதி.௧.௨௮. ஏசா.௧.௰௫. எசேக்.௮.௰௮. மீகா.௩.௪. சக.௭.௰௩. (௰௭) புல.௧.௰௬. புல.௨.௰௮.(௰௮)எசேக்.௭.௰௫.(௰௯)புல.௫.௨௧.(௨௰)தானி.௯.௮.(௨௨)சக.௰.௧,௨. உபா.௩௨.௨௧. சங்.௱௪௭.௮. ஏசா.௩௰.௨௩.—(௰௫.அதி.௧.)எசேக்.௰௪.௰௪,. யாத்.௩௨.௰௧,௰௨. ௧.சாமு.௭.௯. (௨) எசேக்.௫.௨,௰௨. சக.௰௧.௯. (௩) லேவி.௨௬.௰௬,. உபா.௨௮.௨௬.

ளும்பூமியின்மிருகங்களுமாகிய இந்நாலு இனங்
களையும் இவர்கள்மேல் ஏற்படுத்துவேனென்று
ச யெகோவா சொல்லுகிறார்.—இஸ்கியாவின்
புத்திரனும் யூதாதேசத்து இராசாவுமாகிய மனா
ஷேயெருஷலேமிலே செய்ததினிமித்தம், இவர்
களைப் பூமியிலுள்ள சகல இராச்சியங்களிலும்
ரு போகும்படிசெய்வேன்.—யெருஷலேமே, யா
வன் உன்மேலிரங்குவான், யாவன் உன்னி
மித்தம் புலம்புவான்; உன் சுகசெய்தியை வி
சு சாரிக்கத்திரும்புகிறவன்யாவன்.-நீஎன்னைவிட்
டுப்பராமுகமானாய்: ஆதலால் நான் உனக்கு வி
ரோதமாக என் கையைநீட்டி உன்னை அழிப்
பேன்; நான் பொறுத்துப்பொறுத்து இளைத்துப்
எ போனேன்.-தேசத்தின்வாசல்களில் இவர்களைத்
தூற்றுக்கூடையால் தூற்றுவேன்; என்சனங்கள்
தங்கள் வழிகளைவிட்டுத்திரும்பாததினால் இவர்
களைப் புத்திரவீனராக்குவேன், என் சனஙகளை
அ அழிப்பேன்.-இவர்களுக்குள் கடற்கரைமணலி
லும் அதிகமானவிதவைகள் எனக்கிருப்பார்கள்:
வாலிபருடைய மாதாவுக்கு விரோதமாய் மத்தி
யானகாலத்தில் கொள்ளையாடுகிறவனைக்கொண்
டுவந்தேன்: அவள்மேல் கலகமும் பயங்கரமுஞ்
சடிதியில்விழப்பண்ணினேனென்று யெகோ
கூ வா சொல்லுகிறார்.—ஏழுபிள்ளைகளைப் பெற்ற
வள் மெலிவடைகிறாள்: அவள் தன் பிராணனை
விட்டுவிட்டாள்; பகலாயிருக்கையிலும் அவள்
சூரியன் அஸ்தமித்தான்: அவள் இலச்சையடைந்
துகலக்கப்படுகிறாள்: அவர்களில் மீந்திருப்பவர்
களை அவர்களுடைய சத்துருக்களின்சமுகத்தில்
கட்கத்துக்கு ஒப்பிப்பேனென்று யெகோவா
சொல்லுகிறார்.
ய ஐயோ, எனக்கு ஆபத்து, ஆ, என்மாதாவே,
நீர் என்னைச் சருவதேசத்துக்கும் விரோதியும்
விவாதியுமாகப் பெற்றீர்; நான்வட்டிக்குக்கொ
டுத்ததுமில்லை, வட்டிக்குவாங்கினதுமில்லை; ஆ
யக னாலும் எல்லாரும் என்னைச்சபிக்கிறார்கள்.—யெ
கோவா, உன் மீதியானகாலத்தில் உனக்கு நன்
மைகிடைக்குமே; ஆபத்துக்காலத்திலும் துக்க
காலத்திலும் சத்துருவும் உனக்கு நன்மைசெய்
யஉ யப்பண்ணுவேனே.—வடக்கிலுள்ள இரும்பை
யங யும், உருக்கையும் இரும்புமுறிக்குமா.—உன் ச
கல பாவங்களினிமித்தமும் உன் எல்லைகளெல்
லாவற்றிலும் உன்பொருளையும் உன் திரவியங்க
ளையும் விலையின்றிக் கொள்ளையாடவிடுவேன்.-
யச நான் உன்சத்துருக்களுடனே உன்னை, நீ அறியா
ததேசத்திற்குச் செல்லப்பண்ணுவேன்: மூளுகி
ற என் கோபாக்கினி உங்கள் மேற் பற்றி எரியு
மென்றார்.
யரு யெகோவாவே, நீர் அறிவீர்: என்னை நி
னைந்து, நீர் என்னைச்சந்தித்து, என்னை உபத்திர
வப்படுத்துகிறவர்களுக்குப் பிரதிபலனளியும்; உ
மது நெடுஞ்சினத்தினால் என்னை அகற்றிவிடா
திரும்: நான் உமது நிமித்தம் நிந்தையைச்சகித்
தேனென்றறிவீராக.—உம்முடைய வாக்குகள் யசு
காணப்பட்டன, நான் அவைகளை உட்கொண்
டேன்; உம்முடையவாக்கு எனதுள்ளத்துக்குச்
சந்தோஷத்தையும்மகிழ்ச்சியையுந்தந்தது:சேனா
பதியும் தேவனுமாகிய யெகோவாவே,
உமது நாமம் எனக்குத்தரிக்கப்பட்டது.—நான் யஎ
பரிகாசக்காரருடையசங்கத்தில்உட்காரவில்லை,
நான்களிகூரவில்லை;உமதுகரத்தினிமித்தம்நான்
தனித்திருந்தேன்: நீர் என்னைத்தண்டனையினால்
நிரப்பினீர்.—என் வருத்தம் இடைவிடாமலிருக் யஅ
கிறதென்ன, என்காயம் ஆறாமலும் சொஸ்தப்ப
டாமலுமிருக்கிறதேது; நீர்எனக்குப்பொய்யனை
யும் நிலையற்ற சலத்தையும்போல இருப்பீரா.
நீ திரும்பினால் நான் உன்னைமீளவும் அங்கிக யகூ
ரிப்பேன், எனக்குமுன்பாக நீ நிற்பாய்: நீ தீமை
யினின்று நன்மையைப்பிரித்துவிட்டால் என்
வாயைப்போலிருப்பாயென்று யெகோவா
சொல்லுகிறார்: அவர்கள் உன்னிடத்தில் திரும்
புவார்களாக; நீயோ அவர்களிடத்தில் திரும்ப
வேண்டாம்.—நான் உன்னை இந்தச்சனங்களுக் உய
கு உறுதியான ஒருபித்தளை மதிலைப்போலாக்கு
வேன்: அவர்கள்உனக்குவிரோதமாகயுத்தம்பண்
ணுவார்கள், அவர்கள்உன்னைமேற்கொள்ளமாட்
டார்கள்: நான் உன்னையிரட்சித்து விடுவிக்கும்ப
டிக்குஉன்னோடேயிருக்கிறேன்.-நான்உன்னைத் உக
துன்மார்க்கர் கையினின்று இரட்சிப்பேன், உன்
னைப் பயங்கரமானவர்களின் கையினின்றுவிடு
விப்பேனென்று யெகோவா சொல்லுகிறார்.

## யசா. அதிகாரம்.

க. யூதேயருக்குவருந்தண்டனையினிமித்தந் தீர்க்
கதரிசிவிவாகஞ்செய்யாதபடி விலக்கல்: ய. இ
வர்களுடையபாவம் முன்னோருடைய பாவங்
களிலும் அதிகமெனக் காட்டல்: யச. எகிப்
தைவிட்டு நீங்கின மீட்சியைப்பார்க்கிலும்பெ
ரிய மீட்சிவருமெனக்காட்டல்: யகூ. தேவ பூ
சையினிமித்தம் அவர்கள் தண்டிக்கப்படல்.

யெகோவாவின் வாக்கு என்னிடத்தில்,— க
நீ, ஸ்திரியைவிவாகம் பண்ணவேண்டாம், இந் உ
த ஸ்தானத்திலே புத்திர புத்திரிகள் உனக்கிருக்
கலாகாதென்று சொல்லிற்று.—இந்த ஸ்தானத்தி ங
லே பிறக்கும் புத்திரரையும், புத்திரிகளையும், அ
வர்களைப்பெற்ற மாதாக்களையும், இந்தத் தேசத்
தில் அவர்களைச் சனிப்பித்த அவர்கள் பிதாக்க
ளையுங்குறித்து யெகோவா,-அவர்கள் கொடி ச
யமரணமடைவார்கள்; அவர்கள்நிமித்தம்புலம்பு
தலில்லை; அவர்கள் அடக்கம்பண்ணப்படாமல்
பூமியின் முகத்தின்மேல் எருவைப்போலிருப்
பார்கள்: அவர்கள் கட்கத்தினாலும் பஞ்சத்தினா
லும் நாசம்அடைய, அவர்கள் பிணங்கள் ஆகா

(ச) உபா.உஅ.உரு. எசேக்.உங.சசு. உ.இரா.உக.ய,.(ரு)ஏசா.ருக.யக. (சு) ஓசி.யங.யச.(எ)ஏசா.கூ.யங. ஆமோ.
ச.ய,யக. (கூ) க.சாமு.உ.ரு. ஆமோ.அ.கூ. (யக) அதி.ஙகூ.யக,யஉ. (யச) உபா.ஙஉ.உஉ. (யசு) எசேக்.ங.க,ங.
வெளி.ய.கூ,ய. யோபு.உங.யஉ. சங்.௱யகூ.எஉ,௱யக, (யஎ) சங்.க.க. (யஅ) யோபு.சு.யரு,.(யகூ)சக.ங.எ. எசேக்.
உஉ.சு. (உய) அதி.ங.யஅ.—(யசா. அதி. ச.) சங்.அங.கூ.

யத்துப்பறவைகளுக்கும் பூமியின் மிருகங்களுக்
௫ கும் இரையாகுமென்று சொல்லுகிறார்.—துக்கங்
கொண்டாடும் வீட்டில் நீ பிரவேசியாதே, அ
வர்கள் நிமித்தம் அழுதுபுலம்பும்படிக்கு நீ போ
காதேயென்று யெகோவா சொல்லுகிறார்: த
யையும் இரக்கமுமென்னும் என்சமாதானத்தை
இந்தச்சனங்களினின்று நீக்கிவிட்டேனென்று
௬ யெகோவா சொல்லுகிறார்.—இத்தேசத்திலே
பெரியோருஞ் சிறியோருஞ்சாவார்கள்: அடக்
கம்பண்ணப்படார்கள், அவர்கள் நிமித்தம் ஒரு
வரும் புலம்பார், அவர்கள்நிமித்தந்தங்களைக்கீறி
௭ க்கொண்டு, முண்டனம்பண்ணுவாரில்லை.-மரித்
தோர்நிமித்தம் உண்டானதுக்கத்தைமாற்ற ஒரு
வரும் ஆகாரத்தைப்பகுத்துக்கொடுக்கமாட்டார்,
பிதாவுக்காகவாகிலும், மாதாவுக்காகவாகிலும் அ
வர்களை ஆற்றும்பாத்திரத்தைக் குடிக்கக்கொடுக்
௮ கமாட்டார்.—நீ அவர்களோடேபோசனபானம்
பண்ணுகிறதற்கு அவர்களுடைய எந்தப்போச
௯ னசாலையிலும்பிரவேசியாதே.—பார், நான் இவ்
விடத்தில் உங்கள்காலத்தில் நீங்கள் காணும்ப
டி ஆனந்தத்தின்சத்தமும், சந்தோஷத்தின் சத்த
மும், மணவாளனுடையசத்தமும், மணவாட்டி
யின்சத்தமும் ஒழியப்பண்ணுவேனென்று இஸ
ரவேலின் தேவனுஞ் சேனாபதியுமாகிய யெ
கோவா சொல்லுகிறார்.
௰ நீ இவ்வாக்குகளெல்லாவற்றையும் இந்தச்ச
னங்களிடத்தில் தெரிவிக்கும்பொழுது அவர்கள்
உன்னைநோக்கி, யெகோவா எங்களுக்கு வி
ரோதமாக இவ்வளவு தீமைசொல்லுவதற்குக்கா
ரணமென்ன; நம்முடைய தேவனாகிய யெ
கோவாவுக்கு விரோதமாய் நாம்செய்ததீமை
௰௧ யும் பாவமும் என்னவென்றுகேட்க,—நீ அவர்
களைநோக்கி, உங்கள்முன்னோர் என்னைவிட்டு
அந்நியதேவர்களைப் பின்பற்றி, அவர்களைச்சே
வித்து, அவர்களை நமஸ்காரஞ்செய்து, என்னை
விட்டு, என்கட்டளையைக்காத்துநடவாமல்போ
௰௨ னார்கள்.—நீங்களோ, உங்கள் முன்னோரிலும்
அதிக தீமைசெய்தீர்கள்; பாருங்கள், நீங்கள் எ
னக்குச்செவிகொடாதபடி உங்கள் துஷ்ட இரு
தயத்தின் சிந்தனைக்கேற்க நடந்துவருகிறீர்கள்.—
௰௩ ஆதலால் நான் இத்தேசத்திலின்று உங்களை அ
கற்றி, நீங்களாவது உங்கள் பிதாக்களாவது அறி
யாத தேசத்துக்குத்தூரப்படுத்துவேன்; அங்கே
நீங்கள் இரவும் பகலும் அந்நியதேவர்களைச் சே
விப்பீர்கள்; நான்உங்களுக்குத்தயைசெய்யமாட்
டேனென்று யெகோவா சொல்லுகிறாரென்
பதைச்சொல்லு.
௰௪ பாருங்கள், நான்அவர்கள்முன்னோருக்கு அ
ளித்ததேசத்துக்கு அவர்களைத்திரும்பக்கொண்டு
வருவேன்; ஆதலால் இஸரவேல் சந்ததியாரை
எகிப்து தேசத்தினின்று புறப்படப்பண்ணின
யெகோவாவின் நித்தியத்துவத்தைக்கொண்
டு ஆணையிடுகிறேனென்றுசொல்லாமல்,—இஸர ௰௫
வேல்சந்ததியாரை வடதேசத்திலும், தாம் அவர்
களைத் தூரப்படுத்தினதேசங்களிலும்நின்றுபுறப்
படப்பண்ணின யெகோவாவின் நித்தியத்
துவத்தைக்கொண்டு ஆணையிடுகிறேனென்
று சொல்லப்படுங்காலம் வருமென்பதை யெ
கோவா சொல்லுகிறார்.
பாருங்கள், மீன்பிடிக்கிறவர்கள் அநேகரை ௰௬
அழைத்துஅனுப்புவேன், இவர்கள் அவர்களைமீ
னைப்போலப்பிடிப்பார்கள்; பின்புவேட்டைக்
காரர் அநேகரை அழைத்தனுப்புவேன், இவர்
கள் ஒவ்வொருமலையிலும், ஒவ்வொரு குன்றி
லும், கன்மலைகளின் வெடிப்புகளிலும் வேட்
டையாடுவார்கள்.—அவர்களுடைய சகலவழிக ௰௭
ளிலும் என்கண்களிருக்கின்றன: அவைகள்என்
பார்வைக்கு மறைந்திருக்கவில்லை, அவர்களு
டைய பாவமும் என்கண்ணுக்கு மறைந்திருக்க
வில்லை.—அவர்கள் தங்கள் அரோசியமுள்ளகிரி ௰௮
யைகளின் தீமையினால் என்தேசத்தை அசுசிப்
படுத்தினார்கள், அரோசிக்கப்படத்தக்கஅவர்கள்
கிரியைகள் என்சுதந்தரமெங்கும் பரம்பியிருக்
கின்றன, இதினிமித்தம் நான் அவர்களுடைய
தீமைக்கும் பாவத்திற்கும் இருமடங்குபலன் அ
ளிப்பேனென்று யெகோவா சொல்லுகிறார்.-
யெகோவாவே, என்பெலமே, என்கோட் ௰௯
டையே, ஆபத்துக்காலத்தில் என்புகலிடமே, பூ
மியினெல்லைகளிலுள்ளதேசத்தார் உம்மிடத்தில்
வந்து, எங்கள் முன்னோர்பலன்தராத இல்பொ
ருளாகியபொய்மைகளைச்சுதந்தரித்தார்கள், இது
உண்மையென்பார்கள்.—மனுஷன்தனக்குத்தே ௨௰
வர்களை உண்டுபண்ணலாகுமா; அவர்கள்தேவர்
களல்லவே.—பாருங்கள், இந்தச்சமயத்திலேநான் ௨௧
அவர்களுக்குப் போதகம்பண்ணி, என்கையை
யும் என்பெலத்தையும் அவர்களுக்குத்தெரியப்
பண்ணுவேன்; என்நாமம் யெகோவாவென்
று அறிந்துகொள்வார்கள்.

## ௰௭. அதிகாரம்.

௧. யூதேயர் சிறைப்படல்: ௫. மனுஷனை எதிர்பா
ர்ப்பதும் தேவனை எதிர்பார்ப்பதும்வித்தியாச
மெனக்காட்டல்: ௯. தேவனை வஞ்சிக்கலாகா
தெனக்காட்டல்: ௰௨. தேவன் மாத்திரம் ரட்
சிப்புச்செய்யக்கூடுமென்றுதெரிவித்தல்: ௰௫.
நிந்தனையினிமித்தம் எரேமியா புலம்பல்: ௰௯.
ஓய்வுநாளை ஆசரிப்பது கடமையெனக்கூறல்.

யூதாவின்பாவம் இருப்பு எழுத்தாணியினாலும், ௧
வச்சிரத்தின்நுனியினாலும்எழுதப்பட்டிருக்கின்

(௫) எசேக்.௨௪.௰௭,௨௨,௨௩. (௬) லேவி.௰௯.௨௮. உபா.௰௪.௨. எசா.௨௨.௰௨. (௭) எசேக்.௨௪.௰௭. ஓசி.௯.௪. உபா.௨௬.௰௪. யோபு.௪௨.௰௧. நீதி.௩௧.௬,௭. (௯) எசா.௨௪.௭,௮. எசேக்.௨௬.௰௩. ஓசி.௨.௰௧. வெளி.௰௮.௨௩.(௰) உபா.௨௯.௨௪. (௰௧) உபா.௨௯.௨௫. (௰௩) உபா.௨௮.௩௬,௬௩,௬௪,௬௫. (௰௪) எசா.௪௩.௰௮. (௰௬) ஆமோ.௪.௨. அபகூ.௧.௰௫. (௰௭) யோபு.௩௪.௨௧. நீதி.௫.௨௧. (௰௮) எசா.௪௰.௨. எசேக்.௪௩.௭,௯.(௰௯)சங்.௰௮.௨. எசா.௪௪. ௰. (௨௰) எசா.௩௭.௰௯. கலா.௪.௮. (௨௧) யாத்.௰௫.௩. ஆமோ.௫.௮. சங்.௮௩.௰௮.—(௰௭.அதி. ௧.) யோபு.௰௯. ௨௪. நீதி.௩.௩. ௨.கொரி.௩.௩.

றது, அது இருதயபீடத்திலும் உங்கள் வேதிகை
களின் கொம்புகளிலும் பதிந்திருக்கின்றது;—
௨ உயர்ந்த குன்றுகளிலுள்ள பசுமையான விருட்
சங்களுக்குள் அவர்கள் வேதிகைகளையும் அவர்
கள் சோலைகளையும் அவர்கள் பிள்ளைகள் நினைக்
௩ கிறார்கள்.-வெளியிலுள்ள என்மலையே, உன்எல்
லையிலெங்குஞ் செய்யப்பட்ட பாவத்தினிமித்
தம் நான்உன்விளைவையும், உன்சமஸ்தசெல்வத்
தையும், உன் உயர்ந்தஸ்தானங்களையும் கொள்
௪ ளையாடப்படும்படி ஒப்பிப்பேன்.—நான்உனக்
களித்தசுதந்தரத்தை நீ விட்டுவிடுவாய்; நீ அறி
யாததேசத்தில் உன்சத்துருக்களிடத்திற் சேவிக்
கும்படிசெய்வேன்: நீங்கள்மூட்டின என்கோ
பாக்கினி என்றும் எரியும்.
௫ மனுஷனைநம்பி,மாமிசத்தையேதனக்குப்புய
பலமாக்கிக்கொண்டு, யெகோவாவை விட்
டு நீங்கும் இருதயமுள்ளவன் சபிக்கப்பட்டவ
௬ னென்றுயெகோவாசொல்லுகிறார்.-நன்மை
வந்தும் அவன் அதை அறியாமல் பாலைவனத்தி
லுள்ளஎளியபூண்டுக்கொப்பாவான்; வனாந்தரத்
தில்வறண்டஸ்தானங்களிலும், குடியில்லாத உ
௭ வர்நிலத்திலுந் தங்குவான்.-யெகோவாவை
விசுவாசித்து, யெகோவா தன் நம்பிக்கை
யென்றிருக்கிற மனுஷனே வாழ்வுடையவன்.-
௮ இவன், நீர்க்கால்களின் அருகே நடப்பட்டு,
நதியோரத்தில் வேரூன்றி, உஷ்டணம்வந்தும்
அதைஅறியாமல் பசுமையான இலையையுடைய
தாகி, மழையில்லாத வருஷத்திலும் பயமின்றி
ஒழியாமல்கனிதரும் விருட்சத்தைப்போலிருப்
பான்.
௯ இருதயமே எல்லாவற்றிலுங் கபடமும் மகா
௰ கேடுமுள்ளது: அதைஅறிபவன் யாவன்.—யெ
கோவாவாகிய நான் ஒவ்வொருவனுக்கும்
அவனவன்வழிகளுக்கும்,செய்கைகளின்கனிக
ளுக்குந்தக்கதை அளிக்கும்பொருட்டு இருதயத்
தைஆராய்ந்து, உள்ளிந்திரியங்களைப்பரிசோதித்
௰௧ து வருகிறேன்.—அநியாயமாய்ச் செல்வத்தைக்
கூட்டிவைக்கிறவன், முட்டையிட்டு அவயங்
காத்தும், குஞ்சுபொரிக்காதிருக்கிற கௌதாரி
யைப்போலிருக்கிறான்; அவன்தன்பாதிவயதில்
அதைவிட்டுத்தன்முடிவிலேமூடனாயிருப்பான்.
௰௨ ஆதிமுதல் மகிமையும், உன்னதமுமுள்ளசிங்
௰௩ காசனமே நம்முடையபரிசுத்தஸ்தானம்.—இஸ
ரவேலின்நம்பிக்கையாகிய யெகோவாவே,
உம்மைவிடுகிற யாவரும் இலச்சை அடைவார்
கள், அவர்கள் சீவனுள்ளநீரூற்றாகிய யெகோ
வாவை விட்டு நீங்கினபடியால் உம்மைவிட்
டுநீங்குகிறவர்களுடைய நாமம் பூதூளியில் எழு
௰௪ தப்படும்.—யெகோவாவே, நீர் என்னைச்
சொஸ்தப்படுத்தியருளும், அப்பொழுது சொஸ்
தமாவேன்; என்னைஇரட்சியும், அதினால் இரட்
சிக்கப்படுவேன்: நீரே என்துதி.
பாரும், அவர்கள்என்னைநோக்கி, யெகோ ௰௫
வாவின் வாக்கெங்கே;அதுஇப்பொழுதுவரட்
டுமென்கிறார்கள்.—நானோ உம்மைப்பின்பற்று ௰௬
கிறமேய்ப்பன், நான் தொழிலைவிடும்படி தீவ
ரிக்கவுமில்லை: ஆபத்துநாளை விரும்பவுமில்லை;
நீர் அறிவீர்: என்வாயினின்று புறப்பட்டதெல்
லாம் உமக்குமுன்பாகச் செவ்வையாயிருந்தது.-
நீர் எனக்குத்திகிலாயிராதிரும்: ஆபத்துக்காலத் ௰௭
தில் நீரே என்புகலிடம்.-என்னைத்துயரப்படுத் ௰௮
துகிறவர்கள்வெட்கப்படுவார்களாக,நான்வெட்
கப்படவிடாதிரும்: அவர்கள் கலங்குவார்களா
க, நான்கலங்கவிடாதிரும்: அவர்களுடைய ஆ
பத்துநாளைவரப்பண்ணி, இருமடங்குஅவர்களை
நாசப்படுத்தும்.
யெகோவா என்னைநோக்கி, நீ போய், யூ ௰௯
தாவின் இராசாக்கள் போய்வருகிற இந்தச்சன
புத்திரருடைய வாசலிலும், யெருஷலேமின்
எல்லாவாசல்களிலும் நின்று,—அவர்களைநோக் ௨௰
கி, இந்தவாசல்களிலேபிரவேசிக்கிற யூதாவின்
இராசாக்களும், எல்லா யூதாவும், யெருஷலேமி
யர்சகலருமாகிய நீங்கள் யெகோவாவின்
வாக்கைக்கேளுங்கள்.—நீங்கள் ஒய்வுநாளில் சு ௨௧
மைகளைச்சுமந்து, அவைகளை யெருஷலேமின்
வாசல்களிலே கொண்டுவராமலும்,—ஓய்வுநா ௨௨
ளில்உங்கள்வீடுகளினின்று சுமையைவெளியே
கொண்டுபோகாமலும்,எந்தவேலையையுஞ்செய்
யாமலும், நான் உங்கள் முன்னோருக்குக்கட்ட
ளையிட்டபிரகாரம் ஓய்வுநாளைப்பரிசுத்தமாய் ஆ
சரிக்கும்படி சாவதானமாயிருங்களென்று யெ
கோவாசொல்லுகிறாரென்பதைச்சொல்லென்
றார்.-அவர்களோகீழ்ப்படியாமலும்,செவியைச் ௨௩
சாயாமலும், உபதேசத்தைக்கேளாமலும், உட்
கொள்ளாமலுமிருக்கும்படி தங்கள் கழுத்தைக்க
டினப்படுத்தினார்கள்.—நீங்கள் ஓய்வுநாளில்இந் ௨௪
தநகரத்தின் வாசல்களின்வழியாய்ச் சுமையைக்
கொண்டுவராமல், ஓய்வுநாளில் எந்தவேலையை
யுஞ்செய்யாதபடிக்கு அதைப்பரிசுத்தமாய் ஆச
ரிக்கச் சாக்கிரதையோடே எனக்கு அமைந்
திருந்தால்,—தாவீதின்சிங்காசனத்தில் இராசாக் ௨௫
களும் பிரபுகளும்வீற்றிருந்து, இரதங்களின்மே
லுங்குதிரைகளின்மேலும் ஏறுவார்கள், அவர்க
ளும், அவர்களுடையபிரபுகளும் யூதாசனங்க
ளும்,யெருஷலேமியரும் இந்தநகரத்தின்வாசல்
களிலே பிரவேசிப்பார்கள்: இந்தநகரம் என்றும்
நிலைநிற்கும்.—சனங்கள் யூதாவின் நகரங்களி ௨௬
லும்,யெருஷலேமின் சுற்றுப்புறங்களிலுள்ளஸ்
தானங்களிலும், பேன்யாமீன்தேசத்திலும்,சமபூ
மியிலும்,மலைகளிலும்,தென்றிசையிலும்நின்று,

(௨)கியா.௩.௭. ௨.நாளா.௨௪.௰௮. ஏசா.௧.௨௯.(௫)ஏசா.௩௰.௧,௨. ஏசா.௩௧.௩. (௬) யோபு.௨௰.௰௭. ௨பா.௨௯.௨௩.
(௭) சங்.௨௰.௨. நீதி.௰௬.௨௰. ஏசா.௩௰.௰௮.(௮)யோபு.௮.௰௬. சங்.௧.௩.(௰)௧.சாமு.௰௬.௭. ௧.நாளா.௨௮.௯. நீதி.
௰௭.௩. ரோ.௮.௨௭. வெளி.௨.௨௩. சங்.௬௨.௰௨. ரோ.௨.௬. (௰௧) லூக்.௰௨.௨௰. (௰௩) சங்.௭௩.௨௭. ஏசா.௧.௨௮.
லூக்.௰.௨௰. (௰௪) ௨பா.௰.௨௧. சங்.௱௯.௧. (௰௫) ஏசா.௫.௰௯. எசேக்.௰௨.௨௨. ஆமோ.௫.௰௮. ௨.பேதுரு.௩.௪.
(௰௮) சங்.௩௫.௪. சங்.௨௫.௨.(௨௧)எண்.௰௫.௩௨,. நிகி.௰௩.௰௯.(௨௨)யாத்.௨௰.௮. எசேக்.௨௰.௰௨.(௨௬)சக.௭.௭.

யெகோவாவின் ஆலயத்திலேதகனபலிகளை
யும், மற்றப்பலிகளையும், போசனபலிகளையும்,
தூபத்தையும், ஸ்தோத்திரபலிகளையுங் கொண்
௨௭ டுவருவார்கள்.—ஆனாலும் என்வாக்குக்கமையா
மலும், ஓய்வுநாளைப் பரிசுத்தமாய் ஆசரிக்காம
லும்,ஓய்வுநாளில்யெரூஷலேமின்வாசல்களின்
வழியாய்ச் சுமைகளைக் கொண்டுவந்தீர்களேயா
கில் நான் யெரூஷலேமின்வாசல்களில் அக்கி
னியைக்கொளுத்துவேன்; அதுயெரூஷலேமின்
அரமனைகளைப்பட்சிக்கும், அது அவிந்துபோகா
திருக்குமென்று யெகோவா சொல்லுகிறார்.

## ௰௮. அதிகாரம்.

௧. குயவனுடையசக்கரத்தை உவமித்தல்: ௪. அ
தின் தாற்பரியமின்னதென்று தெரிவித்தல்:
௰௧. யூதேயரின் கிரியைகளும் அவைகளின் ப
லனுமின்னதென்றுகாட்டல்: ௰௮. தன்னைக்
கொல்லவகைதேடுபவர்களைக்குறித்துப் பிரார்
த்தித்தல்.

யெகோவாவினின்று எரேமியாவுக்குக்
௨ கிடைத்தவாக்கு,—நீ எழுந்து, குயவன்வீட்டுக்கு
இறங்கிப்போ, அங்கே நான் உனக்கு என்வாக்
௩ குகளைத்தெரிவிப்பேனென்றுசொல்லிற்று.—அப்
பொழுது நான் குயவன்வீட்டுக்கு இறங்கிப்போ
னேன், பார், அவன்அங்கேசக்கரத்தால் ஒருவே
௪ லைசெய்துகொண்டிருந்தான்.—குயவன் செய்த
மட்பாத்திரம் அவன் கையிலே பழுதுபட்டுப்
போனதினால், அவன்தன்இஷ்டப்படி அதைத்
௫ திரும்பச்செய்தான்.—அப்பொழுது யெகோ
௬ வாவின் வாக்கு என்னிடத்தில்,—இஸரவேல்
வமிசத்தாரே, இந்தக்குயவன் செய்தபிரகாரம்
நான் உங்களை நடத்தக்கூடாதாவென்று யெ
கோவா சொல்லுகிறார். இஸரவேல்வமிசத்தா
ரே, களிமண் குயவன்கையிலெப்படியிருக்கிற
தோ, நீங்கள் அப்படி என்கையிலிருக்கிறீர்கள்,
௭ பாருங்கள்.—பிடுங்கவும், கீழேவிழுத்தவும், அ
ழிக்கவும் நான் ஒருசாதியாரையாவது இராச்சி
யத்தையாவது குறித்துச்சொல்லுஞ்சமயத்தில்,—
௮ நான்சொல்லியஅந்தச்சாதியார்தங்கள்தீமையை
விட்டுவிலகுவார்களாகில் நான் செய்யநினைத்த
௯ தீமையைவருவியாமலிரங்குவேன்.—கட்டவும்
நாட்டவும் சாதியாரையாவது ஒருஇராச்சியத்தா
ரையாவதுகுறித்துநான்சொல்லுஞ் சமயத்தில்,—
௰ அவர்கள் என் வாக்குக்கமையாமல் என்பார்வை
யில் தீமைசெய்தால்,நான் அருளிச்செய்யநினைத்
த நன்மையைச் செய்யாமல் மனந்திரும்புவே
னென்றுசொல்லிற்று.
௰௧ இப்பொழுது நீ யூதாசனங்களிடத்திலும்,யெ
ரூஷலேமியரிடத்திலும், பாருங்கள், நான் உங்
களுக்குவிரோதமாய் ஒருதீங்கை எற்படுத்தி,உங்
களுக்கு விரோதமான நினைவைநினைக்கிறேன்;
ஆதலால் நீங்கள் உங்களுங்கள் துன்னெறியை
விட்டுத்திரும்புங்கள், உங்களுங்கள் நெறிகளை
யுங்கிரியைகளையுஞ்சீர்ப்படுத்துங்களென்று யெ
கோவா சொல்லுகிறாரென்பதைச் சொல்லு.—
அவர்களோ, நம்பிக்கையில்லை: நாங்கள் எங்க ௰௨
ளெங்கள் ஆலோசனையின்படிநடப்போம், நாங்
கள் எங்கள் எங்கள் தீமையான இருதயத்தின்சிந்
தனைப்படி செய்வோமென்றார்கள்.—இஸரவே ௰௩
லென்னுங் கன்னிகைசெய்த மிகவும்பயங்கரமா
ன காரியம்போல அந்நிய தேசத்தாருக்குள்ளே
கேள்விப்பட்டதுண்டோவென்று இப்பொழுது
கேட்டுப்பாருங்கள்.—ஒருவன் அந்தரவெளியி ௰௪
லுள்ள கன்மலையினிமித்தம் லிபானோனின் உ
றைந்தமழையைவிட்டுவிடுவானா; ஒருவன் தூரத்
திலுள்ள சலத்தினிமித்தம் பாயுஞ் சீதளசலத்தை
விட்டுவிடுவானா.—என்சனங்களோ என்னைமறந் ௰௫
து மாயைகளுக்குத் தூபங்காட்டுகிறார்கள், செப்
பனிடப்படாத பாதைகளிலும் வழியிலும்அவர்
கள்நடக்கும்படி,அவைகள்அவர்களைப்பூருவபா
தைகளாகிய அவர்களுடைய வழிகளிலிடறப்
பண்ணின.—வழிப்போக்கன் எவனும் பிரமிப்ப ௰௬
டைந்து தன் தலையைத்துலுக்க, அவர்கள் தங்கள்
தேசத்தைப்பாழ்படுத்தி, இகழ்ச்சிக்குறிப்பாக்கி
னார்கள்.—கீழ்காற்றைப்போலச் சத்துருவுக்கு ௰௭
முன்பாகநான் அவர்களைச்சிதறப்பண்ணுவேன்;
அவர்களுடைய ஆபத்துக்காலத்தில் நான் அவர்க
ளுக்கு நேர்முகமாயிராமல், பராமுகம் பண்ணு
வேனென்று யெகோவா சொல்லுகிறார்.
அப்பொழுது அவர்கள், நாம் எரேமியாவுக்கு ௰௮
விரோதமாக ஆலோசனைசெய்வோம்வாருங்கள்;
ஆசாரியனிடத்திலே கட்டளையும், ஞானவானி
டத்தில் ஆலோசனையும், தீர்க்கதரிசியிடத்திலே
வாக்கும் ஒழிந்துபோவதில்லை. நாம் நம்முடைய
நாவினால் அவனைத்தண்டிப்போம்வாருங்கள், அ
வனுடைய வாக்குகள்மேல் சிந்தைவைக்கமாட்
டோமென்றார்கள்.—யெகோவாவே, நீர் என் ௰௯
மேல்சிந்தைவைத்து, என்னோடேவாக்குவாதஞ்
செய்பவர்களுடைய வாக்கைக் கேளும்.—நன் ௨௰
மைக்குப்பிரதியாகத்தீமையை அளிக்கலாகுமா;
என்பிராணனுக்காக அவர்கள் குழிதோண்டினார்
கள். உம்முடையகோபத்தைஅவர்களுக்குவிலக்
கும்படி உமக்குமுன்நின்று அவர்களுக்கு அனு
கூலமாய்ப்பிரார்த்தனைசெய்தேன், அதை நினைந்
தருளும்.—அவர்களுடைய பாலகரைப்பஞ்சத் ௨௧
துக்கு ஒப்பியும், கட்கத்தினால் அவர்களை அகற்
றிவிடும்; அவர்கள் மனைவிகள் புத்திரவீனரும்வி
தவைகளுமாயிருப்பார்களாக, அவர்களுடைய
புருஷருங் கொல்லப்படுவார்களாக; அவர்களு
டையவாலிபர்யுத்தத்திலே கட்கத்தினால் மடியக்
கடவர்கள்.—நீர் அவர்கள்மேல் சடிதியில் சே ௨௨
னையைவருவிக்க, அவர்கள் வீடுகளினின்று அ
ழுகையின்சத்தங் கேட்கப்படக்கடவது, என்
னைப்பிடிக்கக்குழியைத்தோண்டிஎன்கால்களுக்
குக் கண்ணிகளைவைத்தார்கள்.—ஆனாலும் யெ ௨௩

(௨௭) புல.௪.௰௧. ஆமோ.௧.௪,௭. ௨.இரா.௨௫.௯.—(௰௮. அதி. ௬.) ஏசா.௪௫.௯. ரோ.௯.௨௰,௨௧. ஏசா.௬௪.௮. (௮) எசேக்.௰௮.௨௧. யோனா.௩.௰. (௰௧) ௨.இரா.௰௭.௰௩. (௰௩) ௧.கொரி.௫.௧. (௰௬) ௧.இரா.௯.௮. புல.௨.௰௫. மீகா.௬.௰௬. (௰௮) லேவி.௰.௰. மல்.௨.௭. யோவா.௭.௪௮,௪௯.

கோவாவே, அவர்கள் என்னைக்கொலைசெய்
யும்படி எனக்குவிரோதமாய்ச்செய்த ஆலோச
னையெல்லாம் உமக்குத்தெரியும்: அவர்கள் அக்
கிரமத்தை மன்னியாதிரும், அவர்களுடைய பா
வத்தை உமதுபார்வையினின்று துடையாதிரும்,
அவர்கள் உம்முடைய சமுகத்தில் கவிழ்க்கப்ப
டுவார்களாக; உமதுகோபமுள்ளசமயத்தில் இப்
படியே அவர்களைநடத்தும்.

## ௰௯. அதிகாரம்.

௧. மட்பாத்திரத்தையுடைத்து அழித்ததினால் பாவத்தினிமித்தம் யெருஷலேம் நாசமடையுமென்று தெரிவித்தல்: ௰௪. தொப்பேத்தில்வாக்குத்தெரிவித்த பின் யெகோவாவினுலயத்தில் அதைப்பிரசித்தப்படுத்தல்.

பின்பு யெகோவா, நீபோய், குயவனுடைய
ஒருமட்பாத்திரத்தை எடுத்து, சனங்களிலும் ஆ
சாரியர்களிலும் முதியோர் சிலரைக் கூட்டிக்
௨ கொண்டு,—கிழக்குவாசலுக் கெதிர்ப்புறத்தி
லுள்ள இன்னோமின்புத்திரனுடைய தாழ்ந்த பூ
மிக்குப்புறப்பட்டுப்போய், நான் உனக்குத்தெ
௩ ரிவிக்கும்வாக்குகளைப்பிரசித்தப்படுத்து.—யூதா
வின் இராசாக்களே,யெருஷலேமியரே, நீங்கள்
யெகோவாவின் வாக்கைக்கேளுங்கள்; பா
ருங்கள், கேட்பவர் யாவருடையசெவியும் அதி
ரும்படி நான் இந்தஸ்தானத்தின்மேல் தீமையை
வருவிப்பேனென்றுஇஸரவேலின் தேவனும்,
சேனுபதியுமாகிய யெகோவா சொல்லுகி
௪ ருர்.—அவர்கள்என்னைவிட்டு நீங்கினுர்கள், இந்
தஸ்தானத்தைப்பராதீனமாக்கி, தாங்களும், தங்
கள்முன்னேரும், யூதா இராசாக்களும் அறியாத
அந்நியதேவர்களுக்கு இந்தஸ்தானத்திலேதூபங்
கொடுத்து,குற்றமில்லாதவர்களுடையஇரத்தத்தி
௫ ஞல்இந்தஸ்தானத்தை நிரப்பினுர்கள்.—அவர்கள்
தங்கள்புத்திரரைப்பாகாலுக்குத்தகனபலிகளாக
அக்கினியினுலே தகிக்கும்படி, பாகாலுக்கு உ
யர்ந்த ஸ்தானங்களைக் கட்டினுர்கள், இப்படி
நான்கட்டளையிடவுமில்லை, பேசவுமில்லை,திரு
௬ வுளங்கொள்ளவுமில்லை.—ஆதலால்,பாருங்கள்,
இந்த ஸ்தானம் தொப்பேத்தென்றும் இன்னோ
மின் புத்திரனுடைய தாழ்ந்த பூமியென்று பெ
யர்பெருமல் சங்காரத்தின் தாழ்ந்த பூமியென்று
௭ பெயர்பெறுங் காலம்வரும்.—நான் இந்த ஸ்தா
னத்தில், யூதேயரும்யெருஷலேமியருமானவர்க
ளின் ஆலோசனையை வெறுமையாக்குவேன்;
அவர்கள் தங்கள் சத்துருக்களுக்குமுன் கட்கத்
தினுலும், அவர்கள் பிராணனைக் கொலைசெய்
ய வகைதேடுகிறவர்களின் கையினுலும் விழப்
பண்ணுவேன்: அவர்களுடைய பிணங்களை ஆ
காயத்துப் பறவைகளுக்கும், பூமியின் மிருகங்க
௮ ளுக்கும் இரையாகக்கொடுப்பேன்.—நான் இந்
த நகரத்தைப்பாழாக்கி, இகழ்ச்சிக்குறிப்பாக்கு
வேன்; வழிப்போக்கர்யாவரும் பிரமிப்படைந்
து, அதின் வாதைகளெல்லாவற்றினிமித்தமுஞ்
சீறுவார்கள்.—அவர்கள் சத்துருக்களும், அவர் ௯
கள் பிராணனைக்கொலைசெய்யவகைதேடுகிறவர்
களும் அவர்களை இறுகப்பிடிக்கும் முற்றிக்கை
யிலும், நெருக்கும் நெருக்கத்திலும், அவர்கள்
தங்கள் புத்திரரின் மாமிசத்தையும், தங்கள் புத்
திரிகளின் மாமிசத்தையும், அவனவன் தன்சிநே
கனுடைய மாமிசத்தையும் புசிக்கச் செய்வே
னென்று இஸரவேலின் தேவனும் சேனுபதி
யுமாகிய யெகோவா சொல்லுகிறுரென்று
சொல்லி,—உன்னேடேவந்த மனுஷருக்குமுன் ௰
பாக அந்தமட்பாத்திரத்தைத்தகர்த்து,—அவர்களை ௰௧
நோக்கி, குயவனுடையமட்பாத்திரத்தைத்திரும்
ப இசைக்கப்படாதபடி தகர்க்கிறதுபோல நான்
இந்தச்சனங்களையும்இந்தநகரத்தையும்தகர்ப்பே
னென்று சேனுபதியாகிய யெகோவாசொல்
லுகிறுர்: அடக்கம்பண்ண இடங்கிடையாத அ
ளவும் அவர்கள் தொப்பேத்தில் அடக்கம்பண்
ணுவார்கள்.—இவ்விதமாக நான் இந்தஸ்தானத் ௰௨
துக்கும் இதில்குடியிருப்பவர்களுக்குஞ் செய்
வேன், இந்த நகரத்தைத் தொப்பேத்தைப் போ
லாக்குவேன்.-எந்தவீடுகளின்மேல் ஆகாயத்தின் ௰௩
நட்சத்திரங்களெல்லாவற்றிற்குந் தூபங்காட்டி,
அந்நிய தேவர்களுக்குப் பானபலிகளை ஊற்றி
னுர்களோ, அந்த எல்லாவீடுகளும், விசேஷ
மாக யெருஷலேமின் வீடுகளும், யூதா இரா
சாக்களின் வீடுகளும், தொப்பேத்தின் ஸ்தானம்
போல அசுசியாகுமென்று யெகோவாசொல்
லுகிறுரென்பதைச்சொல்லென்ருர்.—பின்பு எ ௰௪
ரேமியாயெகோவா தன்னைத்தீர்க்கதரிசனஞ்
சொல்ல அனுப்பின தொப்பேத்தினின்றுவந்து,
யெகோவாவின் ஆலயத்தின் பிராகாரத்தி
னின்றுகொண்டு சகலசனங்களையும் நோக்கி,—
பாருங்கள், என் வாக்குகளைச் சிந்தித்துக்கொள் ௰௫
ளாதபடி, தங்கள் கழுத்துக்களைக்கடினப்படுத்தி
னபடியினுல் இந்தநகரத்தையும் இதைச்சேர்ந்த
பட்டணங்களையும் குறித்துச்சொல்லிய தீமை
யெல்லாம் இவைகளின்மேல்வருவிப்பேனென்
று,இஸரவேலின் தேவனும்சேனுபதியுமாகிய
யெகோவா சொல்லுகிறுரென்ருன்.

## ௨௰. அதிகாரம்.

௧. எரேமியாவை அடித்துச் சிறைச்சாலையில் அடைத்ததினிமித்தம் பஷ்கூரைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௭. எரேமியா புலம்பல்: ௰௪. தேவனைத் துதித்தல்.

யெகோவாவின் வீட்டுக்குப்பிரதான அ ௧
திகாரியாகிய இம்மேரின் புத்திரன் பஷ்கூரென்
னும்ஆசாரியன்,எரேமியாஇக்காரியங்களைத்தீர்க்
கதரிசனமாய்ச்சொல்லக்கேட்டபொழுது,-எரே ௨
மியா தீர்க்கதரிசியைப் பஷ்கூர் அடித்து, யெ

(௰௯. அதி. ௨.) யோசு.௰௫.௮. ௨.இரா.௨௩.௰. (௩) ௧.சாமு.௩,௰௧. ௨.இரா.௨௧.௰௨. (௪) உபா.௨௮.௨௰. எசா.௬௫.௰௧. (௫) லேவி.௰௮.௨௧. (௬) யோசு.௰௫.௮. (௭) லேவி.௨௬.௰௭. உபா.௨௮.௨௫. (௯) லேவி.௨௬.௨௯. உபா.௨௮.௫௩. எசா.௯.௨௰. புல.௪.௰. (௰௧) எசா.௩௰.௰௪. புல.௪.௨. (௰௩) ௨.இரா.௨௩.௰,௰௨. செப்.௧.௫. (௰௪) ௨.நாளா.௨௰.௫.—(௨௰. அதி. ௧.) ௧.நாளா.௨௪.௰௪.

கோவாவின் ஆலயத்துக்குச் சமீபமாயுள்ள
பேன்யாமீனின் உயர்ந்த வாசலில் தொழுப்பூட்
௩ டினான்.—மறுநாளில் பஷ்கூர் எரேமியாவைத்
தொழுவினின்று விடுவித்தபொழுது, எரேமி
யா அவனை நோக்கி, யெகோவா பஷ்கூ
ரென்றல்ல, பயஞ் சூழ்ந்தோனென்றருத்தங்கொ
ள்ளும் மாகோர் மிசாபீப்பென்னும்பெயர் உ
௪ னக்கிட்டார்.—பார், நான் உன்னை உனக்கும்,
உன் சிநேகிதர் யாவருக்கும் பயங்கரமாகும்படி
செய்வேன்: உன்கண்கள்காண அவர்கள்தங்கள்
சத்துருக்களின் கட்கத்தினால்விழுவார்கள்:நான்
யூதாசனங்களெல்லாரையும்பாபேல்இராசாவின்
கையில் ஒப்பிக்க அவன் அவர்களைச்சிறைபிடித்
துப் பாபேலுக்குக் கொண்டுபோய்க் கட்கத்தி
௫ னால் கொலைசெய்வான்.—இந்த நகரத்தின்பெல
முழுவதையும், இதின் எல்லாப்பிரயாசப்பலனை
யும் அருமையான திரவியங்கள்யாவையும், யூதா
தேசத்துஇராசாக்களின்எல்லாப்பொருளையும்அ
வர்கள் சத்துருக்கள்கையில் ஒப்பிப்பேன், இவர்
கள் அவைகளைக்கொள்ளையிட்டுப்பாபேலுக்குக்
௬ கொண்டுபோவார்கள்.—பஷ்கூரே நீயும், உன்
வீட்டில்வாசமாயிருக்கிற யாவருஞ் சிறைப்பட்
டுப்போவீர்கள்: நீ பாபேலிற் பிரவேசித்து அங்
கேசாவாய், நீயும், நீ கள்ளத்தீர்க்கதரிசனங்களைச்
சொல்லக்கேட்ட உன் சிநேகிதர்யாவரும் அங்
கே அடக்கம் பண்ணப்படுவீர்களென்று யெ
கோவா சொல்லுகிறார்.
௭ யெகோவாவே, நீர் என்னைஏவ, நான் ஏ
வப்பட்டேன்: என்னிலும் நீரேபலவான், என்
னைமேற்கொண்டீர்: நான்தினமும் நிந்திக்கப்ப
டுகிறேன், சகலரும் என்னைப் பரிகாசம் பண்ணு
௮ கிறார்கள்.—நான் பேசத்தொடங்கினது முதல்
கூறினேன், கொடுமையென்றும்கொள்ளையென்
றுஞ் சத்தமிட்டேன்; யெகோவாவின் வாக்
கு நாடோறும் எனக்கு நிந்தையும் பரிகாசமுமா
௯ யிற்று.—இனி நான் அவரைக்குறித்து ஒன்றும்பிர
சித்தப்படுத்தமாட்டேன், அவருடையநாமத்தில்
இனி ஒருபொழுதும்பேசமாட்டேனென்றேன்.
ஆனாலும்அது என் எலும்புகளில் அடைபட்டெ
ரிகிற அக்கினிபோல என்னெஞ்சத்திலாயிற்று,
நான்சகித்துச்சகித்துச்சோர்ந்துபோனேன், மவு
னமாயிருக்க என்னால் கூடாமற்போயிற்று.
௰ அநேகருடைய அவதூறுகளைக்கேட்டேன்,
சுற்றிலும் பயமுண்டு. கூறு, நாங்களுங் கூறு
வோமென்றார்கள். என்னுடையதோழர்அனை
வரும் என்விழுதலைக்காத்திருந்து, அவன் எத்
தப்பட்டுஇணங்கவுங்கூடும், அப்பொழுது நாம்
அவனைமேற்கொண்டு அவனிடத்தில் பழிவாங்
௰௧ குவோமென்கிறார்கள்.—யெகோவா ப
யங்கரமானபராக்கிரமவீரனைப்போல்என்னோடி
ருக்கிறார்: ஆதலால் என்னைத்துயரப்படுத்துகிற
வர்கள்என்னைமேற்கொள்ளாமல்இடறிவிழுவார்
கள்: அவர்கள்அனுகூலம்பெறாமல்மிகவும்வெட்
கப்படுவார்கள்: என்றும் மறவாத நித்திய இலச்
சையடைவார்கள்.—நீதிமானையும் பரிசோதித்து, ௰௨
உள்ளிந்திரியங்களையும் இருதயத்தையும் ஆராய்ந்
துபார்க்கிறசேனைபதியாகிய யெகோவாவே,
நீர் அவர்களுக்கிடுந் தண்டனையை நான்காணும்
படிசெய்யும்: நான் என்காரியத்தை உமக்கே
வெளிப்படுத்தினேன்.—நீங்கள் யெகோவா ௰௩
வைக்குறித்துப் பாடுங்கள், யெகோவா
வைத்துதியுங்கள்: அவர்துஷ்டர்களுடையகையி
னின்றுதரித்திரனுடைய பிராணனைவிடுவித்தார்.
நான்பிறந்தநாள் சபிக்கப்படுவதாக: என்மா ௰௪
தா என்னைப்பிரசவித்ததினம் வாழ்த்தப்படாதி
ருப்பதாக.—உமக்கு ஒருமகன்பிறந்தானென்று ௰௫
என்பிதாவுக்கு நற்செய்தியைத்தெரிவித்து, அவ
னைமிகவுஞ்சந்தோஷப்படுத்தினமனுஷன் சபிக்
கப்படக்கடவன்.—அந்தமனுஷன், யெகோ ௰௬
வா இரங்காமல் கவிழ்த்தநகரங்களைப்போலாகி,
விடியற்காலத்தில் ஓலத்தையும், மத்தியானத்தில்
ஆரவாரத்தையுங் கேட்கக்கடவன்.—என்மாதா ௰௭
என்னைக்கருப்பத்தில்தரித்து, எப்பொழுதும் எ
னக்குப்பிரேதக்குழியாயிருக்கும்படி ஒருவன்க
ருப்பத்தில் என்னைக்கொலைசெய்யாமல் போன
தென்ன.—நான் சஞ்சலத்தையுந் துக்கத்தையும் ௰௮
அனுபவிக்கும்படிக்கும், என் ஆயுள்நாள்களை இ
லச்சையோடே போக்கும்படிக்கும் கருப்பத்தி
னின்று புறப்பட்டதேது.

## ௨௧. அதிகாரம்.

௧. சிதிகியாஎரேமியாவிடத்தில் ஆளனுப்பல்: ௩. சனங்கள்படுந் துக்கமின்னதென்று முன்னுரைத்தல்: ௮. சனங்கள் தங்களைக்கல்தேயர்கையில் ஒப்பிக்கும்படி பிரார்த்தித்தல்: ௰௧. இராசவமிசத்தாரைக்கண்டித்தல்.

பாபேலின்இராசாவாகிய நெபுகத்நெத்சர் எங் ௧
களோடே யுத்தஞ்செய்கிறான்; அவன் எங்களை
விட்டுப்போகும்படி யெகோவா தமது ஆச்
சரியமான கிரியைகள்யாவற்றின்படிக்கும்எங்க
ளுக்கு அனுக்கிரகஞ்செய்யும்பொருட்டு, நீர் எங்
கள்நிமித்தம் யெகோவாவைப் பிரார்த்திக்க
வேண்டுமென்றுசொல்லி,—சிதிகியா மல்கீயா ௨
வின்புத்திரனாகியபஷ்கூரையும்,மாசெயாவென்
னும் ஆசாரியனுடைய புத்திரனாகிய செப்பனி
யாவையும் எரேமியாவிடத்தில் அனுப்பினபொ
ழுது, யெகோவாவினின்று அவனுக்குக்கி
டைத்தவாக்கின்படி,
எரேமியா அவர்களைநோக்கி, நீங்கள் சிதிகியா ௩
வினிடத்தில்,—பாருங்கள், உங்கள் மதில்களுக் ௪
குவெளியே உங்களை முற்றிக்கைசெய்தபாபே
லின்இராசாவோடும்கல்தேயரோடும்யுத்தஞ்செய்
யும்படி, நீங்கள்கைப்பற்றிய யுத்தஆயுதங்களைவி
லக்குவேன், அவர்களை இந்த நகரமத்தியில் ஏக
மாய்க்கூட்டுவேன்.—நானே உங்களோடேஓங்கி ௫

(௩) சங்.௩௧.௰௩. (௫) ௨.இரா.௨௰.௰௭. (௭) புல.௩.௰௪. (௯) யோபு.௩௨.௰௮,௰௯. அப்.௰௮.௫. (௰) சங்.௩௧.௰௩. யோபு.௰௯.௰௯. லூக்.௰௧.௫௩,௫௪. (௰௨) சங்.௫௪.௭. (௰௪) யோபு.௩.௨. (௰௬) ஆதி.௰௯.௨௫. (௰௭) யோபு.௩.௩,௰,. (௰௮) யோபு.௩.௨௨. புல.௩.௧.—(௨௧.அதி.௧.) ௨.இரா.௨௫.௰௮. (௨) அதி.௩௭.௩,௭. (௪) ஏசா.௰௩.௪. (௫) யாத்.௬.௬.

னகையினாலும் வலிமையானபுயத்தினாலுங்கோ
பமும், குரோதமும், மகா உக்கிரமுமாகயுத்தம்
௬ பண்ணி,-இந்தநகரத்தில்வசிக்கிறமனுஷரையும்
மிருகங்களையும் சங்கரிப்பேன்: இவர்கள் மகா
கொள்ளைநோயினால் மடிந்துபோவார்களென்று
இஸரவேலின் தேவனாகிய யெகோவா
சொல்லுகிறாரென்பதைச் சொல்லுங்களென்றா
௭ ன்.-பின்புநான்யூதாவின் இராசாவாகியசிதிகியா
வையும்,அவனுடைய பணிவிடைக்காரரையும்,
சனங்களையும் இந்தநகரத்திலேகொள்ளைநோய்க்
கும், கட்கத்துக்கும்,பஞ்சத்துக்குந்தப்பிமீந்திரு
ப்பவர்களையும், பாபேலின்இராசாவாகியநெபுக
த்நெத்சரின்கையிலும், இவர்கள் சத்துருக்களின்
கையிலும், இவர்கள் பிராணனைவாங்க வகைதே
டுகிறவர்களின்கையிலும்ஒப்பிப்பேன்:அவன்அ
வர்களைக்கட்கத்தின்வாயினாலேவெட்டுவான்;அ
வன் மன்னிப்பதும், இரங்குவதும், தயைசெய்வ
துமில்லையென்று யெகோவாசொல்லுகிறார்.
௮ மேலும்நீ இந்தச்சனங்களைநோக்கி, நான்உங்
களுக்கு முன்னே சீவனின்வழியையும், மரணத்
௯ தின்வழியையும்வைக்கிறேன், பாருங்கள்.-இந்த
நகரத்திலே தங்குகிறவன் கட்கத்தினாலாகிலும்,
பஞ்சத்தினாலாகிலும், கொள்ளை நோயினாலாகி
லுஞ் சாவான்: உங்களை முற்றிக்கைசெய்கிற
கல்தேயரிடத்தில் தன்னை ஒப்பிக்கிறவனோ சீ
விப்பான், அவன் பிராணன் அவனுக்குக்கொள்
ளைப்பொருளாகுமென்று யெகோவா சொல்
௰ லுகிறாரென்று சொல்லு.-நான் நன்மைக்காகவல்
ல, தீமைக்காகவே இந்த நகரத்துக்கு விரோத
மாய் என்முகத்தைவைத்தேன்: இதுபாபேல் இ
ராசாவின்கையில் ஒப்பிக்கப்படும், அவன் அக்
கினியினால் இதைத் தகிப்பானென்று யெகோ
வா சொல்லுகிறார்.
௰௧ யூதா இராசாவின் வமிசத்தைக்குறித்து யெ
௰௨ கோவா சொல்லும் வாக்கைக்கேளுங்கள்.-தா
வீதின் வமிசத்தாரே, நீங்கள் விரைவிலே நியா
யந்தீர்த்து,கொள்ளைக்காரன்கையினின்றுகொள்
ளையாடப்பட்டவனை விடுவியுங்கள், இல்லா
விட்டால் உங்கள் கிரியைகளின் தீமையினி
மித்தம் என்னுடைய குரோதம் அக்கினிபோலப்
புறப்பட்டு எரியும், ஒருவராலுந் தணிக்கக்கூ
௰௩ டாதென்று யெகோவா சொல்லுகிறார்.—பள்
ளத்தில் வசிப்பவளே, சமபூமியிலுள்ள கன்மலை
யே, எங்களுக்கு விரோதமாய் வருகிறவன் யா
வன், எங்கள் வாசஸ்தானங்களிற் பிரவேசிக்கி
றவன் யாவனென்று சொல்லுகிற உனக்கு நா
னே விரோதியென்று யெகோவா சொல்லுகி
௰௪ றார்.—நான் உன்கிரியைகளின் பலனுக்கேற்க
உன்னைத்தண்டிப்பேன்:நான் அதின்வனத்திலே
நெருப்பைக்கொளுத்துவேன்,அது சுற்றிலுமுள்
ள யாவையும் பட்சிக்குமென்று யெகோவா
சொல்லுகிறாரென்பதைச் சொல்லென்றார்.

## ௨௨. அதிகாரம்.

௧.தண்டனைபண்ணி மனந்திரும்பும்படிஏவல்:௰. ஷல்லுமுக்குவருந் தண்டனையைக்காட்டல்: ௰௩. யோயாகீமுக்குவருந்தண்டனையைத்தெரிவித்தல்: ௨௰. கோனியாவின்மேல் வருந்தண்டனையை உணர்த்தல்.

நீ யூதா இராசாவின்வீட்டிற்குப்போய்,—தாவீ ௨
தின் சிங்காசனத்தில் வீற்றிருக்கும் யூதாவின் இ
ராசாவே, நீயும், உன்பணிவிடைக்காரரும், இந்
தவாசலிற்பிரவேசிக்குஞ்சனங்களும் யெகோ
வாவின் வாக்கைக்கேளுங்கள்.—நீங்கள் நியா ௩
யத்தீர்ப்புச்செய்து, நீதியைநடப்பித்து, கொள்
ளைக்காரன்கையினின்று கொள்ளையாடப்பட்ட
வனைவிடுவியுங்கள்: பரதேசிக்கும், அநாதபிள்
ளைக்கும், விதவைக்கும் எந்த அநியாயத்தையும்
உபத்திரவத்தையும் செய்யாதிருங்கள், இந்த ஸ்
தானத்திலேகுற்றமில்லாதவர்களுடைய இரத்தத்
தைச்சிந்தாதிருங்கள்.—நீங்கள் மெய்யாய் இந்த ௪
வாக்கின்படிசெய்வீர்களாகில், தாவீதின் சிங்கா
சனத்தில் வீற்றிருக்கும் இராசாக்கள் இரதங்களி
லும் குதிரைகளிலுமேறி, தங்கள் பணிவிடைக்
காரரோடும் சனங்களோடும் இந்தவாசல்களின்
வழியாய்ப்பிரவேசிப்பார்களென்று யெகோ
வா சொல்லுகிறார்.—நீங்கள் இந்தவாக்குகளுக் ௫
கு அமையாதிருந்தால், இந்தவீடு பாழாய்ப்போ
மென்பதற்கு என்னைக்கொண்டே ஆணையிடுகி
றேனென்று யெகோவா சொல்லுகிறாரென்
னும்இவ்வாக்கைச்சொல்லும்படி, யெகோவா
சொல்லுகிறார்.-யெகோவா யூதாவின்இராசா ௬
வுடையவீட்டைநோக்கி, நீ எனக்குக் கிலியாத்,
லிபானோனின் உச்சி, ஆனாலும், நான் உன்னை
வனமும் குடியில்லாத பட்டணங்களும் போ
லாக்குவேன்.-உனக்குவிரோதமாய்ஆயுதம்பிடித் ௭
து நாசஞ்செய்கிறவர்களை ஆயத்தப்படுத்துவேன்:
அவர்கள் உன் உத்தம ஏரஸ்விருட்சங்களைச்சே
தித்து அக்கினியிலிடுவார்கள்.—பலதேசத்தாரும் ௮
இந்தநகரத்தின்வழியாய்ப்போய், யெகோவா
எதினிமித்தம் இந்தமகாநகரத்துக்கு இப்படிச்
செய்தாரென்று ஒருவருக்கொருவர்சொல்லுவார்
கள்.—அப்பொழுது அவர்கள் உத்தரமாக, அவர் ௯
கள் தங்கள் தேவனாகிய யெகோவாவின்
உடன்படிக்கையைத்தள்ளி, அந்நியதேவர்களுக்
காராதனைசெய்து அவர்களைச் சேவித்ததினிமித்த
மேயென்பார்களென்றுசொல்லுகிறார்.
மரித்தவனிமித்தம் நீங்கள் அழவேண்டாம், ௰
அவனுக்காகப்புலம்பவும்வேண்டாம்: கொண்டு
போகப்படுகிறவனிமித்தம் மிகவும் அழுங்கள்:
அவன் திரும்பிவந்து தன்சென்மதேசத்தை ஒரு
பொழுதுங்காணமாட்டான்.—தன் பிதாவாகிய ௰௧
யோஷியாவுக்குப்பின் அரசாண்டும், இவ்விடத்

(௭) அதி.௩௭.௰௭. உபா.௨௮.௪௯. ௨.நாளா.௩௬.௰௭. (௮) உபா.௩௰.௰௯. (௯) அதி.௩௮.௨,௰௭,௰௮. அதி.௪௫.௫.(௰) லேவி.௰௭.௰௨. ஆமோ.௯.௪. (௰௨) சக.௭.௯. (௰௩) எசேக்.௰௩.௮. அதி.௪௯.௪. (௰௪) நீதி.௧.௩௧. ஏசா.௩.௰,௰௧. ௨.நாளா.௩௬.௰௯.—(௨௨. அதி. ௫.) எபி.௬.௰௩,௰௭. (௭) ஏசா.௩௭.௨௪. (௮) உபா.௨௯.௨௪,௨௫. ௧.இரா.௯.௮,௯. (௯) ௨.இரா.௨௨.௰௭. ௨.நாளா.௩௪.௨௫. (௰) ௨.இரா.௨௨.௨௰. (௰௧) ௨.இரா.௨௩.௩௪.

தினின்று புறப்பட்டுப்போன யூதாவின்இராசா
வான யோஷியாவின்புத்திரனாகிய ஷல்லுமைக்
௰௨ குறித்து,-யெகோவா, அவன்இத்தேசத்தைக்
காணாமல் சிறைபிடித்துக்கொண்டுபோகப்பட்
டஇடத்திலேசாவான், இனியிங்கேதிரும்பிவர
மாட்டானென்றுசொல்லுகிறார்.
௰௩ நான் என்னிமித்தம் விஸ்தாரமானவீட்டைக்
கட்டி, அதிலேமேலறைகளை வகுப்பேனென்
றுசொல்லி,தனக்குப்பலகணிகளைஆயத்தப்படுத்
தி, எரஸ்மரத்தினாலே மச்சுப்பரவி, சாதிலிங்க
௰௪ வருணம்பூசி,—அநீதியினாலே தன்வீட்டையும்,
அநியாயத்தினாலே தன்அறைகளையுங்கட்டி,தன்
அயலான்செய்யும் வேலைக்குக் கூலிகொடாம
லும், அவனுடைய பிரயாசத்துக்குப் பலனைத்
௰௫ தராமலுமிருக்கிறவனுக்கு ஆபத்துவரும்.—நீ, எ
ரஸ்மரத்தின் சித்திரவேலைகளுக்குள் உலா
வுகிறபடியால் அரசாளுவாயா; உன்பிதாபோச
னபானம்பண்ணி நீதிநியாயஞ்செய்துவந்தான்,
௰௬ அப்பொழுது அவன் வாழ்வடைந்தான்.—அ
வன்தரித்திரரும் திக்கற்றவருமாகிய இவர்களு
டையகாரியத்தை நியாயம்விசாரித்தான்; அப்
பொழுது அவனுக்குநன்மை: இது என்னை அறி
கிறஅறிவல்லவாவென்று யெகோவா சொல்
௰௭ லுகிறார்.-உன்கண்களும் உன்மனமும்பொருளா
சை, குற்றமில்லாதவர்களுடைய இரத்தத்தைச்
சிந்துதல்,உபத்திரவம்,கொடுமைகளைச்செய்தலா
கிய இவைகளின்மேலிருக்கின்றனவன்றி, வே
௰௮ றல்ல.—ஆதலால் யோஷியாவின் புத்திரனாகிய
யோயாகீம் என்னும் யூதாவின் இராசாவைக்கு
றித்து, ஐயோ, என்சகோதரனே, ஐயோ, என்ச
கோதரியே என்று சொல்லி, அவர்கள் புலம்ப
மாட்டார்கள்; அவனைக்குறித்து, ஆ, ஆண்டவ
னே, ஆ, அவனுடையமகிமையே என்றுசொல்
௰௯ லி, அவர்கள் புலம்பமாட்டார்கள்.—ஒரு கழு
தையை அடக்கம்பண்ணுகிறதுபோல அவனை
யெருஷலேமின் வாசல்களுக்கு வெளிப்புறத்
தில் இழுத்து எறிந்துவிடுவார்களென்று, யெ
கோவா சொல்லுகிறார்.
௨௰ நீ லிபானோனின்மேலேறிஅழு; பாஷானில்
உரத்தசத்தமிடு, எல்லைகளினின்றுபுலம்பு: உன்
௨௧ நேசர் யாவருஞ்சேதிக்கப்பட்டார்கள்.-நீ வாழ்
வடைந்தகாலத்தில் நான் உன்னோடே பேசி
னேன்; நீயோ கேட்கமாட்டேனென்றாய். உன்
சிறுவயதுமுதல் என் வாக்குக்கமையாமலிருப்ப
௨௨ து உன் பழக்கம்.—காற்று உன் மேய்ப்பர் யாவ
ரையும் மேய்க்கும், உன் நேசர் சிறைப்பட்
டுப்போவார்கள்: அப்பொழுது நீ உன் துரோக
மெல்லாவற்றினிமித்தமும்இலச்சையடைந்து க
௨௩ லங்குவாயே.—லிபானோனில் வாசமாயிருந்து,
எரஸ்விருட்சங்களில் கூடுகட்டிக்கொண்டிருப்
பவளே, பிரசவஸ்திரியின் வேதனைகள்போன்ற
வேதனை உன்மேல் வரும்பொழுது எவ்வளவு
தாழ்ந்தகுணத்தைக்காட்டுவாய்.-யூதாவின் இரா ௨௪
சாவான யோயாகீமின்புத்திரனாகிய கோனியா
என்வலதுகையில் முத்திரைமோதிரமாயிருந்தா
லும், நான் நித்தியரானால் அங்கிருந்தும் உன்
னைப்பிடுங்குவேனென்று யெகோவா சொல்
லுகிறார்.—உன் பிராணனைவாங்கவகைதேடுகிற ௨௫
வர்களுடையகையும், நீ பயப்படுகிறவர்களின்
கையுமாகிய பாபேலின் இராசாவான நெபுகத்
நெச்சரின் கையிலும், கல்தேயரின் கையிலும்,
உன்னை ஒப்பித்துவிடுவேன்.—உன்னையும்,உன் ௨௬
னைப்பெற்றஉன்மாதாவையும்உங்கள்சென்மதே
சமல்லாத அந்நியதேசத்திலே துரத்துவேன்; நீங்
கள்அங்கே சாவீர்கள்.—அவர்கள் தங்கள்தேசத் ௨௭
துக்குத்திரும்பி வர மனோவாஞ்சையாயிருப்பார்
கள், ஆனாலுந்திரும்பார்கள்.—இந்தக்கோனியா ௨௮
என்பவன் அவமதிக்கப்பட்ட தகர்ந்தவிக்கிரக
மா, ஒருவரும் விரும்பாத பாத்திரமா; அவ
னும் அவன்வமிசத்தாரும் தங்களுக்குத்தெரியா
ததேசத்திற்குத் துரத்தப்பட்டதேது.—ஆ, தேச ௨௯
மே, தேசமே, தேசமே, யெகோவாவின்
வாக்கைக்கேள்.—இந்தமனுஷன் பிள்ளையில்லா ௩௰
தவனும், தன்ஆயுள்நாள்களில் வாழ்வில்லாதவ
னுமென்று இவனைக்குறித்துஎழுதுங்கள்: இவன்
வமிசத்தான் எவனாகிலும்வாழ்வடைந்து, தாவீ
தின்சிங்காசனத்தில்வீற்றிருந்து, யூதாதேசத்தில்
இனி ஒருபொழுதும் அரசாளமாட்டானென்று
யெகோவா சொல்லுகிறார்.

## ௨௩. அதிகாரம்.

௧. மேய்ப்பருக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனஞ் சொல்லல்: ௫. சனங்களின்மேய்ப்பராகிய கிறிஸ்துவைக்குறித்துத் தீர்க்கதரிசனமுரைத்தல்: ௯. கள்ளத்தீர்க்கதரிசிகளுக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௩௩. சத்தியதீர்க்கதரிசிகளை நிந்திக்கிறவர்களுக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனமுரைத்தல்.

ஐயோ, நான் மேய்ப்பிக்கும் ஆடுகளைக்கெடுத் ௧
து, சிதறஅடிக்கிற மேய்ப்பர்களுக்கு ஆபத்துவ
ருமென்று யெகோவா சொல்லுகிறார்.—நீங் ௨
கள் என் ஆடுகளைச் சிதறஅடித்தீர்கள், அவைக
ளைத்துரத்திவிட்டீர்கள், அவைகளை விசாரிக்க
வில்லையென்று இஸ்ரவேலின் தேவனாகிய
யெகோவா தமதுசனங்களைமேய்க்கும்மேய்ப்
பருக்கு விரோதமாகச் சொல்லுகிறார்: பாருங்
கள்,நானுங்கள்கிரியைகளின் தீமைக்கேற்கஉங்
களுக்குப்பலன் அளிப்பேனென்று யெகோ
வா சொல்லுகிறார்.—நான் என் ஆடுகளில் மீந் ௩
திருப்பவைகளைத் துரத்திவிட்ட சகல தேசங்க
ளினின்றும் ஏகமாய்க்கூட்டி,அவைகளைத்திரும்
பஅவைகளின் தொழுவங்களுக்குக்கொண்டுவ
ருவேன்; அப்பொழுது அவைகள்பலுகிப்பெரு

(௰௪)௨.இரா.௨௩.௩௫. லேவி.௰௯.௰௩. உபா.௨௪.௰௪,௰௫. மீகா.௩.௰. அபகூ.௨.௯.யாக்.௫.௪.(௰௫)௨.இரா.௨௩.௨௫. சங்.௱௨௮.௨. எசா.௩.௰.(௰௭)எசேக்.௰௯.௬.(௰௮)௧.இரா.௰௩.௩௰.(௰௯)௨.நாளா.௩௬.௬.(௨௪)௧.நாளா.௩.௰௬. உன். ௮.௬. ஆகா.௨.௨௩. (௨௬) ௨.இரா.௨௪.௰௫. ௨.நாளா.௩௬.௰. (௨௮) சங்.௩௧.௰௨. ஓசி.௮.௮. (௨௯) உபா.௩௨.௧. எசா.௧.௨. மீகா.௧.௨.—(௨௩. அதி. ௧.) அதி.௨௨.௨௨. எசேக்.௩௪.௨. (௨) யாத்.௩௨.௩௪. (௩) எசேக்.௩௪.௰௩.

௪ கும்.—அவைகளைமேய்க்கும் மேய்ப்பர்களை அ
வைகள்மேல் ஏற்படுத்துவேன்: இனி அவைகள்
பயப்படுவதுமில்லை, கலங்குவதுமில்லை, காணு
மற்போவதுமில்லையென்று யெகோவா சொல்
லுகிறார்.
௫ பாருங்கள், தாவீதுக்கு நான் ஒரு நீதியுள்ளகி
ளையைத்தோற்றுவிக்குங்காலம்வருமென்று யெ
கோவா சொல்லுகிறார், ஒரு இராசா ஆளுகை
செய்து அனுகூலம்பெற்று, பூமியிலே நியாயத்
௬ தையும்நீதியையும்நடப்பிப்பான்.—அவனுடை
யகாலத்திலே யூதாஇரட்சிப்புப்பெறுவான், இஸ
ரவேல் விக்கினமின்றிவசிப்பான்: "யெகோ
வாவே நம்முடைய நீதி" என்னும் நாமம் அவ
௭ னுக்கிடப்படும்.-பாருங்கள், இஸரவேல்சந்ததி
யாரை எகிப்துதேசத்தினின்று புறப்படப்பண்
ணின யெகோவாவின் நித்தியத்துவத்தைக்
௮ கொண்டென்றுசொல்லாமல்,-இஸரவேல் வமி
சத்திலுள்ள சந்ததியார் தங்கள் சுயதேசத்திலே
வசிக்கும்படி வடதேசங்களிலும், நான் அவர்க
ளைத்துரத்திவிட்ட தேசங்களிலும்நின்று அவர்க
ளைப்புறப்படுத்திநடத்தின யெகோவாவின்
நித்தியத்துவத்தைக்கொண்டே என்றுசொல்லப்
படுங்காலம் வருமென்று யெகோவா சொல்
லுகிறார்.
௯ தீர்க்கதரிசிகளினிமித்தம் என்இருதயம் என
துள்ளத்திலே நொறுங்கியிருக்கின்றது; என் எ
லும்புகளெல்லாங்குலுங்குகின்றன; யெகோ
வாவினிமித்தமும்அவருடையபரிசுத்தவாக்கு
களினிமித்தமும் நான் வெறிகொண்ட மனுஷ
னைப்போலவும், திராட்சரசத்தினால் மயங்குண்
௰ ட ஒரு மனுஷனைப்போலவுமிருக்கிறேன்.—தே
சம்விபசாரரால் நிறைந்திருக்கின்றது; சாபத்தி
னிமித்தந் தேசம்புலம்புகின்றது; வனத்திலுள்ள
மேய்ச்சல்கள் வாடுகின்றன, அவர்களுடைய
மார்க்கந் தீமையுள்ளது, அவர்களுடைய வல்ல
௰௧ மைநேர்மையல்ல.—தீர்க்கதரிசியும், ஆசாரிய
னும் முருட்டாட்டக்காரரானார்கள்; நான் என்
வீட்டிலும் அவர்களுடைய துர்க்கருமத்தைக்
கண்டேனென்று யெகோவா சொல்லுகிறார்.-
௰௨ இதினிமித்தம் அவர்களுடைய வழி அவர்களுக்
கு இருளில் சறுக்கலான வழிகளைப்போலி
ருக்கும்: அவர்கள் அகற்றப்பட்டுவிழுவார்கள்.
அவர்கள் விசாரிக்கப்படும் வருஷத்தில் நான்
அவர்கள்மேல் தீமையை வருவிப்பேனென்று
௰௩ யெகோவா சொல்லுகிறார்.-பாகாலின்நாமத்
தில் தீர்க்கதரிசனஞ்சொல்லி, இஸரவேலராகிய
என்சனங்களைமோசப்படுத்தின ஷமாரியாவின்
தீர்க்கதரிசிகளிடத்தில் மதியீனத்தை நான் கண்
௰௪ டேன்.—மேலும் பயங்கரமான துர்க்கிரியை
யெருஷலேந் தீர்க்கதரிசிகளுக்குள்ளுங் கண்
டேன்: அவர்கள் விபசாரஞ் செய்கிறார்கள்,
பொய்யராய்த்திரிகிறார்கள்: துஷ்டர்களில் ஒரு
வனுந்தன்தீமையைவிட்டுத்திரும்பாதபடிக்கு அ
வர்களுடைய கையை ஸ்திரப்படுத்தியுமிருக்கி
றார்கள்: அவர்கள் எல்லாரும் கொமோராவைப்
போலும், அதில் வசிப்பவர்கள் சோதோமைப்
போலும் நமக்கிருக்கிறார்கள்.—ஆதலால் இந்தத் ௰௫
தீர்க்கதரிசிகளைக்குறித்துச் சேனைபதியாகிய யெ
கோவா, பாருங்கள், நான் அவர்களுக்கு எட்
டியைப்புசிக்கவும், பித்துநீரைக்குடிக்கவும் கொ
டுப்பேன்: யெருஷலேமின்தீர்க்கதரிசிகளினின்
று முழுத்தேசத்திலும் அவபத்தி பரம்பிவிட்ட
தென்கிறார்.-யெகோவாவின் வாயினாலல்ல, ௰௬
தங்கள் சொந்த இருதயத்தோற்றத்தின்படி பே
சி, உங்களிடத்தில் தீர்க்கதரிசனங்களைச்சொல்
லுந்தீர்க்கதரிசிகளின்வாக்குகளைக்கேட்கவேண்
டாம்: அவர்கள் உங்களை வஞ்சிக்கிறார்களென்
று சேனைபதியாகிய யெகோவா சொல்லுகி
றார்.-என்னை அவமானம்பண்ணுகிற யாவரிடத் ௰௭
திலும், உங்களுக்குச் சமாதானமுண்டாகுமென்
று யெகோவா சொல்லுகிறாரென்றும், தங்
கள் தங்கள் மாறுபாடான இருதயசிந்தனைக்
கேற்க நடக்கிற யாவரிடத்திலும், உங்களுக்குத்
தீமை நேரிடாதென்றுஞ் சொல்லுகிறார்கள்.—
யெகோவாவின் ஆலோசனையில் கூடநின் ௰௮
று, அவருடைய வாக்கைக்கேட்டறிந்தவன் யா
வன்; அவருடைய வாக்குக்குச் செவிகொடுத்
துக்கேட்டவன்யாவன்.-பாருங்கள், யெகோ ௰௯
வாவின் கோபமாகிய சூறைக்காற்றுப் புறப்ப
டும், கொடிய சூறைக்காற்றுத் துன்மார்க்கருடை
ய தலையின்மேல் கொடுமையாய்மோதும்.—யெ ௨௰
கோவா தமதுஇருதயத்தின் அபிப்பிராயங்களை
நிறைவேற்றி ஸ்திரப்படுத்தும்வரைக்கும் அவரு
டையகோபந் தணியாது: முடிவுநாள்களில் இ
தை நீங்கள் பிரத்தியட்சமாய் அறிவீர்கள்.-நான் ௨௧
அந்தத்தீர்க்கதரிசிகளை அனுப்பவில்லை, ஆனாலும்
அவர்கள்ஓடினார்கள்: அவர்களுடனேநான்பேச
வில்லை, ஆனாலும்அவர்கள்தீர்க்கதரிசனங்களைப்
பேசினார்கள்.—அவர்கள் என்னுடையஆலோச ௨௨
னையின்படி நின்றார்களாகில், என்சனங்களுக்கு
என்வாக்குகளைத்தெரிவித்து, அவர்களைஅவர்கள்
தீயவழியிலும், அவர்கள் செய்கைகளின்தீமையி
லும்நின்று திருப்புவார்கள்.-நான் சமீபத்திலுள் ௨௩
ள தேவன் மாத்திரமோ, தூரத்திலுமுள்ள தே
வனல்லவாவென்று யெகோவா சொல்லு
கிறார்.—யாவனாகிலும் தன்னை நான்காணாதபடி ௨௪
மறைவிடங்களில் ஒளித்திருக்கக்கூடுமோவென்
று யெகோவா சொல்லுகிறார்; நான்வானத்தி
லும்பூமியிலுமெங்கும்வியாபித்திருக்கிறேனல்ல
வாவென்று யெகோவா சொல்லுகிறார்.-தீர்க் ௨௫

(௪) எசேக்.௩௪.௰௩,. (௫) ஏசா.௪.௨. தானி.௯.௨௪. சக.௩.௮. யோவா.௧.௪௫. சங்.௭௨.௨. ஏசா.௯.௭. (௬) உபா.௩௩.௨௮. சக.௰௪.௰௧. ௧.கொரி.௧.௩௰. (௮) ஏசா.௪௩.௫,௬. (௯) அபகூ.௩.௰௬. (௰) ஓசி.௪.௨,௩. (௰௧) செப்.௩.௪. அதி.௭.௩௰. எசேக்.௮.௰௧. (௰௨) சங்.௩௫.௬. நீதி.௪.௰௯. (௰௩) ஏசா.௯.௰௬. (௰௪) எசேக்.௰௩.௨௨. உபா.௩௨.௩௨. ஏசா.௧.௯,௰. (௰௬) அதி.௰௪.௰௪. (௰௭) எசேக்.௰௩.௰. சக.௰.௨. மீகா.௩.௰௧. (௰௮) யோபு.௰௫.௮. ௧.கொரி.௨.௰௬. (௨௰) ஆதி.௪௯.௧. (௨௪) சங்.௱௩௯.௭,. ஆமோ.௯.௨,௩. ௧.இரா.௮.௨௭.

கதரிசிகள், சொப்பனங்கண்டேன், சொப்பனங்
கண்டேனென்றுஎன்பேரால்பொய்த்தீர்க்கதரிச
னங்களைச்சொல்லும் வாக்கைக்கேட்டேன்.-
உசு பொய்த்தீர்க்கதரிசனங்களைச்சொல்லுந் தீர்க்கத
ரிசிகளுடையஇருதயத்தில் இது எதுவரைக்கும்
இருக்கும்; அவர்கள் தங்கள்இருதயகபடத்தைச்
உஎ சொல்லுகிறதீர்க்கதரிசிகளாஞர்கள்.-என்சனங்
களின்பிதாக்கள்பாகாலினிமித்தம்என்நாமத்தை
மறந்ததுபோல, இவர்கள் தங்கள் தங்கள் அயல
வர்களுக்கு வசனிக்குந் தங்கள் தங்கள் சொப்ப
னங்களினுல் என் நாமத்தை மறக்கப்பண்ணப்
உஅ பார்க்கிருர்கள்.-சொப்பனங்கண்ட தீர்க்கதரிசி
சொப்பனத்தைத்தெரிவிக்கக்கடவன்; என்வாக்
கைப்பெற்றவன் என்வாக்கையே உண்மையா
கப்பிரசித்தப்படுத்தக்கடவன். கோதுமைக்குப்
பதர்எம்மாத்திரமென்று யெகோவா சொல்லு
உக கிருர்.—என்வாக்குஅக்கினிபோலல்லவா; கன்
மலையைநொறுக்குஞ் சம்மட்டியைப்போலல்ல
கூ௰ வாவென்று யெகோவா சொல்லுகிருர்.-ஆத
லால், பாருங்கள், தங்கள்அயலானிடத்தினின்று
என்வாக்கைக்களவெடுக்குந்தீர்க்கதரிசிகளுக்கு
நான்விரோதியென்று யெகோவா சொல்லு
கூக கிருர்.-பாருங்கள், தங்கள்நாவினுல் இனிதாகப்
பேசி, அவர்சொல்லுகிருரென்றுரைக்கிற தீர்க்க
தரிசிகளுக்கு நான் விரோதியாயிருக்கிறேனென்
கூஉ று யெகோவா சொல்லுகிருர்.—பாருங்கள்,
பொய்ச்சொப்பனங்களைத் தீர்க்கதரிசனமாகச்
சொல்லி, அவைகளைவிவரித்து, என்சனங்களைத்
தங்கள் பொய்களினுலும் வீம்பினுலும் மோசம்
போக்குகிறவர்களுக்கு நான்விரோதியாயிருக்கி
றேனென்று யெகோவா சொல்லுகிருர்; நான்
அவர்களை அனுப்பவுமில்லை, அவர்களுக்குக்கட்
டளை யிடவுமில்லை: அதினுல் அவர்கள் இந்தச்
சனங்களுக்கு எந்தப்பலனையுந் தரமாட்டார்க
ளென்று யெகோவா சொல்லுகிருர்.

கூகூ யெகோவாவின் பாரமென்னவென்று
இந்தச்சனங்களாகிலும், தீர்க்கதரிசியாகிலும், ஆ
சாரியனுகிலும் உன்னிடத்தில் உசாவும்பொழு
து, நீ அவர்களைநோக்கி, நான் உங்களைக்கைவி
டுவேனென்கிறதே பாரமென்று யெகோவா
கூச சொல்லுகிருரென்பதைச் சொல்லு.-யெகோ
வாவின் பாரமென்றுசொல்லும்எந்தத்தீர்க்கதரி
சியையாகிலும், ஆசாரியனையாகிலும், சனங்களை
யாகிலும் அவரவர் குடும்பத்துடனே தண்டிப்
கூடு பேன்.—நீங்களெல்லாரும்உங்களுங்கள்அயலா
னிடத்திலும் உங்களுங்கள் சகோதரரிடத்திலும்
யெகோவா என்னஉத்தரந்தந்தார், யெகோ
வா என்னவாக்கைப்பேசினுரென்றுசொல்லுங்
கூசு கள்.—யெகோவாவின் பாரமென்று இனி
நீங்கள்சொல்லவேண்டாம்: ஒவ்வொருவருடை
யவாக்கும் அவரவருக்குப்பாரமாயிருக்கும்; எங்
கள் தேவனும் சேனுபதியுமாகிய யெகோ
வாவென்னும் நித்திய தேவனுடைய வாக்கு

களைப்புரட்டினீர்கள்.—நீ தீர்க்கதரிசியைநோக் கூஎ
கி, யெகோவா என்ன உத்தரந்தந்தார், யெ
கோவா என்னத்தைப்பேசினுரென்று சொல்
லு.—நீங்கள் யெகோவாவின் பாரமென்று கூஅ
சொல்லுகையில், யெகோவாவின் பாரமென்
று சொல்லவேண்டாமென்பதைச்சொல்லி நா
னுங்களிடத்தில் அனுப்பியும், நீங்கள் யெகோ
வாவின் பாரமென்னுமிவ்வாக்கைச் சொல்லு
கிறபடியினுல்,-நான் உங்களைமுழுமையும் மறந் கூக
து, நான் உங்களுக்கும் உங்கள்பிதாக்களுக்கும்
அளித்த இந்த நகரத்தையும் உங்களையும் விட்டு,
என் சமுகத்தினின்று தள்ளுவேன், பாருங்
கள்.-மறக்கப்படாத நித்தியநிந்தனையையும், இ ச௰
லச்சையையும்உங்கள்மேல்வருவிப்பேனென்று
யெகோவா சொல்லுகிருர்.

## உச. அதிகாரம்.

உத்தமமும் அதமமுமான அத்திப்பழங்களினுல்
சிறைபட்டவர்களிற் சிலர் மீண்டுவருவார்க
ளென்றும், சிலர் மீளாமல் சிதற அடிக்கப்படுவா
ர்களென்றுந் திருஷ்டாந்தமாய்த் தெரிவித்தல்.

பாபேலின் இராசாவாகியநெபுகத்நெத்சர், யோ க
யாகீமின் புத்திரனுகிய யெகொனியவென்னும்
யூதாவின் இராசாவையும், யூதாவின் பிரபுகளை
யும், தச்சரையும், கம்மாளரையும் யெருஷலேமி
னின்று பாபேலுக்குச் சிறைபிடித்துக்கொண்டு
போனபின்பு, யெகோவாவின் ஆலயத்தின்
முன்பாகவைக்கப்பட்ட இரண்டு கூடை அத்
திப்பழங்களை யெகோவா எனக்குக் காண்
பித்தார்.—அவைகளில் ஒரு கூடையிலே முதல் உ
முதல்பழுக்கும் மிகவும் நல்ல அத்திப்பழங்களி
ருந்தன: மற்றக்கூடையில் புசிக்கத்தகாத கெட்
ட அத்திப்பழங்களிருந்தன.-அப்பொழுது யெ கூ
கோவா என்னைநோக்கி, எரேமியாவே, நீ எ
தைக்காண்கிருயென்றுசொல்ல, நான், அத்திப்ப
ழங்களைக் காண்கிறேன்; அவையிற் சில
நல்ல அத்திப்பழங்கள், மிகவும் நல்லவைகள்;
கெட்டவைகளோ, அதிககேடுள்ளவைகள், அதி
ககேடுள்ளவைகளாயிருப்பதினுல் அவைகள் பு
சிக்கத்தகாதனவென்றேன்.

பின்னும் யெகோவாவின் வாக்குஎன்னி ச
டத்தில்,—இவ்விடத்தினின்று சிறையாகக் கல் டு
தேயதேசத்துக்கு நான் அனுப்பிய யூதேயசனங்
களை, அவர்களுடைய நன்மைக்காகஇந்தநல்
லஅத்திப்பழங்களைப்போல அங்கிகரிப்பேன்.-
அவர்களுக்கு நன்மை யுண்டாகும்பொருட்டு சு
நான் அவர்கள்மேல் கடாட்சம்வைத்து, இந்தத்
தேசத்துக்குத் திரும்பிவரும்படிசெய்வேன்: அ
வர்களைக்கட்டுவேன், இடியேன்; அவர்களைநாட்
டுவேன், அவர்களைப்பிடுங்கேன்.—நான் யெ எ
கோவாவென்று அவர்கள்அறியும்பொருட்டு,
அவர்களுக்கு இருதயத்தைக்கொடுப்பேன்: அ
வர்கள் தங்கள்பூரணஇருதயத்தோடும்என்னிடத்
தில் திரும்புவார்கள்: அவர்கள் என்சனங்களா

(உஎ) நியா.கூ.எ. (கூ௰) உபா.௰அ.உ௰. (கூஉ) செப்.கூ.ச. (கூகூ) மல்.க.க. (கூக) ஓசி.ச.சு.—(உச.அதி.க.) ஆமோ.
௭.க,ச. உ.இரா.உச.௰உ,. (எ) உபா.கூ௰.சு. எசேக்.௰க.௰க.

வார்கள், நான் அவர்கள் தேவனாவேனென்ப
தை இஸரவேலின் தேவனாகிய யெகோ
வா சொல்லுகிறாரென்று சொல்லிற்று.
அ அதிக கேடுள்ளவைகளாயிருப்பதினால் புசிக்
கத்தகாத அத்திப்பழங்களைப்போல், சிதிகியா
வென்னும் யூதாவினிராசாவையும், அவனுடை
யபிரபுகளையும், இந்தத்தேசத்திலும் எகிப்துதே
சத்திலும் வசிப்பவர்களாகிய யெரூஷலேமிய
கூ ரில் மீந்திருப்பவர்களையும் ஆக்குவேன்.—அவர்
கள்பூமியிலுள்ள சகல இராச்சியங்களிலுஞ் சே
தத்தைஅடையவும், நான் அவர்களைத்துரத்திவி
டுஞ்சகலஸ்தானங்களிலும் அவமானமும், பழ
மொழியும், நிந்தனையும், சாபமுமுள்ளவர்களா
ய கவும் ஒப்பிப்பேன்.—அவர்களுக்கும் அவர்கள்
முன்னோருக்கும் நான் அளித்ததேசத்தில் அவர்
கள் சேதிக்கப்படும்வரைக்கும் அவர்களுக்குவி
ரோதமாய்க்கட்கத்தையும்,பஞ்சத்தையும்,கொள்
ளைநோயையும் அனுப்புவேனென்று யெகோ
வா சொல்லுகிறாரே.

## உரு. அதிகாரம்.

க. சனங்களின் குற்றத்தைக்குறித்து எரேமியா தீர்க்கதரிசனஞ்சொல்லல்: அ. அவர்கள் படுந்தண்டனைஎழுபதுவருஷமட்டுமிருக்குமென்றுதெரிவித்தல்: யஉ. அவர்கள்சத்துருக்களுக்குவருந்தண்டனையைமுன்னுரைத்தல்: யரு. பலதேசத்தார் குரோதபாத்திரத்திற் குடிப்பார்களென்று எரேமியா தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ஙசா. மேய்ப்பர்நாசமடைதல்.

யூதாவின் இராசாவாகிய யோஷியாவின் புத்தி
ரன் யோயாகீம் அரசாண்ட நாலாம்வருஷத்துக்
குச்சரியான, பாபேலின்இராசாவாகிய நெபுகத்
நெத்சர் அரசாண்ட முதலாம்வருஷத்தில், யூதா
வின் சகலசனங்களையுங்குறித்து வாக்கு எரேமி
உ யாவுக்குக்கிடைத்தது.—அதை எரேமியாவென்
னுந்தீர்க்கதரிசி, யூதாவின் சகலசனங்களுக்கும்,
யெரூஷலேமியர்அனைவருக்கும் அறிவிக்கிற
ந தற்காக அவர்களைநோக்கி,—யூதேயாவினிரா
சாவான ஆமோனின் புத்திரனாகிய யோஷியா
வின் பதின்மூன்றாம்வருஷம் முதல் இன்றள
வும்,இருபத்துமூன்றுவருஷமாக யெகோவா
வின் வாக்கு எனக்குக்கிடைத்துவந்தது, நான்
சாக்கிரதையோடே உங்களுக்குச்சொல்லிச்
சொல்லிவந்தேன், நீங்களோ கேட்கவில்லை.—
ச யெகோவா தம்முடையசகல தாசராகியதீர்க்
கதரிசிகளையும் உங்களிடத்தில் சாக்கிரதையோ
டே அனுப்பியிருந்தார்;நீங்களோசிந்திக்கவுமில்
லை, கேட்கிறதற்கு உங்கள்செவியைச்சாய்க்கவு
ரு மில்லை.—அவர்கள்,நீங்களனைவரும்உங்கள்உங்
கள்தீமையானவழிகளையும் உங்களுங்கள் செய்
கைகளின் தீமையையும் விட்டுத்திரும்புங்கள்,
அப்பொழுது யெகோவா உங்களுக்கும்
உங்கள்முன்னோருக்கும் நித்தியசுதந்தரமாக அ
ளித்ததேசத்தில் வசிப்பீர்களென்றார்கள்.—அந் சா
நியதேவர்களைச்சேவிக்கவும், நமஸ்கரிக்கவும்அ
வர்களைப்பின்பற்றாதிருங்கள், உங்கள் கையின்
கிரியைகளினால் என்னைக்கோபப்படுத்தாதிருங்
கள்; அப்பொழுது நான் உங்களுக்கு ஒருதீமை
யையுஞ்செய்யேன்.—ஆனாலும் நீங்கள் எனக்குச் எ
செவிகொடாமல், உங்கள் கையின் கிரியையி
னால் உங்களுக்குக் கேட்டைவருவித்தீர்களென்
று யெகோவா சொல்லுகிறாரென்றான்.
நீங்கள் என்வாக்குகளுக்குச் செவிகொடுக்க அ
வில்லை; ஆதலால்,—பாருங்கள், வடக்கிலிருக் கூ
கிற சகலவமிசத்தாரையும், என்தாசனும் பாபே
லின் இராசாவுமாகிய நெபுகத்நெத்சரையும் அ
ழைத்து, இந்தத்தேசத்துக்கும், இதின்குடிகளுக்
கும், சுற்றிலுமுள்ள சகலதேசத்தாருக்கும்விரோ
தமாய்அனுப்பி,இவர்களைமுழுமையுஞ்சேதித்து,
அற்புதமும்,நிந்தையும்,நெடுங்காலம்நாசமுமுள்
ளவர்களாக்குவேனென்று யெகோவா சொல்
லுகிறார்.—மகிழ்ச்சியின் சத்தமும், சந்தோஷத் ய
தின்சத்தமும்,மணவாளனுடையசத்தமும், மண
வாட்டியின்சத்தமும், திரிகைகளின்சத்தமும்,தீ
பத்தினொளியும் அவர்களிடத்திலிருந்து நீங்கப்
பண்ணுவேன்.—இந்தத்தேசமுழுவதும் பிரமிப் யக
பும் பாழுமாய்க்கிடக்கும்; இந்தச்சாதியார் எழு
பதுவருஷம் பாபேலினிராசாவிடத்தில்சேவிப்
பார்களென்று சேனைபதியாகிய யெகோவா
சொல்லுகிறார்.
எழுபதுவருஷம் நிறைவேறினபின்பு, பாபே யஉ
லின் இராசாவையும் அத்தேசத்தாரையும் அவர்
கள் பாவத்தினிமித்தந் தண்டிப்பேன், கல்தேய
ரின்தேசம் என்றும் பாழாகும்படிசெய்வேன்.—
எரேமியா சகலதேசத்தாருக்குந் தீர்க்கதரிசனமா யந
கச்சொல்லியவைகளும்,இந்தப்புத்தகத்தில் எழு
தப்பட்ட சகலமும், நானிந்தத் தேசத்துக்கு வி
ரோதமாகச்சொன்னவைகளுமாகிய என்வாக்கு
களெல்லாம் அதிற் பலிக்கும்படிசெய்வேன்.—அ யச
நேகதேசத்தாரும், பெரியஇராசாக்களும் அவர்க
ளை அடிமைப்படுத்துவார்கள்: நான் அவர்களு
டைய கிரியைகளின்படிக்கும் அவர்கள் கைக
ளின் கிரியைகளின் படிக்கும் பலனளிப்பே
னென்று யெகோவா சொல்லுகிறார்.
இஸரவேலின் தேவனாகிய யெகோவா யரு
என்னைநோக்கி, என்கையிலுள்ள இந்தக்குரோத
ரசபாத்திரத்தைவாங்கு, நான் உன்னைஅனுப்புகி
ற அந்தந்தத் தேசத்தார் யாவருங் குடிக்கும்படி
செய்.—அவர்களுக்குள்ளே நான் அனுப்புங்கட் யசா
கத்தினிமித்தம்அவர்கள்குடித்து,தள்ளாடி, மயங்
கக்கடவர்களென்றார்.— நான் யெகோவா யஎ
வின் கையினின்று பாத்திரத்தை வாங்கி, யெ
கோவா என்னை அனுப்புகிற தேசத்தார் சகல

(கூ) உபா.உஅ.உரு,ஙஎ. சங்.சச.யங,யச.—(உரு. அதி. ச.) அதி.எ.யங,உரு. (ரு) உ.இரா.யஎ.யங. யோனா.ங.அ. (எ) உபா.ஙஉ.உக. (ய) ஏசா.உச.எ. எசேக்.உசு.யங. ஓசி.உ.யக. வெளி.யஅ.உங. பிர.யஉ.ச. (யஉ) உ.நாளா.ஙசு.உக,உஉ. எஸ்றா.க.க. தானி.கூ.உ. உ.இரா.உச.க. ஏசா.யங.யகூ. (யரு) யோபு.உக.உய. சங்.எரு.அ. ஏசா.ருக.யஎ. வெளி.யச.ய. (யசு) எசேக்.உங.உச. நாகூ.ங.யக.

யஅ ரும்,-இன்றிருக்கிறபடி,பாழும்,அற்புதமும், நிந்
தனையும், சாபமுமுள்ளவர்களாயிருக்கும் வண்
ணம் நான் யெருஷலேமுக்கும்,யூதாபட்டணங்
களுக்கும்,அவைகளின் இராசாக்களுக்கும், பிர
யகூ புகளுக்கும்,—எகிப்தின் இராசாவாகிய பார்வோ
னுக்கும்,அவன் பணிவிடைக்காரருக்கும், பிரபு
களுக்கும், அவனுடைய எல்லாச் சனங்களுக்
உய கும்,-கலப்பானசனங்கள்யாவருக்கும்,ஊத்சுதே
சத்தின்சகலஇராசாக்களுக்கும்,பெலிஸ்தியரின்
தேசத்தின் சகல இராசாக்களுக்கும்,அஷ்கிலோ
னுக்கும், காசாவுக்கும், எக்ரோனுக்கும், அஷ்
உக தோத்தில் மீந்திருப்பவர்களுக்கும்,—எதோமுக்
கும், மோவாபுக்கும்,அம்மோன்புத்திரருக்கும்,—
உஉ தீருவின்சகலஇராசாக்களுக்கும், சீதோனின் இ
ராசாக்கள் சகலருக்கும், சமுத்திரதீரத்திலுள்ள
உங தேசத்து இராசாக்களுக்கும்,—தேதானுக்கும், தே
மாவுக்கும்,பூசின்கடையெல்லைகளிலுள்ள அனை
உச வருக்கும்,—அரபியாவின் சகல இராசாக்களுக்
கும், வனத்திலே வசிக்குங் கலப்பான சனங்க
உரு ளின் இராசாக்களனைவருக்கும்,—சிம்ரியின் எல்
லாஇராசாக்களுக்கும்,எலாமின்இராசாக்களனை
வருக்கும், மேதியவின்சகலஇராசாக்களுக்கும்,-
உசு வடக்கிலே தூரத்திலுஞ் சமீபத்திலும் வெவ்வே
ருயிருக்கிற சகல இராசாக்களுக்கும், பூமியின்
முகத்திலுள்ளபூலோகஇராச்சியங்களெல்லாவற்
றிற்கும் குடிக்கும்படிகொடுத்தேன்: இவர்களுக்
குப்பின்புஷேஷாக்கின்இராசாகுடிப்பானென்
உஎ ருர்.—நீ அவர்களைநோக்கி, நீங்கள் குடித்து, வெ
றிகொண்டு, வாந்திபண்ணி, நான்உங்களுக்குள்
அனுப்புங்கட்கத்தினால் விழுவீர்கள்; இனி ஒரு
பொழுதும் எழுந்திருக்கமாட்டீர்களென்று இஸ
ரவேலின் தேவனும் சேனைபதியுமாகிய யெ
கோவா சொல்லுகிருரென்பதைச் சொல்லு.—
உஅ அவர்கள் குடிக்கிறதற்கு உன்கையினின்று பாத்
திரத்தைவாங்காமல் மறுப்பார்களாகில், நீஅவர்க
ளைநோக்கி, நீங்கள் குடிக்கவேவேண்டுமென்று
சேனைபதியாகிய யெகோவா சொல்லுகிரு
உகூ ரென்பதைச்சொல்லு.—கேளுங்கள்,என் நாமந்
தரிக்கப்பட்ட இந்த நகரத்தின்மேல் நான்தீமை
வருவிக்கத் தொடங்குகிறேன், நீங்கள் சற்றுந்
தண்டனைபெருமற்போவீர்களா; நீங்கள் தண்ட
னைபெருமல்போகமாட்டீர்களே: பூலோகத்தார்
அனைவர் மேலும் நான் கட்கத்தை வரும்படி அ
ழைக்கிறேனென்று சேனைபதியாகிய யெகோ
ஙய வா சொல்லுகிருர்.—நீ அவர்களைநோக்கி, யெ
கோவா உயரத்தினின்று கருச்சிப்பார், தமது
பரிசுத்தஸ்தானத்தினின்று சத்தமிடுவார்; அவர்
தமது இளைப்பாறும் ஸ்தானத்தின்மேல் மிகவும்
முழங்குவார்; பூலோகத்தார் யாவருக்கும் விரோ
தமாய்த் திராட்ச ஆலையை மிதிக்கிறவர்களைப்
போல ஆரவாரம்பண்ணுவாரென்றுசொல்லி அ
வர்களுக்குவிரோதமாய்இந்தத்தீர்க்கதரிசனவாக்
கியங்களெல்லாவற்றையுஞ் சொல்லென்ருர்.—
சருவதேசத்தாரோடும் யெகோவாவின் வ ஙக
ழக்குஇருக்கிறபடியினால்ஆரவாரம்பூமியின் எல்
லைபரியந்தம்பரம்பியிருக்கின்றது; அவர் மாமி
சமுள்ள யாவரோடும் வழக்காடுவார்; அவர்
துன்மார்க்கரைக் கட்கத்துக்கு ஒப்பிப்பாரென்று
யெகோவா சொல்லுகிருர்.—கேளுங்கள், தே ஙஉ
சத்துக்குத்தேசந்தீமைபரம்பும்,பூமியின்எல்லைக
ளினின்று மகாசூறைக்காற்றுவீசும்.—அக்காலத் ஙங
திலே யெகோவாவினாலே கொலையுண்ட
வர்கள் பூமியின் ஒரு எல்லைதொடங்கி மற்ற
எல்லைவரைக்குங் கிடப்பார்கள்: அவர்கள் புலம்
பப்படாமலும், சேர்க்கப்படாமலும், அடக்கம்
பண்ணப்படாமலும்பூமியின்மேல் எருவாயிருப்
பார்கள்.

மேய்ப்பரே, நீங்கள் அலறிஅழுங்கள்; மந்தை ஙச
யின்தலைவர்களே, நீங்கள் சாம்பலில் புரளுங்
கள்: கொல்லப்படவும் சிதறஅடிக்கப்படவுந்தக்
கஉங்கள் நாள்கள் சமீபித்துவந்தன, நீங்கள் அரு
மையானபாத்திரம்போல் விழுவீர்கள்.—மேய்ப் ஙரு
பர் ஓடுவதற்கும், மந்தையின்தலைவர்கள் தப்புவ
தற்கும்வழியில்லை.-தங்கள்மேய்ச்சலை யெகோ ஙசு
வா சேதித்தபடியினால் மேய்ப்பர் அழுஞ்சத்த
மும், மந்தையின் தலைவர்கள் அலறுஞ்சத்தமும்
கேட்கின்றன.—யெகோவாவின் உக்கி ஙஎ
ரகோபத்தினால் சமாதானமுள்ள வாசஸ்தானங்
கள் நாசமாயின.—அவர் பதிவிருந்துபுறப்படுஞ் ஙஅ
சிங்கத்தைப்போலிருப்பார்: உபத்திரவப்படுத்து
கிறவனுடையஉக்கிரத்தினாலும், மூளுங்கோபத்
தினாலும், அவர்களுடையதேசம்வசிப்பாரில்லா
மல்பாழாய்ப்போயிற்று.

## உசு. அதிகாரம்.

க. யெருஷலேமுக்கு விரோதமாய் எரேமியா தீர்க்கதரிசனஞ் சொல்லல்: எ. அதினிமித்தம் ஆசாரியரும் சனங்களும்எரேமியாவைப்பிடித்தல், எரேமியா உத்தரஞ்சொல்லல்: யசு. அதிபதிகள் மீகா ஊரியா என்பவர்களின் சங்கதிகளைச்சார்ந்துபேசி எரேமியாவை விடுவித்தல்.

யூதாவின் இராசாவாகிய யோஷியாவின்புத்திர க
னை யோயாகீமின் இராசரிக ஆரம்பத்தில் கி
டைத்த யெகோவாவின் இவ்வாக்கானது,—
யெகோவாவின் ஆலயத்தின் பிராகாரத்தி உ
னின்று, யெகோவாவின் ஆலயத்தில் ஆரா
தனைசெய்யும்படி வருகிற யூதா நகரத்தார் அனை
வரையும்நோக்கி, அவர்களிடத்தில் சொல்லும்
படி நான் உனக்குக்கட்டளையிடும் சகலவாக்கு
களையுஞ்சொல்லு; ஒருவாக்கையாகிலும் குறைக்
கப்படாதென்று யெகோவா சொல்லுகிருர்.-

(உய) யோபு.க.க. ஏசா.உய.க. (உச) உ.நாளா.கூ.யச. எசேக்.ஙய.ரு. (உஎ) அபகூ.உ.யசு. ஏசா.சுங.சு. (உகூ) நீதி.யக.ஙக. எசேக்.கூ.சு. ஒப.யசு. லூக்.உங.ஙக. க.பேதுரு.ச.யஎ. தானி.கூ.யஅ,யகூ. எசேக்.ஙஅ.உக.(ஙய)ஏசா. சஉ.யங. யோவே.ங.யசு. ஆமோ.க.உ. சங்.யக.ச. க.இரா.கூ.ங. சங்.எஙஉ.யச. ஏசா.யசு.கூ. (ஙக) ஓசி.ச.க. மீகா. சு.உ. ஏசா.சுசு.யசு. யோவே.ங.உ. (ஙங) ஏசா.சுசு.யசு. சங்.எகூ.ங. வெளி.யக.கூ. (ஙரு) ஆமோ.உ.யச. (ஙஅ) சங்.எகூ.உ.—(உசு. அதி. உ.) எசேக்.ஙய. மத்.உஅ.உய. அப்.உய.உசு.

௩ அவர்கள்யாவரும்கேட்டுச்சிந்தித்து, தங்கள் தங்
கள் தீமையுள்ள வழியை விட்டுத் திரும்புவார்க
ளேயாகில் அவர்கள் கிரியைகளின் தீமையினி
மித்தம் நான்அவர்களுக்குச்செய்யநினைத்ததீமை
௪ யைச்செய்யாமல் இரங்குவேன்.—நீ அவர்களை
நோக்கி, நான்அதிகசாக்கிரதையோடே உங்களி
டத்தில் அனுப்பியும், நீங்கள் கேளாமலிருக்கிற
என் தாசராகிய தீர்க்கதரிசிகளின் வாக்குகளுக்
௫ குச்செவிகொடாமலும்,—நீங்கள் எனக்குச்செ
விகொடுத்து நான் உங்களுக்குமுன்வைத்த என்
நியாயப்பிரமாணத்தின்படி நடவாமலும் இருந்
௬ தால்,—நானிந்த ஆலயத்தை சீலோவைப்போ
லாக்குவேன்,பூமியிலுள்ள எல்லாத்தேசத்தாருக்
குள்ளும் இந்தநகரத்தைச் சாபமாக்குவேனென்
றுயெகோவாசொல்லுகிறாரென்பதைச்சொல்
௭ லச்சொல்லிற்று.—இவ்வாக்குகளை ஆசாரியர்க
ளும், தீர்க்கதரிசிகளும், எல்லாச்சனங்களும் எ
ரேமியாயெகோவாவினாலயத்திற்சொல்லக்
கேட்டார்கள்.
௮ சகல சனங்களுக்குஞ் சொல்லும்படி யெ
கோவா தனக்குக்கட்டளையிட்ட யாவற்றை
யும் எரேமியா சொல்லிமுடித்தபொழுது, ஆசா
ரியர்களும், தீர்க்கதரிசிகளும், சகலசனங்களும்
அவனைப்பிடித்து, நீ கொல்லப்படவேவேண்டு
௯ மென்றார்கள்.—இந்த ஆலயம்சீலோவைப்போ
லாகுமென்றும், இந்த நகரம் வசிப்பாரில்லாமல்
பாழாய்ப்போமென்றும் நீ யெகோவாவின்
பேரால்தீர்க்கதரிசனங்கள் சொல்வதேதென்றார்
கள்; யெகோவாவின் ஆலயத்தில்எரேமியா
வுக்குவிரோதமாகச்சனங்களெல்லாரும்ஏகமாய்
க்கூடினார்கள்.
௰ யூதாவின்பிரபுகள் இவைகளைக்கேட்டு, இரா
சாவீட்டிலிருந்து யெகோவாவின்ஆலயத்
துக்குவந்து, யெகோவாவின் ஆலயத்தின்
௰௧ பிரவேசஸ்தானத்தில்உட்காந்தார்கள்.-அப்பொ
ழுது ஆசாரியர்களும், தீர்க்கதரிசிகளும், பிரபுக
ளையும் சகல சனங்களையும்நோக்கி, இந்த மனு
ஷன்மரணத்துக்குப்பாத்திரன்; இந்த நகரத்துக்
குவிரோதமாய் இவன்சொல்லியவாக்கியம் உங்
கள் செவிக்கேறிற்றேயென்றார்கள்.
௰௨ அப்பொழுது எரேமியா சகலபிரபுகளையும்ச
கல சனங்களையும் நோக்கி, நீங்கள்கேட்ட எல்
லாவாக்குகளையும் இந்த ஆலயத்துக்கும் இந்த ந
கரத்துக்கும் விரோதமாகத் தீர்க்கதரிசனமாய்ச்
சொல்லும்படி யெகோவா என்னை அனுப்பி
௰௩ னார்.—ஆதலால் நீங்கள் இப்பொழுது உங்களுங்
கள் வழிகளையும் கிரியைகளையுஞ் சீர்ப்படுத்தி,
உங்கள்தேவனாகியயெகோவாவின்வாக்
குக்குஅமைந்துநடவுங்கள்; அப்படியானால்யெ
கோவா இரங்கி உங்களுக்கு விரோதமாய்ச்
௰௪ சொல்லிய தீமையைச்செய்யாமல் விடுவார்.—பா
ருங்கள், நான் உங்கள்கையிலிருக்கிறேன்:
உங்கள்பார்வைக்கு நன்மையும்செவ்வையுமாயி
ருக்கிறதெதுவோ அதையே எனக்குச்செய்யுங்
கள்.—ஆகிலும்நீங்கள் என்னைக்கொலைசெய்தால் ௰௫
உங்கள்மேலும், இந்தநகரத்தின்மேலும், இதில்
வசிப்பவர்கள்மேலும் குற்றமில்லாதவனுடைய
இரத்தத்தைவருவிப்பீர்களேயென்றுநிச்சயமாய்
அறிந்துகொள்ளுங்கள்: மெய்யாய் இந்தவாக்கு
களெல்லாம் உங்கள்செவிக்கேறும்படி சொல்
லும்பொருட்டு, யெகோவா என்னை உங்க
ளிடத்தில் அனுப்பினாரென்றான்.
அப்பொழுதுபிரபுகளும், சகலசனங்களும்ஆ ௰௬
சாரியர்களையுந் தீர்க்கதரிசிகளையும்நோக்கி, இந்
தமனுஷன் மரணதண்டனைக்குப்பாத்திரனல்ல:
நம்முடையதேவனாகியயெகோவாவின்
நாமத்தைக்கொண்டே இவன் எங்களிடத்தில்
பேசினானென்றார்கள்.—அப்புறம் தேசத்தின் மு ௰௭
தியோரிற்சிலர் எழுந்து, சனசங்கத்தாரனைவரை
யும் நோக்கி,—யூதாவின் இராசாவாகிய இஸ்கியா ௰௮
அரசாண்டகாலத்தில், மோரஷ்தியனாகிய மீகா
தீர்க்கதரிசனஞ்சொல்லி, யூதாவின் சகல சனங்
களுக்கும், சீயோன்வயல்வெளியைப்போலஉழ
ப்படும், யெருஷலேம் மண்மேடுகளாய்ப்போம்,
இந்த ஆலயத்தின்மலை,வனத்திலுள்ளஉயர்ந்தஸ்
தானங்களைப்போலாகுமென்று சேனைபதியாகிய
யெகோவா சொல்லுகிறாரென்றுசொல்ல,—
யூதாவின் இராசாவாகிய இஸ்கியாவும், யூதேயர் ௰௯
யாவரும் அவனைக்கொன்றார்களா, இவன் யெ
கோவாவுக்குப் பயப்படவில்லையா, யெ
கோவாவின் முகத்தைப்பார்த்துப் பிரார்த்திக்
கவில்லையா, யெகோவா இரங்கி அவர்களுக்
கு விரோதமாகச்சொல்லிய தீமையைச் செய்
யாமல் விடவில்லையா; நம்மேல் நாமோ மகாதீ
மையை வருவிப்போம்.-கீரியாத் எயாரீம் நகரத் ௨௰
தில் ஷிமாயியாவின் புத்திரனாகியஊரியாவென்
னும் ஒருமனுஷனும், எரேமியாவின் சகலவாக்
குகளின் படிக்கும்,இந்தநகரத்துக்கும் இந்தத்தே
சத்துக்கும் விரோதமாய் யெகோவாவின் நா
மத்தைக்கொண்டு தீர்க்கதரிசனஞ் சொன்னான்.-
யோயாகீம் இராசாவும், அவனுடையசகலபராக் ௨௧
கிரமவீரரும், சகலபிரபுகளும் அவனுடையவாக்
குகளைக்கேட்டபொழுது, இராசா அவனைக்கொ
லைசெய்யவகைதேடினான்: அதை ஊரியாகேட்
டுப்பயந்து எகிப்துக்கோடிப்போனான்.—அதி ௨௨
னால் யோயாகீம் இராசா அக்போரின் புத்திரனா
கிய எல்நாதானையும் சில சனங்களையும் எகிப்
துக்கு அனுப்ப,—இவர்கள் ஊரியாவை எகிப்தி ௨௩
னின்றுகூட்டிவந்து, யோயாகீம் இராசாவிடத்
தில்சேரப்பண்ணினார்கள்; அவன் கட்கத்தினால்
இவனைக்கொலைசெய்து, சாதாரணசனங்களின்
மரித்தோர்ஸ்தானத்தில் இவன் சவத்தை எறிந்து
விட்டானென்றார்கள்.—கொலை செய்யச்சனங் ௨௪
களின்கையில் எரேமியாவைஒப்பியாதபடி ஷா

(௩) யோனா.௩.௮,௯. (௫) லேவி.௨௬.௰௪,. உபா.௨௮.௰௫. (௬) ௧.சாமு.௪.௰,௰௧. சங்.௭௮.௬௰. ஏசா.௬௫.௰௫. (௰௭) அப்.௫.௩௪,. (௰௮) மீகா.௧.௧. மீகா.௩.௰௨. (௰௯) ௨.நாளா.௩௨.௨௬. யாத்.௩௨.௰௪. ௨.சாமு.௨௪.௰௬. அப்.௫.௩௯. (௨௪) ௨.இரா.௨௨.௰௨,௰௪. அதி.௩௯.௰௪.

பானுடையபுத்திரனாகிய அகீகாம் அவனுக்குச்
சகாயஞ்செய்தான்.

## ௨௭. அதிகாரம்.

௧. நுகத்தின் திஷ்டாந்தத்தினால் யூதேயர்சிறை
யில் அகப்படுவார்களென்று தெரிவித்தல், சிதி
கியா அதற்கமையும்படிவேண்டல்: ௰௬. ஆசா
ரியரிடத்தில் தீர்க்கதரிசனங்களைச் சொல்லல்:
௰௯. எஞ்சிய பாத்திரங்கள் பாபேலுக்குக் கொ
ண்டுபோகப்படுமென்றுமுன்னுரைத்தல்.

யோஷியாவின் புத்திரனும் யூதாவின் இராசா
வுமாகிய யோயாக்கீமின் இராசரிக ஆரம்பத்தில்,
எரேமியாவுக்குக்கிடைத்த யெகோவாவின்
௨ வாக்கு:—யெகோவா என்னுடனே, நீ கயி
றுகளையும் நுகங்களையுமுண்டாக்கி உன் கழுத்தி
௩ லிட்டுக்கொண்டு,—அவைகளை யெருஷலேமி
லே யூதாவின் இராசாவாகிய சிதிகியாவிடத்தில்
வருந்தூதர்கள் கையில், எதோமின் இராசாவுக்
கும், மோவாபின் இராசாவுக்கும், அம்மோனிய
ரின் இராசாவுக்கும், தீருவின்இராசாவுக்கும், சீ
௪ தோனின் இராசாவுக்குங்கொடுத்து,—அவர்கள்
தங்கள் எசமானரிடத்தில், இஸரவேலின் தே
வனுஞ் சேனைபதியுமாகிய யெகோவா,—
௫ நான், என் மகாபராக்கிரமத்தினாலும் ஓங்கிய
புயத்தினாலும் பூமியையும் பூமியில் வசிக்கிற
மனுஷனையும் மிருகசீவன்களையுஞ் சிருஷ்டித்
து,என் பார்வைக்குப் பிரியமானவனுக்குக்கொ
௬ டுத்தேன்.—இப்பொழுது நான் இந்தத் தேசங்
களையெல்லாம் பாபேலின் இராசாவும் என்தாச
னுமாகிய நெபுகத் நெத்சரின்கையில் ஒப்பித்
தேன்; அவனிடத்தில் ஊழியஞ் செய்யும்படி
காட்டுமிருகங்களையும் அவன்வசத்தில் ஒப்பித்
௭ தேன்.—அவனுடையதேசத்தின்காலம் வரும்வ
ரைக்கும், சகலசாதியாரும் அவனிடத்திலும் அ
வன் புத்திரபௌத்திரரிடத்திலும்ஊழியஞ்செய்
வார்கள்: பின்பு அநேகசாதியாரும்மகாராசாக்க
ளும் அவனைஅடிமைப்படுத்திக்கொள்வார்கள்.—
௮ பாபேலின் இராசாவாகிய நெபுகத்நெத்சரிடத்
தில் ஊழியஞ்செய்யாமலும், தங்கள் கழுத்தைப்
பாபேலின் இராசாவின் நுகத்துக்குக் கீழிடா
மலுமிருக்கும் எந்தச்சாதியாரையும் இராச்சியத்
தாரையும் அவன்கையினாலே நான்சேதிக்கும்வ
ரைக்கும் அந்தச்சாதியாரை அவன்கையிற் கட்
கத்தினாலும்,பஞ்சத்தினாலும்,கொள்ளைநோயினா
லுந் தண்டிப்பேனென்று யெகோவா சொல்
௯ லுகிறார்.—ஆகையால் நீங்கள் பாபேலின் இராசா
வினிடத்தில் ஊழியஞ் செய்யமாட்டீர்களென்
று உங்களிடத்தில்சொல்லுகிற உங்கள் தீர்க்கத
ரிசிகளுக்கும், உங்கள் கணிதருக்கும், உங்கள்
சொப்பனதரிசிகளுக்கும்,உங்கள் நாட்பார்க்கிற
வர்களுக்கும்,நிமித்தம் பார்ப்பவர்களுக்குஞ்செ
௰ விகொடுக்கவேண்டாம்.—அவர்கள் உங்களை உங்
கள்தேசத்தினின்று தூரப்படுத்துவதற்கும், நீங்
கள் நாசமடையும்படி நான் உங்களைத்துரத்திவி
டுவதற்கும்ஏதுவாக,உங்களிடத்திற்பொய்த்தீர்க்
கதரிசனஞ்சொல்லுகிறார்கள்.—ஆனாலும்பாபே ௰௧
லின் இராசாவின் நுகத்திற்குக்கீழே தங்கள் தங்
கள்கழுத்துக்களையிட்டு,அவனிடத்தில்ஊழியஞ்
செய்யும் அந்தந்தச்சாதியாரை அவரவர் தேசத்
தில்தங்கும்படிசெய்வேன்; அவர்கள் அதிற்பயிர்
செய்து,அதில்வசிப்பார்களென்பதை யெகோ
வா சொல்லுகிறாரென்று, உங்கள்எசமானரிடத்
திற்சொல்லுங்களென்று சொல்லிஅனுப்பென்
றாரென்றது.
இந்தவாக்குகளெல்லாவற்றின்படிக்கும் யூதா ௰௨
வின் இராசாவாகிய சிதிகியாவிடத்தில்நான்பே
சி, பாபேலின் இராசாவின் நுகத்திற்குக்கீழ்உங்
கள்கழுத்துக்களையிட்டு, அவனிடத்திலும்அவன்
சனங்களிடத்திலும் ஊழியஞ்செய்து சீவிப்பீர்
களாக.—பாபேலின் இராசாவிடத்தில் ஊழி ௰௩
யஞ்செய்யாமலிருக்கிற சாதியாருக்கு விரோத
மாய் யெகோவா சொல்லியபிரகாரம் நீயும்
உன்சனங்களும் கட்கத்தினாலும், பஞ்சத்தினா
லும் கொள்ளைநோயினாலுஞ் சாவவேண்டியதெ
ன்ன.—ஆதலால்,நீங்கள் பாபேலின்இராசாவுக்கு ௰௪
ஊழியஞ் செய்யமாட்டீர்களென்று உங்களிடத்
திற்சொல்லுகிற தீர்க்கதரிசிகளின் வாக்குகளுக்
குச் செவிகொடுக்கவேண்டாம், அவர்கள்உங்க
ளுக்குப்பொய்த்தீர்க்கதரிசனங்களைச்சொல்லுகி
றார்கள்.—நான் அவர்களைஅனுப்பவில்லை; ஆனா ௰௫
லும் நீங்களும் உங்களிடத்தில் தீர்க்கதரிசனஞ்
சொல்லுகிற தீர்க்கதரிசிகளும் நாசப்படும்படி
நான்உங்களைத்துரத்திவிடுவதற்கேதுவாக, அவர்
கள் என் நாமத்தைக்கொண்டு பொய்த்தீர்க்கதரி
சனஞ் சொல்லுகிறார்களென்று யெகோவா
சொல்லுகிறாரென்றேன்.—மேலும் நான், ஆசாரி ௰௬
யரிடத்திலும், இந்தச்சனங்களனைவரிடத்திலும்
யெகோவாவுடைய ஆலயத்தின்பாத்திரங்
கள் பாபேலினின்றுதிரும்பிவிரைவிலேகொண்
டுவரப்படும், கேளுங்களென்று உங்களுக்குத்தீர்
க்கதரிசனஞ்சொல்லுகிறதீர்க்கதரிசிகளின் வாக்
குகளுக்குச் செவிகொடுக்க வேண்டாமென்று
யெகோவா சொல்லுகிறார்: அவர்கள் உங்க
ளுக்குப் பொய்த் தீர்க்கதரிசனங்களைச்சொல்லு
கிறார்கள்.—அவர்களுக்குச் செவிகொடாமல் பா ௰௭
பேலின் இராசாவிடத்தில் ஊழியஞ்செய்து சீ
விப்பீர்களாக: இந்த நகரம் பாழாகவேண்டிய
தென்ன.—அவர்கள்தீர்க்கதரிசிகளாயிருந்ததும், ௰௮
யெகோவாவின் வாக்கு அவர்களுக்குக்
கிடைத்ததுமுண்டானால், யெகோவாவின்
ஆலயத்திலும், யூதா இராசாவின் வீட்டிலும்,
யெருஷலேமிலும் மீந்திருக்கும் பாத்திரங்கள்
பாபேலுக்குப்போகாதபடி, அவர்கள் சேனைபதி
யாகிய யெகோவாவைப் பிரார்த்தனைபண்
ணக்கடவர்கள்.

---

(௨௭. அதி. ௨.) எசேக். ௪. ௧. (௫) சங். ௱௰௫. ௰௫, ௰௬. எசா. ௪௫. ௰௨. தானி. ௪. ௰௭, ௨௫, ௩௨. (௬) எசேக். ௨௯. ௰௮, ௨௰. தானி. ௨. ௩௮. (௭) ௨. நாளா. ௩௬. ௨௰. தானி. ௫. ௨௬. (௰௩) எசேக். ௰௮. ௩௧. (௰௬) ௨. நாளா. ௩௬. ௭, ௰. தானி. ௧. ௨.

௰௯ பாபேலின் இராசாவாகிய நெபுகத்நெச்சார்,
யூதா இராசாவான யோயாக்கீமின் புத்திரனாகிய
யெகொனியவையும், யூதாவிலும்யெருஷலேமி
லுமுள்ளமேல்குலத்தார்யாவரையும்யெருஷலே
மினின்று பாபேலுக்குச் சிறைபிடித்துக்கொண்
௨௰ டுபோனபொழுது,—எடாமல்விட்ட தூண்களை
யும், சமுத்திரத்தையும், ஆதாரங்களையும், நகரத்
திலே மீதியாயிருந்த பாத்திரங்களையுங்குறித்துச்
சேனாபதியாகிய யெகோவா இவ்வாக்கைச்
௨௧ சொல்லுகிறார்.—யெகோவாவின் ஆலயத்தி
லும், யூதா இராசாவின்வீட்டிலும், யெருஷலே
மிலும் மீந்திருக்கிற பாத்திரங்கள் பாபேலுக்குக்
கொண்டுபோகப்படுமென்று இஸ்ரவேலின் தே
வனும்சேனாபதியுமாகிய யெகோவா சொல்
௨௨ லுகிறார்.—நான் அவைகளை விசாரிக்கும் நாள்
வரைக்கும்அங்கேயிருக்கும்; பின்பு நான்அவை
களைக்கொண்டுவந்து இந்தஸ்தானத்திலேசேமித்
துவைப்பேனென்று யெகோவா சொல்லுகி
றாரென்றேன்.

## ௨௮. அதிகாரம்.

௧. அனானிய பொய்த்தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௫. எரேமியா அவன் வாக்கியத்தை ஆட்சேபம்பண்ணல்: ௰. அனானிய எரேமியாவின்மரநுகத்தைமுறித்தல்: ௰௨. எரேமியா இருப்புநுகத்தைக்குறித்துப்பேசல்: ௰௫. எரேமியா அனானியவின் மரணத்தை முன்னுரைத்தல்.

பின்னும் யூதாவின் இராசாவாகியசிதேக்கியாவின்
இராசரிக ஆரம்பத்தில், நாலாம்வருஷம் ஐந்தாம்
மாதத்திலே, கிபியோனூரானும் அசூரென்னுந்
தீர்க்கதரிசியின் புத்திரனுமான அனானிய, யெ
கோவாவின் ஆலயத்தில் ஆசாரியர்களும்சகல
௨ சனங்களும் முன்னிற்க,என்னிடத்தில்,—பாபே
௩ லின்இராசாவின் நுகத்தைமுறித்தேன்.—பாபே
லின்இராசாவாகிய நெபுகத்நெச்சார் இவ்விடத்தி
னின்று எடுத்துப் பாபேலுக்குக்கொண்டுபோன
யெகோவாவுடைய ஆலயத்தின் சகலபாத்
திரங்களையும் நான்இரண்டுவருஷத்திற்குள் இவ்
விடத்தில்திரும்பக்கொண்டுவருவேனென்று,இ
ஸ்ரவேலின் தேவனுஞ் சேனாபதியுமாகிய யெ
௪ கோவா சொல்லுகிறார்.—நான் பாபேலின் இ
ராசாவின்நுகத்தை முறித்துவிடுவேன், யோயா
கீமின்புத்திரனும் யூதாவின் இராசாவுமாகியயெ
கொனியவையும்,பாபேலுக்குச் சிறைபிடித்துக்
கொண்டுபோகப்பட்ட யூதாசனங்களையும் இவ்
விடத்திற்குத் திரும்பக்கொண்டுவருவேனென்
று யெகோவா சொல்லுகிறாரென்றான்.
௫ அப்பொழுது எரேமியா வென்னுந் தீர்க்கதரி
சி,யெகோவாவின் ஆலயத்தில்நின்று, ஆசா
ரியர்களுஞ் சகலசனங்களும் முன்னிற்க, அ
௬ னானிய தீர்க்கதரிசியைநோக்கி,—ஆமென்: யெ
கோவா அப்படியே செய்வாராக: யெகோ
வாவின் ஆலயத்தின்பாத்திரங்களையும்,சிறைப்
பட்டுப்போனயாவரையும்,பாபேலினின்று இவ்
விடத்திற்குக்கொண்டுவருவாரென்று நீ தீர்க்கத
ரிசனமாய்ச் சொல்லிய வாக்குகளை யெகோ
வா சித்திசெய்யக்கடவர்.—ஆகிலும் நான்,உன் ௭
செவிக்கும், இந்தச்சகல சனங்களின் செவிக்
கும் எட்டும்படிசொல்லுகிற இவ்வாக்கைக்கேள்.—
எனக்கும் உனக்கும்முன்னான பூருவகாலத்திலி ௮
ருந்த தீர்க்கதரிசிகள்யுத்தம், பஞ்சம், கொள்ளை
நோய்வருமென்று அநேகதேசங்களுக்கும் மகா
இராச்சியங்களுக்கும் விரோதமாய்த் தீர்க்கதரிச
னஞ் சொன்னார்கள்.—சமாதானம் வருமென்று ௯
தீர்க்கதரிசனவாக்கியஞ்சொல்லியபின்பு,அந்தத்
தீர்க்கதரிசியின் வாக்கு நிறைவேறினால், யெ
கோவா மெய்யாய் இவனை அனுப்பினாரென்
பதை அறிவார்களென்று எரேமியாதீர்க்கதரிசி
சொன்னான்.

அப்பொழுது அனானியவென்னுந்தீர்க்கதரிசி ௰
எரேமியாவின் கழுத்திலிருந்த நுகத்தை நீக்கி
முறித்தான்.—இவ்விதமாய், இரண்டுவருஷகா ௰௧
லத்துக்குள்ளே பாபேலின் இராசாவாகிய நெபு
கத்நெச்சருடைய நுகத்தைச் சகலசாதியாரின்
கழுத்திலின்றும் முறித்து விடுவேனென்பதை
யெகோவா சொல்லுகிறாரென்று,அனானியச
கலசனங்களின்முன்பாகவுஞ்சொன்னான். பின்
பு எரேமியா தீர்க்கதரிசி தன்வழியேபோனான்.
அனானியவென்னுந் தீர்க்கதரிசி எரேமியா ௰௨
தீர்க்கதரிசியின் கழுத்திலிருந்த நுகத்தை முறித்த
பின்பு, எரேமியாவுக்குக்கிடைத்த யெகோ
வாவின் வாக்கு,—நீபோய் அனானியவைநோக் ௰௩
கி, நீ மரநுகங்களைமுறித்தாய்;ஆனாலும் நீ இருப்
புநுகங்களைஅவைகளுக்குப்பிரதியாகஉண்டாக்
குவாயென்பதை யெகோவா சொல்லுகிறார்.-
இந்தச் சகலதேசத்தாரும் பாபேலின் இராசாவா ௰௪
கியநெபுகத்நெச்சரிடத்தில்சேவிக்கும்படிநான்,
அவர்களுடையகழுத்தின்மேல் இருப்புநுகத்தை
வைத்தேன், அவர்கள் அவனிடத்தில் சேவிப்
பார்கள்: காட்டுமிருகங்களையும் அவனுக்கொப்
பித்தேனென்று இஸ்ரவேலின் தேவனுஞ் சே
னாபதியுமாகிய யெகோவா சொல்லுகிறா
ரென்பதைச் சொல்லச்சொல்லிற்று.
பின்பு எரேமியா தீர்க்கதரிசி அனானியதீர்க்க ௰௫
தரிசியைநோக்கி,அனானியவே, நீ இப்பொழுது
கேள்; யெகோவா உன்னை அனுப்பவில்லை;
நீ இந்தச்சனங்கள் பொய்யை நம்பப்பண்ணி
னாய்.—ஆதலால், பார், நான் பூமியின்முகத்தி ௰௬
னின்று உன்னை அகற்றுவேன்: நீ யெகோவா
வுக்கு விரோதமாய் விபரீதத்தைப்பேசினாய்,ஆ
தலால் நீ இந்தவருஷத்திலேசாவாயென்று யெ
கோவா சொல்லுகிறாரென்றான்.—அப்படியே ௰௭
அனானிய தீர்க்கதரிசி அந்தவருஷத்தின் ஏழாம்
மாதத்தில் இறந்துபோனான்.

## ௨௯. அதிகாரம்.

௧. சிறைப்பட்டசனங்களுக்கு எரேமியா பத்தி

(௰௯)௨.இரா.௨௪.௰௪,௰௫.(௨௰)௨.இரா.௨௫.௰௩.(௨௨)௨.இரா.௨௫.௰௩.௨.நாளா.௩௬.௰௮.எஸ்றா.௧.௭.—(௨௮.அதி.௬.) ௧.இரா.௧.௩௬.(௩)உபா.௰௮.௨௨. (௰௪) உபா.௨௮.௪௮.(௰௫)எசேக்.௰௩.௨௨.(௰௬)உபா.௰௩.௫.—(௨௯.அதி.)

*ரமனுப்பல்: ச. பாபேலில் வசிப்பவர்களுக்கு ணர்த்தல்: அ. கள்ளத்தீர்க்கதரிசிகளை மதிக்கப் படாதெனக் காட்டல்: ய. மீட்சியுண்டாகு மென்றுமுன்னுணர்த்தல்: யரு. எஞ்சிய சனங் கள்நாசமடைவார்களென்று தெரிவித்தல்: உக. கள்ளத்தீர்க்கதரிசிகள் அடையும் நாசமுரைத் தல்: உச. ஷிமாயியா எரேமியாவுக்கு விரோத மாய்ப் பத்திரமெழுதல்: ஙய. எரேமியா ஷிமாயி யாவின்நாமத்தை முன்புதெரிவித்தல்.*

யெகொனியவென்னும் இராசாவும், அவனு
டைய இராசஸ்திரியும், அண்ணகர்களும், யூதா
விலும் யெரூஷலேமிலுமுள்ள பிரபுகளும், தச்
சரும்,கம்மாளரும் யெரூஷலேமைவிட்டுப்புறப்
உ பட்டபின்பு,-எரேமியாதீர்க்கதரிசி, சிறைப்பட்
டுப்போன முதியோரில்மீந்திருந்தவர்களுக்கும்,
ஆசாரியர்களுக்கும், தீர்க்கதரிசிகளுக்கும், நெபு
கத்நெத்சரால் யெரூஷலேமிலிருந்து பாபேலுக்
குச் சிறைபிடித்துக்கொண்டுபோகப்பட்ட மற்
௩ றச்சகலசனங்களுக்கும் எழுதி,—யூதாவின் இரா
சாவாகிய சிதிகியா, பாபேலுக்குப்பாபேலின்இ
ராசாவாகிய நெபுகத்நெத்சரிடத்திற்கு யெரூஷ
லேமினின்று விடுத்த ஷாபானின்புத்திரனாகிய
எலாசாவின்கையிலும்,இல்கியாவின்புத்திரனாகி
ய கிமரியாவின்கையிலுங்கொடுத்த பத்திரத்தின்
ச விபரம்.-இஸரவேலின் தேவனுஞ்சேனாபதியு
மாகிய யெகோவா, தாம்யெரூஷலேமினின்
று பாபேலுக்குச் சிறையாகக்கொண்டுபோகும்
படிசெய்யச் சிறைப்பட்டோர் யாவரோடும்,—
ரு நீங்கள் வீடுகளைக்கட்டி வாசம்பண்ணுங்கள்;
தோட்டங்களைநாட்டிஅவைகளின்பலனைப்புசி
சு யுங்கள்.—நீங்கள் விவாகம்பண்ணி, புத்திரபுத்
திரிகளைப்பெற்று, உங்கள் புத்திரருக்கு ஸ்திரிக
ளையும், புத்திரிகளுக்குப்புருஷரையும்விவாகஞ்
செய்வியுங்கள்; நீங்கள் குறையாமற்பெருகும்ப
டி அவர்களும் புத்திரரையும்புத்திரிகளையும் பெ
எ றக்கடவர்கள்.—நான் உங்களைச்சிறைப்பட்டுப்
போகும்படி செய்த நகரத்தின் வாழ்வைத்தேடி,
யெகோவாவை நோக்கி, அதினிமித்தம் பி
ரார்த்தனைபண்ணுங்கள்: அது வாழ்வடைய நீங்
களும் வாழ்ந்திருப்பீர்களென்கிறார்.

அ உங்களுக்குள்ளிருக்கும் உங்கள்தீர்க்கதரிசிக
ளும்,நிமித்தம்பார்ப்பவர்களும் உங்களைவஞ்சிக்
கவிடாதிருங்கள், நீங்கள், சொப்பனங்காணப்
பண்ணுகிற உங்கள் சொப்பனக்காரருக்குச்செ
விகொடாதிருங்களென்று இஸரவேலின் தேவ
னும்சேனாபதியுமாகிய யெகோவாசொல்லு
கூ கிறார்.—இவர்கள் என்நாமத்தைக்கொண்டு உங்
களுக்குப் பொய்த்தீர்க்கதரிசனங்களைச்சொல்லு
கிறார்கள்: அவர்களை நான்அனுப்பவில்லையென்
று யெகோவாசொல்லுகிறார்.

ய பாபேலின் எழுபது வருஷம் நிறைவேறின
பின்பு நான்உங்களைவிசாரித்து, உங்களைத்திரும்
ப இவ்விடத்திற்குக்கொண்டுவருகிறபடியால்,
நன்மைதரும்என்வாக்குத்தத்தங்களைஉங்களுக்கு
நிறைவேற்றுவேனென்று யெகோவாசொல்
லுகிறார்.—நான் உங்களைக் குறித்துக்கொண்ட யக
எண்ணங்கள் இன்னவையென்றறிவேன், அந்த
எண்ணங்கள் தீமையுள்ளவைகளல்ல, நீங்கள்
காத்திருக்கிறமுடிவைத்தருவதற்கேதுவான சமா
தானநினைவுகளே.—அக்காலத்திலே நீங்கள்என் யஉ
னைநோக்கி, ஓலமிடுவீர்கள், என்னைச்சேர்ந்துபி
ரார்த்தனைபண்ணுவீர்கள், நான் உங்களுக்குச்
செவிகொடுப்பேன்.—நீங்கள் என்னைத்தேடுவீர் யங
கள், உங்கள் பூரணஇருதயத்தோடும் என்னைத்
தேடும்பொழுது கண்டடைவீர்களென்று யெ
கோவா சொல்லுகிறார்.—நான் உங்களால்கா யச
ணப்படுவேனென்று யெகோவா சொல்லுகி
றார்: நான் உங்களைச்சிறையினின்று மீட்டுக்
கொள்வேன், நான் உங்களைத்துரத்திவிட்ட எல்
லாத்தேசத்தாரினின்றும் எல்லாஇடங்களினின்
றும் உங்களைச்சேர்த்து, நான் உங்களைத்தூரப்ப
டுத்திவிலக்கின அந்தஸ்தானத்திற்கே திரும்பக்
கொண்டுவருவேனென்று யெகோவாசொல்
லுகிறார்.

யெகோவாஎங்களுக்குப்பாபேலிலும்தீர்க் யரு
கதரிசிகளைஎழுப்பினாரென்று நீங்கள்சொன்னீர்
கள்.—இதினிமித்தந் தாவீதின்சிங்காசனத்தில் யசு
வீற்றிருக்கும் இராசாவையும், உங்களோடேசி
றைப்பட்டுப்போகாமல் இந்த நகரத்தில்வசிக்
கும் உங்கள் சகோதரராகிய சகலசனங்களையுங்
குறித்து யெகோவா இவ்வாக்குச்சொல்
லுகிறார்.-பாருங்கள், நான் கட்கத்தையும், பஞ் யஎ
சத்தையும், கொள்ளைநோயையும் அவர்களுக்
குள்அனுப்பி, கேடுள்ளதாயிருப்பதினால் புசிக்
கத்தகாதகெட்ட அத்திப்பழங்களைப்போல் அவர்
களை ஆக்குவேனென்று சேனாபதியாகிய யெ
கோவா சொல்லுகிறார்.—சாக்கிரதையோடே யஅ
என்தாசராகியதீர்க்கதரிசிகளைக்கொண்டு நான்அ
னுப்பியஎன்வாக்குகளுக்கு அவர்கள் செவிகொ
டாமற்போனார்கள்.—இதினிமித்தம்நான்கட்கத் யகூ
தினாலும், பஞ்சத்தினாலும், கொள்ளைநோயினா
லும் அவர்களைக் கிலேசப்படுத்தி, பூமியிலுள்ள
எல்லா இராச்சியங்களிலேயுஞ்சஞ்சலத்திற்குஅ
வர்களை ஒப்பிப்பேன்; நான் அவர்களைத்தூரப்ப
டுத்துஞ்சகலதேசத்தாருக்குள்ளுஞ்சாபமும்,பிர
மிப்பும், நிந்தையும், அவமானமுமாவார்களென்
று யெகோவா சொல்லுகிறார்.

ஆதலால் யெரூஷலேமில் நின்று பாபேலுக் உய
கு நான் அனுப்பச் சிறைப்பட்டுப்போனவர்க
ளே, நீங்களெல்லாரும் யெகோவாவின்
வாக்குக்குச் செவிகொடுங்கள்.—என்நாமத்தில் உக
உங்களுக்குப் பொய்யாய்த் தீர்க்கதரிசனவாக்கி
யங்களைச்சொல்லுகிற கொலாயாவின் புத்திரனா
கியஆகாப்பையும், மாசெயாவின்புத்திரனாகியசி

(க) உ.இரா.உச.யஉ,. (எ) எஸ்று.சு.ய. க.தீமோ.உ.உ. (அ) எபே.ரு.சு. (ய) உ.நாளா.ஙசு.உக,உஉ. எஸ்று.க.க. தானி.கூ.உ. (யஉ) தானி.கூ.ங,. (யங) லேவி.உசு.ஙக,சய,. உபா.ஙய.க,. (யச) உபா.ச.எ. சங்.ஙஉ.சு. எசா.ருரு.சு. (யகூ) உபா.உஅ.உரு. உ.நாளா.உகூ.அ.

திகியாவையுங்குறித்து, பாருங்கள், நான் பாபே
லின் இராசாவாகிய நெபுகத்நெத்சரின் கையில்
ஒப்பிக்க, அவன் இவர்களை உங்கள்பார்வைக்கு
௨௨ முன்பாகக்கொலைசெய்வான்.—இவர்கள் இஸர
வேல்வமிசத்தாரில் தீமைசெய்து, தங்கள் அயல
வர்களுடைய மனைவிகளுடன் விபசாரம்பண்
ணி, நான் கட்டளையிடாதிருக்க என் நாமத்தைக்
கொண்டு பொய்யான வாக்குகளைச் சொன்னார்
கள், நான் அறிந்தேன், அதற்கு நானே சாட்சி
௨௩ யென்று யெகோவா சொல்லுகிறார்.—இதி
னிமித்தம் யெகோவா, உன்னைப்பாபேலின்
இராசா அக்கினியினாற்சுட்ட சிதிகியாவையும்
ஆகாப்பையும்போலாக்கக்கடவர் என்னுஞ்சாப
மொழி, பாபேலிலுள்ளசிறைப்பட்டயூதாசனங்
களனைவருக்குள்ளும் வழங்கிவருமென்று இஸ
ரவேலின் தேவனுஞ் சேனாபதியுமாகிய யெ
கோவா சொல்லுகிறார் என்பதே.
௨௪ அன்றியும் நேகேலாமியனாகிய ஷிமாயியாவி
௨௫ டத்தில்,—யாவனாகிலும் மதியீனனாகி, தன்னைத்
தீர்க்கதரிசியாகவேற்படுத்திக்கொள்ளப்பார்த்தால்,
நீ அவனைச்சிறைச்சாலையிலுந்தொழுவிலுங்கட்
டுவதற்கு, நீங்கள் யெகோவாவின் ஆலயத்
தில் அதிபதிகளாகும்படி ஆசாரியனாகிய யோ
யதாவுக்குப் பிரதியாக யெகோவா உன்னை
௨௬ ஆசாரியனாக ஏற்படுத்தினார்.—இப்பொழுதும்
உங்களுக்குள்ளே தன்னைத் தீர்க்கதரிசியென்று
சொல்லிவருகிற அனாதோத்தூரானாகிய எரேமி
௨௭ யாவை நீ கடிந்துகொள்ளாததென்ன.-நெடுங்கா
லம் வீடுகளைக்கட்டி அவைகளிலே வாசம்பண்
ணுங்கள், தோட்டங்களைநாட்டி அவைகளின்
பலனைப் புசியுங்களென்று பாபேலிலுள்ள எங்
களுக்குச்சொல்லியனுப்பினானேயென்றுசொல்
௨௮ லி,—உன் நாமத்தைக்கொண்டு நிருபங்களை எழு
தி, யெருஷலேமிலுள்ள சகலசனங்களுக்கும்,
மாசெயாவின் புத்திரனாகிய செப்பனியாவென்
னும் ஆசாரியனுக்கும், சகல ஆசாரியர்களுக்
கும் அனுப்பினாயென்று இஸரவேலின் தேவ
னுஞ் சேனாபதியுமாகிய யெகோவா சொல்
௨௯ லுகிறார் என்பதைச் சொல்லென்றார்.—இந்த
நிருபத்தைச் செப்பனியாவென்னும் ஆசாரியன்
எரேமியாவின் செவிக்கேற வாசித்தான்.
௩௰ பின்பு எரேமியாவுக்குக்கிடைத்த யெகோ
௩௧ வாவின் வாக்கு,—நீ சிறைப்பட்டயாவரிடத்தி
லும்ஆளனுப்பி, நேகேலாமியனாகிய ஷிமாயியா
வைக்குறித்து, யெகோவா, நான் அனுப்பா
திருக்க ஷிமாயியா உங்களிடத்திலே தீர்க்கதரிச
னங்களைச்சொல்லி, நீங்கள்பொய்யைநம்பும்படி
௩௨ பண்ணினானென்றுசொல்லுகிறார்.-ஆதலால், பா
ருங்கள், நான் நேகேலாமியனாகிய ஷிமாயியா
வையும் அவன் சந்ததியையுந்தண்டிப்பேனென்
று யெகோவா சொல்லுகிறார்: அவன்வமிசத்
தாரில் ஒருவனும் இந்தச்சனங்களுக்குள்ளே வ
சிக்கமாட்டான்; அவன் யெகோவாவுக்கு
விரோதமாக விபரீதத்தைப்பேசினான், அதினால்
நான் என் சனங்கள் நிமித்தஞ்செய்யும் நன்மை
யை அவன் காணமாட்டானென்று யெகோ
வா சொல்லுகிறாரென்பதைச் சொல்லச்சொல்
லிற்று.

## ௩௰. அதிகாரம்.

௧.* யூதேய சனங்களின் மீட்சியைக்குறித்துத்தீர்க்கதரிசனஞ் சொல்லல்: ௪. தாழ்வின்பின் வாழ்வுவருமெனக்காட்டல்: ௰. யாக்கோபை ஆற்றல்: ௰௮. யாக்கோபு வமிசத்தார் மேன்மைபெறல்: ௨௩. பாவிகளுக்குவருந் தண்டனையைக் காட்டல்.

எரேமியாவுக்குக்கிடைத்தயெகோவாவின் ௧
வாக்கு,-இஸரவேலின் தேவனாகியயெகோ ௨
வா, நான் உன்னிடத்தில்பேசினசகலவாக்குக
ளையும் ஒருபுத்தகத்தில் எழுதென்று சொல்லுகி
றார்.—பார், நான் இஸரவேலரும் யூதேயருமாகிய ௩
என்சனங்களைச்சிறையினின்றுமீட்குங்காலம்வ
ருமென்று யெகோவா சொல்லுகிறார்: நான்அ
வர்களைத் தங்கள்முன்னோருக்கு அளித்ததேசத்
திற்குத்திரும்பிவரப்பண்ண, அவர்கள் அதைச்
சுதந்தரித்துக் கொள்வார்களென்று யெகோ
வா சொல்லுகிறாரென்பதைச்சொல்லிற்று.
இஸரவேலையும் யூதாவையுங்குறித்து யெ ௪
கோவா இவ்வாக்குகளைச் சொல்லுகிறார்.—
நாம்நடுக்கத்தின் சத்தத்தைக் கேட்டோம், பய ௫
முண்டு, சமாதானமில்லை.—புருஷன் பிரசவிப் ௬
பானா, இப்பொழுது கேட்டுப்பாருங்கள்; பிரச
வஸ்திரியைப்போலப்புருஷர்யாவரும் தங்கள்
தங்கள்இடைகளில் கை வைப்பதையும், முகங்
களெல்லாம்வெளுத்திருப்பதையும் நான்காண்ப
தேது.—ஐயோ, அதுவே மகாதினம், அதைப் ௭
போலவேறில்லை: அது யாக்கோபின்துக்கத்தின்
சமயம்; அவனோ அதினின்று இரட்சிக்கப்படு
வானென்று யெகோவா சொல்லுகிறார்.—
அந்நாளிலே நான் அவனுடைய நுகத்தை உன் ௮
கழுத்தினின்று நீக்கி முறித்து, உன்கயிறுகளைஅ
றுப்பேன், அந்நியர் இனிஒருபொழுதும்இவனை
அடிமையாக்கமாட்டார்கள்:—இவர்கள் தங்கள் ௯
தேவனாகியயெகோவாவையும், இவர்
களுக்கு நான் எழுப்பும் இராசாவாகிய தாவீதை
யுஞ்சேவிப்பார்களென்று சேனாபதியாகிய யெ
கோவா சொல்லுகிறார்.
ஆதலால் என்பணிவிடைக்காரனாகிய யாக் ௰
கோபே, நீபயப்படாதே; இஸரவேலே, நீகலங்
கவேண்டாம்: நான்தூரத்தினின்று உன்னையும்,
உன்சந்ததியாரையும் அவர்கள் சிறைப்பட்டுப்
போனதேசத்தினின்றுவிடுவிப்பேன்; அதினால்
யாக்கோபு திரும்பிவந்து சமாதானம்பெற்று அ
மைதியாயிருப்பான், அவனைப் பயப்படுத்து
வார் ஒருவருமில்லையென்று யெகோவா

(௨௩) எசா.௬௫.௰௫. தானி.௩.௬. (௨௫) ௨.இரா.௩.௰௧. அப்.௨௬.௨௪. (௨௮) ௨.இரா.௨௫.௰௮.—(௩௰. அதி. ௩.) எசேக்.௩௯.௨௫. ஆமோ.௯.௰௪,௰௫. (௭) யோவே.௨.௰௧,௩௧. ஆமோ.௫.௰௮. செப்.௧.௰௪,. தானி.௰௨.௧.(௯)எசா. ௫௫.௩,௪. எசேக்.௩௪.௨௩. எசேக்.௩௭.௨௪. ஓசி.௩.௫. லூக்.௧.௬௯. அப்.௨.௩௰. (௰) எசா.௪௧.௰௩.

௰௧ சொல்லுகிறார்.—உன்னை இரட்சிக்கும்படிநான்
உன்னோடே இருக்கிறேன்: உன்னைச்சிதறஅடித்
தசகலசாதியாரையும் நான்நிர்மூலம்பண்ணினா
லும் உன்னை நிர்மூலம்பண்ணேன்: மட்டாக
நான்உன்னைத்தண்டிப்பேன், முழுவதுந்தண்டி
யாமல்விடேனென்று யெகோவா சொல்லு
௰௨ கிறார்.—உன்காயம் சொஸ்தப்படுவதரிது, உன்
௰௩ புண்மிகவுங்கொடியது.—உன்காயத்தைக்கட்டும்
படி பரிந்துபேசுவதற்கு ஒருவருமில்லை, உன்
௰௪ னைச்சொஸ்தப்படுத்தும் ஔஷதமில்லை.—உன்
நேசர்களெல்லாரும் உன்னை மறந்துவிட்டார்
கள்;அவர்கள் உன்னைத்தேடார்கள்; உன்பாவங்
கள்மிகுதியாயின;எண்ணிறந்தஅதிக்கிரமங்களி
னிமித்தஞ்சத்துருவைப்போலநான்உன்னைக்கா
யப்படுத்தினேன், கொடியவனைப்போல உன்
௰௫ னைத்தண்டித்தேன்.—உன் நொறுங்குதலினிமித்
தம் நீஅழுகிறதென்ன, உன் அக்கிரமங்கள் அதி
கப்பட்டபடியால் உன்துக்கம் மாறாது: உன்பா
வங்களேமிகுதியானபடியால் நான் இவைகளை
உனக்குச்செய்தேனென்று யெகோவாசொல்
௰௬ லுகிறார்.—ஆனாலும் உன்னைப்பட்சிக்கிறவர்கள்
யாவரும் பட்சிக்கப்படுவார்கள்; உன்சத்துருக்க
ளெல்லாருஞ் சிறைப்பட்டுப்போவார்கள்; உன்
னைக்கொள்ளையாடுகிறவர்கள் கொள்ளையாடப்ப
டுவார்கள், உன்பொருளை அபகரிக்கிற சகலரு
டைய பொருளும் அபகரிக்கப்படும்படி செய்
௰௭ வேன்.—ஒருவருந்தேடாத சீயோனென்றும்,இ
வள்தள்ளுண்டவளென்றும்பெயரிட்டார்களே;
நான் உன்னைத் திரும்பவுஞ் சொஸ்தப்படுத்தி,
உன் காயங்களை ஆற்றுவேனென்று யெகோ
வா சொல்லுகிறார்.
௰௮ மேலும் யெகோவா இவ்வாக்குச்சொல்லு
கிறார்; பாருங்கள், நான் யாக்கோபின்கூடாரங்
களைச்சிறையினின்று மீட்டுக்கொள்வேன், அவ
னுடைய வாசஸ்தானங்களின்மேல் தயைசெய்
வேன்; நகரம் அதின் குன்றின்மேற்கட்டப்ப
௰௯ டும், அரமனைமுன்போல நிலைப்படும்.—அவை
களினின்று வாழ்த்தும், ஆனந்த முழக்கமுஞ்
செய்பவர்களுடைய சத்தம் புறப்படும்: நான்
அவர்களைப் பெருகப்பண்ணுவேன், அவர்கள்
தொகையில் குறைந்தவர்களாயிரார்கள்; நான்
அவர்களை மகிமைப்படுத்துவேன், அவர்கள்சி
௨௰ றுமையாயிருக்கமாட்டார்கள்.—அவர்களுடைய
பிள்ளைகள் முன்போலிருக்கும், அவர்களுடை
யசபை என்சமுகத்திலே ஸ்திரப்படும், அவர்க
ளை உபத்திரவப்படுத்துகிறவர்களெல்லாரையுந்
௨௧ தண்டிப்பேன்.—அவர்களுடைய அதிபதிகள் அ
வர்களில்தோன்றுவார்கள், அவர்களுடையஅதி
காரி அவர்களினின்று தோன்றுவான்; அவனை
என்சமீபத்தில் நான்சேரப்பண்ண, அவன் என்
னைச்சேருவான்: என்னிடத்தில் சேருவதற்குத்
தன்னிருதயத்தை எழுப்புகிறவன் யாவன்.—நீங் ௨௨
கள் என் சனங்களாவீர்கள், நானோ உங்கள்
தேவனாவேனென்று யெகோவா சொல்
லுகிறார்.—பாருங்கள், யெகோவாவின்கு ௨௩
ரோதமாகிய சூறைக்காற்றுப் புறப்படும், கொ
டிய சூறைக்காற்றுத் துன்மார்க்கருடைய தலை
யின்மேல் கொடுமையாய்மோதும்.—யெகோ ௨௪
வா செய்து தமது இருதயத்தின்நினைவுகளைநிறை
வேற்றும்வரைக்கும், அவருடைய உக்கிரகோ
பந் தணியாது: முடிவுநாள்களில் இதை நீங்கள்
சிந்தித்துக்கொள்வீர்கள்.

## ௩௧. அதிகாரம்.

௧. இஸரவேலின் மீட்சியைக்குறித்துத் தீர்க்கதரி
சனஞ்சொல்லல்: ௰. அவைகளைப் பிரசித்தப்ப
டுத்தல்: ௰௫. அழுகிற இராயெலையாற்றல்: ௰௮.
எப்ராயீம்புலம்பல்: ௨௧. இஸரவேலர் மீண்டு
வரல்:௨௭.யெகோவா வாக்குத்தத்தஞ்செய்
தல்: ௩௧. சபையோடும் புது உடன்படிக்கை
யைச்செய்தல்: ௩௫. சபைஸ்திரமாதல்: ௩௮. ச
பை விருத்தியடைதல்.

அக்காலத்திலே நான் இஸரவேலின் வமிசத்தா ௧
ரனைவருக்குந் தேவனாவேன், அவர்கள் என்
சனங்களாவார்களென்று யெகோவா சொல்
லுகிறார்.—இஸரவேலை இளைப்பாற்றுகிறதற்கு ௨
நான் போனபொழுது, கட்கத்திற்குத்தப்பி மீந்
தசனங்கள் வனத்தில் அனுக்கிரகம் பெற்றார்க
ளென்று யெகோவா சொல்லுகிறார்.—பூருவ ௩
காலத்தில் யெகோவா எனக்குத்தரிசனமாகி,
என்னிடத்தில்,நான் நித்தியஅன்புடன் உன்னை
நேசித்தேன், ஆதலால் காருணியத்தினாலே நான்
உன்னை இழுத்தேன்.—இஸரவேலின் கன்னிகை ௪
யே, நான்திரும்பவும் உன்னைக்கட்டுவேன், நீ
கட்டப்படுவாய்: நீ திரும்பவும் மேளங்களினா
லே அலங்காரம்பெறுவாய், நீ மகிழ்ச்சிகொண்
டு நடனஞ்செய்பவர்களுடன் புறப்படுவாய்.—
நீ திரும்பவும் ஷமாரியாவின் மலைகளிலே தி ௫
ராட்சக்கொடிகளை நடுவாய்: நாட்டுகிறவர்கள்
அவைகளைநாட்டி, அவைகளின் பலனைச்
சாதாரணமாக அனுபவிப்பார்கள்.—எழுந்திருங் ௬
கள், நாம் சீயோனில் நமது தேவனாகிய யெ
கோவாவிடத்தில்போவோம்வாருங்களென்
று எப்ராயீம்மலைகளிலுள்ள காவலாளர் கூறுங்
காலம்வரும்.—நீங்கள் யாக்கோபினிமித்தம் ஆ ௭
னந்தமுழக்கமிடுங்கள், பிரதான சாதியாருக்குள்
உரத்தசத்தமிட்டுப்பாடுங்கள்: வாழ்த்துதல்செய்
யுங்கள், யெகோவாவே,இஸரவேலின் மீந்
திருப்பவர்களாகிய உமது சனங்களை இரட்சி

(௰௧) ஆமோ.௯.௮. எசா.௨௭.௮. (௰௨) ௨.நாளா.௩௬.௰௬. அதி.௰௫.௰௮. (௰௪) புல.௧.௨. யோபு.௰௩.௨௪. யோபு.௩௰.௨௧. (௰௬) யாத்.௨௩.௨௨. எசா.௩௩.௧. (௰௮) சங்.௱௨.௰௩. (௰௯) எசா.௩௫.௰. சக.௰.௮. (௨௰) எசா.௧.௨௬. (௨௧) ஆதி.௪௯.௰. எண்.௰௬.௫. (௨௨) எசே.௰௧.௨௰. (௨௪) ஆதி.௪௯.௧.—(௩௧. அதி. ௨.) எண்.௰.௩௩. உபா.௧.௩௨. சங்.௯௫.௰௧. எசா.௬௩.௰௪. (௩) மல்.௧.௨. ரோ.௰௧.௨௮,௨௯. ஓசி.௰௧.௪. யாத்.௰௫.௨௰. நியா.௰௧.௩௪. சங்.௱௪௯.௩. (௫) எசா.௬௫.௨௧. ஆமோ.௯.௰௪. உபா.௨௰.௬. உபா.௨௮.௩௰. (௬) எசா.௨.௩. மீகா.௪.௨. (௭) எசா.௰௨.௫,௬.

யுமென்றுசொல்லிப் பிரசித்தப்படுத்துங்கள்.—
அ பாருங்கள், நான் அவர்களைவடதேசத்தினின்று
கொண்டுவருவேன், பூமியின் கடையெல்லைக
ளினின்றுசேர்ப்பேன், அவர்களோடேகுருடர்,
சப்பாணிகள், கருப்பவதிகள், பிரசவஸ்திரிகள்
முதலானவர்கள் மகாகூட்டமாய் ஏகமாக அவ்
கூ விடத்திற்குத்திரும்புவார்கள்.—அவர்கள் அழுது
கொண்டுவருவார்கள், தயையோடே நான் அவர்
களை வழிநடத்துவேன்: அவர்கள் இடறாதபடி
நேர்மையானபாதையில் நீர்க்கால்களின் ஓரத்
தின்வழியாய்அவர்களை நடக்கப்பண்ணுவேன்:
நான் இஸ்ரவேலுக்குப்பிதா, எப்பிராயீம் எனக்கு
முதற்பேறானவனென்று யெகோவா சொல்
லுகிறார்.
ய சாதியாரே, நீங்கள் யெகோவாவின் வாக்
கைக்கேளுங்கள், தூரத்திலுள்ள தீவுகளுக்குப்
போய்இஸ்ரவேலைச்சிதறஅடித்தவரே, அவனைச்
சேர்த்துக்கொண்டு, ஒருமேய்ப்பன் தன் மந்தை
யைக் காப்பதுபோல் அவனைக் காப்பாற்றுவா
யக ரென்றுசொல்லிப்பிரசித்தப்படுத்துங்கள்.—யெ
கோவா யாக்கோபைவிடுவித்தார், அவனிலும்
வல்லமையுள்ள கையையுடையவனிடத்தினின்
யஉ று அவனைமீட்டுக்கொண்டார்.—அவர்கள்வந்து
சீயோனினுச்சியிலே பாடுவார்கள், கோதுமை,
திராட்சரசம், எண்ணெய், ஆட்டுக்குட்டிகள்,
கன்றுகளென்னும் இவைகள்நிமித்தம்யெகோ
வாவின் தயை விளங்குமிடத்தில் ஏகமாய்வரு
வார்கள்: அவர்களுடையஆத்துமம் நீர்பாய்ச்சப்
பட்ட தோட்டத்தைப்போலாகும்; அவர்கள் இ
யங னி ஒருபொழுதுந்துக்கப்படார்கள்.-அப்பொழு
துகன்னியர்நடனஞ்செய்வார்கள், வாலிபரும்வி
ருத்தருங்கூட ஆனந்தம்அடைவார்கள்: நான்அ
வர்களுடையதுக்கத்தைநீக்கி அவர்களைச்சந்தோ
ஷப்படுத்துவேன், அவர்களைஆற்றுவேன், கிலே
யச சத்தைநீக்கிஆனந்தத்தைக்கொடுப்பேன்.—நான்
புஷ்டியினால்ஆசாரியர்களின்மனதைத்திருத்திப்
படுத்துவேன், என் சனங்களும் என் நன்மை
யினால் திருத்திஅடைவார்களென்று யெகோ
வா சொல்லுகிறார்.
யரு இராமாவிலே புலம்பலுங் கசப்பானஅழுகை
யுமாகியசத்தங்கேட்கப்பட்டன; இராயெல்தன்
பிள்ளைகளில்லையென்று அவர்களினிமித்தம் அ
ழுதுகொண்டிருக்கிறாள், அவள் ஆறுதலுக்கிடங்
கொடாளென்று யெகோவா சொல்லுகிறார்.-
யசு உன்அழுகையின்சத்தத்தையும், உன்கண்களின்
நீர்சொரிதலையும்விடென்று யெகோவாசொ
ல்லுகிறார்: உன் செய்கைக்குப்பலன் கிடைக்கு
மென்று யெகோவா சொல்லுகிறார்; அவர்
கள்சத்துருவின்தேசத்தினின்று திரும்பிவருவார்
யஎ கள்.—முடிவில்உனக்குநம்பிக்கைகிடைக்கும்,

உன்சந்ததியார்தங்கள்தேசஎல்லைக்குத்திரும்பிவ
ருவார்களென்று யெகோவா சொல்லுகிறார்.
நீர் என்னைத்தண்டித்தீர், பழகாத எருதைப் யஅ
போல் நான் தண்டனை அனுபவித்தேன்: என்
னைத்திருப்பும், அப்பொழுதுநான்திரும்புவேன்;
யெகோவாவாகியநீரே என் தேவன்.-நான் யகூ
திரும்பினபின்பு மனஸ்தாபப்பட்டேனே, நான்
போதிக்கப்பட்டபின்பு என் தொடையைத்தட்
டினேன்: என் வாலிபத்தின் அவமானத்தை அ
னுபவித்து, இலச்சையடைந்து வியாகுலப்பட்
டேனென்று இப்படி எப்பிராயீம் தன்னைக்குறித்
துப்புலம்புவதைக்கேட்டேன்.—எப்பிராயீம் எனக் உய
கு அருமையானபுத்திரனல்லவா, பிரியமானபிள்
ளையல்லவா; அவனுக்கு விரோதமாய்ப்பேசின
து முதல்அவன்மேல்சிந்தைவைக்கிறேன்:அவன்
நிமித்தம் எனதுள்ளம் இரங்குகின்றது; அவன்
மேல்நான் தயைசெய்வேனேயென்று யெகோ
வா சொல்லுகிறார்.-வழி அடையாளங்களைநாட் உக
டி, உயர்ந்த தூண்களைநிறுத்தி, நீ சென்ற பாதை
யின்மேல் உன் சிந்தையை வை, நீ சென்றவழி
யாய்த்திரும்பு: இஸ்ரவேலாகியகன்னியே, இந்த
உன் நகரங்களுக்குத்திரும்பிவா.
மாறுபாடானகுமாரத்தியே, நீ எதுவரைக்கும் உஉ
அலைந்துதிரிவாய்; யெகோவா பூமியிலே நூ
தனமானதைச்சிருஷ்டித்திருக்கிறார், ஒரு ஸ்திரி
ஒரு புருஷனைச்சூழ்ந்துகொள்வாள்.-நான் சனங் உங
களைச் சிறையினின்று மீட்டுக்கொள்ளும்பொழு
து, அவர்கள் யூதாதேசத்திலும் அதின்நகரங்களி
லும் நீதியின்வாசஸ்தானமே, பரிசுத்தமலையே,
யெகோவா உன்னைஆசீர்வதிக்கக்கடவரென்
னும் இவ்வாக்கைச் சொல்லுவார்களென்றும்,—
யூதாவிலும் அதின் எல்லாப்பட்டணங்களிலும் உச
பயிரிடுகிறவர்களும், மந்தைகளைநடத்துகிறவர்க
ளும் ஏகமாய்வசிப்பார்கள்.—இளைத்துப்போன உரு
ஆத்துமாவைத்திருத்திப்படுத்தினேன், துக்கமுள்
ள ஒவ்வொரு ஆத்துமாவையும் பூர்த்திபண்ணி
னேனென்றும் இஸ்ரவேலின் தேவனுஞ் சே
னைபதியுமாகிய யெகோவா சொல்லுகிறார்.-
இதனுடன் நான் விழித்துப்பார்த்தேன்; என் நித் உசு
திரை எனக்கு இனிதாயிருந்தது.
பாருங்கள், இஸ்ரவேல்வமிசத்தாரையும்யூதா உஎ
வமிசத்தாரையும் மனிதவித்தினாலும், மிருகவித்
தினாலும் நான் வருத்திக்கப்பண்ணுங்காலம்வரு
மென்று யெகோவா சொல்லுகிறார்.—பிடுங் உஅ
குகிறதற்கும், இடிக்கிறதற்கும், கீழே வீழ்த்து
கிறதற்கும், கிலேசப்படுத்துகிறதற்கும், அழிக்
கிறதற்கும் நான் வகைதேடினதுபோல அவர்
களைக்கட்டுகிறதற்கும் நாட்டுகிறதற்கும் வகை
தேடுவேன்.—பிதாக்கள் புளிப்புள்ள திராட்சக் உகூ
காய்களைத்தின்றார்கள், பிள்ளைகளின்பற்கள் கூ

(அ) எசேக். உய. ௩௪. (கூ) சங். ௱உசு. ரு, சு. சக. யஉ. ய. ஏசா. ௩ரு. அ. யாத். ச. உஉ. (ய) ஏசா. சய. யக. எசேக். ௩௪. யஉ, யங, யச. (யக) ஏசா. சச. உங. ஏசா. சகூ. உச, உரு. (யஉ) எசேக். யஎ. உங. ஓசி. ங. ரு. ஏசா. ருஅ. யக. ஏசா. ௩ரு. ய. வெளி. உக. ச. (யரு) மத். உ. யஎ, யஅ. யோசு. யஅ. உரு. ஆதி. சஉ. யங. (யசு) எஸ்றா. க. ரு. ஓசி. க. யக. (யஅ) புல. ரு. உக. (யகூ) உபா. ௩ய. உ. (உய) உபா. ௩உ. ௩சு. ஏசா. சுகூ. யரு. ஓசி. யக. அ. ஏசா. ருஎ. யஅ. ஓசி. யச. ச. (உங) சங். ௱உஉ. ரு, சு, எ, அ. ஏசா. க. உசு. சக. அ. ங. (உஎ) எசேக். ௩சு. கூ, ய, யக. ஓசி. உ. உங. சக. ய. கூ. (உகூ) எசேக். யஅ. உ, ங.

சுகின்றனவென்றுஅக்காலத்தில்ஒருபொழுதுஞ்
௩௰ சொல்லார்கள்.—அவனவன் தன் தன் பாவத்தினி
மித்தஞ்சாவான்: புளிப்புள்ளதிராட்சக்காயைத்
தின்கிறவனெவனோ, அவனுடையபல்லுக் கூசு
மென்று யெகோவா சொல்லுகிறார்.
௩௧ பாருங்கள், நான் இஸரவேல் வமிசத்தாரோ
டும், யூதாவமிசத்தாரோடும் புது உடன்படிக்கை
யை ஏற்படுத்துங்காலம்வருமென்று யெகோ
௩௨ வா சொல்லுகிறார்.—அது, அவர்களுடையமுன்
னோரை எகிப்துதேசத்தினின்று புறப்படுத்துகிற
தற்கு அவர்களுடையகையைப்பிடித்தகாலத்தில்
அவர்களோடேநான்பண்ணின உடன்படிக்கை
யைப்போன்றதல்ல; நான் அவர்களுக்கு நாயக
னயிருந்தும் என்னுடைய அந்த உடன்படிக்கை
யைத் தள்ளிவிட்டார்களென்று யெகோவா
௩௩ சொல்லுகிறார்.—அந்தநாட்களுக்குப்பின்பு இஸ
ரவேல்வமிசத்தாரோடே நான்பண்ணும் உடன்
படிக்கையாவது; நான் என் நியாயப்பிரமாணத்
தை அவர்கள் உள்ளத்தில்பதிப்பேன், அவர்களு
டைய இருதயங்களில் அதை எழுதுவேன்; அ
வர்களுக்குத் தேவனாவேன், அவர்கள் என்ச
னங்களாவார்களென்று யெகோவா சொல்லு
௩௪ கிறாரென்பதே.—நீ யெகோவாவை அறிந்
துகொள்ளென்றுசொல்லி, அவர்களில் ஒருவ
னுந் தன்தன் அயலானுக்குந் தன் தன் சகோதர
னுக்கும் இனி ஒருபொழுதும்போதியான்: சிறி
யோர்முதல்பெரியோர்வரைக்குமுள்ளயாவரும்
என்னை அறிவார்கள்: நான் அவர்கள்குற்றத்தை
மன்னிப்பேன், இனி ஒருபொழுதும் நான்அவர்
கள் பாவத்தை நினையேனென்று யெகோவா
சொல்லுகிறார்.
௩௫ பகலில் ஒளிகொடுப்பதற்குச்சூரியனையும்,இ
ரவில் ஒளிகொடுப்பதற்குச் சந்திரனையும், நட்
சத்திரங்களையும் ஸ்தாபித்து, திரைகள் ஒலிக்கும்
பொழுது சமுத்திரத்தை அமையப்பண்ணுகிற
யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; சே
னபதியாகிய யெகோவாவே அவர்நாமம்.—
௩௬ இந்தநியமங்கள் என்னுடையப்பார்வையினின்று
ஒழிந்தால், இஸரவேலின்வமிசமும் ஒருசாதியா
யிராமல் எனக்குமுன் இராதபடி என்றும் ஒழிந்
துபோமென்று யெகோவா சொல்லுகிறார்.—
௩௭ யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; மே
லேவானத்தை அளக்கவும், கீழேபூமியின் அஸ்
திபாரங்களைச் சோதிக்கவுங் கூடுமேயாகில்நான்
அவர்கள் சகல கிரியையினிமித்தமும், இஸர
வேல்வமிசத்தார்யாவரையுந்தள்ளக்கூடுமென்று
யெகோவா சொல்லுகிறார்.
௩௮ பாருங்கள், இந்தநகரம் அனனேலின் கோபு
ரம்முதல்கோடிவாசல்வரைக்கும்யெகோவா
௩௯ வுக்கென்று கட்டப்படுங்காலம்வரும்.—அளவு
நூல்நேராய்ப்புறப்பட்டு,காரேப்பென்னுங்குன்
றின்மேல் நேராய்ச்சென்று, கோவாத்தைச் சுற்
றிப்போம்.-பிரேதங்களுஞ்சாம்பலுமுள்ளதாழ்ந் ௪௰
தபூமிமுழுவதும், கீதரோன் ஓடைக்குக் கீழ்த்தி
சையிலுள்ள குதிரைவாசலின் கோடிவரைக்கு
முள்ள சகல வயல்வெளிகளும் யெகோவா
வுக்கென்றுபரிசுத்தமாகும்; அது இனி ஒருபொ
ழுதும் பிடுங்கப்படாமலும் இடிக்கப்படாமலும்
நிற்குமென்று யெகோவா சொல்லுகிறார்.

## ௩௨. அதிகாரம்.

௧. எரேமியா சிறைச்சாலையிலடைவதற்கான ஏ
துக்களைத்தெரிவித்தல்: ௬. அனமேலின்வயலை
எரேமியாகிரயத்திற்குவாங்கல்: ௰௨.கிரியாபத்
திரங்களைப்பாருக்கின்கையில் ஒப்பித்தல்: ௰௬.
எரேமியா தேவனிடத்திற் பிரார்த்தித்தல்:
௨௬. யூதேயர்சிறையில் அகப்படுவார்களென்று
முன்னுரைத்தல்: ௩௬. தங்கள் தேசத்திற்குத்தி
ரும்புவார்களென்று தீர்க்கதரிசனஞ்சொல்லல்.

நெபுகத்நெத்சரின்பதினெட்டாம்வருஷத்திற் ௧
குச்சரியான யூதாவின்இராசாவாகிய சிதேக்கியாஅ
ரசாண்டபத்தாம்வருஷத்தில், எரேமியாவுக்குக்
கிடைத்த யெகோவாவின் வாக்கு.—அக்கா ௨
லத்திலே பாபேல் இராசாவின்சேனைகள் யெ
ருஷலேம் நகரத்தைவளைத்தபொழுது, எரேமி
யாதீர்க்கதரிசி யூதாவின் இராசாவீட்டிலுள்ளசி
றைச்சாலையின் பிராகாரத்தில் அடைபட்டிருந்
தான்.—யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா அவ ௩
னைநோக்கி, நீ தீர்க்கதரிசனமாய், யெகோ
வா, பார், நான் இந்தநகரத்தைப்பாபேலுடைய
இராசாவின் கையில் ஒப்பிப்பேன், அவன் இ
தைப்பிடிப்பானென்று சொல்லுகிறாரென்றும்,—
யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா கல்தேயரு ௪
டையகைக்குத்தப்பாமல் பாபேல் இராசாவின்
கையில் ஒப்பிக்கப்பட அவன்வாய் இவன்வாயு
டனேபேசும், அவன்கண்கள் இவன்கண்களைக்
காணும்,—அவன் சிதேக்கியாவைப்பாபேலுக்குக் ௫
கொண்டுபோவான், நான் அவனைச்சந்திக்கும்வ
ரைக்கும் அங்கேயிருப்பான், நீங்கள் கல்தேயரு
டன்யுத்தம்பண்ணினாலும் அனுகூலம்பெறமாட்
டீர்களேயென்றுஞ் சொல்லுகிறாரென்றுஞ்சொ
ல்லவேண்டியதேதென்று அவனைஅடைத்தான்.
எரேமியா,என்னிடத்தில்யெகோவாவின் ௬
வாக்கு,—பார்,உன்பிதாவின்சகோதரனாகியஷல் ௭
லூமின்புத்திரனான அனமேல்உன்னிடத்தில்வந்
து, அனதோத்திலிருக்கிற என்வயலை உனக்காக
வாங்குவதற்குரிய மீட்கும் அதிகாரம் உனக்கே
யுரியதென்று சொல்லுவானென்று சொல்லிற்
றென்றான்.—பின்பு என்பிதாவின் சகோதரனு ௮
டைய புத்திரனாகிய அனமேல், யெகோவா
வின் வாக்கின்படி சிறைச்சாலையின் பிராகாரத்

(௩௰) கலா.௬.௫,௭. (௩௧) எரேக்.௩௭.௨௬. எபி.௮.௮—௰௨. (௩௨) உபா.௧.௩௧. (௩௩) சங்.௪௰.௮. எசேக்.௰௧.௰௯, ௨௰. ௨.கொரி.௩.௩. (௩௪) ஏசா.௫௪.௰௩. யோவா.௬.௪௫. ௧.கொரி.௨.௰. ௧.யோவா.௨.௨௰. மீகா.௭.௰௮. அப்.௰. ௪௩. ரோ.௰௧.௨௭. (௩௫) ஆதி.௧.௰௬. சங்.௭௨.௫,௰௭. ஏசா.௫௧.௰௫. (௩௬) சங்.௱௪௮.௬. ஏசா.௫௪.௯,௰.(௩௮)நெகி. ௩.௧. சக.௰௪.௰.(௩௯)எசேக்.௪௰.௮. சக.௨.௧.(௪௰)௨.நாளா.௨௩.௰௫. நெகி.௩.௨௮. யோவே.௩.௰௭.—(௩௨.அதி.௧.) ௨.இரா.௨௫.௧,௨. (௨) நெகி.௩.௨௫. (௭) லேவி.௨௫.௨௪,௨௫,௩௨. ரூத்.௪.௪.

தில் என்னிடத்தில்வந்து,என்னைநோக்கி,பேன்
யாமீன்தேசத்து அனதோத்திலுள்ள என்வயலை நீ
வாங்கிக்கொள்: சுதந்தரநியாயம்உன்னுடையது,
அதைமீட்கும்அதிகாரம்உனக்குரியது; ஆதலால்
நீயே அதை உனக்காக வாங்கிக்கொள்ளும்படி
வேண்டுகிறேனென்றான். அப்பொழுது அது
யெகோவாவின் வாக்கென்றுஅறிந்துகொண்
௯ டேன்:—ஆதலால் நான் என்பிதாவின் சகோதர
னுடையபுத்திரனாகியஅனமேலினிடத்தில், பதி
னேழுஷேக்கல்வெள்ளியை நிறுத்துக்கொடுத்து,
அனதோத்திலுள்ள வயல்வெளியை விலைக்குக்
௰ கொண்டேன்.—நான் கிரயபத்திரத்தில் கையெ
ழுத்தையும் முத்திரையையும்போட்டு, சாட்சிக
ளைவைத்து, வெள்ளியைத்தராசிலேநிறுத்தேன்.—
௰௧ நியாயப்பிரமாணத்திற்கும்முறைக்குமேற்க,முத்
திரையிடப்பட்டகிரயபத்திரத்தையும் முத்திரை
௰௨ யிட்டிராததையுமெடுத்து,—என்பிதாவின்சகோத
ரனுடைய புத்திரனாகிய அனமேலுக்கு முன்
பாகவும்,கிரயபத்திரத்தில்கையெழுத்துப்போட்
டசாட்சிகளுக்கு முன்பாகவும், சிறைச்சாலை
யின் பிராகாரத்திலிருந்த சமஸ்த யூதர்களுக்கு
முன்பாகவும், மாசெயாவின் புத்திரனாகிய நெரி
யாவின்புத்திரனானபாருக்கிடத்தில் அந்தக்கிரய
பத்திரத்தை ஒப்பித்தேன்.
௰௩ அவர்களுக்குமுன்பாக நான்பாருக்கைநோக்
௰௪ கி,—முத்திரையிடப்பட்ட இந்தக்கிரயபத்திரத்
தையும், முத்திரையிட்டிராததையும் நீ எடுத்து,
அவைகள் நெடுங்காலம் இருக்கும்படி ஒருமட்
பாத்திரத்தில்வைக்கவேண்டுமென்று இஸரவே
லின் தேவனுஞ் சேனைபதியுமாகிய யெகோ
வா சொல்லுகிறாரென்பதைச் சொன்னேன்.—
௰௫ இனி இத்தேசத்திலே வீடுகளும், வயல்வெளிக
ளும், திராட்சத்தோட்டங்களுங் கொள்ளப்படு
மென்று இஸரவேலின் தேவனும் சேனைபதியு
மாகிய யெகோவா சொல்லுகிறார்.
௰௬ நான்கிரயபத்திரத்தை நெரியாவின் புத்திரனா
கிய பாருக்கினிடத்தில் ஒப்பித்தபின்பு யெ
௰௭ கோவாவைப் பிரார்த்தித்து,—ஆ, ஆண்ட
வராகிய யெகோவாவே, நீர் உமது மகா
பராக்கிரமத்தினாலும் ஓங்கிய உமது புயத்தினா
லும் வானத்தையும் பூமியையுஞ் சிருஷ்டித்தீர்,
௰௮ நீர் செய்யக்கூடாதகாரியம் ஒன்றுமில்லை:—நீர்
ஆயிரவருக்குத்தயைசெய்துவருகிறீர், பிதாக்கள்
செய்தபாவத்தின்பலனைப் பின்வரும் அவர்கள்
பிள்ளைகளின்மடியில்செலுத்துகிறீர்: நீரே மகத்
துவமானவர், வல்லமையுள்ள தேவன், சேனா
பதியாகிய யெகோவா வென்னும் நாமத்தை
௰௯ யுடையவர்.—மனுபுத்திரர்சகலருக்கும்அவரவர்
நெறிகளுக்கும், கிரியைகளின் பலனுக்குமேற்
கக்கொடுக்கும்படி அவர்களுடைய சகலவழிக
ளின்மேலுங்கண்ணோட்டமாயிருக்கிறீர்: நீர் ஆ
லோசனையில் பிரதானி, கிரியையில்வல்லவர்.—
நீர் எகிப்துதேசத்திலும் இஸரவேலருக்குள்ளும், ௨௰
மற்றச் சனங்களுக்குள்ளும் அடையாளங்களை
யும் ஆச்சரியமான கிரியைகளையும் இந்நாள்வ
ரைக்கும் நிலைப்படுத்தினீர்; இன்றிருக்கிறபடி
உமக்குக் கீர்த்தியுண்டாகும்படி செய்தீர்.—அ ௨௧
டையாளங்களினாலும், ஆச்சரியமான கிரியைக
ளினாலும், வல்லமையுள்ள கரத்தினாலும், ஓங்கி
யபுயத்தினாலும், மகாபயங்கரத்தினாலும் உமதுச
னங்களாகிய இஸரவேலரை எகிப்தினின்று பு
றப்படப்பண்ணி,—அவர்களுடையபிதாக்களுக் ௨௨
கு அளிப்பேனென்று நீர் ஆணையிட்டபாலுந்தே
னும் பெருகுகிற இத்தேசத்தைக் கொடுத்தீர்.—
அவர்கள்வந்து இதைச்சுதந்தரித்துக்கொண்டார் ௨௩
கள்; ஆனாலும் அவர்கள் உமதுவாக்குக்கமையா
மலும், உமது கட்டளையின்படி நடவாமலும்,
கைக்கொள்ளும்படி நீர் விதித்தருளிய எந்தக்கி
ரியையுஞ் செய்யாமலும்போனார்கள்; ஆதலால்
அவர்கள்மேல் இந்தத்தீமைகளெல்லாவற்றையும்
வருவித்தீர்.—பாரும், நகரத்தைப்பிடிக்கிறதற்குக் ௨௪
கொத்தளங்கள் ஆயத்தமாயிருக்கின்றன; கட்கத்
தினாலும், பஞ்சத்தினாலும், கொள்ளை நோயினா
லும், நகரம் அதற்கு விரோதமாயுத்தஞ்செய்கிற
கல்தேயரின் கையில் ஒப்பிக்கப்பட்டது: நீர்
சொல்லியபிரகாரம் சம்பவித்தது; நீர் அதைப்
பார்த்திருக்கிறீர்.—ஆ, ஆண்டவராகிய யெ ௨௫
கோவாவே, நகரங் கல்தேயரின்கையில் ஒப்
பிக்கப்பட்டிருந்தும்,நீர்என்னைநோக்கி,நீ உனக்
கு ஒருவயலைவிலைக்குக்கொண்டு, அதற்குச்சாட்
சிகளைவையென்று சொன்னீரேயென்றேன்.
அப்பொழுதுஎரேமியாவுக்குக்கிடைத்த யெ ௨௬
கோவாவின் வாக்கு,—பார், யெகோவா ௨௭
வாகிய நானே எல்லாமாமிசத்துக்குந்தேவன்:
என்னால் செய்யமுடியாத காரியமுண்டா.—
பார், நான் இந்த நகரத்தைக்கல்தேயரின் கையி ௨௮
லும், பாபேலின் இராசாவாகிய நெபுகத்நெத்ச
ரின் கையிலும் ஒப்பிப்பேன், அவன் இதைப்பி
டிப்பானென்று யெகோவா சொல்லுகிறார்.—
இந்த நகரத்திற்கு விரோதமாகயுத்தஞ்செய்யுங் ௨௯
கல்தேயர் வந்து, என்னைக்கோபப்படுத்துகிறதற்
கு எந்தவீடுகளின்மேல்பாகாலுக்குத்தூபங்காட்
டி அந்நியதேவர்களுக்குப் பானபலியைச் சொ
ரிந்தார்களோ, அந்தவீடுகளோடே அதை அக்கி
னிகொளுத்திச்சுட்டெரிப்பார்கள்.—இஸரவேல் ௩௰
வமிசத்தாரும் யூதாவமிசத்தாரும் என்பார்வைக்
குத்தங்கள் வாலிபபிராயம்முதற்கொண்டு தீமை
யே மாத்திரஞ் செய்துவந்தார்கள்: இஸரவேல்வ
மிசத்தார் தங்கள்கைக்கிரியையினால் என்னைக்
கோபப்படுத்தினார்களேயென்று யெகோவா

(௯) ஆதி.௨௩.௰௬. சக.௰௧.௰௨. (௰௨) ஏசா.௮.௨. (௰௭) உ.இரா.௰௯.௰௫. ஆதி.௰௮.௰௪. லூக்.௧.௩௭. (௰௮) யாத்.௨௰.௬. யாத்.௩௪.௭. உபா.௫.௯,௰. ஏசா.௯.௬. (௰௯) ஏசா.௨௮.௨௯. யோபு.௩௪.௨௧. சங்.௩௩.௰௩. நீதி.௫.௨௧. (௨௰) யாத்.௯.௰௬. ௧.நாளா.௰௭.௨௧. ஏசா.௬௩.௰௨. தானி.௯.௰௫. (௨௧) யாத்.௬.௬. உ.சாமு.௭.௨௩. ௧.நாளா.௰௭.௨௧. சங்.௱௩௬.௰௧,௰௨. (௨௨) யாத்.௩.௮,௰௭. (௨௩) நிகி.௯.௨௬. தானி.௯.௰—௰௪. (௨௪) எண்.௰௬.௨௨. (௨௯) அதி.௫௨.௰௩. (௩௰) எசேக்.௨௰.௨௮.

௩௧ சொல்லுகிறார்.—இந்த நகரமானது இஸரவேல்
வமிசத்தாரும், யூதா வமிசத்தாரும், அவர்கள்இ
ராசாக்களும், அவர்கள் பிரபுகளும், அவர்கள்ஆ
சாரியர்களும், அவர்கள் தீர்க்கதரிசிகளும், யூதா
சனங்களும், மற்றயெருஷலேமியருஞ்செய்த ச
கலதீமைகளினிமித்தமும், நான் என்பார்வையி
௩௨ னின்று இதைத்தூரப்படுத்துவதற்கும்,—அவர்
கள் இதைக்கட்டினநாள்முதல் இந்நாள்வரைக்
கும் என்னுடைய கோபத்தையும், உக்கிரத்தை
யுந் தோற்றுவிப்பதற்குங்காரணமாயிருந்தது.—
௩௩ அவர்கள் எனக்கு நேர்முகமாகாமல், பராமுகமா
னார்கள்: நான் சாக்கிரதையோடே அவர்களுக்
கு உபதேசஞ்சொல்லிவந்தும், அவர்கள்உபதே
சத்தை உட்கொள்ளுகிறதற்குச் செவிகொடுக்க
௩௪ வில்லை.—அவர்கள் என்நாமந் தரிக்கப்பெற்ற
வீட்டை அசுசிப்படுத்த, அதில் அரோசியமான
௩௫ வைகளை ஸ்தாபித்தார்கள்.—அவர்கள் மோலெக்
குக்கென்று தங்கள்புத்திரரையும், தங்கள் புத்திரி
களையும் அக்கினியைக் கடக்கப்பண்ண,
இன்னோமின்புத்திரனுடைய தாழ்ந்தபூமியிலுள்
ள பாகாலின் உயர்ந்தஸ்தானங்களைக் கட்டினார்
கள்; யூதாசனங்கள் பாவஞ்செய்வதற்கேதுவாய்
இந்த அரோசியமானகாரியத்தைச்செய்யும்பொ
ருட்டு நான்கட்டளையிடவில்லை,நினைக்கவுமில்
லையென்று யெகோவா சொல்லுகிறார்.
௩௬ இப்பொழுதுகட்கத்தினாலும்,பஞ்சத்தினாலும்,
கொள்ளைநோயினாலும் பாபேலின் இராசாவின்
கையில் ஒப்பிக்கப்படுமென்று நீங்கள்சொல்லி
ய இந்தநகரத்தைக்குறித்து இஸரவேலின் தே
வனாகிய யெகோவா இவ்வாக்கைச்சொல்
௩௭ லுகிறார்.—பாருங்கள், நான் என்கோபத்தினா
லும், என்குரோதத்தினாலும் மகா உக்கிரத்தோ
டேஅவர்களைத்துரத்திவிட்ட சமஸ்ததேசங்களி
னின்றும் அவர்களைச்சேர்த்து, இந்த ஸ்தானத்
திற்குத்திரும்பவுங்கொண்டுவந்து, விக்கினமின்
௩௮ றிவசிக்கப்பண்ணுவேன்.—அவர்கள்என்சனங்
களாவார்கள், நான் அவர்களுக்குத் தேவனா
௩௯ வேன்:—அவர்கள் தங்களுக்கும் தங்களுக்குப்
பின்வருஞ்சந்ததியாருக்கும் நன்மையுண்டாகும்
படி, சதாகாலமும்எனக்குப்பயப்படும்பொருட்
டுநான்அவர்களுக்கு ஒரேமனதையும் ஒரேநடை
௪௰ யையுங்கொடுப்பேன்.—நான் அவர்களுக்கு நன்
மைசெய்வதைவிட்டுவிடேனென்று நான் அவர்
களோடே நித்திய உடன்படிக்கையைப்பண்ணு
வேன்; அவர்கள் என்னைவிட்டுநீங்காதபடி என்
னைப்பற்றும்பயத்தை அவர்கள்இருதயங்களிலே
௪௧ வருவிப்பேன்.—அவர்களுக்குநான்நன்மைசெய்
யும்படி அவர்கள்மேல் சந்தோஷப்படுவேன்,
என் பூரண இருதயத்தோடும் பூரண மனதோடும்
அவர்களை இந்தத்தேசத்திலே நிச்சயமாய் நாட்டு
௪௨ வேன்.—நான் இந்தச்சனங்களின்மேல் இந்தப்
பெரிய தீங்குகளெல்லாவற்றையும் வருவித்தது
போல், இவர்களுக்கு நான் வாக்குத்தத்தம்பண்
ணியசகலநன்மைகளையும்இவர்களுக்குவருவிப்
பேனென்று யெகோவா சொல்லுகிறார்.—
மனுஷரும் மிருகமுமில்லாமல் பாழாய்ப்போ ௪௩
யிற்று; கல்தேயரின் கையில் அகப்பட்டுவிட்ட
தென்று நீங்கள்சொல்லுகிற இந்தத்தேசத்திலேநி
லங்கள் கிரயத்திற்குக்கொள்ளப்படும்.—பென்யா ௪௪
மீன்தேசத்திலும் யெருஷலேமைச்சுற்றியிருக்கி
ற ஸ்தானங்களிலும், யூதாநகரங்களிலும், மலைக
ளிலிருக்கும்நகரங்களிலும், தாழ்ந்தபூமியிலிருக்
கும் நகரங்களிலும், தென்திசையிலிருக்கும் நக
ரங்களிலுஞ்சனங்கள்விலைகொடுத்துநிலங்களைக்
கொள்வார்கள்: கிரயபத்திரங்களை எழுதுவார்
கள்: அவைகளுக்கு முத்திரையிடுவார்கள், சாட்
சிகளை வைப்பார்கள், நான் அவர்களைச்சிறையி
னின்று மீட்டுக்கொள்வேனென்று யெகோ
வா சொல்லுகிறாரென்பதைச்சொல்லிற்று.

## ௩௩. அதிகாரம்.

௧. சிறையினின்று மீட்புண்டாகுமென்று தே
வன் வாக்குத்தத்தஞ்செய்தல்: ௰. அந்தச்சாட்
சியினிமித்தம்உண்டாகும்ஆனந்தமின்னதென்
றுதீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௰௪. கிளையென்
னுங் கிறிஸ்துவைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்
சொல்லல்: ௰௯. அவர் இராச்சியம்நிலைப்படு
மென்றுமுன்னுரைத்தல்.

எரேமியா சிறைச்சாலையின்பிராகாரத்தில் அ ௧
டைபட்டிருந்தபொழுது, இரண்டாந்தரம் யெ
கோவாவின்வாக்கு அவனிடத்தில்,-சிருஷ்டி ௨
கர்த்தாவாகிய யெகோவாவும், ஸ்திரப்படுத்து
கிறதற்கு அதை உருவாக்குகிற யெகோவாவு
ம், யெகோவாவென்னும் நாமத்தையுடையவ
ருமாகியஅவர்,-என்னைநோக்கிக்கூப்பிடு, நான் ௩
உனக்கு உத்தரந்தருவேன், உனக்கெட்டாதபெ
ரியவைகளும் ஆச்சரியமானவைகளுமானமறை
பொருளையும் உனக்குத் தெரிவிப்பேனென்கி
றார்.—போரெந்திரங்களினாலும்,கட்கத்தினாலும், ௪
அழிக்கப்பட்ட இந்த நகரத்தின்வீடுகளையும், யூ
தா இராசாக்களின் வீடுகளையுங்குறித்து,—இந்த ௫
நகரத்தின் சமஸ்ததீமையினிமித்தமும் நான்என்
னுடைய முகத்தை மறைத்தேன்; என்னுடைய
கோபத்தினாலும் என் உக்கிரத்தினாலும்நான்கொ
லைசெய்த சனங்களின் பிரேதங்களைக்கொண்டு
அவைகளை நிறைக்கும்படி அவர்கள் கல்தேயரு
டன்யுத்தஞ்செய்யவருகிறார்கள்.—பார், நான்அ ௬
வர்களுக்குச்சொஸ்தத்தையும், ஆரோக்கியத்தை
யுங் கொடுத்து, அவர்களைச் சொஸ்தப்படுத்து
வேன், சமாதானஞ் சத்தியமென்னும் இவைக
ளின்பரிபூரணத்தை அவர்களுக்குவெளிப்படுத்
துவேன்.—யூதாவமிசத்தாரின் சிறையையும்,இஸ ௭
ரவேல்வமிசத்தாரின்சிறையையும் நீக்கி, அவர்க

(௩௧) ஏசா.௧.௪,௯. தானி.௯.௮. (௩௨) ௨.இரா.௨௩.௨௭. (௩௪) எசேக்.௮.௫,௯. (௩௫) லேவி.௰௮.௨௧. ௧.இரா. ௰௧.௩௩. (௩௭) உபா.௩௰.௩. எசேக்.௩௭.௨௧. (௩௯) எசேக்.௰௧.௰௯,௨௰. (௪௰) ஏசா.௫௫.௩. (௪௧) உபா.௩௰.௯. செப்.௩.௰௭. ஆமோ.௯.௰௫.—(௩௩. அதி. ௨.) ஏசா.௩௭.௨௬. யாத்.௰௫.௩. ஆமோ.௫.௮. ஆமோ.௯.௬. (௩) சங். ௯௧.௰௫. ஏசா.௪௮.௬. (௭) ஏசா.௧.௨௬.

ளைமீட்டுக்கொண்டு ஆதியிலிருந்ததுபோல்அவர்
௮ களைக்கட்டுவேன்.—எனக்கு விரோதமாய்க்குற்
றஞ்செய்த அவர்களுடைய எல்லாப்பாவங்களு
மறஅவர்களைச் சுத்திகரிப்பேன்; என் கட்டளை
யைமீறி எனக்குவிரோதமாய்ச்செய்த அவர்களு
டைய எல்லாப்பாவங்களையும்மன்னிப்பேன்.
௯ நான் அவர்களுக்குச்செய்யும் நன்மைகளெல்
லாவற்றையுங்கேட்கும் பூமியிலுள்ள சகலசாதி
யாருக்குள்ளும் அது எனக்குமகிழ்ச்சியும், கீர்த்
தியும், புகழ்ச்சியும், மகிமையுமாகும்: நான் அ
வர்களுக்கருளிச்செய்யும் எல்லா நன்மையும்
வாழ்வுமாகிய இவைகளினிமித்தம் அவர்கள் ப
யந்து நடுங்குவார்களென்று இஸரவேலின் தே
௰ வனாகிய யெகோவா சொல்லுகிறார்.—மனு
ஷரும் மிருகமுமில்லாமற் பாழாய்ப்போயிற்
றென்றுநீங்கள்சொல்லுகிற இந்தஸ்தானத்திலும்,
யூதாவின்நகரங்களிலும், மனுஷரும், வசிப்பா
ரும், மிருகமுமில்லாமற் பாழாய்க்கிடக்கிற யெ
௰௧ ரூஷலேமின்வீதிகளிலும்,—சந்தோஷத்தின் சத்
தமும், மகிழ்ச்சியின்சத்தமும், மணவாளனுடை
யசத்தமும்,மணவாட்டியின்சத்தமும்,யெகோ
வாவே தயாபரர்; அவருடையதயை என்று
முள்ளது: ஆதலால்சேனாபதியாகிய யெகோ
வாவை வாழ்த்துங்களென்று சொல்லுகிறவர்க
ளுடையசத்தமும், யெகோவாவின் ஆலயத்
தில் துதியென்னும்நைவேத்தியத்தையிடுகிறவர்
களுடைய சத்தமும் திரும்பவுங் கேட்கப்படு
மென்று யெகோவா சொல்லுகிறார். தேசத்
தைச் சிறையினின்றுமீட்டு, முன்போல் ஸ்தா
பிப்பேனென்று யெகோவா சொல்லுகிறார்.—
௰௨ மனுஷரும் மிருகமுமில்லாமல் பாழாய்ப்போ
னஇந்தஸ்தானத்திலும், இதைச்சேர்ந்த சகல நக
ரங்களிலும் தங்கள் மந்தைகளை இளைப்பாற்றும்
மேய்ப்பரின் வாசஸ்தானமிருக்குமென்று சேனா
௰௩ பதியாகிய யெகோவா சொல்லுகிறார்.—மலைக
ளிலிருக்கும் நகரங்களிலும்,சமபூமியிலிருக்கும்
நகரங்களிலும், தென்திசையிலுள்ள நகரங்களி
லும்,பேன்யாமீன்தேசத்திலும்யெரூஷலேமைச்
சேர்ந்த ஸ்தானங்களிலும், யூதாவின்நகரங்களி
லும் தங்களைத்தொகையிடுகிறவனுடைய கைக்
கீழ் மந்தைகள்செல்லுமென்று யெகோவா
௰௪ சொல்லுகிறார்.—இஸரவேல்வமிசத்தாருக்கும் யூ
தாவமிசத்தாருக்கும்நான்வாக்குத்தத்தம்பண்ணி
ன அந்தநன்மையை நான்நிறைவேற்றுங்காலம்
வரும்.
௰௫ அக்காலத்தில் அந்நாள்களிலே தாவீதின்வமி
சத்தில் நீதியுள்ள ஒருகிளையை முளைக்கப்பண்
ணுவேன்; அவர் தேசத்திலே நியாயத்தீர்ப்புச்
௰௬ செய்து நீதியை நடப்பிப்பார்.—அந்தநாள்
களிலே யூதா இரட்சிக்கப்படுவான், யெரூஷ
லேம் வாழ்வுபெறும்: அவருக்குச் சூட்டப்படும்
நாமம் "யெகோவா நம்முடையநீதி" என்ப
தேயென்று, யெகோவா சொல்லுகிறார்.
இஸரவேல்சந்ததியாரின்சிங்காசனத்தில் வீற் ௰௭
றிருக்கத்தக்கவன், தாவீதின்வமிசத்திலே தோன்
றாதொழியான்.—தகனபலிகளையிட்டு, போசன ௰௮
பலியைத்தகித்து, நித்தமும்பலியிடுபவன் லேவி
யராகிய ஆசாரியவமிசத்தில் தோன்றாதொழியா
னென்று யெகோவா சொல்லுகிறாரென்ப
தைச்சொல்லிற்று.
பின்பு யெகோவாவின் வாக்கு, எரேமி ௰௯
யாவிடத்தில்,—குறித்தகாலத்தில் இரவும்பகலு ௨௰
மிராதபடி, நீங்கள் பகற்காலத்தின் நியமத்தை
யும் இராக்காலத்தின்நியமத்தையும் விருதாவாக்
கக்கூடுமேயானால்,—என்தாசனாகிய தாவீதுக்கு ௨௧
அவன் சிங்காசனத்தில் அரசாளும் புத்திரனில்
லாதபடிக்கும், லேவியராகிய ஆசாரியர்எனக்கு
ஆராதனைசெய்யாதபடிக்கும், நான் அவர்களோ
டுசெய்த உடன்படிக்கையும் விருதாவாகும்.—
வானத்து நட்சத்திரங்களைஎண்ணவும், கடற்க ௨௨
ரைமணலை அளவிடவுங்கூடாததுபோல், நான்
என்தாசனாகிய தாவீதின்வமிசத்தையும் எனக்கு
ஆராதனைசெய்யும்லேவியரையும் விருத்தியடை
யப்பண்ணுவேனென்று யெகோவா சொல்
லுகிறாரென்பதைச்சொல்லிற்று.—பின்னும் யெ ௨௩
கோவாவின் வாக்கு,எரேமியாவினிடத்தில்,—
இந்தச்சனங்கள், யெகோவா தெரிந்துகொண் ௨௪
ட இவ்விரண்டு வமிசத்தாரையுந் தள்ளிவிட்டா
ரென்றுசொல்லி, என் சனங்கள் அவர்களுக்கு
முன் ஒருசாதியாராக எண்ணப்படாதபடி,அவர்
களை அவமதித்துப்பேசினதை நீ சிந்திக்கவில்லை
யா.—இரவுக்கும் பகலுக்குமுரியநியமம் ஒழிந்த ௨௫
தும், வானத்துக்கும் பூமிக்குமுரிய முறைமைக
ளை நான் ஏற்படுத்தாததுமுண்டானால்,—நான் ௨௬
யாக்கோபின்வமிசத்தையும் என்தாசனாகியதாவீ
தின்வமிசத்தையுந் தள்ளி, ஆபிரகாம், ஈசாக்கு,
யாக்கோபென்பவர்களுடையவமிசத்தாரை அர
சாள அவன் வமிசத்திலொருவரையுந் தெரிந்து
கொள்ளேன்: நான் அவர்கள்மேல் தயைசெய்து,
அவர்களைச் சிறையினின்று மீட்டுக்கொள்வே
னென்று யெகோவா சொல்லுகிறாரென்ப
தைச்சொல்லிற்று.

## ௩௪. அதிகாரம்.

௧. சிதிகியா தூரதேசத்திற்குப் போவானென்று தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௮. தங்கள் அடிமைகளைவிடுவித்த அதிபதிகள் திரும்பவும் அவர்களை அடிமைப்படுத்தல்: அந்தக்குற்றத்தினிமித்தம் அவர்கள் தூரதேசத்தில் அடிமைப்படுவார்களென்று முன்னுரைத்தல்.

பாபேலின் இராசாவாகிய நெபுகத்நெத்சரும், ௧

(௮)எசேக்.௩௬.௨௫. சக.௰௩.௧. எபி.௯.௰௩,௰௪. மீகா.௭.௰௮.(௯) ஏசா.௬௨.௭. ஏசா.௬௰.௫. (௰௧) வெளி.௰௮.௨௩. ௧.நாளா.௰௬.௮,௩௪. ௨.நாளா.௫.௰௩. எஸ்றா.௩.௰௧.சங்.௱௩௬.௧. ஏசா.௰௨.௪.லேவி.௭.௰௨.சங்.௱௭.௨௨.(௰௨)ஏசா. ௬௫.௰.(௰௩)லேவி.௨௭.௩௨.(௰௫)ஏசா.௪.௨. ஏசா.௰௧.௧. (௰௭) ௨.சாமு.௭.௰௫.௧. ௧.இரா.௨.௪. சங்.௮௯.௨௯,௩௬. லூக்.௧.௩௨,௩௩. ரோ.௰௨.௧. ௧.பேதுரு.௨.௫,௯. வெளி.௧.௬.(௨௰)சங்.௮௯.௩௭. ஏசா.௫௪.௯. (௨௧) சங்.௮௯.௩௪. (௨௨) ஆதி.௰௩.௰௬. (௨௫) ஆதி.௮.௨௨. சங்.௭௪.௰௬,௰௭. (௨௬) எஸ்றா.௨.௧.—(௩௪. அதி. ௧.) ௨.இரா.௨௫.௧,.

தன் சமஸ்தசேனைகளும், தனக்காதீனமாயிருந்த
பூமியிலுள்ள சமஸ்த இராச்சியத்தாரும் யெருஷ
லேமுக்கும் அதைச்சேர்ந்த சமஸ்த நகரங்களுக்
கும் விரோதமாயுத்தஞ்செய்தபொழுது, எரேமி
யாவுக்குக்கிடைத்த யெகோவாவின் வாக்கா
௨ னது:—இஸரவேலின் தேவனாகிய யெகோ
வா இப்படிச்சொல்லுகிறார்; நீபோய் யூதாவின்
இராசாவாகிய சிதேக்கியாவுடன்பேசி, அவனு
டன், பார், நான் இந்தநகரத்தைப் பாபேலிராசா
வின்கையிலொப்பிப்பேன், அவன் இதை அக்கி
௩ னியினாற்தகிப்பான்.—நீ அவன் கைக்குத்தப்பா
மல் பிடிக்கப்பட்டு, அவன்கையிலொப்பிக்கப்
படுவாயே; உன் கண்கள் பாபேலுடைய இரா
சாவின்கண்களைக்காணும், அவன்வாய் உன்வா
யோடேபேசும், நீ பாபேலுக்குப் போவாயென்
௪ று யெகோவா சொல்லுகிறார்.—யூதாவின்இ
ராசாவாகிய சிதேக்கியாவே, நீ யெகோவாவின்
வாக்கைக்கேள்; உன்னைக்குறித்து, யெகோ
வா, நீ கட்கத்தினாலே சாவதில்லையென்றுசொல்
௫ லுகிறார்.—நீ சமாதானத்தோடேசாவாய்; உனக்
குமுன்னிருந்த இராசாக்களாகிய உன்முன்னோ
ருக்குத் தூபமிட்டதுபோல அவர்கள் உனக்குந்
தூபமிடுவார்கள்; ஐயோ, ஆண்டவனே என்று
சொல்லி, உன்னைக்குறித்துப் புலம்புவார்கள்;
நானே இவ்வாக்கைச் சொன்னேனென்பதை
யெகோவா சொல்லுகிறாரென்று சொல்லிற்
௬ று.—அப்பொழுது யூதாவின் அரணானநகரங்களில்
லாகீசும், அசேகாவுமே மீந்திருந்தவைகள், பா
பேலுடைய இராசாவின்சேனை யூதாவின்சமஸ்
த நகரங்களிலும் மீந்திருந்த அவைகளுக்கும் யெ
ருஷலேமுக்கும்விரோதமாக யுத்தஞ்செய்தபொ
௭ ழுது,—எரேமியா தீர்க்கதரிசி, யெருஷலேமிலே
யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவிடத்தில் இவ்
வாக்குகளெல்லாவற்றையுஞ் சொன்னான்.

௮ ஒருவனும் யூதனாகிய தன் சகோதரனை அடி
மைப்படுத்தாதபடி, அவனவன் எபிரேயனாகிய
தன் பணிவிடைக்காரனையும், எபிரேயளாகிய
தன் பணிவிடைக்காரியையும் இஷ்டமாய்ப்
போகும்படி விடவேண்டுமென்று அவர்களுக்கு
௯ விடுதலை பிரசித்தப்படுத்தும்பொருட்டு,—இராசா
வாகிய சிதேக்கியா யெருஷலேமிலுள்ள சமஸ்தச
னங்களோடும் உடன்படிக்கைசெய்தபின்பு எரே
மியாவுக்குக்கிடைத்த யெகோவாவின் வாக்
௰ கு:—ஒவ்வொருவனுந் தன் தன் பணிவிடைக்கார
னையும்பணிவிடைக்காரியையும்இனி அடிமைக்
கொள்ளாமல் இஷ்டமாய்ப்போகும்படி விட
வேண்டுமென்னும் உடன்படிக்கைக்குட்பட்ட
சகலபிரபுகளும், சமஸ்தசனங்களும் அதற்குச்
செவிகொடுத்தார்கள், செவிகொடுத்து அவர்களை
௰௧ அனுப்பிவிட்டார்கள்.—பின்பு அவர்கள் இஷ்ட
மாய்ப்போகும்படிவிட்ட பணிவிடைக்காரரை
யும் பணிவிடைக்காரிகளையுந்திரும்பிவரச்செய்
து, மறுபடியும் பணிவிடைக்காரராகவும்பணிவி
டைக்காரிகளாகவும் அடிமைப்படுத்திக்கொண்
டார்கள்.—ஆதலால் யெகோவாவினின்று ௰௨
யெகோவாவின்வாக்கு எரேமியாவினிடத்
தில்,—இஸரவேலின் தேவனாகிய யெகோ ௰௩
வா, நான் உங்கள் பிதாக்களைச் சிறைச்சாலையா
கிய எகிப்துதேசத்தினின்று புறப்படப்பண்ணி
னகாலத்தில்,—நீங்கள் ஒவ்வொருவரும்உங்களுக் ௰௪
குவிற்கப்பட்ட எபிரேயனாகிய உங்களுங்கள் ச
கோதரனைஅனுப்பிவிடவேண்டும்; அவன்உங்க
ளிடத்தில் ஆறுவருஷஞ்சேவித்தபின்புஏழாம்வ
ருஷத்தின்முடிவில் அவன் உங்களைவிட்டுஇஷ்
டமாய்ப்போகும்படி விடுங்களென்று சொல்லி
அவர்களோடே உடன்படிக்கைசெய்தேன்: உங்
கள் பிதாக்களோ என்வாக்கைச் சிந்திக்கவுமில்
லை, அதற்குச்செவிகொடுக்கவுமில்லை.—நீங்கள் ௰௫
ஒவ்வொருவரும்உங்களுங்கள்அயலானுக்குவிடு
தலையைப் பிரசித்தப்படுத்தி, அப்பொழுது சீர்ப்
பட்டிருந்தீர்கள்; என்பார்வைக்குச்செவ்வையா
னதைச்செய்து, என்நாமந்தரிக்கப்பட்டஆலயத்
தில் என்சந்நிதியில் இதற்காக உடன்படிக்கை
பண்ணினீர்கள்.—நீங்கள்மாறி, தன் இஷ்டமாய்ப் ௰௬
போகும்படி விடுதலையாக்கின உங்களுங்கள் ப
ணிவிடைக்காரனையும், உங்களுங்கள் பணிவி
டைக்காரியையுந் திரும்பிவரச்செய்து, மறுபடி
யும் பணிவிடைக்காரராகவும் பணிவிடைக்காரி
களாகவும் அடிமைப்படுத்தி, என்நாமத்தை அவ
மதித்தீர்களென்று சொல்லுகிறார்.—நீங்கள் உங் ௰௭
களுங்கள் சகோதரனுக்கும், உங்களுங்கள் அய
லானுக்கும் விடுதலையைப் பிரசித்தப்படுத்தும்ப
டி எனக்குச்செவிகொடுக்கவில்லையென்று யெ
கோவா சொல்லுகிறார்: பாருங்கள், நான்கட்
கத்திற்கும், கொள்ளைநோய்க்கும், பஞ்சத்திற்கும்
ஏற்றவிடுதலையை உங்களுக்கு விரோதமாய்ப்பி
ரசித்தப்படுத்துகிறேன்; நீங்கள் பூமியிலுள்ளசக
ல இராச்சியங்களிலுஞ் சிதற அடிக்கப்படும்படி
உங்களை ஒப்பிப்பேன்.—கன்றை இரண்டுதுண் ௰௮
டமாய்க்கண்டித்து, அத்துண்டுகளுக்கு இடையி
லேசென்று, என்சந்நிதியிற்பண்ணின உடன்ப
டிக்கையின்வாக்குகளை நிறைவேற்றாமல் என்உ
டன்படிக்கையைமீறின,—யூதாவின்பிரபுகளும், ௰௯
யெருஷலேமின்பிரபுகளும், அண்ணகர்களும்,
ஆசாரியர்களும், கன்றின்துண்டுகளுக்கிடையிற்
சென்ற தேசத்தின் சகல சனங்களுமாகிய—
இம்மனிதரை, நான் அவர்கள்சத்துருக்களின்கை ௨௰
யிலும் அவர்களுடைய பிராணனைச் சேதிக்கவ
கைதேடுகிறவர்களின்கையிலும் ஒப்பிப்பேன்:
அவர்களுடையபிணங்கள் ஆகாயத்துப்பறவை
களுக்கும், பூமியின் மிருகங்களுக்கும் இரையா
கும்.—யூதாவின்இராசாவாகியசிதேக்கியாவையும், ௨௧

(௫) ௨.நாளா.௰௬.௰௪. தானி.௨.௪௬. (௬) ௨.இரா.௰௮.௰௩. ௨.இரா.௰௩.௮. ௨.நாளா.௰௧.௫,௩. (௮) யாத்.௨௧.௨. லேவி.௨௫.௰. நிகி.௫.௰௧. லேவி.௨௫.௩௯—௪௬. (௰௧) வச.௨௧. (௰௪) யாத்.௨௧.௨. யாத்.௨௩.௰. ௨பா.௰௫.௰௨. (௰௫) ௨.இரா.௨௩.௩. நிகி.௰.௨௩. அதி.௭.௰. (௰௬) யாத்.௨௰.௭. லேவி.௰௩.௰௨. (௰௭) மத்.௭.௨. கலா.௬.௭. யாக். ௨.௰௩. ௨பா.௨௮.௨௫,௬௪. (௰௮) ஆதி.௰௫.௰,௰௭.

அவனுடைய பிரபுகளேயும், அவர்கள்சத்துருக்க
ளின்கையிலும், அவர்களுடையபிராணனைச்சே
திக்கவகைதேடுகிறவர்களின்கையிலும்,உங்களே
விட்டு நீங்கின பாபேலுடைய இராசாவின் சே
னையின்கையிலும்ஒப்பிப்பேனென்று யெகோ
௨௨ வா சொல்லுகிறார்.—பாருங்கள், நான்கட்டளே
யிட்டு அவர்கள் இந்தநகரத்திற்குத்திரும்பிவரும்
படிசெய்வேன்; அவர்கள் இதற்குவிரோதமாயுத்
தஞ்செய்து, இதைப்பிடித்து, அக்கினியினால் த
கிப்பார்கள்: யூதாவின்நகரங்களில்குடியிருப்பா
ரில்லாமல் அவைகளேப்பாழாக்குவேனென்பதை
யெகோவா சொல்லுகிறாரென்றுசொல்லிற்று.

## ௩௫. அதிகாரம்.

௧. ரேகாபியர் தங்கள்முன்னேருடையகட்டளே
யைப்பாலித்தல்: ௰௨. யூதேயர் தங்கள் தேவனு
டைய கட்டளேயைமீறல்: ௰அ. ரேகாபியர்தங்
கள்முன்னேரின்கட்டளேயைப் பாலித்ததினி
மித்தம் ஆசீர்வாதம்பெறல்.

யூதாதேசத்து இராசாவான யோஷியாவின் புத்
திரனுகியயோயாக்கீமுடைய இராசரிககாலத்தில்,
எரேமியாவுக்குக்கிடைத்த யெகோவாவின்
௨ வாக்கு:—நீ,ரேகாபியருடையவீட்டுக்குப்போய்,
அவர்களோடேபேசி, அவர்களே யெகோவா
வின் ஆலயத்தின்அறைகளிலொன்றிலேகொண்
டுவந்து,திராட்சரசத்தைஅவர்களுக்குக்குடிக்கக்
௩ கொடுவென்று சொல்லிற்று.—அப்பொழுதுநான்
யசனியாவின் பௌத்திரனும் எரேமியாவின்புத்
திரனுமாகிய கபத்சினியாவையும், அவனுடைய
சகோதரரையும், அவனுடைய சகல புத்திரரை
யும், ரேகாபியருடைய வீட்டாரனைவரையும் அ
௪ ழைத்து,—யெகோவாவுடைய ஆலயத்தின்
பிரபுகளுடைய அறைக்கருகிலும்,வாசற்காவலா
ளனைஷல்லுமின்புத்திரனுகியமாசெயாவின்அ
றையின்மேலுமுள்ள இக்தலியாவின் புத்திரனும்
தேவனுடைய தாசனுமாகிய ஆனனின்புத்தி
௫ ரருடையஅறையில் அவர்களேக்கூட்டிவந்து,-தி
ராட்சரசத்தினால்நிறைந்தசாடிகளேயும்,பாத்திரங்
களேயும் ரேகாப்வமிசத்தாருக்குமுன்பாக நான்
வைத்து, அவர்களேநோக்கி, திராட்சரசத்தைக்
௬ குடியுங்களென்றேன்.—அதற்கு அவர்கள் நாங்
கள் திராட்சரசத்தைக் குடிக்கிறதில்லை: ரேகாப்
பின்புத்திரனும் எங்கள்முன்னேனுமாகிய யோ
னதாப் எங்களேநோக்கி, நீங்கள்பரதேசிகளாய்த்
தங்குகிற தேசத்தில் நெடுநாளாய்ச் சீவிக்கும்ப
௭ டி,—நீங்களும் உங்கள்சந்ததியாரும் ஒருபொழு
துந் திராட்சரசத்தைக் குடியாமலும், வீட்டைக்
கட்டாமலும், விதையைவிதைக்காமலும்,திராட்
சரசத்தோட்டங்களே நாட்டாமலும், அவைக
ளேச்சுதந்தரித்துக்கொள்ளாமலும், உங்கள்ஆயுள்
பரியந்தங் கூடாரங்களிலே வாசம்பண்ணுங்க
௮ ளென்றுகட்டளேயிட்டான்.—அப்படியே எங்க
ளுடைய முன்னேனும் ரேகாபின் புத்திரனு
மாகிய யோனதாப் கட்டளேயிட்ட வாக்கெல்
லாவற்றிற்கும் அமைந்து, நாங்களும், எங்களு
டைய மனைவியரும், எங்களுடைய புத்திரரும்,
எங்களுடையபுத்திரிகளும் எங்களெல்லாநாள்க
ளிலுந் திராட்சரசங்குடியாமலும்,—நாங்கள் வ ௯
சிக்கும்படி வீடுகளேக்கட்டாமலும், திராட்சத்
தோட்டத்தையாகிலும், வயல்வெளியையாகி
லும், விதையையாகிலுங் கொள்ளாமலும்,—கூ ௰
டாரங்களிலேதங்கி, எங்கள்பிதாவாகியயோன
தாப்கட்டளேயிட்டதெல்லாவற்றிற்கும் அமைந்
துநடந்துவந்தோம்.—ஆனாலும் பாபேலின்இரா ௰௧
சாவாகியநெபுகத்நெத்சார் இந்ததேசத்திலேவந்
தபொழுது, நாங்கள் கல்தேயரின் சேனைக்கும்,
ஸீரியருடையசேனைக்கும் பயந்ததினால், யெரு
ஷலேமுக்குப் போவோம்வாருங்களென்றோம்:
அப்படியே நாங்கள்யெருஷலேமிலேவாசமாயி
ருக்கிறோமென்றார்கள்.

பின்பு யெகோவாவின் வாக்கு எரேமி ௰௨
யாவிடத்தில்,—நீ போய், யூதாசனங்களேயும் ௰௩
யெருஷலேமியரையும் நோக்கி, நீங்கள் என்
னுடைய வாக்குகளேச்சிந்திக்கும்படி என் உப
தேசத்தை அங்கிகரிக்கமாட்டீர்களோவென்று
யெகோவா சொல்லுகிறார்.—திராட்சரசங்கு ௰௪
டிக்கலாகாதென்று ரேகாபின்புத்திரனுகிய யோ
னதாப் தன் புத்திரர்களுக்குக் கட்டளேயிட்ட
வாக்கு நிறைவேறுகின்றது; அவர்கள் இந்நாள்
வரைக்கும் அதைக்குடியாமல் தங்கள்பிதாவின்
கட்டளேக்கமைந்து நடந்துவருகிறார்கள்: நா
னும் உங்களிடத்திற்பேசிச் சாக்கிரதையோடே
உங்களுக்குப்போதித்துவந்தேன், ஆனாலும் நீங்
கள் எனக்குச்செவிகொடுக்கவில்லை; நான்சாக்
கிரதையோடே என்தாசராகிய தீர்க்கதரிசிகள்ச
மஸ்தரையும் உங்களிடத்திலனுப்பி,—நீங்களனை ௰௫
வரும் உங்களுங்கள் தீமையானவழிகளேவிட்டுத்
திரும்பி, உங்கள் நடைகளேச் செவ்வைப்படுத்
துங்கள், அந்நியதேவர்களேச் சேவிக்கும்படி அ
வர்களேப்பின்பற்றாதிருங்கள்,அதினால்நான்உங்
களுக்கும் உங்கள்முன்னேருக்கும் அளித்ததே
சத்திலே வசிப்பீர்களென்று சொல்லுவித்தேன்:
ஆனாலும் நீங்கள் எனக்குச்செவிகொடுக்கவுமில்
லை, சிந்திக்கவுமில்லை.—ரேகாபின் புத்திரனு ௰௬
கிய யோனதாபின்சந்ததியார் தங்கள்பிதா தங்க
ளுக்கிட்டகட்டளேயைக்காத்துநடந்தும்,இந்தச்
சனங்கள்எனக்குச்செவிகொடுக்கவில்லை என்று
இஸரவேலின் தேவனும் சேனைபதியுமாகிய
யெகோவா சொல்லுகிறார்.—நான்அவர்களி ௰௭
டத்திற்பேசியும்அவர்கள்கேட்கவில்லை; நான்அ
வர்களேக்கூப்பிட்டும் அவர்கள் உத்தரந்தரவில்
லை; இதினிமித்தம் நான்யூதாவின்மேலும், யெ
ருஷலேமியரனைவர்மேலும் அவர்களுக்கு வி
ரோதமாகநான்சொல்லியசகலதீமையையும்வரு
விப்பேன் பாருங்களென்று, இஸரவேலின் தே
வனும் சேனைபதியான தேவனுமாகிய யெ
கோவா சொல்லுகிறாரென்பதைச்சொல்லிற்று.

(௩௫. அதி.௨.) உ.இரா.ம.௰௫. க.நாளா.உ.௫௫. க.இரா.கூ.௫.(ச)உ.இரா.௰௨.௧. உ.இரா.௨௫.௰அ. க.நாளா.௧.௰அ, ௰௧. (ச) உ.இரா.ம.௰௫. யாத்.உ௰.௰௨. எபே.௬.௨,௩. (௰ச) உ.நாளா.௩௬.௰௫. (௰எ) நீதி.௧.௨௪. ஏசா.௬௫.௰௨.

௰௮ பின்னும் எரேமியா ரேகாபியரின் வீட்டா
ரைநோக்கி, நீங்கள் உங்கள்பிதாவாகிய யோனு
தாபின் கட்டளைக்கமைந்து, அவனுடைய ச
மஸ்தவிதிகளையுங்காத்துநடந்து,அவன்கட்டளை
யிட்டயாவற்றின்படிக்கும் செய்தீர்களென்று இ
ஸரவேலின் தேவனும் சேனைபதியுமாகிய யெ
௰௯ கோவா சொல்லுகிறார்.—ஆதலால் இஸரவே
லின் தேவனும் சேனைபதியுமாகிய யெகோ
வா, ரேகாபின்புத்திரனாகிய யோனதாப்பின்வ
மிசத்தில் சதாகாலமும்எனக்குமுன்பாக நிற்கத்
தக்கபுருஷன் இல்லாமற்போகானென்று சொல்
லுகிறாரென்றான்.

## ௩௬. அதிகாரம்.

௧.பத்திரமெழுதும்படி தேவன் கட்டளையிடல்: ௪. அதைவாசிக்கும்படி எரேமியா பாருக்குக் கட்டளையிடல்: ௯. பாருக் அதிபதிகளிடத்தில் அதைவாசித்தல்: ௰௧. மீகாயா பாருக்கின் வாக்கைஅதிபதிகளுக்குத்தெரிவித்தல்: ௨௰. இராசா ஆளனுப்பிப்பத்திரத்தையெடுத்து வாசிக்கக்கேட்டு,அதைத்தகித்தல்: ௨௭. வேறொருபத்திரத்தை எழுதும்படி எரேமியா கட்டளைபெறல்: எரேமியா இராசாவுக்குவருந் தண்டனையைப்பிரசித்தப்படுத்தல்: ௩௨. பாருக்குக்கு இரண்டாம்பத்திரத்தை எழுதல்.

யூதாவின் இராசாவாகிய யோஷியாவின் புத்தி
ரனான யோயாகீம் அரசாண்ட நாலாம்வருஷத்
தில், எரேமியாவுக்குக்கிடைத்த யெகோவா
௨ வின் இவ்வாக்கு:—நீ ஒருசுருட்பத்திரமெடுத்து,
யோஷியாவின்காலத்திலே நான் உன்னுடன்பே
சினநாள்முதல்இந்நாள்வரைக்கும் இஸரவேலுக்
கும், யூதாவுக்கும், மற்றச் சகலதேசத்தாருக்கும்
விரோதமாய் நான் உன்னிடத்திற்சொல்லியஎல்
௩ லாவாக்குகளையும் அதில் எழுது.—யூதாவமிசத்
தார் நான் அவர்களுக்குச்செய்ய நினைத்திருக்கி
றதீமையெல்லாவற்றையுங்குறித்துக் கேட்டறிந்
து, தங்கள் அக்கிரமத்தையும் பாவத்தையும்நான்
மன்னித்தருளும்படி தங்கள் தீமையானவழியை
௪ விட்டு நீங்கவுங்கூடுமென்றுசொல்லிற்று.—அப்
பொழுது எரேமியா நெரியாவின் புத்திரனாகிய
பாருக்கை அழைத்தான்: யெகோவா எரேமி
யாவிடத்தில்சொல்லிய சகலவாக்குகளையும் அ
வன்வாயால்சொல்ல, பாருக் ஒருசுருட்பத்திரத்
௫ தில் எழுதினான்.—பின்பு எரேமியா பாருக்கை
நோக்கி, நான் அடைக்கப்பட்டிருக்கிறேன்; அ
தினால் நான் யெகோவாவின் ஆலயத்துக்
௬ குப்போகக்கூடாது.—ஆதலால் நீபோய், என்
வாயால்சொல்ல நீ எழுதினசுருட்பத்திரத்திலுள்
ள யெகோவாவின் வாக்குகளை யெகோ
வாவின் ஆலயத்தில் உபவாசதினத்தில்சனங்க
ளுடைய செவிக்கேறவாசிப்பதுமன்றி, தங்கள்
தங்கள் நகரங்களினின்றுவருஞ் சகல யூதர்களு
௭ டையசெவிக்கேறவும் அவைகளைவாசி:—அவர்
கள் யெகோவாவின் சந்நிதியில்பிரார்த்தனை
பண்ணி, தங்கள் தீமையானவழியைவிட்டொரு
வேளைதிரும்புவார்கள்: யெகோவா இந்தச்ச
னங்களுக்குவிரோதமாகமகாகோபமும், உக்கிர
முமுள்ளவாக்குகளைப் பிரசித்தப்படுத்தியிருக்கி
றாரென்றான்.—பின்புநெரியாவின்புத்திரனாகிய ௮
பாருக், எரேமியா தீர்க்கதரிசிதனக்குக்கட்டளை
யிட்ட யாவற்றின்படிக்குஞ் செய்து, பத்திரத்தி
லுள்ள யெகோவாவின் வாக்குகளை யெ
கோவாவின் ஆலயத்திலே வாசித்தான்.—யூ ௯
தாவின் இராசாவான யோஷியாவின் புத்திரனா
கிய யோயாகீமின் ஐந்தாம்வருஷத்தின் ஒன்ப
தாம்மாதத்தில், யெருஷலேமியரனைவரும் யூதா
நகரங்களினின்று யெருஷலேமுக்கு வந்தசமஸ்
தசனங்களும் யெகோவாவின் சந்நிதியில்
உபவாசஞ் செய்யவேண்டுமென்பது கூறப்பட்
டது.—அப்பொழுது பாருக்கு, யெகோவா ௰
வின் ஆலயத்தின் மேல்பிராகாரத்திலே, யெ
கோவாவின் ஆலயத்தின் புதுவாசற்பிரவே
சஸ்தானத்தில், இலேககனாகிய ஷாபானுடைய
புத்திரனான கிமரியாவின் அறையில், எல்லாச்
சனங்களின் செவிக்குமேறப் பத்திரத்திலுள்ள
எரேமியாவின் வாக்குகளைவாசித்தான்.
ஷாபானுடைய பௌத்திரனும் கிமரியாவின் ௰௧
புத்திரனுமாகிய மீகாயா பத்திரத்திலுள்ள யெ
கோவாவின் வாக்குகளையெல்லாம்வாசிக்கக்
கேட்டு,—இராசாவின்வீட்டுக்குப்போய்,இலேக ௰௨
கனுடைய அறையிற்பிரவேசித்தான்: அங்கே
பிரபுகளான இலேககனாகிய இலீஷாமாவும்,ஷி
மாயியாவின்புத்திரனாகிய திலாயாவும், அக்போ
ரின்புத்திரனாகிய எல்னாதானும், ஷாப்பானின்
புத்திரனாகிய கிமரியாவும், அனனியவின்புத்திர
னாகிய சிதிகியாவும், மற்றெல்லாப் பிரபுகளுமி
ருந்தார்கள்.—அப்பொழுது பாருக்சனங்களின் ௰௩
செவிக்கேறும்படி வாசிக்கையில், தான்கேட்ட
பத்திரத்திலுள்ள வாக்குகள் யாவற்றையும் மீகா
யா தெரிவித்தான்.—ஆதலால் அந்தப் பிரபு ௰௪
கள் சமஸ்தரும் கூஷியின்புத்திரனானஷெலேமி
யாவின்பௌத்திரனும் நிதனியாவின் புத்திரனு
மாகிய யெகூதியைப் பாருக்கிடத்தில்அனுப்பி,
சனங்களின்செவிக்கேறும்படி, நீ வாசித்தசுருட்
பத்திரத்தை உன்கையிற் கொண்டுவாவென்று
சொல்லுவித்தார்கள். அப்படியே நெரியாவின்
புத்திரனாகிய பாருக் அந்தச் சுருட்பத்திரத்தைத்
தன்கையிற்கொண்டுஅவர்களிடத்தில்வந்தான்.—
அவர்கள் அவனைநோக்கி, நீ உட்காந்து எங்க ௰௫
ளுடைய செவிக்கேற வாசியென்று சொல்ல,
பாருக் அவர்கள்கேட்க வாசித்தான்.—அப்பொ ௰௬
ழுது அந்தவாக்குகளெல்லாவற்றையுங்கேட்டுப்
பயந்து, ஒருவரை ஒருவர்பார்த்து, பாருக்கை
நோக்கி, இந்தவாக்குகளெல்லாவற்றையும் நாங்
கள் நிச்சயமாக இராசாவுக்குத் தெரிவிப்போ
மென்றார்கள்.—பின்புஅவர்கள்பாருக்கைநோக் ௰௭
கி,அவன்வாய்சொல்ல, நீ இவ்வாக்குகளையெல்
லாம்எவ்விதமாய்எழுதினாய்,எங்களுக்குச்சொல்
லென்றுகேட்க,—பாருக் அதற்குத்தரமாக, அ ௰௮

(௩௬. அதி. ௨.) ஏசா.௮.௧. எசேக்.௨.௯. சக.௫.௧.(௩) அதி.௰௮.௮. யோனா.௩.௮. (௬) லேவி.௰௬.௨௯. அப்.௨௭.௯.

வந்தனதுவாயினால்இவ்வாக்குகளையெல்லாமெ
னக்குச்சொல்ல,நான் மையினாலேபத்திரத்திலெ
யகூ ழுதினேனென்றான்.—அப்பொழுது பிரபுகள்
பாருக்கைநோக்கி, நீயும் எரேமியாவும்போய் ஒ
ளித்திருங்கள்; நீங்கள் இருக்குமிடத்தை ஒருவ
ரும் அறியப்படாதென்றார்கள்.
உய பின்பு அவர்கள் இலேககனாகிய இலீஷாமா
வின் அறையிலேசுருட்பத்திரத்தை வைத்துவிட்
டு,பிராகாரத்தில் இராசாவிடத்திலேபோய், இரா
சாவின்செவிக்கேறும்படி வாக்குகளையெல்லாந்
உக தெரிவித்தார்கள்.—அதினால் இராசாஅந்தச்சுருட்
பத்திரத்தைக்கொண்டுவரும்படி யெகூதியை அ
னுப்ப, யெகூதி அதை இலேககனாகிய இலீஷா
மாவின்அறையினின்று எடுத்துக்கொண்டுபோ
னான். யெகூதிஇராசாவின்செவிகளிலும், இரா
சாவின்சமீபத்தில்நின்ற சமஸ்தபிரபுகளின்செ
உஉ விகளிலும் ஏறும்படிஅதைவாசித்தான்.—ஒன்ப
தாம்மாதமாகியஅந்தச்சமயத்தில் இராசாசீதளகா
லத்தின்அறையிலிருந்தான்: அவனுக்குமுன்பா
உ௩ கக் கணப்பெரிகிறதாயிருந்தது.—யெகூதி மூன்
றுநாலு ஒற்றைகளைவாசித்தபின்பு, இராசா இ
லேககனுடைய கத்தியினால் அந்தச்சுருட்பத்தி
ரத்தைக்கண்டதுண்டமாக்கி, சுருள்முழுவதும்
கணப்பிலுள்ளஅக்கினியினால் வெந்துதீரும்படி
உச கணப்பிலுள்ள அக்கினியில் எறிந்தான்.—இந்
தவாக்குகளைக்கேட்ட இராசாவாயினும், அவன்
தாசரில்ஒருவனாயினும்பயப்படவில்லை, தங்கள்
உரு தங்கள்வஸ்திரங்களைக் கிழிக்கவுமில்லை.—எல்
நாதானும், திலாயாவும், கிமரியாவும் அந்தச்சு
ருட்பத்திரத்தை எரிக்காதபடிக்கு இராசாவை
வேண்டிக்கேட்டும் அவன்அவர்களுக்குச்செவி
உசா கொடுக்கவில்லை.—பாருக்கென்னும் இலேககனை
யும் எரேமியா தீர்க்கதரிசியையும்பிடிக்கும்படி,
இராசா இராசபுத்திரனாகிய இரகமேலுக்கும்,
அஸ்ரியேலின் புத்திரனாகிய செராயாவுக்கும்,
அப்தேயேலின் புத்திரனாகிய ஷெலேமியாவுக்
குங்கட்டளையிட்டான்:ஆனாலும் யெகோவா
அவர்களைமறைத்தார்.
உஎ இராசாஅந்தச்சுருட்பத்திரத்தையும்,அதிலே
பாருக்எரேமியாவின் வாயாற்சொல்ல எழுதியி
ருந்த வாக்குகளையுந் தகித்தபின்பு, யெகோ
உஅ வாவின் வாக்கு எரேமியாவினிடத்தில்,—நீ தி
ரும்பவும்வேறொருசுருட்பத்திரத்தைஎடுத்து, அ
தில் யூதாவின்இராசாவாகிய யோயாக்கீம்சுட்டெ
ரித்த முதலாஞ் சுருட்பத்திரத்திலிருந்த முந்தின
உகூ வாக்குகளையெல்லாம் எழுது.—பின்பு நீ யூதா
வின்இராசாவாகியயோயாக்கீமைநோக்கி, பாபே
லின் இராசா நிச்சயமாகவந்து, இந்தத்தேசத்தை
நாசப்படுத்தி,இதினின்று மனுஷரையும்மிருகங்
களையும் ஒழியப்பண்ணுவானென்று நீ எழுதின
தேதென்றுசொல்லி, அந்தச் சுருட்பத்திரத்தைச்
சுட்டெரித்தாயென்பதை யெகோவாசொல்
௩ய லுகிறார்.-ஆதலால் யூதாவின் இராசாவாகிய யோ
யாக்கீமைக்குறித்து,யெகோவா,தாவீதின் சிங்
காசனத்தின்மேல் வீற்றிருக்க அவன் வமிசத்
தில் ஒருவனுமிரான்: அவனுடையபிரேதம் பக
லின்வெயிலிலும், இரவின் உறைந்தபனியிலும்
எறியப்படும்.—நான் அவனையும், அவனுடைய ௩க
வமிசத்தையும், அவனுடைய தாசரையும் அவர
வர் அக்கிரமத்தினிமித்தந் தண்டித்து, அவர்கள்
மேலும், யெருஷலேமியர்மேலும், யூதாவின் பு
ருஷர்மேலும் நான் அவர்களுக்கு விரோதமாகச்
சொல்லியதும்அவர்கள் கேளாததுமாகிய சகலதீ
மையையும் வருவிப்பேனென்று யெகோவா
சொல்லுகிறாரென்பதைச்சொல்லச்சொல்லிற்று
அப்பொழுது எரேமியா வேறொருசுருட்பத் ௩உ
திரத்தைஎடுத்து, நெரியாவின் புத்திரனாகிய பா
ருக்கென்னும் இலேககனிடத்தில் அதைக்கொ
டுத்தான்; இவன் யூதாவின் இராசாவாகிய யோ
யாக்கீம் அக்கினியினால் சுட்டெரித்த புத்தகத்தி
லுள்ள வாக்குகளையெல்லாம் எரேமியா வாயாற்
சொல்ல அதில்எழுதினான்: அவைகளுமன்றி,
அவைகளைப்போல இன்னும் அநேகவாக்குக
ளுங் கூட்டப்பட்டன.

## ௩எ. அதிகாரம்.

க. கல்தேயர் நீங்கியபின்பு, தேவனிடத்தில் பிரார்த்திக்கும்படி எரேமியாவைச் சிதேக்கியா வேண்டல்: ரு. கல்தேயர் திரும்பியெருஷலேமைத்தகிப்பார்களென்றுதீர்க்கதரிசனஞ்சொல்லல்: யக. அதினிமித்தம் எரேமியா சிறைச்சாலையில்கட்டப்படல்: யசா. எரேமியா இராசாவுடன் சம்பாஷித்துச் சகாயங்கிடைக்கும்படி வேண்டல்.

பாபேலின் இராசாவாகியநெபுகத்நெத்சர்யோ க
யாக்கீமின் புத்திரனாகிய கோனியாவின் பட்டத்
திற்கு யூதாதேசத்தில் இராசாவாக ஏற்படுத்திய
யோஷியாவின் புத்திரனாகிய சிதேக்கியா அரசாண்
டான்.—அவனும், அவன்தாசரும், தேசத்தின் உ
சனங்களும் யெகோவா எரேமியாதீர்க்கதரி
சியைக்கொண்டுசொல்லிய வாக்குகளுக்குச்செ
விகொடுக்கவில்லை.—சிதேக்கியா இராசா ஷெலே ௩
மியாவின் புத்திரனாகிய யெகுக்காலையும், மாசெ
யாவின் புத்திரனாகிய செப்பனியாவென்னும் ஆ
சாரியனையும் எரேமியாதீர்க்கதரிசியினிடத்தில்,
நம்முடைய தேவனாகிய யெகோவாவை
நோக்கி, எங்கள் நிமித்தம் விண்ணப்பம் பண்
ணவேண்டுமென்று சொல்லச்சொல்லி அனுப்பி
னான்.—அப்பொழுது அவர்கள் எரேமியாவைச் ச
சிறைச்சாலையிலடைக்காததினால், அவன் சனங்
களுக்குள்ளே போக்குவரவு செய்திருந்தான்.—
யெருஷலேமை வளைத்த கல்தேயர் பார்வோனு ரு
டைய சேனை எகிப்தினின்று புறப்பட்டதென்
னுஞ் சமாசாரத்தைக் கேள்விப்பட்டபொழுது,
அவர்கள் யெருஷலேமைவிட்டுப்போனார்கள்.
அப்பொழுது யெகோவாவின் வாக்கு எ சா
ரேமியா தீர்க்கதரிசியுடனே,—என்னிடத்தில் எ

(உஉ) ஆமோ.௩.யரு. (உச) உ.இரா.உஉ.யக. எசா.௩சா.உஉ. எசா.௩எ.க.—(௩எ. அதி. க.) உ.இரா.உச.யஎ. உ.நாளா.௩சா.ய. (உ) உ.நாளா.௩சா.யஉ,யச. (ரு) உ.இரா.உச.எ. எசேக்.யஎ.யரு. அதி.௩ச.உக.

உசாவும்படிக்கு உங்களை என்னிடத்தில்அனுப்
பிய யூதாவின் இராசாவைநோக்கி, பார், உங்க
ளுக்குத் துணைசெய்யவந்தபார்வோனுடையசே
னை தன்சுயதேசமாகிய எகிப்துக்குத் திரும்பிப்
௮ போம்.—கல்தேயர்திரும்பிவந்து இந்த நகரத்திற்
கு விரோதமாக யுத்தஞ்செய்து, இதைப்பிடித்து,
அக்கினியினால் எரிப்பார்களென்று இஸ்ரவே
லின் தேவனாகிய யெகோவா சொல்லுகி
௯ றார்.—கல்தேயர்நிச்சயமாய் எங்களைவிட்டுப்போ
வார்களென்றுசொல்லி, நீங்கள் உங்களைமோசப்
படுத்தாதிருங்கள்: அவர்கள்போகமாட்டார்கள்.-
௰ நீங்கள் உங்களுக்கு விரோதமாக யுத்தம்பண்ணு
கிற கல்தேயருடைய சமஸ்தசேனையிலும் உங்க
ளால் வெட்டுண்டு காயப்பட்ட மனிதர்மாத்தி
ரம் அவர்களில் மீந்திருந்தாலும், இவர்களுந் தங்
கள் தங்கள் கூடாரங்களிலெழுந்து, அக்கினியி
னால்இந்தநகரத்தைத்தகிப்பார்களென்பதாக யெ
கோவா சொல்லுகிறாரென்பதைச்சொல்லுங்க
ளென்றது.
௰௧ பார்வோனுடைய சேனைக்கு அஞ்சி,கல்தேய
ரின் சேனை யெருஷலேமினின்று புறப்பட்ட
௰௨ பொழுது,—எரேமியாசனங்களுக்குள் தன்சுதந்
தரத்தின் பங்கைப் பெறும்படியாகப் பேன்யா
மீன்தேசத்திற்குப்போகிறதற்கு யெருஷலேமை
௰௩ விட்டு நீங்கினான்.—அவன் பேன்யாமீன் வாச
லிலிருக்க, அவ்விடத்திலுள்ள வாசற்காவலாள
ரில்அனனியவின்பௌத்திரனும், ஷெலேமியா
வின்புத்திரனுமாகியஇரீயாவென்னும் நாமத்தை
யுடையவொருபிரதானி எரேமியாதீர்க்கதரிசியைப்
பிடித்து, நீ கல்தேயர்பட்சத்தைச்சாருகிறாயென்
௰௪ றுசொல்ல,—எரேமியா, அது பொய்; நான் கல்
தேயர்பட்சத்தைச்சாருகிறதில்லையென்றான். ஆ
னாலும் இரீயா எரேமியாவுக்குச் செவிகொடா
மல், அவனைப்பிடித்து, அவனைப்பிரபுகளிடத்
௰௫ தில்கொண்டுபோனான்.—இதினிமித்தம்பிரபுகள்
எரேமியாவின்மேல்கோபங்கொண்டு அவனைஅ
டித்து, இலேககனாகிய யோனதானுடைய வீட்
டில்அவனைச்சிறைப்படுத்தினார்கள்: அவர்கள்அ
தைச்சிறைச்சாலையாக்கியிருந்தார்கள்.
௰௬ எரேமியாஇருட்டறைகளிலும் நிலவறைகளி
லும் பிரவேசித்தான், நெடுநாள் எரேமியா அங்
௰௭ கே தங்கினபின்பு,—சிதிகியா இராசா ஆளனுப்
பி அவனைவரச்செய்து, இராசாதன்வீட்டில் இர
கசியமாய் அவனை நோக்கி, யெகோவாவி
னால் வாக்குண்டோவென்றுகேட்க, எரேமியா
உண்டு, பாபேல் இராசாவின் கையில்நீர்ஒப்பிக்
௰௮ கப்படுவீரென்றான்.—பின்னும் எரேமியாசிதிகி
யாஇராசாவைநோக்கி, நீங்கள் என்னைச்சிறைச்
சாலையில் வைக்கும்படிக்கு நான் உமக்கும், உம்
முடையபணிவிடைக்காரருக்கும், இந்தச்சனங்
௰௯ களுக்கும்என்னகுற்றஞ்செய்தேன்.-பாபேலின்
இராசாஉங்களுக்கும்இந்தத்தேசத்திற்கும்விரோ
தமாய்வரமாட்டானென்று உங்களிடத்தில் தீர்க்
கதரிசனஞ்சொல்லியதீர்க்கதரிசிகள் இப்பொழு
து எங்கே.—ஆதலால்என்ஆண்டவனே,இராசா உ௰
வே, இலேககனாகிய யோனதானின் வீட்டுக்கு
நான்திரும்பிப்போகவிடாதிரும்;நான்சாவேன்,
என் பிரார்த்தனையை நீர்அங்கிகரிக்கும்படி உம்
மைவேண்டுகிறேனென்றான்.—அதினால் சிதிகி உ௧
யா இராசா எரேமியாவைச் சிறைச்சாலையின்பி
ராகாரத்தில்வைக்கவும், நகரத்தில்அப்பம் ஒழியு
மட்டுந் தினமும் அப்பஞ்சுடுகிறவர்களின்வீதியி
னின்று அவனுக்கு அப்பத்துண்டுகொடுக்கவுங்
கட்டளையிட்டான். இவ்விதமாய் எரேமியா சி
றைச்சாலையின்பிராகாரத்தில் தங்கினான்.

## ௩௮. அதிகாரம்.

௧. எரேமியா மல்கியாவின் சிறைச்சாலையில் ஒப்
பிக்கப்படல்: ௭. எபேத்மெலெக் அவனைவிடு
வித்தல்: ௰௪. அவன் இராசாவுக்கு ஆலோசனை
சொல்லல்: உ௰. அந்த ஆலோசனையை மறைக்
கும்படி இராசாகட்டளையிடல்.

இந்தநகரத்திலேதங்கியிருக்கிறவனெவனோ, அ ௧
வன் கட்கத்தினாலும், பஞ்சத்தினாலும்,கொள்ளை
நோயினாலும் நாசமடைவான்: கல்தேயரிடத்
தில் போகிறவனெவனோ அவன் பிழைப்பான்;
கொள்ளைப்பொருள்போல அவன் தன் பிராண
னைப்பெற்றுச் சீவிப்பானென்று யெகோவா
சொல்லுகிறாரென்றும்,—இந்தநகரம் பாபேலு ௨
டைய இராசாவின் சேனையின்கையில் ஒப்பிக்
கப்பட அவர்களிதைப் பிடிப்பார்களேயென்று
யெகோவா சொல்லுகிறாரென்றும்,எரேமியா
சமஸ்தசனங்களையும் நோக்கிச்சொல்லியவாக்கு
களை,—மத்தானின்புத்திரனாகியஷிபத்தியாவும், ௩
பஷ்கூரின்புத்திரனாகியகிதலியாவும்,ஷெலேமி
யாவின்புத்திரனாகிய யூகாலும், மல்கியாவின்புத்
திரனாகியபஷ்கூருங்கேட்டார்கள்.-பின்புபிரபு ௪
கள்இராசாவைநோக்கி, இந்தமனுஷனைக்கொல்
லும்படி வேண்டுகிறோம்: இப்படிப்பட்ட வாக்
குகளைப் பேசுவதினால் இந்த நகரத்திலே மீந்தி
ருக்கும் படைவீரருடைய கைகளையும், சமஸ்
தசனங்களின் கைகளையும் மெலிவடையும்படி
பண்ணுகிறான்: இவன் இந்தச்சனங்களுக்குத்தீ
மையையேயன்றி நன்மையைத்தேடுகிறானில்லை
யென்றார்கள்.—அப்பொழுது சிதிகியா இராசா, ௫
பாருங்கள், அவன் உங்கள்கைகளிலிருக்கிறான்:
இராசா உங்களை எதிர்த்து ஒன்றுஞ்செய்யமாட்
டானென்றான்.—அதினால் அவர்கள் எரேமியா ௬
வைப்பிடித்து, அவனைச்சிறைச்சாலையின் பிரா
காரத்தில் இராசபுத்திரனாகிய மல்கியாவினுடை
ய துரவிலேபோட்டார்கள்: எரேமியாவைக்கயி
றுகளினால் இறக்கிவிட்டார்கள். அந்தத்துரவி
லே சேறே ஒழியச் சலமில்லை: எரேமியாசேற்
றிலேபுதைந்தான்.
அவர்கள் எரேமியாவைத் துரவிலேபோட் ௭
டதை இராசாவின் வீட்டிலிருந்த கூஷியனா
கிய எபேத்மெலெக்கென்னும் ஒரு அண்ணகன்
கேள்விப்பட்டான்;அச்சமயத்தில்இராசாபேன்
யாமீனுடைய வாசலிலிருந்தான்.—எபேத்மெ ௮

லெக்இராசா வீட்டினின்று புறப்பட்டுப்போய்
௯ இராசாவினிடத்தில்,—என்ஆண்டவனே, இரா
சாவே, இந்தச்சனங்கள் எரேமியா தீர்க்கதரி
சியைத்துரவிலேபோட்டார்கள்; அவனுக்கு இ
வர்கள்செய்ததெல்லாம் பெரியதீமை, அவன்தா
னிருக்குமிடத்தில் பசியினால் இறந்துபோவா
னே: நகரத்திலே உணவுப்பொருளில்லையென்
௰ றான்.—அப்பொழுது இராசா எபேத்மெலெக்
கென்னுங் கூஷியனைநோக்கி, நீ இவ்விடத்தி
னின்று முப்பது புருஷரைக்கூட்டிப்போய், எ
ரேமியாதீர்க்கதரிசிஇறந்துபோகுமுன் அவனைத்
துரவினின்று தூக்கிவிடென்று கட்டளையிட்
௰௧ டான்.—அப்படியே எபேத்மெலெக்அந்தப்புரு
ஷரைத்தன்னோடே கூட்டிக்கொண்டு, இராசா
வின்வீட்டில் பொக்கிஷசாலையின் கீழிருந்தஸ்
தானத்திற்சென்று,பீற்றல் சீலைகளையும் பழங்கந்
தைகளையும் எடுத்து, அவைகளைக்கயிறுகளினால்
எரேமியாவிடத்தில்துரவில் இறக்கிவிட்டான்.-
௰௨ எபேத்மெலெக்கென்னுங் கூஷியன் எரேமியா
வைநோக்கி, பீற்றல் சீலைகளையும் பழங்கந்தை
களையும் உம்முடைய அக்கிள்களின்கயிறுகளுக்
குக் கீழேவைத்துக்கொள்ளுமென்றுசொல்ல, எ
௰௩ ரேமியா அப்படியேசெய்தான்.—அப்பொழுது
எரேமியாவைக் கயிறுகளினாலே துரவினின்று
தூக்கிவிட்டார்கள்: பின்பு எரேமியா சிறைச்சா
லையின் பிராகாரத்தில் தங்கினான்.
௰௪ பின்பு சிதேக்கியாஇராசாஆளனுப்பி, எரேமியா
தீர்க்கதரிசியை யெகோவாவின் ஆலயத்தின்
மூன்றாம்பிரவேசஸ்தானத்திலே தன்னிடத்தில்
அழைப்பித்தான்: இராசாஎரேமியாவைநோக்கி,
நான் உன்னிடத்தில் ஒருகாரியங்கேட்கிறேன்;
நீ எனக்கொன்றும் மறைக்கவேண்டாமென்
௰௫ றான்.—அப்பொழுது எரேமியா சிதேக்கியாவை
நோக்கி, நான் உமக்குத்தெரிவித்தால் நிச்சய
மாய்என்னைக்கொலைசெய்வீரல்லவா,நான்உமக்
கு ஆலோசனைசொன்னாலும் அதை அங்கிக
௰௬ ரியாதிருப்பீரல்லவாவென்று சொல்ல,—சிதேக்கி
யா இராசா எரேமியாவிடத்தில் இரகசியமாய்,
நான்உன்னைக்கொல்லாமலும், உன்பிராணனைச்
சேதிக்கவகைதேடுகிற சனங்களின்கையில் ஒப்
பியாமலுமிருப்பேனென்று, என் ஆத்துமாவின்
சிருஷ்டிகர்த்தாவாகிய யெகோவாவின் நித்
தியத்துவத்தைக்கொண்டு உனக்கு ஆணையிடுகி
௰௭ றேனென்றான்.—அப்பொழுது எரேமியா சிதே
க்கியாவைநோக்கி, நீர் நிச்சயமாய்ப்பாபேலுடை
ய இராசாவின் பிரபுகளிடத்தில் புறப்பட்டுப்
போனால் உமது ஆத்துமாசீவித்திருக்கும், இந்
நகரம் அக்கினியினாலே தகிக்கப்படமாட்டா
து; நீரும் உம்முடையவமிசத்தாரும் பிழைப்பீர்
௰௮ கள்.—நீர் பாபேலுடைய இராசாவின்அதிபதிக
ளிடத்திலேபோகாதிருந்தாலோ,இந்தநகரங்கல்
தேயரின்கையில்ஒப்பிக்கப்படும், அவர்கள் இ
தைஅக்கினியினால்தகிப்பார்கள், நீர் அவர்கள்
கைக்குத்தப்பவேமாட்டீரென்று இஸரவேலின்
தேவனுஞ் சேனாபதியான தேவனுமாகிய
யெகோவா சொல்லுகிறாரென்றான்.—சிதேக்கி ௰௯
யா இராசா எரேமியாவினிடத்தில், கல்தேயர்
தங்களைச்சேர்ந்தயூதேயசனங்களின் கையில்என்
னைஒப்பிக்க, அவர்கள் என்னைப்பரிகாசம்பண்
ணுவார்களென்று அஞ்சுகிறேனென்றான்.—அ ௨௰
தற்குஎரேமியா,அவர்கள்உம்மைஒப்பிக்கமாட்
டார்கள். நான் உம்மோடேபேசும் யெகோ
வாவின் வாக்குக்குக்கீழ்ப்படியும்படி உம்மை
வேண்டுகிறேன்: அதினால் உமக்குநன்மையுண்
டாகும்,உம்முடையஆத்துமாசீவிக்கும்.—அவர் ௨௧
களிடத்தில்போக நீர் சம்மதியாதிருந்தால், பா
ரும், யூதாவுடைய இராசாவீட்டில்மீந்திருக்குஞ்
சகலஸ்திரிகளும்வெளியேபாபேல்இராசாவின்
பிரபுகளிடத்தில் கொண்டுபோகப்படுவார்கள்;
அந்த ஸ்திரிகள், உம்முடையசிநேகர் உம்மை
ஏவி, உம்மை மேற்கொண்டார்கள்: உம்முடை
யகால்கள்சேற்றில்புதைந்தன, அவர்களோபரா
முகம்பண்ணினார்களென்பார்கள்.—உம்முடை ௨௨
யசகல ஸ்திரிகளையும், உம்முடைய பிள்ளைகளை
யும் வெளியே கல்தேயரிடத்திற் கொண்டுபோ
வார்கள்: நீரும் அவர்களுடையகைக்குத்தப்பா
மல் பாபேல்இராசாவின்கையினாற் பிடிக்கப்ப
டுவீர்.—இந்தநகரந் தகிக்கப்படுவதற்கு நீ ஏதுவா ௨௩
யிருப்பாயென்னும் இவ்வாக்கை யெகோவா
எனக்குத் தெரிவித்திருக்கிறாரென்றான்.
அப்பொழுது சிதேக்கியாஎரேமியாவைநோக்கி, ௨௪
நீ இவ்வாக்குகளை ஒருவனுக்குஞ்சொல்லாதே,நீ
சாவதில்லை.—நான் உன்னோடேபேசினேனென் ௨௫
பதை அதிபதிகள் கேள்விப்பட்டு, உன்னிடத்
தில்வந்து, உன்னைநோக்கி,நீஇராசாவுக்குத்தெரி
வித்ததைஎங்களுக்குத்தெரிவி, எங்களுக்குமறை
யாதே, அப்பொழுது உன்னைக் கொலைசெய்ய
மாட்டோம், இராசாஉனக்குச்சொல்லியதையும்
எங்களுக்குச்சொல்லவேண்டுமென்றுகேட்பார்
களாகில்,—நீஅவர்களைநோக்கி, நான்யோனாதா ௨௬
னுடையவீட்டிலே சாகும்படிஅங்கே என்னைத்
திரும்ப அனுப்பவேண்டாமென்று இராசாவின்
சமுகத்தில் விண்ணப்பம்பண்ணினேனென்ப
தைச்சொல்லென்றான்.—பின்பு அதிபதிகள்யாவ ௨௭
ரும் எரேமியாவினிடத்தில்வந்துகேட்டார்கள்:
அவன் இராசா கட்டளையிட்ட எல்லாவாக்குக
ளின்படிக்கும் அவர்களுக்கு உத்தரஞ்சொன்
னான். காரியத்தைஅறியாததினால் அவனோடே
பேசாமல்விட்டார்கள்.—அதுமுதல் எரேமியா ௨௮
யெரூஷலேம் பிடிக்கப்படும்நாள்வரைக்குஞ் சி
றைச்சாலையின்பிராகாரத்தில்தங்கினான்: யெரூ
ஷலேம் பிடிக்கப்பட்டசமயத்திலும் அங்கே
யிருந்தான்.

## ௩௯. அதிகாரம்.

௧. யெரூஷலேமைப்பிடித்தல்: ௪.சிதேக்கியாவைக் குருடனாக்கிப் பாபேலுக்குக் கொண்டுபோய் விடல்: ௮. நகரத்தைத்தகித்துச் சனங்களைச்சிறைபிடித்துக் கொண்டுபோதல்: ௰௧. நெபுகத்

---

(௰௬) எசா.௫௭.௰௬. (௰௭) ௨.இரா.௨௪.௰௨. (௰௧) ௧.சாமு.௩௧.௪.—(௩௯. அதி.)

நெத்சர் எரேமியாவைக்குறித்துக் கட்டளையி
டல்: ௰௫.எபேத்மெலெக்கைப்பற்றி யெகோ
வா வாக்குத் தத்தஞ்செய்தல்.

யூதாவின் இராசாவாகிய சிதிகியா அரசாண்ட
ஒன்பதாம்வருஷம்பத்தாம்மாதத்தில்,பாபேலின்
இராசாவாகிய நெபுகத்நெத்சரும் அவனுடைய
சகலசேனைகளும் யெருஷலேமுக்கு விரோத
மாய்வந்து, அதை முற்றிக்கைபோட்டார்கள்.—
௨ சிதிகியாவின்பதினோராம்வருஷம் நாலாம்மாதம்
ஒன்பதாந்தினத்தில், நகரத்தின்மதில் இடித்துவ
௩ ழியாக்கப்பட்டது.-அப்பொழுது பாபேலுடை
ய இராசாவின் சகலபிரபுகளாகிய நெர்கல்ஷ
ரேத்சர், சம்கார்நேபோ, சர்சேகிம், இரப்சாரிசு,
நெர்கல் ஷரேத்சர், ரப்மாக் என்பவர்களும் பா
பேலின்இராசாவினுடைய மற்றப்பிரபுகள்யாவ
ரும்பிரவேசித்து, நடுவாசலில் உட்காந்தார்கள்.
௪ யூதாவின் இராசாவாகிய சிதிகியாவும் படை
வீரர்யாவரும் அவர்களைக்கண்டமாத்திரத்தில் ஓ
டி, இராத்திரிகாலத்தில் இராசாவின் தோட்டத்
தின்வழியாய் இரண்டு மதில்களுக் கிடையிலு
முள்ள வாசலால் புறப்பட்டுப்போனார்கள்: அ
௫ வன்சமபூமியின்வழியாய்ச்சென்றான்.—கல்தே
யருடைய சேனை அவர்களைத்தொடர்ந்து, யெரி
கோவின் வெளிகளில் சிதிகியாவையணுகி, அ
வனைப்பிடித்து, அமாத்தேசத்திலுள்ள ரிப்லாவுக்
குப் பாபேலின் இராசாவாகிய நெபுகத்நெத்சரி
டத்தில் கொண்டுபோனார்கள்; அங்கே இவன்
௬ அவனைக்குறித்துத் தீர்ப்புச்செய்தான்.—பின்பு
பாபேலின் இராசா ரிப்லாவிலே சிதிகியாவின்
புத்திரரை அவன்முன்பாகக் கொலைசெய்தான்:
யூதாவின் சகலமேற்குலத்தாரையும் பாபேலின்
௭ இராசாகொலைசெய்தான்.—மேலும் அவன் சிதி
கியாவின் கண்களைத்தோண்டி,அவனைப் பாபே
லுக்குக் கொண்டுபோகும்படி அவனுக்குப்பித்த
ளைவிலங்குபூட்டினான்.
௮ இராசாவின்வீட்டையும், சனங்களின் வீடுக
ளையும் கல்தேயர் அக்கினியினால்தகித்து, யெரு
௯ ஷலேமின் மதில்களை இடித்தார்கள்.—நகரத்தில்
தங்கியிருந்த சனங்களையும், தன்னைச்சார்ந்த ச
னங்களையும், மீந்திருந்த மற்றச்சனங்களையும் கா
வற்சேனாபதியாகிய நெபூசராதான் பாபேலுக்
௰ குச் சிறைபிடித்துக்கொண்டுபோனான்.—ஒன்று
மில்லாத தரித்திரசனங்களிற்சிலரைக் காவற்சே
னாபதியாகிய நெபூசராதான் யூதாதேசத்திலிருக்
கச்செய்து, அக்காலத்தில் அவர்களுக்குத்திராட்
சத்தோட்டங்களையும், வயல் நிலங்களையுங்கொ
டுத்தான்.
௰௧ ஆனாலும்எரேமியாவைக்குறித்துப்பாபேலின்
இராசாவாகிய நெபுகத்நெத்சர், காவற்சேனாபதி
௰௨ யாகிய நெபூசராதானிடத்தில்,—நீ அவனை அ
ழைத்து, அவன்மேல் கடாட்சம்வைத்து, அவ
னுக்கொருதீமையுஞ்செய்யாமல், அவன் உனக்
குச்சொல்லியபிரகாரமாகவே அவனைநடத்துவா
யென்றுகட்டளையிட்டான்.—ஆதலால் காவற் ௰௩
சேனாபதியாகிய நெபூசராதானும், நெபூஷஸ்
பான், இரப்சாரிசு, நெர்கல்ஷரேத்சா, ரப்மாக்
என்பவர்களும் பாபேலின் இராசாவுடைய மற்
றெல்லாப்பிரபுகளும்,—எரேமியாவைச்சிறைச் ௰௪
சாலையின் பிராகாரத்தினின்று விடுவித்து, வீட்
டுக்குஅழைத்துக்கொண்டுபோகும்படிக்கு, அவ
னை ஷாபானுடைய பௌத்திரனும் அகிகாமின்
புத்திரனுமாகிய கிதலியாவிடத்தில் ஒப்பித்தார்
கள்: அப்படியே அவன்சனங்களுக்குள்ளே வா
சம்பண்ணினான்.
எரேமியா சிறைச்சாலையின்பிராகாரத்தில் அ ௰௫
டைக்கப்பட்டிருக்கையில், யெகோவாவின்
வாக்கு அவனிடத்தில்,—நீபோய், கூஷியனாகி ௰௬
ய எபேத்மெலெக்கோடேபேசி, இஸரவேலின்
தேவனுஞ் சேனாபதியுமாகிய யெகோவா,
பார், நன்மைக்காகவல்ல, தீமைக்காகவே என்
னுடையவாக்குகளை இந்தநகரத்தின்மேல் நிறை
வேற்றுவேனென்று சொல்லுகிறார்; அத்தினத்
தில்அவைகள் உன்முன்பாக நிறைவேறும்.—
நானோ அந்நாளில் உன்னைவிடுவிப்பேனென்று ௰௭
யெகோவா சொல்லுகிறார்: நீ பயப்படுகிறம
னிதர்கையில் ஒப்பிக்கப்படமாட்டாய்.—நான் ௰௮
நிச்சயமாக உன்னைவிடுவிப்பேன், நீ கட்கத்தி
னால்விழாய், நீ என்னில் நம்பிக்கைவைத்தபடி
யினால் நான் உன் பிராணனைக் கொள்ளைப்பொ
ருளைப்போல உனக்குத் தருவேனென்று யெ
கோவா சொல்லுகிறாரென்பதைச் சொல்லச்
சொல்லிற்று.

## ௪௰. அதிகாரம்.

௧. எரேமியா விடுதலைபெற்றுக்கிதலியாவிடத்திற்
போதல்: ௭. சிதறஅடிக்கப்பட்டயூதேயர் கித
லியாவிடத்திற் செல்லல்: ௰௩. நிதனியாவின்
புத்திரனாகிய இஷ்மாவேலின் துராலோசனை
யோகானானால்தெரிவிக்கப்படல்.

யெருஷலேமிலும் யூதாவிலும்நின்றுசிறையாக் ௧
கிப்பாபேலுக்குக்கொண்டுபோகப்பட்ட சனங்
களுக்குள் விலங்குகளிடப்பட்டிருந்த எரேமி
யாவைக் காவற்சேனாபதியாகிய நெபூசராதான்
விடுதலையாக்கி, ராமாநகரத்தினின்றுபோகவிட்
டபின்பு, எரேமியாவுக்குக்கிடைத்த யெகோ
வாவின் வாக்கு:—காவற்சேனாபதி எரேமியா ௨
வைஅழைத்து, அவனைநோக்கி, உன் தேவனா
கிய யெகோவா இந்தஸ்தானத்தைக்குறித்து
இந்தத்தீமையைக்கூறியிருந்தார்.—நீங்கள் யெ ௩
கோவாவின் வாக்குக்கமையாமல், அவருக்
குவிரோதமாய்ப்பாவஞ்செய்தபடியால்இதுஉங்
களுக்குநேரிட்டது: யெகோவா தாம்சொல்
லியபிரகாரமாகவே வருவித்தார்.—இன்றைத்தி ௪
னம்உன்கையிலிடப்பட்ட விலங்குகளினின்று
உன்னைவிடுவித்தேன். பார், என்னோடேபாபே

(௧) ௨.இரா.௨௫.௧—௪. (௪) ௨.இரா.௨௫.௪,. (௫) ௨.இரா.௨௩.௩௩. (௭) எசேக்.௰௨.௰௩. (௮) ௨.இரா.௨௫.௯. (௯) ௨.இரா.௨௫.௰௧,. ஆதி.௩௭.௩௬. (௰௬) தானி.௯.௰௨. (௰௮) ௧.நாளா.௫.௨௰. சங்.௩௭.௪௰.—(௪௰. அதி. ௩.) உபா. ௨௧.௨௪,௨௫. தானி.௯.௰௧. (௪) ஆதி.௨௰.௰௫.

னுக்குவரஉனக்குச்சம்மதமானால் வா; நான்உன்
னைக்கடாட்சிப்பேன்: என்னுடன்பாபேலுக்கு
வர உனக்கு இஷ்டமில்லாதிருந்தால் இங்கேயி
ரு: பார், தேசம்முழுவதும்உன்முன்னிருக்கின்
றது: நீ போவதற்கு எவ்விடம் உனக்குநன்மை
யும் வசதியுமாயிருக்குமோ, அவ்விடத்திற்குப்
௫ போவென்றான்.—இவன் திரும்பாமல் நின்றதி
னால் அவன், பாபேலின் இராசா யூதாவின் நக
ரங்களின்மேல் அதிபதியாக ஏற்படுத்திய ஷா
பானின் பௌத்திரனும் அகீகாமின் புத்திரனு
மாகிய கிதலியாவிடத்தில் திரும்பிப்போய், ச
னங்களுக்குள் அவனுடன் வாசம்பண்ணு: நீ
போவதற்கு எவ்விடம் உனக்குவசதியோ, அவ்
விடத்திற்குப்போவென்றான். பின்பு காவற்சே
னாபதிஅவனுக்குஉணவுப்பொருளையும், காணிக்
கையையுங் கொடுத்து அவனை அனுப்பிவிட்
௬ டான்.—அப்பொழுது எரேமியாமிஸ்பாவில்அ
கீகாமின்புத்திரனாகிய கிதலியாவிடத்திற்போய்,
தேசத்தில் மீந்திருந்த சனங்களுக்குள் அவனு
டன்வாசம்பண்ணினான்.

௭ பாபேல் இராசா, அகீகாமின்புத்திரனாகிய கி
தலியாவைத் தேசத்தின்மேல் அதிபதியாக ஏற்ப
டுத்தினானென்றும், பாபேலுக்குச் சிறைகொண்
டுபோகப்படாத தரித்திரராகிய சிலபுருஷரை
யும், ஸ்திரிகளையும், குழந்தைகளையும் அவன்வ
சத்தில் ஒப்பித்தானென்றும், வெளிகளிலுள்ள
சேனாபதிகள் யாவரும் அவர்களுடைய சனங்க
௮ ளுங் கேட்டபொழுது,—நிதனியாவின் புத்திரனா
கிய இஷ்மாவேலும், காரேயாவின்புத்திரனாகிய
யோகானானும், யோனாதானும், தன்கூமேத்தின்
புத்திரனாகிய செராயாவும், நெதோபாத்தியனாகிய
ஏபாயின் புத்திரரும், மாகாத்தியரிலொருவனு
டைய புத்திரனாகிய யசனியவும், தங்கள்சனங்க
ளோடே மிஸ்பாவுக்குக் கிதலியாவிடத்தில் வந்
௯ தார்கள்.—அப்பொழுது ஷாபானின்பௌத்திர
னும், அகீகாமின்புத்திரனுமாகியகிதலியாஅவர்க
ளைநோக்கி, நீங்கள் கல்தேயரிடத்தில் சேவிக்கப்
பயப்படவேண்டாம்: தேசத்திலே வாசம்பண்
ணிப் பாபேல் இராசாவிடத்திற் சேவியுங்கள்,
அப்பொழுது உங்களுக்குநன்மையுண்டாகும்.—
௰ பாருங்கள், நான் என்னிடத்தில்வருங் கல்தேய
ரிடத்திற் சேவிக்கும்படி மிஸ்பாவிலே வாசம்
பண்ணுகிறேன்: நீங்களோ, திராட்சரசத்தையும்,
கோடைகாலத்தின் பழத்தையும், எண்ணெயை
யுஞ்சேகரித்து உங்கள் பாத்திரங்களிலேவையுங்
கள், உங்கள்வசமாயிருக்கிற நகரங்களில் வாசம்
பண்ணுங்களென்று அவர்களையும் அவர்கள் ச
௰௧ னங்களையும்நோக்கி ஆணையிட்டான்.—மோவா
பிலும், அம்மோன் புத்திரருக்குள்ளும், ஏதோ
மிலும், மற்றச் சகல தேசங்களிலுமிருந்த யூதர்,
பாபேல்இராசா யூதாவிற் சிலரை மீதியாக விட்
டு, ஷாபானின் பௌத்திரனும் அகீகாமின் புத்
திரனுமாகிய கிதலியாவை அவர்களுக்கதிபதி
யாக ஏற்படுத்தினானென்றுகேட்டபொழுது,—யூ ௰௨
தரெல்லாருந் தாங்கள்துரத்திவிடப்பட்ட சகல
ஸ்தானங்களிலும்நின்று மிஸ்பாவிலே யூதாதே
சத்திற்கிதலியாவிடத்தில்வந்து, திராட்சரசத்தை
யும், கோடைகாலத்தின் பழத்தையும் மிகுதியா
கக் கூட்டிவைத்தார்கள்.

அப்புறம் காரேயாவின்புத்திரனாகியயோகானா ௰௩
னும், வெளிகளிலுள்ளசகலசேனாபதிகளும் மிஸ்
பாவில் கிதலியாவிடத்தில்வந்து,—அவனைநோக் ௰௪
கி, உன்னைக்கொலைசெய்யும்படி அம்மோன்புத்
திரரின் இராசாவாகியபாகாலிஸ், நிதனியாவின்
புத்திரனாகிய இஷ்மாவேலைஅனுப்பினானென்ப
தை அறிவாயாவென்றார்கள்; அகீகாமின்புத்திர
னாகிய கிதலியா அவர்களை நம்பவில்லை.—பின்பு ௰௫
காரேயாவின் புத்திரனாகியயோகானான், மிஸ்பா
விலேகிதலியாவுடன்இரகசியமாகப்பேசி, ஒருவ
ரும் அறியாமல்நிதனியாவின் புத்திரனாகிய இஷ்
மாவேலைக்கொலைசெய்வதற்கு என்னைப்போக
விடும்படி நான் உன்னைவேண்டுகிறேன்: உன்னு
டன்சேர்ந்த யூதரெல்லாருஞ் சிதறுண்டுபோக
வும், யூதாவில் மீந்திருக்குஞ் சனங்கள்நாசமடை
யவும் அவன் உன்னைக்கொலைசெய்யவேண்டிய
தென்னவென்றான்.—அகீகாமின்புத்திரனாகிய கி ௰௬
தலியா, காரேயாவின்புத்திரனாகிய யோகானானை
நோக்கி, நீ இந்தக்காரியத்தைச் செய்யாதே: நீ
இஷ்மாவேலைக்குறித்துச் சொல்லுகிறவாக்குப்
பொய்யென்றான்.

## ௪௧. அதிகாரம்.

௧. இஷ்மாவேல் கிதலியா முதலானவர்களைக் கொல்ல, எஞ்சியசனங்களையழைத்துக்கொண்டு அம்மோனியருடைய தேசத்துக்குப்போம்படிபுறப்படல்: ௰௧. காரேயாவின் புத்திரனாகிய யோகானான் அவர்கள் கையினின்றெஞ்சியசனங்களை விடுவித்து, கல்தேயருக்குப் பயந்து எகிப்துதேசத்துக்குப்போக ஆயத்தப்படல்.

பின்பு ஏழாமாதத்தில் இராசவமிசத்திலுள்ள இ ௧
லீஷாமாவின் பௌத்திரனும், நிதனியாவின்புத்
திரனுமாகிய இஷ்மாவேல் இராச்சிய பிரதா
னிகள் பத்துப்பேரைக்கூட்டிக்கொண்டு, மிஸ்
பாவில் அகீகாமின் புத்திரனாகியகிதலியாவிடத்
தில்வந்தான்; அவர்கள் மிஸ்பா நகரத்தில் ஏக
மாய்ப் போசனம்பண்ணினார்கள்.—அப்பொழு ௨
து நிதனியாவின் புத்திரனாகிய இஷ்மாவேலும்
அவனோடிருந்த பத்துப்பேரும் எழுந்து, பாபே
லின் இராசா தேசத்திற்கு அதிபதியாக ஏற்படுத்
திய ஷாபானின் பௌத்திரனும் அகீகாமின்புத்
திரனுமாகிய கிதலியாவைக்கட்கத்தினாலே கொ
லைசெய்தார்கள்.—மிஸ்பாவிலே கிதலியாவினி ௩
டத்திலிருந்த யூதரெல்லாரையும், அங்கேகாணப்
பட்ட படைஞராகிய கல்தேயரையும் இஷ்மா
வேல் கொலைசெய்தான்.—மற்றநாள் அவன் கித ௪
லியாவைக்கொலைசெய்ததை ஒருவரும் அறியா
திருக்கையில்,—தாடியைச்சிரைத்து, வஸ்திரங்க ௫

(௫)௨. இரா. ௨௫. ௨௨,. (௬)நியா. ௨௰. ௧. (௭)௨. இரா. ௨௫. ௨௩,. (௰)௨ பா. ௧. ௩௮. (௰௪)அதி. ௪௧. ௰.—(௪௧. அதி. ௧.)௨. இரா. ௨௫. ௨௫. (௨)௨. இரா. ௨௫. ௨௫. (௫)லேவி. ௰௯. ௨௭, ௨௮. ௨ பா. ௰௪. ௨. ஏசா. ௰௫. ௨. ௧. சாமு. ௧. ௭. ௨. இரா. ௨௫. ௯.

லேக்கிழித்து, தங்களைக்கீறிக்கொண்டிருந்த எண்
பதுசனங்கள் ஷகேமிலும், ஷீலோவிலும், ஷ
மாரியாவிலும் நின்று யெகோவாவின் ஆல
யத்திலிடுகிறதற்காகக் காணிக்கைகளையுந் தூபவ
ருக்கத்தையுந் தங்கள்கைகளிலே கொண்டுவந்
௬ தார்கள்.—அப்பொழுது நிதனியாவின்புத்திரனா
கிய இஷ்மாவேல் மிஸ்பாவினின்றுபுறப்பட்டு,
அவர்களைச்சந்திக்கும்படி அழுதுஅழுதுசென்று,
அவர்களை அணுகினபொழுது அவர்களைநோக்கி,
அகீகாமின் புத்திரனாகிய கிதலியாவிடத்தில் வா
௭ ருங்களென்றான்.—அவர்கள் நகரத்தின் மத்தியி
லேவந்தபொழுது, நிதனியாவின் புத்திரனாகிய
இஷ்மாவேலும் அவனோடிருந்த சனங்களும் அ
வர்களைக்கொலைசெய்து ஒருகுழிக்குள் எறிந்து
௮ விட்டார்கள்.—அவர்களில்பத்துப்பேரோ இஷ்
மாவேலைநோக்கி, எங்களைக் கொலைசெய்யாதி
ரும்: கோதுமையும், வாற்கோதுமையும், எண்
ணெயும், தேனுமாகிய புதைபொருள் எங்களுக்
குண்டென்றார்கள். ஆதலால் இஷ்மாவேல் அ
வர்களை அவர்கள் சகோதரரோடே கொலைசெய்
௯ யாமல் விட்டுவைத்தான்.—இஷ்மாவேல் கிதலி
யாவினிமித்தங்கொலைசெய்த சனங்களின்பிரே
தங்களையெல்லாம், ஆசா இராசா இஸரவேலின்
இராசாவாகிய பாஷாவுக்குப் பயந்ததினிமித்தம்
தோண்டின அந்தக்குழியில் எறிந்துவிட்டான்:
நிதனியாவின்புத்திரனாகிய இஷ்மாவேல் கொ
லையுண்டவர்களின் சவங்களினால் அதை
௰ நிரப்பினான்.—பின்பு இஷ்மாவேல் மிஸ்பாநக
ரத்தில் மீந்திருந்த சமஸ்தசனங்களையுஞ்சிறைபி
டித்துக்கொண்டுபோனான், இராசாவின் குமா
ரத்திகளையும், காவற்சேனாபதியாகிய நெபூசரா
தான் அகீகாமின்புத்திரனாகியகிதலியாவிடத்தில்
ஒப்பித்த மிஸ்பாவில் மீந்திருந்த சமஸ்த சனங்க
ளையும், நிதனியாவின்புத்திரனாகியஇஷ்மாவேல்
சிறைப்படுத்தி, அம்மோன் புத்திரர் பட்சத்தில்
போவதற்குப்புறப்பட்டான்.
௰௧ நிதனியாவின்புத்திரனாகியஇஷ்மாவேல்செய்
த தீமையையெல்லாம், காரேயாவின்புத்திரனாகிய
யோகானானும் அவனோடிருந்த சமஸ்த சேனாப
௰௨ திகளுங் கேள்விப்பட்டபொழுது,—அவர்கள்
சகல மனுஷரையுங் கூட்டிக்கொண்டு, நிதனி
யாவின்புத்திரனாகிய இஷ்மாவேலை எதிர்த்துயுத்
தஞ்செய்கிறதற்குப் போய், கிபியோனிலுள்ள
பெரியதடாகங்களின் சமீபத்தில் அவனைக்கண்
௰௩ டார்கள்.—இஷ்மாவேலோடேயிருந்த சகல ச
னங்களும் காரேயாவின் புத்திரனாகிய யோகா
னானையும் அவனோடிருந்த சகல சேனாபதிகளை
௰௪ யுங்கண்டு சந்தோஷப்பட்டார்கள்.—இஷ்மா
வேல் மிஸ்பாவினின்று சிறைபிடித்துக்கொண்
டுபோன சமஸ்த சனங்களும் முகந்திருப்பிக்கா
ரேயாவின் புத்திரனாகிய யோகானானிடத்தில்
௰௫ வந்தார்கள்.-நிதனியாவின் புத்திரனாகிய இஷ்மா
வேல் எட்டுப்பேரோடே யோகானானின்கைக்
குத்தப்பி, அம்மோன்புத்திரரிடத்தில்போனான்.-
காரேயாவின் புத்திரனான யோகானானும், அவ ௰௬
னோடிருந்த சமஸ்தசேனாபதிகளும் அகீகாமின்
புத்திரனாகிய கிதலியாவைக் கொலைசெய்தபின்
பு, நிதனியாவின் புத்திரனாகிய இஷ்மாவேல் மி
ஸ்பாவிலிருந்து கொண்டுபோனவர்களும், தாங்
கள் கிபியோனில் விடுதலையாக்கித்திரும்பும்படி
செய்ய மீந்த சகலசனங்களுமாகிய யுத்தவீரரை
யும், ஸ்திரிகளையும், குழந்தைகளையும், அண்ணகர்
களையுஞ்சேர்த்துக்கொண்டு,—பாபேல் இராசா, ௰௭
தேசத்துக்கு அதிபதியாக ஏற்படுத்திய அகீகா
மின் புத்திரனாகிய கிதலியாவை நிதனியாவின்
புத்திரனாகிய இஷ்மாவேல் கொலைசெய்ததினி
மித்தங் கல்தேயருக்குப்பயந்தபடியினால்,-எகிப் ௰௮
துக்குப்போகப் புறப்பட்டு, பேத்லகேம் நகரத்
தைச்சேர்ந்த கிமாமென்னும்ஸ்தானத்தில் வாசம்
பண்ணினார்கள்.

## ௪௨. அதிகாரம்.

௧. தேவனைப் பிரார்த்திக்கும்படி யோகானான் எரேமியாவை வேண்டல்: ௭. யூதாதேசத்தில் தங்கினால்நன்மையுண்டாகுமென்றும், எகிப்துக்குப்போனால் நாசமுண்டாகுமென்றுந்தெரிவித்தல்: ௰௯. அவர்கள்கபடத்தினிமித்தம் எரேமியா அவர்களைக்கண்டித்தல்.

அப்பொழுது சகலசேனாபதிகளும், காரேயா ௧
வின்புத்திரனாகிய யோகானானும், ஓஷாயாவின்
புத்திரனாகியயசனியவும், சிறியோர்பெரியோரா
கிய சகல சனங்களுஞ் சமீபித்துவந்து,—எரே ௨
மியாதீர்க்கதரிசியைநோக்கி, நாங்கள் செய்யும்
விண்ணப்பத்தை அங்கிகரிக்கும்படி உம்மை
வேண்டுகிறோம்; உம்முடையகண்கள்எங்களைக்
காண்கிறபடி, அநேகரில் மீந்திருக்கிற நாங்கள்
கொஞ்சப்பேர்: நாங்கள் நடக்கவேண்டியவழி
யும், நாங்கள்செய்யவேண்டியகாரியமும் இன்
னதென்றுஉம்முடைய தேவனாகிய யெகோ
வா, எங்களுக்குத்தெரிவிக்கும்படிக்கு,—மீந்தி ௩
ருக்கிற இவர்களெல்லாருக்காகவும் உம்முடை
ய தேவனாகிய யெகோவாவை நோக்கிப்
பிரார்த்தனைபண்ணுமென்றுசொல்ல,-எரேமியா ௪
தீர்க்கதரிசிஅவர்களைநோக்கி, நான்கேட்டேன்;
பாருங்கள், உங்கள்வாக்குகளின்படி நான் உங்
கள் தேவனாகிய யெகோவாவை நோக்
கிப் பிரார்த்தனைபண்ணுவேன்; யெகோவா
உங்களுக்கு அருளிச்செய்யும்உத்தரத்தை உங்க
ளுக்குத்தெரிவிப்பேன்; யாதொன்றும் உங்களுக்
கு மறைக்கமாட்டேனென்றான்.—அதினால் அ ௫
வர்கள் எரேமியாவைநோக்கி, உம்முடையதே
வனாகிய யெகோவா உம்மைக்கொண்டுஎங்
களுக்குச் சொல்லி அனுப்புஞ்சகலகாரியங்க
ளுக்குமேற்க நாங்கள்செய்யாதிருந்தால், எங்க
ளுக்கிடையில் யெகோவா சத்தியமும் உண்

(௯) ௧.இரா.௰௫.௨௨. ௨.நாளா.௰௬.௬. (௰௧) அதி.௪௰.௭,௮,௰௩. (௰௨) ௨.சாமு.௨.௰௩. (௰௮) ௨.சாமு.௰௯.௩௭, ௩௮.—(௪௨. அதி. ௧.) அதி.௪௰.௮,௰௩. (௨) ௧.சாமு.௭.௮. ஏசா.௩௭.௪. யாக்.௫.௰௬. லேவி.௨௬.௨௨. (௩) எஸ்றா.௮.௨௨. (௪) ௧.இரா.௨௨.௰௪. ௧.சாமு.௩.௰௮. அப்.௨௰.௨௰. (௫) ஆதி.௩௧.௪௮. உபா.௬.௩.

௬ மையுமுள்ள சாட்சியாயிருக்கக்கடவர்.—நாங்
கள், உம்மை அனுப்புகிற எங்கள் தேவனாகிய
யெகோவாவின் வாக்கு நன்மையாயினும் தீ
மையாயினும் நாங்கள் அதற்கமைந்துநடப்போ
ம்; எங்கள் தேவனாகிய யெகோவாவின்
வாக்குக்கு அமைந்து நடக்கும்பொழுது, எங்க
ளுக்கு நன்மையுண்டாகுமென்றார்கள்.
௭ பத்துநாள்சென்றபின்பு யெகோவாவின்
௮ வாக்குஎரேமியாவுக்குக்கிடைத்தது.—அப்பொ
ழுதுஅவன், காரேயாவின்புத்திரனாகிய யோகா
னானையும், அவனோடிருந்தசமஸ்தசேனாபதிகளை
யும், சிறியோர்பெரியோராகிய சகலசனங்களை
௯ யும் அழைத்து,—அவர்களைநோக்கி, நீங்கள் இ
ஸரவேலின் தேவனாகிய யெகோவாவின்
சமுகத்தில் உங்கள்விண்ணப்பத்தைச் செலுத்
௰ தும்படி என்னைஅனுப்பினீர்களே.—அவர், நீங்
கள்இந்தத்தேசத்திலே வாசம்பண்ணினால் நான்
உங்களைக்கட்டுவேன், உங்களை இடியேன்,
உங்களைநாட்டுவேன், பிடுங்கமாட்டேன்: நான்
உங்களுக்குச்செய்த தீமையைப்பார்த்துஇரங்கு
௰௧ கிறேன்.—நீங்கள்பயப்படுகிற பாபேலின்இரா
சாவுக்குப்பயப்படவேண்டாம், அவனுக்குப்ப
யப்படவேண்டாமென்று யெகோவா சொல்
லுகிறார்: அவன்கையினின்று உங்களைவிடுவித்து
இரட்சிக்கும்படி உங்களோடே இருக்கிறேன்.—
௰௨ நான் உங்கள்மேல் கிருபைகூருவேன், அவன்
உங்களுக்குத்தயைசெய்து, நீங்கள்உங்கள்தேசத்
திற்குத்திரும்பிவரும்படிசெய்வானென்கிறார்.
௰௩ நீங்களோஅப்படியல்ல, நாங்கள்இந்தத்தேசத்
திலேவாசம்பண்ணமாட்டோம்; நாங்கள் யுத்தத்
தைக்காணாமலும், எக்காளத்தின்தொனியைக்கே
ளாமலும், ஆகாரம் இல்லாமையாற் பசிகொள்ளா
௰௪ மலுமிருக்கிற,—எகிப்துதேசத்துக்குப்போய்அங்
கேவாசம்பண்ணுவோமென்றுசொல்லி உங்கள்
தேவனாகியயெகோவாவின்வாக்குக்கமை
௰௫ யாதிருந்தீர்களாகில்,—யூதாவில் மீந்திருக்கிறச
னங்களே, யெகோவாவின் வாக்கைக்கே
ளுங்கள்; இஸரவேலின் தேவனுஞ்சேனாபதி
யுமாகிய யெகோவா, நீங்கள் எகிப்துக்குப்
போகஉங்கள்முகங்களைஅதற்குநேராக்கி, அதிற்
பிரவேசித்து, அங்கே வாசம்பண்ணும்படி போ
௰௬ னால்,—நீங்கள்பயப்படுகிற கட்கம் எகிப்துதேசத்
தில் உங்களைப்பிடிக்கும், நீங்கள் அஞ்சுகிறபஞ்
சம் எகிப்தில் உங்களைத் தொடர்ந்துவரும்; அங்
௰௭ கே நீங்கள்சாவீர்கள்.—எகிப்திலேவாசம்பண்ண
வேண்டுமென்று அவ்விடத்திற்குப் போகத் தங்
கள்முகங்களை அதற்குநேராக்குஞ் சகல சனங்க
ளுங்கட்கத்தினாலும், பஞ்சத்தினாலும், கொள்ளை
நோயினாலுஞ் சாவார்கள்: அவர்களில்ஒருவரும்
நான்வருவிக்குந்தீமைக்குத் தப்பவும் மீந்திருக்
௰௮ கவுமாட்டார்களென்கிறார்.—யெருஷலேமியர்
மேல்என்கோபமும்உக்கிரமுஞ்சொரிந்ததுபோ
ல, நீங்கள் எகிப்திற்பிரவேசித்தபின்புஎன்உக்கி
ரம் உங்கள்மேலுஞ்சொரியும்: நீங்கள்சாபமும்,
அற்புதமும், நிந்தையும், அவமானமுமாவீர்கள்;
நீங்கள்இனிஇந்தஸ்தானத்தைஒருபொழுதுங்கா
ணமாட்டீர்களென்று இஸரவேலின்தேவனுஞ்
சேனாபதியுமாகியயெகோவாசொல்லுகிறார்.
யூதாவில் மீந்திருக்கிற சனங்களே, நீங்கள் எ ௰௯
கிப்துக்குப் போகவேண்டாமென்று யெகோ
வா உங்களைக்குறித்துச் சொன்னார்: இன்றைத்
தினம் நான் உங்களுக்குணர்த்தினேன், இதை
நிச்சயித்துணருங்கள்.—நீ நம்முடைய தேவனா ௨௰
கியயெகோவாவினிடத்தில் பிரார்த்தனை
பண்ணி, நம்முடைய தேவனாகியயெகோ
வா சொல்லும்யாவற்றையும் எங்களுக்குத்தெரி
வி; அவற்றின்படி நாங்கள் செய்வோமென்று
சொல்லி உங்கள் தேவனாகியயெகோவா
வினிடத்தில் என்னை நீங்கள் அனுப்பினபொ
ழுது, உங்கள்ஆத்துமாக்களுக்கு விரோதமாய்க்க
படஞ்செய்தீர்கள்.—நான் இன்றைத்தினம் உங்க ௨௧
ளிடத்தில் அதைத் தெரிவித்தேன்; ஆனாலும்நீங்
கள் உங்கள் தேவனாகியயெகோவாவின்
வாக்குக்கும், அவர்என்னைக்கொண்டு உங்களுக்
குச்சொல்லி அனுப்பின எந்தக் காரியத்துக்
குஞ் செவிகொடுக்கவில்லை.—ஆதலால் நீங்கள் ௨௨
வாசம்பண்ணும்படி போகவிரும்புகிற ஸ்தானத்
திலே கட்கத்தினாலும், பஞ்சத்தினாலும், கொள்
ளைநோயினாலுஞ்சாவீர்கள், இதைநீங்கள்நிச்
சயித்து அறியுங்களென்றான்.

## ௪௩. அதிகாரம்.

௧. யோகானான் எரேமியாவின்வாக்கியத்தை மதி
யாமல் அவனையும் எஞ்சியசனங்களையும்எகிப்
துக்குக்கொண்டுபோதல்: ௮. பாபேல் இராசா
வினால் எகிப்துதேசஞ்செயிக்கப்படுமென்றுஎ
ரேமியாதீர்க்கதரிசனஞ்சொல்லல்.

எரேமியா, எல்லாச்சனங்களுக்கும்அவர்கள்தே ௧
வனாகிய யெகோவா தன்னைக்கொண்டு அ
வர்களுக்குச்சொல்லிஅனுப்பின அவர்களுடை
யதேவனாகியயெகோவாவின் சகலவாக்
குகளையுஞ் சொல்லி முடித்தபின்பு,—ஒஷாயா ௨
வின் புத்திரனாகிய அசரியாவும், காரேயாவின்
புத்திரனாகியயோகானானும், மற்றஅகங்காரமுள்
ளவர்களும் எரேமியாவைநோக்கி, நீ சொல்வது
பொய்: எகிப்திலேவாசம்பண்ணும்படி நீங்கள்
அங்கேபோகவேண்டாமென்று சொல்லும்பொ
ருட்டு நம்முடைய தேவனாகிய யெகோ
வா உன்னை எங்களிடத்தில்அனுப்பவில்லை.—
கல்தேயர் எங்களைக் கொலைசெய்கிறதற்காவது ௩
எங்களைப் பாபேலுக்குச் சிறைபிடித்துக்கொண்
டுபோவதற்காவது எங்களை அவர்கள்கையில்ஒப்
பிக்கும்படி நெரியாவின் புத்திரனாகிய பாருக்
எங்களுக்குவிரோதமாய் உன்னை ஏவினானென்
றார்கள்.—காரேயாவின் புத்திரனாகிய யோகானா ௪
னும், சகலசேனாபதிகளும், சகலசனங்களும் யூ
தாதேசத்தில்வாசம்பண்ணும்படி யெகோவா

(௰) அதி.௩௩.௭. உபா.௩௨.௩௬. (௰௧) ஏசா.௪௩.௫. ரோ.௮.௩௧.(௰௨)சங்.௱௬.௪௫,௪௬. (௰௫) உபா.௰௭.௰௬. லூக்.௯.௫௧. (௰௬) எசேக்.௰௧.௮.(௰௮)சக.௮.௰௩.(௰௯)உபா.௰௭.௰௬.(௨௨)எசேக்.௬.௰௧.—(௪௩. அதி. ௨.)அதி.௪௨.௧.

௫ வின் வாக்குக்குச் செவிகொடுக்கவில்லை.—துரத்
திவிடப்பட்ட சகலசாதிகளிலுமிருந்து திரும்ப
வும் யூதேயாதேசத்தில் வாசம்பண்ணுகிறதற்கு
வந்த யூதர்களில்மீந்தவர்களும், காவற்சேனுபதி
யாகிய நெபூசராதானல் ஷாபானின் பௌத்திர
னும் அகீகாமின் புத்திரனுமாகிய கிதலியாவின்
கையில் ஒப்பிக்கப்பட்டவர்களுமாகியசகலபுரு
ஷரும்,ஸ்திரிகளும்,குழந்தைகளும்,இராசாவின்
குமாரத்திகளுமான எல்லாரையும்,எரேமியாதீர்க்
கதரிசியையும், நெரியாவின்புத்திரனுகிய பாருக்
௬ கையும்,—காரேயாவின்புத்திரனுகிய யோகானு
௭ னும் சகலசேனுபதிகளுங் கூட்டிக்கொண்டு,—எ
கிப்துதேசத்துக்குப்போய் விட்டார்கள்: அவர்
கள் யெகோவாவின் வாக்குக்கமையாமல்
தக்பானேஸ்வரைக்கும்போய்ச்சேர்ந்தார்கள்.
௮ பின்பு தக்பானேசில் எரேமியாவுக்குக்கிடைத்
௯ த யெகோவாவின். வாக்கு:—நீ உன்கையில்
பெரியகற்களை எடுத்து யூதாசனங்களுக்குமுன்
பாக அவைகளைத் தக்பானேசிலுள்ள பார்வோனு
டையவீட்டின் பிரவேசஸ்தானத்துக்குச் சமீபத்
திலிருக்கிற சூளையின் களிமண்ணிலேபுதைத்து
௰ வைத்து,—அவர்களைநோக்கி, இஸ்ரவேலின் தே
வனுஞ் சேனுபதியுமாகிய யெகோவா, பா
ருங்கள், என்தாசனுகியநெபுகத்நெத்சரென்னும்
பாபேலின் இராசாவை வரவழைத்து, நான்பு
தைப்பித்த இந்தக்கற்களின்மேல் அவனுடைய
சிங்காசனத்தைஸ்தாபிப்பேன்; அவன் இவைக
ளின்மேல் தன் சிங்காசனகூடாரத்தை விரிப்
௰௧ பான்.—அவன் வந்து எகிப்துதேசத்தை வதைத்
து, கொலைக்குநேமித்தவர்களைக் கொலைக்கும்,
சிறைக்கு நேமித்தவர்களைச் சிறைக்கும், கட்கத்
துக்கு நேமித்தவர்களைக் கட்கத்துக்கும் ஒப்பிப்
௰௨ பான்.—நான் எகிப்தின் தேவர்களுடைய ஆல
யங்களில் அக்கினிகொளுத்துவேன்; அவன் அ
வைகளைத்தகிப்பான்,அவர்களைச்சிறைபிடித்துக்
கொண்டுபோவான்: ஒரு மேய்ப்பன் தன்போர்
வையினல் போர்த்துக்கொள்வதுபோல் அவன்
எகிப்துதேசத்தினுலேதன்னைப்போர்த்து,அவ்வி
டத்தினின்று சமாதானத்தோடே புறப்பட்டுப்
௰௩ போவான்.—அவன் எகிப்துதேசத்திலுள்ளபேத்
ஷிமெஷின்சிலைகளைத்தகர்ப்பான்;எகிப்தியரின்
தேவர்களுடைய ஆலயங்களை அக்கினியினல்த
கிப்பானென்கிறுரென்பதைச்சொல்லென்றது.

## ௪௪. அதிகாரம்.

௧. தேவபூசையினிமித்தம் யூதேயர்நாசமடைதல்: ௰௧. தேவபூசைக்காரரையும் எகிப்தியரையுங் குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௰௫. யூதேயரின் மனக்கடினத்தைத் தெரிவித்தல்: ௨௰. அதினிமித்தம் எரேமியா அவர்களைக்கண்டித்தல்: ௨௪. அனைவர்மேலும் பின்னுமொரு கண்டித வாக்கியத்தைச்சொல்லல்: ௨௯.எகிப்துதேசத்து இராசா சத்துருவின்கையிலொப்பிக்கப்படுவானென்று முன்னுரைத்தல்.

எகிப்துதேசத்தில் வாசம்பண்ணி மிக்தோலி ௧
லும்,தக்பானேசிலும்,நோப்பிலும்,பத்ரோசுநாட்
டிலுந்தங்கின சமஸ்தயூதரையுங்குறித்து எரேமி
யாவுக்குக்கிடைத்தவாக்கு:—இஸ்ரவேலின்தே ௨
வனும் சேனுபதியுமாகிய யெகோவா, நான்
யெருஷலேமின்மேலும் யூதாவின் சகலநகரங்க
ளின்மேலும்வருவித்ததீமைகளெல்லாங்கண்டீர்
கள்.-பாருங்கள், அவர்கள்தாங்களும், நீங்களும், ௩
உங்கள்முன்னேரும் அறியாத தேவர்களுக்குத்
தூபங்காட்டுகிறதினுலும் சேவிக்கிறதினுலும் எ
ன்னைக் கோபப்படுத்தும்படிசெய்த தீமையினி
மித்தம் அவைகள் இந்நாளில்பாழாய்க்கிடக்கின்
றன, அவைகளில் வசிப்பார் ஒருவருமில்லை.—
நானே,ஆ, நான்வெறுக்கிறஇந்தஅரோசியமான ௪
காரியத்தைச்செய்யாதிருங்களென்று என்தாசரா
கியதீர்க்கதரிசிகள்யாவரையுங் கொண்டுவிரைந்
துசொல்லி அனுப்பினேன்.-அவர்களோ அந்நிய ௫
தேவர்களுக்குத் தூபங்காட்டாமல் தங்கள்தீமை
யைவிட்டுத் திரும்பும்படி சிந்திக்கவுமில்லை, செ
விசாய்க்கவுமில்லை.—ஆதலால் என் உக்கிரமும் ௬
என்கோபமுமூண்டு, யூதாவின் நகரங்களிலும்
யெருஷலேமின் வீதிகளிலுஞ்சொரிந்தன; அதி
னுல்அவைகள் இன்றிருக்கிறபடி அவாந்தரமும்
வெறுமையுமாயிருக்கின்றனவென்றுர்.—இஸ்ர ௭
வேலின் தேவனும் சேனுபதியான தேவனு
மாகிய யெகோவா, நீங்கள் பூமியிலுள்ளச
ருவதேசத்தார்களுக்கும் உங்களைச்சேதிக்கிறதற்
குச்சாபமும்அவமானமுமாகிய எகிப்துதேசத்தி
லேதங்கி,அந்நியதேவர்களுக்குத்தூபங்காட்டி,-
உங்கள் கைகளின்கிரியைகளினுல் என்னைக் ௮
கோபப்படுத்தி,யூதாவில்ஒருவரும்உங்களுக்குள்
மீந்திராதபடிக்கும்உங்கள்புருஷரையும்,ஸ்திரிக
ளையும், பிள்ளைகளையும்,குழந்தைகளையுஞ்சேதிக்
கும்படிக்கும் உங்கள்பிராணனுக்குவிரோதமாய்
இவ்வளவுதீமைசெய்யவேண்டியதென்ன.-யூதா ௯
தேசத்திலும் யெருஷலேமின் வீதிகளிலும் உங்
கள்முன்னேர்கள்செய்ததீமையையும்,யூதாவின்
இராசாக்கள்செய்ததீமையையும், அவர்களுடை
யமனைவியர்செய்த தீமையையும், நீங்கள்செய்த
தீமையையும்,உங்கள்மனைவியர்செய்ததீமையை
யும், நீங்கள்மறந்துவிட்டீர்களா.-இந்நாள்வரைக் ௰
கும்அவர்கள் மனஸ்தாபப்படவுமில்லை, பயப்ப
டவுமில்லை, உங்கள்பார்வைக்கும், உங்கள் முன்
னேரின்பார்வைக்கும்முன்பாகநான்வைத்தவே
தத்துக்கும்,விதிப்பிரமாணங்களுக்குமேற்நடக்
கவுமில்லையென்றுசொல்லுகிறுர்.

ஆதலால் இஸ்ரவேலின் தேவனும் சேனு ௰௧
பதியுமாகிய யெகோவா, பருங்கள், யூதா
வமிசம் முழுவதையுஞ் சேதிக்கிறதற்கு நான்தீ
மைக்காக என் முகத்தை உங்களுக்கு நேராக்
குவேன்.—எகிப்துதேசத்திலே தங்கும்படி தங் ௰௨
கள்முகங்களை அதற்குநேராக்கின யூதாவின்மீந்

(௫) அதி.௪௰.௰௧,௰௨. அதி.௪௧.௰. அதி.௩௯.௰. (௭) ஏசா.௩௰.௪. (௰) எசேக்.௨௯.௰௮,௨௰. (௰௧) சக.௰௧.௯. (௰௨) அதி.௪௬.௨௫.—(௪௪. அதி. ௧.) யாத்.௰௪.௨. ஏசா.௰௯.௰௩. (௩) உபா.௰௩.௭. (௪) உ.நாளா.௩௬.௰௫. (௭) அதி.௪௨.௰௮. (௮) எண்.௰௬.௩௮. (௰) சங்.௫௧.௰௭. நீதி.௨௮.௰௪. (௰௧) லேவி.௰௭.௰௨. ஆமோ.௯.௪.

திருக்கிறசனங்களைச் சேர்த்துக்கொள்வேன், அ
வர்களெல்லாரும் எகிப்துதேசத்தில் நாசமடை
வார்கள்,அவர்கள்விழுவார்கள்; கட்கத்தினாலும்
பஞ்சத்தினாலும்நாசமாவார்கள்: சிறியோர்பெரி
யோர்யாவருங் கட்கத்தினாலும்பஞ்சத்தினாலுஞ்
சாவார்கள்: சாபமும், அற்புதமும், நிந்தையும்,
௰௩ அவமானமுமுள்ளவர்களாவார்கள்.—நான் யெ
ரூஷலேமைத்தண்டித்ததுபோல், எகிப்துதேசத்
தில் தங்கியிருக்கிறவர்களையுங் கட்கத்தினாலும்,
பஞ்சத்தினாலும்,கொள்ளைநோயினாலுந்தண்டிப்
௰௪ பேன்.—யூதாதேசத்திற்குத்திரும்புவோமென்று
விரும்பி எகிப்துதேசத்திலேதங்கும் யூதர்களுக்
குள் மீந்தவர்களில் அத்தேசத்திற்குப்போகும்ப
டி ஒருவருந் தப்பமாட்டார், மீந்திருக்கவுமாட்
டார்: தப்புகிறசிலரேயன்றி ஒருவரும்அங்கேதி
ரும்பமாட்டாரெனறு சொல்லுகிறாரென்பதைச்
சொல்லிற்று.
௰௫ அப்பொழுதுதங்கள்மனைவியர் அந்நியதேவர்
களுக்குத்தூபங்காட்டுவதை அறிந்த சமஸ்த புரு
ஷரும், சமீபித்துநின்றசகலஸ்திரிகளும், எகிப்
துதேசத்திலேபத்ரோசில்வாசம்பண்ணினசனங்
கள்யாவரும்பெரியகூட்டமாய் எரேமியாவுக்கு
௰௬ உத்தரமாக,—நீ யெகோவாவின் நாமத்தைக்
கொண்டு எங்களுக்குச் சொல்லிய வாக்குக்கு
௰௭ நாங்கள்செவிகொடுக்கமாட்டோம்.-நாங்களும்,
எங்கள் பிதாக்களும், எங்கள்இராசாக்களும், பி
ரபுகளும், யூதாவின் நகரங்களிலும்யெரூஷலே
மின் வீதிகளிலுஞ் செய்துவருவதுபோல நாங்
கள்வானத்தின்இராசாத்திக்குத்தூபங்காட்டி, அ
வளுக்குப் பானபலிகளை ஊற்றும்படி எங்களு
டைய வாயினின்றுபுறப்படும் ஒவ்வொன்றுக்
குமேற்க நிச்சயமாய்ச்செய்வோம்: அக்காலத்
தில் நாங்கள் உணவுப்பொருளை மிகுதியாய்ப்
பெற்றோம், வாழ்வடைந்தோம், ஒருதீமையுங்கா
௰௮ ணவில்லை.—நாங்கள் வானத்தின்இராசாத்திக்குத்
தூபங்காட்டாமலும், அவளுக்குப் பானபலிக
ளைச்சொரியாமலும்விட்டதுமுதல் எல்லாவற்றி
லுங்குறைவுபட்டோம், கட்கத்தினாலும் பஞ்சத்
௰௯ தினாலும் நாசமடைந்தோம்.—நாங்கள் வானத்
தின்இராசாத்திக்குத்தூபங்காட்டி, அவளுக்குப்
பானபலிகளை ஊற்றினபொழுது நாங்கள் எங்க
ளெங்கள்புருஷரின்றி அவளைவணங்கும்படிஅச்
சுப்பணிகாரங்களைச்சுட்டு, அவளுக்குப்பானப
லிகளையூற்றினோமா என்றார்கள்.
௨௰ அப்பொழுது எரேமியாதனக்கு உத்தரந்தந்த
சகலசனங்களாகிய ஸ்திரிகள், புருஷர்கள், மற்ற
௨௧ வர்கள்யாவரையும்நோக்கி,—யூதாநகரங்களிலும்
யெரூஷலேமின்வீதிகளிலும்நீங்களும், உங்கள்
பிதாக்களும், உங்களிராசாக்களும், உங்கள்பிரபு
களும், தேசத்தின் சனங்களுங் காட்டின தூபத்
தை யெகோவா நினைத்ததில்லையா; அதின்
௨௨ மேல் சிந்தைவைத்ததில்லையா.—யெகோவா
வினால் உங்கள்துஷ்டகிரியைகளையும், நீங்கள்
செய்த அரோசியமுள்ளவைகளையுஞ்சகிக்கக்கூ
டாமற்போயிற்று; அதினிமித்தம் உங்கள்தேசம்
இன்றிருக்கிறபடி குடியில்லாமல் வெறுமையா
கிப்பிரமிப்புஞ்சாபமுமாயிற்று.—நீங்கள்தூபங் ௨௩
காட்டி யெகோவாவுக்கு விரோதமாய்ப்
பாவஞ்செய்தீர்கள், யெகோவாவின் வாக்
குக்கு அமைந்திருக்கவில்லை, அவர் அருளியவே
தத்துக்கும், விதிப்பிரமாணங்களுக்கும், அவரு
டையசாட்சிப்பிரமாணங்களுக்குமேற்க நடக்க
வில்லை; ஆதலால் இன்றிருக்கிறபடி இந்தத்தீமை
உங்களுக்கு நேரிட்டதென்றான்.—பின்னும் எ ௨௪
ரேமியா சகல ஸ்திரிகளையும், மற்றச்சகலசனங்
களையும்நோக்கி, எகிப்துதேசத்திலுள்ளயூதாவமி
சத்தாரே, நீங்களெல்லாரும் யெகோவாவின்
வாக்கைக் கேளுங்கள்.—இஸ்ரவேலின் தேவ ௨௫
னும்சேனைபதியுமாகிய யெகோவா, நீங்களும்
உங்கள்மனைவியரும், நாங்கள் வானத்தின் இரா
சாத்திக்குத் தூபங்காட்டும்படிக்கும், அவளுக்
குப் பானபலிகளைச்சொரியும்படிக்கும் பண்ணி
னசங்கற்பங்களை நிறைவேற்றுவோமென்று உங்
கள்வாயினாலேசொல்லி, உங்கள்கையினாலே நி
றைவேற்றினீர்கள். நீங்கள் உங்கள்சங்கற்பங்க
ளைச்சித்திசெய்து உங்கள் மனோவாஞ்சையை நி
றைவேற்றுவீர்கள்.—ஆதலால் எகிப்துதேசத்தில் ௨௬
தங்குகிற யூதாவமிசத்தாரே, நீங்களெல்லாரும்
யெகோவாவின் வாக்கைக்கேளுங்கள்; பா
ருங்கள், ஆண்டவராகிய யெகோவாவின்
நித்தியத்துவத்தைக் கொண்டென்று எகிப்துதே
சத்திலிருக்கிறயூதரில் ஒருவர் வாயினாலும் இனி
என்னுடையநாமம் வழங்கப்படுவதில்லையென்
று நான் என்மகிமையுள்ளநாமத்தைக்கொண்டு ஆ
ணையிடுகிறேனென்று யெகோவா சொல்லுகி
றார்.-பாருங்கள், நான்அவர்கள்மேல்நன்மைக்கா ௨௭
கவல்ல, தீமைக்காகவே காத்திருக்கிறேன்: எ
கிப்துதேசத்தில் தங்கும் யூதாசனங்கள்யாவரும்
ஒழியுமட்டுங் கட்கத்தினாலும் பஞ்சத்தினாலும்
நாசமடைவார்கள்.—ஆனாலுங்கட்கத்திற்குத்தப் ௨௮
புஞ்சிலர், எகிப்துதேசத்தினின்றுயூதாதேசத்திற்
குத்திரும்புவார்கள், அக்காலத்தில்என்வாக்கோ,
அவர்களுடைய வாக்கோ, ஆருடைய வாக்கு
வாய்க்குமென்று எகிப்துதேசத்தில் தங்குகிறதற்
கு அங்கேபோயிருக்கிறயூதாவில்மீந்திருக்கிறவர்
கள் சகலரும் அறிவார்களென்று சொல்லுகிறார்.
என்னுடையவாக்குகள் உங்களுக்குத் தீமை ௨௯
யாய்ப்பலிக்குமேயென்று நீங்கள் அறியும்பொ
ருட்டு இந்தஸ்தானத்திலே நான் உங்களைத்தண்
டிப்பேனென்றதற்கு, இதுவே அடையாளமென்
று யெகோவா சொல்லுகிறார்.—பாருங்கள், ௩௰
நான் யூதாவின்இராசாவாகிய சிதேக்கியாவை, அ
வன்பிராணனைவாங்கவகைதேடின அவன்சத்து
ருவாகிய பாபேலின்இராசாவான நெபுகத்நேச்
சரின்கையில்ஒப்பித்ததுபோல், பார்வோன்ஒப்
புறாவென்னும் எகிப்தின் இராசாவையும், அ

---

(௰௭) எண்.௩௰.௰௨. உபா.௨௩.௨௩. நியா.௰௧.௩௬. (௨௩) தானி.௯.௰௧,௰௨. (௨௬) ஆதி.௨௨.௰௮. எசேக்.௨௰.௩௯.
(௨௭) எசேக்.௭.௬. (௨௮) ஏசா.௨௭.௰௩. (௨௯) சங்.௩௩.௰௧. (௩௰) எசேக்.௨௯.௩,.

வன்பிராணனைவாங்கவகைதேடும் அவன் சத்து
ருக்களின்கையில்ஒப்பிப்பேனென்று யெகோ
வா சொல்லுகிறாரென்றான்.

## ௪௫. அதிகாரம்.

பாருக் பயமடைந்ததினிமித்தம் எரேமியா அவ
னைஆற்றல்.

யூதாவின்இராசாவும் யோஷியாவின் புத்திரனு
மாகிய யோயாக்கீமின்நாலாம்வருஷத்தில், நேரி
யாவின்புத்திரனாகிய பாருக் இவ்வாக்குகளை எ
ரேமியாவின்வாய்சொல்ல ஒருபுஸ்தகத்தில் எழு
தினபொழுது, எரேமியாதீர்க்கதரிசி அவனிடத்
௨ தில்பேசி,—பாருக்கே, இஸரவேலின் தேவனா
௩ கியயெகோவா உன்னைக்குறித்து,-நீ,ஐயோ,
இப்பொழுதே எனக்குஆபத்துவரும், யெகோ
வா என் துக்கத்தோடே வியாகுலத்தைக் கூட்
டிவிட்டார்; நான்பெருமூச்செறிந்து சோர்ந்து
போனேன், இளைப்பாறுதல்எனக்குச்சற்றுமில்
லையென்று சொன்னாயென்கிறார்.
௪ நீ அவனிடத்தில்,பார்,நான்கட்டினதைஇடிப்
பேன், நான்நாட்டின இந்தத்தேசம் முழுவதை
௫ யும்பிடுங்குவேன்.-நீஉனக்காகப்பெரியகாரியங்
களைத் தேடுகிறாயா, அவைகளைத் தேடாதே:
பார், எல்லாமாமிசத்தின்மேலுந் தீமைவருவிப்
பேனென்று யெகோவா சொல்லுகிறார்: ஆ
னாலும் நீ போகுஞ்சகலஸ்தானங்களிலும் நான்
கொள்ளைப்பொருளைப்போல உன்பிராணனைஉ
னக்குத்தருவேனென்று யெகோவா சொல்
லுகிறாரென்றுசொல்லு.

## ௪௬. அதிகாரம்.

௧. பிருத்நதியிலே பார்வோன்இராசாவின்சேனை
கள் தோல்வியடையுமென்று தீர்க்கதரிசனஞ்
சொல்லல். ௰௩. நெபுகாத்நேத்சரால்எகிப்துசெ
யிக்கப்படுமென்று தீர்க்கதரிசனஞ்சொல்லல்:
௨௭. யாக்கோபுவமிசத்தாரைச்சாந்தப்படுத்தல்.

புறத்தேசத்தாரைக்குறித்து எரேமியாதீர்க்கதரி
சிக்குக்கிடைத்த யெகோவாவின் வாக்கு:—
௨ யூதாவின்இராசாவான யோஷியாவின்புத்திரனா
கிய யோயாக்கீமின்நாலாம்வருஷத்திலே, பாபே
லின்இராசாவாகிய நெபுகாத்நேத்சர், பிருத் நதி
யைச்சேர்ந்த கார்கேமீஷ்நகரத்தின்அருகில்இருந்
த எகிப்தின்இராசாவாகியபார்வோன் நேகோ
வின்சேனைக்கு விரோதமாகவும், எகிப்துக்குவி
ரோதமாகவும் இவ்வாக்குக்கிடைத்தது.—
௩ நீங்கள்கேடகத்தையும், பரிசையையும்எத்தனம்
௪ பண்ணி யுத்தத்திற்குச்சேருங்கள்.—குதிரையா
ளரே, குதிரைகளைப்பண்ணுறுத்திஏறுங்கள்; த
லைச்சீராக்களைத்தரித்து அணிவகுத்துவாருங்கள்;
ஈட்டிகளைத்துலக்கி, கவசங்களையிட்டுக்கொள்
௫ ளுங்கள்.—அவர்கள் கலங்கிப்பின்வாங்குவதை
நான்காண்கிறேன், அவர்கள்பலவான்கள்அதமா
னார்கள், அவசரமாய் ஓடினார்கள், பின்
னிட்டுப்பார்க்கவில்லை: சுற்றிலும்பயங்கரமுண்
டென்று யெகோவா சொல்லுகிறார்.—வேக ௬
மானவன்ஓடிப்போகானாக, பராக்கிரமசாலி தப்
பமாட்டான்; வடக்கிலே பிருத்நதியோரத்தில்
அவர்கள் இடறிவிழுவார்கள்.—பரந்தோடும் ந ௭
திகளின்வெள்ளம்போலவருகிற இவன்யாவன்.-
எகிப்துப்பாய்ந்தோடுகிற வெள்ளத்தைப்போல ௮
வும், பெருகும்நதியைப்போலவும் வருகின்றது;
நான்எழும்பித்தேசத்தைமூடி, நகரத்தையும் அ
தில் வசிப்பவர்களையும் நாசப்படுத்துவேனென்
கிறான்.-குதிரைகளே, போய் ஏறுங்கள்; இரதங் ௯
களே, கடகடவென்றுஓடுங்கள்; கேடகத்தைப்
பிடிக்குங்கூஷியரும், பூத்தியரும், வில்லைப்பி
டித்து நாணேற்றுகிறலீதியருமாகிய பராக்கிரம
சாலிகள்புறப்படக்கடவர்கள்.—இதுவே சேனை ௰
பதியும் தேவனுமாகிய யெகோவாவின்
நாள், அவர் தம்முடையசத்துருக்களுக்குப் பல
னளித்துப் பழிவாங்குநாள்: கட்கம்பட்சித்து,
அவர்களுடையஇரத்தத்தினால் திருத்தியடைந்து
வெறிகொள்ளும்: வடதேசத்தில் பிருத் நதியின்
சமீபத்தில் சேனைபதியும் ஆண்டவருமாகிய
யெகோவாவுக்கு ஒருபலியிடப்படும்.-எகிப் ௧௧
தின்குமாரத்தியாகிய கன்னிகையே, நீ கிலியாத்
துக்குப்போய்ப்பிசின்தைலத்தைவாங்கு:அநேக
ஔஷதங்களைத்தேடுவதுவீண்; நீ சொஸ்தமடை
யாய்.-புறத்தேசத்தார் உன் அவமானத்தைக்கேள் ௧௨
விப்பட்டார்கள், உன்அழுகை தேசத்தை நிரப்
பும்: பராக்கிரமசாலியும்பராக்கிரமசாலியும் ஒரு
வர்மேலொருவர் இடறி ஏகமாய்விழுந்தார்கள்.
எகிப்துதேசத்தை நாசப்படுத்துகிறதற்குப் பா ௧௩
பேல் இராசாவாகிய நெபுகாத்நேத்சர் வருவா
னென்பதைக்குறித்து எரேமியாதீர்க்கதரிசியினி
டத்தில் யெகோவா இவ்வாக்கைச்சொன்னார்.-
நீ நிலைகொண்டு உன்னை ஆயத்தப்படுத்து, உன் ௧௪
னைச்சுற்றிலும் கட்கம்பட்சிக்குமென்று சொல்
லி, நீங்கள் எகிப்திலேதெரிவித்து, மிக்தோலில்
அறியப்படுத்தி, நோப்பிலுந் தக்பானேசிலும் பிர
சித்தப்படுத்துங்கள்.—உன்பலவான்கள் வாரிக் ௧௫
கொள்ளப்பட்டதென்ன; அவர்கள் நிலைநிற்க
வில்லை, யெகோவா அவர்களைத்தள்ளிவிட்
டார்.-அவர் அநேகரைஇடறப்பண்ணினார், ஒரு ௧௬
வன்மற்றவன்மேல்விழுவான்: அவர்கள், நாமெ
ழுந்து, நெருக்குகிறகட்கத்தினின்றுதிரும்பி,நம்
முடைய சுயசனங்களிடத்திற்கும், நம்முடைய
சென்மதேசத்திற்கும்போவோம் வாருங்களென்
றார்கள்.—எகிப்தின் இராசாவாகிய பார்வோன் ௧௭
ஆரவாரம் நியமிக்கப்பட்டசமயந் தப்பிப்போ
னானென்று அங்கே சத்தமிட்டுச் சொல்லுவார்
கள்.-மலைகளில் தாபோரும், சமுத்திரத்தின்சமீ ௧௮
பத்தில் கர்மேலும் இருக்கிறநிச்சயம்போல், அ
வன்வருவானென்றுசேனைபதியாகிய யெகோ

(௪௫. அதி. ௫.) [illegible] (௨) அ[illegible].—(௪௬. அதி. ௨.) ௨. இரா. ௨௩. ௨௯. ௨. நாளா. ௩௫. ௨௰. (௩) அ[illegible] [illegible] ௨௧. [illegible]. (௬) தா[illegible]. (௭) ஏசா. ௮. ௭, ௮. தானி. ௰௧. ௨௨. (௯) ஏசா. ௬௬. ௰௯. (௰) செ[illegible]. யோவே. ௩. ௰௩. உபா. ௩௨. ௪௨. ஏசா. ௩௪. ௬. செப். ௧. ௭. எசேக். ௩௯. ௰௭. (௰௧) ஏசா. ௪௭. ௧. எசேக். ௩௦. ௨௧. (௰௩) ஏசா. ௰௯. ௧. (௰௬) லேவி. ௨௬. ௩௭. (௰௮) ஏசா. ௪௭. ௪. ஏசா. ௪௮. ௨.

வாவென்னும் நாமமுள்ள இராசா,என்நித்தியத்
துவத்தைக்கொண்டுசொல்லுகிறேனென்கிறார்.-
௰௯ எகிப்திலேவாசம்பண்ணுகிற கன்னிகையே, நீ
சிறைக்குப்போகஉன்னைஆயத்தப்படுத்து:நோப்
புவசிப்பாரில்லாமல் பாழும் வனாந்தரமுமாய்ப்
௨௰ போம்.—எகிப்துமிகவும்அழகுள்ள ஒருகடாரிக்
குச் சமானம், நாசம்வருகின்றது; வடதிசை
௨௧ யினின்றுவருகின்றது.-அதிலுள்ள கூலிப்படை
கள் புஷ்டியான காளைகளைப்போல இருக்கிறார்
கள்; அவர்கள் தண்டனைபெறும் ஆபத்துநாள்அ
வர்கள்மேல்வந்ததினாலே, அவர்கள் நில்லாமல் தி
௨௨ ரும்பி ஏகமாய்ஓடிப்போனார்கள்.—அதின்சத்தம்
சருப்பத்தின் சீறல்போலுண்டாகும்; அவர்கள்
சேனையோடே மரத்தைத்தறிக்கிறவர்களைப்போ
லக்கோடாரிகளைப்பிடித்துக்கொண்டுஅதற்குவி
௨௩ ரோதமாய்நடந்துவருவார்கள்.—அவர்கள்வெட்
டுக்கிளிகளிலும்அதிகமானஎண்ணிறந்ததொகை
யுள்ளவர்களாகையால், மரங்கள் நெருங்கிய அ
தின்காட்டைச்சேதிப்பார்களென்று யெகோ
௨௪ வா சொல்லுகிறார்.—எகிப்தின்குமாரத்தி கலங்
குவாள்; வடதிசையிலுள்ளசனங்களின்கையில்
௨௫ ஒப்பிக்கப்படுவாள்.-இஸரவேலின் தேவனுஞ்
சேனாபதியுமாகிய யெகோவா, நான்திரளா
னசனம் நிறைந்தநோப்பையும்,பார்வோனையும்,
எகிப்தையும், அவர்கள்தேவர்களையும், அவர்கள்
இராசாக்களையும்,பார்வோனையும்அவனைச்சார்ந்
திருக்கிறஎல்லாரையுந்தண்டிப்பேனென்கிறார்.-
௨௬ நான் அவர்கள்பிராணனைச்சேதிக்கவகைதேடுகி
றவர்களாகிய பாபேல்இராசாவானநெபுகத்நேத்
சரின்கையிலும், அவன்தாசரின்கையிலும் அவர்
களை ஒப்பிப்பேன்: அதற்குப்பின்புபூருவகாலத்
தில் இருந்ததுபோல அதுகுடியேற்றப்படுமென்
று யெகோவா சொல்லுகிறார்.
௨௭ என்தாசனாகிய யாக்கோபே, நீபயப்படாதே,
இஸரவேலே, நீ கலங்கவேண்டாம்: பார், நான்
தூரத்திலிருந்து,உன்னையும்உன்சந்ததியாரையும்
அவர்கள் சிறைப்பட்டுப்போன தேசத்தினின்று
விடுவிப்பேன்; அதினால் யாக்கோபுதிரும்பிவந்
து, சமாதானம்பெற்று, விக்கினமின்றி வசிப்பா
ன், அவனைஒருவனும்பயப்படுத்தமாட்டான்.-
௨௮ என் தாசனாகிய யாக்கோபே, நீபயப்படவேண்
டாம்: நான் உன்னோடே யிருக்கிறேன்;
என்னாலே துரத்தப்பட்டு, நீங்கள்போயிருந்தச
கல தேசத்தாரையும் நான் நிருமூலம்பண்ணினா
லும், உன்னை நிருமூலம்பண்ணேன், அளவோ
டே நான் உன்னைத்தண்டிப்பேன்; எப்படியும்
முழுவதும்தண்டனைசெய்யாமல் உன்னைவிடே
னென்று யெகோவா சொல்லுகிறார்.

## ௪௭. அதிகாரம்.

பெலிஸ்தியர் நாசமடைவார்களென்று தீர்க்கதரி
சனஞ்சொல்லல்.

பார்வோன் காசாநகரத்தை நாசப்படுத்துமுன், ௧
பெலிஸ்தியரைக்குறித்து எரேமியாதீர்க்கதரிசிக்
குக்கிடைத்த யெகோவாவின் வாக்கு:–பா ௨
ருங்கள், வடக்கினின்று சலம் எழும்பிவெள்
ளமாய்ப்பெருகி, தேசத்தின்மேலும், நகரத்தின்
மேலும், அதிலுள்ள எல்லாவற்றின்மேலும், அதி
லேவசிப்பவர்கள்மேலும் பாய்ந்தோடும்: அக்கா
லத்தில் சனங்கள் புலம்புவார்கள், தேசத்தார்
யாவரும் அலறுவார்கள்.—அவர்களுடையவலி ௩
மையான குதிரைகளின் குளம்புகளால்உண்
டாகிற சத்தத்தையும், இரதங்கள் உருளுகிற சத்
தத்தையும், அவன் சக்கரங்களின் சத்தத்தையுங்
கேட்டு, பிதாக்கள் பிள்ளைகளைப் பார்க்கக்கூடா
மல் கைசலித்துப்பின்னிடுவார்கள்.—பெலிஸ்தி ௪
யர்யாவரையுங்கொள்ளையாடவும், தீரு, சீதோன்
என்னும் நகரங்களில் மீந்திருக்குந் துணையாளர்
யாவரையுஞ் சேதிக்கவுந்தக்கநாள் வருகின்றது:
யெகோவா பெலிஸ்தியரையும்,கப்தோர்நாட்
டில் மீந்திருப்பவர்களையுங்கொள்ளையாடுவார்.–
காசா நகரத்தின்மேல் மொட்டைதோன்றிற்று; ௫
அஷ்கிலோன் அவர்களுடைய தாழ்ந்தபூமியில்
மீந்திருப்பவர்களோடே சேதிக்கப்படும்: நீ எது
வரைக்கும் உன்னைக்கீறிக்கொள்வாய்.–ஆ, யெ ௬
கோவாவின் கட்கமே, நீ எதுவரைக்கும் இ
ளைப்பாறுமலிருப்பாய்; நீ உன் உறையில்திரும்
பிப்போ, இளைப்பாறு, அமைதியாயிரு.—யெ ௭
கோவா அஷ்கிலோனுக்கும்,சமுத்திரத்தின் ஓ
ரத்துக்கும் விரோதமாய் அதை ஏற்படுத்திக் கட்
டளையிட்டாரே, அது அமைந்திருப்பதெப்படி.

## ௪௮. அதிகாரம்.

அகங்காரமும், நிர்ப்பயமும், தற்புகழ்ச்சியும்,
தேவனுக்குரிய சனங்களை நிந்திக்கும்நிந்தை
யுமாகிய இவைகளினிமித்தம் மோவாபியருக்
குத் தண்டனைவருமென்றும், முடிவுகாலத்தில்
அவர்களுக்கு மீட்சிவருமென்றுந் தீர்க்கதரிச
னஞ்சொல்லல்.

இஸரவேலின் தேவனும் சேனாபதியுமாகிய ௧
யெகோவா மோவாபைக்குறித்து இவ்வாக்
கைச்சொல்லுகிறார்; ஐயோ, நேபோ பாழாய்ப்
போயிற்று: கீரியத்தாயீம் கலங்கிப்பிடிக்கப்பட்
டது: மிஸ்காப் கலங்கி வியாகுலப்பட்டது.—
இனி ஒருபொழுதும் மோவாபுக்குக் கீர்த்தியில் ௨
லை: அது இனி ஒருசாதியாயிராதபடி சேதிப்
போமென்றுசொல்லி, எஷ்போனில் அதற்கு வி
ரோதமாய்த் துராலோசனை செய்கிறார்கள். மத்

(௰௯) எசா.௨௰.௪. (௨௰) ஓசி.௰.௰௧. (௨௧) சங்.௩௭.௰௩. அதி.௫௰.௨௭. (௨௨) எசா.௨௯.௪. (௨௩) எசா.௰.௩௪. நியா.௬.௫. (௨௫) எசேக்.௩௰.௰௪,௰௫,௰௬. நாகூ.௩.௮. எசேக்.௩௰.௰௩. (௨௬) எசேக்.௩௨.௰௧. எசேக்.௨௯.௰௧, ௰௩,௰௪. (௨௭) எசா.௪௧.௰௩,௰௪. (௨௮) அதி.௰.௨௪.—(௪௭. அதி. ௧.) எசேக்.௨௫.௰௫,௰௬. செப்.௨.௪,௫. ஆமோ. ௧.௬,௭,௮. (௨) எசா.௮.௭. அதி.௪௬.௭,௮,௨௰. (௩) நாகூ.௩.௨. (௪) எசேக்.௨௫.௰௬. ஆமோ.௧.௮. ஆதி.௰.௰௪. (௫) ஆமோ.௧.௭. மீகா.௧.௰௬. செப்.௨.௪,௭. சக.௯.௫. (௬) உபா.௩௨.௪௧. எசேக்.௨௧.௩,௪,௫. (௭) எசேக்.௰௪. ௰௭. மீகா.௬.௯.—(௪௮. அதி. ௧.) எசேக்.௨௫:௯. ஆமோ.௨.௧,௨. எண்.௩௨.௩௭,௩௮. ஏசா.௰௫.௨. (௨) ஏசா.௰௬. ௰௪. ஏசா.௰௫.௧,௪.

மெனே, நீயும் மவுனமாவாய்; கட்கம் உன்னைத்
௩ தொடரும்.—ஓரோனாயிமினின்று அழுகையும்,
கொள்ளையாடலும், மகாசங்காரமுமாகிய ஒருசத்
௪ தங்கேட்கின்றது.-மோவாபு நாசமாயிற்று; அதி
லுள்ளசிறுவர்கள்செய்கிற சத்தங்கேட்கின்றது.-
௫ லூகித்துக்கேறும் வழியில் நித்திய அழுகையின்
சத்தம் எழும்புகின்றது; ஓரோனாயிமுக் கிறங்
கும்வழியில் சத்துருக்கள் நாசத்தின் சத்தத்தைக்
௬ கேட்டார்கள்.—தப்பியோடுங்கள், உங்கள்பிரா
ணனை ரட்சித்துக்கொள்ளுங்கள், பாலைவனத்தி
லுள்ள எளியபூண்டைப்போலிருப்பீர்கள்.
௭ நீ உன்கிரியைகளையும் உன் பொருள்களையும்
நம்பினபடியினாலே நீயும் பிடிக்கப்படுவாய்: கி
மோஷ் தன் ஆசாரியரோடும் பிரபுகளோடும் சி
௮ றையாக்கப்படும்.—யெகோவா சொல்லிய பி
ரகாரம் நாசன் ஒவ்வொரு நகரத்தின்மேலும் வரு
வான், அதினால் எந்த நகரமுந்தப்பாது: தாழ்ந்த
௯ பூமிஅழிந்துபோம், சமபூமிநாசமடையும்.-மோ
வாபுபறந்துபோகும்படி அதற்குச் சிறகுகளைக்
கொடுங்கள்: அதின்நகரங்கள் குடிகளில்லாமல்
௰ வெறுமையாய்ப்போம்.-யெகோவாவின் கி
ரியையைக் கபடமாய்ச்செய்கிறவனெவனோ அ
வன் சபிக்கப்பட்டவன், இரத்தஞ்சிந்தாமல் தன்
கட்கத்தைத் தடுக்கிறவன் சபிக்கப்பட்டவன்.
௰௧ மோவாபு தன் இள வயது முதல் சுகியாய்
வாழ்ந்தது, அது தன் வண்டல்களின்மேல் அசை
யாமலிருந்து ஒருபாத்திரத்தினின்று வேறொரு
பாத்திரத்திலேவார்க்கப்படவில்லை, அதுசிறைப்
பட்டுப்போகவில்லை: ஆதலால் அதின் இரசம் அ
திலேயிருக்கின்றது, அதின்வாசனை வேறுபட
௰௨ வில்லை.—ஆதலால் பாருங்கள், அதைக்கவிழ்த்து,
அதின் பாத்திரங்களை வெறுமையாக்கி, அதின்
சாடிகளைத் தகர்க்கும்படி கவிழ்க்கிறவர்களை அ
தற்கு நான் அனுப்புங்காலம் வருமென்று யெ
௰௩ கோவா சொல்லுகிறார்.—இஸரவேல் வமிசத்
தார் தங்கள் விசுவாசப்பொருளாகிய பெத்தே
லைக்குறித்துஇலச்சையடைந்ததுபோல்,மோவா
பு கிமோஷைப்பற்றி இலச்சை அடையும்.
௰௪ நாங்கள் யுத்தத்திற்குப் பராக்கிரமசாலிகள், ப
லவான்களென்று நீங்கள் சொல்வதெப்படி.—
௰௫ மோவாபையும் அதின்பட்டணங்களையும்பாழ்ப
டுத்துகிறவன்ஏறிப்போனான்,தெரிந்துகொள்ளப்
பட்ட அவன்வாலிபர் கொலைக்களத்துக்கு இ
றங்கிப்போனார்களென்று சேனாபதியாகிய யெ
கோவா வென்னும்நாமமுள்ளஇராசாசொல்லு
௰௬ கிறார்.—மோவாபின் ஆபத்துச்சமீபித்து வருகின்
௰௭ றது, அவன்துக்கந் துரிதமாய்வருகின்றது.—அவ
னைச்சூழ இருக்கிறவர்களும், அவன் நாமத்தை
அறிந்தவர்களுமாகிய நீங்களெல்லாரும் அவன்
நிமித்தம் புலம்பி, வலிமையானகோல், அந்தச்
சௌந்தரியமுள்ளதண்டம் எப்படிமுறிந்துபோ
யிற்றென்றுசொல்லுங்கள்.—தீபோனில் வாசமா ௰௮
யிருக்கிறகுமாரத்தியே,நீ மகிமையினின்றுஇறங்
கித்தாகத்தோடேயிரு; மோவாபின்நாசன் உனக்
குவிரோதமாய்வந்தேறி,உன்துருக்கங்களையிடிப்
பான்.—அரோவேரில் வாசமாயிருக்கிறவளே, ௰௯
வழியருகே நின்றுகொண்டு எட்டிப்பார்; ந
டந்ததென்னவென்று ஓடிவருகிறவனையும், தப்
பிப்போகிறவளையும்பார்த்துக்கேள்.—மோவாபு ௨௰
கலக்கப்பட்டது; அது இடிந்துபோயிற்று: நீங்கள்
சத்தமிட்டு அழுதுகொண்டு, மோவாபுகொள்ளை
யாடப்பட்டுப்போயிற்றென்று அர்னோனிலேபி
ரசித்தப்படுத்துங்கள்.—சமபூமியென்னும் ஓலோ ௨௧
னின்மேலும், யாகாசாவின்மேலும், மேபாகாத்
தின்மேலும்,—தீபோனின்மேலும், நேபோவின் ௨௨
மேலும், பேத்திப்லாதாயீமின்மேலும்,-கீரியத்தா ௨௩
யீமின்மேலும், பேத்காமூலின்மேலும், பேத்மி
யோனின்மேலும்,—கிரீயோத்தின்மேலும், போத் ௨௪
ஸ்றாவின்மேலும், மோவாபு தேசத்தில்தூரமுஞ்
சமீபமுமான சகல நகரங்களின்மேலுந் தண்ட
னைவந்தது.—மோவாபின்கொம்பு சேதிக்கப்பட் ௨௫
டது, அவன்புயம் முறிந்துபோயிற்றென்று யெ
கோவா சொல்லுகிறார்.
அவனை வெறியாக்குங்கள்: அவன் யெகோ ௨௬
வாவுக்கு விரோதமாகத் தன்னை மேன்மை
பாராட்டுகிறான்: மோவாபு வாந்திபண்ணி அதி
லேபுரளுவான், அவன் பரிகாசம் பண்ணப்படு
வான்.—இஸரவேலல்லவோ உனக்குப் பரிகாச ௨௭
மாயிருந்தான், அவன்திருடருக்குள்ளே கண்டு
பிடிக்கப்பட்டானோ; நீ அவனைக்குறித்துப் பே
சினது முதல் சந்தோஷத்தினிமித்தந் துள்ளுகி
றாய்.—மோவாபில் வாசம்பண்ணுகிறவர்களாகி ௨௮
ய நீங்கள் நகரங்களைவிட்டுக் கல்மலையிலே வா
சம் பண்ணுங்கள், குகையின் வாசலிலே தன்
கூட்டைக்கட்டுகிற புறாவைப்போலிருங்கள்.—
நாம், மகாஅகங்காரமுள்ள மோவாபின்மேட்டி ௨௯
மையையும், அகங்காரத்தையும், பெருமையை
யும், கருவத்தையும், மனச்செருக்கையுங் கேட்
டோம்.-அவன் குரோதத்தைஅறிவேன்; அது ப ௩௰
லியாது; அவன் பொய்கள் பலியாதென்று யெ
கோவா சொல்லுகிறார்.-ஆகையால் நான் மோ ௩௧
வாபின் நிமித்தம் அலறுவேன்; மோவாபின் ச
கல தேசத்தினிமித்தமும் ஊளையிடுவேன், கி
ராரேசின் சனங்கள் நிமித்தம் என் இருதயம்
புலம்பும்.—சிப்மாவிலுள்ள திராட்சக்கொடியே, ௩௨
நான் யாசேரின் அழுகையோடே உன்னைக்கு
றித்து அழுவேன்: உன் கிளைகள் சமுத்திரத்துக்
கப்பால் போயின, அவைகள்யாசேர்சமுத்திரப

(௫) ஏசா.௰௫.௫. (௬) அதி.௫௧.௬. அதி.௰௭.௬. (௭) எண்.௨௧.௨௯. நியா.௰௧.௨௪. ஏசா.௪௬.௧,௨. அதி.௪௯.௰௨. அதி.௪௯.௩. (௯) சங்.௫௫.௬. (௰) நியா.௫.௨௩. ௧.சாமு.௰௫.௩,௯. ௧.இரா.௨௰.௪௨. (௰௧) செப்.௧.௰௨. (௰௩) நியா.௰௧.௨௪. ௧.இரா.௰௧.௭. ஓசி.௰.௬. ௧.இரா.௰௨.௨௯. (௰௪) ஏசா.௰௬.௬. (௰௫) அதி.௫௰.௨௭. (௰௮) ஏசா.௪௭.௧. எண்.௨௧.௩௰. ஏசா.௰௫.௨. (௰௯) உபா.௨.௩௬. ௧.சாமு.௪.௰௩,௰௬. (௨௰) ஏசா.௰௬.௭. எண்.௨௧.௰௩. (௨௪) ஆமோ.௨.௨. (௨௫) சங்.௭௫.௰. எசேக்.௩௰.௨௧. (௨௬) அதி.௨௫.௰௫,௨௭. (௨௭) செப்.௨.௮. (௨௮) சங்.௫௫.௬,௭. உன்.௨.௪. (௨௯) ஏசா.௰௬.௬,. (௩௰) ஏசா.௰௬.௬. அதி.௫௰.௩௬. (௩௧) ஏசா.௰௫.௫. (௩௨) ஏசா.௰௬.௮,௯.

ரியந்தம் பரந்தன: கோடைகாலத்திலுள்ள உன்
பழத்தின்மேலும், உன் திராட்சப்பழத்தின்மே
௩௩ லும் நாசன் பாய்ந்துவிட்டான்.-மோவாபுதேசத்
திலும் செழிக்கும் வயல்வெளிகளிலும் நின்று
சந்தோஷமும் மகிழ்ச்சியும் எடுபட்டன;நான்தி
ராட்சசாலைகளிலேதிராட்சரசத்தைஒழியப்பண்
ணினேன்: ஆரவாரத்தோடே மிதிப்பார்ஒருவரு
௩௪ மில்லை; அந்தஆரவாரம் ஆரவாரமல்ல.-எஷ்போ
னின் ஓலத்தினிமித்தம் அவர்கள் எலியாலேவ
ரைக்கும், யாகாஸ்வரைக்கும், சோவார்முதல் ஒ
ரோனாயிம்வரைக்கும்மூன்றுவருஷத்துக் கடாரி
யைப்போலத் தங்கள்சத்தத்தை உயர்த்தினார்கள்:
௩௫ நிம்ரீமிலுள்ள சலங்களும் வற்றிப்போம்.—உயர்ந்
தஸ்தானங்களிலே பலியிடுகிறவனும், தன் தே
வர்களுக்குத் தூபங்காட்டுகிறவனும் மோவாபு
தேசத்திலில்லாதொழியும்படி பண்ணுவேனென்
௩௬ றுயெகோவாசொல்லுகிறார்.—ஆகையால்மோ
வாபினிமித்தம் என்மனங்குழல்கள்போலத்தொ
னிக்கும், கூட்டிவைக்கப்பட்ட பொருள் நாச
மாய்ப்போனபடியினால் கீராரேசின் சனங்களி
னிமித்தம் என்னிருதயம் குழல்கள் போலச் சத்
௩௭ தமிடும்.—ஒவ்வொருதலையும் மொட்டையாகும்,
ஒவ்வொருதாடியுங் கத்தரிக்கப்படும்: எல்லாக்
கைகளிலுங்கீறுதல்களுண்டு, அவர்கள் அரைக
௩௮ ளில் இரட்டுத்தரிக்கப்படும்.—மோவாபின் சக
ல உப்பரிகைகள்மேலும் அதின் வீதிகளிலெங்
கும் புலம்பலுண்டாகும்: பிரியமில்லாத ஒரு
பாத்திரத்தைப்போல நான் மோவாபை யுடைத்
தேனென்று யெகோவாசொல்லுகிறார்.—
௩௯ மோவாபு எப்படித்தகர்ந்துபோயிற்று, இலச்சை
யினிமித்தம் எப்படிப்புறங்காட்டி விட்டதென்
றுசொல்லி அலறுவார்கள்; அவனைச் சுற்றியிருக்
கிற யாவருக்கும் மோவாபு பரிகாசமும் பயங்
௪௰ கரமுமுள்ளவனாவான்.—பாருங்கள், அவன்கழு
கைப்போலப் பறந்து வந்து, மோவாபின்மேல்
தன்சிறகுகளை விரிப்பானென்று யெகோவா
௪௧ சொல்லுகிறார்.—பட்டணங்கள் பிடிக்கப்பட்ட
ன, துருக்கங்கள் சடிதியாகக்கைக்கொள்ளப்ப
டும், அந்நாளிலே மோவாபின் பராக்கிரமசாலி
களின்மனம்பிரசவவேதனையின்சமயத்தில் ஸ்தி
ரியின் மனம் எப்படியோ, அப்படியிருக்கும்.—
௪௨ மோவாபு யெகோவாவுக்கு விரோதமாய்
மேன்மைபாராட்டினபடியினால் அவன் ஒருசன
௪௩ மாயிராதபடி நாசப்பட்டுப்போவான்.—மோவா
பில்வசிப்பவனே, பயமும், குழியும், கண்ணியும்
உனக்கு நேரிடுகின்றனவென்று யெகோ
௪௪ வா சொல்லுகிறார்.—பயத்தினிமித்தந் தப்பும்ப
டி ஓடுகிறவன் குழியில்விழுவான்; குழியினின்
று ஏறுகிறவன் கண்ணியில்அகப்படுவான்: மோ
வாபைத் தண்டிக்கும்வருஷத்தை அதின்மேல்
கொண்டுவருவேனென்று யெகோவாசொல்
லுகிறார்.—பராக்கிரமத்திற்கஞ்சி ஓடுகிறவர்கள் ௪௫
எஷ்போனின் நிழலிலே தரித்துநின்றார்கள்: ஆ
னாலும்எஷ்போனினின்றுஅக்கினியும்,சீகோன்
மத்தியினின்றுஅக்கினிச்சுவாலையும்புறப்பட்டு,
மோவாபுதேசத்தின் எல்லையையும், கலகஞ்செய்
பவர்களின் உச்சந்தலையையும் பட்சிக்கும்.—ஐ ௪௬
யோ, மோவாபே, உனக்கு ஆபத்துவரும், கிமோ
ஷின் சனங்கள் நாசமாய்ப்போனார்கள்: உங்கள்
புத்திரர் சிறைகளும், உங்கள் புத்திரிகள் அடி
மைக்காரிகளுமானார்களென்று சொல்லுகிறார்.
ஆனாலும் முடிவுகாலத்தில் மோவாபைச்சி ௪௭
றையினின்று நான் மீட்டுக்கொள்வேனென்று
யெகோவாசொல்லுகிறார். மோவாபின் தண்
டனையின் விவரம்முற்றுப்பெற்றது.

## ௪௯. அதிகாரம்.

௧. அம்மோன்புத்திரரைக்குறித்துத்தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௭. ஏதோமியரைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௨௩. தமஸ்குவைக்குறித்துத்தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௨௮. கேதார்ஆத்சோர் என்பவைகளைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௩௪. ஏலாமியரைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்.

அம்மோன் புத்திரரைக்குறித்து யெகோவா ௧
இவ்வாக்குச் சொல்லுகிறார்; இஸரவேலுக்குச்
சந்ததியாரில்லையா, அவனுக்குச் சுதந்தரவாளி
யில்லையா, அவர்களுடைய இராசா காத்தைச்சு
தந்தரித்துக் கொள்ளுகிறதேது; அவன் சனங்கள்
அவனுடையநகரங்களிலேவாசம்பண்ணவேண்
டியதென்ன.—ஆதலால் பாருங்கள், அம்மோன் ௨
புத்திரரின் நகரமாகிய ரப்பாவிலே யுத்தத்தின்
ஆரவாரத்தை நான் கேட்கப்பண்ணுங்காலம் வ
ருமென்று யெகோவா சொல்லுகிறார்; அது
பாழ்மேடாகும், அதின் கன்னியர் அக்கினியினா
லே தகிக்கப்படுவார்கள்: அப்பொழுது இஸர
வேல் தன்தேசத்தைச்சுதந்தரித்துக்கொண்டவர்
களின் தேசத்தைச்சுதந்தரித்துக்கொள்வானென்
று யெகோவா சொல்லுகிறார்.—எஷ்போ ௩
னே, அலறு, ஆயி பாழாயிற்று: ரப்பாவின்கு
மாரத்திகளே, அழுங்கள், இரட்டைத்தரித்துக்
கொண்டு புலம்புங்கள்; வேலிகளின் அருகில்
அங்குமிங்குமோடுங்கள்; அவர்களுடையஇரா
சா ஆசாரியர்களோடும் பிரபுகளோடுங்கூடச் சி
றைப்பட்டுப்போவான்.—உன் செல்வத்தை நம் ௪
புகிற மாறுபாடான குமாரத்தியே, எனக்கு வி
ரோதமாய் வருபவன் யாவனென்றுசொல்லி நீ
தாழ்ந்த பூமிகளையும் செழிக்கும் உன் பள்ளத்
தையுங்குறித்து மேன்மைபாராட்டுகிறதென்ன.-
பார், உன்னைச்சுற்றியிருக்கிற எல்லாராலும்உன் ௫
மேல் பயம்வருவிப்பேனென்று சேனாபதியும்

(௩௩) ஏசா.௰௬.௰. யோவே.௧.௰௨. (௩௪) ஏசா.௰௫.௪,௫,௬. (௩௫) ஏசா.௰௫.௨. (௩௬) ஏசா.௰௫.௫,௭. (௩௭) ஏசா.௰௫.௨,௩. ஆதி.௩௭.௩௪. (௪௰) உபா.௨௮.௪௯. தானி.௭.௪. ஓசி.௮.௧. அபகூ.௧.௮. ஏசா.௮.௮. (௪௧) ஏசா.௰௩.௮. மீகா.௪.௯. (௪௨) ஏசா.௭.௮. (௪௩) ஏசா.௨௪.௰௭,௰௮. (௪௫) எண்.௨௧.௨௮. எண்.௨௪.௰௭. (௪௬) எண்.௨௧.௨௯. (௪௭) அதி.௪௯.௬,௩௯.—(௪௯. அதி.௧.) எசேக்.௨௧.௨௮. ஆமோ.௧.௰௩. செப்.௨.௮,௯. (௨) எசேக்.௨௫.௫. ஆமோ.௧.௰௪. (௩) ஏசா.௩௨.௰௧. ௧.இரா.௰௧.௫,௩௩. ஆமோ.௧.௰௫.

தேவனுமாகியயெகோவாசொல்லுகிருர்;
நீங்களெல்லாரும் ஒவ்வொருவனுகநேராய்த்து
ரத்திவிடப்படுவீர்கள்; தப்பிஓடுகிறவனைச்சேர்ப்
௬ பார் ஒருவருமில்லை.-பின்பு அம்மோன் புத்திர
ரைச் சிறையினின்று மீட்டுக்கொள்வேனென்று
யெகோவா சொல்லுகிருர்.
௭ தேமானிலே ஞானமில்லையா, விவேகிகளி
னின்று ஆலோசனைஒழிந்துபோயிற்ரு; அவர்க
ளுடையஞானம்அகன்றுபோயிற்ருவென்று சே
ஞபதியாகிய யெகோவா எதோமைக்குறித்
௮ துச்சொல்லுகிருர்.—தேதானிலே வாசமாயிருக்
கிறவர்களே, நீங்கள் ஓடுங்கள், புறங்காட்டுங்கள்,
பள்ளத்தில் ஒதுங்கிப்போங்கள்; நான் விசாரிக்
குங்காலத்தையும் ஆபத்தையும் ஏசாவின்மேல் வ
௯ ருவிப்பேன்.—திராட்சப்பழங்களைச் சேர்க்கிற
வர்கள் உன்னிடத்தில்வந்தால் கொஞ்சம்ப
ழம் விடமாட்டார்களா; திருடர் இராத்திரிகா
லத்திலேவந்தால் தங்களுக்குவேண்டியமட்டும்
௰ அபகரிப்பார்கள்.-நானே ஏசாவைவெறுமையா
க்குவேன், அவன் ஒளித்துக்கொள்ளக்கூடாதப
டிக்கு அவனுடையமறைவிடங்களை வெளிப்ப
டுத்துவேன்: அவன்வமிசமும், அவன் சகோதர
ரும், அவன்அயலார்களும் கொள்ளையாடப்பட்
௰௧ டார்கள், அவனில்லை.—நீ உன் அநாதபிள்ளைக
ளைவிட்டுவிடு, நான் அவைகளை உயிரோடே
காப்பாற்றுவேன்; உன்விதவைகள் என்னைநம்பு
௰௨ வார்களாக.-பார், பாத்திரத்தில்குடிக்கப்படாதெ
ன்றுதீர்ப்புப்பெற்றவர்கள் நிச்சயமாய் அதிற்கு
டித்தார்களே; நீ சற்றுந்தண்டனையின்றித் தப்பு
வாயா, நீதண்டனைக்குத்தப்பமாட்டாய்; அவசி
யமாகப்பாத்திரத்திற் குடிப்பாயென்று யெ
௰௩ கோவா சொல்லுகிருர்.—போத்ஸ்ரு பாழும்,
நிந்தையும், அவாந்தரமும், சாபமுமுள்ளதாகும்;
அதைச்சேர்ந்த சகலபட்டணங்களும் நித்தியப்
பாழாயிருக்குமென்று என்னைக்கொண்டு ஆணை
யிடுகிறேனென்பதை யெகோவா சொல்லு
௰௪ கிருர்.—நீங்கள் அதற்குவிரோதமாகயுத்தஞ்செய்
கிறதற்குஎகமாய்க்கூடிவாருங்களென்றுசொல்
ல, புறச்சாதியாரிடத்தில் தாஞபதிஅனுப்பப்ப
டுஞ்செய்தியை யெகோவாவிடத்தில் நான்
௰௫ கேட்டேன்.—பார், உன்னை அந்நியதேசத்தா
ருக்குள்ளே சிறியவனும், மனுஷருக்குள் அவ
௰௬ மதிக்கப்பட்டவனுமாக்குவேன்.—மலைக்குகை
களில் வாசம்பண்ணுகிறவனே, மலையுச்சியின்
சுதந்தரவாளியே, உன்பயங்கரமும், உன் இருத
யத்தின் அகங்காரமும் உன்னைவஞ்சித்தன: நீ
கழுகைப்போல உயர்ந்தஸ்தானத்தில் உன் கூட்
டைக்கட்டினுலும், நான் உன்னை அங்கேநின்று
தாழ்த்துவேனென்று யெகோவா சொல்லுகி
௰௭ ருர்.—எதோமும் பாழாகும்: அதின் வழியாய்ப்
போகிறவர்கள்யாவரும் பிரமித்து, அதின் எல்லா
வாதைகளையுங்குறித்துச்சீறுவார்கள்.—சோதோ ௰௮
மும், கொமோராவும், அவைகளின்அயல் ஊர்
களுங் கவிழ்க்கப்பட்டவைகள்போலிருக்கும்,
ஒருவனும் அதில்தங்கான், மனுஷசாதியார் ஒரு
வரும் அதில்வாசம்பண்ணுரென்று யெகோ
வா சொல்லுகிருர்.—பெருகியோடுகிற யோர் ௰௯
தான்நதியினின்று சிங்கம்வருவதுபோல, வலி
மையான வாசஸ்தலத்துக்குவிரோதமாய் வருகி
ருன், நான் அங்கிருந்தும் அவனைவிரைந்தோ
டப்பண்ணுவேன்: நான் அதின்மேல்ஏற்படுத்
தும்படி தெரிந்துகொள்ளப்பட்டவன் யாவன்,
எனக்குநிகரானவன்யாவன், எனக்குக்காலத்தை
நியமிக்கிறவன் யாவன், என்சந்நிதியில் நிற்கும்
மேய்ப்பன் யாவன்.—ஆதலால் யெகோவா ௨௰
எதோமுக்கு விரோதமாகச்செய்த ஆலோசனை
யையும், அவர் தேமான்வாசிகளுக்கு விரோதமா
கப்பண்ணினதீர்மானங்களையுங்கேளுங்கள்: மந்
தையில்சிறுவரும்அவர்களை வெளியே இழுத்துக்
கொள்வார்களே: அவர்களுடைய வாசஸ்தானங்
களை வெறுமையாக்குவாரே.—அவைகள் இடிந் ௨௧
துவிழுஞ்சத்தத்தினுல்பூமிஅதிரும், அழுகையின்
சத்தஞ் செங்கடல்வரைக்குங்கேட்கின்றது.—
பாருங்கள், அவன்வந்து ஒருகழுகைப்போலப் ௨௨
பறந்து, போத்ஸ்ருமேல் தன் சிறகுகளைவிரிப்
பான்: அந்நாளில் எதோமியருடைய பராக்கிர
மசாலிகளின் இருதயம் பிரசவவேதனையின்சம
யத்தில் ஸ்திரியின்மனம்போலிருக்கும்.
தமஸ்குவைப்பற்றும் வாக்கியம். அமாத்தும் ௨௩
அர்பாத்தும்வியாகுலப்படுகின்றன: அவர்கள்து
ர்ச்செய்தியைக்கேட்டார்கள்: அவர்கள்மனங்க
ரைந்துபோகிருர்கள்; சமுத்திரத்தின்மேல் புலம்
பலுண்டு; அமைதலில்லை.—தமஸ்குமெலிவடைந் ௨௪
து ஓடுகிறதற்குப்புறங்காட்டுவாள், பயம் அவ
ளைப்பிடித்தது: பிரசவகாலத்தில் வேதனை ஸ்தி
ரியைப்பிடிப்பதுபோல் வேதனையுந் துக்கமும்
அவளைப்பிடித்தன.—கீர்த்திபெற்றநகரமும், என் ௨௫
னுடைய ஆனந்தம்நிறைந்தநகரமும் விடப்படா
தெதன்ன.—ஆதலால் அந்நாளில் அதின்வாலி ௨௬
பர் வீதிகளிலேவிழுவார்கள், யுத்தவீரர்கள் யாவ
ருஞ் சேதிக்கப்படுவார்களென்றுசேனபதியாகி
ய யெகோவா சொல்லுகிருர்.—தமஸ்குவின் ௨௭
மதிலில் அக்கினியைக் கொளுத்துவேன், அது
பென்னாதத்தின் அரமனைகளைப்பட்சிக்கும்.
பாபேலின் இராசாவாகியநெபுகத்நெத்சார்சங் ௨௮
கரிக்கும் கேதார், ஆத்சோர் இராச்சியங்களைக்கு
றித்து யெகோவா இவ்வாக்கைச்சொல்லுகி
ருர்; நீங்கள் எழுந்து, கேதாருக்குப்போய், கிழ்த்
தேசத்துச்சனங்களைக் கொள்ளையாடுங்கள்.—அ ௨௯
வர்கள்தங்களுக்கென்று அவர்கள் கூடாரங்களை

(௭) எசேக். ௨௫. ௰௨. ஆமோ. ௧. ௰௧. ஒப. ௮. எசா. ௰௯. ௰௧. (௯) ஒப. ௫. (௰) மல். ௧. ௩. எசா. ௰௭. ௰௪. (௰௨) ஒப. ௰௬. (௰௩) ஆதி. ௨௨. ௰௮. எசா. ௪௫. ௨௩. ஆமோ ௬ ௮. எசா. ௩௪. ௬. (௰௪) ஒப. ௧, ௨, ௩. (௰௬) ஒப. ௪. யோபு. ௩௯. ௨௭. ஆமோ. ௯. ௨. (௰௮) ஆதி. ௰௯ ௨௫. உபா. ௨௯. ௨௩. ஆமோ. ௪. ௰௧. (௰௯) அதி. ௫௰ ௪௪. யாத். ௰௫. ௰௨. யோபு. ௪௧. ௰. அதி. ௫௰. ௪௫. (௨௩) எசா. ௰௭. ௧. ஆமோ. ௧. ௩. ௪௧. ௯. ௧, ௨. எசா. ௫௭. ௨௰. (௨௪) எசா. ௰௩. ௮. (௨௭) ஆமோ. ௧. ௪. (௨௮) எசா. ௨௧. ௰௩. நியா. ௬. ௩. யோபு. ௧. ௩. (௨௧) சங். ௱௨௰. ௫.

யும்,மந்தைகளையும்,அவர்கள்திரைகளையும்,அவர்
களுடையசகலபாத்திரங்களையும்,ஒட்டகங்களை
யுங்கொண்டுபோவார்கள்; அவர்கள் அவர்களுக்
குச்சுற்றிலும்பயமுண்டென்றுசொல்லுவார்கள்
௩௰ ஆத்சோரின் குடிகளே, துரிதமாய் ஓடுங்கள்,
தூரத்திற்குப்போய்ப் பள்ளத்தில்ஒதுங்கி வாசம்
பண்ணுங்கள், பாபேலின் இராசாவாகிய நெபு
கத்நெத்சர் உங்களுக்குவிரோதமாய்ஆலோசனை
செய்து, உங்களுக்கு விரோதமாய்த்தீர்மானம்
பண்ணியிருக்கிறானென்று யெகோவா சொல்
௩௧ லுகிறார்.—நீங்கள் எழுந்து கதவுகளும் தாழ்களும்
இல்லாமல் நிர்ப்பயமும் நிர்விசாரமுமாகத்தனித்
து வசிக்கிறசாதியாருக்கு விரோதமாய்ப்போங்க
௩௨ ளென்று யெகோவா சொல்லுகிறார்.—அவர்
களுடைய ஒட்டகங்கள்கொள்ளைப்பொருளும்,
அவர்களுடையமிகுதியானஆடுமாடுகள்சூறைப்
பொருளுமாகும்: நான்குகாற்றுத்திசைகளுமான
கடையெல்லையின்மூலைகளுக்குள் அவர்களைச்சி
தறஅடிப்பேன், நான்குதிசையிலுமிருந்து அவர்
களுக்கு ஆபத்துவரப்பண்ணுவேனென்று யெ
௩௩ கோவா சொல்லுகிறார்.—ஆத்சோர்வலியசருப்
பங்களுக்கு இருப்பிடமாகும், அதுநித்தமும் பா
ழாய்ப்போம்: அதில்ஒருவனுந் தங்கமாட்டான்,
மனுஷசாதியாரொருவரும் அதில் குடியிருக்க
மாட்டார்.
௩௪ யூதாவின்இராசாவாகிய சிதிகியா அரசாளத்
தொடங்கினகாலத்தில், ஏலாமைக்குறித்து எரே
மியா தீர்க்கதரிசிக்குக்கிடைத்த யெகோவா
௩௫ வின் வாக்கு:—சேனைபதியாகிய யெகோ
வா, பாருங்கள், நான் ஏலாமின்வில்லென்னும்
அவர்களுடைய பிரதானவல்லமையை நாசப்ப
௩௬ டுத்துவேனென்கிறார்.—வானத்தின் நான்குதி
சையினின்று நாலுகாற்றுக்களை ஏலாமின்மேல்
வீசப்பண்ணுவேன், அந்தக்காற்றுக்கள் எல்லா
வற்றின்முகங்களிலும் அவர்களைத்தூற்றுவேன்;
துரத்திவிடப்பட்ட ஏலாமியர்போகாதசாதியார்
௩௭ இருப்பதில்லை.—நான் ஏலாமியரைஅவர்கள்சத்
துருக்களுக்கு முன்பாகவும், அவர்கள் பிராண
னைவாங்க வகைதேடுகிறவர்களுக்கு முன்பாக
வும் கலங்கப்பண்ணுவேன்: என் உக்கிரகோப
மென்னுந்தீமையை அவர்கள்மேல் வருவிப்பே
னென்று யெகோவா சொல்லுகிறார்; நான்
அவர்களை நாசப்படுத்தும்வரைக்கும் கட்கத்தை
௩௮ அவர்களுக்குப்பின்னாக அனுப்புவேன்.—ஏலா
மியரால் என்சிங்காசனத்தைஸ்தாபிப்பேன், அ
திலிருந்துஇராசாவையும் பிரபுகளையும் நாசப்ப
டுத்துவேனென்று யெகோவா சொல்லுகிறார்.
௩௯ ஆனாலும் முடிவுகாலத்தில் நான்சிறையினின்
று ஏலாமைமீட்டுக்கொள்வேனென்று யெகோ
வா சொல்லுகிறாரென்பதைச்சொல்லிற்று.

## ௫௰. அதிகாரம்.

பாபேல்நகரத்துக்குத்தண்டனைவருமென்று தீர்க்
கதரிசனஞ்சொல்லல், இஸரவேல்சனங்களுக்
குமீட்சிவருமென்று முன்னுரைத்தல்.

யெகோவா, எரேமியா தீர்க்கதரிசியைக் ௧
கொண்டு, பாபேலையுங் கல்தேயரின்தேசத்தை
யுங்குறித்துச்சொல்லுவித்தவாக்கு:—பாபேல் நக ௨
ரம்பிடிக்கப்பட்டது, பேல் வியாகுலமடைந்த
து,மிரோதக்தகர்க்கப்பட்டது; அதின்விக்கிரகங்
கள் இலச்சையடைந்தன, அதின்சிலைகள் கண்
டதுண்டமாயினவென்றுசொல்லித்தேசத்தாருக்
குள்இதைத்தெரிவித்துப்பிரசித்தப்படுத்துங்கள்;
இதை மறையாமல் கொடியேற்றிப் பிரசித்தப்ப
டுத்துங்கள்.-வடக்கினின்று அதற்குவிரோதமாய் ௩
ஒரு சாதி வந்து அதின் தேசத்தைப்பாழாக்கும்,
ஒருவரும் அதிலேவாசம்பண்ணமாட்டார்: மனு
ஷர் மிருகங்களுடன்நீங்கிவிடுவார்கள்.

அந்நாள்களிலே அக்காலத்தில் இஸரவேல்சந் ௪
ததியாரும், யூதாவமிசத்தாரும் ஏகமாய்வருவார்
கள்; அழுது அழுது சென்று, தங்கள் தேவனா
கிய யெகோவாவைத் தேடுவார்களென்று
யெகோவா சொல்லுகிறார்.—ஒருபொழுதும் ௫
மறக்கப்படாத நித்திய உடன்படிக்கையினால்
நாம் யெகோவாவுடனே நம்மைச்சேர்ப்
போம்வாருங்களென்று சொல்லி, சீயோன்தி
சைக்கு எதிர்முகமாகி,அதற்குப்போகும்வழியா
தென்று கேட்டுவிசாரிப்பார்கள்.—என்சனங்கள் ௬
காணாமற்போன ஆடுகள்போலிருந்தார்கள்: அ
வர்கள் தங்கள்மேய்ப்பரால் மலைகளின்மேலே
சிதறஅடிக்கப்பட்டுப்போனார்கள்: அவர்கள் ஒ
ருமலையினின்று வேறொருமலைக்குப்போய் அ
லைந்து, தங்கள் இளைப்பாறும்ஸ்தானத்தை மறந்
துவிட்டார்கள்.—அவர்களைக் கண்டவர்கள்யா ௭
வரும் அவர்களைப்பட்சித்தார்கள்: அவர்கள் நீதி
யின்வாசஸ்தலமாகிய யெகோவாவுக்கு வி
ரோதமாய்,தங்கள்பிதாக்கள்நம்பின யெகோ
வாவுக்கு விரோதமாகவே பாவஞ்செய்தார்
கள்,ஆதலால் எங்களிடத்தில்குற்றமில்லையென்
று அவர்கள்சத்துருக்கள் சொல்லுவார்கள்.—நீங் ௮
கள் பாபேல்மத்தியிலிருந்துபோங்கள், கல்தே
யரின்தேசத்தினின்று புறப்படுங்கள், மந்தைக
ளின்முன்நடக்குங்கடாக்களைப்போலிருங்கள்.

பாருங்கள், நான் பாபேலுக்கு விரோதமாக ௯
வடதேசத்தினின்று பிரதான சாதிகளின் கூட்
டத்தை எழுப்பி வருவிக்க, அவர்கள் அதற்கு வி
ரோதமாக அணிவகுப்பார்கள்; அவர்களால்அது
பிடிக்கப்படும்: அவர்களுடையஅம்புகள்சாமர்த்
தியமுள்ள வில்வீரரின் அம்புகளைப்போலிருக்
கும்; அவைகளில் ஒன்றும் விருதாவாகத் திரும்
பாது.-கல்தேயதேசங்கொள்ளைப்பொருளாகும்: ௰

(௩௧)எசேக்.௩௮.௰௧.எண்.௨௩.௯.உபா.௩௩.௨௮.மீகா.௭.௰௪.(௩௨)எசேக்.௫.௰.(௩௩)மல்.௧.௩.(௩௫)ஏசா.௨௨.௬.—(௫௰. அதி. ௧.) ஏசா.௰௩.௧. (௨) ஏசா.௪௬.௧. அதி.௫௧.௪௪. (௩) அதி.௫௧.௪௮. ஏசா.௰௩.௰௭,௰௮,௨௰. (௪) ஓசி.௧.௰௧. எஸ்றா.௩.௰௨,௰௩. சங்.௱௨௬.௫,௬. சக.௰௨.௰. ஓசி.௩.௫. (௬) ஏசா.௫௩.௬. ௧.பேதுரு.௫.௨,௨௫. (௭) சங்.௭௯.௭. சக.௰௧.௫. தானி.௯.௰௬. சங்.௯௰.௧. சங்.௨௨.௪. (௮) ஏசா.௪௮.௨௰. சக.௨.௬,௭. வெளி.௰௮.௪.(௯)௨.சா முு.௧.௨௨. (௰) வெளி.௰௭.௰௬.

அதைக்கொள்ளையாடும் யாவருந் திருத்திபெறு
வார்களென்று யெகோவா சொல்லுகிறார்.—
௰௧ என் சுதந்தரத்தை நாசப்படுத்தினவர்களே, நீங்
கள் சந்தோஷப்பட்டீர்கள், மகிழ்ந்தீர்கள், நீங்
கள் புல்லுமேயுங் கடாரியைப்போல புஷ்டியா
னீர்கள், வலிய குதிரைகளைப்போலக் கனைத்தீர்
௰௨ கள்.-ஆதாலால் உங்கள்மாதா மிகவும்வியாகுலப்
படுவாள்; உங்களைப்பெற்றவள் இலச்சையடை
வாள்: பாருங்கள், அவள் சாதியாருக்குள்கடை
யும், வனமும், வறண்டபூமியும், அவாந்தரமுமா
௰௩ வாள்.—யெகோவாவின் கோபத்தினிமித்
தம் அது குடியிருப்பாரில்லாமல் முழுமையும்
பாழாய்ப்போம்: பாபேலின் வழியாய்ப் போகி
ற யாவரும் பிரமித்து, அதின் சகலவாதைகளை
௰௪ யுங்கண்டு சீறுவார்கள்.—நீங்கள் பாபேலுக்குவி
ரோதமாக நான்கு திசையிலும் அணிவகுத்துக்
கொள்ளுங்கள்: வில்வீரரே, நீங்கள் எல்லாரும்
அதின் மேல் அம்புகளை எய்யுங்கள், ஓயாமல்
எய்யுங்கள்: அது யெகோவாவுக்குவிரோத
௰௫ மாய்ப் பாவஞ்செய்தது.—அதின் சுற்றிலும் ஆர
வாரியுங்கள்: அது தன்னை ஒப்பித்தது: அதின்
அத்திபாரங்கள் இடிந்தன, அதின் மதில்கள் கீ
ழே விழுந்தன: இது யெகோவா வாங்கும்ப
ழி: அதனிடத்திற்பழிவாங்குங்கள்; அதுசெய்த
௰௬ துபோல நீங்களும்அதற்குச்செய்யுங்கள்.-விதை
விதைக்கிறவனையும், அறுப்புக்காலத்தில் அரிவா
ளைப்பிடிக்கிறவனையும் பாபேலில்நின்று சேதி
யுங்கள்: உபத்திரவப்படுத்துங் கட்கத்துக்குஅஞ்
சி அவர்கள் தங்கள்சனங்களிடத்தில்திரும்பிப்
போவார்கள், அவர்கள் தங்கள்தங்கள் சுயதேசத்
துக்குத் தப்பிஓடுவார்கள்.
௰௭ இஸரவேல் சிதறுண்டஆடு: சிங்கங்கள் சிதற
அடித்தன: முதல்முதல் அஷீரியவின்இராசா அ
தைப்பட்சித்தான்; பின்பு பாபேலின்இராசாவா
கிய இந்தநெபுகத்நெத்சர் அதின்எலும்புகளை மு
௰௮ றித்தான்.—ஆதலால் இஸரவேலின் தேவனும்
சேனுபதியுமாகிய யெகோவா, பாருங்கள்,
நான் அஷீரியஇராசாவைத்தண்டித்ததுபோலப்
பாபேலின்இராசாவையும், அவன்தேசத்தையுந்
௰௯ தண்டிப்பேன்.-இஸரவேலைத்திரும்பவும்அவன்
தொழுவத்துக்குக்கொண்டுவருவேன், அவன்கர்
மேலிலும்பாஷானிலும்மேய்வான்,எப்ராயீமின்
மலையிலும்,கிலியாத்திலும் அவன்ஆத்துமந்திருத்
௨௰ தியாகுமென்கிறார்.—அக்காலத்திலே அந்நாள்க
ளில்இஸரவேலின்அக்கிரமங்கள்தேடப்பட்டா
லும், அவை யில்லை; யூதாவின்பாவங்கள்தேடப்
பட்டாலும், அவை காணப்படாமலிருக்கும்;
நான் மீதியாகவைத்தவர்களைமன்னிப்பேனென்
று யெகோவா சொல்லுகிறார்.
௨௧ கட்கமே, கலகங்களுள்ளதேசத்துக்கு வி
ரோதமாக எழுந்து, அதையும், விசாரிக்கப்படுந்
தேசத்தையுந்தண்டித்து, அவர்கள்சந்ததியார் ஒ
ழியும்படி அவர்களைநாசப்படுத்து: நான் உனக்
குக்கட்டளையிட்ட யாவற்றின்படிக்குஞ் செய்
யென்று யெகோவா சொல்லுகிறார்.—தேசத் ௨௨
திலே யுத்தத்தின்சத்தமும், மகாசங்காரமும் இ
ருக்கின்றன.—சருவபூமியின்சம்மட்டி எப்படிச் ௨௩
சேதிக்கப்பட்டு உடைந்துபோயிற்று; புறச்சாதி
யாருக்குள்ளே பாபேல் எவ்வளவுபாழாய்ப்போ
யிற்று.—பாபேலே, நான் உன்னிமித்தங் கண் ௨௪
ணிவைத்தேன், அதை நீ அறியாமல்அகப்பட்
டாய்: நீ யெகோவாவுக்கு விரோதமாக
யுத்தஞ்செய்தபடியால் சிக்குண்டு அகப்பட்டுப்
போனாய்.—யெகோவா தமது ஆயுதசாலை ௨௫
யைத்திறந்து, தமது குரோதத்தின் ஆயுதங்களை
வெளியே கொண்டுவந்தார்: கல்தேயர் தேசத்
தில்இதுவே ஆண்டவருஞ் சேனுபதியுமாகிய
யெகோவா செய்யுங்கிரியை.—தூரமானஎல் ௨௬
லையினின்று அதற்குவிரோதமாய்வாருங்கள், அ
தின்பண்டசாலைகளைத்திறந்துவிடுங்கள்:அதைப்
போர்கள்போலக்குவித்து, முழுமையும்நாசப்ப
டுத்துங்கள்: அதில்ஒன்றும்விடப்படாது.-அதின் ௨௭
காளைகளைஎல்லாங் கொலைசெய்யுங்கள்; அவை
கள் கொலைக்களத்துக்குப் போகக்கடவன: ஐ
யோ, அவைகளுக்கு ஆபத்துவரும், அவைகள்
விசாரிக்கப்படும் நாள் வந்துவிட்டது.— நம்மு ௨௮
டைய தேவனாகிய யெகோவாவின் பழி
வாங்குதலானஅவருடையஆலயத்தின்பழிவாங்
குதலைச்சீயோனிலேதெரிவிக்கும்படி, பாபேல்
தேசத்தைவிட்டுத் தப்பி ஓடிவந்தவர்களுடைய
சத்தங் கேட்கப்படும்.—பாபேலுக்குவிரோ ௨௯
தமாகவரும்படி வில்வீரரைஅழையுங்கள்: வில்
வீரரே, நீங்கள் எல்லாரும்அதற்குவிரோதமாகப்
பாளயம் இறங்குங்கள்; ஒருவரையுந்தப்பவிடா
திருங்கள்: அதின் கிரியைக்கேற்கப்பிரதிபலன
ளியுங்கள்; அதுசெய்த எல்லாவற்றின்படிக்கும்
அதற்குச்செய்யுங்கள்: அது இஸரவேலின்பரிசுத்
தராகிய யெகோவாவுக்கு விரோதமாய்த்
தன்னை மேன்மைபாராட்டினது.—அதினிமித்தம் ௩௰
அந்தத்தினத்தில்அதின்வாலிபர்அதின்வீதிகளில்
விழுவார்கள், அதின்யுத்தவீரர்சமஸ்தருஞ்சேதிக்
கப்படுவார்களென்று யெகோவா சொல்லுகி
றார்.—பார்,அகங்காரமுள்ளவளே, நான் உனக்கு ௩௧
விரோதியென்றுஆண்டவரும்சேனுபதியுமாகி
ய யெகோவா சொல்லுகிறார்:நான்உன்னைவி
சாரிக்குங்காலமாகியஉன்தினம்வந்துவிட்டது.-
அகங்காரமுள்ளவன்இடறிவிழுவான், அவனைத் ௩௨
தூக்குவாரில்லை: நான் அவன்நகரங்களில்அக்கி
னியைக்கொளுத்துவேன், அது அவனுக்கு நான்
கு திசையிலுமுள்ள சகலத்தையும்பட்சிக்கும்.

---

(௰௧) ஏசா.௪௭.௬. ஓசி.௰.௰௧. (௰௫) ௧.நாளா.௨௯.௨௪. ௨.நாளா.௩௰.௮. புல.௫.௬. எசேக்.௰௭.௰௮. சங்.௱௩௭.௮. வெளி.௰௮.௬. (௰௬) ஏசா.௰௩.௰௪. (௰௭) ௨.இரா.௰௭.௬. ௨.இரா.௨௪.௰,௰௪. (௰௯) ஏசா.௬௫.௰. எசேக்.௩௪.௰௩, ௰௪. (௨௰) ஏசா.௧.௯. (௨௧) எசேக்.௨௩.௨௩. ௨.சாமு.௰௬.௰௧. ௨.இரா.௰௮.௨௫. ௨.நாளா.௩௬.௨௩. ஏசா.௰.௬. (௨௨) அதி.௫௧.௫௪. (௨௩) ஏசா.௰௪.௬. (௨௪) தானி.௫.௩௰,௩௧. (௨௫) ஏசா.௰௩.௫. (௨௭) சங்.௨௨.௰௨. ஏசா.௩௪. ௭. (௨௯) அதி.௫௧.௫௬. வெளி.௰௮.௬. ஏசா.௪௭.௰. (௩௰) அதி.௪௯.௨௬.

௩௩ இஸரவேல்சந்ததியாரும் யூதாவமிசத்தாரும்
ஏகமாய்உபத்திரவப்பட்டார்கள்; அவர்களைச்சி
றைபிடித்தவர்கள் யாவரும் அவர்களைப்போகவி
டாமல் உறுதியாய்ப்பிடித்துக்கொண்டார்களெ
ன்றுசேனாபதியாகிய யெகோவா சொல்லுகி
௩௪ றார்.-சேனாபதியாகிய யெகோவாவென்னும்
நாமமுள்ள அவர்களுடையமீட்பர்வல்லமையுள்
ளவர்: பாபேலின்குடிகள் நடுநடுங்குகிறதற்கே
துவாய் அவர்தேசத்தை நடுங்கப்பண்ணி, அவர்
களுக்காகவழக்காடுவார்.
௩௫ கல்தேயரின்மேலும், பாபேலின் குடிகள்மே
லும், அதின் பிரபுகளின் மேலும், அதின் ஞானி
களின் மேலும் கட்கம் விழுந்ததென்று யெ
௩௬ கோவா சொல்லுகிறார்.—மாயாவித்தைக்கார
ரின்மேல் கட்கம்விழ, அவர்கள் மனம் மயங்
குவார்கள்: பராக்கிரமசாலிகளின்மேல் கட்கம்
௩௭ விழ, அவர்கள் அஞ்சிநடுங்குவார்கள்.—அதின்
குதிரைகளின்மேலும், அதின் இரதங்களின்மே
லும், அதின்மத்தியிலுள்ள கலப்பான சனங்கள்
மேலுங் கட்கம்விழ, அவர்கள் ஸ்திரிகளைப்போ
லாவார்கள்: அவர்கள் பொக்கிஷங்களின்மேல்
கட்கம்விழ, அவைகள் கொள்ளைப் பொருளா
௩௮ கும்.—மழைக்குத்தாழ்ச்சியுண்டாகும்; சலம்வற்
றிப்போம்: அது தொழிற்படுத்தப்பட்ட விக்கிர
கங்களுள்ளதேசம், அவர்கள் தங்கள்விக்கிரகங்
௩௯ கள்மேல் மனமயங்கியிருக்கிறார்கள்.—ஆதலால்
காட்டுமிருகங்களும், தீவுகளிலே சஞ்சரிக்கிற
மிருகங்களும் அதிலே வாசம்பண்ணும், கோட்
டான்கள்அதிலேதங்கும்: இனி ஒருபொழுதுஞ்
சீர்ப்படமாட்டாது; தலைமுறைதோறும் அதில்
௪௰ ஒருவரும் வாசம்பண்ணார்கள்.—தேவன் சோ
தோமையும்,கொமோராவையும்,அவைகளின்அ
யலூர்களையுங்கவிழ்த்ததுபோல்அவைகளைக்
கவிழ்ப்பாரென்று யெகோவாசொல்லு
கிறார்; அதினால் ஒருவரும் அதிலே தங்கமாட்
டார்,மனுபுத்திரரில்ஒருவரும்அதில்வசிக்கமாட்
௪௧ டார்.—பாருங்கள், வடக்கினின்று ஒருசனத்திர
ளும்மகாசாதியும்வரும்,பூமியின்எல்லைகளினின்
று அநேக இராசாக்களும் எழுப்பப்படுவார்கள்.—
௪௨ அவர்கள்வில்லையும், வேலையும்பிடித்துக்கொண்
டுவருவார்கள்: அவர்கள்தயையில்லாதவர்கள்,ஒ
ருவருக்கும்இரங்கமாட்டார்கள்: அவர்கள்சத்தம்
சமுத்திரத்தைப்போல் ஒலிக்கும்; பாபேலின்கு
மாரத்தியே,அவர்கள்குதிரைகளேறி,அணிவகுத்
து, யுத்தசன்னத்தராகி உனக்குவிரோதமாய்வரு
௪௩ வார்கள்.—அவர்கள் வருகிறசெய்தியைப் பாபே
லின்இராசாகேட்டபொழுது அவன் கை மெலி
வடைந்தது: ஸ்திரியின் பிரசவவேதனைபோன்ற
௪௪ வேதனைகள் அவனைப்பிடித்தன.—பாருங்கள்,
யோர்தான் நதியின்பெருக்கினின்று சிங்கம்வரு
வதுபோல், வலிமையான வாசஸ்தலத்துக்கு வி
ரோதமாய்வருகிறான்: நான் அங்கிருந்து அவனை
விரைந்தோடப்பண்ணுவேன்:நான்அதின்மேல்
ஏற்படுத்தும்படி தெரிந்துகொள்ளப்பட்டவன்
யாவன், எனக்கு நிகரானவன்யாவன், எனக்குக்
காலத்தை நியமிக்கிறவன் யாவன், என்சமுகத்
தில் நிற்கும் மேய்ப்பன்யாவன்.—ஆதலால் யெ ௪௫
கோவா பாபேல் நகரத்துக்கு விரோதமாய்ச்
செய்தஆலோசனையையும், அவர் கல்தேயருக்கு
விரோதமாகக்கொண்ட நியமங்களையுஞ் சேளுங்
கள்; மந்தையில்சிறுவரும்அவர்களைவெளியேஇ
ழுத்துக்கொள்வார்களே: அவர்களுடையவாசஸ்
தானங்களை வெறுமையாக்குவாரே.—பாபேல்ந ௪௬
கரம் பிடிக்கப்பட்டதென்னுஞ்சத்தத்தினால்பூமி
அதிரும், அதின் அழுகையின் சத்தம் புறச்சாதிக
ளுக்குள்ளே கேட்கின்றது.

## ௫௧. அதிகாரம்.

௧. பாபேலுக்குத்தண்டனைவருமென்றுதீர்க்கதரி
சனஞ்சொல்லல்: ௫௯. எரேமியா அந்தச்செய்
தியைப் பாபேலுக்கனுப்பி வாசிப்பித்தபின்பு
அதனோடேகல்லுகளைக்கட்டிப் பிறாத் நதியில்
அமிழ்ந்திய திருஷ்டாந்தத்தைத்தெரிவித்தல்.

யெகோவா இவ்வாக்கைச் சொல்லுகிறார்; ௧
பாருங்கள், நான்பாபேலுக்கும்,எனக்குவிரோத
மாயெழும்புகிறவர்கள் மத்தியில் வாசம்பண்ணு
கிறவர்களுக்கும் விரோதமாக அழிவுசெய்யுங்
காற்றைவீசப்பண்ணுவேன்.—தூற்றுவாரைப்பா ௨
பேலுக்கு அனுப்புவேன்,அவர்கள்அதைத்தூற்றி
அதின்தேசத்தை வெறுமையாக்குவார்கள்: ஆபத்
துநாளில் அதின் நான்குதிசையிலும் அதற்குவி
ரோதிகளாயிருப்பார்கள்.—நாணேற்றுகிறவனுக் ௩
கும், தன் சீராவோடு நிமிர்ந்து நிற்கிறவனுக்கும்
விரோதமாக,வில்வீரன்தன்வில்லைநாணேற்றக்க
டவன்: நீங்கள் அதின்வாலிபரைமீதியாகவிடா
திருங்கள்;அதின்சமஸ்தசேனையையுஞ்சங்காரம்
பண்ணுங்கள்.—கல்தேயரின் தேசத்தில்கொலை ௪
செய்யப்பட்டவர்களும்,அதின்இராசவீதிகளில்
உருவிக்குத்தப் பட்டவர்களும் விழுவார்
கள்.—அவர்கள் தேசம் இஸரவேலின்பரிசுத்தருக் ௫
கு விரோதமாகச்செய்த அக்கிரமத்தினால்நிறைந்
திருந்தும், இஸரவேலும் யூதாவுந் தங்கள் தேவ
னுஞ் சேனாபதியுமாகிய யெகோவாவினால்
கைவிடப்படவில்லை.—நீங்கள் ஒவ்வொருவரும் ௬
பாபேலின் அக்கிரமத்தின் தண்டனையில்சேதிக்
கப்படாதபடிக்கு, அதின் மத்தியினின்றுதப்பி
ஓடி, உங்கள் உங்கள் பிராணனை இரட்சிக்கக்க
டவீர்கள்; இது யெகோவா பழிவாங்குங்கா
லம்: அவர் அதற்குப்பிரதிபலனளிப்பார்.—பா ௭
பேல் யெகோவாவின் கையில் பூலோகத்
தார்யாவரையும் வெறிக்கப்பண்ணும்பொற்பாத்

(௩௪) வெளி.௰௮.௮. ஏசா.௪௭.௪. (௩௫) தானி.௫.௩௰. ஏசா.௪௭.௰௩. (௩௬) ஏசா.௪௪.௨௫. (௩௭) எசேக்.௩௰.௫. நாகூ.௩.௰௩. (௩௮) ஏசா.௪௪.௨௭. வெளி.௰௬.௰௨. (௩௯) ஏசா.௰௩.௨௰,௨௧,௨௨. வெளி.௰௮.௨. (௪௰) ஆதி.௰௯.௨௫. ஏசா.௰௩.௰௯. (௪௧) வெளி.௰௭.௰௬. (௪௨) ஏசா.௰௩.௰௮. ஏசா.௫.௩௰. (௪௩) அதி.௪௯.௨௪. (௪௪) யோபு.௪௧.௰. (௪௫) ஏசா.௰௪.௨௪. (௪௬) வெளி.௰௮.௯.—(௫௧. அதி. ௧.) ௨.இரா.௰௯.௭. (௨) அதி.௫௰.௰௪. (௩) அதி.௫௰.௰௪. அதி.௫௰.௨௧. (௬) வெளி.௰௮.௪. அதி.௫௰.௰௫,௨௮. (௭) வெளி.௰௭.௪. வெளி.௰௪.௮.

திரம் ஆயிற்று: அதிலுள்ள மதுபானத்தைப்பு
றத்தேசத்தார்குடித்ததினால் அவர்கள்மனமயங்கி
௮ னார்கள்.—பாபேல் சடிதியில்விழுந்து பாழாய்ப்
போயிற்று: அதினிமித்தம் அலறுங்கள்; அதைச்
சொஸ்தப்படுத்தக்கூடுமேயாகில் அதின் வியாதி
யைமாற்றும் பிசின்தைலத்தை எடுத்துக்கொள்
௯ ளுங்கள்.—பாபேலைச்சொஸ்தப்படுத்தும்படி வி
ரும்பினோம், அதுசொஸ்தப்படவில்லை: அதை
விட்டுநாம் ஒவ்வொருவரும் நமதுதேசத்துக்குப்
போவோம்வாருங்கள்: அதின்தண்டனைவானப
ரியந்தஞ்சென்று ஆகாயமண்டலங்கள் வரைக்
௰ கும்ஏறிப்போயிற்று.—யெகோவா நம்முடை
ய நீதியை வெளிப்படுத்தினார்: நம்முடையதே
வனாகிய யெகோவாவின் கிரியையைச்சீ
யோனில் பிரசித்தம்பண்ணுவோம்வாருங்கள்.—
௰௧ அம்புகளைத் துலக்குங்கள்; பரிசைகளைச் சேர்த்
துக்கொள்ளுங்கள்: யெகோவாமேதியருடை
யஇராசாக்களின்மனதைஏவிவிட்டார்: பாபேல்
நகரத்தை நாசப்படுத்துகிறதற்குத்தீர்மானித்தார்;
யெகோவா செய்யும் பிரதிபலன்அவருடை
யஆலயத்தினிமித்தம் உண்டாகும்பிரதிபலன்.—
௰௨ பாபேலின் மதில்களின்மேல் கொடியை ஏற்
றுங்கள், காவலாளரைத் தைரியப்படுத்துங்கள்
காவலாளரை ஏற்படுத்துங்கள், பதிவிருப்பாரை
வையுங்கள்: யெகோவா தாம் பாபேல் நக
ரத்தாருக்கு விரோதமாய்ச்சொல்லியபடி தீர்மா
௰௩ னித்துச்செய்திருக்கிறார்.—மிகவும் ஐசுவரியங்
களையுடையவளாகி, சலராசியின்ஓரத்தில்வாசம்
பண்ணுகிறவளே, உன்முடிவும், பொருளாசை
௰௪ யின்ஒழிவும்வந்துவிட்டன.—நிச்சயமாய்வெட்
டுக்கிளிகளெத்தனையோ, அத்தனைமனிதரால்உன்
னைநிரப்புவேன்; அவர்கள்உனக்குவிரோதமாக
ஆரவாரம்பண்ணுவார்களென்று சேனாபதியாகி
ய யெகோவா தமது நாமத்தைக்கொண்டே
௰௫ ஆணையிட்டார்.—அவர் தமதுவல்லமையினாலே
பூமியைச்சிருஷ்டித்தார், தமது ஞானத்தினாலே
பூலோகத்தை ஸ்தாபித்தார், தமது புத்தியினாலே
௰௬ வானத்தைவிரித்தார்.—அவர்முழக்கமிடும்பொழு
து ஆகாயத்திலே மிகுதியான சலந்தோன்றும்; பூ
மியின் எல்லைகளினின்று மேகங்களை எழும்பப்
பண்ணி, மழையுடனே மின்னல்களையுமுண்
டாக்கி, தமது பண்டசாலைகளினின்று காற்றுப்
௰௭ புறப்படப்பண்ணுகிறார்.—எந்தமனுஷனும் அ
றிவிலே மிருகத்துக்குச்சமானம்; தொழிற்படுத்
திய சுரூபத்தினால் அதைவார்க்கிறவன் இலச்சை
யடைவான்: அவன்வார்த்த சுரூபம்பொய், அ
௰௮ வைகளுக்குச்சுவாசமில்லை.—அவைகள் மாயை,
பிராந்தியின்கிரியை: தண்டனைவருங்காலத்தில்
௰௯ நாசமடையும்.—யாக்கோபின்பங்கு அவைகளைப்
போலல்ல; அவர் எல்லாவற்றிற்குஞ் சிருஷ்டி

கர்த்தா: இஸரவேல் அவர்சுதந்தரிக்கும்பங்
கு: அவர்நாமம் சேனாபதியாகிய யெகோவா.—
நீ என்மழு, என்யுத்தத்தின்ஆயுதம்: நான்உன்னைக் ௨௰
கொண்டு அந்நியதேசத்தாரைச் சங்கரிப்பேன்,
உன்னைக்கொண்டு இராச்சியங்களைச் சங்கரிப்
பேன்.—உன்னைக்கொண்டுகுதிரையையும், அதில் ௨௧
ஏறுகிறவனையுஞ்சங்கரிப்பேன்; உன்னால் இரதத்
தையும்அதில் ஏறுகிறவனையும்அழிப்பேன்.—உன் ௨௨
னைக்கொண்டுபுருஷனையும், ஸ்திரியையுஞ்சங்க
ரிப்பேன்; உன்னைக்கொண்டுபாலகனையும்விருத்
தனையுஞ் சங்கரிப்பேன்; உன்னைக்கொண்டுவா
லிபனையுங்கன்னிகையையுஞ் சங்கரிப்பேன்.—
உன்னைக்கொண்டுமேய்ப்பனையும்அவன்மந்தை ௨௩
யையுஞ் சங்கரிப்பேன்; உன்னைக்கொண்டு ப
யிர்ச்செய்கைக்காரனையும் அவன் ஏர்க்குண்டை
யையுஞ் சங்கரிப்பேன்; உன்னைக்கொண்டு சே
னாபதிகளையும்அதிகாரிகளையுஞ்சங்கரிப்பேன்.—
பாபேலுங் கல்தேயர் சமஸ்தரும் சீயோனில் ௨௪
செய்த அவர்களுடைய எல்லாத்தீமைக்கும் பிர
திபலனை உங்கள்முன்பாக அளிப்பேனென்று
யெகோவா சொல்லுகிறார்.—பூமிமுழுவதை ௨௫
யும் நாசப்படுத்தும் நாசனாகிய மலையே, பார்,
நான் உனக்கு விரோதியென்று யெகோவா
சொல்லுகிறார்: நான் உன்மேல் கையை ஓங்கி,
மலைகளினின்று உன்னையுருட்டிக்கீழேவிழுத்து
வேன், நான் உன்னை எரிந்தமலையாக்குவேன்.—
கோடிக்கு ஒருகல்லாயினும், அஸ்திபாரங்களுக் ௨௬
கு ஒரு கல்லாயினும் அவர்கள் உன்னிலிருந்து
எடுக்கமாட்டார்கள்; நீநித்தியப்பாழாவாயென்று
யெகோவா சொல்லுகிறார்.—தேசத்திலேகொ ௨௭
டியை ஏற்றுங்கள், புறத்தேசத்தாருக்குள் எக்கா
ளமூதுங்கள், அதற்குவிரோதமாய்ச் சாதியாரை
ஆயத்தப்படுத்துங்கள், அதற்கு விரோதமாய் அர
ராத், மின்னி, அஷ்கேனசென்னும் இராச்சியத்
தாரை ஏகமாய்க்கூட்டுங்கள், அதற்கு விரோத
மாகச் சேனாபதியை ஏற்படுத்துங்கள்; சுணையுள்
ள வெட்டுக்கிளிகளைப்போலக்குதிரைகளைவரப்
பண்ணுங்கள்.—மேதியர்தேசத்தின் இராசாக்க ௨௮
ளும், அதின் சேனாபதிகளும், அதின் சமஸ்த
அதிபதிகளும், அவன் ஆளுகைக்கு அமைந்த
சனங்களுமாகிய சாதியாரை அதற்குவிரோதமா
க ஆயத்தப்படுத்துங்கள்.—அதினால்தேசம் அதிர்ந் ௨௯
து துக்கங்கொள்ளும்: பாபேல் தேசத்தை வசிப்
பாரில்லாமல் பாழாக்கும்படி பாபேலுக்கு வி
ரோதமாக யெகோவாவின் தீர்மானஞ்சித்தி
யாகும்.—பாபேலின் பராக்கிரமசாலிகள் யுத்தம் ௩௰
பண்ணாமல்விட்டுத் தங்கள் கோட்டைகளில் த
ரித்திருக்கிறார்கள்: அவர்கள்பெலங்குன்றி, ஸ்தி
ரிகளைப்போலானார்கள்: அதின் வாசஸ்தானங்
கள் தகிக்கப்பட்டன; அதின் தாழ்கள் முறிக்

(௮) எசா.௨௧.௯. வெளி.௰௪.௮. வெளி.௰௮.௰,௰௧,௰௯. (௯) எசா.௰௩.௰௪. வெளி.௰௮.௫. (௰) சங்.௩௭.௬. (௰௧) அதி.௪௬.௪. எசா.௰௩.௰௭. (௰௨) நாகூ.௨.௧. (௰௩) வெளி.௰௭.௧,௰௫. (௰௪) ஆமோ.௬.௮. நாகூ.௩.௰௫.(௰௫)ஆதி.௧.௧,௬. யோர்பு.௯.௮. சங்.௱௪.௨. எசா.௪௰.௨௨.(௰௬)சங்.௱௩௫.௭. (௨௰) எசா.௰.௫,௰௫. (௨௨) ௨.நாளா.௩௬.௰௭. (௨௪) அதி.௫௰.௰௫,௨௯. (௨௫) எசா.௰௩.௨. ௪௧.௪.௭. வெளி.௮.௮. (௨௭) எசா.௰௩.௨. (௩௰) எசா.௰௯.௰௬. புல.௨.௯. ஆமோ.௧.௫. நாகூ.௩.௰௩.

௩௧ துபோயின.—ஒருபுறத்தில் நகரம் பிடிக்கப்பட்
டது, துறைவழிகள் அடைபட்டன, நாணல்க
ளுக்குள் அக்கினி எரிகின்றது, யுத்தவீரர் பயப்
படுகிறார்களென்று பாபேலின் இராசாவுக்குத்
௩௨ தெரிவிக்கும்படி,—அஞ்சற்காரனுக்கு எதிராக
அஞ்சற்காரனும், தூதனுக்கு எதிராகத் தூதனும்
௩௩ ஓடுகிறார்கள்.—பாபேலின் குமாரத்தி சூட்டுக்
களத்துக்குச் சமானம், அதைப் போரடிக்குங்கா
லம் வந்தது: அற்பநேரத்துக்குள் அரியறுக்குங்
காலம் வருமென்று இஸரவேலின் தேவனும்
சேனாபதியுமாகிய யெகோவா சொல்லுகி
௩௪ றார்.—பாபேலின் இராசாவாகிய நெபுகத்நேத்
சார் என்னைப் பட்சித்தான், என்னை நாசப்ப
டுத்தினான், என்னை வெறும்பாத்திரமாக்கினான்,
முதலையைப்போலஎன்னை விழுங்கினான். என்
சுவையுள்ள பதார்த்தங்களினாலே தன் உதரத்
௩௫ தைநிறைத்து என்னை அகற்றிவிட்டான்.—எனக்
கும் என் மாமிசத்திற்குமுண்டான கொடுமை
யும் உபத்திரவமும் எப்படியிருந்தனவோ, அப்
படியே பாபேலுக்கும் இருப்பதாகவென்று சீ
யோனில் வசிப்பவள் சொல்லக்கடவள்; என்
இரத்தப்பழி கல்தேயரின்மேல் இருப்பதாக
வென்று யெரூஷலேம் சொல்லக்கடவது.—
௩௬ பார், நான் உன் காரியத்தை நியாயம்விசாரித்
து,உன்னிமித்தம் பிரதிபலனளிப்பேன்; அதின்
சமுத்திரத்தையும் நீரூற்றுக்களையும் வற்றப்பண்
ணுவேனென்று யெகோவா சொல்லுகிறார்.-
௩௭ பாபேல் வசிப்பாரில்லாதமண்மேடுகளும், வலு
சருப்பங்களின் அளைகளும்,அற்புதமும், நிந்தை
௩௮ யுமாய்ப்போம்.-அவர்கள்ஏகமாய்ச்சிங்கங்களைப்
போலக் கருச்சிப்பார்கள்: சிங்கக்குட்டிகளைப்
௩௯ போலச்சத்தமிடுவார்கள்.—அவர்கள் களிக்குஞ்
சமயத்தில் அவர்களுக்கு விருந்துசெய்து, அவர்
களை வெறியாக்குவேன், அவர்கள் களிகூர்ந்து
இனிநித்திரைதெளியாதபடிக்கு மகா நித்திரை
கொள்ளப்பண்ணுவேனென்று யெகோவா
௪௰ சொல்லுகிறார்.—அவர்களைஆட்டுக்குட்டிகளைப்
போலவும், வெள்ளாட்டுக்குட்டிகளோடேஆட்
டுக்கடாக்களைப்போலவுங் கொலைக்களத்துக்குத்
௪௧ தாழ்த்துவேன்.-ஷேஷாக்எப்படி அகப்பட்டது;
பூமிமுழுவதற்குமுண்டான புகழ்ச்சி சடிதியில்
எப்படிஅகப்பட்டது; அந்நியதேசத்தாருக்குள்
௪௨ பாபேல்நகரம் எப்படி அற்புதமாயிற்று.—சமுத்
திரம் பாபேலின்மேல் பெருகிப்பாய்ந்தது; அ
தின்திரைகளின்மிகுதியினால்மூடப்பட்டது.—
௪௩ அதைச்சேர்ந்த பட்டணங்கள்பாழும், வறண்ட
பூமியும், வனமுமாயின; வசிப்பாரில்லாமல் ம
னுபுத்திரனொருவனுஞ் செல்லாமலிருக்கிற தே
௪௪ சமாயிற்று.—நான் பாபேல்நகரத்திலே பேலைத்
தண்டிப்பேன், அதுவிழுங்கினதை அதின்வாயி
னின்று கக்கப்பண்ணுவேன்: அந்நியதேசத்தார்
இனி அதைச்சேரமாட்டார்கள்: பாபேலின்மதி
லும்விழும்.—என்சனமே, நீங்கள்அதின்மத்தியி ௪௫
னின்றுபுறப்படுங்கள், யெகோவாவின் உக்
கிரகோபத்தினின்று உங்களுங்கள்பிராணனை இ
ரட்சிக்கக்கடவீர்கள்.—தேசத்திலே செய்தியைக் ௪௬
கேட்பதினால்நீங்கள்மனஞ்சோராமலும்,பயப்ப
டாமலுமிருங்கள்; வருஷத்துக்குவருஷஞ் செய்
திகேட்கப்படும், தேசத்தில் உபத்திரவமுண்டா
கும்,அதிபதிகள்ஒருவருக்கொருவர்விரோதமாயி
ருப்பார்கள்.—ஆதலால்பாருங்கள், நான்பாபேலி ௪௭
லேதொழிற்படுத்தப்பட்ட விக்கிரகங்களைத்தண்
டிக்கும் நாள்வரும்: அப்பொழுது அதின்தேச
மெல்லாங் கலங்கும், கொலையுண்ட சமஸ்தரும்
அதின்மத்தியில்விழுவார்கள்.—அப்பொழுது வா ௪௮
னமும், பூமியும்,அவைகளிலுள்ளயாவும் பாபே
லைக்குறித்துப்பாட்டுப்பாடும்: நாசர்வடதேசத்தி
னின்று அதினிடத்தில் வருவார்களென்று யெ
கோவா சொல்லுகிறார்.—பாபேலால் இஸர ௪௯
வேலரில்கொலையுண்டவர்கள் விழுந்ததுபோல,
பாபேலுக்குள்ளும் சமஸ்ததேசத்தாரிலுங் கொ
லையுண்பவர்கள் விழுவார்கள்.—கட்கத்துக்குத் ௫௰
தப்பினவர்களே,போங்கள், தரித்துநில்லாதிருங்
கள்; தூரதேசத்தில் யெகோவாவை நினை
யுங்கள், யெரூஷலேமின்மேல் சிந்தைவையுங்
கள்.—நாம் இலச்சைஅடைந்தோம், நிந்தையைக் ௫௧
கேட்டதினால்வெட்கம்எங்கள்முகங்களைமூடிற்
று: அந்நியர் யெகோவாவின் ஆலயத்தின்
பரிசுத்தஸ்தானங்களில் பிரவேசித்தார்கள்.—ஆத ௫௨
லால் யெகோவா, பாருங்கள், நான் அதிலே
தொழிற்படுத்தப்பட்ட விக்கிரகங்களைத்தண்டிக்
கும்நாள் வருமென்றுசொல்லுகிறார்: அப்பொ
ழுதுகாயப்பட்டவர்கள் தேசமெங்குங்கதறுவார்
கள்.—பாபேல் வானபரியந்தம்ஏறினாலும், அது ௫௩
தன்பலத்தின்உயர்ச்சியைஅரணாக்கினாலும்நாசர்
என்னிலிருந்து அதின்மேற் போவார்களென்று
யெகோவா சொல்லுகிறார்.—பாபேலினின் ௫௪
று அழுகையின்சத்தமும், கல்தேயரின் தேசத்தி
னின்று மகா சங்காரத்தின் சத்தமுந்தோன்றும்.-
யெகோவா பாபேலைப்பாழாக்குவார்; சமுத் ௫௫
திரத்தின் திரைகளைப்போலிரைகிற அவர்கள் இ
ரைச்சல் அமளிபண்ணும் மகாசத்தத்தை அதி
னின்று ஒழியப்பண்ணுவார்.—நாசன் பாபேலா ௫௬
கிய அவள்மேல்விரோதமாகவந்துவிட்டான், அ
திலுள்ள பராக்கிரமசாலிகள் பிடிக்கப்பட்டார்
கள், அவர்களுடைய வில்லுக்களெல்லாம்முறிந்
துபோயின: பிரதிபலனளிக்குந் தேவனாகிய
யெகோவா மெய்யாய்ப்பிரதிபலனளிப்பார்.—
அதின்பிரபுகளையும், ஞானவான்களையும், சேனா ௫௭
பதிகளையும்,அதிகாரிகளையும், பராக்கிரமசாலிக
ளையும் வெறியாக்குவேன்: அவர்கள் நித்தியநித்
திரையடைந்து, நித்திரை தெளியாதிருப்பார்க

(௩௩) எசா.௨௧.௰. ஆமோ.௧.௩. மீகா.௪.௰௩. எசா.௪௧.௰௫. அபகூ.௩.௰௨. எசா.௰௭.௫. ஓசி.௬.௰௧. யோவே.௩.௰௩. வெளி.௰௪.௰௫,௰௮. (௩௭) எசா.௰௩.௨௨. வெளி.௰௮.௨. (௪௧) எசா.௰௩.௰௯. தானி.௪.௩௰. (௪௨) எசா.௮.௭,௮. (௪௪) எசா.௪௬.௧. (௪௫) வெளி.௰௮.௪.(௪௬)௨.இரா.௰௯.௭. (௪௮) எசா.௪௪.௨௩. வெளி.௰௮.௨௰.(௫௧) சங்.௪௪.௰௫,௰௬. (௫௩) ஆமோ.௯.௨. ஒப.௪. (௫௬) சங்.௯௪.௧.

ளென்று சேனபதியாகிய யெகோவாவென்
௫௮ னும் நாமமுள்ள இராசா சொல்லுகிறார்.—பா
பேல்நகரத்தின்விஸ்தாரமான மதில்கள்முழுமை
யும் இடிக்கப்படும், அதின் உயர்ந்த வாசல்கள்
அக்கினியினால் தகிக்கப்படும்; சனங்கள் படும்
பிரயாசம் விருதா, சனங்கள் இளைத்து, உழன்
றறுத்தவேலை அக்கினிக்கிரையாயிற்றென்று சே
னபதியாகிய யெகோவா சொல்லுகிறார்.
௫௯ யூதாவின்இராசாவாகிய சிதிகியா அரசாண்ட
நாலாம்வருஷத்திலே பாபேலுக்குப்போனசம
யத்தில்,அவனோடேபோன மாசெயாவின்பௌ
த்திரனும் நேரியாவின்புத்திரனுமாகிய செராயா
விடத்தில், எரேமியாதீர்க்கதரிசி கட்டளையிட்
௬௰ டவாக்கு. இந்தச்செராயா சமாதானபிரபு.—பா
பேலுக்குநேரிடுஞ் சமஸ்ததீமையையும், பாபே
லுக்குவிரோதமாக எழுதப்பட்டசமஸ்தவாக்கு
களையும் எரேமியாஒருபுத்தகத்தில் எழுதினான்.-
௬௧ பின்பு எரேமியாசெராயாவைநோக்கி, நீ பாபே
லைச்சேர்ந்தபொழுது, பார்த்து, இவ்வாக்குகளை
௬௨ எல்லாம்வாசித்து,—யெகோவாவே, நீர் இந்
தஸ்தானத்தில் மனுஷனும் மிருகமும் இராதப
டிக்கும், அது என்றும் பாழாயிருக்கும்படிக்கும்,
அதைச்சேதித்துப்போடுவேனென்று இந்தஸ்தா
னத்துக்கு விரோதமாகச் சொன்னீரேயென்று
௬௩ சொல்லுவாயாக.—நீ இந்தப்புத்தகத்தைவாசித்து
முடிந்தபின்பு, இதனோடேஒருகல்லைக்கட்டி இ
௬௪ தைப்பிருத் நதியின்மத்தியில்எறிந்துவிட்டு,—பா
பேல் அதன்மேல் நான்வருவிக்குந்தீமையினால்
இவ்விதமாய் தாழ்ந்துப்போம், அது ஒருபொ
ழுதும் எழும்பமாட்டாதென்று சொல்லென்
றான்: எரேமியாவின்வாக்குகள் இவ்வளவிலே
முடிந்தன.

## ௫௨. அதிகாரம்.

௧. சிதிகியா பாபேல்இராசாவின்கட்டளையை மீறல்: ௪. யெருஷலேம் வசப்பட்டுத்தகிக்கப்படல்: சனங்களைப் பாபேலுக்குக்கொண்டுபோதல்: ௨௮. சிறைப்பட்டவர்களைத் தொகையிடல்: ௩௧.யோயாகீம் உன்னதம்பெறல்.

சிதிகியா அரசாளத்தொடங்கினபொழுது அவ
னுக்கு இருபத்தொருவயது, அவன் யெருஷலே
மிலேபதினொருவருஷம்அரசாண்டான். அவன்
மாதாவின்பெயர் அமுற்றாள், அவள் லிப்னாஊ
௨ ராணுகிய எரேமியாவின்புத்திரி.—அவன் யோ
யாகீம்செய்தயாவற்றின்படிக்கும்யெகோவா
௩ வின் பார்வையில் தீமைசெய்தான்.—யெகோ
வா யெருஷலேமையும் யூதாவையுந் தமதுசந்நி
தியினின்று அகற்றிப்போடும்படி, அவருடைய
கோபத்தினால் அப்படியேநடந்தது, அதினால் சி
திகியா பாபேல்இராசாவுக்குவிரோதமாகக் கல
கம்பண்ணினான்.
௪ பின்பு அவன்அரசாண்ட ஒன்பதாம்வருஷம்
பத்தாம்மாதம் பத்தாந்தினத்தில் பாபேலின்
இராசாவாகிய நெபுகத்நெத்சரும் அவன் சமஸ்
தசேனையும் யெருஷலேமுக்குவிரோதமாய்வந்
து பாளயமிறங்கினார்கள், அதற்குவிரோதமாய்ச்
சுற்றிலும் அரண்களை உண்டாக்கினார்கள்.—சிதி ௫
கியாஇராசா அரசாண்ட பதினோராம் வருஷ
மட்டும் நகரம் வளைக்கப்பட்டது.—நாலாம் மா ௬
தத்தின் ஒன்பதாந்தினத்தில் பஞ்சம் நகரத்
திலே கொடிதாயிற்று, தேசத்தின்சனங்களுக்கு
உணவுப்பொருள் கொஞ்சமுமில்லை.—பின்பு ந ௭
கரம் இடிக்கப்பட்டது, பராக்கிரமவீரர் சமஸ்த
ரும் இராத்திரிகாலத்தில், கல்தேயர்நகரத்திற்கு
விரோதமாகச்சூழ்ந்துநிற்கையில், இராசதோட்
டத்தைச்சேர்ந்தவாசலின்வழியே இரண்டுமதில்
களுக்கிடையாய்த்தப்பிச் சமபூமிக்குநேரே ஓடி
விட்டார்கள்.
பின்பு கல்தேயரின்சேனை இராசாவைத்தொ ௮
டர்ந்துபோய், யெரிகோவின் சமபூமியில் அவ
னைப்பிடிக்க, அவன் சமஸ்தசேனைகளும் அவ
னைவிட்டுச்சிதறுண்டார்கள்.—அப்பொழுது அ ௯
வர்கள் இராசாவைப்பிடித்து, அமாத்தேசத்தி
லுள்ள ரிப்லாவிலிருந்தபாபேலின்இராசாவிடத்
தில்கொண்டுபோனார்கள்; அங்கே இவனுக்கு
நியாயத்தீர்ப்புக்கொடுத்தான்.—பாபேலின் இரா ௰
சா, சிதிகியாவின்புத்திரரை அவன் கண்ணுக்கு
முன்கொலைசெய்தான்; யூதாவின்சமஸ்தபிரபுக
ளையும் ரிப்லாவிலேகொலைசெய்தான்.—பாபே ௰௧
லின்இராசா சிதிகியாவின் கண்களைக்கெடுத்து,
விலங்கிட்டு, பாபேலுக்குக்கொண்டுபோய், அ
வன்மரணமடையும்நாள்வரைக்கும் அவனைச்சி
றைச்சாலையிலேவைத்தான்.
பாபேலின்இராசாவாகிய நெபுகத்நெத்சர் அ ௰௨
ரசாண்ட பத்தொன்பதாம்வருஷம் ஐந்தாம்மா
தம் பத்தாந்தினத்தில் பாபேல்இராசாவின்
மந்திரியும், காவற் சேனபதியுமாகிய நெபூசரா
தான் யெருஷலேமுக்குவந்து,—யெகோவா ௰௩
வின் ஆலயத்தையும், அரமனையையும், பெரி
யோர்களின்வீடுகளையும், யெருஷலேமிலுள்ள
எல்லாவீடுகளையும் அக்கினியினால்தகித்தான்.—
காவற்சேனபதியுடனிருந்த கல்தேயரின் சமஸ் ௰௪
தசேனைகளும் யெருஷலேமைச்சூழ்ந்த மதில்க
ளை இடித்தார்கள்.—காவற்சேனபதியாகிய நெ ௰௫
பூசராதான் அநேக தரித்திரரையும், நகரத்தில்
மீந்திருந்தவர்களையும், தன்னைச்சார்ந்திருந்து பா
பேல்நகரத்து இராசாவின் பட்சத்திற்சேர்ந்தவர்
களையும், மீந்திருந்த மற்றவர்களையுஞ் சிறை
பிடித்துக்கொண்டுபோனான்.—ஆனாலும் காவற் ௰௬
சேனபதியாகிய நெபூசராதான் திராட்சத்தோட்
டங்களைக்காக்கவும், பயிர்ச்செய்கை செய்யவும்
எளியவர்களிற் சிலரைத் தேசத்திலிருக்கவிட்
டான்.—யெகோவாவின் ஆலயத்திலிருந்த ௰௭
பித்தளைத் தூண்களையும், அதின் பீடங்களையும்,
யெகோவாவின் ஆலயத்திலிருந்த பித்தளைச்
சமுத்திரத்தையும்கல்தேயர்கண்டதுண்டமாக்கி,
எல்லாப்பித்தளையையும் பாபேலுக்குக்கொண்டு

(௫௮) அபகூ.௨.௰௩. (௬௩) வெளி.௰௮.௨௧. (௬௪) வச.௫௮.—(௫௨. அதி. ௧.) ௨.இரா.௨௪.௰௮. (௪) ௨.இரா. ௨௫.௧—௨௭. ௪௧.௮.௰௧. (௰) எசேக்.௰௨.௰௩. (௰௨) ௪௧.௭.௫. (௰௭) ௧.இரா.௭.௰௫,௨௩,௨௭,௫௰.

௰அ போனார்கள்.—கொப்பரைகளையும், சாம்பற் பாத்
திரங்களையும், திரிவெட்டிகளையும், கிண்ணங்க
ளையும், கரண்டிகளையும்,ஆராதனைசெய்வதற்குப்
பித்தளையினாற்செய்யப்பட்ட சகல பாத்திரங்க
௰௯ ளையுங் கொண்டுபோனார்கள்.—கிண்ணங்களை
யும், அக்கினிப்பாத்திரங்களையும், கலங்களையும்,
கொப்பரைகளையும், விளக்குத்தண்டுகளையும், க
ரண்டிகளையும்,சட்டிகளையும், பொற்பாத்திரங்க
ளின் பொன்னையும், வெள்ளிப்பாத்திரங்களின்
வெள்ளியையும் காவற்சேனாபதி கொண்டுபோ
உ௰ னான்.—யெகோவாவின் ஆலயத்துக்குச் ச
லோமோன்செய்த இரண்டு தூண்களும், சமுத்
திரமும், பாதங்களின் கீழ்நின்ற பன்னிரண்டு
பித்தளை ரிஷபங்களுமாகிய இந்தச் சமஸ்தபாத்
உக திரங்களின் பித்தளைக்கும் நிறையில்லை.—அந்
தத் தூண்களில் ஒவ்வொரு தூணினுயரம் பதி
னெட்டுமுழம்; பன்னிரண்டுமுழ நூல் அதைச்
சூழ்ந்திருந்தது; நாலுவிரற்கடை அதின் கனம்:
உஉ அது குழாயாயிருந்தது.—அதின்மேல் பித்தளைக்
குமிழிருந்தது; ஒரு குமிழினுயரம் ஐந்துமுழம்,
குமிழைச்சுற்றிப் பின்னலும் மாதுளம்பழங்க
ளுமிருந்தன, எல்லாம் பித்தளை. இரண்டாந் தூ
ணுக்கு அதின் சாயலின்படி மாதுளம் பழங்க
உங ளிருந்தன.—தொண்ணூற்றாறு மாதுளம்பழங்கள்
நான்கு திசைகளுக்குமெதிராயிருந்தன; குமி
ழைச்சுற்றியிருந்த மாதுளம்பழங்கள் நூறு.
உச காவற்சேனாபதி, பிரதான ஆசாரியனாகிய செ
ராயாவையும், இரண்டாம்ஆசாரியனாகிய செப்
பனியாவையும், வாசற்காவற்காரர் மூன்றுபே
உரு ரையுங் கொண்டுபோனான்.—நகரத்தினின்று
யுத்தவீரரின் விசாரிப்புக்காரனாகிய பிரதானி
ஒருவனையும், இராசாவின்சமுகத்தில் நிற்பவர்
களுக்குள்ளே நகரத்திற் காணப்பட்ட எழுபே
ரையும், தேசத்தின் சனங்களைத் தொகையிடுஞ்
சேனைகளின்பிரதான இலேககனையும், நகரத்திற்
காணப்பட்ட சனங்களில் அறுபதுபேரையும்பி
டித்து,—காவற்சேனாபதியாகிய நெபூசராதான், உசு
ரிப்லாவிலிருந்த பாபேலின் இராசாவிடத்தில்
கொண்டுபோனான்.—பின்பு பாபேலின் இரா உஎ
சா அமாத்தைச்சேர்ந்த ரிப்லாவில் அவர்களைஅ
டித்துக்கொன்றான். இவ்விதமாக யூதா தன்
தேசத்தினின்று சிறைபிடித்துக்கொண்டுபோகப்
பட்டான்.—நெபுகத்நெத்சர் ஏழாம்வருஷத்தில் உஅ
மூவாயிரத்து இருபத்து மூன்று யூதரைச்சிறைபி
டித்துக்கொண்டுபோனான்.—நெபுகத்நெத்சரின் உகூ
பதினெட்டாம்வருஷத்தில் யெரூஷலேமினின்
று எண்ணூற்று முப்பத்திரண்டு சனங்களைக்
கொண்டுபோனான்.—நெபுகத்நெத்சருடைய இ ௩௰
ருபத்துமூன்றாம்வருஷத்தில் காவற்சேனாபதியா
கிய நெபூசராதான் யூதேயரில் எழுநூற்றுநாற்பத்
தைந்துசனங்களைச்சிறைபிடித்துக்கொண்டுபோ
னான்: முழுத்தொகை நாலாயிரத்தறுநூறு.
பின்பு யூதாவின் இராசாவாகிய யோயாகீன்சி ௩க
றைப்பட்டமுப்பத்தேழாம்வருஷத்தின் பன்னி
ரண்டாம் மாதம் இருபத்தைந்தாந்தினத்தில், பா
பேலின்இராசாவாகிய ஏவில்மிரோதக்அரசாண்
டமுதலாம்வருஷத்தில், யூதாவின்இராசாவாகிய
யோயாகீனின் தலையையுயர்த்தி, சிறைச்சாலையி
னின்றுவிடுவித்து,—அவனோடேபிரியமாய்ப்பே ௩உ
சி, அவனோடேபாபேலிலிருந்த இராசாக்களின்
ஆசனங்களைப்பார்க்கிலும் அவனுடைய ஆசனத்
தைஉயர்ந்தஸ்தானத்தில்வைத்தான்.-அவனுடை ௩௩
யசிறைச்சாலையின்வஸ்திரங்களைமாற்றினான்: அ
வன்தன் ஆயுள்பரியந்தம் இவன்சமுகத்தில் நித்த
மும்போசனம்பண்ணிவந்தான்.—அவன் சீவித் ௩ச
தநாளெல்லாம் அவன் மரணநாள்வரைக்கும்,பா
பேலின் இராசாவினால் நித்தமும் உணவுப்பொ
ருள் அவனுக்குப்பங்கிடப்பட்டது.

(௰அ) யாத்.உஎ.௩. உ.இரா.உரு.௰ச,௰ரு,௰சு. (உ௰) க.இரா.எ.சஎ. (உக) க.இரா.எ.௰ரு. உ.இரா.உரு.௰எ. உ.நாளா.௩.௰ரு. (உ௩) க.இரா.எ.உ௰. (உச) உ.இரா.உரு.௰அ. (உஅ) உ.இரா.உச.உ. உ.இரா.உச.௰உ. உ.இரா.உச.௰ச. (௩க) உ.இரா.உரு.௩எ,உஅ,உகூ,௩௰. ஆதி.ச௰.௰௩,உ௰. (௩௩) உ.சாமு.கூ.௰௩.

# எரேமியாவின்புலம்பல்.

## ௧. அதிகாரம்.

*௧. பாவத்தினிமித்தம்யெரூஷலேமுக்குண்டான*
*கேட்டைத்தெரிவித்தல்: ௰௨. அதைத்தொட்டுத்*
*துக்கங்கொண்டாடல்: ௰௮. தேவனுடைய*
*நியாயத்தை உணர்ந்துசொல்லல்.*

சனம் நிறைந்த நகரி இப்பொழுது எப்படித்த
னித்திருக்கிருள்; தேசத்தாருக்குள்பிரதானமான
வள் விதவையைப் போலானுள்; இராச்சியங்க
ளுக்குஇராசாத்தியாயிருந்தவள் இப்பொழுது தி
௨ றை கொடுக்கிறவளானுள்.—இராத்திரிகாலத்தில்
அவள் அழுதழுதுகொண்டிருக்கிருள், அவளு
டைய கண்ணீர் அவள் கன்னங்களில் ஓடுகின்ற
து: அவளுக்கிருந்த அநேகநேசருக்குள்ளும்இப்
பொழுது அவளை ஆற்றுவார்ஒருவருமில்லை: அவ
ளுடைய சிநேகர்யாவரும் அவளுக்குச்சத்துருக்
களாகி, நம்பிக்கைத்துரோகஞ்செய்கிருர்கள்.—
௩ யூதா துக்கமுங்கடினவூழியமுமுள்ளவளாவதற்
குச்சிறைப்பட்டுப்போனுள்: அவள் புறச்சாதி
யாருக்குள்வாசம்பண்ணுகிருள்,இளைப்பாறுதல
டையாள்: அவளை உபத்திரவப்படுத்தினவர்கள்
யாவரும்இடுக்கமான இடத்தில் அவளை அணுகிப்
௪ பிடித்தார்கள்.-இப்பொழுது மகோற்சவங்களுக்
கு வருபவர்கள் ஒருவருமில்லாததினுல், சீயோ
னுக்குப்போகிறவழிகள்புலம்புகின்றன: அதின்
வாசல்களெல்லாம்வெறுமையாயின: அதினுல்அ
வள்ஆசாரியர் பெருமூச்சுவிடுகிருர்கள்; அவள்
கன்னியர்கள் துக்கிக்கிருர்கள், அவள் தானே ம
௫ னங்கசந்திருக்கிருள்.—அவள்விரோதிகள் பிரதா
னிகளானுர்கள், அவள்சத்துருக்கள்வாழ்வடைந்
தார்கள்; அவள்கட்டளைமிறிச்செய்தமிகுதியான
அதிக்கிரமங்களினிமித்தம் யெகோவா அவ
ளைத்துக்கப்படுத்தினுர்:ஆதலால் அவள்பாலகர்ச
௬ த்துருவுக்குமுன் சிறைப்பட்டுப்போனுர்கள்.—சீ
யோன்குமாரத்தியின்சௌந்தரியமெல்லாம் அவ
ளைவிட்டுப்போயிற்று: அவள்பிரபுகள், மேய்ச்ச
லைக்காணுமல்பலவீனப்பட்டு, தங்களைத்தொடர்
பவனுக்கு முன்செல்லும் மான்களுக்குச்சமான
௭ மானுர்கள்.—துணைசெய்வார் ஒருவருமில்லாமல்
தன் சனம் சத்துருவின்கையில் அகப்பட்டபொ
ழுதும், தன் விரோதிகள்தன்னைக்கண்டுதன் ஒழி
வைக்குறித்துப் பரிகாசம்பண்ணினபொழுதும்,
யெரூஷலேம், தன் துக்கமுங் கிலேசமுமுள்ள
நாள்களிலே பூருவகாலத்தில் தனக்குண்டான
இனிய பொருள்களையெல்லாம் நினைத்தாள்.—
௮ யெரூஷலேம் மிகவும் அதிகமாய்ப் பாவஞ்செய்
தபடியினுல் அகற்றப்பட்டாள்: அவளைக்கனம்
பண்ணினவர்கள் யாவரும் அவளுடையநிருவா
ணத்தைக்கண்டபடியினுல் அவளை அவமதிக்கி
ருர்கள்: அவளும்பெருமூச்சுவிட்டுப் பின்னிட்
டுத்திரும்புகிருள்.—அவள் தன்ஆசூசம்தன்வஸ் ௯
திரத்தின் தொங்கலிலிருந்தும், தன்முடிவிலே
சிந்தைவைப்பதில்லை; இதினிமித்தம் ஆச்சரிய
மாய்த்தாழ்ச்சிப்பட்டாள்: அவளை ஆற்றுவார் ஒ
ருவருமில்லை. யெகோவாவே, என்துக்கத்
தைப்பாரும்: பகைவன் மேன்மைபாராட்டுகிரு
னே.—விரோதியானவன் அவளுடைய இனிய ௰
பொருள்கள் எல்லாவற்றின்மேலுந் தன்கையை
நீட்டினுன்: உம்முடையசபையிலே சேரலாகா
தென்று நீர் விலக்கியபுறச்சாதியார் தன்னுடை
ய பரிசுத்த ஸ்தானத்திலும் பிரவேசிக்கக்கண்
டாள்.—அவளுடையஎல்லாச்சனங்களும்பெரு ௰௧
மூச்சுவிடுகிருர்கள், ஆகாரத்தைத் தேடுகிருர்கள்;
தங்கள் பிராணரட்சிப்பினிமித்தம் அன்னத்துக்
குப்பிரதியாய்த் தங்கள் அருமையானபொருள்
களைக் கொடுத்துவிட்டார்கள்: யெகோவா
வே, பாரும், சிந்தைவைத்தருளும்; நான்தாழ்ச்
சிப்பட்டேன்.

வழிப்போக்கரே, உங்களுக்குப் பரிதாபமில் ௰௨
லையா; யெகோவாதமதுஉக்கிரகோபம்மூண்
டநாளில் எனக்குவருவித்த துக்கத்தைப்போலத்
துக்கமுண்டோ, நீங்களெல்லாருஞ் சிந்தித்துப்
பாருங்கள்.-அவர் உயரத்தினின்று அக்கினியை ௰௩
அனுப்ப, அது என் எலும்புகளிலே பிரவேசித்
து அவைகளைப்பட்சித்தது:அவர்,என்கால்களுக்
கு வலையைவீசினுர், நான் பின்னிடும்படிசெய்
தார்: அவர் என்னைப் பாழாக்கினுர், நான் நாள்
முழுவதுஞ்சோர்வடைந்திருக்கிறேன்.—என் அ ௰௪
திக்கிரமங்களின் நுகம் அவர்கையினுற் கட்டப்
பட்டிருக்கின்றது: அவைகள் என் கழுத்திலே
பிணைக்கப்பட்டன: அவர் என்பெலத்தைக்கெ
டுத்தார், ஆண்டவர் அவர்கள் கையில் என்
னை ஒப்பித்தார், நான் எழுந்திருக்கக்கூடாது.—
ஆண்டவர் என்னிலுள்ள பராக்கிரமசாலிகள் ௰௫
யாவரையுங் காலால்மிதித்தார்: என் வாலிபரை
நொறுக்கும்படி எனக்கு விரோதமாய்ச் சனத்தி
ரளை வர அழைத்தார்: திராட்ச ஆலையைமிதிப்ப
துபோல் யூதாகுமாரத்தியாகிய கன்னிகையை
ஆண்டவர் மிதித்தார்.—இவைகளினிமித்தம் ௰௬
நான்அழுகிறேன்;என்கண்,என்கண்ணேநீரைச்
சொரிகின்றது, என் பிராணனைத்தாங்கித்தேற்று

(௧. அதி. ௧.) ஏசா. ௪௭. ௭, ௮. எஸ்றா. ௪. ௨௰. (௨) எரே. ௰௩. ௰௭. யோபு. ௭. ௩. சங். ௬. ௬. எரே. ௪. ௩௰. ௨௪. ௧, ௰௬. (௩) எரே. ௫௨. ௨௭. உபா. ௨௮. ௬௪, ௬௫. அதி. ௨. ௯. (௫) உபா. ௨௮. ௪௩, ௪௪. எரே. ௩௰. ௰௪, ௰௫. தானி. ௯. ௭, ௰௬. எரே. ௫௨. ௨௮. (௮) ௧. இரா. ௮. ௪௬. எரே. ௰௩. ௨௨, ௨௬. எசேக். ௰௬. ௩௭. ஓசி. ௨. ௰. (௯) உபா. ௩௨. ௨௯. ஏசா. ௪௭. ௭. (௰) எரே. ௫௧. ௫௧. உபா. ௨௩. ௩. நெகி. ௰௩. ௨. (௰௧) எரே. ௩௮. ௯. அதி. ௨. ௰௨. (௰௨) தானி. ௯. ௰௨. (௰௩) எசேக். ௰௨. ௰௩. (௰௪) உபா. ௨௮. ௪௮. (௰௫) ஏசா. ௬௩. ௩. வெளி. ௰௪. ௰௯, ௨௰. (௰௬) எரே. ௰௩. ௰௭.

கிறவர் எனக்குத்தூரமாயிருக்கிறார்:சத்துருமேற்கொண்டதினால் என்பிள்ளைகள் பாழானார்கள்.—
யஎ சீயோன் தன் கைகளை விரிக்கிறாள், அவளைத்தேற்றுவார்ஒருவருமில்லை: யெகோவா, யாக்கோபை அவன் சத்துருக்கள்சூழும்படி கட்டளையிட்டார்: யெருஷலேம் அவர்களுக்குள்ளே ருதுவதியைப்போலானாள்.
யஅ யெகோவாவே நீதிபரர்; நான் அவர்கட்டளையை மீறினேன்: சனங்களே, நீங்களெல்லாருங் கேட்கும்படிவேண்டுகிறேன், என் துக்கத்தைப்பாருங்கள்: என் கன்னியரும் என்வாலிப
யக ருஞ்சிறைப்பட்டுப்போனார்கள்.-நான் என்நேசரை அழைத்தபொழுது அவர்கள் என்னைவஞ்சித்தார்கள்: என் ஆசாரியர்களும் என்முதியோரும் தங்கள்பிராணனை ஆதரிக்கும்படி அன்னத்தைத்தேடினபொழுது, நகரத்திலே மூச்சொடுங்கி
உய மாண்டார்கள்.—யெகோவாவே, பாரும், நான் ஆபத்தில் அகப்பட்டேன்: என் வயிறு எரிகின்றது; எனக்குள் என்மனந் தளருகின்றது; நான்துணிகரமாகக் கட்டளைமீறினேன்: வெளியிலேகட்கமும், வீட்டிலேமரணமும் என்னைப்
உக புத்திரவீனப்படுத்துகின்றன.—நான் தவிக்கிறேனென்பதை அவர்கள்கேட்டிருக்கிறார்கள்: என்னைத்தேற்றுவார் ஒருவருமில்லை: என்சத்துருக்களெல்லாரும்என்ஆபத்தைக்குறித்துக்கேட்டிருக்கிறார்கள்; நீர் இப்படிச்செய்ததினிமித்தம் அவர்கள்களிகூருகிறார்கள்: ஆனாலும் நீர் ஒருநாளைநியமித்தீர், அதுவரும்பொழுதுஅவர்கள்என்னைப்
உஉ போலாவார்கள்.—அவர்களுடையதீமைகளெல்லாம் உம்முடையசமுகத்தில் வரக்கடவன; நீர் என்சகலஅதிக்கிரமங்களினிமித்தமும்எனக்குச் செய்ததுபோல அவர்களுக்குஞ்செய்யும்: என் பெருமூச்சுகள் மிகுதியாயின, எனதுள்ளஞ் சோர்ந்துபோயிற்று.

## உ. அதிகாரம்.

க. யெருஷலேமின்துக்கத்தினிமித்தம் எரேமியா புலம்பல்: உய. தன்துக்கத்தைத்தெரிவித்தல்.

ஐயோ, ஆண்டவர் தமதுகோபத்தில்சீயோன் குமாரத்தியைமேகத்தினால் எப்படிமூடினார், வானத்தினின்று இஸரவேலின் சௌந்தரியத்தைப் பூமியிலேதள்ளிவிட்டார், அவர் தமது கோபத்தின்நாளிலேதம்முடையபாதபீடத்தை நினைக்க
உ வில்லை.—ஆண்டவர், யாக்கோபின்மேல் இரங்காமல்அவன்வாசஸ்தானங்களெல்லாவற்றையும் விழுங்கினார்: அவர்கோபங்கொண்டு யூதா குமாரத்தியின் அரண்களை இடித்தார்; அவைகளைத்தரைமட்டுந்தாழ்த்தி, இராச்சியத்தையும் அ
ங தின் பிரபுகளையும் அசுசிப்படுத்தினார்.—அவர் தமது உக்கிரகோபத்தினால் இஸரவேலின்கொம்புமுழுவதையுஞ்சேதித்தார்: சத்துருவுக்குமுன் தமது வலக்கையைத்தடுத்தார், சுற்றிலுமிருக்கிறதைப்பட்சிக்கும் அக்கினியின் சுவாலையைப் போல யாக்கோபுக்கு விரோதமாய்ப்பற்றி எரிந்
தார்.—அவர்சத்துருவைப்போலத் தமதுவில்லைநாணேற்றி, விரோதியைப்போலத் தமது வலக்கையை ஓங்கிநின்றார்: கண்ணுக்கினிய யாவரையுங்கொலைசெய்தார், சீயோன்குமாரத்தியின் கூடாரத்தில் தமது கோபத்தை அக்கினியைப்போ ச
லச்சொரிந்தார்.-ஆண்டவர் சத்துருவைப்போலானார்: அவர் இஸரவேலைவிழுங்கினார், அவர் அவனுடைய அரமனைகளையெல்லாம்அழித்தார்: அவனுடைய அரண்களைச் சங்கரித்தார், யூதாவின் குமாரத்திக்குத் துக்கத்தையும் புலம்பலை ரு
யும் வருத்திக்கப்பண்ணினார்.—தோட்டவேலியைப்போல அவர் தமது வேலியைப் பலாற்காரமாகப்பிடுங்கிவிட்டார்: தமது சபையின் ஸ்தானங்களை அழித்தார்: யெகோவா சீயோனின் மகோற்சவங்களையும் ஓய்வுநாள்களையும்மறக்கப்பண்ணினார், அவர் உக்கிரகோபத்தில் இராசாவையும் ஆசாரியனையும் அலட்சியம் பண்ணி சு
னார்.—ஆண்டவர் தமது வேதிகையைத்தள்ளிவிட்டார், தமது பரிசுத்த ஸ்தானத்தை வெறுத்தார், அவர் அதின் அரமனைகளின் மதில்களைச் சத்துருவின் கையில் ஒப்பித்தார்; அவர்கள் யெகோவாவின் ஆலயத்திலே மகோற்சவதினத் எ
தைப்போல ஆரவாரம்பண்ணினார்கள்.—யெ அ
கோவா சீயோன்குமாரத்தியின் மதிலை அழிப்பேனென்று தீர்மானித்தார்: நூலைப்போட்டார், அதை அழியாதபடி அவர் தமது கையைத் தடுக்கவில்லை: ஆதலால் அவர் அலங்கத்தையும் மதிலையும் புலம்பச்செய்தார்; அவைகள் ஏகமாய்ப் பலவீனமாயின.—அதின் வாசல்கள் நிலத்தி கூ
லே புதைந்தன; அதின் தாழ்களைமுறித்து நாசப்படுத்தினார்: அதின் இராசாவும் அதின் பிரபுகளும்அந்நியதேசத்தாருக்குள்இருக்கிறார்கள்:வேதோபதேசமில்லை; அதின் தீர்க்கதரிசிகள் யெகோவாவிடத்தில் தரிசனம் பெறுகிறதுமில்
லை.—சீயோன் குமாரத்தியின் முதியோர் மவுன ய
மாகத்தரையிலிருக்கிறார்கள்: அவர்கள் தங்கள் தலையின்மேல் புழுதியை இறைத்துக்கொள்ளுகிறார்கள்; இரட்டுத்தரித்திருக்கிறார்கள்: யெருஷலேமின் கன்னியர் தலை கவிழ்ந்து தரையை நோக்கியிருக்கிறார்கள்.—என் கண்கள் நீர் சொ யக
ரிந்து பூத்துப்போயின, என் குடல்கள் கலங்குகின்றன, குழந்தைகளும் பாலகரும் நகரத்தின் வீதியிலே சோர்ந்துகிடப்பதினால் என்சனகுமா

(யஎ) எரே.ச.கக. (யஅ) நிகி.கூ.கூ. தானி.கூ.எ,யச. க.சாமு.யஉ.யச,யரு. (யகூ) எரே.கூய.யச. (உய) யோபு.கூய,உஎ. எசா.யக.யக. எரே.ச.யக. ஓசி.யக.அ.உபா.கூஉ.உரு. எசேக்.எ.யரு. (உக) எசா.யரு.எரே.சகூ,. (உஉ) சங்.ளகூ.யகூ.—(உ. அதி. க.) மத்.யக.உகூ. உ.சாமு.க.யஅ. க.நாளா.உஅ.உ.சங்.கக.ரு. (உ) சங்.அகூ.கூகூ. (ங) சங்.எச,யக. சங்.அகூ.சகூ.(ச)எசா.சுகூ.ய. எசேக்.உச.உரு.(ரு) எரே.கூய.யச, உ.இரா.உரு.கூ. எரே.ருஉ.யங.(சு)சங்.அய,யஉ. எசா.ரு.ரு. எசா.க.அ. செப்.கூ.யஅ. (எ) சங்.எச.ச. (அ) உ.இரா.உக.யஉ. எசா.கூச.யக. (கூ) எரே.ருக.கூய,உபா.உஅ.கூகூ. உ.இரா.உச.யரு. உ.நாளா.யரு.கூ. சங்.எச.கூ. எசேக்.எ.உகூ.(ய)யோபு.உ.யங. எசா.கூ.உகூ.யோபு.உ.யஉ.எசா.யரு.கூ.எசேக்.எ.யஅ. (யக)சங்.கூ.எ.யோபு.யகூ.யங.சங்.உஉ.யச,

ரத்தியினது நாசத்தினிமித்தம் எனது ஈரல் தரை
௰௨ யில் ஊற்றப்படுகின்றது.—அவைகள் தங்கள்
மாதாக்களைநோக்கி, தானியம் திராட்சரசம் எங்
கேயென்றுசொல்லி,காயப்பட்டவர்களைப்போ
ல நகரத்தின்வீதிகளில் சோர்ந்து, தங்கள் மா
௰௩ தாக்களின் மடியில் உயிரைவிட்டன.—யெரு
ஷலேமின்குமாரத்தியே, நான் உனக்குச்சாட்சி
யாக எதைச்சொல்லுவேன், உன்னை எதற்கு ஒப்
பிடுவேன்; சீயோனின் குமாரத்தியாகிய கன்
னிகையே, நான் உன்னைத்தேற்றும்படி உன்னை
எதற்கு ஒப்பிடுவேன்; உன் இடிவு சமுத்திரத்
தைப்போல விஸ்தாரமாயிற்று: உன்னைச்சீர்ப்ப
௰௪ டுத்தக்கூடியவன்யாவன்.—உன் தீர்க்கதரிசிகள்
உன்னிமித்தம் அபத்தமும் மதிகேடுமானவைக
ளை உனக்குத்தரிசித்தார்கள்: உன் சிறைப்பாட்
டைவிலக்கும்படி உன்பாவத்தை உனக்கு உ
ணர்த்தவில்லை; உன்னிமித்தம் பொய்த்தரிசனங்
களையும் சிறைப்படுத்துவதற்கேற்றவைகளையுங்
௰௫ கண்டார்கள்.-வழிப்போக்கர்யாவரும்உன்னைக்
குறித்துக்கைகொட்டுகிறார்கள்;சம்பூரணசௌந்
தரியமும், பூமியனைத்திற்கும் ஆனந்தமுமென்
று பெயர்பெற்ற நகரம் இதோவென்று சொல்
லி, யெருஷலேமின் குமாரத்தியைக்குறித்துச்சீ
௰௬ றித் தங்கள் தலைகளைத்துலுக்குகிறார்கள்.—உன்
சத்துருக்களெல்லாரும் உனக்கு விரோதமாய்த்
தங்கள்வாயைத்திறந்து சீறி, உன்மேற் பற்கடிக்
கிறார்கள்: அதை விழுங்கினோம்:நாம்காத்திருந்
தநாள் இதுவே; நமக்குக்கிடைத்தது, அதைக்
௰௭ கண்டோமென்கிறார்கள்.—யெகோவா தாம்
தீர்மானித்ததைச்செய்தார்; தாம் பூருவகாலத்திற்
சொல்லியவாக்கைநிறைவேற்றினார்:அவர் இரங்
காமல் அழித்தார்: சத்துரு உன்னைமேற்கொண்
டு மகிழும்படிசெய்தார், உன் சத்துருக்களின்
௰௮ கொம்பை உயர்த்தினார்.—அவர்களுடைய உள்
ளம் ஆண்டவரைநோக்கி, சீயோன் குமா
ரத்தியின்மதிலே, இரவும் பகலும் கண்ணீர் ந
தியைப்போலச்சொரியவிடு: ஆறவேண்டாம்;
௰௯ உன்கண்மணியை ஓயவிடாதே.—எழுந்திரு,இ
ரவில் முற்சாமத்தில் ஓலமிடு: ஆண்டவரின்
சமுகத்தில் உனதுள்ளத்தைச் சலத்தைப்போல
ஊற்றிவிடு. எல்லாவீதிகளின் சந்தியிலும்பசியி
னால்சோர்ந்துபோகிற உன்சிறுகுழந்தைகளின்
பிராணனிமித்தம் உன்கையினால் அவரை அஞ்
சலிபண்ணு.
௨௰ யெகோவாவே, பாரும், இன்னாருக்கு
இந்தக்காரியஞ்செய்தீரென்றுநினைந்தருளும். ஸ்
திரிகள் கைக்குழந்தைகளாகிய தங்களுடையக
ருப்பத்தின் கனியைப்புசிக்கலாமா, ஆசாரிய
னுந் தீர்க்கதரிசியும் ஆண்டவரின் பரிசுத்தஸ்
தானத்தில் கொல்லப்படலாமா.—பாலகனும்வி ௨௧
ருத்தனுந் தெருக்களில் தரையிலேகிடக்கிறார்
கள்: என்கன்னியரும் என்வாலிபருங் கட்கத்தி
னால்விழுந்தார்கள்; உமதுகோபத்தின்தினத்தில்
இரங்காமல்கொலைசெய்தீர்.—நீர்உற்சவதினத்தி ௨௨
லே செய்வதுபோல எனக்குநான்குதிசையிலும்
பயங்கரங்களை வரவழைத்தீர், யெகோவா
வின் கோபத்தின் தினத்தில் தப்புவாருமில்
லை,மீந்திருப்பாருமில்லை: நான் கையில் ஏந்திவ
ளர்த்தவர்களை என்சத்துருசங்கரித்தான்.

## ௩. அதிகாரம்.

௧. பலதுக்கங்களினிமித்தம் புலம்பல்: ௨௧. துக்கஞ் சகிக்கும்படி புத்திசொல்லல்: ௩௭. தேவன் நீதிபரரென்று உணர்ந்துசொல்லிரட்சையினிமித்தம்பிரார்த்தித்துத்துன்மார்க்கருக்கு நாசம்வருமென்றுதெரிவித்தல்.

அவருடையகோபத்தின் கோலினால் உபத்திர ௧
வத்தைக்கண்டமனுஷன்நானே.—அவர் என்னை ௨
ஒளியிலல்ல, இருளிலே நடத்திக்கொண்டுவந்
தார்.—அவர்எனக்குவிரோதமாய்த்திரும்பி,நாள் ௩
முழுவதும்அடிக்கடி தமதுகையை ஓங்குகிறார்.—
அவர் என்மாமிசத்தையும் என்தோலையுங் கே ௪
டாக்கினார்; என் எலும்புகளைமுறித்தார்.—அவர் ௫
எனக்குவிரோதமாகக்கொத்தளங்கட்டி, கிலேச
மும் பிரயாசமும்என்னைச்சூழும்படிசெய்தார்.—
பூருவகாலத்தில்மரித்தவர்களைப்போல, அந்தகா ௬
ரஸ்தானங்களில்என்னைவசிக்கும்படிசெய்தார்.-
நான்புறப்படக்கூடாதபடி என்னைச்சூழவேலி ௭
அடைத்தார்:என்விலங்குகளைப்பாரமாக்கினார்.-
நான் சத்தமிட்டுக்கூப்பிட்டாலும் அவர் என் ௮
விண்ணப்பத்தை அங்கிகரியார்.—பொளிந்தகற் ௯
களால் என்வழிகளை அடைத்துவிட்டார், என்
பாதைகளை மாறுபாடாக்கினார்.—அவர் எனக் ௰
குப்பதிவிருக்கிற கரடியையும், மறைவிடங்களி
லிருக்கிற சிங்கத்தையும் போலானார்.—அவர் ௰௧
என்வழிகளைவிலக்கி என்னைத்துண்டித்தார்: அ
வர் என்னைப் பாழாக்கிவிட்டார்.—அவர் தமது ௰௨
வில்லைநாணேற்றி, அம்புக்கு என்னை இலக்காக
வைத்தார்.—தமது அப்பறாத்தூணியின் அம்புக ௰௩
ளை எனதுள்ளத்தில் தைக்கப்பண்ணினார்.—நான் ௰௪
என்சாதியாரனைவருக்கும் பரிகாசமும், நாள்மு
ழுவதும் அவர்களுடையபாட்டின்பொருளுமா
னேன்.—அவர் என்னைக்கசப்பினாலே நிரப்பி, ௰௫
எட்டியினால் என்னைவெறியாக்கினார்.—அவர்ப ௰௬
ருக்கைக்கற்களினால் என்பற்களை உடைத்தார்,

(௰௩) தானி.௯.௰௨. (௰௪) எரே.௨.௮. எசேக்.௰௩.௨. ஏசா.௫௮.௧. (௰௫) ௧.இரா.௯.௮. எரே.௰௮.௰௬. நாகூ.௩.௰௯. எசேக்.௨௫.௬. ௨.இரா.௰௯.௨௧.சங்.௪௪.௰௪. சங்.௪௮.௨. (௰௬) யோபு.௰௬.௯,௰. சங்.௨௨.௰௩. சங்.௫௬.௨. சங்.௩௫.௨௧. (௰௭) லேவி.௨௬.௰௬,. உபா.௨௮.௰௫,. சங்.௩௮.௰௬. சங்.௮௯.௪௨.(௰௮)எரே.௰௪.௰௭. (௰௯) சங்.௱௰௯.௱௪௭. சங்.௬௨.௮. ஏசா.௫௧.௨௰. நாகூ.௩.௰. (௨௰) லேவி.௨௬.௨௯. உபா.௨௮.௫௩. எரே.௰௯.௯. எசேக்.௫.௰. (௨௧) ௨.நாளா.௩௬.௰௭. (௨௨) சங்.௩௧.௰௩. எரே.௬.௨௫. ஒசி.௯.௰௨,௰௩.—(௩. அதி. ௪.) யோபு.௰௬.௮. சங்.௫௧.௮. ஏசா.௩௮.௰௩.எரே.௫௰.௰௭. (௬) சங்.௮௮.௫.௬. (௭) யோபு.௩.௨௩.ஒசி.௨.௬. (௮) யோபு.௩௰.௨௰.சங்.௨௨.௨. (௯) யோபு.௰.௰௬. ஏசா.௩௮.௰௩. ஒசி.௫.௰௪. (௰௧) ஒசி.௬.௧. (௰௨) யோபு.௭.௨௰. சங்.௩௮.௨. (௰௩) யோபு.௬.௪. (௰௪) எரே.௨௰.௭. யோபு.௩௰.௯. சங்.௬௯.௰௨. (௰௫) எரே.௯.௰௫. (௰௬) நீதி.௨௰.௰௭.

௰௭ சாம்பலில் என்னைப்புரளப்பண்ணினார்.—என்
ஆத்துமஞ் சமாதானத்திற்குத் தூரமாக்கப்பட்ட
௰௮ து:நன்மையைமறந்துவிட்டேன்.-என்வல்லமை
யும் என் நம்பிக்கையும் யெகோவாவினால்
௰௯ அழிந்துபோயினவென்றேன்.—என் துக்கத்தை
யும் என்கிலேசத்தையும் நினைப்பது எட்டியும்
௨௰ பித்துமாயிருக்கின்றது.—என் ஆத்துமாஇப்பொ
ழுதும் அவைகளை நினைந்து நினைந்து, தாழ்ச்
௨௧ சிப்படுகின்றது.-நான்இதைச்சிந்தையில்வைத்து
நம்புவதற்கிடமுண்டென்றுகண்டேன்.
௨௨ யெகோவாவின் தயைகள் சிதைந்துபோ
வதுமில்லை, அவருடைய கிருபைகள் ஒழிந்து
௨௩ போவதுமில்லை.—அவைகள் காலைதோறும் புதி
௨௪ யவைகள்: உமது உண்மைபெரிது.—யெகோ
வாவே என்பங்கென்று என் ஆத்துமாச்சொல்
லுகின்றது; ஆதலால் அவரில் நம்பிக்கையாயி
௨௫ ருப்பேன்.—யெகோவா தம்மைக் காக்கிறவ
னுக்கும், தம்மைத்தேடும் ஆத்துமாவுக்குந்தயாப
௨௬ ரர்.–அவர் தயாபரர், ஆதலால் அவன் யெகோ
வாவின் இரட்சிப்புக்குக்காத்து அமைதியாயி
௨௭ ருக்கக்கடவன்.–இளம்பிராயத்திலொருவன்நுகம்
௨௮ சுமப்பதுநலம்.—அது அவன்மேல் ஏற்றப்படும்
பொழுது அவன் மவுனமாகித் தனித்திருக்கக் க
௨௯ டவன்.—நம்புவதற்கிடமிருக்கவுங்கூடுமென்று
சொல்லி, அவன் தன்வாயைத் தூளில்வைக்கக்
௩௰ கடவன்.–அவன் தன்னை அடிக்கிறவனுக்குத்தன்
கன்னத்தைத் திருப்பக்கடவன்: அவன் அவமா
௩௧ னத்தினாலே நிறைந்திருக்கக்கடவன்.–ஆண்ட
௩௨ வர் எப்பொழுதுங் கைவிடார்.—அவர் துயரப்
படுத்தினாலும் பின்பு தமதுசம்பூரணகிருபையின்
௩௩ படி தயைசெய்வார்.—மனுபுத்திரரைக் கிலேசப்
படுத்துகிறதும், துக்கப்படுத்துகிறதும் அவருக்
௩௪ குப்பிரியமல்ல.—பூமியில் சிறைப்பட்டவர்கள்
யாவரையுந் தமதுகாலால் மிதிக்கிறதற்காகிலும்,-
௩௫ உன்னதமானவரின் சமுகத்தில் மனுஷருக்கு அ
௩௬ நியாயஞ் செய்கிறதற்காகிலும்,–ஒருவனுக்குரிய
நியாயத்தைப் புரட்டுகிறதற்காகிலும் ஆண்ட
வர் பிரியப்படார்.
௩௭ ஆண்டவர் கட்டளையிடாதிருக்கத் தான்
சொன்னதைச் சித்திசெய்யவல்லவன்யாவன்;–
௩௮ சருவத்திற்குமேலானவருடைய வாயினின்று
௩௯ நன்மையுந் தீமையும்புறப்படுகிறதில்லையா.—சீ
வனுள்ளமனுஷன் தன்பாவங்களின் தண்டனை
௪௰ யினிமித்தம் முறையிடுவதேது.–நாம் நம்முடை
யவழிகளைச் சோதித்து ஆராய்ந்து, யெகோ
௪௧ வாவிடத்தில் திரும்பக்கடவோம்.—வானத்
திலுள்ள தேவனுக்கு நேரே நம்முடையகை
களுடன் நம்முடையசிந்தையையும் ஏற்றக்கட
வோம்.–நாங்கள் அதிக்கிரமஞ்செய்து கட்டளை ௪௨
மீறினோம்: நீர் மன்னிக்கவில்லை.—நீர் கோபத் ௪௩
தினால் மூடி எங்களைத்துயரப்படுத்தி, இரங்கா
மல் கொலைசெய்தீர்.—எங்கள்பிரார்த்தனை உம் ௪௪
மிடத்திற்செல்லாதபடி மேகத்தினால் உம்மைமூ
டிக்கொண்டீர்.—சனங்களுக்குள்ளே நீர் எங்க ௪௫
ளைக் குப்பையும் எச்சிலுமாக்கினீர்.–எங்கள் சத் ௪௬
துருக்களெல்லாரும் எங்களுக்கு விரோதமாகத்
தங்கள் வாயைத்திறந்தார்கள்.–பயமும், கண்ணி ௪௭
யும்,சேதமும், நாசமும்எங்கள்மேல்வந்துவிட்ட
ன.—என்சனங்களின்குமாரத்தி நாசமடைந்த ௪௮
தினிமித்தம் என்கண்களினின்று நீரோடைகள்
பாய்ந்தோடுகின்றன.—யெகோவா வானத் ௪௯
தினின்றுநோக்கி, எங்களைக் கடாட்சிக்கும்வ
ரைக்கும்,—என்கண் இடைவிடாதபடி ஓய்வில் ௫௰
லாமல் நீர்சொரிகின்றது.—என்நகரியின் குமா ௫௧
ரத்திகளனைவரினிமித்தமும் என்கண் என்மன
தைத் துக்கப்படுத்துகின்றது.—என்சத்துருக்கள் ௫௨
காரணமின்றி ஒருபறவையைப்போல் என்னை
மிகவும் வேட்டையாடினார்கள்.—அவர்கள்குழி ௫௩
யில் என்பிராணனைச்சேதித்துக் கல்லினால்என்
னைமூடினார்கள்.–என்தலையின்மேல் சலம்பாய்ந் ௫௪
தபொழுது நான்சேதிக்கப்பட்டேனென்றேன்.
யெகோவாவே, நான் ஆழமான குழியி ௫௫
னின்று உமது நாமத்தை நினைந்து பிரார்த்தனை
பண்ணினேன்.—சகாயத்திற்காக நான் இடுகிற ௫௬
சத்தத்திற்கு உமதுசெவியை அடைத்துக்கொள்
ளாதிருமென்னும் வாக்கைக்கேட்டருளினீர்.—
நான் உம்மைப்பிரார்த்தித்தநாளில், நீர் சேர்ந்து ௫௭
பயப்படாதேயென்றீர்.—ஆண்டவரே, என் ௫௮
ஆத்துமத்தின்வழக்குகளை நீர்வழக்காடினீர்;என்
பிராணனை மீட்டுக்கொண்டீர்.–யெகோவா ௫௯
வே, எனக்குண்டான அநியாயத்தைக்கண்டீர்:
என்நியாயத்தைவிசாரியும்.—அவர்கள்எனக்குச் ௬௰
செய்தபழிகளெல்லாவற்றையும், எனக்குவிரோ
தமாய் அவர்கள்கொண்ட சிந்தனைகளெல்லாவற்
றையுங்கண்டீர்.–யெகோவாவே, நீர் அவர் ௬௧
களுடைய நிந்தையையும், எனக்குவிரோதமாக
அவர்கள்கொண்டஎண்ணங்களையும்,—எனக்கு ௬௨
விரோதமாயெழும்பினவர்களின் வாய்மொழிக
ளையும், அவர்கள்நாள்முழுவதும் எனக்குவிரோ
தமாக ஆலோசிக்குந்துராலோசனையையுங்கேட்
டீர்.—அவர்கள் இருப்பதையும், எழும்புவதை ௬௩
யும்நோக்கிப்பாரும்,நான் அவர்களுடையபாட்
டின்பொருளானேன்.
யெகோவாவே, அவர்களுடையகைகள் ௬௪

(௰௮) சங்.௩௧.௨௨. (௰௯) எரே.௯.௰௫. (௨௨) மல்.௩.௬. (௨௩) ஏசா.௩௩.௨. (௨௪) சங்.௰௬.௫. எரே.௰.௰௬. (௨௫)சங். ௱௩௰.௬. ஏசா.௩௰.௰௮. மீகா.௭.௭. (௨௬) சங்.௩௭.௭. (௨௭) சங்.௯௪.௰௩. (௨௮) எரே.௰௫.௰௭. (௨௯) யோபு.௪௨.௬. (௩௰)ஏசா.௫௰.௬. மத்.௫.௩௯. (௩௧) சங்.௯௪.௰௪. (௩௩)எசேக்.௩௩.௰௧. எபி.௰௨.௰. (௩௬)அபகூ.௧.௩. (௩௭) சங்.௩௩. ௯.(௩௮)யோபு.௨.௰. ஏசா.௪௫.௭. ஆமோ.௩.௬. (௩௯)நீதி.௰௯.௩. மீகா.௭.௯. [illegible] ௧.கொரி.௪.௰௩. (௪௭) ஏசா.௨௪.௰௭. எரே.௪௮.௪௩. ஏசா.௫௧.௰௯.(௪௮)எரே.௪.௰௯.(௪௯)ஏசா.௬௩.௰௫.(௫௰)சங். ௭௭.௨. (௫௨) சங்.௩௫.௭,௰௯. (௫௩) எரே.௩௭.௰௬. தானி.௬.௰௭. (௫௪) சங்.௬௯.௨. சங்.௩௧.௨௨. ஏசா.௩௮.௰,௰௧. (௫௫)சங்.௱௩௰.௧. யோனா.௨.௨.(௫௭)யாக்.௪.௮.(௫௮)சங்.௩௫.௧. எரே.௫௧.௩௬.சங்.௭௧.௨௩.(௫௯)சங்.௯.௩.(௬௰) எரே.௰௧.௰௯. (௬௩) சங்.௱௩௯.௨. (௬௪) சங்.௨௮.௪. எரே.௰௧.௨௰. ௨.தீமோ.௪.௰௪.

செய்தகிரியைகளின்படி அவர்களுக்குப் பலன
௬௫ ளிப்பீர்.—நீர் அவர்களைக் கடினஇருதயத்திற்கு
ஒப்பிப்பீர், உம்முடையசாபம் அவர்கள்மேல்
௬௬ வரும்.—நீர் கோபத்தில்அவர்களைத்தொடர்ந்து,
யெகோவாவாகிய உம்முடையவானங்க
ளின்கீழ்அழிப்பீர்.

## ௪. அதிகாரம்.

௧. சீயோனிமித்தம்புலம்பல்: ௰௩. பாவங்களை யுணர்ந்து சொல்லல்: ௨௧. ஏதோமைப்பயமுறுத்தல்.

ஐயோ, பொன்எப்படிமங்கியிருக்கின்றது; தங்
கம் மாறிப்போயிற்று; பரிசுத்தஸ்தானத்தின் கற்
கள் வெளியே ஒவ்வொருவீதியின் சந்தியிலுங்
௨ கொட்டப்பட்டன.—ஐயோ, அபரஞ்சியைப்
போன்ற சீயோனின்சிரேஷ்டபுத்திரர் குயவன்
கையினாற்செய்யப்பட்ட மட்பாண்டங்களாக
௩ எப்படி எண்ணப்பட்டிருக்கிறார்கள்.—சமுத்தி
ரத்திலிவாழுஞ் செந்துக்களும் முலைகாட்டுகின்ற
ன, அவைகளுந்தங்கள் சிசுக்களுக்குப்பால்கொ
டுக்கின்றன: என்சனங்களின்குமாரத்தியோ, வ
னத்திலுள்ள ஒட்டகப்பட்சியைப்போல இரக்
௪ கமற்றவள்.—குழந்தையின்நாவு தாகத்தால் அ
தின்அண்ணத்தோடே ஒட்டிக்கொண்டது: பா
லகர் உணவுப்பொருள்கேட்கிறார்கள், அவர்க
௫ ளுக்குக் கொடுப்பவனில்லை.—சம்பிரமமாய்ப்
போசனபானம்பண்ணினவர்கள் வீதிகளில் பா
ழாய்க்கிடக்கிறார்கள்: இரத்தாம்பரத்தைத் தரித்த
வர்கள் குப்பைமேடுகளைத் தழுவிக்கொள்ளுகி
௬ றார்கள்.—கைச்செய்கையில்லாமல் ஒருநிமிஷத்
திலே நாசப்பட்ட சோதோமின் தண்டனையி
லும், என்சனகுமாரத்தியின்தண்டனை அதிகமா
௭ யிற்று.—ஐயோ, அதின்பிரபுகள் உறைந்தமழை
யிலுஞ் சுத்தமும், பாலிலும் வெண்மையுமாயி
ருந்தார்கள், அவர்களுடையசரீரம் பதுமராகம
ணியிலும்இரத்தவருணமாயிருந்தது,மெருகிட்ட
௮ நீலக்கல்போலிருந்தார்கள்.—இப்பொழுதோ அ
வர்கள்முகம் கருமையிலுங் கறுத்திருக்கின்றது;
வீதிகளில் அவர்கள்அறியப்படார்கள்: அவர்க
ளுடையதோல் எலும்போடே ஒட்டிக்கொண்
௯ டது; அது காய்ந்தமரத்திற்குச்சமானம்.—பசியி
னால் மாண்டுபோவதிலுங் கட்கத்தினாலே கொ
லைசெய்யப்படுவதுநலம்: அவர்கள் வயலின்பல
னில்லாததினால் உருவக்குத்தப்பட்டு மெலிந்து
௰ போகிறார்கள்.—இரக்கமுள்ள ஸ்திரிகளின்கை
கள் அவர்கள் சொந்தப்பிள்ளைகளைப்பாகம்பண்
ணின: என்சனகுமாரத்தி நாசமடைந்த சமயத்
தில் அவைகள் இவர்களுக்குஉணவுப்பொருளா
௰௧ யின.—யெகோவா தமதுகோபத்தைப் பலிக்
கப்பண்ணினார், அவர்தமதுஉக்கிரகோபத்தைச்
சொரிந்து, சீயோனில் அக்கினியைமூட்டினார்,
அது அதன் அஸ்திபாரத்தைப்பட்சித்தது.—எந் ௰௨
தவிரோதியாயினும், சத்துருவாயினும் யெருஷ
லேமின்வாசல்களில் பிரவேசிக்கக்கூடுமென்று
பூலோகஇராசாக்களும் பூலோகவாசிகளில் ஒரு
வரும் நம்பமாட்டார்கள்.

அதின்மத்தியில் நீதிமான்களின் இரத்தத்தைச் ௰௩
சிந்தின தீர்க்கதரிசிகளின் பாவங்களினிமித்த
மும், அதின் ஆசாரியர்களின் துஷ்டகருமத்தி
னிமித்தமும் இப்படியாயிற்று.—அவர்கள் வீதி ௰௪
களில்குருடராய்த்திரிந்து, தங்கள் வஸ்திரங்க
ளை ஒருவருந்தொடாதபடி அவைகளை இரத்தத்
தினால் அசுசிப்படுத்தினார்கள்.—சனங்கள்அவர்க ௰௫
ளைக்கூப்பிட்டு, அசுத்தரே, புறப்படுங்கள், புறப்
படுங்கள், புறப்படுங்கள்; தொடாதிருங்களென்
றார்கள்: இவர்கள் தப்பிஓடி அலைந்தபொழுது,
அந்நியதேசத்தாரும், இவர்களைஎங்களோடேவா
சம்பண்ணவிடோமென்றார்கள்.-யெகோவா ௰௬
வின் முகம் அவர்களைச்சிதறஅடித்தது; அவர்
இனி அவர்களைக்கடாட்சியார்: அவர்கள் ஆசா
ரியர்களுடையமுகத்தைப்பாராமலும், முதியோ
ரை மதியாமலுமிருந்தார்கள்.—துணை வருமென் ௰௭
று நாம் எதிர்பார்த்ததினால் நம்முடையகண்கள்
பூத்துப்போயின: நாம் நம்மையிரட்சிக்கத்திரா
ணியில்லாதசாதியாரைக்காத்திருந்தோமே.-நாம் ௰௮
நம்முடையவீதிகளில் உலாவாதபடி, அவர்கள்
நம்முடையஅடிச்சுவடுகளைத்தொடருகிறார்கள்:
நம்முடையமுடிவுசமீபித்துவந்தது, நம்முடைய
நாள்கள் நிறைவேறின; நம்முடையமுடிவு வந்
துவிட்டது.—நம்மைத் துயரப்படுத்துகிறவர்கள் ௰௯
ஆகாயத்துக்கழுகுகளிலும் வேகமானவர்கள்: அ
வர்கள் மலைகளின்மேல் நம்மைத் தொடர்ந்தார்
கள், அவர்கள்நமக்காக வனத்திலேபதிவிருந்தார்
கள்.—சாதியாருக்குள்ளே அவன் நிழலிலே வா ௨௰
சம்பண்ணுவோமென்றுநாம்சொல்லிக்காட்டிய
யெகோவாவினால் அபிஷேகம்பெற்றவனா
கிய நம்முடைய நாசிகையின் சுவாசமானவனும்
அவர்கள் குழிகளில் அகப்பட்டான்.

ஊத்சுதேசத்தில்வாசம்பண்ணுகிற ஏதோமின் ௨௧
குமாரத்தியே, நீ சந்தோஷப்பட்டுக்களிகூரு; பா
னபாத்திரம்உன்னிடத்திலும்செல்லும்: நீயும்வெ
றிகொண்டுஉன்நிருவாணத்தைக்காட்டுவாய்.

சீயோன்குமாரத்தியே, உன் பாவத்தின் தண் ௨௨
டனைதீர்ந்துபோயிற்று, அவர் இனி உன்னைச்சி
றைப்படுத்திக்கொண்டுபோகார்: ஏதோமின் கு
மாரத்தியே, அவர் உன்பாவத்தை விசாரிப்பார்;
உன்பாவங்களைவெளிப்படுத்துவார்.

(௬௬) உபா.௨௯.௰௯. எரே.௰.௰௧. சங்.௮.௩.—(௪. அதி.௨.) ஏசா.௩௰.௰௪. எரே.௰௯.௰௧. ௨.கொரி.௪.௭.(௩)யோபு. ௩௧.௰௪,௰௬. (௪) சங்.௨௨.௰௫. (௫) யோபு.௨௪.௮. (௬) ஆதி.௰௯.௨௫. (௮) யோவே.௨.௬. நாகூ.௨.௰. சங்.௱௨. ௫. (௰) ஏசா.௪௯.௰௫. உபா.௨௮.௫௭. ௨.இரா.௬.௨௯. (௰௧) எரே.௭.௨௰. உபா.௩௨.௨௨. எரே.௨௧.௰௪. (௰௩) எரே.௫.௩௧. எசேக்.௨௨.௨௬,௨௮. செப்.௩.௪. மத்.௨௩.௩௧,௩௭. (௰௪) எரே.௨.௩௪. எண்.௰௯.௰௬. (௰௫) லேவி. ௰௩.௪௫. (௰௭) ௨.இரா ௨௪.௭. ஏசா.௨௰.௫. எரே.௩௭.௭. எசேக்.௨௯.௰௬. (௰௮) ௨.இரா.௨௫.௪,௫. எசேக்.௭.௨, ௩,௯. ஆமோ.௮.௨. (௰௯) உபா.௨௮.௫௰. எரே.௪.௰௩. (௨௰) ஆதி.௨.௭. எரே.௫௨.௯. எசேக்.௰௨.௰௩. (௨௧) எரே. ௨௫.௰௫,௰௬,௨௧. ஒப.௰. (௨௨) ஏசா.௪௰.௨. சங்.௱௩௭.௭.

## ௫. அதிகாரம்.

எரேமியா பிரார்த்தித்தல்: பாவத்தை யுணர்ந்து சொல்லிப்புலம்பல்.

யெகோவாவே, எங்களுக்குநேரிட்டதை
நினைந்தருளும்: எங்கள் அவமானத்தைச்சிந்தித்
௨ துப்பாரும்,-எங்கள்சுதந்தரம்அந்நியருக்கும்,எங்
கள்வீடுகள்புறச்சாதியாருக்கும்ஒப்பிக்கப்பட்ட
௩ ன.—நாங்கள் பிதாவில்லாத அநாதபிள்ளைகளா
௪ னோம், எங்கள் மாதாக்கள்விதவைகள்.–நாங்கள்
சலத்தைப் பணத்திற்கு வாங்கிக் குடிக்கிறோம்;
எங்கள் விறகுக்கும் விலைகொடுக்கப்படுகின்ற
௫ து.–எங்கள் கழுத்துக்கள் பாரஞ்சுமந்துநோகின்
றன: இளைப்பாறுதலில்லாமல் ஊழியஞ்செய்து
௬ வருகிறோம்.–நாங்கள்போசனதிருத்தியடையும்
படி, எகிப்தியருக்கும்அஷீரியருக்குங் கை நீட்
௭ டினோம்.-எங்கள்முன்னோர்கள்பாவஞ்செய்தார்
கள், இப்பொழுது அவர்களில்லை; நாங்கள் அ
வர்களுடைய பாவத்தின் தண்டனையை அனுப
௮ விக்கிறோம்.—பணிவிடைக்காரர் எங்கள்மேல்
ஆளுகைசெய்கிறார்கள்: அவர்கள் கையினின்று
௯ எங்களைவிடுவிப்பார் ஒருவருமில்லை.—வனத்தி
லேகட்கமிருப்பதினால் நாங்கள் உணவுப்பொ
௰ ருளைத்தேடுவது பிராண மோசம்.—பயங்கர
மானபஞ்சமிருப்பதினால் எங்கள்தோல் சூளை
௰௧ யைப்போலக்காய்ந்துபோயிற்று.–சீயோனிலுள்
ளஸ்திரிகளையும், யூதா நகரங்களிலுள்ள கன்னி
யரையும் அவமானப்படுத்தினார்கள்.—பிரபுகள் ௰௨
அவர்கள்கையினாலே தூக்கப்படுகிறார்கள்: முதி
யோரின்முகங்கள் மதிக்கப்படவில்லை.—வாலி ௰௩
பரை இயந்திரத்தில் திரிக்கக்கொண்டுபோனார்
கள், பாலகர் விறகு சுமையின் கீழ்விழுந்தார்
கள்.—முதியோர்வாசலையும், வாலிபர்தங்கள் கீ ௰௪
தவாத்தியத்தையும்விட்டொழிந்துபோனார்கள்.-
எங்கள் இருதயத்தின் சந்தோஷம் ஒழிந்துபோ ௰௫
யிற்று; எங்கள்நடனத்திற்குப்பிரதியாகத்துக்கந்
தோன்றிற்று.—எங்கள் தலையினின்று கிரீடம்வி ௰௬
ழுந்தது: ஐயோ, நாங்கள் பாவஞ்செய்தோம்.—
இதினால் எங்கள்இருதயம்சோர்ந்தது;இவைகளி ௰௭
னிமித்தம்எங்கள்கண்கள்இருண்டன.-சீயோன் ௰௮
மலைபாழாயிருப்பதினால், அதின்மேல்நரிகள் உ
லாவித்திரிகின்றன.–யெகோவாவே, நீர்நித் ௰௯
தியர்; உம்முடைய சிங்காசனந் தலைமுறைதோ
றும்நிற்கும்.—நீர் சதாகாலமும் எங்களைநினையா ௨௰
மலிருக்கிறதென்ன, எங்களை நெடுநாளாகக்கை
விட்டதென்ன.—நீர் எங்களிலே மிகவுங்குரோ ௨௧
தங்கொண்டு, முழுமையும் எங்களைக் கைவிட்
டீரே.—யெகோவாவே, நீர் எங்களை உமது ௨௨
பட்சத்திலேதிருப்பியருளும், அப்பொழுதுநாங்
கள்திரும்புவோம்; பூருவகாலத்தைப்போல எங்
கள்காலத்தைச்சீர்ப்படுத்தியருளும்.

(௫. அதி. ௧) சங்.௮௯.௫௰,௫௧. சங்.௭௯.௪. (௨) சங் ௭௯.௧. (௫) உபா.௨௮.௪௮. எரே.௨௮.௰௪. (௬) ஆதி.௨௪.௨. எரே.௫௰.௰௫. ஓசி.௰௨.௧. (௭) எரே.௩௧.௨௯. எசேக்.௰௮.௨. ஆதி.௪௨.௰௩.௪௧.௧.௫. (௮) நெகே.௫.௰௫. (௰) யோபு.௩௰.௩௰. சங்.௱௰௯.௮௩. (௰௧) ஏசா.௰௩.௰௬. சக.௰௪.௨. (௰௨) ஏசா.௪௭.௬. (௰௩) நியா.௰௬.௨௧. (௰௬) யோபு.௰௯.௯. சங்.௮௯.௩௯. (௰௭) சங்.௬.௭. (௰௯) சங்.௩௰.௨. அபகூ.௧.௰௨. சங்.௪௫.௬. (௨௰) சங்.௰௩.௧. (௨௧) சங்.௮௰,௩,௭,௰௯. எரே.௩௧.௰௮.

# எசேக்கியேல் தீர்க்கதரிசியின் புத்தகம்.

## ௧. அதிகாரம்.

*௧. எசேக்கியேலின் காலத்தைக்குறித்தல்: ௪. அவன் நாலுபிராணிகளைத்தரிசித்தல்: ௰௫. நாலு சக்கரங்களைத்தரிசித்தல்: ௨௬. அவன் யெகோவாவின் மகிமைப்பிரகாசத்தைத்தரிசித்தல்.*

கல்தேயதேசத்தில் கேபார் நதியோரத்திலிருந்த
பூசியென்னும் ஆசாரியனுடையபுத்திரனாகிய எ
சேக்கியேலுக்கு யெகோவாவின் வாக்குக்
கிடைத்தது; அங்கே யெகோவாவின்கை
௨ அவன்மேல்அமர்ந்தது.—யோயாகீன் இராசா சி
றைப்பட்ட ஐந்தாம்வருஷம் நாலாம்மாதம் ஐந்
௩ தாந்தேதியாகிய—முப்பதாம்வருஷம் நாலா மா
தம் ஐந்தாந்தினத்திலே நான் சிறைப்பட்டோ
ருக்குள் கேபார் நதியோரத்திலிருக்கையில், வா
னங்கள் திறக்கப்பட நான் தேவதரிசனங்களைக்
கண்டேன்.
௪ நான்பார்த்திருக்கையில், வடக்கினின்று சூ
றைக்காற்றோடே மகா மேகமும் தானாய்ப்பற்றி
எரிகிற அக்கினியும்வந்தன, அதின்சுற்றுப்புறத்தி
லேபிரகாசமும், அதின் நடுவே அக்கினிக்குள்
ளிருந்து விளங்கிய அம்பர்போன்ற வருணமுந்
௫ தோன்றின.—அதின் மத்தியினின்று நாலு பிரா
ணிகளின்ரூபங்கள்தோன்றின. அவைகள் மனி
௬ தசாயலையுடையவைகள்.—ஒவ்வொன்றுக்கு நந்
நாலுமுகங்களும் நந்நாலு சிறகுகளுமிருந்தன.—
௭ அவைகளுடையகால்நேர்மையானகால்; அவை
களின் உள்ளங்கால்கன்றின் உட்குளம்புக்குச்ச
மானம்: அவைகள் துலங்கும்பித்தளையின் வரு
௮ ணம்போல மின்னிக்கொண்டிருந்தன.—அவை
களுக்கு நாலுபக்கங்களிலும் சிறகுகளின்கீழ் ம
னிதகைகளிருநதன; அந்நாலு பிராணிகளுக்
௯ கும் முகங்களுஞ்சிறகுகளுமிருந்தன.—அவை
களின்சிறகுகள் ஒன்றோடொன்று இசைந்திருந்
தன; அவைகள்செல்லும்பொழுது திரும்பவில்
லை; அவைகள் ஒவ்வொன்றும் நேர்மையாய்ச்
௰ சென்றன.—அவைகளுடையமுகங்களின் சாய
லாவது, வலப்பக்கத்தில்நாலும்மனுஷமுகமும்,
சிங்கமுகமும்: இடப்பக்கத்தில் நாலும் எருது
௰௧ முகமும், கழுகுமுகமுமாம்.—அவைகளின் மு
கங்களுஞ் சிறகுகளும் மேலே பிரிக்கப்பட்ட
ன; ஒவ்வொன்றிலுமுள்ள இரண்டு சிறகுகள்
ஒன்றோடொன்று இசைந்திருந்தன, இரண்டு அ
௰௨ வைகளின் சரீரங்களைமூடின.—அவைகள் ஒவ்
வொன்றும் நேர்மையாய்ச்சென்றன: ஆவிசெல்
வது எங்கேயோ அங்கே அவைகளுஞ்செல்லும்;
அவைகள் செல்லும்பொழுது சாயவில்லை.—அந் ௰௩
தப்பிராணிகளின் சாயலாகிய தோற்றம் எரிகிற
அக்கினியின் தழலையும், சுவாலிக்கிற தீவர்த்திக
ளையும்போலிருந்தன: அது அந்தப்பிராணிகளின்
மத்தியில் அங்குமிங்கும் உலாவிக்கொண்டிருந்
தது; அந்த அக்கினி மகாபிரகாசமுள்ளது, அக்
கினியினின்று மின்னல் தோன்றிற்று.—அந்தப் ௰௪
பிராணிகள் மின்னலின்பிரகாசம்போலப்போக்
குவரவுசெய்யும்.
நான் அந்தப் பிராணிகளைப் பார்த்திருக்கை ௰௫
யில், பூமியின்மேல்அவைகளின்சமீபத்தில் நாலு
பக்கங்களையுடையஒருசக்கரத்தைக்கண்டேன்.-
சக்கரங்களின்தோற்றமும், வேலையும், தர்ஷீஸ் ௰௬
ரத்தினம்போலிருந்தன; அந்தநாலும்ஒரேசாயல்:
அவைகளின்தோற்றமும்வேலையும்சக்கரத்திற்கு
ள் சக்கரத்தைப்போலிருந்தன.-அவைகள் செல் ௰௭
லும்பொழுது, தங்கள் நாலுபக்கங்களிலுஞ்செல்
லுஞ்: செல்லுகையில் அவைகள்சாயவில்லை.-அ ௰௮
வைகளின்கட்டுகள் அஞ்சத்தக்கஉயரமுள்ளன;
அந்நாலுகட்டுகளின்சுற்றிலும்நிறையக்கண்களி
ருந்தன.—பிராணிகள்சென்றபொழுது, அந்தச் ௰௯
சக்கரங்களும் அவைகளினருகேசென்றன: பி
ராணிகள் பூமியினின்று எழுந்தபொழுது, சக்க
ரங்களும்எழுந்தன.—ஆவிசெல்வது எங்கேயோ, ௨௰
அங்கேஇவைகளின்ஆவியுஞ்செல்லும்; சக்கரங்
கள்அவைகளின்எதிரேஉயர்த்தப்பட்டன: பிரா
ணிகளின்ஆவி அந்தச்சக்கரங்களில்இருந்தது.-அ ௨௧
வைகள்செல்லும்பொழுதுஇவைகளுஞ்செல்
லும்; அவைகள் நின்றபொழுது இவைகளும்
நிற்கும், அவைகள் பூமியினின்று உயர்த்தப்படும்
பொழுது சக்கரங்களும் அவைகளின் எதிரே உ
யர்த்தப்பட்டன: பிராணிகளின்ஆவி சக்கரங்க
ளில் இருந்தது.—பிராணிகளின்தலையின்மேலுள் ௨௨
ள ஆகாயமண்டலம் பயங்கரமுள்ள பளிங்கைப்
போல அவர்கள்தலைக்குமேலே விரிந்திருந்த
து.—ஆகாயமண்டலத்திற்குக்கீழே அவைகளின் ௨௩
சிறகுகள் ஒன்றுக்கொன்றெதிராக நேராய்விரிந்
திருந்தன: ஒவ்வொருபிராணியின் சரீரத்தை
மூடுவதற்கு இப்பக்கத்திலிரண்டுசிறகும், அப்
பக்கத்திலிரண்டு சிறகுமிருந்தன.—அவைகள் ௨௪
செல்லும்பொழுது ஆழமான சலங்களின் சத்த
மும், சருவவல்லவருடைய வாக்கும்போல அ
வைகளுடைய சிறகுகளின் சத்தத்தைக் கேட்
டேன், அவைகளுடையவாக்கின்சத்தம் ஒருசே
னையின் ஆரவாரம்போலிருந்தது: அவைகள் நிற்

(௧. அதி. ௧.) ௧.இரா.௰௮.௪௬. (௨) ௨.இரா.௨௪.௰௨,௰௫. (௩) அதி.௩.௰௫,௨௩. அதி.௪௩.௩. மத்.௩.௰௬. அப்.௭.௫௬. அப்.௰.௰௧. வெளி.௰௯.௰௧. (௪) எரே.௨௩.௰௯. எரே.௧.௰௪. (௫) வெளி.௪.௬,. (௭) தானி.௰.௬. வெளி.௧.௰௫. (௰) வெளி.௪.௭. எண்.௨.௩,௰,௰௮,௨௫. (௰௧) ஏசா.௬.௨. (௰௩) வெளி.௪.௫. (௰௪) சக.௪.௰. மத்.௨௪.௨௭. (௰௬) தானி.௰.௬. (௰௮) சக.௪.௰. (௰௯) அதி.௰.௰௬,௰௭. (௨௰) அதி.௰.௰௭. (௨௧) வச.௰௯,௨௰. அதி.௰.௰௭. (௨௨) அதி.௰.௧. (௨௪) அதி.௰.௫. அதி.௪௩.௨. தானி.௰.௯. வெளி.௧.௰௫. யோபு.௩௭.௪,௫.

௨௫ கும்பொழுது தங்கள் சிறகுகளைத்தாழவிடும்.—அ
வைகள் நின்று தங்கள்சிறகுகளைத் தாழவிட்ட
பொழுது, அவைகளின் தலைகளுக்கு மேலுள்ள
ஆகாயமண்டலத்தினின்று ஒரு அசரீரிவாக்குப்
பிறந்தது.
௨௬ அவைகளின் தலைகளுக்குமேலுள்ள ஆகாய
மண்டலத்தின் மீதே நீலரத்தினத்தைப்போலவி
ளங்கும்ஒருசிங்காசனரூபமிருந்தது: சிங்காசன
ரூபத்தின்மேல் ஒருமனுஷரூபந்தோன்றிற்று.—
௨௭ அவர்அரைக்குமேல் உட்புறஞ்சுற்றிலும் அம்பர்
போன்ற ஒரு அக்கினித்தோற்றத்தையும், அவர்
அரைக்குக்கீழ்அக்கினியைப்போன்ற ஒருதோற்
றத்தையும்,சுற்றுப்புறத்தில் ஒருபிரகாசத்தையுங்
௨௮ கண்டேன்.-மழைபெய்யும்நாளில்வானவில்எப்
படித்தோன்றுகிறதோ, அப்படியே அவர்சுற்றுப்
புறத்திலுள்ள பிரகாசந்தோன்றிற்று. யெகோ
வாவுடைய மகிமைப்பிரகாசத்தின் தோற்றம்
இவ்விதமாயிருந்தது. நான் அதைக்கண்டமாத்தி
ரத்திலேமுகங்குப்புறவிழுந்து, ஒருவர் பேசுகிற
சத்தத்தைக்கேட்டேன்.

## ௨. அதிகாரம்.

௧. எசேக்கியேலுக்குப் பட்டந்தரித்தல்: ௬. அவனுக்கு உபதேசித்தல்: ௯. அவனிடத்தில் புத்தகம் ஒப்பித்தல்.

அவர் என்னுடனே, மனுபுத்திரனே, உன்கா
லூன்றிநில், நான் உன்னோடேபேசுவேனென்
௨ றார்.—அவர் என்னோடேபேசினசமயத்தில் ஆவி
என்னுள்ளேபுகுந்து என்னைக்காலூன்றிநிற்கும்
படிசெய்ய, நான் என்னுடன்பேசினவருடைய
௩ வாக்குகளைக்கேட்டேன்.—அவர் என்னைநோக்
கி, மனுபுத்திரனே, என்கட்டளைக்கமையாத சா
தியாராகிய இஸரவேல்சந்ததியாரிடத்தில் உன்
னைஅனுப்புகிறேன்: அவர்களும், அவர்கள்முன்
னோரும், இந்நாள்வரைக்கும் என்கட்டளையை
௪ மீறிவருகிறார்கள்.—நாணமில்லாதமுகமும், கடி
னமான இருதயமுமுள்ள சந்ததியாரிடத்தில் நா
ன் உன்னை அனுப்புகிறேன்; நீ அவர்களைநோக்
கி, ஆண்டவராகிய யெகோவா இப்படிச்
௫ சொல்லுகிறாரென்பதைச் சொல்லு.—அவர்கள்
கட்டளைக்கமையாத வமிசத்தாராகிய அவர்கள்,
இவ்வாக்குக்குச் செவிகொடுத்தாலும்,செவிகொ
டாமற்போனாலும் தங்களுக்குள்ளே தீர்க்கதரிசி
ஒருவனுண்டென்றறிந்துகொள்ளவேண்டும்.
௬ மனுபுத்திரனே, முட்பூண்டுகளும், முள்ளுக்
களும் உன்னுடனிருந்தாலும், நீ தேள்களுக்குள்
ளேவாசம்பண்ணினாலும், நீ அவர்களுக்குப் ப
யப்படவேண்டாம்: அவர்களுடைய வாக்குக
ளுக்கும்அஞ்சவேண்டாம், அவர்கள் கட்டளைக்
கமையாத வமிசத்தாராயினும் அவர்கள்வாக்குக
ளுக்குப்பயப்படாமலும் அவர்கள்பார்வைக்குக்
௭ கலங்காமலுமிரு.-மிகுதியாய்க் கட்டளைமீறுகிற
அவர்கள் செவிகொடுத்தாலும், செவிகொடா
மற்போனாலும் என்வாக்குகளை அவர்களுக்குச்
சொல்லு.—மனுபுத்திரனே, கட்டளைக்கமையாத ௮
அந்த வமிசத்தாரைப்போல நீயும் கட்டளைக்க
மையாதவனாயிராமல், நான் உனக்குச்சொல்வ
தைக்கேள்; உன்வாயைத்திறந்துநான் உனக்கிடு
வதைப்புசிப்பாயாக.
பின்பு நான்பார்த்திருக்கையில், ஒரு புத்தகச் ௯
சுருள்பொருந்திய ஒருகைஎன்னிடத்தில் அனுப்
பப்பட்டதைக்கண்டேன்.—அவர்அதை எனக் ௰
குமுன்பாகவிரித்தார்; அது உள்ளும்புறம்பும் எ
ழுதப்பட்டதாயிருந்தது.அதிலேபுலம்பல்களும்,
துக்கமும், ஆபத்தும் எழுதப்பட்டிருந்தன.

## ௩. அதிகாரம்.

௧. எசேக்கியேல் புத்தகத்தைப்புசித்தல்: ௪. யெகோவா அவனுக்குஉபதேசித்தல்: ௰௨. ஆவி அவனைத்தூக்கிக்கொண்டுபோதல்: ௰௫. சிறைப்பட்டோரிடத்திற்சென்று தேவனுடைய உபதேசத்தைப்பெறல்: ௨௨. தேவன் தீர்க்கதரிசியின்வாயைஅடைத்தல், அதைத்திறத்தல்.

பின்பு அவர்என்னைநோக்கி, மனுபுத்திரனே,உ ௧
னக்குக்கிடைத்ததைப் புசிப்பாயாக; இந்தச்சு
ருளை நீ புசித்து இஸரவேல்வமிசத்தாரிடத்திற்
போய்அவர்களோடே பேசுவாயாகவென்றார்.—
அப்பொழுது நான் என்வாயைத்திறக்க, அவர் ௨
அந்தச்சுருளை நான் புசிக்கச்செய்தார்.—பின்னும் ௩
அவர் என்னைநோக்கி, மனுபுத்திரனே, நான் உ
னக்குத்தருகிற இந்தச்சுருளை உன்வயிற்றில் உட்
படச்செய்து இதினால் உன் உதரத்தை நிரப்பு
வாயாகவென்றுசொல்ல, நான் அதைப் புசித்
தேன்; அது என்வாய்க்குத்தேனைப்போல் மதுர
மாயிருந்தது.
அப்புறம் அவர் என்னைநோக்கி, மனுபுத்திர ௪
னே, நீ இஸரவேல் வமிசத்தாரிடத்திற்போய், அ
வர்களுக்கு என்வாக்குகளைத்தெரிவி.—நீ அறிவ ௫
தற்கரிய வாக்கையும், கடினமான பாஷையையு
முடைய சனங்களிடத்திலல்ல, இஸரவேல்வ
மிசத்தாரிடத்தில் அனுப்பப்படுகிறாய்.—அறிவ ௬
தற்கரியவாக்கையும், உனக்குத்தெரியாத கடின
மான பாஷையையுமுடைய திரளான சனங்களி
டத்தில் நீ அனுப்பப்படவில்லை. நான் அவர்க
ளிடத்தில் உன்னை அனுப்பினேனாகில் அவர்கள்
உனக்குச்செவிகொடார்களா.—இஸரவேல் வ ௭
மிசத்தாரோ உனக்குச்செவிகொடார்கள்; எனக்
குஞ்செவிகொடார்கள்:இஸரவேல்வமிசத்தார்ச
கலரும் நாணமில்லாதமுகமும், கடினமான இரு
தயமுமுள்ளவர்கள்.-பார், அவர்களுடையமுகத் ௮
திற்கெதிரே உன்முகத்தையும், அவர்களுடைய
நெற்றிக்கெதிரேஉன்நெற்றியையும்,உரங்கொள்
ளும்படி செய்தேன்.—நான் உன்நெற்றியைத் ௯
தீத்தட்டிக்கல்லிலும் அதிகவைரமான ஒருவச்சி

(௨௬)பாத்.௨௪.௰.(௨௮)வெளி.௪.௩. அதி.௩.௨௩. தானி.௮.௰௭. அப்.௯.௪. வெளி.௧.௰௭.—(௨.அதி.௧.) தானி.௰.௰௧.(௨) அதி.௩.௨௪.(௩)எரே.௩.௨௫. (௫) அதி.௩௩.௩௩.(௬)எரே.௧.௮,௰௭. லூக்.௰௨.௪. எசா.௯.௰௮. எரே.௬.௨௮. மீகா.௭.௪. ௧.பேதுரு.௩.௰௪.(௭)எரே.௧.௭,௰௭.(௮)வெளி.௰.௯. (௯) எரே.௧.௯.—(௩.அதி.௩.) வெளி.௰.௯. எரே.௰௫.௰௬. சங்.௰௯.௰.(௬)மத்.௰௧.௨,௨௩. (௭) யோவா.௰௫.௨௰. (௯) ஏசா.௫௰.௭. மீகா.௩.௮. எரே.௧.௮,௰௭,௰௮.

ரத்தைப்போலாக்கினேன்: அவர்கள் கட்டளைக்
கமையாத வமிசத்தாராயினும் அவர்களுக்குப் ப
யப்படவேண்டாம், அவர்களுடைய பார்வைக்
௰ குக்கலங்கவும் வேண்டாமென்றார்.—பின்னும்அ
வர்என்னைநோக்கி,மனுபுத்திரனே, நான்உன்னி
டத்திற்சொல்லும் வாக்குகளையெல்லாம் உன்கா
தினாற்கேட்டு, உன் இருதயத்திலுட்கொண்டு,—
௰௧ போய், சிறைப்பட்டஉன்சனங்களின்சந்ததியா
ரிடத்தில்சேர்ந்து, அவர்கள்செவிகொடுத்தாலும்
செவிகொடாதிருந்தாலும்அவர்களோடேபேசி,
ஆண்டவராகிய யெகோவா இப்படிச்
சொல்லுகிறாரென்பதை அவர்களுக்குச் சொல்
௰௨ லென்றார்.—அப்பொழுது ஆவிஎன்னைத்தூக்கிவி
ட,அவருடையஸ்தானத்தினின்றுவிளங்கியயெ
கோவாவின் மகாமகிமைதுதிக்கப்படக்கடவ
தென்று அதிரும்படி எனக்குப்பின்னாகச்சொல்
௰௩ லிய சத்தத்தைக்கேட்டேன்.—ஒன்றோடொன்று
இசைந்த பிராணிகளுடைய சிறகுகளின்சத்தத்
தையும், அவைகளினருகேயுள்ள சக்கரங்களின்
சத்தத்தையும், மிகவும் அதிரத்தக்க ஒருசத்தத்தை
௰௪ யுங்கேட்டேன்.—ஆவிஎன்னைத்தூக்கிக்கொண்
டுபோய்விட்டது, நான் துக்கித்து மனஸ்தாபப்
பட்டுக்கொண்டு போனேன்; யெகோவா
வின் கை பாரமாக என்மேல் அமர்ந்தது.
௰௫ பின்புகேபார்நதியோரத்தில்தெல்லவீப்பிலே
வசித்த சிறைப்பட்டோரிடத்தில்போய், அவர்
கள்வசித்த ஸ்தானத்தில் நான்வசித்தேன்;அவ்வி
டத்திலே நான் ஆச்சரியப்பட்டு ஏழுநாளளவுந்
௰௬ தங்கினேன்.—ஏழுநாட்சென்றபின்பு, எனக்குக்
௰௭ கிடைத்த யெகோவாவின் வாக்கு,-மனுபுத்
திரனே, நான் உன்னை இஸரவேல்வமிசத்தாருக்
குக் காவலாளனாக ஏற்படுத்தினேன்: ஆதலால் நீ
என்வாயினிடத்தில் வாக்குக்கேட்டு, என்நாமத்
௰௮ தைக்கொண்டு அவர்களுக்குணர்த்து.—நீ நிச்சய
மாகமரணமடைவாயென்றுநான் துன்மார்க்கனி
டத்திற்சொல்ல, நீ அவனுக்கு உணர்த்தாமலும்,
துன்மார்க்கன் தன் ஆத்துமத்தின் இரட்சிப்புக்
கேதுவாகத்துன்னெறியைவிடும்படிபுத்திசொல்
லாமலும் இருந்தால், அந்தத்துன்மார்க்கன் தன்
துன்மார்க்கத்திலே சாவான்; அவன் இரத்தப்ப
௰௯ ழியோ உன்கையில் கேட்கப்படும்.—நீதுன்மார்க்
கனுக்கு உணர்த்தியும், அவன் தன் துர்க்கிரியை
யையும்துன்னெறியையும்விட்டுத்திரும்பாதிருந்
தால் அவன் தன் துன்மார்க்கத்தில் சாவான்;
௨௰ நீயோ உன் ஆத்துமத்தை இரட்சித்தாய்.—அன்
றியும் நீதிமான் ஒருவன் தன் நீதியைவிட்டுப்பா
வத்தைச்செய்யும்பொழுதும், நான் அவனுக்கு
முன் இடறுகட்டையைவைக்கும்பொழுதும் அ
வன் சாவான்: நீ அவனுக்குணர்த்தாதபடியினால்
அவன் தன் பாவத்திலே சாவான், அவன்முன்
செய்த நீதி நினைவிலும்வராது; அவனுடைய இ
ரத்தப்பழியோ உன்கையில் கேட்கப்படும்.—நீ ௨௧
திமான் பாவஞ்செய்யாதபடி நீ அவனுக்குணர்த்
தியபின்பு அவன் பாவஞ்செய்யாவிட்டால், அ
வன் உணர்ச்சிபெற்றதினிமித்தஞ் சீவிப்பான்;
நீயும் உன் ஆத்துமத்தை இரட்சித்தாயென்று
சொல்லிற்று.
அங்கே யெகோவாவின் கை என்மேல்அ ௨௨
மர, அவர் என்னைநோக்கி, நீ எழுந்துசமபூமிக்
குப்போ, அங்கே நான் உன்னோடேபேசுவே
னென்றார்.—அப்பொழுது நான்எழுந்து சமபூ ௨௩
மிக்குப்போனேன்: கேபார்நதியோரத்தில்நான்
கண்டமகிமைப்பிரகாசத்தைப்போல யெகோ
வாவின் மகிமைப்பிரகாசம் அங்கேயும் நின்ற
தினாலே, நான்முகங்குப்புறவிழுந்தேன்.—அப் ௨௪
பொழுது ஆவி என்னுள்ளேபுகுந்து,என்னைக்கா
லூன்றி நிற்கும்படிசெய்து, என்னோடேபேசி,
என்னைநோக்கி, நீ உன்வீட்டுக்குள்ளேபோய்ப்
பூட்டிக்கொண்டிரு.—மனுபுத்திரனாகிய நீயோ, ௨௫
பார், அவர்கள் உன்மேல்கயிறுகளைப்போட்டு
அவைகளால்உன்னைக்கட்டுவார்கள்,நீபுறப்பட்
டு அவர்களுக்குள்ளே போகவேண்டாம்.—அவர் ௨௬
கள் கட்டளைக்கமையாத வமிசத்தாராயிருக்கிற
படியால், நான்உன்நாவை உன்அண்ணத்தோடு
ஒட்டிக்கொள்ளும்படிசெய்வேன், நீ மவுனமா
யிருப்பாய், அவர்களைக் கடிந்துகொள்ளமாட்
டாய்.—நான்உன்னோடேபேசுஞ்சமயத்தில்உன் ௨௭
வாயைத்திறப்பேன்,அப்பொழுதுஆண்டவரா
கியயெகோவா இப்படிச் சொன்னாரென்று
அவர்களிடத்தில்சொல்வாய்; கேட்கிறவன் கே
ட்கக்கடவன்; கேளாதவன் கேளாதிருக்கக்கட
வன்:அவர்கள்கட்டளைக்கமையாதவமிசத்தாரே.

## ௪. அதிகாரம்.

௧. யெரூஷலேமைவளைப்பதைத்திருஷ்டாந்தப்படுத்தல்: ௪. பாவதண்டனை அனுபவிப்பதைத் திருஷ்டாந்தப்படுத்தல்: ௯. பஞ்சகாலத்திலுண்டாகுந்துக்கத்தைத்திருஷ்டாந்தப்படுத்தல்.

மனுபுத்திரனே, நீ ஒரு செங்கல்லை எடுத்துக் ௧
கொண்டு அதை உனக்குமுன்னேவைத்து, அ
தின்மேல் யெரூஷலேம்நகரத்தைச்சித்திரித்து,—
அதை முற்றிக்கைபண்ணி, அதற்கு விரோத ௨
மாய்க்கொத்தளத்தைக்கட்டி, அதற்கெதிரே பா
ளயமிறங்கி, அதின்நாலுபுறத்திலும் மதிலிடிக்
குங்கருவிகளை ஸ்தாபித்துக்கொள்.—மேலும் நீ ௩
ஒரு இருப்புத்தகட்டைவாங்கி, உனக்கும் நகரத்
திற்கும் இடையில் இருப்புச்சுவராகவை: அ
தற்குஎதிரே உன்முகத்தைத்திருப்பு, அதுவளைக்
கப்படும், நீயே அதை முற்றிக்கைபோடுவாய்.
இது இஸரவேல்வமிசத்தாருக்கு ஒரு அடையா
ளம்.—பின்பு நீ இடப்பக்கமாய்ச்சார்ந்து படுத் ௪
துக்கொண்டு, இஸரவேல்வமிசத்தாரின் அக்கிர
மத்தை அதின்மேல்வை. அப்படிநீபடுக்கும்நாட்

(௰௧) அதி.௨.௫,௭. (௰௨) ௨.இரா.௨.௰௬. அப்.௮.௩௯.(௰௪)௨.இரா.௩.௰௫. (௰௫) யோபு.௨.௰௩. சங்.௱௩௭.௧.(௰௭) ஏசா.௫௨.௮. எரே.௬.௰௭. (௰௮) யோவா.௮.௨௧,௨௪. (௰௯) ஏசா.௪௯.௪,௫. அப்.௨௰.௨௭. (௨௰) அதி.௰௮.௨௪. (௨௨) அதி.௧.௧.(௨௩)அதி.௧.௩,௨௮. (௨௪) அதி.௨.௨. (௨௫) அதி.௪.௮.(௨௬)லூக்.௧.௨௰,௨௨. (௨௭) வச.௰௧.— (௪. அதி. ௯.) அதி.௰௨.௬,௰௧.

களின்தொகை எவ்வளவோ, அவ்வளவாய் நீஅ
௫ வர்களுடைய அக்கிரமத்தைச்சுமப்பாய்.—நாட்
களின்தொகையாகிய முந்நூற்றுத் தொண்ணூறு
நாட்களுக்கேற்க, நான்அவர்களுடையவருஷத்
தின்அக்கிரமத்தை உன்மேற்சுமத்தினேன்: இவ்
வண்ணமே நீ இஸரவேல்வமிசத்தாரின் அக்கிர
சு மத்தைச் சுமப்பாய்.—அவைகள் நிறைவேறின
பின்பு திரும்பவும் உன்வலப்பக்கமாய்ச்சாய்ந்து
படுத்துக்கொள், நீ நாற்பதுநாள்வரைக்கும் யூதா
வமிசத்தாரின் அக்கிரமத்தைச்சுமப்பாய்: நான்
ஒவ்வொருவருஷத்திற்குப்பிரதியாக ஒவ்வொரு
எ நாளையும் ஏற்படுத்துகிறேன்.—ஆதலால் நீ யெ
ருஷலேமின் முற்றிக்கைக்கு எதிர்முகமாகி,
உன்புயத்தை வெளிப்படுத்தி, அதற்கு விரோத
அ மாய்த்தீர்க்கதரிசனஞ்சொல்லு.—பார், நீ அதை
வளைக்கும் நாள்களை நிறைவேற்றும்வரைக்கும்,
நீஒருபக்கத்தினின்று மறுபக்கத்திற்குத்திரும்பா
தபடி உனக்குக்கட்டுக்களைஇடுவேன்.
கூ நீ கோதுமையையும், வாற்கோதுமையையும்,
பெரும்பயற்றையும்,சிறுபயற்றையும்,சாமையை
யும், கம்பையும் எடுத்து ஒரு பாத்திரத்தில்வைத்
து, அவைகளினால் அப்பத்தைச் சுடுவாய், நீஒரு
புறத்திற்குச் சாய்ந்துபடுக்கும் நாட்களின்தொ
கைப்படி முந்நூற்றுத்தொண்ணூறுநாள்அதைப்
௰ புசிப்பாய்.-நீபுசிக்கும்உணவுப்பொருள்நாளொ
ன்றுக்கு இருபது ஷேக்கல் நிறையாயிருக்கும்:
௰க காலத்துக்குக்காலம் அதைப்புசிப்பாய்.—சலத்தி
லும்அளவாகஒருகின்னிலேஆறிலொருபங்கைக்
குடிப்பாய்: காலத்துக்குக்காலம் குடிப்பாய்.—
௰உ நீ வாற்கோதுமை அப்பத்தைப் புசிப்பாய், அ
வர்களுக்குமுன் அதை மனுஷனுடைய கஷ்டத்
தின் வறட்டிகளால் சமைப்பாயென்று சொல்
௰ங லிற்று.—மேலும் இவ்விதமாய் இஸரவேல் சந்ததி
யார் தங்களை நான் துரத்திவிடும் அந்நியதேசத்தா
ருக்குள் தங்கள் தங்கள் அசுசியானஉணவுப்பொ
ருளைப்புசிப்பார்களென்று யெகோவா சொல்
௰ச ல,-நான் ஆ, ஆண்டவராகிய யெகோவா
வே, பாரும், நான் அசுசியானவனல்ல: என் சி
றுபிராயம் முதல் இதுவரைக்குந் தானாய்ச் செத்
ததையாவது,பீறுண்டதையாவது புசிக்கவில்லை;
அரோசியமான இறைச்சி என்வாயில் உட்பட்
௰ரு டதுமில்லையென்றேன்.—அப்பொழுது அவர்
என்னைநோக்கி, பார், மனுஷனுடைய கஷ்டத்
தின் வறட்டிகளுக்குப்பிரதியாக மாட்டுச்சாணி
வறட்டிகளைத்தருவேன், அதினால் உன் ஆகாரத்
௰சு தைச் சமைப்பாயென்றார்.-பின்னும் அவர் என்
னைநோக்கி, மனுபுத்திரனே,பார், நான் யெருஷ
லேமில் ஆகாரக் கோலைமுறிப்பேன்: அதினால்
அவர்கள், நிறையின்படி அன்னத்தைப்புசித்துப்
பிரமிப்போடிருப்பார்கள்; அளவின்படி சலத்
தைக்குடித்துத் திகைத்திருப்பார்களென்றார்.—
அன்னமுஞ் சலமுமில்லாமையால் அவர்கள் ஒ ௰எ
ருவரை ஒருவர் பார்த்து, திகைத்து, தங்கள் பா
வத்திலே சிதைந்து போவார்கள்.

## ௫. அதிகாரம்.

க. தலைமயிரை உவமித்தல்: ௫. பாவத்தினிமித்
தம்யெருஷலேமுக்குத்தண்டனைவருமென்று
முன்னுரைத்தல்: ௰உ. தலைமயிரின் அடையா
ளத்தின் தாற்பரியத்தை வெளிப்படுத்தல்.

மனுபுத்திரனே, நீ கூர்மையான கத்தியாகிய ஒ க
ரு சௌரகன் கத்தியையெடுத்து அதினால் உன் த
லைமயிரையும் உன் தாடியையுஞ் சிரை: பின்பு
நிறுக்குந் தராசைவாங்கி அதைப் பங்கு பங்கா
கப்பிரி.—நகரம் வளைக்கப்படுங் காலமுடிவிலே உ
மூன்றிலொருபங்கை எடுத்து, நகரத்தின் மத்தி
யில் அக்கினியினாலெரித்து, மூன்றிலொருபங்
கை எடுத்துச் சுற்றுப்புறத்தில் கத்தியினாலே சே
தித்து, மூன்றிலொருபங்கைக் காற்றிலே தூற்று:
பின்பு நான் ஒருகட்கத்தை உருவி அவர்களைத்
தொடரும்படிசெய்வேன்.—அதில் அற்பத்தொ ங
கையை எடுத்து உன்வஸ்திரத்தின் ஓரங்களில்மு
டிந்துவை.—பின்பு அவைகளிற் சிலவற்றைஎடுத் ச
து அக்கினிமத்தியில் எறிந்து, அக்கினியினால் அ
வைகளைஎரித்துவிடு; அவைகளினின்றுஅக்கினி
புறப்பட்டு இஸரவேல் குடும்பங்களெல்லாவற்
றிலும் பிரவேசிக்கும்.
இதுவே யெருஷலேம்: இதைச் சுற்றியிருக் ௫
கிற சாதியார்மத்தியிலும், தேசத்தார்மத்தியிலும்
நான் இதைஸ்தாபித்தேன்.—இது அந்நிய தேசத் சு
தாரைப்பார்க்கிலும் என் கட்டளைகளையும், தன்
னைச் சுற்றியிருக்கிறதேசத்துச்சனங்களைப்பார்க்
கிலும் என்னுடைய விதிப்பிரமாணங்களையுந் தீ
மையாக மாற்றிக்கொண்டது: என் விதிகளின்
படிக்கும் கட்டளைகளின்படிக்கும் நடவாமல்,
அவைகளை அவமதித்தார்களென்று ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறார்.—நீங்கள் எ
உங்களைச் சூழ்ந்திருக்கிறசாதியாரிலும் அதிகரித்
து, என்விதிப்பிரமாணங்களின்படி நடக்கவில்
லை, என்கட்டளைகளைக்காத்துக்கொள்ளவில்லை,
உங்களைச்சூழ்ந்திருக்கிற சாதியாரின்கட்டளைப்
படி நடவாமல் போனீர்களென்று ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறார்.—ஆத அ
லால் ஆண்டவராகிய யெகோவா, பார்,
நானே உனக்கு விரோதியாயிருப்பேன், நான்
அந்நிய தேசத்தாருக்குமுன்பாக உனக்குள் நீதி
செலுத்துவேன்.—உன்னுடைய அசுசியானகிரி கூ
யைகளெல்லாவற்றினிமித்தமும், நான் முன்பு
செய்யாததையும், இனிச் செய்யமாட்டாததை
யும்உன் மத்தியிலேசெய்வேன்.-ஆதலால் பிதாக் ௰
கள், உனக்குள்ளிருக்கிறபுத்திரரையும், புத்திரர்,
தங்கள்பிதாக்களையும் புசிப்பார்கள்; நான் உன்
னைத்தண்டிப்பேன், உன்னில் மீந்திருக்குஞ்ச

(௫) எண்.௰ச.௩௪.(அ)அதி.௩.உ௫.(௰௩)ஓசி.௯.௩.(௰ச) அப்.௰.௰ச.யாத்.உஉ.௩க.லேவி.௰க.சம். உபா.௰ச.௩.எசா.
௬௫.ச.(௰௬)லேவி.உ௬.உ௬.சங்.௱௫.௰௬.எசா.௩.க அதி.௰உ.௰௯.(௰எ) லேவி.உ௬.௩௯.—(௫.அதி.க.)லேவி.உக.
௫. எசா.எ.உ௰. (௩)எரே.ச௰.௬.(ச) எரே.சக.க,உ.(எ)எரே.உ.௰,௰க.(௯)புல.ச.௬.தானி.௯.௰உ.ஆமோ.௩.உ.(௰)
லேவி.உ௬.உ௯. உபா.உஅ.௫௩. உ.இரா.௬.உ௯. எரே.௰௯.௯. புல.உ.உ௰. லேவி.உ௬.௩௩. உபா.உஅ.௬ச.சக.உ.௬.

னங்களை எல்லாக்காற்றுத்திசைகளிலுஞ் சிதறஅ
௰௧ டிப்பேனென்கிறார்.—நீ, வெறுக்கப்படத்தக்க
உன் சகல வஸ்துக்களினாலும், அரோசியமான
உன் சகல கிரியைகளினாலும் என்னுடைய பரி
சுத்தஸ்தானத்தை அசுசிப்படுத்தினாய், இதினி
மித்தம் நான் நித்தியரானால் உன்னைச் சிதையப்
பண்ணுவேனே; நான் கண்ணோட்டம் வை
யேன், நான் இரங்கேனென்று ஆண்டவரா
கிய யெகோவா சொல்லுகிறார்.
௰௨ உன்னிலுள்ளவர்களில் மூன்றிலொரு பங்கு
பேர் பஞ்சத்தினால்உன்நடுவில்மெலிந்து,கொள்
ளைநோயினாலேசாவார்கள்: மூன்றிலொருபங்கு
பேர் உன்னைச்சுற்றியிருக்குங்கட்கத்தினால்விழு
வார்கள்; மூன்றிலொருபங்குபேரைச்சகல காற்
௰௩ றுத்திசைகளிலுஞ் சிதறஅடிப்பேன்.—நான் கட்
கத்தை உருவி அவர்களைத் தொடரும்படி செய்
வேன், இவ்விதமாய் என்கோபம் நிறைவேறும்,
என் உக்கிரத்தை நான் அவர்கள்மேலே தங்கப்
பண்ணி ஆறுதலடைவேன்: அவர்கள்மேல் என்
உக்கிரம் பலிக்கச்செய்யும்பொழுது யெகோ
வாவாகிய நான் என்வைராக்கியத்தினால்இவ்
வாக்கைச்சொன்னேனென்று அவர்கள் அறிவார்
௰௪ கள்.—உன் வழியாய்ச்செல்லும் எல்லாருக்கு
முன்பாக, உன்னைச்சூழ்ந்திருக்கிறசந்ததியாருக்
குள் உன்னைப்பாழும் நிந்தையுமாக்குவேன்.—
௰௫ நான் கோபத்தினாலும், உக்கிரத்தினாலும், உக்கி
ரமானகண்டிதங்களினாலும்உன்னைத்தண்டித்து,
உன்னைச்சங்கரிக்கும்பொருட்டு உன்னைச் சங்க
ரிப்பதற்கேதுவானபஞ்சத்தின்தீமையுள்ளஅம்பு
களை உன்மேல் எய்து, உன்னிடத்தில் பஞ்சத்
தைஅதிகரிக்கச்செய்து, ஆகாரக்கோலை முறிப்
௰௬ பேன்.—அதினால் இதுவேஉன்னைச்சூழ்ந்திருக்கி
றசாதியாருக்குள் அவமானமும், நிந்தையும், எச்
சரிப்பும், பிரமிப்பு முண்டாவதற்கேதுவாகும்:
யெகோவாவாகிய நானே இவ்வாக்கைச்
௰௭ சொன்னேன்.—பஞ்சத்தையுந்துஷ்டமிருகங்க
ளையும் நான் உங்கள்மேல் வருவிக்க அவைகள்
உன்னைப்புத்திரவீனமாக்கும்; கொள்ளைநோயும்
இரத்தத்தைச்சிந்துதலும் உன் வழியாய்ச்செல்
லும்; நான் கட்கத்தைஉன்மேல் வருவிப்பேன்.
யெகோவாவாகிய நான் இவ்வாக்கைச்
சொன்னேனென்கிறார்.

## ௭. அதிகாரம்.

௧. தேவபூசையினிமித்தம் இஸ்ரவேலுக்குத்தண்
டனைவருமென்று தெரிவித்தல்: ௮. எஞ்சியச
னங்களிற்சிலர்ஆசீர்வதிக்கப்படல்: ௰௧. தண்
டனையினிமித்தந்துதிக்கும்படிஏவல்.

பின்னும் யெகோவாவின் வாக்கு என்னி
௨ டத்தில்,-மனுபுத்திரனே,நீஇஸ்ரவேலருடையம
லைகளுக்கு எதிர்முகமாகி, அவைகளுக்குவிரோ
தமாய்த்தீர்க்கதரிசனஞ்சொல்லு.-இஸ்ரவேலின் ௩
மலைகளே, ஆண்டவராகிய யெகோவா
வின் வாக்கைக்கேளுங்கள்; ஆண்டவராகி
ய யெகோவா மலைகளையும், குன்றுகளையும்,
நதிகளையும்,தாழ்ந்தபூமிகளையும்நோக்கி,கேளுங்
கள், நான், நானே உங்கள்மேல் கட்கத்தைவரு
வித்து, உங்கள் உயர்ந்தஸ்தானங்களை நாசப்ப
டுத்துவேன்.—உங்கள் வேதிகைகள் பாழாகும், ௪
உங்கள் சூரியவிக்கிரகங்கள்தகர்க்கப்படும்: உங்
களில் கொலையுண்டவர்களை உங்கள் விக்கிர
கங்களுக்குமுன்னே விழப்பண்ணுவேன்.—இ ௫
ஸரவேல் சந்ததியாரின் பிரேதங்களை அவர்கள்
விக்கிரகங்களுக்கு முன் வைப்பேன்; உங்கள்
எலும்புகளை உங்கள் வேதிகைகளின்சுற்றிலுஞ்
சிதறப்பண்ணுவேன். உங்கள்வேதிகைகள் நிரு
மூலமாய்ப்பாழாவதற்கும்,—உங்கள் விக்கிரகங் ௬
கள் தகர்க்கப்பட்டு ஒழிவதற்கும், உங்கள்சூரிய
விக்கிரகங்கள் சேதிக்கப்படுவதற்கும், உங்கள்
கிரியைகள் ஒழிந்துபோவதற்கும், உங்கள்சகல
வாசஸ்தானங்களிலும் உங்கள்நகரங்கள் பாழா
கும், உயர்ந்தஸ்தானங்கள் வெறுமையாகும்.—
கொலைசெய்யப்பட்டவர்கள் உங்கள்மத்தியிலே ௭
விழுவார்கள்,இதினால்நான்யெகோவாவென்
றுநீங்கள்அறிந்துகொள்ளலாமென்பதைச்சொல்
லச்சொல்லிற்று.

நீங்கள் அந்நியதேசங்களில்சிதறுண்டிருக்கும் ௮
பொழுது, அந்நியதேசத்தாரிடத்தில் உங்களிற்
சிலரைக் கட்கத்திற்குத்தப்புவித்து மீதியாகவிடு
வேன்.—என்னைவிட்டுப்புறப்பட்ட தங்கள்சோ ௯
ரமார்க்கமான இருதயத்தையும்,தங்கள்விக்கிரகங்
கள்மேல் தாங்கள்வைத்த சோரமார்க்கமானகண்
களையும் நான்அடங்கப்பண்ணும்பொழுது உங்
களுக்குள்ளே தப்பிப்போனவர்கள், தாங்கள் சி
றைபிடித்துக்கொண்டுபோகப்பட்ட அந்நியதே
சத்தாருக்குள் என்னைநினைந்து, தங்களுடைய
எல்லாஅரோசியமானசெய்கைகளிலுந் தாங்கள்
செய்த தீமையினிமித்தந் தங்களையே வெறுப்
பார்கள்.-நானேயெகோவாவென்றும்,அவர் ௰
களுக்குத் தீமையை நேரிடப்பண்ணுவேனென்
பதாக நான் சொல்லியவாக்கு வீணாகாதென்
றும் அறிந்துகொள்வார்கள்.

ஆண்டவராகிய யெகோவா இவ்வாக் ௰௧
கைச்சொன்னார்; நீஉன்கையினால்அடித்து, உன்
காலால்தட்டி, இஸ்ரவேல்வமிசத்தார்செய்த அ
ரோசியமான எல்லாத்தீமைகளினிமித்தமும் ஐ
யோவென்றுசத்தமிடு; அவர்கள்கட்கத்தினாலும்,
பஞ்சத்தினாலும், கொள்ளைநோயினாலும் விழு
வார்கள்.—தூரத்திலுள்ளவன் கொள்ளைநோயி ௰௨
னால்சாவான்; சமீபத்திலுள்ளவன் கட்கத்தினா
லேவிழுவான்; மீந்திருந்துவளைக்கப்பட்டவன்

(௰௧) ௨.நாளா.௩௬.௰௪. (௰௨) எரே.௰௫.௨. எரே.௯.௰௬.லேவி.௨௬.௩௩. (௰௩) புல.௪.௰௧. உபா.௩௨.௩௬. ஏசா.௧.௨௪. அதி.௩௮.௰௯. (௰௪) லேவி.௨௬.௩௧,௩௨. நிகி.௨.௰௭. (௰௫) உபா.௩௨.௨௩,௨௪. லேவி.௨௬.௨௬. (௰௬) உபா.௨௮.௩௭. ௧.இரா.௯.௭. சங்.௭௯.௪. எரே.௨௪.௯.புல.௨.௰௫. (௰௭) லேவி.௨௬.௨௨.உபா.௩௨.௨௪.—(௭. அதி. ௩.) லேவி.௨௬.௩௰.(௪)வச.௬.லேவி.௨௬.௩௰. (௮) எரே.௪௪.௨௮. (௯)சங்.௭௮.௪௰.ஏசா.௭.௰௩. எண்.௰௫.௩௯. லேவி.௨௬.௩௯. யோபு.௪௨.௬.

பஞ்சத்தினால் இறப்பான்: இவ்விதமாய் நான்
அவர்கள்மேல் என்கோபத்தைப் பலிக்கச்செய்
௰௩ வேன்.—அவர்கள் தங்கள்சகல விக்கிரகங்களுக்
குஞ் சுகந்ததூபங்காட்டின ஸ்தானங்களாகிய
சகல உயர்ந்தமலைகளிலும், மலைகளின் உச்சிக
ளெல்லாவற்றிலும், பசுமையான விருட்சங்கள்
ஒவ்வொன்றின்கீழும், இலைசெறிந்த ஒவ்வொரு
வலாவிருட்சங்களின்கீழும் இருக்கிற அவர்களு
டைய வேதிகைகளுக்குச்சுற்றிலும், அவர்களு
டையவிக்கிரகங்களுக்குள் அவர்களில்கொலை
செய்யப்பட்டசனங்கள்கிடக்கும்பொழுது, நா
ன்யெகோவாவென்று அறிந்துகொள்வார்
௰௪ களென்கிறார்.—நான்என்கையைஅவர்கள்மேல்
ஓங்கி, அவர்களுடைய சகல வாசஸ்தலங்களு
முள்ள தேசத்தைப்பாழாக்கி, அதைத் திப்லாத்
தைச்சேர்ந்த வனத்தைப்பார்க்கிலும் அதிகவெ
றுமையாக்கும்பொழுது, நான் யெகோவா
வென்று அவர்கள் அறிந்துகொள்வார்களென்
றுசொல்லவுஞ்சொல்லிற்று.

## எ. அதிகாரம்.

க. இஸரவேலர்நாசமடைவார்களென்று தீர்க்கத
ரிசனஞ்சொல்லல்: ௰௬. எஞ்சுஞ் சனங்களின்
துக்கத்தையும் ஆபத்தையும்வருணித்தல்.

பின்னும் யெகோவாவின் வாக்கு என்னி
௨ டத்தில்,—மனுபுத்திரனே, ஆண்டவராகிய
யெகோவா இஸரவேலரின்தேசத்தைக்குறித்
து இவ்வாக்கைச் சொல்லுகிறார்; முடிவுவந்து
விட்டது,தேசத்தின்நான்குமுனைகளின்மேலும்
௩ முடிவுவந்துவிட்டது.—தேசமே, உன்முடிவு
வந்துவிட்டது, நான் உன்மேல் என்கோபத்தை
வருவிப்பேன், உன்நெறிகளின்படி உன்னைவி
சாரிப்பேன்,உன்சமஸ்தஅரோசியமான கிரியை
௪ களுக்கும் பலனளிப்பேன்.—நான் உன்மேல்
கண்ணோட்டம்வையேன்,நான்இரங்கேன்:உன்
நெறிகளுக்கும்,உன்மத்தியிலிருக்கிற அரோசிய
மானகிரியைகளுக்குமேற்கஉனக்குப்பலனளிப்
பேன்: அதினால்நானே யெகோவாவென்று
௫ நீங்கள்அறிந்துகொள்வீர்கள்.–தீங்கு,பாருங்கள்,
தீங்கேவந்ததென்று ஆண்டவராகிய யெ
௬ கோவா சொல்லுகிறார்.—முடிவுவந்தது,முடி
வுவந்தது: அது உன்னைஎதிர்பார்த்திருக்கின்றது;
௭ பார்,வந்துவிட்டது.—தேசத்தில் வசிப்பவனே,
விடியற்காலம் உன்மேல்வந்தது: அந்தச் சமயம்
வந்துவிட்டது, மலையிலுள்ள ஆனந்தத்தின் எதி
ரொலியல்ல,கலகத்தின்நாளேசமீபித்துவந்தது.–
௮ இப்பொழுது நான் உன்மேல் என்கோபத்தைவி
ரைவிற்சொரிவேன், என்கோபத்தைப்பலிக்கப்
பண்ணுவேன்: உன்நெறிகளின்படி நான் உன்
னைவிசாரிப்பேன், உன் சகலஅரோசியமான கி
ரியைகளினிமித்தமும்நான்உனக்குப்பலனளிப்
௯ பேன்.—நான் கண்ணோட்டம்வையேன், நான்
இரங்கேன்: உன்நெறிகளுக்கும், உன்மத்தியிலி
ருக்கிற உன்அரோசியமானகிரியைகளுக்குந்தக்
கதாக உனக்குப்பலனளிப்பேன்; அதினால்உன்
னைஅடிப்பவராகியநானே யெகோவாவென்
று நீங்கள் அறிந்துகொள்வீர்கள்.—தினத்தைப் ௰
பாருங்கள், பாருங்கள் அதுவந்துவிட்டது: விடி
யற்காலமாயிற்று; கோல்பூத்தது, அகங்காரந்து
ளிர்த்தது.—கொடுமை பாவக்கோலாக எழும்பி ௰௧
யது: அவர்களுடைய சனசமுதாயத்திலும், அ
வர்களுடையகலகக்காரர்களிலும்ஒருவரும் மீந்
திருக்கமாட்டார்: அவர்கள்நிமித்தம் புலம்
புவதுமில்லை.-அந்தச்சமயம்வருகின்றது,அந்தத் ௰௨
தினஞ் சமீபித்துவருகின்றது: கொள்ளுகிறவன்
சந்தோஷப்படாமலும், விற்கிறவன் துக்கப்ப
டாமலுமிருப்பார்களாக: அதின் திரள் முழுவ
தின்மேலும்மூளுங்கோபம்வந்தது.–விற்கிறவன் ௰௩
சீவனுள்ளோரிடத்தில் தங்கினாலும் விற்கப்பட்
டபொருளினிடத்தில் திரும்பான்: தீர்க்கதரிச
னம்முழுக்கூட்டத்திற்கும்விரோதமாயிருக்கின்
றது; அதுவிருதாவாகாது, பாவத்தில் நாள்விடு
கிறவனெவனுந்தன்னை ஸ்திரப்படுத்த முடியா
து.—எல்லாரையும் ஆயத்தப்படுத்துகிறதற்கு அ ௰௪
வர்கள்எக்காளம்ஊதினாலும் ஒருவரும்யுத்தத்திற்
குப்போவதில்லை: அவர்களுடைய சகல கூட்
டத்தின்மேலும் என்கோபம்நிலைநிற்கின்றது.—
வெளியேகட்கமும், உள்ளே கொள்ளைநோயும் ௰௫
பஞ்சமுமுண்டு: வயல் வெளியிலிருக்கிறவன்
கட்கத்தினாற்சாவான்; நகரத்திலிருக்கிறவனைப்
பஞ்சமுங்கொள்ளைநோயும்பட்சிக்கும்.
தப்புகிறதற்கு இருக்கிறவர்கள்யாவருந்தப்பி, ௰௬
மலைகளின்மேலேதங்கி, தங்கள் தங்கள் அக்கிர
மத்தினிமித்தம் தாழ்ந்த பூமிகளிலுள்ள புறாக்க
ளைப்போலப் புலம்புவார்கள்.—எல்லாக்கைக ௰௭
ளுஞ்சலிக்கும், சகலமுழங்கால்களும் நீரைப்
போலாகும்.—அவர்கள் இரட்டைத் தரித்துக் ௰௮
கொள்வார்கள்,மகாபயத்தினாலே மூடப்படுவார்
கள்; எல்லாமுகங்களும் இலச்சையடையும்,
எல்லாத்தலைகளும் மொட்டையாகும்.—அவர்க ௰௯
ளுடைய அக்கிரமமே அவர்களுக்கு இடறலாயி
ருப்பதினால் தங்கள் வெள்ளியை வீதியில்எறிந்
துவிடுவார்கள், அவர்கள் பொன் அசுசிப்பொரு
ளாய்எண்ணப்படும்: யெகோவாவின் கோ
பத்தின்நாளில் அவர்கள்வெள்ளியும், அவர்கள்
பொன்னும் அவர்களைவிடுவிப்பதில்லை: அவர்
கள் தங்கள் ஆத்துமாவைத் திருத்திப்படுத்துவது
மில்லை, தங்கள்வயிற்றைநிரப்புவதுமில்லை.
அவருடைய சிங்காரத்தின்மகிமையை அகந் ௨௰
தைக்கென்றுவைத்து, அதில் அசுசியானசிலைக
ளையும் அரோசியமானரூபங்களையும் உண்டாக்
கினார்கள்: ஆதலால்நான்அவைகளைஉங்களுக்கு
அசுசியானபொருளைப்போலாக்குவேன்.-அந்நி ௨௧

(௰௩) எரே.௨.௨௰. ஓசி.௪.௰௩. ஏசா.௫௭.௫. (௰௪) ஏசா.௫.௨௫. எண்.௩௩.௪௬. எரே.௪௮.௨௨.—(எ. அதி. ௨.) ஆமோ.௮.௨. மத்.௨௪.௬,௰௩,௰௪.(எ) செப்.௧.௰௪,௰௫. (௰௧) எரே.௬.எ. எரே.௰௬.௫,௬. (௰௫) உபா.௩௨,௨௫. புல. ௧.௨௰. (௰எ) ஏசா.௰௩.எ. எரே.௬.௨௪. (௰௮) ஏசா.௩.௨௪. எரே.௪௮.௩எ. ஆமோ.௮.௰. சங்.௫௫.௫. (௰௯) நீதி. ௰௧.௪. செப்.௧.௰௮. அதி.௪௪.௰௨. (௨௰) எரே.எ.௩௰.

யரின்கையிற் கொள்ளைப்பொருளாகவும், பூமி
யின்துஷ்டசனங்களின்கையிற் சூறையாடுந்திர
வியமாகவும் நான் அதையொப்பிக்க, அவர்கள் அ
௨௨ தைஅசுத்தப்படுத்துவார்கள்.—நான் அவர்களுக்
குப்பராமுகம்பண்ணுவேன்,அதினால்என்மறை
வான ஸ்தானத்தை அசுத்தப்படுத்துவார்கள்:
பறிகாரர்அதிற்பிரவேசித்து அதைஅசுத்தப்படுத்
துவார்கள்.
௨௩ சங்கிலியைச்செய்யுங்கள்:தேசம்நியாயத்தீர்ப்
புக்கேதுவான இரத்தப்பழிக்கேற்ற பாவங்களி
னால் நிறைந்திருக்கின்றது,நகரங்கொடுமையினா
௨௪ லேநிரப்பப்பட்டது.-ஆதலால்நான்அந்நியதுஷ்
டசனங்களைக்கொண்டுவருவேன், அவர்கள் இ
வர்களுடைய வீடுகளைச் சுதந்தரித்துக்கொள்ளு
வார்கள்: நான்பெலவான்களின் ஆடம்பரத்தை
ஒழியப்பண்ணுவேன்; அவர்களுடைய பரிசுத்
௨௫ தஸ்தானங்கள்அசுசியாக்கப்படும்.–சேதம்வரும்;
அவர்கள் சமாதானத்தைத்தேடுவார்கள், அதில்
௨௬ லை.–ஆபத்தின்மேல் ஆபத்துநேரிடும், துர்ச்செய்
தியின்மேல் துர்ச்செய்திவரும்; அக்காலத்தில்அ
வர்கள் தீர்க்கதரிசியிடத்தில் தரிசனத்தைத் தேடு
வார்கள்;ஆசாரியனிடத்தில்வேதமும், மூப்பயோ
௨௭ ரிடத்தில் ஆலோசனையும் ஒழிந்துபோகும்.—இ
ராசாபுலம்புவான், பிரபுகள் திகைப்பைத்தரிப்
பார்கள், தேசத்துச்சனங்களின்கைகள் நடுநடுங்
கும்: நான் அவர்களுடைய நெறிகளுக்குத்தக்க
தாக அவர்களுக்குச்செய்வேன், அவர்களுக்குத்
தகுமானபடி நியாயத்தீர்ப்புச்செய்வேன்; அதி
னால் நானே யெகோவாவென்று அவர்கள்
அறிந்துகொள்வார்களென்பதைச் சொல்லிற்று.

## ௮. அதிகாரம்.

௧. எசேக்கியேல் யெருஷலேமிலே தரிசனம்பெ
றல்: ௫. விக்கிரகதரிசனம்: ௭. விக்கிரகாலயத
ரிசனம்: ௰௩. தம்மூசைப்பூசிக்கும் ஸ்திரிகளைத்
தரிசித்தல்: ௰௫. சூரியபூசை செய்பவர்களைத்
தரிசித்தல்: ௰௭. தேவபூசையினிமித்தம் யெ
கோவா கோபித்தல்.

ஆறாம்வருஷம் ஆறாம் மாதம் ஐந்தாந்தினத்
தில் நான் என்வீட்டிலிருந்தபொழுதும், யூதா
வின்மூப்பயோர் எனக்குமுன்பாக உட்கார்ந்திருந்
தபொழுதும் ஆண்டவராகியயெகோவா
௨ வின் கை என்மேல் அமர்ந்தது.—அப்பொழுது
நான்பார்த்திருக்கையில் அரைக்குக்கீழாக அக்கி
னியையும், அரைக்குமேலாக அம்பர்நிறமானபி
ரகாசத்தையும்போன்ற அக்கினிமயமான ஒருரூ
௩ பத்தைக்கண்டேன்.—அவர்ஒருகையின்சாயலை
நீட்டி என்தலைமயிரைப்பிடிக்க, ஆவி பூமிக்கும்
வானத்திற்குமிடையே என்னைத்தூக்கி, தேவத
ரிசனத்திலே யெருஷலேமில் எரிச்சலை உண்
டாக்கும் எரிச்சலின்விக்கிரகந்தங்கும் ஸ்தானத்
தில், வடதிசைக்கெதிரான உள் வாசலினிடத்
தில் என்னைக்கொண்டுபோயிற்று.—நான் முன் ௪
சமபூமியிற்கண்ட தரிசனத்தின்பிரகாரம் இஸர
வேலின் தேவனுடைய மகிமைப்பிரகாசத்
தை அங்கேயுங்கண்டேன்.
அப்பொழுது அவர் என்னைநோக்கி, மனுபுத் ௫
திரனே, உன்கண்களை வடதிசைக்கு ஏறிட்டுப்
பாரென்றுசொல்ல, நான் என்கண்களை வடதி
சைக்கு ஏறிட்டு, வேதிகைவாசலின் பிரவேச
ஸ்தானத்தில் எரிச்சலையுண்டாக்கும் அந்தவிக்கி
ரகத்தைக்கண்டேன்.—பின்னும் அவர் என்னை ௬
நோக்கி, மனுபுத்திரனே, நான்பரிசுத்தஸ்தானத்
தினின்று நீங்குகிறதற்கு இஸரவேல்வமிசத்தார்
செய்துவருகிற மகாஅரோசியமானவைகளைக்
கண்டாயா; திரும்பு, இன்னும் அதிகஅரோசிய
மான கிரியைகளைக் காண்பாயென்று சொல்லி,
என்னைப்பிராகாரத்தின்வாசலிலே கொண்டு ௭
போனார்; நான் பார்த்திருக்கச் சுவரிலே துவா
ரத்தைக்கண்டேன்.—அப்பொழுது அவர் என் ௮
னைநோக்கி, மனுபுத்திரனே, நீ சுவரைத் துளை
யென்றார்: நான் சுவரைத் துளைத்தபின்பு ஒரு
கதவைக்கண்டேன்.—அவர் என்னுடனே, நீ ௯
உள்ளேபோய், அவர்கள் இங்கேசெய்துவருகிற
அரோசியமானவைகளைப் பாரென்றுசொல்ல,–
நான் உள்ளேபோய்ப்பார்த்தபொழுது, சுவரின் ௰
மேல் நாலுபுறத்திலுஞ் சித்திரிக்கப்பட்ட சகல
விதஊர்வனவற்றையும், அரோசியமானமிருகங்
களையும், இஸரவேல்வமிசத்தாரின் சகலவிக்கிர
கங்களையுங் கண்டேன்.–அவைகளின்முன் இஸ ௰௧
ரவேல்வமிசத்துமூப்பயோரில்எழுபதுபேரும், அ
வர்களுக்குள்ளேஷாபானுடையபுத்திரனாகிய ய
சனியாவுந் தங்கள் தங்கள் கையிலே தங்கள் தங்
கள் தூபகலசத்தைப் பிடித்துக்கொண்டு நிற்கக்
கண்டேன்; மேகபடலத்தைப்போலத்தூபம் எ
ழும்பிற்று.–அப்பொழுது அவர்என்னைநோக்கி, ௰௨
மனுபுத்திரனே, இஸரவேல் வமிசத்துமூப்பயோர்
அந்தகாரத்திலே தங்கள்தங்கள்விக்கிரகாலயங்க
ளில்செய்துவருகிறதைநீகண்டாயா; யெகோ
வா நம்மைப்பாரார்;யெகோவாபூமியைவிட்
டுவிட்டாரென்று சொல்லுகிறார்களேயென்றார்.
பின்னும் அவர் என்னிடத்தில், இதிலும் அ ௰௩
வர்கள்செய்துவருகிற அதிகஅரோசியமானவை
களைத்திரும்பவுங் காண்பாயென்றுசொல்லி,—
யெகோவாவுடைய ஆலயத்தின் வடக்கு ௰௪
வாசலில் என்னைக்கொண்டுபோனார்; அங்கே
தம்மூசைக்குறித்து அழுதுகொண்டிருந்த ஸ்திரி
கள் இருக்கக்கண்டேன்.
அப்பொழுது அவர் என்னிடத்தில், மனுபுத் ௰௫
திரனே, இதைக் கண்டாயா; இன்னுந்திரும்பு,
இதிலும்பெரிய அரோசியமானவைகளைக் காண்
பாயென்றுசொல்லி,—என்னை யெகோவா ௰௬
வின் ஆலயத்தின் உட்பிராகாரத்தில்கொண்டு

(௨௩)௨.இரா.௨௧.௰௩. (௨௬) ௨பா.௩௨.௨௩. எரே.௪.௨௰. சங்.௭௪.௧. புல.௨.௧.—(௮.அதி.௧.) அதி.௰௪.௧. அதி.௧.௧. (௨) அதி.௧.௨௧,௨௭. அதி.௧.௪. (௩) தானி.௫.௫. அதி.௩.௰௪. அதி.௪௰.௨. எரே.௩௨.௩௪. ௨பா.௩௨.௰௬,௨௧. (௪) அதி.௨௨.௨௩. (௰௨) அதி.௯.௯. (௰௬) யோவே.௨.௰௭. அதி.௰௧.௧. எரே.௨.௨௭. ௨பா.௪.௰௧. ௨.இரா.௨௩.௫, ௰௧. யோபு.௩௧.௨௬. எரே.௪௪.௰௭.

போனார், யெகோவாவுடைய ஆலயத்தின்
வாசலிலே மண்டபத்திற்கும் வேதிகைக்கும் இ
டையில், ஏறக்குறைய இருபத்தைந்துபேர் யெ
கோவாவின் ஆலயத்திற்குப் புறங்காட்டிக்
கீழ்த்திசைக்கு எதிர்முகமாகி, கிழக்குத்திசையி
லுள்ள சூரியனுக்குப் பூசைசெய்யக் கண்டேன்.
௰௭ அப்பொழுது அவர் என்னிடத்தில், மனுபுத்
திரனே, இதைக் கண்டாயா, இங்கே யூதாவ
மிசத்தார் இந்த அரோசியமானவைகளைச் செய்
வது அற்பமா; அவர்கள் தங்கள் கொடுமையினால்
தேசத்தை நிரப்புகிறார்கள், திரும்பத் திரும்ப
என்னைக்கோபப்படுத்துகிறார்கள்: பார், அவர்
கள் கிளையைத் தங்கள் நாசிக்குக் கிட்டப்பிடிக்
௰௮ கிறார்கள்.-ஆதலால் நான் மூளுங்கோபத்தைவெ
ளிப்படுத்துவேன்: நான் கண்ணோட்டம் வை
யேன், நான்இரங்கேன்: என்செவிக்கேறும்படி
அவர்கள் ஓலமிட்டாலும் நான் அவர்களுக்குச்
செவிகொடேனென்றார்.

## ௯. அதிகாரம்.

௧. எஞ்சினவர்களிற் சிலர் இரட்சிப்புப் பெறல்:
௫. மற்றனைவரும் பாவத்தினிமித்தம் அழிதல்.

நகரத்தை விசாரிக்கிற அதிபதிகளே, உங்களுங்
கள் கொலைக்கருவிகளைப் பிடித்துக்கொண்டு ச
மீபித்து வாருங்களென்று அவரிட்ட மகாசத்தம்
௨ என் செவிக்கேறிற்று.-அப்பொழுது வடதிசை
யிலுள்ள உயர்ந்தவாசலினின்று தங்கள் தங்கள்
கொலைக்கருவிகளைத் தங்கள் தங்கள் கையிலே
பிடித்துக்கொண்டு ஆறுபேர் வருவதைக் கண்
டேன்; அவர்களில்ஒருவன் சணல் நூலால்செய்
யப்பட்ட வெள்ளங்கியைத்தரித்து, அரையில்
இலேககனுடைய மைக்கூட்டை வைத்திருந்
தான்: அவர்கள் பிரவேசித்துப்பித்தளைவேதிகை
௩ யினருகே நின்றார்கள்.-இஸரவேலின் தேவனு
டைய மகிமைப்பிரகாசம் தானிருந்தகெரூபியி
னின்றுஎழுந்து,ஆலயத்தின் வாசற்படியிற்சென்
றது. பின்பு யெகோவா சணல்நூலாற்செய்
யப்பட்ட வெள்ளங்கியைத் தரித்து, தன் அரை
யில் இலேககனுடைய மைக்கூட்டை வைத்தி
௪ ருந்தவனைக் கூப்பிட்டு, அவனை நோக்கி,—நீ
யெருஷலேம் நகரமெங்கும் போய், அதற்குள்
ளே செய்யப்படுகிற சகல அரோசியமானவை
களினிமித்தமும்பெருமூச்சுவிட்டு அழுகிறமனி
தர்களுடைய நெற்றியிலே குறியிடென்றார்.
௫ பின்பு அவர் மற்றவர்களை நோக்கி, நீங்கள்
நகரமெங்கும் இவனுக்குப் பின்னாகப் போய்
வெட்டுங்கள்: நீங்கள் கண்ணோட்டம்வைக்க
௬ வும் இரங்கவும்வேண்டாம்.—விருத்தரையும்,
வாலிபரையும், கன்னியரையும், பாலகரையு
ம், ஸ்திரிகளையுஞ் சங்காரம்பண்ணுங்கள்: அ
டையாளமிடப்பட்ட ஒருவரிடத்திலும்போகா
திருங்கள்; என்பரிசுத்தஸ்தானத்திலே தொடங்
குவீர்களாகவென்றுஎன்செவிக்கேறத்தக்கதாகச்
சொன்னார். அப்பொழுது அவர்கள்ஆலயத்திற்
குமுன்னிருந்த முதியோரிடத்திலே தொடங்கி
னார்கள்.—அவர் அவர்களைநோக்கி, நீங்கள் ஆல ௭
யத்தை அசுத்தப்படுத்துங்கள், கொலைசெய்யப்
பட்டவர்களால் பிராகாரங்களை நிரப்புங்கள்:
பின்புபுறப்பட்டுப்போங்களென்றுசொல்ல, அ
வர்கள்நகரத்திற்குப்புறப்பட்டுப்போய்க்கொலை
செய்தார்கள்.
அவர்கள் கொலைசெய்யும்பொழுதுநான்மீந்தி ௮
ருந்து, முகங்குப்புறவிழுந்து, ஆ, ஆண்டவ
ராகிய யெகோவாவே, நீர் யெருஷலே
மின்மேல் உமது உக்கிரத்தைச்சொரிந்து, இஸர
வேலில்மீந்த யாவரையும் அழிப்பீராவென்று உ
ரத்தசத்தமிட்டுச் சொன்னேன்.—அப்பொழுது ௯
அவர் என்னுடனே, இஸரவேலும் யூதாவுமாகிய
வமிசத்தாருடையபாவம் மிகவும்பெரிது,தேசம்
இரத்தத்தினாலே நிறைந்தது, நகரம் மாறுபாட்டி
னாலேநிரப்பப்பட்டிருக்கின்றது: யெகோவா
பூமியை நீங்கிவிட்டார், யெகோவா பார்க்க
மாட்டாரென்று சொலலுகிறார்கள்.—ஆதலால் ௰
அவர்கள்மேல் நான்கண்ணோட்டம்வையேன்,
நான் இரங்கேன், அவர்களுடையதலையின்மேல்
அவர்களுடையநெறிக்கேற்ற பலனை அளிப்பே
னென்றார்.—பின்பு சணல்நூலால் செய்யப்பட் ௰௧
டவெள்ளங்கியையும் அரையில் மைக்கூட்டை
யுந் தரித்தவன்வந்து, நீர் எனக்குக்கட்டளையிட்
டபடியே செய்தேனென்றுசொல்லிக் காரியத்
தைத்தெரிவித்தான்.

## ௰. அதிகாரம்.

௧. அக்கினித்தழல்கள் நகரத்திலே வீசப்பட்டத
ரிசனம்: ௮. கெரூபியின்தரிசனம்.

பின்புநான்பார்த்திருக்கையில்,கெரூபிகளுடை ௧
யதலையின்மேலுள்ள ஆகாயமண்டலத்தில், நீல
ரத்தினம்போன்ற ஒருசிங்காசனத்தின் சாயலா
னரூபம்தோன்றக்கண்டேன்.—பின்பு அவர் ச ௨
ணல் உடையைத்தரித்தவனோடேபேசி,அவனை
நோக்கி, நீ கெரூபியின் கீழிருக்கிற சக்கரங்க
ளுக்கு நடுவாகப்போய், கெரூபிகளின் நடுவிலி
ருந்து உன்கைநிறைய அக்கினித்தழல்களை எடுத்
து,நகரத்தின்மேல்இறையென்றார். அப்படியே
நான்காண அவன்போனான்.—அந்தப்புருஷன் ௩
உள்ளேபோனபொழுது, கெரூபிகள் ஆலயத்
தின் வலப்புறத்தில் நின்றன; உட்பிராகாரம்மே
கத்தினால் நிறைந்தது.—அந்தச்சமயத்தில் யெ ௪
கோவாவின் மகிமைகெரூபியின்மேல்நின்று
ஆலயத்தின்வாசற்படியின்மேலேறிற்று; ஆலயம்
மேகத்தினாலே நிறைந்தது, யெகோவாவின்
மகிமைப்பிரகாசம் பிராகாரம் எங்கும் வியாபித்

(௰௮) நீதி.௧.௨௮. ஏசா.௧.௰௫. எரே.௰௧.௰௧. மீகா.௩.௪.சக.௭.௰௩.—(௯. அதி. ௨.) லேவி.௰௬.௪. அதி.௰.௨,௬,௭. வெளி.௰௫.௬. (௩) அதி.௩.௨௩. (௪) யாத்.௰௨.௭.வெளி.௭.௩.சங்.௱௰௯.௫௩,௱௩௬. எரே.௰௩.௰௭.௨.கொரி.௰௨.௨௧. ௨.பேதுரு.௨.௮.(௬)௨.நாளா.௩௬.௰௭.வெளி.௯.௪.எரே.௨௫.௨௯.௧.பேதுரு.௪.௰௭.அதி.௮.௰௧,௰௨,௰௬.(௮)எண்.௰௪.௫. யோசு.௭.௬.(௯) ௨.இரா.௨௧.௰௬.சங்.௰.௰௧. ஏசா.௨௯.௰௫.(௰)அதி.௰௧.௨௧.—(௰. அதி. ௧.) அதி.௧.௨௨,௨௬. (௨) அதி.௯.௨,௩. அதி.௧.௰௩. வெளி.௮.௫. (௪) வச.௰௮.அதி.௧.௨௮.அதி.௯.௩.௧.இரா.௮.௰,௰௧.அதி.௪௩.௫.

௫ இருந்தது.—கெருபிகளுடைய சிறகுகளின் சத்
தம்சருவவல்லமையுள்ள தேவனுடையவாக்
கின் சத்தம்போல் வெளிப்பிராகாரம்வரைக்குங்
௬ கேட்கப்பட்டது.—சணல்அங்கியைத்தரித்த புரு
ஷனிடத்தில், கெருபிகளுக்குள் சக்கரங்களின்
நடுவிலிருந்து அக்கினி எடுக்கவேண்டுமென்று
அவர்கட்டளையிட்டபொழுது, இவன் உள்ளே
௭ போய், சக்கரங்களினருகே நின்றான்.—ஒருகெ
ருபி, கெருபிகளின் நடுவிலிருந்த ஒருகையை
நீட்டி, கெருபிகளின் நடுவிலுள்ள அக்கினியில்
கொஞ்சமெடுத்து, சணலங்கியைத் தரித்தவனு
டையகையிலிட, இவன் அதை எடுத்துக்கொண்
டு வெளியே புறப்பட்டான்.
௮ கெருபிகளுடைய சிறகுகளின்கீழ் மனுஷனு
௯ டைய ஒருகையின்சாயல் தோன்றிற்று.—நான்
பார்த்தபொழுது ஒருகெருபியினருகேஒருசக்கர
மும்,வேறொருகெருபியினருகே வேறொருசக்க
ரமுமாக இவ்விதமாய்க் கெருபிகளினருகே நா
லுசக்கரங்களிருக்கக்கண்டேன்: சக்கரங்களின்
தோற்றம் தர்ஷீஷ்ரத்தின வருணம்போலிருந்த
௰ து.—சக்கரத்திற்குள்ளேசக்கரம்இருக்கிறதுபோ
௰௧ ல நாலும் ஒரேசாயலாகத் தோன்றின.—அவை
கள் செல்லும்பொழுது தங்கள் நாலுபக்கங்களி
லுஞ் செல்லும்; அவைகள் செல்லும்பொழுது
திரும்பாமல் தலைநோக்கும் ஸ்தானத்திற்கேபின்
௰௨ னாகச்சென்றன; அவைகள் சாயவில்லை.—அவை
களின் முதுகுகளும், அவைகளின்கைகளும்,
அவைகளின் சிறகுகளுமாகிய சருவாங்கங்க
ளுஞ் சக்கரங்களும்,அந்தநாலின் சக்கரவளையங்
களின் சுற்றிலும் நிறையக்கண்களுமிருந்தன.—
௰௩ சக்கரங்களைச்சுற்றி ஒருவன் சக்கரமேயென்று
௰௪ அழைக்கக்கேட்டேன்.—ஒவ்வொன்றுக்கும் நந்
நாலு முகங்களிருந்தன: முதல்முகம் கெருபி
யின்முகம், இரண்டாம் முகம் மனுஷனின் மு
கம், மூன்றாம் முகம் சிங்கத்தின்முகம், நாலாம்
௰௫ முகம் கழுகின்முகம்.—கெருபிகள் எழும்பின.
இவ்விதபிராணியை நான் கேபார்நதி ஓரத்திலே
௰௬ கண்டேன்.—கெருபிகள் சென்றபொழுது சக்
கரங்களும் அவைகளினருகேசென்றன: பூமி
யினின்று எழுந்திருக்கும்படி கெருபிகள் தங்
கள் சிறகுகளைவிரித்தபொழுது சக்கரங்கள் அ
வைகளினருகினின்று விலகிப்போகவில்லை.—
௰௭ அவை நின்றபொழுது இவையும் நின்றன;
அவை எழுந்தபொழுது இவையும் எழுந்தன:
௰௮ பிராணிகளின் ஆவி அவைகளிலிருந்தது.—பின்
பு யெகோவாவின் மகிமை வீட்டின் வாசற்
படியை நீங்கிக் கெருபிகளின்மேலாய்நின்றது.—
௰௯ நான் காண்கையில் கெருபிகள் தங்கள் சிறகுக
ளை விரித்துக்கொண்டு பூமியினின்று எழுந்த
ன: அவைகள்புறப்படுகையில் சக்கரங்களும் அ
வைகளினருகே இருந்தன, யெகோவாவு
டைய ஆலயத்தின் கிழக்குவாசலிற்போய்ப்பி
ரவேசஸ்தானத்தில்நிற்க, இஸ்ரவேலின் தேவ
னுடைய மகிமை அவைகளின்மேல் தங்கிற்
று.—நான் முன்கேபார்நதிஓரத்தில்இஸ்ரவேலின் ௨௰
தேவனுக்குக்கீழே இவ்விதபிராணியைக்கண்
டேன்; அதினாலிவைகள் கெருபிகளென்றறிந்
தேன்.—அவைகளில் ஒவ்வொன்றுக்கு நந்நாலு ௨௧
முகமும், ஒவ்வொன்றுக்கு நந்நாலுசிறகும், சிற
குகளின் கீழ்மனுஷருடையகையின்சாயலும் இ
ருந்தன.—அவைகளுடையமுகங்களின் சாயல் ௨௨
கேபார்நதியோரத்திலே நான்கண்டமுகங்களைப்
போலிருந்தன,இவைகளே அவைகள்: அவைகள்
சாயாமல் ஒவ்வொன்றும் நேராய்ச்சென்றன.

## ௰௧. அதிகாரம்.

௧. அதிபதிகளின்துணிகரத்தைத்தெரிவித்தல்: ௪. அவர்களுடைய தண்டனையை வெளிப்படுத்தல்: ௰௩. எசேக்கியேல் புலம்பல்: ௰௭. யெகோவா வாக்குத்தத்தஞ்செய்தல்: ௨௨. கெருபிகள் புறப்படல், எசேககியேல் சிறைப்பட்டோரிடத்தில் திரும்பல்.

பின்பு ஆவி என்னை உயர்த்தி, யெகோவா ௧
வுடைய ஆலயத்தின்கிழக்குவாசலிலேகொண்
டுபோயிற்று: அந்தவாசற் பிரவேசஸ்தானத்தில்
இருபத்தைந்துபேரிருக்கக்கண்டேன்; அவர்க
ளுக்குள் சனங்களின்பிரபுகளாகிய அசூரின்புத்
திரனான யசனியாவும், பினாயாவின் புத்திரனா
னபெலத்தியாவுமிருந்தார்கள்.—அப்பொழுது அ ௨
வர் என்னைநோக்கி, மனுப்புத்திரனே, இவர்கள்
இந்தநகரத்திலேதுர்க்கிரியைகளையோசிக்கிறவர்
களும், துராலோசனை சொல்லுகிறவர்களுமாயி
ருக்கிறார்கள்.—இவர்கள், இன்னுஞ்சமீபிக்கவில் ௩
லை; நாம்வீடுகளைக்கட்டுவோம் வாருங்கள்: இது
வே பானை, நாமே மாமிசமென்கிறார்கள்.
ஆதலால்அவர்களுக்குவிரோதமாய்த்தீர்க்கதரி ௪
சனஞ்சொல்லு, மனுபுத்திரனே, தீர்க்கதரிசனஞ்
சொல்லென்றார்.—அப்பொழுது யெகோவா ௫
வின் ஆவி என்மேல்அமர, அவர் என்னைநோக்
கி,நீஅவர்களிடத்தில்,இஸ்ரவேல்வமிசத்தா
ரே,நீங்கள்இப்படியேசொல்லிவருகிறீர்கள்:உங்
கள்மனதில்தோன்றுவதெதுவோ அது எனக்குத்
தெரியும்.—இந்தநகரத்திலேநீங்கள் அநேகரைக் ௬
கொலைசெய்தீர்கள்,கொலையுண்டவர்களால்வீதி
களை நிறைத்தீர்களென்று யெகோவா சொல்
லுகிறாரென்பதைச்சொல்லென்றார்.—ஆதலால் ௭
ஆண்டவராகிய யெகோவா, இந்தநகர
மே கொப்பரை, உங்களாற்கொலைசெய்து, இ
தின்நடுவே வைக்கப்பட்டவர்களே மாமிசம்:
உங்களையோ இதின்மத்தியிலிருந்து கொண்டுவ
ருவேனென்கிறார்.—நீங்கள் கட்கத்துக்குப்பயப் ௮

(௫) அதி.௧.௨௪. சங்.௨௯.௩,. (௮) அதி.௧.௮. (௯) அதி.௧.௰௫,௰௬. (௰௧) அதி.௧.௰௭. (௰௨) அதி.௧.௰௮. (௰௪) அதி.௧.௬,௰. (௰௫) அதி.௧.௫. (௰௬) அதி.௧.௰௯. (௰௭) அதி.௧.௰௨,௨௰,௨௧. (௰௮) வச.௪. ஓசி.௯.௰௨. (௰௯) அதி.௰௧.௨௨. (௨௰) அதி.௧.௩,௨௨. (௨௧) அதி.௧.௬,௮. வச.௰௪. (௨௨) அதி.௧.௰,௰௨.—(௰௧. அதி. ௧.) அதி.௩.௰௨,௰௪. வச.௨௪. அதி.௰.௰௯. அதி.௮.௰௬. (௩) அதி.௰௨.௨௨,௨௭. ௨.பேதுரு.௩.௪. அதி.௨௪.௩,. (௫) அதி.௨.௨. (௬) அதி. ௭.௨௩. (௭) மீகா.௩.௩.

படுகிறீர்கள்; கட்கத்தையேஉங்கள்மேல்வருவிப்
௧ பேன்.—நான்உங்களை இதின்மத்தியிலிருந்து பு
றப்படுத்தி, அந்நியரின்கையில் ஒப்பித்து, உங்
௰ களைத்தண்டிப்பேன்.—நீங்கள் கட்கத்தினால்வி
ழுவீர்கள்; நான் இஸ்ரவேலின்எல்லையில் உங்க
ளுக்குள்ளேநியாயங்களைச்செலுத்துவேன்; நான்
யெகோவாவென்று நீங்கள் அறிந்துகொள்
௰௧ வீர்கள்.—இந்த நகரம் உங்களுக்குக்கொப்ப
ரையாயிராது, நீங்கள் இதின்மத்தியிலுள்ள மா
மிசமாயிருக்கமாட்டீர்கள்; இஸ்ரவேலின்எல்லை
யிலே நான் உங்களுக்கு நியாயத்தீர்ப்புச்செய்
௰௨ வேன்.—நானே யெகோவாவென்று அறிந்து
கொள்வீர்கள்: நீங்கள் என் விதிப்பிரமாணங்க
ளின்படி நடவாமலும், என்கட்டளைகளைக்காத்
துக்கொள்ளாமலும் உங்களைச்சூழ்ந்திருக்கிறஅந்
நிய தேசத்தாருடைய முறைமைகளுக்கேற்க ந
டந்துவந்தீர்களென்று ஆண்டவராகிய யெ
கோவா சொல்லுகிறார்.
௰௩ நான் தீர்க்கதரிசனஞ்சொல்லுகையில், பினா
யாவின்புத்திரனாகியபெலத்தியாஇறந்தான். அப்
பொழுது நான் முகங்குப்புறவிழுந்து, ஆ, ஆண்
டவராகிய யெகோவாவே, இஸ்ரவேலில்
மீந்திருக்கிறவர்களை முற்றுஞ் சங்காரஞ்செய்வீ
௰௪ ராவென்றுசொல்லி மகாசத்தமிட்டேன்.—திரும்
பவும் யெகோவாவின் வாக்கு என்னிடத்
௰௫ தில்,—மனுபுத்திரனே, யெருஷலேமியர், நீங்கள்
யெகோவாவை விட்டுத் தூரமாய்ப்போங்
கள், சுதந்தரிக்கும்படி இத்தேசம் எங்களுக்குஅ
ளிக்கப்பட்டதென்று உன்சகோதரருக்கும், உன்
குடும்பத்தாருக்கும், இஸ்ரவேல் வமிசத்தாரனை
௰௬ வருக்குஞ் சொல்லுகிறார்கள்.—ஆதலால் நான் அ
வர்களை அந்நியதேசத்தாருக்குள் தூரப்படுத்தியி
ருந்தாலும், அந்நியதேசங்களில் அவர்களைச்சித
ற அடித்திருந்தாலும், அவர்கள்செல்லும் அந்தந்
தத்தேசங்களிலே சொற்பகாலம் அவர்களுக்குப்
புகலிடமாவேனென்று ஆண்டவராகிய யெ
கோவா சொல்லுகிறாரென்று சொல்வாயென்
௰௭ றது.—ஆதலால் நான்சனங்களிடத்தினின்று உங்
களைச்சேர்ப்பேன், நீங்கள் சிதறஅடிக்கப்பட்ட
அந்தந்தத்தேசங்களினின்று நான்உங்களைக்கூட்
டிக்கொண்டு, இஸ்ரவேலின்தேசத்தைஉங்களுக்
களிப்பேனென்று ஆண்டவராகிய யெகோ
௰௮ வா சொல்லுகிறாரென்று சொல்லு.—அவர்கள்
அங்கேவந்து, அசுத்தமும் அரோசியமுமுள்ள ச
௰௯ கலவஸ்துக்களையும் அகற்றுவார்கள்.—அப்பொ
ழுது அவர்கள் என் கட்டளைகளின்படிநடந்து,
என் விதிகளைமதித்துக் காத்துக்கொள்ளும்படி,-
௨௰ நான் அவர்களுக்கு ஏகசிந்தையை அளிப்பேன்,
அவர்கள் உள்ளத்திலே புதிய ஆவியை அருளு
வேன்; கல்லானஇருதயத்தை அவர்கள் மாமிசத்
தினின்றகற்றி, மாமிசமுள்ள இருதயத்தைஅவர்
களுக்குக்கொடுப்பேன். அவர்கள் என்னுடைய
சனமாவார்கள், நான் அவர்களுக்குத் தேவனா
வேன்.—ஆனாலும் மனோவாஞ்சையோடே தங் ௨௧
கள் அசுத்தமும் அரோசியமுமுள்ள வஸ்துக்க
ளைப் பின்பற்றி யிருக்கிறவர்களுக்கு, அவர்கள்
நெறிக்கேற்க அவர்கள் தலைகளின்மேல் பலன்
அளிப்பேனென்று ஆண்டவராகிய யெகோ
வா சொல்லுகிறார்.
பின்பு கெருபிகள் தங்களருகேசக்கரங்களிரு ௨௨
க்கத் தங்கள்சிறகுகளை விரித்தன; இஸ்ரவேலின்
தேவனுடைய மகிமை அவர்களுக்குமேலே
யிருந்தது.—யெகோவாவின் மகிமைநகரத் ௨௩
தின்மத்தியினின்று எழுந்து, நகரத்திற்குக்கீழ்த்தி
சையிலுள்ள ஒருமலையின்மேலேபோய்நின்றது.
அப்பால்ஆவிஎன்னைத்தூக்கி, தேவனுடை ௨௪
ய ஆவியினால்தரிசனத்தில் கல்தேயவில்சிறைப்
பட்டோரிடத்திற்கொண்டுவந்தது. இப்படிநான்
பெற்றதரிசனம் என்னைவிட்டு எழுந்துபோயிற்
று.—பின்பு யெகோவா எனக்குக்காண்பித்த ௨௫
யாவற்றையும் நான்சிறைப்பட்டோருக்குத் தெ
ரிவித்தேன்.

## ௰௨. அதிகாரம்.

௧. எசேக்கியேல் யாத்திரைபண்ணுவதினால் அ
டையாளந்தெரிவித்தல்: அ. சிதிகியா தூரதே
சத்திற்குப்பண்ணும் யாத்திரையின்தாற்பரியத்
தைக் காட்டல்: ௰எ. எசேக்கியேல் நடுக்கங்
கொண்டு போசனபானம்பண்ணி யூதேயரின்
துக்கத்தைத்திருட்டாந்தப்படுத்தல்: ௨௧. யூதே
யரைக்கடிந்துகொள்ளல்: ௨௩. தீர்க்கதரிசனம்
விரைந்து நிறைவேறுமென்று தெரிவித்தல்.

பின்பு யெகோவாவின் வாக்கு என்னிடத் ௧
தில்,—மனுபுத்திரனே, கட்டளைக்கமையாதவமி ௨
சத்தாருக்குள் வாசம்பண்ணுகிறாய், காண்பதற்
குக் கண்ணிருந்தும் அவர்கள் காணமாட்டார்
கள்; கேட்கக்காதிருந்தும் அவர்கள்கேட்கமாட்
டார்கள்: அவர்கள் கட்டளைக்கமையாத வமிசத்
தார்.—மனுபுத்திரனே, நீபிரயாணம்பண்ணுகிற ௩
தற்குப்பொருளை ஆயத்தப்படுத்து, பகலில் அவர்
கள்காண நீபிரயாணம்பண்ணு; அவர்கள் காண
நீ உன்இடத்தைவிட்டு நீங்கிவேறொருஇடத்திற்
குப்புறப்பட்டுப்போ: அவர்கள் கட்டளைக்க
மையாத வமிசத்தாராயினும் சிந்தித்துணரவுங்கூ
டும்.—அப்பொழுது பிரயாணம்பண்ணுவதற்குப் ௪
பொருளை வெளியேகொண்டுவருவதுபோல், நீ
பகற்காலத்தில் அவர்கள் காண உன்பொருளை
வெளியேகொண்டுவா: சிறைப்பட்டவர்கள் பு
றப்படுவதுபோல, அவர்கள்காண நீசாயங்காலத்
திலேபுறப்பட்டுப்போ.—அவர்கள் காணச் சுவ ௫
ரைத்துளை, அதின் வழியாய் அவைகளைக்கொ

(௧) அதி.௫.அ. (௰) உ.இரா.உ௫.௰௯,உ௰,உ௧. எரே.௩௯.௬. எரே.௫உ.௰. ௧.இரா.அ.௬௫. உ.இரா.௰௪.உ௫. சங்.௯.
௰௬. அதி.௬.எ. (௰உ) லேவி.௰அ.௩,உ௪. உபா.௰உ.௩௰,௩௧. (௰௩) வச.௧. அப்.௫.௫. (௰௬) சங்.௯௰.௧. ஏசா.அ.
௰௪. (௰எ) எரே.உ௪.௫.(௰அ) அதி.௩எ.உ௩. (௰௯) சங்.௱௫.௪௪. (உ௰) எரே.௩உ.௩௯. செப்.௩.௯. சங்.௫௧.௰. எரே.
௩௧.௩௩. சக.எ.௰உ. எரே.உ௪.எ. (உஉ) அதி.௧.௰௯. (உ௩) சக.௰௪.௪. அதி.௪௩.உ.—(௰உ. அதி. உ.) ஏசா.௬.௯.
எரே.௫.உ௰. மத்.௰௩.௰௩,௰௪.

௬ ண்டுவா.—அவர்கள் காண அவைகளைத் தோளின்
மேல்சுமந்து சாயங்காலத்திலேவெளியேகொண்
டுபோ: நீ நிலத்தைப்பாராதபடி உன்முகத்தைமூ
டிக்கொள்: நான் உன்னை இஸரவேல்வமிசத்தா
ருக்கு ஒரு அடையாளமாகஏற்படுத்தினேனென்
௭ று சொல்லிற்று.—அப்பொழுது நான்எனக்கிட்ட
கட்டளைப்படி செய்தேன்: சிறைப்பட்டுப்போ
வதற்கேற்ற பொருள்போல நான்பகற்காலத்தில்
என்பொருளை வெளியேகொண்டுவந்தேன், சா
யங்காலத்தில் என்கையினாலே சுவரைத்துளைத்
தேன்; பின்பு இருட்டில் அவைகளைவெளியே
கொண்டுவந்து, அவர்கள் காணத்தோளின்மேல்
சுமந்துகொண்டுபோனேன்.
௮ விடியற்காலத்தில் யெகோவாவின்வாக்கு
௯ என்னிடத்தில்,—மனுபுத்திரனே, கட்டளைக்கமை
யாத வமிசத்தாராகிய இஸரவேல் வமிசத்தார் நீ
என்னசெய்கிறாயென்று உன்னைக்கேட்கவில்லை
௰ யா.—நீ அவர்களிடத்தில்இந்தத்தீர்க்கதரிசனம்யெ
ருஷலேமிலிருக்கிற இராசாவுக்கும், அதிலுள்ள
இஸரவேலின்வமிசத்தார் யாவருக்கும் விரோத
௰௧ மாயிருக்கிறதென்றுசொல்வதுமன்றி,—நான் உங்
களுக்கடையாளம்: நான் செய்வதெப்படியோ,
அப்படியே அவர்களுக்குஞ்செய்யப்படுமென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
றார்: அவர்கள் சிறைப்பட்டுப் பரதேசத்திற்குப்
௰௨ போவார்கள்.—அவர்களுக்குள்ளிருக்கிற பிரபு
தன்தோளின்மேல் சுமைசுமந்து இருட்டிலேபு
றப்பட்டுப்போவான்: வெளியேசுமைகொண்டு
போகும்படி அவர்கள்சுவரைத்துளைப்பார்கள்: அ
வன்தன்கண்களினாலேபூமியைப்பாராதபடிதன்
௰௩ முகத்தைமூடுவான்.—நான் அவன்மேல் என்வலை
யைவீசுவேன், அவன் என்கண்ணியில் அகப்ப
டுவான்: நான் அவனைக்கல்தேயரின் தேசத்தி
லேபாபேலிடத்திற் கொண்டுபோவேன்; அங்
கே அவன்சாவான், ஆயினும்அதைக்காணமாட்
௰௪ டான்.—அவனுக்குத்துணைசெய்யும்படி அவனைச்
சுற்றியிருக்கும்யாவரையும், அவனுடைய சமஸ்
தசேனையையும் சகல காற்றுத் திசைகளுக்கும்
நேராகச்சிதறஅடித்து, கட்கத்தையுருவி, அது அ
௰௫ வர்களைத் தொடரும்படி செய்வேன்.—நான் அ
வர்களைச்சாதியாருக்குள்ளும் தேசங்களிலுஞ் சி
தற அடிக்கும்பொழுது, நானே யெகோவா
௰௬ வென்று அவர்கள் அறிந்துகொள்வார்கள்.—அ
வர்கள் தாங்கள் போய்ச்சேருந்தேசத்தாருக்குள்
தங்கள் அரோசியமான கிரியைகளையெல்லாம்
வெளிப்படுத்தும் பொருட்டு, அவர்களிற் சில
ரைக்கட்கத்துக்கும், பஞ்சத்துக்கும், கொள்ளை
நோய்க்கும் மீந்திருக்கவிடுவேன்; நானே யெ
கோவாவென்று அவர்கள் அறிந்துகொள்
வார்களென்பதாகச்சொல்லச்சொல்லிற்று.
௰௭ பின்னும்யெகோவாவின்வாக்கு என்னி
டத்தில்,—மனுபுத்திரனே, நீ நடுநடுங்கி உன் ஆகா ௰௮
ரத்தைப்புசித்து, நடுக்கங்கொண்டு விசாரத்தோ
டேசலத்தைக்குடிப்பாயாகஎன்றதுமன்றி,—நீதே ௰௯
சத்துச்சனங்களைநோக்கி, யெருஷலேமிலும் இ
ஸரவேலின்தேசத்திலுமுள்ளகுடிகளைக்குறித்து,
அவர்கள் தங்கள் ஆகாரத்தை விசாரத்தோடேபு
சிப்பார்கள், திகைப்போடேதங்கள்சலத்தைக்கு
டிப்பார்கள், அவர்களுடைய தேசந் தன்னிடத்
தில்வாசம்பண்ணுகிறவர்களுடையகொடுமையி
னிமித்தந்தன்னிடத்திலுள்ளசகலவஸ்துக்களோ
டும் நாசப்படும்.—குடியிருக்கிற நகரங்கள் பா ௨௰
ழாய்ப்போகும், தேசம் வெறுமையாகும்; நானே
யெகோவாவென்றுநீங்கள்அறிந்துகொள்வீர்
களென்பதாகஆண்டவராகியயெகோவா
சொல்லுகிறாரென்றுசொல்லவுஞ்சொல்லிற்று.
பின்னும்யெகோவாவின்வாக்கு என்னி ௨௧
டத்தில்,—மனுபுத்திரனே, காலந்தாமதிக்கின்ற ௨௨
து, தரிசனமெல்லாம் ஒழியுமென்று இஸரவேல்
தேசத்திலே வழங்கும் பழமொழியென்ன.—ஆ ௨௩
தலால் அவர்களிடத்தில், தேவனாகிய யெ
கோவா, நான் இந்தப்பழமொழியை ஒழியப்
பண்ணுவேன், அந்தவாக்கு இனிஇஸரவேலருக்
குள்ளே வழங்காதபடி செய்வேனென்றுசொல்
லுகிறார்; மேலும் அவர்களைநோக்கி, காலமும்,
ஒவ்வொருதரிசனத்தின் பலிப்புஞ்சமீபித்தன.—
அதினால் பொய்த்தரிசனமாயினும், இங்கிதமான ௨௪
மந்திரதந்திரமாயினும் இஸரவேல் வமிசத்தாருக்
குள் இனிஇராது.—நானே யெகோவா: நான் ௨௫
வசனிப்பேன், நான்சொல்லும்வாக்குச் சித்திக்
கும்; இனித்தாமதியாது: கட்டளைக்கமையாத வ
மிசத்தாரே, நான் சொல்லும்வாக்கை உங்கள்
நாள்களிலே நிறைவேற்றுவேனென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறாரென்
பதைச்சொல்லச்சொல்லிற்று.
அப்புறம் யெகோவாவின் வாக்கு என் ௨௬
னிடத்தில்,—மனுபுத்திரனே, பார், இஸரவேல் ௨௭
வமிசத்தார், இவன்கண்டதரிசனஞ்சித்திக்கநெடு
நாள்செல்லும், இவன் தூரமானகாலங்களைக்கு
றித்துத் தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறானென்று
சொல்லுகிறார்கள்.—ஆதலால் நீ அவர்களைநோக் ௨௮
கி, என்னுடைய எந்தவாக்கின்பலனும் இனித்
தாமதியாதென்று ஆண்டவராகியயெகோ
வா சொல்லுகிறார்; நான்சொல்லியவாக்குச்சித்
தியாகுமென்று ஆண்டவராகிய யெகோ
வா சொல்லுகிறாரென்றுசொல்லச்சொல்லிற்று.

## ௰௩. அதிகாரம்.

௧. கள்ளத்தீர்க்கதரிசிகளைத்தண்டித்தல்: ௰. துவைக்கப்படாதசாந்தை உவமித்தல்: ௰௭. தீர்க்கதரிசிகளைக்குறித்துக்கையணைகளை உவமித்தல்.

பின்பு யெகோவாவின் வாக்கு என்னிடத் ௧
தில்,—மனுபுத்திரனே, நீ இஸரவேலருக்குள்தீர்க் ௨

---

(௬) எசா.௮.௰௮. (௯) அதி.௰௭.௰௨. (௰) மல்.௧.௧. (௰௨) ௨.இரா.௨௫.௪,௫,௭. எரே.௩௯.௪. (௰௩) யோபு.௰௯.௬. எரே.௫௨.௧. புல.௧.௰௩. ௨.இரா.௨௫.௭. எரே.௫௨.௰௧. (௰௪)௨.இரா.௨௫.௪,௫.(௰௫)சங்.௯.௰௬. (௰௬) சக.௭.௰௪. சங்.௱௭.௩௪.(௨௨)ஆமோ.௬.௩. ௨.பேதுரு.௩.௪.(௨௩)யோவே.௨.௧. செப்.௧.௰௪.(௨௪)புல.௨.௰௪.(௨௫)எசா.௫௫.௰௧. தானி.௯.௰௨. லூக்.௨௧.௩௩. (௨௭) ௨.பேதுரு.௩.௪.—(௰௩. அதி. ௧.) எரே.௰௪.௰௪.

கதரிசனம்பிரசித்தப்படுத்துந்தீர்க்கதரிசிகளுக்கு
விரோதமாய்த்தீர்க்கதரிசனஞ்சொல்லி, தங்கள்
தங்கள் இஷ்டப்படி தீர்க்கதரிசனஞ்சொல்லும்
அவர்களைநோக்கி, நீங்கள் யெகோவாவின்
௩ வாக்கைக்கேளுங்கள்,—ஐயோ, தரிசனத்தைக்
காணுமல் தங்கள் தங்கள் சொந்த அபிப்பிராயத்
தின்படி நடந்துவருகிற மதியற்ற தீர்க்கதரிசிக
ளுக்கு ஆபத்துவருமென்று ஆண்டவராகிய
யெகோவா சொல்லுகிறுரென்று சொல்லு.—
௪ இஸரவேலே, உன்தீர்க்கதரிசிகள் காடுகளிலுள்
௫ ளநரிகளைப்போலிருக்கிறுர்கள்.—யெகோவா
வின் நாளில் இஸரவேல்வமிசத்தார் யுத்தத்தில்
ஸ்திரமாகும்படி நீங்கள்வெடிப்புகளில் ஏறவில்
௬ லை, வேலியை அடைக்கவுமில்லை.—அவர்கள்,
யெகோவா தங்களைஅனுப்பாதிருந்தும், யெ
கோவா சொல்லுகிறுரென்று மாயையையும்
பொய்க்குறியையுந்தெரிவித்து, தங்கள்வாக்குப்
பலிக்குமென்று மற்றவர்களை நம்பச்செய்கி
௭ றுர்கள்.-நீங்கள்கண்ட தரிசனம்அபத்தமல்லவா,
கள்ளத்தீர்க்கதரிசனந்தெரிவிக்கவில்லையா,நான்
வாக்குச் சொல்லாதிருந்தும், யெகோவா
௮ சொன்னுரென்று சொல்லுகிறீர்கள்.—ஆதலால்
ஆண்டவராகியயெகோவா இவ்வாக்குச்
சொல்லுகிறுர்; நீங்கள் மாயையைச்சொல்லி,
பொய்த்தரிசனத்தைக் கண்டபடியினுலே நான்
உங்கள் விரோதி, பாருங்களென்று ஆண்டவ
௯ ராகிய யெகோவா சொல்லுகிறுர்.—மாயை
யைக்கண்டு பொய்யைக்கற்பிக்குந் தீர்க்கதரிசி
களின்மேல் என் கை வரும்: அவர்கள் என் ச
னங்களின் சபையிலிருக்கமாட்டார்கள், இஸர
வேல்வமிசத்தாரின் அட்டவணையில் எழுதப்ப
டமாட்டார்கள், அவர்கள் இஸரவேலின்தேசத்
தில் இனிப்பிரவேசிக்கமாட்டார்கள்; இதினுல்
நானே ஆண்டவராகிய யெகோவாவெ
ன்று நீங்கள் அறிந்துகொள்வீர்கள்.
௰ சமாதானமில்லாதிருந்தும் அவர்கள்சமாதான
மென்றுசொல்லி, என்சனங்களைமோசப்படுத்தி
னுர்கள்; பாருங்கள், ஒருவன் சுவரை எழுப்ப,
மற்றவர்கள் துவையாத சாந்திஞல் பூசுவார்
௰௧ கள்.—இதினிமித்தந் துவையாத சாந்திஞல்
பூசுகிறவர்களைநோக்கி, அது விழுந்துபோமென்
றுசொல்லு: வெள்ளம் பாயும் மழை உண்டா
கும்; மகாகன்மழையேசொரியும்; பெருங்காற்
௰௨ று அதைவெடிக்கப்பண்ணும்.—பாருங்கள், சுவர்
விழும்பொழுது நீங்கள்பூசினபூச்செங்கேயென்
௰௩ று உங்களிடத்தில் கேட்கமாட்டார்களா.—ஆத
லால் நான் உக்கிரங்கொண்டு பெருங்காற்றிஞ
லே அதைவெடிக்கப்பண்ணுவேன்;என்கோபத்
திஞல்வெள்ளம்பாயும்மழைவரும்,அதை அழிக்
கிறதற்கு என்கோபத்திஞலே பெரிய கன்மழை
சொரியுமென்று ஆண்டவராகிய யெகோ
௰௪ வா சொல்லுகிறுர்.—இவ்விதமாய்த் துவையாத
சாந்திஞல் நீங்கள்பூசினசுவரைநான்இடித்து,
அதின்அத்திபாரந்தோன்றும்படிதரைமட்டாகச்
சேதிப்பேன், அதுவிழும்பொழுது அதற்குள்நீங்
களும் நாசமடைவீர்கள்: நானே யெகோவா
வென்று நீங்கள் அறிந்துகொள்வீர்கள்.—இவ்வி ௰௫
தமாய் நான் சுவரிலும், துவையாதசாந்திஞல் அ
தைப் பூசினவர்களிடத்திலும் என் கோபத்தைப்
பலிக்கப் பண்ணுவேன்.—சமாதானமில்லாதிருந் ௰௬
தும் யெருஷலேமைக்குறித்துச் சமாதானத்தின்
தரிசனங்களைப் பெற்று, தீர்க்கதரிசனஞ் சொல்
லும்இஸரவேலரின் தீர்க்கதரிசிகளென்னுஞ்சுவ
ருமில்லை, அதைப் பூசினவர்களுமில்லையென்று
உங்களிடத்திற் சொல்லுவேனென்று ஆண்ட
வராகிய யெகோவா சொல்லுகிறுர்.
மனுபுத்திரனே,தங்கள்தங்கள்மனதின்படிதீர்க் ௰௭
கதரிசனஞ்சொல்லுகிற உன்சனங்களின்கன்னி
யருக்கு நீ பராமுகம்பண்ணி, அவர்களுக்குவி
ரோதமாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லி,—ஐயோ, ௰௮
சகலஅக்கிள்களுக்கும் தழுவணைகளைஆயத்தப்ப
டுத்தி, ஆத்துமாக்களை வேட்டையாடுகிறதற்கு
எந்தவயதுள்ளவர்களின்தலையின்மேல் மூடுசீலை
களைக்கட்டுகிறஸ்திரிகளுக்கு ஆபத்துவரும்;
நீங்கள் என்சனங்களின் ஆத்துமாக்களை வேட்
டையாடுவீர்களா, உங்களிடத்தில்வரும் ஆத்து
மாக்களை இரட்சிப்பீர்களா.—நீங்கள், பொய்க ௰௯
ளைக்கேட்கும்என்சனங்களுக்குப் பொய்சொல்
லி, கைப்பிடிகளினளவுள்ள வாற்கோதுமையும்
அப்பத்துண்டுமாகியஇவைகள்நிமித்தம், அவர்க
ளுக்குள் என்னை அசுத்தப்படுத்துவீர்களா; பிரா
ணரட்சிப்புக்குப் பாத்திரரைக் கொலைசெய்து,
பிராணதண்டனைக்குப்பாத்திரரை உயிரோடே
வைப்பீர்களாவென்று ஆண்டவராகிய யெ
கோவா சொல்லுகிறுர்.—ஆதலால் ஆண்ட ௨௰
வராகிய யெகோவா இவ்வாக்கைச்சொல்
லுகிறுர்; பாருங்கள், நீங்கள்வேட்டையாடுகிற
ஆத்துமாக்களைத் துரத்துவதற்கேதுவான உங்கள்
தழுவணைகளுக்கு விரோதியாயிருக்கிறேன், நா
ன்அவைகளை உங்கள் புயங்களினின்று பிடுங்கி
எறிந்து, நீங்கள்வேட்டையாடித்துரத்தும் ஆத்து
மாக்களைவிடுவிப்பேன்.—உங்கள்மூடுசீலைகளை ௨௧
நான்பிடுங்கி எறிந்து, உங்கள்கையினின்று என்
சனங்களைஇரட்சிப்பேன், நீங்கள் வேட்டையா
டுவதற்கு அவர்கள் இனி உங்கள் கையிலிருக்க
மாட்டார்கள்; இதிஞல் நானே யெகோவா
வென்று நீங்கள்அறிந்துகொள்வீர்கள்.—நான்வி ௨௨
சனப்படுத்தாத நீதிமானுடைய இருதயத்தைப்
பொய்களினுலே நீங்கள் விசனப்படுத்தினபடி
யினுலும், துன்மார்க்கன் தன்பிராணனை இரட்
சிக்கும்பொருட்டுத் தன் துன்னெறியைவிட்டுத்
திரும்பாதபடி நீங்கள் அவனுடையகைகளைத் தி
டப்படுத்தினபடியினுலும்,—நீங்கள் இனி மா ௨௩
யையைக் காணவுமாட்டீர்கள், பொய்த்தீர்க்கத

(௪) உன்.௨.௰௫. (௫) சங்.௱௬.௨௩,௩௰. (௯) எஸ்றா.௨.௫௯,௬௨. நிகி.௭.௫. சங்.௬௯.௨௮. (௰) எரே.௬.௰௪. அதி.௨௨.௨௮. (௰௧) அதி.௩௮.௨௨. (௰௬) எரே.௬.௰௪. (௰௭) அதி.௨௰.௪௬. (௰௮) ௨.பேதுரு.௨.௰௪. (௰௯) நீதி.௨௮.௨௧. மீகா.௩.௫. (௨௨) எரே.௨௩.௰௪. (௨௩) அதி.௰௨.௨௪. மீகா.௩.௬. அதி.௰௪.௮.

ரிசனங்களைச் சொல்லவுமாட்டீர்கள்: நான் உங்
கள்கையினின்று என் சனங்களைவிடுவிப்பேன்:
நானே யெகோவாவென்று நீங்கள்அறிந்து
கொள்வீர்களென்பதைச்சொல்லச்சொல்லிற்று.

## ௰௪. அதிகாரம்.

௧. முதியோரின்கபடத்தை வெளிப்படுத்தல்: ௬. இஸரவேல் வமிசத்தாருக்குப் பயங்கரதரிசனஞ்சொல்லல்: ௰௨. தேவன் செய்யுந்தண்டனையைத்தவிர்க்கமுடியாதெனக்காட்டல்: ௨௨. தண்டனைவருஞ்சமயத்தில் எஞ்சியசனங்களிருப்பார்களென்று தீர்க்கதரிசனஞ்சொல்லல்.

பின்பு இஸரவேலின்முதியோரில்சிலர் என்னி
டத்தில்வந்து எனக்குமுன் உட்காந்தார்கள்.—
௨ அப்பொழுது யெகோவாவின் வாக்கு என்
௩ னிடததில்,—மனுபுத்திரனே, அந்த மனிதர் தங்
கள்இருதயங்களிலே தங்கள்விக்கிரகங்களைஸ்தா
பித்து, அக்கிரமமென்னும் இடறுகட்டையைத்
தங்கள்முகங்களுக்கு முன்வைத்திருக்கிறார்கள்:
௪ அவர்களால் நான் உசாவப்படுவது தகுமா.—ஆத
லால் நீ அவர்களோடேபேசி, அவர்களைநோக்
கி, இவ்வாக்கைச்சொல்லு, இஸரவேல் வமிசத்
தாரில் தன்தன்இருதயத்தில்விக்கிரகங்களைஸ்தா
பித்து, தன்தன் முகத்தின் முன் அக்கிரமமென்
னும் இடறுகட்டையைவைத்து, தீர்க்கதரிசியி
டத்தில் வருகிற எவனுக்கும், இஸரவேல் வமி
சத்தார் தங்கள் விக்கிரகங்களின்வழியாய் என்
னைவிட்டுப் பராமுகமாயிருப்பதினால், தங்கள்
௫ இருதயத்தில்என்னால்அகப்படும்படிக்கு,—யெ
கோவாவாகிய நானே அவனவன் விக்கிர
கங்களின் திரளுக்கேற்க உத்தரங்கொடுப்பே
னென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறார்.
௬ ஆதலால் நீ இஸரவேல்வமிசத்தாரைநோக்கி,
நீங்கள் மனந்திரும்புங்கள், உங்கள் விக்கிரகங்க
ளைவிட்டுத்திரும்புங்கள்; உங்கள்சமஸ்தஅரோசி
யமான கிரியைகளுக்கும் பராமுகம் பண்ணுங்
களென்று ஆண்டவராகிய யெகோவா
௭ சொல்லுகிறார்.—இஸரவேல் வமிசத்தாரில் யாவ
னாகிலும், இஸரவேல்தேசத்தில் தங்கும் அந்நிய
ரில் யாவனாகிலும் என்னைவிட்டுப்பிரிந்து, தன்
விக்கிரகங்களைத் தன் மனதிலேஸ்தாபித்து, அக்
கிரமமென்னும் இடறுகட்டையைத் தன்முகத்
தின்முன்வைத்து, என்னைக்குறித்து உசாவும்படி
தீர்க்கதரிசியிடத்தில்வந்தால், யெகோவாவா
கிய நானே அவனுக்குத்தரங்கொடுப்பேன்.—
௮ அந்த மனுஷனுக்குவிரோதமாக என்முகத்தைக்
காட்டி, அவனை அடையாளமாகவும் பழமொழி
யாகவும் வைப்பேன், அவனை என்சனங்கள்மத்
தியினின்று சேதிப்பேன்; இதினால் நானே யெ
கோவாவென்று நீங்கள் அறிந்துகொள்வீர்
௯ கள்.—ஒருதீர்க்கதரிசிமோசப்பட்டுஒருவாக்கைச்
சொன்னானாகில், யெகோவாவாகியநானே
அந்தத்தீர்க்கதரிசியை மோசப்படச்செய்தேன்,
அவனுக்குவிரோதமாய் என்கையை ஓங்கி, என்
சனங்களாகிய இஸரவேலரினின்று அவனைச்
சேதிப்பேன்.—இஸரவேல்வமிசத்தார் இனி என் ௰
னைவிட்டு நெறிதவறிப்போகாமலும், தங்களு
டைய சகல அக்கிரமங்களினாலும் அசுசிப்படா
மலும், அவர்கள் என்சனங்களும் நான் அவர்க
ளுக்குத் தேவனுமாகும்பொருட்டு,—தீர்க்கதரி ௰௧
சியும், அவனிடத்தில் உசாவுகிறவனுமாகிய
இருவருஞ்சமமாகத்தங்கள்தங்கள்அக்கிரமத்துக்
கேற்கத் தண்டனை அனுபவிக்கவேண்டுமென்
று ஆண்டவராகிய யெகோவா சொல்
லுகிறாரென்பதைச் சொல்லவுஞ் சொல்லிற்று.
பின்பு யெகோவாவின் வாக்கு என்னி ௰௨
டத்தில்,—மனுபுத்திரனே, ஒருதேசம் எனக்கு ௰௩
விரோதமாய்க் கட்டளைமீறிப் பாவஞ்செய்யும்
பொழுது, நான்அதற்குவிரோதமாக என்கையை
ஓங்கி, அதின்ஆகாரக்கோலை முறித்துவிடுவேன்;
அதற்குப்பஞ்சத்தைஅனுப்பி, மனுஷரையும் மி
ருகசீவன்களையும் அதிலிராதபடிசேதிப்பேன்.—
அப்பொழுது, நோவாவும், தானியேலும், யோ ௰௪
புமாகிய இம்மூவரும் அதில் இருந்தாலும் அவர்
கள் தங்கள்நீதியினாலே தங்கள்பிராணனை மாத்
திரம் விடுவிப்பார்களென்று ஆண்டவராகி
ய யெகோவா சொல்லுகிறார்.
நான்தேசமெங்குந்துஷ்டமிருகங்களை அனுப் ௰௫
ப, மிருகங்களினிமித்தம் ஒருவரும் அதின்வழி
யாய்ப்போகக்கூடாதபடி அவைகள் அதைவெ
றுமையும்பாழுமாக்கும்பொழுது,—இம்மூவரும் ௰௬
அதிலிருந்தாலும் நான் நித்தியரானால், அவர்கள்
புத்திரரையும் புத்திரிகளையும்விடுவிக்கமாட்டார்
கள்; அவர்கள்மாத்திரமேவிடுவிக்கப்படுவார்கள்,
தேசமோ பாழாய்ப்போகுமென்று ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறார்.
அந்தத்தேசத்தின்மேல் நான் கட்கத்தைவரு ௰௭
வித்து, கட்கமே, தேசமெங்குஞ் செல்லென்று
சொல்லி, மனுஷரையும் மிருகசீவன்களையும் அ
திலிராதபடிசேதிக்கும்பொழுது,—நான் நித்திய ௰௮
ரானால், இம்மூவரும் அதிலிருந்தாலும் அவர்கள்
புத்திரரையும்புத்திரிகளையும் விடுவிக்கமாட்டார்
கள், அவர்கள்மாத்திரமே விடுவிக்கப்படுவார்க
ளென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறார்.
நான் அந்தத்தேசத்தில் கொள்ளைநோயை அ ௰௯
னுப்பி, மனிதரையும் மிருகங்களையும்அதிலிராத
படி சேதிக்கும்பொருட்டு இரத்தஞ்சிந்த என்
கோபத்தை ஊற்றும்பொழுது,—நான் நித்திய ௨௰
ரானால், நோவாவும், தானியேலும், யோபும் அ
திலிருந்தாலும் அவர்கள் புத்திரனையாகிலும் புத்
திரியையாகிலும் விடுவிக்கமாட்டார்கள், அவர்

(௰௪. அதி. ௧.) அதி.௮.௧. (௩) அதி.௭.௰௯. ௨.இரா.௩.௰௩. (௮) லேவி.௰௭.௰. எரே.௪௪.௰௩. எண்.௨௬.௰. உபா.௨௮.௩௭. (௯) ௧.இரா.௨௨.௨௩. யோபு.௰௨.௰௬. எரே.௪.௰. ௨.தெச.௨.௰௧. (௰) ௨.பேதுரு.௨.௰௫. அதி.௩௭.௨௭. (௰௩) லேவி.௨௬.௨௬. ஏசா.௩.௧. (௰௪) எரே.௰௫.௧. நீதி.௰௧.௪. லேவி.௨௬.௨௧. (௰௬) வச.௰௪,௰௮,௨௰. (௰௭) லேவி.௨௬.௨௫. செப்.௧.௩. (௰௮) வச.௰௪. (௰௯) ௨.சாமு.௨௪.௰௫. அதி.௩௮.௨௨. (௨௰) வச.௰௪.

கள்தங்கள்நீதியினால் தங்கள்பிராணனை மாத்தி
ரம் விடுவிப்பார்களென்று ஆண்டவராகிய
௨௧ யெகோவா சொல்லுகிறார்.—நான்மனிதரை
யும்மிருகஜீவன்களையும் அதிலிராதபடி நாசப்ப
டுத்தும்பொருட்டு, யெருஷலேமுக்கு விரோத
மாய்க்கட்கம், பஞ்சம், துஷ்டமிருகம், பெரு
வாரிக்காய்ச்சல் என்னும் இந்நாலு கொடியதண்
டனைகளையும் அனுப்பும்பொழுது எவ்வளவதிக
மென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறார்.
௨௨ ஆயினும் பாருங்கள், மீந்திருக்குஞ் சிலபுத்தி
ரரும் புத்திரிகளும் வெளியேகொண்டுவரப்படு
வார்கள்:பாருங்கள், அவர்கள் உங்களிடத்தில்வ
ருவார்கள், நீங்கள்அவர்களுடையநடையையும்
அவர்களுடையகிரியைகளையுங்கண்டு, நான்யெ
ருஷலேமின்மேல்வருவிக்குந் தீமையையும், அ
தின்மேல் நான்வருவித்தஎல்லாவற்றையுங்குறித்
௨௩ துத்தேற்றப்படுவீர்கள்.-நீங்கள் அவர்கள் நடைக
ளையும் அவர்கள் கிரியைகளையுங்காணும்பொழு
து அவர்கள் உங்களைத்தேற்றுவார்கள்:நான் அதி
லேசெய்தயாவற்றையுங் காரணமின்றிச்செய்ய
வில்லையென்றுநீங்கள் அறிந்துகொள்வீர்களென்
று ஆண்டவராகிய யெகோவாசொல்லு
கிறாரென்பதைச் சொல்லிற்று.

## ௰௫. அதிகாரம்.

௧. திராட்சக்கொடியை உவமித்தல்: ௬. அதின் தாற்பரியத்தைத் தெரிவித்தல்.

பின்னும் யெகோவாவின் வாக்குஎன்னிடத்
௨ தில்,—மனுபுத்திரனே, வனத்திலுள்ள மரத்தின்கி
ளையைப்பார்க்கிலும் வேறெந்தமரங்களைப்பார்க்
௩ கிலும், திராட்சக்கொடி உத்தமமா.-ஏதாகிலும்ஒ
ருவேலையினிமித்தம் அதில் ஒருதுண்டுஎடுப்பார்
களா, ஏதாகிலும் ஒருபாத்திரத்தைத்தூக்கும்படி
௪ அதினால் ஒருமுளைசெய்யலாமா.-பாருங்கள், அ
து அக்கினிக்கிரையாய் அதில் எறியப்படும்; அக்
கினிஅதின்முனைகள் இரண்டையும்பட்சிக்கும்,
இடைத்துண்டும் எரிக்கப்படும். அது எந்தவே
௫ லைக்காவது உதவுமா.—பாருங்கள், வேகாதிருக்
கும்பொழுதே அது எந்தவேலைக்கும் உதவாதி
ருக்க, அக்கினி அதை எரித்துப் பட்சித்ததின்
பின் வேலைக்குதவுமா.
௬ ஆதலால் நான் வனத்திலுள்ளவிருட்சங்களுக்
குள் திராட்சக்கொடியைஅக்கினிக்குஇரையாய்
ஒப்பித்ததுபோல், யெருஷலேமியரை ஒப்பிப்
பேனென்று ஆண்டவராகிய யெகோவா
௭ சொல்லுகிறார்.—நான் அவர்களுக்குவிரோதமாய்
என் முகத்தை வைப்பேன்; அவர்கள் ஒரு அக்கி
னியினின்று நீங்கினாலும் வேறொரு அக்கினியி
னாலே தகிக்கப்படுவார்கள்; நான் என்முகத்தை
அவர்களுக்கு விரோதமாக வைக்கும்பொழுது,
நானே யெகோவாவென்று நீங்கள் அறிந்து
கொள்வீர்கள்.—அவர்கள் கட்டளைமீறினபடியி ௮
னாலே நான் தேசத்தைப்பாழாக்குவேனென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
றாரென்பதைச்சொல்லிற்று.

## ௰௬. அதிகாரம்.

௧. பிறந்தவுடன் தள்ளப்பட்ட ஒருசிசுவுக்கு யெருஷலேமையொப்பிடல்: ௬. யெகோவா அதைக்கண்டிரங்கல்: ௰௫. அந்தக்கன்னி செய்த விபசாரத்தைத்தெரிவித்தல்: ௩௫. அந்தவிபசாரத்தினிமித்தம் வருந் தண்டனையைக் கூறல்: ௪௪. சோதோம் ஷமாரியாவென்னும் அவள் சகோதரிகள்இருவருக்கும் அவளை ஒப்பிடல்: ௬௰. முடிவில் சிலருக்குத்தயைசெய்தல்.

பின்னும் யெகோவாவின் வாக்கு என்னி ௧
டத்தில்,—மனுபுத்திரனே, நீ யெருஷலேமுக்கு ௨
அதின் அரோசியமானவைகளைத் தெரிவிக்கும்ப
டி,—ஆண்டவராகிய யெகோவா யெ ௩
ருஷலேமைக்குறித்து இவ்வாக்குச் சொல்லுகி
றார்; கானான்தேசமே உன் உற்பத்திக்கும் உன்
சென்மத்திற்குமிடம்; உன் பிதா எமோரியன்,
உன்மாதா ஏத்தித்தி.—நீ பிறந்ததினத்தில் உன் ௪
தொப்புள் அறுக்கப்படவில்லை, சுசியாவதற்கு நீ
சலத்திலே கழுவப்படவில்லை; உனக்கு உப்பு
இடப்படவுமில்லை, நீபுடவைகளினாலே சுற்றப்
படவுமில்லை.—உன்னைக் கடாட்சிப்பதற்கும், ௫
உன்மேல் இரங்கி இவைகளிலொன்றையாகி
லுஞ்செய்வதற்கும் ஒருவருமில்லை;உன்சென்ம
தினத்தில் உன்ஜீவனைவெறுக்கத்தக்கதாக நீ மை
தானவெளியிலே தள்ளப்பட்டாய்:இதுவேஉன்
சென்மத்தின் விருத்தாந்தம்.
நான் உன்னருகேசென்றசமயத்தில், உன்னை ௬
உன் இரத்தத்தில்அசுசியாயிருக்கக்கண்டு,நீஇரத்
தத்தில்கிடக்கையில்,நான்உன்னைநோக்கி,ஜீவித்
திருவென்றேன்; நீ இரத்தத்தில்கிடக்கையிலும்
நான்உன்னைநோக்கி, ஜீவித்திருவென்றேன்.—
நான் வெளியின்பயிரைப்போல் உன்னைச்செ ௭
ழிக்கப்பண்ணினேன், அதினால் நீ விருத்திய
டைந்து, கிரமங்கிரமமாக உன்னதமுஞ் சிரேஷ்
டமுமானாய்:உன்ஸ்தனங்கள்பருத்தன,உன்கூந்
தல் நீண்டது, முன்னே நீ நிருவாணமும் நிருபூ
ஷணமுமாயிருந்தாயே.-நான் உன்னருகேசென் ௮
றசமையத்தில் உன்மேல் நோக்கம்வைத்தேன்,
பார்,உன்பிராயம்அன்பின்பிராயம்; அப்பொழு
து நான்என்வஸ்திரத்தை உன்மேல்விரித்து,உன்
நிருவாணத்தைமூடி, உனக்கு ஆணையிட்டு, உன்
னோடேஉடன்படிக்கைசெய்தேனென்று ஆண்
டவராகியயெகோவாசொல்லுகிறார்,இப்
படி நீ என்னுடையவளானாய்.-நான் உன்னைச்ச ௯
லத்தினாலேசுத்திசெய்து,உன்னைஇரத்தமறக்கழு
வி, எண்ணெயினால் உன்னை அபிஷேகம்பண்
ணினேன்.—பின்பு விசித்திர வஸ்திரத்தை உ ௰
னக்குத்தரித்தேன்,தகசின்தோற்பாதரட்சையை

(௨௧) அதி.௫.௰௭. (௨௨) அதி.௬.௮. அதி.௨௰.௪௩.(௨௩)எரே.௨௨.௮,௯.—(௰௫.அதி.௪.) யோவா.௰௫.௬. (௭) லேவி.௰௭.௰௨. ஏசா.௨௪.௰௮. அதி.௨௰.௩௮,௪௨,௪௪.—(௰௬.அதி.௩.) அதி.௨௧.௩௰. (௪) ஓசி.௨.௩. (௭) யாத்.௧.௭. (௮) ரூத்.௩.௯. யாத்.௰௯.௫. எரே.௨.௨.

உனக்கிட்டேன், மெல்லியபுடவையை உனக்
குக்கட்டினேன்,பட்டுப்புடவையினால்உன்னை
௰௧ மூடினேன்.—ஆபரணங்களினால்உன்னைஅலங்
கரித்தேன், உன் கைகளிலே சரிகளையும், உன்
௰௨ கழுத்திலே சரப்பணியையுமிட்டேன்.—உன்
நெற்றியில்சுட்டியையும்,உன்காதில்காதணியை
யும், உன்தலையின்மேல் சௌந்தரியம்பொருந்தி
௰௩ ய கிரீடத்தையுமிட்டேன்.—இப்படி நீ பொன்
வெள்ளிகளினால்அலங்கரிக்கப்பட்டாய்; மெல்
லியவஸ்திரமும், பட்டும், விசித்திரத் தையலா
டையுமாகிய இவைகளேஉன்னுடை; நீ மெல்லி
யமாவையும், தேனையும், எண்ணெயையும்புசித்
தாய்: நீ மிகவுஞ் சௌந்தரியமுள்ளவளாகி, இ
௰௪ ராச்சியமாகும்படி அனுகூலம்பெற்றாய்.—நான்
உன்மேல்தரித்த என்னுடைய அலங்காரம் பூரண
மாயிருந்தபடியால்,உன்சௌந்தரியத்தின்கீர்த்தி
புறச்சாதியாருக்குள்ளே பரம்பிற்றென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறார்.
௰௫ நீயோ உன்சௌந்தரியத்தைநம்பி,உன்கீர்த்தி
யினிமித்தஞ்சோரமார்க்கமாய்நடந்தாய்,கடந்து
போகிறயாவனோடும்வேசைத்தனஞ்செய்ய உன்
னை ஒப்பித்தாய்; அது அவனுக்குக்கிடைக்கும்.—
௰௬ உன்வஸ்திரங்களில் சிலவற்றைஎடுத்து,பலவரு
ணங்களுடன்உன்உயர்ந்தஸ்தானங்களைச்சிங்கா
ரித்து,அவைகளின்மேல்விபசாரக்கிரியைகளைச்
செய்தாய்: அப்படிப்பட்டவைகள் முன்நடந்த
௰௭ துமில்லை,இனிநடப்பதுமில்லை.-நான்உனக்குத்
தந்தஉத்தமமாகியபொன்வெள்ளிஆபரணங்களை
நீ எடுத்து, உனக்குப்புருஷரூபங்களைஉண்டாக்
கி,அவைகளோடேசோரமார்க்கமாய்நடந்தாய்—
௰௮ உன் விசித்திரத் தையலாடைகளைஎடுத்து அவை
களைமூடினாய்: என்எண்ணெயையும்,என் தூபவ
ருக்கத்தையும்அவைகளின்முன்பாகவைத்தாய்.-
௰௯ நான்உனக்குத்தந்தமெல்லியமா, உனக்குப்புசிக்
கக்கொடுத்த எண்ணெய், தேன் முதலிய உண
வுப்பொருளைஎடுத்துச்சுகந்தத்தினிமித்தம்அவை
களின் முன்பாகவைத்தாய்: இதுமெய்யென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
௨௰ றார்.—எனக்குநீபெற்ற உன்புத்திரரையும், உன்
புத்திரிகளையும் எடுத்து அவைகளுக்கு இரையா
௨௧ கப்பலியிட்டாய்.—நீ என்பாலகரைக்கொலைசெ
ய்து,அக்கினிக்கிடையிலே செல்லப்பண்ணி,அ
வைகளைஒப்பித்து,நீசெய்தவிபசாரம் அற்பகாரி
௨௨ யமா.—நீ உன்சகல அரோசியமானகிரியைகளை
யும் உன்சோரங்களையுஞ்செய்கையில், நீ நிருபூ
ஷணமும் நிருவாணமுமாய், உன்இரத்தத்திலே
புரண்ட உன் சிறுபிராயத்தின்நாள்களை நினைக்க
௨௩ வில்லை.—ஐயோ, உனக்கு ஆபத்துவருமென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
றார்.—உன்தீமைகளெல்லாவற்றிற்கும்பின், நீ உ ௨௪
னக்காக உயர்ந்தஸ்தானத்தையும், ஒவ்வொரு வீ
தியிலும் பீடத்தையுங் கட்டினாய்.—வீதிகளில் ௨௫
ஒவ்வொருசந்தியிலும் உனக்குப்பீடத்தைக்கட்
டி உன்சௌந்தரியம்அரோசிக்கப்படச்செய்து,
வழிப்போக்கர்யாவருக்கும் உன்கால்களைவிரித்
து, உன்சோரங்களை மிகவும் பெருகப்பண்ணி
னாய்.—உன்சமீபத்திலுள்ள ஸ்தூலித்தகாயத்தை ௨௬
யுடைய எகிப்தியரோடே சோரம்போய், என்
னைக்கோபப்படுத்துகிறதற்கு உன் சோரத்தைப்
பெருகப்பண்ணினாய்.—ஆதலால், பார், நான் ௨௭
உனக்குவிரோதமாய்க் கை ஓங்கி, உன் போ
சன பாகத்தைக்குறைத்து, உன்னுடைய துன்
மார்க்கத்தைக்குறித்து இலச்சை அடைந்த பெ
லிஸ்தியரின்குமாரத்திகளாகிய உன்பகைவரின்
இச்சைக்கு உன்னை ஒப்பித்தேன்.—பின்பு நீ தி ௨௮
ருத்தியடையாததினால் அசீரியரோடுஞ்சோரம்
போனாய்; அவர்களுடன்சோரம்போயும் இன்
னும் நீ திருத்தி அடையவில்லை.—கல்தேயவரைக் ௨௯
கும் கானான்தேசத்தில் உன்சோரம்வருத்திக்கப்
பண்ணினாய்; ஆயினும் நீ அதினாலுந் திருத்தி அ
டையவில்லை.—நீ ஒவ்வொருவீதியின்சந்தியிலும் ௩௰
உன்உயர்ந்தஸ்தானத்தைக்கட்டி, ஒவ்வொருதெ
ருவிலும் உன்பீடத்தையுண்டாக்கி,—அரசாளு ௩௧
கைசெய்பவளாகிய ஒருவேசையைப்போலஇந்
தக்கிரியைகளெல்லாவற்றையுஞ்செய்கிறதினால்
உன்மனம்எவ்வளவுசஞ்சலமுள்ளதென்றுஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறார்.—
நீ வேசையைப்போலல்ல, பணயத்தை அவம ௩௨
திக்கிறாய்; தன்புருஷனுக்குப்பிரதியாக அந்நிய
புருஷனைச்சேர்த்து விபசாரஞ்செய்யும் மனைவி
யைப்போலிருக்கிறாய்.—எந்தவேசைகளுக்கும் ௩௩
பணயங்கொடுப்பது வழக்கம்: நீயோ சகல தி
சைகளிலும் நின்று உன்னிடத்தில் விபசாரஞ்
செய்யவரும்படிபணயங்கொடுத்து, உன்நேசர்
யாவருக்கும் வெகுமதிகளையுந்தருகிறாய்.—அதி ௩௪
னால் உன்சோரக்கிரியைகள் மற்றஸ்திரிகளுக்கு
மாறாயிருக்கின்றன, சோரம்போகிறதற்கு ஒருத்
தியும் உன்னைப்பின்செல்லாள்: நீ ஒன்றும்வாங்
காமல் கூலிகொடுக்கிறாய், இதினால் உன் கிரி
யைவிபரீதமாயிருக்கின்றது.
ஆதலால் வேசையே, நீ யெகோவாவின் ௩௫
வாக்கைக்கேள்:—ஆண்டவராகியயெகோ ௩௬
வா இவ்வாக்குச்சொல்லுகிறார்; உன் அசுசியா
னது ஊற்றப்படுகின்றது, நீ உன் நேசரோடும்
உன் அரோசியமான விக்கிரகங்களெல்லாவற்
றோடும் சோரக்கிரியைகளைச்செய்வதினால் உன்
நிருவாணம் வெளிப்பட்டது, உன்பாலகரின்
இரத்தம் அவைகளுக்குக்கொடுக்கப்பட்டது.—

---

(௰௧) ஆதி.௨௪.௨௨,௪௭. நீதி.௧.௯. (௰௨) எசா.௩.௨௧. (௰௩) உபா.௩௨.௰௩,௰௪. சங்.௪௮.௨. (௰௪) புல.௨.௰௫. (௰௫) உபா.௩௨.௰௫. எரே.௭.௪. மீகா.௩.௰௧. எசா.௧.௨௧. எரே.௨.௨௰. (௰௬) ஓசி.௧.௨. ௨.இரா.௨௩.௭. ஓசி.௨.௮. (௰௯) ஓசி.௨.௮. (௨௰) ௨.இரா.௰௬.௩. சங்.௱௬.௩௭,௩௮. எசா.௫௭.௫. எரே.௭.௩௧. (௨௨) எரே.௨.௨. வச.௪௩, ௬௰. ஓசி.௰௧.௧. (௨௪) எசா.௫௭.௫,௭. எரே.௨.௨௰. (௨௫) நீதி.௯.௰௪. (௨௬) அதி.௮.௰,௰௪. (௨௭) ௨.நாளா.௨௮.௰௮,௰௯. (௨௮) ௨.இரா.௰௬.௭,௰. ௨.நாளா.௨௮.௨௩. எரே.௨.௰௮,௩௬. (௨௯) அதி.௨௩.௰௪. (௩௩) எசா.௩௰.௬. ஓசி.௮.௯. (௩௬) எரே.௨.௩௪.

௩௭ ஆதலால், பார், நீ சம்போகம்பண்ணின உன்
நேசரனைவரையும், நீநேசித்தயாவரையும், நீவெ
றுக்கிற சகலரோடும் நான் சேர்த்து, அவர்களை
உனக்குவிரோதமாய் நான்கு திசையிலும் ஏக
மாய்க்கூட்டி, அவர்கள் உன் நிருவாணத்தை
எல்லாங்காணும்படி அவர்களிடத்தில் உன் நிரு
௩௮ வாணத்தை வெளிப்படுத்துவேன்.-விவாகத்தின்
நியமத்தை மீறும் ஸ்திரிகளும், இரத்தஞ்சிந்துகி
றவர்களுமானவர்களின் தீர்ப்பின்படி உனக்கு
நியாயத்தீர்ப்புக்கொடுப்பேன்; குரோதத்தோடும்
எரிச்சலோடும் உனக்கு இரத்தந் தருவேன்.—
௩௯ நான் உன்னை அவர்கள் கையில் ஒப்பிப்பேன்,
அவர்கள் உன் உயர்ந்த ஸ்தானத்தைவீழ்த்துவார்
கள்; உன்பீடங்களை இடிப்பார்கள்: உன்னுடை
களை அவிழ்த்து, உன் சௌந்தரியமுள்ள ஆபர
ணங்களைக்கழற்றி, உன்னை வஸ்திரமில்லாமல்
௪௰ நிருவாணமாக விட்டுவிடுவார்கள்.—அவர்கள் உ
னக்கு விரோதமாகச் சனக்கூட்டத்தைக்கொண்
டுவந்து, உன்னைக் கல்லெறிந்து, உன்னைத் தங்
கள் கட்கங்களினால் உருவக் குத்துவார்கள்.—
௪௧ உன் வீடுகளை அக்கினியினாலே தகித்து, அநே
கஸ்திரிகளின் முன்பாக உன்னைத் தண்டிப்
பார்கள்: இவ்விதமாய் நீ சோரஞ்செய்யாதொ
ழியும்படிசெய்வேன், நீ இனி ஒருபொழுதுங்
௪௨ கூலிகொடுக்கமாட்டாய்.—உன்மேல் நான்வரு
வித்த என் எரிச்சல் ஒழியும்படிபண்ணுவேன்,
என்கோபம் உன்னைவிட்டுநீங்கும், நான்இனிக்
குரோதங்கொள்ளாமல் அமைந்திருப்பேன்.—
௪௩ நீ உன் சிறுபிராயத்தின் நாள்களையெல்லாம் நி
னையாமல், இவைகளெல்லாவற்றினாலும் எனக்
குக் கோபமூட்டினாய்; ஆதலால், பார், நான்
உன் நெறிக்கேற்க உன் தலையின்மேல் பலனை
அளிப்பேனென்று ஆண்டவராகிய யெகோ
வா சொல்லுகிறார்: அதினால் நீ இனி உன்சகல
அரோசியமான கிரியைகளிலும் இந்தத்துர்க்கிரி
யையைச்செய்யமாட்டாய்.
௪௪ பார், பழமொழி சொல்லுகிறவர்களெல்லா
ரும் உன்னைக்குறித்து, தாயைப்போல மகள்என்
௪௫ னும்பழமொழி சொல்லுவார்கள்.—நீ, தன் புரு
ஷனையுந் தன்பிள்ளைகளையும் அரோசிக்கிற உன்
தாயின் மகள்; நீ, தங்கள் புருஷரையுந் தங்கள்
பிள்ளைகளையும் அரோசித்த உன்சகோதரிகளின்
சகோதரி: உங்கள் மாதா எத்தித்தி, உங்கள் பிதா
௪௬ எமோரியன்.—உன் இடப்புறத்திலே தன் புத்தி
ரிகளுடன் வாசம்பண்ணுகிற ஷமாரியா உந்த
மக்கை: உன்வலப்புறத்திலேதன்புத்திரிகளுடன்
௪௭ வாசம்பண்ணுகிற சோதோம் உன்தங்கை.—ஆயி
னும் அவர்களுடைய வழியிலே நடந்ததுமாத்தி
ரமல்ல, அவர்களுடைய அரோசியமான கிரியை
களின்படி செய்ததுமாத்திரமல்ல: அது மிகவும்
அற்பமென்றெண்ணி, உன் சகல நெறிகளிலும்
அவர்களிலும் அதிகசீர்கேடாய்நடந்தாய்.—நீயும் ௪௮
உன்குமாரத்திகளுஞ் செய்ததுபோல, உன்சகோ
தரியாகிய சோதோமும் அவள் குமாரத்திகளுஞ்
செய்யவில்லையென்று, என் நித்தியத்துவத்தைக்
கொண்டுசொல்லுகிறேனென்பதை ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறார்.—அகங் ௪௯
காரமும், பூரணபோசனமும், மிகுதியானசொம்
பும் அவளிடத்திலும் அவள் குமாரத்திகளிடத்தி
லுமிருந்தன, அவள்தரித்திரரையுந் திக்கற்றவர்க
ளையும் பெலப்படுத்தவில்லை. பார், இதுவே உன்
சகோதரியாகிய சோதோமின் தோஷம்.—அவர் ௫௰
கள் அகங்காரிகளாகி, என்பார்வையில் அரோ
சியமானதைச்செய்தார்கள்: அதைக்கண்டு நான்
அவர்களை அகற்றிவிட்டேன்.—நீ செய்தபாவங் ௫௧
களில்பாதியும் ஷமாரியா செய்ததில்லை; நீயோ
உன் அரோசியமானவைகளை அவர்களைப்பார்க்
கிலும் பெருகப்பண்ணினாய், நீ செய்தஉன்சகல
அரோசியமானவைகளினாலும் உன் சகோதரிக
ளின் நீதிவிளங்கப்பண்ணினாய்.—உன்சகோதரிக ௫௨
ளின்மேல்குற்றஞ்சுமத்தின நீ, அவர்களைப்பார்க்
கிலும் அதிக அரோசியமானபாவங்களைச்செய்த
தினிமித்தம் உன் இலச்சையைச் சுமந்துகொள்:
உன்னைப்பார்க்கிலும் அவர்கள் நீதியுள்ளவர்கள்:
நீ உன்சகோதரிகளை நீதிவிளங்கச் செய்தபடியி
னாலே வெட்கப்பட்டு, உன் இலச்சையைச் சு
மந்துகொள்.—நான் சோதோமும் அவள் குமா ௫௩
ரத்திகளுமாகிய இவர்களையும், ஷமாரியாவும் அ
வள் குமாரத்திகளுமாகிய இவர்களையுஞ்சிறையி
னின்று மீட்டுக்கொள்ளும்பொழுது, அவர்கள்
மத்தியில் உன்னையுஞ் சிறையினின்று மீட்டுக்
கொள்வேன்.—அதினால் நீ அவர்களைத்தேற் ௫௪
றி, நீ செய்த எல்லாவற்றையுங் குறித்துவெட்கப்
பட்டு, உன் இலச்சையைச்சுமந்துகொள்வாய்.—
உன்சகோதரிகளாகிய சோதோமும், அவள்குமா ௫௫
ரத்திகளும் தங்கள் முந்தின சீருக்குத் திரும்பும்
பொழுதும், ஷமாரியாவும், அவள் குமாரத்திக
ளும் தங்கள் முந்தின சீருக்குத் திரும்பும் பொ
ழுதும், நீயும் உன்குமாரத்திகளும் உங்கள் முந்
தின சீருக்குத் திரும்புவீர்கள்.—உன்னை வெறுக் ௫௬
கும் ஷீரியவின் குமாரத்திகளும், அவளுக்கு
நாலு புறத்திலுமுள்ள பெலிஸ்தியரின் குமாரத்
திகளும் அவமானம் பண்ணினபொழுது, உன்
தீமை வெளியாயிற்றே;—அதற்கு முன் உன் அ ௫௭
கங்கார நாளில் உன் சகோதரியாகிய சோதோ
மின் நாமத்தை உச்சரிக்கமாட்டாய்.—நீ உன்வி ௫௮
பசாரத்திற்கும், உன்அரோசியமானவைகளுக்கு
மேற்றபலனை அனுபவிப்பாயென்று யெகோ

(௩௭) எரே.௰௩.௨௨,௨௬. புல.௧.௮. ஓசி.௨.௰. நாகூ.௩.௫. (௩௮) லேவி.௨௰.௰. உபா.௨௨.௨௨. ஆதி.௯.௬. யாத்.௨௧.௰௨. (௩௯) ஓசி.௨.௩. (௪௰) அதி.௨௩.௪௬,௪௭. யோவா.௮.௫,௭. (௪௧) உபா.௰௩.௰௬. ௨.இரா.௨௫.௯. எரே.௩௯.௮. அதி.௨௩.௨௭. (௪௩) சங்.௭௮.௪௨. (௪௫) வச.௩. (௪௬) உபா.௩௨.௩௨. ஏசா.௧.௰. (௪௭) ௨.இரா.௨௧.௯. வச.௪௮.௫௧. (௪௮) மத்.௰.௰௫. (௪௯) ஆதி.௰௩.௰. (௫௰) ஆதி.௰௩.௰௩. ஆதி.௰௮.௨௰. ஆதி.௰௯.௫,௨௪. (௫௧) எரே.௩.௰௧. மத்.௰௨.௪௧,௪௨. (௫௩) ஏசா.௧.௯. வச.௬௰,௬௧. எரே.௨௰.௰௬. (௫௪) அதி.௰௪.௨௨,௨௩. (௫௬) ௨.இரா.௰௬.௫. ௨.நாளா.௨௮.௰௮. ஏசா.௭.௧.

௫௯ வா சொல்லுகிறார்.—உடன்படிக்கையைத் தள்
ளி, ஆணையை அவமதித்து நீ செய்ததுபோல, நான்
உனக்குப்பலனளிப்பேனென்று ஆண்டவரா
கிய யெகோவா சொல்லுகிறார்.
௬௰ பின்பு நான் உன் இளம்பிராயத்தில் உன்னு
டன் செய்த உடன்படிக்கையை நினைந்து, உன்
னுடன் ஒரு நித்திய உடன்படிக்கையைச் செய்
௬௧ வேன்.—அச்சமயத்தில் நீ உன் தமக்கையும் உன்
தங்கையுமாகிய உன் சகோதரிகளைச் சேர்க்கும்
பொழுது, உன் நடையை நினைந்து இலச்சைஅ
டைவாய்: நான் அவர்களை உனக்குக் குமாரத்தி
களாகத்தருவேன், ஆனாலும் உன்னுடன் செய்த
௬௨ உடன்படிக்கையின்படியல்ல.—நீ செய்தவை
களெல்லாவற்றையும் நான் மன்னிக்கும்பொழு
து நீ நினைந்துவியாகுலப்பட்டு, இலச்சையினால்
௬௩ உன்வாயை ஒருபொழுதுந்திறவாதபடி,—நான்
உன்னுடன் என் உடன்படிக்கையை ஸ்திரப்
படுத்துவேன்; அதினால் நானே யெகோவா
வென்று நீ அறிந்துகொள்வாயென்று ஆண்ட
வராகிய யெகோவா சொல்லுகிறாரென்ப
தைச் சொல்லிற்று.

## ௰௭. அதிகாரம்.

௧. திராட்சக்கொடியையும் இரண்டு கழுகுகளை
யும் உவமித்தல்: ௰௧. அந்தஉவமைகளின்தாற்
பரியத்தையுஞ் சுவிசேஷமென்னும் விருட்சம்
நடுவதையுந்தெரிவித்தல்.

யெகோவாவின் வாக்கு என்னிடத்தில்,—
௨ மனுபுத்திரனே, நீ இஸரவேல்வமிசத்தாரிடத்தில்
ஒருவிடுகதையையும், உவமையையும் வெளிப்ப
௩ டுத்தி இவ்வாக்கைச்சொல்லு.—பெரிய சிறகுக
ளையும் நீளமான இறகுகளையுமுடையபலவருண
முள்ள பெரிய ஒரு கழுகு லிபானோனில்வந்து,
ஒரு எரஸ்விருட்சத்தில் நுனிக்கிளையை ஒடித்த
௪ து.—அதின்நுனிக்கிளையைக்கொய்து, வர்த்தகதே
சத்திற்குக்கொணடுபோய், வர்த்தகருடைய நக
௫ ரத்தில் அதைவைத்தது.-அந்தத்தேசத்தின் ஒருமு
ளையை எடுத்து, செழிப்புள்ள ஒரு வயல்நிலத்தி
லேகொண்டுபோய், மிகுந்தசலத்தினருகே ஒரு
௬ அலரிச்செடியைப் போல நட்டது.-பின்பு அ
துவளர்ந்து, படர்ந்து, உயரமில்லாத திராட்சக்
கொடியாயிற்று, இதின்கிளைகள் அதற்குநேராகத்
திரும்பி வளர்ந்தன, இதின்வேர்கள் அதற்குக்கீ
ழே இருந்தன: இவ்விதமாய் அந்தக்கொடி கிளைக
௭ ளையுங்கொழுந்துகளையுமுடையதாயிற்று.-அன்
றியும்பெரியசிறகுகளையும்அநேகஇறகுகளையுமு
டையவேறொருகழுகுமிருந்தது: பாருங்கள், இந்
தத்திராட்சக்கொடி தன் நடுவாகிய பாத்திகளுக்
குத்தக்கதாய் அது தனக்கதிகநீரைப் பாய்ச்சும்ப
டிக்கு அதற்கு நேரே தன் வேர்களைச் செலுத்தி,
தன்கிளைகளைவிரியச்செய்தது.-கிளைகளை விடுவ ௮
தற்கும், உத்தமதிராட்சக்கொடியாய்க் கனிகொ
டுப்பதற்கும், இதுமிகுந்தசலத்தின் ஓரத்திலுள்ள
ஒருநிலத்தில் நடப்பட்டிருந்ததென்று ஆண்ட
வராகிய யெகோவா சொல்லுகிறாரென்ப
தைச்சொல்லு.—இதுசெழிக்குமா, இதுபட்டுப் ௯
போம்படி ஒருவன் வேரோடேபிடுங்கி இதின்க
னியைச்சேதிக்கமாட்டானா; வேரோடேபிடுங்
குகிறதற்குப்பலவந்தமும் கூட்டமாகிய சனங்
களுமில்லாதிருந்தாலும், இதுதுளிர்த்த சகல இ
லைகளோடும் பட்டுப்போம்.—பாருங்கள், நடப் ௰
பட்டாலுஞ்செழிக்குமா; இதுதன்மேல்கீழ்காற்
றுப்படமுழுமையும் வாடிப்போகாதா; இது ந
டப்பட்ட பாத்திகளிலே வாடிப்போமென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லு
கிறாரென்பதைச் சொல்லவுஞ்சொல்லிற்று.
பின்னும் யெகோவாவின் வாக்கு என்னி ௰௧
டத்தில்,—நீ கட்டளைக்கமையாத வமிசத்தாரை ௰௨
நோக்கி, இதின்தாற்பரியம் உங்களுக்குத்தெரியு
மா; பாருங்கள், பாபேல் இராசா யெருஷலேமு
க்குவந்து, அதின் இராசாவையும் அதின் பிரபுக
ளையும்பிடித்து, தன்னுடன்பாபேலுக்குக்கொண்
டுபோனான்.-இந்த இராச்சியம் உன்னதம்பெறா ௰௩
மல்தாழ்ச்சியடைந்து, பின் பாபேல் இராசாவின்
உடன்படிக்கையைக்கைக்கொள்வதினால் ஸ்திர
மாகும்படி,—தேசத்தின் பராக்கிரமசாலிகளைப் ௰௪
பிடித்துக்கொண்டு போனதுமன்றி, இராசவமி
சத்தில் ஒருவனைத் தெரிந்து, அவனோடு உடன்
படிக்கையும் பண்ணி, அவனிடத்தில் ஆணையு
மிடுவித்தான்.—ஆனாலும் இவன் தனக்குக் குதி ௰௫
ரைகளையும் அதிக சனங்களையும் கொடுத்தனுப்
பவேண்டுமென்று தன் தூதர்களை எகிப்துக்கு
அனுப்பி, அவனுக்கு விரோதமாகத் துரோகஞ்
செய்தான். இவன் அனுகூலமடைவானா, இவ்
விதகாரியங்களைச் செய்பவன் தப்புவானா,
உடன்படிக்கையை மீறுகிறவன் விடுவிக்கப்படு
வானா;-நான் நித்தியரானால் தன்னை இராசாவாக ௰௬
ஏற்படுத்திய ராசாவின் ஆணையை அவமதித்து, அ
வனுடைய உடன்படிக்கையைத் தள்ளினவன்
அந்த இராசாவோடேகூடப்பாபேல் ஸ்தானமத்
தியில் இறந்தேபோவானென்று ஆண்டவரா
கிய யெகோவா சொல்லுகிறார்.—மிகுந்தச ௰௭
னங்களைநாசப்படுத்துகிறதற்கு அணைபோட்டுக்
கொத்தளங்களைக்கட்டும்பொழுது, பார்வோனு
ம், தன் பராக்கிரமசேனையோடும் மிகுந்த சனத்
தோடும் யுத்தத்தில் இவனுக்குச்சகாயஞ் செய்ய
மாட்டான்.-கைகொடுத்து, உடன்படிக்கையைத் ௰௮
தள்ளி, ஆணையைஅவமதித்து, இவைகளெல்லா
வற்றையுஞ்செய்தஇவன்தப்பமாட்டான்.—ஆத ௰௯

(௫௯) அதி.௰௭.௰௪,௰௬. உபா.௨௯.௰௪,௰௫. (௬௰) சங்.௱௬.௪௫. எரே.௩௨.௪௰. (௬௧) அதி.௨௰.௪௩. ஏசா.௫௪.௧. ஏசா.௬௰.௪. கலா.௪.௨௬,. எரே.௩௧.௩௧,. (௬௨) ரோ.௩.௰௧. (௬௩) ஓசி.௨.௰௯,௨௰.—(௰௭. அதி. ௩.) ௨.இரா.௨௪.௰௨. (௫) உபா.௮.௭,௮,௯. ஏசா.௪௪.௪. (௬) வச.௰௩. (௭) வச.௰௫. (௯) ௨.இரா.௨௫.௭. (௰) அதி.௰௯.௰௨. ஓசி.௰௩.௰௫. (௰௨) அதி.௰௨.௯. ௨.இரா.௨௪.௰௧—௰௬. (௰௩) அதி.௨௯.௰௪. (௰௪) ௨.இரா.௨௪.௰௭. ௨.நாளா.௩௬.௰௩. (௰௫) ௨.இரா.௨௪.௨௰. ௨.நாளா.௩௬.௰௩. உபா.௰௭.௰௬. ஏசா.௩௧.௧,௩. வச.௯. (௰௬) எரே.௩௨.௫. அதி.௰௨.௰௩. (௰௭) எரே.௩௭.௭. எரே.௫௨.௪. (௰௮) ௧.நாளா.௨௯.௨௪. புல.௫.௬.

லால் நான்நித்தியரானால்இவன், என்னுடையஆ
ணையை அவமதித்து, என் உடன்படிக்கையைத்
தள்ளினபடியினால், அதின்பலனை அவன் தலை
யின்மேல் வருவிப்பேனேயென்று ஆண்டவ
௨௰ ராகிய யெகோவா சொல்லுகிறார்.—அவன்
மேல்நான்என்வலையைவீச, அவன் என்கண்ணி
யில் அகப்படுவான், நான் அவனைப் பாபேலுக்
குக்கொண்டுபோவேன், அவன் எனக்குவிரோத
மாய்க் கட்டளைமீறினதினிமித்தம் அங்கே அவ
௨௧ னை நியாயம்விசாரிப்பேன்.—அவனுடைய சகல
படைவகுப்புகளும், தப்பி ஓடுகிற மற்றயாவ
ருங் கட்கத்தினால்விழுவார்கள், மீந்திருப்பவர்
களுஞ் சகல காற்றுத்திசைகளுக்கும் நேராகச்சி
தறஅடிக்கப்படுவார்கள்: இதினால் யெகோ
வாவாகிய நானே இதைச்சொன்னேனென்
று நீங்கள் அறிந்துகொள்வீர்கள்.
௨௨ ஆண்டவராகிய யெகோவா இவ்வாக்
கைச்சொல்லுகிறார்; நானும் உயரமான ஏரஸ்வி
ருட்சத்தின் நுனிக்கிளைகளில் ஒன்றைமுறித்து
நடுவேன்; அதின்கொழுந்துகளையுடையநுனிக்
கொம்பில் இளங்கிளையைக்கொய்து, உயரமுஞ்
சிரேஷ்டமுமுள்ள ஒரு மலையிலே நடுவேன்.—
௨௩ இஸ்ரவேலின் உயர்ந்தமலையில் அதை நாட்டு
வேன்: அது கிளைகளைவிட்டுக்கனிதரும், உத்த
ம ஏரஸ்விருட்சமாகும்: அதின்கீழேபலவித சிற
குகளையுடைய எல்லாப் பறவைகளுந் தங்கி,
அதினுடையகிளைகளின் நிழலிலே வசிக்கும்.—
௨௪ அதினால் யெகோவாவாகிய நான் உயர்ந்த
மரத்தைத்தாழ்த்தி, தாழ்ந்தமரத்தை உயர்த்தினே
னென்றும், நான் பசுமையானமரத்தை வாடப்
பண்ணி, வாடினமரத்தைச் செழிப்பாக்கினே
னென்றும், வெளியிலுள்ள விருட்சங்களெல்லா
வற்றிற்குந் தெரியவரும்: யெகோவாவாகி
ய நானே வசனித்தேன், இதை நிறைவேற்று
வேனென்பதைச் சொல்லச்சொல்லிற்று.

## ௰௮. அதிகாரம்.

௧. திராட்சக்காய்களை உவமித்தல்: ௫. நீதியுள்ள பிதாவைத் தேவன் நடத்தும் முறைமை: ௰. துன்மார்க்க பிதாவின் துன்மார்க்க புத்திரனைத் தேவன் நடத்துந்தன்மை: ௰௪. துன்மார்க்க பிதாவின் சன்மார்க்கபுத்திரனைத் தேவன் நடத்தும்முறைமை: ௰௯. மனந்திரும்பும் பாவியையும்நீதிதவறும்நீதிமானையுந் தேவன் நடத்தும் முறைமை: ௨௫. யெகோவா நியாயஞ் செய்தல்: மனந்திரும்பும்படி சனங்களை ஏவல்.

பின்பு யெகோவாவின் வாக்கு என்னிடத்
௨ தில்,-இஸ்ரவேல்தேசத்தைக்குறித்து, பிதாக்கள்
திராட்சக் காய்களைத்தின்றார்கள், பிள்ளைகளின்
பற்கள் கூசுகின்றனவென்னும் இந்தப்பழமொ
ழியைச் சொல்லுகிறதென்ன.—நான் நித்தியரா ௩
னால், நீங்கள் இனி இஸ்ரவேலில் இந்தப்பழ
மொழியைச் சொல்லமாட்டீர்களென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறார்.—பா ௪
ருங்கள், எல்லா ஆத்துமாக்களும் என்னுடைய
வைகள்; பிதாவின்ஆத்துமம்என்னுடையதுபோ
ல, புத்திரனுடையஆத்துமாவும் என்னுடையது:
பாவஞ்செய்யும் ஆத்துமாவே மரணமடையும்.
ஒருவன் நீதிமானாகி, நியாயத்தையும் நீதியை ௫
யுஞ்செய்து,—மலைகளின்மேல் போசனம்பண் ௬
ணாதவனும்,இஸ்ரவேல்வமிசத்தாரின்விக்கிரகங்
களிடத்தில் கண்களை ஏறிடாதவனும், தன்அய
லானுடையமனைவியை அசுசிப்படுத்தாதவனும்,
ருதுவதியைச் சேராதவனும்,—ஒருவரையும் உ ௭
பத்திரவப்படுத்தாதவனும், கடன்காரனுக்கு ஈட்
டைத் திரும்பக்கொடுத்தவனும், எவனுடைய
பொருளையாயினுங் கொடுமையாய்க் கவராதவ
னும், பசியுள்ளவனுக்குஅன்னமும் நிருவாணிக்
குவஸ்திரமுங் கொடுத்தவனும்,—அநியாயவட் ௮
டிக்குப்பணங்கொடாதவனும், அநியாயவட்டி
யைவாங்காதவனும், அநியாயத்திற்குத் தன்கை
யைவிலக்கி மனிதருக்குள் உண்மையானதீர்ப்
புச்செய்தவனுமாகி,—என்விதிகளின்படி நடந் ௯
து, என்கட்டளைகளைக்காத்து,உண்மையாயிருப்
பானாகில் அவனே நீதிமான்; அவனே சீவிப்
பானென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறார்.
இவன் பெற்றபுத்திரன் இப்படிப்பட்ட கா ௰
ரியங்களில் ஒன்றையுஞ்செய்யாமல் திருடுகி
றவனும், இரத்தஞ் சிந்துகிறவனுமாகி,—இப்ப ௰௧
டிப்பட்டவைகளைச்செய்வதுமன்றி,மலைகளின்
மேல்போசனம்பண்ணி, தன்அயலானுடைய ம
னைவியைஅசுசிப்படுத்தி,—தரித்திரரையுந்திக்கற் ௰௨
றவர்களையும் உபத்திரவப்படுத்தி, கொடுமையி
னால் பொருளைக்கவர்ந்து, ஈட்டைத் திரும்பக்
கொடாமல், விக்கிரகங்களிடத்தில் தன்கண்க
ளை ஏறிட்டு, அரோசியமானதைச்செய்து,—அநி ௰௩
யாயவட்டிக்குக்கடன்கொடுத்து, அநியாயவட்
டி வாங்குவானாகில் அவன் சீவிப்பானா; சீவி
யான்: இந்த அரோசியமானவைகளை எல்லாஞ்
செய்ததினால் அவன்மரிப்பானே; அவன் இரத்
தப்பழி அவன்மேல்தங்கும்.
இன்னும், பாருங்கள், இவன்பெறும்புத்திரன் ௰௪
தன்பிதாசெய்த சகல பாவங்களையுங்கண்டு உற்
றுணர்ந்து, அவைகளின்படிசெய்யாமலும்,—ம ௰௫
லைகளின்மேல் போசனம்பண்ணாமலும், இஸ்ர
வேல்வமிசத்தாரின் விக்கிரகங்களிடத்தில் தன்
கண்களைஏறிடாமலும்,தன்அயலானுடையமனை

(௨௰) அதி.௰௨.௰௩. அதி.௨௰.௩௬. (௨௧) அதி.௰௨.௰௪. (௨௨) எசா.௰௧.௧. எரே.௨௩.௫. சக.௩.௮. எசா.௫௩.௨. சங்.௨.௬. (௨௩) எசா.௨.௨,௩. மீகா.௪.௧. அதி.௩௧.௬. தானி.௪.௰௨. (௨௪) லூக்.௧.௫௨. அதி.௨௨.௰௪.—(௰௮. அதி ௨.) எரே.௩௧.௨௯. புல.௫.௭. (௪) ரோ.௬.௨௩. (௬) அதி.௨௨.௯. லேவி.௰௮.௨௰. லேவி.௨௰.௰௮. (௭) யாத்.௨௨.௨௧, ௨௬. லேவி.௨௫.௰௪. உபா.௨௪.௰௨,௰௩. உபா.௰௫.௭,௮. எசா.௫௮.௭. மத்.௨௫.௩௫,௩௬. (௮) யாத்.௨௨.௨௫. லேவி.௨௫.௩௬,௩௭. உபா.௨௩.௰௯. நிகி.௫.௭. சங்.௰௫.௫. உபா.௧.௰௬. சக.௮.௰௬. (௯) ஆமோ.௫.௪. (௰௧) ஆதி.௯.௬. யாத்.௨௧.௰௨. எண்.௩௫.௩௧. (௰௨) அதி.௮.௬,௰௭. (௰௩) லேவி.௨௰.௯,௰௧,௰௨. அப்.௰௮.௬.

௰௬ வியைஅசுசிப்படுத்தாமலும்,-ஒருவரையும் உபத்
திரவப்படுத்தாமலும், ஈட்டைவைத்திருக்காமலு
ம்,கொடுமையினால் பொருளைக்கவராமலும்,பசி
யுள்ளவனுக்கு அன்னத்தைக்கொடுத்து, நிருவா
௰௭ ணிக்குவஸ்திரத்தைத் தரிப்பித்து,-தரித்திரன்மே
ல்கைவைத்து உபத்திரவஞ் செய்யாமலும், அநி
யாயவட்டிவாசியைவாங்காமலும்,என்கட்டளை
களைக்காத்து,என்விதிகளின்படி நடப்பானாகில்
அவன் தன்பிதாவின்அக்கிரமத்தினிமித்தம்மரிப்
௰௮ பதில்லை,அவன்சீவிப்பானே.-அவன்பிதாவோ,
கொடுமையாய் உபத்திரவப்படுத்தி, கொடுமை
யினால் தன்சகோதரனுடைய பொருளைக்கவர்ந்
து, தன்சனங்களுக்குள் நன்மைசெய்யாமலிருந்
தபடியால் அவன்தன் அக்கிரமத்திலேமரிப்பான்.
௰௯ இதென்ன, புத்திரன் தன்பிதாவின்அக்கிரமத்
தைஅனுபவிக்கிறதில்லையாவென்று சொல்லுகி
றீர்கள்; புத்திரன் நியாயத்தையும் நீதியையுஞ்
செய்து, என் விதிகளெல்லாவற்றையுங்காத்து,
அவைகளின்படிநடந்தால்அவன்சீவிப்பானே.-
௨௰ பாவஞ்செய்யும் ஆத்துமாவே மரணமடையும்.
புத்திரன் பிதாவின்அக்கிரமத்தைச் சுமக்கமாட்
டான், பிதா தன்புத்திரனுடைய அக்கிரமத்தைச்
சுமக்கமாட்டான்: நீதிமான் தன்நீதியை அனுப
விப்பான்,தீயன்தன்தீமையைஅனுபவிப்பான்.-
௨௧ துன்மார்க்கன் தான்செய்த எல்லாப்பாவங்களை
யும்விட்டுத்திரும்பி, என்சகலவிதிகளையுங்கைக்
கொண்டு, நியாயத்தையும் நீதியையுஞ்செய்வா
னாகில் அவன்சீவிப்பானே, அவன்மரணமடை
௨௨ யான்.—அவன் கட்டளைமீறிச்செய்ததோஷங்க
ளில்ஒன்றும்அவனுக்குச்சொல்லப்படமாட்டா
து: அவன் தான்செய்தநீதியினால்சீவிப்பான்.—
௨௩ துன்மார்க்கன் மரிப்பது எனக்குப்பிரியமா; அ
வன் தன்துன்னெறியைவிட்டுச்சீவிப்பதல்லவா
எனக்குப்பிரியமென்று ஆண்டவராகியயெ
கோவா சொல்லுகிறார்.
௨௪ நீதிமான்தன்நீதியைவிட்டுவிலகி, அக்கிரமத்
தைச்செய்து, துன்மார்க்கன்செய்கிறசகலஅரோ
சியமானவைகளின்படிக்குஞ்செய்வானாகில், சீ
விப்பானா, அவன்செய்த நீதி ஒன்றும் எண்ணப்
படுவதில்லை: அவன் தான்கட்டளைமீறுதலாகிய
தன் அக்கிரமத்திலுந்தான்செய்ததன்பாவத்திலும்
மரிப்பான்.
௨௫ ஆயினும் நீங்கள் ஆண்டவரின் நெறி நேர்
மையல்லவென்றுசொல்லுகிறீர்கள். இஸரவேல்
வமிசத்தாரே,கேளுங்கள்; என்நெறிநேர்மையுள்
ளதல்லவா, உங்கள் நெறியல்லவோநேர்மையற்
௨௬ றது.—நீதிமான்தன் நீதியைவிட்டுவிலகி, அக்கி
ரமத்தைச்செய்து அதினால் மரிக்கும்பொழுது,
தான்செய்த தன் பாவத்தினிமித்தம் மரிப்பான்.-
துன்மார்க்கன்தான்செய்துவந்ததீமையைவிட்டு, ௨௭
நியாயத்தையும் நீதியையுஞ்செய்வானாகில், தன்
ஆத்துமாவை இரட்சித்துக்கொள்ளுவான்.—அ ௨௮
வன் உற்றுணர்ந்து, தான்கட்டளைமீறிச்செய்த
எல்லாஅக்கிரமங்களையும்விட்டுத்திரும்புகிறபடி
யால் சீவிப்பானே, அவன்மரிப்பதில்லை.—ஆயி ௨௯
னும் இஸரவேல்வமிசத்தார் ஆண்டவருடை
ய நெறிநேர்மையல்லவென்றுசொல்லுகிறார்கள்.
இஸரவேல்வமிசத்தாரே, என்நெறிகள் நேர்மை
யுள்ளவைகளல்லவா; உங்கள் நெறிகளல்லவா
நேர்மையற்றவைகள்.—ஆதலால் இஸரவேல்வ ௩௰
மிசத்தாரே, நான் உங்களுங்கள்நெறிகளின்படி
உங்களை நியாயம்விசாரிப்பேனென்று ஆண்ட
வராகியயெகோவாசொல்லுகிறார்.நீங்கள்
மனந்திரும்புங்கள், உங்களுங்கள் எல்லா அதிக்
கிரமங்களையும் விட்டுத்திரும்புங்கள்; அப்பொ
ழுது உங்கள் அக்கிரமம் உங்கள்கேட்டுக்குக்கா
ரணமாயிருக்கமாட்டாது.
நீங்கள்கட்டளைமீறிச்செய்த உங்கள் சகல அ ௩௧
திக்கிரமங்களையும் உங்களுக்குவிலக்கி, உங்க
ளுக்காகப் புதுஇருதயத்தையும் புதுஆவியையும்
உண்டுபண்ணுங்கள்: இஸரவேல்வமிசத்தாரே,
நீங்கள் மரிக்கவேண்டியதென்ன.—மரிக்கிறவ ௩௨
னுடையமரணத்தினால் எனக்குப்பிரியமில்லை,
ஆதலால் நீங்கள் திரும்பிச்சீவிப்பீர்களாகவென்
று ஆண்டவராகியயெகோவா சொல்லு
கிறார்.

## ௰௯. அதிகாரம்.

௧. சிங்கக்குட்டிகளை உவமித்துஇஸரவேலின்பி
ரபுகளினிமித்தம் புலம்பல்: ௰. திராட்சக்கொ
டியை உவமித்தல்.

மேலும் நீ இஸரவேலின் பிரபுகளைக் குறித்துப் ௧
புலம்பி, இவ்வாக்கைச் சொல்லு.-உன் மா ௨
தா எவ்விதமானவள், ஒரு பெண்சிங்கம்: அவள்
சிங்கங்களுக்குள்ளேபடுத்து, இளஞ் சிங்கங்க
ளுக்குள் தன் குட்டிகளைவளர்த்தாள்.—பின்புஅ ௩
வள்குட்டிகளிலொன்றைவளர்க்க அவன்இளஞ்
சிங்கமாகி, இரைகவரப்பழகி, மனிதரைபட்சித்
தான்.-புறச்சாதியாரும் அவனைக்குறித்துக்கேள் ௪
விப்பட்டார்கள்; அவன் அவர்கள்குழியிலே அ
கப்பட்டான்,அவனைச்சங்கிலிகளினாலேகட்டி,
எகிப்துதேசத்திற்குக் கொண்டுபோனார்கள்.—
பெண்சிங்கங்காத்து, தன்நம்பிக்கைவிருதா ௫
வென்றுகண்டு,தன்குட்டிகளில்வேறொன்றைத்
தெரிந்து, அவனை இளஞ்சிங்கமாக்கினாள்.-அவ ௬
னும் இளஞ்சிங்கமாகிச்சிங்கங்களோடே அங்கு
மிங்குந்திரிந்து, இரைகவரப்பழகி,மனுஷரைப்
பட்சித்தான்.-அவர்களுடையபாழ்அரமனைகளை ௭
அறிந்து, அவர்கள்நகரங்களைப்பாழாக்கினான்;அ

(௰௮) அதி.௩.௰௮. (௰௯) யாத்.௨௰.௫. உபா.௫.௯. ௨.இரா.௨௩.௨௬. (௨௰) வச.௪. உபா.௨௪.௰௬. ௨.இரா.௰௪.௬. ௨.நாளா.௨௫.௪. எரே.௩௧.௨௯,௩௰. எசா.௩.௰,௰௧. ரோ.௨.௯.(௨௧)வச.௨௭. அதி.௩௩.௰௨,௰௯. (௨௨) அதி.௩௩.௰௬. (௨௩) ௧.தீமோ.௨.௪. ௨.பேதுரு.௩.௯.(௨௪)அதி.௩.௨௰. ௨.பேதுரு.௨.௨௰.(௨௫)அதி.௩௩.௰௭,௨௰.(௨௬)வச.௨௪. (௨௭) வச.௨௧.(௨௮)வச.௰௪. (௨௯) வச.௨௫. (௩௰) அதி.௩௩.௨௰. மத்.௩.௨. வெளி.௨.௫.(௩௧)எபே.௪.௨௨,௨௩. எரே.௩௨.௩௯.(௩௨)புல.௩.௩௩. அதி.௩௩.௰௧. ௨.பேதுரு.௩.௯.—(௰௯.அதி.௧.) அதி.௨௬.௰௭. (௩) ௨.இரா.௨௩.௩௧, ௩௨.(௪)௨.இரா.௨௩.௩௩. ௨.நாளா.௩௬.௪. எரே.௨௨.௰௧,௰௨. (௫) ௨.இரா.௨௩.௩௪.(௬)எரே.௨௨.௰௩—௰௭. வச.௩.

வன் கருச்சிக்குஞ் சத்தத்தினாலே தேசம் அதின்
௮ பூரணத்தொடு வெறுமையாயிற்று.-அப்பொழுது
புறச்சாதியார்சுற்றிலுமுள்ள நாடுகளிலிருந்து அ
வனுக்கு விரோதமாய்வந்து, அவன்மேல் தங்கள்
வலையைவீச, அவன்அவர்கள்குழியில்அகப்பட்
௯ டான்.-அதினால்சனங்கள்சங்கிலிகளைமாட்டி,ஒ
ருகூட்டில் உட்படுத்தி, பாபேல் இராசாவிடத்
தில் கொண்டுபோனார்கள்: இஸரவேலின் மலை
கள்மேல் அவன் கருச்சிப்புமினிக்கேளாதபடி,
அரணான இடங்களில் அவனை அடைத்தார்கள்.
௰ நீ அமைதியாயிருக்கையில்உன்மாதா நீரருகே
நடப்பட்ட ஒரு திராட்சக்கொடிக்கொப்பான
வள்: சலமிகுதியினால் அது மிகவுங்கிளைத்துக் க
௰௧ னிதந்தது.-அரசாளுகிறவர்களுடைய செங்கோ
லுக்கேற்ற பலத்தகொம்புகள் அதிலிருந்தன, அ
தின்வளர்த்தி நெருங்கிய கிளைகளுக்குள் உயர
ஓங்கி, மிகுதியான கிளைகளுக்குள்ளே மேலாகத்
௰௨ தோன்றிற்று.-ஆனாலும் அது உக்கிரத்தினாலே பி
டுங்கப்பட்டுத்தரையிலே தள்ளப்பட்டது, கீழ்க்
காற்றினால் அதின்பழம் காய்ந்து போயிற்று: அ
தின் திடமானகொம்புகள் முறிந்து காய்ந்துபோ
௰௩ யின; அக்கினி அவைகளைப்பட்சித்தது.—இப்
பொழுது அதுவனத்திலே நீரில்லாமல் வறண்ட
௰௪ நிலத்தில் நடப்பட்டிருக்கின்றது.—அதின் கிளை
யிலுள்ள ஒருகொம்பினின்று அக்கினி புறப்பட்
டு அதின்கனிகளை நாசப்படுத்திற்று, அரசாளுஞ்
செங்கோலுக்கேற்ற ஒருதிடமானகொம்பு இனி
அதிலேயில்லை. இதுவேபுலம்பல், புலம்பலே
யாகுமென்றுசொல்லிற்று.

## ௨௰. அதிகாரம்.

௧. இஸரவேலின்முதியோர் தம்மிடத்தில்உசாவு
வதற்கு யெகோவா இடங்கொடாமல் மறுத்
தல்: ௪. அவர்கள் எகிப்தில் கட்டளைமீறல்: ௰.
வனத்திலேகட்டளைமீறல்:௨௭.தேசத்திலேகட்
டளைமீறல்:௩௩. சுயதேசத்தில்ஏகமாய்க்கூடல்.

ஏழாம்வருஷம் ஐந்தாம் மாதம் பத்தாந் தினத்
தில், இஸரவேலின் முதியோர் சிலர் யெகோ
வாவிடத்தில் உசாவுகிறதற்குவந்து, எனக்
௨ குமுன்னாகஉட்காந்தார்கள்.—அப்பொழுது யெ
௩ கோவாவின் வாக்கு என்னிடத்தில்,—மனு
புத்திரனே, நீ இஸரவேலின் முதியோருடனே
பேசி, அவர்களைநோக்கி, நீங்கள் என்னிடத்தில்
உசாவுகிறதற்கு வந்தீர்களாவென்று ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறார்; நான்
நித்தியரானால் நீங்கள் என்னிடத்தில் உசாவவி
டேனென்று ஆண்டவராகிய யெகோவா
௪ சொல்லுகிறார்.—மனுபுத்திரனே, நீ அவர்களுக்
காகப் பரிந்துபேசுவாயா, பரிந்துபேசுவாயா;
நீ அவர்கள்முன்னோரின் அரோசியமானவைக
ளை அவர்களுக்குத்தெரிவிப்பாயாக, நீ அவர்க
ளிடத்தில் இவ்வாக்கைச்சொல்லு.
நான் இஸரவேலைத்தெரிந்துகொண்டு, யாக் ௫
கோபுவமிசத்துச்சனங்களுக்குக் கையெடுத்து, எ
கிப்துதேசத்தில் என்னை அவர்களுக்குவெளிப்
படுத்தியநாளில், நான் உங்கள் தேவனாகிய
யெகோவாவென்றுசொல்லி அவர்களுக்குக்
கையெடுத்தேனென்று ஆண்டவராகியயெ
கோவா சொல்லுகிறார்.—நான் அவர்களைஎகிப் ௬
துதேசத்தினின்று புறப்படுத்தி, பாலுந்தேனும்
பெருகுகிற தேசமாகிய சகலதேசங்களிலும் மகி
மையுள்ள ஒருதேசத்தைத்தெரிந்து, அதில் அ
ழைத்துப் போவேனென்று நான் அவர்களிடத்
தில்ஆணையிட்டநாளில்,—அவர்களைநோக்கி, நீங் ௭
களனைவரும் உங்களுங்கள்கண்கண்ட அரோசி
யமானவைகளைத்தள்ளுங்கள், எகிப்தின்விக்கிர
கங்களால் உங்களைஅசுசிப்படுத்தாதிருங்கள்; நா
னேஉங்கள் தேவனாகியயெகோவாவென்
றேன்.—அவர்களோஎன்வாக்குக்குச்செவிகொ ௮
டுக்கவிரும்பாமல், என்கட்டளையைமீறினார்கள்:
அவர்கள்யாவருந் தங்கள் தங்கள் கண்களுக்கு
வெறுக்கப்படத்தக்கவைகளைத் தள்ளாமலும், எ
கிப்தின்விக்கிரகங்களைவிட்டு நீங்காமலும் இருந்
தார்கள்: அப்பொழுது நான் எகிப்துதேசத்தின்
மத்தியில் அவர்களுக்குவிரோதமாய் என்கோபத்
தை நிறைவேற்றும்படி, அவர்கள்மேல் என் உக்
கிரத்தைச் சொரியப்பண்ணுவேனென்றேன்.—
ஆகிலும் இவர்களை எகிப்து தேசத்தினின்று பு ௯
றப்படுத்தினதினால், இவர்களிருந்த தேசத்தாருக்
குள்என்னைவெளிப்படுத்தப்பட்ட அந்நியருக்கு
முன் என்நாமம் அசுத்தப்படாதபடி நான் கிரு
பைசெய்தேன்.
ஆதலால் நான்இவர்களைஎகிப்துதேசத்தினின் ௰
று புறப்படச்செய்து, வனத்திலே கொண்டுவந்
தேன்.-நான்என்விதிகளைஇவர்களுக்குக்கொடுத் ௰௧
தேன், என்கட்டளைகளைஇவர்களுக்குத்தெரிவித்
தேன், அவைகளின்படிசெய்யும் எந்தமனுஷ
னுஞ் சீவிப்பானே.—மேலும் நான் தங்களைப்பரி ௰௨
சுத்தம்பண்ணுகிறயெகோவாவென்று இவர்
கள் அறியும்பொருட்டு, இவர்களுக்கும்எனக்கும்
நடுவே அடையாளமாகஎன்ஓய்வுநாள்களை ஏற்ப
டுத்தினேன்.-ஆனாலும் இஸரவேல்வமிசத்தார் வ ௰௩
னத்தில் எனக்குவிரோதமாய்க்கட்டளைமீறினார்
கள்: இவர்கள்என்விதிகளின்படிநடக்கவில்லை,
அமைந்துநடக்கிறமனிதனைச்சீவிப்பிக்கும் என்

(௮) ௨.இரா.௨௪.௨. (௯) ௨.நாளா.௩௬.௬. எரே.௨௨.௰௮. (௰) அதி.௰௭.௬. உபா.௮.௭,௮,௯. (௰௧) அதி.௩௧.௩. தானி.௪.௰௧. (௰௨) அதி.௰௭.௰. ஓசி.௰௩.௰௫. (௰௪)நியா.௯.௰௫. ௨.இரா.௨௪.௨௰. புல.௪.௨௰.—(௨௰. அதி. ௧.)அதி. ௮.௧. (௩) அதி.௰௪.௩. (௪) அதி.௨௨.௨. அதி.௰௬.௨. (௫) யாத்.௬.௭. உபா.௭.௬. யாத்.௬.௮. யாத்.௩.௮. உபா.௪.௩௪. யாத்.௨௰.௨. (௬) யாத்.௩.௮,௰௭. உபா.௮.௭,௮,௯. எரே.௩௨.௨௨. சங்.௪௮.௨. தானி.௮.௯. ௪௧.௭.௰௪. (௭) ௨.நாளா.௰௫.௮. லேவி.௰௭.௭. உபா.௨௯.௰௬.,௰௭,௰௮. யோசு.௨௪.௰௪. (௯) யாத்.௩௨.௰௨. எண்.௰௪.௰௩,. உபா. ௯.௨௭. அதி.௩௬.௨௧,௨௨. (௰) யாத்.௰௩.௰௭. (௰௧) உபா.௪.௮. நெகி.௯.௰௩,௰௪. சங்.௱௪௭.௰௯,௨௰. லேவி.௰௮.௫. ரோ.௰.௫. கலா.௩.௰௨. (௰௨) யாத்.௨௰.௮. உபா.௫.௰௨. நெகி.௯.௰௪. (௰௩) எண்.௰௪.௨௨. நீதி.௧.௨௫. யாத்.௰௬. ௨௭. எண்.௰௪,௨௯. சங்.௱௬.௨௩.

கட்டளைகளை அவர்கள் அவமதித்தார்கள்; நான்
ஏற்படுத்தியஓய்வுநாள்களை மிகவும்அசுசிப்படுத்
தினார்கள்: அதினால் நான் அவர்களைவனத்திலே
நாசப்படுத்தும்படி என் உக்கிரத்தை அவர்கள்
௰௪ மேல் சொரியப்பண்ணுவேனென்றேன்.—ஆயி
னும் நான் அவர்களைப்புறப்படுத்தக்கண்ட அந்
நியதேசத்தாருக்குமுன்பாக என்நாமம் அசுத்தப்
௰௫ படாதபடிகிருபைசெய்தேன்.-அவர்கள்,தங்கள்
மனந் தங்கள் விக்கிரகங்களைப் பின்பற்றினபடி
யால் என்விதிகளின்படிநடவாமல், என்கட்ட
ளைகளைஅவமதித்து,என்ஓய்வுநாள்களைஅசுசிப்ப
௰௬ டுத்தினார்கள்;—ஆதலால்நான்வாக்குத்தத்தம்பண்
ணினதும், பாலுந்தேனும் பெருகுகிறதும், சகல
தேசங்களிலும் மகிமையுள்ளதுமாகிய தேசத்தில்
அவர்களைக்கொண்டுவரேனென்று வனத்தில் அ
௰௭ வர்களுக்குக்கையெடுத்தேன்.-ஆயினும் அவர்க
ளைஅழிக்காமல் என்கண்அவர்களைக்கடாட்சித்த
து,நான்அவர்களைவனத்திலேநிர்மூலமாக்கவில்
௰௮ லை.-வனத்திலே நான் அவர்களுடைய பிள்ளைக
ளைநோக்கி, நீங்கள் உங்கள் பிதாக்களின் விதிக
ளின்படிநடக்கவேண்டாம், அவர்களுடைய நி
யாயங்களைக்கைக்கொள்ளாதிருங்கள், அவர்களு
டையவிக்கிரகங்களினால் உங்களை அசுசிப்படுத்
௰௯ தாதிருங்கள்.—நானே உங்கள் தேவனாகிய
யெகோவா; நீங்கள்என்விதிகளின்படிநடந்
து, என் நியாயங்களைக்காத்து, அவைகளின்படி
௨௰ செய்து,—என் ஓய்வுநாள்களைப் பரிசுத்தப்படுத்
துங்கள்; நான்உங்கள் தேவனாகிய யெகோ
வாவென்று நீங்கள்அறியும்பொருட்டு, அவை
கள்எனக்கும் உங்களுக்கும்நடுவே ஒருஅடையா
௨௧ ளமாயிருக்கின்றனவென்றேன்.—ஆனாலும் பிள்
ளைகளும்எனக்குவிரோதமாய்க்கட்டளைமீறினார்
கள்: அவர்கள் என்விதிகளின்படி நடக்கவில்
லை, அமைந்துநடக்கிறமனிதனைச் சீவிப்பிக்கிற
என் கட்டளைகளைக் கைக்கொண்டுஅவைகளின்
படிசெய்யாமல் என் ஓய்வுநாள்களை அசுத்தப்ப
டுத்தினார்கள்: ஆதலால் நான் வனத்தில் அவர்க
ளுக்குவிரோதமாக என் கோபத்தை நிறைவேற்
றும்படி அவர்கள்மேல் என் உக்கிரத்தைச்சொரி
௨௨ யப்பண்ணுவேனென்றேன்.-ஆகிலும் நான்என்
கையைத்தடுத்து,அந்நியதேசத்தாருக்குமுன்பாக
என் நாமம்அசுத்தமாகாதபடிகிருபைசெய்தேன்,
அவர்கள்காணநான் அவர்களைப்புறப்படச்செய்
௨௩ தேன்.—அவர்கள் என்னுடைய கட்டளைகளைக்
கைக்கொள்ளாமல் என்விதிகளை அவமதித்து,
என் ஓய்வுநாள்களை அசுத்தப்படுத்தி, தங்கள்தங்
கள் பிதாக்களின் விக்கிரகங்களின்மேல் கண்
௨௪ வைத்தபடியினால்,—நான்அவர்களைப் புறச்சாதி
யாருக்குள்ளே சிதற அடித்துத்தேசங்களிலே அ
வர்களைத் தூற்றிவிடுவேனென்று வனத்தில் அ
வர்களுக்குக் கைஎடுத்தேன்.-ஆதலால் நன்மை ௨௫
தராதவிதிகளையும், அவர்கள் சீவிக்கிறதற்கேது
வல்லாத நியாயங்களையும் நான்அவர்களுக்கு ஒப்
பித்தேன்.—அவர்கள், நானே யெகோவாவ ௨௬
வென்று அறிவதற்கேதுவாகத்தங்களை நான் வெ
றுமையாக்கும்படி,தங்கள் முதற்பேறெல்லாவற்
றையும் அக்கினியில் செல்லப்பண்ணினதினி
மித்தம், நான் அவர்களுடைய காணிக்கைகளி
னால் அவர்களை அசுசிப்படுத்தினேன்.
ஆதலால் மனுபுத்திரனே, நீ இஸ்ரவேலின்வ ௨௭
மிசத்தாருடன்பேசி, அவர்களைநோக்கி, உங்கள்
முன்னோர் எனக்குவிரோதமாக என்கட்டளை
யைமீறி என்னைத்தூஷணித்தார்களென்று ஆண்
டவராகிய யெகோவாசொல்லுகிறாரென்
பதைச்சொல்லு.—அவர்களுக்களிப்பேனென்று ௨௮
நான்அவர்களுக்குஆணையிட்டதேசத்தில்அவர்க
ளைப்பிரவேசிக்கச்செய்தபின்பு, அவர்கள் ஒவ்
வொரு உயர்ந்தகுன்றையும்நெருங்கிய எல்லாம
ரங்களையுங்கண்டு, அங்கே தங்கள்பலிகளைச்செ
லுத்தி,என்னைக்கோபப்படுத்தும்நைவேத்தியங்க
ளைப்படைத்தார்கள்:அங்கேசுகந்தத்திரவியங்களை
ஆயத்தப்படுத்தினார்கள், அங்கேயும் பானபலிக
ளைச்சொரிந்தார்கள்.—அப்பொழுது நான்அவர்க ௨௯
ளைநோக்கி,நீங்கள்போகிறஉயர்ந்தஸ்தானமென்
னவென்றேன்; இந்நாள்வரைக்கும் பாமாவென்
னும்பெயர் அதற்கு வழங்கிவருகின்றது.—ஆத ௩௰
லால் நீ இஸ்ரவேல்வமிசத்தாரைநோக்கி, இஸ்ர
வேல்வமிசத்தாரே, நீங்கள் உங்கள் முன்னோ
ரைப்போல அசுசியானீர்களா, அவர்களுடைய
அரோசியமானவைகளின்படிநீங்களுஞ்சோரம்
போகிறீர்களாவென்று ஆண்டவராகிய யெ
கோவா சொல்லுகிறார்.—நீங்கள்உங்கள்புத்தி ௩௧
ரரை அக்கினிக்கூடாகச்செல்லப்பண்ணி, உங்
கள்காணிக்கைகளைச் செலுத்தும்பொழுது, உங்
கள் சகலவிக்கிரகங்களினாலும் உங்களை இந்நாள்
வரைக்கும் அசுசிப்படுத்துகிறீர்கள்: நீங்கள் என்
னிடத்தில் உசாவவிடுவேனா; நான் நித்தியரா
னால் நீங்கள் என்னிடத்தில் உசாவவிடேனென்
று ஆண்டவராகிய யெகோவா சொல்லு
கிறார்.—மரத்தையுங்கல்லையுஞ்சேவித்து,தேசங்க ௩௨
ளிலுள்ளவமிசத்தாராகிய புறச்சாதியாரைப்போ
லிருப்போமென்று உங்கள்சிந்தையில்கொண்ட
படிநீங்கள்சொல்லுவதுஒருபொழுதும்நடவாது.
நான்நித்தியரானால் நான் திடமானகையினா ௩௩
லும், ஓங்கியபுயத்தினாலும், சொரிந்தகோபத்தி
னாலும் உங்களை அரசாளுவேனென்று ஆண்ட
வராகிய யெகோவா சொல்லுகிறார்.-நான் ௩௪
உங்களைச் சனக்கூட்டத்தினின்று புறப்படுத்து
வேன், நீங்கள் சிதற அடிக்கப்பட்ட தேசங்களி
னின்று திடமானகையினாலும்,ஓங்கியபுயத்தினா

(௰௪) வச.௯.௨௨. (௰௫) எண்.௰௪.௨௮. (௰௬) எண்.௰௫.௩௯. ஆமோ.௫.௨௫,௨௬. அப்.௭.௪௨,௪௩. (௰௭) சங்.௭௮.௩௮. (௰௮) உபா.௫.௩௨,௩௩. (௨௰) எரே.௰௭.௨௨. (௨௧) எண்.௨௫.௧,௨. உபா.௯.௨௩.௨௪. வச.௰௧,௰௩. (௨௨) சங்.௭௮.௩௮. (௨௪) லேவி.௨௬.௩௩. உபா.௨௮.௬௪. சங்.௱௬.௨௭. எரே.௰௫.௪. (௨௫) சங்.௮௧.௰௩. ரோ.௧.௨௪. ௨.தெச.௨.௰௧. (௨௬) ௨.இரா.௰௭.௰௭. ௨.நாளா.௨௮.௩. எரே.௩௨.௩௫. அதி.௬.௭. (௨௭) ரோ.௨.௨௪. (௨௮) ஏசா.௫௭.௫,. அதி.௰௬.௰௯. (௩௧) வச.௨௬. (௩௨) அதி.௰௧.௫. (௩௩) எரே.௨௧.௫.

லும், சொரிந்தகோபத்தினாலும் உங்களைச்சேர்த்
ஙரு துக்கொள்ளுவேன்.—சனங்களின்வனத்தில் உங்
களைக்கொண்டுவந்து, அங்கேமுகமுகமாய் உங்
ஙசு களைவிசாரிப்பேன்.—நான் எகிப்துதேசத்தின் வ
னத்தில் உங்கள்முன்னோரை விசாரித்ததுபோல
ஙஎ உங்களையும்விசாரிப்பேன்.-நான் உங்களைக்கோ
லின்கீழ்ச் செல்லப்பண்ணி, உடன்படிக்கை
யின்பந்தனத்தில் உங்களை உட்படுத்துவேன்.—
ஙஅ என் கட்டளைக்கமையாதவர்களையும் எனக்குவி
ரோதமாய்க்கட்டளையை மீறுகிறவர்களையும்உங்
களினின்று அகற்றுவேன்: அவர்கள்தங்குந்தே
சத்தினின்று அவர்களைப் புறப்படுத்துவேன், ஆ
னாலும் அவர்கள்இஸ்ரவேலின்தேசத்தில்பிரவே
சிக்கமாட்டார்கள்: இதினால் நானே யெகோ
வாவென்று நீங்கள் அறிந்துகொள்வீர்களென்ப
தை ஆண்டவராகிய யெகோவா சொல்
ஙகூ லுகிறார்.-இப்பொழுது இஸ்ரவேல்வமிசத்தாரே,
நீங்கள் எனக்குச்செவிகொடாமலிருந்தால் நீங்
கள்போய் உங்களுங்கள் விக்கிரகங்களைச்சேவி
யுங்கள்: ஆனாலும் உங்கள் காணிக்கைகளினா
லும், உங்கள்விக்கிரகங்களினாலும் என்பரிசுத்
தநாமத்தை இனி ஒருபொழுதும் அசுத்தப்படுத்
தாதிருங்களென்று தேவனாகிய யெகோவா
சய சொல்லுகிறார்.-இஸ்ரவேலின் உயர்ந்தமலையாகி
ய என்பரிசுத்தமலையிலே தேசத்திலுள்ள சமஸ்த
சனங்களாகிய இஸ்ரவேல் வமிசத்தாரனைவரும்
என்னைச்சேவிப்பார்களென்று ஆண்டவராகி
ய யெகோவா சொல்லுகிறார்: அங்கேநான் அ
வர்களை அங்கிகரிப்பேன், உங்கள்நைவேத்தியங்
களையும், உங்கள் முதற்பலனாகிய காணிக்கைக
ளையும், உங்கள் பரிசுத்தமான சகலவஸ்துக்களை
சக யும் ஒப்பிக்கச்சொல்வேன்.—நான் சாதியாரி
னின்று உங்களைக்கொண்டுவந்து, நீங்கள் சித
றஅடிக்கப்பட்ட தேசங்களிலிருந்து உங்களைச்
சேர்க்குங்காலத்தில் சுகந்ததிரவியத்தைப்போல
உங்களை அங்கிகரிப்பேன், உங்களால்புறச்சா
தியாருக்குமுன்பாக நான் பரிசுத்தமாக்கப்படு
சஉ வேன்.—உங்கள்பிதாக்களுக்கு அளிப்பேனென்
று நான் ஆணையிட்ட தேசமாகிய இஸ்ரவே
லின்தேசத்தில் உங்களைக்கொண்டுவரும்பொழு
து, நான் யெகோவாவென்று நீங்கள் அறிந்
சங துகொள்வீர்கள்.-அங்கே உங்கள் நெறிகளையும்,
உங்களை அசுசிப்படுத்திய உங்கள்சகலகிரியைக
ளையும் நினைந்து நீங்கள்செய்த உங்களெல்லாத்
துர்க்கிரியைகளினிமித்தமும் உங்களை வெறுப்
சச பீர்கள்.—இஸ்ரவேல்வமிசத்தாரே, உங்கள் துன்
னெறிகளின்படிக்கும், உங்கள் துர்க்கிரியைக
ளின்படிக்குமல்ல, என் சுயநாமத்தை நினைந்து
நான்கிரியைசெய்யும்பொழுதுநானே யெகோ
வாவென்று நீங்கள் அறிந்துகொள்வீர்களென்
பதாக ஆண்டவராகிய யெகோவாசொல்
லுகிறாரென்பதைச்சொல்லச்சொல்லிற்று.
பின்னும் யெகோவாவின் வாக்கு என் சரு
னிடத்தில்,—மனுபுத்திரனே, நீதென்றிசைக்கு எ சசு
திர்முகமாகி, தென்றிசைக்குநேரே வாக்கைப்
பிரசித்தப்படுத்தி, தெற்கு வெளியிலுள்ளவனத்
திற்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லு.—
தென்றிசையிலுள்ளவனத்தைநோக்கி, யெகோ சஎ
வாவின் வாக்கைக்கேள்; நான் உன்னிடத்தில்
அக்கினியைக் கொளுத்துவேன், அது உன்னி
டத்திலுள்ள சகல பச்சைமரங்களையும் பட்டம
ரங்களையும் பட்சிக்கும்: அதின்சுவாலை அவிக்
கப்படமாட்டாது, தென்றிசைமுதல் வடதிசை
வரைக்குமுள்ள சகல முகங்களும் அதினாலே
தகிக்கப்படும்.—யெகோவாவாகிய நானே சஅ
அதைக் கொளுத்தினேனென்று எல்லா மாமிச
முங்காணும்: அது அவிக்கப்படுவதில்லையென்
று ஆண்டவராகிய யெகோவா சொல்
லுகிறாரென்பதாகச் சொல்லென்றது.-அப்பொ சகூ
ழுது நான், ஆ, ஆண்டவராகிய யெகோ
வாவே, இவன் உவமைகளையல்லவோபேசுகி
றானென்று அவர்கள் என்னைக்குறித்துச் சொல்
லுகிறார்களென்றேன்.

## உக. அதிகாரம்.

க. எசேக்கியேல் யெரூஷலேமைக்குறித்துப் புலம்பல்: அ. துலங்குங்கூரியகட்கம் வருமென்று தீர்க்கதரிசனஞ் சொல்லல்: யஅ. அந்தக்கட்கம் யெரூஷலேமுக்கு விரோதமாயனுப்பப்படல்: உரு. இராசாவுக்கு விரோதமாய்த்தீர்க்கதரிசனமுரைத்தல்: உஅ. அம்மோனியருக்கு விரோதமாய் அந்தக்கட்கம் அனுப்பப்படல்.

பின்னும் யெகோவாவின் வாக்கு என்னி க
டத்தில்,—மனுபுத்திரனே, நீ யெரூஷலேமுக்கு உ
எதிர்முகமாகி, பரிசுத்தஸ்தானங்களுக்கு விரோ
தமாக உன்வாக்கைப் பிரசித்தப்படுத்தி, இஸ
ரவேலின்தேசத்திற்கு விரோதமாய்த் தீர்க்கதரிச
னஞ்சொல்லி,—இஸ்ரவேலின் தேசத்தைநோக்கி ங
இவ்வாக்கைச்சொல்லு, பார், நான் உனக்கு வி
ரோதியாகி, என்கட்கத்தை அதின் உறையினின்
றுருவி, உன்னிடத்திலுள்ள நீதிமானையும் அநீதி
மானையுஞ் சேதிப்பேனென்று யெகோவா
சொல்லுகிறார்.—உன்னிடத்திலுள்ள நீதிமானை ச
யும் அநீதிமானையுஞ் சேதிக்கும்படி என்கட்கம்
உறையைவிட்டு நீங்கி, தெற்குமுதல் வடக்குவ
ரைக்குமுள்ள எல்லாமாமிசத்திற்கும் விரோத
மாய்ப்புறப்படும்.—இனி அதை உறையிலே தி ரு
ரும்பாதபடி யெகோவாவாகிய நான் அதி
னின்று உருவினேனென்று எல்லா மாமிசமும்
அறிந்துகொள்ளும்.—ஆதலால் மனுபுத்திரனே, சு
நீ உன் இடுப்புநொறுங்கும்படி பெருமூச்சுவிடு;

(ஙரு) எரே.உ.க,ஙரு. (ஙஎ) லேவி.உஎ.ஙஉ. எரே.ஙங.யங. (ஙஅ) அதி.ஙச,யஎ,உய. மத்.உரு.ஙஉ,ஙங. எரே.சச.யச. அதி.கூ.எ. (ஙகூ) நியா.ய.யச. சங்.அக.யஉ. ஆமோ.ச.ச. எசா.க.யங. (சய) எசா.உஉ,ங. மீகா.ச.க. எசா.ருசு.எ. சக.அ.உய,. மல்.ஙு.ச. ரோ.யஉ.க. (சக) எபே.ரு.உ. பிலி.ச.யஅ.(சங)லேவி.உசு. ஙக. ஓசி.ரு.யரு.(சஎ) எரே.உக.யச. லூக்.உங.ஙக.—(உக. அதி. உ.) அதி.உய.சசு. உபா.ஙஉ.உ. ஆமோ.எ.யசு. மீகா.உ.சு,யக. (ங) யோபு.கூ.உஉ. (சு) எசா.உஉ.ச.

அவர்கள்முன்பாக மனங்கசந்து பெருமூச்சுவி
௭ டு.—அவர்கள் உன்னைநோக்கி, எதினாலே நீ பெ
ருமூச்சுவிடுகிறாயென்று கேட்கும்பொழுது, ச
மாசாரங்களினிமித்தமே; அதுவருகின்றது: அப்
பொழுது ஒவ்வொரு இருதயமுங்கரைந்துபோ
கும், சகல கைகளும் மெலிவடையும், ஒவ்வொ
ரு ஆத்துமாவுஞ் சோர்ந்துபோகும், முழங்கால்
களெல்லாஞ் சலத்தைப்போல அலையும்: பாருங்
கள், அதுவருகின்றது, சித்தியாகுமென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறாரென்
பதாக உத்தரஞ் சொல்லென்றுஞ்சொல்லிற்று.
௮ பின்பு யெகோவாவின் வாக்கு என்னி
௯ டத்தில்,-மனுபுத்திரனே,நீதீர்க்கதரிசனஞ்சொல்
லி, கட்கம், கட்கமே கூர்மையாக்கப்பட்டது,
௰ அது துலக்கப்பட்டது.—மகாசங்காரஞ் செய்கிற
தற்கு அது கூர்மையாக்கப்பட்டது; மின்னத்தக்
கதாக அது துலக்கப்பட்டது: நாம் சந்தோஷப்
படலாகுமா; அதுஎன்புத்திரனுடையகோல்,எந்
௰௧ தமரத்தையும் அவமதிக்கும்.—அது கையிற்பிடிக்
கப்படும்பொருட்டு அதைத்துலக்கக்கொடுத்தார்:
கொலைசெய்பவன்கையில் கொடுக்கும்படி அந்
தக் கட்கங் கூர்மையாக்கப்பட்டதைச் சொல்
௰௨ லென்று யெகோவா சொல்லுகிறார்.-மனுபுத்
திரனே, நீ அழுது அலறு: அது என்சனங்களின்
மேலும் இஸ்ரவேலரின்சகலபிரபுகளின்மேலும்
வரும்: என்சனங்களின்மேல்கட்கத்தினிமித்தம்
பயங்கரங்கள்வரும்:ஆதலால்நீஉன்தொடையில்
௰௩ அடித்துக்கொள்.-அதுபரீட்சிக்கப்பட்டது,அது
செங்கோலை அவமதித்தாலோ, இதுநில்லாதென்
று ஆண்டவராகிய யெகோவா சொல்லு
௰௪ கிறார்.—ஆதலால் மனுபுத்திரனே, நீதீர்க்கதரிச
னஞ்சொல்லிக் கைகொட்டு,கட்கத்தை இரண்டு
தரங்கொண்டுவா, மூன்றுதரங்கொண்டுவா, அ
து கொலைசெய்யப்பட்டவர்களின்கட்கம்: அது
அந்தரங்க அறைகளில்பிரவேசிக்கும் மகாசங்கா
௰௫ ரத்தின்கட்கம்.—அவர்களுடைய இருதயங்க
ரையவும், அவர்களுடைய இடிவுகள்மிகுக்
கவும், அவர்களுடைய வாசல்களெல்லாவற்றிற்
கும் விரோதமாய்த்துலங்குங்கட்கத்தை ஏற்படுத்
தினேன்: ஆ, அது துலக்கப்பட்டது, சங்காரத்
௰௬ திற்காகக் கூர்மையாக்கப்பட்டது.—நீ எந்தத்தி
சைக்கும்போ,வலப்புறமாயினும் இடப்புறமாயி
னும் உன்முகந்திரும்புமெவ்விடத்திற்கும்போ.-
௰௭ நான்கையோடேகைகொட்டிஎன்கோபத்தைஆ
றப்பண்ணுவேன்: யெகோவாவாகிய நா
னே இவ்வாக்கைச்சொன்னேனென்பதாகச்
சொல்லென்றுஞ் சொல்லிற்று.
௰௮ திரும்பவும் யெகோவாவின்வாக்கு என்
௰௯ னிடத்தில்,—மனுபுத்திரனே, பாபேலுடைய இ
ராசாவின் கட்கம் வரத்தக்கதாக இரண்டுவழிக

ளை ஆயத்தப்படுத்து: இரண்டும் ஒருதேசத்தினின்
றுவரவேண்டும்: நீ உனக்காக ஒருஸ்தானத்தைத்
தெரிந்துகொள், நகரத்திற்குப்போகிற வழியின்
முனையில் அந்தஸ்தானத்தைத் தெரிந்து
கொள்.—கட்கம் வரத்தக்கதாக அம்மோன்புத்திர ௨௰
ரின்நகரமாகிய ரப்பத்துக்கு விரோதமாக ஒருவ
ழியையும், யூதாவின்மதில்சூழ்ந்த யெருஷலே
முக்கு விரோதமாய் வேறொருவழியையுங்குறிப்
பாயாக.—பாபேல் இராசா இரண்டுவழிகள் சந் ௨௧
திக்குமிடத்தில்நின்று நிமித்தம்பார்த்து, அம்புக
ளைத் துலக்கினான், விக்கிரகங்களிடத்தில் உசா
வினான், ஈரலைப்பார்த்தான்.—மதிலை இடிக்குங் ௨௨
கருவிகளைநியமிக்கவும், சங்காரத்தில் வாய்திறக்
கவும், ஆரவாரமாய்ச்சத்தமிடவும், வாசல்களுக்
கு விரோதமாய்க் கருவிகளை ஏற்படுத்தவும், அ
ணைபோடவும், கொத்தளத்தைக்கட்டவும்யெரு
ஷலேமுக்கு விரோதமாகநிமித்தம் அவன்வலப்
புறத்தில் உண்டாகும்.—ஆணையிட்டவர்களுக் ௨௩
குமுன்பாக இந்த நிமித்தம் ஒரு பொய்போலத்
தோன்றும்: ஆயினும் அவர்கள் பிடிக்கப்படும்
படி இவன் அவர்களுடையதோஷத்தை நினைப்
பான்.—ஆதலால் உங்கள் அக்கிரமங்கள் வெ ௨௪
ளிப்பட்டதினாலும், உங்கள்சகலகிரியைகளின்
தோஷங்களும் பிரத்தியட்சமானதினாலும், உங்
கள் குற்றத்தைநினைவிலே வரப்பண்ணினீர்கள்;
இதினிமித்தம் நீங்கள்நினைவில்வருவீர்கள், கை
யிலகப்படுவீர்களென்று ஆண்டவராகியயெ
கோவா சொல்லுகிறார்.
அசுத்தமும் பாவமுமுள்ள இஸ்ரவேலின் பி ௨௫
ரபுவே, பாவம்நிறைந்த சமயத்தில் உன்தினம்
வந்தது.—முடியை அகற்று,கிரீடத்தைத்தூரப்ப ௨௬
டுத்து: அது இனிமுன்போலிராது: தாழ்ந்தவனை
உயர்த்து, உயர்ந்தவனைத்தாழ்த்து.—நான்கவிழ்ப் ௨௭
பேன்,கவிழ்ப்பேன், அதைக்கவிழ்ப்பேன்: உரி
மைக்காரன் வருமட்டும் அது இனி இராது; இ
வனுக்கே நான்அதைஅளிப்பேனென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறார்.
மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனஞ்சொல்லு,௨௮
ஆண்டவராகியயெகோவா அம்மோனிய
ரைக்குறித்தும் அவர்களுடைய அவமானத்தைக்
குறித்தும் இவ்வாக்கைச்சொல்லுகிறார்;பாவம்நி
றைந்தசமயத்தில், தங்கள் தினத்தைக்கண்டுகொ
லையுண்டதுன்மார்க்கரின்பிடரிகளின்மேல்உன்
னை எறியும்படிக்கு,—அவர்கள் உன்னைக்குறித் ௨௯
து அபத்தமானதைத்தரிசிக்கையிலும் உனக்குப்
பொய்க்குறிபார்க்கையிலும் கட்கம், கட்கமே
உருவப்பட்டது: சங்காரத்துக்காகத் துலக்கப்
பட்டது, பட்சிக்கும்படி மினுக்கப்பட்டது:—
உறையில் அதைத்திரும்பிப்போகப்பண்ணுவே ௩௰
ன்; நீ சிருஷ்டிக்கப்பட்ட ஸ்தானத்தில், உன்

(௯) உபா.௩௨.௪௧. வச.௰௫.௨௮. (௰௧) வச.௰௯. (௰௨) எரே.௩௧.௰௯. (௰௩) யோபு.௯.௨௩. ௨.கொரி.௮.௨. வச.௨௭. (௰௪) எண்.௨௪.௰. அதி.௬.௰௧. ௧.இரா.௨௰.௩௰. ௧.இரா.௨௨.௨௫. (௰௫) வச.௰,௨௮. (௰௬) அதி.௰௪.௰௭. (௰௭) அதி.௨௨.௰௩. அதி.௫.௰௩. (௨௰) எரே.௪௯.௨. ஆமோ.௧.௰௪. (௨௨) எரே.௫௧.௰௪. அதி.௪.௨. (௨௫) ௨.நாளா.௩௬.௰௩. எரே.௫௨.௨. (௨௬) லூக்.௧.௫௨. (௨௭) ஆதி.௪௯.௰. லூக்.௧.௩௨,௩௩. யோவா.௧.௪௯. (௨௮) எரே.௪௯.௧. செப்.௨.௮,௯,௰. (௨௯) யோபு.௰௮.௨௰. சங்.௩௭.௰௩. (௩௰) எரே.௪௭.௬,௭. ஆதி.௰௫.௰௫.

சென்மதேசத்திலே நான் உன்னை நியாயம்விசா
௩௧ ரிப்பேன்.—நான்உன்மேல் என்கோபத்தைஊற்
றுவேன், உனக்குவிரோதமாய் என்கோபாக்கி
னியை ஊதி, அழிக்கிறதற்குத் திறமையுள்ளவர்
களும், மிருககுணமுடையவர்களுமான சனங்
௩௨ களின்கையில் உன்னை ஒப்பிப்பேன்.—நீ அக்
கினிக்கு இரையாவாய்;தேசத்தின்மத்தியில்உன்
இரத்தஞ்சிந்தப்படும்;நீஇனிஒருபொழுதும்நினை
வில்வரமாட்டாய்: யெகோவாவாகிய நா
னே இவ்வாக்கைச் சொன்னேனென்பதைச்
சொல்லச்சொல்லிற்று.

## உஉ. அதிகாரம்.

க. யெருஷலேமின்பாவங்களைநிருணித்தல்: ௰௩. அதின்தண்டனையை நிருணித்தல்: அவர்கள்களிம்புநீக்கும்வகையைத்தெரிவித்தல்:உ௩. தீர்க்கதரிசிகளும், ஆசாரியர்களும், இராசாவும், பிரசைகளுமாகிய இவர்களுடைய தோஷத்தை நிருணித்தல்.

பின்னும் யெகோவாவின் வாக்கு என்னி
௨ டத்தில்,-மனுபுத்திரனே, நீஇப்பொழுதுபரிந்து
பேசுவாயா, இரத்தஞ்சிந்தின நகரிக்குப்பரிந்து
பேசுவாயா; நீ அதின் சகல அரோசியமான கிரி
௩ யைகளையும் அதற்குத்தெரிவிப்பாய்.—நகரியே,
உன்தண்டனைக்கேற்றசமயம்வரும்பொருட்டு நீ
உன்மத்தியிலே மிகுதியான இரத்தஞ் சிந்துகி
றாய், உன்னை அசுசிப்படுத்துகிறதற்கு உனக்கே
விரோதமாகவிக்கிரகங்களை உண்டாக்குகிறாய்.—
௪ நீ சிந்தின இரத்தத்தினாலே குற்றவாளியானாய்;
நீ உண்டாக்கினவிக்கிரகங்களினால்உன்னை அசு
சிப்படுத்தினாய்; உன்தினம் சமீபிக்கும்படிசெய்
தாய், உன்வருஷங்களை நிறைவேற்றினாய்: ஆத
லால் நான் உன்னைப்புறச்சாதியாருக்கு நிந்தை
யாகவும், சகல தேசத்தாருக்கும் பரிகாசமாகவும்
௫ வைத்தேன்.—அசுத்தமென்னும் பெயர்பெற்றக
லகம்நிறைந்தவளென்றுசொல்லி, உனக்குச்சமீ
பத்திலுந்தூரத்திலுமுள்ளவர்கள்உன்னைப்பரிகா
௬ சம்பண்ணுவார்கள்.—பார், இஸரவேலின்பிரபு
கள் தங்கள் தங்கள் கைவல்லமையின்படி உன்
௭ னில் இரத்தஞ் சிந்தினார்கள்.—பிதாமாதாக்களை
அவமதிக்குஞ் சனங்கள் உன்னிடத்திலிருக்கி
றார்கள்: பரதேசிகளை உபத்திரவப்படுத்துகிறவர்
கள்உன்மத்தியில் இருக்கிறார்கள்: அநாதபிள்ளை
களையும், விதவைகளையும் கிலேசப்படுத்துகிற
௮ வர்கள் உன்னிடத்திலிருக்கிறார்கள்.—நீ என் ப
ரிசுத்தவஸ்துக்களை அவமதித்தாய், என் ஓய்வு
௯ நாள்களை அசுசிப்படுத்தினாய்-இரத்தஞ் சிந்தும்
படி புறங்கூறுஞ் சனங்கள் உன்னிடத்திலிருக்
கிறார்கள்: மலைகள்மேலே போசனம்பண்ணுகிற
வர்கள்உன்னிடத்திலிருக்கிறார்கள்: தூர்த்தசெய்
கையை நடத்துகிறவர்கள் உன்மத்தியிலிருக்கி
றார்கள்.—பிதாவின் மனைவியோடே தூர்த்தகிரி ௰
யை செய்பவர்கள் உன்னிடத்திலிருக்கிறார்கள்:
ருதுவதியைத் தாழ்ச்சிப்படுத்துகிறவர்கள் உன்
னிடத்திலிருக்கிறார்கள்.—சிலர் தங்கள் அயலா ௰௧
ருடைய மனைவிகளோடே அரோசியமானதைச்
செய்கிறார்கள்; சிலர் தங்கள் மருமக்களோடே
தூர்த்தகிரியைசெய்கிறார்கள்; சிலர் உன்னிடத்
தில் தங்கள் பிதாக்களுக்குப் பிறந்த தங்கள் ச
கோதரிகளைத் தாழ்ச்சிப்படுத்துகிறார்கள்.-இரத் ௰௨
தஞ்சிந்தும்படிபரிதானம்வாங்குகிறவர்கள் உன்
னிடத்திலிருக்கிறார்கள்; நீ அநியாயவட்டி வாசி
யைவாங்குகிறாய், கொடுமையினால் உன் அயலா
ரிடத்தில் ஆதாயத்தைப்பெறுகிறாய், நீ என்னை
மறந்தாயென்று ஆண்டவராகிய யெகோ
வா சொல்லுகிறார்.
ஆதலால் பார், நீ அநியாயததினால்பெற்றஉன் ௰௩
னுடையலாபத்தினிமித்தமும், உன்மத்தியில்சிந்
தப்பட்ட இரத்தத்தினிமித்தமும், நான் என்கை
யைக்கொட்டுகிறேன்.—நான் உனக்குப் பலன ௰௪
ளிக்குந்தினத்தில் உன் இருதயஞ் சகிக்கக்கூடு
மா; உன்கை திடமாயிருக்குமா; யெகோவா
வாகிய நான்பேசினேன், அதைச் சித்திக்கச்
செய்வேன்.-நான்புறச்சாதியாருக்குள்உன்னைச் ௰௫
சிதறஅடிப்பேன், அந்நியதேசங்களில்உன்னைச்
சிதறஅடிப்பேன்,உன்னிடத்திலுள்ளஉன்அசுசி
யைத்தூரப்படுத்துவேன்.-நீ அந்நியதேசத்தாருக் ௰௬
குமுன்பாக அசுத்தமாவாய், இதினால் நான் யெ
கோவாவென்று நீ அறிந்துகொள்வாயென்ப
தைச்சொல்லிற்று.-யெகோவாவின் வாக்கு ௰௭
என்னிடத்தில்,-மனுபுத்திரனே,இஸரவேல்வமி ௰௮
சத்தார் எனக்குக்களிம்பானார்கள்: அவர்களெல்
லாருங் குகையிலுள்ள் பித்தளையும், வெள்ளீய
மும், இரும்பும், ஈயமுமாயிருக்கிறார்கள்; அவர்
கள்வெள்ளியின்களிம்பு.—ஆதலால் ஆண்டவ ௰௯
ராகிய யெகோவா இவ்வாக்கைச்சொல்லு
கிறார்; பாருங்கள், நீங்களெல்லாருங் களிம்பா
னீர்கள், இதினிமித்தம் நான் உங்களை யெருஷ
லேமின்மத்தியிலே சேர்த்துக்கொள்வேன்.-மனி ௨௰
தர் அக்கினியை ஊதிஉருக்குகிறதற்காக வெள்
ளியையும், பித்தளையையும், இரும்பையும், காரீ
யத்தையும், வெள்ளீயத்தையுங் குகையில்சேர்க்
கிறதுபோல, நான்என்கோபத்தினாலும் என் உக்
கிரத்தினாலும் உங்களைச்சேர்த்துவைத்து உருக்கு
வேன்.—நான் உங்களைச்சேர்த்து என்கோபாக் ௨௧
கினியை ஊற்றுவேன், அதற்குள்ளே நீங்கள் உ
ருகுவீர்கள்.—குகைக்குள்வெள்ளி எப்படி உரு ௨௨
குமோ, அப்படியே நீங்களும் உருகுவீர்கள்; அ
தினால் யெகோவாவாகிய நான்உங்கள்மேல்

(௩௧) அதி.௨௨.௨௰,௨௧. (௩௨) அதி.௨௫.௰.—(௨௨. அதி. ௨.) அதி.௨௰.௪. நாகூ.௩.௧. (௪) ௨.இரா.௨௧.௰௬.௨பா. ௨௮.௩௭. ௧.இரா.௯.௭. தானி.௯.௰௬. (௯) ஏசா.௧.௨௩. மீகா.௩.௧,௨,௩. செப்.௩.௩. (௭) உபா.௨௭.௰௬. யாத்.௨௨. ௨௧,௨௨. (௮) லேவி.௰௯.௩௰. (௯) யாத்.௨௩.௧. லேவி.௰௯.௰௬. (௰) லேவி.௰௮.௭,௮,௰௯. ௧.கொரி.௫.௧. (௰௧)லேவி.௨௰.௰,௰௨. உபா.௨௨.௨௨. எரே.௫.௮. லேவி.௰௮.௯. (௰௨) யாத்.௨௩.௮. உபா.௰௬.௰௯. யாத்.௨௨.௨௫. லேவி.௨௫.௩௬. உபா.௨௩.௰௯. உபா.௩௨.௰௮. எரே.௩.௨௧. (௰௩) அதி.௨௧.௰௭. (௰௫) உபா.௪.௨௭.அதி.௨௩.௨௭,௪௮. (௰௬) சங்.௯.௰௬. (௰௮) ஏசா.௧.௨௨. எரே.௬.௨௮,.

என்கோபத்தை ஊற்றிவிட்டேனென்றுஅறிந்து
கொள்வீர்களென்பதைச்சொல்லச்சொல்லிற்று.
௨௩ பின்பு யெகோவாவின் வாக்கு என்னி
௨௪ டத்தில்,—மனுபுத்திரனே, நீ தேசத்தைப்
பார்த்து, சுத்திகரிக்கப்படாததேசம்,கோபத்தின்
தினத்தில் உன்னில் மழைபெய்யாதென்றுசொல்
௨௫ லு.—அதிலுள்ள தீர்க்கதரிசிகள் துராலோசனை
செய்கிறார்கள், கருச்சிக்கிறசிங்கம் இரை கவ்வு
கிறதுபோல ஆத்துமங்களைப் பட்சிக்கிறார்கள்;
பொக்கிஷத்தையும் அருமையானதிரவியங்களை
யும்வாங்குகிறார்கள்: அவர்களதின்மத்தியில் அ
௨௬ நேகரைவிதவைகளாக்குகிறார்கள்.–அதின் ஆசா
ரியர் என்நியாயப்பிரமாணத்தைமீறுகிறார்கள்,எ
னக்குரியபரிசுத்தவஸ்துக்களைஅசுத்தப்படுத்துகி
றார்கள்:சுசிக்கும்அசுசிக்கும்வேற்றுமையைக்கா
ணார்கள்,என்ஓய்வுநாள்களுக்குத்தங்கள்பார்வை
யைவிலக்குகிறார்கள், அவர்களுக்குள்நான் அவ
௨௭ மதிக்கப்பட்டேன்.–அதிலுள்ளபிரபுகள் லாபம்
பெறும்பொருட்டு இரத்தஞ்சிந்துவதற்கும், பிரா
ணிகளை நாசப்படுத்துவதற்கும் இரை கவ்வுங்
௨௮ கோணாய்களைப்போலிருக்கிறார்கள்.-அதின்தீர்க்
கதரிசிகள்பொய்த்தரிசனங்களைப்பெற்று,பொய்
நிமித்தங்களைச் சொல்லி, யெகோவா சொல்
லாமலிருந்தும் ஆண்டவராகிய யெகோ
வா இப்படிச் சொன்னாரென்று சொல்லி, அவர்
களுக்குத்துவையாத சாந்தைப் பூசுகிறார்கள்.-
௨௯ தேசத்துச்சனங்களுக்கு அநியாயஞ்செய்து,பொ
ருளைக்கவர்ந்து, தரித்திரரையுந் திக்கற்றவர்களை
யும் உபத்திரவப்படுத்துகிறார்கள்: பரதேசிக்கும்
அநியாயஞ்செய்து அவனை உபத்திரவப்படுத்து
௩௰ கிறார்கள்.—நான் தேசத்தை நாசப்படுத்தாதபடி
சுவரை எழுப்புவதற்கும், என் சமுகத்தில் இடி
வில் நிற்பதற்கும், அவர்களுக்குள் ஒருவரைத்
௩௧ தேடினேன்: ஆனாலுங் காணவில்லை.–ஆதலால்
நான் அவர்கள்மேல் என் கோபத்தை ஊற்று
வேன்; என் கோபாக்கினியினால் நான் அவர்
களைப் பட்சிப்பேன்: அவர்களுடைய நெறிக்
கேற்க நான் பலனை அவர்கள்தலையின்மேல்வரு
விப்பேனென்று ஆண்டவராகிய யெகோ
வா சொல்லுகிறாரென்று சொல்லிற்று.

## ௨௩. அதிகாரம்.

௧. அகோலாளின் விபசாரத்தைத் தெரிவித்தல்: ௰௧. அகோலீபாளின் விபசாரத்தைத்தெரிவித்தல்: ௨௧. அகோலீபாள் தன் நேசரால் கிலேசப்படுத்தப்படல்: ௩௬. இருவருங் கண்டிக்கப்படல்: ௪௫. இருவருந் தண்டிக்கப்படல்.

யெகோவாவின் வாக்கு என்னிடத்தில்,—
௨ மனுபுத்திரனே, ஒருதாயின் குமாரத்திகளாகிய
௩ இரண்டு ஸ்திரிகளிருந்தார்கள்.–அவர்கள் எகிப்
திலே விபசாரஞ்செய்து, தங்கள் இளம்பிரா
யத்திலே வேசைகளானார்கள்; அங்கே அவர்க
ளுடைய ஸ்தனங்கள் நெருக்கப்பட்டன, இ
ளம் பிராயத்தில் அவர்களுடைய முலைமுகங்
கள் அமுக்கப்பட்டன.—அவர்களில் மூத்தவ ௪
ளின்பேர் அகோலாள், அவள் தங்கையின்பேர்
அகோலீபாள்: அவர்கள் என்னுடையவர்களா
கிப் புத்திரரையும் புத்திரிகளையும் பெற்றார்கள்.
அவர்கள் நாமங்களின் தாற்பரியமாவது; அகோ
லாள் ஷமாரியா, அகோலீபாள் யெரூஷலேம்.-
அகோலாள் என்னுடையவளாயிருந்தசமயத்தில் ௫
விபசாரஞ்செய்தாள்.—நீலாம்பரத்தைத் தரித்து ௬
மனங்கவரும் வாலிபரும், குதிரையேறுங் குதி
ரை வீரரும்,சேனாபதிகளும், அதிகாரிகளுமாய்த்
தனக்குச் சமீபத்திலுள்ள அஷூரியராகிய தன்
நேசரை மிகவும் நேசித்தாள்.—அவள் தன்னி ௭
டத்திற் பிரியமுள்ள மனுஷராகிய அஷூரியரில்
சிரேஷ்டர் யாவரோடும் விபசாரஞ் செய்தாள்,
அவர்களுடைய சகல விக்கிரகங்களினாலும்
தன்னை அசுசிப்படுத்தினாள்.—எகிப்து தேசத்தி ௮
லே தான் பயின்றவிபசாரத்தை அவள் விட
வில்லை: அவர்கள் அவளுடைய இளம்பிராயத்
தில் அவளுடன் சயனித்தார்கள், அவள் கன்
னிமையின் ஸ்தனங்களை அமுக்கி, அவள்மேல்
தங்கள் விபசாரங்களைச் சொரிந்தார்கள்.—ஆத ௯
லால் நான் அவளுடைய நேசர்கையில், அவள்
மிகவும் நேசித்த அஷூரியரின்கையில் அவளை
ஒப்பித்தேன்.—இவர்கள் அவளை நிருவாணமாக் ௰
கினார்கள்: அவளுடைய புத்திரரையும் புத்திரிக
ளையுஞ் சிறைபிடித்து, அவளைக் கட்கத்தினாலே
கொலைசெய்தார்கள்: அவர்களிட்டதண்டனை அ
வளிடத்தில் பலித்ததினால் அவள் ஸ்திரிகளுக்
குள்ளே பெயர்பெற்றவளானாள்.-இதைக்கண் ௰௧
டு அவள் தங்கையாகிய அகோலீபாள் தனது
அளவில்லாத மோகத்தில் அவளிலுங் கெட்டவ
ளானாள்,சகோதரியின் விபசாரங்களிலும் இவள்
அதிக விபசாரமுள்ளவளானாள்.-அலங்கார வஸ் ௰௨
திரங்களைத்தரித்து, குதிரைகளின்மேலேறுங் கு
திரைவீரரும், மனங்கவரும் வாலிபரும், சேனா
பதிகளும், அதிகாரிகளுமாகிய தன் சமீபத்தி
லுள்ள அஷூரியரின்மேல் மிகவும் மோகித்தாள்.-
அதினால் இவளும் அசுத்தமானாளென்றும், அவர் ௰௩
கள் இருவரும் ஒரே நெறியிலே செல்லுகிறார்க
ளென்றுங் கண்டேன்.—பின்பு அவள் தன்விப ௰௪
சாரத்தில் அதிகரித்தாள்: அரைக்கட்டுக்கட்டி,த
லையில்சாயந்தீர்ந்தபாகைகளைத்தரித்தவர்களும்,-
கல்தேயதேசத்தில் பிறந்தபாபேல் நகரத்தாருமா ௰௫
கிய இராசகுமாரருடைய சாயலான கல்தேயரு
டைய உருவம் சுவரில் எழுதப்பட்டு, சாதிலிங்
கத்தினால் விசித்திரிக்கப்பட்டதைக் கண்டாள்.-

(௨௫) ஓசி.௬.௯.மத்.௨௩.௰௪. மீகா.௩.௰௧. செப்.௩.௩,௪. (௨௬) மல்.௨.௮. லேவி.௨௨.௨,. ௧.சாமு.௨.௨௯. லேவி. ௰.௯. எரே.௰௫.௰௯. (௨௭) ஏசா.௧.௨௩. மீகா.௩.௨,௩,௯,௰,௰௧. செப்.௩.௩. (௨௯) எரே.௫.௨௬,௨௭,௨௮. யாத்.௨௨. ௨௧. லேவி.௰௯.௩௩. (௩௰) எரே.௫.௧. சங்.௱௬.௨௩.—(௨௩. அதி. ௨.) எரே.௩.௭,௮,௰. (௩) லேவி.௰௭.௭. யோசு. ௨௪.௰௪. அதி.௰௬.௨௨. (௪) அதி.௰௬.௮,௨௰. ௧.இரா.௮.௨௧. (௬) ௨.இரா.௰௫.௰௯. ஓசி.௮.௯. (௯) ௨.இரா.௰௮.௯, ௰,௰௧. (௰) அதி.௰௬.௩௭,௪௧. (௰௧) எரே.௩.௮,௰௧.(௰௨)௨.இரா.௰௬.௭,௰. ௨.நாளா.௨௮.௰௬—௨௩. அதி.௰௬.௨௮

௰௬ அவள் கண்ட மாத்திரத்தில் அவர்கள்மேல்மோ
கித்து, அவர்களிடத்தில் கல்தேயதேசத்துக்குத்
௰௭ தூதரை அனுப்பினாள்.—பாபேல் நகரத்தார்வந்
து அன்பின்சயனத்தில் அவளோடேசயனித்து,
வேசைக்கிரியைகளினால் அவளை அசுசிப்படுத்
தினார்கள், அவர்களால் அசுசியானபின்பு அவள்
௰௮ மனம் அவர்களை விட்டு நெகிழ்ந்தது.—இவ்வித
மாய் அவள் தன் விபசாரங்களை வெளிப்படுத்தித்
தன்னை நிருவாணமாக்கினபொழுது, என் மனம்
அவளுடைய சகோதரியை விட்டு நெகிழ்ந்தது
௰௯ போல அவளையும்விட்டு நெகிழ்ந்தது.-பின்பு அ
வள் எகிப்து தேசத்தில் வேசைக்கிரியைகளைச்
செய்த தன் இளம்பிராயத்தை நினைந்து, தன்
௨௰ வேசைக்கிரியைகளை அதிகப்படுத்தினாள்.—கழு
தைகளைப்போல மாமிசமும், குதிரைகளைப்போ
ல இந்திரியமும் நிறைந்த தங்கள் பரபுருஷரில்
௨௧ மிகவும் மோகித்தாள்.-எகிப்தியரால் உன் கன்னி
மையின் ஸ்தனங்களாகிய முலைமுகங்கள் அமுக்
கப்பட்டகாலத்தில், நீ உன் இளம்பிராயத்தில்
செய்த தூர்த்தகிரியைகளை நினைந்துவருகிறாய்.
௨௨ ஆதலால் அகோலீபாளே, ஆண்டவராகிய
யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; பார்,
௨௩ மனங்கவரத்தக்கவாலிபரும்,-குதிரைமேலேறின
பெயர்பெற்றவர்களும், மகா பிரபுகளும், சேனா
பதிகளும், அதிகாரிகளும், பாபேல் நகரத்தாரும்,
சகல கல்தேயராகிய பேகோத், ஷோவா, கோ
வாவென்ற தேசத்து மனுஷரும், அஸ்ஷீரியர் சமஸ்
தருமான உன் மனம் நெகிழ்ந்த உன்நேசரைநான்
கு திசையிலும் உனக்குவிரோதமாகக் கொண்
௨௪ டுவருவேன்.—அவர்கள் பண்டிகளோடும், இர
தங்களோடும், சனக்கூட்டத்தோடுங் கேடகங்
களையும், பரிசைகளையும், தலைச்சீராக்களையுந் த
ரித்தவர்களாய் உனக்கு விரோதமாக நான்கு பு
றத்திலுஞ் சூழுவார்கள்: அவர்களுக்குமுன்பாக
நான் நியாயத்தைத் தோற்றுவிப்பேன், அவர்கள்
தங்கள் நியாயங்களுக்கேற்க உன்னைத் தண்டிப்
௨௫ பார்கள்.-நான் உனக்குவிரோதமாய் என்கோபத்
தைவைப்பேன், அவர்கள் உன்னைமகா உக்கிரத்
தோடே நடத்துவார்கள்: உன் மூக்கையும் உன்
காதுகளையுஞ் சேதிப்பார்கள்; உன்னில் மீந்தி
ருப்பவர்கள் கட்கத்தினால் விழுவார்கள்: அவர்
கள் உன் புத்திரரையும் புத்திரிகளையும் சிறைபி
டிப்பார்கள்; மீதியாயிருக்குஞ் சனங்கள் அக்
௨௬ கினிக்கிரையாவார்கள்.—அவர்கள் உன் வஸ்தி
ரங்களைஉரிந்து, உன் அழகிய ஆபரணங்களை அப
௨௭ கரிப்பார்கள்.-எகிப்துதேசத்தில் நீ பயின்ற உன்
துர்க்கிரியைகளையும், உன் வேசைக்கிரியைக
ளையும் நான் ஒழியப்பண்ணுவேன்: அதினால் நீ
எகிப்தியர்மேல் இனி ஒருபொழுதுங் கண்ணெறி
டாமலும், அவர்களை நினையாமலுமிருப்பாய்.—
மேலும் ஆண்டவராகிய யெகோவா இவ் ௨௮
வாக்கைச்சொல்லுகிறார். பார், நீபகைக்கிறவர்
களின்கையிலும், உன்மனம் வெறுத்தவர்களின்
கையிலும் நான் உன்னை ஒப்பிப்பேன்.—அவர் ௨௯
கள் உன்னை வெறுப்புடனே நடத்தி, உன் பிர
யாசத்தின் பலன்களெல்லாவற்றையும் அபகரித்
து, உன்னை வஸ்திரமில்லாமல் நிருவாணமாக்கி
விடுவார்கள்: உன் இலச்சைக்கேடும் உன்சோரங்
களுமாகிய வேசைத்தனத்தின் நிருவாணம் வெ
ளிப்படுத்தப்படும்.—நீ சோரமார்க்கமாய் அந்நி ௩௰
யரைப்பின்பற்றி, அவர்களுடைய விக்கிரகங்க
ளினால் அசுசியாயிருக்கிறபடியினால் நான் இ
வைகளை உனக்குச்செய்வேன்.—நீ உன்சகோத ௩௧
ரியின்வழியில்நடந்தாய்; ஆதலால் அவளுடைய
பானபாத்திரத்தை உன்கையில் தருவேன்.—நீ ௩௨
உன்சகோதரியின் ஆழமும், விஸ்தாரமுமானபா
னபாத்திரத்தில் குடிப்பாய்: நீ பரிகாசமும் நிந்
தையுமுள்ளவளாவாய்; அந்தப் பான பாத்தி
ரம் அதிகங்கொள்ளுமென்று ஆண்டவராகி
ய யெகோவா சொல்லுகிறார்.—திகிலையும்நா ௩௩
சத்தையுந்தரும் பாத்திரமாகிய ஷமாரியாவென்
னும் உன்சகோதரியுடைய பானபாத்திரத்தினால்
வெறியோடுந் துக்கத்தோடும் நிரப்பப்படுவாய்.-
நீ அதிலுள்ளதைக்குடித்து உறிஞ்சுவாய், அதின் ௩௪
ஓடுகளை உடைத்து உன்ஸ்தனங்களைப் பிடுங்கு
வாய்: நான் இவ்வாக்கைச்சொன்னேனென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
றார்.—ஆதலால் நீஎன்னைமறந்து, உனகுப்பின் ௩௫
னாக என்னைவைத்தபடியால், நீ உன் தூர்த்தந
டைக்கும் உன் வேசைக்கிரியைகளுக்குமேற்ற
பலனை அனுபவிப்பாயென்று ஆண்டவரா
கிய யெகோவா சொல்லுகிறாரென்பதைச்
சொல்லச் சொல்லிற்று.
பின்னும் யெகோவா என்னைநோக்கி, ம ௩௬
னுபுத்திரனே, நீ அகோலாளையும், அகோலீபா
ளையும்விசாரிப்பாயா; அவர்களுடைய அரோசி
யமானகிரியைகளை அவர்களுக்குத் தெரிவிப்பா
யாக.—அவர்கள் விபசாரம்பண்ணினார்கள், அ ௩௭
வர்கள்கையில் இரத்தம் இருக்கின்றது, அவர்கள்
தங்கள் விக்கிரகங்களுடன் விபசாரம் பண்ணி
னார்கள். அவர்கள் தாங்கள் எனக்குப்பெற்றபுத்
திரரை அக்கினிக்கிரையாக அதில்செல்லப்பண்
ணினார்கள்.-அன்றியும் அவர்கள் என்பரிசுத்தஸ் ௩௮
தானத்தை அசுசிப்படுத்தினார்கள், என் ஓய்வுநாட்
களை அசுசிப்படுத்தினார்கள்: இப்படி ஒருநாளில்
எனக்குவிரோதமாக இவைகளைச்செய்தார்கள்.-
அவர்கள் தங்கள் பாலகரைத் தங்கள் விக்கிரகங் ௩௯
களுக்கென்று கொலைசெய்த நாளில், என் பரி
சுத்தஸ்தானத்தில்வந்து அதைஅசுசிப்படுத்தினார்
கள்; என் ஆலயத்தின்மத்தியில் இப்படிச்செய்

(௰௬)௨.இரா.௨௪.௧. (௰௭) வச.௨௨,௨௮. (௰௮) எரே.௬.௮. (௰௯) வச.௩. (௨௰) அதி.௰௬.௨௬.(௨௨)அதி.௰௬.௩௭. (௨௩) எரே.௫௰.௨௧. (௨௬) அதி.௰௬.௩௯. (௨௭) அதி.௰௬.௪௧. வச.௩,௰௯. (௨௮) அதி.௰௬.௩௭.(௨௯)அதி.௰௬.௩௯. வச.௨௬. (௩௰) அதி.௬.௯. (௩௧) எரே.௨௫.௰௫,. (௩௨) அதி.௨௨.௪,௫.(௩௪)சங்.௭௫.௮. ஏசா.௫௧.௰௭.(௩௫)எரே. ௨.௩௨.௧.இரா.௰௪.௯. நிகி.௯.௨௬. (௩௬) அதி.௨௰.௪. ஏசா.௫௮.௧. (௩௭) அதி.௰௬.௨௰,௨௧.௩௬,௩௮.௪௫.(௩௮)அதி. ௨௨.௮. (௩௯) ௨.இரா.௨௧.௪.

௪௰ தார்கள்.—அதுவுமன்றி,தூரத்திலுள்ள மனுஷரை
வரவழைக்கும்படி தூதனை அனுப்பினார்கள், அ
வர்களும் வந்தார்கள்: அவர்கள்நிமித்தம் நீ ஸ்நா
னம்பண்ணி, உன்கண்ணுக்கு அஞ்சனமிட்டு,
௪௧ பூஷணங்களினால் உன்னைச் சிங்காரித்து,—பின்
பு ஒரு இராசரிகமஞ்சத்தின்மேல் உட்கார்ந்து, அ
தற்குமுன்னே ஆயத்தப்படுத்தப்பட்ட ஒருபீடத்
தின்மேல் என்தூபத்தையும் என் எண்ணெயை
௪௨ யும் வைத்தாய்.—அந்த ஸ்தானத்தில் விசாரமில்
லாத சனக்கூட்டத்தின் சத்தமிருந்தது: சாதார
ணமானசகலசனங்களோடும், கையிலேகாப்புக்
களையும், தலையிலே சௌந்தரியமான கிரீடங்க
ளையுமுடையவர்களாகிய சபேயர் வனத்தினின்
௪௩ றுகொண்டுவரப்பட்டார்கள்.-அவர்கள்இப்பொ
ழுது அப்படிப்பட்டவளோடேவிபசாரஞ்செய்
வார்களாவென்றுநான்அந்தவிருத்தவேசையைக்
௪௪ குறித்துச்சொன்னேன்.—ஒரு வேசையிடத்தில்
போவதுபோல அவளிடத்தில் பிரவேசித்தார்
கள்: அப்படியேதுஷ்டஸ்திரிகளாகிய அகோலா
ளிடத்திலும் அகோலீபாளிடத்திலும்பிரவேசித்
தார்கள்.
௪௫ நீதிமான்கள் விபசாரியானவர்களையும், இரத்
தஞ்சிந்தும்ஸ்திரிகளையும் நியாயம் விசாரிப்பது
போல, இவர்களையும் நியாயம்விசாரிப்பார்கள்:
அவர்கள்விபசாரிகள்,இரத்தம்அவர்கள் கையிலி
௪௬ ருக்கின்றது.—நான்அவர்களுக்குவிரோதமாய்க்
கூட்டத்தைக்கொண்டுவருவேன், அகற்றப்படு
வதற்குங் கொள்ளையாடப்படுவதற்கும் அவர்க
௪௭ ளையொப்பிப்பேன்.—அந்தக்கூட்டத்தார் அவர்க
ளைக்கல்லெறிந்து, தங்கள்கட்கங்களினால் அவர்
களைக்கொலைசெய்வார்கள்; அவர்களுடைய புத்
திரரையும் அவர்களுடையபுத்திரிகளையும் நாசப்
படுத்துவார்கள், அக்கினியினால் அவர்கள் வீடுக
௪௮ ளைத்தகிப்பார்கள்.—சகல ஸ்திரிகளும் உணர்த்
தப்பட்டு, உங்களுடையதுர்க்கிரியையைச்செய்
யாதபடி பூமியினின்று இவ்விதமான இலச்சைக்
௪௯ கேட்டைஅகற்றிவிடுவேன்.—அவர்கள்உங்கள்
இலச்சைக்கேட்டின் பலனை உங்களுக்களிப்
பார்கள், நீங்கள் உங்கள் விக்கிரகங்களின் பா
வங்களை அனுபவிப்பீர்கள்: நானே ஆண்டவ
ராகியயெகோவாவென்றுநீங்கள்அறிந்து
கொள்வீர்களென்றுசொன்னார்.

## ௨௪. அதிகாரம்.

௧. ஒருகொப்பரையையுவமித்தல்: ௬.அதின்தாற்பரியம் யெருஷலேமின்நாசமென்றுதெரிவித்தல்: ௰௫. எசேக்கியேலின்மனைவிமரணமடைதல்: ௰௯. அதினிமித்தம் அவன் துக்கப்படாதபடிவிலக்கல்: இவ்வண்ணமே அவன் சனங்களுக்குத்திருஷ்டாந்தமாதல்.

பின்னும் ஒன்பதாம்வருஷம் பத்தாம்மாதம் பத் ௧
தாந்தினத்தில்,யெகோவாவின்வாக்குஎன்
னிடத்தில்,—மனுபுத்திரனே, இந்தத்தினம், இந் ௨
தத்தினத்தின்பேரைநீஎழுது: பாபேலின்இராசா
இந்தத்தினத்தில்யெருஷலேமுக்கு விரோதமாய்
வந்தான்.—கட்டளைக்கமையாதவமிசத்தாருக்கு ௩
நீ ஒருஉவமையைச்சொல்லு, அவர்களைநோக்கி,
ஆண்டவராகியயெகோவா இவ்வாக்குச்
சொல்லுகிறார்; ஒரு கொப்பரையை அடுப்பி
லே வை, அதைவைத்து அதில்சலத்தைவார்.—
நல்ல கண்டங்களான பின்னந்தொடைகளும், ௪
முன்னந்தொடைகளுமாகிய சகலதுண்டங்களை
யும் அதிலேசேர்; உத்தமஎலும்புகளினால் அதை
நிரப்பு.—மந்தையினின்று உத்தமமானதைஅதற் ௫
காகக்கொண்டுவந்து, அதின்எலும்புகளைக்கீழே
குவித்து, அதை நன்றாக அவித்து, அதிலுள்ள எ
லும்புகள் மிகவும்வேக அதைப்பொங்கப்பண்
ணக்கடவர்கள்.

ஆதலால்தேவனாகியயெகோவாசொல் ௬
லுகிறார்; ஐயோ, நுரை ஒட்டிக்கொண்டிருக்கி
றதும், நுரை நீங்காததுமாகிய கொப்பரையென்
னும் இரத்தஞ்சிந்தியநகரிக்குஆபத்துவரும், அதி
லுள்ளதைக்கண்டங்கண்டமாகஎடுத்துக்கொண்
டுபோ; அதின்மேல் சீட்டுப்போடலாகாது.—அ ௭
தின் இரத்தம் அதின் மத்தியிலிருக்கின்றது; அ
தைத்தூளினால்மூடுகிறதற்குநிலத்தில் ஊற்றாமல்
கற்பாறையில் ஊற்றிவிட்டாள்.—அதற்குப் ப ௮
லன் அளிப்பதற்கேதுவாய்க் கோபமூளும்படி
நான் அதின் இரத்தத்தைமறைக்காமல், கன்மலை
யின்மேல்வைப்பேன்.-ஆதலால்ஐயோ,இரத்தஞ் ௯
சிந்தினநகரிக்குஆபத்துவரும்;நான்அக்கினிக்கு
விறகைப்பெரிதாக்குவேனென்று ஆண்டவரா
கியயெகோவா சொல்லுகிறார்.—நீ விறகுக ௰
ளைக்கூட்டி, அக்கினியைமூட்டி, மாமிசத்தைப்
பாகம்பண்ணி,சம்பாரங்களைஇடு, எலும்புகளைத்
தகித்துவிடு.—பின்பு கொப்பரை காயவும், ௰௧
அதின்களிம்புவேகவும், அதிலுள்ளஅழுக்குஉரு
கவும், அதின்நுரைநீங்கவும், அதைவெறுமையா
கத்தழலின்மேல் வை.—அவள்பொய்களினாலே ௰௨
சோர்வடைந்தும், அவளுடைய மிகுந்த நுரை
விட்டுநீங்கவில்லை: அதுஅக்கினியில் இடப்ப
டவேண்டும்.—உன் அழுக்கிலே தோஷமுண் ௰௩
டு: நான் உன்னைச்சுத்திகரித்தும் நீசுத்திகரிக்கப்
படவில்லை, ஆதலால் என்உக்கிரம்உன்மேல்தங்
கச்செய்யும்வரைக்கும் நீ உன் அழுக்கைநீங்கிச்
சுத்திகரிக்கப்படமாட்டாய்.-யெகோவாவா ௰௪
கிய நான் இவ்வாக்கைச்சொன்னேன்:அது
நிறைவேறும், நான் அதைச்செய்வேன்; நான்
பின்வாங்கேன், நான்தப்பவிடேன், நான் இரங்

(௪௰) ஏசா.௫௭.௯. ரூத்.௩.௩. ௨.இரா.௯.௩௰. எரே.௪.௩௰. (௪௧) எஸ்த.௧.௬. ஏசா.௫௭.௭. ஆமோ.௨.௮. நீதி.௭.௰௭. ஓசி.௨.௮. (௪௫) அதி.௰௬.௩௮. (௪௬) அதி.௰௬.௪௰. (௪௭) அதி.௰௬.௪௰. ௨.நாளா.௩௬.௰௭,௰௯. (௪௮) அதி.௨௨.௰௫. உபா.௰௩.௰௧. ௨.பேதுரு ௨.௬. (௪௯) அதி.௨௰.௩௮,௪௨,௪௪.—(௨௪. அதி. ௨.)௨.இரா.௨௫.௧. எரே.௩௯.௧. (௩) அதி.௰௭.௰௨. எரே.௧.௰௩. (௬) அதி.௨௨.௩. வச.௯. ௨.சாமு.௮.௨. யோவே.௩.௩. ஒப.௰௧. நாகூ.௩.௰. (௭) லேவி.௰௭.௰௩. உபா.௰௨.௰௬,௨௪. (௮) மத்.௭.௨. (௯) நாகூ.௩.௧. அபகூ.௨.௰௨. (௰௧) அதி.௨௨.௰௫. (௰௪) ௧.சாமு.௰௫.௨௯. அதி.௫.௰௧.

கேன்; உன்நெறிகளுக்கும் உன்கிரியைகளுக்கு
மேற்க நீ நியாயம் விசாரிக்கப்படுவாயென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகிறா
ரென்பதைச்சொல்லிற்று.
௰௫ பின்னும் யெகோவாவின் வாக்குஎன்னி
௰௬ டத்தில்,—மனுபுத்திரனே, பார், நான் உன்கண்
ணுக்கினியவளை அடித்து,உன்னிடத்தினின்று எ
டுத்துக்கொள்வேன்: ஆயினும்நீபுலம்பாமலும்,அ
௰௭ ழாமலும்,கண்ணீர்விடாமலுமிருப்பாய்.—அமர்ந்
துபெருமூச்சுவிடு, மரித்தவள் நிமித்தந் துக்கங்
கொண்டாடவேண்டாம்,உன்பாகையை உன்த
லையிற்கட்டி, உன்பாதரட்சைகளை உன்பாதங்க
ளில்தொடுத்துக்கொண்டு, உன்மேலுதட்டை மூ
டாமலும்,துக்கங்கொண்டாடுகிறவர்களைப்போ
லப்போசனம் பண்ணாமலும் இருப்பாயென்று
௰௮ சொல்லிற்று.—விடியற்காலத்தில் நான் சனங்க
ளுடன்பேசினேன்: அன்றுசாயங்காலத்தில்என்
மனைவிமரித்தாள்; நான் பெற்றகட்டளைப்படிவி
டியற்காலத்திற் செய்தேன்.
௰௯ அப்பொழுது சனங்கள் என்னைநோக்கி, நீ
செய்கிறவைகள் எங்களுக்கென்னவென்று எங்
களிடத்தில் தெரிவிக்கமாட்டாயாவென்றுகேட்
௨௰ க,—நான், அவர்களுக்குத்தரமாக, யெகோவா
௨௧ வின் வாக்கு என்னிடத்தில்,—நீ இஸரவேல்வ
மிசத்தாரைநோக்கி, பாருங்கள், மேன்மைபொ
ருந்திய உங்கள் பராக்கிரமமும், உங்கள் கண்க
ளுக்கினிமையும், உங்கள்மனம் விரும்பத்தக்கது
மாகிய என் பரிசுத்தஸ்தானத்தை நான் அசுசிப்
படுத்துவேன்; உங்களில்மீந்திருக்கும்புத்திரரும்
௨௨ புத்திரிகளுங் கட்கத்தினால் விழுவார்கள்.—நான்
செய்ததுபோல நீங்களுஞ்செய்வீர்கள்:மேலுதட்
டை மூடாமலுந் துக்கங்கொண்டாடுகிறவர்க
ளைப்போல் ஆகாரம் புசியாமலுமிருப்பீர்கள்.—
௨௩ உங்கள் பாகைகள் உங்கள்தலைகளிலும், உங்கள்
பாதரட்சைகள் உங்கள் கால்களிலுமிருக்கும்:
நீங்கள்புலம்பாமலும்அழாமலுமிருப்பீர்கள்; நீங்
கள் உங்கள் அக்கிரமங்களினிமித்தம் ஒருவரை
௨௪ ஒருவர் பார்த்துப் புலம்புவீர்கள்.—எசேக்கியேல்
உங்களுக்கு ஒரு அடையாளம்: அவன்செய்யும்
யாவற்றின்படிக்கும் நீங்களுஞ்செய்வீர்கள்: இ
துநடக்கும்பொழுது நானே ஆண்டவராகிய
யெகோவாவென்று நீங்கள் அறிந்துகொள்
வீர்களென்பதாக ஆண்டவராகிய யெகோ
௨௫ வா சொல்லுகிறாரென்று சொல்லு.—மனுபுத்தி
ரனே, நான், அவர்கள் பராக்கிரமத்தையும், மகி
மைபொருந்திய அவர்கள் ஆனந்தத்தையும், அ
வர்கள் கண்களுக்கினியபொருளையும், அவர்கள்
மனம்வாஞ்சிக்கும் அவர்கள் புத்திரரையும், புத்
திரிகளையும் அவர்களினின்று கவருந்தினத்தில்,-
௨௬ தப்பி ஓடின ஒருவன் அதை உன்செவிகளுக்குக்
கேட்கப்பண்ண உன்னிடத்தில் வருவானல்ல
வா.—அந்நாளில் உன்வாய்திறக்கப்படும், நீதப் ௨௭
பி ஓடினவனுடன் பேசுவாய், இனிமவுனமாயி
ருக்கமாட்டாய்: இப்படி நீ அவர்களுக்கடையா
ளமாயிருப்பாய்; நானே யெகோவாவென்
று அறிந்துகொள்வார்களென்பதைச் சொல்லிற்
றென்றேன்.

## ௨௫. அதிகாரம்.

௧. அம்மோனியர் யூதேய சனங்களை நிந்தைசெய்
ததினிமித்தம் அவர்களுக்குத் தண்டனைவரு
மென்றுதீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௮. மோவா
பியருக்குத் தண்டனை வருமென்று காட்டல்:
௰௨. ஏதோமியருக்குத் தண்டனை வருமென்று
தெரிவித்தல்: ௰௫. பெலிஸ்தியருக்குத் தண்ட
னைவருமென்று தெரிவித்தல்.

யெகோவாவின் வாக்கு என்னிடத்தில்,— ௧
மனுபுத்திரனே, நீ அம்மோனியருக்கு எதிர்முக ௨
மாகி, அவர்களுக்கு விரோதமாய்த் தீர்க்கதரிச
னஞ்சொல்லு.—அம்மோனியரைநோக்கி,நீங்கள் ௩
ஆண்டவராகிய யெகோவாவின் வாக்
கைக்கேளுங்கள்; நீ, என்னுடைய பரிசுத்தஸ்தா
னம் அசுத்தமானபொழுதும், இஸரவேலின் தே
சம்வெறுமையானபொழுதும், யூதாவின்வமிசத்
தார் சிறைப்பட்டுப்போனபொழுதும், அவைக
ளுக்குவிரோதமாக ஆ, ஆ, என்றாய்.—ஆதலால், ௪
பார், நான்கிழக்குத்தேசத்துச் சனங்களிடத்தில்
உன்னைச் சுதந்தரமாக ஒப்பிப்பேன், அவர்கள்
உன்னில் தங்கள் அரமனைகளைக்கட்டி,உன்னில்
தங்கள் வாசஸ்தலங்களை உண்டாக்குவார்கள்:
உன்பழத்தைப்புசிப்பார்கள், உன் பாலைக்குடிப்
பார்கள்.—நான் ரப்பாவை ஒட்டகசாலையாக்கு ௫
வேன், அம்மோனியரின் தேசத்தை ஆட்டுக்கி
டையாக்குவேன்:நானே யெகோவாவென்
று நீங்கள்அறிந்துகொள்வீர்களென்று ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறார்.—இஸர ௬
வேல்தேசத்துக்குவிரோதமாய் நீ கைகொட்டி,
உன்காலால்தட்டி, அதைமுழுவதும்பகைத்து,ம
னப் பூருவமாய்ச் சந்தோஷப்பட்டாய்.—ஆத ௭
லால், பார், நான் உனக்குவிரோதமாய் என்கை
யை ஓங்கி, அந்நியர்கையில் கொள்ளைப்பொரு
ளைப்போல உன்னை ஒப்பிப்பேன்; மற்றச்சாதி
யாரினின்று உன்னைச்சேதித்து, தேசத்தாரினின்
று உன்னை நாசப்படுத்துவேன்: நான் உன்னைச்
சங்கரிப்பேன்;நானே யெகோவாவென்று
நீ அறிந்துகொள்வாயென்று ஆண்டவராகிய
யெகோவா சொல்லுகிறார்.
பாருங்கள், யூதாவமிசத்தார் சருவ தேசத்தா ௮
ரையும்போலிருக்கிறார்களென்று, மோவாபுஞ்
சேயீருஞ்சொல்லுகிறார்கள்.—ஆதலால், பாருங் ௯
கள்,மோவாபுதேசத்தின் கடையெல்லைகளிலுள்ள

(௰௭)எரே.௰௬.௫,௬,௭. ௨.சாமு.௰௫.௩௰.மீகா.௩.௭. லேவி.௰௩.௪௫.(௰௯)அதி.௩௭.௰௮.(௨௩)எரே.௭.௰௪. சங்.௨௭.௫.(௨௨)எரே.௰௬.௬,௭.(௨௩)யோபு.௨௭.௰௫. சங்.௭௮.௬௪. லேவி.௨௬.௩௯.(௨௪)ஏசா.௨௰.௩.எரே.௰௭.௰௫. யோவா.௰௩.௰௯. (௨௫) வச.௨௧. (௨௬) அதி.௩௩.௨௧,௨௨. (௨௭) அதி.௩.௨௬,௨௭. வச.௨௪.—(௨௫. அதி. ௨.) அதி.௨௬.௨. எரே.௪௯.௧,. ஆமோ.௧.௰௩. செப்.௨.௯.(௩)நீதி.௰௭.௫. (௫) ஏசா.௰௭.௨. செப்.௨.௰௪,௰௫.(௬)யோபு.௨௭.௨௩. புல.௨.௰௫. செப்.௨.௮,௰,௰௫. அதி.௩௬.௫. அதி.௩௫.௩. (௮) ஏசா.௰௫. ஏசா.௰௬. எரே.௪௮.௧. ஆமோ.௨.௧.

நகரங்கள் முதல், மகிமைபொருந்திய பேத்ஷீமோத், பாகால்மியோன், கிரியத்தாயீம்வரைக்குமுள்ளநகரங்களுமிருக்கிற எல்லைவழியாய்நான் அம்மோனியருக்கு விரோதமாய்ப் போகிறதற்குக் கிழக்குத் தேசத்தாருக்காக ஒரு வழியைத்தி
ய றப்பேன்.—அம்மோனியரோடே சுதந்தரிக்கும்படி இவர்களுடையதேசத்தை அவர்களுக்குஒப்பிப்பேன், அதினால் அம்மோனியர்தேசத்தாருக்
யக குள் நினைவிலே வரார்கள்.—மோவாபியர்மேல் தண்டனைகளைவருவிப்பேன்; நானே யெகோவாவென்பதை அறிந்துகொள்வார்களென்று ஆண்டவராகிய யெகோவா சொல்லுகிறார்.
யஉ ஆண்டவராகிய யெகோவா இவ்வாக்கைச்சொல்லுகிறார், ஏதோமியர் யூதாவமிசத்தாரை நிஷ்டூரமாய்த்தண்டனைசெய்தார்கள், அவர்களைத்தண்டனைசெய்துபெரியகுற்றத்திலுட்பட்
யங டார்கள்.—ஆதலால் ஆண்டவராகிய யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; நான் ஏதோமின்மேல்என்கையை ஓங்கி, மனுஷனையும் மிருகத்தையும்இராதபடி சேதிப்பேன்; தேமான் முதல் தேதான்மட்டுந்தேசத்தைவெறுமையாக்கு
யச வேன்;சனங்கள் கட்கத்தினால்விழுவார்கள்.—நான் என் சனங்களாகியஇஸரவேலரின்கையினால் ஏதோமில்பழிவாங்குவேன்:இவர்கள்ஏதோமில் என்னுடையகோபத்துக்கும் உக்கிரத்துக்கும்ஏற்கச்செய்வார்கள்; அவர்கள் என்னால்வருந் தண்டனையை அறிந்துகொள்வார்களென்று ஆண்டவராகியயெகோவா சொல்லுகிறார்.
யரு ஆண்டவராகிய யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; பெலிஸ்தியர்முற்பகையினிமித்தம் இவர்களைநாசப்படுத்துகிறதற்கு மனவெறுப்போடே இவர்களைத்தண்டித்து, இவர்களுக்
யசு குநிஷ்டூரஞ்செய்தார்கள்.—ஆதலால் தேவனாகிய யெகோவா சொல்லுகிறார், பாருங்கள், நான்பெலிஸ்தியர்மேல் என்கையை ஓங்கி, கிரேத்தியரைச்சேதிப்பேன், சமுத்திரக்கரையில்
யஎ மீந்தவர்களை அழிப்பேன்.—நான் பயங்கரகண்டிதங்களினாலுங் கொடிய தண்டனையினாலும்அவர்களுக்குப்பலனளிப்பேன்; நான் அவர்களுக்குப் பலனளிக்கும்பொழுது நானே யெகோவாவென்று அறிந்துகொள்ளுவார்களென்பதைச்சொல்லச்சொல்லிற்று.

## உசு. அதிகாரம்.

க. தீறுநகரத்துக்குவருந்தண்டனையைத் தெரிவித்தல்: எ. அதற்குவிரோதமாய் நெபுகத்நெச்சார்வருவதைக்காட்டல்: யரு. அதுவிழுவதினால்அந்நியதேசத்தார் திகைத்துப் புலம்பல்.

பதினோராம்வருஷம்முதலாந் தினத்தில் யெ
உ கோவாவின் வாக்குஎன்னிடத்தில்,-மனுபுத்திரனே, ஆ,ஆ,சனங்களின்வாசல் போன்ற நகரி இடிக்கப்பட்டது: அவளுடைய வியாபாரம் என்னிடத்தில்வரும்: அவள் வெறுமையாயிருக்கிறபடியால் நான் பூரணப்படுவேனென்றுதீறுநகரம்யெருசலேமுக்கு விரோதமாகச்சொல்
லிற்று.-இதினிமித்தந் தேவனாகிய யெகோ ங
வாசொல்லுகிறார்;பார்,தீறுவே,நான்உன்விரோதி, சமுத்திரந்தன்திரைகளை எழும்பப்பண்ணுகிறதுபோல நான் உனக்குவிரோதமாக அநேகசா
தியாரைவரப்பண்ணுவேன்.—அவர்கள் தீறுவின் ச
மதிலை அழிப்பார்கள், அதின் கோபுரங்களை இடிப்பார்கள்: நான் அதினின்று அதின்மண்ணை வழிப்பேன், அதைக்கற்பாறையின் உச்சியைப்
போலாக்குவேன்.—அது சமுத்திரத்தின் மத்தி ரு
யில்வலைவிரிப்பதற்கேதுவாகும்: நான் இவ்வாக்கைச் சொன்னேனென்று ஆண்டவராகிய யெகோவா சொல்லுகிறார்: அது அந்நியதே
சத்தாருக்குக்கொள்ளைப்பொருளாகும்.—வயல் சு
வெளியிலுள்ள அவள்புத்திரிகள் கட்கத்தினாலே கொலைசெய்யப்படுவார்கள்; நானே யெகோவாவென்று அறிந்துகொள்வார்கள்.
தேவனாகிய யெகோவாசொல்லுகிறார்; எ
பாருங்கள், நான் வடக்கினின்று இராசாதிஇராசனாகியநெபுகத்நெச்சரென்னும்பாபேலின்இராசாவைக்குதிரைகளோடும், ரதங்களோடும்,குதிரைவீரரோடும், மகாசேனைகளோடுஞ்சனத்திரளோடுந் தீறுநகரத்துக்கு விரோதமாய் வரப்பண்
ணுவேன்.—அவன் வயல்வெளிகளிலுள்ள உன் அ
புத்திரிகளைக் கட்கத்தினாலே கொலைசெய்வான்: அவன் உனக்குவிரோதமாய்க் கொத்தளத்தைக் கட்டுவான், உனக்கு விரோதமாக அணைபோடுவான், உனக்குவிரோதமாகக்கேடகத்தை உயர்த்
துவான்.—உன் மதில்களுக்கு விரோதமாகப் கூ
போர்க்கருவிகளை ஸ்தாபிப்பான், தன்கட்டைப்பாரைகளால் உன்கோபுரங்களை இடிப்பான்.—
சுவர் இடிந்த நகரத்தில் சனங்கள் உட்படுவது ய
போல அவன் உன்வாசல்களிற் பிரவேசிக்க, அவன் குதிரைகளின்மிகுதியினால் தூள் உன்னைமூடும்: குதிரைவீரரும், சக்கரங்களும், ரதங்களுமாகிய இவைகளின் இரைச்சலினால் உன் மதில்
கள் அதிரும்.—தன் குதிரைகளின் குளம்பினால் யக
உன் வீதிகளெல்லாவற்றையும் மிதிப்பிப்பான்: கட்கத்தினால் உன்சனங்களைக் கொலைசெய்வா
ன், உன்வலியதூண்கள் தரையிலேவிழும்.—அ யஉ
வர்கள் உன்செல்வத்தைக்கொள்ளையிடுவார்கள், உன்வியாபாரப் பொருள்களைச் சூறையாடுவார்கள்: உன்மதில்களை இடிப்பார்கள், உனக்கு ரம்மியமாயிருக்கிறவீடுகளை அழிப்பார்கள்:உன்கற்களையும், உன்மரங்களையும், உன்மண்ணையுஞ் ச
லத்திலேதள்ளிவிடுவார்கள்.—உன் கீதசத்தத்தை யங

(ய)வச.ச. அதி.உக.ஙஉ.(யஉ)உ.நாளா.உஅ.யஎ. சங்.௱௩எ.எ. எரே.சக.எ,அ. ஆமோ.க.யக. ஒப.ய,. (யச) ஏசா.யக.யச. எரே.சக.உ. (யரு) எரே.உரு.உய. யோவே.ங.ச. ஆமோ.க.சு. உ.நாளா.உஅ.யஅ.(யசு)செப்.உ.ச. க.சாமு.௱ய.யச. எரே.சஎ.ச. (யஎ) சங்.௯.யசு.—(உசு. அதி. உ.) ஏசா.உங. எரே.உரு.உஉ. ஆமோ.க.க. சக.க.உ.(ச) வச.யச.(ரு)அதி.உஎ.ஙஉ. (சு) அதி.உரு.ரு.(எ)எஸ்ரா.எ.யஉ.தானி.உ.ஙஎ.(அ) அதி.உக.உஉ.(யங)ஏசா.யச.யக. எரே.உரு.ய. ஏசா.உங.யசு. வெளி.யஅ.உஉ.

ஒழியப்பண்ணுவேன்; உன்சுரமண்டலசத்தம் இ
௰௪ னிக்கேட்கப்படுவதில்லை.-நான் உன்னைக்கற்பா
றையின் உச்சியைப்போலாக்குவேன்: வலைகள்
விரிப்பதற்கேதுவாயிருப்பாய்; இனிக் கட்டப்
படமாட்டாய்: யெகோவாவாகிய நானே
இவ்வாக்கைச் சொன்னேனென்று ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறார்.
௰௫ தேவனாகிய யெகோவா தீருவுக்குச்
சொல்லுகிறார்; உன்மத்தியிலே சங்கரிக்கப்பட்
டுக் காயம்பெற்றவர்கள் ஓலமிடுங்காலத்தில், நீவி
௰௬ ழுந்தசத்தத்தினால் தீவுகள் அதிராதிருக்குமா.-அப்
பொழுது சமுத்திரதீரத்திலுள்ள பிரபுகள் யாவ
ருந் தங்கள் தங்கள் சிங்காசனங்களைவிட்டு இறங்
குவார்கள், தங்கள் தங்கள் உத்தரீயங்களை வைத்
துவிடுவார்கள், தங்கள் தங்கள் சித்திரத்தையலா
டைகளை உரிந்துபோடுவார்கள்: அவர்கள் நடுக்
கமென்னும் வஸ்திரத்தைத் தரித்துக்கொள்வார்
கள்; தரையிலுட்கார்ந்து, நிமிஷந்தோறும் நடு
நடுங்கி, உன்னைக்குறித்துத் திகைப்பார்கள்.—
௰௭ அவர்கள் உன்னைக்குறித்துப்புலம்பி, உன்னை நி
னைந்து, சமுத்திரயாத்திரைசெய்யுஞ்சனங்களின்
வாசஸ்தானமே, சமுத்திரத்திலுள்ள பெலமுங்
கீர்த்தியும்பொருந்திய நகரியே, நீயும், தங்குகிற
வர்களைப்பயப்படுத்தும் உன்னில்வாசமாயிருக்
கிறவர்களும் எப்படிச்சேதிக்கப்பட்டீர்கள்.—
௰௮ நீ விழும்நாளில் தீவுகளெல்லாம் நடுங்கும்;
நீ அகன்றுபோகும்பொழுது சமுத்திரத்திலுள்ள
தீவுகளெல்லாஞ் சஞ்சலப்படுமென்பார்கள்.—
௰௯ ஆண்டவராகிய யெகோவா இவ்வாக்குச்
சொன்னார்; வசிப்பவர்களில்லாத நகரங்களைப்
போல நான் உன்னைவெறுமையானநகரமாக்கும்
பொழுதும், உன்மேல் நான் ஆழமான சலத்தை
வருவித்து, உன்னை அகாதமானசலத்தில் அமிழ்த்
௨௰ தும்பொழுதும்,—குழியிலிறங்கிய பூருவகாலத்
திலுள்ள சனங்களிடத்தில் நான் உன்னை இறங்
கப்பண்ணுவேன், நீ இனி வாசஸ்தானமாயிராத
படி உன்னைப்பூருவகாலமுதல்பாழாயிருந்தபூமி
யின் பாதாளஸ்தலங்களில் குழியிலிறங்கியிருக்
கிறவர்களுடனேதங்கப்பண்ணுவேன்; சீவனுள்
ளோர்தேசத்தில் மகிமையைப்பிரகாசிக்கச்செய்
௨௧ வேன்.—உன்னைப் பயங்கரத்துக்குக் காரணமா
கும்படி செய்வேன், நீ இனி இருக்கமாட்டாய்:
நீதேடப்பட்டாலும்இனிஒருபொழுதுங்காணப்
படாயென்று ஆண்டவராகியயெகோவா
சொல்லுகிறாரென்பதைச்சொல்லிற்று.

## ௨௭. அதிகாரம்.

௧. தீருநகரத்தின்ஐசுவரியத்தைவருணித்தல்: ௨௬. அதின்விழுதலைக்காட்டல்.

பின்னும் யெகோவாவின் வாக்கு என்னி
௨ டத்தில்,—மனுபுத்திரனே, நீ இப்பொழுது தீருநக
ரத்தைக்குறித்துப் புலம்பி,—தீருநகரத்தைநோக் ௩
கி, சமுத்திரத்தின் பிரவேசஸ்தானத்தில் வாசஞ்
செய்து, அநேக தீவுகளினிமித்தஞ் சனங்களு
டன்வியாபாரம்பண்ணுகிறவளே, ஆண்டவரா
கியயெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்;
தீருநகரியே, நான் பூரண சௌந்தரியென்றாய்.—
உன் எல்லைகள் சமுத்திரத்தின்மத்தியிலிருக்கின் ௪
றன, உன்னைக்கட்டினவர்கள் உன் சௌந்தரி
யத்தைப்பூரணப்படுத்தினார்கள்.—அவர்கள் செ ௫
னீரின்பெருஸ் மரங்களின்பலகைகளால் உன்
சகலகப்பல்களையுமுண்டாக்கினார்கள்: பாய் ம
ரங்களை உனக்குச்செப்பனிடும்படி லிபானோ
னினின்று ஏரஸ்மரங்களைக் கொண்டுவந்தார்
கள்.—பாஷானின் அல்லோன்மரங்களினால் உன் ௬
துடுப்புக்களைச் செப்பனிட்டார்கள்; கித்தீம் தீ
வுகளினின்றுவந்த அஷூரிமரத்தில் பதிக்கப்பட்
டயானைத்தந்தத்தினால், உன் ஆசனங்களைச்செப்
பனிட்டார்கள்.-எகிப்தினின்றுவந்த விசித்திரத் ௭
தையல்பொருந்திய மெல்லியபுடவைஉனக்கு நீ
விரித்தேற்றினபாயாயிற்று; எலீஷாவின்தீவுகளி
னின்று கொண்டுவரப்பட்ட தூமிரவருணமும்
இரத்தவருணமுமுள்ள வஸ்திரம்உனக்குமேற்ப
ரப்பாயிருந்தது.—சீதோனியரும் அர்வாதியரும் ௮
உனக்குத் தண்டுவலிக்கிறவர்களாயிருந்தார்கள்:
தீருநகரியே, உன்னிடத்திலுள்ளவித்துவான்கள்
உனக்கு மாலுமிகளாயிருந்தார்கள்.—உன்னிலுள் ௯
ள கிபாலின்முதியோரும், வித்துவான்களும் கம்
பத்துப் பார்க்கிறவர்களாயிருந்தார்கள்: சமுத்தி
ரத்தின்சமஸ்தகப்பல்களிலும் கப்பற்காரர்கள் வி
யாபாரம்பண்ணுவதற்கு உன்னிடத்திலிருந்தார்
கள்.—பார்சியரும், லூத்தியரும், பூத்தியரும்உன் ௰
சேனையின் யுத்தவீரர்களாயிருந்தார்கள்: அவர்
கள் உன்னிடத்தில் கேடகத்தையுந் தலைச்சீரா
வையுந்தூக்கி, உன்சௌந்தரியத்தை விளங்கப்
பண்ணினார்கள்.—அர்வாதியர் உன்சேனைகளு ௰௧
டன் நான்குதிசையிலும், உன் மதில்களின்மே
லும், கம்மாதியர் உன் கோபுரங்களிலுமிருந்தார்
கள்: இவர்கள்சுற்றிலும்உன்மதில்களின்மேல்தங்
கள்பரிசைகளைத்தூக்கி, உன்சௌந்தரியத்தைப்
பூரணப்படுத்தினார்கள்.—தர்ஷீஷூரார் உன்னோ ௰௨
டே வியாபாரம்பண்ணி, பலவித செல்வமிகுதி
யினால் வெள்ளியையும், இரும்பையும், வெள்ளீ
யத்தையும், காரீயத்தையுங்கொண்டு உன்சந்தை
யில்மாற்றினார்கள்.—யாவான், தூபால், மேஷெக் ௰௩
கென்னுஞ்சாதியார்உன்னிடத்திலுள்ளவியாபா
ரிகள்: அவர்கள்மனுஷரையும் பித்தளைப்பாத்தி
ரங்களையுங்கொண்டுவந்து, உன்சந்தையில் விற்
றார்கள்.—தொகர்மாவமிசத்தார்குதிரைகளையும், ௰௪
குதிரையாள்களையும், கோவேறுகழுதைகளையும்,
உன்சந்தைகளுக்குக்கொண்டுவந்தார்கள்.-தேதா ௰௫

(௰௫) எரே.௪௧.௨௧. அதி.௨௭.௨௮. (௰௬) எசா.௨௩.௮. யோனா.௩.௬. யோபு.௨.௰௩. அதி.௩௨.௰. அதி.௨௭.௩௫. (௰௭) அதி.௨௭.௩௨. வெளி.௰௮.௯. எசா.௨௩.௪. (௰௮) வச.௰௫. (௨௰) அதி.௩௨.௰௮,௨௪. (௨௧) அதி.௨௭.௩௬. சங்.௩௭.௩௬.—(௨௭. அதி. ௨.) அதி.௰௯.௧. (௩) அதி.௨௮.௨,௰௨. எசா.௨௩.௩. (௫) உபா.௩.௯. (௬) எரே.௨.௰. (௯) ௧.இரா.௫.௰௮. சங்.௮௩.௬. (௰) எரே.௪௬.௯. (௰௨) ஆதி.௰.௪. ௨.நாளா.௨௰.௩௬. (௰௩) ஆதி.௰.௨. வெளி.௰௮.௰௩. (௰௪) ஆதி.௰.௩. (௰௫) ஆதி.௰.௭.

னியர் உன்வியாபாரிகளாயிருந்தார்கள்; அநேகதீ
வுகளில்உன்வியாபாரப்பொருள்களைவாங்கி, அ
வைகளுக்குப்பிரதியாய் உனக்கு யானைத்தந்தங்
௰௬ களையுங்கருங்காலிமரங்களையுந்தந்தார்கள்.—சீரி
யர் நீ உண்டாக்கின பலபொருள்களினிமித்தம்
உன்னோடே வியாபாரம்பண்ணி, சிவப்புக்கற்க
ளையும், இரத்தாம்பரங்களையும், விசித்திரத்தைய
லாடைகளையும்,மெல்லியவஸ்திரங்களையும்,பவ
ளங்களையும், பளிங்கையும் உன் சந்தைகளில்
௰௭ விற்கவந்தார்கள்.—யூதரும் இஸ்ரவேல் தேசத்
தாரும் உன்னோடே வியாபாரம்பண்ணி, மின்
னீத்தூரின்கோதுமையையும், கலப்பன்னத்தை
யும், தேனையும், எண்ணெயையும், குங்குலியத்
தையுங் கொண்டுவந்து உன் சந்தையில் விற்றார்
௰௮ கள்.—தமஸ்கூரார் நீ உண்டாக்கின பொருள்
மிகுதியினிமித்தமும், சகல திரவியத்தின் மி
குதியினிமித்தமும்உன்னோடே வியாபாரம்பண்
ணி, எல்போனின் திராட்சரசத்தையும் வெண்
மையான ஆட்டுமயிரையுங் கொண்டுவந்து விற்
௰௯ றார்கள்.—தாண்யாவானென்னுந் தேசத்தார் மூ
சாலினின்று துலக்கப்பட்ட இரும்பையும், இ
லவங்கப்பட்டையையும், வசம்பையுங்கொண்
௨௰ டுவந்து உன் சந்தையில் விற்றார்கள்.—தேதானி
யர் ரதங்களுக்குத் தகுந்த விலையேறப்பெற்ற பு
டவைகளைக் கொண்டுவந்து, உன்னிடத்திலே
௨௧ வியாபாரம் பண்ணினார்கள்.—அரபியரும், கே
தாரின் சகலபிரபுகளும் ஆட்டுக்குட்டிகளையும்,
ஆட்டுக்கடாக்களையும், வெள்ளாட்டுக் கடாக்க
ளையுங் கொண்டுவந்து உன்னிடத்தில் வியாபா
௨௨ ரம் பண்ணினார்கள்.—ஷேபா, ராமாவென்னும்
நகரங்களின் வியாபாரிகள் பலவித உத்தமசுகந்
த திரவியங்களையும், பலவிதரத்தினங்களையும்,
தங்கத்தையும் உன் சந்தைகளில் கொண்டுவந்
௨௩ தார்கள்.-ஆரான், கன்னே, எதேன், ஷேபாஎன்
னுமூராரும், அசீர் கில்மத்தென்னுந் தேசத்தா
௨௪ ரும் உன்னுடையவியாபாரிகள்.—இவர்கள் சக
லவிதமானபொருள்களையும் விற்றார்கள்,நீலவரு
ணமான வஸ்திரங்களையும், விசித்திரத்தையலா
டைகளையும், விலையேறப்பெற்ற வஸ்திரங்களை
யுமிட்டுக்கயிறுகளால் கட்டியிருந்த எரஸ்மாப்
பெட்டிகளையுங்கொண்டுவந்து, உன்னிடத்தில்
௨௫ வியாபாரம் பண்ணினார்கள்.-தர்ஷீஸ்கப்பலின்
சனங்கள் உன்சந்தையில் உன்னைக்குறித்துப்பா
டினார்கள்: நீ பூரணம்பெற்றுச் சமுத்திரத்தின்
மத்தியில்மிகவுஞ்சிறந்திருந்தாய்.
௨௬ உன்னிடத்தில்தண்டுவலிக்கிறவர்கள் ஆழமா
னசலத்தில் உன்னைக்கொண்டுவர,கீழ்காற்றுச்ச
முத்திரத்தின்மத்தியில்உன்னை உடைத்துவிட்ட
௨௭ து.—நீ நாசமடையுந்தினத்தில்உன்செல்வமும்,
உன்சந்தையும், உன்வியாபாரப்பொருள்களும்,
உன்கப்பற்காரரும், உன்மாலுமிகளும், உன்னி
டத்தில்கம்பத்துப்பார்க்கிறவர்களும், உன்வியா
பாரிகளும், உன்னிடத்திலுள்ள சகல யுத்தவீரர்
களும், உன்மத்தியிலுள்ள சகல கூட்டத்தாருட
னே சமுத்திரத்தின்மத்தியிலே விழுவார்கள்.—
உன்மாலுமிகள் அழுஞ்சத்தத்தினால் பேட்டை ௨௮
கள் அதிரும்.—தண்டுவலிக்கிறவர்கள் யாவரும், ௨௯
கப்பலாள்களும், சமுத்திரமாலுமிகளனைவருந்
தங்கள்கப்பல்களை விட்டிறங்கிக்கரையேறிநின்
றுகொண்டு,—உன்னிமித்தஞ்சத்தமிட்டுப்புலம் ௩௰
பி, தங்கள் தலைகளின்மேல் புழுதியைத்தூவி,
சாம்பலிலே புரளுவார்கள்.—உன்னிமித்தந் தங் ௩௧
கள்தலையை முண்டனஞ்செய்வார்கள், இரட்
டைத்தரித்து,மனங்கசந்து, மிகவும்புலம்பி,உன்
னிமித்தந் துக்கங்கொண்டாடுவார்கள்.—அவர் ௩௨
களிடும் ஓலத்தில் உன்னிமித்தம் புலம்பி, உன்
னைக்குறித்து, சமுத்திரமத்தியிலே சேதமாய்ப்
போன தீறுவைப்போல நகரமுண்டோ.-சமுத் ௩௩
திரத்தின்வழியாய் உன்வியாபாரப்பொருள்கள்
புறப்பட்டபொழுது அநேக சனங்களைச் செல்
வமாக்கினாய்; உன்செல்வமும் உன்வியாபாரப்
பொருளுமாகிய இவைகளின்மிகுதியினால் பூமி
யிலுள்ள இராசாக்களை ஐசுவரியமுள்ளவர்களாக்
கினாய்.—நீ சமுத்திரத்திரைகளினால் ஆழத்தில் ௩௪
உடைக்கப்பட்டபொழுது, உன் வியாபாரப்
பொருளுடன் உன்மத்தியிலுள்ள கூட்டத்தார்
விழுந்துபோனார்கள்.-தீவுகளிலுள்ளவர்கள் யா ௩௫
வரும் உன்னைக்குறித்துத்திகைப்பார்கள், அவர்
களுடைய இராசாக்கள்மிகவும்பயந்துமுகவாட்
டமுள்ளவர்களாவார்கள்.-சனங்களுக்குள்ளான ௩௬
வியாபாரிகள் உன்னைச்சீறுவார்கள்; நீ பயங்க
ரத்துக்குக்காரணமானாய், நீ இனி நிலைபெறா
யென்றுசொல்லிப் புலம்புவார்கள் என்பதைச்
சொல்லச்சொல்லிற்று.

## ௨௮. அதிகாரம்.

௧. அகங்காரத்தினிமித்தந் தேவன் தீறு இராசாவைத் தண்டிப்பாரென்று சொல்லல்: ௰௧. அதைக்குறித்துப் புலம்பல்: ௨௰. சீதோனுக்குத் தண்டனைவருமெனல்: ௨௪. இஸ்ரவேலர் தங்கள்தேசத்திற்கு மீண்டுவருவார்களென்றுமுன்னுரைத்தல்.

பின்புயெகோவாவின்வாக்குஎன்னிடத்தி ௧
ல்,-மனுபுத்திரனே, நீ தீறுவின் இராசாவைநோக் ௨
கி,நீமனக்கருவங்கொண்டுநான் தேவன்,சமுத்
திரமத்தியில் தேவாசனத்தில் வீற்றிருக்கிறேனெ
ன்றாய்; உனதுள்ளந் தேவனுடைய உள்ளம்
போலிருக்கின்றதென்று நீ பாவித்தாலும், நீ மனு
ஷனேயன்றித்தேவனல்ல.—பார்,நீதானியேலைப் ௩

(௰௭) ௧.இரா.௫.௯,௰௧. எஸ்றா.௩.௭. அப்.௰௨.௨௰. நியா.௰௧.௩௩. எரே.௮.௨௨. (௨௰) ஆதி.௨௫.௩.(௨௧)ஆதி.௨௫.௰௩. ஏசா.௬௰.௭.(௨௨) ஆதி.௰௭. ௧.இரா.௰.௧,௨. சங்.௭௨.௰,௰௫. ஏசா.௬௰.௬. (௨௩) ஆதி.௰௧.௩௧. ௨.இரா.௰௯.௰௨. ஆதி.௨௫.௩. (௨௫) சங்.௪௮.௭. ஏசா.௨.௰௬. வச.௪. (௨௬) சங்.௪௮.௭. (௨௭) நீதி.௰௧.௪. வெளி.௰௮.௯,. (௨௮)அதி.௨௬.௰௫,௰௮. (௨௯) வெளி.௰௮.௰௭,. (௩௰) யோபு.௨.௰௨. வெளி.௰௮.௰௯. எஸ்த.௪.௧,௩. எரே.௬.௨௬. (௩௧) எரே.௰௬.௬. மீகா.௧.௰௬. (௩௨) அதி.௨௬.௰௭. வெளி.௰௮.௰௮. (௩௩) வெளி.௰௮.௰௯. (௩௪) அதி.௨௬.௰௯. (௩௫) அதி.௨௬.௰௫,௰௬. (௩௬) எரே.௰௮.௰௬.—(௨௮. அதி. ௨.) அதி.௨௭.௩,௪. ஏசா.௩௧.௩. (௩) சக.௯.௨.

பார்க்கிலும்ஞானவான்;எந்தமறைபொருளும்உ
௪ னக்கு மறைவாயிருப்பதில்லை.—நீ உன்ஞானத்தி
னாலும் உன்புத்தியினாலும்ஐசுவரியத்தைச்சம்பா
தித்தாய், பொன்வெள்ளிகளையும் உன்பண்டசா
௫ லைகளில்சேர்த்தாய்:—நீ உன் மகா ஞானத்தினா
லும், உன்வியாபாரத்தினாலும் உன்செல்வத்தை
வருத்திக்கப்பண்ணினாய், செல்வத்தினிமித்தம்
உன்மனங் கருவங்கொண்டதென்று ஆண்டவ
௬ ராகிய யெகோவா சொல்லுகிறார்.—ஆத
லால் ஆண்டவராகிய யெகோவா இவ்
வாக்குச் சொல்லுகிறார்; நீ உன் இருதயத்தைத்
தேவனுடைய உள்ளத்தைப்போலப் பாவித்
௭ தாய்.—ஆதலால், பார், தேசத்தாருக்குள்ளேபயங்
கரமுள்ளவர்களாயிருக்கிற அந்நியரை உனக்கு
விரோதமாய் வருவிப்பேன்: அவர்கள் ஞான
மென்னும்உன்சௌந்தரியத்துக்குவிரோதமாய்த்
தங்கள்தங்கள்கட்கங்களை உருவி, உன்மகிமைப்
பிரகாசத்தைக் களங்கமுள்ளதாக்குவார்கள்.—
௮ அவர்கள்உன்னைக்குழியில்வீழ்த்துவார்கள், கொ
லையுண்டவர்களைப்போல நீசமுத்திரமத்தியிலி
௯ றந்துபோவாய்.—உன்னைக் கொல்லுகிறவனுக்கு
முன்பாக நான் தேவனென்று நீ சொல்லுவா
யா; நீ உன்னைவதைக்கிறவன்கைக்குமனுஷனே
௰ யன்றித் தேவனல்ல.—நீவிருத்தசேதனமில்லாத
வர்களைப்போல் அந்நியரின்கையினால் இறந்து
போவாய்:நானேஇவ்வாக்குச்சொன்னேனென்
று ஆண்டவராகிய யெகோவா சொல்லு
கிறாரென்பதைச்சொல்லச்சொல்லிற்று.
௰௧ பின்னும்யெகோவாவின்வாக்கு என்னி
௰௨ டத்தில்,—மனுபுத்திரனே, நீ தீறு இராசாவைக்கு
றித்து,புலம்பி, அவனைப்பார்த்து நீ சுரூபம்பதித்
தமுத்திரை,பரிபூரணஞானி,பூரணசௌந்தரன்-
௰௩ நீ தேவனுடையநந்தாவனமாகியஏதேனிலிருந்
தாய்; கெம்பு,பதுமராகம்,வச்சிரம்,தர்ஷீஷ் இரத்
தினம், கோமேதகம், யஸ்பி, நீலக்கல், சிவப்புக்
கல்,மரகதம் முதலியசகலவிதரத்தினங்களும்,தங்
கமும் உன்னை மூடிக்கொண்டன: நீ சிருஷ்டிக்
கப்பட்டதினத்தில்உன்மேளவாத்தியங்களும்நா
௰௪ யகசுரங்களும் ஆயத்தப்படுத்தப்பட்டன.—அபி
ஷேகிக்கப்பட்டுமூடுங்கெருபியைப்போல்உன்
னைஏற்படுத்தினேன்; நீ தேவனுடையபரிசுத்
தமலையிலிருந்தாய்;நீஅக்கினிமயமானகற்கள்மத்
௰௫ தியில் உலாவினாய்.—உன் சென்மதினம்முதல்,
பாவம் உன்னில்காணப்படும்வரைக்கும், நீ உன்
௰௬ நெறிகளில் குறைவற்றிருந்தாய்.—உன்னிடத்தி
லுள்ள வியாபாரமிகுதியினிமித்தம் நீ கொடு
மையினால் நிறைந்து பாவஞ்செய்தாய்: ஆத
லால் நான் தேவனுடைய மலையினின்று உன்
னை அசுத்தவஸ்துவைப்போலத்தள்ளிவிடுவேன்:
மூடுங்கெருபியே, நான் அக்கினிமயமான கற்க

ளிலிருந்து உன்னை அழிப்பேன்.—சௌந்தரியத் ௰௭
தினால் உன்மனங் கருவங்கொண்டது, உன்பிர
காசத்தினால் நீ உன் ஞானத்தைக்கெடுத்தாய்: ஆ
தலால் நான் உன்னைத் தரையிலேதள்ளுவேன்,
இராசாக்கள் உன்னை அவமதிக்கும்படி நான் அ
வர்கள் முன்பாக உன்னைத்தள்ளிவிடுவேன்.—நீ ௰௮
உன் அக்கிரமங்களின் மிகுதியினாலும், உன் வி
யாபாரத்தின் அநியாயத்தினாலும் உன்பரிசுத்தஸ்
தானங்களை அசுசிப்படுத்தினாய்; ஆதலால் நான்
உன் மத்தியினின்று ஒரு அக்கினியைத்தோற்று
விப்பேன், அது உன்னைத்தகித்துவிடும், உன்னைப்
பார்க்கும் யாவருக்குமுன்பாகவும் உன்னைப்
பூமியின்மேல் சாம்பலாக்குவேன்.—தேசத்தாருக் ௰௯
குள் உன்னை அறிந்தயாவரும் உன்னைநினைந்துதி
கைப்பார்கள்: நீ பயங்கரமாவாய், நீ இனி ஒரு
பொழுதும் நிலைபெறாயென்று ஆண்டவராகி
ய யெகோவா சொல்லுகிறாரென்பதைச்சொ
ல்லச்சொல்லிற்று.
திரும்பவும் யெகோவாவின் வாக்கு என் ௨௰
னிடத்தில்,—மனுபுத்திரனே, நீ சீதோனுக்கு எ ௨௧
திர்முகமாகி, அதற்கு விரோதமாய்த் தீர்க்கதரிச
னஞ்சொல்லி,—சீதோனே, பார், நான் உனக்கு ௨௨
விரோதியானேன், நான் உன்மத்தியில் மேன்
மைப்படுவேன்: நான் அதின்மேல் தண்டனைக
ளைவருவித்து, அவளால் பரிசுத்தரென்று மதிக்
கப்படுஞ்சமயத்தில்நானே யெகோவாவென்
று அவர்கள் அறிந்துகொள்வார்கள்.—நான் அதி ௨௩
னிடத்தில் கொள்ளைநோயையும், அதின்வீதிக
ளில் இரத்தத்தையும் அனுப்புவேன்; சுற்றிலும்
அதற்குவிரோதமாய் வருங்கட்கத்தினால் காயப்
பட்டவர்கள் அதின்மத்தியில் விழுவார்கள்; நா
னே யெகோவாவென்று அறிந்துகொள்ளு
வார்களென்று ஆண்டவராகியயெகோ
வா சொல்லுகிறார்.
இஸரவேல்வமிசத்தாரை அவமதிக்கும் அவர் ௨௪
களுடைய சுற்றுப்புறத்தார் யாவருக்குந்தைக்கி
றமுள்ளும், நோய்செய்யும் நெரிஞ்சிலும் இனி
அவர்களுக்கு இருப்பதில்லை; நானே ஆண்ட
வராகிய யெகோவாவென்று அவர்கள்
அறிந்துகொள்வார்கள்.—ஆண்டவராகியயெ ௨௫
கோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; இஸர
வேல் வமிசத்தாரை அவர்கள் சிதறஅடிக்கப்பட்
டிருக்கிற அந்தந்தத்தேசத்தாரினின்று சேர்க்குங்
காலத்தில், நான் அவர்களால்மற்றச் சனங்களின்
பார்வையில்பரிசுத்தரென்று துதிக்கப்படுவேன்,
அப்பொழுது அவர்கள் என்தாசனாகிய யாக்கோ
புக்கு நான் அளித்ததங்கள்தேசத்தில் வாசம்பண்
ணுவார்கள்.—அவர்களை அவமதிக்குஞ் சுற்றுப் ௨௬
புறத்தார் யாவரையும் நான் தண்டிக்கும்பொழு
து, அவர்கள் அந்தஸ்தானத்தில்விக்கினமின்றிவா

(௫) சங்.௬௨.௰. சக.௯.௩. (௯) வச.௨. (௰௨) அதி.௨௭.௨,௩. (௰௩) அதி.௩௧.௮,௯. அதி.௨௬.௰௩. (௰௪) யாத்.௨௫.௨௰. வச.௰௬. அதி.௨௰.௪௰. (௰௬) வச.௰௪. (௰௭) வச.௨,௫. (௨௧) அதி.௬.௨. ஏசா.௨௩.௪,௰௨. எரே.௨௫.௨௨. அதி.௩௨.௩௰. (௨௨) யாத்.௰௪.௪,௰௭. அதி.௩௧.௰௩. சங்.௯.௰௬. அதி.௨௰.௪௧. வச.௨௫. (௨௩) அதி.௩௮.௨௨. (௨௪) எண்.௩௩.௫௫. யோசு.௨௩.௰௩. (௨௫) ஏசா.௰௧.௰௨. வச.௨௨. (௨௬) எரே.௩௩.௬. அதி.௩௬.௨௮. ஏசா.௬௫.௨௧. ஆமோ.௯.௰௪. எரே.௩௧.௫.

சம்பண்ணி, வீடுகளைக்கட்டி, திராட்சத்தோட்
டங்களை உண்டாக்குவார்கள்; விசாரமில்லாமல்
வாசம்பண்ணுவார்கள், நானே தங்கள் தேவனா
கிய யெகோவாவென்று அறிந்துகொள்வார்
களென்பதைச்சொல்லச்சொல்லிற்று.

## ௨௯. அதிகாரம்.

௧. பார்வோன் இராசாவின் அகங்காரத்தையுங்க
படத்தையுந்தெரிவித்தல்: ௮. அவன்தேசம் அ
ழிக்கப்படுமென்றுமுன்னுரைத்தல்: ௰௩. நாற்ப
துவருஷத்தின்பின்சீர்ப்படுமென்றுசொல்லல்:
௰௭. எகிப்துதேசத்தின்இராச்சியத்தை நெபுகத்
நெத்சருக்குக்கூலியாகக்கொடுத்தல்: ௨௧. இஸ
ரவேலர்விருத்தியடைதல்.

பத்தாம்வருஷம்பத்தாம்மாதம்பன்னிரண்டா
ந்தினத்தில்யெகோவாவின்வாக்குஎன்னி
௨ டத்தில்,—மனுபுத்திரனே, எகிப்தின் இராசாவா
கியபார்வோனுக்குஎதிர்முகமாகி,அவனுக்கும்எ
கிப்துமுழுவதுக்கும்விரோதமாய்ப்பேசித்தீர்க்க
௩ தரிசனஞ்சொல்லி,-எகிப்தின்இராசாவாகியபார்
வோனே, நீ உன்நதியின்மத்தியில்கிடந்து,இந்த
நதி என்னுடையது, நான் எனக்காக இதைஉண்
டுபண்ணினேனென்ற பெரியமுதலையே, நான்
௪ உன் விரோதியானேன்.—நான் உன்கொடிறுக
ளில்தூண்டில்களைமாட்டி, உன்நதியிலுள்ளமச்
சங்களை உன் செதிள்களில் ஒட்டிக்கொள்ளும்
படிசெய்து, நதியின் மத்தியினின்று உன்னைத்
தூக்கிவிடுவேன், உன் நதியின் மச்சங்களெல்
லாம் உன் செதிள்களில் ஒட்டிக்கொண்டிருக்
௫ கும்.—பின்பு உன்னையும், உன் நதியின் சகல
மச்சங்களையும் மைதானத்திலே தள்ளிவிடு
வேன்: நீ வெளியிலேவிழுவாய்; கூட்டப்பட்
டு ஏகமாய்ச்சேர்க்கப்படமாட்டாய், நான் உன்
னைப்பூமியின் மிருகங்களுக்கும் ஆகாயத்தின் ப
௬ றவைகளுக்கும் இரையாகக்கொடுப்பேன்.—எ
கிப்தியர் யாவரும் இஸரவேல் வமிசத்தாருக்கு
நாணற்கோலாயிருந்தபடியால், நானே யெ
கோவாவென்று அறிந்துகொள்வார்கள்.—
௭ அவர்கள் உன்னைக்கையிலேபிடிக்க, நீ முறிந்து
அவர்கள் தோலைஎல்லாங் கிழிப்பாய்: அவர்கள்
உன்மேல்சாய்ந்தால் நீஅவர்கள் இடுப்பெல்லாம்
முறியும்படி வேதனைப்படுத்துவாயென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறார்.
௮ ஆதலால் பார், நான் உன்மேல்கட்கத்தைவரு
வித்து,மனுஷரையும் மிருகங்களையும் உன்னிலி
௯ ராதபடிசேதிப்பேன்.—நதிஎன்னுடையது, நான்
அதை உண்டாக்கினேனென்று அவன்சொன்
னபடியினால் எகிப்துதேசம்பாழ்பட்டுவெறுமை
யாகும்; அப்பொழுது நானே யெகோவா
௰ வென்று அவர்கள் அறிந்துகொள்வார்கள்.—ஆத
லால் பார், நான் உனக்கும் உன்நதிக்கும்விரோ
தியாகி, மிக்தோல்முதல் கூஷின் எல்லையிலுள்
ளசெவேனேவரைக்கும் எகிப்துதேசத்தை முழு
மையும்பாழ்ப்படுத்திவெறுமையாக்குவேன்.-எந் ௰௧
தமனுஷனுடையகாலும் அதின்வழியாய்ச்செல்
லாது, எந்தமிருகமும் அங்கேபோகாது, நாற்ப
துவருஷமட்டும் வசிப்பாரில்லாமலிருக்கும்.—
வெறுமையாக்கப்பட்டதேசங்களுக்குள் எகிப் ௰௨
துதேசத்தை நான் நாற்பதுவருஷமட்டும் வெறு
மையாக்குவேன், அவாந்தரமாய்ப்போனஅதின்
சகல நகரங்களும் அவாந்தரமாக்கப்படும்: நான்
எகிப்தியரைச்சகலசாதிகளுக்குள்ளுந் தூவி,எல்
லாத்தேசங்களிலும் அவர்களைச் சிதற அடிப்பே
னென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறார்.
நாற்பதுவருஷஞ்சென்றபின்பு நான் எகிப்தி ௰௩
யரை அவர்கள் சிதற அடிக்கப்பட்டதேசத்தாரி
னின்று சேர்த்துக்கொண்டு,—எகிப்தியரைச் சி ௰௪
றையினின்றுமீட்டு, பத்ரோசென்னும் அவர்
கள் சென்மதேசத்திற்கு அவர்களைத் திரும்பிப்
போகப்பண்ணுவேன்; அங்கேஅவர்கள்நீசராச்
சியத்தை யுடையவர்களாவார்கள்.—அது இராச் ௰௫
சியங்களுக்குள் மிகவும் நீசமுள்ளதாகும்; அது
இனித் தேசத்தாருக்குள் சிரேஷ்டமாக என்
ணப்படமாட்டாது: அவர்கள் இனி அந்நியதே
சத்தாரை அரசாளாதபடி நான் அவர்களை மெலி
யப்பண்ணுவேன்.—இஸரவேல்வமிசத்தார் தாங் ௰௬
கள்அவர்களைநோக்கும்பொழுது தங்கள் அக்கிர
மங்கள் நினைவில் வந்து, இனி ஒருபொழுதும்
அவர்களிடத்தில் அடைக்கலம் புகமாட்டார்
கள்: நானே ஆண்டவராகிய யெகோவா
வென்றறிந்துகொள்ளுவார்களென்பதை ஆண்
டவராகிய யெகோவா சொல்லச்சொன்
னாரென்று சொல்லிற்று.
இருபத்தேழாம் வருஷம் முதலாம் மாதம் ௰௭
முதலாந்தினத்தில் யெகோவாவின் வாக்
குஎன்னிடத்தில்,-மனுபுத்திரனே,பாபேலின்இ ௰௮
ராசாவாகிய நெபுகத்நெத்சர் தீறுவுக்குவிரோத
மாகத்தன்சேனைகள் பெரியஊழியஞ் செய்யப்
பண்ணினான்:ஒவ்வொருதலையும் மொட்டையா
யிற்று, ஒவ்வொருவனுடைய தோளின்தோலும்
உரிந்துபோயிற்று; ஆனாலும் அவன்தீறுவுக்குவி
ரோதமாய்ச்செய்தஊழியத்தினிமித்தம்அவனாயி
னும் அவன்சேனையாயினும் கூலிபெறவில்லை.—
ஆதலால் பார், நான்பாபேலின் இராசாவாகிய ௰௯
நெபுகத்நெத்சருக்கு எகிப்துதேசத்தைக்கொடுக்
கிறேன்; அவன் அதின் கூட்டத்தாரைச்சிறை
பிடித்து, சூறையாடி, அதின் கொள்ளைப்பொரு
ளைஅபகரித்துக்கொள்வான், அதுஅவன்சேனைக்
குக்கூலியென்று ஆண்டவராகிய யெகோ
வா சொல்லுகிறார்.—அவன் அதற்கு விரோத ௨௰

(௨௯. அதி. ௨.) அதி.௨௮.௨௧. ஏசா.௰௯.௧. எரே.௨௫.௰௯. (௩) எரே.௪௪.௩௰. சங்.௭௪.௰௩,௰௪. ஏசா.௨௭.௧. அதி. ௨௮.௨. (௪) ஏசா.௩௭.௨௯. (௫) எரே.௮.௨. எரே.௭.௩௩. (௬) ௨.இரா.௰௮.௨௧. ஏசா.௩௬.௬. (௭) எரே.௩௭.௫,௭, ௰௧. அதி.௰௭.௰௭. (௮) அதி.௰௪.௰௭. அதி.௩௨.௰௧,௰௨,௰௩. (௯) அதி.௩௰.௰௨. யாத்.௰௪.௨. எரே.௪௪.௧. அதி.௩௰. ௬. (௰௧) அதி.௩௨.௰௩. (௰௨) அதி.௩௰.௭,௨௬.(௰௩)ஏசா.௰௯.௨௩. எரே.௪௬.௨௬. (௰௪) அதி.௰௭.௬,௰௩.(௰௬)ஏசா. ௩௰.௨,௩. (௰௮) எரே.௨௭.௬. (௨௰) எரே.௨௫.௧.

மாய்ச்செய்தவேலைக்குத் தகுந்தகூலியாக எகிப்
துதேசத்தைஅவனுக்குக்கொடுத்தேன், அவர்கள்
எனக்காக வேலைசெய்தார்களென்று ஆண்ட
வராகிய யெகோவா சொல்லுகிறார்.
௨௧ அந்தத்தினத்தில் நான் இஸரவேல் வமிசத்தா
ரின்கொம்பை முளைக்கப்பண்ணுவேன், அவர்
கள்மத்தியில் நீ வாய்திறக்கும்வரம்அளிப்பேன்;
அதினால் நானே யெகோவாவென்று அ
வர்கள் அறிந்துகொள்வார்களென்பதைச்சொல்
லிற்று.

## ௩௰. அதிகாரம்.

௧. எகிப்தியரும் அதற்குத் துணைநின்றவர்களுஞ் சேதிக்கப்படுவார்களென்று தீர்க்க தரிசனஞ் சொல்லல்: ௨௰. எகிப்தின்சேனைகளை நாசப்படுத்தப்பாபேலின் இராசா தன்சேனைகளைப்பெருகப்பண்ணுவாரென்றுமுன்னுரைத்தல்.

திரும்பவும் யெகோவாவின்வாக்கு என்
௨ னிடத்தில்,-மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனஞ்
சொல்லு; நீங்கள், ஐயோ, அந்தநாளென்றல
௩ றுங்கள்.—அந்தத்தினஞ் சமீபித்துவந்தது; யெ
கோவாவின் தினஞ் சமீபித்துவந்தது; அந்த
௪ மந்தாரதினம் அந்நியதேசத்தாரின்காலம்.–எகிப்
தின்மேல் கட்கம்வரும்,கூஷ்தேசத்தில் மகாவே
தனையுண்டாகும், அந்தச்சமயத்தில் எகிப்துதே
சத்தில் கொலையுண்டவர்கள் விழுவார்கள், அ
தின் கூட்டத்தார் கொண்டுபோகப்படுவார்கள்,
அதின் அஸ்திபாரங்கள் நிருமூலமாக்கப்படும்.–
௫ கூஷ், பூற்று, லூத், கூப்பென்னுந் தேசத்தா
ரும், கலப்புச்சனங்களனைவரும், உடன்பட்ட
தேசத்தார் யாவரும் அவர்களுடனே கட்கத்தி
னால் விழுவார்கள், எகிப்துக்குச் சகாயஞ்செய்
௬ கிறவர்களும் விழுவார்கள்,-அதின் பராக்கிரமத்
தின் அலங்காரம் ஒழிந்துபோமென்று யெ
கோவா சொல்லுகிறார்; மிக்தோல் முதல் செ
வேனேவரைக்குமுள்ள சனங்கள் கட்கத்தினால்
அதிலே விழுவார்களென்று ஆண்டவராகி
௭ ய யெகோவா சொல்லுகிறார்.—பாழாய்ப்
போன தேசங்களுக்குள் அவர்கள் பாழாய்ப்
போவார்கள், நாசப்பட்ட நகரங்களுக்குள் அ
௮ வர்கள் நகரங்களும் நாசப்படும்.—நான் எகிப்
துதேசத்தில் அக்கினியை மூட்டும்பொழுதும்,
துணையாய்நின்ற யாவரும் நாசமடையும்பொ
ழுதும், நானே யெகோவாவென்று அறிந்
௯ துகொள்வார்கள்.—அத்தினத்தில் அனுப்பப்பட்
டதூதர்கள் விசாரமில்லாத கூஷியரைப் பயப்
படுத்தும்படி என்னிடத்தினின்று கப்பலேறிப்
போவார்கள், எகிப்தின் தினத்திலுண்டானது
போலமகாவேதனைஅவர்கள்மேல்வரும்: பாருங்
௰ கள், அதுவருகின்றது.—நான் பாபேலின் இரா
சாவாகியநெபுகத்நெத்சரின்கையினால்எகிப்தின்
கூட்டத்தாரையும் ஒழியப்பண்ணுவேனென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
றார்.—அவனும், தேசத்தாருக்குள்ளே பயங்க ௰௧
ரமுள்ளவர்களாகிய அவன் சனங்களுந் தேசத்
தை நாசப்படுத்தும்படி கொண்டு வரப்படுவார்
கள்: அவர்கள் எகிப்துக்கு விரோதமாகத் தங்
கள்கட்கங்களை உருவி, கொலையுண்ட சனங்க
ளால்தேசத்தை நிரப்புவார்கள்.—நான் நதிகளை ௰௨
வற்றப்பண்ணுவேன், துஷ்டருடைய கையில்
தேசத்தைவிற்பேன்: அந்நியரின்கையினால் தே
சத்தையும்அதின்பூரணத்தையும்பாழாக்குவேன்:
யெகோவாவாகிய நான் இவ்வாக்கைச்
சொன்னேன்.—நான் விக்கிரகங்களை நாசப்ப ௰௩
டுத்துவேன், நோப்பினின்று விக்கிரகங்களை ஒ
ழியப்பண்ணுவேன்; இனி எகிப்துதேசத்தாரில்
ஒருவனும்பிரபுவாயிரான்: எகிப்துதேசத்தில்பய
முண்டாகும்படி செய்வேன்.—பத்ரோசைவெ ௰௪
றுமையாக்குவேன், சோவானில் அக்கினியை
மூட்டுவேன், நோ நகரத்தைத் தண்டிப்பேன்.–
எகிப்தின் பராக்கிரமமென்னுஞ் சீனின்மேல் ௰௫
என்கோபத்தைச்சொரிந்து, நோ நகரத்தின்கூட்
டத்தாரைச்சங்கரிப்பேன்.–நான் எகிப்தில் அக் ௰௬
கினியைமூட்டுவேன்:சீன் மகாவேதனைப்படும்,
நோ பிளந்துபோம்,நோப்புக்குத்தினமும் கிலே
சங்களுண்டாகும்.–அவென், பிபேசேதென் ௰௭
னும்நகரங்களின்வாலிபர்கட்கத்தினால்விழுவார்
கள்: இவைகள்சிறைப்பட்டுப்போம்.—நான் எ ௰௮
கிப்தின் நுகங்களைமுறிக்கும்பொழுது தக்பானே
சில்பகலிலுமிருண்டுபோம்: அதின்பராக்கிரமத்
தின் ஆடம்பரம் அதில்ஒழிந்துபோம்: மேகம்அ
தைமூடும், அதின்குமாரத்திகள் சிறைப்பட்டுப்
போவார்கள்.–இவ்விதமாய் நான்எகிப்தைத்தண் ௰௯
டிக்கும்பொழுது நானே யெகோவாவென்
று அவர்கள் அறிந்து கொள்வார்களென்பதை
ஆண்டவராகிய யெகோவா சொல்லச்
சொன்னாரென்று சொல்லிற்று.
பதினொராம்வருஷம்முதலாம் மாதம் ஏழாந்தி ௨௰
னத்தில், யெகோவாவின் வாக்குஎன்னிட
த்தில்,-மனுபுத்திரனே, எகிப்தின் இராசாவாகிய ௨௧
பார்வோனின்புயத்தைமுறித்தேன்;பார், கட்கம்
பிடிப்பதற்குஅதைப்பெலப்படுத்தும்படிசொஸ்
தப்படுத்துவதற்கேதுவாய்ப் பற்றுவைத்துக் கட்
டப்படுவதில்லை-ஆதலால்பார்,எகிப்தின் இராசா ௨௨
வாகியபார்வோனுக்கு விரோதியாயிருக்கிறேன்,
பலமுள்ளவைகளும், முன் முறிக்கப்பட்டவை
களுமாகிய அவன் புயங்களை முறிப்பேன்; கட்
கம் அவன்கையினின்றுவிழப்பண்ணுவேன்.—
எகிப்தியரைப் பலசாதியாருக்குள்ளுஞ் சிதறப் ௨௩
பண்ணி, பலதேசங்களிலும் பறக்க அடிப்பே
ன்.—நான் பாபேல் இராசாவின்புயத்தைப் பெ ௨௪

(௨௧) சங்.௱௩௨.௰௭. அதி.௨௪.௨௭.—(௩௰. அதி. ௨.) ஏசா.௰௩.௬. (௩) யோவே.௨.௧. செப்.௧.௭. (௪) அதி.௨௯.௰௯. எரே.௫௰.௰௫. (௫) அதி.௨௭.௰. எரே.௨௫.௨௰,௨௪. (௬) அதி.௨௯.௰. (௭) அதி.௨௯.௰௨. (௯) ஏசா.௰௮.௧,௨. (௰) அதி.௨௯.௰௯. (௰௧) அதி.௨௮.௭. (௰௨) ஏசா.௰௯.௪,௫,௬. (௰௩) ஏசா.௰௯.௧,௰௬. எரே.௪௩.௨௫. ௪௧.௰௩.௨. ௪௬.௰.௰௧. (௰௪) அதி.௨௯.௰௪. நாகூ.௩.௮,௯,௰. (௰௫) எரே.௪௬.௨௫. (௰௮) எரே.௨.௰௬. (௨௧) எரே.௪௮.௨௫. எரே.௪௬.௰௧. (௨௨) சங்.௩௭.௰௭. (௨௩) அதி.௨௯.௰௨.

லப்படுத்தி, என்கட்கத்தை அவன் கையிலிடு
வேன்: பின்புநான் பார்வோனின்புயங்களை மு
றிப்பேன், அவன் இவனுக்குமுன்னே சாவுக்கே
துவானகாயம்பட்ட ஒருவனுடையதவிப்பினால்
உ௫ தவிப்பான்.—பாபேல் இராசாவின் புயங்களை
யோ நான் பெலப்படுத்துவேன், பார்வோன் இ
ராசாவின்புயங்கள் விழுந்துபோம்; நான் என்
கட்கத்தைப் பாபேல் இராசாவின்கையிலிடும்
பொழுதும், அவன் அதைஎகிப்துதேசத்தின்மேல்
ஓங்கும்பொழுதும் நானே யெகோவாவென்
உ௬ று அறிந்துகொள்வார்கள்.—நான் அநேகசாதியா
ருக்குள் எகிப்தியரைச் சிதறப்பண்ணி, பலதே
சங்களிலும் அவர்களைத் தூற்றுவேன்; நானே
யெகோவாவென்று அவர்கள் அறிந்துகொள்
வார்களென்பதை ஆண்டவராகியயெகோ
வா சொல்லுகிறாரென்றுசொல்லிற்று.

## ௩௰க. அதிகாரம்.

க. அஷீரியவை ஏரஸ்விருட்சத்திற்குஒப்பிடல்:
௰. அகங்காரத்தினிமித்தந்தறிக்கப்பட்டுவிழல்:
௰அ. பார்வோன் ஒழிவுபெறுதல்.

பதினோராம்வருஷம் மூன்றுமாதம் முதலாந்
தினத்தில், யெகோவாவின் வாக்கு என்
உ னிடத்தில்,—மனுபுத்திரனே, நீ எகிப்தின் இரா
சாவாகிய பார்வோனையும், அவன் கூட்டத்தா
ரையும்நோக்கி, நீ உன் மகத்துவத்தில் ஆருக்
கொப்பாயிருக்கிறாய்.
௩ பார், அஷீரியன், லீபானோனிலுள்ள அழகிய
கிளைகளுள்ளதும், நிழல்தருவதும், மிகவும்உயர்ந்
ததும், நெருங்கிய கொப்புகளுக்குமேலாக வ
ளர்ந்தநுனியுடையதுமாகிய ஒரு ஏரஸ்விருட்ச
௪ மாயிருந்தான்.—சலத்தினால் அது செழித்தோங்
கிற்று, வேரூன்றியஸ்தானத்தின் சுற்றிலும்ஓடும்
நதிகளுக்கும் வெளியிலுள்ள சகலவிருட்சங்க
ளிடத்து நீர்க்கால்களுக்கும் பாய்கிற ஆழமா
௫ னசலத்தினால் அது மேன்மைபெற்றது.—ஆத
லால் வெளியிலுள்ள சகல விருட்சங்களிலும்
மிகவும் உயரமாயிற்று, மிகுந்த ஆழமான சலங்
களினால் அது கிளைத்தபொழுது அதின்கொப்பு
கள் அதிகமும், அதின் கிளைகள் நீளமுமாயின.—
௬ அதின்கொப்புகளில்ஆகாயத்துப்பறவைகளெல்
லாங் கூடுகட்டின, அதின்கிளைகளின்கீழே வெ
ளியின் மிருகங்களெல்லாம்ஈன்றன, அதின்நிழ
லில் பிரதான சாதியார் எல்லாருந்தங்கினார்கள்.—
௭ இவ்விதமாய் அது தன் மகத்துவத்தினாலும், தன்
கொப்புகளின் நீளத்தினாலும்அதிக அழகுள்ளது:
அதின் வேர் மிகுந்த சலங்களிடத்திலிருந்தது.—
௮ தேவனுடைய நந்தவனத்திலுள்ள மற்ற ஏரஸ்
விருட்சங்கள் அதைமூடக்கூடாமற்போயிற்று:
தேவதாருகள் அதின் ஒரு கொப்புக்கும் ஒப்பா
காது, கஸ்தானியமரங்கள் அதின் கொப்பைப்
போலிராது; தேவனுடைய நந்தவனத்திலுள்
ள எந்த விருட்சமும் அழகில் அதற்கொப்பல்
ல.—அதினுடைய கிளைகளின் மிகுதியினால் அ ௯
தை அலங்கரித்தேன்: அதினால் தேவனுடை
ய நந்தவனமாகிய ஏதேனிலுள்ள சகல விருட்
சங்களும் அதின்மேற்பொறாமைகொண்டன.
ஆதலால் ஆண்டவராகிய யெகோவா ௰
இவ்வாக்குச்சொல்லுகிறார்; அவன் அதிக உயர
மாய்த் தன்னை உயர்த்தி, நெருங்கிய கொப்புக
ளுக்குமேலாகத் தன் நுனியைச்செல்லப்பண்
ணி, தன் உன்னதத்தினாலேமனக்கருவங்கொண்
டான்.—ஆதலால் இவனைத்தேசத்தாருக்குள் ஒ ௰க
ரு பராக்கிரமசாலியின் கையில் ஒப்பிப்பேன்;
அவன் இவனுக்குப் பலனளிப்பான்: இவன்
தீமையினிமித்தம் நான் இவனைத் துரத்திவிட்
டேன்.-தேசத்தாரில் பயங்கரமுள்ளவர்களாகிய ௰உ
அந்நியர் அவனை வெட்டிவிட்டுப்போனார்கள்,
மலைகள்மேலும், சகலதாழ்ந்தபூமிகளிலும், தேசத்
திலுள்ள சகலநதிகளின் ஓரங்களிலும்அவன் கி
ளைகள் விழுந்தன, அவன் கொப்புகள் முறிந்த
ன; பூமியிலுள்ள சகல சனங்களும்அவன் நிழலை
விட்டிறங்கி, அவனை விட்டுவிட்டார்கள்.—இப் ௰௩
பொழுது சேதமாய்ப்போன அடிமரத்தின்மேல்
ஆகாயத்துப் பறவைகளெல்லாம் வாசமாயிருக்
கின்றன, அதின்கிளைகளின்மேல்வெளியிலுள்ள
மிருகங்களெல்லாந் தங்குகின்றன.-நீருகேயுள் ௰௪
ள எந்தவிருட்சமுந் தன் உயரத்தினாலே கருவங்
கொள்ளாமலும், நெருங்கியகொப்புகளுக்குமே
லாய்த் தன் நுனியைச் செல்லவிடாமலும், நீ
ரையுண்ணும் எந்தவிருட்சமுந்தானே ஆதரவெ
ன்று எண்ணாமலுமிருக்கும்பொருட்டு, அவைக
ளெல்லாம்மரணத்திற்குஒப்பிக்கப்பட்டு, குழியி
லிறங்கின மனுபுத்திரருக்குள்ளேபூமியின்பாதா
ளங்களில் தள்ளப்பட்டிருக்கின்றன.—அவன்பா ௰௫
தாளத்திலிறங்கினதினத்தில்நான்புலம்பலைவரப்
பண்ணினேன்: நான் அவன் நிமித்தம் ஆழத்தை
மூடினேன், சலப்பிரவாகம் செல்லாதபடிநின்
றுவிட நான்திரளானநீர்களைத்தடுத்தேன்: அவனி
மித்தம் நான் லீபானோனைப்புலம்பச்செய்தேன்,
அவனிமித்தம்வெளியிலுள்ள எல்லாமரங்களும்
வாடிப்போயின.—நான் குழியிலிறங்கினசனங் ௰௬
களுடன் அவனைத்தள்ளிவிட்டபொழுது, அவன்
விழுந்தசத்தத்தினால் சாதியாரையும் அதிரப்பண்
ணினேன்: ஏதேனின் சகலவிருட்சங்களும், லீ
பானோனிலுள்ள உத்தமமுஞ் சிரேஷ்டமுமான
நீரையுண்கிற சகலவிருட்சங்களும், பூமியின்கீ
ழான இடங்களில் ஆறுதலை அடைந்தன.—அவ ௰௭
னுடன்இவர்களும், புறச்சாதியாருக்குள் அவன்
நிழலில்வாசம்பண்ணி அவனுக்குப்புயமாயிருந்
தவர்களும், கட்கத்தினால் கொலையுண்டவர்களி
டத்தில்பாதாளத்தில்இறங்கினார்களென்று ஆண்
டவராகியயெகோவா சொல்லுகிறார்.

(உ௫) சங்.௯.௰௬. (உ௬) வச.உ௩. அதி.உ௯.௰உ.—(௩௰க. அதி. உ.) வச.௰அ. (௩) தானி.௪.௰. (௪) எரே.௫௧.௩௬.
(௫) தானி.௪.௰க. (௬) அதி.௰௭.உ௩. தானி.௪.௰உ. (௮) ஆதி.உ.௮. அதி.உ௮.௰௩. (௰) தானி.௫.உ௰. (௰உ) அதி.
உ௮.௭. அதி.௩௰உ.௫. (௰௩) ஏசா.௰௮.௬. அதி.௩௰உ.௪. (௰௪) சங்.௮உ.௭. அதி.௩௰உ.௰௮. (௰௬) அதி.உ௬.௰௫. ஏசா.
௰௪.௮,௰௫. அதி.௩௰உ.௩௰க. (௰௭) புல.௪.உ௰.

௧௮ நீ மகிமைப்பிரகாசத்திலும்மகத்துவத்திலும்ஏ
தேனின்விருட்சங்களில் எதற்கு ஒப்பாயிருக்கி
றாய், நீயும் ஏதேனின் விருட்சங்களுடனேபூமி
யின்பாதாளத்திலே கொண்டுவரப்படுவாய்: கட்
கத்தினால் கொலைசெய்யப்பட்டவர்களுடனே
விருத்தசேதனமில்லாதவர்கள் மத்தியில் கிடப்
பாய். பார்வோனும் அவன் கூட்டத்தாரும் இது
வேயென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறாரென்பதைச்சொல்லச்சொல்லிற்று

## ௩௨. அதிகாரம்.

௧. எகிப்துவிழுந்ததினிமித்தம்புலம்பல்: ௰௧. பா
பேலின் இராசாவினால் எகிப்து நாசமடையு
மென்றுதீர்க்கதரிசனஞ் சொல்லல்: ௰௭. அது
பாதாளத்திலிறங்கல்.

பன்னிரண்டாம்வருஷம் பன்னிரண்டாம் மா
தம் முதலாந் தினத்தில், யெகோவாவின்
௨ வாக்கு என்னிடத்தில்,-மனுபுத்திரனே, நீ எகிப்
தின் இராசாவாகியபார்வோனைக்குறித்துப்புலம்
பத்தொடங்கி, அவனைநோக்கி,நீசாதியாருக்குள்
ஒரு இளஞ்சிங்கத்துக்குச் சமானமாயிருக்கிறாய்,
நீசமுத்திரங்களில் ஒருமுதலையைப்போலிருக்கி
றாய்: நீநதிகளின்வழியாய்ச்சென்று, உன் கால்க
ளாலே சலத்தைக்கலக்கி, அதின் ஓடைகளை அசு
௩ சிப்படுத்துகிறாய்.—ஆதலால் ஆண்டவராகிய
யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; நான்
சமுதாயசனங்களினால் உன்மேல் என்வலையை
வீசுவேன்; அவர்கள் என்வலையில்உன்னைஇழுத்
௪ துக்கொள்வார்கள்.—அப்பொழுதுநான்உன்னைக்
கரையில்விடுவேன், வெளியில் உன்னைத்தள்ளி
விடுவேன், ஆகாயத்துப்பறவைகளெல்லாம்உன்
மேலே தரிக்கப்பண்ணி, பூமிமுழுவதிலுமுள்ள
௫ மிருகங்களை உன்னாலேதிருத்தியாக்குவேன்.—ம
லைகள்மேல்உன்மாமிசத்தைப்போடுவேன்,உன்
௬ உயரத்தினால்தாழ்ந்தபூமிகளை நிரப்புவேன்.—நீ
நீந்துகிற தேசத்திலே மலைகள் வரைக்கும் உன்
இரத்தத்தைப் பாய்ச்சுவேன், நதிகள் உன்னாலே
௭ நிரம்பும்.—நான் உன்னை அவித்துவிடுகையில்வா
னத்தை மூடி, அதின் நட்சத்திரங்களை இருளப்
பண்ணுவேன்;மேகத்தினாலே சூரியனை மறைப்
௮ பேன், சந்திரன் தன் ஒளியைக்கொடான்.—வா
னத்தின் சகலசோதிகளையும் உன்மேல் அந்தகா
ரமாயிருக்கும்படிசெய்து, உன்தேசத்தின்மேல்
இருளை வரப்பண்ணுவேனென்று ஆண்டவ
௯ ராகிய யெகோவா சொல்லுகிறார்.—நீ அறி
யாத சாதியாருக்குள்ளே புறத்தேசங்கள்வரைக்
கும் உன்நொறுங்குதலைநான் எட்டப்பண்ணும்
பொழுது, அநேக சனங்களின்இருதயங்களைக்
௰ கிலேசப்படுத்துவேன்.—அநேகசனங்கள் உன்
னைக்குறித்துத் திகைக்கும்படிசெய்வேன், அவர்
கள் இராசாக்கள், தங்களுக்குமுன் நான்என்கட்
கத்தைவீசுஞ்சமயத்தில் உன்னிமித்தம் மிகவும்
பயப்படுவார்கள்; நீவிழும்நாளில் அவரவர் தங்
கள்தங்கள்பிராணனுக்காகநிமிஷந்தோறும்நடுங்
குவார்கள்.
ஆண்டவராகிய யெகோவா இவ்வாக் ௰௧
குச்சொல்லுகிறார்; பாபேலுடைய இராசாவின்
கட்கம்உன்மேல்வரும்.—தேசத்தாருக்குள் பயங் ௰௨
கரமுள்ளவர்களாகிய பராக்கிரமசாலிகளின்கட்
கங்களினால் உன்சனங்களெல்லாரையும் விழப்
பண்ணுவேன்: அவர்கள் எகிப்தின்ஆடம்பரத்
தை நாசப்படுத்துவார்கள், அதின்கூட்டமுழுவ
தும்பாழாகும்.—நான்மகாநதியோரத்திலுள்ளஅ ௰௩
தின் சகல மிருகங்களையும் நாசப்படுத்துவேன்;
இனி ஒருபொழுதும் மனுஷனுடைய கால் அ
தைக்கலக்கமாட்டாது, எந்த மிருகத்தின்குளம்
பும் அதைக் கலக்கவுமாட்டாது.—அப்பொழு ௰௪
து நான் அவர்களுடைய சலங்களைத்தெளியப்
பண்ணி, எண்ணெயைப்போல் அவர்கள் நதிக
ளைஓடப்பண்ணுவேனென்று ஆண்டவராகி
ய யெகோவா சொல்லுகிறார்.—நான் இவ்வித ௰௫
மாய் எகிப்துதேசத்தைவெறுமையாக்கி, அதைப்
பூரணப்படுத்தியஅதின்பொருளை அகற்றி, அதில்
வசிக்கும்யாவரையுஞ் சங்கரிக்கும்பொழுது நா
னே யெகோவா வென்று அவர்கள்அறிந்து
கொள்வார்கள்.—இதுவே புலம்பலின்காரியம்; ௰௬
இவ்விதமாய் அவளைக்குறித்துப்புலம்புவார்கள்:
அந்நியதேசத்தாரின்குமாரத்திகள்அவளைக்குறித்
து அழுவார்கள்: எகிப்துக்காகவும், அவள் சனச
முதாயத்திற்காகவும்புலம்புவார்களென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறாரென்ப
தாகச்சொல்லச்சொல்லிற்று.

பன்னிரண்டாம்வருஷம், மாதத்தின்பதினைந் ௰௭
தாந் தினத்தில் யெகோவாவின் வாக்கு
என்னிடத்தில்,—மனுபுத்திரனே,நீஎகிப்தின்சன ௰௮
சமுதாயத்தினிமித்தம்புலம்பி, அவர்களையும்பெ
யர்பெற்றசாதியாரின் புத்திரிகளையுங் குழியிலி
றங்குகிறவர்களோடேபூமியின்பாதாளத்தில்தள்
ளிவிடு.—நீ ஆரைப்பார்க்கிலும் சௌந்தரியவதி ௰௯
யாயிருக்கிறாய்; நீ இறங்கிவிருத்தசேதனமில்லா
தவர்களோடேசயனித்துக்கொள்.—அவர்கள்கட் ௨௰
கத்தினால் கொலையுண்டவர்கள்மத்தியில் விழு
வார்கள்: அவள் கட்கத்துக்கு ஒப்பிக்கப்பட்
டாள்: அவளையும் அவள் சன சமுதாயத்தையும்
பிடித்து இழு.—பராக்கிரமசாலிகளில் பலவான் ௨௧
களும், அவனுக்குச் சகாயஞ்செய்தவர்களும்,
அவனோடே பாதாளத்தின்மத்தியிலே பேசுவார்
கள்: விருத்தசேதனமில்லாதவர்களாய்க் கட்கத்
தினாலே கொலைசெய்யப்பட்டு இறங்கிக் கிடக்
கிறார்கள்.—அங்கே அசூரும், அவளுடைய எல் ௨௨
லாக்கூட்டத்தாரும்கிடக்கிறார்கள்:இவர்களெல்

(௰௮)அதி.௩௨.௰௯. அதி.௨௮.௰.—(௩௨.அதி.௨.) அதி.௨௭.௨. அதி.௰௯.௩,௬. அதி.௨௯.௩. அதி.௩௪.௰௮. (௩) அதி.
௰௨.௰௩. ஓசி.௭.௰௨. (௪) அதி.௨௯.௫. அதி.௩௧.௰௩.(௫)அதி.௩௧.௰௨. (௭) ஏசா.௰௩.௰. யோவே.௨.௩௧. ஆமோ.௮.
௯. மத்.௨௪.௨௯. வெளி.௬.௰௨,௰௩.(௰)அதி.௨௭.௩௫. அதி.௨௬.௰௬.(௰௧)எரே.௪௬.௨௬.(௰௫)யாத்.௭.௫. யாத்.௰௪.
௪,௰௮. (௰௬) ௨.சாமு.௧.௰௭. ௨.நாளா.௩௫.௨௫. (௰௮) அதி.௨௬.௨௰. (௰௯) அதி.௩௧.௨,௰௮. வச.௨௯,௨௪. (௨௨)
வச.௨௪,௨௬,௨௯,௩௰.

லாருங்கட்கத்தினால் கொலைசெய்யப்பட்டுவிழு
ந்து,அவனைச்சுற்றி அடக்கம்பண்ணப்பட்டிருக்
௨௩ கிறார்கள்.—பாதாளத்தின்பக்கங்களில் அவர்களு
டையபிரேதக்குழிகளிருக்கின்றன, அவள் சமு
தாயத்தார் அவள்பிரேதக்குழியைச்சுற்றியிருக்கி
றார்கள்: சீவனுள்ளோர்தேசத்தில்பயமுண்டாக்
கிய அவர்கள்யாவருங்கட்கத்தினால்கொலைசெய்
௨௪ யப்பட்டுவிழுந்தார்கள்.—அங்கே ஏலாமும், அ
வள்சமுதாயசனங்களும் அவளுடைய பிரேதக்
குழிக்குச்சுற்றுப்பக்கத்திலேகிடக்கிறார்கள், அ
வர்களெல்லாருங்கட்கத்தினால் கொலையுண்டுவி
ழுந்து, சீவனுள்ளோர்தேசத்திலேபயமுண்டாக்
கினவிருத்தசேதனமில்லாதவர்களாய்ப்பூமியின்
பாதாளத்திலிறங்கினார்கள்,குழியிலிறங்கினவர்க
ளோடேதங்கள்அவமானத்தைச்சுமக்கிறார்கள்.—
௨௫ கொலைசெய்யப்பட்டவர்களுக்குள்அவளை அவ
ளுடையசனசமுதாயத்தோடே சயனிக்கப்பண்
ணினார்கள்: அவளைச்சுற்றி அவளுடைய பிரே
தக்குழிகளிருக்கின்றன: அவர்களெல்லாரும் வி
ருத்தசேதன மில்லாதவர்களாய்க் கட்கத்தினால்
வெட்டுண்டார்கள்: அவர்கள் சீவனுள்ளோர்தே
சத்தில் பயமுண்டாக்கியுங் குழியிலிறங்கினவர்
களோடே தங்கள் அவமானத்தைச் சுமக்கிறார்
கள்:அவன்கொலையுண்டவர்களுக்குள்வைக்கப்
௨௬ பட்டிருக்கிறான்.—அங்கேமேஷெக்கும், தூபா
லும், அவள் சமுதாயசனங்களுங் கிடக்கிறார்
கள்: சுற்றுப்புறத்தில் அவர்கள் பிரேதக்குழிகளி
ருக்கின்றன: விருத்தசேதனமில்லாதவர்களாகிய
இவர்களெல்லாருஞ்சீவனுள்ளோர் தேசத்தில் ப
யமுண்டாக்கியும், கட்கத்தினால் கொலைசெய்
௨௭ யப்பட்டார்கள்.—இவர்கள் சீவனுள்ளோர் தே
சத்திலே பராக்கிரமசாலிகளுக்குள் பயமுண்
டாக்கியும் தங்கள் யுத்தஆயுதங்களோடே பாதா
ளத்திலிறங்கி, தங்கள் கட்கங்களைத் தங்கள்தலை
யின்கீழ் வைத்திருக்கும் விருத்தசேதனமில்லா
த பராக்கிரமசாலிகளோடே கிடப்பதில்லை: இ
வர்களுடைய அக்கிரமங்களோ இவர்கள் எலும்
௨௮ புகளின்மேலிருக்கும்.—நீயும் விருத்தசேதன
மில்லாதவர்களுக்குள் நொறுங்குண்டு, கட்கத்தி
னால் கொலையுண்டவர்களோடே கிடப்பாய்.—
௨௯ அங்கேஏதோமும்,அவளுடையஇராசாக்களும்,
அவள் சகல பிரபுகளுங் கிடக்கிறார்கள், கட்கத்
தினால் கொலைசெய்யப்பட்டவர்களுக்குள் தங்
கள்பராக்கிரமத்தோடேகிடத்தப்பட்டிருக்கிறார்
கள்: இவர்கள் விருத்தசேதன மில்லாதவர்களோ
டும்,குழியிலிறங்கிப்போகிறவர்களோடுங்கிடக்
௩௰ கிறார்கள்.-வடதேசத்திலுள்ள சகல பிரபுகளும்,
கொலைசெய்யப்பட்டவர்களோடே சீதோனிய
ரெல்லாரும் அங்கே இறங்கிப்போனார்கள்; அ
வர்கள் திகிலடைந்து, தங்கள் பராக்கிரமத்தைக்
குறித்து வெட்கப்பட்டார்கள்; கட்கத்தினாலே
கொலை செய்யப்பட்டவர்களோடும், விருத்தசே
தனமில்லாதவர்களாய்த் தங்கள் இலச்சையைச்
சுமந்து பாதாளத்துக்கு இறங்கிப்போகிறவர்க
ளோடுங் கிடக்கிறார்கள்.—பார்வோன் அவர்க ௩௧
ளைப்பார்த்து, தன் சமுதாய சனங்களைக்குறித்து
ஆறுதலடைவான், பார்வோனும், கட்கத்தினால்
கொலைசெய்யப்பட்ட அவன் சமஸ்த சேனைக
ளும் ஆறுதலடைவார்களென்று ஆண்டவரா
கிய யெகோவா சொல்லுகிறார்.—சீவனுள் ௩௨
ளோர்தேசத்தில் நான் என்னைக்குறித்த பயங்க
ரத்தைப் பலிக்கச்செய்தேன்: பார்வோனும், அ
வன் சமுதாய சனங்களுங் கட்கத்தினால்கொலை
செய்யப்பட்டவர்களோடே விருத்தசேதனமில்
லாதவர்களுக்குள்ளே கிடத்தப்படுவார்களென்
று ஆண்டவராகிய யெகோவா சொல்லு
கிறாரென்பதைச்சொல்லச்சொல்லிற்று.

## ௩௩. அதிகாரம்.

௧. காவலாளனை உவமித்தல்: ௭. அதின்தாற்பரியந் தெரிவித்தல்: ௰. தேவன் தம்முடையபிரமாணத்தைப்பிரகாசிப்பித்தல்: ௨௧. சீமையினிமித்தஞ் சனங்கள் தேசாதிகாரம் பெறுமற்போதல்: ௩௰. தீயருக்குத் தண்டனை வருமெனக்காட்டல்.

பின்பு யெகோவாவின் வாக்கு என்னிடத் ௧
தில்,—மனுபுத்திரனே, நீ உன்சனங்களாகியசந் ௨
ததியாரோடேபேசி,அவர்களுக்குஇவ்வாக்கைச்
சொல்லு,நான் கட்கத்தை ஒருதேசத்தின்மேல்வ
ரப்பண்ணுஞ்சமயத்தில்,அத்தேசத்துச்சனங்கள்
தங்கள்எல்லையிலுள்ள ஒருவனைத்தெரிந்து அவ
னைக்காவற்காரனாக ஏற்படுத்த,-அவன்தேசத்தின் ௩
மேல் கட்கம்வருவதைக்கண்டு, தாரை ஊதிச்ச
னங்களைஎச்சரிக்க,—ஒருவன் தாரையின்சத்தங் ௪
கேட்டு எச்சரிக்கப்படாதிருந்தால்,கட்கம்வந்து
அவனைக்கொலைசெய்யும்பொழுது அவனுடைய
இரத்தப்பழி அவன் சொந்தத்தலையின்மேல் தங்
கும்.-அவன்தாரையின்சத்தத்தைக்கேட்டும்எச்ச ௫
ரிக்கப்படவில்லையே;அவனுடையஇரத்தப்பழி
அவன்மேல்தங்கும். எச்சரிக்கப்படுகிறவனோ,
தன்பிராணனை இரட்சித்துக்கொள்ளுவான்.-கா ௬
வலாளன் கட்கம்வருவதைக்கண்டும் தாரைஊ
திச்சனங்களுக்கு எச்சரிக்காதிருக்க, கட்கம்வந்
து அவர்களில் ஒருவனைக்கொன்றால் அவன்தன்
பாவத்தில் நாசமடைவான்; இவன் இரத்தப்பழி
யையோ காவற்காரனிடத்திற்கேட்பேன்.
மனுபுத்திரனே, நான் இஸ்ரவேல்வமிசத்தா ௭
ருக்குஇவ்விதமாகஉன்னைக்காவற்காரனாக ஏற்ப
டுத்தினேன்; ஆதலால் நீ வாக்கை என்வாயினாற்
கேட்டு, எனக்குப்பிரதியாக அவர்களை எச்சரிப்
பாயாக.-நான்துன்மார்க்கனைநோக்கி,துன்மார்க் ௮
கனே, நீ மரணமடைவாயேயென்று சொல்லும்
பொழுது, துன்மார்க்கன் தன் துன்னெறியைவி
டும்படி நீஅவனிடத்திற்பேசி,அவனைஎச்சரியா
திருந்தால், அந்தத்துன்மார்க்கன்தன்பாவத்தில்ம

(௨௩) ஏசா.௰௪.௰௫. அதி.௨௬.௰௭,௨௧. (௨௪) எரே.௪௯.௩௪,. (௨௬) ஆதி.௰.௨. வச.௰௩,௨௰. (௨௭) வச.௨௧. ஏசா.௰௪.௰௮,௰௯. (௨௯) அதி.௨௫.௰௨,. (௩௰) அதி.௩௮.௨. அதி.௨௮.௨௧. (௩௧) அதி.௩௧.௰௬.—(௩௩. அதி. ௨.) அதி.௰௪.௰௭. ௨.சாமு.௰௮.௨௪,௨௫. ௨.இரா.௯.௰௭. ஓசி.௯.௮. (௪) அதி.௰௮.௰௩. (௭) அதி.௩.௰௭,.

ரணமடைவான்; அவன் இரத்தப்பழியையோ
௯ உன்கையில் கேட்பேன்.—துன்மார்க்கன் தன்நெ
றியைவிட்டுத் திரும்பும்படி நீ எச்சரித்தும் அ
வன் தன் துன்னெறியைவிட்டுத் திரும்பாதிருந்
தால், அவன்தன்பாவத்தில் மரணமடைவான்;நீ
யோஉன்பிராணனை இரட்சித்துக்கொண்டாய்.—
௰ ஆதலால் மனுபுத்திரனே, நீ இஸரவேல்வமிசத்
தாரிடத்தில்பேசி, எங்கள் அக்கிரமங்களும் எங்
கள்பாவங்களும் எங்கள்மேலிருக்கஅவைகளில்
நாங்கள் மெலிந்துபோனால், சீவிப்பதெப்படி
௰௧ யென்றுநீங்கள்சொல்லுகிறீர்கள்.-துன்மார்க்கன்
மரணமடைவது எனக்கு விருப்பமல்ல; துன்
மார்க்கன் தன்துன்னெறியைவிட்டுத்திரும்பிச்சீ
விப்பதையேவிரும்புகிறேனென்று என்நித்தியத்
துவத்தைக்கொண்டு சொல்லுகிறேனென்பதாக
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
றார்:நீங்கள்திரும்புங்கள்,உங்கள்துன்னெறிகளை
விட்டுத்திரும்புங்கள்; இஸரவேல்வமிசத்தாரே,
நீங்கள் மரிக்கவேண்டியதென்னவென்று அவர்
௰௨ களிடத்திற்சொல்லு.—ஆதலால் மனுபுத்திரனே,
நீஉன்சனங்களாகியசந்ததியைநோக்கி,நீதிமான்
கட்டளைமீறுந்தினத்தில்தன்நீதியினால் இரட்சிப்
புப்பெறான்: துன்மார்க்கன்தன்துர்க்கிரியையை
விட்டுத்திரும்பும்நாளிலே தன்துர்க்கிரியையினா
லேவிழான்;நீதிமான்பாவஞ்செய்யும்நாளில்தன்
௰௩ நீதியினால்இரட்சிப்புப்பெறான்.—நான்நீதிமானை
நோக்கி, நீ சீவிப்பாயேயென்றுசொல்ல,அவன்
தன் நீதியைநம்பி அநியாயத்தைச்செய்தால்,அவ
னுடைய நீதியிலொன்றும் நினைவில்வராது;அவ
ன்தான்செய்தஅக்கிரமத்தினிமித்தம்மரணமடை
௰௪ வான்.—பின்னும் நீ மரணமடைவாயேயென்று
துன்மார்க்கனிடத்தில்நான்சொல்ல, அந்தத்துன்
மார்க்கன் தன்பாவத்தைவிட்டுத்திரும்பி, நியாய
௰௫ முஞ்செவ்வையுமானவைகளைச்செய்து,-தன்னி
டத்திலுள்ள ஈட்டைத்திரும்பக்கொடுத்து, தான்
அபகரித்தபொருளைஒப்பித்து, அக்கிரமஞ்செய்
யாமல் சீவனைத்தரும்விதிகளைக் காத்துநடந்தால்
௰௬ அவன் மரணமடையாமல்சீவிப்பானே.—அவன்
செய்த எந்தப்பாவமும் அவனுக்கு விரோதமாக
நினைவிலேவராது: அவன் நியாயமும் நீதியுஞ்
செய்துவந்தான்; அவன்சீவிப்பானே.
௰௭ ஆயினும் உன் சனங்களின்சந்ததியார் ஆண்
டவரின் நெறி நேர்மையல்லவென்றுசொல்லு
கிறார்கள்: அவர்களுடைய நெறியல்லவோ நேர்
௰௮ மையற்றது.—நீதிமான்தன்நீதியைவிட்டுவிலகி,
௰௯ அக்கிரமத்தைச்செய்தால் அதிற்சாவான்.—துன்
மார்க்கன் தான்செய்த தீமையைவிட்டுத்திரும்பி
நியாயத்தையும் நீதியையுஞ்செய்வானாகில்சீவிப்
பானே.

ஆயினும் நீங்கள் ஆண்டவரின் நெறிநேர் ௨௰
மையல்லவென்றுசொல்லுகிறீர்கள். இஸரவேல்
வமிசத்தாரே,நான்உங்களைஉங்கள்நெறிகளின்ப
டிநியாயம்விசாரிப்பேனென்றுசொல்லென்றது.
நாம் சிறைப்பட்ட பன்னிரண்டாம்வருஷம் ௨௧
பத்தாம் மாதம் பதினைந்தாந் தினத்தில் யெ
ரூஷலேமினின்றுதப்பிஓடினவனொருவன் என்
னிடத்தில்வந்து, நகரஞ் சேதிக்கப்பட்டதென்
றான்.—தப்பி ஓடினவன் வருவதற்குமுன்சாயங் ௨௨
காலத்தில் யெகோவாவின் கைஎன்மேல்அ
மர்ந்து, அவன்விடியற்காலத்தில் என்னிடத்தில்
வரும்வரைக்கும்என்வாயைத்திறந்தது;என்வாய்
திறக்கப்பட்டது, பின்பு நான் மவுனமாயிருக்க
வில்லை.-அப்பொழுது யெகோவாவின் வாக் ௨௩
கு என்னிடத்தில்,—மனுபுத்திரனே,இஸரவேல் ௨௪
தேசத்தின்பாழான ஸ்தானங்களில் வாசம்பண்
ணுகிறவர்கள், ஆபிரகாம் ஒருவனாயிருந்துதேசத்
தைச்சுதந்தரித்தான்: நாங்களோ அநேகர்;இந்தத்
தேசம்சுதந்தரமாக எங்களுக்கு அளிக்கப்பட்ட
தென்றுசொல்லுகிறார்கள்.—ஆதலால்நீஅவர்களை ௨௫
நோக்கி,நீங்கள்இரத்தத்துடன்புசிக்கிறீர்கள்;உங்
கள்விக்கிரகங்கள்மேல் உங்கள்கண்களை ஏறிடுகி
றீர்கள்,இரத்தத்தைச்சிந்துகிறீர்கள்: நீங்கள்தேசத்
தைச்சுதந்தரிப்பீர்களா.—நீங்கள் உங்கள் உங்கள் ௨௬
கட்கத்தை நம்புகிறீர்கள், நீங்கள் அருவருப்பா
னதைச்செய்கிறீர்கள், உங்கள் உங்கள் அயலாரு
டைய மனைவியரை அசுசிப்படுத்துகிறீர்கள்: நீங்
கள்தேசத்தைச் சுதந்தரிப்பீர்களாவென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறாரென்
றுசொல்லு.—நீ அவர்களைநோக்கி, பாழான ஸ் ௨௭
தானங்களிலுள்ளவர்கள் கட்கத்தினால்விழுவார்
கள், வெளியிலுள்ளவனை மிருகங்களுக்கிரையா
கஒப்பிப்பேன்,துருக்கங்களிலுங்கெபிகளிலுமி
ருக்கிறவர்கள் கொள்ளைநோயினால்சாவார்கள்.—
நான்தேசத்தைமுழுவதும்பாழ்படுத்திவெறுமை ௨௮
யாக்குவேன், அதின்பராக்கிரமத்தின் அகங்கா
ரம்ஒழிந்துபோம்; இஸரவேலின் மலைகளும் தங்
கள்வழியாய் ஒருவருஞ்செல்லாதபடி அவாந்த
ரமாகும்.—அவர்கள்செய்த அவர்களுடையசக ௨௯
லஅரோசியமான கிரியைகளினிமித்தமும் தே
சமுழுவதையும் அவாந்தரமாக்கும்பொழுது நா
னே யெகோவாவென்று அறிந்துகொள்வார்
களென்பதாக, என்நித்தியத்துவத்தைக்கொண்டு
சொல்லுகிறேனென்பதை ஆண்டவராகிய
யெகோவா சொல்லுகிறாரென்றுசொல்லு.
மனுபுத்திரனே, உன்சனங்களின் சந்ததியார் ௩௰
மதிலின்சமீபத்திலும்வீட்டுவாசல்களிலும்நின்று
கொண்டு, உன்னைக்குறித்து ஒருவரோடொரு
வர் பேசி, யெகோவாவினின்று புறப்பட்

(௰) ஏசா.௪௧.௰௪. (௰௧) ௨.சாமு.௰௪.௰௪. ௨.பேதுரு.௩.௯. அதி.௰௮.௩௨. (௰௨) ௨.நாளா.௭.௰௪. (௰௩) அதி.௩.௨௰. (௰௪) அதி.௩.௰௮,௰௯. (௰௫) அதி.௰௮.௭. யாத்.௨௨.௧,௪. லேவி.௬.௨,௪,௫. எண்.௫.௬,௭. லூக்.௰௯.௮. லேவி.௰௮.௫. (௰௭) அதி.௰௮.௨௫,௨௯. (௰௮) அதி.௰௮.௨௬,௨௭. (௨௰) அதி.௰௮.௨௫,௨௯. (௨௨) ௨.இரா.௨௫.௪. அதி.௨௪.௨௭. (௨௪) அதி.௩௬.௪. ஏசா.௫௧.௨. அப்.௭.௫. மீகா.௩.௰௧. மத்.௩.௯. யோவா.௮.௩௯. (௨௫) ஆதி.௯.௪. லேவி.௩.௰௭. உபா.௰௨.௰௬. அதி.௨௨.௬,௯. (௨௬) அதி.௰௮.௬. (௨௭) வச.௨௪. அதி.௩௯.௪. நியா.௬.௨. ௧.சாமு.௰௩.௬. (௨௮) எரே.௪௪.௨,௬,௨௨. அதி.௩௬.௩௪,௩௫. அதி.௭.௨௪. அதி.௬.௨,௩,௬. (௩௰) ஏசா.௨௯.௰௩.

டவாக்கியமின்னதென்று கேட்போம்வாருங்க
ளென்று தங்கள் தங்கள் அயலாரிடத்திற்சொல்
௩௧ லி,—சனங்கள் உன்னிடத்தில்வருகிறதுபோல
வந்து,என்சனங்களைப் போல உன்சமுகத்திலி
ருந்து உன்வாக்குகளைக்கேட்கிறார்கள்,ஆனாலும்
அவைகளின்படிசெய்யார்கள்: அவர்கள்வாயில்
இனியவாக்கிருந்தும் அவர்களுடையமனம்பொ
௩௨ ருளாசையைப்பற்றுகின்றது.—பார், நீ இனிய
குரலையுடையவனாகி, கீதவாத்தியத்தைச்சாமர்த்
தியமாய் வாசிப்பவனுடைய இன்பந்தரும்பாட்
டுக்குச்சமானமாயிருக்கிறாய்: அவர்கள்உன்வாக்
குகளைக்கேட்கிறார்கள், ஆனாலும் அவைகளின்
௩௩ படி செய்கிறதில்லை.—பார், அது வரும், அதுவ
ரும்பொழுது தங்களுக்குள் ஒருதீர்க்கதரிசியிருந்
தானென்று அவர்கள் அறிந்துகொள்வார்களென்
பதைச்சொல்லச்சொல்லிற்று.

## ௩௪. அதிகாரம்.

௧. மேய்ப்பரைக்கண்டித்தல்: ௭. அவர்களைத்தேவன் தண்டிப்பாரென்று தெரிவித்தல்: ௰௧. தேவன் தன்மந்தையைஇரட்சித்தல்: ௰௭. அதைநியாயம்விசாரித்தல்: ௨௰. அதுகிறிஸ்துவினால்பாலிக்கப்படுமென்று தீர்க்கதரிசனஞ் சொல்லல்.

யெகோவாவின் வாக்கு என்னிடத்தில்,—
௨ மனுபுத்திரனே, இஸரவேலின் மேய்ப்பருக்கு
விரோதமாய்த் தீர்க்கதரிசனஞ்சொல்லி, அவர்க
ளுடனே, ஆண்டவராகிய யெகோவா
மேய்ப்பர்களுக்கு இவ்வாக்குச் சொல்லுகிறார்;
ஐயோ, தங்களைமேய்க்கிற இஸரவேலின் மேய்ப்
பருக்கு ஆபத்துவரும், மேய்ப்பர்மந்தைகளையல்
௩ லவா மேய்க்கவேண்டும்.—நீங்கள் நிணத்தைப்பு
சிக்கிறீர்கள், ஆட்டுமயிரை உடுப்பாக்குகிறீர்கள்,
புஷ்டியானவைகளை அடிக்கிறீர்கள்: மந்தையை
௪ மேய்க்காமல் விடுகிறீர்கள்.—நீங்கள் பெலவீன
முள்ளவைகளைப்பெலப்படுத்தவில்லை, சொஸ்த
மில்லாதவைகளை நீங்கள் சொஸ்தப்படுத்தவில்
லை, நொறுங்குண்டவைகளை நீங்கள் கட்டவில்
லை, கலைந்துபோனவைகளைத் திரும்பவுஞ்சேர்க்
கவில்லை, காணாமற்போனவைகளை நீங்கள் தே
டவில்லை; வலாற்காரமாகவுங்கொடுமையாகவும்
௫ அவைகளை ஆண்டுகொண்டீர்கள்.—மேய்ப்பனில்
லாததினால் அவைகள் சிதறுண்டுபோயின: சிதற
அடிக்கப்பட்டபொழுது காட்டுமிருகங்களெல்
௬ லாவற்றிற்கும் இரையாயின.—என் ஆடுகள் எல்
லாமலைகளிலும், உயர்ந்த ஒவ்வொருமலையிலுந்
திரிந்தன: என் மந்தை பூமியின் முகமெங்குஞ்
சிதறஅடிக்கப்பட்டன, அவைகளைவிசாரித்துத்
தேடுவாரில்லையென்றுசொல்லு.
௭ ஆதலால் மேய்ப்பரே, நீங்கள் யெகோவா
௮ வின் வாக்கைக்கேளுங்கள்;—மேய்ப்பனில்லா
ததினால் என் ஆடுகள் சூறையாடப்பட்டு, எந்
தக்காட்டுமிருகத்திற்கும் இரையாயின, என்னு
டையமேய்ப்பர் என் மந்தையை விசாரிக்கவில்
லை, மேய்ப்பர் தங்களையே மேய்த்தார்கள், மந்
தையை மேய்க்கவில்லை.—ஆதலால் மேய்ப்ப ௯
ரே, நீங்கள் யெகோவாவின் வாக்கைக்கே
ளுங்கள்.—ஆண்டவராகிய யெகோவா ௰
சொல்லுகிறார்; பாருங்கள், நான்மேய்ப்பருக்கு
விரோதியாயிருக்கிறேன்; என் ஆடுகளைஅவர்கள்
கையிலிருந்து கேட்டுக்கொண்டு, அவர்களைமந்
தையைமேய்க்குந்தொழிலினின்றுதள்ளுவேன்;
இனி அவர்கள் தங்களையே மேய்க்கமாட்டார்
கள்; என் ஆடுகள் அவர்களுக்கு ஆகாரமாயிராத
படி நான் அவர்கள்வாயினின்று அவைகளைவிடு
விப்பேனென்று என்நித்தியத்துவத்தைக்கொண்
டு சொல்லுகிறேனென்பதாக ஆண்டவராகி
ய யெகோவா சொல்லுகிறார்.
ஆண்டவராகிய யெகோவா இவ்வாக் ௰௧
குச்சொல்லுகிறார்; பாருங்கள், நானே என்ஆடு
களை விசாரித்து, அவைகளைத்தேடுவென்.—ஒரு ௰௨
மேய்ப்பன் சிதறுண்ட தன் ஆடுகளுக்குள் இருக்
கிறநாளில் தன் மந்தையைத் தேடுகிறதுபோல
நான் என் ஆடுகளைத்தேடி, மேகசஞ்சாரமும்
மந்தாரமுமுள்ள நாளில் அவைகள் சிதறுண்டு
போன எல்லா இடங்களிலும் நின்று அவைக
ளைவிடுவிப்பேன்.—சனங்களிலிருந்து அவைக ௰௩
ளைப்புறப்படுத்தி, தேசங்களினின்று அவைக
ளைச்சேர்த்து, அவைகளை அவர்கள்சுயதேசத்திற்
குக்கொண்டுவந்து, இஸரவேலின் மலைகளின்
மேல் நதிகளின் சமீபத்தில் தேசத்தின் சகலவா
சஸ்தானங்களிலும் அவைகளைமேய்ப்பேன்.—
நான் அவைகளைநல்லமேய்ச்சலில்மேய்ப்பேன், ௰௪
இஸரவேலின் உயர்ந்தமலைகளில் அவைகளின்
தொழுவமிருக்கும்: அங்கே அவைகள் நல்ல
தொழுவத்துள் படுத்துக்கொள்ளும், இஸரவே
லின் மலைகளின்மேல் புஷ்டியாகியமேய்ச்சலை
மேயும்.—நான் என் ஆடுகளைமேய்த்து, அவை ௰௫
களைப்படுக்கப்பண்ணுவேனென்று ஆண்டவ
ராகியயெகோவா சொல்லுகிறார்.—நான் ௰௬
காணாமற்போனவைகளைத் தேடுவேன், துரத்தி
விடப்பட்டவைகளைத்திரும்பவுஞ்சேர்ப்பேன்,
நொறுங்குண்டவைகளைக் கட்டுவேன், பெலவீ
னமுள்ளவைகளைப் பெலப்படுத்துவேன்: புஷ்
டியும்பலமுமுள்ளவைகளை நாசப்படுத்துவேன்;
நியாயத்தோடே இவைகளைமேய்ப்பேன்—என் ௰௭
மந்தையே, பார், ஆட்டுக்கும் ஆட்டுக்கும், க
டாக்களுக்கும் வெள்ளாட்டுக் கடாக்களுக்கும்
நான் நியாயத்தீர்ப்புச்செய்வேனென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறார்.—
நீங்கள்நல்லமேய்ச்சலை மேய்ந்தது மாத்திரமல்ல, ௰௮
உங்கள் மேய்ச்சல்களில் மீந்ததைக்காலினால்மி

(௩௧) அதி.௰௪.௧. அதி.௮.௧. ஏசா.௨௯.௰௩. மத்.௰௩.௨௨. (௩௩) ௧.சாமு.௩.௨௰.—(௩௪. அதி. ௨.) அதி.௩௩.௨௪. எரே.௨௩.௧. சக.௰௧.௰௭. (௩) ஏசா.௫௬.௰௧. சக.௰௧.௫,௰௬. மீகா.௩.௧,௨,௩. (௪) சக.௰௧.௰௬. லூக்.௰௫.௪. ௧ பேதுரு.௫.௩. (௫) ௧.இரா.௨௨.௰௭. மத்.௯.௩௬. வச.௮. ஏசா.௫௬.௯. எரே.௰௨.௯. (௰) எபி.௰௩.௰௭. (௰௨) அதி.௩௰.௩. யோவே.௨.௨. (௰௩) ஏசா.௬௫.௯,௰. எரே.௨௩.௩. (௰௪) சங்.௨௩.௨. எரே.௩௩.௰௨. (௰௬) ஏசா.௪௰.௰௧. மீகா.௪.௬. மத்.௰௮.௰௧. ஏசா.௰.௰௬. ஆமோ.௪.௧. எரே.௰.௨௪. (௰௭) சக.௰.௩. மத்.௨௫.௩௨,௩௩.

திததும், சுத்தசலத்தைக் குடித்ததுமாத்திரமல்ல,
மீந்ததைக் காலால்கலக்கினதும் உங்களுக்கு அற்
௰௯ பமா.—என்மந்தை உங்கள்காலால்மிதிக்கப்பட்
டவைகளை மேய்கின்றது; உங்கள் காலால் கலக்
கப்பட்டதைக் குடிக்கின்றது.
௨௰ ஆகையால் ஆண்டவராகிய யெகோவா
அவர்களுக்கு இவ்வாக்குச் சொல்லுகிறார்; கே
ளுங்கள், நானேகொழுத்த ஆடுகளுக்கும், இளைத்
த ஆடுகளுக்கும் நியாயத்தீர்ப்புச்செய்வேன்.—
௨௧ நீங்கள்பெலவீனமுள்ளவைகளைஎல்லாம்வெளி
யே சிதறஅடிக்கும்படி உங்கள் இடுப்பினாலுந்
தோளினாலுந்தள்ளி, உங்கள் கொம்புகளினால்
௨௨ முட்டினீர்கள்.—ஆதலால் என் ஆடுகள் இனிச்
சூறையாகாதபடி நான் அவைகளை இரட்சித்து,
ஆடுகளுக்கும் ஆடுகளுக்கும் நியாயம்விசாரிப்
௨௩ பேன்.—அவர்களைமேய்க்கும்படி எனதடியானா
கியதாவீதென்னும் ஒருமேய்ப்பனை அவர்களுக்
கு ஏற்படுத்துவேன்; இவன் அவர்களைமேய்த்து,
௨௪ அவர்களுக்கு மேய்ப்பராவான்.-யெகோவா
வாகிய நான்அவர்களுக்குத்தேவனாவேன்,
எனதடியானாகியதாவீது அவர்களுக்குள் அதிபதி
யாவான்; யெகோவாவாகிய நான் இவ்
௨௫ வாக்குச்சொன்னேன்.—நான் அவர்களோடே
சமாதானத்தின் உடன்படிக்கைசெய்வேன், தே
சத்தினின்று துஷ்டமிருகங்களைத் தூரப்படுத்து
வேன்: அவர்கள் வனத்தில் ஆபத்தில்லாமல்
வசிப்பார்கள், வனத்திலே படுத்துக்கொள்வார்
௨௬ கள்.—நான் அவர்களையும், என்மலைக்கு நாலுதி
சையிலுமுள்ள ஸ்தானத்தையும் ஆசீர்வாதமாக்
கி, ஏற்றகாலத்தில் மழையை வருஷிக்கப்பண்
ணுவேன்; ஆசீர்வாதமென்னும்மழைபெய்யும்.—
௨௭ வெளியிலுள்ளவிருட்சங்கள்கனிதரும், பூமிதன்
பலனைக்கொடுக்கும், அதினால் அவர்கள் தங்கள்
தங்கள்தேசத்தில் ஆபத்தில்லாமல்தங்குவார்கள்,
நான் அவர்கள் நுகத்தின்கயிறுகளை அறுத்து, அ
வர்களை அடிமைப்படுத்தினவர்களுடைய கை
யினின்று அவர்களைவிடுவிக்கும்பொழுது நானே
யெகோவாவென்று அறிந்துகொள்வார்கள்.-
௨௮ இனி அவர்கள் அந்நியதேசத்தாருக்குக் கொள்
ளைப்பொருளைப்போலிருக்கமாட்டார்கள், காட்
டுமிருகம் அவர்களைப்பட்சிக்கமாட்டாது; அவர்
கள் நிருவிக்கினமாய் வாசம்பண்ணுவார்கள், அ
வர்களைப் பயப்படுத்துவார் ஒருவருமில்லை.—
௨௯ நான் அவர்களினிமித்தங்கீர்த்திபெறும் ஒருநாற்
றைத்தோற்றுவிப்பேன், அவர்கள் இனித்தேசத்
திலே பஞ்சத்தினால் நாசமடையார்கள், அந்நிய
தேசத்தாரிடத்தில் அவமானத்தை இனிச்சுமக்க
௩௰ மாட்டார்கள்.-இவ்விதமாய்அவர்கள்தங்கள் தே
வனும் யெகோவாவுமாகிய நான் தங்க
ளோடே இருக்கிறேனென்றும், இஸரவேல்
வமிசத்தாராகிய தாங்கள் என் சனங்களென்றும்
அறிந்துகொள்வார்களென்பதை ஆண்டவரா
கிய யெகோவா சொல்லுகிறார்.-என்மந்தை ௩௧
யும் என்மேய்ச்சலின் ஆடுகளுமாகிய நீங்களே ம
னுஷர், நானே உங்கள் தேவனென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறாரென்
பதாகச் சொல்லச்சொல்லிற்று.

## ௩௫. அதிகாரம்.

இஸரவேலின்மேல் ஏதோம்கொண்ட குரோதத்
தினிமித்தம் அவர்கள்தேசத்திற்குத் தண்டனை
வருமென்று தீர்க்கதரிசனஞ்சொல்லல்.

பின்னும்யெகோவாவின்வாக்குஎன்னிடத் ௧
தில்,-மனுபுத்திரனே, சேயீர்மலையின்திசைக்குஎ ௨
திர்முகமாகி, அதற்கு விரோதமாய்த் தீர்க்கதரிச
னஞ்சொல்லி,—அதைப்பார்த்து, சேயீர்மலையே, ௩
பார், நான்உன்விரோதி, நான்உனக்குவிரோதமா
கஎன்கையையோங்கி, உன்னைப்பாழும் அவாந்தர
மூமாக்குவேன்.—உன்நகரங்களை அழிப்பேன், ௪
நீ அவாந்தரமாகி நானே யெகோவாவென்
று அறிந்துகொள்வாய்.—நீ முற்பகைவைத்து, ௫
இஸரவேல் சந்ததியாரின் அக்கிரமம் முடியும்
பொழுது அவர்களுக்கு நேரிட்ட ஆபத்துக்காலத்
தில் கட்கத்தின்வல்லபத்தினால் அவர்களுடைய
இரத்தத்தைச் சிந்தினபடியினால்,—நான் நித்திய ௬
ரானால் இரத்தத்திற்கு உன்னை ஏற்படுத்துவேன்,
இரத்தம் உன்னைத்தொடரும், நீ இரத்தஞ்சிந்துவ
தை அரோசியாமல்விட்டதினால் இரத்தம் உன்
னைத்தொடருமென்று ஆண்டவராகிய யெ
கோவா சொல்லுகிறார்.-நான்சேயீர்மலையைஅ ௭
வாந்தரமும்வெறுமையுமாக்கி, அதிற்போக்குவர
வுசெய்பவர்களை அதிலிராதபடிச்சேதிப்பேன்.-
கொல்லப்பட்டவர்களால் அதின்மலைகளைநிரப் ௮
புவேன்: உன் குன்றுகளிலும், உன் தாழ்ந்தபூமி
களிலும், உன் சமஸ்தநதிகளிலும் கட்கத்தினால்
கொலைசெய்யப்பட்டவர்கள் விழுவார்கள்.—ச ௯
தாகாலமும்நீஅவாந்தரமாய்க்கிடக்கும்படிசெய்
வேன், உன் நகரங்கள் இனிக்குடிஏற்றப்படுவ
தில்லை: நானே யெகோவாவென்று நீங்கள்
அறிந்துகொள்வீர்களென்பதை ஆண்டவரா
கியயெகோவா சொல்லுகிறார்.-இவ்விரண்டு ௰
சாதிகளிடத்திலும், இவ்விரண்டுதேசங்களிலும்
யெகோவா இருந்தும், இவைகள் எனக்குரிய
வைகளாகும், நான் இவைகளைச்சுதந்தரிப்பே
னென்று நீசொன்னபடியினால்,-நான்நித்தியரா ௰௧
னால் நீ அவர்களுக்கு விரோதமாய்க்கொண்டப
கைக்கும், அவர்கள்மேல்காட்டின குரோதத்துக்
கும் பொறாமைக்குந்தக்கதாக உனக்குச்செய்
வேன்; நான் உன்னைநியாயம்விசாரித்து அவர்க

(௨௩) ஏசா.௪௰.௰௧. எரே.௨௩.௪,௫. யோவா.௰.௰௧. எபி.௰௩.௨௰. ௧.பேதுரு.௫.௪. எரே.௩௰.௯. ஓசி.௩.௫. (௨௪) யாத்.௨௯.௪௫. லூக்.௧.௩௨,௩௩. (௨௫) லேவி.௨௬.௬. ஏசா.௰௧.௬—௯. ஓசி.௨.௰௮. எரே.௨௩.௬. (௨௬) ஏசா.௫௬.௭. ஆதி.௰௨.௨. ஏசா.௰௯.௨௪. ௪௧.௮.௰௩. லேவி.௨௬.௪. மல்.௩.௰. (௨௭) லேவி.௨௬.௪,௰௩. ஏசா.௪.௨. எரே.௨௰. எரே.௨௫.௰௪. (௨௮) எரே.௩௰.௰.(௨௯)ஏசா.௰௧.௧. எரே.௨௩.௫. (௩௰) அதி.௩௭.௨௭.(௩௧)யோவா.௰.௰௧.—(௩௫. அதி. ௨.) உபா.௨.௫.எரே.௪௯.௭,௮.ஆமோ.௧.௰௧.ஒப.௰,. (௫) அதி.௨௫.௰௨ ஒப.௰,௰௧.சங்.௱௩௭.௭.தானி.௯.௨௪. (௭) நியா.௫.௬. (௯) எரே.௪௯.௰௭,௰௮. மல்.௧.௩,௪.(௰)ஒப.௰௩. சங்.௪௮.௧,௩. (௰௧) மத்.௭.௨. யாக்.௨.௰௩.

ளிடத்தில் என்னை வெளிப்படுத்துவேனென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
யஉ றார்.—இஸரவேலின் மலைகள் அவாந்தரமாயி
ன, நாசப்படுத்தும்படி அவைகள் எங்களிடத்
தில் கொடுக்கப்பட்டனவென்று அவைகளுக்கு
விரோதமாக நீ சொல்லிய உன் நிந்தனை எல்லாம்
யெகோவாவாகிய நான்கேட்டேனென்று
யங நீ அறிந்துகொள்வாய்.—நீங்கள் எனக்குவிரோ
தமாக உங்கள்வாயினால் உங்களை மேன்மைபா
ராட்டி, எனக்கு எதிராய் அநேக வாக்குகளைச்
சொன்னீர்கள்: அவைகளை நான் கேட்டிருக்
யச கிறேன்.—உலகமெல்லாம்மகிழ்ந்திருக்கும்பொ
யரு ழுது நான் உன்னை வெறுமையாக்குவேன்.—இ
ஸரவேல்வமிசத்தாரின்சுதந்தரம்வெறுமையான
தைக்கண்டு சந்தோஷப்பட்டாய், உன்னையும்
அப்படியே நடத்துவேன்:சேயீர்மலையே, நீயும்,
ஏதோமின்முழுத்தேசமும் வெறுமையாவீர்கள்;
அதினால் நானே யெகோவாவென்று அ
றிந்துகொள்ளுவார்களென்பதாக ஆண்டவரா
கிய யெகோவா சொல்லுகிறாரென்பதைச்
சொல்லச்சொல்லிற்று.

## ஙசு. அதிகாரம்.

*க. இஸரவேல்தேசத்தையாற்றல்: அ. யெகோவா ஆசீர்வதிப்பாரென்றுவாக்குத்தத்தஞ்செய்தல்: யசு. பாவத்தினிமித்தம்இஸரவேலர்தண்டிக்கப்படல்: உக. அவர்கள் மீட்கும்பொருளின்றி இரட்சிக்கப்படல்: உசு. கிறிஸ்துவின் இராச்சியத்தின் சமாதானத்தைத் தீர்க்கதரிசனமாய்ச்சொல்லல்.*

மனுபுத்திரனே, நீஇஸரவேலின்மலைகளைநோக்
கி, தீர்க்கதரிசனவாக்கியங்களைத் தெரிவித்து,
இஸரவேலின் மலைகளே, நீங்கள் யெகோ
வாவின் வாக்கைக்கேளுங்களென்றுசொல்லு,
ஆண்டவராகிய யெகோவா இவ்வாக்குச்
உ சொல்லுகிறார்.—சத்துரு உங்களுக்கு விரோத
மாய், ஆ, ஆ, பூருவகாலத்திலுள்ள உயர்ந்தஸ்
தானங்கள் எங்களுக்குச்சுதந்தரமாகக்கிடைத்த
ங னவென்று சொல்லுகிறபடியால்,—நீ தீர்க்கதரி
சனத்தைத்தெரிவித்து, ஆண்டவராகிய யெ
கோவா இவ்வாக்குச்சொல்லுகிறாரென்றுசொ
ல்லு; நீங்கள் அந்நியதேசத்தாரில் மீந்திருக்குஞ்
சனங்களுக்குச்சுதந்தரமாகும்படி அவர்கள் உங்
களை வெறுமையாக்கி, நான்குதிசையிலும் உங்
களை விழுங்கினபடியினாலும், நீங்கள் வாயா
டிகளுக்குப்பேச்சும், சனங்களுக்கு நிந்தையுமா
ச னவர்களானபடியினாலும்,—இஸரவேலின்மலை
களே, நீங்கள் யெகோவாவின் வாக்கைக்
கேளுங்கள்; மலைகளையும், குன்றுகளையும், நதிக
ளையும், தாழ்ந்தபூமிகளையும், அவாந்தரவெளிக
ளையும் நான்குதிசையிலுமுள்ள அந்நிய தேசத்
தாரில் மீந்த சனங்களுக்குக் கொள்ளைப்பொரு
ளும், நிந்தைப்பொருளும், கைவிடப்பட்டவை
களுமாகிய நகரங்களையுங்குறித்து ஆண்டவ
ராகிய யெகோவா இவ்வாக்குச்சொல்லுகி
றார்.—ஆதலால் தங்கள் பூரணமனச்சந்தோஷத் ரு
தினாலும், தங்கள் மனப்பகையினாலும், கொள்
ளைப்பொருள்போல் அகற்றிவிடும்படி என் தே
சத்தைத்தங்களுக்குச்சுதந்தரமாகப்பிடித்த அந்நி
யதேசத்தாரில் மீந்தசனங்களுக்கும், ஏதோமின்
சகலசனங்களுக்கும்விரோதமாய் நான் என்கோ
பாக்கினியினாலே பேசினேனேயென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறார்.—
ஆதலால் நீ இஸரவேல்தேசத்தைக் குறித்துத்தீர்க் சு
கதரிசனத்தைத்தெரிவித்து, மலைகளையும், குன்
றுகளையும், நதிகளையும், தாழ்ந்த பூமிகளையும்
நோக்கி, பாருங்கள், நீங்கள் அந்நியதேசத்தாரி
டத்தில் அவமானத்தை அனுபவித்தநிமித்தம்
நான்என்கோபத்தினாலும், என்உக்கிரத்தினாலும்
பேசினேனென்று ஆண்டவராகியயெகோ
வா சொல்லுகிறாரென்றுசொல்லு.-ஆதலால்உங் எ
களைச்சுற்றியிருக்கிற அந்நியதேசத்துச்சனங்கள்
மெய்யாய்அவமானத்தை அனுபவிப்பார்களென்
றுநான்கையெடுக்கிறேனென்பதாக ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறார்.
இஸரவேலின்மலைகளே,நீங்களோ, உங்கள்கி அ
ளைதழைக்க, என்னுடைய சனங்களாகிய இஸர
வேலருக்கு உங்கள்கனிகளைத்தருவீர்கள்; அவர்
கள் விரைந்துவருகிறார்கள்.—பாருங்கள், நான் கூ
உங்கள் பட்சத்திலிருக்கிறேன், உங்களிடத்தில்
திரும்புவேன், நீங்கள் செய்கைபண்ணப்பட்டு
விதைக்கப்படுவீர்கள்.—நான் உங்கள்மேல் இஸர ய
வேலின் வமிசத்தாராகிய மனுஷர் யாவரையும்
வருத்திக்கப்பண்ணுவேன்: நகரங்கள் குடியேற்
றப்படும், பாழானஸ்தானங்கள் திரும்பவுங்கட்
டப்படும்.—நான்உங்கள்மேல்மனுஷரையும்,மி யக
ருகசீவன்களையும்பல்கிப்பெருகும்படிவருத்திக்
கப்பண்ணுவேன்; உங்களைப் பூருவகாலத்திலி
ருந்ததுபோல வசிக்கப்பண்ணுவேன், உங்கள்
முந்தினநிலைமையிலும் உத்தமநிலையை அடை
யப்பண்ணுவேன்:நானே யெகோவாவென்
று நீங்கள்அறிந்துகொள்வீர்கள்.—நான் உங்கள் யஉ
மேல் என்சனங்களாகிய இஸரவேலின் மனுஷ
ரை உலாவப்பண்ணுவேன்; அவர்கள் உன்னைச்
சுதந்தரித்துக்கொள்வார்கள், நீ அவர்களுக்குச்சு
தந்தரமாயிருப்பாய், நீ இனி ஒருபொழுதும் உன்
சனங்களை இழந்துபோகாய்.-ஆண்டவராகிய யங
யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; நீம
னுஷரைவிழுங்குகிறாய், தேசமே, உன்சாதி
யாரைக் கெடுத்தாயென்று உன்னைக்குறித்துச்ச
னங்கள் சொல்லுகிறபடியினால்,—நீ இனிமேல் யச
மனுஷரைப் பட்சிப்பதுமில்லை, உன்சாதியா
ரைக் கெடுப்பதுமில்லையென்று ஆண்டவரா

(யங) க.சாமு.உ.ங. வெளி.யங.சு. (யச) ஏசா.சுரு.யங,யச. (யரு) ஒப.யஉ,யரு.—(ஙசு. அதி. க.) அதி.சு.உ,ங.(உ) அதி.உரு.ங. உபா.ஙஉ.யங. அதி.ஙரு.ய. (ங) உபா.உஅ.ஙஎ. க.இரா.கூ.எ. புல.உ.யரு. தானி.கூ.யசு. (ச) அதி.ஙச. உஅ. சங்.எகூ.ச. (ரு) உபா.ச.உச. அதி.ஙஅ.உய. அதி.ஙரு.ய,யஉ. (சு) அதி.ஙச.உகூ. (எ) அதி.உய.ரு. (ய) ஏசா. ருஅ.யஉ. ஆமோ.கூ.யச. (யக) எரே.ஙக.உஎ. அதி.ஙரு.கூ. (யஉ) ஒப.யஎ,. எரே.யரு.எ. (யங) எண்.யங.ஙஉ.

௰௫ கிய யெகோவா சொல்லுகிறார்.—அந்நியதே
சத்தார்செய்த அவமானத்தை உன்னிடத்தில் இ
னிக்கேட்கப்பண்ணமாட்டேன், நீ சனங்களா
லேஇனிநிந்தைபெறமாட்டாய், நீ இனி உன்சா
தியாரைக் கெடுக்கமாட்டாயென்று ஆண்டவ
ராகிய யெகோவா சொல்லுகிறாரென்பதாக
என்னிடத்திற்சொல்லிற்று.
௰௬ பின்னும் யெகோவாவின் வாக்கு என்
௰௭ னிடத்தில்,—மனுபுத்திரனே, இஸரவேல்வமிசத்
தார்தங்கள்சுயதேசத்திலேவாசம்பண்ணினபொ
ழுது அவர்கள் தங்கள்நெறியினாலுந் தங்கள்கிரி
யைகளினாலும் அதைஅசுத்தப்படுத்தினார்கள்: அ
வர்களுடைய நடை என்பார்வையில் ருதுவதி
௰௮ யின்அசுசியைப்போலிருந்தது.—ஆகையால் அ
வர்கள்தேசத்தில்சிந்தின இரத்தத்தினிமித்தமும்,
தங்கள்விக்கிரகங்களினால் அதைஅசுசிப்படுத்தி
னதினிமித்தமும், நான் அவர்களுக்கு விரோத
௰௯ மாய் என்கோபத்தைச்சொரியப்பண்ணி,—நான்
அவர்களைச்சாதியாருக்குள்ளேசிதறஅடித்தேன்,
அவர்கள்தேசங்களில் எங்கும்பறக்கடிக்கப்பட்
டார்கள்: அவர்களுடைய நெறியின்படிக்கும்,
அவர்களுடைய செய்கைகளின்படிக்கும் நியா
௨௰ யம்விசாரித்தேன்.—அவர்கள் போய்ப்பிரவேசித்
ததேசத்திற் சனங்கள் அவர்களைக்குறித்து, அவர்
கள் யெகோவாவின் சனங்கள், அவருடை
ய தேசத்தினின்று புறப்பட்டுவந்தார்களென்று
சொல்ல, இவர்களுக்குள் என்பரிசுத்தநாமத்தை
அசுசிப்படுத்தினார்கள்.
௨௧ ஆனாலும் இஸரவேல்வமிசத்தார் தாங்கள்
போயிருந்த அந்நியதேசத்தாருக்குள் அசுத்தப்ப
டுத்தின என் பரிசுத்த நாமத்தினிமித்தம் அவர்
௨௨ கள்மேலிரங்கினேன்.—ஆதலால் நீ இஸரவேல்
வமிசத்தாரைநோக்கி, இஸரவேல் வமிசத்தாரே,
நான்இப்படிச்செய்வதுஉங்கள்நிமித்தமல்ல,நீங்
கள் போய்ச்சேர்ந்த தேசத்தாருக்குள் அசுசிப்ப
டுத்தினஎன் பரிசுத்தநாமத்தினிமித்தமேயென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
௨௩ றாரென்பதைச் சொல்லு.—சாதியாருக்குள்ளே
நீங்கள் அசுசிப்படுத்தினதும், அவர்களுக்குள்
அசுத்தமாக்கப்பட்டதுமாகிய என்னுடைய ம
காநாமத்தைப் பரிசுத்தப்படுத்துவேன்; நான்
உங்கள்மூலமாக அவர்களுடைய பார்வையில்ப
ரிசுத்தப்படுத்தப்படும்பொழுது அவர்கள் நானே
யெகோவாவென்று அறிந்துகொள்வார்க
ளென்றுஆண்டவராகியயெகோவாசொல்
௨௪ லுகிறார்.—நான் உங்களை அந்நியரிடத்திலிருந்து
சேர்த்துக்கொள்ளுவேன், சகல தேசங்களிலும்
நின்று ஏகமாய்க் கூட்டி, உங்கள் சுயதேசத்திற்
கு உங்களைக்கொண்டுவருவேன்.
௨௫ அப்பொழுது நான் உங்கள்மேல்சுத்தசலந்தெ
ளிப்பேன், நீங்கள் சுத்தமாவீர்கள்: உங்கள் சகல
அசுத்தங்களையும், உங்கள் சகல விக்கிரகங்களை
யும் நீக்கி, உங்களைச் சுத்திகரிப்பேன்.—உங்க ௨௬
ளுக்கு ஒரு புதுஇருதயத்தைத் தருவேன், உங்
களுக்குள் ஒரு புதுஆவியை ஸ்தாபிப்பேன்: உங்
கள் மாமிசத்தினின்று கல்லுப்போன்ற இருதயத்
தை அகற்றி, மாமிசஇருதயத்தைத் தருவேன்.—
உங்கள்உள்ளத்தில்என்ஆவியைஸ்தாபிப்பேன், ௨௭
என் விதிப்பிரமாணங்களின்படி உங்களை நடக்
கப்பண்ணுவேன், நீங்கள் என் கட்டளைகளைக்
காத்து அவைகளின்படி செய்வீர்கள்.—நான் ௨௮
உங்கள் முன்னோருக்கு அளித்ததேசத்தில் நீங்
கள் வாசம்பண்ணி என் சனங்களாவீர்கள், நான்
உங்களுக்குத் தேவனாவேன்.—நான் உங்கள் அ ௨௯
சுசிகள் எல்லாவற்றினின்றும் உங்களை இரட்
சிப்பேன்: நான் தானியத்தை வரவழைத்து, அ
தை வருத்திக்கப்பண்ணுவேன், பஞ்சத்தை உங்
கள்மேல் வருவியேன்.—விருட்சத்தின் கனியும், ௩௰
வயல் வெளியின் விளைவும் பெருகச்செய்வேன்,
நீங்கள் அந்நியதேசத்தாருக்குள் இனிப்பஞ்சத்
தின் அவமானத்தை அடையமாட்டீர்கள்.—அப் ௩௧
பொழுது நீங்கள் உங்கள் சுயதீமையுள்ள நடைக
ளையும், நன்மையல்லாத உங்கள் கிரியைகளையும்
நினைந்து, உங்கள் அக்கிரமங்களினிமித்தமும்
உங்கள் அரோசியமான கிரியைகளினிமித்தமும்
உங்களை வெறுப்பீர்கள்.—இஸரவேல்வமிசத்தா ௩௨
ரே, நான் இப்படிச்செய்வது உங்கள் நிமித்த
மல்லவென்று அறிந்துகொள்ளுங்களென்பதை
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
றார்: நீங்கள் உங்கள்நடையை நினைந்து இலச்
சை அடைந்து,நாணுங்கள்.—அப்பொழுது நான் ௩௩
உங்கள் அக்கிரமங்களையெல்லாம் நீக்கி, உங்க
ளைச் சுத்திகரிக்குங்காலத்தில் நகரங்களில் வ
சிக்கும்படிசெய்வேன்,அப்பொழுதுபாழானஸ்
தானங்கள் திரும்பக்கட்டப்படுமென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறார்.—
அதின் வழியாய்ச்செல்லும்எல்லாருடைய பார் ௩௪
வைக்கும்,அவாந்தரமாய்க்கிடந்த அந்த அவாந்த
ரதேசம்பண்படுத்தப்படும்.—அதினால் சனங்கள், ௩௫
அவாந்தரமாயிருந்த இந்தத்தேசம் ஏதேன்தோட்
டத்தைப்போலாயிற்று; பாழும் வெறுமையுஞ்
சேதமுமாயிருந்த நகரங்கள் மதில்களால்சூழப்
பட்டு, குடியேற்றப்பட்டனவென்று சொல்
லுவார்கள்.—அப்பொழுது யெகோவாவா ௩௬
கிய நான் இடிவுகளைக் கட்டுகிறவரென்றும், அ
வாந்தரமாயுள்ளதேசத்தில் விருட்சங்களைநடுகிற
வரென்றும்உங்கள் நான்குதிசையிலும் மீந்திருக்
கிறஅந்நியதேசத்தார்அறிந்துகொள்வார்கள்: யெ
கோவாவாகிய நான் இட்டவாக்கு சித்தி
யாகும்படிசெய்வேன்.—இஸரவேல்வமிசத்தார் ௩௭
நிமித்தம் நான் இதைச்செய்யும்படி அவர்க
ளால் கேட்கப்படுவேனென்று ஆண்டவராகி

---

(௰௫)அதி.௩௪.௨௯. (௰௭) எரே.௨.௭. லேவி.௰௫.௰௯. (௰௯) அதி.௨௨.௰௫. (௨௰) ஏசா.௫௨.௫. ரோ.௨.௨௪. (௨௧) அதி.௨௰.௯,௰௪. (௨௨) சங்.௱௬.௮. (௨௩) அதி.௨௰.௪௧. (௨௪) அதி.௩௪.௰௩. (௨௫) ஏசா.௫௨.௰௫. எபி.௰.௨௨. எரே.௩௩.௮. (௨௬) எரே.௩௨.௩௯. (௨௮) அதி.௨௮.௨௫. எரே.௩௰.௨௨.(௨௯)மத்.௧.௨௧. ரோ.௰௧.௨௬. அதி.௩௪.௨௯. (௩௰) அதி.௩௪.௨௭. (௩௧) லேவி.௨௬.௩௯. உபா.௯.௫. (௩௫) ஏசா.௫௧.௩. யோவே.௨.௩.

யயெகோவாசொல்லுகிறார், அவர்கள்சனங்க
ளைமந்தையைப்போல் வருத்திக்கச்செய்வேன்.—
௩௮ உற்சவசமயங்களில் யெருஷலேமின்மந்தையா
கிய அந்தப் பரிசுத்தமந்தையைப்போன்றமனித
மந்தைகளினால்அவாந்தரமாய்ப்போனநகரங்கள்
நிறைந்திருக்கும்; நானே யெகோவாவென்
று அவர்கள் அறிந்துகொள்வார்களென்றது.

## ௩௭. அதிகாரம்.

௧. காய்ந்த எலும்புகளை உவமித்தல். இஸரவேல
ரின் சோர்வை நீக்கல்: ௰௫. யூதாவும் இஸர
வேலும் ஐக்கமாதல்: உ௰. கிறிஸ்துவின் இராச்
சியத்தைக்குறித்து வாக்குத்தத்தஞ்செய்தல்.

பின்னும் யெகோவாவின் கரம் என்மேல்
அமர, யெகோவா ஆவியினால் என்னைவெளி
யேகொண்டுபோய், எலும்புகள் நிறைந்த ஒரு
௨ தாழ்ந்த பூமியின்மத்தியில் என்னைநிறுத்தி,—என்
னை அவைகளைச்சுற்றிச் செல்லப்பண்ணினார்:
அந்தத் தாழ்ந்தபூமியில் அநேக எலும்புகளிருந்
௩ தன; அவைகள்மிகவும் உலர்ந்தன.—அவர் என்
னைநோக்கி, மனுபுத்திரனே, இந்த எலும்புகள்
உயிர்க்குமாவென்றுகேட்க, நான் அதற்குத்தர
மாக, ஆண்டவராகிய யெகோவாவே,
௪ நீர் அறிவீரென்றேன்.—பின்னும் அவர் என்னி
டத்தில், நீ இந்த எலும்புகள்மேல்தீர்க்கதரிசனஞ்
சொல்லி, இவைகளைப்பார்த்து, உலர்ந்த எலும்பு
களே, நீங்கள் யெகோவாவின் வாக்கைக்
௫ கேளுங்கள்.—ஆண்டவராகிய யெகோவா
இந்த எலும்புகளுடனே இவ்வாக்கைச்சொல்லு
கிறார்; கேளுங்கள், நான் உங்களுக்குள்சுவாசத்
தைப்பிரவேசிக்கப்பண்ணுவேன், நீங்கள் உயிர்
௬ பெறுவீர்கள்.—நான் உங்கள்மேல் நரம்புகளைச்
சேர்த்து, உங்கள்மேல் மாமிசத்தை உண்டாக்கி,
தோலினால் உங்களைமூடி, உங்களுக்குள்ளே சு
வாசத்தைப்பிரவேசிக்கப்பண்ணுவேன், நீங்கள்
உயிர்பெறுவீர்கள், நானே யெகோவாவென்
று அறிந்துகொள்வீர்களென்பதைச் சொல்லச்
௭ சொன்னார்.—எனக்கிட்ட கட்டளைப்படி நான்
தீர்க்கதரிசனஞ்சொன்னேன்: நான் தீர்க்கதரிச
னஞ்சொல்லுகையில் ஒரு இரைச்சலுண்டாயிற்
று, அசைவுந்தோன்றிற்று, ஒவ்வொரு எலும்புந்
௮ தன்தன் எலும்போடேசேர்ந்தது.—நான் உற்றுப்
பார்க்கையில் அவைகளின் மேல் நரம்பும் மாமி
சமுந்தோன்றின, அவைகளின் மேல் தோல் மூ
டக்கண்டேன்: ஆனாலும் அவைகளுக்குள் சுவா
௯ சமில்லை.—பின்பு அவர் என்னைநோக்கி, நீ ஆவி
யைப்பார்த்துத்தீர்க்கதரிசனஞ்சொல்லு; மனுபுத்
திரனே, தீர்க்கதரிசனஞ்சொல்லி ஆவியைநோக்
கி, ஆவியே, நீநான்குகாற்றுத்திசைகளினின்றும்
வந்து, கொலையுண்டவர்களாகிய இவர்கள்சீவிக்
கும்படிஇவர்கள்மேல் ஊதென்று ஆண்டவரா
கிய யெகோவா சொல்லுகிறாரென்பதைச்

சொல்லென்றார்.—அப்பொழுது அவர் எனக்கிட் ௰
டகட்டளைப்படி நான் தீர்க்கதரிசனஞ்சொல்ல,
ஆவி அவர்களுக்குள் பிரவேசித்தது, அவர்கள்
உயிர்த்து ஒரு மகாபெரியசேனையாய்த் தங்கள்
கால்களை ஊன்றி நின்றார்கள்.

அப்பொழுது அவர் என்னைநோக்கி, மனுபுத் ௰௧
திரனே, இந்த எலும்புகள் இஸரவேலின் சகலவ
மிசத்தாருமே: பார், அவர்கள் எங்கள் எலும்பு
கள் உலர்ந்துபோயின, எங்கள் நம்பிக்கை அற்
றுப்போயிற்று: நாங்களோ சேதிக்கப்பட்டோ
மென்று சொல்லுகிறார்கள்.—ஆதலால் நீ தீர்க்கத ௰௨
ரிசனத்தைத்தெரிவித்து, அவர்களிடத்தில் ஆண்
டவராகியயெகோவா இவ்வாக்குச்சொல்
லுகிறார். என் சனங்களே, பாருங்கள், நான் உங்
கள் பிரேதக்குழிகளைத்திறந்து, பிரேதக்குழியி
னின்று உங்களைவெளிப்படுத்தி இஸரவேலின்
தேசத்துக்குக்கொண்டுபோவேன்.—என் சனங் ௰௩
களே நான் உங்கள் பிரேதக்குழிகளைத்திறந்து
பிரேதக்குழிகளினின்று உங்களைப் புறப்படுத்
தினபொழுது நானே யெகோவாவென்று
நீங்கள் அறிந்துகொள்வீர்கள்.—நான் உங்களுக் ௰௪
குள் என் ஆவியை இருக்கச்செய்வேன், நீங்கள்
உயிர்ப்பீர்கள், நான் உங்கள் சுயதேசத்தில் உங்
களை ஸ்தாபிப்பேன்: அப்பொழுது யெகோ
வாவாகிய நான்சொன்னதைச்சித்திக்கப்பண்
ணினேனென்று அறிவீர்களென்பதை யெகோ
வா சொல்லுகிறாரென்று சொல்லென்றார்.

பின்னும் யெகோவாவின் வாக்கு என் ௰௫
னிடத்தில்,—மேலும்மனுபுத்திரனே, நீ ஒருகோ ௰௬
லை எடுத்து, யூதாவினிமித்தமும் அவன் தோழ
ராகிய இஸரவேல் சந்ததியாரினிமித்தமும் என்
பதை அதின்மேல்எழுது: பின்புவேறொருகோ
லை எடுத்து எப்பிராயீமின்கோலாகிய யோசேப்பி
னிமித்தமும், அவன் தோழராகிய இஸரவேல்வ
மிசத்தார்யாவரினிமித்தமுமென்பதைஅதின்மே
லெழுது.—பின்பு அவைகளை ஒரேகோலாகஒன் ௰௭
றோடொன்றிசை; அவைகள் உன்கையில் ஒன்
றாகும்.

இவைகளின் தாற்பரியமின்னதென்று எங்க ௰௮
ளுக்குத் தெரிவிக்கமாட்டீரோவென்று உன்ச
னங்களின் வமிசத்தார் உன்னிடத்திற்கேட்கும்
பொழுது,—நீஅவர்களைநோக்கி, சேளுங்கள், நான் ௰௯
எப்பிராயீமின்கையிலும், அவன்தோழராகிய இஸ
ரவேல் வமிசத்தாரனைவர்களின்கையிலுமுள்ள
யோசேப்பின் கோலைஎடுத்து, யூதாவின்கோலா
கிய அதனோடேசேர்ப்பேன், அதினால் அவை
கள் என்கையில் ஒரேகோலாகுமென்று ஆண்ட
வராகிய யெகோவா சொல்லுகிறாரென்ப
தைச்சொல்லு.

நீ எழுதியகோல்கள் அவர்கள் முன்பாகஉன் ௨௰
கையிலிருக்கவேண்டும்.—நீ அவர்களைநோக்கி, ௨௧

(௩௭. அதி. ௧.) அதி. ௩. ௰௪. லூக். ௪. ௧. (௩) உபா. ௩௨. ௩௯. ௧. சாமு. ௨. ௬. யோவா. ௫. ௨௧. ரோ. ௪. ௰௭. ௨. கொரி. ௧. ௯. (௫) சங். ௱௪. ௩௰. (௬) அதி. ௬. ௭. யோவே. ௨. ௨௭. (௯) சங். ௱௪. ௩௰. (௰) வெளி. ௰௧. ௰௧. (௰௧) சங். ௱௪௧. ௭. ஏசா. ௪௯. ௰௪. (௰௨) ஏசா. ௨௬. ௰௯. ஓசி. ௰௩. ௰௪. அதி. ௩௬. ௨௪. (௰௪) அதி. ௩௬. ௨௭. (௰௬) எண். ௰௭. ௨. ௨. நாளா. ௰௧. ௰௨, ௰௩, ௰௬. (௰௭) வச. ௨௨. ௨௪. (௰௮) அதி. ௰௨. ௯. (௰௯) சக. ௰. ௬. (௨௧) அதி. ௩௬. ௨௪.

ஆண்டவராகியயெகோவா இவ்வாக்குச்
சொல்லுகிறார்; பாருங்கள், நான் இஸரவேல்வமி
சத்தாரை அவர்கள்போயிருக்குஞ்சாதியாரினின்
றுசேர்த்து, சருவதிசையினின்றும் அவர்களை ஏ
கமாய்க்கூட்டி, அவர்களை அவர்கள் தேசத்திற்
௨௨ குவரப்பண்ணுவேன்.—அந்தத்தேசத்தில் இஸ
ரவேல்மலைகளின்மேல் அவர்களை ஒரே இராச்சி
யமாக்குவேன்; அவர்களனைவர்மேலும் ஒரே இ
ராசா அரசாளுவான்: அவர்கள் இனி இரண்டுசா
தியாராயிருக்கமாட்டார்கள், அவர்கள் இனி ஒரு
பொழுதும் இரண்டுஇராச்சியத்தாராகப்பிரிக்கப்
௨௩ படார்கள்.-இனி அவர்கள் தங்கள்விக்கிரகங்களி
ஞலும், தங்கள் அரோசியமானவைகளிஞலும்,
தங்கள் அதிக்கிரமங்களில் ஒன்றிஞலும் தங்களை
அசுசிப்படுத்தமாட்டார்கள்: அவர்கள் பாவஞ்
செய்த அவர்களுடைய சகல வாசஸ்தலங்களி
னின்றும் அவர்களைவிடுவித்து, சுத்திகரிப்பேன்:
அதிஞல் அவர்கள் என்சனங்களாவார்கள், அவர்
௨௪ களுக்கு நான் தேவனுவேன்.-எனதடியாஞகி
யதாவீது அவர்கள்மேல் இராசாவாயிருப்பான்;
அவர்களெல்லாருக்கும் மேய்ப்பன் ஒருவன் இ
ருப்பான்: அவர்கள் என் கட்டளையின்படிநடந்
து, என்விதிகளைமதித்து, அவைகளின்படிசெய்
௨௫ வார்கள்.-நான் எனதடியாஞகியயாக்கோபுக்களி
த்ததும், உங்கள்முன்னேர்வாசஞ்செய்ததுமாகிய
தேசத்திலே அவர்கள் வாசம்பண்ணுவார்கள்; அ
வர்களும் அவர்கள்புத்திரர் பௌத்திரரும் அதில்
சதாகாலமும்வாசம்பண்ணுவார்கள்: என்தாசஞ
கியதாவீதுஎன்றும்அவர்களுக்குஇராசாவாயிருப்
௨௬ பான்.—மேலும் நான் அவர்களோடேசமாதானத்
தின்உடன்படிக்கைபண்ணுவேன்; அது அவர்க
ளிடத்தில்நித்தியஉடன்படிக்கையாகும்: நான் அ
வர்களைஸ்தாபித்து, வருத்திக்கப்பண்ணி, அவர்
கள்மத்தியில்சதாகாலமும் என்பரிசுத்தஸ்தானத்
௨௭ தைவைப்பேன்.—என் ஆவாசமும்அவர்களிடத்
திலே தங்கும்: நான் அவர்களுக்குத் தேவஞ
௨௮ வேன், அவர்கள் என்சனங்களாவார்கள்.—என்
பரிசுத்தஸ்தானம் சதாகாலமும் அவர்கள் மத்தி
யில் தங்கும்பொழுது யெகோவாவாகிய
நான் இஸரவேலைப்பரிசுத்தப்படுத்துகிறவரென்
று தேசத்தார் அறிந்துகொள்வார்களென்பதைச்
சொல்லச்சொல்லிற்று.

## ௩௮. அதிகாரம்.

௧. கோகின் சேனைகளைக்குறித்தல்: ௮. இஸரவே
லரைப்பகைத்துவளைத்தல்: ௰௪.அவர்களுக்குத்
தண்டனைவருமென்று தீர்க்கதரிசனமுரைத்தல்

யெகோவாவின் வாக்கு என்னிடத்தில்,—
௨ மனுபுத்திரனே, நீ மேஷேக், தூபால் என்பவை
களின் அதிபதியாகிய மாகோக் தேசத்திலுள்ள
கோகுக்கு எதிர்முகமாகி, அவனுக்குவிரோதமா
கத் தீர்க்கதரிசனமாய்,—ஆண்டவராகியயெ ௩
கோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; பார், மே
ஷேக் தூபால் என்பவைகளின் அதிபதியாகிய
கோகே, நான் உனக்குவிரோதியாகி,—உன் தா ௪
டைகளில் குறடுகளைமாட்டி உன்னைத்திருப்பு
வேன், உன்னையும், உன்சமஸ்தசேனையாகியகுதி
ரைகளையும் பலவருண வஸ்திரத்தைத்தரித்தகுதி
ரைவீரரையும், பரிசையையும்கேடகத்தையும்பி
டித்த கட்கந்தரிக்கிறவர்களான பெரிய கூட்டத்
தாரையும் வெளியே கொண்டுவருவேன்.—அவர் ௫
களோடே கேடகத்தையுஞ்சீராக்களையுமுடைய
பாரஸ், கூஷ், பூற்றென்னுந் தேசத்துச் சகலச
னங்களையும்,—கோமரையும், அவன்சகலசேனை ௬
களையும், வடதிசையிலுள்ளதொகர்மாவமிசத்தா
ரையும், அவன் சகலசேனைகளையும் உன்னைச்
சேர்ந்தசமுதாயசனங்களுடன்வெளியேகொண்
டுவருவேன்.—நீயே ஆயத்தமாயிரு, ஏகமாய்க்கூடி ௭
வந்த சகல சேனைகளையும் ஆயத்தப்படுத்து, நீ அ
வர்களுக்குக் காவற்காரஞயிருக்கவேண்டும்.

அநேகநாட்சென்றபின் நீ விசாரிக்கப்படு ௮
வாய்: கட்கத்தினின்று மீட்சிபெற்று, சமுதாய
சனங்களினின்றுசேர்க்கப்பட்டு, நெடுங்காலம்
அவாந்தரமாயிருந்த இஸரவேலின் மலைகளின்
மேல்வருவாய், அப்பொழுது அவர்களெல்லாரும்
அந்நியதேசத்தாரினின்று கொண்டுவரப்பட்டு,
ஆபத்தில்லாமல் வாசம்பண்ணுவார்கள்.-நீ எழுந் ௯
துபெருங்காற்றைப்போல்வருவாய், நீயும், உன்
னேடிருக்கும் உன்சகலசேனையும், சமுதாயச
னங்களும் ஒருமேகத்தைப்போலத் தேசத்தைமூ
டுவீர்கள்.—ஆண்டவராகிய யெகோவா ௰
இவ்வாக்குச்சொல்லுகிறார்; அந்தச்சமயத்தில்ப
லநினைவுகள் உன்மனதில்வர, நீ துர்ச்சிந்தனை
கொண்டு,-நான், மதிலில்லாமல்குடியேற்றப்பட் ௰௧
டதேசத்திற்கு விரோதமாய்ப்போய், மதிலில்லா
திருந்தாலும் ஆபத்தில்லாமல் சுகவாழ்வடைந்து
வாசம் பண்ணுகிறவர்களும், தாழுங்கதவுகளும்
இல்லாதவர்களுமாகிய சனங்களிடத்தில் செல்
லுவேனென்றுசொல்லுவாய்.-அந்நியதேசத்தாரி ௰௨
னின்றுசேர்க்கப்பட்டு, முன்பாழாயிருந்த ஸ்தா
னங்களில் ஆடுமாடுகளையும், பொருளையுமுடை
யவர்களாகிய பூமியின்மத்தியிலுள்ள தேசத்துச்
சனங்களுக்கு விரோதமாக உன்கையைத்திருப்
பி, கொள்ளையாடிப்பொருளை அபகரிப்பாய்.—
அதிஞல்ஷேபாவும், தேதானும், தர்ஷீஷின்வர்த் ௰௩
தகரும், அவர்களைச்சேர்ந்த இளஞ்சிங்கங்கள்
போன்ற அனைவரும் உன்னைநோக்கி, நீ கொள்
ளைப்பொருளைக்கவருகிறதற்குவந்தாயா; நீ சூறை
யாடி வெள்ளியையும் பொன்னையும் பறித்துக்

(௨௨) ஏசா.௰௧.௰௩. எரே.௩.௰௮. ஓசி.௧.௰௧. யோவா.௰.௰௬. (௨௪) ஏசா.௪௰.௰௧. எரே.௨௩.௫. ஓசி.௩.௫. லூக்.௧.
௩௨. யோவா.௰.௰௬. (௨௫) அதி.௩௬.௨௮. ஏசா.௬௰.௨௧. யோவே.௩.௨௰. ஆமோ.௯.௰௫. யோவா.௰௨.௩௪. (௨௬)
சங்.௮௯.௩. ஏசா.௫௫.௩. எரே.௩௨.௪௰. அதி.௩௬.௰,௩௭. ௨.கொரி.௬.௰௬. (௨௭) லேவி.௨௬.௰௧,௰௨. யோவா.௧.
௰௪. (௨௮) அதி.௩௬.௨௩. அதி.௨௰.௰௨.—(௩௮.அதி.௨.)வெளி.௨௰.௮. அதி.௩௨.௨௬.(௪)௨.இரா.௰௯.௨௮. அதி.
௨௩.௰௨. (௫) அதி.௨௭.௰. (௬) ஆதி.௰.௨. (௭) ஏசா.௮.௯,௰. (௮) ஆதி.௪௯.௧. உபா.௪.௩௰. ஏசா.௨௯.௬. அதி.௩௬.
௧,௪,௮. எரே.௨௩.௬. (௯) ஏசா.௨௮.௨. எரே.௪.௰௩. (௰௧) எரே.௪௯.௩௧. (௰௨) நியா.௯.௩௭. (௰௩) அதி.௰௯.௩,௫.

கொண்டுபோகிறதற்கும், ஆடுமாடுகளையும் பொ
ருளையுங் கொண்டுபோகிறதற்கும், மிகுதியான
திரவியத்தை எடுக்கிறதற்குமல்லவா உன் சேனை
களையும் ஏகமாய்க்கூட்டினாயென்று சொல்லு
வார்கள்.
௰௪ ஆதலால் மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனத்
தைத்தெரிவித்து, கோகைநோக்கி, என்சனங்க
ளாகிய இஸ்ரவேலர் ஆபத்தில்லாமல்வாசம்பண்
௰௫ ணும் நாளில் நீ அல்லவா அதை அறிந்து,—நீயும்
உன்னோடே வெகுசனங்களும் குதிரையின்மே
லேறிப்பராக்கிரமசேனையாய், மகா கூட்டமாகி,
வடதிசையிலுள்ள உன்ஸ்தானத்திலிருந்து வரு
௰௬ வீர்கள்.—நீ என்சனங்களாகியஇஸ்ரவேலருக்கு
விரோதமாக மேகத்தைப்போலத்தேசத்தை மூடி
வருவாய்; கோகே, நான் அந்நியதேசத்தாருக்கு
முன்பாக உன்னால் பரிசுத்தரென்று விளங்கும்
பொழுது, அவர்கள் என்னை அறியத்தக்கதாக,
முடிவானகாலத்தில் என்தேசத்துக்கு விரோத
மாய் உன்னைக்கொண்டுவருவேனென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறாரென்
௰௭ பதைச்சொல்லென்றார்.—நான் உன்னை அவர்
களுக்குவிரோதமாகவருவிப்பேனென்று, பூருவ
காலத்தில் அநேகநாள்வரைக்கும் இஸ்ரவேல்தே
சத்தின்தீர்க்கதரிசிகளாகிய என்தாசரைக்கொண்
டு நான்குறித்துச்சொன்னவன் நீயல்லவாவென்
று ஆண்டவராகிய யெகோவா சொல்லு
௰௮ கிறார்.—இஸ்ரவேல்தேசத்திற்கு விரோதமாகக்
கோக்வருவான், அந்தச்சமயத்தில் என் உக்கிரம்
என்முகத்திற்றோன்றுமென்று ஆண்டவராகி
௰௯ ய யெகோவா சொல்லுகிறார்.—அந்நாளில்ச
முத்திரத்தின்மச்சங்களும்,ஆகாயத்தின்பறவைக
ளும்,காட்டுமிருகங்களும்,பூமியில்ஊருகிறசகல
ஊர்வனவும், பூமியின் முகத்திலுள்ள சகலமனு
ஷரும் நடுங்கவும், மலைகள்கீழேதள்ளப்படவும்,
செங்குத்தானவைகள் விழவும், ஒவ்வொரு மதி
௨௰ லுந் தரையிலே விழுந்துபோகவும்,—இஸ்ரவே
லின் தேசத்தில் இவ்வளவுபெரிய ஒரு அதிர்த
லுண்டாகும்பொருட்டு, நான் என் கோபத்தினா
லும்கோபாக்கினியினாலும்இவ்வாக்கைச்சொன்
௨௧ னேன்.-நான் என் சகல மலைகளின்மேலும் அவ
னுக்குவிரோதமாகக் கட்கம்வரும்படிஅழைக்க,
அவனவன் கட்கம் அவனவனுடைய சகோதர
௨௨ னுக்குவிரோதமாயிருக்கும்.-நான் கொள்ளைநோ
யினாலும், இரத்தஞ்சிந்துதலினாலும் அவனைநியா
யம்விசாரிப்பேன்; அவன்மேலும், அவன்சேனை
களின்மேலும், அவனோடிருக்குஞ் சமுதாயச
னங்கள்மேலும் வெள்ளம்பாயத்தக்க மழையை
யும், மகாகன்மழையையும், அக்கினியையும், கந்
௨௩ தகத்தையும்வருஷிக்கப்பண்ணுவேன்.-இவ்வித
மாய் நான் என்மகிமையையும் என் பரிசுத்தத்தை
யும் விளங்கக்காட்டுவேன்; அதினால் அநேகதே
சத்துச் சனங்களுக்கு முன்பாக நான் மதிக்கப்ப
டும்பொழுதுநானே யெகோவாவென்று அ
றிந்துகொள்வார்களென்பதை ஆண்டவராகி
ய யெகோவா சொல்லுகிறார்.

## ௩௯. அதிகாரம்.

௧. கோகுக்குத் தண்டனைவருமென்று தீர்க்கதரி
சனமுரைத்தல்: ௮. இஸ்ரவேலர் செயங்கொள்
ளல்: ௰௧. கோகின் மரித்தோர் ஸ்தானத்தை நி
ருணித்தல்: ௰௮. பட்சிகள் சவங்களைப்பட்
சித்தல்: ௨௫. இஸ்ரவேலர் தங்கள் தேசத்தில்
ஏகமாய் வசிப்பதைமுன்னுரைத்தல்.

ஆகையால்மனுபுத்திரனே,நீ,கோகுக்குவிரோ ௧
தமாய்த்தீர்க்கதரிசனத்தைத்தெரிவித்து, ஆண்ட
வராகிய யெகோவா இவ்வாக்குச்சொல்லு
கிறாரென்றுசொல்லு; மேஷெக், தூபால் என்ப
வைகளின் அதிபதியாகிய கோகே, பார், நான்
உனக்கு விரோதியாகி,—உன்னை நடத்தி, உன் ௨
ஆறுபங்கில் ஒருபங்குமாத்திரம் வைப்பேன், வ
டதிசையினின்று உன்னைவருவித்து, இஸ்ரவே
லின் மலைகள்மேலேறச்செய்வேன்.-உன்வில்லை ௩
உன் இடக்கையினின்றுவீழ்த்தி, உன் அம்புகளை
உன் வலக்கையினின்று விழப்பண்ணுவேன்.—
நீயும், உன் சேனைகளும், உன்னோடேயிருக்கிற ௪
சனங்களும் இஸ்ரவேலுடைய மலைகளின்மேல்
விழுவீர்கள்: அப்பொழுது உங்களைப் பலவி
தச் சிறகுகளையுடைய இரைகவ்வும் பட்சிகளுக்
கும், காட்டுமிருகங்களுக்கும் இரையாகஒப்பிப்
பேன்.—நீ வெளியிலே விழுவாய்: நான் இவ்வாக் ௫
குச்சொன்னேனென்று ஆண்டவராகிய யெ
கோவா சொல்லுகிறார்.—நான் மாகோகின்மே ௬
லும், விசாரமில்லாமல் தீவுகளில் வசிப்பவர்க
ளின்மேலும் அக்கினியை அனுப்புவேன்: நா
னே யெகோவாவென்று அறிந்துகொள்வார்
கள்.—இவ்விதமாய் நான் என்சனங்களாகிய இ ௭
ஸ்ரவேலருக்குள் என் பரிசுத்தநாமத்தைத் தெரி
விப்பேன்; அவர்கள் இனி என் பரிசுத்தநாமத்
தை அசுத்தப்படுத்தவிடேன்: அதினால் தேசத்
தார் நானே இஸ்ரவேலில் பரிசுத்தராகிய யெ
கோவாவென்று அறிந்துகொள்வார்கள்.
வந்தது, பாருங்கள், நான்சொல்லியநாள்இது ௮
வே;நிறைவேறலாயிற்றென்று ஆண்டவராகி
ய யெகோவா சொல்லுகிறார்.—இஸ்ரவேலின் ௯
நகரத்தார் புறப்பட்டுப்போய், கேடகங்களும்,
பரிசைகளும், வில்லுகளும், அம்புகளும், வ
ளைதடிகளும், ஈட்டிகளுமாகிய யுத்தஆயுதங்க
ளைஅக்கினியில் எரிப்பார்கள், ஏழுவருஷம்வ
ரைக்கும் அவைகளை அக்கினியினால் தகிப்பார்
கள்.—அவர்கள்வெளியினின்றுவிறகுகொண்டு ௰
வராமலும், காடுகளில் மரங்களைவெட்டாமலும்

(௰௪) ஏசா.௪.௧. (௰௫) அதி.௩௮.௨. (௰௬) யாத்.௰௪.௪. (௰௯) ஓசி.௪.௩. எரே.௪.௨௪. நாகூ.௧.௫,௬. (௨௰) அதி.௩௮.௫,௬. சங்.௮௯.௪௬. ஆகா.௨.௬,௭. வெளி.௰௬.௰௮. (௨௧) சங்.௱௫௰.௬. நியா.௭.௨௨. ௧.சாமு.௰௪.௨௰. ௨.நாளா.௨௰.௨௩. (௨௨) ஏசா.௬௬.௰௬. எரே.௨௫.௩௧. சங்.௰௧.௬. ஏசா.௨௯.௬. வெளி.௰௬.௨௧. (௨௩) சங்.௯.௰௬.—(௩௯. அதி. ௧.) அதி.௩௮.௨,௩. (௨) அதி.௩௮.௪,௰௫. (௪) அதி.௩௮.௨௧. அதி.௩௩.௨௭. (௬) அதி.௩௮.௨௨. ஆமோ.௧.௪. சங்.௭௨.௰. (௭) லேவி.௰௮.௨௧. அதி.௩௬.௰௬,௨௩. (௮) வெளி.௨௧.௬. அதி.௩௮.௰௭. (௰) ஏசா.௰௪.௨.

ஆயுதங்களைத்தகிப்பார்கள்; அவர்கள் தங்களைக்
கொள்ளையிட்டவர்களைக்கொள்ளையிட்டு,சூறை
யாடினவர்களைச்சூறையாடுவார்களென்று ஆண்
டவராகியயெகோவா சொல்லுகிறார்.
௰௧ அந்நாளில் நான் இஸரவேல்தேசத்தில் சமுத்
திரத்துக்குக்கீழ்த்திசையிலுள்ள பிரயாணக்கார
ருடைய தாழ்ந்தபூமியைக் கோகுக்குப்பிரேதஸ்
தானமாகக் கொடுப்பேன்: அது வழிப்போக்க
ரின் மூக்கைப் பொத்தும்: அங்கே கோகையும்
அவனுடைய சமஸ்த சேனையையும் அடக்கம்
பண்ணுவார்கள்: அதினால் சனங்கள் எமோன்
கோகின் தாழ்ந்தபூமியென்னும் பெயரிதற்கிடு
௰௨ வார்கள்.-தேசத்தைச்சுசிப்படுத்துகிறதற்கு இஸர
வேல்வமிசத்தார் ஏழுமாதமளவாக அவர்களை அ
௰௩ டக்கம்பண்ணுவார்கள்.—தேசத்தின்சகலசனங்
களும் அவர்களை அடக்கம்பண்ணுவார்கள்;
நான்புகழ்ச்சிபெறும் அந்த நாள் அவர்களுக்கு
மகாகீர்த்தியுள்ளதாகுமென்று ஆண்டவராகி
௰௪ யயெகோவா சொல்லுகிறார்.—அவர்கள்தே
சத்தைச்சுசிப்படுத்துகிறதற்காக, நித்தமுந்தேசத்
தில் அங்குமிங்கும்போகும்படிக்கு அங்குமிங்
கும் போகிறவர்களோடே பூமியின் முகத்தின்
மேல் மீந்துகிடக்குஞ் சவங்களை அடக்கம்பண்
ணுகிறவர்களைப்பிரித்தெடுப்பார்கள்:ஏழுமாதஞ்
௰௫ சென்றபின்பும் இவர்கள்தேடுவார்கள்.—தேசத்
திற்சுற்றித்திரிகிறவர்களில் ஒருவன் மனுஷனு
டையஒருஎலும்பைக்காணும்பொழுது,எமோன்
கோகென்னுந் தாழ்ந்தபூமியில் அதைப் புதைக்
கும்வரைக்கும் அதின்அருகில் ஒருஅடையாளத்
௰௬ தைநாட்டுவான்.—அந்தநகரத்தின்பெயர் எமோ
னா: இவ்விதமாய் அவர்கள் தேசத்தைச்சுசிபடுத்
துவார்கள்.
௰௭ மனுபுத்திரனே,நீசகலவிதச்சிறகுகளையுடைய
பறவைகளையும்,சகலவிதகாட்டுமிருகங்களையும்
நோக்கி, நீங்கள் ஏகமாய்க்கூடிவாருங்கள்,நான்
உங்கள்நிமித்தம் இஸரவேலுடைய மலைகளின்
மேல் ஏற்படுத்திய மகா யாகமாகிய யாகத்தில் நீங்
கள்மாமிசத்தைப்புசித்து,இரத்தத்தைக்குடிக்கும்
படிநாலுதிசையினின்றும் ஏகமாய்க்கூடுங்கள்.—
௰௮ நீங்கள், பாஷானின் புஷ்டியான ஆட்டுக்கடாக்
களும், ஆட்டுக்குட்டிகளும், வெள்ளாட்டுக்க
டாக்களும், சகல காளைகளுமாகிய பராக்கிரம
சாலிகளின் மாமிசத்தைத்தின்று, பூமியின் பிரபு
௰௯ களின் இரத்தத்தையுங்குடிப்பீர்கள்.—நான் உங்
கள்நிமித்தம்ஏற்படுத்தும் யாகத்தில் நீங்கள்திருத்
திப்படுமளவும் நிணத்தைப்புசிப்பீர்கள், நீங்கள்
வெறிகொள்ளுமளவும் இரத்தத்தைக் குடிப்பீர்
௨௰ கள்.—இவ்விதமாய் நீங்கள் என் போசனபீடத்
தில் குதிரைகளையும், இரதங்களையும், குதிரைவீ
ரரையும், பராக்கிரமசாலிகளையும், சகலயுத்தவீர
ரையும்புசித்துத்திருத்திப்படுவீர்களென்று ஆண்
டவராகியயெகோவா சொல்லுகிறார்.—
நான்தேசத்தாரிடத்தில் என்மகிமைபிரகாசிக்கப் ௨௧
பண்ணுவேன், நான்செய்த தண்டனையையும்,
அவர்கள்மேல் நான் வைத்தகையையும் அந்நிய
தேசத்தார்யாவருங் காண்பார்கள்.—அன்றுமுதல் ௨௨
இஸரவேல் வமிசத்தார் நான் தங்கள் தேவனா
கியயெகோவாவென்று அறிவார்கள்.
இஸரவேல்வமிசத்தார் எனக்குவிரோதமாய்க் ௨௩
கட்டளைமீறினபடியால் நான் என்முகத்தை அ
வர்களுக்குமறைத்து,அவர்கள்யாவருங்கட்கத்தி
னால்விழும்படி அவர்கள் சத்துருக்களின்கையில்
அவர்களைஒப்பித்தேன்: இப்படிஅவர்கள்தங்கள்
பாவத்தினிமித்தஞ் சிறைபிடிக்கப்பட்டுப்போ
னார்களென்றுஅந்நியதேசத்தார்அறிந்துகொள்வா
ர்கள்.—நான்அவர்களுடையஅசுசிக்கும் அவர்க ௨௪
ளுடைய அதிக்கிரமங்களுக்குமேற்கஅவர்களைந
டத்தி,என்முகத்தைஅவர்களுக்குமறைத்தேன்.—
ஆதலால் இனி நான் யாக்கோபை அவன் சிறை ௨௫
யினின்றுமீட்டு, இஸரவேல் வமிசத்தார் யாவர்
மேலும் இரக்கம்வைத்து, என் பரிசுத்தநாமத்தி
னிமித்தம் உக்கிரங்காட்டுவேனென்று ஆண்ட
வராகியயெகோவா சொல்லுகிறார்.-அவர் ௨௬
கள் தங்கள்தேசத்தில்ஆபத்தில்லாமல்வாசம்பண்
ணும்பொழுதும், அவர்களைப் பயப்படுத்து
வார் ஒருவருமில்லாதிருக்கும்பொழுதும், அவர்
கள் தங்கள் அவமானத்தையும், எனக்கு விரோத
மாய்க் கட்டளை மீறிச்செய்த தங்கள் சகல அக்கி
ரமங்களையுஞ் சுமப்பார்கள்.—நான் அவர்களைச் ௨௭
சனங்களினின்றுவருவித்து, அவர்கள்சத்துருக்க
ளுடைய தேசங்களினின்றுஅவர்களைச்சேர்த்து,
அவர்கள்மூலமாக அநேகதேசத்தாரின் பார்வை
யில் மதிக்கப்படுங்காலத்தில்,—அவர்கள் தேவ ௨௮
னும் யெகோவாவுமாகிய நான், அந்நிய
தேசத்தாருக்குள் அவர்களைச்சிறையாகக்கொண்
டுபோகப்பண்ணினபின்பு, அங்கே அவர்களில்
ஒருவரையும்மீந்திருக்கவிடாமல்,அவர்களுடை
யசுயதேசத்திற்சேர்த்துக்கொண்டேனென்று அ
றிந்துகொள்வார்கள்.—நான் இஸரவேல்வமிசத் ௨௯
தார்மேல் என்ஆவியைச்சொரிந்தபின்பு,இனி ஒ
ருபொழுதும்அவர்களுக்கு என் முகத்தைமறை
யேனென்று ஆண்டவராகியயெகோவா
சொல்லுகிறாரென்றது.

## ௪௰. அதிகாரம்.

௧. பரிசுத்தஸ்தானத்தின்தரிசனம்: ௬. கிழக்குவா
சல்: ௰௭. வெளிப்பிராகாரம்: ௨௰. வடக்குவா
சல்: ௨௪. தெற்குவாசல்: ௨௮. அந்தரங்கத்தி
லுள்ளதெற்குப்பிராகாரத்தின் வாசல்: ௩௫. வ
டக்குவாசல்: ௩௯. எட்டுஆசனங்கள்: ௪௪. அ
றைகள்: ௪௮. ஆலயத்தின்மண்டபம்.

(௰௨) உபா.௨௧.௨௩. (௰௩) அதி.௨௮.௨௨. (௰௭) வெளி.௰௯.௰௭. ஏசா.௰௮.௬. எரே.௰௨.௯. செப்.௧.௭.(௰௮)வெ
ளி.௰௯.௰௮. உபா.௩௨.௰௪. சங்.௨௨.௰௨. (௨௰) சங்.௭௬.௬. வெளி.௰௯.௰௮. (௨௧) அதி.௩௮.௰௬,௨௩. யாத்.௭.௫.
(௨௩) அதி.௩௬.௰௮,௰௯,௨௰,௨௩. உபா.௩௧.௰௭. ஏசா.௫௯.௨. லேவி.௨௬.௨௫. (௨௪) அதி.௩௬.௰௯. (௨௫) எரே.
௩௰.௩,௰௮. அதி.௨௰.௪௰. ஓசி.௧.௰௧. (௨௬) தானி.௯.௰௬. லேவி.௨௬.௫,௬. (௨௭) அதி.௨௮.௨௫,௨௬. அதி.௩௬.
௨௫,௨௪. (௨௮) அதி.௩௪.௩௰. (௨௯) ஏசா.௫௪.௮. யோவே.௨.௨௮. சக.௰௨.௰. அப்.௨.௰௭.—(௪௰. அதி.)

நாங்கள் சிறைப்பட்ட இருபத்தைந்தாம் வரு
ஷத்தின் ஆரம்பத்தில் மாதத்தின் பத்தாந்தினமா
கிய அன்றே, நகரஞ்சேதிக்கப்பட்ட பதினாலாம்
வருஷத்தில்யெகோவாவின் கை என்மேல்
அமர்ந்து, என்னை அங்கே கொண்டுவந்துவிட்
௨ டது.—அவர்தேவதரிசனத்தில், இஸரவேல் தே
சத்தில் என்னைக் கொண்டுபோய், அதிக உயர
மான ஒருமலையின்மேல் என்னை நிறுத்தினார், அ
தின்மேல் தெற்காக ஒருநகரத்தின்சாயல் காண
௩ ப்பட்டது.—அவர் என்னை அவ்விடத்தில் வ
ருவித்தபொழுது, சணல் நூலையும் ஒரு அளவு
கோலையும் கையிலேபிடித்து, பித்தளையைப்போ
லப் பிரகாசம் பொருந்திய ஒருவன் வாசலில்
௪ நிற்கக்கண்டேன்.-அந்த மனுஷன் என்னைநோக்
கி, மனுபுத்திரனே, நான் உனக்குக் காண்பிக்
கும்எல்லாவற்றையும் நீ உன் கண்ணினாற் கண்
டு, உன்காதினாற்கேட்டு, சிந்தித்துக்கொள்; நான்
இவைகளை உனக்குக் காண்பிக்கும்பொருட்
டு நீ இந்தஸ்தானத்தில் வருவிக்கப்பட்டாய்: நீ
காண்பவைகளெல்லாவற்றையும் இஸரவேல் வ
௫ மிசத்தாருக்குத் தெரிவி.—ஆலயத்தைச் சுற்றிப்
புறம்பே ஒரு மதிலிருந்தது, அந்தப்புருஷன் கை
யில்ஆறுமுழ நீளமுள்ள ஒருஅளவுகோலிருந்த
து, ஒவ்வொருமுழம் நந்நாலுவிரற்கடை அதிகம்:
அகலம் ஒரு கோலாகவும், உயரம் ஒரு கோலா
கவும் அவன் அந்த மதிலை அளந்தான்.
௬ பின்பு அவன் கீழ்த்திசைக்கெதிரான வாச
லில்வந்து, அதின் படிகளின்மேலேறி மேல் வா
சற்படியை ஒருகோல் அகலமாகவும், மறுமேல்
வாசற்படியை ஒருகோல் அகலமாகவும் அளந்
௭ தான்.—ஒவ்வொரு அறை ஒருகோல் நீளமும்,
ஒரு கோல் அகலமுமாயிருந்தது; அவ்வறைக
ளுக்கிடையில் ஐந்துமுழவீதிவிட்டிருந்தது; வா
சலின் மண்டபத்தினருகே உள்வாசற்படி ஒரு
௮ கோலாயிருந்தது.—அவன்வாசலின்மண்டபத்
து உள் வீதியையும் ஒருகோலாக அளந்தான்.—
௯ வாசலின் மண்டபத்தை எட்டுமுழமாகவும், அ
தின் தூண்களை இரண்டுமுழமாகவும்அளந்தான்;
வாசலின்மண்டபம் உட்புறத்திலிருந்தது.—
௰ கீழ்த்திசைக்கெதிரான வாசலின் அறைகள் இந்
தப்புறத்தில் மூன்று, அந்தப்புறத்தில் மூன்று இ
ருந்தன; மூன்றும்ஒரேஅளவு: அப்புறத்திலும்
இப்புறத்திலுமுள்ள தூண்களும் ஒரே அளவு.—
௰௧ பிரவேசவாசலின்அகலம்பத்துமுழமாகவும், வா
சலின் நீளம் பதின்மூன்று முழமாகவும் அளந்
௰௨ தான்.—அறைகளுக்குமுன்னே இப்புறத்தில்
ஒருமுழஸ்தானமும், அப்புறத்தில் ஒருமுழஸ்
தானமுமிருந்தன: ஒவ்வொரு அறை இப்புறத்
தில் ஆறுமுழமும், அப்புறத்தில் ஆறுமுழமுமா
௰௩ யிருந்தது.—அப்பால் ஒரு அறையின் மேல்மச்
சினின்று, மற்ற அறையின்மேல்மச்சுமட்டும்வா
சலை அளந்தான்: அதின் அகலம் கதவுக்கெதிரே
௰௪ இருபத்தைந்துமுழம் இருந்தது.—அதின் வாச
லின் சுற்றுப்புறத்திலுள்ள பிராகாரத்தின்தூண்
களை அறுபதுமுழமாக அளந்தான்.—பிரவேசவா ௰௫
சலின்முகப்பினின்றுமண்டபத்தின்மற்றப்புறத்
திலிருந்த உள்வாசல்வரைக்கும் ஐம்பதுமுழம்.—
வாசலின் உட்புறத்தில் சுற்றியிருக்கிற அறைக ௰௬
ளுக்கும், அவைகளின் தூண்களுக்குஞ்சிறுபலக
ணிகளிருந்தன: உள்ளேமண்டபத்தின்சுற்றுப்பு
றத்திலும்பலகணிகளிருந்தன: தூண்களின்மேல்
தாலவிருட்ச விசித்திரமிருந்தது.—பின்பு என் ௰௭
னைவெளிப்பிராகாரத்திற்கு அழைத்துபோனான்,
அங்கே அறைகளும் பிராகாரத்தின் சுற்றில்ப
தித்த தளவரிசையுமிருந்தன: அந்தத்தளவரி
சையின்மேல் முப்பது அறைகளிருந்தன.—வா ௰௮
சல்களின்நீளத்துக்கு எதிர்ப்புறத்திலும், வாசல்க
ளின் அருகிலுமுள்ள அந்தத்தளவரிசைதாழ்ந்தத
ளவரிசையாயிருந்தது.—பின்பு அவன் கீழ்வாச ௰௯
லின் முகப்பினின்று உட்பிராகாரத்தின் முகப்பு
வரைக்குமுள்ள வெளியிலிருந்த நிலத்தின் அக
லத்தை அளந்தான், அதுகிழக்கிலும்வடக்கிலும்
நூறுமுழமாயிருந்தது.
வெளிப்பிராகாரத்திற்கு அடுத்த வடதிசைக்கு ௨௰
எதிர்ப்புறத்திலுள்ள வாசலின் நீளத்தையும் அக
லத்தையும் அளந்தான்.—அதற்கு இப்புறத்தில் ௨௧
மூன்றறைகளும், அப்புறத்தில்மூன்றறைகளுமி
ருந்தன; அதின் தூண்களும் அதின்மண்டபங்க
ளும்முதல்வாசலின்அளவுக்குச்சரி: அதின்நீளம்
ஐம்பதுமுழம், அதின் அகலம் இருபத்தைந்துமு
ழம்.—அதின்பலகணிகளும், அதின்மண்டபங்க ௨௨
ளும், அதின் தாலவிருட்சவிசித்திரங்களும் கீழ்த்
திசைக்கெதிர்ப்புறத்திலுள்ள வாசலின் அளவுக்
குச்சமானம்; அதில் ஏறுகிறதற்கு ஏழுபடிகளி
ருந்தன; அதின் முன்பாக மண்டபங்களிருந்த
ன.—கீழ்த்திசையிலும் வடதிசையிலுமுள்ளவாச ௨௩
லுக்குநேராக உட்பிராகாரத்தின் வாசலிருந்த
து; அவன்வாசலினின்று மற்றவாசல்வரைக்கும்
நூறுமுழம்அளந்தான்.
பின்பு என்னைத் தென்திசையில் அழைத்து ௨௪
வந்தான், தென்திசைக்கெதிர்ப்புறத்திலுள்ளவா
சலின்அளவுக்கேற்கத் தூண்களையும் மண்டபங்
களையும் அளந்தான்.—அந்தப்பலகணிகளைப்போ ௨௫
ல அதற்கும், அதின் மண்டபங்களுக்குஞ் சுற்றி
லும்பலகணிகளிருந்தன: நீளம்ஐம்பதுமுழம்,
அகலம்இருபத்தைந்துமுழம்.—அதில் ஏறுகிறதற் ௨௬
கு ஏழுபடிகளிருந்தன, அவைகளின் முன்பாக
மண்டபங்களிருந்தன: அப்புறத்திலும் இப்பு
றத்திலுந் தூண்களில் தாலவிருட்சவிசித்திரங்க
ளிருந்தன.-உட்பிராகாரத்திற்கு ஒருவாசல்தென் ௨௭
புறத்திலிருந்தது: அவன்தென்புறத்திலுள்ள ஒரு
வாசலினின்றுமற்றவாசல்மட்டும் நூறுமுழம் அ
ளந்தான்.—பின்பு அவன் தெற்குவாசலின்வழி ௨௮
யாய் என்னை உட்பிராகாரத்தில் கொண்டுவந்
தான்: அந்த அளவின்படி தெற்குவாசலை அளந்
தான்.—அதின் அறைகளும், தூண்களும், மண் ௨௯

(௧) அதி.௩௩.௨௧.(௨)வெளி.௨௧.௰. (௩) தானி.௰.௬. அதி.௪௭.௩. வெளி.௰௧.௧. (௪) அதி.௪௪.௫. அதி.௪௩.௰. (௫) அதி.௪௨.௨௰. (௰௬) ௧.இரா.௬.௪. (௰௭) வெளி.௰௧.௨. ௧.இரா.௬.௫.

டபங்களும் அந்த அளவின்படி இருந்தன: அதி
லும் அதின் மண்டபங்களிலும் சுற்றிலும் பலக
ணிகளிருந்தன: அந்த வாசல் ஐம்பதுமுழநீ
௩௰ ளம், இருபத்தைந்துமுழ அகலம்.—சுற்றியிருந்த
மண்டபங்கள்இருபத்தைந்துமுழ நீளம்,ஐந்துமு
௩௰௧ ழ அகலம்.—அதின் மண்டபங்கள்வெளிப்பிராகா
ரத்திற்குநேரேயிருந்தன; தூண்களின்மேல்தால
விருட்சவிசித்திரங்களிருந்தன: அதில் ஏறுகி
றதற்கு எட்டுப்படிகளிருந்தன.
௩௰௨ அவன் என்னை உட்பிராகாரத்தின் கீழ்த்திசை
யில்கொண்டுவந்தான்: அந்தஅளவின்படி அதின்
௩௰௩ வாசலை அளந்தான்.—அதின் அறைகளும்,அதின்
தூண்களும், அதின்மண்டபங்களும் அந்தஅள
வின்படி இருந்தன: அதிலும்அதின்மண்டபங்
களிலும்சுற்றிலும் பலகணிகளிருந்தன: அந்த
வாசல் ஐம்பதுமுழநீளம்,இருபத்தைந்துமுழஅ
௩௰௪ கலம்.—அதின்மண்டபங்கள் வெளிப்பிராகாரத்
திற்குநேரே இருந்தன; இப்புறத்திலும் அப்பு
றத்திலும் அதின் தூண்களில்தாலவிருட்சவிசித்
திரங்களிருந்தன: அதில்ஏறுகிறதற்கு எட்டுப்
படிகளிருந்தன.
௩௰௫ பின்புஅவன்என்னைவடக்குவாசலில் அழைத்
துவந்தான், அந்த அளவின்படி அதின்வாசலை அ
௩௰௬ ளந்தான்.—அதைச்சுற்றி அறைகளும், தூண்க
ளும், மண்டபங்களும், பலகணிகளுமிருந்தன:
அதின்நீளம் ஐம்பதுமுழம், அதின் அகலம் இரு
௩௰௭ பத்தைந்துமுழம்.—அதின் தூண்கள் வெளிப்பி
ராகாரத்திற்குநேரே இருந்தன; இப்புறத்திலும்
அப்புறத்திலும் அதின்தூண்களின்மேல் தாலவி
ருட்சவிசித்திரங்களிருந்தன: அதில் ஏறுகிற
௩௰௮ தற்கு எட்டுப்படிகளிருந்தன.-அதின் அறைக
ளும் அதின்கதவுகளும் வாசல்களின் தூண்களரு
கிலிருந்தன, அங்கே தகனபலிகளைக் கழுவு
வார்கள்.
௩௰௯ தகனபலிகளையும், பிராயச்சித்தபலிகளையும்,
குற்றநிவிர்த்திப்பலிகளையுஞ்சேதிக்கிறதற்கு வா
சலின்மண்டபத்தின் இப்புறத்தில்இரண்டுபீடங்
களும், அப்புறத்தில் இரண்டு பீடங்களுமிருந்
௪௰ தன.—வாசலின் வடதிசையில் பிரவேசஸ்தா
னத்தின்படிகளருகே வெளிப்புறத்தில் இரண்டு
பீடங்களிருந்தன; வாசலின்மண்டபத்திலே
மற்றப்புறத்திலும் இரண்டுபீடங்களிருந்தன.-
௪௰௧ வாசலினருகே இப்புறத்தில் நாலுபீடங்களும்,
அப்புறத்தில்நாலுபீடங்களுமாக எட்டுப்பீடங்க
ளிருந்தன; அவைகளின்மேல் பலிகளைவெட்
௪௰௨ டுவார்கள்.—தகனபலிக்குரிய அந்த நாலுபீடங்
கள் ஒன்றரைமுழநீளமும், ஒன்றரைமுழ அகல
மும்,ஒருமுழஉயரமுமுள்ளபொளிந்தகற்களால்
செய்யப்பட்டன: அவைகளின்மேல் தகனபலி
களையும், மற்றப்பலிகளையும் வெட்டுகிற ஆயுதங்
௪௰௩ களை வைப்பார்கள்.—நாலுவிரற்கடையானமுளை
கள் உள்ளேசுற்றிலுங்கடாவப்பட்டன: பீடங்க
ளின்மேல் மாமிச நைவேத்தியம் வைக்கப்படும்.
உள்வாசலுக்குவெளியே வடக்கு வாசலின ௪௰௪
ருகே, உட்பிராகாரத்தில் பாடகருடையஅறைக
ளிருந்தன; அவையெல்லாந் தெற்குநோக்க
மாயிருந்தன: கிழக்குவாசலினருகே வடக்கு
நோக்கி ஒரு அறையிருந்தது.—பின்பு அவன் என் ௪௰௫
னுடனே, தெற்குநோக்கிய இந்த அறை ஆலயத்
தின் காவலைக்காக்கும் ஆசாரியர்களுடையது.—
வடக்குநோக்கிய அறை வேதிகையைக்காக்கும் ௪௰௬
ஆசாரியர்களுடையது: இவர்கள் லேவிவமிசத்
தாருக்குள் யெகோவாவுக்கு ஆராதனைசெய்
வதற்காகச்சேருகிற சாதோக்கின் புத்திரரென்
றான்.—பின்பு அவன்நூறுமுழநீளமும் நூறுமுழ ௪௰௭
அகலமுமாகச் சதுரமானபிராகாரத்தையும், ஆல
யத்திற்குமுன்பாக இருக்கிற வேதிகையையும்
அளந்தான்.
பின்பு அவன் என்னை ஆலயத்தின்மண்டபத் ௪௰௮
தினிடத்தில்அழைத்துவந்து அதின்தூண்களை அ
ளந்தான், இப்புறத்தில்ஐந்துமுழம், அப்புறத்தில்
ஐந்துமுழம்: வாசலின்அகலம் இப்புறத்தில்மூன்
றுமுழம், அப்புறத்தில் மூன்றுமுழம்.-மண்டபத் ௪௰௯
தின்நீளம் இருபதுமுழம், அதின் அகலம்பதினொ
ருமுழம்; அதில் ஏறுகிறதற்குப்படிகளிருந்த
ன: அவைகளுக்குத் தூண்களிருந்தன, அந்தத்
தூண்களின்சமீபத்தில்இப்புறத்தில்ஒருதூணும்,
அப்புறத்தில் ஒருதூணுமிருந்தன.

## ௪௧. அதிகாரம்.

ஆலயத்தினளவு அறைகள் அலங்காரமுதலியவற்
றைக்குறித்தல்.

பின்பு அவன் என்னை ஆலயத்தில் அழைத்துவந் ௧
து, ஆவாசத்தின் அளவின்படி தூணின் இப்புறத்
தில் ஆறுமுழ அகலமும், அப்புறத்தில் ஆறுமுழ
அகலமுமாக அளந்தான்.—பிரவேசஸ்தானத்தின் ௨
அகலம்பத்துமுழம்; வாசலைச்சேர்ந்த ஒருபக்கம்
ஐந்துமுழம், மற்றப்பக்கம்ஐந்துமுழம்: அதின்நீ
ளத்தை நாற்பதுமுழமும் அதின்அகலத்தை இரு
பதுமுழமுமாக அளந்தான்.—பின்பு அவன் உள் ௩
ளேபோய், பிரவேசஸ்தானத்தின் தூண்களை இர
ண்டுமுழமாகவும்,வாசலைஆறுமுழமாகவும்,வாச
லின் அகலத்தைஎழுமுழமாகவும்அளந்தான்.—பி ௪
ன்பு அவன் தேவாலயத்துக்குமுன்பாக அதின்நீ
ளத்தைஇருபதுமுழமும் அதின்அகலத்தைஇருப
துமுழமுமாக அளந்து, என்னைநோக்கி,இதுமகா
பரிசுத்த ஸ்தானமென்றான்.—பின்பு அவன் ஆ ௫
லயத்தின்சுவரைஆறுமுழமாகவும், ஆலயத்தைச்
சுற்றியிருந்த அறையின்வரிசையின் அகலத்தை
நாலுமுழமாகவும் அளந்தான்.—பக்கவறைகள் ௬
ஒன்றின்மேலொன்று மூன்று வரிசைகளாயிருந்
தன, ஒவ்வொருவரிசையில் முப்பதுஅறை; அ
வைகள் பிடிக்கப்படும்படி ஆலயத்தின் சுவரில்
வரிசையினிமித்தம் சுற்றிலும்இடம்விட்டிருந்த
து, ஆனாலும்அவைகள் ஆலயத்தின்சுவருக்குள்

(௩௯) லேவி.௪.௨,௩. லேவி.௭.௧. (௪௪) ௧.நாளா.௯.௩௧. (௪௫) லேவி.௮.௩௫. எண்.௰௮.௫. ௧.நாளா.௯.௨௩. ௨.நாளா.௰௩.௰௧. சங்.௱௩௪.௧. (௪௬) எண்.௰௮.௫. ௧.இரா.௨.௩௫. (௪௯) ௧.இரா.௬.௩. ௧.இரா.௭.௨௧.—(௪௧. அதி. ௪.) ௧.இரா.௬.௨௰. ௨.நாளா.௩.௮. (௬) ௧.இரா.௬.௫,௬.

௭ ளே கட்டப்படவில்லை.—உயர உயரச்சுற்றிலும்
வரிசைகளுக்கு அகலம் அதிகமாயிருந்தது: ஆ
லயத்துக்குச் சுற்றுப்புறத்தில் உயர உயர ஆலயத்
தைச்சுற்றிச்சுற்றி அகலம்வரவர அதிகமாயிருந்த
து: இவ்விதமாய்க்கீழ்நிலையிலிருந்துநடுநிலைவழி
௮ யாய்மேலேஏறும் வழியிருந்தது.—நான்சுற்றி
லும் ஆலயத்தின்உயரத்தைக்கண்டேன்: வரிசை
களின் அறைகளுக்குஅஸ்திபாரம் ஆறுபெரியமு
ழங்கொண்ட ஒருமுழக்கோலின் ஆழமுள்ளது.-
௯ அறையின்வரிசைக்கு வெளிச்சுவரின் அகலம்
ஐந்துமுழம்: விட்டிருந்தஇடம் ஆலயத்தின்பக்
கத்திலுள்ளஅறைவரிசையின்இடமாயிருந்தது.-
௰ ஆலயத்தைச்சுற்றி அறைகளுக்கு இடையில்இரு
௰௧ பதுமுழ அகலவீதி விட்டிருந்தது.—வரிசை
யின்வாசல் வெறுமையாய்விட்ட இடத்தின்எ
திர்ப்புறத்திலிருந்தது, ஒருவாசல் வடபுறத்தி
லும், ஒருவாசல் தென்புறத்திலுமிருந்தன: வெறு
மையாய்விட்ட இடத்தின்அகலஞ்சுற்றிலும் ஐந்
௰௨ துமுழங்கொண்டது.—மேற்றிசையில் வெறுமை
யாகவிட்ட இடத்தின் முன்பாகவுள்ள மாளி
கையின்அகலம் எழுபதுமுழம்; மாளிகையின்
சுவரின் அகலஞ் சுற்றிலும் ஐந்துமுழம், அதின்
௰௩ நீளம்தொண்ணூறுமுழம்.-இவ்விதமாய்அவன்ஆ
லயத்தின்நீளம் நூறுமுழமாக அளந்தான்; வெறு
மையாகவிட்டஇடமும், மாளிகையும்; அவைக
ளின்சுவர்களோடே நூறுமுழநீளமாயிருந்தன.-
௰௪ கிழக்குத்திசையின் ஆலயத்தின்முற்புறமும், பு
௰௫ றம்பானஸ்தானத்தின் அகலமும்நூறுமுழம்.—பு
றம்பானஸ்தானத்தின் பின்னாக அதற்கெதிரேயி
ருந்த மாளிகையின் நீளத்தையும், இப்புறத்திலும்
அப்புறத்திலும் அதற்கிருந்த மேல்தளங்களையும்
அளந்தான், அந்தரங்க ஆலயமும் பிராகாரத்தின்
௰௬ மண்டபங்களும் உட்பட அறுநூறுமுழம்.—வா
சற்படிகளும், சிறுபலகணிகளும், மூன்றுபக்கங்
களிற்சுற்றிலும், நிலந்தொட்டுப் பலகணிகள்வ
ரைக்கும் வாசலிற்கெதிரான மேல்தளங்களில் ப
லகை அடித்திருந்தது, பலகணிகள் மூடப்பட்
௰௭ டன.—மேல்வாசல் தொட்டு வீட்டின் உட்புற
மும், வெளிப்புறமும், சுற்றிலுஞ்சுவரின் உட்
புறமும், வெளிப்புறமும் எல்லாம் அளவிட்டி
௰௮ ருந்தன.—கெரூபிகளுந் தாலவிருட்ச விசித்தி
ரங்களும் சித்திரிக்கப்பட்டிருந்தன, இரண்
டு கெரூபிகளுக்கிடையில் ஒரு தாலவிருட்சமி
ருந்தது; ஒவ்வொரு கெரூபிக்கும் இவ்
௰௯ விரண்டு முகங்களிருந்தன.—தாலவிருட்சத்தின்
ஒருபுறத்தில் மனுஷனுடையமுகமும், மற்றத்
தாலவிருட்சத்தின் மற்றப்புறத்தில்இளஞ்சிங்கத்
௨௰ தின்முகமுமிருந்தன.—நிலந்தொடங்கி வாச
லின்மேற்புறம்வரைக்கும்ஆலயத்தின்சுவரில்கெ
ரூபிகளுந்தாலவிருட்சவிசித்திரங்களுமிருந்த
௨௧ ன.—ஆலயத்தின்வாசலின் நிலைகள் சதுரமாயி
ருந்தன; பரிசுத்தஸ்தானத்தின்முன்பாகச் சக
லமுஞ் சமானசாயலுள்ளவைகளாயிருந்தன.—
மரவேதிகையினுயரம்மூன்றுமுழம், நீளம்இரண் ௨௨
டுமுழம்; அதின்கோடிகளும், நெடும்புறமும், சுவ
ரும், மரத்தினாற் செய்யப்பட்டன: அவன்
என்னைநோக்கி, இது யெகோவாவின் சந்நி
தானத்திலுள்ள பீடமென்றான்.—தேவாலயத் ௨௩
துக்கும் பரிசுத்தஸ்தானத்துக்கும் இரண்டுகதவு
களிருந்தன.—கதவுகளுக்கு மடக்காகிய இரட் ௨௪
டைச்சிறகுகளிருந்தன; ஒருகதவுக்கு இரண்டு
சிறகும் மற்றக் கதவுக்கு இரண்டு சிறகுமி
ருந்தன.—சுவர்களிலே சித்திரிக்கப்பட்டதுபோ ௨௫
ல, தேவாலயத்தின்கதவுகளில்கெரூபிகளுந்தால
விருட்சங்களும் சித்திரிக்கப்பட்டிருந்தன;
வெளியேமண்டபத்தின்முன்பாக உத்திரங்களி
ருந்தன.—மண்டபத்தின்பக்கங்களில் இப்புறத் ௨௬
திலும், அப்புறத்திலும், ஆலயத்தின்பக்கத்திலுள்
ள அறைவரிசைகளிலுமுள்ள உத்திரங்களில்சிறு
பலகணிகளும், தாலவிருட்சங்களுமிருந்தன.

## ௪௨. அதிகாரம்.

௧. ஆசாரியன் அறைகளைக்குறித்தல்: ௰௩. அவை
களில் நடக்குந்தொழில் இன்னதென்று தெரி
வித்தல்: ௰௫. வெளிப்பிராகாரத்தினளவை நிச்
சயித்தல்.

பின்பு அவன் என்னை வடதிசையின்வழியாய் ௧
வெளிப்பிராகாரத்தில் வரப்பண்ணினான்: வட
திசையில், புறம்பான வெளியின் முன்பாகவும்
மாளிகையின் முன்பாகவுமிருக்கும் அறையி
லேகொண்டுவந்தான்.-நூறுமுழ நீளத்துக்குமுன் ௨
னாக வடக்குவாசலிருந்தது, அகலம் ஐம்பது
முழம்.—உட்பிராகாரத்திலிருந்த இருபதுமு ௩
ழத்துக் கெதிராகவும், வெளிப்பிராகாரத்திலி
ருந்த தளவரிசைக்கெதிராகவும் ஒன்றுக்கொன்
றுஎதிரான மூன்று நிலைகளுள் நடைகாவணங்
களிருந்தன.-உட்புறத்தில்அறைகளுக்குமுன் ௪
பத்துமுழ அகலமானவழியும், ஒருமுழ அகலப்
பாதையுமிருந்தன; அவைகளின் வாசல்கள்
வடதிசையிலிருந்தன.—அடியிலும் இடையி ௫
லுமுள்ளவரிசையின் அறைகளின்சுவர்அதிக உ
யரமாயிருந்தபடியால்மேல்அறைகளின் அகலங்
குறைவாயிருந்தது.—அவைகள் மூன்று நிலைக ௬
ளாயிருந்தன, ஆனாலும் பிராகாரங்களுக்குத்
தூண்களிருந்ததுபோல அவைகளுக்குத் தூண்க
ளில்லை: ஆதலால் அந்த அறைகள் நிலத்தி
னின்று அடியறைகளிலும், இடையறைகளிலும்
அகலங் குறைவாயிருந்தன.—புறம்பே அறைக ௭
ளுக்கெதிரே வெளிப்பிராகாரத்துக்கு நேரே அ
றைகளுக்குமுன்னிருந்த சுவரின் நீளம் ஐம்ப
துமுழம்.—வெளிப்பிராகாரத்திலுள்ள அறை ௮
களின் நீளம் ஐம்பதுமுழம்: தேவாலயத்துக்கு
முன்னே நூறுமுழமிருந்தது.—வெளிப்பிரா ௯
காரத்தினின்று ஒருவன் பிரவேசிக்கும்வழிஇந்த
அறைகளின் கீழே கிழக்கிலிருந்தது.—கிழக் ௰

(௭)௧.இரா.௬.௮. (௮) அதி.௪௰.௫. (௰௬) அதி.௪௰.௰௬. (௰௮) ௧.இரா.௬.௨௯. (௰௯) அதி.௧.௰. (௨௨) யாத்.௩௰.௧. மல்.௧.௭,௰௨. யாத்.௩௰.௮. (௨௩) ௧.இரா.௬.௩௧—௩௫. (௨௬) அதி.௪௰.௰௬.—(௪௨. அதி. ௧.) அதி.௪௧.௰௨,௰௫. (௫) அதி.௪௧.௰௬.

குத்திசையின் பிராகாரச்சுவரின் அகலத்திலேபு
றம்பானவெளிக்கும் மாளிகைக்குமுன்னாக அ
௰௧ றைகளிருந்தன.—அவைகளுக்கு முன்னான
வழி வடதிசையிலுள்ள அறைகளின் வழியைப்
போலிருந்தது: அந்தஅறைகளின் நீளமும்,அ
கலமும்,வெளிப்படும்வழியும்,சாயலுமாகியஎல்
லாம்அந்தஅறைகளின்கதவுகள்முதலியவைகளை
௰௨ ப்போலிருந்தன.-தென்றிசையான அறைகளின்
வாசல்கள் அப்படியேயிருந்தன; கிழக்குத்திசை
யில் பிரவேசிக்குமிடத்தில் அந்தச்சுவருக்கெதி
ரானவழியின்முகப்பில் ஒருவாசலிருந்தது.
௰௩ பின்பு அவன் என்னைநோக்கி, புறம்பானவெ
ளியின்முன்பாக வடக்கிலுந் தெற்கிலுமுள்ள
அறைகள்பரிசுத்தமுள்ளஅறைகள்: அங்கே யெ
கோவாவினிடத்தில்சேரும் ஆசாரியர்மகா
பரிசுத்தமுள்ள பொருள்களைப் புசிப்பார்கள்:
அங்கே அவர்கள் அதிகபரிசுத்தமுள்ளபொருள்
களையும், போசனபலியையும், பிராயச்சித்தபலி
யையும், குற்றநிவிர்த்திப்பலியையும் வைப்பார்
௰௪ கள்; அந்தஸ்தானம்பரிசுத்தமுள்ளது.-ஆசாரியர்
அதில் பிரவேசிக்குஞ் சமயத்தில் அவர்கள் பரி
சுத்த ஸ்தானத்தினின்று வெளிப்பிராகாரத்
தில் போகார்கள், அவர்கள் ஆராதனை செய்யும்
படி தரிக்குந் தங்கள் வஸ்திரங்களை அந்தஸ்தா
னத்தில்வைப்பார்கள்;அவைகள் பரிசுத்தமுள்ள
வைகள்; வேறேவஸ்திரங்களைத் தரித்துக்கொண்
டு சனங்களின் பிராகாரத்தில் போவார்களென்
௰௫ றான்.—அவன் உள் வீட்டை அளந்து முடித்த
பின்பு கீழ்த்திசைக்கெதிரானவாசலின்வழியாய்
என்னை வெளியே அழைத்துப்போய், அதைச்
௰௬ சுற்றிலும்அளந்தான்.—அவன், அளவுகோலினால்
கீழ்த்திசையிலுள்ள பக்கத்தை ஐஞ்ஞூறுகோலா
௰௭ கச்சுற்றிலுமளந்தான்.—அளவுகோலினால் வட
பக்கத்தைச்சுற்றிலும் ஐஞ்ஞூறுகோலாக அளந்
௰௮ தான்.—அளவுகோலினால் தென்பக்கம் ஐஞ்ஞூ
று கோலாக அளந்தான்.
௰௯ அவன் மேற்குத்திசைக்குத் திரும்பி, அளவு
௨௰ கோலால் ஐஞ்ஞூறுகோலாகஅளந்தான்.—நாலு
பக்கங்களிலும் அதைஅளந்தான்: பரிசுத்தமுஞ்
சாதாரணமுமான ஸ்தானங்களைப் பிரிவுபடுத்து
கிறதற்கு ஐஞ்ஞூறு கோல் நீளமும் ஐஞ்ஞூறு
கோல் அகலமுமான இடத்தைச்சுற்றி ஒ
ருமதிலிருந்தது.

## ௪௩. அதிகாரம்.

௧. தேவன் தமது மகிமையைப் பிரகாசிப்பித்தல்: ௭. இஸ்ரவேலரின் பாவத்தைக்காட்டல்: ௰. மனஸ்தாபப்படவும், கட்டளையைக்காத்து நடக்கவுமுபதேசித்தல்: ௰௩.வேதிகையையளத்தல்: ௰௮. வேதிகையின் விதியைக்காட்டல்.

பின்பு அவன்கிழக்குநோக்கிய வாசலாகியவாச
லுக்கு என்னை அழைத்துக்கொண்டுபோனான்.—
இஸரவேலின் தேவனுடைய மகிமை கீழ்த் ௨
திசையின்வழியாய்ப் பிரவேசிக்கக்கண்டேன்:
அவருடையசத்தம் மிகுதியானசலத்தின் சத்தம்
போலிருந்தது: அவருடைய மகிமையினாலே
பூமிபிரகாசித்தது.—நான்கண்ட இந்தத்தரிசனம், ௩
நகரத்தை நாசப்படுத்த வந்தபொழுது நான்கண்
ட தரிசனம்போலிருந்தது: இந்தத் தரிசனங்
கள் கேபார்நதியோரத்தில் நான்கண்டதரிசனத்
தைப்போலிருந்தன; நான் முகங்குப்புறவி
ழுந்தேன்: யெகோவாவின் மகிமைகீழ்த்தி
சைக்கெதிரான வாசல்வழியாய் வீட்டிற்பிரவே
சித்தது.—பின்பு ஆவிஎன்னை எடுத்து உட்பிரா ௪
காரத்தில் கொண்டுபோய்விட்டது.—பாருங்கள், ௫
யெகோவாவின் மகிமையினால் ஆலயம் நி
றைந்தது.—ஆலயத்தினின்று என்னோடேபேசி ௬
னதைக்கேட்டேன்; அந்தமனுஷன் என்அருகே
நின்றான்.
அவர் என்னைநோக்கி, மனுபுத்திரனே, நான் ௭
இஸரவேல்சந்ததியாருக்குள்ளே சதாகாலமும்
வாசம்பண்ணும் என்சிங்காசனமும்,என்பாதபீ
டமுமான ஸ்தானத்தையும், என்பரிசுத்தநாமத்
தையும்,இஸரவேல்வமிசத்தாரும் அவர்களுடை
யஇராசாக்களுந்தங்கள் உயர்ந்தஸ்தானங்களில்
தங்களுடையவிபசாரங்களினாலும்,தங்கள் இரா
சாக்களின் பிரேதங்களினாலும் இனிஅசுத்தப்ப
டுத்தமாட்டார்கள்.—அவர்கள் என்வாசற்படிகளி ௮
னருகே தங்களுடையவாசற்படியையும், என்க
தவுநிலைகளினருகே தங்கள் கதவுநிலையையுமிட்
டு, எனக்குந்தங்களுக்கும் இடையில் ஒருசுவரி
ருக்க, தாங்கள்செய்ததங்கள்அரோசியமானவை
களினால் என்பரிசுத்தநாமத்தை அசுத்தப்படுத்தி
னார்கள்: இதினிமித்தம் நான் அவர்கள்மேற்கோ
பங்கொண்டு அவர்களை நாசப்படுத்தினேன்.—
இப்பொழுது அவர்கள் என்சமுகத்தினின்றுதங் ௯
கள் சோரமார்க்கத்தையும், தங்கள் இராசாக்க
ளின் பிரேதங்களையும் அகற்றினால் நான்சதாகா
லமும் அவர்கள்மத்தியில் வாசம்பண்ணுவேன்.
மனுபுத்திரனே,இஸரவேல்வமிசத்தார்தங்கள் ௰
அக்கிரமங்களினிமித்தம் இலச்சை அடையும்ப
டி, நீ அவர்களுக்கு இந்த ஆலயத்தைக்காட்டு:
அவர்கள் இதின் உருவை அளக்கக்கடவர்கள்.—
அவர்கள் தாங்கள்செய்த பாவத்தினிமித்தம் இ ௰௧
லச்சை அடைந்தால் ஆலயத்தின் ரூபத்தையும்,
அதின் சாயலையும், போகிறவழிகளையும், வரு
கிறவழிகளையும், அதின் எல்லாச்சாயல்களையும்,
அதின் சகலமுறைமைகளையும், அதின் ரூபங்க
ளெல்லாவற்றையும், அதின் சகல கட்டளைகளை
யும்அவர்களுக்குக்காட்டு: அவர்கள் அதின்சகல
கட்டளைகளையும் அதின்சகலமுறைமைகளையுங்

(௰௩) லேவி.௬.௰௬,௨௬. லேவி.௨.௩,௰. எண்.௰௮.௯,௰. (௰௪) அதி.௪௪.௰௯. (௨௰) அதி.௪௰.௫. அதி.௪௫.௨.— (௪௩. அதி. ௧.) அதி.௪௬.௧. (௨) அதி.௰௧.௨௩. வெளி.௧.௰௫. வெளி.௰௮.௧. (௩) அதி.௧.௪,௨௮. எரே.௧.௰. அதி.௪௪.௨. (௪) அதி.௩.௰௨,௰௪. (௫) ௧.இரா.௮.௰,௰௧. (௬) அதி.௪௰.௩. (௭) சங்.௯௯.௧. ௧.நாளா.௨௮.௨. யாத்.௨௯.௪௫. சங்.௬௮.௰௬. யோவே.௩.௰௭. யோவா.௧.௰௪. ௨.கொரி.௬.௰௬. லேவி.௨௬.௩௰. எரே.௰௬.௮. (௮) ௨.இரா.௰௬.௰௪. (௰) அதி.௪௰.௪.

காத்து, அவைகளின்படி செய்யும்பொருட்டு நீ
௰௨ அவர்கள்முன்பாக எழுது.—இதுவே ஆலயத்தின்
கட்டளை; மலையுச்சியின்மேல் சுற்றிலும் அதின்
எல்லையெங்கும் மிகவும் பரிசுத்தமுள்ளதாகும்.
பார், இதுவே ஆலயத்தின்கட்டளை.
௰௩ முழங்களின்படி அளக்கும்வேதிகையின் அள
வுகளாவன: சுற்றளவு ஒருமுழ உயரமும் ஒருமு
ழ அகலமும், அதினுடைய ஓரத்தின்சுற்றெல்லை
ஒரு சாணுமாயிருக்கும்: இது வேதிகையின்
மேற்புறம்: ஒரு முழமும் நாலு விரற்கடையுங்
௰௪ கொண்டது ஒருமுழமாகும்.—தரையிலிருக்கிற
ஆதாரந்தொட்டுக் கீழ்நிலைமட்டும் இரண்டுமுழ
மும், அகலம் ஒரு முழமும், சிறு நிலைமுதல்பெ
ருநிலைவரைக்கும் நாலுமுழமும்,அகலம் ஒருமு
௰௫ ழமுமாயிருக்கும்.—வேதிகையினுச்சி நாலு
௰௬ முழம்; அதின்மேலே நாலுகொம்புகள்.—அந்த
வேதிகைபன்னிரண்டு முழ நீளமும்பன்னிரண்
டு முழ அகலமுமுள்ளது, நாலுபுறமுஞ்சதுரமா
௰௭ னது.—அதின் நாலுபக்கங்களிலுமுள்ளசட்டத்
தின் நீளம் பதினாலு முழம்; அகலம் பதினாலு
முழம், அதைச்சுற்றியிருக்கிற எல்லை அரைமு
ழமும், அதின் ஆதாரஞ்சுற்றிலும் ஒரு முழமுமா
யிருக்கும்; ஏறும்படிகள் கிழக்குத்திசையிலிருக்
குமென்றார்.
௰௮ பின்னும் அவன் என்னைநோக்கி, மனுபுத்திர
னே, ஆண்டவராகிய யெகோவா இவ்
வாக்குச்சொல்லுகிறார்; அவர்கள் தகனபலியிடு
கிறதற்கும், அதின்மேல் இரத்தந் தெளிக்கிறதற்
கும்,வேதிகையையுண்டாக்குந்தினத்தில்இவை
௰௯ களே வேதிகைக்கேற்றமுறைமைகள்.—எனக்கு
ஆராதனைசெய்வதற்குஎன்னிடத்திற்சேருகிறசா
தோக்கின் வமிசத்தாராகிய லேவியரென்னும் ஆ
சாரியர்களுக்குப் பிராயச்சித்தத்தினிமித்தம்நீ ஒ
ரு இளங்காளைகொடுப்பாயாகவென்று ஆண்ட
௨௰ வராகிய யெகோவா சொல்லுகிறார்.—அ
தின் இரத்தத்திற்கொஞ்சமெடுத்து அதின் நாலு
கொம்புகளிலும், சட்டத்தின் நாலுகோடிகளி
லும், சுற்றியிருக்கிற விளிம்பிலுந் தெளிப்பாய்:
இப்படி நீ அதைத்துப்புரவாகச் சுத்திகரிப்
௨௧ பாய்.—பின்பு நீ பிராயச்சித்தஞ் செய்யத்தக்க
காளையைக்கொண்டுபோக, அதை ஆலயத்தில் அ
தற்குக்குறிக்கப்பட்ட ஸ்தானத்திலே பரிசுத்தஸ்
தானத்திற்குப்புறம்பாக ஒருவன்தகனிக்கவேண்
௨௨ டும்.—இரண்டாந்தினத்தில் பிராயச்சித்தத்துக்கா
கக் குற்றமற்ற ஒருவெள்ளாட்டுக் கடாவைப் ப
லியிடுவாய்; அவர்கள் காளையினால் வேதிகை
யைச் சுத்திகரித்ததுபோலச் சுத்திகரிக்கவேண்
௨௩ டும்.—இவ்விதமாய்ச்சுத்திகரித்து முடித்தபின்பு
நீ குற்றமில்லாத ஒரு இளங்காளையையும், குற்ற
மில்லாத ஒருஆட்டுக்கடாவையும்மந்தையினின்
று எடுத்துப் பலியிடுவாயாக.—நீ அவைகளை யெ ௨௪
கோவாவின் சந்நிதியில் பலியிடுவாய், ஆசா
ரியர் அவைகளின்மேல் உப்புத்தெளித்து, தகன
பலியாக யெகோவாவுக்கென்று அவைக
ளைப் பலியிடுவார்கள்.—நீ பிராயச்சித்தத்தினிமித் ௨௫
தம் ஏழுநாள்வரைக்கும் நாடோறும் ஒவ்வொ
ருவெள்ளாட்டுக்கடாவைப் பலியிடுவாய்: குற்ற
மில்லாதவைகளாகியஇளங்காளையையும்,மந்தை
யின் ஆட்டுக்கடாவையும் பலியிடுவார்கள்.—அ ௨௬
வர்கள் ஏழுநாளளவும்வேதிகைக்குப்பிராய்ச்சித்
தஞ்செய்து அதைச்சுத்திகரிப்பார்கள்; அவர்கள்
தங்களைப் பிரதிஷ்டைபண்ணுவார்கள்.—அந் ௨௭
நாள்கள்சென்றபின்பு எட்டாந்தினமுதல் ஆசா
ரியர்கள் வேதிகையின்மேல் உங்கள்நிமித்தந் த
கனபலிகளையும் ஸ்தோத்திரபலிகளையுமிடுவார்
கள்; அதினால் நான் உங்களை அங்கிகரிப்பே
னென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறாரென்றான்.

## சச. அதிகாரம்.

௧. இராசா கிழக்குத்திசையிலுள்ள வாசலைச்சுதந்
தரிக்கப்பெறல்: ௪. யெகோவா ஆசாரியர்க
ளைக் கண்டித்தல், முன் ஆராதனைசெய்தலேவி
யரைத் தேவன் விலக்கிச் சாதோக்கின் சந்த
தியாரை ஏற்படுத்தல்: ௰௭. ஆசாரியர்களுக்குச்
சிலவிதிகளைக் கற்பித்தல்.

பின்பு அவன் என்னைக் கிழக்குக்கெதிரேபுறம் ௧
பான பரிசுத்தஸ்தானத்தின் வாசல்வழியாய்த்தி
ரும்பும்படிசெய்தான்; அது அடைபட்டிருந்த
து.—பின்பு யெகோவா என்னைநோக்கி, இந் ௨
தக்கதவுதிறக்கப்படாமல் அடைபட்டிருக்கும்,
ஒருவனும் இதின்வழியாய்ப் பிரவேசிக்கப்படா
து; இஸரவேலின் தேவனாகிய யெகோவா
இதின்வழியாய்ப் பிரவேசித்தார், ஆதலால் இது
அடைபட்டிருக்கவேண்டும்.—இது அதிபதிக்கே ௩
யுரியது; யெகோவாவின் சந்நிதியில் போ
சனம்பண்ணும்படி அதிபதி இதில் உட்காரு
வான்; அவன் இந்தவாசலின் மண்டபத்தின் வ
ழியாய்ப்பிரவேசித்து, திரும்ப இதின்வழியாய்ப்
புறப்படுவானென்றார்.
பின்பு அவன்வடக்குவாசலின்வழியாய் என் ௪
னை ஆலயத்துக்கு முன்பாக அழைத்துவந்தபொ
ழுது நான் பார்க்கையில், யெகோவாவின்
ஆலயம் யெகோவாவின் மகிமையினாலே
நிறைந்ததென்று கண்டு முகங்குப்புற விழுந்
தேன்.—அப்பொழுது யெகோவா என்னை ௫
நோக்கி, மனுபுத்திரனே, நான் யெகோவா
வின் ஆலயத்தின் சகலவிதிகளையும் சகலமுறை
மைகளையுங்குறித்து உனக்குச்சொல்லும் எல்லா
வற்றையும் நீ சிந்தித்துக்கொள்; உன் கண்களி
னாற்பார், உன் காதினால் கேள், பரிசுத்த ஆலயத்

(௰௨)அதி.௪௰.௨.(௰௩)அதி.௪௰.௫.(௰௫)ஏசா.௨௯.௧. (௰௭) யாத்.௨௰.௨௬. (௰௮) லேவி.௧.௫. (௰௯) அதி.௪௪.௰௫.
யாத்.௨௯.௰,௰௨. லேவி.௮.௰௪,௰௫. அதி.௪௫.௰௮,௰௯. (௨௧) யாத்.௨௯.௰௪. எபி.௰௩.௰௧.(௨௪)லேவி.௨.௰௩.(௨௫)
யாத்.௨௯.௩௫,௩௬. லேவி.௮.௩௩. (௨௬) யாத்.௨௯.௨௪. (௨௭) லேவி.௯.௧. யோபு.௪௨.௮. ரோ.௰௨.௧. ௧.பேதுரு.
௨.௫.—(௪௪. அதி. ௧.) அதி.௪௩.௧.(௨)அதி.௪௩.௩. (௩) ஆதி.௩௧.௫௪. ௧.கொரி.௰.௰௮. அதி.௪௬.௨,௮.(௪)அதி.௩.
௨௩. அதி.௧.௨௮. (௫) அதி.௪௰.௪.

திற் பிரவேசிப்பதும் அதினின்று புறப்படுவதும்
இன்னவிதமென்று நீ ஆலோசித்துப்பார்த்து,—
சு நீ, கட்டளைக்கமையாத இஸரவேல் வமிசத்தாரி
டத்தில், இஸரவேல் வமிசத்தாரே, நீங்கள்செய்
த அரோசியமானகிரியைகளெல்லாம்போதும்.—
எ நீங்கள் என் உணவுப்பொருளாகிய நிணத்தை
யும், இரத்தத்தையுஞ் செலுத்துகையில், என் ஆ
லயத்தை அசுத்தப்படுத்தும்படி, இருதயத்திலும்
மாமிசத்திலும் விருத்தசேதனமில்லாத அந்நிய
தேசத்தாரை என் பரிசுத்த ஸ்தானத்தில் கொண்
டுவந்தீர்கள், உங்கள் சகல அரோசியமான கிரி
யைகளினாலும் என் உடன்படிக்கையைமீறினீர்
அ கள்.—நீங்கள் என் பரிசுத்த ஸ்தானத்தின் காவ
லைக்காக்காமல், என் பரிசுத்த ஸ்தானத்தின் கா
ரியக்காரரை உங்கள்நிமித்தம் ஏற்படுத்தினீர்க
ளென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறாரென்றான்.
கூ இஸரவேலருக்குள்ளிருக்கிற இருதயத்திலும்
மாமிசத்திலும் விருத்தசேதனமில்லாத அந்நியரி
லும்எந்த அந்நியனும், என் பரிசுத்தஸ்தானத்திற்
பிரவேசிக்கக்கூடாதென்று ஆண்டவராகிய
ய யெகோவா சொல்லுகிறார்.—இஸரவேலர்தவ
றினகாலத்தில் என்னைவிட்டுத் தூரமானவர்களு
ம்,என்னைவிட்டுத் தங்கள் விக்கிரகங்களைப்பின்
பற்றிப்போனவர்களுமாகிய லேவியருந்தங்கள்
யக அக்கிரமத்தைச் சுமப்பார்கள்.—ஆனாலும் அவர்
கள் ஆலயத்தின் வாசல்களைக் காவல்பண்ணி,
ஆலயத்திலே பணிவிடைசெய்து, என் பரிசுத்த
ஸ்தானத்தின் பரிசாரகராயிருந்து, சனங்களினி
மித்தந் தகனபலிகளையும், மற்றப்பலிகளையும்
வெட்டி, இவர்களுக்காகப் பணிவிடைசெய்து,
யஉ இவர்கள் முன்பாக நிற்பார்கள்.—அவர்கள் தங்
கள் விக்கிரகங்களுக்குமுன்பாக நின்று சனங்க
ளுக்காகச்சேவித்து, இஸரவேல் வமிசத்தாரைப்
பாவத்தில் விழப்பண்ணினபடியினால், நான் அ
வர்களுக்குவிரோதமாய் என் கையை எடுத்தே
னென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறார்; அவர்கள் தங்கள் பாவத்தின்பல
யங னை அனுபவிப்பார்கள்.—அவர்கள் எனக்கு ஆசா
ரியத்தொண்டுசெய்வதற்கு என் சமீபத்தில் வர
வேண்டாம், மகாபரிசுத்தஸ்தானத்தில் என்
பரிசுத்தமுள்ளவஸ்துக்களின்சமீபத்தில் வரவே
ண்டாம்: அவர்கள் தங்கள் அவமானத்தையும்,
தாங்கள்செய்த அரோசியமான கிரியைகளையும்
யச அனுபவிப்பார்கள்.—ஆலயத்தைக்காவல்பண்ணு
கிறதற்கும், அதிலுள்ளசகலபணிவிடைகளையுஞ்
செய்வதற்கும் நான் அவர்களை ஏற்படுத்துவேன்.
யரு இஸரவேல்வமிசத்தார் என்னைவிட்டுத் தவ
றிப்போகையில், என் பரிசுத்தஸ்தானத்தின் கா

வலைக்காக்கிற சாதோக்கின் சந்ததியாராகிய லே
வியரின் ஆசாரியர்களோ, எனக்காராதனைசெய்
யும்படி என் சமீபத்திற்சேர்ந்து, நிணத்தையும்
இரத்தத்தையும் எனக்குச்செலுத்துகிறதற்கு என்
சந்நிதியில்நிற்பார்களென்று ஆண்டவராகிய
யெகோவா சொல்லுகிறார்.—இவாகள் என் யசு
பரிசுத்தஸ்தானத்திற்பிரவேசிப்பார்கள், இவர்க
ளே எனக்குச்சேவிக்கும்பொருட்டு என்பீடத்
தினிடத்தில்வந்து என்காவலைக்காப்பார்கள்.
உட்பிராகாரத்தின் வாசலில் பிரவேசிக்கும் யஎ
பொழுதுஅவர்கள் சணல்நூல்வஸ்திரங்களைத்தரி
த்துக்கொள்வார்கள்; அவர்கள்உட்பிராகாரத்தின்
வாசலிலும்,உள்ளேயும்ஆராதனைசெய்யுஞ் சமய
த்தில் ஆட்டுமயிர்தரிக்கலாகாது.—அவர்கள் தலைக யஅ
ளிற்சணல்நூற்குல்லாக்களையும்,அவர்கள் இடை
களிற்சணல்நூற்சல்லடங்களையுந் தரிக்கவேண்
டும்; வேர்வை யுண்டாகும்படி இடைக்கட்டுக்க
ட்டலாகாது.—அவர்கள், வெளிப்பிராகாரமாகிய யகூ
பிராகாரத்திலே சனங்களிடத்தில் போகும்பொ
ழுது,தாங்கள் ஆராதனைசெய்யுஞ்சமயத்தில்தரித்
ததங்கள்வஸ்திரங்களைக்களைந்து, அவைகளைப்ப
ரிசுத்தஅறைகளில் வைத்து, வேறேவஸ்திரங்க
ளைஉடுத்துக்கொள்ளக்கடவர்கள்; தங்கள்வஸ்தி
ரங்களினால் சனங்களைப் பரிசுத்தப்படுத்தலாகா
து.—அவர்கள்தலைமுண்டனம்பண்ணலாகாது, த உய
லைமயிர் நீளமாய்வளரவிடலாகாது; தங்கள்தலை
மயிரைக் கத்திரிக்கக்கடவர்கள்.—ஆசாரியனெ உக
வனும் உட்பிராகாரத்திற்பிரவேசிக்கும்பொழு
துதிராட்சரசத்தைக் குடிக்கலாகாது.—விதவை உஉ
யையாகிலும், தள்ளிவிடப்பட்டவளையாகிலும்
அவர்கள் விவாகம்பண்ணாமல், இஸரவேல்வமி
சத்தாளாகிய கன்னிகையையாகிலும், ஒருஆசா
ரியனுடைய மனைவியாயிருந்த விதவையையா
கிலும் விவாகம் பண்ணவேண்டும்.—அவர்கள் உங
என்சனங்களுக்குச் சுத்தவஸ்துவுக்கும் அசுத்த
வஸ்துவுக்குமுண்டான வேற்றுமையைப்
போதித்து, சுசிக்கும் அசுசிக்குமுண்டானவேற்
றுமையை அறியும்படிஉணர்த்தவேண்டும்.—வாக் உச
குவாதமுண்டானால்அவர்கள் தீர்க்கும்படிஏற்ப
டுத்தப்பட்டு,என்கட்டளைப்பிரகாரம்நியாயந்தீர்
க்கவேண்டும்: எனக்குரிய உற்சவங்களெல்லா
வற்றிலும்என்விதிகளையும் என்கட்டளைகளையுங்
காத்துக்கொள்ளக்கடவர்கள்; என் ஓய்வுநாள்க
ளைப் பரிசுத்தமென்று மதிக்கக்கடவர்கள்.—பி உரு
தா, மாதா, புத்திரன், புத்திரி, சகோதரன், வி
வாகமில்லாத சகோதரியென்னும்இவர்களுடை
ய பிரேதத்தினால் அவர்கள் அசுசிப்படுவதேயன்
றி, தாங்கள் அசுசிப்பட இறந்த வேறொருவனி
டத்தில் போகலாகாது.—அவன் சுசியான பின் உசு

(சு)அதி.உ.ரு. அதி.சரு.கூ. க.பேதுரு.ச.ங.(எ)அதி.சங.அ. அப்.உக.உஅ.லேவி.உஉ.ரு.லேவி.உசு.சக. உபா.ய.
யசு. அப்.எ.ருக. லேவி.உக.சு,அ,யஎ,உக. லேவி.ங.யசு (அ)லேவி.உஉ.உ,.(ய)உ.இரா.உங.அ,.(யக)க.நாளா.உசு.
க. உ.நாளா.உகூ.ஙச. எண்.யசு.கூ. (யஉ) ஏசா.கூ.யசு. மல்.உ.அ. சங்.ாசு.உஎ. (யங) எண்.யஅ.ங. உ.இரா.உங.கூ.
(யச) எண்.யஅ.ச. க.நாளா.உங.உஅ,ஙஉ.(யரு)க.சாமு.உ.ஙரு. உபா.ய.அ.(யசு) அதி.சக.உஉ.(யகூ)அதி.சஉ.யச.
லேவி.சு.உஎ. மத்.உங.யஎ,யக. (உய) லேவி.உக.ரு. (உக) லேவி.ய.யக. (உஉ) லேவி.உக.எ,யங,யச.(உங)லேவி.
ய.கூ,ய. மல்.உ,எ. (உச) உபா.யஎ.அ,. உ.நாளா.யகூ.அ,கூ. அதி.உஉ,உசு. (உரு) லேவி.உக.க,. (உசு) எண்.சு.ய.

உஎ பு அவனுக்கு எழுநாள் எண்ணவேண்டும்.—அ
வன் பரிசுத்தஸ்தானத்தில் ஆராதனைசெய்யும்ப
டிக்குப் பரிசுத்தஸ்தானத்தின் உள்ளான பிரா
காரத்தில் பிரவேசிக்குந் தினத்தில், தனக்காகஒ
ரு பிராயச்சித்தஞ் செய்யவேண்டுமென்று ஆண்
டவராகிய யெகோவா சொல்லுகிறார்.—
உஅ இது அவர்களுக்குரிய சுதந்தரம்: அவர்களுக்
குரிய சுதந்தரம் நானே: இஸரவேலில் அவர்க
ளுக்குஎந்தக்காணி ஆட்சியையாவதுநீங்கள்கொ
டுக்கலாகாது: நானே அவர்களுக்குரிய காணி
உகூ ஆட்சி.—அவர்கள்,நைவேத்தியங்களையும், பிரா
யச்சித்த பலிகளையும், குற்றநிவிர்த்திப் பலிகளை
யும் புசிப்பார்கள்; இஸரவேலிலே நிவேதிக்கப்
படுஞ் சகல பொருள்களும்அவர்களுக்குரியன.-
௩௰ சகலவித முதற்கனிகளிலும் பிரதானமும், நீங்
கள் உயர்த்திப்படைக்குஞ் சகலவித பொருள்
களிலும் உயர்த்திப்படைக்கப்பட்ட ஒவ்வொ
ருபொருளும் ஆசாரியர்களுக்குரியன: உன்வீட்
டில் ஆசீர்வாதத்தைத் தங்கப்பண்ணும்பொருட்
டு உங்கள் பிசைந்தமாவின் பிரதானத்தை ஆசா
௩க ரியனுக்குக் கொடுக்கவேண்டும்.—பறவைகளி
லும் மிருகங்களிலுந் தானாயிறந்ததையும்,பீறுண்
டதையும் ஆசாரியர் புசிக்கலாகாது.

## சரு. அதிகாரம்.

க. பரிசுத்த ஆலயத்தினிமித்தந் தேசத்தைப்பங்கிடல்: கூ. இராசாவுக்குஞ் சனங்களுக்கும் விதிகளையும் பிரமாணங்களையுங் கொடுத்தல்.

நீங்கள் சுதந்தரிக்கும்படி சீட்டுப்போட்டுத்தே
சத்தைப் பங்கிடுங்காலத்தில், தேசத்தில் இருபத்
தையாயிரங்கோல்நீளமும்பதினாயிரங்கோல்
அகலமுமான ஒரு பரிசுத்தபங்கை யெகோ
வாவுக்கு ஒப்பிக்கவேண்டும். இது தன் சுற்
உ றெல்லையெங்கும் பரிசுத்தமாயிருக்கும்.—இ
தில் பரிசுத்தஸ்தானத்திற்கென்று ஐஞ்ஞூறுகோ
ல் நீளமும், ஐஞ்ஞூறுகோல் அகலமுமா
க ஒருபங்கு சதுரமாயிருக்கவேண்டும்; அதன்
புறத்தில் சுற்றிலும் ஐம்பதுமுழம் வெளிவிட
௩ வேண்டும்.-இந்த அளவுபட இருபத்தையாயி
ரங்கோல் நீளத்தையும், பதினாயிரங்கோல் அக
லத்தையுமளப்பாய்: அதில் மிகவும்பரிசுத்தமான
ச பரிசுத்தஸ்தானமிருக்கவேண்டும்.—தேசத்தின்
பரிசுத்த பங்காகிய இது, யெகோவாவுக்
குஆராதனைசெய்ய அவரிடத்தில் சேருகிறவர்க
ளும், பரிசுத்தஸ்தானத்தில்ஆராதனைசெய்கிறவர்
களுமாகிய ஆசாரியர்களுக்குரியது: அவர்களு
டைய வீடுகளுக்காகவும், பரிசுத்தஸ்தானத்துக்
காகவும் ஒரு பரிசுத்த இடமிருக்கவேண்டும்.—
ரு இருபத்தையாயிரங்கோல் நீளமும், பதினாயிரம்
அகலமுமான ஒரு பங்கு ஆலயத்தின் பணிவி
டைசெய்யும் லேவியருக்கிருக்கும், அது அவர்க
ளுடைய காணிஆட்சி, அதில் இருபது அறைக
ளிருக்கும்.
நீங்கள் ஒப்பித்த பரிசுத்த பங்குக்கு முன் சு
பாக ஐயாயிரங்கோல் அகலத்தையும், இருபத்
தையாயிரம் நீளத்தையும் நகரத்தின்பங்காக ஏற்
படுத்துவீர்கள்: அது இஸரவேல்வமிசத்தார் யா
வருக்குமுரியதாகும்.
ஒப்பிக்கப்பட்ட பரிசுத்த பங்குக்கு இந்தப் எ
புறத்திலும், அந்தப்புறத்திலும் மேற்கிலே மேற்
குப்புறமாகவும், கிழக்கிலே கிழக்குப்புறமாக
வும் ஒப்பிக்கப்பட்ட பரிசுத்த பங்குக்கும்
நகரத்திற்குமுரிய பங்கின் சமீபத்தில் அதிபதிக்
காக ஒரு பங்கிருக்கவேண்டும்: அதின்
நீளம் மேற்கெல்லைமுதல் கிழக்கெல்லைவரைக்
கும் மற்றப்பங்குக்கெதிரே இருக்கவேண்
டும்.—தேசததில் இஸரவேலருக்குள் அவன் சு அ
தந்தரமிருக்கும்: என் அதிபதிகள் என் சனங்க
ளை இனி உபத்திரவப்படுத்தமாட்டார்கள்; இஸ
ரவேல்வமிசத்தாருக்கு அவர்களுடைய கோத்தி
ரங்களின்படி அவர்களுடைய தேசத்தைக்கொ
டுப்பார்கள்.'
இஸரவேலின் அதிபதிகளே, நீங்கள்செய்தது கூ
போதுமென்று ஆண்டவராகிய யெகோ
வா சொல்லுகிறார்: நீங்கள் உபத்திரவத்தையும்,
அநியாயத்தையுந்தள்ளி, நியாயத்தையும் நீதியை
யுஞ்செய்யுங்கள்,உபத்திரவங்களைஎன்சனங்களி
னின்று அகற்றிவிடுங்களென்று ஆண்டவரா
கிய யெகோவாசொல்லுகிறார்.—செவ்வை ௰
யான தராசும், செவ்வையான ஏபாவும், செவ்
வையான பாத்தும் உங்களிடத்திலிருக்கவேண்
டும்.—ஏபாவும் பாத்தும் ஒரே அளவு, பாத் ஓம ௰க
ரில் பத்திலொருபங்கு, ஏபா ஓமரில் பத்திலொ
ருபங்கு: இரண்டும் ஓமரின்படி அளக்கப்படும்.-
ஷேக்கல் இருபதுகேரா: இருபதுஷேக்கலும், ௰உ
இருபத்தைந்துஷேக்கலும், பதினைந்து ஷேக்க
லும் ஒரு மானேயாகும்.—ஒரு ஓமர் கோதுமை ௰௩
யில் ஒரு ஏபாவின் ஆறிலொருபங்கும், ஒரு ஓ
மர் வாற்கோதுமையில் ஏபாவில் ஆறிலொருபங்
கும் நீங்கள் நிவேதிக்கவேண்டிய நைவேத்தி
யம்.—எண்ணெயின் நியமமாவது, கோருக்குள் ௰ச
பாத்தின் பத்திலொருபங்கு கொடுப்பீர்கள்,
பத்துப்பாத்ஒருகோராகும்.—நீங்கள் அவர்கள்நி ௰ரு
மித்தம் பாவநிவிர்த்திசெய்கிறதற்கு நைவேத்தி
யத்தையும், தகனபலியையும், ஸ்தோத்திரபலிக
ளையும் இடும்படி இஸரவேலின் செழுமையான
மேய்ச்சலில் இருநூறு ஆடுகளில் ஒரு ஆட்டைச்
செலுத்தவேண்டுமென்றுஆண்டவராகியயெ
கோவா சொல்லுகிறார்.—தேசத்தில்சகலசனங் ௰சு
களும் இந்தக்காணிக்கையைஇஸரவேலின் அதி
பதிக்காகக்கொடுப்பார்கள்.—உற்சவங்கள், அமா ௰எ

(உஎ) லேவி.ச.௩. (உஅ) எண்.௰அ.உ௰. உபா.௰.கூ. யோசு.௰௩.௰ச,௩௩. (உகூ) லேவி.சு.௰அ,உஅ. லேவி.உஎ.உக, உஅ. (௩௰) யாத்.௰௩.உ. எண்.௩.௰௩. எண்.௰ரு.உ௰. நிகி.௰.௩எ. நீதி.௩.கூ,௰. மல்.௩.௰. (௩க) யாத்.உஉ.௩க. லேவி.உஉ.அ.—(சரு. அதி. உ.) அதி.சஉ.உ௰. (௩) அதி.சஅ.௰. (ரு) அதி.சஅ.௰௩. அதி.ச௰.௰எ. (சு) அதி.சஅ.௰ரு.(எ) அதி.சஅ.உக. (அ) எரே.உஉ.௰எ. அதி.உஉ.உஎ.(கூ)அதி.சச.சு. எரே.உஉ.௩.(௰)லேவி.௰கூ.௩ரு,௩சு. நீதி.௰க.க. (௰உ) யாத்.௩௰.௰௩. லேவி.உஎ.உரு. எண்.௩.சஎ. (௰ரு) லேவி.க.ச.

வாசிகள், ஓய்வுநாள்கள்முதலிய இஸ்ரவேல்வமி
சத்தாரின் சகல உற்சவங்களிலுந் தகனபலிகளை
யும்,போசனபலிகளையும், பானபலிகளையும்அதி
பதிகொடுப்பதேகடமை: அவன் இஸ்ரவேல்
வமிசத்தாரின் பாவமன்னிப்புக்காகப்பிராயச்சி
த்தபலியையும், நைவேத்தியத்தையும், தகனபலி
யையும், ஸ்தோத்திரபலியையுமிடவேண்டும்.—
௰௮ முதலாம் மாதம் முதலாந்தினத்திலே நீ குற்
றமில்லாத ஒரு இளங்காளையைக் கொண்டுவந்
து, பரிசுத்தஸ்தானத்தைச் சுத்திகரிப்பாயாகவெ
ன்று ஆண்டவராகிய யெகோவா சொல்
௰௯ லுகிறார்.—ஆசாரியன் பிராயச்சித்தஞ்செய்வதற்
கான பலியின் இரத்தத்தில் கொஞ்சமெடுத்து,
ஆலயத்தின்வாசல் நிலைகளிலும், வேதிகையினு
டைய சட்டத்தின் நாலுகோடிகளிலும், உட்
பிராகாரத்தின்வாசல் நிலைகளிலுந்தெளிக்கக்கட
௨௰ வன்.—ஏழாந்தினத்திலும் பிழைசெய்தவனி
மித்தமும், பேதையினிமித்தமும் அப்படிச்செய்
வாய்: இவ்விதமாய் ஆலயத்தைச் சுத்திகரிப்பா
௨௧ யாக.—முதலாம் மாதம் பதினாலாந்தினத்திலே
புளிப்பில்லாத அப்பங்கள் புசிக்கப்படும் ஏழு
நாளின்உற்சவமாகியபஷ்காஇருக்கவேண்டும்.-
௨௨ அந்நாளில் அதிபதி தன்னிமித்தமும், தேசத்துச்
சகல சனங்கள் நிமித்தமும் பிராயச்சித்தஞ்செய்
௨௩ வதற்கு ஒரு காளையைச் செலுத்துவான்.—அந்த
ஏழுநாள் உற்சவத்தில் அவன் அந்த ஏழுநாளும்
யெகோவாவுக்குத் தகனபலியாகப்பழுதற்
ற ஏழுகாளையையும், ஏழுஆட்டுக்கடாக்களையும்,
பிராயச்சித்தஞ்செய்வதற்குநாடோறும்ஒவ்வொ
ரு வெள்ளாட்டுக்கடாவையுஞ் செலுத்துவான்.—
௨௪ ஒவ்வொரு காளையுடன் ஒவ்வொரு ஏபாவும்,
ஒவ்வொரு ஆட்டுக்கடாவுடன் ஒவ்வொரு ஏபா
வுமாகப்போசனநைவேத்தியத்தையும், ஒவ்வொ
ரு ஏபாவுடனே ஒவ்வொரு கின் எண்ணெயை
௨௫ யுஞ் செலுத்துவான்.—ஏழாம் மாதம் பதினைந்
தாந்தினத்தில் உற்சவசமயத்தில் பிராயச்சித்த
பலிக்கும், தகனபலிக்கும், போசனபலிக்கும்
எண்ணெய்க்குமேற்க ஏழுநாள்வரைக்கும் அந்
தப்பிரகாரமாகச்செலுத்துவான்.

## ௪௬. அதிகாரம்.

௧.இராசாவுஞ்சனங்களும்ஆராதனைசெய்யும் விதிகளைக்கற்பித்தல்: ௯. ஆலயத்தில் பிரவேசிப்பதும்புறப்படுவதுமாகிய விசேஷத்தையும் பலிதானம்முதலியவற்றையுங்குறித்தல்: ௰௬. இராசபுத்திரனுடைய சுதந்தரத்தைக்குறித்தல்: ௰௯. பாகமுதலியகிரியைகளைக்குறித்தல்.

ஆண்டவராகியயெகோவாஇவ்வாக்குச்
சொல்லுகிறார், கிழக்குநோக்கியிருக்கிற உட்பி
ராகாரத்தின்வாசல் வேலைசெய்யும் ஆறுநாளி
லும் அடைபட்டிருக்கும்; ஓய்வுநாளிலே திறக்
௨ கப்படும், அமாவாசியிலுந்திறக்கப்படும்.—அதி
பதி வாசலின் வெளிமண்டபத்தின்வழியாய்ப்
பிரவேசித்து, வாசல்நிலைக்குச் சமீபத்தில் நிற்
பான், ஆசாரியர்கள் அவனுடைய தகனபலியை
யும் அவனுடைய ஸ்தோத்திர பலிகளையுமிட
அவன் வாசற்படியில் ஆராதனைசெய்வான்: அ
தன்பின்பு அவன் புறப்படுவான்; வாசலோ, சா
யங்காலபரியந்தம் அடைபடாதிருக்கும்.—ஓய் ௩
வுநாள்களிலும், அமாவாசிகளிலும் தேசத்துச்ச
னங்கள் அந்தவாசலின் பிரவேசஸ்தானத்தில்
யெகோவாவின் சந்நிதியில் வணங்குவார்
கள்.—அதிபதி ஓய்வுநாளில் யெகோவாவுக் ௪
கிடுந் தகனபலி, பழுதற்ற ஆறு ஆட்டுக்குட்டி
களும், பழுதற்ற ஒரு ஆட்டுக்கடாவுமாகும்.—
ஆட்டுக்கடாவோடே ஒரு ஏபா நைவேத்தியத் ௫
தையும், ஆட்டுக்குட்டிகளோடே தனது திரா
ணிக்குத்தக்கதாக ஒவ்வொரு ஏபா நைவேத்தி
யத்துடனே ஒவ்வொரு கின் எண்ணெயையுங்
கொடுப்பான்.—அமாவாசியில் பழுதற்ற ஒரு ௬
இளங்காளையும், பழுதற்ற ஆறு ஆட்டுக்குட்டி
களும், ஒரு ஆட்டுக்கடாவுமிருக்கவேண்
டும்.—நைவேத்தியமாக அந்தக் காளையோடே ௭
ஒரு ஏபாவையும், ஆட்டுக்கடாவோடே ஒரு
ஏபாவையுஞ்செலுத்தவேண்டும், ஆட்டுக்குட்டி
களோடே தன்னாலியன்றளவு எதையாகிலும்
இடுவான், ஒவ்வொரு ஏபா நைவேத்தியத்தோ
டே ஒவ்வொரு கின் எண்ணெயையுமிடுவான்.—
அதிபதி பிரவேசிக்கும்பொழுது வாசல் மண்ட ௮
பத்தின்வழியாய்ப்பிரவேசிப்பான், அந்த வழி
யாய்ப்புறப்படுவான்.
உற்சவசமயங்களில்தேசத்துச்சனங்கள் யெ ௯
கோவாவின் சந்நிதியில் வரும்பொழுது,ஆரா
தனைசெய்கிறதற்கு வடக்குவாசலின்வழியாய்ப்
பிரவேசிக்கிறவன் தெற்குவாசலின் வழியாய்ப்
புறப்படுவான்; தெற்குவாசலின் வழியாய்ப்பிர
வேசிக்கிறவன் வடக்குவாசலின் வழியாய்ப்பு
றப்படுவான்: வந்த வாசலின்வழியாய்ப்புறப்ப
டலாகாது, அதற்கெதிரான வழியாய்ப்புறப்படு
வான்.—அவர்கள் பிரவேசிக்கும்பொழுது அதி ௰
பதி அவர்களுக்குள்ளிருந்து பிரவேசிப்பான்,
அவர்கள் புறப்படும்பொழுது அவனும் புறப்ப
டுவான்.-விருந்துகளிலும், உற்சவங்களிலும்ஒவ் ௰௧
வொரு காளையோடேநைவேத்தியமாக ஒவ்வொ
ருஏபாவையும்,ஒவ்வொருஆட்டுக்கடாவோடே
நைவேத்தியமாக ஒவ்வொரு ஏபாவையும், ஆட்
டுக்குட்டிகளோடே அவனவன்திராணிக்குத்தக்
கதாய்எதையாகிலும், ஒவ்வொரு ஏபா நைவேத்
தியத்துடனே ஒவ்வொருகின் எண்ணெயையுமி
டுவான்.—அதிபதி யெகோவாவுக்குச் சுய ௰௨
இச்சையின்படி தகனபலியையாகிலும்,ஸ்தோத்
திர பலியையாகிலும் இடும்பொழுது அவன்
நிமித்தங்கிழக்குநோக்கியிருக்கிற வாசலைத்திறக்

(௰௮) லேவி.௰௬.௰௬. (௰௯) அதி.௪௩.௨௰. (௨௰) லேவி.௪.௨௭. (௨௧) யாத்.௰௨.௰௮. (௨௨) லேவி.௪.௰௪. (௨௩) லேவி.௨௩.௮. எண்.௨௮.௰௫,௨௨,௩௰.(௨௪)அதி.௪௬.௫,௭. (௨௫) லேவி.௨௩.௩௪. எண்.௨௯.௰௨. உபா.௰௬.௰௩.— (௪௬. அதி. ௨.) அதி.௪௪.௩ (௪) அதி.௪௫.௰௭. (௫) அதி.௪௫.௨௪. உபா.௰௬.௰௭. (௯) யாத்.௨௩.௰௪—௰௭. உபா. ௰௬.௰௬. (௰௨) அதி.௪௪.௩.

கவேண்டும், ஓய்வுநாளில் செய்கிறதுபோல அ
வன் தன்தகனபலியையும், ஸ்தோத்திரபலியை
யுமிடுவான்: பின்பு அவன் புறப்படுவான்; அ
வன் புறப்பட்டபின்பு வாசல் அடைக்கப்பட
௰௩ வேண்டும்.—நீ நித்தமும் பழுதற்ற ஒருவருஷத்
து ஆட்டுக்குட்டியை யெகோவாவுக்குத்
தகனபலியாக இடவேண்டும்: காலைதோறும் அ
௰௪ தை இடவேண்டும்.—அதனுடன் காலைதோறும்
போசன நைவேத்தியமாய் எபாவின் ஆறிலொ
ருபங்கையும், மெல்லியமாவைப் பிசையும்படி
ஒரு கின்னில்மூன்றிலொருபங்கு எண்ணெயை
யும், யெகோவாவுக்கு நித்தமும்நித்தியவிதிப்
௰௫ பிரகாரமிடுவாய்.—இப்படி நித்திய தகனபலியா
கக்காலைதோறும்ஆட்டுக்குட்டியையும், நைவேத்
தியத்தையும், எண்ணெயையுமிடவேண்டும்.
௰௬ அதிபதி தன் புத்திரரில் ஒருவனுக்கு ஒரு
ஈவைக்கொடுத்தால், அது அவன் புத்திரருக்குச்
சுதந்தரமாயிருக்கும்; உரிமை ஆட்சியின்படி அ
௰௭ து அவர்களுக்குச் சுதந்தரமாயிருக்கும்.—அ
வன் தன் பணிவிடைக்காரரில் ஒருவனுக்குத்
தன் சுதந்தரத்தில் ஒரு ஈவைக்கொடுத்தால், அது
விடுதலையின் வருஷம்வரைக்கும் அவனுடைய
தாயிருக்கும்; பின்பு அது திரும்பவும் அதிபதிக்
குரித்தாகும்: அவன் புத்திரர்மாத்திரம் அதின்
௰௮ சுதந்தரத்தைப்பெறுவார்கள்.—அதிபதி சனங்க
ளை அவர்கள்சுதந்தரத்தினின்று அகற்றி, உபத்தி
ரவஞ்செய்து, அவர்கள் சுதந்தரத்தை எடுக்கலா
காது; என் சனங்களில் ஒருவனும் தன் சுதந்த
ரத்தினின்று விலக்கப்படாதபடி, அவன் தன்
னுடைய சுதந்தரத்திலே தன் புத்திரருக்குச்சுதந்
தரங்கொடுக்கக்கடவனென்று ஆண்டவராகி
ய யெகோவா சொல்லுகிறார்.
௰௯ பின்பு அவன் வாசலின்பக்கத்திலுள்ள பிர
வேசஸ்தானத்தின் வழியாய் வடக்குநோக்கியி
ருக்கிறஆசாரியர்களுடையபரிசுத்தஅறைகளில்
என்னை அழைத்துவந்தான்: மேற்குத்திசையில்
அங்கேஇருபுறத்திலும்ஒருஸ்தானமிருந்தது.-
௨௰ அப்பொழுது அவன் என்னைநோக்கி, ஆசாரியர்
கள் வெளியிலுள்ள பிராகாரத்திற்போய்ச் சனங்
களைப் பரிசுத்தப்படுத்தாதபடி இந்தஸ்தானத்தில்
குற்றநிவிர்த்திப் பலியையும், பிராயச்சித்த பலி
யையும் அவிப்பார்கள்; இங்கேபோசனநைவேத்
௨௧ தியத்தைச் சுடுவார்களென்றான்.—பின்னும் அ
வன் என்னை வெளிப்பிராகாரத்தில் அழைத்துப்
போய், அந்தப்பிராகாரத்தின் நாலு மூலைகளி
லுஞ் செல்லப்பண்ணினான்; அந்தப் பிராகாரத்
தின் ஒவ்வொரு மூலையிலும் ஒவ்வொருபிராகார
௨௨ மிருந்தது.-பிராகாரத்தின் நாலு மூலைகளிலும்
புகைசெல்லுந் துவாரங்களையுடைய இந்தப்பி
ராகாரங்கள்நாற்பது முழ நீளமும் முப்பது மு
ழ அகலமுமானவைகள்: மூலைகளிலுள்ள இந்
௨௩ நாலு ஸ்தானங்களும் ஒரேஅளவு.-இந்நாலையுஞ்
சுற்றி உள்ளே ஒரு சுற்றுக் கட்டுண்டாயிருந்த
து, நாலுபுறத்திலும் அறைகளில் பாகசாலைகளி
ருந்தன.—அப்பொழுது அவன்என்னைநோக்கி, ௨௪
இவைகள் சனங்களிடும் பலிகளைப் பாகம்பண்
ணும்ஆலயத்தின்பணிவிடைக்காரருடையஸ்தா
னங்களென்றான்.

## ௪௭. அதிகாரம்.

௧. பரிசுத்தசலந்தோன்றிப்பாய்தல்: ௯. அந்தச்ச
லங்களின் குணத்தைத்தெரிவித்தல்: ௨௨. சீட்
டுப்போட்டுத்தேசத்தைப்பங்கிடல்.

பின்பு அவன் என்னை ஆலயத்தின்வாசலில் தி ௧
ரும்பிவரப்பண்ணினான்; அங்கே கிழக்குநோக்
கியிருக்கிற ஆலயத்தின் கீழ்த்திசையிலுள்ள வா
சற்படியினின்றுநீர்கள்புறப்பட்டு, ஆலயத்தின்வ
லப்புறத்திலேவேதிகைக்குத்தெற்கே ஓடுவதைக்
கண்டேன்.—பின்பு அவன் என்னைவடக்குவா ௨
சலின்வழியாகப் புறப்படப்பண்ணி, வெளியி
லே கிழக்கைநோக்கியிருக்கிற புறவாசல்வரைக்
குஞ்சுற்றிநடத்திக்கொண்டுபோனான்; அங்கே
வலப்புறத்தினின்றுநீர்கள்பாய்ந்தன.—அந்தமனு ௩
ஷன்தன்கையில் நூலைப்பிடித்துக்கொண்டு, கிழ
க்குத்திசையிற்சென்று, ஆயிரமுழம் அளந்தான்,
என்னை அந்த நீர்களைக் கடக்கப்பண்ணினான்;
நீர்கள்கணைக்கால் அளவிருந்தன.—அவன் தி ௪
ரும்பவும் ஆயிரம் முழம் அளந்து, என்னை அந்த
நீர்களைக்கடக்கப்பண்ணினான்; நீர்கள்முழங்கா
லளவிருந்தன. பின்னும் ஆயிரம்முழம் அளந்
து என்னைக்கடக்கப்பண்ணினான்; நீர்கள் அரை
யளவிருந்தன.—திரும்பவும்அவன் ஆயிரம்மு ௫
ழம்அளந்தான்; நான் கடக்கக்கூடாத நதியாயி
ருந்தது: நீர்கள்நீந்தத்தக்கதாகப்பெருகிக் கடக்க
முடியாத ஒருநதியாயின.

அப்பொழுது அவன் என்னைநோக்கி, மனுபுத் ௬
திரனே, நீ இதைக் கண்டாயாவென்றுசொல்
லி, நதியோரத்திற்குத்திரும்பப்பண்ணிநடத்திக்
கொண்டுபோனான்.—நான் திரும்பிவந்தபொழு ௭
துநதியோரத்தில் இக்கரையிலும் அக்கரையிலும்
அநேகவிருட்சங்களைக் கண்டேன்.-அப்பொழு ௮
து அவன்என்னைநோக்கி, இந்த நீர்கள் கிழக்குத்
திசையிலுள்ள தேசத்திற்குப்புறப்பட்டு, சமபூ
மிகளிலேபாய்ந்து, சமுத்திரத்திலே விழும்: ச
முத்திரத்திற்பிரவேசித்தபொழுது அதின் நீர்
நன்னீராகும்.—இந்த நதிகள்போகும் இடமெங் ௯
குமுள்ள ஊர்வனவாகியசீவசெந்துக்களெல்லா
ஞ் சீவிக்கும்: அங்கே மிகுந்த திரளானமச்சங்க
ளிருக்கும், இந்த நீர்கள் அங்கே சென்றுசொஸ்த
மாக்கிறபடியினாலே நதிசெல்லும் இடமெங்கு
முள்ளயாவுஞ் சீவிக்கும்.—ஐன்கெதிமுதல் ஐ ௰
னெக்லாயிம்வரைக்கும் மீன்பிடிக்கிறவர்கள் அ
தின்கரையில் நிற்பார்கள்; அவைவலைகள் விரிக்
கிறதற்கேதுவாகும்; அவைகளின்மச்சங்கள் அவ்
வவற்றின்சாதிப்படி பெருகிமகாசமுத்திரத்தின்

(௰௩) யாத். ௨௯. ௩௮. எண். ௨௮. ௩. (௰௭) லேவி. ௨௫. ௰. (௰௮) அதி. ௪௫. ௮. (௨௰) ௨. நாளா. ௩௫. ௰௩. லேவி. ௨. ௪, ௫, ௭. அதி. ௪௪. ௰௯.—(௪௭. அதி. ௧.) யோவே. ௩. ௰௮. சக. ௰௩. ௧. வெளி. ௨௨. ௧. (௩) அதி. ௪௰. ௩. (௭) வெளி. ௨௨. ௨. (௮) யோசு. ௩. ௰௬. (௰) எண். ௩௪. ௩. யோசு. ௨௩. ௪.

௰௧ மச்சங்களைப்போல மிகுதியாயிருக்கும்.—ஆனா
லும் அதினுடையசேற்றுப்பள்ளங்களும்,அதின்
மடுக்களுஞ் சீர்பெருமல் உப்புக்கு ஒப்பிக்கப்ப
டும்; நதியோரத்தில் இக்கரையிலும் அக்கரையி
லும்வாடாதஇலையையும்,கேடில்லாத கனியையு
முடையசகலவிதவிருட்சங்களுமுண்டாகும்.—
௰௨ அதின்நீர்கள்பரிசுத்தஸ்தானத்தினின்றுபுறப்படு
கிறபடியால் அவைகள் மாதந்தோறுங்கனிதரும்:
அவைகளின் கனிபுசிப்பதற்கும், அதினுடைய
இலை ஔஷதத்துக்குமுதவும்.
௰௩ ஆண்டவராகிய யெகோவா இவ்வாக்
கைச் சொல்லுகிருர்; நீங்கள் இஸரவேலின் பன்
னிரண்டு கோத்திரங்களின் தொகைப்படி சுதந்
தரித்துக்கொள்ளவேண்டிய தேசத்தின் எல்லை
யாவது: யோசேப்புக்கு இரண்டு பங்குண்
௰௪ டு.—நீங்களெல்லாருஞ் சமான சுதந்தரத்தைப்
பெற்றுக்கொள்ளவேண்டும்: உங்கள் முன்னே
ருக்களிப்பேனென்று நான் ஆணையிட்டுக்கொ
டுத்த இந்தத் தேசத்தை நீங்கள் சுதந்தரமாகப் பெ
௰௫ றுவீர்கள்.—தேசத்தின் எல்லையாவது, வடபுறம்
மகா சமுத்திரத்தினின்று சேதாத் நதிக்குப்போ
கிற எத்லோன் வழியாயிருக்கிற அமாத்தும்,—
௰௬ பேரோதாவும், தமஸ்குவினெல்லைக்கும் அமாத்
தின் எல்லைக்கும் இடையிலுள்ள சிப்ராயிமும்,
அவரானின் எல்லையோடே சேர்ந்த அத்சரத்தீ
௰௭ கோனும்,—அவ்விதமாய்ச் சமுத்திரத்தினின்று
போகிற அத்சரேனானும், தமஸ்குவின் எல்லை
யும், வடமூலையான வடக்கும் அமாத்தின் எல்
௰௮ லையும். இது வடபுறம்.—கிழக்குப்புறத்தை அவ
ரானுக்கும் தமஸ்குவுக்குமிடையாகக் கிலியாத்
திலும் யோர்தான் கரையிலுள்ள இஸரவேல்தே
சத்திலும்நின்று கீழ்க்கடல்வரைக்குமுள்ள எல்
லையாக அளக்கவேண்டும்.இது கிழக்குப்புறம்.—
௰௯ தென்றிசையிலுள்ள தென்புறம் தாமார்முதல் கா
தேஷிலுள்ள விவாதசலம்வரைக்கும், நதியின்
வழியாய் மகா சமுத்திரம்வரைக்கும், தென்றி
௨௰ சையில் இந்தத் தென்புறமிருக்கும்.—மேற்குப்பு
றம் அந்த எல்லைமுதல் அமாத்திற்கெதிராகவந்து
சேரும்வரைக்குமுள்ள மகா சமுத்திரம். இது
௨௧ மேற்குப்புறம்.—இவ்விதமாய் நீங்கள்இஸரவேல்
கோத்திரங்களின்படி உங்கள் தேசத்தைப் பங்
கிட்டுக்கொள்ளுங்கள்.
௨௨ உங்களுக்கும், உங்களுக்குள்ளே தங்கி, உங்க
ளுக்குள்ளே பிள்ளைகளைப் பெறுகிறவர்களாகிய
அந்நியருக்கும் நீங்கள் சீட்டுப்போட்டு, தே
சத்தைப் பங்கிட்டு, சுதந்தரமாக்கிக்கொள்வீர்க
ளாக: இவர்கள் இஸரவேல்வமிசத்தார்மத்தியிலே
தேசத்துச் சனங்களைப்போல் எண்ணப்படுவார்
கள்; இஸரவேல்வமிசத்தாருக்குள் உங்களுடன்
௨௩ சுதந்தரத்தைப்பெறுவார்கள்.—அந்நியன்எந்தெந்த
வமிசத்தாருக்குள்ளேதங்கியிருக்கிருனே,அதில்
அவன்சுதந்தரத்தை அவனுக்குக்கொடுக்கவேண்
டுமென்று ஆண்டவராகியயெகோவாசொ
ல்லுகிருர்.

## ௪௮. அதிகாரம்.

௧. இஸரவேலின்ஏழுகோத்திரத்தின்பங்கைத்தெ
ரிவித்தல்: ௮. பரிசுத்தஸ்தானத்திற்குரியபங்கு:
௰௫. நகரத்திற்குரிய பங்கு: ௨௧. இராசாவுக்கு
ரிய பங்கு: ௩௰. நகரத்தினளவையும் வாசல்க
ளையுங்குறித்தல்.

கோத்திரங்களின் நாமங்களாவன. வடதிசை ௧
தொடங்கி அமாத்திற்குப்போகிற எத்லோன் வ
ழியின் ஓரத்திற்கும், அத்சரேனானுக்கும் அ
மாத்தருகிலேயுள்ள வடக்கிலிருக்கிற தமஸ்கு
வின் எல்லைக்குமுள்ளாகக்கீழ்த்திசைதொடங்கி
மேற்றிசைவரைக்குந் தாணுக்கும்,—தாணின் எல் ௨
லை அருகே கீழ்த்திசைதொடங்கி மேற்றிசைவ
ரைக்கும்ஆஷேருக்கும்,—ஆஷேரின் எல்லை அரு ௩
கே கீழ்த்திசைதொடங்கி மேற்றிசைவரைக்கும்
நப்தாலிக்கும்,—நப்தாலியின் எல்லை அருகே ௪
கீழ்த்திசைதொடங்கி மேற்றிசைவரைக்கும் மனா
ஷேக்கும்,—மனாஷேயின் எல்லை அருகே கீழ்த் ௫
திசைதொடங்கி மேற்றிசைவரைக்கும் எப்ராயீ
முக்கும்,—எப்ராயீமின் எல்லை அருகே கீழ்த்தி ௬
சைதொடங்கி மேற்றிசைவரைக்கும் ரூபேனுக்
கும்,—ரூபேனின் எல்லை அருகே கீழ்த்திசை ௭
தொடங்கி மேற்றிசைவரைக்கும் யூதாவுக்கும்
ஒவ்வொரு பங்கு கிடைக்கும்.
யூதாவினெல்லை அருகேகீழ்த்திசைதொடங்கி ௮
மேற்றிசைவரைக்குமுள்ள இருபத்தையாயிரங்
கோல் அகலங்கொண்ட நிலமும், மற்றப்
பங்குகளைப்போலக் கீழ்த்திசைமுதல் மேற்றி
சைவரைக்கும் நீளங்கொண்ட நிலமுமாகிய ஒ
ரு பரிசுத்தபங்கை நீங்கள் ஒப்பிப்பீர்கள்: அ
தின் மத்தியில் பரிசுத்த ஸ்தானமிருக்கவேண்
டும்.—யெகோவாவுக்கு நீங்கள் ஒப்பிக்கும் ௯
பங்கு இருபத்தையாயிரங் கோல் நீளமும், பதி
னாயிரங் கோல் அகலமுமாயிருக்கும்.—வடக் ௰
கே இருபத்தையாயிரங் கோல் நீளமும், மேற்
கே பதினாயிரங் கோல் அகலமும், கிழக்கே
பதினாயிரங் கோல் அகலமும், தெற்கே இரு
பத்தையாயிரங் கோல் நீளமுமாகிய இந்தப்
பரிசுத்தபங்கு ஆசாரியர்களுக்குரியதாகும்: அ
தின்மத்தியில் யெகோவாவின் பரிசுத்தஸ்
தானம்நிற்கும்.—இஸரவேல் சந்ததியார் நெறி ௰௧
தவறினபொழுது லேவியர் தவறினதுபோல நெ
றி தவருமல், என் கட்டளையைக் காக்கிற சா
தோக்கின் புத்திரரும், பரிசுத்தப்படுத்தப்பட்
டவர்களுமாகிய ஆசாரியர்களுக்கு அது உரிய
தாகும்.—லேவியரின் எல்லையினருகே ஒப்பிக் ௰௨
கப்பட்ட பரிசுத்தமாகிய இந்தத் தேசத்தின்
பங்கு அவர்களுக்கு மகா பரிசுத்தமாயிருக்க
வேண்டும். ஆசாரியர்களின் எல்லைக்கெதிராக
லேவியர் இருபத்தையாயிரங் கோல் நீளமும்

(௰௨) யோபு.௮.௰௬. எரே.௰௭.௮. (௰௩) வெளி.௨௨.௨. ஆதி.௪௮.௫. ௧ நாளா.௫.௧. (௰௪) ஆதி.௰௨.௭. (௰௫) அதி. ௪௮.௧,௨௮. எண்.௩௪.௮. (௰௬) எண்.௩௪.௮. ௨.சாமு.௮.௮. (௰௭) எண்.௩௪.௮. (௰௯) எண்.௨௰.௰௩. உபா.௩௨. ௫௰. (௨௨) எபே.௩.௬. வெளி.௭.௯,௰. ரோ.௰.௰௨. கலா.௩.௨௮. கொலோ.௩.௰௧.—(௪௮.அதி.௧.) அதி.௪௭.௰௫..

பதிஞயிரங் கோல் அகலமுமான ஒரு பங்
௰௩ கு பெறவேண்டும்.—அதின் நீளம் இருபத்
தையாயிரம் முழம், அகலம் பதிஞயிரம் மு
௰௪ ழம்.—அவர்கள் அதில் ஒன்றையும் விற்கவும்,
நிலத்தின் முதல்விளைவை மாற்றவும்படாது: அ
வைகள் யெகோவாவினிமித்தம் பரிசுத்த
முள்ளவைகள்.

௰௫ இருபத்தையாயிரங் கோலுக்கெதிராக அக
லத்தில் விடப்பட்ட ஐயாயிரங் கோல், நகரத்
துக்கும், வாசஸ்தானத்துக்கும், பேட்டைக்குமு
ரிய ஒரு சாதாரண ஸ்தானமாயிருக்கும்: அ
௰௬ தின் மத்தியில் நகரமிருக்கும்.—அதின் அளவுக
ளாவன; வடபுறம் நாலாயிரத்தைஞ்ஞூறு கோ
லும், தென்புறம் நாலாயிரத்தைஞ்ஞூறு கோ
லும், கீழ்ப்புறம்நாலாயிரத்தைஞ்ஞூறு கோலும்,
௰௭ மேற்புறம் நாலாயிரத்தைஞ்ஞூறு கோலும்,—நக
ரத்தின் வெளிப்புறம் வடக்கே இருநூற்றைம்ப
து கோலும், தெற்கே இருநூற்றைம்பது கோ
லும், கிழக்கே இருநூற்றைம்பது கோலும்,
மேற்கே இருநூற்றைம்பது கோலுமாகவிருக்
௰௮ கும்.—ஒப்பிக்கப்பட்ட பரிசுத்த பங்கினுடை
ய நீளத்தில் கிழக்கே பதிஞயிரங் கோலும்,
மேற்கே பதிஞயிரங் கோலுமாக இருக்கும்:
அது ஒப்பிக்கப்பட்ட பரிசுத்தபூமிக்கெதிராயி
ருக்கவேண்டும்; அதில் விளையும்பொருள் நகரத்
திற்குப் பணிவிடைசெய்யுஞ் சனங்களின் ஆகா
௰௯ ரமாயிருக்கும்.—இஸரவேலின்சகல கோத்திரங்
களிலும் சிலர் நகரத்துக்காகப் பணிவிடைசெய்
௨௰ வார்கள்.—ஒப்பிக்கப்படும் பூமிமுழுவதும் இரு
பத்தையாயிரங் கோல் நீளமும், இருபத்தையா
யிரங் கோல் அகலமுமாயிருக்கவேண்டும்:
நகரத்தின் சுதந்தரத்தோடே நீங்கள் ஒப்பிக்கும்
பரிசுத்தமுள்ள பூமி சதுரமாயிருக்கவேண்டும்.

௨௧ பரிசுத்தமாக ஒப்பிக்கப்பட்ட பூமிக்கும், ந
கரத்தின் சுதந்தரத்துக்கும் இருபுறத்திலும் மீந்த
பூமி முழுவதையும் அதிபதி சுதந்தரிப்பான்,
இராசாவின் பங்குகளுக்கெதிராய் ஒப்பிக்கப்
பட்ட இருபத்தையாயிரங் கோல் பூமியினின்
று கீழெல்லைவரைக்கும், ஒப்பிக்கப்பட்ட இரு
பத்தையாயிரங் கோல் பூமியின் மேற்றிசையி
னின்று மேற்கெல்லைவரைக்கும் உள்ளவைகளை
எல்லாம் இராசாசுதந்தரிப்பான்: அது ஒப்பிக்கப்
பட்ட பரிசுத்தபூமி; பரிசுத்த ஸ்தானம் அதின்
௨௨ மத்தியில் நிற்கும்.—இவ்விதமாய் மத்தியிலுள்ள
லேவியரின் சுதந்தரத்துக்கும், நகரத்தின் சுதந்த
ரத்துக்கும் புறம்பே அதிபதியின் சுதந்தரமிருக்
கும், யூதாவும் பேன்யாமீனுமானவர்களுடைய
எல்லையின்மத்தியில் அதிபதியின்பங்கிருக்கும்.-
மீந்திருக்கிற கோத்திரங்களில் கீழ்த்திசைதொ ௨௩
டங்கி மேற்றிசைவரைக்கும் பேன்யாமீனுக்
கும்,—பேன்யாமீனின் எல்லை அருகே கீழ்த்தி ௨௪
சைதொடங்கி மேற்றிசைவரைக்கும் ஷிமியோ
னுக்கும்,—ஷிமியோனின் எல்லை அருகே கீழ்த் ௨௫
திசைதொடங்கி மேற்றிசைவரைக்கும் ஈஷகா
ருக்கும்,—ஈஷகாரின் எல்லை அருகே கீழ்த்தி ௨௬
சைதொடங்கி மேற்றிசைவரைக்கும் செபுலோ
னுக்கும்,—செபுலோனின் எல்லை அருகே கீழ்த் ௨௭
திசைதொடங்கி மேற்றிசைவரைக்குங் காத்துக்
கும் ஒவ்வொரு பங்குகிடைக்கும்.-காத்தின் ௨௮
எல்லை அருகே தென்றிசையில் தாமார்முதல் கா
தேஷிலுள்ள விவாத சலபரியந்தமும், நதியின்
வழியாய்மகாசமுத்திரபரியந்தமும்தெற்கெல்லை
இருக்கும்.—சுதந்தரிக்கும்பொருட்டு நீங்கள் இ ௨௯
ஸரவேல்கோத்திரங்களுக்குச்சீட்டுப்போட்டுப்
பங்கிடுந்தேசம் இதுவே, அவரவர்களுடைய
பங்கு இதுவேயென்று ஆண்டவராகியயெ
கோவாசொல்லுகிறார்.

நகரத்தினின்று புறப்படும் வழிகளிவைகள்; ௩௰
வடபுறத்தில், நாலாயிரத்தைஞ்ஞூறு கோல்.—
நகரத்தின்வாசல்களுக்கு இஸரவேல் கோத்திரங் ௩௧
களுடையநாமங்களின்படி பெயரிடப்படும்:
ரூபேனுக்கு ஒருவாசல்; யூதாவுக்கு ஒருவாசல்;
லேவிக்கு ஒருவாசல்; இம்மூன்று வாசல்களும்
வடபுறத்திலிருக்கும்.—கிழக்குப்புறத்தில், நா ௩௨
லாயிரத்தைஞ்ஞூறு கோல்,யோசேப்புக்குஒரு
வாசலும், பேனயாமீனுக்கு ஒருவாசலும், தா
ணுக்கு ஒருவாசலுமாக மூன்றுவாசல்களிருப்
பதாக.—தென்புறத்தில், நாலாயிரத்தைஞ்ஞூறு ௩௩
கோல்,மூன்றுவாசல்களிருக்கும்; ஷிமியோ
னுக்குஒருவாசலும், ஈஷகாருக்கு ஒருவாசலும்,
செபுலோனுக்குஒருவாசலும்.-மேற்புறத்தில்,நா ௩௪
லாயிரத்தைஞ்ஞூறு கோல், மூன்றுவாசல்களி
ருக்கும்; காத்துக்கு ஒருவாசலும், ஆஷேருக்
கு ஒருவாசலும், நப்தாலிக்கு ஒருவாசலும்.-சுற் ௩௫
றிலும் அதினளவு பதினெண்ணாயிரங்கோல்,
அந்நாள்முதல் அந்தநகரம் யெகோவா அங்
கேயிருக்கிறாரென்றருத்தங்கொள்ளும் யெ
கோவாஷம்மாவென்னும்பெயர்பெறும்.

(௰௪) யாத்.௨௨.௨௯. லேவி.௨௭.௰,௨௮,௩௩. (௰௫) அதி.௪௫.௬. அதி.௪௨.௨௰. (௰௯) அதி.௪௫.௬.(௨௧)அதி.௪௫.௭.
(௨௮) அதி.௪௭.௰௯.(௨௯)அதி.௪௭.௰௪.௨௧,௨௨. (௩௧) வெளி.௨௧.௰௨,. (௩௫) எரே.௩௩.௰௬. யாத்.௰௭.௰௫. நியா.
௬.௨௪. எரே.௩.௰௭. யோவே.௩.௨௧. சக.௨.௰. வெளி.௨௨.௩.

# தானியேலின்புத்தகம்.

## க. அதிகாரம்.

*க. யோயாகீம்சிறைபிடிக்கப்படல்: ங. தானியே லும் அவனுடைய மூன்று கூட்டாளிகளுமாகி ய இவர்களுடையவிசேஷத்தைத்தெரிவித்தல்: அ. அவர்களுக்குஉணவுப்பொருளைக்குறித்தல்: யஎ. அவர்களுடைய ஞானத்தின் மேன்மை யைக்கூறல்.*

யூதாவின் இராசாவாகிய யோயாகீம் அரசாண்
டமூன்றும்வருஷத்தில், பாபேலின் இராசாவா
கிய நெபுகத்நெத்சர் யெருஷலேமுக்குவந்து அ
உ தைமுற்றிக்கைசெய்தான்.—ஆண்டவர் யூதா
தேசத்து இராசாவாகிய யோயாகீமைத்தேவால
யத்தின் பாத்திரங்களில் சிலவற்றுடன் அவன்
கையில் ஒப்பிக்க, அவன் அந்தப்பாத்திரங்களை
ஷினியார் தேசத்திலுள்ள தன் தேவனுடைய ஆ
லயத்திலேகொண்டுபோய், தன் தேவனுடைய
ஆலயத்தின் பண்டசாலையில்வைத்தான்.
ங பின்பு இஸரவேல்வமிசத்தாராகிய இராசகு
லத்திலும், பிரபுகளின் குலத்திலும் நிர்த்தோஷ
மும், சௌந்தரியமுமுள்ளவர்களும், சகலவித்
தையிலும் நிபுணரும், புத்திதெளிந்தவர்களும்,
கல்விதேர்ந்தவர்களும், இராசாவின் அரமனையில்
ச நிற்கத்தக்கவர்களும்,—கல்தேயரின் வித்தையை
யும், பாஷையையும் கற்றுக்கொள்ளயோக்கியரு
மாகிய சில வாலிபரைக்கொண்டுவரும்படி இரா
சா தன் அண்ணகர்களின் அதிபதியாகிய அஷ்
ரு பேனசுக்குக் கட்டளையிட்டான்.—இராசா தன்
னுடைய உணவுப்பொருளிலும், குடிக்குந் தி
ராட்சரசத்திலும்உபயோகமாகஒருபங்கைத்தின
மும் அவர்களுக்கேற்படுத்தி, அவர்களைமூன்றுவ
ருஷம்போஷித்து, அதின்முடிவில் இராசாவிடத்
தில் நிற்கும்படிசெய்யக் கட்டளையிட்டான்.—
சு அவர்களுக்குள்யூதாவமிசத்தாராகியதானியேல்,
அனனிய, மீஷாயேல், அசரியாவென்னும் இவர்
எ களுமிருந்தார்கள்.—பின்பு அண்ணகர்களுக்கு
அதிபதி தானியேலுக்குப் பேல்திஷாத்சரென்
றும், அனனியவுக்கு ஷாத்ராக்கென்றும், மீஷா
யேலுக்கு மேஷக்கென்றும், அசரியாவுக்கு அ
பேத்நிகோவென்றும் பெயரிட்டான்.
அ தானியேலோ, இராசபோசனத்தின் பங்கினா
லும், அவனுடைய திராட்சரச பானத்தினாலும்
தன்னை அசுசிப்படுத்தலாகாதென்று தன்மனதி
லே தீர்மானம்பண்ணிக்கொண்டு, தன்னை அசு
சிப்படுத்தாதபடி அண்ணகர்களுக்கு அதிபதியி
கூ டத்தில்வேண்டிக்கொண்டான்.-தேவன் அண்
ணகர்களுக்கு அதிபதியிடத்தில் தானியேலுக்
குத்தயையும் அன்புங்கிடைக்கும்படிசெய்தார்.—
அதினால் அவன் தானியேலைநோக்கி, உங்களுக் ய
குப்போசனபானத்தை நியமித்த இராசாவாகிய
என் ஆண்டவருக்கு நான் அஞ்சுகிறேன்: அவர்
உங்கள் பிராயமுள்ளவாலிபரின் முகங்களிலும்
உங்கள்முகங்கள் வாடிப்போவதைக் காணவே
ண்டியதென்ன; அப்படியானால் இராசா என்
னைச் சிரச்சேதம்பண்ணுகிறதற்கு நீங்கள் ஏது
வாயிருக்கக்கூடுமென்றான்.—அப்பொழுது தா யக
னியேல், அனனிய, மீஷாயேல், அசரியாவென்
பவர்கள்மேல் அண்ணகர்களுக்கு அதிபதி ஏற்
படுத்திய மெல்சாரைநோக்கி, தானியேல்,—உமத யஉ
டியாரைப்பத்துநாள்வரைக்கும் நீர் பரீட்சிக்கும்
படி உம்மைவேண்டுகிறேன்; எங்களுக்குப் பு
சிக்கப்பருப்புமுதலானவைகளையும், குடிக்கச்ச
லத்தையுந்தரக்கடவர்கள்.—பின்பு எங்கள்முகங் யங
களையும், இராசபோசனத்தின்பங்கைப்புசிக்கும்
வாலிபருடைய முகங்களையும் உமக்குமுன்பா
கப்பார்க்கட்டும்: பின்புநீர்கண்டு நிதானித்தபடி
உமதடியாரை நடத்துமென்றான்.—அவன் இக் யச
காரியத்தில் அவர்களுக்குச்செவிகொடுத்து, பத்
துநாள் அவர்களைப் பரீட்சித்தான்.—பத்துநாள் யரு
சென்றபின்பு இராசபோசனத்தைப்புசித்தசமஸ்
தவாலிபருடையமுகங்களிலும் இவர்களுடைய
முகங்கள் சௌந்தரியமும், மாமிசபுஷ்டியுமுள்
ளவைகளாகக் காணப்பட்டன.—இப்படியே யசு
மெல்சார் அவர்களுக்குக்கொடுக்கக் குறித்தபோ
சனத்தையும், குடிக்கிறதற்குத் திராட்சரசத்தை
யுங் கொடாமல்விட்டு, பருப்புமுதலியவைக
ளைக்கொடுத்தான்.
இந்நான்குவாலிபருக்குந் தேவன் சகலவித் யஎ
தைகளிலும், ஞானத்திலும் அறிவையுஞ்சாமர்த்
தியத்தையுங்கொடுத்தார்: தானியேலுக்கு எந்தத்
தரிசனங்களையுஞ் சொப்பனங்களையும் அறியத்
தக்கவரத்தையும்அருளினார்.-அவர்களைக்கொண் யஅ
டுவரும்படி இராசா ஏற்படுத்தியநாள்கள் நிறை
வேறினபொழுது அண்ணகர்களுக்கு அதிபதி அ
வர்களை நெபுகத்நெத்சரின் சமுகத்தில் கொண்
டுபோய்விட்டான்.—அப்பொழுது இராசா அவர் யகூ
களுடன்சம்பாஷித்தான்; அவர்களுக்குள்தானி
யேல், அனனிய, மீஷாயேல், அசரியாவென்
னுமிவர்களைப்போல வேறொருவருங் காணப்ப
டவில்லை: ஆதலால் இவர்கள் இராசாவின்சமுகத்
தில் நின்றார்கள்.—இராசாஞானத்துக்கும்புத்திக் உய
குமேற்ற எந்தக்காரியத்தைக்குறித்து இவர்களி
டத்திற்கேட்பானோ, அதிலேதன்னுடையஇராச்

(க. அதி. க.) உ. இரா. உச. க. உ. நாளா. ஙசு. சு. (உ) எரே. உஎ. யகூ, உய. ஆதி. ய. ய. ஏசா. யக. யக. சக. ரு. யக. உ. நாளா. ஙசு. எ. (ங) உ. இரா. உய. யஎ, யஅ. ஏசா. ஙக. எ. (ச) அப். எ. உஉ. (ரு) வச. யகூ. ஆதி. சக. சசு. க. இரா. ய. அ. (எ) ஆதி. சக. சரு. உ. இரா. உச. யஎ. அதி. ரு. யஉ. (அ) உபா. ஙஉ. ஙஎ. எசேக். ச. யங. ஓசி. கூ. ங. (கூ) ஆதி. ஙக. உக. நீதி. யசு. எ. (யஎ) க. இரா. ங. யஉ. யாக். க. ரு, யஎ. அப். எ. உஉ. எண். யஉ. சு. உ. நாளா. உசு. ரு. (யகூ) ஆதி. சக. சசு. (உய) க. இரா. ய. க.

சியத்திலெங்குமுள்ள சமஸ்த மாயாவித்தைக்
காரர்களிலுஞ் சோதிடரிலும் இவர்களைப் பத்து
மடங்கு அதிக நிபுணராயிருக்கக்கண்டான்.—
௨௧ கோரெஷ் இராசா ராச்சியபரிபாலனம்பண்ணி
னமுதலாம் வருஷம்வரைக்குந்தானியேல் அங்
கே தங்கினான்.

## ௨. அதிகாரம்.

௧. நெபுகத்நெத்சர்சொப்பனங்காணல்: ௰௬. தானி
யேல் இராசாவினிடத்தில்வேண்டல்: ௰௯. தா
னியேல் தேவனைத்துதித்தல்: ௨௪. தானியேல்
சொப்பனத்தைத்தெரிவித்தல்: ௩௬. அதின்தாற்
பரியத்தைத் தெரிவித்தல்: ௪௬. இராசாவிடத்
தில்சம்பிரமத்தையுந்தண்ணளியையும்பெறல்.

நெபுகத்நெத்சர் அரசாண்ட இரண்டாம்வரு
ஷத்தில், நெபுகத்நெத்சர் சொப்பனங்களைக்கண்
டு, அவைகளினால் மனங்கலங்கி, நித்திரைக
௨ லைந்து,—இராசா அந்தச்சொப்பனங்களைத்தனக்
குத்தெரிவிக்கும்பொருட்டு மாயாவித்தைக்கார
ரையும், சோதிடரையும், சகுனிகளையும், கல்தேய
ரையும் அழைக்கும்படி கட்டளையிட்டான். அ
வர்கள்வந்து இராசாவின் சமுகத்தில் நின்றார்
௩ கள்.—அப்பொழுது இராசா அவர்களைநோக்கி,
நான் ஒரு சொப்பனத்தைக்கண்டேன், அதை
அறியவேண்டுமென்று என்மனங்கலங்குகின்ற
௪ தென்றான்.—அப்பொழுதுகல்தேயர் இராசாவை
நோக்கி, இராசாவே, நீர் என்றும்வாழ்க: சொப்
பனத்தைஉமதடியாருக்குத்தெரிவியும், அப்பொ
ழுது நாங்கள் அதின் தாற்பரியத்தைச்சொல்லு
வோமென்று அராமியபாஷையிலேசொல்ல,—
௫ இராசா கல்தேயரைநோக்கி, பிரதியுத்தரமாக,
என்னாலாகுங்காரியமிது: நீங்கள்சொப்பனத்தை
யும், அதின் தாற்பரியத்தையும் எனக்கறிவியாதி
ருந்தால்துண்டிக்கப்படுவீர்கள், உங்கள்வீடுகள்
௬ எருக்களங்களாக்கப்படும்.—சொப்பனத்தையும்,
அதின் தாற்பரியத்தையும் நீங்கள் தெரிவித்தா
லோ, என்னிடத்தில் நன்கொடைகளையும், உப
காரங்களையும், மகாசம்பிரமத்தையும் பெறுவீர்
கள்: ஆதலால் சொப்பனத்தையும் அதின்தாற்ப
ரியத்தையும் எனக்குத்தெரிவியுங்களென்றான்.—
௭ பின்னும் அவர்கள், இராசா தமதடியாருக்குச்
சொப்பனத்தைச்சொல்லக்கடவர், அப்பொழு
து நாங்கள் அதின்தாற்பரியத்தைத்தெரிவிப்போ
௮ மென்று உத்தரஞ்சொல்ல,—இராசா உத்தரமாக,
என்னிலிருந்து வாக்குப்பிறந்ததென்று நீங்கள்
கண்டு, காலதாமதம்பண்ணப்பார்க்கிறீர்களென்
௯ றுநிச்சயமாய் எனக்குவிளங்குகின்றது.—காலம்
மாறுமென்றெண்ணி, பொய்களையும், தீமொழிக
ளையும் எனக்குமுன் சொல்லும்படி கருதுகிறீர்
கள்: நீங்கள் சொப்பனத்தைஎனக்குத்தெரிவியா
திருந்தால்இந்தஒரேதீர்ப்புஉங்கள்மேல் வரும்:
ஆதலால் சொப்பனத்தைத்தெரிவியுங்கள், அப்
பொழுது நீங்கள் அதின்தாற்பரியத்தையுஞ்சொ
ல்லக்கூடுமென்று எனக்கு விளங்குமென்றான்.
கல்தேயர் இராசாவைநோக்கி, இராசாகேட்கி ௰
றதைத்தெரிவிக்கத்தக்கவர் ஒருவரும் பூமியிலில்
லை: ஆதலால் எந்தஇராசாவாகிலும், எந்தப்பிரபு
வாகிலும், எந்தஅதிபதியாகிலும், மாயாவித்தைக்
காரனிடத்திலாவது, சோதிடரிடத்திலாவது, கல்
தேயனிடத்திலாவது இப்படிப்பட்ட காரியங்க
ளைக்கேட்பதில்லையே.—இராசா கேட்கிறகாரி ௰௧
யம் அரிது, மாமிசத்துடனே வாசம்பண்ணாத
தேவர்களேயன்றி, அதை இராசாவின்சமுகத்தில்
தெரிவிக்கவல்லவர் ஒருவருமில்லையென்று உத்
தரஞ்சொன்னார்கள்.—இதைக்கேட்டு இராசா ௰௨
கோபித்து, மிகவுங்குரோதங்கொண்டு, பாபே
லிலுள்ள சகல வித்துவான்களையுங்கொலைசெய்
யும்படி கட்டளையிட்டான்.—வித்துவான்களைக் ௰௩
கொலைசெய்கிறதற்குக் கட்டளை பிரசித்தமான
பொழுது, தானியேலையும், அவனுடைய கூட்
டாளிகளையுங்கொலைசெய்யத்தேடினார்கள்.
பின்பு தானியேல், பாபேலிலுள்ளவித்துவான் ௰௪
களைக்கொலைசெய்யும்படி புறப்பட்ட இராசா
வின் காவற்சேனாபதியாகிய அரியோகுடன் ஆ
லோசனைக்கும் ஞானத்துக்குமேற்கப்பேசி,—இ ௰௫
ராசாவினால் இந்தக்கட்டளை இத்தனை சீக்கிர
மாய் வந்ததென்னவென்று இராசாவின் சேனா
பதியாகிய அரியோகிடத்தில் வினாவ, அரியோ
கு தானியேலுக்குக்காரியத்தை விவரித்தான்.—
அப்பொழுது தானியேல் இராசாவிடத்தில்போ ௰௬
ய், வேண்டுதல்செய்து, எனக்கு அவகாசந்தந்
தால் தாற்பரியத்தை இராசாவுக்குத்தெரிவிப்பே
னென்றான்.—பின்பு தானியேல் தன் வீட்டுக்குப் ௰௭
போய், பாபேலிலுள்ள மற்ற வித்துவான்களு
டன் தானியேலாகிய தானும், தன் கூட்டாளிக
ளும் நாசமடையாதபடி இந்த மறைபொருளைக்
குறித்துப்பரமண்டலத்திலுள்ள தேவனைநோக்
கி அருளைவேண்டிக்கொள்ள,—தன் கூட்டாளி ௰௮
களாகிய அனனிய, மீஷாயேல், அசரியா என்
பவர்களுக்குக்காரியத்தைத் தெரிவித்தான்.
பின்பு இராத்திரிகாலத்தில் ஒரு தரிசனத்தில் ௰௯
அந்த மறைபொருள் தானியேலுக்கு வெளிப்ப
டுத்தப்பட்டது. அப்பொழுது தானியேல், பர
மண்டலத்தின் தேவனைத்துதித்து,—தேவனு ௨௰
டைய நாமஞ்சதாகாலமும் வாழ்த்தப்படக்கட
வது: ஞானமும் வல்லமையும் அவருக்கே உரி
யவைகள்.—அவர் காலங்களையுஞ் சமயங்களை ௨௧
யும் மாற்றுகிறார்: அவர் இராசாக்களைத்தள்ளுகி
றார், இராசாக்களை ஏற்படுத்துகிறார்: அவர் ஞா
னிகளுக்கு ஞானத்தையும், புத்திமான்களுக்கு
விவேகத்தையுங்கொடுக்கிறார்.—ஆழமான மறை ௨௨

(௨௧) அதி.௬.௨௮.—(௨. அதி. ௧.) ஆதி.௪௧.௮. எஸ்த.௬.௧.(௨)ஆதி.௪௧.௮. யாத்.௭.௰௧. (௪) ௧.இரா.௧.௩௧. (௫) ௨.இரா.௰.௨௭. எஸ்ரு.௬.௰௧. (௬) அதி.௫.௰௬,௰௭. (௮) எபே.௫.௰௬. (௯) எஸ்த.௪.௰௧. (௰௧) அதி.௫.௰௧. (௰௪) ஆதி.௩௭.௩௬. (௰௭) மத்.௰௮.௰௯. (௰௯) எண்.௰௨.௬. யோபு.௩௩.௰௪,௰௭.(௨௰)எரே.௩௨.௰௯. (௨௧) ௧.நாளா.௨௯. ௨௯. எஸ்த.௧.௰௪. யோபு.௰௨.௰௮. சங்.௭௫.௬,௭. எரே.௨௭.௫. யாக்.௧.௫. (௨௨) யோபு.௰௨.௨௨. சங்.௨௫.௰௪. சங்.௱௩௯.௰௧,௰௨. எபி.௪.௰௩. யாக்.௧.௰௭.

பொருள்களை வெளிப்படுத்துகிறவர் அவரே:
அந்தகாரத்திலுள்ளது அவருக்குத்தெரியும், ஒளி
உ௩ அவரிடத்தில் தங்குகின்றது.-என் பிதாக்களின்
தேவனே, நீர் எனக்கு ஞானத்தையும் வல்ல
மையையுந்தந்து, நாங்கள் உம்மிடத்தில் வேண்
டினதை இப்பொழுது எனக்குத்தெரிவித்து, இ
ராசாவுடைய சங்கதியை எங்களுக்கு அறியப்
படுத்தியிருக்கிறபடியினால், நான் உமக்குவாழ்த்
துதல்சொல்லி உம்மைப்புகழுகிறேனென்றான்.
உ௪ பின்பு தானியேல் பாபேலிலுள்ள வித்துவான்
களை நாசப்படுத்தும்படி இராசா ஏற்படுத்திய அ
ரியோகினிடத்தில்போய், அவனைநோக்கி, பா
பேலின் வித்துவான்களை நாசப்படுத்தாதிரும்:
இராசாவினிடத்தில் என்னை அழைத்துக்கொண்
டுபோம், இராசாவுக்குத் தாற்பரியத்தை நான்
உ௫ வெளிப்படுத்துவேனென்றான்.—அப்பொழுது
அரியோகு விரைந்து தானியேலை இராசாவிடத்
தில் அழைத்துப்போய், அவனைநோக்கி, சிறைப்
பட்டுவந்த யூதேயதேசத்தாரில் ஒருவனைக்கண்
டேன், அவன் இராசாவுக்குத் தாற்பரியத்தைத்
உ௬ தெரிவிப்பானென்றான்.-இராசா பேல்தெஷாத்ச
ரென்னும் நாமமுள்ள தானியேலைநோக்கி, நான்
கண்ட சொப்பனத்தையும், அதின் தாற்பரியத்
தையும் எனக்குத்தெரிவிக்க உன்னாலே கூடு
உ௭ மாவென்று கேட்க,—தானியேல் இராசாவின்
சமுகத்தில் உத்தரமாக, இராசாகேட்கிற மறை
பொருளை இராசாவுக்கு எந்த வித்துவான்களா
லும், சோதிடராலும், மாயாவித்தைக்காரர்களா
உ௮ லும், குறிகாரராலுந்தெரிவிக்கக்கூடாதே.—ஆ
னாலும் மறைபொருள்களை வெளிப்படுத்துந்தே
வனொருவர் பரமண்டலத்திலிருக்கிறார், பின்
வருங்காலங்களிலே சம்பவிப்பதை இராசாவா
கிய நெபுகத்நெத்சருக்குத் தெரிவித்திருக்கிறார்.
உம்முடைய சொப்பனமும் உமது படுக்கை
யின்மேல் உம்முடைய தலையிலேதோன்றிய தரி
உ௯ சனங்களுமிவைகளே.—இராசாவே, நீர் படுத்
துக்கொண்டிருந்தபொழுது இனிமேல் நடப்ப
வைகள் உம்முடைய சிந்தையிலே தோன்றின:
மறைபொருள்களைத்தெரிவிக்கிறவர் நடப்பதின
௩௰ னதென்று உமக்குத்தெரிவித்திருக்கிறார்.—தாற்
பரியம் இராசாவுக்குத்தெரிவிக்கப்படவும், உம்
முடையநினைவுகளை நீர் அறியவும் வேண்டியிரு
ப்பதினாலேயன்றி, சீவனுள்ளோரெல்லாரிலும்
நான் அதிக ஞானம்பெற்றிருப்பதினால் இந்த ம
றைபொருள் எனக்குத்தெரிவிக்கப்பட்டதல்ல.
௩௧ இராசனே, நீர் பார்த்திருக்கையில், ஒருபெரிய
உருவத்தைக்கண்டீர்: அந்தப்பெரிய உருவம்மிக
வும் பிரகாசமாய் உமக்கெதிரே நின்றது; அதின்
௩௨ சாயல் பயங்கரமுள்ளது.-அந்த உருவத்தின்தலை
பசும்பொன்னாகவும், மார்பும் புயங்களும்வெள்
ளியாகவும், அதின்வயிறும்இடுப்பும் பித்தளையாக
வும்,—அதின் தொடைகள்இரும்பாகவும், அதின் ௩௩
கால்களில்பாதி இரும்பாகவும்பாதிகளிமண்ணாக
வுமிருந்தன.-பின்பு நீர்அதைப்பார்க்கையில் கை ௩௪
களால் பெயர்க்கப்படாத ஒருகல், அந்த உருவத்
தின் இரும்பாகவுங் களிமண்ணாகவுமிருந்தகால்
களிலேமோதி, அவைகளை நொறுக்கிற்று.—அப் ௩௫
பொழுது அந்த இரும்பும், களிமண்ணும், பித்த
ளையும், வெள்ளியும், பொன்னும் ஏகமாய்நொ
றுங்குண்டு, கோடைகாலத்தில் போரடிக்கிற க
ளத்திலிருக்கிற பதரைப்போலாயின; அவை
களுக்கு ஒரு இடமுங்கிடையாதபடி காற்று அ
வைகளைஅடித்துக்கொண்டுபோயிற்று: உருவத்
தைமோதினகல்லோ பெருமலையாகிப்பூமிமுழு
வதையும் நிரப்பிற்று.
சொப்பனம்இது; அதின் தாற்பரியத்தையும் ௩௬
இராசாவின் சமுகத்திலேதெரிவிப்போம்.—இரா ௩௭
சனே, நீர் இராசாதிஇராசா: பரமண்டலத்தின்
தேவன் உமக்கு இராச்சியத்தையும், பராக்கிர
மத்தையும், வல்லமையையும், மகிமையையும் அ
ருளினார்.—மனுபுத்திரரும், காட்டுமிருகங்களும், ௩௮
ஆகாயத்துப்பறவைகளுந் தங்கும் எல்லா இடங்
களையும் உமதுகையில் ஒப்பித்து, நீர் அவைக
ளெல்லாவற்றையும் ஆளும்படிசெய்தார். அந்
தப் பொன்தலைநீரே.—உமக்குப்பின் உம்முடை ௩௯
யதிலுஞ் சிறிதான ஒரு இராச்சியந்தோன்றும்,
பின்பு பூமிமுழுவதிலும் கர்த்தத்துவஞ்செய்யும்
பித்தளையான மூன்றாம் இராச்சியம் ஒன்றெழும்
பும்.—இரும்பு எந்தவஸ்துவையும் நொறுக் ௪௰
கிநசுக்கும், அதுபோலச் சகல வஸ்துக்களையும்
நொறுக்கும்படி இரும்புபோன்ற அந்த இராச்சி
யம்உரங்கொண்டு எல்லாவற்றையுங் கண்ட
துண்டமாக்கிநாசப்படுத்தும்.—கால்களும், கால் ௪௧
விரல்களும் பாதி குயவனுடைய களிமண்ணும்,
பாதி இரும்புமாக இருக்கக்கண்டீரே, அந்த இ
ராச்சியம்பிரிவுபட்டுப்போம்; ஆனாலும்களிமண்
ணோடே இரும்பு கலந்திருந்ததென்று நீர்கண்
டபடியே, இரும்பின் வலிமை அதிலிருக்கும்.—
கால்களின் விரல்களிற் பாதி இரும்பும், பாதிகளி ௪௨
மண்ணுமாயிருந்ததற்கேற்க, அந்த இராச்
சியத்தில் ஒருபங்குவலிமையுள்ளது, ஒருபங்குவ
லிமையற்றது.—நீர் இரும்பைக்களிமண்ணோடே ௪௩
கலந்திருக்கக்கண்டீர், அந்தஇராச்சியத்தார்மற்ற
மனுஷரோடேகலந்திருப்பார்கள்: ஆனாலுங்களி
மண்ணோடே இரும்பு ஒட்டாததுபோல அவர்
கள் ஒருவரோடொருவர் ஒட்டாதிருப்பார்கள்.-
அந்தஇராசாக்களின்அதிகாரகாலத்திலேபரமண் ௪௪
டலத்தின் தேவன் என்றும் அழியாத ஒருஇராச்
சியத்தைஸ்தாபிப்பார்: அந்தஇராச்சியம் மற்றச்
சாதியாரின்கையில் விடப்படாது.—மலையினின் ௪௫
று, கைகளால்பெயர்க்கப்படாத கல், இரும்பை
யும், பித்தளையையும், களிமண்ணையும், வெள்

(உ௮) ஆதி.௪௰.௮. ஆமோ.௪.௰௩. ஆதி.௪௧.௧. (௩௰) ஆதி.௪௧.௰௬. அப்.௩.௰௨. (௩௪) ௧௧.௪.௬. உ.கொரி.௫.௧. எபி.௧.௨௪. (௩௫) சங்.௧.௪. ஓசி.௰௩.௩. சங்.௩௭.௰,௩௬. ஏசா.உ.உ,௩. சங்.௮௰.௩.(௩௭)எஸ்ற.௭.௰௨. ஏரா.௭௭.௫. எரே.உ௭.௬,௭. எசேக்.உ௬.௭. ஓசி.௮.௰. எஸ்ற.௧.உ.(௩௮)எரே.உ௭.௬. (௩௯) அதி.௭.௰௪,உ௭. மீகா.௪.௭. லூக். ௧.௩௨,௩௩. (௪௫) சங்.உ.௯. ஏசா.௬௰.௰௨. ௧.கொரி.௰௫.உ௪. ஏசா.உ௮.௰௬.

ளியையும், பொன்னையும் நொறுக்கினதை நீர் கண்டபிரகாரம், இது அந்த இராச்சியங்களெல்லாவற்றையும் நொறுக்கி நாசப்படுத்தி, தானே என்றென்றைக்கும்நிற்கும்; இனிமேல் நடப்பதின்னதென்று மகா தேவன் இராசாவுக்குஅறிவித்தார்: சொப்பனம் நிச்சயமாயிற்று, அதின் தாற்பரியமுஞ்சத்தியமென்றான்.

௪௬ அப்பொழுது இராசாவாகிய நெபுகத்நெத்சர் முகங்குப்புறவிழுந்து, தானியேலைவணங்கி, அவனுக்குக் காணிக்கைசெலுத்தவுஞ் சுகந்ததூபத்
௪௭ தைக்காட்டவுங் கட்டளையிட்டான்.—இராசா தானியேலைநோக்கி, நீ இந்த மறைபொருளைத் தெரிவித்தாய், ஆதலால் மெய்யாய் உங்கள் தேவன் தேவர்களுக்குக்கடவுளுமாய், இராசாக்களுக்குக் கர்த்தாவுமாய், மறைபொருள்களை வெ
௪௮ ளிப்படுத்துகிறவருமாயிருக்கிறாரென்றான்.-அப்பொழுது இராசா தானியேலைப்பெரியபிரபுவாக்கி,அநேகம் பெரியகாணிக்கைகளை அவனுக்குக் கொடுத்து, அவனைப்பாபேல்தேசமுழுவதற்கும் அதிகாரியாகவும், பாபேலிலுள்ள ஞானிகளின் சகல அதிபதிகளுக்கும் பிரதான அதிபதியாக
௪௯ வும் ஏற்படுத்தினான்.—பின்பு தானியேல் இராசாவிடத்தில்வேண்ட, அவன் ஷாத்ராக்கையும், மேஷக்கையும்,அபேத்நிகோவையும்பாபேல்தேசத்தின்காரியங்களை விசாரிக்கும்படி ஏற்படுத்தினான்: தானியேலோஇராசவாசலிலிருந்தான்.

## ௩. அதிகாரம்.

௧. நெபுகத்நெத்சர்செய்த தங்கப்பிரதிமையைஸ்தாபித்தல்: ௮. ஷாத்ராக்கும் மேஷக்கும் அபேத்நிகோவும்பூசைசெய்யாமல்விடல்: ௰௩. அவர்கள் தண்டனைபெறல்: ௰௯. அவர்கள் அக்கினிச்சூளையில் தள்ளப்படல்: ௨௪. அவர்கள்இரட்சிப்புப்பெறல்: ௨௮. இராசாபிரமிப்படைந்துகட்டளையிடல்.

இராசாவாகிய நெபுகத்நெத்சர்அறுபதுமுழஉயரமும், ஆறுமுழ அகலமுமுள்ளதாகப்பொன்னினால்ஒரு உருவத்தையுண்டாக்கி, பாபேல்தேசத்தில்தூராவென்னுஞ் சமபூமியில்ஸ்தாபித்தான்.-
௨ பின்பு இராசாவாகிய நெபுகத்நெத்சர் ஸ்தாபித்த உருவத்தைப் பிரதிஷ்டைபண்ணும்பொருட்டு, பிரபுகளையும், அதிகாரிகளையும், அதிபதிகளையும், நியாயாதிபதிகளையும், பொக்கிஷகாரரையும், மந்திரிமாரையும், விசாரிப்புக்காரரையும், புறத்தேசாதிபதிகள் யாவரையுங் கூட்டிவரும்
௩ படிஆளனுப்பினான்.—அப்பொழுது இராசாவாகிய நெபுகத்நெத்சர் ஸ்தாபித்த உருவத்தைப்பிரதிஷ்டைபண்ணும்பொருட்டுப் பிரபுகளும், அதிகாரிகளும், அதிபதிகளும், நியாயாதிபதிகளும்,பொக்கிஷகாரரும்,மந்திரிமாரும்,விசாரிப்புக்காரரும், புறத்தேசாதிபதிகள் யாவரும் ஏகமாய்க்கூடினார்கள்; அவர்கள் நெபுகத்நெத்சர் ஸ்
௪ தாபித்த உருவத்தின்முன்பாகநிற்க,—கட்டியக்காரனொருவன் உரத்தசத்தமிட்டு, சனங்களே,பலசாதியாரே, நாநாபாஷைக்காரரே,—நீங்கள் ௫
காளம், நாயகசுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம், தம்புருமுதலான கீதவாத்தியங்களின்சத்தத்தைக்கேட்குஞ்சமயத்தில் தாழவிழுந்து, இராசாவாகியநெபுகத்நெத்சர் ஸ்தாபித்த பொன்விக்கிரகத்தை நமஸ்கரியுங்களென்று உங்களுக்குக்
கட்டளையிடப்பட்டது.—தாழவிழுந்து நமஸ்க ௬
ரியாதவனெவனோ, அவன் அந்தச்சமயத்தில் அக்கினி எரிகிற சூளையின் மத்தியில்தள்ளப்படு
வானென்றான்.—ஆதலால் சமஸ்த சனங்களும் ௭
காளம், நாயகசுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம் முதலான கீதவாத்தியங்களின் சத்தத்தைக் கேட்டமாத்திரத்தில் சமஸ்தசனங்களாகிய பலசாதியாரும், நாநா பாஷைக்காரரும் தாழவிழுந்து, இராசாவாகிய நெபுகத்நெத்சர் ஸ்தாபித்த பொன் விக்கிரகத்தை நமஸ்கரித்தார்கள்.

ஆதலால் அக்காலத்தில் கல்தேயரிற் சிலர் ச ௮
மீபித்துவந்து, யூதர்மேல் குற்றஞ் சாற்றினார்
கள்.-அவர்கள் இராசாவாகிய நெபுகத்நெத்சரை ௯
நோக்கி, இராசனே, என்றைக்கும் வாழ்க.—
காளம், நாயகசுரம், கின்னரம், வீணை, சுரமண் ௰
டலம், தம்புரு முதலான கீதவாத்தியங்களின் சத்தத்தைக் கேட்கும் யாவருந் தாழ விழுந்து பொன்விக்கிரகத்தை நமஸ்கரிக்கவேண்டுமென்
றும்,—தாழவிழுந்து நமஸ்கரியாதவனெவனோ, ௰௧
அவன் அக்கினி எரிகிறசூளையின்மத்தியில் தள்ளப்படவேண்டுமென்றும், இராசாவாகிய நீர் ஒ
ருகட்டளையிட்டீர்.-இராசனே, பாபேல்தேசத் ௰௨
துக்குவிசாரிப்புக்காரராக நீர் ஏற்படுத்தியஷாத்ராக், மேஷக், அபேத்நிகோவென்னும் யூதர்உம்மை மதியாமலும், உம்முடைய தேவர்களைச்சேவியாமலும், நீர் ஸ்தாபித்த பொன்விக்கிரகத்தை நமஸ்கரியாமலுமிருக்கிறார்களென்றார்கள்.

அதற்கு நெபுகத்நெத்சர் கோபங்கொண்டுஉக் ௰௩
கிரமுடையவனாகி, ஷாத்ராக்கையும், மேஷக்கையும், அபேத்நிகோவையுங் கொண்டுவரும்படி கட்டளையிட்டான். அவர்கள் அந்தமனுஷரை இராசாவினிடத்தில் கொண்டுவந்தபொழு
து,—நெபுகத்நெத்சர் அவர்களைநோக்கி, ஷா ௰௪
த்ராக், மேஷக், அபேத்நிகோவென்பவர்களே, என் தேவர்களைச்சேவிக்கமாட்டீர்களா; நான்ஸ்தாபித்த பொன்விக்கிரகத்தை நமஸ்கரிக்கமாட்
டீர்களா; இதுவா உங்கள் தீர்மானம்.—கே ௰௫
ளுங்கள், காளம், நாயகசுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம், தம்புருமுதலான கீதவாத்தியங்களின்சத்தத்தைக்கேட்டவுடனே நீங்கள் தாழவிழுந்து, நான் உண்டாக்கினவிக்கிரகத்தை நமஸ்கரிக்க இணங்கினால் நலம்: நமஸ்கரியாமலிருந்தாலோ அந்தச்சமயத்தில் அக்கினிஎரிகிறசூளையின்மத்தியில் தள்ளப்படுவீர்கள்; என்கையினின்று உங்களை விடுவிக்கவல்லதேவன் யாவ
னென்றுசொல்ல,-ஷாத்ராக்,மேஷக், அபேத்நி ௰௬
கோவென்பவர்கள்இராசாவுக்கு உத்தரமாக, நெ

(௪௬)அப்.௰.௨௫.எஸ்ரு.௯.௯.(௪௭)வச.௨௮.(௪௮)அதி.௪.௯.(௪௯)எஸ்த.௨.௰௯,௨௧.—(௩.அதி.௪.)அதி.௪.௧.(௬)எரே.௨.௯.௨௩.வெளி.௰௩.௰௫.(௰௨)அதி.௨.௪௯.(௰௪)யாத்.௨௧.௰௩.(௰௫)யாத்.௫.௨.௨.இரா.௰௮.௩௫.(௰௬)மத்.௰.௰௯.

புகத்நெச்சரே, இந்தக் காரியத்தைக்குறித்து உத்
௰௭ தரஞ்சொல்ல அவசியமில்லை.—எப்படியும்நாங்
கள்சேவித்துவருகிற எங்களுடைய தேவனே
அக்கினி எரிகிறசூளையினின்றும் எங்களைவிடு
விக்கவல்லவர்,இராசனே, உமதுகையினின்றும்
௰௮ அவர் எங்களை விடுவிப்பாரே.—எப்படியானா
லும் இராசாவே, நாங்கள் உம்முடைய தேவர்க
ளைச்சேவிக்கவும், நீர் ஸ்தாபித்த பொன்விக்கிர
கத்துக்குப் பூசைசெய்யவும் மாட்டோமென்ற
றிந்துகொள்ளுமென்றார்கள்.
௰௯ அப்பொழுதுநெபுகத்நெச்சர் உக்கிரம்நிறைந்
துபேசி, ஷாதிராக், மேஷக் அபேத்நிகோ என்
பவர்களுக்குவிரோதமாய் முகம்வேறுபட்டு, சா
தாரணமான அளவிலும் சூளை ஏழுமடங்கதிகமா
ன உஷ்டணங்கொள்ளப்பண்ணும்படிகட்டளை
௨௰ யிட்டான்.-ஷாதிராக்,மேஷக்,அபேத்நிகோஎன்
பவர்களை அக்கினி எரிகிறசூளையில் தள்ளும்படி
அவர்களைக் கட்டும்பொருட்டுத்தன்சேனையில்
பராக்கிரமவீரர்களுக்குக் கட்டளையிட்டான்.—
௨௧ அப்பொழுது அநதப்புருஷர்கள் தங்கள்போர்
வைகள், தங்கள்அங்கிகள், தங்கள்பாகைகள்மு
தலிய உடைகளோடே கட்டப்பட்டு, அக்கி
னியெரிகிற சூளையின்மத்தியில் தள்ளப்பட்டார்
௨௨ கள்.—இராசாவின் கட்டளை மகா உறுதியாயிருந்
ததினாலும், சூளை மிகவும் உஷ்டணமாயிருந்ததி
னாலும், அக்கினிச்சுவாலை ஷாதிராக், மேஷக்,
அபேத்நிகோ என்பவர்களைத் தூக்கிக்கொண்டு
௨௩ போன அந்தமனுஷரைக்கொன்றது.—ஷாதிராக்,
மேஷக், அபேத்நிகோவென்னும் அம்மூன்று பு
ருஷருங்கட்டுண்டவர்களாய், அக்கினி எரிகிற
௨௪ சுவாலையின்மத்தியில்விழுந்தார்கள்.-பின்பு இரா
சாவாகிய நெபுகத்நெச்சர் பிரமித்து, விரைந்தெ
ழுந்து, தன்மந்திரிமாரைநோக்கி, மூன்றுபுருஷ
ரையல்லவாகட்டி அக்கினிமத்தியில் எறிநதோ
மென்றுசொல்ல, அவர்கள் இராசாவுக்குத்தரமா
௨௫ க, ஆம், இராசனேயென்றார்கள்.—அவன், நாலு
பேர் விடுதலையாய் அக்கினிக்குள் உலாவுகிற
தைக் காண்கிறேன், அவர்களுக்கு ஒருசேதமு
மில்லை: நாலாம் ஆளின்சாயல் தேவபுத்திரனைப்
போலிருக்கின்றதென்றான்.
௨௬ அப்பொழுது நெபுகத்நெச்சர் எரிகிற அக்கி
னிச்சூளையின் வாசலிடத்தில்போய், சருவத்துக்
குமேலான தேவனுடைய தாசராகிய ஷாதி
ராக், மேஷக், அபேத்நிகோஎன்பவர்களே, நீங்
கள்புறப்பட்டுவாருங்களென்று கூப்பிட்டான்.
அப்பொழுது ஷாதிராக், மேஷக், அபேத்நிகோ
என்பவர்கள் அக்கினியினின்று புறப்பட்டுவந்
௨௭ தார்கள்.—பிரபுகளும், அதிகாரிகளும், அதிபதி
களும், இராசாவின் மந்திரிமாரும் ஏகமாய்க்கூ
டி, அந்தப்புருஷருடைய சரீரங்களில் அக்கினி
பற்றாமலும்,அவர்களுடையதலைமயிரில்ஒன்றுங்
கருகாமலும், அவர்கள் வஸ்திரங்கள்சேதப்படா
மலும், அக்கினியின்மணம்அவர்கள்சரீரங்களில்
பிடியாமலுமிருந்ததைக் கண்டார்கள்.—பின்பு ௨௮
நெபுகத்நெச்சர், ஷாதிராக், மேஷக், அபேத்நி
கோ என்பவர்களுடைய தேவன் வாழ்த்தப்ப
டக்கடவர், அவர்கள் தங்களுடைய தேவனை
யேயன்றி வேறொரு தேவனைச்சேவித்து நமஸ்க
ரியாமல், அவரையேநம்பி, இராசாவின் வாக்
கைத்தள்ளி, தங்கள் சரீரங்களை ஒப்பித்ததினால்
அவர் தமது தூதனை அனுப்பி, தம்மில் நம்பிக்
கைவைத்த தமது அடியாரை விடுவித்தார்.—ஆ ௨௯
னபடியினால் ஷாதிராக், மேஷக், அபேத்நிகோ
என்பவர்களுடைய தேவனுக்கு விரோதமாக
யாதாகிலும் ஒருகுறைகூறும் எந்தச்சனங்களும்,
எந்தச்சாதியாரும் எந்தப்பாஷைக்காரரும் துண்
டிக்கப்படுவார்கள், அவரவர்வீடு எருக்களமாக்
கப்படுமென்று ஒருநிருணயம் என்னால்ஏற்படுத்
தப்பட்டது: இவ்விதமாய்விடுவிக்கவல்ல தே
வன் வேறொருவருமில்லையென்றான்.-அப்பொ ௩௰
ழுது இராசா பாபேல் தேசத்தில், ஷாதிராக்கை
யும்,மேஷக்கையும், அபேத்நிகோவையும் மேன்
மைப்படுத்தினான்.

## ௪. அதிகாரம்.

௧. நெபுகத்நெச்சர் தேவனுடைய மகத்துவத்
தையுணர்ந்துசொல்லல்: ௪. அவன்சொப்பனங்
காணல்: ௯. அந்தச்சொப்பனத்தைவிவரித்தல்:
௰௯. தானியேல்அந்தச்சொப்பனத்தின்தாற்பரி
யத்தைவிவரித்தல்: ௨௮. அந்தத்தாற்பரியஞ் சித்
தியாதல்.

இராசாவாகிய நெபுகத்நெச்சர் பூமியெங்கும் ௧
வாசம்பண்ணுகிற நானாசாதியாரும், நானா பா
ஷைக்காரருமாகிய சகல சனங்களுக்கும் எழு
திக்கொள்வது; சமாதானம் உங்களுக்குப்பெரு
கக்கடவது.—மேலான தேவன் என்னிடத்தில் ௨
செய்த அடையாளங்களையும், ஆச்சரியமான கி
ரியைகளையும் பிரசித்தப்படுத்துவது நலமென்று
எனக்குத்தோன்றிற்று.—ஆ, அவருடைய அடை ௩
யாளங்கள் எவ்வளவு மேன்மையுள்ளவைகள்;
அவருடைய ஆச்சரியமானகிரியைகள் எவ்வள
வு பராக்கிரமமுள்ளவைகள்; அவருடையஇராச்
சியம், நித்திய இராச்சியம், அவருடைய கர்த்
தத்துவம் தலைமுறைகள்தோறுமுள்ளது.
நெபுகத்நெச்சராகியநான்என்வீட்டிலேசௌ ௪
க்கியத்தைஅடைந்து, என் அரமனையில்வாழ்வுள்
ளவனாயிருந்தகாலத்தில்,—என்னைப் பயப்படுத்தி ௫
யஒருசொப்பனத்தைக்கண்டேன்,நான்என்மஞ்
சத்திலிருக்கையில், எனக்குண்டான சிந்தனைக
ளும், என் தலையில்தோன்றிய தரிசனங்களும்,
என்னைக்கலங்கச்செய்தன.—ஆதலால் சொப்ப ௬
னத்தின் தாற்பரியத்தைஎனக்குத்தெரிவிக்கும்ப
டிக்குப்பாபேலிலுள்ள சகலவித்துவான்களையும்
என்னிடத்திற் கொண்டுவரும்படி கட்டளையிட்
டேன்.—பின்பு மாயாவித்தைக்காரர்களும்,கணி ௭
தரும், கல்தேயரும், சோதிடரும் என்னிடத்தில்
வர, நான் சொப்பனத்தை அவர்களுக்குத்தெரி

(௨௫) எசா.௪௩.௩. யோபு.௧.௬. யோபு.௩௮.௫. சங்.௩௪.௭.(௨௭)எபி.௰௧.௩௪. (௨௮) சங்.௩௪.௭,௮. எரே.௰௭.௭.—(௪. அதி. ௩.) அதி.௬.௨௬,௨௭. (௫) அதி.௨.௧,௨௮,௨௯. (௭) அதி.௨.௨.

வித்தேன்; அவர்களோ அதின் தாற்பரியத்தைச்
சொல்லவில்லை.
௮ என்தேவனுடையநாமத்தின்படிபேல்தெஷாத்
சரென்று பெயரிடப்பட்டு, பரிசுத்ததேவருடை
ய ஆவியைப்பெற்ற தானியேலோ முடிவில்என்
னிடத்தில்வர, நான் அவன் முன்னிலையில் என்
௯ சொப்பனத்தை விவரித்தேன்.—மாயாவிகளுக்
குப் பிரதானஅதிபதியாகிய பேல்தெஷாத்சரே,ப
ரிசுத்ததேவருடைய ஆவி உன்னிடத்திலிருக்கின்
றது,எந்தமறைபொருளையும் அறிவது உனக்கரித
ல்ல,இது எனக்குத்தெரியும், ஆதலால்எனக்குண்
டான சொப்பனதரிசனங்களையும்,அவைகளின்
௰ தாற்பரியத்தையும் எனக்குச்சொல்லு.—நான் ப
டுத்திருக்கிறபொழுது தலையில்தோன்றியதரிசன
ங்களைப்பார்க்கையில் பூமியின்மத்தியில் மிகவும்
௰௧ உயரமானஒருவிருட்சத்தைக் கண்டேன்.—அந்
தவிருட்சம் வளர்ந்து, பருத்து, பூமியினெல்லை
வரைக்குங் காணப்படத்தக்கதாக வானமளவும்
௰௨ உயர்ந்தது.—அதின் இலைகள் அழகும், அதின்
கனி மிகுதியுமாயிருந்தன, அது யாவற்றிற்கும் உ
ணவுப்பொருளாயிருந்தது: அதின் நிழலில்காட்
டுமிருகங்கள் தங்கின, அதின்கொப்புகளில் ஆ
காயத்துப்பறவைகள் வசித்தன, சகல பிராணி
களும் அதினால் உணவுப்பொருளைப்பெற்றன.-
௰௩ பின்பு நான்படுத்திருக்கையில் தலையிலேதோன்
றிய தரிசனங்களைப் பார்த்தபொழுது, காவலா
ளனாகிய பரிசுத்தனொருவன் வானத்தினின்று
௰௪ இறங்கக்கண்டேன்.—அவன் உரத்த சத்தமிட்
டு, இந்தவிருட்சத்தைத்தறித்து, இதின் கொப்பு
களைவெட்டி, இதின் இலைகளைஉதிர்த்து, இதின்
கனிகளைச்சிதறஅடியுங்கள்: இதின்கீழுள்ளமிரு
கங்களும், இதின் கொப்புகளிலுள்ள பறவைக
௰௫ ளும் விலகக்கடவன.—இதின் வேர்களுள்ள
அடிமரம் இரும்பினாலும் பித்தளையினாலுமாக்கி
ய விலங்கு இடப்பட்டு, பூமியில் வெளியி
லுள்ளபசும்புல்லின்மத்தியில் இருக்கக்கடவது;
ஆகாயத்துப் பனியினால் . நனைக்கப்படுவதாக,
மிருகங்களோடே பூமியின் பூண்டில் அவனுக்
௰௬ குப் பங்கிருக்கக்கடவது.—அவனுடைய
இருதயம் மனுஷனுடைய இருதயமாயிராமல்
மாற, மிருகத்தின் இருதயம்அவனுக்குக்கொடுக்
கப்படக்கடவது; இவ்விதமாய் அவனுக்குமுன்
௰௭ ஏழுகாலங்கள் செல்லவேண்டும்.—சருவத்திற்
குமேலானவர் மனுஷருடைய இராச்சியத்தில்
ஆளுகைசெய்து, தமக்குப் பிரியமாயிருக்கிறவ
னுக்கு அதைக்கொடுத்து, மிகவும் நீசரானமனி
தரை அதின்மேல் ஏற்படுத்தியிருக்கிறாரென்று
சீவனுள்ளோர்அறியும்படிக்கு, காவலாளரின்தீர்
ப்பினாலிவ்வாக்கும், பரிசுத்தர்களின் கட்டளை
௰௮ யினால் இச்சங்கதியுமாயினவென்றான்.—நெபுகத்

நெத்சரென்னும் இராசனாகியநான் இந்தச்சொப்
பனத்தைக் கண்டேன். பேல்தெஷாத்சரே, இப்
பொழுது நீ இதின்தாற்பரியத்தைத்தெரிவி, என்
இராச்சியத்திலுள்ள எந்தவித்துவானாலும் இதின்
தாற்பரியத்தை எனக்குத்தெரிவிக்கக்கூடாது;ஆ
கிலும் பரிசுத்ததேவருடைய ஆவியுள்ளவனாகிய
நீதெரிவிக்கக்கூடுமென்றான்.
பேல்தெஷாத்சரென்னும் நாமம்பெற்ற தானி ௰௯
யேல் ஏறக்குறைய ஒரு நாழிகையளவுந் திகைத்
து, சிந்தித்து, கலங்கினான். அதினால் இராசா அ
வனைநோக்கி,பேல்தெஷாத்சரே,சொப்பனமும்,
அதின் தாற்பரியமும் உன்னைக்கலங்கப்பண்ணா
திருக்கக்கடவனவென்று சொல்ல, பேல்தெஷாத்
சர் உத்தரமாக, என் ஆண்டவனே, அந்தச்
சொப்பனம் உம்முடைய பகைவரிடத்திலும்,
அதின்தாற்பரியம் உம்முடையசத்துருக்களிடத்
திலும் பலிக்கக்கடவன.—நீர்கண்ட விருட்சம் ௨௰
வளர்ந்து, பருத்து, பூமிஎங்குங்காணப்படத்தக்
கதாகவானமளவும் உயர்ந்து,—அழகுள்ள இலைக ௨௧
ளையும் மிகுதியானகனியையுமுடையதாகி, எல்
லாவற்றிற்கும்உணவுப்பொருளைத்தந்தது:அதின்
கீழேகாட்டுமிருகங்கள்தங்கின,அதின்கொப்புக
ளில் ஆகாயத்துப்பறவைகள் வசித்தன.—இராச ௨௨
னே, நீரே அது, நீர் விருத்தியடைந்து பலவானா
னீர்: உம்முடைய மகிமை உன்னதமாகி வானத்
தை அளாவுகின்றது, உம்முடைய கர்த்தத்துவம்
பூமியினெல்லைவரைக்குமுள்ளது.—இந்த விருட் ௨௩
சத்தைத்தறித்து, இதை அழித்துவிடுங்கள்;இதின்
வேர்களாகிய அடிமரம்மாத்திரம் இரும்பினாலும்
பித்தளையினாலுமாக்கியவிலங்கு இடப்பட்டு,
பூமியில் வெளியிலுள்ள பசும்புல்லின்மத்தியிலி
ருக்கவும், ஆகாயத்துப்பனியினால் நனைக்கப்பட்
டு மிருகங்களோடே பங்கைப்பெறவும், இவ்வி
தமாய் ஏழுகாலம் அவனுக்கு முன்செல்லவுங்க
டவனவென்றுசொல்லி, வானத்தினின்று இறங்
கின பரிசுத்தகாவலாளன்ஒருவன்வர,இராசாவா
கிய நீர் கண்டீர்.-இராசனே, தாற்பரியமிது, என் ௨௪
ஆண்டவனாகிய இராசாவின்மேல் வரும்படி ச
ருவத்திற்கு மேலானவர் செய்ததீர்ப்பு இது.—
சனங்கள் உம்மை மனுஷரினின்று விலக்குவார் ௨௫
கள், நீர் காட்டுமிருகங்களோடேவாசம்பண்ணு
வீர், மாடுகளைப்போலப் புல்லைமேய்ந்து, ஆகா
யத்துப்பனியில் நனைவீர், சருவத்திற்குமேலான
வர் மனுஷருக்குள் ஆளுகைசெய்து, தமக்குப்
பிரியமாயிருக்கிறவனுக்கு அதைக்கொடுக்கிறா
ரென்று நீர் அறிந்துகொள்ளும்வரைக்கும்,இப்ப
டியே ஏழுகாலங்கள் உம்மேல் செல்லும்.—வா ௨௬
னங்கள் ஆளுகைசெய்கின்றனவென்று நீர் அறிந்
துகொள்ளும்பொழுது, உம்முடையஇராச்சியம்
ஸ்திரமாகும்; ஆதலால்விருட்சத்தின்வேர்களுள்

(௮) அதி.௧.௭. ஏசா.௬௩.௰௧. அதி.௨.௰௧. (௯) அதி.௨.௪௮. (௰) எசேக்.௩௧.௩,. வச.௨௰. (௰௨) எசேக்.௰௭.௨௩. புல.௪.௨௰. (௰௩) சங்.௱௩.௨௰. உபா.௩௩.௨. சக.௰௪.௫. யூதா.௰௫. (௰௪) மத்.௩.௰. எசேக்.௩௧.௰௨. (௰௬) அதி.௰௧. ௰௩. அதி.௰௨.௭. (௰௭) சங்.௯.௰௬. அதி.௨.௨௧. (௰௮) ஆதி.௪௧.௮,௰௫. (௰௯) எரே.௨௯.௭. (௨௰) வச.௰,௰௧,௰௨. (௨௨) அதி.௨.௩௮. எரே.௨௭.௬,௭,௮. (௨௩) வச.௰௩. அதி.௫.௨௧. (௨௫) வச.௩௨. சங்.௱௬.௨௰. சங்.௮௯.௰௭. எரே. ௨௭ ௫. (௨௬) மத்.௨௧.௨௫. லூக்.௰௫.௰௮,௨௧.

ள அடிமரத்தை விட்டுவிடவேண்டுமென்று கட்
உஎ டளையிட்டார்கள்.—ஆகையால் இராசனே, நான்
சொல்லும் ஆலோசனையை நீர் அங்கிகரித்துக்
கொண்டு, நீதியைச்செய்து, உமது பாவங்களை
யும், தரித்திரருக்குத் தயைசெய்து, உம்முடைய
அக்கிரமங்களையும் அகற்றுவீராக; அப்படியா
னல்உம்முடையவாழ்வு நீடித்திருக்கவுங்கூடும்.
உஅ இவைகளெல்லாம் இராசாவாகிய நெபுகத்
உகூ நெத்சர்மேல் வந்தன.-பன்னிரண்டுமாதஞ்சென்
றபின்பு இராசா பாபேலிலுள்ள அரமனையின்
ஙய மேல் உலாவுகையில்,—இது என் மகிமைப்பிரதா
பத்தினிமித்தம் என்பராக்கிரமத்தின் வல்லமை
யினால் இராசதானியாக நான் கட்டின பெரிய
பாபேலல்லவாவென்று இராசாசொன்னான்.—
ஙக இவ்வாக்கு இராசாவின் வாயினின்றுபுறப்பட்
டமாத்திரத்திலே வானத்தில் தோன்றியவாக்கு,
இராசாவாகியநெபுகத்நெத்சரே,இராச்சியம்உன்
ஙஉ னைவிட்டு நீங்கிற்று.—உன்னைச் சனங்கள் மனி
தர்களினின்று விலக்குவார்கள், காட்டுமிருகங்க
ளோடே தங்குவாய்: மாடுகளைப்போலப் புல்லை
மேய்வாய், சருவத்திற்கு மேலானவர் மனுஷ
னுடைய இராச்சியத்தில் ஆளுகைசெய்து, தமக்
குப்பிரியமாயிருக்கிறவனுக்கு அதைக்கொடுக்கி
றாரென்று நீ அறிந்துகொள்ளும்வரைக்கும் ஏழு
காலங்கள் உன்மேற்செல்லுமென்று உனக்குச்
சொல்லப்பட்டிருக்கின்றதென்பதைச் சொல்
ஙங லிற்று.-அந்நாழிகையில் நெபுகத்நெத்சரிடத்தில்
காரியம்நிறைவேறலாயிற்று: அவன்மனுஷர்களி
னின்று விலக்கப்பட்டு, மாடுகளைப்போலப்புல்
லைமேய்ந்தான், அவனுடைய தலைமயிர் கழுகு
களின் இறகைப்போலவும்,அவனுடையநகங்
கள் பட்சிகளுடைய நகங்களைப்போலவும் வ
ளரும்வரைக்கும் அவன்சரீரம் ஆகாயத்துப்பனி
ஙச யில் நனைந்தது.—அந்நாள்கள்சென்றபின்பு நெ
புகத்நெத்சராகிய நான் என்கண்களை வானத்துக்
கு ஏறிட்டேன், என்புத்தி எனக்குத்திரும்பிவந்
தது,சருவத்திற்குமேலானவரைவாழ்த்துதல்செய்
து, என்றென்றைக்குமிருக்கிறவரைத் துதித்துப்
புகழ்ந்தேன், அவருடைய கர்த்தத்துவம் நித்திய
கர்த்தத்துவம், அவருடைய இராச்சியம் தலைமு
ஙரு றைகள்தோறும் நிற்கின்றது.-பூலோகத்தார்யாவ
ரும் இல்பொருள்போலெண்ணப்படுகிறார்கள்:
அவர்வானத்தின் சேனைக்குள்ளும் பூலோகத்தா
ருக்குள்ளுந் தமது சித்தத்தின்படி செய்துவருகி
றார்: அவருடையகையைத்தடுத்து, என்னசெய்
கிறீரென்று அவரைநோக்கிச் சொல்லத்தக்கவ
ஙசு னொருவனுமில்லையென்றேன்.—அந்தச்சம
யத்தில் என்புத்தி என்னிடத்தில்வந்தது; என் இ
ராச்சியத்துக்கு ஐசுவரியத்தைத் தருவதற்குச் சம்
பிரமமும் மகிமைப்பிரகாசமுந் திரும்பிவந்தன;
என் மந்திரிமாரும் என்பிரபுகளும் என்னைத்தே
டினார்கள்; நான் என் இராச்சியத்திலேஸ்திரமாக்
கப்பட்டேன், என்மகத்துவம் மிகவும் அதிகரித்
தது.—நெபுகத்நெத்சராகிய நான்பரமண்டலத்தி ஙஎ
லுள்ள இராசாவைப்புகழ்ந்து, அவரைமேன்மை
பாராட்டிக் கனம் பண்ணுகிறேன், அவருடை
யசகலகிரியைகளுஞ்சத்தியம், அவருடையவழி
கள் நியாயமானவைகள்: அவர்கருவங்கொண்
டுநடக்கிறவர்களைத் தாழ்த்தவல்லவராயிருக்கிறா
ரென்பதேயாம்.

## ரு. அதிகாரம்.

க. பேல்ஷாத்சர் விருந்துசெய்தல்: ரு. சுவரின்
மேல்விரலெழுதல்: ய.வித்துவான்களுக்குத்தெ
ரியாதென்றுகண்டு தானியேலைவரவழைத்தல்:
யங. இராசா தானியேலுடன் சம்பாஷித்தல்:
யஎ. தானியேல் இராசாவைக்கண்டித்து எழுத்
தின் அர்த்தத்தை வெளிப்படுத்தல்.

இராசாவாகிய பேல்ஷாத்சர் தன்னுடைய பிர க
புகளில் ஆயிரம்பேருக்கு ஒரு மகாவிருந்துசெய்
தான்; அவ்வாயிரம் பெயர்களுக்குமுன் திராட்
சரசத்தைக் குடித்துக்கொண்டிருந்தான்.—பேல் உ
ஷாத்சர் திராட்சரசத்தை ருசித்திருக்கையில்,இ
ராசாவாகியதானும், தன்பிரபுகளும், தன்மனைவி
களும், தன்வைப்பாட்டிகளும் குடிப்பதற்கு அ
வன் தன் பாட்டனாகிய நெபுகத்நெத்சர் யெரூ
ஷலேமின் தேவாலயத்தினின்றுகொண்டுவந்த
பொன்வெள்ளிப்பாத்திரங்களைக்கொண்டுவரும்
படி கட்டளையிட்டான்.—அப்பொழுது யெரூ ங
ஷலேமிலுள்ள தேவாலயமாகிய வீட்டிலிருந்து
எடுக்கப்பட்ட பொற்பாத்திரங்களை அவர்கள்
கொண்டுவந்தார்கள்; இராசாவும், அவனுடைய
பிரபுகளும், அவனுடையமனைவிகளும், அவனு
டைய வைப்பாட்டிகளும் அவைகளிலே குடித்
தார்கள்.—அவர்கள் திராட்சரசத்தைக்குடித்து, ச
பொன், வெள்ளி, பித்தளை, இரும்பு, மரம், கல்
லென்பவைகளாகியதேவர்களைப்புகழ்ந்தார்கள்.
அச்சமயத்தில் ஒருமனுஷனுடைய கைவிரல் ரு
கள்தோன்றி அரமனையிலே சாந்துபூசப்பட்டசு
வரின்மேல் விளக்குக்கெதிராக எழுதின: எழு
தினகையுறுப்பைஇராசாகண்டான்.—அதினால் சு
இராசாவின்முகம் வேறுபட்டது, அவனுடைய
சிந்தனைகள் அவனைக்கலங்கப்பண்ணின, அவ
னுடைய இடுப்பின் பொருத்துகள் தளர்ந்தன,
அவனுடைய முழங்கால்கள் ஒன்றோடொன்று
மோதியடித்தன.—இராசா உரத்தசத்தமிட்டுக்க எ
ணிதரையும், கல்தேயரையும், சோதிடரையும்அ
ழைத்துவரச்சொன்னான். பின்பு இராசாபேசி,
பாபேலிலுள்ள வித்துவான்களைநோக்கி, இந்த
எழுத்தைவாசித்து இதின் அர்த்தத்தை எனக்கு
வெளிப்படுத்துகிறவனெவனோ,அவன்இரத்தாம்

(உஎ)க.பேதுரு.ச.அ. சங்.சக.க,. க.இரா.உக.உஅ. (ஙய) நீதி.யசு.யஅ. (ஙக) லூக்.யஉ.உய. வச.உச. (ஙஉ) வச. உரு. (ஙச) வச.உசு. அதி.யஉ.எ. வெளி.ச.ய. சங்.ய.யசு. மீகா.ச.எ. லூக்.க.ஙங. (ஙரு) ஏசா.சய.யரு,யஎ. சங். ாயரு,ங. யோபு.ஙச.ஙய. யோபு.கூ.யஉ. ஏசா.சரு.கூ. ரோ.கூ.உய.(ஙசு)யோபு.சஉ.யஉ. நீதி.உஉ.ச. மத்.சு.ஙங.(ஙஎ) சங்.ஙங.ச. வெளி.யரு.ங. யாத்.யஅ.யக.—(ரு. அதி. க.) எஸ்த.க.ங. (உ) எரே.ருஉ.யகூ. எரே.உஎ.எ. உ.சாமு.கூ. எ. உ.நாளா.யரு.யசு. (ரு) வெளி.கூ.உய. (சு) ஏசா.ரு.உஎ. நாகூ.உ.ய. (எ) அதி.உ.உ. ஏசா.சஎ.யங. அதி.சு.உ.

பரமும்,கழுத்திலே பொற்சரப்பணியுந் தரிக்கப்
பட்டு, இராச்சியத்தில்மூன்றும்அதிபதியாயிருப்
௮ பானென்றான்.—அப்பொழுது இராசாவின்வித்
துவான்களெல்லாரும்வந்தார்கள்: ஆனாலும்அவர்
களால் அந்த எழுத்தைவாசிக்கவும், அதின் அர்த்
தத்தை இராசாவுக்குவெளிப்படுத்தவுங்கூடாமற்
௯ போயிற்று.—அப்பொழுது இராசாவாகிய பேல்
ஷாத்சர்-மிகவுங் கலங்கினான், அவனுடையமு
கம் வேறுபட்டது, அவனுடையபிரபுகளுந் தி
கைத்தார்கள்.
௰ இராசாவும் அவனுடையபிரபுகளுஞ் சொன்
னவைகளை இராசாத்திகேள்விப்பட்டுப்போசன
சாலையில்வந்தாள்: இராசாத்தி, இராசனே, என்
றைக்கும்வாழ்க: உம்முடைய சிந்தனைகள் உம்
மைக்கலங்கப்பண்ணவும், உமதுமுகம் வேறுப
௰௧ டவும்வேண்டுவதில்லை.—பரிசுத்தமுள்ள தேவ
ருடைய ஆவியைப்பெற்றவனொருவன் உமது
இராச்சியத்திலிருக்கிறான்: உம்முடைய பிதா
வின்நாள்களில் ஒளியும்,புத்தியும், தேவர்களின்
ஞானத்தைப்போன்றஞானமும் அவனிடத்தில்
௰௨ காணப்பட்டன.-அவனிடத்தில் சிரேஷ்டஆவி
யும், ஞானமும், புத்தியும், சொப்பனத்தின்தாற்
பரியத்தைத்தெரிவித்து, கடினமானவாக்கியங்க
ளைவெளிப்படுத்தி, சந்தேகங்களை அறுக்கத்தக்க
புத்தியுங்காணப்பட்டதினிமித்தம் உம்முடைய
பாட்டனாகிய நெபுகத்நெத்சரென்னும் இராசா
அவனை மாயாவித்தைக்காரர்களுக்கும், கணித
ருக்கும், கல்தேயருக்கும், சோதிடருக்கும் பிர
தானியாய்ஏற்படுத்தினார்,அவனுடையபெயர்தா
னியேல்,இராசா,பேல்தெஷாத்சரென்று அவனுக்
குப் பெயரிட்டார்: அந்தத்தானியேல் அழைக்
கப்படக்கடவன், அவன் தாற்பரியத்தை வெ
௰௩ ளிப்படுத்துவானென்றாள்.—அப்பொழுது தானி
யேல்இராசாவிடத்தில்வரஅழைக்கப்பட்டான்.
இராசாதானியேலைநோக்கி, என்பாட்டனாரាகி
ய இராசா யூதாவிலிருந்து சிறைபிடித்துவந்தயூத
௰௪ ரில்ஒருவனாகியதானியேல் நீ அல்லவா.-நீதேவ
ருடைய ஆவியைப்பெற்றிருக்கிறாயென்றும், ஒ
ளியும், புத்தியும், சிரேஷ்டஞானமும் உன்னி
டத்தில் காணப்பட்டனவென்றும் நான் கேள்
௰௫ விப்பட்டேன்.—இந்த எழுத்தை வாசிக்கிறதற்
கும், இதின் தாற்பரியத்தை எனக்குவெளிப்ப
டுத்துகிறதற்கும்வித்துவான்களுங்கணிதரும்என்
னிடத்தில் அழைக்கப்பட்டார்கள்: அவர்களால்
இதின் தாற்பரியத்தை வெளிப்படுத்தக்கூடாமற்
௰௬ போயிற்று.—நீ தாற்பரியத்தை வெளிப்படுத்தி,
ஐயமறுப்பாயென்று நான் உன்னைக்குறித்துக்
கேள்விப்பட்டேன்: நீ இந்த எழுத்தைவாசிக்க
வும், இதின் தாற்பரியத்தை எனக்குத்தெரிவிக்க
வுங் கூடுமேயாகில், நீ இரத்தாம்பரமும், கழுத்தி
லே பொற்சரப்பணியுந் தரிக்கப்பட்டு, இராச்சி
யத்தில் மூன்றும்அதிபதியாயிருப்பாயென்றான்.
அப்பொழுது தானியேல் இராசாவுக்குத்தர ௰௭
மாக, உம்முடையவெகுமானங்கள் உம்மிடத்தி
லிருக்கட்டும், உம்முடைய உபகாரங்களை வே
றொருவனுக்குக்கொடும்; நான்இராசாவுக்குஇந்
த எழுத்தைவாசிப்பேன், இதின் தாற்பரியத்தை
யும்தமக்குத்தெரிவிப்பேன்.—இராசனே, சருவத் ௰௮
திற்குமேலான தேவன் உம்முடையபாட்ட
னாகிய நெபுகத்நெத்சருக்கு இராச்சியத்தையும்,
மகிமையையும், பிரதாபத்தையும், சம்பிரமத்தை
யுங்கொடுத்தார்.—அவர் அந்த மகிமையை அவ ௰௯
னுக்குக்கொடுத்ததினால் சகல சனங்களும், சாதி
யாரும், பாஷைக்காரரும் அவனுக்குமுன்பாக ந
டுங்கிப்பயந்திருந்தார்கள்: அவன்தன்சித்தத்தின்
படி ஒருவனைக்கொல்லுவான்; தன்னுடைய சித்
தத்தின்படி ஒருவனை உயிரோடேகாப்பான்;
தன்னுடைய சித்தத்தின்படி ஒருவனை உயர்த்து
வான்; தன் சித்தத்தின்படி ஒருவனைத்தாழ்த்து
வான்.—அவன் இருதயங்கருவங்கொண்டுகருவத் ௨௰
தினால்மனங்கடினமடைந்தபொழுது, தன் இரா
சசிங்காசனத்தினின்றுநீக்கப்பட்டான், அவனு
டைய மகிமையை அவனைவிட்டகற்றினார்கள்.-
சருவத்திற்குமேலான தேவன் மனுஷனுடைய ௨௧
இராச்சியத்தில் ஆளுகைசெய்து, தமக்குப்பிரிய
மானவனை அதற்குமேலாக ஏற்படுத்துகிறாரென்
று அறிந்துகொள்ளுமளவும் அவன் மனுபுத்திரரி
னின்று அகற்றப்பட்டான், அவன்மனம்மிருகத்
துக்குச் சமானமாயிற்று, காட்டுக்கழுதைகளோ
டேவாசம்பண்ணினான்: மாடுகளைப்போலப்புல்
லைமேய்ந்தான், அவன் சரீரம்ஆகாயத்துப்பனியி
னால் நனைந்தது.—பேல்ஷாத்சரே, அவர் பேரனா ௨௨
கியநீர் இவைகளெல்லாவற்றையுமறிந்தும்உமது
இருதயத்தைத் தாழ்த்தாமல்,—பரமண்டலத்தின் ௨௩
ஆண்டவருக்கு விரோதமாக உம்மை உன்ன
தப்படுத்தினீர்; அவருடைய ஆலயத்தின் பாத்தி
ரங்களை உமக்குமுன்பாகக்கொண்டுவந்தார்கள்,
நீரும், உமதுபிரபுகளும், உமது மனைவிகளும்,
உமது வைப்பாட்டிகளும் அவைகளில் திராட்ச
ரசத்தைக்குடித்தீர்கள்; அல்லாமலும்,தமதுகையி
ற்கொண்டிருக்கிற உமது சுவாசத்துக்கும், உமது
வழிகளெல்லாவற்றிற்கும்அதிகாரியாகிய தேவ
னைநீர்கனம்பண்ணாமல், காணவும்,கேட்கவும்,உ
ணரவுங்கூடாதவெள்ளி,பொன்,பித்தளை,இரும்
பு, மரம், கல்லென்பவைகளாகியதேவர்களைப்பு
கழ்ந்தீர்.-அப்பொழுது அந்தக்கையுறுப்புஅவரா ௨௪
ல்அனுப்பப்பட, இந்த எழுத்து எழுதப்பட்டது.
எழுதப்பட்டஎழுத்து, மினே,மினே,திகேல், ௨௫
யூபார்சின் என்பதே.—இந்த வசனத்தின்தாற்பரி ௨௬
யமாவது: மினே யென்பதற்கு தேவன் உன்
இராச்சியத்தைத்தொகுத்து முடிவுசெய்தாரென்
பதும்,—திகேலென்பதற்கு, நீ தராசிலே தூக் ௨௭

(௮) அதி.௨.௨௭. (௯) அதி.௨.௧.(௰)அதி.௨.௪. (௰௧) அதி.௨.௪௮. வச.௨. அதி.௪.௯. (௰௨) அதி.௬.௩. அதி.௧.௭. (௰௪) வச.௰௧,௰௨. (௰௫) வச.௭,௮.(௰௬)வச.௭.(௰௭)அதி.௨.௬. (௰௮) அதி.௨.௩௭,௩௮. (௰௯) எரே.௨௭.௭. அதி.௩.௪.(௨௰)அதி.௪.௩௰,௩௭. யாத்.௰௮.௰௧. (௨௧) அதி.௪.௩௨,. அதி.௪.௰௭,௨௫. (௨௨) ௨.நாளா.௩௩.௨௩. (௨௩) வச.௩,௪. சங்.௱௰௫.௫,௬. எரே.௰.௨௩. (௨௭) யோபு.௩௧.௬. சங்.௬௨.௯. எரே.௬.௩௰.

கப்பட்டுக் குறைவாய்க் காணப்பட்டாயென்ப
௨௮ தும்,-பிரேஸ் என்பதற்கு, உன் இராச்சியம்பிரி
வுபட்டு மேதியருக்கும் பார்சியருக்கும்கொடுக்
௨௯ கப்பட்டதென்பதுமாமென்ருன்.—அப்பொழு
து பேல்ஷாத்சர் தானியேலுக்கு இரத்தாம்பரத்
தையும், அவனுடையகழுத்தில்பொற்சரப்பணி
யையும் தரிக்கும்படிக்கும், அவன் இராச்சியத்
தில்மூன்ரும் அதிபதியாயிருக்கவேண்டுமென்று
அவனைக்குறித்துப்பிரசித்தம்பண்ணும்படிக்குங்
கட்டளையிட்டான்.
௩௰ அன்றிரவில்கல்தேயரின் இராசாவாகியபேல்
௩௧ ஷாத்சர்கொலைசெய்யப்பட்டான்.—மேதியனு
ன தாரியாவெஷ் அறுபத்திரண்டாம் வயதில் இ
ராச்சியத்துக்கு இராசாவானுன்.

## ௬. அதிகாரம்.

*௧. தானியேலைத் தாரியாவெஷ் கர்த்தத்துவத்தில் ஏற்படுத்தல்: ௪. அதிபதிகள் அவனுக்கு விரோதமாய்த் துராலோசனைசெய்தல்: ௰. அவன் சிங்கக்குகையில் தள்ளப்படல்: ௰௮. அவன் இரட்சிக்கப்பட்டதினிமித்தம் அவன் சந்தோஷப்படல்: ௨௫. அவன்சத்துருக்கள்நாசமடைதல். சமஸ்த சனங்களுக்கும் பிரசித்தப்பத்திரத்தை யனுப்பல்.*

தாரியாவெஷ் இராச்சியம்முழுவதையும்ஆளும்
படிக்கு தனது இராச்சியத்தில் நூற்றிருபது அ
௨ திகாரிகளைநியமித்து,—அந்த அதிகாரிகள் இரா
சாவுக்கு நஷ்டம்வராதபடிகணக்கு ஒப்பிக்கும்
பொருட்டு, அவர்களுக்குமேலாக மூன்றுபே
ரைப்பிரதானிகளாகஏற்படுத்தத்தீர்மானித்தான்;
௩ அம்மூவரில்தானியேலே தலைவன்.-தானியேல்
சிரேஷ்ட ஆவியையுடையவனுனபடியினுல் பி
ரதானிகளிலும், அதிகாரிகளிலும் அதிகம் மதிக்
கப்பட்டான்; ஆகையால் இராசன் இராச்சிய
முழுவதுக்கும் அவனை அதிகாரியாக ஏற்படுத்த
விரும்பினுன்.
௪ அப்பொழுது பிரதானிகளும் அதிகாரிகளும்
இராச்சியத்தைக்குறித்துத் தானியேலுக்குவிரோ
தமாக யாதாயினும்ஒருகுற்றம்பிடிக்கவகைதேடி
னுர்கள்; ஒருகுற்றங்குறைகாணவில்லை; அவன்
உண்மையுள்ளவனுயிருந்தபடியினுல் அவனிட
த்தில் ஒரு தவறும் ஒரு குற்றமுங்காணப்படவில்
௫ லை.-அப்பொழுது அந்தமனுஷர் இந்தத்தானியே
லைக்குறித்து,இவனுடையதேவன்விதித்த பிரமா
ணத்திலல்லாமல் வேறென்றில் குற்றம்பிடிப்ப
௬ து அரிதென்று சொல்லிக்கொண்டார்கள்.-பின்
பு பிரதானிகளும் அதிகாரிகளும் இராசாவினி
டத்தில் சந்தடியாய்க்கூடி, தாரியாவெஷ் இரா
௭ சனே, நீர் என்றைக்கும்வாழ்க.-இராசனே,முப்
பதுநாள்வரையில் எவனுகிலும் உம்மையேயன்
றி எந்தத் தேவனையாயினும், மனுஷரை யாயி
னும் பிரார்த்தனைபண்ணினுல், அவன் சிங்கங்
களின் குகையில் தள்ளப்படும்படிக்கு இராச

கட்டளையையும், ஒரு உறுதியானநியமத்தையும்
ஏற்படுத்தவேண்டுமென்று இராச்சியத்தின்சமஸ்
தபிரதானிகளும், அதிபதிகளும்,அதிகாரிகளும்,
மந்திரிமாரும், சேனுபதிகளும்ஏகமாய்க்கூடி ஆ
லோசனைபண்ணிக்கொண்டிருக்கிருர்கள்.-ஆத ௮
லால்இராசனே,நீர் இப்படிப்பட்டநியமத்தைவி
தித்து,அது மாற்றப்படாதபடி, மேதியர் பார்சிய
ரென்பவர்களுடைய மாருதமுறைமையின் பிர
காரம் அதற்குக்கையெழுத்து வைப்பீராகவென்
ருர்கள்.-ஆதலால் தாரியாவெஷ் இராசாபத்திரத் ௯
துக்கும் நியமத்துக்குங் கையெழுத்து வைத்தான்.
அந்தப் பத்திரத்துக்குக் கையெழுத்து வைக் ௰
கப்பட்டதென்றறிந்தும் தானியேல் தன்வீட்டுக்
குள்ளேபோய், மேல்அறையில்யெருஷலேமின்
திசைக்குநேராயிருந்த பலகணிகள்திறந்திருக்க,
அங்கே தான் முன்செய்துவந்த பிரகாரம் நாளி
லே மூன்றுதரம் முழங்காற்படியிட்டு, தன் தே
வனுடைய சமுகத்தில் பிரார்த்தனைபண்ணித்
துதிசெய்தான்.—அப்பொழுது அந்தச்சனங்கள் ௰௧
ஏகமாய்க்கூடிவந்து,தானியேல்தன் தேவனைப்
பிரார்த்தித்து, அவர்சமுகத்தில் விண்ணப்பஞ்
செய்வதைக்கண்டார்கள்.—பின்பு அவர்கள் இ ௰௨
ராசாவிடத்தில்போய், இராசனே, முப்பதுநாள்
வரைக்கும் உம்மையேயன்றி எந்தத்தேவனையா
யினும், மனுஷனையாயினும்பிரார்த்திக்கிறவனெ
வனுஞ் சிங்கங்களின் குகையிலே தள்ளப்பட
வேண்டுமென்று நீர் கட்டளைப்பத்திரத்துக்குக்
கையெழுத்து வைக்கவில்லையாவென்று சொல்
லி, இராசாவின் கட்டளையைக்குறித்து முறை
யிட்டார்கள்; அதற்குத்தரமாக இராசா, மேதிய
ரும் பார்சியருமானவர்களுடைய மாருதமுறை
மையின்படி அந்தக்காரியம் ஸ்திரமாக்கப்பட்ட
தென்ருன்.—அப்பொழுது அவர்கள்இராசாவை ௰௩
நோக்கி, இராசனே, சிறைபிடிக்கப்பட்ட யூதே
யதேசத்துச் சனங்களில் தானியேலென்பவன்
உம்மையும், நீர் கையெழுத்துவைத்த நியமத்தை
யும் மதியாமல், நாடோறும்மூன்றுதரம்பிரார்த்த
னைசெய்கிருனென்ருர்கள்.-இராசா இந்தச்ச ௰௪
மாசாரங்களைக்கேட்டபொழுது, தன்னைக்குறித்
துமிகவும்மனஸ்தாபப்பட்டு, தானியேலை இரட்
சிக்கும்படி அவன்மேல்சிந்தைவைத்து, அவனை
விடுவிக்கும்பொருட்டுச் சூரியன் அஸ்தமனமா
கும்வரைக்கும் பிரயாசப்பட்டான்.—அப்பொ ௰௫
ழுது அந்தச்சனங்கள் இராசாவினிடத்தில்கூடி,
இராசாவைநோக்கி, இராசனே,இராசாகொடுத்த
எந்தக்கட்டளையாயினும், எந்தப்பிரமாணமாயி
னும் மாற்றப்படலாகாதென்னும்நியாயப்பிரமா
ணம்மேதியருக்கும், பார்சியருக்குமுண்டென்
று அறிவீராகவென்ருர்கள்.—அப்பொழுதுஇரா ௰௬
சாகட்டளையிட, அவர்கள்தானியேலைக்கொண்
டுவந்து அவனைச் சிங்கங்களின்குகையில் தள்
ளிவிட்டார்கள். இராசா தானியேலைநோக்கி, நீ

(௨௮) ஏசா.௨௧.௨. அதி.௯.௧. அதி.௬.௨௮. (௩௰) எரே.௫௧.௩௨,௩௯.௫௭.—(௬. அதி. ௧.) எஸ்த.௧.௧. (௩) அதி.௫.௰௨. (௪) பிர.௪.௪. (௬) நிகி.௨.௩. அதி.௨.௪. (௮) எஸ்த.௧.௰௯.(௰)௧.இரா.௮.௪௪,௪௮. யோனா.௨.௪. சங்.௫௫.௰௭. அப்.௨.௧,௨,௰௫. (௰௨) அதி.௩.௮. (௰௩) அதி.௧.௬. அதி.௩.௰௨. (௰௪) மாற்.௬.௨௬. (௰௫) வச.௮.

இடைவிடாமற் சேவிக்கிற உன் தேவன் உன்
௰எ ளை விடுவிப்பாரென்ருன்.—பின்பு குகையின்
வாசலில்ஒருகல்லுக்கொண்டுவந்துவைக்கப்பட்
டது; தானியேலைப்பற்றுந் தீர்மானம் மாற்றப்
படாதபடி, இராசா தன் மோதிரத்தினுலும் தன்
பிரபுகளுடைய மோதிரத்தினுலும் அதின்மேல்
முத்திரையிட்டான்.
௰அ பின்பு இராசா தன் அரமனைக்குப்போய், அன்
றிராமுழுவதும் உபவாசஞ்செய்தான்: கீதவாத்தி
யம் முதலானவைகளைத் தன்னிடத்தில் கொண்
டுவர உத்தரவுகொடுக்கவில்லை: நித்திரையும் அ
௰௯ வனைவிட்டுப்போயிற்று.—பின்பு இராசா அதி
காலையிலெழுந்து, சிங்கங்களின் குகைக்கு வி
௨௰ ரைந்துசென்ருன்.—அவன் குகைக்குச் சமீப
மாய்ப்போகையில் புலம்பலோசையோடே தா
னியேலைக் கூப்பிட்டான்: மேலும் இராசா தா
னியேலுடனே, தானியேலே, சீவனுள்ள தேவ
னுடைய தாசனே,நீ இடைவிடாதபடிசேவிக்
கிற உன் தேவன் உன்னைச் சிங்கங்களினின்
௨௧ று விடுவிக்கவல்லவரா என்றுகேட்க,—தானி
யேல் இராசாவுடன், இராசனே, என்றைக்கும்
௨௨ வாழ்க.—நான் அவர் சந்நிதியில் குற்றமற்றவ
னுய்க்காணப்பட்டேன்; இராசனே, உமதுசமு
கத்திலும் நான் நீதிகேடுசெய்யவில்லை: ஆதலால்
சிங்கங்கள் என்னைச் சேதம்பண்ணுதபடி என்
தேவன் தமது தூதனைஅனுப்பி, அவைகளின்
௨௩ வாய்களைக் கட்டுவித்தாரென்ருன்.—அப்பொழு
து இராசாதானியேலைக்குறித்துமிகவுங்களிகூர்ந்
து, அவனைக்குகையினின்று தூக்கிவிடச்சொன்
னுன். தானியேல் தன் தேவனிடத்தில் விசு
வாசம்வைத்தபடியினுல் அவன் குகையினின்று
தூக்கிவிடப்பட்டபொழுது, ஒரு சேதமும் அவ
னிடத்திற் காணப்படவில்லை.
௨௪ பின்பு இராசா கட்டளையிட, தானியேலின்
மேல் குற்றஞ்சுமத்திய அந்தமனுஷர்கொண்டுவ
ரப்பட்டு, அவர்களும், அவர்களுடைய பிள்ளை
களும், அவர்களுடைய மனைவியருஞ் சிங்கங்க
ளின்குகையில் தள்ளப்பட்டார்கள்; அவர்கள்கு
கையின் அடியிலேசேருகிறதற்கு முன்னமேசிங்
கங்கள் அவர்கள்மேற் பாய்ந்து, அவர்களுடைய
எலும்புகளெல்லாவற்றையும்நொறுக்கின.
௨௫ அப்பொழுது தாரியாவெஷ் இராசா, பூமிஎங்
கும் வசிக்கும் சகல சனங்களுக்கும், சாதியா
ருக்கும்,பாஷைக்காரருக்கும், சமாதானம் உங்க
௨௬ ளுக்குப்பெருகக்கடவது.—என் இராச்சியத்தின்
ஆளுகையின் கீழெங்குமுள்ள சனங்களும், தா
னியேலின் தேவனுக்கு முன்பாக நடுங்கிப்ப
யப்படவேண்டுமென்று நான் கட்டளையிடுகி
றேன்: அவரே சீவனுள்ள தேவன், அவர்நித்தி
யர், அவருடைய இராச்சியம் நாசமடையாது,
அவருடைய கர்த்தத்துவம் முடிவுபரியந்தம் நிற்
கும்.—அவரே தப்புவிக்கிருர், மீட்கிருர், அவர் ௨௭
வானத்திலும் பூமியிலும் அடையாளங்களையும்
அதிசயங்களையுஞ்செய்துவருகிருர், அவர்தானி
யேலைச் சிங்கங்களின்கைக்குத்தப்புவித்தாரென்
று எழுதினுன்.—அந்தத் தானியேல் தாரியாவெ ௨அ
ஷின் அதிகாரகாலத்திலும்,பார்சியனுகியகோரெ
ஷின் அதிகாரகாலத்திலும் வாழ்ந்திருந்தான்.

## எ. அதிகாரம்.

க. நான்குமிருகங்களைப்பற்றியதரிசனத்தைத்தெ
ரிவித்தல்: கூ. தேவனுடைய இராச்சியத்தை
விபரித்தல்: ௰௫. தரிசனங்களின் தாற்பரியத்
தைக்காட்டல்.

பாபேலின் இராசாவாகிய பேல்ஷாத்சர் அர க
சாண்டமுதலாம் வருஷத்திலே தானியேலுக்கு
அவன் மஞ்சத்தில் சொப்பனமும், தலையில்தரிச
னங்களுந்தோன்றின: அப்பொழுது அவன் அந்
தச்சொப்பனத்தை எழுதி, வாக்கியத்தின்பொரு
ளைவிவரித்தான்.—தானியேல் பேசி விவரிக்கத் ௨
தொடங்கினுன், இராத்திரிகாலத்தில்எனக்குண்
டானதரிசனத்தில்வானத்தின் நாலுகாற்றுகளும்
பெரியசமுத்திரத்தின்மேல் உக்கிரமாய்மோதக்
கண்டேன்.—அப்பொழுது சமுத்திரத்தினின் ௩
று ஒன்றுக்கொன்று வேற்றுமையான நாலுபெரி
யமிருகங்கள் புறப்பட்டன.—அவைகளில்முந் ௪
தினது சிங்கத்தைப்போலிருந்தது, அதற்குக்
கழுகின்சிறகுகளுண்டாயிருந்தன: பின்பு நான்
பார்க்கிறபொழுது அதின் சிறகுகள் பிடுங்கப்
பட்டன, அது பூமியினின்று நிமிர்த்தப்பட்டு
மனுஷனைப்போல இரண்டு காலூன்றி நிற்கும்
படிசெய்யப்பட்டது, மனுஷனுடையஇருதயம்
அதற்கிடப்பட்டது.—பின்பு கரடிக்கொப்பான ௫
இரண்டாம்மிருகத்தைக்கண்டேன், அதுஒருபக்
கமாய்ச்சாய்ந்துநின்று, தன்வாயின்பற்களுக்குள்
ளேமூன்றுவிலாவெலும்பைக் கவ்விக்கொண்
டிருந்தது: நீ எழுந்து வெகுமாமிசத்தைப்பட்
சியென்று அதற்குச்சொல்லப்பட்டது.—அதற் ௬
குப் பின்பு சிவிங்கியைப்போன்ற வேறென்
றைக்கண்டேன், அதின் முதுகின் மேல் பட்சி
யின் சிறகுகள் நாலிருந்தன; அந்தமிருகத்துக்
கு நாலுதலைகளுமுண்டாயிருந்தன; அதற்கு ஆ
ளுகையிடப்பட்டது.—அதற்குப்பின்பு இராத் ௭
திரிகாலத்தில் எனக்குண்டான தரிசனங்களில்
நான்காம்மிருகத்தைக்கண்டேன், அதுகெடியும்
பலமும் பயங்கரமுமான ரூபத்தையுடையதாயி
ருந்தது; அதற்குப்பெரிய இருப்புப்பற்களுண்
டாயிருந்தன: அது நொறுக்கிப்பட்சித்துச் சே
ஷமானதைத்தன்கால்களால் உழக்கிற்று: அது த
னக்கு முன்னிருந்த மிருகங்களைப்போலிராமல்
வேறுரூபத்தையுடையதாயிருந்தது;அதற்குப்பத்

(௰எ) புல.௩.௫௩. மத்.௨௭.௬௬. (௰அ) அதி.௨.௧. (௨௰) அதி.௩.௰௫. (௨௧) அதி.௨.௪. (௨௨) அதி.௩.௨அ. எபி.௰௧.
௩௪. (௨௩) எபி.௰௧.௩௩. (௨௪) உபா.௰௯.௰௯. எஸ்த.௯.௰. உபா.௨௪.௰௬. ௨.இரா.௰௪.௬. (௨௫) அதி.௪.௧. (௨௬)
அதி.௩.௨௯. சங்.௯௯.௧. அதி.௪.௩௪. அதி.௨.௪௪. லூக்.௧.௩௩. (௨எ) அதி ௪.௩.(௨அ)அதி.௧.௨௧. எஸ்ரு.௧.௧,௨.—
(எ. அதி. ௧.) எண்.௰௨.௬. ஆமோ.௩.எ. அதி.௨.௨அ.(௩)வெளி.௰௩.௧.(௪)உபா.௨அ.௪௯. ௨.சாமு.௧.௨௩. எரே.
௪.எ,௰௩. எசேக்.௰எ.௩. அப௧.௧.அ. (௫) அதி.௨.௩௯. (௬) அதி.அ.அ,௨௨. (எ) அதி.௨.௪௰,௪௧. வெளி.௰௩.௧.

௮ துக்கொம்புகளுமுண்டாயிருந்தன.—நான் அந்
தக்கொம்புகளை உற்றுப்பார்க்கையில் அவைக
ளுக்கு இடையிலே வேறொரு சிறியகொம்பு
தோன்றிற்று, அதற்குமுன்பாக முந்தினகொம்பு
களில்மூன்று பிடுங்கப்பட்டன: மேலும் அந்தக்
கொம்பிலே மனுஷனுடைய கண்களைப்போன்
றகண்களும், அகங்காரமுள்ளவைகளைப் பேசும்
வாயு மி ரு ந் த ன.
௯ நான்பார்க்கையில்சிங்காசனங்கள்ஸ்தாபிக்கப்
பட்டன, உறைந்தமழையைப்போன்ற வெண்
மையான வஸ்திரத்தைத்தரித்தவரும், சுத்திசெய்
யப்பட்ட பஞ்சைப்போன்ற தலைமயிரையுடை
யவருமாகிய அநாதியானவர்வீற்றிருந்தார்: அவ
ருடைய சிங்காசனம் அக்கினிச்சுவாலை, அதின்
௰ சக்கரங்கள் எரிகிற அக்கினி.—அவருடையசந்
நிதியினின்று அக்கினிநதி புறப்பட்டோடிற்று:
ஆயிரத்தாயிரவர் அவரைச் சேவித்தார்கள், கோ
டாகோடிபேர் அவர் சமுகத்தில்நின்றார்கள்: நி
யாயவிசாரணை நிரூபிக்கப்பட்டது, புத்தகங்கள்
௰௧ திறக்கப்பட்டன.—அப்பொழுது நான் அந்தக்
கொம்புபேசின அகங்கார வாக்கியங்களினிமித்
தம்பார்த்தேன்: நான் பார்க்கையில் அந்த மிரு
கங்கொலைசெய்யப்பட்டது, அதின்சரீரந்துண்
டிக்கப்பட்டு அக்கினிக்கு ஒப்புக் கொடுக்கப்
௰௨ பட்டது.—மற்ற மிருகங்களினின்றும் அவை
யவைகளுக்குக் கிடைத்த ஆளுகை நீக்கப்பட்
டது: ஆனாலும் நியமிக்கப்பட்ட சமயம்வரைக்
௰௩ கும் அவைகளின் சீவன்காக்கப்பட்டது.-இராத்
திரிகாலத்தில் நான்கண்ட தரிசனங்களிலேமனு
புத்திரனைப்போன்ற ஒருவர் ஆகாயத்துமேகங்
களின்வழியாய் அநாதியானவரிடத்தில் சென்
றார், இவர்அவருக்குச் சமீபத்தில்கொண்டுவரப்
௰௪ பட்டார்.—சகலசனங்களும், சாதியாரும், பா
ஷைக்காரரும் அவரைச்சேவிக்கும்படி அவருக்
கு ஆளுகையும், மகிமையும், இராச்சியமும் அ
ளிக்கப்பட்டன: அவருடைய ஆளுகை என்று
மொழியாத நித்தியஆளுகை, அவருடையஇராச்
சியம் நாசமடையாது.
௰௫ தானியேலாகிய நான் என் சரீரத்திலுள்ளஆ
வியில்விசனப்பட்டேன், என்தலையில்தோன்றி
௰௬ யதரிசனங்கள் என்னைக்கலங்கச்செய்தன.—பின்
பு சமீபத்தில் நிற்பவர்களில் ஒருவனிடத்திற்
போய், அவைகளெல்லாவற்றின் தாற்பரியத்தை
யும் எனக்குச்சொல்லும்படி அவனை வேண்டிக்
கொண்டேன். அதினால்அவன்அவைகளின்தாற்
பரியத்தைநான்அறியும்படி எனக்குச்சொல்லி,-
௰௭ அந்த நாலு பெரியமிருகங்களும் பூமியினின்று

தோன்றும் நாலு இராசாக்கள்.—சருவத்திற்கு ௰௮
மேலானவருக்குரிய பரிசுத்தர்கள் இராச்சியத்
தைப்பெற்று, என்றுஞ் சதாகாலங்களிலும் இ
ராச்சியத்தைச் சுதந்தரித்துக் கொள்வார்களென்
றான்.—அப்பொழுது மற்றவைகளைப்போலிரா ௰௯
மல் வேறு ரூபமும், மிகுந்த பயங்கரமுமாய் இ
ருப்புப்பற்களையும் பித்தளை நகங்களையுமுடை
யதுமாய், நொறுக்கிப் பட்சித்துச் சேஷமான
தைத்தன்கால்களால் உழக்கிறதுமாய்த்தோன்றிய
நாலாம் மிருகத்தைக்குறித்தும்,—அதின் தலையின் ௨௰
மேலுள்ளபத்துக்கொம்புகளைக்குறித்தும், தனக்
குமுன்பாக மூன்றும் விழுந்துபோக எழும்பிக்
கண்களையும், அகங்காரமானவைகளைப் பேசும்
வாயையுடையதாய் மற்றவைகளிலும்பார்வைக்
கு அதிவீரமாயிருந்த கொம்பையே குறித்தும்
பொருள்அறியவிரும்பினேன்.—நான்கண்டபடி ௨௧
நியாய விசாரணையைச் சருவத்திற்குமேலானப
ரிசுத்தர்களுக்குக் கொடுக்கும்படிக்கும், பரிசுத்
தர்கள் இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்
படிக்கும், அநாதியானவர் வருமட்டாக,—அந் ௨௨
தக்கொம்புபரிசுத்தர்களுடன்யுத்தம்பண்ணி, அ
வர்களைச்செயித்தது.—இவ்வண்ணம்அவன், நா ௨௩
லாம் மிருகம் பூமியிலேயுண்டாகும் நாலாம் இ
ராச்சியம், அதுசகலஇராச்சியங்களுக்கும் வேற்
றுமையாயிருந்து, பூமிமுழுவதையும்பட்சித்து,
அதை உழக்கிநொறுக்கும்.—இந்தஇராச்சியத்தில் ௨௪
தோன்றும் பத்துக்கொம்புகள், பத்து இராசாக்
கள்: அவர்களுக்குப்பின்பு வேறொருவன்எழும்
புவான்; அவன் முந்தினவர்களுக்கு வேற்றுமை
யாயிருந்து, மூன்றுஇராசாக்களைத்தாழ்த்தி,—சரு ௨௫
வத்திற்குமேலானவருக்கு விரோதமாய் வாக்கு
களைப்பேசி, சருவத்திற்குமேலானவருக்குரிய
பரிசுத்தர்களை மெலிவடையப்பண்ணி, நியமிக்
கப்பட்டகாலங்களையும் நியமங்களையும்மாற்றப்
பார்ப்பான்: அவர்கள்ஒருகாலமும், காலங்களும்,
பாதிக்காலமுஞ்செல்லும்வரைக்கும்அவனுடை
யகையில் ஒப்பிக்கப்படுவார்கள்.—ஆனாலும்நியா ௨௬
யவிசாரணைஸ்தாபிக்கப்பட்டது, அவர்கள்முடி
வுபரியந்தம்அவனைக்கெடுக்கவும் அழிக்கவுந்தக்
கதாக அவனுடையகர்த்தத்துவத்தை அவனிடத்
தினின்று நீக்குவார்கள்.—இராச்சியமும், கர்த் ௨௭
தத்துவமும், வானத்தின்கீழெங்குமுள்ள இராச்
சியத்தின் மகிமையும், சருவத்திற்குமேலானவ
ருக்குரிய பரிசுத்தர்களாகிய சனங்களுக்குக்கொ
டுக்கப்படும், அவருடைய இராச்சியம்நித்திய இ
ராச்சியம்; அதிபதிகள் யாவரும் அவரைச்சே
வித்து அவருக்கமைந்திருப்பார்கள்.—தாற்பரி ௨௮

(௮) வச.௨௰,௨௧,௨௪. வெளி.௯.௭. சங்.௰௨.௰௩. வெளி.௰௩.௫.(௯)வெளி.௨௰.௪. சங்.௯௰.௨. சங்.௱௪.௨. வெளி.௧.௰௪. எசேக்.௧.௰௫,௰௬.(௰) சங்.௫௰.௩. ஏசா.௩௰.௩௩. ௧.இரா.௨௨.௰௯. எபி.௰௨.௨௨. வெளி.௫.௰௧. வெளி.௨௰.௪,௰௨. (௰௧) வெளி.௰௯.௨௰. (௰௩) எசேக்.௧.௨௬. மத்.௨௪.௩௰. வெளி.௧.௭,௰௩. (௰௪) சங்.௨.௬,௭,௮. சங்.௮.௬. சங்.௱௰.௧,௨. மத்.௰௧.௨௭. மத்.௨௮.௰௮. யோவா.௩.௩௫. ௧.கொரி.௰௫.௨௭. எபே.௧.௨௨. சங்.௱௪௫.௰௩. மீகா.௪.௭. லூக்.௧.௩௩. யோவா.௰௨.௩௪. எபி.௰௨.௨௮. (௰௮) ஏசா.௬௰.௰௨,௰௩,௰௪. ௨.தீமோ.௨.௰௧,௰௨. வெளி.௨.௨௬,௨௭, (௨௧) ௧.கொரி.௬.௨. வெளி.௧.௬. (௨௨) அதி.௮.௰௨,௨௪. வெளி.௰௧.௭. (௨௪) வெளி.௰௭.௰௨.(௨௫)ஏசா.௩௭.௨௩. அதி.௰௧.௨௮,௩௰,௩௧,௩௬. வெளி.௰௩.௫,௬,௭. வெளி.௰௭.௬. வெளி.௰௨.௰௪.(௨௭)லூக்.௧.௩௩. யோவா.௰௨.௩௪. வெளி.௰௧.௰௫. ஏசா.௬௰.௰௨. (௨௮) லூக்.௨.௰௯,௫௧.

யத்தின்முடிவு இதுவரைக்குமேயென்றான். தா
னியேலாகிய நான் என்சிந்தனைகளினால்மிகவுங்
கலக்கமடைந்தேன், என்முகம் விகாரமாயிற்று:
தாற்பரியத்தை என்சிந்தையில் வைத்துக்கொண்
டேன்.

## ௮. அதிகாரம்.

௧. செம்மறியாட்டுக்கடாவையும் வெள்ளாட்டுக்கடாவையுங்குறித்துத்தரிசனங்காணல்: ௰௩. பலி ஒழியுங்காலம் நிரூபிக்கப்படல்: ௰௫. காபிரியேல் தானியேலின்தரிசனத்தை வெளிப்படுத்தல்.

முன்னேதோன்றின தரிசனத்துக்குப்பின் இரா
சாவாகிய பேல்ஷாத்சர் அரசாண்ட மூன்றாம்வ
ருஷத்தில், வேறொருதரிசனம் தானியேலாகிய
௨ எனக்குத்தோன்றிற்று.—நான் தரிசனங் காண்கி
றபொழுது நான் எலாம்தேசத்திலுள்ள ஷூஷான்
இராசதானியிலிருந்தேன், தரிசனத்தில் நான் ஊ
லாயென்னும் ஆற்றங்கரையிலிருந்ததாக எனக்
௩ குத்தோன்றிற்று.—நான் என் கண்களை ஏறிட்டுப்
பார்க்கையில், கொம்புகளுள்ள ஒரு செம்மறி
யாட்டுக்கடா ஆற்றுக்குமுன்பாகநின்றது: அதி
ன் கொம்புகள் உயரமுள்ளவைகள்; அவைகளி
லொன்று மற்றதிலுமதிகமாயுயர்ந் திருந்தது,
௪ உயர்ந்தகொம்பு பின் முளைத்தது.—அந்தச்செம்
மறியாட்டுக்கடா மேற்கிலும்,வடக்கிலும், தெற்
கிலும் தாக்குகிறதைக்கண்டேன்; அதின்முன்
னே ஒரு மிருகமும் நிற்கக்கூடாதிருந்தது, அ
தின் கைக்குத் தப்புவிப்பார் ஒருவருமில்லை; அ
து தன் இஷ்டப்படிசெய்து பெருமைகொண்ட
௫ து.—பின்பு நான் உற்றுப்பார்க்கையில், மேற்கி
னின்று ஒருவெள்ளாட்டுக்கடாநிலத்திலே கால்
படாமல் பூமியின்மேலாக எங்குஞ்சென்றது:
அந்த வெள்ளாட்டுக்கடாவின் கண்களுக்கிடை
௬ யில் ஒருவலிய கொம்பிருந்தது.—அந்தக்கடா,
ஆற்றின்முன்பாக நிற்கிறதாக நான்கண்டகொம்
புகளுள்ள செம்மறியாட்டுக்கடாவண்டையில்க
௭ டுங்கோபத்தோடே ஓடிற்று.—அதுசெம்மறியாட்
டுக்கடாவின் சமீபத்தில் சேரக்கண்டேன், அது
செம்மறியாட்டின்மேல் கடுங்கோபங்கொண்டு,
அதைமுட்டி, அதின் இரண்டுகொம்புகளையும்
முறித்தது: அதற்குமுன் நிற்கிறதற்குச்செம்மறி
யாட்டுக்கடாவுக்குப்பெலனில்லாமையால்,வெ
ள்ளாட்டுக்கடா அதைத்தரையிலேதள்ளி மிதித்த
து: அதின்கையினின்று செம்மறியாட்டுக்கடா
௮ வைவிடுவிப்பார்ஒருவருமில்லை.-ஆதலால்வெள்
ளாட்டுக்கடா மிகுந்தபெருமைஅடைந்தது:அது
பலங்கொண்டிருக்கையில் அந்தப்பெரியகொம்
பு முறிந்துபோயிற்று; அதற்குப்பிரதியாக ஆகா
யத்தின் நாலுகாற்றுத் திசைகளுக்கும் எதிராய்
நாலு வலியகொம்புகள் முளைத்தன.—அவைக ௯
ளில்ஒன்றினின்று ஒருசிறியகொம்புபுறப்பட்டு,
தென்றிசைக்கும், கீழ்த்திசைக்கும், சிறந்ததே
சத்தின் திசைக்குநேராய் மிகவும் பெருமை
கொண்டது.—அது வானத்தின் சேனைபரியந்தம் ௰
வளர்ந்து, அதின்சேனையாகிய நட்சத்திரங்களிற்
சிலவற்றைப் பூமியிலே விழப்பண்ணி, அவை
களைமிதித்தது.—அந்தச்சேனையின் அதிபதிக்கு ௰௧
விரோதமாய்த் தன்னை உன்னதப்படுத்தி,நித்திய
பலியைநீக்கிற்று, அவருடையபரிசுத்தஸ்தானம் .
தள்ளுண்டது.—பாவத்தினிமித்தம்சேனை நித்திய ௰௨
பலியோடே அதற்குஒப்பிக்கப்பட்டது,அதுசத்
தியத்தைத் தரையிலே தள்ளிற்று; அது கிரியை
யைச்செய்து அனுகூலம்பெற்றது.
அப்பொழுது பரிசுத்தனாகிய ஒருவன்பேசக் ௰௩
கேட்டேன், வேறொருவன் பேசினவனைநோக்
கி, பரிசுத்தஸ்தானமும், சேனையும் மிதிக்கப்ப
டும்பொருட்டு அழிவுசெய்யும் பாவத்தையும்,
நித்திய பலியையும்பற்றுந் தரிசனம் எது
வரைக்கும் இருக்குமென்றுகேட்டான்.—அ ௰௪
தற்கு அவன் என்னைநோக்கி, இரண்டாயிரத்து
முந்நூறு இராப்பகல் செல்லும்வரைக்குமிருக்
கும்; பின்பு பரிசுத்தஸ்தானஞ் சுத்தப்படுத்தப்ப
டுமென்றான்.
தானியேலாகிய நான் இந்தத்தரிசனத்தைக் ௰௫
கண்டு இதின் தாற்பரியத்தை அறிய வகைதேடு
கையில், மனுஷனுடையசாயலுள்ளவன் வந்து
எனக்குமுன்னிற்கக்கண்டேன்.—அன்றியும், ௰௬
காபிரியேலே, இந்த மனுஷனுக்குத் தரிச
னத்தைத்தெளிவியென்று ஊலாயின்மத்தியில் ஒ
ருவன்சொல்லிய வாக்கைக் கேட்டேன்.—அப் ௰௭
பொழுதுநான்நின்றஇடத்திலேவந்தான்: அவன்
வருகையில் நான்பயந்து முகங்குப்புற விழுந்
தேன்: அவன் என்னைநோக்கி, மனுபுத்திரனே,
இந்தத்தரிசனம் முடிவுகாலத்தில் நிறைவேறு
மென்று அறிந்துகொள்ளென்றான்.—அவன் என் ௰௮
னோடேபேசுகையில் நான்தரையில் முகங்குப்
புற அயர்ந்தநித்திரைகொண்டேன்: அவன் என்
னைத்தொட்டு, காலூன்றிநிற்கப்பண்ணி,—கேள், ௰௯
குரோதத்தின்முடிவுகாலத்தில்நடப்பதை உனக்
குத்தெரிவிப்பேன்: நியமிக்கப்பட்டகாலத்தில்
முடிவு வரும்.—நீகண்ட இரண்டு கொம்புள் ௨௰
ளசெம்மறியாட்டுக்கடா, மேதியரும் பார்சியரு
மானவர்களுடையஇராசாக்களே.—உரோமமுள் ௨௧
ள அந்தவெள்ளாட்டுக்கடா, கிரேக்கதேசத்தின்
இராசா: அதின்கண்களின் இடையிலுள்ளபெரி
யகொம்பு அதின்முதலாம் இராசா.—அதுமுறிந் ௨௨
துபோனபின்பு அதற்குப்பிரதியாக முளைத்தநா
லும், அந்தச்சாதியில்தோன்றும் நாலு இராச்சி

(௮. அதி. ௧.) அதி.௭.௧. (௨) எஸ்த.௧.௨. (௪) அதி.௫.௰௯. (௮) அதி.௭.௬. (௯) அதி.௰௧.௨௧,௨௫. சங்.௪௮.௨. எசேக்.௨௰.௬,௰௫. அதி.௰௧.௰௬,௪௧,௪௫. (௰) வெளி.௰௨.௪. (௰௧) எரே.௪௮.௨௬,௪௨. யோசு.௫.௰௪. அதி.௰௧.௩௧. யாத்.௨௯.௩௮. எண்.௨௮.௩. எசேக்.௪௬.௰௩. (௰௨) ஏசா.௫௯.௰௪. அதி.௰௧.௨௮,௩௬. (௰௩) ௧.பேதுரு.௧.௰௨. அதி.௰௧.௩௧. (௰௫) ௧.பேதுரு.௧.௰௨. எசேக்.௧.௨௬. (௰௬) அதி.௰௨.௬,௭. லூக்.௧.௰௯,௨௭. (௰௭) எசேக்.௧.௨௮. வெளி.௧.௰௭. (௰௮) அதி.௰.௯,௰. லூக்.௯.௩௨. எசேக்.௨.௨. (௰௯) அதி.௯.௨௭. அபகூ.௨.௩. (௨௧) அதி.௰௧.௩. (௨௨) அதி.௰௧.௪.

யங்களும் பராக்கிரமத்தில் அவனுக்கு ஒப்பான
௨௩ வைகளல்ல.—அவர்களுடைய ஆளுகையின்மு
டிவுகாலத்திலேபாவிகளின் நிறைவேற்றமாகும்
பொழுது, உக்கிரமுகமும், சூதானவைகளில்
வல்லமையுமுள்ள ஒரு இராசாதோன்றுவான்.—
௨௪ அவன் மிகவும் பலவானாயிருப்பான், ஆயினும்
சுயபராக்கிரமத்தினாலல்ல: ஆச்சரியமாய் அழி
வுபண்ணி, அனுகூலம்பெற்று, கிரியை சித்திக்
கச்செய்து, பலவான்களையும், பரிசுத்தசனங்க
௨௫ ளையுஞ் சங்கரிப்பான்.—அவன் தன் புத்தியி
னாலே கபடத்தைச் சித்திக்கப்பண்ணி, மனக்
கருவங்கொண்டு, சமாதானத்தின் காலத்திலும்
அநேகரை நாசப்படுத்துவான்: இராசாதி ராசா
வுக்கு விரோதமாய் நிற்பான்; ஆனாலும் அவன்
௨௬ முறிக்கப்படுவான், கையினாலல்ல.—மேற்சொல்
லிய இராப்பகல்களுக்குரிய தரிசனஞ்சத்தியம்:
ஆதலால் நீ இந்தத்தரிசனத்தை முத்திரைப்படுத்
து; அதற்கு அநேகநாட் செல்லுமென்றான்.—
௨௭ தானியேலாகிய நான் சோர்வடைந்து, சில
நாள் வருத்தமாயிருந்து, பின்பு எழுந்து இராச
காரியத்தைநடப்பித்தேன்; ஆனாலும் எவர்களு
டைய புத்திக்குமெட்டாத இந்தத் தரிசனத்தைக்
குறித்துப்பிரமித்திருந்தேன்.

## ௯. அதிகாரம்.

௧. தானியேல் உபவாசஞ்செய்து தன்னைத்தாழ்த்திப் பிரார்த்தித்தல்: ௨௰. தீர்க்கதரிசனவாக்கியங்கள் அவனுக்குத் தெரிவிக்கப்படல்.

மேதியரின் வமிசத்தானாகிய அகஷ்வேரோஷ்
என்பவனுடையபுத்திரனாகிய தாரியாவெஷ் கல்
தேயராச்சியத்தில் அபிஷேகம்பெற்ற முதலாம்
௨ வருஷத்தில்,—அவன் அரசாண்ட அந்தமுதலாம்
வருஷத்திலே தானியேலாகிய நான், யெருஷ
லேம்படும்பாழினின்று நீங்குவதற்கு எழுபதுவ
ருஷஞ் செல்லுமென்று யெகோவா எரேமி
யா தீர்க்கதரிசிக்குச் சொல்லிய வருஷங்களின்
தொகையைப்புத்தகங்களினால் அறிந்தேன்.
௩ பின்பு நான் உபவாசித்து, இரட்டைத் தரித்
துச் சாம்பலைத்தூற்றி, ஆண்டவராகிய தே
வனைப் பிரார்த்தனையினாலும் விண்ணப்பத்தினா
லுந் தேடும்படி என் முகத்தை அவருக்குநேராக்
௪ கினேன்.—என் தேவனாகிய யெகோவா
வை நோக்கிப் பிரார்த்தனைபண்ணி, என்பாவத்
தை உணர்ந்துசொல்லி, ஆ, ஆண்டவரே, நீர்
மகத்துவமும் பயங்கரமுமான தேவன், உம்
மில் அன்புவைத்து,உம்முடைய கட்டளைகளைக்
காத்து நடக்கிறவர்களுக்கு உடன்படிக்கையை
௫ யும், தயையையுங் காக்கிறவராயிருக்கிறீர்.—நாங்
கள் பாவஞ்செய்தோம், அக்கிரமக்காரராயிருக்
கிறோம், உம்முடைய விதிப்பிரமாணங்களையும்,
உம்முடைய கட்டளைகளையுங் காததுக்கொள்ளா
மல்,துன்மார்க்கராய்த் துர்க்கருமத்தைச் செய்து
வந்தோம்.—உமதுநாமத்தைக்கொண்டு எங்கள் ௬
இராசாக்களோடும், எங்கள் பிரபுகளோடும்,எங்
கள்பிதாக்களோடும், தேசத்திலுள்ள எல்லாச்ச
னங்களோடும்பேசின தீர்க்கதரிசிகளாகியஉம்மு
டைய தாசருக்குச்செவிகொடாமற்போனோம்.-
ஆண்டவரே, நீதி உமக்கேயுரியது,உமக்கு ௭
விரோதிகளாய்அவர்கள் உம்முடையகட்டளைக
ளை மீறினதினிமித்தம், சமீபமுந்தூரமுமான தே
சங்களெல்லாவற்றிலும் உம்மால் துரத்தப்பட்டி
ருக்கிற யூதாவின்சனங்களும், யெருஷலேமிய
ரும்,சகலஇஸரவேலருமாகியஎங்களுக்கோ இந்
நாளிலிருக்கிறபடி இலச்சையே உரியது.-ஆண் ௮
டவரே, நாங்கள் உமக்குவிரோதமாய்ப் பாவஞ்
செய்தோம்: இதினிமித்தம் எங்களுக்கும், எங்
கள் இராசாக்களுக்கும், எங்கள் பிரபுகளுக்கும்,
எங்கள்பிதாக்களுக்கும்இலச்சையே உரியது.-
நாங்கள் எங்கள் தேவனாகிய யெகோவா ௯
வுக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தோம், அவர்
தமதுதாசராகிய தீர்க்கதரிசிகளைக்கொண்டு எங்க
ளுக்குமுன்பாகவைத்தகட்டளைகளின்படிநடக்
கும்பொருட்டு, அவருடைய வாக்குக்குச்செவி
கொடுத்தோமில்லை.-ஆயினும் எங்கள் தேவனா ௰
கிய ஆண்டவரிடத்தில் தயவுகளும் மன்
னிப்புக்களுமுண்டு.-இஸரவேலரெல்லாரும் உ ௰௧
மது வாக்குக்கமையாமல் உமதுகட்டளையை மீ
றி, நெறிதப்பிப்போனார்கள்; இதினால் தேவ
னுடைய தாசனாகிய மோசேயின் நியாயப்பிர
மாணத்திலெழுதியிருக்கிற சாபமும், ஆணையும்,
எங்கள் பாவத்தினிமித்தம் எங்கள்மேல் சொரி
யப்பட்டன.—எங்கள்மேல் பெரியதீங்கை வரு ௰௨
விக்கிறதினால் அவர் எங்களுக்கும்,எங்களைநியா
யம் விசாரித்த நியாயாதிபதிகளுக்கும் விரோத
மாகத் தாம் சொல்லிய வாக்குகளைச் சித்திக்கப்
பண்ணினார்: யெருஷலேமுக்குச் செய்யப்பட்
டதுபோல வானத்தின் கீழெங்குஞ் செய்யப்ப
டவில்லை.-மோசேயின் புத்தகத்தில் எழுதியிருக் ௰௩
கிறதுபோல் இந்தத்தீமையெல்லாம் எங்கள்மேல்
வந்தது: ஆயினும் நாங்கள்எங்களெங்கள் பாவங்
களைவிட்டுத்திரும்பி, உமது சத்தியவாக்கியத்தை
அறிந்துகொள்ளுகிறதற்கு, எங்கள் தேவனாகி
ய யெகோவாவினிடத்தில் வேண்டுதல்
பண்ணவில்லை.—ஆதலால் யெகோவா கண் ௰௪
வைத்து, அந்தத் தீமையை எங்கள்மேல்வருவித்
தார்: எங்கள் தேவனாகிய யெகோவா தாம்
செய்யுங் கிரியைகளெல்லாவற்றிலேயும் நீதியுள்

(௨௩)உபா.௨௮.௫௰. (௨௪) வெளி.௰௭.௰௩,௰௭. அதி.௰௧.௩௬. அதி.௭.௨௫. (௨௫) அதி.௰௧.௨௧,௨௩,௨௪. அதி.௰௧.
௩௬. யோபு.௩௪.௨௰. புல.௪.௬.(௨௬)எசேக்.௰௨.௨௭. வெளி.௨௨.௰. (௨௭) அதி.௭.௨௮.—(௯.அதி.௨.) ௨.நாளா.
௩௬.௨௧. எரே.௨௫.௰௧,௰௨. (௩) நெகி.௧.௪. எரே.௨௯.௰௨,௰௩. யாக்.௪.௮,௯,௰. (௪) யாத்.௨௰.௬. உபா.௭.௯ நெகி.௧.
௫. (௫) ௧.இரா.௮.௪௭,௪௮. நெகி.௧.௬,௭. ஏசா.௬௪.௫,௬,௭. எரே.௰௪.௭. (௬) ௨.நாளா.௩௬.௰௫,௰௬.(௭)நெகி.௯.௩௩.
(௰) நெகி.௯.௰௭. (௰௧) ஏசா.௧.௪,௫,௬. எரே.௮.௫,௰. லேவி.௨௬.௰௪,. உபா.௨௭.௰௫,. புல.௨.௰௭. (௰௨) சக.௧.௬.
புல.௧.௰௨. எசேக்.௫.௯. ஆமோ.௩.௨. (௰௩) உபா.௨௮.௰௫. புல.௨.௰௭. ஏசா.௯.௰௩. எரே.௨.௩௰. ஓசி.௭.௭,௰-
(௰௪) எரே.௩௧.௨௮. நெகி.௯.௩௩.

ளவர்: நாங்கள் அவருடையவாக்குக்குச் செவி
௰௫ கொடுக்கவில்லை.-ஆண்டவரே, கைவல்லபத்
தினால் உம்முடையசனங்களை எகிப்துதேசத்தி
னின்றுபுறப்படுத்தி, இந்நாள்வரைக்குமிருக்கிற
படி உமக்குக் கீர்த்தியையுண்டாக்கின எங்கள்
தேவனே, இப்பொழுதே நாங்கள்பாவஞ்செய்
தோம்; துன்மார்க்கராய் நடந்தோம்.
௰௬ ஆண்டவரே, உம்முடைய நீதிகளெல்லா
வற்றின்படிக்கும், உமதுபரிசுத்தமலையாகிய யெ
ரூஷலேம் நகரத்திற்கு உமதுகோபத்தையும், உக்
கிரத்தையுந்தூரப்படுத்தியருளும்: எங்கள்பாவங்
களினாலும், எங்கள் பிதாக்களின் அக்கிரமங்களி
னாலும் யெரூஷலேம் உம்முடைய சனங்களோ
டும் நான்குதிசையிலுமுள்ள யாவருக்கும் நிந்தை
௰௭ யாயிற்று.-ஆதலால், எங்கள் தேவனே, நீர்உம
தடியான்செய்தபிரார்த்தனையையும், அவன்விண்
ணப்பங்களையுங்கேட்டு, ஆண்டவரினிமித்
தம் உமதுமுகத்தைப்பாழாய்ப்போன உமது பரி
சுத்தஸ்தானத்தின்மேல் பிரகாசிக்கப்பண்ணும்.—
௰௮ என் தேவனே, உமதுசெவியைச் சாய்த்துக்
கேட்டருளும்; உம்முடைய கண்களைத்திறந்து,
பாழாய்ப்போன எங்கள் ஸ்தானங்களையும், உம
து நாமந்தரிக்கப்பெற்ற நகரத்தையும் பார்த்தரு
ளும்: நாங்கள் எங்கள் நீதிகளினிமித்தமல்ல, உ
மது மிகுந்த இரக்கங்களினிமித்தமே எங்கள்
விண்ணப்பங்களைஉமது சமுகத்தில் செலுத்துகி
௰௯ றோம்.-ஆண்டவரே, கேளும்; ஆண்டவரே,
மன்னித்தருளும்; ஆண்டவரே, சிந்தைவைத்
துச்செய்தருளும்: என் தேவனே, உம்முடைய
நாமம் உமது நகரத்துக்கும், உம்முடைய சனங்
களுக்குந்தரிக்கப்பட்டபடியால், உமது நாமத்
தினிமித்தந் தாமதியாதிரும்.
௨௰ நான்வசனித்து வேண்டுதல்பண்ணி, என் பா
வத்தையும், என்சனங்களாகியஇஸரவேலருடை
யபாவத்தையுமுணர்ந்து சொல்லி, என் தேவ
னுடைய பரிசுத்தமலையினிமித்தம், என்விண்
ணப்பத்தை என் தேவனாகிய யெகோவா
௨௧ வின் சமுகத்தில் செலுத்தினேன்.—நான்பிரார்த்
தனைபண்ணி முடிவதற்குமுன், சாயங்காலத்தி
லேபலியிடுஞ்சமயத்தில், என்முந்தினதரிசனத்தி
லே நான் கண்டபுருஷனாகிய காபிரியேல் வேக
௨௨ மாய்ப்பறந்து என்னைத்தொட்டான்.—அவன் எ
னக்குணர்த்தி என்னோடே சம்பாஷணைபண்
ணி, என்னிடத்தில், தானியேலே, நான் உனக்
கு அறிவை உணர்த்தும்படி இப்பொழுது புறப்
௨௩ பட்டுவந்தேன்.—நீ மிகவும்பிரியமானவன்; ஆத
லால் நீ பிரார்த்தனைசெய்யத்தொடங்கின சமயத்
தில் கட்டளை வெளிப்பட்டது: நான் அதைத்
தெரிவிக்கவந்தேன், ஆதலால் தாற்பரியத்தையு
ணர்ந்து, தரிசனத்தை நிதானித்துக்கொள்.-மீறு ௨௪
தலைமுடிப்பதற்கும், பாவங்களை ஒழிப்பதற்கும்,
அக்கிரமத்தினிமித்தம் பிராயச்சித்தஞ்செய்வதற்
கும், நித்திய நீதியைத் தோற்றுவிப்பதற்கும், தரி
சனத்தையும், தீர்க்கதரிசனத்தையும் முத்திரைப்
படுத்துவதற்கும், மகாபரிசுத்தமுள்ளவருக்கு அ
பிஷேகம்பண்ணுவதற்கும், உன் சனங்களையும்
உன்பரிசுத்தநகரத்தையுங்குறித்து எழுபதுவாரங்
கள் நியமிக்கப்பட்டன.-ஆதலால் நீ அறிந்து உ ௨௫
ணர்ந்துகொள், யெரூஷலேமைத் திரும்பக் கட்
டுவதற்குக் கட்டளைவெளிப்படுகிறதுமுதல், ம
ஷீயக்கென்னும் அதிபதிவரும்வரைக்கும், எழு
வாரமும் அறுபத்திரண்டுவாரமுஞ் செல்லும்:
வீதியும் மதிலும் உபத்திரவகாலங்களில் திரும்
பக் கட்டப்படும்.—அந்த அறுபத்திரண்டுவாரங் ௨௬
களுக்குப்பின்பு மஷீயக்சேதிக்கப்படுவார், தமக்
காகவல்ல: பின்வரும்அதிபதியின் சனங்கள் நக
ரத்தையும் பரிசுத்தஸ்தானத்தையும் நாசப்படுத்து
வார்கள்; சலப்பிரளயம்போல அதின்முடிவு வ
ரும், முடிவுபரியந்தம் யுத்தமும் நாசமுமுண்டா
கநியமிக்கப்பட்டன.-அவர் ஒருவாரமளவும் அ ௨௭
நேகரோடே உடன்படிக்கையை உறுதிப்படுத்
துவார்: அந்தவாரத்தின்மத்தியில்பலியையும் நை
வேத்தியத்தையும் ஒழிவிப்பார், தீர்மானிக்கப்
பட்ட அழிவு பாழாய்ப்போனவைகள்மேல்சொ
ரியப்படும்வரைக்கும், சங்காரஞ்செய்கிறவன் அ
ரோசியமான சிறகோடே வந்திறங்குவான்.

## ௰. அதிகாரம்.

௧. தானியேல் உபவாசஞ்செய்தபின் தரிசனங் காணப்பெறல்: ௰. தரிசனத்தினாலேபயமடைதல்: ௰௫. தூதனாலேபெலப்படுத்தப்படல்.

பார்சியருடைய இராசாவாகிய கோரேஷ் அ ௧
ரசாண்ட மூன்றாம்வருஷத்தில், பேல்திஷாத்ச
ரென்னும் பெயர்கொண்ட தானியேலுக்கு ஒரு
காரியம்வெளிப்படுத்தப்பட்டது; காரியமோ சத்
தியம், ஆனாலும் அதற்குநியமிக்கப்பட்டகாலம்
நெடியது: அவன் அந்தத்தாற்பரியத்தைஅறிந்து,
தரிசனத்தைத்தெளிந்துகொண்டான்.-அந்நாள்க ௨
ளில்தானியேலாகிய நான்மூன்றுவாரமளவுந்துக்
கித்துக்கொண்டிருந்தேன்.—அந்த மூன்றுவாரங் ௩
கள் நிறைவேறும்வரைக்கும் சுவையுள்ள பதார்த்
தத்தைநான்புசிக்கவில்லை, மாமிசமுந்திராட்சரச
மும். என்வாயிலுட்படவில்லை, நான் என்மேல்

---

(௰௫)யாத்.௬.௧,௬. ௧.இரா.௮.௫௧. நிகி.௧.௰. எரே.௩௨.௨௰,௨௧. யாத்.௰௪.௰௮. நிகி.௯.௰. (௰௬)௧.சாமு.௰௨.௭. மீகா. ௬.௪,௫. ௪௧.௮.௩. யாத்.௨௰.௫. புல.௨.௰௫,௰௬. (௰௭)எண்.௬.௨௫. புல.௫.௰௮. யோவா.௰௬.௨௪. (௰௮) ஏசா.௩௭. ௰௭. யாத்.௩.௭. எரே.௨௫.௨௯. எரே.௩௬.௭. (௨௰) ஏசா.௬௫.௨௪. (௨௧)௧.இரா.௰௮.௩௬. (௨௩) மத்.௨௪.௰௫. எண். ௰௪.௩௪. எசேக்.௪.௬. (௨௪) புல.௪.௨௨. ஏசா.௫௩.௰,௰௧. எரே.௨௩.௫,௬. எபி.௯.௰௨. வெளி.௰௪.௬. சங்.௪௫.௭. லூக்.௧.௩௫. யோவா.௧.௪௧. எபி.௯.௰௧. (௨௫) மத்.௨௪.௰௫. நிகி.௨.௧,௩,௫,௬,௮. ௨.சாமு.௰௫.௨௫. யோவா.௧. ௪௧. ஏசா.௫௫.௪. நிகி.௪.௮,௰௬,௰௭,௰௮. நிகி.௬.௰௫. (௨௬) ஏசா.௫௩.௮. லூக்.௨௪.௨௬,௪௬. ௧.பேதுரு.௨.௨௧. ௧.பேதுரு.௩.௰௮. யோவா.௰௪.௩௰. மத்.௨௨.௭. லூக்.௰௯.௪௪. மத்.௨௪.௨,௬,௰௪. ஏசா.௮.௭,௮. நாகூ.௧.௮. (௨௭) ஏசா.௫௫.௩. எரே.௩௧.௩௧. ஏசா.௫௩.௰௧. மத்.௨௬.௨௮. ரோ.௫.௰௫,௰௯. எபி.௯.௨௮. மத்.௨௪.௰௫. மாற்.௰௩.௰௪. லூக்.௨௧.௨௰. ஏசா.௰.௨௨,௨௩. லூக்.௨௧.௨௪. ரோ.௰௧.௨௬.—(௰. அதி. ௧.) வெளி.௰௯.௧. (௩) மத்.௯.௰௫.

௪ எண்ணெய்பூசவுமில்லை.-முதலாம்மாதம்இருபத்
து நாலாந்தினத்தில் நான் இதெக்கேலென்னும்
௫ பெரிய ஆற்றங்கரையிலிருந்து,—என்கண்களை ஏ
றிட்டபொழுது,சணலுடைகளைத்தரித்த ஒருபுரு
ஷனைக்கண்டேன், அவர்தமது அரையில் ஊபா
சின்பொன்னாலாக்கியகச்சைக்கட்டிக்கொண்டி
௬ ருந்தார்.—அவருடைய சரீரம் தர்ஷீஷ்ரத்தினத்
தைப்போலவும், அவருடைய முகம்மின்னலின்
தோற்றத்தைப்போலவும், அவருடைய கண்கள்
அக்கினிச்சுவாலைகளைப்போலவும்,அவருடைய
புயங்களுங் கால்களுந் துலங்கும் பித்தளையைப்
போலவும்,அவர்வாக்கின்சத்தம் சனத்திரளின் ஆ
௭ ரவாரத்தைப்போலவுமிருந்தன.—தானியேலாகி
யநான்மாத்திரம்அந்தத்தரிசனத்தைக்கண்டேன்:
என்னோடிருந்த மனுஷர் அதைக் காணவில்லை;
அவர்கள்மிகவும்நடுநடுங்கி ஓடி ஒளித்துக்கொண்
௮ டார்கள்.—ஆதலால் நான் தனியே விடப்பட்
டேன், அந்த ஆச்சரியமான தரிசனத்தை நான்
கண்டமாத்திரத்தில் என் பெலனெல்லாம் போ
யிற்று: என்சத்துவம் அழிந்துபோயிற்று, என்னி
௯ டத்திலேபெலன்சற்றுமில்லை.—ஆயினும் அவர்
வாக்கியத்தின் சத்தத்தைக்கேட்டேன்: அவரு
டையவாக்கியத்தின்சத்தத்தை நான்கேட்டபொ
ழுதுமுகஞ்சாய்த்து நித்திரைபோகிறவனாய்ப் பூ
மியிலே முகங்குப்புறவிழுந்தேன்.
௰ அப்பொழுதுஒருகைஎன்னைத்தொட்டு,என்மு
ழங்கால்களையும் என் உள்ளங்கைகளையும் தரை
௰௧ யிலூன்றும்படிசெய்தது.—பின்பு அவர் என்னை
நோக்கி, தானியேலே, அதிபிரியமானவனே,நா
ன்இப்பொழுது உன்னிடத்தில்அனுப்பப்பட்டு
வந்திருக்கிறேன், ஆதலால்நான்உனக்குச்சொல்
லும்வாக்குகளை நீசிந்தித்து உன்கால்களையூன்றி
நில்லென்றார். அவர் இவ்வாக்கை என்னிடத்திற்
௰௨ சொல்ல, நான் நடுக்கத்தோடேநின்றேன்.—அப்
பொழுது அவர் என்னைநோக்கி, தானியேலே, நீ
பயப்படவேண்டாம்: நீ அறிவைத் தேடும்படிக்
கும், உன்னை உன் தேவனுக்குமுன்பாகச்சிறு
மைப்படுத்தும்படிக்கும் தீர்மானித்த நாள்முத
லாகஉன்வாக்குகள்கேட்கப்பட்டன, உன்வாக்
௰௩ குகளினிமித்தம் நான்வந்தேன்.—பாரஸ் இராச்
சியத்தின் அதிபதி இருபத்தொரு நாள்மட்டும்
என்னைஎதிர்த்துநின்றான்: அப்பொழுதுபிரதான
அதிபதிகளில் ஒருவனாகிய மீகாயேல் எனக்குத்
துணைசெய்யும்படிவந்தான்; ஆதலால்பாரஸ்இரா
௰௪ சாக்களிடத்திலே தரித்திருந்தேன்.-இப்பொழு
துமுடிவுகாலத்தில் உன்சனங்களுக்கு நேரிடுங்
காரியத்தை உனக்குத்தெரிவிக்கும்படிவந்தேன்:
தரிசனத்துக்கு இன்னும் அநேக நாட்செல்லு
௰௫ மென்றான்.—அவன் இவ்வாக்குகளை எனக்குச்
சொன்னசமயத்தில், நான் தரைக்குநேரேமுகத்
௰௬ தைச்சாய்த்து மவுனமாயிருந்தேன்.—அப்பொ
ழுது ஒருவர் மனுபுத்திரரின் சாயலாகவந்து,
என் உதடுகளைத்தொட்டார்: உடனேநான் என்
வாயைத்திறந்துபேசி,என்சமுகத்தில்நின்றவரை
நோக்கி, என் ஆண்டவரே, இந்தத்தரிசனத்தி
னால்துக்கம் என்மேல்வந்தது, என்னிடத்திற்பெ
லன்கொஞ்சமுமில்லை.—ஆகையால் என் ஆண்ட ௰௭
வருடைய பணிவிடைக்காரன் என் ஆண்டவ
ரோடேஎப்படிப்பேசலாம்; இனிஎன்னிடத்தில்
பெலனில்லையே, என்னிடத்திலேசுவாசமில்லை
யே என்றேன்.—அப்பொழுது மனுஷனுடைய ௰௮
சாயலைக்கொண்டவனொருவன் திரும்பவும்வந்
து என்னைத்தொட்டு, என்னைப்பெலப்படுத்தி,—
மனுஷனே, அதிபிரியமானவனே: பயப்பட ௰௯
வேண்டாம், உனக்குச்சமாதானம் உண்டாவதா
க,திடங்கொள்,திடங்கொள்ளென்றான். அவன்
என்னோடேபேச, நான்திடங்கொண்டு அவனை
நோக்கி, என் ஆண்டவர்பேசக்கடவர்; என்னைத்
திடப்படுத்தினீரென்றேன்.—அப்பொழுது அ ௨௰
வர், நான் உன்னிடத்தில் வந்தகாரணமின்ன
தென்று உனக்குத்தெரியுமா; இப்பொழுது நான்
பாரஸ் அதிபதியுடன் யுத்தஞ்செய்யும்படி திரும்
பிப்போகிறேன்: பார், நான்புறப்பட்டுப்போகு
ம்பொழுதே கிரேக்கதேசத்து அதிபதிவருவான்.-
சத்தியவேதத்தில் எழுதியிருக்கிறதைநான்உனக் ௨௧
குத்தெரிவிப்பேன்: இவைகளைக் குறித்துஎனக்
குத்துணைசெய்பவர் உங்கள்பிரபுவாகியமீகாயே
லைத்தவிர வேறொருவருமில்லையென்றார்.

## ௰௧. அதிகாரம்.

கிரேக்க இராசாவினால் பாரஸ் இராச்சியம் வச
மாக்கப்படல்: ௫. தெற்குவடக்குத் தேசத்தின்
இராசாக்கள் உடன்படிக்கைபண்ணி யுத்தஞ்
செய்தல்: ௩௰. சத்துருக்கள்வளைத்து உபத்திரவப்
படுத்தல்.

மேதியனாகிய தாரியாவெஷ் ஆளுகைசெய்த ௧
முதலாம்வருஷத்தில் நான் அவனைத்திடப்படுத்
தி, அவனுக்குத்துணையாய்நின்றேன்.—நான் இப் ௨
பொழுதுஉனக்குச்சத்தியத்தைத்தெரிவிப்பேன்.
கேள், பாரஸ்தேசத்தில்இன்னும்மூன்றுஇராசாக்
கள் தோன்றுவார்கள்; நாலாம்இராசா அவர்க
ளெல்லாரிலும் அதிகஐசுவரியமுள்ளவனாயிருப்
பான்: அவன்தன் ஐசுவரியத்தினால்பலவானாகிக்
கிரேக்கஇராச்சியத்திற்குவிரோதமாய்ச் சகலரை
யும் ஏவுவான்.—பின்பு பராக்கிரமமுள்ள இராச ௩
னொருவன் எழும்பி,பிரபலமாக ஆளுகைசெய்து
தன் இஷ்டத்தின்படிநடப்பான்.-அவன் தோன் ௪
றியபொழுதுஅவன் இராச்சியம்முறிக்கப்பட்டு,
வானத்தின் நான்குகாற்றுத்திசைகளில்பகுக்கப்
படும்; ஆனாலும்அது அவன்சந்ததியாருக்கல்ல,
அவன்செய்த ஆளுகையின்படியுமல்ல: அவனு
டைய இராச்சியம்பிடுங்கப்பட்டு, பிறருக்குக்கி
டைப்பதேயன்றி அவர்கள் வசமாயிராது.

(௪) ஆதி.௨.௰௪. (௫) யோசு.௫.௰௩. அதி.௰௨.௬,௭. வெளி.௧.௰௩,௰௪,௰௫. எரே.௰.௯. (௬) எசேக்.௧.௭,௰௪,௰௬,௨௪. வெளி.௧.௰௪,௰௫. (௭) ௨.இரா.௬.௰௭. அப்.௯.௭. (௰) எரே.௧.௯. வெளி.௧.௰௭. (௰௨) வெளி.௧.௰௭. அப்.௰.௪. (௰௩) அதி.௰௨.௧. யூதா.௯. வெளி.௰௨.௭. (௰௪) ஆதி.௪௯.௧. அபகூ.௨.௩. (௰௬) எரே.௧.௯. (௰௯) நியா.௬.௨௩. (௨௧) யூதா.௯. வெளி.௰௨.௭.—(௰௧. அதி.)

ரு தெற்குத்தேசத்தின் இராசர் பலவானாயிருப்
பான், ஆனாலும் அவன் அதிபதிகளில் ஒருவன்
அவனிலும்பலவானாகிஆளுகைசெய்வான்; இவ
னுடையஇராச்சியம்பெரியஇராச்சியமாகும்.-
சு சிலவருஷங்கள்சென்றபின் ஒருமைப்பட்டிருப்
பார்கள்; சமாதானம் உண்டாகும்படிக்குத்தென்
றிசை இராசாவின்குமாரத்தி வடதிசைஇராசா
வினிடத்தில்வருவாள்: அவளுடையபுயபெலம்
நிலைபெறாது; அவனும்நிலைபெறான்,அவனுடை
யபுயமும் நிலைபெறாது: அவளும், அவளை அ
ழைத்துவந்தவர்களும், அவள் பெற்றபிள்ளையும்
அக்காலங்களில் அவளைப் பலப்படுத்தினவர்க
எ ளும் ஒப்பிக்கப்படுவார்கள்.-அவளுடைய வேர்
களின்முளையாகிய ஒருவன் தன்னுடையஸ்தா
னத்திலேதோன்றி, சேனையோடே புறப்பட்டு,
வடதிசைஇராசாவின் கோட்டையிற்பிரவேசித்
அ து, அவர்களைவிரோதித்துமேற்கொண்டு,-அவர்க
ளுடையபிரபுகளையுஞ் சிறைபிடித்து, அவர்களு
டையதேவர்களையும் அருமையானபொன்வெள்
ளிப்பாத்திரங்களுடனே எகிப்துக்குக்கொண்டு
போவான்;அவன்வடதிசைஇராசாவிலும்வெகு
கூ வருஷம் நிலைநிற்பான்.-இவன் தென்றிசைஇரா
சாவின் இராச்சியத்துக்குவிரோதமாய்வருவான்,
பின்பு தன்தேசத்துக்குத் திரும்பிப்போவான்.-
ய ஆனாலும் அவன்புத்திரர்யுத்தஞ்செய்ய எவப்பட்
டு,வெகுசேனைகளைக்கூட்டுவார்கள்:அவர்களி
லொருவன் நிச்சயமாய்வந்து, வெள்ளம்போ
லச்சென்றுகடந்து, திரும்பவும் தன்கோட்டை
யக வரைக்கும் பாய்ந்துசேருவான்.—அப்பொழுது
தென்திசை இராசாகுரோதங்கொண்டு புறப்பட்
டுப்போய் வடதிசை இராசனோடேயுத்தம்பண்
ணுவான்: இவன் பெரியசேனையை எகமாய்க்
கூட்டுவான்; ஆனாலும் அக்கூட்டத்தார் அவன்
யஉ கையில் ஒப்பிக்கப்படுவார்கள்.—அவன் இந்தச்
சேனையை நீக்கிவிட்டபின்பு, அவன் மனங்க
ருவங்கொள்ளும்; அவன்பதினாயிரவரைவீழ்த்தி
யங னாலும் பலங்கொள்ளமாட்டான்.-சிலவருஷஞ்
சென்றபின்வடதிசைஇராசாதிரும்பிவந்து, முந்
தினசேனையிலும் அதிகமான ஒருசேனையைச்
சேர்த்து,பெரியசேனையோடும்,மிகுந்தசெல்வத்
யச தோடும் விரைந்துவருவான்.-அக்காலங்களிலே
தென்றிசைஇராசாவுக்குவிரோதமாகஅநேகர் எ
ழும்புவார்கள்: உன்சனங்களிலுள்ளகொடியவர்
களுடையபுத்திரருந்தரிசனத்தை நிறைவேற்றும்
படி தங்களைஉன்னதப்படுத்துவார்கள்; ஆனாலும்
யரு அவர்கள்விழுவார்கள்.—வடதிசைஇராசா புறப்
பட்டுவந்துஅணைபோட்டுஅரணான நகரங்களைப்
பிடிப்பான்: தென்றிசை இராசாவின் சேனைக
ளும் அவன் தெரிந்துகொண்டசனங்களும் அவ
னை எதிர்க்கமுடியாது, எதிர்நிற்கப்பெலனில்
யசு லை.—அவனுக்கு விரோதமாய்வருகிறவன் தன்
இஷ்டத்தின்படிசெய்வான், அவனுக்குமுன்பா
க ஒருவனும் நிற்கமாட்டான் அவன்சிறப்புள்ள
தேசத்திலேதங்குவான், அது அவன் கைவசமா
கும்.—மேலும் அவன்தன் இராச்சியம்முழுவதி யஎ
லும் வல்லமையோடே பிரவேசிக்கப் பிரயத்தி
னம்பண்ணுவான், அவனுடன்சந்திசெய்வான்;
இப்படிச்செய்து அவனுக்குக் கெடுதியைச்
செய்யும்பொருட்டுஅவனுக்கு ஒருவாலிபஸ்திரி
யைக்கொடுப்பான்:ஆனாலும்அவளாலே ஸ்திரம்
பெறான்,அவள்அவன்பட்சத்தில்நில்லாள்.-பின் யஅ
புஅவன் தீவுகளுக்குத் தன்முகத்தை நேராகத்தி
ருப்பி, அநேகதீவுகளைப்பிடிப்பான்: ஆனாலும்
அதிபதி ஒருவன்இவன்செய்கிற அவமானத்தை
நீக்கி, தன்மேல்வராமல் அதை அவன்மேல்வரப்
பண்ணுவான்.—அதினால் முகத்தைத்தன்தேசத் யகூ
தின் கோட்டைகளுக்கு நேராகத் திருப்புவான்:
அங்கே அவன் இடறிவிழுந்து, காணப்படாமற்
போவான்.—அவனுடைய ஸ்தலத்தில் இராச்சி உய
யத்தின் ஐசுவரியத்தைச்சேர்க்கும்படி தண்டற்
காரனை அனுப்புகிற ஒருவன் எழும்புவான்: அ
வன்சிலநாளிலே நாசமடைவான், கோபத்தினா
லும் யுத்தத்தினாலுமல்ல.—அவனுடைய ஸ்தலத் உக
தில் நீசன் ஒருவன் எழும்புவான், இவனுக்கு இ
ராச்சியத்தின்மேன்மையைக்கொடுக்கமாட்டார்
கள்: ஆனாலும்இவன்சமாதானத்தோடேநுழைந்
து இச்சகங்களைப் பேசுவதினால், இராச்சியத்
தைப் பெற்றுக்கொள்ளுவான்.—பிரளயமாய் வ உஉ
ருஞ்சேனைகள் இவனால் பிரளயம்போல மூடப்
பட்டுமுறிக்கப்படும்; உடன்படிக்கையின் அதி
பதியும் முறிக்கப்படுவான்.—அவனோடும் உங
உடன்படிக்கை ஸ்திரமாக்கப்பட்டபின்பு
அவன்சூதாய்நடப்பான்:அவன்சிலசனங்களோ
டேபுறப்பட்டுவந்து பலங்கொள்வான்.-அவன் உச
சமாதானமுஞ் செழிப்புமுள்ள தேசத்திலே பிர
வேசித்துத் தன்பிதாக்களுந் தன்பிதாக்களின் பி
தாக்களுஞ்செய்யாததைச்செய்து கொள்ளையிட்
டு, அந்தப்படி அவர்களுக்குள்ளே பொருளைப்
பங்கிட்டுச் சிலகாலம் உறுதியான கோட்டைக
ளுக்குவிரோதமாக உபாயசிந்தனைகளைக் கொள்
வான்.-அவன் மகாசேனையைக்கூட்டிக்கொண் உரு
டு, தென்றிசைஇராசாவுக்குவிரோதமாகத் தன்ப
ராக்கிரமத்தையும் வைராக்கியத்தையுங் காட்டு
வான்; அதினால் தென்றிசைஇராசா மிகவும்ப
லத்த பெரியசேனையுடன்போய் யுத்தம்பண்ணு
வான்;ஆனாலும்அவர்கள்இவனுக்குவிரோதமாய்
உபாயமாகத் துராலோசனை பண்ணியிருப்பதி
னால் இவன்நிற்கமாட்டான்.-இவனுடையஅன் உசு
னபதார்த்தங்களைப்புசிப்பவர்கள் இவனை நாசப்
படுத்துவார்கள், இவனுடையசேனைபிரளயமாய்
வரும்: அநேகர் கொலைசெய்யப்பட்டுவிழுவார்
கள்.—அந்தஇராசாக்களிருவருந் தீமைசெய்யும் உஎ
படிதங்கள் இருதயங்களிலேஎண்ணி, ஒரேபோ
சனபீடத்திலிருந்து பொய்பேசுவார்கள்; ஆனா
லும் அதுசித்திபெறாது: நியமிக்கப்பட்ட காலத்
தில்முடிவு வரும்.—அப்பொழுது மிகுந்தசெல் உஅ

(எ) வச.உய. (ய) ஏசா.அ.அ. (யசு) யோசு.க.ரு. (யஎ) உ.நாளா.உய.ங. (யகூ) யோபு.உய.அ. சங்.ஙஎ.ஙசு.
எசேக்.உகூ.உக.

வத்தோடே தன்தேசத்துக்குத்திரும்பிப்போகை
யில் பரிசுத்த உடன்படிக்கைக்கு மனவிரோதங்
கொண்டு அதின்படி நடந்து, அவன் தன்
௨௯ தேசத்தைச்சேர்ந்தான்.—குறித்தகாலத்தில் திரும்
பவுந்தென்தேசத்தில் வருவான்; அது முன்நடந்
ததுபோலவும் பின்நடந்ததுபோலவுமிராது.
௩௰ அவனுக்குவிரோதமாய்க்கித்தீமின்கப்பல்கள்
வரும்: அதினிமித்தம் அவன் துக்கித்துக்கொண்
டுதிரும்பிப்போய், பரிசுத்த உடன்படிக்கைக்
கு விரோதமாய்க் குரோதங்கொண்டு அதின்படி
செய்து, பரிசுத்த உடன்படிக்கையைத் தள்ளி
௩௧ னவர்களோடுஞ் சம்பந்தம்பண்ணுவான்.—அவ
னுக்குப் பின்பு சேனைவீரர்கள் எழும்பி, உறுதி
யான மதில்சூழ்ந்த பரிசுத்த ஸ்தானத்தை அசுசிப்
படுத்தி, நித்திய பலியை நீக்கி, நாசப்படுத்தும்அ
ரோசியமான வஸ்துவை அதிலே ஸ்தாபிப்பார்
௩௨ கள்.—உடன்படிக்கைக்கு விரோதமாய்த் தூர்க்
கருமஞ் செய்பவர்களுக்கு இச்சகமானபேச்சுக்
களினால் கெடுதிசெய்வார்கள்: ஆனாலுந் தங்கள்
தேவனை அறிந்திருக்கிற சனங்கள் பலங்கொண்
௩௩ டு அற்புதங்களைச் செய்வார்கள்.—சனங்க
ளில் ஞானவான்கள் அநேகருக்கு உபதேசிப்
பார்கள்: ஆனாலும் அவர்கள் நெடுநாள்வரைக்
குங்கட்கத்தினாலும், அக்கினிச்சுவாலையினாலும்,
சிறைபிடிக்கப்படுவதினாலும், கொள்ளையாடப்
௩௪ படுவதினாலும் விழுவார்கள்.—அவர்கள் விழுஞ்
சமயத்தில் அற்பசகாயத்தைப் பெறுவார்கள்: அ
நேகர் இச்சகவாக்குகளினால் அவர்கள் பட்சத்
௩௫ தில் ஒட்டிக்கொள்வார்கள்.—ஞானவான்களைப்
பரீட்சிப்பதற்கும், சுத்திகரிப்பதற்கும், முடிவு
காலபரியந்தம் அவர்களை வெண்மையாக்கு
வதற்கும், அவர்களுக்குள்ளுஞ் சிலர் விழுவார்
கள்: நியமிக்கப்பட்டகாலம்வர இன்னும் நாட்
௩௬ செல்லும்.—இராசா தன் இஷ்டத்தின்படி செய்
து, தன்னை உயர்த்தி, எந்தத்தேவனிலும்தன்னைப்
பெரியவனாக்கி, தேவர்களின் தேவனுக்கு வி
ரோதமாக ஆச்சரியமான காரியங்களைப் பேசு
வான், சம்பூரணகுரோதந் தோன்றும்வரைக்கும்
விருத்தியடைவான்: தீர்மானிக்கப்பட்டதுசித்தி
௩௭ பெறும்.—அவன்தன்பிதாக்களின் தேவனை எண்
ணாமலும், ஸ்திரிகளின் அன்பையும் எந்தத் தே
வனையும் மதியாமலும், எல்லாரிலுந்தன்னை உன்
௩௮ னதப் படுத்துவான்.—அவன் தன் அதிகாரகா
லத்தில் அரண்களின் தேவனைக் கனம்பண்ணு
வான்: தன் பிதாக்களறியாத தேவனைப்பொன்
னினாலும், வெள்ளியினாலும், இரத்தினங்களி
னாலும், இனியபதார்த்தங்களினாலுங் கனம்பண்
௩௯ ணுவான்.—வலிமையான அரண்களிலே தான்
வழிபடுகிற அந்நியதேவனுக்கு இப்படிச்செய்
து மேன்மைப்படுவான்: அவர்கள் அநேகசனங்
களை ஆளும்படி செய்வான், இலாபத்திற்குத்தே
சத்தைப் பங்கிடுவான்.—முடிவுகாலத்தில் தென் ௪௰
றிசை இராசா அவனோடே முட்டுவான்: வட
திசை இராசாவும் இரதங்களோடும், குதிரைவீர
ரோடும், அநேகங்கப்பல்களோடும், சூறைக்காற்
றுப்போல் அவனுக்கு விரோதமாக வருவான்;
அவன் தேசங்களுக்குள் பிரவேசித்துப் புரண்டு
நடந்துபோவான்.—அவன் சிறந்ததேசத்திலும் ௪௧
பிரவேசிப்பான், அநேகந் தேசங்கள் கவிழ்க்
கப்படும்: ஏதோமிலும் மோவாபிலுமுள்ளவர்க
ளும், அம்மோன் புத்திரரிற் பிரதானிகளும் அவ
னுடைய கைக்குத்தப்புவார்கள்.—அவன் தேசங் ௪௨
களின்மேல்தன்கையை நீட்டுவான்: எகிப்துதே
சமுந்தப்பாது.—எகிப்தின் பொன்னும்வெள்ளி ௪௩
யுமான திரவியங்களையும், எல்லா அருமையான
பொருள்களையும் ஆளுவான்: லிபியரும், கூஷிய
ரும் அவன் அடிகளைத் தொடருவார்கள்.—
கிழக்கிலும் வடக்கிலுமிருந்துவரும் செய்திகள் ௪௪
அவனைக் கலங்கப்பண்ணும்: ஆதலால் அநேக
ரைக் கொலைசெய்யவும், நாசப்படுத்தவும் அவன்
மிகுந்தகுரோதத்துடன்புறப்பட்டுப்போவான்.—
சமுத்திரங்களுக்கிடையிலுள்ள சிறப்புப் பொ ௪௫
ருந்திய பரிசுத்தமலையினிடத்தில் தன் அரமனை
யின் கூடாரங்களை ஸ்தாபிப்பான்; ஆனாலும் அ
வன் தன்முடிவைக் காண்பான், அவனுக்குத்து
ணைசெய்வார் ஒருவருமில்லை.

## ௰௨. அதிகாரம்.

௧. இஸரவேலர் ஆபத்தினின்று மீகாயேலால் வி
டுவிக்கப்படல்: ௫. முடிவுகாலத்தின் தீர்க்கதரி
சனங்கள் தானியேலுக்குத் தெரிவிக்கப்படல்.

அக்காலத்தில் உன் சனங்களின் சந்ததியாரு ௧
டைய பட்சத்தில் மீகாயேலென்னும் அந்த மகா
அதிபதி நிற்பான்: ஒருசாதியார் தோன்றினது
முதல் அக்காலம்வரைக்குமுண்டாயிராத ஆபத்
துக்காலம்வரும்: அக்காலத்தில் புத்தகத்திலெழு
தப்பட்டவர்களாகிய உன் சகல சனங்களும் வி
டுவிக்கப்படுவார்கள்.—பூமியின் புழுதியில் நித் ௨
திரையடைந்தவர்களாகிய அநேகரில், சிலர் நித்
தியசீவனையும், சிலர் இலச்சையையும், நித்திய
அவமானத்தையும் அடையும்படி விழித்தெ
ழுந்திருப்பார்கள்.—ஞானவான்கள், ஆகாயமண் ௩
டலத்தின் ஒளியைப்போலவும், நீதிமான்களின்
நெறியில் அநேகரைச்சேர்க்கிறவர்கள், சதாகா
லங்களிலும் நட்சத்திரங்களைப்போலவும் பிரகா
சிப்பார்கள்.—தானியேலே, நீயோமுடிவுகாலம் ௪
வரைக்கும் இவ்வாக்கியங்களை மூடி, புத்தகத்
தை முத்திரைப்படுத்து: அநேகர் அங்குமிங்கும்
ஓடுவார்கள், அறிவுபெருகுமென்றார்.

(௩௰) எண்.௨௪.௨௪. எரே.௨.௰. (௩௩) மல்.௨.௭. (௩௫) ௧.பேதுரு.௧.௭. (௩௬) ௨.தெச.௨.௪. வெளி.௰௩.௫,௬. (௩௭) ௧.தீமோ.௪.௩. ஏசா.௰௪.௰௩. ௨.தெச.௨.௪. (௩௮) ஏசா ௪௪.௯. (௪௰) ஏசா.௨௧.௧. ௪௧.௯.௰௪. எசேக்.௩௮.௪,௰௫. வெளி.௯.௰௬. (௪௧) ஏசா.௰௧.௰௪. (௪௩) யாத்.௰௧.௮. நியா.௪.௰. (௪௫) சங்.௪௮.௨. ௨.தெச.௨.௪,௮. வெளி.௰௯.௨௰.—(௰௨.அதி.௧.) ஏசா.௨௬.௨௰,௨௧. எரே ௩௰.௭. மத்.௨௪.௨௰. வெளி.௰௬.௰௮. ரோ.௰௧.௨௬. யாத்.௩௨.௩௨. எசேக். ௰௩.௯. லூக்.௰.௨௰. பிலி.௪.௩. வெளி.௩.௫. (௨) மத்.௨௫.௪௬. யோவா.௫.௨௮,௨௯. அப்.௨௪.௰௫. ஏசா.௬௬.௨௪. ரோ.௯.௨௧. (௩) நீதி.௪.௰௮. மத்.௰௩.௪௩. யாக்.௫.௨௰. ௧.கொரி.௰௫.௪௧,௪௨. (௪) வெளி.௰.௪.

௫ மேலுந் தானியேலாகிய நான்பார்க்கையில்,
நதியின் இக்கரையில் ஒருவனும், நதியின் அக்
கரையில் ஒருவனுமாகிய இருவர் நிற்கக்கண்
௬ டேன்.—சணலுடையைத்தரித்து, நதியின்சலங்
களின்மேல் நின்றவரை ஒருவன் நோக்கி, இந்
த ஆச்சரியமானவைகளின்முடிவுபரியந்தம் எவ்
௭ வளவு காலஞ்செல்லுமென்றுகேட்க,-சணலு
டையைத்தரித்து நதியின் சலங்கள்மேல் நின்ற
வர் தமதுவலக்கையையும் இடக்கையையும் வா
னத்துக்குநேரே நீட்டி, ஒருகாலமும், காலங்க
ளும், அரைக்காலமுஞ் செல்லும்; பரிசுத்த
சனத்தின்வல்லமையைச் சிதற அடித்தல் ஒழிவு
பெறும்பொழுது, இவைகளெல்லாம் நிறைவேறு
மென்று நித்தியமானவரின் நாமத்தைக்கொண்டு
௮ ஆணையிடக்கேட்டேன்.-இதை நான் கேட்டும்,
கருத்து எனக்குத் தெரியவில்லை: அப்பொழுது
நான் அவரைநோக்கி, என் ஆண்டவரே, இ
வைகளின் முடிவு என்னவென்றேன்.-அதற்க ௯
வர் தானியேலே நீபோய்விடு: முடிவுகாலம்வ
ரைக்கும்வாக்கியங்கள் அடைக்கப்பட்டும், முத்
திரைப்படுத்தப்பட்டுமிருக்கும்.—அநேகர் சுத்த ௰
மடைந்து வெண்மையாகி, பரீட்சிக்கப்படுவார்
கள்; துன்மார்க்கரோ துன்னெறியில் நடப்பார்
கள்: துன்மார்க்கரில் ஒருவரும் அறியமாட்டார்;
ஞானவான்கள்மாத்திரம் அறிவார்கள்.—நித்திய ௰௧
பலியை நீக்கி, சருவநாசத்தின் அரோசியமான
தை ஸ்தாபித்த நாள் முதல் ஆயிரத்திருநூற்றுத்
தொண்ணூறு நாளிருக்கும்.-எதிர்பார்த்து, ஆ ௰௨
யிரத்து முந்நூற்று முப்பத்தைந்துநாள்வரையில்
சேருகிறவன் வாழ்வுடையவன்.—நீயோ முடி ௰௩
வுவருமளவும் போய்விடு: நீ இளைப்பாறி, காலத்
தின்முடிவில் உன் வீதத்தில் நிற்பாயென்றான்.

(௫) அதி.௰.௪. (௭) உபா.௩௨.௪௰. வெளி.௰.௫,௬,௭. வெளி.௰௨.௰௪. லூக்.௨௧.௨௪. (௰) ஓசி.௰௪.௯. சக.௰௩.௯. வெளி.௨௨.௰௧. யோவா.௭.௰௭. (௰௩) ஏசா.௫௭.௨. வெளி.௰௪.௰௩.

# ஓசியா.

## ௧. அதிகாரம்.

௧. இஸரவேலரின் ஆத்தும நிலைமையைத் தெரிவித்தல்: ௩. ஓசியாவிவாகஞ்செய்துயெஸ்ரியேலென்னும்புத்திரனைப்பெறுதல்: ௬. லோருகம்மா பிறத்தல்: ௮. லோயம்மி பிறத்தல்: ௰. யூதா, இஸரவேலென்பவர்களின்இரட்சிப்பைத்தீர்க்கதரிசனமாய்ச்சொல்லல்.

யூதா தேசத்து இராசாக்களாகிய ஊசியா, யோ
தாம், ஆகாஸ், இஸ்கியா என்பவர்களின் காலத்
திலும், யோவாஷின்புத்திரனும் இஸரவேலின்
இராசாவுமாகிய யெரோபேயாமுடையகாலத்தி
லும், பேயெரின் புத்திரனாகிய ஓசியாவுக்குக்கி
௨ டைத்த யெகோவாவின்வாக்கு.—யெகோ
வா ஓசியாவைக்கொண்டு வாக்கைச்சொல்லத்
தொடங்கினபொழுது, யெகோவா ஓசியா
வைநோக்கி, நீபோய், ஒரு விபசாரஸ்திரியை
யும் விபசாரப்பிள்ளைகளையுஞ் சேர்த்துக்கொள்:
தேசம்யெகோவாவை விட்டு மிகுதியும் வி
௩ பசாரத்தைச்செய்துவருகின்றதென்றார்.—அந்தப்
படி அவன்போய், திப்லாயீமின் புத்திரியாகிய
கோமரைச்சேர்த்துக்கொண்டான்; அவள் கருப்
பவதியாகி அவனுக்கு ஒரு புத்திரனைப் பெற்
௪ றாள்.-அப்பொழுது யெகோவா அவனைநோக்
கி, இவனுக்கு யெஸ்ரியேலென்னும் பெயரிடு
வாயாக; சொற்பகாலத்துக்குள்ளே நான் யெ
கூவின்வமிசத்தாரிடத்தில் யெஸ்ரியேலின்இரத்
தப்பழியைவிசாரித்து,இஸரவேல்வமிசத்தாரின்
௫ இராச்சியத்தை ஒழியப்பண்ணுவேன்.—அந்நா
ளில் யெஸ்ரியேலின் தாழ்ந்தபூமியில் இஸரவே
லின் வில்லைமுறிப்பேனென்றார்.
௬ அவள்திரும்பவுங்கருப்பந்தரித்து ஒருபுத்திரி
யைப்பெற்றாள். அவர் அவனைநோக்கி, இவ
ளுக்கு லோருகம்மாவென்னும்பெயரிடுவாயாக:
இஸரவேல்வமிசத்தார்மேல் நான் இனித்தயை
செய்யேன், நான்முழுவதும் அவர்களை அகற்று
௭ வேன்.—யூதாவமிசத்தார்மேல் தயைசெய்வேன்,
வில்லினாலாகிலும், கட்கத்தினாலாகிலும், யுத்தத்
தினாலாகிலும், குதிரைகளினாலாகிலும், குதிரை
வீரரினாலாகிலும், அவர்களை இரட்சிக்காமல், அ
வர்களுடைய தேவனாகிய யெகோவாவி
னால் அவர்களை இரட்சிப்பேனென்றார்.
௮ அவள் லோருகம்மாவை மூலைமறக்கப்பண்
ணினபின்பு கருப்பந்தரித்து, ஒரு புத்திரனைப்
௯ பெற்றாள்.—அப்பொழுது அவர், நீங்கள் என்
னுடையசனங்களல்ல,நான்உங்களுடையவரல்
ல:ஆதலால்இவனுக்கு லோயம்மியென்னும்பெ
யரிடுவாயாகவென்றார்.
ஆயினும், இஸரவேல் வமிசத்தாரின்தொகை, ௰
அளவுக்கும் எண்ணுக்கும் அடங்காத சமுத்திரத்
தின்மணலைப்போலாகும்; நீங்கள் என்னுடைய
சனங்களல்லவென்றுஅவர்களுக்குச்சொல்வதற்
குப்பிரதியாக,நீங்கள்சீவனுள்ள தேவனுடை
ய புத்திரரென்று அவர்களுக்குச் சொல்லப்ப
டும்.—அக்காலத்திலே யூதாவமிசத்தாரும், இஸ ௰௧
ரவேல்வமிசத்தாரும் ஏகமாய்க் கூட்டப்பட்டு,
தங்களுக்கு ஒரேஅதிபதியை ஏற்படுத்தி, தேசத்
தினின்று புறப்பட்டுவருவார்கள்: யெஸ்ரியே
லின்நாள் பெரிதாகும்.

## ௨. அதிகாரம்.

௧. சனங்களின் ஞானவிபசார கிரியைகளைத்தெரிவித்தல்: ௬. அதினிமித்தம் அவர்கள் யெகோவாவினால் தண்டிக்கப்படல்: ௰௪. அவர்கள் வாழ்வடையும்படி யெகோவா அருளிச்செய்தல்.

என் சனங்களேயென்று உங்கள் சகோதரருக் ௧
கும்,தயைபெற்றவர்களேயென்று உங்கள்சகோ
தரிகளுக்குஞ்சொல்லுங்கள்.—உங்கள்மாதாவோ ௨
டே வழக்காடுங்கள்,வழக்காடுங்கள்:அவள்எனக்
கு மனைவியுமல்ல, நான் அவளுக்குப்புருஷனு
மல்ல: அவள் தன் வேசைத்தனங்களைத் தன்பார்
வையினின்றும், விபசாரங்களைத் தனது ஸ்தனங்
கள் மத்தியினின்றும் விலக்கக்கடவள்.—இல்லா ௩
விட்டால்நான்அவளைநிருவாணமாக்கி,அவள்பி
றந்தநாளில் இருந்தபிரகாரம் அவளை நிறுத்துவே
ன், அவளை அவாந்தரவெளியைப்போலாக்கி, வ
றண்ட பூமியைப்போல் அவளைவிட்டு, தாகத்தி
னால் அவளைக்கொலைசெய்வேன்.—அவளுடைய ௪
பிள்ளைகள் விபசாரப்பிள்ளைகளானபடியால், அ
வைகளுக்குத் தயைசெய்யேன்.—அவைகளின் ௫
மாதா விபசாரஞ்செய்தாள்: அவைகளைக் கருப்
பந்தரித்தவள் இலச்சையான கருமஞ்செய்தாள்:
எனக்கு ஆகாரத்தையும், என்சலத்தையும்,என்
ஆட்டுமயிரையும், என்சணலையும்,என்எண்ணெ
யையும், என் பானங்களையுந்தந்துவருகிற என்
நேசரைப்பின்பற்றுவேனென்றாள்.
ஆதலால் பார், நான் உன்வழியை முள்ளுக் ௬
களினால் அடைப்பேன், அவள் தன் பாதைக
ளைக் கண்டுபிடிக்காதபடிக்கு மதிலை எழுப்பு

(௧. அதி. ௨.) அதி.௩.௧. ௨பா.௩௧.௰௬. எரே.௨.௰௩. எசேக்.௨௩.௩,. (௪) ௨.இரா.௰.௰௨. ௨.இரா.௰௫.௰,௰௨,௨௯. (௬) ௨.இரா.௰௭.௬,௨௩. (௭) ௨.இரா.௰௯.௩௫. சக.௪.௬. (௰) ஆதி.௩௨.௰௨. ரோ.௯.௨௫,௨௬,௨௭,௨௮. ௧.பேதுரு. ௨.௰. அதி.௨.௨௩.யோவா.௧.௰௨.௧.யோவா.௩.௧.(௰௧)ஏசா.௰௧.௰௨,௰௩.எரே.௩.௰௮.எசேக்.௩௪.௨௩.—(௨.அதி.௨.) ஏசா.௫௰.௧. எசேக்.௰௬.௨௫.(௩)எரே.௰௩.௨௨,௨௬. எசேக்.௰௬.௩௭,௩௯. எசேக்.௰௯.௰௩. ஆமோ.௮.௰௧,௰௩.(௪) யோவா.௮.௪௧. (௫) ஏசா.௧.௨௧. எரே.௩.௧,௬,௮,௯. எசேக்.௰௬.௰௫,௰௬,. வச.௮.௰௨. எரே.௪௪.௰௭. (௬) யோபு. ௩.௨௩. புல.௩.௭,௯.

௭ வேன்.-அவள் தன் நேசரைப்பின்பற்றுவாள்,ஆ
னாலும் அவர்களை அணுகாள்; அவள் அவர்க
ளைத் தேடுவாள், காணாள்: அப்பொழுது அவள்,
நான் என்முந்தின புருஷனிடத்திலே திரும்பிப்
போவேன்; எனக்கிருக்கிற நிலைமையிலும் இ
௮ ருந்த நிலைமையே உத்தமமென்பாள்.—நான் த
னக்குத் தானியத்தையும், புதுத்திராட்சரசத்தை
யும், எண்ணெயையுங் கொடுத்தேனென்றும், அ
வர்கள் பாகாலாயுருவாக்கின வெள்ளியையும்,
பொன்னையும், நான்தனக்குப்பெருகப்பண்ணி
௯ னேனென்றும் அவள் அறியாள்.—ஆதலால்நான்
என்தானியத்தைஅதின்காலத்திலும், என்திராட்
சரசத்தைஅதின்காலத்திலும் எடுப்பேன்,அவளு
டையநிருவாணத்தைமூடத்தக்க என்ஆட்டுமயி
ரையும், என்சணலையும் திரும்பவாங்குவேன்.—
௰ இப்பொழுது நான் அவள்நேசரின்முன்பாக அ
வள் இழிவை வெளிப்படுத்துவேன், என்கையி
னின்று ஒருவரும் அவளை விடுவிக்கமாட்டார்
௰௧ கள்.—அவளுடையமகிழ்ச்சி எல்லாவற்றையும்,
அவள்உற்சவதினங்களையும், அமாவாசிகளையும்,
ஓய்வுநாட்களையும், அவளுடைய மகாசபைகூ
டும் உற்சவதினங்கள்அனைத்தையும்ஒழியப்பண்
௰௨ ணுவேன்.—என்பிரியமானவர்கள் எனக்குப்ப
ணயமாய்க்கொடுத்த திராட்சக்கொடிகளும்,அத்
திமரங்களும் இவைகள்தானென்று அவள்குறித்
தவைகளை நான்அழித்துக்காடாக்குவேன், காட்
௰௩ டுமிருகங்கள்அவைகளைத்தின்னும்.—அவள் பா
கால்களுக்குத்தூபங்காட்டி, காதணிமுதலிய ஆ
பரணங்களினாலேதன்னை அலங்கரித்துக்கொண்
டு தன்நேசரைப்பின்பற்றி, என்னை மறந்துபோ
னநாட்களினிமித்தம் அவளுக்குப் பலன்அளிப்
பேனென்று யெகோவா சொல்லுகிறார்.
௰௪ ஆயினும், பாருங்கள், நான் அவளுக்கு நயங்
காட்டிவனாந்தரத்தில் அவளைஅழைத்துக்கொண்
டுபோனபின்பு அவளைஆற்றும்படிபேசுவேன்.—
௰௫ அவ்விடத்தினின்று திராட்சத் தோட்டங்களை
யும், நம்பிக்கையின் வாசலாகஅக்கோரின்தாழ்ந்
த பூமியையும்,அவளுக்குக்கொடுப்பேன்:இளம்
பிராயத்தில் எகிப்துதேசத்தினின்று புறப்பட்டு
௰௬ வந்தகாலத்தில் பாடினதுபோல அங்கேபாடு
வாள்.—அந்நாளிலே நீ என்னைப் பாகாலென்னா
௰௭ மல், இஷேயியென்பாயென்று யெகோவா
சொல்லுகிறார்.-பாகால்களுடைய நாமங்களை அ
வள்வாயினின்று அகற்றுவேன்; அப்பால் அவை
௰௮ களின்பேர் நினைவிலும்வராது.—அக்காலத்திலே
நான்அவர்கள்நிமித்தம்காட்டுமிருகங்களோடும்,
ஆகாயத்துப்பறவைகளோடும்,பூமியின் ஊர்வன
வற்றோடும் ஒரு உடன்படிக்கைசெய்து,தேசத்தி
னின்று வில்லையும்,கட்கத்தையும், யுத்தத்தையும்
அகற்றி,அவர்களைவாழ்வுடையவர்களாய்ப்படுக்
கப்பண்ணுவேன்.-நான் நித்தியசம்பந்தத்திற்கெ ௰௯
ன்றுஉன்னை ஏற்படுத்துவேன்; நீதியோடும், நியா
யத்தோடும், அன்போடும், இரக்கத்தோடும் உன்
னை எனக்கென்று நியமிப்பேன்.-நான் உண்மை ௨௰
யோடே உன்னைஎன்னுடையவளென்றுநியமிப்
பேன்:நீயெகோவாவை அறிந்துகொள்வாய்.-
அக்காலத்திலே நான் செவிகொடுப்பேனென்று ௨௧
யெகோவாசொல்லுகிறார்,நான்வானங்களுக்
குச்செவிகொடுப்பேன்,அவைகள் பூமிக்குச்செ
விகொடுக்கும்.-பூமிதானியம்,திராட்சரசம்,எண் ௨௨
ணெயென்னும் இவைக்குச் செவிகொடுக்கும்;
இவைகளோ, யெஸ்ரியேலுக்குச் செவிகொடுக்
கும்.—நான், பூமியில் அவளை எனக்கென்றுவி ௨௩
தைப்பேன்; நான், தயைபெறாதவள்மேல் தயை
செய்வேன்; என்சனமல்லாதவர்களைநோக்கி, நீ
என்சனமென்றுநான்சொல்ல,அவர்கள்என் தே
வனே என்பார்களென்றார்.

## ௩. அதிகாரம்.

*திருஷ்டாந்தத்தினால் இஸரவேலின் சீர்கெட்டநி
லைமையைத்தெரிவித்தல்: அவர்கள்வாழ்வடை
வார்களென்று காட்டல்.*

அந்நிய தேவர்களை மதித்து, திராட்சரசபான ௧
பாத்திரங்கள்மேல் பிரியம்வைக்கிறவர்களாகிய
இஸரவேல்வமிசத்தார்மேல் யெகோவா அன்
புவைத்திருக்கிறபடி, நீ திரும்பவும்போய்,வே
றொருவனால்நேசிக்கப்பட்டவளும்,விபசாரியா
னவளுமாகிய ஒரு ஸ்திரியை நேசித்துக்கொள்
ளென்று யெகோவா என்னிடத்தில் சொன்
னார்.—அப்பொழுது நான் பதினைந்துவெள்ளிக் ௨
காசுக்கும், ஒன்றரை ஓமர் வாற்கோதுமைக்
கும் அவளைக்கொண்டு,—அவளைநோக்கி, நீவே ௩
சைத்தனமாய் நடவாமலும், ஒருவனையுஞ்சேரா
மலும், அநேக நாள் எனக்கென்றிரு; நானும் உ
னக்கென் றிருப்பே னென்றேன்.—இஸரவேல் ௪
சந்ததியார் நெடுநாள் இராசாவில்லாமலும்,பிரபு
இல்லாமலும், பலியில்லாமலும், சிலையில்லாம
லும், எபோத்தில்லாமலும், தேராபீமில்லாமலும்
இருப்பார்கள்.—பின்பு இஸரவேல்சந்ததியார்தி ௫
ரும்பித் தங்கள் தேவனாகிய யெகோவா
வையும் தங்கள் இராசனாகிய தாவீதையுந்தேடு
வார்கள்;பிற்காலத்தில் யெகோவாவையும்
அவருடைய அனுக்கிரகத்தையும் நினைந்து அஞ்
சுவார்கள்.

---

(௭) எசேக்.௰௬.௮. (௮) ஏசா.௧.௩. எசேக்.௰௬.௰௭,௰௮,௰௯. அதி.௮.௪. (௰) எசேக்.௰௬.௩௭. (௰௧) ஆமோ.௮.௫,௰. ௧.இரா.௰௨.௩௨. (௰௨) சங்.௮௰.௰௨,௰௩. ஏசா.௫.௫. (௰௩) எசேக்.௨௩.௪௰,௪௨. (௰௪) எசேக்.௨௰.௩௫. (௰௫) யோசு.௭.௨௬. ஏசா.௬௫.௰. எரே.௨.௨. எசேக்.௰௬.௮,௨௨,௬௰. யாத்.௰௫.௨. (௰௭) யாத்.௨௩.௰௩. யோசு.௨௩.௭. சக.௰௩.௨. (௰௮) யோபு.௫.௨௩. ஏசா.௰௧.௬—௯. எசேக்.௩௪.௨௫. சங்.௪௬.௯. ஏசா.௨.௪. எசேக்.௩௯.௯,௰. சக.௯.௰. லேவி.௨௬.௫. எரே.௨௩.௬. (௨௰) எரே.௩௧.௩௩,௩௪. யோவா.௰௭.௩. (௨௧) சக.௮.௰௨. (௨௩) எரே.௩௧.௨௭. சக.௰.௯. சக.௰௩.௯. ரோ.௯.௨௬. ௧.பேதுரு.௨.௰.—(௩. அதி. ௧.) எரே.௩.௨௰. (௩) உபா.௨௧.௰௩. (௪) ஏசா.௰௧.௰௧. யாத்.௨௮.௬. நியா.௰௭.௫. (௫) எரே.௫௰.௪,௫. எரே.௩௰.௯. எசேக்.௩௪.௨௩,௨௪. ஏசா.௨.௨. எரே.௩௰.௨௪. எசேக்.௩௮.௮,௰௬. தானி.௨.௨௮. மீகா.௪.௧.

## ௪. அதிகாரம்.

*௧. சனங்களும் ஆசாரியருமானவர்களுடைய பா
வத்தினிமித்தந் தேவனால் தண்டனை வரு
மெனக்காட்டல்: ௰௨. தேவபூசையைக்குறித்
துச்சனங்களைக்கண்டித்தல்: ௰௫. இஸரவேல்வ
மிசத்தாருக்குவந்தஆபத்தைக்கண்டு யூதாவமிச
த்தார்புத்திபூருவமாய் நடக்கும்படியுணர்த்தல்.*

இஸரவேல் சந்ததியாரே, நீங்கள் யெகோ
வாவின் வாக்கைக்கேளுங்கள்: தேசத்திலேசத்
தியமும், தயையும், தேவஞானமுமில்லாதபடி
யினாலே யெகோவா தேசத்துச்சனங்களோ
௨ டேவிவாதம்பண்ணுகிறார்.—அவர்கள்கட்டளை
யைமீறிப் பொய்யாணையிட்டு, பொய்சொல்லி,
கொலைசெய்து, திருடி, விபசாரஞ்செய்துவருகி
றார்கள், இடைவிடாதபடி இரத்தஞ்சிந்துகிறார்
௩ கள்.—இதினிமித்தந்தேசம்புலம்பும், அதில்வசிக்
கிற யாவரும் காட்டுமிருகங்களோடும் ஆகாயத்
துப்பறவைகளோடும் சோர்ந்துபோவார்கள்; ச
முத்திரத்தின் மச்சங்களும் வாரிக்கொள்ளப்ப
௪ டும்.—ஆயினும் ஒருவனும் விவாதம்பண்ணுகி
றவனாயிருப்பானாக, ஒருவனும் மற்றவனைக்கண்டித்துக்
கொள்ளாதிருப்பானாக: உன்சனங்கள் ஆசாரிய
னோடே விவாதம்பண்ணுகிறவர்களைப் போலி
௫ ருக்கிறார்கள்.—ஆதலால் நீ பகலில் இடறிவிழு
வாய், இரவிலே தீர்க்கதரிசியும் உன்னோடேவி
ழுவான், நான் உன்தாயைச்சங்கரிப்பேன்.
௬ என்சனங்கள் அறியாமையினிமித்தம் சேதிக்
கப்படுகிறார்கள்: நீ அறிவைவெறுத்துவிட்டாய்,
ஆதலால் நானும் உன்னை வெறுத்துவிடுவேன்,
நீ இனி என்சந்நிதியில் ஆசாரியனாயிருக்கமாட்
டாய்: நீ உன் தேவன் அருளியவேதத்தைமறந்
௭ தாய், நானும் உன்சந்ததியாரைமறப்பேன்.—அ
வர்கள்எவ்வளவுபெருகினார்களோ அவ்வளவு எ
னக்குவிரோதமாய்ப் பாவஞ்செய்தார்கள்: நான்
அவர்களுடைய மகிமையை இலச்சையாகமாற்
௮ றுவேன்.—அவர்கள் என் சனங்களின் பாவ
பலியைப்புசித்து, இவர்களுடைய பாவத்தின்
௯ மேல் வாஞ்சைப்படுகிறார்கள்.—ஆதலால் ச
னத்துக்குநேரிடுவதுபோல் ஆசாரியனுக்கும்நே
ரிடும்: அவர்களுடைய நெறிகளின்படி நான்அ
வர்களைத்தண்டிப்பேன்,அவர்கள்கிரியைகளின்
௰ பலனை அவர்களுக்கு அளிப்பேன்.—அவர்கள்
யெகோவாவை மதியாததினிமித்தம் அவர்
கள் புசித்தாலுந்திருத்திபெறார்கள்:அவர்கள்விப
சாரம் பண்ணினாலும் விருத்தி அடையார்கள்.—
௰௧ வேசைநடையும், திராட்சரசமும், புதுத்திராட்
சரசமும் மனதைக்கவர்ந்துகொள்ளுகின்றன.
௰௨ என்சனங்கள் தங்கள் மரத்துண்டங்களிடத்
தில் ஆலோசனைகேட்கிறார்கள், அவர்களுடைய
கோல் அவர்களைப்போதிக்கின்றது: விபசாரத்
துக்கேற்ற ஆவி அவர்களை முறைதவறப்பண்
ணிற்று, அவர்கள்விபசாரக்கிரியைகளைச்செய்து
தங்கள் தேவனைவிட்டு விலகிஇருக்கிறார்கள்.—
அவர்கள் மலைஉச்சிகளிலே பலியிட்டு, குன்றுக ௰௩
ளின்மேல்நிழல் நல்லதென்று, அல்லோன், லிப்
னா, ஏலாவிருட்சங்களின்கீழ்த் தூபங்காட்டுகி
றார்கள்: இதினிமித்தம் உங்கள்குமாரத்திகள்வே
சையின் கிரியைகளையும்,உங்கள்மருமக்கள் விப
சாரத்தையும்செய்துவருகிறார்கள்.—உங்கள் குமா ௰௪
ரத்திகள் வேசைக்கிரியைகளையும், உங்கள் மரு
மக்கள் விபசாரத்தையுஞ்செய்யும்பொழுது நான்
அவர்களைத்தண்டிக்காமல்விடுவேனா; அவர்களே
விலகி வேசைகளோடேபோய், விலைமக்களோ
டே பலி இடுகிறார்கள்: ஆதலால் விவேகமில்
லாத சனங்கள் இடறிவிழுவார்கள்.
இஸரவேலே, நீ வேசைமார்க்கமாய் நடந்துவ ௰௫
ருகிறாயே, ஆயினும் யூதா இப்படிப்பட்டகுற்ற
மில்லாதிருக்கக்கடவன்; கில்காலுக்குப்போகா
மலும், பேதாவெனிலேசேராமலும், யெகோ
வா நித்தியமானவரென்றுஆணையிடாமலுமிருப்
பீர்களாக.—இஸரவேல் அடங்காத கடாரியைப் ௰௬
போல அடங்காதிருக்கிறான்: ஆதலால் யெ
கோவா விஸ்தாரமானவெளியில் ஆட்டுக்குட்
டியைப்போல அவர்களை மேய்ப்பார்.—எப்ரா ௰௭
யீம் விக்கிரகங்களைச்சார்ந்திருக்கிறான்: அவனை
விடு.—அவர்கள்பானஞ்செய்த மதுப் புளித்தது: ௰௮
நாடோறும் விபசாரக்கிரியைகளைச் செய்துவரு
வார்கள்: அவளுடைய அதிபதிகள் தாருங்களெ
ன்று இலச்சையைவிரும்புகிறார்கள்.—காற்று அ ௰௯
வளைத் தன்சிறகுகளில் இறுகக்கட்டிக்கொண்ட
து,அவர்கள் தங்கள்பலிகளினிமித்தம் இலச்சை
அடைவார்கள்.

## ௫. அதிகாரம்.

*ஆசாரியர்,சனங்கள்,பிரபுகள் என்னுமிவர்களுக்
குவருந் தண்டனையைத் தெரிவித்தல்.*

ஆசாரியர்களே, கேளுங்கள், இஸரவேல்வமி ௧
சத்தாரே, சிந்தித்துக்கொள்ளுங்கள்; இராசவமி
சத்தாரே, செவிகொடுங்கள்; நீங்கள்மிஸ்பாவில்
ஒருகண்ணியும், தாபோரின்மேல் விரிக்கப்பட்
டவலையுமானீர்கள், இதினிமித்தம் நியாயத்தீர்ப்
பு உங்களைத்தொடரும்.—நெறிதவறினவர்கள்மி ௨
குதியும் வதைசெய்கிறார்கள், நான் அவர்களனை
வரையுந் தண்டிப்பேன்.—நான் எப்ராயீமை அ ௩
றிவேன், இஸரவேல் எனக்குமறைந்திருக்கவில்
லை: எப்ராயீமே, நீவிபசாரக்கிரியையைச் செய்
துவருகிறாய், இஸரவேல் ஆசூசப்பட்டான்.—அ ௪
வர்கள்தங்கள் தேவனிடத்தில் திரும்புகிறதற்
குத் தங்கள் கிரியைகளைச் சீர்திருத்தமாட்டார்

(௪. அதி. ௧.) ஏசா.௧.௰௮. எரே.௨௫.௩௧. மீகா.௬.௨. எரே.௪.௨௨. (௩) எரே.௪.௨௮. ஆமோ.௫.௰௬. செப்.௧.௩. (௪) உபா.௰௭.௰௨. (௬) ஏசா.௫.௰௩. (௭) ௧.சாமு.௨.௩௰. மல்.௨.௯. பிலி.௩.௰௯. (௯) ஏசா.௨௪.௨. எரே.௫.௩௧.(௰) லேவி.௨௬.௨௬. மீகா.௬.௰௪. ஆகா.௧.௬. (௰௧) ஏசா.௨௮.௭. பிர.௭.௭. (௰௨) எரே.௨.௨௭. அபகூ.௨.௰௯. ஏசா. ௪௪.௨௰.(௰௩)ஏசா.௧.௨௯. எசேக்.௬.௰௩. ஆமோ.௭.௰௭. ரோ.௧.௨௮. (௰௫) அதி.௯.௰௫. ஆமோ.௪.௪. ௧.இரா.௰௨.௨௯. ஆமோ.௮.௰௪. செப்.௧.௫. (௰௬) எரே.௩.௬. சக.௭.௰௧. (௰௭) மத்.௰௫.௰௪. (௰௮) மீகா.௩.௰௧. (௰௯) எரே.௪.௰௧,௰௨. ஏசா.௧.௨௯. எரே.௨.௨௬.—(௫. அதி. ௨.) ஏசா.௨௯.௰௫. (௩) ஆமோ.௩.௨. எசேக்.௨௩.௫,. அதி.௪.௰௭.

கள்: விபசாரத்தின்ஆவி அவர்களுக்குள்ளிருக்
கின்றது,அவர்கள் யெகோவாவை அறியார்
ரு கள்.—இஸரவேலின் கருவம் அவன்முகத்துக்கு
முன்பாகச் சாட்சியிடுகின்றது: ஆகையால் இஸ
ரவேலும் எப்ராயீமும் தங்கள் தங்கள் அதிக்கிர
மத்திலே விழுவார்கள்; அவர்களோடேயூதாவும்
சு விழுவான்.—அப்பொழுது அவர்கள் தங்கள் ஆ
டுமாடுகளோடு யெகோவாவைத் தேடும்படி
போவார்கள்; அவர்கள் அவரைக் காணார்கள்;
எ அவர்அவர்களைவிட்டுவிலகினார்.-அவர்கள் யெ
கோவாவுக்கு விரோதமாகத் துரோகஞ்செய்
தார்கள்:அந்நியப்பிள்ளைகளைப்பெற்றார்கள்: இப்
பொழுதும் ஒருமாதம் அவர்களைத் தங்கள் பங்கு
அ களோடே பட்சிக்கும்.—கிபியாவில் எக்காளத்
தையும், ராமாவிலே பூரிகையையும் ஊதுங்கள்:
பேதாவெனில் உரத்தசத்தமிடுங்கள், பேன்யா
கூ மீனே,உன்பின்னே பார்.—கண்டிப்பின்தினத்
தில் எப்ராயீம் பாழாவான்: நிச்சயமாய்நேரிடுவ
தை இஸரவேல்வமிசத்தாருக்குள்ளே நான் வெ
ய ளிப்படுத்தினேன்.—யூதாவின் பிரபுகள் எல்லை
யைமாற்றினவர்களைப்போலானார்கள்: நான்என்
உக்கிரத்தைச் சலத்தைப்போல அவர்கள்மேல்
யக ஊற்றுவேன்.—எப்ராயீம் மனப்பூருவமாய் அந்
தமுறைமைக்கு இணங்கினபடியால் உபத்திர
வப்பட்டு, நியாயவிசாரணையில் நொறுக்கப்பட்
யஉ டான்.—ஆதலால்நான் எப்ராயீமுக்குப் பொட்
டரிப்பைப்போலிருப்பேன், யூதாவமிசத்தாருக்
யந கு உளுப்புப்போலாவேன்.—எப்ராயீம் தன் வி
யாதியையும், யூதா தன் காயத்தையுங்கண்டபொ
ழுது எப்ராயீம் அசீரியரிடத்தில்போனான், இ
ராசாவாகிய யாரேபிடத்தில்ஆளனுப்பினான்: அ
வன் உங்களைச்சொஸ்தப்படுத்தவும், உங்கள் கா
யத்தைமாற்றவும் அவனால் முடியாமற்போயிற்
யச று.—நான் எப்ராயீமுக்கு ஒருசிங்கத்தைப்போ
லிருப்பேன், யூதாவமிசத்தாருக்குஒரு இளஞ்
சிங்கத்தைப்போலாவேன்: நான், நானே பீறி,
போய்விடுவேன்; நான் கவர்ந்துகொள்வேன்,
விடுவிப்பார் ஒருவருமில்லை.
யரு அவர்கள் தங்கள் தங்கள் குற்றத்தை உணர்ந்
துசொல்லி, என் முகத்தைத் தேடும்வரைக்கும்
நான் என் ஸ்தானத்துக்குத்திரும்பிப்போவேன்:
அவர்கள் தங்கள் ஆபத்தில் என்னைச்சாக்கிரதை
யோடே தேடுவார்கள்.

## சு. அதிகாரம்.

க. மனந்திரும்பும்படி ஏவல்: ச. பாவத்தைக்குறித்
துச் சனங்களையுணர்த்தல்.

நாம் யெகோவாவினிடத்தில் திரும்பு க
வோம் வாருங்கள்: அவரே நம்மைப்பீறினார், அ
வர் நம்மைச் சொஸ்தப்படுத்துவார்; அவர் அடித்
தார், பற்றிடுவார்.-அவர் இரண்டுநாளுக்குப்பின் உ
பு நம்மை உயிர்ப்பிப்பார்: மூன்றாம்நாளிலே நம்
மை எழுப்புவார், நாம் அவர் சமுகத்தில் சீவிப்
போம்.—அப்பொழுது நாம் அறிவுபெறுவோம், ந
யெகோவாவை அறியும்படி முயலுவோம்:
அவர் வெளிப்பாடு அருணோதயம்போல் நிச்சய
மாயிருக்கின்றது; மழையைப்போல், பூமிக்கு
முன்பின்மாரிகள்போல்,நம்மிடத்தில் வருவார்.
எப்ராயீமே, உனக்குஎன்னசெய்வேன்; யூதா ச
வே, உனக்கு என்னசெய்வேன்; உங்கள்பயபத்
திகாலையில்தோன்றும்மேகத்தைப்போலவும்,வி
டியற்காலத்தில் ஒழிந்துபோகிற பனியைப்போ
லவுமிருக்கின்றது.—ஆதலால் நான் தீர்க்கத ரு
ரிசிகளைக்கொண்டு அவர்களை வெட்டினேன்;
என்வாய்மொழிகளைக்கொண்டு அவர்களைக்கொ
லைசெய்தேன்: உனக்கு நேரிடுந்தண்டனைகள் ஒ
ளியைப்போல் வெளிப்பட்டன.—நான் பலி சு
யைப்பார்க்கிலுந் தயையையும், தகனபலிகளைப்
பார்க்கிலுந் தேவஅறிவையும் அதிகமாய்விரும்
புகிறேன்.-அவர்களோ,ஆதாமைப்போல்உடன் எ
படிக்கையை மீறினார்கள்: அந்த ஸ்தானத்தில் எ
னக்கு விரோதமாய்த் துரோகஞ்செய்தார்கள்.—
கிலியாத் துர்க்கிரியை செய்பவர்களுடைய நக அ
ரம், அது இரத்தக்காலடிகளால் மிதிக்கப்பட்ட
து.-பறிகாரர்கூட்டங்கள் ஒருவனைக்காத்திருக்கி கூ
றதுபோல், ஷிகேமுக்குப்போகிறவழியில் ஆசா
ரியக்கூட்டத்தார் கொலைசெய்கிறார்கள்: அவர்
கள் துர்க்கிரியையைச் செய்கிறார்கள்.—இஸர ய
வேல் வமிசத்திலே பயங்கரமான காரியத்தைக்
கண்டேன்: அங்கே எப்ராயீமின் வேசைமார்க்
கமுண்டு, இஸரவேல் அசுசிப்பட்டான்.-யூதா யக
வே, என் சனங்களைச் சிறைமீட்கும்பொழுது உ
னக்கும் ஒரு அறுப்புக்காலம் நியமித்திருக்கிறார்.

## எ. அதிகாரம்.

க. பாவத்தினிமித்தஞ் சனங்களைக் கண்டித்தல்:
யக. கபடத்தினிமித்தந் தேவன் கோபித்தல்.

நான் இஸரவேலைச்சொஸ்தப்படுத்தவிரும்பின க
பொழுது, எப்ராயீமரின் பாவமும், ஷமாரியா
வின்தீமைகளும்வெளிப்படுத்தப்பட்டன:அவர்
கள்வஞ்சனைசெய்கிறார்கள்; திருடன் உள்ளேவ
ருகிறான், பறிகாரர்கூட்டத்தார் வெளியேசூறை
யாடுகிறார்கள்.-அவர்கள்செய்யுந்தீமையையெல்லா உ
ம் நான் நினைவிலேவைக்கிறேனென்று அவர்கள்

(சு) நீதி.க.உஅ. ஏசா.க.யரு. எரே.யக.யக. எசேக்.அ.யஅ. மீகா.ந.ச. யோவா.எ.நச. (எ) ஏசா.சஅ.அ. எரே.ந
உய. எரே.ரு.யக. அதி.சு.எ. மல்.உ.யக. சக.யக.அ. (அ) யோவே.உ.க. ஏசா.ய.நய. யோசு.எ.உ. நியா.ரு.யச. (ய)
உபா.யகூ.யச. (யக) உபா.உஅ.நந. கஇரா.யஉ.உஅ. மீகா.சு.யசு. (யஉ) நீதி.யஉ.ச. (யந) எரே.நய.யஉ. உஇரா.
யரு.யகூ. (யச) புல.ந.ய. (யரு) லேவி.உசு.சய,சக. எரே.உக.யஉ,யந. எசேக்.சு.கூ. சங்.எஅ.நச.—(சு. அதி. க.)
உபா.நஉ.நக. க.சாமு.உ.சு. யோபு.ரு.யஅ. எரே.நய.யஎ. (உ) க.கொரி.யரு.ச. (ந) ஏசா.ருச.யகூ. உ.சாமு.உந
ச. சங்.எஉ.சு. யோபு.உகூ.உந. (ரு) எரே.க.ய. எரே.உந.உகூ. எபி.ச.யஉ. (சு) க.சாமு.யரு.உஉ. பிர.ரு.க. மீகா.
சு.அ. மத்.கூ.யந. சங்.ருய.அ,கூ. நீதி.உக.ந. ஏசா.க.யக. எரே.உஉ.யசு. யோவா.யஎ.ந. (எ) யோபு.நக.நந. (கூ)
எரே.யக.கூ. எசேக்.உஉ.உரு. (ய) எரே.ரு.நய. (யக) எரே.ருக.நந. யோவே.ந.யந. வெளி.யச.யரு. சங்.ாஉசு.
க.—(எ. அதி. க.) அதி.ரு.க. (உ) எரே.யஎ.க.சங்.கூ.யசு. நீதி.ரு.உஉ. சங்.கூய.அ.

தங்கள் உள்ளத்திற் சிந்திப்பதில்லை: அவர்களு
டையகிரியைகள் அவர்களைச்சூழ்ந்துகொண்ட
ன; அவைகள் என்முகத்தின்முன்னிருக்கின்ற
௩ ன.—அவர்கள் தங்கள் தீமையினுல் இராசாவை
யும், தங்கள்பொய்களினுல் பிரபுகளையும் சந்
௪ தோஷப்படுத்துகிறார்கள்.-அவர்களெல்லாரும்வி
பசாரர்கள், அப்பஞ்சுடுகிறவன் எரியிடும் அடுப்
பைப்போலிருக்கிறார்கள், மாவைப்பிசைந்
தது முதல் அது உப்பிப்போம்வரைக்கும் அனலை
௫ எழுப்பாமல்விடுவான்.-நம்முடையஇராசாவின்
தினத்தில்பிரபுகள் திராட்சரசதாபத்தினுல்வருத்
தமாயிருக்கிறார்கள்; அவன் நிந்தைக்காரரோடே
௬ தன்கையைநீட்டுகிறான்.—அவர்கள் பதிவிருக்
கையில் தங்கள் இருதயத்தை அடுப்பைப்போ
லாக்குகிறார்கள்: அவர்களில் அடுப்புமூட்டுகிற
வன் இராமுழுவதும் நித்திரைகொண்டாலும் அ
து காலமேசுவாலிக்கிறஅக்கினியைப்போல் எரி
௭ யும்.—அவர்கள்எல்லாரும் அடுப்பைப்போல் அ
னலாகி, தங்கள் நியாயாதிபதிகளைப்பட்சித்தார்
கள்; அவர்களுடையசகலஇராசாக்களும் விழுந்
தார்கள்: அவர்களில்என்னைநோக்கிப்பிரார்த்திக்
௮ கிறவன் ஒருவனுமில்லை.—எப்பிராயீம் அந்நியசா
தியாரோடேகலந்திருக்கிறான்; எப்பிராயீம் திருப்
௯ பாமல்விட்ட அப்பம்.—அந்நியர் அவன் பலத்
தைப்பட்சித்தார்கள், அவனோ அதை அறியான்:
அவன் தலைமயிர் இடைக்கிடைநரைத்திருந்தும்
௰ அவன் அதை அறியான்.—இஸரவேலின்கருவம்
அவன் முகத்துக்குமுன்பாகச் சாட்சியிடுகின்ற
து: ஆயினும்அவர்கள்தங்கள் தேவனாகியயெ
கோவாவிடத்தில் திரும்பவுமில்லை, இவையெ
ல்லாவற்றினிமித்தமும் அவரைத்தேடவுமில்லை.
௰௧ எப்பிராயீம் பேதைமையானபுறாவுக்குச்சரி, அ
வன்புத்தியீனன்:எகிப்தியரைவரவழைக்கிறான்,
௰௨ அஷீரியவிடத்திலே போகிறார்கள்.—அவர்கள்
போகும்பொழுதுஎன்வலையை அவர்கள்மேல் வீ
சுவேன்;ஆகாயத்துப்பறவைகளைப்போலஅவர்க
ளைஇறங்கப்பண்ணுவேன்;சபையிலேகேள்விப்
பட்டபிரகாரம்நான் அவர்களைத்தண்டிப்பேன்.-
௰௩ ஐயோ,அவர்கள்என்னைவிட்டுஅலைந்துதிரிகிறப
டியினுல் அவர்களுக்கு ஆபத்துவரும்; அவர்கள்
என்கட்டளையைமீறினபடியினுல் அவர்களுக்கு
நாசம்வரும்: நானே அவர்களை மீட்டுக்கொண்
டேன், ஆனாலும்அவர்கள்எனக்குவிரோதமாய்ப்
௰௪ பொய்களைப்பேசுகிறார்கள்.—தங்கள் சயனங்க
ளில்அலறும்பொழுது அவர்கள்என்னைநோக்கித்
தங்கள்மனப்பூருவமாய் ஓலமிடாமல், தானியம்
திராட்சரசமென்னும்இவைகளுக்காக ஏகமாய்க்
கூடுகிறார்கள், எனக்கு விரோதமாய்க் கட்டளை
௰௫ யை மீறுகிறார்கள்.—நான் அவர்களைத் தண்டித்
தேன், அவர்களுக்குப் புயபலத்தைக் கொடுத்
தேன், ஆனாலும் எனக்குவிரோதமாய்த்துர்ச்சிந்த
னைகளைச்சிந்திக்கிறார்கள்.—அவர்கள் திரும்புகி ௰௬
றார்கள், சருவத்திற்குமேலானவரிடத்திலோஅல்
ல: அவர்கள் கள்ள வில்லுக்கொப்பாயிருக்கி
றார்கள்: அவர்களுடைய பிரபுகள் தங்கள் தங்
கள் நாவின் குரோதத்தினிமித்தம் கட்கத்தினுல்
விழுவார்கள்: இதுவே எகிப்துதேசத்தில் அவர்
களுக்கு வரும்நிந்தை.

## அ. அதிகாரம்.

அவபத்தி,தேவபூசைமுதலியவற்றினிமித்தம்இஸ
ரவேலருக்குவருந் தண்டனையையுரைத்தல்.

நீ உன்வாயில்எக்காளத்தை வை. அவர்கள்என் ௧
உடன்படிக்கையைத்தள்ளி என் கட்டளையைமீ
றினபடியினுலே, சத்துரு,யெகோவாவின்
வீட்டுக்குக் கழுகைப்போல் வருவான்.—ஆ, ௨
என் தேவனே,உம்மைஅறிந்திருக்கிறோமென்
றுசொல்லி, இஸரவேலர் என்னைநோக்கி ஓலமி
டுவார்கள்.-இஸரவேல்நன்மையைவிலக்கினான்: ௩
சத்துரு அவனைத்தொடருவான்.—அவர்கள் இ ௪
ராசாக்களை ஏற்படுத்துகிறார்கள், என்னாலே யல்
ல: என்சம்மதமில்லாமல் பிரபுகளை நிலைப்படுத்
தினார்கள்: அவர்கள் தாங்கள் சேதிக்கப்படுவதற்
கேதுவாய்த்தங்கள் வெள்ளியினுலும் பொன்னி
னுலும் விக்கிரகங்களைச்செய்தார்கள்.
ஷமாரியாவே, உன் கன்று உன்னை விலக்கிற் ௫
று; என் கோபம் அவர்களுக்கு விரோதமாய்
மூண்டிருக்கின்றது:சுத்தம்பெறுவது,எதுவரைக்
கும் அவர்களால் இயலாதிருக்கும்.—அது இ ௬
ஸரவேலில் தோன்றிற்று: தொழிற்காரன் அதைச்
செய்தான்; ஆதலால் அது தேவனல்ல: ஷமாரி
யாவின் கன்று கண்டதுண்டமாக்கப்படும்.-அ ௭
வர்கள் காற்றை விதைத்துச் சூறைக்காற்றை அ
றுப்பார்கள்: விளைவுஅவர்களுக்கில்லை: கதிர் மா
வைக் கொடுக்கமாட்டாது: கொடுத்தாலும் அந்
நியர்அதை விழுங்குவார்கள்.—இஸரவேல் வி ௮
ழுங்கப்பட்டான்: அவர்கள் அந்நியதேசத்தா
ருக்குள் இன்பந்தராத பாத்திரத்தைப்போலிருப்
பார்கள்.—அவர்கள் தனித்துத்திரிகிற காட்டுக் ௯
கழுதையைப்போல அஷீரியவிடத்தில் போனார்
கள்.—எப்பிராயீம் கூலிக்குச்சிநேகரைச் சம்பாதித் ௰
தான், அவர்கள் அந்நியதேசத்தாருக்குக் கூலி
கொடுத்தாலும் இப்பொழுது நான் அவர்களைக்
கூட்டிக்கொள்ளுவேன், பிரபுகளின் இராசா
ஏற்றுஞ்சுமையினுல் அவர்கள் சொற்பகாலத்துக்
குள்ளே துக்கப்படுவார்கள்.—எப்பிராயீம் பாவஞ் ௰௧
செய்வதற்கேதுவாய்அநேகவேதிகைகளைச்செய்
தபடியினுல், வேதிகைகளே அவன் பாவஞ்
செய்வதற்கேதுவாகும்.—நான் என் வேதத்தி ௰௨

(௩) ரோ.௧.௩௨. (௪) எரே.௯.௨. (௭) ௨.இரா.௰௫.௰,௰௪,௨௫,௩௰. ஏசா.௬௪.௭. (௮) சங்.௱௬.௩௫. (௰) ஏசா.௯.௰௩. (௰௨) எசேக்.௰௨.௰௩. லேவி.௨௬.௰௪,. உபா.௨௮.௰௫,. ௨.இரா.௰௭.௰௩,௰௮. மீகா.௬.௪. (௰௪) யோபு.௩௫.௯,௰௧. எரே.௩.௰. சக.௭.௫.—(அ. அதி. ௧.) உபா.௨௮.௫௰. எரே.௪.௰௩. அபகூ.௧.௮. (௨) தீத்.௧.௰௬. (௪) ௨.இரா.௰௫.௰௩,௰௭,௨௫. (௫) எரே.௰௩.௨௭. (௭) நீதி.௨௨.௮. (௮) ௨.இரா.௰௭.௬. எரே.௨௨.௨௮. (௯) ௨.இரா.௰௫.௰௯. எரே.௨.௨௪. (௰) ஏசா.௩௰.௬. எசேக்.௰௪.௩௩,௩௪,௩௭. ஆகா.௨.௬. ஏசா.௰.௮.எசேக்.௨௬.௭. தானி.௨.௩௭. (௰௨) உபா.௪.௬,௮. சங்.௱௪௯.௰௯.

லுள்ளமிகுந்தவிசேஷங்களை அவனுக்கென்று எ
ழுதினேன், அவைகள் அபூருவமாய் எண்ணப்
௰௩ பட்டன.—அவர்கள் எனக்கென்று செலுத்தத்
தகும் மாமிசத்தைப் பலியிட்டுப் புசிக்கிறார்கள்,
யெகோவாவோ அவர்களை அங்கிகரிக்க
மாட்டார்; இப்பொழுது இவர் அவர்களுடைய
அதிக்கிரமத்தைநினைந்து, அவர்களுடையபாவத்
தை விசாரிப்பார்: அவர்கள் திரும்பவும் எகிப்
௰௪ துக்குப் போவார்கள்.—இஸரவேல் தன் சிருஷ்
டிகர்த்தாவைமறந்து விக்கிரகாலயங்களைக் கட்டு
கிறான்; யூதா அரணான பட்டணங்களைப் பெரு
கப்பண்ணுகிறான்: ஆனாலும் நான் அவன் நகரங்
களில் அக்கினியை வரப்பண்ண அது அவனு
டைய அரமனைகளைத் தகிக்கும்.

## ௯. அதிகாரம்.

தேவபூசைமுதலிய பாவங்களினிமித்தம் இஸர
வேலருக்குவருந்தண்டனையைத் தெரிவித்தல்.

இஸரவேலே, நீ அந்நிய சனங்களைப்போலம
கிழ்ந்து களிகூராதே: நீ உன் தேவனுக்குப்ப
ராமுகமாகி, வேசையின் கிரியைகளைச் செய்கி
றாய், ஒவ்வொரு தானியக்களத்திலுங்கூலியைவி
௨ ரும்புகிறாய்.-தானியக்களமும், திராட்சத்தின் ஆ
லையும் அவர்களைப் போஷிப்பதில்லை, திராட்ச
௩ ரசம் அவர்களிடத்தில் ஒழிந்துபோம்.—அவர்
கள் யெகோவாவின் தேசத்தில் வசிப்பதில்
லை; எப்ராயீமரோ திரும்பவும் எகிப்துக்குப்போ
வார்கள், அஷீரியவில் அசுசியான பதார்த்
௪ தங்களைப் புசிப்பார்கள்.—அவர்கள் யெகோ
வாவுக்கென்று திராட்சரசத்தை ஊற்றமாட்
டார்கள், அவர்களுடைய பலிகளை அவர் அங்
கிகரியார்: அவைகள் புலம்புகிறவர்களின் உண
வைப்போலிருக்கும்; அவைகளைப் புசிப்ப
வர்கள் யாவரும் ஆசூசப்படுவார்கள்: அவர்களு
டைய ஆகாரம் அவர்களுக்கேயாகும், அது யெ
௫ கோவாவின் வீட்டிலேசேராது.—மகா சபை
கூடும்நாளிலும், யெகோவாவின் உற்சவதி
௬ னத்திலும்என்னசெய்வீர்கள்.—பார், அவர்கள்நா
சத்துக்குத் தப்பும்படி போய்விட்டார்கள்: எகிப்
து அவர்களைச் சேர்த்துக்கொள்ளும், மோப் அ
வர்களை அடக்கம்பண்ணும்: அவர்கள் வெள்ளியி
னால் சம்பாதித்த இனிய ஸ்தானங்களைக்
காஞ்சொறிகள் சுதந்தரித்துக்கொள்ளும்: அவர்
களுடைய தாவரங்களில் முட்செடிகள் முளைக்
௭ கும்.—உன் மிகுதியான பாவத்துக்காகவும், மகா
பகைக்காகவும் நீ விசாரிக்கப்படும் நாள்கள்வந்த
ன, தண்டனையின்நாள்கள்வந்துவிட்டன; தீர்க்
கதரிசி மதியீனனென்றும், வேத உபதேசி பித்த
னென்றும் இஸரவேலர்அறிந்துகொள்வார்கள்.—
எப்ராயீமின் காவலாளன் என் தேவன்பட்சத் ௮
திலிருந்தான்: தீர்க்கதரிசி தன் வழிகளெல்லா
வற்றிலுங்குருவிபிடிக்கிறவனுடையகண்ணியா
யிருக்கிறான், தன் தேவனுடைய ஆலயத்திற்
கு அரோசியமுள்ளவன்.—கிபியாவின் நாட்களி ௯
லேநடந்ததுபோல அவர்கள்தங்களைமிகவும்கெ
டுத்துக்கொண்டார்கள்: இவர் அவர்களுடைய
குற்றத்தைநினைப்பார், இவர் அவர்களுடையபா
வங்களைவிசாரிப்பார்.-வனத்திலுள்ள திராட்சப் ௰
பழங்களைப்போல் இஸரவேலைக் கண்டேன்;
அத்திமரத்திலே முதல்தரம் பழுக்கும் பழங்க
ளைப்போல உங்கள்முன்னோரைக் கண்டேன்:
அவர்கள் பாகால்பேயோரிடத்திற் போய், இ
லச்சையான அந்தப்பொருளுக்குத் தங்களை வே
றுபடுத்தினார்கள்; அவர்கள் தாங்கள் நேசித்த
பொருளைப்போல் அரோசிகமுள்ளவர்களானா
ர்கள்.-எப்ராயீமின்மகிமை ஒருபறவையைப்போ ௰௧
லப்பறந்துபோம், கருப்பந்தரித்தலும், கருப்பத்
தில்இருத்தலும், பிரசவித்தலும் இனி இராது.-
அவர்கள் தங்கள் பிள்ளைகளைவளர்த்தாலும் நான் ௰௨
அவர்களைப் புத்திரவீனராக்குவேன், ஒருவனும்
மீந்திரான்: ஐயோ, நான் அவர்களைவிட்டு நீங்
கும்பொழுது அவர்களுக்கு ஆபத்துவரும்.-என் ௰௩
பார்வையில் எப்ராயீம் தீருவைப்போல இனி
மையானஸ்தானத்தில்நாட்டப்பட்டிருக்கிறான்:
ஆகிலும் எப்ராயீம் கொலைகாரனிடத்தில் தன்
பாலகரை வெளியேகொண்டுவருவான்.—யெ ௰௪
கோவாவே, அவர்களுக்குக் கொடுத்தருளும்:
என்னத்தைக்கொடுப்பீர்; அழிகருவையும், பா
லில்லாத ஸ்தனங்களையுங்கொடும்.—அவர்களு ௰௫
டைய தீமை எல்லாங் கில்காலிலுண்டு: அங்கே
நான் அவர்களைவெறுத்தேன்: அவர்கள் செய்
யுந்துர்க்கிரியையினிமித்தம் அவர்களை நான் என்
ஆலயத்தினின்று துரத்துவேன், நான் இனி ஒரு
பொழுதும் அவர்களை நேசிக்கமாட்டேன்: அ
வர்களுடைய பிரபுகள்யாவரும் வழுவிப்போ
னார்கள்.—எப்ராயீம் அடிக்கப்பட்டான், அவர் ௰௬
களுடைய வேர் உலர்ந்துபோயிற்று, இனிக்க
னிகொடுக்கமாட்டார்கள்: அவர்கள்பெற்றாலும்
நான் அவர்களுடைய கருப்பத்தின் அருமையா
னதை அழிப்பேன்.—அவர்கள் அவருக்குச்செ ௰௭
விகொடாமல் போனபடியால் என் தேவன்
அவர்களை வெறுத்துவிடுவார்: அவர்கள் அந்நிய
தேசத்தாருக்குள் அலைந்து திரிவார்கள்.

## ௰. அதிகாரம்.

இஸரவேலர்செய்த தேவபூசைமுதலான பாவங்
களினிமித்தம் அவர்களைக் கண்டித்துப் பயமு
றுத்தல்.

(௰௩) எரே.௭.௨௧. ௪௧.௭.௯. எரே.௰௪.௰,௰௨. ஆமோ.௫.௨௨. ஆமோ.௮.௭. உபா.௨௮.௬௮. (௰௪) உபா.௩௨.௰௮. ஏசா.௨௯.௨௩. எபே.௨.௰. ௧.இரா.௰௨.௩௧. எரே.௰௭.௨௭. ஆமோ.௨.௫.—(௯. அதி. ௧.) எரே.௪௪.௰௭. (௩)லேவி. ௨௫.௨௩. எரே.௨.௭. எசேக்.௪.௰௩. தானி.௧.௮. ௨.இரா.௰௭.௬. (௪) எரே.௯.௨௰. உபா.௨௬.௰௪. லேவி.௰௭.௰. (௬) அதி.௭.௰௩. ஏசா.௫.௬. (௭) எசேக்.௰௩.௩,. மீகா.௨.௰௧. செப்.௩.௪.(௮)எரே.௬.௰௭. எசேக்.௩.௰௭.(௯)ஏசா. ௩௧.௬. நியா.௰௯.௨௨. (௰) ஏசா.௨௮.௪. மீகா.௭.௧. எண்.௨௫.௩. எரே.௰௧.௰௩. எசேக்.௨௰.௮. ஆமோ.௪.௫. (௰௨) யோபு.௨௭.௰௪. உபா.௨௮.௪௧,௬௨. உபா.௩௧.௰௭. ௨.இரா.௰௭.௰௮. (௰௫) ஏசா.௧.௨௩. (௰௬) எசேக்.௨௪.௨௧. (௰௭) உபா.௨௮.௬௪,௬௫.—(௰. அதி.)

இஸரவேல் பலனற்றதிராட்சக்கொடி, அவன்
தனக்குக்கனிகொடுக்கிறான்: அவன் தன் கனி
யின்மிகுதிக்கேற்கவேதிகைகளைஅதிகமாகஉண்
டாக்குகிறான்; அவன்தன்தேசத்தின்நலத்துக்கா
கச் சௌந்தரியமான விக்கிரகங்களைச் செய்கி
௨ றான்.—அவர்களுடையஇருதயம்பிரிவுபட்டிருக்
கின்றது; இப்பொழுது அவர்கள்குற்றமுள்ளவர்
களாகத்தீர்க்கப்படுவார்கள்: இவர்அவர்களுடை
யவேதிகைகளைஇடித்து, அவர்களுடைய விக்கி
௩ ரகங்களை நாசப்படுத்துவார்.—நாம் யெகோ
வாவுக்குப் பயப்படாமற்போனபடியினாலே
நமக்குஇராசாவில்லை; இராசா நமக்காக எதைச்
செய்யக்கூடுமென்று இனிச்சொல்லுவார்கள்.—
௪ அவர்கள் சொற்களைச்சொல்லி, பொய்ஆணை
யிட்டு, உடன்படிக்கை பண்ணிக்கொண்டார்
கள்: ஆதலால் வயல்வெளியின் படைச்சால்க
ளில் நச்சுச்செடியைப்போல நியாயத்தீர்ப்புமு
௫ ளைக்கின்றது.-ஷமாரியர்பேதாவெனிலுள்ளகன்
றுகளினிமித்தம் பயப்படுவார்கள்: அதினுடை
யமகிமைவிட்டு நீங்கினதென்று சனங்களும், க
௬ ளிகூர்ந்த பூசாரிகளும் புலம்புவார்கள்.—அது
வும் அஷ்ஷூரியவில் யாரேப்இராசாவுக்குக்காணிக்
கையாகக்கொண்டுபோகப்படும்: இலச்சை எப்
ராயீமைப்பிடிக்கும், இஸரவேல்தன்ஆலோசனை
௭ யினால் இலச்சைஅடைவான்.—ஷமாரியாவின்
இராசா சலமுகத்தின்நுரையைப்போல அதம்
௮ பண்ணப்பட்டான்.—இஸரவேலுடைய பாவ
மாகிய அவெனின் உயர்ந்தஸ்தானங்கள் அழிக்
கப்படும்:முட்செடியும்,குருக்கத்தியும் அவர்கள்
வேதிகைகளின்மேல்முளைக்கும்; அவர்கள்மலை
களைநோக்கி, எங்களை மூடுங்களென்றும், குன்
றுகளைப்பார்த்து, எங்கள்மேல் விழுங்களென்
௯ றுஞ்சொல்லுவார்கள்.—இஸரவேலே, நீ கிபியா
வின்நாட்கள்முதல்பாவஞ்செய்துவந்தாய்: அங்
கே அவர்கள்நின்றார்கள்: பாவமுள்ள சந்ததியா
ருக்குவிரோதமாய்க் கிபியாவிலுண்டானயுத்தத்
௰ தில் அவர்களுக்குச்சேதமில்லை.—நான் அவர்க
ளைத்தண்டிக்கவிரும்புகிறேன்; அவர்கள் தங்கள்
இருவிதபாவங்களினிமித்தங் கட்டப்படும்பொ
ழுது சனங்கள் அவர்களுக்கு விரோதமாய்க்கூ
௰௧ டுவார்கள்.—எப்ராயீம் போரடிக்கவிரும்பி நன்
றாய்ப்பழக்கினகடாரியாயிருக்கிறான்; நான் அ
தின் அழகியகழுத்தின்மேல் நுகத்தை ஏற்றுவே
ன்: எப்ராயீமை ஏர்பூட்டி ஓட்டுவேன்; யூதா உ
ழுவான், யாக்கோபு அவனுக்குப் பரம்படிப்
௰௨ பான்.-நீங்கள் நீதிக்கென்று விதையுங்கள், தேவ
பத்திக்கேற்க அரியரியுங்கள்; பண்படுத்தாத நி
லத்தைச் செய்கைபண்ணுங்கள்: யெகோவா
வந்து உங்கள்மேல்நீதியென்னும்மழைபெய்விக்
கும்வரைக்கும் அவரைத்தேடத்தக்ககாலம் வந்
தது.—நீங்கள் தீமையை உழுதீர்கள், பாவத்தை ௰௩
அறுத்தீர்கள்; நீ உன்வழியையும், உன்பராக்கிர
மவீரர்கூட்டத்தையும் நம்பினாய், ஆனபடியால்
நீங்கள்பொய்களின்கனிகளைப்புசித்தீர்கள்.—ஆ ௰௪
கையால் உன்சனங்களுக்குள் அமளி எழும்பும்,
பிள்ளைகளின்மேல் மாதாமோதப்பட,யுத்தத்தினத்
தில் ஷல்மான் பேத்தார் பெலை நாசப்படுத்தின
துபோல,உன்துருக்கங்களெல்லாம் சிதைக்கப்ப
டும்.—உங்கள் மிகுதியானபாவங்களினிமித்தம் ௰௫
பெத்தேல் உங்களுக்கும் இப்படிச்செய்யும்: இ
ஸரவேலின் இராசா உதயகாலத்தில்சங்கரிக்கப்
படுவான்.

## ௰௧. அதிகாரம்.

௧. தேவனுடைய அனுக்கிரகத்தைப்பெற்ற இஸரவேலர் நன்றியீனத்தினிமித்தந் தண்டிக்கப்படல்: ௮. தேவன் அவர்களை அனுக்கிரகித்தல்.

இஸரவேல் பாலகனாயிருந்தபொழுது நான் ௧
அவனைநேசித்தேன், எகிப்திலிருந்து என்புத்திர
னைவரவழைத்தேன்.—அவர்கள் இவர்களைவரவ ௨
ழைக்க இவர்கள் அவர்கள்சமுகத்தைவிட்டுவில
கினார்கள்: பாகால்களுக்குப் பலியிட்டுத் தொ
ழிற்பட்டவிக்கிரகங்களுக்குத்தூபங்காட்டினார்
கள்.—நான் எப்ராயீமருக்கு அவர்கள்கைகளைப் ௩
பிடித்து நடைபயிற்றினேன்; ஆகிலும் நானே
தங்களைச்சொஸ்தப்படுத்தினவரென்று அவர்கள்
அறியவில்லை.—மனுஷருக்கிசைந்தகயிறுகளாகி ௪
ய அன்பின் பந்தங்களினாலே நான் அவர்களை இ
ழுத்து, அவர்கள் கழுத்துகளினின்று நுகத்தைத்
தூக்கினவரைப்போலாகி, அவர்களிடத்தில் உ
ணவுப்பொருளைக்கூட்டிவைத்தேன்.
அவர்கள் மனந்திரும்பச் சம்மதியாததினிமித் ௫
தம் எகிப்துதேசத்துக்குத் திரும்பிப்போகமாட்
டார்கள், அஷ்ஷூரியனே அவர்களுக்குஇராசா.—
கட்கம்அவர்கள்நகரங்கள்மேல்வந்து தங்கும்,அ ௬
வர்களுடைய ஆலோசனைகளினிமித்தம் அவர்
கள்கோல்களைநாசப்படுத்தி அவர்களைப் பட்
சிக்கும்.—என் சனங்கள் என்னைவிட்டுவிலகப் ௭
பார்க்கிறார்கள்: அவர்கள் சருவத்திற்குமேலான
வரிடத்தில் அவர்களை வரவழைத்தாலும் அவ
ரைமேன்மைபாராட்டுவார் ஒருவருமில்லை.—
எப்ராயீமே, நான் உன்னை எப்படிக்கைவிடு ௮
வேன்; இஸரவேலே, நான் எவ்விதமாய்
உன்னை ஒப்பிப்பேன்; நான் எப்படி உன்னை
அத்மாவைப்போலாக்குவேன்; நான் உன்னைச்
சேபோயிமைப்போல வைப்பதெப்படி; எ
னக்குள் என்னிருதயம் கலங்குகின்றது, காரு

(௧) நாகூ.௨.௨. (௨) ௧.இரா.௰௮.௨௧. மத்.௬.௨௪. (௩) மீகா.௪.௯. (௪) உபா.௨௯.௰௮. ஆமோ.௫.௭. அப்.௮.௨௨-எபி.௰௨.௰௫. (௫) ௧.இரா.௰௨.௨௮,௨௯. ௨.இரா.௨௩.௫. செப்.௧.௪. ௧.சாமு.௪.௨௧,௨௨.(௮)உபா.௯.௨௧. ௧.இரா.௰௨.௩௰. ஏசா.௨.௰௯. லூக்.௨௩.௩௰. வெளி.௬.௰௬. (௯) நியா.௨௰. (௰) உபா.௨௮.௬௩. நியா.௰௬.௰௬. எசேக்.௨௩.௪௬,௪௭. (௰௧) எரே.௫௰.௰௧. மீகா.௪.௰௩. (௰௨) நீதி.௰௧.௰௮. எரே.௪.௩. (௰௩) யோபு.௪.௮. நீதி.௨௨.௮. கலா.௬.௭,௮. (௰௪) ௨.இரா.௰௮.௩௪.—(௰௧. அதி. ௧.) மத்.௨.௰௫. யாத்.௪.௨௨,௨௩. (௨) ௨.இரா.௰௭.௰௬.(௩)உபா.௧.௩௧-ஏசா.௪௬.௩. யாத்.௰௫.௨௬. (௪) லேவி.௨௬.௰௩. (௫) ௨.இரா.௰௭.௰௩,௰௪. (௭) எரே.௩.௬. (௮) எரே.௩.௭. ஆதி-௰௪.௮. உபா.௨௯.௨௩. ஆமோ.௪.௰௧. உபா.௩௨.௩௬. ஏசா.௬௩.௰௫. எரே.௩௧.௨௰.

ணியத்தினால் என் உள்ளமெல்லாம் எரிகின்ற
௯ து.—என் உக்கிரகோபம் பலிக்கவிடேன், எப்
ராயீமைச்சங்கரிக்கத்திரும்பேன்: உன் மத்தியி
லுள்ளபரிசுத்தராகிய நான் மனுஷனல்ல, தே
௰ வன்; நான் கோபத்துடன் வரேன்.—அவர்கள்
யெகோவாவைப் பின்பற்றி நடப்பார்கள்:
அவர் ஒருசிங்கத்தைப்போலக் கருச்சிப்பார்: அ
வர்கருச்சிக்கும்பொழுது அவர்கள் சந்ததியார்
௰௧ மேற்குத்திசையினின்று நடுங்குவார்கள்.—எகிப்
தினின்று குருவியைப்போலவும், அஷூரியதே
சத்தினின்று புறாவைப்போலவும் நடுங்கிவரு
வார்கள்: நான் அவர்களை அவரவர்கள்வீடுகளில்
வாசம்பண்ணுவிப்பேனென்று யெகோவா
௰௨ சொல்லுகிறார்.—எப்ராயீமர் பொய்களினாலும்,
இஸரவேல்வமிசத்தார் வஞ்சகத்தினாலும் என்
னைச் சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள்: யூதாவோ
இன்னுந் தேவனிடத்தில் ஆளுகைபெற்றி
ருக்கிறான், அவன்பரிசுத்தரோடே உண்மையுள்
ளவனாயிருக்கிறான்.

## ௰௨. அதிகாரம்.

௧. எப்ராயீம்,யூதா, யாக்கோபென்பவர்களைக்கண்டித்தல்: ௭. எப்ராயீமின் பாவத்தை எடுத்துக்காட்டித் தண்டனைவருமெனத்தெரிவித்தல்.

எப்ராயீம் காற்றைமாத்திரம் மேய்கிறான், கீழ்
காற்றைப்பின்தொடருகிறான்: அவன் நாடோ
றும் பொய்யையும் உபத்திரவத்தையும் வருத்திக்
கப்பண்ணி, அஷூரியரோடே உடன்படிக்கை
பண்ணுகிறான், எகிப்துக்கு எண்ணெய்கொண்
௨ டுபோகப்படுகின்றது.—யூதாவோடே யெகோ
வாவுக்கு வழக்கிருக்கின்றது, அவர் யாக்கோ
பை அவன்நெறிகளுக்கேற்க விசாரித்து, அவன்
கிரியைகளுக்குத்தக்கதாகப்பலனளிப்பார்.
௩ கருப்பத்தில அவன் தன்சகோதரனுடையகு
திங்காலைப்பிடித்தான், அவன் பிரபுவைப்போல்
௪ தேவனோடே மல்லயுத்தம்பண்ணினான்.—அ
வன், தூதனானவரோடே மல்லயுத்தஞ்செய்து
மேற்கொண்டான்: அழுது அவரைநோக்கிவிண்
௫ ணப்பம்பண்ணினான்.—யெகோவாவென்
னும் நாமத்தை ஞாபகக்குறியாய்ச்சேனாபதியுந்
தேவனுமாகிய யெகோவா பெத்தேலில் அ
௬ வனைக்கண்டு அவனோடேபேசினார்.—ஆதலால்
நீ உன் தேவனிடத்தில் திரும்பு: தயையும் நி
யாயமும்செய், இடைவிடாதபடி உன் தேவ
னைக் காத்துக்கொண்டிரு.
௭ கானானியன் தன்கையில் கள்ளத்தராசைப்பி
டித்திருக்கிறான்: உபத்திரவஞ்செய்யவிரும்புகி
௮ றான்.—எப்ராயீம், நான் ஐசுவரியமுள்ளவனா
னேன், நான்பொருளைச்சம்பாதித்தேன்: நான்ப
டும் எந்தப்பிரயாசத்திலும்பாவத்தைஎன்னில்கா
ணமாட்டார்களென்றான்.—எகிப்துதேசத்தினின் ௯
று உன்னைஅழைத்துவந்த உன் தேவனும்யெ
கோவாவுமாகிய நான் மகா உற்சவதினங்க
ளிலேயிருக்கிறதுபோலத் திரும்பவும் உன்னைக்
கூடாரங்களிலே வாசம்பண்ணுவிப்பேன்.—
நான் தீர்க்கதரிசிகளைக்கொண்டு விளம்பினேன், ௰
அநேகதரிசனங்களை அருளினேன், தீர்க்கதரிசி
களைக் கொண்டு திருஷ்டாந்தங்களைக் காட்டி
னேன்.—ஆகிலுங் கிலியாத்திலே பாவமுண் ௰௧
டு, அவர்கள்அபத்தர், இதுநிச்சயம்: கில்காலில்
காளைகளைப் பலியிடுகிறார்கள்; அவர்களுடைய
வேதிகைகள்வயல்வெளிகளிலுள்ள கற்குவியல்
களைப்போலிருக்கின்றன.—யாக்கோபு ஷீரிய ௰௨
தேசத்துக்கு ஓடிப்போனான், இஸரவேல் ஒரும
னைவிக்காகப் பணிவிடைசெய்தான், ஒருமனை
விக்காக ஆடுமேய்த்தான்.—யெகோவா ஒ ௰௩
ரு தீர்க்கதரிசியைக்கொண்டு இஸரவேலை எகிப்
தினின்றுபுறப்படச்செய்தார், தீர்க்கதரிசியினால்
அவன்காக்கப்பட்டான்.—ஆகிலும் எப்ராயீம் ௰௪
அவரை மிகவும் அதிகமாய்க் கோபப்படுத்தி
னான்: ஆதலால் அவன் ஆண்டவர் இரத்தப்ப
ழியை அவன்மேலேற்றி, அவமானம் என்னும்
பலனை அவன்மேல்திருப்புவார்.

## ௰௩. அதிகாரம்.

௧. எப்ராயீம்விக்கிரகாராதனையினிமித்தந்தண்டிக்கப்படல்: ௯. தேவன் வாக்குத்தத்தஞ்செய்தல்: ௰௫. தண்டனைவருமென்று முன்னுரைத்தல்.

எப்ராயீம் பேசுகிறபொழுதுநடுங்குவார்கள், அ ௧
வன் இஸரவேலில் மேன்மைபெற்றான்; அவன்
பாகாலைக்குறித்துக்குற்றஞ்செய்து இறந்துபோ
னான்.—இப்பொழுது அவர்கள்பாவத்தில் அதிக ௨
ரித்து, தங்கள் தங்கள் புத்திக்கேற்க வெள்ளியி
னால் தங்கள்நிமித்தம் வார்ப்பான விக்கிரகங்க
ளையும் உருவங்களையுமுண்டுபண்ணுகிறார்கள்,
இவைகளெல்லாங் கம்மியர்வேலை: ஆனாலும்
இவைகளைக்குறித்துப் பலியிடுகிறவர்கள் கன்று
களை முத்தஞ்செய்யக்கடவர்களென்றார்கள்.—
ஆதலால் அவர்கள்காலையில் தோன்றும் மேகத் ௩
துக்கும்,சீக்கிரத்தில் ஒழிவுபெறும்விடியற்காலத்
தின்பனிக்கும், தானியக்களத்தினின்று சூறைக்
காற்றினாலே பறக்கடிக்கப்படும் பதருக்கும், பு
கைவாசலில் ஏறிப்போகிற புகைக்கும் ஒப்பா
வார்கள்.—நான்எகிப்துதேசத்தினின்று உன்னைஅ ௪
ழைத்துவந்த உன் தேவனாகிய யெகோவா,
என்னையன்றி நீ வேறுதேவனை அறியவேண்
டாம்: என்னையன்றி இரட்சகர் ஒருவருமில்லை.
நான் மகா வறண்டநிலமாகிய வனாந்தரத்தில் ௫

(௯) எண்.௨௩.௰௯. ஏசா.௫௫.௮,௯. மல்.௩.௬. (௰) ஏசா.௩௧.௪. யோவே.௩.௰௬. ஆமோ.௧.௨. சக.௮.௭. (௰௧) ஏசா. ௬௰.௮. எசேக்.௨௮.௨௫,௨௬.—(௰௨. அதி. ௧.) ௨.இரா.௰௭.௪. ஏசா.௩௰.௬. (௨) மீகா.௬.௨. (௩) ஆதி.௨௫.௨௬. ஆதி.௩௨.௨௪,. (௫) ஆதி.௨௮.௰௨,௰௯. யாத்.௩.௰௫. (௬) மீகா.௬.௮. (௭) நீதி.௰௧.௧. ஆமோ.௮.௫. (௮) சக.௰௧.௫. வெளி.௩.௰௭. (௯) லேவி.௨௩.௪௨,௪௩. நெகி.௮.௰௭. சக.௰௪.௰௬. (௰) ௨.இரா.௰௭.௰௩. (௰௧) ஆமோ.௪.௪. (௰௨) ஆதி.௨௮.௫. உபா.௨௬.௫. ஆதி.௨௯.௨௰,௨௮. (௰௩) யாத்.௰௨.௫௰,௫௧. ஏசா.௬௩.௰௧. மீகா.௬.௪. (௰௪) ௨.இரா. ௰௭.௰௧.—௰௮. தானி.௰௧.௰௮. உபா.௨௮.௩௭.—(௰௩. அதி. ௧.) ௨.இரா.௰௭.௰௬,௰௮. (௨) ௧.இரா.௰௯.௰௮. (௩) தானி.௨.௩௫. (௪) ஏசா.௪௩.௰௧. (௫) உபா.௨.௭. உபா.௮.௰௫.

௬ உன்னை அங்கிகரித்தேன்.—அவர்கள் தங்கள்
மேய்ச்சலுக்கேற்கத் திருத்திபெற்ருர்கள்; திருத்
தி அடைந்து அவர்கள் இருதயங் கருவங்கொண்
டது; இதினிமித்தம் அவர்கள் என்னைமறந்தார்
௭ கள்.—ஆதலால் நான் அவர்களுக்கு ஒரு சிங்கத்
தைப்போலிருப்பேன்: சிவிங்கியைப்போல் வ
௮ ழியருகே பதிவிருப்பேன்.-குட்டிகளைப்பறி
கொடுத்தகரடியைப்போலநான்அவர்களை எதிர்த்
து, அவர்கள் இருதயகோசத்தைக்கிழித்து, அவர்
களைஅங்கே ஒருசிங்கத்தைப்போலப்பட்சித்துப்
போடுவேன்: காட்டுமிருகம் அவர்களைப்பீறும்.
௯ இஸரவேலே, நீயே உனக்குக் கேடுவருவித்
தாய்; ஆனாலும் உனக்குத் துணை என்னிடத்தி
௰ லுண்டு.—எனக்கு இராசாவையும், பிரபுகளை
யும் ஏற்படுத்துவீராகவென்ருய், இப்பொழு
து உன் சகல நகரங்களிலும் உன்னை இரட்சிக்
கும் இராசா எங்கே; உன் நியாயாதிபதிகளெங்
௰௧ கே.—நான் கோபங்கொண்டு உனக்கு இராசா
வைக்கொடுத்தேன், கோபங்கொண்டு அவனை
௰௨ நீக்கினேன்.—எப்ராயீமின் குற்றங் கட்டப்பட்
௰௩ டது; அவன் பாவம் வைக்கப்பட்டது.—பிரச
வஸ்திரியின் வேதனையைப்போன்ற வேதனை
கள் அவனைப்பிடிக்கும்: அவன் விவேகமில்
லாத புத்திரன்; அல்லாவிட்டால் சென்மஸ்தா
௰௪ னத்தில் காலதாமதம் பண்ணமாட்டான்.-நான்
அவர்களை மரித்தோர்ஸ்தலத்தின் வல்லமையி
னின்றும் மீட்டுக்கொள்வேன்; மரணத்தினின்
றும் அவர்களை விடுவிப்பேன்: மரணமே, உன்
நாசமெங்கே; மரித்தோர்ஸ்தலமே, உன் சங்
காரம்எங்கே: என் கண்ணிரங்காது.
௰௫ அவன் தன்சகோதரருக்குள்ளேபலுகிப்பெரு
கினாலும் கீழ்காற்றுவரும், வனாந்தரத்தினின்று
யெகோவாவின் காற்றுவீசும், அதினால் அ
வனுடைய ஊற்றுக்கண் வற்றிப்போம், அவனு
டையதுரவுசுவறிப்போம்: அவன் இவனுடைய
பண்டசாலையினின்று சகல உத்தமபாத்திரங்க
௰௬ ளையும் கொள்ளையாடுவான்.—ஷமாரியா தேவ
னுடைய கட்டளையை மீறினபடியால் தண்ட
னை அனுபவிக்கும், அவர்கள் கட்கத்தினால்விழு
வார்கள்: அவர்களுடைய குழந்தைகள் மோதப்
பட்டுச் சின்னபின்னமாகும், அவர்களுடைய
கருப்பஸ்திரிகள் கீறப்படுவார்கள்.

## ௰௪. அதிகாரம்.

௧. மனந்திரும்பும்படியுணர்த்தல்: ௪. தேவன்
வாக்குத்தத்தம்பண்ணுதல்.

இஸரவேலே, நீ உன் தேவனாகிய யெகோ ௧
வாவினிடத்தில் திரும்பு; நீ உன்பாவத்தினா
லே விழுந்தாய்.—நீ வசனித்துக்கொண்டு யெ ௨
கோவாவினிடத்தில்திரும்பி,அவரைநோக்
கி, எங்கள் பாவத்தை எல்லாம் நீக்கி எங்களை
அங்கிகரித்தருளும்: அப்பொழுது நாங்கள் எங்
கள் உதடுகளின் பலிகளை உமக்குச் செலுத்து
வோம்.—அஷூரியர் எங்களை இரட்சிப்பதில்லை; ௩
நாங்கள்குதிரைகளின்மேல்ஏறமாட்டோம்: எங்
கள் கைக்கிரியையைப்பார்த்து, நீங்கள் எங்கள்
தேவர்களென்று நாங்கள் இனி ஒருபொழுதுஞ்
சொல்லமாட்டோம்: திக்கற்றவன்உம்மிடத்தில்
தயைபெறுவானென்றுசொல்லுங்கள்.

நான் அவர்களுடைய மாறுபாட்டை மாற்று ௪
வேன், நான் பூரணமனதோடே அவர்களை நே
சிப்பேன்: என் கோபம் அவர்களைவிட்டு நீங்கிற்
று.—நான் இஸரவேலுக்குப் பனியைப்போலி ௫
ருப்பேன்: அவன் ஷூஷன் புஷ்பத்தைப்போல
மலருவான், லிபானோனைப்போல அவன்வேர்
கள் ஊன்றிவிடும்.—அவன் கிளைகள் விருத்திய ௬
டைய அவன் சௌந்தரியத்தினாலே சீதவிருட்
சத்தைப்போலிருப்பான், அவன்வாசனை லிபா
னோனின்வாசனையைப்போலாகும்.—அவன் ௭
நிழலில்வாசமாயிருக்கிறவர்கள் திரும்பிவருவார்
கள்; தானியவிளைவைப்போலச்செழிப்பார்கள்,
திராட்சக்கொடியைப்போலப்படருவார்கள்: அ
வர்கள்லிபானோனின்திராட்சரசத்தைப்போலக்
கீர்த்திபெறுவார்கள்.-எனக்கும்விக்கிரகங்க ௮
ளுக்கும் இனி என்னசம்பந்தமென்று எப்ராயீம்
சொல்லுவான், நான் அவனைக்கேட்டு, அ
வனை உற்றுப்பார்ப்பேன்:நான் பசுமையானதே
வதாருவிருட்சத்தைப்போல இருக்கிறேன்.
உன் கனி என்னாலே கிடைத்தது.—யெகோ ௯
வாவின் வழிகள் செவ்வையானவைகள், நீதி
மான்கள் அவைகளில்நடப்பார்கள்:பாவிகளோ
அவைகளில் விழுவார்கள். இவைகளை உணர்வ
தற்கு ஞானமுள்ளவன்யாவன், இவைகளை அறி
வதற்குப்புத்திமான் யாவன்.

---

(௬) உபா.௮.௰௨,௰௪. (௭) புல.௩.௰. எரே.௫.௬. (௮) ௨.சாமு.௰௭.௮. நீதி.௰௭.௰௨. (௯) நீதி.௬.௩௨. மல்.௧.௯. (௰)
௨.இரா.௰௭.௪. உபா.௩௨.௩௮. ௧.சாமு.௮.௫,௰௯. (௰௧) ௧.சாமு.௮.௭. (௰௨) உபா.௩௨.௩௪. யோபு.௰௪.௰௭. (௰௩)
ஏசா.௰௩.௮. எரே.௩௰.௬. நீதி.௨௨.௩. ௨.இரா.௰௯.௩. (௰௪) ஏசா.௨௫.௮. எசேக்.௩௭.௰௨. ௧.கொரி.௰௫.௫௪,௫௫.
எரே.௰௫.௬. ரோ.௰௧.௨௯. (௰௫) ஆதி.௪௧.௫௨. எரே.௪.௰௧. எசேக்.௰௭.௰. நாகூ.௨.௯. (௰௬) ௨.இரா.௰௭.௬.
௨.இரா.௰௮.௰௧. ௨.இரா.௮.௰௨. ஏசா.௰௩.௰௬. ஆமோ.௧.௰௩. நாகூ.௩.௰.—(௰௪. அதி. ௧.) யோவே.௨.௰௩. (௨)
எபி.௰௩.௰௫. (௩) எரே.௩௧.௰௮,. உபா.௰௭.௰௬. ஏசா.௩௰.௨,௰௬. சங்.௯௮.௫. (௪) எரே.௫.௬. எபே.௧.௫.(௫)யோ
பு.௨௯.௰௯. நீதி.௰௯.௰௨. (௬) ஆதி.௨௭.௨௭. உன்.௪.௰௧. (௭) சங்.௯௧.௧. (௮) எரே.௩௧.௰௮. யாக்.௧.௰௭. (௯)
சங்.௱௭.௪௩. எரே.௯.௰௨. தானி.௰௨.௰. யோவா.௮.௪௭. யோவா.௰௮.௩௭. நீதி.௰.௨௯. லூக்.௨.௩௫. ௨.கொரி.௨.
௰௬. ௧.பேது.௨.௭,௮.

# யோவேல்.

## க. அதிகாரம்.

க. இஸரவேலருக்கு வருந்தண்டனையைத் தெரி
வித்தல்: அ. புலம்பும்படி சொல்லல்: யங. பு
லம்பி உபவாசஞ்செய்வதற்கு ஒருநாள் குறிக்
கும்படிவேண்டல்.

பெதுவேலின் புத்திரனாகிய யோவேலுக்குக்கி
உ டைத்த யெகோவாவின் வாக்கு.—முதியோ
ரே, இவ்வாக்கைக்கேளுங்கள், தேசத்தாரே,நீங்
களெல்லாருஞ் செவிகொடுங்கள்; உங்கள்நாட்
களிலாவது, உங்கள்முன்னோரின்நாட்களிலாவ
ங து இப்படி ஒருகாரியம் நடந்ததுண்டா.—நீங்கள்
இதை உங்களுங்கள்பிள்ளைகளுக்குத்தெரிவியுங்
கள், அவர்கள் தங்கள்தங்கள் பிள்ளைகளுக்கும்,
அவர்கள் தங்கள் பிற்சந்ததியாருக்கும் சொல்
ச லக்கடவர்கள்.—காசப்புழுவிட்டதை வெட்
டுக்கிளிதின்றது, வெட்டுக்கிளி விட்டதை யா
லேக்குப் புழுத்தின்றது, யாலேக்குப் புழுவிட்
ரு டதைக் காசில்புழுத்தின்றது.-வெறியரே,நீங்கள்
தெளிந்து அழுதுகொள்ளுங்கள், திராட்சரசபா
னிகளே, நீங்களெல்லாரும் புதுத்திராட்சரசத்தி
னிமித்தம் அலறிக்கொள்ளுங்கள், அது உங்கள்
சு வாயினின்று விலக்கப்பட்டது.—பலமுள்ளவை
களும், எண்ணிறந்தவைகளும், சிங்கத்தின் பல்
லுக்களையும் பெண்சிங்கத்தின் கடைவாய்ப்பல்
லுக்களையுமுடையவைகளுமாகிய ஒருசாதிநம்
எ முடைய தேசத்தின்மேல் வந்து,—என் திராட்
சக்கொடியை அழித்து, என் அத்திமரத்தை மு
றித்தது: அவைகள் அதை முழுவதும்உரித்துப்
போட்டுத்தள்ளிவிட்டன; அதின் கொப்புகள்
வெண்மையாயின.

அ தனது இளம்பிராயத்தின் புருஷனைநினைந்து,
இரட்டைத்தரித்தஒருகன்னியைப்போலப்புலம்
கூ புங்கள்.—யெகோவாவின் ஆலயத்தினின்
றுபோசனபலியும், பானபலியும் அகன்றுபோயி
ன; யெகோவாவின் பணிவிடைக்காரராகிய
ய ஆசாரியர்கள் துக்கிக்கிறார்கள்.-வயல்வெளி பா
ழாய்ப்போயிற்று, பூமி துக்கித்துக்கொண்டிருக்
கின்றது; தானியம்அழிந்துபோயிற்று:புதுத்திரா
ட்சரசம்வற்றிப்போயிற்று, எண்ணெய்குன்றிப்
யக போயிற்று.—வேளாண்மைக்காரரே, கோதுமை
யையும்வாற்கோதுமையையுங்குறித்துவெட்கப்
படுங்கள்; திராட்சத்தோட்டக்காரரே, அலறுங்
கள்; வயல்வெளியின் விளைவு சேதமாய்ப்போ
யஉ யிற்று.—திராட்சக்கொடிவாடிப்போயிற்று, அத்
திமரஞ்சோருகின்றது;வெளியிலுள்ள மாதுளை,
பேரீந்து, தப்புவாமுதலியசகலவிருட்சங்களும்
வாடியிருக்கின்றன: மனுபுத்திரருக்குள்ளே சந்
தோஷம் ஒழிந்துபோயிற்று.—ஆசாரியர்களே, யங
நீங்கள் அரைகட்டிக்கொண்டு புலம்புங்கள்:வே
திகையின்பணிவிடைக்காரரே, நீங்கள் அலறுங்
கள்: என் தேவனுடைய தொண்டரே, நீங்
கள்பிரவேசித்து, இரட்டைத்தரித்து இராமுழுவ
தும் படுத்துக்கொள்ளுங்கள்: உங்கள் தேவனு
டைய ஆலயத்தின் போசனபலியும் பானபலி
யும் அகன்றுபோயின.

நீங்கள் உபவாசதினத்தை நியமிக்கக்கடவீர் யச
கள், வேலையைவிட்டுஓய்ந்திருக்கும்ஒருநாளைப்
பிரசித்தப்படுத்துங்கள், உங்கள் தேவனாகிய
யெகோவாவின் ஆலயத்திலே முதியோரை
யும் தேசத்தார்யாவரையும்ஏகமாய்க்கூட்டி, யெ
கோவாவை நோக்கி ஓலமிடுங்கள்.—ஐயோ, யரு
பயங்கரநாள், யெகோவாவின் நாள்சமீபித்
துவந்தது, அது மகாசங்காரத்தைப்போலச்சரு
வல்லவரிடத்தினின்றுவரும்.—நம்முடைய பார் யசு
வையினின்று ஆகாரமும், நமது தேவனுடை
ய ஆலயத்தினின்று சந்தோஷமும் மகிழ்ச்சியும்
நீக்கப்படவில்லையா.—விதை, மண்கட்டிகளின் யஎ
கீழ் அழுகிப்போயிற்று, தானியவீடுகள் வெறு
மையாயின, பண்டசாலைகள் இடிந்துபோயின;
பயிர்தீந்துபோயிற்று.—ஆ, மேய்ச்சலில்லாததி யஅ
னால் மிருகங்கள் எப்படித்தவிக்கின்றன, மாட்
டுமந்தைகள் எப்படிக்கலங்குகின்றன; ஆட்டுமந்
தைகள் சேதமாய்ப்போகின்றன.-யெகோவா யகூ
வே, உம்மைநோக்கி ஓலமிடுவேன்: அக்கினி
யினால் வனத்திலுள்ளமேய்ச்சல்கள் பட்சிக்கப்
பட்டன, அதின் சுவாலையினால் வெளியின்வி
ருட்சங்களெல்லாம் எரிக்கப்பட்டன.—காட்டு உய
மிருகங்களும் உம்மைநோக்கிக்கதறும்: நீர்க்கால்
கள் வற்றிப்போயின, வனத்திலுள்ளமேய்ச்சல்
கள் அக்கினியினால்பட்சிக்கப்பட்டன.

## உ. அதிகாரம்.

க. பயங்கரமான தண்டனைவருமென்று குறித்
தல்: யஉ. மனஸ்தாபப்படும்படி வேண்டல்:
யரு. உபவாசதினத்தை நியமித்தல்: யஅ. ஆசீர்
வாதத்தைக்குறித்து வாக்குத்தத்தஞ் செய்தல்:
உக. வரும் நன்மையைமுன்னுரைத்தல்.

நீங்கள் சீயோனில் தாரையூதுங்கள், என்பரி க
சுத்தமலையிலேபயமுறுத்துஞ்சத்தமிடுங்கள்: யெ
கோவாவின் நாள்வருகின்றது, அது சமீபித்து
வந்தது; தேசத்தார்யாவரும்நடுங்குவார்களாக.-அ உ

(க. அதி. ங.) சங்.எஅ.ச. (ச) உபா.உஅ.ங அ. (ரு) ஏசா.ஙஉ.ய. (சு) வெளி.கூ.அ. (எ) ஏசா.ரு.சு. (அ) ஏசா.உஉ.
யஉ. நீதி.உ.யசு. எரே.ங.ச. (ய) எரே.யஉ.யக. ஏசா.உச.எ. (யக) எரே.யச.ங,ச. (யஉ) ஏசா.உச.யக. எரே.சஅ.
ஙங. ஏசா.கூ.ங. (யங) எரே.ச.அ. (யச) உ.நாளா.உய.ங,ச,யங. லேவி.உங.ஙசு. (யரு) எரே.ஙய.எ. ஏசா.யங.சு,கூ.
(யஅ) ஓசி.ச.ங. (யகூ) சங்.ருய.யரு. எரே.கூ.ய. (உய) யோபு.ஙஅ,சக. சங்.ாச.உக. க.இரா.யஎ.எ.—(உ அதி.க.)
எரே.ச.ரு. எண்.ய.ரு,கூ. ஓப.யரு. செப்.க.யச,யரு. (உ) ஆமோ,ரு.யஅ,உய. யாத்.ய.யச.

து இருளும் அந்தகாரமுமானநாள், மேகம்பரம்
பிய காரிருளானநாள், மலைகளின்மேலுள்ள அ
ருணோதயத்தைப்போலும் ஒருபெரியவல்லமை
யுள்ளசாதிபரந்துவரும்; அவைகளைப்போல்முற்
காலத்திலுமில்லை, பின்வருஞ்சந்ததியாரின்வரு
ஷங்களுக்குள்ளும் இனி ஒருபொழுதும் அவை
௩ களைப்போலிருப்பதில்லை.—அவைகளுக்கு முன்
அக்கினிபட்சிக்கும்; அவைகளுக்குப்பின்அக்கி
னிச்சுவாலை தகிக்கும்: அவைகளுக்குமுன்னுள்
ளதேசம் ஏதேன் தோட்டத்துக்குச்சமமாம், அ
வைகளுக்குப்பின்னுள்ளசேதமோ வெறுமையா
னவனம்; அவைகளுக்கு ஒருபொருளுந் தப்பா
௪ து.—அவைகளின்சாயல் குதிரைச்சாயல்; அவை
௫ கள்குதிரைவீரரைப்போல ஓடும்.—இரதங்களின்
இரைச்சலைப்போல மலையுச்சிகளில் கடந்துவ
ரும், அவைகளின் சத்தம் அரிதாளை எரிக்
கிற அக்கினிச்சுவாலையின்சத்தம்போலாகும், அ
வைகள் யுத்தஞ்செய்யும்படி அணிவகுக்கப்பட்
௬ டபராக்கிரமசனங்களைப்போலாகும்.—அவை
களுக்குமுன் சனங்கள் நடுங்குவார்கள்: எல்லா
௭ முகங்களும்வாடிப்போம்.—அவைகள்பராக்கிர
மசாலிகளைப்போல ஓடும்; யுத்தவீரரைப்போல
மதிலில் ஏறும்; அவைகள் ஒவ்வொன்றுந் தன்
தன்வழியேசெல்லும், தங்கள் தங்கள் அணிதவ
௮ றாமல் அவைகள்வரும்.—ஒன்றைஒன்று நெருக்
காது; ஒவ்வொன்றுந் தன் தன் பாதையில் செல்
லும்: யுத்தஆயுதங்களுக்கெதிர்ப்பட்டாலும் கா
௯ யம்படாமற்போகும்.—அவைகள் நகரமெங்கும்
விரைந்துசெல்லும்; அவைகள்மதிலின்மேல் ஓ
டும், வீடுகளின்மேலேறும்; திருடனைப்போலப்
௰ பலகணிவழியாய்ப்பிரவேசிக்கும்.-அவைகளுக்
குமுன் பூமிஅதிரும்; வானம் நடுங்கும்: சந்திர
னும் சூரியனும் இருண்டுபோம், நட்சத்திரங்கள்
௰௧ தங்கள்தங்கள் ஒளியை ஒடுக்கும்.—யெகோ
வா தமது சேனைக்குமுன் சத்தமிடுவார்: அவர்
பாளயம் மிகவும் பெரிது: அவருடைய வாக்கை
நிறைவேற்றுவதற்குப்பலமுள்ளது: யெகோ
வாவின் நாள்பெரிதும், மகா பயங்கரமுமாயி
ருக்கின்றது; அதைச்சகிக்கவல்லவன்யாவன்.
௰௨ ஆதலால் நீங்கள் இப்பொழுதே உபவாசஞ்
செய்து, அழுதுபுலம்பிக்கொண்டு, உங்கள்பூரண
இருதயத்தோடும் என்னிடத்தில் திரும்பிவாருங்
௰௩ களென்று யெகோவா சொல்லுகிறார்.—நீங்
கள் உங்கள்வஸ்திரங்களையல்ல, உங்களுங்கள்இ
ருதயங்களைக்கிழித்து, உங்கள் தேவனாகியயெ
கோவாவினிடத்தில் திரும்புங்கள்: அவ
ரே இரக்கமும், கிருபையும், நீடியபொறுமை
யும், மிகுந்ததயையுமுள்ளவர்; தண்டனைசெய்வ
து அவருக்குப்பரிதாபம்.—ஆருக்குத்தெரியும், ௰௪
அவர்திரும்பிவந்து, மனதுருகி, உங்கள் தேவ
னாகிய யெகோவாவுக்கு இடத்தக்கபோச
னபலிக்கும், பானபலிக்குமேற்றவைகள் மீந்தி
ருக்க ஆசீர்வாதஞ்செய்யவுங்கூடும்.
சீயோனில் தாரை ஊதுங்கள், உபவாசதினத் ௰௫
தைநியமித்துக்கொள்ளுங்கள், வேலைவிட்டு ஓய்
ந்திருக்கும் ஒருதினத்தைப் பிரசித்தப்படுத்துங்
கள்.—சனங்களை ஏகமாய்க்கூட்டுங்கள், சபை ௰௬
யைப்பரிசுத்தப்படுத்துங்கள், முதியோரைச்சே
ருங்கள், பாலகரையும் பாற்குழந்தைகளையும்
சேர்த்துக்கொள்ளுங்கள்: மணவாளன் தன் அ
றையினின்றும், மணவாட்டி தனது அந்தப்புரத்
தினின்றும் புறப்படுவார்களாக.—யெகோவா ௰௭
வின் பணிவிடைக்காரராகிய ஆசாரியர்கள்மண்
டபத்துக்கும்வேதிகைக்கும் இடையில் அழுது,
யெகோவாவே, உம்முடையசனங்களைமன்
னித்தருளும், அந்நியர் அவர்களை அரசாளஉமக்கு
ரிய சுதந்தரசனங்களை நிந்தைப்படவிடாதிரும்:
அவர்கள் தேவன் எங்கேயென்று அந்நியசனங்
களுக்குள் அவர்கள் சொல்லவேண்டியதென்ன
வென்பார்களாக.
அப்பொழுது யெகோவா தமதுதேசத்தை ௰௮
நினைந்து, அன்பின்ஊக்கங்கொண்டு, தமதுசனங்
கள்மேல் இரங்குவார்.—யெகோவா உத்தரஞ் ௰௯
சொல்லித் தமதுசனங்களைநோக்கி, கேளுங்கள்,
நான் உங்களுக்குத்தானியத்தையும், திராட்சர
சத்தையும், எண்ணெயையும் அனுப்புவேன், அ
வைகளினால் நீங்கள் திருத்திஅடைவீர்கள்: நான்
அந்நியதேசத்தாருக்குள் உங்களை இனி நிந்தைப்
படவிடேன்.—வடதிசையின் சேனையை உங் ௨௰
களுக்குத் தூரமாகவிலக்கி, அதின் முன்தண்டு
கீழ்க்கடலுக்கும், அதின் பின்தண்டு மேற்கட
லுக்கும் நேராகும்படி, வறட்சியும் பாழுமான
தேசத்துக்குத்துரத்திவிடுவேன், அதுபெரியகாரி
யங்களைச்செய்திருந்தும் அங்கே அதின் நாற்றம்
எழும்பி, அதின் துர்க்கந்தம் வீசுமென்பார்.
தேசமே, நீபயப்படாதே; யெகோவா பெ ௨௰௧
ரியகாரியங்களைச்செய்கிறார், ஆதலால் நீ மகிழ்ந்
துசந்தோஷப்படு.-வெளியிலுள்ளமிருகங்களே, ௨௰௨
நீங்களும் பயப்படாதிருங்கள்: வனத்திலுள்ள
மேய்ச்சல்கள் முளைத்தன, விருட்சங்கள் கனி
கொடுக்கும், அத்திமரமும் திராட்சக்கொடியுந்
தங்கள் தங்கள் பலனைத்தரும்.—சீயோனின்மக் ௨௰௩
களே, சந்தோஷப்படுங்கள்: உங்கள் தேவனா
கிய யெகோவாவில் களிகூருங்கள்: அவர்

(௩)ஆதி.௨.௮. ஏசா.௫௧.௩. சக.௭.௰௪.(௪)வெளி.௯.௭. (௫) வெளி.௯.௯. (௬) எரே.௮.௨௧. புல.௪.௮. நாகூ.௨.௰. (௯) எரே.௯.௨௧. யோவா.௰.௧.(௰)ஏசா.௰௩.௰. எசேக்.௩௨.௭. மத்.௨௪.௨௯.(௰௧)எரே.௨௫.௩௰. ஆமோ.௧.௨. எரே. ௫௰.௩௪. வெளி.௰௮.௮. எரே.௩௰.௭. ஆமோ.௫.௰௮. செப்.௧.௰௫. எண்.௨௪.௨௩. மல்.௩.௨. (௰௨) எரே.௪.௧. ஓசி. ௰௨.௬.(௰௩)சங்.௫௧.௰௭. ௨.சாமு.௧.௰௧. யோபு.௧.௨௰. யாத்.௩௪.௬. யோனா.௪.௨.(௰௪)யோசு.௰௪.௰௨. ௨.சாமு. ௰௨.௨௨. ௨.இரா.௰௯.௪. ஆமோ.௫.௰௫. யோனா.௩.௯. செப்.௨.௩. ஏசா.௬௫.௮. ஆகா.௨.௰௯.(௰௫)எண்.௰.௩.(௰௬) யாத்.௰௯.௰௧,௨௨. ௨.நாளா.௨௰.௰௩. ௧.கொரி.௭.௫. (௰௭) எசேக்.௮.௰௬. மத்.௨௩.௩௫. யாத்.௩௨.௰௧,௰௨. உபா.௯. ௨௬—௨௯. மீகா.௭.௰.(௰௮)சக.௧.௰௪. உபா.௩௨.௩௬. ஏசா.௬௰.௰. (௨௰) எரே.௧.௰௪.எசேக்.௪௭.௰௮. சக.௰௪.௮. உபா.௰௧.௨௪.(௨௨)சக.௮.௰௨. அதி.௧.௰௯.(௨௩)ஏசா.௪௧.௰௬. அபகூ.௩.௰௮. சக.௰.௭. லேவி.௨௬.௪. யாக்.௫.௭.

அளவுக்கிசைய உங்களுக்கு முன்மாரியைக்கொ
டுக்கிறார், முன்போல் உங்கள்நிமித்தம் முன்
மாரியையும் பின்மாரியையும் பெய்விப்பார்.—
௨௪ போர்க்களங்கள் தானியத்தினால் நிறையும், ஆ
லைகளில் திராட்சரசமும், எண்ணெயும் வழிந்
௨௫ தோடும்.—நான் உங்களிடத்தில் அனுப்பின என்
பெரியசேனையாகிய வெட்டுக்கிளியும், யாலேக்
குப்புழுவும், காசில்புழுவும், காசப்புழுவுமாகிய
இவைகள் பட்சித்தவருஷங்களின் விளைவை
௨௬ உங்களுக்குத் திரும்பத்தருவேன்:—நீங்கள் பரி
பூரணமாகப்புசித்து, திருத்திஅடைந்து, உங்க
ளுக்கு ஆச்சரியமான கிரியைகளைச்செய்த உங்
கள் தேவனாகிய யெகோவாவின் நாமத்
தை வாழ்த்துவீர்கள்: என் சனங்கள் ஒருபொழு
௨௭ தும் இலச்சை அடையார்கள்.—நான் இஸரவே
லருக்குள் இருக்கிறவரென்றும், நானே உங்கள்
தேவனாகிய யெகோவா, வேறொருவரில்
லையென்றும் நீங்கள் அறிந்துகொள்வீர்கள்: என்
சனங்கள் என்றும் இலச்சை அடையார்கள்.
௨௮ அதற்கப்பால்நான்எல்லாமாமிசத்தின்மேலும்
என் ஆவியை ஊற்றுவேன்; அப்பொழுது உங்
கள்புத்திரரும், உங்கள் புத்திரிகளுந் தீர்க்கதரிச
னஞ்சொல்லுவார்கள், உங்கள்முதியோர் சொப்
பனங்களைக் காண்பார்கள், உங்கள்வாலிபர் தரி
௨௯ சனங்களை அடைவார்கள்.-அக்காலத்திலே நான்
பணிவிடைக்காரர்மேலும், பணிவிடைக்காரி
௩௰ கள்மேலும் என் ஆவியை ஊற்றுவேன்.—வானத்
திலும் பூமியிலும் இரத்தம், அக்கினி, புகைத்
தூண்கள்முதலிய அற்புதங்களைக் காட்டுவேன்.—
௩௧ யெகோவாவின் மகத்துவமும் பயங்கரமு
மான அந்த நாள் வருமுன் சூரியன் இருளும்,
௩௨ சந்திரன் இரத்தமயமுமாகும்.—யெகோவா
வின் நாமத்தில்பிரார்த்தனைபண்ணுகிறவர்களெ
வர்களோ, அவர்கள் இரட்சிக்கப்படுவார்கள்:
யெகோவா சொல்லிய பிரகாரம் சீயோன்
மலையிலும், யெரூஷலேமிலும், யெகோவா
அழைக்கும் மீந்திருப்பவர்களிடத்திலும் இரட்
சிப்புண்டாகும்.

## ௩. அதிகாரம்.

௧. தேவனுக்குரிய சனங்களின் சத்துருக்க
ளுக்கு வருந்தண்டனையை முன்னுரைத்தல்:
௯. தேவன் செய்யுந்தண்டனைகளினால்தம்மு
டைய இலட்சணங்களைத் தெரிவித்தல்: ௰௮.
தேவன் வாக்குத்தத்தஞ்செய்தல்.

கேளுங்கள், அக்காலத்தில், அந்நாட்களிலே
நான் யூதாவையும் யெரூஷலேமையும் சிறையி
௨ னின்றுமீட்டுக்கொள்வேன்.—நான் சகலசாதியா
ரையுங்கூட்டி,யோஷாபாத்தென்னுந் தாழ்ந்தபூ
மியில் இறங்கப்பண்ணுவேன், அவர்கள் என்
சனங்களையும் என் சுதந்தரமாகியஇஸரவேலரை
யும் அந்நியதேசத்தாருக்குள் சிதற அடித்து, என்
தேசத்தைப் பங்கிட்டு,—என் சனங்களின்மேல் ௩
சீட்டுகளைப்போட்டு, ஒரு பாலகனை வேசைக்
குப் பணயமாகத்தந்து, அவர்கள் குடிக்கும்ப
டி ஒரு கன்னியைத் திராட்சரசத்துக்குக் கிரய
மாகக்கொடுத்தார்கள், இவைகளினிமித்தம் அங்
கே அவர்களோடே வழக்காடுவேன்.—தீருவே, ௪
சீதோனே, பெலிஸ்தியவின் சகல எல்லைகளே,
உங்களுக்கும் எனக்குமென்ன, நீங்கள் எனக்
குப்பிரதிபலனளிப்பீர்களா; எனக்குப் பிரதிப
லனை அளித்தாலும்,நான்தாமதமின்றி அதிசீக்கிர
மாய் அந்தப்பிரதிபலனை உங்கள் தலையின்மேல்
திரும்பும்படிசெய்வேன்.—நீங்கள் என்வெள்ளி ௫
யையும் என் பொன்னையும் எடுத்துக்கொண்டீர்
கள், விரும்பப்படத்தக்க இனிய எனது உத்தம
மான பொருள்களை உங்கள் ஆலயங்களிலே
கொண்டுபோனீர்கள்.—யூதாவின் சந்ததியாரை ௬
யும், யெரூஷலேமின் சந்ததியாரையும் அவர்க
ளுடைய எல்லையினின்று தூரப்படுத்துகிறதற்
குக் கிரேக்கரிடத்தில் விற்றுப்போட்டீர்கள்.—
பாருங்கள், நீங்கள் அவர்களை விற்ற இடத்தி ௭
னின்று நான் அவர்களை எழுப்புவேன், உங்க
ளுக்குப்பிரதிபலன் உங்கள்தலையின்மேல்திரும்
பும்படிசெய்வேன்.—யூதா வமிசத்தார் கையில் ௮
உங்கள்புத்திரரையும் புத்திரிகளையும்நான்விற்க,
இவர்கள் தூரதேசத்தாராகிய சபேயருக்கு அவர்
களை விற்பார்கள்: யெகோவாவே இவ்
வாக்கைச் சொன்னார்.

நீங்கள் புறத்தேசத்தாருக்குள் இவ்வாக்கைப் ௯
பிரசித்தப்படுத்துங்கள்; யுத்தத்துக்கு ஆயத்தப்ப
டுத்துங்கள், பராக்கிரமசாலிகளை எழுப்புங்கள்,
யுத்தவீரர்யாவரும் சமீபித்து, அவர்கள் ஏறிவரக்
கடவர்கள்.—உங்கள் மண்வெட்டிகளைக்கட்கங் ௰
களாகவும், உங்கள் அரிவாள்களை ஈட்டிகளாக
வுஞ்செப்பனிடுங்கள்: நான்பலவானென்றுபல
வீனனுஞ் சொல்லக்கடவன்.—புறத்தேசத்தாரே, ௰௧
நீங்கள் எல்லாருங் கூடிவந்து நாலுதிசையிலுஞ்
சேருங்கள்: யெகோவாவே, நீரும் அவ்வி
டத்தில் உம்முடையபராக்கிரமசாலிகளை இறங்
கப்பண்ணுவீராக.-புறத்தேசத்தார் எழுப்பப்படு ௰௨
வார்களாக, யோஷாபாத்தென்னுந் தாழ்ந்தபூமி
யில்வந்தேறக்கடவர்கள்: நான் நாலு திசையிலு
முள்ளபுறத்தேசத்தார் யாவரையும் நியாயம்விசா
ரிக்க அங்கேவீற்றிருப்பேன்.-அரியஅரிவாளைப் ௰௩

(௨௬) லேவி.௨௬.௫,௨௬. மீகா.௬.௰௪. (௨௭) லேவி.௨௬.௰௧,௰௨. ஏசா.௪௫.௫,௨௧,௨௨. (௨௮) எசேக்.௩௯.௨௯. அப்.௨.௰௭. சக.௰௨.௰. யோவா.௭.௩௯.ஏசா.௫௪.௰௩. அப்.௨௧.௯.(௨௯)௧.கொரி.௰௨.௰௩. கலா.௩.௨௮.கொலோ. ௩.௰௧. (௩௰) மத்.௨௪.௨௯. (௩௧) ஏசா.௰௩.௯,௰. லூக்.௨௧.௨௫. வெளி.௬.௰௨. மல்.௪.௫. (௩௨) ரோ.௰.௰௩. ரோ. ௰௧.௨௬. ஏசா.௰௧.௰௧,௰௨. எரே.௩௧.௭. ரோ.௯.௨௭.—(௩. அதி. ௧.) எரே.௩௰.௩. (௨) சக.௰௪.௨,௩,௪. ௨.நாளா. ௨௰.௨௬. ஏசா.௬௬.௰௬. (௩) ஒப.௰௧. நாகூ.௩.௰.(௪)ஆமோ.௧.௬,௯. எசேக்.௨௫.௰௫,௰௬,௰௭. (௫) தானி.௰௧.௩௮. (௭) ஏசா.௪௩.௫,௬. எரே.௨௩.௮. (௮) எசேக்.௨௩.௪௨. எரே.௬.௨௰.(௯)ஏசா.௮.௯,௰. எரே.௪௬.௩,௪. எசேக்.௩௮. ௭. (௰) ஏசா.௨.௪. மீகா.௪.௩. சக.௰௨.௮. (௰௧) சங்.௱௩.௨௰. (௰௨) சங்.௯௬.௰௩. மீகா.௪.௩. (௰௩) மத்.௰௩.௩௯. வெளி.௰௪.௰௫,௰௮. எரே.௫௧.௩௩. ஓசி.௬.௰௧. ஏசா.௬௩.௩. வெளி.௰௪.௰௯,௨௰.

பிடியுங்கள், விளைச்சல்முற்றிற்று: வந்திறங்குங்
கள்; ஆலைநிரம்பி இருக்கின்றது, தொட்டிகள் வ
ழிந்தோடுகின்றன; அவர்கள்பாதகம்பெரிது.—
௰௪ நடுத்தீர்ப்பின்தாழ்ந்தபூமியில் சனங்கள்திரள்திர
ளாய் நிற்கிறுர்கள்: நடுத்தீர்ப்பின் தாழ்ந்தபூ
மியில் யெகோவாவின் நாள் சமீபித்துவந்த
௰௫ து.—சந்திரனுஞ்சூரியனும் இருளும்,நட்சத்திரங்
௰௬ கள் தங்கள் ஒளியை ஒடுக்கும்.—யெகோவா
சீயோனினின்று கருச்சித்து, யெருஷலேமி
னின்றுதமதுசத்தங்காட்டுவார்; வானமும் பூமி
யும்அதிரும்: யெகோவாதம்முடைய சனங்க
ளுக்குப் புகலிடமும், இஸரவேல்சந்ததியாருக்
௰௭ குத்தருக்கமுமா யிருப்பார்.—என்பரிசுத்த ம
லையாகியசீயோனில்வாசமாயிருக்கிறயெகோ
வாவாகிய நான் உங்கள் தேவனென்று
நீங்கள்அறிந்துகொள்வீர்கள்: அப்பொழுது யெ
ருஷலேம்பரிசுத்தமாயிருக்கும், அதின்வழியாய்
இனி ஒருபொழுதும் அந்நியசனங்கள் செல்ல
மாட்டார்கள்.

அக்காலத்தில் மலைகள்புதுத்திராட்சரசத்தைச் ௰௮
சொரியும், குன்றுகளிலும் பால்பாயும், யூதாவின்
சகலநதிகளும்நீர்ப்பெருக்கெடுத்தோடுகின்றன,
யெகோவாவின் ஆலயத்தில் ஊற்றுத்தோன்
றிச் சித்தீமென்னுந் தாழ்ந்தபூமிக்கு நீர்ப்பாய்ச்
சும்.—யூதாவமிசத்தாரின்தேசத்தில் குற்றமில்லா ௰௯
த இரத்தத்தைச்சிந்தி, அவர்களுக்குச்செய்தகொ
டுமையினிமித்தம் எகிப்து பாழாய்ப்போம், ஏ
தோம் வெறுவனமாகும்.—யூதாவோ சதாகாலங் ௨௰
களிலும், யெருஷலேம் தலைமுறைதோறும்வா
சஸ்தலங்களாகும்.-என்ஞல் சுத்திகரிக்கப்படா ௨௧
தவர்களை நான்சுத்திகரிப்பேன்: யெகோவா
சீயோனில்வாசமாயிருப்பார்.

(௰௬) எரே.௨௫.௩௰. ஆமோ.௧.௨. ஆகா.௨.௬. ஏசா.௫௧.௫,௬. (௰௭) தானி.௰௧.௪௫. ஒப.௰௬. சக.௮.௩. நாகூ.௧.௰௫. சக.௰௪.௨௧. வெளி.௨௧.௨௭. (௰௮) ஆமோ.௯.௰௩. ஏசா.௩௰.௨௫. சங்.௪௯.௪. எசேக்.௪௭.௧. சக.௰௪.௮. வெளி.௨௨.௧. எண்.௨௫.௧. (௰௯) எசேக்.௨௫.௰௨,௰௩. ஆமோ.௧.௰௧. ஒப ௰. (௨௰) ஆமோ.௯.௰௫. (௨௧) ஏசா.௪.௪. எசேக்.௩௬.௨௫. வெளி.௨௧.௩.

# ஆமோஸ்.

## ௧. அதிகாரம்.

*தீரியர் பெலிஸ்தியர் தீறியர் ஏதோமியர் அம்மோ
னியரென்னுஞ் சனங்களுக்கு விரோதமாய்த்
தீர்க்கதரிசனமுரைத்தல்.*

யூதாவின் இராசாவாகிய ஊசியாவின் அதிகாரகா
லத்திலும், இஸரவேலின் இராசாவாகிய யோ
வாஷுடைய புத்திரன் யெரோபேயாம் அரசாண்
டகாலத்திலும், பூமி அதிர்தலுண்டாக இரண்
டு வருஷத்துக்குமுன்னே, தெக்கோயா ஊர்
மேய்ப்பரில் ஒருவனாகிய ஆமோஸ் இஸரவே
லரைக்குறித்துத் தரிசனங்களைக்கண்டுசொல்
௨ லியவாக்குகள்.—யெகோவா சீயோனினின்
று கருச்சித்து, யெருஷலேமினின்று சத்தமிடு
வார்; அதினால் மேய்ப்பரின் வாசஸ்தலங்
கள் துக்கங்கொண்டாடும், கர்மேலின் உச்சிவா
௩ டிப்போமென்றான்.—தமஸ்குவினுடைய மூன்
று பாவத்துக்கு மாத்திரமோ, நான்கினிமித்த
மும் அதின் தண்டனையை நான்விலக்கமாட்
டேன்; அவர்கள் போரடிக்கும் இருப்புக்கரு
விகளினால் கிலியாத்தைப் போரடித்தார்களென்
௪ று யெகோவா சொல்லுகிறார்.—அசாவே
லின் வீட்டிலே நான் அக்கினியை அனுப்ப, அ
து பென்னாதத்தின் அரமனைகளைப் பட்சிக்கும்.-
௫ நான் தமஸ்கு ஊரின் தாழ்ப்பாள்களை முறித்து,
அவெனென்னுந் தாழ்ந்தபூமியினின்று அதில் வ
சிப்பவர்களையும், பேத்ஏதேனினின்று செங்கோ
லையுடையவனையுஞ் சேதிப்பேன்: சீரியவின்
சனங்கள் சிறைபிடிக்கப்பட்டுக் கீருக்குப்போ
வார்களென்று யெகோவா சொல்லுகிறார்.
௬ காசாவுடைய மூன்று பாவத்துக்கு மாத்திர
மோ, நான்கினிமித்தமும் அதின் தண்டனை
யை விலக்கமாட்டேன்; அவர்கள் ஏதோமியரி
டத்தில் ஒப்பிக்கும்படி சிறைப்பட்டோர் யாவ
௭ ரையும் கொண்டுபோய்விட்டார்கள்.—நான் கா
சாவின் மதிலில் அக்கினியை அனுப்ப, அது அ
தினுடைய அரமனைகளைப்பட்சிக்குமென்று யெ
௮ கோவா சொல்லுகிறார்.—நான் அஷ்தோத்தி
னின்று அதில் வசிப்பவர்களையும், அஷ்கிலோ
னினின்று செங்கோலையுடையவனையுஞ்சேதித்
து, எக்ரோனுக்கு விரோதமாக என்கையைத் தி
ருப்ப, பெலிஸ்தியரில் மீந்திருப்பவர்கள் நாச
மடைவார்களென்று ஆண்டவராகிய யெ
கோவா சொல்லுகிறார்.
தீருவின்மூன்றுபாவத்துக்குமாத்திரமோ, நான் ௯
கினிமித்தமும் அதின் தண்டனையை விலக்
கமாட்டேன்; அவர்கள் சகோதரரின் உடன்ப
டிக்கையை நினையாமல், சிறைப்பட்டோர்யாவ
ரையும் ஏதோமியரிடத்தில் ஒப்பித்தார்கள்.—
தீருவின் மதிலின்மேல் நான் அக்கினியை அ ௰
னுப்ப, அது அதினுடைய அரமனைகளைத் தகிக்
குமென்று யெகோவா சொல்லுகிறார்.
ஏதோமினுடைய மூன்று பாவத்துக்குமாத்தி ௰௧
ரமோ, நான்கினிமித்தமும் அதின் தண்டனை
யை விலக்கமாட்டேன்; அவன் தன் சகோதர
னைக் கட்கத்தோடே தொடர்ந்து, தன் மனஉருக்
கத்தைத்தடுத்து, குரோதங்கொண்டு என்றும்பீறி,
நித்தமுந் தன் கோபத்தை விடாதிருந்தான்.—
நான் தேமானில் அக்கினியை அனுப்ப, அது ௰௨
போத்ஸ்றாவின் அரமனைகளைப் பட்சிக்குமென்
று யெகோவா சொல்லுகிறார்.
அம்மோன்புத்திரரின்மூன்றுபாவத்துக்குமாத் ௰௩
திரமோ, நான்கினிமித்தமும்அதின் தண்டனை
யை விலக்கமாட்டேன்; அவர்கள்தங்கள்எல்லை
யைவிஸ்தாரமாக்கும்பொருட்டு, கிலியாத்தேசத்
திலுள்ள கருப்பவதிகளைக்கீறினார்கள்.—ரப்பாவி ௰௪
ன் மதிலின்மேல் அக்கினியை நான் கொளுத்து
வேன், அது யுத்ததினத்தில்பேரொலியோடும், சு
றைவீசுந்தினத்தில்சண்டமாருதத்தோடும்அதின்
அரமனைகளைப்பட்சிக்குமென்று யெகோவா
சொல்லுகிறார்.-அவர்கள்இராசாவும், அவனுக்கா ௰௫
தினராகிய பிரபுகளும் ஏகமாய்ச் சிறைப்பட்டுப்
போவார்களென்று யெகோவாசொல்லுகிறார்.

## ௨. அதிகாரம்.

*மோவாபு, யூதா, இஸரவேல் சனங்களுக்குத்தண்
டனைவருமென்றுதீர்க்கதரிசனஞ்சொல்லல்: அ
வர்களுடைய நன்றியீனத்தினிமித்தம் அவர்க
ளைக்கண்டித்தல்.*

மோவாபின் மூன்றுபாவத்துக்குமாத்திரமோ, ௧
நான்கினிமித்தமும் நான் அதின் தண்டனை
யை விலக்கமாட்டேன்; அவன்ஏதோம் இராசா
வின் எலும்புகளை நீறாகச்சுட்டானென்று யெ
கோவாசொல்லுகிறார்.—ஆதலால்நான்மோவா ௨

(௧.அதி.௧.) ௨.சாமு.௰௪.௨. ௨.நாளா.௨௰.௨௰. ஓசி.௧.௧. சக.௰௪.௰௫.(௨)எரே.௨௫.௩௰. யோவே.௩.௰௬. ௧.சாமு. ௨௫.௨. ஏசா.௩௩.௯. (௩) ஏசா.௮.௪. எரே.௪௯.௨௩. ௨.இரா.௰.௩௨. (௪) எரே.௰௭.௨௭. (௫) எரே.௫௧.௩௰. புல.௨. ௯. ௨.இரா.௰௬.௯. (௬) ௨.நாளா.௨௮.௰௮. ஏசா.௰௪.௨௯. எரே.௪௭.௪,௫. எசேக்.௨௫.௰௫. செப்.௨.௪. ௨.நாளா. ௨௧.௰௬,௰௭.யோவே.௩.௬.(௭)எரே.௪௭.௧.(௮)செப்.௨.௪.சக.௯.௫,௬. எரே.௪௭.௪. எசேக்.௨௫.௰௬.(௯)ஏசா.௨௩. ௧. எரே.௪௭.௪. யோவே.௩.௪,௫. ௨.சாமு.௫.௰௧. ௧.இரா.௫.௧.(௰௧)ஏசா.௨௧.௰௧. எரே.௪௯.௮,. எசேக்.௨௫.௰௨, ௰௩,௰௪. யோவே.௩.௰௯. ஓப.௧,. மல்.௧.௪. ஆதி.௨௭.௪௧. உபா.௨௩.௭. மல்.௧.௨. ௨.நாளா.௨௮.௰௭.எசேக்.௩௫.௫. (௰௨) ஓப.௯,௰. (௰௩) எரே.௪௯.௧,௨. செப்.௨.௯. ஓசி.௰௩.௰௬. எரே.௪௯.௧,. (௰௪) உபா.௩.௰௧. ௨.சாமு.௰௨.௨௬. எரே.௪௯.௨. (௰௫) எரே.௪௯.௩.—(௨. அதி. ௧.) ஏசா.௰௫. எரே.௪௮. எசேக்.௨௫.௮. செப்.௨.௮. ௨.இரா.௩.௨௭. (௨) எரே.௪௮.௪௧.

பில் அக்கினியைஅனுப்ப, அது கிரீயோத்தின்
அரமனைகளைப்பட்சிக்கும்: அதினல் மோவாப்
கலகத்தோடும், ஆரவாரத்தோடும், எக்காளத்தின்
௩ சத்தத்தோடுஞ்சாவான்.-அவர்கள் மத்தியினின்று
அவர்கள் நியாயாதிபதியைச்சேதித்து, அவனே
டேஅவர்களுடையபிரபுகள்யாவரையுங்கொலை
செய்வேனென்று யெகோவா சொல்லுகிறர்.
௪ யூதாவின் மூன்று பாவத்துக்குமாத்திரமோ,
நான்கினிமித்தமும்நான் அதின் தண்டனையை
விலக்கமாட்டேன்; அவர்கள் யெகோவா
வின் நியாயப்பிரமாணத்தை அவமதித்து, அவரு
டைய கட்டளைகளைக் காத்துநடவாமல், தங்கள்
முன்னேர் பின்பற்றின பொய்களினல் நெறித
௫ வறினர்கள்.—நான் யூதாவின்மேல் அக்கினியை
அனுப்ப, அதுயெருஷலேமின் அரமனைகளைப்
பட்சிக்குமென்று யெகோவா சொல்லுகிறர்.
௬ இஸரவேலின் மூன்று பாவத்துக்குமாத்திர
மோ, நான்கினிமித்தமும் நான் அதின் தண்ட
னையை விலக்கமாட்டேன்;அவர்கள்வெள்ளிக்
கு நீதிமானையும், ஒருசோடு பாதரட்சைக்குத்த
ரித்திரனையும் விற்றர்களென்று யெகோவா
௭ சொல்லுகிறர்.—அவர்கள்தரித்திரருடைய தலை
யின்மேல் இறைக்கப்பட்ட தூளைவிரும்பி, சி
றியவர்களுடைய வழியைப் புரட்டுகிறர்கள்:
என்னுடைய பரிசுத்தநாமத்தை அசுத்தப்படுத்து
வதற்குப் பிதாவும் புத்திரனும் ஒரே ஸ்திரியினி
௮ டத்தில் பிரவேசிக்கிறர்கள்.—அவர்கள் சகல
வேதிகைகளின் அருகிலும் அடைவாகவாங்கி
னவஸ்திரஙகளின்மேல் படுத்துக்கொள்ளுகிறர்
கள், தெண்டம்பிடிக்கப்பட்டவர்களின் திராட்
சரசத்தைத் தங்கள்தங்கள்தேவாலயங்களிலேபா
னம்பண்ணுகிறர்கள்.
௯ எரஸ்விருட்சங்களைப்போலநெடியவர்களும்,
அல்லோன்விருட்சங்களைப்போலப் பலவான்க
ளுமாகிய எமோரியரை நான் அவர்முன்னின்
று நாசப்படுத்தினேன்; மேலிருந்த அவன்கனி
யையும், கீழிருந்த அவன்வேரையும் அழித்
௰ தேன்.—நீங்கள் எமோரியருடைய தேசத்தைச்
சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நான் எகிப்துதே
சத்தினின்றுஉங்களைப்புறப்படுத்தி, நாற்பதுவரு
ஷம்வரைக்கும்வனந்தரத்தில் உங்களை நடத்தி
௰௧ னேன்.—உங்கள் புத்திரரில் தீர்க்கதரிசிகளையும்,
உங்கள் வாலிபரில் நசரீயரையுந் தோற்றுவித்
தேன். இஸரவேல்வமிசத்தாரே, இப்படியல்ல
வோசெய்தேனென்று யெகோவா சொல்லு
௰௨ கிறர்.—நீங்களோ நசரீயருக்குத் திராட்சரசங்கு
டிக்கக்கொடுத்து,தீர்க்கதரிசிகளைநோக்கி,நீங்கள்
தீர்க்கதரிசனங்களைச் சொல்லவேண்டாமென்று
விலக்கினீர்கள்.—பாருங்கள், அரிக்கட்டுகள் நி ௰௩
றைய ஏற்றப்பட்ட வண்டி அமுக்கப்படுகிறது
போலஎன்னல்நீங்கள்அமுக்கப்படுவீர்கள்.-வே ௰௪
கமுள்ளவன் ஓடியுந்தப்பமாட்டான், பலவான்
பலத்தினலேதிடப்பட்டுப்போகான்,பராக்கிரம
சாலி தன்பிராணனை விடுவிக்கமாட்டான்.-வில் ௰௫
வீரன்நிற்கமாட்டான்;வேகமானவன் தன்னைத்
தப்புவிக்கமாட்டான்:குதிரைவீரன்தன்பிராண
னைஇரட்சிக்கமாட்டான்.-வீரருக்குள்தைரியமு ௰௬
ள்ளவன் அந்நாளில் நிருவாணியாய் ஓடிப்போ
வானென்று யெகோவா சொல்லுகிறர்.

## ௩. அதிகாரம்.

௧. இஸரவேலருக்குவருந் தண்டனையைத் தெரி
வித்தல்: ௯.அத்தண்டனையைவருணித்து அதின்
காரணம் விளங்கக்காட்டல்.

இஸரவேல் வமிசத்தாரே, நான் எகிப்துதேசத் ௧
தினின்று புறப்படுத்தின சகல வமிசத்தாராகி
யஉங்களுக்குவிரோதமாக யெகோவா சொல்
லிய இவ்வாக்கைக்கேளுங்கள்.—பூமியின் சக ௨
ல குடும்பத்துள்ளும் உங்களைமாத்திரம் அறிந்து
கொண்டேன்: ஆதலால் நான் உங்கள் பாவங்க
ளெல்லாவற்றினிமித்தமும் உங்களைத் தண்டிப்
பேன்.—இருவர் ஒருமனப்பட்டிருந்தாலொழி ௩
யக்கூடிநடக்கலாகுமா.—தனக்குஇரை அகப்ப ௪
டாமல்காட்டிலேசிங்கங்கருச்சிக்குமா, இரைஅ
கப்படுத்தாமல் இளஞ்சிங்கம்தன்கெபியினின்று
சத்தமிடுமா.-குருவிக்குத்தரையிலே சுருக்குவை ௫
யாதிருந்தால் அது கண்ணியில் அகப்படுமா, ஒன்
றும்விழாமலிருக்கத்தரையினின்றுங் கண்ணி எ
டுத்துக்கொள்ளப்படுமா.-நகரத்திலே தாரை ஊதி ௬
னல் சனங்கள்நடுங்கமாட்டார்களா, யெகோ
வாவின் செயலின்றி நகரத்தில் ஆபத்து உண்
டாகுமா.-ஆண்டவராகிய யெகோவா ௭
தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய தாசருக்குத் தம்
முடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்காமல் எந்
தக்காரியத்தையுஞ் செய்யமாட்டார், இதுமெய்.-
சிங்கங்கருச்சித்தது, ஆர்பயப்படான்; ஆண்ட ௮
வராகிய யெகோவா வாக்குச்சொன்னர்,
தீர்க்கதரிசனத்தைச் சொல்லாமலிருக்கிறவனர்.
நீங்கள் ஷமாரியாவின் மலைகளின்மேல் ஏக ௯
மாய்க்கூடி, அதின்மத்தியில் நடக்கிற மிகுந்தக
லகங்களையும், அதிலுள்ள உபத்திரவங்களையும்
பாருங்களென்று அஷ்தோத்தின் அரமனைகளி
லும், எகிப்து தேசத்தின் அரமனைகளிலும் பி
ரசித்தமாய்ச் சொல்லுங்கள்.—அவர்கள் செவ் ௰
வையானவைகளைச்செய்வதை அறியாமல் தங்
கள்அரமனைகளிலே கொடுமையையும், கொள்
ளைப்பொருளையுங் கூட்டிவைக்கிறர்களென்று

(௩) எண்.௨௪.௰௭. எரே.௪௮.௭. (௪) லேவி.௨௬.௰௪,௰௫. நிகி.௧.௭. தானி.௯.௰௧. ஏசா.௨௮.௰௫. எரே.௰௬.௰௧,௨௰. ரோ.௧.௨௫. எசேக்.௨௰.௰௩,௰௫,௰௮,௨௩,௩௰. (௫) எரே.௰௭.௨௭. ஓசி.௮.௰௪. (௬) ஏசா.௨௯.௨௧. (௭) ஏசா.௰.௧. எசேக்.௨௨.௰௧. லேவி.௨௰.௩. எசேக்.௩௬.௨௰. ரோ.௨.௨௪. (௮) யாத்.௨௨.௨௬. எசேக்.௨௩.௪௧. ௧.கொரி.௮.௰. (௯) எண்.௨௧.௨௪. உபா.௨.௩௧. யோசு.௨௪.௮. எண்.௰௩.௨௮,௩௨,௩௩. ஏசா.௫.௨௪. மல்.௪.௧. (௰) யாத்.௰௨.௫௧. உபா.௨.௭. (௰௧) எண்.௬.௨. நியா.௰௩.௫. (௰௨) ஏசா.௩௰.௰. எரே.௰௧.௨௧. மீகா.௨.௬. (௰௩) ஏசா.௧.௰௪. (௰௪) எரே.௯.௨௩. (௰௫) சங்.௩௩.௰௭.—(௩. அதி. ௨.) உபா.௭.௯. தானி.௯.௰௨. மத்.௰௧.௨௨. ரோ.௨.௯. ௧.பேதுரு.௪.௰௭. (௬) ஏசா.௪௫.௭. (௭) ஆதி.௬.௰௩. யோவா.௰௫.௰௫. (௮) அப்.௪.௨௰. ௧.கொரி.௯.௰௬. (௰) எரே.௪.௨௨.

௰௧ யெகோவா சொல்லுகிறார்.—ஆதலால் சத்து
ருவந்து தேசத்தைச்சூழ்ந்துகொண்டு, உன்பலத்
தைத் தாழப்பண்ணுவான்; அப்பொழுது
உன் அரமனைகள் கொள்ளையாடப்படுமென்று
ஆண்டவராகிய யெகோவா சொல்லுகி
௰௨ றார்.–ஒருமேய்ப்பன் இரண்டுகால்களையாகிலும்,
ஒருகாதின்துண்டையாகிலும் சிங்கத்தின் வாயி
னின்றுபிடுங்கி விடுவிக்கிறதுபோல, ஷமாரியா
வில்வாசம்பண்ணும் இஸரவேல்வமிசத்தார் ஒரு
படுக்கையின்மூலையிலும், தமஸ்குவின் ஒருமஞ்
சத்தின் மேலும் நின்று விடுவிக்கப்படுவார்க
௰௩ ளென்று யெகோவா சொல்லுகிறார்.–நீங்கள்
௰௪ கேட்டு, யாக்கோபு வமிசத்தாரிடத்தில்,—நான்
இஸரவேலின் அதிக்கிரமங்களை விசாரிக்கும்நா
ளில்பெத்தேலின் வேதிகைகளை விசாரிக்கவேதி
கையின்கொம்புகள்சேதிக்கப்பட்டுத்தரையிலே
விழுமென்றுசேனாபதியும், தேவனும், ஆண்ட
வருமாகிய யெகோவா சொல்லுகிறாரென்
௰௫ று, சாட்சியிடுங்கள்.-நான் அவர்களுடையஉஷ்
ணகாலத்து வீட்டோடே குளிர்காலத்துவீட்
டையும்இடித்துவிடுவேன்; யானைத்தந்தத்தினால்
விசித்திரித்தவீடுகள் அழிந்துபோகும்; பெரிய
வீடுகளும் ஒழிந்துபோகுமென்று யெகோவா
சொல்லுகிறார்.

## ௪. அதிகாரம்.

*௧. இஸரவேலர்செய்தஉபத்திரவத்தினிமித்தம் அவர்களைக்கண்டித்தல்: ௪. அவர்கள் தேவபூசையினிமித்தம்அவர்களைக்கண்டித்தல்: ௬. மனக்கடினத்தினிமித்தம் அவர்களைக் கண்டித்தல்.*

ஷமாரியாவின்மலைகளிலுள்ளபாஷானின்மாடு
களே, நீங்கள் இவ்வாக்கைக்கேளுங்கள், நீங்கள்
தரித்திரரை உபத்திரவப்படுத்தி, திக்கற்றவர்களை
நொறுக்கி, உங்கள் எசமானரைநோக்கி, நாங்கள்
பானம்பண்ணும்படி கொண்டுவாருங்களென்று
௨ சொல்லுகிறீர்கள்.—கேளுங்கள், துறடுகளால் நீங்
களும், தூண்டில்களினால் உங்கள்சந்ததியாருங்
கொண்டுபோகப்படுங்காலம்வருமென்று ஆண்
டவராகிய யெகோவா தமது பரிசுத்தத்
௩ தைக்கொண்டு ஆணையிட்டார்.-அப்பொழுது அ
ரமனைப்பொருளைவீசி, நீங்கள் எல்லாரும் உங்க
ளுக்கு முன்னிருக்கும் இடிந்த மதிலின்வழி
யாய்ப்புறப்பட்டுப்போவீர்களென்று யெகோ
வா சொல்லுகிறார்.
௪ பெத்தேலுக்குப்போய்ப்பாவஞ்செய்யுங்கள்;
கில்காலில் அதிக்கிரமத்தை அதிகரிக்கப்பண்
ணுங்கள்; காலைதோறும் உங்கள் பலிகளையும்,
மூன்றாம்வருஷத்திலே செலுத்தவேண்டிய உங்
கள் பத்திலொருபாகத்தையுங் கொண்டுவாருங்
௫ கள்.—புளித்தமாவுள்ள ஸ்தோத்திரபலியோடே
தூபங்காட்டி, இஷ்டமானபலிகளைப் பிரசித்த
மாய்க்கூறி அறியப்படுத்துங்கள்: இஸரவேல்வ
மிசத்தாரே, இப்படிச்செய்யப்பிரியப்படுகிறீர்
களென்று ஆண்டவராகிய யெகோவா
சொல்லுகிறார்.
நான் உங்கள் எல்லாநகரங்களிலும் பல்லின் ௬
சுத்தமும், உங்கள் சகல ஸ்தானங்களிலும் ஆகா
ரக்குறைவும் உண்டாகும்படிசெய்தும், நீங்கள்
என்னிடத்தில்திரும்பவில்லையென்று யெகோ
வா சொல்லுகிறார்.—அறுப்புக்கு இன்னம்மூன் ௭
றுமாதம் இருக்க, நான் மழையைத்தடுத்தேன்:ஒ
ரு நகரத்தின்மேல் பெய்யவும், மற்ற நகரத்தின்
மேல் பெய்யாமலிருக்கவும் பண்ணினேன: ஒ
ருதுண்டுநிலத்திலே மழைபெய்தது, மழைபெய்
யாத மற்றத்துண்டுநிலம் வறண்டது.—இரண்டு ௮
மூன்று நகரம் தண்ணீர்குடிக்கும்படி ஒருநகரத்
துக்குப்போய் அலைந்து திருத்தியடையவில்லை:
ஆயினும் நீங்கள் என்னிடத்தில் திரும்பவில்லை
யென்று யெகோவா சொல்லுகிறார்.—கருக் ௯
காயினாலும், விஷப்பனியினாலும் நான்உங்களை
அடித்தேன்: உங்கள்தோட்டங்களையும், உங்கள்
திராட்சத்தோட்டங்களையும், உங்கள்அத்திமரங்
களையும், உங்கள்சீதவிருட்சங்களையும் காசப்பு
ழுப்பட்சித்தது: ஆனாலும் நீங்கள்என்னிடத்தில்
திரும்பவில்லையென்று யெகோவா சொல்லு
கிறார்.—எகிப்தில் உண்டானதுபோலப் பெரு ௰
வாரிக்காய்ச்சலை உங்களுக்குள் அனுப்பினேன்:
உங்கள்வாலிபரைக்கட்கத்தினாலே கொலைசெய்
தேன், உங்கள்குதிரைகளை நான்கவர்ந்துகொண்
டேன்; உங்கள்பாளயங்களின் நாற்றம் உங்கள்
நாசிகளிலும் ஏறப்பண்ணினேன்: ஆயினும் நீங்
கள் என்னிடத்தில் திரும்பவில்லையென்று யெ
கோவா சொல்லுகிறார்.-தேவன் சோதோமை ௰௧
யும் கொமோராவையும்கவிழ்த்ததுபோல, உங்க
ளிற் சிலரைக் கவிழ்த்துவிட்டேன், நீங்கள்
அக்கினியினின்று நீக்கப்பட்ட கொள்ளியைப்
போலானீர்கள்: ஆயினும் நீங்கள் என்னிடத்தில்
திரும்பவில்லையென்று யெகோவா சொல்லு
கிறார்.—ஆதலால் இஸரவேலே, நான் இவ்வித ௰௨
மாய் உன்னைநடத்துவேன்; இஸரவேலே, நான்
இப்படி உன்னைநடத்தப்போகிறபடியால் உன்
தேவனைச்சந்திக்கும்படிஆயத்தமாயிரு.–கேள், ௰௩
மலைகளை உருவாக்கினவரும், காற்றைச்சிருஷ்
டித்தவரும், மனுஷனுடையசிந்தையின்னதென்
று அவனுக்கு வெளிப்படுத்துகிறவரும், விடியற்
காலத்தை அந்தகாரமாக்குகிறவரும், பூமியின்உ
யர்ந்தஸ்தானங்களில் உலாவுகிறவருமாகிய இவ
ரே அவர்,சேனாபதியுந் தேவனுமாகிய யெ
கோவாவென்பதே அவருக்குநாமம்.

(௰௧) ௨.இரா.௰௭,௩,௬. (௰௫) எரே.௩௬.௨௨. நியா.௩,௨௰. ௧.இரா.௨௨.௩௯.—(௪. அதி. ௧.) சங்.௨௨.௰௨. எசேக். ௩௯.௰௮. (௨) சங்.௮௯.௩௫. எரே.௰௬.௰௬. ஆபகூ.௧.௰௫. (௩) எசேக்.௰௨.௫,௰௨. (௪) எசேக்.௨௰.௩௯. ஓசி.௪.௰௫. எண்.௨௮.௩,௫. உபா.௰௪.௨௮. (௫) லேவி.௭.௰௩. லேவி.௨௨.௰௮,௨௧. உபா.௰௨.௬. (௬) ஏசா.௨௬.௰௧. ஆகா.௨.௰௭. (௯) உபா.௨௮.௨௨. ஆகா.௨.௰௭. யோவே.௧.௪. (௰) யாத்.௯.௩,௬. உபா.௨௮.௨௭,௬௰. ௨.இரா.௰௩.௭. (௰௧) ஆதி.௰௯.௨௪,௨௫. ஏசா.௰௩.௰௯. சக.௩.௨. யூதா.௨௩. (௰௨) எசேக்.௰௩.௫. லூக்.௰௪.௩௧,௩௨. (௰௩) சங்.௱௩௯.௨. தானி.௨.௨௮. உபா.௩௨.௰௩. மீகா.௧.௩. ஏசா.௪௭.௪.

## ௫. அதிகாரம்.

௧. தீர்க்கதரிசி இஸரவேலரைக்குறித்துப்புலம்பல்:
௪. மனந்திரும்பும்படி யுணர்த்தல்: ௨௧. தே
வன் பத்திவேஷத்தை வெறுத்தல்.

இஸரவேல்வமிசத்தாரே, உங்களைக் குறித்து
நான்புலம்பிச்சொல்லும் இவ்வாக்கைக்கேளுங்
௨ கள்.—இஸரவேலின் கன்னிகைவிழுந்தாள்; அ
வள் இனி ஒருபொழுதும் எழுந்திருக்கமாட்
டாள்: தூக்குவார் ஒருவருமில்லாமல்அவள்தன்
௩ தேசத்தில் கைவிடப்பட்டுக்கிடக்கிறாள்.—இஸர
வேலர்மத்தியில் ஆயிரவரோடேபுறப்பட்ட நக
ரத்தாருக்கு நூறுபேர்மீந்திருப்பார்கள், நூறுபே
ரோடே புறப்பட்டவர்களுக்குப் பத்துப்பேர்
மீந்திருப்பார்களென்று ஆண்டவராகிய யெ
கோவா சொல்லுகிறார்.
௪ யெகோவாஇஸரவேல்வமிசத்தாரிடத்தில்
இவ்வாக்குச்சொல்லுகிறார், நீங்கள் என்னைத்தே
௫ டுங்கள், அப்பொழுது சீவிப்பீர்கள்:—பெத்
தேலைத்தேடாதிருங்கள், கில்காலில்பிரவேசியா
திருங்கள்:பேர்ஷேபாவுக்குப்போகாதிருங்கள்,
கில்காலிலுள்ள சனங்கள் சிறைப்பட்டுப்போ
௬ வார்கள், பெத்தேல் அற்றுப்போம்.—யெகோ
வாவைத்தேடுங்கள், அப்பொழுது சீவித்
திருப்பீர்கள்; இல்லாவிட்டால்பெத்தேலிலிருக்
கிறவர்களில் ஒருவராலும் அவிக்கப்படாத அக்
கினி யோசேப்பின்வீட்டிலேபாய்ந்து அதைப்
௭ பட்சிக்கும்.—நியாயத்தை எட்டியாகமாற்றி, நீ
தியைத் தரையிலேதள்ளிவிடுகிறவர்களாகிய நீங்
௮ கள்,—கார்த்திகைநட்சத்திரத்தையும், கடகஇரா
சியையுஞ்சிருஷ்டித்து, மரணநிழலை விடியற்கா
லமாகமாற்றி, பகலை இரவைப்போல அந்தகார
மாக்கி, சமுத்திரத்தின் நீர்களைவரஅழைத்து,பூமி
யின் முகத்தின்மேல் அவைகளைச் சொரிந்திருக்
கிறவரையே தேடுங்கள்: யெகோவாவே
௯ அவருக்கு நாமம்.—அவர் பலவான்மேல்நாசத்
தைவருவிக்கிறார்,துருக்கத்தில் அழிவுவரப்பண்
௰ ணுகிறார்.—நகரவாசலில் கடிந்துகொள்ளுகிறவ
னை அவர்கள்பகைக்கிறார்கள்,யதார்த்தமாய்ப்பே
௰௧ சுகிறவனை வெறுக்கிறார்கள்.—நீங்கள் தரித்திரனை
மிதித்து, அவனிடத்திலிருந்து தானியச்சுமைக
ளைவாங்குகிறீர்கள்: ஆதலால் நீங்கள் பொளிந்த
கற்களினாலே வீடுகளைக்கட்டினாலும், அவைக
ளில் வசிக்கமாட்டீர்கள்; இனிமையான திராட்
சத் தோட்டங்களை நாட்டினாலும், அவைகளி
லுண்டாகும் திராட்சரசத்தைப் பானம்பண்ண
௰௨ மாட்டீர்கள்.—நீதிமானைக் கிலேசப்படுத்தி, பரி
தானம்வாங்கி, நகரவாசலில் எளியவர்களுடை
ய நியாயத்தைப்புரட்டி, இப்படிநீங்கள்செய்
துவருகிற உங்கள் பலவிதமான அதிக்கிரமங்க
ளையும், உங்கள் மகா பாவங்களையும் நான் அறி
வேன்.—ஆதலால்அந்தக்காலந் தீமையுள்ளதான ௰௩
படியினால் புத்திமான் அந்தக்காலத்தில்மவுனமா
யிருப்பான்.—நீங்கள் தீமையைத்தேடாமல்நன் ௰௪
மையைத்தேடுங்கள், அப்பொழுதுசீவிப்பீர்கள்:
அன்றியும் சேனாபதியுந் தேவனுமாகிய யெ
கோவா நீங்கள் சொல்லியபிரகாரம்உங்களோ
டிருப்பார்.—நீங்கள் தீமையைவெறுத்து, நன்மை ௰௫
யைவிரும்பி, நகரவாசலில் நியாயத்தை நிலைப்ப
டுத்துங்கள்:சேனாபதியுந் தேவனுமாகிய யெ
கோவா யோசேப்புவமிசத்தில் மீந்திருக்கிற
வர்கள்மேல் தயைசெய்யவுங்கூடும்.—ஆதலால் ௰௬
எல்லாத்தெருக்களிலும்புலம்பலுண்டாக,இரா
சவீதிகளெல்லாவற்றிலும் ஐயோ,ஐயோஎன்பார்
கள்; அவர்கள் பயிர்ச்செய்கைக்காரனைத்துக்கிக்
கிறதற்கும், புலம்ப அறிந்தவர்களைப்புலம்புவதற்
கும் வரஅழைப்பார்களென்று ஆண்டவரும்
சேனாபதியுந் தேவனுமாகிய யெகோவா
சொல்லுகிறார்.—சகல திராட்சத்தோட்டங்களி ௰௭
லும் புலம்பலுண்டாகும்: நானுங்கள் நடுவ
ழியாய்ச்செல்வேனென்று யெகோவா சொல்
லுகிறார்.—ஐயோ, யெகோவாவின் நாளை ௰௮
விரும்புகிறவர்களே,உங்களுக்கு ஆபத்துவரும்,
நீங்கள் அந்தநாளைவிரும்புகிறதேது; யெகோ
வாவின் நாள் ஒளியில்லாமல்அந்தகாரமாயிருக்
குமே.—ஒருவன் சிங்கத்துக்குத்தப்பியோட,கர ௰௯
டிஅவனுக்கு எதிர்ப்பட்டதுபோலவும்,வீட்டிற்
பிரவேசித்துத் தன்கையைச் சுவரின்மேல்வைத்
துச் சார்ந்துகொள்ள, சருப்பம் அவனைக்கடிப்
பதுபோலவும் முடியும்.—யெகோவாவின் ௨௰
நாள் ஒளியில்லாத அந்தகாரமல்லவோ, சற்றும்
ஒளியில்லாத அகோர அந்தகாரமே.

நான் உங்கள் திருநாட்களைவெறுத்து அரோ ௨௧
சிக்கிறேன், வேலைவிட்டுஓய்ந்திருக்கும்உங்கள்
தினங்களைவிரும்பேன்.—நீங்கள் தகனபலிகளை ௨௨
யும் போசனபலிகளையும் எனக்கு இட்டாலும்
நான் அவைகளை அங்கிகரிக்கமாட்டேன்:உங்
கள்புஷ்டியான மிருகங்களின்ஸ்தோத்திரபலிக
ளையும் நான்மதிக்கமாட்டேன்.—உன் பாட்டுக ௨௩
ளின்சத்தத்தை எனக்குவிலக்கிவிடு; நான் உன்
வீணையின்சுரத்தை இனிக்கேளேன்.—நியாயம் ௨௪
சலத்தைப்போலவும், நீதி மகாநதியைப்போல
வும் பிரவாகிக்கவிடுங்கள்.—இஸரவேல்வமிசத் ௨௫
தாரே, நீங்கள் வனாந்தரத்திலிருந்த நாற்பதுவரு
ஷமட்டும்எனக்கென்றுபலிகளையும்,காணிக்கை
களையுஞ் செலுத்தவில்லையா.—ஆயினும் நீங்கள் ௨௬
உங்கள்நிமித்தமுண்டாக்கின பிரதிமைகளாகிய

(௫. அதி. ௧.) எரே.௭.௨௯. எசேக்.௰௯.௧. (௪) ௨.நாளா.௰௫.௨. எரே.௨௯.௰௩. ஏசா.௫௫.௩. (௫) ஓசி.௪.௰௫. (௭) அதி.௬.௰௨. (௮) யோபு.௯.௯. யோபு.௩௮.௩௧. (௰) ஏசா.௨௯.௨௧. ௧.இரா.௨௨.௮. (௰௧) மீகா.௬.௰௫. செப்.௧.௰௩. ஆகா.௧.௬. (௰௨) ஏசா.௨௯.௨௧. (௰௪) மீகா.௩.௰௧. (௰௫) ரோ.௰௨.௯. யாத்.௩௨.௩௰. ௨.இரா.௰௯.௪. யோவே.௨.௰௪. (௰௬) எரே.௯.௰௭. (௰௭) யாத்.௰௨.௰௨. நாகூ.௧.௰௨. (௰௮) ஏசா.௫.௰௯. எசேக்.௰௨.௨௨,௨௭. ௨.பேதுரு.௩.௪. எரே.௩௰.௭. செப்.௧.௰௫. (௰௯) எரே.௪௮.௪௪. (௨௧) நீதி.௨௧.௨௭. ஏசா.௧.௰௧—௰௬. எரே.௬.௨௰. ஓசி.௮.௰௩. லேவி.௨௬.௩௧. (௨௨) ஏசா.௬௬.௩. மீகா.௬.௬,௭. (௨௪) ஓசி.௬.௬. மீகா.௬.௮. (௨௫) உபா.௩௨.௰௭. யோசு.௨௪.௰௪. எசேக்.௨௰.௮,௰௫,௨௩. அப்.௭.௪௨,௪௩. (௨௬) ௧.இரா.௰௧.௩௨.

மோலெக்கின் கூடாரத்தையும், உங்கள் கியூன்
நட்சத்திரத்தையுங் காவிக்கொண்டுவந்தீர்கள்.—
உஎ ஆதலால்நான்தமஸ்குவுக்கு அப்பால் உங்களைச்
சிறைபிடித்துக்கொண்டுபோவேனென்று சேனை
பதியாகிய தேவனென்னும் நாமத்தையுடை
ய யெகோவா சொல்லுகிறார்.

## கூ. அதிகாரம்.

க. இஸரவேலர் சுகசீவிகளாய்நாள்விடல்: அ. அ
வர்களுக்குத்தண்டனைவருமெனக்காட்டல்.

ஐயோ, சீயோனிலேநிருவிசாரமாயிருக்கிறவர்
களும், ஷமாரியா மலையை நம்பியிருக்கிறவர்க
ளும், இஸரவேல்வமிசத்தார் நாடிவருகிறசாதி
யாருள் பிரதானிகளென்றெண்ணப்பட்டவர்க
உ ளுமாகிய இவர்களுக்கு ஆபத்துவரும்.—நீங்கள்
கல்னேயுக்குப்போய்ப்பாருங்கள்; அங்கேநின்
றுபெரிய அமாத்துக்குப்போங்கள்: பெலிஸ்திய
ரின் காத்துக்கு இறங்குங்கள்: இந்தராச்சியங்களி
லும் அவைகள் உத்தமமா; உங்கள் எல்லையி
ங லும் அவைகளின்எல்லைவிஸ்தாரமா.—அவர்கள்
ஆபத்தின்நாள்தங்களுக்குத்தூரமென்றெண்ணி,
கொடுமையின் ஆசனததைச்சமீபிக்கும்படிசெய்
ச து,—யானைத்தந்த மஞ்சங்களின்மேல் படுத்துக்
கொண்டு, தங்கள் சயனங்களின்மேல் சௌக்கி
யமாய்க்கிடந்து, மந்தையிலுள்ள ஆட்டுக்குட்டி
களையும், கொட்டிலிலுள்ள கன்றுகளையும் புசித்
ரு து,—வீணைவாசித்துப்பாடி, தாவீதுசெய்தபிரகா
ரந்தங்களுக்கு வாத்தியக்கருவிகளை உண்டுபண்
சு ணி,—பாத்திரங்களில் திராட்சரசத்தைக்குடித்து,
சிரேஷ்டமான பரிமளதைலங்களைப்பூசி, யோ
சேப்புக்கு நேரிட்ட ஆபத்தினிமித்தம் வியாகு
லப்படாமலிருக்கிறார்கள்.
எ ஆதலால் அவர்கள்சிறைப்பட்டுப்போகிறவர்
களின்முன்னணியிலேபோவார்கள், சௌக்கிய
மாய்ச்சயனித்திருந்தவர்களின் விருந்து ஒழிந்து
அ போம்.-நான் யாக்கோபின்மேன்மையைவெறுக்
கிறேன், அவன் அரமனைகளைப் பகைக்கிறேன்:
நான் நகரத்தையும், அதிலுள்ளயாவையும் பிறர்
வசம் ஒப்பிப்பேனென்று ஆண்டவராகிய
யெகோவா தமதுநாமத்தைக்கொண்டுஆணை
யிட்டார்: சேனைபதியுந் தேவனுமாகியயெ
கூ கோவா இவ்வாக்கைச் சொல்லுகிறார்.—ஒரு
வீட்டிலே பத்துப்பேர் மீந்திருந்தாலும் இறந்து
ய போவார்கள்.—ஒருவனுடைய இனத்தானும், தே
கத்தைத்தகிக்கிறவனும் வீட்டினின்று எலும்புக
ளைவெளியேகொண்டுபோகையில், வீட்டின்பக்
கங்களிலுள்ளவனைநோக்கி, உன்னோடே இன்
னும் ஆராயினுமுண்டோவென்றுகேட்க,
இவன், இல்லையென்பான். அப்பொழுது அவன்,
நீ மவுனமாயிரு: நாம் யெகோவாவின் நா
யக மத்தைச்சொல்லத்தகாது.—பார், யெகோவா
கட்டளைகொடுத்துவிட்டார், பெரியவீட்டைத்
தகர்ந்துபோகவும், சிறியவீட்டை வெடிக்கவும்
இடிப்பாரென்பான்.
கன்மலையின்மேல் குதிரைகள் ஓடுமா, அங் யஉ
கே ஒருவன் மாடுகளால் உழுவானா; நியாயத்
தை நஞ்சாகவும், நீதியின் கனியை எட்டியாக
வும் மாற்றினீர்கள்.—நாங்கள் எங்கள் பலத்தினா யங
லே கொம்புகளைத் தரித்துக்கொள்ளவில்லையா
வென்றுசொல்லி அபத்தமானதைக்குறித்துக்களி
கூருகிறீர்கள்.—இஸரவேல் வமிசத்தாரே, பா யச
ருங்கள், நான் உங்களுக்கு விரோதமாய் ஒருசா
தியாரை எழுப்ப, அவர்கள் ஏமாத்தின் பிரவே
சஸ்தானமுதல்வனாந்தரத்திலுள்ளநதிவரைக்கும்
உங்களைஉபத்திரவப்படுத்துவார்களென்றுசேனை
பதியுந் தேவனுமாகியயெகோவாசொல்
லுகிறார்.

## எ. அதிகாரம்.

க. வெட்டுக்கிளிகளின் தரிசனம்: ச. அக்கினி
யின் தரிசனம்: எ. தூக்குநூலின் தரிசனம்:
ய. அமத்சியாவினால் ஆமோஸ் ஆபத்து அனுப
வித்தல்: யச. ஆமோஸ் உத்தரஞ்சொல்லல்:
யசு. அமத்சியா தண்டனைபெறல்.

ஆண்டவராகிய யெகோவா எனக்கு க
இதைக்காண்பித்தார்; கேளுங்கள், இராசாவின்
புல்லு வெட்டினபின்பு உண்டாகும் புல்லு மு
ளைக்கத்தொடங்கினபொழுது, அவர் வெட்டுக்
கிளிகளைச் சிருஷ்டித்தார்.—அவைகள் தேசத் உ
தின் புல்லைத் தின்றுமுடித்தபொழுது, நான்,
ஆண்டவராகிய யெகோவாவே, மன்
னித்தருளும்படி உம்மைவேண்டுகிறேன்: யாக்
கோபு சிறியவனே, அவனை எழுப்புகிறவன் யா
வனென்றேன்.-அதினால் யெகோவா அதைக் ங
குறித்து மனதுருகினார்: அது உண்டாகாதென்
று யெகோவா சொன்னார்.
பின்பு ஆண்டவராகிய யெகோவா ச
எனக்குஇதைக்காண்பித்தார்: கேளுங்கள், ஆண்
டவராகிய யெகோவா நியாயந்தீர்க்கும்
பொருட்டு அக்கினியை வரவழைக்க, அது மகா
ஆழியைப்பட்சித்தது, அது ஒருபங்கைப்பட்சித்
தது.-அப்பொழுதுநான் ஆண்டவராகியயெ ரு
கோவாவே, விடும்படி உம்மை வேண்டுகி
றேன்: யாக்கோபு சிறியவனே, அவனை எழுப்பு
கிறவன்யாவனென்றேன்,—யெகோவா இதற் சு
கும் மனதுருகினார்: இதுவும் உண்டாகாதென்று
ஆண்டவராகிய யெகோவா சொன்னார்.
பின்புஅவர்எனக்குக்காண்பிக்க, ஆண்டவர் எ
தூக்குநூலைக்கையிற் பிடித்து, தூக்குநூலுக்குக்
கட்டப்பட்ட ஒருமதிலின்மேல் நிற்கக்கண்
டேன்.—யெகோவா என்னைநோக்கி, ஆமோ அ
சே, நீஎதைக்காண்கிறாயென்றுசொல்ல, ஒருதூக்
குநூலை என்றேன். அப்பொழுது ஆண்டவர்,

(உஎ) உ.இரா.யஎ.சு.—(கூ. அதி. க.) லூக்.சு.உச. யாத்.யக.ரு.(உ)எரே.உ.ய. உ.இரா.யஅ.ஙச. உ.நாளா.உகூ.௲.
நாகூ.ங.அ.(ங)எசேக்.யஉ.உஎ.(ரு)எசா.ரு.யஉ. க.நாளா.உங.ரு. (சு) ஆதி.ஙஎ.உரு.(அ)எரே.ருக.யச. எபி.கூ.யங.
யஎ.சங்.சஎ.ச.எசேக்.உச.உக.(யக)எசா.ருரு.யக.(யஉ)ஓசி.ய.ச.(யச)எரே.ரு.யரு.எண்.ஙச.அ.க.இரா.அ.சரு.—
(எ. அதி. உ.) எசா.ருக.யக.(ங)ஙஉ.ஙசு. யோனா.ங.ய. யாக்.ரு.யசு. (அ)எசா.உஅ.அ.யஎ.புல.உ.அ. மீகா.எ.யஅ.

பார், நான் இஸரவேலராகிய என் சனங்கள் மத்
தியில் தூக்குநூலைவிடுவேன்: அவர்களை இனித்
௯ தண்டியாமல் விடேன்.—ஈசாக்கின் உயர்ந்தஸ்
தானங்கள்வெறுமையாய்ப்போம்,இஸரவேலின்
பரிசுத்த ஸ்தானங்கள் வெறுமையாக்கப்படும்;
நான் கட்கத்தைப் பிடித்துக்கொண்டு, யெரோ
பேயாம் வமிசத்தாருக்கு விரோதமாக எழுந்தி
ருப்பேனென்றூர்.
௰ அப்பொழுது பெத்தேலில் பூசாசாரியாகிய அ
மத்சியா, இஸரவேலின் இராசாவாகிய யெரோ
பேயாமிடத்தில் ஆளனுப்பி, ஆமோஸ் இஸர
வேல் வமிசத்தார்மத்தியில் உமக்குவிரோதமாக
இராசதுரோகஞ்செய்கிறுன்: தேசம் அவனுடை
௰௧ ய எல்லாவாக்குகளையுந் தாங்கமாட்டாது.—யெ
ரோபேயாம் கட்கத்தினுல் கொலைசெய்யப்படு
வானேயென்றும், இஸரவேல் தன் தேசத்தினின்
றுசிறைபிடித்துக்கொண்டுபோகப்படுவானென்
றும் ஆமோஸ் சொல்லுகிருனென்று சொல்லு
௰௨ வித்தான்.—அமத்சியா ஆமோசை நோக்கி, தரி
சியே, நீ போ, யூதேயாதேசத்துக்கு ஓடு, அங்கே
போசனஞ்செய், அங்கே தீர்க்கதரிசனஞ்சொல்
௰௩ லு.—பெத்தேலிலே நீ இனித் தீர்க்கதரிசனங்க
ளைச் சொல்லலாகாது: அது இராசாவின் ஆலய
மும் அரமனையுமாயிருக்கின்றதென்றுன்.
௰௪ அப்பொழுது ஆமோஸ் அமத்சியாவுக்கு உத்த
ரமாய், நான்தீர்க்கதரிசியுமல்ல, தீர்க்கதரிசியின்
புத்திரனுமல்ல; நான்மேய்ப்பனும், காட்டத்திப்
பழங்களைப்பொறுக்குகிறவனுமாயிருந்தேன்.—
௰௫ நான் மந்தையைப்பின்பற்றியசமயத்தில் யெ
கோவா என்னை அழைத்தார், யெகோவா என்
னைநோக்கி, நீ போய், என் சனங்களாகிய இஸர
வேலரிடத்தில் தீர்க்கதரிசனஞ்சொல்லென்றூர்.
௰௬ இப்பொழுதுநீ யெகோவாவின் வாக்கைக்
கேள்: இஸரவேலருக்குவிரோதமாய்த்தீர்க்கதரிச
னஞ்சொல்லலாகாது, ஈசாக்கின் வமிசத்தாருக்
குவிரோதமாய் வாக்கியத்தைப்பொழியலா
௰௭ காதென்று நீசொல்லுகிருய்.—இதினிமித்தம்உன்
மனைவி நகரத்தில்வேசையாவாள், உன்புத்திரரும்
உன்புத்திரிகளும் கட்கத்தினுலே விழுவார்கள்,
உன்பூமிநூலால்பங்கிடப்படும்; நீ அசுசியானஒ
ருதேசத்தில் இறந்துபோவாய்: இஸரவேல் நிச்
சயமாகச் சிறைபிடிக்கப்பட்டுத் தன் தேசத்தி
னின்றுபுறப்பட்டுப்போவானென்று யெகோ
வா சொல்லுகிருரென்றுன்.

## ௮. அதிகாரம்.

௧. உஷ்டணகாலத்திலுள்ளபழத்தின்திருஷ்டாந்தத்தையும் அதின் தாற்பரியத்தையுந் தெரிவித்தல்: ௪. உபத்திரவத்தினிமித்தம்இஸரவேலரைக் கண்டித்தல்: ௰௧. தேவனுடைய வாக்கில்லாமலிருக்கிறபஞ்சகாலத்தை நிருணித்தல்.

பின்பு ஆண்டவராகிய யெகோவா, ஒரு ௧
கூடு பழுத்தபழத்தை எனக்குக்காண்பித்து,—ஆ ௨
மோசே, நீ எதைக்காண்கிருயென்றுகேட்க, ஒ
ருகூடு பழுத்தபழத்தையென்றேன். அப்பொழு
து யெகோவா என்னைநோக்கி, என்சனங்க
ளாகியஇஸரவேலருக்கு முடிவுகாலம்வந்துவிட்
டது; நான் இனித்தண்டியாமல் விடேனென்
றூர்.—அந்நாளில் அரமனைகளின்பாட்டுகள் அ ௩
லறுதலாகும்: வெகுபிரேதங்களைஎவ்விடத்திலும்
மவுனமாய் எறிந்துவிடுவார்களென்று ஆண்ட
வராகிய யெகோவா சொல்லுகிருர்.
தேசத்தின் திக்கற்றவர்களை விழுங்குகிறவர்க ௪
ளே, எளியவர்களைஒழியப்பண்ணுகிறவர்களே,
நீங்கள் இவ்வாக்கைக்கேளுங்கள்.—நாங்கள்ஏபா ௫
வைக் குறைத்து, ஷேக்கலை அதிகமாக்கி, கள்
ளத்தராசினுல் வஞ்சகம்பண்ணி, தரித்திரரைப்
பணத்துக்கும், எளியவர்களை ஒருசோடுபாதரட்
சைக்குங்கொள்ளும்படிக்கும், தானியத்தின்ப
தரைவிற்கும்படிக்கும்,—தானியத்தைவிற்கும்ப ௬
டிக்கு அமாவாசியும், கோதுமையை வெளியே
வைக்கும்படிக்கு ஓய்வுநாளும், எப்பொழுதுமு
டிந்துபோமென்று நீங்கள்சொல்லுகிறீர்கள்.—
அவர்கள் கிரியைகளில் ஒன்றையும் மறக்கமாட் ௭
டேன், இதுநிச்சயமென்று யெகோவா யாக்
கோபின் மேன்மையைக்கொண்டு ஆணையிட்
டார்.—இதினிமித்தந் தேசம் நடுங்காதா, அதில் ௮
வசிப்பவர்கள் யாவரும் புலம்பார்களா, அது
முழுவதும் ஒருவெள்ளத்தைப்போல எழும்பா
தா, எகிப்து நதியைப்போல் அடிபட்டு எழும்
பித்தணியாதா.—அந்நாளிலே நான் மத்தியான ௯
காலத்தில்சூரியனை அஸ்தமிக்கப்பண்ணுவேன்,
ஒளியுள்ளபகலிலே தேசத்தைஅந்தகாரப்படுத்து
வேன்:—உங்கள் உற்சவங்களைத் துக்கமாகவும் ௰
உங்கள் பாட்டுகளையெல்லாம் புலம்பலாகவும்
மாற்றுவேன்; எல்லாஅரைகளிலும் இரட்டைவ
ருவித்து, எல்லாத்தலைகளையும்மொட்டையாக்கி,
ஒரே பிள்ளையினிமித்தம் உண்டாகுந் துக்கத்
தைப்போல் அதைத் துக்கநாளாக்குவேன்; அ
தின்முடிவு மிகவுங் கசப்புள்ளதாயிருக்கும்படி
செய்வேனென்று ஆண்டவராகிய யெகோ
வா சொல்லுகிருர்.
கேளுங்கள், ஆகாரத்தின்குறைவினுலாகிலும், ௰௧
சலத்தின் குறைவினுலாகிலுமல்ல, யெகோ
வாவின் வாக்கியத்தைக்கேட்கக்கிடையாமை
யென்னும்பஞ்சத்தை நான்தேசத்தில் அனுப்பும்
நாள்வரும்.—அவர்கள் ஒரு சமுத்திரமுதல் மற் ௰௨
றச்சமுத்திரம்வரைக்கும், வடதிசைமுதல் கீழ்த்
திசைவரைக்கும் அலைந்து திரிந்து, யெகோ
வாவின் வாக்கியத்தைத்தேடும்படி அங்குமிங்
கும் ஓடுவார்கள், ஆயினுங் கிடையாமற்போம்.—

(௯) ஆதி.௪௬.௧. ௨.இரா.௰௫.௰. (௰) ௧.இரா.௰௨.௩௨. ௨.இரா.௰௪.௨௩. (௰௩) ௧.இரா.௰௨.௩௨. (௰௪) ௧.இரா.௨௰.௩௫. ௨.இரா.௨.௫. சக.௰௩.௫. (௰௬) எசேக்.௨௧.௨. மீகா.௨.௬. (௰௭) எசா.௰௩.௰௬. புல.௫.௰௧. ஓசி.௪.௰௩. சக.௰௪.௨.—(௮. அதி. ௨.) எசேக்.௭.௨. (௪) சங்.௰௪.௪. நீதி.௩௰.௰௪. (௫) மீகா.௬.௰,௰௧. ஓசி.௰௨.௭. (௬) நிகி.௰௩.௰௫,௰௬. (௭) ஓசி.௮.௰௩. (௮) ஓசி.௪.௩. (௯) யோபு.௫.௰௪. எசா.௰௩.௰. எரே.௰௫.௯. மீகா.௩.௬. (௰) எசா.௰௫.௨,௩. எரே.௪௮.௩௭. எசேக்.௭.௰௮. எரே.௬.௨௬. சக.௰௨.௰. (௰௧) ௧.சாமு.௩.௧. எசேக்.௭.௨௬.

௰௩ அந்தநாளில் சௌந்தரியமுள்ள கன்னிகைக
ளும், வாலிபருந்தாகத்தினால் சோர்ந்துபோவார்
௰௪ கள்.—தாணே, உன் தேவனுடைய சீவனைக்
கொண்டும்,பேர்ஷேபாவின் மார்க்கத்தின் உண்
மையைக்கொண்டுமென்றுசொல்லி, ஷமாரியா
வின் பாவத்தைக்கொண்டு ஆணையிடுகிறவர்கள்
விழுவார்கள்; இனி ஒருபொழுதும் எழுந்தி
ருக்கமாட்டார்களென்று ஆண்டவராகிய
யெகோவா சொல்லுகிறார்.

## ௯. அதிகாரம்.

௧. இஸரவேலருக்குத்தண்டனை வருமெனக்காட்
டல்: ௰௧. அவர்கள் வாழ்வடைவார்களென்று
முன்னுரைத்தல்.

நான் வேதிகையின் சமீபத்தில் ஆண்டவ
ரை நிற்கக்கண்டேன்: அவர், வாசல்நிலைகள்
அசையும்படிக்கு நீ போதிகையை அடி: அவர்
கள் எல்லாருடைய தலைகளின்மேலும் அவைக
ளைத்தகர்த்து, அவர்களுக்குப்பின்வருஞ் சந்ததி
யாரை நான் கட்கத்தினாலே கொலைசெய்வேன்:
ஓடுகிறவர்களில் ஒருவருந்தப்பமுடியாது, தப்
பினவர்களில் ஒருவனும் விடுவிக்கப்படான்.—
௨ அவர்கள் பாதாளபரியந்தந் தோண்டிப் பதுங்கி
னாலும், அங்கேநின்றும் நான் என்கையில் அவர்
களைப் பிடித்துக்கொள்வேன்; வானபரியந்தம்
ஏறினாலும், அங்கேநின்றும் அவர்களை இறங்கப்
௩ பண்ணுவேன்.—கர்மேலின் உச்சியில்போய் ஒ
ளித்துக்கொண்டாலும், அங்கே அவர்களைத்தே
டிப்பிடிப்பேன்; என்பார்வையினின்று சமுத்தி
ரத்தின் ஆழத்தில்போய் ஒளித்திருந்தாலும், நான்
சருப்பத்துக்குக்கட்டளையிட அது அவர்களைக்
௪ கடிக்கும்.—அவர்கள் தங்கள் சத்துருமுன்பாகச்
சிறைப்பட்டுப்போனாலும், நான் கட்கத்துக்குக்
கட்டளையிட அது அவர்களைக்கொலைசெய்யும்:
நன்மைக்காகவல்ல, தீமைக்காகவே அவர்கள்
௫ மேல் என்கண்களை வைப்பேனென்றார்.—சேனா
பதியுந் தேவனுமாகிய யெகோவா பூமி
யைத்தொட அது கரைந்துபோம், அதில் வசிப்
பவர்கள்யாவரும் புலம்புவார்கள்: அது முழுவ
தும் பெருக்கெடுத்து எழும்பி, எகிப்தின் நதி
௬ யைப்போல எங்கும்பரவும்.—ஆகாயத்திலே த
மது மேலறைகளைஸ்தாபித்து, பூமியிலேதமது கீ
ழறைகளை அஸ்திபாரப்படுத்தி, சமுத்திரத்தின்
நீர்களை வர அழைத்து, அவைகளைப்பூமியின் மு
கத்திலே சொரிந்திருக்கிறவரேஅவர்: யெகோ
௭ வாவென்பதே அவர்நாமம்.—இஸரவேல் வமி
சத்தாரே, நீங்கள்எனக்குக் கூஷ்வமிசத்தாரைப்
போலிருக்கிறீர்களல்லவாவென்று யெகோ
வாசொல்லுகிறார். நான் எகிப்துதேசத்தினின்
று இஸரவேலரையும், கப்தோரினின்று பெலிஸ்
தியரையும், கீரினின்று ஷீரிய சனங்களையுங்
கொண்டுவரவில்லையா.—பாருங்கள், ஆண்ட ௮
வராகிய யெகோவாவின் கண்கள் பாவ
முள்ள இராச்சியத்தார்மேல் வைக்கப்பட்டிருக்
கின்றன, பூமியின் முகத்தினின்று அதை நாசப்
படுத்துவேன்; ஆயினும் யாக்கோபின் வமிசத்
தை முழுவதும் அழிக்கமாட்டேனென்று யெ
கோவா சொல்லுகிறார்.—பாருங்கள், சல்ல ௯
டையினாலேசலித்தரிக்கிறதுபோல, இஸரவேல்
வமிசத்தாரைஎல்லாச்சாதியாருக்குள்ளும் அரிக்
கும்படி நான் கட்டளையிடுவேன், ஒருமணியுந்
தரையிலே விழவிடேன்.—தீங்கு எங்களுக்கு ௰
அணுகுகிறதுமில்லை; எங்களுக்கு நேரிடவுமில்
லையென்று என் சனங்களில் சொல்லும் பாவி
கள் யாவருங் கட்கத்தினாலே கொலைசெய்யப்
படுவார்கள்.

ஏதோமில் மீந்திருப்பவர்களையும், என் நா ௰௧
மந் தரிக்கப்பட்ட சகல சாதியாரையும் சுதந்த
ரித்துக்கொள்ளும்படிக்கு,—நான் அந்தக்காலத் ௰௨
தில் தாவீதின் விழுந்த குடிசையைத்திரும்பவும்
ஸ்தாபித்து, அதின் வெடிப்புகளை அடைத்து,
பாழாய்ப்போனதைச் சீர்ப்படுத்தி, பூருவநாள்
களிலிருந்ததுபோல அதைக்கட்டுவேனென்று
இதைச் சித்திசெய்யும் யெகோவா சொல்லு
கிறார்.—பாருங்கள், உழுகிறவன் அறுக்கிறவ ௰௩
னையும், திராட்சங்களை மிதிக்கிறவன் விதைக்
கிறவனையும் அணுகிப்பிடிக்கும் நாள்கள்வரும்;
மலைகள் புதுத்திராட்சரசஞ்சொரியும், குன்றுக
ளெல்லாங்கரைந்துபோமென்று யெகோவா
சொல்லுகிறார்,—நான் என் சனங்களாகிய இஸ ௰௪
ரவேலரைச்சிறையினின்றுமீட்டுக்கொள்வேன்,
அவர்கள் கைவிடப்பட்ட நகரங்களைத் திரும்
பக்கட்டி அவைகளிலே வாசம்பண்ணுவார்
கள்; திராட்சத்தோட்டங்களைநாட்டி அவைக
ளின் ரசத்தைப்பானம்பண்ணுவார்கள்; தோட்
டங்களையுமுண்டாக்கி, அவைகளின் பலனைப்
புசிப்பார்கள்.—நான் அவர்களை அவர்கள் தே ௰௫
சத்தில் நாட்டுவேன், நான் அவர்களுக்களித்
த தேசத்தினின்று அவர்கள் இனி ஒருபொழு
தும் பிடுங்கப்படுவதில்லையென்று உன் தேவ
னாகிய யெகோவாசொல்லுகிறார்.

(௰௪) ஓசி.௪.௰௫. உபா.௯.௨௧.—(௯. அதி. ௨.) சங்.௱௩௯.௮. யோபு.௨௰.௬. எரே.௫௧.௫௩. ஒப.௪.(௪)லேவி.௨௬.௩௩. உபா.௨௮.௬௫. எசேக்.௫.௰௨. லேவி.௰௭.௰௨. எரே.௪௪.௰௧. (௫) மீகா.௧.௪. (௬) சங்.௱௪.௩,௰௩. (௭) எரே.௪௭.௪. உபா.௨.௨௨. எரே.௪௭.௪. (௮) எரே.௩௰.௰௧. ஒப.௰௬,௰௭. (௰௧) ஒப.௰௯. எண்.௨௪.௰௮. (௰௨) அப்.௰௫.௰௬,௰௭. (௰௩) லேவி.௨௬.௫. யோவே.௩.௰௮.(௰௪)எரே.௩௰.௩. ஏசா.௬௧.௪. எசேக்.௩௬.௩௩—௩௬.(௰௫)ஏசா.௬௰.௨௧. எசேக்.௩௪.௨௮. யோவே.௩.௨௰.

# ஒ ப தி யா.

க.எதோமியர் அழிதல்:யஎ.யாக்கோபுசெயித்தல்.
ஒபதியாவின் தரிசனம். ஆண்டவராகிய
யெகோவா எதோமைக்குறித்து, எழுந்திருங்
கள், அதற்கு விரோதமாக யுத்தஞ்செய்கிறதற்கு
எழுந்திருப்போம் வாருங்களென்று யெகோ
வா செய்தியைச்சொல்ல நாம்கேட்டோம்; தூ
தன் ஒருவன் அந்நியதேசத்தாருக்குள் அனுப்
உ பப்பட்டிருக்கிறான்.—பார், நான் உன்னை அந்
நியதேசத்தாருக்குள்ளே சிறியவனாக்கினேன்: நீ
மிகவும் அவமதிக்கப்பட்டிருக்கிறாய்.
௩ கன்மலைப்பிளப்புகளில் வாசமாயிருக்கிறவ
னே, உயர்ந்தஸ்தானத்தில் வாசம்பண்ணுகிறவ
னே,உன்மனக்கருவம் உன்னைவஞ்சித்தது; தரை
யில் உன்னைவிழச் செய்பவன் யாவனென்று
௪ நீ உன் இருதயத்திலெண்ணுகிறாய்.-நீ கழுகைப்
போல உயர ஏறி, நட்சத்திரங்களுக்குள் உன்
கூட்டைக்கட்டினாலும் அங்கே நின்றும் உன்
னைத்தாழ்த்துவேனென்று யெகோவா சொல்
௫ லுகிறார்.-நீ எப்படிச்சேதிக்கப்பட்டாய்,திருட
ராயினும்,இராக்கொள்ளைக்காரராயினும் உன்னி
டத்தில்வந்தார்களேயாகில் தங்களுக்குவேண்டி
யமட்டும் திருடுவார்களல்லவா; திராட்சப்பழங்
களைப் பறிக்கிறவர்கள் உன்னிடத்தில் வந்தால்
சில பழங்களை மிந்திருக்கவிடுவார்களல்லவா.—
௬ ஏசா எப்படிப் பரீட்சிக்கப்பட்டான்; அவனு
டைய மறைபொருள்கள் எப்படிஆராயப்பட்ட
௭ ன.—உன்னோடே உடன்படிக்கைசெய்த யாவ
ரும் எல்லைவரைக்கும் உன்னைத்துரத்திவிட்டார்
கள்: உன்னோடேசமாதானமாயிருந்தவர்கள்உன்
னைவஞ்சித்து,உன்னைமேற்கொண்டார்கள்;உன்
ஆகாரத்தைப் புசித்தவர்கள் உனக்குக்கீழே
கண்ணியைவைத்தார்கள்: அவனுக்கு விவேக
௮ மில்லை.-அந்நாளிலேநான்எதோமின்ஞானிகளை
யும்,ஏசாவின்மலையில்புத்திமான்களையும்நாசப்ப
௯ டுத்தமாட்டேனோ.-தேமானே, ஏசாவின்மலையிலு
ள்ளயாவருங்கொலையினால் சேதிக்கப்படும்பொ
ருட்டு, உன்பராக்கிரமசாலிகள் நடுங்குவார்கள்.
௰ நீ உன்சகோதரனாகிய யாக்கோபுக்குச்செய்த
கொடுமையினிமித்தம் வெட்கம் உன்னைமூடும்,
௰௧ நீ சதாகாலமுஞ் சேதிக்கப்படுவாய்.—நீ எதிர்ப்
புறத்தில் நின்றநாளிலும், அந்நியர்அவன்சேனை
யைச்சிறைபிடித்துப்போனநாளிலும் அந்நியதே
சத்தார் அவன் வாசலிற்பிரவேசித்து, யெரூஷ
லேமின்மேல்சீட்டுப்போட்டிருக்கையில், நீயும்
௰௨ அவர்களில் ஒருவனைப்போலிருந்தாய்.—உன்ச
கோதரன்பரதேசியானநாளிலே நீ அவன்மேல்
கண் வைப்பது தகாது; யூதாவமிசத்தார் நாசம
டைந்தநாளில் சந்தோஷப்படுவதும், ஆபத்துக்
காலத்தில் அலங்காரமாய்ப்பேசுவதும்தகுதியல்
ல.-என்சனங்களின்ஆபத்துநாளில் அவர்கள்வா ௰௩
சலிற்பிரவேசிக்கலாகாது; அவர்களுடைய ஆ
பத்துக்காலத்தில் நீ அவர்கள் துக்கத்தின்மேல்
கண்வைக்கலாகாது, அவர்களுடையஆபத்துநா
ளில்அவர்கள்பொருளைக்கவர்ந்துகொள்வதுநன்
மையல்ல.—அவர்களில் தப்பியிருந்தவர்களைச் ௰௪
சேதிக்கும்படி வழிச்சந்திகளில் நீ நிற்பதுதகா
து; ஆபத்தின் நாளில் அவனுக்குமீந்திருந்தவர்க
ளைஒப்பிக்கலாகாதென்று யெகோவா சொல்
லுகிறார்.—யெகோவாவின் நாள் அந்நியதே ௰௫
சத்தாரனைவருக்கும் விரோதமாய்ச்சமீபித்துவந்
தது: நீ செய்தபடி உனக்குச்செய்யப்படும்:உன்
செய்கையின்பலன் உன்னிடத்தில் பலிக்கும்.—
நீங்கள் என்பரிசுத்தமலையின்மேல் பானம்பண் ௰௬
ணினதுபோல, அந்நியதேசத்தார் யாவரும் நித்த
மும் பானம்பண்ணுவார்கள், குடித்துக்குடித்து
விழுங்குவார்கள், பின்பு பிறப்பில்லாதவர்கள்
போலிருப்பார்கள்.
சீயோன்மலையில் தப்பியிருப்பவர்கள் சிலர் ௰௭
இருப்பார்கள், அது பரிசுத்தமாகும்; யாக்கோபு
வமிசத்தார் தங்கள்தங்கள் சுதந்தரங்களைச் சுதந்
தரித்துக்கொள்வார்கள்.—யாக்கோபின் வமிசத் ௰௮
தார் அக்கினியும்,யோசேப்பின் வமிசத்தார் அக்
கினிச்சுவாலையும், ஏசாவின் வமிசத்தார் அரிதா
ளுமாயிருப்பார்கள், அவர்கள் இவர்களைத் தகித்
துப் பட்சிப்பார்கள்; ஏசாவின் வமிசத்தாரில் ஒ
ருவனும் மீந்திரான்; யெகோவா இவ்வாக்
கைச் சொன்னார்.-தெற்கிலுள்ளவர்கள் ஏசா ௰௯
வின் மலையையும்,சமபூமியிலுள்ளவர்கள்பெ
லிஸ்தியரையுஞ் சுதந்தரித்துக்கொள்வார்கள்: அ
வர்கள் எப்ராயீமின் நாட்டையும், ஷமாரியா
வின் நாட்டையும், பேன்யாமீன் கிலியாத்தை
யுஞ் சுதந்தரித்துக்கொள்வார்கள்.—சாரிபாத் வ ௨௰
ரைக்குங் கானானியர்மத்தியில் சிறை பிடிக்கப்
பட்டுப்போன இஸரவேல் வமிசத்தாராகிய இந்
தச்சேனையும்,சிப்ராத்தில் சிறைப்பட்டுப்போன
யெரூஷலேமியரும் தெற்குநகரங்களைச் சுதந்த
ரித்துக்கொள்வார்கள்.-ஏசாவின் மலையை நியா ௨௧
யம் விசாரிக்கும்படி ரட்சகர்த்தாக்கள் சீயோன்
மலையில்வந்தேறுவார்கள்;இராச்சியம் யெகோ
வாவினுடையதாகும்.

---

(க) ஏசா.௨௧.௰௧. யோவே.௩.௰௯. மல்.௧.௩. எரே.௪௯.௰௪,. (௩) ௨.இரா.௰௪.௭. வெளி.௰௮.௭. (௪) ஆமோ.
௯.௨. அப௯.௨.௯. (௫) உபா.௨௪.௨௧. ஏசா.௰௭.௬. (௭) எரே.௩௮.௨௨. ஏசா.௰௯.௰௧,௰௨. (௮) யோபு.௫.௰௨,௰௩.
(௯) எரே.௪௯.௭. (௰) ஆதி.௨௭.௪௧. ஆமோ.௧.௰௧.மல்.௧.௪.(௰௧)யோவே.௩.௩.(௰௨)மீகா.௪.௰௧. மீகா.௭.௮.(௰௫)
யோவே.௩.௰௪. (௰௭) யோவே.௨.௩௨. ஆமோ.௯.௮. யோவே.௩.௰௭. (௰௯) ஆமோ.௯.௰௧. (௨௰) எரே.௩௨.௪௪.
(௨௧) ௧.தீமோ.௪.௰௬. யாக்.௫.௨௰. தானி.௨.௪௪. ௪௧.௰௪.௯. வெளி.௰௧.௰௫.

# யோனா.

## ௧. அதிகாரம்.

௧. யோனா நினிவேநகரத்துக்குக் கட்டளைப்படி போகாமல் தர்ஷீஸுக்குஓடல்: ௪.பெருங்காற்றுண்டாதல்: ௰௧. கடலில்தள்ளப்படல்: ௰௭. மச்சத்தால்விழுங்கப்படல்.

அமித்தாயின் புத்திரனாகிய யோனாவுக்குக் கி
௨ டைத்த யெகோவாவின் வாக்கு,—நீ எழுந்
து மகாநகரமாகிய நினிவேயுக்குப்போய், அவர்
களுடையதுன்மார்க்கம் என் சமுகத்தில் வந்து
தோன்றினதினால் அதற்கு விரோதமாய்ச் சத்த
௩ மிட்டுக்கூறு என்பதே.—யோனா யெகோவா
வின் சமுகத்தினின்று தர்ஷீஸுக்கு ஓடிப்போ
கும்படி எழுந்து, யொப்பாநகரத்துக்குச்சென்று
தர்ஷீஸுக்குப்போகிற ஒருகப்பலைக்கண்டுகூலி
கொடுத்து, யெகோவாவின் சமுகத்திற்கு
விலகும்படிஅவர்களுடனே தர்ஷீஸுக்குப்போ
வதற்குக் கப்பலேறினான்.
௪ யெகோவா சமுத்திரத்தின்மேல் பெருங்
காற்றை அனுப்ப, சமுத்திரத்திலேபெரியகொந்
தளிப்பிருந்தபடியினால் கப்பலுடைவதற்கேது
௫ வுண்டாயிற்று.—அப்பொழுதுகப்பற்காரர்பயந்
து அவனவன்தன்தன்தேவனைநோக்கிப்பிரார்த்த
னைபண்ணி, பாரத்தைலெகுவாக்கும்படிசரக்கு
களைக்கப்பலினின்று சமுத்திரத்தில் எறிந்துவிட்
டார்கள். யோனா கப்பலின்கீழ்த்தட்டிலிறங்கிப்
போய்ப்படுத்து அயர்ந்தநித்திரைபண்ணினான்.—
௬ அப்பொழுது கப்பலுக்கு அதிபதி அவனிடத்
தில்வந்து, அவனைநோக்கி, நீ நித்திரைபண்ணு
கிறதென்ன; எழுந்திருந்து, உன் தேவனைநோக்
கிப் பிரார்த்தனைபண்ணு, நாம் கெட்டுப்போ
காதபடி நம்மேல் தேவன் சிந்தைவைக்கவுங்
௭ கூடுமென்றான்.—பின்னும் அவர்கள் ஆர்நி
மித்தம் இந்த ஆபத்து நமக்கு நேரிட்டதென்று
நாம் அறியும்படிக்குச் சீட்டுப்போடுவோம் வா
ருங்களென்று ஒருவரோடொருவர் சொல்லிக்
கொண்டார்கள். அவர்கள் சீட்டுப்போட்டபொ
௮ ழுது யோனாவின்பேரில்சீட்டுவிழுந்தது.—அப்
பொழுது அவர்கள் அவனைநோக்கி, இந்த ஆ
பத்து ஆர் நிமித்தம் நமக்கு நேரிட்டதென்று,
எங்களுக்குச் சொல்லும்படி உன்னைவேண்டுகி
றோம்; உன்தொழிலென்ன, எங்கேயிருந்துவரு
கிறாய், நீ எந்தத்தேசத்தான், நீ என்னசாதியென்
௯ றுகேட்க,—அவன் அவர்களைநோக்கி, நான் எபி
ரேயன்; சமுத்திரத்தையும் உலர்ந்த தரையை
யுஞ் சிருஷ்டித்த பரமண்டலத்திலுள்ள தேவ
னாகிய யெகோவாவுக்குப் பயப்படுகிறே
னென்றான்.-அப்பொழுது அந்தமனுஷர்,அவன் ௰
யெகோவாவின் சமுகத்தினின்று ஓடிப்
போகிறவனென்று தங்களுக்கு அறிவித்ததினால்
அதை அறிந்து, மிகவும்பயந்து, அவனைநோக்கி,
நீ ஏன் இதைச்செய்தாயென்றார்கள்.
சமுத்திரம் அதிகமாகக்கொந்தளித்துக்கொண் ௰௧
டேயிருந்ததினால் அவர்கள் அவனைநோக்கி, ச
முத்திரம் நமக்கமைந்திருக்கும்படி நாங்கள் உ
னக்கென்ன செய்யவேண்டுமென்றார்கள்.—அப் ௰௨
பொழுது அவன் அவர்களைநோக்கி, நீங்கள்என்
னைத்தூக்கிச் சமுத்திரத்தில் எறிந்துவிடுங்கள்;
அதினால் சமுத்திரம் உங்களுக்குஅமைதியாயிரு
க்கும்:என்னிமித்தம்இந்தப்பெரியகொந்தளிப்பு
உங்கள்மேல்வந்தது, அதுஎனக்குத்தெரியுமென்
றான்.-ஆனாலும் அந்தச்சனங்கள் கரைசேரும்ப ௰௩
டிவேகமாகத் தண்டுவலித்தார்கள்; சமுத்திரத்தி
ரைகள் அவர்களுக்கு எதிராய்க்கொந்தளித்துக்
கொண்டிருந்தபடியால் அது கூடாமற் போயிற்
று.—ஆதலால் அவர்கள் யெகோவாவை ௰௪
நோக்கி, ஆ, யெகோவாவே, இந்த மனுஷ
னுடையபிராணனுக்காக எங்களை நாசப்படுத்தா
திரும், குற்றமில்லாத இரத்தப்பழியை எங்கள்
மேல்சுமத்தாதிரும்: யெகோவாவாகிய நீர்
உமது சித்தத்தின்படி செய்கிறீரென்று சத்தமிட்
டார்கள்.—பின்பு அவர்கள் யோனாவைத்தூக்கிச் ௰௫
சமுத்திரத்தில் எறிந்துவிட்டார்கள்: சமுத்திரந்
தன்மும்முரத்தைவிட்டு அமர்ந்தது.-அப்பொழு ௰௬
து அந்தமனுஷர் யெகோவாவுக்கு மிகவும்
பயந்து, யெகோவாவுக்கென்று ஒருபலி
யிட்டுச் சங்கற்பங்களைப்பண்ணினார்கள்.
யெகோவா யோனாவைவிழுங்கும்படிபெ ௰௭
ரிய மச்சத்தை ஆயத்தப்படுத்தியிருந்தார். யோ
னா இராப்பகலாய் மூன்றுநாள்வரைக்கும் அந்த
மச்சத்தின் வயிற்றில் இருந்தான்.

## ௨. அதிகாரம்.

௧. யோனா பிரார்த்தித்தல்: ௰. அவன் ரட்சிப்புப் பெறல்.

அப்பொழுது யோனா மச்சத்தின்வயிற்றிலிருந் ௧
து,தன் தேவனாகிய யெகோவாவை நோக்
கி விண்ணப்பம்பண்ணி,—என் ஆபத்தினிமித் ௨
தம் நான் யெகோவாவை நோக்கிக் கூப்
பிட்டேன், அவர் எனக்கு உத்தரம் அருளி

(௧. அதி. ௧.) ௨.இரா.௰௪.௨௫. (௨) ஆதி.௰.௰௧,௰௨. ஆதி.௰௮.௨௰,௨௧. எஸ்றா.௯.௬. யாக்.௫.௪. வெளி.௰௮.௫. (௩) யோசு.௰௯.௪௬. ஆதி.௪.௰௬. யோபு.௧.௰௨. (௫) அப்.௨௭.௰௮,௰௯,௩௮. ௧.சாமு.௨௪.௩. (௬) யோவே.௨.௰௪. (௭) யோசு.௭.௰௪,௰௬. ௧.சாமு.௰.௨௰,௨௧. நீதி.௰௬.௩௩. அப்.௧.௨௬. (௮) யோசு.௭.௰௯. ௧.சாமு.௰௪.௪௩. (௯) அப்.௰௭.௨௪. (௰௨) யோவா.௰௧.௫௰. (௰௩) நீதி.௨௧.௩௰. (௰௪) உபா.௨௧.௨௮. (௰௫) லூக்.௮.௨௪. (௰௬) மாற்.௪.௪௧. (௰௭) மத்.௰௨.௪௰.—(௨.அதி.௨.) புல.௩.௫௫,௫௬. எசா.௰௪.௯.

னார்; நான்பாதாளத்தின்வயிற்றினின்று ஓலமிட்
டேன், நீர் என் விண்ணப்ப சத்தத்தைக்கேட்
௩ டீர்.—நீர் ஆழமாகிய சமுத்திரங்களின் மத்தி
யில் என்னை எறிந்துவிட்டீர்; நீரோட்டம் என்
னைச்சூழ்ந்துகொண்டது: உம்முடைய திரைக
ளும் அலைகளுமெல்லாம் என்மேல்பாய்ந்தன.—
௪ அப்பொழுது நான் உம்முடையபார்வையினின்
று தள்ளப்பட்டேன்; ஆகிலும் திரும்பவும் நான்
உமது பரிசுத்ததேவாலயத்தைநோக்குவேனென்
௫ றேன்.—சலங்கள் என் ஆத்துமாபரியந்தம் என்
னை நெருக்கின: ஆழி என்னைச்சூழ்ந்தது, கடற்
௬ பாசி என் தலையைச் சுற்றிக்கொண்டது.-மலை
களின் அத்திபாரபரியந்தந்தாழ்ந்தேன்; பூமி தன்
தாழ்களினால்என்றுமென்னை அடைத்துக்கொண்
டது: ஆயினும் என் தேவனாகிய யெகோ
வாவே, நீர் நாசத்தினின்று என் பிராணனைவி
௭ டுவித்தீர்.—என் ஆத்துமம் எனக்குள்ளேசோர்ந்
துபோகையில் யெகோவாவை நினைத்தேன்:
என் வேண்டுதல் உம்முடைய பரிசுத்த தேவா
௮ லயத்தில் உம்மிடத்தில்வந்தது.-அபத்தமானவை
களை மதிக்கிறவர்கள் தங்களுக்குவரும் நன்மை
௯ யைத் தள்ளிவிடுகிறார்கள்.—நானோ, துதியின்சத்
தத்தோடே உமக்குப்பலியிடுவேன்; நான் பண்
ணின சங்கற்பத்தை நிறைவேற்றுவேன். இரட்
சிப்புயெகோவாவினாலேயாகுமென்றான்.
௰ யெகோவா அந்த மச்சத்துக்குக்கட்டளை
யிட்டதினால்,அதுஉலர்ந்ததரையின்மேல்யோ
னாவை உமிழ்ந்துவிட்டது.

## ௩. அதிகாரம்.

௧. யோனா நினிவேயுக்குத்திரும்பவும்அனுப்பப்
பட்டு வாக்குப்பிரசித்தப்படுத்தல்: ௫. பாவத்தி
னிமித்தஞ் சகலரும் மனஸ்தாபப்படல்: ௰. அ
வர்கள் இரட்சிப்பைப்பெறல்.

இரண்டாந்தரம் யெகோவாவின் வாக்கு
௨ யோனாவிடத்தில்,—நீ எழுந்து மகாநகரியாகிய
நினிவேயுக்குப்போய், நான் உனக்கு விதிக்கும்
வாக்கைப் பிரசித்தப்படுத்தென்று சொல்லிற்
௩ று.—யோனா எழுந்து யெகோவாவின் கட்
டளைப்படி நினிவேயுக்குப்போனான். நினிவே
மூன்றுநாட்பிரயாணவழிவிஸ்தாரமான மிகவும்
௪ பெரியநகரமாயிருந்தது.—பின்பு யோனாநகரத்
திற்பிரவேசித்து, ஒருநாட்பிரயாணவழிநடந்து,
நாற்பதுநாள்சென்றபின்பு, நினிவே கவிழ்க்கப்
படுமென்று உரத்தசத்தத்தோடே பிரசித்தப்படுத்
தத்தொடங்கினான்.
௫ அப்பொழுது நினிவேயிலுள்ள சனங்கள் தே
வனை விசுவாசித்து, உபவாசத்தைப் பிரசித்தப்
படுத்தினார்கள், பெரியோர் சிறியோர் யாவரும்
௬ இரட்டைத்தரித்துக்கொண்டார்கள்.—நினிவே
யின் இராசாவிடத்தில் இந்தச்சமாசாரம் வந்த
பொழுது, அவன் தன் சிங்காசனத்தைவிட்டெ
ழுந்து, தன் இராசவஸ்திரத்தைநீக்கி, இரட்டைத்
தரித்து, சாம்பலில் உட்காந்தான்.—மேலும் இ ௭
ராசா, தானும் தன் பிரபுகளுமானவர்களின் நா
மத்தில் நினிவேயிலெங்கும்மனுஷரும், மிருகங்
களும், ஆடுமாடுகளும் ஒன்றும் ருசிபாராமலும்,
புசிக்காமலும், தண்ணீர்குடியாமலுமிருக்கவும்,-
மனுஷரும் மிருகங்களும் இரட்டைத்தரித்து, ௮
தேவனை நோக்கி உற்சாகத்துடன்ஓலமிடவும்,
அவரவர் தங்கள்தங்கள் துன்னெறியையும்,தங்
கள்தங்கள்கைகளிலுள்ளகொடுமையையும் விட்
டுத் திரும்பவுங்கடவர்கள்.—ஆருக்குத்தெரியும், ௯
நாம்கெட்டுப்போகாதபடிக்குத் தேவன் அனு
தாபப்பட்டு, தமது உக்கிரகோபத்தைவிட்டுத்தி
ரும்பவுங்கூடுமென்று கட்டளையாய்ப்பிரசித்தப்
படுத்தினான்.
அவர்கள்தங்கள்தங்கள்துன்னெறியைவிட்டுத் ௰
திரும்பினார்களென்று தேவன் அவர்களுடை
யகிரியைகளைக்கண்டு,தாம் அவர்களுக்குச்செய்
வேனென்றுசொல்லியிருந்த அந்தத்தீங்கைவிட்
டுஅனுதாபப்பட்டுஅதைச்செய்யாமல்விட்டார்.

## ௪. அதிகாரம்.

௧. தேவனுடைய தயையினிமித்தம் யோனா
கோபித்தல்:௪.கிகயோன்செடியின்திருஷ்டாந்
தத்தினால் தேவன் அவனைக்கண்டித்தல்.

யோனா மிகவும் பிரியவீனமடைந்து கோபங் ௧
கொண்டு,-யெகோவாவை நோக்கிப்பிரார்த் ௨
தனைபண்ணி, யெகோவாவே, நான் என்
தேசத்திலிருக்கையில் இதை நான்சொல்லவில்
லையா; அதினிமித்தம் நான்முன்னமேதர்ஷீஸுக்
கு ஓடிப்போனேன்: நீர் தயையும், இரக்கமும்,
நீடியபொறுமையும், மிகுந்த கிருபையுமுள்ளவ
ரும், தண்டனைசெய்யப்பிரியமில்லாதவருமான
தேவன், அது எனக்குத்தெரியும்.—ஆதலால் ௩
யெகோவாவே, இப்பொழுது என்பிராண
னை என்னிலிருந்து வாங்கிக்கொள்ளும்; நான்
சீவிப்பதிலும் மரிப்பது நலமென்று சொல்லிப்
பிரார்த்தித்தான்.
அப்பொழுது யெகோவா, நீ மிகவுங் ௪
கோபங்கொள்வது தகுதியாவென்றார்.—பின்பு ௫
யோனா நகரத்தைவிட்டுப்புறப்பட்டு, நகரத்தின்
கீழ்த்திசையிலிருந்து, அங்கே தனக்கு ஒருகுடி
சையுண்டுபண்ணி, நகரத்துக்குநேரிடுவது இன்
னதென்றுபார்க்கும்படி அதின்கீழ்நிழலில் உட்
காந்தான்.—அப்பொழுது தேவனாகிய யெ ௬
கோவா யோனாவைத்துக்கத்தினின்றுவிடுவிக்
கிறதற்கும், அவன்தலையின்மேல் நிழலிடுவதற்
கும் ஒருகிகாயோன்செடியைத்தோற்றுவித்து,அ
தை அவன்மேலே படரும்படிசெய்தார். அந்
தக் கிகாயோன்செடியினால் யோனா மிகவுஞ்சந்
தோஷப்பட்டான்.—மறுநாள் அருணோதய சம ௭

(௪) ௧.இரா.௮.௩௮. (௫) புல.௩.௫௪. (௮) ௨.இரா.௰௭.௰௫.எரே.௰.௮. (௯) ஓசி.௰௪.௨. எபி.௰௩.௰௫.—(௩.அதி.௩.) ஆதி.௩௰.௮. (௪) உபா.௰௮.௨௨. (௫) மத்.௰௨.௪௧. லூக்.௰௧.௩௨. (௬) யோபு.௨.௮. (௭) ௨.நாளா.௨௰.௩. யோவே. ௨.௰௫. (௮) ஏசா.௫௮.௬. ஏசா ௫௯.௬. (௯) ௨.சாமு.௰௨.௨௨. யோவே.௨.௰௪.(௰)எரே.௰௮.௮. ஆமோ.௭.௩,௬.—(௪. அதி. ௨.) யாத்.௩௪.௬. யோவே.௨.௰௩. (௩) ௧.இரா.௰௯.௪.

யத்தில் தேவன் ஒருபுழுவைவருவிக்க, அது
அந்தக் கிகாயோன்செடியை அரித்தது,அதினால்
அ அதுவாடிப்போயிற்று.—சூரியன் உதித்தபொழு
து தேவன் உஷ்டணமான கீழ்காற்றை வீசப்
பண்ணினார்; அப்பொழுது வெயில் யோனாவு
டையதலையிலேபட, அவன்சோர்ந்துபோய் மர
ணமடையவிரும்பி, சீவிப்பதிலும் மரிப்பதுநல
கூ மென்றான்.—பின்பு தேவன் யோனாவைநோக்
கி,கிகாயோன்செடியினிமித்தம் நீகுரோதங்கொ
ள்வது தகுதியாவென்று சொல்ல, அவன், நான்
மரணபரியந்தங்குரோதங்கொள்வதுதகுதியென்
றான்.—அப்பொழுது யெகோவா நீபிரயாசப் ய
படாததும், நீ வளர்க்காததும், ஒரு இராத்திரியில்
முளைத்ததும், ஒரு இராத்திரியில் அழிந்ததுமாகி
ய கிகாயோன்செடியினிமித்தம் நீ பரதபித்தால்,-
தங்கள்வலதுகைக்கும் தங்கள் இடதுகைக்கும் யக
வித்தியாசமறியாத இலட்சத்து இருபதினாயிரம்
குழந்தைகளும், அநேகமிருகசீவன்களுமிருக்கி
றநினிவேயென்னும் அந்த மகா நகரத்தினிமித்
தம் நான்பரதபிக்காமலிருப்பேனாவென்றார்.

---

(யக) உபா. க. ௩௯.

# மீகா.

## ௧. அதிகாரம்.

௧.தேவபூசையினிமித்தந் தேவன் யூதாவமிசத்தார்மேல்கோபித்தல்: ௰. துக்கிக்கும்படிவிதித்தல்.

யோதாம், ஆகாஸ், இஸ்கியாவென்னும் யூதா
வின் இராசாக்களுடைய காலங்களில், ஷமாரி
யாவையும் யெரூஷலேமையுங்குறித்து மோரஷ்
தியனுகியமீகா தரிசனமாகக்கண்டதும்,அவனுக்
குக்கிடைத்ததுமான யெகோவாவின்வாக்
௨ கு:—சனங்களே, நீங்களெல்லாருங் கேளுங்கள்;
பூமியே, அதின்பரிபூரணமே, நீங்களெல்லாஞ்
செவிகொடுங்கள்:ஆண்டவராகிய யெகோ
வா, தமதுபரிசுத்தஆலயத்திலிருக்கிற ஆண்ட
வரே உங்களுக்குவிரோதமாகச்சாட்சியாயிருப்
௩ பாராக.—பாருங்கள், யெகோவா தமதுஸ்தா
னத்தினின்றுபுறப்பட்டுவருகிறார், அவர் இறங்
கிப் பூமியின் உயர்ந்தஸ்தானங்களின்மேலே மி
௪ திப்பார்.—அக்கினிக்குமுன் மெழுகுஉருகுவது
போலவும், உயர்ந்தஸ்தானத்தினின்று சலம்பாய்
வதுபோலவும் அவர் கீழே மலைகள் உருகும்,
௫ தாழ்ந்த பூமிகள்கிழிந்துபோம்.—யாக்கோபின் அ
திக்கிரமமும், இஸரவேல் வமிசத்தாரின் பாவங்
களும் இவை எல்லாவற்றிற்குங்காரணம். யாக்
கோபின் அதிக்கிரமமென்ன; அதுஷமாரியாவல்
லவா; யூதாவின் உயர்ந்தஸ்தானங்கள் எவை;
௬ யெரூஷலேமல்லவா.-ஆதலால் நான் ஷமாரியா
வைவெளியிலுள்ள மண்மேடும், திராட்சச்செ
டிநடுகிறநிலமுமாக்கி, அதிலுள்ளகற்களைத்தாழ்ந்
தபூமியில்தள்ளி, அதின் அத்திபாரங்களைத்தெரி
௭ யக்காட்டுவேன்.—அதின்தொழிற்பட்டவிக்கிர
கங்களெல்லாந் தகர்க்கப்படும், அதின்பணயங்க
ளெல்லாம்அக்கினியினுல்தகிக்கப்படும், அதின்
சொரூபங்களையெல்லாம் பாழாக்குவேன்: அது
அவைகளை வேசையின்பணயத்தினுல் சேர்த்த
து, அவைகள்திரும்பவும் வேசைப்பணயமாய்ப்
௮ போம்.—ஆதலால் நான்புலம்பிஅலறுவேன், வஸ்
திரமில்லாமல்நிருவாணியாகி, நரிகளைப்போலப்
புலம்பி, ஒட்டகப்பட்சியைப்போலப் புலம்பு
வேன்: அதின்காயஞ் சொஸ்தப்படுத்த முடியா
௯ து.—அது யூதாவரைக்கும்வந்துவிட்டது; அவன்
என் சனங்களின் வாசலாகிய யெரூஷலேம்வ
ரைக்குமே வந்தான்.
௰ நீங்கள் அதைக்காத்திலே தெரிவிக்கவேண்
டாம், சற்றும்அழாதிருங்கள்: பேத்அப்ருவிலே
௰௧ புழுதியிற்புரளு.—ஷாபீர்வாசியே, நீ நிருவாணி
யாய் இலச்சையடைந்துசெல்லு: சாஞன்வாசி
வெளியே வருவதில்லை; பேதத்செலின் புலம்
பல் உங்களுக்கு அடைக்கலமாயிராது.—மாரோத் ௰௨
வாசி, நன்மைவருமென்றுவிசாரத்தோடே எதிர்
பார்த்தான்: யெகோவாவினின்று யெரூஷ
லேமின்வாசல்வரைக்குந் தீமைவந்தது.—லாகீ ௰௩
ஷில்வாசமாயிருப்பவனே, இரதத்திலே வேக
மானமிருகத்தைப்பூட்டு: அவளே சீயோன்குமா
ரத்தியின் பாவத்துக்குக்காரணி: உன்னிடத்தில்
இஸரவேலின்அதிக்கிரமங்கள்காணப்பட்டன.-
ஆதலால் நீ மோரேஷத் காத்துக்குப்பரிதானங்க ௰௪
ளைஅனுப்புவாய்: இஸரவேலின் இராசாக்களுக்
குஅக்சீப்பின்வீடுகள்அபத்தமாயிருக்கும்.—மா ௰௫
ரேஷாவில் வாசமாயிருப்பவனே, நான் மேலும்
ஒரு சுதந்தரனை உன்னிடத்தில் கொண்டுவரு
வேன்: அவன் இஸரவேலின்மகிமையாக அதுல்
லாம்வரைக்கும்வருவான்.—நீ உன் அருமையா ௰௬
ன பிள்ளைகளினிமித்தம் உன் தலையை மொட்
டையிடு, உன் தலைமயிரைச் சிரைத்துக்கொள்;
கழுகைப்போல உன் முண்டிதத்தை விஸ்தார
மாக்கு; அவைகள் உன்னைவிட்டுச் சிறைப்பட்
டுப்போயின.

## ௨. அதிகாரம்.

௧. சனங்கள்செய்த உபத்திரவத்தினிமித்தம்அவர்களைக் கண்டித்தல்: ௪. அநியாயஞ்செய்ததினிமித்தந் தண்டனை வருமென்று முன்னுரைத்தல்: ௰௧. தேவன் வாக்குத்தத்தஞ்செய்தல்.

ஐயோ, பாவத்தைச்செய்ய ஆலோசித்து, தங் ௧
கள்படுக்கைகளிலே தீமையைக்கருதி, தங்களுக்
குக்கைவல்லமையிருப்பதினுல் விடியற்காலமா
னபொழுதுஅதைச்சித்திசெய்பவர்களுக்குஆபத்
துவரும்.—அவர்கள்வயல்களைஇச்சித்து, பலாற் ௨
காரமாய் அபகரிக்கிறார்கள்; வீடுகளை இச்சித்
துக் கவர்ந்துகொள்ளுகிறார்கள்: இவ்விதமாய்அ
வர்கள் மனுஷனையும், அவன்வீட்டையும், மனு
ஷனுடனேஅவன்சுதந்தரத்தையும்வஞ்சிக்கிறார்
கள்.—ஆதலால்,பாருங்கள்,நான்இந்தவமிசத்தா ௩
ருக்குவிரோதமாய்த் தீமையை வருவிக்கக்கருது
கிறேன், அதினின்று நீங்கள் உங்கள்கழுத்துக்க
ளை நீக்கமாட்டீர்கள்; நீங்கள் செருக்குள்ளவர்க
ளாய் நடக்கமாட்டீர்கள்: அது தீமையான கால
மாகுமென்று யெகோவா சொல்லுகிறார்.
அக்காலத்தில் ஒருவன், நாம் முழுவதுஞ்சே ௪
திக்கப்பட்டோம்: அவர் என்சனங்களின் சுதந்

(௧. அதி. ௧.) எரே.௨௬.௰௮. ஆமோ.௧.௧. (௨) உபா.௩௨.௧. ஏசா.௧.௨. மல்.௩.௫. யோனு.௨.௭. அபகூ.௨.௨௰. (௩) ஏசா.௨௬.௨௧. உபா.௩௨.௰௩. ஆமோ.௪.௰௩. (௪) நியா.௫.௫. ஏசா.௬௪.௧,௨,௩. ஆமோ.௯.௫. அபகூ.௩.௬,௰. (௬) ௨.இரா.௰௯.௨௫. எசேக்.௰௩.௰௪. (௭) ஓசி.௨.௫,௰௨. (௮) ஏசா.௨௧.௩. எரே.௪.௰௯. ஏசா.௨௰.௨,௩,௪. யோபு.௩௰.௨௯. (௯) ௨.இரா.௰௮.௰௩. (௰) ௨.சாமு.௧.௨௰. எரே.௬.௨௬. (௰௧) ஏசா.௨௰.௪. எரே.௰௩.௨௨. (௰௨) ஆமோ.௩.௬. (௰௩) ௨.இரா.௰௮.௰௪,௰௭. (௰௪) ௨.சாமு.௮.௨. ௨.இரா.௰௮.௰௪,௰௫,௰௬. யோசு.௰௫.௪௪. (௰௫) யோசு.௰௫.௪௪. ௨.நாளா.௰௧.௭. (௰௬) யோபு.௧.௨௰. ஏசா.௨௨.௰௨. எரே.௭.௨௯. புல.௪.௫.—(௨. அதி. ௧.) ஓசி.௭.௬. ஆதி.௩௧.௨௯. (௨) ஏசா.௫.௮. (௩) எரே.௮.௩. ஆமோ.௫.௰௩. எபே.௫.௰௬. (௪) அபகூ.௨.௬. ௨.சாமு.௧.௰௭.

தரபாகத்தைமாற்றிவிட்டார்: அவர் எப்படி அ
தை என்னைவிட்டுநீக்கினுர்; நமக்குப்பராமுகம்
பண்ணி நமது வயல்வெளிகளைப் பகிர்ந்துகொ
டுத்தாரேயென்று உங்களைக்குறித்துஒப்புச்சொல்
௫ லி மிகவும்புலம்புவான்.—ஆதலால் யெகோ
வாவின் சபையில் சீட்டுப்போட்டபடி நூல்
௬ போடுவார் ஒருவருமில்லை.—அவர்கள்தீர்க்கதரி
சனஞ்சொல்லுகிறதுபோல, நீங்கள் தீர்க்கதரிச
னஞ்சொல்லாதிருங்கள்: அவர்களிடத்தில்தீர்க்க
தரிசனஞ்சொல்லவேண்டாம், அவர்கள் இலச்
சை அடையவேண்டியதில்லை.
௭ யாக்கோபின்வமிசமென்னும் நாமம்பெற்றவ
னே, யெகோவாவின் ஆவி குறுகியிருக்கிற
தா; அவருடையகிரியைகள் இவைகளோ; நேர்
மையாய்நடக்கிறவனுக்கு என் வாக்குகள் நன்
௮ மைசெய்யாதா.—இக்காலத்தில் என் சனங்கள்
சத்துருவைப்போல எழுந்தார்கள்:யுத்தத்தினின்
றுதிரும்பிவந்து, வழியில் அஞ்சாமற்செல்லுகிற
வர்களிடத்திலே மேல்அங்கியையும், வஸ்திரத்
௯ தையும்பறித்துக்கொள்ளுகிறீர்கள்.-என் சனங்க
ளின்ஸ்திரிகளைத்தங்கள்அருமையானவீடுகளிலி
ருந்துஅகற்றிவிட்டீர்கள்; அவர்களுடைய சந்த
தியாரினின்று என்மகிமையை என்றைக்கும் அ
௰ கற்றிவிட்டீர்கள்.—நீங்கள் எழுந்துபுறப்பட்டுப்
போங்கள்; இதுஇளைப்பாறுமிடமல்ல: இது அ
சுசியாயிற்று, நாசப்படுத்தும் அந்தநாசம்மிகவும்
௰௧ பயங்கரமுள்ளதாகும்.—பொய் ஆவியுடைய ஒ
ருவன் அபத்தமாய் நடந்து, திராட்சரசத்தையும்,
மதுபானத்தையுங்குறித்து, நான் உனக்குத்தீர்க்க
தரிசனஞ்சொல்லுவேனென்றுல், அவனே இந்
தச்சனங்களுக்குத்தீர்க்கதரிசியாவான்.
௰௨ யாக்கோபே, உன்முழுச்சனங்களையும் நான்
நிச்சயமாய்க்கூட்டுவேன்; இஸரவேலிலே மீந்
திருப்பவர்களை நிச்சயமாய்ச் சேர்த்துக்கொள்
வேன்; போத்ஸ்ருவின் ஆடுகளைப்போல நான்
அவர்களை ஏகமாய்க்கூட்டுவேன், தன் தொ
ழுவத்துக்குள்ளிருக்கிறமந்தையைப்போலாக்கு
வேன்: சனத்திரளினிமித்தம் மிகவும் ஆரவா
௰௩ ரம் பண்ணுவார்கள்.—தடைகளை நீக்குகிறவர்
அவர்களுக்குமுன் நடந்தேறுகிறுர்: அவர்கள்
தடைகளைநீக்கி, வாசலைக்கடந்து, அதின் வழி
யாய்ப்புறப்படுகிறுர்கள்: அவர்களுடைய இரா
சா அவர்களுக்குமுன்போகிறுர், யெகோவா
அவர்களுக்குத்தலைவராக நடக்கிறுர்.

## ௩. அதிகாரம்.

௧. கொடுமையினிமித்தம் அதிபதிகளைக்கண்டித்தல்: ௫. கள்ளத்தீர்க்கதரிசிகள் கபடத்தினிமித்தம் இலச்சை அடைதல்: ௮. அதிபதிகளையுங் கள்ளத்தீர்க்கதரிசிகளையும் பயமுறுத்தல்.

யாக்கோபுவமிசத்தாரின் பிரதானிகளே, இஸ ௧
ரவேல்வமிசத்தாரின் பிரபுகளே, நீங்கள்செவி
கொடுக்கும்படி உங்களைவேண்டுகிறேன்.—நன் ௨
மையை வெறுத்து, தீமையைவிரும்பி, அவர்க
ளின்சரீரங்களினின்றுதோலையும்,அவர்களுடை
ய எலும்புகளினின்றுஅவர்கள்மாமிசத்தையும்பி
டுங்கி,—என்சனங்களின் மாமிசத்தைத்தின்று, ௩
அவர்களுடையதோலை உரித்துப் பானையிலே
போடுகிறதற்கும், இறைச்சியைக் கொப்பரையி
லேபோடுகிறதற்கும்,அவர்கள் எலும்புகளைமுறி
த்துத்துண்டிக்கிறவர்களே, நீங்கள் நியாயம்இன்
னதென்றறிந்துகொள்வது உங்களுக்குஅல்லவா
தகுதி.—அவர்கள் யெகோவாவை நோக்கி ௪
ஓலமிடுவார்கள், அவர்அவர்களுக்குச்செவிகொ
டார்: அவர்கள்செய்ததுர்க்கிரியைகளினிமித்தம்
அக்காலத்தில் அவர்களுக்குத் தமது முகத்தை
மறைப்பாரென்றேன்.
தங்கள்பற்களால்மென்றுகொண்டு, சமாதான ௫
முண்டாவதாகவென்றுசொல்லி, தங்கள் வாய்க்
கு உணவுப்பொருளைக்கொடாதவனுக்குவிரோ
தமாக யுத்தஞ்செய்ய ஆயத்தப்படுத்தி, என்சனங்
களைமோசப்படுத்துகிற தீர்க்கதரிசிகளைக்குறித்து
யெகோவா இவ்வாக்கைச்சொல்லுகிறுர்.-ஆ ௬
தலால் தேவதரிசனமில்லாதஇராத்திரிஉங்களுக்
குவரும், ஞானதிஷ்டிபெறுத அந்தகாரம் உங்க
ளுக்குக்கிடைக்கும்;தீர்க்கதரிசிகளின்மேல்சூரி
யன்அஸ்தமனமாகும்,அவர்கள்மேல்பகல்காரிரு
ளாய்மாறும்.—அக்காலத்தில் தரிசிகள்இலச்சைய ௭
டைவார்கள், ஞானதிஷ்டியுடையவர்கள் கலங்
குவார்கள்: தேவன் உத்தரந்தராதபடியால்அவர்
களெல்லாரும்மேல் உதட்டை மூடுவார்கள்.
அவன் அதிக்கிரமத்தை யாக்கோபுக்கும், அ ௮
வன்பாவத்தை இஸரவேலுக்கும் நான்தெரிவிக்
கும்படி யெகோவாவின் ஆவி தருகிறவல்ல
மையினுலும், நியாயத்தினுலும், பராக்கிரமத்தி
னுலும் பூரணப்பட்டிருக்கிறேன்.—யாக்கோபு ௯
வமிசத்தின் பிரதானிகளே, இஸரவேல்வமிசத்
தின்பிரபுகளே,நீதியைவெறுத்து,எல்லாநியாயத்
தையும்புரட்டி,—இரத்தத்தினுல் சீயோனையும், ௰
அநியாயத்தினுல் யெரூஷலேமையுங் கட்டுகிற
வர்களாகியநீங்கள்இதைக்கேட்கும்படிஉங்களை
வேண்டுகிறேன்.-அதின்பிரதானிகள் பரிதானத் ௰௧
துக்கு நியாயந்தீர்க்கிறுர்கள், அதின் ஆசாரியர்
கள்கூலிக்கு உபதேசிக்கிறுர்கள், அதின்தீர்க்கத
ரிசிகள் திரவியத்துக்குத்தீர்க்கதரிசனஞ் சொல்
லுகிறுர்கள்: ஆயினும் அவர்கள் யெகோவா
வைச்சார்ந்துகொண்டு,எங்களுக்குள் யெகோ
வா இருக்கிறுரல்லவா,ஒருதீமையும்எங்களுக்கு
நேரிடாதென்கிறுர்கள்.—ஆதலால்உங்கள்நிமித் ௰௨

(௫) உபா.௩௨.௮,௯. (௬) எசேக்.௨௧.௨. எசா.௩௰.௰. ஆமோ.௨.௰௨. (௰) உபா.௰௨.௯. லேவி.௰௮.௨௫,௨௭. எரே.௩.௨ (௰௧) எசேக்.௰௩.௩. (௰௨) எரே.௩௧.௰. எசேக்.௩௬.௩௭. (௰௩) ஓசி.௩.௫. எசா.௫௨.௰௨.—(௩.அதி.௯.) எரே.௫.௪,௫. எசேக்.௰௧.௩,௭. (௪) சங்.௰௮.௪௧. நீதி.௧.௨௮. எசா.௧.௰௫. சக.௭.௰௩. (௫) எசா.௫௬.௰,௰௧. எசேக்.௨௨.௨௫. மத்.௭.௰௫. எசேக்.௰௩.௰௮,௰௯. (௬) எசா.௮.௨௰,௨௨. சக.௰௩.௪. ஆமோ.௮.௯.(௭)ஆமோ.௮.௰௧. எசா.௫௮.௧. (௰) எரே.௨௨.௰௩. எசேக்.௨௨.௨௭. அபகூ.௨.௰௨. செப்.௩.௩. (௰௧) எசா.௧.௨௩. ஓசி.௪.௰௮. எரே.௬.௰௩. எசா.௪௮.௨. ரோ.௨.௰௭. (௰௨) எரே.௨௬.௰௮.

தஞ் சீயோன்வயல்போல உழப்படும், யெரூஷலேம் மண்மேடுகளாய்ப்போகும், ஆலயமாகிய மலை வனத்திலுள்ள உயர்ந்த ஸ்தானங்களுக்கொப்பாகும்.

## ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் இராச்சியத்தைக்குறித்துத்தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௯. தேவன் தமதுசனங்கள்மேல் தயைசெய்தல்: ௰௧. தமதுசத்துருக்களைத்தண்டித்தல்.

முடிவுகாலத்தில் யெகோவாவின் வீடாகிய மலை, மலை உச்சிகளின்மேல் ஸ்தாபிக்கப்பட்டு,குன்றுகளுக்குமேலாய் உயர்த்தப்படும்; சருவ
௨ தேசத்தாரும் அதிற்செல்லுவார்கள்.—செல்லச் செல்ல, அநேகதேசத்துச்சனங்கள், யாக்கோபின் தேவனுடைய ஆலயமிருக்கும் யெகோவாவின் மலைக்குப்போவோம் வாருங்கள்; அவர்தம்முடைய நெறிகளை நமக்குப்போதிப்பார், நாம் அவர் பாதைகளிலே நடப்போம்: சீயோனினின்று வேதப்பிரமாணமும், யெரூஷலேமினின்று யெகோவாவின் வாக்கியமும் புறப்படுமென்பார்கள்.
௩ அவர்அநேகசனங்களை நியாயம்விசாரிப்பார், அதிதூரத்திலுள்ள பராக்கிரமம்பொருந்திய அந்நியதேசத்தாரைக் கண்டிப்பார்; அதினால் அவர்கள் தங்கள்கட்கங்களை மண்வெட்டிகளாகவும், தங்கள் ஈட்டிகளை அரிவாள்களாகவும் அடிப்பார்கள்: ஒருசாதியார் மறுசாதியாருக்கு விரோதமாய்க்கட்கத்தைப்பிடியார்கள்,இனி ஒருபொழு
௪ தும் யுத்தப்பரீட்சைபயிலார்கள்.—அவர்களெல்லாருந்தங்கள்தங்கள்திராட்சக்கொடியின்கீழும், தங்கள்தங்கள் அத்திமரத்தின்கீழுமிருப்பார்கள்; ஒருவனும் அவர்களைப் பயப்படுத்தமாட்டான்: சேனைபதியாகிய யெகோவாவின் வாய்
௫ இவ்வாக்கைச்சொல்லிற்று.—சகலசனங்களுந் தங்கள் தங்கள் தேவனுடைய நாமத்தைப் பற்றிநடப்பார்கள், நாங்கள் எங்கள் தேவனாகிய யெகோவாவின் நாமத்தையே பற்றி
௬ என்றுஞ்சதாகாலங்களிலும் நடப்போம்.-அந்நாளிலே நொண்டியானவளை நான் சேர்த்து, தள்ளப்பட்டவளையும், நான் துக்கப்படுத்தினவளை
௭ யுங் கூட்டிக்கொண்டு,–நொண்டியானவளைமீந்திருப்பவளாகவும், தூரமாய்த் தள்ளப்பட்டவளைப் பலமுள்ளசாதியாகவும் ஏற்படுத்துவேன்: யெகோவா இன்றுமுதல் என்றும்,சதாகாலங்களிலுஞ் சீயோன்மலையில் அவர்கள் மேல் அரசாளுவாரென்று யெகோவா சொல்லுகிறார்.
௮ மந்தையின் துருக்கமே, சீயோன்குமாரத்தியின்அரணே, முந்தினஆளுகையே; உன்னிடத்தில்வரும் இராச்சியம் யெரூஷலேமின்குமாரத்
தியிடத்தில்வரும்.—நீ இப்பொழுது என்உரத்த ௯
சத்தமிடுகிறாய், உன்னிடத்தில்அரசனில்லையா, உன்மந்திரிமார் நாசப்பட்டுப்போனார்களா;ஸ்திரியின் பிரசவவேதனையைப்போலும் வேதனை
கள் உன்னைப் பிடித்தன.—சீயோன் குமாரத்தி ௰
யே, பிரசவஸ்திரியைப்போல வேதனைப்பட்டு, பிரசவிக்கிறதற்குப்பிரயத்தினம்பண்ணு: நீ இப்பொழுது நகரத்தைவிட்டுப்புறப்பட்டுவயல்வெளியில் தங்குவாய், நீ பாபேல்வரைக்கும்போவாய்; அவ்விடத்தில்விடுவிக்கப்படுவாய்; அங்கே யெகோவா உன்சத்துருக்கள்கையினின்று உன்னைமீட்பார்.
சீயோன் அசுசியாயிருப்பதாக, நாம் அவள் ௰௧
மேல் கண் வைக்கக்கடவோமென்றுசொல்லி, இப்பொழுதும் அநேகதேசத்துச்சனங்கள்உனக்குவிரோதமாக ஏகமாய்க்கூடியிருக்கிறார்கள்.—
அவர்களோ யெகோவாவின் நினைவுகளை ௰௨
அறியார்கள், அவருடையஆலோசனைஅவர்களுடைய புத்திக்கு எட்டாது: அவர் அரிக்கட்டுகளைப்போலஅவர்களைப்போர்க்களத்திலே சேர்ப்
பார்.–சீயோன்குமாரத்தியே, நீ எழுந்து போர ௰௩
டி: நான் உன்கொம்பை இரும்பும், உன்குளம்புகளைப்பித்தளையுமாக்குவேன்: நீ அநேகசனங்களைநொறுக்குவாய்: நீ யெகோவாவுக்கென்று, அவர்கள் ஆதாயத்தையும், பூமி முழுவதற்கும் ஆண்டவராயிருக்கிறவருக்கென்று,அவர்களுடைய பொருளையுங் காணிக்கையாக ஒப்பிப்பாய்.

## ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின்சென்மம்: ௪. அவர் இராச்சியம், ௮. அவர்செயம்.

சேனையின்மகளே,இப்பொழுது தளங்களாய்க் ௧
கூடிவாருங்கள்: நாங்கள்வளைந்துகொள்ளப்பட்டோம்: இஸ்ரவேலுடைய நியாயாதிபதியைக்
கோலினால் கன்னத்தில் அடிப்பார்கள்.–பேத்லெ ௨
கேம் எப்ரூத்தாவே, நீ யூதாவிலுள்ள ஆயிரங்களுள் சிறியதாயிருந்தும், அநாதியானவராய்ப் பூருவகாலத்தில் தோன்றினவரும், இஸ்ரவேலரை அரசாளுகிறவருமாகிய ஒருவர் உன்னில்
நின்றுபுறப்பட்டு,என்னிடத்தில் வருவார்.—ஆ ௩
யினும் பிரசவிப்பவள் பிரசவிக்கிறவரைக்கும் அவர்களை ஒப்பிப்பார்: அப்பொழுது அவருடைய சகோதரரில் மீந்திருப்பவர்கள் இஸ்ரவேல்சந்ததியாரிடத்தில் திரும்பிவருவார்கள்.
அவர் நின்றுகொண்டு, யெகோவாவின் ௪
வல்லமையில், தமது தேவனாகிய யெகோவாவினது நாமத்தின் மகத்துவத்திலே மேய்ப்பார்; அவர்கள் நிலைத்திருப்பார்கள்:அவர்இனிப் பூமியின் எல்லைகள் பரியந்தம் புகழ்ச்சிபெற்றி

(௪. அதி. ௧.) ஏசா.௨.௨.(௩)ஏசா.௨.௪. யோவே.௩.௰.(௪)௧.இரா.௪.௨௫. சக.௩.௰.(௫)எரே.௨.௰௧. சக.௰.௰௨.(௬) எசேக்.௩௪.௰௬. செப்.௩.௰௯. எசேக்.௩௪.௰௩. (௭) ஏசா.௯.௬. தானி.௭.௰௪,௨௭. லூக்.௧.௩௩. வெளி.௰௧.௰௫. (௮) ஆதி.௩௫.௨௧. (௯) எரே.௮.௰௯. ஏசா.௰௩.௮. எரே.௩௰.௬. (௰௧) புல.௨.௰௬. ஒப.௰௨.(௰௨)ஏசா.௫௫.௮. ரோ.௰௧.௩௩. ஏசா.௨௧.௰. (௰௩) ஏசா.௪௧.௰௫,௰௬. எரே.௫௧.௩௩. தானி.௨.௪௫. ஏசா.௰௮.௭. சக.௪.௰௪.—(௫. அதி. ௧.) புல.௩.௩௰. மத்.௫.௩௯. (௨) மத்.௨.௬. யோவா.௭.௪௨. ௧.சாமு.௨௩.௨௩. யாத்.௰௮.௨௫. ஆதி.௪௯.௰. ஏசா.௯.௬. நீதி.௮.௨௨,௨௩. யோவா.௧.௧. (௪) ஏசா.௪௰.௰௧. எசேக்.௩௪.௨௩. சங்.௭௨.௮. ஏசா.௫௨.௰௩. சக.௯.௰. லூக்.௧.௩௨.

ரு ருப்பார்.—இவர் தாமே சமாதானத்துக்குக் கார
ணர், அஸ்ஸீரியன் நம்முடைய தேசத்தில் வரும்
பொழுதும், நம்முடைய அரமனைகளில் மிதிக்
கும்பொழுதும், நாம் அவனுக்குவிரோதமாய் ஏ
ழுமேய்ப்பரையும், எட்டு அதிபதிகளையும் எற்ப
சு டுத்துவோம்.—அவர்கள் அஸ்ஸீரியனுடையதேசத்
தையும், நிம்ரோத்தின்தேசத்தையும்அவைகளின்
பிரவேசஸ்தானங்களில் கட்கத்தினால் சேதித்து
விடுவார்கள்: அஸ்ஸீரியன் நம்முடையதேசத்தில்
வரும்பொழுதும், நம்முடைய எல்லைகளைமிதிக்
கும்பொழுதும் அவர் அவனில்நின்று விடுவிப்
எ பார்.—யெகோவாவினின்றுவந்துமனுஷ
ருக்காகக் காத்திராமலும், மனுபுத்திரருக்காகத்
தங்காமலுமிருக்கிற பனியைப்போலவும், பூண்
டுகள்மேல் மழையைப்போலவும் யாக்கோபில்
மீந்திருக்குஞ் சனங்கள் அநேகசனங்களுக்குள்
நிற்பார்கள்.
அ சிங்கம் காட்டுமிருகங்களில், இளஞ்சிங்கம்
ஆட்டுமந்தைகளில்சென்று மிதித்து விடுவிப்பா
ரில்லாமல் பீறுகிறதுபோல், யாக்கோபில் மீந்தி
ருக்கிறவர்கள் சாதியாருக்குள் அந்நிய தேசத்
கூ துச்சனங்கள் மத்தியிலிருப்பார்கள்.—உன்கை
உன்விரோதிகள்மேல்உயரும்,உன் சத்துருக்கள்
ய அனைவருஞ்சேதிக்கப்படுவார்கள்.—அந்நாளில்
உன்மத்தியினின்று உன்குதிரைகளைச்சேதித்து,
யக உன் இரதங்களைச் சங்கரிப்பேன்.—உன்தேசத்
துநகரங்களைச்சேதித்து, உன்ஸ்திரமான துருக்
யஉ கங்களெல்லாவற்றையும் இடிப்பேன்.—உன்கை
யினின்று மாயவித்தைகளைச் சேதிப்பேன்; மா
யாவிகள் இனிஉன்னிடத்தில் இருக்கமாட்டார்
யங கள்.—நான் உன்மத்தியினின்று தொழிற்பட்ட
உன் விக்கிரகங்களையும், உன் சிலைகளையுஞ்சே
திப்பேன்; உன்கைசெய்தகிரியையை இனி ஒரு
யச பொழுதும் நமஸ்கரிக்கமாட்டாய்.—நான் உன்
அஷரிமரங்களை உன் மத்தியினின்று நிருமூல
யரு மாக்கி, உன்நகரங்களை அழிப்பேன்.—நான், கோ
பத்தோடும், உக்கிர கோபத்தோடும், கட்டளைக்
குச்செவிகொடாத அந்நியர்மேல்தண்டனைவரு
விப்பேனென்று யெகோவா சொல்லுகிறார்.

## சு. அதிகாரம்.

நன்றியீனமுங்கட்டளைமீறலுமான இவைகளினி
மித்தஞ் சனங்களோடே விவாதஞ்செய்தல்.

இப்பொழுது நீங்கள் யெகோவா சொல்லி
யவாக்கைக்கேளுங்கள்; நீ எழுந்துமலைகளுக்கு
முன்வாக்குவாதம்பண்ணு, குன்றுகள்உன்வாக்
உ கைக்கேட்கக்கடவன.—மலைகளே, பூமியின்ஸ்
திரமானஅத்திபாரங்களே,நீங்கள் யெகோவா
வின் வழக்கைக்கேளுங்கள்:யெகோவாவுக்
கும், அவருடையசனங்களுக்கும் வழக்குண்டு,
அவர் இஸரவேலோடே வழக்காடுகிறார்.—என் ங
சனங்களே, நான்உங்களுக்கென்னசெய்தேன்,
நான் எதினால்உங்களைவருத்தப்படுத்தினேன்; எ
னக்குவிரோதமாய்ச்சாட்சியிடுங்கள்.—நான்உங் ச
களை எகிப்துதேசத்தினின்று புறப்படச்செய்
தேன், அடிமைவீட்டினின்று உங்களை மீட்டுக்
கொண்டேன்; உங்களுக்குமுன் நான் மோசே
யையும், ஆரோனையும், மிரியமையும் அனுப்பி
னேன்.—என்சனங்களே, நீங்கள் யெகோவா ரு
வின் நீதியை அறிந்துகொள்ளும்பொருட்டு, சித்
தீமினின்று கில்காலுக்குப்போகிறவழியில்மோ
வாபின் இராசனாகிய பாலாக்செய்தஆலோசனை
யையும், பேயோரின் புத்திரனாகிய பிலியாம்
கொடுத்த உத்தரத்தையும் இன்னதின்னதென்று
இப்பொழுது நினைத்துக்கொள்ளுங்கள்.
நான் எதைக்கொண்டு யெகோவாவின் ச சு
முகத்தில்சேர்ந்து, உன்னதமான தேவனைத்
தாழ்ந்துவணங்குவேன்; தகனபலியிட ஒருவரு
ஷத்துக் கன்றை எடுத்துக்கொண்டு அவர்சந்நிதி
யிற்சேருவேனோ.—யெகோவா ஆயிரம் ஆட் எ
டுக்கடாக்களிலும், எண்ணெய்ஆறுகள் பதினாயி
ரங்களிலும் பிரியப்படுவாரோ; நான்என்பாவத்
தினிமித்தம் என்முதற்பேறானவனையோ, என்
ஆத்துமத்தின் பாவத்தினிமித்தம் என் சரீரத்தின்
கனியையோ கொடுப்பேன்.—மனுஷனே, அ அ
வர் நன்மை இன்னதென்று உனக்கறிவித்தார்; நி
யாயஞ்செய்து, தயையைநேசித்து, உன் தேவ
னோடே தாழ்ந்த சிந்தையுடன் நடப்பதையே
யன்றி, யெகோவா உன்னிடத்தில் வேறெ
தைக்கேட்கிறார்.—யெகோவாவின் சத்தம்நக கூ
ரத்தைப்பார்த்துக்கூப்பிடுகின்றது, ஞானமுள்ள
வனெவனோ, அவன் உமதுநாமத்தைமதிப்பான்:
மிலாற்றுக்கும், அதைஏற்படுத்தினவருக்குஞ்செ
விகொடுங்கள்.
துன்மார்க்கனுடைய வீட்டிலேபாவத்தினால் ய
கூட்டிவைக்கப்பட்ட பொருள்களும், அரோசி
யமுள்ளகுறைந்த அளவும் இன்னுமுண்டோ.—
கள்ளத்தராசும்,கள்ளப்படிக்கற்களையுடையபை யக
யுமிருக்க நான் குற்றமற்றவனாயிருப்பேனோ.—
அவர்களில் ஐசுவரியமுள்ளவர்கள்கொடுமையி யஉ
னால்நிறைந்திருக்கிறார்கள், அதில்வாசமாயிருப்
பவர்கள் பொய்பேசுகிறார்கள், அவர்கள் வாயி
லுள்ளநாவு கபடமுள்ளது.—ஆதலால் நான் உங் யங
கள்பாவங்களினிமித்தம் உங்களைவெறுமையாக்
கி, உங்களை அடித்து வருத்தப்படுத்துவேன்.—
நீங்கள் புசித்தும், திருத்தியடையமாட்டீர்கள்; யச
உங்களுள்ளத்தில்சோர்வடைவீர்கள்; நீங்கள்பி
டித்தாலும் விடுவிக்கமாட்டீர்கள்; நீங்கள் விடு
விப்பதையுங் கட்கத்துக்கொப்பிப்பேன்.—நீ வி யரு

(ரு) எசா.கூ.சு. சக.கூ.ய. லூக்.உ.யச. எபே.உ.யச. (சு) ஆதி.ய.அ,ய,யக. லூக்.க.எஉ. (எ) உபா.ஙஉ.உ. (ய) சக. கூ.ய. (யஉ) எசா.உ.சு. (யங) சக.யங.உ. எசா.உ.அ. (யரு) உ.தெச.க.அ.—(சு. அதி. உ) சங்.ருய.க,ச.எசா.க.யஅ. ஓசி. ச.க. (ங) எரே.உ.ரு,ஙக. (ச) யாத்.யஉ.ருக. ஆமோ.உ.ய. (ரு) எண்.உஉ.சு. உபா.உங.ங,ரு. யோசு.உச.கூ,ய. எண்.உரு.க. நியா.ரு.யக. (எ) சங்.ருய.கூ.எசா.க.யக. யோபு.உகூ.சு. உ.இரா.யசு.ங. எரே.எ.ஙக. எசேக்.உங.ஙஎ. (அ) உபா.ய.யஉ.க.சாமு.யரு.உஉ. ஓசி.சு.சு. ஆதி.யஅ.யகூ. எசா.க.யஎ. (ய) ஆமோ.அ.ரு. உபா.உரு.யங—யக. நீதி.யக.க. (யக) ஓசி.யஉ.எ. (யங) லேவி.உசு.யசு. (யச) லேவி.உசு.உசு. (யரு) ஆமோ.ரு.யக. ஆகா.க.சு.

தைப்பாய், அறுக்கமாட்டாய்; நீ சீதவிருட்சக்
கனிகளையும்,திராட்சங்களையும்மிதிப்பாய்,எண்
ணெய் பூசிக்கொள்ளவும், ரசத்தைக்குடிக்கவும்
பெறமாட்டாய்.
௰௬ உம்றியின் கட்டளைகளும், ஆகாப்வமிசத்தா
ரின் எல்லாக்கிரியைகளுங் கைக்கொள்ளப்படு
கின்றன, அவர்களுடையஆலோசனைகளுக்கேற்
கநடக்கிறீர்கள்; ஆதலால் நான் உங்களைப்பா
ழாக்குவேன், உங்கள் நகரத்தாரை நிந்தைப்
பொருளாக்குவேன்: நீங்கள் என் சனங்களின்
அவமானத்தை அனுபவிப்பீர்கள்.

## ௭. அதிகாரம்.

௧. துன்மார்க்கத்தைக்குறித்துப்புலம்பல்: ௫. தேவனிடத்தில் அடைக்கலம்புகுதல்: ௭. சத்துருக்கள் தோல்வியடைதல்: ௰௧. தேவன் சபையாரைத்தேற்றல்.

ஐயோ, உஷ்டணகாலத்துக்கனிகள் சேர்க்கப்
பட்டு, திராட்சப்பழங்கள் அறுக்கப்பட்டபின்
பு புசிக்கிறதற்கு ஒருதிராட்சக்குலையும், என்
ஆத்துமம்வாஞ்சிக்கிற முதற்பழுத்த கனியுமில்
௨ லாதவன்போலிருக்கிறேன்.-தேசத்திலிருந்துதே
வபத்தன் ஒழிந்துபோனான்: சனங்களில் நீதி
மான் ஒருவனுமில்லை: சகலரும் இரத்தஞ்சிந்தப்
பதிவிருக்கிறார்கள்; அவனவன் தன் சகோதர
னைவலையில் அகப்படுத்தவேட்டையாடுகிறான்.
௩ அவர்கள்இரண்டுகைகளாலும் ஊக்கமாய்த்தீ
மைசெய்கிறார்கள், பிரபும், நியாயாதிபதியும் ப
ரிதானங்கேட்கிறார்கள்;பெரியவன்தன்துராசை
யைத்தெரிவிக்கிறான்: இப்படி அவர்கள் பந்த
௪ னைப்படுத்துகிறார்கள்.—அவர்களில் நல்லவன்
முட்செடியைப்போலிருக்கிறான், நீதிமான்முள்
வேலியிலுங்கேடுள்ளவன்: உன் காவற்காரர்கு
றித்த உன்தண்டனையின் தினமே வருகின்றது;
இப்பொழுதே அவர்களுக்குக்கலக்கமுண்டு.
௫ சிநேகனை நம்பவேண்டாம், வழிகாட்டியை
விசுவாசிக்கலாகாது: உன்மடியில்சயனிக்கிறவ
ளுக்குமுன் உன்வாயின்கதவுகளைத்திறவாதே.–
௬ புத்திரன் தன்பிதாவை அவமதிக்கிறான், புத்திரி
தன்மாதாவுக்குவிரோதமாகவும்,மருமகள்தன்மா
மிக்கு விரோதமாகவும் எழும்புகிறார்கள்; ஒருவ
னுடையகுடும்பத்தாரும் அவனுக்குச்சத்துருக்க
௭ ளாயிருப்பார்கள்.–ஆதலால்நான் யெகோவா
வை நோக்கிஇருப்பேன்; என் ரட்சிப்பின் தே
வனை வரக்காத்திருப்பேன்: என் தேவன் எ
னக்குச்செவிகொடுப்பார்.
௮ என் பகைவனே, நீ எனக்கு விரோதமாய்ம
கிழ்ச்சிகொள்ளாதிரு: நான்விழுந்தாலும் எழுந்
திருப்பேன்; நான் இருளிலிருக்கும்பொழுது
யெகோவாவே என்ஒளியாயிருக்கிறார்.–
நான் யெகோவாவுக்கு விரோதமாய்ப்பா ௯
வஞ்செய்தபடியினால், அவர் எனக்காகப்பரிந்து
பேசி, என்பட்சமாய் நியாயந்தீர்க்குமட்டும்அவ
ருடைய கோபத்தைச்சகிப்பேன்: என்னை ஒளி
யிலேபுறப்படப்பண்ணுவார்,நான்அவருடைய
நீதியைப்பார்ப்பேன்.–உன் தேவனாகிய யெ ௰
கோவா எங்கேயென்று என்னிடத்திற்சொல்
லிய பகையுள்ளவள் அதைப்பார்க்கும்பொழுது
வெட்கம்அவளைமூடும்; என்கண்கள்அவளைக்கா
ணும்: அவள் வீதிகளின் சேற்றைப்போல இப்
பொழுதே மிதிக்கப்படுவாள்.–உன்மதில்கள்கட் ௰௧
டப்படுந்தினம் வரும், அந்நாளிலே கட்டளை
தூரப்படுத்தப்படும்.—அந்நாளிலே அஸீரிய மு ௰௨
தல் எகிப்துவரையிலும், எகிப்துமுதல் நதிவரை
யிலும், ஒரு சமுத்திரமுதல் மறு சமுத்திரம்வரை
யிலும், ஒருமலைமுதல் மறு மலைவரையிலுமுள்
ளவர்கள் உன்னிடத்தில் வருவார்கள்.–ஆயினும் ௰௩
தன்னில் வாசமாயிருப்பவர்கள் நிமித்தமும், அ
வர்கள் கிரியைகளுடைய கனியினிமித்தமும்
தேசம் அவாந்தரமாய்ப்போம்.
கர்மேல்மத்தியில் தனித்துவனவாசமாயிருக்கி ௰௪
ற உமக்குரியசுதந்தரமான மந்தையாகிய உம்மு
டையசனங்களை உமதுகோலினாலே மேயும், பூ
ருவகாலத்திலே மேய்ந்ததுபோல அவர்கள் பா
ஷானிலுங்கிலியாத்திலும் மேய்வார்களாக.—நீ ௰௫
எகிப்துதேசத்தினின்று புறப்பட்டநாள்களிலே
நடந்ததுபோல, நான்அவர்களுக்கு ஆச்சரியமா
னகிரியைகளைக்காண்பிப்பேன்.
தேசத்தார் அதைக்கண்டு தங்கள் எல்லாப் ௰௬
பராக்கிரமத்தையுங்குறித்து இலச்சையடைந்து,
தங்கள் வாயின்மேல்கைவைப்பார்கள்: அவர்
கள்காதுகள் செவிடுபடும்.—சருப்பத்தைப்போ ௰௭
லத் தூளை நக்குவார்கள், ஊர்வனவற்றைப்போ
லத் தங்கள் மறைவிடங்களிலிருந்து நடுங்கிப்பு
றப்படுவார்கள்: அவர்கள் நம்முடைய தேவனா
கிய யெகோவாவுக்குப் பயப்படுவார்கள்,
உமது நிமித்தம் பயப்படுவார்கள்.—தமது சுதந் ௰௮
தரத்தில் மீந்திருப்பவர்களின் பாவத்தை மன்
னித்து, அதிக்கிரமத்தைப்பாராமல் வருகிற தே
வனாகிய உமக்கு நிகரானவர்யாவர்; அவர்தயா
பிரியர், ஆதலால் அவருடையகோபம்என்றும்
நிற்கிறதில்லை.—அவர்திரும்புவார், நம்மேல் இ ௰௯
ரங்குவார்; அவர் நம்முடைய தீமைகளை அடக்
குவார்;நீர்அவர்கள்பாவங்களெல்லாவற்றையுஞ்
சமுத்திரத்தின் ஆழங்களில் எறிந்துவிடுவீர்.–நீர் ௨௰
பூருவகாலமுதல்எங்கள் முன்னோருக்கு ஆணை
யிட்ட சத்தியத்தை யாக்கோபுக்கும், தயையை
ஆபிரகாமுக்கும் அருளுவீர்.

---

(௰௬) ௧.இரா.௰௬.௨௫,௨௬. ஒசி.௫.௰௧. ௧.இரா.௯.௮. ஏசா.௨௫.௮. புல.௫.௧.—(௭. அதி. ௧.) ஏசா.௨௪.௰௩. ஏசா.௨௮.௪. (௨) ஏசா.௫௭.௧. அபகூ.௧.௰௫. (௩) ஒசி.௪.௰௮. ஏசா.௧.௨௩. (௪) ௨.சாமு.௨௩.௬,௭. (௫) எரே.௯.௪. (௬) எசேக்.௨௨.௭. லூக்.௰௨.௫௩. (௭) ஏசா.௮.௰௭. (௮) நீதி.௨௪.௰௭. புல.௪.௨௧. (௯) புல.௩.௩௯. (௰) சங்.௩௫.௨௬. சங்.௪௨.௩,௰. சக.௰.௫. (௰௨) ஒசி.௰௧.௰௧. (௰௩) எரே.௨௧.௰௪. (௰௪) ஏசா.௩௭.௨௪. (௰௫) சங்.௬௮.௨௨. (௰௬) ஏசா.௨௬.௰௧. யோபு.௨௧.௫. (௰௭) சங்.௭௨.௯. ஏசா.௪௯.௨௩. எரே.௩௩.௯. (௰௮) யாத்.௰௫.௰௨. யாத்.௩௪.௬,௭. எரே.௫௰.௨௰. சங்.௱௩.௯. ஏசா.௫௭.௰௬. எரே.௩.௫.

# நாகூம்.

## ௧. அதிகாரம்.

௧. யெகோவாவின் மகிமையைவருணித்தல்:
௯. அவர் தமது சனங்களுக்கு அனுக்கிரகமும்,
தமது சத்துருக்களுக்கு நிக்கிரகமுஞ்செய்தல்.

நினிவேயைப்பற்றியவாக்கியம். இல்கோஷிய
௨ னாகிய நாகூமின்தரிசனபுத்தகம்.-யெகோவா
எரிச்சலுள்ளவரும்,பிரதிபலனளிக்கிறவருமான
தேவன்; யெகோவா பழிவாங்குகிறவர்,
உக்கிரகோபமுள்ளவர்; யெகோவா தம்மு
டைய சத்துருக்களுக்குப் பிரதிபலனளிக்கிறார்,
தம்முடையசத்துருக்களினிமித்தங் குரோதத்
௩ தைக் கூட்டிவைக்கிறார்.—யெகோவா நீடி
யபொறுமையுள்ளவரும்,பராக்கிரமத்தில்மகத்து
வமுள்ளவருமாயிருக்கிறார், அவர்தண்டியாமல்
விடார்: யெகோவாவின் பாதை சூறைக்
காற்றிலும், கொந்தளிப்பிலு மிருக்கின்றது,
௪ மேகங்கள் அவருடையபாதத்தூள்.—அவர்சமுத்
திரத்தைக்கடிந்து வற்றப்பண்ணி, சகலநதிகளை
யும்வறட்சியாக்குகிறார்: பாஷானும்,கர்மேலுஞ்
சோருகின்றன, லிபானோனின்செழிப்புமாறிப்
௫ போகின்றது.—அவர்நிமித்தம் மலைகள்அதிரும்,
குன்றுகள் கரைந்துபோம், அவர்சமுகத்தில் தே
சமும், அதனிடத்தில் வசிப்பவைகளெல்லாவற்
௬ றோடேபூமியும் எடுபட்டுப்போம்.—அவருடைய
கோபத்திற்கு முன் நிற்கவல்லவன்யாவன், அ
வருடைய உக்கிரகோபத்திற்குமுன் தரிக்கவல்
லவன்யாவன்; அவருடைய உக்கிரம் அக்கினி
யைப்போலப்பாய்கின்றது,அவரால்கல்மலைகள்
௭ பேர்க்கப்படுகின்றன.—யெகோவா தயாப
ரர், ஆபத்துக்காலத்தில் அரணானதுருக்கம்; தம்
௮ மைநம்புகிறவர்களை அறிந்திருக்கிறார்.—ஆனாலும்
அதின் ஸ்தானத்தைப்புரண்டுபோகிற வெள்ளத்
தினால் சருவசங்காரம்பண்ணுவார், இருள் அவ
ருடையசத்துருக்களைத் தொடரும்.
௯ நீங்கள் யெகோவாவுக்கு விரோதமாய்எ
தைக்கருதுகிறீர்கள், அவர் சருவசங்காரம் பண்
ணுவார்: ஆபத்து இரண்டாந்தரந் தோன்றிவரா
௰ து.-அவர்கள் சன்னல்பின்னலாயிருக்கிறமுட்
செடியைப்போலிருக்கையிலும்,தங்கள்திராட்ச
ரசத்தினாலேவெறிகொண்டிருக்கையிலும்,அவர்
கள்காய்ந்துபோன அரிதாளைப்போலப் பட்சிக்
௰௧ கப்படுவார்கள்.-உன்னிடத்திலிருந்து யெகோ
வாவுக்கு விரோதமாய்த்துராலோசனைபண்ணு
௰௨ கிற ஒருதுஷ்டமந்திரிதோன்றிவந்தான்.—அவர்
கள்அனுகூலம்பெற்றுமிகுதியாயிருந்தாலுஞ்சே
திக்கப்படுவார்கள்,அவன் சென்றுபோவான்.நா
ன் உன்னைமுன்னே உபத்திரவப்படுத்தினேன்,
ஆயினும் இனிஉன்னை ஒருபொழுதும் உபத்திர
௰௩ வப்படுத்தமாட்டேன்.-இப்பொழுதும்நான்உன்
மேலுள்ள அவன்நுகத்தைமுறித்து உன்கட்டுக
ளைஅறுப்பேனென்று யெகோவா சொல்லுகி
றார்.—உன்னைக்குறித்து யெகோவா ஒருகட் ௰௪
டளைவிதித்திருக்கிறார், உன்நாமந்தரிக்க இனிஒ
ருவித்தும் விதைக்கப்படாது: உன் தேவர்களு
டைய ஆலயத்தினின்று தொழிற்பட்டவிக்கிர
கத்தையும், வார்ப்பு விக்கிரகத்தையுஞ் சேதிப்
பேன்: நான்உன்பிரேதக்குழியை ஆயத்தப்படுத்
துவேன்; நீ நீசன்.—சமாதானத்தைப் பிரசித்தப் ௰௫
படுத்தி, நற்செய்தியைக்கொண்டுவந்தவனுடை
யஅடிச்சுவடுகளை மலைகளின்மேலேபாருங்கள்;
யூதாவே, உன் உற்சவங்களை ஆசரித்துக்கொள்,
உன் சங்கற்பங்களைநிறைவேற்றிக்கொள்: துஷ்
டன் இனி உன்வழியாய்ச்செல்லான்; அவன்
முழுவதுஞ் சங்கரிக்கப்பட்டான்.

## ௨. அதிகாரம்.

நினிவேயைச்செயித்தசேனைகளைவருணித்தல்.

சிதறஅடிக்கிறவன் உன்முகத்திற்கு முன்வருகி ௧
றான்: அரணைக்காத்துக்கொள், வழியைக்காவல்
பண்ணு, அரைகளைத் திடமாய்க்கட்டிக்கொள்,
மிகவும்வல்லமையுடனே உன்னைஸ்திரப்படுத்
து.—வெறுமையாக்குகிறவர்கள் அவர்களை வெ ௨
றுமையாக்கி,அவர்களுடையதிராட்சக்கிளைகளை
நாசப்படுத்தியிருந்தாலும், யெகோவா யாக்
கோபின்மகிமையைமாத்திரமல்ல,இஸரவேலின்
மகிமையையுந்திரும்பவும் வருவிப்பார்.—அவனு ௩
டையபராக்கிரமசாலிகளின்கேடகம் இரத்தவரு
ணமாயிற்று,அவனுடையயுத்தவீரர்செவ்வாடை
யைத்தரித்துக்கொண்டார்கள்: அவன்ஆயத்
தம் பண்ணும்நாளில் இரதங்கள்சுவாலிக்கின்ற
ன,ஆயுதங்களோடே மின்னிக்கொண்டிருக்கின்
றன, பீருஸ்மரங்கள்அசைக்கப்படுகின்றன.-இர ௪
தங்கள் வீதிகளில் கடகடவென்றோடி, பெரும்
பாதைகளில் ஒன்றோடொன்றுமோதுகின்றன:
அவைகளின் தோற்றம்தீவர்த்திகளைப்போலிருக்
கின்றது, அவைகள் மின்னல்களைப்போல் ஓடு
கின்றன.-அவன் தன்பராக்கிரமவீரர்களின்மேல் ௫
மனம்வைப்பான்: அவர்கள்நடையில் இடறிவி
ழுவார்கள்; அவர்கள் மதிலுக்கு விரைந்தோடு
வார்கள்,ஒதுக்கிடங்கள்ஆயத்தப்படுத்தப்படும்.—
நதிகளின் வாசல்கள் திறக்கப்படும், அரமனை ௬
வெந்துகரையும்.—நிலைபெற்றவள், தன்தாதிமார் ௭
மார்பில் அடித்து,புறாக்களைப்போலப் புலம்பிக்
கொண்டிருக்கையில்சிறைப்பட்டுப்போவாள்.-
நினிவேபூருவகாலமுதல் நீர்த்தடாகம்போலிருந் ௮
தது:ஆயினும்அவர்கள்ஓடுவார்கள்.நில்லுங்கள்,நி
ல்லுங்களென்றாலும்,ஒருவரும் பின்னிட்டுப்
பார்க்கிறதில்லை.—வெள்ளியைக்கொள்ளையாடுங் ௯
கள், பொன்னைக்கொள்ளையாடுங்கள்: சம்பத்துக்

(௧. அதி. ௨.) யாத்.௨௰.௫. யோசு.௨௪.௰௯. எசா.௫௯.௰௮. (௩) யாத்.௩௪.௬,௭. யோபு.௯.௪. (௪) எசா.௫௰.௨. மத்.௮.௨௬. எசா.௩௩.௯. (௫) நியா.௫.௫. ௨.பேதுரு.௩.௰. (௬) மல்.௩.௨. வெளி.௰௬.௧. (௭) எரே.௩௩.௰௧. புல.௩.௨௫. சங்.௧.௬. ௨.தீமோ.௨.௰௯. (௮) தானி.௯.௨௬. (௯) சங்.௨.௧. (௰) ௨.சாமு.௨௩.௬,௭. மல்.௪.௧. (௰௨) எசா.௮.௮. (௰௩) எரே.௨.௨௰. (௰௫) எசா.௫௨.௭. ரோ.௰.௰௫.—(௨. அதி. ௧.) எரே.௫௧.௰௧,௰௨. (௨) எசா.௰.௰௨. ஓசி.௰.௧. (௩) எசா.௬௩.௨,௩. (௭) எசா.௩௮.௰௪.

குமுடிவில்லை; விரும்பத்தக்கநானாவிதபொருள்
௰ களுமுண்டு.—அவள்வெறுமையும்,சூனியமும்,
அவாந்தரமுமானாள்: மனங் கரைந்துபோகின்ற
து, முழங்கால்கள் தள்ளாடுகின்றன, சகலஇடுப்
புகளிலும்மிகுந்தவேதனை யுண்டு,எல்லாமுகங்
௰௧ களுங்கருகிப்போம்.—சிங்கங்களின்வாசஸ்தான
மெங்கே, இளஞ்சிங்கத்தின் போசனசாலை எங்
கே; கிழச்சிங்கமாகியசிங்கமும், சிங்கக்குட்டிக
ளும் பயப்படுத்துவாரைக்காணாமல்சஞ்சரித்தஸ்
௰௨ தானமெங்கே.—சிங்கந்தன் குட்டிகளுக்குவேண்
டியதைப்பீறி,தன்பெண்சிங்கங்களுக்கு வேண்
டியதைத் தொண்டையிற்பிடித்துக் கொன்று
போட்டு, இரையினாலே தன்குகைகளையும், பீ
றுண்டவைகளினால் தன்கெபிகளையும் நிரப்பிற்
௰௩ று.—பார், நான்உனக்குவிரோதியானேன்,அவள்
இரதங்களைப்புகையாயெழும்பஎரிப்பேன், கட்
கம் உன் இளஞ்சிங்கங்களைப்பட்சிக்கும்: நான்
பூமியினின்று உன்இரையை ஒழிப்பேன், உன்
தூதரின்சத்தம் இனிஒருபொழுதுங் கேட்கப்ப
டுவதில்லையென்று சேனாபதியாகிய யெகோ
வா சொல்லுகிறார்.

## ௩. அதிகாரம்.

*நினிவே நாசமடையுமென்றுமுன்னுரைத்தல்.*

ஐயோ, வஞ்சகத்தினாலும், கொடுமையினாலும்
நிறைந்ததும், கொள்ளையாடினபொருள் நீங்கா
ததும், இரத்தஞ்சிந்தினதுமான நகரத்துக்குஆபத்
௨ துவரும்.—கசையின் இரைச்சலும், உருள்கள்
கடகடவென்றோடுஞ் சத்தமும், குதிரைகளின்
௩ பாய்ச்சலும், இரதங்களின் குலுங்குதலும்,—கு
திரைவீரர் ஏறலும், கட்கந்துலங்கலும்,ஈட்டிகள்
மின்னலும், கொலையுண்டவர்களின் திரளும்,
பிரேதங்களின் ஏராளமும் அங்கேகாணப்
படும்; பிணத்துக்குத்தொகையில்லை; அவர்கள்
௪ சவங்களிலிடறிவிழுகிறார்கள்.—தன் வேசைக்கி
ரியைகளினால் இராச்சியங்களையும், தன்மாயா
வித்தையினால் குடும்பங்களையும் விற்ற அந்தச்
சௌந்தரிய மாயாவியாகிய வேசைசெய்த விப
௫ சாரக்கிரியைகளின் மிகுதியினிமித்தம்,-நான்உ
னக்குவிரோதியானேன்,உன்வஸ்திரத்தின்ஓரங்
களை உன்முகமட்டுந் தூக்கிஎடுத்து, அந்நியருக்
கு உன் நிருவாணத்தையும், அந்நிய இராச்சியங்
களுக்கு உன் இலச்சையையுந்தெரியப்பண்ணு
வேன் பாரென்று, சேனாபதியாகிய யெகோ
௬ வா சொல்லுகிறார்.—நான் உன்மேல் அரோசி
யமான ஊத்தையை எறிந்து, உன்னைத்தாழ்ச்சிப்
௭ படுத்தி, நிந்தனைப்பொருளாக்குவேன்.—உன்
னைக்காண்பவனெவனோ, அவன் நினிவே பா
ழாய்ப்போயிற்று, அதைக்குறித்துப் புலம்புவார்
யாவர்; நான் ஆற்றுவாரை உனக்கெங்கே தேடு
வேனென்றுசொல்லி, உன்னைவிட்டு ஓடிப்போ
வான்.—நதிகள் மத்தியிலிருந்து சலத்தினால் வ ௮
ளையப்பட்டு, சமுத்திரம் அரணாகவும், கடல் அ
தின் மதிலாகவுமிருக்கும் நோ ஆமோன்நகரத்தி
லும், நீ சிரேஷ்டமா.—கூஷும், எண்ணிறந்தப ௯
லமுள்ள எகிப்தும் அதற்குதவி. பூற்றும், லூபிய
ரும் உனக்குத்துணை.—ஆயினும் அவள் எடுபட் ௰
டுச் சிறைப்பட்டுப்போனாள்: அவளுடைய கு
ழந்தைகள் சகலவீதிகளின்முகனைகளிலும் மோ
தி அடிக்கப்பட்டன: அவளுடைய கனம்பொ
ருந்திய மனுஷர்நிமித்தஞ் சீட்டுப்போட்டார்
கள், அவளுடைய பெரியமனுஷர்யாவருஞ் சங்
கிலிகளினாலேகட்டப்பட்டார்கள்.—நீயும் வெறி ௰௧
கொண்டு ஒளித்துக்கொள்வாய்: நீ சத்துருவுக்கு
அஞ்சிப்புகலிடந்தேடுவாய்.-உன் அரண்களெல் ௰௨
லாம் முதல் பழுக்கும் பழங்களையுடைய அத்தி
மரங்களைப்போலிருக்கும்: அவைகள் அலைக்கப்
பட்டால் அவைகளின்பழம் புசிப்பவனுடைய
வாயில்விழும்.—பார், உனக்குள்ளிருக்கும்உன்ச ௰௩
னங்கள் ஸ்திரிகள்: உன்தேசத்தின் வாசல்கள்
உன்சத்துருக்களுக்குமுன் திறக்கப்படும்: அக்கி
னிஉன்தாழ்ப்பாள்களைப்பட்சிக்கும்.—நீ முற்றிக் ௰௪
கையினிமித்தந்தண்ணீர்மொண்டுகொள்,உன்அ
ரண்களைத்திடப்படுத்து, சேற்றிலேபோய்க் களி
மண்ணைமிதித்து, சூளையைப்பலப்படுத்து.—அங் ௰௫
கே அக்கினி உன்னைப்பட்சிக்கும்; கட்கம்உன்
னைச்சேதித்து, யாலேக்குப் புழுக்களைப் போல்
உன்னைப்பட்சிக்கும்: யாலேக்குப் புழுக்களைப்
போல் உன் தொகையை அதிகரிக்கப்பண்ணி,
வெட்டுக்கிளிகளைப்போல் வருத்திக்கும்படிசெ
ய்.-வானத்துநட்சத்திரங்களிலும்உன்வர்த்தகரை ௰௬
அதிகமாய்த்தொகைப்படுத்தினாய்:யாலேக்குப்பு
ழுக்கள் பரவிப் பறந்துபோகின்றன.—உன்னி ௰௭
டத்தில் முடிசூட்டப்பட்டவர்கள் வெட்டுக்கி
ளிகளைப்போலவும், உன் சேனாபதிகள் பெரிய
வெட்டுக்கிளிகளைப்போலவுமிருக்கிறார்கள், அ
வைகள் குளிர்ந்தநாளில் வேலிகளிலே பாளய
மிறங்கும், சூரியனுதித்தமாத்திரத்தில் பறந்து
போம், அவைகளிருக்கும்ஸ்தானம் அறியப்பட
வில்லை.—அஷூரிய இராசாவே, உன்மேய்ப்பர் உ ௰௮
றங்குவார்கள்: உன்பிரதானிகள்படுத்துக்கொண்
டார்கள்: உன்சனங்கள் மலைகளின்மேல் சிதறி
யிருக்கிறார்கள், கூட்டுவான் ஒருவனுமில்லை.—
நீ உன் நொறுங்குதலுக்குப்பரிகரிக்கமுடியாது; ௰௯
உன்காயங் கடுமையாயிருக்கின்றது:உன்செய்தி
யைக் கேட்கும்யாவரும் உன்மேல்கைகொட்டு
வார்கள்: யாவன்மேல் உன் தீமை நித்தமும் பா
யாமற்போயிற்று.

---

(௰) ஏசா.௰௩.௭,௮. தானி.௫.௬. எரே.௩௰.௬. யோவே.௨.௬.—(௩. அதி. ௧.) அபகூ.௨.௰௨. (௨) எரே.௪௭.௩. (௪) ஏசா.௪௭.௯,௰௨. வெளி.௰௮.௨,௩. (௫) ஏசா.௪௭.௨,௩. மீகா.௧.௰௧. அபகூ.௨.௰௬. (௬) மல்.௨.௯. எபி.௰.௩௩. (௭) வெளி.௰௮.௰. எரே.௰௫.௫. (௮) ஆமோ.௬.௨. எரே.௪௬.௨௫,௨௬. எசேக்.௩௰.௰௪—௰௬. (௰) ஏசா.௰௩.௰௬. புல.௨.௰௯. யோவே.௩.௩. (௰௧) எரே.௨௫.௨௬,௨௭. (௰௨) வெளி.௬.௰௩. (௰௩) எரே.௫௰.௩௭. எரே.௫௧.௩௰. (௰௫) யோவே.௧.௪. (௰௭) வெளி.௯.௭. (௰௮) யாத்.௰௫.௰௬. எரே.௫௰.௰௮. எசேக்.௩௧.௩. ௧.இரா.௨௨.௰௭. (௰௯) மீகா.௧.௮. புல.௨.௰௫. செப்.௨.௰௫.

# அபகூக்.

## ௧. அதிகாரம்.

*௧. சனங்களின் பாவத்தைக்குறித்தல்: ௫. அவர்களுக்குத் தண்டனை வருமென்று தெரிவித்தல்: ௰௨. அந்தத்தண்டனை துஷ்டசனங்களால் வருமென்றுதெரிவித்தல்.*

அபகூக்கென்னுந் தீர்க்கதரிசிக்குத் தெரிவிக்
௨ கப்பட்டவாக்கியம்.-யெகோவாவே, நான் ஓலமிடுகிறேன், நீர் எதுவரைக்குங் கேளாமலிருப்பீர்;உம்மைநோக்கிக்கொடுமையைக் குறித்து நான்சத்தமிடுகிறேன், எதுவரைக்கும் நீர்
௩ இரட்சியாமலிருப்பீர்.-நீர் ஏன் எனக்கு அநியாயத்தைக்காண்பிக்கிறீர், ஏன் எனக்கு உபத்திரவத்தைக்காட்டுகிறீர்; கொள்ளையாடலும், கொடுமையும் எனக்குமுன்பாக இருக்கின்றன: விவாதத்தையுங் கலகத்தையும் எழுப்புவாருண்
௪ டு.—இதினிமித்தம் நியாயப்பிரமாணம்மெலிந்துபோயிற்று, நியாயத்தீர்ப்புச் செல்லுகிறதில்லை: துன்மார்க்கர் நீதிமான்களை வளைந்துகொள்ளுகிறார்கள்; ஆதலால் நியாயம்புரட்டப்படுகின்றது.
௫ அந்நிய தேசத்தாருக்குள்ளே சுற்றிப்பாருங்கள், மிகவும்பிரமித்துக்கொள்ளுங்கள்: விவரிக்கப்பட்டாலும் நீங்கள்விசுவாசியாத ஒருகிரியை
௬ யை உங்கள் நாள்களிலே நடப்பிப்பேன்.—பாருங்கள், தங்களுக்கு ஆதீனமல்லாத வாசஸ்தானங்களைச்சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு, பூமியிலெங்குஞ்சென்றுவருகிற நிஷ்டுரமுந் தீவரமுமான சாதியாராகிய கல்தேயரை நான் எழுப்பு
௭ வேன்.-அவர்கள்கெடியும் பயங்கரமுமுள்ளவர்கள்: அவர்களுடையநியாயத்தீர்ப்பும், அவர்களு
௮ டையமகிமையும் அவர்களாலேஆகும்.—அவர்களுடையகுதிரைகள் சிவிங்கிகளிலும்வேகமும், சாயங்காலத்தில்திரியுங் கோணாய்களிலுந் தீவரமுமுள்ளவைகள்:அவர்களுடையகுதிரைவீரர்பரம்பி இருப்பார்கள்; அவர்களுடைய குதிரைவீரர், தூரத்திலிருந்துவந்து தின்கிறதற்குத்தீவரிக்
௯ குங் கழுகைப்போலப்பறந்து வருவார்கள்.-அவர்களெல்லாருங்கொடுமைசெய்யவருவார்கள்:அவர்களுடையமுகங்கள்,சுவறச்செய்யுங்கீழ்காற்றைப்போலிருக்கும், தூளைப்போலச் சிறைப்
௰ பட்டவர்களைக் கூட்டுவார்கள்.—இராசாக்களைநிந்தித்து, பிரபுகளைப்பரிகாசம்பண்ணுவார்கள்: திடமானதுருக்கங்களைஎல்லாம் நகைப்பார்கள்; மண்ணை மேடுகளாய்க்குவித்து, அவைகளைப்பி
௰௧ டிப்பார்கள்.—அதினால் அவனுடைய மனம்மாற,அவன், தன்பராக்கிரமந் தன்தேவனாலுண்டாயிற்றென்றெண்ணி, கடந்து வந்து குற்றவாளியாவான்.

யெகோவாவே, என் தேவனே, என்ப ௰௨
ரிசுத்தரே, நீரல்லவோ நித்தியர்; நாங்கள் மரணமடையோம். யெகோவாவே, நீர் அவர்களைத் தண்டனைக்கேற்படுத்தினீர்; கன்மலையே, தண்டனைக்காக அவர்களை நியமித்தீர்.—நீர் தீமை ௰௩
யின்மேல்பார்வை வைக்கக்கூடாத சுத்தக்கண்ணையுடையவராய் இருக்கிறீர்: அநியாயத்தை நோக்கிப் பார்க்கவுமாட்டீரே, துரோகமாய் நடக்கிறவர்களை நீர் நோக்கிக்கொண்டிருக்கிறதென்ன; துன்மார்க்கன்,தன்னைப்பார்க்கிலும் நீதிமானை விழுங்கும்பொழுது நீர் பேசாமலிருக்கிறதென்ன.—மனுஷரை, சமுத்திரமச்சங்க ௰௪
ளையும், அதிகாரியில்லாத ஊர்வனவற்றையும் போலாக்குகிறதென்ன.—அவர்களெல்லாரை ௰௫
யுந்தூண்டிலினாலேபிடிக்கிறார்கள், அவர்கள்தங்கள் வலையில் அவர்களை அகப்படுத்துகிறார்கள், அவர்களைத் தங்கள்பறியிலே சேர்த்துக்கொள்ளுகிறார்கள்: அதினால் சந்தோஷப்பட்டுக்களிகூருகிறார்கள்.—அவைகளினால் சம்பூரணமானபங் ௰௬
கும், அறுசுவைப்பதார்த்தமும் தங்களுக்குக் கிடைத்துவருகிறபடியால் அவர்கள் தங்கள்வலைக்குப்பலியிட்டு, தங்கள் பறிக்குத்தூபங்காட்டுகிறார்கள்.—இதற்காக அவர்கள்தங்கள்வலையை இ ௰௭
ழுத்துக் கொட்டிக்கொண்டிருந்து, இரங்காமல் இடைவிடாதபடி சாதியாரைக் கொலைசெய்கிறார்கள்.

## ௨. அதிகாரம்.

*௧. வரப்போகிறகாரியங்களைத்தரிசிப்பதற்குவிசுவாசத்தோடே எதிர்பார்ப்பது கடமையெனக்காட்டல்: ௫. பொருளாசையைக்குறித்தல்: ௯. லோபத்தைக் குறித்தல்: ௰௨. நிஷ்டுரத்தைக்குறித்தல்: ௰௫. வெறியைக்குறித்தல்: ௰௮. தேவபூசையினிமித்தந்தண்டிக்கப்படல்.*

நான் என்காவலிலே நிற்பேன், என்கோபுரத் ௧
திலே தரிப்பேன், அவர் எனக்குச்சொல்வதின்னதென்றும், நான் என்னுடைய நியாயத்தைக்குறித்து இன்னஉத்தரந் தருவேனென்றும் நான் உணரும்படி உற்றுப்பார்ப்பேன்.—அப்பொழு ௨
து, எனக்கு உத்தரமாக, யெகோவா, ஒருவன் ஓடும்பொழுதும், வாசிக்கத்தக்கதெளிவாய் இந்தத்தரிசனத்தைப் பலகைகளில் எழுது.-தரிசனம் ௩
நியமிக்கப்பட்ட காலத்துக்காக இன்னும்வைத்திருக்கின்றது, ஆனாலும் முடிவிலே தெளிவாய்

(௧. அதி. ௨.) புல.௩.௮. (௪) யோபு.௨௧.௭. எரே.௰௨.௧. (௫) ஏசா.௨௧.௰௪. அப்.௰௩.௪௰. (௬) உபா.௨௮.௪௯, ௫௰. எரே.௫.௰௫. உ.நாளா.௩௬.௬. (௮) எரே.௫.௬. செப்.௩.௩. எரே.௪.௰௩. (௰௧) தானி.௫.௪. (௰௨) சங்.௯௰.௨. புல.௫.௰௯. உ.இரா.௰௯.௨௫. ஏசா.௰.௫,௬,௭. எசேக்.௩௰.௨௫. உபா.௩௨.௪. (௰௩) எரே.௰௨.௧. (௰௫) எரே.௰௬.௰௬. ஆமோ.௪.௨. (௰௬) உபா.௮.௰௭. ஏசா.௰.௰௩.—(௨. அதி. ௧.) ஏசா.௨௧.௮,௰௧. (௨) ஏசா.௮.௧. (௩) தானி.௰.௰௪. எபி.௰.௩௭.

விளங்கும், அதுபொய்சொல்லாது: அதுதாமதித்
தாலும் அதற்குக்காத்திரு; அதுநிச்சயமாய்வரும்,
௪ மிகவுந்தாமதிக்கமாட்டாது.—பார், அகங்காரி
யுடைய மனம் அவனுக்குள்ளே செவ்வையுள்ள
தல்ல: நீதிமானோ தன் விசுவாசத்தினாலே ஜீவித்
திருப்பான்.
௫ அவன் திராட்சரசத்திலே குற்றஞ்செய்து அ
கங்காரியாகி, தன்வீட்டிலே தரியாமல், பாதா
ளத்தைப்போலத் தனது ஆசையை விஸ்தாரமாக்
கி, மரணத்தைப்போல் ஒருபொழுதுந் திருத்தி
பெறாமல், சகல சாதியாரையுந் தன்னிடத்தில்
கூட்டிச் சனங்களையுஞ் சேர்த்துக்கொள்ளுகி
௬ றான்.—ஆதலால் இவர்களெல்லாரும் அவனுக்கு
விரோதமாய் ஒரு திருஷ்டாந்தவாக்கையும், நிந்
தனையான பழமொழியையும் வசனித்து, ஐயோ,
தன்னுடையதல்லாததைச் சேர்த்துக்கொள்ளுகி
றவனுக்கு ஆபத்துவரும்; எதுவரைக்கும் அவன்
தன்மேல் களிமண்சுமையை ஏற்றுவானென்பார்
௭ கள்.—உன்னைக்கடிப்பவர்கள் சடிதியாய் எழும்
பமாட்டார்களா, உன்னைக் கிலேசப்படுத்துகிற
வர்கள் விழித்திருக்கமாட்டார்களா; நீ அல்லவா
௮ அவர்களுக்குக்கொள்ளைப்பொருளாவாய்.—நீ அ
நேகதேசத்துச்சனங்களைக் கொள்ளையிட்டாய்;
மனிதருடைய இரத்தத்தினிமித்தமும், நாட்டுக்
கும், நகரத்துக்கும், அவைகளில்வசிப்பவர்களுக்
குமுண்டான கொடுமையினிமித்தமுஞ் சனங்க
ளில் மீந்திருப்பவர்கள்யாவரும் உன்னைக்கொள்
ளையிடுவார்கள்.
௯ ஐயோ, ஆபத்துக்குத்தப்பி, தன் கூட்டை உ
யர்ந்தஸ்தானத்தில்வைக்கும்படி தன்குடும்பத்தா
ருக்காகத் தீமையோடே ஆதாயத்தைச் சம்பாதிக்
௰ கிறவனுக்கு ஆபத்துவரும்.-நீ அநேகசனங்களைச்
சேதிப்பதினால், உன்குடும்பத்தாருக்கு இலச்சை
வரும்படி ஆலோசனைசெய்து, உன்பிராணனுக்
௰௧ கு விரோதமாகப் பாவஞ்செய்தாய்.—கல்
லு, சுவரினின்று ஓலமிடுகின்றது, உத்திரம், மச்
சினின்று அதற்குச்சாட்சியிடும்.
௰௨ ஐயோ, இரத்தஞ்சிந்தி, நகரத்தைக்கட்டி, அநி
யாயத்தோடே நகரியைஸ்தாபித்திருக்கிறவனுக்
௰௩ கு ஆபத்துவரும்.—கேளுங்கள், சனங்கள் அக்கி
னிக்கு இரையாகப்பிரயாசப்பட்டு, சனம் விரு
தாவாக இளைத்துப்போவது சேனைபதியாகிய யெ
௰௪ கோவாவினாலாயிற்றல்லவா.—சமுத்திரஞ் ச
லத்தினால் நிறைந்திருக்கிறதுபோல, பூமி யெ
கோவாவின் மகிமையைப்பற்றும் அறிவினா
லே நிறைந்திருக்கும்.
௰௫ ஐயோ, அவர்களுடைய நிருவாணத்தைக்கா
ணும்வண்ணம் பிறனுக்குப் பானம்பண்ணும்ப
டிகொடுத்து, தன்பானபாத்திரத்தை அவன் வா
யிலே பிடித்து, அவனை வெறியாக்குகிறவனுக்
கு ஆபத்துவரும்.—நீ மகிமையினாலே அல்ல, இ ௰௬
லச்சையினாலே நிரப்பப்பட்டாய்: நீயும் பா
னம்பண்ணி, விருத்தசேதனமில்லாதவனென்று
விளங்கும்படிசெய்: யெகோவாவின் வலக்
கையிலுள்ளபாத்திரம்உன்னிடத்தில்வரும், உன்
மகிமையுள்ளவஸ்துக்களின்மேல் இலச்சையுள்
ளவாந்திசெய்வாய்.—லிபானோனுக்கு நீ செய்த ௰௭
கொடுமை உன்னைமூடும், மனுஷருடைய இரத்
தஞ்சிந்தினதினிமித்தமும், நாட்டுக்கும், நகரத்
திற்கும், அதில்வசிப்பவர்கள்யாவருக்குஞ்செய்
தகொடுமையினிமித்தமும் மிருகங்கள்செய்யுஞ்
சங்காரம் உன்னைக்கலங்கப்பண்ணும்.
தொழிற்காரன்செப்பனிடும்விக்கிரகமும், ஊ ௰௮
மையானதேவர்களை உண்டுபண்ணித் தான்தொ
ழிற்படுத்திய விக்கிரகத்தை நம்பினவனுக்கு
வார்க்கப்பட்டதும், பொய்ப்போதனை போதிப்
பதுமாகிய விக்கிரகமும் என்னலாபந்தரும்.—
ஐயோ, மரத்துண்டைப்பார்த்து, விழியென்றும், ௰௯
ஊமையான கல்லைநோக்கி, எழும்பென்றுஞ்
சொல்லுகிறவனுக்குஆபத்துவரும்; அதுபோதிக்
குமா, பாருங்கள், பொன் வெள்ளியினால் அது
மூடப்பட்டது, அதற்குள்ளேசுவாசஞ்சற்றுமில்
லையே.—யெகோவாவோ தமதுபரிசுத்த ஆ ௨௰
லயத்தில் இருக்கிறார்: பூமியெல்லாம்அவருக்
குமுன்மவுனமாயிருப்பதாகவென்றார்.

## ௩. அதிகாரம்.

௧. தேவன் பூருவகாலத்திலே தமதுசனங்களுக்
குச்செய்தஅனுக்கிரகத்தைவருணித்தல்: ௭. தீர்
க்கதரிசிஅவரிடத்தில் விசுவாசம்வைத்தல்.

அபகூக்கென்னுந்தீர்க்கதரிசி ஷிகாயோனில் ௧
பாடியவிண்ணப்பம்.—யெகோவாவே, உ ௨
மது வாக்கை நான்கேட்டு அஞ்சினேன்: யெ
கோவாவே, நீர் வருஷங்களுக்குள் உமது கி
ரியையைஉயிர்ப்பித்தருளும், வருஷங்களுக்குள்
அதை விளங்கப்பண்ணுவீராக; கோபித்தாலுந்
தயையை நினைந்தருளும்.—தேவன் தேமானி ௩
னின்றுவந்தார், பரிசுத்தமுள்ளவர் பாரன்மலை
யினின்றும் வந்தார். சேலா. அவருடையமகி
மைப்பிரகாசம் ஆகாயத்திலேவியாபித்திருந்தது,
அவர்துதியினால் பூமிநிறைந்தது.—அவருடைய ௪
பிரகாசம் சோதியாயிருந்தது; அவருடைய கை
யினின்று கிரணங்கள்சொரிந்தன: அதுவே அவர்
பராக்கிரமத்தின்மறைவு.—அவருக்கு முன்பாகக் ௫
கொள்ளைநோய்சென்றது, அவர்பாதத்தினின்று
அக்கினித்தழல்கள்புறப்பட்டன.—அவர்நின்று ௬
பூமியைஅளந்தார்: அவர்உற்றுப்பார்த்துத்தேசத்
தாரைக்கரையப்பண்ணினார்; நித்தியமலைகள் சி
தற அடிக்கப்பட்டன, என்றுமுள்ளசிறுமலைகள்
தாழ்ந்தன: அவர்பாதைகள்நித்தியமானவைகள்.-

(௪) யோவா.௩.௩௬. ரோ.௧.௰௭. கலா.௩.௰௧. எபி.௰.௩௮. (௫) நீதி.௨௭.௨௰. (௬) மீகா.௨.௪. (௮) ஏசா.௩௩.௧. (௯) எரே.௨௨.௰௪. எரே.௪௯.௰௬. ஒப.௪. (௰௨) எரே.௨௨.௰௪. எசேக்.௨௪.௯. மீகா.௩.௰. நாகூ.௩.௧. (௰௩) எரே.௫௧.௫௮. (௰௪) ஏசா.௰௧.௯. (௰௫) ஓசி.௭.௫. ஆதி.௯.௨௨. (௰௬) எரே.௨௫.௨௬,௨௭. (௰௮) ஏசா.௪௪.௯,௰. எரே.௰.௮,௰௪. சக.௰.௨. சங்.௱௰௫.௫. ௧.கொரி.௰௨.௨. (௨௰) செப்.௧.௭. சக.௨.௰௩.—(௩. அதி. ௨.) சங்.௮௫.௬. (௩) உபா.௩௩.௨. நியா.௫.௪. (௫) நாகூ.௧.௩. (௬) நாகூ.௧.௫. ஆதி.௪௯.௨௬.

எ கூஷானின்கூடாரங்கள் துக்கத்தில் அமிழ்ந்தக்
கண்டேன்: மீதியானின்தேசத்துத் தொங்குதி
அ ரைகள் நடுங்கின.—யெகோவாவே, நீர்உம்
முடைய குதிரைகளின்மேலும், இரட்சிப்புக்
கேற்ற உமது இரதங்களின்மேலும் ஏறினீர், நீர்
நதிகளின்மேல் விசனமாயிருந்தீரா, உமது கோ
பம் நதிகளின்மேலிருந்ததா, சமுத்திரத்தின்மேல்
௯ உமது குரோதம் இருந்ததா.—கோத்திரங்களுக்
கிடப்பட்ட ஆணைகளின்வாக்குப்படி உம்மு
டைய வில்லு நாணேற்றப்பட்டதாக வெளிப்
பட்டது. சேலா. நீர் பூமியின் நதிகளைப்பிளந்
௰ தீர்.—மலைகள் உம்மைக்கண்டு நடுங்கின: பெரு
கினசலம் ஓடிப்போயிற்று: ஆழி கோஷித்தது,
௰௧ அதின்கைகளை உயர்த்திற்று.—சந்திரசூரியர்தங்
கள்நிலைகளில்தரித்துநின்றார்கள்: உமது அம்புக
ளின் ஒளியிலும், துலங்கிய உமது ஈட்டியின்பி
௰௨ ரகாசத்திலுஞ் சென்றார்கள்.—நீர் குரோதத்தோ
டேபூமியின்வழியாய் நடந்தீர், கோபத்தோடே
௰௩ தேசத்தாரை மிதித்துவிட்டீர்.—உம்மால் அபி
ஷேகம்பெற்றவனோடே உமதுசனங்களின் இ
ரட்சிப்பினிமித்தம் புறப்பட்டீர்; அடிதொடங்
கிக் கழுத்துப்பரியந்தம் வெளிப்படுத்தி, துஷ்
டவமிசத்தானுடைய தலைவனைச்சேதித்தீர். சே
௰௪ லா.—அவனுடையகிராமாதிபதிகள் என்னைச்சி
தறஅடிக்கிறதற்குச் சூறைக்காற்றுப்போலப் பு
றப்பட்டார்கள்: தரித்திரனைமறைவிடத்தில்பட்
சிப்பது அவர்களுக்குச் சந்தோஷமாயிருந்தது,
நீர்அவர்களை அவனுடையகோலினால் மோதிஅ
டித்தீர்.—மகாசலங்கள் குவிந்திருக்கையில் நீர் ௰௫
உம்முடைய குதிரைகளோடே சமுத்திரத்தின்
வழியாய் நடந்தீர்.—நான்கேட்டபொழுது என் ௰௬
குடல் குழம்பிற்று: அந்தச்சத்தத்துக்கு என் உத
டுகள் நடுங்கத்தொடங்கின: உக்கல் என் எலும்
புகளிலுண்டாயிற்று, எனது நிலையில்நான்நடுங்
கினேன், ஆயினும்எங்களோடெதிர்க்குஞ்சனங்
கள்வரும்பொழுது, அந்த ஆபத்துத்தினத்திலே
நான் இளைப்பாறுதலை அடைவேன்.

அத்திமரம்பூவாதிருந்தாலும், திராட்சக்கொடி ௰எ
கள் காய்க்காமற்போனாலும், சீதவிருட்சத்தின்
கனி ஒழிந்தாலும், நிலங்கள் தானியத்தை விளை
வியாதிருந்தாலும், தொழுவினின்று ஆட்டுமந்
தைசேதிக்கப்பட்டாலும், கொட்டிலிலே மாடு
இல்லாதிருந்தாலும்,—நான் யெகோவாவில் ௰அ
களிகூருவேன், எனக்கு இரட்சிப்புச்செய்யுந்
தேவனில் மகிழுவேன்.—ஆண்டவராகிய ௰௯
யெகோவா என்பெலம், அவர் என்கால்களை
மான் கால்களைப்போலாக்கி, என் உயர்ந்தஸ்
தானங்களில்என்னைஉலாவப்பண்ணுவார். நிகி
னோத்வாத்தியத்தில் பிரதான வாத்தியக்காரனி
மித்தம் ஒப்பிக்கப்பட்ட சங்கீதம்.

(அ) உபா.௩௩.௨௬,௨௭. (௯) சங்.எஅ.௰௫,௰௬. (௰) யாத்.௰௯.௰௬,௰அ. நியா.௫.௪,௫. சங்.௬அ.அ. யாத்.௰௪.௨௨. யோசு.௩.௰௬. (௰௧) யோசு.௰.௰௧,௰௨,௰௩. சங்.௰அ.௰௪. (௰௨) எரே.௫௧.௩௩. ஆமோ.௧.௩. மீகா.௪.௰௩.(௰௩)யோசு.௰.௨௪. (௰௫) சங்.எஎ.௰௯. (௰௬) சங்.௱௰௯.௱௨௰. எரே.௨௩.௯. (௰அ) யோபு.௰௩.௰௫. ஏசா.௪௧.௰௪. (௰௯) உ.சாமு.௨௨.௩௪. உபா.௩௨.௰௩.

# செப்பனியா.

## ௧. அதிகாரம்.

*நானா பாவங்களினிமித்தம் யூதாதேசத்துக்கு வருந்தண்டனையை முன்னுரைத்தல்.*

ஆமோனின் புத்திரனாகிய யோஷியாவென்
னும் யூதாவின் இராசா அரசாண்டகாலத்தில்,
இஸ்கியாவின் புத்திரனாகிய அமரியாவின் புத்தி
ரனான கிதலியாவின் பௌத்திரனும், கூஷியின்
புத்திரனுமாகிய செப்பனியாவுக்குக்கிடைத்த
௨ யெகோவாவின் வாக்கு.-நான்தேசத்தினின்
று சகல வஸ்துக்களையும் வாரிக்கொள்வே
௩ னென்று யெகோவா சொல்லுகிறார்.-நான் ம
னுஷரையும்மிருகங்களையும்வாரிக்கொள்வேன்;
ஆகாயத்துப்பறவைகளையும்,சமுத்திரமச்சங்களை
யும், துன்மார்க்கரோடே இடறுகிறதற்கேதுவா
னவைகளையும் வாரிக்கொண்டு, தேசத்தினின்று
மனுஷரைச் சங்காரம்பண்ணுவேனென்று யெ
௪ கோவா சொல்லுகிறார்.—நான் யூதாவின்மே
லும் என்கையைநீட்டி, இந்தஸ்தானத்தினின்று
பாகாலின் மீந்திருக்கிறவர்களையும், பூசாசாரிக
ளின் நாமத்தையும், மற்ற ஆசாரியர்களையும்,—
௫ வீட்டின்நிலாமுற்றங்களின்மேல் ஆகாயத்துநட்
சத்திரங்களுக்குப் பூசைசெய்பவர்களையும், யெ
கோவாவையும் மல்காமையுங்கொண்டு ஆ
௬ ணையிட்டுவணங்குகிறவர்களையும்,—யெகோ
வாவைவிட்டுப் பராமுகம்பண்ணினவர்களை
யும், யெகோவாவைத் தேடாமலும் அவ
ரைக்குறித்து விசாரியாமலுமிருக்கிறவர்களையுஞ்
௭ சேதிப்பேன்.—ஆண்டவராகிய யெகோ
வாவின் சமுகத்தில் மவுனமாயிருங்கள்: யெ
கோவாவின் நாள் சமீபமாயிற்று: யெகோ
வா ஒருபலியை ஏற்படுத்தினார்,அதற்குத்தாம்வ
௮ ரவழைத்தவர்களையும் ஆயத்தப்படுத்தினார்.–யெ
கோவா பலியிடும்நாளில் நான்பிரபுகளையும்,
இராசகுமாரரையும், மறுதேசவஸ்திரத்தைத்தரிக்
௯ கும் சமஸ்தசனங்களையுந் தண்டிப்பேன்.-வாசற்
படியைக் குதித்துத்தாண்டி, கொடுமையினாலும்
வஞ்சகத்தினாலும் தங்கள் ஆண்டவருடைய வீ
டுகளைநிரப்பும் யாவரையும் அந்நாளில் தண்டிப்
௰ பேன்.—அந்நாளிலே மச்சவாசலினின்று அல
றுஞ்சத்தமும், இரண்டாம் வாசலினின்று அ
லறுதலும், சிறுமலைகளினின்று பெரியநொறுங்
குதலின் இரைச்சலுமுண்டாகுமென்று யெ
௰௧ கோவா சொல்லுகிறார்.—கீழ்நகரத்தில் வசிப்
பவர்களே, அலறுங்கள்,வர்த்தகரெல்லாருஞ்சே
திக்கப்பட்டார்கள்;வெள்ளியைச் சுமக்கிறவர்க
ளெல்லாருஞ்சேதிக்கப்பட்டார்கள்.–அக்காலத் ௰௨
திலே நான்விளக்குகளைக்கொண்டு யெருஷலே
மைச்சோதித்து, தங்கள்பாவங்களைக்குறித்துநிரு
விசாரமுள்ளவர்களாகி, யெகோவா நன்மை
யாகிலுந் தீமையாகிலுஞ் செய்யமாட்டாரென்
றுதங்கள்சிந்தையில் எண்ணியிருக்கிறவர்களைத்
தண்டிப்பேன்.-அவர்களுடையபொருள் கொள் ௰௩
ளையாடப்படும், அவர்களுடையவீடுகள் வெறு
மையாகும்: அவர்கள்வீடுகளைக்கட்டியும்,அவை
களில்வசிக்கமாட்டார்கள்; திராட்சத்தோட்டங்
களைநாட்டியும், அவைகளின் இரசத்தைக் குடி
யார்கள்.—யெகோவாவின் மகா நாள் அதி ௰௪
கசமீபமாயிற்று, யெகோவாவினது நாளின்
சத்தம் மிகவும்விரைந்துவரும், அதற்குப்பராக்கி
ரமசாலியும்மனங்கசந்து அலறுவான்.–அந்தநாள் ௰௫
குரோதத்தின்நாள், அது துக்கமுங் கிலேசமுமு
ள்ளநாள், பாழுஞ்சேதமுமுள்ளநாள், இருளும்
மந்தாரமுமுள்ளநாள், மேகங்களும் அகோரஅந்
தகாரமுமுள்ள நாள்.—அதுமதில்சூழ்ந்த நகரங் ௰௬
களுக்கும், உயரமான கொத்தளங்களுக்கும் வி
ரோதமாக எக்காளத்தொனியும், பயங்கர சத்த
முமுள்ளநாள்.–மனுஷர் யெகோவாவுக்கு ௰௭
விரோதமாய்ப் பாவஞ்செய்தபடியினால், அவர்
கள் குருடரைப்போல நடக்கும்படி நான் அ
வர்களைக் கிலேசப்படுத்துவேன்: அவர்களு
டைய இரத்தம் புழுதியைப்போலச் சொரியப்
படும், அவர்களுடைய மாமிசம் எருவைப்போ
லாகும்.—யெகோவாவின் கோபத்தின் நா ௰௮
ளில், அவர்கள் வெள்ளியும், அவர்கள் பொன்
னும் அவர்களைவிடுவிக்கமுடியாது; தேசம்முழு
வதும், சுவாலிக்கும் அவருடைய கோபாக்கி
னியினால் பட்சிக்கப்படும்: தேசத்தார்யாவரை
யும் துரிதமாய்நிருமூலப்படுத்துவார்.

## ௨. அதிகாரம்.

*௧. பாவத்தினிமித்தம்மனஸ்தாபப்படும்படிவிதித்தல்: ௪. பெலிஸ்தியருக்குத்தண்டனை வருமெனக்காட்டல்: ௮. மோவாபியருக்குத் தண்டனைவருமென்றுதெரிவித்தல்: ௰௨. கூஷியருக்கும் அஷூரியருககுந் தண்டனை வருமென்று அறியப்படுத்தல்.*

ஒருவரும்விரும்பாதசாதியாரே, நியமம்வெளிப் ௧
படுமுன்னும், பறக்கிறபதரைப்போலநாள்செல்
லுமுன்னும், யெகொவாவின் உக்கிரகோ

(௧. அதி. ௩.) ஒசி.௪.௩. எசேக்.௭.௰௯. மத்.௰௩.௪௧. (௪) ௨.இரா.௨௩.௪,௫. ஓசி.௰.௫. (௫) ௨.இரா.௨௩.௰௨. எரே. ௰௯.௰௩. ௧.இரா.௰௮.௨௧. ௨.இரா.௰௭.௩௩,௪௧. ஏசா.௪௮.௧. ஓசி.௪.௰௫. யோசு.௨௩.௬. ௧.இரா.௰௧.௩௨. (௬) ஏசா. ௧.௪. எரே.௨.௰௩,௰௭. ஓசி.௭.௭. (௭) அப.௨.௨௰. சக.௨.௰௩. ஏசா.௰௩.௬. ஏசா.௩௪.௬. வெளி.௰௯.௰௭. (௮) எரே.௩௯.௬. (௰) ௨.நாளா.௩௩.௰௪. (௰௧) யாக்.௫.௧. (௰௨) எரே.௪௮.௰௧. ஆமோ.௬.௧. (௰௩) உபா.௨௮.௩௰,௩௯. ஆமோ.௫.௰௧. மீகா.௬.௰௫. (௰௪) யோவே.௨.௧,௰௧. (௰௫) ஏசா.௨௨.௫. யோவே.௨.௨,௰௧. ஆமோ.௫.௰௮. (௰௬) எரே.௪.௰௯. (௰௭) உபா.௨௮.௨௮. ஏசா.௫௯.௰. எரே.௯.௨௨. (௰௮) நீதி.௰௧.௪. எசேக்.௭.௰௯.—(௨. அதி. ௧.) யோபு.௨௧.௰௮. சங்.௧.௪. ஏசா.௰௭.௰௩. ஓசி.௰௩.௩ ௨.இரா.௨௩.௨௬.

பம்உங்கள்மேல்வருமுன்னும்,யெகோவாவு
டைய கோபத்தின்நாள் உங்கள்மேல்வருமுன்
௨, ௩ னும்,—நீங்கள் கூட்டங்கூடிவாருங்கள்.-யெ
கோவாவின் நியாயங்களுக்கேற்க நடக்கை
யும், தேசத்தில் தாழ்ந்தசிந்தையுமுள்ளவர்களே;
நீங்களெல்லாரும் அவரைத்தேடுங்கள், நீதியைத்
தேடுங்கள்; மனத்தாழ்மையைத்தேடுங்கள், யெ
கோவாவின் கோபத்தின்நாளில் நீங்கள் ம
றைக்கப்படவுங்கூடும்.
௪ காசாவிடப்படும், அஷ்கிலோன் பாழாகும்:
மத்தியானகாலத்தில் அஷ்தோத்தைத்துரத்திவிடு
௫ வார்கள், எக்ரோன் நிருமூலமாக்கப்படும்.—ஐ
யோ, சமுத்திரதீரத்தில் வசிக்கிற கிரேத்தியசாதி
யாரே,உங்களுக்கு ஆபத்துவரும்,உங்களுக்குவி
ரோதமாய் யெகோவாவின் வாக்குண்டு;பெ
லிஸ்தியரின் தேசமாகியகானானே, இனிஉன்
னில் வசிப்பாரிராதபடிக்கு உன்னை அழிப்
௬ பேன்.—கடல் ஓரத்திலுள்ள தேசம் மேய்ச்சலுக்
கிடமும், மேய்ப்பரின்குடிலும், ஆட்டுத்தொழு
௭ வங்களுமுள்ளதாகும்.-அந்தத்தேசத்திேரம்,யூ
தாவமிசத்தாரில் மீந்திருப்பவர்களுக்கு உரித்தா
கும்; அவர்கள் அதில்மேய்ப்பார்கள்: சாயங்கா
லத்திலே அஷ்கிலோனிலுள்ள வீடுகளில் படுத்
துக்கொள்வார்கள்: அவர்களுடைய தேவனா
கிய யெகோவா அவர்கள்மேல் சிந்தைவை
த்து, அவர்களைச்சிறைமீட்டுக்கொள்வார்.
௮ மோவாபுசெய்த அவமானத்தையும், அம்மோ
ன் புத்திரர்என்சனங்களைஅவமதித்து, அவர்கள்
எல்லைகளைத்தள்ளி, தங்களை உன்னதப்படுத்தி
௯ ன செய்தியையும் நான்கேட்டேன்.—ஆதலால்
மோவாபு சோதோமைப்போலவும், அம்மோன்
புத்திரர் கொமோராவைப்போலவுமாகி, காஞ்
சொறிபடரும்இடமும், உப்பளமும், நித்தியப்
பாழுமாயுமிருக்கும்:என்சனங்களில்மீந்திருப்ப
வர்கள் அவர்களைக்கொள்ளையாடுவார்கள், எனக்
குரியசாதியாரில்மீந்திருப்பவர்கள்அவர்களைச்சு
தந்தரித்துக்கொள்ளுவார்களென்று என்நித்தியத்
துவத்தைக்கொண்டு ஆணையிடுகிறேனென்பதை
இஸ்ரவேலின் தேவனுஞ் சேனைபதியுமாகிய
௰ யெகோவாசொல்லுகிறார்.-அவர்கள் சேனைப
தியாகிய யெகோவாவின் சனங்களுக்குவி
ரோதமாகத் தங்களை உன்னதப்படுத்தி, அவர்
களை நிந்தித்தபடியினால்,அவர்களுடைய அகங்
காரத்தினிமித்தம் இது அவர்களுக்குக்கிடைக்
௰௧ கும்.—யெகோவா அவர்களுக்குப் பயங்கர
மானவராயிருப்பார்: பூமியிலுள்ள சகல தே
வர்களையும் மெலிவடையப்பண்ணுவார்; தீவுக
ளிலுள்ள அந்நியசாதியார் ஒவ்வொருவருந் தங்
கள் தங்கள் ஸ்தானங்களில் அவருக்கு ஆராதனை
செய்வார்கள்.
கூஷ்தேசத்துச் சனங்களே, நீங்களும், என் ௰௨
கட்கத்தினால் கொலைசெய்யப்படுவீர்கள்.-அவர் ௰௩
வடதேசத்துக்குத் தமதுகையை நீட்டி, அஷூரி
யவை நாசப்படுத்துவார்; நினிவேயை வனாந்த
ரத்தைப்போலவெறுமையாக்கி, வறட்சியானஸ்
தானமாக்குவார்.—மந்தைகளும், நானாசாதிமிரு ௰௪
கங்களும் அதின்மத்தியில் படுத்துக்கொள்ளும்:
அதிலுள்ள போதிகைகளின்மேல் நாரையும்,
கோட்டானும் இராத்தங்கும்; பலகணிகளில் சத்
தந் தொனிக்கும்; வாசற்படிகளில் சேதந் தங்
கும்:எரஸ்மரங்களின்மச்சைத்திறந்துவிடுவார்.-
நான்தான்,என்னையன்றி வேறில்லையென்று தன் ௰௫
னுடைய சிந்தையில் எண்ணி, நிருவிசாரமாய்க்
களித்திருந்த நகரம் இதுவே: இது எப்படிப் பாழ்
பட்டது, சீவசெந்துக்கள் படுக்கும் ஸ்தானமு
மாயிற்று; இதின்வழியாய்ச் செல்லும் ஒவ்வொ
ருவனுந் தன்கையை ஆட்டிச்சீறுவான்.

## ௩. அதிகாரம்.

௧. யெரூஷலேமைக்கண்டித்தல்: ௮. இஸரவே
லின் மீட்சியை அபேட்சித்தல்: ௰௪. தேவன்
செய்யும் ரட்சிப்பைக் குறித்துச் சந்தோஷப்
படல்.

ஐயோ, அழுக்கும்அசுசியுமுள்ளதாகி,உபத்திர ௧
வப்படுத்தும்நகரிக்குஆபத்துவரும்.—அவள்வாக் ௨
குக்குச் செவிகொடுக்கவில்லை; உபதேசத்தை
உட்கொள்ளவில்லை; அவள் யெகோவாவில்
விசுவாசம் வைக்கவில்லை; தன் தேவனைச் ச
மீபித்து வரவில்லை.—அவள் மத்தியிலுள்ள பிர ௩
புகள் கருச்சிக்கிற சிங்கங்கள்; அவள் நியாயா
திபதிகள் சாயங்காலத்தில் புறப்படும் கோனாய்
கள்; அவர்கள் விடியற்காலத்துக்குமுன் எல்லா
எலும்புகளையும் பட்சிப்பார்கள்.—அவள் தீர்க் ௪
கதரிசிகள் வீணர்கள், வஞ்சகர்: அவளுடைய
ஆசாரியர்கள் பரிசுத்தஸ்தானத்தை அசுத்தப்படுத்
துகிறார்கள். அவர்கள் நியாயப்பிரமாணத்தைப்
புரட்டுகிறார்கள்.—நீதிபரராகிய யெகோவா ௫
அதின் மத்தியில் இருக்கிறார்; அவர் அநியா
யஞ்செய்யார்: காலைதோறும் அவர் தமது நியா
யத்தை வெளிப்படுத்துகிறார், அவர் செய்யாதொ
ழியார்; அநியாயக்காரனோ இலச்சையை அறி
யான்.—நான் அந்நியசாதியாரைச் சேதித்தேன்: ௬
அவர்களுடைய கோடிக்கற்கள் பாழாயின, அ

(௨) யோவே.௨.௰௬. (௩) ஆமோ.௫.௬,௰௫. யோவே.௨.௰௪. யோனா.௩.௯. (௪) எரே.௪௭.௪,௫. ஆமோ.௧.௬,௭,௮. சக.௯.௫,௬. எரே.௬.௪. (௫) எசேக்.௨௫.௰௬. யோசு.௰௩.௨. (௬) ஏசா.௰௭.௨. (௭) ஏசா.௰௧.௰௧. மீகா.௪.௭. ஆகா.௧.௰௨. யாத்.௪.௩௧. லூக்.௧.௬௮. எரே.௨௯.௰௪. (௮) எரே.௪௮.௨௭. எசேக்.௨௫.௩,௬,௮. எரே.௪௯.௧. (௯) ஏசா.௰௫. ஆமோ.௨.௧. ஆமோ.௧.௰௩. ஆதி.௰௯.௨௫. உபா.௨௯.௨௩. ஏசா.௰௩.௰௯. எரே.௪௯.௰௮. (௰) ஏசா.௰௬.௬. எரே.௪௮.௨௯. (௰௧) மல்.௧.௰௧. யோவா.௪.௨௧. ஆதி.௰.௫. (௰௨) ஏசா.௰௮.௧. எரே.௪௬.௯. எசேக்.௩௰.௯. (௰௩) ஏசா.௰.௰௨. எசேக்.௩௧.௩. நாகூ.௧.௧. (௰௪) ஏசா.௰௩.௨௧,௨௨. ஏசா.௩௪.௰௧,௰௪. எரே.௨௨.௰௪. (௰௫) ஏசா.௪௭.௮. வெளி.௰௮.௭. யோபு.௨௭.௨௩. புல.௨.௰௫. எசேக்.௨௭.௩௬. நாகூ.௩.௰௯.—(௩.அதி.௨.)எரே.௨௨.௨௧.(௩)எசேக்.௨௨.௨௭. மீகா.௩.௯,௰,௰௧. அபகூ.௧.௮. (௪) எரே.௨௩.௰௧,௩௨. புல.௨.௰௪. ஓசி.௯.௭. எசேக்.௨௨.௨௬.(௫)உபா.௩௨.௪. மீகா.௩.௰௧. எரே.௩.௩.

வர்களுடைய வீதிகளில் ஒருவரும் உலாவிவரா
தபடி வெறுமையாக்கினேன்: அவர்களுடைய
நகரங்களில் மனுஷனுகிலும், குடியாகிலும் இ
௭ ராதபடிக்கு நாசப்படுத்தினேன்.—உன் வாசஸ்
தானஞ் சேதிக்கப்படாதபடிக்கு நீ என்க்குப்ப
யந்து, உபதேசத்தை உட்கொள்ளுவாயே என்
றேன்; நான் அவர்களை எப்படித் தண்டித்தும்,
அவர்கள் விரைந்து தங்கள் எல்லாக்கிரியைக
ளையுங் கேடாக்கிஞர்கள்.
௮ ஆகையால் நான் கொள்ளையாட எழுந்திருக்
கும்நாள்வரைக்கும் என்னைஎதிர்க்காதிருங்களெ
ன்று யெகோவா சொல்லுகிறூர்: அந்நியதே
சத்தாரைச்சேர்க்கவும், சகல இராச்சியத்தாரை
யும் ஏகமாய்க்கூட்டவும், என்கொபமும் என்
உக்கிரமும் அவர்கள்மேல்சொரியவும் நான்தீர்
மானம்பண்ணினேன்:பூமியெல்லாம்என் குரோ
௯ தத்தின்அக்கினியினுல் பட்சிக்கப்படும்.—அப்
பொழுது அவர்கள்யெகோவாவின்நாமத்தில்
பிரார்த்தனைபண்ணுகிறதற்கும், ஒருமனப்பட்டு
அவரைச்சேவிக்கிறதற்கும் நான்சனங்களுக்குச்
௰ சுத்தபாஷையைப் போதிப்பேன்.—என்னிடத்
தில் பிரார்த்தனைசெய்பவர்களாகிய சிதறஅடிக்
கப்பட்டவர்களின்குமாரத்தி கூஷின் நதிகளுக்
கு அக்கரையினின்று என்னுடைய காணிக்கை
௰௧ யைக்கொண்டுவருவாள்.—நீ எனக்கு விரோத
மாய்க் கட்டளையைமீறிச்செய்திருந்த உன்சகல
கிரியைகளினிமித்தமும் அந்நாளில் இலச்சைஅ
டையமாட்டாய்: அப்பொழுதுநான் உன்மேன்
மையைக்குறித்துக் களிகூர்ந்தவர்களை உன்மத்தி
யினின்று தூரப்படுத்துவேன், நீ இனி என்னு
டைய பரிசுத்தமலையைக்குறித்து அகங்காரங்
௰௨ கொள்ளமாட்டாய்.—நான் உன்மத்தியிலே தரித்
திரரும் திக்கற்றவர்களுமாகிய சனங்களை மீந்தி
ருக்கவிடுவேன், அவர்கள் யெகோவாவின்
௰௩ நாமத்தில் விசுவாசமாயிருப்பார்கள்.—இஸரவே
லில் மீந்திருப்பவர்கள் பாவஞ்செய்யார்கள்,
பொய்சொல்லார்கள்; சூதுள்ளநாவு அவர்கள்வா
யிலேயில்லை: அவர்கள் புசித்துப்படுத்துக்கொள்
வார்கள், அவர்களைப் பயப்படுத்துவார் ஒருவ
ருமில்லை.
சீயோன் குமாரத்தியே, களிகூரு; இஸரவே ௰௪
லரே, சத்தமிடுங்கள்; யெரூஷலேமின் குமாரத்
தியே, உன் பூரண இருதயத்தோடும் மகிழ்ந்துசந்
தோஷப்படு.—யெகோவா உன் தண்டனைக ௰௫
ளை அகற்றிஞர், அவர் உன் சத்துருவைத் தூரப்
படுத்திஞர்: இஸரவேலின் இராசாவாகிய யெ
கோவா உன்மத்தியிலிருக்கிறூர்:ஆபத்தைஇனி
நீ காணமாட்டாய்.—அந்நாளிலே யெரூஷலே ௰௬
மைநோக்கி, பயப்படாதேயென்றும், சீயோனை
நோக்கி, உன்கைகள் மெலிவடைய விடாதே
யென்றுஞ்சொல்லப்படும்.—உன் மத்தியிலிருக்கி ௰௭
ற உன் தேவனுகிய யெகோவா பலமுள்ள
வர்; அவர் இரட்சிப்பார், அவர் உன்மேல் களி
கூர்ந்துசந்தோஷப்படுவார், அவர்உன்மேல்வை
க்கும்அன்பிஞல்பூரித்திருப்பார்,அவர்உன்மேல்
பாட்டுப்பாடிஆனந்தங்கொள்ளுவார்.—மகோற்ச ௰௮
வத்தில் போகாமல்துக்கித்து, உன்னுடன்கூடி,
உன்அவமானம்என்னும் பாரஞ்சுமந்திருந்தவர்க
ளைஏகமாய்க்கூட்டுவேன்.-பாருங்கள்,அக்காலத் ௰௯
தில் உன்னைத்துக்கப்படுத்தினயாவரையுந் தண்
டிப்பேன்: நொண்டியானவளை இரட்சிப்பேன்,
துரத்திவிடப்பட்டவளைக் கூட்டுவேன்; அவர்
கள்வெட்கம்அனுபவித்த சகலதேசங்களிலும்அ
வர்களைப் புகழ்ச்சியுங் கீர்த்தியுமுள்ளவர்களாய்
ஏற்படுத்துவேன்.—அக்காலத்திலே நானுங்களைக் ௨௰
கூட்டிக்கொண்டுவருவேன், அக்காலத்தில் உங்
களைச் சேர்த்துக்கொள்ளுவேன்: உங்களுக்குப்
பிரத்தியட்சமாய்ச் சிறையினின்று நான் உங்
களை மீட்டுக்கொள்ளுங்காலத்தில், பூமியிலுள்ள
எல்லாச்சனங்கள்மத்தியிலும்,கீர்த்திக்கும்புகழ்ச்
சிக்கும் உங்களைப் பாத்திரராக்குவேனென்று
யெகோவா சொல்லுகிறூர்.

(௭) எரே.௮.௯. ஆதி.௯.௰௨. (௮) சங்.௩௭.௩௪. நீதி.௨௰.௨௨. யோவே.௩.௨. (௯) ஏசா.௰௯.௰௮. (௰) சங்.௬௮.௩௧. ஏசா.௬௰.௪,. மல்.௧.௰௧. அப்.௮.௨௭. (௰௧) எரே.௭.௪. மீகா.௩.௰௧. மத்.௩.௯. (௰௨) ஏசா.௰௪.௩௨. சக.௰௧.௰௧. மத்.௫.௩. ௧.கொரி.௧.௨௭,௨௮. யாக்.௨.௫. (௰௩) மீகா.௪.௭. ஏசா.௬௰.௨௧. ஏசா.௬௩.௮. வெளி.௰௪.௫. எசேக். ௩௪.௨௮. மீகா.௪.௪. (௰௪) ஏசா.௰௨.௬. சக.௨.௰. (௰௫) யோவா.௧.௪௯. எசேக்.௪௮.௩௫. வெளி.௭.௰௫. (௰௬) ஏசா.௩௫.௩,௪. எபி.௰௨.௰௨. (௰௭) உபா.௩௰.௯. ஏசா.௬௨.௫. எரே.௩௨.௪௧. (௰௮) புல.௨.௬. (௰௯) எசேக்.௩௪. ௰௬. மீகா.௪.௬,௭. (௨௰) ஏசா.௰௧.௰௨. எசேக்.௨௮.௨௫. ஆமோ.௯.௰௪.

# ஆகாய்.

## ௧. அதிகாரம்.

௧. தேவனுடைய ஆலயத்தைக் கட்டத்தாமதித்த சனங்களைக் கண்டித்தல்: ௭. ஆலயத்தைக் கட்டும்படி ஏவல்: ௰௨. தேவன் சகாயஞ்செய்வாரென்று வாக்குத்தத்தஞ்செய்தல்.

தாரியாவேஷ் இராசா அரசாண்ட இரண்டாம்
வருஷம் ஆறாமாதம் முதலாந்தினத்தில், ஆகாய்
தீர்க்கதரிசியைக்கொண்டு, ஷியல்தியேலின் புத்
திரனாகிய செருபாபேலென்னும் யூதாவின் அதி
காரிக்கும், யோசதேக்கின் புத்திரனாகிய யோ
சுவாவென்னும் பிரதான ஆசாரியனுக்குங் கி
௨ டைத்த யெகோவாவின் வாக்கு,—காலம்,
யெகோவாவின் வீட்டைக் கட்டுகிறதற்கு
உபயோகமான காலம் இன்னம்வரவில்லையென்
று இந்தச்சனங்கள்சொல்லுகிறார்களென்பதைச்
சேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறா
௩ ரென்றது.—ஆகாய் தீர்க்கதரிசியைக்கொண்டு கி
௪ டைத்தயெகோவாவின்வாக்கு,-இந்தவீடு
பாழாயிருக்குஞ் சமயம், நீங்கள்மச்சுப்பரவப்
பட்ட உங்கள்வீடுகளில் வாசம்பண்ணுதற்கேற்
௫ ற காலமா.—ஆதலால் இப்பொழுது சேனாபதி
யாகிய யெகோவா இவ்வாக்குச் சொல்லுகி
றார்; நீங்கள் உங்கள்வழிகளைச்சிந்தித்துக்கொள்
௬ ளுங்கள்.—நீங்கள் மிகுதியாய் விதைத்துஞ்சொற்
பஞ் சேர்த்துக்கொண்டீர்கள்; நீங்கள் புசித்துந்
திருத்திப்படவில்லை; நீங்கள் குடித்தும் பூரணப்
படவில்லை; வஸ்திரந்தரித்தும் ஒருவரும் உஷ்ட
ணங்கொள்ளவில்லை; கூலியைச் சம்பாதிக்கிற
வன் பொத்தலானபைமுடிப்பில் அதை வைக்
கிறானென்று சொல்லிற்று.
௭ சேனாபதியாகிய யெகோவா இவ்வாக்குச்
சொல்லுகிறார்; நீங்கள் உங்களுங்கள்வழிகளைச்
௮ சிந்தித்துக்கொள்ளுங்கள்.—நீங்கள்மலையில்ஏறிப்
போய், மரத்தைக்கொண்டுவந்து, ஆலயத்தைக்க
ட்டுங்கள்;நான்அதின்மேல் பிரியம்வைப்பேன்,
என்மகிமைவிளங்குமென்று யெகோவாசொ
௯ ல்லுகிறார்.-மிகுதிவருமென்று நீங்கள்எதிர்பார்த்
திருக்கச் சொற்பங் கிடைத்தது; நீங்கள்வீட்
டில் அதைச்சேர்க்க, நான் அதின்மேல் ஊதி
னேன். யாதினிமித்தம்என்வீடுபாழாயிருக்க,நீங்
கள்உங்களுங்கள்வீடுகளுக்கு ஓடிப்போயிருக்கி
௰ றீர்கள்.—இதினிமித்தமல்லவா உங்கள்மேலுள்ள
வானத்தின்பனிநின்றுவிட்டது, பூமியின்பலன்
௰௧ நின்றுவிட்டது.—நிலத்தின்மேலும், மலைகளின்
மேலும், தானியத்தின்மேலும், புதுத்திராட்சர
சத்தின்மேலும், எண்ணெயின்மேலும், பூமி வி
ளைவிக்குமெல்லாவற்றின்மேலும், மனுஷர்மே
லும், ஆடுமாடுகள்மேலும், கைசெய்யும் எல்லாக்
கிரியைகளின்மேலும் மழை தாழ்ச்சியாகும்படி
நான் கற்பித்தேனென்று சேனாபதியாகிய யெ
கோவா சொல்லுகிறார்.
அப்பொழுது ஷியல்தியேலின் புத்திரனாகி ௰௨
ய செருபாபேலென்னும் யோசதேக்கின் புத்தி
ரனும், மகா ஆசாரியனுமாகிய யோசுவாவும்,
சனங்களில் மீந்திருந்த யாவருந் தங்கள் தேவ
னாகிய யெகோவாவின் வாக்குக்கும், தங்
கள் தேவனாகிய யெகோவா ஆகாய் தீர்க்
கதரிசியை அனுப்பினதுபோல அவனுடைய
வாக்குகளுக்குஞ் செவிகொடுத்தார்கள், சனங்
கள் யெகோவாவின் சமுகத்தில்பயமடைந்
தார்கள்.—அப்பொழுது யெகோவாவின் ௰௩
தூதனாகிய ஆகாய், யெகோவா தன்னை அ
னுப்பி இட்டகட்டளைப்படி சனங்களைநோக்
கி, நான் உங்களோடிருக்கிறேனென்று யெ
கோவா சொல்லுகிறாரென்றான்.—பின்புயெ ௰௪
கோவா, ஷியல்தியேலின்புத்திரனும் யூதாவி
ன்அதிகாரியுமாகிய செருபாபேலினுடைய ஆவி
யையும், யோசதேக்கின்புத்திரனும் மகா ஆசா
ரியனுமாகிய யோசுவாவின் ஆவியையும், சனங்
களில்மீந்திருந்தவர்கள் எல்லாருடைய ஆவியை
யும் எழுப்ப,—தாரியாவேஷ் இராசா அரசாண்ட ௰௫
இரண்டாம்வருஷம் ஆறாமாதம்இருபத்தினாலாந்
தினத்தில், அவர்கள்போய், தங்கள் தேவனுஞ்
சேனாபதியுமாகிய யெகோவாவின் ஆலயத்
தின் கிரியையைச்செய்யத்தொடங்கினார்கள்.

## ௨. அதிகாரம்.

௧. முந்தினஆலயத்திலும் பிந்தினஆலயம்அதியுத்தமமென்று சொல்லி அதைக்கட்டும்படி சனங்களை ஏவல்: ௰. பாவத்தினாலே கிரியைதடுக்கப்படல்: ௨௰. தேவன் செருபாபேலுக்குவாக்குத்தத்தஞ்செய்தல்.

ஏழாமாதம் இருபத்தோராந்தினத்தில், ஆகாய் ௧
தீர்க்கதரிசியினால் கிடைத்தயெகோவாவின்
வாக்கு,—நீ, ஷியல்தியேலின் புத்திரனும், யூ ௨
தாவின் அதிகாரியுமாகிய செருபாபேலையும்,
யோசதேக்கின்புத்திரனும், மகாஆசாரியனுமா
கிய யோசுவாவையும், சனங்களில் மீந்திருப்ப
வர்களையும் நோக்கி,—இந்த ஆலயத்தின் முந்தி ௩
ன மகிமையைக்கண்டவர்களில் மீந்திருப்பவர்
உங்களுக்குண்டோ, இப்பொழுது அது உங்க

(௧. அதி. ௧.) எஸ்றா.௪.௨௪. சக.௧.௧. ௧.நாளா.௩.௰௭,௰௯. எஸ்றா.௩.௨. மத்.௧.௰௨. லூக்.௩.௨௭. ௧.நாளா.௬.௰௫. (௩) எஸ்றா.௫.௧. (௪) ௨.சாமு.௭.௨. சங்.௱௩௨.௩,.(௫)புல.௩.௪௰. (௬) உபா.௨௮.௩௮. ஓசி.௪.௰. மீகா.௬.௰௪,௰௫. சக.௮.௰. (௰) லேவி.௨௬.௰௯. உபா.௨௮.௨௩. ௧.இரா.௮.௩௫. (௰௧) ௧.இரா.௰௭.௧. ௨.இரா.௮.௧. (௰௨) எஸ்றா.௫.௨. (௰௩) மத்.௨௮.௨௰. ரோ.௮.௩௧. (௰௪) ௨.நாளா.௩௬.௨௨. எஸ்றா.௧.௧. (௰௫) எஸ்றா.௫.௨,௮.—(௨.அதி.௩) எஸ்றா.௩.௰௨. சக.௪.௰.

ளுக்கு எப்படித்தோன்றுகின்றது, அதைப்பார்க்
கிலும் உங்கள்பார்வைக்கு மிகவும் அற்பமல்ல
௪ வா.—ஆனாலும் யெகோவா இவ்வாக்குச்
சொல்லுகிறார்; சிருபப்பெலே, இப்பொழுது நீ
திடனாயிரு; யோசாதெக்கின்புத்திரனும், மகா
ஆசாரியனுமாகிய யோசுவாவே, நீ திடனாயிரு;
தேசத்துச் சனங்களே, நீங்களெல்லாருந் திடங்
கொண்டிருந்து வேலையை நடத்துங்களென்று
யெகோவா சொல்லுகிறார்: நான் உங்களோ
டிருக்கிறேனென்று சேனைபதியாகிய யெகோ
௫ வா சொல்லுகிறார்.—நீங்கள் எகிப்தினின்று பு
றப்பட்டபொழுது, நான் உங்களோடே பண்
ணின உடன்படிக்கையின்வாக்கின் படி, என்
ஆவி உங்களுக்குள் இருக்கின்றது: பயப்படாதி
௬ ருங்கள்.—சேனைபதியாகிய யெகோவா இவ்
வாக்குச்சொல்லுகிறார்; நான் சொற்பகாலத்துக்
குள்ளேவானத்தையும், பூமியையும், சமுத்திரத்
தையும், உலர்ந்ததரையையும் இன்னும் ஒருத
௭ ரம் அசையப்பண்ணுவேன்.—நான் சகலதேசத்
துச் சனங்களையும் அசையப்பண்ணுவேன், சரு
வதேசத்தாராலும் விரும்பப்படத்தக்கவர் வரு
வார்: நான் இந்த ஆலயத்தை மகிமையினாலே ப
ரிபூரணப்படுத்துவேனென்று சேனைபதியாகிய
௮ யெகோவா சொல்லுகிறார்.—வெள்ளி என்
னுடையது, பொன் என்னுடையதென்று சேனை
௯ பதியாகிய யெகோவா சொல்லுகிறார்.—பிந்
தின இந்த ஆலயத்தின் மகிமை முந்தினதுடை
யதிலும் அதிகமாகுமென்று சேனைபதியாகிய
யெகோவா சொல்லுகிறார்: இந்தஸ்தானத்
திலே சமாதானத்தை அருளுவேனென்று சே
னைபதியாகிய யெகோவா சொல்லுகிறாரென்
று சொல்லிற்று.
௰ தாரியாவேஷ் அரசாண்ட இரண்டாம் வரு
ஷம் ஒன்பதாமாதம் இருபத்து நாலாந்தினத்
தில், ஆகாய் தீர்க்கதரிசியினால் கிடைத்த யெ
௰௧ கோவாவின் வாக்கு,—நீ ஆசாரியர்களிடத்
௰௨ தில், நியாயப்பிரமாணத்தைக் குறித்து,—ஒரு
வன் தன்வஸ்திரத்தின் தொங்கலில் பரிசுத்த மா
மிசத்தை வைத்துக்கொண்டுபோகையில், தன்
வஸ்திரத்தின்தொங்கல் அப்பத்தையாயினும், சா
தத்தையாயினும், திராட்ச ரசத்தையாயினும்,
எண்ணெயையாயினும், மற்றெந்த உணவுப்பொ
ருளையாயினுந்தொட்டால், பரிசுத்தமாகுமாவெ
ன்று சேனைபதியாகிய யெகோவா கேட்கச்
சொல்லுகிறாரென்றுசொல்ல, ஆசாரியர்கள், ஆக
௰௩ மாட்டாதென்றுஉத்தரஞ்சொன்னார்கள்.—பின்பு
ஆகாய், பிணத்தால் அசுசி அடைந்தவன்அவை
களில் எதையேனுந் தொட்டால் அது அசுசிப்
படுமாவென்று கேட்க, ஆசாரியர்கள் அசுசிப்
படுமென்று உத்தரஞ்சொன்னார்கள்.—அப்பொ ௰௪
ழுது ஆகாய்அப்படியே இந்தச்சனங்களும், இந்
தச்சாதியாரும் என் சமுகத்திலிருக்கிறார்கள்; இ
வர்கள் கைசெய்யுங்கிரியைகள் ஒவ்வொன்றும்
அப்படியேயிருக்கின்றது; ஆதலால்இவர்கள்செ
லுத்தினது அசுசிப்பட்டிருக்கிறதென்று ஆண்
டவர்சொல்லுகிறார்.—யெகோவாவின் ஆ ௰௫
லயமுண்டாகும்படி கல்லின்மேல் கல்லுவைக்
கப்படுவதற்குமுன்னும், பூருவகாலமுதல் இது
வரைக்கும் நடந்ததை இப்பொழுது சிந்தித்
துக்கொள்ளும்படி உங்களைவேண்டுகிறேன்.—
ஒருவன் இருபது அரிக்கட்டு அளவுள்ள அம் ௰௬
பாரத்தினிடத்தில் வந்தபொழுது பத்து இருந்த
து: ஒருவன் ஆலையின்தொட்டியில் ஐம்பதுபூரா
எடுக்கவர இருபது இருந்தது.—உங்கள்கைகள் ௰௭
செய்யும்வேலைகளெல்லாவற்றிலேயுங்கருக்காயி
னாலும், விஷப்பனியினாலும், கன்மழையினாலும்
உங்களை அடித்தேன்; ஆயினும் நீங்கள் என்னி
டத்தில் திரும்பவில்லை.—இதுமுதல் ஆராய்ந்து ௰௮
சிந்தித்துப்பாருங்கள், ஒன்பதா மாதம் இரு
பத்துநாலாந்தினமாகிய இந்நாளும் யெகோ
வாவின் ஆலயத்தின் அத்திபாரம்போடப்பட்
டநாளுக்கு முதல் நடந்ததைச் சிந்தித்துக்
கொள்ளுங்கள்.—விதை, தானியக்களஞ்சியத்தில் ௰௯
சேர்க்கப்பட்டதோ; திராட்சக்கொடியும், அத்தி
மரமும், மாதுளஞ்செடியும், சீதவிருட்சமும்இன்
னுங் கனிகொடுக்கவில்லை: நான் இன்றுமுதல்
உங்களை ஆசீர்வதிப்பேனென்று யெகோவா
சொல்லுகிறாரென்றான்.
பின்னும் இருபத்துநாலாந்தினமாகிய அந் ௨௰
நாளில், ஆகாய்க்குக் கிடைத்த யெகோவா
வின் வாக்கு,—நீ, யூதாவின் அதிகாரியாகிய சி ௨௧
ருபப்பெலினிடத்தில், நான்வானத்தையும் பூமி
யையும் அசையப்பண்ணுவேன்.—இராச்சியங்க ௨௨
ளின் சிங்காசனத்தைக் கவிழ்த்துப்போடுவேன்,
அந்நியதேசத்தாருடைய இராச்சியங்களின் ப
ராக்கிரமத்தைஅழிப்பேன்; ரதங்களையும், அவை
களில் ஏறி இருப்பவர்களையும் கவிழ்த்துப்போடு
வேன்; குதிரைகளோடே அவைகளின்மேல்ஏறி
இருப்பவர்கள்யாவருந் தங்கள் தங்கள் சகோதர
ரின்கட்கத்தினால் விழுவார்களென்று சொல்லச்
சொல்லிற்று.—சேனைபதியாகிய யெகோவா ௨௩
இவ்வாக்குச்சொல்லுகிறார்; ஷியல்தியேலின்
புத்திரனும், என்தாசனுமாகிய சிருபப்பெலே,
நான்அந்நாளில் உன்னை அங்கிகரித்து, முத்திரை
மோதிரமாக ஏற்படுத்துவேனென்று யெகோ
வா சொல்லுகிறார்: நான் உன்னைத்தெரிந்து
கொண்டேனென்றுசேனைபதியாகிய யெகோ
வா சொல்லுகிறார்.

(௪) சக.௮.௯. (௫) யாத்.௨௯.௪௫,௪௬. நிகி.௯.௨௰. ஏசா.௬௩.௰௧. (௬) எபி.௰௨.௨௬. யோவே.௩.௰௬. (௭) ஆதி.௪௯.௰. மல்.௩.௧. (௯) யோவா.௧.௰௪. சங்.௮௫.௮,௯. லூக்.௨.௰௪. எபே.௨.௰௪. (௰௧) லேவி.௰.௯,௰. உபா.௩௩.௮. மல். ௨.௭. (௰௩) எண்.௰௯.௰௧. (௰௪) தீத்.௧.௰௫. (௰௬) சக.௮.௰. (௰௭) உபா.௨௮.௨௨. ௧.இரா.௮.௩௭. ஆமோ.௪.௬,௮,௯, ௰,௰௧. எரே.௫.௩. (௰௮) சக.௮.௯. (௰௯) சக.௮.௰௨. (௨௧) எபி.௰௨.௨௬. (௨௨) தானி.௨.௪௪. மத்.௨௪.௭. மீகா. ௫.௰. சக.௪.௬. (௨௩) உன்.௮.௬. எரே.௨௨.௨௪. ஏசா.௪௨.௧.

# சகரியா.

## ௧. அதிகாரம்.

௧. பாவத்தினிமித்தம் மனஸ்தாபப்படும்படி விதித்தல்: ௭. குதிரை வீரர்களைப்பற்றிய திருஷ்டாந்தந் தெரிவித்தல்: ௰௨. யெருஷலேமின்சனங்களை ஆற்றும்படி தேவன் வாக்குத்தத்தஞ்செய்தல்: ௰௮. நாலுகொம்புகளையுந் தொழிற்காரர்சிலரையுந் தரிசனத்திலேகாணல்.

தாரியாவெஷ் அரசாண்ட இரண்டாம்வருஷம்
எட்டாமாதத்தில், இத்தோவின் பௌத்திரனும்
பெரிகாயாவின் புத்திரனுமாகிய சகரியாவென்
னுந் தீர்க்கதரிசிக்குக்கிடைத்த யெகோவா
௨ வின்வாக்கு,—யெகோவா உங்கள்முன்னோர்
௩ கள்மேல் மிகவும்பிரியவீனமாயிருந்தார்.—ஆத
லால் நீ அவர்களைநோக்கி,என்னிடந்திரும்புங்க
ளென்றுசேனாபதியாகிய யெகோவாசொல்லு
கிறார்; அப்பொழுது நான் உங்களிடந்திரும்
புவேனென்று சேனாபதியாகிய யெகோவா
௪ சொல்லுகிறார்.-நீங்கள் உங்கள்துன்னெறிகளையு
ம்,உங்கள்துர்க்கிரியைகளையும் விட்டுத்திரும்புங்
களென்றுசேனாபதியாகிய யெகோவாசொல்
லுகிறாரென்பதைப்பூருவகாலத்திலுள்ள தீர்க்கத
ரிசிகள் உங்கள் முன்னோரைநோக்கிச்சொல்லி
யும், அவர்கள்கேளாமலும், எனக்குச்செவிகொ
டாமலும்போனார்கள்,நீங்கள் அவர்களைப்போல்
நடவாதிருங்களென்று யெகோவாசொல்லு
௫ கிறார்.—உங்கள்பிதாக்கள் எங்கே, தீர்க்கதரிசிகள்
௬ என்றைக்குமிருக்கிறார்களா.—நான் என் தாசரா
கிய தீர்க்கதரிசிகளுக்குக் கற்பித்த என்வாக்குக
ளும்,என்பிரமாணங்களும்உங்கள்பிதாக்களிடத்
திற்பலிக்கவில்லையா; அவர்கள்திரும்பி,எங்களு
டைய நெறிகளுக்குங் கிரியைகளுக்குமேற்கச்
சேனாபதியாகிய யெகோவா எங்களுக்குச்
செய்யநினைத்ததுஎப்படியோ, அப்படியேஎங்க
ளுக்குச்செய்தாரென்றுசொல்லவில்லையாவென்
பதைச்சேனாபதியாகிய யெகோவாசொல்லச்
சொல்லுகிறாரென்றுசொல்லிற்று.
௭ தாரியாவெஷ் ஆளுகைசெய்த இரண்டாம்வ
ருஷம் செபாத்தென்னும் பதினோராமாதம் இரு
பத்துநாலாந்தினத்தில்,யெகோவாவின்வாக்
கு, இத்தோவின்பௌத்திரனும்,பெரிகாயாவின்
புத்திரனும், தீர்க்கதரிசியுமாகிய சகரியாவுக்குக்
௮ கிடைத்தது.—நான் இராத்திரியிலேதாழ்ந்தபூமியி
லிருந்த காதஸ்செடிக்குள்சிவப்புக்குதிரையில்ஏ
றிநின்றஒருபுருஷனைக்கண்டேன்; அவனுக்குப்
பின்னாகச்சிவப்பும், மங்கினநிறமும், வெண்மை
௯ யுமானகுதிரைகளிருந்தன.—அப்பொழுதுநான்
என் ஆண்டவனே, இவர்கள் யாவரென்றுகேட்
க, என்னோடேபேசினதூதன் இவர்கள் இன்னா
ரென்று உனக்குக் காண்பிப்பேனென்றான்.—
பின்பு காதஸ்செடிக்குள்நின்றபுருஷன் பூமியில் ௰
அங்குமிங்குந்திரியும்படி யெகோவா இவர்க
ளை அனுப்பினாரென்றான்.—அப்பொழுது அவர் ௰௧
கள்காதஸ்செடிக்குள்நின்ற யெகோவாவின்
தூதனைநோக்கி,உத்தரமாக, நாங்கள்பூமியில்அங்
குமிங்கும் திரிந்தோம், பூமிமுழுவதும் அமை
தலும், இளைப்பாறுதலுமுள்ளதாயிருக்கக் கண்
டோமென்றார்கள்.
அப்பொழுது யெகோவாவின் தூதன்சே ௰௨
னாபதியாகிய யெகோவாவே,நீர் எழுபதுவ
ருஷம்வரைக்கும்யெருஷலேமின்மேலும், யூதா
நகரங்களின்மேலுங் கோபங்கொண்டீர்; எது
வரைக்கும் அவைகளின்மேல் தயைசெய்யாமல்
தாமதிப்பீரென்றுசொல்ல,—என்னோடே பேசி ௰௩
ன தூதனுக்கு உத்தரமாக யெகோவா, உத்த
ம வாக்குகளையும், சமாதானவாக்குகளையும் அ
ருளினார்.-பின்பு என்னோடேபேசினதூதன்என் ௰௪
னைநோக்கி,சேனாபதியாகிய யெகோவா இவ்
வாக்குச்சொல்லுகிறார்; நான் யெருஷலேமினி
மித்தமும், சீயோனினிமித்தமும் மிகவும் வை
ராக்கியத்தைக்கொண்டிருக்கிறேன்.—நான் சற் ௰௫
றேபிரியவீனமாயிருந்தபொழுது, அவர்கள் துக்
கத்தை அதிகரிக்கவகைதேடினபடியினாலே,சுக
மாய்வாழுகிற அந்த அந்நியதேசத்தார்மேல் மிக
வுங்கோபங்கொண்டேன்.—ஆதலால் யெகோ ௰௬
வா, நான் மிகுந்ததயையோடே யெருஷலேமி
னிடத்தில் திரும்பிவந்தேனென்று சொல்லுகி
றார்: என் ஆலயம் அதிலே கட்டப்படும்,யெரு
ஷலேமின்மேல் அளவுநூல் பிடிக்கப்படுமென்
று சேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறா
ரென்று நீ சத்தமிட்டுக்கூறென்றான்.—பின்னும் ௰௭
என் நகரங்கள் நன்மையின்மிகுதியினால் பரம்
பிவிடும்; யெகோவா திரும்பவுஞ்சீயோனைத்
தேற்றுவார், திரும்பவும்யெருஷலேமைத்தெரிந்
துகொள்ளுவாரென்று சேனாபதியாகிய யெ
கோவா சொல்லுகிறாரென்று சத்தமிட்டுக்கூ
றென்றான்.
பின்பு நான் என்கண்களைஏறிட்டு,நாலுகொம் ௰௮
புகளைக்கண்டேன்.—அப்பொழுது நான் என் ௰௯
னோடேபேசின தூதனைநோக்கி, இவைகளென்
னவென்றுகேட்க, அவன் எனக்குத்தரமாக, இ
வைகள் யூதாவையும், இஸரவேலையும், யெருஷ
லேமையுஞ் சிதறஅடித்த கொம்புகளென்றான்.—

(௧. அதி. ௧.) எஸ்றா.௪.௨௪. ஆகா.௧.௧. எஸ்றா.௫.௧. மத்.௨௩.௩௫. (௩) எரே.௨௫.௫. மீகா.௭.௰௯. மல்.௩.௭. லூக். ௰௫.௨௰. யாக்.௪.௮. (௪) ஏசா.௩௧.௬. எசேக்.௰௮.௩௰. ஓசி.௰௪.௧. (௬) ஏசா.௫௫.௧. புல.௧.௰௮. (௮) யோசு.௫. ௰௩. வெளி.௬.௪.(௰)எபி.௧.௰௪.(௰௧)சங்.௱௩.௨௰,௨௧. (௰௨) சங்.௱௨.௰௩. வெளி.௬.௰. எரே.௨௫.௰௧,௰௨. தானி. ௯.௨. (௰௩) எரே.௨௯.௰. (௰௪) யோவே.௨.௰௮. (௰௫) ஏசா.௪௭.௬. (௰௬) ஏசா.௰௨.௧. (௰௭) ஏசா.௫௧.௩. ஏசா. ௰௪.௧. (௰௯) எஸ்றா.௪.௧,௪,௭.

௨௰ பின்பு யெகோவா எனக்குநாலுதொழிற்கார
௨௧ ரையுங்காண்பித்தார்.—இவர்கள்எதைச்செய்யும்
படிக்குவருகிறார்களென்றுகேட்டேன், அதற்கு
அவர், ஒருவனுந் தலைநிமிராதபடிக்கு அந்தக்
கொம்புகள்யூதாவைச்சிதறஅடித்தனவே, அவை
களுக்குப் பயமுறுத்தும்படிக்கும், யூதாவின்தே
சத்தைச் சிதறஅடிக்கத்தக்கதாகக்கொம்பைஎடுத்
தஅந்நியதேசத்தாருடையகொம்புகளைத்தள்ளிவி
டும்படிக்கும்இவர்கள்வந்திருக்கிறார்களென்றார்.

## ௨. அதிகாரம்.

௧. யெருஷலேமைஅளவுபடுத்தல்: சீயோனைமீட்டுக்கொள்ளல்: ௰. அவர்கள் வாழ்வடைவார்களென்றுதெரிவித்தல்.

பின்பு நான் என்கண்களை ஏறிட்டு, தன்கையில்
அளவுநூலைப் பிடித்துக்கொண்டிருந்த ஒருமனு
௨ ஷனைக்கண்டேன்.—நீர் எவ்விடத்திற்குப்போ
கிறீரென்றுநான்கேட்க, அவர் யெருஷலேமின்
அகலம் இவ்வளவென்றும், அதின் நீளம் இவ்வ
ளவென்றும் அறியும்படிக்கு அதை அளக்கிறதற்
௩ குப்போகிறேனென்றார்.—பின்பு என்னோடே
பேசினதூதன் புறப்பட்டபொழுது, வேறொரு
தூதன் புறப்பட்டு இவனைச்சந்திக்கும்படிவந்
௪ து,—இவனைநோக்கி, நீதுரிதமாய்ப்போய், அந்
தவாலிபனிடத்தில், சனங்களும், மிருகங்களும்
மிகுந்திருப்பதினால், மதிலில்லாத பட்டணங்க
ளைப்போல யெருஷலேம் வாசஸ்தலமாகும்:—
௫ நான் அவளைச்சுற்றிஅக்கினிமதிலாயிருப்பேன்,
அவள்மத்தியிலே மகிமைப்பிரகாசமாவேனென்
று யெகோவா சொல்லுகிறார்.
௬ ஆகாயத்துநான்குகாற்றுத்திசைகளிலும் உங்க
ளைச்சிதறப்பண்ணினேனென்று யெகோவா
சொல்லுகிறார்: ஓ, ஓ, நீங்கள் வடதேசத்தினின்
று ஓடிவாருங்களென்று யெகோவா சொல்
௭ லுகிறார்.—பாபேல் குமாரத்தியினிடத்தில் வசிக்
கிற சீயோனே, உன்னை விடுவித்துக்கொள்.—
௮ மகிமையுண்டாகும்படிக்கு உங்களைக்கொள்ளை
யிட்ட அந்நியதேசத்தாரிடத்தில்அவர்என்னை அ
னுப்பினார்:உங்களைத்தொடுகிறவன்அவருடைய
௯ கண்மணியைத் தொடுகிறான்.—பாருங்கள், நான்
என்கையை அவர்களுக்குவிரோதமாய் அசைப்
பேன், அவர்கள் தங்கள் தங்கள் ஊழியக்காரருக்
குக் கொள்ளைப்பொருள்போலாவார்கள்: அதி
னால் சேனைபதியாகிய யெகோவா என்னை அ
னுப்பினாரென்றறிவீர்களென்பதைச் சேனைபதி
யாகிய யெகோவா சொல்லுகிறார்.
௰ சீயோன் குமாரத்தியே,நீபாட்டுப்பாடிமகிழ்ச்
சியாயிருப்பாய்: பார், நான்வந்து உன்மத்தியில்
வாசம்பண்ணுவேனென்று யெகோவா சொல்
லுகிறார்.—அந்நாளில்அநேகசனங்கள் யெகோ ௰௧
வாவினிடத்தில்சேர்ந்து என்சனங்களாவார்
கள்: நான் உன்மத்தியிலே வாசம்பண்ணுவேன்,
அப்பொழுது சேனைபதியாகிய யெகோ
வா என்னை உன்னிடத்தில் அனுப்பினாரென்ற
றிவாய்.—யெகோவா பரிசுத்தமுள்ள தேசத் ௰௨
திலே யூதாவென்னுந் தமதுபங்கைச்சுதந்தரித்து,
திரும்பவும் யெருஷலேமைத் தெரிந்துகொள்வா
ரென்று சொல்லென்றான்.—சகல மாமிசமே, ௰௩
யெகோவாவின் சமுகத்தில் மவுனமாயிருங்
கள்: அவர் தமது பரிசுத்தமுள்ள வாசஸ்தலத்தி
னின்று எழுந்திருக்கிறார்.

## ௩. அதிகாரம்.

௧. யோசுவாவைக்குறித்துக் கண்ட தரிசனத்தினால் சீயோனுக்கு நன்மையுண்டாகுமென்று தெரிவிக்கப்படல்: ௮. கிளையென்னுங் கிறிஸ்துவருவாரென்று வாக்குத்தத்தஞ் செய்தல்.

பின்பு அவன் யெகோவாவின் தூதனுக்கு ௧
முன்பாகநின்ற மகா ஆசாரியனாகிய யோசுவா
வையும், அவனுக்குவிரோதஞ்செய்யும்படி அ
வன்வலப்பக்கத்தில்நின்ற சாத்தானையும் எனக்
குக்காண்பித்தான்.—யெகோவா சாத்தானை ௨
நோக்கி, சாத்தானே, யெகோவா உன்னைக்
கடிந்துகொள்ளக்கடவர்; யெருஷலேமைத் தெ
ரிந்துகொண்ட யெகோவாவே உன்னைக்
கடிந்துகொள்வாராக: இவன் அக்கினியினின்று
பறிக்கப்பட்ட கொள்ளியல்லவா என்றார்.—
அந்தச்சமையத்திலே யோசுவாஅழுக்குள்ளவஸ் ௩
திரங்களைத் தரித்துத் தூதனுக்கு முன்பாக நின்
றான்.—அவர்தமக்குமுன்பாகநின்றவர்களைநோக் ௪
கி,இவன் தரித்திருக்கிற அழுக்குள்ளவஸ்திரங்க
ளைக்களைந்துவிடுங்களென்றார். பின்பு அவனை
நோக்கி, பார், நான் உன்பாவத்தைஉன்னைவிட்
டு நீங்கும்படிபண்ணி,உனக்குச்சிறந்தவஸ்திரங்
களைத் தரிப்பித்தேனென்றார்.—இவன் தலையின் ௫
மேல்சௌந்தரியமுள்ள பாகையை வைப்பார்க
ளாகவென்று நான்சொல்ல, அவர்கள்சௌந்தரி
யமுள்ளபாகையை அவன்சிரசின்மேல்வைத்து,
அவனுக்குவஸ்திரங்களைத்தரிப்பித்தார்கள். அப்
பொழுது யெகோவாவின் தூதன்சமீபத்தில்
நின்றான்.—பின்பு யெகோவாவின் தூதன் ௬
யோசுவாவைநோக்கி,—நீஎன்வழிகளிலேநடந் ௭
து, என்கட்டளையைக் காத்துக்கொள்வாயானால்
என்ஆலயத்திலேநியாயாதிபதியாகி, என்பிராகா
ரங்களைக் காவல்பண்ணுவாய், என்சமீபத்திலுள்
ளவர்களுக்குள்உலாவுகிறதற்கு இடம் உனக்குத்
தருவேனென்று சேனைபதியாகிய யெகோவா
சொல்லுகிறாரென்று உறுதியாய்ச்சொன்னார்.—

(௨௧) சங். ௭௫.௪,௫.—(௨. அதி. ௧.) எசேக். ௪௰.௩. (௨) வெளி. ௰௧.௧. (௪) எரே. ௩௧.௨௭. எசேக். ௩௬.௰,௰௧. (௫) ஏசா. ௨௬.௧. ஏசா. ௬௰.௰௯. வெளி. ௨௧.௨௩. (௬) ஏசா. ௪௮.௨௰. எரே. ௧.௰௪. உபா. ௨௮.௬௪. எசேக். ௰௭.௨௧. (௭) வெளி. ௰௮.௪. (௮) உபா. ௩௨.௰. ௨. தெச. ௧.௬. (௯) ஏசா. ௰௧.௰௫. (௰) ஏசா. ௰௨.௬. செப். ௩.௰௪. லேவி. ௨௬.௰௨. எசேக். ௩௭.௨௭. யோவா. ௧.௰௪. ௨. கொரி. ௬.௰௬. (௰௧) ஏசா. ௨.௨,௩. யாத். ௰௨.௪௯. எசேக். ௩௩.௩௩. (௰௨) உபா. ௩௨.௯. (௰௩) அபகூ. ௨.௨௰. செப். ௧.௭. ஏசா. ௫௭.௰௫. உபா. ௨௬.௰௫. ஏசா. ௬௩.௰௫.—(௩. அதி. ௧.) ஆகா. ௧.௧. சங். ௱௯.௬. வெளி. ௰௨.௰. (௨) யூதா. ௯. ரோ. ௮.௩௩. ஆமோ. ௪.௰௧. ரோ. ௰௧.௫. யூதா. ௨௩. (௩) ஏசா. ௬௪.௬. (௪) ஏசா. ௬௧.௰. லூக். ௰௫.௨௨. லேவி. ௰௯.௮. (௫) யாத். ௨௯.௬. (௭) லேவி. ௮.௩௫. ௧. இரா. ௨.௩. எசேக். ௪௪.௰௬. உபா. ௰௭.௯. மல். ௨.௭.

௮ மகா ஆசாரியனாகிய யோசுவாவே, நீயும், உன்ச
மீபத்திலிருக்கிற உன்தோழராகிய அடையாளம்
பொருந்தியமனுஷருங் கேட்பீர்களாக: பாருங்
கள், நான் கிளை என்னும் என்தாசனைவரப்பண்
௯ ணுவேன்.—பாருங்கள், யோசுவாவின் சமுகத்
தில் நான்வைத்தகல்லாகிய அந்த ஒரேகல்லின்
மேல் ஏழுகண்களுண்டு: பாருங்கள், நான் அதி
லுள்ளமுத்திரையைத் தொழிற்படுத்துவேன், ஒ
ரேநாளில் அந்தத்தேசத்தின் பாவத்தைநீக்குவே
னென்று சேனைபதியாகிய யெகோவா சொல்
௰ லுகிறார்.—அந்நாளிலே நீங்கள்திராட்சக்கொடி
யின்கீழும், அத்திமரத்தின்கீழும் உங்களுங்கள்
அயலாரை வரவழைப்பீர்களென்றுசேனைபதியா
கிய யெகோவா சொல்லுகிறார்.

## ௪. அதிகாரம்.

௧. பொன்னினால்செய்யப்பட்டசெடிவிளக்கின் திருஷ்டாந்தத்தினால் சிருபப்பெல் நிறைவேற்றுங் கிரியையைக்குறித்தல்: ௰௧. இரண்டுசீதவிருட்சங்களைக்காட்டல்.

பின்பு என்னோடேபேசினதூதன் திரும்பிவந்
து, நித்திரைபண்ணுகிறவனைஎழுப்புவதுபோல
என்னைஎழுப்பி,என்னைநோக்கி, நீ எதைக்காண்
௨ கிறாயென்றுசொல்ல,—நான், உற்றுப்பார்த்து, மு
ழுவதும் பொன்னினால் செய்யப்பட்ட ஒருசெ
டிவிளக்கைக் கண்டேன், அதின் உச்சியில் அ
தற்குக் கிண்ணியையும், அதின்மேலுள்ள ஏழு
அகல்களையும், அதின் உச்சியிலுள்ள ஏழுஅகல்
௩ களுக்குட்போகிற ஏழு குழாய்களையும்,—அதற்
கருகிலே கிண்ணிக்கு வலதுபுறத்தில் ஒருசீத
விருட்சமும், அதற்கு இடதுபுறத்தில் ஒருசீத
விருட்சமுமாக இரண்டு சீதவிருட்சங்களையுங்
௪ கண்டேனென்றேன்.—மேலும் நான் என்னோ
டேபேசின தூதனைநோக்கி, என் ஆண்டவ
௫ னே, இவைகளென்னவென்று கேட்டேன்.—அ
தற்கு என்னோடேபேசினதூதன் உத்தரமாய்,இ
வைகள் இன்னவைகளென்று உனக்குத்தெரியா
தாவென்றுசொல்ல, நான், என் ஆண்டவனே,
௬ எனக்குத்தெரியாதென்றேன்.—அப்பொழுது அ
வன் எனக்கு உத்தரமாய், சிருபப்பெலிடத்தில்
யெகோவா இவ்வாக்குச் சொல்லுகிறார்; ப
லத்தினாலாகிலும்,பராக்கிரமத்தினாலாகிலுமல்ல,
என்னுடைய ஆவியினாலே சித்தியாகுமென்
று சேனைபதியாகிய யெகோவா சொல்லுகி
௭ றார்.—பெருமலையே, நீ எம்மாத்திரம், சிருபப்பெ
லுக்கு முன்பாகச் சமபூமியாவாய்: அவன் பி
ரதானகல்லை நிலைப்படுத்தும்பொழுது, அதற்குக்
கிருபை,கிருபையென்று ஆரவாரம்பண்ணுவார்
௮ களென்றான்.—பின்னும் யெகோவாவின்
வாக்கு என்னிடத்தில்,—சிருபப்பெலின்கைகள் ௯
இந்த ஆலயத்துக்குஅஸ்திபாரம்போட்டன; அவ
னுடையகைகளே இதைமுடித்துமிருக்கும்;அதி
னால் சேனைபதியாகிய யெகோவா என்னை
உங்களிடத்தில் அனுப்பினாரென்று அறிவாய்.—
அற்பகாரியங்களின் நாளை அவமதித்தவன் யா ௰
வன்; பூமி எங்குஞ்சுற்றிப்பார்க்கிறவைகளாகிய
யெகோவாவின் ஏழுகண்களும்,சிருபப்பெ
லின் கையிலிருக்கிறவெள்ளீயத்தூக்கைக்கண்டு
சந்தோஷப்படுகின்றனவென்றுசொல்லிற்று.
பின்பு நான் அவனைநோக்கி, செடிவிளக்குக் ௰௧
குவலதுபுறத்திலும், அதற்கு இடதுபுறத்திலுமுள்
ளசீதவிருட்சங்களிரண்டுமென்னவென்றுகேட்
டேன்.-திரும்பவும்நான்அவரைநோக்கி,பொன் ௰௨
னினால் செய்யப்பட்ட இரண்டுகுழாய்களின்வ
ழியாகப் பொன்னிறமான எண்ணெயைத்
தாங்களேசெலுத்துஞ்சீதவிருட்சங்களின்இரண்
டுகிளைகளென்னவென்றுகேட்டேன்.—அதற்கு ௰௩
அவன், இவையின்னவையென்றுஉனக்குத்தெரி
யாதாவென்றுசொல்ல, என் ஆண்டவனே, எ
னக்குத் தெரியாதென்றேன்.—அப்பொழுது அ ௰௪
வன், இவ்விருவருஞ் சருவலோகத்திற்கும் அதி
பதியின் சமுகத்தில்நிற்கும் அபிஷேகம்பெற்ற
வர்களே என்றான்.

## ௫. அதிகாரம்.

௧. பறக்கிற பத்திரத்தின் திருஷ்டாந்தத்தினால் திருடரும் பொய்யாணை இடுகிறவர்களுமாகியஇவர்களுக்குவருஞ்சாபந் தெரிவிக்கப்படல்: ௫. ஏபாவிலுள்ளஸ்திரியினால் இஸ்ரவேலருக்குவருந்தண்டனையைவிளங்கக்காட்டல்.

நான் என்கண்களைத்திரும்பவும் ஏறிட்டு, பறக் ௧
கிறபுத்தகச்சுருளைக் கண்டேன்.—அப்பொழுது ௨
அவன்என்னைநோக்கி,நீகாண்கிறதென்னவென்
றுசொல்ல, நான் இருபதுமுழ நீளமும், பத்துமு
ழஅகலமுமுள்ள பறக்கிற புத்தகச்சுருளைக்கண்
டேனென்றேன்.—அப்பொழுது அவன்என்னை ௩
நோக்கி, இது தேசத்தின்மேலெங்கும் புறப்பட்
டுப்போகிற சாபம்: திருடர்யாவரும் இந்தப்புறத்
திலுள்ளதின்படி சேதிக்கப்படுவார்கள்; ஆணை
யிடுகிற யாவரும் அந்தப்புறத்திலுள்ளதின்படி
யே சேதிக்கப்படுவார்கள்.—அது திருடனுடைய ௪
வீட்டிலும், என் நாமத்தைக்கொண்டு பொய் ஆ
ணையிடுகிறவனுடைய வீட்டிலும் பிரவேசித்து,
அவனவன்வீட்டின்மத்தியில் தங்கி, மரங்களோ
டுங் கல்லுகளோடும் அதை நிர்மூலமாக்கும்ப
டிஅதைப்புறப்படுத்துவேனென்று சேனைபதியா
கிய யெகோவா சொல்லுகிறாரென்றான்.
பின்பு என்னோடேபேசின தூதன் வெளி ௫

(௮) சங்.௭௧.௭. ஏசா.௮.௰௮. எசேக்.௰௨.௰௧. ஏசா.௪௨.௧. எசேக்.௩௪.௨௩,௨௪. ஏசா.௪.௨. எரே.௨௩.௫. லூக். ௧.௭௮. (௯) சங்.௱௰௮.௨௨. ஏசா.௨௮.௰௬. வெளி.௫.௬. எரே.௩௧.௩௪. மீகா.௭.௰௮,௰௯. (௰) ௧.இரா.௪.௨௫. ஏசா.௩௬.௰௭. மீகா.௪.௪.—(௪. அதி. ௧.) தானி.௮.௰௮. (௨) யாத்.௨௫.௩௧. வெளி.௧.௰௨, யாத்.௨௫.௩௭. வெளி.௪.௫. (௩) வெளி.௰௧.௪. (௬) ஓசி.௧.௭. (௭) எரே.௫௧.௨௫. மத்.௨௧.௨௧. சங்.௱௰௮.௨௨. எஸ்றா.௩. ௰௧,௰௩. (௯) எஸ்றா.௩.௰. எஸ்றா.௬.௰௫. ஏசா.௪௮.௰௬. (௰)ஆகா.௨.௩. ௨.நாளா.௰௬.௯. நீதி.௰௫.௩. (௰௪) வெளி. ௰௧.௪. லூக்.௧.௰௯.—(௫. அதி. ௧.) எசேக்.௨.௯. (௩) மல்.௪.௬. (௪) லேவி.௰௯.௰௨. மல்.௩.௫. லேவி.௰௪.௪௫.

யேவந்து, என்னைநோக்கி, இப்பொழுது நீ உன்
கண்களை ஏறிட்டு, தோன்றி வருவதைப்பாரென்
௬ றுசொல்ல,—நான் அது என்னவென்று கேட்
டேன்; அதற்கு அவன் தோன்றிவருகிறஅதுஒரு
ஏபாவென்றான். மேலும் இது தேசத்தாருக்கெல்
௭ லாந் திருஷ்டாந்தமென்றான்.—பின்பு ஒருகிக்
கோர்நிறையான ஈயம் தூக்கப்பட்டது:ஏபாவின்
௮ மத்தியில் ஒருஸ்திரியிருந்தாள்.—பின்பு அவன்
இதுவேபாவம் என்றுசொல்லி, அதை ஏபாவின்
நடுவிலேதள்ளி, ஈயக்கட்டியை அதின்வாயிலே
௯ வைத்தான்.—அப்பொழுது நான் என்கண்களை
ஏறிட்டு, நாரைப்பட்சியின் சிறகுகளைப்போல
இரண்டுஸ்திரிகள்வெளிப்பட்டு, அவர்கள்சிறகு
களிலுள்ளகாற்றினால்அந்த ஏபாவைப்பூமிக்கும்
வானத்துக்கும் மத்தியவழியாய்த்தூக்கிக்கொண்
௰ டுபோகக் கண்டேன்.—அப்பொழுது என்னோ
டேபேசின தூதனைநோக்கி, இவர்கள்அந்தஏபா
வை எங்கேகொண்டுபோகிறார்களென்று கேட்
௰௧ டேன்.-அதற்கவன் ஷினியார்தேசத்தில் அதற்கு
ஒருவீட்டைக்கட்டும்படிக்கு அதைக் கொண்
டு போகிறார்கள்: அங்கே அது ஸ்தாபிக்கப்
பட்டு, தன்பாதத்தில்நிலைப்படுமென்றான்.

## ௬. அதிகாரம்.

௧. நான்கு ரதங்களின் தரிசனத்தைக்காணல்: ௯. சிலருக்குச்சூட்டப்பட்ட முடிகளினால் கிளையென்னுங் கிறிஸ்துவின் ஆலயமும் ஆளுகையுமாகிய இவைகளின் தரிசனங் காணப்படல்.

பின்பு நான்என்கண்களைஏறிட்டுப்பார்த்து, பித்
தளைமலைகளாகிய இரண்டுமலைகளின்மத்தியிலே
புறப்படுகிற நாலு இரதங்களைக்கண்டேன்.—
௨ முதலாம் இரதத்தில் சிவப்புக்குதிரைகளும், இ
ரண்டாம் இரதத்தில் கறுப்புக்குதிரைகளும்,—
௩ மூன்றாம்இரதத்தில் வெள்ளைக்குதிரைகளும், நா
லாம்இரதத்தில் பலவருணக்குதிரைகளும்பூட்டி
௪ யிருந்தன.—அப்பொழுதுநான் என்னோடேபே
சினதூதனைநோக்கி, என் ஆண்டவனே, இவை
௫ களென்னவென்றுகேட்டேன்.—அந்தத் தூதன்
எனக்கு உத்தரமாய், சருவலோகத்திற்கும் அதி
பதியின் சமுகத்தினின்று புறப்படுகிற வானத்
௬ தின் நாலு ஆவிகளேயென்றான்.—ஒன்றில் பூட்
டப்பட்டிருக்கிறகறுப்புக்குதிரைகள்வடதேசத்
துக்குப்புறப்பட்டுப்போயின; வெண்மையான
வைகள் அவைகளின் பின்னாகப் புறப்பட்டுப்
போயின; பலவருணமுள்ளவைகள் தென்தே
௭ சத்துக்குப் புறப்பட்டுப் போயின.—சிவப்புக்
குதிரைகள்புறப்பட்டுப் பூமியைச்சுற்றித்திரியும்
படிவேண்டினபின்பு,அவன்அவைகளிடத்தில்,
நீங்கள்போய்ப் பூமியைச்சுற்றித்திரியுங்களென்
றுசொல்ல,அவைகள்பூமியில்எங்குந்திரியத்தொ
௮ டங்கின.—அப்பொழுது அவன் என்னைக்கூப்
பிட்டு, என்னோடேபேசி, பார், வடதேசத்துக்
குப் புறப்பட்டுப்போனவைகள் வடதேசத்தில்
என் ஆவியைச் சாந்தப்படுத்தினவென்றான்.
பின்பு யெகோவாவின் வாக்கு என்னி ௯
டத்தில்,—சிறைப்பட்டிருந்த மனுஷராகிய எல் ௰
தாயும், தோபியாவும், யெதாயாவும் பாபேலிலி
ருந்து செப்பனியாவின் புத்திரனாகிய யோஷி
யாவின்வீட்டிலேவருவார்கள்.—அந்நாளிலே நீ ௰௧
அங்கேபோய், வெள்ளியையும், பொன்னையும்
வாங்கி, கிரீடங்களைச் செய்வித்து, அவைகளை
யோசாதெக்கின்புத்திரனும், மகா ஆசாரியனுமா
கிய யோசுவாவின் சிரசிலே சூட்டி,—அவனை ௰௨
நோக்கி, பார், கிளையென்னும் நாமமுள்ள புரு
ஷன் தமது சுயஸ்தானத்திலே முளைத்தெழும்பி,
யெகோவாவின் ஆலயத்தைக்கட்டுவார்.—
அவரே யெகோவாவின் ஆலயத்தைக்கட்டு ௰௩
வார்; அவரே மகிமையைத்தாங்கிக்கொண்டு, த
மது சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்து ஆளுகை
செய்வார்; அவர் தமது சிங்காசனத்தின்மேல் ஆ
சாரியத்தொழிலையும் நடப்பிப்பார்: இவ்விரண்
டுக்குள்ளுஞ்சமாதானத்தின் அபிப்பிராயஞ் சித்
திபெறும்.-கிரீடங்கள் யெகோவாவின் ஆல ௰௪
யத்தில் ஏலெமுக்காகவும்,தோபியாவுக்காகவும்,
யெதாயாவுக்காகவும், செப்பனியாவின் புத்திர
னாகியஜனுக்காகவும் ஞாபகக்குறியாய்வைக்கப்
படும்.-தூரத்திலுள்ளவர்கள்வந்து யெகோவா ௰௫
வின் ஆலயத்தைக்கட்டுவார்கள், அப்பொழுது
சேனைபதியாகிய யெகோவா உங்களிடத்தில்
என்னை அனுப்பினாரென்று அறிவீர்கள். நீங்கள்
மனப்பூருவமாய் உங்கள் தேவனாகிய யெ
கோவாவின் வாக்குக்கு அமைந்துநடந்தீர்க
ளேயாகில் இது சித்தியாகுமென்று சேனைபதியா
கிய யெகோவா சொல்லுகிறாரென்பதைச்
சொல்லச்சொல்லிற்று.

## ௭. அதிகாரம்.

௧. உபவாசத்தைக்குறித்து வினாவல்: ௮. பாவமே சிறைக்குக்காரணமென்றுகூறல்.

தாரியாவெஷ் இராசா ஆளுகைசெய்த நாலாம் ௧
வருஷம் கெஷ்லேயென்னும் ஒன்பதாமாதம் நா
லாந் தினத்தில்,—யெகோவாவின் சமு ௨
கத்தில்பிரார்த்தனைபண்ணுகிறதற்கும், நான் இத்
தனைவருஷம்வரையில் செய்ததுபோல ஐந்தாம்
மாதத்தில் தனித்து அழுதுகொள்ளவேண்டுமா
வென்று சேனைபதியாகிய யெகோவாவின்
ஆலயத்திலிருந்த ஆசாரியர்களிடத்திலும், தீர்க்
கதரிசிகளிடத்திலுங் கேட்கிறதற்கும்,—தேவ ௩
னுடைய ஆலயத்துக்கு, ஷரேத்சரையும், ரே
கேம் மேலேக்கையும், அவனுடைய மனுஷரை
யும் அவர்கள் அனுப்பினபொழுது, யெகோ

(௰௧) எரே.௨௯.௫,௨௮. ஆதி.௰.௰.—(௬. அதி. ௨.) வெளி.௬.௪,௫. (௩) வெளி.௬.௨. (௫) சங்.௱௪.௪. எபி.௧.௭,௰௪. ௧.இரா.௨௨.௰௯. தானி.௭.௰. லூக்.௧.௰௯. (௬) எரே.௧.௰௪. (௭) ஆதி.௰௩.௰௭. (௮) நியா.௮.௩. பிர.௰.௪. (௰௧) யாத்.௨௮.௩௬. லேவி.௮.௯. (௰௨) லூக்.௧.௭௮. யோவா.௧.௪௫. மத்.௰௬.௰௮. எபே.௨.௨௰,௨௧,௨௨. எபி.௩.௩. (௰௩) ஏசா.௨௨.௨௪. சங்.௱௰.௪. எபி.௩.௧. (௰௪) யாத்.௰௨.௰௪. மாற்.௰௪.௯. (௰௫) ஏசா.௫௭.௰௯. எபே.௨.௰௩, ௰௧.—(௭. அதி. ௨.) ௧.சாமு.௰௩.௰௨. உபா.௰௭.௯,௰,௰௧. மல்.௨.௭. எரே.௫௨.௰௨.

வாவின் வாக்குச் சகரியாவுக்குக் கிடைத்தது.
௪ அப்பொழுதே சேனைபதியாகிய யெகோ
௫ வாவின் வாக்கு என்னிடத்தில்,—நீ தேசத்துச்
சனங்கள்சமஸ்தரையும், ஆசாரியர்களையும்நோக்
கி, நீங்கள் இந்த எழுபதுவருஷம்வரையில் ஐந்
தாம் மாதத்திலும், ஏழாம் மாதத்திலும் உ
பவாசஞ்செய்து புலம்பினபொழுது எனக்கே
௬ யென்று உபவாசஞ்செய்தீர்களா.—நீங்கள்போச
னபானம்பண்ணிவருகிறபொழுது உங்களுக்
கென்றல்லவோ போசனபானம் பண்ணினீர்
௭ கள்.-முன்னே யெருஷலேமும்,அதைச் சுற்றியி
ருந்த அதின்பட்டணங்களும், தெற்குநாடும்,சம
பூமியும் வாசஸ்தலங்களாகிச் சுகவாழ்வடைந்த
பொழுது, யெகோவா பூருவகாலத்திலுள்ளதீ
ர்க்கதரிசிகளைக்கொண்டுசொல்லியவாக்குகள்இ
வைகளல்லவாவென்றுசொல்லச்சொல்லிற்று.
௮ பின்பு சகரியாவுக்குக் கிடைத்த யெகோ
௯ வாவின் வாக்கு,—நீங்கள் உண்மையான நி
யாயத்தீர்ப்புச்செய்யுங்கள், ஒருவருக்கொருவர்
தயையையும், இரக்கத்தையுஞ் செய்யுங்கள்.—
௰ விதவைக்கும், அநாதபிள்ளைக்கும், பரதேசிக்
கும், தரித்திரனுக்கும் அநியாயஞ்செய்யாதிருங்
கள்; உங்களில் ஒருவனுந் தன் சகோதரனுக்கு
விரோதமாகத் தீமையைச் சிந்திக்கலாகாதென்று
சேனைபதியாகிய யெகோவா சொன்னார்.—
௰௧ ஆனாலும் அவர்கள் செவிகொடாமல் மறுத்து,
தோளைவிலக்கி, கேளாதபடிக்குத் தங்கள் செ
௰௨ விகளை அடைத்து,—சேனைபதியாகிய யெகோ
வா தமது ஆவியினாலே முந்தின திர்க்கதரிசிகள்
மூலமாய்ச் சொல்லி அனுப்பின நியாயப்பிர
மாணத்தையும் வாக்குகளையுங் கேளாதபடிக்கு,
தங்கள் தங்கள் இருதயத்தை வச்சிரம்போலக்
கடினப்படுத்தினார்கள்: ஆதலால் சேனைபதியாகி
ய யெகோவா மிகவுங் கோபங்கொண்டார்.-
௰௩ ஆதலால் நான் கூப்பிட்டபொழுது அவர்கள்
கேளாமலிருந்ததுபோல, அவர்கள் கூப்பிட்ட
பொழுது நானுங்கேளாமலிருந்தேனென்று சே
௰௪ னைபதியாகிய யெகோவா சொல்லுகிறார்.-அ
வர்களுக்குத் தெரியாத அந்நியதேசத்துச் சமஸ்த
சனங்களுக்குள்ளும் அவர்களைச் சூறைக்காற்றி
னால் சிதற அடித்தேன். அதினால் அவர்கள் தே
சத்தில் ஒருவரும் போக்குவரவுசெய்யாமலிருக்
கப் பாழாய்ப்போயிற்று: அவர்கள் இன்பம்பொ
ருந்தியத்தேசத்தை அவாந்தரமாக்கிவிட்டார்க
ளென்று சொல்லிற்று.

## ௮. அதிகாரம்.

௧. யெருஷலேம் திரும்பவுங் கட்டப்படல்: ௯. தேவனுடைய ஆலயங் கட்டப்பட்டதினிமித்தஞ் சனங்கள் சந்தோஷப்படல்: ௰௬. செய்யத்தகுங்கடமைகளைத் தெரிவித்தல்: ௰௮. வாழ்வு வருமென்று வாக்குத்தத்தஞ்செய்தல்.

பின்புசேனைபதியாகியயெகோவாவின்வாக் ௧
கு என்னிடத்தில்,—நான் சீயோனுக்காகமிகுந் ௨
த வைராக்கியங்கொண்டேன், அவர்களுக்காக
மிகவும் உக்கிரமான வைராக்கியங்கொண்டே
னென்று சேனைபதியாகிய யெகோவாசொல்
லுகிறார்.—மேலும் நான் சீயோனிடத்தில் திரும் ௩
பி, யெருஷலேமின் மத்தியில் வாசம்பண்ணு
வேன்: அப்பொழுது யெருஷலேம் சத்தியநகர
மென்றும், சேனைபதியாகிய யெகோவாவின்
மலை பரிசுத்தமலையென்றும் பெயர்பெறுமென்
று யெகோவா சொல்லுகிறார்.—திரும்பவும் ௪
யெருஷலேமின் வீதிகளிலே முதிர்ந்தவயதினி
மித்தந் தங்கள் கைகளில் கோலைப்பிடித்து நடக்
கிற விருத்தரும், விருத்தைகளும் வசிப்பார்கள்.—
நகரத்தின்தெருக்களிலேவிளையாடுகிற ஆண்பிள் ௫
ளைகளும், பெண்பிள்ளைகளும் அதின் தெருக்க
ளில் நிறைந்திருக்குமென்று சேனைபதியாகிய
யெகோவா சொல்லுகிறார்.—சேனைபதியாகி ௬
ய யெகோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்;
இந்நாள்களில் அது சனங்களில் மீந்திருக்கிறவர்
களின்பார்வைக்கு ஆச்சரியமுள்ளதாயிருந்தா
லும், எனது பார்வைக்கும் ஆச்சரியமுள்ளதாயி
ருக்குமாவென்று சேனைபதியாகிய யெகோவா
சொல்லுகிறார்.—பாருங்கள், கிழக்குத்தேசத்தி ௭
லும், சூரியன் அஸ்தமிக்குந் திசையின் தேசத்தி
லும் நின்று என்சனங்களை விடுவிப்பேன்.-நான் ௮
அவர்களைக்கொண்டுவர, அவர்கள்யெருஷலேம்
மத்தியில் வாசம்பண்ணுவார்கள்: அவர்கள் என்
சனங்களாவார்கள்,சத்தியத்திலும்நீதியிலும்நான்
அவர்களுக்குத் தேவனாவேனென்று சேனை
பதியாகிய யெகோவா சொல்லுகிறார்.

தேவாலயங் கட்டப்படும்பொருட்டுச்சேனை ௯
பதியாகிய யெகோவாவின் வீட்டின் அஸ்தி
பாரம் போடப்பட்ட நாளிலிருந்த தீர்க்கதரி
சிகள் இந்நாள்களில் சொல்லிய இந்தவாக்குக
ளைக் கேட்டிருக்கிறவர்களே, உங்கள்கைகள் தி
டப்படக்கடவன.—இந்நாள்களுக்கு முன்னே ௰
மனுஷருடைய பணிவிடையினால் பலனுமில்
லை, மிருகத்தின் வேலையினால் பலனுமில்லை;
போக்குவரவு செய்பவனுக்கு உபத்திரவத்தினி
மித்தஞ் சமாதானமுமில்லை: சகல மனுஷரும் ஒ
ருவருக்கொருவர் விரோதிக்கச்செய்தேனென்
று சேனைபதியாகிய யெகோவா சொல்லுகி

(௫) ஏசா.௫௮.௫. எரே.௪௧.௧. ரோ.௰௪.௬. (௭) எரே.௰௭.௨௬. (௯) ஏசா.௫௮.௬,௭. எரே.௭.௨௩. மீகா.௬.௮. மத். ௨௩.௨௩. (௰) யாத்.௨௨.௨௧,௨௨. உபா.௨௪.௰௭. ஏசா.௧.௰௭. எரே.௫.௨௮. சங்.௩௬.௪. மீகா.௨.௧. அதி.௮.௰௭. (௰௧) நிகி.௯.௨௯. எரே.௭.௨௪. ஓசி.௪.௰௬. அப்.௭.௫௭. (௰௨) எசேக்.௰௧.௰௯. நிகி.௯.௨௯,௩௰. ௨.நாளா.௩௬.௰௩. தானி.௯.௰௧. (௰௩) நீதி.௧.௨௪—௨௮. ஏசா.௧.௰௫. எரே.௰௧.௰௧. மீகா.௩.௪. (௰௪) உபா.௪.௨௭. எசேக்.௩௬.௰௯. உபா.௨௮.௩௩. லேவி.௨௬.௨௨.தானி.௮.௯.—(௮. அதி. ௨.) நாகூ.௧.௨. (௩) ஏசா.௧.௨௧,௨௬. ஏசா.௨.௨,௩. எரே.௩௧.௨௩. (௪) ௧.சாமு.௨.௩௧. ஏசா.௬௫.௨௰,௨௨. புல.௨.௨௰. (௬) ஆதி.௰௮.௰௪. லூக்.௧.௩௭. ரோ.௪.௨௧. (௭) ஏசா.௰௧.௰௧,௰௨. எசேக்.௩௭.௨௧. ஆமோ.௯.௰௪,௰௫. மல்.௧.௰௧. (௮) எரே.௩௰.௨௨. எரே.௪.௨. (௯) ஆகா. ௨.௪,௰௮. எஸ்றா.௫.௧,௨. (௰) ஆகா.௧.௬,௯,௰. ௨.நாளா.௰௫.௫.

௰௧ றார்.—இப்பொழுதோ, பூருவகாலத்திலிருந்த
வர்களுக்கு இருந்ததுபோல,மீந்திருப்பவர்
களுக்கு நானிருக்கமாட்டேனென்று சேனைப
௰௨ தியாகிய யெகோவா சொல்லுகிறார்.—விதை
விளைவுதரும்; திராட்சக்கொடி தன் கனியைத்
தரும், பூமி தன்பலனைத் தரும், வானந் தன் பனி
யைச் சொரியும்; மீந்திருக்கிற இந்தச்சனங்கள்
இவைகளெல்லாவற்றையுஞ் சுதந்தரிக்கப் பண்
௰௩ ணுவேன்.-யூதாவமிசத்தாரே, இஸரவேலின் வ
மிசத்தாரே, நீங்கள் அந்நியருக்குள் சாபமாயிருந்
ததுபோல ஆசீர்வாதமாயிருக்கும்படி நான் உங்க
ளை இரட்சிப்பேன்; பயப்படாதிருங்கள்: உங்
கள் கைகள் திடப்படக்கடவனவென்று சேனை
௰௪ பதியாகிய யெகோவா சொல்லுகிறார்.—சே
னைபதியாகிய யெகோவா இவ்வாக்குச்சொல்
லுகிறார்; உங்கள் முன்னோர்கள் என்னைக்கோ
பப்படுத்தினபொழுது நான் உங்களைத்தண்டிக்க
௰௫ நினைத்து இரங்காமலிருந்ததுபோல,—இந்நாட்
களில் யெருஷலேமுக்கும், யூதாவமிசத்தாருக்
கும் நன்மைசெய்யத் திரும்பவும் நினைத்திருக்கி
றேன்: நீங்கள் பயப்படாதிருங்களென்று சேனை
பதியாகிய யெகோவா சொல்லுகிறார்.
௰௬ ஒருவரோடொருவர் சத்தியத்தைப் பேசுங்
கள்; உங்கள் வாசல்களில் சத்தியத்திற்குஞ் சமா
தானத்திற்கும் ஏற்க நியாயத்தீர்ப்பைச் செய்யுங்
கள்; இவைகளே நீங்கள் செய்யவேண்டியவை
௰௭ கள்.—உங்களில் ஒருவனுந் தன் சிந்தையில் பி
றனுக்குவிரோதமாய்த் தீமையைச் சிந்திக்கலாகா
து; பொய்யாணையின்மேல் பிரியம் வைக்கலாகா
து: இவைகளெல்லாவற்றையும் நான் வெறுக்கி
றேனென்று யெகோவா சொல்லுகிறாரென்று
சொல்லிற்று.
௰௮ மேலும் சேனைபதியாகிய யெகோவா
௰௯ வின் வாக்கு என்னிடத்தில்,—நாலாமாதத்
தின் உபவாசமும், ஐந்தாமாதத்தின் உபவாச
மும், எழாமாதத்தின் உபவாசமும், பத்தாமா
தத்தின் உபவாசமும் யூதாவமிசத்தாருக்குச் சந்
தோஷத்தையும், மகிழ்ச்சியையுந் தரத்தக்க ஆ
னந்தமுள்ள உற்சவங்களாகும்; ஆதலால் நீங்கள்
சத்தியத்தின்மேலும், சமாதானத்தின்மேலும் பி
ரியம் வைப்பீர்களாகவென்று சேனைபதியாகிய
௨௰ யெகோவா சொல்லுகிறார்.—சனங்களும், அ
௨௧ நேக நகரத்தாரும் வருவார்கள்.—ஒரு நகரத்தார்
மற்றொரு நகரத்திற்சென்று, நாம் யெகோவா
வின் சமுகத்தில் விண்ணப்பஞ் செய்கிறதற்
கும், சேனைபதியாகிய யெகோவாவைத்தே
டுகிறதற்கும்விரைந்துபோவோம்வாருங்கள்: நா
௨௨ னும் போகிறேனென்று சொல்லுவார்கள்.—அ
நேகசனங்களும், பலமுள்ளசாதியாரும் சேனை
பதியாகிய யெகோவாவைத் தேடுகிறதற்
கும், யெகோவாவின் சமுகத்தில்விண்ணப்
பஞ்செய்வதற்கும் யெருஷலேமிலே வருவார்க
ளென்று சேனைபதியாகிய யெகோவா சொல்
லுகிறார்.—அந்நாள்களில் நானாபாஷைக்காரரா ௨௩
கிய அந்நியதேசத்தாரில் பத்து மனுஷர் ஒரு யூத
னுடையவஸ்திரத்தொங்கலைப்பிடித்து,தேவன்
உங்களோடே இருக்கிறாரென்று கேள்விப்
பட்டோம்: ஆதலால் உங்களோடே போவோ
மென்று சொல்லி, அவனைப்பற்றிக்கொள்வார்க
ளென்று சேனைபதியாகிய யெகோவா சொல்
லுகிறாரென்றுசொல்லிற்று.

## ௯. அதிகாரம்.

௧. சபையாரை இரட்சித்தல்: ௯. கிறிஸ்து வருவா
ரென்றுஎதிர்பார்த்துமகிழும்படிஏவல்: ௰௨. செ
யமும் ரட்சிப்பும் உண்டாகுமென்றுகூறல்.

அதராக்தேசத்தின்மேல் யெகோவா சொல் ௧
லிய தீர்க்கதரிசனவாக்கியம், தமஸ்கு அதற்கு இ
ளைப்பாறும்ஸ்தானமாகும்: இஸரவேலின்சமஸ்த
கோத்திரத்தாரைப்போல் மனுஷருடைய கண்
கள் யெகோவாவை நோக்கிப் பார்க்கும்
பொழுது,—அமாத்தும், தீறுவும், மிகுந்தஞான ௨
முள்ள சீதோனும் அதற்கு எல்லையாகும்.—தீறு, ௩
தனக்காக அரணைக்கட்டி, தூளைப்போல் வெள்
ளியையும், வீதிகளின்சேற்றைப்போலப் பசும்
பொன்னையுங்கூட்டிவைத்தது,—பார், ஆண்ட ௪
வர் அதைத்தள்ளிவிட்டு, சமுத்திரத்திலுள்ள அ
தின்பலத்தை முறிப்பார்; அது அக்கினிக்கு இ
ரையாகும்.—அஷ்கிலோனும், காசாவும், எக்ரோ ௫
னும் அதைக்கண்டு தங்கள்நம்பிக்கை தங்களை
வெட்கப்படுத்தினபடியால் பயந்துமிகுந்ததிகில
டையும்; காசாவில் இராசாஅழிந்துபோவான்,
அஷ்கிலோன் வாசஸ்தலம் அற்றுப்போம்.-அஷ் ௬
தோத்தில் அந்நியர் வாசம்பண்ணுவார்கள், பெ
லிஸ்தியருடைய கருவத்தையும் அகற்றுவேன்.-
அவனுடையஇரத்தத்தை அவன் வாயினின்றும், ௭
அவனுடைய அரோசியமானபொருள்களை அவ
னுடைய பற்களின் மத்தியினின்றும் நீக்கிவிடு
வேன்: மீந்திருப்பவனே நமது தேவனுடை
ய பட்சத்திலிருப்பான், யூதாவிலுள்ள அதிபதி
யைப்போலிருப்பான், எக்ரோன் எபூசியனைப்
போலிருப்பான்.—புறப்படும்பொழுதும், தி ௮
ரும்பிவரும்பொழுதுஞ்சேனையினிமித்தம் நான்
என்ஆலயத்தைச்சூழப்பாளயம்இறங்குவேன்: உ
பத்திரவஞ்செய்பவனொருவனையும் அவர்கள்வ
ழியாய்இனிஒருபொழுதும்போகவிடேன்:நான்
இப்பொழுது கண்ணோட்டமாயிருக்கிறேன்.

(௰௨) ஓசி.௨.௨௧,௨௨. யோவே.௨.௨௨. ஆகா.௨.௰௯. (௰௩) எரே.௪௨.௰௮. ஆதி.௰௨.௨. ரூத்.௪.௰௧,௰௨. ஏசா.௰௯.௨௪,௨௫. செப்.௩.௨௰. ஆகா.௨.௰௯. (௰௪) எரே.௩௧.௨௮. ௨.நாளா.௩௬.௰௬. (௰௬) எபே.௪.௨௫. (௰௭) நீதி.௩.௨௯. (௰௯) எரே.௫௨.௪,௬,௭,௰௨,௰௩. ௨.இரா.௨௫.௨௫. எரே.௪௧.௧,௨. எஸ்த.௮.௰௭. ஏசா.௩௫.௰. (௨௧) ஏசா.௨.௩. மீகா.௪.௧,௨. (௨௨) ஏசா.௬௰.௩,. (௨௩) ஏசா.௩.௬. ஏசா.௪.௧. ௧.கொரி.௰௪.௨௫.—(௯. அதி. ௧.) எரே.௨௩.௩௩. ஆமோ.௧.௩ ௨.நாளா.௨௰.௰௨. சங்.௱௪௫.௰௫. (௨) எரே.௪௯.௨௩. ஏசா.௨௩. ஆமோ.௧.௯. ௧.இரா.௰௭.௯. எசேக்.௨௮.௨௧. ஒப.௨௰. எசேக்.௨௮.௩. (௩) யோபு.௨௭.௰௬. (௪) ஏசா.௨௩.௧. எசேக்.௨௬.௰௭. (௫) எரே.௪௭.௧,௫. செப்.௨.௪. (௬) ஆமோ.௧.௮. (௮) சங்.௩௪.௭. ஏசா.௬௰.௰௮. எசேக்.௨௮.௨௪. யாத்.௩.௭.

௯ சீயோன்குமாரத்தியே, மிகவுங்களிகூரு; யெ
ருஷலேமின்குமாரத்தியே, ஆனந்தமுழக்கமிடு:
பார், உன்இராசா நீதியுள்ளவர், இரட்சகர்த்தா
வும், தாழ்ந்தசிந்தையுள்ளவரும், கழுதைக்குட்
டியாகிய கழுதையின்மேல் ஏறியிருப்பவருமாய்
௰ உன்னிடத்திற்குவருகிறார்.-எப்பிராயீமினின்று இ
ரதத்தையும், யெருஷலேமினின்று குதிரையை
யுஞ் சேதித்துவிடுவேன், யுத்தத்தின்வில்லும் நீக்
கப்படும்: அவர் அந்நியதேசத்தாருக்குச் சமாதா
னத்தைப்பேசுவார்: அவருடையஆளுகை ஒருச
முத்திரந்தொடங்கி மறுசமுத்திரம்வரைக்கும், ந
திதொடங்கிப் பூமியின்கடைஎல்லைவரைக்குஞ்
௰௧ செல்லும்.-நான்உன்உடன்படிக்கையின்இரத்
தத்தினிமித்தஞ் சலமில்லாதகுழியினின்று உன்
சிறைப்பட்டோரைவிடுதலைபண்ணுவேன்.
௰௨ விடுதலையை எதிர்பார்க்கிற சிறைப்பட்டோ
ரே, நீங்கள் திடமான அரணுக்குத்திரும்புங்கள்:
இன்றைக்கேஉனக்குஇருமடங்குதருவேனென்
௰௩ று தெரிவித்திருக்கிறேன்.—நான்எனக்கென்று யூ
தாவை நாணேற்றி, எப்பிராயீமினால் வில்லைநிரப்
புவேன், சீயோனே,உன்புத்திரரைக்கிரேக்கதே
சத்தின்புத்திரருக்கு விரோதமாகஎழுப்பி, உன்
னைப் பராக்கிரமசாலியின்கட்கத்தைப்போலாக்
௰௪ குவேன்.—அவர்கள்மேல் யெகோவா காணப்
படுவார், அவருடைய அம்பு மின்னலைப்போலப்
புறப்படும்: ஆண்டவராகிய யெகோவா
எக்காளத்தையூதி, தெற்குத்திசையின் சூறைக்
௰௫ காற்றுகளோடே செல்லுவார்.—சேனாபதியாகிய
யெகோவா அவர்களைக் காப்பாற்றுவார்; அ
வர்கள்பட்சித்துக் கவண்கற்களைக்கீழ்ப்படுத்திக்
கொள்வார்கள்; அவர்கள்பானம்பண்ணி,திராட்
சரசத்தினாலானதுபோல ஆரவாரம்பண்ணி, பா
ன பாத்திரங்களைப்போலவும், வேதிகைகளின்
கோடிகளைப்போலவும் நிறைந்திருப்பார்கள்.—
௰௬ அந்நாளில்அவர்களுடைய தேவனாகிய யெ
கோவா ஆட்டுக்கூட்டத்தைப்போன்ற தம்மு
டையசனங்களாகியஅவர்களை இரட்சிப்பார்: அ
வருடையதேசத்தில்கொடியாய்ஏற்றப்பட்டகிரீ
௰௭ டக்கல்லுகளாவார்கள்.-அவருடையநன்மை
எவ்வளவுபெரிது,அவருடையசௌந்தரியம்எவ்
வளவுபெரிது, தானியம் வாலிபரையும், புதுத்
திராட்சரசம் கன்னியரையும் பூரிக்கச்செய்யும்.

## ௰. அதிகாரம்.

௧. விக்கிரகங்களைத் தேடாமல் யெகோவா
வைத்தேடுவது உசிதமென்று காட்டல்: பா
வத்தினிமித்தம் மந்தைதண்டிக்கப்பட்டுப்பின்
புசொஸ்தமாக்கப்படல்.

பின்மாரிகாலத்தில் வேண்டிய மழையை யெ ௧
கோவாவிடத்தில்வேண்டிக்கொள்ளுங்கள்;
யெகோவா மின்னல்களையுண்டாக்கி, வயல்
வெளியில் யாவருக்கும்பயிருண்டாகும்படிபெ
ருமழையைக்கொடுப்பார்.—விக்கிரகங்கள் அபத் ௨
தமானவைகளைச்சொல்லின, மாயாவிகள்பொய்
த்தரிசனங்களைக்கண்டு, பொய்யான சொப்பன
ங்களை விவரித்து, வீணாகத்தேற்றப்பார்த்தார்கள்:
ஆதலால் சனங்கள் மந்தையைப்போலத்திரிந்
து, மேய்ப்பனில்லாததினிமித்தங் கலங்குகிறார்
கள்.—மேய்ப்பருக்கு விரோதமாக என்கோபம் ௩
மூண்டது, கடாக்களை நான்தண்டித்தேன்: மே
லுஞ் சேனாபதியாகிய யெகோவா தமது மந்
தையாகிய யூதாவமிசத்தைவிசாரித்து,அவர்களை
யுத்தத்திலே தமது சிறந்த குதிரையைப்போலாக்
கினார்.—அவனிடத்திலின்று கோடிக்கல்லும், அ ௪
வனிடத்தினின்றுமுளையும், அவனிடத்தினின்
று யுத்தவில்லும்வரும், அவனிடத்தினின்று ஒவ்
வொருஅதிகாரியுந்தோன்றிவருவான்.
யெகோவா அவர்களோடிருப்பதினால் அ ௫
வர்கள்யுத்தம்பண்ணி, பராக்கிரமவீரராய் யுத்தத்
திலேவீதிகளின்சேற்றைப்போலச் சத்துருக்க
ளை மிதிப்பார்கள்: குதிரைகளின்மேலேறியிருக்
கிறவர்களை வெட்கப்படுத்துவார்கள்.—நான் அ ௬
வர்களுக்குத் தயைசெய்தபடியினாலே யூதாவமி
சத்தாரைப்பெலப்படுத்தி, யோசேப்பின்வமிசத்
தாரைஇரட்சித்து அவர்களைநிலைப்படுத்துவேன்;
யெகோவாவாகிய நான் அவர்களுடைய
தேவனானகயால் அவர்கள் என்னால்தள்ளப்
படாதவர்கள்போலிருப்பார்: அவர்களுக்குச்செ
வியைச் சாய்ப்பேன்.—எப்பிராயீமர் பராக்கிரம ௭
சாலிகளைப்போலிருப்பார்கள், திராட்ச ரசத்தி
னால் களி உண்டாவது போல அவர்களு
டையஇருதயங் களிகூரும்:அவர்களுடையபுத்
திரர் அதைக்கண்டுசந்தோஷப்படுவார்கள்;அ
வர்களுடைய இருதயம் யெகோவாவிடத்
தில் களிகூரும்.—நான் அவர்களைமீட்டபடியி ௮
னால் அவர்களுக்குப்பயில்காட்டிஅழைத்து, அ
வர்களைச்சேர்த்துக்கொள்வேன்: அவர்கள்பெரு
கிஇருந்ததுபோலப்பெருகிஇருப்பார்கள்.—நான் ௯
அவர்களைச்சனங்களுக்குள் இறைத்தபின்பு, அ
வர்கள் தூரதேசங்களிலிருந்து என்னைநினைத்து,
தங்கள் சந்ததியாரோடே இரட்சிக்கப்பட்டுத்தி
ரும்பிவருவார்கள்.—எகிப்துதேசத்தினின்றும் அ ௰
வர்களைத்திரும்பிவரப்பண்ணுவேன், அஷீரிய
வினின்றும் அவர்களைச்சேர்த்துக்கொண்டு, அ
வர்களைக் கிலியாத் தேசத்துக்கும், லிபானோ

(௯) ஏசா.௬௨.௰௧. மத்.௨௧.௫. யோவா.௰௨.௰௫. எரே.௨௩.௫. லூக்.௰௯.௩௮. யோவா.௧.௪௯. (௰) ஓசி.௧.௭. மீகா.௫.௰. ஆகா.௨.௨௨. எபே.௨.௰௪,௰௭. சங்.௭௨.௮. (௰௧) யாத்.௨௪.௮. எபி.௰.௨௯. ஏசா.௪௨.௭. (௰௨) ஏசா. ௪௯.௯. ஏசா.௬௧.௭. (௰௪) ஏசா.௨௧.௧. (௰௫) லேவி.௪.௰௮,௨௫. உபா.௰௨.௨௭. (௰௬) ஏசா.௬௨.௩. மல்.௩.௰௭. ஏசா.௰௧.௰௨. (௰௭) யோவே.௩.௰௮. ஆமோ.௯.௰௪.—(௰. அதி. ௧.) எரே.௰௪.௨௨. உபா.௰௧.௰௪. யோபு.௨௯.௨௩. யோவே.௨.௨௩. எரே.௰.௰௩. (௨) எரே.௰.௮. அப.௯.௨.௰௮. நியா.௰௭.௫. யோபு.௰௩.௰௪. எசேக்.௩௪.௫. (௩) எசேக்.௩௪.௰௭. லூக்.௧.௬௮. உன்.௨௧.௧. (௪) எண்.௨௪.௰௭. ௧.சாமு.௰௪.௩௮. ஏசா.௰௯.௰௩. ஏசா.௨௨.௨௩. (௫) எரே.௩.௰௮. எசேக்.௩௭.௨௧. ஓசி.௧.௭. (௮) ஏசா.௫.௨௬. ஏசா.௪௯.௰௯. எசேக்.௩௬.௩௭. (௯) ஓசி.௨.௨௩. உபா. ௩௰.௧. (௰) ஏசா.௰௧.௰௧,௰௬. ஓசி.௰௧.௰௧. ஏசா.௪௯.௨௰.

னுக்கும் வரப்பண்ணுவேன்; அவர்களுக்கு இ
௰௧ டம் இல்லாமற்போம்.-அவன் துக்கமென்னுஞ்
சமுத்திரத்தைக் கடந்தபின்பு சமுத்திரத்தின்தி
ரைகளை அடிப்பான், அப்பொழுது நதியின் ஆ
ழமான சலமுழுவதும் வற்றிப்போம்: அஸீரிய
வின் கருவம் தாழ்த்தப்படும், எகிப்தின் செங்
௰௨ கோல்நீங்கிப்போம்.—நான்அவர்களை யெகோ
வாவினால் பெலப்படுத்துவேன்; அவர்கள் அ
வருடையநாமத்தில் உலாவிக்கொள்வார்களென்
று யெகோவா சொல்லுகிறார்.

## ௰௧. அதிகாரம்.

௧.யெரூஷலேம்நாசமடையுமென்றுமுன்னுரைத்தல்: ௪. தெரிந்துகொள்ளப்பட்டவர்இரட்சிப்புப்பெற,மற்றவர்கள்நாசமடைதல்: ௰. சோலைமுறிப்பதினால்யூதேயர் முறிக்கப்படுவார்களென்றுகாட்டல்: ௰௫. புத்தியில்லாதமேய்ப்பரின் கிரியைகளையும் பலனையுந் தெரிவித்தல்.

லிபானோனே, அக்கினி உன் எரஸ்மரங்களைப்
பட்சிக்கும்படிக்கு உன்வாசல்களைத் திறந்துவி
௨ டு.—தேவதாருவிருட்சங்களே, எரஸ்மரங்கள்வி
ழுந்தன, சிறந்தவைகள் நாசமாயின; ஆதலால்
அலறுங்கள்: பாஷானிலுள்ள அல்லோன்விருட்
சங்களே, அரணுள்ளசோலை கீழே தள்ளப்பட்
டதினால் அலறுங்கள்.
௩ மேய்ப்பரின் மகிமை நாசமாக்கப்பட்டபடி
யால் அவர்கள் அலறுகிறசத்தங் கேட்கின்ற
து: யோர்தானின் பெருமை அழிந்துபோயிற்று;
அதினால் இளஞ்சிங்கங்கள் கருச்சிக்குஞ்சத்தங்
௪ கேட்கின்றது.—என் தேவனாகிய யெ
கோவா இவ்வாக்குச்சொல்லுகிறார்; கொலை
௫ யுண்கிற ஆடுகளை மேயப்பண்ணி,—அவைகளை
உடையவர்கள் அவைகளைக் கொன்று, தங்க
ளுக்குக் குற்றமில்லையென்றெண்ணுகிறார்கள்:
அவைகளை விற்கிறவர்கள் நான் செல்வன்; யெ
கோவாவுக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக
வென்கிறார்கள்: அவைகளை மேய்க்கிறவர்களில்
ஒருவனாகிலும் அவைகள்மேல் இரக்கம்வைக்கி
௬ றதில்லை.—கேளுங்கள், நான் இனி இந்தத்தேசத்
தார்மேல் இரக்கம்வையாமல், மனுஷர்யாவரை
யும் அவனவன் அயலான்கையிலும், அவனவன்
இராசாவின்கையிலும் ஒப்பிப்பேன்: இவர்கள்
இந்தத்தேசத்தைச் சேதிப்பார்கள், இவர்கள்கை
யினின்று அவர்களை விடுவிக்கமாட்டேனென்
௭ று யெகோவா சொல்லுகிறார்.—ஆட்டுக்கூட்
டத்தில் சிறுமைப்பட்டவைகளினிமித்தம் நான்
கொலையுண்கிற ஆடுகளை மேயப்பண்ணினேன்.
அதற்கு இரண்டுகோல்களை எடுத்துக்கொண்டு
ஒன்றுக்கு அனுக்கிரகமென்றும், ஒன்றுக்குப்பந்
௮ தனமென்றும் பெயரிட்டு ஆடுகளைமேய்த்து,—ஒ
ரேமாதத்தில் மூன்றுமேய்ப்பரைச் சேதித்தேன்;
என்மனம் அவர்களைவெறுத்ததுபோல் அவர்க
ளுடையமனம் என்னைவெறுத்தது.—அப்பொழு ௯
து நான் இனி உங்களை மேய்க்கமாட்டேன்: சா
கிறது சாகட்டும்; அதமாகிறது அதமாகட்டும்; மீந்
திருப்பவைகளில் ஒன்றினுடைய மாமிசத்தை
ஒன்றுதின்னக்கடவதென்றுசொல்லி,
அனுக்கிரகம் என்னப்பட்ட என்கோலை எடுத் ௰
து அந்தச்சனங்களெல்லாரோடும் நான்பண்ணி
யிருந்தஎன்னுடன்படிக்கையை அற்றுப்போகப்
பண்ணும்படிக்கு அதைமுறித்தேன்.-அந்நாளில் ௰௧
அது அற்றுப்போயிற்று: அதினால் மந்தையில்என்
னைப்பற்றிக்கொண்ட சிறுமைப்பட்டவைகள்
இது யெகோவாவின் வாக்கேயென்று அ
றிந்துகொண்டன.-பின்பு நான் அவர்களைநோக் ௰௨
கி, உங்கள் பார்வைக்கு நலமாய்த்தோன்றினால்
எனக்குவேண்டியகூலியைத்தாருங்கள்; இல்லா
விட்டால்இருக்கட்டுமென்றேன். அப்பொழுது
எனக்குக்கூலியாகமுப்பதுவெள்ளிக் காசை நி
றுத்தார்கள்.-பின்பு யெகோவா என்னைநோக் ௰௩
கி, அதைக்குயவனிடத்தில் எறிந்துவிடு. இது
வே நான் அவர்களால் மதிக்கப்பட்ட சிறந்தவி
லையென்றுசொல்ல, நான் அந்தமுப்பதுவெள்
ளிக்காசை எடுத்து, அவைகளைக் குயவனிடத்
தில் யெகோவாவின் ஆலயத்தில்எறிந்துவிட்
டேன்.—பின்பு நான் யூதாவுக்கும், இஸரவே ௰௪
லுக்குமுண்டான சகோதரசம்பந்தத்தைஅற்றுப்
போகப்பண்ணும்படிக்குப் பந்தனம் என்னப்
பட்ட என்னுடைய இரண்டாங்கோலையும் இ
ரண்டாகத்துணித்தேன்.
பின்பு யெகோவா என்னைநோக்கி, நீ அவி ௰௫
வேகமுள்ள மேய்ப்பனுடைய ஆயுதங்களை இன்
னும்வைத்துக்கொள்.-பார்,தேசத்தில் ஒருமேய்ப ௰௬
னைத்தோற்றுவிப்பேன், அவன் அதமாகிறவை
களைவிசாரியாமலும், சிதறுண்டதைத் தேடாம
லும், நொறுங்குண்டதைச் சொஸ்தப்படுத்தா
மலும், நின்றுவிட்டதை ஆதரியாமலும், புஷ்டி
யானவைகளின் மாமிசத்தைப்புசித்தும் அவை
களுடைய குளம்புகளைப்பிளந்தும்வருவான்.—
ஐயோ, ஆட்டுக்கூட்டத்தைக் கைவிடுகிற வீண ௰௭
னாகிய மேய்ப்பனுக்கு ஆபத்துவரும்; கட்கம்அ
வனுடைய புயத்தின்மேலும், அவனுடையவல
துகண்ணின்மேலும் வரும்: அவனுடையபுயம்
முழுவதுஞ்சூம்பும், அவனுடைய வலதுகண்தீர
இருண்டுபோமென்றார்.

## ௰௨. அதிகாரம்.

௧. யெரூஷலேம் நடுங்கச்செய்யும்பாத்திரமாதல்: ௩.பாரமானகல்லாதல்:௬.யூதேயாசெயங்கொள்ளல்: ௯. யெரூஷலேம் மனஸ்தாபப்படல்.

இஸரவேலைக்குறித்து யெகோவா சொல்லி ௧
ய தீர்க்கதரிசனவாக்கியம்; வானங்களைவிரித்து,
பூமியை அஸ்திபாரப்படுத்தி, மனுஷனுடைய
ஆவியை அவனுக்குள் சிருஷ்டித்திருக்கிற யெ

(௰௧) ஏசா.௰௧.௰௫,௰௬. ஏசா.௰௪.௨௫. எசேக்.௩௰.௰௩. (௰௨) மீகா.௪.௫.—(௰௧.அதி.௨.) ஏசா.௩௨.௰௯. (௫) எரே.௨.௩. உபா.௨௯.௰௯. ஓசி.௰௨.௮. (௭)செப்.௩.௰௨. மத்.௰௧.௫. (௮) ஓசி.௫.௭. (௯) எரே.௰௫.௨. (௰௧) செப்.௩.௰௨. (௰௨) மத்.௨௬.௰௫. (௰௩) மத்.௨௭.௯,௰. (௰௫) எசேக்.௩௪.௨,௩,௪. (௰௭) எரே.௨௩.௧. எசேக்.௩௪.௨. யோவா.௰.௰௨,௰௩.—(௰௨. அதி. ௧.) ஏசா.௪௨.௭. எண்.௰௬.௨௨. பிர.௰௨.௭. ஏசா.௫௭.௰௬. எபி.௰௨.௯.

௨ கோவா,—பாருங்கள், சுற்றிலுமிருக்கிற சமஸ்
தசனங்களுக்கும் நான்யெருஷலேமைத்தடுமாற்
றும்பாத்திரமாக்குவேன், யெருஷலேம்வளைந்து
கொள்ளப்பட்டிருக்கும்பொழுது யூதாவும் அப்
படியேயாகும்.
௩ அந்நாளிலே நான்யெருஷலேமைச் சமஸ்த
சனங்களுக்கும் பாரமானகல்லாக்குவேன்: அ
தைக்கிளப்புகிறவர்யாவரும் நொறுக்கப்படுவார்
கள், ஆயினும்பூமியிலுள்ளசமஸ்தசனங்களும்அ
தற்கு விரோதமாக ஏகமாய்க் கூடுவார்களென்
௪ றார்.—அந்நாளிலே நான் ஒவ்வொருகுதிரையை
யுந் திகைப்பினாலும், அதில் ஏறியிருக்கிறவனை
மயக்கத்தினாலும் அடித்து, யூதாவமிசத்தாரின்
மேல் என் கண்களைத்திறந்துவைத்து, சனங்க
ளின் குதிரைகளெல்லாவற்றையுங்குருட்டினால்
௫ அடிப்பேன்.-தங்கள் தேவனுஞ் சேனாபதியுமா
கிய யெகோவாவினால் யெருஷலேமியர்
என்பலமாகவிருப்பார்களென்று யூதாவின் அதி
பதிகள் தங்கள் தங்கள் இருதயங்களில் எண்ணு
வார்கள்.
௬ அந்நாளிலே நான் யூதாவின் அதிபதிகளைவிற
குகளுக்குள் எரிகிற அக்கினிபடுப்புக்கும், வைக்
கோற் கட்டுகளுக்குள் எரிகிற தீவர்த்திக்கும்
ஒப்பாக்குவேன்: அவர்கள் வலதுபுறமும் இட
துபுறமுமாகப்புறப்பட்டு, சுற்றிலுமிருக்கிற சம
ஸ்த சனங்களையும் பட்சிப்பார்கள்: யெருஷ
லேம், தன்னிடமாகிய யெருஷலேமில் வாசஸ்
௭ தானமாகும்.-தாவீதின் வமிசத்தின் மகிமையும்,
யெருஷலேமியரின் மகிமையும் யூதாவின்மேல்
உன்னதம்பெறாதபடி யெகோவா யூதாவின்
௮ கூடாரங்களை முதல் இரட்சிப்பார்.—அந்நாளி
லே யெகோவா யெருஷலேமியரைக் காப்
பாற்றுவார்; அதனால் அந்நாளில் அவர்களில் இ
டறியிருப்பவன் தாவீதைப்போலவும், தாவீதின்
வமிசத்தார்தங்கள்முன்னணியிலுள்ள யெகோ
வாவின் தூதனாகிய தேவனைப்போலவுமி
ருப்பார்கள்.
௯ அந்நாளிலே யெருஷலேமுக்கு விரோதமாய்
வருகிறஅந்நியதேசத்தார்யாவரையும் அழிக்கும்
௰ படிவகைதேடுவேன்.—நான் தாவீதின் வமிசத்
தார்மேலும், யெருஷலேமியர்மேலுங் கிருபைக்
கும், விண்ணப்பங்களுக்குமேற்ற ஆவியை ஊற்
றுவேன்: அவர்கள்தாங்கள்குத்தினஎன்னைநோக்
கிக்கொண்டு, ஒருவன் தன் ஒரேபேறானவனி
மித்தந்துக்கிக்கிறதுபோல, அவனிமித்தந்துக்கித்
து, ஒருவன்தலைப்பிள்ளையினிமித்தம் புலம்புகி
௰௧ றதுபோல, அவனிமித்தம்புலம்புவார்கள்.—மெ
கிதோனைச்சேர்ந்த தாழ்ந்தபூமியிலுள்ள ஆதத்ரிம்
மோனின் துக்கத்தைப்போல, அந்நாளில்யெரு
ஷலேமிலே மிகுந்ததுக்கமுண்டாகும்.—தேசத் ௰௨
திலுள்ள ஒவ்வொருகுடும்பமுந்தனித்தனியாய்த்
துக்கங்கொண்டாடும்; தாவீதின் குடும்பத்தார் த
னியேயும், அவர்களுடைய ஸ்திரிகள் தனியே
யும், நாதானின்குடும்பத்தார் தனியேயும், அவர்
களுடைய ஸ்திரிகள் தனியேயும்,—லேவியின் ௰௩
குடும்பத்தார் தனியேயும், அவர்களுடையஸ்திரி
கள்தனியேயும், ஷிமியின் குடும்பத்தார் தனியே
யும், அவர்களுடையஸ்திரிகள் தனியேயும்,—மீந் ௰௪
திருக்கும் எந்தெந்தக் குடும்பத்தாருந் தனித்தனி
யேயும், அவரவர்களுடைய ஸ்திரிகளுந் தனித்த
னியேயுந்துக்கங்கொண்டாடுவார்களென்
று யெகோவா சொல்லுகிறார்.

## ௰௩. அதிகாரம்.

க. பாவத்தினிமித்தம் ஊற்றின்கண்திறத்தல்: தே
வபூசையையுங்கள்ளத்தீர்க்கதரிசனத்தையும்நீக்
கல்: ௭. கிறிஸ்துவின்மரணத்தையும் யூதேயருக்
குவரும்விசேஷங்களையுந்தெரிவித்தல்.

அந்நாளிலே பாவத்தையும், அசுத்தத்தையும் நீக் ௧
கும்படிக்குத் தாவீதின் வமிசத்தாருக்கும்,
யெருஷலேமியருக்குந்திறந்த ஒருஊற்றின்கண்
ணுண்டாகும்.
அந்நாளிலே நான் விக்கிரகங்களின்பேருந் ௨
தேசத்திலில்லாமல் அகற்றுவேன், அவைகள் நி
னைவிலேவராது: தீர்க்கதரிசிகளும், அசுத்த ஆவி
யுந் தேசத்தினின்று அகலும்படிசெய்வேனென்
று சேனாபதியாகிய யெகோவா சொல்லுகி
றார்.—ஒருவன் தீர்க்கதரிசனஞ் சொல்லவிரும் ௩
பினால் அவன்தரிசனஞ்சொல்லும்பொழுது, அ
வனைப்பெற்ற பிதாமாதாக்கள்அவனைநோக்கி, நீ
யெகோவாவின் நாமத்தைக்கொண்டுபொய்
பேசுகிறபடியால் நீசீவிக்கப்படாதென்றுசொல்
லி அவனைப்பெற்றபிதாமாதாக்களே அவனை உரு
வக்குத்துவார்கள்.—மேலும் அந்நாளிலே தீர்க்க ௪
தரிசிகள் தங்கள் தங்கள் தீர்க்கதரிசனங்களைச்
சொல்லும்பொழுது, அவைகளைக்குறித்து இலச்
சைஅடைவார்கள்; வஞ்சிக்கிறதற்கு இனிஅவர்
கள் உரோமமுள்ள போர்வையைப் போர்த்துக்
கொள்ளமாட்டார்கள்.—ஒவ்வொருவனும்நான் ௫
தீர்க்கதரிசியல்ல, நான் பயிர்செய்கிறவன்; என்
சிறுவயதுமுதல் ஒருமனுஷன் என்னை வேலை
கொண்டானென்பான்.-அப்பொழுது ஒருவன் ௬
அவனைநோக்கி, உன்கைகளிலுள்ளஇந்தத்தழும்
புகளென்னவென்றுகேட்க, அவன், என்சிநேகரி
ன்வீட்டில் இப்படிக்காயப்பட்டேனென்பான்.
கட்கமே, என் கூட்டாளியாகிய என்மேய்ப் ௭
பனுக்குவிரோதமாய்விழித்துக்கொள்: மேய்ப்ப

(௨) ஏசா.௫௧.௰௭. (௩) மத்.௨௧.௪௪. (௪) சங்.௭௬.௬. எசேக்.௩௮.௪. (௫) யோவே.௩.௰௬. (௬) ஒப.௰௮. (௮) யோவே.௩.௰. (௯) ஆகா.௨.௨௨. (௰) எரே.௩௧.௯. எசேக்.௩௯.௨௯. யோவே.௨.௨௮. யோவா.௰௯.௩௪,௩௭.வெளி. ௧.௭. எரே.௬.௨௬. ஆமோ.௮.௰. (௰௧) அப்.௨.௩௭. ௨.இரா.௨௩.௨௯. ௨.நாளா.௩௫.௨௪. (௰௨)மத்.௨௪.௩௰. வெளி. ௧.௭. ௨.சாமு.௫.௰௪. லூக்.௩.௩௧.—(௰௩.அதி.௧.) எபி.௯.௰௪. ௧.பேதுரு.௧.௰௯. வெளி.௧.௫. (௨) யாத்.௨௩.௰௩. யோசு.௨௩.௬. எசேக்.௩௰.௰௩. ஓசி.௨.௰௬. மீகா.௫.௰௨,௰௩. ௨.பேதுரு.௨.௧. (௩) உபா.௰௩.௭. (௪) மீகா.௩.௬,௭. ௨.இரா.௧.௮. ஏசா.௨௰.௨. மத்.௩.௪. (௫) ஆமோ.௭.௰௪. (௭) ஏசா.௪௰.௰௧. எசேக்.௩௪.௨௩. யோவா.௰.௩௰. யோவா.௰௪.௰,௰௧.பிலி.௨.௬. மத்.௨௬.௩௧. மத்.௰௮.௰,௰௪.

னை அடி, ஆடுகள்சிதறிப்போம்: ஆனாலும் அந்
தச்சிறுவர்மேல்திரும்பவும்என்கையைவிரிப்பே
னென்று சேனைபதியாகிய யெகோவா சொல்
௮ லுகிறார்.—அத்தேசம்முழுவதிலேயும் இரண்டுபங்
குமனுஷர் சேதிக்கப்பட்டுமாண்டுபோவார்கள்;
மூன்றாம் பங்கோ அதில் மீந்திருப்பார்கள்.—
௯ அந்த மூன்றாம்பங்கை அக்கினிமத்தியின் வழி
யாய்க்கொண்டுவந்து, வெள்ளியை உருக்குகிற
துபோல அவர்களை உருக்கி, பொன்னைப்புடமி
டுகிறதுபோல நான் அவர்களைப்புடமிடுவேன்:
அவர்கள்என்நாமத்தில்வேண்டுதல்செய்வார்கள்,
நான் அவர்கள்விண்ணப்பத்தைக்கேட்டு, இவர்
கள் என்னுடையசனங்களென்று நான்சொல்ல,
அவர்கள், யெகோவாவே எங்கள் தேவ
னென்று சொல்லுவார்களென்பதை யெகோ
வா சொல்லுகிறார்.

## ௰௪. அதிகாரம்.

௧. யெரூஷலேமின் நாசமும் அதை நாசப்படுத்தினவர்களுடைய தண்டனையுமாகிய இவைகளைத் தெரிவித்தல்: ௰௬. யூதேயரும் அந்நியதேசத்தாருமானவர்களின் மீட்சியைக் குறித்தல்: ௨௰. அந்த மீட்சியினால் யாவரும் பரிசுத்தமுள்ளவர்களாதல்.

பாருங்கள், யெகோவாவின் நாள் வருகின்
றது, உன் திரவியங் கொள்ளைப்பொருளாய்
௨ உன்மத்தியில் பங்கிடப்படும்.-யெரூஷலேமுக்
கு விரோதமாக யுத்தம்பண்ணும்படி நான் சகல
தேசத்தாரையுங் கூட்டுவேன்; நகரம்பிடிக்கப்ப
டும், வீடுகள் கொள்ளையாடப்படும், ஸ்திரிகள்
அவமானப்படுவார்கள்; நகரத்தின்பாதிச்சனங்
கள் சிறைப்பட்டுப்போவார்கள், மீந்திருப்பவர்
கள்மாத்திரம் நகரத்தினின்று சேதிக்கப்படார்
௩ கள்.—அப்பொழுது யெகோவா புறப்பட்டு
யுத்தநினத்திலே யுத்தஞ்செய்ததுபோல், அந்தத்
தேசத்தாருக்குவிரோதமாகயுத்தஞ்செய்வார்.
௪ அந்நாளில் அவருடைய பாதங்கள் கிழக்கே
யெரூஷலேமுக்கு எதிர்ப்புறத்திலுள்ள சீதவி
ருட்சமலையின்மேல் நிற்கும், அப்பொழுது மிக
வும் பெரியபள்ளமுண்டாகும்படி சீதவிருட்ச
மலை தன்நடுவில் கிழக்குக்கும் மேற்குக்கும் எதி
ராகப்பிளந்துபோம், அதில்ஒருபாதிவடபக்கமா
௫ யும், ஒருபாதி தென்பக்கமாயும் விலகும்.—அப்
பொழுது மலைகளைச்சேர்ந்த பள்ளம் ஆத்சல்வ
ரைக்கும் எட்டுவதினால், நீங்கள் யூதாதேசத்து இ
ராசாவாகிய ஊசியாவின் நாள்களில் பூமி அதிர்
தலுக்குத் தப்பி ஓடினதுபோல் என் மலைகளைச்
சேர்ந்தபள்ளத்தின்வழியாய் ஓடிப்போவீர்கள்:
என் தேவனாகிய யெகோவா வருவார், பரி
சுத்தர்கள்யாவரும் உம்முடனிருப்பார்கள்.—
அந்நாளிலே பிரகாசிக்கும் ஒளியில்லாமல் இறு ௬
கினஅந்தகாரமுண்டாகும்.-ஒருநாள்வரும், யெ ௭
கோவா அதை அறிவார், அதுபகலுமல்ல, இ
ரவுமல்ல: சாயங்காலத்தில் ஒளியுண்டாகும்.—
அந்நாளிலே சீவநீர்கள் யெரூஷலேமினின்றுபு ௮
றப்பட்டு, பாதி கிழக்குச் சமுத்திரத்திற்கும், பா
தி மேற்குச்சமுத்திரத்திற்குஞ் செல்லும்: அது
மாரிகாலத்திலுங்கோடைகாலத்திலுமிருக்கும்.-
யெகோவா பூமி எங்கும் இராசாவாயிருப் ௯
பார்: அந்நாளிலே யெகோவா ஒருவரே இ
ருப்பார், அவருடைய நாமமும் ஒன்றே.—கே ௰
பாதொடங்கி, யெரூஷலேமுக்குத்தென்புறத்தி
லுள்ள ரிம்மோன் வரைக்குஞ் சமபூமியாய் மா
றும்: நகரம் உன்னதம்பெற்று, தனதிடத்திலே
பேன்யாமீன் வாசல்தொடங்கிப் பழையவாச
லிருந்தஸ்தலத்திலுள்ளகோடிவாசல்வரைக்கும்,
அன்னேலின் கோபுரந்தொடங்கி இராசாவின்
திராட்சஆலைகள்வரைக்குங்குடியேற்றப்படும்.—
அதில் வாசம்பண்ணுவார்கள், இனிச்சாபம்அதி ௰௧
லிராது; யெரூஷலேமோ வாழ்வோடேதங்கும்.
யெரூஷலேமுக்குவிரோதமாகயுத்தம்பண்ணி ௰௨
ன சமஸ்தசனங்களையும் யெகோவா வாதிக்
கும் வாதையிதுவே; அவர்கள் காலூன்றிநிற்கை
யிலும் அவர்களுடையமாமிசம் சிதைந்துபோம்,
அவர்களுடைய கண்கள் தங்கள் குழிகளிலே
கெட்டுப்போம், அவர்களுடைய நாவு அவர்கள்
வாயில் அழிந்துபோம்.—அந்நாளிலே யெகோ ௰௩
வாவினால் பெரியகலகம் அவர்களுக்குள்ளி
ருக்கும்; அவனவன் தன்தன் அயலானுடையகை
யைப்பிடிப்பான், அவர்களுடைய கைகள் ஒரு
வருக்கொருவர் விரோதமாய் ஓங்கப்படும்.—யூ ௰௪
தாவும் யெரூஷலேமிலே யுத்தம்பண்ணுவான்;
அப்பொழுது சுற்றிலுமிருக்கிற அந்நியதேசத்தா
ரெல்லாருடையதிரவியமாகியபொன்வெள்ளிக
ளும், வஸ்திரங்களும் மிகுதியாய்க்கூட்டிவைக்
கப்படும்.-அந்தப்பாளயங்களிலிருக்குங்குதிரை ௰௫
கள், கோவேறுகழுதைகள், ஒட்டகங்கள், கழு
தைகள்முதலானமிருகங்களெல்லாவற்றிற்கும்வ
ரும்வாதையும் அந்தவாதையைப்போலிருக்கும்.
பின்பு யெரூஷலேமுக்கு விரோதமாகவந்த ௰௬
அந்நியதேசத்தாரெல்லாரிலும் மீந்திருக்கும் யா
வரும், சேனைபதியும் யெகோவாவுமாகிய இ
ராசாவைத்தொழுதுகொள்ளும்படிக்கும், கூடா
ரங்களின் உற்சவத்தை ஆசரிக்கும்படிக்கும் வ
ருஷத்துக்குவருஷம் வருவார்கள்.—அப்பொழு ௰௭
து பூமியிலுள்ள வமிசத்தார்களில், சேனைபதியும்
யெகோவாவுமாகிய இராசாவைத்தொழுது
கொள்ளும்படிக்கு யெரூஷலேமுக்குவராதவர்
களெவர்களோ, அவர்கள்மேல்மழைபெய்யாது.-

(௮) ரோ.௰௧.௫. (௯) ஏசா.௪௮.௰. ௧.பேதுரு.௧.௬,௭. சங்.௫௰.௰௫. சங்.௱௪௪.௰௫. எரே.௩௰.௨௨. எசேக்.௰௧.௨௰. ஓசி.௨.௨௩.—(௰௪. அதி. ௧.) ஏசா.௰௩.௯. யோவே.௨.௩௧. அப்.௨.௨௰. (௨) யோவே.௩.௨. ஏசா.௰௩.௰௬. (௪) யோவே.௩.௰௨,௰௪. (௫) ஆமோ.௧.௧. மத்.௰௬.௨௭. யூதா.௰௪. யோவே.௩.௰௧. (௭) வெளி.௨௨.௫. மத்.௨௪.௩௬. ஏசா.௩௰.௨௬. வெளி.௨௧.௨௩. (௮) எசேக்.௪௭.௧. யோவே.௩.௰௮. வெளி.௨௨.௧. யோவே.௨.௨௰. (௯) தானி.௨.௪௪. வெளி.௰௧.௰௫. எபே.௪.௫,௬. (௰) ஏசா.௪௰.௪. எரே.௩௧.௩௮. (௰௧) எரே.௩௧.௪௰. எரே.௨௩.௬. (௰௩) ௧.சாமு.௰௪.௰௫,௨௰. நியா.௭.௨௨. ௨.நாளா.௨௰.௨௩. எசேக்.௩௮.௨௧. (௰௪) எசேக்.௩௯.௰. (௰௬) ஏசா.௬௰.௬,௭. லேவி.௨௩.௩௪,௪௩. நிகி.௮.௰௪. ஓசி.௰௨.௯. யோவா.௭.௨. (௰௭) ஏசா.௬௰.௰௨.

௰௮ மழையில்லாத எகிப்தின் வமிசத்தாரும் வராம
லுஞ்சேராமலுமிருந்தால், கூடாரங்களின் உற்ச
வத்தை ஆசரிக்கப்போகாத அந்நியதேசத்தார்க
ளை யெகோவாவாதிக்கும்வாதை அவர்கள்
௰௯ மேலும்வரும்.—இதுவேகூடாரங்களின்உற்சவத்
தைஆசரிக்கவந்தேறாதஎகிப்தியருக்கும்,மற்றுஞ்
சகலதேசத்தாருக்கும்வருந்தண்டனை.
௨௰ அந்நாளிலே குதிரைகளின் மணிகளின்மேல்
"யெகோவாவுக்குப்பரிசுத்தம்" என்பது ப
திந்திருக்கும்,யெகோவாவின் ஆலயத்திலுள்
ள பானைகள் வேதிகையின் சமுகத்திலுள்ளபாத்
திரங்களைப்போலாகும்.—யெருஷலேமிலும் யூ ௨௧
தாவிலுமுள்ள பானைகளெல்லாஞ் சேனைபதியா
கிய யெகோவாவுக்குப் பரிசுத்தமாகும்; ப
லியிடுகிற யாவரும்வந்து, அவைகளிலெடுத்துப்
பாகம்பண்ணுவார்கள்: அந்தக்காலத்தில்சேனைப
தியாகிய யெகோவாவின் ஆலயத்தில்கானா
னியர்நிற்கமாட்டார்கள்.

(௰௮)உபா.௰௧.௰.(௨௰)ஏசா.௨௩.௰௮.(௨௧)ஏசா.௩௫.௮.யோவே.௩.௰௭.வெளி.௨௧.௨௭.எபே.௨.௰௯,௨௰,௨௧,௨௨.

# மல்கியா.

## ௧. அதிகாரம்.

௧. இஸரவேலின் நன்றிகேட்டைக்குறித்துத்தீர்க்கதரிசி அவர்களைக் கண்டித்தல்: ௬. அவர்களுடைய துன்மார்க்கத்தைக்காட்டல்.

மல்கியாவின் வழியாய் இஸரவேலருக்குக்கி
௨ டைத்த யெகோவாவின் வாக்கியம்.—நான்
உங்களைநேசித்தேனென்று யெகோவாசொல்
லுகிறார். அதற்கு நீங்கள், நீர் எப்படி எங்களை
நேசித்தீரென்கிறீர்கள்; ஏசாவு, யாக்கோபுக்குச்
சகோதரனல்லவா; ஆகிலும் நான் யாக்கோபை
௩ நேசித்தேன்.—ஏசாவை நான் பகைத்தேன்,அவ
னுடைய மலைகளைப்பாழும், அவனுடைய சுதந்
தரத்தை வனாந்தரத்திலுள்ள வலுசருப்பங்களின்
வாசஸ்தானமுமாக்கினேனென்று யெகோ
௪ வா சொல்லுகிறார்.—ஏதோமியர், நாம் பாழாக்
கப்பட்டாலும்பாழான இடங்களைத்திரும்பவுங்
கட்டுவோமென்று சொல்லுகிறார்கள்; சேனைபதி
யாகிய யெகோவா, அவர்கள்கட்டுவார்கள்,
நான் இடிப்பேன்; அவர்கள், துன்மார்க்கத்தின்
எல்லையென்றும், யெகோவாவின் நித்திய
கோபத்துக்குத்தக்கசனங்களென்றும்அவர்களுக்
௫ குப்பெயரிடுவார்கள்.—நீங்கள் அதைக்கண்ணி
னாலேகண்டு,இஸரவேலுடைய எல்லைக்கப்பால்
யெகோவாவின் மகிமை பிரகாசமாயிருப்ப
தாகவென்று சொல்லுவீர்களென்னும் இவ்வாக்
குச்சொல்லுகிறார்.
௬ மேலும் சேனைபதியாகிய யெகோவா, தம
துநாமத்தை அவமதிக்கிறஆசாரியர்களாகிய உங்
களிடத்தில்,புத்திரன் தன் பிதாவையும்,பணிவி
டைக்காரன் தன் எசமானனையுங் கனம்பண்ணு
வார்கள்: நான்பிதாவாயிருந்தால் என்கனமெங்
கே; நான்எசமானனாயிருந்தால் என்னைப்பற்றும்
பயமெங்கேயென்றுசொல்ல,நீங்கள் உமதுநாமத்
௭ தை எப்படி அவமதித்தோமென்கிறீர்கள்.—என்
னுடையவேதிகையின்மேல்அசுத்தஆகாரத்தைப்
படைத்துவருகிறீர்கள்;நீங்களோ எதினால்அதை
அசுத்தப்படுத்தினோமென்கிறீர்கள்; யெகோ
வாவின் பீடம்அலட்சியமுள்ளதென்றுசொல்
௮ லுகிறீர்கள்.—நீங்கள் கண்ணூனமானதைப்பலி
யிட்டால் அது தோஷமல்லவா, காலூனமான
தையும், நசல்பிடித்ததையும் பலியிட்டால் அது
தோஷமல்லவா, அப்படிப்பட்டதை நீ உன்தே
சாதிபதியினிடத்தில்செலுத்து; அவன்உன்மேற்
பிரியமாயிருப்பானா, உன்னை அங்கிகரிப்பானா
வென்று சேனைபதியாகிய யெகோவா சொல்
லுகிறார்.—எங்கள்மேல்கிருபைவிளக்கியருளும் ௯
படி தேவனுடைய சமுகத்தில் விண்ணப்பம்
பண்ணும்பொருட்டு உங்களைவேண்டுகிறேன்:
உங்கள்கையினால் இதுநடந்ததே: அவர் உங்க
ளை அங்கிகரிப்பாராவென்று சேனைபதியாகிய
யெகோவா சொல்லுகிறார்.—உங்களில் யா ௰
வன் கதவுகளைப்பூட்டுகிறான், பலனில்லாமல்
என்வேதிகையின்மேல் அக்கினியைக் கொ
ளுத்தமாட்டீர்கள். உங்கள்மேல் எனக்குப்பிரி
யமில்லை, உங்கள்கையினின்று நான்காணிக்கை
யை அங்கிகரிக்கமாட்டேனென்றுசேனைபதியா
கிய யெகோவா சொல்லுகிறார்.—ஆனாலும் ௰௧
சூரியன் உதிக்கிறதிசைதொடங்கி அது அஸ்த
மிக்கிறதிசைவரைக்கும்அந்நியதேசத்தாருக்குள்
என்நாமம் மேன்மை பெறும்; எல்லா இடங்க
ளிலும் என்நாமத்துக்கென்று தூபமும், பரிசுத்
தமான காணிக்கையுஞ் செலுத்தப்படும்: அந்நிய
தேசத்தாருக்குள் என்நாமம் மேன்மை பெறு
மென்று சேனைபதியாகிய யெகோவா சொல்
லுகிறார்.
யெகோவாவின் பீடம் அசுத்தம்; அவ ௰௨
ருடையஆகாரமாகிய அதின்பலன் அலட்சிய
முள்ளதென்றுநீங்கள்சொல்லுவதினால் அதைஅ
வமதிக்கிறீர்கள்.—இது எவ்வளவுவருத்தமென்று ௰௩
சொல்லி நீங்கள் அதைஅவமதிக்கிறீர்களென்று
யெகோவாசொல்லுகிறார்; பீறுண்டதையும்,
காலூனமாயிருந்ததையும், நசல்கொண்டதையும்
கொண்டுவந்து காணிக்கையாகச்செலுத்துகிறீர்
கள்; அதை உங்கள் கைகளினின்று அங்கி
கரித்துக்கொள்வேனோவென்று சேனைபதியாகிய
யெகோவா சொல்லுகிறார்.—தன்மந்தையில் ௰௪
ஆண் இருக்கையில், கெட்டுப்போனதை ஆண்
டவருக்குச் சங்கற்பம்பண்ணிப் பலியிடுகிற
வஞ்சகன் சபிக்கப்பட்டவன்: நான்மகாராசா,
அந்நியதேசத்தாருக்குள் என்நாமம் பயங்கரமுள்
ளதென்றுசேனைபதியாகிய யெகோவாசொல்
லுகிறார்.

## ௨. அதிகாரம்.

௧. உடன்படிக்கையைமீறினதினிமித்தம் ஆசாரியரைத்தண்டித்தல்: ௰. தேவபூசையினிமித்தம் சனங்களைத் தண்டித்தல்: ௰௪. பரதாரகமனத்தையுங் கொடுமையையுங்குறித்து அவர்களைத்தண்டித்தல்.

ஆசாரியர்களே, இப்பொழுது இந்தக்கட்டளை ௧
உங்களுக்காக இருக்கின்றது.—நீங்கள் கே ௨

(௧. அதி. ௨.) உபா.௭.௮. உபா.௰.௰௫. ரோ.௯.௰௩. (௩) எரே.௪௯.௰௮. எசேக்.௩௫.௩. ஒப.௰,. (௬) யாத்.௨௰.௰௨. லூக்.௬.௪௬. (௭) உபா.௰௫.௨௧. எசேக்.௪௧.௨௨. (௮) லேவி.௨௨.௨௨. உபா.௰௫.௨௧. யோபு.௪௨.௮. (௯) ஓசி.௰௩.௯.(௰)௧.கொரி.௯.௰௩. ஏசா.௧.௰௧. எரே.௬.௨௰. ஆமோ.௫.௨௧. (௰௧) ஏசா.௫௯.௰௯. ஏசா.௬௰.௩,௫. யோவா.௪.௨௧,௨௩. ௧.தீமோ.௨.௮. வெளி.௮.௩. ஏசா.௬௬.௰௯,௨௰. (௰௩) லேவி.௨௨.௨௰. (௰௪) சங்.௪௭.௨. ௧.தீமோ.௬.௰௫.—(௨. அதி. ௨.) லேவி.௨௬.௰௪. உபா.௨௮.௰௫.

ளாமலும், எனது நாமத்தைக் கனம்பண்ணும்ப
டிசிந்தித்துக்கொள்ளாமலுமிருந்தால், நான் உங்க
ளுக்குள்ளே சாபத்தை அனுப்பி, உங்களுக்குண்
டான ஆசீர்வாதங்களைச் சாபமாக்குவேன்: நீங்
கள்சிந்தித்துக்கொள்ளாமலிருப்பதினிமித்தம் அ
வைகளைச்சபித்தேனென்றுசேனைபதியாகிய யெ
௩ கோவா சொல்லுகிறார்.-பாருங்கள், நான்உங்
களுடையவிதையைக்கெடுத்து, உங்கள் உற்ச
வங்களின்சாணியை உங்கள் முகங்களின்மேலி
றைப்பேன்; நீங்கள்அதனோடேஎடுத்துக்கொண்
௪ டுபோகப்படுவீர்கள்.-என் உடன்படிக்கை லே
வியரோடே நிலைக்கும்பொருட்டு, நான்இந்தக்
கட்டளையை உங்களிடத்தில் அனுப்பினேன்,
இதுஉங்களுக்குத்தெரியவருமென்று சேனைபதி
௫ யாகிய யெகோவா சொல்லுகிறார்.—சீவனும்,
சமாதானமும்பொருந்திய என் உடன்படிக்கை
அவனுக்கிருந்தது; அவன்எனக்குப்பயந்து, என்
நாமத்துக்குமுன்திகைத்தான், இதினிமித்தம்
௬ அவைகளை அவனுக்குக்கொடுத்தேன்.—சத்தியப்
பிரமாணம் அவனுடையவாயிலிருந்தது, அவன்
உதடுகளில் அநியாயங்காணப்படவில்லை: அ
வன்சமாதானமும், நேர்மையுமுள்ளவனாக என்
னோடேநடந்தான், அநேகரைத் துன்மார்க்கத்தி
௭ னின்றுதிருப்பினான்.—ஆசாரியனுடைய உதடு
கள் அறிவைக்காக்கவேண்டும், அவன்வாயிலே
நியாயப்பிரமாணத்தைத்தேடுவது மனிதருக்குக்க
டமை: அவன் சேனைபதியாகிய யெகோவா
௮ வின் தூதன்.-நீங்களோவழியைவிட்டுவிலகி, நி
யாயப்பிரமாணத்தைக்குறித்து அநேகரை இட
றப்பண்ணினீர்கள்; லேவியின் உடன்படிக்கை
௯ யைக் கெடுத்துவிட்டீர்கள்.—நீங்கள் என்வழிக
ளைப்பார்த்து நடவாமல் நியாயப்பிரமாணத்தில்
பட்சபாதம்பண்ணினபடியினாலே, நானும் உங்
களைஎல்லாச்சனங்களின்முன்பாகவும்அவமதிக்
கப்படத்தக்கவர்களும், நீசருமாகும்படிசெய்தே
னென்று சேனைபதியாகிய யெகோவா சொல்
௰ லுகிறார்.—எங்களெல்லாருக்கும் ஒரே பிதாவில்
லையா; ஒரே தேவனல்லவா எங்களைச்சிருஷ்
டித்தார்; நாங்கள் எங்களுடையமுன்னோரின்உ
டன்படிக்கையைமீறி, ஒருவருக்கொருவர் து
ரோகமாய் நடக்கிறதென்ன.
௰௧ யூதா விசுவாசபாதகனாய்நடந்தான், இஸரவே
லிலும் யெருஷலேமிலும் அரோசியமானகாரி
யஞ்செய்யப்பட்டது; யெகோவாவுக்குப்
பிரியமும்பரிசுத்தமுமாயிருந்ததை யூதா அசுசிப்
படுத்தி,. அந்நியதேவனைப்பற்றிய புத்திரியைவி
௰௨ வாகம்பண்ணினான்.—இப்படிச்செய்கிறவனெ
வனோ, அவன் குருவாயினும், சீஷனாயினும்,
சேனைபதியாகியயெகோவாவுக்குக்காணிக்
கையைச் செலுத்துகிறவனாயினும் யாக்கோபின்
கூடாரங்களினின்று யெகோவா அவனைச்
சேதித்துவிடுவார்.—இன்னும் நீங்கள் யெகோ ௰௩
வாவின் வேதிகையைக் கண்ணீரினாலும், அ
ழுகையினாலும், பெருமூச்சினாலும்மூடுகிறீர்கள்;
அதினால் அவர்காணிக்கையைமதியார், உங்கள்
கையினின்று அதை அங்கிகரிக்கமாட்டார்.
எதினால் என்கிறீர்கள்; உன்தோழியும், உன்உ ௰௪
டன்படிக்கைக்குட்பட்டவளுமாகிய மனைவிக்
கு நீ துரோகஞ்செய்ததைக்குறித்து யெகோ
வா உனக்கும், உன்இளம்பிராயத்தின்மனைவிக்
குஞ்சாட்சி.—அவர் ஒருத்தியைச் சிருஷ்டித்தா ௰௫
ரல்லவா; ஆவி அவரிடத்தில் பரிபூரணமாயிருந்
தது. எதினால் ஒருத்தி; தேவசந்ததியைப்பெறும்
படிதான். ஆதலால் உங்களுங்கள் ஆவியைக்கு
றித்துச் சாவதானமாயிருங்கள், ஒருவனாகிலுந்
தன் இளம்பிராயத்திலுள்ள மனைவிக்குத் துரோ
கஞ்செய்யாமலிருப்பானாக.—நான் ஸ்திரியைத் ௰௬
தள்ளிவிடுதலை வெறுக்கிறேனென்று இஸரவே
லின் தேவனாகிய யெகோவா சொல்லுகி
றார்: ஒருவன்கொடுமையினால் தன்வஸ்திரத்தை
மூடுவதை நான் வெறுக்கிறேனென்று சே
னைபதியாகிய யெகோவா சொல்லுகிறார்: ஆ
தலால் நீங்கள் துரோகஞ் செய்யாதபடி உங்கள்
ஆவியைப்பற்றிச் சாவதானமாயிருங்கள்.
நீங்கள் உங்கள்வாக்குகளினாலே யெகோ ௰௭
வாவை வருத்தப்படுத்தினீர்கள். ஆனாலும் எதி
னால் அவரை வருத்தப்படுத்தினோமென்கிறீர்
கள்; தீமைசெய்கிறவனெவனோ, அவன் யெ
கோவாவின் பார்வைக்கு நல்லவனென்றும்,
அவன்மேல் அவர் பிரியமாயிருக்கிறாரென்றும்,
நியாயத்தீர்ப்புச்செய்யுந் தேவன் எங்கேயென்
றும் நீங்கள்சொல்வதினால் ஆயிற்றே.

## ௩. அதிகாரம்.

௧. கிறிஸ்துவருவதையும், அவருக்குமுன் தூதன் அனுப்பப்படுவதையுங்குறித்தல்: ௭. துன்மார்க்கத்தினிமித்தஞ்சனங்களைக்கண்டித்தல்: ௰௩. சனங்களின்அவிசுவாசத்தைக்காட்டல்: ௰௬. தேவபத்தியுள்ளவர்களின்வாழ்வைத்தெரிவித்தல்.

பாருங்கள், நான் என்தூதனைஅனுப்ப, அவன் ௧
எனக்குமுன்பாகச்சென்று, வழியை ஆயத்தப்ப
டுத்துவான்: நீங்கள் தேடுகிற ஆண்டவரும்,
நீங்கள்விரும்புகிற உடன்படிக்கையின் தூதனு
மானவர் விரைந்து தமது ஆலயத்துக்குவருவார்:
பாருங்கள், அவர்வருவாரென்று சேனைபதியாகி
ய யெகோவா சொல்லுகிறார்.—அவர் வரும் ௨
நாளைச்சகிக்கவல்லவன்யாவன், அவர்தோன்ற,
நிற்கவல்லவன் யாவன்; அவர் புடமிடுகிறவனு
டையஅக்கினியைப்போலவும், வண்ணாருடை

(௩) ௧.இரா.௰௪.௰. (௫) எண்.௨௫.௰௨. எசேக்.௩௪.௨௫. உபா.௩௩.௯,௰. (௬) உபா.௩௩.௮. எரே.௨௩.௨௨. யாக்.௫.
௨௰. (௭) லேவி.௰.௰. உபா.௰௭.௯,௰. எஸ்றா.௭.௮. எரே.௰௮.௰௮. ஆகா.௨.௰௧,௰௨. கலா.௪.௰௪. (௮) ௧.சாமு.௨.
௰௭. எரே.௰௮.௰௫. நிகி.௰௩.௨௯. (௯) ௧.சாமு.௨.௩௰. (௰) ௧.கொரி.௮.௬. எபே.௪.௬. யோபு.௩௧.௰௫. (௰௧) எஸ்றா.
௯.௧. நிகி.௰௩.௨௩. (௰௨) நிகி.௰௩.௨௮,௨௯. (௰௪) நீதி.௫.௰௮. நீதி.௨.௰௬. (௰௫) மத்.௰௯.௪,௫. எஸ்றா.௯.௨. ௧.கொரி.
௭.௰௪. (௰௬) உபா.௨௪.௧. மத்.௫.௩௨. (௰௭) எசா.௪௩.௨௪. ஆமோ.௨.௰௩.—(௩. அதி. ௧.) மத்.௰௧.௰. மாற்.௧.௨.
லூக்.௧.௭௬. எசா.௪௰.௩. எசா.௬௩.௯. ஆகா.௨.௭. (௨) வெளி.௬.௰௭. மத்.௩.௰,௰௧,௰௭.

௩ ய சவுக்காரத்தைப்போலவுமிருப்பார்.-அவர் இருந்துகொண்டு வெள்ளியைப் புடமிட்டுப் பரிசோதித்து, லேவியின் புத்திரரைச் சுத்திசெய்து, அவர்களைப்பொன்னைப்போலவும் வெள்ளியைப்போலவுஞ் சுத்திகரிப்பார்; அதினால் அவர்கள்நீதியோடே யெகோவாவுக்கென்று காணிக்கையைச் செலுத்துகிறவர்களாவார்கள்.—
௪ அப்பொழுது பூருவநாள்களிலும், முந்தினவருஷங்களிலுமிருந்ததுபோலயூதாவின்காணிக்கையும், யெருஷலேமின்காணிக்கையும் யெகோ
௫ வாவைப் பிரியப்படுத்தும்.—நான்நியாயத்தீர்ப்புச்செய்யும்படி உங்களிடத்தில் வருவேன்; மாயாவித்தைக்காரர்களுக்கும், விபசாரருக்கும், பொய் ஆணையிடுகிறவர்களுக்கும், எனக்குப்பயப்படாமல் கூலிக்காரர், விதவைகள், அநாதபிள்ளைகளாகிய இவர்களுக்கு வரவேண்டியதை அபகரித்துக்கொள்ளுகிறவர்களுக்கும், பரதேசிக்கு அநியாயஞ்செய்பவர்களுக்கும் விரோதமாய் நான்தீவிரமான சாட்சியாவேனென்று சேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறார்.—
௬ நானே யெகோவா, நான்மாறாதிருக்கிறேன்; ஆனபடியினாலே யாக்கோபின்சந்ததியாகிய நீங்கள்நாசமடையவில்லை.
௭ உங்கள் முன்னோரின்காலமுதல் நீங்கள் என் கட்டளைகளைக் கைக்கொள்ளாமல் அவைகளை விட்டுவிலகிப்போனீர்கள். என்னிடத்தில்திரும்புங்கள், நான் உங்களிடத்தில் திரும்புவேனென்று சேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறார். நீங்களோ எதைக்கொண்டு திரும்புவோமென்கிறீர்கள்.
௮ மனுஷன் தேவனுடையதைத்திருடலாமா; நீங்களோ என்னுடையதைத் திருடிக்கொண்டீர்கள். ஆயினும் எவ்விதமாய் உம்முடையதைத் திருடினோமென்கிறீர்கள், பத்திலொன்றாகியபாகத்தையும், காணிக்கைகளையுந் திருடினீர்கள்.—
௯ நீங்கள்சாபத்துக்குட்பட்டே இருக்கிறீர்கள்: தேசத்தாராகிய நீங்களெல்லாரும் என்னைவஞ்சிக்கி
௰ றீர்கள்.—என் ஆலயத்தில் ஆகாரமுண்டாயிருக்கும்படிக்குப் பத்திலொன்றாகிய பாகங்களெல்லாவற்றையும் பண்டசாலையிலே கொண்டுவாருங்கள், அதினால் நான் உங்களுக்கு வானத்தின் பலகணிகளைத்திறந்து, கொள்ளத்தக்க இடமாகாதபடி உங்கள்மேல் நன்மையை வருஷிப்பேனோவென்று இப்பொழுது என்னைப் பரிசோதித்துப் பாருங்களென்பதைச் சேனாபதியாகி
௰௧ ய யெகோவா சொல்லுகிறார்.—உங்கள் பூமியின் பலனைக் கெடுத்துவிடாதபடிக்கும், வெளியிலுள்ள திராட்சக்கொடி பழமில்லாமற்போகாதபடிக்கும், உங்கள்நிமித்தம் பட்சிப்பவனைக் கண்டிப்பேனென்றுசேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறார்.—நீங்கள் விரும்பத்தக்கதே ௰௨
சத்தையுடையவர்களாயிருப்பதினால், அந்நியதேசத்தார்யாவரும்உங்களைவாழ்வுடையவர்களென்பார்களென்று சேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறார்.

நீங்கள் எனக்குவிரோதமாய்ச்சொல்லியவாக் ௰௩
குகள் கடினமுள்ளவைகளென்று யெகோவா சொல்லுகிறார். ஆனாலும் நீங்கள் உமக்குவிரோதமாய் எதைப்பேசினோமென்கிறீர்கள்.—தேவ ௰௪
னைச்சேவிப்பதுவிருதா; அவருடைய கட்டளையைக் கைக்கொள்வதினாலும், சேனாபதியாகிய யெகோவாவுக்குமுன்பாகத் துக்கித்துநடப்பதினாலும் எங்களுக்கென்னபலன்.—இப்பொ ௰௫
ழுது நாங்கள் அகங்காரிகளை வாழ்வுடையவர்களென்று எண்ணுவது நியாயம்; தீமைசெய்பவர்கள் மேன்மைப்பட்டார்கள்; அவர்கள் தேவனைப் பரீட்சைபார்க்கையிலும் விடுவிக்கப்படுகிறார்களேயென்று சொல்லிவந்தீர்கள்.

அப்பொழுது யெகோவாவினிடத்தில் ப ௰௬
யபத்தியாயிருந்தவர்கள் ஒருவரோடொருவர்பேசிக்கொள்வார்கள்: யெகோவா செவிகொடுத்தும், அதைக் கேட்டுமிருப்பார், மேலும் யெகோவாவிடத்தில் பயபத்தியுள்ளவர்களாய் அவருடைய நாமத்தைத் தியானிப்பவர்களினிமித்தம் ஞாபகபுத்தகமொன்று அவர்சமுகத்தில் எழுதப்பட்டிருக்கின்றது.—நான் பொக்கி ௰௭
ஷத்திற்சேர்க்கும் நாளில் அவர்கள் என்னுடையவர்களாவார்கள்; ஒருமனுஷன் தன்னைச் சேவிக்கும்புத்திரனைக் கடாட்சிக்கிறதுபோல, நானும் அவர்களைக்கடாட்சிப்பேன்.—அப்பொழு ௰௮
து நீதிமானுக்கும் அநீதிமானுக்கும், தேவனைச் சேவிப்பவனுக்கும் அவரைச் சேவியாதவனுக்குமிருக்கும் வித்தியாசத்தைத் திரும்பவுங் காண்பீர்களென்று சேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறார்.

## ௪. அதிகாரம்.

௧. துன்மார்க்கருடையதாழ்வையும் சன்மார்க்கருடையவாழ்வையும் வருணித்தல்: ௪. கட்டளையைக்காக்கும்படி ஏவல்: ௫. இலீசாதீர்க்கதரிசி வருவதைக்குறித்தல்.

பாருங்கள், ஒருநாள்வருகின்றது, அது சூளையைப்போல எரியும்; அதில் அகங்காரிகள் யாவரும், பாவஞ்செய்பவர்கள் யாவரும் அரிதாளாவார்கள்: வருகிற அந்தநாள் அவர்களைச்சுட்டெரிக்கும், அது அவர்களுக்குவேரையும், கொப்பையும்விடாதென்றுசேனாபதியாகிய யெகோவா சொல்லுகிறார். ௧

ஆனாலும் என்நாமத்துக்குப்பயந்திருக்கிறஉங் ௨

(௩) ஏசா.௧.௨௫. ௪௧.௰௩.௯. ௧.பேதுரு.௨.௫.(௫)௪௧.௫.௪. யாக்.௫.௪,௰௨. (௬) எண்.௨௩.௰௯. ரோ.௰௧.௨௯.யாக்.௧.௰௭.புல.௩.௨௨.(௭)அப்.௭.௫௧.௪௧.௧.௩.(௮)நிகி.௰௩.௰,௰௨.(௰)நீதி.௩.௯,௰.௧.நாளா.௨௬.௨௰.௨.நாளா.௩௧.௰௧.நிகி.௰.௩௮.ஆதி.௭.௰௧. ௨.இரா.௭.௨. ௨.நாளா.௩௧.௰. (௰௧)ஆமோ.௪.௯. தானி.௮.௯.(௰௪)யோபு.௨௧.௰௪,௰௫. செப்.௧.௰௨. (௰௫) சங்.௭௩.௰௨.சங்.௯௫.௮. (௰௬) சங்.௬௬.௰௬.எபி.௩.௰௩. சங்.௫௬.௮.ஏசா.௬௫.௬. வெளி.௨௰.௰௨. (௰௭) யாத்.௰௯.௫. உபா.௭.௬.தீத்.௨.௰௪. ௧.பேதுரு.௨.௯.ஏசா.௬௨.௩.சங்.௱௩.௰௩.(௰௮)சங்.௫௮.௰௧.—(௪.அதி.௧.)யோவே.௨.௩௧.௨.பேதுரு.௩.௭.ஓப.௰௮.ஆமோ.௨.௯. (௨)லூக்.௧.௭௮. எபே.௫.௰௪. ௨.பேதுரு.௧.௰௯.வெளி.௨.௨௮.

கள்மேல்தன்கிரணங்களில் ஆரோக்கியங்கொண்
டிருக்கிற நீதியின்சூரியன் உதிப்பான்; நீங்கள்
விடுதலைபெற்று கொட்டிலின் புஷ்டியான கன்
௩ றுகளைப்போல வளருவீர்கள்.—நான் இப்படிச்
செய்யும்நாளில் துன்மார்க்கர் உங்கள் கால்க
ளின்கீழ் சாம்பலாயிருப்பதினால், நீங்கள் அவர்
களை மிதிப்பீர்களென்று சேனைபதியாகிய யெ
கோவா சொல்லுகிறார்.
௪ ஒரேபில் இஸரவேலரெல்லாருக்காகவும் என்
தாசனாகிய மோசேக்கு நான் விதித்தகட்டளைக
ளும், விதிகளுமாகிய நியாயப்பிரமாணத்தை நி
னைத்துக்கொள்ளுங்கள்.
பாருங்கள், யெகோவாவினுடையபெ ௫
ரிதும், பயங்கரமுமான நாள் வருவதற்குமுன்
னே நான்உங்களிடத்தில் இலீசாதீர்க்கதரிசியை
அனுப்புகிறேன்.—நான் வந்து தேசத்தைச்சாபத் ௬
தால் அடியாதபடிக்கு, அவன், பிதாக்களுடைய
இருதயத்தைப் பிள்ளைகளிடத்திற்கும், பிள்ளைக
ளுடைய இருதயத்தை அவர்களுடைய பிதாக்க
ளிடத்திற்குந்திருப்புவான்.

(௩) ௨.சாமு.௨௨.௪௩. மீகா.௭.௰.௪௧.௰.௫. (௪) யாத்.௨௰.௩. ௨பா.௪.௰. சங்.௱௪௭.௰௯. (௫) மத்.௰௧.௰௪. மாற்.௯.௰௧. லூக்.௧.௰௭.யோவே.௨.௩௧. (௬) ௪௧.௰௪.௰௨.௪௧.௫.௩.

## தீர்க்கதரிசிகளின் புத்தகங்கள் முற்றுப்பெற்றன.

THE

# NEW TESTAMENT

OF OUR

LORD AND SAVIOUR

# JESUS CHRIST,

TRANSLATED OUT OF

THE ORIGINAL GREEK:

AND WITH

THE FORMER TRANSLATIONS DILIGENTLY COMPARED AND REVISED,

UNDER THE AUSPICES OF

The British and Foreign Bible Society.

MADRAS:

PRINTED FOR THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY,

AT THE AMERICAN MISSION PRESS.

MDCCCL.

# கர்த்தரும் இரட்சகருமாகிய

# யேசுக்கிறிஸ்து.

அருளிய

# புதிய உடன்படிக்கை.

---

இஃது

இங்கிலாந்துமுதலியசருவதேசவேதசங்கத்தாரின்

உத்தரவின்படி

கிரேக்கென்னும்மூலபாஷையிலிருந்துமொழிபெயர்த்து முந்தினமொழி

பெயர்ப்புகளைக்கொண்டு பரிசோதிக்கப்பட்டிருக்கின்றது.

சென்னநகரம்:

அமெரிகன் மிஷன் அச்சுக்கூடத்திற் பதிக்கப்பட்டது.

௲௮௱௫௰௯.

# மத்தேயு எழுதின சுவிசேஷம்.

## ௧. அதிகாரம்.

*௧. கிறிஸ்துவின்வமிசவரலாறு: ௰௮.அவர்சென்
மவிவரம்.*

ஆபிரகாமின்சந்ததியான தாவீதின்சந்ததியாகி
௨ ய யேசுக்கிறிஸ்துவின் வமிசவரலாறு.-ஆபி
ரகாம் ஈசாக்கைப்பெற்றான்; ஈசாக்கு யாக்கோ
பைப்பெற்றான்;யாக்கோபு யூதாவையும் அவன்
௩ சகோதரரையும் பெற்றான்;—யூதா தாமாரிடத்
தில் பேரேசையுஞ் செரக்கையும்பெற்றான்; பே
௪ ரேஸ் எத்சரோனைப்பெற்றான்;-எத்சரோன் ரா
மைப் பெற்றான்; ராம் அம்மினதாபைப் பெற்
றான்; அம்மினதாபு நாக்ஷோனைப்பெற்றான்;-
௫ நாக்ஷோன் சல்மோனைப்பெற்றான்; சல்மோன்
இராகாப்பினிடத்தில் போவசைப் பெற்றான்;
போவஸ் ரூத்தினிடத்தில் ஓபெத்தைப் பெற்
௬ றான்; ஓபெத் ஈஷாயைப்பெற்றான்;—ஈஷாய்
இராசனாகிய தாவீதைப்பெற்றான்; இராசனாகிய
தாவீது ஊரியாவின் மனைவியினிடத்தில் ச
௭ லோமோனைப்பெற்றான்;-சலோமோன் ரெகோ
பெயாமைப்பெற்றான்; ரெகோபெயாம் அபியா
வைப்பெற்றான்; அபியா ஆசாவைப்பெற்றான்;-
௮ ஆசா யோஷாபாத்தைப்பெற்றான்; யோஷாபாத்
யெகோராமைப்பெற்றான்; யெகோராம் அகஸ்
௯ யாவைப்பெற்றான்;-அகஸ்யா யோதாமைப்பெ
ற்றான்; யோதாம் ஆகாசைப்பெற்றான்; ஆகாஸ்
௰ இஸ்கியாவைப்பெற்றான்;—இஸ்கியா மனாஷே
யைப் பெற்றான்; மனாஷே ஆமோனைப் பெற்
றான்; ஆமோன் யோஷியாவைப்பெற்றான்;—
௰௧ யோஷியா பாபேலுக்குச் சிறைப்பட்டுப்போ
கிறகாலத்தில், யெகொனியவையும் அவன்ச
௰௨ கோதரரையும் பெற்றான்:-பாபேலுக்குச் சிறை
யாய்க் கொண்டுபோகப்பட்ட பின்பு யெகொ
னிய சலாதியேலைப்பெற்றான்;. சலாதியேல் சி
௰௩ ருபப்பெலைப் பெற்றான்;—சிருபப்பெல் அபி
யூத்தைப்பெற்றான்; அபியூத் இலீயகீமைப்பெற்
௰௪ றான்; இலீயகீம் அசோரைப்பெற்றான்;-அசோர்
சாதோக்கைப் பெற்றான்; சாதோக் ஆகீமைப்
௰௫ பெற்றான்; ஆகீம் இலியூத்தைப்பெற்றான்;—இ
லியூத் எலீயேசாரைப்பெற்றான்;எலீயேசார் மத்
தானைப்பெற்றான்; மத்தான் யாக்கோபைப்பெற்
௰௬ றான்;-யாக்கோபு மரியாளின்புருஷனாகிய யோ
சேப்பைப் பெற்றான், அவளிடத்தில் கிறிஸ்து
௰௭ என்னும் யேசு பிறந்தார்.—இவ்விதமாயுண்டா
ன தலைமுறைகளெல்லாம், ஆபிரகாம் முதல் தா
வீதுவரைக்கும் பதினாலுதலைமுறைகளும், தாவீ
துமுதல் பாபேலுக்குச் சிறைப்பட்டுப்போனது
வரைக்கும் பதினாலுதலைமுறைகளும்,பாபேலுக்
குச் சிறைப்பட்டுப்போனது முதல் கிறிஸ்து
வரைக்கும் பதினாலுதலைமுறைகளுமாம்.
யேசுக்கிறிஸ்துவின் ஜென்மவிருத்தாந் ௰௮
தம்: அவருடையமாதாவாகிய மரியாள்யோசேப்
புக்குவாக்குத்தத்தையானபின்பு, அவர்கள் கூ
டிவாழ்வதற்குமுன் அவள் பரிசுத்த ஆவியி
னாலே கருப்பவதியென்று காணப்பட்டாள்.-
அவளுடைய புருஷனாகிய யோசேப்பு நீதிமானா ௰௯
கையால், அவளை அவதூறுபண்ணவிரும்பாமல்,
இரகசியமாய் அவளைத்தள்ளிவிட எண்ணங்கொ
ண்டான்.-அவன் இவைகளைச்சிந்தனைபண்ணு ௨௰
கையில்,கர்த்தருடைய தூதன்சொப்பனத்தில்
அவனுக்குத்தோன்றி,தாவீதின்புத்திரனாகியயோ
சேப்பே, நீ உன்மனைவியாகிய மரியாளைச்சேர்த்
துக்கொள்ள அஞ்சவேண்டாம்: அவளுடைய க
ருப்பத்திலுள்ளது பரிசுத்த ஆவியினாலாயிற்
று.-அவள் ஒருபுத்திரனைப்பிரசவிப்பாள், அவர் ௨௧
தம்முடையசனங்களைஅவர்கள்பாவங்களினின்
றும் இரட்சிப்பார், ஆதலால் அவருக்கு யேசு
வென்று பெயரிடுவாயாகவென்றான்.—இவைக ௨௨
ளெல்லாம் நடந்ததினால், "பாருங்கள், கன்
னியானவள் கருப்பவதியாகி ஒருபுத்திரனைப்
பிரசவிப்பாள், அவருக்கு இம்மானுவேலென்
னும்பெயரிடுவார்கள்" என்று,-தீர்க்கதரிசியைக் ௨௩
கொண்டு கர்த்தர் சொல்லியவாக்குநிறைவேற
லாயிற்று: இம்மானுவேலென்பதற்குத் தேவன்
நம்முடனிருக்கிறாரென்றருத்தமாம்.-யோசேப் ௨௪
பு நித்திரைதெளிந்து எழுந்தபொழுது தனக்
குக் கர்த்தருடைய தூதன் கட்டளையிட்டப
டி தன்மனைவியைச் சேர்த்துக்கொண்டான்.-ஆ ௨௫
யினும், தன்னால் யேசுவென்று பெயரிடப்
பட்ட முதற்பேறான புத்திரனை அவள்பெறும்வ
ரைக்கும் அவன் அவளை அறியாதிருந்தான்.

## ௨. அதிகாரம்.

*௧. சாஸ்திரிகள்நட்சத்திரத்தினால்நடத்தப்படல்:
௰௩. யோசேப்பு யேசுவையும் மரியாளையும்
எகிப்துக்குக்கொண்டுபோதல்: ௰௬. பேத்லகே
மூரில் ஏரோது இராசா குழந்தைகளைக்கொல்
லுவித்தல்: ௰௯. கிறிஸ்து இஸரவேல் தேசத்*

---

(௧. அதி. ௧.) ஏசா.௰௧.௧. யோவா.௭.௪௨. அப்.௨.௩௰. ரோ.௧.௩. ஆதி.௨௨.௰௮. கலா.௩.௰௬. (௨) ஆதி.௨௧.௨,௩. ஆதி.௨௫.௨௬. ஆதி.௨௯.௩௫. (௩) ஆதி.௩௮.௨௭,. ரூத்.௪.௰௮,. ௧.நாளா.௨.௫,௯,.(௬)௧.சாமு.௰௬.௧. ௨.சாமு.௰௨.௨௪. (௭) ௧.நாளா.௩.௰,. (௰) ௨.இரா.௨௰.௨௧. (௰௧) ௨.இரா.௨௪.௰௪,௰௫,௰௬. (௰௨) ௧.நாளா.௩.௰௭,௰௯. எஸ்றா.௩.௨. நிகி.௰௨.௧. ஆகா.௧.௧. (௰௮) லூக்.௧.௩௫. (௰௯) உபா.௨௪.௧. (௨௰) லூக்.௧.௩௫. (௨௧) லூக்.௧.௩௧. அப்.௪.௰௨. (௨௨) ஏசா.௭.௰௪. (௨௫) யாத்.௰௩.௨. லூக்.௨.௭,௨௧.—(௨. அதி.)

துக்குத் திரும்பிவந்து நாசரேத்தூரில் வாசம் பண்ணல்.

ஏரோது இராசாவின்காலத்தில், யூதாவிலுள்ள
பேத்லகேமிலே யேசு பிறந்தபின்பு, சாஸ்திரி
கள் கீழ்த்திசையினின்று யெரூஷலேமுக்கு வந்
௨ து,-பிறந்திருக்கிற யூதரின் இராசா எங்கே; அவ
ரைக்குறித்த நட்சத்திரத்தை நாங்கள் கீழ்த்திசை
யில்கண்டு, அவரை நமஸ்கரிக்க வந்தோமென்
௩ றூர்கள்.—ஏரோது இராசா அதைக்கேட்டதி
னால், அவனும், அவனோடே யெரூஷலேமியரீ
௪ னைவருங் கலங்கினார்கள்.-அவன், பிரதான ஆசா
ரியர், சனங்களின் வேதபாரகர் எல்லாரையுங்
கூடிவரச்செய்து, கிறிஸ்து எங்கே பிறப்பா
௫ ரென்று அவர்களிடத்தில் விசாரித்தான்.—அவர்
கள் அவனை நோக்கி, தீர்க்கதரிசி, "யூதாதேசத்
திலுள்ள பேத்லகேமே, என் சனங்களாகிய இ
ஸரவேலரைப் பரிபாலனம்பண்ணும் இராசா
உன்னிடத்திலே தோன்றுவதினால், யூதாதேசத்
திலுள்ள பிரபுகளில் நீ சிறியதல்ல" வென்
௬ று எழுதியிருக்கிறான்;—ஆகையால் அப்படியே
யூதாதேசத்திலுள்ள பேத்லகேமில் பிறப்பாரென்
௭ றூர்கள்.—அப்பொழுது ஏரோது அந்தச்சாஸ்தி
ரிகளை இரகசியமாய் அழைத்து, அவர்களுக்கு
அந்த நட்சத்திரந்தோற்றின காலத்தை ஆராய்ந்த
௮ றிந்துகொண்டு,—நீங்கள் போய் அந்தப்பிள்ளை
யைக்குறித்து நன்றாய் விசாரித்துப்பாருங்கள்;
நீங்கள் அதைக் கண்டபின்பு, நானும்போய் அ
தைநமஸ்கரிக்கும்படிசெய்தியை எனக்குத்தெரி
வியுங்களென்று சொல்லி, அவர்களைப் பேத்ல
௯ கேமுக்கு அனுப்பிவிட்டான்.—இராசாசொன்
னதை அவர்கள் கேட்டுப்புறப்பட்டுப் போனார்
கள்; கீழ்த்திசையில்அவர்கள் கண்டநட்சத்திரம்
அவர்களுக்குமுன்னேபோய், அந்தப்பிள்ளை இ
ருந்த ஸ்தானம்வரைக்குஞ்சென்று மேலே நின்
௰ றது.—அவர்கள்அந்த நட்சத்திரத்தைக்கண்டு மி
குந்த ஆனந்தக்களிப்படைந்தார்கள்.
௰௧ பின்பு அவர்கள் அந்தவீட்டிலேபிரவேசித்து,
அதின்மாதாவாகிய மரியாளோடே பிள்ளையைக்
கண்டு, வணக்கமாய்விழுந்து, அதை நமஸ்கரித்
தார்கள்: அன்றியும் அவர்கள்தங்கள்பொக்கிஷப்
பெட்டிகளைத் திறந்து, பொன்னையும், குந்
திருவையும், வெள்ளைப்போளத்தையும் அதற்
௰௨ குக்காணிக்கையாய் வைத்தார்கள்.—பின்பு அ
வர்கள், ஏரோதினிடத்தில் திரும்பிப்போகலா
காதென்று சொப்பனத்திலே தேவ எச்சரிப்புப்
பெற்று, வேறுவழியாகத் தங்கள் தேசத்துக்குப்
௰௩ புறப்பட்டுப்போனார்கள்.—அவர்கள் புறப்பட்
டுப்போனபின்பு, கர்த்தருடைய தூதன் ஒரு
வன் சொப்பனத்திலே யோசேப்புக்குத்தரிசன
மாகி, ஏரோது இந்தக் குழந்தையைக் கொலை
செய்யத்தேடுவான்: ஆதலால்நீஎழுந்து,குழந்தை
யையும், அதின் மாதாவையுங்கூட்டிக்கொண்டு,
எகிப்துதேசத்துக்கு ஓடிப்போ, நான்செய்தியை
உனக்குத்தெரிவிக்கும் வரைக்கும் அங்கே தங்
குவாயாகவென்றான்.—அப்பொழுது அவன் எ ௰௪
ழுந்து, இராத்திரியிலே குழந்தையையும்,அதின்
மாதாவையுங் கூட்டிக்கொண்டு, எகிப்துதேசத்
துக்குப்போய்,—ஏரோதேயின் மரணபரியந்தம் ௰௫
அங்கே தங்கினான்: அதினால், "எகிப்திலிருந்து
என்புத்திரனை வரவழைத்தேன்" என்று தீர்க்கத
ரிசியைக்கொண்டு கர்த்தர் சொல்லுவித்தவாக்
குநிறைவேறலாயிற்று.
பின்புஏரோது,தான்சாஸ்திரிகளினால்வஞ்சிக் ௰௬
கப்பட்டதைக்கண்டு மிகவுங் குரோதங்கொண்
டு, அந்தச்சாஸ்திரிகளிடத்தில் தான்கேட்டா
ராய்ந்த காலத்தின்படி, பேத்லகேமிலும், அதின்
சகல எல்லைகளிலும் இரண்டுவயதுமுதல் அதற்
குட்பட்ட சகல ஆண்பிள்ளைகளையுங் கொலை
செய்ய ஆட்களை அனுப்பினான்.—அப்பொழுது ௰௭
"ராமாவிலே புலம்பலும், அழுகையும், மகாதுக்
கசத்தமுங் கேட்டன, இராகெல் தன்பிள்ளை
கள் இல்லையென்று அவர்கள் நிமித்தம் அழு
துகொண்டிருக்கிறாள், அவள் ஆறுதலுக்கு இ
டங்கொடாள்" என்று,—எரேமியா தீர்க்கதரிசி ௰௮
யினால் சொல்லப்பட்டவாக்கு நிறைவேறிற்று.
பின்பு ஏரோது இறந்தபொழுது, சொப்பனத் ௰௯
தில் கர்த்தருடைய தூதன் ஒருவன்யோசேப்
புக்குத்தோன்றி,—நீ எழுந்து, குழந்தையையும் ௨௰
அதின்மாதாவையுங் கூட்டிக்கொண்டு, இஸர
வேல்தேசத்துக்குப்போ: பிள்ளையின்பிராணனை
வாங்கத்தேடினவர்கள் இறந்துபோனார்களென்
றுசொல்ல,—அவன் எழுந்து, குழந்தையையும் ௨௧
அதின் மாதாவையுங் கூட்டிக்கொண்டு இஸர
வேல்தேசத்துக்குவருகையில்,-அர்கிலேயு தன் ௨௨
பிதாவாகிய ஏரோதின்பட்டத்துக்குவந்து, யூதே
யாவை அரசாளுகிறானென்று கேள்விப்பட்டு,
அங்கேபோகப்பயந்தான்: அப்பொழுது சொப்
பனத்தில் அவன் தேவஎச்சரிப்புப்பெற்று, வில
கிக் கலிலேயாநாட்டின் திசைகளுக்குப்போய்,-
நாசரேத்தென்னுமூரில் வந்து வாசம்பண்ணி ௨௩
னான்: இப்படியே "நசரீயன் என்னப்படுவார்"
என்று தீர்க்கதரிசிகளினாலே சொல்லப்பட்ட
வாக்குநிறைவேறிற்று.

## ௩. அதிகாரம்.

௧. யோவானின் விருத்தாந்தம்: ௭. அவன் ஞானஸ்நானம் பிரசித்தப்படுத்தல்: ௰௩. கிறிஸ்து அவனிடத்தில்வந்து ஞானஸ்நானம்பெறல்.

அக்காலத்திலே யோவான்ஸ்நானன் யூதேயா ௧
வின்வனத்தில்வந்து,-பரமஇராச்சியஞ்சமீபித்து ௨
வந்தபடியால், மனந்திரும்புங்களென்று பிரசங்
கம்பண்ணினான்.-"கர்த்தாவின் வழியை ஆ ௩
யத்தப்படுத்துங்கள், அவருடைய பாதைகளைச்

(௧) லூக்.௨.௪,௬,௭. ஆதி.௰.௩௰. (௨) லூக்.௨.௰௧. நாகூ.௨௪.௰௭. ஏசா.௬௰.௩. (௪) ௨.நாளா.௩௬.௰௪. ௨.நாளா. ௩௪.௰௩. மல்.௨.௭. (௬) மீகா.௫.௨.யோவா.௭.௪௨. வெளி.௨.௨௭. (௰௧) சங்.௭௨.௰.ஏசா.௬௰.௬. (௰௫) ஓசி.௰௧.௧. (௰௮) எரே.௩௧.௰௫. (௨௨) லூக்.௨.௩௯.(௨௩)யோவா.௧.௪௫.நியா.௰௩.௫.௧.சாமு.௧.௰௧.—(௩. அதி. ௧.) யோவா. ௧.௨௮. யோசு.௰௪.௰. (௨) தானி.௨.௪௪. (௩) ஏசா.௪௰.௩. யோவா.௧.௨௩.

செவ்வைபண்ணுங்களென்பதை,வனத்தில் ஒரு
வன் சத்தமிட்டுச்சொல்லுவான்,"என்று ஏசாயா
தீர்க்கதரிசியினாற் குறிக்கப்பட்டவன் இவனே.-
௪ இந்தயோவான்ஒட்டகமயிர் உடையைத்தரித்து,
தன் அரையிலே வார்க்கச்சுக்கட்டிக்கொண்டிரு
ந்தான்;வெட்டுக்கிளிகளுங் காட்டுத்தேனும்அவ
௫ னுக்கு ஆகாரமாயிருந்தன.—அப்பொழுது யெ
ருஷலேமியரும், யூதேயா தேசத்தாரனைவரும்,
யோர்தான்நதியைச்சேர்ந்த சுற்றுப்புறத்தார்யா
௬ வரும்புறப்பட்டு அவனிடத்தில்போய்,—தங்கள்
தங்கள் பாவங்களை உணர்ந்துசொல்லி, அவனா
லே யோர்தானில் ஞானஸ்நானம்பெற்றார்கள்.
௭ மேலும் அவன், பரிசேயரிலும், சதுசேயரி
லும் அநேகர் தன்னால் ஞானஸ்நானம்பெறவ
ருவதைக்கண்டு, அவர்களைநோக்கி, விரியன்
குட்டிகளே, வருங்கோபத்துக்குத் தப்பிக்கொ
௮ ள்ள உங்களுக்கு உணர்த்தினவன்யாவன்.—ம
னந்திரும்புதலுக்குத்தக்க கனிகளைக் கொடுங்
௯ கள்.—ஆபிரகாம் எங்களுக்குப் பிதாவென்று
சொல்லும்படி, உங்கள் உள்ளத்திலே நினைத்துக்
கொள்ளாதிருங்கள்: ஆபிரகாமுக்குத் தேவன்
இந்தக்கற்களிலும் பிள்ளைகளைத் தோற்றுவிக்க
வல்லவராயிருக்கிறாரென்று நான் உங்களுக்குச்
௰ சொல்லுகிறேன்.—இப்பொழுது கோடரி மரங்
களின்வேரருகில் வைத்திருக்கின்றது: ஆதலால்
நல்லகனிகொடாத மரங்களெல்லாம் வெட்டப்
௰௧ பட்டு அக்கினியிலே போடப்படும்.-நீங்கள் மன
ந்திரும்பும்பொருட்டு நான்சலத்தினால்உங்களுக்
கு ஞானஸ்நானங்கொடுக்கிறேன்:எனக்குப்பின்
வருபவர் என்னிலும்வல்லவர், அவருடைய பாத
ரட்சைகளை ஏந்தவும்நான் பாத்திரனல்ல: அவரே
பரிசுத்த ஆவியினாலும்,அக்கினியினாலும் உங்
௰௨ களுக்கு ஞானஸ்நானங்கொடுப்பார்.-அவருடை
யகையில் தூற்றுக்கூடை இருக்கின்றது, அவர்
தமது களம்முழுவதையும் விளக்கி, தமது கோது
மையைக் களஞ்சியத்திற்சேர்ப்பார்; பதரையோ,
அவியாத அக்கினியினால் தகிப்பாரென்றான்.
௰௩ அப்பொழுது யேசு, யோவானிடத்தில் ஞா
னஸ்நானம் பெறும்படி, கலிலேயாவைவிட்டு,
யோர்தானண்டையில் அவனிடத்தில் வந்தார்.-
௰௪ யோவான் அவரைமறுத்து, உம்மாலே நான் ஞா
னஸ்நானம்பெறுவது அவசியமாயிருக்க, நீர்என்
௰௫ னிடத்தில் வரலாமாவென்றான்.—அப்பொழுது
யேசு அவனைநோக்கி, இப்படி எந்த நீதியையும்
நிறைவேற்றுவது நமக்குக்கடமை: ஆதலால் இப்
பொழுது சம்மதிக்கவேண்டுமென்றுசொல்ல, அ
௰௬ வன் சம்மதித்தான்.—யேசு ஞானஸ்நானம்பெற்
று, சலத்தைவிட்டு ஏறிவந்தவுடனே வானம் அ
வருக்குத் திறக்கப்பட, தேவனுடைய ஆவி
புறாவைப்போல் இறங்கி அவர்மேல்வருகிறதை
அவன்கண்டான்.—மேலும் இவர் எனது அன்பா ௰௭
னகுமாரன்,இவரில்பிரியமாயிருக்கிறேனென்று
ஒருவாக்கு வானத்தினின்றும் பிறந்தது.

## ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்துச் சோதிக்கப்படல்: ௰௨. அவர் கப்பர்நாகூமூரில்வாசம்பண்ணல்: ௰௭. அவர்சுவிசேஷத்தைப்பிரசித்தப்படுத்தல்: ௰௮. பேதுரு, அந்திரேயா, யாக்கோபு, யோவான் என்பவர்களைத்தம்மிடத்தில் வரவழைத்தல்: ௨௩. கிறிஸ்து வியாதியுள்ளவர்களைச்சொஸ்தப்படுத்தல்.

பின்புயேசு, பிசாசினாலேசோதிக்கப்படும்படி ௧
ஆவியினால் வனத்திற்குக் கொண்டுபோகப்பட்
டு,—நாற்பதுநாள் இரவும்பகலும் உபவாசமாயி ௨
ருந்தார்; பின்பு அவருக்குப்பசியுண்டாயிற்று.—
அப்பொழுதுசோதிக்கிறவன் அவரிடத்தில் வந் ௩
து, நீ தேவனுடைய குமாரனாயிருந்தால் இந்
தக்கற்கள் அப்பமாகும்படி கட்டளையிடென்றா
ன்.-அதற்குத்தரமாக அவர், "மனிதன் அப்பத்தி ௪
னாலேமாத்திரமல்ல, கர்த்தருடைய வாயினின்
றுபுறப்படும் எந்த வாக்கினாலுஞ் சீவிக்கிறான்,"
என்றுஎழுதியிருக்கின்றதென்றார்.—அப்பொழு ௫
துபிசாசானவன் அவரைப்பரிசுத்தநகரத்திற்குக்
கொண்டுபோய், அவரைத்தேவாலயத்தின் மேல்
உப்பரிகையில் நிறுத்தி,—அவரிடத்தில், "அவர் ௬
உன்னைக்குறித்துத் தம்முடையதூதர்களுக்குக்
கட்டளையிட, அவர்கள் உன்பாதங் கல்லில் இ
டறாதபடிக்கு உன்னைக்கைகளில் ஏந்திக்கொள்
வார்கள்," என்று எழுதியிருக்கின்றது: ஆகை
யால், நீ தேவனுடைய குமாரனானால் தாழக்
குதியென்றான்.—அதற்கு யேசு, "உன் தேவ ௭
னாகிய கர்த்தாவைப் பரீட்சை செய்யா
திருப்பாயாக," என்றும் எழுதியிருக்கின்றதென்
றார்.—மறுபடியும் பிசாசானவன் அவரை மி ௮
கவுமுயர்ந்தமலையின்மேல்கொண்டுபோய், உல
கத்திலுள்ள இராச்சியங்கள் எல்லாவற்றையும்,
அவைகளின் மகிமையையும் அவருக்குக்காண்
பித்து,—அவருடனே, நீ விழுந்து என்னைத்தொ ௯
ழுதாயானால், இவையெல்லாவற்றையும் உனக்
குத் தருவேனென்றுசொல்ல,—யேசு அவனை ௰
நோக்கி, சாத்தானே, அப்புறம்போ: "உன் தே
வனாகிய கர்த்தாவைத் தொழுதுகொண்டு,
அவர் ஒருவரையே சேவிப்பாயாக," என்று எழு
தியிருக்கின்றதென்றார்.—அப்பொழுது பிசாசு ௰௧
அவரை விட்டுப்புறப்பட்டுப்போக, தேவதூதர்
கள்வந்து அவருக்குப் பணிவிடைசெய்தார்கள்.
பின்பு யோவான் காவலில்வைக்கப்பட்டா ௰௨

(௪) ௨.இரா.௧.௮. ௪௧.௰௩.௪. லேவி.௰௧.௨௨. ௧.சாமு.௰௪.௨௫,௨௬. (௫) லூக்.௩.௭. (௬) அப்.௰௯.௪,௰௮. (௭) லூக்.௩.௭,௮,௯. ரோ.௫.௯. ௧.தெச.௧.௰. (௯) யோவா.௮.௩௩,௩௯. அப்.௰௩.௨௬. ரோ.௪.௧,௰௧,௰௬. (௰) லூக்.௰௩.௭,௯. யோவா.௰௫.௬. (௰௧) யோவா.௧.௰௫,௨௬,௩௩. அப்.௧.௫. அப்.௰௧.௰௬. ஏசா.௪௪.௩. மல்.௩.௨. அப்.௨.௩,௪. ௧.கொரி.௰௨.௰௩. (௰௨) மல்.௩.௩. மல்.௪.௧. (௰௬) ஏசா.௪௨.௧.யோவா. ௧.௩௨,௩௩. (௰௭) யோவா.௰௨.௨௮. சங்.௨.௭. ஏசா.௪௨.௧. லூக்.௯.௩௫. எபே.௧.௫. கொலோ.௧.௰௩. ௨.பேதுரு,௧.௰௭.—(௪. அதி. ௧.) லூக்.௪.௧,. ௧.இரா.௰௮.௰௨. எசேக்.௩.௰௪. அப்.௮.௩௯. (௪) உபா.௮.௩. (௫) நிகி.௰௧.௧. ௰௮.ஏசா.௫௨.௧.வெளி.௰௧.௨. (௬) சங்.௯௧.௰௧,௰௨. (௭) உபா.௬.௰௬. (௰) உபா.௬.௰௩. யோசு.௨௪.௰௪. ௧.சாமு.௭.௩. (௰௧) எபி.௧.௰௪. (௰௨) யோவா.௩.௨௪.

னென்று யேசு கேள்விப்பட்டு, கலிலேயாவுக்
யங குப்போய்,—நாசரேத்தை விட்டு, செபுலோன்
நப்தாலியென்னும்இவைகளின் எல்லைகளிலேச
முத்திரதீரத்திலுள்ள கப்பர்நாகூமிற் சென்றுவா
யச சம்பண்ணினார்.—அதினால், "கடற்கரை அரு
கிலும், யோர்தானுக்கப்புறத்திலுமுள்ள அந்நி
யருடைய கலிலேயாதேசமாகிய செபுலோன்
தேசத்தாரும், நப்தாலி தேசத்தாருமாகிய இருளி
லேயிருக்கிற சனங்கள் பெரிய ஒளியைக் கண்
யரு டார்கள்.-மரணநிழல் பொருந்திய திசையிலிருந்
யசா தவர்கள்மேல் ஒளி பிரகாசித்தது," என்று,-எசா
யாதீர்க்கதரிசிசொல்லியவாக்கு நிறைவேறிற்று.
யஎ அதுமுதல் யேசு, பரம இராச்சியஞ் சமீபித்த
து, ஆகையால் மனந்திரும்புங்களென்று பிரசங்
கிக்கத்தொடங்கினார்.
யஅ அவர்கலிலேயாவின்சமுத்திரதீரத்தில்உலாவு
கையில், மீன்பிடிக்கிறவர்களான பேதுருவென்
னுஞ்சீமோனும், அவனுடைய சகோதரன்அந்தி
ரேயாவுமாகிய இருவருங் கடலிலேவலைவீசுகிற
யகூ தைக்கண்டு,-அவர்களை நோக்கி, என்னைப்பின்
பற்றிவாருங்கள், நான் உங்களை மனுஷரைப்பி
உய டிக்கிறவர்களாக்குவேனென்றார்.—உடனே அ
வர்கள்வலைகளைவிட்டு, அவரைப்பின்பற்றினார்
உக கள்.—அவர் அவ்விடம்விட்டுப் போகையில்,
செபேதேயுவின் புத்திரனாகிய யாக்கோபு, அ
வன் சகோதரனாகிய யோவான் என்னும் வேறி
ரண்டு சகோதரர், தங்கள் பிதாவாகிய செபேதே
யுவுடனே படவில் தங்கள் வலைகளைத்தைத்துக்
கொண்டிருக்கக்கண்டு, அவர்களையும் அழைத்
உஉ தார்.—உடனே அவர்கள் படவையும், தங்கள்
பிதாவையும்விட்டு அவரைப்பின்பற்றினார்கள்.
உங பின்பு யேசு, அவர்களுடையஆலயங்களில்
உபதேசஞ்செய்து, இராச்சியத்தின்சுவிசேஷத்
தைப்பிரசங்கித்து, கலிலேயாவிலெங்குஞ்சென்
று, சனங்களின் சகலவித வியாதிகளையும், சக
உச லவித நோய்களையும் மாற்றினார்.-அதினால் ஒசீ
ரியதேசம் எங்கும் அவருடைய கீர்த்தி பரம்பி
யிருந்தது; பலவிதமான வியாதிகளையும், வேத
னைகளையுமுடைய பிணியாளிகள் யாவரையும்,
பிசாசுபிடித்தவர்களையும், சந்திரரோகிகளையும்,
திமிர்வாதக்காரரையும் அவரிடத்தில் கொண்டு
வந்தார்கள்; அவர் அவர்களைச் சொஸ்தப்படுத்தி
உரு னார்.—கலிலேயாவிலும், தெக்கப்போலியிலும்,
யெருஷலேமிலும், யூதேயாவிலும், யோர்தான்
நதிக்கு அப்புறத்திலுமிருந்துவெகுசனங்கள்வந்
து அவரைப்பின்சென்றார்கள்.

## ரு. அதிகாரம்.

க. கிறிஸ்து மலையின்மேல் உபதேசித்தல்: ங.
வாழ்வுடையவர் இன்னாரென்பதை நிருணித்
தல்: யங. தம்முடையசீஷரை உப்புக்கும், ஒ
ளிக்கும், ஒப்பிடல்: யஎ. கிறிஸ்துத்தாம்கட்ட
ளைநிறைவேற்றும்படி தோன்றினாரென்பதைச்
சொல்லல்: உக.கொலை,குரோதம்இவைகளைவி
லக்கல்: உஎ. பரதாரகமனத்தைவிலக்கல்: ஙங.
பொய்யாணையிடுவதைவிலக்கல்: ஙஅ. நிந்தனை
செய்வதைவிலக்கல்: சக.சத்துருக்களுக்கு நன்
மைசெய்யக்கட்டளையிடல்.

அவர் திரளானசனங்களைக்கண்டு மலையின்மே க
லேறினார். அவர் உட்காந்தபின்பு, அவருடை
ய சீஷர் அவரிடத்தில்வந்தார்கள்:—அப்பொழு உ
து அவர் தமதுவாய்திறந்து, அவர்களுக்கு உப
தேசிக்கத்தொடங்கினார்.-ஆவியில் எளிமையுள் ங
ளவர்கள் வாழ்வுடையவர்கள்: பரமஇராச்சியம்
அவர்களுக்கேயுரியது.—துக்கப்படுகிறவர்கள் ச
வாழ்வுடையவர்கள்: அவர்கள் ஆறுதலைஅடை
வார்கள்.—தாழ்ந்தசிந்தையுள்ளவர்கள் வாழ்வு ரு
டையவர்கள்: அவர்கள் பூமியைச்சுதந்தரித்துக்
கொள்வார்கள்.-நீதியின்மேல் பசிதாகமுள்ளவர் சா
கள் வாழ்வுடையவர்கள்: அவர்கள் திருத்திஅ
டைவார்கள்.—இரக்கமுள்ளவர்கள் வாழ்வுடை எ
யவர்கள்:அவர்கள் இரக்கத்தைப்பெறுவார்கள்.-
சுத்தமானஇருதயமுள்ளவர்கள் வாழ்வுடையவர் அ
கள்: அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்.—ச கூ
மாதானத்தை நடப்பிக்கிறவர்கள் வாழ்வுடைய
வர்கள்: அவர்கள் தேவனுடைய புத்திரரென்
னப்படுவார்கள்.-நீதியினிமித்தந் துன்பப்படுகி ய
றவர்கள் வாழ்வுடையவர்கள்: பரமஇராச்சியம்
அவர்களுக்கேயுரியது.-என்னிமித்தம் மனுஷர் யக
உங்களை நிந்தித்து, துன்பப்படுத்தி, சகலவித தீ
மொழிகளையும்உங்கள்மேல் பொய்யாய்ச்சொன்
னார்களானால், நீங்கள் வாழ்வுடையவர்கள்.-சந் யஉ
தோஷப்பட்டு மிகவுங்களிகூருங்கள்:பரமண்ட
லத்தில்உங்களுக்குமிகுந்தபலன்கிடைக்கும்: பூ
ருவகாலத்திலுள்ள தீர்க்கதரிசிகளையும் இவ்வித
மாய்த்துன்பப்படுத்தினார்கள்.
நீங்கள் பூமிக்குஉப்பாயிருக்கிறீர்கள்: உப்பா யங
னதுசாரமற்றுப்போனால்,திரும்ப யாதினால் சார
மாக்கப்படும்; இனிஅதுவெளியேகொட்டப்படு
வதற்கும், மனுஷரால் மிதிக்கப்படுவதற்குமே
யன்றி, வேறொன்றுக்குமுதவாது.—நீங்கள் உ யச
லகத்திற்கு ஒளியாயிருக்கிறீர்கள். மலையின்மே
லுள்ளநகரம் மறைந்திருக்கமாட்டாது.-மனுஷர் யரு
விளக்கைக்கொளுத்தி, மரக்காலால் மூடிவையா
மல் ஒருதண்டின்மேல்வைப்பார்கள்; அதினால்
அதுவீட்டிலுள்ளயாவருக்கும் ஒளிகொடுக்கும்.-
அப்படியே மனுஷர் உங்கள் நற்கிரியைகளைக் யசா
கண்டு, பரமண்டலத்திலுள்ள உங்கள்பிதாவின்

(யச) எசா.கூ.க,உ.எசா.சஉ.எ. (யஎ) மாற்.க.யசா,யஎ,யஅ. யோவா.க.சஉ. (யகூ) லூக்.ரு.ய,யக. (உய) லூக்.யஅ.
உஅ. (உக) மாற்.க.யகூ,உய. (உங)மாற்.க.உக,ஙகூ. மாற்.க.யச. (உரு) மாற்.ங.அ.—(ரு. அதி. க.)மாற்.ங.யங. (ரு)
லூக்.சா.உய.சங்.ருக.யஎ.எசா.ருஎ.யரு. (ச) எசா.சாக.உ,ங.யோவா.யசா.உய.உ.கொரி.க.எ.வெளி.உக.ச.(சா)எசா.
ருரு.க. (எ) சங்.சக.க.மாற்.யக.உரு.உ. தீமோ.க.யசா.எபி.சா.ய.யாக்.உ.யங.(அ)சங்.யரு.உ.எபி.யஉ.யச. க.கொரி.
யங.யஉ. க.யோவா.ங.உ,ங. (ய) உ.கொரி.ச.யஎ. உ.தீமோ.உ.யஉ. க.பேதுரு.ங.யச. (யக) க.பேதுரு.ச.யச.
(யஉ) அப்.ரு.சக.ரோ.ரு.ங. யாக்.க.உ.க.பேதுரு.ச.யங. உ.நாளா.ஙசா.யசா.நெகி.கூ.உசா.அப்.எ.ருஉ.க.தெச.உ.யரு.
(யங) லூக்.யச.ஙச,ஙரு. (யச) நீதி ச.யஅ.பிலி.உ.யச. (யசா) க.பேதுரு உ.யஉ.யோவா.யரு.அ. க.கொரி.யச.உரு.

மகிமை பிரகாசிக்கப்பண்ணும்பொருட்டு, உங்
கள்ஒளிஅவர்களுக்குமுன்பிரகாசிக்கக்கடவது.
௰௭ நியாயப்பிரமாணத்தையும், தீர்க்கதரிசனவாக்
கியங்களையும் ஒழிப்பதற்கு நான் வந்தேனென்
று நீங்கள்நினைக்கவேண்டாம்: அவைகளைஒழிக்
கிறதற்கல்ல, நிறைவேற்றுவதற்கே வந்தேன்.—
௰௮ வேதப்பிரமாணம் முழுவதும் நிறைவேறுவதே
யன்றி, வானமும் பூமியும் ஒழியும்வரைக்கும் அ
தில் ஒரு சிறு எழுத்தாயினும், ஒரு எழுத்தின் உ
றுப்பாயினும்ஒழிந்துபோவதில்லையென்றுமெய்
௰௯ யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன்.—ஆதலால்
இந்தக்கட்டளைகளில் மிகவுஞ்சிறிய ஒருகட்ட
ளையையாயினுமீறி, அவ்வண்ணமே மனுஷருக்
கு உபதேசிக்கிறவனெவனோ, அவன்பரமஇராச்
சியத்தில் மிகவுஞ் சிறியவனென்றெண்ணப்படு
வான்: அவைகளின்படி செய்தும், உபதேசித்
தும்வருகிறவனோ, பரமஇராசசியத்தில்பெரியவ
௨௰ னென்றெண்ணப்படுவான்.—வேதபாரகரும், ப
ரிசேயருமானவர்களின் நீதியிலும் உங்கள்நீதி
அதியுத்தமமல்லாதிருந்தால், நீங்கள்பரமஇராச்சி
யத்தில் ஒருபொழுதும் பிரவேசிக்கமாட்டீர்க
ளென்று நான் உங்களுக்குச்சொல்லுகிறேன்.
௨௧ கொலைசெய்யாயாகவென்றும், கொலைசெய்
பவன்நியாயத்தீர்ப்புக்குப்பாத்திரனென்றும்பூரு
வத்தாருக்குச்சொல்லிய வாக்கைக்கேள்விப்பட்
௨௨ டீர்கள்.—நியாயமில்லாமல் தன் சகோதரன்மேல்
கோபங்கொள்பவனெவனோ, அவன் நியாயத்
தீர்ப்புககுப்பாத்திரனாவான்: தன் சகோதரனைப்
புத்தியீனனென்பவனெவனோ, அவன் பெரிய
சங்கத்தீர்ப்புக்குப் பாத்திரனாவான்: அவனை மூ
டனென்பவனெவனோ, அவன் நரக அக்கினிக்
குப் பாத்திரனாவானென்று நான் உங்களுக்குச்
௨௩ சொல்லுகிறேன்.—ஆதலால் நீ வேதிகையினி
டத்தில் உன் காணிக்கையைக் கொண்டுவந்த
சமயத்தில், உன்மேல் உன் சகோதரனுக்கு வி
ரோதமுண்டென்று அங்கே நினைவுகொள்வாயா
௨௪ கில்,—அந்த வேதிகைக்குமுன் உன்காணிக்கை
யைவைத்துவிட்டு, போய், முன்பு உன்சகோ
தரனுடனே ஒப்புரவாகி, பின்புவந்து உன்கா
௨௫ ணிக்கையைச் செலுத்துவாயாக.—உன் எதிரா
ளி உன்னை நியாயாதிபதியிடத்தில் ஒப்பியாம
லும், அந்த நியாயாதிபதி உன்னைத் தலையாரியி
டத்தில்ஒப்பியாமலும், நீ சிறைச்சாலையில்வைக்
கப்படாமலுமிருக்கும்படி, நீ சீக்கிரமாய் உன்
எதிராளியுடனே வழியிலிருக்கிறபொழுது அ
௨௬ வனுடன் இணங்கிக்கொள்வாயாக.—இல்லா
விட்டால் நீ ஒருகாசாகிலுங் குறையாமல் மு
ழுமையுஞ்செலுத்தும்வரைக்கும், அவ்விடத்தை

விட்டுத் திரும்பிவரமாட்டாயென்று மெய்யாக
உனக்குச்சொல்லுகிறேன்.
விபசாரஞ் செய்யாயாகவென்று, பூருவத்தா ௨௭
ருக்குச் சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டீர்
கள்.—ஒரு ஸ்திரியையிச்சித்துப்பார்க்கிறவனெ ௨௮
வனோ, அவன் தன் இருதயத்தில் அவளுடன்
விபசாரஞ் செய்தாயிற்றென்று நான் உங்களுக்
குச்சொல்லுகிறேன்.-ஆதலால் உன்வலக்கண்உ ௨௯
னக்கு இடறுவரப்பண்ணினால், அதைத்தோண்
டி எறிந்துவிடு: உன்சரீரம்முழுவதும்நரகத்திலே
தள்ளப்படுவதைப்பார்க்கிலும், உன் அவயவங்க
ளில் ஒன்றுகெட்டுப்போவதே உனக்குநலம்.—
உன்வலக்கை உனக்குஇடறுவரப்பண்ணினால், ௩௰
அதைத்தறித்து எறிந்துவிடு: உன்சரீரம் முழுவ
தும்நரகத்தில்தள்ளப்படுவதைப்பார்க்கிலும்,உன்
அவயவங்களில் ஒன்றுகெட்டுப்போவதேஉனக்
குநலம்.—ஒருவன் தன் மனைவியைத்தள்ளிவிடு ௩௧
கையில், தொடராமுறி அவளுக்குக் கொடுக்கக்
கடவனென்று சொல்லப்பட்டிருக்கின்றது.—வி ௩௨
பசாரநிமித்தத்தினாலன்றி, எவனாகிலுந்தன்மனை
வியைத்தள்ளிவிட்டால், அவன் அவளைவிபசா
ரஞ் செய்யப்பண்ணுகிறானென்றும், தள்ளிவி
டப்பட்டவளை எவனாகிலும் விவாகம்பண்ணி
னால், அவனும் விபசாரஞ் செய்கிறானென்றும்
நான் உங்களுக்குச்சொல்லுகிறேன்.
அன்றியும், பொய்யாணை இடாதிருப்பாயாக ௩௩
வென்றும், உன் ஆணைகளைக் கர்த்தருக்குச்
செலுத்துவாயாகவென்றும் பூருவத்தாருக்குச்
சொல்லப்பட்டதென்று கேள்விப்பட்டீர்கள்.—
நானே உங்களுக்கு இவ்வாக்குச் சொல்லுகி ௩௪
றேன், நீங்கள் எவ்விதத்திலுஞ் சத்தியம்பண்ண
லாகாது; வானத்தைக்கொண்டுசத்தியம் பண்ண
லாகாது; அது தேவனுடைய சிங்காசனம்:
பூமியைக்கொண்டு சத்தியம்பண்ணலாகாது; அ
து அவருடைய பாதபீடம்:—யெருஷலேமைக் ௩௫
கொண்டுசத்தியம்பண்ணலாகாது; அதுமகாஇரா
சாவின்நகரம்.—உன்சிரசைக்கொண்டுசத்தியம் ௩௬
பண்ணலாகாது; அதின் மயிரில் ஒன்றையாவ
து வெண்மையாக்கவாயினும், கருமையாக்கவா
யினும் உனக்குவல்லமைஇல்லை.—உள்ளதைஉள் ௩௭
ளதென்றும், இல்லதை இல்லதென்றுஞ் சொல்
லக்கடவீர்கள்: இவைகளுக்கு அதிகமானது தீ
மையிலிருந்துவிளைகின்றது.
கண்ணுக்குப் பிரதியாகக் கண்ணும், பல்லுக் ௩௮
குப்பிரதியாகப் பல்லுமென்று சொல்லப்பட்ட
தைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்: நானோ உங்
களுக்கு இவ்வாக்குச் சொல்லுகிறேன்,—தீமை ௩௯
செய்தவனுடனே நீங்கள் எதிர்த்து நிற்கலாகா

---

(௰௭) ரோ.௩.௩௧. கலா.௩.௨௪. (௰௮) லூக்.௰௬.௰௭. (௰௯) யாக்.௨.௰. (௨௰) ரோ.௯.௩௧. (௨௧) யாத்.௨௰.௰௩. உபா.௫.௰௭. (௨௨) ௧.யோவா.௩.௰௫. ௨.சாமு.௬.௨௰. யாக்.௨.௨௰. (௨௪) யோபு.௪௨.௮. ௧.தீமோ.௨.௮. ௧.பேதுரு.௩.௭. (௨௫) நீதி.௨௫.௮. லூக்.௰௨.௫௮,௫௯. ஏசா.௫௫.௬. (௨௭) யாத்.௨௰.௰௪. (௨௮) யோபு.௩௧.௧. நீதி.௬.௨௫. ௨.சாமு.௰௧.௨. (௨௯) ரோ.௮.௰௩. ௧.கொரி.௯.௨௭. கொலோ.௩.௫. (௩௧) உபா.௨௪.௧. மாற்.௰.௨. (௩௨) லூக்.௰௬.௰௮. ரோ.௭.௩. ௧.கொரி.௭.௰,௰௧. (௩௩) யாத்.௨௰.௭. எண்.௩௰.௨. உபா.௨௩.௨௩. (௩௪) யாக்.௫.௰௨. ஏசா.௬௬.௧. (௩௫) சங்.௪௮.௨. (௩௭) கொலோ.௪.௬. யாக்.௫.௰௨. (௩௮) யாத்.௨௧.௨௪. (௩௯) நீதி.௨௰.௨௨. ரோ.௰௨.௰௭, ௰௯. ௧.கொரி.௬.௭. ௧.தெச.௫.௰௫. ௧.பேதுரு.௩.௯. ஏசா.௫௰.௬. புல.௩.௩௰.

து: ஒருவன் உன் வலக்கன்னத்தில் அடித்தால்,
மறுகன்னத்தையும் அவனுக்குத் திருப்பிச்சாய்.-
௪௰ ஒருவன் உன் வஸ்திரத்தை எடுக்க உன்னுடனே
வழக்காடினால்,அவனுக்கு உன் மேல்அங்கியை
௪௧ யும்விட்டுவிடு.—ஒருவன் உன்னை ஒருநாழிகை
வழிவரும்படிவலாற்காரம்பண்ணினால், அவனு
௪௨ டனே இருநாழிகைவழி நடந்துபோ.—உன்னி
டத்தில்வேண்டிக்கொள்ளுகிறவனுக்குக்கொடு,
உன்னிடத்தில் கடன் வாங்கவிரும்புகிறவனுக்
குப்பராமுகம்பண்ணாதே.
௪௩ நீ பிறனைநேசித்து, உன் சத்துருவைப் பகைக்
கக்கடவாயென்றுசொல்லியவாக்கைக்கேள்விப்
௪௪ பட்டீர்கள்.—நானோ உங்களுக்கு இவ்வாக்கைச்
சொல்லுகிறேன், உங்கள் சத்துருக்களைநேசியுங்
கள்,உங்களைச்சபிக்கிறவர்களைஆசீர்வதியுங்கள்,
உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மைசெய்
யுங்கள், உங்களை நிந்தித்து, உங்களைத்துன்பப்ப
டுத்துகிறவர்கள் நிமித்தம் வேண்டுதல்பண்ணுங்
௪௫ கள்.—அதினால் நீங்கள்பரமண்டலத்திலுள்ளஉங்
கள்பிதாவுக்குப்பிள்ளைகளாவீர்கள்:அவர் தீயவர்
கள்மேலும், நல்லவர்கள்மேலுந் தமது சூரியன்
உதிக்கவும், நீதியுள்ளவர்கள்மேலும், அநீதியுள்
ளவர்கள்மேலும்மழைபெய்யவும்பண்ணுகிறார்.-
௪௬ உங்களை நேசிக்கிறவர்களைமாத்திரம் நீங்கள் நே
சிப்பீர்களாகில், உங்களுக்கென்னபலன்வரும்;
ஆயக்காரரும் அப்படிச்செய்கிறார்களல்லவா.—
௪௭ உங்கள் சகோதரரைமாத்திரம்நீங்கள்வாழ்த்துவீர்
களாகில்,நீங்கள்செய்கிறவிசேஷமென்ன,ஆயக்
௪௮ காரரும் அப்படியே செய்கிறார்களல்லவா;—ஆ
தலால் பரமண்டலத்திலுள்ள உங்கள் பிதாப்பூர
ணசற்குணமுள்ளவராயிருக்கிறதுபோல், நீங்க
ளும்பூரணசற்குணமுள்ளவர்களாவீர்களாக.

## ௬. அதிகாரம்.

௧. தருமஞ்செய்யும்வகையைக்காட்டல்: ௨. நன்கொடைகொடுக்கும் முறையைத்தெரிவித்தல்: ௫. பிரார்த்தனைசெய்யும்வகையை உணர்த்தல்: ௰௬. உபவாசஞ்செய்யும் விதத்தைக்குறித்தல்: ௰௯. உலகப்பொருளைச்சம்பாதிப்பதைக்குறித்துப் போதனைசொல்லல்: ௨௫. மெய்த்தேவபத்திதேடுவது அவசியமெனக்கூறல்.

நீங்கள், மனுஷர்காணும்பொருட்டாய் அவர்க
ளுக்குமுன்பாக உங்கள்தருமத்தைச் செய்யாதப
டி சாவதானமாயிருங்கள்: செய்தால், பரமண்ட
லத்திலுள்ள உங்கள் பிதாவினிடத்தில் ஒருபல
௨ னையும் பெறமாட்டீர்கள்.—ஆதலால் கபடிகள்,
மனுஷரால் புகழப்படும்படி ஆலயங்களிலும் வீ
திகளிலுஞ் செய்வதுபோல, நீயுந் தருமஞ்செய்
யும்பொழுது உனக்குமுன்பாகத்தாரையூதுவிக்
கவேண்டாம். அவர்கள் தங்கள் பலனைப்பெற்
றார்களென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லு
கிறேன்.-உன்தருமம் அந்தரங்கமாயிருக்கும்படி, ௩
நீதருமஞ்செய்யும்பொழுது, உன் வலக்கைசெய்
வதை உன் இடக்கை அறியலாகாது:-அப்பொழு ௪
து அந்தரங்கத்திலுள்ளதைப்பார்க்கிற உன் பிதா,
தாமேபிரத்தியட்சமாய்உனக்குப்பலனளிப்பார்.
நீ பிரார்த்தனைசெய்யும்பொழுது, கபடிகளைப் ௫
போலிருக்கலாகாது: அவர்கள் ஆலயங்களிலும்,
வீதிகளின் சந்திகளிலும்நின்று, மனுஷர்காணும்
படி பிரார்த்தனைசெய்ய விரும்புகிறார்கள். அவர்
கள் தங்களுடைய பலனைப்பெற்றார்களென்று
மெய்யாய் நான் உங்களுக்குச்சொல்லுகிறேன்.-
நீ பிரார்த்தனை செய்யும்பொழுது, உன் உள்ள ௬
றையில் பிரவேசித்து, அதின்கதவைப் பூட்டி
னபின்பு, அந்தரங்கத்திலுள்ள உன் பிதாவை
நோக்கிப் பிரார்த்தனைசெய்; அப்பொழுது அந்த
ரங்கத்திலுள்ளதைப்பார்க்கிற உன்பிதா, பிரத்தி
யட்சமாய்உனக்குப்பலனளிப்பார்.-ஆதலால்பி ௭
ரார்த்தனைசெய்யும்பொழுது, நீங்கள் அஞ்ஞானி
களைப்போல் வீணாய்வசனிக்கலாகாது: அவர்கள்
தாங்கள் அதிகமாய்வசனிக்கிறதினிமித்தங்கேட்
கப்படுவோமென்று நினைக்கிறார்கள்.—நீங்கள் அ ௮
வர்களைப்போலச்செய்யாதிருங்கள்: நீங்கள் உங்
கள்பிதாவிடத்தில்வேண்டுதல்செய்யுமுன், உங்
களுக்கு இன்னதுவேண்டுமென்று அவர் அறிந்
திருக்கிறாரே.—ஆதலால் நீங்கள் இவ்விதமாய்ப் ௯
பிரார்த்தனைபண்ணுங்கள்: பரமண்டலங்களிலி
ருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் ப
ரிசுத்தப்படுவதாக.-உம்முடைய இராச்சியம் வ ௰
ருவதாக. உம்முடைய சித்தம் பரமண்டலத்தி
லேசெய்யப்படுகிறதுபோலப்பூமண்டலத்திலே
யுஞ் செய்யப்படுவதாக.-இன்றைக்கு எங்களுக் ௰௧
கு வேண்டிய ஆகாரத்தை எங்களுக்குத்தாரும்.-
எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிற ௰௨
துபோல,நீர் எங்கள் கடன்களை எங்களுக்கு மன்
னித்தருளும்.—நாங்கள் சோதனையில் பிரவேசி ௰௩
யாதபடிசெய்து, தீமையினின்று எங்களை இரட்
சித்துக்கொள்ளும்:இராச்சியமும்,வல்லமையும்,
மகிமையுஞ் சதாகாலங்களிலும் உமக்கேயுரிய
வைகள். ஆமென்.-மனுஷர்செய்த தப்பிதங்களை ௰௪
நீங்கள் மன்னிப்பீர்களானால், உங்கள் பரமபி
தாவும் உங்களுக்கு மன்னிப்பார்:—மனுஷர் ௰௫
செய்த தப்பிதங்களை நீங்கள் மன்னியாதிருப்பீர்
களாகில், உங்கள்பிதாவும் உங்கள் தப்பிதங்களை
மன்னியாதிருப்பார்.
மேலும் நீங்கள் உபவாசம்பண்ணும்பொழு ௰௬
து, கபடிகளைப்போல் முகவாட்டத்தைக்காட்ட

(௪௨) உபா.௰௫.௮,௰. (௪௩) லேவி.௰௯.௰௮. உபா.௨௩.௬. (௪௪) ரோ.௰௨.௰௪,௨௰. லூக்.௨௩.௩௪. அப்.௭.௬௰. ௧.கொரி.௪.௰௨,௰௩. ௧.பேதுரு.௨.௨௩. (௪௫) யோபு.௨௫.௩. (௪௬) லூக்.௬.௩௨. (௪௮) ஆதி.௰௭.௧. லேவி.௰௯.௨. கொலோ.௧.௨௮. யாக்.௧.௪. ௧.பேதுரு.௧.௰௫,௰௬. எபே.௫.௧.—(௬. அதி. ௧.) உபா.௨௪.௰௩. தானி.௪.௨௭. ௨.கொரி.௯.௯,௰. (௨) ரோ.௰௨.௮. (௪) லூக்.௰௪.௰௪. (௬) ௨.இரா.௪.௩௩. (௭) பிர.௫.௨. ௧.இரா.௰௮.௨௬,௨௯. (௯) லூக்.௰௧.௨. (௰) அதி.௨௬.௩௯,௪௨. அப்.௨௧.௰௪. சங்.௱௩.௨௰.௨௧. (௰௧) யோபு.௨௩.௰௨. நீதி.௩௰.௮. (௰௨) அதி.௰௮.௨௧. (௰௩) லூக்.௨௨.௪௰,௪௬. ௧.கொரி.௰.௰௩. ௨.பேதுரு.௨.௯. வெளி.௩.௰. யோவா.௰௭.௰௫. ௧.நாளா.௨௯.௰௧. (௰௪) மாற்.௰௧.௨௫,௨௬. எபே.௪.௩௨. கொலோ.௩.௰௩. யாக்.௨.௰௩. (௰௬) ஏசா.௫௮.௫.

வேண்டாம்: அவர்கள்தாங்கள்உபவாசமாயிருப்
பதை மனுஷர்காணும்படி, தங்கள் முகங்களை
வாடப்பண்ணுகிறார்கள். அவர்கள் தங்களுடை
ய பலனைப் பெற்றார்களென்று நான் மெய்யாய்
௰எ உங்களுக்குச் சொல்லுகிறேன்.—நீ உபவாசம்
பண்ணும்பொழுது, அந்த உபவாசிப்பு மனுஷ
ருக்குக் காணப்படாமல், அந்தரங்கத்திலுள்ள
உன்பிதாவுக்கே காணப்படும்படி, உன்தலைக்கு
எண்ணெய் பூசி, உன் முகத்தைக் கழுவக்கட
௰அ வாய்.—அப்பொழுது அந்தரங்கத்திலுள்ளதைப்
பார்க்கிற உன் பிதா, வெளிப்படையாய் உனக்
குப் பலனளிப்பார்.
௰௯ பூச்சியும், துருவுங்கெடுத்தும், திருடர் கன்ன
மிட்டுத்திருடியுமிருக்கிற பூமியில், உங்களுக்கா
கப்பொக்கிஷங்களைநீங்கள்கூட்டிவையாதிருங்
௨௰ கள்.—பூச்சியாயினுந் துருவாயினுங்கெடுக்காம
லும், திருடர் கன்னமிட்டுத் திருடாமலுமிருக்கி
ற பரமண்டலத்தில் உங்களுக்காகப் பொக்கி
௨௧ ஷங்களைக்கூட்டிவையுங்கள்.—உங்கள் பொக்
கிஷம் எங்கேயோ,அங்கே உங்கள்இருதயமுமி
௨௨ ருக்கும்.—கண்ணானதுசரீரத்திற்கு விளக்கு: ஆத
லால் உன் கண் துலக்கமாயிருந்தால், உன்சரீரம்
௨௩ முழுவதும் ஒளிபெறும்.—உன்கண் துலக்கமில்
லாதிருந்தால், உன் சரீரம்முழுவதும் இருள் அ
டைந்திருக்கும். உன்னிலுள்ள ஒளி இருளாயி
ருந்தாலோ, அந்த இருள் எவ்வளவுபெரிது.
௨௪ ஒருவன் இரண்டு எசமான்களுக்கு ஊழியஞ்
செய்யமாட்டான்:ஒருவனை அவன்பகைத்து,மற்
றவனைநேசிப்பான்; அல்லது ஒருவனைப்பற்றிக்
கொண்டு, மற்றவனை அலட்சியம்பண்ணுவான்;
நீங்கள் தேவனையும், மம்மோனையுஞ்சேவிக்க
௨௫ மாட்டீர்கள்.—ஆதலால் உங்கள்சீவனைக்குறித்து,
எதைப்புசிப்போம்,எதைக்குடிப்போமென்றும்,
உங்கள் சரீரத்தைக்குறித்து, எதை உடுப்போமெ
ன்றும் நீங்கள்கவலைப்படாதிருங்களென்றுநான்
உங்களுக்குச்சொல்லுகிறேன். ஆகாரத்திலுஞ்சீ
வனும்,உடையிலுஞ்சரீரமும்முக்கியமல்லவா.—
௨௬ ஆகாயத்துப்பறவைகளைநோக்கிப்பாருங்கள்: அ
வைகள்விதைக்கிறதுமில்லை,அறுக்கிறதுமில்லை,
களஞ்சியங்களிற் கூட்டிவைக்கிறதுமில்லை; அ
வைகளையும்உங்கள்பரமபிதாவேபோஷிக்கிறார்.
அவைகளிலும் நீங்கள் மேன்மையுள்ளவர்களல்
௨எ லவா.—கவலைப்படுகிறதினால் உங்களில் ஒரு
வன் தன்ஆயுளுக்கு ஒருசணகாலமாயினுங்கூட்
௨அ டுவானா.—உடைக்காக நீங்கள் கவலைப்படுகிற
தென்ன; வெளியிலுள்ள லீஷன்புஷ்பங்கள்
எப்படிவளருகின்றன, அவைகளை உற்றுப்பா
ருங்கள்; அவைகள்வருந்துகிறதுமில்லை,நூற்கிற
௨௯ துமில்லை:—ஆகிலும் மிகுந்த மகிமைபொருந்திய
சலோமோனும் அவைகளில்ஒன்றைப்போலாகி
லும்அலங்கரிக்கப்படவில்லையென்றுநான்உங்க
ளுக்குச்சொல்லுகிறேன்.—ஆதலால் அற்ப விசு ௩௰
வாசிகளே,ஒருநாள்வளருகிறதுமாய், மறுநாள்அ
டுப்பில் போடப்படுகிறதுமாயிருக்கிற பூண்டுக
ளைத் தேவன் இவ்விதமாய் அலங்காரப்படுத்து
கிறாரானால்,மிகவும்அதிகமாய்உங்களுக்கு உடுத்
துவாரல்லவா.—ஆதலால் நாம் எதைப்புசிப்போ ௩௧
மென்றும், எதைக் குடிப்போமென்றும், எதை
உடுப்போமென்றும் நீங்கள் கவலைப்படாதிருங்
கள்; அஞ்ஞானிகள் இவைகளெல்லாவற்றையுந்
தேடுவார்கள்:—இவைகளெல்லாம் உங்களுக்கு ௩௨
வேண்டியவைகளென்பது உங்கள்பரமபிதாவுக்
குத்தெரியும்.—முதல் தேவனுடைய இராச் ௩௩
சியத்தையும், அவருடையநீதியையுந்தேடுங்கள்;
அப்பொழுது இவைகளெல்லாம் உங்களுக்குக்
கூடக்கொடுக்கப்படும்.—ஆதலால்நாளையினிமித் ௩௪
தங்கவலைப்படாதிருங்கள்:நாளைத்தினம்,தன்னி
மித்தந் தானே கவலைப்படும். அந்தந்தநாளைக்கு
அதினதின் தீமையே போதும்.

## எ. அதிகாரம்.

௧. பிறர்மேற்குற்றம்பாரிப்பதை விலக்கல்: எ. பி
ரார்த்தனைசெய்யும்படி போதித்தல்: ௰௩. இடுக்
கமானவாசலினாலேபிரவேசிக்கும்படிஉணர்த்
தல்: ௰௫. கள்ளத்தீர்க்கதரிசிகளைக் குறித்து எச்
சரிக்கைப்படுத்தல்: ௨௧. தேவனுடைய சித்
தத்தின்படிநடப்பது அவசியமெனக்காட்டல்:
௨௪. புத்திமானுக்கும் புத்தியீனனுக்கும் ஏற்
ற ஒப்பனையைச் சொல்லல்: ௨அ. கிறிஸ்துத்
தாம் சொல்லத்தொடங்கிய உபதேசத்தை மு
டித்தல்.

நீங்கள் குற்றஞ்சுமத்தப்படாமல் இருக்கவேண் ௧
டில், பிறர்மேல் குற்றஞ்சுமத்தவேண்டாம்: நீங்
கள் குற்றஞ்சுமத்துவதுபோலக் குற்றஞ்சுமத்தப்
படுவீர்கள்.—நீங்கள் அளக்கும் அளவினால், உங்க ௨
ளுக்கும் அளப்பார்கள்.—உன் கண்ணிலுள்ளஉத் ௩
திரத்தை உணராமல்,உன்சகோதரனுடைய கண்
ணிலிருக்கிற சிராயைப்பார்க்கிறதென்ன.—உத் ௪
திரம் உன்கண்ணிலிருக்க, நீ உன்சகோதரனை
நோக்கி, உன்கண்ணிலுள்ள சிராயை எடுத்துவி
டுகிறேன், இடங்கொடுவென்று சொல்வதென்
ன.—கபடியே, முன்பு உன்கண்ணிலுள்ள உத்தி ௫
ரத்தை நீக்கிவிடு; அப்பொழுது உன் கண்தெளி
ய, நீ உன் சகோதரனுடைய கண்ணிலுள்ள சி
ராயை எடுத்துவிடுவாய்.
நீங்கள் நாய்களுக்குப்பரிசுத்தமானதை இடாத ௬
திருங்கள், பன்றிகளுக்கு முன் உங்கள் முத்துக்
களைப்போடாதிருங்கள்; இவைகள் அந்த முத்
துக்களைத் தங்கள் கால்களால் உழக்கி, திரும்பி
உங்களைப்பீறும்.
வேண்டிக்கொள்ளுகிற எவனும், வாங்கிக் எ

(௰எ) தானி.௰.௩. (௰௯) நியா.௨௩.௪. ௧.தீமோ.௬.௰எ. எபி.௰௩.௫. யாக்.௫.௧. (௨௰) லூக்.௰௨.௩௩,௩௪. ௧.தீமோ.௬.௰௯. ௧.பேதுரு.௧.௪. (௨௨) லூக்.௰௧.௩௪,௩௬. (௨௪) லூக்.௰௬.௰௩. கலா.௧.௰. ௧.தீமோ.௬.௰எ. யாக்.௪.௪. ௧.யோவா.௨.௰௫. (௨௫) லூக்.௰௨.௨௨,௨௩. பிலி.௪.௬. ௧.பேதுரு.௫.எ. (௨௬) யோபு.௩அ.௪௧. லூக்.௰௨.௨௪. (௩௩) ௧.இரா.௩.௰௩. லூக்.௰௨.௩௧. ௧.தீமோ.௪.அ.—(எ. அதி. ௧.) ரோ.௨.௧. ரோ.௰௪.௩,௪,௰,௰௩. ௧.கொரி.௪.௩,௫. யாக்.௪.௰௧,௰௨. (௬) நீதி.௯.எ,அ. அப்.௰௩.௪௫,௪௬. (எ) மாற்.௰௧.௨௪. லூக்.௰அ.௧. யோவா.௰௬.௨௩,௨௪. யாக்.௧.௫,௬. ௧.யோவா.௩.௨௨.

கொள்ளுகிறான்; தேடுகிறவன், கண்டடைகி
௮ றான்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்:—ஆத
லால் வேண்டிக்கொள்ளுங்கள், உங்களுக்குக்
கொடுக்கப்படும்; தேடுங்கள்,கண்டடைவீர்கள்;
௯ தட்டுங்கள், உங்களுக்குத் திறக்கப்படும்.—உங்
களுக்குள் எந்தமனுஷனாயினும், தன்னிடத்தில்
அப்பங்கேட்கிறதன்மகனுக்குக்கல்லைக்கொடுப்
௰ பானா.—மீனை அவன் கேட்டால் அவனுக்குப்
௰௧ பாம்பைக் கொடுப்பானா.—தீயராகிய நீங்களே
உங்கள்பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக்கொடுக்க
அறிந்திருக்க, பரமண்டலத்திலுள்ள உங்கள் பி
தா, தம்மை வேண்டிக்கொள்பவர்களுக்கு மிக
வும் அதிகமாய் நன்மைகளைக் கொடுப்பாரல்ல
௰௨ வா.-ஆதலால் மனுஷர் உங்களுக்குச்செய்யும்ப
டி நீங்கள் விரும்புகிறவைகளெவைகளோ, அ
வைகளையே நீங்களும் அவர்களுக்குச்செய்யுங்
கள்: இதுவே நியாயப்பிரமாணமும், தீர்க்கதரிச
னங்களுமாம்.
௰௩ நீங்கள் இடுக்கமானவாசலால் பிரவேசியுங்
கள்: நாசத்துக்குப்போகிறவாசல் விரிவுள்ளது,
வழிவிசாலம், அதினால்பிரவேசிக்கிறவர்கள் அ
௰௪ நேகர்:—சீவனுக்குப்போகிற வாசல் எவ்வளவு
இடுக்கம், வழி எவ்வளவுநெருக்கம், சிலர்மாத்
திரம் அதைக்கண்டடைகிறார்கள்.
௰௫ ஆட்டின் வேஷத்தையும், பீறுகிறகோனாய்க
ளின் உள்ளத்தையுமுடையவர்களாய், உங்களி
டத்தில்வருகிற கள்ளத்தீர்க்கதரிசிகளைக்குறித்து
௰௬ ச்சாவதானமாயிருங்கள்.-நீங்கள் அவர்களுடை
யகனிகளினால்அவர்களை அறிவீர்கள். முட்செடி
களில்திராட்சப்பழங்களையும்,முட்பூண்டுகளில்
அத்திப்பழங்களையும் பறிக்கிறவர்களுண்டா.—
௰௭ அப்படியே நல்லமரங்களெல்லாம் நல்லகனிக
ளைக்கொடுக்கும்; கெட்டமரமோ கெட்டகனிக
௰௮ ளைக்கொடுக்கும்.—நல்லமரங் கெட்டகனிகளை
யும், கெட்டமரம் நல்லகனிகளையுங் கொடுக்க
௰௯ மாட்டாது.—நல்ல கனிகளைக்கொடாத மரங்க
ளெல்லாந் தறிக்கப்பட்டு, அக்கினியிலே போ
௨௰ டப்படும்.—ஆதலால் நீங்கள் அவர்களுடையக
னிகளினால் அவர்களை அறியலாம்.
௨௧ என்னைநோககி, கர்த்தாவே, கர்த்தாவே
யென்றுசொல்லுகிற எவனுமல்ல, பரமண்டலத்
திலுள்ளஎன் பிதாவுடைய சித்தத்தின்படி செய்
கிறவனே, பரமராச்சியத்தில் பிரவேசிப்பான்.—
௨௨ அந்நாளில் அநேகர் என்னைநோக்கி, கர்த்தா
வே, கர்த்தாவே, உமது நாமத்தினாலே நாங்
கள் தீர்க்கதரிசனஞ் சொன்னோமல்லவோ, உம
து நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்தினோமல்ல
வோ; உமது நாமத்தினால் அநேக ஆச்சரியமான
கிரியைகளைச் செய்தோமல்லவோ என்பார்கள்.-
அப்பொழுது நான் அவர்களைநோக்கி, நான்ஒரு ௨௩
பொழுதும்உங்களை அறியவில்லை: துர்க்கிரியைக்
காரரே, நீங்கள் என்னைவிட்டுப்போங்களென்
பேன்.
ஆதலால் நான்சொல்லிய இவ்வாக்குகளைக் ௨௪
கேட்டு, இவைகளின்படிசெய்கிறவனெவனோ,
அவனைக்கன்மலையின்மேல் தன் வீட்டைக்கட்
டினபுத்தியுள்ள மனுஷனுக்கு ஒப்பிடுவேன்.—
பெருமழைசொரிந்தும், பெருவெள்ளம்வந்தும், ௨௫
காற்றுகள்அடித்துஅந்தவீட்டின்மேல்மோதியும்,
அதின் அத்திபாரங் கன்மலையின்மேல் போடப்
பட்டபடியால், அது விழவில்லை.—நான்சொல் ௨௬
லிய இவ்வாக்குகளைக் கேட்டு, இவைகளின்படி
செய்யாதவனெவனோ, அவன், மணலின்மேல்
தன் வீட்டைக்கட்டின புத்தியீனனுக்கு ஒப்பி
டப்படுவான்.—பெருமழை சொரிந்து, பெரு ௨௭
வெள்ளம்வந்து, காற்றுகள் அடித்து அந்தவீட்
டின்மேல் மோதியபொழுது, அது விழுந்தது:
முழுவதும் அழிந்துபோயிற்றென்றார்.—யேசு ௨௮
இவ்வாக்குகளைச்சொல்லி முடித்தபொழுது, அ
வர் வேதபாரகரைப்போலல்ல, அதிகாரமுடை
யவராய் அவர்களுககு உபதேசம்பண்ணினப
டியால்,—சனங்கள் அவருடைய உபதேசத்தைக் ௨௯
குறித்துப்பிரமித்தார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. குஷ்டரோகியைச் சொஸ்தப்படுத்தல்: ௫. நூற்றுவருக்கதிபதியின் பணிவிடைக்காரனைச் சொஸ்தப்படுத்தல்: ௰௪.பேதுருவின்மாமியைச் சொஸ்தப்படுத்தல்: ௰௬. வெகு சனங்களைச் சொஸ்தப்படுத்தல்:௰௮.கிறிஸ்துத்தம்மைப்பின் செல்லக்கட்டளையிடல்:௨௩.கடற்கொந்தளிப்பை அமர்த்தல்: ௨௮. பிசாசுகளைத்துரத்தல்.

அவர்மலையினின்றுஇறங்கினபொழுது,திரளா ௧
னசனங்கள் அவரைப் பின்சென்றார்கள்.—அப் ௨
பொழுது குஷ்டரோகி ஒருவன்வந்து அவரை
வணங்கி, கர்த்தாவே, உமக்குச் சித்தமா
னால், நீர் என்னைச்சுத்திகரிக்கக்கூடுமென்றான்.-
யேசு தமது கையை நீட்டி,அவனைத்தொட்டு, ௩
எனக்குச்சித்தமுண்டு, நீ சுத்தமாவாயாகவென்
றார். உடனே அவன்குஷ்டரோகம்நீங்கிற்று.—
பின்பு யேசு, நீஇதைஒருவனுக்குஞ்சொல்லாத ௪
படிசாவதானமாயிரு; போய், ஆசாரியனுக்குஉ
னனைக்காண்பித்து, அவர்களுக்குச்சாட்சியாக,
மோசேவிதித்தகாணிக்கையைச் செலுத்துவாயா
கவென்றார்.
யேசு கப்பர்நாகூமில்பிரவேசித்தபின்பு, நூ ௫
று சேவகருக்கதிபதி ஒருவன் அவரிடத்தில்வந்
து,—அவரை நோக்கி, கர்த்தாவே, என் ப ௬
ணிவிடைக்காரன் திமிர்வாதமுள்ளவனாய், வீட்

---

(௮) நீதி.௮.௰௭.(௰௧)ஆதி.௬.௫. (௰௨) லூக்.௬.௩௧. லேவி.௰௯.௰௮. ரோ.௰௩.௮,௯,௰. கலா.௫.௰௪. ௧.தீமோ.௧.௫. லூக்.௰௩.௨௪. (௰௫) உபா.௰௩.௩. எரே.௨௩.௰௬. ரோ.௰௬.௰௭,௰௮. எபே.௫.௬. கொலோ.௨.௮. ௨.பேதுரு.௨.௧, ௨,௩. ௧.யோவா.௪.௧. மீகா.௩.௫. ௨.தீமோ.௩.௫. அப்.௨௰.௨௯,௩௰. (௰௬) லூக்.௬.௪௩,௪௪. (௰௭) எரே.௰௧.௰௯. (௰௯) யோவா.௰௫.௨,௬.(௨௧)ஓசி.௮.௨. அப்.௰௯.௰௩. ரோ.௨.௰௩. யாக்.௧.௨௨. (௨௨) எண்.௨௪.௪. யோவா.௰௧. ௫௧. ௧.கொரி.௰௩.௨. (௨௩) லூக்.௰௩.௨௫,௨௭. ௨.தீமோ.௨.௰௯. சங்.௫.௫. அதி.௨௫.௪௧.(௨௯)யோவா.௭.௪௬.— (௮. அதி. ௨.) மாற்.௧.௪௰,. (௪) மாற்.௫.௪௩. லேவி.௰௪.௩,௪,௰. (௫) லூக்.௭.௧,.

டிலேகிடந்து மிகவும் உபாதிப்படுகிறானென்று
௭ வேண்டிக்கொண்டான்.—யேசு அவனைநோக்
கி, நான்வந்து அவனைச் சொஸ்தப்படுத்துவே
௮ னென்றுசொல்ல,—நூறுசேவகருக்கதிபதி, கர்த்
தாவே, நீர் என்வீட்டிற்பிரவேசிப்பதற்குநான்
பாத்திரனல்ல: ஒருவாக்குமாத்திரஞ்சொன்னால்,
௯ என்பணிவிடைக்காரன் சொஸ்தமாவான்.-நான்
அதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டவனாயினும், எனக்
குக்கீழ்ப்பட்ட சேவகரில் ஒருவனைப் போவெ
ன,போகிறான்; மற்றொருவனைவாவென, வருகி
றான்; என்பணிவிடைக்காரனை இதைச்செய்யெ
௰ ன,செய்கிறானென்றான்.—யேசு அதைக்கே
ட்டு,ஆச்சரியப்பட்டு,பின்சென்றவர்களைநோக்
கி, இஸரவேலருக்குள்ளும் இப்படிப்பட்டவிசு
வாசத்தை நான் காணவில்லையென்று மெய்யாய்
௰௧ உங்களுக்குச் சொல்லுகிறேன்.—அநேகர் கிழக்
கிலும்மேற்கிலுமிருந்து வந்து, பரம இராச்சியத்
தில் ஆபிரகாம்,ஈசாக்கு, யாக்கோபு என்பவர்க
௰௨ ளோடே பந்தியிருப்பார்கள்,—இராச்சியத்தின்
பிள்ளைகளோ, காரிருளிலே புறம்பாகத்தள்ளப்
படுவார்கள்: அங்கே அழுகையும், பற்கடிப்பு
முண்டாகுமென்று நான் உங்களுக்குச் சொல்
௰௩ லுகிறேனென்றார்.—பின்பு யேசு, நூறுசேவக
ருக்கதிபதியைநோக்கி, போ; உன் விசுவாசத்
தின்படி உனக்காகக்கடவதென்றார். அந்த நாழி
கையில்அவனுடையபணிவிடைக்காரன்சொஸ்
தம் அடைந்தான்.

௰௪ யேசு பேதுருவின்வீட்டிலேசேர்ந்து,அவனு
டைய மாமி சுரமாய்க்கிடக்கிறதைக்கண்டார்.—
௰௫ அவர் அவள் கையைத்தொட, சுரம் அவளை நீங்
கிற்று: அவள்எழுந்திருந்து,அவர்களுக்குப்பணி
விடைசெய்தாள்.

௰௬ அஸ்தமனமானபொழுது, பிசாசுபிடித்திருந்த
அநேகரை அவரிடத்திற் கொண்டுவந்தார்கள்: அ
வர் ஒருவாக்கினால் அந்த ஆவிகளைத்துரத்தி, பிணி
யாளிகளெல்லாரையுஞ்சொஸ்தப்படுத்தினார்.—
௰௭ இப்படியே "அவரே நம்முடையபெலவீனங்க
ளை ஏற்றுக்கொண்டு, நம்முடைய துக்கங்க
ளைத்தாங்கினார்," என்று, தீர்க்கதரிசியாகிய ஏ
சாயாசொல்லியவாக்கு நிறைவேறிற்று.

௰௮ பின்பு யேசு அநேகசனங்கள்தம்மைச்சூழ்ந்
திருக்கக்கண்டு,அக்கரைக்குப்போகக் கட்டளை
௰௯ யிட்டார்.-அப்பொழுது வேதபாரகன் ஒருவன்
வந்து, அவரைநோக்கி, போதகரே, நீர் எங்கே
போனாலும் நான் உம்மைப்பின்பற்றுவேனென்
௨௰ று சொல்ல,—யேசு அவனைநோக்கி, நரிகளுக்
குக் குகைகளும், ஆகாயத்துப் பறவைகளுக்குக்
கூடுகளுமுண்டு;மனுபுத்திரனுக்கோ,தலைசாய்க்
௨௧ கவும் இடமில்லை என்றார்.—பின்னும் அவரு
டைய சீஷரில் வேறொருவன் அவரைநோக்கி,
கர்த்தாவே, முன்பு நான் போய் என் பிதா
வை அடக்கம்பண்ண உத்தரவு தாருமென்று
சொல்ல,—யேசு அவனைப்பார்த்து, நீ என்னைப் ௨௨
பின்பற்றிவா; மரித்தோர் தங்கள் மரித்தோரை
அடக்கம்பண்ணக் கடவர்களென்றார்.

அவர் படவில் ஏறுகிறபொழுது, அவருடை ௨௩
ய சீஷர் அவரைப் பின்சென்றேறினார்கள்.—
அப்பொழுது படவு திரைகளினால் மூடப்படத் ௨௪
தக்கதாக,கடலிலே பெருங்காற்றுண்டாயிற்று:-
அவர் நித்திரையாயிருந்தார். அவருடைய சீஷர் ௨௫
கள் அவரிடத்திற்சேர்ந்து, அவரைஎழுப்பி,
கர்த்தாவே, எங்களை இரட்சியும்: மாண்டு
போகிறோமேயென்றுசொல்ல,-அவர்அவர்களை ௨௬
நோக்கி, அற்பவிசுவாசிகளே, ஏன் பயப்படுகி
றீர்களென்று சொல்லி, எழுந்து, காற்றுகளையுங்
கடலையுங் கடிந்துகொள்ள, மகா அமைதியுண்
டாயிற்று.—அந்த மனுஷர் மிகவும் ஆச்சரியப் ௨௭
பட்டு, காற்றுகளுங் கடலும்இவருக்குஅமைந்தி
ருக்கின்றனவே, இவர் எப்படிப்பட்டவரென்
றார்கள்.

பின்பு அவர் அக்கரையிலுள்ள கெர்கேசேனர் ௨௮
தேசத்தில் சேர்ந்தார்: அவ்வழியாய் ஒருவருஞ்
செல்லாமலிருக்கும்படி பிசாசுபிடித்த மனுஷர்
இரண்டுபேர் மிகுந்த துஷ்டராய், பிரேதவறை
களினின்று புறப்பட்டு அவருக்கெதிராகவந்து,-
ஆ,யேசுவே,தேவனுடைய குமாரனே,எங் ௨௯
களுக்கும்உமக்குமென்ன; காலம் வருமுன்னே
எங்களை யாதனைப்படுத்தும்படி இங்கே வந்தீரா
வென்றுகூப்பிட்டார்கள்.—அவர்களுக்குச் சற் ௩௰
றேதூரமாக அநேகம்பன்றிகள்கூட்டமாய்மேய்
ந்துகொண்டிருந்தன.—பிசாசுகள்,நீர் எங்களைத் ௩௧
துரத்தினால் நாங்கள் அந்தப்பன்றிக்கூட்டத்தில்
பிரவேசிக்கும்படி உத்தரவு தாருமென்று அவ
ரை வேண்டிக்கொண்டன.—அவர் போங்க ௩௨
ளென்று அவைகளுக்குச் சொல்ல, உடனே அ
வைகள்புறப்பட்டுப்பன்றிக்கூட்டத்திற்பிரவே
சித்தன: பின்புபன்றிகளெல்லாம் மேட்டிலிருந்
துகடலிலேபாய்ந்து, நீர்களிலே மாண்டுபோயி
ன.-அவைகளை மேய்த்தவர்கள் ஓடி, பட்டணத் ௩௩
திற்சென்று, பிசாசு பிடித்திருந்தவர்களுடைய
செய்தியையும், மற்றெல்லாவற்றையுந் தெரிவித்
தார்கள்.—அப்பொழுதுபட்டணத்தார் யாவரும் ௩௪
யேசுவைச் சந்திக்கப் புறப்பட்டு, அவரைக்
கண்டு, தங்கள் எல்லைகளைவிட்டுப்போகும்படி
அவரை வேண்டிக்கொண்டார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. கிறிஸ்துதிமிர்வாதக்காரனைச்சொஸ்தப்படுத்திப்பாவத்தைமன்னித்தல்: ௯. மத்தேயுஅழைக்கப்படல்: ௰. அவன்வீட்டில்விருந்துநடத்தல்: ௰௪. உபவாசத்தைவிலக்கும்நியாயத்தைக்காட்டல்: ௨௰. பிரதரவியாதியை நீக்கல்: ௨௩. அதிபதியின்மகளை மரணத்தினின்றுஉயிர்ப்பித்தல்: ௨௭. குருடர் இருவருக்குப் பார்வையைக்கொடுத்தல்: ௩௩. பிசாசுபிடித்த ஊமையைச்சொஸ்

(௰௧) ஆதி.௰௨.௩. ஏசா.௨.௨,௩. மல்.௧.௰௧. லூக்.௰௩.௨௯. அப்.௰.௪௫. ரோ.௰௫.௯,. எபே.௩.௬. (௰௨) லூக்.௰௩.௨௮. ௨.பேதுரு.௨.௰௭. யூதா.௰௩. (௰௪) லூக்.௪.௩௮,௩௯. ௧.கொரி.௯.௫. (௰௬) லூக்.௪.௪௰,௪௧. (௰௭) ஏசா.௫௩.௪. ௧.பேதுரு.௨.௨௪. (௰௯) லூக்.௯.௫௭,௫௮. (௨௧) லூக்.௯.௫௯,௬௰. (௨௬) சங்.௱௭.௨௯.—(௯. அதி.)

தப்படுத்தல்: ௩௫.திக்கற்றவர்கள்மேல்இரங்கல்.
அப்பொழுது அவர்படவிலேறி, இக்கரைப்பட்
௨ டு, தம்முடையபட்டணத்திற்குவந்தார்.—அங்கே
படுக்கையின்மேல்கிடந்ததிமிர்வாதக்காரனொரு
வனை அவரிடத்திற்கொண்டுவந்தார்கள்: யேசு
அவர்களுடையவிசுவாசத்தைக்கண்டு, திமிர்வா
தக்காரனைநோக்கி, மகனே, திடமாயிரு; உன்பா
வங்கள்உனக்குமன்னிக்கப்பட்டனவென்றார்.-
௩ அதினால் வேதபாரகரிற் சிலர், இவன்தேவதூஷ
ணஞ் சொல்லுகிறானென்று எண்ணிக்கொண்
௪ டார்கள்.—யேசு அவர்களுடைய சிந்தனைகளை
அறிந்து, நீங்கள் உங்கள் இருதயங்களிலே துர்ச்
௫ சிந்தனைகொள்ளுகிறதென்ன.—உன் பாவங்கள்
உனக்குமன்னிக்கப்பட்டனவென்றுசொல்லுகி
றதோ, எழுந்திருந்து நடவென்று சொல்லுகிற
௬ தோ, எது எளிது.-மனுபுத்திரன் பூமண்டலத்தில்
பாவங்களை மன்னிக்கிறதற்கு அதிகாரமுடைய
வரென்பதை நீங்கள் அறியத்தக்கதாகவென்று
சொல்லி, திமிர்வாதக்காரனைநோக்கி, நீ எழுந்து,
உன்படுக்கையைஎடுத்துக்கொண்டு, உன்வீட்டுக்
௭ குப்போவென்றுசொல்ல,—அவன் எழுந்து தன்
௮ வீட்டுக்குப்போனான்.—சனங்கள் இதைக்கண்
டுஆச்சரியப்பட்டு, மனுஷருக்குஇப்படிப்பட்ட
அதிகாரத்தைஅருளியதேவனைத்துதித்தார்கள்.
௯ யேசு அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப்போ
கையில், ஆயத்துறையில் மத்தேயுவென்னும்நாம
முள்ள ஒருவனிருக்கக்கண்டு, அவனைநோக்கி, நீ
என்னைப்பின்பற்றிவாவென்றார். அவன் எழுந்
து, அவரைப்பின்பற்றினான்.
௰ பின்பு யேசு வீட்டிலே போசனபந்தியிருக்
கையில், அநேகம் ஆயக்காரரும், பாவிகளும்வந்
து, அவரோடும், அவர்சீஷரோடும்பந்தியிருந்தார்
௰௧ கள்.—பரிசேயர் அதைக்கண்டு, அவருடை
ய சீஷரைநோக்கி, உங்கள்போதகர் ஆயக்கார
ரோடும், பாவிகளோடும் போசனம்பண்ணுகிற
௰௨ தென்னவென்றார்கள்.—யேசு அதைக்கேட்டு,
அவர்களைநோக்கி, சொஸ்தமுள்ளவர்களுக்கல்
ல, வியாதியுள்ளவர்களுக்கேவைத்தியன்வேண்
௰௩ டும்.—பலியிலும் இரக்கத்தைவிரும்புகிறேனென்
பதின் அருத்தத்தை நீங்கள்போய்க்கற்றுக்கொள்
ளுங்கள்: நீதிமான்களையல்ல, பாவிகளையே மனந்
திரும்புகிறதற்கு அழைக்கவந்தேனென்றார்.
௰௪ அப்பொழுது யோவானுடைய சீஷர் அவ
ரிடத்தில்வந்து, நாங்களும், பரிசேயரும் அ
டிக்கடி உபவாசம்பண்ணியிருக்கிறோம், உம்மு
டைய சீஷரோ, உபவாசம்பண்ணாமலிருக்கிற
௰௫ தென்னவென்றுகேட்க,—யேசு அவர்களிடத்
தில், மணவாளனுடையதோழர்மணவாளன் தங்
களோடிருக்கிறபொழுது துயரப்படுவார்களா; ம
ணவாளன் அவர்களைவிட்டு நீக்கப்படுங்காலம்வ
ரும், அப்பொழுது அவர்கள் உபவாசம்பண்ணு
௰௬ வார்கள்.—ஒருவனுங் கோடித்துண்டைப்பழை
யவஸ்திரத்தோடே இணைக்கமாட்டான், இணைத்
தால் அதனோடே இணைத்ததுண்டு அவ்வஸ்திரத்
தைவிட்டு ஏடுபட்டுப்போக, அதிகபொத்தலுண்
டாகும்.—பழையதுருத்திகளில் புதியதிராட்சர ௰௭
சத்தை வைக்கமாட்டார்கள்: வைத்தால் துருத்தி
கள் கிழிந்துபோம், ரசமுஞ்சிந்திப்போம், துருத்
திகளுங் கெட்டுப்போம்: புதியரசத்தைப்புதிய
துருத்திகளில் வார்த்துவைத்தால் இரண்டுங்காக்
கப்படுமென்றார்.
அவர் இவைகளை அவர்களுடன்பேசின சம ௰௮
யத்தில், அதிபதி ஒருவன்வந்து அவரைவணங்கி,
இந்நேரத்தில் என் மகள் இறந்துபோனாள்: நீர் வந்
து அவள்மேல் உம்முடைய கையைவையும்,
அப்பொழுது அவள் சீவிப்பாளென்றான்.-யேசு ௰௯
எழுந்து, தம்முடைய சீஷரோடும் அவன்பின்
னேபோனார்.—அவர் போகையில், பன்னிரண்டு ௨௰
வருஷமாகப் பெரும்பாடுள்ள ஒருஸ்திரிவந்து,—
இவருடைய வஸ்திரத்தைமாத்திரந்தொட்டால் ௨௧
சொஸ்தமடையலாமென்று தன்உள்ளத்தில் எண்
ணி, அவருக்குப்பின்னேபோய், அவருடைய
வஸ்திரத்தின் விளிம்பைத்தொட்டாள்.—யேசு ௨௨
திரும்பி, அவளைக்கண்டு, மகளே, திடமாயிரு;
உன்விசுவாசம் உன்னைச்சொஸ்தமாக்கிற்றென்
றார். அந்நேரமே அந்தஸ்திரி சொஸ்தமடைந்
தாள்.-பின்பு யேசு அதிபதியின்வீட்டிலேசேர்ந் ௨௩
து, வாத்தியக்காரரையும், இரைகிற சனங்களை
யுங்கண்டு,—அவர்களைநோக்கி, விலகுங்கள்: இந் ௨௪
தக்கன்னி இறந்துபோகவில்லை, நித்திரைசெய்
கிறாளென்றுசொல்ல, அவர்கள் அவரைப் பரி
காசம்பண்ணினார்கள்.—சனங்கள் வெளியே அ ௨௫
கற்றப்பட்டபின்பு, அவர் உள்ளேபோய், அந்தக்
கன்னியின்கையைப்பிடிக்க, அவள் எழுந்திருந்
தாள்.-இந்தக்கீர்த்தி அத்தேசமெங்கும்பரம்பிற்று. ௨௬
யேசு அவ்விடம்விட்டுப்போகையில், குருட ௨௭
ரிருவர் அவர்பின்னேசென்று, தாவீதின்புத்திர
னே, எங்கள்மேல் இரங்குமென்று ஓலமிட்டார்
கள்.—அவர் வீட்டிலேவந்தபின்பு, அந்தக்குரு ௨௮
டர் அவரிடத்தில் வந்தார்கள்: யேசு அவர்களை
நோக்கி, நான் இப்படிச்செய்ய வல்லவரென்று
நீங்கள்விசுவாசிக்கிறீர்களாவென்றுகேட்க, ஆம்,
கர்த்தாவே, விசுவாசிக்கிறோமென்றார்கள்.—
அப்பொழுது அவர் அவர்களுடைய கண்களைத் ௨௯
தொட்டு, உங்கள்விசுவாசத்தின்படி உங்களுக்
காகக்கடவதென்றார்.—உடனே அவர்களுடைய ௩௰
கண்கள்திறக்கப்பட்டன; பின்பு யேசு ஒருவ
ருக்குந் தெரியாதபடி சாவதானமாயிருங்க
ளென்றுசொல்லி, உறுதியாய்அவர்களுக்குக்கட்
டளையிட்டார்.—அவர்களோ புறப்பட்டு, அத்தே ௩௧
சமெங்கும் அவருடைய கீர்த்தியைப் பிரசித்தம்
பண்ணினார்கள்.
அவர்கள்புறப்பட்டமாத்திரத்திலே, பிசாசுபி ௩௨
டித்திருந்த ஊமையன் ஒருவனை அவரிடத்திற்

(௨) லூக்.௫.௰௮. (௪) சங்.௱௩௯.௨. லூக்.௫.௨௨. (௰௧) லூக்.௫.௩௰. கலா.௨.௰௬. (௰௩) ஓசி.௬.௬. மீகா.௬.௬,௭,௮. ௧.திமோ.௧.௰௫. (௰௪) லூக்.௫.௩௩,. (௰௫) யோவா.௩.௨௯. அப்.௰௩.௨,௩. ௧.கொரி.௭.௫. (௨௩) லூக்.௮.௫௧. (௨௪) அப்.௨௰.௰.(௨௭)மாற்.௰.௪௭,௪௮. லூக்.௰௮.௩௮.௩௯. (௩௧) மாற்.௭.௩௬.(௩௨)லூக்.௰௧.௰௪.

௩௩ கொண்டுவந்தார்கள்.—பிசாசுதுரத்தப்பட்டபின்
பு,ஊமையன்பேசினான்: சனங்கள் ஆச்சரியப்ப
ட்டு, இஸரவேலருக்குள் இதைப்போல் ஒருபொ
௩௪ ழுதுங் காணப்படவில்லையென்றார்கள்.—பரிசே
யரோ,பிசாசாதிபதியினால் அவன்பிசாசுகளைத்து
௩௫ ரத்துகிறானென்றார்கள்.-பின்பு யேசு, சகலபட்
டணங்களிலும், கிராமங்களிலுஞ் சஞ்சரித்து,அ
வர்கள் ஆலயங்களில் உபதேசஞ்செய்து, இராச்
சியத்தின் சுவிசேஷத்தைப்பிரசங்கித்து, சனங்க
ளுக்குண்டான எந்த வியாதியையும், எந்த நோ
யையும் நீக்கி, அவர்களைச் சொஸ்தப்படுத்தினார்.
௩௬ அவர் மிகுந்தசனங்களைப் பார்த்து, மேய்ப்ப
னில்லாதஆடுகளைப்போல அவர்கள் அலைந்து சி
தறுண்டவர்களானபடியினால், அவர்கள் மேல்
௩௭ மனதுருகி,—தம்முடைய சீஷரைநோக்கி, வி
௩௮ ளைவுமிகுதி, வேலையாட்களோ சிலர்.—ஆதலால்
அறுப்புக்குத்தலைவர் அரி அரிவதற்கு ஆட்களை
அனுப்பும்படி, அவரை வேண்டிக்கொள்ளுங்க
ளென்றார்.

## ௰. அதிகாரம்.

௧. அப்போஸ்தலரின் நாமங்களை விவரித்தல்: ௫. பன்னிரண்டு சீஷரை அனுப்பிவிடல்: ௰௬. அவர்படுந்துயரத்தைத்தெரிவித்தல்: ௩௪. கிறிஸ்துவினுடையஉபதேசத்தின்பலனைக்காட்டல்: ௪௰. சீஷரை உபசரிக்கும்பலனைக்குறித்தல்.

அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷரையுந்
தம்மிடதகில்அழைத்து, அசுத்தஆவிகளைத் துரத்
தவும்,சகலவிதவியாதிகளையும் நோய்களையும் நீக்
௨ கவும் அவர்களுக்கு அதிகாரங்கொடுத்தார்.—அந்
தப் பன்னிரண்டு அப்போஸ்தலரின் நாமங்க
ளாவன; முந்தினவனாகிய பேதுரு என்னப்பட்
ட சீமோன், அவனுடையசகோதரனாகிய அந்தி
ரேயா; செபேதேயுவின்புத்திரன் யாக்கோபு,அ
௩ வன்சகோதரன் யோவான்;—பிலிப்பு, பர்தொ
லொமேயு; தோமா, ஆயக்காரனாகிய மத்தேயு;
அல்வேயுவின்புத்திரனாகிய யாக்கோபு, ததேயு
௪ வென்னும் மறுநாமமுள்ள இலேப்பேயு;—கானா
னியனாகியசீமோன், அவரைக் காட்டிக்கொடுத்
தவனாகிய யூதாஸ்காரியோத்து என்பவைகளே.—
௫ யேசு இந்தப்பன்னிருவரையும்நோக்கி, நீங்கள்
௬ புறத்தேசத்தாரிடத்திற் செல்லாமலும்,—ஷமாரி
யருடைய எந்தப்பட்டணத்திலும் பிரவேசியாம
லும், காணமற்போன ஆடுகளாகிய இஸரவேல்
௭ வமிசத்தாரிடத்திற்கே போங்கள்.—போகும்பொ
ழுது, பரமஇராச்சியஞ் சமீபித்ததென்று கூறுங்
௮ கள்,—வியாதியுள்ளவர்களைச் சொஸ்தப்படுத்துங்
கள், குஷ்டரோகிகளைச் சுத்தம்பண்ணுங்கள், ம
ரித்தோரை எழுப்புங்கள், பிசாசுகளைத் துரத்துங்
கள்: நீங்கள் கைம்மாறின்றிப் பெற்றுக்கொண்
டீர்கள், கைம்மாறின்றிக்கொடுங்கள்.—நீங்கள் ௯
உங்கள் அரைப்பைகளில் பொன்னையாகிலும்,
வெள்ளியையாகிலும்,செம்பையாகிலும்வைக்க
வும், வழிக்காகப்பையையாகிலும், இரண்டு அங்
கிகளையாகிலும், பாதரட்சைகளையாகிலும், கோ
லையாகிலுந் தேடவும்வேண்டாம்.—வேலைக்கார ௰
ன் தன் ஆகாரத்திற்குப்பாத்திரன்.-நீங்கள் எந்தப் ௰௧
பட்டணத்திலும்,எந்தக்கிராமத்திலும்பிரவேசிக்
கும்பொழுது, அதிலுள்ளவர்களில் பாத்திரவான்
இன்னானென்றுவிசாரித்து, நீங்கள் புறப்படும
ளவும் அவ்விடத்திலே தங்குங்கள்.—நீங்கள் ஒரு ௰௨
வீட்டில் பிரவேசிக்கும்பொழுது, அதை வாழ்த்
துங்கள்.—அந்த வீட்டார் பாத்திரராயிருந்தால், ௰௩
நீங்கள் சொல்லிய வாழ்த்து அவர்களிடத்தில்
தங்கும்: பாத்திரரல்லாதிருந்தால், அந்தவாழ்த்து
உங்களிடத்தில் திரும்பிவரும்.—எவ்விடத்தாரா ௰௪
யினும் உங்களை அங்கிகரித்துக்கொள்ளாமலும்,
உங்கள் வாக்குகளுக்குச் செவிகொடாமலுமி
ருந்தால், நீங்கள் அந்த வீட்டையாகிலும், பட்
டணத்தையாகிலும் விட்டுப் புறப்படுகையில்,
உங்கள் பாதங்களிற்படிந்த தூளை உதறிப்போ
டுங்கள்.—நியாயத்தீர்ப்புநாளில், அந்தப்பட்ட ௰௫
ணத்தின் நிலைமையிலும், சோதோம் கொமோ
ரா தேசங்களின் நிலைமை சகாயமாகுமென்று
மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன்.
பாருங்கள், கோனாய்களுக்குள் ஆடுகளைப் ௰௬
போல், நான் உங்களை அனுப்புகிறேன்: ஆத
லால் நீங்கள் சருப்பங்களைப்போலப் புத்தியுள்
ளவர்களும், புறாக்களைப்போலக் கபடமற்றவர்
களுமாயிருங்கள்.—மனுஷரைக்குறித்து நீங்கள் ௰௭
சாவதானமாயிருங்கள்: அவர்கள் உங்களைச் சங்
கத்தாரிடத்தில் ஒப்பித்து, தங்கள் ஆலயங்க
ளில் வாரினால் உங்களை அடிப்பார்கள்.—என் ௰௮
னிமித்தம், நீங்கள் தேசாதிபதிகளும், இராசாக்
களுமானவர்கள்முன்பாக, அவர்களுக்கும் புறத்
தேசத்தாருக்குஞ் சாட்சியாகக்கொண்டுபோகப்
படுவீர்கள்.—அவர்கள் உங்களை ஒப்பிக்குஞ்சம ௰௯
யத்தில், எவ்விதமாய், எதை நாம் சொல்லுவோ
மென்று நீங்கள்கவலைப்படவேண்டாம்: நீங்கள்
பேசவேண்டுவது அந்நேரத்தில் உங்களுக்கு அ
ருளப்படும்.-பேசுகிறவர்கள் நீங்களல்ல, உங்கள் ௨௰
பிதாவின் ஆவியானவரே உங்களிலிருந்து பே
சுகிறவர்.—சகோதரன் தன் சகோதரனையும், பிதா ௨௧
தன்பிள்ளையையும்மரணத்துக்கு ஒப்பிப்பார்கள்:
பிள்ளைகள் தங்கள் தங்கள் பெற்றாருக்கு வி
ரோதமாயெழும்பி, அவர்களைக்கொலைசெய்விப்
பார்கள்.—என் நாமத்தினிமித்தம் நீங்கள் எல்லா ௨௨

(௩௪) லூக்.௰௧.௰௫. (௩௫) லூக்.௰௩.௨௨. (௩௬) ௧.இரா.௨௨.௰௭. சக.௰.௨. (௩௭) லூக்.௰.௧. யோவா.௪.௩௫. (௩௮) ௨.தெச.௩.௧.—(௰. அதி. ௨.) யோவா.௧.௪௨. (௪) அப்.௧.௰௩. யோவா.௰௩.௨௬. (௬) யோவா.௪.௯,௨௰. அப்.௰௩.௪௬. ஏசா.௫௩.௬. எரே.௫௰.௬,௰௭. ௧.பேதுரு.௨.௨௫. (௭) லூக்.௯.௫. லூக்.௰.௮. (௮) அப்.௮.௰௮,௨௰. (௯) ௧.சாமு.௯.௭. லூக்.௰.௪. (௰) ௧.கொரி.௯.௭,. ௧.தீமோ.௫.௰௭. (௰௪) நெகி.௫.௰௩. அப்.௰௩.௫௧. (௰௬) லூக்.௰.௨. ரோ.௰௬.௰௯. எபே.௫.௰௫. ௧.கொரி.௰௪.௨௰. பிலி.௨.௰௫. (௰௭) மாற்.௰௩.௯. அப்.௫.௪௰.(௰௮)அப்.௰௨.௧. ௨.தீமோ.௪.௰௭.(௰௯) லூக்.௰௨.௰௧. யாத்.௪.௰௨. எரே.௧.௭. (௨௰) ௨.சாமு.௨௩.௨. அப்.௪.௮. ௨.தீமோ.௪.௰௭.(௨௧)மீகா.௭.௬. (௨௨) தானி.௰௨.௰௨,௰௩.

ராலும் பகைக்கப்படுவீர்கள்: ஆயினும் முடிவுப
ரியந்தம் நிலைத்திருக்கிறவனே, இரட்சிக்கப்படு
௨௩ வான்.—அவர்கள் ஒருபட்டணத்தில் உங்களைத்
துன்பப்படுத்தினால், மறுபட்டணத்துக்கு ஓடிப்
போங்கள்: நீங்கள் இஸ்ரவேலின் பட்டணங்க
ளெங்குஞ் சுற்றிமுடியுமுன், மனுபுத்திரன் வரு
வானென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகி
௨௪ றேன்.—சீஷன் தன் குருவிலும், பணிவிடைக்
காரன் தன் எசமானனிலும்பெரியவர்களல்ல.—
௨௫ சீஷன் தன்குருவுக்கும்,பணிவிடைக்காரன்தன்
எசமானனுக்குஞ் சமமானால்போதும். வீட்டெ
சமானனையே பாகால்சேபூலென்று அவர்கள்
சொன்னார்களானால், அவருடைய வீட்டாரை
எவ்வளவு அதிகமாய்ச் சொல்லுவார்கள்.—
௨௬ வெளியாக்கப்படாத மறைபொருளில்லை; அறி
யப்படாத இரகசியமுமில்லை: ஆதலால் நீங்கள்
௨௭ அவர்களுக்குப் பயப்படாதிருங்கள்:-நான் இரு
ளில்உங்களுக்குச்சொல்லுவதை, நீங்கள் ஒளியி
லேசொல்லுங்கள்: உங்கள் செவிக்கேறுவதை,
நிலாமுற்றங்கள்மேல் நின்று பிரசித்தப்படுத்துங்
௨௮ கள்.-ஆத்துமாவைக்கொலைசெய்யவல்லமையில்
லாமல், சரீரத்தைமாத்திரங் கொலைசெய்பவர்க
ளுக்கு நீங்கள் பயப்படாதிருங்கள்: ஆத்துமா,
சரீரம் இரண்டையும் நரகத்திலே நாசப்படுத்த
௨௯ வல்லவருக்கே பயப்படுங்கள்.—ஒருகாசுக்கு இ
ரண்டு அடைக்கலான்குருவிகள் விற்கப்படுமல்
லவா; ஆயினும் உங்கள் பிதாவின் அனுமதியின்
றி, அவைகளில் ஒன்றுந் தரையிலே விழாது.—
௩௰ உங்கள் தலைமயிரெல்லாம் எண்ணப்பட்டிருக்
௩௧ கின்றன.—ஆதலால் பயப்படாதிருங்கள், அநே
கம் அடைக்கலான்குருவிகளைப்பார்க்கிலும்,நீங்
௩௨ கள்மேன்மையானவர்கள்.—ஆனதால் மனுஷருக்
கு முன் என்னை அறிக்கைபண்ணுகிறவனெவ
னோ,அவனை நானும் பரமண்டலத்திலுள்ள என்
பிதாவின் சமுகத்தில் அறிக்கைபண்ணுவேன்.—
௩௩ மனுஷருக்கு முன் என்னை மறுதலிப்பவனெ
வனோ, அவனை நானும் பரமண்டலத்திலுள்ள
என் பிதாவின் சமுகத்திலே மறுதலிப்பேன்.—
௩௪ பூமியின்மேல் சமாதானத்தை வருவிக்கவந்தே
னென்று எண்ணிக்கொள்ளாதிருங்கள்: சமாதா
னத்தையல்ல, கட்கத்தைவருவிக்கவந்தேன்.—
௩௫ புத்திரன் தன்பிதாவையும், புத்திரி தன்மாதாவை
யும்,மருமகள்தன்மாமியையும்விரோதிக்கச்செய்
௩௬ யும்படிவந்தேன்.—ஒருமனுஷனுடைய குடும்பத்
௩௭ தாரே அவனுக்குச்சத்துருக்கள்.—என்னைப்பார்க்
கிலும் பிதாவையாவது, மாதாவையாவது அதி
கமாய் நேசிக்கிறவன் எனக்குப்பாத்திரனல்ல:
என்னைப்பார்க்கிலும் புத்திரனையாகிலும், புத்தி
ரியையாகிலும் அதிகமாய் நேசிக்கிறவன் எனக்
குப்பாத்திரனல்ல.—தன்சிலுவையை எடுத்துக் ௩௮
கொண்டு, என்பின்னேசெல்லாதவன் எனக்குப்
பாத்திரனல்ல.—தன்பிராணனைக்காக்கிறவன்அ ௩௯
தை இழந்துபோவான்: என்னிமித்தந் தன்பிரா
ணனை இழந்துபோகிறவன் அதைக்காப்பான்.
உங்களை அங்கிகரிக்கிறவன் என்னையும் அங் ௪௰
கிகரிக்கிறான், என்னை அங்கிகரிக்கிறவன் என்
னை அனுப்பினவரையும் அங்கிகரிக்கிறான்.—
தீர்க்கதரிசியென்று ஒரு தீர்க்கதரிசியை அங்கிக ௪௧
ரிக்கிறவன் தீர்க்கதரிசியின்பலனைப்பெறுவான்;
நீதிமானென்று ஒருநீதிமானை அங்கிகரிக்கிறவன்
நீதிமானின் பலனைப்பெறுவான்.—இந்தச்சிறிய ௪௨
வர்களில் ஒருவன் என் சீஷனென்று அவனுக்கு
ஒரு கலசந் தண்ணீர் குடிக்கக்கொடுக்கிறவன்,
தன் பலனை இழந்துபோகானென்று மெய்யாய்
உங்களுக்குச்சொல்லுகிறேன்.

## ௰௧. அதிகாரம்.

௧. சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்தக்கிறிஸ்துப் பிரயாணஞ்செய்தல்: ௨. யோவான் சீஷரைக் கிறிஸ்துவினிடத்தில் அனுப்பல்: ௭. கிறிஸ்து யோவானைக்குறித்துச் சாட்சியிடல்: ௰௬. கிறிஸ்துவையும் யோவானையுங் குறித்துச்சனங்கள்கொண்ட எண்ணந் தெரிவித்தல்: ௨௰. கோராசின் முதலிய பட்டணங்களின்மேல் கிறிஸ்துப் புலம்பல்: ௨௫. கிறிஸ்துத்தன் பிதாவாகிய தேவனை வாழ்த்துதல்: ௨௮. வருந்தியசனங்களை அழைத்தல்.

இவ்விதமாக யேசு தம்முடைய பன்னிரண்டு ௧
சீஷருக்குங் கட்டளைகொடுத்து முடித்தபின்பு,
அவர்கள் பட்டணங்களில் உபதேசிக்கவும், பி
ரசங்கிக்கவும் அவ்விடம்விட்டுப்புறப்பட்டார்.-
காவலிலிருந்தயோவான் கிறிஸ்துச்செய்தகிரி ௨
யைகளின்செய்தியைக்கேள்விப்பட்டு,தன்சீஷ
ரில் இரண்டுபேரைஅனுப்பி,—வருபவர் நீரோ, ௩
வேறொருவர் வர நாங்கள் எதிர்பார்க்கவேண்டு
மோவென்று அவரைக் கேட்பித்தான்.—அவர்க ௪
ளுக்குத்தரமாக யேசு, நீங்கள்கேட்டுங்கண்டுமி
ருக்கிறவைகளை யோவானுக்குப்போய்த்தெரிவி
யுங்கள்.—குருடர்பார்வைஅடைகிறார்கள்,சப்பா ௫
ணிகள் நடக்கிறார்கள், குஷ்டரோகிகள் சுத்தம
டைகிறார்கள், செவிடர் கேட்கிறார்கள், மரித்
தோர் எழுப்பப்படுகிறார்கள்,எளியவர்களுக்குச்
சுவிசேஷம் அறிவிக்கப்படுகின்றது.—என்னில் ௬
இடறுண்ணாதவனெவனோ, அவன் வாழ்வுடை
யவனென்றார்.
அவர்கள்போனபின்பு, யேசு, யோவானைக் ௭
குறித்துச்சனங்களிடத்திலே, நீங்கள் வனத்தில்
எதைப்பார்க்கப்புறப்பட்டீர்கள்,காற்று அசைக்
கும் நாணலையோ;—எதைப்பார்க்கப் புறப்பட் ௮

---

(௨௩) அப்.௰௪.௬. (௨௪) லூக்.௬.௪௰. யோவா.௰௩.௰௬.(௨௫)யோவா.௮.௪௮,௫௨. (௨௮) ஏசா.௮.௰௨,௰௩. ௧.பேதுரு.௩.௰௪. (௩௰) ௧.சாமு.௰௪.௪௫. லூக்.௨௧.௰௮. (௩௨) ரோ.௰.௯,௰. வெளி.௩.௫. (௩௩) ௨.தீமோ.௨.௰௨. (௩௫) மீகா.௭.௬. (௩௬) மீகா.௭.௬. யோவா.௰௩.௰௮. (௩௭) லூக்.௰௪.௨௬. (௩௯) லூக்.௰௭.௩௩. யோவா.௰௨.௨௫. (௪௰) யோவா.௰௨.௪௪. கலா.௪.௰௪. (௪௧) ௧.இரா.௰௭.௰. ௨.இரா.௪.௮. (௪௨) எபி.௬.௰.—(௰௧. அதி. ௩.) ஆதி.௪௯.௰. எண்.௨௪.௰௭. தானி.௯.௨௪. யோவா.௬.௰௪. (௫) ஏசா.௪௨.௫. சங்.௨௨.௨௬. ஏசா.௬௧.௧. யாக்.௨.௫. (௬) ரோ.௯.௩௨,௩௩. ௧.கொரி.௧.௨௩. கலா.௫.௰௧. ௧.பேதுரு.௨.௭. எபே.௪.௰௩.

டீர்கள், மெல்லிய வஸ்திரங்களைத் தரித்த ஒரு
மனுஷனையோ; மெல்லிய வஸ்திரங்களைத்
தரித்திருப்பவர்கள் அரசர்மாளிகைகளிலிருக்கி
௯ ருர்கள்.—எதைப்பார்க்கப்புறப்பட்டீர்கள்,தீர்க்
கதரிசியையோ; ஆம், தீர்க்கதரிசியிலும் அதிக
மேன்மையுள்ளவனையேயென்று நான் உங்களுக்
௰ குச்சொல்லுகிறேன்.—"பாரும், என்தூதனை உ
மக்குமுன்பாக அனுப்புகிறேன், அவன் உமக்கு
முன்னேபோய், உமதுவழியை ஆயத்தப்படுத்து
வான்,"என்று ஒருவனைக்குறித்து எழுதியிருக்
௰௧ கின்றது, அவனே இவன்.—ஸ்திரிகளிடத்திலே
பிறந்தவர்களில், யோவான்ஸ்நானனிலும்பெரி
யவன்ஒருவனுந் தோன்றவில்லையென்று மெய்
யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன்: ஆனாலும்
பரம இராச்சியத்தில் சிறியவனும், அவனிலும்
௰௨ பெரியவனாயிருக்கிறான்.—யோவான்ஸ்நானனு
டைய காலமுதல் இதுவரைக்கும், பரம இராச்
சியம் பலவந்தப்படுகின்றது, பலவந்தம்பண்ணு
கிறவர்கள் வலாற்காரமாய் அதைப் பிடித்துக்
௰௩ கொள்ளுகிறார்கள்.—யோவான்வரைக்கும்,தீர்க்
கதரிசிகள் யாவராலும், நியாயப்பிரமாணத்தினா
௰௪ லும் உபதேசந்தெரிவிக்கப்பட்டது.-நீங்கள் ஏற்
றுக்கொள்ளப் பிரியப்பட்டால், வருபவனாகிய
௰௫ இலீசா இவன்தான்.—கேட்கிறதற்குக்காதுள்ள
வன் கேட்கக்கடவன்.

௰௬ இந்தச்சந்ததியாரைஆருக்கு ஒப்பிடுவேன்;சந்
தைகளிலிருந்து, தங்கள்தோழரைநோக்கி, உங்
௰௭ களுக்காக ஊதினோம்,—நீங்கள் கூத்தாடவில்
லை; உங்களுக்காகப்புலம்பினோம், நீங்கள் மார்
பில் அடிக்கவேயில்லையென்றுசொல்லிக்கூப்பி
௰௮ டுகிறபிள்ளைகளுக்கொப்பாயிருக்கிறார்கள்.-யோ
வான்வந்துபோசனபானம்பண்ணாமலிருந்தான்,
அதினால் பிசாசைக்கொண்டிருக்கிறானென்றார்
௰௯ கள்.—மனுபுத்திரன் வந்து போசனபானம்பண்
ணுகிறான், அதினால் அவர்கள், பாருங்கள், இ
வன் போசனப்பிரியன், மதுபானன், ஆயக்கார
ருக்கும் பாவிகளுக்குஞ்சிநேகிதனென்றுசொல்
லுகிறார்கள். ஆனாலும் ஞானம், தன்பிள்ளைக
ளால் நீதியாய் எண்ணப்படுமென்றார்.

௨௰ அவர் தம்முடைய ஆச்சரியமான செய்கைக
ளில் அநேகஞ்செய்யப்பட்ட பட்டணங்களைக்
குறித்து, அவைகளிலுள்ளவர்கள் மனந்திரும்பா
ததினிமித்தம் அவைகளைக்கடிந்துகொள்ளத்தொ
௨௧ டங்கி,—ஐயோ, கோராசினே, உனக்குஆபத்துவ
ரும்; ஐயோ, பேத்சாயிதாவே,உனக்குஆபத்துவ
ரும்; உங்களுக்குள்ளேநடந்த ஆச்சரியமான கிரி
யைகள் தீறுசீதோன் நகரங்களிலே செய்யப்பட்
டால், அவர்கள்நெடுநாளுக்குமுன் இரட்டைத்
தரித்து, சாம்பலிலேயிருந்து, மனந்திரும்புவார்
௨௨ கள்.—ஆதலால் நியாயத்தீர்ப்புநாளில் உங்கள்
நிலைமையிலும், தீறுசீதோன் நகரங்களின் நிலை
மைசகாயமாகுமென்று நான் உங்களுக்குச்சொ
ல்லுகிறேன்.—வானபரியந்தம் உயர்த்தப்பட்ட ௨௩
கப்பர்நாகூமே, நீ பாதாளபரியந்தந் தாழ்த்தப்ப
டுவாய்: உனக்குள்ளேநடந்த ஆச்சரியமான கிரி
யைகள் சோதோமில்நடந்ததுண்டானால், அது
இந்நாள்வரைக்கும் நிற்குமே.—ஆதலால் நியா ௨௪
யத்தீர்ப்புநாளில்உன் நிலைமையிலும்,சோதோம்
தேசத்துநிலைமை சகாயமாயிருக்குமென்று நான்
உனக்குச்சொல்லுகிறேனென்றார்.

அந்தச்சமயத்தில், யேசு, பிதாவே, வானத் ௨௫
துக்கும்பூமிக்கும் கர்த்தாவே, நீர் இவைகளை
ஞானவான்களுக்கும், வித்துவான்களுக்கும் ம
றைத்து, குழந்தைகளுக்கு வெளிப்படுத்தினீர்;
இதினிமித்தம் நான் உம்மைத் துதிக்கிறேன்.—
பிதாவே, இதுவே உமது பார்வைக்கு நலம்.— ௨௬
பிதாவினால் என்னிடத்தில் எல்லாம் ஒப்பிக்கப் ௨௭
பட்டன: பிதாவே யன்றி, ஒருமனுஷனுங்கு
மாரனை அறியான்; குமாரனும், எவனுக்குக்குமா
ரன் அவரை வெளிப்படுத்தச்சித்தமாயிருக்கிறா
ரோ, அவனுமே யன்றி, ஒருமனுஷனும் பிதா
வை அறியான்.

வருந்திப் பாரஞ்சுமக்கிற நீங்களெல்லாரும் ௨௮
என்னிடத்தில்வாருங்கள், நான் உங்களுக்கு இ
ளைப்பாறுதலைத்தருவேன்.-நான்சாந்தமும்,தாழ்ந் ௨௯
தசிந்தையுமுள்ளவர்: ஆதலால் என்நுகத்தைஉங்
கள்மேல் ஏற்றுக்கொண்டு, என்னிடத்தில் கற்
றுக்கொள்ளுங்கள்; அதினால் உங்கள் ஆத்துமங்
களுக்கு இளைப்பாறுதலைப் பெறுவீர்கள்.—என் ௩௰
நுகம் எளிது, என்சுமை இலகுவென்றார்.

## ௰௨. அதிகாரம்.

௧. கிறிஸ்து ஒய்வுநாளைப்பற்றிஉபதேசித்தல்: ௯. சூம்பினகையைச்சொஸ்தப்படுத்தல்: ௰௪. பரிசேயர் கிறிஸ்துவுக்கு விரோதமாய்த்துராலோசனைசெய்தல்: அவரைக்குறித்துச் சொல்லப்பட்டதீர்க்கதரிசனங்கள்சித்திபெறல்: ௨௨. பிசாசுபிடித்த குருடும்ஊமையுமாகிய ஒருவனைச்சொஸ்தப்படுத்தல்: ௩௧. தேவாவிக்கு விரோதமாய்ச்சொல்லிய தூஷணத்தைக் குறித்து உபதேசித்தல்: ௩௮. யோனாவையும்,தென்றேசத்து இராசாத்தியையுஞ்சுட்டி அடையாளந்தேடினவர்களைக்கண்டித்தல்: ௪௩. அசுத்தஆவிபிடித்தவனுடையகாரியம் விவரித்தல்: ௪௬. தன்மாதாமுதலிய இனத்தார் இன்னாரெனக்குறித்தல்.

அக்காலத்திலே யேசு ஓய்வுநாளிலேபயிர்வ ௧
ழியே நடந்துபோகையில், அவருடைய சீஷர்
பசியாயிருந்தபடியினாலே கதிர்களைக்கொய்து,
புசிக்கத்தொடங்கினார்கள்.—அதைக் கண்ட ௨
பரிசேயர் அவரிடத்தில், பாரும், ஓய்வுநாளில்
செய்யத்தகாததை உம்முடையசீஷர் செய்கிறார்
களென்றுசொல்ல,—அவர்களுக்குஅவர், தாவீ ௩

(௰) மல்.௩.௧. (௰௨) லூக்.௰௬.௰௬. (௰௩) மல்.௪.௬. (௰௪) மல்.௪.௫. (௰௫) வெளி.௨.௭,௰௧.(௰௬)லூக்.௭.௩௧.(௰௯) லூக்.௭.௩௫. (௨௧) யோனா.௩.௭,௮.(௨௩)புல.௨.௧. (௨௫) லூக்.௰.௨௧. ௧.கொரி.௧.௰௯,௨௭. ௨.கொரி.௩.௰௪.(௨௭) லூக்.௰.௨௨. யோவா.௩.௩௫. ௧.கொரி.௰௫.௨௭. யோவா.௧.௰௮. (௨௯) யோவா.௰௩.௰௫. பிலி.௨.௫. ௧.பேதுரு.௨. ௨௧. ௧.யோவா.௨.௬. ௪௧.௯.௯. பிலி.௨.௭,௮. எரே.௬.௰௬. (௩௰) ௧.யோவா.௫.௩.—(௰௨. அதி. ௧.) உபா.௨௩. ௨௫. (௩) ௧.சாமு.௨௧.௬.

தும், அவனோடிருந்தசனங்களும் பசியாயிருந்த
௪ பொழுது,-அவன் தேவாலயத்தில் பிரவேசித்து,
ஆசாரியருக்கேயன்றி,தனக்கும்,தன்னோடிருந்த
வர்களுக்கும் புசிக்கத்தகாத தேவசமுகத்தப்பங்
களைப் புசித்தானென்று நீங்கள் வாசிக்கவில்லை
௫ யா.—மேலும் ஆசாரியர், ஓய்வுநாட்களில்தேவா
லயத்தில் ஓய்வுநாளின் நியமத்தை மீறியுங் குற்
றமில்லாதிருக்கிறார்களென்று நீங்கள் வேதத்தி
௬ லேவாசிக்கவில்லையா.—தேவாலயத்திலும்பெரி
யவர் ஒருவர் இந்தஸ்தானத்திலேயிருக்கிறாரென்
௭ று நான் உங்களுக்குச்சொல்லுகிறேன்.—"பலி
யையல்ல, இரக்கத்தைவிரும்புகிறேன்," என்ப
தின் அருத்தம் நீங்கள் அறிந்தீர்களேயாகில்,குற்
றமற்றவர்கள்மேல் குற்றஞ்சுமத்தமாட்டீர்கள்.–
௮ மனுபுத்திரன் ஓய்வுநாளுக்குக் கர்த்தராயிருக்
௯ கிறாரென்றார்.—பின்பு அவர் அவ்விடம்விட்டு,
அவர்களுடைய ஆலயத்திற்பிரவேசித்தார்.
௰ அங்கே சூம்பினகையையுடைய மனுஷன் ஒ
ருவனிருந்தான். அப்பொழுது அவர்கள் அவர்
மேல்குற்றஞ் சுமத்தும்படி அவரைநோக்கி, ஓய்
வுநாளில் சொஸ்தப்படுத்துவது நியாயமாவென்
௰௧ றுகேட்க,–அவர் அவர்களுக்கு உத்தரமாய், உங்
களில் எவனாகிலுந் தன் ஆடு ஓய்வுநாளில் ஒருகு
ழியிலே விழுந்தால், அதைப்பிடித்துத் தூக்கிவி
௰௨ டானா.—ஆட்டிலும் மனுஷன் எவ்வளவு மேன்
மையுள்ளவன்; ஆதலால் ஓய்வுநாட்களில் நன்
௰௩ மைசெய்வது நியாயமென்று சொல்லி,—பின்பு
அந்தமனுஷனைநோக்கி, உன்கையைநீட்டென்
றுசொல்ல, அவன் அதை நீட்டினான்; அது மற்
றக்கையைப்போலச்சொஸ்தமாயிற்று.
௰௪ அப்பொழுது பரிசேயர்புறப்பட்டு, அவரை
எப்படிக்கொலைசெய்யலாமென்று அவருக்குவி
௰௫ ரோதமாகத் துராலோசனைசெய்தார்கள்.–யேசு
அதை அறிந்து, அவ்விடம்விட்டுப்போனார்: அ
௰௬ நேகசனங்கள் அவருக்குப்பின்செல்ல,-அவர் அ
வர்களெல்லாரையுஞ் சொஸ்தப்படுத்தி, தம்மை
ஒருவரும்பிரசித்தம்பண்ணாதபடி அவர்களுக்குக்
௰௭ கட்டளையிட்டார்.—"நான் தெரிந்துகொண்ட
என் தாசனும், என் ஆத்துமாவுக்குப்பிரியனுமா
யிருக்கிற என் அன்பானவரைப்பாருங்கள்: அ
வர் மேல் என் ஆவியை அமரப்பண்ணுவேன்,
அதினால் அவர் புறத்தேசத்தாரிடத்தில்நீதியைப்
௰௮ பிரசித்தப்படுத்துவார்.–கலகமாவது, உரத்தசத்த
மாவது செய்யார்; வீதிகளில் தன்குரல்கேட்கப்
௰௯ பண்ணார்.—நீதி செயம்அடையப்பண்ணும் வ
ரைக்கும், அவர் நெரிந்த நாணலைமுறிக்கமாட்
டார், மங்கி எரிகிறதிரியை அவிக்கமாட்டார்.–
௨௰ அந்நியதேசத்தவர்கள் அவருடையநாமத்தில் நம்
௨௧ பிக்கைவைப்பார்கள்,"என்று,–எசாயாதீர்க்கதரி
சியினால்சொல்லப்பட்டது இவ்விதமாய் நிறை
வேறிற்று.

பின்பு பிசாசுபிடித்திருந்த குருடனும் ஊமையு ௨௨
யனுமான ஒருவன் அவரிடத்திற்கொண்டுவரப்
பட்டபொழுது, அவர், குருடனும் ஊமையனு
மானவனைப்பேசவும், காணவுந்தக்கதாய்ச் சொ
ஸ்தப்படுத்தினார்.—சனங்களெல்லாரும் பிரமித் ௨௩
து, இவர் தாவீதின் புத்திரனல்லவாவென்றார்
கள்.-பரிசேயரோ அதைக்கேட்டு, இவன் பிசா ௨௪
சுகளைத்துரத்துவது பாகால்சேபூலென்னும் பிசா
சாதிபதியினாலே யன்றி, மற்றப்படியல்லவென்
றார்கள்.–யேசு அவர்களுடைய சிந்தனைகளை அ ௨௫
றிந்து, அவர்களை நோக்கி, தனக்குள்ளே விரோத
மாய்ப்பிரிந்திருக்கிற எந்த இராச்சியமும் அழிந்
துபோம்; ஒருநகரத்தாராகிலும், ஒருகுடும்பத்தா
ராகிலுந் தங்களுக்குள்ளே பிரிவுப்பட்டால் நிலை
நிற்கமாட்டார்கள்.—அப்படியே சாத்தான் சாத் ௨௬
தானைத்துரத்தினால், தனக்குத்தானே விரோதமா
யிருக்கிறான்; ஆகையால் அவன் இராச்சியம் எவ்
விதமாய்நிற்கும்.–நான் பாகால்சேபூலினாலே பி ௨௭
சாசுகளைத் துரத்துகிறேனாகில், உங்கள் பிள்ளை
கள் அவைகளை ஆராலே துரத்துகிறார்கள்; ஆ
கையால் அவர்களே உங்களுக்கு நியாயந்தீர்ப்ப
வர்களாவார்கள்.—நான் தேவனுடைய ஆவி ௨௮
யினாலே பிசாசுகளைத்துரத்துகிறேனாகில், தேவ
னுடைய இராச்சியமே உங்களிடத்தில்வந்து
விட்டது.-முன்பு பலவானைக்கட்டாவிட்டால், ௨௯
அவனுடைய வீட்டில் ஒருவன்பிரவேசித்து, அ
வனுடையஉடைமைகளைக்கொள்ளையிடுவதெப்
படி; கட்டினால் அவனுடைய வீட்டைக்
கொள்ளையாடலாம்.–என்னோடே இராதவன் எ ௩௰
னக்குவிரோதியானவன்; என்னோடேசேர்க்கா
தவன்சிதற அடிக்கிறான்.

ஆதலால் மனுஷர்செய்யும் எந்தப்பாவமும், ௩௧
தூஷணமும் மனுஷருக்கு மன்னிக்கப்படும்: ப
ரிசுத்த ஆவிக்கு விரோதமான பாவமோ மன்
னிக்கப்படுவதில்லையென்று நான் உங்களுக்குச்
சொல்லுகிறேன்.–எவனாகிலும் மனுபுத்திரனுக் ௩௨
குவிரோதமாகப்பேசினால், அது அவனுக்குமன்
னிக்கப்படும்:எவனாகிலும்பரிசுத்த ஆவிக்கு
விரோதமாய்ப்பேசினால்,அது இம்மையிலும்மறு
மையிலும் அவனுக்கு மன்னிக்கப்படுவதில்லை.-
ஒருமரத்தை அதின்கனிகளினால் அறியலாம்: நீ ௩௩
ங்கள் ஒருமரத்தைநல்லமரமென்றெண்ணினால்,
அதின்கனியையும் நல்லதென்றெண்ணுங்கள்;
ஒருமரத்தைக் கேடுள்ளதென்றெண்ணினால், அ
தின் கனியையுங் கேடுள்ளதென்றெண்ணுங்
கள்.—விரியன்குட்டிகளே, நீங்கள் தீயவர்களா ௩௪
யிருக்க நல்லவைகளைப் பேசுவதெப்படி; மன
தில் நிறைந்ததையே வாய்பேசும்.—நல்ல மனு ௩௫
ஷன் தன் இருதயத்திலுள்ள நல்லபொக்கிஷத்தி
லிருந்து நல்லவைகளை எடுத்துக்காண்பிக்கிறான்:
தீமையுள்ள மனுஷன் தன் தீமையுள்ளபொக்கி

(௪) யாத்.௨௫.௩௰. யாத்.௨௯.௩௨,௩௩. லேவி.௮.௩௧. (௫) எண்.௨௮.௯. யோவா.௭.௨௨. (௬) ௨.நாளா.௬.௰௮. மல்.௩.௧. (௭) ஓசி.௬.௬. மீகா.௬.௬,௭,௮. (௰) யோவா.௯.௰௬. (௰௧) யாத்.௨௩.௪,௫. உபா.௨௨.௪. (௰௪) யோவா.௫.௰௮. (௰௭) எசா.௪௨.௧. (௨௫) யோவா.௨.௨௫. வெளி.௨.௨௩. (௨௮) தானி.௭.௰௪.(௨௯)எசா.௪௯.௨௪.(௩௧)லூக்.௰௨.௰. எபி.௬.௪,. எபி.௰.௨௬,௨௯. ௧.யோவா.௫.௰௬. அப்.௭.௫௧. (௩௨) யோவா.௭.௰௨,௫௨. ௧.திமோ.௧.௰௩.

ஷத்திலிருந்து தீயவைகளை எடுத்துக்காண்பிக்கி
௩௬ றான்.—மனுஷர் தாங்கள்பேசும் வீணானவாக்கு
கள் ஒவ்வொன்றையுங் குறித்து நியாயத்தீர்ப்பு
நாளில் உத்தரவாதம்பண்ணுவார்களென்று நான்
௩௭ உங்களுக்குச்சொல்லுகிறேன்.—நீ உன் வாக்குக
ளினாலே நீதிமானென்றும்,உன்வாக்குகளினாலே
குற்றவாளியென்றுந்தீர்க்கப்படுவாயென்றார்.
௩௮ அப்பொழுது வேதபாரகரிலும், பரிசேயரி
லுஞ்சிலர்அவரைநோக்கி, போதகரே, உம்மால்
ஏதாயினும் ஒரு அடையாளத்தைக் காணவிரும்
௩௯ புகிறோமென்றுசொல்ல,—அவர் அவர்களுக்குத்
தரமாய், தீமையும், சோரமார்க்கமுமான இந்தச்
சந்ததியார் ஒரு அடையாளத்தைக் கேட்கிறார்
கள்; யோனாதீர்க்கதரிசியின் அடையாளமேயன்
றி, வேறொரு அடையாளமும் இவர்களுக்குக்
௪௰ கொடுக்கப்படுவதில்லை.—யோனா, மூன்றுநாள்
இரவும்பகலும் ஒருமகாமச்சத்தின்வயிற்றிலிருந்
ததுபோல, மனுபுத்திரனும்மூன்றுநாள் இரவும்ப
௪௧ கலும் பூமிக்குள்ளிருப்பார்.—நினிவேநகரத்தார்
நியாயத்தீர்ப்புநாளில் இந்தச்சந்ததியாருக்கு வி
ரோதமாயெழும்பி, இவர்கள் மேல் குற்றஞ்சு
மத்துவார்கள்: யோனா செய்த பிரசித்தத்தைக்
கேட்டு, அவர்கள் மனந்திரும்பினார்கள்; யோ
னாவிலும்பெரியவர் ஒருவர் இவ்விடத்தில்இருக்
௪௨ கிறார்.—அன்றியும், தெற்குத்தேசத்து இராசாத்தி
நியாயத்தீர்ப்புநாளில் இந்தச் சந்ததியாருக்கு வி
ரோதமாயெழும்பி, இவர்கள்மேல் குற்றஞ்சுமத்
துவாள்: அவள் சலொமோனின் ஞானத்தைக்
கேட்கும்பொருட்டுப்பூமியின் எல்லைகளினின்
றும்வந்தாள்; சலொமோனிலும் பெரியவர் ஒரு
௪௩ வர் இவ்விடத்திலிருக்கிறார்.—அசுத்தஆவி ஒரு
மனுஷனைவிட்டுப்புறப்பட்டபின்பு, நீரற்ற இ
டங்களில் அலைந்து, இளைப்பாறுதற்கான இடத்
தைத்தேடியுங் கண்டடையாமலிருக்கும்பொழு
௪௪ து,-அது, நான்புறப்பட்ட என்வீட்டிற்குத்திரும்
பிப்போவேனென்று சொல்லி, அவ்விடத்திற்
சென்று, வெறுமையும், பெருக்கிச்சோடிக்கப்
பட்டதுமாயிருக்கக்கண்டு, திரும்பிப்போய்,—
௪௫ தன்னிலும் மிகவுந்தீமையான வேறேழுஆவிக
ளைக்கூட்டிக்கொண்டுவந்து பிரவேசித்து, அங்
கேவாசம்பண்ணும்: அந்தமனுஷனுடையமுன்
னிலைமையிலும்பின்னிலைமை அதிககேடுள்ளதா
கும். அப்படியே இந்தத்தீமையுள்ள சந்ததிக்கும்
நடக்குமென்றார்.
௪௬ சனங்களுடனேஅவர்இப்படிப்பேசுகையில்,
அவருடைய மாதாவுஞ் சகோதரரும் அவ
ரோடேபேசவிரும்பி, வெளியேநின்றார்கள்.—
௪௭ ஒருவன் அவரிடத்தில், பாரும், உம்முடைய மா
தாவுஞ் சகோதரரும் உம்மோடே பேசவிரும்பி,
௪௮ வெளியே நிற்கிறார்களென்றான்.—அவர் தமக்க
தைத் தெரிவித்தவனுக்கு உத்தரமாய், என்னு
டைய மாதா யாவர், என் சகோதரர் யாவரென்
றுசொல்லி,—தம்முடைய சீஷருக்கு நேரே தம ௪௯
துகையை நீட்டி, என் மாதாவையுஞ் சகோதர
ரையும் பாருங்கள்.—பரமண்டலத்திலுள்ள என் ௫௰
பிதாவின் சித்தத்தின்படிசெய்கிறவர் எவரோ,
அவரே என்சகோதரர், என்சகோதரி, என்மாதா
வென்றார்.

## ௰௩. அதிகாரம்.

௧. விதைக்கிறவனை உவமித்தல்: ௰. சீஷருடனே சம்பாஷித்தல்: ௰௮. சொல்லிய உவமையின் அருத்தந் தெரிவித்தல்: ௨௪. களையின் உவமை: ௩௧. கடுகுவிதையின்உவமை: ௩௩. புளித்தமாவின்உவமை: ௩௪. தீர்க்கதரிசனங்கள் சித்தியாதல்: ௩௬. முன்சொன்ன உவமையின்வியாக்கியானஞ்சொல்லல்: ௪௪. மறைபொருளின் உவமை: ௪௫. முத்தின் உவமை: ௪௭. வலையின் உவமை: ௫௧. சீஷருக்குணர்த்தல்: ௫௩ கிறிஸ்துச் சுயதேசத்தாரால் அவமதிக்கப்படல்.

பின்பு, அந்நாளிலே யேசு வீட்டிலிருந்துபுறப் ௧
பட்டுப்போய், கடலினருகே உட்காந்தார்.—அ ௨
நேகசனங்கள் அவரிடத்தில் கூடிவந்தபடியால்
அவர் படவில் ஏறி உட்காந்து, சனங்களெல்லா
ருங் கரையிலேநிற்க,—அவர் உவமைகளால் அ ௩
நேகவிசேஷங்களைஅவர்களுக்குப்போதித்தார்.-
பாருங்கள், விதைக்கிறவன் ஒருவன் விதைக்கப் ௪
புறப்பட்டான்; அவன் விதைக்கிறபொழுது, சி
ல வழியருகேவிழுந்தன, அவைகளைப் பறவை
கள்வந்து பட்சித்தன.—சில சிறிதுமண்ணுள்ள ௫
கற்பாறை இடங்களில் விழுந்து, மண் ஆழமில்
லாததினால் உடனேமுளைத்தன.—வெயில் ஏறின ௬
பொழுது அவைகள் தீந்து,வேரில்லாததினால் உ
லர்ந்துபோயின.—சில முள்ளுகளுக்குள்ளே வி ௭
ழுந்தன; முள்ளுகள்வளர்ந்து அவைகளை நெருக்
கின.—வேறு சிலவோ நல்லநிலத்தில் விழுந்து, ௮
சில நூறுகவும், சில அறுபதாகவும், சில முப்ப
தாகவும் பலன்கொடுத்தன.—கேட்கிறதற்குக்கா ௯
துள்ளவன் கேட்கக்கடவனென்றார்.—பின்பு சீ ௰
ஷர் வந்து, அவரைநோக்கி, ஏன் உவமைக
ளால் அவர்களுடன் பேசுகிறீரென்றுகேட்க,—
அவர்களுக்குத்தரமாய் அவர், பரம இராச்சியத் ௰௧
தின் மறைபொருளை அறியும்படிக்கு உங்களுக்
கு அருள்கிடைத்தது, அவர்களுக்கோ கிடைக்க
வில்லை.—உள்ளவனெவனோ, அவனுக்குக் கொ ௰௨
டுக்கப்படும், பரிபூரணமுமடைவான்: உள்ளவ
னல்லாதவனோ, அவனிடத்திலுள்ளதும் எடுத்
துக்கொள்ளப்படும்.—அவர்கள் கண்டுங்காணாமை ௰௩
லும், கேட்டுங்கேளாமலும், உணராமலுமிருக்கி
றபடியினாலே, நான் உவமைகளால் அவர்களுட
னேபேசுகிறேன்.—"இந்தச்சனங்கள் கண்களி ௰௪
னாலேகாணாமலும், காதுகளினாலே கேளாமலும்,
இருதயத்தில் உணராமலும், மனந்திரும்பாம

(௩௮) ௧.கொரி.௧.௨௨. (௩௯) ஏசா.௫௭.௩. யோவா.௪.௪௮. (௪௰) யோனா.௧.௰௭. (௪௧) லூக்.௰௧.௩௨. ரோ.௨.௨௭. யோனா.௩.௫. (௪௨) ௧.இரா.௰.௧. (௪௩) யோபு.௧.௭. ௧.பேதுரு.௫.௮. (௪௫) எபி.௬.௪. எபி.௰.௨௬. ௨.பேதுரு.௨.௨௰,௨௧,௨௨. (௪௭) அப்.௧.௰௪. ௧.கொரி.௯.௫. கலா.௧.௰௯. (௫௰) யோவா.௰௫.௰௪. கொலோ.௩.௰௧. எபி.௨.௰௧.—(௰௩. அதி. ௮.) ஆதி.௨௬.௰௨. (௰௧) மாற்.௪.௰௧. ௧.கொரி.௨.௰. ௧.யோவா.௨.௨௭. (௰௪) எபி.௫.௰௧.

லும், என்ஞல் சொஸ்தமடையாமலுமிருக்கும்ப
டிக்கு, அவர்கள் கடினமாக்கப்பட்ட இருதயத்
தையும், மந்தமாக்கப்பட்டகாதுகளையும், மூடிக்
கொண்டிருக்கிற கண்களையுமுடையவர்களாயி
௰௫ ருக்கிறபடியினாலே,-நீங்கள் கேட்பீர்கள், ஆனா
லும் உணரமாட்டீர்கள்; காண்பீர்கள், ஆனாலும்
அறியமாட்டீர்கள்," என்று ஏசாயா சொல்லிய
தீர்க்கதரிசனவாக்கியம் அவர்களிடத்தில் நிறை
௰௬ வேறிற்று.—உங்கள் கண்களோ காணுகின்றன,
உங்கள் காதுகளோ கேட்கின்றன; ஆதலால் அ
௰௭ வைகளே ஆனந்தமுள்ளவைகள்.-நீங்கள் காண்
கிறவைகளைக் காணவும், கேட்கிறவைகளைக்
கேட்கவும், அநேக தீர்க்கதரிசிகளும் நீதிமான்
களும் விரும்பியும், காணாமலுங் கேளாமலும்
போனார்களென்று மெய்யாய் உங்களுக்குச்
சொல்லுகிறேனென்றார்.
௰௮ ஆகையால் நீங்கள் விதைக்கிறவனைப்பற்றும்
௰௯ உவமையைக்கேளுங்கள்.—ஒருவன்இராச்சியத்
தின்வாக்கைக்கேட்டும் உணராதிருந்தால்,தீயன்
வந்து அவனுடைய இருதயத்திலே விதைக்கப்
பட்டதைக்கவருகிறான். இவனே வழியருகே
௨௰ விழுந்த விதையைப் பெற்றவன்.—கற்பாறை
யில்விழுந்த விதையைப்பெற்றவன், வாக்கைக்
கேட்டவுடனேசந்தோஷத்தோடே அதை உட்
கொண்டும், வேர்பற்றியிராமல் கொஞ்சக்காலம்
௨௧ மாத்திரம் நிலைத்து,—பின்பு அந்த வாக்கினிமித்
தம் உபத்திரவமுந் துயரமும் நேரிட்டமாத்திரத்
௨௨ தில் தவறுகிறான்.-முள்ளுள்ளஇடத்தில்விழுந்த
விதையைப்பெற்றவன், வாக்கைக்கேட்ட பின்
பு, லௌகீகக்கவலையும், பொருள் மயக்கமும்
அந்த வாக்கை நெருக்குவதினால் பலனற்றவனா
௨௩ வான்.-நல்லநிலத்திலேவிழுந்தவிதையைப்பெற்
றவனோ, அந்த வாக்கைக்கேட்டும், உணர்ந்தும்,
அதின்படிசெய்தும்,ஒருவன் நூறும், ஒருவன் அ
றுபதும்,ஒருவன் முப்பதுமாகப்பலன்கொடுத்து
வருகிறானென்றார்.
௨௪ அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச்
சொல்லிக்காட்டினார்,பரமஇராச்சியம், ஒருவன்
தன்வயலில் நல்லவிதைவிதைத்தலுக்கொப்பாயி
௨௫ ருக்கின்றது.—சனங்கள் நித்திரைகொள்ளுகை
யில், அவன் சத்துரு வந்து கோதுமைக்குள்ளேக
௨௬ ளையை விதைத்துப்போனான்.-பின்புபயிர்முளை
த்துக் கதிர்கொண்டபொழுது, அந்தக்களைகளுங்
௨௭ காணப்பட்டன.-பணிவிடைக்காரர் தங்கள் எச
மானனிடத்தில் வந்து, ஆண்டவனே, நீர் உம
துவயலில் நல்ல விதையை விதைத்தீரல்லவா;
களைகள் அதில் எப்படி உண்டாயினவென்று
௨௮ கேட்க,—அவன், சத்துரு அதைச்செய்தானென்
றான். அப்பொழுது பணிவிடைக்காரர், நாங்கள்
போய், அவைகளைப்பிடுங்குவது உமக்குச்சித்த
மாவென்று கேட்க,—அவன், வேண்டாம்; களை ௨௯
களைப் பிடுங்குகிறபொழுது கோதுமையையும்
பிடுங்காதபடிக்கு,-அவ்விரண்டையும்அறுப்புக் ௩௰
காலம்வரைக்கும் வளரவிடுங்கள்: அறுப்புக்கா
லத்தில் நான் அரி அரிகிறவர்களுடனே, நீங்கள்
முதல் களைகளைப்பிடுங்கி, எரிக்கிறதற்குக்கட்டு
களாகக் கட்டிவையுங்கள்: பின்பு கோதுமை
யை என் களஞ்சியத்தில் சேர்த்துவிடுங்களென்
று சொல்வேனென்பதைச் சொன்னானென்றார்.
அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் ௩௧
சொல்லிக்காட்டினார்; பரம இராச்சியம் ஒருகடு
குவிதைக்கொப்பாயிருக்கின்றது, அதை ஒரு ம
னுஷன் எடுத்துத் தன்நிலத்திலே விதைத்தான்.—
அது எல்லாவிதைகளிலுஞ் சிறியதாயினும், வள ௩௨
ரும்பொழுது எந்தப்பூண்டிலும் பெரிதாகி, ஆகா
யத்துப்பறவைகள் அதின் கிளைகளில் வந்தடை
யத்தக்கதான செடியாகுமென்றார்.
அவர் வேறொரு உவமையை அவர்களுக்குச் ௩௩
சொன்னார்; மூன்று மரக்கால் மாமுழுவதும் பு
ளிப்பாகும்வரைக்கும் ஒருஸ்திரி புளித்தமாவை
எடுத்துஅதிலேமறைத்துவைத்தாள்; பரம இராச்
சியம் அந்தப்புளித்தமாவுக்கொப்பாயிருக்கின்ற
தென்றார்.—யேசு இவைகளையெல்லாம் உவமை ௩௪
யாகச் சனங்களுடன்பேசினார்; உவமைகளினா
லேயன்றி வேறுவிதமாய் அவர் அவர்களுடன்
பேசவில்லை.—"நான் உவமைகளோடே என் ௩௫
வாயைத்திறந்து, உலகத்தோற்றம்முதல் மறைந்த
பொருளைவெளிப்படுத்துவேன்," என்று தீர்க்கத
ரிசி சொல்லியவாக்கு நிறைவேறிற்று.—பின்பு ௩௬
யேசு சனங்களை அனுப்பிவிட்டு, வீட்டுக்குப்
போனார். அங்கே அவருடையசீஷர் அவரிடத்
தில்வந்து, நீர்வயலின்களைகளைக்குறித்துச்சொல்
லிய உவமைப்பொருளை எங்களுக்குவெளிப்ப
டுத்தவேண்டுமென்றுசொல்ல,—அவர்களுக்குத்த ௩௭
ரமாய், அவர், நல்லவிதையைவிதைக்கிறவன் ம
னுபுத்திரன்; வயல் உலகம்;—நல்லவிதைஇராச் ௩௮
சியத்தின்சந்ததியார்; களைகள் தீயனுடையசந்த
தியார்;—அவைகளைவிதைக்கிறசத்துரு பிசாசு; அ ௩௯
றுப்புக்காலம் உலகத்தின்முடிவு; அரிஅரிகிறவர்
கள் தேவதூதர்கள்;—களைகள் சேர்க்கப்பட்டுஅக் ௪௰
கினியினால் எரிக்கப்படுவதுபோல, இவ்வுலகத்
தின் முடிவிலேநடக்கும்.—மனுபுத்திரன் தமது ௪௧
தூதரை அனுப்ப, அவர்கள், அவருடையஇராச்
சியத்திலுள்ள சகல இடறல்களையும், பாவஞ்
செய்பவர்களையுஞ்சேர்த்து,—அக்கினிச்சூளையி ௪௨
ல் அவர்களைப்போடுவார்கள்: அங்கே அழுகை
யும் பற்கடிப்புமுண்டாயிருக்கும்.—அப்பொழு ௪௩
து நீதிமான்கள் தங்கள் பிதாவின் இராச்சியத்தி

(௰௫) ஏசா.௬.௯. எசேக்.௰௨.௨. யோவா.௰௨.௪௰. அப்.௨௮.௨௬,௨௭. ரோ.௰௧.௮. ௨.கொரி.௩.௰௪,௰௫. (௰௬) லூக்.௰.௨௩,௨௪. யோவா.௨௰.௨௯. (௰௭) எபி.௰௧.௰௩. ௧.பேதுரு.௧.௰,௰௧. (௨௰) ஏசா.௫௮.௨. எசேக்.௩௩.௩௧,௩௨. யோவா.௫.௩௫. (௨௧) ௨.தீமோ.௧.௰௫. (௨௨) லூக்.௰௮.௨௪. ௧.தீமோ.௪.௰. எரே.௪.௩. (௩௧) ஏசா.௨.௨,௩. மீகா.௪.௧. (௩௫) சங்.௭௮.௨. ரோ.௰௬.௨௫,௨௬. ௧.கொரி.௨.௭. எபே.௩.௯. கொலோ.௧.௨௬. (௩௮) ரோ.௰.௰௮. கொலோ.௧.௬. ஆதி.௩.௰௫. யோவா.௮.௪௪. அப்.௰௩.௰. ௧.யோவா.௩.௮. (௩௯) யோவே.௩.௰௩. வெளி.௰௪.௰௫. (௪௧) ௨.பேதுரு.௨.௧,௨. (௪௨) வெளி.௨௰.௰. (௪௩) தானி.௰௨.௩. ௧.கொரி.௰௫.௪௨,௪௩,௫௮.

லே சூரியனைப்போலப்பிரகாசிப்பார்கள். கேட்
கிறதற்குக்காதுள்ளவன்கேட்கக்கடவன்.
௪௪ அன்றியும்,பரமஇராச்சியம் வயலில்புதைக்கப்
பட்ட பொக்கிஷத்துக்கு ஒப்பாயிருக்கின்றது;
அதை ஒருமனுஷன் கண்டு மறைத்து, பின்புஅ
தைப்பற்றிய சந்தோஷத்தினால் போய், தனக்
குள்ளயாவையும் விற்று, அந்தவயலைக்கொள்ளு
கிறான்.
௪௫ அன்றியும்,பரமஇராச்சியம்நல்லமுத்துக்களைத்
௪௬ தேடி,—ஒருஆணிமுத்தைக்கண்டு, போய்,தனக்
குள்ளயாவையும்விற்று, அதைக்கொள்ளுகிற வி
யாபாரிக்குஒப்பாயிருக்கின்றது.
௪௭ மேலும் பரம இராச்சியம் கடலிலிடப்பட்டு,
எந்தச்சாதியானவைகளையும்வாரிக்கொள்ளுகிற
௪௮ வலைக்கு ஒப்பாயிருக்கின்றது.—அது நிறைந்த
பொழுது சனங்கள் அதைக்கரையில் இழுத்து,
உட்கார்ந்து, நல்லவைகளைப் பாத்திரங்களிலே
சேர்த்து, ஆகாதவைகளைத்தள்ளிவிடுகிறார்கள்.—
௪௯ இவ்விதமாய் உலகத்தின் முடிவிலே நடக்கும்:
தேவதூதர்புறப்பட்டு,நீதிமான்களிலிருந்து துன்
௫௰ மார்க்கரைப்பிரித்து,—அக்கினிச்சூளையில் அவர்
களைப்போடுவார்கள்: அங்கே அழுகையும்பற்க
௫௧ டிப்புமுண்டாயிருக்குமென்றார்.-யேசு, இவை
களையெல்லாம் நீங்கள் அறிந்துகொண்டீர்களா
வென்று அவர்களிடத்திற்கேட்க, அவர்கள்,
கர்த்தாவே, அறிந்துகொண்டோமென்றார்
௫௨ கள்.—அவர் பின்னும் அவர்களை நோக்கி, பரம
இராச்சியத்தைக்குறித்த உபதேசத்தைப்பெற்ற
எந்த வேதபாரகனும், புதியவைகளையும், பழை
யவைகளையுந் தன் பண்டசாலையிலிருந்து வெ
ளிப்படுத்தும் வீட்டெசமானனைப்போலிருக்கி
றானென்றார்.
௫௩ யேசு இந்த உவமைகளைச் சொல்லிமுடித்த
௫௪ பின்பு, அவ்விடம்விட்டுப்புறப்பட்டார்.-அவர்
தமது ஊரில் வந்து, ஆலயத்திலே சனங்களுக்
கு உபதேசம்பண்ணினார்; அவர்கள் பிரமித்து,
இவ்விதஞானமும் ஆச்சரியமான கிரியைகளும்
௫௫ இவனுக்கெங்கேயிருந்துவந்தன.—இவன் தச்ச
னுடையபுத்திரனல்லவா; இவன் மாதாவின் நா
மம் மரியாளல்லவா;இவனுடையசகோதரர் யாக்
கோபும், யோசேப்பும், சீமோனும், யூதாவுமல்ல
௫௬ வா,-இவனுடையசகோதரிகளெல்லாரும்நமக்கு
ள்ளே இருக்கிறார்களல்லவா; இவைகளெல்லாம்
இவனுக்கு எங்கேயிருந்துவந்தனவென்றுசொல்
௫௭ லி,—அவரைக்குறித்து இடறுண்டார்கள்.யேசு
அவர்களைநோக்கி, தன்தேசத்திலும், தன்குடும்
பத்திலுமன்றி, தீர்க்கதரிசி எவ்விடத்திலாகிலும்
௫௮ அவமதிக்கப்படானென்றார்.-அவர்களுடையஅ
விசுவாசத்தினிமித்தம் அவர்அவ்விடத்தில்அநே
க ஆச்சரியமானகிரியைகளைச்செய்யவில்லை.

## ௰௪. அதிகாரம்.

௧.யோவான்ஸ்நானன்கொலைசெய்யப்படல்:௰௩.
ஐந்தப்பத்தையும் இரண்டு மீனையுங் கொண்டு
ஐயாயிரஞ் சனங்களைப்போஷித்தல்: ௨௨. யே
சு சமுத்திரத்தின்மேல் உலாவல்: ௩௪. அநேக
சனங்களைச் சொஸ்தப்படுத்தல்.

அக்காலத்தில் காற்பங்குதேசாதிபதியாகிய ஏ ௧
ரோது யேசுவின் கீர்த்தியைக்கேள்விப்பட்
டு,—தன் பணிவிடைக்காரரைநோக்கி, இவன் ௨
யோவான்ஸ்நானன்; இவன் மரித்தோரினின்
றும் உயிர்த்தெழுந்தவனாதலால், இவனால் இந்த
ஆச்சரியமான கிரியைகள் நடப்பிக்கப்பட்டன
வென்றான்.
முன்பு யோவான், ஏரோது இராசாவிடத்தில் ௩
அவனுடையதம்பியாகியபிலிப்பினுடைய மனை
வி ஏரோதியாளைக்குறித்து, நீர் அவளைச்சேர்க்கத்
தகாதென்று சொன்னதினிமித்தம்,—ஏரோது இ ௪
ராசா அவனைப்பிடித்துக்கட்டி, காவலில்வைப்
பித்தான்.—அவனைக் கொலைசெய்ய அபிப்பிரா ௫
யங்கொண்டும், சனங்கள் யோவானைத் தீர்க்கத
ரிசியென்று எண்ணினபடியினால் அவன் அவர்
களுக்குப் பயந்தான்.-ஆனாலும் ஏரோதின்சென் ௬
மதினங்கொண்டாடப்பட்டபொழுது, ஏரோதி
யாளின் புத்திரி அவர்களுக்குமுன் நடனம்பண்
ணி ஏரோதைச்சந்தோஷப்படுத்தினாள்,—ஆனப ௭
டியால் எதைக்கேட்டாலுந் தருவேனென்று அ
வன் அவளுக்கு ஆணையிட்டு வாக்குக்கொடுத்
தான்.-அவள் தன்மாதாவினால் முன் உணர்த்தப் ௮
பட்டபடி, நீர் யோவான் ஸ்நானனுடைய சிர
சை ஒருதாலத்தில் இங்கே எனக்குத்தரவேண்டு
மென்றாள்.—அதினால் இராசா துக்கமடைந்து, ௯
தான் இட்ட ஆணையினிமித்தமும், தன்னுடன்
பந்தியிலிருந்தவர்களினிமித்தமும் அவன் அ
தைக் கொடுக்கிறதற்குக் கட்டளையிட்டான்.—
பின்பு சிறைச்சாலையில் ஆளனுப்பி, யோவானு ௰
டைய சிரசைச்சேதிப்பித்தான்.-அந்தச் சிரசு ஒ ௰௧
ருதாலத்தில்கொண்டுவந்து, அந்தக்கன்னிக்குக்
கொடுக்கப்பட்டது: அவள் அதைத் தன் மாதா
விடத்தில் கொண்டுபோய்க்கொடுத்தாள்.-பின்பு ௰௨
அவனுடைய சீஷர் வந்து அவனுடைய உட
லை எடுத்து அடக்கம்பண்ணி, போய், யேசு
வுக்கு அந்தச்செய்தியைத்தெரிவித்தார்கள்.
யேசு அதைக்கேட்டு, படவிலேறி, வனத் ௰௩
தைச்சேர்ந்த ஒரு இடத்துக்குத்தனியேபோனார்:
சனங்கள் அதைக்கேள்விப்பட்டு, பட்டணங்க
ளிலிருந்து கால்நடையாய் அவரைப்பின்சென்
றார்கள்.-யேசுபுறப்பட்டுத்திரளானசனங்களைக் ௰௪
கண்டு, அவர்கள்மேல்மனதுருகி, அவர்களில்வி
யாதியுள்ளவர்களைச்சொஸ்தப்படுத்தினார்.
. சாயங்காலத்தில் அவருடையசீஷர்அவரிடத் ௰௫
தில்வந்து, இதுவனத்தைச்சேர்ந்தஇடம், நேரஞ்
சென்றுபோயிற்று; சனங்கள் கிராமங்களுக்குப்
போய்த்தங்களுக்காக ஆகாரத்தைக்கொள்ளும்ப
டிக்கு அவர்களை அனுப்பிவிடுமென்று சொல்
ல,—யேசு, இவர்கள் போகவேண்டுவதில்லை; ௰௬
நீங்களேஇவர்களுக்குப்புசிக்கக்கொடுங்களென்

(௪௪)பிலி.௩.௭,௮. ஏசா.௫௫.௧. வெளி.௩.௰௮.(௪௬)நீதி.௨.௪.(௫௨)உன்.௭.௰௩.(௫௫)ஏசா.௪௯.௭.—(௰௪.அதி.௩.)
லேவி.௰௮.௰௬. (௫) லூக்.௨௰.௬. (௰௩) யோவா.௬.௧,௨. (௰௪) மாற்.௬.௩௪. (௰௫) யோவா.௬.௫.

௰௭ றார்.—அதற்கு அவர்கள் ஐந்து அப்பமும், இரண்
டுமீனுமேயல்லாமல், வேறொன்றும் எங்களிடத்
௰௮ திலில்லையென்று சொல்ல,—அவர், அவைகளை
என்னிடத்திற் கொண்டுவாருங்களென்றார்.—
௰௯ பின்பு அவர், சனங்கள் புல்லின்மேலே பந்தி
யிருக்கும்படி கட்டளையிட்டு, அந்த ஐந்து அப்
பங்களையும், இரண்டுமீன்களையும் எடுத்து, வா
னத்தை அண்ணாந்துபார்த்து, ஆசீர்வாதஞ்செய்
து, அப்பங்களைப்பிட்டுச் சீஷரிடத்திற்கொடுக்
௨௰ க, சீஷர்சனங்களுக்குக் கொடுத்தார்கள்.—அ
வர்களெல்லாரும் புசித்துத் திருத்திஅடைந்தார்
கள்: சேஷமானவைகளைப்பன்னிரண்டுகூடை
௨௰௧ நிறைய எடுத்தார்கள்.—புசித்தவர்கள், ஸ்திரிக
ளும் பிள்ளைகளுந்தவிர, ஏறக்குறைய ஐயாயி
ரம்புருஷர்.
௨௰௨ அப்பால் யேசு சனங்களை அனுப்பிவிடுகை
யில், தம்முடைய சீஷர் படவிலேறித் தமக்கு
முன் அக்கரைக்குப்போகும்படி அவர்களைநெ
௨௰௩ ருக்கியேவினார்.-சனங்களைஅனுப்பிவிட்டபின்
பு, அவர் தனியே பிரார்த்தனைபண்ணும்படி ஒ
ரு மலைக்குப்போனார்: சாயங்காலமானபொழு
௨௰௪ து, அவர் அங்கே தனித்துநின்றார்.—அந்தச்சம
யத்திலே படவு கடலின்நடுவே சேர்ந்து, எதிர்
காற்றாயிருந்ததினிமித்தம் அலைகளால் அலைவு
௨௰௫ பட்டது.—அப்பொழுது இரவின் நாலாஞ்சாமத்
திலே யேசு சமுத்திரத்தின்மேல்நடந்து, அவர்
௨௰௬ களிடத்திற்சென்றார்.-அவர்சமுத்திரத்தின்மேல்
நடக்கிறதைச் சீஷர் கண்டு திகைத்து, ஆவேச
மென்று சொல்லிப் பயத்தினால் ஓலமிடத்தொ
௨௰௭ டங்கினார்கள்.—அப்பொழுதே யேசு, அவர்களு
டனே, திடங்கொள்ளுங்கள், பயப்படாதிருங்
௨௰௮ கள்; நான்தானென்றார்.—பேதுரு அவரைநோக்
கி, கர்த்தாவே, நீரேயானால் சலத்தின்மேல்
உம்மிடத்தில் நான்வரும்படிகட்டளையிடுமென்
௨௰௯ றான்.—அதற்கு அவர் வாவென்றுசொல்ல, பே
துருபடவைவிட்டிறங்கி, யேசுவினிடத்தில்
௩௰ போகும்படி சலத்தின்மேல் நடந்து,—காற்றுப்
பலத்திருப்பதைக்கண்டுபயந்து அமிழத்தொடங்
கி, கர்த்தாவே, என்னை இரட்சியுமென்று உ
௩௰௧ ரத்தசத்தமிட்டான்.-உடனே யேசு கையைநீட்
டி அவனைப் பிடித்துக்கொண்டு, அவனுடனே,
ஆ, அற்பவிசுவாசியே, ஏன் சந்தேகப்பட்டா
௩௰௨ யென்றார்.-அவர்கள்படவிலேறினவுடனே,காற்
௩௰௩ று அமைதியாயிற்று.—அப்பொழுது படவிலுள்
ளவர்கள்வந்து அவரை நமஸ்கரித்து, மெய்யாக
வே நீர் தேவனுடைய குமாரனென்றார்கள்.
௩௰௪ பின்பு அவர்கள் அக்கரைக்கு ஓடி, கெனேச
௩௰௫ ரேத் நாட்டிலே சேர்ந்தார்கள்.—அவ்விடத்தும
னுஷர் அவரை அறிந்து, அந்தத்தேசமெங்கும் ஆ
ளனுப்பி, பிணியாளிகளெல்லாரையும் அழைப்
௩௰௬ பித்து, அவரிடத்தில்கொண்டுவந்தார்கள்.—அவ
ருடையவஸ்திரத்தின் ஓரத்தைமாத்திரந்தொடும்
படிவேண்டினார்கள்; தொட்டயாவருஞ் சொஸ்
தமடைந்தார்கள்.

## ௰௫. அதிகாரம்.

௧. கிறிஸ்து, வேதபாரகரையும் பரிசேயரையுங் கண்டித்தல்: ௰. மனுஷரை அசுத்தப்படுத்துகிறதின்னதென்றுகுறித்தல்: ௨௧. ஒருகானானஸ்திரியின்புத்திரியைச்சொஸ்தப்படுத்தல்: ௨௯. அநேகசனங்களைச்சொஸ்தப்படுத்தல்: ௩௨. ஏழு அப்பங்களினாலும், சிலசிறுமீன்களினாலும் நாலாயிரஞ்சனங்களைப்போஷித்தல்.

அக்காலத்திலே யெரூஷலேமிலுள்ள வேதபா ௧
ரகரும், பரிசேயரும் யேசுவினிடத்தில் வந்
து,—உம்முடையசீஷர் தங்கள்கைகளைக் கழுவா ௨
மல்போசனம்பண்ணி, முதியோருடைய பாரம்
பரியமுறைமையை மீறிநடக்கிறதென்னவென்
றுகேட்க,—அவர்களுக்குத்தரமாக யேசு, நீங் ௩
கள் உங்கள்பாரம்பரியமுறைமையினால் தேவ
னுடைய கட்டளையையென்மீறிநடக்கிறீர்கள்.-
"உன் பிதாவையும் மாதாவையுங் கனம்பண்ண ௪
வேண்டும்,"என்றும், "பிதாவையாயினும், மாதா
வையாயினும் நிந்திப்பவன் கொலைசெய்யப்பட
வேண்டும்,"என்றுந்தேவன்கட்டளையிட்டார்.-
நீங்களோ, ஒருவன் தன் பிதாவிடத்திலாயினும், ௫
மாதாவிடத்திலாயினும் உமக்கென்னாலே உதவு
கிறதேதுண்டோ, அதைக் காணிக்கையாய்க்கொ
டுக்கிறேனென்னும் வாக்கைச்சொன்னால்,—அ ௬
வன் தன்பிதாவையும், தன் மாதாவையுங் கனம்
பண்ணவேண்டுவதில்லையென்று போதித்து, இ
வ்விதமாய் உங்கள் பாரம்பரியமுறைமைகளினா
லே தேவனுடைய கட்டளையை அபத்தமாக்
குகிறீர்கள்.—ஆ, கபடிகளே, "இந்தச்சனங்கள் ௭
தங்கள்வாயினால் என்னிடத்திற்சேருகிறார்கள்,
தங்கள் உதடுகளினால்என்னைக்கனம்பண்ணுகி
றார்கள்; இவர்களுடைய இருதயமோ எனக்குத்
தூரமாயிருக்கின்றது.—மனுஷர் கற்பித்தவிதிக ௮
ளைத் தேவகட்டளையென்றுபோதித்து, விருதா
வாக எனக்கு ஆராதனைசெய்துவருகிறார்கள்,"
என்று-ஏசாயா உங்களைக்குறித்துத் தீர்க்கதரிசன ௯
வாக்கியங்களை நன்றாகச்சொன்னானென்றார்.
பின்பு சனங்களை வரஅழைத்து, நீங்கள்கேட் ௰
டு உணர்ந்துகொள்ளுங்கள்.—வாய்க்குள்ளேபோ ௰௧
கிறது ஒருவனையும் அசுசிப்படுத்தாது; வாயிலி
ருந்துபுறப்படுகிறதே ஒருவனை அசுசிப்படுத்து
கின்றதென்று அவர்களுடனேசொன்னார்.—அப் ௰௨
பொழுது அவருடைய சீஷர் அவரிடத்தில்வந்
து, பரிசேயர் இந்தவாக்கைக்கேட்டு, இடறுண்
டார்களென்று அறிந்திருக்கிறீராவென்றுசொல்
ல,—அவர், என் பரம பிதா நடாதநாற்றுகள்யா ௰௩
வும் பிடுங்கப்படும்.—அவர்களைவிட்டுவிடுங்கள்: ௰௪
அவர்கள் குருடருக்குவழிகாட்டுகிறகுருடராயி

---

(௨௫)யோவா.௬.௰௯. (௨௬) யோபு.௯.௮. (௩௩) சங்.௨.௭. யோவா.௧.௪௯. அப்.௮.௩௭. ரோ.௧.௪. (௩௬) அப்.௰௯.௰௨.—(௰௫. அதி. ௨.) கொலோ.௨.௮. (௪) யாத்.௨௰.௰௨. நீதி.௨௩.௨௨. எபே.௬.௨. யாத்.௨௧.௰௭. நீதி.௨௰.௨௰. (௭) ஏசா.௨௯.௰௩. எசேக்.௩௩.௩௧. (௮) ஏசா.௨௯.௰௩. கொலோ.௨.௰௮—௨௨. தீத்.௧.௰௩. (௰௧) அப்.௰.௰௫. ரோ.௰௪.௰௪,௰௭,௨௰. ௧.தீமோ.௪.௪. தீத்.௧.௰௫. (௰௩) யோவா.௰௫.௨. ௧.கொரி.௩.௰௨,. (௰௪) ஏசா.௯.௰௬. மல்.௨.௮.

ருக்கிறார்கள். குருடன் குருடனுக்கு வழிகாட்
டினால் இருவருங் குழியிலேவிழுவார்களென்
௰௫ றார்.—அப்பொழுதுபேதுரு அவரைநோக்கி, இந்
த உவமையை எங்களுக்கு விவரிக்கவேண்டு
௰௬ மென்றான்.—அதற்கு யேசு, இதுவரைக்கும் நீங்
௰௭ களும் புத்தியில்லாதவர்களா.—வாய்க்குள்ளே
போகிறவையெல்லாம் வயிற்றிற்பிரவேசித்துக்
கழிந்துபோகின்றனவென்பதை, நீங்கள் இன்
௰௮ னும் உணர்ந்துகொள்ளவில்லையா.—வாயிலிருந்
து புறப்படுகிறவைகள் இருதயத்திலிருந்து புறப்
பட்டுவருகின்றன; இவைகளே மனுஷனை அசு
௰௯ சிப்படுத்துகின்றன.—இருதயத்திலிருந்து துரா
லோசனைகள், கொலைகள், விபசாரங்கள், வே
சைமார்க்கங்கள், களவுகள், பொய்ச்சாட்சிகள்,
தூஷணங்களாகிய இவைகள்புறப்படுகின்றன.-
௨௰ மனுஷனை அசுசிப்படுத்துகிறவைகள் இவைக
ளே: கைகழுவாமல் புசிப்பதோ, மனுஷனை அ
சுசிப்படுத்துவதில்லையென்றார்.
௨௧ பின்பு யேசு, அவ்விடம்விட்டுவிலகி, தீறுசீ
௨௨ தோனின்திசைகளுக்குப்போனார்.—கானான் தே
சத்தாளாகிய ஒருஸ்திரி அந்த எல்லைகளிலிருந்து
வந்து,அவரைநோக்கி, கர்த்தாவே, தாவீதின்
புத்திரனே, என்மேலிரங்கும்; என்மகள் பிசாசி
னால் மிகவும் வருத்தப்படுகிறாளென்றுசொல்லி
௨௩ ஓலமிட்டாள்.—அவர் அவளுக்குத்தரமாக ஒரு
வாக்குஞ்சொல்லவில்லை. அப்பொழுது அவரு
டையசீஷர்சேர்ந்து, இவள் நமக்குப்பின்வந்து
ஓலமிடுகிறாளே,இவளை அனுப்பிவிடுமென்று அ
௨௪ வரைவேண்டிக்கொண்டார்கள்.—அதற்கு அவர்,
காணாமற்போன ஆடுகளாகிய இஸரவேல்கோத்
திரத்தாரிடத்திற்கேயன்றி, நான் அனுப்பப்பட
௨௫ வில்லையென்றார்.-பின்பு அவள்வந்து அவரைவ
ணங்கி, கர்த்தாவே, எனக்குதவிசெய்யுமென்
௨௬ றுசொல்ல,-அவர் உத்தரமாய்,பிள்ளைகளுடைய
அப்பத்தை எடுத்து நாய்களுக்குப்போடுகிறது த
௨௭ குதியல்லவென்றார்.—அதற்கு அவள், கர்த்தா
வே, அது மெய்: ஆயினும் நாய்கள் தங்கள் எ
சமானரின் போசனபீடங்களிலிருந்து விழுந்
௨௮ துணிக்கைகளைத் தின்னுமே யென்றாள்.—அப்
பொழுது யேசு அவளுக்குத்தரமாய், ஸ்திரியே,
உன் விசுவாசம்பெரிது: நீ விரும்பினபடியே உ
னக்காகக்கடவதென்றார். அந்நேரமே அவளு
௨௯ டைய மகள் சொஸ்தமடைந்தாள்.—பின்பு யே
சு அவ்விடம்விட்டுக் கலிலேயாக்கடலினருகே
வந்து, ஒருமலையிலேறி அங்கே உட்காந்தார்.—
௩௰ அப்பொழுது சப்பாணிகள், குருடர், ஊமையர்,
முடவர் முதலான அநேகம்பேரைக் கூட்டிவந்
து, மிகுந்தசனங்கள் யேசுவைச்சேர்ந்து, அ
வர்களை அவருடைய பாதத்தில் விட்டார்கள்;
௩௧ அவர்களை அவர்சொஸ்தப்படுத்தினார்.—ஊமை
யர்பேசுகிறதையும், முடவர்சொஸ்தமாகிறதை
யும், சப்பாணிகள் நடக்கிறதையும், குருடர்
காண்கிறதையுஞ் சனங்கள்கண்டுஆச்சரியப்பட்
டு, இஸரவேலின் தேவனைத்துதித்தார்கள்.
பின்பு யேசு தம்முடையசீஷரை அழைத்து, ௩௨
இந்தச்சனங்களைக்குறித்து நான் பரிதாபப்படுகி
றேன்,இவர்கள் இப்பொழுது மூன்றுநாளாக என்
னிடத்திலேதங்கி, போசனமில்லாமல் இருக்கி
றார்கள்: இவர்கள் வழியிலே சோர்ந்துபோவார்
களே, இவர்களைப்பட்டினியாக அனுப்பிவிடே
னென்றார்.—அதற்கு அவருடைய சீஷர், இவ்வ ௩௩
ளவுசனங்களுக்குந் திருத்தியுண்டாக்கும்படிக்
குவேண்டிய அப்பங்கள் இந்தவனத்தில் நமக்கு
எப்படி அகப்படுமென்றார்கள்.—யேசு அவர்க ௩௪
ளுடனே, உங்களிடத்தில் எத்தனை அப்பங்கள்
உண்டென்றுகேட்க, எழு அப்பங்களும், சில சி
றுமீன்களுமுண்டென்று சீஷர்சொன்னார்கள்.—
அப்பொழுது அவர் சனங்களைத் தரையிலே பந் ௩௫
தியிருக்கச்சொல்லி,—அந்த எழு அப்பங்களை ௩௬
யும், மீன்களையுமெடுத்து, ஸ்தோத்திரஞ்செய்து,
அவைகளைப்பிட்டு, தம்முடைய சீஷரிடத்
திற்கொடுக்க, சீஷர், சனங்களுக்குக்கொடுத்
தார்கள்.—எல்லாரும் புசித்துத் திருத்தியடைந்த ௩௭
பின்பு, சேஷமானவைகளை எழுகூடைநிறைய
எடுத்தார்கள்.—போசனம்பண்ணினவர்கள், ஸ்தி ௩௮
ரிகளும் பிள்ளைகளுந்தவிர, நாலாயிரம்புருஷர்.—
அவர் சனங்களை அனுப்பிவிட்டு, படவிலேறி, ௩௯
மக்தலாகரையைச்சேர்ந்தார்.

## ௰௬. அதிகாரம்.

௧. பரிசேயர்அடையாளமாகஅற்புதங்களைக்கேட்டல்: ௫. கிறிஸ்து உபதேசமாகிய புளித்தமாவைக்குறித்துத் தம்முடைய சீஷரை எச்சரித்தல்: ௰௩. கிறிஸ்துவைக் குறித்துச் சனங்கள் கொண்ட எண்ணத்தையும், பேதுருவின்அறிக்கையையுந்தெரிவித்தல்: ௨௧. கிறிஸ்துத்தமது மரணத்தைமுன்னுரைத்தல்:பேதுருவைக் கண்டித்தல்: ௨௪. தமக்குப்பின்சென்ற சனங்களுக்கு உபதேசித்தல்.

அப்பொழுது பரிசேயருஞ்சதுசேயரும்வந்து, ௧
அவரைச் சோதிக்கும்பொருட்டு, வானத்தில் ஏ
தாயினும் ஒரு அடையாளத்தைத் தங்களுக்குக்
காண்பிக்கும்படி அவரைவேண்டிக்கொண்டார்
கள்.—அவர்களுக்குத்தரமாய் அவர், சாயங்காலத் ௨
தில் செவ்வானந்தோன்றினபடியால், வெளுக்
குமென்கிறீர்கள்.—விடியற்காலத்தில் வானஞ் ௩
செந்நிறமும் மந்தாரமுமாயிருப்பதினால், இன்று
பெருங்காற்றும் மழையுமுண்டாகுமென்கிறீர்
கள்: கபடிகளே, வானத்தின்தோற்றத்தை நீங்
கள் வகை அறுக்கக்கூடுமேயாகில், காலங்க
ளின் அடையாளங்களை வகை அறுக்கமாட்
டீர்களா.—தீமையும், சோரமார்க்கமுமுள்ள சந் ௪
ததியாரானவர்கள் அடையாளங்கேட்கிறார்கள்;
யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி,
வேறொரு அடையாளமும் இவர்களுக்குக்கொ

(௰௭) ௧.கொரி.௬.௰௩. (௰௮) யாக்.௩.௬. (௰௯) ஆதி.௬.௫. நீதி.௬.௰௪. எரே.௰௭.௯. (௨௪) அப்.௩.௨௫,௨௬. ரோ.௰௫.௮. (௨௬) பிலி.௩.௨. (௩௰) எசா.௩௫.௫,௬. லூக்.௭.௨௨. (௩௩) ௨.இரா.௪.௪௩. (௩௬) ௧.சாமு.௯.௰௩. லூக்.௨௨.௰௯.—(௰௬. அதி. ௧.) ௧.கொரி.௧.௨௨.

டுக்கப்படுவதில்லையென்றுசொல்லி, அவர்களை
விட்டுப்போனார்.
௫ அவருடைய சீஷர் அக்கரைக்குவருமுன்,
அப்பங்களை எடுத்துவர மறந்துவிட்டார்கள்.
௬ பின்பு யேசு அவர்களைநோக்கி,பரிசேயருஞ்
சதுசேயருமானவர்களுடைய புளித்தமாவுக்கு
விலகிமிகவும்எச்சரிக்கையாயிருங்களென்றார்.-
௭ நாம் அப்பங்களைக் கொண்டுவராததினாலல்ல
வோவென்றுசொல்லி, தங்களுக்குள்ளே அவர்
௮ கள் யோசித்துக்கொண்டிருப்பதை—யேசு கண்
டு, அவர்களைநோக்கி, அற்பவிசுவாசிகளே, நீங்
கள் அப்பங்களைக் கொண்டுவராததைக்குறித்து,
௯ உங்களுக்குள்ளே யோசிக்கிறதென்ன.—இதுவ
ரைக்கும் உங்களுக்குப் புத்திஇல்லையா; ஐயாயி
ரம்பேரைப் போஷித்த ஐந்துஅப்பங்களையும்,
துண்டங்களினால் நீங்கள் நிறைத்தகூடை இத்த
௰ னையென்பதையும்,—நாலாயிரம்பேரைப் போ
ஷித்த எழு அப்பங்களையும்,துண்டங்களினால்
நீங்கள் நிறைத்தகூடை இத்தனையென்பதையும்
௰௧ நினைத்திருக்கவில்லையா.—பரிசேயருஞ்சதுசேய
ருமானவர்களுடைய புளித்தமாவுக்கு விலகி எச்
சரிக்கையாயிருங்களென்னும் இவ்வாக்கை, நா
ன் அப்பத்தைக்குறித்துச் சொல்லவில்லையென்
று நீங்கள் சிந்தித்துக்கொள்ளாதிருக்கிறதெப்படி
௰௨ யென்றார்.—அப்பொழுது அவர்கள், அப்பத்தின்
புளித்தமாவுக்கல்ல, பரிசேயருஞ்சதுசேயருமா
னவர்களுடைய உபதேசத்துக்கே சாவதானமா
யிருக்கச்சொன்னாரென்றறிந்தார்கள்.
௰௩ பின்பு யேசு, பிலிப்பு செசாரியாவின் திசை
களில் வந்தபொழுது,தம்முடைய சீஷரைநோக்
கி,மனுபுத்திரனாகிய என்னை ஆரென்று சனங்கள்
௰௪ சொல்லுகிறார்களென்றுகேட்க,—அவர்கள், உம்
மைச்சிலர் யோவான் ஸ்நானனென்றும், சிலர்
இலீசாவென்றும், சிலர் எரேமியாவென்றும்,
தீர்க்கதரிசிகளில் ஒருவரென்றுஞ் சொல்லுகி
௰௫ றார்களென்றார்கள்.—பின்பு அவர் அவர்களை
நோக்கி, நீங்கள் என்னை ஆரென்று சொல்லுகி
௰௬ றீர்களென்று கேட்டார்.-அதற்குச் சீமோன் பே
துரு, நீர் சீவனுள்ள தேவனுடைய குமாரனா
௰௭ கிய கிறிஸ்து வென்றான்.—அவனுக்குத்தரமாய்
யேசு, யோனாவின் புத்திரனாகிய சீமோனே, நீ
வாழ்வுடையவன்: மாமிசரத்தமல்ல, பரமண்ட
லத்திலுள்ள என்பிதா இதை உனக்கு வெளிப்ப
௰௮ டுத்தினார்.—நீயே பேதுரு, இந்தக்கன்மலையின்
மேல் என் சபையைக்கட்டுவேன்;பாதாளத்தின்
வாசல்களும் அதைமேற்கொள்ளமாட்டாதென்
௰௯ று நான் உனக்குச் சொல்லுகிறேன்.—அன்றி
யும்,பரம இராச்சியத்தின்திறவுகோல்களை உனக்
குத்தருவேன்: பூமண்டலத்திலே நீ கட்டுவதெது
வோ, அது பரமண்டலத்திலேயுங் கட்டப்படும்:
பூமண்டலத்திலே நீ கட்டவிழ்ப்பதெதுவோ,
அது பரமண்டலத்திலேயுங் கட்டவிழ்க்கப்படு
மென்றுசொல்லி,—பின்பு தாம் கிறிஸ்துவா ௨௰
கிய யேசுவென்று ஒருவருக்குஞ்சொல்லாத
படிக்குத் தம்முடைய சீஷருக்குக் கட்டளை
யிட்டார்.
யேசு, தாம்யெரூஷலேமுக்குப்போய், மூதி ௨௧
யோர்களாலும், பிரதானஆசாரியர்களாலும்,வே
தபாரகர்களாலும் மிகுந்தவேதனை அனுபவிக்
கவும், கொலைசெய்யப்படவும், மூன்றாம்நாளி
ல் எழுந்திருக்கவும் வேண்டுமென்று அதுமுதல்
தம்முடைய சீஷருக்குத்தெரிவிக்கத்தொடங்கி
னார்.—அப்பொழுதுபேதுரு அவரைத்தனியேஅ ௨௨
ழைத்து, அவரைக்கடிந்து, கர்த்தாவே, அது
உமக்குத்தூரமாயிருப்பதாக: அதுஒருபொழுதும்
உமக்கு நேரிடாதென்றுசொல்ல,—அவர் திரும் ௨௩
பிப்பேதுருவைநோக்கி,சாத்தானே, நீ எனக்குப்
பின்னேபோ: எனக்கு இடறலாயிருக்கிறாய்: நீ
தேவனுக்கேற்றவைகளையல்ல, மனுஷருக்
கேற்றவைகளைச்சிந்திக்கிறாயென்றார்.
பின்பு யேசு தம்முடைய சீஷரைநோக்கி, ௨௪
என்னைப் பின்பற்றிநடக்க ஒருவன் விரும்பி
னால், தன்னைவெறுத்து, தன்சிலுவையை எடுத்
துக்கொண்டு,என்னைப்பின்பற்றக்கடவன்.-தன் ௨௫
பிராணனை இரட்சிக்கவிரும்புகிறவன் அதைஇ
ழந்துபோவான்: என்னிமித்தந்தன்பிராணனைஇ
ழந்துபோகிறவன்அதைக்கண்டடைவான்.-மனு ௨௬
ஷன், உலகமுழுவதையுஞ் சம்பாதித்துக்கொண்
டாலும், தன்பிராணனைஇழந்துபோனால்அவனு
க்கென்னலாபம்; ஒருமனுஷன் தன் பிராணனை
மீட்டுக்கொள்ளுகிறதற்கு எதைக்கொடுப்பான்.-
மனுபுத்திரன் தன்னுடையதூதரோடே தனது பி ௨௭
தாவின் மகிமையிலேவருவான்; அப்பொழுது
அவன் அவனவன் கிரியைக்கேற்க அவனவனுக்
குப்பலனளிப்பான்.—இங்கே நிற்கிறவர்களிற்சி ௨௮
லர், மனுபுத்திரன் தன்னுடைய இராச்சியத்தில்
வருவதைக்காண்கிறதற்குமுன்னே மரணமடை
யாரென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகி
றேனென்றார்.

## ௰௭. அதிகாரம்.

௧. கிறிஸ்து மறுரூபப்படல்: ௰௪. சந்திரரோகியைச் சொஸ்தப்படுத்தல்: ௨௨. அவர்தமதுமரணத்தை முன்னுரைத்தல்: ௨௪. தீர்வையைக்கொடுப்பதற்கு அற்புதத்தைச்செய்தல்.

ஆறுநாளுக்குப்பின்பு, யேசு, பேதுருவையும், ௧
யாக்கோபையும், அவன்சகோதரனாகிய யோவா
னையும்அழைத்துக்கொண்டு, தனித்திருக்கும்படி
உயர்ந்த மலையின்மேல்சென்று,—அவர்களுக்கு ௨

(௯) யோவா.௬.௯. (௰௩)லூக்.௯.௰௮. (௰௪)லூக்.௯.௭,௮,௯. (௰௬) யோவா.௬.௬௯. அப்.௮.௩௭. எபி.௧.௨,௫. ௧.யோவா.௪.௰௫. (௰௭)எபே.௨.௮. ௧.கொரி.௨.௰. கலா.௧.௰௭. (௰௮)யோவா.௧.௪௨. எபே.௨.௨௰. வெளி.௨௧.௰௪. யோபு.௩௮.௰௭. சங்.௯.௰௩. ஏசா.௩௮.௰. (௰௯)அதி.௰௮.௰௮. யோவா.௨௰.௨௩. (௨௩)௨.சாமு.௰௯.௨௨. ரோ.௮.௭. (௨௪)லூக்.௯.௨௩. அப்.௰௪.௨௨. ௧.தெச.௩.௩. ௨.தீமோ.௩.௰௨. (௨௫) லூக்.௰௭.௩௩. யோவா.௰௨.௨௫. (௨௬) சங்.௪௯.௭,௮. (௨௭) தானி.௭.௰. சக.௰௪.௫. யூதா.௰௪. யோபு.௩௪.௰௧. நீதி.௨௪.௰௨. எரே.௰௭.௰. ரோ.௨.௬. ௧.கொரி.௩.௮. ௨.கொரி.௫.௰. ௧.பேதுரு.௧.௰௭. வெளி.௨.௨௩.—(௰௭. அதி.)

முன்பாக மறுரூபமானார்: அவருடைய முகஞ்
சூரியனைப்போலப் பிரகாசித்தது, அவருடைய
வஸ்திரம் ஒளியைப்போல வெண்மையுள்ளதா
௩ யிற்று.—உடனே மோசேயும் இலீசாவும் அவ
ரோடே சம்பாஷணை பண்ணுகிறவர்களாய், அ
௪ வர்களுக்குத் தரிசனமானார்கள்.—அப்பொழுது
பேதுரு யேசுவை நோக்கி, கர்த்தாவே,
நாம் இங்கேதரிப்பது நலம்: உமக்குச்சித்தமா
னால், இவ்விடத்தில் உமக்கொன்று, மோசேக்
கொன்று, இலீசாவுக்கொன்றாக, மூன்று குடி
௫ சைகளைக் கட்டுவோமென்றான்.—அவன் பேசு
கையில் ஒளியுள்ள ஒருமேகம் அவர்கள்மேல்நிழ
லிட்டது:இவர் என் அன்பானகுமாரன், இவரிற்
பிரியமாயிருக்கிறேன்; இவருக்குச் செவிகொ
டுங்களென்னும்வாக்கு அந்தமேகத்திலிருந்து பி
௬ றந்தது.—சீஷர் அதைக் கேட்டு, முகங்குப்புற
௭ விழுந்து, மிகவும் பயந்தார்கள்.—அப்பொழுது
யேசு வந்துஅவர்களைத்தொட்டு, எழும்புங்கள்,
௮ பயப்படாதிருங்களென்றார்.—அவர்கள் கண் ஏ
றிட்டுப் பார்த்தபொழுது, யேசுவையேயன்
௯ றி, வேறொருவரையுங் காணவில்லை.-பின்பு அ
வர்கள் மலையினின்று இறங்குகிறபொழுது, யே
சு அவர்களைநோக்கி, மனுபுத்திரன்மரித்தோரிலி
ருந்து எழுந்திருக்கும்வரைக்கும், நீங்கள் இந்தத்
தரிசனத்தை ஒருவருக்குஞ் சொல்லவேண்டா
௰ மென்று கட்டளையிட்டார்.—அப்பொழுது
அவருடையசீஷர் அவரைநோக்கி, முன்னமே
இலீசா வரவேண்டுமென்று வேதபாரகர் சொல்
௰௧ லுகிறதென்னவென்றுகேட்க,—அதற்குத்தரமாக
யேசு, முன்பு இலீசாவந்து எல்லாவற்றையுஞ்
௰௨ சீர்ப்படுத்தவேண்டுமென்பது மெய்.—இலீசாவந்
தாயிற்றென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்,
அவர்கள் அவனென்றறியாமல் அவனுக்குத் தங்
கள் இஷ்டப்படிசெய்தார்கள். அப்படியே மனு
புத்திரனும் அவர்களால் உபத்திரவப்படுவானெ
௰௩ ன்றார்.—அப்பொழுது அவர் யோவான்ஸ்நான
னைக்குறித்துத் தங்களுடனே பேசினாரென்று சீ
ஷர் அறிந்தார்கள்.
௰௪ பின்பு அவர்கள் சனக்கூட்டத்தினிடத்தில்
சேர்ந்தபொழுது,ஒருமனுஷன் அவரிடத்தில்வந்
௰௫ து, முழங்காற்படியிட்டு,—கர்த்தாவே, என்ம
கன்மேலிரங்கும்: அவன்சந்திரரோகியாய்க்கொ
டியவேதனைப்படுகிறான்: அடிக்கடி அக்கினியி
௰௬ லும், அடிக்கடிசலத்திலும் விழுகிறான்.—அவனை
உம்முடைய சீஷரிடத்திற் கொண்டுவந்தேன்,
அவர்கள் அவனைச் சொஸ்தப்படுத்தக்கூடாமற்
௰௭ போயிற்றென்றான்.—அதற்குத்தரமாய் யேசு,
ஆ, விசுவாசமில்லாதமாறுபாடுள்ளசந்ததியாரே,
எதுவரைக்கும் உங்களோடிருப்பேன்; எதுவ
ரைக்கும் உங்களைச்சகிப்பேன்; அவனை என்
௰௮ னிடத்திற் கொண்டுவாருங்களென்றார்.—யேசு
அந்தப்பிசாசைக்கடிந்தார்; உடனே அது அ
வனைவிட்டுப்போயிற்று: அந்நேரமேஅந்தப்பிள்
ளைசொஸ்தமடைந்தான்.—பின்பு சீஷர் தனித் ௰௯
து யேசுவினிடத்தில்வந்து, ஏன் நாங்கள்
அதை அகற்றக்கூடாமற்போயிற்றென்றார்கள்.—
யேசு அவர்களைநோக்கி, உங்களுடைய அவிசு ௨௰
வாசத்தினாலேதான்: ஒருகடுகுவிதையளவு விசு
வாசம் உங்களுக்குண்டானால், நீங்கள் இந்தம
லையைநோக்கி, இவ்விடம்விட்டு அப்புறம்போ
வென்றுசொல்ல, அதுபோம்; உங்களால் கூடா
தகாரியம் ஒன்றுமிராதென்று மெய்யாய் உங்க
ளுக்குச்சொல்லுகிறேன்.—ஆனாலும் பிரார்த்தனை ௨௧
யினாலும், உபவாசத்தினாலுமேயன்றி, இந்த இ
னம் அகலாதென்றார்.
அவர்கள் கலிலேயாநாட்டிலே சஞ்சரித்தசம ௨௨
யத்தில், யேசு அவர்களைநோக்கி,மனுபுத்திரன்
மனுஷருடைய கையில் ஒப்பிக்கப்படுவான்.—
அவர்கள் அவனைக்கொலைசெய்வார்கள், அவன் ௨௩
மூன்றாம்நாளில் எழுந்திருப்பானென்றார். அதி
னால் அவர்கள்மிகுந்த துக்கமடைந்தார்கள்.
அவர்கள் கப்பர்நாகூமில் வந்தபொழுது, வ ௨௪
ரிப்பணஞ் சேர்க்கிறவர்கள் பேதுருவினிடத்
தில்வந்து, உங்கள்போதகர் வரிப்பணங் கொ
டுக்கிறதில்லையாவென்று கேட்க, அவன், கொ
டுக்கிறாரென்றான்.—அவன் வீட்டிலேவந்தபொ ௨௫
ழுது, அவன் பேசுகிறதற்குமுன்னே யேசு
அவனைநோக்கி, சீமோனே, பூமியிலுள்ள இரா
சாக்கள் ஆர்கையிலிருந்து தீர்வையும், வரியும்
வாங்குகிறார்கள்; தங்கள்சந்ததியார்கையிலிருந்
தா, அந்நியர்கையிலிருந்தா, இது உனக்கு எப்
படித்தோன்றுகின்றதென்று கேட்க,—அந்நியர் ௨௬
கையிலிருந்தென்று பேதுரு அவருக்குச்சொன்
னான். யேசு, அப்படியானால் சந்ததியார் நீங்க
லாயிருப்பார்கள்.—ஆனாலும் நாம் அவர்களுக்கு ௨௭
இடறல்வருவியாதபடிக்கு, நீ கடலுக்குப்போ
ய்த் தூண்டிலைப்போட்டு, முதல் அகப்படுகிற
மீனை எடு, அதின்வாயைத் திறந்துபார், அதில்
ஒருவெள்ளிக்காசைக்காண்பாய்: அதை எடுத்து
வந்து, எனக்காகவும், உனக்காகவும் அவர்களுக்
குக்கொடுவென்றார்.

## ௰௮. அதிகாரம்.

௧. கிறிஸ்துத் தம்முடைய சீஷர் தாழ்ந்த சிந்தை
யுள்ளவர்களும், இடறல் வருவியாதவர்களுமா
யிருக்கவேண்டுமென்று போதித்தல்: ௰௫. குற்
றஞ்செய்த சகோதரனை நடத்தும் முறைமை
யைக்காட்டல்: ௨௧. இத்தனைதரம் மன்னிக்க
வேண்டுமென்று குறித்தல்: ௨௩. மன்னிப்ப
தைக்குறித்துஒருதிருஷ்டாந்தத்தைக்காட்டல்.

அக்காலத்திலே சீஷர் யேசுவினிடத்தில் ௧
வந்து, பரமஇராச்சியத்தில் யாவன் பெரியவ
னென்றார்கள்.—யேசு ஒரு சிறுபிள்ளையைத் தம் ௨
மிடத்தில் அழைத்து, அதை அவர்கள்மத்தியில்
நிறுத்தி,—நீங்கள் சீர்ப்பட்டுச் சிறுபிள்ளைகளைப் ௩

(௫) ௨.பேதுரு.௧.௰௭. மாற்.௧.௰௧. லூக்.௩.௨௨. ஏசா.௪௨.௧. உபா.௰௮.௰௫,௰௯. அப்.௩.௨௨,௨௩.(௬)௨.பேதுரு.௧.௰௮. (௭) தானி.௯.௨௧. (௰௧) மல்.௪.௬. லூக்.௧.௰௬,௰௭. அப்.௩.௨௧. (௨௰) ௧.கொரி.௰௩.௨.—(௰௮. அதி. ௩.) சங்.௱௩௧.௨. மாற்.௰.௰௪. லூக்.௰௮.௰௬. ௧.கொரி.௰௪.௨௰. ௧.பேதுரு.௨.௩.

போலாகாவிட்டால், பரம இராச்சியத்தில் பிர
வேசிக்கமாட்டீர்களென்று மெய்யாய் உங்களுக்
௪ குச் சொல்லுகிறேன்.—ஆகையால் இந்தச்சிறு
பிள்ளையைப்போலத் தன்னைத்தாழ்த்துகிறவனெ
வனே, அவன் பரமஇராச்சியத்தில்பெரியவன்.-
௫ இப்படிப்பட்ட ஒரு பிள்ளையை என்நாமத்தி
னால்ஏற்றுக்கொள்ளுகிறவன், என்னையும்ஏற்றுக்
௬ கொள்ளுகிறான்.—என்மேல் விசுவாசமாயிருக்
கிற இந்தச்சிறியரில் ஒருவனுக்கு இடறல்வரு
விக்கிறவனெவனே, அவனுடையகழுத்தில் ஏந்
திரக்கல்லைக்கட்டி, அவனை ஆழமான கடலில்
அமிழ்த்துவது அவனுக்கு நலம்.
௭ ஐயோ, இடறல்களினிமித்தம் உலகத்துக்கு
ஆபத்துவரும்; இடறல்கள் வருவது அவசியம்;
ஆனாலும் ஐயோ, இடறல்களை வருவிப்பவனுக்
௮ கு ஆபத்துவரும்.-ஆதலால் உன்கையானாலும்,
காலானாலும் உனக்கு இடறல் வரப்பண்ணி
னால், அவைகளைத் தறித்தெறிந்துவிடு: இரண்டு
கைகளோடாயினும், இரண்டு கால்களோடாயி
னும்நித்தியஅக்கினியில்தள்ளப்படுவதிலும், சப்
பாணியாயாயினும், ஊனனாயாயினுஞ் சீவனிற்
௯ பிரவேசிப்பது உனக்கு நலம்.-மேலும் உன்கண்
உனக்கு இடறல்வரப்பண்ணினால், அதைத்தோ
ண்டி எறிந்துவிடு: இரண்டுகண்ணையுடையவ
னாய்நரகாக்கினியில் தள்ளப்படுவதிலும்,ஒற்றை
க்கண்ணையுடையவனாய்ச்சீவனில் பிரவேசிப்ப
௰ து உனக்கு நலம்.-இந்தச் சிறுவரில் ஒருவனையும்
அவமதியாதபடி எச்சரிக்கையாயிருங்கள்; அவர்
களுடைய தூதர்கள் பரமண்டலத்தில் என்பரம
பிதாவின் முகத்தைநித்தமுந் தரிசித்திருக்கிறார்க
௰௧ ளென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.—அன்
றியும், மனுபுத்திரன் கெட்டுப்போனதை இரட்
௰௨ சிக்கவந்தான்.—உங்களுக்கு எப்படித்தோன்று
கின்றது; ஒருமனுஷனுக்குண்டான நூறு ஆடுக
ளில்ஒன்றுதப்பிப்போனால், அவன்தொண்ணூற்
றொன்பது ஆடுகளையும் மலைகளில் விட்டு, தப்
௰௩ பிப்போனதைப்போய்த் தேடுவானல்லவா.—அ
வன் அதைக்கண்டால், தப்பிப்போகாமலிருந்
ததொண்ணூற்றொன்பதைப்பார்க்கிலும்,அதைக்
குறித்து அதிகமாய்ச் சந்தோஷப்படுவானென்று
௰௪ மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.-அந்
தப்படி இந்தச்சிறியரில் ஒருவனாயினுங் கெட்
டுப்போவது, பரமண்டலத்திலுள்ள உங்கள் பி
தாவுக்குச்சித்தமல்ல.
௰௫ உன் சகோதரன் உனக்குவிரோதமாய்க் குற்
றஞ்செய்தால், நீ போய், நீயும் அவனுந் தனித்
திருக்கையில், அவனைக்கடிந்துகொள்: அவன்
உனக்குச்செவிகொடுத்தால், உன் சகோதரனை
௰௬ ஆதாயமாய்ப்பெற்றுக்கொண்டாய்.—அவன் உ
னக்குச் செவிகொடாவிட்டால், காரியமெல்

லாம் இரண்டு மூன்றுசாட்சிகளுடைய வாக்கி
னால் நிலைப்படும்படிக்கு, நீ இரண்டொருவரை
அழைத்துப்போ.—அவன் அவர்களுக்கு அமை ௰௭
யாதிருந்தால், நீ அதைச் சபைக்கு அறிவிக்க
வேண்டும்: அவன் சபைக்கும் அடங்காதிருந்
தால், நீ அவனை அஞ்ஞானியையும் ஆயக்கார
னையும்போல் எண்ணுவாயாக.-பூமண்டலத்தில் ௰௮
நீங்கள் எவைகளைக் கட்டுவீர்களோ, அவைகள்
பரமண்டலத்திலுங் கட்டப்படும்: பூமண்டலத்
தில் எவைகளைக்கட்டவிழ்ப்பீர்களோ, அவை
கள்பரமண்டலத்திலுங்கட்டவிழ்க்கப்படுமென்
று மெய்யாய் உங்களுக்குச்சொல்லுகிறேன்.—
அன்றியும், பூமண்டலத்தில் உங்களில் இருவர் ௰௯
ஒருமனப்பட்டு வேண்டுவதெதுவோ, அது பர
மண்டலத்திலுள்ள என் பிதாவினால் அவர்களுக்
கு அருளப்படும்.—இருவராயினும், மூவராயி ௨௰
னும் என்நாமத்தில் எங்கே கூடிவருகிறார்களோ,
அங்கே நான் அவர்கள்மத்தியிலிருக்கிறேனென்
று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.
அப்பொழுது பேதுரு அவரிடத்தில் வந்து, ௨௰௧
கர்த்தாவே, என் சகோதரன் எனக்குவிரோத
மாய்க் குற்றஞ்செய்தால், அவனுக்கு நான் எத்த
னைதரம் மன்னிக்கவேண்டும்; ஏழுதரமோவென்
றுகேட்க,-யேசு அவனைநோக்கி, ஏழுதரம் மாத் ௨௰௨
திரமல்ல: ஏழு எழுபது தரமென்று உனக்குச்
சொல்லுகிறேன்.
ஆனபடியால் பரம இராச்சியம், தன்பணிவி ௨௰௩
டைக்காரருடனே கணக்குப்பார்க்கச் சித்தங்
கொண்ட ஒரு இராசனுக்கொப்பாயிருக்கின்ற
து.—அவன் கணக்குப்பார்க்கத்தொடங்கினபொ ௨௰௪
ழுது, பதினாயிரந்தாலந்து கடன்பட்ட ஒருவன்
அவனிடத்திற்கொண்டுவரப்பட்டான்.—அவன் ௨௰௫
கடனிறுக்கக் கூடாமற்போனபடியால், அவன்
ஆண்டவன் அவனையும், அவனுடைய மனைவி
யையும், பிள்ளைகளையும், அவனுக்குண்டானயா
வையும்விற்றுக் கடன்தீர்க்கும்படி கட்டளையிட்
டான்.-அப்பொழுதுஅந்தப்பணிவிடைக்காரன் ௨௰௬
விழுந்துவணங்கி, ஆண்டவனே, எல்லாவற்றை
யும் உமக்குத் தந்து தீர்க்கிறேன், நீர் என்மேல்
இரங்கிப்பொறுக்க வேண்டுமென்று வேண்டிக்
கொண்டான்.—அப்படியே ஆண்டவன் அந்தப் ௨௰௭
பணிவிடைக்காரன்மேலிரங்கி, அவனைவிடுவித்
து, கடனையும் அவனுக்கு மன்னித்தான்.-பின்பு ௨௰௮
அந்தப் பணிவிடைக்காரன் புறப்பட்டுப் போ
கையில், தன்னோடே பணிவிடைசெய்து, தன்
னிடத்தில் நூறு தேனாரியக்காசு கடன்பட்ட ஒ
ருவனைக்கண்டு, அவனைப்பிடித்து, தொண்டை
யைநெரித்து, நீபட்டகடனை எனக்குத்தந்துதீர்க்
கவேண்டுமென்றான்.-அப்பொழுதுஅந்தப்பணி ௨௰௯
விடைக்காரன் அவன்பாதத்தில்விழுந்து, எல்லா

(௬) லூக்.௰௭.௧,௨.(௭)லூக்.௰௭.௧. ௧.கொரி.௰௧.௰௯. அதி.௨௬.௨௪. (௰) சங்.௩௪.௭. சக.௰௩.௭. எபி.௧.௰௪. எஸ்த.
௧.௰௩. லூக்.௧.௰௯. (௰௧) லூக்.௰௯.௰. யோவா.௩.௰௭. (௰௨) லூக்.௰௫.௪. (௰௫) லேவி.௰௯.௰௭. லூக்.௰௭.௩. யாக்.
௫.௨௰. ௧.பேதுரு.௩.௨. (௰௬) உபா.௰௭.௬. யோவா.௮.௰௭. ௨.கொரி.௰௩.௧. எபி.௰.௨௮. (௰௭) ரோ.௰௬.௰௭.
௧.கொரி.௫.௯. ௨.தெச.௩.௬,௰௪. ௨.யோவா.௰. (௰௮) யோவா.௨௰.௨௩. ௧.கொரி.௫.௪. (௰௯) ௧.யோவா.௩.௨௨.
(௨௰௧) லூக்.௰௭.௪. (௨௰௨) மாற்.௰௧.௨௫. கொலோ.௩.௰௩. (௨௰௫) ௨.இரா.௪.௧.

வற்றையும் உனக்குத்தந்து தீர்க்கிறேன், என்
மேல் இரங்கிப்பொறுக்கவேண்டுமென்றான்.—
௩௰ ஆனாலும் அவன் சம்மதியாமல்போய், அவன்
பட்டகடனைத்தீர்க்குமளவும் அவனைக்காவலிற்
௩௧ போடுவித்தான்.—நடந்தவைகளை மற்றப்பணி
விடைக்காரர்கண்டு, மிகவுந்துக்கித்து, தங்கள்
ஆண்டவனிடத்தில்போய், நடந்தயாவையும் இ
௩௨ வனுக்குத் தெரிவித்தார்கள்.—அப்பொழுது அ
வன் ஆண்டவன் அவனை அழைப்பித்து, அவ
னிடத்தில், தீயனான பணிவிடைக்காரனே, நீ
என்னைவேண்டிக்கொண்டபடியால், நான் அந்
தக்கடன்முழுமையும் உனக்குமன்னித்தேனே.-
௩௩ நான் உன்மேலிரங்கினபடி, நீயும் உன் உடன்
பணிவிடைக்காரன்மேல் இரங்கவேண்டுமல்ல
௩௪ வாவென்றுசொல்லி.-அவன் ஆண்டவன் குரோ
தங்கொண்டு, அவன் பட்டகடன்கள்யாவையுந்
தனக்குக்கொடுத்துத் தீர்க்குமளவும், அவனைச்சி
றைச்சாலைக்காவலாளரிடத்தில் ஒப்பித்தான்.—
௩௫ நீங்கள், அவனவன் சகோதரன்செய்த தப்பிதங்
களை மனப்பூருவமாய் மன்னியாதிருந்தால், இப்
படியே என் பரமபிதாவும் உங்களுக்குச்செய்
வாரென்றார்.

## ௰௯. அதிகாரம்.

௧. வியாதியுள்ளவர்களைச் சொஸ்தப்படுத்தல்: ௩. விவாகத்தைக்குறித்து நிருணித்தல்: ௰௩. குழந்தைகளை அங்கிகரித்தல்: ௰௬. வாலிபனொருவனுக்குப்போதித்தல்: ௨௩. செல்வர் இரட்சிக்கப் படுவது அரிதெனக்காட்டல்: ௨௭. தம்மைப் பின்பற்றுகிறவர்களுக்குப் பலனளிக்க வாக்குத்தத்தஞ்செய்தல்.

இவ்வாக்குகளைச்சொல்லி முடித்தபின்பு, யே
சு, கலிலேயா நாட்டைவிட்டு, யோர்தானருகே
யுள்ள யூதேயாநாட்டின் எல்லைகளுக்குச் சென்
௨ றார்.—அநேகசனங்கள் அவரைப் பின்சென்றார்
கள்; அவ்விடத்தில் அவர்களை அவர் சொஸ்தப்
படுத்தினார்.
௩ அப்பொழுது பரிசேயரிற் சிலர் அவரிடத்தி
லேவந்து, அவரைச்சோதிக்கும்படி, புருஷன் ஒ
ருவன் தன் மனைவியை எந்தநிமித்தத்தினாலாயி
௪ னுந் தள்ளிவிடலாமாவென்றுகேட்க,-அவர் அ
தற்குத்தரமாய், ஆதியிலே சிருஷ்டிகர்த்தர் மனு
ஷரைச் சிருஷ்டித்தபொழுது, அவர்களை ஆணும்
பெண்ணுமாகச் சிருஷ்டித்தாரென்பதையும்,—
௫ "இதினிமித்தம் ஒருவன் தன் பிதா மாதாவைப்பி
ரிந்து, தன் மனைவியைப்பற்றிக்கொள்வான், அ
வர்கள் இருவரும் ஏகாங்கமாயிருப்பார்கள்,"
என்று அவர் சொன்னாரென்பதையும், நீங்கள்
௬ வாசிக்கவில்லையா.-ஆதலால் அவர்கள் இருவரா
யிராமல்,ஏகாங்கமாயிருக்கிறார்கள். தேவன் இ
ணைத்ததை மனுஷன் பிரிக்கப்படாதென்றார்.—
அவர்கள்,அப்படியானால் தொடராமுறிகொடுத் ௭
து, அவளைத்தள்ளிவிடும்படி மோசே கட்டளை
யிட்டதேதென்றுகேட்க,—அதற்கு அவர், உங் ௮
கள் இருதயகடினத்தினிமித்தம் நீங்கள் உங்கள்
மனைவிகளைத்தள்ளிவிடும்படி மோசே உங்களுக்
கு இடந்தந்தான்: ஆதிமுதலோ அப்படியிருக்கவி
ல்லை.—ஆதலால் எவனாகிலும் விபசாரத்தினிமித் ௯
தத்தினாலன்றி, தன் மனைவியைத் தள்ளிவிட்டு,
வேறொருத்தியை விவாகம்பண்ணினால் அவன்
விபசாரஞ்செய்கிறான்: தள்ளிவிடப்பட்டவளை
விவாகம்பண்ணுகிறவனும் விபசாரஞ்செய்கிறா
னென்று உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.
அவருடைய சீஷர் அவரைநோக்கி, ஸ்திரியு ௰
டனே புருஷனுடைய சம்பந்தம் இப்படியிருக்
குமேயாகில், விவாகம்பண்ணுவது நன்மையல்
லவென்றார்கள்.—அவர், அவர்களுடனே,எவர்க ௰௧
ளுக்கு அளிக்கப்பட்டதோ அவர்களேயன்றி,
மற்றவர்கள் இவ்வாக்கைப்பற்றார்கள்.—அண் ௰௨
ணகர்களுண்டு, சிலர் மாதாவின் கருப்பத்தில்
அப்படியே பிறந்தார்கள்: சிலர் மற்றமனுஷரால்
அண்ணகர்களாக்கப்பட்டார்கள்: சிலர்பரம இ
ராச்சியத்தினிமித்தந் தங்களை அண்ணகர்களாக்
கினார்கள். இதற்குடன்பட வல்லவனெவனோ,
அவன் உடன்படக்கடவனென்றார்.
பின்பு அவர் குழந்தைகளின்மேல் கைவைத் ௰௩
து, அவைகளுக்காக வேண்டுதல்பண்ணும்படி,
அவைகளை அவரிடத்திற்கொண்டுவந்தார்கள்: சீ
ஷர் அவைகளைக் கொண்டுவந்தவர்களைக்
கடிந்தார்கள்.—யேசு, குழந்தைகளை என்னி ௰௪
டத்தில் வரவிடுங்கள், தடைபண்ணாதிருங்கள்:
பரமஇராச்சியம் அப்படிப்பட்டவைகளுடைய
தென்றுசொல்லி,—அவைகள்மேல் தம்முடை ௰௫
ய கைகளைவைத்து, பின்பு அவ்விடம்விட்டுப்
போனார்.
அப்பால் ஒருவன் அவரைநோக்கி, நல்லபோ ௰௬
தகரே, நித்தியசீவனை நான் பெறும்பொருட்டு
எந்த நன்மையைச் செய்யவேண்டுமென்றுகேட்
க,-அவர் அவனுடனே, நீ என்னை நல்லவனென் ௰௭
று சொல்லுகிறதென்ன; தேவன் ஒருவரேயன்
றி, நல்லவன் ஒருவனுமில்லை: நீ சீவனில் பிர
வேசிக்கவிரும்பினால், கட்டளைகளைக்காத்துநட
வென்றார்.—அவன் அவருடனே அவைகள் எ ௰௮
வையென்றுகேட்க, யேசு, "கொலைசெய்யாயா
க, விபசாரஞ்செய்யாயாக, களவுசெய்யாயாக,
பொய்ச்சாட்சிசொல்லாயாக,—உன் பிதாவை ௰௯
யும் மாதாவையுங் கனம்பண்ணுவாயாக: உன்
னைப்போலப் பிறனையும் நேசிப்பாயாக," என்ப
வைகளே யென்றார்.—அதற்கு அந்த வாலிபன், ௨௰
அவரிடத்தில், இவைகளை எல்லாம் நான் சிறுபி
ராயமுதல் காத்துநடக்கிறேன்: இனி எனக்கென்

(௩௫) நீதி.௨௧.௰௩. மாற்.௰௧.௨௬. யாக்.௨.௰௩.—(௰௯. அதி. ௧.) யோவா.௰.௪௰. (௪) ஆதி.௧.௨௭. மல்.௨.௰௫. (௫) ஆதி.௨.௨௪. மாற்.௰.௫—௯. எபே.௫.௩௧. ௧.கொரி.௬.௰௬. (௭) உபா.௨௪.௧. (௯) லூக்.௰௬.௰௮. ௧.கொரி.௭.௰,௰௧. (௰) நீதி.௨௧.௰௯. (௰௧) ௧.கொரி.௭.௨,௭,௯,௰௭. (௰௨) ௧.கொரி.௭.௩௨,௩௪. (௰௩) லூக்.௰௮.௰௫. (௰௪) அதி.௰௮.௩. (௰௬) லூக்.௰௮.௰௮. லூக்.௰.௨௫. (௰௮) யாத்.௨௰.௰௩. உபா.௫.௰௭. (௰௯) லேவி.௰௯.௰௮. ரோ.௰௩.௯. கலா.௫.௰௪. யாக்.௨.௮.

௨௧ ன குறைவென்றான்.-யேசு அவனைநோக்கி, நீ
பூரண சற்குணனாயிருக்கவிரும்பினால்,போய்,உ
னக்குண்டானவைகளை விற்றுத் தரித்திரருக்குக்
கொடு, நீ பரமண்டலத்தில் பொக்கிஷத்தைப்
பெறுவாய்: பின்பு வந்து என்னைப் பின்செல்
௨௨ லென்றார்.—வாலிபன் இவ்வாக்கைக்கேட்டு, அ
வன்மிகுந்த செல்வத்தையுடையவனானதினாலே
விசனப்பட்டுப்போய்விட்டான்:
௨௩ அப்பொழுது யேசு தம்முடைய சீஷரை
நோக்கி, ஐசுவரியவான் பரம இராச்சியத்தில் பி
ரவேசிப்பதரிதென்று மெய்யாய் உங்களுக்குச்
௨௪ சொல்லுகிறேன்.-ஐசுவரியவான் தேவனுடை
ய இராச்சியத்தில் பிரவேசிப்பதிலும், ஒரு ஒட்
டகம் ஊசியின் காதிலே நுழைவது எளிதென்
௨௫ று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.—அ
வருடைய சீஷர் அதைக்கேட்டு மிகவும் பிர
மித்து, அப்படியானால் ஆர் இரட்சிக்கப்படுவார்
௨௬ களென்று கேட்க,-யேசு அவர்களைநோக்கி, அ
வர்களுடனே, மனுஷரால்இது கூடாதகாரியம்:
தேவனோ எந்தக்காரியத்தையுஞ் செய்யவல்
லவரென்றார்.
௨௭ அப்பொழுது பேதுரு அவரைநோக்கி, பா
ரும், நாங்கள் எல்லாவற்றையும்விட்டு உம்மைப்
பின்சென்று வருகிறோமே; எங்களுக்கென்ன
௨௮ பலன் வருமென்றுகேட்க,—யேசு அவர்களை
நோக்கி, புதுச்சிருஷ்டிதோன்றுங்காலத்தில், ம
னுபுத்திரன் தமது மகிமையுள்ள சிங்காசனத்தில்
வீற்றிருக்கும்பொழுது, என்னைப் பின்சென்று
வந்த நீங்களும், இஸரவேலராகிய பன்னிரண்
டு வமிசத்தாருக்கு நியாயத்தீர்ப்புக்கொடுக்கும்ப
டி, பன்னிரண்டு சிங்காசனங்களில் வீற்றிருப்
பீர்களென்று மெய்யாய்உங்களுக்குச்சொல்லுகி
௨௯ றேன்.—என் நாமத்தினிமித்தம், வீடுகளையாகி
லும், சகோதரரையாகிலும், சகோதரிகளையாகி
லும், பிதாவையாகிலும், மாதாவையாகிலும், ம
னைவியையாகிலும், பிள்ளையையாகிலும், நிலங்
களையாகிலும் விட்டவனெவனோ, அவன் நூறு
மடங்குபலன்பெற்று, நித்திய சீவனையுஞ் சுதந்த
௩௰ ரித்துக்கொள்வான்.—முந்தினோர் அநேகர் பிந்தி
னோராவார்கள்;பிந்தினோர்முந்தினோராவார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. திராட்சத்தோட்டக்காரரை உவமித்தல்: ௰௭. கிறிஸ்துத் தமது மரணத்தை முன்னுரைத்தல்: ௨௰. சீஷர் இருவருக்கு உத்தரஞ்சொல்லித் தாழ்ந்தசிந்தை அவசியமென்று போதித்தல்: ௨௯. குருடர் இருவருக்குப்பார்வையை அருளல்.

பரமஇராச்சியம், தன் திராட்சத்தோட்டத்திற்
குக் கூலியாட்களை அழைத்துவரும்படி அதிகா
லையிலே புறப்பட்ட வீட்டெசமானனுக்கொப்
௨ பாயிருக்கின்றது.-அவன் கூலியாட்களிடத்தில்,
நாளொன்றுக்கு ஒரு தேனாரியப்பணங் கூலி
பேசி, அவர்களைத் தன் திராட்சத்தோட்டத்திற்
கு அனுப்பினான்.—மூன்றாம்மணி நேரத்திலும் அ ௩
வன் புறப்பட்டு, கடைத்தெருவிலே வேலையில்
லாமல் நிற்கிற வேறுசிலரைக்கண்டு,—நீங்களுந் ௪
திராட்சத்தோட்டத்திற்குப் போங்கள், நியாய
மானபடி உங்களுக்குத் தருவேனென்று அவர்
களுக்குச் சொல்ல, அவர்களும் போனார்கள்.-
ஆறாம், ஒன்பதாம்மணி நேரங்களிலும் அவன் ௫
திரும்பப்புறப்பட்டு அப்படியே செய்தான்.—
பதினோராம் மணிநேரத்திலும் அவன் புறப் ௬
பட்டு, வேலையில்லாமல் நிற்கிற வேறுசிலரைக்
கண்டு, அவர்களுடனே பகல்முழுவதும் நீங்
கள் இங்கே வீணராய் நிற்கிறதென்னவென்று
கேட்க,—அவர்கள் அவனுடனே, ஒருவரும் எங் ௭
களை வேலைகொள்ளவில்லையென்றார்கள்.அவன்
அவர்களுடனே, நீங்களுந் திராட்சத்தோட்டத்
திற்குப் போங்கள்; நியாயமானபடி கூலிவாங்
கிக்கொள்வீர்களென்றான்.—சாயங்காலத்தில், தி ௮
ராட்சத்தோட்டத்தின் எசமானன் தன் காரி
யக்காரனைநோக்கி, நீ கூலிக்காரரை அழைத்து,
பின்பு வந்தவர்கள்தொடங்கி முன்பு வந்தவர்
கள்வரைக்குங் கூலியைக்கொடுவென்றான்.—
அப்படிப் பதினோராம் மணிநேரத்தில் வேலை ௯
கொள்ளப்பட்டவர்கள் வந்து, ஆளுக்கு
ஒவ்வொரு தேனாரியப்பணம் வாங்கிக்கொண்
டார்கள்.-முன்பு வேலைக்குவந்தவர்களுஞ்சேர்ந் ௰
து, தங்களுக்கு அதிக கூலிவருமென்றெண்ணி
னார்கள்; அவர்களும் ஆளுக்கு ஒவ்வொரு தே
னேரியாப்பணத்தைவாங்கினார்கள்.—அதைவாங் ௰௧
குகிறபொழுது அவர்கள், வீட்டெசமானனுக்கு
விரோதமாய்மொறுமொறுத்து,—பின்னேவந்த இ ௰௨
வர்கள் ஒருமணிநேரம் மாத்திரம் வேலைசெய்
தார்கள், பகலின் பாரமும், வெயிலும் பொ
றுத்த எங்களுக்கு இவர்களைச்சமமாக்கினீரென்
றார்கள்.—அவர்களில் ஒருவனுக்கு உத்தரமாய் ௰௩
அவன், சிநேகிதா, நான் உனக்கு அநியாயஞ்
செய்யவில்லை: நீ ஒரு தேனாரியப்பணங் கூலி
பேசி என்னுடன் சம்மதிக்கவில்லையா.—உன்னு ௰௪
டையதை நீ வாங்கிக்கொண்டுபோ: நான் உனக்
குக் கொடுத்ததுபோல, பின்னேவந்த இவனுக்
குங்கொடுக்க எனக்கு இஷ்டமாயிருக்கின்றது.-
என்னுடையதை நான் என் இஷ்டப்படி நடத் ௰௫
தலாகாதா; நான் தயாளனாயிருப்பதினாலோ, நீ
வன்கண்ணனாயிருக்கிறாயென்றான்.—இவ்வித ௰௬
மாய்ப் பிந்தினோர் முந்தினோராவார்கள், முந்தி
னோர் பிந்தினோராவார்கள்: அழைக்கப்பட்ட
வர்கள் அநேகர், தெரிந்துகொள்ளப்பட்டவர்க
ளோ சிலரென்றார்.
யேசு யெருஷலேமுக்குப் பிரயாணமாய்ப் ௰௭
போகிறபொழுது, வழியிலே பன்னிரண்டுசீஷ
ரையுந்தனிப்பட அழைத்து, அவர்களைநோக்கி,-

(௨௧) லூக்.௰௨.௩௩. அப்.௨.௪௫. ௧.தீமோ.௬.௰௮,௰௯.(௨௩)மாற்.௰.௨௪. ௧.கொரி.௧.௨௬. ௧.தீமோ.௬.௯,௰. (௨௪) ஆதி.௰௮.௰௪. யோபு.௪௨.௨. எரே.௩௨.௰௭. சக.௮.௬. லூக்.௧.௩௭. (௨௭) லூக்.௰௮.௨௮. உபா.௩௩.௯. லூக்.௫.௰௧. (௨௮) லூக்.௨௨.௨௮,௨௯,௩௰. ௧.கொரி.௬.௨,௩. வெளி.௨.௨௬. (௨௯) லூக்.௰௮.௨௯,௩௰. (௩௰) லூக்.௰௩.௩௰.— (௨௰. அதி. ௨.) அதி.௰௮.௨௮. (௰௫) ரோ.௯.௨௧. உபா.௰௫.௯. நீதி.௨௩.௬. (௰௭) லூக்.௰௮.௩௧. யோவா.௰௨.௰௨.

௰௮ கேளுங்கள், நாம் யெருஷலேமுக்குப் போகி
ரும்; அங்கே மனுபுத்திரன் பிரதான ஆசாரிய
ரிடத்திலும், வேதபாரகரிடத்திலும் ஒப்பிக்கப்
படுவான், அவர்கள் அவனுக்கு மரணதண்டனைத்
௰௯ தீர்ப்புச்செய்து,—அந்நியர் அவனைப்பரிகாசம்
பண்ணவும், வாரினால் அடிக்கவும், சிலுவைம
ரத்தில் அறையவும் அவர்களிடத்தில் ஒப்பிப்
பார்கள்: பின்பு மூன்றாம்நாளில் உயிர்த்தெழும்
புவானென்றார்.
௨௰ அப்பொழுது செபேதேயுவின் புத்திரருடை
ய மாதா, தன்புத்திரரோடு அவரிடத்தில்வந்து
வணங்கி, அவரிடத்தில் ஒரு விண்ணப்பம்பண்
௨௧ ணியிருந்தாள்.—அவர் உனக்கென்னவேண்டு
மென்று அவளிடத்திற்கேட்க, அவள் அவரை
நோக்கி, உம்முடைய இராச்சியத்தில் என் புத்தி
ரராகிய இருவரில் ஒருவன் உமது வலதுபாரி
சத்திலும், மற்றவன் உமது இடதுபாரிசத்திலும்
௨௨ இருக்கும்படி கட்டளையிடுமென்றாள்.—அதற்
குத்தரமாய் யேசு, நீங்கள் கேட்டது உங்களுக்
குத்தெரியவில்லை. நான் குடிக்கும் பாத்திரத்தி
லே குடிக்க உங்களாலாகுமா, நான் பெற்றுக்
கொள்ளும் ஸ்நானத்தைப்பெற்றுக்கொள்ள உங்
களாலாகுமாவென்றுகேட்க, அவர்கள் அவருக்
௨௩ கு எங்களாலாகுமென்றார்கள்.—அப்பொழுது அ
வர் அவர்களைநோக்கி, என்பாத்திரத்தில் குடிப்
பீர்களே, நான் பெற்றுக்கொள்ளும்ஸ்நானத்தை
யும் பெற்றுக்கொள்வீர்களே: ஆனாலும் என்பி
தாவினால் எவர்களுக்கு ஆயத்தப்படுத்தப்பட்ட
தோ அவர்களுக்கேயன்றி, மற்றவர்களுக்கு
என் வலதுபாரிசத்திலும், என் இடதுபாரிசத்தி
லும் இருக்கும்படிஅருள எனக்கு அதிகாரமில்
௨௪ லையென்றார்.—மற்றப் பத்துப்பேரும் அதைக்
கேட்டு, அந்தச்சகோதரர் இருவர்மேலுங் கோ
௨௫ பங்கொண்டார்கள்.—அப்பொழுது யேசு அவர்
களை அழைத்து, அந்நியதேசத்தாரிலுள்ள பிரபு
கள் அவர்களை ஆளுகிறார்கள், பெரியோர்கள் அ
வர்கள்மேல்அதிகாரத்தைச்செலுத்துகிறார்கள், இ
௨௬ து உங்களுக்குத்தெரியும்.—உங்களுக்குள் அப்
படி இருக்கப்படாது: உங்களில் பெரியவனாக
விரும்புகிறவன், உங்கள் பணிவிடைக்காரனா
௨௭ கக்கடவன்.—உங்களில் பிரதானியாகவிரும்பு
௨௮ கிறவன், உங்கள் அடிமையாகக்கடவன்.-மனுபுத்
திரனும், பணிவிடைகொள்வதற்கல்ல, பணிவி
டைசெய்யவும், அநேகரைமீட்கும்பொருளாகத்
௨௯ தனதுபிராணனைத் தரவுமே வந்தானென்றார்.-அ
வர்கள்யெரிகோவிலிருந்து புறப்பட்டுப்போகை
யில் அநேகசனங்கள் அவரைப்பின்சென்றார்கள்.
௩௰ அப்பொழுது குருடர்இருவர் வழியருகேஉட்
காந்திருந்து, யேசு வழியிலேவருகிறாரென்று
கேள்விப்பட்டு, கர்த்தாவே, தாவீதின் புத்தி
ரனே, எங்கள்மேலிரங்குமென்று ஓலமிட்டார்
கள்.—அவர்கள் பேசாதபடி சனங்கள் அவர்களைக் ௩௧
கடிந்துகொண்டார்கள்: அவர்களோ, கர்த்தா
வே, தாவீதின் புத்திரனே, எங்கள்மேல் இரங்
குமென்று அதிகமாய் உரத்தசத்தமிட்டார்கள்.—
அப்பொழுது யேசு தரித்துநின்று, அவர்களை ௩௨
அழைத்து, நான்உங்களுக்குஎன்னசெய்யவிரும்
புகிறீர்களென்றார்.-அவர்கள்அவருடனே, கர்த் ௩௩
தாவே, எங்கள் கண்களைத்திறக்கவேண்டுமென்
றார்கள்.—யேசு அவர்கள்மேல் மனதுருகி, ௩௪
அவர்களுடைய கண்களைத்தொட்டார்: உட
னே அவர்கள் பார்வையடைந்து, அவர்பின்னே
சென்றார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧. கிறிஸ்துக்கழுதையிலேறி யெருஷலேமுக்கு யாத்திரைசெய்தல்: ௰௨. தேவாலயத்தினின்று வர்த்தகரைத்துரத்திவிடல்: ௰௮. கனிதராத அத்திமரத்தைச்சபித்தல்: ௨௩. பிரதானஆசாரியரை உத்தரங்கொடாதபடி வெல்லல்: ௨௮. இரண்டு புத்திரரை உவமித்தல்: ௩௩. வீட்டெசமானனையும், வேலைக்காரரையும் உவமித்தல்.

அவர்கள் யெருஷலேமுக்குச்சமீபமாகி, ஒலீ ௧
வமலையினருகேயுள்ள பேத்பாகேயில் சேர்ந்த
பொழுது, யேசு இரண்டுசீஷரைநோக்கி,-உங்க ௨
ளுக்கெதிர்ப்புறத்திலுள்ள அந்தக்கிராமத்திற்குப்
போங்கள், அங்கேகட்டப்பட்டிருக்கிறஒருகழு
தையையும், அதனுடன்ஒருகுட்டியையுங் காண்
பீர்கள்: அவைகளின் கட்டைஅவிழ்த்து, என்
னிடத்திலேகொண்டுவாருங்கள்.-ஒருவன் உங்க ௩
ளுக்கு யாதாயினுஞ்சொன்னால், கர்த்தருக்கு
இவைகள்வேண்டுமென்றுசொல்லுங்கள்; உட
னே அவன் அவைகளைஅனுப்பிவிடுவானென்
றுசொல்லி, அவர்களை அனுப்பினார்.—இவைக ௪
ளெல்லாம்நடந்ததினால், "நீங்கள் சீயோன் குமா
ரத்தியினிடத்தில், பார், உன் இராசா தாழ்ந்தசிந்
தையுள்ளவரும், கழுதையின் குட்டியாகிய கழு
தையின்மேலேறியிருப்பவருமாய் உன்னிடத்து
க்கு வருகிறாரென்பதைத் தெரிவியுங்கள்," என்
று,—தீர்க்கதரிசியினால் சொல்லப்பட்டதுநிறை ௫
வேறிற்று.—சீஷர்போய், யேசு தங்களுக்கு ௬
இட்ட கட்டளைப்படிசெய்து,—கழுதையையு ௭
ம், குட்டியையுங்கொண்டுவந்து, அவைகளின்
மேல் தங்கள்வஸ்திரங்களைவிரித்து, அவரை
ஏற்றினார்கள்.—திரளான சனங்கள் தங்கள்வஸ் ௮
திரங்களை வழியிலேவிரித்தார்கள்; சிலர்மரங்க
ளின்கிளைகளைத்தறித்து வழியிலே பரப்பினார்
கள்.—முன்நடப்பாரும், பின்நடப்பாருமாகிய ௯
சனங்கள், தாவீதின்புத்திரனுக்குஓசன்னா: கர்த்

(௰௮) அதி.௰௬.௨௧. (௰௯) மாற்.௫.௧,௰௬,. லூக்.௨௩.௧. யோவா.௰௮.௨௮,. அப்.௩.௰௩. (௨௨) லூக்.௨௨.௪௨. யோவா.௰௮.௰௧. லூக்.௰௨.௫௰. (௨௩) அப்.௰௨.௨. ரோ.௮.௰௭. ௨.கொரி.௧.௭. வெளி.௧.௯.(௨௪)லூக்.௨௨.௨௪, ௨௫. (௨௬) ௧.பேதுரு.௫.௩. மாற்.௯.௩௫.(௨௮)யோவா.௰௩.௪. பிலி.௨.௭. லூக்.௨௨.௨௭. யோவா.௰௩.௰௪. ஏசா. ௫௩.௰,௰௧. தானி.௯.௨௪,௨௬. யோவா.௰௧.௫௧,௫௨. ௧.தீமோ.௨.௬. தீத்.௨.௰௪. ௧.பேதுரு.௧.௰௯. ரோ.௫.௰௫,௰௯. எபி.௯.௨௮.—(௨௧. அதி. ௧.) லூக்.௰௯.௨௯. சக.௰௪.௪.(௪)ஏசா.௬௨.௰௧. சக.௯.௯. யோவா.௰௨.௰௨.(௭)௨.இரா. ௯.௰௩. (௮) லேவி.௨௩.௪௰. யோவா.௰௨.௰௩. (௯) சங்.௱௰௮.௨௫,௨௬.

தருடைய நாமத்தினாலே வருபவர் ஸ்தோத்தி
ரிக்கப்பட்டவர்; உன்னதமானவானங்களில் ஓ
சன்னாவென்றுசொல்லி ஆரவாரம் பண்ணினார்
௰ கள்.–அவர் யெருஷலேமில்பிரவேசித்தபொழு
து, நகரத்தாரெல்லாருங்கலங்கி, இவர் ஆரென்
௰௧ றார்கள்.—சனங்களோ, இவர் கலிலேயாநாட்டி
லுள்ளநாசரேத்திலிருந்துவந்த தீர்க்கதரிசியாகிய
யேசுவென்றார்கள்.
௰௨ பின்புயேசுதேவனுடையஆலயத்தில் பி
ரவேசித்து, அதிலே விற்கிறவர்களுங் கொள்ளு
கிறவர்களுமாகிய யாவரையும் வெளியேதுரத்தி,
காசுக்காரருடைய பீடங்களையும்,புறாக்களைவிற்
கிறவர்களுடையஆசனங்களையுங் கவிழ்த்துவிட்
௰௩ டு,—"என்வீடு பிரார்த்தனையின் வீடென்னப்ப
டும்,"என்றெழுதியிருக்கின்றது;நீங்களோஇதை
த்திருடர் குகையாக்கினீர்களென்று அவர்களுட
௰௪ னேசொன்னார்.–பின்பு குருடருஞ் சப்பாணிக
ளுந் தேவாலயத்தில் அவரிடத்தில் வந்தார்கள்;
௰௫ அவர் அவர்களைச் சொஸ்தப்படுத்தினார்.—அவர்
செய்த ஆச்சரியமான கிரியைகளையும்,தாவீதின்
புத்திரனுக்கு ஓசன்னாவென்று தேவாலயத்தில்
உரத்தசத்தமிட்ட பிள்ளைகளையும் பிரதான ஆசா
ரியரும் வேதபாரகருங்கண்டு, குரோதங்கொண்
௰௬ டு,-அவரைநோக்கி,இவர்கள்சொல்வதைக்கேட்
கிறீரோவென்று சொல்ல, யேசு, கேட்கிறேன்;
"பாலகருங் குழந்தைகளுமாகிய இவர்களுடை
ய வாயினின்றுந் துதியைத் தோற்றுவித்தீர்,"என்
பதை நீங்கள் ஒருபொழுதும் வாசிக்கவில்லையா
வென்றுசொல்லி,
௰௭ அவர்களைவிட்டு, நகரத்திலிருந்து புறப்பட்
டுப் பேதனியவுக்குப்போய்,அங்கே இராத்தங்கி
௰௮ னார்.—காலையில் அவர் நகரத்திற்குத் திரும்பிப்
போகையில், அவருக்குப் பசியுண்டாயிற்று.—
௰௯ அப்பொழுது வழியருகே ஒரு அத்திமரத்தை அ
வர்கண்டு, அதினிடத்தில்போய், இலைகளையே
யன்றிக்கனிகளைக்காணாமையினால்அதைப்பார்த்
து, இதுமுதல் உன்னிடத்தில் கனி உண்டாகா
திருக்கக்கடவதென்றார். உடனே அத்திமரம்
௨௰ பட்டுப்போயிற்று.—சீஷர் அதைக்கண்டு,இந்
த அத்திமரம் அதிசீக்கிரமாய்ப்பட்டுப் போயிற்
றென்று ஆச்சரியத்தோடே சொன்னார்கள்.—
௨௧ யேசு அவர்களைநோக்கி,நீங்கள் சந்தேகப்படா
மல் விசுவாசித்தால், இந்த அத்திமரத்துக்குச் சம்
பவித்ததைச் செய்வதுமன்றி, இந்த மலையை
நோக்கி, நீ பெயர்ந்து சமுத்திரத்தில்விழுவாயா
கவென்று சொன்னாலும், உடனே அப்படியே
ஆகுமென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்லு
௨௨ கிறேன்.—அல்லாமலும், நீங்கள் விசுவாசத்து
டன்வேண்டுதல்செய்து கேட்பதெதுவோ, அ
தைப்பெறுவீர்களென்றார்.

அவர் தேவாலயத்திலே வந்து உபதேசம்பண் ௨௩
ணுகிறபொழுது, பிரதான ஆசாரியரும், சனங்
களின் முதியோரும் அவரிடத்தில்வந்து, எந்த
அதிகாரத்தைக்கொண்டு நீர் இவைகளைச்செய்கி
றீர்; இப்படிப்பட்ட அதிகாரத்தை உமக்குத்தந்
தவர் யாவரென்றுகேட்க,—யேசு அதற்கு உத் ௨௪
தரமாய், நானும்உங்களிடத்தில் ஒன்றைக்கேட்
பேன், அதை நீங்கள் எனக்குச்சொன்னீர்களா
னால், நான் இவைகளை இன்ன அதிகாரத்தைக்
கொண்டு செய்கிறேனென்று உங்களுக்குத்தெ
ரிவிப்பேன்.-யோவான்கொடுத்த ஞானஸ்நானம் ௨௫
ஆராலுண்டாயிற்று; தேவனாலோ, மனுஷரா
லோ, அதைச்சொல்லுங்களென்றார்; அவர்கள்
தங்களுக்குள், அது தேவனால் உண்டாயிற்
றென்றோமானால்,இவர்,ஏன் அவனைவிசுவாசிக்
கவில்லையென்பார்.—அது மனுஷரால் உண்டா ௨௬
யிற்றென்று சொல்லவும், சனங்களுக்குப் பயப்
படுகிறோம்; அவர்களெல்லாரும் யோவானைத்
தீர்க்கதரிசியென்றெண்ணுகிறார்களேயென்று த
ங்களுக்குள்ளே யோசித்து,—அவரை நோக்கி, ௨௭
நாங்கள் சொல்லக்கூடாதென்றார்கள். அப்பொ
ழுது அவர் அவர்களைநோக்கி, நானும் இவை
களை இன்ன அதிகாரத்தைக்கொண்டு செய்கிறே
னென்று உங்களுக்குச்சொல்லேன்.
ஒரு மனுஷனுக்கு இரண்டுபுத்திரருண்டு; அ ௨௮
வர்களில் மூத்தவனிடத்தில் அவன்போய், மக
னே, நீ இன்று என் திராட்சத்தோட்டத்திலே
போய், வேலைசெய்யென்றுசொல்ல,—அவன் ௨௯
போகமாட்டேனென்றுசொல்லி, பின்பு அவன்
மனந்திரும்பிப்போனான்.–பிதா இளையவனிடத் ௩௰
திலும்போய் அப்படியேசொல்ல, அவன் உத்த
ரமாக, ஐயா,போகிறேனென்றுசொல்லியும்போ
கவில்லை.–இவ்விருவரில் யாவன் பிதாவின் சித் ௩௧
தத்தை நிறைவேற்றினான்; உங்களுக்கெப்படித்
தோன்றுகின்றதென்று அவர் கேட்டபொழுது,
மூத்தவனே யென்றார்கள். அப்பொழுது யேசு
அவர்களைநோக்கி, ஆயக்காரரும் வேசைகளும்
உங்களுக்குமுன் தேவனுடைய இராச்சியத்
தில் பிரவேசிக்கிறார்களென்று மெய்யாய் உங்க
ளுக்குச்சொல்லுகிறேன்.—யோவான் நீதிமார்க் ௩௨
கமாய்உங்களிடத்தில்வந்தும், நீங்கள் அவனை
விசுவாசிக்கவில்லை: ஆயக்காரரும் வேசைகளு
மோ அவனைவிசுவாசித்தார்கள்: அதை நீங்கள்
கண்டும்,-அதன்பின்னும் விசுவாசிக்கும்படிக்கு
மனஸ்தாபப்படவில்லை.
வேறொரு உவமையைக்கேளுங்கள்: வீட்டெ ௩௩
சமானன் ஒருவன் திராட்சத்தோட்டத்தைஉண்
டாக்கி, அதைச்சுற்றி வேலி அடைத்து, அதில்
ஆலையைநாட்டி, கோபுரத்தைக்கட்டி, பின்புஅ
தைத் தோட்டக்காரர்வசமாய் விட்டு, புறத்தேசத்

(௰) லூக்.௰௯.௪௫. (௰௧) லூக்.௭.௰௬. யோவா.௬.௰௪. (௰௨) லூக்.௰௯.௪௫. யோவா.௨.௰௫. உபா.௰௪.௨௫. (௰௩) ஏசா.௫௬.௭. எரே.௭.௰௧. லூக்.௰௯.௪௬. (௰௬) சங்.௮.௨. (௰௭) யோவா.௰௧.௰௮. (௨௧) லூக்.௰௭.௬. யாக்.௧.௬. ௧.கொரி.௰௩.௨. (௨௨) மாற்.௰௧.௨௪. லூக்.௰௧.௯. யாக்.௫.௰௬. ௧.யோவா.௩.௨௨. (௨௩) மாற்.௰௧.௨௭ லூக்.௨௰.௧. யாத்.௨.௰௪. அப்.௪.௭. (௨௬) லூக்.௨௰.௬. (௩௧) லூக்.௭.௨௯,௩௰. (௩௨) லூக்.௩.௰௨,௰௩. (௩௩) சங்.௮௰.௮. உன்.௮.௰௧. ஏசா.௫.௧. எரே.௨.௨௧.

௩௪ திற்குப்போனான்.—கனிகாலஞ் சமீபமானபொ
ழுது, கனிகளை வாங்கிக்கொண்டுவரும்படிக்
குத்தன்வேலைக்காரரைத்தோட்டக்காரரிடத்தில்
௩௫ அனுப்பினான்.—தோட்டக்காரர், அவன் வே
லைக்காரரைப்பிடித்து, ஒருவனை அடித்தார்கள்,
ஒருவனைக் கொலைசெய்தார்கள், வேறொருவன்
௩௬ மேற்கல்லெறிந்தார்கள்.—திரும்பவும் எசமானன்
முந்தினவர்களிலும் அதிகமானவேறுவேலைக்கா
ரரை அனுப்பினான்: அவர்களையும் அப்படியே
௩௭ செய்தார்கள்.—பின்பு அவன் என்புத்திரனுக்கு
அஞ்சுவார்களென்றெண்ணிக்கடைசியிலே தன்
புத்திரனை அவர்களிடத்தில் அனுப்பினான்.—
௩௮ தோட்டக்காரரோ, புத்திரனைக்கண்டபொழுது,
இவன்சுதந்தரவாளி; இவனைக்கொன்று, இவனு
டைய சுதந்தரத்தைக் கட்டிக்கொள்வோம் வா
ருங்களென்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொ
௩௯ ண்டு,—அவனைப்பிடித்து, திராட்சத்தோட்டத்
திற்குப்புறம்பேதள்ளிக் கொலைசெய்தார்கள்.—
௪௰ ஆதலால் அந்தத்திராட்சத்தோட்டத்தின் எசமா
னன் வரும்பொழுது, அந்தத்தோட்டக்காரருக்
௪௧ கு என்னசெய்வானென்றுகேட்டார்.—அதற்
கு அவர்கள், அந்தத்துஷ்டரைக்கொடுமையாய்
அழித்து, பருவகாலங்களில் தனக்குக் கனிக
ளைக்கொடுக்கும் வேறுதோட்டக்காரர்வசமாய்த்
திராட்சத்தோட்டத்தைவிடுவானென்றார்கள்.—
௪௨ அப்பொழுதுயேசு அவர்களைநோக்கி,“வீடுகட்
டுகிறவர்கள் தள்ளிவிட்டகல் கோடிக்குத்தலைக்
கல்லாயிற்று: இது கர்த்தாவினால் நடந்தது,
இது நம்முடைய பார்வைக்கு அற்புதம்,”என்று
வேதத்தில் நீங்கள் ஒருபொழுதும் வாசிக்கவில்
௪௩ லையா.—ஆகையால் தேவனுடைய இராச்சி
யம் உங்களிடத்திலிருந்து நீக்கப்பட்டு, அதின்
கனிகளைத்தருஞ்சாதியாருக்கு அருளப்படுமென்
௪௪ று உங்களுக்குச் சொல்லுகிறேன்.—அன்றியும்
இந்தக்கல்லின்மேல்விழுகிறவன் நொறுக்கப்படு
வான்: இது எவன்மேல்விழுமோ, அவனைநொ
௪௫ றுக்குமென்றார்.—பிரதான ஆசாரியரும் பரிசேய
ரும் அவருடைய உவமைகளைக்கேட்டு, தங்க
௪௬ ளைக்குறித்துப் பேசினாரென்றுணர்ந்து,—அவ
ரைப்பிடிக்க வகைதேடியும், சனங்கள் அவரைத்
தீர்க்கதரிசியென்றெண்ணினபடியினால், அவர்க
ளுக்குப்பயந்தார்கள்.

## ௨௨. அதிகாரம்.

க. இராசபுத்திரனுடையவிவாகத்தை உவமித்தல்: ௰௫. இராசாவுக்கு வரிப்பணங்கொடுப்பதைப் பற்றிப் போதித்தல்: ௨௩. மரித்தோர் உயிர்த்தெழுதலைக்குறித்துப்போதித்தல்: ௩௪.பிரதானகட்டளையின்னதென்றுநிருணித்தல்:௪௧. கிறிஸ்துத் தம்மைக்குறித்துப் பரிசேயரை மவுனமாக்கல்.

பின்பு யேசு உவமைகளினால் அவர்களிடத் க
தில்பேசி,—பரம இராச்சியம் தன்புத்திரனுக்கு ௨
விவாகஞ்செய்த இராசனுக்கொப்பாயிருக்கின்ற
து.—அழைக்கப்பட்டவர்களை விவாகத்துக்குவ ௩
ரச்சொல்லும்படி அவன் தன்பணிவிடைக்கார
ரை அனுப்பினான்: அவர்களோ வரமாட்டோ
மென்றார்கள்.—மறுபடியும் அவன் வேறே பணி ௪
விடைக்காரரை அனுப்பி, என்விருந்தை ஆயத்
தப்படுத்தினேன்: என் எருதுகளும் புஷ்டியான
செந்துக்களும் அடிக்கப்பட்டன, எல்லாம் ஆ
யத்தமாயிருக்கின்றன: நீங்கள் விவாகத்துக்கு
வாருங்களென்று அழைக்கப்பட்டவர்களிடத்
தில் சொல்லுங்களென்றான்.—அவர்களோ அ ௫
தைஎண்ணாமல் ஒருவன் தன்வயலுக்கும், ஒரு
வன்தன்வியாபாரத்துக்கும்போய்விட்டார்கள்.—
மற்றவர்களோ, அவனுடைய வேலைக்காரரைப் ௬
பிடித்து, நிந்தித்து, கொலைசெய்தார்கள்.—இரா ௭
சா அதைக்கேட்டுக்கோபங்கொண்டு, தன் சே
னைகளை அனுப்பி, அந்தக்கொலைபாதகரைச்சங்
கரித்து, அவர்களுடைய பட்டணத்தையுந்தகித்
துப்போட்டான்.—பின்பு அவன் தன் பணிவி ௮
டைக்காரரைநோக்கி, விவாகவிருந்து ஆயத்தமா
யிருக்கின்றது, அழைக்கப்பட்டவர்களோ அதற்
குப்பாத்திரரல்ல.—ஆதலால் நீங்கள் வழிச்சந்தி ௯
களிலேபோய், அகப்படும்யாவரையும் விவாகத்
திற்கு அழைத்துவாருங்களென்றான்.—அதினால் ௰
அந்தப்பணிவிடைக்காரர் வீதிகளிற்சென்று, அ
கப்பட்டதீயவர்களையும் நல்லவர்களையுங் கூட்
டிவந்தார்கள்: விருந்துசாலைபந்தியிருக்கிறவர்க
ளால் நிறைந்தது.

பந்தியிருக்கிறவர்களைப்பார்க்கும்படி இராசா ௰௧
பிரவேசித்தபொழுது, விவாகவஸ்திரந்தரியாத ஒ
ருவனை அங்கே கண்டு,—சிநேகிதா, நீ விவாக ௰௨
வஸ்திரமில்லாமல் இவ்விடத்தில் எப்படிப்பி
ரவேசித்தாயென்று கேட்க, இவன் பேசாமலி
ருந்தான்.—அப்பொழுது இராசா பணிவிடைக் ௰௩
காரரைநோக்கி, இவனுடைய கைகால்களைக்கட்
டி, எடுத்துக்கொண்டுபோய், அழுகையும் பற்க
டிப்பும் உண்டாகும்புறம்பான இருளிலேதள்ளி
விடுங்களென்று கட்டளையிட்டான்.—அழைக் ௰௪
கப்பட்டவர்கள் அநேகர், தெரிந்துகொள்ளப்
பட்டவர்களோ சிலரென்றார்.

பின்பு பரிசேயர்போய், வாக்குகளில் அவரை ௰௫
அகப்படுத்தும்படி ஆலோசனைபண்ணி,—தங் ௰௬
கள் சீஷரில் சிலரையும் ஏரோதின் சனங்களை
யும் அவரிடத்திற்கு அனுப்பினார்கள்; அவர்கள்,
போதகரே, நீர் சத்தியமுள்ளவர், பாரபட்சமில்
லாமலும், எவர்களுடைய முகத்தையும் பாராம
லும், தேவன் அருளிய மார்க்கத்தை உண்மை

(௩௪) உன்.அ.௰க,௰௨. (௩௫) ௨.நாளா.௨௪.௨௧. நிகி.௯.௨௬. அப்.எ.௫௨. க.தெச.௨.௰௫. எபி.௰க.௩௬,௩எ. (௩அ) சங்.௨.அ. எபி.க.௨. சங்.௨.௨. யோவா.௰க.௫௩. அப்.௪.௨அ.(௩௯)மாற்.௰௪.௬௬,. யோவா.௰அ.௰௨,. அப்.௨.௨௩. (௪௧) லூக்.௨௧.௨௪. எபி.௨.௩. அப்.௰௩.௪௬.(௪௨)சங்.௱௰அ.௨௨. ஏசா.௨அ.௰௬. அப்.௪.௰௧. எபே.௨.௨௰. க.பேதுரு.௨.௬,எ. (௪௪) ஏசா.அ.௰௪,௰௫. ௪௧.௰௨.௩. லூக்.௨௰.௰அ. ரோ.௯.௩௩. க.பேதுரு.௨.அ. ஏசா.௬௰.௰௨. தானி. ௨.௪௪.—(௨௨. அதி. க.) வெளி.௰௯.எ,௯.(௪)நீதி.௯.௨. (எ) தானி.௯.௨௬. லூக்.௰௯.௨எ. (அ) அப்.௰௩.௪௬.(௰௧) ௨.கொரி.௫.௩. எபே.௪.௨௪. கொலோ.௰.௰௨. வெளி.௩.௪. (௰௫) மாற்.௰௨.௰௩. லூக்.௨௰.௨௰.

யாய்த் தெரியக்காட்டுகிறீரென்று அறிந்திருக்கி
௰௭ ரோம்.—ஆதலால் இராசாவுக்கு வரிகொடுப்பது
நியாயமோ, இல்லையோ, அதை எங்களுக்குச்
சொல்லவேண்டும்; உமக்கெப்படித் தோன்றுகி
௰௮ ன்றதென்றார்கள்.-யேசு அவர்களுடைய துர்க்
குணத்தைஅறிந்து, கபடிகளே, நீங்கள்என்னை
௰௯ ஏன் சோதிக்கிறீர்கள்.—வரிக்காசை எனக்குக்
காண்பியுங்களென்றார். அப்பொழுது அவர்கள்
ஒரு தேனாரியப்பணத்தை அவரிடத்திற்கொண்
௨௰ டுவந்தார்கள்.-அவர் இந்தச்சாயலும் மேலெழுத்
தும்ஆருடையதென்று கேட்க, அவர்கள்,இது இ
௨௧ ராசாவுடையதென்றார்கள்.-அப்பொழுது அவர்,
இராசாவுடையதை இராசாவுக்கும், தேவனு
டையதைத் தேவனுக்குஞ் செலுத்துங்களென்
௨௨ றார்.-அவர்கள் அதைக்கேட்டு ஆச்சரியப்பட்டு,
அவரைவிட்டுப்போனார்கள்.
௨௩ உயிர்த்தெழுதலில்லையென்று சொல்லுகிற ச
௨௪ துசேயர் அந்நாளில் அவரிடத்தில்வந்து,—போ
தகரே, புருஷன் ஒருவன் பிள்ளைகளில்லாமல் இ
றந்துபோனால், அவனுடைய சகோதரன் அவ
னுக்குச் சந்ததிதோன்றும்படி அவனுடைய ம
னைவியை விவாகம்பண்ணவேண்டுமென்றுமோ
௨௫ சே சொன்னாரே.—எங்களிடத்தில் சகோதரர்
ஏழுபேரிருந்தார்கள்: அவர்களில் மூத்தவன் வி
வாகம்பண்ணிச் சந்ததியில்லாமல் மரித்து, தன்ம
௨௬ னைவியைத் தன் சகோதரனுக்குவிட்டான்.—இ
ரண்டாம் மூன்றாஞ் சகோதரன் முதல், ஏழாஞ்
சகோதரன்வரைக்கும் அப்படியே நடந்தது.—
௨௭ எல்லாருக்கும் பின்பு அந்தஸ்திரியும் இறந்து
௨௮ போனாள்.—ஆகையால் உயிர்த்தெழுதலில் அ
வள் அவர்கள் ஏழுவரில் யாவனுக்கு மனைவியா
வாள், எல்லாரும் அவளைவிவாகம்பண்ணினார்க
௨௯ ளேயென்றுசொல்லிக்கேட்டார்கள்.-யேசு அ
வர்களுக்குத்தரமாக, நீங்கள்வேதத்தையுந் தேவ
னுடைய வல்லமையையும் உணராதபடியால்,
௩௰ தப்பாய் எண்ணங்கொள்ளுகிறீர்கள்.-உயிர்த்தெ
ழுதலில் பெண்கொள்வதுங் கொடுப்பதுமில்லை,
அவர்கள் பரமண்டலத்திலுள்ள தேவனுடை
௩௧ ய தூதரைப்போலிருக்கிறார்கள்.—மரித்தோர் உ
யிர்த்தெழும்புவதைக்குறித்து, நான் ஆபிரகாமின்
தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோ
௩௨ பின் தேவனுமாயிருக்கிறேனென்று,—தேவ
னால் உங்களுக்குச்சொல்லப்பட்டதை நீங்கள்
வாசிக்கவில்லையா; அவர் மரித்தோரின் தேவ
னல்ல,சீவனுள்ளோரின் தேவனேயென்றார்.-
௩௩ சனங்கள் இதைக்கேட்டு அவருடைய உபதே
சத்தைக்குறித்துப்பிரமித்தார்கள்.
௩௪ அவர் சதுசேயரை மவுனமாக்கினதைப் பரி
௩௫ சேயர்கேட்டுக்கூடிவந்தார்கள்.—அவர்களில் நி
யாயசாஸ்திரி ஒருவன் அவரைச்சோதிக்கும்ப
டி,—போதகரே, வேதப்பிரமாணத்தில் எந்தக் ௩௬
கட்டளை பிரதானமென்று கேட்க,-யேசு அவ ௩௭
னைப்பார்த்து, "நீ உன்பூரண இருதயத்தோடும்,
உன்பூரண ஆத்துமாவோடும், உன்பூரணமன
தோடும் உன் தேவனாகிய கர்த்தாவிடத்
தில் அன்பு கூருவாயாக," என்கிற-இதுவேமு ௩௮
தலும், பிரதானமுமான கட்டளை.—இதற்குச் ௩௯
சமமான இரண்டாங் கட்டளை "உன்னைப்போ
லப் பிறனையும் நேசிப்பாயாக," என்பது.—இவ் ௪௰
விரண்டு கட்டளைகளிலும் நியாயப்பிரமாணம்
முழுமையும், தீர்க்கதரிசனங்களும் அடங்கு
மென்றார்.
பின்பு பரிசேயர் கூடியிருக்கையில்,யேசு அ ௪௧
வர்களைநோக்கி,-நீங்கள் கிறிஸ்துவைப்பற்றி ௪௨
என்னத்தைக்கருதிக்கொள்ளுகிறீர்கள்; அவர் ஆ
ருடைய புத்திரனென்றுகேட்க, அவர் தாவீதின்
புத்திரனென்றார்கள்.-அதற்குத்தரமாய்,அவர், ௪௩
"கர்த்தர் என் ஆண்டவரைநோக்கி, நான் உம்
முடைய சத்துருக்களை உமது பாதபீடமாக்கும்வ
ரைக்கும்,—நீர் என் வலதுபாரிசத்தில் வீற்றிரு ௪௪
மென்றார்," என்று தாவீது தேவாவியினால் அவ
ரை ஆண்டவரென்று சொல்லியிருக்கிறதெப்
படி.-தாவீது அவரைக் கர்த்தரென்று சொல் ௪௫
லியிருக்க, அவர் எப்படி அவனுடைய புத்திர
னாயிருப்பாரென்றார்.—அதற்குத்தரமாக, ஒருவ ௪௬
னும் ஒருவாக்கையுஞ் சொல்லக்கூடாமற்போ
யிற்று, அந்நாள்முதல் ஒருவரும் அவரிடத்தில்
வினாவத்துணியவில்லை.

## ௨௩. அதிகாரம்.

௧. வேதபாரகரையும் பரிசேயரையுமல்ல, வே
தோபதேசத்தைப்பற்றி நடக்கும்படி சனங்க
ளுக்குப் போதித்தல்: ௰௩. அவர்களுக்குநேரி
டும் ஆபத்தைத் தெரிவித்தல்: ௩௪. யெருஷலே
மின் சங்காரத்தைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்
சொல்லல்.

பின்பு யேசு சனங்களையுந் தம்முடைய சீஷ ௧
ரையும்நோக்கி,-வேதபாரகரும்பரிசேயரும்மோ ௨
சேயின் ஆசனத்திலிருக்கிறார்கள்.—ஆதலால் நீங் ௩
கள்கைக்கொள்ளவேண்டுமென்று அவர்கள் உங்
களுக்குச்சொல்லும்யாவையுங் கைக்கொண்டு ந
டக்கக்கடவீர்கள்; அவர்களுடைய கிரியைக
ளின்படியோ செய்யாதிருங்கள்: அவர்கள் பே
சுகிறதேயன்றிச்செய்கிறதில்லை.-சுமப்பதற்கரிய ௪
பாரமான சுமைகளைக்கட்டி மனுஷருடையதோ
ள்களின்மேல் ஏற்றுகிறார்கள், தாங்களோ ஒருவி
ரலினாலும் அவைகளை அசைக்கமாட்டார்கள்.-
மனுஷரால் காணப்படும்படி அவர்கள் தங்கள் ௫
கிரியைகள்யாவையுஞ் செய்கிறார்கள்: வேதவ
சனம்பதிந்தகாப்புகளை அகலமாக்கி, தங்கள்வஸ்
திரங்களின் தொங்கல்களை விஸ்தாரம்பண்ணி,-

(௨௧) ரோ.௰௩.௭. (௨௩) லூக்.௨௰.௨௭. அப்.௨௩.௮.(௨௪)உபா.௨௫.௫. (௨௯) யோவா.௨௰.௯. (௩௰) ௧.யோவா.௩.௨. (௩௧) யாத்.௩.௬.௰௬. லூக்.௨௰.௩௭. அப்.௭.௩௨. எபி.௰௧.௰௬. (௩௭) உபா.௬.௫. லூக்.௰.௨௭. (௩௯) லேவி.௰௯.௰௮. லூக்.௰.௨௭. ரோ.௰௩.௯. கலா.௫.௰௪. யாக்.௨.௮. (௪௰) ௧.தீமோ.௧.௫. (௪௧) லூக்.௨௰.௪௧. (௪௩) சங்.௱௰.௧. அப்.௨.௩௪. ௧.கொரி.௰௫.௨௫. எபி.௧.௰௩. (௪௬) லூக்.௰௪.௬. லூக்.௨௰.௪௰.—(௨௩. அதி. ௨.) நெகி.௮.௪.௮. மல். ௨.௭. லூக்.௨௰.௪௫. (௩) ரோ.௨.௰௯,. அப்.௰௫.௰. கலா.௬.௰௩.(௫)அதி.௬.௧. எண்.௰௫.௩௮. உபா.௬.௮. நீதி.௩.௩.

௬ விருந்துகளில் பிரதானஇடங்களையும், ஆலயங்க
௭ ளில் முதல் ஆசனங்களையும்,-சந்தைகளில்வாழ்த்
துதல்களையும், மனுஷரால் இரபீ, இரபீயென்
௮ றழைக்கப்படுதலையும் விரும்புகிறார்கள்.—நீங்
களோ, இரபீயென்றழைக்கப்படவேண்டாம்:
உங்களுக்கு ஒரே குருவுண்டு, அவரே கிறிஸ்
௯ து.—நீங்கள் பூமண்டலத்தில் ஒருவனையும் பிதா
வேயென்று சொல்லலாகாது: ஒருவரே உங்க
ளுக்குப் பிதா, பரமண்டலத்திலுள்ளவர் அவரே,
௰ நீங்களெல்லாருஞ் சகோதரர்.—நீங்கள் குருக்
களென்னும்பேரைத் தரிக்கலாகாது; உங்களுக்
௰௧ கு ஒரே குருவுண்டு, அவரே கிறிஸ்து.—உங்க
ளெல்லாரிலும் பெரியவன் உங்களுக்குப்பணி
௰௨ விடைக்காரனாகக்கடவன்.—தன்னை உயர்த்துகி
றவன் தாழ்த்தப்படுவான், தன்னைத்தாழ்த்துகிற
வன் உயர்த்தப்படுவான்.

௰௩ ஐயோ, கபடிகளாகிய வேதபாரகரே, பரிசே
யரே, உங்களுக்கு ஆபத்துவரும்; மனுஷர் பரம
இராச்சியத்திற் பிரவேசியாதபடி நீங்கள் அதைப்
பூட்டிப்போடுகிறீர்கள்: நீங்கள் அதில்பிரவேசிப்
பதுமில்லை, பிரவேசிக்க விரும்புகிறவர்களைப்
௰௪ பிரவேசிக்கவிடுவதுமில்லை.—ஐயோ, கபடிகளா
கிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஆ
பத்துவரும்; நீங்கள்விதவைகளின்வீடுகளைப்பட்
சித்து, கபடமாக நெடும்பிரார்த்தனைகளைச் செய்
கிறீர்கள்: இதினிமித்தம் அதிகதண்டனை உங்க
௰௫ ளுக்குக் கிடைக்கும்.—ஐயோ, கபடிகளாகியவே
தபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ஆபத்துவ
ரும்; நீங்கள் உங்கள் மதத்தில் ஒருவனைச்சேர்க்
கும்படி, கடலையுந் தரையையுங்கடந்து திரிகி
றீர்கள், அவன் சேர்க்கப்பட்டபின்பு, நீங்கள்
உங்களிலும் அவனை இருமடங்கு நரகத்துக்குப்
௰௬ பாத்திரனாக்குகிறீர்கள்.—ஐயோ, குருடரானவ
ழிகாட்டிகளே, உங்களுக்கு ஆபத்துவரும்; ஒரு
வன் தேவாலயத்தைக்கொண்டு சத்தியம்பண்ணி
னால், அது ஒன்றுமில்லை; ஒருவன் தேவாலயத்
திலுள்ள பொன்னைக்கொண்டு சத்தியம்பண்ணி
னானேயாகில், அவன் கடனாளியென்கிறீர்கள்.-
௰௭ மூடரே, குருடரே, எதுமுக்கியம்; பொன்னோ,
அந்தப்பொன்னைப் பரிசுத்தப்படுத்துந் தேவால
௰௮ யமோ.—ஒருவன் வேதிகையைக்கொண்டுசத்தி
யம்பண்ணினால், அது ஒன்றுமில்லை; அதிலுள்
ளநைவேத்தியத்தைக்கொண்டு சத்தியம்பண்ணி
னானாகில், அவனே கடனாளியென்கிறீர்கள்.—
௰௯ மூடரே, குருடரே, எதுமுக்கியம்; நைவேத்திய
மோ, நைவேத்தியத்தைப் பரிசுத்தப்படுத்தும்வே
௨௰ திகையோ.—ஆதலால் வேதிகையைக்கொண்டு
சத்தியம்பண்ணுகிறவன் அதைக்கொண்டும், அ
திலுள்ள சமஸ்தபொருள்களைக்கொண்டுஞ் சத்தி
யம்பண்ணுகிறான்.—தேவாலயத்தைக்கொண்டு ௨௧
சத்தியம்பண்ணுகிறவன் அதைக்கொண்டும், அ
தில் வாசமாயிருப்பவரைக்கொண்டுஞ் சத்தியம்
பண்ணுகிறான்.—வானத்தைக்கொண்டு சத்தியம் ௨௨
பண்ணுகிறவன் தேவனுடைய சிங்காசனத்
தைக்கொண்டும், அதில் வீற்றிருப்பவரைக்கொ
ண்டுஞ் சத்தியம்பண்ணுகிறான்.—ஐயோ, கபடி ௨௩
களாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்
கு ஆபத்துவரும்; நீங்கள் துளசியிலும், வெந்தை
யத்திலும், சீரகத்திலும் பத்திலொரு பாகத்தைக்
கொடுத்தும், வேதத்திலுள்ள பாரமானவைகளா
கியநீதியையும், இரக்கத்தையும், விசுவாசத்தை
யும் விட்டுவிட்டீர்கள்: இவைகளைக்காத்து நடப்
பதும், இவைகளை மீறாமல் நிற்பதுமே உங்கள்க
டமை.—குருடரானவழிகாட்டிகளே, கொசுக் ௨௪
குவடிகட்டி, ஒட்டகத்தைவிழுங்குகிறீர்கள்.—
ஐயோ, வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு ௨௫
ஆபத்துவரும்; நீங்கள் போசனபானபாத்திரங்க
ளின் வெளிப்புறத்தைச் சுத்தஞ்செய்கிறீர்கள்,
அவைகளின் உட்புறமோ கொள்ளையினாலும் அ
நீதியினாலும் நிறைந்திருக்கின்றது.—குருடான ௨௬
பரிசேயனே, முதலாவது போசனபானபாத்தி
ரங்களின் உட்புறத்தைச் சுத்தம்பண்ணு, அப்
பொழுது அவைகளின்வெளிப்புறமுஞ் சுத்தமா
கும்.—ஐயோ, கபடிகளாகியவேதபாரகரே, பரி ௨௭
சேயரே, உங்களுக்கு ஆபத்து வரும்; நீங்கள்
வெள்ளை அடிக்கப்பட்ட பிரேதவறைகளுக்குச்
சமானமாயிருக்கிறீர்கள், அவைகளின் வெளிப்
புறம் அலங்காரமுள்ளது, உள்ளேமரித்தோரு
டைய எலும்புகளும், சகலவித அசுசியும்நிறைந்
திருக்கின்றன.—அப்படியே நீங்களும் புறம்பே ௨௮
மனுஷருக்கு நீதிமான்களென்று காணப்படுகி
றீர்கள், உங்கள் உள்ளமோ சூதினாலும், அநீதியி
னாலும் நிறைந்திருக்கின்றது.—ஐயோ, கபடிக ௨௯
ளாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்கு
ஆபத்துவரும்; நீங்கள், தீர்க்கதரிசிகளுடைய பி
ரேதவறைகளைக்கட்டி, நீதிமான்களின் பிரேதவ
றைகளைச்சிங்காரித்து,—நாம் நம்முடைய முன் ௩௰
னோரின்காலத்தில் இருந்தோமானால், தீர்க்கதரி
சிகளுடைய இரத்தத்தைச்சிந்த உடன்படமாட்
டோமென்கிறீர்கள்.—இவ்விதமாய் நீங்கள்தீர்க் ௩௧
கதரிசிகளைக் கொலைசெய்தவர்களின் சந்ததியா
ரென்று உங்களைக்குறித்து நீங்களே சாட்சியிடு
கிறீர்கள்.—ஆதலால் நீங்கள் உங்கள் முன்னோ ௩௨
ருடைய அளவைநிரப்புங்கள்.—ஆ, சருப்பங்க ௩௩
ளே, விரியன்குட்டிகளே, நீங்கள் எப்படி நரக
யாதனைக்குத் தப்புவீர்கள்.

ஆதலால் பாருங்கள், நான் உங்களிடத்தில் ௩௪
தீர்க்கதரிசிகளையும், ஞானவான்களையும், வேத

(௬) மாற்.௰௨.௩௮,௩௯. ௩.யோவா.௯. (௮) யாக்.௩.௧. ௨.கொரி.௧.௨௪. ௧.பேதுரு.௫.௩.(௯)மல்.௧.௬.(௰௨)யோபு. ௨௨.௨௯. நீதி.௰௫.௩௩. லூக்.௰௪.௰௧. யாக்.௪.௬. ௧.பேதுரு.௫.௫.(௰௩)லூக்.௰௧.௫௨.(௰௪)லூக்.௨௰.௪௭. ௨.தீமோ. ௩.௬. தீத்.௧ ௰௧. (௰௭) யாத்.௩௰.௨௯. (௰௯) யாத்.௨௯.௩௭. (௨௧) ௧.இரா.௮.௰௩. ௨.நாளா.௬.௨. சங்.௨௬.௮. (௨௨) சங்.௰௧.௪. அப்.௭.௪௯. (௨௩) லூக்.௰௧.௪௨. ௧.சாமு.௰௫.௨௨. ஓசி.௬.௬. மீகா.௬.௮. (௨௫) லூக்.௰௧.௩௯. (௨௭) லூக்.௰௧.௪௪. அப்.௨௩.௩.(௨௯)லூக்.௰௧.௪௭. (௩௧) அப்.௭.௫௧,௫௨. ௧.தெச.௨.௰௫. (௩௩) ஆதி.௰௫.௰௬. ௧.தெச. ௨.௰௬. (௩௪) லூக்.௰௧.௪௯. அப்.௫.௪௰. ௨.கொரி.௰௧.௨௪,௨௫.

பாரகரையும் அனுப்புகிறேன்: நீங்கள் அவர்களி
ற்சிலரைக்கொலைசெய்வீர்கள், சிலுவையில் அ
றைவீர்கள்; சிலரை உங்கள்ஆலயங்களில் வாரி
ஞல் அடிப்பீர்கள்,ஊருக்கூர்துன்பப்படுத்துவீர்
௩௫ கள்.—நீதிமானுகிய ஆபேலின்இரத்தமுதல் நீங்
கள் தேவாலயத்துக்கும் வேதிகைக்கு மிடையி
லே கொலைசெய்த பெரிகாயாவின்புத்திரனுகிய
சகரியாவின் இரத்தம்வரைக்கும், பூமியில்சிந்தப்
பட்ட நீதியானஎல்லா இரத்தப்பழியும் உங்கள்
௩௬ மேல் வரும்.—இவைஎல்லாம் இந்தச்சந்ததியின்
மேலே வருமென்று மெய்யாய் உங்களுக்குச்
௩௭ சொல்லுகிறேன்.–யெருஷலேமே, யெருஷலே
மே, தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்து, உன்னி
டத்தில் அனுப்பப்பட்டவர்கள் மேல் கல்லெ
றிகிறவளே, கோழி தன்குஞ்சுகளைச்சிறகுக
ளின்கீழே கூட்டிச்சேர்த்துக்கொள்ளும் வண்
ணமாக, அநேகந்தரம் உன் பிள்ளைகளைச்சேர்த்
துக்கொள்ள விரும்பினேன், நீயோ சம்மதிக்க
௩௮ வில்லை.—பாருங்கள், உங்கள்வாசஸ்தலம் உங்
௩௯ களுக்குப்பாழாய்விடப்படும்.—கர்த்தருடை
ய நாமத்திஞலே வருபவர் ஸ்தோத்திரிக்கப்
படக்கடவரென்று நீங்கள் சொல்லும்வரைக்
கும், இதுமுதல் என்னைக்காணுதிருப்பீர்களென்
று உங்களுக்குச்சொல்லுகிறேனென்றுர்.

## ௨௪. அதிகாரம்.

௧. தேவாலயத்தின்நாசத்தை முன்னுரைத்தல்: ௩. அழியுஞ் சமயத்திலுண்டான அடையாளங்களைத் தெரிவித்தல்: ௯. சீஷர்துயரப்படல்: ௰௫. சனங்கள் தப்பிஓடல்: ௨௩.கள்ளத்தீர்க்கதரிசிகள் தோன்றல்: ௨௯.யூதேயாதேசத்தின் நிலைமையைத்தெரிவித்தல்: ௩௨. அத்திமரத்தைக்குறித்த உவமையைச்சொல்லல்: ௩௬. சலப்பிரளயகாலத்தைப்போன்றஉபத்திரவமுண்டாதல்: ௪௨. விசாரம் அவசியமெனக்காட்டல்: ௪௫. உண்மையுள்ளதாசனையும் உண்மையில்லாததாசனையும் உவமித்தல்.

யேசு தேவாலயத்தை விட்டுப்புறப்படுகிற
பொழுது, அவருடைய சீஷர்சேர்ந்து, தேவா
லயங்கட்டியிருக்கிறவைகளை அவருக்குக்காண்
௨ பித்தார்கள்.–யேசு அவர்களைநோக்கி, இவைக
ளெல்லாவற்றையும் பார்க்கிறீர்களல்லவா. இடி
படாததாய் ஒருகல்லும் மற்றெருகல்லின்மேல்
விடப்படுவதில்லையென்று மெய்யாய் உங்களுக்
குச்சொல்லுகிறேனென்றுர்.
௩ பின்பு அவர் ஒலீவமலையின்மேல் உட்கார்ந்தி
ருக்கையில், சீஷர் அவரிடத்தில் தனித்துவந்து,
இவை எப்பொழுது நடக்கும், நீர் வருவதற்கும்,
உலகத்தின்முடிவுக்கும்அடையாளம்யாது, நீர்இ
வைகளை எங்களுக்குத்தெரிவிக்கவேண்டுமென்
றுசொல்ல,—அவர்களுக்குத்தரமாக யேசு, அ ௪
நேகர் வந்து என் நாமத்தைத்தரித்து, தங்களைக்கி
றிஸ்துவென்றுசொல்லி, அநேகரைவஞ்சிப்பார்
கள்;–ஆகையால் ஒருவனும் உங்களை வஞ்சியாத ௫
படிக்கு நீங்கள்சாவதானமாயிருங்கள்.—அன்றி ௬
யும், யுத்தங்களையும், யுத்தச்செய்திகளையுங்கேட்
பீர்கள்: நீங்கள்கலங்காதபடி சாவதானமாயிருங்
கள்: இவைகளெல்லாம் நடப்பது அவசியம், ஆ
ஞலும் முடிவு உடனேவராது.—ஒருதேசத்தார் ௭
மறுதேசத்தாருக்கும், ஒரு இராச்சியத்தார் மறு
இராச்சியத்தாருக்கும் விரோதமாய் எழும்புவார்
கள்: பஞ்சமும், பெருவாரிக்காய்ச்சலும், பூமி
அதிர்தலும் அங்கங்கே உண்டாகும்.—இவைக ௮
ளெல்லாம் உபத்திரவங்களின் ஆரம்பம்.—அப் ௯
பொழுது உபத்திரவப்படும்படி உங்களை ஒப்பித்
து, உங்களைக்கொலைசெய்வார்கள்: என்நாமத்தி
னிமித்தம் நீங்கள்சகலதேசத்தாராலும்பகைக்கப்
படுவீர்கள்.—அக்காலத்தில் அநேகர் இடறுண் ௰
டு, ஒருவரைஒருவர்ஒப்பித்து, ஒருவரை ஒருவர்
பகைப்பார்கள்.—அநேகங் கள்ளத்தீர்க்கதரிசி ௰௧
கள் எழும்பி, அநேகரைவஞ்சிப்பார்கள்.–அக்கி ௰௨
ரமம் மிகுதியாவதிஞல் அநேகருடைய அன்பு
தணிந்துபோம்.—முடிவுபரியந்தம் நிலைநிற்பவ ௰௩
னே இரட்சிக்கப்படுவான்.—சகல தேசத்தாருக் ௰௪
குஞ்சாட்சியாய் இராச்சியத்தின் இந்தச்சுவிசே
ஷம் பூமியில் எங்கும் பிரசங்கிக்கப்படும்; அப்
பொழுதுமுடிவுவரும்.-ஆதலால் வாசிக்கிறவன் ௰௫
சிந்திக்கக்கடவன்,–தானியேல்தீர்க்கதரிசிகுறித் ௰௬
துச்சொல்லிய சருவசங்கார அரோசியமானவஸ்
து பரிசுத்தஸ்தானத்திலே நிற்க நீங்கள் காணும்
பொழுது, யூதேயா தேசத்திலுள்ளவர்கள் மலைக
ளுக்குஓடிப்போகக்கடவர்கள்:—வீட்டின்மேல் ௰௭
நிற்கிறவன் தன் வீட்டிலுள்ளவைகளை எடுத்துக்
கொண்டுபோகும்படி இறங்கவேண்டாம்:–வய ௰௮
லில் இருப்பவன் தன்வஸ்திரங்களை எடுத்துக்
கொள்ளும்படி பின்னிட்டுத்திரும்பலாகாது.—
ஐயோ, அந்நாட்களிலே கருப்பவதிகளுக்கும், ௰௯
முலைகொடுக்கும்ஸ்திரிகளுக்கும் ஆபத்துவரும்.-
உலகமுண்டானதுமுதல் இதுவரைக்கும்நடவா ௨௰
ததும், இனிஒருபொழுதும் நடவாமலிருப்பது
மாகிய மிகுந்த உபத்திரவம் அக்காலத்திலுண்
டாகும்.–ஆதலால் நீங்கள் ஓடிப்போவது மாரிகா ௨௧
லத்திலாகிலும், ஓய்வுநாளிலாகிலுஞ் சம்பவியா
தபடிக்குவேண்டுதல் பண்ணுங்கள்—அந்நாட்க ௨௨
ளின் தொகை குறைக்கப்படாதிருந்தால் ஒரு
பிராணியுந் தப்புவதில்லை: தெரிந்துகொள்ளப்
பட்டவர்களினிமித்தமே அந்நாட்களின் தொ

(௩௫) வெளி.௰௮.௨௪. ஆதி.௪.௮. ௧.யோவா.௩.௰௨. ௨.நாளா.௨௪.௨௰,௨௧. (௩௭) லூக்.௰௩.௩௪. ௨.நாளா.௨௪.௨௪. உபா.௩௨.௰௧,௰௨. சங்.௯௧.௪. (௩௯) சங்.௱௰௮.௨௬.—(௨௪. அதி. ௨.) ௧.இரா.௯.௭. எரே.௨௬.௰௮. மீகா.௩.௰௨. லூக்.௰௯.௪௪. (௩) ௧.தெச.௫.௧. (௪) எரே,௰௪.௰௪. யோவா.௫.௪௩.(௫)எபே.௫.௭. கொலோ.௨.௮,௰௮. ௨.தெச. ௨.௩. ௧.யோவா.௪.௧. (௭) ௨.நாளா.௰௫.௬. ஏசா ௰௯.௨. ஆகா.௨.௨௨. சக.௰௪.௰௩. (௯) லூக்.௨௧.௰௨. யோவா. ௰௫.௨௰. அப்.௪.௨,௩. ௧.பேதுரு.௪.௰௬. வெளி.௨.௰,௰௩. (௰) ௨.தீமோ.௧.௰௫. (௰௧) அப்.௨௰.௨௯. ௨.பேதுரு. ௨.௧. ௧.தீமோ.௪.௧. (௰௩) எபி.௩.௬,௰௪. வெளி.௨.௰. (௰௪) ரோ.௰.௰௮. கொலோ.௧.௬,௨௩. (௰௫) தானி.௯.௨௭, ௨௭,௩௫. (௰௯) லூக்.௨௩.௨௯. (௨௰) தானி.௯.௨௬. யோவே.௨.௨. (௨௨) ஏசா.௬௫.௮,௯. சக.௰௪.௨,௩.

௨௩ கை குறைக்கப்படும்.—அக்காலத்திலே கள்ளக்கி
றிஸ்துக்களுங் கள்ளத்தீர்க்கதரிசிகளுந்தோன்றி,
தங்களால்கூடுமாகில், தெரிந்துகொள்ளப்பட்ட
வர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக, மிகுந்தஅடை
யாளங்களையும்அற்புதங்களையுங்காட்டுவார்கள்.-
௨௪ ஆதலால் ஒருவன் உங்களிடத்தில், பாருங்கள்,
கிறிஸ்து இங்கே இருக்கிறார், அங்கே இருக்
௨௫ கிறாரென்றால், நீங்கள் நம்பாதிருங்கள்.—பா
ருங்கள், நான் முன்னமே உங்களுக்குத் தெரி
௨௬ விக்கிறேன்.—பாருங்கள், அவர் வனத்திலிருக்
கிறாரென்றால், வெளியேபுறப்படாதிருங்கள்.—
௨௭ பாருங்கள், வீட்டின் உள்ளறைக்குள்இருக்கிறா
ரென்றால், அதைநம்பாதிருங்கள்: மின்னல் கி
ழக்கில் தோன்றி மேற்குவரைக்கும் பிரகாசிப்ப
௨௮ துபோல மனுபுத்திரன்வருவான்.-பிணமெங்கே
யோ,அங்கேகழுகுகளுங்கூடிவரும்.
௨௯ உபத்திரவமுள்ள அந்நாட்கள்கழிந்தவுடனே
சூரியன் இருளடையும், சந்திரன் ஒளிகொடா
து, நட்சத்திரங்கள் வானத்தினின்று உதிரும்,
வானத்தின்வலிமையுள்ள வஸ்துக்கள் அசைக்
௩௰ கப்படும்:—அப்பொழுது மனுபுத்திரனுடைய அ
டையாளம் வானத்திலேகாணப்படும்: மனுபுத்
திரன் பராக்கிரமத்தோடும், மகாமகிமையோடும்
வானத்தின்மேகங்களில் வருவதைப்பூமியிலுள்
ள சகலவமிசத்தாருங்கண்டு புலம்புவார்கள்.—
௩௧ உரத்தசத்தமாய்த்தொனிக்கும் எக்காளத்துடனே
தம்முடையதூதரை அனுப்புவான்,அவர்கள் வா
னத்தின் ஒரு எல்லைதொடங்கி மறுஎல்லைவரைக்
கும், நாலுதிசையிலும் நின்று அவனால் தெரிந்
௩௨ துகொள்ளப்பட்டவர்களைச்சேர்ப்பார்கள்.—அத்
திமரத்தினால் ஒரு திருஷ்டாந்தத்தைக் கற்றுக்
கொள்ளுங்கள்; அதின்கிளைகள் துளிர்த்து, இலை
கள் தழைக்கிறபொழுது, வசந்தகாலஞ் சமீபித்
௩௩ துவந்ததென்று உங்களுக்குத்தெரியும்.—அப்படி
யே இவைகளெல்லாவற்றையும் நீங்கள் காணும்
பொழுது, அவன்சமீபித்து வாசற்படியிலே வந்
௩௪ துவிட்டானென்று அறியக்கடவீர்கள்.—இந்தச்
சந்ததி ஒழிந்துபோகுமுன், இவைகளெல்லாஞ்
சம்பவிக்குமென்று மெய்யாய் உங்களுக்குச்
௩௫ சொல்லுகிறேன்.—வானமும் பூமியும் ஒழிந்து
போம், என்வாக்குகளோ, ஒருபொழுதும் ஒழி
யாமலிருக்கும்.

௩௬ அந்நாளையும் அந்நாழிகையையும்என்பிதாஒரு
வரேயன்றி, வேறொருவரும் அறியார்,பரமண்ட
லத்திலுள்ள தேவதூதர்களும் அதை அறியார்
௩௭ கள்.—நோவாவின்காலத்தில் நடந்ததுபோ
௩௮ ல,மனுபுத்திரன்வருங்காலத்திலும்நடக்கும்.—ச
லப்பிரளயத்துக்குமுன்னானநாட்களில், நோவா
பேழையிற்பிரவேசித்த நாள்வரைக்குஞ் சனங்
கள்போசனபானம்பண்ணியும்,-பெண்கொண் ௩௯
டும், பெண்கொடுத்தும், சலப்பிரளயம்வந்து அ
னைவரையுங்கொண்டுபோகும்வரைக்கும் உண
ராதிருந்தார்கள்; மனுபுத்திரன்வரும்பொழுதும்
அதுபோலநடக்கும்.—அந்தச்சமயத்தில் இரண் ௪௰
டுபுருஷர்வயலில்இருப்பார்கள்;அவர்களில்ஒரு
வன்அகப்படுவான், மற்றவன்விடப்படுவான்.—
இரண்டு ஸ்திரிகள் திரிகைதிரித்துக்கொண்டி ௪௧
ருப்பார்கள்; அவர்களில் ஒருத்தி அகப்படு
வாள், ஒருத்தி விடப்படுவாள்.

உங்கள் எசமானன் வரும் நாழிகையை நீங்கள் ௪௨
அறியீர்கள்: ஆதலால்விழித்திருக்கக்கடவீர்கள்.-
திருடன்வருஞ் சாமத்தை வீட்டெசமானன் அ ௪௩
றிந்தால், தன்வீடு கன்னமிடப்படாதபடிக்கு அ
வன் விழித்துக்கொண்டிருப்பானென்று அறிந்
திருக்கிறீர்கள்.—மனுபுத்திரன் நீங்கள் எதிர்பார்த் ௪௪
திராத நாழிகையில்வருவான்: ஆதலால் நீங்களும்
ஆயத்தமாயிருக்கக்கடவீர்கள்.—எசமானன், தன் ௪௫
வீட்டாருக்குத் தகுந்தசமயத்திலே போசனங்
கொடுக்கும்படி, அவர்களின் மேல்விசாரணைக்
காரனாகவைத்த உண்மையும் புத்தியுமுள்ளபணி
விடைக்காரன் யாவன்.—எசமானன் தான்வரும் ௪௬
பொழுது அந்தப்பிரகாரஞ்செய்யக்காண்கிற ப
ணிவிடைக்காரனே வாழ்வுடையவன்.—தன் ௪௭
பொருள்கள் எல்லாவற்றிற்கும் அதிகாரியாக அ
வனை ஏற்படுத்துவானென்று மெய்யாய் உங்க
ளுக்குச் சொல்லுகிறேன்.—அந்தப்பணிவிடைக் ௪௮
காரன் துஷ்டனாய், என் எசமானன் திரும்பிவ
ரத் தாமதப்படுவானென்றெண்ணி,—தன் னோ ௪௯
டே பணிவிடைசெய்பவர்களை அடிக்கத்தொ
டங்கி, வெறியரோடே புசித்துக்குடித்து இருப்
பானானால்,—அவன் எசமானன், அந்தப்பணிவி ௫௰
டைக்காரன் எதிர்பார்த்திராத நாளிலும், அறியா
தநேரத்திலும் வந்து, அவனைக்கடினமாய்த் தண்
டித்து,—அழுகையும் பற்கடிப்புமுள்ள இடத் ௫௧
திலே, கபடிகளோடே அவனுடையபங்கை ஏற்
படுத்துவான்.

## ௨௫. அதிகாரம்.

௧. பத்துக்கன்னியரை உவமித்தல்: ௰௪. தூரதே
சத்துக்குப் பிரயாணமாய்ப்போன மனுஷன்
கொடுத்த தாலந்துகளை உவமித்தல்: ௩௧. நடுத்
தீர்வைநாளின் விசேஷங்களைத்தெரிவித்தல்.

அப்பொழுது பரமஇராச்சியம், தங்கள் தீவர்த் ௧
திகளைப்பிடித்துக்கொண்டு, மணவாளனை எதிர்
கொள்ளப்புறப்படுகிற பத்துக்கன்னியருக்கொ
ப்பாகும்.-அவர்களில் ஐந்துபேர் புத்தியுள்ளவர் ௨
கள், ஐந்துபேர் புத்தியீனர்.—புத்தியீனர் தங் ௩

(௨௩) ௨பா.௰௩.௧. ௨ தெச.௨.௯,௰,௰௧. வெளி.௰௩.௰௩. யோவா.௬.௩௭. ரோ.௮.௨௮,௨௯,௩௰. ௨.தீமோ.௨.௰௯. (௨௮) யோபு.௩௯.௩௰.(௨௯)தானி.௭.௰௧,௰௨. ஏசா.௰௩.௰. எசேக்.௩௨.௭. யோவே.௨.௰,௩௧. ஆமோ.௫.௨௰. அப்.௨.௨௰. வெளி.௬.௰௨.(௩௰)தானி.௭.௰௩. சக.௰௨.௰௨. வெளி.௧.௭. (௩௧) ௧.கொரி.௰௫.௫௨. ௧.தெச.௪.௰௬. (௩௩) யாக்.௫.௯. (௩௫) சங்.௱௨.௨௬. ஏசா.௫௧.௬. எரே.௩௧.௩௫,௩௬. எபி.௧.௰௧. (௩௬) அப்.௧.௭. ௧.தெச.௫.௨. ௨.பேதுரு.௩.௰. சக.௰௪.௭.(௩௮)ஆதி.௬.௩,௪. ௧.பேதுரு.௩.௨௰. (௪௩) ௧.தெச.௫.௨. ௨.பேதுரு.௩.௰. வெளி.௩.௩ (௪௪) ௧.தெச.௫.௬. (௪௫) அப்.௨௰.௨௮. ௧.கொரி.௪.௨. எபி.௩.௫. (௪௬) வெளி.௰௬.௰௫.—(௨௫. அதி. ௧.) எபே.௫. ௨௯,௩௰. வெளி.௰௯.௭.

கள் தீவர்த்திகளைஎடுத்தும் எண்ணெயைக்கூடக்
௪ கொண்டுபோகவில்லை:—புத்தியுள்ளவர்களோ,
தங்கள் தீவர்த்திகளோடே தங்கள் பாத்திரங்க
ளில் எண்ணெயையுங் கொண்டுபோனார்கள்.—
௫ மணவாளன் தாமதித்தபொழுது, எல்லாரும் நித்
௬ திரைமயக்கம் அடைந்து தூங்கினார்கள்.-அத்தரா
த்திரியில், பாருங்கள், மணவாளன் வருகிறான்;
அவனை எதிர்கொள்ளப் புறப்படுங்களென்று
௭ ஒருசத்தம் பிறந்தது.—அப்பொழுது அந்தக்கன்
னியரெல்லாரும் எழுந்து, தீவர்த்திகளை ஆயத்தப்
௮ படுத்தினார்கள்.—புத்தியீனர் புத்தியுள்ளவர்களை
நோக்கி, உங்கள் எண்ணெயிற்கொஞ்சம் எங்க
ளுக்குத்தாருங்கள்; எங்கள் தீவர்த்திகள் அணைந்
௯ து போகின்றனவென்று சொல்ல,—புத்தியுள்ள
வர்கள் அதற்குத்தரமாய், எங்களுக்கும் உங்க
ளுக்கும் போதாமலிராதபடி, நீங்கள் விற்கிறவர்
களிடத்தில்போய், உங்களுக்காகக் கொள்ளுங்
௰ களென்றார்கள்.—அவர்கள் கொள்ளப்போகிற
பொழுது மணவாளன் வந்தான்; ஆயத்தமாயிருந்
தவர்கள் அவனோடே விவாக வீட்டில் பிரவே
௰௧ சித்தார்கள்:கதவுபூட்டப்பட்டது.-பின்பு மற்றக்
கன்னியரும்வந்து,ஆண்டவனே,ஆண்டவனே,
௰௨ எங்களுக்காகத் திறக்கவேண்டுமென்றார்கள்.—அ
தற்குத்தரமாய், அவன்,உங்களை அறியேனென்று
மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்
௰௩ றான்.—மனுபுத்திரன் வரும் நாளையானாலும், நா
ழிகையையானாலும் நீங்கள் அறியாதபடியால்,
நீங்கள் விழித்துக்கொண்டிருக்கக்கடவீர்கள்.
௰௪ அவன், தூரதேசத்திற்குப் பிரயாணமாய்ப்பு
றப்படுகையில், தன் பணிவிடைக்காரரை அ
ழைத்து, தன்பொருளை அவர்களுக்கு ஒப்பித்தம
௰௫ னுஷனைப்போலிருக்கிறான்.—அவன் அவரவர்
சாமர்த்தியத்துக்கேற்க,ஒருவனுக்கு ஐந்து தாலந்
தும், ஒருவனுக்கு இரண்டும், மற்றொருவனுக்கு
ஒன்றுங்கொடுத்து, பின்பு புறத்தேசத்திற்குப்
௰௬ போனான்.-ஐந்து தாலந்தைப்பெற்றவன்போய்,
அவைகளால்வியாபாரம்பண்ணி, வேறைந்துதா
௰௭ லந்தைச் சம்பாதித்தான்.—அப்படியே இரண்
டைப்பெற்றவனும், வேறிரண்டைச் சம்பாதித்
௰௮ தான்.—ஒன்றைப்பெற்றவனோ, போய், நிலத்
தைத்தோண்டி, தன் எசமானனுடைய திரவியத்
௰௯ தைப் புதைத்துவைத்தான்.—வெகுகாலஞ்சென்
றபின்பு அந்தப்பணிவிடைக்காரருடைய எச
மானன் திரும்பிவந்து, அவர்களோடே கணக்
௨௰ குப் பார்த்தான்.-அப்பொழுது ஐந்துதாலந்தைப்
பெற்றவன் சேர்ந்து, வேறும் ஐந்துதாலந்தைக்
கொண்டுவந்து, ஆண்டவனே, ஐந்துதாலந்தை
என்னிடத்தில் ஒப்பித்தீர்: அவைகளால் வேறும்
ஐந்துதாலந்தைச் சம்பாதித்தேன், பாருமென்று
௨௧ சொல்ல,—எசமானன் அவனைநோக்கி, நல்லது,
உண்மையும் உத்தமமுமுள்ள பணிவிடைக்கார
னே, நீ அற்பத்தில் உண்மையாயிருந்தாய், மிகு
தியின்மேல் உன்னை அதிகாரியாய் ஏற்படுத்து
வேன்: நீ உன் எசமானனுடைய சந்தோஷத்
தில் பங்கடையவாவென்றான்.—இரண்டு தாலந் ௨௨
தைப்பெற்றவனுஞ்சேர்ந்து, ஆண்டவனே, நீர்
இரண்டுதாலந்தை என்னிடத்தில் ஒப்பித்தீர்: அ
வைகளால் வேறும் இரண்டு தாலந்தைச் சம்பா
தித்தேன், பாருமென்றுசொல்ல,—எசமானன் அ ௨௩
வனைநோக்கி, நல்லது, உண்மையும் உத்தமமு
முள்ள பணிவிடைக்காரனே, நீ அற்பத்தில்
உண்மையாயிருந்தாய், மிகுதியின்மேல் உன்னை
அதிகாரியாக ஏற்படுத்துவேன்: உன் எசமான
னுடைய சந்தோஷத்தில் பங்கடையவாவென்
றான்.—பின்பு ஒரு தாலந்தைப்பெற்றவன் வந்து, ௨௪
ஆண்டவனே, நீர் விதையாத இடத்தில் அறுக்கி
றவரும், தெளியாத இடத்தில் சேர்க்கிறவரு
மாகிய கடினமான மனுஷனாயிருக்கிறீரென்று
நான் அறிந்தேன்:—ஆதலால் நான் பயந்து உம ௨௫
து தாலந்தை நிலத்திலே புதைத்து வைத்தேன்:
உம்முடையதை உமக்கு ஒப்பிக்கிறேனென்று
சொல்ல,—அவன் எசமானன் அவனுக்குத்தர ௨௬
மாய், தீமையுஞ் சோம்பலுமுள்ள பணிவிடைக்
காரனே, நான் விதையாத இடத்தில் அறுக்கிற
வனென்றும், தெளியாத இடத்தில் சேர்க்கிறவ
னென்றும் நீ அறிந்தாயே:—அப்படியானால் நீ ௨௭
என் திரவியத்தை வியாபாரிகளிடத்தில் கொடுத்
துவைக்கவேண்டும், அப்பொழுது நான் வந்து
என்னுடையதை வட்டியோடே வாங்கிக்கொள்
வேனென்று சொல்லி,—இவனிடத்திலிருக்கிற ௨௮
தாலந்தை நீங்கள் எடுத்து, பத்துத்தாலந்தைப்
பெற்றவனுக்குக் கொடுங்கள்.—உள்ளவனெவ ௨௯
னோ, அவனுக்குக்கொடுக்கப்படும், சம்பூரண
மும் அவனுக்குண்டாகும்: உள்ளவனல்லாதவ
னிடத்திலுள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும்.—
பலனற்ற பணிவிடைக்காரனாகிய இவனை அழு ௩௰
கையும் பற்கடிப்புமுடையதாகிய மிகவுந் தூர
மான இருளிலே தள்ளிவிடுங்களென்றான்.
மனுபுத்திரன் தன்னுடைய சகலபரிசுத்த தூத ௩௧
ரோடே தனது மகிமையில்வருவான்,அவன் தன
து மகிமையுள்ள சிங்காசனத்தின்மேல் வீற்றிருப்
பான்.—அப்பொழுது சகலசாதியாரும் அவன் ச ௩௨
முகத்தில் கூட்டப்படுவார்கள்: மேய்ப்பன் ஒரு
வன் செம்மறி ஆட்டை வெள்ளாட்டினின்று
பிரிப்பதுபோல், அவர்களை வெவ்வேறாகப்பிரித்
து,—செம்மறி ஆடுகளைத் தனது வலதுபாரிசத்தி ௩௩
லும், வெள்ளாடுகளைத் தனது இடதுபாரிசத்தி
லும் நிறுத்துவான்.—பின்பு இராசா, தமது வலது ௩௪
பாரிசத்திலுள்ளவர்களை நோக்கி, வாருங்கள்,
என் பிதாவினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே,

(௫) ௧.தெச.௫.௬. (௬) ௧.தெச.௪.௰௬. (௭) லூக்.௰௨.௩௫. (௰) லூக்.௰௩.௨௫. (௰௨) அபகூ.௧.௰௩. யோவா.௯.௩௧. (௰௩) ௧.கொரி.௰௪.௩. ௧.தெச.௫ ௬. ௧.பேதுரு.௫.௮. வெளி.௰௫.௰௬. (௰௫) ரோ.௰௨.௬. ௧.கொரி.௰௨.௭. எபே.௪.௰௬.(௨௧)௨.தீமோ.௨.௰௨. எபி.௰௨.௨. ௧.பேதுரு.௧.௮. (௩௧) சக.௰௪.௫. அப்.௧.௰௧. ௧.தெச.௪.௰௬. ௨.தெச.௧.௬. யூதா.௰௫. வெளி.௧.௭. (௩௨) ரோ.௰௪.௰. ௨.கொரி.௫.௰. வெளி.௨௰.௰௨. வெளி.௨௰.௩௮.(௩௪)ரோ.௮.௰௭. ௧.பேதுரு.௧.௪,௯. வெளி.௨௧.௭. ௧.கொரி.௨.௯. எபி.௰௧.௰௬.

உலக சிருஷ்டிதொடங்கி உங்களுக்காக ஆயத்
தம்பண்ணப்பட்ட இராச்சியத்தைச் சுதந்தரித்
௩௫ துக்கொள்ளுங்கள்.-நான் பசியாயிருந்தேன், நீங்
கள் எனக்குப்போசனத்தைத் தந்தீர்கள்: நான் தா
கமாயிருந்தேன், நீங்கள் எனக்குப் பானத்தைக்
கொடுத்தீர்கள்: நான் பரதேசியாயிருந்தேன், நீங்
கள் என்னை உங்களிடத்தில்சேர்த்துக்கொண்டீர்
௩௬ கள்.—நான் நிருவாணியாயிருந்தேன், எனக்கு
வஸ்திரங்கொடுத்தீர்கள்: நான் வியாதியாயிருந்
தேன், என்னைவிசாரித்தீர்கள்: நான்காவலிலிருந்
தேன், என்னிடத்திற்கு வந்தீர்களென்றுசொல்
௩௭ ல,—நீதிமான்கள் அவருக்குத்தரமாய், கர்த்தா
வே,நாங்கள் எப்பொழுது உம்மைப் பசியுள்ள
வராகக்கண்டு போசனங்கொடுத்தோம்,தாகமுள்
௩௮ ளவராகக்கண்டு பானத்தைக்கொடுத்தோம்.-நாங்
கள் எப்பொழுது உம்மைப்பரதேசியென்றுகண்
டு சேர்த்துக்கொண்டு, நிருவாணியென்றுகண்டு
௩௯ வஸ்திரங்கொடுத்தோம்.—நாங்கள் எப்பொழுது
உம்மை வியாதியுள்ளவரென்றும்,காவலிலிருக்கி
றவரென்றுங் கண்டு,உம்மிடத்தில்வந்தோமென்
௪௰ பார்கள்.-அதற்குத்தரமாய் இராசா, மிகவுஞ்சிறி
யரான என் சகோதரராகிய இவர்களில் ஒருவனு
க்கு நீங்கள் எதைச்செய்தீர்களோ, அதை எனக்
கே செய்தீர்களென்று மெய்யாய் உங்களுக்குச்
௪௧ சொல்லுகிறேனென்பான்.—பின்பு அவர் தமது
இடதுபாரிசத்திலுள்ளவர்களைநோக்கி,சபிக்கப்
பட்டவர்களே, நீங்கள் என்னைவிட்டுப் பிசாசா
னவனுக்காகவும், அவனுடைய தூதர்களுக்காக
கவும் ஆயத்தப்படுத்தப்பட்ட நித்திய அக்கினியி
௪௨ னிடத்திற்போங்கள்.—நான் பசியாயிருந்தேன்,
நீங்கள் எனக்குப் போசனங்கொடுக்கவில்லை:
நான் தாகமாயிருந்தேன், நீங்கள் எனக்குப்பான
௪௩ ங்கொடுக்கவில்லை.-நான்பரதேசியாயிருந்தேன்,
நீங்கள் என்னை உங்களிடத்தில் சேர்த்துக்கொள்
ளவில்லை: நான் நிருவாணியாயிருந்தேன், நீங்
கள் எனக்குவஸ்திரங்கொடுக்கவில்லை: நான் வி
யாதியுள்ளவனும், காவலில்வைக்கப்பட்டவனு
மாயிருந்தேன், நீங்கள் என்னை விசாரிக்கவில்லை
௪௪ யென்பான்.—அப்பொழுது அவர்கள் அவருக்
குத்தரமாய், கர்த்தாவே, உம்மைப் பசியுள்ள
வரென்றாவது, தாகமுள்ளவரென்றாவது, பரதே
சியென்றாவது, நிருவாணியென்றாவது, வியாதி
யுள்ளவரென்றாவது, காவலிலிருப்பவரென்றாவ
து நாங்கள் எப்பொழுதுகண்டு, உமக்குதவிசெய்
௪௫ யவில்லையென்பார்கள்.-அதற்குத்தரமாய்அவன்,
மிகவுஞ் சிறியரான இவர்களில் ஒருவனுக்கு நீங்
கள் எதைச்செய்யாதிருந்தீர்களோ, அதை எனக்
கே செய்யாதிருந்தீர்களென்று மெய்யாய்உங்க
௪௬ ளுக்குச்சொல்லுகிறேனென்பார்.—இவர்கள் நித்
திய தண்டனையையும், நீதிமான்களோ, நித்திய
சீவனையும் அனுபவிக்கப்போவார்களென்றார்.

## உ௬. அதிகாரம்.

க. அதிபதிகள் கிறிஸ்துவுக்கு விரோதமாய்த்துரா லோசனைசெய்தல்: ௬. ஒருஸ்திரி கிறிஸ்துவுக்கு அபிஷேகஞ்செய்தல்: ௰௪. யூதாதுரோகஞ் செய்தல்:௰௭.பஸ்காவைக்குறித்துச் சம்பாஷித்தல்:உ௬. கர்த்தர் இராப்போசனத்தைநிருபித்தல்: தோட்டத்தில் துக்கமடைதல்: ௪௭. அவர் ஒப்பிக்கப்படல்: ௫௭.மகா ஆசாரியனிடத்தில் கொண்டுபோகப்படல்: ௫௯. அவர் நியாயம் விசாரிக்கப்படல்: ௬௯. பேதுரு அவரை மறுத்தல்.

யேசு இந்த வாக்குகளையெல்லாஞ் சொல்லி க
முடித்த பின்பு, தம்முடைய சீஷரைநோக்கி,—
இரண்டுநாளைக்குப்பின்பு பஸ்கா வருமென்ற உ
றிந்திருக்கிறீர்கள், அப்பொழுது மனுபுத்திரன்
சிலுவையில் அறையப்படும்படி ஒப்பிக்கப்படு
வானென்றார்.—அக்காலத்திலே பிரதான ஆசாரி ௩
யரும், வேதபாரகரும், சனங்களின் முதியோ
ரும் காய்பா என்னும் மகா ஆசாரியனுடைய அ
ரமனையில் கூடிவந்து,—தந்திரமாய் யேசுவைப் ௪
பிடித்துக்கொலைசெய்ய ஆலோசனைபண்ணின
பொழுது,—உற்சவத்தில்ஆகாது,சனங்களுக்குள் ௫
ளே கலகமுண்டாகுமென்றார்கள்.

யேசு பேதனியவூரில் குஷ்டரோகியாயிரு ௬
ந்த சீமோனுடைய வீட்டிலிருக்கையில்,-ஒருஸ் ௭
திரி வெண்கற்பரணியில் விலைஉயர்ந்த சுகந்த
தைலத்தைக்கொண்டுவந்து, அவர்பந்தியிருந்தச
மயத்தில் அவருடையசிரசின்மேல் ஊற்றினாள்.-
அவருடையசீஷர் அதைக்கண்டுவிசனப்பட் ௮
டு, இவ்வளவு வீண்செலவேது.—இந்தத்தைலத் ௯
தை உயர்ந்த கிரயத்துக்குவிற்று, தரித்திரருக்குக்
கொடுக்கலாமேயென்றார்கள்.—யேசு அதை அ ௰
றிந்து, அவர்களைநோக்கி, நீங்கள் இந்த ஸ்திரி
யைவருத்தப்படுத்துகிறதென்ன; இவள் எனக்கு
நற்கிரியையைச்செய்தாள்.—தரித்திரர் எப்பொ ௰௧
ழுதும் உங்களுடன் இருக்கிறார்கள்; நானோ எப்
பொழுதும் உங்களோடிருப்பதில்லை.—இவள் ௰௨
இந்தத்தைலத்தை என்சரீரத்தின்மேல் ஊற்றின
து, என்னை அடக்கம்பண்ணுவதற்காயத்தமாகச்
செய்தாள்.—உலகமெங்கும் எவ்விடத்தில் இங் ௰௩
தச்சுவிசேஷம் பிரசித்தமாக்கப்படுமோ, அவ்
விடத்தில் இவளை நினைப்பதற்கு இந்த ஸ்திரி
செய்ததுந் தெரிவிக்கப்படுமென்று மெய்யாய்
உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.

பின்பு பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் ௰௪
காரியோத்து என்பவன் பிரதான ஆசாரியரிடத்
தில்போய்,—நான் அவரை உங்களுக்குக்காட் ௰௫
டிக்கொடுத்தால், நீங்கள் எனக்கென்ன தருவீர்
களென்றுகேட்க, அவர்கள் அவனுக்கு முப்பது
வெள்ளிக்காசை நிறுத்துக்கொடுத்தார்கள்.—அ ௰௬
துமுதல் அவன் அவரைக்காட்டிக்கொடுக்கச் ச
மயந்தேடினான்.

(௩௫) எசா.௫௮.௭. எசேக்.௰௮.௭. யாக்.க.உ௭. எபி.௰௩.உ. ௩.யோவா.௫. (௩௬) யாக்.உ.௰௫,௰௬. உ.தீமோ.க.௰௬. (௪௰) நீதி.௰௪.௩௧. எபி.௬.௰. (௪௧) சங்.௬.௮. உ.பேதுரு.உ.௪. யூதா.௭. (௪௫) நீதி.௰௪.௩௧. சக.உ.௮. அப்.௯.௫. (௪௬) தானி.௰உ.உ. யோவா.௫.உ௯. ரோ.உ.௭.—(உ௬. அதி. ௩.) சங்.உ.உ. யோவா.௰௧.௪௭. அப்.௪.உ௫. (௬) யோவா.௰௧.க,உ. (௰௧) உபா.௰௫.௰௧. (௰௫) சக.௰௧.௰உ.

௰௭ புளிப்பில்லாத அப்பம் புசிக்கிற நாட்களுக்
குமுதல்நாளில்,சீஷர் யேசுவினிடத்தில்வந்து,
பஷ்காவை நாங்கள் எங்கே உமக்கு ஆயத்தம்
பண்ணுவோம்,உம்முடைய சித்தமென்னவென்
௰௮ றுகேட்க,—அவர், நீங்கள் நகரத்தில் இன்னானி
டத்திலேபோய், அவனைநோக்கி, காலஞ்சமீபித்
திருக்கின்றது; உன்வீட்டில் என் சீஷரோடே
பஷ்காவை ஆசரிப்பேனென்று போதகர்சொல்
௰௯ லுகிறாரென்பதைச் சொல்லுங்களென்றார்.–யே
சு இட்டகட்டளைப்படி சீஷர்போய், பஷ்கா
௨௰ வை ஆயத்தப்படுத்தினார்கள்.—சாயங்காலத்தில்
௨௧ அவர் பன்னிருவரோடே பந்தியிருந்தார்.—அ
வர்கள் போசனம்பண்ணுகையில், அவர், உங்க
ளில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பா
னென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறே
௨௨ னென்றார்.–அப்பொழுது அவர்கள் மிகவுந் துக்
கித்து அவரைநோக்கி, கர்த்தாவே, நானோ
அவனென்று ஒவ்வொருவராகச் சொல்லத்தொ
௨௩ டங்கினார்கள்.–அதற்குத்தரமாய் அவர், என்னோ
டே போசனபாத்திரத்தில் கைதோய்க்கிறவனே
௨௪ என்னைக்காட்டிக்கொடுப்பான்.—மனுபுத்திரன்
தன்னைக்குறித்து எழுதியிருக்கிற விதமாய்ப்போ
கிறான்:எந்தமனுஷன் அவனைக்காட்டிக்கொடுக்
கிறானோ, ஐயோ, அவனுக்கு ஆபத்துவரும்; அந்
தமனுஷன் பிறவாதிருந்தானானால் அவனுக்கு
௨௫ நலமென்றார்.–அப்பொழுது அவரைக் காட்டிக்
கொடுத்த யூதாவும் அவரைநோக்கி, இரபீ, நா
னோ அவனென்று கேட்க, அவர் அவனுடனே
நீ சொன்னாயென்றார்.

௨௬ பின்பு அவர்கள் போசனம்பண்ணுகையில்,
யேசு அப்பத்தைஎடுத்து, துதிசெய்து, அதைப்
பிட்டு, சீஷருக்குக்கொடுத்து, நீங்கள் எடுத்துப்
௨௭ புசியுங்கள்; இதுவே என்சரீரமென்றார்.—பின்
பு அவர் பாத்திரத்தையும் எடுத்து, ஸ்தோத்திரஞ்
சொல்லி, அதை அவர்களுக்குக்கொடுத்து, நீங்
௨௮ களெல்லாரும் இதிற்பானம்பண்ணுங்கள்.—இ
துவே புதிய உடன்படிக்கைக்கேற்க, பாவமன்
னிப்புக்கென்று அநேகருக்காகச் சிந்தப்படுகிற
௨௯ என்னுடைய இரத்தம்.—நானுங்களோடே என்
பிதாவின் இராச்சியத்தில் நவமாய்ப்பானம்பண்
ணும் நாள்வரைக்கும், இந்தத்திராட்சரசத்தை
நான் இனிப்பானம்பண்ணேனென்றுஉங்களுக்
௩௰ குச்சொல்லுகிறேனென்றார்.-அவர்கள்ஒருபாட்
டைப்பாடி, ஒலீவமலைக்குப் புறப்பட்டுப்போ
௩௧ னார்கள்.—அப்பொழுது யேசு அவர்களைநோக்
கி,“நான் மேய்ப்பனை அடிப்பேன்,அதினால் மந்
தையின்ஆடுகள் சிதறிப்போம்,”என்றெழுதியிரு
க்கிறபடி,இந்த இராத்திரியிலேநீங்களெல்லாரும்
௩௨ என்னிமித்தம் இடறுண்பீர்கள்.—நான் உயிர்த்
தெழுந்தபின்பு,உங்களுக்குமுன்னே கலிலேயா
௩௩ வுக்குப் போவேனென்றார்.–அதற்குத்தரமாய்ப்
பேதுரு, எல்லாரும் உம்மைக்குறித்து இடறுண்
டாலும், நான் ஒருபொழுதும் இடறுண்ணே
னென்றான்.—யேசு அவனைநோக்கி, இந்தராத் ௩௪
திரியிலே சேவல் கூவுமுன்னே, நீ என்னைமூன்
றுதரம் மறுதலிப்பாயென்று மெய்யாய் உனக்
குச்சொல்லுகிறேனென்றார்.—அதற்குப் பேது ௩௫
ரு, நான் உம்மோடே மரணமடைந்தாலும், உம்
மை மறுதலிக்கமாட்டேனென்றான். சீஷரெல்
லாரும் அப்படியே சொன்னார்கள்.

பின்பு யேசு அவர்களுடனே கெத்சேமனீ ௩௬
யென்னும்ஸ்தானத்தைச்சேர்ந்து, சீஷரைநோக்
கி, நான் அங்கேபோய்வேண்டுதல் பண்ணுமள
வும் நீங்கள்இவ்விடத்தில்உட்காந்திருங்களென்
றுசொல்லி,-பேதுருவையும்செபேதேயுவின்புத் ௩௭
திரர் இருவரையுங் கூட்டிக்கொண்டுபோய்,துக்
கமடையவும், மிகவும் வியாகுலப்படவுந்தொ
டங்கி,–பின்பு அவர்களைநோக்கி, மரணம்வரு ௩௮
விக்கிறவேதனை என் ஆத்துமாப்படுகின்றது: நீங்
கள் இங்கேதரித்து, என்னோடே விழித்திருங்க
ளென்றுசொல்லி,–சற்று அப்புறம்போய் முகங் ௩௯
குப்புறவிழுந்து, ஆ, என்பிதாவே, கூடுமாகில்,
இந்தப்பாத்திரம் என்னைவிட்டுநீங்கும்படிசெய்
யும், எப்படியும் என்சித்தத்தின்படியல்ல, உம்
முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவதென்று
வேண்டுதல்பண்ணினார்.—பின்பு அவர் சீஷரி ௪௰
டத்தில்வந்து, அவர்கள் நித்திரைபண்ணக்கண்
டு, பேதுருவைநோக்கி, நீங்கள் ஒருமணிநேரம
ளவும் என்னோடே விழித்திருக்கக்கூடாதா.—
நீங்கள் சோதனையில் அகப்படாதபடிக்குவிழித் ௪௧
திருந்துவேண்டுதல்செய்யுங்கள்: ஆவி உற்சாக
மாயிருக்கின்றது, மாமிசமோ பலவீனமுள்ள
தென்று சொல்லி,—இரண்டாந்தரம்போய், ஆ, ௪௨
என்பிதாவே, இந்தப்பாத்திரத்தில் நான் பானம்
பண்ணினாலன்றி இது என்னைவிட்டு நீங்கக்கூ
டாதிருந்தால், உம்முடைய சித்தத்தின்படியே
ஆகக்கடவதென்று வேண்டுதல்பண்ணினார்.-அ ௪௩
வர்கள்கண்கள் உறக்கங்கொண்டபடியால், அ
வர் திரும்பிவந்தபொழுது அவர்கள் பின்னும்
நித்திரைபண்ணக்கண்டார்:—அவர்திரும்பவும் ௪௪
அவர்களைவிட்டுப்போய், மூன்றாந்தரமும் முந்
தின வாக்குகளையே சொல்லி வேண்டுதல்பண்
ணினார்.—பின்பு அவர் தம்முடைய சீஷரிடத் ௪௫
திலேவந்து, நீங்கள் இனி நித்திரைபண்ணி இ
ளைப்பாறுங்கள்: கேளுங்கள், மனுபுத்திரன் பா
விகளுடையகைகளில் காட்டிக்கொடுக்கப்படு
ஞ்சமயஞ் சமீபித்தது.—எழுந்திருங்கள், நாம் ௪௬
போவோம்: என்னைக்காட்டிக்கொடுப்பவன் ச
மீபித்துவருகிறானென்றார்.

அவர்பேசுகையில், பன்னிருவரில் ஒருவனா ௪௭
கிய யூதா வந்தான், அவனோடே பிரதான ஆசாரி
யராலும், சனங்களின்மூப்பரும் அனுப்
பப்பட்டதிரளானசனங்களுங் கட்கங்களையும்,
தடிகளையும் பிடித்துக்கொண்டுவந்தார்கள்.–அவ ௪௮

(௰௭)யாத்.௰௨.௬,௰௮.(௨௩)சங்.௪௧.௯.(௨௪)ஏசா.௫௩.தானி.௯.௨௬.அப்.௰௭.௨,௩. ௧.கொரி.௰௫.௩.(௨௬)௧.கொரி.௰௧.௨௩,௨௪,௨௫. ௧.கொரி.௰.௰௬. (௨௮) யாத்.௨௪.௮. லேவி.௰௭.௰. எரே.௩௧.௩௧. ரோ.௫.௰௫.எபி.௯.௨௨.(௨௯) அப்.௰.௪௧.(௩௧)சக.௰௩.௭. (௩௯) எபி.௫.௭. யோவா.௰௨.௨௭. பிலி.௨.௮. (௪௧) எபே.௬.௰௮. (௪௭) அப்.௧.௰௬.

ரைக் காட்டிக்கொடுக்கிறவன் அவர்களைநோக்
கி, எவனை நான்முத்தஞ்செய்வேனோ, அவனே
அவன்: அவனைப்பிடித்துக்கொள்ளுங்களென்று
௪௯ அடையாளஞ்சொல்லியிருந்தான்.—உடனே அ
வன் யேசுவினிடத்தில்வந்து, இரபீ, நீர்வாழ்
௫௰ கவென்று அவரைமுத்தஞ்செய்தான்.-யேசு அ
வனைநோக்கி, சிநேகிதா, நீவந்தகாரணமென்ன
வென்றார். அப்பொழுது மற்றவர்கள்சேர்ந்து,
யேசுவின்மேல் கைகளைவைத்து அவரைப்பி
௫௧ டித்தார்கள்.—அதினால் யேசுவின் கூட்டத்தா
ரில் ஒருவன் தன்கையை நீட்டித்தன்கட்கத்தை
உருவி, மகா ஆசாரியனுடைய பணிவிடைக்கா
௫௨ ரனைக் காதறவெட்டினான்.-அப்பொழுது யேசு
அவனைநோக்கி, கேள், நீ உன்கட்கத்தைத்திரும்
ப அதின்இடத்தில்போடு: கட்கத்தை எடுக்கிற
வர்கள்யாவருங் கட்கத்தினாலே நாசமடைவார்
௫௩ கள்.—பன்னிரண்டுலேகியோனுக்கு மேற்பட்ட
தேவதூதர்களைஎனக்கனுப்பும்படி என்பிதாவை
இப்பொழுது நான் வேண்டிக்கொள்ளக்கூடா
௫௪ தென்று நீ நினைக்கிறாயா.—அப்படியானால், இவ்
விதமாய் நடக்குமென்று சொல்லிய வேதவாக்
௫௫ கியங்கள் எப்படி நிறைவேறுமென்றார்.—அந்
நேரத்திலே யேசு, அந்தத்திரளானசனங்களை
நோக்கி, நீங்கள் ஒரு திருடனைப்பிடிக்கப் புறப்
படுவதுபோலக் கட்கங்களோடுந் தடிகளோடும்
என்னைப்பிடிக்கவந்தீர்களா; நாடோறும் நான்
தேவாலயத்தில் உங்களுக்குள்இருந்துஉபதேசம்
பண்ணிவந்தேன், அப்பொழுது நீங்கள்என்
௫௬ னைப்பிடிக்கவில்லையே.—தீர்க்கதரிசிகளின்வாக்
கியங்கள் நிறைவேறும்படியாக இவைகளெல்
லாம் நடக்கின்றனவென்றார். அப்பொழுதுசீஷ
ரெல்லாரும் அவரைவிட்டு ஓடிப்போனார்கள்.
௫௭ யேசுவைப்பிடித்தவர்கள் அவரை மகாஆ
சாரியனாகிய காய்பாவினிடத்தில் கொண்டுபோ
னார்கள், அங்கே வேதபாரகரும் முதியோருங்
௫௮ கூடிவந்திருந்தார்கள்.—பேதுருவோ, மகா ஆசா
ரியனுடைய அரமனைவரைக்குந் தூரத்தில் அவ
ரைப்பின்சென்று, அதில்பிரவேசித்து, முடிவை
௫௯ க்காணும்படி சேவகருடனுட்காந்தான்.—அப்
பொழுது பிரதான ஆசாரியரும், முதியோரும்,
மற்றச் சங்கத்தாரனைவரும் யேசுவைக்கொலை
செய்யும்படி அவருக்கு விரோதமாய்ப்பொய்ச்
௬௰ சாட்சிதேடியும் அகப்படவில்லை.—அநேகர்வந்
து பொய்ச்சாட்சி சொல்லியும் ஒவ்வவில்லை.—
௬௧ பின்பு இரண்டுபேர்வந்து, இவன் தேவாலயத்
தை இடித்து மூன்றுநாளைக்குள்ளே கட்டவல்ல
வனாயிருக்கிறேனென்றானென்று பொய்ச்சாட்
௬௨ சி சொன்னார்கள்.—அப்பொழுது மகாஆசாரியன்
எழுந்து, அவரைநோக்கி, இவர்கள் உனக்கு வி
ரோதமாய்ச் சொல்லுகிற சாட்சியென்ன; இதற்
குத்தரமாக ஏதாயினுஞ்சொல்வதில்லையாவென்
றான்.—யேசு பேசாமலிருந்தார். அப்பொழுது ௬௩
மகாஆசாரியன் அவரைநோக்கி, தேவனுடை
ய குமாரனாகிய கிறிஸ்து நீதானோ; அதை எங்
களுக்குச் சொல்லென்று சீவனுள்ள தேவனைக்
கொண்டு ஆணையிட்டு, உன்னைக் கேட்கிறே
னென்றான்.—யேசு அவனைநோக்கி, நீ சொன் ௬௪
னாயே: அன்றியும் இனிமேல் நீங்கள் மனுபுத்
திரனைச் சருவ வல்லமையுள்ளவருடைய வல
துபாரிசத்திலே வீற்றிருக்கவும், வானத்தின்மே
கங்களிலே வரவுங்காண்பீர்களென்று உங்க
ளுக்குச் சொல்லுகிறேனென்றார்.—மகா ஆசாரி ௬௫
யன் அதைக்கேட்டவுடனே தன் வஸ்திரங்க
ளைக்கிழித்து, இவன் தேவதூஷணஞ்சொன்னா
ன்; இனிச்சாட்சிகள் நமக்குவேண்டுவதென்ன,
இப்பொழுதே இவன் தூஷணத்தைக் கேட்டீர்
களே.—உங்களுக்கு எப்படித் தோன்றுகின்ற ௬௬
தென்றான்; அதற்குத்தரமாய்அவர்கள், இவன்
மரணத்திற்குப் பாத்திரனென்றார்கள்.—அப்பொ ௬௭
ழுது சிலர் அவருடைய முகத்திலே துப்பினார்
கள், சிலர் அவரைக்குட்டினார்கள்; சிலர் அவ
ருடையகன்னத்தில் அறைந்து,-கிறிஸ்துவே, ௬௮
உம்மை அடித்தவன் யாவன், அதைஞானதிருஷ்
டியினால் எங்களுக்குச்சொல்லுமென்றார்கள்.
பேதுரு அரமனையின் பிராகாரத்தில் இருந் ௬௯
தான்: அப்பொழுது பணிவிடைக்காரி ஒருத்தி
அவனிடத்திலே, நீயும் கலிலேயனாகிய யேசு
வோடே யிருந்தாயென்றாள்.—அதற்கு அவன், ௭௰
நீ பேசுகிறது எனக்குத்தெரியாதென்று எல்லா
ருக்குமுன்பாக மறுதலித்தான்.—அவன் மண் ௭௧
டபத்திற்குப் போகையில் வேறொருத்தி அவ
னைக்கண்டு, இவனும் நசரீயனாகிய யேசுவுட
னே இருந்தானென்று அங்கே இருந்தவர்களுக்
குச் சொன்னாள்.—பின்னும் அவன், நான் அந் ௭௨
த மனுஷனை அறியேனென்றுசொல்லி, ஆணை
யிட்டு மறுதலித்தான்.—சற்றுநேரத்துக்குப் பின் ௭௩
பு அங்கேநின்றவர்கள் பேதுருவினிடத்தில் வந்
து, மெய்யாக நீயும் அவர்களில் ஒருவன்; உன்
உச்சரிப்பு உன்னை வெளிப்படுத்துகின்றதென்
றார்கள்.—அதினால் பேதுரு, நான் அந்த மனுஷ ௭௪
னை அறியேனென்று சபதஞ்செய்யவும், ஆணை
யிடவுந்தொடங்கினான். உடனேசேவல்கூவிற்
று.—சேவல் கூவுமுன் நீ என்னைமூன்றுதரம்மறு ௭௫
தலிப்பாயென்று யேசு தனக்குச்சொல்லியவாக்
கைப் பேதுரு நினைந்து, வெளியே போய், மனங்
கசந்து அழுதான்.

## ௨௭. அதிகாரம்.

௧. கிறிஸ்துப் பிலாத்துவின்கையில் ஒப்பிக்கப்படல்: ௩. யூதா மனஸ்தாபப்பட்டுச்சாதல்: ௰௧. கிறிஸ்துப் பிலாத்துவினிடத்தில் சாட்சியிட்டு

(௪௯) ௨.சாமு.௨௰.௯. (௫௰) சங்.௪௧.௯. (௫௨) ஆதி.௯.௬. வெளி.௰௩.௰. (௫௩) ௨.இரா.௬.௰௭. தானி.௭.௰. (௫௪) ஏசா.௫௩.௭. (௫௬) புல.௪.௨௰. (௬௰) சங்.௩௫.௰௧. அப்.௬.௰௩. (௬௧) உபா.௰௯.௰௫. யோவா.௨.௰௯. (௬௩) ஏசா.௫௩.௭. லேவி.௫.௧. ௧.சாமு.௰௪.௨௪,௨௬. (௬௪) தானி.௭.௰௩. யோவா.௧.௫௧. ரோ.௰௪.௰. ௧.தெச.௪.௰௬. வெளி.௧.௭. சங்.௱௰.௧. அப்.௭.௫௫. (௬௫) ௨.இரா.௰௮.௩௭. (௬௬) லேவி.௨௪.௰௬. (௬௭) ஏசா.௫௰.௬. (௬௯) யோவா.௰௮.௰௬,௰௭,௨௫.—(௨௭. அதி.)

மவுனமாதல்: ௰௫. சனங்களுடைய முறைமைகளில் ஒன்றைக்காட்டல்: ௰௯. பிலாத்துத் தன் மனதை வெளிப்படுத்தல்: ௨௭. கிறிஸ்துவைக் கொலைசெய்யக்கொண்டுபோதல்: ௩௨. கிறிஸ்துவைச் சிலுவையிலறைதல்: ௩௩. கிறிஸ்துவைநிந்தித்தல்: ௪௫. கிறிஸ்துச் சிலுவையில் உரத்தசத்தமிடல்: ௫௰. அவருடைய மரணத்தறுவாயில் அற்புதங்களுண்டாதல்: ௫௫. ஸ்திரிகள் சமீபித்துவருதல்: ௫௭. கிறிஸ்துவை அடக்கம் பண்ணல்: ௬௨. காவலாளரைநியமித்தல்.

விடியற்காலமானபொழுது, பிரதான ஆசாரியரும், சனங்களின் முதியோருமாகிய யாவரும் யேசுவைக் கொலைசெய்யும்படி ஆலோசனை
௨ பண்ணி,-அவரைக்கட்டிக்கொண்டுபோய், பொந்தியு பிலாத்தென்னும் அதிபதியினிடத்தில் அவரை ஒப்பித்தார்கள்.
௩ அவரைக்காட்டிக்கொடுத்த யூதா, அவர் மரணமடையத்தீர்க்கப்பட்டதைக்கண்டபொழுது மனஸ்தாபமடைந்து, அந்த முப்பதுவெள்ளிக் காசையும் பிரதான ஆசாரியரிடத்திலும் முதி
௪ யோரிடத்திலுந் திரும்பக்கொடுத்து,—நான் குற்றமில்லாதவரைக் காட்டிக்கொடுத்ததினாலே பாவஞ்செய்தேனென்றான். அதற்கு அவர்கள், எங்களுக்கென்ன; நீயே அதைப் பார்த்துக்கொள்
௫ ளென்றார்கள்.—பின்பு அவன் அந்த வெள்ளிக் காசைத் தேவாலயத்தில் எறிந்து, புறப்பட்டுப்
௬ போய், நான்றுகொண்டான்.—பிரதான ஆசாரியர்அந்தப்பணத்தைஎடுத்து, இது இரத்தக்கிரயம், ஆதலால் இதைக்காணிக்கைப்பெட்டியில்சேர்ப்
௭ பது தகாதென்றுசொல்லி—அவர்கள் ஆலோசனை பண்ணினபின்பு, பரதேசிகளை அடக்கம்பண்ணும்படி அதற்குக்குயவனிலத்தைக்கொண்டார்
௮ கள்.—இதினிமித்தம் இந்நாள்வரைக்கும் அந்தநிலம், இரத்தநிலமென்னப்பட்டிருக்கின்றது.—
௯ இவ்விதமாய், "இஸரவேல் சனங்களால்மதிக்கப்பட்டவருடைய கிரயமாகிய முப்பது வெள்
௰ ளிக்காசை அவர்களெடுத்து,—கர்த்தர் எனக்குக்கட்டளையிட்டபடி அதைக் குயவனிலத்துக் காகக்கொடுத்தார்கள்," என்று எரேமியாதீர்க்கத
௰௧ ரிசிசொல்லியவாக்கு நிறைவேறிற்று.—யேசு அதிபதிக்குமுன்பாகநின்றபொழுது, அவன் அவரைநோக்கி, நீ யூதருடைய இராசாவாவென்று கேட்க, யேசு அவனுடனே,நீசொல்லுகிறாயே
௰௨ யென்றார்.—பிரதான ஆசாரியரும் முதியோரும் அவர்மேற்குற்றஞ்சாற்றினபொழுது, அவர் உத்
௰௩ தரமாய் ஒன்றுஞ்சொல்லவில்லை.—பின்பு பிலாத்து அவரைநோக்கி, இவர்கள் உனக்கு விரோதமாய் இத்தனைகுற்றங்களைச் சாற்றுகிறார்களென்
௰௪ பதை நீகேட்கவில்லையாவென்றான்.—அவர் அவனுக்குத்தரமாய் ஒருவாக்குஞ்சொல்லவில்லை; அதினால் அதிபதியானவன் மிகவும் ஆச்சரியப்
௰௫ பட்டான்.—அந்த உற்சவசமயத்தில், காவலிலிருந்தவர்களுக்குள் எவனைச்சனங்கள் கேட்பார்
களோ,அவனை அதிபதி விடுதலையாக்குவதுவழக்
கம்.—அக்காலத்திலே பேர்பெற்ற பரப்பாசென் ௰௬
பவன் காவலிலிருந்தான்.—ஆகையால் சனங்கள் ௰௭
கூடியிருக்கையில் பிலாத்து அவர்களைநோக்கி, பரப்பாசையோ, கிறிஸ்துவென்னும் யேசுவையோ, எவனை உங்களுக்கு விடுதலையாக்கவேண்டும்; உங்கள் விருப்பமென்னவென்று
கேட்டான்.—அவர்கள் பொறாமையினால் அவ ௰௮
ரை ஒப்பித்தார்களென்று அவன் அறிந்தான்.
அன்றியும் அவன் நியாயாசனத்திலிருக்கை ௰௯
யில், அவனுடையமனைவி அவனிடத்தில் ஆளனுப்பி, நீர் அந்த நீதிமானை ஒன்றுஞ்செய்யாதிரும்: நான் இன்றைக்குச்சொப்பனத்தில் அவனைக்குறித்து மிகுதியுந் துயரப்பட்டேனென்று
சொல்லுவித்தாள்.—பிரதான ஆசாரியரும் முதி ௨௰
யோரும் பரப்பாசைக்கேட்கும்படிக்கும், யேசுவைக்கொலைசெய்விக்கும்படிக்குஞ் சனங்
களை ஏவினார்கள்.—பின்பு இவ்விருவரில் எவ ௨௧
னை நான் உங்களுக்கு விடுதலைபண்ணவேண்டுமென்று அதிபதி சனங்களிடத்திலே கேட்டபொழுது, அவர்கள் பரப்பாசையென்றார்கள்.—
அதற்குப்பிலாத்து, கிறிஸ்துவென்னப்பட்ட ௨௨
யேசுவை நான் என்னசெய்யவேண்டுமென்றுகேட்க, சிலுவையில் அறையவேண்டுமென்று
எல்லாரும் அவனுடனே சொன்னார்கள்.—அதி ௨௩
பதி, ஏன், என்னகுற்றஞ்செய்தானென்றுகேட்க, அவர்கள் மேலும் மேலுஞ் சத்தமிட்டு, அவனைச்சிலுவையில் அறையவேண்டுமென்றார்கள்.
பிலாத்து எல்லாம்வீணென்றும், கலகம் அதிக ௨௪
ரிக்கிறதென்றுங்கண்டு, சனங்களுக்குமுன்பாகச்சலத்தைஅள்ளித் தன் கைகளைக்கழுவி, நான் இந்தநீதிமானின்இரத்தத்தில் குற்றமில்லாதவன்:
நீங்களே பாருங்களென்றான்.—அதற்குத்தரமாய்ச் ௨௫
சமஸ்தசனங்களும்,இவனுடையஇரத்தம்எங்கள் மேலும், எங்கள்பிள்ளைகள்மேலுமிருப்பதாகவென்றார்கள்.
அப்பொழுது அவன் பரப்பாசை அவர்களுக் ௨௬
கு விடுதலையாக்கி, யேசுவை வாரினால் அடிப்பித்து, சிலுவையில் அறையும்படி ஒப்பித்தான்.—
அப்பொழுதுஅதிபதியின்போர்ச்சேவகர் யேசு ௨௭
வை அதிபதியின்வீட்டுக்குக்கொண்டுபோய்,அவரிடத்தில் போர்ச்சேவகர் கூட்டத்தைஎல்
லாங் கூட்டினார்கள்.—அவருடையவஸ்திரங்க ௨௮
ளைக்களைந்து, சிவந்த மேலங்கியை அவருக்குத் தரித்து,
முள்ளுகளால் ஒருமுடியைப்பின்னி அவரு ௨௯
டைய சிரசின்மேலேசூட்டி, அவருடையவலக் கையில் ஒருகோலைக்கொடுத்து, பின்பு அவர்சமுகத்தில் முழங்கால்படியிட்டு, யூதரின் இராசாவே, வாழ்கவென்று அவரைப்பரிகாசம்பண்
ணி,—அவர்மேலே துப்பி, அந்தக்கோலை எடுத்து ௩௰
அவருடையசிரசில் அடித்தார்கள்.—அவரைப்ப ௩௧

(௧)சங்.௨.௨.(௨)அப்.௩.௰௩.(௫)௨.சாமு.௰௭.௨௩. அப்.௧.௰௮.(௮) அப்.௧.௰௯.(௯)சக.௰௧.௰௨,௰௩.(௰௧)௧.தீமோ. ௬.௰௩. (௨௰) அப்.௩.௰௪. (௨௪) உபா.௨௧.௬. (௨௫) உபா.௰௯.௰. யோசு.௨.௰௯. ௨.சாமு.௧.௰௬. ௧.இரா.௨.௩௨. அப்.௫.௨௮.(௨௬)ஏசா.௫௩.௫. (௨௯) சங்.௬௯.௰௯. ஏசா.௫௩.௩. (௩௰) ஏசா.௫௰.௬. (௩௧) ஏசா.௫௩.௭.

ரிகாசம்பண்ணினபின்பு, அவர்கள் அவருக்கு உ
டுத்தினமேலங்கியைக்களைந்து,அவருடையவஸ்
திரங்களை அவருக்கு உடுத்தி, அவரைச் சிலு
வையில் அறையும்படி கொண்டுபோனார்கள்.–
௩௨ அவர்கள் வெளியே புறப்படுகையில், குரேனிய
னாகிய சீமோன் என்பவனைக்கண்டு, அவருடை
ய சிலுவையைச்சுமக்கும்படி அவனைவலாற்கா
௩௩ ரம்பண்ணினார்கள்.-பின்பு அவர்கள் தலை ஓட்டி
டமென்றருத்தங்கொள்ளுங்கொல்கொதாவென்
னும் ஸ்தானத்தில் சேர்ந்தபொழுது,
௩௪ கசப்புக்கலந்தகாடியை அவருக்குக் குடிக்கக்
கொடுத்தார்கள்: அவர் அதை ருசிபார்த்து, குடிக்
௩௫ கப்பிரியப்படவில்லை.–அவர்கள் அவரைச் சிலு
வையில் அறைந்தபின்பு, அவருடைய வஸ்திரங்
களுக்குச்சீட்டுப்போட்டு, அவைகளைப் பங்கிட்
டார்கள்: அதினால் "என்வஸ்திரங்களைத் தங்க
ளுக்குள்ளே பங்கிடுகிறார்கள், என் உடைக்குச்
சீட்டுப்போடுகிறார்கள்," என்று தீர்க்கதரிசியி
னால் சொல்லப்பட்டவாக்கு நிறைவேறிற்று.—
௩௬ பின்பு அவர்கள் அங்கே உட்கார்ந்து, அவரைக்
௩௭ காவல்பண்ணினார்கள்.—அவருடைய மரணத்
தின்காரணத்தைக் குறிக்கும்படிக்கு "இவன் யூ
தருடைய இராசாவாகிய யேசு,"என்று எழுதி,
அவருடைய சிரசுக்குமேலே வைத்தார்கள்.—
௩௮ அவருடைய வலதுபுறத்தில் ஒருவனும், இடது
புறத்தில் ஒருவனுமாக இரண்டுகள்ளர் அவருட
னே சிலுவையில் அறையப்பட்டார்கள்.
௩௯ வழிப்போக்கர் அவரைத் தூஷணித்து, தங்
௪௰ கள் தலைகளை அசைத்து,—தேவாலயத்தை இடித்
து மூன்றுநாளுக்குள்ளே கட்டுகிறவனே, நீ உன்
னைத்தான் இரட்சித்துக்கொள். நீ தேவனுடை
ய குமாரனானால், சிலுவையிலிருந்து இறங்கிவா
௪௧ வென்றார்கள்.—அப்படியே பிரதான ஆசாரிய
ரும், வேதபாரகரும், முதியோரும் இவன் மற்ற
வர்களை இரட்சித்தானே; தன்னை இரட்சித்துக்
௪௨ கொள்ள வல்லமையில்லை.—இவன் இஸரவே
லின் இராசாவானால், இப்பொழுதே சிலுவையி
லிருந்து இறங்கிவரட்டும், அப்பொழுது இவ
௪௩ னைவிசுவாசிப்போம்.—இவன் தன்னைத் தேவ
னுடைய குமாரனென்றுசொல்லி, தேவன்
மேல் நம்பிக்கையாயிருந்தானே; அவர் இவன்
மேற் பிரியமானால், இப்பொழுதே இவனை இ
ரட்சிப்பாராகவென்று அவரைப் பரிகாசம்
௪௪ பண்ணினார்கள்.—அவரோடே சிலுவையில் அ
றையப்பட்ட கள்ளரும் அவரை நிந்தித்தார்கள்.-
௪௫ ஆறும் மணிநேரந்தொடங்கி, ஒன்பதாம்மணிநே
ரம்வரைக்கும் அத்தேசமெங்கும் அந்தகாரமுண்
௪௬ டாயிருந்தது.–ஒன்பதாம்மணிநேரத்தில் யேசு,
"ஏலி,ஏலி, லாமாசபக்தானி,"என்றுமிகுந்
தசத்தத்தோடே கூப்பிட்டார்;அதற்கு, என் தே
வனே, என் தேவனே, நீர் ஏன் என்னைக்கை
விட்டீரென்றருத்தமாம்.—அவ்விடத்தில் நின்ற ௪௭
வர்களிற் சிலர் அதைக்கேட்டு, இவன் இலீசா
வைக்கூப்பிடுகிறானென்றார்கள்.—உடனே அ ௪௮
வர்களில் ஒருவன் ஓடி, கடற்காளானை எடுத்து,
காடியால் நிரப்பி, அதை ஒரு கம்பில்பூட்டி, அ
வருக்குக்குடிக்கக்கொடுத்தான்.-மற்றவர்களோ, ௪௯
பொறு, இலீசா இவனை இரட்சிக்கவருவானோ,
அதைப்பார்ப்போமென்றார்கள்.
யேசு திரும்பவும் மிகுந்த சத்தமிட்டு, ஆவி ௫௰
யைவிட்டார்.–அப்பொழுது தேவாலயத்திலுள் ௫௧
ள திரைச்சீலை, தலைதொடங்கி அடிவரைக்கும்
இரண்டாகக்கிழிந்தது; பூமியும் அதிர்ந்தது, கல்
மலைகளும் பிளந்தன;—பிரேதவறைகளுந்திறந் ௫௨
தன; மகா நித்திரைஅடைந்திருந்த பரிசுத்தவான்
கள் அநேகருடைய சரீரங்கள் எழுந்தன.–அவர் ௫௩
உயிர்த்தெழுந்தபின்பு, இவர்கள் பிரேதவறைக
ளைவிட்டுப்புறப்பட்டுப் பரிசுத்த நகரத்தில் பிர
வேசித்து, அநேகருக்குத் தரிசனமானார்கள்.—
நூறுசேவகருக்கதிபதியும், அவனோடே யேசு ௫௪
வைக் காவல்பண்ணினவர்களும் பூமி அதிர்ச்
சியையும், மற்றைச்சங்கதிகளையுங் கண்டபொ
ழுது மிகவும்பயந்து, மெய்யாய் இவர் தேவனு
டைய குமாரனென்று சொல்லிக்கொண்டார்
கள்.—அப்பொழுது மக்தலேனா மரியாள், யாக் ௫௫
கோபுக்கும்யோசேக்கும் மாதாவாகிய மரியாள்,
செபேதேயுவின் புத்திரருடைய மாதாமுதலிய
ஸ்திரிகள் அநேகர்–அங்கே தூரத்திலே பார்த்துக் ௫௬
கொண்டிருந்தார்கள்: இவர்கள் யேசுவைச்
சேவித்துக்கொண்டு, கலிலேயாவிலிருந்து அவ
ரைப் பின்பற்றி வந்தவர்கள்.—சாயங்காலத்தில் ௫௭
அரிமத்தீயா ஊரிலுள்ள ஐசுவரியவானும், யே
சுவின் சீஷனுமாகிய யோசேப்பென்பவன் பி
லாத்துவினிடத்தில்போய், யேசுவின் சரீரத்
தைக் கேட்டான்.—அப்பொழுது அதை அவ ௫௮
னுக்குக்கொடுக்கும்படி பிலாத்துக்கட்டளையிட்
டான்.—யோசேப்பு அந்தச்சரீரத்தை எடுத்து, ௫௯
துய்யதாகிய மெல்லியபுடவையில் அதைச்சுற்
றி,—தான் கன்மலையில் வெட்டுவித்திருந்த தன் ௬௰
னுடைய புதிய பிரேதவறையில் அதைவைத்து,
அப்பிரேதவறையின் வாசலில் ஒரு பெரியகல்
லைப் புரட்டிவைத்துவிட்டுப் போனான்.—மக்த ௬௧
லேனாமரியாளும் மற்றமரியாளும் பிரேதவறைக்
கெதிர்ப்புறத்தில் உட்கார்ந்திருந்தார்கள்.
ஆயத்தநாளுக்கு மறுநாள், பிரதான ஆசாரிய ௬௨
ரும் பரிசேயரும் பிலாத்துவினிடத்தில்கூடிவந்
து,—ஆண்டவனே, அந்தவஞ்சகன், நான் மூன் ௬௩
றுநாளுக்குப்பின் எழுந்திருப்பேனென்று உயி
ரோடிருந்தபொழுது சொன்னது எங்கள் நினை
வில் வந்தது.—ஆதலால் அவனுடைய சீஷர் இ ௬௪
ராத்திரியிலே வந்து, அவனைக் களவெடுத்து
போய், பின்புமரித்தோரிலிருந்துஎழுந்தானென்

(௩௨) எண்.௰௫.௩௫. ௧.இரா.௨௧.௰௩. அப்.௭.௫௮. எபி.௰௩.௰௨. (௩௪) சங்.௬௯.௨௧. (௩௫) சங்.௨௨.௰௮. (௩௮) ஏசா.௫௩.௰௨. (௩௯) சங்.௨௨.௭. (௪௰) யோவா.௨.௰௯. (௪௩) சங்.௨௨.௮. (௪௫) ஆமோ.௮.௯. (௪௬) எபே.௫.௭. சங்.௨௨.௧. (௪௮) சங்.௬௯.௨௧.(௫௧)யாத்.௨௬.௩௧. ௨.நாளா.௩.௰௪. (௫௬) லூக்.௮.௨,௩. (௬௰) ஏசா.௫௩.௯. (௬௩) லூக்.௯.௨௨. யோவா.௨.௰௯.

று சனங்களுக்குச் சொல்லாதபடிக்கும், முந்தி
ன வஞ்சனையிலும் பிந்தினவஞ்சனை பெரிதா
காதபடிக்கும், மூன்றுநாள்வரைக்கும் பிரேதவ
றையைக்காவல்பண்ணக் கட்டளையிடவேண்டு
௬௫ மென்றார்கள்.—பிலாத்து அவர்களுடனே, காவ
லாளர் உங்களிடத்திலுண்டு: நீங்கள்போய், உங்
களால் இயன்றளவும் பத்திரப்படுத்துங்களென்
௬௬ றான்.—அவர்கள்போய், கல்லுக்கு முத்திரையிட்
டு, காவலாளரை ஏற்படுத்திப் பிரேதவறையைப்
பத்திரப்படுத்தினார்கள்.

## ௨௮. அதிகாரம்.

௧. கிறிஸ்து உயிர்த்தெழுதல்: ௰௧. காவலாளருக்குப்பரிதானங்கொடுத்தல்: ௰௬. கிறிஸ்துத்தரிசனமாகி அவர்களுக்குக்கட்டளையிடல்.

ஓய்வுநாள் முடிந்தபின்பு, வாரத்தின் முதலா
நாள் வைகறையில், மக்தலீனீமரியாளும் மற்றம
ரியாளும் பிரேதவறையைப் பார்க்கவந்தார்கள்.-
௨ அப்பொழுது பூமி மிகவும் அதிரும்படி கர்த்த
ருடைய தூதன் ஒருவன் வானத்தினின்று இ
றங்கிவந்து, வாசலிலிருந்தகல்லைப் புரட்டித்தள்
௩ ளி, அதின்மேல் உட்காந்தான்.-அவனுடையமு
கம் மின்னல்போலவும், அவனுடையவஸ்திரம்
உறைந்த மழையைப்போலவும் வெண்மையா
௪ யிருந்தன.—காவலாளர் அவனைக்கண்டு, பயத்
தினாலேநடுங்கி, மரித்தோரைப்போலானார்கள்.-
௫ தூதன் அந்தஸ்திரிகளைநோக்கி, நீங்கள் பயப்ப
டவேண்டாம்: சிலுவையில் அறையப்பட்ட
யேசுவைத் தேடுகிறீர்களென்று அறிந்திருக்கி
௬ றேன்.—அவர் இங்கே இல்லை: அவர்சொல்லிய
பிரகாரம் எழுந்திருக்கிறார். கர்த்தர் வைக்கப்
௭ பட்டஇடத்தைநீங்கள்வந்துபாருங்கள்.-விரைந்
துபோய், அவருடைய சீஷரைநோக்கி, அவர்
மரித்தோரை நீங்கி எழுந்துவிட்டார்; அவர் உங்
களுக்கு முன்னே கலிலேயாவுக்குப்போவார்;
அங்கே அவரைக்காண்பீர்களென்று சொல்லுங்
௮ கள்:—பாருங்கள், நான் இந்தச்செய்தியை உங்
களுக்குத் தெரிவித்தேனென்றான். உடனே அ
வர்கள் பயத்தோடும், மிகுந்தசந்தோஷத்தோடும்
பிரேதவறையைவிட்டு, அவருடைய சீஷருக்
குச்செய்தியைத் தெரிவிக்கும்படி ஓடினார்கள்.
அவர்கள் அவருடைய சீஷருக்கு அறிவிக்கப் ௯
போகையில், யேசு அவர்களுக்கு எதிர்ப்பட்டு,
நீங்கள்வாழ்கவென்றார். அவர்கள்சேர்ந்து அவரு
டைய பாதங்களைக்கட்டிக்கொண்டு, அவரை ந
மஸ்கரித்தார்கள்.—அப்பொழுது யேசு அவர் ௰
களைநோக்கி, பயப்படாதிருங்கள்: கலிலேயா
வுக்குப்போகும்படி என்சகோதரருக்குச்சொல்
லுங்கள், அங்கே அவர்கள் என்னைக்காண்பார்க
ளென்றார்.
அவர்கள் போகையில்,காவலாளரிற் சிலர் நக ௰௧
ரத்தில்சென்று, நடந்த யாவற்றையும் பிரதான
ஆசாரியருக்குத்தெரிவித்தார்கள்.—அப்பொழுது ௰௨
அவர்கள் முதியோரோடேகூடிவந்து, ஆலோச
னைபண்ணி, பின்பு அந்தப்போர்ச்சேவகருக்கு
மிகுந்த பணத்தைக்கொடுத்து,—நாங்கள் நித்தி ௰௩
ரைபண்ணுகையில் அவனுடைய சீஷர் இராத்
திரியில் வந்து அவனைக் களவாய்க்கொண்டுபோ
னார்களென்று சொல்லுங்கள்.—இது அதிபதி ௰௪
யின்செவிக்கேறினால்,நாங்கள் அவரைச் சமாதா
னப்படுத்தி, உங்களைத் தப்புவிப்போமென்றார்
கள்.-அவர்கள் அந்தப்பணத்தை வாங்கிக்கொண் ௰௫
டு, தங்களுக்குக்கிடைத்த கட்டளைப்படிசெய்
தார்கள்: யூதருக்குள் இந்நாள்வரைக்கும் இந்தச்
சங்கதிபிரசித்தமாயிருக்கின்றது.
பதினொருசீஷரும், கலிலேயாநாட்டில் யேசு ௰௬
தங்களுக்குக்குறித்தமலைக்குப்போனார்கள்.-அங் ௰௭
கே அவர்கள் அவரைக்கண்டு,நமஸ்கரித்தார்கள்.
சிலரோ சந்தேகப்பட்டார்கள்.—அப்பொழுது ௰௮
யேசு சேர்ந்து,அவர்களைநோக்கி, பரமண்டலத்
திலும்,பூமண்டலத்திலுமுள்ள சகலஅதிகாரமும்
எனக்கு ஒப்பிக்கப்பட்டிருக்கின்றது.
ஆதலால் நீங்கள் புறப்பட்டுப்போய்,சருவதே ௰௯
சத்தாரையுஞ் சீஷராக்கி, பிதா, குமாரன், பரிசுத்
தஆவியின்நாமத்தினால் அவர்களுக்கு ஞானஸ்நா
னங்கொடுத்து,-நான் உங்களுக்குக்கட்டளையிட் ௨௰
டயாவையுங் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு
உபதேசம்பண்ணுங்கள்: பாருங்கள், உலகம் ஒ
ழியுமளவும், சதாகாலங்களிலும் நான் உங்க
ளோடிருக்கிறேனென்றார். ஆமென்.

(௬௬)தானி.௬.௰௭.—(௨௮. அதி. ௩.) தானி.௰.௬. (௰) ரோ.௮.௨௯. எபி.௨.௰௧. (௰௮) தானி.௭.௰௩,௰௪. லூக்.௧.௩௨. யோவா.௩.௩௫. அப்.௨.௩௬. ரோ.௰௪.௯. ௧.கொரி.௰௫.௨௭. எபே.௧.௯,௰௯. பிலி.௨.௯,௰. எபி.௧.௨. ௧.பேது.௩.௨௨. வெளி.௰௭.௰௪. (௰௯) ஏசா.௫௨.௰. அப்.௨.௩௮,௩௯. ரோ.௰.௰௮. கொலோ.௧.௨௩. (௨௰) அப்.௨.௪௨.

# மாற்கு எழுதின சுவிசேஷம்.

## ௧. அதிகாரம்.

௧. யோவான்ஸ்நானனுடைய சரித்திர விவரம்: ௯. கிறிஸ்து ஸ்நானம்பெறல்: ௰௨. அவர்சோதிக்கப்படல்: ௰௪. அவர் சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்தல்: ௰௬. பேதுரு அந்திரேயா முதலானவர்கள் அழைக்கப்படல்: ௨௧. பிசாசுபிடித்தவனைச்சொஸ்தமாக்கல்: ௨௯.பேதுருவின் மாமியைச்சொஸ்தமாக்கல்: ௩௨. அநேகசனங்களைச் சுகமாக்கல். தனியே பிரார்த்தனைசெய்தல்: ௪௰. ஒருகுஷ்டரோகியைச்சுசியாக்கல்.

தேவனுடைய குமாரனாகிய யேசுக்கிறிஸ்
௨ துவினுடைய சுவிசேஷத்தின் ஆரம்பம்;-"பா
ருங்கள், நான் என் தூதனை உம்முடையமுகத்
திற்குமுன்பாக அனுப்புகிறேன், அவன் உமக்
குமுன்சென்று, உம்முடைய வழியை ஆயத்
௩ தப்படுத்துவான்:" என்பதும்,—"கர்த்தருடை
ய வழியை ஆயத்தப்படுத்துங்கள், அவருடை
ய பாதைகளைச் செவ்வைபண்ணுங்களென்று வ
னத்தில்கூறுகிறவனுடையவாக்குண்டாயிற்று,"
என்பதுந் தீர்க்கதரிசிகளினால் எழுதப்பட்டிருக்
௪ கின்றன.—யோவான் வனத்திலே ஞானஸ்நா
னங்கொடுத்து, பாவமன்னிப்புக்கென்று மனந்
திரும்புதலின் ஞானஸ்நானத்தைப் பிரசித்தப்
௫ படுத்தினான்.—அப்பொழுது யூதேயாதேசத்தார
னைவரும் யெரூஷலேமியரும் அவனிடத்திற்
சேர்ந்து, தங்கள் தங்கள் பாவங்களை உணர்ந்து
சொல்லி, எல்லாரும் யோர்தான்நதியில் அவ
௬ னால் ஞானஸ்நானம்பெற்றார்கள்.—அந்த யோ
வான் ஒட்டகமயிர் உடையைத் தரித்து, தன்
அரையிலே வார்க்கச்சுக் கட்டிக்கொண்டிருந்
தான்; வெட்டுக்கிளிகளுங் காட்டுத்தேனும் அ
௭ வனுக்கு ஆகாரம்.—அவன், என்னிலும் அதிக
வல்லமையுள்ளவர் ஒருவர் எனக்குப்பின்வருகி
றார், நான் குனிந்து அவருடைய பாதரட்சைக
ளின்வாரை அவிழ்க்கிறதற்கும் பாத்திரனல்ல.—
௮ நான் சலத்தினால் உங்களுக்கு ஞானஸ்நானங்
கொடுக்கிறேன்: அவரோ பரிசுத்த ஆவியி
னால் உங்களுக்கு ஞானஸ்நானங் கொடுப்பா
௯ ரென்றுசொல்லிப் பிரசங்கம்பண்ணினான்.—அக்
காலத்தில் யேசு கலிலேயா நாட்டிலுள்ள நாச
ரேத்திலிருந்துவந்து, யோர்தான் நதியிலே யோ
௰ வானாலே ஞானஸ்நானம்பெற்று,—அவர் சலத்தி
லிருந்து ஏறிவந்தமாத்திரத்திலே வானம் பிரிந்த
தையும்,ஆவி புறாவைப்போலத் தம்மேல் இறங்கு
௰௧ வதையுங் கண்டார்.-அப்பொழுது, நீர் எனது பி
ரியகுமாரன், உம்மிடத்தில் அன்பாயிருக்கிறே
னென்னும் வாக்கு வானத்திலிருந்து பிறந்தது.—
அப்பொழுது ஆவியானவர் அவரைவனத்திற்கு ௰௨
நடத்திக்கொண்டுபோனார்.—அந்தவனத்தில் அ ௰௩
வர் நாற்பதுநாள்வரைக்குமிருந்து, காட்டுமிரு
கங்களுக்குள்ளே தங்கி, சாத்தானாலே சோதிக்
கப்பட்டார்; தேவதூதர்கள் அவருக்குப்பணிவி
டைசெய்தார்கள்.-யோவான் காவலில்வைக்கப் ௰௪
பட்டபின்பு, யேசு கலிலேயா நாட்டில்வந்து,
தேவனுடைய இராச்சியத்தின் சுவிசேஷத்
தைப் பிரசங்கிக்கத்தொடங்கி,-காலம் நிறைவே ௰௫
றிற்று, தேவனுடைய இராச்சியஞ் சமீபித்த
து: நீங்கள் மனந்திரும்பிச் சுவிசேஷத்தை விசு
வாசியுங்களென்றார்.—பின்பு அவர் கலிலேயா ௰௬
சமுத்திரதீரத்திலே செல்லுகிறபொழுது, மீன்பி
டிக்கிறவர்களாகிய சீமோனையும், அவனுடைய
சகோதரன் அந்திரேயாவையுங் கடலில் வலை
வீசுகிறதைக்கண்டு,—யேசு அவர்களை நோக்கி, ௰௭
நீங்கள் எனக்குப்பின்சென்று வாருங்கள், உங்க
ளை மனிதரைப் பிடிக்கிறவர்களாக்குவேனென்
றார்.—உடனே அவர்கள் தங்கள் வலைகளைவிட் ௰௮
டு, அவருக்குப் பின்சென்றார்கள்.—அவர் அவ் ௰௯
விடம்விட்டுச்சற்றுத்தூரம்போனபொழுது, செ
பேதேயுவின் புத்திரனாகிய யாக்கோபையும்
அவனுடைய சகோதரனாகிய யோவானையும் ப
டவிலே தங்கள் வலைகளைத்தைத்துக்கொண்டி
ருக்கக்கண்டு, உடனே அவர்களை அழைத்தார்.—
அப்பொழுது கூலியாட்களுடன் படவிலிருக் ௨௰
கிற தங்கள் பிதாவாகிய செபேதேயுவையும்விட்
டு, அவருக்குப்பின்சென்றார்கள்.—பின்பு அவர் ௨௧
கள் கப்பர்நாகூமில் பிரவேசித்தார்கள்; அவர்
ஓய்வுநாளில் தாமதியாமல் ஆலயத்திற்குப்போய்
உபதேசம்பண்ணினார்.—அவர் வேதபாரகரைப் ௨௨
போலல்ல, அதிகாரமுடையவராய் அவர்களை உ
பதேசித்தபடியால், அவர்கள் அவருடைய உப
தேசத்தைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள்.—அ ௨௩
வர்களுடைய ஆலயத்தில் அசுத்த ஆவியையுடை
ய ஒரு மனுஷனிருந்தான்.—அவன் நாசரேத் ௨௪
தூராகிய யேசுவே, எங்களுக்கும் உமக்கு
மென்ன: எங்களை நாசப்படுத்தவந்தீரா; நீர் தே
வனுக்குரிய பரிசுத்தர், அது எனக்குத்தெரியு
மென்றுசொல்லிச் சத்தமிட்டான்.—யேசு அ ௨௫
வனைக்கடிந்து, நீ பேசாமல் இவனைவிட்டுப்பு
றப்பட்டுப்போவென்றுசொல்ல,—அந்த அசுத்த ௨௬
ஆவி அவனை அலக்கழித்து, உரத்தசத்தமிட்டு,

---

(௧. அதி. ௧.) லூக்.௧.௩௫. யோவா.௧.௩௪. (௨) மல்.௩.௧. மத்.௰௧.௰.(௩)ஏசா.௪௰.௩. மத்.௩.௩.(௪)மத்.௩.௧.(௫)மத்.௩.௫. (௬) மத்.௩.௪. லேவி.௰௧.௨௨. (௭) மத்.௩.௰௧. யோவா.௧.௨௭. அப்.௰௩.௨௫. (௮) அப்.௧.௫. அப்.௰௧.௰௬. ஏசா.௪௪.௩. யோவே.௨.௨௮. அப்.௨.௪. ௧.கொரி.௰௨.௰௩. (௯) மத்.௩.௰௩. (௰) மத்.௩.௰௬. (௰௧) சங்.௨.௭. மத்.௩.௰௭. (௰௨) மத்.௪.௧. (௰௩) மத்.௪.௰௧. (௰௪) மத்.௪.௰௨,௨௩. (௰௫) தானி.௯.௨௫. கலா.௪.௪. எபே.௧.௯. மத்.௩.௨. (௰௬) மத்.௪.௰௮. (௰௮) மத்.௰௯.௨௭. (௰௯) மத்.௪.௨௧. (௨௧) மத்.௪.௰௩. (௨௨) மத்.௭.௨௮. (௨௩) லூக்.௪.௩௩. (௨௪) மத்.௮.௨௯.

௨௭ அவனைவிட்டு நீங்கிற்று.—அதினால் எல்லாரும்
பிரமித்து, ஒருவரையொருவர் பார்த்து, ஆ, இதென்
ன; இதெப்படிப்பட்ட நூதன உபதேசம்; இவர்
அதிகாரத்தோடே அசுத்த ஆவிகளுக்குக் கட்ட
ளையிட, அவைகளும் இவருக்கு அமைகின்ற
௨௮ னவென்றார்கள்.—அதுமுதல் அவருடைய கீர்த்
தி கலிலேயாவின் திசைகளிலெங்கும் பரம்பிற்
௨௯ று.-அவர்கள் ஆலயத்தைவிட்டுப் புறப்பட்டவு
டனே, யாக்கோபு யோவானோடு, சீமோன் அந்
திரேயா என்பவர்களுடைய வீட்டிலேவந்தார்
௩௰ கள்.—அங்கே சீமோனுடைய மாமி சுரமாய்க்கி
டந்தாள், அப்பொழுதே அவர்கள் அவளைக்குறித்
௩௧ து அவரிடத்திற் பேசினார்கள்.-அவர்போய் அவ
ளுடைய கையைப்பற்றி அவளைத் தூக்கிவிட்
டமாத்திரத்தில் சுரம் அவளைவிட்டு நீங்கிற்று; அ
௩௨ வள் அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.—சூ
ரியன் அஸ்தமித்தபின்பு, மாலைக்காலத்தில், பி
ணியாளிகள் யாவரையும் பிசாசுபிடித்தவர்களை
௩௩ யும் அவரிடத்திற் கொண்டுவந்தார்கள்.—பட்ட
ணத்தார் யாவரும் வீட்டுவாசலருகே கூடிவந்
௩௪ தார்கள்.—பலவிதமான வியாதிகளினால் வருந்
திய அநேகரைச் சொஸ்தப்படுத்தி, அநேக பிசா
சுகளையுந் துரத்தினார்: அந்தப்பிசாசுகள் தம்மை
அறிந்தபடியால், அவைகள்பேச அவரிடங்கொ
௩௫ டுக்கவில்லை.—அதிகாலையில் இருட்டோடே
அவர்எழுந்திருந்து புறப்பட்டு, வனத்தைச்சேர்ந்
த ஒரு இடத்துக்குப்போய், அங்கே பிரார்த்தனை
௩௬ பண்ணினார்.—சீமோனும் அவனோடிருந்தவர்க
௩௭ ளும் அவரைத் தொடர்ந்துபோனார்கள்.—அவர்
கள் அவரைக்கண்டபொழுது அவரைநோக்கி,
சகலரும் உம்மைத் தேடுகிறார்களென்றார்கள்.—
௩௮ அவர் அவர்களைநோக்கி, சமீபத்திலுள்ள ஊர்க
ளிலே போவோம், வாருங்கள்: அவைகளிலும்
பிரசங்கிக்கிறதற்குப் புறப்பட்டு வந்தேனென்
௩௯ றார்.—பின்பு அவர் கலிலேயாநாட்டிலெங்கும்
போய், அவர்களுடைய ஆலயங்களில் பிரசங்
௪௰ கம்பண்ணி, பிசாசுகளைத்துரத்தினார்.—குஷ்ட
ரோகி ஒருவன் அவரிடத்தில்வந்து முழங்காற்ப
டியிட்டு, உமக்குச்சித்தமானால், நீர் என்னைச் சுத்
திகரிக்கக்கூடுமென்று அவரைவேண்டிக்கொண்
௪௧ டான்.—யேசு மனதுருகி, கையைநீட்டி, அ
வனைத்தொட்டு, அவனுடனே, எனக்குச் சித்த
௪௨ முண்டு; நீ சுத்தமாவாயென்றார்.—அவர்சொன்
ன மாத்திரத்தில் குஷ்டரோகம் அவனைவிட்டு
௪௩ நீங்கிற்று; அவன் சுத்தமானான்.-பின்பு அவர் அ
வனைநோக்கி, நீ இதை ஒருவருக்குஞ் சொல்லாத
படிஎச்சரிக்கையாயிரு: அன்றியும், நீபோய், ஆசா
ரியனுக்கு உன்னைக் காண்பித்து, உனக்குண்
டான சுத்தத்தைக்குறித்து அவர்களுக்குச்சாட்சி
யாகும்பொருட்டு, மோசே விதித்தவைகளைச்செ
லுத்தென்று கட்டளையிட்டு, உறுதியாய்ச்சொல்
௪௪ ௪௫ லி-அவனை உடனே அனுப்பிவிட்டார்.-ஆனா

லும்அவன்புறப்பட்டுப்போய், இந்தச்செய்தியை
வெளிப்படுத்தி, எங்கும் பரப்பத்தொடங்கினான்;
அதினால் அவர் வெளிப்படையாய்ப்பட்டணத்
திற் பிரவேசிக்கக்கூடாமல், புறம்பிலுள்ள வனாந்
தரஸ்தானங்களில் தங்கினார், சனங்கள் எல்லாத்
திசைகளினின்றும் அவரிடத்தில்வந்தார்கள்.

## ௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துத்திமிர்வாதக்காரனைச் சொஸ்தப்படுத்தல்: ௰௩. மத்தேயுவை வரவழைத்தல், பாவிகளோடே புசித்தல்: ௰௮. யோவானுடைய சீஷரும் பரிசேயரும் உபவாசத்தைக்குறித்து வாக்குவாதம்பண்ணல்: ௨௩. ஓய்வுநாளில் சீஷர் கதிர்களைக்கொய்து புசிப்பது குற்றமல்லவென்று காட்டல்.

சிலநாள் சென்றபின்பு, அவர் திரும்பவுங் கப் ௧
பர்நாகூமுக்குப்போனார்.-அவர் வீட்டில் இருக் ௨
கிறாரென்று சனங்கள் கேள்விப்பட்டபொழு
து, வாசலில் இடமிராதபடி அநேகர் உடனே
கூடிவந்தார்கள்: அவர் அவர்களுக்கு வாக்கைப்
போதித்தார்.—நாலுபேரால் சுமக்கப்பட்ட ஒரு ௩
திமிர்வாதக்காரனை அவரிடத்திலே கொண்டுவந்
தார்கள்.—சன நெருக்கத்தினிமித்தம் அவர்கள் ௪
அவருக்குச்சமீபமாய்ச் சேரக்கூடாமல், அவர்
இருந்த வீட்டின்மேல் கூரையைப்பிரித்துவழி
யுண்டாக்கி, திமிர்வாதக்காரனைப் படுக்கையோ
டே இறக்கினார்கள்.—யேசு அவர்களுடைய ௫
விசுவாசத்தைக்கண்டு, திமிர்வாதக்காரனைநோக்
கி, மகனே, உன் பாவங்கள் உனக்கு மன்னிக்
கப்பட்டனவென்றார்.-அங்கே உட்காந்திருந்த ௬
வேதபாரகரிற் சிலர்,-இப்படித் தேவதூஷணங் ௭
களை இவன் பேசுகிறதென்ன; தேவன் ஒருவ
ருக்கேயன்றி மற்றொருவருக்குப்பாவங்களைமன்
னிக்க வல்லமையுண்டாவென்று தங்கள் இரு
தயங்களிலே சிந்தித்துக்கொண்டார்கள்.-அவர் ௮
கள் அப்படித்தங்களுக்குள்ளே சிந்தித்திருக்கி
றார்களென்பதை யேசு உடனே தமதுஉள்ளத்
தில் உணர்ந்து, அவர்களைநோக்கி, நீங்கள் உங்
கள் இருதயங்களில் இப்படி ஏன் சிந்திக்கிறீர்
கள்.—இந்தத் திமிர்வாதக்காரனுடனே உன்பா ௯
வங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டனவென்று
சொல்லுகிறதோ, எழுந்திருந்து உன்படுக்கை
யை எடுத்துக்கொண்டு நடவென்றுசொல்லுகிற
தோ, எதுஎளிது.-மனுபுத்திரன்பூமண்டலத்திலே ௰
பாவங்களை மன்னிக்கிறதற்கு அதிகாரமுடையவ
னென்பதை நீங்கள் அறியத்தக்கதாக என்றுசொ
ல்லி,—பின்பு அவர் திமிர்வாதக்காரனைநோக்கி, ௰௧
நீ எழுந்து, உன்படுக்கையை எடுத்துக்கொண்டு,
உன்வீட்டுக்குப்போவென்று உனக்குக்கட்டளை
யிடுகிறேனென்றுசொல்ல,—அவன், எல்லாருங் ௰௨
காணஎழுந்து, தன்படுக்கையை எடுத்துக்கொண்
டுபோனான்; அப்பொழுது அவர்கள்யாவரும்பிர
மித்து, நாம் ஒருபொழுதும் இப்படிக்கண்டதில்

(௨௯) மத்.௮.௰௪. (௩௨) மத்.௮.௰௬.(௩௪)லூக்.௪.௪௧. (௩௫) லூக்.௪.௪௨. (௩௮) லூக்.௪.௪௩. ஏசா.௬௧.௧. யோவா. ௰௬.௨௮.(௩௯)மத்.௪.௨௩. லூக்.௪.௪௪. (௪௰) மத்.௮.௨. லூக்.௫.௰௨. (௪௩) லேவி.௰௪.௩,௪,௰. (௪௫) லூக்.௫.௰௫.— (௨. அதி. ௧.) மத்.௯.௧. (௭) யோபு.௰௪.௪. ஏசா.௪௩.௨௫. (௮) மத்.௯.௪. (௯) மத்.௯.௫.

லேயேயென்றுசொல்லித் தேவனைத் துதித்தார்
௰௩ கள்.—அவர் புறப்பட்டுத்திரும்பவுங் கடற்கரை
யில் போனபொழுது, சனங்களெல்லாரும் அவ
ரிடத்தில்கூடிவர, அவர்அவர்களுக்கு உபதேசம்
௰௪ பண்ணினார்.-அவர்நடந்துபோகையில், அல்வே
யுவின் புத்திரனாகிய லேவியென்பவன் ஆயத்
துறையில் உட்கார்ந்திருக்கிறதைக்கண்டு, அவ
னைநோக்கி, நீ எனக்குப்பின்செல்லென்றார். அ
௰௫ வன்எழுந்து அவருக்குப்பின்சென்றான்.-பின்பு
அவனுடையவீட்டில் அவர் பந்தியிருக்கையில்,
அவருக்குப்பின்செல்லும் அநேகம் ஆயக்காரரி
லும் பாவிகளிலுஞ் சிலர்வந்து, யேசுவுடனே
யும் அவருடைய சீஷருடனேயும் பந்தியிருந்
௰௬ தார்கள்.—அவர், ஆயக்காரரோடும் பாவிகளோ
டும் போசனம்பண்ணுகிறதை வேதபாரகரும் ப
ரிசேயருங்கண்டு, அவருடையசீஷரைநோக்கி,
இவர் ஆயக்காரரோடும் பாவிகளோடும் போச
னபானம் பண்ணுவதென்னவென்றுகேட்டார்
௰௭ கள்.-யேசு அதைக்கேட்டு, அவர்களை நோக்
கி, சொஸ்தமுள்ளவர்களுக்கல்ல, வியாதியுள்ள
வர்களுக்கே வைத்தியன்வேண்டும்: நான் நீதி
மான்களையல்ல, பாவிகளையே மனந்திரும்புகிற
௰௮ தற்கு அழைக்கவந்தேனென்றார்.-அன்றியும், உ
பவாசம்பண்ணுகிறவர்களாகிய யோவானுடை
யசீஷரும், பரிசேயருடைய சீஷரும் அவரிடத்
தில்வந்து, யோவானுடைய சீஷரும் பரிசேய
ருடையசீஷரும் உபவாசம்பண்ணுகிறார்களே,
உம்முடைய சீஷரோ உபவாசம் பண்ணாமலி
௰௯ ருக்கிறதேதென்றுகேட்க,—யேசு அதற்கு உத்
தரமாக, மணவாளன் தங்களுடன் இருக்கையில்,
மணவாளனுடைய தோழர் உபவாசம்பண்ணு
வார்களா; தங்களோடே மணவாளன் இருக்கும்
௨௰ வரைக்கும் உபவாசம்பண்ணார்களே.—மணவா
ளன் அவர்களைவிட்டு நீக்கப்படும் நாட்கள்வ
ரும், அப்பொழுது அவர்கள் உபவாசம்பண்ணு
௨௧ வார்கள்.—ஒருவனும் புதுத்துண்டைப் பழைய
வஸ்திரத்தில் பொருத்தான்: பொருத்தினால் அ
தில் பொருத்தப்பட்ட புதுத்துண்டு பழையவஸ்
திரத்திலிருந்து எடுபட்டுப்போக, அதிகபொத்த
௨௨ லுண்டாகும்.—ஒருவனும் பழையதுருத்திகளில்
புதியதிராட்சரசத்தைவார்க்கான்: வார்த்தால்அந்
தப்புதியரசம் துருத்திகளைக்கிழித்துவிடும், ரச
முஞ் சிந்திப்போம், துருத்திகளுஞ் சிதைந்து
போம்: புதியரசத்தைப்புதியதுருத்திகளில் வார்த்
௨௩ துவைக்கவேண்டுமேயென்றார்.—பின்பு ஓய்வு
நாளில் அவர் பயிர்வழியேபோனபொழுது, அ
வருடையசீஷர் நடக்கையில் கதிர்களைக் கொய்
௨௪ யத்தொடங்கினார்கள்.-பரிசேயர் அவரிடத்தில்,
பாரும், இவர்கள் ஓய்வுநாளில்செய்யத்தகாததை
௨௫ என்செய்கிறார்களென்று கேட்டார்கள்.—அவர்
அவர்களிடத்தில், அப்யாதாரென்னும் மகா ஆ
சாரியனுடைய நாட்களிலே, தாவீது அவதிப்
பட்டு, தானும் தன்னோடிருந்தவர்களும் பசியா
யிருந்தபொழுது,-தேவனுடைய ஆலயத்திற் ௨௬
பிரவேசித்து, ஆசாரியரேயன்றி வேறொருவரும்
புசிக்கத்தகாததேவசமுகத்தப்பத்தைப்புசித்ததை
யும், தன்னோடிருந்தவர்களுக்குக் கொடுத்ததை
யும் நீங்கள் ஒருபொழுதும் வாசிக்கவில்லையா
என்றார்.—பின்பு, அவர் அவர்களுடனே, மனு ௨௭
ஷர் ஓய்வுநாள் நிமித்தமாக அல்ல, ஓய்வுநாள் ம
னுஷர்நிமித்தம் நியமிக்கப்பட்டது.—மனுபுத் ௨௮
திரன் ஓய்வுநாளுக்குங் கர்த்தாவென்றார்.

## ௩. அதிகாரம்.

க. கிறிஸ்துச் சூம்பினகையையும் மற்றவியாதிக
ளையுஞ் சொஸ்தஞ்செய்தல்: ௰௩. பன்னிரண்டு
சீஷரைத் தெரிந்துகொள்ளல்: ௨௰. வேதபாரக
ரை யுத்திநியாயத்தில்வெல்லல்: ௩க. தன்குடும்
பத்தார் இன்னாரென்றுகுறித்தல்.

திரும்பவும் அவர் ஆலயத்தில் பிரவேசித்தார்; க
அங்கே சூம்பினகையையுடைய மனுஷனொரு
வனிருந்தான்.—அவர்கள் அவர்மேற் குற்றஞ் ௨
சுமத்தலாமென்றெண்ணி ஓய்வுநாளில்அவனைச்
சொஸ்தப்படுத்துவாரோ, மாட்டாரோவென்று
அவரை உற்றுப்பார்த்தார்கள்.—அவர் சூம்பின ௩
கையையுடையவனைநோக்கி, நீ எழுந்து நடுவே
நில்லென்றுசொல்லி,—பின்பு அவர் அவர்களை ௪
நோக்கி, ஓய்வுநாளில் நன்மைசெய்வதோ,தீமை
செய்வதோ, பிராணனை இரட்சிப்பதோ,நாசப்ப
டுத்துவதோ,எதுநியாயமென்றுகேட்க,அவர்கள்
பேசாமலிருந்தார்கள்.—அப்பொழுது அவர் அ ௫
வர்களுடைய இருதயத்தின் கடினத்தினிமித்தந்
துக்கித்து, கோபத்தோடே அவர்களைச்சுற்றிப்
பார்த்து, பின் அந்தமனுஷனைநோக்கி, உன்கை
யைநீட்டென்றுசொல்ல, அவன்நீட்டினான்: உ
டனே அது மற்றக்கையைப்போலச் சொஸ்தமா
யிற்று.-பின்பு பரிசேயர் புறப்பட்டுப்போய், அ ௬
வரைக் கொலைசெய்யும்படி ஏரோதியரோடே
அவருக்குவிரோதமாய்த் துராலோசனைபண்ணி
னார்கள்.-ஆதலால் யேசு, தம்முடைய சீஷருட ௭
னே அவ்விடம்விட்டு, விலகிக் கடலோரத்திற்
குப்போனார்.-கலிலேயாவிலும், யூதேயாவிலும், ௮
யெரூஷலேமிலும், இதூமியாவிலும், யோர்தா
னுக்கு அக்கரையிலும் இருந்துவந்த திரளான
சனங்கள் அவரைப் பின்சென்றார்கள்; தீருசீ
தோன் சுற்றுப்புறத்திலுள்ளவர்கள் அவர்செய்த
பெரியகிரியைகளின் செய்தியைக்கேள்விப்பட்
டு, திரளாக அவரிடத்தில் வந்தார்கள்.-அவர் அ ௯
நேகரைச்சொஸ்தப்படுத்தினதினால், வியாதியுள்
ளவர்கள்யாவரும் அவரைத்தொடும்படிக்கு அவ
ரைநெருக்கினார்கள்.-ஆதலால் தாம் சனங்களால் ௰
நெருக்கப்படாதிருக்க, சீஷர் தமக்காக ஒருபட
வை ஆயத்தம்பண்ணும்படிக்கு அவர்களுக்குக்
கட்டளையிட்டார்.—அசுத்த ஆவிகள் அவரைக் ௰௧
கண்டவுடனே அவர்சமுகத்தில்விழுந்து,நீர் தே

(௰௩) மத். ௯.௯. (௰௪) மத். ௯.௯. (௰௫) மத். ௯.௰. (௰௭) மத். ௯.௰௨,௰௩. க.திமோ.க.௰௫. (௰௮) மத். ௯.௰௪. லூக். ௫. ௩௩. (௨௩) மத். ௰௨.க. லூக். ௬.க. உபா.௨௩.௨௫. (௨௫) க.சாமு.௨க.௬.(௨௬) யாத்.௨௯.௩௨,௩௩. லேவி.௨௪.௯.(௨௮) மத். ௰௨.௮.—(௩.அதி.க.) மத். ௰௨.௯. லூக். ௬.௬. (௬) மத். ௰௨.௰௪. மத். ௨௨.௰௬. (௰௪) லூக். ௪.௪க. மத். ௰௪.௩௩.

௰௨ வனுடைய குமாரனென்று சத்தமிட்டன.—அ
வைகள் தம்மைத் தெரிவியாதபடிக்கு அவைக
௰௩ ளுக்கு உறுதியாய்க்கட்டளையிட்டார்.-பின்பு அ
வர் ஒரு மலையின்மேல்ஏறி, தமக்குச்சித்தமான
வர்களைவரவழைக்க,அவர்கள் அவரிடத்தில் வந்
௰௪ தார்கள்.—அப்பொழுது அவர், தம்மால் பேதுரு
௰௫ வென்று பேர்பெற்ற சீமோனும்,—செபேதேயு
வின் புத்திரராய் மேகநாதத்தின் புத்திரரென்
றருத்தங்கொள்ளுகிற போவநெர்கெஸ் என்று
௰௬ மறுபேர்பெற்ற யாக்கோபு,—யாக்கோபின் ச
கோதரனாகிய யோவானென்பவர்களும், அந்
திரேயாவும், பிலிப்பும், பர்தொலொமேயும், மத்
தேயும், தோமாவும், அல்பேயுவின் புத்திரனா
கிய யாக்கோபும், ததேயுவும், கானானியனாகிய
௰௭ சீமோனும்,—தம்மைக்காட்டிக்கொடுத்த யூதாஸ்
௰௮ காரியோத்துமாகிய பன்னிருவரையும்,-தம்மோ
டேயிருக்கவும், சுவிசேஷத்தைப் பிரசங்
௰௯ கிக்கும்பொருட்டாய் அனுப்பப்படவும்,—வியா
திகளை நீக்கிப் பிசாசுகளைத்துரத்தத்தக்க அதிகார
௨௰ மடைந்திருக்கவும் ஏற்படுத்தினார்.—பின்பு வீட்
டுக்குப்போனார்கள், அங்கே அவர்கள் போசனம்
பண்ணச் சாவகாசமில்லாதபடி, அநேகசனங்
௨௧ கள் திரும்பவுங்கூடிவந்தார்கள்.—அவருடைய
இனத்தார் அதைக்கேட்டு, அவருக்கு மயக்க
முண்டாயிருக்கிறதென்றுசொல்லி அவரைப்பி
டித்துக்கொள்ளும்படிவந்தார்கள்.
௨௨ யெருஷலேமிலிருந்துவந்த வேதபாரகர், இ
வன் பாகால்சேபூலைக்கொண்டிருக்கிறான், பிசா
சாதிபதியினால் பிசாசுகளைத் துரத்துகிறானென்
௨௩ றார்கள்.—அவர் அவர்களை அழைத்து, அவர்க
ளைநோக்கி, சாத்தானைச் சாத்தான்துரத்துவதெப்
௨௪ படி.—ஒரு இராச்சியந் தனக்குவிரோதமாய்வே
றுபட்டால், அந்த இராச்சியம் நிலைநிற்கக்கூ
௨௫ டாது.—ஒரு குடும்பந்தனக்குவிரோதமாய் வேறு
பட்டால், அந்தக்குடும்பம் நிலைநிற்கக்கூடாது.-
௨௬ சாத்தான் தனக்குவிரோதமாய் எழும்பிப் பிரிவு
பட்டால், அவன்நிலைநிற்கமாட்டாமல் அழிந்து
௨௭ போவான்.—முன்பு பலவானைக் கட்டாவிட்
டால், அவனுடையவீட்டில் ஒருவன் பிரவேசித்
து, அவனுடைய பொருள்களைக் கொள்ளையிட
மாட்டான்; கட்டினால் அவனுடைய வீட்
டைக் கொள்ளையாடலாமென்று உவமைகளாற்
௨௮ பேசினார்:—பின்பு மனுஷருடையபுத்திரருக்கு
எந்தப்பாவங்களும், அவர்கள் சொல்லும் எந்தத்
௨௯ தூஷணங்களும் மன்னிக்கப்படும்.—பரிசுத்த ஆ
வியைத் தூஷணிக்கிறவனெவனோ, அவன் ஒரு
பொழுதும் மன்னிப்புப்பெறான், அவன் நித்திய
தண்டனைக்குப் பாத்திரனென்று மெய்யாக உங்
௩௰ களுக்குச்சொல்லுகிறேனென்றார்.-அசுத்த ஆவி
யைக்கொண்டிருக்கிறானென்றுஅவர்கள்சொன்
னதினிமித்தம் இப்படிச்சொன்னார்.

அப்பொழுது அவருடையமாதாவுஞ்சகோதர ௩௧
ரும்வந்துவெளியேநின்று, அவரைஅழைக்கும்ப
டி அவரிடத்தில் ஆளனுப்பினார்கள்.—அவரைச் ௩௨
சுற்றியிருந்தசனங்கள் அவரிடத்தில், பாரும்,
உம்முடையமாதாவும்,உம்முடையசகோதரரும்
வெளியேநின்று உம்மைத் தேடுகிறார்களென்று
சொல்ல,—அவர்களுக்குத்தரமாய் அவர், எனக்கு ௩௩
மாதாவும் எனக்குச்சகோதரரும் யாவரென்றார்.-
பின்பு தம்மைச்சூழ்ந்திருந்தவர்மேல் பார்வை ௩௪
செலுத்தி, என் மாதாவையும் என் சகோதரரை
யும் பாருங்கள்.—தேவனுடைய சித்தத்திற்க ௩௫.
மைந்து நடப்பவரெவரும் என்சகோதரன், என்
சகோதரி, என்மாதாவென்றார்.

## ௪. அதிகாரம்.

௧. விதைக்கிறவனை உவமித்தல்: ௰. அதின் தாற்பரியத்தைத் தெரிவித்தல்: ௨௧. விளக்கை உவமித்தல்: ௨௪. சாவதானமாயிருப்பது அவசியமெனக்காட்டல்: ௨௬. விதையின்விளைவை உவமித்தல்: ௩௰. கடுகுவிதையைஉவமித்தல்: ௩௩. மற்ற உவமைகளையுஞ் சொல்லல்: ௩௫. சமுத்திரத்தைக்கடிந் தமைத்தல்.

பின்பு அவர் சமுத்திரதீரத்திலே திரும்பவும் உ ௧
பதேசம்பண்ணத்தொடங்கினார்: மிகுந்த சனங்
கள் அவரிடத்தில்கூடி வந்தபடியால், அவர் கட
லின்மேற் படவிலேறி உட்கார்ந்தார்; சனங்கள்
யாவருங் கடற்கரையிலிருந்தார்கள்.—அவர் உவ ௨
மைகளால் அநேக விசேஷங்களை அவர்களுக்
குப்போதித்தார்.—அவர் போதித்தபொழுது அ ௩
வர்களைநோக்கி, பாருங்கள், விதைக்கிறவன் ஒ
ருவன் விதைக்கப்புறப்பட்டான்.—அவன் வி ௪
தைக்கிறபொழுது சில வழியருகேவிழுந்தன, ஆ
காயத்துப் பறவைகள் வந்து அவைகளைப்பட்சித்
தன.—சில கொஞ்சமண்ணுள்ள கற்பாறைநிலத் ௫
தில் விழுந்தன; மண் ஆழமில்லாததினிமித்தம்
உடனே முளைத்தன.—வெயில் ஏறினபொழுது ௬
அவை தீந்து, வேரில்லாததினால் உலர்ந்துபோ
யின.—சில முட்களுக்குள்ளே விழுந்தன, முட் ௭
கள் வளர்ந்து அவைகள் பலன்கொடாதபடிக்கு
அவைகளை நெருக்கின.—வேறு சில நல்லநிலத்தி ௮
லே விழுந்து ஓங்கிவளர்ந்தன, அதில் சில முப்ப
தும், சில அறுபதும், சில நூறுமாகப் பலன்கொ
டுத்தனவென்றார்.—அவர் அவர்களுடனே, கேட் ௯
கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவனென்
றார்.—பின்பு அவர் தனித்திருக்கையில், பன்னி ௰
ருவரோடும் அவரைச்சூழ இருந்தவர்கள் அந்த
உவமையைக்குறித்து அவரிடத்தில் வினவினார்
கள்.—அவர் அவர்களைநோக்கி, தேவனுடை ௰௧
ய இராச்சியத்தின் மறைபொருள்களை அறியும்ப
டிக்கு உங்களுக்கு அருள் கிடைத்தது: புறம்
பாயிருக்கிறவர்களோ மனந்திரும்பாமலும், பா
வமன்னிப்பை அடையாமலுமிருக்கும்படிக்கு,

(௰௨) மத்.௰௨.௰௬. (௰௯) யோவா.௧.௪௨. (௨௰) அதி.௩௧. (௨௧) யோவா.௭.௫. (௨௨) மத்.௯.௩௪. லூக்.௰௧.௰௫. யோவா.௭.௨௰. (௨௩) மத்.௰௨.௨௫. (௨௭) ஏசா.௪௯.௨௪. மத்.௰௨.௨௯. (௨௮) மத்.௰௨.௩௧. (௩௧) மத்.௰௨.௪௬. லூக்.௮.௰௯.—(௪. அதி. ௧.) மத்.௰௩.௧. லூக்.௮.௪. (௮) யோவா.௰௫.௫. கொலோ.௧.௬. (௰) மத்.௰௩.௰. (௰௧) ௧.கொரி.௫.௰௨. ௧.தீமோ.௩.௭.

இவைகளெல்லாம் உவமைகளாற் சொல்லப்பட்
௰௨ டுவருகின்றன:—அதினால் அவர்கள் கண்டுங்கா
ணாமலும், கேட்டுங்கேளாமலுஞ் சிந்தியாமலுமி
௰௩ ருக்கிறார்களென்றார்.—பின்பு அவர் அவர்களை
நோக்கி, நீங்கள் அந்த உவமையை உணரவில்
லையா; உணராதிருந்தால் மற்றஎல்லா உவமைக
ளையும் எப்படி அறிவீர்களென்றார்.
௰௪, ௰௫ விதைக்கிறவன்வாக்கை விதைக்கிறான்.-சி
லர்வாக்கைக்கேட்கும்பொழுது, சாத்தான் உட
னேவந்து,அவர்கள் இருதயங்களிலேவிதைக்கப்
பட்டவாக்கைக் கவருகிறான்; இவர்களேவாக்
குவிதைக்கப்பட்ட வழியருகுக் கொப்பானவர்
௰௬ கள்.—சிலர் வாக்கைக்கேட்டமாத்திரத்திலேசந்
௰௭ தோஷத்தோடே உட்கொண்டும்,—அது தங்க
ளுக்குள்ளே வேரூன்றியிராததினால் கொஞ்சக்
காலம்மாத்திரம் நிலைகொள்வார்கள்: அவ்வாக்கி
னிமித்தங் கிலேசமுந் துயரமும் நேரிட்டவுட
னே வழுவுகிறார்கள், இவர்களே விதைக்கப்பட்
௰௮ ட கற்பாறைநிலத்துக் கொப்பானவர்கள்.-சிலர்
வாக்கைக்கேட்ட பின்பு, லௌகீக சிந்தனைக
ளும், ஐசுவரியத்தின் மயக்கமும், மற்றப்பொரு
ளைப் பற்றிவரும் இச்சைகளும் அந்த வாக்கை
நெருக்கிக்கொள்வதினால் பலனற்றவர்களாகிறா
௰௯ ர்கள்.—இவர்களே விதைக்கப்பட்டமுள்ளுள்
௨௰ ளநிலத்துக்கொப்பானவர்கள்.-சிலர் வாக்கைக்
கேட்டு உட்கொண்டு, சிலர் முப்பதும், சிலர்
அறுபதும், சிலர் நூறுமாகப் பலன்கொடுக்கி
றார்கள், இவர்களேவிதைக்கப்பட்ட நல்லநிலத்
துக்கொப்பானவர்களென்றார்.
௨௧ பின்பு அவர் அவர்களைநோக்கி, விளக்குத்
தண்டின்மேலன்றி, மரக்காலின்கீழாயினும்,கட்
டிலின் கீழாயினும் வைக்கிறதற்கு விளக்குக்
௨௨ கொண்டுவரப்படுமா.-வெளிப்படையாகாத அந்
தரங்கமுமில்லை; வெளிப்படாத மறைபொருளு
௨௩ மில்லை.—கேட்கிறதற்கு ஒருவன் காதுள்ளவனா
௨௪ யிருந்தால் கேட்கக்கடவனென்றார்.—பின்பு அ
வர் அவர்களைநோக்கி, நீங்கள் கேட்கிறதைச் சிந்
தித்துக்கொள்ளுங்கள்: நீங்கள் அளக்கும் அளவி
னால் உங்களுக்கும் அளக்கப்படும்: செவிகொ
டுப்பவர்களாகிய உங்களுக்கு அதிகங் கொ
௨௫ டுக்கப்படும்.—உள்ளவனெவனோ, அவனுக்குக்
கொடுக்கப்படும்: உள்ளவனல்லாதவனெவனோ,
அவனிடத்திலுள்ளதும் எடுத்துக்கொள்ளப்படு
மென்றார்.
௨௬ பின்னும் அவர், ஒரு மனுஷன் நிலத்திலே வி
தைவிதைத்து, இரவில் நித்திரைபண்ணிப் பக
௨௭ லில் விழித்திருப்பான்.—அவனுக்குத் தெரியா
தவிதமாய் அந்த விதை முளைத்துப்பயிராகும்;—
௨௮ பூமி, தானே முன்பு முளையையும், அப்பால் கதி
ரையும், பின்பு கதிரிலேநிறைந்த தானியத்தை
௨௯ யும் விளைவிக்கும்;—பயிர் முற்றினபொழுது,
அறுப்புக்காலமானபடியால் அவன் அரிய அரி
வாளைப்பிடிக்கிறான். தேவனுடைய இராச்
சியம் இதைப்போலாகுமென்றார்.
பின்பு அவர், நாம் தேவனுடைய இராச்சி ௩௰
யத்தை எதற்கொப்பிடலாம்; எதினாலே நாம் அ
தைத் திருஷ்டாந்தப்படுத்தலாம்.—அது ஒரு கடு ௩௧
கு விதைக்கொப்பாகும், அது நிலத்தில்விதைக்
கப்படுகிறபொழுது, பூமியிலுள்ள சகலவிதைக
ளிலுஞ்சிறிது.—விதைக்கப்பட்டபின்பு வளர்ந் ௩௨
து, எந்தப்பூண்டிலும்பெரிதாகி, ஆகாயத்துப்ப
றவைகள் அதின் நிழலில் வந்தடையத்தக்கதாக
விஸ்தாரமான கிளைகளை விடுகின்றதென்றார்.—
அவர்கள் கேட்குந்திராணிக்குத்தக்கதாய் இவ்வி ௩௩
த அநேக உவமைகளைக்கொண்டு அவர்களுக்கு
வாக்கைச்சொன்னார்.-உவமைகளைக்கொண்டே ௩௪
யன்றி, அவர்களுக்கு அவர் ஒன்றுஞ்சொல்ல
வில்லை: தம்முடையசீஷருடனே அவர்தனித்தி
ருக்கிறபொழுது அவர்களுக்குஎல்லாவற்றையும்
விரித்துரைத்தார்.—பின்பு அத்தினத்தின் சாயங் ௩௫
காலத்தில், அவர் அவர்களைநோக்கி, அக்கரைக்
குப்போவோம் வாருங்களென்றார்.—அப்பொழு ௩௬
து அவர்கள் சனங்களை அனுப்பிவிட்டு, அவர் ப
டவில் இருந்தபடியே அவரைக்கொண்டுபோ
னார்கள். வேறுபடவுகளும் அவரோடேகூடப்
போயின.—பலத்த சுழல்காற்றுண்டானதினால் ப ௩௭
டவு நிறையத்தக்கதாக அலைகள் அதின்மேல்
மோதின.—அப்பொழுது அவர் படவின் பின் ௩௮
னணியத்தில் ஒருதலையணையின்மேல் நித்திரை
கொண்டிருந்தார்: அவர்கள் அவரை எழுப்பி, அ
வருடனே, போதகரே, நாங்கள் மடிந்துபோகி
றோம், உமக்குக் கவலையில்லையாவென்றார்கள்.-
அவர் எழுந்து, காற்றை அதட்டி, கடலைப்பார்த் ௩௯
து, இரையாதே, அமைதியாயிருவென்றார். உட
னேகாற்றுநிற்க, மிகுந்த அமைதியுண்டாயிற்று.-
பின்பு அவர் அவர்களைநோக்கி, இப்படி என் ௪௰
பயப்படுகிறீர்கள்; உங்களுக்கு விசுவாசமில்லாத
தென்னவென்றார்.—அவர்கள் மிகவும் பயந்து ௪௧
காற்றுங்கடலும் இவருக்கு அமைந்திருக்கின்ற
ன, இவர் எப்படிப்பட்டவரென்று ஒருவரோ
டொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. பலபிசாசுகளாற் பிடியுண்டவனைச் சொஸ்தப்படுத்தல்: ௨௧. ஆலயத்தலைவனுடைய புத்திரியைச் சொஸ்தப்படுத்தப்போதல்: ௨௫. பெரும்பாடுள்ள ஸ்திரியைக் குணமாக்கல்: ௩௫. தலைவனுடைய புத்திரியை உயிர்ப்பித்தல்.

பின்பு அவர்கள் கடற்கரையிலுள்ள கதரேனர் ௧
தேசத்திற் சேர்ந்தார்கள்.—அவர் படவிலிருந் ௨
திறங்கினவுடனே, அசுத்த ஆவிகொண்டிருந்த
ஒரு மனுஷன் பிரேதவறைகளினின்று அவருக்
கெதிராகவந்தான்.—அவன் அந்தப்பிரேதவறை ௩

(௰௨) ஏசா.௬.௯. மத்.௰௩.௰௪. ரோ.௰௧.௮. (௰௪) மத்.௰௩.௰௯. (௰௮) ௧.தீமோ.௬.௯,௰௭. (௨௧) மத்.௫.௰௫. லூக்.௮.௰௬. (௨௨) மத்.௰.௨௬. லூக்.௰௨.௨. (௨௩) மத்.௰௧.௰௫. (௨௪) மத்.௭.௨. லூக்.௬.௩௮. (௨௫) மத்.௰௩.௰௨. லூக்.௮.௰௮. (௨௯) மத்.௰௩.௨௪. வெளி.௰௪.௰௫. (௩௰) மத்.௰௩.௩௧. லூக்.௰௩.௰௮. அப்.௨.௪௧. (௩௩) மத்.௰௩.௩௪. யோவா. ௰௬.௰௨. (௩௫) மத்.௮.௰௮,௨௩. லூக்.௮.௨௨.—(௫. அதி. ௧.) மத்.௮.௨௮. லூக்.௮.௨௬.

களினிடத்தில் வாசம்பண்ணுகிறவன்; ஒருவ
னும் அவனைச் சங்கிலிகளினாலுங் கட்டக்கூ
௪ டாது.—அநேகந்தரம் அவன் விலங்குகளினும்,
சங்கிலிகளிலும் பூட்டப்பட்டிருந்தும், அவன்
அந்தச்சங்கிலிகளைமுறித்து, விலங்குகளைத்தகர்த்
தான்: ஒருவனும் அவனை வசப்படுத்தக்கூடா
௫ து.—அவன் எப்பொழுதும் இரவும்பகலும் மலை
களிலும், பிரேதவறைகளிலுந்தங்கி, அலறி, தா
னே தன்னைக்கற்களால் கீறிக்கொள்ளுவான்.—
௬ அவன் தூரத்திலே யேசுவைக்கண்டு ஓடிவந்
து அவரை வணங்கினான்; அவர் அவனைநோக்
௭ கி,–அசுத்த ஆவியே, நீ இந்த மனுஷனைவிட்டுப்
௮ போவென்று கட்டளையிட்டார்.—அதினால் அ
வன், யேசுவே, சருவத்திற்குமேலான தேவ
னுடைய குமாரனே, எனக்கும் உமக்குமென்
ன; நீர் என்னை வேதனைப்படுத்தாதபடிக்கு நான்
உமக்குத் தேவன் மேல் ஆணையிடுகிறேனென்
௯ று பெருங்குரலிட்டுச் சொன்னான்.—அவர் அ
வனைநோக்கி, உன்பேர் என்னவென்றுகேட்க,
அவன், அநேகராயிருக்கிறோம்: ஆதலால் என்
௰ பேர் லேகியோனென்றுசொல்லி,—அத்தேசத்
தினின்றுந் தங்களை ஓட்டிவிடாதபடிக்கு அவ
௰௧ ரை மிகவும் வேண்டிக்கொண்டான்.—அவ்வி
டத்திலே மலைகளின் அடிவாரத்தில்பன்றிகள்மி
௰௨ குந்த கூட்டமாய் மேய்ந்துகொண்டிருந்தன.–பி
சாசுகளெல்லாம் அவரைநோக்கி, நாங்கள் அந்
தப்பன்றிக்கூட்டத்தில் பிரவேசிக்கும்படிக்கு
எங்களை அனுப்புமென்று வேண்டிக்கொண்ட
௰௩ ன.—உடனே யேசு அவர்களுக்கு விடைகொ
டுத்தார். அப்பொழுது அந்த அசுத்தஆவிகள் பு
றப்பட்டுப் பன்றிகளில் பிரவேசிக்க, ஏறக்கு
றைய இரண்டாயிரம் பன்றிகளாகிய அந்தக்கூட்
டம் உயர்ந்தமேட்டிலிருந்து கடலிலேபாய்ந்து,
௰௪ அதில் அமிழ்ந்திமாண்டது.–பன்றிகளை மேய்த்த
வர்கள் ஓடி, நகரத்திற்கும் நாட்டிற்குஞ் செய்தி
யைத் தெரிவிக்க, அவர்கள் நடந்ததைப் பார்க்
௰௫ கும்படி புறப்பட்டு,—யேசுவைச் சேர்ந்து,
லேகியோனென்னும்பிசாசுகளினால் பிடியுண்
டிருந்தவன் வஸ்திரந்தரித்துக்கொண்டு, புத்தி
தெளிந்து உட்கார்ந்திருக்கிறதைக்கண்டு பயந்தார்
௰௬ கள்.—பிசாசினால் பிடியுண்டவனுக்கும் பன்றி
களுக்குஞ் சம்பவித்ததைக் கண்டவர்கள் அவர்
௰௭ களுக்கு விவரமாகச்சொன்னார்கள்.—அப்பொ
ழுது தங்கள் எல்லைகளை விட்டுப்புறப்படும்படி
௰௮ அவரை வேண்டிக்கொண்டார்கள்.—பின்பு அ
வர் படவில் பிரவேசித்தபொழுது, பிசாசால் பி
டியுண்டவன் அவரோடேபோகும்படி அவரை
௰௯ வேண்டிக்கொண்டான்.–யேசு அவனுக்கு உத்
தரவுகொடாமல், அவனுடனே, நீ உன் இனத்தா
ரிடத்தில் உன் வீட்டுக்குப்போய், கர்த்தர் உன்
மேல் இரங்கி உனக்காகச்செய்த மகா கிரியைக
௨௰ ளை அவர்களுக்குத் தெரிவியென்றார்.–அந்தப்ப
டி அவன்போய், தனக்கு யேசு செய்த மகாகிரி

யைகளைத்தெக்கப்போலி தேசத்திலே பிரசித்தம்
பண்ணினான்: எல்லாரும் ஆச்சரியப்பட்டார்
கள்.–பின்பு யேசு படவின்வழியாய்த் திரும்ப ௨௧
வும் இக்கரையைச்சேர்ந்து சமுத்திரதீரத்தில் இ
ருந்தபொழுது, வெகுசனங்கள் அவரிடத்தில் கூ
டிவந்தார்கள்.—அப்பொழுது ஆலயத்தலைவரில் ௨௨
ஒருவனாகிய யாயீருவென்பவன்வந்து அவரைக்
கண்டு, அவருடையபாதத்திலே விழுந்து,–என் ௨௩
சிறுமகள் மரணாவஸ்தைப்படுகிறாள்: ஆதலால்
நீர்வந்து அவள்சொஸ்தமாகும்பொருட்டு அவள்
மேல்கைகளைவைத்தருளும்; அப்பொழுது சீவிப்
பாளென்று அவரைமிகவும் வேண்டிக்கொண்
டான்.—அவர் அவனோடேபோகையில் அவர் ௨௪
நெருங்குண்ணத்தக்கதாக அநேகசனங்கள் அவ
ருக்குப் பின்சென்றார்கள்.—அந்தச்சமயத்திலே ௨௫
பன்னிரண்டுவருஷமாகப் பெரும்பாடுடையவ
ளாய்,—அநேக வைத்தியரிடத்தில் மிகுதியும்வ ௨௬
ருத்தப்பட்டு, தனக்குண்டான யாவையும் செ
லவழித்துஞ் சற்றாயினுஞ் சொஸ்தமடையாமல்
மிகவும்மெலிவடைந்த ஒருஸ்திரி,-யேசுவைக் ௨௭
குறித்துக் கேள்விப்பட்டு, அவருடைய வஸ்தி
ரங்களைமாத்திரந் தொட்டால் சொஸ்தமடைய
லாமென்றெண்ணி,—சனங்களுக்குள்ளே பின் ௨௮
னாகவந்து, அவருடைய வஸ்திரத்தைத் தொட்
டாள்.–உடனே அவளுடைய இரத்தஊறல் நின் ௨௯
றுபோயிற்று; அவளுக்கு உண்டான உபத்திர
வம் நீங்கி ஆரோக்கியமடைந்ததை அவள் தன்
சரீரத்தில் உணர்ந்தாள்.—அப்பொழுது தம்மி ௩௰
டத்தினின்று சத்துவம்புறப்பட்டதை யேசு த
மக்குள் அறிந்து, திரும்பிச் சனங்களைப்பார்த்து,
என் வஸ்திரங்களைத் தொட்டவர் யாவரென்று
கேட்க,—அவருடைய சீஷர் அவரைநோக்கி, ௩௧
சனங்கள் உம்மை நெருக்குகிறதை நீர் கண்டும்,
என்னைத்தொட்டவர் யாவரென்று நீர் கேட்கிற
தெப்படியென்றார்கள்.—அவர் அப்படிச் செய் ௩௨
தவளைக் காணும்படிக்குச் சுற்றிலும்பார்க்க,—த ௩௩
னக்குச்சம்பவித்ததை அறிந்த ஸ்திரிபயந்து, ந
டுங்கிவந்து, அவர்சமுகத்தில் விழுந்து, உள்ள
தெல்லாவற்றையும் அவருக்குத் தெரிவித்தாள்.–
அவர் அவளைநோக்கி, மகளே, உன் விசுவாசம் ௩௪
உன்னைச் சொஸ்தமாக்கிற்று; உன்வருத்தம் நீங்
கிச் சமாதானத்தோடே போவென்றார்.—அவர் ௩௫
பேசிக்கொண்டிருக்கையில், ஆலயத்தலைவனு
டைய வீட்டிலிருந்து சிலர் வந்து, உம்மு
டையமகள் இறந்துபோனாள்: இனி என்போத
கரைவருத்தப்படுத்துகிறீரென்றார்கள்.–அவர்கள் ௩௬
சொல்லியவாக்கை யேசு கேட்டவுடனே ஆ
லயத்தலைவனைநோக்கி, நீ பயப்படவேண்டாம்,
விசுவாசமாகவேயிருவென்றுசொல்லி,—பின்பு ௩௭
பேதுருவும், யாக்கோபும், யாக்கோபின் சகோ
தரனாகிய யோவானுந்தவிர, வேறொருவருந்தமக்
குப்பின்செல்லாமல் தடுத்து,—ஆலயத்தலைவனு ௩௮
டையவீட்டிலேசேர்ந்து, ஆரவாரத்தையும், அழு

(௰௭) மத்.௮.௩௪. அப்.௰௬.௩௯. (௰௮) லூக்.௮.௩௮.(௨௧)மத்.௯.௧. லூக்.௮.௪௰.(௨௨)மத்.௯.௰௮. லூக்.௮.௪௧.(௨௫) லேவி.௰௫.௨௫. மத்.௯.௨௰. (௩௰) லூக்.௬.௰௯. (௩௪) மத்.௯.௨௨. அப்.௰௪.௯. (௩௫) லூக்.௮.௪௯.

து மிகவும் புலம்புகிறவர்களையுங் கண்டார்.—
௩௯ அவர் பிரவேசிக்கையில் அவர்களுடனே, நீங்
கள் ஆரவாரம்பண்ணி அழுகிறதென்ன, கன்
னி இறந்துபோகவில்லை, நித்திரைகொள்ளுகிறா
௪௰ ளென்றார்.—அவர்கள் அவரைநோக்கி, நகைத்
தார்கள். பின்பு அவர் எல்லாரையும் வெளியே
அகற்றி, அந்தக்கன்னியின் பிதாவையும், மாதா
வையும், தம்மோடே வந்தவர்களையும் அழைத்
துக்கொண்டு, பிள்ளை படுத்திருந்த இடத்திற் பி
௪௧ ரவேசித்து,—அந்தக்கன்னியின் கையைப்பிடித்
து, அவளுடனே, சிறுபெண்ணே, எழுந்திரு
வென்றுஉனக்குக்கட்டளையிடுகிறேனென்றருத்
௪௨ தங்கொள்ளும் "தாலித்தாகூமி," என்றார்.-உட
னே அவள்எழுந்து உலாவத்தொடங்கினாள்; அ
வர்கள் மிகவும் ஆச்சரியப்பட்டார்கள்: அந்தக்
௪௩ கன்னியின்வயது பன்னிரண்டு.—பின்பு அவர்,
அவர்கள் அதை ஒருவருக்குந் தெரிவியாதபடிக்
குஉறுதியாய்க்கட்டளையிட்டதுமன்றி,அவளுக்
குப்புசிக்க ஏதாயினுங்கொடுக்கவுங் கற்பித்தார்.

## ௬. அதிகாரம்.

௧. கிறிஸ்து அவமதிக்கப்படல்: ௭. சீஷருக்கு அதிகாரங்கொடுத்தல்: ௰௪. யோவான் ஸ்நானன் கொலைசெய்யப்படல்: ௩௰. கிறிஸ்துத் தனித்திருக்கப்போதல்: ௩௫. ஐந்து அப்பம், இரண்டு மச்சங்களினால் ஐயாயிரவரைப் போஷித்தல்: ௪௮. சமுத்திரத்தின்மேல்நடத்தல்: ௫௩. அநேக சனங்களைச்சொஸ்தப்படுத்தல்.

அவர் அவ்விடம்விட்டுத் தமது சென்மதேசத்
திற்குப்போனார்; அவருடைய சீஷரும் அவருக்
௨ குப்பின்சென்றார்கள்.—ஓய்வுநாள் வந்தபொழு
து அவர் ஆலயத்தில் உபதேசிக்கத்தொடங்கி
னார்: கேட்ட அநேகர் பிரமித்து, இவைகளெங்
கேயிருந்து இவனுக்குக் கிடைத்தன; இவனு
டையகைகள் இவ்வித ஆச்சரியமான கிரியைக
ளைச்செய்கிறதற்கு இவனுக்கு அருளப்பட்டஞா
௩ னம் எப்படிப்பட்டது.-இவன் மரியாளின்புத்
திரனும், யாக்கோபு, யோசே, யூதா, சீமோன்
என்பவர்களுக்குச் சகோதரனுமாகிய தச்சனல்
லவா; இவனுடைய சகோதரிகளும் இங்கே
நமக்குள்இருக்கிறார்களல்லவாவென்றுசொல்லி
௪ அவரைக்குறித்து இடறுண்டார்கள்.—அதினால்
யேசு அவர்களைநோக்கி, சுயதேசத்திலும், சுய
சுற்றத்தாரிலும், சுயகுடும்பத்திலுமன்றி, தீர்க்கத
ரிசி மற்றெவ்விடத்திலாவது அவமதிக்கப்படா
௫ னென்றார்.-அங்கேஅவர்,சிலநோயாளிகள்மேல்
தம்முடையகைகளைவைத்து, அவர்களைச்சொ
ஸ்தப்படுத்தினதேயன்றி, வேறொரு வலியகிரி
௬ யையயுஞ்செய்யமாட்டாமல்,-அவர்களுடை
ய அவிசுவாசத்தைக்குறித்து ஆச்சரியப்பட்டார்.
௭ பின்புகிராமங்களைச்சுற்றித்திரிந்து உபதேசம்
பண்ணினார். அன்றியும் அவர் பன்னிருவரை
யும் அழைத்து, அசுத்த ஆவிகள்மேல் அவர்களுக்
கு அதிகாரங்கொடுத்து,-அவர்கள் பையையும்,ஆ ௮
காரத்தையும்,அரைக்கச்சிலே பணத்தையும் வழி
க்குக்கொண்டுபோகாமல், ஒரு கோலைமாத்திரம்
எடுத்துப்போகவும்,—பாதரட்சைகளைத் தொடுத் ௯
துக்கொண்டுபோகவும், இரண்டு அங்கிகளைத் த
ரியாதிருக்கவும் அவர்களுக்குக் கட்டளையிட்
டார்.—பின்பு அவர்களைநோக்கி, நீங்கள் எவ் ௰
விடத்திலாயினும் பிரவேசிக்கும் ஒருவீட்டில்,
அவ்விடத்தை விட்டுப் புறப்படுகிறவரைக்குந்
தங்கியிருங்கள்.—எவர்களாயினும் உங்களை அங் ௰௧
கிகரித்துக்கொள்ளாமலும், உங்களுக்குச் செவி
கொடாமலுமிருந்தால், அவர்களுடைய இடத்
தை நீங்கள்விட்டுப்புறப்படுகையில் அவர்களுக்
குவிரோதமான சாட்சியாக உங்கள்பாதத்திறப
டிந்த தூளை உதறிப்போடுங்கள். நியாயத்தீர்ப்பு
நாளில் அந்தப்பட்டணத்தாரின் நிலைமையிலும்,
சோதோம் கொமோராவின் நிலைமை சகாயமாயி
ருக்குமென்று மெய்யாக உங்களுக்குச்சொல்லு
கிறேனென்பதைச்சொல்லி, இருவர் இருவராக
அவர்களை அனுப்பினார்.—அவர்கள்புறப்பட்டு, ௰௨
மனந்திரும்புங்களென்று பிரசங்கித்து,—அநே ௰௩
கம்பிசாசுகளைத்துரத்தி, அநேகம்நோயாளிகளுக்
குத் தைலத்தைப்பூசிச்சொஸ்தப்படுத்தினார்கள்.-
இவ்விதமாய் அவருடையகீர்த்தி பரம்பியிருந்த ௰௪
து: ஏரோது இராசா அதைக்கேள்விப்பட்டு,யோ
வான் ஸ்நானன் மரித்தோரினின்றும் உயிரோ
டெழுப்பப்பட்டிருக்கிறான், ஆதலால் அற்புத
மான கிரியைகள்அவனாலேநடப்பிக்கப்படுகின்
றனவென்றான்.—சிலர் அவரை இலீசாவென் ௰௫
றார்கள். சிலர் அவரை ஒரு தீர்க்கதரிசி, அல்ல
து தீர்க்கதரிசிகளில் ஒருவனைப்போன்றவரென்
றார்கள்.—ஏரோது அதைக்கேட்டபொழுது, அ ௰௬
வன் நான் சிரச்சேதம்பண்ணுவித்த யோவான்
தான்: அவன் மரித்தோரினின்று எழுந்திருக்கி
றானென்றான்.—ஏரோது, தன் சகோதரனாகிய ௰௭
பிலிப்பினுடைய மனைவி ஏரோதியாளைவிவா
கம்பண்ணியிருந்தான்:—யோவான் ஏரோதை ௰௮
நோக்கி, நீர் உம்முடைய சகோதரனுடைய ம
னைவியைச் சேர்க்கத்தகாதென்று சொன்னதினி
மித்தம், ஏரோது ஆளனுப்பி அவனைப்பிடித்து,
கட்டிக்காவலிலே வைப்பித்தான்.-இதினால் ஏ ௰௯
ரோதியாளும் அவன்மேல் குரோதங்கொண்டு,
அவனைக் கொலைசெய்யவிரும்பினாள்.-ஆயினும் ௨௰
ஏரோது, யோவான் நீதியும் பரிசுத்தமுமுள்ளவ
னென்றறிந்து அவனுக்குப்பயந்து, அவனை நன்
றாய்க்காத்து, அவனுடைய ஆலோசனைக்கேற்க
அநேககாரியங்களைச்செய்து, விருப்பத்தோடே
அவன் சொற்கேட்டுவந்தான், ஆதலால் அது

(௩௯) யோவா.௰௧.௰௧. (௪௰) அப்.௯.௪௰. (௪௩) மத்.௮.௪.—(௬. அதி. ௧.) மத்.௰௩.௫௪. (௨) யோவா.௬.௪௨. (௩) கலா.௧.௰௯. மத்.௰௧.௬. (௪) மத்.௰௩.௫௭. யோவா.௪.௪௪. (௫) ஆதி.௰௯.௨௨. மத்.௰௩.௫௮. (௬) ஏசா.௫௯.௰௬. (௭) மத்.௯.௩௫. லூக்.௰௩.௨௨. மத்.௰.௧. லூக்.௯.௧. (௮) மத்.௰.௯. லூக்.௩.௩. (௯) அப்.௰௨.௮. (௰) மத்.௰.௰௧. (௰௧) மத்.௰.௰௪. லூக்.௰.௯. அப்.௰௩.௫௧. (௰௩) யாக்.௫.௰௪. (௰௪) மத்.௰௪.௧. (௰௫) மத்.௰௬.௰௪. (௰௬) மத்.௰௪.௨. லூக். ௩.௰௯. (௰௮) லேவி.௰௮.௰௬. (௨௰) மத்.௰௪.௫.

௨௧ செய்யக்கூடாமற் போயிற்று.—பின்பு காலம்
வாய்த்தது; ஏரோது தன் சென்மதினத்தில் தன்
பிரதானமனுஷருக்கும், சேனாபதிகளுக்கும், க
லிலேயாவிலுள்ள பிரபுகளுக்கும் விருந்துபண்
௨௨ ணினான்.-அச்சமயத்தில் ஏரோதியாளுடையபுத்
திரிவந்து, ஏரோதுக்கும், அவனுடனே பந்தியி
ருந்த மற்றவர்களுக்கும் பிரியமுண்டாகும்படி
நடனம்பண்ணினாள், அதினால் இராசா அந்தக்
கன்னியைநோக்கி, நீ என்னிடத்தில்வேண்டிய
௨௩ தைக்கேள், நான் உனக்குத்தருவேன்.—நீ என்
இராச்சியத்திற் பாதிவரைக்கும் என்னிடத்தில்
எதைக்கேட்டாலும், அதை உனக்குத்தருவே
னென்று அவளுக்கு ஆணையிட்டுச்சொன்னான்.-
௨௪ அப்பொழுது அவள் வெளியேபோய், தன்மாதா
விடத்தில், நான் என்னகேட்கவேண்டுமென்று
கேட்க, இவள், யோவான் ஸ்நானனுடைய தலை
௨௫ யைக்கேளென்றாள்.—பின்பு அவள் துரிதமாய்இ
ராசாவினிடத்தில் திரும்பிப்போய், நீர் இப்பொ
ழுதே ஒரு தாலத்தில் யோவான்ஸ்நானனுடை
ய தலையை எனக்குத்தரவேண்டுமென்று கேட்
௨௬ டாள்.—அதினால் இராசா மிகவுந் துக்கப்பட்
டான்; ஆயினுந் தான்இட்ட ஆணையினிமித்த
மும், அவனுடனே பந்தியிருந்தவர்களினிமித்
தமும் அவளுக்குஅதை மறுக்கமாட்டாமல்,—
௨௭ அவனுடையதலையைக்கொண்டுவரும்படி தன்
மெய்க்காவலரில் ஒருவனுக்குக்கட்டளையிட்ட
னுப்ப, அவன்போய், சிறைச்சாலையிலே யோ
௨௮ வானுடைய சிரசைச்சேதித்து,—ஒருதாலத்தில்
அவனுடைய தலையைக்கொண்டுவந்து அந்தக்
கன்னிக்குக்கொடுத்தபொழுது, அவள் அதைத்
௨௯ தன்மாதாவுக்குக் கொடுத்தாள்.—பின்பு அவனு
டைய சீஷர் அந்தச்செய்தியைக்கேட்டு,
வந்து அவனுடைய உடலை எடுத்து ஒரு பிரேத
௩௰ வறையில் வைத்தார்கள்.—அப்போஸ்தலர் யே
சுவினிடத்தில் கூடிவந்து, தாங்கள் செய்த
வைகளும்போதித்தவைகளுமாகியசெய்தியெல்
௩௧ லாம் அவருக்கு விவரித்தார்கள்.—போகிறவர்க
ளும் வருகிறவர்களும் மிகுதியானபடியால், அ
வர்கள் போசனம்பண்ணச் சாவகாசமில்லாமலி
ருந்ததினிமித்தம் அவர் அவர்களைநோக்கி, நீங்
கள் வனத்தைச்சேர்ந்தஇடத்தில் தனித்துச் சற்
றே இளைப்பாறும்படி வாருங்களென்றார்.—
௩௨ பின்பு அவர்கள் படவிலேறி வனத்தைச்சேர்ந்
தஇடத்தில்தனித்திருக்கும்படிபுறப்பட்டுப்போ
௩௩ னார்கள்.—அவர்கள் புறப்பட்டுப்போகிறதைச்
சனங்கள் கண்டார்கள்; அவரை அறிந்த அநே
கர், கரைவழியாய்ச் சகலபட்டணங்களிலுமி
ருந்துபோய், அவர்களுக்குமுன் அங்கே சென்
௩௪ று, அவரிடத்தில் கூடினார்கள்.—யேசு இறங்கி
னபொழுது திரளான சனங்களைக்கண்டு, அவர்
கள் மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போலிருந்தப
டியினால் அவர்கள்மேல் மனதுருகி, அநேக வி
சேஷங்களை அவர்களுக்குஉபதேசிக்கத்தொடங்
கினார்.—சாயங்காலமானபொழுது அவருடைய ௩௫
சீஷர் அவரிடத்தில்வந்து, இது வனத்தைச்சேர்ந்
தஇடம், பொழுதும்போயிற்று:-இவர்கள் சுற்றி ௩௬
யிருக்கிற நாட்டுக்குங் கிராமங்களுக்கும்போய்,
தங்களுக்காக ஆகாரத்தை வாங்கிக்கொள்ளும்
படி இவர்களை அனுப்பிவிடும்: புசிக்கிறதற்கு
இவர்களிடத்தில் ஒன்றுமில்லையென்று சொல்
ல,-அவர்களுக்குத்தரமாக அவர், நீங்களே இவர் ௩௭
களுக்குப் போசனங்கொடுங்களென்றார். அவர்
கள் அவருடனே,இவர்களுக்குப்போசனங்கொ
டுப்பதற்கு நாங்கள்போய், இருநூறு தேனாரியப்
பணத்துக்கு அப்பங்களை வாங்கிக்கொண்டுவ
ரவேண்டுமாவென்றார்கள்.-அதற்கு அவர்,உங்க ௩௮
ளிடத்தில் எத்தனை அப்பங்களுண்டு, போய்ப்பா
ருங்களென்றுசொல்ல, அவர்கள் அறிந்து, ஐந்து
அப்பமும் இரண்டுமீனுமிருக்கின்றனவென்றார்
கள்.-அப்பொழுது பந்தியாகச் சமஸ்தரையும்ப ௩௯
சும்புல்லின்மேல் அவர்கள் உட்காரப்பண்ணும்
படி,அவர் கட்டளையிட்டார்.—அப்படியே நூறு ௪௰
பேராகவும், ஐம்பதுபேராகவும் வரிசைவரிசை
யாய் உட்கார்ந்தார்கள்.—பின்பு அவர் அவ்வைந் ௪௧
து அப்பங்களையும், அவ்விரண்டுமீன்களையுமெ
டுத்து, வானத்தை அண்ணாந்துபார்த்து ஆசீர்வா
தஞ்செய்து, அப்பங்களைப்பிட்டு, சனங்களுக்
குமுன்வைக்கும்படி அவைகளைச் சீஷரிடத்தில்
கொடுத்து, பின்பு அவ்விரண்டு மீன்களையும் அ
வர்கள் எல்லாருக்கும் பங்கிட்டார்.—எல்லாரும் ௪௨
புசித்துத் திருத்தியடைந்தார்கள்.—பின்பு அவர் ௪௩
கள், சேஷமானவைகளையும், மீன்களில் மீந்த
வைகளையும் பன்னிரண்டுகூடை நிறைய எடுத்
தார்கள்.—அப்பங்களைப்புசித்த புருஷர் ஏறக்கு ௪௪
றைய ஐயாயிரம்பேர்.—உடனே அவர், தாம் ச ௪௫
னங்களை அனுப்பிவிடுகையில், சீஷர் படவிலே
றித் தமக்குமுன் அக்கரையிலுள்ள பேத்சாயிதா
வுக்குப் போகும்படி அவர்களைநெருக்கியேவி
னார்.-அவர்களை அனுப்பிவிட்டபின்பு, அவர்பி ௪௬
ரார்த்தனைபண்ணும்படி ஒருமலைக்குப்போனார்.-
சாயங்கால மானபொழுது, படவு கடலின் நடு ௪௭
வேசேர்ந்தது, அவர் கரையிலே தனித்திருந்தார்.-
எதிர்காற்றானபடியினால் அவர்கள் தண்டுவலித் ௪௮
து வருந்தக்கண்டு, இரவின் நாலாஞ்சாமத்திலே
சமுத்திரத்தின்மேல்நடந்து,அவர்களைச்சேர்ந்து,
அவர்களால் கடந்து போவதுபோற்காணப்பட்
டார்.—அவர் சமுத்திரத்தின்மேல் நடப்பதை அ ௪௯
வர்கள் கண்டபொழுது, அது ஒருஆவேசமென்
றெண்ணி ஓலமிட்டார்கள்.—எல்லாரும் அவ ௫௰
ரைக்கண்டு கலங்கினார்கள். உடனே அவர் அவர்
களுடனேபேசி, திடன்கொள்ளுங்கள்; பயப்ப
டாதிருங்கள்: நான்தானென்றார்.—அவர் அவர்க ௫௧
ளிருந்தபடவிலேற, காற்றுஅமர்ந்தது: அதினால்
அவர்கள் தங்கள் உள்ளத்தில் மிகவும் அதிக

(௨௧) மத்.௰௪.௬. ஆதி.௪௰.௨௰. (௨௩) எஸ்த.௫.௩,௬. (௨௬) மத்.௰௪.௯. (௩௰) லூக்.௯.௰. (௩௧) மத்.௰௪.௰௩. (௩௨) மத்.௰௪.௰௩.(௩௪)மத்.௯.௩௬. லூக்.௯.௰௧. (௩௫) மத்.௰௪.௰௫. (௩௭) எண்.௰௧.௰௩,௨௨. ௨.இரா.௪.௪௩.(௩௮)மத்.௰௪.௰௭. லூக்.௯.௰௩. (௪௧) ௧.சாமு.௯.௰௩. மத்.௨௬.௨௬. (௪௫) மத்.௰௪.௨௨. (௪௭) மத்.௰௪.௨௩. (௪௮) லூக்.௨௪.௨௮.

௫௨ மாய்ப் பிரமித்து ஆச்சரியங்கொண்டார்கள்.—அ
வர்கள், இருதய கடினத்தினிமித்தம், அப்பங்க
ளின் அற்புதத்தின்மேல்சிந்தைவைக்கவில்
௫௩ லை.—அவர்கள் அக்கரைக்கோடி, கெனேசரெத்
௫௪ நாட்டுக்கு வந்து கரைசேர்ந்தார்கள்.—அவர்கள்
படவைவிட்டிறங்கினவுடனே சனங்கள் அவ
௫௫ ரை அறிந்து,—அந்தத்திசையெங்கும்ஓடி, படுக்
கையோடே பிணியாளிகளைச்சுமந்து, அவர் வந்
திருக்கிறாரென்று சேள்விப்பட்ட இடங்களுக்
௫௬ குக்கொண்டுவந்தார்கள்.—அவர் பிரவேசித்தகி
ராமம், நகரம், நாடு எவைகளோ, அவைகளின்
சந்தைகளில் பிணியாளிகளைவைத்து, அவர்கள்
அவருடைய வஸ்திரத்தின்ஓரத்தைமாத்திரந்தொ
டும்படிக்கு அவரை வேண்டினார்கள்: அவரைத்
தொட்டவர் யாவருஞ் சொஸ்தமடைந்தார்கள்.

## ௭. அதிகாரம்.

௧. கைகழுவாமல் புசிப்பதைக்குறித்து வாக்குவாதஞ்செய்தல்: ௰௪. மனுஷனை அசுசிப்படுத்துவதின்னதென்றுகாட்டல்: ௨௪. ஸீரோபெனீக்கிய கன்னியைக் குணமாக்கல்: ௩௧. செவிடனுந் தெற்றுவாயனுமான ஒருவனைச் சொஸ்தப்படுத்தல்.

பின்பு யெருஷலேமிலிருந்துவந்தபரிசேயரும்,
வேதபாரகரிற் சிலரும் அவரிடத்தில் கூடிவந்
௨ தார்கள்.—அவருடைய சீஷரிற் சிலர், கழுவா
மல் அசுத்தமாயிருக்கிற கைகளோடே புசிப்ப
௩ தைக்கண்டு குறைசொன்னார்கள்.—பரிசேயரும்,
மற்ற யூதர் எல்லாரும் முதியோருடைய பாரம்
பரை முறைமைகளைக் கைக்கொள்ளுகிறவர்க
ளாதலால், அடிக்கடிகைகழுவாமல்புசியார்கள்.-
௪ அன்றியும் அவர்கள் சந்தைகளினின்று வந்
தால் ஸ்நானம்பண்ணாமல்புசிக்கமாட்டார்கள்.
சலபாத்திரங்களையும், குடங்களையும், செப்புப்
பாத்திரங்களையும்,மஞ்சங்களையுங்கழுவி,மற்றும்
இப்படிப்பட்ட அநேக சடங்குகளையுங்கைக்
௫ கொள்ளுவார்கள்.—ஆதலால் அந்தப் பரிசேய
ரும் வேதபாரகரும் அவரைநோக்கி, உம்முடை
ய சீஷர் கைகழுவாமல்போசனம்பண்ணி, முதி
யோருடைய முறைமையை மீறிநடக்கிறதென்
௬ னவென்றுகேட்க,—அவர்அதற்குத்தரமாக, நீங்
கள் தேவனுடைய கட்டளையைவிட்டு, கு
டங்களையுஞ் சலபாத்திரங்களையுங்கழுவி, மற்
றும் இவ்விதமான அநேக கிரியைகளைச்செய்
து, மனுஷருடைய பாரம்பரை முறைமைகளைக்
௭ கைக்கொண்டுவருகிறீர்கள்.—ஆ, கபடிகளாகிய
உங்களைக்குறித்து, "இந்தச்சனங்கள் தங்கள் உ
தடுகளினால் என்னைக் கனம்பண்ணுகிறார்கள்,
இவர்களுடைய இருதயமோ எனக்குத்தூரமாயி
௮ ருக்கின்றது.—ஆனாலும்மனுஷன்கற்பித்தவிதிக
ளையே விதியென்றுபோதித்து, விருதாவாக எ
னக்கு ஆராதனைசெய்து வருகிறார்கள்," என்று,
ஏசாயா தீர்க்கதரிசனவாக்கியங்களை நன்றாய்ச்
சொன்னானென்றார்.—பின்பு அவர் அவர்களுட ௯
னே உங்கள்பாரம்பரைமுறைமையைக் காத்துக்
கொள்ளும்படிக்கு, நீங்கள் பிரத்தியட்சமாய்த்
தேவனுடைய கட்டளையை விலக்குகிறீர்
கள்.—"உன் பிதாவையும் உன் மாதாவையுங் ௰
கனம்பண்ணவேண்டும்," என்றும், "பிதாவை
யாயினும் மாதாவையாயினும் நிந்திப்பவன் கொ
லை செய்யப்படவேண்டும்," என்றும், மோசே
சொன்னானே.—ஒருவன் தன் பிதாவிடத்திலாயி ௰௧
னும் மாதாவிடத்திலாயினும், உமக்கு என்னாலே
உதவுகிறதேதுண்டோ, அது, காணிக்கையென்
றருத்தங்கொள்ளுங்கொர்பானவதாகவென்னும்
வாக்கைச்சொன்னால்,—பின்பு அவன் தன்பிதா ௰௨
வுக்குந் தன் மாதாவுக்கும் உதவிசெய்யவேண்டு
வதில்லையேயென்று நீங்கள் உத்தரவுகொடுத்து,-
இவ்விதமாய்க் கற்பித்த உங்கள் பாரம்பரைமு ௰௩
றைமையினால் தேவனுடைய வாக்கைவிலக்
குகிறீர்கள்: அப்படியே நீங்கள் அநேக காரியங்
களைச்செய்து வருகிறீர்களென்றுசொல்லி,
பின்பு அவர் எல்லாச்சனங்களையும் அழைத் ௰௪
து, நீங்களெல்லாரும் எனக்குச்செவிகொடுத்து
உணர்ந்துகொள்ளுங்கள்.—ஒரு மனுஷனுக்குப் ௰௫
புறம்பாயிருந்து,உட்படுவதொன்றும் அவனை அ
சுசிப்படுத்தமாட்டாது: அவன் உள்ளத்தினின்று
புறப்படும்பொருள்களே அவனை அசுசிப்படுத்து
கின்றன.—கேட்கிறதற்கு ஒருவன்காதுள்ளவனா ௰௬
னால்கேட்கக்கடவனென்றார்.—பின்பு அவர் ச ௰௭
னங்களைவிட்டு, வீட்டில் பிரவேசித்தபொழுது,
அவருடைய சீஷர் அந்த உவமையைக்குறித்து
அவரிடத்தில் வினாவினார்கள்.—அவர்களைநோக் ௰௮
கி அவர், நீங்களும் புத்தியில்லாதவர்களா; புறம்
பாயிருக்கிறயாவும் மனுஷனுக்குட்படுவதினால்,
அவனை அசுசிப்படுத்தமாட்டாதென்பதை நீங்
கள் உணரவில்லையா.—அது அவனுடைய இருத ௰௯
யத்திலேபிரவேசியாமல் வயிற்றில்பிரவேசித்து,
அதினின்று, எல்லாப்போசனங்களையுங் கழிக்
கும்வழியாய்ப் புறப்படுகின்றதென்றார்.—பின் ௨௰
னும், மனுஷனுடைய உள்ளத்தினின்றுபுறப்படு
கிறதே அவனை அசுசிப்படுத்துகின்றது.—மனுஷ ௨௧
னுடைய உள்ளமாகிய இருதயத்தினின்று துர்ச்
சிந்தனை, விபசாரம், வேசைமார்க்கம், கொலை,—
களவு, பொருளாசை, பகை, வஞ்சகம், இச்சை, ௨௨
பொறாமை, தூஷணம், அகங்காரம், மதிகேடு
என்னுமிவைகள் புறப்படுகின்றன:-தீமையான ௨௩
இவைகளெல்லாம் உள்ளத்தினின்று புறப்பட்
டு, மனுஷனை அசுசிப்படுத்துகின்றனவென்றார்.
பின்பு அவர் எழுந்து அவ்விடம்விட்டுத் தீறு ௨௪
சீதோனின்எல்லைகளுக்குப் போனார்; அங்கே
அவர் ஒருவீட்டில் பிரவேசித்தபின்பு ஒருவருந்
தம்மை அறியாமலிருக்க விரும்பியும், அவர்
மறைவாயிருக்கக்கூடாமலிருந்தது.—ஸீரோபெ ௨௫
னீக்கிய தேசத்திற்பிறந்த ஒரு கிரேக்க ஸ்திரீக்

(௫௨) மத்.௰௪.௩௪. (௫௬) மத்.௯.௨௧. அப்.௰௯.௰௨.—(௭. அதி. ௧.) மத்.௰௫.௧. (௫) மத்.௰௫.௨. (௭) ஏசா.௨௯.௰௩. மத்.௰௫.௮. (௰) யாத்.௨௰.௰௨. உபா.௫.௰௬. மத்.௰௫.௪. யாத்.௨௧.௰௭. லேவி.௨௰.௯. நீதி.௨௰.௨௰. (௰௧) மத்.௰௫.௫. (௰௪) மத்.௰௫.௰. (௰௬) மத்.௰௧.௰௫. (௰௭) மத்.௰௫.௰௫. (௨௧) ஆதி.௬.௫. மத்.௰௫.௰௯. (௨௪) மத்.௰௫.௨௧.

௨௬ கு அசுத்தஆவிபிடித்த மகளிருந்தாள்.—அந்தஸ்
திரி அவரைக்குறித்துக் கேள்விப்பட்டபொழு
து, வந்து அவருடையபாதத்தில் விழுந்து, தன்
மகளிலிருந்து பிசாசைத்துரத்தவேண்டுமென்று
௨௭ அவரை வேண்டிக்கொண்டாள்.–யேசு அவளை
நோக்கி, முதலாவது பிள்ளைகள் திருத்தியாகட்
டு: பிள்ளைகளுடைய ஆகாரத்தை எடுத்துநாய்
களுக்குப் போடுகிறது தகாதென்று சொல்ல,—
௨௮ அவருக்குத்தரமாய் அவள், கர்த்தாவே, அ
துமெய்: போசனபீடங்களின்கீழிருக்கிற நாய்
கள், பிள்ளைகள் விட்ட உச்சிட்டங்களைத்தின்
௨௯ னுமேயென்றாள்.—அவர் அவளைநோக்கி, இந்த
வாக்கினிமித்தம் நீ போ, பிசாசு உன் மகளைவிட்
௩௰ டகன்றதென்றார்.–பின்பு அவள் தன்வீட்டிலே
போய்ச்சேர்ந்தபொழுது, பிசாசு அகன்றுபோ
யிற்றென்பதையும், தன் மகள் கட்டிலின்மேல்
படுத்திருக்கிறதையுங்கண்டாள்.

௩௧ பின்பு அவர் தீருசீதோன் எல்லைகளைவிட்டுப்
புறப்பட்டு, தெக்கப்போலியென்னுந்தேசத்தின்
எல்லைகளின்வழியாய்த்திரும்பவுங் கலிலேயாக்
௩௨ கடலருகேவந்தார்.—அங்கே கொன்னைவாயை
யுடைய செவிடனை அவரிடத்திற்கொண்டுவந்
து, அவர் தமது கையை அவன்மேல்வைக்கும்
படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்.—
௩௩ அப்பொழுது அவர் சனக்கூட்டத்தைவிட்டு அ
வனை ஒருபுறத்தில் அழைத்துப்போய்,தம்முடை
ய விரல்களை அவனுடையகாதுகளிலேவைத்து,
௩௪ உமிழ்ந்து,அவனுடையநாவைத்தொட்டு,–பின்
பு வானத்தை அண்ணாந்துபார்த்து, பெருமூச்
சுவிட்டு, எப்பத்தாவென்றார், எப்பத்தாவென்
பதற்குத் திறக்கப்படுவதாகவென்பது அருத்த
௩௫ மாம்.–உடனே அவனுடைய காதுகள் திறக்கப்
பட்டன, அவன் நன்றாய்ப்பேசத்தக்கதாக அவ
௩௬ னுடைய நாவின் கட்டு நீக்கப்பட்டது.–பின்பு
அதை ஒருவருக்குஞ் சொல்லாதபடிக்கு அவர்க
ளுக்குக்கட்டளையிட்டார்: அவர் எவ்வளவாய்க்
கட்டளையிட்டாரோ, அவ்வளவதிகமாக அவர்
௩௭ கள் பிரசித்தம்பண்ணினார்கள்.—அவர்கள் மிக
வும் அதிகமாய் ஆச்சரியப்பட்டு, எல்லாம் நன்
றாகச்செய்கிறார்:செவிடர் கேட்கவும்,ஊமையர்
பேசவும் பண்ணுகிறாரென்று சொல்லிக்கொண்
டார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. கிறிஸ்துச் சனங்களைப்போஷித்தல்: ௰. ஆகாயத்திலுள்ள அடையாளத்தைக்காட்டாது மறுத்தல்: ௰௪. புளித்தமாவைக்குறித்து எச்சரித்தல்: ௨௨. குருடனுக்குப் பார்வை அருளல்: ௨௭. தாம் கிறிஸ்துவென்று அறிக்கையிடல்: ௩௧. தமது மரணவேதனையை முன்னுரைத்தல்: ௩௪. தம்மைப் பின்பற்றுகிறவர்கள் நிலைநிற்கும்படி உற்சாகப்படுத்தல்.

அக்காலத்திலே சனங்கள் திரளாகவந்து,போச
னம்பண்ணுகிறதற்கு ஒன்றுமில்லாதிருந்தபொ
ழுது, யேசு தம்முடைய சீஷரை அழைத்து,
அவர்களுடனே,—இந்தச்சனங்கள் என்னிடத் ௨
தில் மூன்றுநாளாய்த் தரித்திருக்கிறார்கள், போ
சனம்பண்ணுகிறதற்கு இவர்களுக்கு ஒன்றுமில்
லை, இவர்களைக்குறித்து நான் பரிதாபப்படுகி
றேன்: இவர்களிற் சிலர் தூரத்திலிருந்து வந்தி
ருக்கிறார்களே.—நான் இவர்களைப் பட்டினி ௩
யாய்த் தங்கள் வீடுகளுக்கு அனுப்பிவிட்டால்
வழியிலே சோர்ந்துபோவார்களென்று சொல்
ல,—சீஷர் அவருக்குத்தரமாக, இவர்களைத்தி ௪
ருத்திப்படுத்துவதற்கு ஒருவன் இந்தவனத்தில்
அப்பங்கள் சம்பாதிப்பதெப்படியென்றார்கள்.-
அதற்கு அவர், எத்தனை அப்பங்கள் உங்களி ௫
டத்திலுண்டென்றுகேட்க, ஏழு என்றார்கள்.—
அப்பொழுது அவர் சனங்களைத்தரையிலே பந் ௬
தியிருக்கக்கட்டளையிட்டு, அந்த ஏழு அப்பங்க
ளையும் எடுத்து, ஸ்தோத்திரஞ்செய்து, அவைக
ளைப்பிட்டு, அவர்களுக்கு முன்வைக்கும்ப
டி அவைகளைத் தம்முடைய சீஷரிடத்தில்கொ
டுக்க, அவர்கள் சனங்களுக்குமுன் வைத்தார்
கள்.–அன்றியுஞ் சில சிறுமீன்கள் அவர்களிடத் ௭
திலிருந்தன: அவர் ஆசீர்வாதஞ்சொல்லியபின்பு
அவைகளையும் பரிமாறும்படிக்குக்கட்டளையிட்
டார்.—சனங்கள் புசித்துத்திருத்தி அடைந்தார் ௮
கள்: சேஷமானவைகளை ஏழு கூடை நிறைய
எடுத்தார்கள்:-புசித்தவர்கள் ஏறக்குறைய நாலா ௯
யிரம்பேர்.

பின்பு அவர்களை அனுப்பிவிட்டு, உடனே ௰
தம்முடைய சீஷருடன் படவிலேறி, தல்மனு
தாவின் எல்லைகளில்வந்தார்.–அப்பொழுது பரி ௰௧
சேயர் புறப்பட்டுவந்து அவருடனேதருக்கிக்கத்
தொடங்கி, அவரைப் பரீட்சைபார்க்கும்படி அ
வரிடத்தில் ஆகாயத்தில் ஒரு அடையாளத்தைக்
கேட்டார்கள்.—அவர் தமது ஆவியில் பெரு ௰௨
மூச்சுவிட்டு, இந்தச்சந்ததியார் ஏன் ஒரு அடை
யாளத்தைக் கேட்கிறார்கள்; இந்தச்சந்ததியாருக்
கு ஒருஅடையாளமுங் கொடுக்கப்படுவதில்லை
யென்று மெய்யாக உங்களுக்குச் சொல்லுகி
றேனென்றுசொல்லி,—அவர்களைவிட்டுத்திரும் ௰௩
பவும் படவிலேறி அக்கரைக்குப்போனார்.

சீஷர் அப்பங்களைக்கொண்டுபோக மறந்தி ௰௪
ருந்தார்கள், படவில் ஒரு அப்பம்மாத்திரம் அ
வர்களிடத்திலிருந்தது.—அவர் அவர்களைநோக் ௰௫
கி, நீங்கள் பரிசேயருடைய புளித்தமாவையும்,
ஏரோதின்புளித்தமாவையுங்குறித்துஎச்சரிக்கை
யாயிருங்களென்றார்.–அவர்கள், நாம் அப்பங்க ௰௬
ளைக் கொண்டுவராததினாலோ பேசுகிறாரென்று
சொல்லி, தங்களுக்குள்ளே யோசித்துக்கொண்
டிருந்தார்கள்.—யேசு அதை அறிந்து அவர்க ௰௭
ளைநோக்கி, உங்களிடத்தில் அப்பங்களில்லாத
தினால் நீங்கள்யோசித்துக்கொண்டிருக்கிறதென்

(௩௧) மத்.௰௫.௨௯. (௩௨) மத்.௯.௩௨. (௩௩) யோவா.௯.௬. (௩௪) யோவா.௰௧.௩௩,௩௮,௪௧. (௩௫) ஏசா.௩௫.௫,௬. மத்.௰௧.௫.—(௮. அதி. ௧.) மத்.௰௫.௩௨. (௫) மத்.௰௫.௩௪. (௭) மத்.௰௪.௰௯. (௰) மத்.௰௫.௩௯. (௰௧) மத்.௰௨.௩௮. யோவா.௬.௩௰. (௰௪) மத்.௰௬.௫. (௰௫) மத்.௰௬.௬. (௰௬) மத்.௰௬.௭.

ன; இதுவரைக்கும் அறியாமலும் உணராமலுமி
ருக்கிறீர்களா, இதுவரைக்கும் உங்களுடைய இ
௰௮ ருதயங் கடினமாயிருக்கின்றதா.—கண்களிருந்
துங்காணாமலிருக்கிறீர்களா, காதுகளிருந்துங்கே
ளாமலிருக்கிறீர்களா, நீங்கள் நினைவுகூரவில்லை
௰௯ யா.—ஐயாயிரம்பேருக்குள்ளே நான் ஐந்துஅப்
பங்களைப் பிட்டுக்கொடுத்தபொழுது, எத்தனை
கூடைநிறைந்ததுணிக்கைகளை எடுத்தீர்களென்
று அவர்களைக்கேட்க, அவர்கள் அவருடனே,
உ௰ பன்னிரண்டு என்றார்கள்.—நாலாயிரம் பேருக்
குள்ளே ஏழு அப்பங்களை நான் கொடுத்த
பொழுது, எத்தனைகூடைநிறையத்துணிக்கை
களை எடுத்துக்கொண்டீர்களென்றதற்கு, அவர்
உ௧ கள் ஏழு என்றார்கள்.—அவர் அவர்களைநோக்கி,
நீங்கள் உணராமலிருக்கிறதென்னவென்றார்.
உஉ பின்பு அவர் பேத்சாயிதாவுக்கு வந்தார்; சி
லர் ஒருகுருடனை அவரிடத்திற்குக் கொண்டு
வந்து, அவனைத்தொடும்படிக்கு அவரை வேண்
உ௩ டிக்கொண்டார்கள்.—அப்பொழுது அவர்
அந்தக் குருடனுடையகையைப் பிடித்து, பட்
டணத்துக்குப்புறம்பே அவனை நடத்திக்கொண்
டுபோய்,அவனுடைய கண்களில் உமிழ்ந்து,தம்
முடைய கைகளை அவன்மேல்வைத்து, ஏதாயி
உ௪ னுங் காண்கிறாயாவென்று கேட்க,—அவன் ஏ
றிட்டுப்பார்த்து, உலாவுகிற மனுஷரை மரங்க
உ௫ ளைப்போலக்காண்கிறேனென்றான்.-அவர்திரும்
பவுந் தம்முடையகைகளை அவனுடையகண்
களின்மேல் வைத்து, ஏறிட்டுப்பார்க்கச்செய்
தார்: அப்பொழுது அவன்சொஸ்தமடைந்து,
உ௬ யாவையுந்தெளிவாய்க்கண்டான்.-அவர், நீ பட்
டணத்தில்பிரவேசியாமலும், பட்டணத்தில் ஒ
ருவனுக்கும் இதைச் சொல்லாமலுமிருவென்று
சொல்லி,அவனை வீட்டிற்கு அனுப்பிவிட்டார்.
உ௭ யேசு, தம்முடைய சீஷரோடே அவ்விடம்
விட்டு,பிலிப்புசேசாரியாப்பட்டணத்தைச்சேர்
ந்தகிராமங்களுக்குப்போனார்:வழியில் அவர்தம்
முடைய சீஷரைநோக்கி, என்னைக்குறித்து ம
னுஷர் என்ன சொல்லுகிறார்களென்று கேட்
உ௮ டார்.—அதற்குத்தரமாக அவர்கள், சிலர் உம்மை
யோவான்ஸ்நானனென்றும், சிலர் உம்மைஇலீ
சாவென்றும், சிலர் உம்மைத்தீர்க்கதரிசிகளில் ஒ
ருவரென்றுஞ் சொல்லுகிறார்களென்றார்கள்.—
உ௯ பின்பு அவர் அவர்களுடனே, நீங்கள் என்னை
ஆரென்றுசொல்லுகிறீர்களென்றார்; அதற்குத்தர
௩௰ மாகப் பேதுரு, நீரே கிறிஸ்து என்றான்.—அப்
பொழுது தம்மைக்குறித்து அதை ஒருவருக்குஞ்
சொல்லாதபடிக்கு உறுதியாய் அவர்களுக்குக்
௩௧ கட்டளையிட்டார்.—பின்பு மனுபுத்திரன் மிகுந்
தவேதனை அனுபவிக்கவும், மூதியோர், பிரதான
ஆசாரியர், வேதபாரகர் என்பவர்களால் தள்ளப்
படவும், கொலைசெய்யப்படவும்,மூன்றுநாளுக்
குள் உயிர்த்தெழுந்திருக்கவும் வேண்டுமென்று
அவர்களுக்குத்தெரிவிக்கத்தொடங்கினார்.—பிர ௩௨
சித்தமாய் அதைச் சொன்னதினிமித்தம் பேதுரு
அவரை ஒருபுறத்தில் அழைத்துப்போய், கடிந்
துகொள்ளத்தொடங்கினான்.—அவர் திரும்பித்தம் ௩௩
முடைய சீஷரைப்பார்த்து, பின் பேதுருவிடத்
தில், சாத்தானே, நீ என் பிறகேபோ: நீ தேவ
னுக்சேற்றவைகளையல்ல,மனுஷருக்கேற்றவை
களைச் சிந்திக்கிறாயென்றுசொல்லி அவனைக்க
டிந்துகொண்டார்.
பின்பு அவர் தம்முடையசீஷருடனே சனங் ௩௪
களை அழைத்து, என்னைப்பின்பற்றிநடக்க ஒரு
வன் விரும்பினால் தன்னைவெறுத்து, தன் சிலு
வையையெடுத்துக்கொண்டு, என்னைப்பின்பற்றக்
கடவன்.—தன் பிராணனைஇரட்சிக்கவிரும்புகிற ௩௫
வன் அதைஇழந்துபோவான்; என்னிமித்தமும்,
சுவிசேஷத்தினிமித்தமும், தன்பிராணனைஇழந்
துபோகிறவனோ அதை இரட்சிப்பான்.—மனு ௩௬
ஷன் உலகமுழுவதையுஞ் சம்பாதித்துக்கொண்
டாலும், தன்பிராணனை இழந்துபோனால் அவ
னுக்கு என்னலாபம்.—ஒருமனுஷன் தன்பிராண ௩௭
னை மீட்கிறதற்கு என்னத்தைக்கொடுப்பான்.—
ஆதலால் சோரமார்க்கமும், பாவமுமுள்ள இந் ௩௮
தச்சந்ததியாருக்குள் எவன், என்னிமித்தமும்
என்வாக்குகளினிமித்தமும் இலச்சை அடைவா
னோ, அவனைக்குறித்து மனுபுத்திரன் பரிசுத்த தூ
தரோடேதன்பிதாவின்மகிமையில் வரும்பொழு
து இலச்சையடைவானென்றார்.

## ௯. அதிகாரம்.

௧. கிறிஸ்து வேற்றுருவமாதல். இலீசாஇன்னா
னென்பதைநிச்சயித்தல்: ௰௪. ஊமையுஞ் செவி
டுமான ஒரு ஆவியைத்துரத்தல்: ௩௧. தாம்மரண
மடைந்துஉயிர்த்தெழுந்திருக்கிறதைத்தெரிவித்
தல்: ௩௩. பெரியவன் இன்னானென்பதை நிரு
ணித்தல்: ௩௮. கிறிஸ்து உபதேசித்தல்.

அன்றியும் அவர் அவர்களுடனே, இங்கே நிற் ௧
கிறவர்களிற் சிலர், தேவனுடைய இராச்சி
யம் வல்லமையோடே வருவதைக்காணுமுன்
மரணமடைவதில்லையென்று மெய்யாக உங்க
ளுக்குச் சொல்லுகிறேனென்றார்.
ஆறுநாளுக்குப்பின்பு யேசு பேதுருவையும், ௨
யாக்கோபையும்,யோவானையுங்கூட்டிக்கொண்
டு, தனித்திருக்கும்படி உயர்ந்தமலையின்மேல் அ
வர்களை அழைத்துப்போய், அவர்களுக்குமுன்
மறுரூபமானார்.—அவருடையவஸ்திரம், பூமியி ௩
லுள்ள எந்தவண்ணானும் அத்தனைவெண்மையா
க்கக்கூடாததாய், உறைந்தமழைபோல மிகவும்
வெண்மையாகப்பிரகாசித்தது.—மோசேயும் இ ௪
லீசாவும் அவர்களுக்குத்தரிசனையாகி, யேசுவு
டனே சம்பாஷித்தார்கள்.—அப்பொழுது பேது ௫
ரு யேசுவைநோக்கி, இரபீ, நாம் இங்கே நிற்

(௰௯) மத்.௰௪.உ௰. லூக்.௯.௰௭. யோவா.௬.௰௩. (உ௰) மத்.௰௫.௩௭. (உ௬) மத்.௮.௪. (உ௭) மத்.௰௬.௰௩.(உ௮)மத். ௰௪.உ. (உ௯) மத்.௰௬.௰௬. யோவா.௬.௬௯. (௩௰) மத்.௰௬.உ௰. (௩௧) மத்.௰௬.உ௧. லூக்.௯.உஉ. (௩௪) மத்.௰.௩௮. லூக்.௯.உ௩. (௩௫) யோவா.௰உ.உ௫. (௩௮) மத்.௰.௩௩. ரோ.௧.௰௬. உ.தீமோ.௧.௮.—(௯. அதி. ௧.) மத்.௰௬.உ௮. லூக்.௯.உ௭. மத்.உ௪.௩௰. (உ) மத்.௰௭.௧. (௩) தானி.௭.௯. மத்.உ௮.௩.

பது நலம்: ஆதலால் இங்கே உமக்கும், மோசேக்
கும், இலீசாவுக்கும் ஒவ்வொரு குடிசையாக
மூன்று குடிசைகளை உண்டாக்குவோமென்
௬ றான்.—இவர்கள் மிகவும் பயந்தபடியினாலே,
தான் பேசத்தக்கதின்னதென்று தனக்குத் தெரி
௭ யாமலிருந்தது.-அப்பொழுது ஒரு மேகம் அவர்
கள்மேல் நிழலிட்டது: இவர் எனதன்பான குமா
ரன்: இவருக்குச்செவிகொடுங்களென்னும்வாக்
௮ கு அந்தமேகத்திலிருந்து பிறந்தது.-உடனே இ
வர்கள் சுற்றிப்பார்த்தபொழுது யேசுவையே
யன்றி,தங்களிடத்தில் வேறொருவரையுங் காண
௯ வில்லை.-அவர்கள் மலையினின்றிறங்குகிறபொ
ழுது அவர் இவர்களைநோக்கி,நீங்கள் கண்டவை
களை, மனுபுத்திரன் மரித்தோரினின்று உயிர்த்
தெழுந்திருப்பதற்குமுன் ஒருவருக்குந்தெரிவிக்
௰ கவேண்டாமென்று கட்டளையிட்டார்.—இவர்
கள் அந்தவாக்கைத் தங்கள் உள்ளத்தில்வைத்து,
மரித்தோரினின்று உயிர்த்தெழுதல் இன்னதென்
றறியும்படி, ஒருவரை ஒருவர் வினாவினார்கள்.
௰௧ பின்பு அவரைநோக்கி, முதலாவது இலீசாவ
ரவேண்டுமென்றுவேதபாரகர்சொல்லுகிறதென்
௰௨ னவென்றுகேட்க,—அவர் அதற்குத்தரமாக,முன்
பு இலீசாவந்து எல்லாவற்றையுஞ் சீர்ப்படுத்து
வது மெய்தான்; அன்றியும் எழுதியிருக்கிறபடி
மனுபுத்திரன் மிகுந்த வேதனை அனுபவிக்கவும்,
௰௩ அவமதிக்கப்படவும்வேண்டும்.—இலீசா வந்தா
யிற்றென்று உங்களுக்குச் சொல்லுகிறேன், அ
வனைக்குறித்து எழுதியிருக்கிறபிரகாரம், அவ
னை அவர்கள் தங்கள் இஷ்டப்படி செய்தார்க
ளென்றார்.
௰௪ பின்பு அவர் சீஷரிடத்தில் வந்தபொழுது,
அவர்களைச்சூழ்ந்த மிகுந்த சனங்களையும், அ
வர்களுடனே வாதாடும் வேதபாரகரையுங் கண்
௰௫ டார்.-சனங்களெல்லாரும் அவரைக்கண்டமாத்
திரத்தில்மிகவும்பிரமித்து,ஓடி,அவரைவந்தனஞ்
௰௬ செய்தார்கள்.—அப்பொழுது அவர் வேதபாரக
ரைநோக்கி, நீங்கள் இவர்களோடே என்னத்
தைக்குறித்து வாக்குவாதம்பண்ணுகிறீர்களென்
௰௭ றுகேட்க,—சனங்களில் ஒருவன் அதற்குத்தர
மாக, போதகரே, ஊமையான ஆவியாற் பிடிக்
கப்பட்ட என்மகனை உம்மிடத்தில்கொண்டுவந்
௰௮ தேன்.—அந்த ஆவி அவனைப்பிடிக்கும் எவ்வி
டத்திலேயும் அவனை மோதுகின்றது: அவன்பற்
களைக்கடித்துக்கொண்டு நுரைதள்ளச்சோர்ந்து
போகிறான்: அதைத் துரத்தும்படி உம்முடைய
சீஷரை வேண்டிக்கொண்டேன்; அவர்களால்
௰௯ கூடாமற்போயிற்றென்றான்.—அப்பொழுது அ
வர், ஆ, விசுவாசமில்லாத சந்ததியாரே, எதுவ
ரைக்கும் நான் உங்களோடிருப்பேன், எதுவ
ரைக்கும் நான் உங்களைச்சகிப்பேன்; அவனை
என்னிடத்தில் கொண்டுவாருங்களென்றுசொல்
ல,—அவர்கள் அவனை அவரிடத்திற்கொண்டு ௨௰
வந்தார்கள்: இவன் அவரைக்கண்டமாத்திரத்
தில் தரையில்விழுந்து, நுரைதள்ளிப்புரளத்தக்
கதாக ஆவி அவனை அலக்கழித்தது.—அப்பொ ௨௧
ழுது அவர் அவனுடைய பிதாவைநோக்கி, இ
து இவன்மேல் வந்து எத்தனைநாளாயிற்றென்று
கேட்க, அவன், இவன் சிறுபிராயமுதற்கொண்
டிருக்கின்றது,—இவனை நாசப்படுத்துகிறதற்கு ௨௨
அநேகந்தரம் அக்கினியிலுஞ் சலத்திலுந்தள்ளிற்
று, நீர் ஏதாயினுஞ்செய்யக்கூடுமாகில் எங்கள்
மேல் இரங்கி உதவிசெய்யுமென்றான்.—யேசு ௨௩
அவனைநோக்கி, நீ விசுவாசிக்கக்கூடுமாகில், ஆ
கும், விசுவாசிக்கிறவனுக்கு எவையுஞ் சித்தியா
குமென்றார்.—உடனே அந்தப்பாலகனுடைய ௨௪
பிதா உரத்த சத்தத்தோடே கண்ணீர்சொரிய,
கர்த்தாவே, விசுவாசிக்கிறேன்; என் விசுவா
சக்குறைவை நிறைவாக்கியருளுமென்றான்.—
சனங்கள் திரண்டு ஓடிவருகிறதைக்கண்டு, யே ௨௫
சு, அந்த அசுத்த ஆவியுடனே, ஊமையுஞ்செவி
டுமான ஆவியே, நீ இவனைவிட்டகன்றுபோ, இ
னி இவனிடத்திற் பிரவேசியாமற்போவென்று
உனக்குக்கட்டளையிடுகிறேனென்றுசொல்லி அ
தைக்கடிந்தார்.—அப்பொழுது அது சத்தமிட்டு, ௨௬
அவனை மிகவும் அலக்கழித்து, புறப்பட்டுப்போ
யிற்று: அவன் இறந்துபோனானென்று அநேகர்
சொல்லத்தக்கதாக மரித்தவன்போலக் கிடந்தா
ன்.—யேசு அவனுடைய கையைப்பிடித்துஅவ ௨௭
னைத்தூக்க,அவன்எழுந்திருந்தான்.-பின்பு அவர் ௨௮
வீட்டிலேவந்தபொழுது,அவருடையசீஷர் இர
கசியமாய் அவரைநோக்கி, அதைத்துரத்த எங்க
ளாலே கூடாமற்போனதென்னவென்று கேட்
க,—அவர் அவர்களைநோக்கி, வேண்டுதலினாலும் ௨௯
உபவாசத்தினாலுமேயன்றி, மற்றொருவகையா
லும் அந்த இனத்தைத்துரத்தக்கூடாதென்றார்.
பின்பு அவர் அவ்விடம்விட்டுப்பிரயாணப் ௩௰
பட்டு,கலிலேயாவின்வழியாய்ப் போனார்;அவர்
தம்முடையசீஷருக்கு உபதேசம்பண்ணவேண்
டியதாயிருந்ததினால், ஒருவருந் தம்மைக்கண்ட
றியாதிருக்க விரும்பினார்.—மனுபுத்திரன் மனு ௩௧
ஷருடைய கையில் ஒப்பிக்கப்படுவான், அவர்
கள் அவனைக்கொலைசெய்வார்கள்; மரித்தபின்
அவன் மூன்றாம்நாளில் எழுந்திருப்பானென்
றார்.—அவர்களோ அந்தச்சொல்லை அறியவில் ௩௨
லை, அவரைவினாவவும்பயந்தார்கள்.
பின்பு அவர்கப்பர்நாகூமிற்சேர்ந்து,ஒருவீட் ௩௩
டில் இருந்தபொழுது, அவர் அவர்களைநோக்கி,
வழியிலே நீங்கள் எதைக்குறித்து உங்களுக்குள்
ளேவாக்குவாதம்பண்ணினீர்களென்றுகேட்க,—
அவர்கள்,தங்களில் எவன்பெரியவனாவானென் ௩௪
று ஒருவரோடொருவர் வழியிலே வாக்குவாதம்
பண்ணினபடியினாலேபேசாமலிருந்தார்கள்.—

---

(௯) மத்.௰௭.௯. (௰௧) மல்.௪.௫. மத்.௰௭.௰. (௰௨) சங்.௨௨.௬. ஏசா.௫௩.௨,. தானி.௯.௨௬. லூக்.௨௩.௰௧. பிலி.௨.௭. (௰௩) மத்.௰௧.௰௪. லூக்.௧.௰௭. (௰௪) மத்.௰௭.௰௪. லூக்.௯.௩௭. (௰௭) மத்.௰௭.௰௪. லூக்.௯.௩௮. (௨௰) லூக்.௯.௪௨. (௨௩) மத்.௰௭.௨௰. லூக்.௰௭.௬. யோவா.௰௧.௪௰. (௨௮) மத்.௰௭.௰௯. (௩௧) மத்.௰௭.௨௨. லூக்.௯.௪௪. (௩௩) மத்.௰௮.௧. லூக்.௯.௪௬.

௩௫ அதினால் அவர் உட்கார்ந்து, பன்னிருவரையும்
அழைத்து, அவர்களைநோக்கி, ஒருவன் முந்தின
வனாயிருக்கவிரும்பினால் அவன் எல்லாருக்கும்
பிந்தினவனும், எல்லாருக்கும்பணிவிடைக்கார
௩௬ னுமாயிருக்கக்கடவனென்றுசொல்லி,–ஒருபிள்
ளையை எடுத்து அவர்கள்மத்தியிலேநிறுத்தி, பின்
பு அதை அணைத்துக்கொண்டு, அவர்களைநோக்
௩௭ கி,–இப்படிப்பட்ட பிள்ளைகளில் ஒன்றை என்
நாமத்தினால் ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை
ஏற்றுக்கொள்ளுகிறான்: என்னை ஏற்றுக்கொள்
ளுகிறவனெவனோ, அவன் என்னையல்ல, என்
னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்ளுகிறானெ
ன்றார்.

௩௮ அப்பொழுது யோவான் அவரைநோக்கி,
போதகரே, நமக்குப் பின்செல்லாதவன் ஒரு
வன், உம்முடைய நாமத்தினாலே பிசாசுகளைத்
துரத்தக்கண்டோம்: அவன் நமக்குப்பின்செல்
லாதபடியால் அவனைத் தடுத்தோமென்றான்.—
௩௯ அதற்கு யேசு, நீங்கள் அவனைத்தடைப்படுத்த
வேண்டாம்: என் நாமத்தினால் ஆச்சரியமானகி
ரியைகளைச்செய்கிறவன், என்னைக்குறித்துத்தீங்
௪௰ குசொல்வது எளிதல்ல;–நமக்குவிரோதமாயிரா
௪௧ தவன் நம்முடைய பட்சத்திலிருக்கிறான்.—நீங்
கள் கிறிஸ்துவைச் சார்ந்தவர்களாயிருப்பதி
னால், என் நாமத்தினிமித்தம் ஒருவன், ஒருகலசந்
தண்ணீர் உங்களுக்குக்கொடுத்தால், அவன்தன்
பலனை இழந்துபோவதில்லையென்று மெய்யாக
௪௨ உங்களுக்குச்சொல்லுகிறேன்.—என்மேல் விசு
வாசமாயிருக்கிற இந்தச் சிறியரில் ஒருவனுக்கு
எவனாகிலும் இடறல் வரப்பண்ணுவதிலும், அ
வன் தன் கழுத்தில் எந்திரக்கல்லுக் கட்டப்பட்
டுச் சமுத்திரத்தில் அமிழ்த்தப்படுவது அவனுக்கு
௪௩ நலம்.—உன்கை உனக்கு இடறல்வரப்பண்ணி
௪௪ னால் அதைத் தறித்துவிடு.—நீ இரண்டுகையோ
டே அவியாத அக்கினி நரகத்திற்குப் போவதி
லும், ஊனனாய்ச் சீவனிற்பிரவேசிப்பது உனக்
கு நலம்: அங்கே அவர்கள்புழு மடியாமலும்,
௪௫ அக்கினி அவியாமலுமிருக்கும்.-உன்கால்உனக்
கு இடறல்வரப்பண்ணினால் அதைச்சேதித்து
௪௬ விடு.—நீ இரண்டுகாலோடே அவியாத அக்கி
னி நரகத்தில் தள்ளப்படுவதிலும், சப்பாணி
யாய்ச் சீவனிற் பிரவேசிப்பது உனக்கு நலம்:
அங்கே அவர்கள்புழுமடியாமலும், அக்கினி அ
௪௭ வியாமலுமிருக்கும்.—உன் கண் உனக்கு இட
றல்வரப்பண்ணினால் அதைத் தோண்டிவிடு.—
௪௮ இரண்டுகண்ணோடே, மடியாதபுழுவும் அவியா
த அக்கினியுமிருக்கிற நரகத்தீயில் தள்ளப்படுவ
திலும், ஒற்றைக்கண்ணையுடையவனாய்த் தேவ
னுடைய இராச்சியத்திற் பிரவேசிப்பது உனக்
௪௯ கு நலம்.—எல்லாப்பலிகளும் உப்பினாலே சார
மாக்கப்படும், யாவனும் அக்கினியினால் உப்
பிடப்படுவான்.—உப்பு நல்லது, உப்புச் சார ௫௰
மற்றதேயானால் எதினால் அதற்குச் சாரமுண்
டாக்குவீர்கள்; உங்களுக்குள்உப்புஉண்டாகும்
படிசெய்யுங்கள், ஒருவரோடொருவர் சமாதா
னமாயிருக்கக்கடவீர்களென்றார்.

## ௰. அதிகாரம்.

௧. மனைவியை அகற்றலைக்குறித்துத் தீர்ப்புச் சொல்லல்: ௰௩. பிள்ளைகளை அங்கிகரித்தல்: ௰௭. ஐசுவரியமுள்ள வாலிபனுக்கு உணர்த்தல்: ௨௮. சீஷருக்குண்டாகும் பலனை நிருணித்தல்: ௩௨. கிறிஸ்துத் தமது மரணத்தைக்குறித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௩௫ யாக்கோபுயோவானென்பவர்களுடைய வேண்டுதலை அங்கிகரியாமல் தள்ளல்: ௪௬. குருடனுக்குப் பார்வை அருளல்.

பின்பு அவர் அவ்விடத்திலிருந்து புறப்பட்டு, ௧
யோர்தானுக்கக்கரையான யூதேயாநாட்டின் எல்
லையைச்சேர்ந்தார்: சனங்கள் திரும்பவும் அவரி
டத்தில் கூடிவந்தார்கள்; அவர் தமது வழக்கத்
தின்படி அவர்களுக்குத் திரும்பவும் உபதேசம்
பண்ணினார்.

அப்பொழுது பரிசேயர் அவரைப்பரீட்சை ௨
செய்யும்படிக்கு அவரிடத்தில்வந்து, புருஷன்
தன் மனைவியைத்தள்ளிவிடுவதுநியாயமாவென்
று கேட்டார்கள்.–அவர்களுக்குத்தரமாக அவர், ௩
இதைக்குறித்து மோசே உங்களுக்கென்ன கட்
டளை கொடுத்தானென்றுகேட்க,—அதற்கு அ ௪
வர்கள், தொடராமுறிகொடுத்து அவளை விடும்ப
டிக்கு மோசே விதித்தானென்றார்கள்.—அப் ௫
பொழுது யேசு அவர்களுக்குத்தரமாக, உங்கள்
இருதயகடினத்தினிமித்தம் மோசே உங்களுக்கு
இந்த விதியை எழுதினான்.-சிருஷ்டிகாலம்முத ௬
லோ தேவன் புருஷனும் ஸ்திரியுமாக அவர்க
ளைச் சிருஷ்டித்தார்.-"இதினிமித்தம் ஒருமனுஷ ௭
ன் தன் பிதாவையும் மாதாவையும் பிரிந்து, தன்
மனைவியைப் பற்றிக்கொள்ளுவான்; அவர்கள்
இருவரும் ஏகாங்கமாயிருப்பார்கள்:"—அப்படி ௮
யே அவர்கள் இனி இருவராயிராமல் ஏகாங்கமா
யிருக்கிறார்கள்.-ஆதலால் தேவன் இணைத்ததை ௯
மனுஷன் பிரிக்கலாகாதென்றார்.—வீட்டில் அ ௰
வருடைய சீஷர் அதைக்குறித்துத் திரும்பவும்
அவரிடத்தில் வினாவினார்கள்.—அவர் அவர்க ௰௧
ளுடனே, எவனாகிலுந் தன் மனைவியைத் தள்
ளிவிட்டு வேறொரு ஸ்திரியை விவாகஞ்செய்
தால், அவளுக்கு விரோதமாய் அவன் விபசா
ரம் பண்ணுகிறான்.—அன்றியும் மனைவியான ௰௨
வள் தன் புருஷனைத்தள்ளி வேறொருவனைவி
வாகஞ்செய்தால் அவளும் விபசாரம்பண்ணுகி
றாளென்றார்.

(௩௫) மத்.௨௰.௨௬,௨௭.(௩௬)மத்.௰௮.௨. (௩௭) மத்.௰.௪௰. (௩௮) எண்.௰௧.௨௮. (௩௯) ௧.கொரி.௰௨.௩. (௪௰) மத். ௰௨.௩௰. (௪௧) மத்.௰.௪௨. (௪௨) மத்.௰௮.௬. (௪௩) உபா.௰௩.௬. மத்.௫.௨௯. (௪௪) ஏசா.௬௬.௨௪. (௪௯) லேவி.௨. ௰௩. எசேக்.௪௩.௨௪. (௫௰) மத்.௫.௰௩. எபே.௪.௨௯. கொலோ.௪.௬. ரோ.௰௨.௰௮. ௨.கொரி.௰௩.௰௧. எபி.௰௨. ௰௪.—(௰. அதி. ௧.) மத்.௰௯.௧. யோவா.௰.௪௰. (௨) மத்.௰௯.௩. (௪) உபா.௨௪.௧. மத்.௫.௩௧. (௬) ஆதி.௧.௨௭.(௭) ஆதி.௨.௨௪. ௧.கொரி.௬.௰௬. எபே.௫.௩௧. (௰௧) மத்.௫.௩௨. லூக்.௰௬.௰௮. ரோ.௭.௩. ௧.கொரி.௭.௰,௰௧.

௰௩ அப்பொழுது அவர் தொடும்படி அவர்கள் பிள்
ளைகளை அவரிடத்திற்கொண்டுவந்தார்கள்:சீஷர்
அவைகளைக்கொண்டுவந்தவர்களைக் கடிந்தார்
௰௪ கள்.–யேசு அதைக்கண்டு பிரியவீனப்பட்டு,அ
வர்களைநோக்கி,சிறுபிள்ளைகள் என்னிடத்தில்வ
ரவிடுங்கள், தடைபண்ணாதிருங்கள்: தேவனு
டைய இராச்சியம் அப்படிப்பட்டவைகளுக்
௰௫ கேயுரியது.–எவனாகிலும் ஒருபிள்ளையைப்போ
லத் தேவனுடைய இராச்சியத்தைஏற்றுக்கொ
ள்ளாதிருந்தால், அதிற் பிரவேசியானென்பதை
மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்று
௰௬ சொல்லி,–பின்பு அவைகளை அணைத்து, தம்மு
டைய கைகளை அவைகள்மேல்வைத்து,அவை
களை ஆசீர்வதித்தார்.
௰௭ பின்பு அவர் புறப்பட்டு வழிநடக்கையில், ஒ
ருவன் அவரிடத்தில் ஓடிவந்து, முழங்காற்படி
யிட்டு, அவரைநோக்கி,நல்லபோதகரே, நித்திய
சீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நான்
௰௮ என்னசெய்யவேண்டுமென்று கேட்டான்.-யே
சு அவனைநோக்கி, நீ என்னை நல்லவரென்று ஏன்
சொல்லுகிறாய்; தேவன் ஒருவரேயன்றி,நல்ல
௰௯ வன் வேறொருவனுமில்லையே.–"விபசாரஞ்செ
ய்யாயாக,கொலைசெய்யாயாக, களவுசெய்யாயா
க, பொய்ச்சாட்சிசொல்லாயாக, வஞ்சனைசெய்
யாயாக, உன் பிதாவையும், உன் மாதாவையுங்
கனம்பண்ணுவாயாக," என்னுங் கட்டளைகளை
௨௰ அறிந்திருக்கிறாயென்றார்.—அவன் அவருக்குத்
தரமாக, போதகரே, இவைகளையெல்லாம் நான்
என் சிறுவயதுமுதல் கைக்கொண்டு வருகிறே
௨௧ னென்றான்.—அப்பொழுது யேசு அவனைப்
பார்த்து, அவனில்அன்புகூர்ந்து, அவனுடனே,
உன்னிடத்தில் ஒருகுறைவுண்டு: நீபோய்,உனக்
குண்டான யாவற்றையும் விற்று,தரித்திரருக்குக்
கொடு, அப்பொழுது பரமண்டலத்திலே பொக்
கிஷம் உனக்குண்டாகும்:பின்பு வந்து சிலுவை
யை எடுத்துக்கொண்டு, எனக்குப்பின் செல்
௨௨ லுவாயாகவென்றார்.-அவன் மிகுந்த பொருளை
யுடையவனானபடியால் அந்தவாக்கைக்கேட்டு
விசனப்பட்டுப்போய்விட்டான்.
௨௩ அப்பொழுது யேசு சுற்றிப்பார்த்து, தம்மு
டைய சீஷரைநோக்கி, ஐசுவரியமுள்ளவர்கள்
தேவனுடைய இராச்சியத்திற் பிரவேசிப்ப
௨௪ து மிகவும் அரிதென்றார்.—சீஷர் அவருடைய
வாக்குகளைக்குறித்துப் பிரமித்தார்கள். பின்னும்
யேசு அவர்களைப்பார்த்து, பிள்ளைகளே, ஐசுவ
ரியத்தை நம்புகிறவர்கள் தேவனுடைய இ
௨௫ ராச்சியத்திற் பிரவேசிப்பது அரிது.—ஐசுவரிய
வான் தேவனுடைய இராச்சியத்திற்பிரவே
சிப்பதிலும், ஒரு ஒட்டகம் ஊசியின்காதில் நு
௨௬ ழைவது எளிதென்றார்.—அவர்கள் மிகவும் பிர
மித்து, அப்படியானால் யாவர் இரட்சிக்கப்படு
வாரென்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்
டார்கள்.–யேசு அவர்களைநோக்கி,மனுஷரால் ௨௭
இதுகூடாது,தேவனால்கூடாததல்ல:தேவன்
எந்தக்காரியத்தையுஞ்செய்யவல்லவரென்றார்.
அப்பொழுது பேதுரு அவரைநோக்கி, நாங் ௨௮
களெல்லாவற்றையும் விட்டு உம்மைப்பின்பற்
றினோமே, பாருமென்று சொல்லத்தொடங்கி
னான்.—யேசு அதற்குத்தரமாக, என்னிமித்த ௨௯
முஞ்சுவிசேஷத்தினிமித்தமும் வீட்டையாகிலு
ம்,சகோதரரையாகிலும்,சகோதரிகளையாகிலும்,
பிதாவையாகிலும், மாதாவையாகிலும், மனைவி
யையாகிலும்,பிள்ளைகளையாகிலும்,நிலங்களையா
கிலும் விடுகிறவனெவனோ, அவன் துன்பத்தோ
டே,-வீடுகளையும்,சகோதரரையும்,சகோதரிகளை ௩௰
யும், மாதாக்களையும், பிள்ளைகளையும், நிலங்களை
யும் நூறுமடங்கு அதிகம் இம்மையிலே பெறுவ
துமன்றி, பரலோகத்திலே நித்தியசீவனையும்பெ
றுவான்.—முந்தினோராகிய அநேகர் பிந்தினோ ௩௧
ரும், பிந்தினோர் முந்தினோருமாவார்களென்று
மெய்யாய்உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.
பின்பு அவர்கள் யெருஷலேமுக்குப் பிரயா ௩௨
ணமாய்ப்போகையில், யேசு அவர்களுக்குமு
ன்னேநடந்தார்: அவர்கள் பிரமித்துப்பயத்தோ
டே அவருக்குப்பின்சென்றார்கள். அப்பொழு
து அவர்,பன்னிருவரையும் மறுபடியும் அழைத்
து, தமக்கு நேரிடுங்காரியங்களை அவர்களுக்குத்
தெரிவித்தார்.–பாருங்கள், யெருஷலேமுக்குப் ௩௩
போகிறோம்; அங்கேமனுபுத்திரன்பிரதானஆசா
ரியரிடத்திலும் வேதபாரகரிடத்திலும் ஒப்பிக்
கப்படுவான்; அவர்கள் அவனுக்கு மரணதண்ட
னைத்தீர்ப்புச்செய்து, அவனை அந்நியதேசத்தா
ரிடத்தில் ஒப்பிப்பார்கள்.—அவர்கள் அவனைப் ௩௪
பரிகாசம்பண்ணி, அவனை வாரினால் அடித்து,
அவன்மேல் துப்பி, அவனைக் கொலைசெய்
வார்கள்: மூன்றாம்நாளில் உயிர்த்தெழுந்திருப்
பானென்றார்.
பின்பு செபேதேயுவின் புத்திரராகிய யாக் ௩௫
கோபும் யோவானும் அவரிடத்தில்வந்து, போ
தகரே, நாங்கள் உம்மிடத்தில் வேண்டிக்கொள்
வதை எங்களுக்கருளிச்செய்ய விரும்புகிறோ
மென்றார்கள்.-அதற்கு அவர்,நான் உங்களுக்குச் ௩௬
செய்ய நீங்கள்விரும்புகிறதென்னவென்றுகேட்
க,-அவர்கள் அவரைநோக்கி,நீர் மகிமைஅடைந் ௩௭
திருக்கும்பொழுது எங்களில் ஒருவன் உமதுவ
லதுபாரிசத்திலும், மற்றவன் உமது இடதுபாரி
சத்திலும் இருக்கும்படி அருள்செய்யவேண்டு
மென்று விரும்புகிறோமென்றார்கள்.—யேசுஅ ௩௮
வர்களைநோக்கி, நீங்கள் கேட்டது உங்களுக்
குத்தெரியவில்லை: நான் குடிக்கும் பாத்திரத்தி
லேகுடிக்கவும், நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நா
னத்தைப் பெற்றுக்கொள்ளவும் உங்களாலாகு

(௰௩)மத்.௰௯.௰௩. லூக்.௰௮.௰௫.(௰௪)௧.கொரி.௰௪.௨௰. (௰௫) மத்.௰௮.௩.(௰௭) மத்.௰௯.௰௬. (௰௯) யாத்.௨௰. ரோ. ௰௩.௯. (௨௧) மத்.௬.௰௯. (௨௩) மத்.௰௯.௨௩. லூக்.௰௮.௨௪.(௨௪)யோபு.௩௧.௨௪. சங்.௫௨.௭. ௧.தீமோ.௬.௰௭.(௨௭) எரே.௩௨.௰௭. மத்.௰௯.௨௬. (௨௮) மத்.௰௯.௨௭. லூக்.௰௮.௨௮. (௩௰) ௨.நாளா.௨௫.௯. லூக்.௰௮.௩௰. (௩௧) மத். ௰௯.௩௰. லூக்.௰௩.௩௰. (௩௨) மத்.௨௰.௰௭. லூக்.௰௮.௩௧. லூக்.௯.௨௨. (௩௫) மத்.௨௰.௨௰.

௩௯ மாவென்றுகேட்க,—அவர்கள் அவருடனே, எங்
களாலாகுமென்றார்கள். அப்பொழுது யேசு
அவர்களைநோக்கி, நான் குடிக்கும்பாத்திரத்தில்
நீங்களுங் குடிப்பீர்களே; நான் பெற்றுக்கொள்
ளும் ஸ்நானத்தை நீங்களும் பெற்றுக்கொள்வீர்
௪௰ களே.—ஆனாலும் எவர்களுக்கு ஆயத்தப்படுத்தப்
பட்டதோ, அவர்களையேயன்றி, மற்றவர்களை
என் வலதுபாரிசத்திலும் என் இடதுபாரிசத்தி
லுமிருக்கச்செய்யஎனக்கு அதிகாரமில்லையென்
௪௧ றார்.—மற்றப் பத்துப்பேரும் அதைக்கேட்டு,
யாக்கோபின்மேலும் யோவான்மேலும் பிரியவீ
௪௨ னப்பட்டார்கள்.—அப்பொழுது யேசு அவர்க
ளை அழைத்து, அவர்களுடனே, புறத்தேசத்தா
ருக்குள் கர்த்தத்துவம்பெற்றவர்கள் அவர்களை
ஆளுகிறார்கள்; பெரியோர்கள் அவர்கள்மேல்
அதிகாரத்தைச் செலுத்துகிறார்கள்: இது உங்க
௪௩ ளுக்குத்தெரியும்.—உங்களுக்குள் அப்படியிருக்
கப்படாது: உங்களில் பெரியவனாகவிரும்புகிற
வன், உங்கள் பணிவிடைக்காரனாகக்கடவன்.—
௪௪ உங்களில் பிரதானியாக விரும்புகிறவன், எல்
௪௫ லாருக்கும் அடிமையாகக்கடவன்.—மனுபுத்திர
னும் பணிவிடைகொள்வதற்கல்ல, பணிவிடை
செய்யவும், அநேகரை மீட்கும் கிரயமாகத்தன
து பிராணனைக்கொடுக்கவும் வந்தானென்றார்.
௪௬ பின்பு அவர்கள் யெரிகோவுக்குவந்தார்கள்:
அவர் தமது சீஷரோடுந் திரளான சனங்களோ
டும் யெரிகோவினின்று புறப்பட்டுப் போகை
யில் திமேயுசின் புத்திரனாகிய பர்த்திமேயு என்
னுங் குருடன் வழியருகே பிச்சை கேட்டுக்
௪௭ கொண்டிருந்தான்.—நாசரேத்தூரானாகிய யேசு
வருகிறாரென்று கேள்விப்பட்டு அவன், யேசு
வே, தாவீதின்புத்திரனே, என்மேலிரங்குமென்
௪௮ றுசொல்லிச் சத்தமிடத்தொடங்கினான்.—அவன்
பேசாதபடி அநேகர் அவனைக் கடிந்துகொண்
டார்கள்: அவனோ, தாவீதின் புத்திரனே, என்
மேலிரங்குமென்று அதிகமாய் உரத்தசத்தமிட்
௪௯ டான்.—அப்பொழுது யேசு தரித்துநின்று அவ
னை அழைத்துவரச்சொல்ல, அவர்கள் அந்தக்கு
ருடனை அழைத்து, அவனுடனே, திடங்கொள்,
எழுந்திரு; அவர் உன்னை அழைக்கிறாரென்றார்
௫௰ கள்.—உடனே அவன்தன்வஸ்திரத்தைத்தள்ளி,
௫௧ எழுந்து, யேசுவினிடத்தில்வந்தான்.—யே
சு அவனைநோக்கி, உனக்கு நான் என்னசெய்ய
விரும்புகிறாயென்றுகேட்க, குருடன், இரபூனி,
நான் பார்வை அடையவேண்டுமென்றான்.—
௫௨ யேசு அவனுடனே, நீ போ, உன் விசுவாசம்
உன்னைச்சொஸ்தமாக்கிற்றென்றுசொல்லியமாத்
திரத்தில், அவன் பார்வையடைந்து, வழியிலே
யேசுவைப் பின்சென்றான்.

## ௰௧. அதிகாரம்.

௧. கிறிஸ்து யெருஷலேமுக்கு யாத்திரைசெய்தல்: ௰௨. அத்திமரத்தைச் சபித்தல்: ௰௫. தேவாலயத்தினின்று வர்த்தகரை அகற்றல்: ௨௰. விசுவாசத்தை மேன்மையாக்கல்: ௨௭. பிரதானஆசாரியர் முதலானவர்களை மவுனமாக்கல்.

அவர்கள் யெருஷலேமுக்குச்சமீபித்து, ஒலீ ௧
வ மலையினருகேயுள்ள பேத்பாகே பேதனிய
என்னும் ஊர்களிற் சேர்ந்தபொழுது, அவர் தம்
முடைய சீஷரில் இருவரை நோக்கி,—உங்க ௨
ளுக்கெதிர்ப்புறத்திலுள்ள அந்தக்கிராமத்துக்குப்
போங்கள்: நீங்கள் அதிற் பிரவேசித்தவுடனே
ஒருவரும் ஏறாமற்கட்டப்பட்டிருக்கிற ஒருகுட்
டியைக் காண்பீர்கள்; அதை அவிழ்த்துக்கொண்
டுவாருங்கள்.—எவனாகிலும் உங்களுடனே, ஏ ௩
னிப்படிச் செய்கிறீர்களென்றால், கர்த்தாவுக்
கு இது வேண்டுமென்று சொல்லுங்கள்; உட
னே அவன்அதை இவ்விடத்திற்கு அனுப்பிவி
டுவானென்றுசொல்லி அவர்களை அனுப்பினார்.—
அந்தப்படி அவர்கள்போய், இரண்டுபாதை சந் ௪
திக்கும் வெளியிலேகதவினருகே கட்டப்பட்டி
ருக்கிறகுட்டியைக்கண்டு அதின்கட்டவிழ்க்கிற
பொழுது,—அங்கேநின்றவர்களிற்சிலர்இவர்களை ௫
நோக்கி, நீங்கள் என் குட்டியின்கட்டவிழ்க்கி
றீர்களென்றுகேட்க,—இவர்கள் யேசு தங்களுக் ௬
கிட்டகட்டளைப்படியே அவர்களுக்குச்சொல்
ல, இவர்களைவிட்டுவிட்டார்கள்.—இவர்கள் அந் ௭
தக்குட்டியை யேசுவினிடத்திற்கொண்டு
வந்து, அதின்மேல் தங்கள் வஸ்திரங்களை வி
ரித்தார்கள்; அவர் அதின்மேல் வீற்றிருந்தார்.—
அநேகர் தங்கள் வஸ்திரங்களை வழியிலே விரித் ௮
தார்கள்: சிலர் மரங்களின்கிளைகளைத்தறித்து வ
ழியிலே பரப்பினார்கள்.—முன்நடப்பாரும், பின் ௯
நடப்பாரும், கர்த்தருடைய நாமத்தினாலே
வருபவர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்; ஓசன்னா:—
கர்த்தருடைய நாமத்தினாலே வருகிற நம்மு ௰
டையபிதாவாகிய தாவீதின்இராச்சியம் ஆசீர்வ
திக்கப்படத்தக்கது. உன்னதமான ஸ்தானங்க
ளில் ஓசன்னாவென்றுசத்தமிட்டார்கள்.—யேசு ௰௧
யெருஷலேமிலுந் தேவாலயத்திலும் பிரவேசித்
தார்: அங்கேஅவர்எல்லாவற்றையுஞ்சுற்றிப்பார்
த்தபின்பு சாயங்காலமானபடியினால், பன்னிரு
வருடன்புறப்பட்டுப்பேதனியவுக்குப்போனார்.
காலையில் அவர்கள் பேதனியினின்று திரும் ௰௨
பிவந்தபொழுது அவருக்குப் பசியுண்டாயிருக்
கையில்,—அவர் இலையையுடைய அத்திமரத்தைத் ௰௩
தூரத்திலே கண்டு, அதில் ஏதாயினுங் காணலா
மென்றெண்ணி அதினிடத்திற்சென்று, கனிகா
லமல்லாமையால், இலைகளையேயன்றிவேறொன்
றையும் அவர்காணவில்லை.—அப்பொழுது யேசு ௰௪
அதைப்பார்த்து, இனிஒருபொழுதும் ஒருவனும்
உன்னிடத்தில் கனியைப் புசியாதிருக்கக்கடவ
னென்றார். அவருடைய சீஷர் அதைக்கேட்
டார்கள்.
அவர்கள் யெருஷலேமுக்குவந்தபின்பு, யே ௰௫

(௪௧) மத்.௨௰.௨௪. (௪௨) லூக்.௨௨.௨௫. (௪௩) மத்.௨௰.௨௬,௨௮. லூக்.௧.௪௮. (௪௫) யோவா.௰௩.௰௪. பிலி.௨.௭. மத்.௨௰.௨௮. ௧.தீமோ.௨.௬. தீத்.௨.௰௪. (௪௬) மத்.௨௰.௨௯,௫௨. மத்.௧.௨௨.—(௰௧. அதி. ௧.) மத்.௨௧.௧.(௯)சங்.௱௰௮.௨௬. சங்.௱௪௮.௧.

சு தேவாலயத்திற்பிரவேசித்து, தேவாலயத்தில்
விற்போரையுங்கொள்வோரையுந்துரத்தி,காசுக்
காரருடைய பீடங்களையும், புறாவிற்கிறவர்களு
௰௬ டைய ஆசனங்களையுங்கவிழ்த்தார்.—எந்தப்பாத்
திரத்தையாயினுந் தேவாலயத்தின் வழியாய்க்
கொண்டுபோகிறதற்கு ஒருவனுக்கும் இடங்கொ
௰௭ டுக்கவில்லை.—அன்றியும் அவர், "என்வீடு எல்
லாச்சாதிகளுக்கும் பிரார்த்தனைவீடென்னப்படு
ம்,"என்றெழுதியிருக்கின்றதல்லவா; நீங்களோ
அதைத்திருடர்குகையாக்கினீர்களென்று அவர்
௰௮ களுக்குப்போதித்தார்.-வேதபாரகரும் பிரதான
ஆசாரியரும் அதைக்கேட்டு,அவரை நாசப்படுத்
துகிறதற்குவகைதேடினார்கள்: ஆனாலுஞ்சனங்க
ளெல்லாரும் அவருடைய உபதேசத்தைக்குறித்
து ஆச்சரியப்பட்டபடியினால், அவருக்குப் ப
௰௯ யந்தார்கள்.–சாயங்காலமானபொழுது அவர் நக
ரத்தைவிட்டுப்புறப்பட்டார்.
௨௰ விடியற்காலையில் அவர்கள் திரும்பிவருகை
யில்,அந்த அத்திமரம் வேரோடேபட்டுப்போன
௨௧ தைக்கண்டார்கள்.-பேதுரு நினைவடைந்து,அவ
ரைநோக்கி, இரபீ, நீர் சபித்த அத்திமரம் பட்டுப்
௨௨ போயிற்று, பாருமென்றான்.—அதற்குத்தரமாக
யேசு அவர்களைநோக்கி, நீங்கள் தேவனை வி
௨௩ சுவாசித்துக்கொள்ளுங்கள்.–யாவனாயினும் இந்
த மலையைநோக்கி, நீ பேர்ந்து சமுத்திரத்தில்வி
ழுவாயாகவென்று சொல்லி, தன் இருதயத்தில்
ஐயமின்றித் தான்சொன்னபடி நடக்குமென்று
விசுவாசித்தால், அவன் சொல்லியபடியே அவ
னுக்காகுமென்று மெய்யாக உங்களுக்குச்சொல்
௨௪ லுகிறேன்.—ஆதலால் நீங்கள் பிரார்த்தனைபண்
ணும்பொழுது, நீங்கள் வேண்டிக்கொள்ளும்யா
வையும்பெறுவோமென்றுவிசுவாசியுங்கள்,அப்
பொழுது அவைகள் உங்களுக்குக்கிடைக்கு
மென்று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.–
௨௫ பரமண்டலத்திலுள்ள பிதா உங்கள் குற்றங்களை
உங்களுக்கு மன்னிக்கும்படி நீங்கள் பிரார்த்த
னைபண்ண எழுந்து நிற்கையில், ஒருவன்மேல்
உங்களுக்குக் குறைவுண்டானால், மன்னியுங்
௨௬ கள்.—நீங்கள் மன்னியாதிருப்பீர்களானால், பர
மண்டலத்திலுள்ள உங்கள் பிதாவும் உங்கள்குற்
றங்களை மன்னியாரென்றார்.
௨௭ அவர்கள் திரும்பவும் யெருஷலேமுக்குவந்து
அவர் தேவாலயத்தில் உலாவுகையில், பிரதான
ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும்வந்து,-
௨௮ எந்த அதிகாரத்தைக்கொண்டு நீர் இவைகளைச்
செய்கிறீர், இப்படிப்பட்டவைகளை நீர்செய்யும்
படிக்கு இந்த அதிகாரத்தை உமக்குத்தந்தவர்யா
௨௯ வரென்று அவரிடத்தில் கேட்டார்கள்.–அதற்கு
யேசு உத்தரமாக, நானும் உங்களிடத்தில் ஒன்
றுகேட்கிறேன், அதை நீங்கள் எனக்குச்சொன்
னீர்களானால் நான் இவைகளைச்செய்யும் அதிகா
ரம் எதென்று உங்களுக்குச்சொல்லுவேன்.—
யோவான் கொடுத்த ஞானஸ்நானம் தேவனா ௩௰
லே, மனுஷராலோ உண்டாயிற்று; அதைச்
சொல்லுங்களென்றுகேட்க,–அவர்கள்தங்களுக் ௩௧
குள், அது தேவனாலுண்டாயிற்றென்றோமா
னால், இவர் ஏன் அவனை விசுவாசிக்கவில்லை
யென்பார்;-அது மனுஷராலுண்டாயிற்றென்று ௩௨
சொல்லவும்,சமஸ்த சனங்களும் யோவானைத்
தீர்க்கதரிசி யென்றெண்ணுகிறபடியினாலே, ச
னங்களுக்குப் பயப்படுகிறோமென்று யோசித்
து,—யேசுவை நோக்கி, எங்களுக்குத்தெரியா ௩௩
தென்றார்கள். அப்பொழுது யேசு அவர்களுட
ன், நானும் இவைகளைச்செய்யும் அதிகாரம் இன்
னதென்று உங்களுக்குச்சொல்லேனென்றார்.

## ௰௨. அதிகாரம்.

௧. திராட்சத்தோட்டத்தை உவமித்தல்: ௰௩.வரிப் பணத்தைக்குறித்துப் பரிசேயரை மவுனமாக்கல்: ௰௮. மரித்தோர் உயிர்த்தெழுதலைக்குறித்துச்சதுசேயரை மவுனமாக்கல்: ௨௮. பிரதான கட்டளையை நிருணித்தல்: ௩௫. வேதபாரகர் உத்தரங் கொடாதபடி அவர்களை வெல்லல்: ௩௮. அவர்களுடைய துர்க்குணத்தை வெளிப்படுத்தல்: ௪௧. விதவையின் காணிக்கையைப் புகழ்தல்.

பின்பு அவர் அவர்களிடத்தில் உவமைகளைச் ௧
சொல்லத்தொடங்கினார். ஒரு மனுஷன் ஒருதிரா
ட்சத்தோட்டத்தை உண்டாக்கி, அதைச்சூழவே
லி அடைத்து, அதில் ஆலையைநாட்டி, ஒருகோ
புரத்தைக்கட்டி, பின்பு அதைத் தோட்டக்காரர்
வசமாய்விட்டுப் புறத்தேசத்துக்குப்போனான்.-
பருவகாலத்தில் அந்தத் திராட்சத்தோட்டத்தின் ௨
கனிகளின் பங்கைத் தோட்டக்காரரிடத்தி
லேவாங்கிவரும்படி, அவன் ஒரு பணிவிடைக்
காரனை அவர்களிடத்தில் அனுப்பினான்.–அவர் ௩
கள் அவனைப்பிடித்து, அடித்து, வெறுமையாய்
அனுப்பினார்கள்.–பின்பு அவன் வேறொரு ப ௪
ணிவிடைக்காரனை அவர்களிடத்தில் அனுப்ப,
அவர்கள் அவன்மேல் கல்லெறிந்து, தலையிலே
காயப்படுத்தி, அவமானம்பண்ணி அனுப்பினார்
கள்.–மறுபடியும் அவன் வேறொருவனை அனுப் ௫
ப, அவனை அவர்கள் கொலைசெய்தார்கள்; இப்
படி அநேகரிற்சிலரை அடித்து, சிலரைக்கொலை
செய்தார்கள்.–அவனுக்கு ஒரே அன்பான குமா ௬
ரனிருந்தான், இவனுக்கு அஞ்சுவார்களென்று
கடைசியில் இவனையும் அவர்களிடத்தில் அ
னுப்பினான்.—அந்தத்தோட்டக்காரர், இவன் சு ௭
தந்தரவாளி; இவனைக் கொலைசெய்வோம், வா
ருங்கள். இவனுடைய சுதந்தரம் நம்முடைய
வசமாகுமென்று தங்களுக்குள்ளே சொல்லிக்
கொண்டு,—இவனைப்பிடித்துக் கொலைசெய்து, ௮
தோட்டத்துக்குப்புறம்பே எறிந்துவிட்டார்க
ள்.—அப்பொழுது அந்தத்தோட்டத்திற்கு எச ௯
மானன் என்னசெய்வான்; அவன்வந்து, அந்தத்

(௰௭) ஏசா.௫௬.௭. எரே.௭.௰௧. (௰௮) லூக்.௰௯.௪௭. மத்.௭.௨௮. லூக்.௪.௩௨. (௨௰) மத்.௨௧.௰௯. (௨௩) மத்.௰௭.௨௰. லூக்.௰௭.௬. (௨௪) மத்.௭.௭. லூக்.௰௧.௯. யோவா.௰௪.௰௩. யாக்.௧.௫,௬. (௨௫) மத்.௬.௰௪. (௨௬) மத்.௰௮.௩௫. (௨௭) மத்.௨௧.௨௩. (௩௨) மத்.௩.௫.—(௰௨. அதி. ௧.) மத்.௨௧.௩௩.

தோட்டக்காரரைச் சங்காரம்பண்ணி, அந்தத்
தோட்டத்தை மற்றவர்கள் வசத்தில் ஒப்பிப்பா
௰ னே.-"வீடுகட்டுகிறவர்கள் தள்ளிவிட்டகல்லு,
௰௧ கோடிக்குத்தலைக்கல்லாயிற்று.-இது கர்த்தாவி
ஞல் நடந்தது, இது நம்முடையபார்வைக்கு அ
ற்புதமாயிற்று,"என்னும் வேதவாக்கியத்தை நீங்
௰௨ கள் வாசிக்கவில்லையாவென்ருர்.—அவர் தங்க
ளைக்குறித்து இந்த உவமையைப்பேசினரென்று
ணர்ந்து அவரைப்பிடிக்க வகைதேடினர்கள்;
அவர்கள் சனங்களுக்குப் பயந்து அவரைவிட்
டுப்போனர்கள்.
௰௩ பின்பு அவர்கள், வாக்குகளில் அவரை அகப்
படுத்தும்படிக்குச்சிலபரிசேயரையும்,ஏரோதிய
ரிற்சிலரையும் அவரிடத்தில் அனுப்பினர்கள்.—
௰௪ அவர்கள்வந்து அவரைநோக்கி, இரபீ, நீர் சத்தி
யமுள்ளவர்,மனுஷரில் ஒருவனுக்கும் அஞ்சாம
லும், மனுஷருடையமுகத்தைப்பாராமலுந் தே
வனருளிய மார்க்கத்தை உண்மையாகப்போ
திக்கிறீர், அது எங்களுக்குத்தெரியும்: இராசா
வுக்குவரிகொடுப்பது நியாயமோ, அல்லவோ,—
௰௫ நாம் கொடுக்கவேண்டுமோ, கொடாமல் விட
வேண்டுமோவென்றுகேட்டார்கள்; அவரோ,அ
வர்களுடைய கபடத்தை அறிந்து, அவர்களை
நோக்கி, நீங்கள் என்னை ஏன் சோதிக்கிறீர்கள்;
ஒரு தேனரியப்பணத்தைக் கொண்டுவந்து எ
௰௬ னக்குக் காண்பியுங்களென்று சொல்ல,—அவர்
கள் அதைக் கொண்டுவந்தார்கள். அவர் அவர்
களைநோக்கி, இந்த ரூபமும் மேலெழுத்தும்ஆரு
டையதென்றுகேட்க, அவர்கள்அவருடனே, இ
௰௭ து இராசாவுடையதென்ருர்கள்.—அதற்குத்தர
மாக யேசு அவர்களுடன், இராசாவுடையதை
இராசாவுக்கும், தேவனுடையதைத்தேவ
னுக்குஞ் செலுத்துங்களென்றுசொல்லக்கேட்
ட அவர்கள் அவரைக்குறித்து ஆச்சரியப்பட்
டார்கள்.
௰௮ பின்பு உயிர்த்தெழுதல் இல்லையென்றுசொல்
௰௯ லுகிற சதுசேயர் அவரிடத்தில்வந்து,—போதக
ரே,ஒருவன் பிள்ளைகளில்லாமல்தன்மனைவியை
விட்டிறந்தால், அவனுடையசகோதரன் அவன்
மனைவியைவிவாகம்பண்ணி, அவனுக்குச்சந்த
தி தோற்றுவிக்கவேண்டுமென்று மோசே நமக்
௨௰ குக் கட்டளையிட்டாரே.—ஏழுபேர் சகோதரர்
இருந்தார்கள்: அவர்களில் மூத்தவன் ஒருஸ்திரி
யை விவாகம்பண்ணி, சந்ததி இல்லாமல் இறந்
௨௧ துபோனன்.—இரண்டாஞ் சகோதரன் அவளை
விவாகம்பண்ணி, சந்ததி இல்லாமல் அவனும் இ
றந்துபோனன்: மூன்ருஞ்சகோதரனும் அப்படி
௨௨ யேபோனன்.-இவ்வேழுபேரும் அவளை விவா
கம்பண்ணிச் சந்ததிஇல்லாமற்போனர்கள்: எல்
லாருக்கும் பின்பு அந்த ஸ்திரியும் இறந்துபோ
௨௩ னள்.—உயிர்த்தெழுதலில் அவர்கள் எழும்புகிற
பொழுது, அந்தஎழுபேருக்கும் மனைவியாயிருந்
தவள், அவர்களில் யாவனுக்கு மனைவியாவா
ளென்றுகேட்க,—அதற்குத்தரமாக யேசு அவர் ௨௪
களைநோக்கி, நீங்கள் வேதத்தையுந் தேவனு
டைய வல்லமையையும் உணராததினலல்ல
வோ தப்பாய் எண்ணங்கொள்ளுகிறீர்கள்.-மரித் ௨௫
தோர் உயிர்த்தெழுந்திருக்கிறகாலத்தில், பெண்
கொள்வதுங் கொடுப்பதுமில்லை; அவர்கள் பர
மண்டலத்திலுள்ள தேவ தூதரைப்போல இருக்
கிருர்கள்.—மரித்தோர் உயிர்த்தெழுந்திருப்பார்க ௨௬
ளென்பதைக்குறித்து, "நான் ஆபிரகாமின் தே
வனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோபின்
தேவனுமாயிருக்கிறேன்," என்று செடியி
னின்று மோசேயுடன் தேவன் சொல்லிய
வாக்கியத்தை மோசேயின் ஆகமத்தில் நீங்கள்
வாசிக்கவில்லையா.—அவர் மரித்தோரின் தேவ ௨௭
னல்ல, சீவனுள்ளோரின் தேவனயிருக்கி
ருர்: ஆதலால் நீங்கள் மிகவுந் தப்பாய் எண்
ணங்கொள்ளுகிறீர்களென்ருர்.
வேதபாரகரில் ஒருவன்வந்து, அவர்கள்தருக் ௨௮
கம்பண்ணுகிறதைக்கேட்டு, அவர் அவர்களுக்
கு நன்ருய் உத்தரஞ்சொன்னரென்றுணர்ந்து,அ
வரைநோக்கி, எல்லாக்கட்டளைகளுக்குள்ளும்
முக்கியமானது எதென்றுகேட்டான்; யேசு அ
வனுக்குத்தரமாக, எல்லாக் கட்டளைக்குள்ளும்
முக்கியமானது,-"இஸரவேலே, கேள், நம்மு ௨௯
டையதேவனகியகர்த்தர் ஒரேகர்த்தர்.—
உன்பூரண இருதயத்தோடும், உன் பூரண ஆத்து ௩௰
மத்தோடும், உன் பூரணமனதோடும், உன் பூரண
பலத்தோடும் உன் தேவனகியகர்த்தாவினி
டத்தில் அன்புகூருவாயாக," என்பதே: இது
வே பிரதானகட்டளை.—அதைப்போலும் இரண் ௩௧
டாங்கட்டளை, "உன்னைப்போலவே பிறனையும்
நேசிக்கவேண்டும்," என்பதே. இவைகளிலும்
முக்கியமானகட்டளை வேறென்றுமில்லையென்
ருர்.—அதினல் வேதபாரகன்,உத்தமபோதகரே, ௩௨
நீர் சொன்னது சத்தியம்: தேவன் ஒருவரேயன்
றி வேறில்லை.-பூரண இருதயத்தோடும், பூரணம ௩௩
னதோடும்,பூரண ஆத்துமத்தோடும், பூரண பலத்
தோடும் அவரிடத்தில் அன்புகூருவதும், தன்
னைப்போலப்பிறனை நேசிப்பதுஞ் சகல சரு
வாங்க தகனபலிகளிலும், மற்றப்பலிகளிலும்
முக்கியமேயென்ருன்.—அவன் விவேகத்துடன் ௩௪
சொல்லிய உத்தரத்தை யேசுகேட்டு அவனை
நோக்கி, நீ தேவனுடைய இராச்சியத்திற்குத்
தூரமானவனல்லவென்ருர். பின்பு ஒருவனும்
அவரிடத்தில் வினவத்துணியவில்லை.
யேசு தேவாலயத்தில் உபதேசம்பண்ணுகை ௩௫
யில்,கிறிஸ்துத்தாவீதின் புத்திரனென்று வேத
பாரகர் சொல்லுகிறதெப்படி.-தாவீது பரிசுத்தஆ ௩௬
வியினலே, "கர்த்தர் என் ஆண்டவரைநோக்

(௰) சங்.௱௰௮.௨௨. (௰௨) மத்.௨௧.௪௫,௪௬. (௰௩) மத்.௨௨.௰௫. (௰௮) மத்.௨௨.௨௩. அப்.௨௩.௮. (௰௯) உபா.௨௫.௫. (௨௫) ௧.கொரி.௰௫.௪௨,௪௯,௫௨. (௨௬) யாத்.௩.௬. (௨௮) மத்.௨௨.௩௫. (௨௯) உபா.௬.௪. லூக்.௰.௨௭. (௩௧) லேவி.௰௯.௰௮. மத்.௨௨.௩௯. ரோ.௰௩.௯. கலா.௫.௰௪. யாக்.௨.௮. (௩௨) உபா.௪.௩௯. ஏசா.௪௫.௬,௰௪. (௩௩) ௧.சாமு.௰௫.௨௨. ஓசி.௬.௬. மீகா.௬.௬,௭,௮. (௩௪) மத்.௨௨.௪௬. (௩௫) மத்.௨௨.௪௧. (௩௬) ௨.சாமு.௨௩.௨. சங்.௱௰௧.

கி, நான் உம்முடைய சத்துருக்களை உமதுபாத
பீடமாக்கும்வரைக்கும் நீர் என் வலதுபாரிசத்
௩௭ தில் வீற்றிருமென்றார்,"என்று சொன்னான்.-இப்
படித்தாவீது தானே அவரை ஆண்டவரென்று
சொல்லியிருக்க, அவர் எப்படி அவனுடையபுத்
திரனுவாரென்றார்; சாதாரண சனங்கள் அவர்
வாக்கைக்கேட்டுப் பிரியப்பட்டார்கள்.
௩௮ பின்னும் அவர் உபதேசம்பண்ணுகையில் அ
வர்களைநோக்கி, நீளமான அங்கிகளைத்தரித்து ந
௩௯ டக்கவும், சந்தைகளிலேவாழ்த்தப்படவும்,-ஆல
யங்களில்முதல் ஆசனங்களிலும், விருந்துகளில்
௪௰ பிரதான இடங்களிலுமிருக்கவும் விரும்பி,-கப
டமாய் நெடும்பிரார்த்தனைகளைச்சொல்லி, வித
வைகளின் பொருளைப் பட்சித்துவருகிற வேத
பாரகரைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள்: இ
வர்கள் அதிகதண்டனை அடைவார்களென்றார்.
௪௧ யேசு, பொக்கிஷப்பெட்டிக்கு எதிர்ப்புறத்
திலிருக்கையில், சனங்கள் அதிலேதிரவியமிடுவ
தைப்பார்த்தார்; அநேகஞ்செல்வர் அதிகமிட்
௪௨ டார்கள்.-பின்பு ஒரு தரித்திரவிதவைவந்து இ
௪௩ ரண்டுகாசையிட்டாள்.-அப்பொழுது அவர் தம்
முடையசீஷரை அழைத்து, அவர்களுடனே, இந்
தப்பொக்கிஷப்பெட்டியிலே திரவியத்தை
இட்டவர்களெல்லாரிலும், இந்தத் தரித்திரவித
வையே அதிகமாயிட்டாளென்று மெய்யாக உங்
௪௪ களுக்குச் சொல்லுகிறேன்.-அவர்களெல்லாருந்
தங்கள்தங்கள் பூரணத்திற்சிறிது இட்டார்கள்; இ
வளோ, தன் எளிமையிலுந் தன்சீவனத்திற்குண்
டானயாவையுங் கொடுத்துவிட்டாளென்றார்.

## ௰௩. அதிகாரம்.

*௧. தேவாலயம் நாசமாகுமென முன்னுரைத்தல்: ௩. சீஷருக்குண்டாகுந் துக்கத்தைத்தீர்க்கதரிசனமாய்ச்சொல்லல்: ௰௪. யூதருக்கு உபத்திரவம் வருமெனக்காட்டல்: ௨௩. கள்ளத்தீர்க்கதரிசிகள் வருவார்களென்றும் யூதேயராச்சியம் நாசமாமென்றும் முன்னுரைத்தல்: ௨௮ அத்திமரத்தை உவமித்தல்: ௩௨. சாவதானமாயிருப்பது அவசியமெனக்காட்டல்.*

பின்பு அவர் தேவாலயத்தை விட்டுப்புறப்படு
கையில், அவருடையசீஷரில் ஒருவன் அவரை
நோக்கி, போதகரே, பாரும், எப்படிப்பட்டகற்
கள், இது எப்படிக்கட்டப்பட்டிருக்கின்றதென்
௨ றுசொல்ல,-யேசு அவனுக்குத்தரமாக, இந்தப்
பெரிய கட்டுக்கோப்புகளைப்பார்க்கிறாயா; இடி
படாததாய்ஒருகல்லும்மற்றொருகல்லின்மேல்வி
௩ டப்படுவதில்லையென்றார்.-பின்பு அவர் தேவா
லயத்துக்கு எதிர்ப்புறத்தில் ஒலீவமலையின்மே
லிருக்கையில், பேதுருவும், யாக்கோபும், யோவா
௪ னும், அந்திரேயாவுமாத்திரம்வந்து,—இவைகள்
எப்பொழுதுநடக்கும், இவைகளெல்லாம் நேரி
டுங்காலத்திற்கு அடையாளமென்ன; அவைகளை
எங்களுக்குச் சொல்லவேண்டுமென்று அவரி
டத்தில் இரகசியமாய்க்கேட்டார்கள்.—அதற்கு ௫
யேசு உத்தரமாய், அநேகர் என்னுடைய நாமத்
தைத்தரித்து வருவார்கள்; நானே அவரென்று
சொல்லி அநேகரைவஞ்சிப்பார்கள்.-ஆகையால் ௬
ஒருவனும் உங்களை வஞ்சியாதபடி எச்சரிக்கை
யாயிருங்கள்.-யுத்தங்களையும், யுத்தச்செய்திகளை ௭
யும் நீங்கள்கேட்கும்பொழுது கலங்காதிருப்பீர்
களாக: இவைகள் நடப்பது அவசியம்; ஆயி
னும் முடிவு உடனேவராது.-ஒரு தேசத்தார் மறு ௮
தேசத்தாருக்கும், ஒரு இராச்சியத்தார் மறுஇராச்
சியத்தாருக்கும் விரோதமாய் எழும்புவார்கள்:ப
ல இடங்களிலே பூமிஅதிர்தல்களும், பஞ்சங்
களும், கலகங்களுமுண்டாகும்: இவைகளெல்
லாம் உபத்திரவங்களின் ஆரம்பம்.
நீங்கள் உங்களைக்குறித்துச்சாவதானமாயிருங் ௯
கள்: அவர்கள் உங்களை இராசசங்கத்தாரிடத்தில்
ஒப்பிப்பார்கள்; ஆலயங்களில் அடிக்கப்படுவீர்
கள்: நீங்கள் என்னிமித்தம், தேசாதிபதிகளும்
இராசாக்களுமானவர்களுக்கு முன்பாக அவர்க
ளுக்குச்சாட்சியாய்க் கொண்டுபோய்விடப்படு
வீர்கள்.—முன்பு சுவிசேஷம் சருவதேசத்தாரி ௰
டத்திலும் பிரசித்தப்படவேண்டும்.-ஒப்பிக்கும் ௰௧
படி உங்களைக்கொண்டுபோகும் பொழுது, நீங்
கள் எதைச்சொல்லுவோமென்று முன்னேகவ
லைப்படவும் யோசிக்கவும்வேண்டாம்; நீங்களல்
ல, பரிசுத்த ஆவியானவரே பேசுகிறவர்: ஆக
லால் அந்நேரத்தில் உங்களுக்கு அருளப்படுவ
தெதுவோ அதையேசொல்வீர்களாக.-சகோதரன் ௰௨
தன்சகோதரனையும், பிதா தன் புத்திரனையும் மர
ணத்துக்கு ஒப்பிப்பார்கள்; பிள்ளைகள் தங்கள்
பெற்றாருக்கு விரோதமாய் எழுந்து அவர்களைக்
கொலைசெய்விப்பார்கள்.—என் நாமத்தினிமித் ௰௩
தம் நீங்களெல்லாராலும் பகைக்கப்படுவீர்கள்:
ஆயினும் முடிவுபரியந்தம் நிலைநிற்கிறவனே இ
ரட்சிக்கப்படுவான்.
வாசிக்கிறவன், சிந்திக்கக்கடவன், தானியேல் ௰௪
தீர்க்கதரிசி குறித்துச்சொல்லிய சருவசங்கார அ
ரோசியமான வஸ்து, தான் நிற்கத்தகாதஸ்தா
னத்திலே நிற்க நீங்கள் காணும்பொழுது, யூ
தேயாதேசத்திலுள்ளவர்கள், மலைகளுக்கு ஓடிப்
போகக்கடவர்கள்.-வீட்டின்மேல் நிற்கிறவன், ௰௫
தன் வீட்டுக்குள் இறங்காமலும், தன் வீட்டி
லுள்ளவைகளில் ஒன்றையும் எடுத்துக்கொண்டு
போகும்படிக்குப்பிரவேசியாமலும் போகக்கட
வன்.—வயல்வெளியில் இருக்கிறவன், தன்வஸ் ௰௬
திரத்தை எடுத்துக்கொண்டு போகும்படிக்குப்
பின்னிட்டுத் திரும்பலாகாது.-ஐயோ, அந்நாட் ௰௭
களிலே கருப்பவதிகளுக்கும், முலைகொடுக்கும்

(௩௮) மத்.௨௩.௧. லூக்.௨௰.௪௬. லூக்.௰௧.௪௩. (௪௰) மத்.௨௩.௰௪. (௪௧) லூக்.௨௧.௧. மத்.௰.௯. ௨.இரா.௰௨.௯.(௪௩) ௨.கொரி.௮.௰௨. (௪௪) உபா.௨௪.௬. ௧.யோவா.௩.௰௭.—(௰௩. அதி. ௧.) மத்.௨௪.௧. (௨) லூக்.௰௯.௪௪. (௪) மத். ௨௪.௩. (௫) எரே.௨௯.௮. எபே.௫.௬. ௧.தெச.௨.௩. (௮) மத்.௨௪.௮. (௯) மத்.௰.௰௭,௰௮. வெளி.௨.௰.(௰)மத்.௨௪. ௰௪. (௰௧) மத்.௰.௰௯.௮. அப்.௨.௪. (௰௨) மீகா.௭.௬. மத்.௰.௨௧. லூக்.௨௧.௰௯. (௰௩) மத்.௨௪.௯. தானி.௰௨.௰௨. மத்.௰.௨௨. வெளி.௨.௰.(௰௪)மத்.௨௪.௰௫. தானி.௯.௨௭. லூக்.௨௧.௨௧. (௰௭) லூக்.௨௧.௨௩.

௰௮ ஸ்திரிகளுக்கும் ஆபத்துவரும்.—தேவன் உல
கத்தைச் சிருஷ்டித்தகாலமுதற்கொண்டு இதுவ
ரைக்கும் நடவாததும், இனி நடவாததுமாகிய
௰௯ உபத்திரவம்அந்நாட்களிலுண்டாகும்.-ஆதலால்
நீங்கள் ஓடிப்போவது மாரிகாலத்தில் சம்பவியா
௨௰ தபடிக்கு வேண்டுதல்பண்ணுங்கள்.—கர்த்தர்
அந்நாட்களின் தொகை குறையப்பண்ணுவிட்
டால் ஒரு பிராணியாயினும் தப்புவதில்லை: தெ
ரிந்துகொண்டவர்களினிமித்தம் அந்நாட்களின்
௨௧ தொகையைக் குறைவாக்கினார்.—கள்ளக்கிறிஸ்
துக்களுங் கள்ளத்தீர்க்கதரிசிகளுந்தோன்றி,கூடு
மாகில்,தெரிந்துகொள்ளப்பட்டவர்களையும்வஞ்
சிக்கத்தக்கதாக அடையாளங்களையும், அற்புதங்
௨௨ களையுங் காட்டுவார்கள்.—ஆதலால், ஒருவன் உங்
களிடத்தில், பாருங்கள், கிறிஸ்து இங்கே இருக்
கிறார்; அங்கே இருக்கிறாரென்றால் நம்
௨௩ பாதிருங்கள்.-நீங்கள் சாவதானமாயிருங்கள்: பா
ருங்கள், நான்முன்னமே எல்லாவற்றையும் உங்
களுக்குத் தெரிவித்தேன்.

௨௪ அந்நாட்களில் அந்த உபத்திரவத்துக்குப்பின்
பு சூரியன் இருளும், சந்திரன் தன் ஒளியைக்
௨௫ கொடாது.—நட்சத்திரங்கள் வானத்தினின்று வி
ழும், வானத்திலுள்ள வலியவஸ்துக்கள் அசைக்
௨௬ கப்படும்.-அப்பொழுது மனுபுத்திரன் மகாபராக்
கிரமத்தோடும் மகிமையோடும் மேகங்களில்வரு
௨௭ வதைக்காண்பார்கள்.—அப்பொழுது அவன் தன்
னுடைய தூதரை அனுப்பி, தான்தெரிந்துகொ
ண்டவர்களைவானம்பூமியென்னும் இவைகளின்
கடையெல்லைபரியந்தம்,நான்குதிசையிலுமின்
௨௮ று கூட்டுவான்.—இப்பொழுது அத்திமரத்தினால்
ஒரு திருஷ்டாந்தத்தைஉணர்ந்துகொள்ளுங்கள்;
அதின்கிளைகள் துளிர்த்து, இலைகள் தழைக்கும்
பொழுது வசந்தகாலஞ் சமீபித்ததென்று நீங்கள்
௨௯ அறிந்துகொள்வீர்கள்.—அதுபோலவே இவைகள்
சம்பவிப்பதை நீங்கள் காணும்பொழுது, அது
சமீபித்துக்கதவருகேயும்வந்துவிட்டதென்று அ
௩௰ றியக்கடவீர்கள்.—இந்தச்சந்ததி ஒழிந்துபோகு
முன் இவைகளெல்லாஞ் சம்பவிக்குமென்று
௩௧ மெய்யாக உங்களுக்குச்சொல்லுகிறேன்.—வா
னமும் பூமியும் ஒழிந்துபோம்,என்வாக்குகளோ
ஒழியாதிருக்கும்.

௩௨ அந்நாளையும், அந்நாழிகையையும் என்பிதா
ஒருவரேயன்றி, வேறொருவரும் அறியார்; பர
மண்டலத்திலுள்ளதேவதூதர்களும்அறியார்கள்,
௩௩ குமாரனும் அறியார்.—அக்காலத்தின் வரவை நீங்
கள் அறியாதபடியால், சாவதானமாய் விழித்துக்
௩௪ கொண்டு பிரார்த்தனைபண்ணக்கடவீர்கள்.—இ
து,ஒருமனுஷன்,தன் பணிவிடைக்காரருக்கு அ
திகாரங்கொடுத்து, ஒவ்வொருவருக்கும் அவனவ
வன் வேலையை நியமித்து, காவற்காரன் விழித்
துக்கொண்டிருக்கும்படிக்குக் கட்டளையிட்டு,
தன்வீட்டைவிட்டுத் தூரதேசத்திற்குப்போய்வ
ருவதுபோலாகும்.—ஆதலால் வீட்டெசமானன் ௩௫
சாயங்காலமோ, அத்தராத்திரியோ, சேவல் கூ
வும்நேரமோ,காலையோ,இவைகளில் இன்னவே
ளையிலேவருவானென்றுநீங்கள் அறியாதிருக்கிற
படியால்,விழித்துக்கொண்டிருக்கக்கடவீர்கள்:-
இல்லாவிட்டால் அவன் சடிதியாய்வந்து, நீங் ௩௬
கள் தூங்கியிருப்பதைக் காண்பான்.-இதினிமித் ௩௭
தம் உங்களுக்கு நான்சொல்லுகிறதை யாவருக்
குஞ்சொல்லுகிறேன், விழித்திருங்களென்றார்.

## ௰௪. அதிகாரம்.

௧. கிறிஸ்துவுக்கு விரோதமாய்த் துராலோசனை செய்தல்: ௩. ஸ்திரி சுகந்த தைலத்தால் யேசுவுக்குஅபிஷேகம்பண்ணல்: ௰. யூதாதுரோகஞ் செய்தல்: ௰௨. பஷ்காவை ஆயத்தப்படுத்தச் சீஷரை அனுப்பல்: ௰௭. அவர்களோடே போசனம்பண்ணல்: ௨௨. இராப்போசனத்தை ஏற்றல்: ௨௬. பேதுரு தம்மை மறுப்பானென்று முன்னுரைத்தல்: ௩௨. கிறிஸ்துத்தோட்டத்தில் வேதனை அனுபவித்தல்: ௪௩. கிறிஸ்து ஒப்பிக்கப்படல்: ௫௩. அநியாயமாய்க்குற்றஞ்சுமத்தப்படல்,தண்டனை அடையத்தீர்க்கப்படல்: ௬௬. பேதுருஅவரைமறுத்தல்.

புளியாத அப்பம் புசிக்கிற பஷ்காவருவதற்கு ௧
இரண்டுநாளுக்கு முன், பிரதான ஆசாரியரும்
வேதபாரகரும் அவரைச்சூதாய்ப்பிடித்துக்கொ
லைசெய்யும்படிக்கு வகை தேடினபொழுது,—
உற்சவநாட்களில் ஆகாது, சனங்களுக்குள்ளே ௨
கலகமுண்டாகுமென்றார்கள்.

அவர் பேதனியவில் குஷ்டரோகியாயிருந்த ௩
சீமோனுடைய வீட்டில் பந்தியிருக்கையில், ஒ
ருஸ்திரி வெண்கற்பரணியில் மிகவும் விலை உ
யர்ந்த களங்கமில்லாத சுகந்ததைலத்தை எடுத்து
வந்து, அதை உடைத்து அதிலுள்ளதை அவ
ருடைய தலையின்மேல்சொரிந்தாள்.—அதினாற் ௪
சிலர் தங்களுக்குள்ளேவிசனம் அடைந்து, இந்
தத்தைலத்தை நஷ்டப்படுத்துவதென்ன.—இ ௫
தை முந்நூறு தேனாரியக்காசுக்கு மேற்பட்டகி
ரயத்துக்கு விற்றுத் தரித்திரருக்குக் கொடுக்கலா
மென்றுசொல்லி, அவளுக்கு விரோதமாய்மொ
றுமொறுத்தார்கள்.—அப்பொழுது யேசு, அ ௬
வளை ஒன்றுஞ்செய்யாதிருங்கள், ஏன் அவளை
வருத்தப்படுத்துகிறீர்கள்; அவள் எனக்கு நற்
கிரியையைச்செய்தாள்.—தரித்திரர் எப்பொழு ௭
தும் உங்களோடிருக்கிறார்கள், விரும்பிய எந்
தவேளையிலும்அவர்களுக்கு நன்மைசெய்யலாம்:
நானோ எப்பொழுதும் உங்களோடே இருப்ப
தில்லை.—இவள் தன்னால் இயன்றமட்டுஞ்செய் ௮
தாள்: இவள் இந்தச்சுகந்த தைலத்தை என்மேற்
சொரிந்து, என்னை அடக்கம்பண்ணத்தக்க கிரி

(௰௯) தானி.௯.௨௬. யோவே.௨.௨. மத்.௨௪.௨௰. (௨௨) மத்.௨௪.௨௪. (௨௩) ௨.பேதுரு.௩.௰௭. (௨௪) தானி.௭.௰. செப்.௧.௰௫. மத்.௨௪.௨௯,. (௨௬) தானி.௭.௰௩,௰௪. மத்.௰௬.௨௭. அப்.௧.௰௧. ௧.தெச.௪.௰௬. ௨.தெச.௧.௬,௰. வெளி.௧.௭. (௨௮) மத்.௨௪.௩௨.(௩௧)ஏசா.௪௰.௮. (௩௩) மத்.௨௪.௪௨. லூக்.௰௨.௪௰. ரோ.௰௩.௰௧. ௧.தெச.௫.௬.(௩௪) மத்.௨௪.௪௫. (௩௫) மத்.௨௪.௪௨,௪௪.—(௰௪. அதி. ௧.) மத்.௨௬.௨. யோவா.௰௧.௫௫. (௩) மத்.௨௬.௬.(௫)மத்.௰௮.௨௮. (௭) ௨பா.௰௫.௰௧.

௯ யையை முன்னேசெய்தாள்.-உலகத்திலே எவ்வி
டத்தில் இந்தச்சுவிசேஷம் பிரசித்தமாக்கப்படு
மோ,அவ்விடத்தில் இவளை நினைப்பதற்கு இவள்
செய்ததுந் தெரிவிக்கப்படுமென்று மெய்யாக
உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.
௰ அதன்பின்பு, பன்னிருவரில் ஒருவனாகிய யூ
தாஸ்காரியோத்து என்பவன் பிரதான ஆசாரியரு
க்கு அவரைக்காட்டிக்கொடுக்கும்படி அவர்களி
௰௧ டத்தில்போனான்.-அவர்கள் அதைக்கேட்டுச்சந்
தோஷப்பட்டு, அவனுக்குப்பணங்கொடுப்போ
மென்று வாக்குத்தத்தம்பண்ணினார்கள். அவன்
அவரைக்காட்டிக்கொடுக்குஞ்சமயந்தேடினான்.
௰௨ புளியாத அப்பங்களைப் புசிக்கிற நாட்களில்,ப
ஷ்கா ஆட்டுக்குட்டி பலியிடப்படும்முதலாம் நா
ளில் அவருடையசீஷர் அவரைநோக்கி,நீர் பஷ்
காவைப்புசிக்கும்படி நாங்கள் எங்கேபோய் ஆ
யத்தம்பண்ணுவோம்,உம்முடையசித்தமென்ன
௰௩ வென்றுகேட்க,—அவர் தம்முடையசீஷரில் இ
ருவரைநோக்கி,நீங்கள் நகரத்துக்குப்போங்கள்,
அங்கே ஒருமனுஷன் தண்ணீர்க்குடத்தைத்தோ
ளின்மேல்வைத்துக்கொண்டு உங்களுக்கெதிராக
௰௪ வருவான்: அவனுக்குப்பின்சென்று,—அவன்
பிரவேசிக்கும் வீட்டின் எசமானனை நோக்கி,
போதகர், என் சீஷருடனே பஷ்காவைப்புசிக்
கத்தக்க விருந்தறை எங்கேயென்று கேட்கிறா
௰௫ ரென்றுசொல்லுங்கள்;—அப்பொழுது அவன்,
சோடிக்கப்பட்டு ஆயத்தமாயிருக்கிறமேல்வீட்டி
லுள்ள ஒருபெரிய அறையை உங்களுக்குக்காண்
பிப்பான்: அங்கே நமக்காக ஆயத்தப்படுத்துங்க
௰௬ ளென்றுசொல்லி அனுப்பினார்.-சீஷர்புறப்பட்டு
நகரத்திற்சென்று, அவர் தங்களுக்குச்சொல்லிய
படியே கண்டு, பஷ்காவை ஆயத்தப்படுத்தினார்
௰௭ கள்.—சாயங்காலத்தில் அவர் பன்னிருவருடன்
௰௮ கூடப்போனார்.-அவர்கள் பந்தியிருந்துபுசிக்கை
யில்,யேசு, என்னோடேபுசிக்கிற உங்களில்ஒரு
வன் என்னைக்காட்டிக்கொடுப்பானென்றுமெய்
யாக உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.-
௰௯ அப்பொழுது அவர்கள் மிகவுந்துக்கங்கொண்டு
அவரைநோக்கி, அவன் நானோ, நானோவென்று
ஒவ்வொருவராய்க் கேட்கத்தொடங்கினார்கள்.-
௨௰ அவர்களுக்குத்தரமாக அவர், என்னோடேதாலத்
திலே தோய்க்கிறவனான பன்னிருவரில் ஒருவ
௨௧ னே அவன்.—மனுபுத்திரன்தன்னைக்குறித்து எழு
தியிருக்கிறவிதமாய்ப்போகிறான்:எந்தமனுஷன்
அவனைக் காட்டிக்கொடுக்கிறானோ,ஐயோ,அவ
னுக்கு ஆபத்துவரும்: அந்தமனுஷன்பிறவாதி
ருந்தானானால் அவனுக்கு நலமாமென்றார்.
௨௨ பின்பு அவர்கள் போசனம்பண்ணுகையில்
யேசு அப்பத்தை எடுத்து ஆசீர்வாதஞ்செய்து,
அதைப்பிட்டு அவர்களுக்குக்கொடுத்து, இதைஎ
௨௩ டுத்துப்புசியுங்கள், இது என்சரீரமென்றார்.-பின்
பு பாத்திரத்தையும் எடுத்துஸ்தோத்திரஞ்செய்து,
அதை அவர்களுக்குக்கொடுக்க, அவர்கள் எல்
லாரும் அதிற்பானம்பண்ணினார்கள்.—அப்பொ ௨௪
ழுது அவர் அவர்களைநோக்கி, இதுவேபுதிய உ
டன்படிக்கைக்கேற்க, அநேகரினிமித்தஞ் சிந்
தப்படுகிற என் இரத்தம்.-நான் தேவனுடைய ௨௫
இராச்சியத்திலே திராட்சரசத்தை நவமாய்ப்பா
னம்பண்ணும்நாள்வரைக்கும், அதை நான் இனி
ஒருபொழுதும் பானம்பண்ணேனென்று மெய்
யாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.
அவர்கள் ஒரு பாட்டைப்பாடி, பின்பு ஒலீ ௨௬
வமலைக்குப் புறப்பட்டுப்போனார்கள்.—யேசு ௨௭
அவர்களைநோக்கி, "நான் மேய்ப்பனை அடிப்
பேன்,ஆடுகள்சிதறிப்போம்," என்றெழுதியிருக்
கிறபடி, இந்த இராத்திரியிலே நீங்களெல்லாரும்
என்னிமித்தம் இடறுண்பீர்கள்.—நான் மரித் ௨௮
தோரைநீங்கி எழுந்தபின்பு, உங்களுக்குமுன் க
லிலேயாவுக்குப் போவேனென்றார்.—அப்பொ ௨௯
ழுது பேதுரு அவரைநோக்கி, எல்லாரும் இட
றுண்டாலும், நான் மாட்டேனென்றுசொல்ல,-
யேசு அவனைநோக்கி, இன்றைத்தினம், இவ் ௩௰
விரவிற் சேவல் இரண்டாந்தரங் கூவுமுன், நீ
மூன்றுதரம் என்னை மறுதலிப்பாயென்றுமெய்
யாய் உனக்குச்சொல்லுகிறேனென்றார்.—அப் ௩௧
பொழுது அவன்,நான்உம்மோடேமரிக்கவேண்
டியதாயிருந்தாலும், உம்மை மறுதலிக்கமாட்டே
னென்று மிகவும் உறுதியாய்ச்சொன்னான். எல்
லாரும் அப்படியே சொன்னார்கள்.—பின்பு ௩௨
அவர்கள் கெத்சேமனியென்னும் ஸ்தானத்திற்
சேர்ந்தார்கள்: அப்பொழுது அவர் தம்முடைய
சீஷரைநோக்கி, நான் போய் வேண்டுதல்பண்
ணுமளவும் நீங்கள் இங்கே இருங்களென்றுசொ
ல்லி,—பேதுருவையும், யாக்கோபையும், யோ ௩௩
வானையுங்கூட்டிக்கொண்டுபோய், மிகுந்ததிகி
லையும், வியாகுலத்தையும்அடையத்தொடங்கி,-
அவர்களை நோக்கி, என் ஆத்துமம் மரணம் வரு ௩௪
விக்கும் வேதனை படுகின்றது: நீங்கள் இங்கே
தரித்து விழித்திருங்களென்றுசொல்லி,—சற்று ௩௫
அப்புறம்போய்த் தரையிலேவிழுந்து, கூடுமா
கில்,அந்தநேரந் தம்மைவிட்டுநீங்கும்படி வேண்
டுதல்செய்து,—அப்பா, பிதாவே, உம்மால் எல் ௩௬
லாமாகும்; இந்தப்பாத்திரம் என்னைவிட்டு நீங்கு
ம்படிசெய்யும்: எப்படியும் என்னுடைய சித்தத்
தின்படியல்ல, உமது சித்தத்தின்படியே ஆகக்க
டவதென்றார்.-பின்பு அவர்வந்து,அவர்கள்நித்தி ௩௭
ரைபண்ணுகிறதைக்கண்டு, பேதுருவை நோக்
கி,சீமோனே,நித்திரைகொள்ளுகிறாயா; நீ ஒரும
ணிநேரமளவும் என்னோடே விழித்திருக்கக்கூ
டாதா:-நீங்கள் சோதனையில் அகப்படாதபடி,வி ௩௮
ழித்திருந்துவேண்டுதல்பண்ணுங்கள். ஆவி உற்
சாகமுள்ளதே, மாமிசமோ பலவீனமுள்ளதென்
றார்.—திரும்பவும்போய், முன்சொல்லியவாக் ௩௯
குகளை வசனித்து வேண்டுதல்பண்ணினார்.—

(௰) மத்.௨௬.௰௪. லூக்.௨௨.௩,௪. (௰௨) மத்.௨௬.௰௭. (௰௭) மத்.௨௬.௨௰. (௨௧) மத்.௨௬.௨௪. (௨௨) மத்.௨௬.௨௬. ௧.கொரி.௰௧.௨௩. (௨௬) மத்.௨௬.௩௰. (௨௭) மத்.௨௬.௩௧. சக.௰௩.௭. (௨௯) மத்.௨௬.௩௩,௩௪. (௩௨) மத்.௨௬.௩௬. (௩௪)யோவா.௰௨.௨௭. (௩௬) ரோ.௮.௰௫. கலா.௪.௬. எபி.௫.௭. யோவா.௫.௩௰. (௩௮) ரோ.௭.௨௩. கலா.௫.௰௭.

௪௰ அவர் திரும்பிவந்தபொழுது அவர்கள் கண்கள்
பாரநித்திரைஅடைந்தபடியினால், அவர்கள் மறு
படியும் நித்திரைபண்ணக்கண்டார்; அன்றியும்
அவருக்குத்தரங்கொடுக்க அவர்கள் அறியவில்
௪௧ லை.—அவர் மூன்றாந்தரம் அவர்களிடத்தில் வந்
து, நீங்கள் இனி நித்திரைபண்ணி இளைப்பாறுங்
கள்: இனிப்போதும், நேரம்வந்தது; பாருங்கள்,
மனுபுத்திரன் பாவிகளுடைய கையில் காட்டிக்
௪௨ கொடுக்கப்படுகிறான்.—எழுந்திருங்கள், போ
வோம்வாருங்கள்; என்னைக் காட்டிக்கொடுப்ப
வன் சமீபித்துவருகிறான், பாருங்களென்றார்.
௪௩ அவர் பேசுகையில் அந்நேரமே பன்னிருவ
ரில்ஒருவனாகிய யூதாவந்தான், பிரதான ஆசாரி
யர், வேதபாரகர், முதியோர்என்பவர்களிடத்தி
லின்று திரளானசனங்களுங் கட்கங்களையும், த
டிகளையும்பிடித்து அவனோடே வந்தார்கள்.-
௪௪ அவரைக்காட்டிக்கொடுப்பவன், எவனை நான்
முத்தஞ்செய்வேனோ, அவனே அவன்; அவ
னைப்பிடித்துச் சாவதானமாய் நடத்திக்கொண்
டுபோங்களென்று அடையாளமாக அவர்களுக்
௪௫ குச்சொல்லியிருந்தான்.-ஆதலால் அவன்வந்தவு
டனே அவரிடத்திற்சேர்ந்து, இரபீ, இரபீயென்
றுசொல்லி, அவரைமுத்தஞ்செய்தான்.
௪௬ அப்பொழுது அவர்கள்அவர்மேல்தங்கள்கை
௪௭ களை வைத்துப் பிடித்துக்கொண்டார்கள்.—சமீ
பமாய்நின்றவர்களில் ஒருவன் கட்கத்தை உரு
வி, பிரதான ஆசாரியனுடையபணிவிடைக்கார
௪௮ னைக்காதற வெட்டினான்.—யேசு அவர்களை
நோக்கி, நீங்கள் ஒருதிருடனைப்பிடிக்கப்புறப்
படுகிறதுபோல, கட்கங்களோடுந்தடிகளோடும்
௪௯ என்னைப் பிடிக்கவந்தீர்களா.—தினமும் நான்
தேவாலயத்தில் உங்களுக்குள் இருந்து, உபதே
சம்பண்ணிவந்தேன். அப்பொழுது நீங்கள் என்
னைப்பிடிக்கவில்லையே: ஆனாலும் வேதவாக்கி
௫௰ யங்கள் நிறைவேறவேண்டுமென்றார்.—அப்பொ
ழுது சீஷர்களெல்லாரும் அவரைவிட்டு ஓடிப்
௫௧ போனார்கள்.—ஒருவாலிபன் ஒருசீலையைத் தன்
மேற் போர்த்துக்கொண்டு அவரைப்பின்சென்
௫௨ றான்.—சேவகர் அவனைப்பிடிக்க, அவன் தன்
வஸ்திரத்தைவிடுத்து, நிருவாணமாய் அவர்களை
விட்டு ஓடிப்போனான்.
௫௩ யேசுவை அவர்கள் மகாஆசாரியனிடத்திற்
கொண்டுபோனார்கள்: பிரதான ஆசாரியர் சமஸ்த
ரும், முதியோரும், வேதபாரகரும் அவரிடத்திற்
௫௪ கூடிவந்தார்கள்.-பேதுரு மகாஆசாரியனுடைய
அரமனைவரைக்குந் தூரத்தில் அவருக்குப்பின்
சென்று அதிற்பிரவேசித்து, பணிவிடைக்காரரோ
டே உட்காந்து, நெருப்பினருகே குளிர்காய்ந்து
௫௫ கொண்டிருந்தான்.-அப்பொழுது பிரதான ஆசா
ரியரும் பெரியசங்கத்தார்யாவரும் யேசுவைக்
கொலைசெய்யும்படி, அவருக்கு விரோதமாகப்
பொய்ச்சாட்சிதேடினார்கள்; அகப்படவில்லை.-
அநேகர்வந்து அவருக்கு விரோதமாகப்பொய்ச் ௫௬
சாட்சிசொல்லியும், அவர்கள் சாட்சி ஒவ்வவில்
லை.-சிலர் எழுந்து, கையினால் செய்யப்பட்ட இந் ௫௭
த ஆலயத்தை நான் இடித்து, மூன்றுநாளுக்குள்
ளே கையில்லாமல் வேறொன்றைக் கட்டுவே
னென்பதை இவன் சொல்லக்கேட்டோமென்
று—அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்சி ௫௮
சொன்னார்கள்.—அப்படியும் அவர்களுடைய ௫௯
சாட்சி பொருந்தாமற்போயிற்று.—அப்பொழுது ௬௰
மகாஆசாரியன் மத்தியில் எழுந்து, யேசுவை
நோக்கி, உனக்கு விரோதமாக இவர்களிட்டசா
ட்சிகளென்ன; நீ இதற்குத்தரம் ஒன்றுஞ்சொல்
லுகிறதில்லையாவென்றுகேட்க,-அவர் உத்தரஞ் ௬௧
சொல்லாமல் மவுனமாயிருந்தார். அதினால் மகா
ஆசாரியன் திரும்பவும் அவரைநோக்கி, நீ ஸ்
தோத்திரிக்கப்பட்டவருடைய குமாரனாகிய கி
றிஸ்துவாவென்றுகேட்க,—யேசு, நானே அ ௬௨
வர்: மனுபுத்திரன்சருவவல்லவருடையவலதுபா
ரிசத்திலே வீற்றிருந்து, வானத்தின்மேகங்களில்
வரவுங் காண்பீர்களென்றார்.-அப்பொழுது மகா ௬௩
ஆசாரியன் தன் வஸ்திரத்தைக்கிழித்து,-மேலுஞ் ௬௪
சாட்சிநமக்குவேண்டுமா, இந்தத்தூஷணத்தைக்
கேட்டீர்களே, உங்களுக்கெப்படித் தோன்று
கின்றதென்றான்: அவர்களெல்லாரும், இவன்மர
ணத்திற்குப் பாத்திரனென்று தீர்ப்புச்சொன்னார்
கள்.—அப்பொழுது சிலர் அவர்மேல் துப்பி, ௬௫
அவருடைய முகத்தைமூடி, கையினால் அவரை
அடித்து, நீ தீர்க்கதரிசனஞ்சொல்லென்று அவ
ரிடத்தில் சொல்லத்தொடங்கினார்கள்: அன்றி
யும்பணிவிடைக்காரர் அவரைக்கன்னத்தில் அ
றைந்தார்கள்.
அத்தருணத்திலே பேதுரு மாளிகையின்கிழே ௬௬
பிராகாரத்திலிருந்தான்: அப்பொழுது மகாஆசா
ரியனுடையபணிவிடைக்காரிகளில் ஒருத்திவந்
து,—தீக்காய்ந்துகொண்டிருக்கிற பேதுருவைக் ௬௭
கண்டு, அவனை உற்றுப்பார்த்து, நீயும் நாசரேத்
தூராகிய யேசுவுடனே இருந்தாயென்று
சொல்ல,-அவன் மறுத்து, அறியேன், நீபேசுகிற ௬௮
தும் எனக்குத்தெரியாதென்றான். பின்பு அவன்
வெளியேமண்டபத்திற்குப்போக, சேவல்கூவி
ற்று.—பின்னும்பணிவிடைக்காரிஅவனைப்பார்த் ௬௯
துச் சமீபத்தில் நின்றவர்களைநோக்கி, இவன் அ
வர்களில் ஒருவனென்றாள்.—அவன் திரும்பவும் ௭௰
மறுதலித்தான். சற்றுநேரத்திற்குப்பின்பு அங்கே
நின்றவர்கள் மறுபடியும்பேதுருவைநோக்கி, நிச்
சயமாய் நீ அவர்களில் ஒருவன்: நீ கலிலேய
மனுஷன், உன் உச்சரிப்பு அதைக்காட்டுகின்ற
தென்றார்கள்.—அதற்கு அவன், நீங்கள் குறித்துச் ௭௧
சொல்லிய மனுஷனை நான் அறிந்ததில்லையென்
று சபதஞ்செய்து ஆணையிடத்தொடங்கினான்.-

(௪௧) யோவா.௰௩.௧. (௪௨) மத்.௨௬.௪௬. (௪௩) மத்.௨௬.௪௭. (௪௮) மத்.௨௬.௫௫. (௪௯) சங்.௨௨.௬. ஏசா.௫௩.௭. லூக்.௨௨.௩௭. (௫௰) சங்.௮௮.௮. (௫௩) மத்.௨௬.௫௭. (௫௫) மத்.௨௬.௫௯. (௫௭) யோவா.௨.௰௯. (௬௰) மத்.௨௬.௬௨. (௬௧) ஏசா.௫௩.௭. மத்.௨௬.௬௩. (௬௨) மத்.௨௪.௩௰. லூக்.௨௨.௬௯. (௬௬) மத்.௨௬.௫௮,௬௯. லூக்.௨௨.௫௫. யோவா.௰௮.௰௬. (௬௯) மத்.௨௬.௭௧. (௭௰) மத்.௨௬.௭௩. அப்.௨.௭.

௭௨ சேவல் இரண்டாந்தரங்கூவிற்று. அப்பொழு
து சேவல் இரண்டாந்தரங் கூவுமுன் நீ மூன்று
தரம் என்னை மறுதலிப்பாயென்று தன்னுடனே
யேசு சொன்னதைப் பேதுரு நினைத்து,அதின்
மேற் சிந்தைவைத்து அழுதான்.

## ௰௫. அதிகாரம்.

*௧. கிறிஸ்துவைப் பிலாத்தினிடத்தில் கொண்டுபோதல்: ௩. அவர் பிலாத்தினால் கொலைக்கு ஒப்பிக்கப்படல்: ௰௬. கிறிஸ்துவைப் பரிகாசம்பண்ணல்: ௨௧. அவரைச்சிலுவையிலறைதல்: ௨௯. அவரை நிந்தித்தல். அவர் உரத்தசத்தமிடல்: ௩௭. அவர் உயிர்விடல்: ௪௰. அவர்மரணமடைந்தபொழுது ஸ்திரிகள் தூரத்தினின்று பார்த்தல்: ௪௪. அவரை அடக்கம்பண்ணல்.*

விடியற்காலத்திலே பிரதான ஆசாரியர், மூதி
யோர், வேதபாரகர் முதலான பெரியசங்கத்தார்
யாவரும் ஆலோசனைபண்ணி, பின்பு அவர்கள்
யேசுவைக் கட்டிக்கொண்டுபோய்ப் பிலாத்
௨ தினிடத்தில் ஒப்பித்தார்கள்.—அப்பொழுது பி
லாத்து அவரைநோக்கி, நீ யூதருடைய இரா
சாவாவென்றுகேட்க, அவர் அவனுக்குத்தர
௩ மாய், நீ சொல்லுகிறாயே என்றார்.—பிரதான ஆ
சாரியர் அவர்மேல் அநேக குற்றங்களைச் சாற்றி
னார்கள்: அவரோ ஒரு உத்தரமுங்கொடுக்கவில்
௪ லை.—பிலாத்துப் பின்னும் அவரைநோக்கி, இ
வர்கள் உனக்கு விரோதமாக அநேககுற்றங்க
ளைச் சாற்றுகிறார்களே, பார், அதற்குத்தரம் ஒன்
௫ றுஞ்சொல்வதில்லையாவென்றுகேட்டான்.—பி
லாத்து ஆச்சரியப்படத்தக்கதாக யேசு அதற்
௬ கும் ஒன்றுஞ்சொல்லாதிருந்தார்;-உற்சவசமயத்
தில்,காவலிலிருப்பவர்களுக்குள்அவர்கள்கேட்
கும் ஒருவனை அவர்களுக்காக அவன் விடுதலை
௭ யாக்குவான்.-கலகம்பண்ணி, கலகத்திலே கொ
லைசெய்து கட்டப்பட்டவர்களில் பரப்பாசென்
௮ னும் ஒருவனிருந்தான்.—தங்களுக்கு வழக்கத்
தின்படி செய்யவேண்டுமென்று சனங்
கள் சத்தமிட்டு, அவனை வேண்டிக்கொள்ளத்
௯ தொடங்கினார்கள்.—பிலாத்து அவர்களைநோக்
கி, நான் யூதருடைய இராசாவை உங்களுக்காக
௰ விடுதலையாக்கவேண்டுமோவென்றான்.—பிரதான
ஆசாரியர் பொறாமையினால் அவரைஒப்பித்தார்க
௰௧ ளென்று அவன் அறிந்துகொண்டான்.—அப்பொ
ழுது பரப்பாசைத் தங்களுக்காக விடுதலையாக்
கும்படிகேட்டுக்கொள்ளவேண்டுமென்றுபிரதா
௰௨ ன ஆசாரியர் சனங்களை ஏவினார்கள்.—பிலாத்து
அவர்களைநோக்கி, யூதர்களுடைய இராசாவென்
று நீங்கள்சொல்லுகிறவனை நான் என்னசெய்ய
௰௩ விரும்புகிறீர்களென்று பின்னுங்கேட்க,—அவர்
கள் அவனைச்சிலுவையில்அறையவேண்டுமென்
௰௪ று திரும்பவுஞ் சத்தமிட்டார்கள்.—அப்பொழுது
பிலாத்து, என், என்னகுற்றஞ் செய்தானென்று
அவர்களிடத்திற்கேட்க, அவர்கள் அவனைச்சி
லுவையில் அறையவேண்டுமென்று, அதிகம் அ
திகமாய்ச் சத்தமிட்டார்கள்.

அப்பொழுது பிலாத்துச் சனங்களைச் சமாதா ௰௫
னப்படுத்த விரும்பி, பரப்பாசை அவர்களுக்கு
விடுதலையாக்கி, யேசுவை வாரினால் அடிப்பித்
து,சிலுவையில்அறையப்படும்படி ஒப்பித்தான்.-
பின்பு போர்ச்சேவகர் அவரைப் பிரித்தோரிய ௰௬
மென்னும் மண்டபத்திற்குள்ளே கொண்டுபோ
ய், சேனைத்தளத்தார் யாவரையுங் கூடிவரச்செய்
து,—சிவப்பான அங்கியை அவருக்குத் தரித் ௰௭
து, முள்ளுகளால் ஒரு முடியைப்பின்னி அவ
ருக்குச்சூட்டி,—யூதரின் இராசாவே, நீர் வாழ் ௰௮
கவென்று அவரை வாழ்த்துதல் செய்யத்தொடங்
கி,—ஒரு கோலினால் அவருடைய சிரசில் அடித் ௰௯
து, அவர்மேல் துப்பி, முழங்காற்படியிட்டு அ
வரை வணங்கினார்கள்.—இவ்விதமாய் அவரைப் ௨௰
பரிகாசம் பண்ணினபின்பு, அந்தச் சிவப்பான
அங்கியை அவரிலிருந்து கழற்றி, அவருடைய
வஸ்திரங்களை அவருக்குடுத்தி, அவரைச் சிலு
வையில் அறையும்படிக்குக் கொண்டுபோனார்
கள்.-அலேக்குசந்தர், உருப்பு என்பவர்களுடை ௨௧
யபிதாவாகிய சீமோனென்னுங் குரேனியன் நாட்
டினின்று வருகையில், அவனைவலாற்காரமாய்
அவருடைய சிலுவைமரத்தைச் சுமந்துகொண்
டுபோகும்படிசெய்தார்கள்.—பின்பு அவரைத் ௨௨
தலை ஒட்டிடமென்றருத்தங்கொள்ளுங் கொல்
கொதா ஸ்தானத்திற் கொண்டுபோய்,—கசப் ௨௩
புக்கலந்த திராட்சரசத்தை அவருக்குக் குடிக்கக்
கொடுத்தார்கள்:அவர் அதைக்கொள்ளவில்லை.—
அவர்கள் அவரைச் சிலுவையில் அறைந்தபின் ௨௪
பு அவருடைய வஸ்திரங்களைப்பங்கிட்டு, அவ
னவன் பங்கறிந்தெடுக்கச் சீட்டுப்போட்டார்
கள்.—அவரைச் சிலுவையில் அறையும்பொழுது ௨௫
மூன்றாம் மணி நேரமாயிருந்தது.—அவருடைய ௨௬
மரணத்தின் காரணத்தைக் குறிக்கும்பொருட்டு
"இவன் யூதருடைய இராசா," என்னுமெழுத்
தை அவருடைய சிரசின்மேலிட்டார்கள்.—அவ ௨௭
ருடைய வலதுபுறத்தில் ஒருவனும், இடதுபுறத்
தில் ஒருவனுமாக இரண்டுகள்ளர் அவருடனே
சிலுவையில் அறையப்பட்டார்கள்.—அதினால், ௨௮
"அவர் அக்கிரமக்காரருடனே எண்ணப்பட்
டார்," என்னும் வேதவாக்கியம்நிறைவேறிற்று.-
வழிப்போக்கர் அவரைத் தூஷணித்து, தலையை ௨௯
அசைத்து, ஆ, தேவாலயத்தை இடித்து மூன்று
நாளுக்குள் அதைக் கட்டுகிறவனே,—நீ உன் ௩௰
னைத்தான் இரட்சித்து, சிலுவையிலிருந்து இறங்
கிவாவென்றார்கள்.—பிரதான ஆசாரியரும், வே ௩௧
தபாரகரும் ஒருவரை ஒருவர் நோக்கி, இவன்

(௭௨) மத்.௨௬.௭௫.—(௰௫. அதி. ௧.) சங்.௨.௨. மத்.௨௭.௧. அப்.௩.௰௩. (௨) மத்.௨௭.௰௧. (௪) மத்.௨௭.௰௩. (௫) ஏசா.௫௩.௭. யோவா.௰௯.௯. (௬) மத்.௨௭.௰௫. (௰௧) மத்.௨௭.௨௰. அப்.௩.௰௪. (௰௫) மத்.௨௭.௨௬. (௰௬) மத்.௨௭.௨௭. (௨௧) மத்.௨௭.௩௨. (௨௨) மத்.௨௭.௩௩. (௨௩) மத்.௨௭.௩௪. (௨௪) சங்.௨௨.௰௮. லூக்.௨௩.௩௪. (௨௫) மத்.௨௭.௪௫. (௨௬) மத்.௨௭.௩௭. யோவா.௰௯.௰௯. (௨௭) மத்.௨௭.௩௮. (௨௮) ஏசா.௫௩.௰௨. லூக்.௨௨.௩௭. (௨௯) யோவா.௨.௰௯.

பிறரை இரட்சித்தான்;தன்னையோ இரட்சிக்க
௩௨ வல்லமையில்லை.—நாம் கண்டு விசுவாசிக்கும்
படிக்கு, இஸரவேலின் இராசாவாகிய கிறிஸ்து
இப்பொழுது சிலுவையிலிருந்து இறங்கிவரக்
கடவனென்று சொல்லிப் பரிகாசம்பண்ணினார்
கள். அவரோடே சிலுவையில் அறையப்பட்ட
௩௩ வர்களும் அவரை நிந்தித்தார்கள்.—ஆறும் மணி
நேரந்தொடங்கி, ஒன்பதாம் மணிநேரம்வரைக்
கும், அத்தேசத்திலெங்கும் அந்தகாரம் உண்டா
௩௪ யிருந்தது.–ஒன்பதாம் மணிநேரத்தில் யேசு "எ
லி,எலி, லாமாசபக்தானி," என்று உரத்தசத்தத்
தோடே கூப்பிட்டார். அதற்கு, என் தேவ
னே, என் தேவனே, நீர் என் என்னைக்கை
௩௫ விட்டீரென்றருத்தமாம்.—சமீபமாய் நின்றவர்க
ளிற் சிலர் அதைக்கேட்டு, இவன் இலீசாவைக்
௩௬ கூப்பிடுகிறான், கேளுங்களென்றார்கள்.—அப்
பொழுது ஒருவன் ஓடி, பொறுங்கள், இவனை இ
றக்கும்படிக்குஇலீசாவருவாரோ,அதைப்பார்ப்
போமென்றுசொல்லி,கடற்காளானைக்காடியினா
ல்நிரப்பி, அதைஒருகம்பிற்பூட்டி,குடிக்கும்படி
௩௭ அவருக்குக் கொடுத்தான்.–பின்பு யேசு உரத்த
௩௮ சத்தமிட்டு, ஆவியை விட்டுவிட்டார்.–அப்பொ
ழுதுதேவாலயத்திலுள்ளதிரைச்சீலை,மேலேதொ
டங்கி, கீழேவரைக்கும் இரண்டாய்க்கிழிந்தது.
௩௯ அவருக்கெதிர்ப்புறத்தில் நின்ற நூறுசேவக
ருக்கதிபதி அவர் அவ்விதமாய்ச்சத்தமிட்டுஆவி
யைவிட்டதைக்கண்டு, மெய்யாக இவர் தேவ
௪௰ னுடைய குமாரனென்றான்.-அந்தச்சமயத்தில்
ஸ்திரிகளுந் தூரத்தினின்று பார்த்தார்கள்: கலி
லேயா நாட்டில் அவரைப் பின்சென்று, அவ
ரைச் சேவித்துவந்த மக்தலீனீ மரியாளும், சின்
னயாக்கோபுக்கும் யோசேக்கும் மாதாவாகிய
௪௧ மரியாளும், சலோமேயும்,—அவருடனேயெரு
ஷலேமுக்குவந்த மற்ற அநேக ஸ்திரிகளும் அ
வர்களுடனே இருந்தார்கள்.
௪௨ ஓய்வுநாளுக்குமுந்தின நாள் ஆயத்தநாளான
படியினால் சாயங்காலமானபொழுது, அரிமத்தி
௪௩ யா ஊரானும்,—கனம்பொருந்திய மந்திரியும்,
தேவனுடைய இராச்சியம் வருவதை எதிர்
பார்க்கிறவனுமாகிய யோசேப்புத்திடங்கொண்
டு, பிலாத்தினிடத்திற்போய், யேசுவின் சரீ
௪௪ ரத்தைக் கேட்டான்.—அவர் இப்படிச் சீக்கிர
மாய் மரணமடைந்ததைக்குறித்துப்பிலாத்து ஆச்
சரியப்பட்டு,நூறுசேவகருக்கதிபதியைஅழைப்
பித்து, அவர்இறந்துபோய் எவ்வளவுநேரமாயிற்
௪௫ றென்று விசாரித்து,—நூறு சேவகருக்கதிபதியி
னால் அறிந்தபின்பு, அந்தச் சரீரத்தை யோசேப்
௪௬ புக்கு ஒப்பித்தான்.—அவன் போய்மெல்லிய
புடவை எடுத்துவந்து, சரீரத்தை இறக்கிச் சண
ற்புடவையிலே சுற்றி, கன்மலையிலேவெட்டப்
பட்ட பிரேதவறையில் அதைவைத்து, பிரேத
வறையின்வாசலில் ஒரு கல்லைப் புரட்டிவைத்
தான்.—அவர் வைக்கப்பட்ட இடத்தை மக்த ௪௭
லீனீ மரியாளும் யோசேயின் மாதாவாகிய
மரியாளுங்கண்டார்கள்.

## ௰௬. அதிகாரம்.

௧. தேவதூதர் கிறிஸ்து எழுந்தசெய்தியைத் தெரிவித்தல்: ௯. மக்தலீனீ மரியாளுக்குக்கிறிஸ்துத் தரிசனமாதல்: ௰௨. இரண்டு சீஷருக்குத் தரிசனமாதல்: ௰௪. பதினொருவருக்குந் தரிசனமாதல், அவர்களுக்குக் கட்டளையிடல்: ௰௯. பரமண்டலத்துக்கெழுந்தருளல்.

ஓய்வுநாள்சென்றபின்பு மக்தலீனீமரியாளும், ௧
யாக்கோபின் மாதாவாகிய மரியாளும், ச
லோமேயும் அவருக்குப் பூசும்படிக்குச் சுகந்த
பொருள்களைக்கிரயத்துக்கு வாங்கிக்கொண்டு,–
வாரத்தின் முதலாநாள் அதிகாலையில், சூரியோ ௨
தயசமயத்திலேபிரேதவறையைச்சேர்ந்தார்கள்.-
அவர்கள் ஒருவரை ஒருவர்நோக்கி, அந்தப்பிரே ௩
தவறையின் வாசலிலேகிடக்கிறகல்லை நமக்காக
யாவன்புரட்டுவானென்றுசொல்லி,-பின்பு கண் ௪
ஏறிட்டுப்பார்த்தபொழுது, அந்தக்கல்லு மிகவும்
பெரிதாயிருந்தும்புரட்டப்பட்டிருந்ததைக்கண்
டார்கள்.–அவர்கள் பிரேதவறையிற் பிரவேசித் ௫
து, வெண்மையான அங்கியைத்தரித்து, வலப்
பக்கத்தில் உட்காந்திருந்த ஒருவாலிபனைக்கண்
டுபயந்தார்கள்.–அவன் அவர்களைநோக்கி, பயப் ௬
படாதிருங்கள்:சிலுவையில்அறையப்பட்டநாச
ரேத்தூராகிய யேசுவை நீங்கள் தேடுகிறீர்க
ள்: அவர் எழுந்தார்; அவரிங்கேயில்லை: அவரை
அவர்கள் வைத்த இடத்தைப்பாருங்கள்.—நீங் ௭
கள்போங்கள், அவர் உங்களுக்குச்சொல்லியபிர
காரம் உங்களுக்கு முன்பாகக் கலிலேயாவுக்குப்
போகிறார்: அங்கே அவரைக்காண்பீர்களென்று
அவருடையசீஷருக்கும்,பேதுருவுக்குஞ்சொல்
லுங்களென்றான்.—அவர்கள் நடுங்கிப் பிரமித் ௮
து, விரைந்து புறப்பட்டுப் பிரேதவறையிலிருந்
து ஓடிப்போனார்கள்; அவர்கள் பயப்பட்டபடி
யினால், ஒருவருக்கும் ஒன்றுஞ்சொல்லவில்லை.
அவர் எழுந்தபின் வாரத்தின்முதலாம்நாளில், ௯
எழு பிசாசுகளிலிருந்து அவரால் விடுதலையாக்
கப்பட்ட மக்தலீனீ மரியாளுக்குமுதல் தரிசனை
யானார்.—அவள் புறப்பட்டு முன்பு அவருடன் ௰
இருந்தவர்களிடத்தில்போய், அவர்கள் துக்கங்
கொண்டாடி அழுதுகொண்டிருக்கையில், செய்
தியைத்தெரிவித்தாள்.—அவர் உயிரடைந்து, அ ௰௧
வளாலே காணப்பட்டாரென்று அவர்கள் கேள்
விப்பட்டும் அதை நம்பவில்லை.
அதன்பின்பு அவர்களில் இருவர் நாட்டுக் ௰௨
குப்புறப்பட்டுப்போகையில், அவர்வேற்றுருவ

(௩௨) மத்.௨௭.௪௪. (௩௩) மத்.௨௭.௪௫. (௩௪) சங்.௨௨.௧. மத்.௨௭.௪௬. (௩௬) மத்.௨௭.௪௮. சங்.௬௯.௨௧.(௩௭)மத். ௨௭.௫௰. (௩௮) மத்.௨௭.௫௧.(௩௯)மத்.௨௭.௫௪.(௪௰)மத்.௨௭.௫௫. சங்.௩௮.௰௧. லூக்.௮.௨,௩. (௪௨) மத்.௨௭.௫௭. (௪௩) லூக்.௨.௨௫,௩௮. (௪௬) மத்.௨௭.௫௯,௬௰.—(௰௬. அதி. ௧.) மத்.௨௮.௧. லூக்.௨௩.௫௬. (௨) லூக்.௨௪.௧.(௫) லூக்.௨௪.௩. (௬) மத்.௨௮.௫,௬,௭. (௭) மத்.௨௬.௩௨. (௮) மத்.௨௮.௮. (௯) யோவா.௨௰.௰௪. (௰) லூக்.௮.௨. லூக். ௨௪.௰. (௰௧) லூக்.௨௪.௰௧. (௰௨) லூக்.௨௪.௰௩.

௰௩ மாய் அவர்களுக்குந்தரிசனையானார்.-அவர்களும்
போய் அதை மற்றவர்களுக்கு அறிவித்தார்கள்:
இவர்களையும் அவர்கள் நம்பவில்லை.
௰௪ பின்பு அவர்,போசனபந்தியிலிருந்த பதினொ
ருவருக்குந்தரிசனையாகி, தாம் உயிர்த்தெழுந்த
பின்பு தம்மைக்கண்டவர்களை அவர்கள் நம்பாம
லிருந்தபடியினால் அவர்களுடைய அவிசுவாசத்
தினிமித்தமும், இருதயகடினத்தினிமித்தமும்அ
௰௫ வர்களைக்கடிந்துகொண்டார்.-பின்பு அவர்அவர்
களைநோக்கி, நீங்கள் உலகத்திலெங்கும்போய்,
சிருஷ்டியானயாவருக்குஞ்சுவிசேஷத்தைப்பிர
௰௬ சங்கம்பண்ணுங்கள்.-விசுவாசிக்கிறவனாகி, ஞா
னஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்;
௰௭ விசுவாசியாதவனோ தண்டிக்கப்படுவான்.—வி
சுவாசமுள்ளவர்களால் இந்த அடையாளங்கள்
நடக்கும்; என் நாமத்தினாலே பிசாசுகளைத்துரத்
துவார்கள்; அந்நியபாஷைகளைப்பேசுவார்கள்.-
சருப்பங்களையும் எடுப்பார்கள்; பிராணனை நா ௰௮
சப்படுத்தும் பானத்தைக் குடித்தாலும் நாசப்
படார்கள்; இவர்கள் பிணியாளிகள்மேல் கை
களைவைக்க அவர்கள் சொஸ்தமடைவார்களெ
ன்றார்.
இவ்விதமாய்க் கர்த்தர் அவர்களுடனேபே ௰௯
சின பின்பு, அவர் பரமண்டலத்திற்கேற்றப்பட்
டு, தேவனுடைய வலதுபாரிசத்திலே வீற்றி
ருந்தார்.—அவர்கள்புறப்பட்டு எங்குஞ் சுவிசே ௨௰
ஷத்தைப் பிரசங்கம்பண்ணிவந்தார்கள், கர்த்
தர் அவர்களுடனேகூட கிரியைகளைச்செய்
து, தாம்தோற்றுவித்த அடையாளங்களினாலே
வாக்கைத் திருஷ்டாந்தப்படுத்தினார். ஆமென்.

---

(௰௪) லூக்.௨௪.௩௬. ௧.கொரி.௰௫.௫. (௰௫) மத்.௨௮.௰௯. கொலோ.௧.௨௩. (௰௬) யோவா.௩.௰௮,௩௬. அப்.௰௬.௩௰,௩௧,௩௨. ரோ.௰.௯. ௧.பேது௩.௨௧. யோவா.௰௨.௪௮. (௰௭) லூக்.௰.௰௭. அப்.௫.௰௬. அப்.௰௯.௰௨. அப்.௨௪. ௧.கொரி.௰௨.௰,௨௮. (௰௮) லூக்.௰.௰௯. அப்.௨௮.௫. அப்.௫.௰௫,௰௬. யாக்.௫.௰௪,௰௫. (௰௯) அப்.௧,௨,௩. லூக். ௨௪.௫௧. சங்.௱௰.௧. அப்.௭.௫௫. (௨௰) அப்.௫.௰௨. ௧.கொரி.௨.௪,௫. எபி.௨.௪.

# லூக்கா எழுதின சுவிசேஷம்.

## க. அதிகாரம்.

க. முகவுரை: ரு. இலிசபேத் கருப்பந்தரித்தல்: உசு. மரியாள் கருப்பந்தரித்தல்: ஙகூ. அவ்விருவருஞ் சந்தித்தல்: மரியாள் பாட்டுப்பாடல்: ருஎ. யோவானுடைய சென்மவிவரம்: சுஎ. அவன் பிதாவாகிய சகரியாதீர்க்கதரிசனஞ்சொல்லல்: அய. யோவான் விருத்தியடைதல்.

மகா மேன்மைபொருந்திய தேயோப்பிலுவே,
ஆதிமுதல் கண்ணாற்கண்டும், வாக்கைப்போதித்
துமிருந்தவர்கள் எங்களிடத்தில் ஒப்பித்த பிரகா
உ ரம்,—எங்களுக்குள்ளே நிச்சயித்துக்கொண்ட
விசேஷங்களின் விருத்தாந்தங்களை அநேகர் வி
ங வரிக்கத்துணிந்தபடியால்,—நானும் ஆதிமுதல்
எல்லாவற்றையும் நன்றாய் ஆராய்ந்துபார்த்து, உ
மக்கு உபதேசிக்கப்பட்டபொருள்களின் நிச்ச
ச யத்தை நீர் அறியும்படிக்கு,—அவைகளை ஒழுங்
காய் எழுதுவது எனக்கு நன்றாய்த்தோன்றிற்று.
ரு யூதேயாதேசத்தின் இராசாவாகிய ஏரோதின்
காலத்தில், அபியாவென்னும் ஆசாரிய வகுப்
பில், சகரியாவென்னும் ஆசாரியன் ஒருவன்
இருந்தான்: ஆரோனின் வமிசத்திற்பிறந்த இலி
சபேத் என்னப்பட்டவள் அவனுக்கு மனைவி.—
சு இவ்விருவருந் தேவனுக்கு முன் நீதியுள்ள
வர்களாய், கர்த்தர் இட்டசகலகட்டளைகளின்
படியும், நியமங்களின்படியுங் குற்றமில்லாமல்
எ நடந்துவந்தார்கள்.—இலிசபேத் மலடியாயிருந்
தபடியினால், அவர்களுக்குப் பிள்ளையில்லை; இ
அ ருவரும் முதிர்ந்தவயதுள்ளவர்களானார்கள்.—அ
வன் தன் ஆசாரியவகுப்பின்முறைப்படி தேவ
னுடைய சமூகத்தில்ஆசாரியத்தொழில்செய்து
கூ வருங்காலத்தில்,—ஆசாரியருடைய வழக்கத்தின்
படி கர்த்தருடைய பரிசுத்தஸ்தானத்திற் பிர
வேசித்து, தூபங்காட்டுகிறதற்குச் சீட்டைப்பெ
ய ற்றான்.-தூபங்காட்டுகிறவேளையிலே, கூட்டமா
ய்ச்சனங்களெல்லாரும் புறம்பேயிருந்து பிரார்த்
யக தனைபண்ணினார்கள்.—அப்பொழுது கர்த்தரு
டைய தூதன் ஒருவன் தூபவேதிகையின்வலது
பாரிசத்தில் நிற்கிறவனாய், அவனுக்குத்தரிசனை
யஉ யானான்.—சகரியா அவனைக்கண்டுகலங்கி, பய
யங மடைந்தான்.—தூதன் அவனைநோக்கி, சகரியா
வே, நீ பயப்படவேண்டாம்: உன்விண்ணப்பம்
அங்கிகரிக்கப்பட்டது; உன்மனைவியாகிய இலி
சபேத் உனக்கு ஒருபுத்திரனைப்பெறுவாள், அவ
யச னுக்கு யோவானென்று பேரிடுவாயாக.—அதி
னால் உனக்குச்சந்தோஷமுங் களிப்புமுண்டா
கும்; அவன் சென்மத்தினிமித்தம் அநேகர் சந்
தோஷப்படுவார்கள்.—அவன் கர்த்தருடை யரு
ய பார்வைக்குப்பெரியவனாவான், திராட்சரசத்
தையும் மதுவையுங் குடியான்; அவன் தன் மா
தாவின் கருப்பத்தில் தோன்றினதுமுதல், பரி
சுத்தஆவியினாலே பூரணப்படுவான்.—அவன், யசு
இஸ்ரவேற்சந்ததியாரில் அநேகரை அவர்களு
டைய தேவனாகிய கர்த்தாவிடத்திற்குத்
திருப்புவான்.—பிதாக்களுடைய இருதயங்களைப் யஎ
பிள்ளைகளிடததிற்கும், கட்டளைமீறுகிறவர்களை
நீதிமான்களுடையஞானத்திற்குந்திருப்பி, கர்த்
தருக்கு அமையத்தக்க ஒரு சாதியாரைஆயத்தப்
படுத்தும்படி அவன் இலீசாவின்ஆவியும் பலமு
முடையவனாய், அவருக்கு முன்னே செல்லுவா
னென்றான்.—அப்பொழுது சகரியா, நான் எதி யஅ
னால் இதை அறியலாம்; நான்விருத்தன், என்ம
னைவியும் முதிர்வயதுள்ளவளென்று தூதனிடத்
திற்சொல்ல,-தூதன் அவனுக்கு உத்தரமாக,நான் யகூ
தேவனுடைய சந்நிதானத்தில் நிற்கிற காபிரி
யேல்; உன்னுடனேசம்பாஷித்து,உனக்குச்சுவி
சேஷமாக இவைகளைத் தெரிவிக்கும்படி அனுப்
பப்பட்டவனாய்வந்தேன்.-கேள், என்வாக்கியங் உய
கள் தகுதியான காலத்திலே நிறைவேறும்; என்
வாக்கியங்களை நீ விசுவாசியாதபடியினால், இந்
தக்காரியங்கள் நிறைவேறும் நாள்வரைக்கும் நீ
பேசத்திராணியில்லாமல் ஊமையனாய் இருப்பா
யென்றான்.-சகரியாவைக் காத்திருந்த சனங்கள், உக
அவன் தேவாலயத்திலே தாமதித்ததினால் ஆச்சரி
யப்பட்டார்கள்.—அவன் வெளியே வந்தபொ உஉ
ழுது, அவர்களோடே பேசத்திராணியில்லாமல்
அவர்களுக்குப்பயில்காட்டி, ஊமையனாயிருந்
தான்: அதினால் தேவாலயத்தில் ஒரு தரிசனை
யைக் கண்டானென்றறிந்தார்கள்.—அவன் ஆ உங
ராதனைசெய்யும்நாட்கள் கழிந்தபின் தன் வீட்
டுக்குப்போனான்.—அந்நாட்களின்பின் அவனு உச
டைய மனைவியாகிய இலிசபேத் கருப்பவதி
யாகி,—சனங்களுக்குள் எனக்குண்டான அவ உரு
மானத்தை நீக்கும்படி கர்த்தர் இந்நாட்களில்
என்னைக்கடாட்சித்து, இப்படி எனக்கு அருளிச்
செய்தாரென்று சொல்லி, ஐந்துமாதம் வரைக்
கும் ஒளித்துக்கொண்டிருந்தாள்.—ஆறாம்மாதத் உசு
திலே கலிலேயாவிலுள்ள நாசரேத்தென்னுமூ
ரில்—தாவீதின் வமிசத்தானாகிய யோசேப்பென் உஎ

(க.அதி.க.) எபி.உ.ங. க.பேதுரு.ரு.க. உ.பேதுரு.க.யசு. க.யோவா.க.க.(ங)அப்.யரு.யக,உசு,உக. க.கொரி.எ.சய. அப்.யக.ச.அப்.க.க.(ச)யோவா.உய.ஙக. (ரு)மத்.உ.க.(சு)ஆதி.எ.க. க.இரா.கூ.ச. யோபு.க.க. அப்.உங.க. பிலி.ங.சு.(கூ)யாத்.ஙய.எ,அ. க.சாமு.உ.உஅ.(ய)லேவி.யசு.யஎ. வெளி.அ.ங,ச. (யக) யாத்.ஙய.க.(யஉ)நியா.சு.உஉ. தானி.ய.அ. அப்.ய.ச. வெளி.க.யஎ. (யரு) எண்.சு.ங. நியா.யங.ச. எரே.க.ச. கலா.க.யரு.(யசு)மல்.ச.ரு,சு. (யஎ) மல்.ச.ரு. (யஅ) ஆதி.யஎ.யஎ. (யகூ) தானி.அ.யசு. எபி.க.யச. (உய) எசேக்.ங.உசு.(உரு)ஆதி.ஙய.உங. ஏசா.ச.க. (உஎ) மத்.க.யஅ.

னும் நாமமுள்ள புருஷனுக்கு நியமிக்கப்பட்
டிருந்த கன்னியாகிய மரியாளிடத்தில், காபிரி
யேலென்னுந் தூதன் தேவனால் அனுப்பப்பட்
௨௮ டுவந்து,—பரிபூரண கிருபை பெற்றவளே, நீ
வாழ்க, கர்த்தர் உன்னோடிருக்கிறார்: நீ ஸ்தி
ரீகளுக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவளென்றான்.-
௨௯ அவள் அவனைக்கண்டு, அவனுடைய வாக்கி
னால் கலங்கி, இந்தவாழ்த்துதல் எப்படிப்பட்ட
௩௰ தோவென்று சிந்தித்தாள்.—தூதன் அவளைநோக்
கி, மரியாளே, பயப்படாதே: நீ தேவனிடத்
௩௧ தில் கிருபைபெற்றாய்.—பார், நீ கருப்பந்தரித்
து ஒரு புத்திரனைப் பிரசவிப்பாய், அவருக்கு
௩௨ யேசுவென்று பெயரிடுவாயாக.—அவர் பெ
ரியவராவார், சருவத்திற்குமேலானவருடையகு
மாரனென்னப்படுவார்: தேவனாகிய கர்த்
தர், அவருக்கு அவருடைய பிதாவாகிய தாவீ
௩௩ தின் சிங்காசனத்தைக் கொடுப்பார்.-அவர் யாக்
கோபின் வமிசத்தைச்சதாகாலங்களிலும் ஆண்
டுகொள்வார்; அவருடைய ஆளுகைக்கு முடி
௩௪ வில்லையென்றான்.—அப்பொழுது மரியாள் தூ
தனைநோக்கி, இதெப்படியாகும், ஒருபுருஷனை
௩௫ அறியேனென்றுசொல்ல,—தூதன் அவளுக்குத்
தரமாக, பரிசுத்தஆவி உன்மேல்வரும், சருவத்
திற்குமேலானவருடைய பலம் உன்மேல் நிழ
லிடும்: ஆதலால் உன்னிடத்தில் தோன்றும் பரி
சுத்தமானது தேவனுடைய குமாரனென்னப்
௩௬ படும்.—மேலும் பார், உன் சுற்றத்தாளாகிய இலி
சபேத்துந் தன்முதிர்வயதில் ஒரு புத்திரனைக்க
ருப்பந்தரித்தாள்:மலடியென்னப்படும் அவளுக்
௩௭ கு இது ஆறுமாதம்.-தேவனால் செய்யக்கூடாத
௩௮ தொன்றுமில்லையென்றான்.—மரியாள், பாரும்,
நான் கர்த்தாவுக்கு அடிமை; உமது வாக்
கின்படி எனக்காகக்கடவதென்றாள். பின்பு தூ
௩௯ தன் அவளைவிட்டுப்போனான்.-அந்நாட்களில்ம
ரியாள் எழுந்து, மலைநாட்டிலே யூதாவிலுள்ள ஒ
௪௰ ரு பட்டணத்திற்கு விரைந்துபோய்,—சகரியாவி
ன்வீட்டிற் பிரவேசித்து,இலிசபேத்துக்கு வாழ்த்
௪௧ துதல் சொன்னாள்.—இலிசபேத் மரியாளுடைய
வாழ்த்துதலைக்கேட்டமாத்திரத்தில், அவளுடை
ய கருப்பத்திலுள்ள சிசு துள்ளிற்று; இலிசபேத்
௪௨ பரிசுத்த ஆவியினாலே பூரணப்பட்டு,—உரத்த
சத்தமிட்டு,ஸ்திரிகளுக்குள்ளே நீ ஆசீர்வதிக்கப்
பட்டவள், உன் கருப்பத்தின்கனியும் ஆசீர்வ
௪௩ திக்கப்பட்டது.—என் கர்த்தருடைய தாயார்
என்னிடத்தில் வருவது எனக்கெதினாலே கி
௪௪ டைத்தது.—நீ வாழ்த்திய சத்தம் என்செவிக்கே
ற, என் கருப்பத்திலுள்ள சிசு களிப்புடன் துள்

ளிற்று.—விசுவாசித்தவளே, வாழ்வுடையவள்: ௪௫
கர்த்தாவினால் அவளுக்குத்தெரிவிக்கப்பட்
டவைகள் நிறைவேறுமென்றாள்.—அப்பொ ௪௬
ழுது மரியாள், என் ஆத்துமம் கர்த்தாவைப்
புகழுகின்றது,—என் ஆவி என் இரட்சகராகிய ௪௭
தேவனில் களிகூருகின்றது.—அவர் தம்மு ௪௮
டைய அடிமையின் தாழ்மையைப்பார்த்தருளி
னார்:இதுமுதல் சகல சந்ததியாரும் என்னை வாழ்
வுடையவளென்பார்கள்.—பரிசுத்த நாமம்பொ ௪௯
ருந்திய வல்லமையுள்ளவர் எனக்கு மகிமையா
னவைகளைச் செய்தார்.—அவருடைய இரக்கம், ௫௰
தலைமுறை தலைமுறையாக அவருக்குப் பயப்ப
டுகிறவர்கள்மேல் நிற்கின்றது.—அவர் தமது ௫௧
புயத்தினாற் பலத்தவைகளைச்செய்து, இறுமாப்பு
டையவர்களை அவர்களுடைய சிந்தனைகளிலே
சிதறஅடித்து,—பலவான்களைச் சிங்காசனங்களி ௫௨
லிருந்து தள்ளி, தாழ்ந்தவர்களை உயர்த்தினார்.—
பசியுள்ளவர்களை நன்மைகளினாலே பூரணப்ப ௫௩
டுத்தி, செல்வரை வெறுமையாய் அனுப்பிவிட்
டார்.—அவர் நம்முடையபிதாக்களுக்கு வாக்குத் ௫௪
தத்தம் பண்ணினபடி, ஆபிரகாமுக்கும் அவன்
சந்ததிக்குஞ்சதாகாலங்களிலும் இரக்கஞ்செய்ய
நினைந்து,—தமதடியானாகிய இஸரவேலைத்தாங் ௫௫
கினாரென்றாள்.—பின்பு மரியாள் ஏறக்குறைய ௫௬
மூன்றுமாதம் அவளோடிருந்து, தன்வீட்டுக்குத்
திரும்பினாள்.—இலிசபேத்துக்குப் பிரசவகாலம் ௫௭
வந்து, அவள் ஒருபுத்திரனைப்பிரசவித்தாள்.—
கர்த்தர் அவளுக்குப் பூரணகிருபைசெய்தா ௫௮
ரென்று அவளுடைய அயலாரும் இனத்தாருங்
கேள்விப்பட்டு, அவளுடனே சந்தோஷப்பட்
டார்கள்.—எட்டாந்தினத்தில் அவர்கள் பிள்ளைக் ௫௯
கு விருத்தசேதனம் பண்ணும்படிவந்து, அதின்
பிதாவினுடைய நாமமாகிய சகரியாவென்னும்
நாமத்தை அதற்குத்தரித்தார்கள்.—அப்பொழுது ௬௰
அதின்தாய் அப்படியல்ல,அதற்குயோவானென்
றுபெயரிடவேண்டுமென்றாள்.—அவர்கள் அவ ௬௧
ளைநோக்கி, உன் பந்துசனங்களுக்குள்ளே இந்
தப்பெயரிடப்பட்டவர் ஒருவருமில்லையென்று
சொல்லி,—அதினுடைய பிதாவைநோக்கி, இ ௬௨
தற்கென்னபெயரிடவிரும்புகிறீரென்றுகுறிப்பி
னாலேகேட்க,—அவன் எழுதுகிறபலகையைக் ௬௩
கேட்டுவாங்கி, இதின்பேர் யோவானென்றெழு
தினான். அவர்களெல்லாரும் ஆச்சரியப்பட்டார்
கள்.—அந்த நிமிஷத்தில் அவனுடைய வாய்தி ௬௪
றந்து, நாவுதிருந்த, அவன் வசனித்துத் தே
வனைத்துதித்தான்.—அவர்களைச் சுற்றிவாசமா ௬௫
யிருந்த யாவருக்கும் பயம்வந்தது.—யூதேயாவின் ௬௬

---

(௨௮) தானி.௯.௨௩. நியா.௬.௰௨. (௩௧) ஏசா.௭.௰௪. (௩௨) ௨.சாமு.௭.௰,௰௨. ஏசா.௯.௬,௭. எரே.௨௩.௫. வெளி.௩.௭. (௩௩) தானி.௭.௰௪,௨௭. ஒப.௨௧. மீகா.௪.௧. யோவா.௰௨.௩௪. எபி.௧.௮. (௩௫) மத்.௧.௨௰. மத்.௰௪.௩௩. மாற்.௧.௧. யோவா.௧.௩௪. அப்.௮.௩௭. ரோ.௧.௪. (௩௭) ஆதி.௰௮.௰௪. எரே.௩௨.௰௭. சக.௮.௬. மத்.௰௯.௨௬. மாற்.௰.௨௭. ரோ.௪.௨௧. (௩௯) யோசு.௨௧.௯,௰,௰௧. (௪௨) நியா.௫.௨௪. (௪௬) ௧.சாமு.௨.௧. சங்.௩௪.௨,௩. அபகூ.௩.௰௮. (௪௮) ௧.சாமு.௧.௰௧. சங்.௱௩௮.௬. மல்.௩.௰௨. (௪௯) சங்.௭௧.௰௯. (௫௰) ஆதி.௰௭.௭. யாத்.௨௰.௬. சங்.௱௩.௰௭,௰௮. (௫௧) சங்.௯௮.௧. ஏசா.௪௰.௰. சங்.௩௩.௰. ௧.பேதுரு.௫.௫. (௫௨) யோபு.௫.௰௧. சங்.௱௰௩.௬. (௫௩) ௧.சாமு.௨.௫. சங்.௩௪.௰. (௫௪) சங்.௯௮.௩. எரே.௩௧.௩,௨௰. ஆதி.௰௭.௰௯. சங்.௱௩௨.௰௧. ரோ.௰௧.௨௮. கலா.௩.௰௬. (௫௯) ஆதி.௰௭.௰௨. லேவி.௰௨.௩. (௬௬) ஆதி.௩௯.௨. சங்.௮௰.௰௭. அப்.௰௧.௨௧.

மலைநாடெங்கும் இந்தவிசேஷங்கள் எல்லாஞ்
சொல்லிக்கொள்ளப்பட்டன: கேள்விப்பட்ட
வர்களெல்லாரும் இவைகளைச் சிந்தையில்
வைத்துக்கொண்டு, இந்தக்குழந்தை எப்படிப்
பட்டதாயிருக்குமோவென்றார்கள்; கர்த்தரு
௬௭ டைய கை அதினோடிருந்தது.—அதினுடைய
பிதாவாகிய சகரியா பரிசுத்த ஆவியினாலே பூர
௬௮ ணைப்பட்டு, தீர்க்கதரிசனமாய்,—இஸ்ரவேலின்
தேவனாகிய கர்த்தருக்கு ஸ்தோத்திரம்;—
௬௯ உலகத்தின் தோற்றமுதல், தம்முடைய பரிசுத்த
தீர்க்கதரிசிகளைக்கொண்டுசொல்லியபிரகாரம்,—
௭௰ அவர் தம்முடையசனங்களைக்கடாட்சித்துமீட்
டுக்கொண்டார், நம்முடைய சத்துருக்களினின்
றும், நம்மைப்பகைக்கிற யாவருடைய கைகளி
௭௧ னின்றும் நம்மைவிடுவிக்கும்பொருட்டு,—அவர்
தமதடியானாகிய தாவீதின் வமிசத்தில் இரட்சிப்
பின்கொம்பை நமக்குத்தோன்றப்பண்ணினார்.-
௭௨ நாம் நம்முடைய சத்துருக்களின் கைகளுக்குத்
௭௩ தப்புவிக்கப்பட்டவர்களாய்,—பயமில்லாமல்,
நம்முடைய வாழ்நாளெல்லாந் தேவபத்தியும் நீ
தியுமாய் அவருக்குமுன் தொண்டுசெய்வதற்கு
௭௪ நமக்கு அனுக்கிரகஞ்செய்து,—தாம் நம்முடை
ய பிதாவாகிய ஆபிரகாமுக்கு இட்டஆணையா
கிய தமது பரிசுத்த உடன்படிக்கையை நினைந்
௭௫ து,-நம்முடையபிதாக்கள்மேல் தயைசெய்தார்.-
௭௬ பாலகனே, நீ, இருளிலும் மரணநிழலிலும் உட்
காந்திருக்கிறவர்களுக்கு ஒளி பிரகாசிப்பிக்கும்
௭௭ படியாகவும்,—நம்முடைய நடைகளைச் சமாதா
னத்தின்வழியில் நடத்தும்படியாகவும், உன்ன
தத்தினின்று நமக்குச் சூரியோதயந் தோன்றப்
பண்ணின நம்முடைய தேவனுடைய மகா
௭௮ இரக்கத்தினால்,—பாவமன்னிப்பைப்பற்றும் அறி
வை அவருடைய சனங்களுக்குத் தெரியப்ப
டுத்தி, கர்த்தாவின் வழிகளை ஆயத்தப்படுத்து
௭௯ கிறதற்கு அவருக்கு முன்னே நடப்பாய்.—ஆகை
யால் நீ சருவத்திற்குமேலானவருடைய தீர்க்க
௮௰ தரிசியென்னப்படுவாயென்றான்.—பின்பு பால
கன் வளர்ந்து, ஆவியிலே பலங்கொண்டு, இஸ்ர
வேலருக்குத் தான் காணப்படும்நாள்வரைக்கும்
வனத்திலே வாசம்பண்ணினான்.

## ௨. அதிகாரம்.

*௧. யோசேப்பு பேத்லகேமுக்குப்போயிருக்கையில் கிறிஸ்து சனனமாதல்: ௮. அவருடைய சனனந் தூதரால் மேய்ப்பருக்குத் தெரிவிக்கப்படல்: ௰௫. மேய்ப்பர் மற்றச்சனங்களுக்கு அந்தச்செய்தியைத் தெரிவித்தல்: ௨௧. கிறிஸ்து விருத்தசேதனம்பெறல்: ௨௨. மரியாள் தன்னைச் சுசிப்படுத்தல்: ௨௫. ஷிமியோன்தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௩௬. அன்னாள் கிறிஸ்துவைக்குறித்துத் தேவனைச்சிந்தித்தல்: ௩௯. யேசு விருத்தியடைதல்: ௪௧. சிறுபிராயத்தில்சாஸ்திரிகளோடே சம்பாஷித்தல்.*

அக்காலத்தில் அகுஸ்துஇராசா, தேசத்தின்எல் ௧
லாக்குடிகளுடைய பேரும் எழுதப்படவேண்டு
மென்றுகட்டளையிட்டான்.-குரீனியென்பவன் ௨
சீரியதேசத்திற்கு அதிபதியானபொழுது, இந்
தக்குடிமதிப்புமுதலுண்டாயிற்று.—எல்லாரும் எ ௩
ழுதப்படும்படிக்குத்தங்கள்தங்கள்ஊர்களுக்குப்
போனார்கள்.—அப்பொழுது யோசேப்பும், தாவீ ௪
தின் குலத்தானும் வமிசத்தானுமாயிருந்தபடியி
னாலே, தனக்குநியமிக்கப்பட்ட கருப்பவதியா
கிய மனைவி மரியாளுடனே எழுதப்படும்படிக்
குக் கலிலேயாநாட்டிலுள்ள நாசரேத்தூரைவிட்
டு,—யூதேயாநாட்டிலுள்ள பேத்லகேமென்னுந் ௫
தாவீதின் ஊருக்குப்போனான்.—அவ்விடத்தில் ௬
அவர்கள் இருக்கிறகாலத்தில், அவள்பிரசவகா
லம்பூரணமாயிற்று.—அவள் தன் முதற்பேறான ௭
புத்திரனைப்பிரசவித்து, அவரைப் புடவைகளிற்
சுற்றி, சத்திரத்தில் அவர்களுக்கிடமில்லாதபடி
யினால்அவரைப்பசுத்தொட்டியிலேவைத்தாள்.—
அப்பொழுது அந்தத்திசையில் இராத்திரியில்தங் ௮
கள்ஆட்டுக்கூட்டத்தைக்காத்துக்கொண்டுமேய்
ப்பர் வெளியில் தங்கியிருந்தார்கள்.—பாருங் ௯
கள், கர்த்தருடைய தூதன் அவர்களிடத்தில்
வந்துநிற்க, கர்த்தருடைய மகிமை அவர்க
ளைச்சுற்றிப்பிரகாசித்தது: அவர்கள்மிகவும்பயந்
தார்கள்.—அந்தத்தூதன் அவர்களைநோக்கி,பயப் ௰
படாதிருங்கள்: எல்லாச்சனங்களுக்குமுண்டா
கும் மிகுந்த ஆனந்தத்தை உங்களுக்குச்சுவிசே
ஷமாகஅறிவிக்கிறேன்.-இன்றைத்தினங் கர்த்த ௰௧
ராகியகிறிஸ்தென்னும் இரட்சகர்தாவீதின்
ஊரில் உங்களுக்குப் பிறந்தார்.—பிள்ளையைப் ௰௨
புடவைகளிற்சுற்றிப் பசுத்தொட்டியிலே வைத்
திருப்பதைக் காண்பீர்கள்; இதுவே உங்களுக்
கு அடையாளமென்றான்.-சடிதியில், பரமசே ௰௩
னைகள்திரளாய், அந்தத் தூதனுடனேசேர்ந்து,—
உன்னதங்களிலுள்ள தேவனுக்குப் புகழ்ச்சி ௰௪
யும், பூமியிலேசமாதானமும்,மனுஷர்மேல்அனு
க்கிரகமுமுண்டாகக்கடவனவென்றுசொல்லித்
தேவனைத்துதித்தார்கள்.—தூதர் அவர்களைவிட் ௰௫
டுப் பரமண்டலத்திற்குச்சென்றபின்பு, மேய்ப்
பர் ஒருவரை ஒருவர்நோக்கி, நாம் இப்பொழு
து பேத்லகேமுக்குப்போய், நடந்ததும், கர்த்
தர் நமக்குத்தெரிவித்ததுமாகிய இந்தவிசேஷத்
தைப்பார்ப்போம் வாருங்களென்றுசொல்லி,—
விரைந்துபோய், மரியாளையும், யோசேப்பை ௰௬

---

(௬௭) யோவே.௨.௨௮. (௬௮) ௧.இரா.௧.௪௮. சங்.௭௨.௰௮. யாத்.௩.௰௬.(௬௯)எரே.௨௩.௫,௬. தானி.௯.௨௪. அப்.௩.௨௧. ரோ.௧.௧.(௭௧)சங்.௱௩௨.௰௭. (௭௩) ரோ.௬.௰௮,௨௨. எபி.௯.௰௪. எரே.௩௨.௩௯,௪௰. எபே.௪.௨௪. ௨.தெச.௨.௰௩. ௨.தீமோ.௧.௯. தீத்.௨.௰௨. ௧.பேதுரு.௧.௰௫. ௨.பேதுரு.௧.௪. (௭௪) ஆதி.௰௨.௩. எபி.௬.௰௩,௰௭. (௭௫) லேவி.௨௬.௪௨. சங்.௯௮.௩. எசேக்.௰௬.௬௰. (௭௬) ஏசா.௪௰.௩. மல்.௩.௧. (௭௭) ஏசா.௯.௨. அப்.௨௬.௰௮. (௭௮) எண்.௨௪.௰௭. ஏசா.௰௧.௧. சக.௩.௮. மல்.௪.௨.—(௨. அதி. ௨.) அப்.௫.௩௭. (௫) ௧.சாமு.௰௬.௧,௪. யோவா.௭.௪௨. (௰) ஆதி.௰௨.௩. மத்.௨௮.௰௯. கொலோ.௧.௨௩. (௰௧) ஏசா.௯.௬. அப்.௨.௩௬. பிலி.௨.௰.(௰௩)ஆதி.௨௮.௰௨. சங்.௱௩.௨௰,௨௧. தானி.௭.௰. எபி.௧.௰௪. வெளி.௫.௰௧. (௰௪) எபே.௧.௫. வெளி.௫.௰௩. ஏசா.௫௭.௰௯. ரோ.௫.௧. எபே.௨.௰௭. கொலோ.௧.௨௰. யோவா.௩.௰௬. எபே.௨.௪,௬. ௨.தெச.௨.௰௬. ௧.யோவா.௪.௯,௰.

யும், பசுத்தொட்டியிற்கிடக்கிற குழந்தையை
௰௭ யுங்கண்டார்கள்.—கண்டு, அந்தப் பிள்ளையைக்
குறித்துத் தங்களுக்குச் சொல்லப்பட்ட வாக்
௰௮ கைப் பிரசித்தப்படுத்தினார்கள்.—மேய்ப்பரால்
சொல்லப்பட்டவைகளைக் கேட்ட யாவரும்,
அவைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள்.—
௰௯ மரியாளோ, இவைகளையெல்லாஞ் சிந்தித்து,
௨௰ தன்இருதயத்தில்வைத்துக்கொண்டாள்.–மேய்ப்
பருந் தங்களுக்குச் சொல்லப்பட்டதின்படி
யே, கேட்டுக்கண்ட எல்லாவற்றிற்காகவுந் தே
௨௧ வனைப் புகழ்ந்து, துதித்து, திரும்பினார்கள்.—
பிள்ளைக்கு விருத்தசேதனஞ் செய்கிறதற்கேற்
ற எட்டாந்தினத்தில், அது கருப்பமாகிறதற்
குமுன், தேவதூதன் சொல்லிய யேசுவென்
௨௨ னும் பேர் அதற்கு இடப்பட்டது.–மோசேயின்
கட்டளைப்படி, அவர்களைச்சுசியாக்குவதற்கா
௨௩ ன நாட்கள்கழிந்தபின்,–"முதற்பேறான எந்தஆ
ணுங் கர்த்தாவுக்குப் பிரதிஷ்டையாக்கப்ப
டவேண்டும்," என்று கர்த்தர் அருளிச்செய்த
௨௪ வேதப்பிரமாணத்தில்எழுதியிருக்கிறபடி,-அவர்
கள் அவரைக்கர்த்தாவுக்கென்று ஒப்பிக்
கும்படிக்கும், ஒருசோடு மணிப்புறாவை யாகி
லும், இரண்டு மாடப்புறாக்குஞ்சுகளை யாகிலும்
பலியிடும்படிக்குங் கர்த்தருடைய நியாயப்
பிரமாணத்திற் சொல்லியபிரகாரம் அவரை யெ
௨௫ ரூஷலேமுக்குக்கொண்டுவந்தார்கள்.–அப்பொ
ழுது ஷிமியோனென்னும்பெயருள்ளமனுஷன்
யெரூஷலேமில் வாசமாயிருந்தான்; அவன் நீதி
யுந் தேவபத்தியுமுள்ளவனாய் இஸ்ரவேலின் ஆ
றுதலுக்கு எதிர்பார்த்திருந்தான்: பரிசுத்த ஆ
௨௬ வி அவன்மேல் அமர்ந்திருந்தது.—அன்றியுங்
கர்த்தருடைய கிறிஸ்துவைக் காணுமல்
தான் மரணமடைவதில்லையென்பது பரிசுத்த
ஆவியினால் அவனுக்கு அறிவிக்கப்பட்டது.—
௨௭ அவன் ஆவியினால் ஏவப்பட்டுத்தேவாலயத்தி
லேவந்திருந்தான்:பிதாமாதாக்கள்யேசுவென்
னும் பிள்ளைக்கு நியாயப்பிரமாணமுறைப்படி
செய்யஅவரைஉள்ளேகொண்டுவந்தபொழுது,-
௨௮ அவன்அவரைத்தன்கைகளில் ஏந்திக்கொண்டு,-
௨௯ ஆண்டவரே, இப்பொழுது நீர் உம்முடைய
வாக்கின்படி உமது அடியேனைச் சமாதானத்
௩௰ துடன் அனுப்பிவிடுகிறீர்.–புறத்தேசத்தாரை வி
ளக்கும் ஒளியும், உம்முடையசனங்களாகிய இ
௩௧ ஸரவேலருக்கு மகிமையுமான இரட்சிப்பை–ச
கலசனங்களுக்குமுன்பாகவுந் தோற்றுவித்தீர்.–
௩௨ அதை என்கண்கள் கண்டனவென்றுசொல்லித்
௩௩ தேவனைத் துதித்தான்.—அப்படி அவரைக்கு
றித்துச்சொல்லப்பட்டவைகளை அவருடையதா
யும்யோசேப்புங் கேட்டு, ஆச்சரியப்பட்டார்
௩௪ கள்.—பின்னும் ஷிமியோன் அவர்களை ஆசீர்வ

தித்து, அவருடைய மாதாவாகிய மரியாளிடத்
தில், பார், அநேகருடைய இருதயசிந்தனைகளை
வெளிப்படுத்தும்பொருட்டு,–இஸரவேலரில் அ ௩௫
நேகர் விழுவதற்கும், எழுந்திருக்கிறதற்கும், வி
ரோதமாய்ப்பேசப்படும் அடையாளமாவதற்கும்
இவர் ஏற்படுத்தப்பட்டிருக்கிறார்; உன் ஆத்துமத்
தையே ஒருகட்கம்உருவிப்போமென்றான்.-அல் ௩௬
லாமலும் ஆஷேருடையகோத்திரத்தில்பானுவே
லின்புத்திரியும், தீர்க்கதரிசியும்,கன்னிப்பிராயத்
தில்விவாகஞ்செய்த புருஷனுடன் ஏழுவருஷ
மாத்திரம் வாழ்ந்திருந்தவளும், மிகுந்த வயது
சென்றவளுமாகிய அன்னாள் என்னும்ஒருத்தியி
ருந்தாள்.—ஏறக்குறைய எண்பத்திநாலுவயதுள் ௩௭
ள அந்தவிதவை தேவாலயத்தைவிட்டு நீங்கா
மல், இரவும் பகலும் பிரார்த்தனைபண்ணி உபவா
சித்து, ஆராதனை செய்துவந்தாள்.—அவளும்அந் ௩௮
தச்சமயத்திலேசேர்ந்துநின்று, கர்த்தாவைத்
துதித்து, யெரூஷலேமிலே மீட்பை எதிர்பார்த்
திருந்தயாவருடனேயும்அவரைக்குறித்துப் பேசி
னாள்.—கர்த்தருடைய விதிப்படி சகலத்தை ௩௯
யும் அவர்கள் செய்துமுடித்தபின்பு, கலிலேயா
தேசத்திலுள்ள தங்கள் ஊராகிய நாசரேத்துக்
குத்திரும்பினார்கள்.—பாலகன் வளர்ந்து, ஆவியி ௪௰
லே பலங்கொண்டு, ஞானத்தினால் பூரணப்பட்
டான்: தேவனுடைய அனுக்கிரகம் அவர்
மேல் அமர்ந்தது.–அவருடைய பிதா மாதாக்கள் ௪௧
வருஷந்தோறும் பஷ்கா உற்சவசமயத்தில் யெ
ரூஷலேமுக்குப்போவார்கள்.-அவர்பன்னிரண் ௪௨
டு வயதுள்ளவரானபொழுது, அவர்கள் உற்சவ
முறைமையின்படி யெரூஷலேமுக்குப்போய்,-
உற்சவநாட்கள் நிறைவேறினபின்பு திரும்பி ௪௩
வருகிறபொழுது, யேசுவென்னும் பாலகன்
தம்முடைய தாயாருக்கும் யோசேப்புக்குந் தெ
ரியாமல்யெரூஷலேமிலே தங்கிவிட்டார்.—அ ௪௪
வர்கள், அவர் பிரயாணக்காரருடைய கூட்டத்
தில் இருப்பாரென்றெண்ணி, ஒரு நாட்பிரயா
ணம் நடந்துபோய், பின் இனத்தாருக்குள்ளும்
அறிமுகமானவர்களுக்குள்ளும் அவரைத்தேடி,-
அவரைக்காணாததினால் யெரூஷலேமுக்குத் தி ௪௫
ரும்பி அவரைத்தேடினார்கள்.—மூன்று நாட்க ௪௬
ளின் பின்பு தேவாலயத்தில் அவர் போதகர்க
ளுக்குள் உட்கார்ந்திருக்கவும், அவர்களுக்குச்
செவிகொடுக்கவும், அவர்களை வினாவவுங்கண்
டார்கள்.—அவர் பேசக்கேட்டயாவரும் அவ ௪௭
ருடைய புத்திக்கும் உத்தரங்களுக்கும் பிரமித்
தார்கள்.—இப்படி அவரைக்கண்டு ஆச்சரியப் ௪௮
பட்டு அவருடைய தாய் அவரைநோக்கி, மக
னே, நீ எங்களுக்கேன் இப்படிச்செய்தாய்; உன்
பிதாவும் நானும் விசாரத்தோடே உன்னைத்தேடி
னோமே என்றுசொல்ல,—அவர் அவர்களைநோக் ௪௯

(௰௯)ஆதி.௩௭.௰௧.(௨௧)ஆதி.௰௭.௰௨.லேவி.௰௨.௩.(௨௨)லேவி.௰௨.௨,௩,௪,௬.(௨௩)யாத்.௰௩.௨. எண்.௩.௰௩.(௨௫) ஏசா.௪௰.௧.(௨௬)சங்.௮௯.௪௮. எபி.௰௧.௫.(௨௯)ஆதி.௪௬.௩௰. பிலி.௧.௨௩.(௩௰)ஏசா.௯.௨.ஏசா.௬௰.௧,௨.அப்.௰௩. ௪௭.(௩௨)ஏசா.௫௨.௰.(௩௪)ஏசா.௮.௰௪. ஓசி.௰௪.௯. மத்.௨௧.௪௪. ரோ.௯.௩௨,௩௩. ௧.கொரி.௧.௨௩,௨௪. ௨.கொரி. ௨.௰௬. ௧.பேதுரு.௨.௭,௮. அப்.௨௮.௨௨. சங்.௪௨.௰.யோவா.௰௧.௨௫.(௩௭)அப்.௨௬.௭. ௧.தீமோ.௫.௫.(௩௮)மாற். ௰௫.௪௩. (௪௧) யாத்.௨௩.௰௫,௰௭. உபா.௰௬.௧,௰௬. (௪௭) மத்.௭.௨௮. யோவா.௭.௰௫,௪௬. (௪௯) யோவா.௨.௰௬.

கி, நீங்கள் என் என்னைத்தேடினீர்கள்; நான்
என் பிதாவின் வீட்டிலிருக்கவேண்டியதென்ற
௫௰ றியீர்களாவென்றார்.—அவர்கள், அவர் தங்களுக்
குச்சொல்லிய வாக்கை உணர்ந்துகொள்ளவில்
௫௧ லை.—பின்பு அவர்களுடனே போய், நாசரேத்
தூரிற் சேர்ந்து, அவர்களுக்கு அமைந்திருந்
தார்: அவருடைய மாதா நடந்தவைகளையெல்
லாம் இருதயத்திலே வைத்துக்கொண்டாள்.—
௫௨ யேசு, ஞானத்தையும், சரீரவளர்ச்சியையும், தே
வனிடத்திலும் மனுஷரிடத்திலும் அன்பை
யும் அதிகமதிகமாய்ப் பெற்றுக்கொண்டார்.

## ௩. அதிகாரம்.

*௧. யோவான் தேவவாக்கைக்கூறி ஞானஸ்நானங் கொடுத்தல்: ௰௫. கிறிஸ்துவைக் குறித்துச் சாட்சியிடல்: ௰௯. யோவான் சிறைச்சாலையில் அகப்படல்: ௨௧. கிறிஸ்து ஞானஸ்நானம் பெறல்: ௨௩. அவர் வமிசவரலாறு.*

தைபேரியு இராசா அரசாண்ட பதினைந்தாம்
வருஷத்தில், பொந்தியு பிலாத்து யூதேயா தே
சத்திற்கு அதிபதியும், ஏரோது காற்பங்காகிய க
லிலேயா தேசத்திற்கு அதிபதியும், அவனுடைய
சகோதரனாகிய பிலிப்பு காற்பங்காகிய இத்துரி
யதேசத்திற்குந் திராகோனித்து தேசத்திற்கும் அ
திபதியும், இலுசானிய காற்பங்காகிய அபிலீனி
௨ தேசத்திற்கு அதிபதியும்,—அன்னாவுங் காய்பா
வும் மகா ஆசாரியருமானார்கள்; அக்காலத்தில் வ
னத்திலே சகரியாவின்புத்திரனாகிய யோவானுக்
௩ குத் தேவவாக்குக்கிடைத்தது.—அவன் யோர்
தான் நதியைச்சேர்ந்த தேசத்திலெங்குஞ்சென்
று,“கர்த்தாவின் வழியை ஆயத்தப்படுத்தி,
அவருடைய பாதைகளைச் செவ்வைபண்ணுங்
௪ கள்,—பள்ளங்களெல்லாம் நிரப்பப்படும், எல்
லா மலையுங் குன்றுந் தாழ்த்தப்படும்; கோணல்
௫ நேர்மையாகும்,முருட்டுவழிகள் சமமாகும்,-மா
மிசமுள்ளயாவருந் தேவனுடைய இரட்சிப்
௬ பைக்காண்பார்களென்று,—வனத்திலே குரலிட்
டுச்சொல்லுகிறவனுடையசத்தமுண்டாயிற்று,”
என்று ஏசாயா தீர்க்கதரிசியுடைய புத்தகத்தில்
எழுதியிருக்கிற பிரகாரம், பாவ மன்னிப்பின்
பொருட்டு மனந்திரும்புதலின் ஞானஸ்நானத்
௭ தைப் பிரசங்கம்பண்ணினான்.—அவன் தன்னால்
ஞானஸ்நானம் பெறும்படிக்குப் புறப்பட்டுவந்
த சனங்களைநோக்கி, விரியன்குட்டிகளே, வ
ருங்கோபத்திற்கு நீங்கள் தப்பும்படி உங்களுக்
௮ குணர்த்தினவன் யாவன்.—மனந்திரும்புதலுக்
குத்தக்க கனிகளைக்கொடுங்கள், ஆபிரகாம் எங்
கள் பிதாவென்றுசொல்ல உங்களுள்ளத்திலே நி
னையாதிருங்கள்: ஆபிரகாமுக்குத் தேவன் இந்
தக்கற்களினின்றும் பிள்ளைகளைத் தோற்றுவிக்க
வல்லவரென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.—
௯ அல்லாமலும், கோடரி இப்பொழுதே மரங்க
ளின்வேரருகில் வைத்திருக்கின்றது: ஆதலால்
நல்லகனிகொடாத மரங்களெல்லாந் தறிக்கப்
பட்டு, அக்கினியிலே போடப்படுமென்றான்.—
சனங்கள் அவனைநோக்கி, அப்படியானால் நாங் ௰
கள் என்னசெய்யவேண்டுமென்று கேட்க,—அ ௰௧
வர்களுக்கு உத்தரமாக அவன், இரண்டுசட்டை
களையுடையவன் இல்லாதவனுக்குக்கொடுக்கக்
கடவன், ஆகாரத்தையுடையவனும் அப்படியே
செய்யக்கடவனென்றான்.-பின்பு ஆயக்காரரும் ௰௨
ஞானஸ்நானம்பெறும்படி அவனிடத்திலேவந்
து, போதகரே, நாங்கள்செய்யவேண்டியதென்
னவென்றுகேட்க,—அவன் அவர்களைநோக்கி, ௰௩
உங்களுக்கு நியமிக்கப்பட்டதற்கதிகமாய் ஒன்
றையுங் கேளாதிருங்களென்றான்.—போர்ச்சே ௰௪
வகரும்அவனைநோக்கி, நாங்கள்செய்யவேண்டு
வதென்னவென்று கேட்டார்கள்; அவர்களுட
னே அவன், நீங்கள் வலாற்காரமாய் ஒருவனி
டத்திலும் ஒன்றையுங் கவர்ந்துகொள்ளாமலும்,
பொய்ச்சாட்சிசொல்லாமலும், உங்கள் சம்பள
மே போதுமென்று அமைந்திருக்கக் கடவீர்க
ளென்றான்.—சனங்களெல்லாரும், யோவான் ௰௫
கிறிஸ்துவாவென்று தங்கள் தங்கள் இருத
யங்களில் அவனைக்குறித்துச் சிந்தனைபண்ணி,
சமுசயப்பட்டபொழுது,—யோவான் சகலரை ௰௬
யும்நோக்கி, நான்சலத்தினால் உங்களுக்கு ஞா
னஸ்நானங்கொடுக்கிறேன்;என்னிலும்வல்லவர்
ஒருவர்வருகிறார்,அவருடையபாதரட்சைகளின்
வாரை அவிழ்க்கிறதற்கும் நான் பாத்திரனல்
ல: அவர் பரிசுத்த ஆவியினாலும், அக்கினியினா
லும் உங்களுக்கு ஞானஸ்நானங்கொடுப்பார்.—
தூற்றுஞ்சுளகு அவருடைய கையிலிருக்கின்ற ௰௭
து, அவர் தம்முடையகளத்தை நன்றாகவிளக்கி,
கோதுமையைத் தம்முடைய களஞ்சியத்திலே
சேர்த்து, பதரை அவியாத அக்கினியில்தகிப்பா
ரென்றான்.—இப்படியே அவன் பற்பலபோத ௰௮
னைகளைச்சொல்லி, சனங்களுக்குப் பிரசங்கம்
பண்ணினான்.—காற்பங்கு தேசாதிபதியாகிய ௰௯
ஏரோது, தன் சகோதரனான பிலிப்பினுடைய
மனைவியாகிய ஏரோதியாளின் நிமித்தமாகவும்,
அவன் செய்தமற்றத் தீங்குகளின்நிமித்தமாகவும்
யோவானாற்கடிந்துகொள்ளப்பட்டபொழுது,—
தான் இப்படிச்செய்ததுமன்றி, யோவானையுங் ௨௰
காவலில் வைப்பித்தான்.—சனங்களெல்லாரும் ௨௧
ஞானஸ்நானம்பெற்றசமயத்தில்,யேசுவும்ஞா
னஸ்நானம் பெற்றார்.—அவர் பிரார்த்தனைபண் ௨௨
ணுகையில் வானந்திறக்கப்பட்டது, அப்பொ
ழுது பரிசுத்த ஆவி, ரூபங்கொண்டு ஒரு புறா
வைப்போல அவர்மேல் இறங்கிற்று, நீர் என
து அன்பான குமாரன்; உம்மிலே பிரியமாயிருக்
கிறேனென்று வானத்தினின்றும் ஒருவாக்குண்
டாயிற்று.—யேசு ஏறக்குறையமுப்பதுவயதுள் ௨௩
ளவரானார், சனங்கள் அவரை யோசேப்பின்புத்
திரனென்றெண்ணினார்கள்,—அந்த யோசேப் ௨௪

(௫௧) தானி.௭.௨௮. ௧.சாமு.௨.௨௬.—(௩. அதி. ௧.) யோவா.௰௧.௪௯,௫௧. (௩) மாற்.௩.௧. (௫) சங்.௯௮.௨. ஏசா. ௫௨.௰.(௬)ஏசா.௪௰.௩. (௰) அப்.௨.௩௭. (௰௧) ௨.கொரி.௮.௰௪. யாக்.௨.௰௫,௰௬. ௧.யோவா.௩.௰௭. (௰௨) மத்.௨௧.௩௨. (௰௪) யாத்.௨௩.௧. லேவி.௰௯.௰௧. (௰௭) மீகா.௪.௰௨. மத்.௰௩.௩௰. (௰௯) மத்.௰௪.௩. (௨௧) மத்.௩.௰௩.

புஎலிக்கும், இவன் யந்நாய்க்கும், இவன் லே
விக்கும, இவன் மெல்கிக்கும், இவன் யன்னாக்
௨௫ கும், இவன் யோசேப்புக்கும்,—இவன் மத்ததி
யாவுக்கும், இவன் ஆமோசுக்கும், இவன் நாகூ
முக்கும், இவன் எஸ்லிக்கும், இவன் நங்காயுக்
௨௬ கும்,—இவன் மாகாத்துக்கும், இவன் மத்ததியா
வுக்கும், இவன் ஷிமியிக்கும், இவன் யோசேப்
௨௭ புக்கும், இவன் யூதாவுக்கும்,—இவன் யோவன்
னாவுக்கும், இவன் இரேசாவுக்கும், இவன் சிரு
பப்பெலுக்கும், இவன் சலாத்தியேலுக்கும், இவன்
௨௮ நேரிக்கும்,—இவன் மெல்கிக்கும், இவன் அத்
திக்கும், இவன் கோசமுக்கும், இவன் எல்மோ
௨௯ தாமுக்கும், இவன் ஏருக்கும்,—இவன் யோசேக்
கும், இவன் எலியேசருக்கும், இவன் யோரீமுக்
கும், இவன் மத்தாத்துக்கும், இவன் லேவிக்கும்,-
௩௰ இவன் ஷிமியோனுக்கும், இவன் யூதாவுக்கும்,
இவன்யோசேப்புக்கும், இவன் யோனானுக்கும்,
௩௧ இவன் இலியக்கீமுக்கும்,—இவன் மேலேயாவுக்
கும், இவன் மயினானுக்கும், இவன் மத்ததாவுக்
கும், இவன் நாதானுக்கும், இவன் தாவீதுக்கும்,—
௩௨ இவன் ஈஷாயுக்கும், இவன் ஓபெத்துக்கும், இ
வன்போவசுக்கும், இவன் சலோமோனுக்கும், இ
௩௩ வன் நாக்ஷோனுக்கும்,—இவன் அம்மினதாபுக்
கும், இவன் ராமுக்கும், இவன் எத்சரோனுக்கும்,
௩௪ இவன்பேரேசுக்கும், இவன்யூதாவுக்கும்,-இவன்
யாக்கோபுக்கும், இவன் ஈசாக்குக்கும், இவன்
ஆபிரகாமுக்கும், இவன் தேராகுக்கும், இவன்
௩௫ நாகோருக்கும்,-இவன்சேரூக்குக்கும், இவன்ரே
கூவுக்கும், இவன் பேலேக்குக்கும், இவன் ஏபே
௩௬ ருக்கும், இவன் சாலாவுக்கும்,—இவன் கேனா
னுக்கும், இவன் அர்பக்சாத்துக்கும், இவன்ஷே
முக்கும், இவன் நோவாவுக்கும், இவன் லாமே
௩௭ குக்கும்,—இவன் மெத்தூசலாகுக்கும், இவன்
ஏனோக்குக்கும், இவன் யாரேத்துக்கும், இவன் மக
௩௮ லாலெயேலுக்கும், இவன் கேனானுக்கும்,—இ
வன் ஏனோஷுக்கும், இவன்சேத்துக்கும், இவன்
ஆதாமுக்கும் புத்திரன்; இவன் தேவனாலுண்
டானவன்.

## ௪. அதிகாரம்.

*௧. சாத்தானால் கிறிஸ்துச்சோதிக்கப்படல்: ௰௪. அவர் தேவவாக்கியத்தைப் பிரசித்தம்பண்ணத் தொடங்கல்: ௰௬. நாசரேத்தூரார் அவருடைய திவ்வியவாக்குகளைக்குறித்து ஆச்சரியப்படல்: ௩௩. பிசாசினால் பிடியுண்டவனைக் குணமாக்கல்: ௩௮. பேதுருவின் மாமியைச் சொஸ்தப்படுத்தல்: ௪௰. பலவிதவியாதிகளையும் நீக்கல்.*

யேசு பரிசுத்த ஆவியினாலே பூரணப்பட்டு,
யோர்தானைவிட்டுத் திரும்பி, ஆவியினாலே வ
௨. னாந்திரத்துக்கு நடத்தப்பட்டு,—நாற்பதுநாள் பிசா
சினால் சோதிக்கப்பட்டார். அந்நாட்களில் அ
வர் ஒன்றும் புசிக்கவில்லை: அவைகள் கழிந்த
பின்பு, அவருக்குப் பசியுண்டாயிற்று.—அப்பொ ௩
ழுது பிசாசானவன் அவரிடத்தில், நீ தேவனு
டைய குமாரனானால் இந்தக்கல் அப்பமாகும்ப
டிசொல்லென்றான்.—அதற்கு யேசு, "ம ௪
னுஷன் அப்பத்தினாலேமாத்திரமல்ல, தேவ ன
ருளும் எந்தவாக்கினாலும்ஜீவிப்பான்," என்றெ
ழுதியிருக்கின்றதென்றார்.—பின்பு பிசாசானவன் ௫
அவரை உயர்ந்த மலையின்மேலே கொண்டு
போய், ஒருநிமிஷத்தில் உலகத்தின்இராச்சியங்
களையெல்லாம் அவருக்குக்காண்பித்தான்.—மே ௬
லும் பிசாசானவன் அவரிடத்தில், இந்த அதிகா
ரமெல்லாவற்றையும், இவைகளின் மகிமையை
யும் உனக்குத்தருவேன்: அது எனக்கு ஒப்பிக்கப்
பட்டிருக்கின்றது; என் இஷ்டப்படிக்கு நான்
இவைகளை எவனுக்காயினுங் கொடுக்கிறேன்.—
ஆதலால் நீ என்னை நமஸ்காரம்பண்ணினால் எல் ௭
லாம் உன்னுடையதாகுமென்றுசொல்ல,—யே ௮
சு அவனுக்குத்தரமாக, சாத்தானே, நீ எனக்
குப்பின்னாகப்போ; "உன் தேவனாகிய கர்த்
தாவை நமஸ்கரித்து, அவரைமாத்திரஞ் சேவிப்
பாயாக," என்றெழுதியிருக்கின்றதேயென்றார்.-
பின்பு அவன் அவரை யெருஷலேமுக்குக் ௯
கொண்டுபோய், அவரைத் தேவாலயத்தின் உப்ப
ரிகையின்மேல் நிறுத்தி, நீ தேவனுடைய
குமாரனானால் இவ்விடத்திலிருந்து தாழக்குதி:-
"அவர், உன்னைக்காப்பாற்றும்படி, உன்னைக்கு ௰
றித்துத் தம்முடைய தூதர்களுக்குக் கட்டளை
யிடுவார், அவர்கள் உன் கால் கல்லில் இடறாத
படிக்கு,—தங்கள் கைகளில் உன்னை ஏந்திக் ௰௧
கொள்வார்கள்," என்றெழுதியிருக்கின்றதென்
று அவருடனேசொல்ல,—அவனுக்குத்தரமாக ௰௨
யேசு, "உன் தேவனாகிய கர்த்தாவைப் பரீ
ட்சைசெய்யாதிருப்பாயாக," என்று சொல்லியி
ருக்கின்றதென்றார்.—பிசாசானவன் பரீட்சை ௰௩
களையெல்லாம் முடித்தபின்பு சிலகாலம் அவ
ரைவிட்டுப்போனான்.

பின்பு யேசு, ஆவியின் வல்லமையினாலே க ௰௪
லிலேயாவுக்குத் திரும்பினார்: அவருடைய கீர்த்
தி, சூழ்ந்ததேசமெங்கும் பரம்பிற்று.—அவர்க ௰௫
ளுடைய ஆலயங்களில் அவர் உபதேசம்பண்
ணி, எல்லாராலும் புகழப்பட்டார்.

பின்பு அவர் தாம் வளர்ந்த நாசரேத்துக்குப் ௰௬
போய், ஓய்வுநாளிலே தமது வழக்கத்தின்படி ஆ
லயத்திற் பிரவேசித்து, வாசிக்கும்பொருட்டு எ
ழுந்து நின்றார்.—அப்பொழுது ஏசாயா தீர்க்கது ௰௭
ரிசியின் புத்தகத்தை அவருக்குக்கொடுக்க, அவர்
அந்தப்புத்தகத்தை விரித்து,—"கர்த்தருடைய ௰௮
ஆவி என்மேல் அமர்ந்தது, தரித்திரருக்குச் சுவி
சேஷத்தைத்தெரிவிக்கும்பொருட்டு அவர் எனக்
கு அபிஷேகஞ்செய்தார்; நொறுங்கிய இருதயமு
ள்ளவர்களைச் சொஸ்தப்படுத்தவும், சிறைப்பட்

(௩௨) ரூத்.௪.௰௮,. (௩௪) ஆதி.௰௧.௨௪,௨௬. (௩௬) ஆதி.௰௧.௰௨. ஆதி.௫.௬. (௩௮) ஆதி.௫.௧,௨.—(௪. அதி. ௨.) யாத்.௩௪.௨௮. ௧.இரா.௰௯.௮. (௪) உபா.௮.௩. (௬) யோவா.௰௨.௩௧. வெளி.௰௩.௨,௭. (௮) உபா.௬.௰௩. (௰) சங்.௯௧.௰௧. (௰௨) உபா.௬.௰௬. (௰௩) யோவா.௰௪.௩௰. எபி.௪.௰௫. (௰௪) அப்.௰.௩௭. (௰௬) மத்.௨.௨௩. மாற்.௬.௧. அப்.௰௩.௰௪. (௰௮) ஏசா.௬௧.௧.

டவர்களுக்கு விடுதலையையும், குருடருக்குப்
பார்வையடைதலையும் பிரசங்கிக்கவும், நொறுங்
௰௯ குண்டவர்களை விடுதலையாக்கி,—கர்த்தர் அங்
கிகரிக்கத்தக்க வருஷத்தைப் பிரசித்தப்படுத்த
வும் என்னை அனுப்பினார்,"என்று எழுதியிருந்த
௨௰ இடத்தைக்கண்டார்.—பின்பு அவர் அந்தப்புத்
தகத்தைச் சுருட்டிப் பரிசாரகனிடத்திற்கொடுத்
து உட்கார்ந்தார். ஆலயத்திலுள்ள எல்லாருடைய
௨௧ கண்களும் அவர்மேல் நோக்கமாயிருந்தன.—அ
வர் அவர்களைப்பார்த்துப் பேசத்தொடங்கி, உங்
கள் செவிக்கேறின இந்தவேதவாக்கியம் இன்
௨௨ றைத்தினமே நிறைவேறிற்றென்றார்.-எல்லாரும்
அவருக்கு நற்சாட்சியிட்டு, அவர் வாயினின்று
புறப்பட்ட கிருபையுள்ள வாக்குகளைக்குறித்து
ஆச்சரியப்பட்டு, இவன் யோசேப்பின் புத்திர
௨௩ னல்லவா வென்றார்கள்.-அவர் அவர்களைநோக்
கி, வைத்தியனே, உன்னைத்தானே சொஸ்தப்ப
டுத்துஎன்னும்பழமொழியைச்சொல்லி,நாங்கள்
கேள்விப்பட்டபடி கப்பர்நாகூமிலே நீ செய்த
எந்தக்கிரியைகளையும் உன்னூராகிய இவ்விடத்
திலுஞ் செய்யென்று நீங்கள் என்னுடன் சொல்
௨௪ லுவீர்களே என்றார்.—மேலும் அவர்,எந்தத்தீர்க்
கதரிசியாவது தன் தேசத்தில்அங்கிகரிக்கப்படா
னென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகி
௨௫ றேன்.—பின்னும் அவர், இலீசாவின் காலத்தில்
மூன்றுவருஷமும் ஆறுமாதமுமாக வானம் அ
டைக்கப்படத்தேசமெங்கும்மிகுந்தபஞ்சமுண்
டாயிற்று, அப்பொழுது இஸ்ரவேலருக்குள் அ
௨௬ நேகம் விதவைகள் இருந்தார்கள்;—ஆயினுஞ் சீ
தோனைச்சேர்ந்த சாரிபாத் ஊரானாகிய ஒரு வித
வையினிடத்திற்கேயன்றி, மற்றொருத்தியிடத்
௨௭ திற்கும் இலீசா அனுப்பப்படவில்லை.-மேலும்
இலீசா தீர்க்கதரிசியின் காலத்தில் இஸ்ரவேல
ருக்குள் குஷ்டரோகிகள் அநேகர் இருந்தும்,
ஸீரியதேசத்தானாகிய நாமானேயன்றி, வேறொ
ருவனுஞ்சுத்தமாக்கப்படவில்லையென்று சத்திய
மாய் உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.—
௨௮ ஆலயத்திலுள்ள யாவரும் இவைகளைக்கேட்ட
௨௯ மாத்திரத்தில் குரோதத்தினாலே நிறைந்து,—எ
ழுந்து, அவரை நகரத்திலிருந்து துரத்தி, தங்கள்
நகரங்கட்டப்பட்டிருந்த செங்குத்தானமலையி
னின்றும் அவரைத்தாழத் தள்ளும்படிக்கு அதின்
௩௰ உச்சிக்கு அவரைக் கொண்டுபோனார்கள்.—அ
வர் அவர்கள் மத்தியின்வழியாய்ச்சென்றுபோய்
௩௧ விட்டார்.-பின்பு அவர் கலிலேயா தேசத்திலுள்
ள கப்பர்நாகூமூரைச்சேர்ந்து, ஓய்வுநாட்களிற்
௩௨ சனங்களுக்குஉபதேசம்பண்ணினார்:-அவர்அதி
காரத்துடன் பேசினபடியால், அவர்கள் அவரு
டைய உபதேசத்தைக்குறித்துப் பிரமித்தார்கள்.
௩௩ ஆலயத்தில் அசுத்த பிசாசின் ஆவியையுடைய
௩௪ ஒரு மனுஷனிருந்தான்.—அவன் உரத்தசத்தமிட்
டு,ஆ,நாசரேத்தூரானாகிய யேசுவே, எங்களுக்
கும் உமக்குமென்ன; எங்களைக் கெடுக்கவாவந்
தீர், உம்மை அறிந்திருக்கிறேன்; நீர் தேவனு
டைய பரிசுத்தரேயென்றான்.-யேசு, நீ பேசா ௩௫
மல் இவனை விட்டுப்போவென்று அதைக்கடிந்
துகொண்டார். அதினால் பிசாசு அவனைச்சனங்
களுக்குள்ளே தள்ளி, அவனுக்கு ஒரு சேதமுஞ்
செய்யாமல் அவனை விட்டுப்போயிற்று.—எல் ௩௬
லாரும் பிரமிப்படைந்து, இவர் அதிகாரத்தோ
டும் வல்லமையோடும் அசுத்த ஆவிகளுக்குக்
கட்டளையிட, அவைகளும் நீங்குகின்றனவே;
இதெப்படிப்பட்டவாக்கென்று ஒருவரோடொ
ருவர் சொல்லிக்கொண்டார்கள்.—அவருடைய ௩௭
கீர்த்தி சூழ்ந்திருந்த அந்தத்தேசமெங்கும் பிரசித்
தமாயிற்று.
பின்பு அவர் ஆலயத்தைவிட்டுச் சீமோனின் ௩௮
வீட்டிற் பிரவேசித்தார். சீமோன் மனைவியின்
மாதா மிகுந்த சுரமாய்க்கிடந்தாள்; அவள்நிமித்
தம் அவரை வேண்டிக்கொண்டார்கள்.—அவர் ௩௯
அவள் சமீபத்தில் நின்று, சுரத்தைக்கடிந்தார்;
அது அவளைவிட்டு நீங்கிற்று: உடனே அவள்
எழுந்திருந்து,அவர்களுக்குப் பணிவிடைசெய்
தாள்.
சூரியன் அஸ்தமிக்கையிற்சகலருந் தங்களிட ௪௰
த்திலிருந்த பலவியாதியுடையவர்களைஅவரிடத்
திற்கொண்டுவர, ஒவ்வொருவர்மேலும் அவர்
தம்முடைய கைகளைவைத்து,அவர்களைச்சொஸ்
தப்படுத்தினார்.—அநேகரிடத்திலிருந்த பிசாசு ௪௧
கள், நீர் தேவனுடைய குமாரனாகிய கிறிஸ்
து என்று சத்தமிட்டுப்புறப்பட்டன. அவர் தம்
மைக் கிறிஸ்து என்று அவைகள் அறிந்தபடி
யினால் அவைகள் பேசுகிறதற்கு இடங்கொடா
மல் கடிந்துகொண்டார்.-விடியற்காலமானபொ ௪௨
ழுது அவர்புறப்பட்டு வனத்தைச்சேர்ந்த இடத்
திற்குப்போனார்: சனங்கள் அவரைத்தேடி அவ
ரிடத்திற்போய், தங்களைவிட்டுப்போகாதபடிக்
கு அவரைத்தடுத்தார்கள்.-அவர் அவர்களைநோக் ௪௩
கி, நான் மற்ற ஊர்களுக்குந் தேவனுடைய
ஆளுகையைச் சுவிசேஷமாய் அறிவிக்கவேண்
டும், அதின் நிமித்தம் நான் அனுப்பப்பட்டே
னென்றார்.-பின்பு அவர் கலிலேயாவின் ஆல ௪௪
யங்களிற் பிரசங்கம்பண்ணிவந்தார்.

## ௫. அதிகாரம்.

௧. திரளானமீன்களைப்பிடித்தல்: ௰௨. குஷ்டரோகியைச் சொஸ்தப்படுத்தல். பாவமன்னிப்பருளல்: ௨௭. மத்தேயுவை வரவழைத்து அவன் வீட்டிலேபோசனம்பண்ணல்: ௩௩. உபவாசத்தைக்குறித்துப்போதித்தல்.

ஒருநாள் அவர் கெனேசரெத்தின் சிறுகடலின ௧
ருகே நின்றபொழுது, சனங்கள் தேவனுடை
ய வாக்கைக்கேட்கிறதற்கு அவரைநெருக்கினார்
கள்.—கடற்கரையில் இரண்டுபடவுகள் இருக் ௨
கக்கண்டார். மீன்பிடிக்கிறவர்கள் அவைகளை
விட்டிறங்கி வலைகளை அலசிக்கொண்டிருந்
தார்கள்.—அவைகளில் ஒன்றாகிய சீமோனின் ௩

(௨௨)சங்.௪௫.௨. மத்.௰௩.௫௪. யோவா.௬.௪௨.(௨௩)மத்.௪.௰௩.மத்.௰௩.௫௪.(௨௪)மத்.௰௩.௫௭.(௨௫)௧.இரா.௰௭.௮. யாக்.௫.௰௭.(௨௭)௨.இரா.௫.௰௪.(௩௰)யோவா.௮.௫௯.(௩௪)சங்.௰௬.௰. தானி.௯.௨௪.—(௫. அதி. ௧.) மத்.௪.௰௮.

படவிலேறி, அதைக்கரையிலிருந்து சற்றேதள்
ளும்படிஅவனைவேண்டிக்கொண்டு உட்காந்து,
அந்தப்படவிலிருந்து சனங்களுக்கு உபதேசம்
௪ பண்ணினார்.—அவர்பிரசங்கம் முடித்தபின்பு சீ
மோனைநோக்கி, நீ ஆழியிலேதள்ளி, மீன்பிடிக்
கும்படிக்குஉங்கள்வலைகளைத்தாழவிடுங்களென்
௫ றார்.—சீமோன் அவருக்குத்தரமாக, ஆண்டவ
ரே, இராமுழுவதும் நாங்கள் பிரயாசப்பட்டும்
ஒன்றும் அகப்படவில்லை: ஆயினும்உம்முடைய
சொல்லுக்கு வலையைத்தாழஇறக்குகிறேனென்
௬ றான்.—அந்தப்படி அவர்கள்செய்து, அவர்களு
டைய வலைகிழியத்தக்கதாய்த் திரளான மீன்க
௭ ளைச் சேர்த்துக்கொண்டார்கள்.—அப்பொழுது
தங்களுக்கு உதவிசெய்ய வரும்படி மற்றப்பட
விலிருந்த கூட்டாளிகளுக்குச் சமிக்கைகாட்
ட, அவர்களும்வந்து இரண்டு படவுகளும் ஆ
௮ ழத்தக்க பாரமாக நிரப்பினார்கள்.—சீமோன்பே
துரு அதைக்கண்டு யேசுவின் முழந்தாள்க
ளினருகேவிழுந்து, கர்த்தாவே, நான் பாவ
முள்ள மனுஷன், நீர் எனக்கு விலகவேண்டு
௯ மென்றான்.—அவர்கள் அவ்வளவு மீன்களைப்பி
டித்ததினிமித்தம் அவனுக்கும் அவனோடே இ
௰ ருந்த யாவருக்குந் திகிலுண்டாயிற்று.—சீமோ
னுடைய கூட்டாளிகளும், செபேதேயுவின்புத்
திரருமாகிய யாக்கோபுக்கும் யோவானுக்கும்
அந்தப்படியே உண்டாயிற்று. யேசு சீமோ
னைநோக்கி, நீ பயப்படாதே; இதுமுதல் நீ மனு
௰௧ ஷரைப் பிடிப்பவனாவாயென்றார்.—அவர்கள்தங்
கள்படவுகளைக்கரையிலேகொண்டுவந்து எல்லா
வற்றையும்விட்டு, அவரைப்பின்சென்றார்கள்.
௰௨ மேலும்யேசு ஒருபட்டணத்திலிருக்கையில்,
குஷ்டரோகம் நிறைந்த ஒருமனுஷன் அவரைக்
கண்டுமுகங்குப்புறவிழுந்து, கர்த்தாவே, உ
மக்குச்சித்தமுண்டானால், என்னைச் சுத்தமாக்க
உம்மால் ஆகுமென்று அவரை வேண்டிக்கொண்
௰௩ டான்.—அப்பொழுது அவர் தமது கையைநீட்
டி அவனைத்தொட்டு, எனக்குச்சித்தமுண்டு: சுத்
தமாவாயாகவென்றார். உடனே குஷ்டரோகம்
௰௪ அவனைவிட்டு நீங்கிற்று.—பின்பு அவர் அவனை
நோக்கி, நீ இதை ஒருவருக்குஞ் சொல்லாமற்
போய், ஆசாரியனுக்கு உன்னைக்காண்பித்து, அ
வர்களுக்குச்சாட்சியாய், மோசேயின்கட்டளைப்
படி நீ சுத்தமானதைக்குறித்துப்பலிசெலுத்துவா
௰௫ யாகவென்று கட்டளையிட்டார்.—ஆயினும்அவரு
டையகீர்த்தி அதிகமதிகமாய்ப்பரம்பிற்று: அநே
கசனங்கள் அவருடைய வாக்கைக்கேட்கும்ப
டிக்கும், அவராலே தங்கள் தங்கள் வியாதிகளை
விட்டு நீங்கும்படிக்குங் கூடிவந்தார்கள்.
௰௬ அவர்புறப்பட்டுவனத்திற்குப்போய்ப்பிரார்த்
௰௭ தனைபண்ணினார்.—பின்பு ஒருநாள் அவர் உப
தேசஞ்செய்கிற சமயத்தில், கலிலேயா யூதேயா
நாடுகளிலுள்ள சகல நகரங்களிலிருந்தும், யெரூ
ஷலேமினின்றுஞ் சில பரிசேயரும் நியாயசாஸ்
திரிகளும்வந்து, அவர் சமீபத்தில் உட்காந்தார்
கள்: அப்பொழுது அவர்களைச் சொஸ்தப்படுத்து
கிறதற்குக் கர்த்தருடைய பலம்விளங்கிற்று.
பின்பு சிலமனுஷர் திமிர்வாதக்காரனொருவ ௰௮
னைப் படுக்கையோடே கொண்டுவந்து, அவனை
உள்ளே கொண்டுபோகவும் அவர் சமுகத்தில்
வைக்கவும் வகைதேடி,—சனங்களின் மிகுதியி ௰௯
னால் அவனைஉள்ளேகொண்டுபோவதற்கு இடங்
காணாமல், வீட்டின்மேலேறி, தட்டோடுகளின்வ
ழியாய்ப்படுக்கையுடனேமத்தியில், யேசுவின்
சமுகத்தில் அவனை இறக்கினார்கள்.—அவர்களு ௨௰
டைய விசுவாசத்தை அவர் கண்டு, மனுஷனே,
உன்பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டன
வென்று அவனுடன்சொன்னார்.—அதினால் வே ௨௧
தபாரகரும் பரிசேயருஞ் சிந்தனைபண்ணி, தே
வதூஷணங்களைச்சொல்லுகிற இவன் யாவன்;
தேவன் ஒருவருக்கேயன்றி, வேறொருவருக்
குப்பாவங்களைமன்னிக்கவல்லமையுண்டாஎன்
றார்கள்.—யேசு அவர்களுடைய சிந்தனைகளை ௨௨
அறிந்து, அவர்களுடனே, நீங்கள் உங்கள் இரு
தயங்களிற் சிந்திக்கிறதென்ன.—உன்பாவங்கள் ௨௩
உனக்கு மன்னிக்கப்பட்டனவென்று சொல்லு
கிறதோ, எழுந்துநடவென்று சொல்லுகிறதோ,
எது எளிது.—மனுபுத்திரன் பூமண்டலத்திலே ௨௪
பாவங்களை மன்னிக்கிறதற்கு அதிகாரமுடைய
வனென்பதை நீங்கள் அறியத்தக்கதாகவென்று
சொல்லி, பின் அவர் திமிர்வாதக்காரனைநோக்
கி, நீ எழுந்து, உன்படுக்கையை எடுத்துக்கொண்
டு, உன்வீட்டுக்குப்போவென்று உனக்குக்கட்ட
ளையிடுகிறேனென்றுசொல்ல,—உடனே அவன் ௨௫
எல்லாருங்காண எழுந்து, தன்படுக்கையை எடுத்
துக்கொண்டு, தேவனைத்துதித்துத் தன்வீட்டுக்கு
ப்போனான்.—அப்பொழுது அவர்களெல்லாரும் ௨௬
பிரமித்துத் தேவனைத் துதித்தார்கள், நாங்கள்
இன்று ஆச்சரியமானவைகளைக் கண்டோமென்
றுசொல்லி, பயத்தினால் நிறைந்திருந்தார்கள்.
அதன்பின்பு அவர்புறப்பட்டு, ஆயத்துறையி ௨௭
லுட்காந்திருந்த லேவியென்னும் ஆயக்காரனைக்
கண்டு, அவனுடனே, நீ என்னைப் பின்சென்று
வாவென்று சொல்ல,—அவன் எல்லாவற்றையும் ௨௮
விட்டெழுந்து அவருக்குப் பின்சென்றான்.—
பின்பு லேவி தன்வீட்டில் அவருக்குப் பெரிய ௨௯
விருந்துபண்ணினான்: அநேக ஆயக்காரரும் மற்
றவர்களும் அவர்களோடே பந்தியிருந்தார்கள்.—
அவர்களுடைய வேதபாரகரும் பரிசேயரும் அ ௩௰
வருடைய சீஷருக்கு விரோதமாக மொறுமொ
றுத்து, எதினாலே நீங்கள் ஆயக்காரரோடும் பா
விகளோடும் போசனபானம்பண்ணுகிறீர்களெ
ன்றார்கள்.—யேசு அவர்களுக்குத்தரமாய், சொஸ் ௩௧
தமுள்ளவர்களுக்கல்ல, வியாதியுள்ளவர்களுக்
கே வைத்தியன் வேண்டும்.—நீதிமான்களையல்ல, ௩௨

(௪) யோவா.௨௧.௬. (௮) ௨.சாமு.௬.௯. ௧.இரா.௰௭,௰௮. (௰௨) மத்.௮.௨. (௰௪) மத்.௮.௪. லேவி.௰௪.௪,௰,௨௧, ௨௨. (௰௫) மத்.௪.௨௫. (௰௬) மத்.௰௪.௨௩. (௰௮) மத்.௯.௨. (௨௧) மத்.௯.௩. சங்.௩௨.௫. ஏசா.௪௩.௨௫. (௨௭) மத்.௯.௯. (௨௯) மத்.௯.௰. (௩௨) மத்.௯.௰௩. ௧.தீமோ.௧.௰௫.

பாவிகளையே மனந்திரும்புகிறதற்கு அழைக்க
வந்தேனென்றார்.
௩௩ பின்பு அவர்கள் அவரைநோக்கி, யோவானு
டையசீஷரும், பரிசேயருடைய சீஷரும் அ
நேகந்தரம் உபவாசமும் பிரார்த்தனையும்பண்ணு
கிறார்கள்; உம்முடைய சீஷரோ, போசனபா
னம் பண்ணுகிறார்கள், அதேனென்றுகேட்க,—
௩௪ அவர் அவர்களுடனே, மணவாளன் தோழர்க
ளுடனே இருக்கிறபொழுது, அவர்களை உபவா
௩௫ சிப்பிக்க உங்களாலாகுமா.-மணவாளன் அவர்
களைவிட்டு நீக்கப்படுங்காலம்வரும், அந்நாட்க
ளில் அவர்கள் உபவாசஞ்செய்வார்களென்றார்.
௩௬ பின்னும் அவர் அவர்களுடனேஉவமையாக,
ஒருவனும் புதியவஸ்திரத்துண்டைப் பழையவ
ஸ்திரத்தோடே இணைக்கமாட்டான்; இணைத்தா
ல் புதியது பழையதைக் கிழிக்கும், அல்லாம
லும் புதியவஸ்திரத்துண்டு பழையதற்கு ஒவ்வா
௩௭ து.—ஒருவனும் பழையதுருத்திகளில் புதியதி
ராட்சரசத்தை வார்த்துவையான்; வைத்தால், புதி
யரசந் துருத்திகளைக்கிழித்துப்போம், அதுவுஞ்
சிந்திப்போம், துருத்திகளுங்கெட்டுப்போம்.—
௩௮ புதியரசத்தைப்புதியதுருத்திகளில்வார்த்துவைத்
௩௯ தால் இரண்டுங்காக்கப்படும்.—அன்றியும் பழை
யரசத்தைப் பானம்பண்ணினவன் பின்பு பு
திய ரசத்தைவிரும்பான்: பழையது உத்தமமென்
பானேயென்றார்.

## ௬. அதிகாரம்.

௧. ஓய்வுநாளைக்குறித்துப் பரிசேயர் உத்தரங்கொடுக்கக்கூடாமற் போதல்: ௬. சூம்பினகையையுடையவனைச் சொஸ்தப்படுத்தல்: ௰௨. சீஷரைத் தெரிந்துகொள்ளல்: ௰௭. வியாதியுள்ளவர்களைச் சொஸ்தமாக்கல்: ௨௰. சீஷருக்கு உபதேசஞ்செய்தல்: ௨௭. சத்துருக்களையும் நேசிக்கவேண்டுமென்று விதித்தல்: ௩௭. உபதேசஞ்செய்தல்: ௩௯. பிறர்மேற் குற்றஞ்சுமத்துவது தகாதென்று விலக்கல்: ௪௬. வீடுகட்டுகிறவனை உவமித்தல்.

இரண்டாந்தினத்துக்குப் பின் வந்த முதலாம்
ஓய்வுநாளில் அவர் பயிர்வழியே நடந்துபோகை
யில், அவருடைய சீஷர் கதிர்களைக்கொய்து,
கைகளினாலே நிமிட்டிப் புசிக்கத்தொடங்கினார்
௨ கள்.—அதினால் பரிசேயரிற் சிலர் ஓய்வுநாட்க
ளிற் செய்யத்தகாததை நீங்கள் செய்கிறதென்
௩ னவென்று அவர்களிடத்திற் கேட்க,—யேசு
அவர்களுக்குத்தரமாக, தாவீது தானுந் தன்
னோடிருந்தவர்களும்பசியாயிருந்தபொழுது தே
௪ வனுடைய ஆலயத்திற் பிரவேசித்து,—ஆசா
ரியரேயன்றி வேறொருவரும் புசிக்கத்தகாத தே
வசமூகத்தப்பங்களை எடுத்துப் புசித்ததுமன்றி,
தன்னோடேயிருந்தவர்களுக்குங் கொடுத்தானெ
௫ ன்று நீங்கள் வாசிக்கவில்லையாவென்றார்.—மே
லும் மனுபுத்திரன் ஓய்வுநாளுக்குக் கர்த்தா
வாயிருக்கிறானென்றும்அவர்களுடனேசொன்
னார்.-மற்றொரு ஓய்வுநாளில் அவர் ஒரு ஆலயத் ௬
திற் பிரவேசித்து உபதேசித்தார்: அங்கே சூம்
பின வலதுகையையுடைய ஒரு மனுஷனிருந்
தான்.—அப்பொழுது வேதபாரகரும் பரிசேய ௭
ரும் அவரிடத்திற் குற்றங்காணும்படி, ஓய்வு
நாளிலுஞ் சொஸ்தப்படுத்துவாரோவென்று அவ
ரை உற்றுப்பார்த்தார்கள்.-அவர் அவர்களுடை ௮
ய சிந்தனைகளை அறிந்து, சூம்பினகையையுடை
யவனை நோக்கி, நீ எழுந்து நடுவிலே நில்லென்
றார். அந்தப்படி அவன் எழுந்து நின்றான்.—
அப்பொழுது யேசு அவர்களைநோக்கி, நான் ௯
உங்களிடத்தில் ஒன்றுகேட்கிறேன்; ஓய்வுநாட்
களிலே நன்மைசெய்வதோ, தீமைசெய்வதோ,
ஜீவனைக்காப்பதோ, அழிப்பதோ, எது நியாய
மென்று சொல்லி,—சுற்றியிருந்த எல்லார்மேலு ௰
ம் பார்வைசெலுத்தி, பின்பு அந்தமனுஷனிடத்
தில், உன்கையை நீட்டென்றார். அவன் அப்ப
டியேசெய்ய, அவனுடைய கை மற்றக்கையைப்
போலச் சொஸ்தமாயிற்று.—அவர்கள் எரிச்சலி ௰௧
னாலே நிறைந்து யேசுவை என்னசெய்யலா
மென்று ஒருவரோடொருவர் சம்பாஷித்தார்
கள்.—அக்காலத்தில் அவர் பிரார்த்தனைபண்ணும் ௰௨
படி ஒருமலையின்மேலேறி, இராமுழுவதுந் தே
வனை நோக்கிப் பிரார்த்தனைபண்ணினார்.
உதயமாகிறபொழுது அவர்தம்முடைய சீஷ ௰௩
ரை வரவழைத்து,—அவர்களிற் பேதுருவென் ௰௪
று தாம்பெயரிட்ட சீமோனும், அவனுடைய
சகோதரனாகிய அந்திரேயாவும், யாக்கோபும்,
யோவானும், பிலிப்பும், பர்தொலொமேயும்,—
மத்தேயும், தோமாவும், அல்வேயுவின் புத்திரனா ௰௫
கிய யாக்கோபும், உற்சாகமுள்ளவன் என்னப்
பட்ட சீமோனும்,—யாக்கோபின் சகோதரனாகி ௰௬
ய யூதாவும், பின்பு தம்மைக்காட்டிக்கொடுக்கும்
ஸ்காரியோத்தூரானான யூதாவுமாகிய பன்னிரு
வரையுந் தெரிந்துகொண்டு, அவர்களுக்கு அப்
போஸ்தலரென்று பெயரிட்டார்.
பின்பு அவர் அவர்களுடனே இறங்கிச் சம ௰௭
பூமியிலே போய்நின்றார், அங்கே அவருடைய
சீஷர் கூட்டமும், அவரைக்கேட்கிறதற்கும், தங்
கள் வியாதிகளினின்று நீங்குவதற்கும், யூதேயா
நாட்டின் திசைகள் யாவற்றிலும் யெருஷலேமி
லும், தீருசீதோன்நகரங்களைச்சேர்ந்த கடலோர
த்திலும்இருந்துவந்த வெகு திரளானசனங்களும்
இருந்தார்கள்.—அசுத்தமான ஆவிகளால் வாதிக் ௰௮
கப்பட்டவர்கள் வந்துசொஸ்தமடைந்தார்கள்.-
சத்துவம் அவரினின்றுபுறப்பட்டுச் சகலரை ௰௯
யுஞ் சொஸ்தப்படுத்தினதினாலே, சனங்களெல்
லாரும் அவரைத்தொடும்படிவகைதேடினார்கள்.
பின்பு அவர் தம்முடைய சீஷரை நோக்கிப் ௨௰
பார்த்து, தரித்திரராகிய நீங்கள் வாழ்வுடைய
வர்கள்: தேவனுடைய இராச்சியம்உங்களுக்
கேஉரியது.—இப்பொழுது பசியாயிருக்கிறவர் ௨௧
களே, நீங்கள் வாழ்வுடையவர்கள்: நீங்கள் தி

(௩௬) மத்.௯.௰௬,௰௭.—(௬. அதி. ௧.) மத்.௰௨.௧.(௨)யாத்.௨௰.௰. (௩) ௧.சாமு.௨௧.௬. (௪) லேவி.௨௪.௯. (௬) மத். ௰௨.௯. யோவா.௯.௰௬.(௰௩)மத்.௰.௧. (௰௯) மத்.௰௪.௩௬.(௨௰)மத்.௫.௩. யாக்.௨.௫.(௨௧)ஏசா.௫௫.௧. ஏசா.௬௧.௩.

ருத்தி பெறுவீர்கள். இப்பொழுது அழுகிறவர்
களே, நீங்கள் வாழ்வுடையவர்கள்: நீங்கள் ந
௨௨ கைப்பீர்கள்.—மனுபுத்திரனிமித்தஞ் சனங்கள்
உங்களைவெறுத்து, உங்களைவிலக்கி, நிந்தைப்ப
டுத்தி, உங்கள் நாமத்தையுந் தீமையுள்ளதென்று
தள்ளிவிடும்பொழுது, நீங்கள் வாழ்வுடையவர்
௨௩ களாவீர்கள்.—பரமண்டலத்தில் உங்கள் பலன்
மிகுதியாயிருப்பதினால், அந்நாளிலே நீங்கள்
சந்தோஷப்பட்டு ஆனந்தத்துடனே களிகூருங்
கள்: அவர்களுடைய பிதாக்கள், தீர்க்கதரிசிக
௨௪ ளுக்கும் அப்படியேசெய்தார்கள்.-ஐயோ, செல்
வரே, நீங்கள் உங்கள் சௌக்கியத்தைப் பெற்
௨௫ றுக்கொண்டீர்கள்.—ஐயோ, திருத்திபெற்றவர்
களே, நீங்கள் பசியாயிருப்பீர்கள். ஐயோ, இப்
பொழுது நகைக்கிற நீங்கள் துக்கித்து அழுவீர்
௨௬ கள்.–ஐயோ, எல்லா மனுஷரும் உங்களைக்குறித்
துப் புகழ்ச்சியாய்ப்பேசும்பொழுதுஉங்களுக்கு
ஆபத்துவரும்;அவர்களுடையபிதாக்கள் கள்ளத்
தீர்க்கதரிசிகளுக்கும் அப்படியே செய்தார்கள்.
௨௭ செவிகொடுக்கிறவர்களே, உங்கள் சத்துருக்க
ளில் அன்புகூருங்கள், உங்களைப்பகைக்கிறவர்
௨௮ களுக்கு நன்மைசெய்யுங்கள்.—உங்களைச்சபிக்
கிறவர்களை ஆசீர்வதியுங்கள், உங்களை நிந்திக்
கிறவர்களுக்காக வேண்டுதல்பண்ணுங்கள்.—
௨௯ உன் கன்னத்தில் அறைகிறவனுக்கு மற்றக்கன்
னத்தையுங் காட்டு; உன் உத்தரீயத்தைப்பறிக்
௩௰ கிறவன் உன் அங்கியையும் எடுக்கவிடு.—உன்
னைவேண்டிக்கொள்ளுகிற யாவனுக்குங் கொ
டுப்பாயாக; உன்பொருளை எடுத்துக்கொண்டவ
௩௧ னிடத்தில் அதைக் கேளாதே.—மனுஷர் உங்
களுக்குச்செய்யவிரும்புகிறவைகளை, நீங்களும்
௩௨ அவர்களுக்குச் செய்யுங்கள்.—உங்களிடத்தில்
அன்புகூருகிறவர்களிடத்தில் மாத்திரம் அன்
புகூருவீர்களாகில் உங்களுக்கு என்னபலன்வ
ரும்; பாவிகளுந் தங்களை நேசிக்கிறவர்களை நே
௩௩ சிப்பார்கள்.—உங்களுக்கு நன்மைசெய்கிறவர்
களுக்கு மாத்திரம் நீங்கள் நன்மைசெய்தால்
உங்களுக்கென்ன பலன்வரும்; பாவிகளும்அப்
௩௪ படிச் செய்கிறார்களே.—வரப்பற்றிக்கொள்ள
லாமென்று நீங்கள் ஒருவனுக்குக்கடன்கொடுத்
தால் உங்களுக்கென்னபலன்வரும்; பிரதிபலன்
பெறும்படி பாவிகளும் பாவிகளுக்குக்கடன்
௩௫ கொடுக்கிறார்களே.–நீங்கள் உங்கள் சத்துருக்க
ளை நேசியுங்கள், நன்மைசெய்யுங்கள், பிரதிப
லனை விரும்பாமற் கடன்கொடுங்கள், அப்பொ
ழுது உங்கள்பலன் மிகுதியாயிருக்கும்; அன்றி
யும் நன்றியறியாதவர்கள்மேலும், தீயவர்கள்மே
லுந் தயைசெய்யுஞ் சருவத்திற்குமேலானவருக்
௩௬ குச்சந்ததியாராவீர்கள்.–உங்கள்பிதா இரக்கமுள்
ளவராயிருக்கிறதுபோல, நீங்களும் இரக்கமுள்
ளவர்களாயிருப்பீர்களாக.—நீங்கள் பிறர்மேற் ௩௭
குற்றஞ்சுமத்தவேண்டாம், அப்பொழுது குற்
றஞ் சுமத்தப்படமாட்டீர்கள்: தண்டாக்கினைக்
குள்ளாக்காதிருங்கள், அப்பொழுது தண்டாக்
கினைக்குட்படமாட்டீர்கள்: விடுதலைசெய்யுங்
கள், அப்பொழுது நீங்களும் விடுதலையாக்கப்ப
டுவீர்கள்.–கொடுங்கள், அப்பொழுது உங்களுக் ௩௮
குங் கொடுக்கப்படும்; அமுக்கி, குலுக்கி, வ
ழிந்துவிழுகிற நல்லஅளவாக மனுஷர் உங்கள்
மடியிலேபோடுவார்கள். நீங்கள் அளக்கிற அள
வின்படி உங்களுக்கும் அளக்கப்படுமென்று
சொல்லுகிறேனென்றார்.–பின்பு அவர் ஒரு உவ ௩௯
மையை அவர்களுக்குச் சொன்னார், குருடன்
குருடனுக்கு வழிகாட்டலாமா, இருவருங் கு
ழியிலே விழுவார்களல்லவா;–சீஷன் தன் குரு ௪௰
விலும் பெரியவனல்ல, சம்பூரணம்பெற்றவனெ
வனுந் தன்குருவைப்போலாவான்.—உன்கண் ௪௧
ணிலுள்ள உத்திரத்தை உணராமல், உன்சகோ
தரனுடைய கண்ணிலிருக்கிற சிராயைப்பார்க்
கிறதென்ன.—உன்கண்ணிலுள்ள உத்திரத்தை ௪௨
உணராமல் நீ உன்சகோதரனைநோக்கி, சகோ
தரனே, உன்கண்ணிலுள்ள சிராயை எடுத்துப்
போடுகிறேன், இடங்கொடுவென்று சொல்வ
தெப்படி; கபடியே, முன்பு உன்கண்ணிலுள்
ள உத்திரத்தை எடுத்துப்போடு, அப்பொழுது
உன்சகோதரனுடைய கண்ணிலுள்ள சிராயை
எடுத்துப்போட நன்றாய்ப்பார்ப்பாய்.—கெட்ட ௪௩
கனிகொடுக்கிறமரம் நல்லமரமல்ல; நல்லகனி
கொடுக்கிறமரங் கெட்டமரமல்ல.–எந்தமரமும் ௪௪
அதினதினுடையகனியினால்அறியப்படும். முட்
செடிகளில் அத்திப்பழங்களையும்,நெரிஞ்சிற்செ
டியிலே திராட்சத்தையும் பறிக்கிறதில்லை.–நல் ௪௫
லமனுஷன் தன்னிருதயத்திலுள்ள நல்லபொக்
கிஷத்தினின்று நலமானதை எடுத்துக்காண்பிக்
கிறான்; தீமையுள்ள மனுஷன் தன்இருதயத்தி
லுள்ள தீமையான பொக்கிஷத்தினின்று தீமை
யானதை எடுத்துக்காண்பிக்கிறான்: இருதயத்
தில் நிறைந்ததையே அவன்வாய்பேசும்.
அன்றியும், நான் இடுகிற சட்டளைப்படி நீங் ௪௬
கள் செய்யாமலிருந்து, என்னைக் கர்த்தாவே,
கர்த்தாவேயென்று சொல்வதென்ன.—என் ௪௭
னிடத்தில்வந்து, என் வாக்குகளைக்கேட்டு, அ
வைகளின்படி செய்பவன், யாவனுக்கொப்பா
யிருக்கிறானென்று நான் உங்களுக்குத்தெரிவிப்
பேன்.—ஆழமாய்த்தோண்டி, பாறையின்மேல் ௪௮
அஸ்திபாரம்போட்டு வீடுகட்டின மனுஷனுக்
கொப்பாயிருக்கிறான்:பெருவெள்ளமுண்டான
பொழுது நீரோட்டம் அந்தவீட்டில் மோதியும்,

(௨௨) ௧.பேது.௫.௨.௰௧. யோவா.௰௬.௨. (௨௩) மத்.௫.௰௨. அப்.௫.௪௧. கொலோ.௧.௨௪. யாக்.௧.௨. அப்.௭.௫௧. (௨௪) ஆமோ.௬.௧. யாக்.௫.௧. (௨௫) ஏசா.௬௫.௰௩. நீதி.௰௪.௰௩. (௨௬) யோவா.௰௫.௰௯. ௧.யோவா.௪.௫. (௨௭) யாத்.௨௩.௪. நீதி.௨௫.௨௧. ரோ.௰௨.௨௰. (௨௮) அப்.௭.௬௰. (௨௯) ௧.கொரி.௬.௭. (௩௰) உபா.௰௫.௭,௮,௰. நீதி. ௨௧.௨௬. (௩௧) மத்.௭.௰௨. (௩௫) சங்.௩௭.௨௬. (௩௭) மத்.௭.௧. (௩௮) நீதி.௰௯.௰௭. சங்.௭௯.௰௨. யாக்.௨.௰௩. (௩௯) மத்.௰௫.௰௪. (௪௰) மத்.௰.௨௪. யோவா.௰௩.௰௬. (௪௧) மத்.௭.௩. (௪௨) நீதி.௰௮.௰௭. (௪௩) மத்.௭.௰௬,௰௭. (௪௪) மத். ௰௨.௩௩. (௪௫) மத்.௰௨.௩௪,௩௫. (௪௬) மல்.௧.௬. மத்.௭.௨௧. (௪௭) மத்.௭.௨௪.

அதுகன்மலையின்மேல் அஸ்திபாரம்போடப்பட்
டபடியால் அதை அசைக்கக்கூடாமற்போயிற்
சக று.—கேட்டும் அதின்படி செய்யாதவன், அஸ்தி
பாரமில்லாமல் மண்ணின்மேல் வீடுகட்டினவ
னுக்கொப்பாயிருக்கிறான்;வெள்ளம் அதில் மோ
தினவுடனே அது விழுந்தது; அதின்சேதம் மிக
வும் பெரிதென்றார்.

## எ. அதிகாரம்.

*க. நூறுசேவகருக்கதிபதியின் வேலைக்காரனைக் காணமற்சொஸ்தப்படுத்தல்: யக. விதவையின் மரித்தபுத்திரனை உயிர்ப்பித்தல்: யஅ. கிறிஸ்து யோவானிடத்தில் உத்தரம்அனுப்பல்: உச. கிறிஸ்துயோவானைக்குறித்துச்சாட்சியிடல்: ஙசு. பாவமுள்ள ஸ்திரிக்குப் பாவமன்னிப்பருளல்.*

சனங்களின்செவிக்கேற அவர்தம்முடையவாக்
கியங்களையெல்லாஞ் சொல்லிமுடித்தபின்பு, கப்
உ பர்நாகூமிற் பிரவேசித்தார்.—நூறுசேவகருக்கதி
பதி ஒருவனுக்குப் பிரியமான ஒருவேலைக்கா
ரன் மரணத்திற்கேதுவான வருத்தமுடையவனா
ங யிருந்தான்.—அதினால் அவன் யேசுவைக்குறித்
துக்கேள்விப்பட்டபொழுது,அவர்வந்துதன்வே
லைக்காரனைச் சொஸ்தப்படுத்தவேண்டுமென்று
அவரைவேண்டிக்கொள்ளும்படி, யூதரின் மூதி
யோரிற் சிலரை அவரிடத்தில் அனுப்பினான்.—
ச அவர்கள் யேசுவினிடத்திலேவந்து அவ
ரை மிகவும்வேண்டிக்கொண்டு, நீர் தயைசெய்
வீரென்று காத்திருக்கிறவன் பாத்திரமானவன்.—
ரு அவன் எங்கள் தேசத்தாரைநேசித்து, எங்களுக்
காக ஒரு ஆலயத்தையுங்கட்டினானென்றார்கள்.—
சு அப்பொழுது யேசு அவர்களுடனே கூடப்
போய் வீட்டுக்குச்சமீபமானபொழுது, நூறுசே
வகருக்கதிபதி அவரண்டை சிநேகிதரை அனுப்
பி, கர்த்தாவே, நீர் வருந்தவேண்டாம்: நீர்
என்வீட்டிற் பிரவேசிக்கிறதற்கு நான் பாத்திர
எ னல்ல.—நான் உம்மிடத்தில்வருகிறதற்கு என்
னை அபாத்திரனென்றெண்ணினேன்: நான்பிற
ரதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டவனாயினும், எனக்
குக் கீழ்ப்பட்ட சேவகரில் ஒருவனைப்போவெ
னப்போகிறான்; மற்றொருவனைவாவெனவருகி
றான்; என்வேலைக்காரனைநோக்கி, இதைச்செய்
அ யெனச்செய்கிறான்:—அதுபோல நீர் ஒருசொல்
மாத்திரஞ்சொன்னால் என்வேலைக்காரன் சொஸ்
கூ தமடைவானென்று சொல்லுவித்தான்.—யேசு
இவைகளைக்கேட்டு, அவனைக்குறித்து ஆச்சரி
யப்பட்டு, திரும்பி, தமக்குப்பின்செல்லுகிற ச
னங்களைநோக்கி, இப்படிப்பட்ட விசுவாசத்தை
நான் இஸரவேலருக்குள்ளுங்காணவில்லையென்
ய றுஉங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.—அனுப்
பப்பட்டவர்கள் வீட்டுக்குத் திரும்பிப்போய்,
வருத்தமாயிருந்த வேலைக்காரன்சொஸ்தமடைந்
திருக்கிறதைக்கண்டார்கள்.

யக மறுநாளில் அவர் நாயீனென்னும் ஊருக்குப்
போனார்; அவருடையசீஷர் அநேகரும், மற்றும்
அநேகசனங்களும் அவருடனே போனார்கள்.—
அவர் ஊர்வாசலுக்குச் சமீபித்தபொழுது, வித யஉ
வையாகிய மாதாவுக்கு ஒரேபுத்திரனாகி,மரித்துப்
போன ஒருவனுடைய சவத்தைச்சுமந்து வெளி
யே கொண்டுவந்தார்கள்: ஊராரில் அநேகசனங்
களும் அவளுடனேவந்தார்கள்.—கர்த்தர் அவ யங
ளைப்பார்த்து, அவளைக்குறித்து மனதுருகி, நீ அ
ழவேண்டாமென்றுசொல்லி,—சமீபித்து,பாடை யச
யைத்தொட, சுமக்கிறவர்கள் நின்றார்கள். அப்
பொழுது அவர், வாலிபனே, எழுந்திருவென்று
உனக்குச் சொல்லுகிறேனென்றார்.—அப்பொ யரு
ழுது மரித்தவனெழுந்து உட்கார்ந்து, பேசத்தொ
டங்கினான். பின்பு அவர் அவனைத் தாயிடத்தி
ல் ஒப்பித்தார்.—எல்லாரும் பயமடைந்தார்கள்: யசு
ஒரு மகாதீர்க்கதரிசி எங்களுக்குள் தோன்றியி
ருக்கிறார்; தேவன் தம்முடைய சனங்களைச்
சந்தித்தாரென்றுசொல்லித்தேவனைத்துதித்தார்
கள்.—பின்பு யூதேயாதேசம் முழுவதிலும், சுற் யஎ
றிலுமுள்ள தேசங்கள் யாவற்றிலும் இந்தச்செய்
திபரம்பிற்று.

பின்பு இவையெல்லாவற்றையும் யோவானு யஅ
டையசீஷர் அவனுக்கு அறிவித்தபொழுது,—
யோவான் தன்சீஷரில் இரண்டுபேரை அழைத் யகூ
து, நீங்கள் யேசுவினிடத்திலே போய்,வரு
பவர் நீரா, வேறொருவர்வர நாங்கள் எதிர்பார்
க்கவேண்டுமாவென்று கேளுங்களென்பதைச்
சொல்லி அனுப்ப,—அந்த மனுஷர் அவரிடத் உய
திலேபோய், வருபவர் நீரா; வேறொருவர்வர
நாங்கள் எதிர்பார்க்கவேண்டுமாவென்று கேட்
கும்படி யோவான்ஸ்நானன் எங்களை உம்மிடத்
திற்கு அனுப்பினானென்றார்கள்.—அந்நேரமே உக
அவர், நோய்களையும், கொடியவியாதிகளையும்,
துஷ்ட ஆவிகளையுமுடைய அநேகரைச் சொ
ஸ்தப்படுத்தி, குருடர் அநேகருக்குப் பார்வை
யை அருளினார்.—பின்பு யேசு அவர்களுக் உஉ
குத்தரமாக, நீங்கள்போய், கண்டுகேட்டசெய்
திகளை யோவானுக்குத்தெரிவியுங்கள்; குருடர்
பார்வையடைகிறார்கள், சப்பாணிகள் நடக்கி
றார்கள், குஷ்டரோகிகள் சொஸ்தமாகிறார்கள்,
செவிடர் கேட்கிறார்கள், மரித்தோர் எழுப்பப்
படுகிறார்கள், தரித்திரரிடத்திற் சுவிசேஷம் பிர
சித்தமாயிற்று.—என்னில் இடறுண்ணாதவனெவ உங
னோ, அவன்வாழ்வுடையவனென்றார்.

யோவானுடைய தூதர்புறப்பட்டபின்பு, அ உச
வர் யோவானைக்குறித்துச் சனங்களிடத்திற் பே
சத்தொடங்கி, நீங்கள்வனத்தில் எதைப்பார்க்
கப்புறப்பட்டீர்கள், காற்றுக்கு அசையும் நாண
லையா;—எதைப்பார்க்கப்புறப்பட்டீர்கள், மெல் உரு
லியவஸ்திரங்களைத்தரித்த ஒருமனுஷனையா,கே
ளுங்கள், சிங்காரவஸ்திரங்களைத் தரிப்பவர்க
ளும், சுகியாய்ப் புசிப்பவர்களும் அரமனைகளி
லேதங்குகிறார்கள்.—எதைப்பார்க்கப் புறப்பட் உசு
டீர்கள், தீர்க்கதரிசியையா; ஆம், தீர்க்கதரிசியி

(எ. அதி. க.) மத்.அ.ரு. (யச) யோவா.யக.சங. அப்.கூ.சய. ரோ.ச.யஎ. (யசு) யோவா.ச.யகூ. (யஅ) மத்.யக.உ. (உஉ) மத்.யக.ச. ஏசா.ஙரு.ரு. (உச) மத்.யக.எ.

லும் அதிகமேன்மையுள்ளவனையேயென்றுநான்
௨௭ உங்களுக்குச்சொல்லுகிறேன்.—"பாரும், நான்
என்தூதனைஉமக்குமுன்பாகஅனுப்புகிறேன்,அ
வன் உமக்குமுன்னே உமதுவழியை ஆயத்தப்ப
டுத்துவான்," என்றெழுதப்பட்டவன் இவனே.—
௨௮ ஸ்திரிகளிடத்திற் பிறந்தவர்களில் யோவான்ஸ்
நானனிலும் பெரியதீர்க்கதரிசியில்லை: ஆயினும்
தேவனுடைய இராச்சியத்திற் சிறியவன் அ
வனிலும் பெரியவனென்று நான் உங்களுக்குச்
௨௯ சொல்லுகிறேனென்றார்.—கேட்ட சகல சனங்
களும், ஆயக்காரரும்யோவானிடத்தில் ஞானஸ்
நானம்பெற்றவர்களாயிருந்து தேவன் நீதியுள்
௩௰ ளவரென்று அறிக்கையிட்டார்கள்.—அவனிடத்
தில் ஞானஸ்நானம்பெறாமற் பரிசேயரும் நியா
யசாஸ்திரிகளுந் தேவனுடைய ஆலோசனை
யைவிரோதித்து, தள்ளிவிட்டார்கள்.
௩௧ அன்றியுங் கர்த்தர்,இக்காலத்திலுள்ளசனங்க
ளை ஆருக்கொப்பிடுவேன், இவர்கள்யாருக்கொ
௩௨ ப்பாயிருக்கிறார்கள்.—சந்தைகளிலிருந்து, உங்
களுக்காக ஊதினோம், நீங்கள் கூத்தாடவில்லை;
உங்களுக்காகப்புலம்பினோம், நீங்கள் அழவில்
லையென்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கூப்
பிடுகிற பிள்ளைகளுக்கொப்பாயிருக்கிறார்கள்.—
௩௩ யோவான்ஸ்நானன்வந்து அப்பம்புசிக்கவுமில்
லை, திராட்சரசங்குடிக்கவுமில்லை; அதினாற் பி
சாசையுடையவனாயிருக்கிறானென்கிறீர்கள்.—
௩௪ மனுபுத்திரனோ வந்து போசனபானம்பண்ணுகி
றான்; நீங்கள், அவனைப்போசனப்பிரியன், மது
பானி, ஆயக்காரருக்கும் பாவிகளுக்குந் தோழ
௩௫ னென்கிறீர்கள்,-ஆனாலும் ஞானம், தன் எல்லா
ப்பிள்ளைகளாலும் நீதியாய் எண்ணப்படுகின்ற
தென்றார்.
௩௬ பரிசேயரில் ஒருவன்தன்னுடன் போசனம்
பண்ணும்படி அவரை வேண்டிக்கொண்டான்.
அவர்பரிசேயனுடைய வீட்டிற் பிரவேசித்துப்
௩௭ பந்தியிருந்தார்.—பரிசேயனுடைய வீட்டிலே
பந்தியிருக்கிறதை அந்த ஊரிலுள்ள பாவியாகிய
ஒருஸ்திரி அறிந்து, ஒருபரணியிற்சுகந்ததைலத்
௩௮ தைக்கொண்டுவந்து,—அவருடைய பாதங்களி
னருகே பின்னாகநின்று அழுதுகொண்டு, அவரு
டைய பாதங்களைக்கண்ணீரினாலே கழுவி, தன்
தலைமயிரினாலேதுடைத்து, அவருடையபாதங்க
ளைமுத்தஞ்செய்து, சுகந்ததைலத்தைப்பூசினாள்.-
௩௯ அவரை அழைத்தபரிசேயன் அதைக்கண்டபொ
ழுது, இவள்பாவியே. இவர் தீர்க்கதரிசியானால்
தம்மைத்தொடுகிற ஸ்திரி இன்னாளென்றும், இப்
படிப்பட்டவளென்றும் அறிந்திருப்பாரென்று
௪௰ தனக்குள் எண்ணிக்கொண்டான்.-அப்பொழுது
யேசு அவனைநோக்கி,சீமோனே,உனக்கு ஒன்
றைச்சொல்ல விரும்புகிறேனென்று சொல்ல,அ
௪௧ வன் போதகரே, சொல்லுமென்றான்.-கடன்கா
ரன் ஒருவனுக்குக்கடனாளிகள் இரண்டுபேரிருந்
தார்கள்: அவர்களில் ஒருவன் ஐந்நூறுதேனாரியக்
காசும், மற்றவன் ஐம்பதுங் கொடுக்கவேண்டிய
தாயிருந்தது.—அவர்கள் கொடுக்கிறதற்குத் திரா ௪௨
ணியில்லாதவர்களாயிருந்தபொழுது, இருவருக்
குங் கடனைமன்னித்தான். அவர்களில் எவன்
அவனிடத்தில் அதிக அன்பாயிருப்பான்;அதை
எனக்குச்சொல்லென்றுகேட்க,—சீமோன் அவ ௪௩
ருக்குத்தரமாக, மிகுதிக்கு மன்னிப்புப்பெற்றவ
னேயென்று நினைக்கிறேனென்றான். அப்பொ
ழுது அவர் நீ யதார்த்தமாய்த்தீர்த்தாயென்றுசொ
ல்லி,—பின்பு ஸ்திரிக்குநேரே திரும்பி, சீமோ ௪௪
னைநோக்கி, இந்த ஸ்திரியைப் பார்க்கிறாயா;
நான் உன்வீட்டில்வந்தபொழுது நீ என்கால்க
ளுக்காகத் தண்ணீரைத் தரவில்லை: இவளோ
கண்ணீரினால் என்கால்களைக்கழுவி, தன் தலை
மயிராலே துடைத்தாள்.—நீ என்னை முத்தஞ் ௪௫
செய்யவில்லை: நான்இங்கேபிரவேசித்ததுமுதல்
இவள் என்பாதங்களை ஓயாமல் முத்தஞ்செய்கி
றாள்.—நீ என்தலைக்கு எண்ணெயிடவில்லை: இ ௪௬
வளோ சுகந்த தைலத்தை என் பாதங்களிற் பூசி
னாள்.—ஆதலால் இவள்செய்த அநேக பாவங்கள் ௪௭
மன்னிக்கப்பட்டதைக்குறித்து மிகவும் அன்பா
யிருக்கிறாளென்று உனக்குச் சொல்லுகிறேன்;
கொஞ்சமாக மன்னிப்புப்பெற்றவனெவனோ,
அவன் கொஞ்சமாய் நேசிப்பானென்று சொல்
லி,—பின்பு அவளைநோக்கி, உன்பாவங்கள் மன் ௪௮
னிக்கப்பட்டனவென்றார்.—பந்தியிலிருந்தவர் ௪௯
கள், பாவங்களை மன்னிக்கிற இவன்யாவனென்
று தங்களுக்குள்ளேசொல்லிக்கொண்டார்கள்.-
அவர் ஸ்திரியைநோக்கி, உன்விசுவாசம்உன்னை ௫௰
இரட்சித்தது, சமாதானத்தோடேபோவென்றார்.

## ௮. அதிகாரம்.

௧. கிறிஸ்து நகரந்தோறுந்திரிதல்: ௪. வித்திடுகிற வனை உவமித்தல்: ௯. அதின்தாற்பரியத்தைத் தெரிவித்தல்: ௰௬. விளக்கை உவமித்தல்: ௰௯. தமது குடும்பத்தார் இன்னாரென்று காட்டல்: ௨௨. காற்றைஅடங்கச்செய்தல்: ௨௬. பிசாசுகளைத்துரத்தல்: ௪௰. சனங்கள் கிறிஸ்துவைத்தேடல்: ௪௩. பிரதரவியாதியை நீக்கல்: ௪௯. அதிபதியின்கன்னியை உயிர்ப்பித்தல்.

பின்பு அவர் பட்டணங்கள்கிராமங்கள்தோறுந் ௧
திரிந்து, தேவனுடைய இராச்சியத்தைச்சுவி
சேஷமாய்க்கூறிப்பிரசித்தப்படுத்தினார்: பன்னி
ருவரும் அவருடனிருந்தார்கள்.—தீமையா ௨
ன ஆவிகளினின்றும் வியாதிகளினின்றுஞ்சொ
ஸ்தமாக்கப்பட்ட சில ஸ்திரிகளும், ஏழு பிசா
சுகள் நீங்கிய மக்தலீனீயென்னும் மரியாளும்,—
ஏரோதின்வீட்டதிகாரியாகிய கூசாவின்மனைவி ௩
யோவன்னாளும், ஸூஷன்னாளும்,மற்றை அநே
கருந் தங்கள் பொருளைச்செலவுசெய்து,அவருக்
குப் பணிவிடைசெய்து, அவருடனே யிருந்
தார்கள்.
பின்புபட்டணங்களினின்றுமிகுந்தசனங்கள் ௪
வந்து அவரிடத்திற் கூடியிருக்கிறபொழுது,—அ கி

(௨௭)மல்.௩.௧.(௩௰)அப்.௨௰.௨௭.(௩௧)மத்.௰௧.௰௬.(௩௩)மத்.௩.௪.(௩௫)மத்.௰௧.௰௯.(௩௬)மத்.௨௬.௬.(௪௬)சங்.௨௩.௫.(௪௭)௧.தீமோ.௧.௰௪.(௪௮)மத்.௯.௨.(௪௯)மத்.௯.௩.—(௮.அதி.௨.) மத்.௨௭.௫௫,௫௬. மாற்.௰௬.௯.(௪)மத்.௰௩.௨.

வர், விதைக்கிறவன் தன்விதையை விதைக்கப்பு
றப்பட்டான்: அவன்விதைக்கிறபொழுது சிலவ
ழியருகேவிழுந்தன; பின்பு மிதிக்கப்பட்டன,ஆ
காயத்துப்பறவைகள் அவைகளைப்பட்சித்தன.—
௬ சில கற்பாறையின்மேல் விழுந்தன; அவைமு
ளைத்தபின் ஈரமில்லாததினால் உலர்ந்துபோயி
௭ ன.-சிலமுட்செடிகளுள்ள இடத்திலே விழுந்த
ன; முட்செடிகளுங்கூடவளர்ந்து, அவைகளை
௮ நெருக்கின.—சில நல்லநிலத்திலே விழுந்துமுளை
த்து, நூறுமடங்காகப் பலன்கொடுத்தனவென்
று இந்த உவமையைச்சொன்னார். அவர் இவை
களைவசனித்த பின்பு, கேட்கிறதற்குக் காதுள்ள
வன்கேட்கக்கடவனென்று உரத்தசத்தத்துடன்
௯ சொன்னார்.—அவருடையசீஷர் அவரைநோக்கி,
இந்த உவமையின் தாற்பரியமென்னவென்று
௰ கேட்க,-அவர்,தேவனுடைய இராச்சியத்தின்
மறைபொருள்களை அறியும்படிக்கு உங்களுக்கு
அருள்கிடைத்தது: மற்றவர்கள் கண்டுங்காணாம
லும், கேட்டும் உணராமலும் இருக்கும்படி அ
வர்களுக்குஉவமைகளாகச்சொல்லப்பட்டி
௰௧ ருக்கின்றன.-இந்த உவமையின்கருத்து இது:
௰௨ விதையானது தேவனுடைய வாக்கு.—வழிய
ருகானவர்கள் கேட்கும்பொழுது விசுவாசியா
மலும், இரட்சிக்கப்படாமலும் இருக்கும்படிக்
குப்பிசாசானவன்வந்து, அவர்களுடைய இருத
௰௩ யங்களிலுள்ள வாக்கைக் கவருகிறான்.—கற்பா
றைக்கொப்பானவர்கள், கேட்கும்பொழுது சந்
தோஷத்தோடே வாக்கை உட்கொண்டு,பின்பு
அது தங்களுக்குள்ளே வேரூன்றச்செய்யாமல்,
சிலகாலம் மாத்திரம்விசுவாசித்துச்சோதனைக்கா
௰௪ லத்திலேவிழுகிறார்கள்.—விதைவிழுந்த முட்செ
டிகளுள்ள நிலத்துக்கொப்பானவர்கள், கேட்
டும், கவலைகளிலும், செல்வத்திலும், சீவனத்
தின் சிற்றின்பங்களிலும் அமிழ்ந்ததினால்நிறைந்
௰௫ தபலன் கொடார்கள்.—நல்லநிலத்துக்கொப்பா
னவர்களோ, அவ்வாக்கைக்கேட்டு, நேர்மையும்
உண்மையுமான இருதயத்தில் அதைக்காத்துக்
கொண்டு, பொறுமையோடே பலன்கொடுத்து
வருகிறார்கள்.
௰௬ ஒருவனும் விளக்கைக்கொளுத்தி அதை ஒரு
பாத்திரத்தினால் மூடான், கட்டிலின்கீழே வை
யான்; உள்ளேவருகிறவர்கள் பிரகாசத்தைப்
௰௭ பார்க்கும்படி தண்டின்மேலேவைப்பான்.—வெ
ளிப்படையாகாத மறைபொருளில்லை; அறிந்
து, பிரசித்தமாக்கப்படாத இரகசியமுமில்லை.—
௰௮ ஆதலால் நீங்கள் கேட்கும் விதத்தைக்குறித்து
எச்சரிக்கையாயிருங்கள்: உள்ளவனெவனோ,அ
வனுக்குக் கொடுக்கப்படும்; உள்ளவனல்லாதவ
னெவனோ, அவன் தன்னிடத்திலுண்டென்று
நினைக்கிறதும் அவனிடத்தினின்று எடுத்துக்
கொள்ளப்படுமென்றார்.
௰௯ பின்பு அவருடையமாதாவுஞ் சகோதரரும்
அவரிடத்தில் வந்தார்கள், சனங் கூட்டமான
தினால் அவரிடத்திற் சேரக்கூடாமலிருந்தது.—
அப்பொழுது சிலர் அவரிடத்தில், உம்முடை ௨௰
ய மாதாவும் உம்முடைய சகோதரரும் உம்
மைப்பார்க்கவிரும்பிவெளியேநிற்கிறார்களென்
றுசொல்ல,-அவர் அவர்களுக்குத்தரமாக,தேவ ௨௧
னுடைய வாக்கைக்கேட்டு அதின்படி செய்
பவர்களே என்மாதாவும்,என்சகோதரருமாயிருக்
கிறார்களென்றார்.
ஒருநாள் அவர் தம்முடையசீஷரோடு ஒருப ௨௨
டவிலேறி, அவர்களைநோக்கி,கடலின்அக்கரை
க்குப்போவோம் வாருங்களென்றார். அவர்கள்
அப்படியே புறப்பட்டுப்போனார்கள்.-அவர்கள் ௨௩
ஓடுகையில் அவர் நித்திரையானார்: கடலிலே சு
ழல்காற்றுண்டானதினால் அவர்கள் மோசமடை
ய,படவு சலத்தினால் நிறைந்தது.-அதினால் அவர் ௨௪
கள் அவரிடத்தில்வந்து, ஆண்டவரே, ஆண்
டவரே, நாங்கள் கெட்டுப்போகிறோமென்று
சொல்லி அவரை எழுப்பினார்கள். அப்பொழுது
அவர் எழுந்து, காற்றையுஞ் சலத்தின் உக்கிரத்
தையுங் கடிந்தார்: அவைகள் அமர, மகாஅமை
தியுண்டாயிற்று.-பின்பு அவர் அவர்களைநோக் ௨௫
கி, உங்கள் விசுவாசமெங்கேயென்றார்; அவர்
கள் பயந்து, ஆச்சரியப்பட்டு, இவர் எப்படிப்
பட்டவரோ; காற்றுகளுக்குஞ் சலத்துக்குங்கட்
டளையிடுகிறார், அவைகளும் இவருக்கு அமைந்
திருக்கின்றனவேயென்று ஒருவரோடொருவர்
சொல்லிக்கொண்டார்கள்.
பின்பு கலிலேயாநாட்டுக்கெதிர்ப்புறத்திலுள் ௨௬
ள கதரேனர்நாட்டிலே சேர்ந்தார்கள்.-அவர் அக் ௨௭
கரையிலிறங்கினபொழுது, நெடுநாளாகப் பிசா
சுகளாற்பிடிக்கப்பட்டஒருவன்,பட்டணத்தினி
ன்றுவந்து அவருக்கு எதிர்ப்பட்டான், அவன்
வஸ்திரந்தரியாமலும், எந்த வீட்டிலாவது வாச
மாயிராமலும் பிரேதவறைகளில் வாசம்பண்ணி
னான்.-அவன் சங்கிலிகளாலும், விலங்குகளாலு ௨௮
ம் பிணிப்புண்டு, காவல்செய்யப்பட்டிருந்தும்,
அவன் விலங்குகளைத்தகர்த்துவிட்டு,பிசாசினால்
ஏவப்பட்டு, வனாந்தரத்தில் இழுக்கப்பட்டான்.
யேசு அந்த அசுத்த ஆவி அவனைவிட்டுப்போ
கும்படி கட்டளையிட்டதினால்,—அவன் யேசு ௨௯
வைக் கண்டபொழுது குரலிட்டு, அவருக்கு
முன்பாகவிழுந்து, யேசுவே, சருவத்திற்குமே
லான தேவனுடைய குமாரனே, எனக்கும்
உமக்கும் என்ன; என்னை வேதனைப்படுத்தாதப
டி உம்மை வேண்டுகிறேனென்றான்.—பின்பு ௩௰
யேசு அவனைநோக்கி, உன்பெயரென்னவென்
றுகேட்க, அநேக பிசாசுகள் அவனிடத்திற்பு
குந்தபடியால், அவன் லேகியோனென்றான்.—
தங்களைப் பாதாளத்துக்குப்போகக் கட்டளையி ௩௧
டாதபடி அவைகள் அவரை வேண்டிக்கொண்
டன.—அவ்விடத்து மலைச்சாரலில் அநேகம் ௩௨
பன்றிகள் கூட்டமாய் மேய்ந்துகொண்டிருந்
தன: அவைகள் அந்தப்பன்றிகளுக்குட்பிரவே

(௯) மத்.௰௩.௰.(௰)எசா.௬.௯. (௰௧) மத்.௰௩.௰௮. (௰௬) மத்.௫.௰௫. (௰௭) மத்.௰.௨௬. (௰௮) மத்.௰௩.௰௨.(௰௯) மத்.௰௨.௪௬. (௨௨) மத்.௮.௨௩. (௨௬) மத்.௮.௨௮. (௩௧) வெளி.௨௰.௨.

சிக்கும்படி தங்களுக்கு உத்தரவுகொடுக்கவேண்
டுமென்று அவரை வேண்டிக்கொள்ள, அப்படி
௩௩ யே அவைகளுக்கு உத்தரவுகொடுத்தார்.—உட
னே பிசாசுகள் அந்தமனுஷனை நீங்கி, பன்றிக
ளுக்குட்புகுந்தன: பன்றிக்கூட்டம் மேட்டிலி
ருந்து விரைந்தோடி, கடலிலே பாய்ந்து, சலத்
௩௪ திலே மாண்டுபோயின.—அவைகளை மேய்த்
தவர்கள் அதைக்கண்டு ஓடிப்போய், நகரத்தி
லும் நாட்டிலும் அந்தச்செய்தியைத்தெரிவித்தார்
௩௫ கள்.—அப்பொழுது சனங்கள்நடந்ததைப்பார்க்
கும்படி புறப்பட்டு யேசுவினிடத்திலே
வந்து, பிசாசுகள் விட்டுப்போன மனுஷன்வஸ்
திரந்தரித்து, புத்திதெளிந்து, யேசுவின் பாதத்
௩௬ தினருகே இருக்கக்கண்டு பயந்தார்கள்.—பிசா
சுகளாற் பிடியுண்டிருந்தவன் விடுவிக்கப்பட்ட
விதமின்னதென்று கண்டவர்களும் அவர்களுக்
குத் தெரிவித்தார்கள்.
௩௭ அப்பொழுது கதரேனருடைய சுற்றுத்தேசத்
தின் சனங்களெல்லாரும் மிகுந்த பயமடைந்த
வர்களானபடியினாலே, தங்களை விட்டுப்போ
கும்படி அவரைவேண்டிக்கொண்டார்கள்; அந்
௩௮ தப்படி அவர்படவிலேறித் திரும்பினார்.—பிசா
சுகள் விட்டுப்போன மனுஷன் அவருடனே
இருக்கும்படி அவரிடத்தில் உத்தரவு கேட்டுக்
௩௯ கொண்டான்.—யேசு, நீ உன்வீட்டுக்குத்திரும்
பிப்போய், தேவன் உனக்குச்செய்த மகாகிரி
யையை அறிவிப்பாயாகவென்றுசொல்லி அவ
னைஅனுப்பிவிட்டார். அந்தப்படிஅவன்போய்,
தனக்கு யேசுசெய்த பெரியகாரியங்களை நகரத்
௪௰ திலெங்கும் பிரசித்தப்படுத்தினான்.-பின்பு யே
சு திரும்பிவந்தபொழுது சனங்கள் யாவரும் அ
வரை அபேட்சித்துக்காத்திருந்தபடியால் அவர்
கள் அவரை அங்கிகரித்தார்கள்.
௪௧ அப்பால் ஆலயத்தலைவனாகிய யாயீருவந்து,
யேசுவின் பாதத்தில் விழுந்து, தனக்குண்டா
னபன்னிரண்டு வயதுள்ள ஒரேபுத்திரி மரண
௪௨ வஸ்தையாய்க் கிடக்கிறபடியினாலே,-தன் வீட்
டுக்கு வரும்படிக்கு அவரை வேண்டிக்கொண்
டான். அவர்அவனுடனே போகையில் சனங்
கள் அவரைநெருக்கினார்கள்.
௪௩ பன்னிரண்டு வருஷமாகப் பெரும்பாடுடை
யவளாய், தன்பொருள்கள்யாவையும் வைத்திய
ருக்குச்செலவழித்தும், ஒருவராலுஞ் சொஸ்த
௪௪ மடையாத ஒருஸ்திரி பின்னாலேவந்து,—அவ
ருடைய வஸ்திரத்தினோரத்தைத்தொட்டாள்: உ
டனே அவளுடைய இரத்தஊறல் நின்றுபோயிற்
௪௫ று.-யேசு, என்னைத்தொட்டவர் யாவரென்றார்;
நாங்கள் அறியோமென்று எல்லாருஞ்சொன்ன
பொழுது, பேதுருவும் அவரோடிருந்தவர்களும்
அவரைநோக்கி, சனங்கள் உம்மைநெருக்கி உ
ரஞ்சிக்கொண்டிருக்க, என்னைத்தொட்டவர் யா
வரென்று எப்படிக் கேட்கிறீரென்றுசொல்ல,—
௪௬ யேசு, சத்துவம் என்னைவிட்டுப் புறப்பட்டதை
அறிந்திருக்கிறேன்: ஆதலால் ஒருவர் என்னைத்
தொட்டதுண்டென்றார்.-அந்தஸ்திரிதான் மறைந்சுஇ
ருக்கக்கூடாதென்றுகண்டு, நடுங்கிவந்து, அவ
ர்முன்பாகவிழுந்து, தான் அவரைத்தொட்டகார
ணத்தையும், தொட்டமாத்திரத்தில் சொஸ்தம
டைந்தவிதமின்னதென்பதையும் எல்லாச்சனங்
கள்முன்னும் அவருக்கு அறிவித்தாள்.—அவர் ௪௮
அவளைநோக்கி, மகளே, ஆறுதலாயிரு: உன்விசு
வாசம் உன்னை இரட்சித்தது; சமாதானத்தோ
டேபோவென்றார்.
அவர் பேசுகையில், ஆலயத்தலைவனுடைய ௪௯
வீட்டினின்று ஒருவன்வந்து, அவனைநோக்கி,
உம்முடையமகள் இறந்துபோனாள்; போதகரை
வருத்தப்படுத்தவேண்டுவதில்லை யென்றான்.—
யேசு அதைக்கேட்டு, யாயீருவை நோக்கி, நீ ௫௰
பயப்படாதே: விசுவாசித்துக்கொள், அவள்காக்
கப்படுவாளென்றார்.—அவர் வீட்டிலே சேர்ந்த ௫௧
பொழுது, பேதுருவையும், யாக்கோபையும், யோ
வானையும், பெண்ணுடைய பிதா மாதாக்களையுந்
தவிர, வேறொருவருக்கும் உள்ளேபோக அவர்
இடங்கொடாமல்,—எல்லாரும் அவளைக்குறித் ௫௨
து அழுது துக்கங்கொண்டாடுகையில், அவர்,
நீங்கள் அழவேண்டாம்; அவள் இறந்துபோ
கவில்லை, நித்திரையாயிருக்கிறாளென்றார்.—அ ௫௩
வள் இறந்துபோனாளென்று அவர்கள் அறிந்த
தினால், அவரைப் பரிகாசம்பண்ணினார்கள்.—
பின்பு அவர் எல்லாரையும் வெளியேபோகப் ௫௪
பண்ணி, அவளுடைய கையைப்பிடித்து, கன்
னியே, எழுந்திருவென்றுசொல்ல,-அவளுடை ௫௫
யஆவி திரும்பிவந்தது, உடனே அவள் எழுந்தி
ருந்தாள்: அவளுக்குப் போசனங்கொடுக்கும்ப
டி கட்டளையிட்டார்.-அவளுடைய பிதாமாதாக் ௫௬
கள் பிரமித்தார்கள்: நடந்ததை ஒருவருக்குஞ்
சொல்லாதபடிக்கு அவர் அவர்களுக்குக் கட்ட
ளையிட்டார்.

## ௯. அதிகாரம்.

௧. சீஷரையனுப்பல்: ௭. ஏரோது கிறிஸ்துவைக்
காணவிரும்பல்: ௰. ஐந்தப்பங்களாலும் இரண்டு
மீன்களினாலும் ஐயாயிரவரைப் போஷித்தல்:
௰௮. கிறிஸ்துவை நிருணித்தல்: ௨௩. கிறிஸ்துஉ
பதேசித்தல்: ௨௮. அவர்வேற்றுருவமாதல்: ௩௭.
பிசாசுபிடித்த பாலகனைச் சொஸ்தப்படுத்தல்:
௪௬. தாழ்ந்தசிந்தை அவசியமெனக்காட்டல்:
௪௯. எல்லார்மேலுந் தயைசெய்வது கடமை
யென்று போதித்தல்: ௫௧. ஷமாரியர் கிறிஸ்து
வை அங்கிகரியாமல்தள்ளல்: ௫௭. திடசிந்தை
யில்லாமல் தமக்குப்பின்செல்ல விரும்பினவர்
களுக்குப் புத்திசொல்லல்.

பின்பு அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷ ௧
ரையுங்கூடிவரஅழைத்து, எந்தப்பிசாசுகள் மே
லும் அதிகாரத்தையும், வியாதிகளை நீக்குவதற்கு
வல்லமையையும் அவர்களுக்குக்கொடுத்து,—
அவர்களைநோக்கி, பிரயாணத்தினிமித்தந் தடிக ௨
ளையாவது, பையையாவது, அப்பத்தையாவது,

(௩௭) மத்.௮.௩௪. அப்.௰௬.௩௯. (௩௮) மாற்.௫.௰௮. (௪௧) மத்.௯.௰௮.(௪௩)மத்.௯.௨௰.(௪௬)மாற்.௫.௩௰.(௪௧)மாற்.௫.௨௨,. (௫௨) யோவா.௰௧.௰௧,௰௩. (௫௪) யோவா.௰௧.௪௩. (௫௬) மத்.௮.௪.—(௯. அதி. ௧.) மத்.௰.௧.(௨)மத்.௰.௯.

காசையாவது எடுத்துக்கொள்ளாதிருங்கள்; ஆ
ளுக்கு இரண்டு அங்கிகளையுங் கொண்டுபோக
௩ வேண்டாம்.—நீங்கள் பிரவேசிக்கும் வீடெது
வோ, அதிலேதங்கி, அதினின்றுபுறப்படுங்கள்.-
௪ உங்களை ஏற்றுக்கொள்ளாதவர்களெவர்களோ,
அவர்களுடைய நகரத்தைவிட்டுப் புறப்படுகை
யில், அவர்களுக்குவிரோதமானசாட்சியாக உங்
கள் பாதங்களிற்படிந்ததூளையும் உதறிவிடுங்க
௫ ளென்று சொல்லி,—தேவனுடைய இராச்சி
யத்தைச்சுவிசேஷமாய் அறிவிக்கவும், பிணியா
ளிகளைச்சொஸ்தப்படுத்தவும் அவர்களை அனுப்
௬ பினார்.—அவர்கள் புறப்பட்டுப்போய், எங்குஞ்
சுவிசேஷத்தைப்பிரசங்கம்பண்ணி, பிணியா
ளிகளைச்சொஸ்தமாக்கி, கிராமங்கள்தோறுந்தி
ரிந்தார்கள்.
௭ அக்காலத்திலே காற்பங்கு தேசாதிபதியாகி
ய ஏரோது, அவராற் செய்யப்பட்டயாவையுங்
கேள்விப்பட்டதுமன்றி, சிலர் யோவான் மரித்
௮ தோரிலிருந்து உயிர்த்தெழுந்தானென்றும்,—சி
லர் இலீசா தோன்றினானென்றும், சிலர் பூருவ
காலத்திலுள்ள தீர்க்கதரிசிகளில் ஒருவன் உயிர்த்
தெழுந்தானென்றுஞ்சொன்னபடியினால் கலக்க
௯ முமடைந்தான்.—ஏரோது, யோவானை நான்சிரச்
சேதம்பண்ணினேன்,இப்படிப்பட்டவைகளைச்
செய்ய நான்கேள்விப்படுகிற இவன்யாவனென்
று சொல்லி, அவரைப்பார்க்க அபேட்சித்தான்.
௰ அப்போஸ்தலர் திரும்பிவந்து, தாங்கள் செய்
தயாவையும் அவருக்குத் தெரிவித்தபொழுது,அ
வர் அவர்களையுங் கூட்டிக்கொண்டுபேத்சாயிதா
வென்னும் பட்டணத்தைச்சேர்ந்த வனாந்தரத்
௰௧ திற்கு இரகசியமாய்ப்போனார்.-சனங்கள் அதை
அறிந்து, அவருக்குப்பின்னேபோனார்கள்: அ
வர்களை அவர் அங்கிகரித்துக்கொண்டு, தேவ
னுடைய இராச்சியத்தைக்குறித்து அவர்களு
டனே பேசி, சொஸ்தமடையவேண்டியவர்க
௰௨ ளைச்சொஸ்தமாக்கினார்.—சாயங்காலத்தில் பன்
னிருவருஞ்சேர்ந்து அவரைநோக்கி, நாம் இருக்
கிற இடம் வனாந்தரம், ஆதலால் சுற்றியிருக்கிற
பட்டணங்களுக்குங் கிராமங்களுக்கும்போய்த்
தங்கி, உணவுப்பொருளைச் சம்பாதித்துக்கொள்
ளும்படிக்குச்சனங்களை அனுப்பிவிடவேண்டு
௰௩ மென்றார்கள்.-அவரோ,நீங்களே அவர்களுக்குப்
௰௪ போசனங்கொடுங்களென்றுசொல்ல,-அவர்கள்
ஐந்தப்பங்களும்இரண்டுமீன்களும்மாத்திரம்எங்
களிடத்தில் உண்டு;ஆதலால்நாங்கள்போய்,இந்
தச்சனங்களெல்லாருக்காகவும் உணவுப்பொரு
ளைவாங்கவேண்டுமே என்றார்கள்; ஏறக்குறைய
௰௫ ஐயாயிரம் புருஷர் இருந்தார்கள்.—அவர் தமது
சீஷரைநோக்கி, இவர்களை ஐம்பது ஐம்பதுபே
ராகப்பந்தியிருக்கச்செய்யுங்களென்றுசொல்ல,
அந்தப்பிரகாரமே அவர்கள் எல்லாரையும் உட்
௰௬ காரப்பண்ணினார்கள்.—பின்பு அவர் அவ்வைந்
து அப்பங்களையும் இரண்டுமீன்களையும் எடுத்து,
வானத்தைப்பார்த்து, அவைகளை ஆசீர்வதித்துப்
பிட்டு, சனங்களின்முன்பாக வைக்கும்படிக்
குச் சீஷரிடத்திற் கொடுத்தார்.—அவர்களெல்லா ௰௭
ரும் புசித்துத்திருத்தியடைந்தார்கள்: மீந்தவை
பன்னிரண்டு கூடைநிறைய எடுக்கப்பட்டன.
பின்பு அவர் சனங்களைவிட்டு நீங்கி, தம்மு ௰௮
டைய சீஷருடனே பிரார்த்தனைபண்ணினபொ
ழுது அவர் அவர்களைநோக்கி,என்னைச்சனங்கள்
ஆரென்று சொல்லுகிறார்களென்று கேட்க,—அ ௰௯
வர்கள் உத்தரமாக, உம்மை யோவான்ஸ்நான
னென்றும், சிலர் இலீசாவென்றும், சிலர் பூரு
வத்திலுள்ள தீர்க்கதரிசிகளில் ஒருவன் உயிர்த்
தெழுந்தானென்றுஞ்சொல்லுகிறார்களென்
றார்கள்.—பின்பு அவர் அவர்களிடத்திலே, நீங் ௨௰
கள் என்னை ஆரென்று சொல்லுகிறீர்களென்ற
தற்கு, பேதுரு உத்தரமாய், நீர் தேவனுடைய
கிறிஸ்துவென்றான்.—அப்பொழுது அவர், அ ௨௧
வர்கள் அதை ஒருவருக்குஞ்சொல்லாதபடி உறு
தியாய் அவர்களுக்குக் கட்டளையிட்டார்.—மே ௨௨
லும் மனுபுத்திரன் மிகுந்தவேதனை அனுபவிக்க
வும், மூதியோராலும், பிரதான ஆசாரியராலும்,
வேதபாரகராலுந் தள்ளப்படவும்,கொல்லப்பட
வும், மூன்றாம்நாளில் உயிர்த்தெழுந்திருக்கவும்
வேண்டுமென்றார்.
பின்பு அவர் அவர்களெல்லாரிடத்திலும், என் ௨௩
னைப்பின்பற்றமனமுள்ளவன்,தன்னைவெறுத்து,
அனுதினமுந் தன் சிலுவையை எடுத்துக்கொண்
டு என்னைப்பின்பற்றக்கடவன்.-தன் பிராணனை ௨௪
இரட்சிக்க விரும்புகிறவன் அதை இழந்துபோ
வான்: என்னிமித்தந் தன்பிராணனை இழந்து
போகிறவனெவனோ,அவன் அதை இரட்சித்துக்
கொள்ளுவான்.—ஒருமனுஷன் உலகமுழுவதை ௨௫
யுஞ் சம்பாதித்துக்கொண்டாலும், தன்னைத்தா
னே கெடுத்து நாசமடைந்தால், அவனுக்கு என்
னலாபம்.-என்னைக்குறித்தும், என் வாக்குகளைக் ௨௬
குறித்தும் இலச்சையடைகிறவனெவனோ, அவ
னைக்குறித்து மனுபுத்திரனுந் தனது மகிமையோ
டும், பிதாவின் மகிமையோடும்,பரிசுத்த தூ
தருடைய மகிமையோடும் வரும்பொழுது
இலச்சையடைவான்.-இங்கேநிற்கிறவர்களிற்சி ௨௭
லர், தேவனுடைய இராச்சியத்தைக்காண்கிற
தற்குமுன்னே மரணமடைவதில்லையென்று மெ
ய்யாக உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.
இவ்வாக்குகளை அவர்சொல்லி ஏறக்குறைய ௨௮
எட்டுநாட்களின்பின், அவர் பேதுருவையும்,
யோவானையும்,யாக்கோபையுங்கூட்டிக்கொண்
டு பிரார்த்தனைபண்ணுகிறதற்கு ஒருமலையின்மே
லேறினார்.—அவர் பிரார்த்தனைபண்ணுகையில்அ ௨௯
வருடையமுகரூபம் மாறிற்று, அவருடையவஸ்
திரம் மிகவும் வெண்மையாய்ப்பிரகாசித்தது.—
அன்றியும் மோசே இலீசாவென்னும் இவ்விரு ௩௰

(௩) மத்.௰.௭,௮.(௪)மத்.௰.௰௧. (௫) மத்.௰.௰௪. அப்.௰௩.௫௧. (௬) மாற்.௬.௰௨.(௭)மத்.௰௪.௧. (௰) மாற். ௬.௩௰. மத். ௰௪.௰௩.(௰௨)மத்.௰௪.௰௫. (௰௮) மத்.௰௬.௰௩. (௰௯) மத்.௰௪.௨.(௨௰)மத்.௰௬.௰௬. (௨௧) மத்.௰௬.௨௰.(௨௨)மத்.௰௬.௨௧.(௨௩)மத்.௰.௩௮. (௨௫) மத்.௰௬.௨௬. (௨௬) மத்.௰.௩௩. ௨.தீமோ.௨.௰௨. (௨௭) மத்.௰௬.௨௮.(௨௮)மத்.௰௭.௧.

௩௧ வரும் மகிமையுடனே தோன்றி,-அவர் யெருஷ
லேமிலே நிறைவேற்றும் மரணத்தைக்குறித்துச்
௩௨ சம்பாஷணைபண்ணினார்கள்.—பேதுருவும் அவ
னோடிருந்தவர்களுங் கன நித்திரையடைந்தார்
கள்: விழித்தபின்பு, அவருடையமகிமையையும்
அவரோடே நிற்கும் அவ்விரண்டுபேரையுங் க
௩௩ ண்டார்கள்.—அவ்விருவரும் அவரைவிட்டுப்பி
ரிந்துபோகையில், பேதுரு யேசுவை நோக்கி,
ஆண்டவரே, நாம் இங்கேயிருப்பது நலம்:
நாங்கள் உமக்கொன்று, மோசேக்கொன்று, இலீ
சாவுக்கொன்றாக,மூன்றுகுடிசைகளை உண்டாக்
குவோமென்று, தான்பேசுகிறதின்னதென்பதை
௩௪ அறியாமல் பேசினான்.-இவ்விதமாய் அவன் பே
சுகிறபொழுது ஒருமேகம் அவர்கள்மேல் நிழ
லிட்டது: அவர்கள் மேகத்நிற் பிரவேசிக்கை
௩௫ யில் இவர்கள் பயந்தார்கள்.-இவர் எனது அன்பா
னகுமாரன்: இவருக்குச் செவிகொடுங்களென்
௩௬ று மேகத்தினின்று சத்தமுண்டாயிற்று.-அந்தச்
சத்தமுண்டாகுகையில்,யேசு மாத்திரங்காணப்
பட்டார். பின்பு அவர்கள் தாங்கள் கண்டவை
களில் ஒன்றையும் அந்நாட்களில் ஒருவருக்குஞ்
சொல்லாமலுந் தெரிவியாமலுமிருந்தார்கள்.
௩௭ மறுநாளில் அவர்கள் மலையினின்று இறங்கின
பொழுது, அநேகசனங்கள் அவரை எதிர்கொண்
௩௮ டுவந்தார்கள்.—அவர்களில் ஒருவன் ஒலமிட்டு,
போதகரே, நீர் என்மகனைக் கடாட்சிக்கும்படி
உம்மைவேண்டுகிறேன்: அவன் எனக்கு ஒரே
௩௯ பிள்ளை.-பாரும், ஒரு ஆவி சடுதியாய் அவனைப்
பிடிக்க, அவன் அலறுகிறான்; அது அவனை நு
ரைதள்ளும்படி உலைத்து, அவனை நசுக்கியும்,
௪௰ அவனைவிட்டு நீங்குவது அரிது.-அதைத்துரத்தும்
படிக்கு உம்முடைய சீஷரை வேண்டிக்கொண்
டேன்; அவர்களாற் கூடாமற்போயிற்றென்று
௪௧ சொல்ல,—யேசு உத்தரமாக, அவிசுவாசமும்
மாறுபாடுமுள்ள சந்ததியே,நான் எதுவரைக்கும்
உங்களிடத்திலிருந்து உங்களைச் சகிப்பேனென்
று சொல்லி, பின்பு உன் மகனை இங்கேகொண்
௪௨ டுவாவென்றார்.—அவன் வருகிறபொழுதும் பி
சாசு அவனைக் கீழேதள்ளி உலைக்க, யேசு அந்
த அசுத்தஆவியைக்கடிந்து, அந்தப்பிள்ளையைச்
சொஸ்தப்படுத்தி,அவனை அவன் பிதாவிடத்தில்
ஒப்பித்தார்.
௪௩ எல்லாருந் தேவனுடைய மகாவல்லமை
யைக்குறித்து ஆச்சரியப்பட்டார்கள். யேசு
செய்த எல்லாவற்றையுங்குறித்து யாவரும் ஆச்
சரியப்பட்டபொழுது அவர் தம்முடைய சீஷ
௪௪ ரைநோக்கி,-மனுபுத்திரன் மனுஷருடைய கை
களில் ஒப்பிக்கப்படுவான்: இந்தவாக்குகள் உங்
௪௫ கள் செவியிலேறவிடுங்களென்றார்.—அவர்கள்
அந்தவாக்கை அறியவில்லை, அது அவர்களுக்குத்
தோன்றாதபடி மறைக்கப்பட்டிருந்தது; அவ்
வாக்கைக்குறித்து அவரிடத்தில்விசாரிக்கவும் அ
வர்கள் பயந்தார்கள்.
பின்பு அவர்கள் தங்களில் யாவன் பெரியவ ௪௬
னென்று ஒருவரோடொருவர்வாக்குவாதம்பண்
ணியிருந்தார்கள்.—அவர்களுடைய இருதயசிந் ௪௭
தனையை யேசு அறிந்து, ஒருபிள்ளையை எடுத்
து,அதைத்தமதுசமீபத்திலே நிறுத்தி,-அவர்களை ௪௮
நோக்கி, என்நாமத்தினிமித்தம் இந்தச்சிறுபிள்
ளையை ஏற்றுக்கொள்ளுகிறவன், என்னை ஏற்றுக்
கொள்ளுகிறான்: என்னை ஏற்றுக்கொள்ளுகிற
வன், என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்ளு
கிறான்: உங்களெல்லாரிலுஞ் சிறியவனேபெரி
யவனாவானென்றார்.
அதற்கு யோவான், போதகரே, உம்முடைய ௪௯
நாமத்தினாலே பிசாசுகளைத்துரத்துகிற ஒருவனை
நாங்கள்கண்டு, அவன் எங்களுடன்பின்பற்றி ந
டவாதபடியினால் அவனைத் தடைபண்ணினோ
மென்றுசொல்ல,-யேசு அவனுடனே, நீங்கள் ௫௰
அவனைத் தடுக்கவேண்டாம்: நமக்குவிரோத
மாயிராதவன் நம்முடைய பட்சத்திலிருக்கிறா
னென்றார்.
அவர் ஏற்றப்படுங்காலம் நிறைவேறும்பொ ௫௧
ழுது, அவர் யெருஷலேமுக்குப்போகத் திடசித்
தைகொண்டு முகந்திரும்பி, தமக்குமுன்பாகத்
தூதரை அனுப்பினார்.—அவர்கள்போய், அவ ௫௨
ருக்காக இடம் ஆயத்தப்படுத்தும்படி ஷமாரிய
ருடைய ஒரு கிராமத்திலே பிரவேசித்தார்கள்.—
அவர் யெருஷலேமுக்குப்போக நோக்கமாயி ௫௩
ருந்தபடியினால், இவர்கள் அவரை ஏற்றுக்கொள்
ளவில்லை.—அவருடைய சீஷராகிய யாக்கோ ௫௪
பும் யோவானும் அதைக்கண்டு, கர்த்தா
வே, இலீசா செய்ததுபோல, இவர்களைப் பட்
சிக்க, வானத்தினின்று அக்கினிவரும்படி நாங்
கள் கட்டளையிடுவது உமக்குச்சித்தமாவென்று
கேட்க,—அவர் திரும்பி, அவர்களைக் கடிந்து, ௫௫
உங்கள் ஆவி இன்னவிதமென்று நீங்கள் அறி
யீர்கள்.—மனுபுத்திரன் மனுஷருடைய சீவனை ௫௬
அழிக்கிறதற்கல்ல, இரட்சிக்கவே வந்தானென்
றார். பின்பு அவர்கள் வேறொருகிராமத்திற்குப்
போனார்கள்.
அவர்கள் வழிநடந்துபோகையில் ஒருவன்அ ௫௭
வரைநோக்கி, கர்த்தாவே, நீர் எங்கேபோ
னாலும் உம்மைப்பின்செல்லுவேனென்றசொல்
ல,-அவனுடன் யேசு, நரிகளுக்குக்குழிகளும், ௫௮
ஆகாயத்துப்பறவைகளுக்குக் கூடுகளுமுண்டு;
மனுபுத்திரனுக்கோ தலைசாய்க்கவும் இடமில்லை
யென்றார்.-அவர் வேறொருவனைநோக்கி,நீஎன் ௫௯
னைப் பின்சென்று வாவென்றுசொல்ல, அவன்
ஆண்டவரே, முன்பு நான்போய், என்பிதா
வை அடக்கம்பண்ணும்படிக்கு உத்தரவுகொடுக்
கவேண்டுமென்றான்.—அதற்கு யேசு, மரித் ௬௰

(௩௨) தானி.௮.௰௮. (௩௫) மத்.௩.௰௭. அப்.௩.௨௨. (௩௬) மத்.௰௭.௯. (௩௭) மத்.௰௭.௰௪. (௪௪) மத்.௰௭.௨௨. (௪௫) மாற்.௯.௩௨. (௪௬) மத்.௰௮.௧. (௪௮) மத்.௰.௪௰. மத்.௨௩.௰௧,௰௨. (௪௯) மாற்.௯.௩௮. எண்.௰௧.௨௮. (௫௰) மத்.௰௨.௩௰. (௫௧) மாற்.௰௬.௰௯. அப்.௧.௨. (௫௩) யோவா.௪.௪,௯. (௫௪) ௨.இரா.௧.௰,௰௨. (௫௬) யோவா.௩.௰௭. (௫௭) மத்.௮.௰௯. (௫௯) மத்.௮.௨௧.

தோர் தங்களிடத்தில் மரித்தவர்களை அடக்கம்
பண்ணக்கடவர்கள்:நீபோய்த்தேவனுடைய
இராச்சியத்தைப்பிரசித்தப்படுத்துவாயாகவென்
௬௧ றூர்.—பின்பு வேறொருவன் கர்த்தாவே, உ
மக்குப்பின்செல்லுவேன்;ஆனாலும்முன்பு நான்
போய் என்வீட்டிலுள்ளவர்களிடத்தில் விடை
பெற்றுவரும்படி உத்தரவுகொடுமென்றான்.—
௬௨ யேசு அவனைநோக்கி,கலப்பையைப்பிடித்துக்
கொண்டு பின்னாகப்பார்க்கிறவன் எவனும், தே
வனுடைய இராச்சியத்துக்கு யோக்கியனல்ல
வென்றார்.

## ௰. அதிகாரம்.

௧. எழுபதுசீஷரை நியமித்தனுப்பல்: ௰௩. கோ
ராசின்முதலிய நகரங்களுக்கு வருந்தண்டனை
யைமுன்னறிவித்தல்: ௰௭. எழுபதுசீஷருடன்
சம்பாஷித்தல்: ௨௩. சீஷரை ஆசீர்வதித்தல்:
௨௫.நியாயசாஸ்திரிக்குபதேசித்தல்: ௩௮. மார்த்
தாளும் மரியாளுந் தங்கள் வீட்டில் கிறிஸ்து
வை உபசரித்தல்.

இவைகளின் பின்பு கர்த்தர் வேறெழுபது
பேரை நியமித்து, அவர்களை நோக்கி, விளைவு
மிகுதியே, அரிகிறவர்களோ சிலர்; ஆதலால் வி
ளைவுக்குத் தலைவன் அரிவதற்கு ஆட்களை அ
னுப்பும்படி அவரைவேண்டிக்கொள்ளுங்கள்.—
௨ நீங்கள்புறப்பட்டுப்போங்கள்: கேளுங்கள்,கோ
ணாய்களுக்குள்ளே ஆட்டுக்குட்டிகளைப்போல,
௩ நான் உங்களை அனுப்புகிறேன்.—நீங்கள் பணப்
பையையாவது, வட்டுவத்தையாவது, பாதரட்
சைகளையாவது கொண்டுபோகவேண்டாம்: வ
௪ ழியில்ஒருவரையும்வாழ்த்தவேண்டாம்.—நீங்கள்
ஒருவீட்டிலேபிரவேசிக்கும்பொழுது இந்தவீட்
டுக்கு வாழ்த்தலென்று முதற்சொல்லுங்கள்.—
௫ அங்கே வாழ்த்தலுக்குப்பாத்திரன் ஒருவன் இ
ருந்தால், உங்கள் வாழ்த்தல் அவனிடத்திலே
தங்கும்: இல்லாதிருந்தால், உங்களிடத்தில் தி
௬ ரும்பிவிடும்.—வேலைக்காரன் தன்கூலிக்குப்பாத்
திரன்: ஆதலால் அவர்கள் தருவதையே போசன
பானம்பண்ணுங்கள்: அந்தவீட்டில்தானே தங்
௭ குங்கள், வீட்டுக்கு வீடு போகாதிருங்கள்.—அன்
றியும்,நீங்கள் ஒருபட்டணத்திலேபிரவேசிக்கும்
பொழுது சனங்கள் உங்களை எற்றுக்கொண்
டால், உங்கள் முன்புவைக்கப்படுவதைப்புசித்
௮ து,—அங்கிருக்கும் நோயாளிகளைச் சொஸ்தப்ப
டுத்தி, தேவனுடைய இராச்சியம் உங்களுக்
குச்சமீபித்ததென்று அவர்களுக்குத்தெரிவியுங்
௯ கள்.—ஒரு பட்டணத்தில் நீங்கள் பிரவேசிக்
கும்பொழுது, அவர்கள் உங்களை ஏற்றுக்கொள்
ளாதிருந்தால் நீங்கள் அந்தப்பட்டணவீதிகளி
௰ லேபோய்,-எங்களில் ஒட்டிக்கொண்ட உங்கள்
பட்டணத்தின் புழுதியையும் உங்களுக்கு வி
ரோதமாய்த்துடைத்துப்போடுகிறோம்: ஆயினும்
தேவனுடைய இராச்சியம் உங்களுக்குச்சமீ
பித்ததென்று நீங்கள் நிச்சயித்து அறிந்துகொள்
ளுங்களென்பதைச்சொல்லுங்கள்.—அந்நாளில் ௰௧
அந்தப்பட்டணத்தின் நிலைமையிலுஞ் சோதோ
மின்நிலைமை சகாயமாயிருக்குமென்று நான்உங்
களுக்கு சொல்லுகிறேனென்றார்.
ஐயோ,கோராசினே,ஐயோ,பேத்சாயிதாவே, ௰௨
உங்களுக்கு ஆபத்துவரும்; உங்களுக்குள்ளே ந
டந்த ஆச்சரியமான கிரியைகள் தீருசீதோன்
நகரங்களில் நடந்தால் அவர்கள் நெடுங்காலத்
துக்குமுன் இரட்டைத்தரித்து, சாம்பலில் உட்
காந்து மனந்திரும்புவார்கள்.—ஆதலால் நியாயத் ௰௩
தீர்ப்பில் உங்கள்நிலைமையிலுந் தீருசீதோன் நகர
த்தாரினிலைமை சகாயமாயிருக்கும்.-ஓ, வானபரி ௰௪
யந்தம் உயர்த்தப்பட்டகப்பர்நாகூமே,நீ பாதாள
பரியந்தந் தாழ்த்தப்படுவாயென்றார்.-உங்கள் வா ௰௫
க்கைக்கேட்கிறவன்,என்வாக்கைக்கேட்கிறான்;
உங்களை அவமதிக்கிறவனெவனோ, அவன் என்
னை அவமதிக்கிறான்; என்னை அவமதிக்கிறவன்,
என்னை அனுப்பினவரை அவமதிக்கிறானென்
றுசொல்லி,—தாம்போகும் எல்லாப்பட்டணங்க ௰௬
ளுக்கும், மற்றஸ்தானங்களுக்கும் இருவரிருவ
ராகத் தமக்குமுன் அனுப்பிவிட்டார்.
அவ்வெழுபதுபேருஞ் சந்தோஷத்துடன் தி ௰௭
ரும்பிவந்து, கர்த்தாவே, உமது நாமத்தினா
லே பிசாசுகளும் எங்கள் வசப்பட்டனவென்று
சொல்ல,-அவர் அவர்களைநோக்கி, சாத்தான் வா ௰௮
னத்தினின்று மின்னல்போலவிழக்கண்டேன்.-
கேளுங்கள், சருப்பங்களையுந் தேள்களையும் மி ௰௯
திக்கவும், சத்துருவின் சகல பராக்கிரமத்தையும்
மேற்கொள்ளவுந்தக்கதாக உங்களுக்கு வல்
லமைதருகிறேன்: ஒன்றும் உங்களுக்குத் தீமை
செய்யமாட்டாது.—ஆயினும் ஆவிகள் உங்கள் ௨௰
வசப்பட்டனவென்று நீங்கள் சந்தோஷப்படா
மல், பரமண்டலத்தில் உங்கள் நாமங்கள்எழுதப்
பட்டனவென்று சந்தோஷப்படுங்களென்றார்.
அந்நேரத்தில் யேசு ஆவியிலே களிகூர்ந்து, ௨௧
வானத்திற்கும் பூமிக்கும் ஆண்டவராகிய பி
தாவே,நீர் இவைகளை ஞானவான்களுக்கும் வித்
துவான்களுக்கும் மறைத்து, பாலகருக்கு வெ
ளிப்படுத்தினீர்: இதினிமித்தம் உம்மைஸ்தோத்
திரிக்கிறேன். ஆ, பிதாவே, இது உமதுபார்வைக்
கு நலமாய்த்தோன்றிற்று, அப்படியே ஆவதாக.-
என்பிதாவினாற் சகலமும் என்னிடத்தில் ஒப் ௨௨
பிக்கப்பட்டன: பிதாவேயன்றி, ஒருவனுங் கு
மாரனை அறியான்; குமாரனும், குமாரன் ஆருக்
குவெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, அவ

(௬௧) ௧.இரா.௰௯.௨௰.—(௰. அதி. ௧.) மத்.௯.௩௭,௩௮. ௨.தெச.௩.௧. (௨) மத்.௰.௰௬. (௩) மத்.௰.௯. ௨.இரா.௪.௨௯. (௪) மத்.௰.௰௨. (௬) மத்.௰.௰௧. ௧.கொரி.௰.௨௭. ௧.கொரி.௯.௪,. ௧.தீமோ.௫.௰௭. (௮) மத்.௩.௨. (௯) மத்.௰.௰௪. அப்.௰௩.௫௧. (௰௧) மத்.௰.௰௫. (௰௨) மத்.௰௧.௨௧. எசேக்.௩.௬. (௰௪) மத்.௰௧.௨௩. எரே.௫௧.௫௩. எசேக்.௩௨.௰௮. (௰௫) மத்.௰.௪௰. ௧.தெச.௪.௮. யோவா.௫.௨௩. (௰௬) மத்.௰.௧. (௰௮) யோவா.௰௨.௩௧. வெளி.௯.௧. (௰௯) மாற்.௰௬.௰௮. அப்.௨௮.௫. (௨௰) யாத்.௩௨.௩௨. சங்.௬௯.௨௮. ஏசா.௪.௩. தானி.௰௨.௧. பிலி.௪.௩. எபி.௰௨.௨௩. வெளி.௰௩.௮. (௨௧) மத்.௰௧.௨௫. (௨௨) மத்.௨௮.௰௮. யோவா.௩.௩௫. யோவா.௧.௰௮.

னுமேயன்றி வேறொருவனும் பிதாவை அறியா
னென்றார்.
௨௩ பின்பு அவர் சீஷரிடத்தில்திரும்பி, இரகசிய
மாய் அவர்களுடனே, நீங்கள் காண்கிறவைக
ளைக் காணுங்கண்கள் ஆசீர்வதிக்கப்பட்டன.—
௨௪ அநேகந் தீர்க்கதரிசிகளும் இராசாக்களும் நீங்
கள் காண்கிறவைகளைக்காணவும், நீங்கள் கேட்
கிறவைகளைக்கேட்கவும் விரும்பியும், காணவுங்
கேட்கவுமில்லையென்று நான் உங்களுக்குச்
சொல்லுகிறேனென்றார்.
௨௫ அப்பொழுது நியாயசாஸ்திரி ஒருவன் எழுந்
து, அவரைச் சோதிக்கும்படி, போதகரே, நான்
நித்திய சீவனைப் பெறுவதற்கு என்னசெய்ய
௨௬ வேண்டுமென்று கேட்க,—அவர் அவனைநோக்
கி, வேதப்பிரமாணத்தில் என்ன எழுதியிருக்கின்
௨௭ றது; எப்படி வாசித்திருக்கிறாயென்றார்.—அதற்
கு அவன்உத்தரமாக, "உன் பூரண இருதயத்தோ
டும், உன் பூரணஆத்துமத்தோடும், உன் பூரண
பலத்தோடும், உன் பூரணமனதோடும் உன் தே
வனாகிய கர்த்தாவையும், உன்னைப்போ
லப்பிறனையும்நேசிப்பாயாக,"என்பதேயென்று
௨௮ சொல்ல,-அவர்அவனைநோக்கி,நீசொன்னஉத்த
ரஞ்சரி: அப்படிச்செய்தால் நீசீவனைப்பெறுவா
௨௯ யென்றார்.—அவன் தன்னை நீதிமானென்றுகாட்
டவிரும்பி, யேசுவை நோக்கி, என் அயலான்
௩௰ ஆரென்றுகேட்க,—யேசு உத்தரமாய், ஒருவன்
யெருஷலேமினின்று யெரிகோவுக்குப்போய்க்
கள்ளர்கையில் அகப்பட்டான், அவர்கள் அ
வனுடையவஸ்திரத்தை உரிந்துகொண்டு, அவ
னைக்காயப்படுத்தி, குற்றுயிராய்விட்டுப் போய்
௩௧ விட்டார்கள்.—பின்பு தற்செயலாய் ஆசாரியன்
ஒருவன் அந்தவழியேசெல்லுகையில்,அவனைக்
௩௨ கண்டு மறுபக்கமாய் விலகிப்போனான்.—அது
போலவே, ஒருலேவியனும் அந்த இடத்துக்கு
வந்து, அவனைச் சேர்ந்துபார்த்து, மறுபக்க
௩௩ மாய் விலகிப்போனான்.—பின்பு ஷமாரியன் ஒ
ருவன் பிரயாணம்பண்ணுகையில் அவன்இருந்
௩௪ த இடத்திற்போய், அவனைக்கண்டுஇரங்கி,—அ
வனிடத்திற்சேர்ந்து, அவனுடைய காயங்களில்
எண்ணெயுந் திராட்சரசமும் வார்த்து, அவைக
ளைக்கட்டி, அவனைத் தன் மிருகத்தின்மேலேற்
றி, சத்திரத்திலேகொண்டுபோய் அவனை ஆத
௩௫ ரித்தான்.-தான் புறப்படும் மறுநாளில், இரண்டு
தேனாரியக்காசைஎடுத்துச் சத்திரக்காரன்கையிற்
கொடுத்து, அவனைநோக்கி, நீ இவனை ஆதரித்
துக்கொள்: அதிகஞ்செலவழித்திருந்தால் நான்தி
௩௬ ரும்பிவரும்பொழுதுதருவேனென்றான்.-இம்மூ
வருக்குள் கள்ளர்கையில் அகப்பட்டவனுடை
ய அயலான்யாவன், நீ என்ன நினைக்கிறாயென்
௩௭ றார்.—இவன், அவன்மேல் தயைவைத்தவனே
யென்று சொல்ல, யேசு இவனைநோக்கி, நீயும்
போய், அப்படியேசெய்என்றார்.

பின்பு அவர்கள்செல்லுகையில் அவர் ஒருகி ௩௮
ராமத்திற்பிரவேசித்தார்: மார்த்தாளென்னும்பெ
யர்கொண்ட ஒருஸ்திரிஅவரைத்தன்வீட்டில் ஏற்
றுக்கொண்டாள்.—இவளுக்குச் சகோதரியான ௩௯
மரியாள் யேசுவின் பாதத்தண்டையிலுட்கார்ந்
து, அவர் உபதேசத்தைக்கேட்டாள்.–மார்த்தாள் ௪௰
பலவேலைகளில் அழுந்திக் கவலைகொண்டதி
னால் அவரிடத்திற்போய், கர்த்தாவே, என்
சகோதரி என்னைத் தனியே வேலைசெய்யும்படி
விட்டுவிட்டாளே, நீர் பார்க்கவில்லையா; எனக்
குதவிசெய்யும்படி அவளுக்குக் கட்டளையிடுவீ
ராகவென்றுசொல்ல,—யேசு இவளைநோக்கி, ௪௧
மார்த்தாளே, மார்த்தாளே, நீவெகுகாரியங்களைச்
சிந்தித்துக் கவலைப்படுகிறாய்.–ஒன்றுமாத்திரமே ௪௨
அவசியம்: மரியாள் தன்னைவிட்டு எடுக்கப்படா
தநல்லபங்கைத்தெரிந்துகொண்டாளென்றார்.

## ௰௧. அதிகாரம்.

௧. பிரார்த்தனையைக்குறித்துக்கிறிஸ்து உபதேசித்தல்: ௰௪. ஊமையான ஒருபிசாசைத் துரத்தல்: ௨௪. அசுசியான ஆவியை உவமித்தல்: ௨௭. வாழ்வுடையவர்களின்னாரென்றுநிருணித்தல்: ௨௯. கிறிஸ்து, சனங்களிடத்தில் வாக்கைப்பிரசித்தப்படுத்தல்: ௩௩. விளக்கை உவமித்தல்:௩௭. பரிசேயரைக்கண்டித்தல்: ௪௫. நியாயசாஸ்திரிகளைக்கண்டித்தல்.

அவர் ஒரு ஸ்தானத்தில் பிரார்த்தனைபண்ணி ௧
ஒழிந்தபின்பு, அவருடையசீஷரில் ஒருவன் அ
வரைநோக்கி, கர்த்தாவே, யோவான் தன் சீ
ஷருக்குப் பிரார்த்தனைபண்ணுகிறதற்குப் போ
தித்ததுபோல, நீரும் எங்களுக்குப் போதிக்க
வேண்டுமென்றான்.—அதினால் அவர் அவர்களு ௨
டனே, நீங்கள் பிரார்த்தனைபண்ணுகிறபொழு
து, பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே,
உம்முடையநாமம் பரிசுத்தப்படுவதாக. உம்மு
டைய இராச்சியம் வருவதாக: உம்முடைய சித்
தம் பரமணடலத்திலேசெய்யப்படுகிறதுபோல,
பூமண்டலத்திலேயுஞ் செய்யப்படுவதாக.—எங் ௩
களுக்குவேண்டியஆகாரத்தை எங்களுக்கு இன்
றுதாரும்.-எங்களுக்குக் குற்றஞ்செய்த யாவருக் ௪
கும் நாங்கள் மன்னிக்கிறபடியால்,நீரும் எங்கள்
பாவங்களை எங்களுக்குமன்னித்தருளும். நாங்
கள் சோதனையிற் பிரவேசியாதபடிசெய்து, தீ
மையினின்று எங்களை இரட்சித்துக்கொள்ளு
மென்று சொல்லுங்களென்றார்.—பின்னும் அ ௫
வர் அவர்களிடத்தில், உங்களில் ஒருவன் அந்த
ராத்திரியிலே தனக்குச் சிநேகனானவனிடத்திற்
குப்போய், அவனுடனே, சிநேகனே, என்
சிநேகிதன் ஒருவன் பிரயாணமாய் என்னிடத்
தில் வந்திருக்கிறான்.—அவனுக்குமுன் வைக்கி ௬
றதற்கு என்னிடத்தில் ஒன்றுமில்லை; நீர் எனக்
கு மூன்று அப்பங் கடனாகக்கொடுக்கவேண்டு
மென்று கேட்கும்பொழுது,–உள்ளே இருக்கிற ௭

(௨௩) மத்.௰௩.௰௬. (௨௪) ௧.பேதுரு.௧.௰. (௨௫) மத்.௰௯.௰௬. (௨௭) உபா.௬.௫. லேவி.௰௯.௰௮.(௨௮)லேவி.௰௮.௫. நிகி.௯.௨௯. எசேக்.௨௰.௰௧,௰௩,௨௧. ரோ.௰.௫. (௩௧) சங்.௩௮.௰௧. (௩௩) யோவா.௪.௯. (௩௫) மத்.௨௰.௨. (௩௮) யோவா.௰௧.௧. (௩௯) ௧.கொரி.௭.௩௨,. அதி.௮.௩௫. அப்.௨௨.௩. (௪௨) சங்.௨௭.௫.—(௰௧. அதி. ௨.) மத்.௬.௯.

வன், என்னைவருத்தப்படுத்தாதே: இப்பொழுது
கதவு பூட்டியாயிற்று, என்பிள்ளைகள் என்னு
டனே படுத்திருக்கிறார்கள். நான் உனக்குத்த
ருகிறதற்கு எழுந்திருக்கக் கூடாதென்று உத்த
௮ ரஞ்சொல்லி,-அவன் தனக்குச் சிநேகிதனாயிருப்
பதினிமித்தம் அவனுக்குஎழும்பிக்கொடாதிருந்
தும்,தன்னை அவன் வருந்திக்கேட்கிறபடியினால்
எழுந்து, அவனுக்குவேண்டிய அளவு கொடுப்
பானென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.—
௯ வேண்டிக்கொள்ளுங்கள், உங்களுக்குக்கொடுக்
கப்படும்; தேடுங்கள்,கண்டடைவீர்கள்; தட்டுங்
௰ கள், உங்களுக்குத் திறக்கப்படும்.—வேண்டிக்
கொள்ளுகிறவனெவனும் வாங்கிக் கொள்ளுகி
றான்; தேடுகிறவன் கண்டடைகிறான்; தட்டுகி
௰௧ றவனுக்குத்திறக்கப்படும்.—உங்களில் ஒருபிதா
விடத்தில் தன்மகன் அப்பங்கேட்டால் கல்லைக்
கொடுப்பானா; மீனைக் கேட்டால், மீனுக்குப்
௰௨ பிரதியாகப் பாம்பைக்கொடுப்பானா.-முட்டை
யைக்கேட்டால், அவனுக்குத் தேளைக்கொடுப்
௰௩ பானா.—தீயவர்களாகிய நீங்கள், உங்களுங்கள்
பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைக்கொடுக்க அறிந்
திருக்கையில், பரமண்டலத்திலுள்ள உங்கள்
பிதா, தம்மைவேண்டிக்கொள்பவர்களுக்கு மிக
வும் அதிகமாய்ப் பரிசுத்தஆவியைக் கொடுப்பா
ரல்லவாவென்றார்.
௰௪ பின்பு அவர் ஊமையான ஒருபிசாசைத்துரத்
தினார். பிசாசுவிட்டுநீங்கினபின்பு ஊமையன்
பேசினான்; சனங்கள் ஆச்சரியப்பட்டார்கள்.-
௰௫ அவர்களிற்சிலர் இவன் பிசாசாதிபதியாகிய பா
கால்சேபூலைக்கொண்டு பிசாசுகளைத்துரத்துகிறா
௰௬ னென்றார்கள்.—வேறுசிலர் அவரைச் சோ
திக்கும்படி, வானத்திலிருந்து ஒருஅடையாளத்
௰௭ தைக்காட்டும்படி அவரைக்கேட்டார்கள்.—அ
வர்களுடைய சிந்தனைகளை அவர் அறிந்து, அ
வர்களைநோக்கி, எந்த இராச்சியமுந் தனக்குள்
பிரிவுபட்டால் அழிந்துபோம்; ஒரு குடும்பந்த
னக்குள்பிரிவுபட்டால் அந்தக்குடும்பம் நாசம
௰௮ டையும்.-சாத்தானுந் தனக்குள்பிரிவுபட்டால்அ
வன்இராச்சியம் எவ்விதமாய்நிற்கும்; பாகால்சே
பூலைக்கொண்டு நான் பிசாசுகளைத்துரத்துகிறே
௰௯ னென்கிறீர்கள்.—நான் பாகால்சேபூலைக்கொண்
டு பிசாசுகளைத்துரத்தினேனாகில் உங்கள்பிள்ளை
கள் ஆரைக்கொண்டு துரத்துகிறார்கள்; ஆகை
யால் அவர்களே உங்களுக்குநியாயந்தீர்ப்பவர்க
௨௰ ளாவார்கள்.—நான் தேவனுடைய விரலினா
லே பிசாசுகளைத்துரத்துகிறேனேயாகில், தேவ
னுடைய இராச்சியம் உங்களுக்குள்ளே வந்து
௨௧ விட்டதுநிச்சயம்.—யுத்தசனனத்தனாகிய ஒருப
ராக்கிரமசாலி தன்அரணைக்காக்கும்பொழுது,அ
௨௨ வனுடைய பொருள் பத்திரப்பட்டிருக்கும்.—அ
வனிலும் அதிகபராக்கிரமசாலி வந்து அவனை
மேற்கொண்டால், அவன்நம்பியிருந்தசகல ஆயு
தவருக்கத்தையும்பறித்துக்கொண்டு, அவன்பொ
ருளைக்கொள்ளையாடிப் பங்கிடுவான்.—என்னு ௨௩
டனிராதவன், எனக்கு விரோதமாயிருக்கிறான்:
என்னோடே சேர்த்துக்கொள்ளாதவன் சிதற அ
டிக்கிறான்.-அசுத்தமான ஆவி ஒருமனுஷனைவிட் ௨௪
டுப்புறப்பட்டபின்பு, நீரற்றஇடங்களில் அலைந்
து, இளைப்பாறுதற்கானஇடத்தைத்தேடியுங்கண்
டடையாமலிருக்கும்பொழுது, அது, நான்விட்
டுவந்த என் இருப்பிடத்துக்குத் திரும்பிப்போ
வேனென்றுசொல்லி,—வந்து, அதுபெருக்கிச் ௨௫
சோடிக்கப் பட்டதாயிருக்கக்கண்டு,—திரும்பிப் ௨௬
போய், தன்னிலுந் தீமையுள்ள வேறேழு ஆவிக
ளைக்கூட்டிக்கொண்டுவந்து பிரவேசித்து, அங்
கேவாசம்பண்ணும்: அந்தமனுஷனுடைய முன்
னிலைமையிலும் பின்னிலைமைஅதிககொடிதாயி
ருக்குமென்றார்.
இவைகளைஅவர்பேசுகையில் கூட்டத்திலுள் ௨௭
ள ஒருஸ்திரி அவரைநோக்கி, உம்மைத்தரித்த
கருப்பமும், நீர் பாலுண்ட முலைகளும் ஆசீர்வ
திக்கப்பட்டவைகளென்று பெருங்குரலிட்டுச்
சொன்னாள்.-அவர், தேவனுடைய வாக்குக் ௨௮
குச்செவிகொடுத்து, அதைக்காத்துக்கொள்ளுகி
றவர்களே வாழ்வுடையவர்களென்றார்.
சனங்கள் திரளாய்க்கூடிவந்திருக்கிறபொழு ௨௯
து அவர், இந்தச்சந்ததியார் சீர்கெட்டவர்கள்:
ஒரு அடையாளத்தைத் தேடுகிறார்கள்; யோனா
தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி,வேறொரு
அடையாளமும் இவர்களுக்குக் கொடுக்கப்படு
வதில்லை.-நினிவே நகரத்தாருக்கு யோனாஅடை ௩௰
யாளமானதுபோல், மனுபுத்திரனும் இந்தச்சந்த
திக்கிருப்பான்.—தென்றிசையின் இராசாத்தி, ச ௩௧
லோமோனின் ஞானத்தைக்கேட்கும்படி பூமி
யின் கடையெல்லையினின்றும் வந்தாள்; ஆத
லால் அவள் நியாயத்தீர்ப்பில் இந்தச்சந்ததியா
ருக்கு விரோதமாயெழும்பி, இவர்கள்மேற் குற்
றஞ்சுமத்துவாள்: பாருங்கள், சலோமோனிலும்
பெரியவர் ஒருவர் இங்கே யிருக்கிறார்.—நினி ௩௨
வேநகரத்தார் யோனாவின் உபதேசத்தினாலே ம
னந்திரும்பினார்கள்; ஆதலால் அவர்கள் நியாயத்
தீர்ப்பில் இந்தச்சந்ததியாருக்கு விரோதமாயெ
ழும்பி, இவர்கள்மேற் குற்றஞ்சுமத்துவார்கள்:
பாருங்கள், யோனாவிலும்பெரியவர் ஒருவர் இங்
கே யிருக்கிறார்.-விளக்கைக்கொளுத்தி, மறை ௩௩
விடத்திலாவது, மரக்காலின்கீழாவது ஒருவ
னும் வையான், பிரவேசிக்கிறவர்கள் பிரகாசத்
தைக்காணும்படி ஒரு தண்டின்மேலே வைப்
பான்.—கண்ணே சரீரத்திற்குவிளக்கு: ஆதலால் ௩௪
உன்கண் துலக்கமாயிருந்தால் உன்சரீரம்முழுவ

(௮) அதி.௰௮.௧,. (௯) மத்.௭.௭. மாற்.௰௧.௨௪. யாக்.௧.௬. ௧.யோவா.௩.௨௨.(௰௧)மத்.௭.௯. (௰௪) மத்.௯.௩௨.(௰௫) மத்.௯.௩௪. வச.௰௮,௰௯. (௰௬) மத்.௰௨.௩௮. (௰௭) மத்.௰௨.௨௫. யோவா.௨.௨௫. (௨௰) யாத்.௮.௰௯. மத்.௰௨.௨௯. (௨௨) ஏசா.௫௩.௰௨. கொலோ.௨.௰௫. (௨௩) மத்.௰௨.௩௰. (௨௪) மத்.௰௨.௪௩. (௨௬) யோவா.௫.௰௪. எபி.௬.௪. ௨.பேதுரு.௨.௨௰. (௨௮) மத்.௭.௨௧. யாக்.௧.௨௫. (௨௯) மத்.௰௨.௩௮,௩௯. (௩௰) யோவா.௧.௰௭. (௩௧) ௧.இரா.௰.௧. (௩௨) யோனா.௩.௫. (௩௩) மத்.௫.௰௫. (௩௪) மத்.௬.௨௨.

தும் ஒளிபெறும்; அது தோஷமுள்ளதானால்உன்
௩௫ சரீரம் இருள் அடையும்.—ஆனபடியால் உன்னி
லிருக்கிற ஒளி இருளாகாமல் எச்சரிக்கையாயி
௩௬ ரு.—ஒருபுறத்திலும் இருளில்லாமல் உன்சரீரம்
முழுவதும் வெளிச்சமாயிருந்தால், ஒரு விளக்
குஅதின் துலக்கமுள்ளபிரகாசத்தினால் உனக்கு
வெளிச்சந்தருவதுபோல், அது முழுவதும் ஒளி
பெறுமென்றார்.
௩௭ அவர் பேசுகையில் பரிசேயன் ஒருவன், தன்
னுடன் பகற்போசனம் பண்ணுகிறதற்கு அவ
ரை வேண்டிக்கொண்டான்: அவர்போய்ப் பந்
௩௮ தியிருந்தார்.—போசனம்பண்ணுவதற்குமுன் அ
வர் ஸ்நானம் பண்ணாமலிருந்ததைக்கண்டு, பரி
௩௯ சேயன் ஆச்சரியப்பட்டான்.—கர்த்தர் அவனை
நோக்கி, பரிசேயராகிய நீங்கள் போசனபான
பாத்திரங்களின் வெளிப்புறத்தைச் சுத்தம்பண்
ணுகிறீர்கள்; உங்களுள்ளமோ, கொள்ளையினா
௪௰ லுந்தீமையினாலும் நிறைந்திருக்கின்றது.-ஆ, புத்
தியீனரே, வெளிப்புறத்தை உண்டாக்கினவர்
௪௧ உட்புறத்தையு முண்டாக்கவில்லையா.—உங்க
ளுக்குண்டானபொருளில் பிச்சைகொடுங்கள்;
அதினால் எல்லாம் உங்களுக்குச் சுசியாகும்.—
௪௨ ஐயோ, பரிசேயரே, உங்களுக்கு ஆபத்துவரும்,
நீங்கள் துளசியிலும், அரூயிப்பூண்டிலும், சகல
விதக்கீரைகளிலும் பத்திலொன்றுகொடுத்து, நி
யாயத்தையுந் தேவ அன்பையும்விட்டு விலகுகி
றீர்கள்: இவைகளைக்காப்பதும் அவைகளை மீறா
௪௩ மற்செய்வதும் உங்கள் கடமை.—ஐயோ, பரி
சேயரே, உங்களுக்கு ஆபத்துவரும், நீங்கள் ஆ
லயங்களில் முதலாசனங்களையும், சந்தைகளில்
௪௪ வாழ்த்துகளையும் விரும்புகிறீர்கள்.-ஐயோ, கபடி
களாகிய வேதபாரகரே, பரிசேயரே, உங்களுக்
கு ஆபத்துவரும், நீங்கள் மறைந்திருக்கிற பிரே
தக்குழிகளைப்போலிருக்கிறீர்கள், மனுஷர் அ
வைகளை அறியாமல் அவைகள்மேலே நடக்கி
றார்களென்று சொன்னார்.
௪௫ அப்பொழுது நியாய சாஸ்திரிகளில் ஒருவன்
அவரைநோக்கி, போதகரே, நீர் இப்படிச்சொல்
வதினால் எங்களையும் நிந்திக்கிறீரேயென்றான்.—
௪௬ அதற்கு அவர், ஐயோ, நியாயசாஸ்திரிகளே,உங்
களுக்கு ஆபத்துவரும்,நீங்கள் சுமப்பதற்கரியசு
மைகளை மனுஷர்மேல் ஏற்றுகிறீர்கள், நீங்களோ
உங்கள் விரல்களில் ஒன்றினாலும் அந்தச்சுமை
௪௭ களைத் தொடவும் மாட்டீர்கள்.—ஐயோ, உங்கள்
பிதாக்கள் கொலைசெய்ததீர்க்கதரிசிகளுக்கு நீங்
௪௮ கள் பிரேதவறைகளைக்கட்டுகிறீர்கள்.—உங்கள்
பிதாக்கள் அவர்களைக் கொலைசெய்தார்கள்: நீங்
கள் அவர்களுக்குப் பிரேதவறைகளைக் கட்டுகி
றீர்கள், ஆதலால் உங்கள் பிதாக்களுடைய கிரி
யைகளுக்கு நீங்களும் உடன்பட்டவர்களென்
௪௯ று சாட்சியிடுகிறீர்கள்.—ஆதலால் தேவனுடை
ய ஞானம்,நான் தீர்க்கதரிசிகளையும் அப்போஸ்
தலர்களையும் அவர்களிடத்தில் அனுப்புவேன்,
அவர்களிற் சிலரைத் துன்பப்படுத்திக் கொ
லைசெய்வார்கள்.—ஆபேலின் இரத்தமுதல் வே ௫௰
திகைக்குந் தேவாலயத்திற்குமிடையில் அழிக்
கப்பட்ட சகரியாவின் இரத்தம்வரைக்கும், உல
கத்தோற்றமுதற் சிந்தப்பட்ட சகலதீர்க்கதரிசிக
ளின் இரத்தமும் இந்தச்சந்ததியிடத்திலே கேட்
கப்படுமென்று சொல்லிற்று.-இந்தச்சந்ததியிடத் ௫௧
திலே கேட்கப்படுமென்றுமெய்யாய் உங்களுக்
குச் சொல்லுகிறேன்.—ஐயோ, நியாயசாஸ்திரி ௫௨
களே, உங்களுக்குஆபத்துவரும், நீங்கள் அறி
வின் திறவுகோலைக்கவர்ந்தீர்கள்: நீங்களும் பிர
வேசிக்கிறதில்லை, பிரவேசிக்கிறவர்களையுந் த
டைபண்ணினீர்களென்றார்.—இவைகளை அவர் ௫௩
அவர்களிடத்திற் பேசினபொழுது, வேதபாரக
ரும் பரிசேயரும் அவர்மேற் குற்றஞ்சுமத்தும்ப
டி,—அவருடைய வாய்மொழியிலே குற்றம்பி ௫௪
டிக்க விரும்பி, அவரைநோக்கி,அநேகமானவை
களை அவர் பேசுகிறதற்கு அவரைமிகவுந் தூண்
டினார்கள்.

## ௰௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துத்தம்முடையசீஷருக்குப்போதித்தல்: ௰௩.செல்வனொருவனை உவமித்தல்:௨௨. லௌகீககவலையைவிலக்கல்: ௩௫. சாக்கிரதையுள்ளவர்களாயிருக்கும்படி ஏவல்: ௪௧. எசமானனையும் பணிவிடைக்காரனையும் உவமித்தல்: ௪௯. தன் உபதேசத்தின் பலனைநிருணித்தல்: ௫௪. கபடிகளைக் கண்டித்தல்: ௫௯. அவர்களுக்குப் போதித்தல்.

அத்தருணத்தில், அநேகம் ஆயிரஞ்சனங்கள் ௧
ஒருவரை ஒருவர் மிதிக்கத்தக்கதாகக் கூடிவந்தி
ருக்கையில், அவர்தம்முடைய சீஷரைநோக்கி,
முதல் நீங்கள் பரிசேயருடைய கபடமாகிய
புளித்தமாவுக்குவிலக மிகவும் எச்சரிக்கையாயி
ருங்கள்.-வெளியாக்கப்படாத மறைபொருளில் ௨
லை; அறியப்படாத இரகசியமுமில்லை.—ஆத ௩
லால், நீங்கள் இருளிலேபேசினது ஒளியிலே
கேட்கப்படும்;நீங்கள் அறைகளிலேசெவியிலே
றச்சொன்னது நிலாமுற்றங்கள்மேலும் பிரசித்த
மாக்கப்படும்.-என் சிநேகிதரே, சரீரத்தைக்கொ ௪
லைசெய்தபின்பு, வேறொன்றுஞ்செய்ய இயலாத
வர்களுக்குப் பயப்படாதிருங்களென்று நான்
உங்களுக்குச்சொல்லுகிறேன்.-நீங்கள் பயப்ப ௫
டத்தக்கவர் இன்னாரென்று உங்களுக்குணர்த்
துகிறேன்: கொலைசெய்தபின்பு நரகத்திலேதள்
ளவல்லவருக்குப்பயப்படுங்கள்;மெய்யாய் அவ
ருக்குப்பயப்படுவீர்களாகவென்றுஉங்களுக்குச்
சொல்லுகிறேன்.—இரண்டுகாசுக்கு ஐந்து அ ௬
டைக்கலான்குருவிகள் விற்கப்படுமல்லவா; ஆ
யினும் அவைகளில் ஒன்றையுந் தேவன் மறக்

(௩௮) மாற்.௭.௩. (௩௯) மத்.௨௩.௨௫. தீத்.௧.௰௫. (௪௧) ஏசா.௫௮.௭. தானி.௪.௨௭. (௪௨) மத்.௨௩.௨௩. (௪௩) மத்.௨௩.௬. (௪௪) மத்.௨௩.௨௭. சங்.௫.௯. (௪௬) மத்.௨௩.௪. (௪௭) மத்.௨௩.௨௯. (௪௯) மத்.௨௩.௩௪. (௫௰) ஆதி.௪.௮. ௨.நாளா.௨௪.௨௰,௨௧. (௫௨) மத்.௨௩.௰௩. (௫௪) மாற்.௰௨.௰௩.—(௰௨. அதி. ௧.) மத்.௰௬.௬,௰௨. (௨) மத்.௰.௨௬. (௪) ஏசா.௫௧.௭,௮,௰௨,௰௩. மத்.௰.௨௮. யோவா.௰௫.௰௪,௰௫. (௬) மத்.௰.௨௯.

௭ கமாட்டார்.—உங்கள் தலைமயிரெல்லாம் எண்
ணப்பட்டிருக்கின்றன. ஆதலால் பயப்படாதி
ருங்கள்: அநேகம் அடைக்கலான் குருவிகளைப்
௮ பார்க்கிலும் நீங்கள் அருமையானவர்கள்.-பின்
னும்இவ்வாக்கைஉங்களுக்குச்சொல்லுகிறேன்,
மனுஷர்முன்பாக என்னை அறிக்கைபண்ணுகிற
வனெவனோ, அவனை மனுபுத்திரனுந் தேவனு
டைய தூதர்களின்முன்பாக அறிக்கைபண்ணு
௯ வான்.-மனுஷருக்குமுன்பாக என்னை மறுதலிக்
கிறவனெவனோ,அவன் தேவதூதர்களுக்குமுன்
௰ பாகமறுதலிக்கப்படுவான்.-எவனாகிலும் மனுபுத்
திரனுக்கு விரோதமாக ஒருவாக்கைப்பேசினால்
அவனுக்குமன்னிக்கப்படும்:பரிசுத்தஆவிக்குவி
ரோதமாய்த்தூஷணைபேசுகிறவனுக்கு மன்னிக்
௰௧ கப்படுவதேயில்லை.—ஆலயங்களிலும், நியாயாதி
பதிகளிடத்திலும்,தேசாதிபதிகளிடத்திலும்உங்
களைக் கொண்டுபோய்விடும்பொழுது, எப்படி,
என்ன உத்தரங்கொடுப்போமென்றும், எதைப்
பேசுவோமென்றுங் கவலைப்படாதிருங்கள்.—
௰௨ நீங்கள் பேசவேண்டுவதைப் பரிசுத்தஆவியான
வர் அந்நேரத்தில் உங்களுக்குஉணர்த்துவாரென்
று உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.
௰௩ கூட்டத்தில் ஒருவன் அவரைநோக்கி, போத
கரே, எனக்குந் தனக்குமுண்டான சுதந்தரத்
தைப் பங்கிட்டுக்கொள்ளும்படி, என்சகோதர
௰௪ னுக்குக்கட்டளையிடுமென்றுசொல்ல,—அவர் அ
வனுடனே, மனுஷனே, என்னை உங்களுக்கு நி
யாயாதிபதியாகவும், பங்கிடுகிறவனாகவும் ஏற்ப
௰௫ டுத்தினவன் யாவனென்றார்.—பின்பு அவர் அ
வர்களைநோக்கி, பொருளாசையைக்குறித்து எச்
சரிக்கையாயிருக்கப்பாருங்கள்: ஒருவன் மிகுந்
த பொருளைப்பெற்றாலும் அவனுடைய ஆயுள்
௰௬ நாட்கள் நிலைபெறாதென்றார்.—மேலும் அவர்
அவர்களைநோக்கி, ஐசுவரியமுள்ளவனாகிய ஒரு
௰௭ வனுடைய நிலங்கள் செழித்து விளைந்தன.—அ
தினால் அவன், என்தானியத்தைச்சேர்த்துவைக்
கிறதற்கு வேண்டிய இடமில்லை; நான் என்ன
௰௮ செய்வேனென்று தனக்குள்ளே சிந்தித்து,—பின்
பு அவன்,நானிதைச்செய்வேன்:என்களஞ்சியங்
களைஇடித்து, மிகவும்பெரியவைகளாய்க்கட்டி,
எனக்குண்டான தானியம் யாவையும் என்பொ
௰௯ ருளையும் அங்கேசேர்த்துவைத்து,—என் ஆத்துமத்
துடனே,ஆத்துமாவே,உனக்கு வெகுவருஷங்க
ளுக்காக மிகுந்தபொருள் சேர்க்கப்பட்டிருக்
கின்றது; நீ இளைப்பாறு, போசனபானம்பண்
௨௰ ணி மகிழ்ச்சியாயிருவென்பேனென்றான்.—தே
வன் அவனுடனே, புத்தியீனனே, இன்றிரவில்
உன்பிராணன் உன்னிலிருந்து எடுத்துக்கொள்
ளப்படும்: அப்பொழுது நீ கூட்டிவைத்தபொ
ருள் ஆருடையதாகுமென்றாரென்று இந்த உவ
மையைச்சொல்லி,-தேவனில் ஐசுவரியவானாக ௨௧
யிராமல்,தனக்காகப் பொக்கிஷங்களைக் கூட்டி
வைக்கிறவனுக்கு இப்படியே ஆகுமென்றார்.
பின்னும் அவர் தம்முடைய சீஷரைநோக்கி, ௨௨
நீங்கள்,எதை உண்போமென்று உங்கள் சீவனுக்
காகவும், எதை உடுப்போமென்று உங்கள் சரீ
ரத்திற்காகவும் கவலைப்படவேண்டாம்.—போ ௨௩
சனத்தைப்பார்க்கிலும்பிராணனும்,உடையைப்
பார்க்கிலுஞ் சரீரமும் முக்கியம்.—காகங்களைநி ௨௪
னைத்துப்பாருங்கள்:அவைகள் விதைக்கிறதுமில்
லை, அறுக்கிறதுமில்லை; அவைகளுக்குப் பண்
டகசாலையுங் களஞ்சியமுமில்லை; அவைகளுக்
குந் தேவன் உணவுகொடுக்கிறார்: பறவைகளி
லும் நீங்கள் மிகவும் மேன்மையானவர்களல்
லவா.—உங்களில், கவலைப்படுகிறதினால் தனக் ௨௫
குள்ள ஆயுளோடே ஒருநாழிகையாயினுங் கூட்
டக்கூடியவன் யாவன்.—மிகவும் அற்பகாரியத் ௨௬
தை நீங்கள் செய்யக்கூடாதிருக்க, மற்றவைக
ளுக்காக நீங்கள் கவலைப்படுகிறதென்ன.—லீ ௨௭
ஷன் புஷ்பங்களை உற்றுப்பாருங்கள், அவை
கள் எப்படிவளருகின்றன: அவைகள் வருந்துகி
றதுமில்லை, நூற்கிறதுமில்லை; ஆனாலும் மிகுந்த
மகிமைபொருந்தியசலோமோனும் அவைகளில்
ஒன்றைப்போலாயினும் அலங்கரிக்கப்படவில்
லையென்று நான்உங்களுக்குச்சொல்லுகிறேன்.-
அற்பவிசுவாசிகளே, இன்றைக்குவெளியிலிருந் ௨௮
து, நாளைக்கு அடுப்பிற்போடப்படுகிற புல்லைத்
தேவன் இவ்விதமாய் அலங்கரிப்பாராகில், மி
கவும் அதிகமாய் உங்களுக்கு உடுத்துவாரல்
லவா.—எதைப் புசிப்போம், எதைப் பானம் ௨௯
பண்ணுவோமென்றுகேளாமலும்,—மனதிலேக ௩௰
லக்கமடையாமலும் இருங்கள், உலகத்தார் இ
வையெல்லாவற்றையுந் தேடுகிறார்கள்: இவை
கள் உங்களுக்கு வேண்டுமென்று உங்கள்பிதா
வுக்குத்தெரியும்.
ஆதலால் தேவனுடைய இராச்சியத்தையே ௩௧
தேடுங்கள்; அப்பொழுது இவையெல்லாம் உங்
களுக்குக்கூடக் கொடுக்கப்படும்.—சிறிய ஆட் ௩௨
டுக்கூட்டமே, பயப்படவேண்டாம்; உங்களுக்
கு இராச்சியத்தைக்கொடுக்க உங்கள் பிதா பிரி
யப்படுகிறார்.—உங்களுக்குண்டானவைகளைவிற் ௩௩
றுப் பிச்சைகொடுங்கள், பழையதாய்ப்போகாத
பணப்பைகளையுங் குறையாத பொக்கிஷத்தை
யும் பரமண்டலத்திலேசேர்த்துவையுங்கள், அங்
கேதிருடன் அணுகான்,பூச்சியுங்கெடுக்காது.—
உங்கள் பொக்கிஷம் எங்கேயோ, அங்கே உங் ௩௪
கள் இருதயமுமிருக்கும்.-உங்கள் அரைக்கச்சுக ௩௫
ளைக்கட்டி, விளக்குகளைக் கொளுத்திக்கொள்
ளுங்கள்.—தங்கள் ஆண்டவன் விவாகத்திலிருந் ௩௬
துவந்து தட்டும்பொழுது, உடனே அவனுக்குத்

(௮) மத்.௰.௩௨. ௨.தீமோ.௨.௰௨. ௧.யோவா.௨.௨௩. (௰) மத்.௰௨.௩௧,௩௨. ௧.யோவா.௫.௰௬. (௰௧) மத்.௰.௰௯. (௰௪) யோவா.௰௮.௩௬. (௰௫) ௧.தீமோ.௬.௭,. (௰௯) பிர.௰௧.௯. ௧.கொரி.௰௫.௩௨. யாக்.௫.௫. (௨௰) யோபு.௨௰.௨௨. சங்.௫௨.௬. யாக்.௪.௰௪. சங்.௩௯.௬. எரே.௰௭.௰௧. (௨௧) மத்.௬.௨௰. ௧.தீமோ.௬.௰௮,௰௯. யாக்.௨.௫. (௨௨) மத். ௬.௨௫. (௨௪) யோபு.௩௮.௪௧. சங்.௱௪௭.௯. (௩௧) மத்.௬.௩௩. (௩௨) மத்.௰௧.௨௫,௨௬. (௩௩) மத்.௰௯.௨௧. அப்.௨.௪௫. மத்.௬.௨௰. ௧.தீமோ.௬.௰௯. (௩௫) எபே.௬.௰௪. ௧.பேதுரு.௧.௰௩. மத்.௨௫.௧,.

திறக்கும்படி காத்திருக்கிற மனுஷரைப்போல்
௩௭ இருங்கள்.—ஆண்டவன் வரும்பொழுது விழித்
திருக்கக்காணப்படுகிற பணிவிடைக்காரரே வா
ழ்வுடையவர்: அவன் அரைக்கச்சுக்கட்டிக்கொ
ண்டு அவர்களைப் பந்தியிருக்கச்செய்து, பின்பு
அவர்களுக்குப் பணிவிடை செய்வானென்று
௩௮ மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—அ
வன் இரண்டாஞ் சாமத்திலாவது, மூன்றாஞ் சா
மத்திலாவது வந்து, அப்படியே கண்டால், அந்
தப்பணிவிடைக்காரர் வாழ்வுடையவராவார்.—
௩௯ திருடன்வரும்நேரத்தை வீட்டெசமானன் அ
றிந்தால், அவன் விழித்திருந்து, தன் வீட்டைக்
கன்னமிடும்படிக்கு இடங்கொடான், இது உங்
௪௰ களுக்குத் தெரியும்.—ஆதலால் நீங்கள் ஆயத்தமா
யிருங்கள்: நீங்கள் நினையாத நேரத்தில் மனுபுத்
திரன்வருவானென்றார்.
௪௧ அப்பொழுது பேதுரு அவரைநோக்கி, கர்த்
தாவே, இந்த உவமையை எங்களைக்குறித்தோ,
எல்லாரையுங் குறித்தோ சொல்லுகிறீரென்று
௪௨ கேட்க,-கர்த்தர், எசமானன்தன்பணிவிடைக்
காரருக்குத் தகுதியானகாலத்தில் உணவுப்பொ
ருளைக்கொடுக்கும்படி அவர்கள்மேல் ஏற்படுத்த
த்தக்க உண்மையும்புத்தியுமுள்ளவிசாரிப்புக்கா
௪௩ ரன் யாவன்.—எசமானன் வரும்பொழுது அப்ப
டிச்செய்யக்காணப்படுகிற பணிவிடைக்காரன்
௪௪ வாழ்வுடையவன்.—அவனை எசமானன் தனக்
குண்டான எல்லாவற்றிற்கும்அதிகாரியாய்ஏற்ப
டுத்துவானென்று மெய்யாக உங்களுக்குச்சொல்
௪௫ லுகிறேன்.—அந்தப்பணிவிடைக்காரன், என் எ
சமானன்வரத்தாமதிக்கிறானென்றெண்ணி, வே
லைக்காரரையும் வேலைக்காரிகளையும் அடிக்கத்
தொடங்கி,புசித்துக்குடித்துவெறிகொண்டால்,-
௪௬ அந்தப்பணிவிடைக்காரன் நினையாதநாளிலும்,
அறியாதநேரத்திலும் அவனுடைய எசமானன்
வந்து, அவனைத் தண்டித்து, உண்மையில்லா
தவர்களுடன் அவனுக்குப் பங்கை ஏற்படுத்து
௪௭ வான்.—தன் எசமானனுடைய சித்தத்தைஅறிந்
தும் ஆயத்தமாயிராமலும், அவனுடைய சித்தத்
தின்படி செய்யாமலும் இருக்கிற பணிவிடைக்
௪௮ காரன் பலஅடிகள்அடிக்கப்படுவான்.—அறியா
மலிருந்து, அடிகளுக்கேற்றவைகளைச் செய்கிற
வனோ, சில அடிகள் அடிக்கப்படுவான். அதிகம்
பெற்றவனிடத்தில் அதிகங் கேட்கப்படும்: மனு
ஷர் எவனிடத்தில் அதிகம் ஒப்பித்தார்களோ,
அவனிடத்தில் அதிகங்கேட்பார்கள்.
௪௯ பூமியின்மேல் அக்கினியைவீசவந்தேன்; அ
து இப்பொழுது பற்றி எரிவதையேயன்றி, எ
௫௰ தைவிரும்புகிறேன்.—நான்பெறவேண்டியஒரு
ஸ்நானமுண்டு; அது முடியுமளவும் நான் எவ்வ
௫௧ ளவாய் நெருக்கப்படுகிறேன்.—நான் பூமியிலே
சமாதானத்தைத் தரவந்தேனென்று நினைக்கிறீர்
கள், அல்ல; பேதத்தைச்செய்யவந்தேனென்று
உங்களுக்குச்சொல்லுகிறேன்.—இதுமுதல் ஒரு ௫௨
ரேகுடும்பத்திலுள்ள ஐந்துபேரில், மூவர் இருவ
ருக்கும், இருவர் மூவருக்கும் விரோதமாய்ப்பி
ரிந்திருப்பார்கள்.—பிதா புத்திரனுக்கும், புத்தி ௫௩
ரன் பிதாவுக்கும், மாதா புத்திரிக்கும், புத்திரிமா
தாவுக்கும், மாமி தன்மருமகளுக்கும், மருமகள்
தன் மாமிக்கும் விரோதமாய்ப் பிரிந்திருப்பார்க
ளென்றார்.
பின்பு அவர் சனங்களைநோக்கி, நீங்கள்மேற் ௫௪
கில் ஒருமேகம் எழும்புகிறதைக் காணும்பொழு
து மழைவருமென்றுசொல்லுகிறீர்கள்; அதுஅப்
படியாகும்.—அன்றியுந் தென்றல் அடிக்கிறதை ௫௫
நீங்கள் காணும்பொழுது காங்கை உண்டாகு
மென்கிறீர்கள்; அதுவும் அப்படியாகும்.—கப ௫௬
டிகளே, வானம் பூமிகளின் தோற்றத்தை வகை
அறுக்க உங்களுக்குத்தெரியும்; இக்காலத்தைவ
கைஅறுக்க உங்களுக்குத்தெரியாதிருக்கிறதென்
ன.—நீங்கள்தானே யதார்த்தத்தீர்ப்புப்பண்ணும ௫எ
விருக்கிறதென்ன.
நீ உன் எதிராளியுடனே நியாயாதிபதியிடத் ௫௮
திற்குப்போகிறபொழுது, வழியிலிருக்கையில்
அவனிலிருந்து விடுதலைபெறும்படி எத்தனம்
பண்ணு; இல்லாவிட்டால் அவன் உன்னைப்பி
டித்துநியாயாதிபதிக்குமுன்பாகக்கொண்டுபோ
க, நியாயாதிபதி உன்னைத்தலைவனுக்கு ஒப்பிப்
பான், தலைவன் உன்னைக்காவலில்வைப்பான்.—
நீ, காசு முற்றச்செலுத்தும்வரைக்கும்அவ்விடத் ௫௯
தினின்றும் விடுதலையாக்கப்படாயென்று உனக்
குச்சொல்லுகிறேனென்றார்.

## ௰௩. அதிகாரம்.

க. பாவதண்டனைக்குத் தப்பும்படி மனந்திரும்பு
தல்அவசியமெனக்காட்டல்: ௬. கனியற்ற அத்
திமரத்தை உவமித்தல்: ௰. கூனியைச்சொஸ்
தப்படுத்தல்: ௰௮. கடுகுவிதையையும் புளிப்பு
மாவையும் உவமித்தல்: ௨௨. உபதேசத்தைச்
சொல்லல்: ௩௧. ஏரோதையும்யெருஷலேமை
யுங்கண்டித்தல்.

பிலாத்து, கலிலேயருடைய இரத்தத்தை அவர் ௧
களுடைய பலிகளுடனே கலந்திருந்தசெய்தி
யை, அத்தருணத்தில் அங்கிருந்த சிலர் அவருக்
குத்தெரிவித்தார்கள்.—யேசு அவர்களுக்குத்த ௨
ரமாக, அந்தக்கலிலேயர் அப்படிப்பட்டவைக
ளை அனுபவித்ததினாலே மற்றெல்லாக் கலிலேய
ரிலும் அதிகபாவிகளென்று நினைக்கிறீர்கள்.—
அல்லவென்று நான் உங்களுக்குச்சொல்லுகி ௩
றேன்: நீங்களெல்லாரும் மனந்திரும்பாவிட்
டால் அதுபோலவே கெடுவீர்கள்.—சிலோவா ௪
விலே கோபுரம்விழுந்து பதினெட்டுப்பேரைக்

(௩௭) மத். ௨௪. ௪௬. (௩௯) மத். ௨௪. ௪௩. ௧. தெச. ௫. ௨. ௨. பேதுரு. ௩. ௰. வெளி. ௩. ௩. (௪௰) மத். ௨௪. ௪௪. மாற். ௰௩. ௩௩. ௧. தெச. ௫. ௬. ௨. பேதுரு. ௩. ௰௨. (௪௨) மத். ௨௫. ௨௧. ௧. கொரி. ௪. ௨. (௪௪) மத். ௨௪. ௪௭. (௪௫) மத். ௨௪. ௪௮. (௪௬) மத். ௨௪. ௫௧. (௪௭) எண். ௰௫. ௩௰. உபா. ௨௫. ௨. யோவா. ௯. ௪௧. அப். ௰௭. ௩௰. யாக். ௪. ௰௭. (௪௮) லேவி. ௫. ௰௭. ௧. தீமோ. ௧. ௰௩. (௫௰) மத். ௨௰. ௨௨. (௫௧) மத். ௰. ௩௪. மீகா. ௭. ௬. யோவா. ௭. ௪௩. (௫௨) மத். ௰. ௩௫. (௫௪) மத். ௰௬. ௨. (௫௮) நீதி. ௨௫. ௮. மத். ௫. ௨௫. சங். ௩௨. ௬. ஏசா. ௫௫. ௬. (௫௯) மாற். ௰௨. ௪௨.—(௰௩. அதி. ௪.) மத். ௰௮. ௨௪.

கொன்றதே, யெருஷலேமியரனைவரிலும் அந்
தப்பதினெட்டுப்பேரும் அதிக குற்றவாளிகளெ
௫ ன்று நினைக்கிறீர்கள்.—அல்லவென்று நான் உங்
களுக்குச்சொல்லுகிறேன்: நீங்களெல்லாரும் ம
னந்திரும்பாவிட்டால் அந்தப்பிரகாரமே கெடு
வீர்களென்றார்.
௬ மேலும் அவர், ஒருவன் தன் திராட்சத்தோட்
டத்தில் ஒரு அத்திமரத்தை நாட்டியிருந்தான்;
பின்பு அவன்வந்து அதிலே கனியைப்பார்க்கிற
௭ பொழுது ஒன்றுங்காணாததினால்,—தோட்டக்கா
ரனுடனே, பார், மூன்றுவருஷமாக இந்த அத்தி
மரங்கனிதருமோவென்று பார்த்துவருகிறேன்,
ஒன்றையுங்காணவில்லை: என் இது நிலத்தையுங்
கெடுக்கின்றது; இதைத் தறித்துப்போடென்று
௮ சொல்ல,—அவன்உத்தரமாக,ஆண்டவனே,இன்
னும் ஒருவருஷம் நிற்கவிடும், நான் இதைச்சுற்
௯ றிக்கொத்தி, எருப்போடுவேன்.—இது கனிகொ
டுக்கவுங்கூடும், கொடாதிருந்தால் நீர் பின்பு இ
தைத் தறிப்பிக்கலாமென்றானென்னும் இந்தஉவ
௰ மையைச்சொன்னார்.—ஒரு ஒய்வுநாளில் அவர்,
ஒரு ஆலயத்தில் உபதேசம்பண்ணினபொழுது,
௰௧ பதினெட்டுவருஷமாய்ப் பலவீனப்படுத்தும்
ஆவிபிடித்திருந்து, சற்றும் நிமிரக்கூடாத கூனி
௰௨ யாகிய ஒரு ஸ்திரி அங்கேயிருந்தாள்.—யேசு
அவளைக்கண்டு தம்மிடத்தில் அழைத்து, ஸ்
திரியே, நீ உன்பலவீனத்திலிருந்து விடுதலையாக்
கப்பட்டாயென்று சொல்லி, அவள்மேலே தம்
௰௩ முடைய கைகளை வைத்தமாத்திரத்தில்,-அவள்
௰௪ நிமிர்ந்து, தேவனைத் துதித்தாள்.—யேசு ஒய்
வுநாளிலே சொஸ்தப்படுத்தினதினால், ஆலயத்
தலைவன் குரோதங்கொண்டு, சனங்களைநோக்
கி, வேலைசெய்வதற்கு ஆறுநாளுண்டு: சொஸ்
தம்பெறும்படி அவைகளிலே நீங்கள்வாருங்கள்,
௰௫ ஒய்வுநாளில் வராதிருங்களென்றான்.—அவனுக்
கு உத்தரமாகக் கர்த்தர், கபடியே, உங்களில்
எவனுந் தன் எருதையாவது, தன் கழுதையை
யாவது ஒய்வுநாளில் அவிழ்த்து, தொழுவத்திலி
ருந்து கொண்டுபோய், அதற்குத்தண்ணீர்காட்டு
௰௬ கிறதில்லையா.—ஆபிரகாமின் சந்ததியில், பதி
னெட்டு வருஷமாய்ச் சாத்தானாலே கட்டப்பட்
டவளாகிய இவளை, ஒய்வு நாளில் அந்தக்கட்டி
லிருந்து அவிழ்த்துவிடவேண்டியதில்லையா என்
௰௭ றார்.—அப்படி அவர்சொன்னபொழுது, அவரு
டைய விரோதிகள் யாவரும் இலச்சை அடைந்
தார்கள்: அவர்செய்தசகலமகத்துவமான கிரியை
களையுங்குறித்துச் சனங்களெல்லாருஞ் சந்தோ
ஷப்பட்டார்கள்.
௰௮ பின்பு அவர், தேவனுடைய இராச்சியம்
எதற்கொப்பாகும், அதை எதற்கொப்பிடுவேன்;
௰௯ ஒருகடுகுவிதைக்கொப்பாயிருக்கின்றது.-அதை
ஒருமனுஷன் எடுத்துத் தன் தோட்டத்தில் இட்
டபின்பு, அது வளர்ந்து, பெரியசெடியாயிற்று;
ஆகாயத்துப்பறவைகள்வந்து, அதின்கிளைகளில்
கூடுகட்டினவென்றார்.—திரும்பவும் அவர், தே ௨௰
வனுடைய இராச்சியத்தை எதற்கொப்பிடு
வேன்.—அது ஸ்திரி மூன்றுமரக்கால்மா புளிப் ௨௧
படையத்தக்கதாகப் புளிப்புமாவை எடுத்து அ
தில் அடக்கிவைத்த புளிப்புமாவுக்கொப்பாயி
ருக்கின்றதென்றார்.—அவர் யெருஷலேமைநா ௨௨
டிப் பட்டணங்கள் கிராமங்கள்தோறும் போய்
உபதேசித்தார்.—அப்பொழுது ஒருவன் அவரை ௨௩
நோக்கி, கர்த்தாவே, சிலர்மாத்திரமோ இரட்
சிக்கப்படுவார்களென்றுகேட்க,
அவர், ஒடுக்கமான வாசலின்வழியாய்ப் பிர ௨௪
வேசிக்க மிகவும் பிரயாசப்படுங்கள்: அநேகர்
பிரவேசிக்கத் தேடியும் பிரவேசிக்கமாட்டார்க
ளென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.—வீட் ௨௫
டெசமானன்எழுந்து கதவைப்பூட்டினபின்,நீங்
கள் வெளியேநின்று கதவைத்தட்டி, கர்த்தா
வே, கர்த்தாவே, எங்களுக்குத்திறக்கவேண்
டுமென்றுசொல்ல, அவர் உத்தரமாக,நீங்கள் எவ்
விடத்தாரென்று அறியேனென்பதாக உங்களு
டன்சொல்லுவார்.—அப்பொழுது நீங்கள், உம்மு ௨௬
டையசமுகத்திற்போசனபானம்பண்ணினோம்,
நீர் எங்கள்வீதிகளில் உபதேசம்பண்ணினீரென்
பீர்கள்.—ஆனாலும் அவர், நீங்கள் எவ்விடத்தா ௨௭
ரென்று அறியேன்; அக்கிரமக்காரராகிய நீங்க
ளெல்லாரும் என்னைவிட்டுப் போங்களென்று
சொல்லுவாரென்பதை உங்களுக்குச் சொல்லு
கிறேன்.—நீங்கள் ஆபிரகாமையும், ஈசாக்கை ௨௮
யும், யாக்கோபையும், சகல தீர்க்கதரிசிகளை
யுந் தேவனுடைய இராச்சியத்திலிருக்கிறவர்
களாகவும், உங்களைப் புறம்பே தள்ளப்பட்ட
வர்களாகவுங் காணும்பொழுது உங்களுக்கு அ
ழுகையும் பற்கடிப்பும் உண்டாகும்.—கிழக்கி ௨௯
லும், மேற்கிலும், வடக்கிலும், தெற்கிலும் நின்
று சனங்கள் வந்து தேவனுடைய இராச்சி
யத்திற் பந்தியிருப்பார்கள்.—பாருங்கள், பிந்தி ௩௰
னோர் முந்தினோராவார்கள், முந்தினோர் பிந்தி
னோராவார்களென்றார்.
அந்நாளிலே பரிசேயரிற்சிலர் வந்து அவரை ௩௧
நோக்கி, ஏரோது உம்மைக்கொலைசெய்யவிரும்
புகிறான்; நீர் இவ்விடத்தைவிட்டுப்போகவேண்
டுமென்றார்கள்.—அவர்களுடனே அவர், நீங்கள் ௩௨
போய் அந்தநரியிடத்தில், பார், இன்றும்நாளையும்
நான் பிசாசுகளைத் துரத்தி, சொஸ்தங்களைச்செய்
து, மூன்றாம்நாளில் நிறைவேற்றம் பெறுவேன்.-
ஆயினும்இன்றும், நாளையும், பின்வரும்நாளும்நா ௩௩
ன் நடக்கவேண்டும்: யெருஷலேமுக்குப்புறம்
பே எந்தத் தீர்க்கதரிசியும் மடிந்துபோகானென்
று சொல்லுங்கள்.-ஆ, யெருஷலேமே, யெருஷ ௩௪
லேமே, தீர்க்கதரிசிகளைக்கொலைசெய்து, உன்னி

(௬) ஏசா.௫.௨. மத்.௨௧.௰௯. (௰௨) மாற்.௰௬.௰௮. அப்.௯.௰௭. (௰௪) யாத்.௨௰.௯. மத்.௰௨.௰. (௰௫) அதி.௰௪.௫. (௰௬) அதி.௰௯.௯. (௰௮) மத்.௰௩.௩௧. மாற்.௪.௩௰. (௨௧) மத்.௰௩.௩௩. (௨௨) மத்.௯.௩௫. (௨௪) மத்.௭.௰௩. ரோ.௯.௩௧. (௨௫) சங்.௩௨.௬. ஏசா.௫௫.௬. மத்.௨௫.௰. மத்.௭.௨௩. (௨௭) மத்.௭.௨௩.சங்.௬.௮. மத்.௨௫.௪௧. (௨௮) மத்.௰௩.௪௨. (௩௰) மத்.௰௯.௩௰. மாற்.௰.௩௧. (௩௨) எபி.௨.௰. (௩௪) மத்.௨௩.௩௭.

டத்தில் அனுப்பப்பட்டவர்கள்மேற்கல்லெறிகி
றவளே, கோழி தன் குஞ்சுகளைத் தன் சிறகுக
ளின்கீழ்ச் சேர்த்துக்கொள்ளும்வண்ண
மாக,அநேகந்தரம் உன் பிள்ளைகளைச் சேர்த்துக்
கொள்ள விரும்பினேன், நீங்களோ சம்மதிக்க
௩௫ வில்லை.—பாருங்கள், உங்கள் வாசஸ்தலம் பா
ழாய்விடப்படும்: இதுமுதல், கர்த்தருடைய
நாமத்தினாலேவருபவர் ஸ்தோத்திரிக்கப்பட்ட
வரென்று நீங்கள்சொல்லும்வரைக்கும் என்னைக்
காணமாட்டீர்களென்றுமெய்யாய்உங்களுக்குச்
சொல்லுகிறேனென்றார்.

## ௰௪. அதிகாரம்.

க. பாண்டு வியாதியுள்ளவனைச் சொஸ்தப்படுத்தல்: ௭. தாழ்ந்தசிந்தை அவசியமெனப்போதித்தல்: ௰௨. விருந்துக்கழைக்கும் விதியைக்காட்டல்: ௰௬. மகாவிருந்தை உவமித்தல்: ௨௫. பல உபதேசஞ்செய்தல்.

ஒரு ஓய்வுநாளில், அவர்பிரதானபரிசேயரில் ஒ
ருவனுடைய வீட்டிற்போசனம்பண்ணும்படிக்
குப்போயிருக்கையில், அவர்கள் அவரை உற்
௨ றுப்பார்த்தார்கள்.—அப்பொழுது நீர்க்கோவை
வியாதியுள்ள மனுஷன் அவர்சமுகத்தில் நின்
௩ றான்.—யேசு, நியாயசாஸ்திரிகளையும் பரிசே
யரையும்நோக்கி, ஓய்வுநாளிலே சொஸ்தப்ப
௪ டுத்துவது நியாயமாவென்று கேட்டார்.—அவர்
கள்பேசாதிருந்தார்கள். அவர்அவனைப்பிடித்துச்
௫ சொஸ்தமாக்கி அனுப்பிவிட்டார்.—பின்பு அ
வர் அவர்களைநோக்கி, உங்களில் எவனும், தன்
கழுதையாவது எருதாவது ஓய்வுநாளில் ஒருகுழி
யில்விழுந்தால் உடனே அதைத்தூக்கிவிடானா
௬ வென்றார்.—அதற்குத்தரஞ்சொல்லஅவர்களாலே
கூடாமலிருந்தது.
௭ அழைக்கப்பட்டவர்கள் பந்தியில் முதலிடத்
தைத் தெரிந்துகொண்டதை அவர்பார்த்து, இந்த
உபதேசவாக்கை அவர்களுக்குச்சொன்னார்.—
௮ நீ ஒருவனால் விவாகவிருந்துக்கு அழைக்கப்ப
டும்பொழுது முதலிடத்தில் இராதே; உன்னி
லும் அதிககனமுள்ளவன் அவனால் அழைக்கப்
௯ பட்டிருக்கவுங் கூடுமே.—அப்பொழுது உன்னை
யும் அவனையும் அழைத்தவன் உன்னிடத்தில்
வந்து, இவருக்கு இடங்கொடென்றுசொல்ல,
நீ வெட்கத்தோடே கீழான இடத்திற்குப்போயி
௰ ருக்கவரும்.—ஆதலால் நீ அழைக்கப்படும்பொ
ழுது போய், கீழானஇடத்தில் இருப்பாயாக;
அப்பொழுது உன்னை அழைத்தவன் உன்னிடத்
தில்வந்து, சிநேகிதா, நீ முந்திப்போயிருவென்
றுசொல்ல, உன்னுடனே பந்தியிருப்பவர்க
௰௧ ளுக்கு முன்பாக நீ கனம்பெறுவாய்.—எவன்
தன்னை உயர்த்துகிறானோ, அவன் தாழ்த்தப்
படுவான்; எவன்தன்னைத் தாழ்த்துகிறானோ, அ
வன் உயர்த்தப்படுவானென்றார்.

பின்பு அவர் தம்மை விருந்துக்கு அழைத்தவ ௰௨
னைநோக்கி, நீ பகல்விருந்தையாவது இராவிருந்
தையாவது பண்ணுகிறபொழுது, உன்னுடைய
சிநேகிதரையும், சகோதரரையும், மற்ற இனத்
தாரையும், செல்வராகிய அயலாரையும் அழைக்
கவேண்டாம்; அவர்களும் உன்னை அழைப்பார்
கள், அதினால் உனக்குப் பிரதிபலன்வரும்.—நீ ௰௩
விருந்துபண்ணும்பொழுது தரித்திரர், ஊனர்,
சப்பாணிகள், குருடர் இப்படிப்பட்டவர்களை
அழைப்பாயாக.—அப்பொழுது நீ ஆசிர்வாதம் ௰௪
பெறுவாய்; அவர்கள் உனக்குப்பிரதிபலன் தர
மாட்டார்கள்: ஆனாலும் நீதிமான்கள் மரித்தோ
ரைவிட்டு எழுந்திருக்குங்காலத்தில் பிரதிபலன்
உனக்கு அளிக்கப்படுமென்றார்.
அவருடனே பந்தியிருந்தவர்களில் ஒருவன் ௰௫
இவ்வாக்குகளைக்கேட்டபொழுதுஅவரைநோக்
கி, தேவனுடைய இராச்சியத்திலே போச
னம்பண்ணப் பெறுகிறவனே வாழ்வுடையவ
னென்றான்.—அதற்கு அவர், ஒருமனுஷன் பெ ௰௬
ரியவிருந்துபண்ணி அநேகரை அழைத்தான்.—
பின்பு விருந்துவேளையில், அழைக்கப்பட்டவர் ௰௭
களிடத்தில், வாருங்கள்; எல்லாம் ஆயத்தமாயி
ருக்கின்றனவென்றுசொல்லும்படி தன் பணிவி
டைக்காரனை அனுப்பினான்.—அவர்களெல்லா ௰௮
ரும் போக்குச்சொல்லத் தொடங்கினார்கள். ஒ
ருவன், ஒருவயல்நிலத்தைக் கொண்டேன், நான்
போய் அதைப்பார்ப்பது அவசியம்: ஆதலால்எ
னக்கு மன்னிக்கவேண்டுமென்று உன்னைவேண்
டுகிறேனென்றான்.—வேறொருவன், ஐந்தேர்மா ௰௯
டு கொண்டேன், அவைகளை நான்போய்ச் சோ
திக்கவேண்டும்: ஆகையால் எனக்கு மன்னிக்
க உன்னை வேண்டுகிறேனென்றான்.—மற்றொ ௨௰
ருவன், நான் விவாகம்பண்ணினேன், அதினால்
நான் வரக்கூடாதென்றான்.—பின்பு அந்தப்ப ௨௧
ணிவிடைக்காரன்போய்த் தன் எசமானனுக்கு
அந்தச் செய்திகளைத் தெரிவிக்க, வீட்டெசமா
னன் கோபங்கொண்டு தன் பணிவிடைக்கார
னைநோக்கி, நீ துரிதமாய் நகரத்தின் தெருக்களி
லும் வீதிகளிலும்போய், தரித்திரரையும், ஊன
ரையும், சப்பாணிகளையும், குருடரையும் இவ்வி
டத்திற்கு அழைத்துக்கொண்டுவாவென்றான்.—
பின்பு அந்தப்பணிவிடைக்காரன், ஆண்டவ ௨௨
னே, நீர்இட்டகட்டளைப்படிசெய்தாயிற்று, இன்
னும் இடமுண்டென்று சொல்ல,—எசமானன் ௨௩
அந்தப்பணிவிடைக்காரனைநோக்கி, நீ வழிகளி
லும், வேலிகளின்அருகிலும்புறப்பட்டுப்போய்,
என்வீடு நிறையும்படி சனங்களை வருந்திக்கூட்
டிக்கொண்டுவா.—அழைக்கப்பட்ட அந்தமனு ௨௪
ஷரில் ஒருவராகிலும், என்னுடைய இந்த இரா
விருந்தை ருசிபார்ப்பதில்லையென்பதை உங்க
ளுக்குச்சொல்லுகிறேனென்றான் என்றார்.

(௩௫)லேவி.௨௬.௩௧,௩௨. சங்.௬௯.௨௫. ஏசா.௧.௭. தானி.௯.௨௭. மீகா.௩.௰௨. சங்.௱௰௮.௨௬. மத்.௨௧.௯. யோவா. ௰௨.௰௩.—(௰௪. அதி. ௩.) மத்.௰௨.௰.(௫)யாத்.௨௩.௫. உபா.௨௨.௪. (௰) நீதி.௨௫.௬,௭. (௰௧) யோபு.௨௨.௨௯. சங். ௰௮.௨௭. நீதி.௨௯.௨௩. மத்.௨௩.௰௨. யாக்.௪.௬. ௧.பேதுரு.௫.௫. (௰௩) நெகி.௮.௰,௰௨. (௰௫) வெளி.௰௯.௯. (௰௬) மத்.௨௨.௨. (௰௭) நீதி.௯.௨,௫. (௨௪) மத்.௨௧.௪௩. அப்.௰௩.௪௬.

௨௫ பின்பு அநேகசனங்கள் அவரோடே பிரயா
ணமாய்ப் போகையில் அவர் திரும்பிப்பார்த்து,
௨௬ அவர்களிடத்தில்,—ஒருவன் என்னிடத்தில்வந்
து, தன்பிதாவையும், மாதாவையும், மனைவியை
யும், பிள்ளைகளையும், சகோதரரையும், சகோ
தரிகளையும், தன் சுயபிராணனையும் வெறுக்கா
௨௭ விட்டால் என்சீஷனாயிருக்கமாட்டான்.—தன்
சிலுவையைத்தாங்கி எனக்குப் பின்செல்லாத
௨௮ வன்என்சீஷனாயிருக்கமாட்டான்.-உங்களில் ஒ
ருவன் ஒருகோபுரத்தைக் கட்டநினைத்தால், எவ்
வளவு செல்லுமென்றும், அதை முடிக்கிறதற்கு
ஏதுக்களுண்டோ,இல்லையோவென்றும்முதல்
௨௯ உட்காந்துகணக்குப்பாராமலிருப்பானே.-அவன்
அத்திபாரம் போட்டபின்பு முடிக்கிறதற்குத்
திராணியில்லாதிருந்தால், அதைப்பார்க்கும் யா
௩௰ வரும்,—இந்த மனுஷன் கட்டக் கையிட்டும்
முடிக்கிறதற்குத் திராணியில்லாதவனென்று அ
வனைப் பரிகாசம்பண்ணத்தொடங்குவார்கள்.—
௩௧ மேலும் எந்த இராசாவும் மறுஇராசாவுடனே
படைஎடுக்க அபிப்பிராயங்கொண்டால், தனக்
குவிரோதமாய் இருபதினாயிரவரைக்கொண்டுவ
ருகிறவனோடே பதினாயிரவரைக்கொண்டு எதிர்
க்கக்கூடுமா, கூடாதாவென்று முன்பு உட்காந்
௩௨ து ஆலோசனைபண்ணாமலிருப்பானே.—கூடாதி
ருந்தால், அவன் தூரத்திலிருக்கையில் தூதர்க
ளை அனுப்பிச்சமாதானத்தை நிலைப்படுத்த வகை
௩௩ தேடுவான்.—அதுபோல, உங்களில் எவனுந் த
னக்குண்டான யாவற்றையும் வெறுத்துவிட்டா
லொழிய, அவன்என்சீஷனாயிருக்கமாட்டான்.
௩௪ உப்பு நல்லது: உப்புச் சாரமற்றுப்போனால்
௩௫ திரும்ப எதினால் சாரமாக்கப்படும்.—அது நிலத்
திலாகிலும் எருவிலாகிலும் போடத்தக்கதல்
ல; அதை வெளியே கொட்டிப்போடுவார்கள்.
கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கடவ
னென்றார்.

## ௰௫. அதிகாரம்.

௧. காணாமற்போன ஆட்டையும் வெள்ளிக்கா
சையும் உவமித்தல்: ௰௧. கெட்டுப்போன மக
னை உவமித்தல்.

அப்பொழுது சகல ஆயக்காரரும், மற்றப்பா
விகளும் அவருடைய வாக்குகளைக்கேட்கும்ப
௨ டிஅவரிடத்திற்சேர்ந்தார்கள்.-பரிசேயரும்வேத
பாரகரும்மொறுமொறுத்து, இவர் பாவிகளைஏற்
றுக்கொண்டு, அவர்களோடே புசிக்கிறாரென்
றார்கள்.
௩ அவர் அவர்களுக்கு இந்தஉவமையைச்சொன்
௪ னார்.—உங்களில் எவனாகிலும், தனக்குண்டான
நூறு ஆடுகளில் ஒன்றைஇழந்தால், தொண்ணூற்
றொன்பது ஆடுகளையும் வனத்திலேவிட்டுப்போ
ய், இழந்ததைக்கண்டடையும்வரைக்குந் தேடா
௫ மல் இருப்பானே.—கண்டடைந்தபின்பு, அவன்
அதைச்சந்தோஷமாய்த் தன் தோள்கள்மேல் ஏற்
றிக்கொண்டு வீட்டுக்குவந்து,-சிநேகிதர்களையும் ௬
அயலாரையுங் கூடிவரவழைத்து, காணாமற்போ
ன என் ஆட்டைக்கண்டேன், ஆதலால்என்னோ
டே களிகூருங்களென்பானல்லவா.—அதுபோ ௭
ல,மனந்திரும்புவதற்கு அவசியமில்லாத தொண்
ணூற்றொன்பது நீதிமான்களிலும், மனந்திரும்
புகிற ஒரேபாவியினிமித்தம் பரமண்டலத்தில்
அதிகங்களிப்புண்டாகுமென்று நான்உங்களுக்
குச்சொல்லுகிறேன்.
மேலும் பத்துத்திராகுமாக்காசையுடைய எந் ௮
தஸ்திரியும், ஒரு திராகுமாக்காசை இழந்தால்,
விளக்கைக்கொளுத்தி, வீட்டைப்பெருக்கி, அ
தைக் காணும்வரைக்குஞ் சாக்கிரதையாய்த் தே
டாமலிருப்பாளா.—அவள் கண்டபின்பு, தன் ௯
சிநேகிதர்களையும் அயலாரையுங்கூடிவரவழைத்
து, நான் இழந்த திராகுமாவைக் கண்டேன்,
ஆதலால் என்னோடே களிகூருங்களென்பாளல்
லவா.—அதுபோல மனந்திரும்புகிற ஒரு பாவி ௰
யின் நிமித்தமாகவுந் தேவதூதருக்குமுன்பாகச்
சந்தோஷமுண்டாகுமென்று நான் உங்களுக்
குச்சொல்லுகிறேனென்றார்.
பின்னும்அவர், ஒருமனுஷனுக்கு இரண்டுபுத் ௰௧
திரரிருந்தார்கள்.—அவர்களில் இளையவன் தன்பி ௰௨
தாவைநோக்கி,பிதாவே,பொருளில் எனக்குவ
ரும் பங்கைத்தரவேண்டுமென்றுசொல்ல,அவன்
அவர்களுக்குப்பொருளைப்பங்கிட்டான்.—சில ௰௩
நாளுக்குப்பின்பு இளையவன் எல்லாவற்றையுஞ்
சேர்த்துக்கொண்டு தூரதேசத்திற்குப் பிரயாண
மாய்ப்போய்,அங்கேதுராசாரத்தினாலேதன்பொ
ருளைச் செலவழித்தான்.—எல்லாவற்றையும் அ ௰௪
வன் செலவழித்த பின்பு, அந்தத் தேசத்திலே
கொடியபஞ்சமுண்டாக, அவனுக்குக் குறைவு
வரத்தொடங்கிற்று.—பின்பு அவன்போய் அத்தே ௰௫
சத்தாரில் ஒருவனிடத்திற்சேர, இவன் அவனைத்
தன்வயல்களிலே பன்றிகளைமேய்க்கும்படி அ
னுப்பினான்.—பன்றிகள்தின்கிற தவிடுகளினாலே ௰௬
தன்வயிற்றைநிரப்ப வாஞ்சையாயிருந்தும், ஒரு
வனும் அவனுக்குக்கொடுக்கவில்லை.—அவன் புத் ௰௭
திதெளிந்து, ஆ, என் பிதாவினிடத்தில் எத்தனை
கூலிக்காரர் அளவுக்குமிஞ்ச ஆகாரத்தைப்பெற்
றுக்கொள்ளுகிறார்கள், நானோபசியினாலேகெட்
டுப்போகிறேன்.—நான் எழுந்து என் பிதாவினி ௰௮
டத்திற்குப்போய், பிதாவே, தேவனுக்கும்
உமக்கும் விரோதமாய்ப் பாவஞ்செய்தேன்.—
இனி உம்முடைய புத்திரனென்றழைக்கப்படு ௰௯
வதற்கு நான்பாத்திரனல்ல: உம்முடைய கூலிக்
காரரில் ஒருவனைப்போல் என்னையுஞ்சேர்த்துக்
கொள்ளுமென்பேனென்று சொல்லி,—அவன் ௨௰
எழுந்து தன் பிதாவினிடத்திற்சென்றான். அ
வன் அதிதூரத்திலிருக்கையில் பிதா அவனைக்
கண்டு, மனதுருகி, ஓடி, அவனுடைய கழுத்
தைக்கட்டி, அவனை முத்தஞ்செய்தான்.—புத் ௨௧

(௨௬) உபா.௰௩.௬. மத்.௰.௩௭. ரோ.௯.௰௩. வெளி.௰௨.௰௧. (௨௭) மத்.௰௬.௨௪. ௨.தீமோ.௩.௰௨. (௨௮) நீதி.௨௪.
௨௭. (௩௪) மத்.௫.௰௩.—(௰௫. அதி. ௧.) மத்.௯.௰. (௨) அப்.௰௧.௩. கலா.௨.௰௨. (௪) மத்.௰௮.௰௨. (௬) ௧.பேதுரு.
௨.௰,௨௫. (௮) மத்.௰௮.௨௮. (௰௨) மாற்.௰௨.௪௪. (௨௰) அப்.௨.௩௯. எபே.௨.௰௩,௰௭. (௨௧) சங்.௫௧.௪.

திரன் அவனைநோக்கி, பிதாவே, தேவனுக்கும் உமக்கும்விரோதமாய்ப்பாவஞ்செய்தேன், இனி உம்முடைய புத்திரனென்றழைக்கப்படுவதற்கு நான் பாத்திரனல்லவென்று சொல்ல,-
௨௨ பிதா தன் பணிவிடைக்காரருடனே, நீங்கள் முக்கியமான வஸ்திரத்தைக்கொண்டுவந்து இவனுக்குடுத்தி, இவனுடைய கைக்குமோதிரத்தையும், கால்களுக்குப்பாதரட்சைகளையுங்கொடுங்
௨௩ கள்.—கொழுத்த கன்றைக்கொண்டுவந்து அடியுங்கள், நாம்போசனம்பண்ணி, மகிழ்ச்சியாயி
௨௪ ருப்போம்வாருங்கள்:—என்மகனுகிய இவன் மரித்தான், திரும்பவுஞ் சீவித்திருக்கிறுன்; இவன் காணுமற்போனுன், இப்பொழுது காணப்பட்டானென்றுன். அவர்கள் களிகூரத் தொடங்கி
௨௫ ஞர்கள்.—அவனுடையமூத்தமகன் வயலிலிருந்தான்: அவன் திரும்பிவீட்டுக்குச் சமீபமாய் வருகிறபொழுது கீதவாத்தியத்தையும்,நடனக்களிப்
௨௬ பையுங்கேட்டு,-பணிவிடைக்காரன் ஒருவனை
௨௭ அழைத்து, இதென்னவென்று விசாரித்தான்.—பணிவிடைக்காரன் அவனைநோக்கி, உமதுசகோதரன் வந்துவிட்டான்; உமதுபிதா அவனைச் சுகத்தோடே திரும்பப் பெற்றுக்கொண்டபடியினுலே, கொழுத்தகன்றை அடிப்பித்தாரென்று
௨௮ சொல்ல,-இவன்கோபங்கொண்டு, உள்ளேபோகச்சம்மதிக்கவில்லை: ஆதலால் பிதா வெளியே வந்து இவனை மிகவும்வேண்டிக்கொண்டான்.—
௨௯ இவன் பிதாவுக்கு உத்தரமாக, பாரும், நான் எந்தக்காரியத்திலும் உம்முடைய கட்டளையை மீருமல் வெகுவருஷம் உம்மிடத்திற் சேவித்துவருகிறேன்: ஆயினும் என்சிநேகிதருடன் நான்களிகூரும்படி நீர் ஒருபொழுதும் ஒரு ஆட்டுக்குட்
௩௰ டியை எனக்குத்தரவில்லை.—உம்முடைய பொருள்களை வேசைகளோடேபட்சித்த உமது மகனுகிய இவன் வந்தமாத்திரத்தில், கொழுத்தகன்றை இவனுக்காக அடிப்பித்தீரென்றுசொல்ல,—
௩௧ அவன்,மகனே,நீ எப்பொழுதும் என்னேடிருக்கிருய், எனக்குண்டானயாவும் உனக்குரியவை
௩௨ களே.—உன்சகோதரனுகிய இவன் மரித்தான், திரும்பவுஞ் சீவித்திருக்கிறுன்; காணுமற்போனுன், இப்பொழுது காணப்பட்டான்; ஆனபடியினுலே நாம் மகிழ்ச்சியாகிக் களிகூருவதே தகுதியென்று சொன்னுனென்றுர்.

## ௰௬. அதிகாரம்.

௧. அநீதியுள்ள உக்கிராணக்காரனை உவமித்தல்: ௰. உண்மை அவசியமெனக்காட்டல்: ௰௪. பரிசேயரைக்கண்டித்தல்: ௰௯. செல்வனையுந்தரித்திரனையும் உவமித்தல்.

பின்பு அவர்தம்முடையசீஷரைநோக்கி,ஒரு ஐசுவரியவான்,தன்னுடையஉக்கிராணக்காரன் ஒருவன் தன்பொருளை அழித்தானென்று குற்றஞ்
௨ சாற்றப்பட்டதை அறிந்து,-அவனைத்தன்னிடத்தில்வரவழைத்து, அவனுடனே, உன்னைக்குறித்து நான்கேள்விப்பட்டதென்ன; உன் உக்கிராணக்கணக்கை ஒப்பித்துவிடு; நீ இனி உக்கிராணக்காரனுயிருக்கத்தகாதென்றுன்.-அப்பொழு ௩
து உக்கிராணக்காரன் தனக்குள்ளே,நான்என்ன செய்வேன்,என் எசமானன்உக்கிராணவிசாரிப்பை என்னில் நீக்குகிறுனே:கொத்துகிறதற்கு எனக்குப்பெலனில்லை;பிச்சைகேட்கவோ,வெட்கமாயிருக்கின்றது.-உக்கிராணவிசாரிப்பைவிட் ௪
டு நான் தள்ளப்படும்பொழுது,அவர்கள் தங்கள் வீடுகளில் என்னை எற்றுக்கொள்ளும்படி நான் ஒன்றைச்செய்யத்தீர்மானிக்கிறேனென்று எண்ணிக்கொண்டு,—அவன் தன் எசமானனிடத்திற் ௫
கடன்பட்டவர்களை ஒவ்வொருவனுக அழைத்து, ஒருவனைநோக்கி, நீ என் எசமானனிடத்திற் பட்டகடன் எவ்வளவென்றுகேட்க,—நூறு பாத் ௬
எண்ணெயென்றுன். உக்கிராணக்காரன் அவனுடனே, நீ உன்பத்திரத்தைஎடுத்துச்சீக்கிரமாய் உட்கார்ந்து, ஐம்பதென்றெழுதென்றுன்.—பின்பு ௭
அவன் வேறொருவனைநோக்கி, நீ பட்டகடன் எவ்வளவென்றுகேட்க, நூறு ஓமர் கோதுமை என்றுன். உக்கிராணக்காரன் அவனுடனே, நீ உன்பத்திரத்தை எடுத்து எண்பதென்றெழுதென்றுன்.—அநீதியுள்ள உக்கிராணக்காரன் புத்தியோ ௮
டேசெய்தபடியினுல் எசமானன் அவனைப்புகழ்ந்தான். ஒளியின் பிள்ளைகளிலும், இப்பிரபஞ்சத்தின்பிள்ளைகள் தங்கள்தங்கள் காலத்தில் அதிகபுத்திமான்களாயிருக்கிறுர்கள்.—நீங்கள் மா ௯
ளும்பொழுது அவர்கள் உங்களை நித்தியவீடுகளில் எற்றுக்கொள்ளும்படி,அநீதமானபொருளினுல் உங்களுக்காகச் சிநேகிதரைச் சம்பாதியுங்களென்று நான் உங்களுக்குச்சொல்லுகிறேன்.-
அற்பத்தில் உண்மையுள்ளவன் அதிகத்திலும் ௰
உண்மையுள்ளவன்:அற்பத்தில் உண்மையில்லாதவன் அதிகத்திலும் உண்மையில்லாதவன்.-அநீ ௰௧
தமானபொருளில் நீங்கள் உண்மையில்லாதிருந்தால், யதார்த்தமான செல்வத்தை உங்கள்வசத்தில் ஒப்பிப்பவனுர்.—பிறனுடையதில் நீங்கள் ௰௨
உண்மையில்லாதிருந்தால், உங்களுக்குச் சொந்தமானதை உங்களிடத்தில்யார் ஒப்பிப்பார்.

ஒருவன் இரண்டு எசமானரிடத்திற்சேவிக்க ௰௩
மாட்டான்: ஒருவனை அவன் பகைத்து, மற்றவனை நேசிப்பான்; அல்லது ஒருவனைப்பற்றிக்கொண்டு மற்றவனை அலட்சியம்பண்ணுவான். நீங்கள் தேவனையும் மம்மோனையுஞ் சேவிக்கமாட்டீர்களென்றுர்.—இவையெல்லாவற்றையுங் ௰௪
கேட்டு, பொருளாசைக்காரராகிய பரிசேயர் அவரைப்பரிகாசம்பண்ணினுர்கள்.—அதினுல் அ ௰௫
வர் அவர்களைநோக்கி, நீங்கள் மனுஷர்முன்பாக உங்களைநீதிமான்களென்று காட்டுகிறீர்கள்; தேவன் உங்கள் இருதயங்களை அறிவார்: மனுஷருக்குள்மதிக்கப்படுவது, தேவனுக்கு முன்பாக வெறுக்கப்படும்.—யோவான் வரைக்கும், நி ௰௬

(௨௪)எபே.௨.௧. வெளி.௩.௧.—(௰௫.அதி.௬.) எசேக்.௪௫.௰,௰௧,௰௪. (௮) யோவா.௰௨.௩௬. எபே.௫.௮. ௧.தெச.௫.௫. (௯) தானி.௪.௨௭. மத்.௬.௰௯. ௧.தீமோ.௬.௰௭,௰௮,௰௯. (௰) மத்.௨௫.௨௧.(௰௩)மத்.௬.௨௪.(௰௪)மத்.௨௩.௰௪. (௰௫) சங்.௭.௯. ௧.சாமு.௰௬.௭. (௰௬) மத்.௪.௰௭.

யாயப்பிரமாணமுந் தீர்க்கதரிசிகளின்வாக்கியங்
களும் அறிவிக்கப்பட்டுவந்தன: அதுமுதல் தே
வனுடைய இராச்சியஞ் சுவிசேஷமாய் அறி
விக்கப்பட்டுவருகின்றது, யாவரும் பிரயத்தனத்
௰எ துடன் அதிற்பிரவேசிக்கிறார்கள்.-வானமும்பூமி
யும் ஒழிந்துபோவதெளிதாயிருந்தாலும், வேதப்
பிரமாணத்திலொருஎழுத்தின்உறுப்புங் கெட்டுப்
௰அ போகாது.—தன்மனைவியைத்தள்ளி வேறொருஸ்
திரியை விவாகம்பண்ணுகிறவன் விபசாரஞ்செ
ய்கிறான்:புருஷனாலே தள்ளப்பட்டவளை விவா
கம்பண்ணுகிறவனும் விபசாரஞ்செய்கிறான்.
௰௯ இரத்தாம்பரமும் மெல்லியவஸ்திரமுந் தரித்த
ஒரு ஐசுவரியவான் அனுதினமுஞ்சம்பிரமமாய்
௨௰ வாழ்ந்திருந்தான்.—பருக்களினால் நிறைந்தவனா
௨௧ யிருந்த இலாசருவென்னும் ஒருதரித்திரன்,—அந்
த ஐசுவரியவானுடைய போசன பீடத்திலிருந்
துவிழுந் துணிக்கைகளைப் புசிக்க வாஞ்சையுள்
ளவனாய் அவனுடைய வாசலினருகே கிடந்
தான்: நாய்கள்வந்து அவனுடையபருக்களை நக்
௨௨ கும்.—பின்பு அந்தத்தரித்திரன் மரித்தான், தே
வதூதர் அவனை ஆபிரகாமின்மடியிலே கொண்
டுபோய்விட்டார்கள்: ஐசுவரியவானும் மரண
௨௩ மடைந்து, அடக்கம் பண்ணப்பட்டான்.—அ
வன் நரகத்தில் யாதனைப்பட்டு, தன் கண்களை
ஏறிட்டு, தூரத்தில் ஆபிரகாமையும், அவன்
மடியில் இலாசருவையுங்கண்டு ஓலமிட்டு,—
௨௪ பிதாவாகிய ஆபிரகாமே, என்மேலிரங்கும், தன்
விரலின்நுனியைத் தண்ணீரிலேதோய்த்து, என்
நாவைக் குளிரப்பண்ணும்படி இலாசருவை அ
னுப்பிவிடும்; நான் இந்த அக்கினிச்சுவாலையில்
௨௫ யாதனைப்படுகிறேனென்றான்.—அதற்கு ஆபிர
காம், மகனே, நீ உன் ஆயுள்காலத்தில் உன் சம்
பத்தைப்பெற்றாய், இலாசரு ஆபத்தை அடைந்
தான், அதைநினைத்துக்கொள்: இப்பொழுது அ
வன் ஆறுதல் அடைகிறான், நீ யாதனைப்படுகி
௨௬ றாய்.—அதுவுமல்லாமல், எங்களுக்கும் உங்களுக்
கும்இடையிலேபெரும்பிளப்புநிலைத்திருக்கின்
றது: அதினிமித்தம் இவ்விடத்திலுள்ளவர்கள்
அவ்விடத்திற்கும், அவ்விடத்திலுள்ளவர்கள்
இவ்விடத்திற்குங் கடந்துசெல்வது கூடாதென்
௨௭ றான்.—அப்பொழுது அவன், பிதாவே, என்பிதா
வின் வீட்டிலிருக்கிற என் ஐந்துசகோதரரும்இந்
தயாதனையுள்ள ஸ்தலத்துக்குவராதபடி அவர்க
௨௮ ளை எச்சரிக்கும்பொருட்டு,—இவனை அவர்களி
டத்தில் அனுப்ப உம்மை வேண்டுகிறேனென்
௨௯ றுசொல்ல,—ஆபிரகாம் அவனைநோக்கி, மோ
சேயுந் தீர்க்கதரிசிகளும் அவர்களிடத்திலுண்டு;
அவர்கள் இவர்களுக்கே செவிகொடுக்கக்கட
௩௰ வர்களென்றான்.—அவன், பிதாவாகிய ஆபிரகா
மே, அப்படியல்ல: மரித்தோரினின்று ஒருவன்
அவர்களிடத்திற்குப்போனால் மனந்திரும்புவார்
களேயென்றுசொல்ல,—அவன், அவர்கள் மோ ௩௧
சேக்குந் தீர்க்கதரிசிகளுக்குஞ் செவிகொடாவி
ட்டால்,மரித்தோரினின்று ஒருவன்எழுந்துபோ
னாலும் உடன்படார்களென்றானென்றார்.

## ௰௭. அதிகாரம்.

௧. பிறருக்கு இடறல்வரப்பண்ணாதபடி கிறிஸ்து புத்திசொல்லல்: ௭. எசமானனுக்கும் பணிவிடைக்காரனுக்குமுண்டான முறைமையைத் தெரிவித்தல்: ௰௧. பத்துக்குஷ்டரோகிகளைச் சொஸ்தப்படுத்தல்: ௨௰. தேவனுடைய இராச்சியத்தின்விசேஷத்தைவிளக்கல்: ௨௨. கிறிஸ்துவருந்தன்மையைக்காட்டல்.

பின்பு அவர் தம்முடைய சீஷரைநோக்கி,இட ௧
றல்கள் இல்லாதிருப்பது கூடாதகாரியம்: ஆனா
லும் ஐயோ,அவைகளைவருவிப்பவனுக்கு ஆபத்
துவரும்.—அவன் இந்தச்சிறியரில் ஒருவனுக்கு ௨
இடறல்வருவிப்பதிலும், தன்னுடையகழுத்தில்
எந்திரக்கல்கட்டப்பட்டு,சமுத்திரத்தில்அமிழ்த்
தப்படுவது அவனுக்கு நலம்.
நீங்கள் உங்களைக்குறித்து எச்சரிக்கையாயி ௩
ருபபீர்களாக: உன்சகோதரன் உனக்குவிரோத
மாய்க்குற்றஞ்செய்தால் அவனைக்கடிந்துகொள்;
அவன் மனஸ்தாபப்பட்டால் அவனுக்கு மன்
னிப்பாயாக.—அவன் ஒருநாளில் உனக்கு வி ௪
ரோதமாய் ஏழுதரங்குற்றஞ்செய்து, அந்நாளில்
ஏழுதரமும் உன்னிடத்தில்வந்து,மனஸ்தாபப்ப
டுகிறேனென்றால் அவனுக்கு மன்னிப்பாயாக
வென்றார்.-அப்போஸ்தலர் கர்த்தரைநோக் ௫
கி, எங்கள் விசுவாசம் வருத்திக்கச்செய்யுமென்
றுசொல்ல,—கர்த்தர், கடுகுவிதை அளவு விசு ௬
வாசம் உங்களிடத்தில் உண்டானால், நீங்கள்
இந்தக் காட்டத்திமரத்தைப்பார்த்து, நீ வேருட
னே பிடுங்கப்பட்டுச் சமுத்திரத்தில் நாட்டப்
படக்கடவாயென்று சொல்ல, அது உங்களுக்
கமையும்.—உங்களில் எவனாகிலும், தன் பணி ௭
விடைக்காரன் உழுது அல்லது மேய்த்து, வய
லினின்று வந்தவுடனே அவனைப்பார்த்து, நீ
வந்து பந்தியிருவென்பானா.—நீ எனக்காக இ ௮
ராப்போசனத்தை ஆயத்தப்படுத்து, அரைக்கச்
சுக்கட்டி, நான்போசனபானம் பண்ணுமளவும்
எனக்குப்பணிவிடைசெய்து, பின்பு நீ போசன
பானம்பண்ணலாமென்றல்லவா அவனுடனே
சொல்லுவான்.—அந்தப்பணிவிடைக்காரன் த ௯
னக்குக் கட்டளையிட்டவைகளைச் செய்கிறபடி
யினால் அவன் இவனுக்கு உபசாரஞ்செய்வானா;
நான் அப்படி நினைக்கவில்லை.-அதுபோல், நீங் ௰
களும் உங்களுக்குக் கட்டளையிடப்பட்ட யா
வையுஞ்செய்தபின்பு, நாங்கள் அபாத்திரமானப
ணிவிடைக்காரராயிருக்கிறோம்: எங்களுக்குண்

(௰எ) சங்.௱௨.௨௬,௨௭. ஏசா.௪௰.௮. மத்.௫.௰௮. ௧பேதுரு.௧.௨௫. (௰௮) மத்.௫.௩௨. மாற்.௰.௰௧. ௧கொரி.௭.௰,௰௧. (௨௪) சக.௰௪.௰௨. ஏசா.௬௬.௨௪. மாற்.௯.௪௪,. (௨௫) யோபு.௨௧.௰௩. (௨௯) ஏசா.௮.௨௰. யோவா.௫.௩௯, ௪௫. அப்.௰௫.௨௧. (௩௧) யோவா.௰௨.௰,௰௧.—(௰௭. அதி. ௧.) மத்.௰௮.௬,௭. ௧கொரி.௰௧.௰௯. (௩) மத்.௰௮.௰௫,௨௧. லேவி.௰௯.௰௭. நீதி.௰௭.௰. யாக்.௫.௰௯. (௬) மத்.௰௭.௨௰. (௰) யோபு.௨௨.௩. சங்.௰௬.௨. மத்.௨௫.௩௰. ரோ.௩.௰௨. ௧கொரி.௯.௰௬,௰௭. பிலே.௰௧.

டான கடமையைமாத்திரஞ் செய்தோமென்று
சொல்லுவீர்களாகவென்றார்.
௰௧ பின்பு அவர் யெருஷலேமுக்குப் பிரயாண
மாய்ப்போகையில், ஷமாரியா, கலிலேயா நாடு
௰௨ களின்வழியாய்ச்சென்று—ஒரு கிராமத்திற்பிர
வேசிக்கையில், குஷ்டரோகிகள் பத்துப்பேர்
௰௩ அவருக்கெதிராகத் தூரத்திலேநின்று—சத்தமிட்
டு, யேசுவே, போதகரே, எங்கள்மேல் இரங்
௰௪ குமென்றார்கள்.—அவர்களை அவர் கண்டு, நீங்
கள்போய், உங்களை ஆசாரியருக்குக்காண்பியுங்
களென்று அவர்களுக்குச்சொன்னார். அவர்கள்
௰௫ போகையில் சுத்தமானார்கள்.—அவர்களில் ஒரு
வன் தான் ஆரோக்கியமடைந்ததைக் கண்டமாத்
திரத்தில் திரும்பி மிகுந்தசத்தத்துடனே தேவ
௰௬ னைத் துதித்து,—யேசுவின் பாதத்திலே முகங்
குப்புறவிழுந்து, அவரை ஸ்தோத்திரஞ்செய்தா
௰௭ ன்: அவன் ஷமாரியன்.–யேசு, பத்துப்பேரல்
லவா சுத்தமானார்கள், ஒன்பதுபேரெங்கே.—
௰௮ தேவனுக்குத் துதிசெலுத்தும்படி இந்த அந்
நியனே ஒழிய வேறொருவருந்திரும்பிவரவில்
௰௯ லையென்றுசொல்லி,—அவனைநோக்கி, நீ எழுந்
துபோ: உன்விசுவாசம் உன்னைச்சொஸ்தமாக்
கிற்றென்றார்.
௨௰ தேவனுடைய இராச்சியம்எப்பொழுதுவ
ருமென்றுபரிசேயர் அவரிடத்தில் விசாரித்தஒரு
சமயத்தில், அவர் அவர்களுக்குத்தரமாக, தேவ
னுடைய இராச்சியம்பிரத்தியட்சமாய்வராது.–
௨௧ இங்கேபாருங்கள், அங்கேபாருங்களென்றுசொ
ல்லத்தகாது; கேளுங்கள், தேவனுடைய இராச்
சியம் உங்களுக்குள்ளேயிருக்கின்றதென்றார்.–
௨௨ பின்பு அவர்சீஷரைநோக்கி, மனுபுத்திரனுடை
ய நாட்களில் ஒன்றைக்காணும்படி நீங்கள் அ
பேட்சிக்குங்காலம்வரும்: ஆனாலுங் காணமாட்
௨௩ டீர்கள்.—உங்களிடத்திற்சிலர், இங்கே பாருங்
கள், அங்கே பாருங்களென்று சொல்லும்பொழு
து, நீங்கள்புறப்படாமலும்அவர்களைப்பின்செல்
௨௪ லாமலுமிருங்கள்.—மின்னல் வானத்தின் ஒரு
திசையிற்றோன்றி, மறுதிசைவரைக்கும் பிரகா
சிக்கிறதுபோல், தன்னுடைய நாளில் மனுபுத்தி
௨௫ ரனுந் தோன்றுவான்.–அதற்குமுன்பு அவன்மி
குந்த வேதனை அனுபவிக்கவும், இந்தச்சந்ததியி
௨௬ னால் அவமதிக்கப்படவும் வேண்டும்.–நோவா
வின் காலத்திலே நடந்ததுபோல் மனுபுத்திரன்
௨௭ வருங்காலத்திலும் நடக்கும்.—நோவா பேழை
யிற்பிரவேசித்தநாள்வரைக்குஞ்சனங்கள் போச
னபானம்பண்ணியும், பெண்கொண்டும் பெண்
கொடுத்தும் வந்தார்கள், அந்நாளிலே சலப்பிர
௨௮ ளயம்வந்து எல்லாரையும் அழித்தது.-லோத்தின்
காலத்திலே நடந்ததுபோலவும் நடக்கும்; சனங்
கள்போசனபானம்பண்ணியும், கொண்டும், விற்
றும், நாட்டியும், கட்டியும்வந்தார்கள்.—லோத் ௨௯
துச் சோதோமைவிட்டுப் புறப்பட்ட அந்தத்தி
னத்திலே வானத்தினின்று அக்கினியுங்கெந்தக
மும்பெய்து, எல்லாவற்றையும் அழித்தன.–மனு ௩௰
புத்திரன் வெளிப்படுந்தினத்தில் அப்படியே ஆ
கும்.-அந்தநாளில் வீட்டின்மேலிருப்பவன், வீட் ௩௧
டுக்குள்ளிருக்கிற தன்பொருளை எடுத்துக்கொள்
ளும்படிக்கு இறங்காமற் போகக்கடவன்: வய
லிலிருப்பவன், பின்னிட்டுத்திரும்பாமற் போ
கக்கடவன்.—லோத்தின் மனைவியைநினைத்துக் ௩௨
கொள்ளுங்கள்.—தன் பிராணனை இரட்சிக்கவ ௩௩
கைதேடுகிறவன், அதை இழந்துபோவான்; அ
தை இழந்தவன் காத்துக்கொள்ளுவான்.—அந்த ௩௪
இராத்திரியில் ஒரேபடுக்கையில் படுக்கும் இருவ
ரில், ஒருவன் பிடித்துக்கொள்ளப்படுவான், மற்
றவன் விடப்படுவான்.—மாஅரைக்கும் இரண் ௩௫
டு ஸ்திரிகளில், ஒருத்தி பிடித்துக்கொள்ளப்படு
வாள், மற்றவள் விடப்படுவாள்.—வயலிலிருக் ௩௬
கும் இருவரில், ஒருவன் பிடித்துக்கொள்ளப்படு
வான், மற்றவன்விடப்படுவானென்று உங்களுக்
குச்சொல்லுகிறேனென்றார்.–அவர்கள் அவருக் ௩௭
குத்தரமாக, கர்த்தாவே, எங்கேயென்றார்கள்;
அதற்கு அவர், பிணமெங்கேயோ, அங்கே கழு
குகள் வந்துகூடுமென்றார்.

## ௰௮. அதிகாரம்.

௧. விதவையை உவமித்தல்: ௯. பரிசேயனையும்
ஆயக்காரனையும் உவமித்தல்: ௰௫. பிள்ளைகளை
அங்கிகரித்தல்: ௰௮. தலைவனொருவன் கிறிஸ்து
வினிடத்தில் வந்த செய்தியைத் தெரிவித்தல்:
௩௧. கிறிஸ்துத் தமது மரணத்தை முன்னறிவித்
தல்: ௩௫. பிச்சைக்காரனான ஒரு குருடனுக்
குப்பார்வை அளித்தல்.

இளக்கரியாமல் இடைவிடாதபடி பிரார்த்தனை ௧
பண்ணுவது அவசியமென்பதைக்குறித்து, அவர்
அவர்களுக்கு ஒரு உவமையைச்சொன்னார்.—
ஒரு பட்டணத்திலே தேவனுக்குப் பயப்ப ௨
டாமலும், மனுஷரை மதியாமலும் ஒரு நியாயா
திபதி இருந்தான்.—அந்தப்பட்டணத்தில் ஒரு ௩
விதவையும் இருந்தாள். அவள் அவனிடத்திற்
போய், எனக்கு விரோதியானவனிடத்திற் பழி
வாங்கவேண்டுமென்றாள்.–அவன் சிலநாள் சம் ௪
மதிக்கவில்லை: பின்பு அவன் நான் தேவனுக்
கு அஞ்சாதவனும், மனுஷரை மதியாதவனுமா
யிருந்தும்,–இந்தவிதவை என்னை வருத்தப்படுத் ௫
துகிறபடியால் இவளைக்குறித்து ஒரு தீர்ப்புச்
செய்வேன், இல்லாவிட்டால் இவள் எப்பொழு
தும்வந்து என்னை வருத்தப்படுத்துவாளென்று
தனக்குள்ளே சிந்தனைபண்ணினானென்றுசொல்
லி,-பின்பு கர்த்தர், அநீதியுள்ளஅந்தநியாயாதிப ௬
திசொன்னதைக்கேளுங்கள்.-தேவன் சிலநாள் ௭

(௰௧) அதி.௯.௫௧,௫௨. (௰௨) லேவி.௰௩.௪௬. (௰௪) லேவி.௰௩.௨. (௰௯) மத்.௯.௨௨. (௨௧) வச.௨௩. ரோ.௰௪.௰௭. யோவா.௧.௨௬. (௨௨) யோவா.௰௭.௰௨. (௨௩) மத்.௨௪.௨௩. (௨௪) மத்.௨௪.௨௭. (௨௫) மாற்.௮.௩௧. (௨௬) ஆதி.௭. மத்.௨௪.௩௭. (௨௮) ஆதி.௰௯. (௨௯) ஆதி.௰௯.௰௬,௨௪. (௩௰) ௨.தெச.௧.௬. (௩௧) மத்.௨௪.௰௭. (௩௨) ஆதி.௰௯.௨௬. (௩௩) மத்.௰.௩௯. யோவா.௰௨.௨௫. (௩௪) மத்.௨௪.௪௰,௪௧. ௧.தெச.௪.௰௭. (௩௭) யோபு.௩௯.௩௰.—(௰௮. அதி. ௧.) ரோ.௰௨.௰௨. எபே.௬.௰௮. கொலோ.௪.௨. ௧.தெச.௫.௰௭. (௭) வெளி.௬.௰.

தாமதித்தாலும், தம்மால் தெரிந்துகொள்ளப்பட்
டு, தம்மைநோக்கி இரவும் பகலும் வேண்டுதல்
பண்ணுகிற அவர்களுக்காகப் பழிவாங்காமலி
௮ ருப்பாரா.—சீக்கிரமாய் அவர்களுக்காகப் பழி
வாங்குவாரென்று நான் உங்களுக்குச்சொல்
லுகிறேன். ஆகிலும் மனுபுத்திரன் வரும்பொ
ழுது பூமியிலே விசுவாசத்தைக் காண்பானோ
௯ என்றார்.—தங்களையே நீதிமான்களென்று ம
தித்து, மற்றவர்களை அவமதிக்குஞ் சிலரைக்
௰ குறித்து இந்த உவமையைச்சொன்னார்.—இ
ரண்டுமனுஷர் பிரார்த்தனைபண்ணும்படி தேவா
லயத்திற்குப்போனார்கள்; ஒருவன் பரிசேயன்,
௰௧ மற்றவன் ஆயக்காரன்.—பரிசேயன் தனித்து
நின்று, தேவனே, நான் பறிகாரர், அநீதர், வி
பசாரர் இப்படிப்பட்ட மற்றமனுஷரைப்போ
லவும், இந்த ஆயக்காரனைப்போலவுமல்ல; இ
தினிமித்தம் உமக்கு ஸ்தோத்திரஞ் செலுத்துகி
௰௨ றேன்.—வாரத்தில் இரண்டுதரம் உபவாசிக்கி
றேன், எனக்குண்டான எல்லாவற்றிலும் பத்தி
லொன்று செலுத்துகிறேனென்று சொல்லிப்
௰௩ பிரார்த்தித்தான்.—ஆயக்காரன் தூரத்தில் நின்
று, தன் கண்களையும் வானத்துக்கு ஏறிடத்து
ணியாமல், தன்மார்பில் அடித்து, தேவனே,
௰௪ பாவியாகிய என்மேல் இரங்குமென்றான்.—அவ
னல்ல,இவனே நீதிமானாக்கப்பட்டவனாய்த்தன்
வீட்டுக்குத் திரும்பிப்போனானென்று உங்களுக்
குச்சொல்லுகிறேன்: தன்னை உயர்த்துகிறவன்
தாழ்த்தப்படுவான்; தன்னைத் தாழ்த்துகிறவனே
௰௫ உயர்த்தப்படுவானென்றார்.—பின்பு குழந்தைக
ளை அவர் தொடும்படிக்கு அவர்கள் அவரிடத்
திற் கொண்டுவந்தார்கள்: சீஷர் அதைக்கண்டு அ
௰௬ வர்களைக் கடிந்தார்கள்.—யேசு அவைகளை வர
அழைத்து, குழந்தைகளை என்னிடத்தில் வரவி
டுங்கள், அவைகளைத் தடைபண்ணாதிருங்கள்:
தேவனுடைய இராச்சியம் அப்படிப்பட்ட
௰௭ வைகளுக்கேயுரியது.—குழந்தையைப் போலத்
தேவனுடைய இராச்சியத்தை ஏற்றுக்கொள்
ளாதவன் எவனோ, அவன் அதில் ஒருபொழுதும்
பிரவேசிக்கமாட்டானென்று மெய்யாக உங்க
௰௮ ளுக்குச்சொல்லுகிறேனென்றார்.—அதிபதி ஒரு
வன் அவரைநோக்கி, நல்லபோதகரே, நித்திய
சீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படி நான் செய்
௰௯ யவேண்டியதென்னவென்றுகேட்க,—யேசு அ
வனுடனே, நீ என்னை நல்லவரென்றுஏன்சொல்
லுகிறாய்; தேவன் ஒருவரே யன்றி, மற்றொரு
௨௰ வரும் நல்லவரல்லவே.—"விபசாரஞ் செய்யா
யாக, கொலைசெய்யாயாக, களவுசெய்யாயாக,
பொய்ச்சாட்சிசொல்லாயாக, உன்பிதாவையும்,
உன் மாதாவையுங் கனம்பண்ணுவாயாக," என்

னுங் கட்டளைகளை அறிவாயேயென்றார்.—அதற் ௨௧
கவன், இவைகளைஎல்லாம் என்சிறுவயது முதற்
கொண்டு காத்து நடக்கிறேனென்றுசொல்ல,—
யேசு அவ்வாக்கைக்கேட்டு அவனைநோக்கி, ௨௨
இன்னும் உன்னில் ஒருகுறைவிருக்கின்றது: உ
னக்குண்டானவைகளை யெல்லாம் நீ விற்றுத்த
ரித்திரருக்குக்கொடு, பரமண்டலத்திலே பொக்
கிஷத்தைப்பெறுவாய்: வந்து என்னைப் பின்பற்
றுவாயாகவென்றார்.—அவன் மிகுந்த ஐசுவரிய ௨௩
முள்ளவனானபடியால் அவ்வாக்கைக் கேட்ட
மாத்திரத்தில் மிகவுந்துக்கித்தான்.—அவன் மி ௨௪
குந்த துக்கமடைந்ததை யேசு கண்டு, ஐசுவரி
யமுள்ளவர்கள் தேவனுடைய இராச்சியத்
திற் பிரவேசிப்பது எவ்வளவு அரிது.—ஐசுவரிய ௨௫
வான் தேவனுடைய இராச்சியத்திற்பிரவே
சிப்பதிலும், ஒரு ஒட்டகம் ஊசியின்காதிலே
நுழைவதெளிதென்றார்.—அதைக்கேட்டவர்கள், ௨௬
அப்படியானால் ஆர் இரட்சிக்கப்படுவார்களென்
றுகேட்க,—அவர், மனுஷராலாகமாட்டாதவை ௨௭
கள் தேவனாலாகுமென்றார்.—அப்பொழுது பேது ௨௮
ரு, பாரும்,நாங்கள் எல்லாவற்றையும்விட்டு உம்
மைப்பின்பற்றினோமேயென்று சொல்ல,-அவர் ௨௯
அவர்களைநோக்கி, தேவனுடைய இராச்சியத்
தினிமித்தம் வீட்டையாகிலும், பெற்றாரையாகி
லும், சகோதரரை யாகிலும், மனைவியை யாகி
லும், பிள்ளைகளையாகிலும்விட்ட யாவரும்,—
இம்மையில் அவையிலும் மிகுதியானவைகளை ௩௰
யும், மறுமையிலே நித்திய சீவனையும்பெறாமல்
இருப்பதில்லையென்று மெய்யாக உங்களுக்குச்
சொல்லுகிறேனென்றார்.

பின்புஅவர்பன்னிருவரைச்சேர்த்துக்கொண் ௩௧
டு, அவர்களுடனே, பாருங்கள், யெருஷலே
முக்குப் போகிறோம், மனுபுத்திரனைக்குறித்துத்
தீர்க்கதரிசிகளால் எழுதப்பட்டயாவும் நிறைவே
றும்.—அவன் புறத்தேசத்தாருடையகையில் ஒப் ௩௨
பிக்கப்பட்டு, பரிகாசமும் நிந்தையுமடைந்து
துப்பப்படுவான்.—அவனைவாரினால் அடித்து, ௩௩
பின்பு கொலைசெய்வார்கள்: மூன்றாம்நாளில் எ
ழுந்திருப்பானென்றார்.—அவர்கள் இவைகளி ௩௪
லொன்றையும் உணரவில்லை: இவைகளின்பொ
ருள் அவர்களுக்கு மறைவாயிருந்தது, அவர்
சொன்னவைகளை அறியாமலிருந்தார்கள்.

அவர் யெரிகோவுக்குச் சமீபமானபொழுது, ௩௫
பிச்சைகேட்கும்படி வழியருகேயிருந்த குருட
னொருவன்,—சனங்கள் நடக்கிற சத்தத்தைக் ௩௬
கேட்டு,அதென்னவென்று விசாரித்தான்.-அவர் ௩௭
கள்நாசரேத்தூரானாகிய யேசு நடந்துபோகிறா
ரென்று அவனுக்குஅறிவித்தார்கள்.—அவன்சத்த ௩௮
மிட்டு, யேசுவே, தாவீதின் புத்திரனே, என்

(௮) எபி.௰.௩௭. ௨.பேதுரு.௩.௮,௯. (௯) சங்.௱௩௧.௨. ஏசா.௬௰௫. வெளி.௩.௰௭.(௰௪)யோபு.௨௨.௨௯. மத்.௨௩.
௰௨. யாக்.௪.௬. ௧.பேதுரு.௫.௫,௬.(௰௫)மத்.௰௯.௰௩. (௰௬) ௧.கொரி.௰௪.௨௰. ௧.பேதுரு.௨.௨.(௰௭)மாற்.௰.௰௫.
(௰௮) மத்.௰௯.௰௬. (௨௰) யாத்.௨௰.௰௨,௰௬. உபா.௫.௰௬—௨௰. ரோ.௰௩.௯. எபே.௬.௨. கொலோ.௩.௨௰. (௨௨)
மத்.௬.௰௯,௨௰. ௧.தீமோ.௬.௰௯. (௨௪) நீதி.௰௧.௨௮. மத்.௰௯.௨௩. (௨௭) எரே.௩௨.௰௭. சக.௮.௬. (௨௮) மத்.௰௯.
௨௭. (௨௯) உபா.௩௩.௯. (௩௰) யோபு.௪௨.௰. (௩௧) மத்.௰௬.௨௧. சங்.௨௨. ஏசா.௫௩. (௩௨) மத்.௨௭.௨. யோவா.
௰௮.௨௮. அப்.௩.௰௩. (௩௪) மாற்.௯.௩௨. யோவா.௰.௬. (௩௫) மத்.௨௰.௨௯.

௩௯ மேலிரங்குமென்றான்.—முன்நடப்பவர்கள் அ
வன் பேசாமல் இருக்கும்படி அவனைக்கடிந்து
கொண்டார்கள்: அவனோ தாவீதின் புத்திரனே,
என்மேலிரங்குமென்று அதிகசத்தமிட்டான்.—
௪௰ யேசு தரித்து நின்று, அவனைத் தம்மிடத்திற்
கொண்டுவரும்படி கட்டளையிட்டார்: அவன்
௪௧ கிட்டவந்தபொழுது அவர் அவனைநோக்கி,—நீ
என்னவிரும்புகிறாய்; உனக்கு நான் செய்ய
வேண்டியதென்னவென்றுகேட்க,அவன், கர்த்
தாவே, நான் பார்வைஅடையும்படி செய்ய
௪௨ வேண்டுமென்றான்.—யேசு அவனைநோக்கி, நீ
பார்வைஅடைவாயாக: உன்விசுவாசம் உன்னை
௪௩ இரட்சித்ததென்றார்.-உடனே அவன் பார்வைஅ
டைந்து, தேவனைப்புகழ்ந்து, அவருக்குப்பின்
சென்றான்: அதைக்கண்ட சனங்களெல்லாருந்
தேவனுக்குத் துதிசெலுத்தினார்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. ஆயக்காரனாகிய சக்கேயுவின்செய்தியைத்தெ
ரிவித்தல்: ௰௧. பிரபுவையும் அவனுடைய பத்
துப்பணிவிடைக்காரரையும் உவமித்தல்: ௨௮.
கிறிஸ்து யெருஷலேமுக்குப் பிரயாணம்பண்
ணல்: ௪௧. அதற்குநேரிடும்ஆபத்தைக்குறித்துப்
புலம்பல்.

பின்பு அவர்யெரிகோவிற் பிரவேசித்து, அதின்
௨ வழியாய்ப்போகையில்,—ஆயக்காரருக்குத்தலை
வனும்,ஐசுவரியவானுமாகிய சக்கேயு, யேசு ஆ
௩ ரென்று பார்த்தறிய வகைதேடினான்.—அவன்
குள்ளனானபடியினாற் சனக்கூட்டத்தில் அவ
௪ ரைக் காணக்கூடாமல்,—அவர்செல்லும் வழி
யில், முன்னே ஓடி, அவரைப்பார்க்கும்படி ஒரு
௫ காட்டத்திமரத்தில் ஏறினான்.—யேசு அவ்வி
டத்தில்வருகையில், அண்ணாந்து அவனைப்பார்த்
து அவனுடனே, சக்கேயுவே, நீ சீக்கிரமாய் இ
றங்கிவா; இன்றைக்கு நான் உன்வீட்டிலே தங்
௬ கவேண்டுமென்றுசொல்ல,-அவன் சீக்கிரமாய்
இறங்கி, சந்தோஷத்தோடே அவரை ஏற்றுக்
௭ கொண்டான்.-அதைக்கண்டயாவரும்,இவர்பா
வியான மனுஷனோடே பந்தியிருக்கப்போகிறா
௮ ரேயென்று மொறுமொறுத்தார்கள்.-சக்கேயு நின்
று கர்த்தரைநோக்கி, கர்த்தாவே, என்
பொருளிற் பாதியைத் தரித்திரருக்குக் கொடுக்
கிறேன்; நான் ஒருவனிடத்தில் எதையாகிலும்
அநியாயமாய் எடுத்திருந்தேனானால், நாலுமடங்
௯ காய்ப் பிரதியளிப்பேனென்றான்.—யேசு அவ
னைக்குறித்து, இவனும்ஆபிரகாமின்புத்திரன், இ
தினிமித்தம் இன்றைக்கு இந்தவீட்டுக்கு இரட்
௰ சிப்புவந்தது.-மனுபுத்திரன் காணாமற்போனதை
௰௧ த்தேடி ரட்சிக்கும்படி வந்தானென்றார்.-அவர்
யெருஷலேமுக்குச் சமீபமாயிருப்பதினாலும்,
தேவனுடையஇராச்சியஞ்சீக்கிரமாய்க்காண
ப்படுமென்று அவர்கள் நினைத்ததினாலும்இவை

களைக்கேட்டவர்களிடத்தில் அவர்,-மேற்குலத் ௰௨
தான் ஒருவன்,தனக்கு ஒரு இராசாதிகாரத்தைப்
பெற்றுமீளுவதற்காகத் தூரதேசத்திற்குப் போ
கிறகாலத்தில்,—தன்னுடைய பத்துப் பணிவி ௰௩
டைக்காரரையும்அழைத்து,அவர்களிடத்திற்பத்
து இராத்தல் திரவியத்தைக்கொடுத்து,நான்வரும்
வரைக்குந் தொழிற்பண்ணுங்களென்று சொல்
லிப்போனான்.-அவனுடையபிரசைகள் அவனை ௰௪
வெறுத்து, இப்படிப்பட்டவன் எங்களை ஆளவி
டோமென்னுஞ் செய்தியை அவனிடத்தில் அ
னுப்பினார்கள்.-அவன் இராசாதிகாரத்தைப்பெற் ௰௫
றுத் திரும்பிவந்து, தன்னிடத்தில் திரவியம்வாங்
கியிருந்த பணிவிடைக்காரரை அவனவன் வியா
பாரத்திற்பெற்ற இலாபம் எவ்வளவென்றறியும்
படி தன்னிடத்திலேவர அழைப்பித்தான்.-அப் ௰௬
பொழுது முந்தினவன்வந்து,ஆண்டவனே, உம்
முடைய இராத்தல், பத்துஇராத்தல்களை ஆதாய
மாக்கிற்றென்றான்.-அவன் இவனைநோக்கி, நல் ௰௭
லது, உத்தமபணிவிடைக்காரனே, நீ சொற்பத்
தில் உண்மையாயிருந்தாய், நீ பத்துப்பட்டணங்
கள்மேல் அதிகாரம் பெறுவாயாகவென்றான்.—
இரண்டாம் பணிவிடைக்காரன்வந்து, ஆண்ட ௰௮
வனே, உம்முடைய இராத்தல், ஐந்து இராத்தல்
களை ஆதாயமாக்கிற்றென்றான்.—இவனுடனே ௰௯
யும் அவன், நீ ஐந்துபட்டணங்களின்மேல் அ
திகாரம்பெறுவாயென்றான்.—பின்பு வேறொரு ௨௰
வன்வந்து, ஆண்டவனே, உம்முடைய இராத்
தலை ஒரு சேலையிலே நான்வைத்துக்கொண்டே
ன், பாரும், இங்கே இருக்கின்றது.—நீர் ௨௧
வையாததை எடுக்கிறவரும், விதையாததை அ
றுக்கிறவருமாகிய கடினமுள்ள மனுஷனாயிருக்
கிறீர்: ஆதலால் நான் உமக்குப்பயப்பட்டேனெ
ன்றுசொல்ல,-அவன் இவனைநோக்கி, தீமையுள் ௨௨
ள பணிவிடைக்காரனே, உன்வாக்கைக்கொண்
டே உனக்குத் தண்டனைத் தீர்ப்புச்செய்வேன்.
நான் வையாததை எடுக்கிறவனும், விதையாத
தை அறுக்கிறவனுமாகிய கடினமுள்ள மனுஷ
னென்றறிந்தாயே,—ஆகையால் நான் திரும்பி ௨௩
வருகிறபொழுது என் திரவியத்தை வட்டியோ
டே பெற்றுக்கொள்ளும்படி, நீ அதைக் காசுக்
கடையில் ஒப்பியாமற்போன தென்னவென்று
சொல்லி,—சமீபமாய் நின்றவர்களைநோக்கி, நீங் ௨௪
கள் அந்தஇராத்தலைஇவனிடத்திலிருந்தெடுத்து,
பத்து இராத்தலுள்ளவனுக்குக் கொடுங்களென்
றான்.-அவர்கள் அவனைநோக்கி, ஆண்டவனே, ௨௫
அவனுக்குப் பத்துஇராத்தல்களுண்டே என்றார்
கள்.-பின்னும் அவன், உள்ளவனெவனோ, அவ ௨௬
னுக்குக் கொடுக்கப்படும்; உள்ளவனல்லாதவ
னிடத்திலுள்ளதும் எடுத்துக்கொள்ளப்படுமென்
று நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—என் ௨௭
னைத்தங்கள்மேல் அரசாளவிடாத என்சத்துருக்க
ளை இங்கே கொண்டுவந்து, எனக்குமுன் சங்க

(௪௩) அப்.௪.௨௧.—(௰௯. அதி. ௭.) மத்.௯.௰௧. (௮) யாத்.௨௨.௧. ௧.சாமு.௰௨.௩. ௨.சாமு.௰௨.௬. (௯) ரோ.௪. ௰௧,௰௨,௰௬. கலா.௩.௭. (௰) மத்.௰௮.௰௧. (௰௧) அப்.௧.௬. (௰௨) மத்.௨௫.௰௪. (௰௪) யோவா.௧.௰௧. (௰௭) மத்.௨௫. ௨௧. (௨௪) மத்.௨௫.௨௪. (௨௨) ௨.சாமு.௧.௰௬. யோபு.௰௫.௬. மத்.௨௫.௨௬. (௨௬) மத்.௰௩.௰௨.

ரித்துப்போடுங்களென்முனென்று இந்தஉவமை
யைச்சொன்னார்.
௨௮ இவ்வாக்குகளை அவர்சொல்லியபின்பு,யெரு
ஷலேமுக்குப்போகும்படி முன்னேசென்றார்.-
௨௯ அவர் ஒலீவ மலை யென்னும் மலைச்சார்பிலுள்
ள பேத்பாகேயுக்கும், பேதனியவுக்குஞ் சமீப
மானபொழுது, தம்முடைய சீஷரிலிருவரை
௩௰ நோக்கி,—நீங்கள் உங்களுக்கெதிர்ப்புறத்திலுள்
ள அந்தக்கிராமத்திற்குப்போங்கள்; அதிற்பிர
வேசித்தமாத்திரத்தில் மனுஷரில் ஒருவனுகிலும்
ஒருகாலமும் ஏருத கழுதைக்குட்டியைக் கட்டி
யிருக்கக்காண்பீர்கள்; அதின் கட்டவிழ்த்துக்
௩௧ கொண்டுவாருங்கள்.-அதை என் அவிழ்க்கிறீர்
களென்று ஒருவன் உங்களிடத்திற் கேட்டால்,
கர்த்தாவுக்கு வேண்டுமென்று அவனுக்குச்
௩௨ சொல்லுங்களென்றார்.—அனுப்பப்பட்டவர்கள்
போய், தங்களுக்கு இவர்சொல்லியபிரகாரங்
௩௩ கண்டார்கள்.—கழுதைக்குட்டியை அவர்கள் அ
விழ்க்கிறபொழுது அதின் எசமானர் அவர்களை
நோக்கி, குட்டியை என் அவிழ்க்கிறீர்களென்
௩௪ றார்கள்.—அதற்கு அவர்கள், கர்த்தாவுக்கு இ
௩௫ துவேண்டுமென்றுசொல்லி,—பின்பு அதை யே
சுவினிடத்திற்கொண்டுவந்து,தங்கள் வஸ்தி
ரங்களைக் குட்டியின்மேல்விரித்து, யேசுவை
௩௬ அதின்மேல் ஏற்றினார்கள்.—அவர்போகையில்
அவர்கள் தங்கள்வஸ்திரங்களை வழியிலேவிரித்
௩௭ தார்கள்.—அவர் ஒலீவமலைச்சாரலைச்சேர்ந்து வ
ருகையில், சீஷர்கூட்டத்தாரெல்லாருந் தாங்
கள்கண்ட மகாகிரியைகளெல்லாவற்றையும் நி
னைந்து, மிகுந்தசத்தத்துடனே தேவனைத்து
௩௮ திக்கத்தொடங்கி,—கர்த்தருடைய நாமத்தி
னாலே வருகிற இராசா ஸ்தோத்திரிக்கப்படத்தக்
கவர்: பரமண்டலத்திலே சமாதானமும், உன்ன
தங்களில் மகிமையும் உண்டாயிருக்கக்கடவன
௩௯ வென்றார்கள்.—கூட்டத்திலுள்ள பரிசேயரிற்
சிலர் அவரைநோக்கி, போதகரே,நீர் உம்முடை
௪௰ யசீஷரைக்கடிந்துகொள்ளுமென்று சொல்ல,-அ
வர் அவர்களுக்குத்தரமாக, இவர்கள் பேசாமல்
இருந்தால், கற்களே விரைவிற் சத்தமிடுமென்று
நான் உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.
௪௧ அவர் நகரத்தைச்சமீபித்தபொழுது, அவர் அ
தைப்பார்த்து, அதைக்குறித்துக் கண்ணீர்விட்
௪௨ டு,—உனக்குக்கிடைத்த இந்தநாளில் உன் சமா
தானத்துக்கேற்றவைகளை நீ சிந்தித்துக்கொண்
டால் நலம்; இப்பொழுது அவைகள் உன் பார்
௪௩ வைக்கு மறைவாயிருக்கின்றன.—நீ உன் இரட்
சிப்பின்காலத்தைச் சிந்திக்கவில்லை, ஆதலால்
உன்சத்துருக்கள் உன்னைச்சூழ அரணிட்டு, உன்
னைவளைந்துகொண்டு, எங்கும்உன்னை இறுக்கிப்
௪௪ பிடிப்பார்கள்.—உன்னையும் உன்னிலுள்ள உன்
பிள்ளைகளையுந் தரைமட்டமாக்குவார்கள்; உன்
னிடத்தில் ஒருகல் மற்றொருகல்லின்மேலிருக்க
விடார்கள்; இப்படிப்பட்டநாட்கள்உனக்குநே
ரிடுமென்றார்.—பின்புஅவர்தேவாலயத்திலே பிர ௪௫
வேசித்து,அதிலே விற்பவர்களையுங் கொள்பவர்
களையும் புறம்பே தள்ளத்தொடங்கி,—அவர்களை ௪௬
நோக்கி, "என்வீடு பிரார்த்தனையின்வீடு" என்று
எழுதப்பட்டிருக்கின்றது:நீங்களோ, அதைக்கள்
ளர்குகையாக்கினீர்களென்றார்.—பின்பு அவர்நா ௪௭
டோறுந் தேவாலயத்தில் உபதேசம்பண்ணினார்.
பிரதானஆசாரியரும்வேதபாரகருஞ்சனங்களின்
பிரதானிகளும் அவரைக்கொலைசெய்யவகைதே
டினார்கள்.-சனங்களெல்லாரும்மிகுந்த ஆவலோ ௪௮
டே அவருக்குச்செவிகொடுத்தபடியினால் அவர்
கள்அப்படிச்செய்யவகைகாணுமற்போனார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. பிரதான ஆசாரியரையும் வேதபாரகரையும்யுத்
தியிலேவெல்லல்: ௯. திராட்சத்தோட்டத்தை
உவமித்தல்: ௰௯. இராசனுக்கு வரிசெலுத்துவ
துகடமையென்றுகாட்டல்: ௨௭. மரித்தோர் எ
ழுந்திருப்பதைக்குறித்துச்சதுசேயருடனேசம்
பாஷித்தல்: ௪௧. தம்மைக்குறித்துயுத்திநியாயஞ்
சொல்லி வேதபாரகரை மவுனமாக்கல்.

அந்நாட்களில் ஒருநாள், அவர் தேவாலயத்தி ௧
லே சனங்களுக்கு உபதேசம்பண்ணி, சுவிசே
ஷத்தைப் பிரசங்கித்தபொழுது, பிரதான ஆசா
ரியரும், வேதபாரகரும்,முதியோரும் அவரிடத்
தில் வந்துநின்று,—அவரைநோக்கி, எந்த அதி ௨
காரத்தைக்கொண்டு நீர் இவைகளைச்செய்கிறீர்;
இப்படிப்பட்ட அதிகாரத்தை உமக்குக்கொடுத்த
வர் யாவரென்றுகேட்க,-அதற்குத்தரமாக அவர், ௩
நான் உங்களிடத்தில் ஒன்றை வினவுகிறேன்,
எனக்குத்தரஞ்சொல்லுங்கள்.—யோவான் கொ ௪
டுத்த ஞானஸ்நானம் தேவனாலே, மனுஷ
ராலோ ஆயிற்றென்றார்.—அவர்கள்தங்களுக்குள் ௫
ளே யோசித்து, தேவனால் உண்டாயிற்றென்
றோமானால், இவர், என் அவனைவிசுவாசிக்கவில்
லையென்பார்.—அது மனுஷரால் உண்டாயிற்றெ ௬
ன்றோமாகில், எல்லாச்சனங்களும் யோவானைத்
தீர்க்கதரிசியென்றெண்ணுகிறபடியினால்எங்கள்
மேற் கல்லெறிவார்களென்று எண்ணி,—அது ௭
எப்படிவந்ததோ, எங்களுக்குத் தெரியாதென்று
உத்தரஞ்சொன்னார்கள்.—அப்பொழுது யேசு ௮
அவர்களைநோக்கி, நானும் இவைகளைச்செய்யும்
அதிகாரம் இன்னதென்று உங்களுக்குச் சொல்
லேனென்றார்.—பின்பு அவர் சனங்களிடத்தில் ௯
உவமையாகப்பேசத்தொடங்கி, ஒருவன் திராட்
சத்தோட்டத்தைஉண்டாக்கி, அதைத்தோட்டக்
காரர்வசமாகவிட்டு, நெடுநாளாகத்தூரதேசத்திற்
குப்போயிருந்தான்.—அவர்கள் திராட்சத்தோட் ௰
டத்தின்கனிகளில் தனதுபங்கைக்கொடுத்தனுப்
பவேண்டுமென்றுஅந்தத்தோட்டக்காரரிடத்தில்

(௨௮) மாற்.௰.௩௨. (௨௯) மத்.௨௧.௧.(௩௫)௨.இரா.௯.௰௩. மத்.௨௧.௭. (௩௬) மத்.௨௧.௮.(௩௮)சங்.௱௰௮.௨௬. எபே. ௨.௰௪. (௪௰) அபகூ.௨.௰௧. (௪௧) யோவா.௰௧.௩௫. (௪௩) ஏசா.௨௯.௩,௪. எரே.௬.௩,௬.(௪௪)௧.இரா.௯.௭,௮. மீகா. ௩.௰௨. மத்.௨௪.௨. தானி.௯.௨௪. ௧.பேதுரு.௨.௰௨.(௪௫)மத்.௨௧.௰௨. (௪௬) ஏசா.௫௬.௭. எரே.௭.௰௧.(௪௭)மாற். ௰௧.௰௮. (௪௮) அப்.௰௬.௰௪.—(௨௰. அதி. ௧.) மத்.௨௧.௨௩. (௨) அப்.௪.௭. (௬) மத்.௰௪.௫. (௯) மத்.௨௧.௩௩.

தன் பணிவிடைக்காரனைப் பருவகாலத்தில் அ
னுப்ப, அந்தத்தோட்டக்காரர் இவனை அடித்து,
௰௧ வெறுமையாக அனுப்பிவிட்டார்கள்.—பின்பு
அவன் வேறொரு பணிவிடைக்காரனை அனுப்
பினான்: அவனையும் அவர்கள் அடித்து, அவமா
னப்படுத்தி, வெறுமையாக அனுப்பிவிட்டார்
௰௨ கள்.—பின்பு அவன் மூன்றாம் பணிவிடைக்கா
ரனை அனுப்பினான்: அவனையும் அவர்கள்காயப்
௰௩ படுத்தித் துரத்தினார்கள்.—அப்பொழுது திராட்
சத்தோட்டத்தின் எசமானன், நான் என்னசெய்
வேன், எனது அன்பானகுமாரனை அனுப்புவே
ன்: அவர்கள் அவனைக்கண்டு மதிக்கக்கூடுமென்
௰௪ றான்.-தோட்டக்காரர் அவனைக் கண்டபொழு
து,இவனே சுதந்தரவாளி: இவனைக்கொலைசெய்
வோம்வாருங்கள், அப்பொழுது சுதந்தரம் எங்க
ளுக்குரித்தாகுமென்று தங்களுக்குள்ளேயோசித்
௰௫ துக்கொண்டு,—அவனைத் திராட்சத் தோட்டத்
துக்குப் புறம்பே தள்ளிக் கொலைசெய்தார்கள்.
திராட்சத் தோட்டத்தின் எசமானன் அவர்களை
௰௬ என்னசெய்வான்.-அவன்வந்து, அந்தத் தோட்
டக்காரரைச்சங்கரித்து, திராட்சத்தோட்டத்தை
மறுபேர்கையில் ஒப்பிப்பானென்றார். அவர்கள்
அதைக்கேட்டமாத்திரத்தில் அப்படியாகாதிருப்
௰௭ பதாக என்றார்கள்.—அவர், அவர்கள்மேற் பார்
வைசெலுத்தி, "வீடுகட்டுகிறவர்கள் தள்ளிவிட்
டகல், கோடிக்குத்தலைக்கல்லாயிற்று," என்னும்
௰௮ வேதவசனத்தின் தாற்பரியமென்ன.-அந்தக்கல்
லின் மேல்விழுகிறவனெவனோ, அவன்நொறுக்
கப்படுவான்; அது எவன்மேல்விழுமோ, அவன்
நொறுங்குண்பானென்றார்.
௰௯ பிரதானஆசாரியரும் வேதபாரகருந்தங்களுக்
குவிரோதமாக அந்தஉவமையைப்பேசினாரென்
றுணர்ந்து, அத்தருணத்தில் அவரைப்பிடிக்கவி
௨௰ ரும்பியுஞ் சனங்களுக்குப் பயந்தார்கள்.-பின்பு
அவர்கள் அவரை உற்றுப்பார்த்து, தேசாதிபதி
யின் ஆளுகைக்கும் அதிகாரத்துக்கும் அவரை
ஒப்பிக்கும்படி, அவருடைய வாக்கில்குற்றங்
கண்டுபிடிக்கத்தக்கதாகத் தங்களை நேர்மையுள்ள
வர்களாய்க் காண்பிக்கிற வேவுகாரரை அனுப்பி
௨௧ னார்கள்.-இவர்கள் அவரைநோக்கி, போதகரே,
நீர் உண்மைபேசி உபதேசித்து வருகிறீர், முகம்
பாராமல் தேவன் அருளிய மார்க்கத்தை உண்
மையாய்ப்போதிக்கிறீர், இது எங்களுக்குத்தெரி
௨௨ யும்.-இராசாவுக்கு வரிகொடுப்பது நியாயமோ,
௨௩ அல்லவோவென்று கேட்டார்கள்.—அவர் அவர்
களுடைய சூதை அறிந்து, அவர்களைநோக்கி,
நீங்கள் என்னை என்சோதிக்கிறீர்கள்: தேனாரியக்
௨௪ காசை எனக்குக் காண்பியுங்கள்.-அதிலிருக்கிற
ரூபமும் மேலெழுத்தும் ஆருடையவைகளென்
று கேட்க, அவை இராசாவுடையவைகளென்று
௨௫ உத்தரஞ்சொன்னார்கள்.-அவர், ஆதலால் நீங்கள்
இராசாவுடையதை இராசாவுக்கும், தேவனு
டையதைத் தேவனுக்குஞ் செலுத்துங்க
ளென்றார்.—அவர்கள் அவரைச் சனங்களுக்கு ௨௬
முன்பாக ஒருவாக்கிலும் அகப்படுத்தக்கூடா
மல், அவருடைய உத்தரத்தைக்குறித்து ஆச்சரி
யப்பட்டுப்பேசாமல் இருந்தார்கள்.
மரித்தோரினின்றுஉயிர்த்தெழுதலில்லையென் ௨௭
று மறுக்கிற சதுசேயரிற் சிலர் அவரிடத்தில்வந்
து, அவரைநோக்கி,-போதகரே, புருஷன் ஒரு ௨௮
வன் பிள்ளைகளில்லாமல் இறந்துபோனால், அ
வனுடைய சகோதரன் அவனுக்குச் சந்தானவி
ருத்தியுண்டாக்கும்படி அவனுடையமனைவியை
விவாகம்பண்ணவேண்டுமென்று மோசே எழு
தினாரே.—இப்படிக்குச் சகோதரர் எழுபேர் இ ௨௯
ருந்தார்கள்: அவர்களில் மூத்தவன்விவாகம்பண்
ணிப்பிள்ளையில்லாமல் இறந்துபோக,—பின்பு ௩௰
இரண்டாஞ்சகோதரன் அவளைவிவாகம்பண்ணி
அவனும் பிள்ளையில்லாமல் இறந்துபோனான்.—
மூன்றாஞ் சகோதரனும் அவளைவிவாகம்பண்ணி ௩௧
னான்; இவ்விதமாய் எழுபேரும் அவளைவிவாகம்
பண்ணிப்பிள்ளைபெறாமல்இறந்துபோனார்கள்.-
எல்லாருக்கும் பின் அந்த ஸ்திரியும் இறந்துபோ ௩௨
னாள்.-இப்படி எழுபேரும்அவளைவிவாகம்பண் ௩௩
ணினவர்களாயிருக்க,மரித்தோரினின்றுஎழுந்தி
ருக்குங்காலத்தில் அவள் எவனுக்கு மனைவியா
யிருப்பாளென்று கேட்க,—யேசு அவர்களுக் ௩௪
குத்தரமாக, இந்தலோகத்தின்பிள்ளைகள் பெண்
கொண்டுங் கொடுத்தும்வருகிறார்கள்.—பரலோ ௩௫
கத்தையும், மரித்தோரினின்று எழுதலையும் பெற்
றுக்கொள்ளப் பாத்திரராக எண்ணப்பட்டவர்க
ளோ, பெண்கொள்வதுங் கொடுப்பதுமில்லை.—
இவர்கள் இனி மரியார்கள்: இவர்கள் மரித்தோ ௩௬
ரினின்று உயிர்த்தெழுந்திருப்பவர்களாகி, தேவ
தூதரைப்போன்றவர்களும், தேவனுடைய
பிள்ளைகளுமாயிருக்கிறார்கள்.-கர்த்தர், "ஆபி ௩௭
ரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும்,
யாக்கோபின் தேவனுமாயிருக்கிறார்," என்று
மோசே முட்செடியின் விருத்தாந்தத்திற்சொன்
னதினால், மரித்தோர் எழுந்திருப்பார்களென்ப
தற்குப்பிரமாணங்கொடுத்தான்.-அவர் மரித்தோ ௩௮
ரின் தேவனல்ல, சீவனுள்ளோரின் தேவனாயி
ருக்கிறார்: எல்லாரும் அவருக்குச்சீவித்திருக்கி
றார்களென்றார்.
வேதபாரகரிற் சிலர் அதைக்கேட்டு, போதக ௩௯
ரே, நன்றாகச் சொன்னீரென்றார்கள்.—பின்பு ௪௰
அவர்கள் அவரிடத்தில் வேறொன்றையுங்கேட்
கத் துணியவில்லை.—மேலும் அவர் அவர்களை ௪௧
நோக்கி, கிறிஸ்து தாவீதின் புத்திரனென்று அ
வர்கள் சொல்வதெப்படி.-"கர்த்தர் என் ஆண் ௪௨
டவரைநோக்கி, நான் உம்முடைய சத்துருக்க
ளை உமது பாதபீடமாக்கும்வரைக்கும்—நீர் என் ௪௩
வலப்பாரிசத்தில்வீற்றிரும்," என்பதைச்சொன்
னாரென்று தாவீதுதானே சங்கீத புத்தகத்தில்

(௰௭) சங்.௱௰௮.௨௨. (௰௮) தானி.௨.௩௪,௩௫. (௨௧) மத்.௨௨.௰௬. (௨௪) மத்.௰௮.௨௮. (௨௭) மத்.௨௨.௨௩. அப்.௨௩.௬.௮. (௨௮) உபா.௨௫.௫. (௩௬) க.கொரி.௰௫.௪௨,௪௯,௫௨. க.யோவா.௩.௨. ரோ.௮.௨௩. (௩௭) யாத்.௩.௬. (௩௮) ரோ.௬.௰,௰௧. (௪௧) மத்.௨௨.௪௨. (௪௩) சங்.௱௰.௧. அப்.௨.௩௫.

சச சொல்லியிருக்கிறான்.—இப்படித்தாவீது அவரை
ஆண்டவரென்று சொல்லியிருக்க, அவர் எப்
படி அவனுடைய புத்திரனாயிருப்பாரென்றார்.
சரு பின்பு சனங்களெல்லாருங்கேட்க, அவர்தம்
சசு முடைய சீஷரைநோக்கி,—நீளமான வஸ்திரத்
தைத்தரித்து உலாவவிரும்பி, சந்தைகளில்வாழ்த்
துக்களையும், ஆலயங்களிற் பிரதான ஆசனங்க
ளையும்,விருந்துகளிற் பிரதான ஸ்தானங்களையும்
சஎ அபேட்சித்து,—விதவைகளின் பொருளைப்பட்
சித்து, கபடமாகத் தீர்க்க பிரார்த்தனைகளைப்
பண்ணிவருகிறவேதபாரகரைக்குறித்து நீங்கள்
எச்சரிக்கையாயிருங்கள்: அவர்கள் அகோரமா
னதண்டனை அனுபவிப்பார்களென்றார்.

## உக. அதிகாரம்.

க. விதவையின் காணிக்கையைக்குறித்துப் புகழ்
தல்: ரு. தேவாலயம்நாசமடைவதைக்குறித்துத்
தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ய. சீஷர்படும்வேத
னையை முன்னறிவித்தல்: உய. சனங்களுமு
பத்திரவத்தில்அமிழ்ந்திருப்பார்களென்பதைச்
சொல்லல்:உகூ.அத்திமரத்தின் நாசத்தையும் அ
தைக்குறித்துச்சிலஉபதேசங்களையுந் தெரிவித்
தல்: ஙச. விழித்திருக்கச்சொல்லல்.

பின்பு அவர் கண்ணேறிட்டுப் பார்த்தபொழு
து,செலவர்தருமப்பெட்டியிலே தங்கள் தங்கள்
உ காணிக்கைகள் இடுவதைக் கண்டார்.—ஒருதரித்
திரவிதவை அதில்இரண்டுகாசையிட அவர் கண்
ங டு,—இந்தத்தரித்திரவிதவை மற்றெல்லாரிலும் அ
திகம்போட்டாளென்று மெய்யாக உங்களுக்குச்
ச சொல்லுகிறேன்.—அவர்கள் எல்லாருந் தங்கள்
தங்கள் பரிபூரணத்திலெடுத்துத் தேவனுடை
ய காணிக்கைகளோடே இட்டார்கள்: இவளோ
தன் எளிமையிலே சீவனத்துக்குண்டான யா
வையும் இட்டாளென்றார்.
ரு பின்பு சிறந்த கற்களினாலுங் காணிக்கைகளி
னாலுந் தேவாலயம் அலங்கரிக்கப்பட்டிருக்கிற
சு தென்று சிலர் சொல்ல,—அவர், நீங்கள் பார்க்
கிற இவைகளில், ஒருகல் மற்றொருகல்லின்மே
லிராதபடி எல்லாம் இடிக்கப்படும்நாள்கள்வரு
எ மென்றார்.—அவர்கள் அவரைநோக்கி, போதக
ரே, இவை எப்பொழுது நடக்கும்; இவைகள்
சம்பவிக்குங் காலத்துக்கு அடையாளமென்ன
அ வென்று கேட்டார்கள்.—அதற்கு அவர், நீங்
கள் வஞ்சிக்கப்படாதபடி எச்சரிக்கையாயிருங்
கள்: அநேகர் என் நாமத்தைத்தரித்துவந்து, நா
னே கிறிஸ்துவென்றும், காலஞ் சமீபித்ததென்
றுஞ்சொல்லுவார்கள்: அவர்களுக்குப்பின்செல்
கூ லாதிருங்கள்.—அன்றியும், நீங்கள் யுத்தங்கள்
கலகங்கள் இவைகளின் செய்திகளைக் கேட்கும்
பொழுது பயப்படவேண்டாம்: இவைகள்முன்
னமே நடப்பது அவசியம், ஆனாலும் முடிவு
உடனே வராதென்றார்.—மேலும் அவர்களுட ய
னே இவ்வாக்குச்சொன்னார், அக்காலத்தில் தே
சத்திற்குத்தேசமும், இராச்சியத்திற்கு இராச்சி
யமும் விரோதமாயெழும்பும்.—பல இடங்களி யக
லே பூமியின் மகா அதிர்தலும், பஞ்சங்களும்,
கொள்ளைநோய்களும், வானத்திலே பயங்கரமா
ன தரிசனங்களும், அதிசய அடையாளங்களும்
உண்டாகும்.—இவைகள் எல்லாவற்றிற்குமுன் யஉ
னேஎன்நாமத்தினிமித்தம் அவர்கள்உங்கள்மேல்
தங்கள் கைகளைவைத்து, உங்களைத் துயரப்படுத்
தி,ஆலயங்களிலும்,சிறைச்சாலைகளிலும் ஒப்பித்
து,இராசாக்களுக்குந் தேசாதிபதிகளுக்கும்முன்
பாக உங்களைக்கொண்டுபோவார்கள்.—சாட்சி யங
யிடுவதற்கு இது உங்களுக்குநேரிடும்.—ஆகை யச
யால் நீங்கள்எவ்வித உத்தரஞ்சொல்லலாமென்று
சிந்தனைபண்ணாதபடி உங்கள் மனதை ஸ்திரப்ப
டுத்துங்கள்.—உங்கள் விரோதிகள் யாவரும் உத்த யரு
ரங்கொடாமலும்,எதிர்த்துநில்லாமலும்இருக்கும்
படி நான்உங்களுக்கு வாக்கையும் ஞானத்தையுந்
தருவேன்.—பெற்றார்,சகோதரர், இனத்தார், சிநே யசு
கிதரென்னும் இவர்களினாலே நீங்கள் ஒப்பிக்கப்
படுவீர்கள்; உங்களிற் சிலரைக் கொலைசெய்
விப்பார்கள்.—என்நாமத்தினிமித்தம் எல்லாராலு யஎ
ம்பகைக்கப்படுவீர்கள்.—ஆனாலும் உங்கள் தலை யஅ
மயிரில்ஒன்றாகிலுஞ் சிதைந்துபோகாது.—பொறு யகூ
மையினால்உங்கள்ஆத்துமங்களைக்காத்துக்கொள்
ளுங்கள்.—அன்றியும், யெரூஷலேஞ் சேனைக உய
ளால் வளைக்கப்பட்டிருக்கிறதைநீங்கள் காணும்
பொழுது, அதின் அழிவு சமீபமாயிற்றென்றறி
யுங்கள்.—அப்பொழுது யூதேயாவிலுள்ளவர்கள் உக
மலைகளுக்கு ஓடிப்போகக்கடவர்கள்;அதின்மத்
தியிலிருக்கிறவர்கள் அதைவிட்டு நீங்கக்கடவர்
கள்; நாட்டுப்புறங்களிலுள்ளவர்கள் அதிற் பிர
வேசியாமலிருப்பார்களாக.—இவைகளே தகுந் உஉ
ததண்டனை நேரிடும்நாட்கள்,எழுதப்பட்டவை
களெல்லாம் நிறைவேறும்.—ஐயோ, அந்த நாட் உங
களில், கருப்பவதிகளுக்கும் முலைகொடுக்கும்
ஸ்திரிகளுக்கும் ஆபத்துவரும்; தேசத்திலே மகா
துயரமும், இந்தச்சனங்களின்மேலே கோபமும்
நிற்கும்.—கட்கத்தின்வாயால் விழுவார்கள், சி உச
றைப்பட்டுச்சருவதேசங்களிலுங்கொண்டுபோ
கப்படுவார்கள்: அந்நியதேசத்தாருடைய காலங்
கள் நிறைவேறும்வரைக்கும் யெரூஷலேம் புறத்
தேசத்தாரால் மிதிக்கப்படும்.
சந்திரன்,சூரியன்,நட்சத்திரங்களிலும்அடை உரு
யாளங்கள் தோன்றும்; பூமியிலுள்ள சனங்களுக்
குள் துக்கமுஞ் சஞ்சலமுமுண்டாகும், சமுத்தி
ரமுந்திரைகளும்முழங்கும்.—வானத்தின்வலிமை உசு
யுள்ளவஸ்துக்கள் அசையும்: ஆதலால் பூலோகத்
தின்மேல் வருங்காரியங்களைச் சிந்தித்து,பயத்தி

(சரு) மத்.உங.க. (சசு) மத்.உங.ரு.—(உக. அதி. க.) மாற்.யஉ.சக.(ங)உ.கொரி.அ.யஉ. (ரு) மத்.உச.க.(அ)மத்-
உச.ச. எபே.ரு.எ. உ.தெச.உ.ங. மத்.ங.உ. (ய) மத்.உச.எ. (யஉ) மாற்.யங.கூ. வெளி.உ.ய. அப்.ச.ங. அப்.உரு-
உங. க.பேதுரு.உ.யங. (யங) பிலி.க.உகூ. உ.தெச.க.ரு. (யச) மத்.ய.யகூ. (யரு) அப்.சு.ய. (யசு) மீகா.எ.சு. அப்-
எ.ருகூ. (யஎ) மத்.ய.உஉ. (யஅ) மத்.ய.ஙய. (உய) மத்.உச.யரு. (உஉ) தானி.கூ.உசு,உஎ. சக.யக.க.(உங) மத்.உச-
யகூ. (உச) தானி.கூ.உஎ. .ரோ.யக.உரு. (உரு) மத்.உச.உகூ. உ.பேதுரு.ங.ய,யஉ. (உசு) மத்.உச.உகூ.

௨௭ ஞலே மனுஷர் சோர்ந்துபோவார்கள்.—அப்
பொழுது மனுபுத்திரனை மகாவல்லமையோடும்
மகிமையோடும் மேகத்தில் வரக்காண்பார்கள்.-
௨௮ அவைகள் நிறைவேறத் தொடங்கும்பொழுது
உங்கள் மீட்புச் சமீபமாயிருப்பதினல் ஏறிட்
டுப்பார்த்து, உங்கள் தலைகளை நிமிரச்செய்யுங்
௨௯ களென்ருர்.—பின்னும் அவர் அவர்களைநோக்
கி, அத்திமரத்தையும் மற்றைச் சகலமரங்களையும்
௩௰ பாருங்கள்.-அவைகள் தளிர்க்கிறதை நீங்கள் கா
ணும்பொழுது, வசந்தகாலஞ் சமீபமாயிற்றென்
று அறிவீர்களென்பதை உவமையாய்ச் சொன்
௩௰௧ ஞர்.—அப்படியே இவைகள்நிறைவேற நீங்கள்
காணும்பொழுது தேவனுடைய இராச்சியஞ்
௩௰௨ சமீபமாயிற்றென்று அறியக்கடவீர்கள்.—இவை
யெல்லாம் நிறைவேறும்வரைக்கும்இந்தச்சந்ததி
ஒழிந்துபோகாதென்று மெய்யாகவே உங்களுக்
௩௰௩ குச்சொல்லுகிறேன்.-வானமும் பூமியும் ஒழிந்து
போம்: என் வாக்குகளோ ஒழியாமலிருக்கும்.
௩௰௪ உங்கள் இருதயங்கள் பெருண்டியினலும்,
வெறியினலும்,லெளகீக கவலைகளினலும் பார
மடையாதபடிக்கும்,நீங்கள் நினையாதவேளையில்
அந்தநாள் உங்களுக்கு நேரிடாதபடிக்கும், உங்
௩௰௫ களைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள்.—பூமி
யிலுள்ள சமஸ்தசனங்கள்மேலும் அந்தநாள் ஒரு
௩௰௬ வலையைப்போலவரும்.—ஆகையால் இனிச் சம்
பவிக்குங் காரியங்கள் யாவுக்கும் நீங்கள்தப்பி,
மனுபுத்திரன் முன்பாக நிற்கப்பாத்திரராய் எண்
ணப்படும்பொருட்டு, விழித்து, இடைவிடாத
படி வேண்டுதல்பண்ணுங்களென்ருர்.
௩௰௭ அவர் பகலிலே தேவாலயத்தில் உபதேசித்து,
இரவிலே புறப்பட்டுப்போய் ஒலீவஎன்னும் ம
௩௰௮ லையிலே தங்கிவந்தார்.—அதிகாலையிலே சனங்
களெல்லாரும் அவருடைய உபதேசத்தைக்கேட்
கும்படிக்குத் தேவாலயத்தில் அவரிடத்திற்குவந்
தார்கள்.

## ௨௨. அதிகாரம்.

௧. யூதர் கிறிஸ்துவுக்கு விரோதமாகத் துராலோசனைசெய்தல்: ௭. பஷ்காவை ஆயத்தப்படுத்தல்: ௰௪. கர்த்தர் இராப்போசனத்தை ஏற்படுத்தல்: ௨௧. தான் ஒப்பிக்கப்படுவதைக் குறித்துப்பேசல்: ௨௪. தாழ்ந்தசிந்தை அவசியமென்று போதித்தல்: ௩௰௧. பேதுரு தன்னை மறுப்பதைக்குறித்துச் சம்பாஷித்தல்: ௩௰௫. சீஷருடனே சம்பாஷித்தல்: ௩௰௯. கிறிஸ்துத் தோட்டத்தில் வியாகுலமடைதல்: ௪௭. யூதாவின் துரோகத்தைக் குறித்தல்: ௫௪. பேதுரு கிறிஸ்துவை மறுத்தல்: ௬௩. கிறிஸ்துவை நிந்தித்து அடித்தல்: ௬௬. கிறிஸ்து நியாயவிசாரணையில் தம்மைக் குறித்துச் சாட்சியிடல்.

பஷ்காவென்னப்பட்ட புளியாத அப்பத்தின்
௨ உற்சவஞ் சமீபமானபொழுது,—பிரதான ஆசாரி
யரும் வேதபாரகருஞ் சனங்களுக்குப்பயப்பட்
டபடியினல் அவரைக் கொலைசெய்யும்படி வ
கைதேடினர்கள்.
அக்காலத்திற் பன்னிருவரில் ஒருவனகிய ஸ் ௩
காரியோத்தென்னும் மறுநாமமுள்ள யூதாவுக்
குள் சாத்தான் புகுந்தபடியால்,—அவன்போய், ௪
பிரதான ஆசாரியருஞ் சேனபதிகளுமானவர்க
ளிடத்தில் அவரைக்காட்டிக்கொடுக்கும் வகை
யைக்குறித்து அவர்களுடன் ஆலோசனைபண்
ணினன்.—அதினல் அவர்கள் சந்தோஷப்பட்டு, ௫
அவனுக்குப் பணங்கொடுக்கத் தீர்மானித்தார்
கள்.—அதற்கு அவன் சம்மதித்து, அவரை அவர் ௬
களுக்குக் காட்டிக்கொடுக்கிறதற்குச் சனக்கூட்
டமில்லாத சமயத்தைத்தேடினன்.
பஷ்காவைப்பலியிடவேண்டியபுளியாதஅப் ௭
பத்தின் நாள்வந்தது.—அப்பொழுது அவர் பே ௮
துருவையும் யோவானையும்நோக்கி, நாம் பஷ்கா
வைப் புசிக்கும்படி, நீங்கள்போய் நமக்காக ஆ
யத்தப்படுத்துங்களென்றுசொல்லி அவர்களை அ
னுப்புகையில்,—அவர்கள் அவரைநோக்கி, நாங் ௯
கள் எங்கே ஆயத்தம்பண்ணும்படி உமக்கு வி
ருப்பமுண்டென்று கேட்க,—அவர், நீங்கள் ௰
நகரத்திற் பிரவேசிக்கும்பொழுது, ஒருவன் தண்
ணீர்க்குடஞ் சுமந்துகொண்டு உங்களுக்கு எ
திர்ப்படுவான்; நீங்கள் அவனுக்குப் பின்சென்
று அவன்போகும்வீட்டிலே பிரவேசித்து,—அக் ௰௧
தவீட்டெசமானனைநோக்கி, போதகர், என்சீஷ
ரோடே நான் பஷ்காவைப் புசிக்கத்தகும் வி
ருந்தறை எங்கேயென்று உம்மிடத்திற்கேட்கச்
சொன்னரென்று சொல்லுங்கள்.—அவன் சோ ௰௨
டிக்கப்பட்டு ஆயத்தமாயிருக்கிற விஸ்தாரமான
ஒரு மேல்அறையை உங்களுக்குக் காண்பிப்பா
ன்: அங்கே ஆயத்தம்பண்ணுங்களென்ருர்.—
அவர்கள்போய் அவர்சொல்லிய பிரகாரமாகக் ௰௩
கண்டு பஷ்காவை ஆயத்தப்படுத்தினர்கள்.—சம ௰௪
யம் வந்தபொழுது அவரும் அவருடனே பன்
னிரண்டு அப்போஸ்தலரும் பந்தியிருந்தார்கள்.-
அப்பொழுது அவர் அவர்களைநோக்கி, நான்வே ௰௫
தனைப்படுகிறதற்கு முன் உங்களுடன் இந்தப்
பஷ்காவைப் போசனம்பண்ண மிகவும் வாஞ்
சையாயிருந்தேன்.—தேவனுடைய இராச்சி ௰௬
யத்தில் அதுநிறைவேறும்வரைக்கும் நான் இனி
இதிற்புசிப்பதில்லையென்று உங்களுக்குச்சொல்
லுகிறேனென்ருர்.-பின்பு அவர் பாத்திரத்தை எடு ௰௭
த்து, ஸ்தோத்திரஞ்செய்து, நீங்கள் இதை எடுத்து
உங்களுக்குள்ளே பங்கிட்டுக்கொள்ளுங்கள்.—
தேவனுடைய இராச்சியம்வருமளவும், நான் தி ௰௮
ராட்சரசம் பானம்பண்ணுவதில்லையென்று உங்
களுக்குச் சொல்லுகிறேனென்ருர்.
பின்பு, அவர் அப்பத்தை எடுத்து, ஸ்தோத்தி ௰௯

(௨௭) மத்.௨௪.௩௰. வெளி.௧.௭. (௨௮) ரோ.௮.௰௯,௨௩. (௨௯) மத்.௨௪.௩௰௨. (௩௰௩) மத்.௨௪.௩௰௫. (௩௰௪) ரோ.௰௩.௰௩. ௧.தெச.௫.௬. ௧.பேதுரு.௪.௭. (௩௰௫) ௧.தெச.௫.௨. ௨.பேதுரு.௩.௰. வெளி.௩.௩. (௩௰௬) மத்.௨௪.௪௨. சங்.௧.௫. எபே.௬.௰௩.—(௨௨. அதி. ௧.) மத்.௨௬.௨. (௨) சங்.௨.௨. யோவா.௰௧.௪௭. அப்.௪.௨௭. (௩) மத்.௨௬.௰௪. யோவா.௰௩.௨,௨௭. (௫) சக.௰௧.௰௨. (௭) மத்.௨௬.௰௭. (௰௪) மத்.௨௬.௨௰. (௰௬) அப்.௰.௪௧. வெளி.௰௯.௯. (௰௮) மத்.௨௬.௨௯. (௰௯) மத்.௨௬.௨௬. ௧.கொரி.௰௧.௨௪.

ரஞ்செய்து, அதைப்பிட்டு அவர்களுக்குக்கொ
டுத்து, இது உங்கள்நிமித்தம் ஒப்பிக்கப்படுகிற
என்சரீரம்: என்னை நினைக்கிறதற்காக இப்படிச்
௨௰ செய்யுங்களென்றார்.—இராப்போசனம் ஒழிந்த
பின்பு, அவர் அந்தப்படியே பாத்திரத்தையும் எ
டுத்து, உங்கள்நிமித்தஞ் சிந்தப்படுகிற என் இ
ரத்தத்தினாலுண்டாகும் புதிய உடன்படிக்கைக்
கேற்றபாத்திரம் இதுவேயென்றார்.
௨௧ பாருங்கள், என்னைக் காட்டிக்கொடுப்பவனு
டைய கை என்னுடனே பந்தியிலிருக்கின்றது.-
௨௨ நியமிக்கப்பட்டபிரகாரம் மனுபுத்திரன் போகி
றான், அதுமெய்: ஆனாலும் ஐயோ, எந்தமனுஷ
ன் அவனைக்காட்டிக்கொடுக்கிறானோ, அவனுக்
௨௩ கு ஆபத்துவருமென்றார்.—அவர்கள், நம்மில்யா
வன் அப்படிச்செய்வானென்று தங்களுக்குள்
ளே விசாரிக்கத்தொடங்கினார்கள்.
௨௪ அவர்கள் தங்களில் எவன்பெரியவனாக எண்
ணப்படுவானென்று வாக்குவாதஞ் செய்தபொ
௨௫ ழுது,—அவர் அவர்களைநோக்கி, அந்நியதேசத்
தாரின் இராசாக்கள் அவர்களைஆளுகிறார்கள்;அ
வர்கள்மேல் அதிகாரஞ்செலுத்துகிறவர்கள் உப
காரிகளென்னும் பெயர்பெற்றிருக்கிறார்கள்.—
௨௬ உங்களுக்குள் அப்படியிருக்கப்படாது: உங்க
ளில் பெரியவன்சிறியவனைப்போலவும், அதிகா
ரிபணிவிடைக்காரனைப்போலவும்இருக்கக்கட
௨௭ வர்.—பந்தியிருக்கிறவனோ, பணிவிடை செய்
கிறவனோ, இவ்விருவரில் எவன் பெரியவன்,
பந்தியிருக்கிறவனல்லவா;ஆனாலும் நான் உங்க
ளுக்குள்ளே பணிவிடை செய்பவனைப்போலி
௨௮ ருக்கிறேன்.—எனக்குண்டான சோதனைகளில்
௨௯ நீங்களே என்னுடன் தரித்திருந்தவர்கள்.—என்
பிதா எனக்கு ஏற்படுத்தினதுபோல, நானும் உங்
களுக்கு ஒரு இராச்சியத்தை ஏற்படுத்துகிறேன்.-
௩௰ ஆகினால் நீங்கள், என் இராச்சியத்தில் என்பந்
தியில் போசனபானம்பண்ணி, சிங்காசனங்க
ளின்மேல் வீற்றிருந்து, இஸ்ரவேலரின் பன்னி
ரண்டு கோத்திரத்தாருக்கும் நியாயத்தீர்ப்புக்கொ
டுப்பீர்களென்றார்.
௩௧ பின்னுங் கர்த்தர் சீமோனே, சீமோனே,
கோதுமையைப்புடைக்கிறதுபோல,உங்களைப்
புடைக்கும்படி சாத்தான் உத்தரவுகேட்டான்.-
௩௨ நானோ உன்விசுவாசம் ஒழிந்துபோகாதபடி உ
னக்காகப்பிரார்த்தனைபண்ணினேன்: நீசீர்பெற்
றபின்பு, உன்சகோதரரை ஸ்திரப்படுத்துவாயா
௩௩ கவென்றார்.—அதற்கு அவன், கர்த்தாவே,
உம்முடனே நான் காவலிலுஞ் சாவிலுமுட்ப
௩௪ டும்படி ஆயத்தமாயிருக்கிறேனென்றான்.—அவர்,
பேதுருவே, இன்று சேவற் கூவுமுன்னே நீஎன்
னை அறிந்திருக்கிறதை மூன்றுதரம் மறுதலிப்
பாயென்று உனக்குச்சொல்லுகிறேனென்றார்.—
பின்னும் அவர் அவர்களைநோக்கி, நான் உங் ௩௫
களைப் பணப்பையும், சாமான்பையும், தொடு
தோலுமில்லாமல் அனுப்பினபொழுது, உங்க
ளுக்கேதாகிலும் ஒரு குறைவுண்டாவென்றுகே
ட்க,அவர்கள் ஒருகுறைவுமில்லையென்றார்கள்.-
அப்பொழுது அவர் அவர்களுடனே, பணப்பை ௩௬
யுஞ் சாமான்பையும் இப்பொழுதுவைத்திருக்கி
றவன் அவைகளை எடுத்துக்கொள்ளக்கடவன்:
அல்லாமலுங்கட்கமில்லாதவன்தன்வஸ்திரத்தை
விற்று ஒன்றைக் கொள்ளக்கடவன்:—ஆதலால் ௩௭
என்னைப்பற்றுங் காரியங்கள் நிறைவேறவேண்
டும்: “அவர் அக்கிரமக்காரருடன் எண்ணப்பட்
டார்,” என்றெழுதப்பட்டது என்னிடத்தில் நி
றைவேறவேண்டுமென்று உங்களுக்குச் சொல்
லுகிறேனென்றார்.—அதற்கு அவர்கள், கர்த்தா ௩௮
வே, பாரும், இங்கே இரண்டு கட்கங்களுண்
டென்றுசொல்ல, அவர் அவர்களைநோக்கிப்போ
துமென்றார்.
பின்பு அவர் புறப்பட்டுத்தமது வழக்கத்தின் ௩௯
படி ஒலீவமலைக்குப்போனார்; அவருடையசீஷ
ரும் அவருக்குப்பின் சென்றார்கள்.—அவ்விடத் ௪௰
திற் சேர்ந்தபொழுது அவர் அவர்களைநோக்கி,
நீங்கள் சோதனையில் அகப்படாதபடி பிரார்த்த
னைபண்ணுங்களென்றார்.—பின்பு அவர் ஒருகல் ௪௧
லெறிதூரத்தில் அவர்களைவிட்டுப்போய், முழங்
காற்படியிட்டு,—பிதாவே, உமக்குச்சித்தமானால் ௪௨
இந்தப்பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படிசெய்
யும்: எப்படியும் என்சித்தத்தின்படியல்ல, உம்
முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவதென்று
சொல்லி வேண்டுதல்பண்ணினார்.—அப்பொழுது ௪௩
அவரைப்பெலப்படுத்தும்படிக்கு வானத்தினின்
று ஒருதூதன்தோன்றினான்.—பின்னும் அவர் அ ௪௪
திகவேதனைப்பட்டு, ஊக்கத்தோடே வேண்டு
தல்பண்ணினார்: அவருடைய வேர்வை இரத்தத்
துளிகளைப்போலாகித் தரையிலே விழுந்தது.—
பின்பு அவர் பிரார்த்தனையைவிட்டெழுந்து, தம் ௪௫
முடைய சீஷரிடத்தில்வந்து, அவர்கள் துக்கத்
தினாலே நித்திரைபண்ணக்கண்டு,—அவர்களை ௪௬
நோக்கி, ஏன் நித்திரைகொள்ளுகிறீர்கள்; எழுந்
திருங்கள், சோதனையிற்பிரவேசியாதபடிவேண்
டுதல் பண்ணுங்களென்றார்.
அவர் பேசுகையிற் சனங்கள் கூட்டமாய்ச் ௪௭
சேர்ந்தார்கள், பன்னிருவரில் ஒருவனாகிய யூதா
வென்பவன் அவர்களுக்குமுன்னேநடந்து, யே
சுவை முத்தஞ்செய்யும்படிக்கு அவரிடத்தில்
வந்தான்.—யேசு அவனைநோக்கி, யூதாவே, நீ ௪௮
முத்தத்தினால் மனுபுத்திரனைக் காட்டிக்கொ
டுக்கிறாயாவென்றார்.—அவரைச்சுற்றி இருந்த ௪௯

(௨௰) ௧.கொரி.௰.௰௬. (௨௧) சங்.௪௧.௯. மத்.௨௬.௨௧,௨௩. யோவா.௰௩.௨௧,௨௬. (௨௨) மத்.௨௬.௨௪. அப்.௨.௨௩.
(௨௩) மத்.௨௬.௨௨. (௨௪) மாற்.௯.௩௪. (௨௫)மத்.௨௰.௨௫. (௨௬) மத்.௨௰.௨௬. ௧.பேதுரு.௫.௩.(௨௭)மத்.௨௰.௨௮.
பிலி.௨.௭. (௨௮) எபி.௪.௰௫.(௨௯)மத்.௨௪.௪௭. ௨.கொரி.௧.௭. ௨.தீமோ.௨.௰௨. (௩௰) மத்.௮.௰௧. வெளி.௰௯.௯.
சங்.௪௯.௰௪. மத்.௰௯.௨௮. ௧.கொரி.௬.௨. வெளி.௩.௨௧. (௩௧) ௧.பேதுரு.௫.௮. ஆமோ.௯.௯. (௩௨) யோவா.௰௭.
௯,௰௧,௰௫. சங்.௫௧.௰௩. (௩௪) மத்.௨௬.௩௪. (௩௫) மத்.௰.௯. (௩௭) எசா.௫௩.௰௨. (௩௯) மத்.௨௬.௩௬. (௪௰) மத்.௬.
௰௩.(௪௧)மத்.௨௬.௩௯. (௪௨) யோவா.௫.௩௰.(௪௩)மத்.௪.௰௧. (௪௪) யோவா.௰௨.௨௭. எபி.௫.௭.(௪௭)மத்.௨௬.௪௭.

வர்கள், இனி யின்னது நடக்குமென்றுகண்டு,
அவரைநோக்கி, கர்த்தாவே, கட்கத்தினுலே
வெட்டலாமாவென்று கேட்கையில்,
ருய அவர்களில் ஒருவன், மகாஆசாரியனுடைய ப
ணிவிடைக்காரனை வலதுகாதறவெட்டினான்.—
ருக யேசு, இவ்வளவில் நிறுத்துங்களென்றுசொல்
லி, அவன் காதைத்தொட்டு அவனைச்சொஸ்தப்
ருஉ படுத்தினார்.—பின்பு யேசு, தமக்கு விரோத
மாய்வந்த பிரதான ஆசாரியரையும், தேவாலயத்
தைச்சேர்ந்தசேனாபதிகளையும், மூதியோரையும்
நோக்கி, ஒருதிருடனைப்பிடிக்கப் புறப்படுவது
போல, நீங்கள் கட்கங்களோடுந் தடிகளோடும்
ருங புறப்பட்டுவந்தீர்களே.—நான் தினமும் உங்களு
டனே தேவாலயத்திலிருக்கையில் நீங்கள் என்
மேல் கைகளை நீட்டவில்லை: இதுவே உங்கள்
காலமும், அந்தகாரத்தின் அதிகாரமுமாயிருக்
கின்றதென்றார்.
ருச அப்பொழுதுஅவர்கள்அவரைப்பிடித்து,மகா
ஆசாரியனுடைய மாளிகைக்குக் கொண்டுபோ
னார்கள். பேதுருவுந் தூரத்தில் அவருக்குப்பின்
ருரு சென்றான்.—அவர்கள் பிராகாரத்தின் மத்தியிலே
நெருப்புமூட்டி, அதைச்சுற்றி உட்கார்ந்தபொழு
து, பேதுருவும் அவர்களுக்குள் உட்கார்ந்தான்.—
ருசு அக்கினியினருகே இருந்த சமயத்தில், பணிவி
டைக்காரி ஒருத்தி அவனைக்கண்டு உற்றுப்பார்த்
ருஎ து, இவனும் அவனோடிருந்தானென்றாள்.—அ
தற்கவன், ஸ்திரியே, நான் அவனை அறியேனென்
ருஅ றுசொல்லி அவரை மறுதலித்தான்.—சற்றுநே
ரத்திற்குப்பின்பு வேறொருவன் அவனைக்கண்
டு, நீயும் அவர்களில் ஒருவனென்றுசொல்ல, பே
ருகூ துரு, மனுஷனே, நானல்லவென்றான்.—ஏறக்கு
றைய ஒருமணிநேரத்திற்குப்பின்பு வேறொரு
வன் அவனைப் பார்த்து, மெய்யாக இவனும் அ
வனோடிருந்தான்: இவன் கலிலேயன்தானென்
சுய று நிச்சயத்தோடே சொன்னான்.—அதற்குப் பே
துரு, மனுஷனே, நீ பேசுகிறதை அறியேனென்
றான். அவன் சொல்லிய மாத்திரத்திற் சேவல்கூ
சுக விற்று.—கர்த்தர் திரும்பிப் பேதுருவைநோக்
கிப்பார்த்தார். பேதுரு, சேவல்கூவுமுன்னே நீ
என்னைமூன்றுதரம் மறுதலிப்பாயென்றுதன்னோ
டே கர்த்தர் சொல்லியவாக்கை நினைத்து,—
சுஉ வெளியேபோய் மனங்கசந்தழுதான்.
சுங யேசுவைக் காவல்கொண்ட மனுஷர் பரி
காசம்பண்ணி, அவரை அடிக்கத்தொடங்கினார்
சுச கள்.—அவருக்கு முக்காடிட்டு, அவருடைய மு
கத்தில் அறைந்து, உன்னை அடித்தவன்யாவன்,
அதைத்தீர்க்கதரிசனமாகச்சொல்லென்றார்கள்.—
சுரு அதுவுமல்லாமல் அவருக்குவிரோதமாய் அநேக
நிந்தையான வாக்குகளைப்பேசினார்கள்.
சுசு விடியற்காலமானபொழுது சனங்களின்மூதி
யோரும், பிரதான ஆசாரியரும், வேதபாரகருங்
கூடிவந்து, தங்கள் ஆலோசனைச்சங்கத்தில் அ
வரைக்கொண்டுபோய், அவரைநோக்கி,—நீ கி சுஎ
றிஸ்துவா, எங்களுக்குச்சொல்லென்றார்கள். அ
தற்கு அவர், நான் உங்களுக்குச் சொன்னாலும்
நம்பமாட்டீர்கள்.—நான் உங்களிடத்தில் வி சுஅ
னாவினாலும், நீங்கள் எனக்குத்தரஞ்சொல்லவும்
என்னைவிடுதலையாக்கவுமாட்டீர்கள்.—இனி மனு சுகூ
புத்திரன் சருவவல்லமையுள்ள தேவனுடை
ய வலதுபாரிசத்தில் வீற்றிருப்பானென்றுசொல்
ல,—அவர்கள் எல்லாரும், நீ தேவனுடைய கு எய
மாரனாவென்றார்கள்; அவர் அவர்களுடனே, நா
னே அவரென்று நீங்கள் சொல்லுகிறீர்களென்
றார்.—அப்பொழுது அவர்கள், இனிச்சாட்சி எக
நமக்கு வேண்டுவதென்ன, இவனுடைய சுய
வாக்கைக் கேட்டோமேயென்றார்கள்.

## உங. அதிகாரம்.

க. பிலாத்து, கிறிஸ்துவை ஏரோதிடத்திலனுப்
பல்: யங. பிலாத்து விசாரணைசெய்து பிராண
தண்டனைக்குத் தீர்த்தல்: உசு. புலம்பினஸ்திரி
களிடத்தில் கிறிஸ்து வசனித்தல்: ஙங. கிறிஸ்
துச் சிலுவையிலறையப்படல்: ஙக. கள்ளர் சி
லுவையிலறையப்படல். இரண்டு திருடரின்
விசேஷத்தைத் தெரிவித்தல்: சச. கிறிஸ்து மர
ணமடைதல்: ருய. அவரை அடக்கம்பண்ணல்.

பின்பு சகலசனங்களும் எழுந்து, அவரைப்பி க
லாத்துவினிடத்திற்குக் கொண்டுபோய், அவர்
மேற்குற்றஞ்சுமத்தத்தொடங்கி,—இவன், தான் உ
இராசாவாகிய கிறிஸ்துவென்றும், இராசாவுக்கு
வரிகொடுக்க வேண்டுவதில்லையென்றுஞ்சொல்
லி, அவர்களைக் கலகப்படுத்தக் கண்டோமென்
றார்கள்.—பிலாத்து அவரைநோக்கி, நீ யூதருடை ங
ய இராசாவாவென்றுகேட்க, அவர் உத்தரமாக,
நீ சொல்லுகிறாய் என்றார்.—பின்பு பிலாத்து ச
பிரதான ஆசாரியரையும், சனங்களையும்நோக்கி,
நான் இந்த மனுஷனிடத்தில் ஒரு குற்றத்தையுங்
காணவில்லையென்றான்.—அதற்கு அவர்கள், இ ரு
வன் கலிலேயாமுதல், இவ்விடம்வரைக்கும், யூ
தாதேசத்தில் எங்கும் உபதேசம்பண்ணி, சனங்
களைக் கலகப்படுத்துகிறானென்று அதிக வை
ராக்கியத்துடனே சொன்னார்கள்.—கலிலேயா சு
என்பதைப்பிலாத்துக்கேள்விப்பட்டு, இந்தமனு
ஷன் கலிலேயனாவென்று விசாரித்து,—அவன் எ
ஏரோது இராசாவின் அதிகாரத்துக்குட்பட்டவ
னென்றறிந்து, அக்காலத்தில்யெரூஷலேமில்வந்
திருந்த ஏரோதிடத்திற்கு அவரை அனுப்பினான்.
ஏரோது யேசுவைக் குறித்து வெகுசெய் அ
திகளைக் கேள்விப்பட்டபடியினால், அவர்செய்
யும் ஆச்சரியமான கிரியைகளைப் பார்க்கவிரும்
பி, நெடுநாளாய் அவரைக்காண அபேட்சித்

(ருய) மத்.உசு.ருக. (ருஉ) மத்.உசு.ருரு. (ருங) யோவா.யஉ.உஎ. (ருச) மத்.உசு.ருஎ,ருஅ. (ருரு) மத்.உசு.சுக. (ருஅ) மத்.உசு.எக. (ருகூ) மத்.உசு.எங. (சுக) மத்.உசு.ஙச,எரு. (சுங) மத்.உசு.சுஎ,சுஅ. (சுசு) மத்.உஎ.க. அப். ச.உசு. (சுஎ) மத்.உசு.சுங. (சுகூ) மத்.உசு.சுச. எபி.க.ங. (எய) மத்.உசு.சுச. (எக) மத்.உசு.சுரு.—(உங.அதி.க.) மத்.உஎ.உ. (உ) அப்.யஎ.எ. மாற்.யஉ.யஎ. யோவா.யகூ.யஉ. (ங) மத்.உஎ.யக. க.தீமோ.சு.யங. (ச) க.பேதுரு. உ.உஉ. (அ) மத்.யச.க.

திருந்தான்: ஆதலால் அவன் அவரைக்கண்ட
௯ பொழுது மிகவுஞ் சந்தோஷப்பட்டு,—அநேக
காரியங்களைக்குறித்து அவரிடத்தில் வினவி
னுன்; அவர் அவனுக்கொன்றுஞ் சொல்லவில்
௰ லை.—பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் நின்
று, வைராக்கியத்துடனே அவர்மேற் குற்றஞ்
௰௧ சாற்றினார்கள்.—ஏரோது தனது சேனைகளுடன்
அவரை அவமானம்பண்ணி, பிரகாசமுள்ளவஸ்
திரத்தை அவருக்கு உடுத்தி, அவரைப்பரிகாசம்
பண்ணி, பிலாத்தினிடத்தில் திரும்பவும் அனுப்
பிவிட்டான்.
௰௨ முன்னே ஒருவருக்கொருவர் விரோதிகளா
யிருந்த பிலாத்தும் ஏரோதும் அந்தநாளில் சிநே
கிதரானார்கள்.
௰௩ பின்பு பிலாத்துப் பிரதான ஆசாரியரையும்,
நியாயாதிபதிகளையும், சனங்களையுங் கூடிவரச்
௰௪ செய்து, அவர்களைநோக்கி,—நீங்கள், இந்தமனு
ஷன் சனப்புரட்டனென்று சொல்லி, இவனை
என்னிடத்திற் கொண்டுவந்தீர்கள்: பாருங்கள்,
உங்களுக்குமுன்பாக இவனைச்சோதித்தும், நீங்
கள் இவன்மேற் சார்த்தினகுற்றங்களில் ஒன்றை
௰௫ யும் நான் இவனிடத்திலே காணவில்லை.—பின்
பு உங்களை ஏரோதினிடத்திற்கு அனுப்பினேன்:
அவரும் இவனிற் குற்றங் கண்டுபிடிக்கவில்லை;
கேளுங்கள், இவன் மரணதண்டனைக்கேற்ற எ
௰௬ தையுஞ் செய்யாதவனானபடியினால்,-நான் இவ
னைத்தண்டித்து, விடுதலையாக்குவேனென்றான்.-
௰௭ உற்சவகாலத்தில் அவர்களுக்காக ஒருவனை விடு
௰௮ தலையாக்குவது அவசியமாயிருந்தது,—ஆதலால்
சமஸ்தசனங்களும் ஏகமாய்ச்சத்தமிட்டு, இவனை
அகற்றிவிடும், பரப்பாசை எங்களுக்காக விடுத
௰௯ லையாக்கவேண்டுமென்றார்கள்.—அவன், நகரத்
திலே நடந்த கலகத்துக்காகவுங்கொலைக்காகவுங்
௨௰ காவலில் வைக்கப்பட்டிருந்தான்.–அப்பொழு
துபிலாத்து யேசுவை விடுதலையாக்க விரும்பி,
௨௧ திரும்பவும் அவர்களிடத்திற் பேசினான்.–ஆனா
லும் அவர்கள்,இவனைச் சிலுவையில் அறையும்,
சிலுவையில் அறையுமென்று கூக்குரலிட்டார்
௨௨ கள்.—அவன் மூன்றாந்தரமும் அவர்களைநோக்
கி, இவன் என்னதீங்குசெய்தான்; இவனிடத்தி
லே மரணதண்டனைக்கேற்ற ஒருகுற்றத்தையுங்
காணவில்லையே: ஆதலால் நான் இவனைத்தண்
௨௩ டித்து விடுதலையாக்குவேனென்றான்.–அப்பொ
ழுதும் அவர்கள் திடத்துடனே, அவரைச் சிலு
வையில் அறையும்படி மிகுந்தசத்தமிட்டுக்கேட்
டுக்கொண்டார்கள். அவர்களும்,பிரதானஆசாரி
யரும் இட்டசத்தம் மேற்கொண்டபடியினால்,–
௨௪ பிலாத்து அவர்கள் வேண்டினபிரகாரம் ஆகக்க
௨௫ டவதென்று கட்டளையிட்டு,—கலகத்தினிமித்த
முங் கொலையினிமித்தமுங் காவலில் வைக்கப்
பட்டிருந்தவனை அவர்கள்வேண்டினபடி அவர்
களுக்காக விடுதலையாக்கி, யேசுவை அவர்களு
டையஇஷ்டத்துக்குஒப்பித்தான்.—அவர்கள் அ ௨௬
வரைக் கொண்டுபோகிறபொழுது,நாட்டிலிருந்
துவருகிற குரேனிஊரானாகிய சீமோனைப்பிடித்
து, சிலுவையை யேசுவின் பின்சுமந்துகொண்
டுபோகும்படி அவன்மேலேவைத்தார்கள்.
அவரைப் பின்சென்ற திரளானசனங்களுக் ௨௭
குள் அநேகஸ்திரிகள் அவரைக்குறித்துத்துக்கித்
து அழுது புலம்பிக்கொண்டிருந்தார்கள்.—யே ௨௮
சு திரும்பி அவர்களைப்பார்த்து,யெரூஷலேமின்
குமாரத்திகளே,நீங்கள் என்னிமித்தம்அழவேண்
டாம், உங்கள் நிமித்தமும், உங்கள் பிள்ளைகளி
னிமித்தமும் அழுதுகொள்ளுங்கள்.—மலடிக ௨௯
ளும், பிள்ளைபெறாதஸ்திரிகளும், பால் கொடா
தவர்களும்வாழ்வுடையவர்களென்று சொல்லப்
படும் நாட்கள்வரும்.—அக்காலத்திலேமலைகளை ௩௰
நோக்கி,எங்கள்மேல் விழுங்களென்றும், குன்று
களைநோக்கி, எங்களை மூடிக்கொள்ளுங்களென்
றுஞ் சொல்லுவார்கள்.–பசுமையான மரத்துக்கு ௩௧
இப்படிச்செய்தால், பட்டமரத்துக்கு என்ன
செய்யப்படுமென்றார்.–குற்றவாளிகளாகிய வே ௩௨
றிரண்டுபேர் கொலைசெய்யப்படுவதற்கு அவரு
டனே கொண்டுபோகப்பட்டார்கள்.—பின்பு ௩௩
கபாலஸ்தானமென்னுமிடத்தில் அவர்கள்சேர்ந்
தபொழுது, அங்கே அவரையும், அவருடையவ
லதுபாரிசத்தில் ஒருகுற்றவாளியையும், அவரு
டையஇடதுபாரிசத்திலேமற்றக்குற்றவாளியை
யுஞ் சிலுவைகளில் அறைந்தார்கள்.
அப்பொழுது யேசு, பிதாவே, இவர்களுக் ௩௪
கு மன்னித்தருளும்: இவர்கள் தாங்கள்செய்கி
றதின்னதென்று அறியார்களென்றார். பின்பு
அவர்கள் சீட்டுப்போட்டு அவருடையவஸ்தி
ரங்களைப்பங்கிட்டார்கள்.—சனங்கள் பார்த்துக் ௩௫
கொண்டுநின்றார்கள். அவர்களுடனே தலைவ
ரும் அவரை இகழ்ந்து, இவன் மற்றவர்களை இ
ரட்சித்தான்; இவன் தேவனால் தெரிந்துகொள்
ளப்பட்ட கிறிஸ்துவானால் தன்னைத்தானே
இரட்சிக்கக்கடவனென்றார்கள்.—அதுவுமல்லா ௩௬
மல், போர்ச்சேவகரும் அவரிடத்திற்சேர்ந்து,
அவருக்குக் காடியை நீட்டி,-நீ யூதரின் இராசா ௩௭
வானால் உன்னை இரட்சித்துக்கொள்ளென்று
சொல்லி, அவரைப்பரிகாசம் பண்ணினார்கள்.-
அன்றியும், "இவன் யூதருடையஇராசா," என் ௩௮
னும் எழுத்து,அவருக்குமேலாய்க் கிரேக்கு,லத்தீ
ன், எபிரேயுபாஷைகளில் எழுதப்பட்டிருந்தது.
அறையுண்டிருந்த குற்றவாளிகளில் ஒருவன் ௩௯
அவரைநிந்தித்து, நீ கிறிஸ்து வானால் உன்னை
யும் எங்களையும் இரட்சித்துக்கொள்ளென்றான்.-
மற்றவன், நீ சற்றுந் தேவனுக்குப்பயப்படுகிற ௪௰

(௰௧) ஏசா,௫௩.௩. (௰௨) அப்.௪.௨௮. (௰௩) மத்.௨௭.௨௩. (௰௬) மத்.௨௭.௨௬.(௰௭)மத்.௨௭.௰௫. (௰௮) அப்.௩.௰௪. (௨௪)மத்.௨௭.௨௬. யாத்.௨௩.௨. (௨௬) மத்.௨௭.௩௨.(௨௯)மத்.௨௪.௰௯. ஏசா.௨.௰௯. ஓசி.௰.௮. வெளி.௬.௰௬.(௩௧) நீதி.௰௧.௩௧. எரே.௨௫.௨௯. எசேக்.௨௰.௪௭. ௧.பேதுரு.௪.௰௭. (௩௨) ஏசா.௫௩.௰௨. மத்.௨௭.௩௮. (௩௩) மத்.௨௭.௩௩.(௩௪)மத்.௫.௪௪. அப்.௭.௬௰. ௧.கொரி.௪.௰௨. அப்.௩.௰௭. மத்.௨௭.௩௫. (௩௫) சங்.௨௨.௰௭. ௪௧.௰௨.௰. மத்.௨௭.௩௯. (௩௮) மத்.௨௭.௩௭. (௩௯) மத்.௨௭.௪௪.

தில்லையா; நீ ஒத்ததண்டனைக்குட்பட்டாய்.—
௪௧ நாம் இதற்குப்பாத்திரர்; நமது கிரியைகளுக்குத்
தக்கபலனைப்பெற்றோம்: இவரோ, தகாததொன்
றையுஞ் செய்யவில்லையென்று அவனைக் கண்
௪௨ டித்தான்.—பின்பு அவன் யேசுவை நோக்கி,
கர்த்தாவே, நீர் உம்முடைய இராச்சியத்திற்
பிரவேசிக்கும்பொழுது அடியேனை நினைந்தரு
௪௩ ளுமென்றான்.—யேசு அவனைநோக்கி, இன்
றைக்கு நீ என்னுடனே பரதீசில் இருப்பாயென்
றுமெய்யாக உனக்குச்சொல்லுகிறேனென்றார்.-
௪௪ பின்பு ஏறக்குறைய ஆறாம்மணிநேரந்தொடங்
கி, ஒன்பதாம் மணிநேரம்வரைக்கும் அந்தத்தே
௪௫ சத்தில் எங்கும் அந்தகாரமுண்டாயிற்று.—சூரி
யன் இருண்டது, தேவாலயத்தின் திரைச்சீலை
இரண்டாக நடுவிலேகிழிந்தது.
௪௬ யேசு மிகுந்தசத்தமிட்டு, பிதாவே, உம்மு
டைய கைகளில் என் ஆவியை ஒப்பிக்கிறே
னென்றார்: இவைகளைச்சொல்லியபின்பு ஆவி
௪௭ யைவிட்டார்.—நூறுசேவகருக்கதிபதி நடந்த
வைகளைக்கண்டு, மெய்யாக இந்தமனுஷன் நீதி
மானென்றுசொல்லித் தேவனைத்துதித்தான்.—
௪௮ அன்றியும் அந்தக்காட்சியைப்பார்க்கக்கூடிவந்
திருந்த சனங்களெல்லாருஞ் சம்பவித்தவைகளை
ப்பார்த்தபொழுது,தங்கள் தங்கள் மார்பில் அடித்
௪௯ துக்கொண்டு திரும்பினார்கள்.—அவருக்கு அறி
முகமானவர்கள் சகலரும், கலிலேயாவினின்று
அவருக்குப் பின்வந்த ஸ்திரிகளுந் தூரத்திலே
நின்று, அந்தவிசேஷங்களைப் பார்த்தார்கள்.
௫௰ மற்றவர்களுடையஆலோசனைக்குங்கிரியைக்
கும் உடன்படாமல்,தேவனுடைய ஆளுகை
௫௧ யைக் காத்திருந்தவனும்,-யூதருடைய பட்டண
மாகிய அரிமத்தியாவிலுள்ளவனும், உத்தமனும்,
௫௨ நீதிமானும், மந்திரியுமாகிய யோசேப்பு,-பிலாத்
தினிடத்திற்போய், யேசுவின் சரீரத்தைக்கொ
௫௩ டுக்கும்படி வேண்டிக்கொண்டான்.—பின்பு அ
வன் அதை இறக்கி, மெல்லியபுடைவையிற்
சுற்றி, கல்லில் வெட்டப்பட்டதும், ஒருக்கா
லும் ஒருவரையும்வைக்கப்படாததுமாகியஒருபி
௫௪ ரேதவறையிலேவைத்தான்.—அந்நாள் ஆயத்த
௫௫ நாளாயிருந்தது, ஓய்வுநாள் சமீபமாயிற்று.—கலி
லேயாவிலிருந்து அவருடனேவந்த ஸ்திரிகளும்
பின்னேபோய், பிரேதவறையையும்,அவருடை
யசரீரம் அடக்கம் பண்ணப்பட்டவகையையும்
௫௬ பார்த்து,-திரும்பிவந்து, சுகந்த திரவியங்களையும்
பரிமள தைலங்களையும் ஆயத்தப்படுத்தி, பின்பு
கட்டளைப்படி ஓய்வுநாளில் ஓய்ந்திருந்தார்கள்.

## ௨௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து மரித்தோரைநீங்கி எழுந்தசெய்தியைத் தேவதூதர் வெளிப்படுத்தல்: ௩. ஸ்திரிகள் அந்தச்செய்தியைச் சீஷருக்குத்தெரிவித்தல்: ௰௩. எம்மாவு ஊருக்குப் போயிருந்த இரண்டு சீஷருக்குங் கிறிஸ்துத் தரிசனமாகி, சம்பாஷித்தல: ௩௩. அவர்கள் யெரூஷலேமுக்குத்திரும்பிச் சகலருக்கும் இச்செய்தியைத்தெரிவித்தல்: ௩௬. சீஷருக்குக் கிறிஸ்துத் தரிசனமாகி, போசனம் பண்ணி, உபதேசித்தல்: ௫௰. அவர்பரமண்டலத்திற் கெழுந்தருளல்.

வாரத்தின் முதலாநாள் அதிகாலையில், அவர் ௧
கள் தாங்கள் ஆயத்தப்படுத்திய சுகந்ததிரவியங்
களை எடுத்து, வேறுசில ஸ்திரிகளுடன் பிரேதவ
றையினிடத்திற் சென்றார்கள்.-பிரேதவறையிலி ௨
ருந்து கல்புரட்டப்பட்டதைக் கண்டு,—அவர் ௩
கள் பிரவேசித்து, கர்த்தராகிய யேசுவின்
சரீரத்தைக்காணாமல்,—அதைக்குறித்து மிகுந்த ௪
கலக்கமடைந்திருக்கையில், பிரகாசமான வஸ்
திரங்களைத்தரித்த இரண்டுபேர் அவர்கள் அருகே
நின்றார்கள்.—அவர்கள் பயந்து பூமிக்கு நேரே ௫
குனிந்து நிற்கையில், இவர்கள் அவர்களைநோக்
கி, நீங்கள் மரித்தோரிடத்திற் சீவனுள்ளோரைத்
தேடுகிறதென்ன.—அவர் இங்கேயில்லை, எழுந் ௬
துவிட்டார்.—மனுபுத்திரன் பாவிகளான மனு ௭
ஷர்கையில் ஒப்பிக்கப்படவும், சிலுவையில் அ
றையப்படவும், மூன்றாம்நாளில் எழுந்திருக்க
வும்வேண்டுமென்று அவர் கலிலேயாவில் இருக்
கையில் உங்களுடன் பேசினாரே, அதைநினைத்
துக்கொள்ளுங்களென்றுசொல்ல,-அவருடைய ௮
வாக்குகள் அவர்கள்நினைவில் வந்தன.—பின்பு ௯
அவர்கள் பிரேதவறையைவிட்டுத்திரும்பி, அந்
தச்சங்கதிகளை எல்லாம் பதினொருவருக்கும்,மற்
றெல்லாருக்கும் அறிவித்தார்கள்.—அந்தச் சங் ௰
கதிகளை அப்போஸ்தலருக்குத்தெரிவித்தவர்கள்,
மக்தலீனிமரியாளும், யோவன்னாளும், யாக்கோ
பின் மாதாவாகிய மரியாளும், இவர்களுடனே
இருந்த மற்ற ஸ்திரிகளுமே.—அவர்கள் இ ௰௧
வர்கள் வாக்குகளைக் கட்டுக்கதைகளென்றெண்
ணி, அவைகளை நம்பவில்லை.—அப்பொழுது ௰௨
பேதுரு எழுந்து, பிரேதவறையினிடத்திற்கு ஓ
டி, குனிந்து,வஸ்திரங்கள்மாத்திரம் வைத்திருப்
பதைக்கண்டு, நடந்தவைகளைக்குறித்துத் தன்
னில் ஆச்சரியப்பட்டுக்கொண்டுபோனான்.
அந்தத்தினத்தில் அவர்களில் இரண்டுபேர், ௰௩
யெரூஷலேமுக்குஆறுநாழிகைவழிதூரத்திலுள்
ள எம்மாவு கிராமத்திற்குப்போகையில்,—நடக் ௰௪
தகாரியங்கள் யாவையுங்குறித்து ஒருவரோடொ
ருவர் பேசிக்கொண்டார்கள்.—அவர்கள் சம்பா ௰௫
ஷணைபண்ணி வினாவுகிறபொழுது, யேசு தா
மே சமீபித்துவந்து, அவர்களுடனே நடந்தார்.-
ஆனாலும் அவரை அவர்கள் அறியாதபடி அவர் ௰௬
களுடைய கண்கள் மறைக்கப்பட்டன.—அவர் ௰௭
அவர்களைநோக்கி, நீங்கள் துக்கமாய் வழிநடக்

(௪௪) மத்.௨௭.௪௫. (௪௫) மத்.௨௭.௫௧. (௪௬) சங்.௩௧.௫. ௧.பேதுரு.௨.௨௩. மத்.௨௭.௫௰.(௪௭)மத்.௨௭.௫௪.(௪௯) சங்.௩௮.௰௧. மத்.௨௭.௫௫,௫௬. (௫௰) மாற்.௰௫.௪௩. (௫௧) மத்.௨௭.௫௭. (௫௨) மத்.௨௭.௫௮. (௫௪) மத்.௨௭.௬௨. (௫௫) மாற்.௰௫.௪௭.(௫௬)மாற்.௰௬.௧. யாத்.௨௰.௰.—(௨௪.அதி.௧.) மத்.௨௮.௧. (௨) மத்.௨௮.௨. (௩) மாற்.௰௬.௫. (௪) யோவா.௨௰.௰௨. அப்.௧.௰. (௭) மத்.௰௬.௨௧. மாற்.௮.௩௧. (௮) யோவா.௨.௨௨. (௯) மத்.௨௮.௮. (௰௧) மாற்.௰௬.௰௧. (௰௨) யோவா.௨௰.௩,௬. (௰௩) மாற்.௰௬.௰௨. (௰௫) மத்.௰௮.௨௰. (௰௬) யோவா.௨௰.௰௪.

து, ஒருவருக்கொருவர் சம்பாஷிக்கிறவைகள்
௰௮ என்னவென்றுகேட்க,—அவர்களில் ஒருவனு
கிய கிலெயொப்பா அவருக்குத்தரமாய், யெருஷ
லேமில், இந்நாட்களில் நடந்தவைகளை அறியா
மலிருக்கிற அந்நியன் நீர்மாத்திரமாஎன்றான்.—
௰௯ அவர், அவை யாவையென்றுவினவ, அவர்கள்,
நாசரேத்தூராகிய யேசுவைக் குறித்தவை
கள்தான்: அவர் தேவனுக்குஞ் சகல சனங்க
ளுக்கும் முன்பாகக் கிரியையிலும் வாக்கிலும்
௨௰ வல்லமையுள்ள தீர்க்கதரிசியாயிருந்தார்.—நம்மு
டைய பிரதான ஆசாரியரும், நியாயாதிபதிகளும்
அவருக்கு மரணதண்டனைத் தீர்ப்புக்கொடுத்து,
௨௧ சிலுவையில் அறைந்தார்கள்.—நாங்கள், இஸ
ரவேலரை மீட்பவர் அவரேயென்று நம்பினோம்:
இதுமாத்திரமல்ல, அவைகள் சம்பவித்து இன்று
௨௨ மூன்றுநாளாயின.—எங்கள் கூட்டத்தின் சில ஸ்
திரிகள் அதிகாலையிலே பிரேதவறையினிடத்திற்
போய், அவருடைய சரீரத்தைக் காணாமல்திரும்
௨௩ பி வந்து,-தேவதூதரைத் தரிசித்தோம்,அவர்கள்,
அவர் சீவித்திருக்கிறாரென்பதைச் சொன்னார்க
ளென்றுசொல்லி, எங்களைப்பிரமிக்கப்பண்ணி
௨௪ னார்கள்.—அப்பொழுது எங்களிற்சிலர் பிரேத
வறையினிடத்திற்குப்போய், ஸ்திரிகள் சொன்
னபடியே கண்டார்கள்: அவரையோ அவர்கள்
௨௫ காணவில்லை என்றார்கள்.—அப்பொழுது அவர்
அவர்களுடனே,தீர்க்கதரிசிகள்சொன்னயாவை
யும் விசுவாசிக்கிறதற்கு உணர்வில்லாமல் மந்
௨௬ தமான இருதயமுள்ளவர்களே,—இவ்விதமாக
வேதனை அனுபவிப்பதும், தமக்குரிய மகிமை
யைப் பெற்றுக்கொள்வதுங் கிறிஸ்துவுக்கவசி
௨௭ யம் அல்லவாவென்றார்.—பின்பு மோசேமுதலி
ய சகலதீர்க்கதரிசிகளுடைய வேதவாக்கியங்க
ளெல்லாவற்றிலுந்தம்மைக்குறித்து எழுதினவை
௨௮ களை அவர்களுக்கு விரித்துரைத்தார்.—தாங்கள்
போகிற கிராமத்தைச்சேர்ந்து, அவர் அப்புறம்
௨௯ போகிறவர்போலக்காண்பித்ததினால்,-அவர்கள்,
நீர் எங்களுடனேதங்கும்: சாயங்காலமாயிற்றே,
பொழுதும் போயிற்றென்றுசொல்லி அவரைவ
ருந்திக்கேட்டார்கள்:அவர் அவர்களிடத்தில்தங்
௩௰ கும்படி பிரவேசித்தார்.—பின்பு அவர்களுடனே
பந்தியிருக்கையில்,அவர் அப்பத்தை எடுத்து, ஆ
சீர்வாதஞ்செய்து, அதைப் பிட்டு அவர்களுக்
௩௧ குக்கொடுக்க,—அவர்களுடைய கண்கள் தெளிந்
து அவரை அறிந்தார்கள்; உடனே அவர்மறைந்
௩௨ தார்.—பின்பு அவர்கள் ஒருவரை ஒருவர்நோக்
கி, வழிநடந்து, அவர் நம்முடனேபேசி, வேத
வாக்கியங்களை நமக்கு விளங்கக்காட்டினபொ
ழுது, நம்முடைய இருதயங்கள் நமக்குள்ளே
அனல்கொள்ளவில்லையாவென்றார்கள்.—அந்நே ௩௩
ரமே அவர்கள் எழுந்து, யெருஷலேமுக்குத்தி
ரும்பிப்போய், பதினொருவரும் அவர்களோடே
யிருந்தவர்களுங் கூடியிருக்கிறதைக்கண்டும்;—
கர்த்தர் மெய்யாக எழுந்து சீமோனுக்குத் த ௩௪
ரிசனையானாரென்று அவர்கள்சொல்லுகிறதைக்
கேட்டும்,—இவர்களும் வழியிலே நடந்தவைக ௩௫
ளையும், அவர் அப்பத்தைப்பிட்கையில் தாங்கள்
அவரை அறிந்துகொண்டதையும் விவரித்துச்
சொன்னார்கள்.

அவர்கள்பேசுகையில், யேசு தாமே அவர் ௩௬
கள் மத்தியில்நின்று, உங்களுக்குச் சமாதான
முண்டாவதாக வென்று அவர்களுடனே
சொன்னார்.—அவர்கள் ஒரு ஆவியைக்கண்டோ ௩௭
மென்று கருதி, கலங்கிப்பயப்பட்டார்கள்.—அ ௩௮
வர் அவர்களைநோக்கி, நீங்கள் கலங்கியிருக்கிற
தென்ன, சந்தேகம் உங்கள் இருதயங்களில் எ
ழும்புகிறதேது.—என்கைகளையுங் கால்களையும் ௩௯
பாருங்கள், நான்தான்: என்னைத்தொட்டுப்பா
ருங்கள்: நீங்கள் காணுகிறபடி எனக்கு மாமிச
மும் எலும்பும் இருக்கிறதுபோல, ஒரு ஆவிக்கு
இல்லையென்றுசொல்லி,—கைகளையுங் கால்களை ௪௰
யும் அவர்களுக்குக் காண்பித்தார்.—சந்தோஷத் ௪௧
தினால் அவர்கள் பின்னும் விசுவாசியாமற் பிர
மித்திருக்கிறபொழுது, போசனத்துக்கு இங்கே
ஏதாகிலுமுண்டாவென்று அவர்களை அவர்கேட்
க,-அவர்கள்,பொரித்தமீன்துண்டத்திலும்,தேன் ௪௨
கூட்டிலுஞ் சில எடுத்து அவருக்குக்கொடுத்
தார்கள்.—அவர் எடுத்து, அவர்கள் முன்பாகப் ௪௩
புசித்தார்.—அவர் அவர்களைநோக்கி, மோசே ௪௪
யின்நியாயப்பிரமாணத்திலும்,தீர்க்கதரிசிகளின்
புத்தகங்களிலும், சங்கீதங்களிலும் என்னைக்கு
றித்து எழுதியிருக்கிறயாவும் நிறைவேறவேண்டு
மென்று நான் உங்களோடிருந்தகாலத்தில், உங்
களுக்குச்சொல்லியவாக்குகள் இவைகளே என்
றார்.—பின்பு வேதவாக்கியங்களை அவர்கள்அறிந் ௪௫
துகொள்ளும்படி அவர்அவர்களுடையமனதைத்
தெளிவித்து, அவர்களைநோக்கி,—இவ்விதமாய் ௪௬
எழுதியிருக்கின்றது, இதுமாத்திரமல்ல, கிறிஸ்து
மரணவேதனை அனுபவிக்கவும், மூன்றாம்நாளி
லே மரித்தோரினின்று எழுந்திருக்கவும்,—யெ ௪௭
ருஷலேந்தொடங்கி, சருவதேசத்தாரிடத்திலும்
அவருடைய நாமத்தினாலே மனந்திரும்புதலும்,
பாவமன்னிப்பும் பிரசங்கிக்கப்படவும் வேண்
டும்.—நீங்களே இவைகளுக்குச்சாட்சிகள். ௪௮
பாருங்கள், என்பிதா வாக்குத்தத்தம்பண்ணி ௪௯

(௰௮) யோவா.௰௯.௨௫. (௰௯) மத்.௨௧.௰௧. யோவா.௩.௨. அப்.௨.௨௨. அப்.௭.௨௨. (௨௰) அப்.௰௩.௨௭,௨௮. (௨௧) அப்.௧.௬. (௨௨) மத்.௨௮.௮. யோவா.௨௰.௰௮. (௨௬) அப்.௰௭.௩. ௧.பேதுரு.௧.௰௧. (௨௭) ஆதி.௩.௰௫. உபா.௰௮.௰௫. சங்.௰௬.௯,௰. சங்.௨௨. ஏசா.௯.௬. ஏசா.௫௩. எரே.௨௩.௫. எசேக்.௩௪.௨௩. தானி.௯.௨௪. மீகா.௭.௨௰. மல்.௩.௧. (௨௮) ஆதி.௩௨.௨௬. மாற்.௬.௪௮. (௨௯) ஆதி.௰௯.௩. அப்.௰௬.௰௫. (௩௰) மத்.௰௪.௰௯. (௩௧) யோவா.௮.௫௯. (௩௪) ௧.கொரி.௰௫.௫. (௩௬) மத்.௰௬.௰௪. ௧.கொரி.௰௫.௫. (௩௭) மாற்.௬.௪௯. (௩௯) யோவா.௨௰.௨௰,௨௭. (௪௧) ஆதி.௪௫.௨௬. யோவா.௨௧.௫. (௪௩) அப்.௰.௪௧. (௪௪) மத்.௰௬.௨௧. மாற்.௮.௩௧. (௪௫) அப்.௰௬.௰௪. (௪௬) சங்.௨௨. ஏசா.௫௰.௬. அப்.௰௭.௩. (௪௭) தானி.௯.௨௪. அப்.௰௩.௩௮,௪௬. ௧.யோவா.௨.௰௨. ஆதி.௰௨.௩. சங்.௨௨.௨௭. ஏசா.௪௯.௬,௨௨. ஓசி.௨.௨௩. மீகா.௪.௨. மல்.௧.௰௧. (௪௮) யோவா.௰௫.௨௭. அப்.௧.௮,௨௧. அப்.௨.௩௨. அப்.௩.௰௫. (௪௯) ஏசா.௪௪.௩. யோவே.௨.௨௮. யோவா.௰௪.௰௪,௨௬. அப்.௧.௪. அப்.௨.௧,.

னதை நான் உங்களுக்கு அனுப்புவேன்: ஆத
லால் நீங்கள் உன்னதத்திலிருந்துவல்லமையைப்
பெறும்வரைக்கும் யெருஷலேம் நகரத்திலே த
ரித்திருங்களென்றார்.
௫௰ பின்பு அவர் பேதனியவரைக்கும் அவர்களை
நடத்திக்கொண்டுபோய், தம்முடைய கைகளை
௫௧ உயர்த்தி, அவர்களை ஆசீர்வதித்தார்.—அவர்களை
ஆசீர்வதிக்கையில் அவர் அவர்களைவிட்டுப்பிரிந்
து, பரமண்டலத்திற்கு எற்றப்பட்டார்.—பின்பு ௫௨
அவர்கள் அவரைத்தொழுதுகொண்டு, மகா சந்
தோஷத்தோடே யெருஷலேமுக்குத்திரும்பிப்
போனார்கள்.—அவர்கள் இடைவிடாமல் தேவா ௫௩
லயத்திலே தேவனைப்புகழ்ந்து துதித்தார்கள்.
ஆமென்.

---

(௫௰) அப். ௧. ௰௨. (௫௧) ௨. இரா. ௨. ௰௧. மாற். ௰௬. ௰௯. அப். ௧. ௯. எபே. ௪. ௮. (௫௨) மத். ௨௮. ௯, ௰௭. (௫௩) அப். ௨. ௪௬. அப். ௫. ௪௨.

# யோவான் எழுதின சுவிசேஷம்.

## ௧. அதிகாரம்.

*௧. கிறிஸ்துவின் தேவத்துவத்தை விளக்கல்: ௬. தேவனால் யோவான் அனுப்பப்பட்டதைக் குறித்தல்: ௰௪. வாக்கு அவதரித்தல்: ௰௯. அதைக்குறித்து யோவான் சாட்சியிடல்: ௨௯. கிறிஸ்துவின் முதன்மையைக்காட்டல்: ௩௫. அந்திரேயா, பேதுரு முதலானவர்கள் அழைக்கப்படல்: ௪௩. நாதான்வேலைக்குறித்துச் செய்தி தெரிவித்தல்.*

ஆதியிலே வாக்கிருந்தது, அவ்வாக்குத் தேவ
னிடத்திலிருந்தது, அவ்வாக்கே தேவன்.—
௨ அது ஆதியிலே தேவனிடத்திலிருந்தது.—
௩ அதினாற் சகலமுஞ் சிருஷ்டிக்கப்பட்டன; சி
ருஷ்டிகளுக்குள் அதினாற் சிருஷ்டிக்கப்படாத
௪ சிருஷ்டி ஒன்றுமில்லை.—அதிலே சீவனுண்டாயி
ருந்தது; அந்தச் சீவன் மனுஷருக்கு ஒளியாயி
௫ ருந்தது.—அந்த ஒளி இருளிலே பிரகாசித்தது;
இருள் அதைப்பற்றிக்கொள்ளவில்லை.
௬ யோவானென்னும் ஒருமனுஷன் தேவனால்
௭ அனுப்பப்பட்டான்—சாட்சியாய்வந்த அவன்,
தன்னால் எல்லாரும் விசுவாசிக்கும்படி, அந்த
௮ ஒளியைக்குறித்துச் சாட்சியிட்டான்.—அவன்
அந்த ஒளியல்ல, அந்த ஒளியைக்குறித்துச்சாட்
௯ சியிட வந்தான்.—உலகத்தில் தோன்றுகிற
சகலமனுஷரையும் பிரகாசிப்பிக்கிறவரே மெய்
௰ ஒளி.—அவர் உலகத்திலே தோன்றினார், உலகம்
அவரால் உண்டாயிற்று, உலகமோ அவரை அ
௰௧ றியவில்லை.—அவர் தமது சொந்தத்தில்வந்தார்,
அவருக்குச் சொந்தமானவர்கள் அவரை அங்கி
௰௨ கரிக்கவில்லை.—தமது நாமத்தின்மேல் விசுவா
சம்வைத்து, தம்மை அங்கிகரித்தவர்களெவர்க
ளோ, அவர்கள் தேவனுடைய புத்திரராகும்
௰௩ படிஅவர் அதிகாரங்கொடுத்தார்.—அவர்கள் இரத்
தத்தினாலாகிலும், மாமிச இச்சையினாலாகிலும்,
மனுஷருடைய இச்சையினாலாகிலுமல்ல, தே
௰௪ வனாற் பிறந்தார்கள்.—அவ்வாக்கு மனுஷனாகி,
கிருபையினாலுஞ் சத்தியத்தினாலும் நிறைந்தவ
ராய் நமக்குள் வாசம்பண்ணினார், பிதாவுக்கு ஒ
ரேபேறானவருக்கு ஏற்ற மகிமையாகிய அவரு
டைய மகிமையைக் கண்டோம்.
அவரைக்குறித்து யோவான், எனக்குப்பின்வ ௰௫
ருபவர் எனக்கு முன்னிருந்தவர்: ஆதலால் அ
வர் என்னிலும் மேன்மையுள்ளவரென்று நான்
குறித்தவர், இவரேயென்று சாட்சியிட்டுப்பிரசித்
தப்படுத்தினான்.—நியாயப்பிரமாணம்மோசேயி ௰௬
னாற் கொடுக்கப்பட்டது, கிருபையுஞ் சத்திய
மும் யேசுக்கிறிஸ்துமூலமாக உண்டாயின.-
அவருடைய பரிபூரணத்தினால் நாங்களனைவ ௰௭
ரும் மென்மேலுங் கிருபைபெற்றோம்.—ஒருவ ௰௮
னும் ஒருகாலத்திலுந் தேவனைக் காணவில்லை;
பிதாவின் மார்பிலுள்ள ஒரேபேறான குமாரனே
அவரை நமக்குவெளிப்படுத்தினார்.
யூதர் யெருஷலேமிலிருந்து ஆசாரியரையும் ௰௯
லேவியரையும் யோவானிடத்தில் அனுப்பி, நீர்
ஆரென்று கேட்பித்தபொழுது,—யோவான் மறு ௨௰
தலியாமல் அறிக்கையிட்டான்; நான் கிறிஸ்து
அல்லவென்றே அறிக்கையிட்டான்.—அவர்கள், ௨௧
நீர் ஆர்; இலீசாவாவென்று அவனிடத்திற்கேட்
க, அவன், நான் அவனுமல்லவென்றான். அவர்
கள், நீர் தீர்க்கதரிசியாவென்று கேட்க, அ
வன் அதற்கும் உத்தரமாக, அல்லவென்றான்.—
பின்பு அவர்கள் அவனைநோக்கி, நீர்ஆர்; எங்களை ௨௨
அனுப்பினவர்களுக்கு நாங்கள் உத்தரஞ்சொல்
லும்படி, நீர் உம்மைக்குறித்து என்னசொல்லு
கிறீரென்றுகேட்க,—அவன், ஏசாயாதீர்க்கதரிசி ௨௩
சொல்லியபிரகாரம், "கர்த்தருடையவழியை
ச்செவ்வைபண்ணுங்கள்," என்றுவனத்திலே கூ
றுகிறவனுடைய சத்தமாயிருக்கிறேனென்றான்:
இதுவே அவனிட்டசாட்சி.-அனுப்பப்பட்டவ ௨௪
ர்கள் பரிசேயர். அவர்கள் பின்னும்அவனைநோக்
கி,—நீர் கிறிஸ்துவுமல்ல, இலீசாவுமல்ல, அந் ௨௫
தத்தீர்க்கதரிசியுமல்லவென்றால், நீர் ஞானஸ்நா
னம் எப்படிக்கொடுக்கலாமென்றுகேட்க,—யோ ௨௬
வான், நான் சலத்தினாலே ஞானஸ்நானங் கொ
டுக்கிறேன்: நீங்கள் அறியாதிருக்கிற ஒருவர் உங்
களுக்குள்ளிருக்கிறார்.—அவர் எனக்குப்பின்வந் ௨௭
தும் எனக்குமுன்னிருந்தவர், அவருடைய பாத
ரட்சையின் வாரை அவிழ்ப்பதற்கும் நான் பாத்
திரனல்லவென்றான்.—இந்தச்சங்கதிகள், யோர் ௨௮
தான் நதியின் அக்கரையில் யோவான் ஞான

---

(௧. அதி. ௧.) நீதி.௮.௨௨,௨௩. கொலோ.௧.௰௭. ௧.யோவா.௧.௧. வெளி.௧.௨. வெளி.௰௯.௰௩. நீதி.௮.௩௰. ௧.யோவா.௧.௨. பிலி.௨.௬. ௧.யோவா.௫.௭.(௨)ஆதி.௧.௧. (௩) சங்.௩௩.௬. எபே.௩.௯. கொலோ.௧.௰௬. எபி.௧.௨. வெளி.௪.௰௧. (௪) ௧.யோவா.௫.௰௧. (௫) அதி.௩.௰௯. (௬) மல்.௩.௧. மத்.௩.௧.(௭)அப்.௰௯.௪.(௯)ஏசா.௪௯.௬. ௧.யோவா.௨.௮. (௰) எபி.௧.௨. எபி.௰௧.௩. (௰௧) லூக்.௰௯.௪. அப்.௩.௨௬. (௰௨) ஏசா.௫௬.௫. ரோ.௮.௰௫. கலா.௩.௨௬. ௨.பேதுரு.௧.௪. ௧.யோவா.௩.௧. (௰௩) யாக்.௧.௰௮. ௧.பேதுரு.௧.௨௩. (௰௪) மத்.௧.௰௬,௨௰. லூக்.௧.௩௧,௩௫. ௧.தீமோ.௩.௰௬. ரோ.௧.௩. கலா.௪.௫. எபி.௨.௰௧,௰௫,௰௬,௰௭. மத்.௰௭.௨. ௨.பேதுரு.௧.௰௭. கொலோ.௧.௰௯. (௰௫) மத்.௩.௰௧. லூக்.௩.௰௬. அதி.௮.௫௮. கொலோ.௧.௰௭. (௰௬) யாத்.௨௰.௧,. உபா.௪.௪௪. ரோ.௩.௨௪.(௰௭)எபே.௧.௫,௭,௮. கொலோ.௧.௰௯.(௰௮)யாத்.௩௩.௨௰. உபா.௪.௰௨. மத்.௰௧.௨௭. லூக்.௰.௨௨. ௧.தீமோ.௧.௰௭. ௧.யோவா.௪.௯,௰௨,௨௰. (௨௰) லூக்.௰௩.௰௫. அப்.௰௩.௨௫. (௨௧) மல்.௪.௫. மத்.௰௭.௰. உபா.௰௮.௰௫,௰௮. (௨௩) மத்.௩.௩. லூக்.௩.௪. ஏசா.௪௰.௩. (௨௬) மத்.௩.௰௧. மல்.௩.௧. (௨௭) அப்.௰௯.௪. (௨௮) நியா.௭.௨௪.

ஸ்நானங்கொடுத்த பேதப்பரவூரில் நடந்தன.
௨௯ மறுநாளிலே யோவான் யேசுவைத்தன்னி
டத்தில்வரக்கண்டு, பாருங்கள், உலகத்தின் பா
௩௰ வத்தைச்சுமந்துதீர்க்கிற தேவஆட்டுக்குட்டி.—எ
னக்குப்பின்வருபவர் எனக்கு முன்னுமிருந்தப
டியால், என்னிலும் மேன்மையுள்ளவரென்று
௩௧ நான்குறித்துச்சொல்லியவர்இவரே.—நானும்இ
வரை அறியாதிருந்தேன்: இவர் இஸரவேலுக்கு
வெளிப்படும்பொருட்டு, நான்சலத்தினால் ஞா
௩௨ னஸ்நானங் கொடுக்கவந்தேனென்றான்.—பின்
னும் யோவான் அவருக்குச்சாட்சியாக, ஆவி
புறாவைப்போல வானத்தினின்றிறங்கி, அவர்
௩௩ மேல் தங்கினதைக்கண்டேன்.—சலத்தினால் ஞா
னஸ்நானங்கொடுக்கும்படி என்னை அனுப்பின
வர், நீ எவர்மேல் ஆவியிறங்கித் தங்கக்காண்பா
யோ,அவரேபரிசுத்தஆவியினால் ஞானஸ்நானங்
கொடுப்பவரென்று என்னுடன் சொல்லாதிருந்
௩௪ தால் நான் அவரை அறியேன்.—நான்கண்டு,இவ
ரே தேவனுடைய குமாரனென்று சாட்சி
யிட்டுவருகிறேனென்றான்.
௩௫ மறுநாளில் யோவான் தன்னுடைய சீஷரில்
௩௬ இருவரோடுநிற்கையில்,—யேசு நடந்துபோகி
றதைஅவன்கண்டு,பாருங்கள்,தேவஆட்டுக்குட்
டிஎன்றான்; இவ்வாக்கைக்கேட்டு அந்த இரண்
டுசீஷரும் யேசுவுக்குப் பின்சென்றார்கள்.—
௩௭ அப்பொழுது யேசு திரும்பி,அவர்கள்பின்னே
வருவதைக்கண்டு, எதைத்தேடுகிறீர்களென்று அ
௩௮ வர்களிடத்திலேவினாவ,—அவர்கள், இரபீ, எங்
கே வாசம்பண்ணுகிறீரென்று அவரைக் கேட்
டார்கள்; இரபீ என்பதற்குப்போதகரென்றருத்
௩௯ தமாம்.—அவர், வந்து பாருங்களென்றார். அந்தப்
படிஅவர்கள்போய், அவருடைய வாசஸ்தானத்
தைப்பார்த்து, அன்றைத்தினம்அவரிடத்திலிருந்
தார்கள்: அப்பொழுதுஏறக்குறையப்பத்துமணி
௪௰ நேரம்.—யோவான் சொன்னதைக்கேட்டுஅவ
ருக்குப்பின்சென்ற இரண்டுபேரில் ஒருவன், சீ
மோன்பேதுருவின்சகோதரனாகிய அந்திரேயா.-
௪௧ அவன்முதல் தன்சகோதரனாகியசீமோனைக்கண்
டு, கிறிஸ்து வென்றருத்தங்கொள்ளும் மஷீ
யக்கைக்கண்டோமென்று அவனுடனேசொன்
௪௨ னான்.—பின்பு அவனை யேசுவினிடத்தில் அ
ழைத்துக்கொண்டுபோக, யேசு அவனைப்பார்த்
து, நீ யோனாவின்புத்திரனாகியசீமோன்: இனிக்
கேபாவென்னும் பேர் பெறுவாயென்றார்: கே
பாவென்பதற்குக் கல்லென்பதுபொருள்.
௪௩ மறுநாளிலே யேசு கலிலேயாவுக்குப்போக
௪௪ விரும்பி,—அந்திரேயா, பேதுருவென்பவர்களு
டைய ஊராகிய பேத்சாயிதாபட்டணத்தானான
பிலிப்பைக்கண்டு, நீ என்னைப்பின்சென்றுவா
வென்றார்.-பிலிப்புநாதான்வேலைச்சந்தித்துஅவ ௪௫
னைநோக்கி, வேதநூலிலே மோசேயினாலும்,தங்
கள்தங்கள் புத்தகங்களிலே தீர்க்கதரிசிகளினா
லுங் குறிக்கபட்டவரைக்கண்டோம், அவரே
யோசேப்பின்புத்திரனும், நாசரேத்தூரானுமாகி
ய யேசு என்றான்.—அதற்கு நாதான்வேல், நா ௪௬
சரேத்தூரினின்றும் ஒரு நன்மை தோன்றுமா
வென்றுசொல்ல, பிலிப்பு,வந்துபாரென்றான்.—
யேசு நாதான்வேலைத்தம்மிடத்தில் வரக்கண்டு, ௪௭
அவனைக்குறித்து, கபடமில்லாதஉண்மையுள்ள
இஸரவேலன் ஒருவனைப்பாருங்களென்றார்.—
நாதான்வேல், நீர் என்னை எப்படிஅறிந்திருக்கி ௪௮
றீரென்றுகேட்க, யேசு, பிலிப்புஉன்னைஅழை
க்கிறதற்குமுன்னே நீ அத்திமரத்தின்கீழிருக்கை
யில்உன்னைக்கண்டேனென்றார்.-நாதான்வேல், ௪௯
இரபீ, நீரே தேவனுடைய குமாரன்; நீரே இ
ஸரவேலரின் இராசாஎன்றான்.—யேசு, அத்திம ௫௰
ரத்தின்கீழே உன்னைக் கண்டேனென்று நான்
உன்னுடனே சொன்னதினாலேவிசுவாசித்தாய்;
இதிலும் பெரிதானவைகளைக் காண்பாயென்
றார்.—பின்னும் அவர் அவனைநோக்கி, இனி நீங் ௫௧
கள் வானம்பிரிவதையும்,தேவதூதர்கள் மனுபுத்
திரனிடத்தில்இறங்குவதையும்ஏறுவதையுங் கா
ண்பீர்களென்று மெய்யாய் உங்களுக்குச்சொல்
லுகிறேனென்றார்.

## ௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துச்செய்த முதலாம் அற்புதம்: ௰௨. கப்பர்நாகூமுக்குப்போதல்: ௰௩. யெருஷலேமுக்குச்சென்று தேவாலயத்தைச் சுத்திசெய்தல்: ௰௮. அவர்தமதுமரணத்தையும் உயிர்த்தெழுதலையுந் தீர்க்கதரிசனமாய்ச்சொல்லல்: ௨௩. அவருடைய ஆச்சரியமான செய்கைகளைப்பார்த்து அநேகர் விசுவாசித்தல்.

மூன்றாம் நாளிலே கலிலேயாவிலுள்ள கானாவி ௧
ல் ஒருவிவாகம் நடந்தது;யேசுவின் மாதாவும்
அங்கேயிருந்தாள்.—யேசுவும், அவருடையசீ ௨
ஷரும் அந்த விவாகத்துக்கு அழைக்கப்பட்டார்
கள்.—திராட்சரசங் குறைவுபட்டதினால் யே ௩
சுவின் மாதா அவரைநோக்கி, இவர்களிடத்
தில் திராட்சரசமில்லையென்றாள்.—அதற்கு யே ௪
சு, ஸ்திரியே, உனக்கும்எனக்கும் என்ன; என்
னுடையகாலம் இன்னும்வரவில்லையென்றார்.—
அவருடைய மாதா பணிவிடைக்காரரைநோக் ௫
கி, அவர் உங்களுக்குச் சொல்லுகிறபடியே
செய்யுங்களென்றாள்.—யூதர் தங்களைச் சுத்திக ௬
ரிக்குமுறைமையின்படி ஒவ்வொன்று இரண்டு
மூன்று பாத்தண்ணீர் கொள்ளத்தக்க ஆறுகற்சா
டிகள் அங்கேவைக்கப்படிருந்தன.-யேசுபணி ௭
விடைக்காரரைநோக்கி, சாடிகளிலே தண்

(௨௯)யாத்.௰௨.௩. எசா.௫௩.௭. அப்.௮.௩௨. ௧.பேதுரு.௧.௰௯. வெளி.௫.௬,. எசா.௫௩.௰௧. ௧.கொரி.௰௫.௩. கலா. ௧.௪. எபி.௧.௩. ௧.பேதுரு.௨.௨௪. ௧.யோவா.௨.௨. வெளி.௧.௫. (௩௧) மல்.௩.௧. லூக்.௧.௰௭,௭௬,௭௭. (௩௨) மத். ௩.௰௬. (௩௩) மத்.௩.௰௧. அப்.௧.௫. (௪௰) மத்.௪.௰௮. (௪௨) மத்.௰௬.௰௮. (௪௫) ஆதி.௩.௰௫. உபா.௰௮.௰௮. லூக். ௨௪.௨௭. எசா.௪.௨. மீகா.௫.௨. சக.௯.௰௨. லூக்.௨௪.௨௭. மத்.௨.௨௩. (௪௬) ஆதி.௭.௪௧,௪௨,௫௨. (௪௭) சங்.௩௨. ௨. ரோ.௨.௨௮,௨௯. (௪௯) மத்.௰௪.௩௩. மத்.௨௧.௪. (௫௧) ஆதி.௨௮.௰௨. லூக்.௨.௯,௰௩. அப்.௧.௰.—(௨. அதி. ௧.) யோசு.௰௯.௨௮. (௪) ௨.சாமு.௰௬.௰. (௬) மாற்.௭.௩.

ணீர் நிரப்புங்களென்று சொல்ல, அவர்கள் அ
அ வைகளின் விளிம்புமட்டும்நிரப்பினார்கள்.—பின்
பு அவர், இனி நீங்கள்மொண்டு, பந்திவிசாரிப்
புக்காரனிடத்திற் கொண்டுபோங்களென்று அ
வர்களிடத்திற் சொல்ல, அவர்கள் அந்தப்பிரகா
கூ ரஞ் செய்தார்கள்.—அந்தரசம் உண்டானவகை,
தண்ணீர்மொண்ட பணிவிடைக்காரருக்கே தெ
ரிந்ததன்றி, பந்திவிசாரிப்புக்காரனுக்குத் தெரி
யாது: அவன் திராட்சரசமாய் மாறிய தண்ணீ
ரை ருசிபார்த்து, பின்பு மணவாளனை அழைத்
௰ து, அவனைநோக்கி,—எவர்களும் முன்பு உயர்ந்த
திராட்ச ரசத்தைக் கொடுப்பார்கள்; சனங்கள்
பூர்த்தியாய்க் குடித்தபின்பு தாழ்ந்ததைக் கொ
டுப்பார்கள்: நீரோ இதுவரைக்கும் உயர்ந்த
௰க ரசத்தை வைத்திருக்கிறீரென்றான்.—இவ்விதமாக
யேசு கலிலேயாவிலுள்ள கானாவூரில் அற்பு
தங்களைச்செய்ய ஆரம்பித்து, தமது மகிமையை
வெளிப்படுத்தினார்; அவருடைய சீஷர் அவரி
டத்தில் விசுவாசம் வைத்தார்கள்.
௰உ அதன்பின்பு அவரும், அவருடையமாதாவும்,
அவருடைய சகோதரரும், அவருடைய சீஷ
ருங் கப்பர்நாகூமுக்குப் போனார்கள்: அங்கே
சிலநாள்மாத்திரந் தங்கினார்கள்.
௰௩ யூதருடைய பஷ்கா சமீபமாயிருந்ததினால்,
௰௪ யேசு யெருஷலேமுக்குப் போனார்.—தேவா
லயத்தில் ஆடுமாடுகள், புறாக்கள் விற்கிறவர்க
ளும்,காசுமாற்றுகிறவர்களும்இருக்கிறதைக்கண்
௰௫ டு,-கயிற்றால் ஒருசவுக்கை உண்டுபண்ணி,அவர்
கள்யாவரையும், ஆடுமாடுகளையுந்தேவாலயத்துக்
குப்புறம்பே துரத்தி, காசுமாற்றுகிறவர்களுடை
ய காசுகளைக்கொட்டி, பீடங்களைக்கவிழ்த்து,—
௰௬ புறாக்களை விற்கிறவர்களைநோக்கி, இவ்விடத்தி
லிருந்து இவைகளை எடுத்துக்கொண்டு போங்
கள்; என்பிதாவின்வீட்டை வியாபாரவீடாக்கா
௰௭ திருங்களென்றார்.—"உமது ஆலயத்தினிமித்தம்
நான்கொண்ட வைராக்கியம் என்னைப்பட்சித்த
து," என்றெழுதியிருக்கிறது அவருடைய சீஷ
ரின் நினைவில்வந்தது.
௰அ பின்பு யூதர் அவரைநோக்கி, நீர் இப்படிப்
பட்டவைகளைச் செய்கிறதற்கு என்ன அடை
யாளம் எங்களுக்குக் காட்டுகிறீரென்று கேட்க,-
௰கூ அவர்களுக்குத்தரமாக யேசு, நீங்கள் இந்த ஆ
லயத்தை இடியுங்கள், மூன்றுநாளுக்குள்ளே இ
உ௰ தை எழுப்புவேனென்றார்.—அப்பொழுது யூதர்,
இந்தஆலயம் நாற்பத்தாறு வருஷமாகக் கட்டப்
பட்டதே, நீர் இதைமூன்றுநாளுக்குள்ளேஎழுப்
உ௰க புவீராவென்றார்கள்.-அவர்தமது சரீரமாகிய ஆல
உ௰உ யத்தைக்குறித்துப்பேசினார்.—ஆதலால் அவர் ம
ரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்த பின்பு அவர்
சொல்லிய இவ்வாக்கு அவருடைய சீஷரின் நி
னைவில்வர, அவர்கள் அவ்வேதவாக்கியத்தை
யும், யேசு சொல்லியவாக்கையும் உணர்ந்து
கொண்டார்கள்.
பின்பு அவர் பஷ்காவின் சமயத்திலே யெரு உ௰௩
ஷலேமிலிருக்கையில், அவர் செய்த அற்புதங்க
ளை அநேகர் கண்டு, அவருடைய நாமத்தில் வி
சுவாசித்தார்கள்.—ஆனாலும் யேசு எல்லாரையும் உ௰௪
அறிந்தபடியினாலே தாம்அவர்களைச்சார்ந்துகொ
ள்ளவில்லை.—மனுஷருள்ளத்திலிருப்பதுஅவருக் உ௰௫
குத்தெரிந்தபடியால், மனுஷரைக்குறித்து ஒருவ
ரும் அவருக்குச் சாட்சியிடவேண்டுவதில்லை.

## ௩. அதிகாரம்.

க. கிறிஸ்து நிக்கோதேமுக்கு உபதேசித்தல்: உஉ.
யோவான் ஞானஸ்நானஞ்செய்தல்: உ௫. கி
றிஸ்துவைக்குறித்து யோவான் சாட்சியிடல்.

யூதரில் அதிபதியாகிய நிக்கோதேமுவென்னும் க
பரிசேயன் ஒருவன் இருந்தான்.—அவன் இராத் உ
திரிகாலத்தில் யேசுவினிடத்தில்வந்து, அவரை
நோக்கி, இரபீ, நீர்தேவனால் வந்த போதக
ரென்பதை நாங்கள் அறிகிறோம்: ஒருவனுந் தன்
னுடனே தேவன் இல்லாதிருந்தால், நீர் செய்
கிற இவ்வற்புதங்களைச் செய்யமாட்டானென்
றுசொல்ல,-அவனுக்குத்தரமாக யேசு, ஒருவன் ௩
மறுபடியும் பிறவாவிட்டால், தேவனுடைய
இராச்சியத்தைக் காணமாட்டானென்று மெய்
யாகவே உனக்குச்சொல்லுகிறேனென்றார்.—அ ௪
தற்கு நிக்கோதேமு, முதிர்வயதுள்ள ஒரு மனு
ஷன் எப்படிப்பிறப்பான், அவன் இரண்டாந்
தரந் தன்மாதாவின் கருப்பத்திற் பிரவேசித்துப்
பிறக்கக்கூடுமாவென்றுகேட்க,—யேசு பிரதி ௫
யுத்தரமாக, ஒருவன் சலத்தினாலும், ஆவியினா
லும் பிறவாவிட்டால், தேவனுடைய இராச்
சியத்திற் பிரவேசிக்கமாட்டானென்று மெய்
யாகவே உனக்குச் சொல்லுகிறேன்.—மாமிசத்தி ௬
னாற்பிறப்பது மாமிசம்; ஆவியினாற் பிறப்பதுஆ
வி.—நீங்கள் மறுபடியும் பிறப்பது அவசியமென் ௭
று நான் உனக்குச்சொன்னதைக்குறித்து ஆச்சரி
யப்படவேண்டாம்.—காற்றுத் தனக்கு இஷ்ட அ
மான இடத்தில் வீசுகின்றது, அதின்சத்தத்தைக்
கேட்கிறாய், ஆகிலும் அதுவந்த இடத்தையும் அ
து செல்லும் இடத்தையும் அறியாய்: அவ்வண்
ணமே ஆவியினாற் பிறந்தவன் எவனும்இருப்பா
னென்றார்.—நிக்கோதேமு இவைகள் எவ்வித கூ
மாய் உண்டாகுமென்று கேட்க,—அவனுக்குத் ௰
தரமாக யேசு, நீ இஸ்ரவேலரின் போதகனாயி
ருந்தும்,இவைகளை அறியவில்லையா.—நாங்கள் ௰க
அறிந்திருக்கிறதைச் சொல்லுகிறோம், நாங்கள்
கண்டதைக்குறித்துச் சாட்சியிடுகிறோம்; நீங்க

(கூ) அதி.௪.௪௬. (௰க) அதி.க.௰௪. (௰உ) மத்.௰உ.௪௬. (௰௩) யாத்.௰உ.௰௪. உபா.௰௬.க,௰௬. (௰௪) மத்.உக.௰உ. லூக்.௰கூ.௪௫. (௰௬) லூக்.உ.௪கூ. (௰௭) சங்.௬கூ.கூ. (௰அ) மத்.௰உ.௩அ. (௰கூ) மத்.உ௬.௬க. மாற்.௰௪.௫௭. (உக) கொலோ.உ.கூ. எபி.அ.உ. க.கொரி.௩.௰௬. உ.கொரி.௬.௰௬. (உஉ) லூக்.உ௪.அ. (உ௫) க.சாமு.௰கூ.௭. க.நாளா. உஅ.கூ. மத்.கூ.௪. அப்.க.உ௪. வெளி.உ.உ௩.—(௩. அதி. உ.) அதி.௭.௫௰. அப்.உ.உஉ. அப்.௰.௩அ. (௩) அதி.க. ௰௩. கலா.௬.௰௫. தீத்.௩.௫. யாக்.க.௰அ. க.பேதுரு.க.உ௩. க.யோவா.௩.கூ. (௫) மாற்.௰௬.௰௬. அப்.உ.௩அ. (அ) பிர.௰க.௫. க.கொரி.உ.௰க. (கூ) அதி.௬.௫உ,௬௰. (௰க) மத்.௰க.உ௭. அதி.க.௰அ. அதி.௰௪.உ௪. வச.௩உ.

ளோ எங்கள்சாட்சியை ஏற்றுக்கொள்ளுகிறதில்
௰௨ லை.—பூலோககாரியங்களை நான் உங்களுக்குச்
சொல்லுகிறபொழுது நீங்கள் விசுவாசியாதே
போனால், பரலோககாரியங்களை உங்களுக்குச்
௰௩ சொன்னால் எப்படிவிசுவாசிப்பீர்கள்.—பரமண்
டலத்திலிருந்திறங்கினவனும், பரமண்டலத்திலி
ருப்பவனுமாகிய மனுபுத்திரனேயன்றி, ஒருவ
னும் பரமண்டலத்துக்கு ஏறவில்லையே.
௰௪ மோசேவனத்திற் சருப்பத்தை உயர்த்தினது
போல, மனுபுத்திரனும் உயர்த்தப்படவேண்
௰௫ டும்.—அதினால் அவனை விசுவாசிக்கிறவனெவ
னோ, அவன்கெட்டுப்போகாமல்நித்தியசீவனைப்
பெறுவான்.
௰௬ தேவன்,தமது ஒரேபேறானகுமாரனைவிசுவா
சிக்கிறவனெவனோ, அவன்கெட்டுப்போகாமல்
நித்தியசீவனை அடையும்படி அவரையேகொடுக்
கிறதற்கு,இவ்வளவாய் உலகத்தாரில் அன்பு வை
௰௭ த்தார்.—உலகத்தாரைத் தண்டிக்கிறதற்கல்ல, அவ
ர்மூலமாய் உலகத்தாரை இரட்சிக்கிறதற்கே தே
வன் தமது குமாரனை உலகத்தில் அனுப்பினார்.
௰௮ அவரைவிசுவாசிக்கிறவன் தண்டனைக்குட்ப
டான்: அவரை விசுவாசியாதவனோ தேவனு
டைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில்
விசுவாசியாதபடியினால், அவன் இப்பொழுதே
௰௯ தண்டனைக்குத் தீர்க்கப்பட்டிருக்கிறான்.—ஒளி
உலகத்திலேவந்திருந்தும், மனுஷர் தங்கள் கிரி
யைகள் தீமையுள்ளவைகளாயிருப்பதினால் அந்
த ஒளியிலும் இருளைவிரும்புகிறார்கள், இதுவே
௨௰ தண்டனைத்தீர்ப்புக்குக்காரணம்.—துர்க்கிரியை
செய்கிறவன் எவனுந் தன்கிரியைகள் கண்டிக்
கப்படாதபடி,ஒளியைவெறுத்து, அதினிடத்திற்
௨௧ சேரான்.—உண்மையாய் நடக்கிறவன் தன்கிரி
யைகள் தேவனுடைய சித்தத்தின்படி செய்
யப்பட்டவைகளென்று வெளிப்படுத்தும்படிக்
கு ஒளியிலே சேருகிறானென்பதை மெய்யாய்
நான் உனக்குச்சொல்லுகிறேனென்றார்.
௨௨ அதன்பின்பு யேசுவும் அவருடைய சீஷ
ரும் யூதேயா நாட்டுக்குள்ளேவந்தார்கள்; அங்
கே அவர் அவர்களோடே சஞ்சரித்து, ஞானஸ்
நானங்கொடுத்தார்.
௨௩ அன்றியும் யோவானும், சாலிமூரைச்சேர்ந்த
ஐனோனிலே மிகுந்த சலமிருந்தபடியால் அங்
கேஞானஸ்நானங் கொடுத்துவந்தான். சனங்கள்
௨௪ போய், ஞானஸ்நானம் பெற்றார்கள்.—அக்காலத்
தில் யோவான் காவலில்வைக்கப்படவில்லை.
௨௫ பின்பு யோவானுடையசீஷரிற் சிலரும் யூத
ருஞ் சுத்திகரித்தலைக்குறித்து வாக்குவாதம்பண்
ணி,—அவர்கள் யோவானிடத்தில்வந்து, இரபீ, ௨௬
உம்முடனே யோர்தானின் அக்கரையில் ஒரு
வர் இருந்தார், நீரும் அவரைக்குறித்துச்சாட்சி
யிட்டீர்; பாரும், அவர் ஞானஸ்நானங்கொடுக்
கிறார், எல்லாரும் அவரிடத்திலே போகிறார்க
ளென்றுசொல்ல,—யோவான் உத்தரமாய், பர ௨௭
மண்டலத்தினின்று அருளப்படாவிட்டால் எந்
தமனுஷனும்யாதொன்றையும்பெறமாட்டான்.—
நான்கிறிஸ்துவல்ல, அவருக்குமுன்னாக அனுப் ௨௮
பப்பட்டவனாயிருக்கிறேனென்று நான் சொன்
னேன், அதற்காக நீங்கள் எனக்குச்சாட்சிகள்.—
மணவாட்டியையுடையவனே மணவாளன்: ம ௨௯
ணவாளனுடையதோழன் நின்று, அவனுடைய
சொல்லைக் கேட்க மிகவுஞ் சந்தோஷப்படுகி
றான்: இப்பொழுது என்னுடைய இந்தச்சந்தோ
ஷம் பூரணமாயிற்று.—அவர் பெருகவும், நான் ௩௰
சிறுகவும் வேண்டும்.—உன்னதத்தினின்றும் வ ௩௧
ருகிறவர் எல்லாரிலும் மேலானவர்:பூமியிலிருந்
து தோன்றினவன் பூலோகத்தான், அவன் பூ
லோகத்தைக்குறித்துப்பேசுவான்: பரலோகத்தி
னின்று வருபவர் எல்லாரிலும் மேலானவர்.—
அவர்கண்டு,கேட்டவற்றிற்கே சாட்சிகொடுக்கி ௩௨
றார்; ஆனாலும் ஒருவரும் அவருடைய சாட்சி
யை அங்கிகரிக்கவில்லை.—அவருடையசாட்சி ௩௩
யை அங்கிகரித்தவன், தேவன் சத்தியமுள்ள
வரென்று நிச்சயப்படுத்துகிறான்.—தேவனால் ௩௪
அனுப்பப்பட்டவர் தேவனுடைய வாக்குக
ளைப்பேசுகிறார்: தேவன் தமது ஆவியை அள
வில்லாமல் அவருக்குக் கொடுக்கிறார்.—பிதா ௩௫
குமாரனைநேசிக்கிறார், சகலத்தையும் அவர் கை
யில் ஒப்பித்தார்.—குமாரனிடத்தில் விசுவாசம் ௩௬
வைக்கிறவன் நித்திய சீவனுக்குரியவன்: குமார
னை விசுவாசியாதவன் சீவனைக்காண்பதில்லை;
அவன்மேல் தேவனுடைய குரோதந் தங்கு
கின்றதென்றான்.

## ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து ஷமாரிய ஸ்திரியுடனே சம்பாஷித்தல்: ௨௭. அவள்நகரத்திற்போய் அவரைக்குறித்துச்செய்திதெரிவித்தல்: ௩௧. கிறிஸ்து வேளாண்மையை உவமித்தல்: ௩௯. நகரத்தாரிற் சிலர்வந்து கிறிஸ்துவைவிசுவாசித்தல்: ௪௩. கிறிஸ்து கலிலேயாதேசத்துக்குப் புறப்படல்: ௪௬. கப்பர்நாகூமில் அவர் ஒரு அதிபதியின் மகளைச்சொஸ்தப்படுத்தல்.

அக்காலத்திலே, யோவானிலும் யேசு அநே ௧

(௰௩)நீதி.௩௰.௪. நீதி.௰௬.௨௮. அப்.௨.௩௪. ௧.கொரி.௰௫.௪௭. எபே.௪.௯,௰. (௰௪) எண்.௨௧.௯. அதி.௮.௨௮.(௰௬) ரோ.௫.௮. ௧.யோவா.௪.௯. (௰௭) லூக்.௯.௫௬. அதி.௫.௪௫. ௧.யோவா.௪.௰௪. (௰௮) அதி.௫.௨௪. அதி.௬.௪௰,௪௭. அதி.௨௰.௩௧. (௰௯) அதி.௧.௪,௯,௰,௰௧. அதி.௮.௰௨. (௨௰) யோபு.௨௪.௰௩,௰௭. எபே.௫.௰௩. (௨௩) ௧.சாமு.௯.௪. மத்.௩.௫,௬. (௨௪) மத்.௰௪.௩.(௨௬)அதி.௧.௭,௰௫,௨௭,௩௪. (௨௭) ௧.கொரி.௪.௭. எபி.௫.௪. யாக்.௧.௰௭.(௨௮)அதி. ௧.௨௰,௨௭. மல்.௩.௧. மாற்.௧.௨. (௨௯) மத்.௨௨.௨. ௨.கொரி.௰௧.௨. எபே.௫.௨௫,௨௭. வெளி.௨௧.௯. உன்.௫.௧. (௩௧) மத்.௨௮.௰௮. ரோ.௯.௫. ௧.கொரி.௰௫.௪௭. அதி.௬.௩௩. எபே.௧.௨௧. பிலி.௨.௯. (௩௨) அதி.௮.௨௬. (௩௩) ரோ.௩.௪. ௧.யோவா.௫.௰. (௩௪) அதி.௭.௰௬. அதி.௧.௰௬. (௩௫) மத்.௰௧.௨௭. மத்.௨௮.௰௮. லூக்.௰.௨௨. அதி. ௫.௨௰,௨௨. அதி.௰௩.௩. அதி.௰௭.௨. எபி.௨.௮. (௩௬) அபகூ.௨.௪. அதி.௧.௰௨. அதி.௬.௪௭. ரோ.௧.௰௭. ௧.யோவா.௫.௰.—(௪. அதி. ௧.) அதி.௩.௨௨,௨௬.

கரைச் சீஷராக்கி ஞானஸ்நானங் கொடுக்கிரு
ரென்று பரிசேயர் கேள்விப்பட்டார்கள்; அ
௨ தைக் கர்த்தர் அறிந்து,—யூதேயாவைவிட்டுத் தி
௩ ரும்பவுங் கலிலேயாவிலேசென்ருர்.—யேசு தா
மேஞானஸ்நானங்கொடுக்கவில்லை, அவருடை
௪ யசீஷர் கொடுத்தார்கள்.—அவர் ஷமாரியா நாட்
டின் வழியாய்ப் போகவேண்டியதாயிருந்தபடி
௫ யால்,-யாக்கோபு தன்புத்திரனுகிய யோசேப்புக்
குக்கொடுத்தநிலத்துக்குச் சமீபமாய், ஷமாரியா
வைச்சேர்ந்த சீகாரென்னும் ஊரிலே வந்தார்.
அவ்விடத்திலே யாக்கோபின்கிணறு இருந்தது.-
௬ பிரயாணத்தினுலே யேசு இளைப்படைந்து, கி
ணற்றின் அருகே உட்காந்தார்; அப்பொழுது ஏ
௭ றக்குறைய ஆரும்மணிநேரமாயிற்று.-அவருடை
யசீஷர் உணவுப்பொருளைக் கொள்ளும்படி ஊ
ருக்குப்போயிருக்கையில், ஷமாரியஸ்திரிஒருத்
தி, தண்ணீர்மொண்டுகொள்ளும்படிவந்தாள்.—
௮ அவளுடனே யேசு, எனக்குக்குடிக்கக்கொடு
௯ வென்ருர்.—யூதருக்கும், ஷமாரியருக்கும் வி
யவகாரமில்லாததினுல், ஷமாரியஸ்திரி அவரை
நோக்கி,யூதனுகியநீர் ஷமாரியஸ்திரியாகியஎன்
னிடத்திலே குடிக்கக்கொடுவென்று எப்படிக்
௰ கேட்கலாமென்ருள்.—அவளுக்குத்தரமாய் யே
சு, நீ தேவனுடைய ஈவையும், குடிக்கக்கொ
டுவென்று உன்னைக்கேட்கிறவனையும் அறிந்தா
யானுல், நீயே அவனைநோக்கி வேண்ட, அவன்
௰௧ உனக்குச் சீவநீரைக் கொடுப்பானென்ருர்.—ஸ்
திரி அவரைநோக்கி, ஆண்டவனே, மொண்டு
கொள்ளுகிறதற்குஉம்மிடத்திலேபாத்திரமுமில்
லை, கிணறும் ஆழம்: அப்படியிருக்க அந்தச்சீவ
௰௨ நீர் உமக்கெங்கேயிருந்துவரும்.—இந்தக் கிணற்
றை எங்களுக்குத்தந்த எங்களுடையபிதாவாகிய
யாக்கோபிலும் நீர் பெரியவரா; அவரும், அவ
ருடைய புத்திரரும், அவருடைய சீவசெந்
துக்களும் இதிலே குடித்தார்களென்று சொல்
௰௩ ல,—யேசு அவளுக்குத்தரமாய், இந்த நீரைக்கு
௰௪ டிப்பவன் திரும்பவுந்தாகமடைவான்.—நான்
கொடுக்கிற நீரைக்குடிப்பவன் எவனே, அவன்
ஒருபொழுதுந் தாகமடையான்; நான் அவனுக்
குக்கொடுக்கும் நீர் அவன் உள்ளத்திலே நீரூற்
௰௫ ருகி, நித்தியசீவபரியந்தம்ஊறுமென்ருர்.—அந்த
ஸ்திரிஅவரைநோக்கி,ஆண்டவனே,நான்தாக
மடையாமலும்,மொண்டுகொள்ளுகிறதற்கு இங்
கேவராமலும் இருக்கும்படி, நீர் அந்த நீரை எ
௰௬ னக்குத்தரவேண்டுமென்ருள்.—பின்பு யேசு அ
வளைநோக்கி, நீ போய் உன்புருஷனை அழைத்
௰௭ துக்கொண்டு, இங்கேவாவென்றுசொல்ல,—ஸ்தி
ரி அவருக்குத்தரமாய், எனக்குப்புருஷனில்லை
யென்ருள். யேசு அவளுடனே, எனக்குப்புரு
ஷனில்லையென்று நீ சொன்னது யதார்த்தம்:—

ஐந்து புருஷர் உனக்கிருந்தார்கள்: இப்பொழுது ௰௮
இருக்கிறவன் உன்புருஷனல்ல: ஆதலால் நீ
சொன்னது உண்மையென்ருர்.—ஸ்திரி அவரை ௰௯
நோக்கி, ஆண்டவனே, நீர் ஒருதீர்க்கதரிசியெ
ன்று நான்காண்கிறேன்.—எங்கள்பிதாக்கள் இந்த ௨௰
மலையில் ஆராதனைசெய்தார்கள்; நீங்களோ,தொ
ழுதுகொள்ளவேண்டிய ஸ்தானம் யெருஷலே
மில் உண்டென்றுசொல்லுகிறீர்களென்ருள்.—
அதற்கு யேசு, ஸ்திரியே, என்னை நம்பு, நீங் ௨௧
கள் இந்த மலையிலாவது, யெருஷலேமிலாவது
பிதாவுக்காராதனைசெய்யாதகாலம்வருகின்றது.-
நீங்கள் அறியாததற்காராதனைசெய்கிறீர்கள்: நாங் ௨௨
கள் அறிந்திருக்கிறதற்காராதனைசெய்கிறேம்: யூ
தரிடத்திலிருந்து இரட்சிப்புத் தோன்றுகின்ற
து.—உண்மையாய் ஆராதனைசெய்பவர்கள், ஆவி ௨௩
யிலும் உண்மையிலும் பிதாவுக்காராதனை செய்
யுங்காலம்வரும், இப்பொழுதும் வந்திருக்கின்ற
து: அப்படியே தமக்கு ஆராதனைசெய்பவர்களைப்
பிதாதேடுகிருர்.—தேவனே ஆவி: அவருக்கா ௨௪
ராதனைசெய்பவர்கள் ஆவியைக்கொண்டுசத்திய
மாய் அவருக்காராதனை செய்யவேண்டுமென்
ருர்.—அந்த ஸ்திரி,கிறிஸ்து என்னும் மஸீயக் ௨௫
வருகிருரென்று நான் அறிவேன், அவர் வரும்
பொழுது எல்லாவற்றையும் நமக்குஉணர்த்துவா
ரென்றுசொல்ல,—யேசு அவளைநோக்கி, உன் ௨௬
னுடேபேசுகிறவராகியநானே அவரென்ருர்.

இதற்குள் அவருடைய சீஷர் வந்து, ஸ்திரியு ௨௭
டன் அவர் பேசிக்கொள்வதைக்குறித்து ஆச்சரி
யப்பட்டார்கள்: ஆனுலும் நீர் எதைத்தேடுகிறீ
ரென்ருவது, ஏன் அவளுடன் சம்பாஷிக்கிறீ
ரென்ருவது ஒருவனுங் கேட்கவில்லை.—பின்பு ௨௮
ஸ்திரி தன் குடத்தைவைத்துவிட்டு நகரத்திற்
சென்று, சனங்களைநோக்கி,—நான் செய்த யா ௨௯
வையும் எனக்குச்சொல்லிய ஒருமனுஷனை வந்
துபாருங்கள்: அவரல்லவா கிறிஸ்துவென்று
சொல்ல,—அவர்கள்,நகரத்தை நீங்கி அவரிடத் ௩௰
திற்சென்ருர்கள்.

அத்தருணத்தில் அவருடைய சீஷர் அவரை ௩௧
நோக்கி, போதகரே, சாப்பிடுமென்று வேண்டிக்
கொண்டார்கள்.—அதற்கு அவர் நீங்கள் அறியா ௩௨
தபோசனம் என்னிடத்தில் உண்டு என்ருர்.—
அப்பொழுது சீஷர் ஒருவரை ஒருவர்நோக்கி, ௩௩
ஆராவது அவருக்குப்போசனங் கொண்டுவந்தி
ருப்பானுவென்ருர்கள்.—யேசு அவர்களுட ௩௪
னே, நான், என்னை அனுப்பினவருடைய சித்
தத்தின்படிசெய்து, அவருடைய கிரியையை நி
றைவேற்றுவதே என் போசனம்.—நாலுமாதஞ் ௩௫
சென்றபின் அறுப்புக்காலமுண்டாகுமென்று
நீங்கள்சொல்லுகிறதில்லையா; கேளுங்கள்,வயல்
களின்மேல் உங்கள் கண்களை ஏறிட்டுப்பாருங்

---

(௫) ஆதி.௩௮.௨௨. யோசு.௨௪.௩௨. (௯) ௨.இரா.௰௭.௨௪. லூக்.௯.௫௨,௫௩. அப்.௰.௨௮. (௰) ஏசா.௰௨.௩. எரே. ௨.௰௩. சக.௰௩.௧. (௰௪) அதி.௬.௩௫,௩௮. அதி.௭.௩௮. (௰௫) அதி.௬.௩௪. ரோ.௬.௨௩. ௧.யோவா.௫.௨௰. (௰௯) லூக். ௭.௰௬. அதி.௬.௰௪. நியா.௯.௭. ௨.பா.௰௨.௫,௰௧. ௧.இரா.௯.௩. (௨௧) மல்.௧.௰௧. ௧.தீமோ.௨.௮. (௨௨) ௨.இரா.௰௭. ௨௯. ஏசா.௨.௩. லூக்.௨௪.௪௭. ரோ.௯.௪,௫. (௨௩) பிலி.௩.௩. (௨௪) ௨.கொரி.௩.௰௭. (௨௬) மத்.௨௬.௬௩,௬௪. (௩௪) யோபு.௨௩.௰௨. அதி.௬.௩௮. (௩௫) மத்.௯.௩௭.

கள்; அவைகள் அறுப்புக்கு இப்பொழுதும்
வெண்மையாயிருக்கின்றனவென்று நான் உங்
௩௬ களுக்குச் சொல்லுகிறேன்.—அறுக்கிறவன் கூ
லியைவாங்கி, நித்தியசீவனுக்கேற்ற பலனைச்
சேர்த்துக்கொள்ளுகிறான்: அதினால் விதைக்கிற
வனும் அறுக்கிறவனுங் கூடச்சந்தோஷப்படுகி
௩௭ றார்கள்.—இப்படியே, ஒருவன் விதைக்கிறான்,
வேறொருவன் அறுக்கிறானென்னும் பழமொழி
௩௮ மெய்ப்படுகின்றது.—நீங்கள் பிரயாசப்படாமல்
விளைந்த பயிரை அறுக்கும்படி நான் உங்களை
அனுப்பினேன்: மற்றவர்கள் பிரயாசப்பட்டார்
கள், நீங்கள் அவர்களுடைய பிரயாசத்தின்பல
னைப்பெற்றுக்கொண்டீர்களென்றார்.
௩௯ அந்தஸ்திரி, நான் செய்தயாவையும் எனக்
குச்சொன்னாரென்று சாட்சியிட்ட வாக்கினி
மித்தம், அந்த நகரத்தாரிலுள்ள ஷமாரியரில் அ
௪௰ நேகர் அவரை விசுவாசித்தார்கள்.—ஷமாரியர்
அவரிடத்திலேவந்து, தங்களிடத்தில் தங்கும்ப
டிஅவரை வேண்டிக்கொண்டார்கள்: அதினால்
௪௧ அவர்இரண்டுநாள்அங்கேதங்கினார்.—அவருடை
ய உபதேசத்தினிமித்தம்பின்னும்வெகுமனுஷர்
௪௨ விசுவாசித்து,—ஸ்திரியைநோக்கி, உன்சொல்
லினாலேமாத்திரமல்ல, நாங்களும் அவருடைய
உபதேசத்தைக் கேட்டு, அவர் மெய்யாய்க் கி
றிஸ்துவாகிய உலக ரட்சகரென்றறிந்து விசு
வாசிக்கிறோமென்றார்கள்.
௪௩ இரண்டுநாட்சென்றபின்பு, அவர் அவ்விடத்
தைவிட்டுப் புறப்பட்டுக்கலிலேயாவுக்குப்போ
௪௪ னார்.—தீர்க்கதரிசி, தன் சென்மதேசத்திற்கனம்
பெறானென்று யேசு தாமே சொல்லியிருந்
௪௫ தார்.—அவர்கலிலேயாவிற்சேர்ந்தபொழுது, உற்
சவத்திற்குப்போய், யெரூஷலேமில் அவர் உற்
சவத்திலேசெய்த யாவையும்பார்த்திருந்த கலி
௪௬ லேயர் அவரை ஏற்றுக்கொண்டார்கள்.—பின்பு
யேசு, தாம் சலத்தைத்திராட்சரசமாக்கின கலி
லேயாவிலுள்ள கானாவுக்குத்திரும்பவும் போ
னார். அப்பொழுது கப்பர்நாகூமில் இராசசங்
கத்தான் ஒருவனுடைய புத்திரன் வருத்தமாயி
௪௭ ருந்தான்.—யேசு யூதேயாவினின்று கலிலேயா
வில்வந்ததை அந்தமனுஷன் கேள்விப்பட்டவு
டனே, அவரிடத்திற்குப்போய், தன்புத்திரனுக்
கு மரணஞ் சமீபித்திருந்தபடியினால் அவனைச்
சொஸ்தமாக்கும்படி வரவேண்டுமென்று அவ
௪௮ ரை வேண்டிக்கொண்டான்.—யேசு அவனை
நோக்கி, நீங்கள் அடையாளங்களையும் அற்புதங்
களையுங்காணாவிட்டால் விசுவாசிக்கமாட்டீர்க
௪௯ ளென்றுசொல்ல,—இராசசங்கத்தான் கர்த்தா
வே, என்பிள்ளைசாவதற்குமுன்னே வாருமென்
௫௰ றான்.—யேசு அவனிடத்தில், போ; உன் மகன்
உயிரோடிருக்கிறானென்றார். யேசு தனக்குச்
சொல்லியவாக்கை நம்பி, அந்தமனுஷன் போ
௫௧ னான்.-அவன்போகையில் அவனுடைய பணிவி
டைக்காரர் அவனுக்கெதிராகவந்து, உம்முடை
யபுத்திரன் உயிரோடிருக்கிறானென்றறிவித்தார்
கள்.—எத்தனைமணிநேரத்தில் அவன் சொஸ்தம ௫௨
டையத்தொடங்கினானென்று அவர்களிடத்தில்
விசாரித்தபொழுது, அவர்கள், நேற்று ஏழாம்ம
ணிநேரத்திலே சுரம் அவனைவிட்டு நீங்கிற்றென்
றார்கள்:—அந்தநேரம்,உன்மகன் உயிரோடிருக்கி ௫௩
றானென்று யேசு தனக்குச்சொல்லிய நேரமே
யென்று பிதா அறிந்து, அவனும், அவன்வீட்டா
ரனைவரும் விசுவாசிகளானார்கள்.—யேசு, யூதே ௫௪
யாவினின்றுகலிலேயாவுக்குத்திரும்பிவந்தபொ
ழுது, இந்த இரண்டாம் அற்புதத்தைச்செய்தார்.

## ௫. அதிகாரம்.

௧. முப்பத்தெட்டுவருஷம் வருத்தமாயிருந்த ஒ
ருமனுஷனை ஓய்வுநாளிலே சொஸ்தமாக்கல்:
௰. கிறிஸ்து யூதரைக்கடிந்து போதித்தல்: ௩௧.
யோவானும், பரமபிதாவும், வேதநூல்களுங் கி
றிஸ்துவுக்குச் சாட்சியிடல்.

அதன்பின்பு யூதருடைய உற்சவம்வந்தது; யே ௧
சு யெரூஷலேமுக்குப் போனார்.—யெரூஷலேம் ௨
நகரத்தில் ஆட்டுவாசலின் சமீபத்தில், எபிரேயு
பாஷையிலே பேதெஸ்தா என்னப்பட்ட ஒரு
குளம் இருக்கின்றது; அதற்கு ஐந்துமண்டபங்
களுண்டு.—அவைகளிலே குருடர், சப்பாணி ௩
கள், சூம்பின உறுப்பையுடையவர்கள் முதலா
ன அநேகவியாதிக்காரர் கிடந்து, சலம் அசை
வதை எதிர்பார்த்திருந்தார்கள்.—விசேஷகாலத் ௪
திலே தேவதூதன் ஒருவன் அந்தக்குளத்திலிறங்
கி, சலத்தைக் கலக்குவான்: சலங் கலக்கப்பட்
டபின்பு முதல் அதிலிறங்குகிறவன் எவனோ,அ
வன் எந்த வியாதியையுடையவனாயிருந்தாலுஞ்
சொஸ்தமடைவான்.—அக்காலத்தில் முப்பத் ௫
தெட்டுவருஷம் வியாதியாயிருந்த ஒருமனுஷன்
அங்கேயிருந்தான்.—அவன் கிடப்பதை யேசு ௬
கண்டு, அவன் அநேகநாளாக வருத்தமடைந்
தானென்றறிந்து,அவனைநோக்கி, நீ சொஸ்தம
டைய விரும்புகிறாயாவென்று கேட்க,—பிணி ௭
யாளன் அவருக்குத்தரமாய், கர்த்தாவே, ச
லங் கலக்கப்படுகிறபொழுது என்னைக்குளத்திற்
கொண்டுபோய்விடுகிறதற்கு ஒருவருமில்லை: நா
ன்நடந்துபோகிறதற்குமுன்னமேவேறொருவன்
இறங்குவானென்றான்.—யேசு அவனைநோக்கி, ௮
நீ எழுந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு
நடவென்றார்.—உடனே அந்த மனுஷன்சொஸ் ௯
தமடைந்து, தன்படுக்கையை எடுத்துக்கொண்டு
நடந்துபோனான்: அந்தநாள் ஓய்வுநாள்.
யூதர், சொஸ்தமடைந்தவனை நோக்கி, இது ௰
ஓய்வுநாள்: நீ உன் படுக்கையை எடுத்துப்போ
வது நியாயமல்லவென்று சொல்ல,—அவர்களுக் ௰௧
குத்தரமாய் அவன், என்னைச் சொஸ்தப்படுத்தி
னவர் உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட
வென்று எனக்குச்சொன்னாரென்றான்.—அதற் ௰௨

(௩௬) தானி.௰௨.௩. (௪௨) ௧.யோவா.௪.௰௪. (௪௪) மத்.௰௩.௫௭. (௪௫) அதி.௨.௨௩. உபா.௰௬.௰௬. (௪௬) அதி.௨.௧. ௰௧. (௪௮) ௧.கொரி.௧.௨௨.—(௫. அதி. ௧.) லேவி.௨௩.௨. உபா,௰௬.௧. (௨) நிகி.௩.௧. (௮) மத்.௯.௬. (௯) அதி. ௯.௰௪. (௰) யாத்.௨௰.௰. நிகி.௰௩.௰௯. எரே.௰௭.௨௧,. மத்.௰௨.௨. மாற்.௨.௨௪. லூக்.௬.௨.

கு அவர்கள், உன்படுக்கையை எடுத்துக்கொண்
டு நடவென்று உன்னுடனே சொல்லிய மனு
௰௩ ஷன் யாவனென்று கேட்டார்கள்.—அவர் இன்
னாரென்று சொஸ்தமடைந்தவனுக்குத் தெரியா
து: அவ்விடத்திற் சனங்கள் திரளாயிருந்தபடி
௰௪ யால் யேசு விலகிவிட்டார்.–பின்பு யேசு தே
வாலயத்தில் அவனைக்கண்டு, பார், நீ சொஸ்தம
டைந்தாய்: இனிப் பாவஞ் செய்யாதிரு, செய்
தால் அதிககேடு உனக்கு நேரிடுமென்றார்.—
௰௫ அந்தமனுஷன்போய், தன்னைச் சொஸ்தமாக்கி
னவர் யேசு வென்று யூதருக்கு அறிவித்தான்.-
௰௬ ஓய்வுநாளில் அவர் இவைகளைச் செய்தபடியி
னால், யூதர் யேசுவைத் துன்பப்படுத்திக் கொ
லைசெய்ய வகைதேடினார்கள்.
௰௭ அவர்களுடனே யேசு, என்பிதா இதுவரை
க்குங் கிரியை செய்துவருகிறார், நானுங்கிரி
௰௮ யைசெய்து வருகிறேனென்றார்.—அவர் ஓய்வு
நாளின்நியமத்தைமீறினதுமன்றி, தேவனைத்த
மது பிதாவென்று சொல்லி, தம்மைத் தேவ
னுக்கு இணையாக்கினபடியினாலும், யூதர் அவ
ரைக்கொலைசெய்ய அதிகமாய் வகைதேடினார்
௰௯ கள்.—அப்பொழுது யேசு அவர்களைநோக்கி,
பிதா செய்யக் குமாரன் கண்டதையன்றி, வே
றொன்றையுந் தானாகச் செய்யான், அவர் செய்
கிறவைகள் எவைகளோ, அவைகளையே குமார
௨௰ னுஞ் செய்கிறான்.-பிதா,குமாரனில்அன்புவைத்
து, தாம்செய்கிற யாவையும் அவனுக்குத் தெரி
விக்கிறார்: நீங்கள் ஆச்சரியங்கொள்ளும்படி, இ
வைகளிலும் பெரிய கிரியைகளையே அவனிடத்
தில் தெரிவிப்பாரென்று மெய்யாகவே உங்களுக்
௨௧ குச் சொல்லுகிறேன்.–அல்லாமலும் பிதா மரித்
தோரை எழுப்பி உயிர்ப்பிக்கிறதுபோல, குமார
னுந் தன்னுடைய இஷ்டப்படியே எவர்களுக்
௨௨ காகிலும் உயிர்கொடுக்கிறான்.–அன்றியும், பிதா
வைக் கனம்பண்ணுகிறதுபோல எல்லாருங் கு
மாரனையுங் கனம்பண்ணுவதற்காக, பிதா ஒருவ
ருக்கும் நியாயத்தீர்ப்புச் செய்யாமல், நியாயத்
தீர்ப்பின் அதிகாரம் முழுவதையுங் குமாரனி
௨௩ டத்தில் ஒப்பித்தார்.–குமாரனைக் கனம்பண்ணா
தவன், அவனை அனுப்பினபிதாவைக்கனம்பண்
௨௪ ணாதவன்.-என்வாக்குக்குச்செவிகொடுத்து,என்
னை அனுப்பினவரைவிசுவாசிக்கிறவன், நித்திய
சீவனை அடைந்திருக்கிறான், அவன் ஒருபொழு
துந்தண்டனைக்குட்படாமல், மரணத்தைவிட்டு
நீங்கி, சீவனுக்குட்பட்டிருக்கிறானென்று மெய்
௨௫ யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.–மரித்
தோர் தேவனுடைய குமாரனின் சத்தத்தைக்
கேட்குங்காலம் வருகின்றது, இப்பொழுதும்
வந்திருக்கின்றது: அதைக்கேட்பவர்கள் சீவிப்
பார்களென்று மெய்யாகவேஉங்களுக்குச்சொல்
லுகிறேன்.-பிதா,தம்மிலேதாமே சீவனையுடைய ௨௬
வராயிருப்பதுபோல, குமாரனுந் தன்னிலேதா
னே சீவனை யுடையவனாயிருக்க அருள்செய்
தார்.—அன்றியும், அவன் மனுபுத்திரனாயிருக்கி ௨௭
றபடியினாலே, நியாயத்தீர்ப்புச் செய்யும்படி அ
திகாரத்தையும் அவனுக்குக் கொடுத்தார்.—இ ௨௮
தைக்குறித்து நீங்கள் ஆச்சரியப்படவேண்டாம்:
பிரேதக்குழிகளிலுள்ள யாவரும் அவனுடைய
சத்தத்தைக்கேட்குங் காலம் வரும்.—அப்பொ ௨௯
ழுது நற்கிரியை செய்தவர்கள் சீவனைப் பெறும்
படிக்கும், துர்க்கிரியை செய்தவர்கள் தண்டனை
அடையும்படிக்கும் உயிர்த்தெழுந்து புறப்படு
வார்கள்.-நானாகஒன்றுஞ்செய்யேன்: நான்கேட் ௩௰
கிறபடி நியாயந்தீர்க்கிறேன்: நான் என்னுடை
யசித்தத்தையல்ல, என்னை அனுப்பினபிதாவின்
சித்தத்தையே தேடுகிறபடியினால் என்னுடைய
தீர்ப்பு நீதியுள்ளது.—நானே என்னைக்குறித்துச் ௩௧
சாட்சியிட்டால், என் சாட்சி மெய்யாயிராது.
மற்றும் ஒருவன் என்னைக்குறித்துச் சாட்சியி ௩௨
டுகிறான்; அவன் என்னைக்குறித்துக்கொடுக்கிற
சாட்சி மெய்யென்று அறிந்திருக்கிறேன்.—நீங் ௩௩
கள் யோவானிடத்திற்கு மனுஷரை அனுப்பி
னபொழுது, அவனுஞ் சத்தியத்தைக்குறித்துச்
சாட்சியிட்டான்.—மனுஷருடைய சாட்சியை ௩௪
நான் அங்கிகரிக்கிறதில்லை: நீங்கள் இரட்சிப்
பைப்பெறும்படி இவைகளைச்சொல்லுகிறேன்.-
அவன்,எரிந்துபிரகாசிக்கிற விளக்கு: நீங்களுஞ் ௩௫
சிலகாலம் அவனுடைய ஒளியிலே களிகூரச்
சம்மதித்தீர்கள்.
யோவானுடைய சாட்சியிலும் அதிகமேன் ௩௬
மையானசாட்சி எனக்குண்டு: நான் நிறைவேற்
றும்படிக்குப் பிதா எனக்குக்கொடுத்த கிரியைக
ளாகிய நான்செய்துவருகிற கிரியைகளே, பிதா
என்னை அனுப்பினாரென்பதற்கு என்னைக்குறித்
துச்சாட்சியிடுகின்றன.—அன்றியும்,என்னை அ ௩௭
னுப்பின பிதாவே என்னைக்குறித்துச்சாட்சியிட்
டார். நீங்கள் அவருடைய சத்தத்தை ஒருபொ
ழுதுங்கேட்டதுமில்லை,அவருடைய ரூபத்தைக்
கண்டதுமில்லை.—அவர் அனுப்பினவரை நீங் ௩௮
கள் விசுவாசியாதபடியினால் அவருடைய வாக்
கு உங்கள் உள்ளத்தில் தரித்துநிற்கிறதில்லை.
வேதவாக்கியங்களை ஆராய்ந்துபாருங்கள்; அ ௩௯

---

(௰௪) மத்.௰௨.௪௫. (௰௭) அதி.௯.௪. (௰௮) அதி.௭.௰௯. அதி.௰.௩௰,௩௩. பிலி.௨.௬. (௰௯) அதி.௮.௨௮. அதி.௰௪.௰.(௨௰)மத்.௩.௰௭. ௨.பேதுரு.௧.௰௭. (௨௧) லூக்.௭.௰௪. அதி.௰௧.௨௫,௪௩. (௨௨) மத்.௰௧.௨௭. மத்.௨௮.௰௮. அதி.௩.௩௫. அதி.௰௭.௨. அப்.௰௭.௩௧. ௧.பேதுரு.௪.௫. (௨௩) ௧.யோவா.௨.௨௩. (௨௪) அதி.௩.௰௬,௰௮. அதி.௬.௪௰.௪௭. ௧.யோவா.௩.௰௪. (௨௫) எபே.௨.௨,௫. எபே.௫.௰௪. கொலோ.௨.௰௩. (௨௭) அப்.௰.௪௨. அப்.௰௭.௩௧. தானி.௭.௰௩,௰௪. (௨௯) ஏசா.௨௬.௰௯. ௧.கொரி.௰௫.௫௨. ௧.தெச.௪.௰௬. தானி.௰௨.௨. மத்.௨௫.௩௨,௩௩,௪௬. (௩௰) மத்.௨௬.௩௯. அதி.௪.௩௪. அதி.௬.௩௮. (௩௧) அதி.௮.௰௪. வெளி.௩.௰௪. (௩௨) மத்.௩.௰௭. ௧ யோவா.௫.௬,௭,௯. (௩௩) அதி.௧.௰௫,௰௯,௨௭,௩௨. (௩௫) ௨.பேதுரு.௧.௰௯. மத்.௰௩.௨௰. (௩௬) ௧.யோவா.௫.௯. அதி.௩.௨. (௩௭) மத்.௩.௰௭. மத்.௰௭.௫. அதி.௬.௨௭. உபா.௪.௰௨. ௧.தீமோ.௧.௰௭. ௧.யோவா.௪.௰௨. (௩௯) ஏசா.௮.௨௰. ஏசா.௩௪.௰௬. லூக்.௰௬.௨௯. அப்.௰௭.௰௧. உபா.௰௮.௰௫,௰௮. லூக்.௨௪.௨௭.

வைகளினால் நித்தியசீவன் உங்களுக்குக்கிடைக்
குமென்று எண்ணுகிறீர்கள்: அவைகளுமே என்
௪௰ னைக்குறித்துச் சாட்சியிடுகின்றன.—ஆனாலும்
சீவனைப்பெறும்படி நீங்கள் என்னிடத்தில் வர
௪௧ விரும்பீர்கள்.–நான் மனுஷராற்புகழ்ச்சியை ஏற்
௪௨ றுக்கொள்ளேன்.—நான் உங்களைத் தேவஅன்
௪௩ பில்லாதவர்களென்று அறிந்திருக்கிறேன்.-நான்
என்பிதாவின் நாமத்தினாலே வந்திருக்கிறேன்,
நீங்கள் என்னை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை: வே
றொருவன் தன் சுயநாமத்தினாலேவந்தால் அவ
௪௪ னை ஏற்றுக்கொள்வீர்கள்.—நீங்கள் தேவனால்
மாத்திரம் வரும் புகழ்ச்சியைத்தேடாமல், ஒரு
வருக்கொருவர் செய்யும் புகழ்ச்சியை அங்கிக
ரிக்கிறவர்களாயிருக்கையில், எப்படிவிசுவாசிக்
௪௫ கக்கூடும்.–நான் பிதாவினிடத்தில் உங்கள்மேல்
குற்றஞ்சாற்றுவேனென்று நினைக்கவேண்டாம்:
நீங்கள் நம்புகிற மோசேதானே உங்கள்மேல்
௪௬ குற்றஞ்சாற்றுவான்.—நீங்கள் மோசேயை விசு
வாசித்தால் என்னையும் விசுவாசிப்பீர்கள்: அவ
௪௭ னே என்னைக்குறித்து எழுதினான்.—அவன் எ
ழுதினதை நீங்கள் விசுவாசியாமலிருந்தால், என்
னுடைய வாக்கியங்களை எப்படி விசுவாசிப்பீர்
களென்றார்.

## ௬. அதிகாரம்.

*௧. கிறிஸ்து, ஐந்து அப்பத்தினாலும் இரண்டு மீன்களாலும் ஐயாயிரம்பேரைப்போஷித்தல்: ௰௬. அவர் சலத்தின் மேல்நடத்தல்: ௨௨. அநேகசனங்கள் அவரிடத்தில்வர அவர்களுக்கு உபதேசஞ் சொல்லல்: ௪௧. தம்மை ஆகாரமாகக் கொடுத்தல்: ௫௨. யூதர் அவரைக்குறித்துவாக்குவாதம்பண்ணல்: ௬௰. அநேகர் அவரைவிட்டு நீங்க அப்போஸ்தலர் நிலைகொள்ளல்.*

அதன்பின்பு யேசு, தைபேரியாக் கடலென்
னும் மறுநாமங்கொண்ட கலிலேயாக் கடலைக்
௨ கடந்துபோனார்.–அவர் பிணியாளரைச் சொஸ்
தப்படுத்தின அற்புதங்களைக்கண்டு, சனத்திரள்
௩ அவருக்குப் பின்சென்றது.—யேசு மலையிலே
றி, அங்கேதம்முடைய சீஷருடனே உட்காந்
௪ தார்.–அக்காலத்திலே பஷ்கா என்னும் யூதரின்
உற்சவஞ் சமீபித்தது.
௫ யேசு தம்முடைய கண்களை ஏறிட்டுப்
பார்த்து, திரளானசனங்கள் தம்மிடத்தில்வரக்
கண்டு, பிலிப்பைநோக்கி, இவர்கள்புசிக்கிறதற்
கு நாம் எங்கே அப்பங்களைக்கொள்ளலாமென்
௬ றார்.—அவர் தாம் செய்வதைத் தாம் அறிந்தும்,
இவனைப்பரீட்சிக்கும்படி இப்படிக்கேட்டார்.-
௭ பிலிப்பு அவருக்குத்தரமாக, இவர்களில் ஒவ்
வொருவனுங் கொஞ்சங் கொஞ்சமாயெடுத்துக்
கொண்டாலும், இருநூறு தேனாரியப்பணத்தப்
பங்களும் இவர்களுக்குப் போதாதென்றான்.—
௮ அப்பொழுது அவருடைய சீஷரில் ஒருவனும்,
சீமோன் பேதுருவின் சகோதரனுமாகிய அந்தி
ரேயா அவரைநோக்கி,—இங்கே ஒருசிறுவன் ௯
இருக்கிறான், அவன்கையில் ஐந்து வாற்கோது
மை அப்பங்களும், இரண்டு மீன்களுமுண்டு:
இவ்வளவுசனங்களுக்கும் அவைகள் எம்மாத்
திரமென்றான்.–யேசு, சனங்களைப் பந்தியிருக் ௰
கப்பண்ணுங்களென்றார். அவ்விடத்திலேமிகுந்
தபுல்லிருந்தது. எண்ணின்படி ஏறக்குறைய ஐ
யாயிரம்பேரிருந்தார்கள்.—அப்பொழுது யேசு ௰௧
அந்த அப்பங்களை எடுத்து; ஸ்தோத்திரஞ்செய்து
சீஷரிடத்திற்கொடுக்க, சீஷர் அவைகளையும்,அ
ப்படியே மீன்களிலும் வேண்டியமட்டும் பந்தி
யிருக்கிறவர்களுக்குப்பகிர்ந்துகொடுத்தார்
கள்.—அவர்கள் திருத்தியடைந்தபின்பு, அவர் ௰௨
தம்முடைய சீஷரைநோக்கி, ஒன்றுஞ்சேதமா
ய்ப்போகாமல் சேஷமானவைகளைச் சேர்த்துக்
கொள்ளுங்களென்றார்.—அப்படியே, வாற்கோ ௰௩
துமை அப்பங்கள் ஐந்தில் அவர்கள்புசித்து, மிந்
தவைகளாற் பன்னிரண்டு கூடைகளைநிரப்பி
னார்கள்.—யேசு செய்த அந்த அற்புதத்தைச் ௰௪
சனங்கள்கண்டு, மெய்யாய் இவர் உலகத்தில் வ
ருபவராகிய அந்தத்தீர்க்கதரிசியென்றார்கள்.
ஆதலால் யேசு, அவர்கள்வந்து,வலாற்காரமா ௰௫
ய்த் தம்மைப்பிடித்து இராசாவாக்கப்பார்க்கிறார்
களென்பதைஅறிந்து, திரும்பவுந் தனித்து மலை
யிலேறினார்.–சாயங்காலமானபொழுது, அவரு ௰௬
டைய சீஷர் கடற்கரையிலிறங்கிப்படவிலேறி,
கடலின் அக்கரையிலுள்ள கப்பர்நாகூமுக்குப்
போகப்புறப்பட்டார்கள்.-அப்பொழுது இருட் ௰௭
டாயிருந்தது, யேசுவும் அவர்களிடத்திற் சேர
வில்லை.—அல்லாமலும் பெருங்காற்று அடித்தப ௰௮
டியினாலே கடல் எழும்பிற்று.—அப்படி அவர் ௰௯
கள் ஏறக்குறைய இருபத்தைந்து, அல்லது முப்
பது ஸ்தாதிவழி தூரத்திற்குத் தண்டு வலித்தார்
கள்,அப்பொழுது யேசு கடலின்மேல்நடந்து,
படவுக்குச் சமீபமாய்வருகிறதைக்கண்டு பயந்
தார்கள்.—அவர் அவர்களைநோக்கி, நான்தான்; ௨௰
பயப்படாதிருங்களென்றார்.—அப்பொழுது அ ௨௧
வர்கள் சந்தோஷமாய் அவரைப்படவிலேற்றிக்
கொண்டார்கள்: உடனே படவு, அவர்கள்போ
கவேண்டிய கரையைப்பிடித்தது.
மறுநாளில் கடலின் அக்கரையிலே நின்றச ௨௨
னங்கள், அவருடையசீஷர் ஏறின அந்த ஒரு ப
டவேயன்றி அங்கே வேறொருபடவில்லையென்
பதையும், யேசு தம்முடைய சீஷருடனே பட
விலேறவில்லை, அவருடையசீஷர்மாத்திரம்போ
னார்களென்பதையும் அறிந்தார்கள்.–கர்த்தர்ஸ் ௨௩
தோத்திரஞ்செய்தபின்பு அவர்கள் அப்பம்புசித்
த இடத்திற்குச்சமீபமாய், தைபேரியாவிலிருந்
று வேறேபடவுகளும்வந்தன.—அப்பொழுது ௨௪
யேசுவும், அவருடைய சீஷரும் அங்கேயில்

(௪௰) அதி.௧.௰௧. (௪௨) வச.௩௪. ௧.தெச.௨.௬. (௪௪) அதி.௰௨.௪௩. ரோ.௨.௨௯. (௪௫) ரோ.௨.௰௨. (௪௬) ஆதி.௩.௰௫. உபா.௰௮.௰௫,௰௮. அப்.௨௬.௨௩.—(௬. அதி. ௧.) மத்.௪.௰௫. (௪) லேவி.௨௩.௫,௭. உபா.௰௬.௧. (௫) மத்.௰௪.௰௪. (௭) எண்.௰௧.௨௧,௨௨. (௯) ௨.இரா.௪.௪௨. (௰௪) ஆதி.௪௯.௰. உபா.௰௮.௰௫,௰௮. மத்.௰௧.௩. (௰௬) மத்.௰௪.௨௩. மாற்.௬.௪௭.

லையென்பதைச் சனங்கள்கண்டு, அவர்களும்ப
டவுகளில்ஏறி, யேசுவைத் தேடிக்கப்பர்நா
௨௫ கூமுக்குவந்தார்கள்.—கடலின் அக்கரையில் அ
வர்கள் அவரைக்கண்டபொழுது, இரபீ, நீர் எப்
௨௬ பொழுது இங்கேவந்தீரென்றுகேட்க,—யேசு
அவர்களைநோக்கி, நீங்கள் அற்புதங்களைக்கண்ட
தின் நிமித்தமல்ல, அந்த அப்பத்தைப்புசித்துத்தி
ருத்தியடைந்ததின்நிமித்தமேஎன்னைத்தேடுகிறீர்
களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
௨௭ கிறேன்.–அழிந்துபோகிறபோசனத்திற்காகவல்
ல, நித்திய சீவனுள்ளவரைக்கும் நிற்கும்போச
னத்திற்காகவே பிரயாசப்படுங்கள், அதை மனு
புத்திரன் உங்களுக்குக் கொடுப்பான்: பிதாவாகி
ய தேவன் அவனைக்குறித்து முத்திரித்தாரென்
௨௮ றார்.—அப்பொழுது அவர்கள், தேவனுக்
கேற்ற கிரியைகளை நிறைவேற்றும்படி நாங்கள்
செய்ய வேண்டுவதென்னவென்று கேட்க,—
௨௯ அவர்களுக்குத்தரமாக யேசு, தேவன் அ
னுப்பினவரை நீங்கள்விசுவாசித்துக்கொள்வதே
௩௰ தேவனுக்கேற்ற கிரியையென்றார்.–அதற்கு
அவர்கள், உம்மை விசுவாசிக்கும்படி நாங்கள்
காணத்தக்கதாக எந்த அடையாளத்தைக்காட்டுகி
௩௧ றீர், எந்தக்கிரியையைச் செய்கிறீர்;—நம்முடை
ய பிதாக்கள் வனத்திலே மன்னாவைப்புசித்தார்
கள்; எழுதியிருக்கிறபடி, "அவர்வானத்தினின்
று ஆகாரத்தை அவர்களுக்குப் புசிக்கக்கொடுத்
௩௨ தார்," என்றார்கள்.-அப்பொழுது யேசு அவர்க
ளைநோக்கி, வானத்தினின்று ஆகாரத்தை மோ
சே உங்களுக்குக்கொடுக்கவில்லை; என்பிதா வா
னத்தினின்று மெய்யான ஆகாரத்தை உங்களுக்
குத்தருகிறாரென்று மெய்யாகவே உங்களுக்குச்
௩௩ சொல்லுகிறேன்.—வானத்தினின்று இறங்கிவந்
து, உலகத்திற்குச் சீவனைக்கொடுப்பவரே தே
௩௪ வன் அருளிச்செய்யும் ஆகாரமென்றார்.—அப்
பொழுது அவர்கள், கர்த்தாவே, அந்த ஆகா
ரத்தைநித்தமும் எங்களுக்குத்தாருமென்றார்கள்.-
௩௫ யேசு அவர்களிடத்தில், நான் சீவனுள்ள ஆகா
ரம்: என்னிடத்தில்வருபவன் ஒருபொழுதும்ப
சி அடையான்; என்னிடத்தில் விசுவாசமாயி
ருக்கிறவன் ஒருபொழுதுந் தாகமடையான்.—
௩௬ நான் உங்களுக்குச் சொல்லியபிரகாரமாக, என்
௩௭ னைக்கண்டு நீங்கள் விசுவாசிக்கவில்லை.—பிதா
எனக்குக்கொடுக்கிற யாவரும் என்னிடத்திலே
வருவார்கள்; என்னிடத்தில் வருபவனை நான்
௩௮ ஒருபொழுதுந் தள்ளேன்.—நான் என்னுடைய
சித்தத்தையல்ல, என்னை அனுப்பினவருடைய
சித்தத்தையே நிறைவேற்றும்பொருட்டு வானத்
௩௯ தினின்று இறங்கிவந்தேன்.—அவர் எனக்குத்
தந்தவர்களில் ஒருவனையும் நான் இழந்துபோ

காமல், கடைசிநாளில் அவர்களை எழுப்புவதே
என்னை அனுப்பின பிதாவின் சித்தம்.—குமார ௪௰
னைக்கண்டு அவன்மேல் விசுவாசிப்பவனெவ
னோ, அவன் நித்திய சீவனைப்பெறுவதே என்
னை அனுப்பினவருடைய சித்தம். கடைசிநாளி
லே நான் அவனை உயிர்த்தெழும்பச் செய்வே
னென்றார்.-நான் வானத்தினின்றுவந்த ஆகாரமா ௪௧
யிருக்கிறேனென்று அவர் சொன்னபடியினால்,
யூதர் அவரைக்குறித்து மொறுமொறுத்து,-இவன் ௪௨
யோசேப்பின் புத்திரனாகிய யேசு அல்லவா, இ
வனுடைய பிதாவையும் மாதாவையும் அறிந்தி
ருக்கிறோமே; நான் வானத்தினின்று இறங்கிவந்
தேனென்று இவன் எப்படிச்சொல்லலாமென்
றார்கள்.—அப்பொழுது யேசு, நீங்கள் ஒருவ ௪௩
ரோடொருவர் மொறுமொறுக்கவேண்டாம்.—
என்னை அனுப்பின பிதா ஒருவனை இழுத்துக் ௪௪
கொள்ளாவிட்டால், அவன் என்னிடத்தில் வர
மாட்டான்: இழுக்கப்பட்டவனைக்கடைசி
நாளில் எழுப்புவேன்.–"எல்லாருந் தேவனா ௪௫
லே போதிக்கப்படுவார்கள்," என்று தீர்க்கதரி
சனவாக்கியங்களில் எழுதியிருக்கின்றது. ஆத
லால் பிதாவினிடத்திற் கேட்டுக் கற்றுக்கொள்
ளுகிறவனெவனோ, அவன் என்னிடத்தில் வரு
கிறான்.—தேவனிடத்தினின்று வந்தவனே ௪௬
யன்றி, வேறொருவனும்பிதாவைக்கண்டதில்லை,
அவனேபிதாவைக்கண்டான்.-என்மேல் விசுவா ௪௭
சம்வைக்கிறவனுக்கு நித்திய சீவனுண்டென்று
மெய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன்.-நா ௪௮
னே அந்தச்சீவ ஆகாரம்.—உங்கள் பிதாக்கள் ௪௯
வனத்திலே மன்னாவைப்புசித்து மரித்தார்கள்.—
வானத்தினின்று வந்த இந்த ஆகாரத்தை ஒருவன் ௫௰
புசித்தால் மரணமடையான்.—வானத்தினின் ௫௧
று இறங்கின சீவஆகாரம் நானே: இந்த ஆகா
ரத்தைப்புசிப்பவன் சதாகாலமும் உயிரோடிருப்
பான்: நான் கொடுக்கும் ஆகாரம் உலகத்தின் சீ
வனினிமித்தம் நான் கொடுக்கும் என்மாமிசமே
என்றார்.-அப்பொழுதுயூதர், இவன் தன்னுடை ௫௨
ய மாமிசத்தை எப்படி நமக்குப் புசிக்கக்கொடுப்
பானென்று தங்களுக்குள்ளே வாக்குவாதம்பண்
ணினார்கள்.–அதினால் யேசு அவர்களைநோக்கி, ௫௩
நீங்கள் மனுபுத்திரனுடைய மாமிசத்தைப்புசியா
மலும், அவனுடைய இரத்தத்தைப்பானம்பண்
ணாமலும்இருந்தால், உங்கள் உள்ளத்தில் சீவனில்
லையென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்
லுகிறேன்.—என்மாமிசத்தைப்புசித்து, என் இ ௫௪
ரத்தத்தைப்பானம்பண்ணுகிறவனுக்கு நித்திய சீ
வனுண்டு; கடைசிநாளில் நான் அவனை எழுப்பு
வேன்.—என் மாமிசமே மெய்யான போசனம், ௫௫
என் இரத்தமே மெய்யானபானம்.–என்மாமிசத் ௫௬

(௨௭) மத்.௩.௰௩. மத்.௰௭.௫. அப்.௨.௨௨. ௨.பேதுரு.௧.௰௧. (௨௯) ௧.யோவா.௩.௨௩. (௩௰) மத்.௰௨.௩௮. ௧.கொரி.௧.௨௨. (௩௧) யாத்.௰௬.௰௫. நிகி.௯.௰௫. ௧.கொரி.௰.௩. சங்.௭௮.௨௩,௨௪. (௩௫) அதி.௪.௰௪. (௩௭) மத்.௨௪.௨௩. ௨.திமோ.௨.௰௯. ௧.யோவா.௨.௰௯. (௩௮) மத்.௨௬.௩௯. (௩௯) அதி.௰.௨௮. (௪௰) அதி.௩.௰௫,௰௬. (௪௨) மத்.௰௩.௫௫. (௪௪) உன்.௧.௪. (௪௫) எசா.௫௪.௰௩. எரே.௩௧.௩௪. மீகா.௪.௨. எபி.௮.௰. (௪௬) அதி.௧.௰௮. மத்.௰௧.௨௭. (௪௭) அதி.௩.௰௬,௰௮,௩௬. (௫௰) வச.௫௧.௫௮. (௫௧) அதி.௩.௰௩. எபி.௰.௫,௰. (௫௨) அதி.௭.௪௩. (௫௩) மத்.௨௬.௨௬,௨௮. (௫௪) வச.௨௭,௪௰,௬௩. (௫௬) ௧.யோவா.௩.௨௪.

தைப்புசித்து,என்இரத்தத்தைப்பானம்பண்ணுகி
றவன் என்னிலும், நான் அவனிலும் வாசம்பண்
௫௭ ணுவதுண்டு.-என்னை அனுப்பினசீவனுள்ளபிதா
விஞல் நான் சீவித்திருக்கிறபிரகாரம், என்னைப்
௫௮ புசிக்கிறவனும் என்ஞற்சீவிப்பான்.—இதுவே
வானத்தினின்று இறங்கின ஆகாரம்: இது உங்
கள் பிதாக்கள் புசித்த மன்ஞவைப்போலல்ல, அ
வர்கள் மரித்தார்களே: இந்த அப்பத்தைப்புசிப்ப
வன் சதாகாலமும் உயிரோடிருப்பானென்ருர்.-
௫௯ கப்பர்நாகூமிலுள்ள ஆலயத்தில் அவர் உபதே
௬௰ சிக்கையில் இவைகளைச்சொன்ஞர்.—அப்பொ
ழுது அவருடைய சீஷரில் அநேகர் அவைக
ளைக்கேட்டமாத்திரத்தில், இது கடினமான உப
௬௧ தேசம்; ஆர்கேட்பார்களென்ருர்கள்.-தம்முடை
யசீஷர் அதைக்குறித்துக் குறைசொல்லுகிருர்க
ளென்பதை யேசு தமதுள்ளத்தில் அறிந்து,அவர்
களைநோக்கி, இது உங்களுக்கு இடறல்வருவிக்
௬௨ கின்றதா.—மனுபுத்திரன் தான் முன்னிருந்த
ஸ்தானத்திற்கு ஏறிப்போகிறதை நீங்கள்கண்டா
௬௩ லென்ன.—ஆவியே உயிர்ப்பிக்கிறது; மாமிசம்
ஒன்றுக்கும்உதவாது: நான் உங்களுக்குச்சொல்
லும் வாக்குகளே ஆவி, அவையே சீவன்.—
௬௪ ஆயினும் உங்களிற் சிலர் விசுவாசிக்கிறதில்லை
யென்ருர். யேசு,விசுவாசமில்லாதவர்களின்ஞ
ரென்றும், தம்மைக்காட்டிக்கொடுப்பவனின்ஞ
௬௫ னென்றும் ஆதிமுதல் அறிந்தார்.—பின்னும் அ
வர், இதினிமித்தம்ஒருவன் என்பிதாவினுடைய
அருள் பெருவிட்டால் என்னிடத்தில் வரமாட்
டானென்றுஉங்களுக்குச்சொன்னேனென்ருர்.
௬௬ அதுமுதல் அவருடைய சீஷரில் அநேகர் அ
வருடனே கூடப்போகாமல் பின்வாங்கிப்போ
௬௭ ஞர்கள்.—அப்பொழுது யேசு பன்னிருவரை
யும்நோக்கி, நீங்களும் போக விரும்புகிறீர்களா
௬௮ வென்றுகேட்க,—சீமோன்பேதுரு உத்தரமாக,
கர்த்தாவே, ஆரிடத்திற்குப்போவோம், நித்
தியசீவனைத்தரும்வாக்குகள் உம்மிடத்தில்உண்
௬௯ டு.-நீரே சீவனுள்ள தேவனுடைய குமாரஞ
கிய கிறிஸ்து என்று நாங்கள்விசுவாசித்து, நிச்
௭௰ சயித்து அறிந்திருக்கிறேமென்ருன்.—அப்பொ
ழுது யேசு, பன்னிருவராகிய உங்களைநான்தெ
ரிந்துகொள்ளவில்லையா, உங்களுக்குள்ளும் ஒ
௭௧ ருவன் பிசாசாயிருக்கிருனென்ருர்.—பன்னிரு
வரில் ஒருவஞகிய சீமோனின் புத்திரன் யூ
தாஸ்காரியோத்துத் தம்மைக்காட்டிக்கொடுப்ப
வஞயிருந்தபடியினல், அவனைக்குறித்து இப்ப
டிச்சொன்ஞர்.

## ௭. அதிகாரம்.

௧. கிறிஸ்து யெருஷலேமுக்குப்போதல்: ௰௪. தேவாலயத்திலே சனங்களைப் போதித்தல்: ௨௫. வாதிகளுக்கு உத்தரஞ்சொல்லல்: ௩௨. அவர் சொல்லிய உபதேசத்தைவிவரித்தல்: ௩௭. அவரைக்குறித்துச் சனங்கள் விசாரித்தல்: ௪௫. பிரதானஆசாரியரும் பரிசேயருங் கிறிஸ்துவைக் குறித்து வாக்குவாதஞ்செய்தல்.

அதின்பின்பு யேசு யூதர்தம்மைக்கொலைசெய் ௧
யத்தேடினபடியினலே யூதேயாநாட்டிற் சஞ்ச
ரிக்கவிரும்பாமல் கலிலேயாவிலே சஞ்சரித்து
வந்தார்.—யூதரின் கூடார உற்சவஞ் சமீபமான ௨
பொழுது,—அவருடையசகோதரர் அவரைவிசு ௩
வாசியாததிஞல் அவரைநோக்கி, நீர் செய்கிறகி
ரியைகளை உம்முடைய சீஷரும் பார்க்கும்படி,
நீர் இவ்விடம்விட்டு யூதேயாநாட்டுக்குப்போக
வேண்டும்.—பிரபலமாயிருக்கவிரும்புகிற எவ ௪
னும், அந்தரங்கத்தில்எந்தக்கிரியையையுஞ்செய்
யான்.-நீர் இப்படிப்பட்டவைகளைச் செய்தால் ௫
உம்மை உலகத்திற்குவெளிப்படுத்தவேண்டுமே
யென்ருர்கள்.-அவர்களுடனே யேசு, என்னு ௬
டையகாலம் இன்னும் வரவில்லை: உங்கள் கால
மோ எப்பொழுதும் ஆயத்தமாயிருக்கின்றது.—
உலகத்தார் உங்களைப்பகைக்கமாட்டார்கள்; அ ௭
வர்களுடைய கிரியைகள் தீமையுள்ளவைகளெ
ன்று நான் சாட்சியிடுகிறபடியினல் என்னைப்ப
கைக்கிருர்கள்.—நீங்கள் இந்த உற்சவத்துக்குப் ௮
போங்கள்:என்னுடையகாலம் நிறைவேருதபடி
யால் நான்இந்தஉற்சவத்துக்குஇப்பொழுதுபோ
கேனென்ருர்.-இவைகளை அவர்களுடன் சொல் ௯
லி, பின்னுங் கலிலேயாநாட்டிலே தங்கிஞர்.

அவருடையசகோதரர் புறப்பட்டபின்பு, அ ௰
வரும் பிரசித்தமாயல்ல, அந்தரங்கமாய் உற்சவத்
துக்குப்போஞர்.-உற்சவத்திலே யூதர் அவரைத் ௰௧
தேடி, அவர் எங்கேயென்று கேட்டார்கள்.—அ ௰௨
திஞற் சனங்களுக்குள்ளே மிகுந்த வாக்குவாத
முண்டாகி, சிலர் அவர்நல்லவரென்றும், சிலர்
அப்படியல்ல, அவன் சனங்களை வஞ்சிக்கிரு
னென்றுஞ்சொல்லிக்கொண்டார்கள்.—யூதருக் ௰௩
குப்பயந்திருப்பதிஞல்ஒருவஞகிலும் அவரைக்
குறித்துப் பிரசித்தமாய்ப்பேசத்துணியவில்லை.

பாதி உற்சவம் நடந்தபின்பு யேசு தேவால ௰௪
யத்துக்குப்போய் உபதேசம்பண்ணத்தொடங்கி
ஞர்.-யூதர் ஆச்சரியப்பட்டு, கல்லாதவஞகிய இ ௰௫
வன் எப்படிக்கல்விமாஞனென்றுசொல்ல,-
அவர்களுக்குத்தரமாக யேசு, நான் போதிக்கிற ௰௬
உபதேசம் என்னுடையதல்ல, என்னை அனுப்பி
னவருடையதாயிருக்கின்றது.-அவருடைய சித் ௰௭
தத்தை நிறைவேற்றவிரும்புகிறவனெவனே, அ
வன், இந்த உபதேசந் தேவஞலாயிற்ருே, நா
ஞய்ப்பேசுகிறேஞேவென்பதை அறிந்துகொள்
ளுவான்.-தாஞய்ப்பேசுகிறவன்தனக்கேபுகழ்ச் ௰௮

(௫௮) வச.௪௯,௫௰,௫௧. (௬௰) வச.௬௬. மத்.௰௧.௬. (௬௨) மாற்.௰௬.௰௯. அப்.௧.௯. எபே.௪.௮. (௬௩) ௨.கொரி. ௩.௬. (௬௪) வச.௩௬. அதி.௨.௨௪,௨௫. அதி.௰௩.௰௧. (௬௫) வச.௪௪,௪௫. (௬௬) வச.௬௰. (௬௮) அப்.௫.௨௰.(௬௯) மத்.௰௬.௰௬. அதி.௧.௪௯. அதி.௰௧.௨௭. (௭௰) லூக்.௬.௰௩. அதி.௰௩.௨௭.—(௭. அதி. ௧.) அதி.௫.௰௬,௰௮. (௨) லேவி.௨௩.௩௪. (௩) மத்.௰௨.௪௬. மாற்.௩.௩௧. அப்.௧.௰௪. (௫) மாற்.௨௧. (௬) அதி.௨.௪. (௭) அதி.௰௫.௰௯. அதி. ௩.௰௯. (௮) அதி.௮.௨௰. (௰௧) அதி.௰௧.௫௬. (௰௨) அதி.௯.௰௬. மத்.௨௧.௪௬. (௰௩) அதி.௯.௨௨. (௰௫) மத்.௰௩. ௫௪. அப்.௨.௭. (௰௬) அதி.௩.௰௧. (௰௭) அதி.௮.௪௩. (௰௮) அதி.௫.௪௧. அதி.௮.௫௰.

சியைத் தேடுகிறான்: தன்னை அனுப்பினவருக்
குப்புகழ்ச்சிதேடுகிறவன் சத்தியவாதி, அவனி
௰௯ டத்தில்அநீதமிராது.-மோசேநியாயப்பிரமாணத்
தைஉங்களுக்குக்கொடுக்கவில்லையா,ஆனாலும்
உங்களில் ஒருவனும் நியாயப்பிரமாணத்தைக்
காத்துநடக்கிறதில்லை; என்னைக்கொலைசெய்யத்
௨௰ தேடவேண்டியதென்னவென்றார்.—அதற்குச் ச
னங்கள் உத்தரமாய், நீ பிசாசுபிடித்தவன்; யா
வன் உன்னைக்கொலைசெய்யத்தேடுகிறானென்று
௨௧ சொல்ல,—யேசு அவர்களுக்குத்தரமாக, நான்
ஒருகிரியையைச்செய்தேன், நீங்கள் எல்லாரும்
௨௨ ஆச்சரியப்படுகிறீர்கள்.—மோசே உங்களுக்குவி
ருத்தசேதனத்தை ஏற்படுத்தினான்; அது மோசே
யினாலாயிற்றோ,அல்ல, பிதாக்களினாலாயிற்றே;
நீங்கள் ஓய்வுநாளிலும்மனுஷருக்கு விருத்தசே
௨௩ தனஞ் செய்துவருகிறீர்கள்.—மோசேயின் கட்ட
ளையைமீறாதபடி,ஒருமனுஷன்ஓய்வுநாளிலும்வி
ருத்தசேதனத்தைப்பெறலாமென்றால், நான்ஓய்
வுநாளில்ஒருமனுஷனைமுழுவதுஞ்சொஸ்தமாக்
கினதினிமித்தம்என்மேற்குரோதங்கொள்ளுகிற
௨௪ தென்ன.—வெளித்தோற்றத்துக்கேற்கத்தீர்ப்புச்
செய்யாமல்,உண்மைக்கேற்கத்தீர்ப்புச்செய்யுங்
௨௫ களென்றார்.—அப்பொழுது யெரூஷலேமியரிற்
சிலர், இவனையல்லவா கொலைசெய்யத்தேடுகி
௨௬ றார்கள்.—பாருங்கள், இவன் பயமின்றிப்பேசு
கிறான், ஆகிலும் ஒருவனும் இவனுக்குஒன்றுஞ்
சொல்லவில்லை. இவன் கிறிஸ்துவென்று அ
திபதிகள் நிச்சயித்து அறிந்துவிட்டார்களா.—
௨௭ இவன் வந்தஇடத்தை நாம் அறிந்திருக்கிறோம்:
கிறிஸ்து வரும்பொழுது, அவர் வரும் இடத்
தை ஒருவரும் அறியமாட்டாரே என்றார்கள்.—
௨௮ அப்பொழுது யேசு, தேவாலயத்தில்உபதேசிக்
கையிற் சத்தமிட்டு,நீங்கள் என்னை அறிந்திருக்கி
றீர்கள், நான் வந்த இடத்தையும் அறிந்திருக்கி
றீர்கள்: நானாக வரவில்லை, என்னை அனுப்பின
௨௯ வர்சத்தியமுள்ளவர், அவரைஅறியீர்கள்.-நானோ
அவரை அறிந்திருக்கிறேன்: அவரிடத்திலிருந்
துவந்தேன், அவர் என்னை அனுப்பினாரென்றார்.-
௩௰ அப்பொழுது அவர்கள் அவரைப்பிடிக்க வகை
தேடினார்கள்: அவருடையநேரம் வராதபடியால்
௩௧ ஒருவனும் அவர்மேற் கைவைக்கவில்லை.-சனங்
களில் அநேகர் அவர்மேல் விசுவாசம் வைத்து,
கிறிஸ்து வரும்பொழுது, இவர்செய்கிற அற்பு
தங்களிலும் அதிகமானவைகளை அவர் செய்வா
ராவென்றார்கள்.
௩௨ சனங்கள் அவரைக்குறித்துவாக்குவாதம்பண்
ணுகிறதைப்பரிசேயர்கேட்டபொழுது, அவர்க
ளும் பிரதானஆசாரியரும் அவரைப் பிடித்துக்
கொண்டுவரும்படிசேவகரைஅனுப்பினார்கள்.—
அப்பொழுது யேசு அவர்களிடத்தில், நான்இ ௩௩
னிச்சிலகாலம்மாத்திரம்உங்களுடனே இருந்து,
பின்பு என்னை அனுப்பினவரிடத்திற்குப்போ
வேன்.—நீங்கள் என்னைத்தேடுவீர்கள், ஆயினும் ௩௪
என்னைக் காணமாட்டீர்கள்: நான் இருக்குமி
டத்துக்கு நீங்கள் வரமாட்டீர்களென்றார்.—அப் ௩௫
பொழுது யூதர், இவனை நாங்காணாதபடி இவ
னெங்கேபோவான்; கிரேக்கருக்குள்ளே சிதறி
யிருக்கிறவர்களிடத்திற்குப்போய், கிரேக்கருக்
கு உபதேசம்பண்ணுவானோ.—என்னைத்தேடுவீர் ௩௬
கள், ஆனாலும் என்னைக் காணமாட்டீர்கள்:
நான் இருக்குமிடத்திற்கு நீங்கள் வரமாட்டீர்க
ளென்று இவன்சொல்லிய இவ்வாக்கின் கருத்
தென்னவென்று தங்களுக்குள்ளே பேசத்தொ
டங்கினார்கள்.—பின்பு உற்சவத்தின் கடைசிநா ௩௭
ளாகிய பிரதானநாளில், யேசு நின்று சத்த
மிட்டு, ஒருவன் தாகமாயிருந்தால், என்னிடத்
தில்வந்து பானம்பண்ணக்கடவன்.—என்மேல் ௩௮
விசுவாசம் வைக்கிறவனெவனோ, அவன் உள்
ளத்தினின்று, வேதநூலிற்சொல்லியபிரகாரஞ் சீ
வநீருள்ள நதிகள் பெருகுமென்றார்.-தம்மிடத் ௩௯
தில் விசுவாசம்வைத்திருப்பவர்கள்பெறும்ஆவி
யைக்குறித்து இப்படிச்சொன்னார்: இதுவரைக்
கும் யேசு மகிமைபெறாததினால் அந்தப்பரிசுத்
தஆவி அளிக்கப்படவில்லை.
சனங்களில் அநேகர் அவ்வாக்கைக்கேட்ட ௪௰
பொழுது,இவர் சத்தியமாய்த் தீர்க்கதரிசியேயெ
ன்றார்கள்.-சிலர், இவர் கிறிஸ்து என்றார்கள். ௪௧
அதற்குவேறுசிலர் கிறிஸ்து கலிலேயாவினின்
று வருவாரா.—தாவீதின்சந்ததியிலும், தாவீதிருந் ௪௨
தபேத்லகேமூரிலுமிருந்து கிறிஸ்துத் தோன்று
வாரென்று வேதத்திலே சொல்லியிருக்கவில்லை
யாவென்றார்கள்.—இவ்விதமாய் அவரைக்குறித் ௪௩
துச் சனங்களுக்குள்ளே பிரிவுண்டாயிற்று.—அ ௪௪
வர்களிற் சிலர் அவரைப்பிடிக்க விரும்பினார்
கள்; ஆனாலும் ஒருவரும் அவர்மேற் கைவைக்
கவில்லை.
பின்பு அந்தச்சேவகர் பிரதான ஆசாரியரிடத் ௪௫
திற்கும் பரிசேயரிடத்திற்குந் திரும்பிவந்தபொ
ழுது, அவர்கள் இவர்களைநோக்கி, எதினாலே
நீங்கள் அவனைக் கொண்டுவரவில்லையென்று
கேட்க,—சேவகர் உத்தரமாக, அந்தமனுஷன் ௪௬
பேசுகிறதுபோல ஒருவரும் ஒருபொழுதும் பே
சினதில்லையென்றார்கள்.—அதற்குப் பரிசேயர், ௪௭
நீங்களும் வஞ்சிக்கப்பட்டீர்களா.—பெரியோர் ௪௮

(௰௯) யாத்.௨௪.௩. அதி.௧.௰௭. அப்.௭.௩௮. மத்.௰௨.௰௪. அதி.௫.௰௬,௰௮. (௨௰) அதி.௮.௪௮,௫௨. (௨௨) லேவி.௰௨.௩. ஆதி.௰௭.௰. (௨௩) அதி.௫.௮,௯,௰௬. (௨௪) உபா.௧.௰௬,௰௭. நீதி.௨௪.௨௩. யாக்.௨.௧. (௨௬) வச.௪௮.(௨௭) மத்.௰௩.௫௫. (௨௮) அதி.௮.௰௪. அதி.௫.௩௨,௪௩. ரோ.௩.௪. அதி.௧.௰௮. (௨௯) மத்.௰௧.௨௭. (௩௰) மாற்.௰௧.௰௮. (௩௧) மத்.௰௨.௨௩. (௩௩) அதி.௰௬.௰௬. (௩௪) ஓசி.௫.௬. அதி.௮.௨௧. (௩௫) ஏசா.௰௧.௰௨. யாக்.௧.௧. ௧.பேதுரு.௧.௨. (௩௭) லேவி.௨௩.௨௬. ஏசா.௫௫.௧. அதி.௬.௩௫. லேவி.௨௨.௰௭.(௩௮)உபா.௰௮.௰௫. நீதி.௰௮.௪. ஏசா.௰௨.௩. ஏசா.௪௪.௩. (௩௯) ஏசா.௪௪.௩. யோவே.௨.௨௮. அதி.௰௬.௭. அப்.௨.௰௭,௩௩,௩௮. அதி.௰௨.௰௬. அதி.௰௬.௭. (௪௰) உபா.௰௮.௰௫,௰௮. அதி.௧.௨௧. அதி.௬.௰௪.(௪௧)அதி.௪.௪௨. அதி.௬.௬௯. வச.௫௨. அதி.௧.௪௬.(௪௨)சங்.௱௩௨.௰௧. எரே.௨௩.௫. மீகா.௫.௨. ௧.சாமு.௰௬.௧,௪. (௪௩) வச.௰௨. அதி.௯.௰௬.(௪௪) வச.௩௰. (௪௬) மத்.௭.௨௯. (௪௮) அதி.௰௨.௪௨. அப்.௬.௭. ௧.கொரி.௧.௨௰,௨௬.

களிலாவது, பரிசேயரிலாவது ஒருவனாயினும்
௪௯ அவன்மேல் விசுவாசித்ததுண்டா.—வேதத்தை
அறியாத இந்தச்சனங்கள் சபிக்கப்பட்டவர்க
௫௰ ளென்றார்கள்.—இராத்திரிகாலத்தில் யேசுவி
னிடத்தில் வந்த நிக்கோதேமு அவர்களுடன்
௫௧ இருந்தான்.—அவன் அவர்களை நோக்கி, ஒரு
மனுஷன் சொல்வதைக் கேட்டு, அவன்செய்வ
தை அறிந்துகொள்ளுகிறதற்குமுன்னமே, நம்
முடைய நியாய சாஸ்திரம் அவனைத் தண்ட
௫௨ னைக்குட்படுத்தலாமாவென்று கேட்க,—அவர்
கள் உத்தரமாக அவனைநோக்கி, நீருங் கலிலேய
னா, நீர் ஆராய்ந்துபாரும்: கலிலேயாவினின்று
ஒரு தீர்க்கதரிசியுந் தோன்றவில்லையேயென்றார்
௫௩ கள்.-பின்பு ஒவ்வொருவருந் தங்கள் தங்கள்வீடு
களுக்குப்போனார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. விபசாரஞ்செய்த ஸ்திரியை விடுவித்தல்: ௰௨. கிறிஸ்துத் தாம் உலகத்துக்கொளியென்று தெரிவித்தல்: ௨௧. யூதரோடே வாதானுவாதஞ் செய்தல்: ௩௰. ஆபிரகாமைக்குறித்துப் பேசல்: ௪௮. தாம் சுத்தமுடையவரென்றுகாட்டித் தேவாலயத்தினின்றும் புறப்படல்.

௨ யேசு ஒலீவமலைக்குப்போய்,–மறுநாட்காலை
யில் தேவாலயத்துக்குத் திரும்பிவந்தார், சனங்
களெல்லாரும் அவரிடத்திற் சேர்ந்தார்கள்; அ
வர் உட்காந்து, அவர்களுக்கு உபதேசம்பண்ணி
௩ னார்.—அப்பொழுது விபசாரத்திற் கண்டுபிடிக்
கப்பட்ட ஒருஸ்திரியை வேதபாரகரும் பரிசே
யரும் அவரிடத்திற்கொண்டுவந்து, நடுவிலே நி
௪ றுத்தி,—அவரைநோக்கி, போதகரே, இந்தஸ்தி
௫ ரி விபசாரத்திற் பிடிக்கப்பட்டாள்.–இப்படிப்
பட்டவர்கள் கல்லெறியப்படவேண்டுமென்று
மோசே நியாயசாஸ்திரத்தில் நமக்குக் கட்டளை
யிட்டிருக்கிறாரே. நீர் என்னசொல்லுகிறீரென்
௬ றார்கள்.—அவர்மேற் குற்றஞ் சுமத்துதற்குக்கா
ரணமாக அவரைச்சோதிக்கும்படி அவர்களிப்
படிக்கேட்டார்கள். யேசு குனிந்து, விரலினா
௭ லே தரையிலெழுதினார்.—அவர்கள் மேலும்மே
லும் அவரிடத்திற் கேட்டபொழுது, அவர் நி
மிர்ந்து, அவர்களைநோக்கி, உங்களிற் பாவமில்
லாதவனெவனோ, அவன் முன்பு கல்லை இவள்
௮ மேல் எறியலாமென்று சொல்லி,—பின்புங் கு
௯ னிந்து தரையிலெழுதினார்.—அதைக் கேட்ட
வர்கள் தங்கள்தங்கள் மனச்சாட்சியாற் க
டிந்துகொள்ளப்பட்டு, முதியோர்முதல், இளை
ஞர்வரைக்கும் ஒருவனொருவனாக எல்லாரும் பு
றப்பட்டுப்போனார்கள்: யேசு தனித்திருந்தார்,
௰ அந்தஸ்திரியும் நடுவிலேநின்றாள்.—யேசு நி
மிர்ந்து, அந்த ஸ்திரியையே யன்றி வேறொரு
வரையுங் காணாமையால், அவர் அவளைநோக்கி,
ஸ்திரியே, உன்மேற் குற்றஞ்சுமத்தினவர்கள்
எங்கே; ஒருவனாகிலும் உன்னைத் தண்டனைக்
குள்ளாகத் தீர்க்கவில்லையாவென்று கேட்க,-அ ௰௧
வள், கர்த்தாவே, ஒருவனுமில்லையென்றாள்.
யேசு அவளைநோக்கி, நானும் உன்னைத் தண்
டனைக்குள்ளாகத் தீர்க்கமாட்டேன்: நீ போ, இ
னிப் பாவஞ்செய்யாதேயென்றார்.
யேசு திரும்பவுஞ் சனங்களைநோக்கி, நான் ௰௨
உலகத்தின் ஒளி: என்னைப்பின்பற்றுகிறவன் இ
ருளிலே நடவாமல் சீவனாகிய ஒளியைப்பெற்
றுக்கொள்ளுவானென்றார்.—பரிசேயர் அவரை ௰௩
நோக்கி, நீரே உம்மைக்குறித்துச்சாட்சியிடுகிறீர்;
ஆதலால் உம்முடையசாட்சி மெய்யல்லவென்
றுசொல்ல,—யேசு அவர்களுக்குத்தரமாக, என் ௰௪
னைக்குறித்து நானே சாட்சியிட்டாலும், என்
சாட்சிமெய்யாயிருக்கின்றது: நான் வந்த இடத்
தையும், நான் போகுமிடத்தையும் அறிந்திருக்
கிறேன்; நீங்களோ, நான் வந்த இடத்தையும்,
நான்போகுமிடத்தையும் அறியீர்கள்.—நீங்கள் ௰௫
மாமிசத்திற்கேற்கத் தீர்ப்புச் சொல்லுகிறீர்கள்;
நான் ஒருவனையுங்குறித்துத் தீர்ப்புச்சொல்லுகி
றதில்லை.—நான்மாத்திரமல்ல, நானும் என்னை ௰௬
அனுப்பினபிதாவும் ஒன்றாயிருக்கிறபடியினால்,
நான் தீர்ப்புச்சொன்னால் என்னுடைய தீர்ப்
புச்சத்தியம்.—இரண்டுபேருடையசாட்சி அங் ௰௭
கிகரித்துக்கொள்ளத்தகுமென்று உங்கள் நியாய
சாஸ்திரத்தில் எழுதியிருக்கின்றது.—நான் என் ௰௮
னைக்குறித்துச் சாட்சியிடுகிறேன், என்னை அ
னுப்பின பிதாவும் என்னைக்குறித்துச்சாட்சியிடு
கிறாரென்றார்.—அப்பொழுது அவர்கள் அவரை ௰௯
நோக்கி, உம்முடைய பிதா எங்கேயென்றுகேட்
க, யேசு உத்தரமாக, நீங்கள் என்னையும் என் பி
தாவையும் அறியீர்கள்: என்னை அறிந்தீர்களா
னால், என் பிதாவையும் அறிந்திருப்பீர்களென்
றார்.–தேவாலயத்தில் யேசு உபதேசம்பண்ணிப் ௨௰
பொக்கிஷசாலையிலிருந்தபொழுது, இவ்வாக்கு
களைச்சொன்னார்: அவருடைய நேரம் வராதப
டியால், ஒருவரும் அவரைப்பிடிக்கவில்லை.—
பின்பு யேசு அவர்களைநோக்கி, நான் போகி ௨௧
றேன், நீங்கள் என்னைத்தேடுவீர்கள், உங்கள்
பாவங்களில் மரிப்பீர்கள்: நான்போகுமிடத்திற்
கு நீங்கள் வரமாட்டீர்களென்றார்.—அப்பொழு ௨௨
து யூதர், இவன், நான்போகுமிடத்திற்கு நீங்
கள் வரமாட்டீர்களென்கிறானே, தன்னைத்தான்
கொலைசெய்வானோவென்றுபேசிக்கொண்டார்
கள்.–அவர் அவர்களைநோக்கி, நீங்களோ கீழே ௨௩
யுள்ளவர்கள்; நானோ மேலிருந்துவந்தவன்: நீங்
கள்இப்பிரபஞ்சத்தார்; நானோ இப்பிரபஞ்சத்தா
னல்ல.–ஆகையால் நீங்கள் உங்கள் பாவங்களி ௨௪
லேமரணமடைவீர்களென்று நான்உங்களுக்குச்

(௫௰)அதி.௩.௨.(௫௧)உபா.௧.௰௭. (௫௨) ஏசா.௯.௧,௨. அதி.௧.௪௬. வச.௪௧.—(௮.அதி.௫.) லேவி.௨௰.௰. உபா.௰௭.௭. ரோ.௨.௧.(௯)ரோ.௨.௨௨. (௰௧) லூக்.௯.௫௬. (௰௨) அதி.௧.௪,௫,௯. அதி.௩.௰௯. (௰௩) அதி.௫.௩௧. (௰௪) அதி.௭.௨௮. (௰௫) அதி.௭.௨௪. அதி.௩.௰௭. (௰௬) அதி.௰௬.௩௨. (௰௭) உபா.௰௭.௬. மத்.௰௮.௰௬. ௨.கொரி.௰௩.௧. எபி.௰.௨௮. (௰௮) அதி.௫.௩௭. (௰௯) அதி.௰௬.௩. அதி.௰௪.௭. (௨௰) மாற்.௰௨.௪௧. அதி.௭.௩௰. அதி.௭.௮. (௨௧) அதி.௭.௩௪. வச.௨௪. (௨௩) அதி.௩.௩௧. அதி.௰௫.௰௯. ௧.யோவா.௪.௫. (௨௪) வச.௨௧. மாற்.௰௬.௰௬.

சொன்னேன்: நானே அவரென்று நீங்கள் விசு
வாசியாவிட்டால் உங்கள் பாவங்களிலே மர
௨௫ ணமடைவீர்களென்றார்.—அதற்கு அவர்கள், நீ
யாவனென்றுகேட்க, யேசு அவர்களைநோக்கி,
ஆதிமுதல் நான் உங்களுக்குச்சொன்னபடியி
௨௬ ருக்கிறவனே.—நான் உங்களைக்குறித்துப்பேசி,
நியாயஞ்சொல்லுவதற்கு அநேககாரியங்களுண்
டு: என்னை அனுப்பினவர்சத்தியமுள்ளவர்; நான்
அவரிடத்திற் கேள்விப்பட்டவைகளையே உல
௨௭ கத்தாருக்குச்சொல்லுகிறேனென்றார்.—அவர் பி
தாவைக்குறித்துப்பேசினாரென்று அவர்கள் அறி
௨௮ யாதிருந்தார்கள்.-ஆதலால் யேசு அவர்களைநோக்
கி, நீங்கள் மனுபுத்திரனை உயர்த்தினபின்பு, என்
னையே அவரென்றும், நானாக ஒன்றுஞ்செய்யா
மல் என்பிதா எனக்குப்போதித்தபடியே இவை
௨௯ களைச்சொன்னேனென்றும் அறிவீர்கள்.—என்
னை அனுப்பினவர் என்னோடேயிருக்கிறார்: பி
தாவுக்குப்பிரியமானவைகளை நான் எப்பொழு
தும் செய்கிறபடியால், அவர் என்னைத் தனி
௩௰ யே விடவில்லையென்றார்.—இவைகளை அவர்
சொல்லுகையில், அநேகர் அவரிடத்தில் விசுவா
௩௧ சம் வைத்தார்கள்.—ஆதலால் யேசு தம்மைவிசு
வாசித்த யூதரைநோக்கி, நீங்கள் என்னுடைய
உபதேசத்திலே நிலைத்திருந்தால் மெய்யாய் என்
௩௨ சீஷராகி,—சத்தியத்தை அறிவீர்கள், சத்தியமே
உங்களைவிடுதலையாக்குமென்றார்.

௩௩ அவர்கள் உத்தரமாக, நாங்கள் ஆபிரகாமின்
சந்ததியார், நாங்கள் ஒருபொழுதும் ஒருவனுக்
கும் அடிமைகளாயிருக்கவில்லையே: அப்படி
யிருக்க, நீங்கள் விடுதலையாவீர்களென்று நீ எப்
௩௪ படிச்சொல்லலாமென்றார்கள்.—யேசு அவர்க
ளுக்குத்தரமாக, பாவத்தைச் செய்கிறவன் எவ
னும், பாவத்துக்கடிமையென்று மெய்யாகவே
௩௫ உங்களுக்குச் சொல்லுகிறேன்.—அடிமையான
வன் என்றைக்கும் வீட்டிலேதங்கான்: குமார
௩௬ னே என்றைக்குந் தங்குவான்.—ஆதலால் குமா
ரன் உங்களை விடுதலையாக்கினால், மெய்யாய்வி
௩௭ டுதலையாவீர்கள்.-நீங்கள் ஆபிரகாமின் சந்ததியா
ரென்று நான் அறிந்திருக்கிறேன்: ஆனாலும் என்
உபதேசம் உங்களுள்ளத்தில் இடம்பெறாதபடி
யால், என்னைக்கொலைசெய்யத்தேடுகிறீர்கள்.—
௩௮ நான் என்பிதாவினிடத்திலே கண்டதைப்பே
சுகிறேன்: நீங்களும் உங்கள் பிதாவினிடத்தி
௩௯ லே கண்டதைச் செய்கிறீர்களென்றார்.—அவர்
கள் உத்தரமாக, அவரைநோக்கி, ஆபிரகாமே
எங்கள்பிதாவென்று சொல்ல, யேசு, நீங்கள்
ஆபிரகாமின்பிள்ளைகளானால், ஆபிரகாம் செய்
௪௰ தகிரியைகளின்படி செய்வீர்களே.—தேவனி
டத்திற் கேள்விப்பட்டசத்தியத்தை உங்களுக்
குத் தெரிவித்தவனாகிய என்னைக் கொலைசெய்
யத் தேடுகிறீர்கள்: ஆபிரகாம் இப்படிச்செய்ய
வில்லையே.—நீங்கள் உங்கள் பிதாவின்கிரியை ௪௧
களைச் செய்கிறீர்களென்று சொல்ல, அவர்கள்,
நாங்கள் வேசைமார்க்கத்திற் பிறந்தவர்களல்ல;
ஒருவரே எங்கள் பிதா, தேவனே அவரென்
றார்கள்.-யேசு அவர்களைநோக்கி, நான் தேவ ௪௨
னிடத்திலிருந்து புறப்பட்டுவந்தேன்; நானா
கவரவில்லை, அவரே என்னை அனுப்பினார்: ஆகை
யால் தேவன் உங்கள் பிதாவாயிருந்தால் என்
னிடத்தில் அன்புவைப்பீர்கள்;-நீங்கள் எதினால் ௪௩
என்வாக்கை அறியவில்லை, என்வாக்கைக்கேட்
க மனமில்லாதிருப்பதினாலல்லவோ.—நீங்கள் ௪௪
உங்கள் பிதாவாகிய பிசாசினால் தோன்றினீர்
கள், உங்கள்பிதாவின் இச்சையை நிறைவேற்று
வீர்கள். ஆதிமுதலாய்அவன் கொலைபாதகன், அ
வனுள்ளத்திற் சத்தியமில்லாததினால், அவன் சத்
தியத்தில் நிலைநிற்கவில்லை. அவன் பொய்சொல்
லுகிறபொழுது தன்சொந்தத்திலெடுத்துப்பேசுகி
றான்: அவன், பொய்யனும் பொய்யின் பிதாவுமா
யிருக்கிறான்.—நான் உங்களுக்குச் சத்தியத் ௪௫
தைச்சொல்லுகிறபடியினாலே நீங்கள் என்னைவி
சுவாசிக்கவில்லை.—என்னிடத்திற் பாவமுண் ௪௬
டென்று உங்களில் யாவன் சாட்சியிடுவான்;
நான் சத்தியத்தைச்சொல்லியிருக்க, நீங்கள் எதி
னால் என்னை விசுவாசிக்கவில்லை.—தேவனா ௪௭
லுண்டானவன் தேவனுடைய வாக்குகளுக்
குச் செவிகொடுப்பான்: நீங்கள் தேவனுக்
கேற்காதவர்கள், ஆதலாற் செவிகொடுக்கமாட்டீ
ர்களென்றார்.-அப்பொழுது யூதர் அவரைநோக் ௪௮
கி, உன்னை ஷமாரியனென்றும், பேய்பிடித்தவ
னென்றும் நாங்கள் நியாயமாய்ச்சொல்லுகிறோ
மல்லவாவென்றுசொல்ல,—யேசு, நான் பேய்பி ௪௯
டித்தவனல்ல; நான் என்பிதாவைக் கனம்பண்
ணுகிறேன், நீங்கள் என்னைக் கனவீனம்பண்
ணுகிறீர்கள்.—நான் தற்புகழ்ச்சியைத்தேடுகிற ௫௰
தில்லை: தேடி நியாயஞ்செய்பவர் ஒருவர் இ
ருக்கிறார்.—என்வாக்கைக் காத்து நடக்கிறவ ௫௧
னெவனோ, அவன் ஒருபொழுதும் மரணத்தைக்
காணானென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்
லுகிறேனென்றுசொல்ல,—யூதர் அவரைநோக் ௫௨
கி, நீ பேய்பிடித்தவனென்று இப்பொழுது அறி
கிறோம். ஆபிரகாமுந் தீர்க்கதரிசிகளும் மரித்தார்
கள்; என் வாக்கைக்காத்துநடக்கிறவனெவனோ,
அவன் ஒருபொழுதும் மரணத்தை அனுபவியா
னென்கிறாய்.—எங்கள் பிதாவாகிய ஆபிரகாமி ௫௩
லும் நீ பெரியவனா, அவரும் மரணமடைந்தார்;

(௨௬)அதி.௭.௨௮. அதி.௩.௩௨.(௨௮)அதி.௩.௰௪. ரோ.௧.௪. அதி.௫.௰௯,௩௰. அதி.௩.௰௧.(௨௯)அதி.௰௪.௰,௰௧. வச.
௰௬. அதி.௪.௩௪. (௩௰) அதி.௭.௩௧. (௩௨) ரோ.௬.௰௪,௰௮,௨௨. ரோ.௮.௨. யாக்.௧.௨௫. யாக்.௨.௰௨. (௩௩) லேவி.
௨௫.௪௨. மத்.௩.௯.(௩௪)ரோ.௬.௰௬,௨௰. ௨.பேதுரு.௨.௰௯.(௩௫)கலா.௪.௩௰.(௩௬)ரோ.௮.௨. கலா.௫.௧.(௩௭)அதி.
௭.௰௯.(௩௮)அதி.௩.௩௨. (௩௯) மத்.௩.௯. ரோ.௨.௨௮. ரோ.௯.௭. கலா.௩.௭,௨௯.(௪௰)வச.௨௬,௩௭,.(௪௧)ஏசா.௬௩.
௰௬. மல்.௧.௬. (௪௨) ௧.யோவா.௫.௧. அதி.௰௬.௨௭. அதி.௰௭.௮,௨௫. அதி.௫.௪௩. அதி.௭.௨௮,௨௯.(௪௩)அதி.௭.
௰௭. (௪௪)மத்.௰௩.௩௮. ௧.யோவா.௩.௮. யூதா.௭.(௪௭)அதி.௰.௨௬,௨௭. ௧.யோவா.௪.௬. (௪௮) அதி.௭.௨௰. அதி.
௰.௨௰. வச.௫௨. (௫௰) அதி.௫.௪௧. அதி.௭.௰௮. (௫௧) அதி.௫.௨௪. அதி.௰௧.௨௬. (௫௨) சக.௧.௫. எபி.௰௧.௰௩.

தீர்க்கதரிசிகளும் மரணமடைந்தார்கள்: நீ உன்
னை எப்படிப்பட்டவனாக்குகிறாயென்றார்கள்.–
௫௪ யேசு உத்தரமாக, நான் என்னைக்கனம்பண்ணி
னால் அந்தக்கனம் அபத்தமாகும்: என்பிதாவே
என்னைக் கனம்பண்ணுகிறார்; அவரை நீங்கள்
உங்கள் தேவனென்று சொல்லுகிறீர்கள்.—
௫௫ நீங்கள் அவரை அறியவில்லை: நான் அவரை அ
றிந்திருக்கிறேன்: அவரை நான் அறியேனென்
றேனாகில், உங்களைப்போல நானும் பொய்ய
னாவேன்: அவரை நான் அறிந்து, அவருடை
௫௬ யவாக்கைக் காத்து நடக்கிறேன்.—உங்கள் பி
தாவாகிய ஆபிரகாம் என் நாளைக்காண அபே
ட்சித்துக் களிகூர்ந்தான்: அதைக்கண்டு சந்
௫௭ தோஷப்பட்டானென்றார்.–அப்பொழுது யூதர்
அவரைநோக்கி, உனக்கு ஐம்பது வயதில்லை
யே, நீ ஆபிரகாமைக் கண்டாயாவென்று கேட்
௫௮ க,—யேசு அவர்களுடனே, ஆபிரகாம் இருந்த
தற்குமுன்னும் நான் இருக்கிறேனென்று மெய்
யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.-
௫௯ அப்பொழுது அவர்கள் அவர்மேல் எறியும்படி
கற்களை எடுக்க, யேசு மறைந்து, அவர்கள் நடு
வேசென்று, தேவாலயத்தைவிட்டுப்போனார்.

## ௯. அதிகாரம்.

௧. குருடனைச்சொஸ்தப்படுத்தல்: ௮. அதைக்கு
றித்துச்சனங்கள் ஆச்சரியப்படல்: ௰௩. குருட
னைப்பரிசேயரிடத்திற் கொண்டுபோதல்: ௰௮.
அவன் பிதா மாதா சாட்சியிடல்: ௨௪. பரிசே
யர் அக்காரியத்தைவிசாரித்தல்: ௩௫. தள்ளப்
பட்டகுருடன் கிறிஸ்துவைச்சந்தித்தல்.

யேசு அப்புறம்போகையில், பிறவிக்குருடனா
௨ கிய ஒருமனுஷனைக்கண்டார்.—அவருடையசீ
ஷர் அவரைநோக்கி, இரபீ, இவன் குருடனாய்ப்
பிறக்க, இவனோ, இவனுடையபெற்றாரோ, ஆர்
௩ பாவஞ்செய்தார்களென்றுகேட்க,-யேசு உத்த
ரமாக, இவன்செய்த பாவத்தினாலுமல்ல,இவனு
டைய பெற்றார் செய்தபாவத்தினாலுமல்ல, தே
வனுடைய கிரியைகள் இவனிடத்திற் காண
௪ ப்படுவதற்காயிற்று.—பகற்காலமிருக்குமளவும்
நான் என்னை அனுப்பினவருடைய கிரியைக
ளைச்செய்யவேண்டும்; ஒருவனுங் கிரியைசெய்
௫ வதற்கியலாத இராக்காலம்வருகின்றது.–நான்உ
லகத்தில் இருக்கும்வரைக்கும் உலகத்திற்கு ஒளி
௬ யாயிருக்கிறேனென்று,–இப்படி அவர்சொல்லி,
பின்பு தரையிலேதுப்பி, உமிழ்நீரினாற் சேறுண்
டாக்கி, அந்தச்சேற்றைக் குருடனுடைய கண்
௭ களின்மேற்பூசி,–நீபோய், சிலோவாக்குளத்திற்
கழுவென்றார், சிலோவா வென்பதற்கு அனுப்
பப்பட்டவனென்றருத்தமாம். அவன்போய்க்க
ழுவி, பார்வையடைந்து, திரும்பிவந்தான்.
௮ பின்பு அயலாரும், அவன் குருடனாயிருக்
கமுன் அவனைக்கண்டிருந்தவர்களும் அவனைப்
பார்த்து, பிச்சைகேட்டுக்கொண்டிருந்தவன் இ
வனல்லவாவென்றார்கள்.—சிலர், அவன்இவன் ௯
தானென்றார்கள்: வேறுசிலர் இவன் அவனைப்
போலிருக்கிறானென்றார்கள்: இவனோ, நா
னே அவனென்றான்.—அப்பொழுது அவர்கள் ௰
அவனைநோக்கி, உன்கண்கள் எப்படித்திறக்கப்
பட்டனவென்று வினவ,—அவன் உத்தரமாக, ௰௧
யேசுவென்னும் நாமமுள்ள ஒருவர் சேறுண்
டாக்கி, என்கண்களின்மேற் பூசி, நீ போய்ச் சி
லோவாக்குளத்திலே கழுவென்றுசொல்ல, நான்
போய்க்கழுவிப்பார்வையடைந்தேனென்றான்.-
அப்பொழுது அவர்கள் அந்தமனுஷனெங்கே ௰௨
யென்றுகேட்க,அவன்,நான்அறியேனென்றான்.
பின்பு முன் குருடனாயிருந்தவனை அவர்கள் ௰௩
பரிசேயரிடத்திற்குக் கொண்டுபோனார்கள்.—
யேசு சேறுண்டாக்கி, அவனுடையகண்களைத் ௰௪
திறந்தநாள் ஓய்வுநாளாயிருந்தது.—ஆதலாற் பரி ௰௫
சேயரும் அவனைநோக்கி, நீ எப்படிப்பார்வை
யடைந்தாயென்றுகேட்க, அதற்கு அவன், அவர்
சேற்றை என் கண்களின்மேல் இட்டார், நான்
கழுவினேன், இப்பொழுது காண்கிறேனென்
றான்.—அதினாற் பரிசேயரிற் சிலர், அந்த மனு ௰௬
ஷன் ஓய்வுநாளைக் கைக்கொள்ளாமலிருக்கிற
படியால், அவன் தேவனாலானவனல்லவென்
றார்கள். வேறுசிலர், பாவியாகிய ஒருவன் இவ்
வித அற்புதங்களைச் செய்வதெப்படியென்றார்
கள்;அவர்களுக்குள்ளேபிரிவுண்டாயிற்று.-பின் ௰௭
னும் அவர்கள் குருடனாயிருந்தவனைநோக்கி, அ
வன் உன்கண்களைத் திறந்ததினால் அவனைக்கு
றித்து நீ என்னசொல்லுகிறாயென்றுவினவ, அ
வன், அவர் ஒரு தீர்க்கதரிசியென்றான்.–பார்வை ௰௮
யடைந்தவனுடைய பெற்றாரைஅழைத்து விசா
ரிக்குமளவும், அவன் பிறவிக்குருடனாயிருந்து,
பின்பு பார்வையடைந்தானென்பதை யூதர் நம்
பவில்லை.–அவர்களைநோக்கி, உங்கள் புத்திரன் ௰௯
குருடனாய்ப்பிறந்தானென்று நீங்கள் சொல்லுகி
றீர்களே, அவன் இவன் தானா; இப்பொழுது இ
வன் எப்படிக்காண்கிறானென்று கேட்க,—இவ ௨௰
னுடையபெற்றார் அவர்களுக்குத்தரமாக, இவன்
எங்கள் புத்திரனென்றும், குருடனாய்ப் பிறந்
தானென்றும் அறிந்திருக்கிறோம்.—இவன் இப் ௨௧
பொழுது பார்வையடைந்தவகை எங்களுக்குத்
தெரியாது; இவன்கண்களைத்திறந்தவன் இன்னா
னென்றும், நாங்கள் அறியோம்: இவன்பெரி
யவன்; இவனிடத்திற் கேளுங்கள்: இவனே
தன்னைக்குறித்துச் சொல்லுவானென்றார்கள்.—
யேசுவைக் கிறிஸ்து என்று சொல்பவன் எ ௨௨
வனோ, அவன் ஆலயத்திற்குப் புறம்பாக்கப்ப
டவேண்டுமென்று யூதர் அதற்குமுன் தீர்மா

(௫௪) அதி.௫.௩௧,௪௧. அதி.௰௬.௰௪. அதி.௰௭.௨. அப்.௩.௰௩. (௫௫) அப்.௭.௨௮,௨௯. (௫௬) லூக்.௰.௨௪. எபி.௰௧.௰௩. (௫௮) யாத்.௩.௰௪. ஏசா.௪௩.௰௩. கொலோ.௧.௰௭. வெளி.௧.௮. (௫௯) அதி.௰.௩௧,௩௯. லூக்.௪.௩௰.—(௯. அதி.௨.) வச.௩௪. (௩) அதி.௰௧.௪. (௪) அதி.௪.௩௪. அதி.௰௭.௪. (௫) அதி.௧.௫,௯. அதி.௰௨,௩௫,௪௬. (௬) மாற்.௭.௩௩. (௭) நெகெ.௩.௰௫. ௨.இரா.௫.௰௪. (௰௧) வச.௬,௭. (௰௬) வச.௩௩. அதி.௩.௨. அதி.௭.௰௨.௪௩. (௰௭) அதி.௪.௰௯. (௨௨) அதி.௭.௰௩. அப்.௫.௰௩. வச.௩௪. அதி.௰௬.௨.

னம்பண்ணியிருந்தபடியினாலே, குருடனாயிரு
ந்தவனுடைய பெற்றோர் அவர்களுக்குப் பயந்
௨௩ து,–இவன் பெரியவன், இவனிடத்திற்கேளுங்
௨௪ களென்றார்கள்.—ஆதலால் அவர்கள் குருடனா
யிருந்தவனை இரண்டாந்தரமும் அழைத்து, நீ
தேவனைத் துதிப்பாயாக: அந்த மனுஷன்பா
வியென்று நாங்கள் அறிந்திருக்கிறோமென்றார்
௨௫ கள்.—அதற்கவன், அவர் பாவியோ,அல்லவோ
என்பதை நான்அறியேன்: நான் குருடனாயிருந்
தேன், இப்பொழுது காண்கிறேன், இதொன்
௨௬ றையே அறிந்திருக்கிறேனென்றான்.—அப்பொ
ழுது அவர்கள் அவனிடத்தில், உனக்கென்ன
செய்தான்,உன்கண்களைஎப்படித்திறந்தானென்
௨௭ றுதிரும்பவுங்கேட்க,—அவன் அவர்களுக்குத்
தரமாக, முன் அதைஉங்களுக்குச்சொன்னேன்,
நீங்கள்செவிகொடுக்கவில்லை: திரும்பவுங்கேட்
கவேண்டியதென்ன, நீங்களும் அவருக்குச்சீஷ
௨௮ ராக விரும்புகிறீர்களாவென்றான்.—அப்பொழு
து அவர்கள் அவனை வைது, நீ அவனுடைய சீ
௨௯ ஷன்; நாங்கள் மோசேயின்சீஷர்.—மோசேயு
டனே தேவன்பேசினார், இது எங்களுக்குத்தெ
ரியும்: இவன்வந்த இடத்தையும் அறியோமென்
௩௰ றார்கள்.-அதற்கு அந்தமனுஷன், அவர் என்கண்
களைத்திறந்திருந்தும், அவர் வந்த இடத்தை நீங்
கள்அறியாமலிருக்கிறது ஆச்சரியமானகாரியம்.-
௩௧ தேவன் பாவிகளுக்குச்செவிகொடுப்பதில்லை:
அவர்மேற்பத்தியாயிருந்து, அவருடைய சித்தத்
துக்கமைந்து நடக்கிறவனெவனோ, அவனுக்
கே செவிகொடுக்கிறார்,இதை நாம் அறிந்திருக்கி
௩௨ றோம்.—பிறவிக்குருடனுடைய கண்களை ஒரு
வன்திறந்தானென்று, உலகமுண்டானதுமுதற்
௩௩ கொண்டு கேள்விப்படவில்லையே.—அவர் தே
வனால் வராதவராயிருந்தால், யாதொருகிரியை
௩௪ யையுஞ் செய்யமாட்டாரென்றான்.-அப்பொழு
து அவர்கள் அவனைநோக்கி, முழுவதும் பாவங்
களிலேபிறந்தநீயாஎங்களுக்குபதேசம் பண்ணு
கிறவனென்றுசொல்லி, அவனைப் புறம்பேதள்
௩௫ ளினார்கள்.–அவனை அவர்கள் புறம்பேதள்ளின
தை யேசு கேள்விப்பட்டு,பின்பு அவனைக்கண்
டு, நீ தேவனுடைய குமாரனிடத்தில் விசு
௩௬ வாசிக்கிறாயாவென்றார்.–அதற்கவன், கர்த்தா
வே, நான் அவரிடத்தில் விசுவாசிப்பதற்கு அ
௩௭ வர்ஆரென்றுகேட்க,-யேசு அவனுடனே,நீஅவ
ரைக்கண்டாய், உன்னுடனே பேசுகிறவர் அவ
௩௮ ரே என்றார்.–அவன் கர்த்தாவே, விசுவாசிக்
கிறேனென்று சொல்லி அவரை வணங்கினான்.
௩௯ பின்பு யேசு, காணாதவர்கள் காணவும்,காண்
கிறவர்கள் குருடராகவுந்தக்கதாக, நியாயத்தீர்ப்
புக்கொடுப்பதற்கு நான் இவ்வுலகத்திலேவந்தே
௪௰ னென்றார்.—அவருடனேநின்ற பரிசேயரிற் சி
லர் இவைகளைக் கேட்டமாத்திரத்தில் அவரை
நோக்கி, நாங்களுங் குருடராவென்றார்கள்.—
யேசு அவர்களுடனே, நீங்கள் குருடராயிருந் ௪௧
தால் உங்களுக்குப்பாவமுண்டாகாது: காண்கி
றோமென்று நீங்கள் சொல்லுகிறபடியால் உங்
கள் பாவம் நிலைநிற்கின்றது.

## ௰. அதிகாரம்.

௧. கிறிஸ்துத்தம்மைஆட்டுப்பட்டியின்வாசலுக்கு வமித்தல்: ௬. அதின்தாற்பரியத்தை விளக்கல்: ௰௧. தம்மைமேய்ப்பனுக்குவமித்தல்: ௰௯. கிறிஸ்துயூதரோடுவாக்குவாதஞ்செய்தல்: ௨௨. சனங்களுக்குபதேசஞ்செய்தல்: ௩௯. யோர்தான் நதி தீரத்திற்செல்லல்.

ஆட்டுக்கிடைக்கு அதின் வாசல்வழியாய்ப்பி ௧
ரவேசியாமல்,வேறுவழியாய் அதிற்பிரவேசிக்கி
றவன் திருடனுங் கொள்ளையிடுகிறவனுமாயிருக்
கிறானென்று மெய்யாகவே உங்களுக்குச்சொல்
லுகிறேன்.—வாசலின்வழியாகப்பிரவேசிக்கிற ௨
வனே, ஆடுகளின் மேய்ப்பன்.—வாசல்காப்ப ௩
வன் அவனுக்குத் திறக்கிறான்; ஆடுகளும் அவ
னுடைய குரலுக்குச் செவிகொடுக்கின்றன: அ
வன் தன்னுடைய ஆடுகளைப் பேர்பேராக அ
ழைத்து, அவைகளைவெளியேநடத்திக்கொண்டு
போகிறான்.—அவன் தன்னுடைய ஆடுகளைவெ ௪
ளியிலேவிட்டு, பின்பு அவைகளுக்குமுன்னாக
நடந்துபோக, ஆடுகள் அவனுடையகுரலைஅறி
கிறபடியினால் அவனுக்குப் பின்செல்லுகின்ற
ன.–அந்நியருடைய குரலைஅறியாதபடியினால், ௫
அவைகள் அந்நியனுக்குப்பின்செல்லாமல் அவ
னைவிட்டோடிப்போகும் என்றார்.-இந்தஉவமை ௬
யை யேசு அவர்களுடனே சொன்னபொழுது,
அவர் தங்களுக்குச்சொன்னவைகளின்தாற்பரி
யத்தை அவர்கள் அறியவில்லை:-ஆதலால் யேசு ௭
திரும்பவும் அவர்களை நோக்கி, ஆடுகளுக்கு வா
சல் நான்தானென்று மெய்யாகவேஉங்களுக்குச்
சொல்லுகிறேன்.—எனக்குமுன் வந்த சகலருந் ௮
திருடருங் கொள்ளைக்காரருமாயிருந்தார்கள்: ஆ
டுகள் அவர்களுக்குச் செவிகொடுக்கவில்லை.—
நானே வாசல்: ஒருவன் என் வழியாய்ப்பிரவே ௯
சித்தால் இரட்சிக்கப்படுவான், அவன் உள்ளும்
புறம்புஞ் சஞ்சரித்து, மேய்ச்சலைக்கண்டடை
வான்.–திருடன் திருடுகிறதற்கும், கொலைசெய் ௰
கிறதற்கும்,கெடுக்கிறதற்குமேயன்றி, வேறொன்
றுக்கும்வரான்: நானோ,அவர்களுக்குச்சீவனுண்
டாகவும்,அதுபரிபூரணமாயிருக்கவும்வந்தேன்.-
நானே நல்லமேய்ப்பன்: நல்லமேய்ப்பன் ஆடுக ௰௧
ளுக்காகத் தன் சீவனைக்கொடுக்கிறான்.–மேய்ப் ௰௨
பனல்லாதவனும், ஆடுகளுக்குரியவனல்லாதவ
னுமாகிய கூலியாள்,கோனாய் வரக்காணும்பொ
ழுது,ஆடுகளைவிட்டோடிப்போவான்:கோனாய்

(௨௪) யோசு.௭.௰௯. ௧.சாமு.௬.௫. வச.௰௬. (௨௯) அதி.௮.௰௪. (௩௰) அதி.௩.௰. (௩௧) யோபு.௩௫.௰௨. சங்.௰௮.
௪௧. சங்.௩௪.௰௫. சங்.௬௬.௰௮. நீதி.௧.௨௮. நீதி.௰௫.௨௯. நீதி.௨௮.௯. ஏசா.௧.௰௫. எரே.௰௧.௰௧. எசேக்.௮.௰௮.
மீகா.௩௧.௪. சக.௭.௰௩. (௩௫) மத்.௰௪.௩௩. ௧.யோவா.௫.௰௩. (௩௭) அதி.௪.௨௬. (௩௯) அதி.௫.௨௨,௨௭. மத்.௰௩.
௰௩.(௪௰)ரோ.௨.௰௯.(௪௧)அதி.௰௫.௨௨,௨௪.—(௰. அதி. ௯.) அதி.௰௪.௬. எபே.௨.௰௮.(௰௧)ஏசா.௪௰.௰௧. எசேக்.
௩௪.௰௨,௨௩. எசேக்.௩௭.௨௪. எபி.௰௩.௨௰. ௧.பேதுரு.௨.௨௫. (௰௨) சக.௰௧.௰௬,௰௭.

ஆடுகளைப்பிடித்து, அவைகளைச் சிதற அடிக்
௰௩ கும்.—கூலியாள் கூலிக்காரனானபடியால் ஓ
டிப்போகிறான், ஆடுகளைக்குறித்துக் கவலைப்ப
௰௪ டான்.—நானே நல்லமேய்ப்பன், பிதாவானவர்
என்னை அறிந்திருக்கிறதுபோலவும், நான் பிதா
௰௫ வை அறிந்திருக்கிறதுபோலவும்,—நானும் என்
னுடையவைகளை அறிந்தும், என்னுடையவை
களால் அறியப்பட்டும் இருக்கிறேன்: ஆடுகளி
௰௬ னிமித்தம் என்சீவனையும் ஒப்பிக்கிறேன்.—இந்
தக்கிடையிலுள்ளவைகளேயன்றி,வேறாடுகளும்
எனக்குண்டு: அவைகளையும் நான் நடத்திக்
கொண்டு வரவேண்டும், அவைகள் என்குரலுக்
குச் செவிகொடுக்கும்: அப்பொழுது ஒரே ஆட்
௰௭ டுக்கூட்டமும், ஒரே மேய்ப்பனுமாகும்.—நான்
என் சீவனைத் திரும்பவும் அடையும்படி ஒப்
பிக்கிறபடியினால், என்பிதா என்மேல் அன்பா
௰௮ யிருக்கிறார்.—ஒருவனும் என் உயிரைப் பறிக்க
மாட்டான், நானாகவே அதை ஒப்பிக்கிறேன்.
அதை ஒப்பிக்கிறதற்கும், அதைத்திரும்ப எடுக்
கிறதற்கும் என்னிடத்தில் அதிகாரமுண்டு. இந்
தக் கட்டளையை என் பிதாவினிடத்திற் பெற்
றுக்கொண்டேனென்றார்.

௰௯ இந்த வாக்குகளினிமித்தந் திரும்பவும் யூதர்
௨௰ களுக்குள்ளே பிரிவுண்டாயிற்று.—அவர்களில்
அநேகர், அவன் பிசாசுபிடித்தவன், பைத்திய
காரன்; நீங்களேன் அவனுக்குச்செவிகொடுக்கி
௨௧ றீர்களென்றார்கள்.—வேறுசிலர், இவ்வாக்குகள்
பிசாசு பிடித்தவனுடையவைகளல்லவென்றும்,
குருடரின் கண்களைப் பிசாசு திறக்கக்கூடுமோ
வென்றுஞ்சொன்னார்கள்.

௨௨ பின்பு மாரிகாலத்தில் யெருஷலேமிலே தே
வாலய பிரதிஷ்டையின் உற்சவங்கொண்டா
௨௩ டப்படும்.—யேசு, தேவாலயத்திற் சலோமோ
னுடைய மண்டபத்தில் உலாவிக்கொண்டி
௨௪ ருக்கையில்,—யூதர் அவரை வளைந்துகொண்
டு, அவரை நோக்கி, நீர் எதுவரைக்கும் எங்
களைச் சமுசயப்படுத்துவீர்; நீர் கிறிஸ்து வா
னால், எங்களுக்கு விளக்கமாகச்சொல்லுமெ
௨௫ ன்றார்கள்.—அவர்களுக்குத்தரமாக யேசு, அ
தை உங்களுக்குச்சொன்னேன், நீங்கள் விசு
வாசிக்கவில்லை: என்பிதாவின் நாமத்தினாலே
நான் செய்துவருகிற கிரியைகளே என்னைக்
௨௬ குறித்துச் சாட்சியிடுகின்றன.—ஆனாலும் நீங்
கள் என் கிடையின் ஆடுகளல்லாதபடியினாலே
௨௭ விசுவாசியாமலிருக்கிறீர்கள்.—நான் உங்களுக்
குச் சொல்லியபிரகாரம் என் ஆடுகள் என் குர
லுக்குச் செவிகொடுக்கின்றன, நான் அவைக
ளை அறிந்திருக்கிறேன், அவைகளும் எனக்குப்
பின்செல்லுகின்றன.—நான் அவைகளுக்கு நித் ௨௮
திய சீவனைக்கொடுக்கிறேன்; அவைகள் ஒரு
பொழுதுங் கெட்டுப்போகிறதில்லை, ஒருவனும்
என்கையினின்று அவைகளைப்பறித்துக்கொள்ள
மாட்டான்.—அவைகளை எனக்குக்கொடுத்த ௨௯
என் பிதா எல்லாரிலும் பெரியவர்; ஒருவனி
லும் என் பிதாவின் கையினின்று அவைக
ளைப் பறித்துக்கொள்ளமாட்டான்.—நானும் பி ௩௰
தாவும் ஒன்றாயிருக்கிறோமென்றார்.—அப்பொ ௩௧
ழுது யூதர் மறுபடியும் அவர்மேல் எறியும்படி
கற்களை எடுத்தார்கள்.—யேசு அவர்களைநோக் ௩௨
கி, நான் என் பிதாவினால் அநேகநற்கிரியை
களை உங்களுக்குக்காட்டினேன்; அவைகளில்
எந்தக்கிரியையின் நிமித்தம் நீங்கள் என்மேற்
கல்லெறிவீர்களென்று கேட்க,—அவருக்குத் ௩௩
தரமாக யூதர், நற்கிரியையினிமித்தமாகவல்ல,
நீ மனுஷனாயிருக்க, உன்னைத் தேவனென்று
சொல்லி, இவ்விதமாய்த் தேவதூஷணஞ்சொல்
லுகிறதினிமித்தமாகவே உன்மேற் கல்லெறியப்
போகிறோமென்றார்கள்.—அதற்கு யேசு உத்த ௩௪
ரமாக, "தேவர்களாயிருக்கிறீர்களென்று நான்
சொன்னேன்,"என்பது உங்கள் வேதத்தில் எழு
தியிருக்கவில்லையா.—தேவனுடைய வாக்கை ௩௫
ப்பெற்றவர்களை அவர் தேவர்களென்றுசொல்லி
யவேதவாக்கியந் தவறாமலிருக்க,—பிதாவினாற் ௩௬
பரிசுத்தமாக்கப்பட்டும், உலகத்தில் அனுப்பப்
பட்டுமிருக்கிற நான், என்னைத் தேவனுடை
ய குமாரனென்று சொன்னதினாலே தேவதூஷ
ணஞ்செய்தாயென்று சொல்லலாமா.—நான் என் ௩௭
பிதாவின் கிரியைகளைச்செய்யாதிருந்தால், நீங்
கள் என்னை விசுவாசிக்கவேண்டுவதில்லை.-நான் ௩௮
செய்தால், நீங்கள் என்னை விசுவாசியாதிருந்தா
லும், அந்தக்கிரியைகளை விசுவாசிக்கவேண்டும்:
அதினாற் பிதா என்னிலேயும், நான் அவரிலே
யும் இருக்கிறதை நீங்கள் அறிந்து விசுவாசிப்
பீர்களென்றார்.—ஆதலால் அவர்கள் திரும்ப ௩௯
வும் அவரைப்பிடிக்கத்தேடினார்கள்: அவர் அ
வர்களுடைய கைகளினின்று விலகிப்புறப்ப
ட்டு,—யோர்தான் ஆற்றின் அக்கரையில், முன் ௪௰
னே யோவான் ஞானஸ்நானங்கொடுத்த இடத்
திற்குத் திரும்பவும்போய், அங்கே தங்கினார்.—
அநேகம்பேர் அவரிடத்திற்சென்று, யோவான் ௪௧
ஒரு அற்புதத்தையுஞ் செய்யவில்லை: ஆனாலும்
இவரைக்குறித்து அவன் சொன்னயாவும் மெய்
யென்றார்கள்.—அவ்விடத்தில் அநேகர் அவர் ௪௨
மேல் விசுவாசமுள்ளவர்களானார்கள்.

## ௰௧. அதிகாரம்.

௧. இலாசரு வருத்தப்படல்: ௭. கிறிஸ்து அவனி

(௰௪) மத்.௰௧.௨௭. (௰௫) ௨.தீமோ.௨.௰௯. (௰௬) ஏசா.௫௬.௮. எசேக்.௩௭.௨௨. எபே.௨.௰௪. ௧.பேதுரு.௨.௨௫. (௰௭) ஏசா.௫௩.௭,௮,௰௨. எபி.௨.௯. (௰௮) அதி.௬.௩௮. அப்.௨.௨௪,௩௨. (௰௯) அதி.௭.௪௩. (௨௰) அதி.௭.௨௰. (௨௧) யாத்.௪.௰௧. சங்.௯௪.௯. அதி.௯.௬,௭,௩௨,௩௩. (௨௩) அதி.௩.௰௧. (௨௫) அதி.௩.௨. (௨௬) ௧.யோவா.௪.௬. (௨௭) [illegible] ௪,௰௫. (௨௮) அதி.௬.௩௭. அதி.௰௭.௰௧,௰௨. அதி.௰௮.௯. (௨௯) அதி.௰௪.௨௮. அதி.௰௭.௧,௬,. (௩௰) அதி.௰௭.[illegible] ௨௨. (௩௩) அதி.௫.௰௮. (௩௪) சங்.௮௨.௬. (௩௫) ரோ.௰௩.௧. (௩௬) அதி.௬.௨௭. அதி.௩.௰௭. அதி.௫.௰௭,௰௮. லூக். ௧.௩௫. (௩௭) அதி.௰௫.௨௪. (௩௮) அதி.௫.௩௬. அதி.௰௪.௰,௰௧. (௩௯) அதி.௭.௩௰,௪௪. (௪௰) அதி.௧.௨௮. (௪௧) அதி. ௩.௩௰. (௪௨) அதி.௮.௩௰.—(௰௧. அதி.)

டத்திற் செல்லல்: ௰௭. அவனுடைய சகோதரிகளுடன் கிறிஸ்து சம்பாஷணைபண்ணி, அவனை உயிர்ப்பித்தல்: ௪௭. பிரதான ஆசாரியர்களும் பரிசேயரும் அவருக்கு விரோதமாய்த் துராலோசனைசெய்தல்: ௫௫. பஸ்கா உற்சவத்தில் அவரைப்பிடிக்கவகைதேடல்.

அக்காலத்தில், மரியாளும் அவளுடைய சகோ
தரி மார்த்தாளும் இருந்த ஊராகிய பேதனியவி
லுள்ள இலாசருஎன்னும் ஒருவன் வியாதியாயி
௨ ருந்தான்.—கர்த்தர்மேற் பரிமள தைலத்தைப்
பூசி, தன் தலைமயிரினால் அவருடைய பாதங்க
ளைத் துடைத்தவள்அந்தமரியாளே, அவளுடைய
சகோதரனாகிய இலாசரு வியாதியாயிருந்தான்.-
௩ அப்பொழுது அவனுடைய சகோதரிகள், கர்த்
தாவே, உமக்கன்பானவன் வருத்தமாயிருக்கி
௪ றானென்றுசொல்லி அனுப்பினார்கள்.—யேசு
அதைக்கேட்டு, அந்தவியாதி மரணத்துக்கேது
வானதல்ல, தேவனுடைய குமாரன் மகிமைப்
படும்பொருட்டுத் தேவனுடைய மகிமை வி
௫ ளங்குவதற்கேதுவாயிருக்கின்றதென்றார்.-யேசு
மார்த்தாளிலும், அவளுடையசகோதரியிலும், இ
௬ லாசருவிலும் அன்பாயிருந்தார்.—அவன் வியாதி
யாயிருக்கிறதை அவர் கேள்விப்பட்டபொழு
து, தாம் இருந்த இடத்திலே பின்னும் இரண்டு
௭ நாள்தங்கினார்.—அதன்பின்பு அவர் சீஷரை
நோக்கி, நாம் திரும்பவும் யூதேயாநாட்டிற்குப்
௮ போவோம்வாருங்களென்றார்.—அதற்குச் சீஷர்,
இரபீ, சிலநாளுக்குமுன்னே யூதர் உம்மேற்கல்
லெறியப்பார்த்தார்களே; நீர்திரும்பவும் அவ்வி
௯ டத்திற்குப் போகிறீராவென்று சொல்ல,—அ
தற்குத்தரமாக யேசு, பகலுக்குப் பன்னிரண்
டுமணிநேரமில்லையா, பகற்காலத்திலே நடக்கி
றவன் இவ்வுலகத்தின் ஒளியைக் காண்கிறபடி
௰ யினால் இடறான்.—இராக்காலத்திலே நடக்கிற
வன்தனக்கு ஒளியில்லாதபடியினால் இடறுவா
௰௧ னென்றார்.—இவைகளைச்சொல்லியபின்பு, நம
து சிநேகிதனாகிய இலாசரு நித்திரையடைந்
தான்; நான் அவனை எழுப்பப்போகிறேனென்
௰௨ றார்.-யேசு அவனுடையமரணத்தைக்குறித்து அ
௰௩ வ்விதமாகச்சொன்னார்.-அவர்நித்திரையின் ஆறு
தலைக்குறித்துப்பேசினாரென்றுசீஷர்கருதிக்கொ
ண்டு, கர்த்தாவே, அவன் நித்திரைசெய்தால்
௰௪ சவுக்கியமடைவானென்றார்கள்.—அப்பொழுது
யேசு அவர்களிடத்தில், இலாசருமரித்தானென்
௰௫ றுவிளக்கமாய்ச்சொல்லி,-நீங்கள்விசுவாசிக்கும்
படி நான் அங்கேயிராததினால் உங்கள்நிமித்தஞ்
சந்தோஷப்படுகிறேன்; ஆகிலும் அவனிடத்திற்
௰௬ குப்போவோம் வாருங்களென்றார்.—அப்பொ
ழுது திதுமு வென்னப்பட்ட தோமா மற்றச்சீ
ஷரைநோக்கி, இவரோடே மரிக்கும்படி நா
௰௭ மும் போவோம் வாருங்களென்றான்.—யேசு
சேர்ந்தபொழுது, அவன்பிரேதவறையில் வைக்
கப்பட்டு நாலுநாளாயிற்றென்று சொல்லக்
கேட்டார்.—பேதனியவூர் யெருஷலேம்நகரத் ௰௮
திற்குச் சமீபமாய் ஏறக்குறையப் பதினைந்துஸ்
தாதிவழிதூரத்திலிருந்தது.—யூதரில் அநேகர், ௰௯
மார்த்தாள் மரியாள் என்பவர்களுடைய சகோ
தரனைக்குறித்து அவர்களுக்கு ஆறுதல்சொல்
லும்படி அவர்களிடத்தில் வந்திருந்தார்கள்.—
யேசு வருகிறாரென்று மார்த்தாள் கேட்டபொ ௨௰
ழுது அவருக்கெதிர்கொண்டுபோனாள்: மரியா
ளோ வீட்டிலேயிருந்தாள்.—அப்பொழுது மார்த் ௨௧
தாள்யேசுவை நோக்கி, கர்த்தாவே, நீர் இங்
கே இருந்தீரானால் என் சகோதரன் மரிப்பதில்
லை.—இப்பொழுதும் நீர் தேவனிடத்திற்கேட் ௨௨
டுக்கொள்வதெதுவோ, அதைத் தேவன் உமக்
கருளுவாரென்பதை அறிந்திருக்கிறேனென்று
சொல்ல,—யேசு அவளிடத்தில், உன் சகோத ௨௩
ரன் உயிர்த்தெழுந்திருப்பானென்றார்.—மார்த் ௨௪
தாள் அவரைநோக்கி, மரித்தோர் உயிர்த்தெழும்
புங்கடைசிநாளில்இவனும்எழுந்திருப்பானென்
பது எனக்குத்தெரியுமென்றாள்.—அப்பொழுது ௨௫
யேசுஅவளைநோக்கி, நானேஉயிர்த்தெழுதலுஞ்
சீவனுமாயிருக்கிறேன்: என்னிடத்தில் விசுவா
சமாயிருக்கிறவன் மரித்தாலுஞ் சீவிப்பான்.—
சீவித்திருக்கையில் என்னிடத்தில் விசுவாசமா ௨௬
யிருக்கிறவனெவனோ, அவன் ஒருபொழுதும்
மரியான். இதைவிசுவாசிக்கிறாயாவென்றுகேட்
க,—அவள் அவரைநோக்கி, ஆம், கர்த்தாவே: ௨௭
நீர் உலகத்தில் வருபவரும், தேவனுடைய
குமாரனுமாகிய கிறிஸ்துவென்று நான் வி
சுவாசிக்கிறேனென்றாள்.—இப்படிச் சொல்லி ௨௮
யபின்பு, அவள்போய்த் தன்சகோதரி மரியாளை
இரகசியமாய் அழைத்து, போதகர் வந்திருக்
கிறார், உன்னை அழைக்கிறாரென்றாள்.-அதை அ ௨௯
வள்கேட்டவுடனே விரைந்தெழுந்து, அவரிடத்
தில்வந்தாள்.-அப்பொழுது யேசு கிராமத்திற்பி ௩௰
ரவேசிக்காமல், மார்த்தாள் தம்மைச்சந்தித்தஇடத்
திலேயிருந்தார்.—வீட்டில் மரியாளோடே யி ௩௧
ருந்து, அவளுக்காறுதல்சொல்லுகிறயூதர், அவள்
விரைந்தெழுந்து புறப்பட்டுப்போகிறதைக்கண்
டு, அவள்பிரேதவறையினிடத்தில் அழுதுகொள்
ளும்படிபோகிறாளென்றுசொல்லி, அவளுக்குப்
பின்சென்றார்கள்.—யேசு இருந்தவிடத்திலே ம ௩௨
ரியாள்சேர்ந்து, அவரைக்கண்டமாத்திரத்தில் அ
வருடையபாதத்தில்விழுந்து, அவருடனே, கர்த்
தாவே, நீர் இங்கேயிருந்தீரானால் என் சகோ
தரன் மரியானென்றாள்.—அவளும் அவளுட ௩௩
னேபோன யூதரும் அழுகிறதை யேசு கண்ட
பொழுது, தமதுள்ளத்தில் பெருமூச்சுவிட்டுத்
துக்கித்து,—அவனை எங்கே வைத்தீர்களென்று ௩௪
கேட்க, அதற்கு அவர்கள், கர்த்தாவே, வந்து

(௧) லூக்.௰.௩௮,௩௯. (௨) மத்.௨௬.௭. (௪) அதி.௧.௩. (௬) அதி.௰.௪௰. (௮) அதி.௰.௩௧. (௯) அதி.௯.௪. (௰) அதி.௰௨.௩௫. (௰௧) உபா.௩௧.௰௬. தானி.௰௨.௨. மத்.௯.௨௪. அப்.௭.௬௰. ௧.கொரி.௰௫.௰௮,௫௧. (௨௨) அதி.௯.௩௧. (௨௪) லூக்.௰௪.௰௪. (௨௫) அதி.௫.௨௧. அதி.௧.௪. அதி.௰௪.௬. கொலோ.௩.௪. ௧.யோவா.௧.௧,௨. அதி.௩.௩௬. ௧.யோவா.௫.௰. (௨௭) மத்.௰௬.௰௬. அதி.௪.௪௨.

௩௫ பாருமென்றார்கள்.—யேசு கண்ணீர்விட்டார்.—
௩௬ யூதர், பாருங்கள், இவர் அவனிடத்தில் எவ்வ
௩௭ ளவு அன்பாயிருந்தாரென்றார்கள்.—அவர்களிற்
சிலர், குருடனுடையகண்களைத்திறந்த இவர் இ
வனை மரியாமலிருக்கப் பண்ணவுங் கூடாதா
௩௮ யென்றார்கள்.—அப்பொழுது யேசு திரும்பவுந்
தமக்குள் பெருமூச்சுவிட்டு, பிரேதவறையினி
டத்திற் சேர்ந்தார். அது ஒருகுகை, அதின்மேல்
௩௯ ஒருகல்வைக்கப்பட்டிருந்தது.—கல்லையெடுத்துப்
போடுங்களென்று யேசு சொல்ல,மரித்தவனு
டையசகோதரியாகிய மார்த்தாள் அவரைநோக்
கி, கர்த்தாவே,நாலுநாளாயிற்று: நாற்றங்கொ
௪௰ ள்ளுமென்றாள்.-அவளிடத்தில் யேசு,நீவிசுவா
சித்தால் தேவனுடைய மகிமையைக் காண்
பாயென்று நான் உனக்குச்சொல்லவில்லையா
௪௧ வென்றார்.—அப்பொழுது பிரேதம் வைக்கப்
பட்ட இடத்திலிருந்த கல்லைப்புரட்டினார்
கள். யேசு கண்களை ஏறிட்டு, பிதாவே, நீர்
எனக்குச் செவிகொடுத்தபடியினால் உம்மைத்
௪௨ துதிக்கிறேன்.—நீர் எப்பொழுதும் எனக்குச்செ
விகொடுக்கிறீரென்று நான் அறிந்திருக்கிறேன்:
ஆனாலும் சுற்றியிருக்கிறசனங்கள், நீர் என்னை
அனுப்பினதை விசுவாசிக்கும்படி அவர்கள் நி
மித்தமேஇப்படிச்சொன்னேனென்றுசொல்லி,-
௪௩ பின்பு, இலாசருவே, வெளியேவாவென்று மகா
௪௪ சத்தத்தோடே கூப்பிட்டார்.—மரித்தவன் கை
கால்கள்கட்டியிருந்த சேலைகளோடும், முகஞ்
சுற்றப்பட்டிருந்த சேலையோடும் வெளியேவந்
தான்: யேசு அவர்களுடனே, இவனுடையகட்
௪௫ டை அவிழ்த்து விடுங்களென்றார்.—அப்பொ
ழுது மரியாளிடத்திற்கு வந்த யூதரில் அநேகர்,
யேசு செய்த கிரியைகளைக்கண்டு அவரை விசு
௪௬ வாசித்தார்கள்.—வேறுசிலர், பரிசேயரிடத்திற்
குப்போய், யேசு செய்தவைகளை அவர்களுக்
குத் தெரிவித்தார்கள்.
௪௭ அப்பொழுது பிரதானஆசாரியரும் பரிசேய
ரும் மகா சங்கங் கூடும்படிசெய்து, நாம் என்
னசெய்கிறோம்; அந்தமனுஷன் அநேக அற்பு
௪௮ தங்களைச் செய்துவருகிறான்.—நாம் அவனுக்கு
இடங்கொடுத்தால், எல்லாரும் அவனிடத்தில்
விசுவாசிப்பார்கள்: பின்பு ரோமர்வந்து,நம்மு
டைய ஸ்தலத்தோடு சனங்களை அழித்துப்போ
௪௯ டுவார்களென்றார்கள்.—அவ்வருஷத்து மகா ஆ
சாரியனாகிய காய்பாவென்னும் ஒருவன் அவர்
௫௰ களைநோக்கி, நீங்கள் ஒன்றும் அறியீர்கள்.—சனங்
கள் எல்லாருங் கெட்டுப்போகாதபடி ஒரே மனு
ஷன் சனங்கள்நிமித்தம் மரணமடைவது நமக்
கு நலமென்று நீங்கள் சிந்தியாமலிருக்கிறீர்க
௫௧ ளென்றான்.-இவ்வாக்கை அவன் தானாகச்சொல்
லாமல், அவன் அந்தவருஷத்து மகா ஆசாரிய
னாயிருக்கிறபடியால் யூதசனங்கள் நிமித்தமாக
வும்,—அந்தச்சனங்கள் நிமித்தமாகமாத்திரமல்ல, ௫௨
அங்கங்கே சிதறிப்போயிருக்கிற தேவனுடை
ய பிள்ளைகளை ஒன்றாகக்கூட்டிக்கொள்ளுகிறதி
னிமித்தமாகவும், யேசு மரணமடைவதைக் கு
றித்துத் தீர்க்கதரிசனமாய்ச்சொன்னான்.—ஆத ௫௩
லால் அந்நாள்முதல் அவர்கள் அவரைக்கொலை
செய்யும்படி ஆலோசனைபண்ணிவந்தார்கள்.—ஆ ௫௪
தினால் யேசு, பின்புபிரசித்தமாய் யூதர் மத்தியிற்
சஞ்சரியாமல், அவ்விடத்தைவிட்டு வனத்தைச்
சேர்ந்த இடமாகிய எப்ராயீம் ஊருக்குப்போய்,
அங்கே தம்முடைய சீஷருடனே சஞ்சரித்தார்.
யூதருடைய பஷ்கா சமீபமாயிருந்தது: அதற் ௫௫
குமுன் அந்த நாட்டினின்று அநேகர் தங்களைச்
சுத்திகரிக்கும்பொருட்டு யெருஷலேமுக்குப்
போனார்கள்.—அங்கே அவர்கள் யேசுவைத் ௫௬
தேடிக்கொண்டு தேவாலயத்திலே நிற்கையில்,
உங்களுக்கெப்படித் தோன்றுகின்றது, அவன்
உற்சவத்துக்கு வராமலிருப்பானோவென்று ஒருவ
ரோடொருவர் பேசினார்கள்.—பிரதான ஆசாரிய ௫௭
ரும் பரிசேயரும் அவரைப்பிடிக்கும்படி, அவர்
இருக்கிற இடத்தை ஒருவன் அறிந்தால் அதைக்
காட்டவேண்டுமென்று கட்டளை கொடுத்திருந்
தார்கள்.

## ௰௨. அதிகாரம்.

௧. மரியாள் யேசுவின்பாதத்தில் தைலத்தைப்பூ சல்: ௯. இலாசருவைக்காணும்படிவெகுசனங் கள்கூடிவரல்: ௰௨. கிறிஸ்து யெருஷலேமிற் பிரவேசித்தல்: ௨௰. அந்நியதேசத்தார் யேசுவி னிடத்தில்வரல்: ௨௭. கிறிஸ்துத் தமதுமரணத் தைமுன்னுரைத்தல்: ௩௭. விசுவாசிகள் சில ரென்றுதெரிவித்தல்: ௪௪. கிறிஸ்து உபதேசஞ் செய்தல்.

பஷ்காவருகிறதற்கு ஆறுநாளுக்குமுன் யேசு, ௧
தாம் மரித்தோரினின்று உயிர்ப்பித்த இலாசரு
தங்கின பேதனிய ஊருக்குப்போனார்.—அங்கே ௨
அவருக்கு இராவிருந்துபண்ணினார்கள்; மார்த்
தாள் பணிவிடைசெய்தாள்: அவருடனே பந்தியி
ருந்தவர்களில் இலாசருவும் ஒருவன்.—அப்பொ ௩
ழுது மரியாள் விலையுயர்ந்த சுகந்த தைலத்தில்
ஒரு இராத்தலை எடுத்து, அதை யேசுவின் பா
தங்களிற்பூசி, தன்தலைமயிரால் அவைகளைத் து
டைத்தாள்: அந்தத்தைலத்தின்பரிமளம் வீடெங்
கும் வீசிற்று.—அப்பொழுது, அவரைக்காட்டிக் ௪
கொடுப்பவனும், சீஷனும், சீமோனின் புத்தி
ரனுமாகிய யூதாஸ்காரியோத்து,—இந்தத்தை ௫
லத்தை முந்நூறுதேனாரியப்பணத்துக்குவிற்றுத்த
ரித்திரருக்குக் கொடாமற் போனதென்னவென்
றான்.-அவன் தரித்திரர்மேல்விசாரம்வைத்ததினா ௬
லல்ல, திருடனாய்ப் பணப்பையை வைத்திருக்
கிறவனும், அதிலிடப்பட்டதைக்கொண்டுபோ
கிறவனுமானபடியினால் இப்படிச்சொன்னான்.-

(௩௫) லூக்.௰௯.௪௧. (௩௭) அதி.௯.௬. (௪௰) வச.௪,௨௩. (௪௨) அதி.௰௨.௩௰. (௪௪) அதி.௨௰.௭. (௪௫) அதி.௨.௨௩. (௪௭) சங்.௨.௨. மத்.௨௬.௩. அதி.௰௨.௰௯. அப்.௪.௰௬. (௪௯) லூக்.௩.௨. அப்.௪.௬. (௫௰) அதி.௰௮.௰௪. (௫௨) ஏசா.௪௯.௬. ௧.யோவா.௨.௨. எபே.௨.௰௪,௰௫,௰௬,௰௭. (௫௪) அதி.௪.௧,௩. ௨.நாளா.௰௩.௰௯. அதி.௨.௰௩. (௫௬) அதி.௭.௰௧.—(௰௨. அதி. ௧.) அதி.௰௧.௧,௪௩. (௨) மத்.௨௬.௬. (௩) லூக்.௰.௩௮,௩௯. அதி.௰௧.௨. (௬) அதி.௰௩.௨௯.

எ அப்பொழுது யேசு, இவளைவிட்டுவிடு: என்
னை அடக்கம்பண்ணும் நாளுக்காக இதைக் காத்
அ துவைத்தாள்.—தரித்திரர் எப்பொழுதும் உங்க
ளிடத்தில் இருக்கிறார்கள்; நானோ, எப்பொழு
தும் உங்களிடத்தில் இருப்பதில்லையென்றார்.—
௯ பின்பு யூதரில் அநேக சனங்கள், அவர் அங்
கேயிருக்கிறதை அறிந்து, யேசுவின் நிமித்தம்
மாத்திரமல்ல, அவராலே மரித்தோரினின்று எ
ழுப்பப்பட்ட இலாசருவைக் காண்பதினிமித்த
மாகவும்போனார்கள்.
௰ இலாசருவினிமித்தம் யூதரில் அநேகர் வில
கிப்போய், யேசுவின்மேல் விசுவாசித்தபடியி
௰௧ னாலே,-பிரதான ஆசாரியர் இலாசருவையுங்கொ
லைசெய்யும்படி ஆலோசனை பண்ணினார்கள்.
௰௨ மறுநாளிலே யேசு யெருஷலேமுக்குவருகி
றாரென்று உற்சவத்துக்குப்போன அநேகசனங்
௰௩ கள் கேள்விப்பட்டு,—குருத்தோலைகளைப்பிடித்
து, அவருக்கெதிர்கொண்டுபோகும்படி புறப்
பட்டு, ஓசன்னா, கர்த்தருடைய நாமத்தினா
லே வருகிற இஸ்ரவேலரின் இராசா வாழ்த்தப்ப
௰௪ டத்தக்கவரென்று சத்தமிட்டார்கள்.-"சீயோன்
குமாரத்தியே,நீ பயப்படாதிரு:உன் இராசா ஒரு
கழுதைக்குட்டியின்மேல் ஏறிவருகிறார், பார்,"
௰௫ என்று எழுதியிருக்கிற பிரகாரம்,-யேசு ஒருகழு
தைக்குட்டியைக்கண்டு, அதின்மேலேறிப்போ
௰௬ னார்.—இந்தச்சங்கதிகளின் தாற்பரியத்தைச் சீ
ஷர் முதல் உணரவில்லை: யேசு மகிமைப்பட்
டபின், அவரைக்குறித்து அப்படி எழுதியிருக்
கிறதும், தாங்கள் அப்படி அவருக்குச்செய்த
௰௭ தும் அவர்கள் நினைவில்வந்தன.—அவர் இலாச
ருவைப் பிரேதவறையினின்று வெளியே வர அ
ழைத்து, அவனை மரித்தோரினின்று எழுப்பின
பொழுது, அவருடனேயிருந்த சனங்கள் அதற்
௰௮ குச் சாட்சிகொடுத்தார்கள்.—அவர் அப்படிப்
பட்ட அற்புதத்தைச் செய்தாரென்று சனங்கள்
கேள்விப்பட்டதினால் அவர்கள் அவருக்கெதிர்
௰௯ கொண்டுபோனார்கள்.—ஆதலால் பரிசேயர் ஒ
ருவரை ஒருவர்நோக்கி, நீங்கள் செய்வதெல்
லாம் வீணென்று அறிகிறதில்லையா; பாருங்கள்,
உலகம் அவனுக்குப் பின்செல்லுகின்றதென்று
சொல்லிக்கொண்டார்கள்.
௨௰ உற்சவத்தில் ஆராதனைசெய்வதற்குவந்தவர்க
௨௧ ளிற் சில கிரேக்கர்,—கலிலேயாநாட்டின் பேத்
சாயிதா ஊரானாகிய பிலிப்புவினிடத்தில் வந்து,
ஐயா, நாங்கள் யேசுவைக்காண விரும்புகி
றோமென்று அவனைவேண்டிக்கொண்டார்கள்.-
௨௨ பிலிப்பு அதை அந்திரேயாவுக்குச்சொன்னான்:
பின்பு அந்திரேயாவும் பிலிப்பும் அதை யேசு
வுக்குச் சொன்னார்கள்.
யேசு அவர்களுக்குத்தரமாக, மனுபுத்திரன் ௨௩
மகிமைபெறுஞ் சமயம்வந்தது.—கோதுமைமணி ௨௪
நிலத்தில்விழுந்து உருவழியாவிட்டால், ஒன்றி
யாயிருக்கும்: உருவழிந்தால் மிகுந்த பலனைக்
கொடுக்குமென்று மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன்.-தன்சீவனை விரும்புகிறவன் அ ௨௫
தை இழப்பான்; இவ்வுலகத்திலே தன்சீவனை
வெறுக்கிறவன் அதை நித்திய சீவனுள்ளவரைக்
குங் காத்துக்கொள்வான்.—ஒருவன் என்னைச் ௨௬
சேவிக்கவிரும்பினால் எனக்குப் பின்செல்லக்க
டவன்; அப்பொழுது நான் இருக்குமிடமெங்
கேயோ அங்கே என் பணிவிடைக்காரனுமிருப்
பான்: என்னைச்சேவிக்கிறவனைப் பிதா கனம்
பண்ணுவார்.—இப்பொழுது என் ஆத்துமா க ௨௭
லங்குகின்றது; நான் என்னசொல்லுவேன்; பி
தாவே, இந்த நேரத்தினின்று என்னைஇரட்சியு
மென்று சொல்வேனா: இந்தநேரத்தின்பொ
ருட்டாகவே வந்தேன்.—பிதாவே, உமது நா ௨௮
மத்தின் மகிமையை விளங்கப்பண்ணுமென்று
சொல்லிய மாத்திரத்தில், அதின்மகிமையை வி
ளங்கப்பண்ணினேன், இன்னும் விளங்கப்பண்
ணுவேனென்று வானத்தினின்று சத்தம் பிறந்த
து.—அப்பொழுது அங்கே நின்ற சனங்கள் அ ௨௯
தைக்கேட்டு, இடிமுழக்கமுண்டாயிற்றென்றார்
கள்: வேறு சிலர் தேவதூதன் ஒருவன் அவரு
டன் பேசினானென்றார்கள்.—யேசு, அந்தச்சத் ௩௰
தம் என்னிமித்தமாகவல்ல, உங்கள் நிமித்தமா
கவே பிறந்தது.—இப்பொழுது இவ்வுலகத்திற் ௩௧
கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கப்படுகின்றது: இப்
பொழுது இவ்வுலகத்தின் அதிபதி புறம்பாகத்
தள்ளப்படுவான்.—நான் பூமியினின்று ஏற்றப் ௩௨
படும்பொழுது, எல்லாரையும் என்னிடத்தில்
இழுத்துக்கொள்ளுவேனென்றார்.—தாம் அடை ௩௩
யும் மரணம் இன்னவிதமென்று குறிக்கும்படி
இவ்வாக்கைச்சொன்னார்.—சனங்கள் அவரை ௩௪
நோக்கி, கிறிஸ்து என்றைக்குமிருக்கிறாரென்
றுவேதஞ்சொல்ல நாங்கள் கேட்டிருக்கிறோ
மே: அப்படியிருக்க, மனுபுத்திரன் ஏற்றப்பட
வேண்டுமென்று நீர் எப்படிச்சொல்லுகிறீர்; இந்
தமனுபுத்திரன் யாவனென்று கேட்க,—அதற்கு ௩௫
யேசு அவர்களைநோக்கி, சிலகாலம் ஒளி உங்
களுடனே இருக்கும். இருள் உங்களைமூடாதப
டி நீங்கள் ஒளியையுடையவர்களாயிருக்கையில்
நடவுங்கள்: இருளிலே நடக்கிறவன் தான்நடந்
துபோகிறவழி இன்னதென்று அறியான்.—நீங் ௩௬

(அ) மத்.௨௬.௰௧. (௯) அதி.௰௧.௪௩,௪௪. (௰) அதி.௰௧.௪௫. (௰௧) லூக்.௰௬.௩௧. (௰௨) மத்.௨௧.அ. (௰௩) சங்.௱௰அ. ௨௫,௨௬. (௰௪) சக.௯.௯.(௰௫)மத்.௨௧.எ. (௰௬) லூக்.௰அ.௩௪. அதி.எ.௩௯. அதி.௰௪.௨௬. (௰௯) அதி.௰௧.௪எ,௪அ. (௨௰)அதி.௰எ.௪. க.இரா.அ.௪௧,௪௨. அப்.அ.௨எ. (௨௩) அதி.௰௩.௩௨. அதி.௰எ.௧. (௨௪) க.கொரி.௰௫.௩௬. மத். ௰.௩௯. (௨௬) அதி.௰௪.௩. அதி.௰எ.௨௪. க.தெச.௪.௰எ.(௨எ)மத்.௨௬.௩அ,௩௯. லூக்.௰௨.௫௰. லூக்.௨௨.௫௩.(௨அ) மத்.௩.௰எ. (௩௰) அதி.௰௧.௪௨. (௩௧) மத்.௰௨.௨௯. லூக்.௰.௰அ. அப்.௨௬.௰அ. ௨.கொரி.௪.௪. எபே.௨.௧. (௩௨) அதி.௩.௰௪. ரோ.௫.௰அ. எபி.௨.௯. (௩௩) அதி.௰அ.௩௨. (௩௪) சங்.அ௯.௩௬,௩எ. ஏசா.௯.எ. ஏசா.௫௩.அ. எசேக். ௩எ.௨௫. தானி.௨.௪௪. மீகா.௪.எ. (௩௫) அதி.௧.௯. எரே.௰௩.௰௬. எபே.௫.அ. அதி.௰௧.௰. க.யோவா.௨.௰௧. (௩௬) லூக்.௰௬.அ. எபே.௫.அ. க.தெச.௫.௫. க.யோவா.௨.௯,௰,௰௧. அதி.அ.௫௧.

கள் ஒளியையுடையவர்களாயிருக்கையில், ஒளி
யின் பிள்ளைகளாகும்படிக்கு ஒளியை விசுவா
சிப்பீர்களாகவென்றார். இவைகளை யேசு சொல்
லிப்புறப்பட்டு, அவர்களுக்கு விலகிமறைந்தார்.
௩௭ அவர் அவர்கள்முன்பாக அத்தனை அற்புதங்க
ளைச்செய்திருந்தும், அவர்கள் அவரைவிசுவாசிக்
௩௮ கவில்லை.—அதினால் "கர்த்தாவே, எங்கள்
வாக்கைக்கேட்டு விசுவாசித்தவன்யாவன், கர்த்
தருடைய புயம் ஆருக்கு வெளிப்பட்டது,"
என்று எசாயா தீர்க்கதரிசி சொல்லிய வாக்கியம்
௩௯ நிறைவேறிற்று.—விசுவாசிப்பது இவர்களாற் கூ
டாதென்பதைக்குறித்து, எசாயா தேவனுடை
ய மகிமையைக்கண்டு, அவரைக்குறித்துப் பே
௪௰ சும்பொழுது,—"அவர்கள் தங்கள் கண்களி
னாலே காணாமலும், தங்கள் இருதயங்களினால்
உணர்ந்து மனந்திரும்பாமலும், சொஸ்தமடை
யாமலும் இருக்கும்படிக்கு அவர்களுடையகண்
களைக் குருடாக்கி, அவர்களுடைய இருதயத்
௪௧ தைக்கடினப்படுத்தினார்," என்று—பின்னும் ஒரு
இடத்திற்சொல்லியிருக்கிறான்.
௪௨ அதிபதிகளில் அநேகர் அவர்மேல் விசுவாசித்
தார்கள்; ஆயினும் அவர்கள் பரிசேயரால் ஆல
யத்துக்குப்புறம்பாக்கப்படாதபடி, அவரை அ
௪௩ றிக்கையிடவில்லை.—அவர்கள் தேவனால் வரு
கிற கனத்திலும், மனுஷரால் வருகிற கனத்தை
அதிகமாய் விரும்பினார்கள்.
௪௪ யேசு சத்தமிட்டு, என்மேல் விசுவாசமாயி
ருப்பவன் என்மேலல்ல, என்னை அனுப்பினவர்
௪௫ மேல் விசுவாசமாயிருக்கிறான்.—என்னைக்காண்
பவன் என்னை அனுப்பினவரைககாண்கிறான்.—
௪௬ என்மேல் விசுவாசமாயிருக்கிற யாவரும் இரு
ளில் இராதபடி, நான் உலகத்தில் ஒளியாக
௪௭ வந்தேன்.—ஒருவன் என்வாக்குகளைக்கேட்டும்
விசுவாசித்துக்கொள்ளாமற்போனால், நான் அ
வனைத் தண்டனைக்குட்படுத்துகிறதில்லை: நான்
உலகத்தாரைத் தண்டனைக்குட்படுத்துவதற்கல்
ல, உலகத்தாரை இரட்சிக்கிறதற்கேவந்தேன்.—
௪௮ என்னை அலட்சியம்பண்ணி, என்வாக்குகளைஎற்
றுக்கொள்ளாதவனைத்தண்டனைக்குள்ளாகத்தீர்க்
கிறதற்கு ஒன்றிருக்கின்றது: அது நான் சொல்
லியவாக்கு, கடைசிநாளில் அதே அவனைத்
௪௯ தண்டனைக்குள்ளாகத்தீர்க்கும்.—நானாக ஒன்றும்
பேசவில்லை; என்னை அனுப்பினபிதாவே நான்
பேசவும் உபதேசிக்கவும் வேண்டியவைகளை எ
௫௰ னக்குக் கட்டளையிட்டார்.—அவருடைய கட்
டளை நித்திய சீவனைத் தருமென்று அறிந்திருக்
கிறேன்: ஆதலால் நான் உபதேசிக்கிறவைக
ளைப் பிதா எனக்குச் சொல்லியபிரகாரம் உப
தேசிக்கிறேனென்றார்.

## ௰௩. அதிகாரம்.

௧. கிறிஸ்து, தமது சீஷரின் பாதங்களைக் கழு
வல்: ௰௨. அதின் தாற்பரியத்தைத் தெரிவித்
தல்: ௨௧. யூதாவின்துரோகத்தை முன்னுரைத்
தல்: ௩௧. கிறிஸ்து சீஷருக்குப் போதித்தல்:
௩௬. பேதுரு தம்மை மறுப்பானென்று அறி
வித்தல்.

பஸ்காவுக்குமுன்னே, யேசு இவ்வுலகத்தை ௧
விட்டுப் பிதாவினிடத்திற்குப் போகிறதற்குத்
தம்முடையகாலம் வந்ததென்றறிந்து, இவ்வுல
கத்திலுள்ள தம்முடையவர்களிடத்தில் வைத்த
அன்பை முடிவுபரியந்தம் அவர்களிடத்தில்
வைத்தார்.—அவரைக் காட்டிக்கொடுக்கும்படி ௨
பிசாசு, சீமோனின் புத்திரனாகிய யூதாஸ்
காரியோத்தின் இருதயத்திலே யோசனையை
உண்டுபண்ணிற்று.—பின்பு யேசு அவர்கள் இ ௩
ராப்போசனம் பண்ணிக்கொண்டிருக்கையில்,
தமக்குப் பிதா சகலத்தையும் ஒப்பித்ததையும்,
தாம் தேவனிடத்தினின்று வந்ததையும்,
தேவனிடத்திற்குப் போகிறதையும் அறிந்
து,-இராப்போசனத்தை விட்டெழுந்து, மேலங் ௪
கியைக் கழற்றிவைத்து, ஒருசீலையை எடுத்துத்தம்
மைச் சுற்றிக்கட்டிக்கொண்டு,—பின்பு ஒருபாத் ௫
திரத்திலே சலத்தைவார்த்து, சீஷருடையபாதங்
களைக் கழுவவும், தாம் கட்டிக்கொண்டிருந்த
சீலையினாலே துடைக்கவுந்தொடங்கினார்.-அவர் ௬
சீமோன் பேதுருவினிடத்தில் வர அவன் அவ
ரைநோக்கி, கர்த்தாவே, நீர்என்பாதங்களைக்
கழுவுகிறதோவென்றுகேட்க,-யேசு அவனுக் ௭
குத்தரமாக, நான் செய்கிறதின்னதென்று நீ இப்
பொழுது அறியவில்லை; இனிமேல் அதை அறி
வாயென்றார்.—பேதுரு பின்னும் அவரைநோக் ௮
கி, நீர் என்பாதங்களை ஒருபொழுதுங்கழுவப்ப
டாதென்றான். அவனுக்குப்பிரதியுத்தரமாக யே
சு, நான் உன்னைக்கழுவாவிட்டால் என்னிடத்
தில் உனக்குப்பங்கில்லையென்றார்.—அதற்குச் சீ ௯
மோன்பேதுரு, கர்த்தாவே, என்கால்களைமாத்
திரமல்ல, என் கைகளையுந் தலையையுங் கூட
நீர் கழுவவேண்டுமென்றான்.—யேசு அவனி ௰
டத்தில், ஸ்நானம்பண்ணினவனுடைய கால்க
ளைமாத்திரங் கழுவவேண்டும், அப்பொழுது சரு
வாங்கத்திலுஞ் சுத்தமாயிருப்பான்: சுத்தமாயி
ருக்கிறீர்கள், எல்லாருமல்லவென்றார்.-அவர்தம் ௰௧
மைக் காட்டிக்கொடுப்பவன் இன்னானென்று
அறிந்திருந்தபடியினாலே நீங்கள் எல்லாருஞ் சுத்
தமுள்ளவர்களல்லவென்றார்.—அவர்களுடைய ௰௨
கால்களைக் கழுவினபின்பு, அவர் தமது மேலங்
கியைத் தரித்துக்கொண்டு திரும்பவும் உட்கார்ந்
து, அவர்களைநோக்கி, நான் உங்களுக்குச்செய்

(௩௮) ஏசா.௫௩.௧. ரோ.௰.௰௬. (௩௯) ஏசா.௬.௧. (௪௰) ஏசா.௬.௯,௰. மத்.௰௩.௰௪. (௪௨) அதி.௭.௰௩. (௪௩) அதி.௫.௪௪. (௪௪) மாற்.௯.௩௭. ௧.பேதுரு.௧.௨௧. (௪௫) அதி.௰௪.௯. (௪௬) வச.௩௫,௩௬. அதி.௩.௰௯. அதி.௯.௫.௩௯. (௪௭) அதி.௫.௪௫. அதி.௮.௰௫,௨௬. அதி.௩.௰௭. (௪௮) லூக்.௰.௰௫. உபா.௰௮.௰௯. மாற்.௰௬.௰௬. (௪௯) அதி.௮.௩௮. உபா.௰௮.௰௮.—(௰௩.அதி.௧.) மத்.௨௬.௨. அதி.௰௭.௨,௰௧. (௨) லூக்.௨௨.௩. (௩) மத்.௰௧.௨௭. மத்.௨௮.௰௮. அப்.௨.௩௬. ௧.கொரி.௰௫.௨௭. எபி.௨.௮. அதி.௮.௪௨. அதி.௰௬.௨௮. (௪) லூக்.௨௨.௨௭. பிலி.௨.௭,௮. (௭) வச.௰௨. (௮) அதி.௩.௫. ௧.கொரி.௬.௰௧. எபே.௫.௨௫. தீத்.௩.௫. எபி.௰.௨௨. (௰) அதி.௰௫.௩. (௰௧) அதி.௬.௬௪.

௰௩ ததின்னதென்று அறிந்திருக்கிறீர்களா.—நீங்கள்
என்னைப் போதகரென்றும், கர்த்தரென்
றுஞ் சொல்லி வருகிறீர்கள்: நீங்கள் சொல்லு
கிறது சரி; நான் அப்படியேயிருக்கிறேன்.—
௰௪ கர்த்தரும்போதகருமாகிய நான் உங்கள் கால்
களைக் கழுவினபடியினால், நீங்களும் ஒருவருக்
௰௫ கொருவர் கால்களைக்கழுவவேண்டும்.-நான் உங்
களுக்குச் செய்ததுபோல, நீங்களுஞ் செய்யும்
படி உங்களுக்கு ஒரு திருஷ்டாந்தத்தைக் காட்
௰௬ டினேன்.-பணிவிடைக்காரன் தன் எசமானனி
லும், அப்போஸ்தலன் தன்னை அனுப்பினவரி
லும் பெரியவரல்லவென்றுமெய்யாகவே உங்க
௰௭ ளுக்குச்சொல்லுகிறேன்.—நீங்கள் இவைகளை அ
றிந்து, இவைகளைச்செய்வீர்களானால் வாழ்வு
டையவர்களாயிருப்பீர்கள்.
௰௮ உங்கள் எல்லாரையுங் குறித்து நான்பேசவில்
லை: நான்தெரிந்துகொண்டவர்களை அறிந்திருக்
கிறேன்: "என்னுடனே அப்பம் புசிக்கிறவன் எ
னக்கு விரோதமாய்த் தன் குதிங்காலைத் தூக்கி
னான்," என்கிறவேதவாக்கியம் நிறைவேறவேண்
௰௯ டும்.—அது நடக்கும்பொழுது நானே அவரென்
று நீங்கள் விசுவாசிக்கும்படி, அது நடப்பதற்
குமுன் இப்பொழுது அதை உங்களுக்குச்சொல்
௨௰ லுகிறேன்.—நான் அனுப்புகிறவனை அங்கிகரிப்
பவன் என்னையும் அங்கிகரிக்கிறான்; என்னை
அங்கிகரிக்கிறவன் என்னை அனுப்பினவரையும்
அங்கிகரிக்கிறானென்று மெய்யாகவே உங்களுக்
௨௧ குச் சொல்லுகிறேனென்றார்.—இவ்வாக்குகளைச்
சொல்லியபின்பு, யேசு தமதுஆவியிலே கலக்
கங்கொண்டு, உங்களில் ஒருவன் என்னைக்காட்
டிக்கொடுப்பானென்று மெய்யாகவே உங்களுக்
குச்சொல்லுகிறேனென்று சொல்லிச் சாட்சி
௨௨ யிட்டார்.-அப்பொழுது சீஷர், அவர்குறித்தவன் எ
வனென்று ஐயப்பட்டு, ஒருவரை ஒருவர் பார்த்
௨௩ தார்கள்.—அந்தச்சமயத்தில் அவருடைய சீஷ
ரில் யேசு நேசித்த ஒருவன் யேசுவின் மார்பி
௨௪ லே சாய்ந்திருந்தான்.—ஆனபடியினால் அவர்ஆ
ரைக்குறித்துப் பேசினாரென்று விசாரிக்கும்படி
சீமோன் பேதுரு அவனுக்குச் சைகைகாட்ட,-
௨௫ அப்பொழுது அவன், யேசுவின்மார்பிலே சாய்ந்
துகொண்டு, கர்த்தாவே, அவன்யாவனென்று
௨௬ கேட்க,-யேசு உத்தரமாக, நான் இந்தத்துணிக்
கையைத்தோய்த்து எவனுக்குக்கொடுப்பேனோ,
அவனே அவனென்றுசொல்லி, துணிக்கையைத்
தோய்த்து, சீமோனின் புத்திரனாகிய யூதாஸ்கா
௨௭ ரியோத்திற்குக் கொடுத்தார்.—துணிக்கையை அ
வன் வாங்கின பின்பு சாத்தான் அவனிற்புகுந்
தான். அப்பொழுது யேசு அவனைநோக்கி, நீ
செய்வதை விரைவிற் செய்யென்றார்.-அவர் இப் ௨௮
படி அவனுடன்சொல்லியகருத்தைப்பந்தியிருந்
தவர்களில்ஒருவனும் அறியவில்லை.-யூதா பணப் ௨௯
பையை வைத்துக்கொண்டிருக்கிறபடியினால்,
அவன் போய், உற்சவத்துக்கு வேண்டியவைக
ளைக்கொள்வதற்காவது, தரித்திரருக்கேதாயினுங்
கொடுப்பதற்காவது யேசு அவனுடனே சொல்
லியிருப்பாரென்று சிலர் நினைத்தார்கள்.—அவன் ௩௰
அந்தத் துணிக்கையை வாங்கினவுடனே புறப்
பட்டுப்போனான்: இராக்காலமாயிருந்தது.
அவன்புறப்பட்டுப்போனபின்பு யேசு, இப் ௩௧
பொழுது மனுபுத்திரன் மகிமைப்பட்டான், அ
வனாலே தேவனுடைய மகிமை விளங்கும்.—
அவனாலே தேவனுடைய மகிமைபிரகாசிக் ௩௨
கப்படுமானால், தேவன் தம்மோடே அவனை
யும் மகிமைப்படுத்துவாரே, சீக்கிரமாய் அவனை
மகிமைப்படுத்துவார்.—பிள்ளைகளே, இன்னுஞ் ௩௩
சிலகாலம்மாத்திரம் நான் உங்களுடன் இருப்
பேன். நீங்கள் என்னைத்தேடுவீர்கள்: நான்போ
குமிடத்துக்கு நீங்கள்வரக்கூடாதென்று நான்யூ
தரோடே சொன்னதுபோல, இப்பொழுது உங்க
ளுடனேயுஞ் சொல்லுகிறேன்.—நீங்கள் ஒருவ ௩௪
ரில் ஒருவர் அன்பாயிருங்கள்; நான் உங்களி
டத்தில் அன்புவைத்ததுபோல, நீங்களும் ஒருவ
ரில்ஒருவர்அன்பாயிருங்களென்கிற புதியகட்ட
ளையை நான் உங்களுக்குக்கொடுக்கிறேன்.—நீங் ௩௫
கள் ஒருவரில் ஒருவர் அன்பாயிருந்தால், என் சீ
ஷரென்றுஎல்லாரும்அறிவார்களென்றார்.
சீமோன்பேதுரு அவரைநோக்கி, கர்த்தா ௩௬
வே, நீர் எங்கே போகிறீரென்றுகேட்க, யேசு
அவனுக்குத்தரமாய், நான்போகிற இடத்திற்கு
நீ இப்பொழுது என்னோடேசெல்லமாட்டாய்;
பின்பு என்னைப் பின்செல்லுவாயென்றார்.—பே ௩௭
துரு அவரைநோக்கி, கர்த்தாவே, நான் ஏன்
இப்பொழுது உம்மைப் பின்செல்லக்கூடாது,
உமக்காக என் சீவனையும் ஒப்பிப்பேனென்று
சொல்ல,—யேசு அவனுக்குத்தரமாய், நீ எனக் ௩௮
காக உன்சீவனை ஒப்பிப்பாயா, சேவல்கூவுகிற
தற்குமுன்னே நீ மூன்றுதரம்என்னைமறுதலிப்பா
யென்றுமெய்யாகவேஉனக்குச்சொல்லுகிறேன்.

## ௰௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து, தமதுசீஷரைத்தேற்றல்: ௮. தமக்கும் பிதாவுக்குமுள்ள ஐக்கத்தைத்தெரிவித்தல்: ௰௫. பரிசுத்த ஆவியை அனுப்பவாக்குத்தத்தம்பண்ணல்: ௨௫. தாம் சீஷரைப்பிரிந்துபோதலைக்குறித்துப்பேசல்.

நீங்கள் மனங்கலங்காதிருங்கள்: தேவனில் ௧
விசுவாசமாயிருங்கள், என்னிலும் விசுவாசமா

(௰௩)மத்.௨௩.௮,௰.லூக்.௬.௪௬.௧.கொரி.௮.௬.பிலி.௨.௰௧.(௰௪)லூக்.௨௨.௨௭.ரோ.௰௨.௰.கலா.௬.௧,௨. ௧.பேதுரு.
௫.௫.(௰௫)மத்.௰௧.௨௯.பிலி.௨.௫. ௧.பேதுரு.௨.௨௧. ௧.யோவா.௨.௬.(௰௬)மத்.௰.௨௪. அதி.௰௫.௨௰.(௰௭)யாக்.௧.
௨௫.(௰௮)சங்.௪௧.௯.மத்.௨௬.௨௩.(௰௯)அதி.௰௪.௨௯.(௨௰)மத்.௰.௪௰.மத்.௨௫.௪௰.(௨௧)மத்.௨௬.௨௧. அதி.௰௨.௨௭.
அப்.௧.௰௭. ௧.யோவா.௨.௰௯.(௨௩)அதி.௰௯.௨௬.அதி.௨௰.௨. (௨௭) லூக்.௨௨.௩.(௨௯)அதி.௰௨.௬.(௩௧)அதி.௰௨.
௨௩. அதி.௰௪.௰௩. ௧.பேதுரு.௪.௰௧.(௩௨)அதி.௰௭.௨,௪,௫,௬. அதி.௰௨.௨௩.(௩௩)அதி.௭.௩௪.(௩௪)லேவி.௰௯.௰௮.
அதி.௰௫.௰௨,௰௭. எபே.௫.௨. ௧ தெச.௪.௯. யாக்.௨.௮. ௧ பேதுரு.௧.௨௨. ௧.யோவா.௨.௭,௮.(௩௫)௧.யோவா.௨.
௫.(௩௬)அதி.௨௧.௰௮. ௨.பேதுரு ௧.௰௪.(௩௭) மத்.௨௬.௩௩,௩௪,௩௫.—(௰௪. அதி ௧.) வச.௨௭. அதி.௰௬.௨௨,௩௩.

௨ யிருங்கள்.-என்பிதாவின் வீட்டில் அநேகம் வா
சஸ்தானங்களுண்டு: இல்லாதிருந்தால்,நான்உங்
களுக்குச்சொல்லியிருப்பேன். உங்களுக்காக ஒ
ருஸ்தானத்தை ஆயத்தப்படுத்தப்போகிறேன்.—
௩ நான்போய்,உங்களுக்காகஒருஸ்தானத்தைஆயத்
தப்படுத்தினபின்பு, நான் இருக்கிற இடத்திலே
நீங்களும் இருக்கும்படி திரும்பிவந்து உங்களை
௪ என்னிடத்திற்சேர்த்துக்கொள்ளுவேன்.—நான்
போகிறஇடத்தை அறிந்திருக்கிறீர்கள், வழியை
௫ யும்அறிந்திருக்கிறீர்களென்றார்.-தோமா அவரை
நோக்கி, கர்த்தாவே, நீர்போகிற இடத்தை அ
றியோமே; வழியை நாங்கள் அறிவதெப்படிஎன்
௬ று கேட்க,-யேசு, நானே வழியும், சத்தியமும்,
சீவனுமாயிருக்கிறேன்: என்னாலேயன்றி, ஒருவ
னும் பிதாவினிடத்திற்குச் செல்லமாட்டான்.-
௭ நீங்கள் என்னை அறிந்தால், என்பிதாவையும் அ
றிந்திருப்பீர்கள்: இதுமுதல் நீங்கள் அவரை அ
றிந்தும், அவரைக்கண்டுமிருக்கிறீர்களென்றார்.-
௮ பிலிப்பு, கர்த்தாவே, நீர் பிதாவை எங்க
ளுக்குக்காண்பியும், அதுவே எங்களுக்குப்போ
௯ துமென்றுசொல்ல,—யேசு, பிலிப்பே, நான்
இவ்வளவுகாலம் உங்களோடேயிருந்தும் நீ என்
னை அறியவில்லையா, என்னைக்கண்டவன் பி
தாவைக்கண்டான்; அப்படியிருக்கப் பி
தாவை எங்களுக்குக்காண்பியுமென்று நீ சொல்
௰ வதெப்படி.—நான் பிதாவிலேயும், பிதா என்னி
லேயும் இருக்கிறதை நீ விசுவாசிக்கிறதில்லை
யா; நான் உங்களுடனே சொல்லுகிறவாக்குக
ளை நான் சுயமாய்ச் சொல்லவில்லையே: என்
னில் வாசமாயிருக்கிற பிதாவானவரே கிரியை
௰௧ களைச் செய்துவருகிறார்.—நான் பிதாவிலேயும்,
பிதா என்னிலேயும் இருக்கிறதை விசுவாசியுங்
கள், விசுவாசியாதிருந்தால் கிரியைகளினிமித்த
௰௨ மாகவே என்னை விசுவாசியுங்கள்:—நான் என்பி
தாவினிடத்திற்குப் போகிறபடியினால், என்னி
டத்தில்விசுவாசமாயிருப்பவன் நான் செய்கிறகி
ரியைகளைச் செய்வதுமாத்திரமல்ல, இவைகளி
லும் மிகவும் பெரியவைகளையே செய்வானென்
றுமெய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன்.-
௰௩ நீங்கள் என்நாமத்தினாலேவேண்டிக்கொள்வதெ
துவோ, குமாரனாற் பிதாவின்மகிமை பிரகாசிக்
கப்படும்பொருட்டாக அதை நான் நிறைவேற்
௰௪ றுவேன்.—நீங்கள் என் நாமத்தினாலே வேண்டிக்
கொள்வதெதுவோ, அதை நான் செய்வேன்.
௰௫ நீங்கள் என்னில் அன்பாயிருந்தால், என்கட்
௰௬ டளைகளைக் காத்துக்கொள்ளுங்கள்.—அப்பொ
ழுது நான் பிதாவைநோக்கி வேண்டுதல்பண்
ண, என்றைக்கும் உங்களுடனே இருப்பதற்
குச்சத்திய ஆவியாகிய வேறுதேற்றுகிறவரை உ
ங்களுக்கு அவர் அனுப்புவார்.—உலகத்தார்அ ௰௭
வரைக்காணாமலும், அறியாமலும் இருக்கிறபடி
யினால், அவர்கள் அவரை அங்கிகரியார்கள்: அ
வர் உங்களுக்குள்ளேவாசம்பண்ணி, உங்கள்
உள்ளத்திலும் தங்குகிறதினால் நீங்கள் அவரை
அறிந்திருக்கிறீர்கள்;—நான் உங்களை அநாதராய் ௰௮
விடேன்: உங்களிடத்தில் வருவேன்.—சிலகா ௰௯
லத்திற்குப்பின்பு உலகத்தார் என்னைக்காணார்
கள்; நீங்களோ என்னைக்காண்பீர்கள்: நான் சீ
விக்கிறபடியினால் நீங்களுஞ்சீவிப்பீர்கள்.-நான் ௨௰
என்பிதாவிலேயும், நீங்கள் என்னிலேயும், நான்
உங்களிலேயும் இருக்கிறதை அக்காலத்தில்
அறிந்துகொள்வீர்கள்.—என்கட்டளைகளைப்பெற் ௨௧
று, அவைகளைக்காத்துக்கொள்பவனே என்னில்
அன்பாயிருக்கிறான்: என்னில் அன்பாயிருக்கிற
வன்மேல்என்பிதாவும்அன்பாயிருப்பார்,நானும்
அவனில்அன்பாயிருந்து, அவனுக்கென்னைவெ
ளிப்படுத்துவேனென்றார்.—ஸ்காரியோத்தல்லா ௨௨
த யூதா அவரைநோக்கி, கர்த்தாவே, நீர் உம்
மை உலகத்தாருக்கல்ல, எங்களுக்கு வெளிப்ப
டுத்துகிறதற்குக்காரணமென்னவென்றுகேட்க,-
யேசு அவனுக்குத்தரமாக, ஒருவன் என்னில் ௨௩
அன்பாயிருந்தால், அவன் என்வாக்குகளைக்காத்
துக்கொள்வான்: அவனில் என்பிதா அன்பாயி
ருப்பார், நாங்கள் அவனிடத்தில்வந்து அவனோ
டேவாசம் பண்ணுவோம்.—என்னில் அன்பா ௨௪
யிராதவன் என் வாக்குகளைக் காத்துக்கொள்
ளான்: நீங்கள்கேட்கிறவாக்கு என்னுடையதல்
ல, என்னை அனுப்பினபிதாவினுடையது.-நான் ௨௫
உங்களுடனே இருக்கையில் இவைகளை உங்க
ளுக்குச் சொன்னேன்.—என் நாமத்தினாற் பிதா ௨௬
அனுப்பும் பரிசுத்தஆவியாகிய தேற்றுகிறவரோ,
சகலத்தையும் உங்களுக்குப்போதித்து,நான்உங்
களுக்குச்சொல்லியயாவையும் உங்கள்நினைவில்
வருவிப்பார்.—சமாதானத்தை நான் உங்களிடத் ௨௭
தில் தந்துபோகிறேன், என்சமாதானத்தை உங்க
ளுக்குத்தருகிறேன்: உலகத்தாருக்குக் கொடுக்கி
றதுபோல நான் உங்களுக்குக் கொடுப்பதில்லை.
நீங்கள் மனங்கலங்கவும், பயப்படவும் வேண்
டாம்.—நான்போய்ப் பின்பு உங்களிடத்திற் ௨௮
குத்திரும்பிவருவேனென்று நான்உங்களுடனே
சொன்னதைக் கேட்டீர்களே. நீங்கள் என்னில்
அன்பாயிருந்தால், என் பிதா என்னிலும்பெரி

---

(௨) அதி.௰௩.௩௩,௩௬. (௩) வச.௰௮,௨௮. அப்.௧.௰௧. அதி.௰௨.௨௬. அதி.௰௭.௨௪. ௧.தெச.௪.௰௭.(௬)எபி.௯.௮.அதி.
௧.௰௭.அதி.௮.௩௨. அதி.௧.௪. அதி.௰௧.௨௫. அதி.௰.௯.(௭) அதி.௮.௰௯. (௯) அதி.௰௨.௪௫. கொலோ.௧.௰௫.எபி.
௧.௩.(௰)அதி.௰.௩௮. அதி.௰௭.௨௧,௨௩.அதி.௫.௰௯. அதி.௭.௰௬. அதி.௮.௨௮. அதி.௰௨.௪௯.(௰௧)அதி.௫.௩௬.அதி.
௰.௩௮. (௰௨) மத்.௨௧.௨௧. மாற்.௰௬.௰௭. லூக்.௰.௰௭. (௰௩) மத்.௭.௭. மத்.௨௧.௨௨. அதி.௰௫.௭,௰௬. அதி.௰௬.௨௩,
௨௪. யாக்.௧.௫. ௧.யோவா.௩.௨௨. (௰௫) வச.௨௧,௨௩. அதி.௰௫.௰,௰௪. ௧.யோவா.௫.௩. (௰௬) அதி.௰௫.௨௬.அதி.
௰௬.௭. ரோ.௮.௰௫,௨௬. (௰௭) அதி.௰௫.௨௬. அதி.௰௬.௰௩. ௧.யோவா.௪.௬. ௧.கொரி.௨.௰௪. ௧.யோவா.௨.௨௭.
(௰௮)மத்.௨௮.௨௰. வச.௩,௨௮.(௰௯)அதி.௰௬.௰௬. ௧.கொரி.௰௫.௨௰.(௨௰)அதி.௰.௩௮.அதி.௰௭.௨௧,௨௩,௨௬.(௨௧)
வச.௰௫,௨௩. ௧.யோவா.௨.௫. (௨௨) லூக்.௬.௰௬. (௨௩) வச.௰௫. ௧.யோவா.௨.௨௪. வெளி.௩.௨௰. (௨௪) அதி.
௫.௰௯,௩௮. அதி.௭.௰௬. (௨௬) வச.௰௬. லூக்.௨௪.௪௯. அதி.௰௫.௨௬. அதி.௰௬.௭. அதி.௨.௨௨. அதி.௰௬.௰௩.
௧.யோவா.௨.௨௰,௨௭. (௨௭) பிலி.௪.௭. கொலோ.௩.௰௫. வச.௧. (௨௮) வச.௩,௰௨,௰௮. அதி.௰௬.௰௬.பிலி.௨.௬

யவராயிருக்கிறபடியினாலே, நான்பிதாவினிடத்
திற்குப் போகிறேனென்று நான்சொல்வதைக்
௨௯ குறித்துச் சந்தோஷப்படுவீர்கள்.—அது நடக்கும்
பொழுது நீங்கள் விசுவாசிக்கும்பொருட்டு,அது
நடக்கிறதற்குமுன் இப்பொழுதே அதை உங்க
௩௰ ளுக்குத் தெரிவித்தேன்.—இனி நான் அதிகமாக
உங்களுடனே சம்பாஷிக்கமாட்டேன்: இவ்வு
லகத்தின் அதிபதி வருகிறான், என்னிடத்தில்
௩௧ அவனுக்கு ஒன்றுமில்லை.—நான்பிதாவின்மேல்
அன்புவைத்து, அவர் எனக்குக் கட்டளையிட்ட
படிசெய்கிறதை உலகத்தார் அறியும்படி இப்ப
டியாகும். எழுந்திருங்கள், இவ்விடம்விட்டுப்
புறப்படக்கடவோம்.

## ௰௫. அதிகாரம்.

௧. அவர் தம்மைத் திராட்சக்கொடிக்கும், தம்மு
டைய சீஷரைக் கிளைகளுக்கும் ஒப்பிடல்: ௭.
மிகுந்த கனிகொடுப்பதவசியமென்று சொல்
லல்: ௰௭. அவர்களுக்குவருந் துயரத்தையும் ஆ
றுதலையுந் தெரிவித்தல்.

நான் மெய்யான திராட்சக்கொடி, என் பிதா தி
௨ ராட்சத்தோட்டத்தைப்பாலிப்பவன்.—என்னிற்
கனிகொடாத எந்தக்கிளையையும்அவர் சேதிக்கி
றார்: கனிகொடுக்கிற கிளைகள் அதிக கனிகளைக்
கொடுக்கும்படி அவைகளைச் சீர்திருத்துகிறார்.—
௩ நான் உங்களுக்குச்சொல்லிய வாக்கினாலே நீங்
௪ கள் இப்பொழுது சுத்திகரிக்கப்பட்டீர்கள்.—என்
னிலே நிலைத்திருங்கள்,நானும் உங்களில் நிலைத்
திருப்பேன். கிளை,திராட்சக்கொடியில் நிலைத்
திருந்தாலொழியக் கனி கொடுக்கமாட்டாதது
போல், நீங்களும் என்னில் நிலைத்தாலொழியக்க
௫ னிகொடுக்கமாட்டீர்கள்.—நானே திராட்சக்கொ
டி, நீங்களோ கிளைகள்: என்னில் நிலைகொண்
டும், நான் நிலைகொள்ளப்பட்டுமிருப்பவன் மி
குந்த கனிகளைக்கொடுப்பான்: என்னையன்றி
௬ நீங்கள் ஒன்றுஞ் செய்யமாட்டீர்கள்.—ஒருவன்
என்னில் நிலைத்திராவிட்டால், அவன் உலர்ந்து
போன கிளையைப்போல் வெளியே போடப்ப
டுவான்; சனங்கள் அவைகளைச்சேர்த்து, அக்கி
௭ னியிலிட்டு எரிப்பார்கள்.—நீங்கள் என்னிலே
யும், என்வாக்குகள் உங்களிலேயும் நிலைத்திருந்
தால், நீங்கள் வேண்டிக்கொள்வதெதுவோ, அது
௮ உங்களுக்குச்செய்யப்படும்.—நீங்கள் மிகுந்த க
னிகளைக் கொடுப்பதினால் என்பிதாவின் மகிமை
பிரஸ்தாபப்படும்; அப்படியே எனக்குஞ் சீஷ
௯ ராயிருப்பீர்கள்.—பிதா என்னில் அன்பாயிருக்
கிறதுபோல, நானும் உங்களில் அன்பாயிருக்கி
றேன்: என்அன்பிலே நிலைத்திருங்கள்.—நான் ௰
என்பிதாவின் கட்டளைகளைக்காத்து, அவருடை
ய அன்பிலே நிலைத்திருக்கிறதுபோல, நீங்களும்
என் கட்டளைகளைக் காத்துக்கொண்டால் என்
அன்பில் நிலைத்திருப்பீர்கள்.—உங்களிடத்தில் ௰௧
என்சந்தோஷம் நிலைத்திருக்கிறதற்கும், உங்கள்
சந்தோஷஞ்சம்பூரணமாகிறதற்கும்நான்இவைக
ளை உங்களுக்குச்சொன்னேன்.—நான் உங்களில் ௰௨
அன்பாயிருக்கிறதுபோல,நீங்களும் ஒருவரில்ஒ
ருவர்அன்பாயிருப்பீர்களாக,இதுவே என்கட்ட
ளை.—ஒருவன் தன் சிநேகிதருக்காகத் தன்பிராண ௰௩
னைவிடுவதற்கான அன்பிலும் அதிகமான அன்பு
ஒருவரிடத்திலுமில்லை.—நான் உங்களுக்குக்கட் ௰௪
டளையிடுகிறயாவையும் நீங்கள் செய்தால், என்
சிநேகிதராவீர்கள்.—பணிவிடைக்காரன் தன் எச ௰௫
மானன் செய்கிறதை அறியாதிருக்கிறான்; ஆத
லால் இனி நான் உங்களைப் பணிவிடைக்கார
ரென்றுசொல்லேன்:நான் என்பிதாவினிடத்திற்
கேள்விப்பட்டயாவையும் உங்களுக்குத் தெரி
வித்தபடியினாலே, நான் உங்களைச்சிநேகிதரென்
று சொல்லுகிறேன்.—நீங்கள் என்னைத்தெரிந்து ௰௬
கொள்ளவில்லை, நீங்கள் என் நாமத்தினாலே பி
தாவினிடத்திற் கேட்டுக்கொள்வதெதுவோ, அ
தை அவர் உங்களுக்குக் கொடுக்கத்தக்கதாக
நீங்கள் புறப்பட்டுக் கனிகளைக்கொடுக்கும்படிக்
கும், உங்கள் கனிகள் நிலைத்திருக்கும்படிக்கும்
நானே உங்களைத் தெரிந்து ஏற்படுத்தினேன்.—
நீங்கள் ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கவேண் ௰௭
டுமென்றே உங்களுக்குக்கட்டளையிடுகிறேன்.—
உலகத்தார் உங்களை வெறுக்கும்பொழுது, அ ௰௮
வர்கள் உங்களுக்குமுன் என்னை வெறுத்தார்க
ளென்று சிந்தித்துக்கொள்ளுங்கள்.—நீங்கள் உ ௰௯
லகத்தாராயிருந்தால், உலகத்தார் தங்களைச்சேர்ந்
தவர்களென்று சிநேகிப்பார்கள்: நீங்கள் உலகத்
தாராயிராமல் என்னால் உலகத்தினின்று தெரிந்
துகொள்ளப்பட்டவர்களானபடியினால் உலகத்
தார் உங்களை வெறுக்கிறார்கள்.—பணிவிடைக் ௨௰
காரன் தன் எசமானனிலும் பெரியவனல்லவெ
ன்று நான் உங்களுக்குச் சொல்லிய வாக்கை
நினைத்துக்கொள்ளுங்கள். அவர்கள் என்னைத்
துன்பப்படுத்தினார்களேயாகில் உங்களையுந் துன்
பப்படுத்துவார்கள்; அவர்கள் என்வாக்கைக் காத்
துக்கொண்டார்களேயாகில் உங்களுடையதை
யுங் காத்துக்கொள்வார்கள்.—என்னை அனுப் ௨௧
பினவரை அறியாதவர்களானபடியினால், அவர்
கள் என் நாமத்தினிமித்தமே இவைகளையெல்

(௨௯) அதி.௰௩.௰௯. (௩௰) அதி.௰௨.௩௧. அதி.௰௬.௰௧. (௩௧) அதி.௰.௰௮. பிலி.௨.௮. எபி.௫.௮.—(௰௫. அதி.௨.) மத்.௰௫.௰௩. (௩) அதி.௰௩.௰. அதி.௰௭.௰௭. எபே.௫.௨௬. ௧.பேதுரு.௧.௨௨. (௪) கொலோ.௧.௨௩. ௧.யோவா. ௨.௬. (௫) ஓசி.௰௪.௮. பிலி.௧.௰௧. பிலி.௪.௰௩. அப்.௪.௰௨. (௬) மத்.௩.௰. மத்.௭.௰௯. (௭) வச.௰௬. அதி.௰௪.௰௩, ௰௪. அதி.௰௬.௨௩. (௮) மத்.௫.௰௬. பிலி.௧.௰௧. அதி.௰௩.௩௫. (௰) அதி.௰௪.௰௫,௨௧,௨௩.(௰௧)அதி.௰௬.௨௪. அதி. ௰௭.௰௩. ௧.யோவா.௧.௪. (௰௨) அதி.௰௩.௩௪. ௧.தெச.௪.௯. ௧.பேதுரு.௪.௮. ௧.யோவா.௩.௰௧. (௰௩) அதி.௰.௰௧, ௰௫. ரோ.௫.௭,௮. எபே.௫.௨. ௧.யோவா.௩.௰௬. (௰௪) அதி.௰௪.௰௫,௨௩.(௰௫)அதி.௰௮.௰௭. அதி.௰௭.௨௬. அப். ௨௰.௨௬. (௰௬) அதி.௬.௭௰. அதி.௰௩.௰௮. ௧.யோவா.௪.௰,௰௯. மத்.௨௮.௰௯. கொலோ.௧.௬. வச.௭. அதி.௰௪.௰௩. (௰௭) வச.௰௨. (௰௮) ௧.யோவா.௩.௧,௰௩.(௰௯)௧.யோவா.௪.௫. அதி.௰௭.௰௪. (௨௰) மத்.௰.௨௪. லூக்.௬.௪௰. அதி. ௰௩.௰௬. எசேக்.௩.௭. (௨௧) மத்.௰.௨௨. மத்.௨௪.௯. அதி.௰௬.௩.

௨௨ லாம் உங்களுக்குச்செய்வார்கள்.—நான் வந்து
அவர்களுக்கு உபதேசஞ் செய்யாதேபோனால்,
அவர்களுக்குப் பாவம் உண்டாயிராது: இப்பொ
ழுது அவர்கள்தங்கள்பாவத்தை மறைக்கிறதற்கு
௨௩ உபாயமில்லை.—என்னைப் பகைக்கிறவன் என்
௨௪ பிதாவையும் பகைக்கிறான்.—ஒருவனும் ஒரு
பொழுதுஞ்செய்யாதகிரியைகளை நான் அவர்க
ளுக்குள்ளேசெய்யாதிருந்தேனானால் அவர்களுக்
குப்பாவமில்லை: அவைகளை அவர்கள் கண்டி
ருந்தும் என்னையும், என்பிதாவையும் பகைக்கி
௨௫ றார்கள்.—"நிமித்தமில்லாமல் என்னைப் பகைத்
தார்கள்,"என்று அவர்களுடையவேதத்தில் எழு
தியிருக்கிற வாக்கியம் இவ்விதமாக நிறைவே
௨௬ றிற்று.—பிதாவினிடத்தினின்று என்னால் உங்க
ளுக்கு அனுப்பப்படுபவரும், பிதாவினின்றுபு
றப்படுகிறவருமாயிருக்கிற சத்திய ஆவியாகிய
தேற்றுகிறவர் வரும்பொழுது,என்னைக்குறித்துச்
௨௭ சாட்சியிடுவார்.—ஆதிமுதல் என்னோடேயிருந்த
படியால் நீங்களுஞ்சாட்சியிடுவீர்கள்.

## ௰௬. அதிகாரம்.

௧. கிறிஸ்து, தாம்போவதையும்,தேற்றுகிறவர்வரு
வதையும், அவர் உலகத்தாருக்குள்ளேசெய்யுங்
கிரியையையுந் தெரிவித்தல்: ௰௨. அவர் சீஷரி
டத்திற்செய்யுங்கிரியையைக்காட்டல்: ௰௬. கி
றிஸ்துப்போவதைக் குறித்துச் சொல்லிய வாக்
கைச்சீஷர்உணராதிருத்தல்: ௨௫. அவ்வாக்கை
யே அவர்களுக்குணர்த்தல்.

நீங்கள் இடறுண்ணாதபடி இவைகளை உங்க
௨ ளுக்குச் சொன்னேன்.—அவர்கள் உங்களை ஆ
லயங்களுக்குப்புறம்பாக்குவார்கள்: உங்களைக்
கொலைசெய்கிறவன், தான் தேவனுக்குத்
தொண்டுசெய்கிறேனென்று நினைக்குங் காலம்
௩ வரும்.—அவர்கள் பிதாவையும் என்னையும்அறி
யாதபடியினால், இவைகளை உங்களுக்குச்செய்
௪ வார்கள்.—அந்தக்காலம் வரும்பொழுது நான்
உங்களுக்குத் தெரிவித்ததை நீங்கள் நினைக்கும்
படி, இவைகளை உங்களுக்குச் சொன்னேன்.
நான் உங்களுடன் இருந்தபடியினால் ஆதியிலே
இவைகளை நான் உங்களுக்குத் தெரிவிக்கவில்
௫ லை.-இப்பொழுது நான் என்னை அனுப்பினவரி
டத்திற்குப்போகிறேன்; எங்கேபோகிறீரென்று
உங்களில் ஒருவனும் என்னிடத்திற் கேளாம
௬ ல்,—நான் உங்களுக்கு இவைகளைத் தெரிவித்ததி
னால்,உங்கள் இருதயங்கள் துக்கத்தினால் நிறைந்
௭ திருக்கின்றன.—ஆனாலும் நான் உங்களுக்குச்
சொல்வது சத்தியம்; நான்போகிறது உங்களுக்

கு நலம்: நான் போகாதிருந்தால், தேற்றுகிறவர்
உங்களிடத்தில் வரார்; போவேனேயாகில் அவ
ரை உங்களிடத்தில் அனுப்புவேன்.—அவர் வந் ௮
து பாவத்தையும், நீதியையும், நியாயத்தீர்ப்பை
யுங்குறித்து இவ்வுலகத்தைக்கடிந்துகொள்வார்.—
இவர்கள் என்னிடத்தில் விசுவாசமாயிராததினா ௯
லே பாவத்தைக்குறித்தும்,—நீங்கள் இனி என் ௰
னைக்காணாதபடி நான் என்பிதாவினிடத்திற்குப்
போகிறதினாலே நீதியைக்குறித்தும்,—இவ்வுல ௰௧
கத்தின் அதிபதி நியாயந்தீர்க்கப்பட்டதினாலே
நியாயத்தீர்ப்பைக் குறித்துங் கடிந்துகொள்
வார்.—நான் உங்களுக்குச்சொல்வதற்கு இன் ௰௨
னும் அநேககாரியங்களுண்டு, அவைகளை நீங்
கள் இப்பொழுது சகிக்கமாட்டீர்கள்.—சத்திய ௰௩
ஆவியானவர் வரும்பொழுது, சகல சத்தியத்தி
லும் உங்களை உட்படுத்தி நடத்துவார்: அவர் தம்
முடையவைகளைப்பேசாமல், தாம் கேள்விப்ப
டுபவைகள் எவைகளையும் பேசி, வருங்காரியங்
களை உங்களுக்குத் தெரிவிப்பார்.—அவர் என்ம ௰௪
கிமையைப் பிரகாசிக்கப்பண்ணுவார்: அவர் எ
னக்குரியவைகளிலெடுத்து,உங்களுக்குக்காட்டு
வார்.—பிதாவுக்குள்ள யாவும் என்னுடையவை ௰௫
கள்: அதினால் அவர்என்னுடையவைகளிலெடுத்
து, உங்களுக்குக் காட்டுவாரென்றேன்.—நான் ௰௬
பிதாவினிடத்திற்குப் போகிறேன்: ஆதலால்,
கொஞ்சக்காலமானபின்பு நீங்கள் என்னைக்கா
ணாமலிருப்பீர்கள், மறுபடி கொஞ்சக்காலமான
பின்பு என்னைக் காண்பீர்களென்றார்.—அப்பொ ௰௭
ழுது அவர் சீஷரிற் சிலர், நான் என் பிதாவி
னிடத்திற்குப்போகிறேன், ஆதலால் கொஞ்சக்
காலமானபின்பு என்னைக்காணீர்களென்றும், இ
னிக்கொஞ்சக்காலமானபின்பு என்னைக் காண்
பீர்களென்றும், அவர் எங்களிடத்திற் சொன்ன
தின் கருத்தென்னவோவென்று தங்களுக்குள்
ளேசொன்னதுமன்றி,—கொஞ்சக்காலமென்று ௰௮
அவர் சொன்னதின் கருத்தென்ன, அவர்சொல்
வது நமக்கு விளங்கவில்லையேஎன்றார்கள்.—
தம்மிடத்தில் அவர்கள் வினாவ விரும்புகிறதை ௰௯
யேசு அறிந்து, அவர்களைநோக்கி, கொஞ்சக்
காலமானபின்பு என்னைக்காணாமலிருப்பீர்கள்,
இனிக்கொஞ்சக்காலமானபின்பு என்னைக்காண்
பீர்களென்று நான் சொன்னதைக்குறித்து நீங்
கள் உங்களுக்குள்ளே வினாவுகிறீர்களோ.—நீங் ௨௰
கள் அழுது புலம்புவீர்கள், உலகத்தார் சந்தோ
ஷப்படுவார்கள்: நீங்கள் துக்கப்படுவீர்கள், ஆ
னாலும் உங்கள் துக்கஞ் சந்தோஷமாகுமென்று

(௨௨) அதி.௯.௪௧. ரோ.௧.௨௰. யாக்.௪.௰௭.(௨௩)௧.யோவா.௨.௨௩.(௨௪)அதி.௩.௨. அதி.௭.௩௧. அதி.௯.௩௨.(௨௫)
சங்.௩௫.௰௯. சங்.௬௯.௪. (௨௬) லூக்.௨௪.௪௯. அப்.௨.௩௩. ௧.யோவா.௫.௬.(௨௭)லூக்.௨௪.௪௮. அப்.௧.௮,௨௧,௨௨.
அப்.௨.௩௨. அப்.௩.௰௫. அப்.௪.௨௰,௩௩. ௧.பேதுரு.௫.௧. ௨.பேதுரு.௧.௰௬. லூக்.௧.௧. ௧.யோவா.௧.௧.௨.—
(௰௬. அதி. ௧.) மத்.௰௧.௬.மத்.௨௪.௰. மத்.௨௬.௩௧.(௨)அதி.௯.௨௨,௩௪. அதி.௰௨.௪௨. அதி.௮.௧. அதி.௯.௧. அதி.
௨௬.௯,௰,௰௧.(௩)அதி.௰௫.௨௧. ரோ.௰.௨. ௧.கொரி.௨.௮. ௧.தீமோ.௧.௰௩. (௪) அதி.௰௩.௰௯. அதி.௰௪.௨௯. மத்.௧.
௰௫.(௫)வச.௰,௰௬. அதி.௭.௩௩. அதி.௰௩.௩. அதி.௰௪.௨௮. (௬) வச.௨௨. அதி.௰௪.௧. (௭) அதி.௭.௩௯. அதி.௰௪.
௰௬,௨௬. அதி.௰௫.௨௬. அப்.௨.௩௩. எபே.௪.௮. (௯) அப்.௨.௨௨—௩௭. (௰) அப்.௨.௩௨. அதி.௩.௰௪. அதி.௫.௩௨.
(௰௧)அப்.௨௬.௰௮. லூக்.௰.௰௮. அதி.௰௨.௩௧. எபே.௨.௨. கொலோ.௨.௰௫. எபி.௨.௰௪.(௰௨)மாற்.௪.௩௩. ௧.கொ
ரி.௩.௨. எபி.௫.௰௨. (௰௩) அதி.௰௪.௰௭,௨௬. அதி.௰௫.௨௬. ௧.யோவா.௨.௨௰,௨௭. (௰௫) மத்.௰௧.௨௭. அதி.௩.௩௫.
அதி.௰௩.௩. அதி.௰௭.௰. (௰௬) வச.௰. அதி.௭.௩௩. அதி.௰௩.௩௩. அதி.௰௪.௰௯. வச.௨௮. அதி.௰௩.௩.

மெய்யாகவே உங்களுக்குச்சொல்லுகிறேன்.—
௨௧ ஸ்திரி பிரசவிக்கையில் தன்காலம்வந்தபடியால்
துயரமடைகிறாள். பிள்ளைபெற்றபின்பு ஒரு ம
னுஷன் உலகத்திலேபிறந்ததினால் உண்டாகுஞ்
சந்தோஷத்தினிமித்தம் அவள் அந்தத்துயரத்தை
௨௨ நினையாள்:—அதுபோல, நீங்களும் இப்பொழுது
துக்கமடைந்திருக்கிறீர்கள்: நான்மறுபடியும்உங்
களைக்காண்பேன், அப்பொழுது உங்கள் இருத
யம் மகிழும், உங்கள்மகிழ்ச்சியைஒருவனும் உங்
௨௩ களிடத்தினின்று நீக்கமாட்டான்.—அந்நாளிலே
நீங்கள் ஒன்றையும் என்னிடத்திற் கேட்கமாட்
டீர்கள். என் நாமத்தினாலே பிதாவினிடத்தில்
வேண்டிக்கொள்வதெதையும் அவர் உங்களுக்
குக்கொடுப்பாரென்று மெய்யாகவே உங்களுக்
௨௪ குச்சொல்லுகிறேன்.—இதுவரைக்கும் நீங்கள்
என்நாமத்தினால் ஒன்றையும்வேண்டிக்கொள்ள
வில்லை: வேண்டுங்கள், அப்பொழுது பெற்றுக்
கொள்வீர்கள், அதினால் உங்கள் சந்தோஷம்
௨௫ பூரணமாயிருக்கும்.—உவமைகளினாலே நான்
இவைகளை உங்களிடத்திற்பேசினேன்: நான் பி
தாவைக்குறித்து உவமைகளாக உங்களிடத்திற்
பேசாமல், வெளிப்படையாகவே உங்களுக்கு
௨௬ அறிவுகொளுத்துங் காலம்வரும்.—அந்நாளிலே
நீங்கள் என்நாமத்தினாலே விண்ணப்பம்பண்ணு
வீர்கள்; உங்களைக்குறித்து நான் பிதாவைநோக்
கிவேண்டுதல்பண்ணுவேனென்று நான்உங்களி
௨௭ டத்திற்சொல்லுகிறதில்லை.—நீங்கள் என்னை நே
சித்து, நான் தேவனிடத்தினின்று வந்
ததை விசுவாசித்தபடியினால், பிதா தாமே உங்
௨௮ களில் அன்பாயிருக்கிறார்.—நான் பிதாவினின்
று புறப்பட்டு உலகத்திலேவந்தேன்: திரும்பவும்
உலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்குப் போகி
௨௯ றேனென்றார்.—அவருடையசீஷர் அவரைநோக்
கி, இப்பொழுது நீர் உவமையில்லாமல், வெ
௩௰ ளிப்படையாய்ப்பேசுகிறீர்.—நீர் எல்லாவற்றை
யும் அறிந்திருக்கிறீர், ஒருவன் உம்மிடத்தில் வி
னவுவது உமக்குவேண்டுவதில்லையென்று இப்
பொழுது நிச்சயித்து அறிந்திருக்கிறோம்: ஆத
லால் நீர் தேவனிடத்தினின்று வந்ததை
௩௧ விசுவாசிக்கிறோமென்றுசொல்ல,—யேசு அவர்
களுக்குத்தரமாக, நீங்கள் இப்பொழுது விசு
௩௨ வாசிக்கிறீர்களா.—பாருங்கள், நீங்கள் என்னைத்
தனியேவிட்டு, சிதறஅடிக்கப்பட்டு, அவரவரி
டத்திற்குப்போகுஞ்சமயம்வரும், அது இப்பொ
ழுது வந்துவிட்டது: ஆனாலும் நான் தனித்தி
௩௩ ரேன், பிதா என்னோடேயிருக்கிறார்.—என்னா
லே நீங்கள் சமாதானமுடையவர்களாயிருக்கும்
பொருட்டு, இவைகளை உங்களுக்குச் சொன்
னேன். இவ்வுலகத்தில் உங்களுக்கு உபத்திரவ
முண்டாகும்: ஆனாலுந் திடங்கொள்ளுங்கள்;
நான் உலகத்தைச் செயித்தேனென்றார்.

## ௰௭. அதிகாரம்.

௧. கிறிஸ்து, பிதாவினிடத்தில் தமக்காகப்பிரார்த்தித்தல்: ௬. சீஷரினிமித்தம்பிரார்த்தித்தல்: ௨௰. சமஸ்த சீஷரின் ஆனந்த சௌக்கியத்தினிமித்தம் பிரார்த்தித்தல்:

யேசு இவ்வாக்குகளைச்சொல்லியபின்பு, வா ௧
னத்திற்குத் தம்முடையகண்களை ஏறிட்டு, பிதா
வே,—நேரம்வந்தது; நீர் உம்முடைய குமாரனுக் ௨
குக்கொடுத்த யாவருக்கும் அவன் நித்திய சீவ
னைக்கொடுக்கும்பொருட்டு, எல்லாமனுஷர்மே
லும் அதிகாரத்தை அவனுக்குக்கொடுத்தபடியே,
அவன் உம்முடைய மகிமையை விளக்கும்ப
டி, நீர் உமது குமாரனுடைய மகிமையைவி
ளங்கப்பண்ணியருள்வீராக.—ஒன்றான மெய்த் ௩
தேவனாகிய உம்மையும், நீர் அனுப்பினயே
சுக் கிறிஸ்துவையும் அறிந்துகொள்வதே
நித்திய சீவன்.—பூமியில் உம்முடைய மகிமை ௪
யைப் பிரகாசிக்கப்பண்ணினேன், நான் செய்
யும்படி நீர்கொடுத்த கிரியையை முடித்தேன்.—
இப்பொழுது பிதாவே, உலகந்தோன்றுகிறதற்கு ௫
முன் உம்மோடு எனக்குண்டான அந்த மகிமை
யை நான் உம்மிடத்திற் பெறும்படி செய்யும்.—
நீர் உலகத்தினின்றும் எனக்குக்கொடுத்த மனுஷ ௬
ருக்கு உம்முடைய நாமத்தை வெளிப்படுத்தி
னேன்: அவர்கள் உம்முடையவர்களாயிருந்தார்
கள், அவர்களை என்னிடத்தில் ஒப்பித்தீர்; அவர்
கள் உம்முடையவாக்கைக் காத்து நடந்திருக்கி
றார்கள்.—நீர் எனக்குத்தந்த யாவும் உம்மால் உண் ௭
டாயினவென்று அவர்கள் இப்பொழுது உணர்ந்
துகொண்டார்கள்.—நீர் எனக்குத்தந்தவாக்குகளை ௮
நான் அவர்களுக்குக்கொடுத்தேன்; அவர்கள் அ
வைகளை அங்கிகரித்துக்கொண்டு, நான் உம்மி
டத்தினின்று புறப்பட்டுவந்தேனென்று அவர்
கள் நிச்சயித்தறிந்து, நீர் என்னை அனுப்பினீரென்
று விசுவாசித்திருக்கிறார்கள்.—நான் அவர்கள் நி ௯
மித்தம் வேண்டுதல்பண்ணுகிறேன்: உலகத்தாரி
னிமித்தமாகவல்ல, நீர் எனக்குக்கொடுத்தவர்கள்
உம்முடையவர்களானபடியால், அவர்கள்நிமித்
தமாகவே வேண்டுதல்பண்ணுகிறேன்.—என்னு ௰
டையவர்கள் யாவரும் உம்முடையவர்கள், உம்
முடையவர்கள் என்னுடையவர்கள்; அவர்க

(௨௧) ஏசா.௨௬.௰௭. (௨௨) வச.௬. லூக்.௨௪.௪௧,௫௨. அதி.௰௪.௧,௨௭. அதி.௨௰.௨௰. அப்.௨.௪௬. அப்.௰௩.௫௨. ௧.பேதுரு.௧.௮. மத்.௭.௭. அதி.௰௪.௰௩. அதி.௰௫.௰௬. (௨௪) அதி.௰௫.௰௧. (௨௬) வச.௨௩. (௨௭) அதி.௰௪.௨௧, ௨௩. வச.௩௰. அதி.௩.௰௩. அதி.௰௭.௮.(௨௮)அதி.௰௩.௩.(௩௰)அதி.௨௧.௰௭. வச.௨௭. அதி.௰௭.௮. (௩௨) மத்.௨௬. ௩௧. மாற்.௰௪.௨௭. அதி.௨௰.௰. அதி.௮.௨௯. அதி.௰௪.௰,௰௧. (௩௩) ஏசா.௯.௬. அதி.௰௪,௨௭. ரோ.௫.௧. எபே.௨. ௰௪. கொலோ.௧.௨௰. அதி.௰௫.௰௯,௨௰,௨௧. ௨.தீமோ.௩.௰௨. அதி.௰௪.௧. ரோ.௮.௩௭. யோவா.௪.௪. யோவா.௫. ௪.—(௰௭. அதி. ௨.) அதி.௰௨.௨௩. அதி.௰௩.௩௨. தானி.௭.௰௪. மத்.௰௧.௨௭. மத்.௨௮.௰௮. அதி.௩.௩௫. ௧.கொரி. ௰௫.௨௫,௨௭. பிலி.௨.௯. எபி.௨.௮. வச.௬,௯,௨௪. (௩) ஏசா.௫௩.௰௧. ௧.கொரி.௮.௪. ௧.தெச.௧.௯. அதி.௩.௩௪. அதி.௬.௨௯,௫௭. அதி.௰௧.௪௨. (௪) அதி.௰௩.௩௧. அதி.௪.௩௪. அதி.௰௯.௩௰. அதி.௰௪.௩௧. அதி.௰௫.௰. (௫) அதி. ௧.௧,௨. அதி.௰௪.௯. பிலி.௨.௬. கொலோ.௧.௰௫,௰௭. எபி.௧.௩,௰. (௬) சங்.௨௨.௨௨. வச.௨,௯,௰௧. அதி.௰௫.௰௯. (௮) அதி.௮.௨௮. அதி.௰௬.௨௭,௩௰. (௯) ௧.யோவா.௫.௰௯. (௰) அதி.௰௬.௰௫.

௰௧ ளால் என்மகிமை பிரகாசிக்கும்.-நான் இனி உல
கத்திலே தங்கேன், உம்மிடத்திலேவருகிறேன்,
இவர்களோ உலகத்திலே தங்குவார்கள்.பரிசுத்த
முள்ளபிதாவே, நீர் எனக்குத்தந்த இவர்கள் நம்
மைப்போல் ஒன்றாயிருக்கும்படி, நீர் இவர்களை
உம்முடைய நாமத்தினாலே காத்துக்கொள்ளும்.-
௰௨ இவ்வுலகத்தில் நான் இவர்களுடனே இருக்
கையில், இவர்களை உம்முடைய நாமத்தினாலே
காத்துக்கொண்டேன்: நீர் எனக்குக்கொடுத்தவர்
களைக் காத்துக்கொண்டுவந்தேன், வேத வாக்கி
யம் நிறைவேறும்படி, கேட்டின்மகனே யன்றி
இவர்களில்வேறொருவனுங்கெட்டுப்போகவில்
௰௩ லை;—இப்பொழுது நான் உம்மிடத்தில் வருகி
றேன்; என்றால் இவர்கள் உள்ளத்தில் பூரணசந்
தோஷம் உண்டாகும்பொருட்டு, இவ்வுலகத்
௰௪ தில் இவைகளைச்சொல்லுகிறேன்.—நான் உம்
முடையவாக்கை இவர்களுக்குக்கொடுத்தேன்;
நான் இவ்வுலகத்தின் தன்மையுள்ளவனல்லாதது
போல, இவர்களும் இவ்வுலகத்தின் தன்மையுள்
ளவர்களல்ல; அதினால் உலகத்தார் இவர்களைவெ
௰௫ றுக்கிறார்கள்.—நீர் உலகத்தினின்று இவர்களை
எடுத்துக்கொள்ளும்படியல்ல,இவர்களைத்தீமைக்
குவிலக்கிக்காக்கும்பொருட்டு வேண்டுதல்பண்
௰௬ ணுகிறேன்.—நான் உலகத்தின் தன்மையுள்
ளவனல்லாததுபோல, இவர்களும் இவ்வுலகத்
௰௭ தின் தன்மையுள்ளவர்களல்ல.-உம்முடைய சத்
தியத்தினால் இவர்களைப்பரிசுத்தஞ்செய்யும்: உம்
௰௮ முடையவாக்கே சத்தியம்.—நீர் என்னை இவ்வு
லகத்தில் அனுப்பினதுபோல,நானும் இவர்களை
௰௯ உலகத்தில் அனுப்புகிறேன்.-இவர்கள் சத்தியத்
தினாலே பரிசுத்தமாக்கப்பட்டவர்களாகும்பொ
ருட்டு, இவர்கள் நிமித்தம் நான் என்னைப்பரிசுத்
௨௰ தப்படுத்துகிறேன்.—மேலும் நான் இவர்கள் நி
மித்தம் மாத்திரமல்ல, இவர்களுடைய உபதேசத்
தினால் என்னிடத்தில் விசுவாசமானவர்கள் எல்
௨௧ லாரும் ஒன்றாயிருக்கும்படிக்கும்,-பிதாவே, நீர்
என்னை அனுப்பினதை உலகத்தார் விசுவாசிப்ப
தற்காக நீர் என்னிலேயும், நான் உம்மிலேயும்
இருக்கிறதுபோல,அவர்களும் நம்மில் ஒன்
றாயிருக்கும்படிக்கும், அவர்கள் நிமித்தமும்
௨௨ வேண்டுதல்பண்ணுகிறேன்.-நாம் ஒன்றாயிருக்
கிறதுபோல், இவர்களும் ஒன்றாகும்படிக்கும்,
நான் இவர்களிலேயும் நீர் என்னிலேயும்இருக்க
இவர்கள் ஒருமைப்பாட்டில் பூரணப்படும்படிக்
௨௩ கும்,—நீர் என்னை அனுப்பினதையும், என்னை
நேசித்ததுபோல் இவர்களையும் நேசித்ததையும்,
உலகத்தார் அறியும்படிக்கும், நீர் எனக்குத்தந்த
மகிமையைநான்இவர்களுக்குக்கொடுத்தேன்.—
பிதாவே, உலகம் அத்திபாரம் போடப்படுவ ௨௪
தற்கு முன்னேநீர் என்னிடத்தில் அன்புவைத்த
படியினால், எனக்குத்தந்த என்னுடைய மகிமை
யை நீர் எனக்குக்கொடுத்தவர்கள் காணும்படி,
நான் இருக்கும் இடம் எங்கேயோ, அங்கே அ
வர்களும் என்னோடே யிருக்கவேண்டுமென்று
விரும்புகிறேன்.-ஆ, நீதியுள்ளபிதாவே, உலகத் ௨௫
தார் உம்மை அறியவில்லை,நானோ உம்மைஅறிந்
திருக்கிறேன், நீர் என்னை அனுப்பினதை இவர்
கள் அறிந்திருக்கிறார்கள்.—நீர் என்னிடத்தில் ௨௬
வைத்த அன்பு இவர்களில் இருக்கும்படிக்கும்,
நான் இவர்களில்இருக்கும்படிக்கும் உம்முடை
ய நாமத்தை இவர்களுக்குத் தெரியப்படுத்தினே
ன்: மேலுந் தெரியப்படுத்துவேனென்றார்.

## ௰௮. அதிகாரம்.

௧. யேசு ஒப்பிக்கப்படல்: ௰௨. மகாஆசாரியனி
டத்தில் அவரைக்கொண்டுபோதல்: ௰௫. பே
துருவும் யோவானும் அவருக்குப் பின்செல்
லல்: ௰௯. அவர் நியாயவிசாரணையில் உட்ப
டல்: ௨௪. பேதுரு அவரைமறுத்தல்: ௨௮. அ
வரைப் பிலாத்தினிடத்திற் கொண்டுபோதல்:
௩௩. பிலாத்து அவருக்குத்தீர்ப்புச்சொல்லல்.

யேசு இவ்வாக்குகளைச் சொல்லியபின்பு,தம் ௧
முடைய சீஷருடனே கிதிரோனாற்றுக்கு அப்
புறம்போனார், அங்கே ஒருதோட்டமிருந்தது,
அவரும் அவருடையசீஷரும் அதிற்பிரவேசித்
தார்கள்.—யேசு தம்முடைய சீஷருடனே அங் ௨
கே அநேகந்தரம் போய் வந்ததினால், அவரைக்
காட்டிக்கொடுத்த யூதாவும் அந்தஇடத்தை அறிந்
தான்.—யூதா இராணுவத்தாரையும், பிரதான ஆ ௩
சாரியர் பரிசேயர் என்பவர்களிடத்தினின்று
வந்தசேவகரையுங் கூட்டிக்கொண்டு, பந்தங்
களோடும், தீவர்த்திகளோடும், ஆயுதங்களோடும்
அவ்விடத்திற்கு வந்தான்.—தமக்கு நேரிடும்யா ௪
வையும் யேசு அறிந்து புறப்பட்டு, அவர்களை
நோக்கி, ஆரைத் தேடுகிறீர்களென்று கேட்க,-
நாசரேத்தூரானாகிய யேசுவை யென்று அவர் ௫
கள் உத்தரஞ்சொன்னார்கள். அதற்கு யேசு நா
னே அவனென்றார். அவரைக்காட்டிக்கொடுத்த
யூதாவும் அவர்களுடனே நின்றான்.-நானே அவ ௬
னென்று அவர் சொன்னமாத்திரத்தில் அவர்கள்
பின்னிட்டுத் தரையிலே விழுந்தார்கள்.—பின் ௭
னும் அவர் அவர்களைநோக்கி, ஆரைத்தேடுகிறீர்க
ளென்று கேட்க, நாசரேத்தூரானாகிய யேசு
வை என்றார்கள்.-யேசு, நானே அவனென்று ௮
உங்களுடனேசொன்னேன்: ஆதலால் நீங்கள்

(௰௧) அதி.௰௩.௧. அதி.௰௬.௨௮. ௧.பேதுரு.௧.௫. யூதா.௧. வச.௨௧,. அதி.௰.௩௰. (௰௨) அதி.௬.௩௯. எபி.௨.௰௩.
அதி.௰௮.௯. ௧.யோவா.௨.௰௯. அதி.௰௩.௰௮. சங்.௱௯.௮. அப்.௧.௨௰.(௰௪)வச.௮. அதி.௰௫.௰௮,௰௯. ௧.யோவா.
௩.௰௩. அதி.௮.௨௩. (௰௫) மத்.௬.௰௩. கலா.௧.௪. ௨.தெச.௩.௩. ௧.யோவா.௫.௰௮. (௰௬) வச.௰௪. (௰௭) அதி.௰௫.
௩. அப்.௰௫.௯. எபே.௫.௨௬. ௧.பேதுரு.௧.௨௨. ௨.சாமு.௭.௨௮. சங்.௱௰௯.௱௪௨,௱௫௧. அதி.௮.௪௰. (௰௮) அதி.
௨௰.௨௧. (௰௯) ௧.கொரி.௧.௨,௩௰. ௧.தெச.௪.௭. எபி.௰.௰. (௨௧) வச.௰௧,௨௨. அதி.௰.௰௬. ரோ.௰௨.௫. கலா.௩.
௨௮. அதி.௰௪.௰௧. (௨௨) அதி.௰௪.௨௰. ௧.யோவா.௧.௩. கொலோ.௩.௰௪. (௨௪) அதி.௰௪.௩. ௧.தெச.௪.௰௭. (௨௫)
அதி.௰௫.௨௧. அதி.௰௬.௩. அதி.௭.௨௯. அதி.௰.௰௫. வச.௮. அதி.௰௬.௨௭. (௨௬) வச.௬. அதி.௰௫.௯.—
(௰௮. அதி. ௧.) மத்.௨௬.௩௬. ௨.சாமு.௨௩.௰௫. (௨) லூக்.௨௧.௩௭. (௩) மத்.௨௬.௪௭. அப்.௧.௰௬.

என்னைத்தேடினீர்களானால் இவர்களைப் போக
௯ விடுங்களென்றார்.—அதினால் நீர் எனக்குக்கொ
டுத்தவர்களில் ஒருவனையாகிலும் நான் இழக்க
வில்லையென்று அவர் சொன்னவாக்கு நிறை
௰ வேறிற்று.—அப்பொழுது சீமோன் பேதுரு தன்
னிடத்திலிருந்தகட்கத்தையுருவி, பிரதான ஆசா
ரியனுடைய பணிவிடைக்காரனின்வலதுகாதற
வெட்டினான். அந்த வேலைக்காரனுடைய பேர்
௰௧ மல்கூஸ்.—யேசு பேதுருவைநோக்கி, உன் கட்
கத்தை உறையிலேபோடு: பிதா எனக்குத்தந்
த பாத்திரத்தில் நான் பானம்பண்ணாதிருப்பே
௰௨ னோவென்றார்.—அப்பொழுது இராணுவத்தாரும்,
சேனாபதியும், யூதருடைய சேவகரும் யேசு
௰௩ வைப் பிடித்து, அவரைக்கட்டி,—முதலாவது
அன்னாவிடத்திற் கொண்டுபோனார்கள்; அவன்
அவ்வருஷத்து மகா ஆசாரியனாகிய காய்பாவுக்
௰௪ கு மாமனாயிருந்தான்.—ஒருமனுஷன் சனங்கள்
நிமித்தம் மரணமடைவது தகுதியென்று யூதருக்
கு ஆலோசனைசொன்னவன் அந்தக் காய்பாவே.
௰௫ சீமோன் பேதுருவும், வேறொருசீஷனும் யே
சுவுக்குப் பின்சென்றார்கள்: அந்தச்சீஷன் ம
கா ஆசாரியனுக்கு அறிமுகமானவனாயிருந்த
தினால், யேசுவுடனே மகாஆசாரியனுடைய
௰௬ மாளிகையிற் பிரவேசித்தான்.—பேதுருவோ வெ
ளிவாசற்படியருகே நின்றான். அப்பொழுது ம
காஆசாரியனுக்கு அறிமுகமான மற்றச் சீஷன்
வெளியேபோய், வாசற்காவல் ஸ்திரியுடனே
பேசி, பேதுருவை உள்ளே அழைத்துக்கொண்
௰௭ டான்.—அப்பொழுது வாசற்காவற்காரி பேது
ருவைநோக்கி, நீயும் அந்தமனுஷனுடைய சீஷ
ரில் ஒருவனல்லவாவென்றுகேட்க, அவன், நா
௰௮ னல்லவென்றான்.—சீதளகாலமானபடியினாலேப
ணிவிடைக்காரரும், சேவகருங் கரியில் நெருப்
பைமூட்டி, நின்று குளிர்காய்ந்தார்கள்: அவர்க
ளுடனே பேதுருவும் நின்று குளிர்காய்ந்தான்.
௰௯ அப்பொழுது மகா ஆசாரியன் யேசுவினிட
த்தில், அவருடைய சீஷரையும், அவருடைய
௨௰ உபதேசத்தையுங்குறித்து வினாவினான்.—யேசு
அவனுக்குத்தரமாய், நான் பிரசித்தமாக உலகத்
தாருடனேபேசினேன்; ஆலயத்திலேயும், யூதர்
கூடிவருந் தேவாலயத்திலேயும் எப்பொழுதும்
உபதேசம்பண்ணினேன்; அந்தரங்கத்திலேநான்
௨௧ ஒன்றும்பேசவில்லை.—நீர் என்னிடத்தில் என்
விசாரிக்கிறீர், என்சொல்லைக் கேட்டவர்களுக்
கு நான்சொல்லியவைகளைக்குறித்து அவர்களி
டத்திலே விசாரிக்கலாம்: நான்பேசினதின்ன
௨௨ தென்று அவர்களுக்குத்தெரியுமென்றார்.—அவர்
இப்படிச் சொன்னபொழுது, சமீபமாய் நின்ற
சேவகரில் ஒருவன், மகா ஆசாரியருக்குஇப்படி
உத்தரஞ் சொல்லலாமாவென்று சொல்லி, யே
சுவை ஒரு அடியடித்தான்.—யேசு அவனுக் ௨௩
குத்தரமாக, நான் தகாததைச் சொன்னேனானால்
தகாததைக்குறித்துச் சாட்சியிடு: நான் தகுந்த
தைச் சொல்லியிருக்க, என் என்னை அ
டிக்கிறாயென்றார்.—அன்னா, அவரைக் கட்டப் ௨௪
பட்டவராய் மகா ஆசாரியனாகிய காய்பாவினி
டத்திற்கு அனுப்பியிருந்தான்.—சீமோன் பே ௨௫
துரு நின்று குளிர்காய்ந்தான்: அப்பொழுது சி
லர் அவனைநோக்கி, நீயும் அவனுடைய சீஷ
ரில் ஒருவனல்லவாவென்று கேட்க, அவன், நா
னல்லவென்று மறுதலித்தான்.—மகா ஆசாரிய ௨௬
னுடையபணிவிடைக்காரரில் ஒருவனும், பேது
ருவினாற் காதறவெட்டப்பட்டவனுக்கு இனத்
தானுமானவன் அவனைநோக்கி, நான் உன்னை அ
வரோடே தோட்டத்திற் காணவில்லையாவென்
றான்.—அப்பொழுது பேதுரு, திரும்பவும் மறுத ௨௭
லித்தான்: உடனே சேவல் கூவிற்று.
பின்பு அவர்கள் காய்பாவினிடத்தினின்று ௨௮
யேசுவை அதிபதியின் வீட்டுக்குக்கொண்டு
போனார்கள்: விடியற்காலமாயிற்று; அவர்கள் நி
யாயஸ்தலத்திற்போய் அசுசிப்பட்டால் பஷ்கா
வைப் புசிக்கக்கூடாதென்றஞ்சி, தாங்கள் அந்
தவீட்டிற்பிரவேசிக்கவில்லை.—ஆதலால் பிலாத் ௨௯
து வெளியே அவர்களிடத்திற்குப்போய், இந்த
மனுஷன்மேல் நீங்கள் என்னகுற்றஞ் சாற்றுகி
றீர்களென்றான்.—அவனுக்குத்தரமாகஅவர்கள், ௩௰
இவன் குற்றவாளியல்லாதிருந்தால், உம்மிடத்
தில் ஒப்பிக்கமாட்டோமென்றார்கள்.—அப்பொ ௩௧
ழுது பிலாத்து அவர்களைநோக்கி, இவனை நீங்க
ள்கொண்டுபோய், உங்கள் நியாயசாஸ்திரத்திற்
கேற்கஇவனுக்குத்தீர்ப்புக்கொடுங்களென்றான்.
அதற்கு யூதர், ஒருவனுக்கு மரண தண்டனை
கொடுப்பதற்கு எங்களுக்கு அதிகாரமில்லையே
யென்றார்கள்.—யேசு தமக்கு மரணம் வரும்வ ௩௨
கையைக்குறித்துச்சொல்லியிருந்த வாக்கு இவ்
விதமாக நிறைவேறலாயிற்று.—அப்பொழுது பி ௩௩
லாத்துத்திரும்பவும் நியாயஸ்தலத்திற் பிரவேசித்
து, யேசுவை அழைத்து, நீ யூதருடைய இராச
னாவென்றுகேட்க,—யேசு அவனுக்குத்தரமாக, ௩௪
இதை நீயாகக்கேட்கிறாயா, மற்றவர்கள் என்னை
க்குறித்து இதை உனக்குச்சொன்னார்களாவென்
றார்.—பிலாத்து உத்தரமாக, நான் யூதனா; உன் ௩௫
னுடையசாதியாரும், பிரதானஆசாரியரும் உன்
னை எனக்கு ஒப்பித்தார்கள்: என்னசெய்தா
யென்றுகேட்க,—யேசு பிரதியுத்தரமாக, என் ௩௬
இராச்சியம் இவ்வுலகசம்பந்தமானதல்ல: என் இ
ராச்சியம் இவ்வுலகசம்பந்தமானதுண்டானால்,
நான் யூதர்கையில் அகப்படாதபடி, என்பணி
விடைக்காரர் யுத்தஞ் செய்வார்கள்: என் இராச்
சியம் இம்மையிலுள்ளதல்லவென்றார்.—அப்பொ ௩௭

(௯) அதி.௰௭.௰௨. (௰) மத்.௨௬.௫௧. (௰௧) மத்.௨௰.௨௨. மத்.௨௬.௩௯,௪௨. (௰௩) மத்.௨௬.௫௭. லூக்.௩.௨. வச.௨௪. (௰௪) அதி.௰௧.௫௰. (௰௫) லூக்.௨௨.௫௪. (௰௬) மாற்.௰௪.௬௬. (௨௰) மத்.௨௬.௫௫. லூக்.௪.௰௫. (௨௨) எரே.௨௰.௨. அப்.௨௩.௨. (௨௪) மத்.௨௬.௫௭. (௨௫) மத்.௨௬.௬௯,௭௧. (௨௭) லூக்.௨௨.௬௰. அதி.௰௩.௩௮. (௨௮) மத்.௨௭.௨. மாற்.௰௫.௧. லூக்.௨௩.௧. அப்.௩.௰௩. மத்.௨௭.௨௭. அப்.௰.௨௮. (௩௨) மத்.௨௰.௰௯. (௩௩) மத்.௨௭.௰௧. (௩௬) ௧.தீமோ.௬.௰௩. தானி.௨.௪௪. தானி.௭.௰௪. லூக்.௰௨.௰௪. (௩௭) அதி.௮.௪௭. ௧.யோவா.௩.௰௯.

ழுது பிலாத்து அவரைநோக்கி, நீ இராசனல்ல
வாவென்றுகேட்க, யேசு உத்தரமாக, நீ சொல்
லுகிறபடி நான் இராசாவே. இதற்காகவே நான்
பிறந்தேன், சத்தியத்தைக்குறித்துச் சாட்சியி
டும்படிக்கே நான் இவ்வுலகத்திற்கு வந்தேன்.
சத்தியத்தின்பட்சத்தானெவனோ, அவன் எனக்
ஙஅ குச்செவிகொடுக்கிறானென்று சொல்ல,—பிலாத்
து, சத்தியம் எதென்றுசொல்லி, திரும்பவும் யூதரி
ளிடத்திற்போய் அவர்களைநோக்கி, நான் அவ
ஙகூ ளிடத்தில் ஒருகுற்றமுங்காணவில்லை.—பஷ்கா
வில் நான் ஒருவனைவிடுதலைபண்ணுவது உங்க
ளுக்கு வழக்கமாயிருக்கிறதே: ஆகையால் நான்
யூதருடைய இராசாவை உங்களுக்காகவிடுதலை
பண்ண, உங்களுக்கு விருப்பமுண்டாவென்
சய றான்.—அப்பொழுது அவர்கள் எல்லாருஞ்சத்த
மிட்டு, இவனையல்ல, பரப்பாசை விடுதலைபண்
ணவேண்டுமென்றார்கள். பரப்பாஸ் ஒரு திரு
டனாயிருந்தான்.

## யகூ. அதிகாரம்.

க. பிலாத்தினாற் கிறிஸ்துக் குற்றமற்றவராய்க்கா
ணப்படல், அவர் அடிக்கப்பட்டு முள்முடி
சூட்டப்படல்: அ. யேசுவை விடுதலையாக்
கப்பிலாத்து வகைதேடல்: யரு. யூதருடை
ய ஆரவாரத்தினால் அவரைச் சிலுவையில் அ
றைய ஒப்பித்தல்: யஎ. அவரைச் சிலுவையில்
அறைதல்: உங. அவருடையவஸ்திரத்தைப்பங்
கிடல்: உரு. அவர் தமது மாதாவைக்கண்டு பே
சல்: உஅ. அவர் மரணமடைதல்: ஙக. அவரு
டையவிலாவை ஈட்டியினாலே குத்தல்: ஙஅ.
அவரை அடக்கம்பண்ணல்.

அப்பொழுது பிலாத்து யேசுவைப் பிடித்
உ து வாரினால்அடிப்பித்தான்.—பின்பு போர்ச்சே
வகர் முள்ளுகளினால் ஒரு முடியைப்பின்னி,
அவருடைய சிரசின்மேல் அதை வைத்து, தூ
ங மிரவருண அங்கியை அவருக்குத்தரித்து,—யூத
ருடைய இராசாவே, வாழ்கவென்றுசொல்லி, அ
வரைத் தங்கள் கைகளினால் அறைந்தார்கள்.—
ச பிலாத்துத் திரும்பவும் வெளியேபோய், அவர்
களைநோக்கி, கேளுங்கள், இவனிடத்தில் ஒரு
குற்றத்தையும்நான்காணவில்லையென்பதை நீங்
கள் அறியும்படி, இவனை உங்களிடத்திற்குவெ
ரு ளியே கொண்டுவருகிறேனென்றான்.—பின்பு
யேசு, அந்தமுள்முடியும், தூமிரவருண அங்கி
யுந்தரிக்கப்பட்டவராய் வெளியே வர, பிலாத்
து அவர்களைநோக்கி, இந்தமனுஷனைப்பாருங்க
சு ளென்றான்.—பிரதான ஆசாரியருஞ் சேவகரும்
அவரைக்கண்டபொழுது சத்தமிட்டு, சிலுவை
யில் அறையும், சிலுவையில் அறையுமென்று
சொல்ல, பிலாத்து, நீங்களே இவனைக்கொண்டு
போய்ச் சிலுவையில் அறையுங்கள்: இவனிடத்
தில் ஒரு குற்றத்தையும் நான் காணவில்லையே
யென்றான்.—யூதர் உத்தரமாக, எங்களுக்கு ஒரு எ
நியாயப்பிரமாணமுண்டு, இவன் தன்னைத் தே
வனுடைய குமாரனென்று சொன்னபடியினா
ல் அந்த நியாயப்பிரமாணத்தின்படியே இவன்
மரணம் அடையவேண்டுமென்றார்கள்.

அந்தச்சொல்லைப் பிலாத்துக்கேட்டபொழுது அ
அதிகமாய்ப்பயந்து, திரும்பவும் நியாயஸ்தலத்
திற் பிரவேசித்து,—யேசுவை நோக்கி, நீ எவ் கூ
விடத்தானென்றுகேட்க, யேசு உத்தரங்கொ
டுக்கவில்லை.—ஆதலால் பிலாத்து அவரிடத்தில், ய
நீ எனக்கு உத்தரஞ்சொல்லுகிறதில்லையா, உன்
னைச் சிலுவையில் அறைகிறதற்கும் எனக்குஅதி
காரமுண்டு, உன்னைவிடுதலைபண்ணுவதற்கும் எ
னக்கு அதிகாரமுண்டு, இது உனக்குத் தெரியா
தாவென்றான்.—யேசு, உயரத்திலிருந்து கொடுக் யக
கப்படாதிருந்தால் என்னைவிரோதிக்கும் ஒரு அ
திகாரமும் உனக்குண்டாயிருக்கமாட்டாது: ஆ
தலால் என்னைஉன்னிடத்தில் ஒப்பித்தவனுக்கு
அதிகபாவமுண்டென்றார்.—அது முதல் பிலாத்து யஉ
அவரைவிடுதலைபண்ணவகைதேடினான்: யூதர்க
ளோ சத்தமிட்டு, இவனை விடுதலைபண்ணினால்
நீர் இராசனுடைய பட்சத்தானல்ல: தன்னை இ
ராசாவாக்குகிறவனெவனோ, அவன் இராசனுக்
கு விரோதியாயிருக்கிறானென்றார்கள்.

பிலாத்து இந்தச்சொல்லைக்கேட்டு, எறக்குறை யங
ய ஆறும்மணிநேரத்தில், அவன் யேசுவைவெ
ளியே அழைத்துப்போய், தளவரிசைப்படுத்தி
யஇடமென்றும், எபிரேயுபாஷையிலே கப்பதா
வென்றுஞ்சொல்லப்பட்ட ஸ்தானத்திலே நியா
யாசனத்தின்மேல் உட்கார்ந்து, யூதரை நோக்கி,
உங்கள் இராசாவைப்பாருங்களென்றான்.—அந் யச
தநாள் பஷ்காவை ஆயத்தப்படுத்துகிற நாளாயி
ருந்தது.—அவர்கள் சத்தமிட்டு, அகற்றும், அகற் யரு
றும், இவனைச் சிலுவையில் அறையுமென்று
சொல்ல, பிலாத்து, உங்களுடையஇராசனை நான்
சிலுவையில் அறையலாமாவென்றான்; அதற்குப்
பிரதான ஆசாரியர், கைசரேயன்றி, வேறொரு
இராசா எங்களுக்கு இல்லையென்றார்கள்.—அப் யசு
பொழுது அவரைச் சிலுவையில் அறையும்படி
அவன் அவர்களுக்கொப்பிக்க, அவர்கள் யே
சுவை நடத்திக்கொண்டுபோனார்கள்.—அவர் யஎ
தம்முடைய சிலுவையைச்சுமந்துகொண்டு, எபி
ரேயுபாஷையிலே கொல்கொதாவென்று பெயர்
கொண்ட கபாலஸ்தானம் என்னும் இடத்திற்
குப் புறப்பட்டுப்போனார்.—அங்கே இருபக்கங் யஅ
களிலே வேறு இருவரையும், அவர்கள் நடுவிலே
யேசுவையுஞ் சிலுவைகளில் அறைந்தார்கள்.

"நாசரேத்தூரானாகிய யேசு என்னும் யூத யகூ
ரின் இராசா," என்று பிலாத்து எழுதி, அதைச்
சிலுவையின்மேற் சேர்ப்பித்தான்.—யேசு சிலு உய
வையில் அறையப்பட்ட இடம் நகரத்திற்குச்ச

(ஙஅ) மத்.உஎ.உச. அதி.யக.ச,சு. (ஙகூ) மத்.உஎ.யரு. (சய) அப்.ங.யச. லூக்.உங.யக.—(யகூ. அதி. க.) மத்.உஎ.உசு. லூக்.யஅ.ஙங. (ச) அதி.யஅ.ஙஅ. (சு) அப்.ங.யங. (எ) லேவி.உச.யசு. மத்.உசு.சுரு. மத்.ய.ஙங. (கூ) ஏசா.ருங.எ. மத்.உஎ.யஉ,யச. (யக) லூக்.உஉ.ருங. அதி.எ.ஙய. (யஉ) லூக்.உங.உ. அப்.யஎ.எ.(யச)மத்.உஎ.சுஉ.(யரு) ஆதி.சக.ய. (யசு) மத்.உஎ.உசு,ஙக. (யஎ) மத்.உஎ.ஙக,ஙங. எண்.யரு.ஙசு. எபி.யங.யஉ. (யகூ) மத்.உஎ.ஙஎ.

மீபமானதினாலும், அது எபிரேயு, கிரேக்கு, லத்
தீன் பாஷைகளில் எழுதப்பட்டதினாலும், யூ
தரில் அநேகர் அந்த எழுத்தை வாசித்தார்கள்.—
உக யூதருடைய பிரதான ஆசாரியர், பிலாத்தினிடத்
தில், யூதருடைய இராசாவென்று நீர் எழுதா
மல், தான் யூதருடைய இராசாவென்று அவன்
சொன்னானென்பதாக எழுதவேண்டுமென்றார்
உஉ கள்.—பிலாத்து உத்தரமாக, நான் எழுதினது
எழுதியாயிற்றென்றான்.
உ௩ போர்ச்சேவகர் யேசுவைச் சிலுவையில்
அறைந்தபின்பு, அவருடைய வஸ்திரங்களை எ
டுத்து, ஒவ்வொரு சேவகனுக்கு ஒவ்வொருபங்
காக நாலுபங்காக்கினார்கள்; அங்கியையும் எடுத்
தார்கள்: அந்த அங்கி தைக்கப்படாமல், மேலே
தொடங்கி முழுவதும் நெய்யப்பட்டிருந்தபடி
உச யால்,-அவர்கள் தங்களுக்குள்ளேபேசி, இதைக்
கிழியாமல், இது எவனுக்குவருமோ, அறியும்ப
டிசீட்டுப்போடுவோமென்றார்கள்:“என்வஸ்திர
ங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டார்கள், என்
உடைக்குச் சீட்டுப்போட்டார்கள்,” என்னும்
வேதவாக்கியம் போர்ச்சேவகர் இப்படிச்செய்
ததினால் நிறைவேறிற்று.
உரு அத்தருணத்தில் யேசுவின் சிலுவைக்குச்ச
மீபத்தில் அவருடைய மாதாவும், அவளுடைய
சகோதரியாகிய கிலெயொப்பாமரியாளும், மக்த
உசு லீனீமரியாளும் நின்றார்கள்.-யேசு தம்முடைய
மாதாவையும், அங்கேநின்ற தமக்குஅன்பான சீ
ஷனையும்பார்த்து, பின்பு தம்முடைய மாதாவை
நோக்கி, ஸ்திரியே, உன்னுடைய மகனைப்பா
உஎ ரென்றார்.—அந்தச்சீஷனைநோக்கி, உன்மாதா
வைப் பாரென்றார்; அதினால் அந்தச் சீஷன்
அந்நேரம்முதல் அவளைத் தன்வீட்டிற்சேர்த்துக்
கொண்டான்.
உஅ அதன்பின்பு எல்லாம் முடிந்ததென்று யேசு
அறிந்து, வேதவாக்கியம் நிறைவேறும்படி, நான்
உகூ தாகமாயிருக்கிறேனென்றார்.—அங்கே காடிநி
றைந்த ஒரு பாத்திரம்வைக்கப்பட்டிருந்தது: அ
வர்கள் கடற்காளானைக் காடியில் தோய்த்து, ஈ
சோப்புத்தண்டிற்சேர்த்து, அவருடைய வாயி
௩௰ னிடத்திற்கு நீட்டிக்கொடுத்தார்கள்.-யேசு கா
டியைவாங்கினபின்பு, முடிந்ததென்றுசொல்லி,
௩க தலையைச்சாய்த்து ஆவியை விட்டார்.—அந்த
நாள் பெரிய ஓய்வுநாளுக்கு ஆயத்தநாளானபடி
யினால், சரீரங்கள் அந்த ஓய்வுநாளிலே சிலு
வைகளில் இராதபடி யூதர் பிலாத்தினிடத்திற்
குப்போய், அவர்களுடைய கால் எலும்புகளை
முறிக்கும்படிக்கும், சரீரங்களை எடுக்கும்படிக்
௩உ கும் உத்தரவு கேட்டுக்கொண்டார்கள்.—ஆத
லால் போர்ச்சேவகர்வந்து, அவருடனே சிலு
வைகளில் அறையப்பட்டவர்களில் முந்தின
வனுடைய கால் எலும்புகளையும், மற்றவனு
டைய கால் எலும்புகளையும் முறித்தார்கள்.—
அவர்கள் யேசுவினிடத்தில்வந்து, அவர் மரித் ௩௩
ததைக்கண்டு, அவருடைய கால் எலும்புகளை
முறிக்கவில்லை.—பின்பு போர்ச்சேவகரில் ஒரு ௩ச
வன் ஈட்டியினால் அவருடைய விலாவிற் குத்தி
னான், உடனே இரத்தமும் நீரும் புறப்பட்டன.-
அதைக்குறித்துச் சாட்சி கொடுக்கிறவன் கண் ௩ரு
ணினால் அதைக்கண்டான், அவனுடையசாட்
சி மெய்யாயிருக்கிறது: நீங்கள் விசுவாசிக்கும்ப
டி, அவன் தான்சொல்வது மெய்யென்று அ
றிந்திருக்கிறான்.—“அவருடைய எலும்புகளில் ௩சு
ஒன்றும் முறிக்கப்படுவதில்லை,” என்னும் வேத
வாக்கியமும்,—“தாங்கள் குத்தினவரைப் பார்ப் ௩எ
பார்கள்,”என்ற வேறொருவாக்கியமும்நிறைவே
றும்படி இவைகள் நடந்தன.
இதன்பின்பு அரிமத்தியா ஊரானும், யேசு ௩அ
வுக்குச் சீஷனாயிருந்தும், யூதருக்குப் பயந்ததி
னால் அதை மறைத்தவனுமாகிய யோசேப்பு, யே
சுவினுடைய சரீரத்தை எடுத்துக்கொள்ளும்ப
டி பிலாத்தினிடத்தில் உத்தரவுகேட்டான்: பிலா
த்துஉத்தரவுகொடுக்க, அவன்போய், யேசுவின்
சரீரத்தை எடுத்துக்கொண்டான்.—ஆரம்பத்தில் ௩கூ
ஒரு இராத்திரியிலே யேசுவினிடத்திற்குப்
போயிருந்த நிக்கோதேமும் ஏறக்குறைய நூறு
இராத்தல் வெள்ளைப்போளத்தையுங் கரியபோ
ளத்தையுங்கலந்துகொண்டுவந்தான்.—பின்பு அ ச௰
வர்கள் யேசுவின் சரீரத்தை எடுத்துக்கொண்
டு, யூதர் பிரேதத்திற் சுகந்தவருக்கமிடுகிறமுறை
மைக்கேற்க, அதைச் சுகந்தவருக்கங்களுடனே
புடவைகளாற் சுற்றிக்கட்டினார்கள்.—அவர் சி சக
லுவையில் அறையப்பட்ட இடத்தில் ஒருதோட்
டமிருந்தது; ஒருபொழுதும் ஒருவரும் வைக்கப்
பட்டிராத புதியபிரேதவறை அந்தத்தோட்டத்தி
லேயிருந்தது.—அந்தநாள் யூதருடைய ஆயத்தநா சஉ
ளானபடியினாலும், பிரேதவறை சமீபமாயிருந்த
தினாலும் அங்கே யேசுவை வைத்தார்கள்.

## உ௰. அதிகாரம்.

க. யேசுவின் உத்தானத்தைத் தெரிவித்தல்: ௰க. மக்தலீனீமரியாளுக்கு அவர் தரிசனமாதல்: ௰௯. சீஷருக்குத்தரிசனமாதல்: உச. தோமாவுக்குத் தரிசனமாதல்: ௩௰. சுவிசேஷத்தை எழுதின அபிப்பிராயமின்னதெனக்காட்டல்.

பின்பு வாரத்தின் முதலாம்நாள் காலையில், இ க
ருட்டோடே மக்தலீனீமரியாள் பிரேதவறை
யினிடத்திற்போய், அதிலிருந்தகல்லு எடுக்கப்
பட்டிருப்பதைக்கண்டு,—அவள் ஓடி, சீமோன் உ
பேதுருவினிடத்திலும், யேசுவுக்குஅன்பான

(உ௩) லூக்.உ௩.௩ச.(உச)சங்.உஉ.௰அ. (உரு) மாற்.௰ரு.ச௰. லூக்.உச.௰அ.(உசு)அதி.௰௩.உ௩. அதி.உ௰.உ. அதி. உக.எ,உ௰,உச. அதி.உ.ச.(உஎ) அதி.க.௰க. அதி.௰சு.௩உ. (உஅ) சங்.சுகூ.உக. (உகூ) மத்.உஎ.சஅ. (௩௰) அதி. ௰எ.ச. (௩க) வச.சஉ. மாற்.௰ரு.சஉ. உபா.உக.உ௩. (௩ச) க.யோவா.ரு.சு,அ. (௩சு) யாத்.௰உ.சசு. எண்.கூ.௰உ. சங்.௩ச.உ௰. (௩எ) சங்.உஉ.௰சு,௰எ. சக.௰உ.௰. வெளி.க.எ. (௩அ) மத்.உஎ.ருஎ. லூக்.உ௩.ருக. அதி.கூ,உஉ.(௩கூ) அதி.௩.க,உ. அதி.எ.ரு௰. (ச௰) அப்.ரு.சு. (சஉ) ஏசா.ரு௩.கூ. வச.௩க.—(உ௰. அதி. க.) மத்.உஅ.க. (உ) அதி. ௰௩.உ௩. அதி.௰கூ.உசு. அதி.உக.எ,உ௰,உச.

மற்றச் சீஷனிடத்திலும்போய், பிரேதவறையி
னின்றுங் கர்த்தாவை எடுத்துக்கொண்டார்
கள், அவரை வைத்த இடம் எங்களுக்குத்தெரிய
௩ வில்லையென்றாள்.-அப்பொழுதுபேதுருவும்,மற்
றச்சீஷனும் பிரேதவறையினிடத்திற்குப் போ
கும்படிபுறப்பட்டு,இருவருங்கூடஓடினார்கள்.-
௪ பேதுருவிலும் மற்றச்சீஷன் துரிதமாய் ஓடி,
௫ முந்திப் பிரேதவறையினிடத்திற் சேர்ந்து,—கு
னிந்து, சேலைகள் வைத்திருக்கக்கண்டான்; அ
௬ வன் உள்ளே போகவில்லை.—அப்பொழுது சீ
மோன்பேதுரு அவனுக்குப்பின்னேசென்று, பி
௭ ரேதவறையிற் பிரவேசித்து,—சேலைகள்வைத்தி
ருக்கிறதையும், அவருடைய தலையைச்சுற்றியி
ருந்தசேலை மற்றச்சேலைகளுடனே வைக்கப்ப
டாமல் வேறாக ஒரு இடத்திற் சுருட்டி வைக்
௮ கப்பட்டிருக்கிறதையுங் கண்டான்.—அப்பொ
ழுது முந்திப்பிரேதவறையைச்சேர்ந்த மற்றச்சீ
ஷனும் உள்ளேபோய், கண்டு,விசுவாசித்தான்.-
௯ அவர் மரித்தோரை நீங்கி உயிர்த்தெழுந்திருக்க
வேண்டுமென்கிற வேதவாக்கியத்தின் கருத்தை
௰ அவர்கள் இதுவரைக்கும் உணரவில்லை.—பின்
பு அந்தச்சீஷர் தங்கள்வீடுகளுக்குத் திரும்பிப்
போனார்கள்.
௰௧ மரியாள் பிரேதவறையினருகே வெளியில் அ
ழுதுகொண்டுநின்றாள்: அவள் அழுது குனிந்து
௰௨ பிரேதவறைக்குள்ளே பார்த்து,–யேசுவின்
சரீரம் வைக்கப்பட்டிருந்த இடத்திலே வெள்
ளங்கியைத்தரித்தவர்களாகி, தலைமாட்டில் ஒரு
வனும், கால்மாட்டில் ஒருவனுமாய் இரண்டு
௰௩ தூதர் இருக்கக்கண்டாள்.—அவர்கள் அவளை
நோக்கி, ஸ்திரியே, என் அழுகிறாயென்றுகேட்
க, அவள், என் கர்த்தரை எடுத்துக்கொண்டு
போய்விட்டார்கள், அவரை வைத்த இடம் எ
௰௪ னக்குத் தெரியவில்லை–என்றுசொல்லி, பின்னா
கத்திரும்புகையில் யேசு நிற்கக்கண்டாள், அ
வள் அவரை யேசுவென்று அறியவில்லை.—
௰௫ யேசு அவளைநோக்கி,ஸ்திரியே,என்அழுகிறாய்,
ஆரைத் தேடுகிறாயென்றார்; அவள் அவரைத்
தோட்டக்காரனென்று எண்ணி, அவருடனே,
ஐயா, நீர் அவரை எடுத்துக்கொண்டுபோனீரே
யானால்அவரைவைத்தஇடத்தைஎனக்குச்சொல்
லவேண்டும், நான்போய் அவரை எடுத்துக்கொ
௰௬ ள்வேனென்றாள்.—யேசு, மரியாளே, யென்று
அவளுடனேசொல்ல, அவள் திரும்பி அவரை
நோக்கி,போதகரேயென்றருத்தங்கொள்ளும் இ
௰௭ ரபூனியென்றாள்.—யேசு அவளைநோக்கி, நீ
என்னைத்தொடாதே; இன்னும் என்பிதாவினி
டத்திற்கு நான் எழுந்துபோகவில்லை: நீ என் ச
கோதரரிடத்திற்குப்போய், அவர்களைநோக்கி,
நான் என் பிதாவினிடத்திற்கும், உங்கள் பிதா
வினிடத்திற்கும், என் தேவனிடத்திற்கும்
உங்கள் தேவனிடத்திற்கும் எழுந்துபோ
கிறேனென்று சொல்லென்றார்.—மக்தலேனமரி ௰௮
யாள்போய், தான் கர்த்தரைக் கண்டதை
யும், அவர் தனக்குச்சொன்னவைகளையுஞ் சீஷ
ருக்குத்தெரிவித்தாள்.
வாரத்தின் முதல்நாளாகிய அன்றைத்தினம், ௰௯
அஸ்தமனகாலத்தில், சீஷர் யூதருக்குப் பயந்
ததினாற் கதவுகளைப்பூட்டிக் கூடியிருக்கையில்,
யேசு தோன்றி, நடுவிலேநின்று, உங்களுக்
குச்சமாதானமுண்டாவதாகவென்றுசொல்லி,-
தம்முடையகைகளையும், விலாவையும் அவர்க ௨௰
ளுக்குக்காண்பித்தார். சீஷர் கர்த்தாவைக்
கண்டபொழுது மகிழ்ந்தார்கள்.—அப்பொழுது ௨௧
யேசு திரும்பவும் அவர்களுடனே, உங்களுக்
குச்சமாதானம் உண்டாவதாக: பிதா என்னை அ
னுப்பினதுபோல, நானும் உங்களை அனுப்புகி
றேனென்றுசொல்லி,–பின்பு அவர்கள்மேல் ஊ ௨௨
தி, பரிசுத்த ஆவியை உட்கொள்ளுங்கள்.—எ ௨௩
வர்களுடைய பாவங்களை மன்னிப்பீர்களோ,
அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும்; எ
வர்களுடைய பாவங்களை மன்னியாதிருப்பீர்க
ளோ, அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்ப
டாதிருக்குமென்றார்.
யேசு வந்தபொழுது, பன்னிருவரில் ஒருவ ௨௪
னாகிய திதுமு வென்னுந்தோமா அவர்களுட
னே இருக்கவில்லை.—ஆதலால் மற்றச்சீஷர் அ ௨௫
வனுடனே, நாங்கள் கர்த்தரைக் கண்டோ
மென்றுசொல்ல, அவ்வன் அவர்களுடனே, அவ
ருடையகைகளில் ஆணி அடித்திருந்த தழும்பை
நான்கண்டு, அந்தத்தழும்பில் என் விரலையிட்டு,
அவருடைய விலாவில் என் கையை வைத்தா
லொழிய,விசுவாசிக்கமாட்டேனென்றான்.
எட்டுநாளுக்குப்பின்பு அவருடைய சீஷர் தி ௨௬
ரும்பவும் அறைக்குள்ளே இருந்தார்கள், தோமா
வும் அவர்களுடனே இருந்தான்: கதவுகள்பூட்
டப்பட்டிருந்தன, அப்பொழுது யேசுவந்
து, நடுவிலே நின்று, உங்களுக்குச் சமாதான
முண்டாவதாகவென்றார்.—பின்பு தோமா ௨௭
வைநோக்கி, உன்விரலை இங்கேநீட்டி, என்கை
களைப்பார்; உன்கையை இங்கேநீட்டி, என்வி
லாவிலே வை: அவிசுவாசியாயிராமல்,விசுவாசி
யாயிருப்பாயாகவென்றார்.-அவருக்குத்தரமாகத் ௨௮
தோமா, என் கர்த்தாவே, என் தேவனே
என்றான்.-யேசு தோமாவே, நீ என்னைக்கண்ட ௨௯
படியினாலே விசுவாசித்தாய்:காணாமலிருந்தும்வி
சுவாசிப்பவர்களே வாழ்வுடையவர்களென்றார்.
இந்தப்புத்தகத்தில்எழுதப்படாதவேறநேக அ ௩௰
டையாளங்களையும், யேசு, தம்முடைய சீஷர்
முன்பாகச் செய்தார்.—யேசு தேவனுடை ௩௧

(௩) லூக்.௨௪.௰௨. (௫) அதி.௰௯.௪௰. (௭) அதி.௰௧.௪௪. (௯) சங்.௰௬.௰. அப்.௨.௨௫—௩௧. (௰௧) மாற்.௰௬.௫. (௰௪) மத்.௨௮.௯. லூக்.௨௪.௰௬,௩௧. அதி.௨௧.௪. (௰௭) சங்.௨௨.௨௨. ரோ.௮.௨௯. எபி.௨.௰௧. அதி.௰௬.௨௮. எபே.௪.௰. (௰௮) மத்.௨௮.௰. (௰௯) மாற்.௰௬.௰௪. ௧.கொரி.௰௫.௫. (௨௰) அதி.௰௬.௨௨. (௨௧) அதி.௰௭.௰௮,௰௯. ௨.தீமோ.௨.௨. எபி.௩.௧. (௨௩) மத்.௰௬.௰௯. மத்.௰௮.௰௮. (௨௪) அதி.௰௧.௰௬. (௨௭) ௧.யோவா.௧.௧. (௨௯) ௨.கொரி.௫.௭. ௧.பேதுரு.௧.௮. (௩௰) அதி.௨௧.௨௫. (௩௧) லூக்.௧.௪. அதி.௩.௰௫,௰௬. ௧.பேதுரு.௧.௮,௯.

ய குமாரனாகிய கிறிஸ்தென்று நீங்கள் விசு
வாசிப்பதற்கும், விசுவாசித்து அவருடைய நா
மத்தினாலே நீங்கள் சீவனை அடைவதற்குமே
இவைகள் எழுதப்பட்டிருக்கின்றன.

## ௨௧. அதிகாரம்.

௧. கிறிஸ்து தைபேரியாஎன்னுங்கலிலேயாக்கடற்
கரையில் சீஷருக்குத் தரிசனமாதல்: ௰௫. பே
துருவோடே சம்பாஷணைசெய்தல்: ௨௰. யோ
வானைக்குறித்துப்பேசல்: ௨௪. முடிவுரைத்தல்.

இதன்பின்பு யேசு தைபேரியாவின்கடற்கரை
யிலே திரும்பவுந் தம்மைச் சீஷருக்குக் காட்
டினார்; இதுவே அவர் தம்மைக்காட்டின விவ
௨ ரம்.-சீமோன்பேதுருவும், திதுமுவென்னுந்தோ
மாவும், கலிலேயாவிலுள்ள கானாஊரானாகிய நா
தான்வேலும், செபேதேயுவின் புத்திரரும், அ
வருடைய சீஷரில் வேறிருவருங்கூடியிருக்கிற
௩ காலத்திலே,-சீமோன்பேதுருமற்றவர்களைநோக்
கி, நான் மீன்பிடிக்கப்போகிறேனென்றுசொல்
ல, அவர்கள், நாங்களும் உன்னுடனே வருகி
றோமென்றார்கள். உடனே அவர்கள் புறப்பட்
டுப்போய்ப்படவிலேறினார்கள்; அன்றிரவில் அ
௪ வர்கள் ஒன்றும் பிடிக்கவில்லை.—விடியற்காலமா
னபொழுது யேசு கரையிலே நின்றார்: அவரை
௫ யேசுவென்று சீஷர் அறியவில்லை.—அப்பொ
ழுது யேசு அவர்களைநோக்கி, பிள்ளைகளே, பு
சிக்கிறதற்கு ஏதாகிலும் உங்களிடத்திலுண்டா
வென்றுகேட்க, அவர்கள் இல்லையென்றார்கள்.-
௬ பின்புஅவர், நீங்கள்படவுக்குவலப்புறத்தில்வலை
யைப்போடுங்கள், உங்களுக்கு அகப்படுமென்று
சொல்ல, அவர்கள்போட்டார்கள், திரளானமீன்
கள் அகப்பட்டதினால் அதைஇழுக்கக்கூடாமற்
௭ போயிற்று.-ஆதலால் யேசுவுக்கு அன்பானசீஷ
ன்பேதுருவைநோக்கி, அவர் கர்த்தரென்றான்.
அவர் கர்த்தரென்று சீமோன் பேதுரு கேட்ட
மாத்திரத்தில், தான்வஸ்திரமில்லாதவனானபடியி
னாலே தன் மேலங்கியைக்கட்டிக்கொண்டு கட
௮ லிலே குதித்தான்.—மற்றச்சீஷர் கரைக்கு ஏறக்
குறைய இருநூறுமுழத்தூரத்தில் இருந்தபடியி
னால் மீன்களுடனே வலையை இழுத்துக்கொண்
௯ டு படவின்வழியாய்ச்சேர்ந்தார்கள்.-அவர்கள் க
ரையிலிறங்கினபொழுது, அக்கினி கரிகளில் மூ
ளுகிறதையும், அதின்மேல் மீன் வைத்திருக்கிற
௰ தையும், அப்பத்தையுங்கண்டார்கள்.—யேசு, நீங்
கள் இப்பொழுது பிடித்த மீன்களிற் சிலகொண்
௰௧ டுவாருங்களென்றுசொல்ல,—சீமோன்பேதுரு தி
ரும்பிப்போய், நூற்றைம்பத்துமூன்று பெரிய
மீன்களால் நிறைந்தவலையைக் கரைக்கு இழுத்
௰௨ தான்: இவ்வளவிருந்தும்வலைகிழியவில்லை.-பின்
பு யேசு அவர்களைப் போசனம்பண்ணவாருங்
களென்றழைத்தார். அவரைக் கர்த்தரென்று
சீஷர் அறிந்தபடியினால் அவர்களில் ஒருவனா
கிலும் நீர் ஆரென்றுகேட்கத்துணியவில்லை.-யே ௰௩
சு வந்து அப்பத்தையும் மீனையும்எடுத்து, அவர்
களுக்குப் பரிமாறினார்.—இவ்விதமாக யேசு ம ௰௪
ரித்தோரிலிருந்து எழுந்தபின்பு தம்முடைய சீ
ஷருக்கு மூன்றாந்தரந் தரிசனங்கொடுத்தார்.

அவர்கள் போசனம்பண்ணினபின்பு, யேசு ௰௫
சீமோன் பேதுருவைநோக்கி, யோனாவின் புத்
திரனாகிய சீமோனே, இவர்களிலும் நீ என்
னில் அதிக அன்பாயிருக்கிறாயாவென்றார்; அ
தற்கவன், கர்த்தாவே, நான் உம்மில் அன்பா
யிருக்கிறதை நீர் அறிந்திருக்கிறீரென்றுசொல்
ல, அவர், என்ஆட்டுக்குட்டிகளைப் போஷிப்பா
யாகவென்றார்.—அவர் இரண்டாந்தரமும் அவ ௰௬
னைநோக்கி, யோனாவின் புத்திரனாகிய சீ
மோனே, என்னில் அன்பாயிருக்கிறாயாவென்
றார்; அதற்கவன், கர்த்தாவே, நான் உம்மில்
அன்பாயிருக்கிறதை நீர் அறிந்திருக்கிறீரென்று
சொல்ல, அவர், என் ஆடுகளை மேய்ப்பாயாக
வென்றார்.-அவர் மூன்றாந்தரமும் அவனைநோக் ௰௭
கி, யோனாவின் புத்திரனாகிய சீமோனே, நீ
என்னில் அன்பாயிருக்கிறாயாவென்றார். என்
னில் அன்பாயிருக்கிறாயாவென்று அவர் மூன்
றாந்தரமுந் தன்னுடனே சொன்னபடியினாலே
பேதுரு துக்கமடைந்து, கர்த்தாவே, நீரெல்லா
வற்றையும் அறிந்திருக்கிறீர்: நான் உம்மில் அன்
பாயிருக்கிறதையும் அறிந்திருக்கிறீரென்று சொ
ல்ல, யேசு அவனுடன், என்ஆடுகளைப்போஷிப்
பாயாக.-நீஇளவயதுள்ளவனாயிருக்கையில் உன் ௰௮
அரைக்கச்சை நீயே கட்டிக்கொண்டு உன் இஷ்
டப்படிநடந்துவந்தாய்: நீ முதிர் வயதுள்ளவனா
யிருக்கும்பொழுது உன் கைகளை நீட்டுவாய், வே
றொருவன் உன்அரைக்கச்சைக்கட்டிஉனக்கிஷ்
டமில்லாத இடத்திற்கு உன்னைக் கொண்டு
போவானென்று மெய்யாகவே உனக்குச்சொல்
லுகிறேனென்றார்.—அவன் இன்னவிதமானமர ௰௯
ணத்தினாலே தேவனுடைய மகிமைபிரகாசிக்
கப்பண்ணுவானென்பதைக் குறிக்கும்பொருட்
டு இப்படிச்சொன்னார். அவர் இப்படிப்பேசின
பின்பு, என்னைப் பின்சென்றுவாவென்று அவ
னுடனேசொன்னார்.—அந்தப்படி பேதுரு திரும் ௨௰
பிப்பார்த்து, யேசுவுக்கு அன்பானவனும், இ
ராப்போசனம்பண்ணுகையில் அவருடையமார்
பிலேசார்ந்து, கர்த்தாவே, உம்மைக்காட்டிக்
கொடுப்பவன் யாவனென்று கேட்டவனுமாகிய
சீஷன் செல்லுகிறதைக்கண்டான்.—பேதுரு அ ௨௧
வனைக்கண்டு, யேசுவை நோக்கி, இவன் என்
னவாயிருப்பானென்றான்.—அதற்கு யேசு, ௨௨
நான் வருமளவும் இவனிருக்கும்படி எனக்குச்

(௨௧. அதி. ௨.) அதி.௧.௪௫. மத்.௪.௨௧. (௪) அதி.௨௰.௰௪. (௫) லூக்.௨௪.௪௧. (௬) லூக்.௫.௪,௬,௭. (௭) அதி.௰௩.௨௩. அதி.௨௰.௨.(௰௨)அப்.௰.௪௧. (௰௪) அதி.௨௰.௰௯,௨௬. (௰௬) அப்.௨௰.௨௮. எபி.௰௩.௨௰. ௧.பேதுரு.௨.௨௫. ௧.பேதுரு.௫.௨,௪. (௰௭) அதி.௨.௨௪,௨௫. அதி.௰௬.௩௰. (௰௮) அதி.௰௩.௩௬. அப்.௰௨.௩,௪. (௰௯) ௨.பேதுரு.௧.௰௪. (௨௰) அதி.௰௩.௨௩,௨௫. அதி.௨௰.௨. (௨௨) மத்.௰௬.௨௭,௨௮. மத்.௨௫.௩௧. ௧.கொரி.௪.௫. ௧.கொரி.௰௧.௨௬. வெளி.௨.௨௫. வெளி.௩.௰௧. அதி.௨௨.௭,௨௰.

சித்தமானால் உனக்கென்ன; நீ என்னைப்பின்
உங செல்லென்றார்.—அதினால் அந்தச்சீஷன் மரண
மடையானென்கிற பேச்சுச் சகோதரருக்குள்
ளே உண்டாயிற்று: யேசு அவன் மரணமடை
யானென்று சொல்லாமல், நான்வருமளவும் அ
வனிருக்க எனக்குச் சித்தமானால் அதினால் உ
உச னக்கென்னவென்றார்.—அந்தச் சீஷனே இந்த
விசேஷங்களைக்குறித்துச் சாட்சியிட்டு, இவை
களைஎழுதினான்: அவனுடையசாட்சிமெய்யென்
று அறிந்திருக்கிறோம்.—அன்றியும் யேசு செய்உரு
த மற்ற அநேககாரியங்களுண்டு, அவைகள் ஒவ்
வொன்றாய் எழுதப்பட்டால், அதினால் உண்டா
கும் புத்தகங்களை உலகங்கொள்ளாதென்று கரு
துகிறேன். ஆமென்.

---

(உச) அதி.௰க.ஙரு. ங.யோவா.௰உ. (உரு) அதி.உ௰.ஙய. ஆமோ.எ.௰.

# அப்போஸ்தலரின் கிரியைகள்.

## ௧. அதிகாரம்.

௧. யேசு தம்முடைய சீஷருக்குத்தரிசனமாதல், அவர்களுக்குக் கட்டளையிடல், வானத்துக்கெழுந்தருளல்: ௰௨. சீஷர் யெருஷலேமுக்கு மீளுதல், அங்கேபிரார்த்தித்தல்: ௰௫. யூதாவுக்குப் பிரதியாக மத்தியாவை ஏற்படுத்தல்.

தேயோப்பிலுவே, யேசு, தாம்தெரிந்துகொண்
ட அப்போஸ்தலருக்குப்பரிசுத்தஆவியைக்கொ
௨ ண்டுகட்டளையிட்டபின்,-அவர்ஏறெடுக்கப்பட்
டநாள்வரைக்குஞ்செய்ததும்,போதித்ததுமாகிய
யாவையுங்குறித்து முதலாம்பிரபந்தத்தைப்பண்
௩ ணினேன்.-அவர்மரணவேதனையடைந்தபின்பு,
நாற்பதுநாள் அளவும் அவர்களுக்குத்தரிசனையா
கி,தேவனுடைய இராச்சியத்திற்கேற்றவைக
ளைப்பிரசங்கம்பண்ணி, அநேகதிருஷ்டாந்தங்க
ளினாலே தம்மை உயிரோடிருப்பவராக அவர்க
௪ ளுக்குக்காட்டினார்.-அவர் அவர்களுடனே கூ
டியிருந்தபொழுது அவர்களைநோக்கி,யோவான்
சலத்தினாலே ஞானஸ்நானங்கொடுத்தான்; நீங்
களோ பரிசுத்த ஆவியினாலே சிலநாளுக்குள்ளே
௫ ஞானஸ்நானம் பெறுவீர்கள்.—ஆகையால் நீங்
கள்யெருஷலேமைவிட்டுநீங்காமல்,என்னிடத்
தில் நீங்கள் கேள்விப்பட்ட பிதாவினுடைய
வாக்குத்தத்தத்தைப்பெறக் காத்திருக்கவேண்டு
௬ மென்று கட்டளையிட்டார்.—அவர்கள் கூடி
வந்திருந்தபொழுது அவரைநோக்கி, கர்த்தா
வே, நீர் இந்தக்காலத்திலா இஸரவேலரிடத்தில்
இராச்சியபரிபாலனத்தைத் திரும்பவும் நிலைப்ப
௭ டுத்துவீரென்றுகேட்க,-அவர் அவர்களுடனே,
பிதா தம்முடையவசத்தில் வைத்திருக்கிறகாலங்
களையும், சமயங்களையும் அறிகிறது உங்களுக்குத்
௮ தகாது.—பரிசுத்தஆவி உங்கள்மேல் வரும்பொ
ழுது நீங்கள்வல்லமையைப்பெற்று,யெருஷலே
மிலும், யூதேயா, ஷமாரியாவிலுமெங்கும், பூமி
யின்கடைஎல்லைவரைக்குமுள்ள இடங்களிலும்
௯ எனக்குச் சாட்சியாயிருப்பீர்களென்றார்.-அவர்
இவைகளைச்சொல்லியபின்பு, அவர்கள் கண்க
ளுக்குமுன்பாக ஏறெடுக்கப்பட்டார்; அவர்கள்
அவரைக்காணாதபடி, ஒருமேகம் அவரை எடுத்
௰ துக்கொண்டுபோயிற்று.—அவர்போகிறபொழு
து அவர்கள் வானத்திற்கு நேராய் உற்றுப்பார்க்
கையில், வெள்ளங்கியைத்தரித்த இரண்டுபேர்
அவர்கள் அருகேநின்று,—கலிலேயராகிய மனு ௰௧
ஷரே, நீங்கள் ஏன் வானத்தைஅண்ணாந்துபார்க்
கிறீர்கள்; உங்களினின்று வானத்திற்கு ஏற்றப்
பட்ட அந்த யேசு, வானத்திற்கு எழுந்தருள
நீங்கள் கண்டவிதமாகவே, திரும்பவும் வருவா
ரென்றார்கள்.—அப்பொழுது அவர்கள் ஒலீவ ௰௨
என்னப்பட்ட மலையைவிட்டுயெருஷலேமுக்
குத் திரும்பினார்கள். அந்த மலை யெருஷலேமி
னின்று ஒரு ஓய்வுநாள் பிரயாண தூரத்திலிருக்
கின்றது.-அவர்கள் பிரவேசித்தபின்பு மேலறை ௰௩
யில் ஏறினார்கள். அங்கே பேதுருவும், யாக்கோ
பும், யோவானும், அந்திரேயாவும், பிலிப்பும்,
தோமாவும், பர்தொலொமேயும், மத்தேயும், அல்
வேயுவின் புத்திரனாகிய யாக்கோபும், சீ
லோத்தேயென்னுஞ் சீமோனும், யாக்கோபின்
சகோதரனாகிய யூதாவுந்தங்கியிருந்தார்கள்.-
இவர்களெல்லாரும், யேசுவின் மாதாவாகிய ௰௪
மரியாள்முதலான ஸ்திரிகளோடும்,அவருடைய
சகோதரரோடும் ஒருமனப்பட்டு, வேண்டுதலி
லும், விண்ணப்பத்திலும் உறுதியாய்த் தரித்தி
ருந்தார்கள்.

அந்தச்சமயத்தில் ஏறக்குறைய நூற்றிருபது ௰௫
பேர் கூடி இருந்தபொழுது, பேதுரு சீஷர்மத்
தியிலேநின்று,—சகோதரரே, யேசுவைப் ௰௬
பிடித்தவர்களுக்கு வழிகாட்டியான யூதாவைக்
குறித்துப்பரிசுத்த ஆவிதாவீதின்வாக்கினால்முன்
சொல்லியவேதவாக்கியம் நிறைவேறுவது அவசி
யம்.-அவன் எங்களுக்குள் ஒருவனாக எண்ணப் ௰௭
பட்டு, இந்த ஊழியத்திற்பங்கைப்பெற்றிருந்தா
ன்.—அவன் அநீதத்தின் பலனுக்கு ஒருநிலத்தை ௰௮
வாங்கினான், பின்பு அவன்தலைகீழாகவிழுந்து ந
டுவேவெடிக்க அவன் குடர்களெல்லாஞ் சரிந்த
ன.-இது யெருஷலேமியர் அனைவருக்குந்தெரி ௰௯
ந்தது;அன்றியும் அந்தநிலம் இவர்களுடைய சுய
பாஷையில் இரத்தநிலமென்றருத்தங்கொள்ளும்
அகெல்தம என்றுசொல்லப்படுகின்றது.-“அவ ௨௰
னுடைய வீடு பாழாகக்கடவது, அதில் ஒருவ
னும்வாசம்பண்ணாதிருப்பானாக: அவனுடைய
கண்காணிப்பை வேறொருவன் பெறுவானாக,”
என்று சங்கீதபுத்தகத்தில் எழுதியிருக்கின்றது.-
ஆதலால் யோவான் ஸ்நானங்கொடுத்தநாள்மு ௨௧
தல், கர்த்தராகிய யேசு நம்மைவிட்டு ஏ

(௧. அதி. ௧.)லூக்.௧.௩.(௨)மாற்.௰௬.௰௯.௧.தீமோ.௩.௰௬.மத்.௨௮.௰௯.(௩)லூக்.௨௪.௩௬.௧.கொரி.௰௫.௫.(௪) லூக். ௨௪.௪௩,௪௯. யோவா.௰௪.௰௬,௨௬,௨௭. யோவா.௰௬.௭.அதி.௨.௩௩. (௫) மத்.௩.௰௧. யோவே.௩.௰௮.அதி.௨.௪.(௬) மத்.௨௪.௩. ஏசா.௧.௨௬.தானி.௭.௨௭. ஆமோ.௯.௰௨.(௭)மத்.௨௪.௩௬. மாற்.௰௩.௩௨. ௧.தெச.௫.௧.(௮)அதி.௨.௧,௪. லூக்.௨௪.௪௮,௪௯. யோவா.௰௫.௨௭. (௯) லூக்.௨௪.௫௧. யோவா.௬.௬௨. (௰) மத்.௨௮.௩. (௰௧) அதி.௨.௭. அதி. ௰௩.௩௧. தானி.௭.௰௩. மத்.௨௪.௩௰. யோவா.௰௪.௩. ௧.தெச.௧.௰. ௧.தெச.௪.௰௬. ௨.தெச.௧.௰. வெளி.௧.௭. (௰௨) லூக்.௨௪.௫௨. (௰௩) அதி.௯.௩௭,௩௯. மத்.௰.௨,௩,௪. லூக்.௬.௰௫. யூதா.௧. (௰௪) அதி.௨.௧,௪௬. லூக்.௨௩.௪௯,௫௫. மத்.௰௩.௫௫. (௰௫) வெளி.௩.௪. (௰௬) சங்.௪௧.௯. யோவா.௰௩.௰௮. லூக்.௨௨.௪௭. யோவா.௰௮.௩.(௰௭)மத்.௰.௪. லூக்.௬.௰௬. வச.௨௫. அதி.௰௨.௨௫. (௰௮) மத்.௨௭.௫,௭,௮. மத்.௨௬.௰௫. ௨.பேதுரு.௨.௰௫. (௨௰) சங்.௬௯.௨௫. சங்.௱௯.௮. (௨௧) மாற்.௧.௧. வச.௯.

௨௨ றெடுக்கப்பட்ட நாள்வரைக்கும்,—அவர் நமக்
குள்ளே போக்குவரவுசெய்த எல்லாக்காலங்க
ளிலும், எங்களுடன் இருந்தமனுஷரில் ஒருவ
னை, அவர் உயிர்த்தெழுந்ததற்கு எங்களுடனே
௨௩ சாட்சியாக ஏற்படுத்தவேண்டுமென்றான்.—அப்
பொழுது அவர்கள், யுஸ்து என்னும் மறுநாம
முள்ள பர்சபா என்று பேர்கொண்ட யோசேப்
௨௪ பு, மத்தியாஎன்னும் இருவரையுந்தெரிந்து,-எல்
லாருடைய இருதயங்களையும் அறிந்திருக்கிற
௨௫ கர்த்தாவே,—யூதா தன்சுய ஸ்தானத்திற்குப்
போகிறதற்குத் தவறிவிழுந்த இந்த ஊழியத்தி
லும், அப்போஸ்தல பட்டத்திலுமுட்பட, இவ்
விருவரில் நீர் தெரிந்துகொண்டவன் இன்னா
னென்று எங்களுக்குத் தெரிவித்தருளுமென்று
௨௬ சொல்லி, பிரார்த்தனைபண்ணி,—அவர்கள் சீட்
டுப்போட்டார்கள்; சீட்டு மத்தியாவுக்கு விழுந்த
து; அப்பொழுது அவன் பதினொரு அப்போஸ்
தலர்களோடும் எண்ணப்பட்டான்.

## ௨. அதிகாரம்.

௧. பரிசுத்த ஆவி இறங்கல்: ௫. அவர்கள் பலபாஷைகளைப்பேசவரம் பெற்றதைக்குறித்துச் சனங்கள்ஆச்சரியப்படல்: ௰௪. பேதுரு உபதேசித்தல்: ௩௭. உபதேசத்தைக்கேட்டு அநேகர் மனந்திரும்பல்: ௪௧. அவர்கள் ஞானஸ்நானம் பெற்றுச்சீர்ப்படல்.

பெந்திக்கோஸ்தென்னும் நாள் வந்தபொழுது,
அவர்கள் எல்லாரும் ஒரே இடத்தில் ஒருமனப்
௨ பட்டிருந்தார்கள்.—பலத்தகாற்று அடிக்கிறசத்
தத்தைப்போல ஒருசத்தஞ்சடிதியில் வானத்திலி
ருந்து உண்டாகி, அவர்கள் இருந்தவீடுமுழுவ
௩ திலும்பரம்பிற்று.—பின்பு அக்கினிபோலக் கவ
ருடைய நாவுகள் அவர்களுக்குத்தோன்றி, அ
௪ வர்கள் ஒவ்வொருவர்மேலும் அமர்ந்தன.—அ
வர்கள் எல்லாரும் பரிசுத்த ஆவியினாற் பூரணப்
பட்டு,ஆவிபேசஏவினபடி வெவ்வேறு பாஷை
௫ களிலே பேசத்தொடங்கினார்கள்.—அக்காலத்
தில், வானத்தின்கீழுள்ள சகல தேசத்தாருள்ளு
மிருந்துவந்த தேவபத்திமான்களாகிய யூதர் யெ
௬ ரூஷலேமிலே வாசம்பண்ணினார்கள்.—இந்தச்
செய்தி பரம்பினபொழுது, திரளானசனங்கள்
கூடிவந்து, யாவருந் தங்கள்தங்கள் பாஷையில்
அவர்கள் பேசுவதைக்கேட்டு, மனங்கலங்கினார்
௭ கள்.—சகலரும் பிரமித்து, ஆச்சரியப்பட்டு, பா
ருங்கள், பேசுகிற இவர்கள் எல்லாருங் கலிலே
௮ யரல்லவா.-நம்முடைய சென்மபாஷையில் இ
வர்கள்பேச, நாமனைவரும் கேட்கிறோமே, இ
௯ தென்ன.—பருத்தரும், மேதியரும், ஏலாமியரும்,
மெசொப்பொத்தாமியா, யூதேயா, கப்பதோகி
யா, பொந்து, ஆசியா,—பிரிகியா, பம்பிலியா, ௰
எகிப்து என்னுந் தேசத்தவர்களும், லிபியாதே
சத்தின் குரேனியைச்சேர்ந்த நாட்டாரும், இங்
கே சஞ்சரிக்கிற ரோமாநகரத்தாரும், யூதரும்,
யூதமார்க்கத்திற் சேர்ந்தவர்களும்,—கிரேத்தேய ௰௧
ரும், அரபியருமாகிய நாம்நமது பாஷைகளிலே
தேவனுடைய ஆச்சரியமான கிரியைகளை
இவர்கள் பேசக்கேட்கிறோமேயென்று ஒருவ
ரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.—அவர் ௰௨
கள் எல்லாரும் பிரமிப்படைந்து, சந்தேகப்பட்
டு, இதின் கருத்தென்னவென்று ஒருவரோடொ
ருவர்சொன்னார்கள்.—சிலர்,இவர்கள் மதுபானத் ௰௩
தினாலே பூரிக்கப்பட்டிருக்கிறார்களென்று பரி
காசம்பண்ணினார்கள்.

அப்பொழுது பேதுரு பதினொருவரோடும் நி ௰௪
ன்று சத்தமிட்டு, அவர்களைநோக்கி, யூதேயரும்,
யெரூஷலேமியருமாகிய நீங்களெல்லாரும் என்
வாக்குக்குச்செவிகொடுத்து,இதை அறியுங்கள்.-
நீங்கள் நினைக்கிறபடி இவர்கள் வெறிகொண்ட ௰௫
வர்களல்ல, பொழுது விடிந்து மூன்றுமணிநே
ரம்மாத்திரமாயிற்றே.-தீர்க்கதரிசியாகிய யோவே ௰௬
லினால் உரைக்கப்பட்டபடியே இது நடக்கின்
றது.-“கடைசிநாட்களிலே நான் எல்லாமாமிசத் ௰௭
தின்மேலும் என்ஆவியை ஊற்றுவேன்: உங்கள்
புத்திரரும்,உங்கள் புத்திரிகளுந் தீர்க்கதரிசனஞ்
சொல்லுவார்கள், உங்கள் வாலிபர் தரிசனங்க
ளை அடைவார்கள், உங்கள் முதியோர் சொப்ப
னங்களைக்காண்பார்கள்.—அக்காலத்தில் நான் ப ௰௮
ணிவிடைக்காரர்மேலும், பணிவிடைக்காரிகள்
மேலும் என்ஆவியை ஊற்றுவேன்; அவர்கள் தீர்
க்கதரிசனஞ் சொல்லுவார்கள்.—உயர்ந்தவானத் ௰௯
தில் அற்புதங்களாகவும்,தாழ்ந்தபூமியில் அடை
யாளங்களாகவும்இரத்தம், அக்கினி, புகைக்காடு
முதலியவைகளைக் காட்டுவேன்.—கர்த்தருடைய ௨௰
மகத்துவமும், பயங்கரமுமான அந்தநாள்வருமு
ன் சூரியன்இருளும்,சந்திரன் இரத்தமயமாகும்.-
கர்த்தருடைய நாமத்திற் பிரார்த்தனைபண்ணு ௨௧
கிறவர்கள் எவர்களோ, அவர்கள் இரட்சிக்கப்ப
டுவார்கள்,”என்றுதேவன் சொல்லுகிறார்.-இஸ் ௨௨
ரவேலரே,நீங்கள்இவ்வாக்குக்குச்செவிகொடுங்
கள்; நீங்கள் அறிந்திருக்கிறபடி, நாசரேத்தூரா
னாகிய யேசுவைக்கொண்டு தேவன் உங்க
ளுக்குள் ஆச்சரியமானகிரியைகளையும், அற்பு
தங்களையும், அடையாளங்களையுஞ் செய்து, அ
வைகளினால் அவரை உங்களுக்கு வெளிப்படுத்
தினார்.—தேவன் நிச்சயித்த ஆலோசனையின்ப ௨௩
டியேயும்,முன்னறிந்ததின்படியேயும்ஒப்பிக்கப்
பட்ட அந்தயேசுவை நீங்கள்பிடித்து, துஷ்
டருடைய கைகளினாற் சிலுவையில் அறைந்து

(௨௨) யோவா.௰௫.௨௭. அதி.௪.௩௩. அதி.௰௫.௨௨. (௨௪) ௧.சாமு.௰௬.௭. ௧.நாளா.௨௮.௯. எரே.௰௧.௨௰. அதி.௰௫.௮. வெளி.௨.௨௩. வச.௰௭.—(௨. அதி. ௧.) லேவி.௨௩.௰௫. உபா.௰௬.௯. அதி.௨௰.௰௬. அதி.௧.௰௪.(௨)அதி.௪.௩௧.(௪)அதி.௧.௫. மாற்.௰௬.௰௭. ௧.கொரி.௰௨.௰,௨௮,௩௰. (௭) அதி.௧.௰௧. (௰௫) ௧.தெச.௫.௭. (௰௭) ஏசா.௪௪.௩. எசேக்.௰௧.௨௰. யோவே.௨.௨௮,௨௯. சக.௰௨.௰. யோவா.௭.௩௮. அதி.௰.௪௬. அதி.௨௧.௯. (௰௮) அதி.௨௧.௪,௯,௰. ௧.கொரி.௰௨.௰,௨௮. (௰௯) யோவே.௨.௩௰,௩௧.(௨௰)மத்.௨௪.௨௯.(௨௧)ரோ.௰.௰௩.(௨௨)யோவா.௩.௨. எபி.௨.௪. (௨௩)மத்.௨௬.௨௪.அதி.௩.௰௮. அதி.௫.௩௰.

௨௪ கொலைசெய்தீர்கள்.—தேவன் மரண உபாதிக
ளின் கட்டவிழ்த்து அவரை எழுப்பினார்: அவர்
௨௫ அதினாற் கட்டுப்படுவது கூடாதகாரியமே.—அ
வரைக்குறித்துத் தாவீது, "நான் எப்பொழுதும்
கர்த்தாவை எனக்குமுன்பாகவைத்துக்கொண்
டேன், அவர் என்வலதுபாரிசத்திலிருக்கிறபடி
௨௬ யால் நான் அசைக்கப்படேன்.—அதினிமித்தம்
என் இருதயம் மகிழ்ந்திருக்கின்றது, என் நாவு
களிகூருகின்றது; இப்படியே என் மாமிசமும்
௨௭ நம்பிக்கையோடே இளைப்பாறும்.—மேலும் நீர்
என் ஆத்துமத்தை மரித்தோர்ஸ்தானத்தில் விட
மாட்டீர், உமக்குரியபரிசுத்தர் அழிவைக்காண
௨௮ வும்விடீர்.-சீவனின்பாதைகளை நான் தரிசிக்கும்
படி பண்ணினீர்; உமது சமுகத்திலுள்ள ஆனந்
தத்தினால் என்னைப் பூரணப்படுத்தினீர்," என்
௨௯ று சொன்னானே.—சகோதரரே, முற்பிதாவா
கிய தாவீதைக்குறித்து நான் உங்களுடனே த
டையின்றிப்பேசுவதற்கு இடங்கொடுங்கள், அ
வன் மரணம் அடைந்து அடக்கம்பண்ணப்பட்
டான்,அவனுடையபிரேதவறை இந்நாள்வரைக்
௩௰ கும் நம்மிடத்திலிருக்கின்றது.—அவன் தீர்க்கதரி
சியாயிருந்து, "உன்சிங்காசனத்திலே வீற்றிருக்
கும்பொருட்டு,சரீரசம்பந்தமாக உன் சந்ததியில்
கிறிஸ்துவை எழுப்புவேன்,"என்று தேவன்
தன்னிடத்தில் ஆணையிட்டு வாக்குத்தத்தங்கொ
௩௧ டுத்திருந்ததை அறிந்ததினால்,—அவன், கிறிஸ்து
வினுடைய ஆத்துமம் மரித்தோர் ஸ்தலத்திலே
விடப்படுவதில்லையென்றும்,அவருடையசரீரம்
அழிவடைவதில்லையென்றும் முன்னறிந்து, அ
வர் உயிர்த்தெழுந்திருப்பதைக் குறித்துப் பேசி
௩௨ னான்.-இந்த யேசுவையே தேவன் எழுப்பி
னார், இதற்கு நாங்கள் அனைவருஞ்சாட்சிகள்.—
௩௩ அவர் தேவனுடைய வலதுபாரிசத்தில் உயர்த்
தப்பட்டு, பிதாஅருளிய வாக்குத்தத்தத்தின்படி
பரிசுத்த ஆவியைப்பெற்று, நீங்கள் இப்பொழு
துகாண்கிறதுங் கேட்கிறதுமானதை வருஷித்
௩௪ தார்.—தாவீது பரமண்டலத்திற்கு எழுந்துபோ
கவில்லை: அவனே "கர்த்தர் என் ஆண்ட
வரை நோக்கி, நான் உம்முடைய சத்துருக்
௩௫ களை உமது பாதபீடமாக்கும்வரைக்கும்,-நீர் என்
வலதுபாரிசத்தில் வீற்றிருமென்று சொன்னார்,"
௩௬ என்றான்.—ஆதலால் நீங்கள் சிலுவையில் அ
றைந்த இந்த யேசுவையே, தேவன் கர்த்
தரும் கிறிஸ்துவுமாக ஏற்படுத்தினாரென்று
இஸரவேல்சனங்கள் யாவரும் நிச்சயித்து உண
ரக்கடவர்களென்றான்.

அவர்கள் இவைகளைக் கேட்டபொழுது, ௩௭
தங்கள் தங்கள் இருதயத்திலே குத்துண்டு, பே
துருவையும் மற்ற அப்போஸ்தலரையும் நோக்
கி, சகோதரரே, நாங்கள் என்னசெய்யவேண்டு
மென்று கேட்க,—பேதுரு அவர்களைநோக்கி, ௩௮
நீங்கள்யாவரும் மனந்திரும்புங்கள், பாவமன்
னிப்பினிமித்தம் யேசுக்கிறிஸ்துவின் நாமத்
திலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள்,
அப்பொழுது பரிசுத்தஆவியாகிய வரத்தைப்
பெறுவீர்கள்.—உங்களுக்கும், உங்கள் சந்ததிக் ௩௯
கும், நம்முடைய தேவனாகிய கர்த்தர்வர
அழைக்குந் தூரத்திலுள்ள எவர்களுக்கும் வாக்
குத்தத்தமானது உண்டென்று சொன்னதுமன்
றி,—இன்னும் அநேக வாக்குகளினாலே சாட் ௪௰
சியையும், உபதேசத்தையுங்கொடுத்து, இக்கா
லத்திலுள்ள தாறுமாறான சந்ததியாரைப் பிரிந்
து,உங்களை இரட்சித்துக்கொள்ளுங்களென்றுஞ்
சொன்னான்.

அப்பொழுது மகிழ்ச்சியோடே அவன்வாக் ௪௧
கை அங்கிகரித்தவர்கள் ஞானஸ்நானம்பெற்றார்
கள்: அத்தினத்தில்ஏறக்குறையமூவாயிரம்பேர் ச
பையிலேசேர்க்கப்பட்டு,—அப்போஸ்தலருடை ௪௨
ய உபதேசத்திலும்,ஐக்கத்திலும்,அப்பம்பிட்குத
லிலும், பிரார்த்தனைசெய்தலிலும்உறுதியாய் நிலை
கொண்டார்கள்.—பயம் எல்லாரிடத்திலும்வந்த ௪௩
து: அப்போஸ்தலரால் அநேகம் அற்புதங்களும்
அடையாளங்களுஞ் செய்யப்பட்டன.-விசுவா ௪௪
சிகள்யாவரும் ஒருமித்திருந்து,எல்லாப்பொருள்
களையுஞ் சாதாரணமாகவைத்து,—தங்கள் தங்கள் ௪௫
ஆஸ்திகளையும் உடைமைகளையும்விற்று, ஒவ்
வொருவனுக்கும்வேண்டியபடி அவைகளைப்ப
கிர்ந்தார்கள்.—அவர்கள் ஏகசிந்தையுடையவர்க ௪௬
ளாய், நாடோறும் தேவாலயத்திற் சஞ்சரித்து,
வீடுகள்தோறும் அப்பம்பிட்டு, மகிழ்ச்சியும்மன
நேர்மையுமுள்ளவர்களாய்ப்போசனம்பண்ணி,
தேவனைத் துதித்து, எல்லாச் சனங்களினிடத்
திலுந் தயைபெற்றிருந்தார்கள்.—கர்த்தர் இரட் ௪௭
சிக்கப்படுபவர்களை அனுதினமும் சபையோ
டேசேர்த்தார்.

## ௩. அதிகாரம்.

௧. பேதுருவினாற் சப்பாணி ஒருவன் சொஸ்தம் பெறல்: ௰௩. யேசுவின் நாமத்திற் சனங்கள் மனந்திரும்பப் பேதுரு போதித்தல்.

பிரார்த்தனைசெய்கிற ஒன்பதாம் மணிநேரத்தில் ௧
பேதுருவும், யோவானுங்கூடித் தேவாலயத்திற்
குப்போனார்கள்.-தன்தாயின் கருப்பத்திலிருந்து ௨

(௨௪) வச.௩௨. அதி.௩.௰௫. அதி.௰௭.௩௧. ரோ.௪.௨௪. ரோ.௮.௰௧. ௧.கொரி.௬.௰௪. ௧.கொரி.௰௫.௰௫. ௨.கொரி.௪.௰௪. கலா.௧.௧. எபே.௧.௨௰. கொலோ.௨.௰௨. ௧.தெச.௧.௯. எபி.௰௩.௨௰. ௧.பேதுரு.௧.௨௧. (௨௫) சங்.௰௬.௮. (௨௯) ௧.இரா.௨.௰. அதி.௰௩.௩௬. (௩௰) ௨.சாமு.௭.௰௨,௰௩. சங்.௱௩௨.௰௧. லூக்.௧.௩௨,௭௧. ரோ.௧.௩. ௨.தீமோ.௨.௮. (௩௧) சங்.௰௬.௰. அதி.௰௩.௩௫. (௩௨) வச.௨௪. அதி.௧.௮. (௩௩) அதி.௫.௩௧. பிலி.௨.௯. எபி.௰.௰௨. யோவா.௰௪.௨௬. யோவா.௰௫.௨௬. அதி.௧.௪. அதி.௰.௪௬. எபி.௪.௮. (௩௫) சங்.௱௰.௧. மத்.௨௨.௪௪. ௧.கொரி.௰௫.௨௫. எபே.௧.௨௰. எபி.௧.௰௩. (௩௬) அதி.௫.௩௧. (௩௭) சக.௰௨.௰. லூக்.௩.௰. அதி.௯.௬. (௩௮) லூக்.௨௪.௪௭. அதி.௩.௰௯. (௩௯) யோவே.௨.௨௮. அதி.௩.௨௫. அதி.௰.௪௫. எபே.௨.௰௩,௰௭. (௪௨) வச.௪௬. அதி.௧.௰௪. ரோ.௰௨.௰௨. எபே.௬.௰௮. கொலோ.௪.௨. எபி.௰.௨௫. (௪௩) மாற்.௰௬.௰௭. அதி.௪.௩௩. (௪௪) அதி.௪.௩௨,௩௪. (௪௫) ஏசா.௫௮.௭. (௪௬) அதி.௧.௰௪. லூக்.௨௪.௫௩. அதி.௨௰.௭. லூக்.௨.௫௨. அதி.௪.௩௩. ரோ.௰௪.௰௮. (௪௭) அதி.௫.௰௪.—(௩. அதி. ௧.) அதி.௨.௪௬. சங்.௫௫.௰௭. (௨) அதி.௰௪.௮. யோவா.௯.௮.

சப்பாணியாய்ப்பிறந்த ஒருமனுஷனைத் தேவால
யத்தின் அலங்காரமென்னும் வாசலில், தேவா
லயத்திற் பிரவேசிப்பவர்களிடத்திலே பிச்சை
கேட்கும்பொருட்டு,தினமுஞ்சுமந்துவந்து வை
௩ ப்பார்கள்.–அவன், பேதுருவும் யோவானுந் தே
வாலயத்திற் பிரவேசிக்க வருவதைக்கண்டு பிச்
௪ சைகேட்டான்.–அப்பொழுது பேதுருவும் யோ
வானும் அவனில் நோக்கம்வைத்து, எங்களைப்
௫ பாரென்றுசொல்ல,–அவன் அவர்களால் ஏதாயி
னும் பெற்றுக்கொள்ளலாமென்றெண்ணி அவர்
௬ களைப்பார்த்தான்.–அப்பொழுது பேதுரு, வெள்
ளியும் பொன்னும் என்னிடத்திலில்லை; ஆனா
லும் என்னிடத்திலுள்ளதை உனக்குத்தருகிறே
ன்:நாசரேத்தூரானாகிய யேசுக்கிறிஸ்துவின்
நாமத்தினாலே நீ எழுந்து நடவென்றுசொல்லி,–
௭ வலதுகையினால் அவனைப்பற்றித்தூக்க, அவனு
டைய கால்களும், கரடுகளும் பெலன்கொண்
௮ டு,–அவன் எழுந்துநின்று, நடந்தான்,அன்றியும்
அவன் நடந்து குதித்து, தேவனைத் துதித்து,அ
வர்களுடனே தேவாலயத்திற் பிரவேசித்தான்.–
௯ அவன் நடக்கிறதையும், தேவனைத் துதிக்கிற
௰ தையுஞ் சமஸ்தசனங்களுங்கண்டு,—இவன் தே
வாலயத்தின் சௌந்தரியவாசலில் உட்காந்து பி
ச்சைகேட்டவனென்று அறிந்துகொண்டு, அவ
னுக்குச் சம்பவித்ததைக்குறித்து மிகவும் பிரமித்
௰௧ து, திகைப்படைந்தார்கள்.—சொஸ்தமடைந்த
சப்பாணி,பேதுருவையும் யோவானையுஞ்சேர்ந்
து பற்றிக்கொண்டான், சனங்கள் எல்லாரும்மி
கவும் ஆச்சரியப்பட்டு, சலோமோனின் மண்ட
பத்தில் அவர்களிடத்தில் ஒருமிக்க ஓடினார்கள்.
௰௨ பேதுரு அதைக் கண்டு, சனங்களைநோக்கி,
இஸ்ரவேலரே, நீங்கள் இதற்கு ஆச்சரியப்படுகி
றதென்ன; நாங்கள் சுயவல்லமையினால், அல்ல
து சுயபுண்ணியத்தினால் இவனை நடக்கப்பண்
ணினோமென்று எங்களை நீங்கள் உற்றுப்பார்க்கி
௰௩ றதென்ன.-ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்
பவர்களுடைய தேவனாகிய நம்முடைய முற்
பிதாக்களின் தேவன், தமது குமாரனாகிய யே
சுவை மகிமைப்படுத்தினார்; பிலாத்து அவ
ரை விடுதலையாக்க அபிப்பிராயங்கொண்டிருந்த
பொழுது நீங்கள் ஒப்பித்து, அவனுக்குமுன்பா
௰௪ க அவரை மறுதலித்தீர்கள்.—பரிசுத்தமும் நீதியு
முள்ளவரை நீங்கள் மறுதலித்து,கொலைபாதகன்
ஒருவனை உங்களுக்காக விடுதலைபண்ணவேண்
௰௫ டிக்கொண்டீர்கள்.-நீங்கள் சீவனுக்கதிபதியைக்
கொலைசெய்தீர்கள், தேவன் மரித்தோரினின்
று அவரை உயிரோடெழுப்பினார்;அதற்கு நாங்
௰௬ களே சாட்சிகள்.—அவருடைய நாமத்தில் விசு
வாசம்வைக்கிறதினிமித்தம், அவருடைய நாம
மே, நீங்கள் கண்டும் அறிந்துமிருக்கிற இவனை
ஸ்திரமாக்கிற்று: அவரைப்பற்றிக்கொண்ட விசு
வாசமே, உங்கள் எல்லாருக்குமுன்பாக இந்தப்
பூரணசொஸ்தத்தை இவனுக்குண்டாக்கிற்று.—
சகோதரரே, நீங்களும் உங்கள் அதிபதிகளும் அ ௰௭
றியாமையினால் இதைச்செய்தீர்களென்று அறிந்
திருக்கிறேன்.–தேவன், கிறிஸ்துவேதனைபட ௰௮
வேண்டுமென்று தம்முடைய தீர்க்கதரிசிகள் எல்
லாருடைய வாக்கினாலுந் தாம் முன்தெரிவித்த
வைகளை இவ்விதமாக நிறைவேற்றினார்.
ஆதலால் நீங்கள் உங்கள் பாவங்கள் நிவிர்த்தி ௰௯
யாகும்படி, மனந்திரும்பிச் சீர்ப்படுங்கள், அப்
படியே ஆறுதல் செய்யுங்காலங்கள் கர்த்தரு
டைய சந்நிதியினின்று வரும்.-பூருவகாலம்மு ௨௰
தல் உங்கள்நிமித்தங் குறிக்கப்பட்ட யேசுக்கி
றிஸ்துவை அவர் அனுப்புவார்.-உலகத்தோற் ௨௧
றமுதல், தேவன் தம்முடைய எல்லாப்பரிசுத்த
தீர்க்கதரிசிகளுடைய வாக்கினாலுஞ் சொல்லிய
வைகளெல்லாஞ் சீர்ப்படுங் காலம்வருமளவும்,
அவர் பரமண்டலத்தில் இருக்கவேண்டும்.—
மோசே நம்முடைய ஆதிபிதாக்களைநோக்கி, ௨௨
“உங்கள் தேவனாகிய கர்த்தர் உங்களுக்காக
என்னைப்போல் ஒரு தீர்க்கதரிசியை உங்கள் ச
கோதரரிலிருந்து தோன்றச்செய்வார்;அவர் உங்
களுக்குச்சொல்லும் எல்லாவற்றிற்குஞ் செவி
கொடுங்கள்.—அந்தத் தீர்க்கதரிசியின் சொற்கே ௨௩
ளாதவனெவனோ, அவன் சனங்களிலிராதபடி
சேதிக்கப்படுவான்,” என்றான்.—சாமுவேலும், ௨௪
அவனுக்குப் பின்தோன்றி உரைத்த தீர்க்கத
ரிசிகளெல்லாரும் இந்நாட்களை முன்னறிவித்
தார்கள்.—நீங்களே அந்தத் தீர்க்கதரிசிகளுடை ௨௫
ய சந்ததியாரும், “உன்சந்ததியினாலே பூமண்ட
லத்திலுள்ளசமஸ்தசாதியாரும் ஆசீர்வதிக்கப்படு
வார்கள்,” என்று தேவன் ஆபிரகாமுக்குச்சொ
ல்லி, நம்முடைய ஆதிபிதாக்களுடனேபண்ணி
ன உடன்படிக்கைக் குள்ளானவர்களுமாயிருக்
கிறீர்கள்.—தேவன் தம்முடைய குமாரனாகிய ௨௬
யேசுவை எழுப்பி, உங்களில் தங்கள்பாவங்க
ளினின்று திரும்புகிறயாவரையும் ஆசீர்வாதஞ்
செய்வதற்கு, முதல் அவரை உங்களுக்கே அ
னுப்பினாரென்றான்.

## ௪. அதிகாரம்.

௧. பேதுருவின் உபதேசத்தினால் மகா ஆசாரியன் குரோதங்கொள்ளல், பேதுருவையும் யோவானையுஞ் சிறைச்சாலையில் வைப்பித்தல்: ௫. பேதுருவும் யோவானும் நியாயஸ்தலத்தில் நிற்கையிற் பேதுரு உத்தரஞ்சொல்லல்: ௰௩. கிறிஸ்து

---

(௬) அதி.௪.௰. (௮) ஏசா.௩௫.௬. (௯) அதி.௪.௰௬,௨௧. (௰) யோவா.௯.௮. (௰௧) யோவா.௰.௨௩. அதி.௫.௰௨.(௰௩) அதி.௫.௩௰. யோவா.௭.௩௯. யோவா.௰௨.௰௬. யோவா.௰௭.௨. மத்.௨௭.௨,௨௰. மாற்.௰௫.௰௧. லூக்.௨௩.௰௮,௨௰, ௨௧. (௰௪) சங்.௰௬.௰. மாற்.௧.௨௪. லூக்.௧.௩௫. அதி.௭.௫௨. அதி.௨௨.௰௪. எபி.௨.௰. (௰௫) ௧.யோவா.௫.௰௧. அதி.௨.௨௪,௩௨. (௰௬) மத்.௯.௨௨. (௰௭) லூக்.௨௩.௩௪. யோவா.௰௬.௩. ௧.கொரி.௨.௮. ௧.தீமோ.௧.௰௩.(௰௮)லூக். ௨௪.௪௪. சங்.௨௨. ஏசா.௫௰.௬. தானி.௯.௨௬. ௧.பேதுரு.௧.௰,௰௧. (௰௯) அதி.௨.௩௮. (௨௧) அதி.௧.௰௧. மத்.௰௭. ௰௧. லூக்.௧.௭௧. (௨௨) உபா.௰௮.௰௫,௰௮,௰௯. அதி.௭.௩௭. (௨௫) அதி.௨.௩௯. ரோ.௯.௪,௮. கலா.௩.௨௬. ஆதி. ௰௨.௩. கலா.௩.௮. (௨௬) மத்.௰.௫. மத்.௰௫.௨௪. லூக்.௨௪.௪௭. வச.௨௨. மத்.௧.௨௧.—(௪. அதி.)

௪௮ பண்ணலாமாவென்றுசொல்லி,-கர்த்தருடை
ய நாமத்தினால் அவர்களுக்கு ஞானஸ்நானங்
கொடுக்கும்படி கட்டளையிட்டான். அப்பொ
ழுது சிலநாள் அங்கேதங்கும்படி, அவனை அவர்
கள் வேண்டிக்கொண்டார்கள்.

## ௰௧. அதிகாரம்.

*௧. விருத்தசேதன முள்ளவர்கள், விருத்தசேதன மில்லாதவர்களிடத்திற் சுவிசேஷத்தைப் பிரசித்தம்பண்ணின பேதுருவைக் கண்டித்தல்: பேதுரு அவர்களுக்குத்தரஞ் சொல்லல்: ௰௯. பர்னபாவை அந்தியோகிய நகரத்திற்கனுப்பல்: ௨௫. பர்னபா பவுலைத்தேடித் தருசுவுக்குச் செல்லல்: ௨௭. பஞ்சத்தின்நிமித்தம் பர்னபாவும் பவுலும் யெருஷலேமுக்குத் திரவியத்தை அனுப்பல்.*

அந்நியதேசத்தாருந் தேவவாக்கை அங்கிகரித்து
க்கொண்டார்களென்று,யூதேயாவிலிருக்கிறஅப்
போஸ்தலரும்,மற்றச்சகோதரருங் கேள்விப்பட்
௨ டார்கள்.—பேதுரு யெருஷலேமுக்குத் திரும்
பிவந்தபொழுது, விருத்தசேதனமுள்ளவர்கள்
௩ அவனோடே வாக்குவாதம்பண்ணி,—நீ விருத்
தசேதனமில்லாதவர்களிடத்திலேபோய், அவர்
களோடே புசித்தாயென்று தருக்கித்துச்சொன்
௪ னார்கள்.—அதினால் பேதுரு, நடந்தகாரியத்
தைக் கிரமமாக விவரிக்கத்தொடங்கினான்.—
௫ நான் யொப்பாபட்டணத்திற் பிரார்த்தனைபண்
ணினபொழுது, ஞானதிருஷ்டியில் நாலு தொங்
கலும் பின்னப்பட்ட பெரிய துப்பட்டிபோன்
ற ஒரு கூடு வானத்தினின்று என்னிடத்தில் இற
௬ ங்கிவரக்கண்டேன்.-நான் அதை உற்றுப்பார்த்த
பொழுது,அதிலே பூமியிலுள்ள நாற்காற்செந்துக்
களையும்,காட்டுமிருகங்களையும்,ஊர்வனவற்றை
யும், ஆகாயத்துப்பறவைகளையுங் கண்டேன்.—
௭ அன்றியும் பேதுருவே, எழுந்திரு;அடித்துப்புசி
யென்று என்னுடனே சொல்லுகிற சத்தத்தைக்
௮ கேட்டேன்.—அதற்கு நான், கர்த்தாவே,
அப்படியல்ல: விலக்கப்பட்டதும், அசுத்தமு
டையதுமான எந்தப்பொருளாவது ஒருபொழு
தும் என் வாயிற் புகவில்லையேயென்றேன்.—
௯ தேவன் சுசிப்படுத்தினவைகளை நீ அசுத்தமெ
ன்று எண்ணாதிரு என்று, இரண்டாந்தரமும் வா
௰ னத்தினின்று சத்தம் எனக்குக்கேட்டது.—இவ்
விதமாய் மூன்றுந்தரமும் உண்டாயிற்று: எல்
லாந் திரும்பவும் வானத்திற்கு எடுத்துக்கொள்
௰௧ ளப்பட்டன.—அப்பொழுது சேசாரியாவிலிரு
ந்து மூன்று மனுஷர் என்னிடத்தில் அனுப்
பப்பட்டு, நான் இருந்தவீட்டிற்கு முன்னேவந்
௰௨ துநின்றார்கள்.—சிறிதும் ஐயப்படாமல், நான்
அவர்களுடனே போகவேண்டுமென்று ஆவியா
னவர் எனக்குக்கட்டளையிட்டார். சகோதரரா
கிய இந்த ஆறுபேரும், நானுங்கூடி அந்த மனு
ஷனுடைய வீட்டுக்குப்போனோம்.—அவன், ஒ ௰௩
ருதேவதூதன் தன்வீட்டிலே நிற்கக்கண்டதை
யும், தன்னைநோக்கி, நீ யொப்பாவிலிருக்கிற
பேதுருவென்று மறுபேர்கொண்ட சீமோனை அ
ழைக்கும்படி ஆட்களை அவனிடத்திற்கு அனுப்
பு;-நீயும்,உன்வீட்டார்அனைவரும் இரட்சிப்புப் ௰௪
பெறுவதற்கேதுவான வாக்கியங்களை அவன் உ
னக்குத்தெரிவிப்பானென்று சொன்னானென்ப
தையும் எங்களுக்குத்தெரிவித்தான்.—நான் பே ௰௫
சத்தொடங்கினபொழுது,பரிசுத்த ஆவியானவர்
ஆதியிலேநம்மிடத்தில்இறங்கினதுபோல,அவர்
களிடத்திலும் இறங்கினார்.-யோவான் சலத்தினா ௰௬
லேஞானஸ்நானங்கொடுத்தான்; நீங்கள் பரிசுத்
தஆவியினாலே ஞானஸ்நானம் பெறுவீர்களென்
று கர்த்தர் சொல்லியவாக்கு அப்பொழுது
என் நினைவில் வந்தது.—கர்த்தராகிய யே ௰௭
சுக்கிறிஸ்துவை விசுவாசித்துக்கொண்டிருக்
கிற நமக்குத் தேவன் அருளினதுபோல, அந்
தவரத்தை அவர்களுக்கும் அருளினதினாலே,
தேவனை எதிர்க்க நான்எம்மாத்திரமென்றான்.-
அவர்கள் இவைகளைக்கேட்டபொழுது, அமர்ந் ௰௮
திருந்து, சீவனை அடையும்படி, மனந்திரும்புத
லைத் தேவன் அந்நியதேசத்தாருக்கும் அருளிச்
செய்தாரென்று தேவனைத் துதித்தார்கள்.
ஸ்தேவான் நிமித்தமாக உண்டான உபத்திர ௰௯
வத்தினாலே சிதறுண்டவர்கள்,பெனிக்கே, குப்
புரு, அந்தியோகியவரைக்குஞ்சென்று யூதருக்
கேயன்றி, மற்றொருவருக்கும் வாக்கைப்பிரசங்
கம் பண்ணவில்லை.—அவர்களிற் குப்பியரும், ௨௰
குரீனியருமாகிய சிலர் அந்தியோகியவில் வந்த
பொழுது, கிரேக்கருடனேயும் பேசி, கர்த்த
ராகிய யேசுவைச் சுவிசேஷமாய்ப் பிரசித்
தப்படுத்தினார்கள்.—கர்த்தருடைய கரம் அ ௨௧
வர்களுடன் இருந்ததினால், அநேகசனங்கள் வி
சுவாசித்து, கர்த்தரிடத்தில் திரும்பினார்கள்.
இந்தச்செய்தியை யெருஷலேமிலுள்ள சபை ௨௨
யார் கேள்விப்பட்டபொழுது அந்தியோகியவ
ரைக்கும்போகும்படி பர்னபாவை அனுப்பினார்
கள்.—அவன் போய்ச்சேர்ந்து, தேவனுடை ௨௩
ய கிருபையைக்கண்டு சந்தோஷப்பட்டான்.-
மேலும் அவன் நல்லவனும், பரிசுத்த ஆவியினா ௨௪
லும், விசுவாசத்தினாலும் பூரணப்பட்டவனுமா
யிருந்தபடியினால், எல்லாருந் திடசித்தங்கொண்
டு, கர்த்தாவைப் பற்றிக்கொள்ளும்படி அவர்
களுக்கு உபதேசித்தான்: அநேகம்பேர் கர்த்த
ரிடத்திற் சேர்க்கப்பட்டார்கள்.—பின்பு பர்னபா ௨௫
பா ஷவுலைத்தேடும்படி புறப்பட்டுத்தருசுக்குப்

(௪௮) ௧.கொரி.௧.௰௭. அதி.௨.௩௮. அதி.௮.௰௫.—(௰௧. அதி. ௨.) அதி.௰.௪௬. கலா.௨.௰௨. (௩) அதி.௰.௨௮. கலா.௨.௰௨. (௪) லூக்.௧.௩. (௫) அதி.௰.௯,. (௰௨) யோவா.௰௬.௰௩. அதி.௰.௰௯. அதி.௰௫.௭. அதி.௰.௨௩. (௰௩) அதி.௰.௩௰. (௰௫) அதி.௨.௪. (௰௬) மத்.௩.௰௧. யோவா.௧.௨௬,௩௩. அதி.௧.௫. ஏசா.௪௪.௩. யோவே.௨.௨௮. யோவே.௩.௰௮. (௰௭) அதி.௰௫.௮,௯. அதி.௰.௪௭. (௰௮) ரோ.௰.௰௨,௰௩. ரோ.௰௫.௯,௰௬. (௰௯) அதி.௮.௧. (௨௰) அதி.௬.௧. (௨௧) லூக்.௧.௬௬. அதி.௨.௪௭. அதி.௯.௩௫. (௨௨) அதி.௯.௨௭. (௨௪) அதி.௰௩.௪௯. அதி.௰௪.௨௨. அதி.௫. வச.௨௧. அதி.௫.௰௪. (௨௫) அதி.௯.௩௰.

௨௬ போய்,—அவனைக்கண்டு, அந்தியோகியவுக்கு
அவனை அழைத்துவந்தான். அவர்கள் ஒரு வரு
ஷகாலமாய்ச் சபையுடனேகூடி, அநேக சனங்
களுக்கு உபதேசம்பண்ணினார்கள். அந்தியோ
கியவிலே சீஷர் முதல் முதல் கிறிஸ்தவர்க
ளென்னும் பேர்பெற்றார்கள்.
௨௭ அந்நாட்களில், யெரூஷலேமிலிருந்து தீர்க்க
௨௮ தரிசிகள் அந்தியோகியவுக்கு வந்தார்கள்.—அ
வர்களில் ஒருவனாகிய அகாபென்பவன் எழுந்
து, சருவதேசங்களிலுங் கொடியபஞ்சம் உண்
டாகுமென்று ஆவியினால்அறிவித்தான்: கிலௌ
திய கைசரின் அதிகாரகாலத்தில் அது உண்டா
௨௯ யிற்று.-அப்பொழுது சீஷரில் ஒவ்வொருவரும்,
தங்கள் தங்கள் திராணியின்படி, யூதேயாதேசத்
தில் வசிக்கிற சகோதரருக்கு உதவியாகப்பொ
ருளை அனுப்பவேண்டுமென்று தீர்மானம்பண்
௩௰ ணினார்கள்.—அப்படியே பர்னபா, ஷவுல் என்
பவர்களுடைய கையிற்கொடுத்து அதை முதி
யோரிடத்திற்கு அனுப்பினார்கள்.

## ௰௨. அதிகாரம்.

க.ஏரோதுஇராசாவினால்பேதுருசிறைச்சாலையில் வைக்கப்படல்; தூதனால் விடுதலைபெறல்:௰௨. அவன் மரியாளின் வீட்டுக்குப்போதல்:காவற்காரரைக் கொலைசெய்ய ஏரோது கட்டளையிடல்: ௨௰. அகங்காரத்தின் நிமித்தம் ஏரோதுராசா நாசமடைதல்: தேவனுடைய வாக்குச் சித்தியாதல்.

அக்காலத்தில், ஏரோது இராசா, சபையாரிற் சி
௨ லரைக்கிலேசப்படுத்தும்படி கைநீட்டி,-யோவா
னுடைய சகோதரனாகிய யாக்கோபைக் கட்கத்
௩ தினாலே கொலைசெய்தான்.—அது யூதருக்குப்
பிரியமாயிருக்கிறதைஅவன்கண்டு, பேதுருவை
யும் பிடிக்கத் துணிந்தான். அந்நாட்கள் புளிப்
௪ பில்லாத அப்பத்தின் உற்சவநாட்கள்.—அவ
னைப்பிடித்து, பஷ்கா உற்சவங் கழிந்தபின்பு ச
னங்களுக்குமுன்பாக வெளியேகொண்டுவரலா
மென்றெண்ணி, அவனைச் சிறைச்சாலையிலே
வைத்து, ஒரு வகுப்பிற்கு நாலு போர்ச்சேவக
ராக,நாலுவகுப்பார் அவனைக்காக்கும்படி ஒப்
௫ பித்தான்.-பேதுரு காவலில் வைக்கப்பட்டிருக்
கையில், சபையார் இடைவிடாமல் தேவனை
நோக்கி, அவன் நிமித்தம் வேண்டுதல்பண்ணி
௬ னார்கள்.—ஏரோது, அவனை வெளியேகொண்டு
வரும்படி நினைத்திருந்த நாளுக்குமுதனாள் இ
ராத்திரியில், இரண்டுசங்கிலிகளினாலே பிணிப்
புண்டிருந்தபேதுரு,இரண்டுசேவகர் மத்தியிலே
நித்திரைபண்ணினான்: காவற்காரரும் கதவுக்கு
முன் காவலறையைக் காத்துக்கொண்டிருந்தார்
௭ கள்.-அறையிற் பிரகாசமுண்டாகக் கர்த்தரு
டைய தூதன் ஒருவன்தோன்றி, பேதுருவின்
விலாவிலேதட்டி, சீக்கிரமாயெழுந்திருவென்று
அவனைஎழுப்பினான். அவன்சங்கிலிகள் அவனு
டையகைகளைவிட்டுநீங்கின.-பின்பு தூதன்அவ ௮
னுடனே, உன் அரையைக்கட்டி, உன் பாதரட்
சைகளைத் தொடுத்துக்கொள்ளென்றுசொல்ல,அ
வன்அப்படியேசெய்தான். பின்னும் அவன்இவ
னைநோக்கி, உன் வஸ்திரத்தைப் போர்த்துக்கொ
ண்டு, எனக்குப்பின்னேவாவென்றான்.-இவன் ௯
அவன் பின்னே வெளியே புறப்பட்டுப்போ
னான்; தூதனாற்செய்யப்பட்டது மெய்யென்றறி
யாமல், சொப்பனங்கண்டதாக எண்ணினான்.-
அவர்கள் முதலாங்காவலையும், இரண்டாங்கா ௰
வலையுங்கடந்து, பின்பு நகரத்திற்குப்போகிற
இருப்புக்கதவினிடத்திற் சேர்ந்தபொழுது, அது
தானாய்த்திறக்க, அதின்வழியாய் அவர்கள் புறப்
பட்டு, ஒரு வீதிமட்டும் நடந்துபோனார்கள்; உ
டனே தூதன் அவனைவிட்டு நீங்கினான்.-பேது ௰௧
ருவுக்குத் தெளிவு வந்தபொழுது அவன், ஏரோ
தின்கையிலும், யூதசனங்களுடைய அபேட்சை
எல்லாவற்றிலுமிருந்து என்னை விடுதலையாக்கும்
படி, கர்த்தர் தமது தூதனை அனுப்பினாரென்
று இப்பொழுது நிச்சயித்துணருகிறேனென்றா
ன்.-அவன் இப்படிச்சிந்தித்துக்கொண்டு, மாற் ௰௨
கென்றுபேர்கொண்ட யோவானுடைய தாயா
கிய மரியாள் வீட்டுக்குப்போனான்; அங்கே அ
நேகர்கூடிவந்து, வேண்டுதல் பண்ணிக்கொண்
டிருந்தார்கள்.—பேதுரு தலைவாசற்கதவைத்தட் ௰௩
டினபொழுது, உரோதாளென்று பெயர்கொண்
ட ஒரு வேலைக்காரி ஒற்றுக்கேட்பதற்காக வந்
து,—பேதுருவின் குரலென்று அறிந்து, சந்தோ ௰௪
ஷப்பட்டு, வாசலைத்திறவாமல்உள்ளே ஓடி, வா
சலுக்குமுன்னே பேதுரு நிற்கிறாரென்றாள்.—
அவர்கள், நீ பிதற்றுகிறாயென்றார்கள். அவள்,அ ௰௫
வர்தானென்று உறுதியாய்ச்சொன்னபொழுது,
அவர்கள்,அது அவனுடைய தூதனென்றார்கள்.-
பேதுரு பின்னுந் தட்டிக்கொண்டிருந்தபொ ௰௬
ழுது, அவர்கள்திறந்து, அவனைக்கண்டு பிரமித்
தார்கள்.—அவர்கள் பேசாமலிருக்கும்படி அ ௰௭
வன் கையினாலே சமிக்கைசெய்து, கர்த்தர்
தன்னைக்காவலிலிருந்து விடுதலையாக்கின வகை
யை அவர்களுக்கு விவரித்து, இந்தச்செய்தியை
யாக்கோபுக்கும், மற்றச் சகோதரருக்குந் தெரி
வியுங்களென்றுசொல்லி, புறப்பட்டு வேறொரு
இடத்திற்குப் போனான்.-பொழுது விடிந்தபின் ௰௮
பு, பேதுருவைக்குறித்துச் சேவகருக்குள் உண்
டான கலகங்கொஞ்சமல்ல.—ஏரோது அவனை ௰௯
த்தேடிக் காணாமற் போனபொழுது, காவற்கா
ரரைச்சோதித்து, அவர்களைக்கொலைசெய்யும் ப

(௨௭) அதி.௨.௰௭. அதி.௰௩.க. அதி.௰௫.௩௨. அதி.௨௧.௯. க.கொரி.௰௨.௨௮. எபே.௪.௰௬. (௨௮) அதி.௨௧.௰. (௨௯) ரோ.௰௫.௨௬. க.கொரி.௰௬.க. ௨.கொரி.௯.க. (௩௰) அதி.௰௨.௨௫.—(௰௨. அதி. ௨.) மத்.௪.௨௧.(௩)யாத். ௰௨.௰௪,௰௫. (௪) யோவா.௨௧.௰௮. (௫) ௨.கொரி.க.௰௧. எபே.௬.௰௮. க.தெச.௫.௰௭. (௭) அதி.௫.௰௯.(௯)சங். ௱௨௬.க. அதி.௰.௩,௰௭. (௰) அதி.௰௬.௨௬. (௰௧) சங்.௩௪.௭. தானி.௩.௨௮. தானி.௬.௨௨. எபி.க.௰௪. யோபு.௫. ௰௯. சங்.௩௩.௰௮,௰௯. ௨.கொரி.க.௰. ௨.பேதுரு.௨.௯. (௰௨) அதி.௪.௨௩. அதி.௰௫.௩௭. வச.௫. (௰௫) ஆதி.௪௮. ௰௫. மத்.௰௮.௰. (௰௭) அதி.௰௩.௰௬.

டிகட்டளையிட்டான். பின்பு அவன் யூதேயா
வைவிட்டுச் சேசாரியாவுக்குப்போய், அங்கே
வாசம்பண்ணினான்.
௨௰ அக்காலத்தில், ஏரோது தீரு, சீதோன் தே
சத்தாருக்கு விரோதமாய்க்கோபங்கொண்டிருந்
தான்: அவர்கள் தங்களுக்குவேண்டிய உணவுப்
பொருளை இராசாவுடைய தேசத்திலிருந்துவாங்
கிக்கொள்வதினால் ஒருமனப்பட்டு, அவனிடத்
திற்குப்போய், இராசாவின் வீட்டுவிசாரணைக்
காரனாகிய பிலாஸ்துஸ் என்பவனைத் தங்களுக்
குத் துணையாயிருக்கும்படிபண்ணி, சமாதானங்
௨௧ கேட்டுக்கொண்டார்கள்.—ஆதலால் குறிக்கப்
பட்டநாளில் ஏரோது இராசவஸ்திரத்தைத் தரித்
துக்கொண்டு, சிங்காசனத்தின்மேல்வீற்றிருந்து,
௨௨ அவர்களுக்குப் பிரசங்கம்பண்ணினான்.-சனங்
கள் ஆரவாரம்பண்ணி, இது மனுஷனுடைய
சத்தமல்ல, தேவனுடைய சத்தமேயென்றார்
௨௩ கள்.—அவன் தேவனுக்குப் புகழ்ச்சிசெலுத்
தாதபடியினால், கர்த்தருடைய தூதன் சடி
தியாய் அவனை அடித்தான்: அவன் புழுவினால்
தின்னப்பட்டிறந்தான்.
௨௪,௨௫ தேவவாக்கோ படர்ந்து பெருகிற்று.-பர்
னபாவும்,ஷவுலும் தங்கள் ஊழியத்தை நிறை
வேற்றினபின்பு, மாற்கென்று மறுபேர்கொண்
ட யோவானைக் கூட்டிக்கொண்டு, யெருஷலே
மைவிட்டுத்திரும்பினார்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. பர்னபாவும், பவுலும் அந்நியதேசத்தாரிடத்தில் அனுப்பப்படல்: ௪. செருகியுபவுல், மாயாவியாகிய இலிமா என்பவர்களுடைய விவரந் தெரிவித்தல்: ௰௩. அந்தியோகிய நகரத்தில் பவுல் கிறிஸ்துவின் வாக்கியத்தைப் பிரசித்தப்படுத்தல்: ௨௬. அவர்கள் இரட்சிப்பின் வாக்கியத்தை அங்கிகரிக்க, அவன் அவர்களைவேண்டிக்கொள்ளல்: ௪௨. அநேகஞ்சனங்கள் வாக்கியத்தை அங்கிகரித்தல்: ௪௪. யூதசனங்கள் விபரீதஞ்செய்தல்.

அந்தியோகியவிலுள்ள சபையிலே பர்னபா
வும், நைகரென்னப்பட்ட ஷிமியோனும், சூரீ
னியனாகிய உலூசியும், தேசத்தின் காற்பங்குக்
கு அதிபதியாகிய ஏரோதுடன் வளர்க்கப்பட்ட
மனாயீனும், ஷவுலுமாகிய இவர்கள், தீர்க்கதரிசி
௨ களும் போதகருமாயிருந்தார்கள்.—அவர்கள் உ
பவாசம்பண்ணி, கர்த்தருக்கு ஆராதனைசெய்
தபொழுது, பரிசுத்த ஆவியானவர், பர்னபா
வும் ஷவுலுஞ்செய்யும்படி நான் ஏற்படுத்தியகிரி
யைக்காக அவர்களைப்பிரித்துவிடுங்களென்றார்.-
௩ அதினால் அவர்கள் உபவாசித்து வேண்டுதல்
பண்ணி, இவர்கள்மேற் கைகளைவைத்த பின்பு
அனுப்பிவிட்டார்கள்.
அவர்கள்பரிசுத்தஆவியினால்அனுப்பப்பட்டு, ௪
சிலூக்கிய நகரத்திற்குப்போய்,அங்கே கப்பலே
றிக் குப்புறுதீவிற்சென்று,—சாலமிசைச் சேர்ந் ௫
தார்கள், அங்கே யூதருடைய ஆலயங்களிற்போ
ய்த் தேவவாக்கைப் பிரசங்கம்பண்ணினார்கள்:
யோவான்அவர்களுக்குப்பணிவிடைக்காரனாயி
ருந்தான்.—அவர்கள் அந்தத் தீவிலெங்குந்திரிந் ௬
து, பாப்போநகரபரியந்தம் வந்தபொழுது, நற்
புத்திமானாகிய செருகியுபவுலென்னுந் தேசாதி
பதியுடனே கூடியிருந்த பர்யேசுவென்று பேர்
கொண்ட மாயாவியுங் கள்ளத்தீர்க்கதரிசியுமாகி
ய ஒரு யூதனைக்கண்டார்கள்.—அந்தத் தேசா ௭
திபதி தேவவாக்கைக்கேட்கவிரும்பி, பர்னபா
வையும் ஷவுலையும் அழைப்பித்தான்.-மாயாவி ௮
யென்றருத்தங்கொள்ளும் இலிமாவென்னும்பெ
யரையுடையவன் அவர்களைவிரோதித்து, தேசா
திபதியைவிசுவாசத்தினின்றுந்திருப்ப வகைதே
டினான்.—அப்பொழுது பவுலென்னும் பெயர் ௯
கொண்ட ஷவுல் பரிசுத்த ஆவியினாற் பூரணப்
பட்டு, அவன்மேற் கண்ணூன்றி,—எவ்வித கப ௰
டமும், எவ்வகைத்தீங்கும் நிறைந்தவனே, பிசா
சின்மகனே, எல்லாநீதிக்கும்பகைவனே, நீகர்த்
தருடைய மெய்வழியைப் புரட்டாமல்விடா
யா.-கேள், இப்பொழுது கர்த்தருடைய கை ௰௧
உன்மேல் வந்தது, நீ சிலகாலஞ் சூரியனைக்கா
ணாமற் குருடனாவாயென்றான். உடனே மந்தார
மும் இருளும் அவன்மேல்விழ, அவன் அங்கு
மிங்குந்திரிந்து, கைலாகு கொடுக்கிறவர்களைத்
தேடினான்.—நடந்ததை அத்தேசாதிபதி கண்டு, ௰௨
கர்த்தருடைய உபதேசத்தைக்குறித்து ஆச்ச
ரியப்பட்டு, விசுவாசமுள்ளவனானான்.—பின்பு ௰௩
பவுலும், அவனைச்சேர்ந்தவர்களும் பாப்போ ந
கரத்தைவிட்டு, பம்பிலியாவிலுள்ள பெருகேயுக்
குப்போனார்கள்:யோவான் அவர்களைவிட்டுநீங்
கி யெருஷலேமுக்குத்திரும்பினான்.
அவர்கள்பெருகேயைவிட்டுப்புறப்பட்டு, பி ௰௪
சிதிய நாட்டிலுள்ள அந்தியோகியவிற்சேர்ந்து,
ஓய்வுநாளில் ஆலயத்திற்பிரவேசித்து உட்கார்ந்
தார்கள்.—நியாயப்பிரமாணமும், தீர்க்கதரிசன ௰௫
வாக்கியமும் வாசித்துமுடிந்தபின்பு, புருஷரே,
சகோதரரே, நீங்கள் சனங்களுக்கு உபதேசஞ்
செய்யவிரும்பினால் செய்வீர்களாகவென்றுசொ
ல்லும்படி,ஆலயத்திற்கதிபதிகள்அவர்களுக்கா
ளனுப்பினார்கள்.-அப்பொழுது பவுல் எழுந்து, ௰௬
கை அமைத்து, இஸரவேலரே, தேவனுக்குப்
பயந்துநடக்கிறவர்களே,செவிகொடுங்கள்.-இந் ௰௭

(௨௰) ௧.இரா.௫.௯,௰௧. எசேக்.௨௭.௰௭. (௨௩) ௧.சாமு.௨௫.௩௮. ௨.சாமு.௨௪.௰௭. சங்.௱௰௫.௧.(௨௪)ஏசா.௫௫.௰௧. அதி.௬.௭. அதி.௰௯.௨௰. கொலோ.௧.௬. (௨௫) அதி.௰௧.௨௯,௩௰. அதி.௰௩.௫,௰௩. வச.௰௨.—(௰௩. அதி. ௧.) அதி.௰௧.௨௭. அதி.௰௧.௨௨—௨௬. ரோ.௰௬.௨௧.(௨)எண்.௮.௰௪. ரோ.௧.௨. கலா.௧.௰௫. கலா.௨.௯. மத்.௯.௩௮. ரோ.௰.௰௫. எபே.௩.௭,௮. ௧.தீமோ.௨.௭. ௨.தீமோ.௧.௰௧. எபி.௫.௪. (௩) அதி.௬.௬.(௪)அதி.௪.௩௬.(௫)வச.௪௬. அதி.௰௨.௨௫. (௬) அதி.௮.௯. (௮) யாத்.௭,௰௧. ௨.தீமோ.௩.௮. (௯) அதி.௪.௮. (௰) மத்.௰௩.௩௮. யோவா.௮.௪௪. ௧.யோவா.௩.௮. (௰௧) யாத்.௯.௩. ௧.சாமு.௫.௬. (௰௩) அதி.௰௫.௩௮. (௰௪) அதி.௰௬.௰௩. (௰௫) லூக்.௪.௰௬. எபி.௰௩.௨௨. (௰௬) அதி.௰௨.௰௭. வச.௨௬,௪௨,௪௩. (௰௭) உபா.௭.௬,௭. யாத்.௧.௩, சங்.௱௫.௨௩,௨௪. யாத்.௬.௬.

த இஸரவேல் சந்ததியாருடைய தேவன் நம்மு
டைய ஆதிபிதாக்களைத் தெரிந்துகொண்டு, அ
வர்கள் எகிப்து தேசத்திற் சஞ்சரித்துவந்தகாலத்
தில்; அவர்களை மேன்மைப்படுத்தி, கைவல்லபத்
தினால் அதிலிருந்து அவர்களைப்புறப்படப்பண்
௰௮ ணி,—நாற்பது வருஷகாலமாய்வனத்தில் அவர்
௰௯ களை ஏந்திக்கொண்டு,—கானான்தேசத்திலுள்ள
ஏழு இராச்சியத்தாரை நாசப்படுத்தி, சீட்டுப்
போட்டு அவர்களுடையதேசத்தை இவர்களுக்
௨௰ குப் பங்கிட்டுக்கொடுத்தார்.—பின்பு ஏறக்கு
றைய நானூற்றைம்பது வருஷகாலமாய், சாமு
வேல் தீர்க்கதரிசிவரைக்கும் இவர்களுக்கா
௨௧ க நியாயாதிபதிகளை ஏற்படுத்தினார்.—பின்பு ஒரு
இராசா வேண்டுமென்று அவர்கள் கேட்டுக்
கொண்டபடியால், தேவன், பேன்யாமீன்
கோத்திரத்தானாகிய கீஷின் புத்திரனான ஷவு
லை அவர்களுக்கு ஏற்படுத்தினார், அவன் நாற்
௨௨ பதுவருஷமிருந்தான்.—அவர் அவனை விலக்
கினபொழுது தாவீதை இராசனாக ஏற்படுத்தி
னதுமன்றி, எனதுள்ளத்துக்கேற்றவனாக ஈஷா
யின் புத்திரனாகிய தாவீதைக் கண்டுகொண்
டேன், அவன் என் சித்தத்துக்கிணங்க எல்லாவ
ற்றையுஞ் செய்வானென்று சாட்சியுமிட்டார்.—
௨௩ இவனுடைய சந்ததியில், தேவன், தமது வாக்
குத்தத்தத்தின்படி இஸரவேலருக்காக யேசுவெ
ன்னும் இரட்சகரைத் தோன்றப்பண்ணினார்.—
௨௪ அவர் தோன்றுவதற்குமுன், யோவான் மனந்
திரும்புதற்கேற்ற ஞானஸ்நானத்தை இஸரவே
௨௫ லர்யாவருக்கும் பிரசங்கித்தான்.—மேலும் யோ
வான் தான் ஓடவேண்டிய ஓட்டத்தை நிறை
வேற்றுகையில், நீங்கள் என்னை எவனென்
று நினைக்கிறீர்கள், நான் அவரல்ல. எனக்குப்
பின் ஒருவர் வருவார், அவருடைய பாதரட்
சையை அவிழ்க்கிறதற்கும் நான் பாத்திரனல்ல
௨௬ வென்றான்.—ஆபிரகாமின் சந்ததியாராகிய ச
கோதரரே, தேவனுக்குப் பயந்து நடக்கிற
வர்களே, இந்த இரட்சிப்பின் வாக்கியம் உங்
களிடத்திற்கே அனுப்பப்பட்டிருக்கின்றது.—
௨௭ யெரூஷலேமிலே குடியிருக்கிறவர்களும், அ
வர்களுடைய அதிபதிகளும், அவரையாகிலும்,
ஓய்வுநாட்கள்தோறும் வாசிக்கப்படுகிற தீர்க்க
தரிசிகளின் வாக்கியங்களையாகிலும் உணர்ந்த
றியாமல், அவரைத் தண்டனைக்குள்ளாகத்
தீர்த்ததினால், அவைகளை நிறைவேற்றினார்
௨௮ கள்.—மரணத்திற்கு ஏதுவொன்றையுங் காணா
திருந்தும், அவர்கள் அவரைக்கொலைசெய்யும்
படி பிலாத்தைவேண்டிக்கொண்டார்கள்.—அ ௨௯
வரைக்குறித்து எழுதியிருக்கிற யாவையும் அ
வர்கள் நிறைவேற்றினபின்பு, அவரை மரத்தி
னின்று இறக்கி, பிரேதவறையில் வைத்தார்கள்.-
தேவனோ, மரித்தோரினின்று அவரை எழுப் ௩௰
பினார்.—அன்றியும் அவர் கலிலேயாவிலிருந்து ௩௧
தம்முடனேகூட யெரூஷலேமுக்கு வந்தவர்க
ளுக்கு அநேகநாள் தரிசனையானார், ஆதலால்
அவர்களே சனங்களுக்குமுன் அவருடைய சா
ட்சிகள்.—"நீ என் புத்திரன், இன்று உன்னைச் ௩௨
செனிப்பித்தேன்,"என்று இரண்டாஞ் சங்கீதத்
தில் எழுதியிருக்கிறபடி,—தேவன் யேசுவை ௩௩
எழுப்பினதினால், ஆதிபிதாக்களுக்கு அருளிச்
செய்த வாக்குத்தத்தத்தை அவர்களுடைய சந்த
தியாராகிய நமக்கு நிறைவேற்றினாரென்று, நாங்
கள் உங்களுக்குச் சுவிசேஷமாய்த் தெரிவிக்கி
றோம்.-அவர், மறுபடியும் மரியாதபடி அவரை ௩௪
மரித்தோரிலிருந்து எழுப்பினதைக் குறித்து"தா
வீதுக்கு நிச்சயிக்கப்பட்ட கிருபைகளை உங்க
ளுக்கு அருளுவேன்," என்று சொன்னார்.—
"நீர் உமது பரிசுத்தன் அழிவைக்காணவிடீர்," ௩௫
என்று வேறொருசங்கீதத்தில் சொல்லியிருக்கின்
றது.—தாவீது தேவனுடைய சித்தத்தின்படி அ ௩௬
வரைச்சேவித்து, தன்வாழ்நாள்கழித்தபின்பு மகா
நித்திரை அடைந்து, தன்பிதாக்களிடத்திற்சேர்க்
கப்பட்டு அழிவை அடைந்தான்.—தேவனால் ௩௭
எழுப்பப்பட்டவரோ, அழிவைக்காணவில்லை.
சகோதரரே, அவர்மூலமாக உங்களுக்குப்பா ௩௮
வமன்னிப்புக்கிடைக்கும், இது உங்களுக்கு அறி
விக்கப்படுகின்றது.-மோசேயின் நியாயப்பிரமா ௩௯
ணத்தினால் நீங்கள்விடுதலையாய், நீதிமான்களா
கக்கூடாதவைகளெவைகளோ, அவைகளினின்
றும்விசுவாசிப்பவர்கள் யாவரும் அவராலே நீதி
மான்களாகிறார்களென்று உணர்ந்துகொள்ளுங்க
ள்.—மேலும்"அவமதிக்கிறவர்களே, ஒருவன் உங் ௪௰
களிடத்தில் விவரித்தாலும், நீங்கள் விசுவாசியாத
ஒருகிரியையை உங்கள் நாட்களிலே நடப்பிப்
பேன்; பாருங்கள், பிரமிப்படைந்து அழிந்து
போங்கள்,"என்று—தீர்க்கதரிசன புத்தகத்தில் எ ௪௧
ழுதியிருக்கின்றது, அது உங்களுக்கு நேரிடாதப
டி சாவதானமாயிருங்களென்றான்.—பின்பு யூ ௪௨
தர் ஆலயத்தினின்று புறப்பட்டபொழுது, அ
டுத்த ஓய்வுநாளிலும் அந்தவாக்கியங்களைத் தங்க
ளுக்குச்சொல்லவேண்டுமென்று அந்நியதேசத்
தாரானவர்கள் வேண்டிக்கொண்டார்கள்.—ச ௪௩
பைகலைந்தபின்பு யூதரிலும், யூதமார்க்கத்தை அ

(௰௮)யாத்.௰௬.௩௫. எண்.௰௪.௩௩,௩௪. சங்.௯௫.௮,௰. அதி.௭.௩௬. உபா.௧.௩௧. (௰௯) உபா.௭.௧. யோசு.௰௪.௧,௨. சங்.௭௮.௮௫.(௨௰)நியா.௨.௰௬. ௧.சாமு.௩.௨௰.(௨௧)௧.சாமு.௮.௫. ௧.சாமு.௰.௧.(௨௨)௧.சாமு.௰௫.௨௩,௨௬,௨௮. ஓசி.௰௩.௰௧. ௧.சாமு.௰௬.௰௩. ௨.சாமு.௨.௪. சங்.௮௯.௨௰. ௧.சாமு.௰௩.௰௪. (௨௩) ஏசா.௰௧.௧. லூக்.௧.௩௨,௭௧. ரோ.௧.௩. ௨.சாமு.௭.௰௧. சங்.௱௩௨.௰௨. மத்.௧.௨௧. ரோ.௰௧.௨௬.(௨௪)மத்.௩.௨. லூக்.௩.௩.(௨௫)மத்.௩.௰௧.யோவா.௧.௨௰,௨௭.(௨௬)லூக்.௨௪.௪௭. (௨௭) லூக்.௨௩.௩௪. ௧.கொரி.௨.௮. வச.௰௪,௰௫. லூக்.௨௪.௨௧,௪௪.(௨௮)மத்.௨௭.௨௨. அதி.௩.௰௩,௰௪. (௨௯) லூக்.௨௪.௪௪. யோவா.௰௯.௨௮,௩௰,௩௬,௩௭. மத்.௨௭.௫௯. (௩௰) மத்.௨௮.௬. (௩௧) மத்.௨௮.௰௬. ௧.கொரி.௰௫.௫,௬,௭. அதி.௧.௰௧. அதி.௧.௮.(௩௨)ஆதி.௩.௰௫. ஆதி.௰௨.௩. ரோ.௪.௰௩. கலா.௩.௰௬. (௩௩) சங்.௨.௭. எபி.௧.௫. (௩௪) ஏசா.௫௫ ௩. (௩௫) சங்.௰௬.௰. அதி.௨.௩௧.(௩௬)வச.௨௨. சங்.௭௮.௭௨. ௧.இரா.௨.௰. (௩௮) எரே.௩௧.௩௪. தானி.௯.௨௪. லூக்.௨௪.௪௭. ௧.யொவா.௨.௰௨.(௩௯)ஏசா.௫௩.௰௧. ரோ.௩.௨௮. ரோ.௮.௩. எபி.௭.௰௯. (௪௰) ஏசா.௨௯.௰௪. அபகூ.௧.௫. (௪௩) அதி.௰௧.௨௩. தீத்.௨.௰௪. எபி.௰௨.௰௫. ௧.பேதுரு.௫.௰௨.

னுசரிக்கப்பெற்ற தேவபத்தியுள்ளவர்களிலும்
அநேகர் பவுலுவுக்கும், பர்னபாவுக்கும் பின்
செல்ல,அவர்களுடன் இவர்கள்பேசி,தேவனு
டைய கிருபையில் நிலைகொண்டிருக்கவேண்
டுமென்று புத்திசொன்னார்கள்.
௪௪ மறு ஓய்வுநாளில், கொஞ்சங்குறைய நகரத்
தார்யாவருந் தேவவாக்கைக்கேட்கும்படி கூடி
௪௫ வந்தார்கள்.—யூதர் சனத்திரளைக்கண்டபொழு
து பொறாமையினால் நிறைந்து,பவுல்சொல்லிய
வைகளை விரோதித்துத் தூஷணமாய்ப்பேசி, எ
௪௬ திர்த்துநின்றார்கள்.—அப்பொழுது, பவுலும் பர்
னபாவுந் தைரியங்கொண்டு, தேவவாக்கை மு
தல்முதல் உங்களிடத்திலே பிரசித்தப்படுத்துவ
து அவசியம்: கேளுங்கள், நீங்கள் அதைப் புறக்
கணித்து, நித்தியசீவனைப் பெறுவதற்கு அபாத்தி
ரரென்று உங்களை எண்ணுகிறபடியினால், நாங்
௪௭ கள் அந்நியதேசத்தாரிடத்திற் போகிறோம்.-"நீர்
பூமியின் எல்லைபரியந்தமும் இரட்சகராயிருக்
கும்படி, உம்மை அந்நியதேசத்தாருக்கு ஒளியெ
ன்று ஏற்படுத்தினேன்,"என்பதின்படி தேவன்
எங்களுக்குக் கட்டளையிட்டாரென்றார்கள்.—
௪௮ அந்நியதேசத்தார் அதைக்கேட்டுச் சந்தோஷப்
பட்டு, கர்த்தருடைய வாக்கைப் புகழ்ந்
தார்கள். நித்தியசீவனுக்கு நியமிக்கப்பட்டவர்
கள் எவர்களோ, அவர்கள் விசுவாசித்தார்கள்.—
௪௯ இப்படியே கர்த்தருடைய வாக்கு அத்தேச
௫௰ மெங்கும் பரம்பிற்று.-யூதரோ,பத்தியுங் கனமும்
பொருந்திய ஸ்திரிகளையும், நகரத்தின் பிரதானி
களையும் எழுப்பி, பவுலையும் பர்னபாவையுந்
துன்பப்படுத்தும்படிசெய்து, தங்கள் எல்லைகளி
௫௧ னின்று அவர்களைத் துரத்திவிட்டார்கள்.—அவர்
கள், தங்கள் கால்களின் தூளை அவர்களுக்குச்
சாட்சியாக உதறிப்போட்டு,இக்கோனிய நகரத்
௫௨ திற்குப்போனார்கள்.—சீஷர் சந்தோஷத்தினாலு
ம் பரிசுத்தஆவியினாலும் பூரணப்பட்டார்கள்.

## ௰௪. அதிகாரம்.

௧. இக்கோனியநகரத்திற் பவுலும் பர்னபாவுந் துயரப்படுத்தப்படல்: ௮. இலுஸ்திராநகரத்திற் சப்பாணி ஒருவனைச் சொஸ்தப்படுத்தினதினாற் சனங்கள் பர்னபாவுக்கும் பவுலுக்கும் பூசைசெய்ய விரும்பல்: ௰௯. பவுல் கல்லாலெறியுண்டும் பிழைத்தல்: அவனும் பர்னபாவும் நானாதேசங்களிலுந் திரிந்து சபையை ஸ்திரப்படுத்தல். அந்தியோகிய சபையாருக்குத் தங்கள் கிரியையின் செய்தியைத்தெரிவித்தல்.

அவர்கள் இருவரும் இக்கோனியவிலே யூதரு
டைய ஆலயத்திற்குப்போய், வாக்கியத்தைச்
சொன்னதினால் யூதரிலுங் கிரேக்கரிலுந் திரளா
னசனங்கள்விசுவாசித்தார்கள்.-அவிசுவாசிகளா ௨
கியயூதர்,சகோதரருக்குவிரோதமாக அந்நியதே
சத்தாருடைய மனதை எழுப்பிப்பகையுண்டாக்
கினார்கள்.—அங்கே அவர்கள் நெடுங்காலந்தங் ௩
கி, கர்த்தரைக் குறித்துத்தைரியமாய் வாக்
கைப்பிரசித்தப்படுத்தினார்கள். அவர் தமது கிரு
பைபொருந்தியவாக்குக்குச் சாட்சியாய், அ
டையாளங்களும் அற்புதங்களும் அவர்கள் கை
களாற் செய்யப்படும்படி அருள்செய்தார்;—நக ௪
ரத்தின் சனங்கள்பிரிந்து, சிலர் யூதர்பட்சத்தை
யும், சிலர் அப்போஸ்தலர் பட்சத்தையுஞ் சார்ந்
தார்கள்.—பின்பு அந்நியதேசத்தாரும், யூதரும், ௫
தங்கள்தங்கள் அதிபதிகளுடன் தங்களை நிந்
திக்கவும், தங்கள்மேற் கல்லெறியவுங்கலகம்
பண்ணுகிறதை—அவர்கள் அறிந்து,லிக்கவோனி ௬
யநாட்டிலுள்ள இலுஸ்திராவுக்கும்,தெர்பிக்கும்,
அவைகளைச்சூழ்ந்த திசைக்குந் தப்பிஓடி,—அங் ௭
கே சுவிசேஷத்தைப் பிரசங்கம்பண்ணினார்கள்.
இலுஸ்திராவில் ஒருவன் தன் தாயின் கருப் ௮
பத்திலிருந்து பிறந்ததுமுதல் சப்பாணியாய், ஒ
ருபொழுதும் நடவாமல், பெலமில்லாத கால்க
ளையுடையவனாய் உட்காந்திருந்து,—பவுல் பேசு ௯
கிறதைக்கேட்டான்: இவன்மேல் அவன் நோக்
கம் வைத்து, சொஸ்தமடைவதற்கேற்ற விசுவா
சம் இவனிடத்திலிருக்கின்றதென்று அறிந்து,—
நீ காலூன்றி நிமிர்ந்து நில்லென்று உரத்தசத்த ௰
மிட்டுச்சொல்ல, அவன் குதித்தெழுந்து உலா
வினான்.—சனங்கள் பவுல் செய்ததைக்கண்டு, ௰௧
தேவர்கள் மனுஷரூபமெடுத்து நம்மிடத்தில் இ
றங்கியிருக்கிறார்களென்று லிக்கவோனிய பா
ஷையிலே குரலிட்டுச் சொன்னார்கள்.—பர்ன ௰௨
பாவுக்கு யூப்பித்தரென்றும், பவுல் பிரதானபிர
சங்கியானபடியால்அவனுக்குமெருக்கூரியென்
றும் பெயரிட்டார்கள்.-பின்பு பட்டணத்திற்கு ௰௩
முன்னிருந்த யூப்பித்தருடைய பூசாரி, எருதுக
ளையும், பூமாலைகளையும் வாசலுக்குச்சமீபமா
கக் கொண்டுவந்து, சனங்களுடன் அவர்களுக்
குப்பலியிடவிரும்பினான்.—அப்போஸ்தலராகி ௰௪
ய பர்னபாவும், பவுலும் அதைக்கேள்விப்பட்
டு, தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,
சனங்களுக்குள் ஓடிக்குரலிட்டு,—மனுஷரே, ௰௫
என் இப்படிச்செய்கிறீர்கள், நாங்களும் உங்
களைப்போலப் பாடுஅனுபவிக்கிற மனுஷர், நீ
ங்கள் இந்தமாயைகளைவிட்டு, வானத்தையும்,
பூமியையும், சமுத்திரத்தையும், அவைகளிலுள்
ளயாவையுஞ் சிருஷ்டித்த சீவனுள்ள தேவனி
டத்திற்குத் திரும்பும்படி, உங்களுக்குச்சுவி
சேஷமாய்ச் சொல்லுகிறோம்.—சென்றகாலங்க ௰௬

(௪௫) அதி.௰௮.௬. ௧.பேதுரு.௪.௪. யூதா.௰. (௪௬) மத்.௰.௬. ரோ.௧.௰௬. யாத்.௩௨.௰. உபா.௩௨.௨௧. ஏசா.௫௫.௫. மத்.௨௧.௪௩. ரோ.௰.௰௯. அதி.௰௮.௬. (௪௭) ஏசா.௪௨.௬. லூக்.௨.௩௰. (௪௮) அதி.௨.௪௭. (௫௰) ௨.தீமோ.௩.௰௧. (௫௧) மத்.௰.௰௪. அதி.௰௮.௬. (௫௨) மத்.௫.௰௨. யோவா.௰௬.௨௨. அதி.௨.௪௬.—(௰௪. அதி. ௩.) மாற்.௰௬.௨௰. எபி.௨.௪. (௪) அதி.௰௩.௩. (௫) ௨.தீமோ.௩.௰௧. (௬) மத்.௰.௨௩. (௮) அதி.௩.௨. (௯) மத்.௮.௰. (௰) ஏசா.௩௫.௬. (௰௧) அதி.௨௮.௬. (௰௩) தானி.௨.௪௬. (௰௪) மத்.௨௬.௬௫. (௰௫) அதி.௰.௨௬. யாக்.௫.௰௭. வெளி.௰௯.௰. ௧.சாமு.௰௨.௨௧. ௧.இரா.௰௬.௰௩. எரே.௰௪.௨௨. ஆமோ.௨.௪. ௧.கொரி.௮.௪. ௧.தெச.௧.௯. ஆதி.௧.௧. வெளி.௰௪.௭. (௰௬) சங்.௮௧.௰௨. அதி.௰௭.௩௰. ௧.பேதுரு.௪.௩.

ளில், சருவதேசத்தாருந் தங்கள் தங்கள் நெறி
௰௭ களிலே நடக்க இடங்கொடுத்தார்.—ஆகிலும்
நன்மைசெய்து, வானத்திலிருந்து மழையையும்,
செழிப்புள்ள காலங்களையும் நமக்குத்தந்து, ஆ
காரத்தினாலும், மகிழ்ச்சியினாலும் நம்முடை
ய இருதயங்களைத் திருத்திப்படுத்தி, இவ்வித
மாய் அவர் தமக்குச்சாட்சியையும் ஏற்படுத்
௰௮ தாமல் விடவில்லையென்றார்கள்.—அவர்கள் இப்
படிச்சொல்லியும், தங்களுக்குச்சனங்கள் பலி
யிடாதபடி விலக்குவது அரிதாயிருந்தது.
௰௯ பின்பு அந்தியோகியவிலும், இக்கோனியவி
லுமிருந்து யூதரிற் சிலர் வந்து, சனங்களுக்குப்
போதித்து, பவுல்மேற்கல்லெறிந்து, அவன்மரித்
தானென்று நினைத்துப் பட்டணத்திற்கு வெளி
யே அவனை இழுத்துக்கொண்டுபோனார்கள்.—
௨௰ ஆனாலும் சீஷர் அவனைச்சூழ்ந்து நிற்கையில்,
அவன் எழுந்து பட்டணத்திற்பிரவேசித்து, ம
றுநாளிலே பர்னபாவுடன் தெர்பிக்குப் போ
௨௧ னான்.—அவர்கள் அந்தப்பட்டணத்திற் சுவிசே
ஷத்தைப் பிரசங்கம்பண்ணி, அநேகரைச் சீஷ
ராக்கின பின்பு, இலுஸ்திராவுக்கும், இக்கோ
னியவுக்கும், அந்தியோகியவுக்குந் திரும்பி,—
௨௨ சீஷருடைய மனதைஸ்திரப்படுத்தி, அவர்கள்
விசுவாசத்திலே நிலைகொள்ளவேண்டுமென்றும்,
நாம் அநேக உபத்திரவங்களின் வழியாய்த் தே
வனுடைய இராச்சியத்திற் பிரவேசிக்கவேண்
௨௩ டுமென்றுஞ் சொல்லிக்கொண்டார்கள்.—அன்றி
யும் அவர்கள் ஒவ்வொருசபையிலும் மூதியோ
ரைத்தெரிந்து ஏற்படுத்தி, உபவாசித்து, பிரார்த்
தனைபண்ணி, அவர்கள் விசுவாசித்துக்கொண்டி
ருந்த கர்த்தருக்கு அவர்களை ஒப்பித்தார்
௨௪ கள்.—பின்பு அவர்கள் பிசிதியவின் வழியாய்ச்
௨௫ சென்று, பம்பிலியாவைச்சேர்ந்து,—பெருகே
யிலே வாக்கைப் பிரசங்கித்து, அத்தாலியாநகரத்
௨௬ திற்குப்போனார்கள்.—அவ்விடத்தில் அவர்கள்
கப்பலேறி, தாங்கள் நிறைவேற்றின கிரியைக்
காகத் தேவனுடைய கிருபைக்கு ஒப்பிக்கப்
பட்டு விட்டுநீங்கின அந்தியோகியவுக்குப்போ
௨௭ னார்கள்.—அங்கேசேர்ந்து, அவர்கள்சபையைக்
கூடிவரச்செய்து, தங்களால் தேவன்செய்த
யாவையும், அவர் அந்நியதேசத்தாருக்கு விசுவா
சத்தின்கதவைத் திறந்தாரென்பதையும் விவரித்
௨௮ தார்கள்.—பின்பு அவர்கள், சீஷருடனே அங்
கே நெடுங்காலந் தங்கினார்கள்.

## ௰௫. அதிகாரம்.

௧. விருத்தசேதனத்தைக்குறித்துவாக்குவாதஞ்செய்தல்: ௬. அதைத்தொட்டு அப்போஸ்தலர் ஆலோசனையையுந் தீர்ப்பையுஞ்சொல்லல். ௨௨. பர்னபா,பவுல் என்பவர்களுடையகையிற் பத்திரத்தை அனுப்பல்: ௩௬. விவாதத்தினிமித்தம் பிரிதல்.

பின்பு யூதேயாதேசத்தினின்று வந்தசிலர், நீங் ௧
கள் மோசேயின் முறைமைப்படி விருத்தசேதன
ம்பெறாவிட்டால்இரட்சிக்கப்படமாட்டீர்களெ
ன்று சகோதரருக்குப் போதித்தார்கள்.—அதினால் ௨
பவுலும், பர்னபாவும் அவர்களுடனே வாக்கு
வாதமும், மிகுந்த தருக்கமும்பண்ணினபொழு
து, அதைக்குறித்துப் பவுலும், பர்னபாவும், தங்
களில் வேறு சிலரும், யெருஷலேமிலுள்ள அப்
போஸ்தலரிடத்திற்கும் மூதியோரிடத்திற்கும்
போகவேண்டுமென்று தீர்மானம் பண்ணினார்
கள்.—அந்தப்பிரகாரமாகவே அவர்கள் சபையா ௩
ரால் வழிவிட்டனுப்பப்பட்டபின்பு, பெனிக்
கே, ஷமாரியாநாடுகளின்வழியாய்ப்பிரயாணஞ்
செய்து, அந்நியதேசத்தாருடைய மனந்திரும்பு
தலாகிய செய்தியினாற் சகோதரரனைவரையும் மி
கவுஞ் சந்தோஷப்படுத்தினார்கள்.—யெருஷலே ௪
மில் அவர்கள் சேர்ந்து, அப்போஸ்தலராலும்;
மூதியோராலும், மற்றச்சபையாராலும் அங்கிக
ரிக்கப்பட்டு, பின்பு தங்களால் தேவன் செய்
தயாவையுந் தெரிவித்தார்கள்.—அப்பொழுது ப ௫
ரிசேயரின்வகுப்பிற் சில விசுவாசிகள் எழுந்து,
அவர்கள் விருத்தசேதனத்தைப்பெற்று, மோசே
யின் பிரமாணத்தைக் கைக்கொள்ளும்படி கட்
டளையிடவேண்டுமென்றார்கள்.
அதினால் அப்போஸ்தலரும், மூதியோரும் ௬
அந்தக்காரியத்தை ஆராய்ந்துபார்ப்பதற்காகக் கூ
டினார்கள்.—மிகுந்த வாக்குவாதமுண்டானபொ ௭
ழுது, பேதுரு எழுந்து அவர்களைநோக்கி, சகோ
தரராகிய மனுஷரே, அந்நியதேசத்தார் என்வாயி
னாற் சுவிசேஷவாக்கியத்தைக்கேட்டு விசுவாசிக்
கும்படி, அநேகநாளுக்கு முன் எங்களுக்குள்
ஒருவனாகிய என்னைத் தேவன் தெரிந்துகொண்
டார், இது உங்களுக்குத்தெரியும்.—இருதயங்க ௮
ளை அறிந்திருக்கிற தேவன் நமக்கு அருளின
துபோல, அவர்களுக்கும் பரிசுத்தஆவியை அரு
ளி, அவர்களுக்குச் சாட்சியிட்டு,—அவர்கள் ௯
இருதயங்களை விசுவாசத்தினாலே சுத்திகரித்து,
நமக்கும் அவர்களுக்கும் ஒரு பேதமுங்காட்ட
வில்லை.—ஆதலால் நம்முடைய பிதாக்களும் ௰
நாமுஞ் சகிப்பதற்கரிய நுகத்தைச் சீஷருடை
ய கழுத்திலிட்டு, நீங்கள் தேவனைப் பரீட்சை
பார்க்கிறதென்ன.—கர்த்தராகிய யேசுக் ௰௧
கிறிஸ்துவின் கிருபையினால் அவர்கள் இரட்
சிக்கப்படுகிற பிரகாரமாக, நாமும் இரட்சிக்கப்
படுவோமென்பதை நம்புகிறோமென்றான்.

---

(௰௭) அதி.௰௭.௨௭. ரோ.௧.௨௰. லேவி.௨௬.௪. உபா.௨௮.௰௨. யோபு.௫.௰௧. சங்.௱௪௭.௮. எரே.௰௪.௨௨. மத்.௫.௪௫. (௰௯) அதி.௰௩.௪௫. ௨.கொரி.௰௧.௨௫. ௨.தீமோ.௩.௰௧. (௨௧) மத்.௨௮.௰௯. (௨௨) மத்.௰.௩௮. லூக்.௨௨.௨௮, ௨௯. ரோ.௮.௰௭. ௨.தீமோ.௨.௰௧,௰௨. (௨௩) தீத்.௧.௫. (௨௭) அதி.௰௫.௪,௰௨. ௧.கொரி.௰௬.௯. ௨.கொரி.௨.௰௨. கொலோ.௪.௪. வெளி.௩.௮.—(௰௫. அதி. ௧.) கலா.௨.௰௨. யோவா.௭.௨௨. கலா.௫.௨. பிலி.௩.௨. கொலோ.௨. ௮,௰௧,௰௬. ஆதி.௰௭.௰. லேவி.௰௨.௩. (௨) கலா.௨.௧. (௩) ரோ.௰௫.௨௪. ௧.கொரி.௰௬.௬,௰௧. அதி.௰௪.௨௭. (௫) வச.௧. (௭) அதி.௰.௨௰. (௮) ௧.நாளா.௨௮.௯. அதி.௰.௪௪. (௯) ரோ.௰.௰௧. அதி.௰.௰௫,௨௮,௪௩. ௧.கொரி.௧.௧. ௧.பேதுரு.௧.௨௨. (௰) மத்.௨௩.௪. கலா.௫.௧. (௰௧) ரோ.௩.௨௪. எபே.௨.௮. தீத்.௨.௰௧.

௰௨ பின்பு அந்நியதேசத்தாருக்குள்ளே தேவன்
தங்களைக்கொண்டுசெய்வித்த ஆச்சரியமான கிரி
யைகளையும், அற்புதங்களையும் பர்னபாவும், ப
வுலுந் தெரிவிக்கையில், கூடிவந்தயாவரும் மவு
னமாய்ச் செவிகொடுத்தார்கள்.
௰௩ அவர்கள் பேசிமுடிந்தபின்பு, யாக்கோபு பே
சத்தொடங்கினன்: மனுஷரே, சகோதரரே, எ
௰௪ னக்குச்செவிகொடுப்பீர்களாக.—தேவன் தம
துநாமத்தினிமித்தம் அந்நியதேசத்தாரில் ஒருச
னக்கூட்டத்தை எடுத்துக்கொள்ளும்படி, முதல்
முதல் அவர்களைக் கடாட்சித்தவிதத்தை ஷிமி
௰௫ யோன் விவரித்துச்சொன்னனே.—அதற்குத்தீர்க்
கதரிசிகளின் வாக்கியங்கள் ஒத்திருக்கின்றன.—
௰௬ "மீந்திருக்குஞ் சனங்களும், என் நாமந்தரிக்கப்
பெற்ற சகலசாதியாருந் தேவனைத்தேடும்பொ
௰௭ ருட்டு,—நான் இதற்குப்பின்பு திரும்பிவந்து, வி
ழுந்ததாகிய தாவீதின் கூடாரத்தைமறுபடியும் ஸ்
தாபிப்பேன்: அதில் பிறலானவைகளைச்சீர்ப்படு
த்தி,அதைநிறுத்துவேனென்று இவைகளைச்செய்
யுந் தேவன் சொல்லுகிறார்,"என்று எழுதியிருக்
௰௮ கிறது.—அநாதிகாலமுதலாய், தமது கிரியைகளை
௰௯ யெல்லாந் தேவன் அறிந்திருக்கிறார்.—ஆகை
யால்அந்நியதேசத்தாரில் தேவனிடத்திற்குத்
திரும்பியிருக்கிறவர்கள்மேற் பாரம் ஏற்றாமல்,—
௨௰ விக்கிரகங்களின் அசுத்தங்களுக்கும், வேசை
மார்க்கத்திற்கும், நெருக்குண்டுசெத்தவைகளுக்
கும்,இரத்தத்திற்கும் விலகும்படியே அவர்களுக்
கு எழுதவேண்டுமென்பது என்னுடைய தீர்மா
௨௧ னம்.—பூருவகாலந்தொடங்கி, மோசேயின் கட்
டளைகளைப்பிரசித்தப்படுத்துகிறவர்கள் ஒவ்வொ
ரு பட்டணத்திலுமுண்டு,ஓய்வுநாட்கள்தோறும்
அவைகள்ஆலயங்களில்வாசிக்கப்பட்டுவருகின்
௨௨ றன என்றான்.—பின்பு அப்போஸ்தலரும், மூதி
யோரும், சமஸ்தசபையாரும், சகோதரருக்குள்
ளே கனம்பொருந்திய பர்சபாவென்னப்பட்ட
யூதாவையும், சீலாவையுந் தங்களில் தெரிந்து
கொண்டு, இவர்களைப்பவுலுடனும், பர்னபாவு
டனும், அந்தியோகியவுக்கு அனுப்புவது நல
மென்று கருதிக்கொண்டு, அவர்கள்வழியாய்—
௨௩ ஒரு பத்திரத்திலே, அந்தியோகியவிலும், ஸீரி
யவிலும், கிலீக்கியாவிலுமிருக்கிற அந்நியதே
சத்தாராகிய சகோதரருக்கு, அப்போஸ்தலரும்,
மூதியோரும், சகோதரருமாகிய நாங்கள் வாழ்
௨௪ த்துதல் சொல்லுகிறோம்.—நாங்கள் கட்டளை
பண்ணாதிருக்கவும், சிலர் எங்களிடத்திலிருந்து
புறப்பட்டு, நீங்கள் விருத்தசேதனம்பெற்று,
மோசேயின் நியாயப்பிரமாணத்தைக் கைக்
கொள்வது கடமையென்றுசொல்லி, இப்படிப்
பட்டபோதனையினால் உங்களைக்கலக்கி,உங்கள்
மனதைச் சஞ்சலப்படுத்தினர்களென்று நாங்கள்
கேள்விப்பட்டோம்.—அதினிமித்தம் நாங்கள் ௨௫
ஒருமனப்பட்டுக்கூடிவந்து, தெரிந்துகொண்ட
சிலமனுஷரை நம்முடைய கர்த்தராகியயே
சுக்கிறிஸ்துவின் நாமத்திற்காகத்தங்கள் பிரா
ணனையும் ஒப்பிக்க ஆயத்தமாயிருந்தவர்களும்,—
எங்களுக்கு அன்பானவர்களுமாகிய பர்னபா ௨௬
வோடும், பவுலோடும் உங்களிடத்திற்கு அனுப்
புவது நலமென்றுகருதி,—யூதாவையுஞ் சீலாவை ௨௭
யும் அனுப்புகிறோம், அவர்களும் இவைகளைவா
ய்மொழியினால் உங்களுக்குத் தெரிவிப்பார்
கள்.—விக்கிரகங்களுக்கு நிவேதிக்கப்பட்டவை ௨௮
களுக்கும், இரத்தத்திற்கும், நெருக்குண்டுசெத்
தவைகளுக்கும், வேசைமார்க்கத்திற்கும் நீங்கள்
விலகவேண்டும்.—அதுவேயன்றி, வேறொருபா ௨௯
ரத்தையும் உங்கள்மேல் ஏற்றாமல்விடுவது நல
மென்று பரிசுத்தஆவிக்கும் எங்களுக்குந் தோன்
றிற்று. இவைகளுக்குவிலகி, நீங்கள் உங்களைக்
காத்துக்கொண்டால் நல்லது. சுகத்தோடே இ
ருப்பீர்களாகவென்று எழுதி அனுப்பினார்கள்.—
அவர்கள் அனுப்பிவிடப்பட்டபின்பு அந்தியோ ௩௰
கியவுக்குப்போய், சபையைக்கூடிவரச்செய்து,
அந்தப்பத்திரத்தைக்கொடுத்தார்கள்.—அதை அ ௩௧
வர்கள்வாசித்து, அதின் ஆறுதலானவாக்கைக்கு
றித்து,சந்தோஷப்பட்டார்கள்.—யூதாவும் சீலாவு ௩௨
ம்,தாங்களுந்தீர்க்கதரிசிகளானபடியினால்,சகோ
தரரை அநேகவாக்குகளினாற்போதித்து அவர்க
ளைஸ்திரப்படுத்தி,—சிலகாலம் அங்கேயிருந்து,பி ௩௩
ன்பு சமாதானத்துடன் அப்போஸ்தலரிடத்திற்
போகும்படிசகோதரரால்விடைபெற்றார்கள்.—சீ ௩௪
லாவோ பின்னும் அங்கே தங்கப்பிரியங்கொண்
டான்.—பவுலும்பர்னபாவும்வேறு அநேகரோடே ௩௫
உபதேசஞ்செய்து,கர்த்தருடையவாக்கைப்பிர
சங்கித்து, அந்தியோகியவிலே தங்கினார்கள்.
சிலநாளுக்குப் பின்பு, பவுல் பர்னபாவை ௩௬
நோக்கி, கர்த்தருடைய வாக்கை நாம்அறிவி
த்திருந்த சகலநகரங்களிலுமுள்ளசகோதரர் எப்
படியிருக்கிறார்களென்று பார்க்கும்படி, திரும்
பிப்பிரயாணமாகப்போவோம் வாவென்றான்.—
பர்னபா, மாற்கென்று பெயர்கொண்ட யோவா ௩௭
னைத்தங்களுடன்கூட்டிக்கொண்டுபோக அபிப்
பிராயங்கொண்டான்.—பவுலோ, அவன் பம்பி ௩௮
லியாவிலே தங்களுடனேகூடக் கிரியைக்கு வ
ராமல், தங்களைவிட்டுப் பிரிந்துபோனபடியால்
தங்களுடன்கூட்டிக்கொண்டுபோகத்தகாதென்
றான்.—இப்படி அவர்களுக்குள்ளே விவாதமு ௩௯
ண்டதினால், அவர்கள் ஒருவரை ஒருவர்விட்டுப்
பிரிந்தார்கள்: பர்னபா மாற்குவைக் கூட்டிக்
கொண்டு கப்பலேறிக் குப்புரு தீவுக்குப்போ

(௰௨) அதி.௰௪.௨௭. (௰௩) அதி.௰௨.௰௭. வச.௭. (௰௭) ஆமோ.௯.௰௧,௰௨. (௰௯) ௧.தெச.௧.௯. (௨௰) ஆதி.௩௫.௨ யாத்.௨௰.௩,௨௩. எசேக்.௨௰.௩௰. ௧.கொரி,௮.௧. வெளி.௨.௰௪,௨௰. ௧.கொரி.௬.௯,௰௮. கலா.௫.௰௯. எபே.௫.௩ கொலோ.௩.௫. ௧.தெச.௪.௩. ௧.பேதுரு.௪.௩. ஆதி.௯.௪. லேவி.௩.௰௭. உபா.௰௨.௰௬,௨௩. (௨௪) வச.௧. கலா. ௨.௩. தீத்.௧.௰,௰௧. (௨௫) அதி.௰௩.௫௰. ௧.கொரி.௰௫.௩௰. ௨.கொரி.௰௧.௨௩,௨௬. (௨௮) அதி.௨௧.௨௫. வெளி.௨ ௰௪,௨௰. லேவி.௰௭.௰௪. (௩௩) ௧.கொரி.௰௬.௰௧. எபி.௰௧.௩௧.(௩௫)அதி.௰௩.௧. (௩௬) அதி.௰௪.௧,௬,௨௪,௨௫.(௩௭) அதி.௰௨.௰௨,௨௫. கொலோ.௪.௰. ௨.தீமோ.௪.௰௧. பிலே.௨௪. (௩௮) அதி.௰௩.௰௩.

௪௰ னான்.—பவுல்சீலாவைத்தெரிந்துகொண்டு, சகோ
தரராலே தேவனுடைய கிருபைக்குஒப்பிக்கப்
௪௧ பட்டுப் புறப்பட்டு,—சீரியாவிலும், கிலீக்கியா
விலும்போய்ச்சபைகளை ஸ்திரப்படுத்தினான்.

## ௰௬. அதிகாரம்.

௧. தீமோத்தேயுக்கு விருத்தசேதனஞ்செய்தல்: ௬. பவுல் பிலிப்பாநகரத்திற் செல்லல்: ௰௧. லீதியாள் மனந்திரும்பி ஞானஸ்நானம்பெறல்: ௰௬. பவுல் பேய்பிடித்த வாலிபஸ்திரியைச் சொஸ்தப்படுத்தினதினிமித்தம் எசமானர் குரோதங்கொள்ளல்: ௨௫. அதினிமித்தம் பவுலுஞ் சீலாவுஞ் சிறைச்சாலையில் வைக்கப்படல்: சிறைச்சாலைத்தலைவன் மனந்திரும்பி ஞானஸ்நானம் பெறல்: ௩௫. பவுலுஞ் சீலாவுஞ் சிறைச்சாலையினின்று விடுதலையாதல்.

அதன்பின்பு அவன், தெர்பிக்கும், இலுஸ்திரா
வுக்கும் போனான்: அங்கே தீமோத்தேயுவென்
னப்பட்ட சீஷன் ஒருவன் இருந்தான், அவனு
டையமாதா விசுவாசமுடைய ஒருயூதஸ்திரி: அ
௨ வன் பிதா கிரேக்கன்.—அவன் இலுஸ்திராவி
லும் இக்கோனியவிலுமுள்ள சகோதரரால் நற்
௩ சாட்சிபெற்றவன்.—அவனைப் பவுல் தன்னுட
னே கூட்டிக்கொண்டுபோக விரும்பி, அவனு
டைய பிதா கிரேக்கனென்று அவ்விடங்களி
லுள்ள யூதரெல்லாருமறிந்திருந்தபடியால், அவ
௪ னுக்கு விருத்தசேதனம்பண்ணினான்.-அவர்கள்
பட்டணங்கள்தோறும் போகையில், யெருஷ
லேமிலுள்ள அப்போஸ்தலராலும், முதியோரா
லும் நிருபிக்கப்பட்ட கட்டளைப்பத்திரத்தைச்ச
னங்கள் காத்துக்கொள்ளும்படி, அவர்களுக்கு
௫ ஒப்பித்தார்கள்.-இவ்விதமாய்ச் சபைகள் விசுவா
சத்திலேஸ்திரப்பட்டன, நாளுககு நாள் அவை
௬ களின் தொகைபெருகிற்று.—அவர்கள் பிரிகிய
விலும், கலாத்தியதிசையிலும் போனபொழுது,
ஆசியாதேசத்தில் அவர்கள்வாக்கைப் பிரசங்கம்
பண்ணாதபடி, பரிசுத்த ஆவியினாலே விலக்கப்
௭ பட்டார்கள்.—மூசியாவைச்சேர்ந்து பிதுனிய
வுக்குப்போக ஆயத்தமாயிருந்தபொழுது, ஆவி
௮ யானவர் தடைபண்ணினார்.—அதினால் அவர்
கள் மூசியாவைவிட்டுத் துரோவசிற்சேர்ந்தார்
௯ கள்.—மக்கேதோனியா தேசத்தான் ஒருவன்வந்
துநின்று,மக்கேதோனியாவுக்கு நீர் வந்து, எங்க
ளுக்கு உதவிசெய்யுமென்று தன்னை வேண்டிக்
கொண்டதாக ஒரு தரிசனம் இராக்காலத்திலே
௰ பவுல் கண்டான்.—அந்தத்தரிசனையை அவன்
கண்டதினால் அவர்களுக்குச் சுவிசேஷத்தைப்
பிரசங்கிக்கும்படி, கர்த்தர் எங்களை அழைத்தா
ரென்று நாங்கள் நிச்சயித்துணர்ந்து,உடனே மக்
கேதோனியாவுக்குப் புறப்பட்டுப்போக ஆயத்
தப்படுத்தினோம்.—ஆகையால் பாய்வலித்து, து ௰௧
ரோவசைவிட்டு நேராய்ச் சமோத்திராக்கேதீவுக்
கும், மறுநாளில் நேயாபொலிக்கும் ஓடினோம்.—
அங்கேயிருந்து மக்கேதோனியாவின் பிரதான ௰௨
நகரமும், உரோமர் குடியேறின தேசமுமாகிய
பிலிப்பிப் பட்டணத்திற்குச்சென்று, சிலநாள்
அவ்விடத்தில் தங்கினோம்.—ஓய்வுநாளிற் பட்ட ௰௩
ணத்தைவிட்டு, நதி ஓரத்தில் வழக்கமாய்ப் பி
ரார்த்தனைபண்ணுவதற்கான ஒரு இடத்திற்குப்
போய் உட்கார்ந்து, அங்கே கூடிவந்திருந்த ஸ்தி
ரிகளுடன் பேசிக்கொண்டோம்.
அப்பொழுது துயத்தீரா நகரத்தாளும், இரத் ௰௪
தாம்பரம்விற்கிறவளும், இலீதியாளென்னும்பெ
யர்கொண்டவளுமாகிய ஒரு தேவபத்தியுள்ள
ஸ்திரி, கர்த்தர் அவளுடைய இருதயத்தைத் தி
றந்தருளினதினால்,பவுல்சொல்லியவாக்குகளைக்
கேட்டுச்சிந்தித்துக்கொண்டாள்.—அவளும் அ ௰௫
வள் குடும்பத்தாரும் ஞானஸ்நானம்பெற்றபின்
பு, என்னைக் கர்த்தரிடத்தில் விசுவாசமு
டையவளென்று எண்ணினால், என்வீட்டில்வந்
து தங்கியிருங்களென்று எங்களை வருந்திவேண்
டி, இருத்தினாள்.
நாங்கள் பிரார்த்தனைபண்ணுவதற்கான ஸ்தா ௰௬
னத்திற்குப்போகையில், பீத்தோன் என்னும் ஆ
வியைக்கொண்டிருந்து, குறிசொல்வதினால்தன்
எசமானருக்கு மிகுந்த ஆதாயமுண்டாக்கும் ஒ
ரு சிறுபெண், எங்களுக்கு எதிர்ப்பட்டாள்.—
அவள் பவுலுக்கும், எங்களுக்கும் பின்சென்று, ௰௭
குரலிட்டு, இந்தமனுஷர் சருவத்திற்குமேலான
தேவனுடையதாசர், இரட்சிப்பின் வழியை
எங்களுக்குத் தெரிவிக்கிறார்களென்றாள்.—இப் ௰௮
படி அநேகநாட் செய்துவந்தாள். அதினால் ப
வுல் விசனமடைந்து, திரும்பிப்பார்த்து, அந்த
ஆவியுடனே, நீ இவளைவிட்டுப் புறப்படும்படி
யேசுக்கிறிஸ்துவின் நாமத்தினால்உனக்குக்
கட்டளையிடுகிறேனென்றுசொல்ல, அந்நேரமே
அது புறப்பட்டுப்போயிற்று.
அவளுடைய எசமானர் தங்கள் ஆதாயத்தின் ௰௯
நம்பிக்கை அற்றுப்போயிற்றென்றுகண்டு, பவு
லையும், சீலாவையும் பிடித்து, சந்தை வெளியி
லுள்ள அதிபதிகளிடத்தில் இழுத்துக்கொண்
டுபோய்,—நியாயாதிபதிகளுக்கு முன்னிறுத்தி, ௨௰
யூதராகிய இந்தமனுஷர்,—உரோமராகிய நம் ௨௧
மால் ஏற்றுக்கொள்ளவும், செய்யவுந் தகாதமு
றைமைகளைப்போதித்து, நம்முடையநகரத்தில்
மிகுந்த கலகமுண்டாக்குகிறார்களென்றார்கள்.-
அப்பொழுது சனங்கள் அவர்களுக்கு விரோத ௨௨
மாய்க்கூடி எழும்பினார்கள்; நியாயாதிபதிகள்
அவர்களுடைய வஸ்திரங்களைக் கிழித்துப்போ

(௪௰) அதி.௰௪.௨௬. (௪௧) அதி.௰௬.௫.—(௰௬.அதி.௧.) அதி.௰௪.௬. அதி.௰௧.௨௨. ரோ.௰௬.௨௧. ௧.கொரி.௪.௰௭. பிலி.௨.௰௯. ௧.தெச.௩.௨. ௧.தீமோ.௧.௨. ௨.தீமோ.௧.௨,௫. (௨) அதி.௬.௩. (௩) ௧.கொரி.௯.௨௰. கலா.௨.௩. (௪) அதி.௰௫.௨௮,௨௯. (௫) அதி.௰௫.௪௧. (௮) ௨.கொரி.௨.௰௨. ௨.தீமோ.௪.௰௩. (௯) அதி.௰.௩௰. (௰) ௨.கொரி.௨.௰௩. (௰௨) பிலி.௧.௧.(௰௪)லூக்.௨௪.௪௫.(௰௫)ஆதி.௰௯.௩. நியா.௰௯.௨௧. லூக்.௨௪.௨௯. எபி.௰௩.௨.(௰௬)௧.சாமு.௨௮.௭. அதி.௰௯.௨௪. (௰௮) மாற்.௰௬.௰௭. (௰௯) அதி.௰௯.௨௫,௨௬. ௨.கொரி.௬.௫. மத்.௰.௰௮.(௨௧)௧.இரா.௰௮.௰௭. (௨௨) ௨.கொரி.௬.௫. ௧.தெச.௨.௨.

டவும்,அவர்களை அடிக்கவுங் கட்டளையிட்டார்
௨௩ கள்.—இவர்கள்மிகுதியாய் அவர்களை அடிப்பித்
து,பின்பு சிறைச்சாலையிலிடுவித்து, அவர்களைப்
பத்திரமாய்க்காக்கும்படி சிறைச்சாலைக்காரனுக்
௨௪ குக் கட்டளையிட்டார்கள்.—அவன் இப்படிப்
பட்ட கட்டளையைப்பெற்று, அவர்களை உட்கா
வல்அறையிலிட்டு, அவர்கள் கால்களைத் தொழு
விலே மாட்டிவைத்தான்.
௨௫ அத்தராத்திரியிலே பவுலுஞ் சீலாவும்பிரார்த்
தனைபண்ணி, தேவனைத் துதித்துப்பாடினார்
கள்: காவலில் வைக்கப்பட்டவர்கள் அதைக்
௨௬ கேட்டுக்கொண்டிருந்தார்கள்.-சடிதியிற்சிறைச்
சாலையின் அத்திபாரங்கள் அசையத்தக்கதாக,
பூமி மிகவும் அதிர்ந்தது: உடனே கதவுகளெல்
லாந் திறக்கப்பட்டன, எல்லாருடைய பந்
௨௭ தங்களும் நீங்கின.—சிறைச்சாலைக்காரன் நித்தி
ரைதெளிந்து, சிறைச்சாலையின் கதவுகள்திறந்
திருக்கிறதைக்கண்டு, காவலில் வைக்கப்பட்ட
வர்கள் ஓடிப்போனார்களென்று நினைந்து, தன்
கட்கத்தை உருவி, தன்னைக் கொலைசெய்யப்
௨௮ பார்த்தான்.-பவுல் மகாசத்தமிட்டு, நீ உனக்குக்
கேடொன்றுஞ்செய்யாதிரு: நாங்களெல்லாரும்
௨௯ இங்கே இருக்கிறோமென்றுசொல்ல,-அவன் வி
ளக்கைக்கொண்டுவரச்சொல்லி, நடுநடுங்கி,உள்
ளே பாய்ந்து,பவுலுவுக்குஞ்சீலாவுக்கும் முன்பா
௩௰ கவிழுந்தான்.—பின்பு அவன் அவர்களை வெ
ளியே அழைத்து, ஐயர்மாரே, இரட்சிக்கப்ப
டும்படி நான் என்ன செய்யவேண்டுமென்று
௩௧ கேட்க,—அவர்கள், கர்த்தராகிய யேசுக்
கிறிஸ்துவில் விசுவாசித்துக்கொள், அப்பொ
ழுது நீயும், உன் குடும்பத்தாரும் இரட்சிக்கப்
௩௨ படுவீர்களென்றார்கள்.—மேலும் அவர்கள் அ
வனுக்கும், அவன் வீட்டிலுள்ள யாவருக்குங்
கர்த்தருடைய வாக்கைப்போதித்தார்கள்.—
௩௩ அந்த இராத்திரியில், அந்நேரத்திலே அவன் அ
வர்களைச் சேர்த்துக்கொண்டு, அவர்களுக்கு
அடிபட்டகாயங்களைக் கழுவினான்; உடனே
அவனும், அவனைச்சேர்ந்த யாவரும் ஞானஸ்நா
௩௪ னம்பெற்றார்கள்.—பின்பு அவன் அவர்களைத்
தன்வீட்டுக்கு அழைத்துப்போய், அவர்களுக்கு
முன் போசனம் வைப்பித்து, அவனும், அவன்
வீட்டார் யாவருந் தேவனில் விசுவாசம்வைத்
௩௫ ததினால், சந்தோஷப்பட்டான்.—உதயமானபொ
ழுது,அதிபதிகள், அந்தமனுஷரை விட்டுவிடுங்
களென்றுசொல்லச்சேவகரை அனுப்பினார்கள்.-
௩௬ சிறைச்சாலைக்காரன் பவுலுடனே, உங்களைவிடு
தலையாக்கும்படி அதிபதிகள் கட்டளை அனுப்பி
னார்கள்: ஆதலால் நீங்கள் இப்பொழுது புறப்
பட்டுச் சமாதானத்தோடே போவீர்களாகஎன்
௩௭ றான்.—அதற்குப் பவுல், உரோமராகிய எங்களை
அவர்கள் நியாயம் விசாரியாமல், வெளியரங்க
மாய் அடிப்பித்து, சிறைச்சாலையிற் போடுவித்
தார்களே; இப்பொழுது இரகசியமாய் எங்களை
விடுதலையாக்குகிறார்களா, அப்படியல்ல; அவர்
களே வந்து, எங்களை வெளியே அழைத்து, அ
னுப்பிவிடக்கடவர்களென்றான்.—சேவகர் இ ௩௮
வ்வாக்குகளை நியாயாதிபதிகளுக்குத் தெரிவித்
தார்கள்: உரோமராயிருக்கிறார்களென்று அவர்
கள்கேட்டபொழுது பயமடைந்து, வந்து அவர்
களைவேண்டிக்கொண்டு,—பின்பு அவர்களை ௩௯
வெளியே அழைத்துப்போய், பட்டணத்தை
விட்டுப்போகும்படி கேட்டுக்கொண்டார்கள்.—
அந்தப்படி அவர்கள் சிறைச்சாலையினின்று வெ ௪௰
ளிப்பட்டு,இலீதியாளிடத்திற்குப்போய், சகோ
தரரைக்கண்டு, அவர்களுக்கு ஆறுதல்சொல்லிப்
புறப்பட்டுப்போனார்கள்.

## ௰௭. அதிகாரம்.

௧. பவுல் தெசலோனிக்காவில் வாக்கியத்தைப் பிரசித்தப்படுத்தல்: சிலர் விசுவாசித்தல், மற்றவர்கள் விரோதித்தல்: ௰. பவுலுஞ் சீலாவும் பெரோயா நகரத்தில், கிறிஸ்துவின் வாக்கைப் பிரசங்கித்துத் துயரப்படுத்தப்படல்:௰௬.பவுல் அத்தேனே நகரத்திற்குப்போய்ச் சனங்களுக்கு யுத்திநியாயங்கள் காட்டிப்பேசல்: ௨௨. சிலர் விசுவாசித்தல்.

அவர்கள் அம்பிப்போலியையும், அப்பொல் ௧
லோனியவையுங் கடந்து, தெசலோனிக்காவை
ச்சேர்ந்தார்கள், அங்கே யூதருடைய ஆலயமொன்
றிருந்தது.-பவுல்,தன்வழக்கத்தின்படி அவர்களி ௨
டத்திற்போய்,மூன்று ஓய்வுநாட்களில்வேதவாக்
கியங்களின் நியாயங்களை எடுத்து அவர்களுட
னேபேசி,-கிறிஸ்து மரணவேதனை அனுபவிக்க ௩
வும்,மரித்தோரினின்றுஉயிர்த்தெழுந்திருக்கவும்
வேண்டியதென்றும், நான் பிரசங்கமாய் உங்க
ளுக்குப்பிரசித்தப்படுத்துகிற யேசு தாமேகிறி
ஸ்துவென்றுந் திருஷ்டாந்தப்படுத்தினான்.—அ ௪
வர்களிற்சிலர் விசுவாசித்து,பவுலையுஞ்சீலாவை
யுஞ் சேர்ந்துகொண்டார்கள்; தேவபத்தியுள்ள
கிரேக்கரில் அநேகரும், கனம்பொருந்திய ஸ்
திரிகளில் அநேகரும் அப்படியேசெய்தார்கள்.
விசுவாசியாத யூதர் வைராக்கியங்கொண்டு,ச ௫
ந்தைவெளியிலேதிரிந்தலைகிற சிலநீசரைச்சேர்த்
துக்கொண்டு, கூட்டங்கூடி, பட்டணத்தைக்க
லகப்படுத்தி, யாசோனுடைய வீட்டை வளைந்
து, அவர்களைச் சனங்களிடத்தில் வெளியே
கொண்டுவரும்படி வகைதேடினார்கள்.—அவர் ௬
களைக்காணாமல், அவர்கள் யாசோனையும், சில
சகோதரரையும் பட்டணத்தின் அதிபதிகளுக்
குமுன் இழுத்துக்கொண்டுபோய், மகாசத்தமிட்
டு,உலகப்புரட்டர்களாகிய இவர்கள் இங்கேயும்
வந்திருக்கிறார்கள்.—யாசோன் இவர்களை ஏற்றுக் ௭
கொண்டான்: யேசுவென்னும் வேறொருவ
னை இராசாவென்று சொல்லி, இராசாவின் கட்
டளைகளுக்கு விரோதமாகச் செய்கிறார்களென்

(௨௬) அதி.௪.௩௧. (௩௰) லூக்.௩.௰. அதி.௨.௩௭. (௩௧) யோவா.௩.௰௬,௩௬. யோவா.௬.௪௭. ௧.யோவா.௫.௰. (௩௩) லூக்.௫.௨௯. (௩௭) அதி.௨௨.௨௫. (௩௯) மத்.௮.௩௪. (௪௰) வச.௰௪.—(௰௭. அதி. ௨.) லூக்.௪.௰௬. (௩) லூக்.௨௪. ௨௬,௪௬. கலா.௩.௧.(௪)அதி.௨௮.௨௪. (௫) ரோ.௰௬.௨௧.(௬)அதி.௰௬.௨௧.(௭)யோவா.௰௯.௰௨. ௧.பேது௫.௨,௰௩

௮ றுசொல்லி,—இவைகளைக்கேட்ட சனங்களையும்
பட்டணத்தின் அதிபதிகளையுங் கலங்கச்செய்
௯ தார்கள்.—பின்பு அவர்கள் யாசோனிடத்திலும்,
மற்றவர்களிடத்திலும் பிணைவாங்கிக்கொண்டு,
அவர்களை விட்டுவிட்டார்கள்.
௰ உடனே சகோதரர் இராத்திரிகாலத்திலே ப
வுலையும், சீலாவையும் பெரோயாவுக்கு அனுப்
பிவிட, அவர்கள் அங்கேசேர்ந்து, யூதருடைய
௰௧ ஆலயத்திற்குப்போனார்கள்.-இந்தச்சனங்கள் தெ
சலோனிக்காவிலுள்ள சனங்களிலும் மேன்மை
யுள்ளவர்கள், இவர்கள் மனோவாஞ்சையுடனே
வாக்கை ஏற்றுக்கொண்டு, காரியங்கள் மெய்யோ
அல்லவோவென்பதை அறியும்படி, நாடோறும்
௰௨ வேதாகமங்களை ஆராய்ந்து பார்த்தார்கள்.—ஆத
லால் அவர்களில் அநேகரும், கனம்பொருந்திய
அநேக கிரேக்கஸ்திரிகளும், புருஷரும் விசுவா
௰௩ சிகளானார்கள்.—பெரோயாவிலுந் தேவவாக்குப்
பவுலினால் அறிவிக்கப்படுகின்றதென்று தெச
லோனிக்கேயரான யூதர் அறிந்தபொழுது, அங்
கேவந்து, சனங்களைக் கலகப்படுத்தினார்கள்.—
௰௪ உடனே சகோதரர்கள் பவுலைச் சமுத்திரத்திற்கு
நேரேபோக அனுப்பினார்கள்: சீலாவுந் தீமோத்
௰௫ தேயும் பின்னும் அங்கே தங்கினார்கள்.—பவுலை
வழி நடத்தினவர்கள் அவனை அத்தேனேநகரத்
திற்கு அழைத்துப்போனார்கள்: அங்கே சீலாவும்,
தீமோத்தேயும்விரைவாய்த்தன்னிடத்தில்வரவே
ண்டுமென்று அவர்களுக்குச்சொல்லும்படி, அவ
னாற்கற்பிக்கப்பட்டுப் புறப்பட்டுப்போனார்கள்.
௰௬ பவுல் அத்தேனேநகரத்தில் அவர்கள்வரக்காத்
திருந்தபொழுது, அந்தநகரம் விக்கிரகங்களால்
நிறைந்திருப்பதைக்கண்டு, அவனுள்ளத்தில் மி
௰௭ கவும் வைராக்கியங் கொண்டிருந்தான்.—ஆத
லால், அவன் ஆலயத்திலே யூதர்களோடும், மற்
றத் தேவபத்தியுள்ளவர்களோடும், சந்தைவெளி
யிலே தனக்கெதிர்ப்பட்டவர்களோடுந் தின
௰௮ முஞ் சம்பாஷித்துவந்தான்.—எப்பிக்கூரரும்,
ஸ்தோயிக்கருமான மதத்தாரிற் சிலர் அவனுட
னே வாக்குவாதம்பண்ணினார்கள். சிலர், இந்த
வாயாடி என்னசொல்லுகிறானென்று கேட்டார்
கள், வேறுசிலர், அவன் யேசுவையும், மரித்
தோரின் உயிர்த்தெழுதலையும் அவர்களுக்குப்
பிரசங்கித்தபடியினால், இவன் அந்நியதேவர்க
௰௯ ளைப் பிரசித்தப்படுத்துகிறவனென்றார்கள்.—ஆ
தலால் அவர்கள் அவனை அரெயோபகுஸ் என்
னும் நியாயஸ்தலத்திற்கு அழைத்துப்போய், நீ
சொல்லுகிற நூதனமான போதனையை நாங்க
௨௰ ளும் அறியலாமா.—நவமானகாரியங்களையே எங்
கள் செவிக்கேறப்பண்ணுகிறாய்: இவைகளின்
கருத்தின்னதென்றறிய விரும்புகிறோமென்றார்
௨௧ கள்.—அந்த அத்தேனேநகரத்தார்யாவரும், அங்
கே தங்கும் அந்நியதேசத்தாரும் அதிக நூதன
மானவைகளைத் தெரிவிப்பதிலும், கேட்பதிலு
மேயன்றி, வேறொன்றிலுந் தங்கள் காலத்தைப்
போக்கவிரும்பார்கள்.
பவுல் மாருஸ் மேடையின் மத்தியில் நின் ௨௨
று, அத்தேனரே, நீங்கள் தேவபூசையில் மிக
வுங் கருத்துள்ளவர்களாயிருக்கிறீர்களென்பது எ
னக்குப்பிரத்தியட்சமாய்த் தோன்றுகின்றது.—
நான் உலாவி, நீங்கள் பூசிக்கும்பொருள்களைப் ௨௩
பார்த்தபொழுது, "அறியப்படாத தேவனுக்
கு," என்றெழுதப்பட்டிருந்த ஒருவேதிகையைக்
கண்டேன். நீங்கள் அறியாமற் பூசிக்கும் அவ
ரையே நான் உங்களுக்கு அறிவிக்கிறேன்.—உ ௨௪
லகத்தையும், அதிலுள்ள யாவையுஞ் சிருஷ்டித்த
தேவன், வானத்திற்கும் பூமிக்கும் அதிபதியா
தலால், அவர், கையாற் செய்யப்பட்ட ஆலயங்க
ளில் வாசஞ்செய்கிறதில்லை;—யாதாயினும் ஒரு ௨௫
பொருள் தமக்குவேண்டுவதாக மனுஷருடைய
கையினாற் பணிவிடைகொள்ளுகிறதுமில்லை,—
அவர் சீவனையும், சுவாசத்தையும், மற்றயாவை ௨௬
யுஞ் சமஸ்தருக்குங்கொடுத்திருக்கிறாரே, பூமண்
டலத்திலெங்கும் வாசமாயிருக்கும்படி, ஒரே இ
ரத்தத்தினின்று மனுஷசாதியார் யாவரையுஞ் சி
ருஷ்டித்து, நம்மில் ஒருவருக்குந் தூரமல்லாத
தேவனாகிய தம்மை அவர்கள் தடவியடை
யத்தக்கதாக,—தம்மைத் தேடும்படி அவர்களுக் ௨௭
காக முன் தீர்மானிக்கப்பட்ட காலங்களையும்,
வாசஸ்தான எல்லைகளையும் நிரூபணம்பண்ணி
னார்.—அவர்மூலமாக நாம்சீவிக்கிறோம், இயங் ௨௮
குகிறோம், இருக்கிறோம்; இப்படியே உங்கள்
புலவர்களிலுஞ் சிலர் நாம் அவருடைய வமி
சத்தாராயிருக்கிறோமென்று சொல்லியிருக்கிறார்
கள்.—நாம் தேவனுடைய வமிசத்தாராயிருக் ௨௯
கிறபடியால், மனுஷருடைய யுத்தியினாற் சித்
திரவேலையாய்த்தொழிற்படுத்திய பொன், வெள்
ளி, கல் இவைகளுக்கொப்பாய்த்தெய்வம் இருக்
கின்றதென்று நாம் நினைக்கலாகாது.—அறியா ௩௰
மையுடைய காலங்களைத் தேவன் விசாரியாதி
ருந்தாலும், இப்பொழுது எங்குமுள்ளஎல்லா ம
னுஷரும் மனந்திரும்பவேண்டுமென்று கட்ட
ளையிடுகிறார்.—அன்றியும், தாம் ஏற்படுத்திய புரு ௩௧
ஷன் ஒருவரைக்கொண்டு, பூலோகத்தார்யாவ
ரையும் நியாயம் விசாரிப்பதற்கு ஒருநாளைக்கு
றித்தார்; மரித்தோரினின்று அவரை அவர் உ
யிர்த்தெழுப்பினதினால், அதின் நிச்சயத்தை எல்
லாருக்கும் விளங்கப்பண்ணினாரென்றான்.
மரித்தோரின் உயிர்த்தெழுதலைக்குறித்துஅவர் ௩௨
கள் கேட்டமாத்திரத்தில், சிலர் இகழ்ந்தார்கள்:
சிலர் மற்றொருவேளை உன்னிடத்தில் இதைக்
கேட்போமென்றார்கள்.—பின்பு பவுல் அவர்க ௩௩
ளைவிட்டுப்புறப்பட்டுப்போனான்.-சிலர் அவன் ௩௪
பட்சத்திற்சேர்ந்து, விசுவாசிகளானார்கள்; அவர்

(௰௧)ஏசா.௩௪.௰௬. லூக்.௰௬.௨௯. யோவா.௫.௩௯.(௰௪)மத்.௰.௨௩. (௰௫) அதி.௰௮.௫.(௰௬)௨.பேதுரு.௨.௮. (௨௩)
௨.தெச.௨.௪.(௨௪)அதி.௰௪.௰௫.மத்.௰௧.௨௫.(௨௫)சங்.௫௰.௮.ஆதி.௨.௭.எண்.௰௬.௨௨.யோபு.௰௨.௰.ஏசா.௪௨.௭.
௪௧.௰௨.௧. அதி.௰௪.௰௭.(௨௭)உபா.௩௨.௯.ரோ.௧.௨௰.(௨௮)கொலோ.௧.௰௭. எபி.௧.௩. தீத்.௪.௰௨.(௨௯)ஏசா.௪௰.
௰௮.(௩௰)அதி.௰௪.௰௬. ரோ.௩.௨௫. லூக்.௨௪.௪௭. தீத்.௨.௰௧,௰௨. ௧.பேதுரு.௧.௰௪.(௩௧)அதி.௰.௪௨. ரோ.௨.௰௬.

களில் அரெயோபகியனாகிய தியொனுசியும், தாமரியென்று பெயருள்ள ஒரு ஸ்திரியும், வேறு சிலரும் இவர்களுடனே இருந்தார்கள்.

## ௰அ. அதிகாரம்.

௧. பவுல் கொரிந்து நகரத்திற்குப் போய்த் தேவ வாக்கைப் பிரசித்தப்படுத்தல்: ௰௨. கல்லியோனிடத்திற் கொண்டுபோதல், அவனால் விடுதலைபெறல்: ௰அ. பலவிடங்களுக்குப்போய்ச் சீஷரைத் திடப்படுத்தல்: ௨௪. அப்பொல்லோவின் விருத்தாந்தம்.

இவைகள் நடந்தபின்பு, பவுல் அத்தேனேயை
௨ விட்டு, கொரிந்துக்குப்போனான்.—கிலௌதிய, யூதரெல்லாரும் உரோமையைவிட்டுப்போகும்படி கட்டளையிட்டபடியினால், இத்தாலியைவிட்டு, நவமாய்வந்திருந்தவனும், அக்கிலாவென்னும் நாமமுள்ளவனும், பொந்து தேசத்தானுமாகிய ஒரு யூதனையும், அவனுடைய மனைவியாகிய பிரிஸ்கில்லாளையும் அங்கே கண்டு அவர்களி
௩ டத்திற்போனான்.—அவர்கள் கூடாரஞ்செய்யுந் தொழிற்காரராயிருந்தார்கள், இவனும் அத்தொழிலாளியாதலால், அவர்களிடத்தில்தங்கிவேலை
௪ செய்துவந்தான்.—அன்றியும் இவன் ஓய்வுநாட்கள்தோறும் ஆலயத்திற் சம்பாஷணைபண்ணி, யூதரையும் அந்நியதேசத்தாரையும் உடன்படுத்தி
௫ னான்.—மக்கேதோனியாவிலிருந்து சீலாவும், தீமோத்தேயும் வந்தபொழுது, பவுல் தனதுள்ளத்தில் அதிகபத்திவைராக்கியங்கொண்டு, யேசுவே கிறிஸ்துவென்று யூதருக்குச் சாட்சியிட்
௬ டான்.—அவர்கள் மறுத்துப்பேசி, தூஷணித்தபொழுது, அவன் தன்வஸ்திரங்களை உதறி, உங்கள்இரத்தப்பழி உங்கள்தலைமேலிருக்கும்; நான் சுத்தமாயிருக்கிறேன்: இதுமுதல் நான் அந்நியதேசத்தாரிடத்திற் போகிறேனென்று அவர்களிடத்திற்சொல்லி,
எ அவ்விடத்தைவிட்டுத் தேவபத்தியுள்ளவனாகிய யுஸ்தின்வீட்டுக்குப்போனான், அந்தவீடு ஆல
அ யத்திற்குச்சமீபமாயிருந்தது.—ஆலயத்தின் அதிபதியாகிய கிரிஸ்பு தன்குடும்பத்தாரனைவரோடுங் கர்த்தரை விசுவாசித்தான்; கொரிந்தியரில் அநேகருங்கேட்டு விசுவாசித்து, ஞானஸ்நானம்
௯ பெற்றார்கள்.—இராத்திரிகாலத்தில், கர்த்தர் ஒருதரிசனத்தில் பவுலுடனே, நான் உன்னோடேயிருக்கிறேன், ஒருவரும் உன்னைத்தீண்டி, உனக்குத்தீமைசெய்யவிடேன்: இந்தநகரத்தில் எ
௰ னக்கு அநேகசனங்களிருக்கிறார்கள்,—ஆகையால் நீ பயப்படவேண்டாம், மவுனமாயிராதே, வாக்கைப் பிரசித்தப்படுத்துவாயாகவென்றார்.-
௰௧ அதினால் அவன் ஒருவருஷமும் ஆறுமாதமும் அங்கேதங்கி, அவர்களுக்குத்தேவனுடைய வாக்கை உபதேசித்தான்.

கல்லியோனென்பவன், அகாயநாட்டிற் பிர ௰௨
திநிதியானபொழுது, யூதர் ஒருமனப்பட்டு, பவுலுக்குவிரோதமாய் எழும்பி, அவனை நியாயஸ்
தலத்திற்குக்கொண்டுபோய்,—வேதநூலுக்கு வி ௰௩
ரோதமாகத் தேவனைச்சேவிக்கும்படி, இவன் மனுஷருக்குப் போதிக்கிறானென்றார்கள்.—ப ௰௪
வுல் தன்வாயைத் திறக்கையில், கல்லியோன் யூதரைநோக்கி, யூதரே, இது அநியாயத்திற்காவது, துராசாரத்திற்காவது ஏற்றதாயிருந்தால், நான் உங்கள் முறைப்பாட்டைப் பொறுமையாகக்
கேட்பது எனக்குக் கடமையாயிருக்கும்.—இது ௰௫
உபதேசத்திற்கும், நாமங்களுக்கும், உங்கள் வேதத்திற்குமேற்ற விவாதமாயிருக்கையால், நீங்களே அதைப்பார்ப்பீர்களாக; நான் இப்படிப்பட்டவைகளை விசாரிக்க விரும்புகிறதில்லையென்
றுசொல்லி,—அவர்களை நியாயஸ்தலத்தினின்றுந் ௰௬
துரத்தினான்.—அப்பொழுது கிரேக்கர் எல்லா ௰எ
ரும் ஆலயத்தின் அதிபதியாகிய சொஸ்தெனேயைப்பிடித்து, நியாயஸ்தலத்திற்குமுன்பாக அடித்தார்கள். அதைக்குறித்துக் கல்லியோன் விசாரணைபண்ணாமலிருந்தான்.

பவுல் அநேகநாள் அங்கே தரித்திருந்தபின்பு, ௰அ
சகோதரருடைய உத்தரவுபெற்று, தான் முன்பண்ணின சங்கற்பத்தினிமித்தம் கெங்கிரேயாவிலே தலைச்சௌரம்பண்ணி, பிரிஸ்கில்லாளும் அக்கிலாவுமானவர்களுடன் சீரியதேசத்திற்
குக் கப்பலேறிச்சென்றான்.—அவன் எபேசுநக ௰௯
ரத்தைச்சேர்ந்தபொழுது, அவர்களைவிட்டுநீங்கி, ஆலயத்திற்பிரவேசித்து, யூதருடனே சம்பாஷ
ணைபண்ணினான்.—அவர்கள் அவனைச் சிலகா ௨௰
லந் தங்களுடனிருக்கவேண்டுமென்று கேட்க
அவன்சம்மதியாமல்,—வருகிற உற்சவத்தை ஆ ௨௧
சரிப்பதற்கு எதுவிதமும் நான் யெருஷலேமிலிருக்கவேண்டும்: தேவனுக்குச் சித்தமுண்டானால், திரும்பி உங்களிடத்தில்வருவேனென்று சொல்லி, அவர்களுடைய உத்தரவைப் பெற்றுக்கொண்டு கப்பலேறி, எபேசுவைவிட்டுப் பு
றப்பட்டான்.—அவன் சேசாரியாவைச்சேர்ந்த ௨௨
வுடனே, ஏறிப்போய்ச்சபையாரை உபசரித்து,
பின்பு அந்தியோகியவிலிறங்கினான்.—அங்கே ௨௩
சிலகாலஞ் சஞ்சரித்தபின், புறப்பட்டுக் கிரமமாய்க் கலாத்திய, பிரிகிய தேசங்களெங்குந்திரிந்து, சீஷரெல்லாரையும் ஸ்திரப்படுத்தினான்.

அந்தச்சமயத்தில்அலெக்குசந்திரியாவிற்பிறந் ௨௪
தவனும், சாதுரியவானும், வேதவல்லவனுமாகிய அப்பொல்லோவென்றுபேர்கொண்ட ஒருயூதன்
எபேசுவுக்குவந்தான்.—இவன் கர்த்தருடைய ௨௫
ய மார்க்கத்தில் உபதேசம்பெற்று, யோவானின் ஸ்நானத்தைமாத்திரம்அறிந்தவனாயிருந்தும், சாக்கிரதையுள்ளவனாகி, கர்த்தருடையவாக்கை

(௰அ. அதி. ௨.) ரோ.௰௬.௩. ௧.கொரி.௰௬.௰௯. ௨.தீமோ.௪.௰௯. (௩) அதி.௨௰.௩௪. ௧.கொரி.௪.௰௨. ௧.தெச.௨.௯. ௨.தெச.௩.அ. (௫)அதி.௰எ.௰௪,௰௫. யோபு.௩௨.௰எ. (௬)௧.பேதுரு.௪.௪. நிகி.௫.௰௩. மத்.௰.௰௪,. லேவி.௨௰.௯.௰௧, ௰௨. ௨.சாமு.௧.௰௬. எசேக்.௰அ.௰௩. எசேக்.௩.௰அ. (அ)௧.கொரி.௧.௰௪. (௯)அதி.௨௩.௰௧. (௰)எரே.௧.௰அ.௰௯. மத். ௨அ.௨௰. (௰௪)அதி.௨௩.௨௯. (௰எ) ௧.கொரி.௧.௨. (௰அ)எண்.௬.௰அ. ரோ.௰௬.௧. (௨௧) அதி.௰௯.௨௧. ௧.கொரி.௪. ௰௯. எபி.௬.௩. யாக்.௪.௰௫. (௨௩) கலா.௧.௨. (௨௪) ௧.கொரி.௧.௰௨. தீத்.௩.௰௩. (௨௫) ரோ.௰௨.௰௧. அதி.௰௯.௩

யதார்த்தமாய்ச் சொல்லிப்போதித்துவந்தான்.—
௨௬ ஆலயத்தில் அவன் தைரியமாய்ப்பேசத்தொடங்
கினபொழுது, அக்விலாவும், பிரிஸ்கில்லாளும்
அவன்சொல்லுகிறதைக்கேட்டு, அவனைச்சேர்த்
துக்கொண்டு, தேவனுடைய மார்க்கத்தை அ
திக நுட்பமாய் அவனுக்குத் தெரிவித்தார்கள்.—
௨௭ பின்பு அவன் அகாயநாட்டுக்குப்போக விரும்
பினபடியினால், சீஷர் அவனை உபசரிக்கும்படி
சகோதரர் அவர்களுக்கு எழுதினார்கள்: அவன்
அங்கேசேர்ந்தபின்பு, கிருபையினால் விசுவாசித்
௨௮ தவர்களுக்கு மிகவுந் துணையாயிருந்தான்.—அ
வன் வெளிப்படையாக யூதருடனே பலமாய்த்
தருக்கம்பண்ணி, யேசுவே கிறிஸ்துவென்
று வேதநூலால் திருஷ்டாந்தப்படுத்தினான்.

## ௰௯. அதிகாரம்.

௧. பவுல் தன் கையை வைக்கப்பன்னிருவர் பரிசுத்த ஆவியைப்பெறல்: அநேகர் அவனை விரோதித்தல், அவன் பிரார்த்தனைபண்ணப் பிணியாளர் சொஸ்தம்பெறல்: ௰௩. அசுத்த ஆவி ஸ்கேவாவின் புத்திரர்மேற்பாய்தல். மாயாவிகளின்புஸ்தகங்கள் தகிக்கப்படல்: ௨௧. தீமீத்திரியு பவுலைவிரோதித்துக்கலகம்பண்ண, நகரத்தின் அதிபதி அவர்களைச் சாந்தப்படுத்திப்பேசி அனுப்பல்.

கொரிந்தில் அப்பொல்லோ இருக்கையில்,
பவுல்மேலைத்தேசங்களில்திரிந்து, எபேசுவைச்
௨ சேர்ந்தான்.-அங்கேசிலசீஷரைக்கண்டு, அவர்க
ளைநோக்கி, நீங்கள்விசுவாசிகளானபொழுதுபரி
சுத்த ஆவியைப் பெற்றுக்கொண்டீர்களாவென்
றுகேட்க, அவர்கள் அவனுடனே, பரிசுத்தஆவி
உண்டென்பதைநாங்கள்கேள்விப்படவுமில்லை
௩ யென்றார்கள்.-அப்பொழுது அவன் அவர்களுட
ன், நீங்கள்பெற்ற ஸ்நானமென்னவென்றுகேட்
க, அவர்கள்யோவானின்ஸ்நானமென்றார்கள்.—
௪ அப்பொழுது பவுல், யோவான்தனக்குப்பின்வ
ருபவராகிய கிறிஸ்து யேசுவை விசுவாசிக்க
வேண்டுமென்று சனங்களுக்குச்சொல்லி, மனந்
திரும்புதலின் ஞானஸ்நானத்தைக் கொடுத்தா
௫ னே என்றான்.-அதைக் கேட்டபொழுது அவர்
கள் கர்த்தராகிய யேசுவின் நாமத்தினாலே
௬ ஞானஸ்நானம் பெற்றார்கள்.—பவுல் அவர்கள்
மேற் கைகளைவைத்தபொழுது, பரிசுத்தஆவி அ
வர்கள்மேல் அமர, அவர்கள் அந்நியபாஷைக
ளிற்பேசித் தீர்க்கதரிசனஞ் சொன்னார்கள்.—
௭ அந்தமனுஷரெல்லாரும் ஏறக்குறையப்பன்னி
௮ ருவர்.—பவுல் ஆலயத்திற்குப்போய், தைரியத்து
டன்பேசி, மூன்றுமாதமளவும் பிரசங்கித்து, தே
வனுடைய இராச்சியத்திற்கேற்றவைகளைப்
௯ போதித்துவந்தான்.—சிலர் மனக்கடினங்கொண்
டு, அவிசுவாசிகளாய்க் கூட்டத்திற்குமுன் இந்
தவழியை நிந்தித்தபொழுது, அவன் அவர்களை
நீங்கி, சீஷரை அவர்களினின்றுபிரித்து, நாடோ
றும் திரன்னு என்பவனுடைய வித்தியாலயத்தி
லே தருக்கம்பண்ணிவந்தான்.—இப்படி இரண்டு ௰
வருஷம் நடந்துவந்தது; அதனால் ஆசியாதேசத்
தில்வாசம்பண்ணின யூதரும், கிரேக்கருமான இ
வர்களெல்லாரும், கர்த்தராகிய யேசுவின்
வாக்கைக்கேட்டார்கள்.-தேவன் பவுலின்கை ௰௧
களைக்கொண்டு அற்புதங்களைச் செய்வித்துவரு
கையில்,-அவனுடையசரீரத்திலிருந்தவேர்வைப் ௰௨
பரிவட்டங்களையுங் கச்சுகளையும் வியாதியுள்ள
வர்களிடத்திற்கொண்டுவர, வியாதிகள் அவர்க
ளைவிட்டு நீங்கிப்போயின, துஷ்ட ஆவிகளும் அ
வர்களினின்று புறப்பட்டன.
அப்பொழுதுதேசாந்திரிகளாய்த்திரிகிறமந்திர ௰௩
வாதிகளாகிய யூதரிற் சிலர், துஷ்ட ஆவிகள்
பிடித்தவர்களிடத்தில், கர்த்தராகிய யேசு
வின் நாமத்தைச்சொல்லத்துணிந்து, பவுல் பிர
சங்கிக்கிற யேசுவின் நாமத்தினால் உங்களுக்
குக் கட்டளையிடுகிறோமென்றார்கள்.—பிரதான ௰௪
ஆசாரியனாகிய ஸ்கேவா என்னும் யூதன் ஒரு
வனுடைய புத்திரர் எழுபேர் இப்படிச்செய்த
பொழுது,—அவர்களுக்குத்தரமாய்த்துஷ்டஆவி, ௰௫
யேசுவை அறிவேன், பவுலையும்அறிந்திருக்கி
றேன்; நீங்களோ ஆரென்று சொன்னமாத்திரத்
தில்,—துஷ்டஆவியாற் பிடிபட்டமனுஷன் அ ௰௬
வர்கள் மேற்பாய்ந்து, அவர்களைத் தன் கீழ்ப்ப
டுத்தி மேற்கொள்ள, அவர்கள் நிருவாணிகளும்,
காயம்பட்டவர்களுமாய் அந்த வீட்டைவிட்டு
ஓடிப்போனார்கள்.—அது எபேசிலே வாசம்பண் ௰௭
ணுகிற யூதர், கிரேக்கர் அனைவருக்குந் தெரிய
வந்தது; அவர்களெல்லாரும் பயமடைந்தார்கள்;
கர்த்தராகிய யேசுவின் நாமம் மேன்மை
பெற்றது.—விசுவாசிகளானவர்களில் அநேகர் ௰௮
வந்து, தங்கள் செய்கைகளைவெளிப்படுத்தி, அ
றிக்கையிட்டார்கள்.—மாயவித்தைக்காரரில் அ ௰௯
நேகர் தங்கள் புத்தகங்களைக்கொண்டுவந்து, எல்
லாருக்குமுன்பாகவுந்தகித்தார்கள்: மதிக்கப்பட்
ட அவைகளின்கிரயம் ஐம்பதினாயிரம்வெள்ளிக்
காசு.—இவ்வண்ணமே கர்த்தருடைய வாக் ௨௰
கு விருத்தியடைந்து பிரபலமாயிற்று.
இவைமுடிந்தபின்பு, பவுல் மக்கேதோனியா, ௨௧
அகாய என்னுந்தேசங்களின் வழியாய், யெரு
ஷலேமுக்குப் போகும்படி மனங்கொண்டு,
நான் அங்கேசென்றபின்பு உரோமா நகரியை
யுங் காணவேண்டுமென்று சொல்லி,—தனக்கு ௨௨
உதவிசெய்கிறவர்களில் தீமோத்தேயு, எரஸ்து
வாகிய இருவரை மக்கேதோனியாவுக்கு அனுப்

(௨௭) ௧.கொரி.௩.௬. அதி.௰௯.௨௨.—(௰௯. அதி. ௧.) ௧.கொரி.௧.௰௨. (௨) அதி.௮.௰௫. ௧.சாமு.௩.௭. (௩) அதி.௰௮.௨௫. (௪) மத்.௩.௰௧. யோவா.௧.௰௫,௨௭,௩௰. அதி.௧.௫. (௫) அதி.௮.௰௫. (௬) அதி.௬.௬. அதி.௨.௪. (௮) அதி.௰௭.௨. அதி.௧.௩. (௯) ௨.தீமோ.௧.௰௫. ௨.பேதுரு.௨.௨. யூதா.௰. அதி.௯.௨. (௰) அதி.௨௰.௩௧. (௰௧) மாற்.௰௬.௨௰. (௰௨) அதி.௫.௰௫. ௨.இரா.௪.௨௯. (௰௩) மத்.௰௨.௨௭. மாற்.௯.௩௮. (௰௭) லூக்.௧.௬௫. அதி.௨.௪௩. (௰௮) மத்.௩.௬. (௨௰) அதி.௬.௭. (௨௧) ரோ.௰௫.௨௫. கலா.௨.௧. அதி.௨௰.௨௨. அதி.௰௮.௨௧. ரோ.௰௫.௨௪—௨௮. (௨௨) ரோ.௰௬.௨௩. ௨.தீமோ.௪.௨௰.

பி, தான் பின்னுஞ்சிலகாலம் ஆசியாவில் தங்கி
௨௩ னான்.—அக்காலத்தில் இந்த மார்க்கத்தைக்குறித்
௨௪ து மிகுந்த கலகமுண்டாயிற்று.—தீமீத்திரியு என்
றுநாமமுள்ள ஒருதட்டான், தியானாள் தேவிக்கு
வெள்ளியினாற்சிறுகோயில்களைச் செய்வதினால்,
தொழிற்காரருக்கு மிகுந்த லாபம்வருவித்தான்.-
௨௫ அவன் அவர்களையும், அவ்விதத்தொழிலாளராகி
யமற்றவர்களையுங் கூடிவரச்செய்து, சனங்களே,
இந்தத்தொழிலினாலே நாம் சீவனம்பண்ணுகி
௨௬ றோம், இது உங்களுக்குத்தெரியும்.—நீங்கள்கண்
டுங் கேட்டுமிருக்கிறபடி, பவுலென்பவனாகிய
இவன், கைகளாற்செய்யப்பட்டவைகள் தேவர்
களல்லவென்றுசொல்லி, எபேசிலேமாத்திரமல்
ல, சற்றுக்குறைய ஆசியாவெங்கும் அநேகசனங்
களுக்குப்போதித்து, அவர்களைப்பரபட்சமாக்கி
௨௭ னான்.—அதினால் நம்முடைய தொழில் அற்ப
மாய் எண்ணப்படுவதுமன்றி, மகா தேவியாகி
ய தியானாளுடைய கோயில் அவமதிக்கப்படுவ
தற்கும், ஆசியா தேசத்தாரெல்லாரும், பூமண்ட
லத்தாரும்நமஸ்கரிக்கும் அவள்மகிமைநாசமடை
௨௮ வதற்கும் ஏதுவுண்டாயிருக்கின்றதென்றான்.-அ
வர்கள் அதைக் கேட்டமாத்திரத்தில், கோபம் நி
றைந்தவர்களாய், எபேசியருடைய தியானாளே
மகத்துவமானவளென்று சொல்லிச் சத்தமிட்
௨௯ டார்கள்.—நகரம்முழுவதுங் கலகத்தினாலே நிரப்
பப்பட்டது: அவர்கள் பவுலுடன் வழித்துணை
யாய்வந்த மக்கேதோனியராகிய காயுவையும், அ
ரிஸ்தர்குவையும் இழுத்துக்கொண்டு ஒருமனப்
பட்டு, நடனசாலைக்குப் பாய்ந்தோடினார்கள்.—
௩௰ பவுல் சங்கத்திற்குப்போக விரும்பினான், ஆயி
னும் சீஷர் அவனைத்தடைப்படுத்தினார்கள்.—
௩௧ நடனசாலைக்கு அவன் போகாமலிருப்பதற்கு
வேண்டிக்கொள்வதற்காக, அவனுடைய சிநே
கிதராகிய ஆசியாவின் தலைவரிற்சிலர் அவனி
௩௨ டத்திற்கு ஆளனுப்பினார்கள்.—சங்கங் கலக்
கமடைந்ததினால், சிலர் ஒன்றையும், சிலர் வே
றொன்றையும் பேசினார்கள்: அநேகர் தாங்
கள் கூடிவந்த காரணமின்னதென்று அறியாதி
௩௩ ருந்தார்கள்.—யூதர் அலேக்குசாந்தரென்பவனை
முன்னிற்கத்தள்ளுகையில், கூட்டத்திற் சிலர்
அவனைமுன்னே இழுத்துவிட்டார்கள். அலேக்
குசாந்தர் கையினாற் சமிக்கைகாட்டி, சனங்க
௩௪ ளுக்குத்தரஞ் சொல்ல விரும்பினான்.—அவன்
யூதனென்று அவர்கள் அறிந்து, எல்லாரும் எ
பேசியருடைய தியானாளே பெரியவளென்று
இரண்டு மணி நேரமளவும் ஏகமாய்ச்சத்தமிட்
௩௫ டார்கள்.—நகரத்தின் அதிபதி சனங்களைச்சா
ந்தப்படுத்தி, எபேசியரே, எபேசிய நகரி மகா
தேவியாகிய தியானாளுக்கும், வானத்திலிருந்து
விழுந்த சொரூபத்திற்கும் கோயிற்பரிசா
ரிகியாயிருக்கிறதை அறியாதவன் உண்டோ.—
இது மறுத்துப்பேசக்கூடாத காரியமானதினா ௩௬
லே, நீங்கள் ஒன்றும்பதறிச்செய்யாமல் அமை
தியாயிருக்கவேண்டும்.—நீங்கள் இந்த மனுஷ ௩௭
ரை இவ்விடத்திற்கொண்டுவந்தீர்கள், இவர்கள்
கோயிற்கொள்ளைக்காரருமல்ல, உங்கள் தேவி
யைத் தூஷணித்தவர்களுமல்ல.—நியாயஸ்தா ௩௮
னங்களும், பிரதிநிதிகளும் இருக்கிறபடியினா
லே தீமீத்திரியுக்கும், அவனைச் சேர்ந்திருக்கிற
தொழிற்காரருக்கும் ஒருவன்மேல் ஒருகாரிய
முண்டானால், ஒருவருக்கொருவர் உத்தரம், பி
ரதியுத்தரஞ் சொல்லலாமே.—நீங்கள் வேறொரு ௩௯
காரியத்தை விசாரித்தால், அது நியாயசங்கத்தி
லே தீர்க்கப்படும். இன்றைக்குண்டான கலகத்
திற்கு நாம் உத்தரஞ்சொல்வதற்கு ஏதுவுண்டா
யிற்று.-உண்டானகலகத்திற்குநிமித்தமில்லாதப ௪௰
டியால், அதைக்குறித்து உத்தரஞ்சொல்ல நமக்
கியலாதென்றுசொல்லி,—பின்பு கூட்டத்தை அ ௪௧
னுப்பிவிட்டான்.

## ௨௰. அதிகாரம்.

௧. பவுல் மக்கேதோனியா தேசத்திற்குப் புறப்படல்: ௭. அவன் பிரசங்கம் பண்ணினவேளையில் விழுந்த யுத்திகுசென்பவனைச் சொஸ்தப்படுத்தல்: ௰௩. மிலீத்தைச்சேர்தல்: ௰௭. எபேசிலுள்ள முதியோரைப் போதித்துத் தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௩௬. பிரயாணஉபசாரஞ்சொல்லிக்கொண்டு புறப்படல்.

கலகந்தணிந்தபின்பு பவுல் சீஷரைத்தன்னிடத் ௧
தில்அழைத்து, வாழ்த்துதல்சொல்லி, மக்கேதோ
னியாவுக்குப் போகப்புறப்பட்டான்.—அவன் ௨
அந்தத்திசைகளிலே திரிந்து, சீஷருக்கு அ
திகபுத்திசொல்லி, கிரேக்குதேசத்தைச் சேர்ந்
தான்.—அங்கே மூன்றுமாதஞ் சஞ்சரித்தபின்பு ௩
அவன் கப்பலேறி, சீரியநாட்டுக்குப்போக ம
னதாயிருந்தபொழுது, யூதர் அவனுக்கு இரகசி
யமாய்ச்சருப்பனைசெய்ய நினைத்தபடியினால், தி
ரும்பி மக்கேதோனியாவழியாய்ப் போக எண்
ணினான்.—பெரோயா ஊரானாகிய சொப்பத்த ௪
ரும், தெசலோனிக்கேயரில் அரிஸ்தர்க்கும், செக்
குந்தும், தெர்பியனாகிய காயுவும், தீமோத்தேயும்,
ஆசியாதேசத்தாராகிய தீகிக்கும், திரோப்பிமுமா
கிய இவர்கள் ஆசியாதேசம்வரைக்கும் அவனோ
டேபோனார்கள்.—இவர்கள் முன்னேபோய், து ௫
ரோவஸ்பட்டினத்திலே நாங்கள்வரும்படி காத்
திருந்தார்கள்.—நாங்கள் புளியாத அப்பத்தின் ௬
உற்சவநாட்களுக்குப்பின்பு கப்பலேறி, பிலிப்
பிப்பட்டணத்தைவிட்டு, ஐந்து நாளைக்குள்ளே
துரோவசில் அவர்களைச்சேர்ந்து, அங்கே ஏழு
நாள் தங்கினோம்.—வாரத்தின்முதலாநாளிலே சீ ௭
ஷர் அப்பம்பிட்கும்படி வந்துகூடினபொழுது,

(௨௩) ௨.கொரி.௧.௮. அதி.௯.௨. (௨௪) அதி.௰௬.௰௬,௰௯. (௨௬) சங்.௱௰௫.௪. ஏசா.௪௪.௰—௨௰. எரே.௰.௩. (௨௯) ரோ.௰௬.௨௩. ௧.கொரி.௧.௰௪. அதி.௨௰.௪. கொலோ.௪.௰. பிலே.௨௪. (௩௩) ௧.தீமோ.௧.௨௰. ௨.தீமோ.௪.௰௪. அதி.௰௨.௰௭.—(௨௰. அதி. ௧.) ௧.கொரி.௰௬.௫. ௧.தீமோ.௧.௩. (௩) அதி.௯.௨௩. ௨.கொரி.௰௧.௨௬. (௪) அதி.௰௯.௨௯. கொலோ.௪.௰. அதி.௰௬.௧. எபே.௬.௨௧. கொலோ.௪.௭. ௨.தீமோ.௪.௰௨. அதி.௨௧.௨௯. (௬) யாத்.௰௨.௰௪,௰௫. அதி.௰௬.௮. ௨.கொரி.௨.௰௨. ௨.தீமோ.௪.௰௩. (௭) ௧.கொரி.௰௬.௨. வெளி.௧.௰. அதி.௨.௪௨,௪௬. ௧.கொரி.௰.௰௬.

பவுல் மறுநாளிற் புறப்பட ஆயத்தமாயிருந்து,
அவர்களுடனேபேசி, பாதி இராத்திரி அளவும்
௮ பிரசங்கித்தான்.—நாங்கள் கூடியிருந்த மேலறை
௯ யில் அநேகவிளக்குகளிருந்தன.—யுத்திகு என்று
பேர்கொண்ட ஒருவாலிபன்சாளரவாசலில்உட்
காந்து, பவுல்நெடுநேரமாகப்பிரசங்கம் பண்ணி
வருகையில், கனதூக்கமடைந்து, நித்திரைமயக்
கத்தினுற் சாய்ந்து, மூன்றும்மெத்தையிலிருந்து
தாழவிழுந்து, மரித்தவனுகி எடுக்கப்பட்டான்.-
௰ உடனே பவுல் இறங்கிப்போய் அவன்மேல்வி
ழுந்து அணைத்துக்கொண்டு,கலங்கவேண்டாம்;
இவன் உயிர் இவனுக்குள் இருக்கின்றதென்று
௰௧ சொல்லி,—திரும்பவும் ஏறிப்போய், அப்பம்பிட்
டுப்புசித்து, விடியற்காலமளவும் வெகுநேரமாய்
௰௨ ப்பேசிக்கொண்டிருந்து புறப்பட்டான்.—அந்த
வாலிபனை உயிருள்ளவனுகவே அழைத்துவந்து,
அவர்கள் மிகவும் ஆறுதல் அடைந்தார்கள்.
௰௩ பவுல் தான் கால் நடையாகப்போக விரும்பி
னதினுல், நாங்கள்முன்னேகப்பலேறி அசொஸ்
பட்டணத்திற்குப்போய், அங்கே பவுல் தன்னை
ஏற்றிக்கொள்ள எங்களுக்குத்தரவு கொடுத்தப
௰௪ டி,அவ்விடத்தில் இருந்தோம்.—அவன் அசொஸ்
பட்டணத்தில் எங்களைச்சந்தித்தபொழுது, நாங்
கள் அவனை ஏற்றிக்கொண்டு, மித்திலீனிக்குப்
௰௫ போய்,—அவ்விடத்தைவிட்டு, மறுநாளிலே கீ
௰௬ யவுக்கெதிராகச்சென்ருேம்.—பவுல் எப்படியும்
பெந்திக்கோஸ்து உற்சவநாளிலே யெருஷலே
மிற்சேரவிரும்பி, ஆசியாதேசத்திற் காலதாமதம்
பண்ணுமல்,எபேசுபட்டணத்தைக் கடந்துபோ
கத்தீர்மானித்ததினுல், மறுநாளிற் சாமுதீவை அ
டைந்து, துரோகில்லியோனில் தங்கி, அடுத்
தநாளிலே மிலீத்துக்குப் போனேம்.
௰௭ மிலீத்திலிருந்து அவன் எபேசுவிலுள்ளசபை
யின் முதியோரை அழைத்துவரும்படி ஆளனுப்
௰௮ பினுன்.—அவர்கள் தன்னிடத்திற் சேர்ந்தபொ
ழுது அவன் அவர்களைநோக்கி, நான் ஆசியாதே
சத்தில்வந்த முதலாம் நாள் தொடங்கி எப்பொ
ழுதும் நான் உங்களுக்குள் இருந்தவிதத்தை அ
௰௯ றிந்திருக்கிறீர்கள்.—எல்லாவற்றிலும் மனத்தாழ்
மையோடும், மிகுந்தகண்ணீரோடும், யூதருடை
ய துராலோசனையினுல் எனக்குநேரிட்ட சோத
னைகளோடும் நான் கர்த்தரை ச் சேவித்து,—
௨௰ உபயோகமானவைகளில் ஒன்றையும் நான் ம
றைத்துவைக்காமல், பிரசித்தமாகவும், வீட்டுக்
குவீடும் உங்களுக்குப்பிரசங்கம்பண்ணி உங்க
௨௧ ளுக்கு உபதேசித்து,—தேவனிடத்திற்கு ம
னந்திரும்புவதும், நம்முடைய கர்த்தராகிய
யேசுக்கிறிஸ்துவை விசுவாசிப்பதும் அவ
சியமென்று யூதரிடத்திலும், கிரேக்கரிடத்திலும்
சாட்சியிட்டேனென்பதை நீங்கள் அறிந்திருக்
கிறீர்கள்.—நான் ஆவியிற் கட்டுண்டவனுய், இப் ௨௨
பொழுதுயெருஷலேமுக்குப்போகிறேன், அங்
கே எனக்கு நேரிடுவதின்னதென்றறியேன்.—
பந்தனங்களும்,உபத்திரவங்களும் எனக்கு நேரி ௨௩
டுகின்றனவென்று பரிசுத்தஆவியானவர் பட்ட
ணந்தோறும் எனக்குச் சாட்சியிடுகிருர். இது
ஒன்றையே அறிந்திருக்கிறேன்.—ஆயினும் அ ௨௪
வைகளில் ஒன்றையுங்குறித்துக் கவலைப்படா
மல் தேவகிருபையை அறிவிக்கிற சுவிசேஷத்
தைச்சாட்சியிடும்படிக்கு, கர்த்தராகிய யே
சுவினிடத்தில் நான்பெற்ற ஊழியத்தை நி
றைவேற்றவும்,சந்தோஷத்தோடே என் ஓட்டத்
தை முடிக்கவும் விரும்பி, என் பிராணனையும்
அருமையென்றெண்ணேன்.—நான் உங்களுக் ௨௫
குள்ளே திரிந்து, தேவனுடைய இராச்சியத்
தைக்குறித்துப் பிரசங்கிக்கக் கேட்டவர்களாகி
ய உங்களில் ஒருவனுயினும் என் முகத்தைக்
காணமாட்டானென்று அறிந்திருக்கிறேன்.—
தேவனுடைய ஆலோசனையில் ஒன்றையும் ௨௬
மறைத்துவையாமல், எல்லாவற்றையுந்தெரிவித்
தபடியால்,—எந்த மனுஷனுடைய இரத்தப்பழிக் ௨௭
கும் நீங்கி நான் சுத்தமாயிருக்கிறேனென்பதற்
கு, நீங்களே இன்றைத்தினஞ் சாட்சிகள்.
ஆதலால் நீங்கள்உங்களைக்குறித்தும்,தேவன் ௨௮
தமது சுய இரத்தக்கிரயங்கொடுத்துவாங்கினதும்,
மேய்ப்பதற்குப் பரிசுத்தஆவியானவர் உங்களை
அத்தியட்சராய் ஏற்படுத்தினதுமாகியசபையின்
ஆட்டுக்கூட்டம் முழுவதையுங்குறித்தும், எச்
சரிக்கையாயிருங்கள்.—நான் போன பின்பு ஆட் ௨௯
டுக்கூட்டத்தைத்தப்பவிடாத கொடிய கோணு
ய்கள் உங்களுக்குட் பிரவேசிக்கும்.—அதுவு ௩௰
மன்றி, உங்களிலுஞ்சிலர் எழும்பி,சீஷரைத்தங்
களிடத்தில் இழுத்துக்கொள்ளும்படி விபரீதமா
னவைகளைப் போதிப்பார்களென்றறிந்திருக்கி
றேன்.—ஆனபடியினுலே நீங்கள் விழித்துக் ௩௧
கொண்டு, நான் மூன்றுவருஷமாக இரவும் பக
லுங் கண்ணீரோடே இடைவிடாமல் ஒவ்வொ
ருவருக்கும் போதித்துவந்தேனென்பதைநினைத்
துக்கொள்ளுங்கள்.—இப்பொழுது சகோதரரே, ௩௨
தேவனுக்கும், உங்களை ஏறக்கட்டவும், பரி
சுத்தமாக்கப்பட்ட எல்லாருக்குள்ளும் உங்க
ளுக்குச் சுதந்தரத்தைக்கொடுக்கவும் வல்லமை
யுள்ளஅவருடையகிருபையின்வாக்குக்கும் உங்
களை ஒப்பிக்கிறேன்.—ஒருவனுடைய வெள்ளி ௩௩

---

(௮) அதி.௧.௰௩. (௰) ௧.இரா.௰௭.௨௧. ௨.இரா.௪.௩௪. மத்.௯.௨௪. (௰௬) அதி.௰௮.௨௧. அதி.௨௪.௰௭. அதி.௨.௧. ௧.கொரி.௰௬.௮.(௰௮) அதி.௰௮.௰௯.(௰௯)வச.௩.(௨௰)வச.௨௭.(௨௧)அதி.௰௮.௫. மாற்.௧.௰௫. லூக்.௨௪.௪௭.(௨௨) அதி.௰௧.௨௧.(௨௩) அதி.௨௧.௪,௰௧. ௧.தெச.௩.௩.(௨௪)அதி.௨௧.௰௩. ரோ.௮.௩௫. ௨.கொரி.௪.௰௬. ௨.தீமோ.௪.௭. அதி.௧.௰௭. ௨.கொரி.௪.௧. கலா.௧.௧. தீத்.௧.௨.(௨௫)வச.௩௮. ரோ.௰௫.௨௩.(௨௬)அதி.௰௮.௬.௨.கொரி.௭.௨.(௨௭) வச.௨௰.லூக்.௭.௩௰.யோவா.௰௫.௰௫.எபே.௧.௨.(௨௮)௧.தீமோ.௪.௰௬. ௧.பேதுரு.௫.௨. ௧.கொரி.௰௨.௨௮.எபே.௧.௮,௰௪. கொலோ.௧.௰௪. எபி.௯.௰௨. ௧.பேதுரு.௧.௰௯. வெளி.௫.௯. எபி.௯.௰௪. (௨௯) மத்.௭.௰௫. ௨.பேதுரு.௨.௧. (௩௰) ௧.தீமோ.௧.௨௰. ௧.யோவா.௨.௰௯ (௩௧)அதி.௰.௰௯.(௩௨)எபி.௰௩.௯. அதி.௯.௩௧. அதி.௨௬.௰௮. எபே.௧.௰௮. கொலோ.௧.௰௨. எபி.௯.௰௫. ௧.பேதுரு.௧.௪. (௩௩) ௧.சாமு.௰௨.௩. ௧.கொரி.௯.௰௨. ௨.கொரி.௭.௨.

யையாகிலும், பொன்னையாகிலும், வஸ்திரத்தை
ஙச யாகிலும் நான் இச்சித்ததில்லை.—எனக்கும், என்
னுடன் இருந்தவர்களுக்கும் வேண்டியவைகள்
கிடைக்கும்படி இந்தக் கைகளே பிரயாசப்பட்
ஙரு டன, இது உங்களுக்கே தெரியும்.—கர்த்த
ராகிய யேசு, வாங்குகிறதிலுங்கொடுக்கிறதே
உத்தமமென்று சொல்லிய வாக்கை நீங்கள் நி
னைந்து, வேலைசெய்து, பலவீனரைத்தாபரிப்பது
தகுதியென்று எல்லாவற்றிலும் உங்களுக்குக்
காட்டினேனென்றான்.
ஙசு இப்படிச் சொல்லியபின்பு அவன்முழங்காற்
படியிட்டு, அவர்களெல்லாரோடும்பிரார்த்தனைப
ஙஎ ண்ணினான்.—அவர்களெல்லாரும்மிகவும்அழுது,
இனி நீங்கள் என்முகத்தைக்காணமாட்டீர்களெ
ன்று அவன்சொல்லிய வாக்கியத்தினிமித்தம் அ
ஙஅ திகமாய்த் துக்கப்பட்டு,—பவுலின் கழுத்தைக்க
ட்டிக்கொண்டு, அவனைமுத்தஞ்செய்தார்கள். பி
ன்பு கப்பல்வரைக்கும் அவனுடன்போனார்கள்.

## உக. அதிகாரம்.

க. பவுல் யெருஷலேமுக்குப்போகப் புறப்படல்: எ. வழியிலே சிலரை உபசரித்தல், பிலிப்பின்வீட்டில் தங்கல்: யஎ. யெருஷலேமிற்சேர்ந்து ஆசரணைசெய்தல்: உஎ. சனங்களுக்குள்ளே கலகமுண்டாதல்: ஙஎ. பவுல் சேனாபதியினால் விடுவிக்கப்பட்டு, சனங்களிடத்திற்பேச உத்தரவுபெறல்.

நாங்கள், அவர்களைவிட்டுப்பிரிந்து துறைபெ
யர்ந்தபின்பு, நேராய்ஓடிக் கோஸ்தீவையும், மறு
நாளில் உரோது தீவையுஞ் சேர்ந்து, அதினின்
உ று பத்தேரா பட்டினத்திற் சேர்ந்து,—அங்கே
பேனிக்கேதேசத்திற்குப்போக ஆயத்தமாயிருந்
ங த கப்பலைக்கண்டு, அதில் ஏறிப்போய்,—குப்பு
ரு தீவைக்கண்டு, அதை இடதுபுறமாகவிட்டு ஷீ
ரியவுக்கு ஓடி, தீறுநகரத்தில் அவர்கள் கப்ப
லின் சரக்குகளை இறக்கவேண்டியிருந்ததினால்
அவ்விடத்திலிறங்கி, அங்கேசீஷரைக்கண்டு ஏ
ச ழுநாள்தங்கினோம்.—அவர்கள் ஆவியினால் ஏவப்
பட்டு, நீர் யெருஷலேமுக்குப்போகலாகாதென்
ரு றுபவுலுடனேசொன்னார்கள்.—நாங்கள் அந்நாட்
களைக்கழித்துப்புறப்பட்டுப்போனபொழுது, அ
வர்களெல்லாரும் மனைவிகளோடும், பிள்ளைக
ளோடும் நகரத்திற்குப்புறம்பே எங்களைவழிவிட்
டார்கள்: கடற்கரையிலே நாங்கள்முழங்காற்படி
சு யிட்டுப் பிரார்த்தனைபண்ணினோம்.—பின்பு நாங்
கள் ஒருவரை ஒருவர் வினவிக்கொண்டு கப்
பல் ஏறினோம்; அவர்களுந் தங்கள்தங்கள் வீடுக
எ ளுக்கு மீண்டார்கள்.—நாங்கள் தீறுநகரத்தைவிட்
டுப்பித்தோலேமாய்க்குப்போய், ஓட்டத்தை மு
டித்து, சகோதரரைவாழ்த்தி, ஒருநாள் அவர்களி
டத்தில் தங்கினோம்.—மறுநாளிலே பவுலின்கூட் அ
டமாகிய நாங்கள் புறப்பட்டுச் சேசாரியா நக
ரத்திற்குப் போய், ஏழுபேரில் ஒருவனாகிய பி
லிப்பென்னுஞ் சுவிசேஷகனுடைய வீட்டிற்
சென்று, அவ்விடத்தில் தங்கினோம்.—அவனுக் கூ
குண்டான குமாரத்திகளாகிய நாலு கன்னிகள்
தீர்க்கதரிசனஞ் சொல்லுகிறவர்கள்.—நாங்கள் ய
அங்கே அநேகநாள் தங்கினோம், அகாபென்
றுபேர்கொண்ட ஒருதீர்க்கதரிசி யூதேயாவிலின்
று வந்திருந்தான்.—அவன் எங்களிடத்தில் வந் யக
து, பவுலின் அரைக்கச்சை எடுத்து, தன்கைகளை
யுங் கால்களையுங் கட்டிக்கொண்டு, இந்தக் கச்
சையுடையவனை யெருஷலேமிலுள்ளயூதர்இவ்
விதமாய்க் கட்டி, அந்நியதேசத்தாருடையகைக
ளில்ஒப்பிப்பார்களென்று பரிசுத்தஆவியானவர்
சொல்லுகிறாரென்றான்.—இவைகளை நாங்கள் யஉ
கேட்டமாத்திரத்தில், யெருஷலேமுக்குப்போக
வேண்டாமென்று நாங்களும், அவ்விடத்துச்ச
னங்களும் அவனைவேண்டிக்கொண்டோம்.—அ யங
தற்குப்பவுல் உத்தரமாக, நீங்கள் அழுதுஎன்நெஞ்
சத்தைப்பிளக்கவேண்டியதென்ன, யெருஷலே
மிலே கர்த்தராகிய யேசுவின் நாமத்தினி
மித்தம் நான் கட்டப்படுவதற்குமாத்திரமல்ல,
என்பிராணனை ஒப்பிப்பதற்கும் ஆயத்தமாயிருக்
கிறேனென்றான்.—அவன் உடன்படாதபடியி யச
னால், கர்த்தருடைய சித்தத்தின்படி ஆகக்கடவ
தென்றுசொல்லி நாங்கள் அமைவாயிருந்தோம்.—
அந்நாட்களுக்குப்பின்பு நாங்கள்பிரயாணத்திற் யரு
குரிய பொருள்களைச் சேர்த்துக்கொண்டு யெரு
ஷலேமுக்குப்போனோம்.—சேசாரியா நகரத்தி யசு
லுள்ள சீஷரிற் சிலர் எங்களுடனே வந்து, குப்
புருதீவானும், நெடுங்காலஞ் சீஷனாயிருந்தவனு
மாகிய மினாசோனிடத்தில் தங்கும்படி எங்களை
அழைத்தார்கள்.—நாங்கள் யெருஷலேமிற் சேர்ந் யஎ
தபொழுது, சகோதரர் எங்களைச்சந்தோஷத்தோ
டே ஏற்றுக்கொண்டார்கள்.—மறுநாளிலே பவுல் யஅ
எங்களுடனே யாக்கோபிடத்திற்சேர்ந்தான்; மூ
பியோரெல்லாரும் அவ்விடத்திற் கூடிவந்தார்
கள்.—அவர்களுக்கு அவன்வாழ்த்துதல்செய்து, யகூ
பின்பு தனது ஊழியத்தினால் தேவன் அந்நிய
தேசத்தாருக்குள்ளே செய்தவைகளை ஒவ்வொன்
றாக விவரித்தான்.—அவர்கள் கேட்டுக் கர்த்த உய
ரை ஸ்தோத்திரம்பண்ணி, பின்பு இவனைநோக்
கி, சகோதரனே, யூதரில் அநேகர் விசுவாசிக
ளானதைப்பார்த்திருக்கிறாயே; இவர்களெல்லா
ரும் வேதமுறைமைகளில் மகா பிரியர்,—அந் உக
நியதேசத்தாருக்குள் இருக்கிற யூதர் எல்லாருந்
தங்கள் பிள்ளைகளுக்கு விருத்தசேதனம்பண்
ணவும், முறைமைகளின்படி நடக்கவும் வேண்

(ஙச) அதி.யஅ.ங. க.கொரி.ச.யஉ. க.தெச.உ.கூ. உ.தெச.ங.அ. (ஙரு) ரோ.யரு.க. க.கொரி.கூ.யஉ. உ.கொரி. யக.கூ,யஉ. எபே.ச.உஅ. க.தெச.ச.யஉ. உ.தெச.ங.அ. (ஙசு) அதி.எ.சுய. (ஙஎ) ஆதி.சரு.யச. (ஙஅ) வச.உரு.—(உக. அதி. ச.) வச.யஉ. அதி.உய.உங. (ரு) அதி.உய.ஙசு. (சு) யோவா.க.யக. (அ) எபே.ச.யகூ. உ.திமோ.ச.ரு. அதி கூ.ரு. (கூ) யோவே.உ.உஅ. (ய) அதி.யக.உஅ. (யக) வச.ஙங. அதி.உய.உங. (யங) அதி.உய.உச. (யச) மத். கூ.ய. லூக்.யக.உ. (யஎ) அதி.யரு.ச. (யஅ) அதி.யரு.யங. கலா.க.யகூ. (யகூ) அதி.யரு.ச,யஉ. ரோ.யரு.யஅ,யகூ. அதி.க.யஎ. (உய) அதி.உஉ.ங. ரோ.ய.உ. கலா.க.யச.

டுவதில்லையென்றுசொல்லி, இவ்விதமாய் அவர்
கள் மோசேயைவிட்டுவிலகும்படி நீ உபதே
சிக்கிறாயென்று இவர்கள் கேள்விப்பட்டிருக்கி
௨௨ றார்கள்.—நீ இங்கே வந்தசெய்தியை இவர்கள்
கேள்விப்பட்டு, கூட்டங்கூடி வருவார்கள், இ
து நிச்சயம்: ஆதலால் நாம்செய்யவேண்டியதெ
௨௩ ன்ன.—நாங்கள் உனக்குச்சொல்லுகிறபடியே நீ
செய்யவேண்டும்: சங்கற்பம் பண்ணினவர்களா
௨௪ கிய நாலுபேர் எங்களிடத்திலிருக்கிறார்கள்.—நீ
அவர்களைச்சேர்த்து, அவர்களுடன் உன்னையுஞ்
சுத்திபண்ணிக்கொண்டு, அவர்கள் தலைச்சௌ
ரம்பண்ணிக்கொள்வதற்கு வேண்டிய செலவு
பண்ணுவாயாக: அப்பொழுது எல்லாரும்,உன்
னைக் குறித்துத் தங்களுக்குத் தெரிவிக்கப்பட்ட
செய்திகளில் ஒன்றும் உள்ளதல்லவென்றும், நீ
யும் வேதமுறைமைகளைக்காத்து நடக்கிறவனெ
௨௫ ன்றும் அறிந்துகொள்வார்கள்.—மேலும் விசுவா
சிகளான அந்நியதேசத்தார் இப்படிப்பட்டவை
களைக் கைக்கொள்ளாமல் விக்கிரகங்களுக்கு
நிவேதித்ததற்கும், இரத்தத்திற்கும், நெருக்குண்
டு செத்ததற்கும், வேசை மார்க்கத்திற்கும் மாத்
திரம் நீங்கலாயிருக்கவும் வேண்டுமென்று நாங்
கள் தீர்மானம்பண்ணி, எழுதி அனுப்பியிருக்கி
௨௬ றோமேயென்றார்கள்.—மறுநாளிலே பவுல் அந்
தமனுஷரைச் சேர்த்து,அவர்களுடனே தானுஞ்
சுத்திசெய்துகொண்டு, தேவாலயத்திற் பிரவே
சித்து, அவர்களில் ஒவ்வொருவனுக்காகவும்
வேண்டிய பலிகொடுக்கப்படுமளவுஞ் சுத்தமா
வதற்கான நாட்களை நான் நிறைவேற்றுவே
௨௭ னென்று அறிவித்தான்.—அதற்கான ஏழுநாட்
களும் நிறைவேறிவருகையில், ஆசியாதேசத்தி
லிருந்துவந்த யூதர், தேவாலயத்தில் அவனைக்
கண்டு, சனங்களெல்லாரையும் மூட்டி, அவன்
௨௮ மேற் கைகளைவைத்து,—ஓ, இஸ்ரவேலரே, உத
விசெய்யுங்கள்: இவன் சனங்களுக்கும், வேதப்
பிரமாணத்திற்கும், இந்த ஸ்தலத்திற்கும் விரோ
தமாக. எங்கும் எல்லாருக்கும் போதித்துவரு
கிறதன்றி, இந்தத் தேவாலயத்திலே கிரேக்க
ரையும் அழைத்துவந்து, இந்தப் பரிசுத்தஸ்தலத்
தையும் அசுசிப்படுத்தினனென்று சத்தமிட்டார்
௨௯ கள்.—முன்பு நகரத்தில் எபேசியனாகிய திரோப்
பிமு பவுலுடன் இருக்கக்கண்டதினால், இ
வன் அவனைத் தேவாலயத்தில் அழைத்துவந்தா
௩௰ னென்று நினைத்தார்கள்.—அப்பொழுது நகர
மெங்குங் கலகமுண்டாயிற்று, சனங்கள் கூடி
ஓடிவந்து,பவுலைப்பிடித்து, தேவாலயத்திற்குப்
புறம்பே இழுத்தார்கள்: உடனே கதவுகள் பூட்
௩௧ டப்பட்டன.—மேலும் அவர்கள் அவனைக்கொ
லைசெய்ய வகைதேடினார்கள், அத்தருணத்திலே
போர்ச்சேவகரின் சேனாபதி யெருஷலேமில்
எங்குங் கலகமுண்டாயிற்றென்று கேள்விப்பட்
டு,-உடனே போர்ச்சேவகரையும்,நூறுபேருக்க ௩௨
திபதிகளையுஞ் சேர்த்துக்கொண்டு,அவர்களிடத்
திற்கோடினான்: சேனாபதியையும் போர்ச்சேவ
கரையும் அவர்கள் கண்டமாத்திரத்தில், பவுலை
அடியாமல் விட்டார்கள்.—அப்பொழுது சேனா ௩௩
பதி சேர்ந்து,அவனைப்பிடித்து, இரண்டுசங்கிலி
களினாற் கட்டச்சொல்லி, பின்பு இவன் யாவ
னென்றும், என்னசெய்தானென்றும் விசாரித்
தான்.—சனங்களிற்சிலர் ஒருவிதமாகவும், மற்ற ௩௪
வர்கள் வேறொருவிதமாகவுஞ் சொல்லிச் சத்த
மிட்டார்கள்: கலகத்தினிமித்தம் அவன் நிச்ச
யத்தை அறியக்கூடாதபடியால்,அவனைக்கோட்
டைக்குள்கொண்டுபோகச்சொன்னான்.-அவன் ௩௫
படிகள்மேல் ஏறினபொழுது சனக்கூட்டம்
பின்சென்று,-இவனை அகற்றுங்களென்று உக்கி ௩௬
ரமாய்க்கூப்பிட்டபடியினாலே போர்ச்சேவகர்
அவனைச் சுமந்துகொண்டு போனார்கள்.—அவர் ௩௭
கள் பவுலைக்கோட்டைக்குள்ளே கொண்டுபோ
கிற சமயத்தில், அவன் சேனாபதியிடத்தில்,
நான் உம்முடன் ஒருசொற்சொல்லலாமாவென்
றுகேட்க, இவன், கிரேக்குபாஷை உனக்குத்
தெரியுமா.—இந்த நாட்களுக்குமுன் கலகமுண் ௩௮
டாக்கி, நாலாயிரங்கொலைபாதகரைவனத்திலே
நடத்திக்கொண்டுபோன எகிப்தியன் நீ அல்ல
வாஎன்றான்.—அதற்குப் பவுல், நான் கிலீக்கி ௩௯
யாநாட்டிலுள்ள கீர்த்திபெற்ற தருசு நகரத்தா
னாகிய யூதன்: நான் சனங்களுடன் பேசும்படி
எனக்குத்தரவுகொடுக்கவேண்டுமென்று உம்மை
வேண்டிக் கொள்ளுகிறேனென்றான்.—அவனுக் ௪௰
கு உத்தரவுகொடுத்தபின்பு,பவுல்படிகளின்மேல்
நின்று கையினாற் சனங்களுக்குச் சமிக்கைகாட்
டினான், மிகவும் அமைதலுண்டாயிற்று. அப்
பொழுது அவன் எபிரேயுபாஷையிலே பேசத்
தொடங்கினான்.

## ௨௨. அதிகாரம்.

௧. பவுல் சனங்களுக்குப் பிரசங்கம் பண்ணல்: ௨௨. சனங்க்ள் பவுலைவிரோதித்தபொழுது சேனாபதி இவனைவிடுவித்தல்: ௩௰. அவனை அடிக்காமல்விட்டு, யூதர் சுமத்தின குற்றம் விசாரிக்கச்சேனாபதி கட்டளையிடல்.

சகோதரரும், பிதாக்களுமாகியசனங்களே, உங் ௧
களுக்கு நான் இப்பொழுது சொல்லுகிற உத்
தரத்திற்குச் செவிகொடுப்பீர்களாகஎன்றான்.-அ ௨
வன் எபிரேயுபாஷையிலேதங்களுடன்பேசுகிற
தை அவர்கள்கேட்டு, அதிக அமைதலாயிருந்தார்
கள்.-அதற்குப்பின் அவன், நான் யூதன், கிலிக் ௩
கியாநாட்டிலுள்ள தருசு ஊரிற் பிறந்து, இந்த
நகரத்திலே கமாலீயேலின் பாதத்தண்டையில்
வளர்ந்து,முன்னோர்களுடைய விதிப்பிரமாணத்

(௨௪) எண்.௬.௨,௰௩,௰௮. அதி.௰௮.௰௮. (௨௫) அதி.௰௫.௨௰,௨௮. (௨௬) அதி.௨௪.௰௮. எண்.௬.௰௩. (௨௭) அதி.௨௪.௰௮. அதி.௨௬.௨௧. (௨௮) அதி.௨௪.௫,௬. (௨௯) அதி.௨௰.௪. (௩௰) அதி.௨௬.௨௧. (௩௨) அதி.௨௩.௨௭. (௩௩) வச.௰௧. அதி.௨௰.௨௩. (௩௬) லூக்.௨௩.௰௮. அதி.௨௨.௨௨. (௩௮) அதி.௫.௩௬. (௩௯) அதி.௯.௰௧. (௪௰) அதி.௰௨.௰௭.—(௨௨. அதி. ௧.) அதி.௭.௨. (௩) அதி.௨௧.௩௯. ௨.கொரி.௰௧.௨௨. பிலி.௩.௫. உபா.௩௩.௩. ௨.இரா.௪.௩௮. லூக்.௰.௩௯. அதி.௫.௩௪. அதி.௨௬.௫. அதி.௨௧.௨௰. கலா.௧.௰௪. ரோ.௰.௨.

திற்கேற்கப் பூரணமாய்ப்போதிக்கப்பட்டு, நீங்
களெல்லாரும் இன்றைத்தினமிருக்கிற பிரகா
ரம், தேவனிற் பத்திவைராக்கியமுடையவனா
௪ கி,—இந்தமார்க்கத்தாரை மரணபரியந்தந் துன்
பப்படுத்தி, புருஷரையும் ஸ்திரிகளையுங் கட்
௫ டிச் சிறைச்சாலைகளில் ஒப்பித்துவந்தேன்.—அ
தற்கு மகா ஆசாரியனும், முதியோர் யாவருஞ்
சாட்சிகள்: அவர்கள் கையிலிருந்து நான் சகோ
தரருக்கு நிருபங்களைவாங்கிக்கொண்டு, தமஸ்கு
விலிருக்கிறவர்களுந் தண்டிக்கப்படும்படி அவர்
களைக்கட்டி, யெரூஷலேமுக்குக் கொண்டுவரு
௬ வதற்காக அவ்விடத்திற்குப்போனேன்.—நான்
பிரயாணப்பட்டுத் தமஸ்குவுக்குச் சமீபமான
பொழுது, மத்தியானகாலத்திற் சடிதியாய் வா
னத்திலிருந்து மிகுந்த ஒளியுண்டாகி, என்னைச்
௭ சுற்றிப்பிரகாசித்தது.—நான் தரையிலேவிழுந்து,
ஷவுலே, ஷவுலே, நீ என் என்னைத்துன்பப்படுத்
துகிறாயென்றுஎன்னுடன்சொல்லிய சத்தத்தைக்
௮ கேட்டேன்.—அதற்கு நான், கர்த்தாவே, நீர்
ஆரென்றேன், அவர் என்னுடனே, நீ துன்பப்
படுத்துகிற நாசரேத்தூரானாகிய யேசுவே நா
௯ ன் என்றார்.—என்னோடே யிருந்தவர்கள் அந்த
ஒளியைக்கண்டு பயமடைந்தார்கள்; என்னுடன்
பேசினவருடைய வாக்கை அவர்கள் கேட்க
௰ வில்லை.—பின்னும் நான் கர்த்தாவே, நான்
என்னசெய்யவேண்டுமென்று கேட்க, கர்த்தர்
என்னுடனே, நீ எழுந்து, தமஸ்குவுக்குப்போ,
நீசெய்யும்படி நியமிக்கப்பட்டயாவும் அங்கே
௰௧ உனக்குச் சொல்லப்படுமென்றார்.—நான் அந்த
ஒளியின்மகிமையினாலே பார்வையற்றுப்போன
படியால், என்னோடிருந்தவர்களாற் கைலாகு
பெற்றுநடத்தப்பட்டு, தமஸ்குவிற்போய்ச்சேர்ந்
௰௨ தேன்.—அங்கே வாசம்பண்ணுகிற சகல யூதரா
லும் நற்சாட்சிபெற்றவனும், வேதப்பிரமாணத்
திற் பத்தியுள்ளவனுமாகிய அனனியாவென்னு
ம் ஒருவன் என்சமீபத்தில்வந்து நின்று, என்னை
௰௩ நோக்கி,—சகோதரனாகிய ஷவுலே, நீ பார்வைய
டைவாயாகவென்றான். அந்நேரமே நான் அவ
௰௪ னைப்பார்த்தேன்.—பின்பு அவன், நம்முடைய
முன்னோரின் தேவன் நீ தமதுசித்தத்தை அறிந்
து, அந்த நீதிபரரானவரைக்கண்டு, அவருடை
௰௫ யவாக்கைக்கேட்டு,-நீ கண்டு கேட்டவைகளைக்
குறித்து எல்லா மனுஷருக்குஞ் சாட்சிகொடுக்கி
றவனாயிருக்கும்படி, உன்னைத்தெரிந்துகொண்
௰௬ டார்.—இனித் தாமதிக்கிறதென்ன, நீ எழுந்து,
கர்த்தருடைய நாமத்திற் பிரார்த்தனைபண்
ணி, ஞானஸ்நானம்பெற்று, உன் பாவங்கள் நீங்
௰௭ கும்படி செய்வாயாகவென்றான்.—பின்பு நான்
யெரூஷலேமுக்குத் திரும்பிவந்து, தேவாலயத்
திற் பிரார்த்தனைபண்ணுகையில், ஞானதிருஷ்டி
அடைந்து அவரைத் தரிசித்தேன்.—அவர் என்னு ௰௮
டனே, நீ என்னைக்குறித்துச் சொல்லுஞ் சாட்சி
யை அவர்கள் அங்கிகரியார்கள்: ஆதலால் தா
மதமில்லாமற் சீக்கிரமாய் யெரூஷலேமைவிட்
டுப் போவென்றுசொல்ல,—அதற்கு நான், கர்த் ௰௯
தாவே, உம்மை விசுவாசிக்கிறவர்களை நான்
காவலில்வைத்து, ஆலயங்கள் அனைத்திலும் அ
வர்களை அடிப்பித்திருந்ததையும்,—உமக்கு இரத் ௨௰
தச்சாட்சியான ஸ்தேவானுடைய இரத்தஞ் சிந்
தப்பட்டபொழுது நானும் அருகேநின்று, அவ
னைக்கொலைசெய்வதற்குச் சம்மதித்து, அவனைக்
கொலைசெய்தவர்களின் வஸ்திரங்களைக் காத்துக்
கொண்டதையும் இவர்கள் அறிந்திருக்கிறார்களே
என்றேன்.—அவர் என்னைநோக்கி, நீ போ: தூர ௨௧
மாய் அந்நியதேசத்தாரிடத்திற்கு உன்னை அனுப்
புகிறேனென்று சொன்னாரென்றான்.—இந்தச் ௨௨
சொல்வரைக்கும் அவர்கள் அவனுக்குச் செவி
கொடுத்து, பின்பு இப்படிப்பட்டவனைப் பூமியி
லிருந்து அகற்றவேண்டும், இவன் உயிரோடிருக்
கிறது நியாயமல்லவென்று மிகவுஞ் சத்தமிட்
டார்கள்.—அவர்கள் சத்தமிட்டு, தங்கள் வஸ் ௨௩
திரங்களைக் களைந்துபோட்டு, ஆகாசத்திலே புழு
தி தூற்றிக்கொண்டுவருகையில்,—சேனாபதி அவ ௨௪
னைக் கோட்டைக்குள்ளே கொண்டுவரும்படி
கட்டளையிட்டதுமன்றி, அவனுக்கு விரோதமாய்
இப்படிச் சத்தமிட்டதற்குக் காரணமின்னதென்
று அறியும்பொருட்டு, அவனைக் கசையினால் அ
டித்து விசாரிக்கவுஞ்சொன்னான்.—அவர்கள் அ ௨௫
வனை வார்களினாற் கட்டுகையில், பவுல் சமீபமா
ய் நின்ற நூறுபேருக்கதிபதியைநோக்கி, உரோ
மனும், நியாயம் விசாரிக்கப்படாதவனுமாயிருக்
கிற மனுஷனை நீங்கள் அடிக்கிறதற்கு அதிகார
முண்டாவென்று கேட்டான்.—நூறுபேருக்கதி ௨௬
பதி அதைக்கேட்டு, சேனாபதியினிடத்திற்குப்
போய், அந்தமனுஷன் உரோமன்: ஆதலால்
நீர் செய்வதைக் குறித்து எச்சரிக்கையாயிருக்
கவேண்டுமென்று சொல்ல,—சேனாபதி பவுலி ௨௭
னிடத்தில்வந்து, நீ உரோமனா, எனக்குச்சொ
ல்லென்றான்; அதற்கவன், அப்படித்தானென்
றான்.—சேனாபதி, நான் மிகுந்த திரவியத்தினா ௨௮
லே, இந்த ஆதிபத்தியத்தைப்பெற்றுக்கொண்டே
னென்று சொல்ல, பவுல், நான் அப்படியே
பிறந்தேனென்றான்.—உடனே அவனை அடித்து ௨௯
விசாரிக்க ஆயத்தமாயிருந்தவர்கள் அவனைவிட்
டுவிலகினார்கள்: சேனாபதியும் அவனை உரோம
னென்று அறிந்து, தான் அவனைக்கட்டினதற்கா
கப்பயந்தான்.—மறுநாளில் அவன் பவுலின்மேல் ௩௰
யூதரால் ஏற்படுத்தப்பட்டகுற்றம் இன்னதென்

(௪) அதி.௮.௩. பிலி.௩.௬. ௧.தீமோ.௧.௰௩. (௫) லூக்.௨௨.௬௬. அதி.௯.௨. (௬) அதி.௯.௩. (௯) தானி.௰.௭. (௰௨) அதி.௯.௰௭. அதி.௰.௨௨. ௧.தீமோ.௩.௭. (௰௪) அதி.௨௩.௰௧. அதி.௪.௨௰. (௰௫) அதி.௩.௰௩. அதி.௯.௰௫. ௧.கொரி.௯.௧. அதி.௩.௰௪. ௧.கொரி.௰௧.௨௩. கலா.௧.௰௨. (௰௬) அதி.௨.௩௮. எபி.௰.௨௨. அதி.௯.௰௪. ரோ.௰.௰௩. (௰௭) அதி.௯.௨௬. ௨.கொரி.௰௨.௨. (௰௮) வச.௰௪. மத்.௰.௰௪. (௰௯) வச.௪. மத்.௰.௰௭. (௨௰) அதி.௭.௫௮. லூக்.௰௧.௪௮. ரோ.௧.௩௨. (௨௧) அதி.௯.௰௫. அதி.௰௩.௨,௪௬,௪௭. அதி.௰௮.௬. அதி.௨௬.௰௭. ரோ.௧.௪. ரோ.௰௫.௰௬. கலா.௧.௰௫,௰௬. எபே.௩.௭,௮. ௧.தீமோ.௨.௭. ௨.தீமோ.௧.௰௧. (௨௨) அதி.௨௧.௩௬. அதி.௨௫.௨௪. (௨௫) அதி.௰௬.௩௭.

று நிச்சயமாய் அறிய விரும்பி, அவனுடைய கட்
டை அவிழ்ப்பித்து, பிரதான ஆசாரியரையும்,அ
வர்களுடைய மகா சங்கத்தாரெல்லாரையுங் கூ
டிவரும்படி கட்டளையிட்டு, பின்பு அவனைத்
தாழக் கொண்டுபோய், அவனை அவர்களுக்கு
முன் நிறுத்தினான்.

## உங. அதிகாரம்.

*க. பவுல் நியாயம்விசாரிக்கப்படல், அவனை அடிக்கும்படி மகா ஆசாரியன் கட்டளையிடல், அபவாதிகளுக்குள்ளே பேதமுண்டாதல்: ௰உ. அவனைக் கொலைசெய்யும்படி நாற்பதுபேர் உடன்படல்: ௰சு. பவுல் அவர்கள்அபிப்பிராயத்தை அறிந்து விடுதலைபெறல்: ஙக. பிலிப்பினிடத்தில் அனுப்பப்படல்.*

பவுல்,மகாசங்கத்தாரை உற்றுப்பார்த்து, சகோ
தரரே, நான் இந்நாள்வரைக்கும் எவ்விதத்திலும்
நேர்மையான நன்மனச்சாட்சிக்கேற்கத் தேவ
னுக்குமுன்பாக நடந்துவந்தேனென்று சொல்
உ ல,—மகாஆசாரியனாகிய அனனியா, அவனுக்குச்
சமீபமாய் நின்றவர்களைநோக்கி, இவன் வாயில்
ங அடியுங்களென்று கட்டளையிட்டான்.-அப்பொ
ழுது பவுல் அவனுடன், சாந்துபூசப்பட்ட சுவ
ரே, தேவன் உன்னைஅடிப்பார்: நியாயப்பிரமா
ணத்தின்படி எனக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்க
இருக்கிற நீ, அந்த நியாயப்பிரமாணத்திற்கு மா
றுகஎன்னைஅடிக்கச்சொல்லலாமாவென்றான்.—
ச சமீபத்தில் நின்றவர்கள்,தேவனுடைய மகா
ரு ஆசாரியனை நிந்திக்கிறாயாவென்றார்கள்.—அதற்
குப் பவுல், சகோதரரே, இவரை மகா ஆசாரிய
னென்று நான் அறியவில்லை: "உன் சனங்க
ளின் அதிபதியைத் தூஷணிக்கப்படாது," என்
சு று எழுதியிருக்கிறதேயென்றான்.—அவர்களிற்
சதுசேயர் ஒருபங்கும், பரிசேயர் ஒருபங்குமா
னவர்களென்று பவுல் அறிந்து,சங்கத்தாருக்குள்
ளே சத்தமிட்டு, சகோதரரே, நான் பரிசேயன்,
பரிசேயனுடைய புத்திரன்: மரித்தோரின் உயி
ர்த்தெழுதலை நம்பினதினிமித்தம் நான் குற்றஞ்
எ சுமத்தப்பட்டேனென்றான்.—அவன் அப்படிச்
சொன்னபொழுது, பரிசேயருக்குஞ் சதுசேய
ருக்கும் வாக்குவாதமுண்டாய், கூட்டம் இ
அ ரண்டுபட்டது.—சதுசேயர் உயிர்த்தெழுதல் இல்
லையென்றும், தேவதூதனும் ஆவியுமில்லையென்
றுஞ் சொல்லுகிறார்கள்: பரிசேயரோ, அவ்வி
ரண்டும் உண்டென்று அறிக்கையிடுகிறார்கள்.—
கூ ஆகையால் பெரிய கூக்குரல் உண்டாயிற்று;பரி
சேயரைச் சேர்ந்த வேதபாரகர் எழுந்து, இந்த
மனுஷனிடத்தில் ஒரு தீங்கையுங் காணோம்:
ஒரு ஆவியாயினும், ஒரு தேவதூதனாயினும் இ
வனுடனே பேசினதுண்டானால், நாம் தேவ
னுடனே போர்செய்வது தகாதென்று சொல்
௰ லி வாதாடினார்கள்.—மிகுந்த வாக்குவாதமுண்
டானபொழுது, பவுல் அவர்களாற் பீறுண்டு
போவானென்று சேனாபதி பயந்து, போர்ச்
சேவகர்போய், அவனை அவர்களினின்று பல
வந்தமாய் நீக்கி, கோட்டைக்குட் கொண்டுபோ
கும்படி கட்டளையிட்டான்.—அந்த இராத்திரி ௰க
யிலே கர்த்தர் பவுலினருகே நின்று,பவுலே,தி
டன்கொள்: நீ என்னைக்குறித்து யெருஷலேமி
லே சாட்சிகொடுத்ததுபோல, உரோமையிலுஞ்
சாட்சிகொடுக்கவேண்டுமென்றார்.-விடியற்கால ௰உ
மானபொழுது யூதரிற்சிலர் ஒன்றாய் ஆலோசனை
செய்து, பவுலைத் தாங்கள் கொலைசெய்யுமளவும்
புசிப்பதுங் குடிப்பதுமில்லையென்றுசபதம்பண்
ணி, தங்களுக்குள்ளே கட்டுப்பாடுசெய்துகொ
ண்டார்கள்.—நாற்பதுபேருக்கு மேற்பட்டவர் ௰ங
கள் இப்படிச்சபதத்தினாலே கட்டுப்பாடுசெய்
துகொண்டார்கள்.—அவர்கள், பிரதான ஆசாரி ௰ச
யரிடத்திலும் முதியோரிடத்திலும் போய், நாங்
கள் பவுலைக்கொலைசெய்யுமளவும் ஒன்றையும்
புசிப்பதில்லையென்று திடமாய்ச் சபதம்பண்
ணிக்கொண்டோம்.—ஆதலால் நீங்களும் மகா ௰ரு
சங்கத்தாருடன் அவனுடையகாரியத்தை நுட்
பமாய் விசாரிக்க விரும்புகிறவர்கள்போலச்சே
னாபதிக்குக்காட்டி, அவர் நாளைக்கு உங்களி
டத்திற்கு அவனைக் கொண்டுவரும்படி கேட்
பீர்களாக: அவன் உங்களுக்குச்சமீபமாய் வரு
முன்னே நாங்கள் அவனைக்கொலைசெய்ய ஆ
யத்தமாயிருப்போமென்றார்கள்.—அந்தச் சருப்ப ௰சு
னையைப் பவுலினுடைய சகோதரியின்புத்திரன்
கேட்டு, கோட்டைக்குட்போய்ப் பவுலுவுக்குச்
சொன்னான்.—அப்பொழுது பவுல்,நூறுபேருக்க ௰எ
திபதிகளில் ஒருவனை அழைத்து,இந்த வாலிபன்
சேனாபதிக்கு ஒருகாரியத்தை அறிவிக்கவிரும்பு
கிறான், ஆதலால்இவனைஅவரிடத்திற்கொண்டு
போகவேண்டுமென்றான்.-அந்தப்படி அவன் இ ௰அ
வனைச் சேனாபதியினிடத்திற்குக் கூட்டிப்போ
ய், காவலில் வைக்கப்பட்டிருக்கிற பவுல், என்
னைஅழைத்து, உமக்கு ஒருகாரியத்தைச்சொல்ல
விரும்புகிற இந்த வாலிபனை உம்மிடத்திற்குக்
கொண்டுபோகும்படி என்னை வேண்டிக்கொ
ண்டானென்று சொல்ல,—சேனாபதி அவனு ௰கூ
டைய கையைப் பிடித்துக்கொண்டு, தனித்த இ
டத்திற்போய், நீ எனக்கென்னசொல்லவிரும்பு
கிறாயென்று கேட்டான்.—அதற்கு அவன், யூ உ௰
தர், பவுலின்காரியத்தை நுட்பமாய் விசாரிக்க
விரும்புகிறவர்கள்போலவந்து, நீர் நாளைக்கு
அவனை மகா சங்கத்தாரிடத்திற்குக் கொண்டுவ
ரும்படி, உம்மைவேண்டிக்கொள்ளத் தீர்மானம்
பண்ணியிருக்கிறார்கள், நீர் அவர்களுக்கு உ
டன்படலாகாது.—அவர்களில் நாற்பது சனங்க உக
ளுக்கு அதிகமானவர்கள் அவனைக்கொலைசெய்
யுமளவும் புசிப்பதும், குடிப்பதுமில்லையென்று

---

(உங. அதி.க.) அதி.உச.௰சு. க.கொரி.ச.ச. உ.கொரி.க.௰உ. உ.கொரி.ச.உ. உ.தீமோ.க.ங.எபி.௰ங.அ. (உ) க.இரா. உஉ.உச. யோவா.௰அ.உஉ. (ங) லேவி.௰கூ.ஙரு. உபா.உரு.க,உ. யோவா.எ.ருக. (ரு) அதி.உச.௰எ. யாத்.உஉ.உஅ. பிர.௰.உ௰. உ.பேதுரு.உ.உ௰. யூதா.அ. (சு) அதி.உசு.ரு. பிலி.ங.ரு. அதி.உச.௰ரு.உ௰. (அ) மத்.உஉ.உங. (கூ) அதி. உரு.உரு. அதி.உஉ.எ,௰எ,௰அ. அதி.ரு.ஙகூ. (௰க) அதி.௰அ.கூ. (௰உ) வச.உக,ங௰. அதி.உரு.ங. (உ௰) வச.௰உ.

சபதம்பண்ணிக்கொண்டு, அவனுக்காக ஒளித்தி
ருந்து, இப்பொழுது உம்முடையவாக்குத்தத்தத்
திற்குக் காத்துக்கொண்டு ஆயத்தமாயிருக்கிறார்
௨௨ களென்றான்.—அப்பொழுது சேனாபதி, நீ இ
வைகளை எனக்குத் தெரிவித்ததை ஒருவருக்குஞ்
சொல்லாதிருவென்று கட்டளையிட்டு, வாலிப
௨௩ னை அனுப்பினான்.—அதன்பின்பு அவன் நூறு
பேருக்கதிபதிகள் இருவரை அழைத்து, சேசாரி
யாவுக்குப் போவதற்காக இருநூறு போர்ச்சேவ
கரையும், குதிரைவீரர் எழுபதுபேரையும், இரு
நூறு வில்வீரரையும், இராத்திரியின் மூன்றும
ணிநேரத்திற்கு ஆயத்தப்படுத்துங்களென்றும்,—
௨௪ பவுலை ஏற்றி, பெலிக்குஸ் அதிபதியினிடத்திற்
கு நிருவிக்கினமாய்க் கொண்டுபோகும்படி வா
கனங்களை ஆயத்தப்படுத்துங்களென்றுஞ்சொன்
௨௫ னதுமன்றி,—ஒருநிருபத்தில், மகா கனம்பொ
௨௬ ருந்திய பெலிக்குஸ் என்னும் அதிபதிக்கு,—கி
லௌதிய இலுசியாசௌக்கியமுண்டாக வாழ்த்
௨௭ துதல்சொல்லி,—இந்தமனுஷனை யூதர் பிடித்துக்
கொலை செய்யப்போகிறசமயத்தில், இவன் உ
ரோமனென்றறிந்து, நான் போர்ச்சேவகருட
௨௮ னே கூடப்போய், இவனைவிடுவித்தேன்.—அ
வர்கள் இவன்மேற் சார்த்தின குற்றத்தை நான்
அறியவிரும்பி, இவனை அவர்களுடைய மகா
௨௯ சங்கத்திற்குக் கொண்டுபோனேன்.—இவன் பி
ராணதண்டனைக்காயினும், விலங்கிற்காயினுந்
தகுந்த ஒரு குற்றமுமில்லாதவனென்றும், அ
வர்களுடைய வேதத்திற்கேற்ற தருக்கங்களைக்
குறித்துக் குற்றஞ் சார்த்தப்பட்டவனென்றும் எ
௩௰ னக்குத்தெரியவந்தது.-யூதர் இந்த மனுஷனுக்கு
விரோதமாய்த் துராலோசனைசெய்கிறார்களென்
பதை நான் அறிந்தபொழுது, உடனே நான்
இவனை உம்மிடத்திற்கனுப்பி, குற்றஞ்சார்த்து
கிறவர்கள் இவனுக்கு விரோதமாய்ச்சொல்லு
கிற காரியங்களை உமக்குமுன்பாகச்சொல்லும்
படி அவர்களுக்குக்கட்டளையிட்டேன். உமக்கு
௩௧ வாழ்வுண்டாவதாகவென்றெழுதினான்.-போர்ச்
சேவகர் தங்களுக்குக் கட்டளையிட்டபடி பவு
லைக்கூட்டிக்கொண்டு, இராத்திரியில் அந்திப்
௩௨ பத்திரி ஊருக்குப்போய்,—மறுநாளிற் குதிரைவீ
ரரை அவனுடனேகூடப்போகவிட்டு, தாங்கள்
௩௩ கோட்டைக்குத்திரும்பினார்கள்.—அவர்கள்சே
சாரியாவிற்சேர்ந்து, நிருபத்தை அதிபதிக்குக்
கொடுத்து,பவுலையும்அவன்முன்பாகநிறுத்தினார்
௩௪ கள்.—அதிபதி நிருபத்தைவாசித்து,நீ எந்தத்தே
சத்தானென்றுகேட்டு,கிலீக்கியாதேசத்தானென்
௩௫ றறிந்து,—உன்மேற் குற்றஞ் சார்த்துகிறவர்கள்
வரும்பொழுது உன்னைக்கேட்டு விசாரிப்பே
னென்றுசொல்லி, ஏரோதின் அரமனையில் அவ
னைக்காவலில்வைக்கும்படி கட்டளையிட்டான்.

## ௨௪. அதிகாரம்.

௧. பவுல் பெலிக்குசுக்கு முன்பாக விசாரிக்கப்படுகையில், அபவாதிகள் சாட்சியிடல்: ௰. பவுலின்உத்தரம்: ௨௨. அவனுக்குத்தீர்ப்புச்செய்யாமல்தாமதித்தல்: ௨௪. பவுல்பெலிக்குசுக்கும், அவனுடையஸ்திரிக்கும் தன் விசுவாச விசேஷத்தைக்காட்டல்.

ஐந்து நாளுக்குப்பின்பு, மகாஆசாரியனாகிய அ ௧
னனியா, முதியோரோடும், வாக்குவல்லவனாகி
ய தருத்துல்லோடும் இறங்கிவந்தான், இவர்கள்
அதிபதியிடத்தில் பவுலுக்குவிரோதமாய்ப்பேசி
னார்கள்.—அவன் அழைக்கப்பட்டுவந்தபொழு ௨
து, தருத்துல்லு அவன்மேற் குற்றஞ் சுமத்தும்
பொருட்டு,—மகா கனம்பொருந்திய பெலிக்கு ௩
சே,உம்மாலே நாங்கள் மிகுந்தசமாதான சௌக்
கியத்தை அனுபவிக்கிறதையும், உம்முடைய இ
ராச்சிய பரிபாலனத்தினால் இத்தேசத்தாருக்கு
யோக்கியமான கிரியைகள் நடக்கிறதையுங் கு
றித்து நாங்கள் எப்பொழுதும், எவ்விடத்திலும்
மிகவும் நன்றிசொல்லி அறிக்கையிடுகிறோம். நா
ன் பலவாக்குகளினாலும்உம்மைவருத்தாதபடி,—
நாங்கள் சுருக்கமாய்ச்சொல்வதை நீர் உமது கா ௪
ருணியத்துடனேகேட்கும்படிவேண்டிக்கொள்
ளுகிறேன்.—பெருவாரிக் காய்ச்சல்போன்ற இந் ௫
த மனுஷன், நசரீய மதத்தாருக்குத்தலைவனும்,
உலகத்திலெங்குமுள்ள எல்லா யூதருக்குள்ளும்
கலகம்எழுப்புகிறவனுமாகக் கண்டறிந்தோம்.—
இவன் எங்கள்தேவாலயத்தைஅசுசிப்படுத்துகிற ௬
தற்குவகைதேடினபொழுது,இவனைப்பிடித்தஎ
ங்கள்வேதநூலின்படி இவனுக்குநியாயத்தீர்ப்புச்
கொடுக்க விரும்பினோம்.—அப்பொழுது சேனாப ௭
தியாகிய இலுசியாவந்து, மிகுந்த பலவந்தமாய்
எங்கள் கைகளினின்று இவனை நீக்கிக்கொண்
டுபோய்,-இவன்மேற் குற்றஞ்சார்த்துகிறவர்கள் ௮
உம்மிடத்தில்வரும்படி கட்டளையிட்டார்: நீர்
இவர்களிடத்தில் விசாரித்தால், நாங்கள் இவன்
மேற் குற்றஞ்சார்த்துகிற காரியங்கள்யாவையும்
அறிந்துகொள்ளலாமென்றான்.—யூதர் அதற்கிசை ௯
ய, இப்படியே இருக்கிறதென்றார்கள்.—பேசும்ப ௰
டி அதிபதி, பவுலுக்குச் சமிக்கைகாட்டினபின்
பு,அவன் உத்தரமாக,அநேகவருஷம் நீர் இத்தே
சத்தாருக்கு நியாயாதிபதியாயிருக்கிறதை நான்
அறிந்து, அதிக சந்தோஷத்தோடே என் பொரு
ட்டாக உத்தரஞ்சொல்லுகிறேன்.—நான் தேவா ௰௧
ராதனைசெய்யும்படி யெருஷலேமுக்குப்போன
துமுதல் இதுவரைக்கும், பன்னிரண்டுநாள்மாத்
திரமாயினவென்று நீர் அறியலாம்.—தேவாலயத் ௰௨
தில் நான் ஒருவனோடாவது தருக்கம்பண்ணின
தையும்,ஆலயங்களிலாயினும்,நகரத்திலாயினுஞ்
சனங்களுக்குள்ளே கலகம்பண்ணினதையும் இ

(௨௭) அதி.௨௧.௩௩. (௨௮) அதி.௨௨.௩௰. (௨௯) அதி.௰௮.௰௫. அதி.௨௬.௩௧.(௩௰)வச.௨௰.அதி.௨௪.௮.(௩௪)அதி.௨௧.௩௯.(௩௫) அதி.௨௪.௧,௰. மத்.௨௭.௨௭.—(௨௪. அதி. ௧.) அதி.௨௧.௨௭. அதி.௨௩.௨,௩௰,௩௫. (௫) லூக்.௨௩.௨ அதி.௬.௰௩. ௧.பேதுரு.௨.௰௨,௰௫.(௬)அதி.௨௧.௨௮. யோவா.௰௮.௩௧.(௭)அதி.௨௧.௩௩. (௮) அதி.௨௩.௩௰. (௰௪) வச.௰௭. அதி.௨௧.௨௬. அதி.௨௫.௮.

௰௩ வர்கள் காணவில்லை:—இப்பொழுது என்மேற்
சார்த்துகிறகுற்றங்களை மெய்ப்படுத்தவுமாட்டார்
௰௪ கள்.—இவர்கள் கெட்டபிரிவென்று சொல்லுகி
றமார்க்கத்தின்படியே நான், நியாயப்பிரமாணத்
திலும்,தீர்க்கதரிசனபுத்தகங்களிலும்எழுதியிருக்
கிற யாவையும் விசுவாசித்துக்கொண்டு, என்
முன்னோர்களின் தேவனுக்கு ஆராதனைசெய்
௰௫ து,—மரித்தோராகிய நீதிமான்களும், அநீதிமான்
களுந் திரும்பவும் உயிர்த்தெழும்புவார்களென்
று இவர்களும் அங்கிகரிக்கிற நம்பிக்கையைத்
தேவன் மேல் வைக்கிறேனென்பதை உமக்கு
௰௬ அறிக்கையிடுகிறேன்.—அதினால் நான் தேவ
னுக்கும் மனுஷருக்கும் முன்பாகக்குற்றமற்ற
மனச்சாட்சியை எப்பொழுதுங் காத்துக்கொள்
௰௭ ளும்படி பிரயத்தினம்பண்ணுகிறேன்.—அநேக
வருஷங்கள் சென்றபின்பு நான் என் தேசத்தா
ருக்குத் தருமப்பொருளைக் கொண்டுவரவும், கா
௰௮ ணிக்கைகளைச்செலுத்தவும் வந்தேன்.—அப்பொ
ழுது கூட்டமுங் கலகமுமில்லாமல் நான் தே
வாலயத்திற் சுத்தம்பண்ணியிருக்கிறவனாக, ஆ
சியாதேசத்தாராகிய சில யூதர் என்னைக்கண்டார்
௰௯ கள்.—அவர்களுக்கு என்மேல் விரோதமானகா
ரியமுண்டானால் அவர்கள் உமக்கு முன்பாக
௨௰ இங்கேவந்து குற்றஞ்சார்த்தவேண்டும்.—அவர்
களுக்குள்ளே நான் நின்றபொழுது, மரித்தோர்
உயிர்த்தெழுந்திருப்பார்களென்பதைக் குறித்தே
நான் இன்றைக்கு உங்களால் நியாயத்தீர்ப்ப
டையும்படி நிற்கிறேனென்று சத்தமிட்டு நான்
௨௧ சொல்லிய இந்த ஒருவாக்கேயன்றி,—நான் மகா
சங்கத்தாருக்குமுன்பாக நின்றபொழுது அவர்
கள் வேறேதாகிலும் ஒரு குற்றத்தை என்னிடத்
திற் கண்டார்களேயாகில், அதை இவர்களுஞ்
௨௨ சொல்லலாமே என்றான்.—பெலிக்குஸ் அதைக்
கேட்டு, இந்தமார்க்கத்தின் விருத்தாந்தத்தை வி
சேஷமாய்அறிந்து,சேனாபதியாகிய இலுசீயா வ
ரும்பொழுது நான் உங்களுடைய காரியத்தைத்
திட்டமாய் விசாரித்துக்கொள்ளுவேனென்று
௨௩ சொல்லி அவர்களை அனுப்பினான்.—பின்பு பவு
லைக்கண்டிப்பில்லாமற் காவல் செய்யவும், அவ
னுடைய பந்து சனங்களில் எவனையும் அவனி
டத்திற்போய்ச் சேவிக்கிறதற்குத் தடைபண்ணா
திருக்கவும் நூறுபேருக்கதிபதிக்குக் கட்டளையி
௨௪ ட்டான்.—சிலநாளுக்குப்பின்பு பெலிக்குஸ் யூ
த ஸ்திரியாகிய தன் மனைவி துருசில்லாளுடன்
வந்து, பவுலை அழைப்பித்து, கிறிஸ்துவைப்
பற்றும் விசுவாசத்தைக்குறித்து அவன்சொல்லக்
௨௫ கேட்டான்.—அவன் நீதியையும், இச்சை அடக்
கத்தையும்,பின்வரும் நியாயத்தீர்ப்பையுங்குறித்
துநியாயமெடுத்துப்பேசுகையில்,பெலிக்குஸ் ப
யமடைந்து, இப்பொழுது நீ போ; எனக்குச்சா
வகாசமானபொழுது உன்னை அழைப்பிப்பே
னென்றான்.—அவன், விடுதலைபண்ணும்படி ப ௨௬
வுல் தனக்குப்பணங்கொடுப்பானென்று நம்பியி
ருந்தான்: அதினிமித்தமே அவன் பலமுறை அ
வனை அழைப்பித்து, அவனுடன் பேசினான்.—இ ௨௭
ரண்டுவருஷஞ் சென்றபொழுது, பெலிக்குசுக்
குப்பிரதியாகப்பொர்க்கியுபெஸ்துவந்தான்:அப்
பொழுது பெலிக்குஸ் யூதருக்குச் சந்தோஷஞ்
செய்யவிரும்பி, பவுலைக் காவலில்வைத்தபடி
யே விட்டுப்போனான்.

## ௨௫. அதிகாரம்.

௧. பெலிக்குசுக்குப் பிரதியாகப்பெஸ்து அதிபதி யானபின்பு, பவுல் திரும்பவும் விசாரிக்கப்பட‌ல்: ௰௩. அகிரிப்பா இராசாவிடத்தில் பவுலின் விருத்தாந்தம் பெஸ்துவினால் அறிவிக்கப்படல்: ௨௩. அகிரிப்பா பெஸ்து இவர்களால் பவுல் திரும்பவும் விசாரிக்கப்படல்: அவனைக் குறித்துப் பெஸ்துத் தன் எண்ணத்தை வெளிப்படுத்தல்.

பெஸ்து ஆதிபத்தியத்திற்கு வந்து மூன்றுநாட் ௧
சென்றபின்பு, சேசாரியாவினின்று யெருஷ
லேமுக்குப்போனான்.—அப்பொழுது மகா ஆ ௨
சாரியனும், யூதரில் பிரதானசனங்களும் பவுலுக்
கு விரோதமாய் அவனிடத்தில் முறையிட்டார்
கள்.—வழியில் அவனைக்கொலைசெய்ய அபிப் ௩
பிராயங்கொண்டு, தங்கள்மேல் தயைசெய்து, அ
வனை யெருஷலேமுக்கு அழைப்பிக்கவேண்டு
மென்று வேண்டிக்கொண்டார்கள்.—அதற்குப் ௪
பெஸ்து, பவுல் சேசாரியாவிலே காவலில்வைக்
கப்பட்டிருக்கிறானே, நானுஞ் சீக்கிரமாக அங்
கேபோகிறேன்.-ஆதலால்உங்களில் திராணியுள் ௫
ளவர்கள்கூடவந்து,அந்தமனுஷனிடத்திற்குற்ற
முண்டானால் அதை அவன்மேற் சார்த்துவார்க
ளாகவென்றான்.—அவன் பத்தெட்டுநாள் அவர் ௬
களிடத்தில் தாமதித்து, பின் சேசாரியாவுக்கு
ப்போய், மற்றநாளில் நியாயாசனத்தில் வீற்றி
ருந்து, பவுலைக் கொண்டுவரச்சொன்னான்.—அ ௭
வன் வந்தபொழுது யெருஷலேமிலிருந்து வந்
த யூதர் சூழநின்று, அநேகங் கொடியகுற்றங்க
ளைப் பவுலின்மேற் சார்த்தியும், அவைகளைமெய்
ப்படுத்தவில்லை.—பின்பு உத்தரமாகப் பவுல், ௮
நான் யூதருடைய நியாயப்பிரமாணத்திற்காகி
லும்,தேவாலயத்திற்காகிலும், கைசருக்காகிலும்
ஒருகுற்றமுஞ் செய்யவில்லையென்றான்.—ஆயி ௯
னும் பெஸ்து யூதரைச் சந்தோஷப்படுத்த விரும்
பிப் பவுலுடனே, நீ யெருஷலேமுக்குப்போய்,
அங்கே எனக்குமுன் இவைகளைக்குறித்து நி
யாயம் விசாரிக்கப்பட விரும்புகிறாயாவென்று
கேட்க,—பவுல், நான் நியாயத்தீர்ப்பு அடைய ௰
வேண்டி,கைசருடைய நியாயாசனத்திற்குமுன்

(௰௪) அதி.௯.௨. ௨.தீமோ.௧.௩. அதி.௨௬.௨௨. (௰௫) அதி.௨௩.௬. தானி.௰௨.௨. யோவா.௫.௨௮,௨௯. (௰௬) அதி. ௨௩.௧. (௰௭) அதி.௰௧.௨௯,௩௰. ரோ.௰௫.௨௫. ௨.கொரி.௮.௪. கலா.௨.௰. (௰௮) அதி.௨௧.௨௬,௨௭. (௰௯) அதி. ௨௩.௩௰.(௨௰)அதி.௨௩.௬. (௨௨) வச.௭.(௨௩)அதி.௨௭.௩. (௨௬) யாத்.௨௩.௮.(௨௭)யாத்.௨௩.௨.—(௨௫. அதி. ௨.) அதி.௨௪.௧. வச.௰௫. (௩) அதி.௨௩.௰௨,௰௫. (௫) அதி.௰௮.௰௪. வச.௰௮. (௭) மாற்.௰௫.௩. லூக்.௨௩.௨,௰. அதி. ௨௪.௫,௰௩. (௮) அதி.௬.௰௩. (௯) அதி.௨௪.௨௭. வச.௨௰.

பாக நிற்கிறேன்: யூதருக்கு நான் ஒரு அநியாய
முஞ் செய்யவில்லை, அது உமக்கு நன்றாய்த்தெ
௰௧ ரியும்.—நான் அநியாயமுள்ளவனாயிருந்து மர
ணத்திற்குப் பாத்திரமானதைச் செய்தேனாகில்,
நான் மரிக்க மறுக்கமாட்டேன்: இவர்கள் என்
மேற் சார்த்துகிறவைகளெல்லாம் வீணாயிருந்தா
லோ, இவர்களிடத்தில் என்னை ஒப்பிப்பதற்
கு அதிகாரம் ஒருவருக்குமில்லை. கைசருக்கு
௰௨ நான் அபயமிடுகிறேனென்றான்.—அப்பொழு
து பெஸ்து ஆலோசனைக்காரருடனே பேசிக்
கொண்டு, நீ கைசருக்கு அபயமிட்டாய்; கைச
ரிடத்திற்குப் போவாயென்று உத்தரஞ்சொன்
௰௩ னான்.—சிலநாட்சென்றபின்பு அகிரிப்பா இரா
சாவும், பேர்னிக்கேயாளும் பெஸ்துவைச் சந்
௰௪ திக்கும்படி சேசாரியாவுக்கு வந்தார்கள்.—அங்
கே அவர்கள் அநேகநாள் தங்கினபின்பு, பெஸ்
து பவுலின் சங்கதியை இராசாவுக்கு விவரித்து,
பெலிக்குசென்பவராற் காவலில்வைத்துவிடப்
௰௫ பட்ட ஒரு மனுஷனிருக்கிறான்.-நான் யெரூஷ
லேமில் இருந்தபொழுது பிரதானஆசாரியரும்,
யூதரின் முதியோரும் அவனுக்கு விரோதமாய்ப்
பிராதுபண்ணி, அவனுக்குத்தண்டனைத்தீர்ப்புச்
௰௬ செய்யக்கேட்டுக்கொண்டார்கள்.–நான் அவர்க
ளுக்குத்தரமாக, குற்றஞ்சார்த்தப்பட்டவன் தன்
மேற் குற்றஞ் சார்த்துகிறவர்களுக்கு முன்பாக
நின்று, அவர்கள் சார்த்தினகுற்றத்தைக்குறித்துத்
தனக்காகப் பிரதியுத்தரஞ்சொல்லுகிறதற்குஅவ
ன் இடம் பெறுவதற்குமுன்னே அவனைப் பிரா
ணநாசத்திற்கு ஒப்பிப்பதுஉரோமருக்குமுறைய
௰௭ ல்லவென்றேன்.-அந்தப்படி அவர்கள்இங்கேகூ
டிவந்தபொழுது, நான் சிறிதுந் தாமதியாமல் ம
றுநாளில் நியாயாசனத்திலிருந்து, அந்த மனுஷ
௰௮ னைக் கொண்டுவரச்சொன்னேன்.—குற்றஞ்சா
ர்த்தினவர்கள் வந்துநின்று, நான் நினைத்திருந்த
குற்றங்களில் ஒன்றையும் அவன்மேல் எற்படுத்
௰௯ தவில்லை.—ஆயினும் தங்கள் மதத்திற்கும்,மரித்த
யேசுவென்னும் ஒருவன் உயிரோடிருக்கிறா
னென்று பவுல் சொன்னதற்குமேற்ற சிற்சில
தருக்கங்களை அவனுக்குவிரோதமாகச் சொன்
௨௰ னார்கள்.—அப்படிப்பட்டவைகளைக்குறித்து எ
னக்குச் சமுசயமுண்டானபடியால்,நீ யெரூஷ
லேமுக்குப்போய், அங்கே இவைகளைக்குறித்து
நியாயம் விசாரிக்கப்பட விரும்புகிறாயாவென்
௨௧ றுகேட்டேன்.—அதற்குப் பவுல், தான்மகாரா
சாவுக்குமுன்பாக விசாரிக்கப்படுமளவும் நிறு
த்திவைக்கப்படவேண்டுமென்று அபயமிட்ட
பொழுது, நான் அவனைக் கைசரிடத்திற்கு அ
னுப்பும் வரைக்குங் காவல்செய்யும்படி கட்
௨௨ டளையிட்டேனென்றான்.-அப்பொழுது அகிரிப்
பா பெஸ்துவுடன், நான் அந்தமனுஷனைக்கேட்
க விரும்புகிறேனென்றுசொல்ல,இவன், நாளைக்
௨௩ கு நீர்அவனைக்கேட்கலாமென்றான்.-மறுநாளில்
அகிரிப்பாவும், பேர்னிக்கேயாளும் மிகுந்த ஆ
டம்பரத்தோடேவந்து, சேனாபதிகளோடும், நக
ரத்தின் பிரதான சனங்களோடும் நியாயஸ்தலத்
திற் பிரவேசித்தார்கள், உடனே பெஸ்துவுடை
ய கட்டளையினால் பவுல் கொண்டுவரப்பட்டா
ன்.–பெஸ்து, அகிரிப்பா இராசாவே, எங்களோ ௨௪
டே இவ்விடத்திலிருக்கிற சனங்களே, நீங்கள்
காண்கிற இந்தமனுஷனைக்குறித்து யூதராகிய ச
னத்திரளெல்லாம் யெரூஷலேமிலும், இவ்வி
டத்திலும் என்னைவருந்திக்கேட்டுக்கொண்டார்
கள், இவன் இனி உயிரோடிருக்கத்தகாதென்று
சொல்லிச்சத்தமிட்டார்கள்.–நான், இவன் பிரா ௨௫
ணதண்டனைக்கேற்றதொன்றையுஞ் செய்யவில்
லையென்று அறிந்ததினாலும், இவன் மகாராசா
வுக்கு அபயமிட்டபடியினாலும் இவனை அனுப்
பத்தீர்மானம் பண்ணினேன்.—இவனைக்குறித் ௨௬
து ஆண்டவனுக்கு எழுதுகிறதற்கு நிச்சயப்பட்
டகாரியம் ஒன்றையுங் காணவில்லை. காவலுக்
கு உட்பட்ட ஒருவன்பேரிலுள்ள குற்றத்தைக்
காட்டாமல், அவனை அனுப்புகிறது புத்தியீன
மானகாரியமென்று எனக்குத் தோன்றினபடி
யினால்,—இவனை விசாரித்துப்பார்த்த பின்பு, ௨௭
எழுதத்தக்க விசேஷம் எனக்குண்டாகும்படி,
இவனை உங்கள்முன்பாகவும், விசேஷமாய் அ
கிரிப்பா இராசாவே, உமக்குமுன்பாகவுங் கொ
ண்டுவந்தேனென்றான்.

## ௨௬. அதிகாரம்.

௧. அகிரிப்பாவிடத்தில் பவுல்சொல்லியஉத்தரம்:
௨௪. பெஸ்து அவனை மதியீனனென்று சொல்
லப் பவுல் அவனுக்குச்சொல்லியஉத்தரம். பெ
ஸ்து பவுல் குற்றமற்றவனென்று சொல்லி இரா
சாவிடத்திற் போகும்படி உத்தரவுகொடுத்தல்.

பின்பு அகிரிப்பா பவுலைநோக்கி, நீ உன்பொ ௧
ருட்டாகப்பேசும்படி உனக்கு அனுமதிகிடைத்
ததென்றுசொல்ல, பவுல் கையைநீட்டி, தன்பொ
ருட்டாக உத்தரஞ்சொல்லத் தொடங்கினான்.—
அகிரிப்பா இராசாவே, யூதர் என்மேற்சார்த்து ௨
கிற சகலகுற்றங்களைக்குறித்தும் நான் இன்றைக்
கு உமக்குமுன்பாகப்பிரதியுத்தரஞ்சொல்ல வந்
ததினால், என்னைவாழ்வுடையவனென்று எண்
ணுகிறேன்.—யூதருக்குள் உண்டான சகலமு ௩
றைமைகளையுந் தருக்கங்களையும் நீர் நுட்பமாய்
அறிந்திருக்கிறீர்: ஆதலால் நீர் பொறுமையுடன்
எனக்குச்செவிகொடுக்கும்படிவேண்டிக்கொள்
ளுகிறேன்.–நான் வாலிப வயதுமுதல் யெரூஷ ௪
லேமில் என்தேசத்தாருக்குள் இருந்தேன், அந்
தவாலிபவயதுமுதல் நான் நடந்துவந்தவிதமின்
னதென்று யூதர் அனைவருக்குந்தெரியும்.—நம் ௫
முடைய மார்க்கத்தின்படி, மிகவுந் திட்டமா
ன வகுப்புக்கிசைய நான் பரிசேயனாய் நான்
விட்டு வந்தேனென்று முதற்றொடங்கி என்னை
அறிந்திருக்கிறார்கள். அவர்களுக்குச் சாட்சி

(௰௧) வச. ௨௫. அதி. ௰௮. ௰௪. அதி. ௨௬. ௩௨. (௰௪) அதி. ௨௪. ௨௭. (௰௫) வச. ௨, ௩. (௰௬) வச. ௪, ௫. (௰௭) வச. ௬. (௰௯) அதி. ௰௮. ௰௫. (௨௨) அதி. ௯. ௰௫. (௨௪) வச. ௨, ௩, ௭. அதி. ௨௨. ௨௨. (௨௫) அதி. ௨௩. ௯, ௨௯. வச. ௰௧, ௰௨.—
(௨௬. அதி. ௫.) அதி. ௨௨. ௩. பிலி. ௩. ௫.

௬ சொல்ல மனமிருந்தாற்சொல்லலாம்.—அகிரிப்
பா இராசாவே, தேவன் நம்முடைய பிதாக்க
ளுக்கு அருளிச்செய்த வாக்குத்தத்தத்திற்கு ஏற்
ற நம்பிக்கையினிமித்தம் நான் இப்பொழுது நி
௭ யாயத்தீர்ப்படையும்படி நிற்கிறேன்.—இரவும்
பகலும் இடைவிடாமல் தேவனைச்சேவித்து
வருகிற நம்முடைய பன்னிரண்டு கோத்திரத்
தாரும் அந்த வாக்குத்தத்தம் நிறைவேறு
மென்று நம்பியிருக்கிறார்கள்; அந்தநம்பிக்கையி
னிமித்தமே யூதர் என்மேற் குற்றஞ் சார்த்துகி
௮ றார்கள்.—தேவன் மரித்தோரை உயிர்த்தெழும்
பப்பண்ணுகிறது நம்பப்படாததென்று நீங்கள்
௯ எண்ணுகிறதெப்படி.—முன்னே நானும், நாச
ரேத்தூராகிய யேசுவின் நாமத்திற்கு விரோ
தமான அநேககாரியங்களை நடபிக்கவேண்டுமெ
௰ ன்றுநினைத்தேன்.-அப்படியேயெருஷலேமிலே
செய்தேன்: பிரதான ஆசாரியரிடத்தில் அதிகா
ரம்பெற்று, பரிசுத்தவான்களில் அநேகரைக்கா
வல்வீடுகளில் அடைத்துவைத்தேன்; அவர்கள்
கொலைசெய்யப்படுகையில் நானும் உடன்பட்
௰௧ டிருந்தேன்.—அநேகமுறை நான் ஆலயங்களி
லெங்கும்அவர்களைத்தண்டித்து, தூஷணிக்கும்ப
டி அவர்களைப் பலவந்தஞ்செய்தேன்; மிகவும்
மூர்க்கவெறியாய்ப் புறத்தேசத்தின் பட்டணங்
கள்வரைக்கும் அவர்களைத் துன்பப்படுத்தி
௰௨ னேன்.-இப்படிச்செய்துவருகையில், நான் பிர
தான ஆசாரியரிடத்திற்பெற்ற அதிகாரத்தோடும்,
நிருபத்தோடும் தமஸ்குவுக்குப் போனபொழு
௰௩ து,-இராசாவே, வழியிலேமத்தியானத்தில், சூரி
யப்பிரகாசத்திலும் அதிகமான ஒளி வானத்தி
லிருந்து என்னையும் என்னுடனே பிரயாணப்
பட்டவர்களையுஞ்சூழ்ந்து பிரகாசிப்பதை நான்
௰௪ கண்டேன்.—நாங்களெல்லாருந் தரையிலே வி
ழுந்தோம், அப்பொழுது ஷவுலே, ஷவுலே, ஏன்
நீ என்னைத்துன்பப்படுத்துகிறாய்; கூருக்கெதிரா
க உதைக்கிறது உனக்குக்கடினமாமென்று எபி
ரேயுபாஷையில் என்னுடனே சொல்லிய சத்
௰௫ தத்தைக் கேட்டேன்.—நான், கர்த்தாவே,
நீர் ஆரென்றேன்; அதற்கு அவர், நீதுன்பப்படுத்
௰௬ துகிற யேசுவே நான்.—நீ எழுந்து, காலூன்றி
நில்: நான் உன்னை ஊழியக்காரனாகவும், நீ கண்
டவைகளையும் நான் உனக்கு வெளிப்படுத்து
பவைகளையுங்குறித்துச் சாட்சியாகவும்ஏற்படுத்
௰௭ தும்படி உனக்குத் தரிசனையானேன்.—நான்
உன் தேசத்தாரின்கைக்கும், அந்நிய தேசத்தா
௰௮ ரின் கைக்கும் உன்னைத் தப்புவிப்பேன்.—என்
னைப்பற்றும் விசுவாசத்தினாலே பாவமன்னிப்
பையும், பரிசுத்தவான்களுக்குள்ளே சுதந்தரத்
தையும் அவர்கள் பெற்றுக்கொள்ளும்படி அவர்
களுடைய கண்களைத் திறக்கவும், அவர்களை இ
ருளினின்று ஒளியினிடத்திற்கும், சாத்தானின்
அதிகாரத்தினின்று தேவனிடத்திற்குந் தி
ருப்பவும் உன்னை அவர்களிடத்தில் அனுப்புகி
றேனென்றார்.—அகிரிப்பா இராசாவே, நான் ௰௯
அந்தப்பரமதரிசனைக்குக் கீழ்ப்படாதவனாயிரா
மல்,-முன்பு தமஸ்குவிலும், யெருஷலேமிலும், ௨௰
யூதேயாதேசத்தின் எல்லைகளிலெங்குமுள்ளவர்
களிடத்திலும், பின்பு அந்நிய தேசத்தாரிடத்தி
லும்,அவர்கள்குணப்பட்டு, தேவனிடத்திற்
குத்திரும்பி, மனந்திரும்புதலுக்கேற்ற கிரியை
களைச் செய்யவேண்டுமென்று பிரசித்தப்படுத்தி
னேன்.-இவைகளினிமித்தமே யூதர் தேவாலயத் ௨௧
தில்என்னைப்பிடித்துக்கொலைசெய்யும்படிவகை
தேடினார்கள்.-ஆயினும் நான் தேவஅனுக்கிரகத் ௨௨
தைப்பெற்று, கிறிஸ்து மரணவேதனையடைந்
து,மரணத்தினின்றுஉயிர்த்தெழுந்தவர்களில் மு
தன்மையானவராயிருந்து, சுயதேசத்தாருக்கும்
அந்நியதேசத்தாருக்கும்ஒளியைப்பிரசித்தம்பண்
ணுவாரென்று,-தீர்க்கதரிசிகளும், மோசேயும், ௨௩
பின்வருமென்றுசொல்லிய காரியங்களையன்றி,
இந்நாள்வரைக்குஞ்சிறியோருக்கும், பெரியோ
ருக்கும்வேறொன்றைநான்சொல்லிச்சாட்சியிடு
கிறதில்லையென்றான்.-இவ்விதமாய்ப்பவுல் தன் ௨௪
பொருட்டு உத்தரஞ்சொன்னபொழுது, பெஸ்
து மிகுந்தசத்தத்துடனே, பவுலே, நீ பிதற்றுகி
றாய்; அதிக கல்வி உன்னைப் பைத்தியக்காரனாக்
குகின்றதென்று சொல்ல,—அவன், மகா கனம் ௨௫
பொருந்திய பெஸ்துவே, நான்பிதற்றுகிறவனல்
ல, சத்தியமும், நற்புத்தியுமான வாக்குகளை வச
னிக்கிறேன்.—இராசா இந்த விருத்தாந்தத்தைஅ ௨௬
றிந்திருக்கிறார், இவை ஒரு மூலையிலே நடந்த
காரியங்களல்ல: ஆதலால் இவைகளில் ஒன்றும்
அவருக்கு மறைவாயிராதென்று நிச்சயித்து, நா
ன் தைரியமாய் அவருக்கு முன்பாகப் பேசுகி
றேன்.—அகிரிப்பா இராசாவே, தீர்க்கதரிசிகளை ௨௭
விசுவாசிக்கிறீரோ; விசுவாசிக்கிறீரென்றறிந்தி
ருக்கிறேனென்றான்.—அப்பொழுது அகிரிப்பா ௨௮
பவுலைநோக்கி, நானும் கிறிஸ்தவனாவதற்குக்
கொஞ்சங்குறைய நீ என்னை உடன்படுத்தினா
யென்றான்.—அதற்குப் பவுல், நீர்மாத்திரமல்ல, ௨௯
இன்று என்னைக்கேட்கிறயாவருங் கொஞ்சங்கு
றையவல்ல,இந்தச் சங்கிலிகள்தவிர,முழுவதும்
என்னைப்போலாகும்படி தேவனிடத்தில்
வேண்டுதல் பண்ணுகிறேனென்றான்.—இவை ௩௰

(௬)அதி.௨௩.௬. ஆதி.௩.௰௫. ஆதி.௨௨.௰௮. ௨.சாமு.௭.௰௧. ஏசா.௪.௨. ஏசா.௪௰.௰. எரே.௨௩.௫. எசேக்.௩௪.௨௩. தானி.௯.௨௪. மீகா.௭.௨௰. ரோ.௰௫.௮. தீத்.௨.௰௩.(௭)யாக்.௧.௧. லூக்.௨.௩௭. ௧.தெச.௩.௰. ௧.தீமோ.௫.௫. பிலி. ௩.௰௧.(௯)யோவா.௰௬.௨. ௧.தீமோ.௧.௰௩. (௰) அதி.௮.௩. கலா.௧.௰௩. அதி.௯.௰௪,௨௧. (௰௧) அதி.௨௨.௰௯. (௰௨) அதி.௯.௩. (௰௬) அதி.௨௨.௰௫. (௰௮) ஏசா.௩௫.௫. லூக்.௧.௭௭. யோவா.௮.௰௨. ௨.கொரி.௪.௪. எபே.௧.௰௮. ௧.தெச.௫.௫. ௨.கொரி.௬.௰௪. எபே.௪.௰௮. கொலோ.௧.௰௩. ௧.பேதுரு.௨.௯,௨௫. லூக்.௧.௭௯. எபே.௧.௰௨. கொலோ.௧.௰௨. அதி.௨௰.௩௨. அதி.௨௨.௨௧. (௨௰) அதி.௯.௨௰,௨௨,௨௯. மத்.௩.௮. அதி.௨௧.௩௰,௩௧.(௨௨)லூக். ௨௪.௨௭,௪௪. ௧.கொரி ௰௫.௨௰. கொலோ.௧.௰௮. வெளி.௧.௫. லூக்.௨.௩௨. (௨௩) லூக்.௨௪.௨௭,௪௪. அதி.௨௪. ௰௪. ரோ.௩.௨௨. யோவா.௫.௪௬. (௨௪) ௨.இரா.௯.௰௧. யோவா.௰.௨௰. ௧.கொரி.௧.௨௩. (௨௯) ௧.கொரி.௭.௭.

களைஅவன் சொன்னபின்பு இராசாவும்,அதிபதி
யும், பேர்னிக்கேயாளும், அவர்களுடனிருந்த
௩௧ வர்களும் எழுந்துபோகையில்,-இந்த மனுஷன்
மரணத்திற்காகிலும், சங்கிலிகளுக்காகிலும் பாத்
திரமானது ஒன்றையுஞ் செய்யவில்லையென்று
ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.—
௩௨ அப்பொழுது அகிரிப்பா பெஸ்துவுடனே, இ
வன் கைசருக்கு அபயமிடாதிருந்தானானால்இவ
னை விடுதலைபண்ணலாகுமென்றான்.

## ௨௭. அதிகாரம்.

௧. பவுல் உரோமாநகரத்திற்குப்போகப் புறப்படல்: ௭. சமுத்திரத்திற் பெருங்காற்றுண்டாதல்: ௨௧. பவுல், கப்பற்காரர் இன்னதுசெய்யவேண்டுமென்று அவர்களுக்குணர்த்தல்: ௩௯. கப்பல் சேதமானபொழுது சனங்கள் கரைப்படல்.

கப்பலேறி நாங்கள் இத்தாலிதேசத்திற்குப்போ
கத்தீர்மானித்தபொழுது, அவர்கள், மகாராசாவி
ன்சேனையில் நூறுபேருக்கதிபதியாகிய இயூலிய
சென்னும் பேர்கொண்டவன் வசத்திற் பவுலை
யும், காவலில்வைக்கப்பட்டிருந்த வேறுசிலரை
௨ யும் ஒப்பித்தார்கள்.-நாங்கள் அதிரமித்தியவின்
கப்பலேறி, ஆசியாதேசத்துக்கரையோரத்தின்வ
ழியாய்ப்போகநினைத்துப் புறப்பட்டோம்; மக்
கேதோனியா தேசத்திலுள்ள தெசலோனிக்கா
பட்டணத்தானாகிய அரிஸ்தர்கு என்னும் ஒரு
௩ வன் எங்களுடன் இருந்தான்.—மறு நாளி
லே சீதோன் துறையைச்சேர்ந்தோம். இயூலிய
சென்பவன் பவுலைப் பட்சமாய்நடத்தி, அவன்
தன் சிநேகிதரிடத்திற்குப்போய்த் தன்னை ஆற்
௪ றும்படி உத்தரவுகொடுத்தான்.—அவ்விடம்விட்
டு நாங்கள் புறப்பட்டு, எதிர்காற்றாயிருந்தபடி
௫ யால் குப்புருதீவுக்கருகாகச்சென்று,—கிலிக்கி
யா, பம்பிலியா தேசங்களின் கடலின்வழியா
கப்போய், உலுக்கியாதேசத்தின் மூராவிற்சேர்ந்
௬ தோம்.-அங்கே இத்தாலிக்குப்போக ஆயத்தமா
யிருந்த அலேக்குசந்திரியாக்கப்பலை, நூறுபே
ருக்கதிபதிகண்டு, எங்களை அதில் ஏற்றினான்.—
௭ காற்று எங்களுக்கு ஒவ்வாததாயிருந்தபடியால்,
நாங்கள் அநேகநாளாய் மெல்லச்சென்று, வருத்
தத்தோடே கினீதுக்கெதிரே ஓடி, கிரேத்தே
தீவின் கீழ்ப்புறமான சலுமோனுக்கு நே
௮ ராய்ப்போய்,—பிரயாசத்தோடே அதைக்கடந்
து, நல்ல குடாக்கடலென்னும் ஒரு இடத்திலே
சேர்ந்தோம்; இலசேயபட்டினம் அதற்குச்சமீப
௯ மாயிருந்தது.-மிகுந்த காலஞ்சென்று, உபவாச
உற்சவநாளுங் கழிந்துபோனபடியினால்,இனித்
துணிந்தோடுவது மோசமாயிருக்கையில், பவுல்
௰ அவர்களைநோக்கி, சனங்களே,-இந்தயாத்திரை,
சரக்குகளுக்கும், கப்பலுக்கும்மாத்திரமல்ல, நம்
முடைய சீவனுக்குங்கூட நஷ்டமும், மிகுந்
தசேதமும் வருவிக்குமென்று காண்கிறேனென்
றுசொல்லி எச்சரித்தான்.—நூறுபேருக்கதிபதி ௰௧
பவுலினாற் சொல்லப்பட்டவைகளிலும், மாலு
மியையும்,கப்பலுக்கெசமானனையும் அதிகமாய்
நம்பினான்.-அல்லாமலும் அந்தத்துறை மழைகா ௰௨
லத்தில் தங்குவதற்கு வசதியில்லாதபடியினால்,
கிரேத்தேதீவிலுள்ள தென்மேற்கேயும்,வடமேற்
கேயும் நோக்குகிற பெனிக்கேயென்னுந்துறை
முகத்திற் சேரக்கூடுமானால்,மழைகாலத்தில் தங்
க அங்கேசேரும்பொருட்டு இவ்விடம் விட்டுப்
புறப்படவேண்டுமென்று அநேகர் ஆலோசனை
சொன்னார்கள்.-மேலுந்தென்றல் மெதுவாய் வீ ௰௩
சினபடியால், அவர்கள் தங்கள் அபிப்பிராயஞ்
சித்தியாகுமென்றெண்ணி, அவ்விடம்விட்டுக்கி
ரேத்தேதீவுக்கருகாய்ப்போனார்கள்.-சிலகாலஞ் ௰௪
சென்றபின்புஉரொகலுதோனென்னுங் கடுங்கா
ற்று அதில்மோதிற்று.-கப்பல்அதில் அகப்பட்டு, ௰௫
காற்றுக்கு எதிரே ஓடமாட்டாததினால் நாங்கள்
கொண்டுபோகப்பட்டோம்.—அப்படிக்கிலோ ௰௬
தியாவென்னும்தீவைக்கடந்து ஓடுகையில், பட
வை வசப்படுத்த, மிகுந்த வருத்தமாயிருந்தது.-
அதை அவர்கள் தூக்கி எடுத்தபின்பு,ஏதுக்களைத் ௰௭
தேடி, கப்பலைச்சுற்றிக்கட்டி,பின்பு சொரிமண
லிலே விழுவோமென்றுபயந்துபாய்களை இறக்கி,
இவ்விதமாய்க்கொண்டு போகப்பட்டார்கள்.—
மேலும்நாங்கள்பெருங்காற்றிலும்மழையிலும்மி ௰௮
கவும் அலைவுண்டபடியால்,மறுநாளிலே சிலபா
ரத்தை அவர்கள்கடலில் எறிந்தார்கள்.-மூன்றாம் ௰௯
நாளிலே கப்பலின் தளவாடங்களை எங்கள் கை
களினால் எடுத்தெறிந்தோம்.-அநேக நாளாய்ச்சூ ௨௰
ரியனும், நட்சத்திரங்களுங் காணப்படவில்லை,
எங்களுக்குப்பெருங்காற்றும் மழையும் எதிரிட்
டதினால், தப்புவோமென்ற நம்பிக்கை எல்லாம்
அற்றுப்போயிற்று.—வெகுநாள் அவர்கள் போ ௨௧
சனம்பண்ணாமலிருந்தபொழுது,பவுல் அவர்கள்
மத்தியில் எழுந்து,சனங்களே,நீங்கள்என்சொல்
லுக்குச்செவிகொடுத்து, கிரேத்தேதீவைவிட்டுப்
புறப்படாமல் இருந்தால் இந்தவருத்தமுஞ்சேத
மும் நேரிடாதே.-ஆகிலும் இப்பொழுது திடன் ௨௨
கொள்ளுங்களென்று உங்களை வேண்டிக்கொள்
ளுகிறேன்: கப்பலுக்குச் சேதமேயன்றி, உங்க
ளில் ஒருவருக்கும் பிராணசேதம் வருவதில்லை.-
நான் ஆதீனமாயிருந்து ஆராதனைசெய்துவருகிற ௨௩
தேவனுடைய தூதன் இன்றிரவில் என்னி
டத்தில்வந்துநின்று, பவுலே, பயப்படாதிரு;
நீ கைசருக்குமுன்பாக நிற்கவேண்டும்.-கேள், ௨௪
உன்னுடன்கூட யாத்திரைபண்ணுகிற யாவருக்
குந் தேவன் உன்னிமித்தந் தயைசெய்தாரென்
றான்.-ஆதலால் சனங்களே, திடன்கொள்ளுங் ௨௫
கள்: எனக்குச்சொல்லப்பட்ட பிரகாரமாகவே
நடக்குமென்று நான் தேவனை நம்புகிறேன்.-
நாம் ஒரு தீவில் விழவேண்டியதாக வருமென் ௨௬
றான்.-பதினாலாம் இராத்திரியானபொழுது,நாங் ௨௭

(௩௧) அதி.௨௩.௯,௨௯. (௩௨) அதி.௨௫.௰௧.—(௨௭. அதி. ௧.) அதி.௨௫.௰௨,௨௫. (௨) அதி.௰௯.௨௯.(௩) அதி.௨௪. ௨௩. (௯) லேவி.௨௩.௨௭,௨௯. (௰௯) யோனா.௧.௫. (௨௩) அதி.௨௩.௰௧. தானி.௬.௰௬. ரோ.௧.௰௨. ௨.தீமோ.௧. ௩. (௨௫) லூக்.௧.௪௫. ரோ.௪.௨௰,௨௧. ௨.தீமோ.௧.௰௨. (௨௬) அதி.௨௮.௧.

கள் அதிரியாக்கடலில்அலைந்துதிரிகையில்,நடுச்
சாமத்திற் கப்பலாட்கள் ஒருகரை சமீபமாயிருக்
௨௮ கிறதென்று நிதானித்தார்கள்.-உடனே அவர்கள்
விழுதுவிழுத்தி இருபதுபாகமென்று கண்டார்
கள்; சற்றப்புறம் போனபொழுது திரும்பவுஞ்
௨௯ சோதித்துப் பதினைந்து பாகமென்று கண்டு,-பா
றையிடங்களில் விழுவோமென்று பயந்து, கப்
பலின் பிற்பக்கத்திலிருந்த நாலு நங்கூரங்களை
விட்டு, விடியற்காலத்தை அபேட்சித்திருந்தார்
௩௰ கள்.—கப்பல்மனுஷர் கப்பலைவிட்டு ஓடிப்போ
க வகைதேடி, தாங்கள் கப்பலின் முன்னணி
யத்திலிருந்து நங்கூரங்களைப் போடுவது போ
லச்சூதுசெய்து, படவைக் கடலில் இறக்குகை
௩௧ யில்,-பவுல்நூறுசேவகருக்கதிபதியையும், போர்
ச்சேவகரையும்நோக்கி, இவர்கள் கப்பலிலிரா
விட்டால் நீங்கள் தப்பிப்போகமாட்டீர்களென்
௩௨ ருன்.—அப்பொழுது போர்ச்சேவகர் ஓடத்தின்
கயிறுகளை அறுத்து, அதைத் தாழவிட்டார்கள்.—
௩௩ பொழுதுவிடிய, எல்லாரும் போசனம்பண்ணு
வதற்குப் பவுல் அவர்களைத்தைரியப்படுத்தி, நீங்
கள் ஒன்றும் புசிக்காமல் பட்டினிகாத்திருந்து,
௩௪ இன்றைக்குப்பதினாலாம்நாளாயிற்றே.-ஆதலால்
போசனம்பண்ணும்படி நான் உங்களை வேண்
டிக்கொள்ளுகிறேன்: நீங்கள் தப்பிப்போவதற்
கு அதுவே உதவியாயிருக்கும்: உங்கள் தலைக
ளிலிருந்து ஒருமயிரும் விழாதென்றுசொல்லி,—
௩௫ அப்பத்தை எடுத்துக்கொண்டு, எல்லாரும் முன்
னிற்கத்தேவனை ஸ்தோத்திரித்து,அதைப்பிட்
௩௬ டுப் புசிக்கத்தொடங்கினான்.—அப்பொழுது மற்
௩௭ றெல்லாருந் திடன்கொண்டு புசித்தார்கள்.—கப்
பலில் இருநூற்றெழுபத்தாறுபேர் இருந்தோம்.—
௩௮ திருத்தியாகப்புசித்தபின்பு அவர்கள் கோதுமை
யைக்கடலில் எறிந்து, கப்பலின் பாரத்தை இ
௩௯ லகுவாக்கினார்கள்.—உதயமானபொழுது, இன்
னதேசமென்றறியாமல் சமமானகரையுள்ள ஒரு
குடாவைப்பார்த்து, அங்கேபோகக்கூடுமானால்
அவ்விடத்திற்குக்கப்பலை ஒட்டவேண்டுமென்
௪௰ றுயோசனையாயிருந்து,—நங்கூரங்களைக் கடலி
லே கிடக்கவிட்டு, சுக்கான் கயிறுகளையுந்தளரச்
செய்து, பாயைக் காற்றுக்கு விரித்துக் கரைக்கு
௪௧ நேராய் ஓடுகையில்,—இரண்டு கடல்கள் சந்திக்
கும் ஒரு இடத்திற்சென்று,கப்பல் பொறுத்தது;
அதின் முற்பக்கம் அசையாமல் நிலையூன்றியிருந்
தது, பிற்பக்கம்அலைகளின் பலத்தினால் உடைந்
௪௨ துபோயிற்று.—காவலிலிருந்தவர்களில் ஒருவ
னும் நீந்தி ஓடிப்போகாதபடி அவர்களைக் கொ
லைசெய்யப் போர்ச்சேவகர் ஆலோசித்தார்கள்.—
௪௩ நூறு சேவகருக்கதிபதியோ பவுலைக் காப்பாற்ற
விரும்பி,அவர்களுடைய ஆலோசனையைத்தடுத்
து, நீந்தத்தக்கவர்கள் முந்திவிழுந்து கரையேற
௪௪ வும்,—மற்றவர்களிற் சிலர் பலகைகளின்மே
லும், சிலர் கப்பல் துண்டுகள் மேலும்போய்க்
கரையேறவுங் கட்டளையிட்டான். இவ்விதமாய்
எல்லாருந் தப்பிக் கரைசேர்ந்தார்கள்.

## ௨௮. அதிகாரம்.

௧. பவுல் முதலானவர்கள் உபதீவிலுள்ள சீரற்றசனங்களால் உபசரிக்கப்படல், பவுல் தன் கையினின்று சருப்பத்தை நீக்கல்: ௭. பவுலினால் புபிலியென்னும் அதிபதி முதலானோர் சொஸ்தமாக்கப்படல்: ௰௧. மற்றக்கப்பலிலேறி உரோமா நகரத்திற்குப் புறப்பட்டுப்போய் வழியிலே சகோதரரைச்சந்தித்தல்: ௰௬. உரோமையிற் சேர்தல்: யூதருடன் பவுல் சம்பாஷித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தல்.

அவர்கள் தப்பிக் கரைசேர்ந்தபின்பு, அந்தத்தீ ௧
வின்பேர் மெலித்தாவென்றறிந்தார்கள.—அந்நி ௨
யராகிய அந்தத்தீவிலுள்ளசனங்கள் எங்களுக்கு
மிகுந்த தயை காண்பித்தார்கள்: அப்பொழுது
பெய்த மழையினிமித்தமும்,குளிரினிமித்தமும்
அவர்கள் நெருப்புமூட்டி, எங்கள் அனைவரை
யும் உபசரித்தார்கள்.—பவுல் சில விறகுகளை ௩
வாரி அந்த நெருப்பின்மேற் போடுகையில்,ஒரு
விரியன் அனலுறைத்துப் புறப்பட்டு, அவனு
டைய கையைப் பற்றிக்கொண்டது.—இந்த ௪
அந்நியர் அந்தச்சருப்பம் அவனுடைய கையி
லே தொங்கக்கண்டபொழுது, இந்த மனுஷன்
கொலைபாதகன், இதற்குச்சமுசயமில்லை,இவன்
சமுத்திரத்திற்குத்தப்பிவந்தும் பழியானது இவ
னைச் சீவிக்கவிடவில்லையென்று தங்களுக்குள்
ளே சொல்லிக்கொண்டார்கள்.—அவன் அந்தச ௫
ருப்பத்தைத் தீயில் உதறி,ஒரு தீங்குமின்றியிருந்
தான்.—அவன்வீக்கங்கொண்டு,சடிதியில் மரித்து ௬
விழுவானென்றுஅவர்கள்பார்த்திருந்தார்கள்:நெ
டுநேரமாக அவர்கள்அப்படிக்காத்திருந்தும் சேத
மெவ்வளவும் அவனுக்கு வராததைக்கண்டபொ
ழுது, அவர்கள் வேறுசிந்தைகொண்டு, இவன்
தேவனென்றார்கள்.—அந்தத்தீவுக்கதிபதியா ௭
கிய புபிலியென்னும் பெயர்கொண்டவனுடை
ய காணிகள் அதற்குச்சமீபமாயிருந்தன; அவன்
எங்களைப் பட்சமாய் ஏற்றுக்கொண்டு, மூன்று
நாள் எங்களைத்தங்கச்செய்தான்.-புபிலியினுடை ௮
ய பிதா சுரத்தோடும், உதிரக்கழிச்சலோடுங் கி
டந்தான்:பவுல் அவன்சமீபத்திற்போய்ப்பிரார்த்
தனைபண்ணி, அவன்மேல் தன்கைகளைவைத்து,
அவனைச்சொஸ்தப்படுத்தினான்.—இப்படிநடந் ௯
தபொழுது தீவிலுள்ள மற்றவியாதிக்காரரும்வந்
துசொஸ்தமாக்கப்பட்டார்கள்.—பின்பு அவர்கள் ௰
எங்களை மிகவுங் கனம்பண்ணினதுமன்றி, நாங்
கள் கப்பல் ஏறினபொழுது எங்களுக்குவேண்
டியவைகளையும் ஏற்றினார்கள்.—மூன்றுமாதஞ் ௰௧
சென்றபின்பு, தீவிலே மழைகாலத்திற்குத்தங்கி
யிருந்த மிதுனமென்னும் அடையாளமுடைய

---

(௩௪)௧.இரா.௧.௫௨.மத்.௰.௩௰.லூக்.௰௨.௭.(௩௫)௧.சாமு.௯.௰௩. மத்.௰௫.௩௬. மாற்.௮.௬. யோவா.௬ ௰௧. ௧.தீமோ.௪.௩,௪.(௩௭)அதி.௨.௪௧. ரோ.௰௩.௧. ௧.பேதுரு.௩.௨௰. (௪௧) ௨.கொரி.௰௧.௨௫.(௪௪)வச.௨௨.—(௨௮. அதி. ௧.) அதி.௨௭.௨௬. (௨) ரோ.௧.௰௪. ௧.கொரி.௰௪.௰௧. கொலோ.௩.௰௧. (௫) மாற்.௰௬.௰௮. லூக்.௰.௰௯. (௬) அதி.௰௪.௰௧. (௮) யாக்.௫.௰௪,௰௫. மாற்.௬.௫. லூக்.௪.௪௰. ௧.கொரி.௰௨.௯.௨௮. (௰) மத்.௰௫.௬. ௧.தீமோ.௫.௰௮.

அலெக்குசந்திரியாவின்கப்பலிலே நாங்கள் ஏறி
௰௨ ப்புறப்பட்டுப்போய்,—சிரக்கூஸ் நகரத்தைச்சே
௰௩ ர்ந்து, அங்கே மூன்றுநாள்தங்கினோம்.—பின்
பு அவ்விடம்விட்டுச் சுற்றி ஓடி, இரேகியுவிற்
சேர்ந்து ஒருநாட்கழித்தபின்பு, தென்றற்காற்று
வீசுகையில் மறுநாளிலே புத்தேயோலிக்குப்
௰௪ போனோம்.—அங்கே சகோதரரைக் கண்டோம்,
அவர்கள் ஏழுநாள் தங்களிடத்திலிருக்கும்படி
எங்களை வேண்டிக்கொண்டார்கள்: இந்தப்பிர
காரமாகநாங்கள்உரோமாநகரிக்குப்போனோம்.—
௰௫ நாங்கள்வந்த செய்தியைக்கேட்டு அவ்விடத்தி
லுள்ள சகோதரரிற் சிலர் புறப்பட்டு, அப்பியு
புரம்வரைக்கும், சிலர் மூன்றுசத்திரம்வரைக்
கும் எங்களுக்கு எதிர்கொண்டுவந்தார்கள்: அ
வர்களைப் பவுல் கண்டு, தேவனைத் துதித்துத்
௰௬ திடன்கொண்டான்.—உரோமையில் நாங்கள்
சேர்ந்தபொழுது, நூறுசேவகருக்கதிபதி தன்கா
வலிலிருந்தவர்களைச் சேனாபதிக்குஒப்பித்தான்:
தன்னைக்காத்திருக்குஞ் சேவகனுடன் தனித்தி
௰௭ ருக்கும்படி பவுலுக்குஉத்தரவுகிடைத்தது.—மூன்
றுநாளைக்குப்பின்பு பவுல் யூதரிற் பிரதானமான
வர்களைக் கூடிவரவழைத்தான்: அவர்கள் கூடி
வந்தபொழுது அவன் அவர்களைநோக்கி, சகோ
தரரே, நம்முடைய சனங்களுக்காயினும், முன்
னோர் முறைமைக்காயினும் விரோதமானதொன்
றையும் நான் செய்யாமலிருந்தும், காவலில்வைக்
கப்பட்டு, யெருஷலேமிலிருந்து உரோமர்கை
௰௮ களில் ஒப்பிக்கப்பட்டேன்.—அவர்கள் என்னை
நியாயம் விசாரித்தபொழுது, மரணத்திற்கேற்ற
ஒரு குற்றமும் என்னிடத்திற் காணாதபடியினால்
௰௯ என்னை விடுதலையாக்க விரும்பினார்கள்.—யூதர் ம
றுத்துப்பேசினபொழுது, நான் கைசருக்கு அ
பயமிடுவது அவசியமென்றுணர்ந்தேன்; என்தே
சத்தாரின்மேற் குற்றஞ்சார்த்தும்பொருட்டாக
௨௰ அப்படிச்செய்ததல்ல.—இந்தக்காரணத்தினாலே
நான் உங்களைக் காணவும், உங்களுடனேபே
சவும் உங்களை அழைப்பித்தேன்: இஸரவேலரின்
நம்பிக்கையின் நிமித்தமே இந்தச்சங்கிலிகளி
௨௧ னாற் கட்டப்பட்டிருக்கிறேனென்றான்.—அவர்
கள் அவனுடனே, உன்னைக்குறித்து யூதேயாவி
னின்று காகிதங்கள் எங்களிடத்தில் வரவுமில்
லை, வந்த சகோதரரில் ஒருவனும் உன்னைக்கு
றித்துத் தீங்கை அறிவித்ததுஞ் சொன்னதுமில்
லை.—எங்கும் இந்த மதத்தை விரோதித்துப்பேசு ௨௨
கிறார்கள், அதை அறிந்திருக்கிறோம், உன் சிந்
தனையாது, இதை உன்னிடத்திலே கேட்கவி
ரும்புகிறோமென்று சொல்லி,—அவர்கள் அவ ௨௩
னுக்கு ஒருநாள் நியமித்தார்கள், அநேகம்பேர்
அவன் தங்கின இடத்திலே சேர்ந்தார்கள்; அ
வன் காலைதொடங்கி மாலைவரைக்கும் மோசே
யின் நியாயப்பிரமாணத்திலும், தீர்க்கதரிசிகளின்
வாக்கியத்திலுமிருந்து, யேசுவுக்குரியவைக
ளை அவர்களுக்குப்போதித்து, தேவனுடைய
இராச்சியத்தைக்குறித்துச் சாட்சிகொடுத்து, அ
வர்களுக்கு உணர்த்தினான்.—சிலர் அவன் சொல் ௨௪
லியவைகளை விசுவாசித்தார்கள், சிலர் விசுவா
சிக்கவில்லை.—இப்படி அவர்கள் ஒருவரோடொ ௨௫
ருவர் ஐக்கங்கொள்ளாமற் புறப்பட்டுப்போகை
யில் பவுல்அவர்களைநோக்கி,—"இந்தச்சனங்கள் ௨௬
கண்ணாற் காணாமலும், காதாற்கேளாமலும், மன
திலுணராமலும், மனந்திரும்பாமலும், என்னாற்
சொஸ்தமடையாமலுமிருக்கும்பொருட்டு,—மந் ௨௭
தபுத்தியும், கேளாதகாதும், திறவாத கண்ணுமு
டையவர்களாயிருக்கிறபடியினாலே, நீங்கள் உ
ற்றுக்கேட்டாலுஞ் சிந்தித்துக்கொள்ளாமலிருப்
பீர்கள்; உற்றுப்பார்த்தாலும் அறியாமலிருப்பீர்
களென்று இந்தச் சனங்களிடத்திற்குப்போய்ச்
சொல்லு," என்கிறதைப் பரிசுத்த ஆவியானவர்
ஏசாயாதீர்க்கதரிசியைக்கொண்டு நம்முடைய
முன்னோருடனே நன்றாய்ச் சொன்னார்.—ஆதல ௨௮
லால் தேவனுடைய இரட்சிப்பு அந்நியதேசத்
தார்களுக்கு அனுப்பப்பட்டிருக்கின்றது, அவர்
கள் அதற்குச்செவிகொடுப்பார்கள், இதை நீங்
கள் அறிந்துகொள்ளுங்களென்று இந்தஒரேவாக்
கைச்சொன்னான்.—இவைகளை அவன் சொன் ௨௯
னபின்பு யூதர்தங்களுக்குள்ளே மிகவுந் தருக்கம்
பண்ணிக்கொண்டுபோய் விட்டார்கள்.—பின் ௩௰
பு பவுல் தான் குடிக்கூலிக்கு வாங்கின வீட்டில்
இரண்டுவருஷமுழுவதும் வாசம்பண்ணி, தன்
னிடத்தில் வந்த யாவரையும் ஏற்றுக்கொண்டு,—
மிகுந்த தைரியத்தோடே தடையில்லாமல் தே ௩௧
வனுடைய இராச்சியத்தைக்குறித்துப் பிரசங்
கித்து, கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவின்
விசேஷங்களை உபதேசித்துக்கொண்டுவந்தான்.

(௰௬) அதி.௨௪.௨௫. (௰௭) அதி.௨௪.௰௨,௰௩. அதி.௨௧.௩௩. (௰௮) அதி.௨௨.௨௪. (௰௯) அதி.௨௫.௰௧. (௨௰) அதி.
௨௬.௬,௭,௨௯. எபே.௩.௧. ௨.திமோ.௧.௰௬. பிலே.௰,௰௩. (௨௨) லூக்.௨.௩௪. ௧.பேதுரு.௨.௰௨. லூக்.௨௪.௨௭.
(௨௪) அதி.௰௪.௪. (௨௬) ஏசா.௬.௯. எரே.௫.௨௰. எசேக்.௰௨.௨. மத்.௰௩.௰௪,௰௫. மாற்.௪.௰௨. லூக்.௮.௰. யோவா.
௰௨.௪௰. ரோ.௰௧.௮. (௨௮) மத்.௨௧.௪௧,௪௩. அதி.௰௩.௪௬,௪௭. ரோ.௰௧.௰௧. (௩௧) அதி.௪.௩௧. எபே.௬.௰௯.

# உரோமாநகரத்தாருக்கு

## எழுதிய நிருபம்.

### ௧. அதிகாரம்.

*௧. பவுலுக்கு அப்போஸ்தலபட்டந் தரித்தல்: ௮. அவன் உரோமாநகரத்திற் சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்தும்படி அங்கே போக விரும்பல்: ௰௪. தேவ நீதியையும், ஞானத்தையும் சுவிசேஷத்தினாற்காட்டல்: ௨௪. சுவிசேஷத்தைப்பெறாதவர்கள் செய்யுந் தீங்குகளைக் காட்டல்.*

சரீரத்தின்படி, தாவீதின்வமிசத்திற் பிறந்தவ
௨ ரும்,-பரிசுத்தமுடைய ஆவியின்படி, மரித்தோ
ரிலிருந்து எழுந்ததினால் தேவனுடையகுமா
ரனென்று வல்லமையுடன் காண்பிக்கப்பட்டவ
௩ ரும்,-தமது நாமத்தினிமித்தஞ் சருவதேசத்தாரை
யும்,அவர்களுக்குள் யேசுக்கிறிஸ்துவினால்
அழைக்கப்பட்ட உங்களையும் விசுவாசத்திற்கு
௪ அமைவிக்கும்பொருட்டு,-எங்களுக்குக்கிருபை
யும்,அப்போஸ்தலபட்டமுங்கொடுத்தவருமாயி
௫ ருக்கிற-தேவகுமாரனும், நமது கர்த்தருமா
கிய யேசுக்கிறிஸ்துவைக்குறித்துத் தேவ
ன் பரிசுத்தவேதாகமங்களிலே தமது தீர்க்கதரிசி
களின்வழியாய்முன்னேவாக்குத்தத்தம்பண்ணி
ன சுவிசேஷத்திற்குப் பிரித்தெடுக்கப்பட்டவ
௬ னும்,—அப்போஸ்தலனென்று அழைக்கப்பட்ட
வனும், யேசுக்கிறிஸ்துவின் ஊழியக்கார
னுமாகிய பவுல், உரோமாநகரத்திலுள்ள தேவ
னுக்குப்பிரியரும், அழைக்கப்பட்ட பரிசுத்தரு
௭ மாகிய யாவருக்கும் எழுதிக்கொள்வது:—நம்
முடைய பிதாவாகிய தேவனாலும், கர்த்த
ராகிய யேசுக்கிறிஸ்துவினாலும் உங்
களுக்குக்கிருபையும், சமாதானமும் உண்டா
௮ கக்கடவன.—உங்கள் விசுவாசம் உலகத்திலெங்
கும் பிரசித்தமாகிறபடியால், நான் உங்களெல்
லாருக்காகவும் யேசுக்கிறிஸ்து மூலமாய் மு
தல்முதல் என் தேவனை ஸ்தோத்திரிக்கிறேன்.—
௯ நீங்கள் ஸ்திரப்படுவதற்குச் சில ஞானவரங்களை
௰ உங்களுக்குக் கொடுக்கும்படிக்கும்,—உங்களி
லும் என்னிலுமுள்ள விசுவாசத்தினால் உங்க
ளோடுகூடி நானும் ஆறுதலடையும்படிக்கும்
௰௧ உங்களைக்காண வாஞ்சையாயிருக்கிறேன்.—ஆத
லால் தேவனுடைய சித்தத்தின்படி எதுவி
தமும் இப்பொழுதே உங்களிடத்தில் வருகிற
தற்கு எனக்குநல்லபிரயாணங்கிடைக்கவேண்டு
மென்று எப்பொழுதும் என் பிரார்த்தனைகளில்
உங்களை நினைந்து, இடைவிடாமல் வேண்டிக்
கொள்ளுகிறேன்.—தமது குமாரனுடைய சுவிசே ௰௨
ஷத்தில், நான் என்ஆவியினாற்சேவிக்கிற தேவ
னே இதைக்குறித்து எனக்குச்சாட்சி.—சகோதர ௰௩
ரே, மற்றத்தேசத்தாருக்குள்ளே நான் பலனை அ
டைந்தபிரகாரம் உங்களுக்குள்ளுஞ் சில பலனை
அடையும்பொருட்டு, பலமுறையும்உங்களிடத்
திற்குவர அபிப்பிராயங்கொண்டேன்,ஆனாலும்
இதுவரைக்கும் எனக்குத்தடை உண்டாயிற்றெ
ன்பதை நீங்கள் அறியாதிருக்க எனக்கு மனதில்
லை.-கிரேக்கருக்கும், மற்றப்புறச்சாதிகளுக்கும், ௰௪
கல்விமான்களுக்கும், மூடருக்கும் நான் கடனா
ளியாயிருக்கிறேன்.—ஆதலால் உரோமாநகரத் ௰௫
திலுள்ள உங்களுக்கும் என்னால் இயன்றளவுஞ்
சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க விரும்புகிறேன்.—
கிறிஸ்துவின் சுவிசேஷத்தைக்குறித்து நான் ௰௬
வெட்கப்படேன்: அது, முன்பு யூதரிலும், பி
ன்பு கிரேக்கரிலும் விசுவாசிக்கிறவனெவனோ,
அவனுக்கு இரட்சிப்பைத் தருவதற்குத் தேவ
பலமுள்ளதாயிருக்கின்றதே.—“நீதிமான் விசு ௰௭
வாசத்தினாலே சீவித்திருப்பான்,” என்றெழுதி
யிருக்கிறபடி, விசுவாசத்தினாலாகுந் தேவனு
டைய நீதி, விசுவாசத்திற்கு ஏதுவாய், அதிலே
வெளிப்படுத்தப் பட்டிருக்கின்றது.—காணப்ப ௰௮
டாதவைகளாகிய அவருடைய நித்தியவல்ல
மை,தேவத்துவம் முதலியவைகள்,சிருஷ்டிக்கப்
பட்டவைகளினால் உலகசிருஷ்டிதொடங்கித்
தெளிவாய்க் காட்டப்பட்டிருக்கின்றன; அதி
னால் அவர்கள் உத்தரஞ்சொல்வதற்கு இடமில்
லை.—தேவனைக்குறித்து அறியவேண்டுவதெ ௰௯
துவோ, அது அவர்களுக்குள்ளே வெளிப்படுத்
தப்பட்டிருக்கின்றது; தேவனே அதை அவர்
களுக்கு வெளிப்படுத்தினார்.—ஆதலால் சத்தியத் ௨௰
தைத்தடுத்து அடைத்துக்கொள்ளுகிற மனுஷரு
டைய எவ்வித துராசாரத்திற்கும், அநியாயத்திற்

---

(௧. அதி. ௧.) அப்.௯.௰௫. கலா.௧.௰௫. அப்.௨௬.௬. தீத்.௧.௧. அதி.௩.௨௧. கலா.௩.௮. (௨) அப்.௨௨.௨௧. ௧.கொரி.௧.௨. ௧.தீமோ.௧.௰௧. ௨.தீமோ.௧.௰௧. அதி.௯.௨௪. ௧.கொரி.௧.௧. ௧.தெச.௪.௭. (௩) மத்.௧.௬,௰௬. அப்.௨.௩௰. ௨.தீமோ.௨.௮. யோவா.௧.௰௪. கலா.௪.௪. அப்.௰௩.௩௨. எபி.௯.௰௪.(௪)அப்.௬.௭. அதி.௰௬.௨௫. அப்.௯.௰௫.(௫) அதி.௰௨.௩. ௧.கொரி.௰௫.௰. கலா.௧.௰௫. எபே.௩.௮.(௭)௧.கொரி.௧.௩. ௨.கொரி.௧.௨. கலா.௧.௩. (௮) ௧.கொரி. ௧.௪. பிலி.௧.௪. கொலோ.௧.௩,௪. ௧.தெச.௧.௨. பிலே.௫. அதி.௰௬.௰௯. ௧.தெச.௧.௮. (௯) அதி.௰௫.௨௯. (௰) தீத். ௧.௪. ௨.பேதுரு.௧.௧.(௰௧) அதி.௰௫.௨௩,௩௧. ௧.தெச.௩.௰. யாக்.௪.௰௫. ௧.தெச.௩.௰. (௰௨) அதி.௯.௧. ௨.கொரி. ௧.௨௩. அப்.௨௭.௨௩. ௨.தீமோ.௧.௩. (௰௩) அதி.௫.௨௩. அப்.௰௬.௭. ௧.தெச.௨.௰௮. பிலி.௪.௰௭. (௰௪) ௧.கொரி. ௯.௰௯. (௰௬) சங்.௪௰.௯,௰. மாற்.௮.௩௮. ௨.தீமோ.௧.௮. ௧.கொரி.௧.௰௮. லூக்.௨.௩௰,௩௧,௩௨. லூக்.௨௪.௪௭. அப். ௩.௨௬. அப்.௰௩.௨௬,௪௬. (௰௭) அதி.௩.௨௧. அபகூ.௨.௪. யோவா.௩.௩௬. கலா.௩.௰௧. பிலி.௩.௯. எபி.௰.௩௮. (௰௮) சங்.௰௧.௧,. அப்,௰௭.௨௭. (௰௯) அப்.௰௪.௰௭. யோவா.௧.௯.(௨௰)அப்.௰௭.௩௰. எபே.௫.௬. கொலோ.௩.௬.

கும் விரோதமாய்த் தேவனுடைய கோபம்
௨௧ வானத்திலிருந்து வெளிப்படுகின்றது.—அவர்
கள் தேவனை அறிந்தும், அவரைத் தேவ
னென்று புகழாமலும், நன்றியறியாமலுமிருந்
து, தங்கள் சிந்தனைகளினாலே வீணரானார்கள்;
அவர்களுடைய விவேகமற்ற இருதயம் இருள்
௨௨ அடைந்தது.-அவர்கள்தங்களையேஞானிகளென்
௨௩ றுமதித்துப்பைத்தியகாரராகி,-அழிவில்லாத தே
வனுடைய மகிமையை அழிவுள்ளமனுஷர்,
பறவைகள், மிருகங்கள், ஊர்வனமுதலியவை
௨௪ களுக்கொப்பான சாயலாக மாற்றினார்கள்.—இ
தினிமித்தம், அவர்கள் தங்கள் சுய இருதயங்க
ளின் இச்சைகளினால் ஒருவரோடொருவர் தங்
கள் சரீரங்களைக் கனவீனப்படுத்துவதற்கு, தே
௨௫ வன் அவர்களை அசுத்தத்திற்கு ஒப்பித்தார்.-அவர்
கள் தேவனுடைய சத்தியத்தைப் பொய்யாக
மாற்றி, சிருஷ்டிகருக்கு ஆராதனைசெய்யாமற்
சிருஷ்டியை ஆராதித்தார்கள், அவரே சதாகா
௨௬ லமுந் துதிக்கப்படத்தக்கவர். ஆமென்.—இதி
னிமித்தந் தேவன் அவர்களை இகழத்தக்க இச்
சைகளுக்கு ஒப்பித்தார்: அவர்களுடைய ஸ்தி
ரிகளும் சுபாவ அனுபோகத்தைச் சுபாவத்திற்
குமாறான அனுபோகமாக மாற்றினார்கள்.—
௨௭ அதுபோலப் புருஷரும் ஸ்திரிகளைச் சுபாவத்
தின்படி அனுபவியாமல், தங்கள் இச்சைகளி
னால் ஒருவர்மேல் ஒருவர் பொங்கி, புருஷனோ
டேபுருஷன் முறைகேடானதை நடப்பித்து,
தங்கள் தங்கள் தப்பிதத்திற்குத் தகுதியானபல
னைத் தங்களிடத்தில் தாமே பெற்றுக்கொண்
௨௮ டார்கள்.—தேவனை அறியும்அறிவை மனதினாற்
பற்றிக்கொள்ள அவர்கள் விரும்பாததினிமித்தம்,
தகாதவைகளைச் செய்யும்படி தேவன் அவர்க
௨௯ ளைத்துர்ச்சிந்தைக்கு ஒப்பித்தார்.—அவர்கள் சகல
வித அநியாயத்தினாலும், வேசைமார்க்கத்தினா
லும், தீங்கினாலும், பொருளாசையினாலும், கு
ரோதத்தினாலும், பொறாமையினாலும், கொலையி
னாலும், வாக்குவாதத்தினாலும், வஞ்சகத்தினா
௩௰ லும், பகையினாலும் நிறைந்தவர்களும்,—புறங்கூ
றுகிறவர்களும், அவதூறுபண்ணுகிறவர்களும்,
தேவனை வெறுக்கிறவர்களும், இறுமாப்புள்ள
வர்களும், அகந்தையுள்ளவர்களும், வீம்புக்கார
ரும், துர்க்கிரியைகளையூகிப்பவர்களும், பெற்றா
௩௧ ருக்குக் கீழ்ப்படியாதவர்களும்,—விவேகமில்லா
தவர்களும், உடன்படிக்கைகளை மீறுகிறவர்க
ளும், சுபாவஅன்பில்லாதவர்களும், மன்னியாத
வர்களும், இரக்கமில்லாதவர்களுமாயிருந்தார்
கள்.—இப்படிப்பட்டவைகளைச் செய்பவர்கள் ௩௨
மரணத்திற்குப் பாத்திரராயிருக்கிறார்களென்கிற
தேவனுடைய தீர்ப்பை அவர்கள் அறிந்துந்
தாங்களே அவைகளைச்செய்கிறதுமல்லாமல், அ
வைகளைச்செய்கிற மற்றவர்களிடத்திற் பிரிய
மாயுமிருக்கிறார்கள்.

## ௨. அதிகாரம்.

௧. பாவத்தினாலே யாவரும் தண்டனைக்குள்ளாக்
கப்படல்: ௨௧. யூதருக்கும் அந்நியதேசத்தாருக்
கும் வித்தியாசமில்லையெனக்காட்டல்: ௨௭. ஒ
ருவன்தான் குற்றவாளியாயிருந்து பிறருக்குப்
போதிப்பது விருதாவென்று தெரிவித்தல்:௨௫.
கட்டளைக்கமையாமல் விருத்தசேதனத்தினால்
இரட்சிப்புக்கிடையாதெனக்காட்டல்.

ஆகையால்,தீர்ப்புச்சொல்லுகிறவனே, நீ தீர்ப் ௧
புச்சொல்லுகிறதற்குக்குறிக்கிற கிரியைகளை நீ
யே செய்கிறபடியால், நீ மற்றவர்களுக்குக்கொ
டுக்கிற தீர்ப்பினால் உன்னைத்தானே குற்றவா
ளியாக்குகிறாய்: ஆதலால் நீ உத்தரஞ்சொல்ல இ
டமில்லை.—இப்படிப்பட்டவைகளைச் செய்கிற ௨
வர்களுக்குத் தேவன் கொடுக்கிற நியாயத்தீர்ப்
போ, சத்தியத்திற்கிசைந்திருக்குமென்பது நமக்
குத்தெரியும்.—இப்படிப்பட்டவைகளைச் செய்கி ௩
றவர்களுக்குத் தண்டனைத்தீர்ப்புக்கொடுக்கிற ம
னுஷனே, அவைகளைச்செய்கிற நீ தேவனு
டைய நியாயத்தீர்ப்புக்கு விலகலாமென்று நி
னைக்கலாமா.—அல்லது நீ மனந்திரும்பும்படி தே ௪
வனுடைய தயை உன்னை ஏவுகிறதென்று சிந்
தித்துக்கொள்ளாமல், அவருடையதயை, பொறு
மை,நீடியபொறுமையென்னும்இவைகளின்ஐசு
வரியத்தை அவமதிக்கலாமா.-கடினமுங் குணப் ௫
படாததுமாகியஉன்இருதயத்தினால், நீ தேவனு
டைய யதார்த்தநியாயத்தீர்ப்புவெளிப்படும் அந்
தக்குரோததினத்திற்குக் குரோதத்தைச்சேர்த்துக்
கொள்ளுகிறாய்.—அவர், ஒவ்வொருவனுக்கும் ௬
அவனவன் கிரியைகளுக்குத்தக்கதாய்,—தளரா ௭
மல் நற்கிரியைகளைச்செய்து, மகிமையையும்,
கனத்தையும், அழியாமையையுந் தேடுகிறவர்க
ளுக்கு நித்தியசீவனையும்,—சத்தியத்திற்குக் கீழ்ப் ௮
படியாமல் அநியாயத்திற்குக்கீழ்ப்படிந்திருக்கிற
விரோதிகளுக்குக் கோபத்தையுங் குரோதத்தை
யும்,—முன்பு யூதரிலும், பின்பு கிரேக்கரிலும் ௯
தீமையைச்செய்கிற எவனுக்கும் வியாகுலத்தை
யும், யாதனையையும்,—முன்பு யூதரிலும், பின்பு ௰
கிரேக்கரிலும் நன்மைசெய்கிற எவனுக்கும் ம
கிமையையும், கனத்தையும், சமாதானத்தையும்

(௨௧) ௨.இரா.௰௭.௰௫. எரே.௨.௫. எபே.௪.௰௭,௰௮. (௨௨) எரே.௰.௰௪. (௨௩) உபா.௪.௰௬,. ஏசா.௪௰.௰௮,௨௫. எரே.௨.௰௧. எசேக்.௮.௰. அப்.௰௭.௨௯. (௨௪) சங்.௮௧.௰௨. அப்.௭.௪௨. எபே.௪.௰௮,௰௯. ௨.தெச.௨.௰௧,௰௨. ௧.கொரி.௬.௰௮. ௧.தெச.௪.௪. ௧.பேதுரு.௪.௩. லேவி.௰௮.௨௨. (௨௫) ௧.தெச.௧.௯. ௧.யோவா.௫.௨௰. ஏசா.௪௪.௨௰. எரே.௰.௰௪. ஆமோ.௨.௪. (௨௬) லேவி.௰௮.௨௨,௨௩. எபே.௫.௰௨. யூதா.௰. (௨௮) எபே.௫.௪. (௩௨) அதி.௨.௨. அதி.௬.௨௧. அதி.௫௰.௰௮. ஓசி.௭.௩.—(௨. அதி. ௧.) அதி.௧.௰௮. ௨.சாமு.௰௨.௫,௬,௭. மத்.௭.௧,௨. யோவா.௮.௯.(௪)அதி.௯.௨௩. எபே.௧.௮. எபே.௨.௪,௬. அதி.௩.௨௬. யாத்.௩௪.௬. ஏசா.௩௰.௰௮. ௨.பேதுரு.௩.௯,௰௫. (௫) உபா.௩௨.௩௪. யாக்.௫.௩. (௭) யோபு.௩௪.௰௧. சங்.௬௨.௰௨. நீதி.௨௪.௰௨. எரே.௰௭.௰. மத்.௰௬.௨௭. ௧.கொரி.௩.௮. ௨.கொரி.௫.௰. வெளி.௨.௨௩. (௮) யோபு.௨௪.௰௩. அதி.௧.௨௰. ௨.தெச.௧.௮. (௯) ஆமோ.௩.௨. லூக்.௰௨.௪௭,௪௮. ௧.பேதுரு.௪.௰௭.

௰௧ அளிப்பார்.-தேவனிடத்திற் பட்சபாதமில்
௰௨ லை.—என் சுவிசேஷத்தின்படி தேவன் யே
சுக்கிறிஸ்துவைக்கொண்டு மனுஷருடைய
அந்தரங்கங்களைக்குறித்து நியாயத்தீர்ப்புக்கொ
டுக்கும் அந்த நாளிலே, நியாயப்பிரமாணமில்
லாமற் பாவஞ்செய்தவர்கள் நியாயப்பிரமாண
௰௩ மில்லாமல் அழிவார்கள்.—நியாயப்பிரமாணமு
டையவர்களாய்ப் பாவஞ்செய்தவர்கள் நியாயப்
பிரமாணத்தின்படி தீர்ப்புப் பெறுவார்கள்.—
௰௪ நியாயப்பிரமாணத்தைக் கேட்கிறவர்கள் தேவ
னுக்கு முன்பாக நீதிமான்களல்ல, நியாயப்பி
ரமாணத்தின்படி செய்கிறவர்களே நீதிமான்க
௰௫ ளாக்கப்படுவார்கள்.–நியாயப்பிரமாணமில்லாத
புறத்தேசத்தார் இயல்பாய் நியாயப்பிரமாணத்
தின்படி நடந்தால், நியாயப்பிரமாணமில்லாத
வர்களாகிய அவர்களே தங்களுக்கு நியாயப்பிர
௰௬ மாணமாயிருக்கிறார்கள்.—அவர்களுடைய மன
துங்கூடச்சாட்சியிடுகிறதினாலும், அவர்களு
டைய சிந்தனைகள், குற்றமுண்டு அல்லது குற்
றமில்லையென்று ஒன்றுக்கொன்று தீர்க்கிறதினா
லும், அவர்கள் தங்கள் இருதயங்களில் நியாயப்
பிரமாணத்திற்கேற்ற கிரியை எழுதியிருக்கின்ற
௰௭ தென்று காட்டுகிறார்கள்.—பார், நீ யூதனென்
னும் பெயர்பெற்று, நியாயப்பிரமாணத்தைச்
சார்ந்து, தேவனைக்குறித்துப் பெருமைபா
௰௮ ராட்டி,—நியாயப்பிரமாணத்தினால் உபதேசம்
பெற்று, அவருடைய சித்தத்தை அறிந்து, வித்
௰௯ தியாசங்களைச் சோதித்து அறிகிறாய்.—நியாயப்
பிரமாணத்தினால் அறிவையுஞ் சத்தியத்தையுங்
௨௰ காட்டிய சட்டமுடையவனாகவும்,—நீ உன்
னைக்குருடருக்கு வழிகாட்டியாகவும், அந்தகா
ரத்திலுள்ளவர்களுக்கு ஒளியாகவும், அறிவீன
ருக்குக்குருவாகவும், பாலகருக்குப் போதகனா
௨௧ கவும் எண்ணுகிறாயே.—பிறனுக்குப் போதிக்கி
றவனாகிய நீ, உனக்குத்தானே போதியாமலிருக்
கலாமா; களவு செய்யாயாகவென்று பிரசங்கிக்
௨௨ கிற நீ, களவு செய்யலாமா.—விபசாரஞ் செய்
யாயாகவென்றுசொல்லுகிற நீ, விபசாரஞ்செய்
யலாமா; விக்கிரகங்களைவெறுக்கிற நீ, பரிசுத்தப்
௨௩ பொருள்களைக் கொள்ளையிடலாமா.—நியாயப்
பிரமாணத்தைக்குறித்துப்பெருமைபாராட்டுகிற
நீ, நியாயப்பிரமாணத்தை மீறி, தேவனைக்க
௨௪ னவீனம்பண்ணலாமா.—எழுதியிருக்கிற பிரகா
ரம், புறத்தேசத்தாருக்குள் உங்களாலே தேவ
னுடைய நாமந் தூஷணிக்கப்படுகின்றது.—
நீ நியாயப்பிரமாணத்தைக் காத்துநடந்தால், வி ௨௫
ருத்தசேதனம் பலன் தருமே: நீ நியாயப்பிரமா
ணத்தை மீறிநடந்தாயாகில், உன் விருத்தசேத
னம் விருத்தசேதனமில்லாமையாயிற்றே.-விருத் ௨௬
தசேதனமில்லாதவன் நியாயப்பிரமாணத்தின்
நீதிக்கிசைய நடந்தால், அவனுடைய விருத்
தசேதனமில்லாமை விருத்தசேதனமென்றெண்
ணப்படுமல்லவா.—சுபாவநிலையில் விருத்தசே ௨௭
தனமில்லாமல் நியாயப்பிரமாணத்தை நிறை
வேற்றுகிறவன், எழுத்தும் விருத்தசேதனமுமுள்
ளவனாய், நியாயப்பிரமாணத்தை மீறுகிறவனாகி
ய உன்னைக் குற்றப்படுத்துவானல்லவா.—புறம் ௨௮
பாக யூதனாயிருக்கிறவன் யூதனல்ல; புறம்பாயுள்
ள மாமிசவிருத்தசேதனம் விருத்தசேதனமல்ல.–
உள்ளத்தில் யூதனாயிருக்கிறவனே யூதன்; எழுத் ௨௯
தின்படியல்ல, ஆவியின்படி இருதயவிருத்தசே
தனமே விருத்தசேதனம்; இவனுடைய புகழ்ச்சி
மனுஷராலல்ல, தேவனால் ஆகின்றது.

## ௩. அதிகாரம்.

௧. யூதர் வேதத்தினாலே பலநன்மைகளைப் பெறல்: ௯. மற்றவர்களைப்போலக் கட்டளைமீறினதினிமித்தங் கட்டளையினால் இரட்சிப்புக்கிடையாதெனக்காட்டல்: ௨௧. கட்டளையினாலன்றி, விசுவாசத்தினால் நீதிமானாக்கப்படல்.

இப்படியானால் யூதருக்குமேன்மையென்ன, வி ௧
ருத்தசேதனத்தினாலே பலன்என்ன.–எவ்விதத்தி ௨
லும் மிகுதியுண்டு: விசேஷமாகத் தேவனுடை
யவாக்கியங்கள் அவர்களிடத்தில்ஒப்பிக்கப்பட்
டன.–சிலர்விசுவாசியாதிருந்துமென்ன, அவர்க ௩
ளுடைய அவிசுவாசம் தேவனுடைய உண்
மையைஅபத்தமாக்குமா.—இல்லையே: மனுஷர் ௪
யாவரும் பொய்யராயிருந்தாலும் தேவனே உ
ண்மையுள்ளவர்; அப்படியே, "நீர் உம்முடைய
வாக்குகளில் நீதிபரராய் விளங்கி, நியாயவிசார
ணையில்வெற்றிபெறுவீர்," என்றெழுதியிருக்கின்
றது.—நம்முடைய அநீதி தேவனுடைய நீதி ௫
யைவிளக்கினால் என்னசொல்லுவோம்; மனுஷர்
பேசுகிறபிரகாரம் நான் பேசுகிறேன்.–கோபாக் ௬
கினைசெலுத்துகிற தேவன் அநியாயமுள்ளவ
ரல்லவோ, அப்படிச்சொல்லவேகூடாது: கூடு
மேயாகில்தேவன் உலகத்தைநியாயம்விசாரிப்
பதெப்படி.–தேவனுக்குப் புகழ்ச்சியுண்டா ௭
க, என்பொய்யினால் அவருடையசத்தியம் அதி

(௰௧) உபா.௰.௰௭. உ.நாளா.௰௯.௭. யோபு.௩௪.௰௯. அப்.௰.௩௪. கலா.உ.௬. எபே.௬.௯. கொலோ.௩.௨௫. ௧.பேதுரு.௧.௰௭. (௰௨) பிர.௰௨.௰௩. மத்.௨௫.௩௧. ௧.கொரி.௪.௫. வெளி.௨௰.௰௨. யோவா.௫.௨௨. அப்.௰௭.௩௧. உ.தீமோ.௪.௧,௮. ௧.பேதுரு.௪.௫. அதி.௰௬.௨௬. ௧.தீமோ.௧.௰௧. உ.தீமோ.உ.௮. (௰௪) மத்.௭.௨௧. யாக்.௧.௨௨, ௨௩,௨௫. ௧.யோவா.௩.௭.(௰௭)மத்.௩.௯. யோவா.௮.௩௩. அதி.௯.௬,௭. உ.கொரி.௰௧.௨௨. மீகா.௩.௰௧. அதி.௯.௪. ஏசா.௪௫.௨௫. யோவா.௮.௪௧. (௰௮) உபா.௪.௮. சங்.௱௪௭.௰௯,௨௰. பிலி.௧.௰௧. (௰௯) அதி.௬.௰௭. உ.தீமோ.௧. ௰௩. (௨௰) மத்.௰௫.௰௪. யோவா.௯.௩௪,௪௰,௪௧. (௨௧) சங்.௫௰.௰௬,. மத்.௨௩.௩,. (௨௨) மல்.௩.௮. (௨௩) வச.௰௭. (௨௪)௨.சாமு.௰௨.௰௪. ஏசா.௫௨.௫. எசேக்.௩௬.௨௰,௨௩. (௨௫) கலா.௫.௩. (௨௬) அப்.௰.௩௪,௩௫. (௨௭) மத்.௰௨. ௪௧,௪௨. (௨௮) மத்.௩.௯. யோவா.௮.௩௯. அதி.௯.௬,௭. கலா.௬.௰௫. வெளி.௨.௯. (௨௯) ௧.பேதுரு.௩.௪.பிலி.௩. ௩.கொலோ.௨.௰௧. அதி.௭.௬. உ.கொரி.௩.௬. ௧.கொரி.௪.௫. உ.கொரி.௰.௰௮. ௧.தெச.௨.௪.—(௩.அதி.௨.)௨.பா. ௪.௭,௮. சங்.௱௪௭.௰௯,௨௰. அதி.௨.௰௮. அதி.௯.௪. (௩) அதி.௰.௰௬. எபி.௪.௨. எண்.௨௩.௰௯.அதி.௯.௬. உ.தீமோ. ௨.௰௩. (௪) யோபு.௪௰.௮. யோவா.௩.௩௩. சங்.௬௨.௯. சங்.௱௰௬.௰௧. சங்.௫௧.௪. (௫) அதி.௬.௰௯. கலா.௩.௰௫. (௬) ஆதி.௰௮.௨௫. யோபு.௮.௩. யோபு.௩௪.௰௭.

கவிருத்தி அடைந்ததானால், இனி நான் பாவி
௮ யென்று தீர்க்கப்படுவானேன்.—நன்மைவரும்
படிக்குத் தீமைசெய்யக்கடவோமென்று சொன்
னாலுமென்ன, நாங்கள் அப்படிச் செய்கிறவர்க
ளென்று நிந்திக்கப்படுகிறோம், நாங்களே அப்
படிப்போதிக்கிறவர்களென்று சிலர் சொல்லு
கிறார்கள், அப்படிப்பட்டவர்கள்மேல் வருந்
௯ தண்டனை நீதியுள்ளது.—வேறென்ன, நாங்கள்
அவர்களிலும் மேன்மையுள்ளவர்களா, எவ்
விதத்திலுமில்லை. யூதர், கிரேக்கர் யாவரும்பாவத்
திற்குட்பட்டவர்களென்று முன் திருஷ்டாந்
௰ தப்படுத்தினோம்.—அப்படியே, "நீதிமான் ஒருவ
௰௧ னாகிலுமில்லை:—ஞானமுள்ளவன் ஒருவனுமில்
லை, தேவனைத் தேடுகிறவன் ஒருவனுமில்லை.-
௰௨ எல்லாரும் நெறிதவறி ஏகமாய்க் கேடுள்ளவரா
னார்கள்; நன்மைசெய்கிறவன் ஒருவனுமில்லை.-
௰௩ அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட பிரேதவ
றை; தங்கள் நாவுகளால் வஞ்சனைசெய்கிறார்
கள்; அவர்கள் உதடுகளின்கீழே விரியன்களின்
௰௪ விஷமிருக்கின்றது:—அவர்களுடைய வாய் ச
பிப்பினாலும், கசப்பினாலும் நிறைந்திருக்கின்ற
௰௫ து:—அவர்களுடையகால்கள் இரத்தஞ்சிந்துகிற
௰௬ தற்கு விரைந்து ஓடுகின்றன:—நாசமும், கிலே
சமும் அவர்களுடைய பாதைகளிலிருக்கின்ற
௰௭ ன:—சமாதானத்தின் பாதையை அவர்கள் அறி
௰௮ யார்கள்:—அவர்களுடைய கண்களுக்கு முன்
பாகத் தேவபயமேயில்லை," என்றெழுதியிருக்
௰௯ கின்றது.—நியாயப்பிரமாணஞ் சொல்லுகிறதெல்
லாம் நியாயப்பிரமாணத்திற்கு உட்பட்டிருக்கிற
வர்களுக்கே சொல்லப்பட்டிருக்கின்றனவென்
று அறிந்திருக்கிறோம்: இவ்விதமாக எந்த வாயும்
மூடப்பட்டு, உலகத்தார்யாவருந்தேவனுடை
௨௰ ய சமுகத்திற் குற்றவாளிகளாவார்கள்.—இப்
படி நியாயப்பிரமாணத்தினாலே பாவத்தை அ
றிகிற அறிவு வருகிறபடியால், எந்தமனுஷனும்
நியாயப்பிரமாணத்தின் கிரியைகளினாலே தே
வனுக்குமுன்பாக நீதிமானாக்கப்படுவதில்லை.-
௨௧ எல்லாரும் பாவஞ்செய்து, தேவனுடைய ம
௨௨ கிமையைப் பெறாமற் போனபடியினாலே,-நியா
யப்பிரமாணத்தினாலுந் தீர்க்கதரிசிகளினாலுஞ்
சாட்சியிடப்பட்ட தேவநீதி நியாயப்பிரமாணத்
திற்கு வேறாய், இப்பொழுது வெளிப்பட்டிருக்
௨௩ கின்றது.-யேசுக்கிறிஸ்துவைப்பற்றும் விசு
வாசத்தினாலே தேவன் அருளும் நீதியானது,
வித்தியாசமில்லாமல் எல்லார்மேலும் வந்து, வி
சுவாசிகளனைவருக்கும்உரித்தாகும்.—அவர்கள் ௨௪
அவருடைய கிருபையினாலே கிறிஸ்துயேசு
விலுள்ள மீட்பைக்கைமாறில்லாமற்பெற்று, நீ
திமான்களாக்கப்படுகிறார்கள்.—தேவன், தமது ௨௫
பொறுமையைக்காட்டின முற்காலத்திலே நடந்
த பாவங்களைத்தாம்மன்னித்துவிட்டதைக்குறித்
து, தமதுநீதியைக் காண்பிக்கும்பொருட்டாக
வும், தாம்நீதியுள்ளவரும், யேசுவினிடத்தில்
விசுவாசமாயிருக்கிறவனை நீதிமானாக்குகிறவரு
மாக விளங்கும்படி, இக்காலத்திலே தமது நீதி
யைக் காண்பிக்கும்பொருட்டாகவும்,—அவரு ௨௬
டைய இரத்தத்தைப்பற்றும் விசுவாசத்தினாற் பி
ராயச்சித்தபலியாக அவரை ஏற்படுத்தி வைத்
தார்.—மேன்மைபாராட்டலெங்கே, அதுநீக்கப் ௨௭
பட்டதே. எந்தப்பிரமாணத்தினாலே, கிரியை
யின்பிரமாணத்தினாலேயோ, அல்ல: விசுவாசப்
பிரமாணத்தினாலேயே.—ஆதலால் நியாயப்பிரமா ௨௮
ணத்திற்கேற்றகிரியைகளில்லாமல் விசுவாசத்தி
னாலேயே மனுஷன்நீதிமானாக்கப்படுகிறானென்
று தீர்க்கிறோம்.—அவர் யூதருக்குமாத்திரமா தே ௨௯
வன், புறத்தேசத்தாருக்குந் தேவனாயிருக்கிறா
ரல்லவா; புறத்தேசத்தாருக்கும்அவரே தேவன்.-
விருத்தசேதனமுள்ளவர்களை விசுவாசத்தினிமித் ௩௰
தமும், விருத்தசேதனமில்லாதவர்களை விசுவா
சத்தினாலும் நீதிமான்களாக்குகிறவர் ஒரே தே
வன்.—இப்படியானால் விசுவாசத்தினாலே நி ௩௧
யாயப்பிரமாணத்தை ஒழித்துவிடுகிறோமா, அப்
படியல்லவே: நியாயப்பிரமாணத்தை நிலைநிறுத்
துகிறோம்.

## ௪. அதிகாரம்.

௧. விசுவாசத்தினால் ஆபிரகாம் நீதிமானாதல்: ௯. ஆபிரகாம் விருத்தசேதனத்தினாலேயல்ல, விசுவாசத்தினாலேநீதியைப்பெறல்: ௰௮. விசுவாசத்தினாலேதான் நீதியையாவருந்தேடுவது அவசியமெனக்காட்டல்.

அப்படியானால் நம்முடையபிதாவாகிய ஆபிர ௧
காம், மாமிசத்தின்படி என்னத்தைப்பெற்றுக்
கொண்டான்.—ஆபிரகாம் கிரியைகளினாலே நீ ௨
திமானாக்கப்பட்டானாகில், அவன் மேன்மைபா
ராட்டுகிறதற்கு இடமுண்டு; ஆனாலும் அது தே
வனுக்கு முன்பாகவல்ல.-வேதவாக்கியம் என் ௩
னத்தைச் சொல்லுகின்றது, ஆபிரகாம் தேவ
னில் விசுவாசம்வைத்தான், அதுவே அவனுக்
குநீதியென்றெண்ணப்பட்டது.—கிரியைசெய் ௪
கிறவன் பெறவேண்டியகூலி,கிருபையென்றல்

---

(௮) அதி.௫.௨௰. அதி.௬.௧,௰௫. (௯) அதி.௧.௨௮,. அதி.௨.௧,. வச.௨௩. கலா.௩.௨௨. (௰) சங்.௰௪.௧,௨,௩. (௰௩) சங்.௫.௯. எரே.௫.௰௬. சங்.௱௪௰.௩.(௰௪)சங்.௰.௭. (௰௫) நீதி.௧.௰௬. எசா.௫௯.௭,௮. (௰௮) சங்.௩௬.௧.(௰௯)யோவா.௰.௩௪. யோவா.௰௫.௨௫. யோபு.௫.௰௬. சங்.௱௭.௪௨. எசேக்.௰௬.௬௨. வச.௯,௨௩. அதி.௨.௨. (௨௰) சங்.௱௪௩.௨. அப்.௰௩.௩௯. கலா.௨.௰௬. எபே.௨.௮,௯. தீத்.௩.௫. அதி.௭.௭. (௨௧) அப்.௰௫.௰௧. அதி.௧.௰௭. பிலி.௩.௯. எபி.௰௧.௪,. யோவா.௫.௪௬. அப்.௨௬.௨௩. அதி.௧.௧. ௧.பேதுரு.௧.௰. (௨௨) அதி.௰.௰௨. கலா.௩.௨௮. கொலோ.௩.௰௧.(௨௩)வச.௯. அதி.௰௧.௩௨. கலா.௩.௨௨.(௨௪)அதி.௪.௰௬. எபே.௨.௮. தீத்.௩.௫,௬.மத்.௨௰.௨௮. எபே.௧.௮. கொலோ.௧.௰௪. ௧.தீமோ.௨.௬. எபி.௯.௰௨. ௧.பேதுரு.௧.௰௮,௰௯.(௨௫)அப்.௰௩.௩௮,௩௯. ௧.தீமோ.௧.௰௬. அப்.௰௭.௩௰. எபி.௯.௰௫. (௨௬) லேவி.௰௬.௰௫. ௧.யோவா.௨.௨. கொலோ.௧.௨௰.(௨௭)அதி.௨.௰௭,௨௩. ௧.கொரி.௧.௨௯,௩௧. எபே.௨.௯. (௨௮) அப்.௰௩.௩௮,௩௯. அதி.௮.௩. கலா.௨.௰௬. (௩௰) அதி.௰.௰௨,௰௩. கலா.௩.௮,௨௰,௨௮.—(௪. அதி. ௧.) எசா.௫௧.௨. மத்.௩.௯. யோவா.௮.௩௩,௩௯. ௨.கொரி.௰௧.௨௨. (௨) அதி.௩.௨௰,௨௭,௨௮.(௩) ஆதி.௰௫.௬. கலா.௩.௬. யாக்.௨.௨௩. (௪) அதி.௰௧.௬.

௫ ல,கடனென்றெண்ணப்படும்.-கிரியை செய்யா
மலிருந்தும் பாவியை நீதிமானுக்குகிறவர்மேல்
விசுவாசிக்கிறவனுக்கு, அவனுடைய விசுவாச
௬ மே நீதியாய் எண்ணப்படும்.-அந்தப்படிதாவீது,
கிரியைகளில்லாமல்தேவ ஞல் நீதிமானென்று
எண்ணப்படுகிறவன் பெறும் ஆசீர்வாதத்தைக்
௭ காட்ட,-"எவர்களுடைய அக்கிரமங்கள் மன்னி
க்கப்பட்டனவோ, எவர்களுடைய பாவங்கள்
மூடப்பட்டனவோ, அவர்களே வாழ்வுடைய
௮ வர்கள்.—கர்த்தாவினுற் பாவஞ்சுமத்தப்படா
மலிருக்கிற மனுஷன் வாழ்வுடையவன்,"என்று
௯ சொல்லியிருக்கிறான்.—இந்த ஆசீர்வாதம்விருத்த
சேதனத்திற்குமாத்திரமோ, விருத்தசேதனமில்
லாமைக்குமோ; விசுவாசம் ஆபிரகாமுக்கு நீதி
யாகஎண்ணப்பட்டதென்றுசொல்லுகிறோமே.-
௰ அது எப்பொழுது எண்ணப்பட்டது, அவன் வி
ருத்தசேதனமுள்ளவனுயிருந்தபொழுதா, விருத்
தசேதனமில்லாதவனுயிருந்தபொழுதா; விருத்த
சேதனமுள்ளவனுயிருந்தபொழுதல்ல, விருத்த
௰௧ சேதனமில்லாதவனுயிருந்தபொழுதே.—விருத்த
சேதனமில்லாதவர்களாய் விசுவாசிக்கிற யாவ
ருக்கும் நீதியெண்ணப்படும்பொருட்டு, அவர்க
ளுக்கு அவன்பிதாவாயிருக்கும்படிக்கும், விருத்
தசேதனத்தை அடைந்தவர்களுக்கு மாத்திரமல்
௰௨ ல,—நம்முடைய பிதாவாகிய ஆபிரகாம், விருத்த
சேதனமில்லாதகாலத்திற் பெற்ற விசுவாசத்தின்
அடிச்சுவடுகளில் நடக்கிறவர்களாயிருக்கிறவர்
களுக்கும் பிதாவாயிருக்கும்படிக்கும் விருத்தசே
தனமில்லாதகாலத்தில், விசுவாசத்தினுலாகும் நீ
திக்கு முத்திரையாக விருத்தசேதனத்தின் அடை
௰௩ யாளத்தைப்பெற்றான்.-ஆபிரகாம்உலகத்திற்குச்
சுதந்தரவாளியாவானென்னும்வாக்குத்தத்தம்,அ
வனுக்காகிலும், அவன் சந்ததிக்காகிலும் நியா
யப்பிரமாணத்தினுலே கிடையாமல், விசுவாசத்
௰௪ தினுலாகும் நீதியினுலேகிடைத்தது.-நியாயப்
பிரமாணத்தைச்சார்ந்தவர்கள்சுதந்தரராஞல், வி
சுவாசம் அபத்தமாகும்,வாக்குத்தத்தமும் விருதா
௰௫ வாகும்.-மேலும், நியாயப்பிரமாணங்கோபாக்கி
னையைப் பலிக்கப்பண்ணுகின்றது: நியாயப்பிர
மாணம் இல்லாவிட்டாற் கட்டளைமீறுதலுமில்
௰௬ லை.—ஆதலால் நியாயப்பிரமாணத்தைச்சார்ந்த
சந்ததியாருக்கு மாத்திரமல்ல, நம்மெல்லாருக்கு
ம்பிதாவாகிய ஆபிரகாமைப்போல விசுவாசத்
தைக்கொண்ட சந்ததியாரெல்லாருக்கும் வாக்
குத்தத்தமானது நிச்சயமாகும்பொருட்டு, அது
கிருபையின்மூலமாய் விசுவாசத்தினுலே வ
ரும்.—அவன்நம்பினவரும், மரித்தோரை உயிர்ப் ௰௭
பித்து, இல்லவைகளை உள்ளவைகளாகத்தோற்று
விக்கிறவருமாகிய தேவனுக்கு முன்பாக,"நா
ன் உன்னை மிகவும் அதிகமான சாதியாருக்குப்
பிதாவாக ஏற்படுத்தினேன்,"என்று எழுதியிருக்
கிறபிரகாரமாய், ஆபிரகாம் நம்மெல்லாருக்கும்
பிதாவாயிருக்கிறான்.—"இப்படியே உன்சந்ததி ௰௮
இருக்கும்,"என்று சொல்லப்பட்டபிரகாரம், அ
வன்,தான் அநேகசாதியாருக்குப் பிதாவாவதை
நம்புவதற்கிடமில்லாதிருந்தும், அதை நம்பிக்
கையோடே விசுவாசித்தான்.—அவன் விசுவா ௰௯
சத்திலேபெலவீனமாயிருக்கவில்லை,ஏறக்குறை
யநூறுவயதானகாலத்தில் அவன்,தன்சரீரம்மரித்
ததுபோலிருந்ததையும், சாராளுடைய கருப்பம்
மரித்ததுபோலிருந்ததையும் எண்ணவில்லை:—
அவிசுவாசத்தினுலேதேவனுடைய வாக்குத் ௨௰
தத்தத்தைக்குறித்துச் சந்தேகப்படாமல்,—தே ௨௧
வன் தாம்பண்ணின வாக்குத்தத்தத்தை நிறை
வேற்றவல்லவரென்று நிச்சயமாய்நம்பி, தேவ
னுடைய மகிமைவிளங்கப்பண்ணி,விசுவாசத்
திலே பலங்கொண்டவனுனான்.—ஆதலால் அது ௨௨
அவனுக்கு நீதியாய் எண்ணப்பட்டது.—அது ௨௩
அவனுக்கு அப்படி எண்ணப்பட்டதென்பது
அவன்நிமித்தம்மாத்திரம் எழுதப்படாமல், நமக்
காகவும் எழுதப்பட்டது.—நம்முடைய பாவங் ௨௪
களை நிவர்த்தியாக்குவதற்கு ஒப்பிக்கப்பட்டும்,
நாம் நீதிமான்களாக்கப்படுவதற்கு உயிர்த்தெ
ழுப்பப்பட்டுமிருக்கிற-நம்முடைய கர்த்தரா ௨௫
கிய யேசுவை மரித்தோரினின்று எழுப்பின
வரிடத்தில் விசுவாசம்வைத்தால், நமக்கும் அப்
படியே எண்ணப்படும்.

## ௫. அதிகாரம்.

௧. விசுவாசத்தினுலே நீதிமான்களாய் எண்ணப்பட்டவர்கள் அடையும்பலனைத் தெரிவித்தல்: ௰௨. ஆதாமின்வழியாய்ப் பாவமும் மரணமும் வந்தபிரகாரம், கிறிஸ்துவினுலே நீதியும் நித்தியசீவனும் வருமெனக்காட்டல்.

இப்படி,விசுவாசத்தினுலேநாம்நீதிமான்களாக் ௧
கப்பட்டபடியினுல்,நம்முடைய கர்த்தராகி
ய யேசுக்கிறிஸ்து மூலமாய்த்தேவனிடத்
திற் சமாதானம்பெற்றிருக்கிறோம்.-மேலும் விசு ௨
வாசத்தினுல் அவர்மூலமாக நாம் நிலைகொண்டி
ருக்கிற இந்தக்கிருபையை அடைந்து,தேவன்
அருளும் மகிமையை அடைவோமென்கிற நம்
பிக்கையினுலே மகிழ்ந்திருக்கிறோம்.—அதுமாத் ௩
திரமல்ல, உபத்திரவங்களிலேயும் மேன்மைபா

(௫) யோசு.௨௪.௨. (௭) அதி.௩௨.௧,௨. (௰௧) ஆதி.௰௭.௰. லூக்.௰௯.௯. கலா.௩.௭. (௰௩) ஆதி.௰௭.௪. கலா.௩.௨௯. (௰௪) கலா.௩.௰௮. (௰௫) அதி.௩.௨௰. அதி.௭.௮,௰,௰௧. ௧.கொரி.௰௫.௫௬. ௨.கொரி.௩.௭,௯. கலா.௩.௰,௰௯. ௧.யோவா.௩.௪. (௰௬) அதி.௩.௨௪. கலா.௩.௨௨. (௰௭) ஏசா.௫௧.௨. ஆதி.௰௭.௫. அதி.௮.௰௧. எபே.௨.௨,௫. அதி.௯.௨௬. (௰௮) ௧.கொரி.௧.௨௮. ௧.பேதுரு.௨.௰. ஆதி.௰௫.௫. (௰௯) ஆதி.௰௭.௰௭. எபி.௰௧.௰௧,௰௨. (௨௧) சங்.௱௰௫.௩. லூக்.௧.௩௭,௪௫. எபி.௰௩.௰௯. (௨௩) அதி.௰௫.௪. ௧.கொரி.௰.௬,௰௧. (௨௪) ஏசா.௫௩.௫,௬. ௨.கொரி.௫.௨௧. கலா.௧.௪. எபி.௯.௨௮. ௧.பேதுரு.௨.௨௪. ௧.பேதுரு.௩.௰௮. ௧.கொரி.௰௫.௰௭. ௧.பேதுரு.௧.௨௧. (௨௫) அப்.௨.௨௪. அப்.௰௩.௩௰.—(௫. அதி. ௧.) ஏசா.௩௨.௰௭. யோவா.௰௬.௩௩. அதி.௩.௨௮,௩௰. எபே.௨.௰௪. கொலோ.௧.௨௰. (௨) யோவா.௰௪.௬. எபே.௨.௰௮. எபி.௰.௨௰. ௧.கொரி.௰௫.௧. எபி.௩.௬. (௩) மத்.௫.௰௧,௰௨. அப்.௫.௪௧. ௨.கொரி.௰௨.௰. பிலி.௨.௰௭. யாக்.௧.௨,௰௨. ௧.பேதுரு.௩.௰௪.

ச ராட்டுகிறோம்.—உபத்திரவம் பொறுமையையும்,
பொறுமை நிச்சயத்தையும், நிச்சயம் நம்பிக்கை
யையும் உண்டாக்குகின்றனவென் றறிந்திருக்கி
ரு றோம்.—நமக்குக்கொடுக்கப்பட்ட பரிசுத்த ஆவி
யினாலே தேவனுடைய அன்பு நம்முடைய
இருதயங்களில் ஊற்றப்பட்டிருக்கிறபடியினா
லே, அந்த நம்பிக்கை நம்மை வெட்கப்படுத்தா
சு து:-நாம் பெலமற்றவர்களாயிருக்கையிலும், குறி
த்தகாலத்திற் கிறிஸ்து அக்கிரமக்காரருக்காக ம
எ ரித்தார்.—நீதிமானுக்காக ஒருவன் மரிப்பது அரி
து: ஒருவேளை உதாரதயையுள்ளவனுக்காக ஒரு
அ வன் மரிக்கத்துணிவான்.—நாம் பாவிகளாயிருக்
கையிலுங் கிறிஸ்து நமக்காக மரித்ததினால்,தே
வன் நம்மேல்வைத்த அன்பை விளங்கப்பண்
கூ ணுகிறார்.—இப்படி நாம் அவருடைய இரத்தத்தி
னால் நீதிமான்களாக்கப்பட்டவர்களாகி, நிச்சய
மாய் அவர் மூலமாகக் கோபாக்கினையினின்று இ
ய ரட்சிக்கப்படுவோம்.-நாம் அவருக்குச் சத்துருக்
களாயிருக்கையில்,அவர் குமாரனுடைய மரணத்
தினாலே தேவனுடன் ஒப்புரவாக்கப்பட்டோ
மானால், ஒப்புரவாக்கப்பட்டபின் அவருடை
ய சீவனால் அதிக நிச்சயமாய் இரட்சிக்கப்படு
யக வோமே.-அதுமாத்திரமல்ல,இப்பொழுது ஒப்புர
வாகுதலை நமக்குக்கிடைக்கப்பண்ணின நம்மு
டைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்து மூல
மாய்த் தேவனில் மேன்மைபாராட்டுகிறோம்.—
யஉ ஒரே மனுஷனாலே பாவமும்,பாவத்தினாலே மர
ணமும் உலகத்திற் பிரவேசித்தன; எல்லாமனு
ஷரும் பாவஞ்செய்தவர்களானபடியால், எல்
லாரும் மரணத்திற் காதீனமாயிருக்கிறார்கள்.—
யங நியாயப்பிரமாணங் கொடுக்கப்படுமுன்னும் பா
வம் உலகத்தில் இருந்தது: ஆகிலும் நியாயப்பிர
மாணமில்லாதவிடத்திற் பாவம் எண்ணிக்கைப்
யச படவில்லை.—அப்படியிருந்தும் வருபவருக்கு
முன்னடையாளமாகிய ஆதாம்முதல் மோசேவ
ரைக்கும், ஆதாமின் பாவத்திற்கொப்பாய்ப் பா
வஞ்செய்யாதவர்களையும் மரணம் ஆண்டுகொ
யரு ண்டது.—ஆனாலும் கிருபையின் ஈவு குற்றத்
தைப்போலிராது. ஒருவன் குற்றஞ்செய்ததினால்
அநேகர்மரித்தார்கள், தேவனுடைய கிரு
பையும், யேசுக்கிறிஸ்து வென்னும் ஒரே ம
னுஷனுடைய கிருபையினால் வருகிற ஈவும்
அநேகர்மேல் அதிகமாய்ப் பெருகியிருக்கின்ற
யசு ன.—கிருபையின் ஈவு ஒருவன்செய்தபாவத்தினா
லுண்டானதுபோலிராது: அந்தத்தீர்ப்பு ஒரேகுற்
றத்தினிமித்தந் தண்டனைக்கேதுவாயிருந்தது, கி
ருபையுள்ள ஈவோ அநேகங்குற்றங்களை நீக்கி,
நீதியாக்குவதற்கேதுவாயிருக்கின்றது.-ஒரேமனு யஎ
ஷன் குற்றஞ்செய்ததினால், அந்தஒரேமனுஷன்
மூலமாய் மரணம் ஆண்டுகொண்டிருக்க, கிரு
பையின் பரிபூரணத்தையும், நீதியாகிய ஈவின்ப
ரிபூரணத்தையும்பெற்றிருப்பவர்கள்,மிகவும் அ
திகமாய் யேசுக்கிறிஸ்து வென்னும் ஒரேம
னுஷனாலே சீவனை அடைந்தாளுவார்கள்.—ஆ யஅ
தலால் ஒரேமனுஷனுடைய குற்றத்தினால் எல்
லாமனுஷருக்குந் தண்டனைக்கேதுவான தீர்ப்
புண்டானதுபோல, ஒரே மனுஷனுடைய நீ
தியினால் எல்லாமனுஷருக்குஞ் சீவநீதிக்கேது
வான தீர்ப்புண்டாயிற்று.—மேலும் ஒரேம யகூ
னுஷன் கட்டளையை மீறினதினால் அநேகர்பா
விகளானதுபோல, ஒரேமனுஷன் கட்டளைக்க
மைந்ததினால் அநேகர் நீதிமான்களாக்கப்படு
வார்கள்.—அன்றியும், குற்றம்பெருகும்படி நியா உய
யப்பிரமாணம் வந்தது. பாவம் பெருகியிருந்த
கிருபை அதிகமாகப் பெருகிற்று:—அதினாற் பா உக
வம் மரணத்திற்கேதுவாக ஆண்டுகொண்டது
போல, கிருபையானது நம்முடைய கர்த்தரா
கிய யேசுக்கிறிஸ்து மூலமாய், நீதியினால்
நித்தியசீவனுக்கேதுவாக ஆண்டுகொண்டது.

## சு. அதிகாரம்.

க. கிறிஸ்துவினாலே நீதிமான்களாகப்பெற்றவர்
கள் பாவஞ்செய்யத் தகாதெனக்காட்டல்:யஉ.
அவர்மூலமாய் நீதிமான்களாகப்பெற்றவர்கள்
துர்க்குணமடக்கி,சற்குணராய்நடந்து,நித்திய
சீவனைத் தேடுவது முறையென்று தெரிவித்தல்.

ஆகையால் நாம் என்னசொல்லலாம்: கிருபை க
பெருகும்படி பாவத்திலே நிலைநிற்போமா.—
அப்படிக்கூடாதே. பாவத்திற்கு மரித்தவர்களா உ
கிய நாம்,இனி அதில் எப்படி நாள்விட்டுச்சீவிப்
போம்.—யேசுக்கிறிஸ்துவுக்குள் ஞானஸ் ங
நானம் பெற்றவர்களாகிய நாம்அனைவரும், அவ
ருடைய மரணத்திற்குள் ஞானஸ்நானம் பெற்
றோமென்று உங்களுக்குத்தெரியவில்லையா.—ஆ ச
தலால் பிதாவின்மகிமையினாற் கிறிஸ்து மரித்
தோரினின்றுஎழுப்பப்பட்டதுபோல,நாமும்பு
திதானசீவனுள்ளவர்களாய் நடந்துகொள்ளும்ப
டி, மரணத்திற்குள்ளான ஞானஸ்நானத்தினால்
அவருடன் அடக்கம்பண்ணப்பட்டோம்.—ஆத ரு
லால் அவருடையமரணசாயலில் நாம் அவருட
னே நாட்டப்பட்டவர்களாயிருந்தால், அவரு
டைய உயிர்த்தெழுதலிலும் அப்படியிருப்போ
மே.—நாம் இனிப் பாவத்திற்கு ஊழியஞ்செய் சு

(ச)யாக்.க.உ. யாக்.க.யஉ.(ரு)பிலி.க.உய. உ.கொரி.க.உஉ. கலா.ச.சு. எபே.க.யங,யச. (சு) கலா.ச.ச. வச.அ.
அதி.ச.உச. (அ) யோவா.யரு.யங. க.பேதுரு.ங.யஅ. க.யோவா.ங.யசு. (கூ) அதி.ங.உசு. எபே.உ.யங. எபி.க
யச, க.யோவா.க.எ. அதி.க.உய. க.தெச.க.கூ. (ய) அதி.அ.ஙஉ. உ.கொரி.ரு.யஅ,யக. எபே.உ.யரு. கொலோ.க.
உய,உஉ. யோவா.யச.யகூ. உ.கொரி.ச.ய,யக.(யக)அதி.ங.உக,ஙய. கலா.ச.கூ. வச.ய. உ.கொரி.ரு.யஅ,யக.(யஉ)
ஆதி.ங.சு. க.கொரி.யரு.உக. ஆதி.உ.யஎ. அதி.சு.உங. க.கொரி.யரு.உக. (யங) அதி.ச.யரு. க.யோவா.ங.ச.(யச)
க.கொரி.யரு.உக,உஉ,சரு. (யரு) எசா.ருங.யக. மத்.உசு.உஅ. (யஅ) யோவா.யஉ.ஙஉ. எபி.உ.கூ. (உய) யோவா.
யரு.உஉ. அதி.ங.உய. கலா.ங.யகூ,உங. லூக்.எ.சஎ. க.தீமோ.க.யச.—(சு. அதி. க.) அதி.ங.அ. வச.யரு.(உ)ஙக.
யக.அதி.எ.ச. கலா.உ.யகூ. கலா.சு.யச. கொலோ.ங.உ. க.பேதுரு.உ.உச.(ங)கலா.ங.உஎ. க.கொரி.யரு.உக.(ச)
கொலோ.உ.யஉ. அதி.அ.யக. க.கொரி.சு.யச. உ.கொரி.யங.ச. யோவா.யக.சய. கலா.சு.யரு. எபே.ச.உஉ,உங,
உச.கொலோ.ங.ய.(ரு)பிலி.ங.ய,யக.(சு)கலா.உ.உய.கலா.கூ.யச.எபே.ச.உஉ.கொலோ.ங.ரு,ய.கொலோ.உ.யக.

யாதபடி,பாவமாகிய சரீரம் நாசமாகும்பொருட்
டாக நம்முடைய பழையசுபாவம் அவருடனே
சிலுவையில் அறையப்பட்டதென்பது நமக்குத்
௭ தெரியும்.-மரித்தவன்பாவத்தைநீங்கி விடுதலையா
௮ யிருக்கிறான்.-கிறிஸ்துவோடே நாம்மரித்தோ
மாகில் அவரோடே சீவித்துமிருப்போமென்று
௯ நம்புகிறோம்.—மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்
த கிறிஸ்து இனிமரிப்பதில்லை; மரணமானது
இனி அவரை ஆண்டுகொள்ளாதென்று அறிந்
௰ திருக்கிறோம்.—மரித்தவராகிய அவர், பாவத்திற்
கு ஒரேதரம் மரித்தார்: சீவித்திருப்பவராகிய அ
௰௧ வர், தேவனுக்குச் சீவித்திருக்கிறார்.—அப்ப
டியே நீங்களும், உங்களைப் பாவத்திற்கு மரித்த
வர்களென்றும்,நம்முடைய கர்த்தராகிய யே
சுக்கிறிஸ்து மூலமாய்த் தேவனுக்குச் சீ
வித்திருப்பவர்களென்றும் எண்ணிக்கொள்ளுங்
௰௨ கள்.—ஆகையால் நீங்கள், சரீரஇச்சைகளின்படி
பாவத்திற்குக் கீழ்ப்படியத்தக்கதாக, மரிக்கும்
உங்கள் சரீரத்திலேபாவம் ஆளுகைசெய்யவிடா
௰௩ திருங்கள்.—நீங்கள், உங்கள் அவயவங்களை அநீ
தியின் ஆயுதங்களாகப்பாவத்திற்கு ஒப்பியாமல்,
உங்களைமரித்தோரிலிருந்தெழுந்த சீவனுள்ளோ
ராகவும்,உங்கள் அவயவங்களைநீதியின் ஆயுதங்க
௰௪ ளாகவுந் தேவனுக்கு ஒப்பிப்பீர்களாக.—நீங்க
ள்நியாயப்பிரமாணத்திற்குக்கீழிராமல், கிருபை
யின் கீழிருக்கிறபடியால்,பாவம் உங்கள்மேல் ஆ
௰௫ ளுகைசெய்யமாட்டாது.-இதினாலென்ன; நாம்
நியாயப்பிரமாணத்திற்குக் கீழிராமல், கிருபை
யின் கீழிருக்கிறபடியால், நாம் பாவஞ்செய்ய
௰௬ லாமா; அப்படியாகாது.—மரணத்திற்கேதுவான
பாவம், நீதிக்கேதுவான கீழ்ப்படிதல் என்னும்
இவற்றில், எதற்குக்கீழ்ப்படியும்படி உங்களை அ
டிமைகளாக ஒப்பிக்கிறீர்களோ, அதற்கே கீழ்ப்
படிகிற அடிமைகளாவீர்களென்று நீங்கள் அறி
யீர்களா; முன்னே நீங்கள் பாவத்திற்கடிமைக
௰௭ ளாயிருந்தும்,—இப்பொழுது உங்களுக்கு ஒப்பிக்
கப்பட்ட உபதேசத்தின் கோட்பாட்டுக்கு நீங்
கள் மனச்சந்தோஷமாய்க் கீழ்ப்படிந்திருக்கிற
௰௮ படியினாலே தேவனுக்கு ஸ்தோத்திரம்.—இவ்
விதமாய் நீங்கள் பாவத்தினின்று விடுதலையாக்
௰௯ கப்பட்டு, நீதிக்கு அடிமைகளானீர்கள்.—உங்கள்
சரீரபெலவீனத்தினிமித்தம் மனுஷர் பேசும்வி
தமாய்வசனிக்கிறேன்: முன்னமேஅக்கிரமத்தை
ச்செய்யும்படி நீங்கள் உங்கள் அவயவங்களை
அசுத்தத்திற்கும், அக்கிரமத்திற்கும் அடிமைக
ளாய் ஒப்பித்ததுபோல், இப்பொழுது பரிசுத்தத்
தைச்செய்யும்படி உங்கள் அவயவங்களை நீதிக்
௨௰ கு அடிமைகளாய் ஒப்பிப்பீர்களாக.—பாவத்திற்
கு நீங்கள் அடிமைகளாயிருந்தகாலத்திலே நீதிக்
கு விலகினவர்களாயிருந்தீர்கள்.—இப்பொழுது ௨௧
உங்களுக்கு இலச்சையாய்த்தோன்றுகிற அந்தக்
கிரியைகளினால் அப்பொழுது உங்களுக்கென்
னபலன் உண்டாயிற்று; அவைகளின் முடிவு ம
ரணம்.—இப்பொழுது நீங்கள் பாவத்திற்குவிடுத ௨௨
லையாக்கப்பட்டுத் தேவனுக்கு அடிமைகளா
னதினால், பரிசுத்தமே உங்களுக்குக்கிடைக்கிற
பலன்: அதின்முடிவுநித்தியசீவனே.-பாவத்தின் ௨௩
சம்பளம் மரணம்; தேவனுடைய கிருபை
யுள்ள ஈவோ, நம்முடைய கர்த்தராகிய யே
சுக்கிறிஸ்துவினாலுண்டான நித்தியசீவன்.

## ௭. அதிகாரம்.

௧. விசுவாசிகள் நியாயப்பிரமாணத்தினின்று வி
டுதலைபெற்றுக் கிறிஸ்துவுடன் விவாகஞ்செய்
தல்: ௭. நியாயப்பிரமாணம் தீமையுள்ளதாகா
மல் சுத்தமும், நியாயமும்,நலமுமுள்ளதெனக்
காட்டல்: ௰௩.கட்டளையைமீறிப் பாவஞ்செய்
யும் ஒருவன் பாவத்தைவெறுத்ததினால் நியா
யப்பிரமாணம் உத்தமமென்று அறிக்கையிடல்:

நியாயப்பிரமாணத்தைஅறிந்தவர்களுடனேபே ௧
சுகிறேன்; சகோதரரே, ஒருமனுஷன் உயிரோ
டிருக்குமளவும் நியாயப்பிரமாணம் அவனை ஆ
ளுகின்றதென்று அறியீர்களா.—புருஷனையுடை ௨
ய ஸ்திரி, தன் புருஷன் உயிரோடிருக்குமள
வும் நியாயப்பிரமாணத்தின்படி அவனுக்கு ஆ
தீனமாயிருக்கிறாள்; புருஷன் மரித்தபின் அ
வள் தன் புருஷனுடைய பிரமாணத்தினின்
று விடுதலையாயிருக்கிறாள்.—இதினிமித்தம் புரு ௩
ஷன் உயிரோடிருக்கையில் அவள் வேறொரு
மனுஷனை விவாகம்பண்ணுவதினால், விபசாரி
யென்னப்படுவாள்: புருஷன் மரித்தபின்பு அ
வள் அந்தப்பிரமாணத்தினின்று விடுதலையானப
டியினால், வேறொருமனுஷனைவிவாகம்பண்ணி
னாலும் விபசாரியல்ல.—அப்படிப்போல, என் ச ௪
கோதரரே, நாம் தேவனுக்குக் கனிகொடுக்
கும்படி மரித்தோரினின்று எழுந்த கிறிஸ்து
வென்னும் வேறொருவருடையவர்களாவதற்கு,
கிறிஸ்துவின் சரீரத்தினாலேநீங்களும்நியாயப்
பிரமாணத்திற்கு மரித்தவர்களானீர்கள்.-நாம் மா ௫
மிசத்திற்கிசையநடந்தகாலத்தில்,நியாயப்பிரமா
ணத்தினாலே தோன்றிய பாவ இச்சைகள்மர
ணத்திற்கேதுவான கனிகளைக்கொடுக்கத்தக்கதா
க,நம்முடைய அவயவங்களிலே பலஞ்செய்திரு
ந்தன.-பழைய எழுத்துக்கேற்கவல்ல,புதியஆவி ௬
யின்படிதேவனைச்சேவிக்கிறதற்கு நம்மைக்
கட்டியிருந்த நியாயப்பிரமாணம் மரித்ததினால்,
இப்பொழுது நாம் அதினின்றுவிடுதலையாக்கப்

(௭) ௧.பேதுரு.௪.௨. (௮) ௨.தீமோ.௨.௰௧. (௯) வெளி.௧.௰௮. (௰) எபி.௯.௨௭,௨௮. லூக்.௨௰.௩௮. (௰௧) வச.௨. கலா.௨.௰௯. (௰௨) சங்.௰௯.௰௩. (௰௩) அதி.௭.௫. கொலோ.௩.௫. யாக்.௪.௧. அதி.௰௨.௧. ௧.பேதுரு.௨.௨௪. (௰௪) அதி.௭.௪,௬. கலா.௫.௰௮. (௰௫) ௧.கொரி.௯.௨௧. (௰௬) மத்.௬.௨௪. ௨.பேதுரு.௨.௰௯. (௰௭) ௨.தீமோ.௧.௰௩. (௰௮) யோவா.௮.௩௨. ௧.கொரி.௭.௨௨. கலா.௫.௧. ௧.பேதுரு.௨.௰௬. (௨௰) யோவா.௮.௩௪. (௨௧) அதி.௭.௫. அதி.௧.௩௨. (௨௨) யோவா.௮.௩௨. (௨௩) ஆதி.௨.௰௭. அதி.௫.௰௨. யாக்.௧.௰௫. அதி.௨.௭. ௧.பேதுரு.௧.௪.—(௭.அதி.௨.) ௧.கொரி.௭.௩௯. (௩) மத்.௫.௩௨. (௪) அதி.௮.௨. கலா.௨.௰௯. எபே.௨.௰௬. கொலோ.௨.௰௪. கலா.௫.௨௨. (௫) அதி.௬.௰௩,௨௧. கலா.௫.௰௯. யாக்.௧.௰௫. (௬) அதி.௨.௨௯. ௨.கொரி.௩.௬.

௭ பட்டிருக்கிறோம்.-இனி என்னத்தைச்சொல்லு
வோம், நியாயப்பிரமாணம்பாவகாரணமா; அப்
படியல்லவே: நியாயப்பிரமாணம் இல்லாதிருந்
தாற் பாவமின்னதென்றுநான்அறியமாட்டேன்:
"இச்சியாதிருப்பாயாக," என்பதை நியாயப்பிர
மாணஞ்சொல்லாதொழிந்தால், இச்சிப்பின்ன
௮ தென்று நான் அறியமாட்டேன்.-பாவம் இடம்
பெற்று,கட்டளையினால்எனதுள்ளத்திற்சகலவித
துராசைகளையும்உண்டாக்கிற்று. நியாயப்பிரமா
ணம் இல்லாவிட்டாற்பாவம் மரித்ததாயிருக்கு
௯ ம்.-முன்னேநியாயப்பிரமாணம் இல்லாததினால்
நான் உயிரோடிருந்தேன்: பின்புகட்டளைவந்த
தினாற்பாவம் உயிர்த்தது, நான் மரித்தேன்.—
௰ சீவனுக்குரியகட்டளை எனக்கு மரணமாய் மு
௰௧ டிந்ததென்றுகண்டேன்.—பாவம்கட்டளையினா
ல் இடம்பெற்று என்னை வஞ்சித்து, அதினால்
௰௨ என்னைக்கொலைசெய்தது.—ஆதலால் நியாயப்
பிரமாணம் பரிசுத்தமுள்ளது, கட்டளையும் பரி
௰௩ சுத்தமும், நீதியும், நன்மையுமுள்ளது.-நன்மை
யானது எனக்கு மரணமுண்டாவதற்கு ஏதுவா
யிற்றோ; அல்லவே. பாவம், கட்டளையினாலே மி
குந்த பாவமுள்ளதாகும்படிக்கும், அது பாவமா
கவே விளங்கும்படிக்கும் பாவமே நன்மையா
னதைக்கொண்டு எனக்கு மரணத்தை உண்டாக்
௰௪ கிற்று.-நியாயப்பிரமாணம் ஆவிக்கேற்றதாயிருக்
கிறதென்று நாம்அறிந்திருக்கிறோம்: நானோ பா
வத்திற்குவிலைப்பட்டு, மாமிசத்திற்குரியவனாயி
௰௫ ருக்கிறேன்.—நான் செய்வதற்கு நானே சம்ம
திக்கிறதில்லை:நான்விரும்புகிறதைச்செய்யாமல்
௰௬ நான் வெறுக்கிறதையேசெய்கிறேன்.—நான்வி
ரும்பாததைச் செய்திருக்க, நியாயப்பிரமாணம்
௰௭ நல்லதென்று ஒத்துக்கொள்ளுகிறேன்.-ஆதலால்
நானல்ல, எனக்குள்ளே வாசமாயிருக்கிற பாவ
௰௮ மே அதைச்செய்கின்றது.-என்னிடத்தில், என்
மாமிசத்திலே நன்மையானதொன்றும் வாசமா
யிருக்கிறதில்லையென்பது எனக்குத் தெரியும்:
நன்மையைவிரும்புவது எனக்கு எளிது,அதைச்
௰௯ செய்வதோ மிகவும் அரிது.-நான், விரும்புகிற
நன்மையைச்செய்யாமல், விரும்பாததீமையைச்
௨௰ செய்கிறேன்.—அந்தப்படி நான் விரும்பாததை
நானே செய்கிறவனாயிருக்க, நானல்ல, எனக்
குள்ளேவாசமாயிருக்கிறபாவமேஅப்படிச்செய்
௨௧ கின்றது.—ஆதலால் நன்மைசெய்ய நான்விரும்
புகிறசமயத்தில், தீமைசெய்வதற்கு என்னிலுள்
௨௨ ள ஒரு பிரமாணத்தைக் காண்கிறேன்.-எனதுள்
ளான ஆவியின்படி, தேவனுடைய நியாயப்
௨௩ பிரமாணத்தின்மேற் பிரியமாயிருக்கிறேன்.-ஆ
யினும்என்மனதின்பிரமாணத்திற்கு விரோதமா
ய்ப்போராடி, என் அவயவங்களிலுள்ள பாவப்
பிரமாணத்திற்கு என்னைச் சிறையாக்கிக்கொள்
ளுகிறஎன்அவயவங்களிலுள்ளவேறொருபிரமா
ணத்தைக் காண்கிறேன்.-ஐயோ,நான் நிர்ப்பாக் ௨௪
கியமுள்ள மனுஷன்; இந்த மரணசரீரத்தினின்
று ஆர்என்னைவிடுவிப்பார்.-நம்முடைய கர்த்த ௨௫
ராகிய யேசுக்கிறிஸ்துமூலமாய்த்தேவனை
ஸ்தோத்திரிக்கிறேன். ஆதலால் சரீரத்தைக்கொ
ண்டு பாவப்பிரமாணத்திற்கு ஊழியஞ்செய்தும்,
மனதைக்கொண்டு தேவனுடைய நியாயப்
பிரமாணத்திற்கு ஊழியஞ்செய்தும்வருகிறேன்.

## ௮. அதிகாரம்.

௧. கிறிஸ்துவை விசுவாசிப்பவர்கள் ஆக்கினைத்
தீர்ப்பினின்றுவிடுதலைபெற்றுச்சற்குணராதல்:
௰௨. தேவனுக்குரிய புத்திரராதல். அவர்
கள் மோட்சத்தை எதிர்பார்த்தல். அதற்குரிய
மிக்கப்படல்: ௩௧. கிறிஸ்துவினால் அவர்களுக்
குக் கிடைக்கும் நன்மையுஞ் செயமுமின்ன
தெனக்காட்டல்.

ஆனபடியினால் கிறிஸ்துயேசுவுக்குள்ளி ௧
ருக்கிறவர்களாகி, மாமிசத்திற்கிசைய நடவாம
ல்,ஆவியின்படிநடந்துவருகிறவர்களுக்குத்தண்
டனைத்தீர்ப்பிராது.—யேசுக்கிறிஸ்து மூல ௨
மாய் ஆவியின்பிரமாணம், மரணத்திற்கேதுவா
கிய பாவத்தின் பிரமாணத்தினின்று என்னை வி
டுதலையாக்கிற்று.—மாமிசத்தினாலுண்டான பல ௩
வீனத்தினிமித்தம்,நியாயப்பிரமாணஞ் செய்யக்
கூடாததைத் தேவன் செய்யும்படி,தமதுகுமா
ரனைப்பாவமுடைய மாமிசத்தின் சாயலாகவும்,
பாவபலியாகவும் அனுப்பி,மாமிசத்திலேபாவத்
திற்குத்தண்டனைத்தீர்ப்புச்செய்தார்.—அதினால் ௪
மாமிசத்தின்படிநடவாமல் ஆவியின்படிநடக்கி
றநம்மாலேநியாயப்பிரமாணத்தின் நீதிநிறைவே
றலாகும்.—மாமிசத்திற்கிசைந்தவர்கள் மாமிசத் ௫
திற்கேற்றவைகளிற்பிரியப்படுகிறார்கள்; ஆவிக்
கிசைந்தவர்கள் ஆவிக்கேற்றவைகளிற் பிரியப்
படுகிறார்கள்.—மாமிசத்திற்கேற்றசிந்தை மர ௬
ணம்; ஆவிக்கேற்றசிந்தையோ சீவனுஞ் சமாதா
னமுமுள்ளது.-மாமிசசிந்தை தேவனுக்கு வி ௭
ரோதமானபகை: அது தேவனுடைய நியா
யப்பிரமாணத்திற்கு ஆதீனமல்ல, ஆதீனமாயிருக்
கவுங்கூடாது.-ஆதலால் மாமிசசிந்தையுள்ளவர் ௮
கள் தேவனுக்குப் பிரியராயிருக்கமாட்டார்
கள்.-தேவனுடைய ஆவி உங்களுள்ளத்தில் ௯
வாசமாயிருந்தால், நீங்கள் மாமிசசிந்தையுள்ள
வர்களாயிராமல், ஆவியையுடையவர்களாயிருப்

(௭) அதி.௩.௨௰. யாத்.௨௰.௰௭. அப்.௨௰.௩௩. (௮) அதி.௪.௰௫. ௧.கொரி.௰௫.௫௬. (௯) லேவி.௰௮.௰௫. எசேக். ௨௰.௰௧ ௰௩,௨௧. ௨.கொரி.௩.௭. (௰௨) சங்.௰௯.௮. ௧.தீமோ.௧.௮. (௰௪) ௧.இரா.௨௧.௨௰,௨௫. ௨.இரா.௰௭.௰௭. (௰௫) சங்.௧.௬. கலா.௫.௰௭. (௰௮) ஆதி.௬.௫. (௨௨) சங்.௧.௨. ௨.கொரி.௪.௰௬. எபே.௩.௰௬. கொலோ.௩.௯. (௨௩) கலா.௫.௰௭. அதி.௬.௰௩,௰௯. (௨௫) ௧.கொரி.௰௫.௫௭.—(௮. அதி. ௧.) வச.௪. கலா.௫.௰௬,௨௫. (௨) யோவா.௮.௩௬. அதி.௬.௰௮,௨௨. கலா.௨.௰௯. ௧.கொரி.௰௫.௪௫. ௨.கொரி.௩.௬. அதி.௭.௨௪,௨௫. (௩) அப்.௰௩.௩௯. அதி.௩.௨௰. எபி.௭.௰௮,௰௯. ௨.கொரி.௫.௨௧. கலா.௩.௰௩. (௪) வச.௧. (௫) யோவா.௩.௬. ௧.கொரி.௨.௰௪. கலா.௫.௨௨,௨௫. (௬) அதி.௬.௨௧. வச.௰௩. கலா.௬.௮. வச.௭. (௭) யாக்.௪.௪. ௧.கொரி.௨.௰௪. (௯) ௧.கொரி.௩.௰௬. யோவா.௩.௩௪. கலா.௪.௬. பிலி.௧.௨௰. ௧.பேதுரு.௧.௰௧.

பீர்கள். கிறிஸ்துவின் ஆவியைப்பெறாதவன்
௰ அவருக்குரியவனல்ல.—கிறிஸ்து உங்களில்
தங்கினால், சரீரமானது பாவத்தினிமித்தம் மர
ணத்திற்காதீனமாயினும், ஆவியானது நீதியினி
௰௧ மித்தஞ்சீவனையுடையதாயிருக்கும்.—அன்றியும்,
யேசுவை மரித்தோரினின்று எழுப்பினவரு
டையஆவி உங்களில்வாசமாயிருந்தால், கிறிஸ்
துவை மரித்தோரினின்று எழுப்பினவர் உங்க
ளில் வாசமாயிருக்கிற தம்முடையஆவியினாலே
மரணத்திற்கேற்ற உங்கள் சரீரங்களையும் உயிர்ப்
௰௨ பிப்பார்.—ஆதலால் சகோதரரே, மாமிசததிற்சீ
வித்து நாள் விடுகிறதற்கு நாம் மாமிசத்திற்குக்க
௰௩ டனாளிகளல்ல.—மாமிசத்தில் நீங்கள் சீவித்து
நாள்விட்டாற் சாவீர்கள்; ஆவியினாலே சரீரத்
தின்கிரியைகளைநாசப்படுத்தினாற்சீவிப்பீர்கள்.-
௰௪ தேவனுடைய ஆவியினாலே நடத்தப்படுகிற
வர்கள் எவர்களோ, அவர்களே தேவனுடை
௰௫ ய புத்திரராயிருக்கிறார்கள்.—திரும்பவும் பயப்
படுகிறதற்கு நீங்கள் அடிமைத்தனத்தின் ஆவி
யைப்பெறாமல், அப்பாபிதாவே, என்று கூப்
பிடப்பண்ணுகிற புத்திரசுவிகாரத்தின் ஆவியை
௰௬ யே பெற்றிருக்கிறீர்கள்.—நாம் தேவனுடைய
பிள்ளைகளாயிருக்கிறோமென்று ஆவியானவர்தா
மே நம்முடைய ஆவியோடே சாட்சியிடுகிறார்.—
௰௭ நாம் அவருடைய பிள்ளைகளாயிருந்தோமாகில்
சுதந்தரருமாயிருக்கிறோமே; கிறிஸ்துவுடனே
நாம் மகிமைப்படும்படிக்கு அவருடனே பாடு
பட்டால் அவரோடே சுதந்தரராய்த் தேவனுக்
௰௮ குச் சுதந்தரராகவே யிருக்கிறோம்.—இக்காலத்
தின் உபத்திரவங்கள், இனி நம்மிடத்தில் வெ
ளிப்படும் மகிமைக்கு ஒப்பிடப்படுவதற்குப்பாத்
திரமானவைகளல்லவென்று நான் எண்ணுகி
௰௯ றேன்.—மேலும் சிருஷ்டி தேவனுடைய புத்
திரர் வெளிப்படுவதற்கு மிகுந்த ஆவலோடே
௨௰ காத்திருக்கின்றது.—சிருஷ்டி, தன் இஷ்டத்தி
௨௧ னாலேயல்ல,—அழிவுள்ள நிலைமையினின்றும்
விடுதலைபெறுந் தேவனுடைய பிள்ளைகளுக்
குரிய மகிமையுள்ள விடுதலைக்குப் பங்காளியா
குமென்கிற நம்பிக்கையுள்ளதாய், மாயைக்குக்
கீழ்ப்படுத்தினவராலேயே கீழ்ப்படுத்தப்பட்டி
௨௨ ருக்கின்றது.—சிருஷ்டியாவும் பிரசவவேதனை
போன்ற வேதனைப்பட்டு, இதுவரைக்கும் பெ
ருமூச்சுவிட்டு வருகின்றனவென்பது நமக்குத்
தெரியும்.—அவைகள்மாத்திரமல்ல, ஆவியின்மு ௨௩
தற்பலனைப்பெற்ற நாமுங்கூட நம்முடைய ச
ரீரம் மீட்கப்படுதலாகிய புத்திரசுவிகாரத்தை எ
திர்பார்த்து, நமக்குள் அப்படியே பெருமூச்சு
விடுகிறோம்.—நாம் நம்பிக்கையினால் இரட்சிக் ௨௪
கப்பட்டிருக்கிறோம்: காணப்படுகிறபொருளை
நம்புவது நம்பிக்கையல்ல: தான் காண்பதை ஒ
ருவன் நம்பவேண்டியதென்ன.—நாம் காணாத ௨௫
தைநம்புகிறபடியாற்பொறுமையோடே அதைக்
காத்திருக்கிறோம்.—அந்தப்படியே ஆவியானவ ௨௬
ரும் நம்முடைய பலவீனங்களில் நமக்கு உதவி
செய்கிறார்: நாம் இன்னதற்கு வேண்டுதல்பண்
ணவேண்டுமென்று அறியாமலிருக்க, ஆவியான
வர் தாமே சொல்லமுடியாத பெருமூச்சோடே
நமக்காக வேண்டுதல்பண்ணுகிறார்.—தேவனு ௨௭
டைய அனுமதிக்கேற்கப் பரிசுத்தவான்
களினிமித்தம் வேண்டுதல்பண்ணும் ஆவியின்
அபிப்பிராயம், இருதயங்களை ஆராய்ந்து பார்ப்ப
வருக்குத் தெரியும்.—அன்றியும், அவர் முன்கொ ௨௮
ண்ட தீர்மானத்தின்படி அழைக்கப்பட்டவர்க
ளாய், தேவனில் அன்புகூருகிறவர்களுக்குச்
சகலமும் நன்மையாய் முடியுமென்று அறிந்தி
ருக்கிறோம்.—தம்முடையகுமாரன் அநேக சகோ ௨௯
தரருக்குள்ளே முதற்பேறானவராயிருக்கும்பொ
ருட்டு, அவர் எவர்களை முன்னறிந்தாரோ, அவர்
களைத் தமதுகுமாரனுடைய சாயலுக்கு ஒப்பாயி
ருக்கும்படி முன்குறித்தார்.—எவர்களை முன்கு ௩௰
றித்தாரோ, அவர்களை அழைத்தார்: எவர்களை அ
ழைத்தாரோ, அவர்களை நீதிமான்களாக்கினார்: எ
வர்களை நீதிமான்களாக்கினாரோ, அவர்களை மகி
மைப்படுத்தினார்.—இவைகளைக்குறித்து நாம் என் ௩௧
னசொல்லுவோம், தேவன் நமது பட்சத்திலி
ருந்தால், நமக்குவிரோதமாயிருப்பவன்யாவன்.—
தம்முடைய சொந்தக் குமாரனென்றும் பாராமல் ௩௨
நம்மெல்லாருக்காகவும் அவரை ஒப்பித்திருக்க,
அவரோடே மற்றெல்லாவற்றையும் அவர்நமக்க
ருளாதிருப்பதெப்படி.—தேவன் தெரிந்துகொ ௩௩
ண்டவர்கள்மேற் குற்றஞ் சாற்றுபவனார்; தேவ
னே அவர்களைநீதிமான்களாக்குகிறவர்.—அவர்க ௩௪
ளுக்குத் தண்டனைத் தீர்ப்புக்கொடுப்பவன் யா
வன்; கிறிஸ்துவே மரித்தவர், அவரே எழுந்தும்
இருக்கிறவர், அவரே தேவனுடைய வலப்பா
ரிசத்திலும்இருக்கிறவர், அவரே நமக்காகவேண்

---

(௰௧) அப்.௨.௨௪. அதி.௬.௪,௫. ௧.கொரி.௬.௰௪. ௨.கொரி.௪.௰௪. எபே.௨.௫. (௰௨) அதி.௬.௭,௰௪. (௰௩) வச.௬. கலா.௬.௮. எபே.௪.௨௨. கொலோ.௩.௫. (௰௪) கலா.௫.௰௮. (௰௫) ௧.கொரி.௨.௰௨. எபி.௨.௰௫. ௨.தீமோ.௧.௭. ௧.யோவா.௪.௰௮. ஏசா.௫௬.௫. கலா.௪.௫,௬. மாற்.௰௪.௩௬. (௰௬) ௨.கொரி.௧.௨௨. எபே.௧.௰௩. (௰௭) அப்.௨௬.௰௮. கலா.௪.௭. அப்.௰௪.௨௨. பிலி.௧.௩௰. ௨.தீமோ.௨.௰௧,௰௨. (௰௮) ௨.கொரி.௪.௰௭. ௧.பேது.௧.௬,௭. (௰௯) ௨.பேது.௩.௰௩. ௧.யோவா.௩.௨. (௨௧) வச.௨௨. ஆதி.௩.௰௯. (௨௨) மாற்.௰௬.௰௫. கொலோ.௧.௨௩. எரே.௰௧. ௰௨. ௨.கொரி.௫.௫. எபே.௧.௰௪. ௨.கொரி.௫.௨,௪. லூக்.௨௰.௩௬. லூக்.௨௧.௨௮. எபே.௪.௩௰. ௨.கொரி.௫.௬. எபி.௰௧.௧. (௨௬) மத்.௨௰.௨௨. யாக்.௪.௩. சக.௰௨.௰. எபே.௬.௰௮. (௨௭) ௧.நாளா.௨௮.௯. சங்.௭.௯. நீதி.௰௭.௩. எரே.௰௧.௨௰. எரே.௰௭.௰. அப்.௧.௨௪. ௧.தெச.௨.௪. வெளி.௨.௨௩. ௧.யோவா.௫.௰௪. அதி.௯.௰௧,௨௩,௨௪. ௨.தீமோ.௧.௯. (௨௯) யாத்.௩௩.௰௨,௰௭. சங்.௧.௬. எரே.௧.௫. மத்.௭.௨௩. அதி.௰௧.௨. ௨.தீமோ.௨.௰௯. ௧.பேது.௧.௧. எபே.௧.௬,௰௨. யோவா.௰௭.௨௨. ௨.கொரி.௩.௰௮. பிலி.௩.௨௧. ௧.யோவா.௩.௨. கொலோ.௧.௰௫,௰௮. எபி.௧.௬. வெளி.௧.௫. (௩௰) அதி.௧.௬. எபே.௪.௪. எபி.௯.௰௫. ௧.பேது.௨.௯. ௧.கொரி.௬.௰௧. யோவா.௰௭.௨௨. எபே.௨.௭. எண்.௰௪.௯. (௩௨) அதி.௫.௬,௰. அதி.௪.௨௫. (௩௩) ஏசா.௫௰.௮,௯. வெளி.௰௨.௰,௰௧. (௩௪) யோபு.௩௪.௩௰. மாற்.௰௬.௰௯. கொலோ.௩.௧. எபி.௧.௩. ௧.பேது.௩.௨௨. எபி.௭.௨௫. ௧.யோவா.௨.௧.

௩௫ டுதலும் பண்ணுகிருர்.—கிறிஸ்துவின் அன்
பைவிட்டு நம்மைப்பிரிப்பவன் யாவன்; உபத்
திரவமோ, வியாகுலமோ, துன்புறுத்தலோ,பஞ்
சமோ, நிருவாணமோ, ஆபத்தோ, கட்கமோ.—
௩௬ "உமதுநிமித்தம் நாங்கள் நாடோறுங் கொலை
செய்யப்படுகிறோம்; அடிக்கப்படும் ஆடுகளைப்
போல எண்ணப்பட்டிருக்கிறோம்," என்று எழு
௩௭ தியிருக்கிறதற்கிசைய நடந்தாலும்,-நம்மில்அன்
புகூருகிறவர் மூலமாக இவை எல்லாவற்றையும்
நாம் செயங்கொண்டு, வெற்றிசிறந்தவர்களாயி
௩௮ ருக்கிறோம்.-மரணமாவது, சீவனாவது, தேவதூ
தராவது, அதிபதிகளாவது, அதிகாரிகளாவது,
நிகழ்காரியங்களாவது,வருங்காரியங்களாவது,-
௩௯ உயர்வாவது, தாழ்வாவது, வேறெந்தச்சிருஷ்டி
யாவது நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்
து யேசுவினால் விளங்கிய தேவனுடைய
அன்பைவிட்டு நம்மைப்பிரிக்கமாட்டாதென்று
நிச்சயித்திருக்கிறேன்.

## ௯. அதிகாரம்.

*௧. யூதரினிமித்தம் பவுல் மனஸ்தாபப்படல்: ௬. ஆபிரகாமின் சந்ததியாரனைவரும் கிருபைபெறத்தக்கவர்களல்லவெனக்காட்டல்: ௰௪. கிருபைகிரியைகளின்படியல்ல, தேவசித்தத்தின்படி அருளப்படுமென்று தெரிவித்தல்: ௰௯. குயவனைத் திருஷ்டாந்தமாகக்காட்டி விவாதக்காரனுக்கு உத்தரஞ்சொல்லல்: தேவன் செய்வது நியாயமெனத்தெரிவித்தல்.*

சரீரத்தின்படி என்வமிசத்தாராகிய சகோதர
ரும், இனத்தாருமானவர்களுக்காக, நானே கிறி
ஸ்துவைவிட்டுச்சபிக்கப்பட்டவனாகவேண்டு
௨ மென்றிருந்து,-மிகுந்த துக்கமும், இடைவிடா
த மனஸ்தாபமுமுள்ளவனாயிருக்கிறேனென்று,-
௩ நான் கிறிஸ்துவைக்கொண்டு சத்தியத்தைச்
சொல்லுகிறேன், நான் சொல்லுகிறது பொய்
யல்ல, பரிசுத்தஆவியின் சமுகத்தில் என்மனமே
௪ இதற்குச்சாட்சி.—அவர்கள் இஸரவேல் சந்ததி
யாரே;புத்திரசுவிகாரம்,மகிமை,உடன்படிக்கை
கள், நியாயப்பிரமாணங்கொடுத்தல், தேவாராத
னை, வாக்குத்தத்தங்களாகியஇவைகளும் அவர்க
ளுடையனவே; முற்பிதாக்கள் அவர்களுடைய
௫ வர்களே.-மேலும் சரீரத்தின்படி கிறிஸ்துவும்
அவர்களுடையவமிசத்திலேதோன்றினார். அவர்
என்றென்றைக்கும் ஸ்தோத்திரிக்கப்பட்ட சரு
வத்திற்குமேலான தேவனானவர். ஆமென்.-
௬ தேவனுடைய வாக்கு அவமாய்ப் போயிற்
றென்று சொல்லலாகாது. இஸரவேல்வமிசத்தா
ரெல்லாரும் இஸரவேலரல்ல:-ஆபிரகாமின் சந் ௭
ததியாரானதினாற்சகலரும் அவனுடைய பிள்
ளைகளுமல்லவே: "உன் சந்ததி ஈசாக்கின் வழி
யாய் விளங்கும்," என்று எழுதியிருக்கின்ற
து.—மாமிசத்தின்படி பிள்ளைகளானவர்கள் தே ௮
வனுடைய பிள்ளைகளல்ல: வாக்குத்தத்தத்தின்
பிள்ளைகளே அந்தச் சந்ததியென்றெண்ணப்படு
கிறார்கள்.-"இக்காலத்திலே வருவேன், சாராள் ௯
ஒரு புத்திரனைப்பெறுவாள்," என்பதே அந்த
வாக்குத்தத்தத்தின்வாக்கியம்.-இதுவுமல்லாமல், ௰
நம்முடைய பிதாவாகிய ஈசாக்கென்னும் ஒரு
வனால் ரிபெக்காள் கருப்பவதியானபொழுது,-
அவளுடைய பிள்ளைகள் பிறவாமலும், நன்மை ௰௧
தீமை ஒன்றுஞ்செய்யாமலுமிருக்கையில்,தேவ
னுடைய தெரிந்துகொள்ளுதலின்படியிருக்கி
ற அவருடைய தீர்மானம்,கிரியைகளினாலேயல்
ல, அழைக்கிறவராலே நிலைநிற்கும்படி,-"மூத் ௰௨
தவன் இளையவனிடத்திற் சேவிப்பான்,"என்று
அவளுடனே சொல்லப்பட்டது.—அந்தப்பிர ௰௩
காரமாக, "யாக்கோபின்மேல் அன்பு வைத்து,
ஏசாவை வெறுத்தேன்," என்றும் எழுதியிருக்
கின்றது.—நாம் என்னசொல்லுவோம்; தேவ ௰௪
னிடத்தில் அநியாயமுண்டா, அப்படியல்ல
வே.—அவர் மோசேயைநோக்கி, "எவனுக்கு ௰௫
அனுக்கிரகஞ் செய்யச்சித்தங்கொள்வேனோ அ
வனுக்கு அனுக்கிரகத்தையும், எவனுக்குத்தயை
செய்யச் சித்தங்கொள்வேனோ அவனுக்குத் த
யையையுஞ் செய்வேன்," என்றார்.—ஆதலால் ௰௬
விரும்புகிறவனாலுமல்ல, ஓடுகிறவனாலுமல்ல,
தயைசெய்யுந் தேவனாலே ஆகும்.-பார்வோ ௰௭
னுடனே, "என் வல்லமையை உன்னிடத்திற்
காண்பிக்கவும், என் நாமம் பூமி எங்கும் பிரசித்
தமாகவுமே உன்னை நிறுத்தினேன்," என்று அ
வர் சொன்னதாக வேதத்திலே சொல்லியிருக்
கின்றது.-ஆதலால் அவர் எவன்மேல் இரங்கச்சி ௰௮
த்தமாயிருக்கிறாரோ, அவன்மேல் இரங்குகிறார்,
எவனைக் கடினப்படுத்தச்சித்தமாயிருக்கிறாரோ,
அவனைக்கடினப்படுத்துகிறார்.-இப்படியானால் ௰௯
அவர் இன்னும் ஏன் குற்றம்பிடிக்கிறார், அவரு
டைய சித்தத்தை விரோதித்தவன் யாவனென்
று நீ என்னுடனே சொல்வாய்.—மனுஷனே, ௨௰
தேவனுடன் வாக்குவாதம்பண்ணுவதற்கு நீ
யாவன்; உருவாக்கப்பட்டவஸ்து உருவாக்கின
வனுடனே,நீ என்னை ஏன் இப்படி உண்டாக்கி
னாயென்று சொல்லலாமா.-ஒரே களிமண்பிண் ௨௧
டத்திலிருந்து ஒருபாத்திரத்தைக் கனத்திற்கும்,

(௩௬)சங்.௪௪.௨௨. ௧.கொரி.௰௫.௩௰,௩௧. ௨.கொரி.௪.௰௧.(௩௭)௧.கொரி.௰௫.௫௭. ௨.கொரி.௨.௰௪. ௧.யோவா.௪. ௪. வெளி.௰௨.௰௧.(௩௮)எபே.௧.௰௯. கொலோ.௧.௰௬. ௧.பேது௫.௩.௨௨.—(௯. அதி. ௧.) யாத்.௩௨.௩௨.(௨)அதி. ௰.௧.(௩)௨.கொரி.௧.௨௩. கலா.௧.௨௰. பிலி.௧.௮. ௧.தீமோ.௨.௭.(௪)உபா.௭.௬. யாத்.௪.௨௨. உபா.௰௪.௧. எரே. ௩௧.௯. ௧.சாமு.௪.௨௧. ௧.இரா.௮.௰௧. அப்.௩.௨௫. எபி.௮.௮,௯,௰. சங்.௱௪௭.௰௯.எபி.௯.௧. அப்.௰௩.௩௩.எபே.௨. ௰௨.(௫)உபா.௰.௰௫. லூக்.௩.௨௩. எரே.௨௩.௬. யோவா.௧.௧.அப்.௨௰.௨௮. எபி.௧.௮. ௧.யோவா.௫.௨௰.(௬)எண். ௨௩.௰௯. யோவா.௮.௩௯. அதி.௨.௨௮,௨௯. கலா.௬.௰௬. (௭) கலா.௪.௨௩. ஆதி.௨௧.௰௨. எபி.௰௧.௰௮. (௮) கலா. ௪.௨௮. (௯) ஆதி.௰௮.௰,௰௪. (௰) ஆதி.௨௫.௨௧. (௰௧) அதி.௪.௰௭. அதி.௮.௨௮. (௰௨) ஆதி.௨௫.௨௩. (௰௩) மல்.௧. ௨,௩. உபா.௨௧.௰௫. நீதி.௰௩.௨௪. மத்.௰.௩௭. லூக்.௰௪.௨௬. யோவா.௰௨.௨௫.(௰௪)உபா.௩௨.௪. ௨.நாளா.௰௯.௭. யோபு.௮.௩. சங்.௯௨.௰௫. (௰௫) யாத்.௩௩.௰௯. (௰௭) கலா.௩.௮,௨௨. யாத்.௯.௰௬. (௰௮) ௨.நாளா.௨௰.௬. யோபு. ௯.௰௨. தானி.௪.௩௫. (௨௰) யோபு.௩௩.௰௩. ஏசா.௨௯.௰௬. (௨௧) நீதி.௰௬.௪. எரே.௰௮.௬. ௨.தீமோ.௨.௨௰.

வேறொன்றைக் கனவீனத்திற்குஞ் செய்வதற்
குக் குயவனுக்கு மண்ணின்மேல் அதிகாரமில்
உஉ லையா.-தேவன், தமது குரோதத்தைக்காண்பிக்
கவும், தமது வல்லமையை அறிவிக்கவும் விரும்
பி, நாசத்திற்கேற்ற குரோதபாத்திரங்களின்மேல்
வெகுகாலம் நீடியபொறுமையைக் காட்டினது
உங மன்றி,—தாம் மகிமைக்காக ஆயத்தப்படுத்தின அ
னுக்கிரகபாத்திரங்களின்மேலே தமது மகிமை
யின் ஐசுவரியத்தையும் பிரஸ்தாபமாக்கவிரும்
உச பி,—யூதரிலிருந்துமாத்திரமல்ல, புறத்தேசத்தா
ரிலிருந்தும் எங்களைப்போல் அவர்களையும் அ
உரு ழைத்தாரேயானாலென்ன.—அப்படியே "எனக்
குரிய சனங்களல்லாதவர்களை எனக்குரியசனங்
களென்றும், நேசிக்கப்படாதிருந்தவளை நேசிக்
கப்பட்டவளென்றுஞ்சொல்லி அழைப்பேன்,"
உசு என்றும்,—நீங்கள் என் சனங்களல்லவென்று
அவர்களுக்குச் சொல்லப்பட்ட இடத்தில், "ஜீ
வனுள்ள தேவனுடைய பிள்ளைகளென்று
அழைக்கப்படுவார்கள்," என்றும் ஓசியாவின்
உஎ புத்தகத்தில் அவர் சொல்லியிருக்கிறார்.—மேலு
ம், "இஸ்ரவேல் சந்ததியாரின் இலக்கஞ் சமுத்தி
ரத்தின் மணல்அத்தனையாயிருந்தாலும், அவர்க
ளில் மீந்திருப்பவர்கள்மாத்திரம் இரட்சிக்கப்ப
டுவார்கள்," என்று ஏசாயாவும் இஸ்ரவேலைக்கு
உஅ றித்துச் சொல்லுகிறான்.—கர்த்தர் நீதியோடே
சீக்கிரமாய்க் கிரியையைத்தீர்த்து நிறைவேற்று
வார்: தேசத்திற் சுருக்கமாய்க்கிரியையைச்செய்
உகூ துமுடிப்பார்.—அல்லாமலும் அதற்குமுன்னே
ஏசாயா, "சேனைபதியாகிய கர்த்தர் நமக்கு ஒரு
சந்ததியை மீந்திருக்கவிடாராகில், நாம்சோதோ
மைப்போ லிருப்போம், கொமோராவுக்கொப்
ங௰ பாவோம்,"என்றான்.—இப்படியானால் என்ன
சொல்லுவோம், நீதியைத்தொடராத அந்நியர் நீ
தியைப்பெற்றார்கள், அது விசுவாசத்தினாலாகும்
ஙக நீதியே.—இஸ்ரவேலரோ, நியாயப்பிரமாணத்தி
னால் நீதியைத்தேடியும், நியாயப்பிரமாணத்தினா
ஙஉ லாகும் நீதியைப்பெறவில்லை.-எதினாலே; அவர்
கள்விசுவாசத்தினால் அதைத்தேடாமல், நியாயப்
பிரமாணத்தின்கிரியைகளினால் அதைத்தேடி
னார்கள். இடறுகிறதற்கான அந்தக்கல்லில் இ
ஙங டறினார்கள்.-"பாருங்கள், இடறுகிறதற்கானகல்
லையும், தவறுகிறதற்கான கல்மலையையும் நான்
சீயோனில் வைக்கிறேன்: அவர்மேல் விசுவா
சமாயிருப்பவனெவனோ, அவன் வெட்கப்ப
டான்," என்று எழுதியிருக்கிறதின்படி ஆயிற்று.

## ௰. அதிகாரம்.

க. நியாயப்பிரமாணத்தினாலே யூதர் இரட்சிப்புப்
பெறாதிருத்தல். விசுவாசத்தினாலேமாத்திரங்கி
டைக்குமெனக்காட்டல்:௰ச.விசுவாசத்தினால்
அந்நியதேசத்தார் இரட்சிப்புப்பெற்றும் யூதர்
பெறவில்லையென்று தெரிவித்தல்.

சகோதரரே, இஸ்ரவேலர் இரட்சிக்கப்பட க
வேண்டுமென்றே நான் மனோவாஞ்சையோ
டே தேவனிடத்தில் வேண்டுதல்பண்ணுகி
றேன்.—அவர்கள் தேவனைக் குறித்துப் பக் உ
திவைராக்கியமுள்ளவர்களென்பதற்கு நானே
அவர்களைக்குறித்துச் சாட்சிசொல்லுகிறேன்,
ஆயினும் அது அறிவுக்கேற்றதல்ல.—அவர்கள் ங
தேவநீதியை அறியாமல், தங்கள் சுய நீதியை
நிலைப்படுத்த வகைதேடி, தேவநீதிக்கு அ
மைந்தவர்களாயிருக்கவில்லை.—விசுவாசிக்கிற ச
வன் எவனுக்கும் நீதி உண்டாகும்படி, கிறிஸ்
துவே நியாயப்பிரமாணத்தின் முடிவாயிருக்கி
றார்.—நியாயப்பிரமாணத்தினாலாகும் நீதியைக் ரு
குறித்து மோசே, "இவைகளைச்செய்கிற மனு
ஷனே இவைகளாற் சீவித்திருப்பான்," என்றெ
ழுதினான்.—விசுவாசத்தினாலாகும் நீதியானது, சு
கிறிஸ்துவை இறங்கிவரப்பண்ணும்படி வா
னத்திற்கேறுபவன் யாவன்.-அல்லது, கிறிஸ்து எ
வை மரித்தோரினின்றுஎழுப்புகிறதற்குப்பாதா
ளலோகத்தில் இறங்குபவன் யாவனென்று உன்
மனதிலே சிந்தனைபண்ணாதேயென்றுசொல்லு
கிறதுமன்றி,—"இந்தவாக்கு உனக்குச்சமீபமா அ
ய், உன்வாயிலும் மனதிலுமுள்ளது,"என்று பின்
னுஞ் சொல்லுகின்றது: விசுவாசத்தின் இந்த
வாக்கையே நாங்கள் பிரசங்கிக்கிறோம்.—நீதி கூ
உண்டாக, மனுஷர் இருதயத்தால் விசுவாசிக்
கவேண்டும், இரட்சிப்புண்டாக வாயினால் அ
றிக்கையிடவும் வேண்டும்:—ஆதலால் நீ கர்த் ௰
தராகிய யேசுவை உன் வாயினால் அறிக்
கையிட்டு, தேவன் அவரை மரித்தோரினின்று
எழுப்பினாரென்று உன்இருதயத்தோடேவிசுவா
சித்தால் இரட்சிக்கப்படுவாய்.-அல்லாமலும்"அ ௰க
வரை விசுவாசிக்கிறவனெவனோ, அவன் வெட்
கப்படான்,"என்று வேதத்திற் சொல்லியிருக்
கின்றது.-யூதருக்குங் கிரேக்கருக்கும் வித்தியா ௰உ
சமேயில்லை: எல்லாருக்குமேலானவராகிய ஒரே
கர்த்தரானவர், தம்மைநோக்கிப் பிரார்த்த
னைபண்ணுகிற யாவருக்குங் கிருபையில் ஐசு
வரியமுள்ளவராயிருக்கிறார்.—கர்த்தருடைய ௰ங
நாமத்திற் பிரார்த்தனைபண்ணுகிறவன் எவனோ,
அவன் இரட்சிக்கப்படுவான்.—அவர்கள் விசுவா ௰ச
சியாதவரிடத்தில் எப்படிப்பிரார்த்தனைபண்ணு
வார்கள், தங்களுக்குஅறிவிக்கப்படாதவரில் எவ்
விதமாய் விசுவாசம்வைப்பார்கள், பிரசங்கி இல்

(உஉ) க.தெச.ரு.கூ. க.பேதுரு.உ.அ. யூதா.ச. (உங) அதி.உ.ச. எபே.க.அ. கொலோ.க.உஎ. அதி.அ.உஅ,உங, ங௰. (உச) அதி.ங.உகூ. (உரு) ஓசி.உ.உங. க.பேதுரு.உ.௰. (உசு) ஓசி.க.௰. (உஎ) ஏசா.௰.உஉ,உங. அதி.௰க.ரு. (உஅ) ஏசா.உஅ.உஉ. (உகூ) ஏசா.க.கூ. புல.ங.உஉ. ஏசா.௰ங.௰கூ. எரே.ரு௰.ச௰. (ங௰) அதி.௰.உ௰. அதி.க.௰எ. (ஙக) அதி.௰க.எ. கலா.ரு.ச. (ஙஉ) லூக்.உ.ஙச. க.கொரி.க.உங. (ஙங) ஏசா.உஅ.௰சு. மத்.உக.சஉ. க.பேதுரு. உ.சு,எ,அ. அதி.௰.௰க.—(௰. அதி. உ.) அப்.உக.உ௰. கலா.க.௰ச. அதி.கூ.ஙக. (ங) அதி.க.௰எ. பிலி.ங.கூ. (ச)மத். ரு.௰எ. கலா.ங.உச. (ரு) லேவி.௰அ.ரு. நெகி.கூ.உகூ. எசேக்.உ௰.௰க,௰ங,உக. கலா.ங.௰உ. (சு) உபா.ங௰.௰உ,௰ங. (அ) உபா.ங௰.௰ச. (கூ) மத்.௰.ஙஉ. அப்.அ.ஙஎ. (௰க) ஏசா.உஅ.௰சு. எரே.௰எ.எ.(௰உ)அப்.௰ரு.கூ. கலா.ங.உஅ. அப்.௰.ஙசு. க.தீமோ.உ.ரு. எபே.க.அ. (௰ங) யோவே.உ.ஙஉ. அப்.உ.உக. அப்.கூ.௰ச. (௰ச) தீத்.க.உ.

௰௫ லாதிருந்தால் எப்படிக்கேள்விப்படுவார்கள்.—அ
னுப்பப்படாதிருந்தால் எப்படிப்பிரசங்கம்பண்
ணுவார்கள்; எழுதியிருக்கிறபிரகாரம், "சமாதா
னத்தின் சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்தி, நற்
காரியங்களைச் சுவிசேஷமாய்த் தெரிவிக்கிறவர்
களுடைய பாதங்கள் எவ்வளவு அழகானவை
௰௬ கள்."—ஆனாலும் எல்லாருஞ் சுவிசேஷத்திற்குக்
கீழ்ப்படியவில்லை. அதற்கு ஏசாயா, "கர்த்தா
வே, எங்கள்வாக்கைக்கேட்டு விசுவாசித்தவன்
௰௭ யாவன்," என்றான்.-ஆதலால் விசுவாசங்கேள்வி
௰௮ யினாலும், கேள்வி தேவவாக்கினாலும்வரும்.—பூ
மியெங்கும் அவர்கள் சத்தமும், பூமண்டலத்தின்
எல்லைமட்டும் அவர்கள்வாக்குகளுஞ்சென்றன,
இது நிச்சயம், ஆதலால் அவர்கள் கேள்விப்பட
௰௯ வில்லையா என்கிறேன்.—இஸரவேலர் அறிய
வில்லையாஎன்கிறேன்; முதலாவது மோசேயும்,
"மதிக்கப்படாத சனங்களினால் உங்களுக்கு எ
ரிச்சலையுண்டாக்கி,மதிகெட்ட சாதியாரால் உங்
௨௰ களைக் கோபப்படுத்துவேன்," என்றான்.—அன்
றியும் ஏசாயா அதிகதைரியங்கொண்டு "என்
னைத்தேடாதவர்களால் கண்டடையப்பட்டே
ன், என்னைவிசாரித்துக்கொள்ளாதவர்களுக்குப்
௨௧ பிரசித்தமானேன்" என்றும்,—இஸரவேலரைக் கு
றித்தோ, "கட்டளைமீறி எதிர்த்துப்பேசுகிறசனங்
களுக்கு நாள்முழுவதும் என்கைகளை விரித்தே
னே," என்றுஞ் சொல்லியிருக்கிறான்.

## ௰௧. அதிகாரம்.

௧. இஸரவேலர் யாவருந் தள்ளப்படவில்லையெனக்காட்டல்: ௭. தெரிந்துகொள்ளப்படாதவர்கள் தள்ளப்படல்: ௰௧. இவர்கள் தவறினதினால் அந்நியதேசத்தாருக்கு இரட்சிப்புக்கிடைத்தல்: ௨௫. அந்நியதேசத்தார் அகங்காரங்கொள்வது தகாதெனக்காட்டல். நீதி தயை இவைகளினிமித்தம் தேவனை வாழ்த்துவது கடமையென்றுணர்த்தல்.

தேவன் தம்முடைய சனங்களைத் தள்ளிவிட்
டாரா என்கிறேன், இல்லையே. நானும் ஆபிரகா
மின்வமிசத்திலும், பேன்யாமீன்கோத்திரத்திலு
௨ ம்பிறந்த இஸரவேலனாயிருக்கிறேன்.—தேவன்
தாம் முன்னறிந்த தம்முடையசனங்களைத் தள்ளி
விடவேயில்லை. இலீசாவைக்குறித்து வேதஞ்
சொல்லுகிறதை அறியீர்களா; அவன் தேவனை
௩ நோக்கி,—"கர்த்தாவே, உம்முடைய தீர்க்க
தரிசிகளை அவர்கள் கொலைசெய்து, உம்முடை
யவேதிகைகளை இடித்தார்கள்; நான் ஒருவனே
மீந்திருக்கிறேன், என் பிராணனையும் வாங்கத்
தேடுகிறார்கள்," என்று இஸரவேலரைக்குறித்து
முறையிட்டுவிண்ணப்பம்பண்ணினபொழுது,-
அவனுக்குக்கிடைத்த தேவனுடைய உத்தரம் ௪
என்னசொல்லுகின்றது; "பாகாலுக்கு முன்பா
க முழங்காற்படியிடாத எழாயிரம்பேரை எனக்
காகமீதியாய்வைத்தேன்," என்பதே.-அப்படியே ௫
இக்காலத்திலுங் கிருபையின் தெரிந்துகொள்ளு
தலின்படி மீதியுண்டாயிருக்கின்றது.—கிருபை ௬
மூலமாய் உண்டானால் கிரியைகளினால் உண்
டாகவில்லை: உண்டாயிருந்தால் கிருபையானது
கிருபையல்ல: அது கிரியைமூலமாயுண்டாகில்
கிருபைமூலமாயுண்டாகவில்லை: உண்டாயிருந்
தால் கிரியையானது கிரியையல்ல.—இப்படியி ௭
ருக்க முடிவென்ன, இஸரவேலர் தேடுகிறதைப்
பெறாமலிருக்கிறார்கள்; தெரிந்துகொள்ளப்பட்
டவர்களோ அதைப்பெற்றார்கள்.—"தேவன் ௮
அவர்களுக்குஅகோரநித்திரையின் ஆவியையும்,
காணாதகண்களையும், கேளாதகாதுகளையுங் கொ
டுத்தார்," என்று எழுதியிருக்கிறபிரகாரமாக, இந்
நாள்வரைக்கும் மற்றவர்கள் குருடாக்கப்பட்
டார்கள்.-இதைக்குறித்துத் தாவீதும் "அவர்களு ௯
டையபந்தி, அவர்களுக்குச் சுருக்கும், கண்ணி
யும், இடறுதற்கானகல்லும், பிரதிபலன் பெறுவ
தற்கேதுவுமாயிருக்கக்கடவது.-காணாதபடிஅவர் ௰
களுடைய கண்களும் அந்தகாரப்படக்கடவன,
அவர்களுடையமுதுகு எப்பொழுதுங் கூனுகக்
கடவது," என்றுசொல்லியிருக்கிறான்.—விழுவ ௰௧
தற்கிடறினார்களென்கிறேனு; அல்ல அல்ல: அ
வர்களுக்கு எரிச்சலுண்டாக, அவர்கள்விழுதல்
அந்நியருக்குஇரட்சிப்பாயிற்று.-அவர்கள் தவறு ௰௨
உலகத்திற்கு ஐசுவரியமும், அவர்களுடைய கு
றைவு அந்நியருக்குஐசுவரியமுமாயிருந்தால், அ
வர்களுடைய விருத்தி எவ்வளவு அதிகமாகும்.-
அந்நியரே, எனது இனத்தாருக்குள்ளே நான் எ ௰௩
ரிச்சலைத்தோற்றுவித்து, அவர்களிற் சிலரை இ
ரட்சிக்கலாமோவென்றுஅந்நியராகிய உங்களுக்
குச்சொல்லுகிறேன்.—அந்நியருக்கு அப்போஸ் ௰௪
தலனாகிய நான், உங்களுக்குள் என்தொழிலை
மேன்மைப்படுத்துகிறேன்.—அவர்களைத் தள்ளு ௰௫
தல், உலகத்தை ஒப்புரவாக்குதலாயிருந்தால், அ
வர்களை அங்கிகரித்தல்,மரித்தோரினின்றுதோன்
றிய சீவனல்லவா.—மேலும்முதல்விளைவு பரிசுத் ௰௬
தமாயிருந்தால், விளைவுமுழுவதும் அப்படியே
யாகும்: வேர் பரிசுத்தமாயிருந்தாற் கிளைகளும்
அப்படியாகும்.-சிலகிளைகள்முறிக்கப்பட,காட் ௰௭
டுச்சீதவிருட்சமாகிய நீ அவைகளுக்குள் ஒட்ட

(௰௫) ஏசா.௫௨.௭. நாகூ.௧.௰௫. (௰௬) அதி.௩.௩. ஏபி.௪.௨. ஏசா.௫௩.௧. யோவா.௰௨.௩௮. (௰௮) சங்.௰௯.௪. மத்.௨௮.௰௯. கொலோ.௧.௬,௨௩. ௧.இரா.௰௮.௰. மத்.௪.௮. (௰௯) உபா.௩௨.௨௧. தீத்.௩.௩. (௨௰) ஏசா.௬௫.௧. (௨௧) ஏசா.௬௫.௨.—(௰௧. அதி. ௧.) ௧.சாமு.௰௨.௨௨. எரே.௩௧.௩௭. ௨.கொரி.௰௧.௨௨. பிலி.௩.௫. (௨) அதி.௮.௨௯. (௩) ௧.இரா.௰௯.௰,௰௪. (௪) ௧.இரா.௰௯.௰௮. (௫) அதி.௯.௨௭. (௬) அதி.௪.௪,௫. கலா.௫.௪. உபா.௯.௪,௫. (௭) அதி.௯.௩௧. அதி.௰.௩. (௮) ௨.கொரி.௩.௰௪. ஏசா.௨௯.௰. உபா.௨௯.௪. ஏசா.௬.௯. எரே.௫.௨௧. எசேக்.௰௨.௨. மத்.௰௩.௰௪. யோவா.௰௨.௪௰. அப்.௨௮.௨௬,௨௭. (௯) சங்.௬௯.௨௨. (௰) சங்.௬௯.௨௩. (௰௧) அப்.௰௩.௪௬. அப்.௰௮.௬. அப்.௨௨.௰௮.௨௧. அப்.௨௮.௨௪,௨௮. அதி.௰.௰௨. (௰௩) ௧.கொரி.௭.௰௬. ௧.தீமோ.௪.௰௬. யாக்.௫.௨௰. (௰௪) அப்.௯.௰௫. அப்.௨௨.௨௧. கலா.௧.௰௬. எபே.௩.௮. (௰௬) லேவி.௨௩.௰. எண்.௰௫.௰௮,௰௨,௨௰,௨௧. (௰௭) எரே.௰௧.௰௬. அப்.௨.௩௨. எபே.௨.௰௨,௰௩.

வைக்கப்பட்டு, சீதவிருட்சத்தின் வேரையும் இ
யஅ ரசத்தையும் அனுபவித்ததினால்,—நீ அந்தக்கிளை
களுக்கெதிராகப் பெருமைபாராட்டாதே. பெ
ருமைபாராட்டினால் நீ வேரைத்தாங்காமல், வே
ரே உன்னைத் தாங்குகிறதென்று சிந்தித்துக்
யகூ கொள்.—நான் ஒட்டவைக்கப்படுகிறதற்கு அந்
தக் கிளைகள் முறிக்கப்பட்டனவென்று நீசொல்
உய லுவாய்.—நல்லது; அவிசுவாசத்தினால் அவை
கள் முறிக்கப்பட்டன, நீ விசுவாசத்தினாலே
நிற்கிறாய். நீ அகங்காரியாயிராமற்பயந்திரு.—
உக சுபாவக்கிளைகளைத் தேவன் தப்பவிடாதிரு
ந்தால் உன்னையுந் தப்பவிடாதிருக்கக் கூடும்.-
உஉ ஆதலால் தேவனுடைய தயையையுங் கண்
டிப்பையும் பார்: விழுந்தவர்களுக்குக்கண்டிப்
பும்,தயையில் நீ நிலைத்திருப்பாயாகில் உனக்குத்
தயையுங் கிடைக்கும்: நில்லாதிருந்தால் நீயும்
உங வெட்டுண்டுபோவாய்.—அவர்களும் அவிசுவா
சத்தில் நிலைத்திராவிட்டால் ஒட்டவைக்கப்படு
வார்கள்: தேவன் திரும்பவும் அவர்களை ஒட்
உச டவைக்கிறதற்கு வல்லவராயிருக்கிறாரே.—சுபா
வப்படிகாட்டுச்சீதவிருட்சத்தின் கிளையாகிய நீ,
அதிலிருந்துவெட்டப்பட்டு, சுபாவத்திற்கு மா
றாக உத்தம சீதவிருட்சத்தில் ஒட்டவைக்கப்
பட்டிருந்தால், சுபாவக்கிளைகளாகிய அவர்கள்
தங்கள் சீதவிருட்சத்தில் ஒட்டவைக்கப்படுவ
உரு து மிகவும் எளிதாகுமல்லவா.—சகோதரரே, உ
ங்களில் அகந்தையானகுணம் இராதபடிக்கு,
அந்நியதேசத்தாரின்நிறைவு உண்டாகும்வரைக்
கும் இஸரவேலரிற்சிலருக்குக் குருட்டாட்டங்
கிடைக்குமென்கிற ஒரு மறைபொருளை நீங்கள்
உசா அறியவேண்டுமென்றிருக்கிறேன்.—பின்பு இ
ஸரவேலரெல்லாரும் இரட்சிக்கப்படுவார்கள்:
அந்தப்படி, "மீட்பர் சீயோனினின்றுதோன்றி,
அவபத்தியை யாக்கோபினின்று விலக்குவார்,"
உஎ என்றும்,—"நான் அவர்களுடைய பாவங்களைநீக்
கும்பொழுது,நான் அவர்களுடனேபண்ணும் உ
டன்படிக்கைஇதுவே,"என்றும்எழுதியிருக்கின்
உஅ றன.—சுவிசேஷத்தைக்குறித்து அவர்கள், உங்
கள் நிமித்தம் பகைஞரும், தெரிந்துகொள்ளுத
லைக்குறித்து அவர்கள்,பிதாக்களினிமித்தம்பிரிய
உகூ ருமாயிருக்கிறார்கள்.—தேவனுடையவரங்க
ஙய ளும், அழைக்குதலும் மாறாதவைகளே.—நீங்கள்
முற்காலத்திலே தேவனுக்குக் கீழ்ப்படியாதி
ருந்து, இப்பொழுது அவர்களுடைய அவிசுவா
ஙக சத்தினால் இரக்கம்பெற்றிருக்கிறதுபோல,-அவர்
களும்இப்பொழுது கீழ்ப்படியாமலிருந்து, இனி
உங்களுக்குண்டான இரக்கத்தினால்இரக்கம்பெ
றுவார்கள்.—தேவன் எல்லார்மேலும் இரக்கம் ஙஉ
விளங்கப்பண்ணத்தக்கதாக,அவர்களெல்லாரை
யும் அவிசுவாசத்திற்குள் அடைத்துவைத்தார்.—
தேவனுடைய ஞானம், அறிவு என்பவைக ஙங
ளின்சம்பூரணம் எவ்வளவு ஆழம்; அவருடைய
நியாயத்தீர்ப்புகள் புத்திக்கெட்டாதவைகள், அ
வருடைய வழிகள் ஆராய்ந்துகொள்ளப்படாத
வைகள்.—கர்த்தருடைய சிந்தையை ஆர் அறி ஙச
வார்; அவருக்கு உசாவுதுணையாயிருந்தவன் யா
வன்.—தனக்குப் பிரதியாகக்கொடுக்கும்படி அ ஙரு
வருக்கு முதல் ஒன்றைக்கொடுத்தவனார்;—சகல ஙசா
மும் அவராலும், அவர்மூலமாகவும், அவருக்கா
கவுமுண்டாயிருக்கின்றன: அவருக்கே என்
றென்றைக்கும் மகிமையுண்டாவதாக. ஆமென்.

## யஉ. அதிகாரம்.

க. தேவனுடைய இரக்கங்களைக்கண்டு, அவ
ரைச்சேவிப்பது கடமையெனக்காட்டல்: கூ.
நேசம் முதலானநற்குணங்களை வளர்ப்பதும்,
பகைமுதலானதுர்க்குணங்களை விலக்குவதும்
அவசியமெனக்காட்டல்.

அப்படியிருக்க, சகோதரரே, நீங்கள் புத்திக் க
கேற்ற ஆராதனைசெய்யும்படி, உங்கள்சரீரங்க
ளைச்சீவனும், பரிசுத்தமும், தேவனுக்குப் பி
ரியமுமானபலியாகநிறுத்தவேண்டுமென்று தே
வனுடைய இரக்கங்களினிமித்தம் உங்களை
வேண்டிக்கொள்ளுகிறேன்.—நீங்கள், இவ்வுல உ
கத்திற்கு ஒப்பாக நடவாமல், தேவனுடைய
நன்மையும், பிரியமும், சம்பூரணமுமானசித்த
மின்னதென்று பகுத்தறியும்படி, உங்கள் மன
தைப் புதிதாக்குதலினாலே மறுரூபமாகுங்கள்,—
மேலும் உங்களில் எவனும் எண்ணவேண்டிய ங
அளவுக்குமேலாகத் தன்னை எண்ணாமல்,அவன
வனுக்குத்தேவன் பங்கிட்டவிசுவாசத்தின் அ
ளவுக்கேற்க அடக்கமாய் எண்ணவேண்டுமென்
று,எனக்கருளப்பட்டகிருபையினால் உங்களில்
ஒவ்வொருவனுக்குஞ் சொல்லுகிறேன்.—நமக்கு ச
ஒரே சரீரததில்அநேக அவயவங்களிருந்தும் எல்
லாஅவயவங்களுக்கும் ஒரேதொழில் இல்லாதது
போல,-அநேகராகியநாமும் கிறிஸ்துவுக்குள் ரு
ஒரே சரீரமாயிருக்க,ஒருவருக்கொருவர்அவயவ
ங்களாயிருக்கிறோம்.—ஆதலால் நமக்கு அருளப் சா
பட்ட கிருபையின்படிவெவ்வேறான வரங்களை
ப்பெற்றவர்களாயிருக்கையால், தீர்க்கதரிசனஞ்
சொல்லுகிறவனானால், விசுவாச அளவுக்கேற்கச்
சொல்லக்கடவன்.—உதவி செய்கிறவனானால் எ

(யஅ) க.கொரி.ய.யஉ. (உய) அதி.யஉ.யசா. நீதி.உஅ.யச. ஏசா.சாசா.உ. பிலி.உ.யஉ. (உஉ) க.கொரி.யரு.உ.எபி.ங.சா,யச.யோவா.யரு.உ.(உங)உ.கொரி.ங.(உரு)அதி.யஉ.யசா.வச.எ. உ.கொரி.ங.யச. லூக்.உக.உச.வெளி.எ.கூ. (உசா) ஏசா.ருகூ.உய. சங்.யச.எ. (உஎ) ஏசா.உஎ.கூ. எரே.ஙக.ஙக,. எபி.அ.அ. (உஅ) உபா.எ.அ.(உகூ)எண்.உங. யகூ. (ஙய) எபே.உ.உ. கொலோ.ங.எ. (ஙஉ) அதி.ங.கூ. கலா.ங.உஉ. (ஙங) சங்.ஙசா.சா. யோபு.யக.எ. சங்.கூஉ.ரு. (ஙச) யோபு.யரு.அ. ஏசா.சய.யங. எரே.உங.யஅ. க.கொரி.உ.யசா. யோபு.ஙசா.உஉ. (ஙரு) யோபு.ஙரு.எ. (ஙசா) க.கொரி.அ.சா. கொலோ.க.யசா. எபி.யங.உக. க.பேதுரு.ரு.யக. யூதா.உரு. வெளி.க.சா.—(யஉ.அதி.க.)உ.கொரி.ய.க. க.பேதுரு.உ.ரு. க.கொரி.சா.யங,உய. எபி.ய.யகூ. (உ) க.யோவா.உ.யரு. எபே.க.யஅ. கொலோ.க.உக, உஉ. எபே.ரு.ய,யஎ. க.தெச.ச.சா. (ங) அதி.க.ரு. எபே.ங.உ,எ,அ. நீதி.உரு.உஎ. க.கொரி.யஉ.எ,யக. எபே.ச.எ. (ச) க.கொரி.யஉ.யஉ. எபே.ச.யச. (ரு) க.கொரி.ய.யஎ. எபே.க.உக. (சா) க.கொரி.யஉ.ச. அப்.யக.உஎ. அப்.யச.க,சா,உக,ஙக. (எ) அப்.யங.க.

உதவிசெய்யக்கடவன்:போதிக்கிறவனேபோதி
௮ க்கக்கடவன்.—உபதேசிக்கிறவனே உபதேசிக்
கக்கடவன்: கொடுக்கிறவனே கபடமில்லாமற்
கொடுக்கக்கடவன்; முதலாளியானவனே
சாக்கிரதையாயிருக்கக்கடவன்,தயைசெய்
கிறவனேஇஷ்டமனதோடே அப்படிச்செய்
௯ யக்கடவன்.-அன்பு மாயமற்றதாயிருப்பதாக.
தீமையைவெறுத்து நன்மையைப் பற்றிக்கொள்
௰ ளுங்கள்.—சகோதரநேசத்தில் ஒருவருக்கொரு
வர் மிகுந்தபட்சமாயிருங்கள்; கனம்பண்ணுகி
றதில் ஒருவரை ஒருவர் முந்திக்கொள்ளுங்கள்.—
௰௧ வேலையில் அசதியாயிராமல் சாக்கிரதையாயி
ருங்கள்;ஆவியில்அனலாயிருங்கள்;கர்த்தருக்
௰௨ கு ஊழியஞ் செய்யுங்கள்.–நம்பிக்கையிலே சந்
தோஷமாயிருங்கள்; உபத்திரவத்திலே பொறு
மையாயிருங்கள்; வேண்டுதலில் உறுதியாய்த்
௰௩ தரித்திருங்கள்.—பரிசுத்தர்களுடைய குறைவு
கள் நிறைய உதவிசெய்யுங்கள்; அந்நியரை உ
௰௪ பசரிக்கக் கருத்தாயிருங்கள்.—உங்களைத் துன்
பப்படுத்துகிறவர்களை ஆசீர்வதியுங்கள்: ஆசீர்
௰௫ வதிக்கிறதேயன்றிச் சபியாதிருங்கள்.—சந்தோ
ஷப்படுகிறவர்களுடனே சந்தோஷப்படுங்கள்,
௰௬ அழுகிறவர்களுடனே அழுங்கள்.—ஒருவரோ
டொருவர்ஏகசிந்தையுள்ளவர்களாயிருங்கள்.
மேட்டிமையானவைகளைச் சிந்தியாமல், தாழ்ந்
தவர்களுக்கிணங்க நடவுங்கள். உங்களையேபுத்
௰௭ திமான்களென்றெண்ணாதிருங்கள்.—ஒருவனுக்
குந் தீமைக்குத்தீமைசெய்யாதிருங்கள். எல்லாரு
டையபார்வைக்கும் யோக்கியமானவைகளையே
௰௮ நடப்பியுங்கள்.–கூடுமாகில் உங்களாலானமட்
டும் எல்லாமனுஷரோடுஞ் சமாதானமாயிருங்க
௰௯ ள்.–பிரியமானவர்களே, நீங்களே பழிவாங்கா
மல் கோபத்திற்கு இடங்கொடுங்கள் "பிரதிப
லன் அளிப்பது எனக்கு உரியது, நானே பிரதி
தண்டனைசெய்வேனென்பதைக் கர்த்தர்சொல்
௨௰ லுகிறார்,"என்று எழுதியிருக்கின்றது.–ஆதலால்
உன்சத்துருவுக்குப் பசியுண்டானால், அவனுக்
குப்போசனங்கொடு; அவனுக்குத்தாகமுண்டா
னால் அவனுக்குப் பானங்கொடு: அதினால் நீ
அவனுடைய தலையின்மேல் அக்கினித்தழலைக்
௨௧ குவிப்பாய்.—நீ தீமையினாலே செயிக்கப்படா
மல், நன்மையினாலேதீமையைச்செயிப்பாயாக.

## ௰௩. அதிகாரம்.

௧. இராசாமுதலானவர்களுக்கு அமைந்திருப்பது கடமையென்று சொல்லல்: ௮. அன்புகட்டளையின் சாரமென்று தெரிவித்தல்: ௰௧. இருளின் கிரியைகளைத்தள்ளி ஒளியின் கிரியைகளைச்செய்வது அவசியமெனக்காட்டல்.

ஒவ்வொருவனும் மேலான அதிகாரிகளுக்குக் ௧
கீழ்ப்படியக்கடவன். தேவனாலேயன்றி அதி
காரமில்லை: இருக்கிற அதிகாரங்கள் தேவனா
லே நியமிக்கப்பட்டன.—ஆதலால் அதிகாரத் ௨
திற்கு எதிர்க்கிறவன் தேவனுடைய நியமத்
திற்கு எதிர்க்கிறான்: எதிர்க்கிறவர்கள் தங்களுக்
குத்தாமே தண்டனை வருவிக்கிறார்கள்.—அன்றி ௩
யும் அதிபதிகள், நற்கிரியைகளைச்செய்கிறவர்க
ளுக்கல்ல, துர்க்கிரியைகளைச்செய்கிறவர்களுக்
கே பயங்கரமாயிருக்கிறார்கள். ஆகையால் நீ அ
திகாரத்திற்குப் பயமில்லாதிருக்க விரும்பினால்
நன்மைசெய்வாயாக, அதினால் உனக்குப்புகழ்ச்
சிஉண்டாகும்:–உனக்கு நன்மையுண்டாகும்ப ௪
டி அவன் தேவனுடைய ஊழியக்காரனாயிருக்
கிறான். நீ தீமைசெய்தால்பயப்படு;அவன் வீணா
ய்க் கட்கத்தைப் பிடிக்கவில்லை:தீங்கைச்செய்கி
றவனுக்கு ஏற்றதண்டனை அளிப்பதற்கு அவன்
நீதிசெலுத்துகிற தேவ ஊழியக்காரனாயிருக்கி
றான்.-ஆதலால் கோபாக்கினையினிமித்தமாத்திர ௫
மல்ல,மனச்சாட்சியினிமித்தமும் நீங்கள்அவர்க
ளுக்குக் கீழ்ப்படியவேண்டும்.–இதற்காகவே வ ௬
ரியையுங்கொடுக்கிறீர்கள்: அதை வாங்குகிற
தற்கு அவர்கள் தேவனுடைய பணிவிடைக்
காரராகி, இடைவிடாமல் இந்தக்காரியத்தை வி
சாரித்து வருகிறார்கள்.—ஆனபடியினால் எல்லா ௭
ருக்குஞ் செலுத்தவேண்டிய கடமைகளைச் செ
லுத்துங்கள்.எவனுக்குவரியைச் செலுத்தவேண்
டுமோ அவனுக்குவரியையும்,எவனுக்குத்தீர்வை
யைச்செலுத்தவேண்டுமோ அவனுக்குத் தீர்வை
யையுஞ்செலுத்தவேண்டும், எவனுக்குப்பயப்ப
டவேண்டுமோ அவனுக்குப்பயப்படுங்கள், எவ
னைக் கனம்பண்ணவேண்டுமோ அவனைக் கனம்
பண்ணுங்கள்.—ஒருவனில் ஒருவன் வைக்க ௮
வேண்டிய அன்பிலேயன்றி,வேறொன்றிலும் எ
வனிடத்திலுங்கடன்படாதிருங்கள்:பிறனில் அ
ன்புகூருகிறவன் நியாயப்பிரமாணத்தை நிறை
வேற்றுகிறானே.-"விபசாரஞ்செய்யாயாக,கொ ௯
லைசெய்யாயாக,களவுசெய்யாயாக,பொய்ச்சாட்
சி சொல்லாயாக,இச்சியாயாக,"என்னும் இந்தக்
கட்டளைகளும், மற்ற எந்தக்கட்டளையும், உன்
னில் அன்புகூருகிறதுபோலப் பிறனிலும் அன்
புகூருவாயாகஎன்னும் ஒரேவாக்கியத்திலேதொ
கையாய் அடங்கியிருக்கின்றன.-அன்பு பிறனுக் ௰
குத் தீங்குசெய்யாது: ஆதலால் அன்பே நியாயப்

(௮) ௧.கொரி.௰௪.௩. மத்.௬.௧,௨,௩. ௨.கொரி.௮.௨. அப்.௨௰.௨௮. எபி.௰௩.௭,௨௪. ௧.பேதுரு.௫.௨. ௨.கொரி.௯.௭. (௯) ௧.தீமோ.௧.௫. ௧.பேதுரு.௧.௨௨. சங்.௩௪.௰௪. ஆமோ.௫.௰௫. (௰) எபி.௰௩.௧. ௨.பேதுரு.௧.௭. பிலி.௨.௩. ௧.பேதுரு.௫.௫. (௰௨) லூக்.௰.௨௰. பிலி.௩.௧. ௧.தெச.௫.௰௬. லூக்.௨௧.௰௯. ௧.தீமோ.௬.௰௧. எபி.௰.௩௬. எபி.௰௨.௧. யாக்.௧.௪. ௧.பேதுரு.௨.௰௯,௨௰. லூக்.௰௮.௧. அப்.௨.௪௨. எபே.௬.௰௮. ௧.தெச.௫.௰௭. (௰௩) ௨.கொரி.௯.௧,௰௨. எபி.௰௩.௰௬. ௧.யோவா.௩.௰௭. ௧.தீமோ.௩.௩. எபி.௰௩.௨. (௰௪) மத்.௫.௪௪. அப்.௭.௬௰. ௧.பேதுரு.௨௨௩. (௰௫) ௧.கொரி.௰௨.௨௬. (௰௬) ௧.கொரி.௧.௰. சங்.௱௩௧.௧,௨. நீதி.௩.௭. (௰௭) மத்.௫.௩௯. ௨.கொரி.௮.௨௧. (௰௮) மாற்.௯.௫௰. எபி.௰௨.௰௪. (௰௯) நீதி.௨௪.௨௯. உபா.௩௨.௩௫. (௨௰) யாத்.௨௩.௪,௫. நீதி.௨௫.௨௧,௨௨.— (௰௩ அதி. ௧.) தீத்.௩.௧. ௧.பேதுரு.௨.௰௩. நீதி.௮.௰௫,௰௬. தானி.௨.௨௧. யோவா.௰௯.௰௧. (௨) தீத்.௩.௧. (௩) ௧.பேதுரு.௨.௰௪. (௫) பிர.௮.௨. ௧.பேதுரு.௨.௰௯. (௭) மத்.௨௨.௨௧. (௮) கலா.௫.௰௪. ௧.தீமோ.௧.௫. யாக்.௨.௮. (௯) யாத்.௨௰.௰௩. லேவி.௰௯.௰௮. மத்.௨௨.௩௯. கலா.௫.௰௪. யாக்.௨.௮. (௰) மத்.௨௨.௪௰.

௰௧ பிரமாணத்தின் நிறைவேற்றம்.—நாம் விசுவாசிக
ளானபொழுதிலும் இப்பொழுது நம்முடைய இ
ரட்சிப்புச்சமீபமாய்ச் சேர்ந்திருக்கிறதினால்,நித்
திரையைவிட்டு எழுந்திருக்கத்தக்க வேளையா
யிற்றென்று நாம் காலத்தை அறிந்திருக்கவேண்
௰௨ டும்.—இரவுசென்றுபோயிற்று, பகல் சமீபமாயிற்
று: ஆதலால் அந்தகாரத்தின் கிரியைகளை நாம்
விட்டுவிலகி,ஒளியின் ஆயுதங்களைத் தரிக்கக்கட
௰௩ வோம்.—பெருணவும், வெறியும், வேசைமார்க்
கமும், காமவிகாரமும், விரோதமும், பொரு
மையுமுள்ளவர்களாய் நடவாமல், பகலுக்கேற்
௰௪ கச்சீராய்நடக்கக்கடவோம்.—உங்கள் மாமிசத்
திற்காக அதின் இச்சைகளைத் திருத்தியாக்
கும்படி தேடாமல், கர்த்தராகியயேசுக்கி
றிஸ்துவைத் தரித்துக்கொள்ளுங்கள்.

## ௰௪. அதிகாரம்.

௧. உணவுப்பொருளினிமித்தஞ் சகோதரரை அற்பமாயெண்ணுவது தகாதெனக்காட்டல்:௰௩.உணவுப்பொருளினாலேயல்ல,அவிசுவாசத்தினால்மனுஷர்அசுசியாவார்களென்று தெரிவித்தல்.

விசுவாசத்திற் பலவீனமுள்ளவனுடனே சமுச
யமான தருக்கங்கள் செய்யாமல் அவனைச்சேர்த்
௨ துக்கொள்ளுங்கள்.—ஒருவன் எந்தப்பதார்த்தத்
தையும் புசிக்கலாமென்று நம்புகிறான்: பலவீன
முள்ளவேறொருவன்கீரைகளைப்புசிக்கிறான்.—
௩ புசிக்கிறவன் புசியாதவனைஅவமதிக்கப்படாது,
புசியாதவனும் புசிக்கிறவனைக் குற்றமுள்ளவ
னென்று தீர்க்கப்படாது; தேவன் அவனைச்
௪ சேர்த்துக்கொண்டாரே.—மற்றொருவனுடைய
வேலைக்காரனைக் குற்றமுள்ளவனென்று தீர்க்கி
ற நீயார்; அவன் நின்றாலும், விழுந்தாலுந் தன்சு
ய எசமானனுக்குக் கணக்கொப்பிப்பான். அ
வன் நிலைநிறுத்தப்படுவானே: தேவன் அவனை
௫ நிலைநிறுத்தவல்லவராயிருக்கிறாரே.—அன்றியும்
ஒருவன் ஒருநாளை மறுநாட்களிலும் விசேஷ
மென்றெண்ணுகிறான்: வேறொருவன் எல்லா
நாட்களுஞ் சமமென்றெண்ணுகிறான். அவன்
அவன் தன் தன் மனதில் ஆலோசித்து நிச்சயித்தி
௬ ருக்கக்கடவன்.—ஒரு நாளை விசேஷமென்று
கொள்ளுகிறவன் கர்த்தருக்கென்று விசே
ஷித்துக்கொள்ளுகிறான்; நாளை விசேஷமென்
றுகொள்ளாதவனும் கர்த்தருக்கென்று விசே
ஷித்துக்கொள்ளாமலிருக்கிறான். புசிக்கிறவன்
தேவனுக்கு ஸ்தோத்திரஞ்செலுத்தி, கர்த்த
ருக்கென்று புசிக்கிறான்; புசியாதவனோ கர்த்
தருக்கென்று புசியாமலிருந்து, தேவனுக்

கு ஸ்தோத்திரஞ்செலுத்துகிறான்.—நம்மில் ஒரு ௭
வனுந் தனக்காகச் சீவிக்கிறதுமில்லை,ஒருவனுந்
தனக்காக மரிக்கிறதுமில்லை.—நாம் சீவித்தாலுங் ௮
கர்த்தருக்கென்று சீவிக்கிறோம்; நாம் மரித்
தாலுங் கர்த்தருக்கென்று மரிக்கிறோம்: ஆத
லால் நாம் சீவித்தாலும், மரித்தாலுங் கர்த்தரு
டையவர்களாயிருக்கிறோம்.—கிறிஸ்துவும் ௯
மரித்தோர்மேலுஞ் சீவனுள்ளோர்மேலும் ஆண்
டவர் ஆகும்பொருட்டு மரித்தும், உயிர்த்தும்,
எழுந்துமிருக்கிறார்.—நீ உன்சகோதரனைக் குற்ற ௰
முள்ளவனென்று தீர்க்கிறதென்ன, உன்சகோத
ரனை அவமதிக்கிறதென்ன, நாம் அனைவருங் கி
றிஸ்துவின் நியாயாசனத்திற்கு முன்பாக நிற்
போமே.—"முழங்கால்யாவும் என் சமுகத்தில் ௰௧
முடங்குமென்றும், நாவுகள்யாவுந் தேவனை அ
றிக்கைபண்ணுமென்றும் என் சீவனைக்கொண்
டுசொல்லுகிறேன்என்பதைக் கர்த்தர் சொல்
லுகிறார்," என்று எழுதியிருக்கின்றது.-ஆதலால் ௰௨
நம்மில் எவனுந் தன்னைக்குறித்துத் தேவனுக்
குக் கணக்கு ஒப்பிக்கவேண்டும்.—இப்படியிருக் ௰௩
கிறபடியால், நாம் இனி ஒருவரை ஒருவர் குற்ற
முள்ளவர்களென்று தீராதிருப்போமாக: ஒருவ
னுந் தன் சகோதரன் இடறுகிறதற்காயினும், வி
ழுகிறதற்காயினும் எதுவான ஒன்றையும் அவ
னுக்குமுன்பாகப் போடாதபடிக்கே தீர்மானித்
துக்கொள்ளக்கடவோம்.—எந்தப்பொருளுஞ்சு ௰௪
பாவத்தின்படி அசுசியல்ல:ஆயினும் எந்தப்பொ
ருளும் அசுசியென்று எண்ணிக்கொள்ளுகிறவ
னுக்கு அது அசுசியாகுமென்று நான் கர்த்தரா
கிய யேசுவினால் அறிந்து நிச்சயித்திருக்கி
றேன்.—ஆதலால் உன் போசனத்தினால் உன் ௰௫
சகோதரனுக்கு விதனமுண்டாக்கினால் நீ அன்
பாய் நடக்கிறவனல்ல. கிறிஸ்து மரித்து மீட்
டவனை நீ உன்போசனத்தினாலே நாசப்படுத்தா
தே.—உங்கள் நன்மை தூஷணிக்கப்படுவதற்கு ௰௬
இடங்கொடாதிருப்பீர்களாக.-தேவனுடைய ௰௭
இராச்சியம்போசனபானங்களிலல்ல, அது நீதி,
சமாதானம், பரிசுத்த ஆவியினாலுண்டாகுஞ் சந்
தோஷம் என்னும் இவைகளிலுள்ளதே.-இவைக ௰௮
ளாலே கிறிஸ்துவுக்கு ஊழியஞ்செய்கிறவன்
தேவனுக்குப் பிரியனும், மனுஷரால் அங்கி
கரிக்கப்பட்டவனுமாயிருக்கிறான்.—ஆதலால் ௰௯
சமாதானத்திற்கேற்றவைகளையும், ஒருவரை ஒரு
வர் ஞானவளர்த்தியில் தேறப்பண்ணுகிறவைக
ளையுந்தேடிக்கொள்ளக்கடவோம்.—போசனத்தி ௨௰
னிமித்தந் தேவனுடைய கிரியையை நாசஞ்

(௰௧)௧.கொரி.௰௫.௩௪. எபே.௫.௰௪. ௧.தெச.௫.௫,௬. (௰௨) எபே.௫.௰௧. கொலோ.௩.௮. எபே.௬.௰௩.(௰௩)பிலி.௪.௮. ௧.பேது.௨.௰௨. நீதி.௨௩.௨௰. லூக்.௨௧.௩௪. ௧.பேது.௪.௩. ௧.கொரி.௬.௯. எபே.௫.௫. யாக்.௩.௰௪.(௰௪) கலா.௩.௨௭. எபே.௪.௨௪. கொலோ.௩.௰.கலா.௫.௰௬. ௧.பேது.௨.௰௧.—(௰௪. அதி. ௧.) ௧.கொரி.௮.௯,௰௧.(௨) வச.௰௪. ௧.கொரி.௰.௨௫. ௧.தீமோ.௪.௪. தீத்.௧.௰௫. (௩) கொலோ.௨.௰௬. (௪) யாக்.௪.௰௨. (௫) கலா.௪.௰. (௬) கலா.௪.௰. ௧.கொரி.௰.௩௧. ௧.தீமோ.௪.௩. (௭) ௧.கொரி.௬.௰௯,௨௰. கலா.௨.௨௰. ௧.தெச.௨.௰. ௧.பேது.௪.௫. (௯) ௨.கொரி.௫.௰௫. அப்.௰.௩௬.(௰)மத்.௨௫.௩௧,௩௨. அப்.௰.௪௨. அப்.௰௭.௩௧. ௨.கொரி.௫.௰. யூதா.௰௪,௰௫.(௰௧) ஏசா.௪௫.௨௩. பிலி.௨.௰. (௰௨) மத்.௰௨.௩௬. கலா.௬.௫. ௧.பேது.௪.௫. (௰௩) ௧.கொரி.௮.௯,௰௩. (௰௪) அப்.௰.௰௫. ௧.கொரி.௰.௨௫. ௧.தீமோ.௪.௪. தீத்.௧.௰௫. ௧.கொரி.௮.௭,௰.(௰௫)௧.கொரி.௮.௰௧. (௰௬)அதி.௰௨.௰௭.(௰௭) ௧.கொரி.௮.௮. (௰௮) ௨.கொரி.௮.௨௧. (௰௯) சங்.௩௪.௰௪. அதி.௰௫.௨. ௧.கொரி.௰௪.௰௨. ௧.தெச.௫.௰௧. (௨௰) வச.௰௫. மத்.௰௫.௰௧. அப்.௰.௰௫. ௧.கொரி.௮.௯,௰,௰௧,௰௨.

செய்யாதே. எந்தப்பொருளுஞ்சுசியுள்ளதே; ஆ
னாலும்,இடறும்படி புசிக்கிறவனுக்குத்தீமையுள்
௨௧ ளதாயிருக்கும்.—மாமிசத்தைப்புசித்தல், மது
வைக்குடித்தல், மற்றெதையாவது செய்தல் உன்
சகோதரன் இடறுகிறதற்காயினும், தவறுகிறதற்
காயினும், மெலிவடைகிறதற்காயினும் ஏதுவாயி
௨௨ ருந்தால் அதைச்செய்வது நல்லதல்ல.—உனக்கு
விசுவாசமுண்டானால் உனதுள்ளத்தில் தேவ
னுக்கு முன்பாக அதைக்காத்துக்கொள். நல்ல
தென்று நிச்சயித்த காரியத்திலே தன்னைக்குற்ற
௨௩ வாளியாக்காதவன் வாழ்வுடையவன்.-சமுசயத்
துடன் புசிக்கிறவன், விசுவாசத்தினாலே புசியா
ததினிமித்தந்தண்டனைக்குப்பாத்திரனாவான்:வி
சுவாசத்தினின்று தோன்றாத யாவும் பாவம்.

## ௰௫. அதிகாரம்.

௧. பலவான்கள் பலவீனருக்குத்துணைநிற்பது அவசியமெனக்காட்டல்: ௮. விசுவாசிகளெல்லாருஞ் சகோதரரென்றுதெரிவித்தல்: ௰௪. பவுல் உரோமரிடத்திலே போவதற்கு வாக்குக்கொடுத்தல்: ௩௰. தனக்காகப் பிரார்த்தனைபண்ணும்படி அவர்களைவேண்டல்.

பலமுள்ளவர்களாயிருக்கிற நாம் சுய பிரியத்
தின்படி நடவாமல், பலவீனமுள்ளவர்களுடை
௨ யபலவீனங்களைத் தாங்குவது கடமை.—நம்மில்
ஒவ்வொருவனுந் தன் தன் அயலானுடைய நன்
மைக்கென்று ஞானவளர்த்தியுண்டாகும்படி, அ
௩ வனுக்குப்பிரியமாய் நடக்கக்கடவன்.—கிறிஸ்
துவுந் தமது பிரியத்தின்படி நடவாமல், "உம்
மை நிந்திக்கிறவர்களுடைய நிந்தைகள் என்
மேல்வந்தன," என்று எழுதியிருக்கிறபடியே ந
௪ டந்தார்.—அன்றியும் வேதவாக்கியங்களினாலுண்
டாகும்பொறுமையினாலும்,ஆறுதலினாலும் நாம்
நம்பிக்கை அடையும்பொருட்டு, பூருவத்தில் எ
ழுதப்பட்டவைகளெல்லாம் நமக்குப் போதனை
௫ யாக எழுதப்பட்டிருக்கின்றன.—நம்முடைய
கர்த்தரானயேசுக்கிறிஸ்துவின் பிதாவா
கிய தேவனை நீங்கள் ஒரே மனதினாலும், ஒரே
௬ வாக்கினாலுந் துதிக்கும்படி,—பொறுமையையும்
ஆறுதலையும் அருளுந் தேவன், யேசுக்கிறி
ஸ்துவின் மாதிரிப்படி நீங்கள் ஒருவருக்கொ
ருவர் ஏகசிந்தையுள்ளவர்களாகும்பொருட்டு,
௭ உங்களுக்கு அனுக்கிரகஞ்செய்வாராக.-அப்படி
யே தேவனுடைய மகிமைவிளங்கக் கிறிஸ்
து நம்மை அங்கிகரித்ததுபோல, நீங்களும் ஒரு
வரை ஒருவர் அங்கிகரித்துக்கொள்ளுங்கள்.—
௮ பிதாக்களுக்கு அருளிச்செய்யப்பட்ட வாக்குத்
தத்தங்களை உறுதியாக்கும்பொருட்டு, தேவனு
டைய சத்தியத்தினிமித்தம் யேசுக்கிறிஸ்து
விருத்தசேதனமுள்ளவர்களுக்கு ஊழியக்காரரா
னாரென்று நான் சொல்லுகிறேன்.—அன்றியும், ௯
தேவனுடைய அனுக்கிரகத்தினிமித்தம் அவ
ரைத்துதிப்பது, அந்நியதேசத்தாருக்குங்கடமை;
அந்தப்படி, "இதினிமித்தம்,அந்நியதேசத்தாருக்
குள் உம்மைக்கீர்த்தனம்பண்ணுவேன், உமது நா
மத்தினாலே துதிபாடுவேன்," என்று எழுதியிருக்
கின்றது.—பின்னும் அவர், "அந்நியரே, அவருக் ௰
குரியசனங்களோடேகளிகூருங்கள்," என்றும்,-
"புறத்தேசத்தாரே, நீங்கள் அனைவருங் கர்த்தா ௰௧
வை ஸ்தோத்திரியுங்கள்; சனங்களே, நீங்கள் சம
ஸ்தரும் அவரைத்துதியுங்கள்," என்றுஞ்சொல்லு
கிறார்.-இவையுமன்றி, ஏசாயா, "ஈஷாயின் வே ௰௨
ரும், அந்நியரை அரசாளும்படி எழுந்திருப்பவரு
மாகிய ஒருவர்தோன்றுவார்; அவரிடத்தில் அந்நி
யர் நம்பிக்கைவைப்பார்கள்," என்று சொல்லுகி
றான்.—ஆதலால் நீங்கள் பரிசுத்தஆவியின் பலத் ௰௩
தினாலே சம்பூரண நம்பிக்கை பெறுவதற்கு அந்த
நம்பிக்கையை அருளுந் தேவன், விசுவாசத்
தைக்கொண்டு உங்களை எல்லாவிதமான சமாதா
னத்தினாலும் மகிழ்ச்சியினாலும் பூரணப்படுத்து
வாராக.—என் சகோதரரே, நீங்கள் நற்குணநி ௰௪
றைவுள்ளவர்களும்,சகல அறிவினாலும் பூரணப்
பட்டவர்களும், ஒருவருக்கொருவர் உபதேசஞ்
சொல்லவல்லவருமாயிருக்கிறீர்களென்று நானே
உங்களைக்குறித்து நிச்சயித்திருக்கிறேன்.—ஆயி ௰௫
னும் சகோதரரே,அந்நியதேசத்தார் பரிசுத்தஆவி
யினாலே பரிசுத்தமாக்கப்பட்டு, அங்கிகரிக்கப்
படத்தக்கநைவேத்தியமாவதற்கு நான் தேவனு
டைய சுவிசேஷத்தைக்குறித்து ஆசாரிய ஊழி
யத்தைச் செய்து, அந்நியதேசத்தாரிடத்தில் யே
சுக்கிறிஸ்துவின் பணிவிடைக்காரனாயிருக்
கும்படி,—தேவன் எனக்கு அருளிய கிருபை ௰௬
யினாலே நான் உங்களுக்கு ஞாபகப்படுத்தும்
பொருட்டு, இவைகளைத் தைரியத்துடன் எழுதி
னேன்.—ஆதலால் நான் தேவனுக்குரியவை ௰௭
களைக்குறித்து யேசுக்கிறிஸ்துவைக்கொண்
டு மேன்மைபாராட்டுவதற்குக் காரணமுண்டு.—
யெருஷலேம்தொடங்கிச் சுற்றிலும், இல்லூரிக் ௰௮
கு தேசம்வரைக்குங் கிறிஸ்துவினுடைய சு
விசேஷத்தை எங்கும் பிரசங்கிக்கும்படி,—வாக் ௰௯
கியத்தினாலும், கிரியையினாலும், அற்புத அடை
யாளங்களின் பலத்தினாலும், தேவனுடைய
பரிசுத்த ஆவியின் வல்லமையினாலும், அந்நிய
தேசத்தாரைக் கட்டளைக்கமைவிக்கிறதற்குக் கி
றிஸ்து என்னைக்கொண்டு நடப்பித்தவைகளைச்

(௨௧) ௧.கொரி.௮.௰௩. (௨௨) ௧.யோவா.௩.௨௧. (௨௩) தீத்.௧.௰௫.—(௰௫. அதி. ௧.) கலா.௬.௧. அதி.௰௪.௧. (௨) ௧.கொரி.௯.௰௯,௨௨. பிலி.௨.௪,௫. அதி.௰௪.௰௯. (௩) மத்.௨௬.௩௯. யோவா.௫.௩௰. சங்.௬௯.௯. (௪) ௧.கொரி.௯.௯,௰. ௨.தீமோ.௩.௰௬,௰௭. (௫) அப்.௪.௨௪,௩௨. (௬) அதி.௰௨.௰௬. ௧.கொரி.௧.௰. பிலி.௩.௰௬. (௭) அதி.௰௪.௧,௩. அதி.௫.௨. (௮) மத்.௰௫.௨௪. யோவா.௧.௰௧. அப்.௩.௨௫,௨௬. அதி.௩.௩. ௨.கொரி.௧.௨௰. (௯) யோவா.௰.௰௬. அதி.௯.௨௩. சங்.௰௮.௪௯. (௰) உபா.௩௨.௪௩. (௰௧) சங்.௱௰௭.௧. (௰௨) ஏசா.௰௧.௧,௰. வெளி.௫.௫. (௰௩) அதி.௰௨.௰௨. (௰௪) ௨.பேதுரு.௧.௰௨. ௧.யோவா.௨.௨௧. ௧.கொரி.௮.௧,௭,௰. (௰௫) அதி.௧.௫. கலா.௧.௰௫. எபே.௩.௭,௮. (௰௬) அதி.௰௧.௰௩. கலா.௨.௭,௮,௯. ௧.தீமோ.௨.௭. ௨.தீமோ.௧.௰௧. ஏசா.௬௬.௨௰. பிலி.௨.௰௭. (௰௭) எபி.௫.௧. (௰௮) அப்.௰௯.௰௧. ௨.கொரி.௰௨.௰௨. (௰௯) அப்.௨௧.௰௯. கலா.௨.௮. அதி.௧.௪.

சொல்வதேயன்றி,வேறொன்றையும் நான்சொல்
௨௰ லத்துணியமாட்டேன்.—"அவரைக்குறித்துச்செ
ய்திகேளாதவர்கள் காணப்பெறுவார்கள்," என்
றும், "கேள்விப்படாதவர்கள் அறிந்துகொள்
வார்கள்," என்றும் எழுதியிருக்கிறபிரகாரம், நா
ன் மற்றொருவனுடைய அஸ்திபாரத்தின்மேற்
௨௧ கட்டாதபடிக்கு,—கிறிஸ்துவினுடைய நா
மஞ் சொல்லப்பட்டிராத இடங்களிற் சுவிசே
ஷத்தைப் பிரசங்கிக்கும்படி விரும்பிப் பிர
௨௨ யாசப்பட்டேன்.—இதினால் உங்களிடத்தில்வ
ருகிறதற்கு அடிக்கடி எனக்குத் தடையுண்டா
௨௩ யிற்று.—இப்பொழுது இந்தத் திசைகளில் இருக்
கிறதற்கு எனக்குஇடமில்லாதபடியினாலும்,உங்
களிடத்தில் வரும்படி அநேகவருஷமாய் எனக்
கு மகாவாஞ்சை உண்டாயிருந்தபடியினாலும்,-
௨௪ நான் ஸ்பானியாதேசத்திற்குப் பிரயாணம்பண்
ணுகையில் உங்களைக்கண்டுகொள்ளவும், உங்க
ளிடத்தில் தங்குவதினாலுண்டாகுஞ் சந்தோஷத்
தை அடைந்தபின்பு அவ்வழியேசெல்ல உங்க
ளால்அனுப்பிவிடப்படவும் நம்பிக்கையாயிருக்
௨௫ கிறேன்.—இப்பொழுதோ பரிசுத்தவான்களுக்
கு ஊழியஞ்செய்யும்படி நான் யெருஷலேமுக்
௨௬ குப் பிரயாணம்போகிறேன்.—மக்கேதோனியா
விலும், அகாயவிலுமுள்ளவர்கள், யெருஷலே
மிலுள்ள பரிசுத்தவான்களில் தரித்திரருக்காகச்
சில தருமங்களைச் சேர்த்துக்கொள்ளப் பிரியப்
௨௭ பட்டிருக்கிறார்கள்.-இவர்கள் பிரியப்பட்டிருக்
கிறார்களே; இவர்கள் அவர்களுக்குக்கடனாளிக
ளாயிருக்கிறார்கள். அந்நியர் அவர்களுடைய ஞா
னப்பொருள்களிற் பங்குபெற்றிருக்க, தாங்கள்
லௌகீக நன்மைகளால் அவர்களுக்கு உதவி
௨௮ செய்யக் கடனாளிகளாயிருக்கிறார்களே.—இதை
நான் நிறைவேற்றி, இந்தப்பலனை அவர்களிடத்
தில் பத்திரப்படுத்தினபின்பு, உங்கள்வழியாய்
௨௯ ஸ்பானியதேசத்திற்குப்போவேன்.—நான் உங்க
ளிடத்தில்வரும்பொழுது,கிறிஸ்துவினுடை
ய சுவிசேஷத்தின்சம்பூரண ஆசீர்வாதத்தோடே
௩௰ வருவேனென்று நிச்சயித்திருக்கிறேன்.—சகோ
தரரே, யூதேயாதேசத்திலிருக்கிற அவிசுவாசிக
ளுக்கு நான் தப்புவிக்கப்பட்டு, யெருஷலேமி
லுள்ள பரிசுத்தவான்களுக்கு நான்செய்யப்போ
கிற ஊழியம் பரிசுத்தவான்களால் அங்கிகரிக்
௩௧ கப்பட்டபின்பு,—தேவனுக்குத் திருவுளமா
னால் நான் சந்தோஷத்துடன் உங்களிடத்தில்
வந்து உங்களோடே ஆறுதல்அடையும்பொருட்
௩௨ டாக,—நீங்கள் என்னுடனே எனக்காகத் தேவ
னிடத்திற்போராட்டமாய்விண்ணப்பம்பண்
ணவேண்டுமென்று நம்முடைய கர்த்தராகி
ய யேசுக்கிறிஸ்துவினிமித்தமும், ஆவியின்
அன்பினிமித்தமும் உங்களை வேண்டிக்கொள்
ளுகிறேன்.—சமாதானத்தின் தேவன் உங்க ௩௩
ளனைவரோடும் இருப்பாராக. ஆமென்.

## ௰௬. அதிகாரம்.

௧. பவுல் உரோமரில் அநேகருக்கு வாழ்த்துதல் அனுப்பல்: ௰௭. அவர்களுக்குபதேசஞ்செய்தல்: ௨௧. பவுலுடன் இருந்தசனங்கள் வாழ்த்துதல் அனுப்பல். அவர்களுக்குபதேசஞ்செய்தல்: ௨௫. நன்மைகளினிமித்தந் தேவனைத் துதித்தல்.

கெங்கிரேயாவூரின் சபைக்கு ஊழியக்காரி ௧
யாகிய நம்முடைய சகோதரி வொய்பேயாளை
நீங்கள் கர்த்தர்நிமித்தம் பரிசுத்தவான்களுக்
கேற்றபடி அங்கிகரித்துக்கொண்டு,—எந்தக்கா ௨
ரியத்தில் உங்கள் உதவி அவளுக்கு அவசிய
மோ, அதிலே நீங்கள் அவளுக்குத் துணைநிற்க
வேண்டுமென்று அவளை உங்களிடத்தில் ஒப்பிக்
கிறேன்: அவள் அநேகருக்கும், எனக்குங்கூட
ஆதரவாயிருந்தாள்.—கிறிஸ்துயேசுவுக்குள் ௩
என் உடன்வேலைக்காரராகிய பிரிஸ்கில்லாளை
யும், அக்வீலாவையும் வாழ்த்துங்கள்.—அவர் ௪
கள் என் பிராணனுக்காகத் தங்கள்கழுத்துகளைக்
கட்கத்திற்குக்கொடுத்தார்கள்: நான்மாத்திரம
ல்ல, அந்நியதேசத்தாராகிய சமஸ்த சபையாரும்
அவர்களைக் குறித்துத் துதிசெலுத்துகிறார்கள்.—
அவர்கள் வீட்டிற்கூடிவருகிற சபையையும் ௫
வாழ்த்துங்கள். அகாயவில் கிறிஸ்துவுக்
கு முதற்பலனாகிய என்பிரியமான எப்பனேத்
தென்பவனை வாழ்த்துங்கள்.—எங்களுக்காக மி ௬
கவும் பிரயாசப்பட்ட மரியாளை வாழ்த்துங்கள்.-
அப்போஸ்தலருக்குள்ளே பெயர்பெற்றவர்களு ௭
ம், எனக்குமுன்னே கிறிஸ்துவுக்குள்ளான
வர்களும், என் இனத்தாரும், என்னுடன் காவ
லிற் கட்டுண்டவர்களுமாகிய அந்திரோனிக்கை
யும், இயூனியவையும் வாழ்த்துங்கள்.—கர்த் ௮
தருக்குள்ளாய் எனக்குப்பிரியமான அம்பிலி
யாவைவாழ்த்துங்கள்.—கிறிஸ்துவுக்குள் நம் ௯
முடன் வேலைக்காரனாகிய உருபானுவையும், எ
னக்குப்பிரியமான இஸ்தாகுவையும் வாழ்த்துங்
கள்.—கிறிஸ்துவுக்குள் உத்தமனாகிய அப் ௰
பெல்லியை வாழ்த்துங்கள். அரிஸ்தொபுலின்
வீட்டாரை வாழ்த்துங்கள்.—என் இனத்தா ௰௧
னாகிய எரோதியோனை வாழ்த்துங்கள். கர்த்த
ருக்குட்பட்டவர்களாகிய நர்கிசின் வீட்டா
ரை வாழ்த்துங்கள்.—கர்த்தாவின் ஊழியத் ௰௨
திற் பிரயாசப்படுகிற திரிபேனாளையும், திரிபோ
சாளையும் வாழ்த்துங்கள். கர்த்தரின் ஊழி

(௨௰) ௨.கொரி.௰.௰௩,௰௫,௰௬. ஏசா.௫௨.௰௫. (௨௨) அதி.௧.௰௩. ௧.தெச.௨.௰௭,௰௮. (௨௩) அப்.௰௯.௨௧. அதி.௧.௯. (௨௪) அப்.௰௫.௩. வச.௩௧. (௨௫) அப்.௰௯.௨௧. (௨௬) ௧.கொரி.௰௬.௧,௨. (௨௭) அதி.௰௧.௰௭. ௧.கொரி.௯.௰௧. கலா.௬.௬. (௨௮) பிலி.௪.௰௭. (௨௯) அதி.௧.௰௧. (௩௰) ௨.தெச.௩.௨. ௨.கொரி.௮.௪. (௩௧) அதி.௧.௰௧. அப்.௰௮.௨௧. ௧.கொரி.௪.௰௯. யாக்.௪.௰௫. ௧.கொரி.௰௬.௰௮. ௨.கொரி.௭.௰௩. ௨.தீமோ.௧.௰௬. பிலே.௭,௨௰. (௩௨) பிலி.௨.௧. ௨.கொரி.௧.௰௧. கொலோ.௪.௰௨. (௩௩) ௧.கொரி.௰௪.௩௩. ௧.தெச.௫.௨௩. எபி.௰௩.௨௰.—(௰௬. அதி. ௧.) அப்.௰௮.௰௮. பிலி.௨.௨௯. ௩.யோவா.௫.௬. (௩) அப்.௰௮.௨,௰௮,௨௬. ௨.தீமோ.௪.௰௯. (௫) ௧.கொரி.௰௬.௰௯. கொலோ.௪.௰௫. பிலே.௨. ௧.கொரி.௰௬.௰௫. (௭) கலா.௧.௨௨.

யத்தில் மிகவும் பிரயாசப்பட்டு, எனக்குப் பி
ரியமாயிருக்கிற பெர்சிசாளை வாழ்த்துங்கள்.—
௰௩ கர்த்தரால் தெரிந்துகொள்ளப்பட்ட உருப்பு
வையும், அவனுக்கும் எனக்குந்தாயானவளையும்
௰௪ வாழ்த்துங்கள்.—அசிங்கிரித்தையும், பிலெகோ
னையும், எருமாவையும், பத்திரோபாவையும், எரு
மேயையும், அவர்களுடனேயிருக்கிற சகோதர
௰௫ ரையும் வாழ்த்துங்கள்.-பிலொலோகையும், யூலி
யாளையும், நெரேயுசையும், அவனுடைய சகோ
தரியையும், ஒலிம்பாவையும், அவர்களோடிருக்
கிற பரிசுத்தவான்கள் எல்லாரையும் வாழ்த்துங்
௰௬ கள்.—ஒருவரை ஒருவர் பரிசுத்தமாய் முத்தஞ்
செய்து வாழ்த்துங்கள். கிறிஸ்துவின் சபை
௰௭ யார் உங்களை வாழ்த்துகிறார்கள்.—சகோதரரே,
நீங்கள் கற்றுக்கொண்ட உபதேசத்திற்கு விபரீ
தமாய்ப் பேதங்களையும், இடறல்களையும் உண்
டாக்குகிறவர்களுடைய குறிப்பறிந்து, அவர்க
ளைவிட்டு விலகவேண்டுமென்று உங்களுக்குப்
௰௮ புத்திசொல்லுகிறேன்.—அப்படிப்பட்டவர்கள்
நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்து
வைச் சேவிக்காமல், தங்கள் வயிற்றுக்கேஊழி
யஞ்செய்து, இன்சொற்களினாலும், இதம்பேசு
கிறதினாலும் பேதையரின் இருதயங்களை வஞ்
௰௯ சிக்கிறவர்களாயிருக்கிறார்கள்.—நீங்கள் கட்ட
ளைக்கு அமைந்திருக்கிறவர்களென்று யாவருக்
குந் தெரியவந்ததினால் உங்களைக்குறித்துச் சந்
தோஷப்படுகிறேன். ஆயினும் நீங்கள் நன்மைக்
கு அறிவாளிகளும், தீமைக்கு அறிவீனருமாயி
ருக்கவேண்டுமென்று விரும்புகிறேன்.—சமாதா ௨௰
னத்தின் தேவன் சீக்கிரத்தில் உங்கள் காலின்
கீழே சாத்தானை நசுக்குவார். நம்முடைய கர்த்
தராகிய யேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்
களோடிருப்பதாக. ஆமென்.—என் உடன்வே ௨௰௧
லைக்காரனாகிய தீமோத்தேயும், என் இனத்தா
ராகிய லூசியும், யாசோனும், சோசிப்பத்தரும்
உங்களை வாழ்த்துகிறார்கள்.—இந்த நிருபத்தை ௨௰௨
எழுதின தெர்த்தியுவாகிய நான், கர்த்தருக்
குள் உங்களை வாழ்த்துகிறேன்.—என்னையும் ௨௰௩
சபையனைத்தையும் உபசரித்துவருகிற காயு உங்
களை வாழ்த்துகிறான். நகரத்திற்கு அதிபதியா
கிய எரஸ்தும், சகோதரனாகிய குவர்த்தும் உங்க
ளை வாழ்த்துகிறார்கள்.—நம்முடைய கர்த்தரா ௨௰௪
கிய யேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்க
ளனைவரோடுமிருப்பதாக. ஆமென்.—ஆதி ௨௰௫
காலங்கள்முதல் மறைவாயிருந்து, இப்பொழுது
தீர்க்கதரிசிகள் சொல்லிய வேதவாக்கியங்களி
னால், அநாதியான தேவனுடைய கட்டளை
யின்படி விசுவாசத்திற்குக் கீழ்ப்படிகிறதற்கு,
சருவ தேசத்தாருக்கும் வெளிப்படுத்தப்பட்ட
தும், அறிவிக்கப்பட்டதுமாயிருக்கிற மறைபொ
ருளை வெளிப்படுத்தலின்படியேயும்,—யேசுக் ௨௰௬
கிறிஸ்துவைப்பற்றும்பிரசங்கமாகிய என்சுவி
சேஷத்தின்படியேயும், உங்களை ஸ்திரப்படுத்த
வல்லவராகிய—ஒரே ஞானமுள்ள தேவனுக் ௨௰௭
கு யேசுக்கிறிஸ்து மூலமாய் என்றென்றைக்
கும் மகிமையுண்டாவதாக. ஆமென்.

(௰௩) ௨.யோவா.௧. (௰௬) ௧.கொரி.௰௬.௨௰. (௰௭) அப்.௰௫.௧,௫,௨௪. ௧.தீமோ.௬.௩. ௧.கொரி.௫.௯,௰௧. ௨.தீமோ.௩.௫. ௨.யோவா.௰. (௰௮) பிலி.௩.௰௯. கொலோ.௨.௪. ௨.பேதுரு.௨.௩. (௰௯) ௧.கொரி.௰௪.௨௰. (௨௰) ஆதி.௰௩.௩௩. ஆதி.௩.௰௫. ௧.கொரி.௰௬.௨௩. (௨௪) ௧.தெச.௫.௨௮. (௨௫) ௧.கொரி.௨.௭. எபே.௩.௫,௯. (௨௬) எபே.௩.௰. ௧.பேதுரு.௧.௨௰. அப்.௬.௭. எபே.௩.௨௰. ௧.தெச.௩.௰௨. ௨.தெச.௨.௰௭. யூதா.௨௪. எபே.௧.௰. கொலோ.௧.௨௬. (௨௭) ௧.தீமோ.௧.௰௭. ௧.தீமோ.௬.௰௫. யூதா.௨௫.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொரிந்தியருக்கெழுதின

## முதலாம் நிருபம்.

---

### க. அதிகாரம்.

க. வாழ்த்துதல்சொல்லல்: ச. கொரிந்தியருக்குக் கிடைத்த கிருபையினிமித்தம் பவுல் தேவனைத்துதித்தல்: ய. பேதத்தினிமித்தம் அவர்களைக்கண்டித்தல்: யஎ. சுவிசேஷத்தின் மேன்மைபாராட்டல்: உகூ. சுவிசேஷத்தினால் அறிவீனருக்குந் தரித்திரருக்கும் இரட்சிப்பைஅருளித் தேவன் தமது மகிமையைவிளக்கல்.

கொரிந்துநகரத்தில் கிறிஸ்து யேசுவினாற்
சுத்திகரிக்கப்பட்டவர்களும், பரிசுத்தராவதற்கு
அழைக்கப்பட்டவர்களுமாகிய தேவனுடை
ய சபையாருக்கும், எவ்விடத்திலும் நமக்குந்
தங்களுக்குங் கர்த்தராயிருக்கிற யேசுக்
கிறிஸ்துவின் நாமத்திற் பிரார்த்தனைபண்ணி
உ வருகிற யாவருக்கும்,—தேவனுடைய சித்
தத்தின்படி அப்போஸ்தலனாகும்பொருட்டுயே
சுக்கிறிஸ்துவினால் அழைக்கப்பட்ட பவு
லும், சகோதரனாகிய சொஸ்தெனேயும் எழுதிக்
ங கொள்வது:—நம்முடைய பிதாவாகிய தேவனா
லும், கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவினா
லும் உங்களுக்குக் கிருபையுஞ் சமாதானமு
ச முண்டாகக்கடவன.—தேவன் யேசுக்கி
றிஸ்து மூலமாய் உங்களுக்குக் கிருபை அருளி
னபடியினால், நான் உங்கள் நிமித்தம் இடைவி
டாமல் என் தேவனை ஸ்தோத்திரிக்கிறேன்.—
ரு கிறிஸ்துவைக் குறித்த சாட்சி உங்களுக்குள்
சு ளே ஸ்திரமாக்கப்பட்டபிரகாரம்,—நீங்கள், அ
வரால் எல்லாவற்றிலும், எல்லா உபதேசத்தி
லும், எல்லாஅறிவிலும் ஐசுவரியமுள்ளவர்களா
எ ளீர்கள்.—ஆதலால் நீங்கள் எந்தவரத்திலுங் கு
றைவில்லாதவர்களாய், நம்முடைய கர்த்த
ராகிய யேசுக்கிறிஸ்து வெளிப்படுவதைக்
அ காத்திருக்கிறீர்கள்.—தமது குமாரனும், நமது
கர்த்தருமா யிருக்கிற யேசுக்கிறிஸ்துவு
டன் அதிகாரத்தைப் பெற்றுக்கொள்வதற்கு
உங்களை அழைத்த தேவன் உண்மையுள்ள
கூ வர்.—ஆதலால் நம்முடைய கர்த்தராகியயே
சுக்கிறிஸ்துவின் நாளில் நீங்கள் குற்றமற்ற
வர்களாகும்பொருட்டு, முடிவுபரியந்தம் உங்க
ளை ஸ்திரப்படுத்துவார்.—சகோதரரே, நீங்களெல் ய
லாரும் ஒருவருக்கொருவர் இணங்கிப்பேசி, பே
தங்களில்லாமல் ஒரே மனதும், ஒரேஆலோசனை
யுமுள்ளவர்களாய் இசைந்திருக்கவேண்டுமென்
று நம்முடைய கர்த்தராகியயேசுக்கிறிஸ்
துவின் நாமத்தினால் உங்களுக்குப் புத்திசொல்
லுகிறேன்.—என் சகோதரரே, உங்களுக்குள்ளே யக
வாக்குவாதங்களுண்டென்று குலோவேயாளின்
வீட்டாரிற் சிலரால் எனக்குத் தெரிவிக்கப்
பட்டது.—உங்களில் அவனவன், நான் பவுலைச் யஉ
சேர்ந்தவன்; நான் அப்பொல்லோவைச்சேர்ந்த
வன்; நான் கேபாவைச்சேர்ந்தவன்; நான் கி
றிஸ்துவைச்சேர்ந்தவனென்று சொல்லுகிற
தினால் நான் இப்படிச்சொல்லுகிறேன்.—கிறிஸ் யங
து பிரிந்திருக்கிறாரா, உங்கள் நிமித்தம் பவுல்
சிலுவையில் அறையப்பட்டானா, அல்லது பவு
லின் நாமத்தினால் ஞானஸ்நானம்பெற்றீர்களா.—
ஸ்தேவானுடைய வீட்டாருக்கும், கிரிஸ்புவுக் யச
கும், காயுவுக்குமேயன்றி, வேறொருக்காவது ஞா
னஸ்நானங்கொடுத்தேனோ நான் அறியேன்.—
உங்களில் வேறொருவருக்கும் ஞானஸ்நானங் யரு
கொடாததற்காக நான் தேவனை ஸ்தோத்திரிக்
கிறேன்.—இதினாலே நான் என் நாமத்தைக்கொ யசு
ண்டு ஞானஸ்நானங் கொடுத்தேனென்று ஒரு
வனுஞ் சொல்லமாட்டான்.—ஞானஸ்நானங் யஎ
கொடுப்பதற்கல்ல, கிறிஸ்துவினுடைய சி
லுவை வீணாயிராதபடி அவர், ஞானவாக்குக
ளில்லாமற் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கிறதற்
கே என்னை அனுப்பினார்:—சிலுவையின் பிரசங் யஅ
கம், கெட்டுப்போகிறவர்களுக்குப் பைத்தியமா
யினும் இரட்சிக்கப்பட்டவர்களாகிய நமக்கு
அது தேவபலமுள்ளதாயிருக்கின்றது.—"நான் யகூ
ஞானிகளுடைய ஞானத்தைஅழித்து, புத்திமான்
களுடைய புத்தியை ஒழிப்பேன்," என்று எழு
தியிருக்கின்றது.—ஞானி எங்கே, வேதபாரகன் உய
எங்கே, இவ்வுலகத்தின் தருக்கசாஸ்திரி எங்கே;
இவ்வுலகத்தின் ஞானத்தைத் தேவன் பைத்தி
யமாக்குகிறாரல்லவா.—தேவனுடைய ஞா உக
னத்திற்கிசைய உலகம் சுயஞானத்தினாலே தே

---

(க. அதி. க.) யூதா.க. யோவா.யஎ.யகூ. ரோ.க.எ. அப்.கூ.யச,உக. ரோ.ங.உஉ. (உ) ரோ.க.உ. எபே.க.க. அப்.யஅ.யஎ. (ங) ரோ.க.எ,அ. (ரு) அதி.உ.உ. உ.தீமோ.க.அ. (சு) அதி.யஉ.அ. உ.கொரி.அ.எ. (எ) பிலி.ங.உய. தீத்.உ.யஉ. உ.பேதுரு.ங.யஉ. கொலோ.ங.ச. (அ) க.தெச.ங.யஉ. கொலோ.க.உஉ. க.தெச.ரு.உங. (கூ) எசா.சகூ.எ. க.தெச.ரு.உச. எபி.ய.உங. யோவா.யஎ.உக. க.யோவா.க.ங. (ய) ரோ.யஉ.யசு. உ.கொரி.யங.யக. பிலி.உ.உ. க.பேதுரு.ங.அ. (யஉ) அதி.ங.ச. அப்.யஅ.உச. யோவா.க.சஉ. (யங) உ.கொரி.யக.ச. எபே.ச.ரு. (யச) அப்.யஅ.அ. ரோ.யசு.உங. (யஎ) அதி.உ.க,ச,யங. உ.பேதுரு.க.யசு. (யஅ) உ.கொரி.உ.யரு. அப்.யஎ.யஅ. அதி.யரு.உ. ரோ.க.யசு. (யகூ) யோபு.ரு.யஉ,யங. எசா.உகூ.யச. எரே.அ.கூ. (உய) எசா.ஙங.யஅ. யோபு.யஉ.யஎ,உய,உச. எசா.சச.உரு. ரோ.க.உஉ. (உக) ரோ.க.யஅ,உக,உஅ. மத்.யக.உரு.

ஓசையிடுங் கைத்தாளத்திற்கும் ஒப்பாயிருப்பே
௨ ன்.—நான் தீர்க்கதரிசனத்தையுடையவனாயிருந்
தாலும், சகலவித இரகசியங்களையும், சகலவித
அறிவையும் அறிந்தாலும், மலைகளைப்பெயர்க்
கிறதற்குப்பூரண விசுவாசம் எனக்குண்டானா
லும் அன்பு எனக்கில்லாதிருந்தால் நான் ஒன்
௩ றுமில்லாதவனாயிருப்பேன்.—எனக்குண்டான
பொருளெல்லாவற்றையுந் தரித்திரருக்குக்
கொடுத்தாலும்,தகிக்கிறதற்கு என் தேகத்தை ஒப்
பித்தாலும் அன்பு எனக்கில்லாதிருந்தால் எனக்
௪ கு ஒருபலனுமில்லை.—அன்பு நீடிய பொறுமை
யுந் தயையுமுள்ளது; அன்புக்குப்பொறாமையில்
லை; அன்பு தன்னைப்புகழாது, இறுமாப்பாயிரா
௫ து.—சீர்கேடானதைச் செய்யாது, தன் பொழி
வைப்பாராது, சடிதியிற் கோபங்கொள்ளாது,
௬ தீங்கு நினையாது.—அநியாயத்திற் சந்தோஷப்ப
டாமல், சத்தியத்திற் சந்தோஷப்படுகின்றது.—
௭ சகலத்தையும் மூடுகின்றது, சகலத்தையும் விசு
வாசிக்கின்றது, சகலத்தையும் நம்புகின்றது, ச
௮ கலத்தையுஞ் சகிக்கின்றது.—தீர்க்கதரிசனங்க
ளும் ஒழிந்துபோம், பாஷைகளும் ஒழிந்து
போம், அறிவும் அகன்றுபோம்: அன்போ ஒரு
௯ பொழுதும் ஒழியாது.—நம்முடைய அறிவு கு
றைவுள்ளது,நாம் தீர்க்கதரிசனஞ்சொல்லுதலுங்
௰ குறைவுள்ளது.—நிறைவுவரும்பொழுது குறை
௰௧ வு ஒழியும்.—நான் பாலகனாயிருந்தபொழுது பா
லகனைப்போலப்பேசினேன்,பாலகனைப்போல்
உணர்ந்தேன், பாலகனைப்போல் யூகித்தேன்:
நான் பிராயமுள்ளவனானபொழுது பாலகனுக்
௰௨ கேற்றவைகளைத் தவிர்த்துவிட்டேன்.—இப்பொ
ழுது அப்பிரகத்தின் வழியாய்த் தெளிவில்லா
மற் பார்க்கிறோம்; அப்பொழுதோ முகமுகமா
கப்பார்ப்போம்: இப்பொழுது நான் குறைந்த அ
றிவுள்ளவன்; அப்பொழுதோ நான் அறியப்பட்
டிருக்கிற பிரகாரம் நானும் அறிந்துகொள்வே
௰௩ ன்.—இப்பொழுது விசுவாசம், நம்பிக்கை,அன்
பு என்னும் இம்மூன்றும் நிற்கின்றன; இவைக
ளில் அன்பே சிரேஷ்டம்.

## ௰௪. அதிகாரம்.

௧. பலபாஷைகளைப் பேசுவதிலும் உபதேசிப்பது உத்தமமெனக்காட்டல்: ௬. உபதேசத்தினாலே சனங்களை உணர்த்துவது அவசியமெனத் தெரிவித்தல்: ௨௰. உணர்வினாலுண்டாகும்பலனை அறிவித்தல்: ௨௬. உபதேசத்தையும்,நானாபாஷைகளைப் பேசுவதையுங் குறித்துப் பவுல் புத்திசொல்லல்: ௩௪. சபையிலே ஸ்திரிகள் உபதேசிப்பது தகாதென விலக்கல்.

அன்பையே தொடருங்கள், ஆவிக்குரியவைக
ளையும், விசேஷமாகத்தீர்க்கதரிசனஞ்சொல்லும்
௨ வரத்தையும்விரும்புங்கள்.-அந்நியபாஷையிற்
பேசுகிறவன்,ஆவியில் இரகசியங்களைப்பேசினா
லும், ஒருவனும் அவன்பேசுகிறதைஅறியாதிருக்
கிறதினால், அவன் மனுஷரிடத்திலல்ல, தேவ
னிடத்திற்பேசுகிறான்.-தீர்க்கதரிசனஞ்சொல் ௩
லுகிறவனோ,பத்தியைவளர்க்கிறதற்கும்,உணர்த்
துகிறதற்கும், ஆற்றுகிறதற்கும் மனுஷருக்குப்
பேசுகிறான்.—அந்நியபாஷையிற்பேசுகிறவன் ௪
தன்பத்தியைவளர்க்கிறதற்குப்பேசுகிறான்; தீர்க்
கதரிசனஞ்சொல்லுகிறவனோ சபையின் பத்தி
யை வளர்க்கிறதற்குப் பேசுகிறான்.—நீங்களெல் ௫
லாரும் அந்நிய பாஷைகளைப் பேச விரும்புகி
றேன்: ஆயினும் அந்நியபாஷைகளைப்பேசுகிற
வன் சபையின் பத்தியை வளர்க்கிறதற்கு அ
ருத்தத்தைத் தெரிவியாதேபோனால், தீர்க்கதரி
சனஞ்சொல்லுகிறவன் அவனிலுஞ் சிரேஷ்ட
ன்: ஆதலால் நீங்கள் தீர்க்கதரிசனஞ் சொல்லு
கிறவர்களாகவேண்டுமென்று அதிகமாய் விரும்
புகிறேன்.—சகோதரரே, நான் உங்களிடத்தில் ௬
வந்து அந்நியபாஷைகளைப்பேசினாலும், வெ
ளிப்படுத்தலையாவது, அறிவையாவது, தீர்க்கதரி
சனத்தையாவது, போதகத்தையாவதுபேசாவிட்
டால்,என்னால்உங்களுக்கு என்னலாபம்வரும்.-
அப்படியே நீங்குழல், சுரமண்டலமுதலியஉயி ௭
ரில்லாதவாத்தியங்கள் தொனிகளில்வித்தியாசங்
காட்டாவிட்டால் ஊதினது இன்னது,வாசிக்கப்
பட்டது இன்னதென்பது எப்படித்தெரியும்.-எக் ௮
காளமானது அறியத்தக்க சத்தமிடாதிருந்தால்,
யுத்தத்துக்கு எத்தனம்பண்ணுகிறவன் யாவன்.-
அதுபோல,நீங்களும் தெளிவானசொல்லைநாவி ௯
னால் வசனியாவிட்டால், பேசப்பட்டது இன்
னதென்று எப்படித்தெரியும்; நீங்கள் ஆகாயத்
திற்குப்பேசுவீர்களே.—உலகத்தில் எத்தனையோ ௰
பலவிதமான பாஷைகளுண்டு, அவைகளில் ஒ
ன்றும் அருத்தமில்லாததல்ல.—ஆகிலும் நான் ௰௧
பாஷையின் அருத்தத்தை அறியாமலிருந்தால்
பேசுகிறவனுக்கு அந்நியதேசத்தானாயிருப்பே
ன்,பேசுகிறவன் எனக்கும் அந்நியதேசத்தானா
யிருப்பான்.—நீங்களும் ஆவிக்குரியவைகளைப் ௰௨
பெற ஆவலாயிருக்கிறபடியினால்,சபையின் பத்
தியைவளர்ப்பதற்கேதுவானவைகளை மிகுதியா
ய்ப்பெறும்படிதேடுங்கள்.—அந்நியபாஷைபேசு ௰௩
கிறவன் அதின்கருத்தைத் தெரிவிக்கும்படி வே
ண்டக்கடவன்.—நான் அந்நியபாஷையில் விண் ௰௪
ணப்பம்பண்ணினால் என் ஆவி விண்ணப்பம்
பண்ணுமேயன்றி, என் கருத்துப் பலனற்றதாயி
ருக்கும்.-இனிஎன்ன; நான் ஆவியினாலே விண் ௰௫
ணப்பம்பண்ணுவேன்,அறிவுவிளங்கவிண்ணப்
பம்பண்ணுவேன்:நான்ஆவியினாலேபாடுவேன்,
அறிவுவிளங்கப்பாடுவேன்.-இல்லாவிட்டால்,நீ ௰௬
ஆவியில் துதிசெய்யும்பொழுது கல்லாதவன் நீ
பேசுகிறதின்னதென்று அறியாததினால், உன் ஸ்
தோத்திரத்திற்கு ஆமென் என்று எப்படிச்சொல்

(௨)அதி.௰௨.௮ ௯,௰ ௨௮. மத்.௭.௨௨. மத்.௰௭.௨௰.(௩)மத்.௬.௧,௨.(௪)நீதி.௰.௰௨. ௧.பேதுரு.௪.௮.(௫)அதி.௰.௨௪. பிலி.௨.௪.(௬)சங்.௰.௩. ரோ.௧.௩௧. ௨.யோவா.௪. (௭) ரோ.௰௫.௧. கலா.௬.௨. ௨.தீமோ.௨.௨௪. (௯) அதி.௮.௨. (௰௨)௨.கொரி.௩.௰௮. பிலி.௩.௰௨. மத்.௰௮.௰. ௧.யோவா.௩.௨.—(௰௪. அதி. ௧.)அதி.௰௨.௩௧. எண்.௰௧.௨௫,௨௯. (௨) அதி.௨.௪. அப்.௨௨.௯. (௬) வச.௨௬.(௰௫) எபே.௫.௰௯. கொலோ.௩.௰௬. சங்.௪௭.௭. (௰௬) அதி.௰௧.௨௪.

௰௭ லுவான்.—நீ நன்றாய்த்துதிசெய்வாய், ஆகிலும் அ
௰௮ தினாற் பிறருடைய பத்திவளராதே.—உங்களெல்
லாரிலும் நான் அதிகமாகப் பாஷைகளைப்பேசு
கிறதினால் என் தேவனை ஸ்தோத்திரிக்கிறே
௰௯ ன்:-ஆனாலும் நான் சபையில் அந்நியபாஷையிற்
பதினாயிரஞ் சொற்களைப்பேசுகிறதிலும்,பிறரை
யுணர்த்தும்படி ஐந்துசொற்களைமாத்திரங்கருத்து
விளங்கப்பேசஅதிகவாஞ்சையாயிருக்கிறேன்.-
௨௰ சகோதரரே, நீங்கள் புத்தியிற் குழந்தைகளா
யிராமல், துர்க்குணத்திற்குழந்தைகளாயிருப்பீர்
௨௧ களாக: புத்தியிற்புருஷராகுங்கள்.-"மறுபாஷை
களினாலும், மறு உதடுகளினாலும் இந்தச்சனங்
களிடத்திற்பேசுவேன்; ஆகிலும் இவர்கள் எ
னக்குச் செவி கொடார்களென்று கர்த்தர்
சொல்லுகிறார்,"என்பது வேதத்தில் எழுதியிருக்
௨௨ கின்றது.—ஆதலால் அந்நியபாஷைகள் விசுவா
சிகளுக்கல்ல, அவிசுவாசிகளுக்கு அடையாள
மாயிருக்கின்றன: தீர்க்கதரிசனமோ, அவிசுவா
சிகளுக்கல்ல, விசுவாசிகளுக்கு அடையாளமா
௨௩ யிருக்கின்றது.—இப்படியிருக்க,சபையார்யாவ
ரும் ஒரு இடத்திற் கூடிவந்து, எல்லாரும் அந்
நியபாஷைகளிற் பேசிக்கொள்ளுகையில், கல்
லாதவர்களாகிலும், அவிசுவாசிகளாகிலும் உள்
ளேவந்தால், உங்களை மதியீனரென்றுசொல்லார்
௨௪ களா.—எல்லாருந் தீர்க்கதரிசனங்களைச்சொல்
லுகையில் ஒரு அவிசுவாசியாகிலும், கல்லாதவ
னாகிலும் வந்தால் அவன் எல்லாராலுங்கண்டிக்
கப்பட்டும், எல்லாராலும் நிதானிக்கப்பட்டுமி
௨௫ ருப்பான்.—அதினால் அவனுடைய இருதயத்தின்
அந்தரங்கமானவைகள்பிரத்தியட்சமாகும்; அவ
ன் முகங்குப்புறவிழுந்து தேவனுக்கு ஆராத
னைசெய்து, தேவன் மெய்யாய் உங்களுக்குள்
௨௬ ளிருக்கிறாரென்று அறிக்கையிடுவான்.—நீங்கள்
கூடிவந்திருக்கிறபொழுது, உங்களில் ஒருவன்
சங்கீதத்தையும், ஒருவன் போதகத்தையும், ஒரு
வன் அந்நியபாஷையையும், ஒருவன் வெளிப்
படுத்தப்பட்ட வாக்கியத்தையும், ஒருவன் அருத்
தந் தெரிவித்தலையும் வசனிக்கிறார்கள். சகோ
தரரே, இதென்ன,எப்படியும் பத்தியை வளர்க்
கிறதற்கு எல்லாஞ் செய்யப்படக்கடவன.—
௨௭ அந்நிய பாஷையிற் பேச விரும்பினால், இருவர்
மூவர்மாத்திரங் கிரமங்கிரமமாய்ப்பேசவும், ஒரு
வன் அருத்தத்தைத்தெரிவிக்கவும் வேண்டும்.—
௨௮ அருத்தத்தைத்தெரிவிப்பவன் அங்கே யில்லாதி
ருந்தால், அவன் சபையிற்பேசாமல், தன்னிடத்
திலும், தேவனிடத்திலும் பேசக்கடவன்.—
௨௯ தீர்க்கதரிசிகளில் இருவர் மூவர் வசனிக்கலாம்,
௩௰ மற்றவர்கள் நிதானிக்கக்கடவர்கள்.—அப்பொ
ழுது உட்காந்திருக்கிற வேறொருவனுக்கு ஏதா
கிலும் வெளிப்படுத்தப்பட்டால், முந்தினவன்
பேசாமலிருக்கக்கடவன்.—எல்லாருங் கற்கிற ௩௧
தற்கும், எல்லாரும் ஆறுதலை அடைகிறதற்கும்
நீங்கள் அனைவரும் ஒருவரொருவனாய்த் தீர்க்க
தரிசனஞ்சொல்லலாம்.—தீர்க்கதரிசிகளின் ஆவி ௩௨
கள் தீர்க்கதரிசிகளுக்கே கீழ்ப்படிந்திருக்கின்
றன.—தேவன் கலகத்துக்கல்ல, சமாதானத்திற் ௩௩
குக் காரணர், பரிசுத்தவான்களுடைய எல்லாச்
சபைகளிலேயும் அப்படியே ஆகும்.—சபைக ௩௪
ளில் உங்கள் ஸ்திரிகள் பேசாமலிருக்கக்கடவர்
கள்: பேசுகிறதற்கு அவர்களுக்கு உத்தரவில்லை;
வேதத்தின்படி அவர்கள் அமைந்திருக்கவேண்
டும்.—அவர்கள் யாதொன்றைக் கற்றுக்கொள்ள ௩௫
விரும்பினால், வீட்டிலே தங்கள் தங்கள் புருஷ
ரிடத்தில் வினாவக்கடவர்கள்: ஸ்திரிகள் சபை
யிற் பேசுகிறது அவமரியாதை.—என்ன; தேவ ௩௬
வாக்கு உங்களிடத்திலிருந்தாபுறப்பட்டது, அ
து உங்களிடத்திற்குமாத்திரமாவந்தது.—ஒருவன் ௩௭
தன்னைத் தீர்க்கதரிசியென்றாகிலும், ஆவியைப்
பெற்றவனென்றாகிலும் எண்ணினால்,நான் உங்
களுக்கு எழுதுகிறவைகள் கர்த்தருடைய
கட்டளைகளென்று அறியக்கடவன்.—ஒருவன் ௩௮
அறியாமையுள்ளவனானால் அவன் அறியாமை
யுள்ளவனாயிருக்கக்கடவன்.—ஆதலால் சகோத ௩௯
ரரே, நீங்கள் தீர்க்கதரிசனஞ்சொல்ல விரும்பு
வீர்களாக, அந்நியபாஷைகளையும் பேசுகிறதற்
குத்தடைபண்ணாதிருங்கள்.—சகலமுஞ் சீருக் ௪௰
கேற்க ஒழுங்காய்ச்செய்யப்படக்கடவன.

## ௰௫. அதிகாரம்.

க. கிறிஸ்து உயிர்த்தெழுந்திருப்பதைக்குறித்துச் சிலவிசேஷங்களைச்சொல்லல்: ௰௨. உயிர்த்தெழுதலில்லையென்று சாதிப்பவர்களைக் கண்டித்தல்: ௨௰. கிறிஸ்து உயிர்த்தெழுந்தது அவருடைய சனங்களின் உயிர்த்தெழுதலுக்குக் காரணமென்று காட்டல்: ௨௯. உயிர்த்தெழுதலில்லாவிட்டாற் சன்மார்க்கம் பலனற்றதென்று தெரிவித்தல்: ௩௫. உயிர்த்தெழுதலின் சரீரத்தை வருணித்தல்: ௪௩. உயிர்த்தெழுதலின் வகையை நிருணித்தல்: ௫௰. கடைசிநாளை விவரித்தல்.

சகோதரரே, நான் உங்களிடத்திற் பிரசங்கித்த க
சுவிசேஷத்தை உங்களுக்கு அறிவிக்கிறேன்,
நீங்களும் அதை அங்கிகரித்துக்கொண்டு, அதி
லே நிலைத்திருக்கிறீர்கள்.—நீங்கள் விருதாவாய் ௨
விசுவாசியாமல், நான் உங்களுக்குப் பிரசங்கித்
ததை நினைவில் வைத்தால், அதினால் நீங்கள் இ
ரட்சிக்கப்படுவீர்கள்.—கிறிஸ்து நமது பாவங் ௩
களினிமித்தம் வேதத்தின்படி மரித்தார்.—வே ௪

(௨௰)சங்.௱௩௧.௨. மத்.௰௧.௨௫. ரோ.௰௬.௰௯. எபே.௪.௰௪. எபி.௫.௰௨,௰௩. மத்.௰௮.௩. க.பேதுரு.௨.௨. அதி.௨.௪. (௨௧)யோவா.௰.௩௪. ஏசா.௨௮.௰௧,௰௨.(௨௩)அப்.௨.௰௩. (௨௫) ஏசா.௪௫.௰௪. சக.௮.௨௩.(௨௬)வச.௬. அதி.௰௨.௮,௯,௰. அதி.௰௨.௭. ௨.கொரி.௰௨.௰௯. எபே.௪.௰௨. (௨௯) அதி.௰௨.௰. (௩௰) க.தெச.௫.௰௯,௨௰.(௩௨)க.யோவா.௪.௧. (௩௩) அதி.௰௧.௰௬. (௩௪) க.தீமோ.௨.௰௧,௰௨. அதி.௰௧.௩. எபே.௫.௨௨. கொலோ.௩.௰௮. தீத்.௨.௫. க.பேதுரு.௩.௧. ஆதி.௩.௰௬. (௩௭) ௨.கொரி.௰.௭. க.யோவா.௪.௬. (௩௯) அதி.௰௨.௩௧. க.தெச.௫.௨௰. (௪௰)வச.௩௩.—(௰௫. அதி. க.) கலா.௧.௰௧. ரோ.௫.௨.(௨)ரோ.௧.௰௬. கலா.௩.௪.(௩)அதி.௰௧.௨,௨௩. கலா.௧.௰௨. சங்.௨௨.௰௫. ஏசா.௫௩.௫,௬. தானி.௯.௨௬. சக.௰௩.௭. க.பேதுரு.௧.௰௧.(௪)சங்.௨.௭. ஏசா.௫௩.௰. ஓசி.௬.௨. க.பேதுரு.௧.௰௧.

தத்தின்படி அவர் அடக்கம்பண்ணப்பட்டு, மூ
ன்றும்நாளில் உயிர்த்தெழுந்தார்: நான் பெற்ற
தும் உங்களுக்குப் பிரதானமாக அறிவித்ததுமா
௫ கிய உபதேசம் இது.-அவர் கேபாவுக்கும், பின்
௬ பு பன்னிருவருக்குந் தரிசனையானார்.—அதன்
பின்பு ஏகமாய்க்கூடிய ஐஞ்ஞூறுபேருக்கதிகமா
ன சகோதரருக்குத் தரிசனையானார்; அவர்களில்
அநேகர் இந்நாள்வரைக்குமிருக்கிறார்கள், சிலர்
௭ மாத்திரம் மகாநித்திரை அடைந்தார்கள்.—பின்
பு யாக்கோபுக்கும், அப்பால்அப்போஸ்தலரெல்
௮ லாருக்குந் தரிசனையானார்.–எல்லாருக்கும்பின்,
பிரசவகாலத்திற்குமுன் பிறந்தவன்போன்ற எ
௯ னக்குந் தரிசனையானார்.—அப்போஸ்தலரெல்
லாரிலும் நான் சிறியவன், தேவனுடைய ச
பையை நான் துன்பப்படுத்தினபடியினால், அப்
போஸ்தலனென்னும்பெயர்பெறுவதற்குப் பாத்
௰ திரனல்ல.—ஆகிலும் நான் நிற்கிற நிலை தேவ
னுடைய கிருபையினாலுண்டாயிற்று: அவர்எ
னக்கு அருளிய கிருபை பலனற்றதாயிருக்க
வேயில்லை; நான் மற்றெல்லாரிலும் அதிகமாய்ப்
பிரயாசப்பட்டேன்: நானாகவல்ல, என்னோடே
யிருக்கிற தேவனுடைய கிருபையினால் அப்
௰௧ படிச்செய்தேன்.–ஆதலால் நானாகிலும், அ
வர்களாகிலும் இப்படியே பிரசங்கிக்கிறோம்,
௰௨ இப்படியே நீங்களும் விசுவாசித்தீர்கள்.–கிறிஸ்
து மரித்தோரிலிருந்து எழுந்தாரென்று பிரசங்
கிக்கப்பட்டிருக்க, உங்களிற்சிலர், மரித்தோரின்
உயிர்த்தெழுதலில்லையென்றுசொல்வதெப்படி.-
௰௩ மரித்தோரின் உயிர்த்தெழுதலில்லையாகில், கிறி
௰௪ ஸ்துவும் எழுந்திருக்கவில்லையே.—கிறிஸ்து
எழுந்ததில்லையாகில், எங்கள் பிரசங்கமும் அபத்
௰௫ தம், உங்கள்விசுவாசமும் விருதா.–மரித்தோர் எ
ழுந்திராவிட்டால், தேவன் எழுப்பாத கிறிஸ்
துவைத் தேவன் எழுப்பினாரென்று அவரைக்
குறித்துச் சாட்சிசொன்னதினால், நாங்கள் தே
வனுக்காகப் பொய்ச்சாட்சி சொல்லுகிறவர்
௰௬ களாகவுங் காணப்படுவோம்:–மரித்தோர் எழுந்
திராவிட்டால், கிறிஸ்துவும் உயிர்த்தெழுந்த
௰௭ தில்லை.—கிறிஸ்து எழுந்திராவிட்டால், உங்
கள் விசுவாசம் விருதா; நீங்கள் இதுவரைக்கும்
௰௮ உங்கள் பாவங்களிலிருக்கிறீர்கள்.—அப்படியா
னால் கிறிஸ்துவைப்பற்றி மகாநித்திரை அ
௰௯ டைந்தவர்களுங் கெட்டுப்போனார்கள்.–நாம் கி
றிஸ்துவின்மேல் இம்மைக்காகமாத்திரம் நம்
பிக்கை வைத்தோமாகில், எல்லா மனுஷரிலும்
௨௰ நாமே மகா நிர்ப்பாக்கியராயிருக்கிறோம்.-அப்ப
டியல்ல, கிறிஸ்து மரித்தோரைவிட்டெழுந்து,
நித்திரை அடைந்தவர்களின் முதற்பலனானார்.–
மனுஷனால் மரணமுண்டானதுபோல, மனு ௨௧
ஷனால் மரித்தோரின் உயிர்த்தெழுதலும் உண்
டாயிற்று.—ஆதாமினாலே சகலரும் மரிப்பது ௨௨
போல, கிறிஸ்துவினாலே சகலரும் உயிர்ப்
பிக்கப்படுவார்கள்.—ஆகிலும் அவனவன் தன் ௨௩
தன்வரிசையில் அப்படியாவான்:முதலாவது மு
தற்பலனானவர் கிறிஸ்து; பின்புஅவர் வரும்
பொழுது கிறிஸ்துவுக்குரியவர்கள் எழுந்
திருப்பார்கள்.—அவர் எல்லா ஆளுகையை ௨௪
யும், எல்லா அதிகாரத்தையும், வல்லமையை
யும் அழித்து, பின்பு இராச்சியத்தைப். பிதாவா
கிய தேவனிடத்தில் ஒப்பிக்குங்காலத்தில்
முடிவுவரும்.—அவர் எல்லாச்சத்துருக்களையுந் ௨௫
தமது பாதத்திற்குக்கீழாக்கும்வரைக்கும், அவர்
ஆளுகை செய்யவேண்டும்.—அவர் அழிக்குங் ௨௬
கடைசிச் சத்துரு மரணமே.—அவர் எல்லாச்சத் ௨௭
துருக்களையுந் தமது பாதத்திற்குக் கீழாக்கிவைத்
தார். ஆகிலும் சகலமும் அவருக்குக் கீழாக்கிவை
க்கப்பட்டதென்று சொலலும்பொழுது, சகலத்
தையும் அவருக்குக்கீழ்ப்படுத்தினவர் தவிரவெ
ன்பது பிரத்தியட்சமாய்விளங்குகின்றது.–சகல ௨௮
மும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்பொழுது,
தேவனே சகலத்திலுஞ்சகலமுமாயிருக்கத்தக்
கதாக, குமாரனே தமக்குச்சகலத்தையுங்கீழாக்கி
வைத்தவருக்குக்கீழ்ப்பட்டிருப்பார்.-மரித்தோர் ௨௯
எழுந்திராவிட்டால் மரித்தோரினிமித்தம் ஞான
ஸ்நானம் பெறுகிறவர்கள் என்னசெய்வார்கள்,
மரித்தோரினிமித்தம் இவர்கள் ஞானஸ்நானம்
பெறுகிறதென்ன.–நாங்களும் ஏன் எந்நேரமும் ௩௰
நாச மோசத்தை அடையத்தக்கவர்களாயிருக்கி
றோம்.–நான் தினமும் மரிக்கிறேனென்று நம்மு ௩௧
டைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவில்
உங்கள்நிமித்தம் எனக்குண்டான ஆனந்தத்தைக்
கொண்டே சத்தியம்பண்ணுகிறேன்.—நான் ம ௩௨
னுஷர் வழக்கமாய்ப்பேசுகிறேன், மரித்தோர் எ
ழுந்திராவிட்டால் நான் எபேசு நகரத்திற் காட்
டுமிருகங்களுடனே யுத்தஞ்செயததினால் எனக்
கு என்னலாபம், போசனபானம்பண்ணுவோம்
வாருங்கள்; நாளைக்குச் சாவோம்.—வஞ்சிக்கப் ௩௩
படாதிருங்கள்: தீதான சம்பாஷணை நல்லொ
ழுக்கத்தைக் கெடுக்கும்.—பாவத்திற்கு விலகி, ௩௪
நீதிப்படிநடக்க விழித்திருங்கள்; உங்களிற்சி
லர் தேவனைப்பற்றும் அறிவில்லாதவர்களாயி
ருக்கிறார்கள்: உங்களுக்கு இலச்சையுண்டாக

---

(௫) லூக்.௨௪.௩௪. மத்.௨௮.௰௭. அப்.௰.௪௧. (௭) லூக்.௨௪.௫௰. அப்.௧.௩,௪. (௮) அப்.௯.௪,௰௭. (௯) எபே.௩.௮. அப்.௮.௩. கலா.௧.௰௩. பிலி.௩.௬. ௧.தீமோ.௧.௰௩. (௰) எபே.௩.௭,௮. ௨.கொரி.௰௧.௨௩. மத்.௰.௨௰. ரோ.௰௫.௰௮, ௰௯. ௨.கொரி.௩.௫. கலா.௨.௮. எபே.௩.௭. பிலி.௨.௰௩. (௰௩) ௧.தெச.௪.௰௪. (௰௫) அப்.௨.௨௪,௩௨. (௰௭) ரோ.௪.௨௪. (௰௯) ௨.தீமோ.௩.௰௨. (௨௰) ௧.பேதுரு.௧.௩. அப்.௨௬.௨௩. கொலோ.௧.௰௮. வெளி.௧.௫. (௨௧) ரோ.௫.௰௨,௰௭. யோவா.௰௧.௨௫. ரோ.௬.௨௩. (௨௩) வச.௨௰. ௧.தெச.௪.௰௫,௰௬,௰௭. (௨௪) தானி.௭.௰௪,௨௭. (௨௫) சங்.௱௰.௧. அப்.௨.௩௪,௩௫. எபே.௧.௨௨. எபி.௧.௰௩. (௨௬) ௨.தீமோ.௧.௰. வெளி.௨௰.௰௪. (௨௭) சங்.௮.௬. மத்.௨௮.௰௮. எபி.௨.௮. ௧.பேதுரு.௩.௨௨. (௨௮) பிலி.௩.௨௧. அதி.௩.௨௩. (௩௰) ௨.கொரி.௰௧.௨௬. கலா.௫.௰௧. (௩௧) ௧.தெச.௨.௰௯. ரோ.௮.௩௬. ௨.கொரி.௪.௰,௰௧. (௩௨) ௨.கொரி.௧.௮. பிர.௨.௨௪. ஏசா.௨௨.௰௩. லூக்.௰௨.௰௯. (௩௩) அதி.௫.௬. (௩௪) ரோ.௰௩.௰௧. எபே.௫.௰௪. ௧.தெச.௪.௫. அதி.௬.௫.

௩௫ நான் இப்படிச்சொல்லுகிறேன்.—ஒருவன், மரித்
தோர் எப்படி எழுந்திருப்பார்கள், எவ்விதமா
ன சரீரத்தோடே தோன்றுவார்களென்று கேட்
௩௬ பான்.—புத்தியீனனே, நீ விதைக்கிறது சாவா
௩௭ விட்டால் முளைக்கமாட்டாதே.—நீ விதைக்கிற
பொழுது பின் விளையும்விளைவை விதையாமல்,
கோதுமை அல்லது மற்றொன்றினுடைய வெறு
௩௮ வித்தையே விதைக்கிறாய்.—அதில் தேவன் த
மது சித்தத்தின்படி உருவைத் தோற்றுவிப்பார்,
விதை ஒவ்வொன்றிற்கும் அதினதின் விசேஷத்
துக்கேற்க உருவைத் தோற்றுவிப்பார்.—
௩௯ எல்லா மாமிசமும் ஒரேவிதமான மாமிசமல்ல:
மனுஷருடைய மாமிசம் வேறே, மிருகங்களு
டையமாமிசம்வேறே,மச்சங்களுடையதும்பட்
௪௰ சிகளுடையதும் வேறே.-வானத்திற்குரிய வஸ்
துக்களுமுண்டு,பூமிக்குரியவஸ்துக்களுமுண்டு:
வானத்திற்குரியவற்றின்மகிமைவேறே, பூமிக்கு
௪௧ ரியவற்றின் மகிமைவேறே.-சூரியனுடைய ம
கிமையும்வேறே, சந்திரனுடையமகிமையும்வே
றே, நட்சத்திரங்களுடையமகிமையும் வேறே:
ஒருநட்சத்திரத்தினுடைய மகிமை மற்றொருநட்
சத்திரத்தின் மகிமைக்கு வேறாயிருக்கின்றது.—
௪௨ அவ்விதமாய் மரித்தோரின் உயிர்த்தெழுதலுமி
ருக்கும். அழிவுள்ளதாய் விதைக்கப்படும்; அழி
௪௩ யாததாயெழுந்திருக்கும்.-இழிவாய் விதைக்கப்ப
டும்;மகிமையாயெழுந்திருக்கும்: பலவீனமாய்வி
தைக்கப்படும்; பலமுள்ளதாய் எழுந்திருக்கும்.-
௪௪ ஸ்தூலதேகம் விதைக்கப்படும்; ஆவிக்குரிய தே
கம் எழுந்திருக்கும். ஸ்தூலதேகமுமுண்டு, ஆ
௪௫ விக்குரியதேகமுமுண்டு.—அப்படியே முந்தின
மனுஷனாகிய,"ஆதாம்சீவாத்துமாவானான்,"என்
றெழுதியிருக்கின்றது; பிந்தின ஆதாம் உயிர்ப்
௪௬ பிக்கிறஆவி.-ஆவிக்கேற்றதுமுந்தினதாயிராமல்,
ஸ்தூலத்திற்கேற்றதே முந்தினதாயிருக்கின்றது;
௪௭ ஆவிக்கேற்றது பிந்தினதாயிருக்கின்றது.—முந்
தினமனுஷன், மண்ணிற்றோன்றிய மண்ணான
வன்:இரண்டாம்மனுஷன்,விண்ணிற்றோன்றிய
௪௮ கர்த்தரானவர்.—மண்ணானவன்எப்படியோ,அ
ப்படியே மண்ணானவர்களுமிருப்பார்கள்: விண்
ணானவர் எப்படியோ,அப்படியேவிண்ணானவர்
௪௯ களுமிருப்பார்கள்.-நாம்மண்ணானவனுடையசா
யலைத்தரித்ததுபோல, விண்ணானவருடைய சா
௫௰ யலையுந் தரித்துக்கொள்ளுவோம்.—சகோதரரே,
நான் இதைச் சொல்லுகிறேன், மாமிசமும் இரத்
தமுந் தேவனுடைய இராச்சியத்தைச்சுதந்த
ரிப்பதில்லை; அழிவுள்ளது அழியாமையைச் சு
௫௧ தந்தரிக்கமாட்டாது.—கேளுங்கள், நான் உங்
களுக்கு ஒரு மறைபொருளை வெளிப்படுத்துகி
றேன்; நாமனைவரும் மகாநித்திரைஅடைவதில்
லை.—ஆகிலும் கடைசி எக்காளந்தொனிக்கும் ௫௨
பொழுது, ஒரு இமைப்பொழுதில் நாமெல்லா
ரும் மறுரூபமாக்கப்படுவோம்: எக்காளந்தொ
னிக்கும், மரித்தோர் அழியாதவர்களாய் எழுந்தி
ருப்பார்கள், நாமும் மறுரூபமாக்கப்படுவோம்.-
அழிவுள்ளதாகிய இது அழியாமையையும், சா ௫௩
வுள்ளதாகிய இது சாவாமையையுந்தரித்துக்கொ
ள்ளவேண்டும்.—அழிவுள்ளதாகிய இது அழியா ௫௪
மையையும், சாவுள்ளதாகிய இது சாவாமையை
யுந் தரித்துக்கொள்ளும்பொழுது, "மரணஞ்செ
யமாக விழுங்கப்பட்டது," என்றெழுதியிருக்
கிற வாக்கியம் நிறைவேறலாகும்.—ஆ, மரண ௫௫
மே, உன் கூர்மை எங்கே; ஆ, பாதாளமே, உன்
செயம் எங்கே.—மரணத்தின் கூர்மை பாவம்; ௫௬
பாவத்தின் பலம் நியாயப்பிரமாணம்.—நம்மு ௫௭
டைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவி
னால் நமக்குச் செயங்கொடுக்கிற தேவனுக்
கு ஸ்தோத்திரமுண்டாவதாக.—ஆதலால், ௫௮
என் பிரியமான சகோதரரே, கர்த்தரிடத்தில்
உங்கள் பிரயாசம் பலனற்றதாயிராதென்று அறிந்
து, நீங்கள் கர்த்தாவின் கிரியையில் ஸ்திரப்
பட்டு, அசைவற்றவர்களும், எப்பொழுதும் பெ
ருகுகிறவர்களுமாயிருப்பீர்களாக.

## ௰௬. அதிகாரம்.

௧. தருமஞ்செய்யும்படி பவுல் கொரிந்தியரை ஏவல்: ௰. தீமோத்தேயு அப்பொல்லோவென்பவர்களைக்குறித்துச் சில விசேஷந்தெரிவித்தல்: ௰௫. ஸ்தேவான்முதலானவர்களைக்குறித்துச் சிலவிசேஷஞ்சொல்லல்: ௰௯. வாழ்த்துச்சொல்லி நிருபத்தைமுடித்தல்.

பரிசுத்தவான்களுக்காகச் சேர்க்கப்படும் பொ ௧
ருளைக்குறித்து, நான் கலாத்தியவின் சபைக
ளுக்கிட்ட கட்டளைப்படி நீங்களுஞ்செய்யுங்
கள்.—நான்வரும்பொழுதுபொருள்சேர்க்குதல் ௨
இராதபடி, உங்களில் ஒவ்வொருவனும்,தன்தன்
வரவுக்குத்தக்கதை வாரத்தின் முதல் நாட்கள்
தோறுந்தன்னிடத்திற்கூட்டிவைக்கக்கடவன்.-
நான் வந்திருக்கும்பொழுது, உங்கள் நன்கொ ௩
டையை யெருஷலேமுக்குக் கொண்டுபோகும்
படி, நீங்கள் நிருபங்களினாலே தகுதியுள்ளவர்
களென்று குறிக்கிறவர்களை அனுப்புவேன்.—நா ௪
னும் போகத்தகுதியானால், அவர்களும் என்னு
டனே வரலாம்.—நான் மக்கேதோனியாவின் ௫
வழியாய் வருகிறேன்: மக்கேதோனியாவைக்
கடந்து உங்களிடத்திற்குவருவேன்.—நான் எங் ௬

(௩௫) எசேக்.௩௭.௩. யோவா.௰௨.௨௪. (௪௨) தானி.௰௨.௩. மத்.௰௩.௪௩. (௪௩) பிலி.௩.௨௧. (௪௫) ஆதி.௨.௭. ரோ.௫.௰௪. யோவா.௫.௨௧. பிலி.௩.௨௧. கொலோ.௩.௪. (௪௭) யோவா.௩.௩௧. ஆதி.௨.௭. யோவா.௩.௰௩,௩௧. (௪௮) பிலி.௩.௨௰,௨௧. (௪௯) ஆதி.௫.௩. ரோ.௮.௨௯. ௨.கொரி.௩.௰௮. பிலி.௩.௨௧. ௧.யோவா.௩.௨. (௫௰) மத்.௰௬.௰௭. யோவா.௩.௩,௫. (௫௧) ௧.தெச.௪.௰௫,௰௬,௰௭. பிலி.௩.௨௧.(௫௨)சக.௯.௰௪. மத்.௨௪.௩௧. யோவா.௫.௨௫. ௧.தெச.௪.௰௬. (௫௩) ௨.கொரி.௫.௪. (௫௪) ஏசா.௨௫.௮. எபி.௨.௰௪,௰௫. வெளி.௨௰.௰௪.(௫௫)ஓசி.௰௩.௰௪. (௫௬) ரோ.௪.௰௫.(௫௭)ரோ.௭.௨௫. ௧.யோவா.௫.௪,௫. (௫௮) ௨.பேதுரு.௩.௰௪. அதி.௩.௮.—(௰௬. அதி. ௧.) அப்.௰௧.௨௯. ரோ.௰௫.௨௬. ௨.கொரி.௮.௪. கலா.௨.௰.(௨)அப்.௨௰.௭. வெளி.௧.௰.(௩)௨.கொரி.௮.௰௯. ௨.கொரி.௮.௪,௬,௰௯. (௪) ௨.கொரி.௮.௪,௰௯.(௫)அப்.௰௯.௨௧. ௨.கொரி.௧.௰௫. (௬) அப்.௰௫.௩. ரோ.௰௫.௨௪. ௨.கொரி.௧.௰௫.

கேபோனாலும் நீங்கள் என்னை வழிவிட்டனுப்
பும்படிக்கு நான் உங்களிடத்திற் சிலகாலந் த
ரித்திருப்பேன், ஒருவேளை மாரிகாலமுடியும்வ
௭ ரைக்கும் உங்களிடத்தில் நிற்கவுங்கூடும்.-நான்
பண்ணும் இந்தப் பிரயாணத்திற்கிடையில் உங்
களைக்காணமாட்டேன்; ஆனாலும், பின்பு கர்த்
தர் உத்தரவுகொடுத்தால், உங்களிடத்திற் சிலகா
௮ லந் தங்குவேனென்று நம்பியிருக்கிறேன்.-பெ
ரிதும், பலமுமான கதவு எனக்குத் திறக்கப்பட்
டிருக்கிறதினாலும், விரோதிகளும் அநேகராயிரு
௯ க்கிறதினாலும்,-எபேசு நகரத்திற் பெந்திக்கோஸ்
௰ துவரைக்குந்தரிப்பேன்.—தீமோத்தேயுவந்தால்,
அவன் பயமில்லாமல் உங்களிடத்தில் தரிக்கும்
படி நீங்கள் பார்த்துக்கொள்ளுங்கள்: என்னைப்
போல அவனுங் கர்த்தருடைய கிரியை
௰௧ யை நடப்பிக்கிறானே.—ஆனபடியினால் ஒருவ
னும் அவனை அவமதிக்கப்படாது: அவன் சமா
தானத்தோடே என்னிடத்தில் வரும்படி வழி
விட்டனுப்புங்கள்: அவன் சகோதரருடன்கூடி
௰௨ வருவானென்று காத்திருக்கிறேன்.-சகோதரனா
கிய அப்பொல்லோவும், சகோதரரோடு உங்க
ளிடத்தில்வரும்படி, அவனை மிகவும் வேண்டிக்
கொண்டேன்: ஆனாலும் இப்பொழுது வர அவ
னுக்குச் சற்றும்பிரியமில்லை; அவனுக்கு நற்ச
௰௩ மயங்கிடைத்தால் வருவான்.—விழித்திருங்கள்,
விசுவாசத்தில் நிலைத்திருங்கள், புருஷராயிருங்
௰௪ கள், பலங்கொள்ளுங்கள்.—உங்கள் காரியங்க
ளெல்லாவற்றையும் அன்புடன் நடப்பிக்கக்கட

வீர்கள்.—சகோதரரே, ஸ்தேவானுடைய குடும் ௰௫
பத்தார் அகாயநாட்டில் முதற்பலனானவர்களெ
ன்றும், பரிசுத்தர்களுக்கு ஊழியஞ் செய்து
வருகிறார்களென்றும் நீங்கள் அறிந்திருக்கிறீர்
கள்.—இப்படிப்பட்டவர்களுக்கும், உடன்வே ௰௬
லையாட்களாய்ப் பிரயாசப்படும் மற்றயாவருக்
கும், நீங்களும் அமைந்திருக்கவேண்டுமென்று
உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.-ஸ்தேவா ௰௭
னும், பொருத்துனாத்தும், அகாயிகுசும் உங்கள்
குறைவை நிறைவேற்றுகிறதற்கு வந்ததினால்
நான் சந்தோஷப்படுகிறேன்.-அவர்களால் உங் ௰௮
கள்ஆவியும், எனதாவியும் ஆறுதலை அடைந்த
ன: ஆதலால் இப்படிப்பட்டவர்களைமதிப்பீர்க
ளாக.—ஆசியாவின் சபைகள் உங்களை வாழ்த்து ௰௯
கின்றன. அக்வீலாவும், பிரிஸ்கில்லாளும், தங்
கள்வீட்டிற் கூடுகிறசபையோடு கர்த்தரில்
உங்களை மிகவும் வாழ்த்துகிறார்கள்.—சகோதர ௨௰
ரெல்லாரும் உங்களை வாழ்த்துகிறார்கள். நீங்கள்
ஒருவரை ஒருவர் பரிசுத்தமான முத்தத்தினால்
வாழ்த்துவீர்களாக.—பவுலாகிய நான் என்கை ௨௧
எழுத்தைக்கொண்டே வாழ்த்துகிறேன்.—ஒரு ௨௨
வன் கர்த்தராகியயேசுக்கிறிஸ்துவினிடத்
தில் அன்புகூராதிருந்தால் அவன் சபிக்கப்பட்
டவனாயிருக்கக்கடவன், கர்த்தர் வருவார்.—
கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவினுடை ௨௩
ய கிருபை உங்களோடிருப்பதாக.—கிறிஸ்து ௨௪
யேசுவைப்பற்றும் எனதன்பு, உங்களெல்லா
ரோடும் இருப்பதாக. ஆமென்.

---

(௭) அப்.௰௮.௨௧. யாக்.௪.௰௫. (௯) அப்.௰௪.௨௭. அப்.௰௯.௯. (௰) அப்.௰௯.௨௨. ரோ.௰௬.௨௧. பிலி.௨ ௨௰,௨௨. ௧.தெச.௩.௨. (௰௧) ௧.தீமோ.௪.௰௨. அப்.௰௫.௩௩. (௰௨) அதி.௧.௰௨. (௰௩) மத்.௨௪.௪௨. ௧.தெச.௫.௬. ௧.பேதுரு.௫.௮. அதி.௰௫.௧. பிலி.௧.௨௭. ௧.தெச.௩.௮. ௨.தெச.௨.௰௫. எபே.௬.௰. கொலோ.௧.௰௧. (௰௪) அதி.௰௪.௧. ௧.பேதுரு.௪.௮. (௰௫) அதி.௧.௰௬. ரோ.௰௬.௫. ௨.கொரி.௮.௪. எபி.௬.௰. (௰௬) எபி.௰௩.௰௭. எபி.௬ ௰. (௰௭) ௨.கொரி.௰௧.௯. (௰௮) கொலோ.௪.௮. பிலி.௨.௨௯. ௧.தெச.௫.௰௨. (௰௯) ரோ.௰௬.௫,௰௫. பிலே.௨. (௨௰) ரோ.௰௬.௰௬.(௨௧)கொலோ.௪.௰௮. ௨.தெச.௩.௰௭. (௨௨)எபே.௬.௨௪. கலா.௧.௮,௯.யூதா.௰௪,௰௫.(௨௩)ரோ.௰௬.௨௰.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொரிந்தியருக்கெழுதிய

## இரண்டாம் நிருபம்.

---

### க. அதிகாரம்.

*க. வாழ்த்து: ௩. கிறிஸ்துவின்சீஷர் துக்கத்திலுஞ் சௌக்கியத்தை அனுபவித்தல்: ௰௨. கொரிந்திலுள்ள சபைக்கு அப்போஸ்தலர்காட்டினகுணகிரியைகளை விவரித்தல்: ௰௫. பவுல் அவர்களிடத்திற் போகத்தீர்மானித்தல்.*

தேவனுடைய சித்தத்தினாலே, யேசுக்கி
றிஸ்துவின் அப்போஸ்தலனாகியபவுலும், சகோ
தரனாகிய தீமோத்தேயும் கொரிந்துநகரத்திலுள்
ள தேவனுடைய சபைக்கும், அகாயதே
சமெங்குமுள்ள எல்லாப் பரிசுத்தர்களுக்கும்
உ எழுதிக்கொள்வது:—நம்முடைய பிதாவாகிய
தேவனாலும், கர்த்தராகியயேசுக்கிறிஸ்
துவினாலும் உங்களுக்குக்கிருபையும், சமாதா
௩ னமுமுண்டாகக்கடவன.-நம்முடைய கர்த்த
ரானயேசுக்கிறிஸ்துவின் பிதாவாகிய தே
வனும், இரக்கங்களையுடைய பிதாவும், பூரண
ஆறுதலை அருளுகிற தேவனுமாயிருக்கிற
௪ வர் ஸ்தோத்திரிக்கப்படக்கடவர்.—தேவனா
லே நாங்கள் அடைகிற ஆறுதலினால், எந்த உ
பத்திரவங்களிலும் அகப்படுகிறவர்களுக்கு நாங்
கள் ஆறுதல்செய்யத்திராணியுள்ளவர்களாயிருக்
கிறதற்கு, எங்களுக்குநேரிடும் எல்லா உபத்திர
வங்களிலும் அவர் எங்களுக்கு ஆறுதல்செய்கிற
௫ வராயிருக்கிறார்.-கிறிஸ்துவினிமித்தம் எங்
களுக்குநேரிட்ட உபத்திரவங்கள் பெருகுகிற
துபோல, கிறிஸ்துவினால் எங்களுக்கு ஆறுத
௬ லும்பெருகியிருக்கின்றது.—ஆதலால் நாங்கள் உ
பத்திரவப்பட்டாலும், அது உங்கள் ஆறுதலுக்
கும் இரட்சிப்புக்குமேதுவாகும், நாங்கள் ஆறு
தல்அடைந்தாலும்,அது எங்களுக்கு நேரிடும் உ
பத்திரவங்களை நீங்களுஞ் சகிக்கிறதற்கேதுவாயி
ருக்குமே: அது உங்கள் ஆறுதலுக்கும் இரட்சிப்
௭ புக்குமேதுவாகும்.—நீங்கள் உபத்திரவங்களிற்
பங்காளராயிருக்கிறதுபோல, ஆறுதலிலுமிருப்
பீர்களென்று நாங்கள் அறிந்து, உங்களைக்குறித்
து உறுதியான நம்பிக்கையுள்ளவர்களாயிருக்கி
௮ றோம்.-ஆதலால் சகோதரரே, நாங்கள் சீவிப்போ
மென்னும் நம்பிக்கையும் எங்களுக்கில்லாதிருக்
கத்தக்கதாக, ஆசியாவில், எங்கள்பலத்துக்குமிஞ்
சினதாக எங்கள்மேலேற்றப்பட்ட அளவிறந்த
உபத்திரவத்தின்பாரத்தை நீங்கள் அறியாதிருப்
பது எங்களுக்குவிருப்பமல்ல.—எங்கள்மேலல் ௯
ல, மரித்தோரை எழுப்புகிற தேவன்மேல் நாங்
கள் நம்பிக்கையாயிருப்பதற்கு மரணத்தீர்ப்பு
எங்களுக்குக்கிடைத்தது.-அவ்விதமான மரணத் ௰
தினின்று அவர்எங்களைவிடுவித்தார், இப்பொழு
தும்விடுவிக்கிறார்: அவர் பின்னும்விடுவிப்பாரெ
ன்று நம்பியிருக்கிறோம்;-அநேகர்மூலமாய்எங்க ௰௧
ளுக்குண்டான ஈவுக்காக, அநேகரால் எங்கள்
நிமித்தம் ஸ்தோத்திரங்கள் செலுத்தப்படும்பொ
ருட்டு, நீங்களும் விண்ணப்பத்தினால் எங்களுக்
குதவிசெய்யுங்கள்.—லௌகீக புத்தியினாலல்ல, ௰௨
தேவனுடைய கிருபையினால் நாங்கள் உல
கத்தவர்களிடத்திலும், விசேஷமாக உங்களிடத்
திலுங் கபடமில்லாமல் நேர்மையோடே நடந்து
வருகிறோமென்பதற்கு, எங்கள் மனஞ் சாட்சி
சொல்லுகிறதே எங்களுக்குப்புகழ்ச்சி.—நீங்கள் ௰௩
வாசித்தும், ஒத்துக்கொண்டும் இருக்கிறவைக
ளையேயன்றி, வேறொன்றையும் நாங்கள் உங்க
ளுக்கு எழுதவில்லை; முடிவுபரியந்தம் அப்படி
யே ஒத்துக்கொள்வீர்களென்று நம்பியிருக்கி
றேன்.—கர்த்தராகிய யேசுவின் நாளில் ௰௪
நீங்கள் எங்களுக்குப் புகழ்ச்சியாயிருப்பதுபோ
ல, நாங்களும் உங்களுக்குப்புகழ்ச்சியாயிருப்ப
தை ஒருபங்காகஒத்துக்கொண்டிருக்கிறீர்களே.-
இந்த நம்பிக்கையோடே உங்களுக்கு இரண் ௰௫
டாந்தரமும் நன்மை கிடைக்கும்படி,-முன்னே ௰௬
உங்களிடத்தில் வரவும், உங்கள் ஊர்வழியாய்
மக்கேதோனியாவுக்குப் போகவும், மக்கேதோ
னியாவைவிட்டுத் திரும்ப உங்களிடத்திற்கு வர
வும், உங்களால் யூதேயாநாட்டுக்கு வழிவிட்ட
னுப்பப்படவும் அபிப்பிராயங்கொண்டேன்.—
நான் தீர்மானம்பண்ணினபொழுது வீணாயோ ௰௭
சித்தேனா, அல்லது என்னிடத்தில் ஆமென்பது
ஆமென்றும், அல்லவென்பது அல்லவென்றுமி
ருக்கத்தக்கதாக, நான் யோசிக்கிறவைகளை மாமி
ச இச்சையின்படி யோசிக்கிறேனா.—நாங்கள் ௰௮
உங்களுக்குச்சொல்லிய எங்கள் வாக்கு ஆமென்
றும், அல்லவென்றுமல்ல, தேவன் சத்தியமுள்
ளவராயிருப்பதுபோலவே இருக்கின்றது.—என் ௰௯
னாலும், சில்வானுவினாலும், தீமோத்தேயுவினாலு
ம் உங்களுக்குள்ளே பிரசங்கிக்கப்பட்ட தேவ
னுடைய குமாரனாகிய யேசுக்கிறிஸ்து ஆ

---

(க. அதி. க.) எபே.க.க. பிலி.க.க. (உ) ரோ.க.எ. கொலோ.க.உ. (௩) க.பேதுரு.க.௩. (௫) அப்.௯.௪. கொலோ. க.உ௪. (௬) அதி.௪.௰௫. (௭) ரோ.௮.௰௭. உ.தீமோ.உ.௰உ. (௮) அப்.௰௯.உ௩. க.கொரி.௰௫.௩உ. (௯) எரே.௰௭. ௫,௭. (௰) உ.பேதுரு.உ.௯. (௰௧) ரோ.௰௫.௩உ. பிலி.க.உ௰. அதி.௪.௰௫. (௰உ) அதி.உ.௰௭. க.கொரி.உ.௪. ௰ (௰௪) அதி.௫.௰உ. பிலி.உ.௰௬. க.தெச.உ.௰௯,உ௰. ரோ.க.௰௧. (௰௬) க.கொரி.௰௬.௫,௬. க.கொரி.௪.௰௯. (௰௭) அதி.௰.உ. (௰௯) மாற்.க.க. அப்.௯.உ௰. எபி.௰௩.௮.

மென்றும், அல்லவென்றுமிராமல் ஆமென்றேயி
௨௰ ருந்தார்.—அவரில் எங்களால் தேவனுடைய
மகிமை விளங்கும்படி, தேவனுடைய வாக்
குத்தத்தங்களெல்லாம் ஆமென்றும், அவருக்குள்
௨௧ ஆமெனென்றும் இருக்கின்றன.—உங்களோடே
எங்களையுங் கிறிஸ்துவுக்குள் ஸ்திரப்படுத்தி,
௨௨ நமக்கு அபிஷேகம்பண்ணினவரே தேவன்.-அ
வர் நம்மை முத்திரைப்படுத்தி, நம்முடைய இரு
தயங்களில் ஆவியென்னும் அச்சாரத்தையுங்கொ
௨௩ டுத்திருக்கிறார்.—நான் உங்களைப்பேணி, இதுவ
ரைக்குங் கொரிந்துக்கு வராமலிருக்கிறேனென்
று என் ஆத்துமாவுக்குச்சாட்சியாகத் தேவனை
௨௪ யே அழைக்கிறேன்.-உங்கள்விசுவாசத்தின்மே
ல் ஆளுகைசெய்பவர்களாயிராமல், நீங்கள் விசு
வாசத்திலேநிலைநிற்கிறபடியால்,நாங்கள் உங்
கள் சந்தோஷத்திற்குதவிக்காரராயிருக்கிறோம்.

## ௨. அதிகாரம்.

௧. பவுல் சேரும்பொழுது துக்கப்படாதபடி, தள்ளப்பட்டவர்களைத் திரும்பவும் ஏற்றுக்கொள்ளப்புத்திசொல்லல்: ௰௨. சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்துவதினால் உண்டானபலனைப் பவுல் தெரிவித்தல்.

திரும்பவும் உங்களிடத்தில் துக்கத்தோடே வ
௨ ரேனென்று எனக்குள்ளேதீர்மானித்தேன்.-நான்
உங்களைத் துக்கப்படுத்தினால், என்னால் துக்கம
டைந்தவனேயன்றி, யாவன் என்னைச் சந்தோ
௩ ஷப்படுத்துவான்.-என் சந்தோஷம் உங்களெல்
லாருக்குஞ் சந்தோஷமாயிருக்குமென்று,
உங்களெல்லாரையும் நம்பி, நான் வரும்பொ
ழுது என்னைச் சந்தோஷப்படுத்தவேண்டியவர்
களால் நான் துக்கமடையாதபடிககு இதை உங்
௪ களுக்கு எழுதினேன்.-உங்களைத் துக்கப்படுத்து
வதற்கல்ல, உங்கள்மேல் நான் வைத்த அன்பின்
மிகுதியை நீங்கள் உணர்வதற்காக மிகுந்த வி
யாகுலமும், மனவேதனையுமுள்ளவனாய், மிகுந்
த கண்ணீரோடே உங்களுக்கெழுதினேன்.—
௫ துக்கப்படுத்தினவன், என்னைமாத்திரமல்ல, நா
ன் அதிகபாரமேற்றாதபடி, ஏறக்குறைய உங்க
௬ ளெல்லாரையுந் துக்கப்படுத்தினான்.—அப்படி
ப்பட்டவனுக்கு அநேகராலுண்டான இந்தத்
௭ தண்டனையே போதும்.—ஆதலால் அவன்மிகு
தியான துக்கத்தில் அமிழ்ந்துபோகாதபடி நீங்
கள் அவனுக்கு மன்னித்து, அவனை ஆற்றுவ
௮ து உங்கள் கடமை.—இதினிமித்தம் நீங்கள் உங்
கள் அன்பை அவனுக்குக்காட்டும்படி உங்களை
௯ வேண்டிக்கொள்ளுகிறேன்.—நீங்கள் சகலத்தி
லேயும் கீழ்ப்படிந்திருக்கிறீர்களோவென்பதற்கு
எனக்குச்சாட்சி கிடைக்கும்படி நான் எழுதியி
ருந்தேன்.-சாத்தானுடைய சூழ்ச்சிகள் எங்களுக் ௰
குத் தெரியாமலிருக்கவில்லை, ஆதலால் அவன்
நம்மை மேற்கொள்ளாதபடிக்கு,-நீங்கள்எவனுக் ௰௧
கு மன்னிக்கிறீர்களோ,அவனுக்கு நானும் மன்
னிக்கிறேன்: எதை நான் மன்னித்தேனோ, அ
தை நான்உங்கள் நிமித்தம் கிறிஸ்து சமுகத்தில்
மன்னித்திருக்கிறேன்.—மேலும் நான் கிறிஸ்து ௰௨
வின் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கத்துரோ
வசுக்குவந்தபொழுது, கர்த்தாவினால் எனக்
குக் கதவுதிறக்கப்பட்டது.—என்சகோதரனாகிய ௰௩
தீத்துவைக்காணாததினால் என் ஆவிக்கு அமைத
லில்லாதிருந்தது: ஆதலால் நான் அவர்களிடத்
தில் விடைபெற்று,மக்கேதோனியாவுக்குப்போ
னேன்.—கிறிஸ்துவினால் எங்களை எப்பொழு ௰௪
தும் வெற்றிசிறக்கப்பண்ணி, எவ்விடத்திலும்
எங்களைக்கொண்டு தம்மை அறிகிற அறிவின்
வாசனையை வெளிப்படுத்துகிற தேவனுக்கு
ஸ்தோத்திரம்.—இரட்சிப்பைப் பெற்றவர்களுக் ௰௫
குள்ளும், கெட்டுப்போகிறவர்களுக்குள்ளும்
நாங்கள் தேவனுக்குக் கிறிஸ்துவின் சுகந்த
மாயிருக்கிறோம்.—இவர்களுக்குள் மரணத்திற்கு ௰௬
மரணவாசனையாயிருக்கிறோம்; அவர்களுக்
குள் சீவனுக்குச் சீவவாசனையாயிருக்கிறோம்.
இவைகளுக்குத்தகுந்தவன் யாவன்.—நாங்கள், ௰௭
தேவனுடைய வாக்கியத்தைக் கலப்பாய்ப்
பேசுகிற அநேகரைப்போலல்ல, உண்மையாக
வும், தேவனாலானவர்களாகவும், தேவனுக்கு
முன்பாகவும் கிறிஸ்துவுக்குள் பேசுகிறோம்.

## ௩. அதிகாரம்.

௧. கொரிந்தியர் பவுலுக்கு உபசாரநிருபங்களைப் போலாதல்: ௪. மோசேயின்நியாயப்பிரமாணத்திலும், கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பது உத்தமமெனக்காட்டல்: ௰௨. திருஷ்டாந்தத்தினாற் சுவிசேஷவாக்கியத்தைவெளிப்படுத்தல்.

எங்களை நாங்கள் மெய்ச்சுக்கொள்ளத்திரும்ப ௧
வுந்தொடங்குகிறோமா; சிலரைப்போல் உங்க
ளுக்கு உபசார நிருபங்களை அனுப்புவதும், உங்
களிடத்தில் உபசார நிருபங்களைப் பெறுவ
தும் எங்களுக்கு அவசியமா.—நீங்களே, எங்கள் ௨
இருதயங்களில் எழுதப்பட்டும், சகலமனுஷரா
லும் அறிந்து வாசிக்கப்பட்டும்வருகிற எங்கள்நி
ருபம்.—நீங்களே, சீவனுள்ள தேவனுடைய ௩
ஆவியினாற் கற்பலகைகளிலல்ல, மாமிசமான
இருதயப்பலகைகளில், மையில்லாமல் எழுதப்
பட்டும்,கிறிஸ்துவினுடைய நிருபமாக எங்
கள் ஊழியத்திற் பிரசித்தமாக்கப்பட்டுமிருக்கி
றீர்கள்.—இப்படிப்பட்ட நம்பிக்கையை நாங் ௪

(௨௰) ரோ.௰௫.௮,௯. (௨௧) ௧.யோவா.௨.௨௰,௨௭. (௨௨) எபே.௧.௰௩. எபே.௧.௰௪.(௨௩)ரோ.௧.௰௧. கலா.௧.௨௰. பிலி.௧.௮. ௧.கொரி.௪.௨௧. (௨௪) ௧.கொரி.௩.௫. ௧.பேதுரு.௫.௩. ரோ.௰௧.௨௰. ௧.கொரி.௰௫.௧.—(௨. அதி. ௧.) அதி.௧.௨௩. (௩) அதி.௰௨.௨௧. அதி.௭.௰௬. கலா.௫.௰. (௪) அதி.௭.௮,௯,௰௨. (௫) ௧.கொரி.௫.௧. கலா.௪.௰௨.(௬) ௧.கொரி.௫.௪,௫. ௧.தீமோ.௫.௨௰.(௭)கலா.௬.௧. (௯) அதி.௭.௰௫. (௰௨) அப்.௰௬.௮. ௧.கொரி.௰௬.௯. (௰௩) அதி.௭.௫,௬. (௰௪) உன்.௧.௩. (௰௫) ௧.கொரி.௧.௰௮. அதி.௪.௩. (௰௬) லூக்.௨.௩௪. யோவா.௯.௩௯. ௧.பேதுரு.௨.௭,௮. ௧.கொரி.௰௫.௰. (௰௭) அதி.௪.௨. ௨.பேதுரு.௨.௩. அதி.௧.௰௨.—(௩. அதி. ௧.) அதி.௫.௰௨. அப்.௰௮.௨௭. (௨) ௧.கொரி.௯.௨. (௩.) ௧.கொரி.௩.௫. யாத்.௨௪.௰௨. சங்.௪௰.௮. எரே.௩௧.௩௩. எசேக்.௰௧.௨௰. எபி.௮.௰.

கள் கிறிஸ்துவினால் தேவன் மேல் கொண்
ரு டிருக்கிறோம்.—நாங்கள், எங்களால் எதையாயி
னும் ஆலோசித்துநிதானிப்பதற்குவல்லவர்களல்
ல; எங்கள் வல்லமை தேவனாலுண்டாயிருக்
சு கின்றது.—ஆவியின் புது உடன்படிக்கைக்கு ஊ
ழியக்காரராகும்படி, அவரே எங்களுக்கு வல்ல
மையைக்கொடுத்தார்; எழுத்துக்கல்ல, எழுத்துக்
கொல்லுகின்றது,ஆவியோ சீவனைக்கொடுக்கின்
எ றது.—மோசேயின் முகத்தில் தோன்றி ஒழிந்து
போகத்தக்க மகிமைப்பிரகாசத்தினிமித்தம்,இஸ
ரவேல் சந்ததியார் அவனுடைய முகத்தைநோக்
கிப்பார்க்கக்கூடாதபடி, கற்களிற்பதித்தெழுதப்
பட்ட மரணத்தின் ஊழியம் மகிமையுள்ளதாயி
அ ருக்க,—ஆவியின் ஊழியம் அதிகமகிமையுள்ளதா
கூ யிருக்குமல்லவா.—தண்டனைத்தீர்ப்பை வெளிப்
படுத்தும் ஊழியம் மகிமையுள்ளதாயிருக்க, நீதி
யைவெளிப்படுத்தும் ஊழியம் அதிகமகிமையுள்
௰ ளதாயிருக்குமே.-இதின்பொருட்டாக மகிமைப்
பட்டிருந்த அந்தஊழியம், இந்தஊழியத்திற்கு
உண்டாயிருக்கிற அதிகமகிமைக்குமுன்பாக ம
௰க கிமைப்பட்டதல்ல.—ஒழிந்துபோனது மகிமை
யுள்ளதானால், ஒழிந்துபோகாதது அதிக மகிமை
௰உ யுள்ளதாகுமே.—இவ்விதமான நம்பிக்கை எங்
களுக்குண்டானபடியால், நாங்கள் மிகுந்த தை
௰ங ரியத்துடனே பேசுகிறோம்.—இஸரவேல்சந்ததி
யார்,ஒழிந்துபோகிறதின் முடிவை நோக்கிப்பா
ராதபடி மோசேதன் முகத்தின்மேல் முக்காடிட்
௰ச டதுபோல, நாங்களிடுகிறதில்லை.—அவர்
களுடைய மனங் கடினப்பட்டது: இந்நாள்வ
ரைக்கும்பழைய உடன்படிக்கை வாசிக்கப்படு
கையில் அந்தமுக்காடு நீங்காமல் அவர்களிடத்
திலிருக்கின்றது; அது கிறிஸ்துவினால் நீக்கப்
௰ரு படுகின்றது.-ஆயினும் மோசே வாசிக்கப்படுகிற
பொழுது, இந்நாள்வரைக்கும் முக்காடு அவர்
௰சு கள் மனதின் மேலிருக்கின்றது.—ஆனாலும் கர்த்
தரிடத்தில் மனந்திரும்பும்பொழுது அந்தமுக்
௰எ காடு நீக்கப்படும்.—கர்த்தர் தாமே அந்த ஆ
வியாயிருக்கிறார்: கர்த்தருடைய ஆவி எங்
௰அ கேயோ, அங்கே விடுதலையுமுண்டு.—நாம் அ
னைவருந் திறந்தமுகமாய், கர்த்தாவின் ம
கிமையைக் கண்ணாடியிற்காண்பதுபோலக்கண்
டு, கர்த்தருடைய ஆவியினால் அதற்கொப்
பான சாயலாகமேலும் மேலும் மகிமைபெற்று,
மறுரூபப்படுகிறோம்.

## ச. அதிகாரம்.

க. பவுல், கபடின்மை, நேர்மை, உற்சாகமென்
னும் இவைகளோடு சுவிசேஷத்தைப் பிரசங்
கித்தல்: எ. அதினால் அநேகதுக்கங்களை அனு
பவித்தல்: ௰ங. அந்தத்துக்கந் தனக்கும், சபைக்
கும் நன்மையாய்முடிதல்.

ஆதலால்,இந்த ஊழியத்தில்உட்பட்டவர்களா க
கிய நாங்கள் எங்களுக்குக்கிடைத்த இரக்கத்தின்
படியே,இளைப்படையாமல் நின்று,—இலச்சை உ
யான அந்தரங்ககாரியங்களைத் தள்ளிவிட்டு, கு
தாய் நடவாமலும், தேவனுடைய வாக்கியத்
தைப்புரட்டாமலும் சத்தியத்தை வெளிப்படுத்
துகிறதினால், தேவன் முன்பாக எல்லாருடை
ய மனச்சாட்சிக்கும் எங்களை விளங்கப்பண்ணு
கிறோம்.-ஆதலால் நாங்கள் வெளிப்படுத்துஞ் சு ங
விசேஷம் மறைந்திருந்தால், அது கெட்டுப்போ
கிறவர்களுக்கு மறைந்திருக்கின்றது.-தேவனு ச
டைய சாயலாகிய கிறிஸ்துவின் மகிமை
யுள்ள சுவிசேஷத்தின் ஒளி, அவிசுவாசிகளா
கிய அவர்களுக்குப் பிரகாசியாதபடி, இப்பிர
பஞ்சத்தின் அதிபதி அவர்களுடைய ஞானக்
கண்களைக்குருடாக்கினான்.—நாங்கள் எங்களைப் ரு
பிரசங்கியாமல், கிறிஸ்துயேசுவைக்கர்த்
தரென்றும், எங்களையோ யேசுவினிமித்
தம் உங்கள் ஊழியக்காரரென்றும் பிரசங்கிக்கி
றோம்.—இருளிலிருந்துஒளி பிரகாசிக்கக்கட்ட சு
ளையிட்ட தேவன், யேசுக்கிறிஸ்துவின்மு
கத்திலுள்ள தமதுமகிமையை அறிகிற அறிவாகி
ய பிரகாசத்தைக் காண்பிக்கும்படி எங்கள்ம
னதிற் பிரகாசித்தார்.—மகத்துவமான இந்த வல் எ
லமை எங்களாலேயல்ல, தேவனாலுண்டாயி
ருக்கிறதென்று தோன்றும்படிக்கு, இந்தப்பொக்
கிஷம் மட்பாண்டங்களில்எங்களுக்குக்கிடைத்
திருக்கின்றது.—நாங்கள் சுற்றிலும் நெருக்கப் அ
பட்டும் ஒடுங்கிப்போகிறதில்லை; கலக்கமடைந்
தும் திடனற்றவர்களாகிறதில்லை.—துன்பப்படுத் கூ
தப்பட்டும் கைவிடப்படுகிறதில்லை; கீழே தள்
ளப்பட்டும் நாசப்படுகிறதில்லை.—யேசு சீவித் ௰
திருப்பது எங்கள் சரீரத்தில் வெளிப்படும்படி,
கர்த்தராகிய யேசுவின் மரணத்தை எப்
பொழுதும் எங்கள்சரீரத்தில்தாங்கிவருகிறோம்.-
சாவுள்ள எங்கள் சரீரத்தில் யேசு சீவித்திருப் ௰க
பதுவெளிப்படும்பொருட்டு,சீவித்திருக்கிறநாங்
கள் யேசுவினிமித்தம் நித்தமும் மரணத்திற்கு

(ரு) யோவா.௰ரு.ரு. க.கொரி.௰ரு.௰. பிலி.உ.௰ங.(சு)க.கொரி.ங.ரு. எபே.ங.எ. கொலோ.க.உரு,உகூ. உ.தீமோ.
க.௰க. எரே.ஙக.ஙக. மத்.உசு.உஅ. எபி.அ.சு,அ. ரோ.உ.உஎ,உகூ.ரோ.ங.உ௰. யோவா.சு.சுங. ரோ.அ.உ.(எ)ரோ.
எ.௰. யாத்.ஙச.க,உஅ,ங௰,ஙரு. (அ) கலா.ங.ரு.(கூ) ரோ.க.௰எ.(௰உ)அதி.எ.ச. எபே.சு.௰கூ.(௰ங)யாத்.ஙச.ஙங.ஙரு.
ரோ.௰.ச. கலா.ங.உங. (௰ச) ஏசா.சு.௰. யோவா.௰உ.ச௰. ரோ.௰க.எ,அ,உரு. (௰சு) யாத்.ஙச.ஙச. ரோ.௰க.உங
உசு. ஏசா.உரு.எ. (௰எ) வச.கூ. க.கொரி.௰ரு.சரு.(௰அ)க.கொரி.௰ங.௰உ. அதி.ச.ச,கூ. க.தீமோ.க.௰க. ரோ.அ
உகூ. க.கொரி.௰ரு.சகூ. கொலோ.ங.௰.—(ச. அதி. க) அதி.ங.சு. க.கொரி.எ.உரு. க.தீமோ.க.௰ங. (உ) ரோ.க.
௰சு. அதி.உ.௰எ. க.தெச.உ.ங,ரு. அதி.சு.எ,௰. அதி.ரு.௰க.(ங)க.கொரி.க.௰அ உ.தெச.உ.௰.(ச)யோவா.௰உ.ஙக.
எபே.சு.௰உ.ஏசா.கூ.௰. யோவா.௰உ.ச௰.அதி.ங.அ,கூ,௰க,௰அ. யோவா.க.௰அ. எபி.க.ங. (ரு) க.கொரி.க.௰ங,உங
க.கொரி.கூ.௰கூ. (சு) ஆதி.க.ங. உ.பேதுரு.க.௰கூ. வச.ச. க.பேதுரு.உ.கூ. (எ) அதி.ரு.க. க.கொரி.உ.ச. (அ)
அதி.எ.ரு. (கூ) சங்.ஙஎ.உச. (௰) க.கொரி.௰ரு.ஙக. கலா.சு.௰எ. ரோ.அ.௰எ. உ.தீமோ.உ.௰க,௰உ. க.பேதுரு.ச
௰ங. (௰க) சங்.சச.உஉ. ரோ.அ.ஙசு. க.கொரி.௰ரு.ஙக,சகூ.

௰௨ ஒப்பிக்கப்பட்டிருக்கிறோம்.-இவ்விதமாய்எங்க
ளில் மரணமும், உங்களிற் சீவனும் பலிக்கின்ற
௰௩ ன.—"நான் விசுவாசித்தபடியினாற்பேசினேன்,"
என்று எழுதியிருக்கிறபடி,விசுவாசத்தைத்தரும்
ஆவியைப்பெற்று, நாங்களும் விசுவாசித்து, அ
௰௪ தினிமித்தம் பேசுகிறோம்.—கர்த்தராகிய யே
சுவை எழும்பப்பண்ணினவர்,எங்களையும் யே
சுவைக்கொண்டு எழும்பப்பண்ணி, உங்களு
௰௫ டன் நிறுத்துவாரென்றறிந்திருக்கிறோம்.—பரிபூ
ரணகிருபை, அநேகருடைய ஸ்தோத்திரங்களி
னால்,தேவனுடைய மகிமை விளங்குவதற்கே
துவாய்ப் பெருகும்பொருட்டு, இவையெல்லாம்
௰௬ உங்கள் நிமித்தம் நடந்து வருகின்றன.—இதினி
மித்தம் நாங்கள் தளரவில்லை, எங்கள் புறம்பான
மனுஷன் அழிந்தும், உள்ளானவனோ தினமும்
௰௭ புதிதாக்கப்படுகிறான்.—காணப்பட்டவைகளை
யலல்,காணப்படாதவைகளை நாம்நோக்கியிருக்
௰௮ கையில்,—இலகுவானதும், அற்பகாலம் மாத்தி
ரம் நிற்கிறதுமான நம்முடையஉபத்திரவம், மிக
வும் அதிகமான நித்தியமுள்ள கனம்பொருந்திய
மகிமையை நமக்கு உண்டாக்குகின்றது. கா
ணப்பட்டவைகள் அநித்தியமானவைகள், கா
ணப்படாதவைகளோ நித்தியமானவைகள்.

## ௫. அதிகாரம்.

௧. கடைசிநாளிற் கிடைக்கும் நித்தியசீவனை அபேட்சித்தல்; சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்தப்பவுல் பிரயாசப்படல்: ௰௧. தன்தொழிலை நிருணித்தல்.

பூமிக்குரிய கூடாரமாகிய நம்முடையவீடு இ
டிந்துபோகும்பொழுது, கையாற்செய்யப்படா
மல் தேவன் செய்த நித்தியவாசஸ்தலமாகிய ஒ
ருவீடு பரமண்டலத்தில் நமக்குண்டென்று நாம்
௨ அறிந்திருக்கிறோம்.-பரமண்டலத்திலுள்ளநம்மு
டைய வீட்டைத்தரித்துக்கொள்ளுகிறதற்கு அ
௩ பேட்சித்து, இதிற்பெருமூச்சுவிடுகிறோம்.-வஸ்
திரந்தரிக்கப்பட்டவர்களாயிருந்தால் நிருவாணி
௪ களாய்க் காணப்படோம்.—இந்தக் கூடாரத்திலி
ருக்கையில் நாம் பாரஞ்சுமந்து, பெருமூச்சுவிடு
கிறோம்: நாம் இதை நீங்கவேண்டுமென்றுவிரும்
பாமல், மரணஞ் சீவனால் விழுங்கப்படும்பொ
ருட்டு, அதைத்தரித்துக்கொள்ள வாஞ்சையாயி
௫ ருக்கிறோம்.—இதற்கு நம்மை ஆயத்தப்படுத்தி
னவர் தேவனே, ஆவியென்னும் அச்சாரத்தை
௬ யும் நமக்குத்தந்தவர் அவரே.—ஆகையால் இந்
தச்சரீரத்தில் வாசமாயிருக்கையில் நாம் தரிசித்
து நடவாமல் விசுவாசித்து நடக்கிறதினால்,—
கர்த்தாவைச் சேராதவர்களாயிருக்கிறோமெ ௭
ன்றறிந்தும், எப்பொழுதுந் தைரியமுள்ளவர்க
ளாயிருக்கிறோம்.—நாம் தைரியமுள்ளவர்களா ௮
யிருந்து சரீரத்தைவிட்டு நீங்கவும், கர்த்தரு
டன் சேர்ந்திருக்கவும் அதிகவிருப்பமாயிருக்கி
றோம்.—இதினிமித்தம் நாம் சரீரத்திலிருந்தா ௯
லும்,இல்லாவிட்டாலும் அவரால்அங்கிகரிக்கப்
பட்டவர்களாயிருக்கப் பிரயாசப்படுகிறோம்.—
சரீரத்தில் நாம் செய்த நன்மைக்காவது, தீமைக் ௰
காவது தக்கபலனைப்பெறும்படி, நாம் அனைவ
ருங் கிறிஸ்துவின் நியாயாசனத்திற்குமுன்பா
க வெளிப்படவேண்டும்.—ஆதலால் கர்த்தரு ௰௧
டைய பயங்கரத்தை அறிந்து, மனுஷரைப்போ
திக்கிறோம்; இப்படித் தேவனுக்கு முன்பாக
விளங்கப்பட்டிருக்கிறோம்;உங்கள்மனதிலும்வி
ளங்கப்பட்டிருக்கிறோமென்று நான் நம்புகிறே
ன்.-இதினால்நாங்கள்உங்களிடத்தில்எங்களைத்தி ௰௨
ரும்பவும் மெய்ச்சுக்கொள்ளாமல்,இருதயத்தினா
லல்ல, வெளிவேஷத்தினால் மேன்மைபாராட்டு
கிறவர்களுக்கு எதிரே நீங்கள் எங்களைக்குறித்து
மேன்மைபாராட்டுவதற்கு ஏது உண்டாக்குகி
றோம்.—நாங்கள் மதிகெட்டவர்களானால் அது ௰௩
தேவன் நிமித்தமும், தெளிந்த புத்திமான்களா
னால், அது உங்கள் நிமித்தமுமாயிருக்கும்.—கி ௰௪
றிஸ்துவின் அன்பு எங்களைநெருக்கி ஏவுகின்
றது; ஒருவர் எல்லார் நிமித்தமும் மரித்திருக்க,
எல்லாரும் மரித்தார்களென்றும்,—சீவித்திருக்கிற ௰௫
வர்கள்,இனித்தங்களுக்கென்று சீவிக்காமல்,தங்
களுக்காக மரித்துத் திரும்ப எழுந்தவருக்கென்
று சீவிக்கும்படி,அவர் எல்லார் நிமித்தமும் மரித்
தாரென்றும் நிதானிக்கிறோம்.—ஆதலால் இது ௰௬
முதற்கொண்டு நாங்கள் ஒருவனையும் மாமிசத்
தின்படி அறியோம்: நாம் கிறிஸ்துவையும்
மாமிசத்தின்படி முன் அறிந்திருந்தாலும், இ
னி ஒருபொழுதும் அவரை அறியோம்.—ஆத ௰௭
லால் கிறிஸ்துவுக்குள்ளிருக்கிறவன் புதுச்சி
ருஷ்டியாயிருக்கிறான்: பழையவைகள் ஒழிந்து
போயின; எல்லாம் புதியவைகளாயின.—யே ௰௮
சுக்கிறிஸ்துவைக் கொண்டு நம்மைத் தம்
மோடே ஒப்புரவாக்கி, ஒப்புரவாக்குதலின் ஊ
ழியத்தை எங்களுக்கு அருளிய தேவனால் இ
வையெல்லாம் உண்டாக்கப்படும்.— இவ்வித ௰௯
மாய்த் தேவன் உலகத்தாருடைய பாவங்களை
அவர்கள்மேற் சுமத்தாமல், அவர்களைக் கிறிஸ்

---

(௰௨) அதி.௰௩.௯. (௰௩) ரோ.௧.௰. ௨.பேதுரு.௧.௧. சங்.௱௰௬.௰. (௰௪) ரோ.௮.௰௧. ௧.கொரி.௬.௰௪.(௰௫)௧.கொரி.௩.௨௧. கொலோ.௧.௨௪. ௨.தீமோ.௨.௰. அதி.௧.௰௧. (௰௬) ரோ.௭.௨௨. எபே.௩.௰௬. (௰௭) ரோ.௮.௨௪. எபி.௰௧.௧. (௰௮) மத்.௫.௰௨. ரோ.௮.௰௮. ௧.பேதுரு.௧.௬.—(௫. அதி. ௧.) யோபு.௪.௰௯. ௨.பேதுரு.௧.௰௩,௰௪. (௨) ரோ.௮.௨௩. (௩) வெளி.௩.௰௮. (௪) ௧.கொரி.௰௫.௫௩,௫௪. (௫) ஏசா.௨௯.௨௩. எபே.௨.௰. ரோ.௮.௨௩. எபே.௧.௰௪. (௬) ரோ.௮.௨௪,௨௫. ௧.கொரி.௰௩.௰௨. எபி.௰௧.௧. (௮) பிலி.௧.௨௩. (௰) மத்.௨௫.௩௧,௩௨. ரோ.௰௪.௰.ரோ.௨.௬. கலா.௬.௭. எபே.௬.௭. கொலோ.௩.௨௪,௨௫. வெளி.௨௨.௰௨. (௰௧) யோபு.௩௧.௨௩. எபி.௰.௩௧. யூதா.௨௩. அதி.௪.௨.(௰௨)அதி.௩.௧. அதி.௧.௰௪.(௰௩)அதி.௰௧.௧,௰௬,௰௭. (௰௪) ரோ.௫.௰௫.(௰௫)ரோ.௬.௰௧,௰௨. ௧.கொரி.௬.௰௯. கலா.௨.௨௰. ௧.தெச.௫.௰. ௧.பேதுரு.௪.௨.(௰௬) மத்.௰௨.௫௰. யோவா.௰௫.௰௪. கலா.௫.௬. பிலி.௩.௭,௮. கொலோ.௩.௰௧. யோவா.௬.௬௩. (௰௭) ரோ.௮.௯. கலா.௬.௰௫.கலா.௫.௬. ஏசா.௪௩.௰௮,௰௯. எபே.௨.௰௫. வெளி.௨௧.௫.(௰௮)ரோ.௫.௰. எபே.௨.௰௫. கொலோ.௧.௨௰. ௧.யோவா.௨.௨. (௰௯) ரோ.௩.௨௪,௨௫.

துவினால் தமக்கு ஒப்புரவாக்கிக்கொண்டு, ஒப்
புரவாக்குதலின் வாக்கை எங்களிடத்தில் ஒப்
௨௰ பித்தார்.—ஆதலால் நாங்கள் கிறிஸ்துவினி
மித்தந் தானாபதிகளாயிருந்து, தேவன், எங்க
ளைக்கொண்டுவேண்டிக்கொள்வதுபோல, நாங்
கள் கிறிஸ்துவுக்குப் பிரதியாக, நீங்கள்
தேவனோடே ஒப்புரவாகுங்களென்று உங்க
௨௧ ளைவேண்டிக்கொள்ளுகிறோம்.—பாவத்தை அறி
யாதவராலே நாம் தேவனுக்கு முன்பாக நீதி
மான்களாக்கப்படும்படி, அவர் நமக்காக அவ
ரைப்பாவமாக்கினார்.

## ௬. அதிகாரம்.

௧. பவுல் உண்மையாய்ச் சுவிசேஷத்தைப் பிர
சங்கித்தல்: ௰௪. தேவபூசைக்காரருடன் சிநேகி
தம் பண்ணலாகாதெனக்காட்டல்.

நீங்கள் தேவனுடைய கிருபையைப்பலனற்
றதாய்ப்பெறாதபடி, உடன்வேலையாட்களாகிய
நாங்கள் உங்களை வேண்டிக்கொள்ளுகிறோம்.—
௨ "நற்சமயத்தில் உனக்குச்செவிகொடுத்து, இரட்
சிப்பின்தினத்தில் நானுனக்குச் சகாயஞ்செய்
தேன்," என்று அவர்சொல்லியிருக்கிறார்: பாருங்
கள், இப்பொழுதே நற்சமயம்; இப்பொழுதே
௩ இரட்சிப்பின்நாள்.—எங்கள் ஊழியத்தைக்குற்
றப்படுத்தத்தக்க காரணத்திற்கு நாங்கள் இடங்
௪ கொடாமல், மிகுந்தபொறுமையுடனே,—கிலே
சங்களையும், நெருக்கங்களையும், ஆபத்துகளை
௫ யும்,—அடிகளையும், காவலையும், கலகங்களை
யும், பிரயாசங்களையும், கண்விழிப்புகளையும், உ
௬ பவாசங்களையும் அனுபவிக்கிறோம்.—சுத்தமும்,
அறிவும், நீடியபொறுமையும், தயையும், பரி
௭ சுத்தஆவியும், கபடமற்றஅன்பும்,—சத்தியவாக்
கும், தேவனுடைய பராக்கிரமமும், வலது
பக்கத்திலும், இடதுபக்கத்திலும் நீதியாகியயுத்த
௮ ஆயுதங்களும்,—கனமும், கனவீனமும், தூர்க்
கீர்த்தியும், நற்கீர்த்தியுமுள்ளவர்களாகவும், வஞ்
சகரென்னப்பட்டவர்களாயினும் சத்தியமுள்ள
௯ வர்களாகவும்,—அறியப்படாதவர்கள் போன்ற
வர்களாயினும் அறியப்பட்டவர்களாகவும், ம
ரித்தோரென்னப்பட்டவர்களாயினுஞ் சீவனுள்
ளோராகவும், அடிக்கப்பட்டவர்களாயினுங்
௰ கொலை செய்யப்படாதவர்களாகவும்,—துக்கப்
பட்டவர்களாயினும் எப்பொழுதுஞ்சந்தோஷத்
தையுடையவர்களாகவும், தரித்திரராயினும் அ
நேகரைச் செல்வராக்கினவர்களாகவும், பொரு
ளற்றவராயினுஞ் சருவத்திற்கும் அதிகாரிகளாக
வுமிருந்து, இவையெல்லாவற்றினாலும் நாங்கள்
எங்களைத் தேவனுடைய ஊழியக்காரரென்
று விளங்கக்காட்டுகிறோம்.—ஆ, கொரிந்தியரே, ௰௧
உங்களை நினைந்து, எங்கள் வாய்திறக்கப்பட்டி
ருக்கின்றது, எங்கள் இருதயம் பூரிக்கின்றது.—நீங் ௰௨
கள் எங்களுக்குள் ஒடுங்கியிராமல் உங்கள் உள்
ளத்திலே ஒடுங்கியிருக்கிறீர்கள்.—ஆதலால் ஈடா ௰௩
க நீங்களும் விஸ்தாரமாவீர்களாகவென்று உங்
களை என் பிள்ளைகளாகப்பாவித்துப் பேசுகி
றேன்.—அவிசுவாசிகளுடன் ஒரு நுகத்திற்பூட் ௰௪
டப்படாதிருப்பீர்களாக: நீதிக்கும் அநீதிக்குஞ்
சம்பந்தமென்ன, இருளுக்கும் ஒளிக்கும் ஐக்க
மென்ன.—கிறிஸ்துவுக்கும் பேலியாளுக்கும் இ ௰௫
சைவுண்டா, அவிசுவாசியுடன் விசுவாசிக்குப்
பங்குண்டா.—"நான் அவர்களுக்குள்ளே வாசம் ௰௬
பண்ணுவேன், அவர்களுக்குள் உலாவுவேன்;
அவர்களுக்குத்தேவனாவேன், அவர்கள் எனக்
குச் சனங்களாவார்கள்," என்று தேவன் சொல்
லியபிரகாரம், நீங்களே சீவனுள்ள தேவனு
டைய ஆலயம்; தேவனுடைய ஆலயத்திற்
கும், விக்கிரகத்திற்குஞ் சம்பந்தமுண்டா.—"ஆத ௰௭
லால் நீங்கள் அவர்களிடத்திலிருந்து புறப்பட்
டுப் பிரிந்துபோய், அசுத்தமானதைத்தொடாதி
ருங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.—அப் ௰௮
பொழுது நான் உங்களை அங்கிகரித்துக்கொ
ண்டு, உங்களுக்குப்பிதாவாயிருப்பேன், நீங்கள்
எனக்குப்புத்திரரும், புத்திரிகளுமாவீர்களென்று
சருவவல்லமையுள்ள கர்த்தர் சொல்லுகிறார்."

## ௭. அதிகாரம்.

௧. கொரிந்தியர் பரிசுத்தமுள்ளவர்களாகும்படி,
பவுல் அவர்களை உபதேசித்தல்: ௫. தீத்துவினால்
அவர்கள் சுவிசேஷத்தைப் பெற்றதினிமித்
தந் தனதுசந்தோஷத்தை வெளிப்படுத்தல்.

பிரியமானவர்களே, இவ்வித வாக்குத்தத்தங்க ௧
ள் நமக்குண்டாயிருக்க, சரீரத்திலும் ஆத்துமத்
திலுமுள்ள அசுத்தங்கள் முழுவதையும் நீக்கி,
நம்மைச்சுத்திகரித்து, தேவனுக்குப் பயப்
பட்டவர்களாய், பரிசுத்தத்தில் அதிகரிக்கக்க
டவோம்.—எங்களை அங்கிகரித்துக்கொள்ளுங் ௨
கள்; நாங்கள் ஒருவனுக்கும் அநியாயஞ்செய்ய
வில்லை, ஒருவனையுங் கெடுக்கவில்லை, ஒருவனை
யும் வஞ்சிக்கவில்லை.—உங்களைக் குற்றவாளி ௩
களாக்கும்பொருட்டாக நான் இப்படிப்பேச
வில்லை: உங்களுடன் மரிக்கவும், சீவிக்கவும்
எங்களிருதயங்களிலிருக்கிறீர்களென்று முன்ன
மேசொல்லியிருக்கிறேன்.—நான் மிகுந்த தை ௪
ரியத்தோடே உங்களுடன் பேசுகிறேன், உங்க
ளைக்குறித்து மிகவும்மேன்மைபாராட்டுகிறேன்:
நான் மிகவும் ஆறுதலாயிருக்கிறேன், எங்களுக்

(௨௰) யோபு.௩௩.௨௩. மல்.௨.௭. எபே.௬.௰௯. அதி.௬.௧.(௨௧)ஏசா.௫௩.௬,௯,௰௨. கலா.௩.௰௩. ௧.பேது.௨.௨௨, ௨௪. ௧.யோவா.௩.௫. ரோ.௧.௰௭.—(௬. அதி. ௧.) ௧.கொரி.௩.௯. அதி.௫.௨௰. எபி.௰௨.௰௫. (௨) ஏசா.௪௯.௮. (௩) ரோ.௰௪.௰௩. (௫) அதி.௰௧.௨௩,. (௭) அதி.௪.௨. ௧.கொரி.௨.௫. அதி.௰.௪. எபே.௬.௰௧,௰௩. ௨.தீமோ.௪.௭. (௮) அதி.௪.௨. ௧.கொரி.௪.௯. சங்.௱௰௮.௰௮. (௰) ௧.கொரி.௪.௧.(௰௧)அதி.௭.௩. (௰௨) அதி.௰௨.௰௫. (௰௩) ௧.கொரி.௪.௰௪.(௰௪)உபா.௭.௨,௪. ௧.கொரி.௫.௯. ௧.சாமு.௫.௨,௩. ௧.இரா.௰௮.௨௧. ௧.கொரி.௰.௨௧. எபே.௫.௭,௰௧.(௰௬) ௧.கொரி.௩.௰௬. எபே.௨.௨௧,௨௨. எபி.௩.௬. யாத்.௨௯.௪௫. எரே.௩௧.௩௩. எசேக்.௩௬.௨௮. சக.௮.௮. (௰௭) ஏசா. ௫௨.௰௧. வெளி.௰௮.௪. (௰௮) எரே.௩௧.௧,௯. வெளி.௨௧.௭.—(௭. அதி. ௧.) அதி.௬.௰௭,௰௮. ௧.யோவா.௩.௩.(௨) அப்.௨௰.௩௩.(௩)அதி.௬.௰௧,௰௨. (௪) அதி.௩.௰௨. ௧.கொரி.௧.௪. அதி.௧.௪. பிலி.௨.௰௭.

குவந்திருக்கிற மிகுந்த உபத்திரவத்தில் பரிபூர
௫ ண சந்தோஷப்படுகிறேன்.—நாங்கள் மக்கே
தோனியாவில் வந்தபொழுது புறம்பே விரோ
தங்களும், உள்ளேபயங்கரங்களுமுண்டாக,எப்
பக்கத்திலுந் துக்கத்தில் அகப்பட்டதினால் எங்
கள்சரீரத்திற்கு இளைப்பாறுதல் சற்றுமில்லை.—
௬ ஆயினும் தாழ்மையானவர்களுக்கு ஆறுதல்செய்
கிற தேவன், தீத்துவந்ததினால் எங்களுக்கு ஆறு
௭ தல்செய்தார்.-அவன் வந்ததினாலேமாத்திரமல்ல,
உங்கள் வாஞ்சையையும், உங்கள் துக்கிப்பை
யும், என்மேல் நீங்கள்கொண்ட மனப்பிரீதியை
யும், அவன் உங்களால் ஆறுதலடைந்த செய்தி
யையும் அவன் எங்களுக்குத்தெரிவித்ததினாலும்
௮ அதிகமாய்ச் சந்தோஷப்பட்டேன்.—நான் நிரு
பத்தினால் உங்களைத்துக்கப்படுத்தியும், அனுதா
பப்படுகிறதில்லை:அந்தநிருபஞ் சொற்பகாலமா
யினும் உங்களைத்துக்கப்படுத்திற்றென்று நான்
௯ கண்டு அனுதாபப்பட்டிருந்தும்,—நீங்கள் துக்
கப்பட்டதினாலல்ல, மனந்திரும்புகிறதற்கேது
வாகத்துக்கப்பட்டதினிமித்தமே இப்பொழுது
சந்தோஷப்படுகிறேன்: தேவனுக்கேற்ற துக்
கத்தை அனுபவித்தீர்கள், ஆதலால் நீங்கள் எங்
களால் எவ்விதத்தினாலும் ஒருநஷ்டமுமடைய
௰ வில்லை.—தேவனுக்கேற்றதுக்கம்,இரட்சிப்
பைத்தருந்துக்கமில்லாத மனந்திரும்புதலைத்தோ
ற்றுவிக்கும்:லௌகீகதுக்கமோ மரணத்தை வரு
௰௧ விக்கும்.—பாருங்கள், நீங்கள் பட்டதுந் தேவ
னுக்கேற்றதுமான அந்தத்துக்கம், உங்களிடத்
தில் எவ்வளவு விசாரமும், குற்றம்நீக்கலும், பி
ரியவீனமும், பயமும், வாஞ்சையும், பத்திவை
ராக்கியமும், தண்டனைத்தீர்ப்புமாகிய இவைக
ளைத் தோற்றுவித்தது; இந்தக்காரியத்தைக்குறித்
து நீங்கள் உங்களைப் பரிசுத்தர்களென்பதற்குப்
௰௨ பூரணசாட்சியிட்டீர்கள்.—ஆதலால், அநியாயஞ்
செய்தவனிமித்தமும், அநியாயஞ்செய்யப்பட்
டவனிமித்தமுமல்ல, தேவன் முன்பாக உங்க
ளிடத்தில் நாங்கள்கொண்டிருக்கிற விசாரத்தை
உங்களுக்கு வெளிப்படுத்துகிறதினிமித்தமே அ
௰௩ ப்படி எழுதினேன்.-ஆதலால் உங்கள் ஆறுதலில்
நாங்களும் ஆறுதலடைந்தோம்: விசேஷமாகத்
தீத்துவினுடையஆவி உங்கள்அனைவராலும்ஆறு
தலடைய, அவனுக்குண்டான சந்தோஷத்தினி
மித்தம் அதிகமாய்ச் சந்தோஷப்பட்டோம்.—
௰௪ அவனிடத்தில் உங்களைக்குறித்து மேன்மைபா
ராட்டினதினால்நான்வெட்கப்படேன்;நாங்கள்
சகலத்தையும் உங்களுக்குச் சத்தியமாய்ச்சொல்
லியபிரகாரம், தீத்துவுடனே நாங்கள் உங்களைக்
குறித்து மேன்மைபாராட்டினதுஞ் சத்தியம்.—
௰௫ அன்றியும் நீங்கள்அனைவரும் கட்டளைக்கமைந்
து, பயத்தோடும் நடுக்கத்தோடும் அவனை உபச
ரித்ததை அவன் நினைக்கிறதினால், உங்களிடத்
தில் அவன் வைத்திருக்கிற அன்பு மென்மேலும்
அதிகரித்து வருகின்றது.—ஆதலால் நான் எவ் ௰௬
விதத்திலேயும் உங்களைக்குறித்துத் திடனாயிருக்
கலாமென்று சந்தோஷப்படுகிறேன்.

## ௮. அதிகாரம்.

௧. பிறர்செய்ததருமத்தைக்காட்டிக் கிறிஸ்துவின் அன்பினிமித்தம் யெருஷலேமிலுள்ள தரித்திரருக்கு உதவிசெய்யும்படி பவுல் கொரிந்தியரை வேண்டல்: ௰௬. தீத்துவையும் வேறொரு சகோதரனையும்புகழ்தல்.

சகோதரரே, மக்கேதோனியாவின் சபைகளுக் ௧
குத் தேவன் அருளியகிருபையை உங்களுக்கு
அறிவிக்கிறேன்.—அவர்கள் மிகுந்த உபத்திரவத் ௨
தினாற் சோதிக்கப்படுகையிற்கொடியதரித்திரரா
யிருந்தும், தங்கள் பரிபூரண சந்தோஷத்தினால்
அதிகஉதாரமாய்க்கொடுத்தார்கள்.-அவர்கள் தங் ௩
களாலான மட்டும், தங்கள் பலத்திற்குமே
லாகவுங்கொடுக்கத் தாங்களே மனதுள்ளவர்க
ளாயிருந்தார்களென்பதற்கு நானே சாட்சி.—தங் ௪
கள் உபகாரத்தையும், பரிசுத்தர்களுக்குச் செய்
யப்படும் தருமஊழியத்தின் பங்கையும் ஏற்றுக்
கொள்ளும்படி, அவர்கள் எங்களைமிகவும்வேண்
டிக்கொண்டார்கள்.-அவர்கள் செய்ய நாங்க ௫
ள் நம்பியிருந்தபடிமாத்திரமல்ல, அதற்கதிகமாய்
முன்பு கர்த்தருக்கும், தேவனுடைய சித்
தத்தின்படி,பின்பு எங்களுக்குந் தங்களைத்தாமே
ஒப்பித்தார்கள்.—அதினால் தீத்து, தான் முன்தொ ௬
டங்கினபிரகாரமாக இந்தத்தருமகாரியத்தைஉங்
களிடத்தில் முடிக்கும்படி அவனை வேண்டிக்
கொண்டோம.—ஆதலால் விசுவாசம், வாக்கு ௭
வல்லபம், அறிவு, பூரணசாக்கிரதை, எங்களி
டத்தில் நீங்கள் வைத்த அன்பு என்னும் இவைக
ளில் நீங்கள் பெருகியிருக்கிறதுபோல, இந்தத்
தருமத்திலும் பெருகவேண்டும்.—இது கட்டளை ௮
யென்று நான்சொல்லுகிறதில்லை, பிறருடைய
சாக்கிரதையினிமித்தமும், உங்கள் அன்பின்
உண்மையைப் பரீட்சிக்கும்பொருட்டுஞ் சொ
ல்லுகிறேன்.—நம்முடைய கர்த்தராகிய ௯
யேசுக்கிறிஸ்துவின் கிருபையை நீங்கள் அ
றிந்திருக்கிறீர்கள், அவர் ஐசுவரியமுள்ளவராயி
ருந்தும், நீங்கள் அவருடைய தரித்திரத்தினால்
ஐசுவரியவான்களாகும்படி, உங்கள் நிமித்தந்
தரித்திரரானாரே.—ஆதலால் செய்கிறதற்குமாத் ௰
திரமல்ல, ஒருவருஷத்திற்குமுன்னே ஆரம்பம்
பண்ணவும் விருப்பமுள்ளவர்களாயிருந்த உங்
களுக்கு இதைக்குறித்து நான் கொண்ட எண்
ணம் இன்னதென்று சொல்லுகிறேன்.—செய் ௰௧
கிறதையும் இப்பொழுது நிறைவேற்றுங்கள்; தீர்
மானிக்கிறதற்கு எப்படி உற்சாகமுண்டாயிருந்

(௫) அதி.௨.௰௩. அதி.௪.௮. உபா.௩௨.௨௫. (௬) அதி.௧.௪ அதி.௨.௰௩. (௮) அதி.௨.௪. (௰) ௨.சாமு.௰௨.௰௩. மத். ௨௬.௭௫. நீதி.௰௭.௨௨. (௰௨) அதி.௨.௪. (௰௩) ரோ.௰௫.௩௧. (௰௫) அதி.௬.௰௨. அதி.௨.௯. பிலி.௨.௰௨. (௰௬) ௨.தெச.௩.௪.—(௮. அதி. ௨.) மாற்.௰௨.௪௪. (௪) அப்.௰௧.௨௯. ரோ.௰௫.௨௫,௨௬. ௧.கொரி.௰௬.௧,௩,௪. (௬) வச. ௰௭. அதி.௰௨.௰௮. வச.௪,௰௯. (௭) ௧.கொரி.௧.௬. அதி.௯.௮. (௮) ௧.கொரி.௭.௬. (௯) மத்.௮.௨௰. பிலி.௨.௬,௭. (௰) ௧.கொரி.௭.௨௫. நீதி.௰௯.௰௭. மத்.௰.௪௨. ௧.தீமோ.௬.௰௮,௰௯. எபி.௰௩.௰௬. அதி.௯.௨.

ததோ, அப்படியே உங்களுக்குண்டானவைக
ளிலெடுத்து நிறைவேற்றுவதற்கும் உற்சாகமு
௰௨ ண்டாவதாக.—ஒருவனுக்கு மனவிருப்பமுண்
டானால் அவன் தனக்கில்லாததின்படியல்ல, த
னக்குள்ளதின்படி அங்கிகரிக்கப்படுவானே.—
௰௩ மற்றவர்களுக்கு இலகுவும், உங்களுக்குப் பா
ரமுமுண்டாகும்படிக்கல்ல, சமமான நிலையுண்
௰௪ டாகும்பொருட்டாகவே:—"அதிகமாகச்சேர்த்
துக்கொண்டவனுக்கு அதிகமும், குறைவாகச்
சேர்த்துக்கொண்டவனுக்குக் குறைவுமில்லை,"
௰௫ என்று எழுதியிருக்கிறபிரகாரம்,—உங்களுடை
ய பரிபூரணம் அவர்களுடைய வறுமையை நீக்கு
வதினாலும், இக்காலத்தில் அவர்களுடைய பரி
பூரணம் உங்களுடைய வறுமையை நீக்குவதினா
லும் இப்படிச் சம நிலையுண்டாயிருக்குமென்
௰௬ பது என்னுடைய அபிப்பிராயம்.—உங்களுக்
காக இப்படிச்சாக்கிரதையாயிருக்கும்படி தீத்து
வின் இருதயத்தில்அருள்செய்த தேவனுக்குஸ்
௰௭ தோத்திரம்.-நான்வேண்டிக்கொண்டதைஅவன்
அங்கிகரித்ததுமாத்திரமல்ல, அவன்தானே சாக்
கிரதையாயிருந்து, தனது இஷ்டப்படிக்கு உங்
௰௮ களிடத்திலும் வந்தான்.—எல்லாச்சபைகளினா
லுஞ் சுவிசேஷ ஊழியத்திலே புகழ்ச்சிபெற்ற
ஒரு சகோதரனை அவனுடன் அனுப்பியிருக்கி
௰௯ றோம்.—அதுமாத்திரமல்ல, அவன், கர்த்தருக்
கே துதியுண்டாகும்படியாகவும், உங்கள் உதார
குணம் விளங்கும்படியாகவும் எங்கள் ஊ
ழியத்தினாற் சேர்க்கப்பட்ட தருமப்பொருளைக்
கொண்டுபோகையில் எங்களுடன் பிரயா
ணஞ் செய்வதற்குச்சபைகளால் தெரிந்து ஏற்ப
௨௰ டுத்தப்பட்டவனுமாயிருக்கிறான்.-எங்கள் ஊழி
யத்தினாற்சேர்க்கப்படும் பூரணத்தைக்குறித்து ஒ
ருவனும் எங்கள்மேற் குற்றஞ்சுமத்தாதபடி,—
௨௰௧ கர்த்தருக்குமுன்பாக மாத்திரமல்ல, மனுஷ
ருக்கு முன்பாகவும் நலமானவைகளை நடப்பிக்
௨௰௨ கிறதற்குச்சாவதானமாயிருந்து,-அநேககாரியங்
களிற்சாக்கிரதையுள்ளவனென்று நாங்கள்அடிக்
கடி கண்டறிந்தவனும், இப்பொழுது உங்கள்
மேலுள்ளமிகுந்தநம்பிக்கையினால் மிகவும்அதிக
சாக்கிரதையுள்ளவனுமாகிய நம்முடைய சகோ
௨௰௩ தரனை அவர்களோடே அனுப்பினோம்.—தீத்து
வைக்குறித்து விசாரித்தால், அவன் எனக்
குக்கூட்டாளியும், உங்கள்நிமித்தம் என் உடன்
வேலைக்காரனுமாயிருக்கிறானென்றும், எங்கள்
சகோதரர், சபைகளால் அனுப்பப்பட்டவர்க
ளும், கிறிஸ்துவுக்கு மகிமையுமாயிருக்கிறார்
௨௰௪ களென்றுஞ் சொல்லுகிறோம்.—ஆனபடியி
னால் உங்கள் அன்பையும், நாங்கள் உங்களைக்
குறித்து மேன்மைபாராட்டுவது தகுதியென்ப
தையும் அவர்களுக்கும், சபைகளுக்குமுன்பாக
வெளிப்படுத்துங்கள்.

## ௯. அதிகாரம்.

௧. கொரிந்தியருந் தருமப்பணத்தைக் கொடுப்பதற்கு ஆயத்தமுள்ளவர்களென்று பவுல் அவர்களைப்புகழ்தல்: ௬. தருமப்பணத்தைக் கொடுப்பதினாலுண்டாகும் பலனை நிருணித்தல்.

பரிசுத்தவான்களுக்கு ஊழியஞ்செய்வதைக்கு ௧
றித்து நான் அதிகமாய் உங்களுக்கு எழுதவேண்
டுவதில்லை.—உங்கள் மனவிருப்பத்தை நான் அ ௨
றிந்து, அகாயவிலுள்ளவர்கள் ஒருவருஷத்துக்கு
முன் ஆயத்தமாயிருந்தார்களென்று நான் மக்கே
தோனியரிடத்திற் சொல்லி உங்களைப் புகழ்ந்
தேன்; மேலும் உங்களிலுண்டான சாக்கிரதை
அநேகரை எழுப்புகின்றது.—உங்களைக்குறித்து ௩
நாங்கள்சொன்ன புகழ்ச்சி இக்காரியத்தில் வி
ருதாவாகாமல், நான் சொல்லியபிரகாரம் நீங்கள்
ஆயத்தமாயிருப்பதற்கு உங்களிடத்திற் சகோத
ரரை அனுப்பினேன்.-என்னோடேவரும் மக்கே ௪
தோனியர் உங்களை ஆயத்தமில்லாதவர்களாகக்
கண்டால், நீங்களல்ல, உங்களைத் திடமாய்ப்பு
கழ்ந்த நாங்களே இலச்சையடைவோம்.-ஆகை ௫
யால், முன் அறிவிக்கப்பட்டிருக்கிற உங்கள் த
ருமம் உலோபத்தனமாயல்ல, தாராளமாயிருக்
கும்படி அதை ஆயத்தப்படுத்துகிறதற்குச் சகோ
தரரை ஏவி, உங்களிடத்தில் முன் அனுப்புவது
அவசியமென்று நினைத்தேன்.-பின்னும் இதைச் ௬
சொல்லுகிறேன், சிறுகவிதைக்கிறவன் சிறுக
அறுப்பான்; பெருகவிதைக்கிறவன் பெருகவே
அறுப்பான்.—அவனவன் விசனமாயாவது, கட் ௭
டாயமாயாவதல்ல, தன்தன் மனவிருப்பத்தின்ப
டி கொடுக்கக்கடவன்; மனவிருப்பமாய்க்
கொடுப்பவனில் தேவன் பிரியமாயிருக்கிறார்.-
எல்லாவற்றிலும் எப்பொழுதும் நீங்கள் திருத்தி ௮
யுள்ளவர்களாய், எவ்வித நற்கிரியைகளிலுஞ்சம்
பூரணமுள்ளவர்களாயிருக்கும்படி, உங்களிடத்
தில் தேவன் சகலவிதகிருபையையும் பெருகச்
செய்யவல்லவராயிருக்கிறார்.—"அவன் வாரியி ௯
றைக்கிறான்; தரித்திரருக்குக்கொடுக்கிறான்: அ
வன் நீதி என்றைக்கும் நிற்கும்," என்று எழுதியி
ருக்கிறபடி,—விதைக்கிறவனுக்கு விதையையும், ௰
புசிப்பதற்கு ஆகாரத்தையும் அளிப்பவர் உங்கள்
விதையையும் அதிகமாய்ப்பெருகப்பண்ணி, உ
ங்கள் நீதியின் பலனைவருத்திக்கச்செய்வாராக.-
தேவனுக்கு எங்களால் ஸ்தோத்திரமுண்டா ௰௧
கும்படி செய்விக்கும் மிகுந்த உதாரகுணத்தில்,
நீங்கள் எவ்விதத்திலுஞ் சம்பூரணமுள்ளவர்களா
வீர்கள்.-உங்களுடைய இந்தக் கிருபையின் கிரி ௰௨
யைபரிசுத்தர்களுடையகுறைவுகளை நிறைவேற்

---

(௰௨) மாற்.௰௨.௪௩,௪௪. லூக்.௨௧.௩. (௰௪) யாத்.௰௬.௰௮. (௰௭) வச.௬. (௰௮) அதி.௰௨.௰௮. (௰௯) ௧.கொரி.௰௬.௩,௪. அதி.௯.௮. அதி.௪.௰௫. (௨௧) ரோ.௰௨.௰௭. ௧.பேதுரு.௨.௰௨. (௨௩) பிலி.௨.௨௫. (௨௪) அதி.௭.௰௪.—(௯. அதி. ௧.) அப்.௰௧.௨௯. ரோ.௰௫.௨௬. ௧.கொரி.௰௬.௧. கலா.௨.௰. (௨) அதி.௮.௰,௰௧,௨௪. (௩) அதி.௮.௬.௰௭,௰௮,௨௨. (௫) ஆதி.௩௩.௰௧. (௬) நீதி.௰௧.௨௪. கலா.௬.௭,௯. (௭) உபா.௰௫.௭. யாத்.௨௫.௨. நீதி.௰௧.௨௫. ரோ.௰௨.௮. (௮) நீதி.௰௧.௨௪,௨௫. பிலி.௪.௰௯. (௯) சங்.௱௰௨.௯. (௰) ஏசா.௫௫.௰. ஓசி.௰.௰௨. மத்.௬.௧. (௰௧) அதி.௧.௰௧. அதி.௮.௰௫.

றுகிறதற்குமாத்திரமல்ல, அநேகர் தேவனை ஸ்
தோத்திரிக்கிறதற்கும்மிகவும் உபயோகமாயிருக்
௰௩ கும்.-அவர்கள் இவ்வூழியத்தின் பிரமாணத்தைக்
கண்டு, நீங்கள் கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்
குக் கீழ்ப்படுவதை அறிக்கையிடுவதினிமித்த
மும், தங்களுக்கும் மற்றனைவருக்குங் கிடைத்த
உதாரதருமத்தினிமித்தமுந் தேவனைத் துதிப்
௰௪ பார்கள்.—அவர்கள் உங்கள்நிமித்தம்பிரார்த்தனை
பண்ணி,தேவன் உங்களுக்கு அளித்த மிகவும்
மேன்மையான கிருபையினிமித்தம் உங்கள்
௰௫ மேல் வாஞ்சையாயிருக்கிறார்கள்.—தேவன் அ
ருளின சொல்லிமுடியாத இந்த ஈவினிமித்தம்
அவருக்கே ஸ்தோத்திரம்.

## ௰. அதிகாரம்.

௧. பவுல் தான் குற்றமற்றவனென்று விரோதிகளிடத்திற் சொல்லல்: ௭. பிறருடைய கிரியை தங்களுடையதென்று தங்களை மேன்மைபாராட்டுவதினிமித்தம் விரோதிகள்மேற் குற்றஞ் சுமத்தல்.

உங்களுக்குமுன்பாக இருக்கும்பொழுது தாழ்
மையும், தூரத்திலிருக்கும்பொழுது உங்கள்மேல்
தைரியமுமாயிருக்கிற பவுலாகிய நான், கிறிஸ்
துவின் சாந்தத்தினாலும், தயையினாலும் உங்க
௨ ளை வேண்டிக்கொள்ளுகிறேன்.—உங்களிடத்தி
லிருக்கிறபொழுது, எங்களைச் சரீரத்தின்படி ந
டக்கிறவர்களென்று எண்ணுகிற சிலருக்கு வி
ரோதமாய்த் துணிவுகொள்வேனென்று நினைக்
கிறதால், அந்தத்துணிவோடே நான் தைரியமுள்
௩ ளவனாயிராதபடி செய்வீர்களாக.—நாங்கள் சரீ
ரத்தோடே நடந்தும், சரீரத்தின்படி யுத்தம்பண்
௪ ணுகிறதில்லை.—எங்கள் யுத்தஆயுதங்கள் மாமிசத்
துக்கேற்றவைகளல்ல, துருக்கங்களை நிருமூலப்
படுத்துவதற்குத் தேவனால் பலமுள்ளவைகளா
௫ யிருக்கின்றன.—அவைகளினால் நாங்கள், தருக்
கங்களையும், தேவனை அறிகிற அறிவுக்கு வி
ரோதமான எவ்விதமேட்டிமையையும் நிருமூல
மாக்கி, எந்தச்சிந்தையையுங் கிறிஸ்துவுக்குக்
கீழ்ப்படியச்சிறைப்படுத்துகிறவர்களாயிருந்து,-
௬ நீங்கள் நிறைவாய்க் கீழ்ப்படிந்திருக்கும்பொழு
து, எல்லாக்கீழ்ப்படியாமைக்கும் ஏற்ற நீதியுள்
ள தண்டனையைச் செலுத்த ஆயத்தமாயிருக்கி
௭ றோம்.—நீங்கள் வெளித்தோற்றமானவைகளைப்
பார்க்கிறீர்களா; ஒருவன், தன்னைக் கிறிஸ்து
வுக்குரியவனென்று நம்பிக்கொண்டால்அவன்,
தான் கிறிஸ்துவுக்குரியவனானதுபோல, நாங்
களுங் கிறிஸ்துவுக்குரியவர்களென்று தன்
௮ னாலேதானே சிந்திக்கக்கடவன்.-உங்களைநாசப்
படுத்துவதற்கல்ல, பத்தியில் ஸ்திரப்படுத்துகிற
தற்குக் கர்த்தர் எங்களுக்கு அருளிய அதிகாரத்
தைக்குறித்து நான் சற்றே அதிகமாய்ப்புகழ்ந்தா
லும் இலச்சைப்படுவதில்லை.—அவனுடைய ௯
நிருபங்கள் பாரமும், வலிமையுமுள்ளவைகள்;
அவன் சரீரத்தோற்றம் பெலவீனம்: அவன்
வாக்கோ அற்பமென்கிறார்கள்.—நான் நிருபங் ௰
களால் உங்களைப்பயமுறுத்துகிறவனாகத் தோன்
றாதபடிக்கு,—அப்படிச்சொல்லுகிறவன், தூரத் ௰௧
திலிருக்கும் வேளையில் நிருபங்களின் வாக்கி
னால் நாங்கள் காணப்படுகிறதுபோல, சமீபத்
திலிருக்கும்பொழுதுங் கிரியையிலேயுங்காணப்
படுவோமென்று சிந்திக்கக்கடவன்.—தங்களைத் ௰௨
தாமே புகழுகிற சிலருடன் நாங்கள் எங்களைச்ச
ரியாக்கவும்,ஒப்பிடவுந்துணியோம்:தங்களாலே
தங்களை அளந்து, தங்களுக்குள் தங்களை ஒப்பிடு
கிறவர்கள் விவேகிகளல்ல.—அளந்து கொடாத ௰௩
வைகளைக்குறித்து நாங்கள் மேன்மைபாராட்டா
மல், உங்களிடம் வரைக்கும் எட்டத்தக்கதாய்த்
தேவன் எங்களுக்கு அளந்துதந்த அளவின்படி
மேன்மைபாராட்டுகிறோம்.-நாங்கள்உங்களிடத் ௰௪
தில்வந்து எட்டாதவர்களாய், அளவுக்குமிஞ்சு
கிறதில்லை: நாங்கள் கிறிஸ்துவின் சுவிசே
ஷத்தோடே உங்களிடத்திலும் வந்தோம்.—அள ௰௫
வுக்குமிஞ்சிப்பிறருடைய வேலைகளுக்குட்பட்
டு, மேன்மைபாராட்டோம்;—ஆகிலும் உங்கள் ௰௬
விசுவாசம் விருத்தியடைந்திருக்குங் காலத்தில்
உங்களுக்கு அப்புறத்திலுள்ள இடங்களில் சுவி
சேஷத்தைப் பிரசங்கிக்கவும், பிறருடைய எல்
லைகளுக்குள்ளே செய்யப்பட்டவைகளை நாங்
கள் செய்ததாக மேன்மைபாராட்டாதிருக்கவுந்
தக்கதாக, எங்கள் அளவு உங்களால் மிகவும்
பெருகுமென்று நம்பிக்கையாயிருக்கிறோம்.—
மேன்மைபாராட்டுகிறவன் கர்த்தாவைக்கு ௰௭
றித்தே மேன்மைபாராட்டக்கடவன்.—தன்னைத் ௰௮
தான் புகழுகிறவனல்ல, கர்த்தாவினாற் புக
ழப்படுகிறவனே உத்தமன்.

## ௰௧. அதிகாரம்.

௧. பவுல் தன்னைப்புகழ்தல் அவசியமெனக்காட்டல்: ௰௬. தனதுவிரோதிகளிலுந் தன்னைச்சிறியவனாக்காமற் கிறிஸ்துவினிமித்தந் தான்பட்டபிரயாசம், உபத்திரவம் இவைகளினாலேபெரியவனாக்கல்.

நீங்கள் என்புத்தியீனத்தைச் சற்றே சகிப்பது நல ௧
மாகும்: எனக்குச் சகித்துமிருக்கிறீர்களே.-நான் ௨
உங்களைக்கற்புடையகன்னிகையாய்க் கிறிஸ்து
என்னும் ஒரே புருஷனுக்கு ஒப்பிக்கிறதற்கு நி
யமித்திருக்கிறபடியால், உங்களைக்குறித்துத் தே
வவைராக்கியமாய்க்கவலைப்படுகிறேன்.-சருப்ப ௩

---

(௰௩) மத். ௫. ௰௬. எபி. ௰௩. ௰௬. (௰௪) அதி. ௮. ௧. (௰௫) யாக். ௧. ௰௭.—(௰. அதி. ௧.) ரோ. ௰௨. ௧. வச. ௰. அதி. ௰௨. ௫, ௭, ௯. (௨) ௧. கொரி. ௪. ௨௧. (௪) எபே. ௬. ௰௩. ௧. தெச. ௫. ௮. ௧. தீமோ. ௧. ௰௯. ௨ தீமோ. ௨. ௩. அப். ௭. ௨௨. ௧. கொரி. ௨. ௪. எரே. ௧. ௰. (௫) ௧. கொரி. ௧. ௰௯. (௬) அதி. ௰௩. ௨, ௰. அதி. ௨. ௯. (௭) யோவா. ௭. ௨௪. ௧ கொரி. ௰௪. ௩௭. ௧. யோவா. ௪. ௬. ௧. கொரி. ௩. ௨௩. அதி. ௰௧. ௨௩. (௮) அதி. ௰௩. ௰. அதி. ௭. ௰௪. (௯) ௧. கொரி. ௨. ௩, ௫. அதி. ௰௨. ௫, ௭, ௯. கலா. ௪. ௰௩. ௧. கொரி. ௧. ௰௭. அதி. ௰௧. ௬. (௰௨) அதி. ௩. ௧. (௰௩) வச. ௰௫. (௰௪) ௧. கொரி. ௩. ௫, ௰. (௰௫) ரோ. ௰௫. ௨௰. (௰௭) ஏசா. ௬௫. ௰௬. ௧. கொரி. ௧. ௩௧. (௰௮) நீதி. ௨௭. ௨. ரோ. ௨. ௨௯. ௧. கொரி. ௪. ௫.—(௰௧. அதி. ௨.) கலா. ௪. ௰௭, ௰௮. ஓசி. ௨. ௰௯, ௨௰. ௧. கொரி. ௪. ௰௫. கொலோ. ௧. ௨௮. லேவி. ௨௧. ௰௩. (௩) ஆதி. ௩. ௪. யோவா. ௮. ௪௪. எபே. ௬. ௨௪. கொலோ. ௨. ௪, ௮, ௰௮. ௧. தீமோ. ௧. ௩. எபி. ௰௩. ௯. ௨. பேதுரு. ௩. ௰௭.

மானது தன்னுடைய சூதினால் ஏவாளைவஞ்சித்த
பிரகாரம், உங்கள்மனங் கிறிஸ்துவின்மேலுள்
ள நேர்மையைவிட்டுவிலகிக்கெடுக்கப்படுமென்
௪ று அஞ்சுகிறேன்.-வந்திருக்கிறவன், நாங்கள் பிர
சங்கியாத வேறொரு யேசுவைப் பிரசங்கித்
தால், அல்லது நீங்கள் பெறாத வேறொரு ஆ
வியையும், நீங்கள் அங்கிகரியாத வேறொரு சுவி
சேஷத்தையும் பெற்றீர்களானால் அவனை நன்
௫ றாய்ச்சகிப்பீர்கள்.—மிகவும் பிரதான அப்போஸ்
தலரில் நான் எவ்வளவாயினுங் குறைவுள்ளவ
௬ னல்லவென்று எண்ணுகிறேன்.—நான் வாக்கி
லே கல்லாதவனாயிருந்தும், அறிவில் அப்படிப்
பட்டவனல்ல; எல்லாவிதங்களிலும் உங்களுக்
௭ குள்ளே வெளிப்பட்டிருக்கிறோமே.—நீங்கள் உ
யர்த்தப்படும்படி என்னைத்தானேதாழ்த்தி, தே
வன் அருளிய சுவிசேஷத்தைக்கைம்மாறின்றி
உங்களுக்குப் பிரசித்தப்படுத்தினதினாற்குற்றஞ்
௮ செய்தேனோ.-உங்களுக்குஊழியஞ்செய்யும்பொ
ருட்டு, மற்றச் சபைகளிடத்திற் சம்பளத்தைப்
பெற்று, அவர்கள் பொருளை அபகரித்தேன்.—
௯ நான்உங்களிடத்திலிருந்துகுறைவுபட்டசமயத்
தில், ஒருவர்மேலும் நான்பாரமேற்றவில்லை: மக்
கேதோனியாவிலிருந்து வந்த சகோதரர் என்
குறைவை நிறைவாக்கினார்கள்: எவ்விதத்திலே
யும்உங்கள்மேல் ஒருபாரமும் ஏற்றாதபடி பார்த்
௰ தேன், இன்னும் அப்படிச்செய்வேன்.—அகாய
நாட்டின் திசைகளில் இந்தப்புகழ்ச்சி என்னை
விட்டு நீங்குவதில்லையென்று, என்னிலுள்ள கி
றிஸ்துவின் சத்தியத்தைக்கொண்டுசொல்லுகி
௰௧ றேன்.—எதினாலே; நான் உங்களை நேசிக்கா
௰௨ ததினாலேயா; தேவன் அறிவார்.—மேலும் தங்
களை மேன்மைபாராட்டுகிறதினால் எங்களைப்
போலக் காணப்படச் சமயந் தேடுகிறவர்களுக்
குச் சமயமற்றுப்போகும் பொருட்டாக, நான்
இப்படிச்செய்கிறேன்; பின்னும் இப்படிச்செய்
௰௩ வேன்.—அவர்களே கள்ளஅப்போஸ்தலர், கப
டமுள்ள வேலையாட்கள், கிறிஸ்துவின் அப்
போஸ்தலரின் வேஷத்தை மாத்திரந் தரிக்கிறார்
௰௪ கள்.—அது ஆச்சரியமல்ல; சாத்தானும் ஒளியுள்
௰௫ ள தூதனுடைய உருவத்தை எடுப்பானே.—ஆத
லால் அவனுடைய ஊழியக்காரரும் நீதியின்ஊ
ழியக்காரர்போன்ற உருவத்தை எடுப்பது மகா
பெரியகாரியமல்ல, அவர்களுடையமுடிவு அவ
௰௬ ரவர்கிரியைக்கேற்றதாயிருக்கும்.-பின்னும்நான்
இதைச்சொல்லுகிறேன், ஒருவனும் என்னைப்
புத்தியீனனென்று எண்ணாதிருப்பானாக; எண்
ணினால் நானும் சற்றே மேன்மைபாராட்டும்படி

என்னைப்புத்தியீனனாகவாயினும் அங்கிகரித்துக்
கொள்ளுங்கள்.—இப்படித் தைரியமாய் மேன் ௰௭
மைபாராட்டுகையில் நான் சொல்லுகிறது கர்த்
தரின் கட்டளையினாலல்ல, புத்தியீனனைப்போ
லச்சொல்லுகிறேன்.—அநேகர் சரீரத்தின்படி ௰௮
மேன்மைபாராட்டுகிறதால் நானும் மேன்மைபா
ராட்டுவேன்.—புத்தியுள்ள நீங்கள், புத்தியில்லா ௰௯
தவர்களை இனிதாய்ச் சகிக்கிறீர்கள்.—ஒருவன் ௨௰
உங்களைச் சிறைப்படுத்தினாலும், ஒருவன் உங்
களைப் பட்சித்தாலும், ஒருவன் உங்கள் பொ
ருளை அபகரித்தாலும், ஒருவன் தன்னை உயர்த்
தினாலும், ஒருவன் உங்களை முகத்தில்அறைந்தா
லுஞ் சகிக்கிறீர்களே.—நாங்கள் பலவீனராக ௨௧
எங்களுக்கு வந்த நிந்தையைக்குறித்து நான் பே
சுகிறேன். ஒருவன் எதிலே துணிவுள்ளவனாயி
ருக்கிறானோ, நானும் அதிலே துணிவுள்ளவனாயி
ருக்கிறேன், நான் ஒரு புத்தியீனனைப்போல
இவ்வாக்குப்பேசுகிறேன்.—அவர்கள் எபிரேய ௨௨
ரா, நானும் அப்படியே: அவர்கள் இஸரவேல
ரா, நானும் அப்படியே: அவர்கள் ஆபிரகாமின்
சந்ததியாரா, நானும் அப்படியே.—அவர்கள் ௨௩
கிறிஸ்துவின் ஊழியக்காரரா, நான் அவர்க
ளுக்கு மேற்பட்டவன்; நான் புத்தியீனனைப்
போலப்பேசுகிறேன், அவர்களிலும் நான் அதி
க பிரயாசப்பட்டேன்; எண்ணிறந்த அடிபட்
டேன், பலமுறையுங் காவல்களில் வைக்கப்
பட்டேன், அநேகந்தரம் மரணத்திற்குச் சமீப
மானேன்.—யூதரிடத்தில் ஒன்றுகுறைய நாற்ப ௨௪
தடி ஐந்துதரம்பட்டேன்.—மூன்றுதரம் மிலாறு ௨௫
களினால் அடிக்கப்பட்டேன், ஒருதரங் கல்லா
லெறியுண்டேன், மூன்றுதரங் கப்பற்சேதத்தில்
மோசப்பட்டேன், ஒரு இரவும் பகலும் ஆழி
யில் அமிழ்ந்தியிருந்தேன்.—அநேகந்தரம் யாத் ௨௬
திரையிலும், நதிகளின்மோசங்களிலும், திரு
டராலுண்டான மோசங்களிலும், என்சுயதே
சத்தாரால்வந்தமோசங்களிலும், அந்நியதேசத்தா
ராலுண்டானமோசங்களிலும், நகரமோசங்களி
லும், வனாந்தரமோசங்களிலும், சமுத்திரமோ
சங்களிலும், கள்ளச்சகோதரர்மோசங்களிலும்,—
பிரயாசத்திலும், கிலேசத்திலும், அடிக்கடி கண் ௨௭
விழிப்புகளிலும், பசியிலும், தாகத்திலும், அ
டிக்கடி உபவாசங்களிலும், குளிர்ச்சியிலும், நி
ருவாணத்திலும் நாள்விட்டுவந்தேன்.—பு ௨௮
றம்பே உண்டான இவைகளையன்றி, சகலசபை
களினாலுமுண்டாகுங் கவலை என்னை நாடோ
றும் நெருக்குகின்றது.—ஒருவன் பலவீனனானால் ௨௯
நானும் பலவீனனல்லவா, ஒருவன் இடறற்பட்

(௪) கலா.௧.௭,௮. (௫) ௧.கொரி.௰௫.௰. கலா.௨.௬. (௬) ௧.கொரி.௧.௰௭. எபே.௩.௪. அதி.௪.௨. (௭) அப்.௰௮.௩. ௧.கொரி.௯.௬.௰௨. (௯) அப் ௨௰.௩௩. ௧.தெச.௨.௯. ௨.தெச.௩.௮,௯. பிலி.௪.௰,௰௫,௰௯. அதி.௰௨.௰௪,௰௬. (௰) ரோ.௯.௧. ௧.கொரி.௯.௰௫. (௰௧) அதி.௬.௰௧. (௰௨) ௧.கொரி.௯.௰௨. (௰௩) அப்.௰௫.௨௪. ரோ.௰௬.௰௮. கலா.௧.௭. பிலி.௧.௰௫. ௨.பேதுரு.௨.௧. ௧.யோவா.௪.௧. வெளி.௨.௨. அதி.௨.௰௭. பிலி.௩.௨. தீத்.௧.௰,௰௧. (௰௪) கலா.௧.௮. (௰௫) அதி.௩.௯. பிலி.௩.௰௯. (௰௬) வச.௧. அதி.௰௨.௬,௰௧. (௰௭) ௧.கொரி.௭.௬,௰௨. அதி.௯.௪. (௰௮) பிலி.௩.௩,௪. (௰௯) ௧.கொரி.௪.௰. (௨௰) கலா.௨.௩. (௨௧) அதி.௰.௯. பிலி.௩.௪. (௨௨) அப்.௨௨.௩. ரோ.௰௧.௧. பிலி.௩.௫. (௨௩) ௧.கொரி.௰௫.௰. அப்.௯.௰௬. அதி.௬.௪,௫. ௧.கொரி.௰௫.௩௰,௩௧,௩௨. (௨௪) உபா.௨௫.௩. (௨௫) அப்.௰௬.௨௨. அப்.௰௪.௰௯. அப்.௨௭,௪௧. (௨௬) அப்.௯.௨௩. அப்.௰௩.௫௰. அப்.௨௩.௰,௰௧. அப்.௨௫.௩. அப்.௰௪.௫. (௨௭) அப்.௨௰.௩௧. ௧.கொரி.௪.௰௧. (௨௮) அப்.௨௰.௰௮,. ரோ.௧.௰௪. (௨௯) ௧.கொரி.௮.௰௩.

௩௰ டால் நான் பரிதாபப்படுகிறதில்லையோ.—நான்
மேன்மைபாராட்டவேண்டுமானால் என் பலவீ
னங்களைக்குறித்து மேன்மைபாராட்டுவேன்.—
௩௧ நான் பொய்சொல்லுகிறதில்லையென்று நம்மு
டையகர்த்தரானயேசுக்கிறிஸ்துவின்பி
தாவாகிய நித்தியானந்த தேவன் அறிவார்.—
௩௨ தமஸ்கு நகரத்தில் அரேத்தா இராசாவின் சேனா
பதி என்னைப்பிடிக்கவேண்டுமென்று, தமஸ்கி
யருடைய நகரவாசல்களிற் காவலாளரை ஏற்
௩௩ படுத்திவைத்தபொழுது,—நான் ஒருகூடையோ
டே பலகணியினின்று மதில்வழியாய் இறக்கிவி
டப்பட்டு, அவனுடைய கைக்குத்தப்பினேன்.

## ௰௨. அதிகாரம்.

௧. பரமதரிசனங்களினாலும், விசேஷ உபத்திர
வங்களினாலும் பவுல் தான் உண்மையான அப்
போஸ்தலனென்றுகாட்டல்: ௰௩. பவுலும், தன்
பட்சத்தாரும் லாபத்தினிமித்தமல்ல, கொரிந்
தியரின் நன்மையினிமித்தம் பிரயாசப்படல்.

மேன்மைபாராட்டுவது எனக்குத்தகுதியல்ல.
ஆயினுங் கர்த்தர் கொடுத்த தரிசனங்களையும்
௨ வெளிப்படுத்துதல்களையும் விவரிக்கிறேன்.—கி
றிஸ்துவைப்பற்றிய ஒருவனை அறிந்திருக்கி
றேன், அவன் பதினாலுவருஷத்திற்குமுன்னே
மூன்றாம் வானம்வரைக்கும் எற்றப்பட்டான்,
அப்பொழுது அவன் சரீரத்திலிருந்தானோ, அ
தற்குப் புறம்பேயிருந்தானோவென்றறியேன்: அ
௩ து தேவனுக்குத் தெரியும்.—இவன் பரதீ
சில் எற்றப்பட்டு, மனுஷர் பேசக்கூடாததும்,
வாக்குக்கெட்டாததுமானவாக்கியங்களைக்கேட்
௪ டான்.—அப்பொழுது அவன் சரீரத்திலிருந்தா
னோ, அதற்குப் புறம்பேயிருந்தானோவென்றறி
௫ யேன்: தேவன் அறிவார்.—இப்படிப்பட்ட
வனைக்குறித்துமேன்மைபாராட்டுவேன்: என்ப
லவீனங்களினாலேயன்றி, என்னைக்குறித்து வே
௬ றொன்றினாலும் மேன்மைபாராட்டேன்.-மேன்
மைபாராட்ட நான்விரும்பினாலுஞ் சத்தியத்தை
ப்பேசுவேன், ஆதலால் நான் புத்தியீனர்களுக்
குள்எண்ணப்படேன்;ஆனாலும்ஒருவன்என்னி
டத்திற்காண்பதற்கும், என்னிடத்திற்கேட்பதற்
கும் மேலாக என்னை மேன்மையுள்ளவனென்
றெண்ணாதபடி, நான் பேசாமலிருக்கிறேன்.—
௭ அன்றியும், எனக்கு வெளிப்படுத்தப்பட்டவை
களின் மேன்மையினிமித்தம் அளவுக்குமிஞ்ச
எண்ணாதபடி, என்னைக்குட்டுஞ் சாத்தானுடை
யதூதனாகிய ஒருமுள்ளு என்சரீரத்தில் தைத்
௮ திருந்தது.—அது என்னைவிட்டு நீங்கும்படி,
நான் மூன்றுதரம் கர்த்தரிடத்தில் அதைக்
குறித்து வேண்டிக்கொண்டேன்.—அதற்கு அ ௯
வர் என்னுடன், என்கிருபை உனக்குப்போ
தும்: பலவீனத்தில் என் பலம் சம்பூரணப்படு
மென்றார். ஆதலால் கிறிஸ்துவின் வல்லமை
என்மேல் அமர்ந்து நிற்கும்பொருட்டாக, நான்
மிகுந்த மகிழ்ச்சியோடே என் பலவீனங்களைக்
குறித்து மேன்மைபாராட்டுவேன்.—அந்தப்படி ௰
நான்பலவீனமாயிருக்கும்பொழுது பலவானாயி
ருக்கிறபடியால், கிறிஸ்துவினிமித்தம் பலவீ
னங்களிலும், நிந்தைகளிலும், வறுமைகளிலும்,
துன்பங்களிலும், இடுக்கங்களிலும் பிரியமாயி
ருக்கிறேன்:-மேன்மைபாராட்டுகிறதினால்நான் ௰௧
புத்தியீனனானேன்; நீங்களே அதற்கு என்னைப்
பலவந்தப்படுத்தினீர்கள்: நான் பிரயோசனமில்
லாதவனாயிருந்தாலும், மகா பிரதான அப்போ
ஸ்தலருக்கும் நான் எவ்வளவாகிலுங் குறைந்
தவனாயிராததால், உங்களால் நான் மெய்ச்சுக்
கொள்ளப்பட நியாயமாயிருந்ததே:-அப்போஸ் ௰௨
தலருக்குரிய அடையாளங்கள், உங்களுக்குள்
எல்லாப்பொறுமையோடும், ஆச்சரியமான கிரி
யைகளோடும், அற்புதங்களோடும், வல்லமைக
ளோடும் நடப்பிக்கப்பட்டனவே.—நான் உங் ௰௩
கள்மேலே சுமை ஏற்றாமலிருந்ததேயன்றி, மற்
றச்சபைகளுக்கு நீங்கள் எதிலேகுறைவாயிருந்
தீர்கள்; இந்த அநியாயத்தை நீங்கள் எனக்குமன்
னிக்கவேண்டும்.-பாருங்கள், மூன்றாந்தரம் உங் ௰௪
களிடத்தில்வர ஆயத்தமாயிருக்கிறேன்; உங்க
ளுடையவைகளை யல்ல, உங்களையே நான் தே
டுகிறபடியால் உங்கள்மேலே சுமை ஏற்றமாட்
டேன்: பிள்ளைகள் பெற்றாருக்கல்ல, பெற்றார்
பிள்ளைகளுக்குப்பொருளைக் கூட்டிவைப்பது க
டமை.—நான் உங்களை எவ்வளவு அதிகமாக ௰௫
நேசிக்கிறேனோ, அவ்வளவு குறைவாய் நேசிக்
கப்பட்டாலும், மிகவுஞ் சந்தோஷமாய் நான்
உங்கள் ஆத்துமங்களினிமித்தம் என்னைச் செல
வுபண்ணவும், செலவுபண்ணப்படவும்விரும்பு
கிறேன்.-அப்படியாகட்டும், உங்கள்மேல் நான் ௰௬
பாரம் ஏற்றவில்லை: ஆகிலும் சூதுள்ளவனாயிருந்
து, உங்களைக்கபடத்தினாற் பிடித்தேன்.—நான் ௰௭
உங்களிடத்தில் அனுப்பினவர்களில் எவன்வழி
யாயாவதுஉங்களிடத்தில்ஆதாயத்தைப்பெற்றே
னோ.—தீத்துவை உங்களிடத்திற் போகும்படி ௰௮
நான் வேண்டி, அவனுடனே சகோதரன்
ஒருவனைஅனுப்பினேன். தீத்து உங்களிடத்தில்
ஒரு ஆதாயத்தையாகிலுந்தேடினானா, நாங்கள் ஒ
ரேஆவியையுடையவர்களும்,நாங்கள்ஒரேமார்க்
கமுடையவர்களுமாய் அல்லவா நடந்தோம்.—

(௩௰) அதி.௰௨.௫,௯,௰.(௩௧)ரோ.௧.௰௨. அதி.௧.௨௩. கலா.௧.௨௰. ௧.தெச.௨௫. ரோ.௯.௫.(௩௨)அப்.௯.௨௪,௨௫.—(௰௨. அதி. ௨.) ரோ.௰௬.௭. கலா.௧.௨௨. அப்.௨௨.௰௭. அப்.௰௪.௯. (௩) லூக்.௨௩.௪௩. (௫) அதி.௰௧.௩௰. (௬) அதி.௰.௮. (௭) எசேக்.௨௮.௨௪. கலா.௪.௰௩,௰௪. யோபு.௨.௭. லூக்.௰௩.௰௬. (௮) உபா.௩.௨௩—௨௭. மத்.௨௬.௪௪. (௯) அதி.௰௧.௩௰. ௧.பேதுரு.௪.௰௪. (௰) ரோ.௫.௩. அதி.௰௩.௪. (௰௧) அதி.௰௧.௧,௰௬,௰௭. அதி.௰௧.௫. கலா.௨.௬,௭,௮. ௧.கொரி.௩.௭. எபே.௩.௮. (௰௨) ரோ.௰௫.௰௮,௰௯. ௧.கொரி.௯.௨. (௰௩) ௧.கொரி.௧.௭. ௧.கொரி.௯.௰௨. அதி.௰௧.௭. (௰௪) அதி.௰௩.௧. அப்.௨௰.௩௩. ௧.கொரி.௰.௩௩ ௧.கொரி.௪.௰௪,௰௫. (௰௫) பிலி.௨.௰௭. ௧.தெச.௨.௮. யோவா.௰.௰௧. கொலோ.௧.௨௪. ௨.தீமோ.௨.௰. அதி.௬.௰௨,௰௩. (௰௬) அதி.௰௧.௯. (௰௭) அதி.௭.௨. (௰௮) அதி.௮.௬,௰௬,௰௮,௨௨.

௰௯ எங்கள்குற்றத்தை மறைக்கும்படி இவ்விதமாய்
உங்களிடத்திற் பேசுகிறோமென்று நீங்கள் எண்
ணுகிறீர்களா, தேவனுடைய சமுகத்திற்கிறி
ஸ்துவைச்சார்ந்து பேசுகிறோம்: பிரியமான
வர்களே, உங்களைப் பத்தியில் ஸ்திரப்படுத்தும்
பொருட்டு, சகலத்தையுஞ்செய்கிறோம்.—
௨௰ நான்வந்து உங்களை என்மனதுக்கு இசைந்தவர்
களாகக்காணாமலும், உங்களுக்குநானும் உங்கள்
மனதுக்கிசைந்தவனாகக் காணப்படாமலும் இ
ருப்பேனோவென்றும், வாக்குவாதங்களும்,பொ
றாமைகளும், குரோதங்களும், விவாதங்களும்,பு
றங்கூறுதலும், கோட்சொல்லுதலும், இறுமாப்பு
ம், கலகங்களுமுண்டாயிருக்குமோவென்றும்,—
௨௧ திரும்பவும் நான் உங்களிடத்தில் வரும்பொழு
து என் தேவன் என்னைத் தாழ்மைப்படுத்தும்
படி, முன் பாவஞ்செய்தவர்களாகிய அநேகர்
தாங்கள் நடப்பித்த அசுத்தத்தையும், வேசைமா
ர்க்கத்தையும், காமவிகாரத்தையும்விட்டு மனந்தி
ரும்பாமலிருப்பதைக் குறித்து நான் புலம்பவே
ண்டியதாயிருக்குமோவென்றும் அஞ்சுகிறேன்.

## ௰௩. அதிகாரம்.

பாவத்தினிமித்தம் பவுல் அவர்களைக்கண்டித்தல்.
சபையார் தம்மைத்தாமே பரீட்சிக்கும்படி அ
வர்களை வேண்டல்: சாதாரண வாழ்த்துதல்
சொல்லல்.

இந்த மூன்றாந்தரம் நான் உங்களிடத்தில் வரு
கிறேன். "எந்தக்காரியமும், இரண்டுமூன்று சாட்
௨ சிகளின் வாக்கினால் ஸ்திரப்படும்."-நான் திரும்
பவும் வரும்பொழுது தப்பவிடமாட்டேனென்
று முன்னே பாவஞ்செய்தவர்களுக்கும், மற்ற
னைவருக்கும் முன்னமே சொன்னேன்; இப்
பொழுது உங்களுக்குத்தூரமாயிருந்தும் உங்களி
டத்தில்இருப்பவனைப்போல இரண்டாந்தரமும்
௩ முன் அறிவித்தெழுதுகிறேன்.—என்னாலே கிறி
ஸ்துப் பேசுகிறதைக் குறித்துத் திருஷ்டாந்தத்
தைத்தேடுகிறீர்களே, அவர் உங்களுக்குள்ளே ப
௪ லவீனராயல்ல, வல்லவராயிருக்கிறார்.—அவர்ப
லவீனத்தினாற்சிலுவையில் அறையப்பட்டிருந்
தும், தேவனுடைய வல்லமையினாற் சீவித்தி
ருக்கிறார். அவருக்குள் நாங்களும் அவருடன்
பலவீனராயிருந்தும், தேவன் உங்கள்மேல் அ
ருளும் வல்லமையினால் அவருடனே சீவிப்
போம்.—உங்களுக்கு விசுவாசமுண்டோவென் ௫
று உங்களை ஆராய்ந்தறியுங்கள்; உங்களைத்தானே
பரீட்சித்துப்பாருங்கள். நீங்கள் அங்கிகரிக்கத்
தகாதவர்களல்லாதிருந்தால் யேசுக்கிறிஸ்து
உங்களிடத்திலிருக்கிறாரென்று உங்களைத்தாமே
அறிகிறதில்லையா, நாங்கள் அங்கிகரிக்கத்தகாத
வர்களல்லவென்பதை அறிவீர்களென்று நம்புகி
றேன்.—நீங்கள் எவ்வளவாகிலும் ஒருதீங்கையுஞ் ௬
செய்யாதிருக்கும்படி தேவனை வேண்டிக்கொ
ள்ளுகிறேன்.—நாங்கள் அங்கிகரிக்கத்தக்கவர்க ௭
ளென்று தோன்றுவதற்கல்ல, அங்கிகரிக்கத்தகா
தவர்களுக்குள்ளே நாங்கள் எண்ணப்பட்டாலு
ம்,நீங்கள் நேர்மையானதைச்செய்யவேண்டுமெ
ன்பதே எங்கள் வேண்டுதல்.—சத்தியத்திற்கு வி ௮
ரோதமாக நாங்கள் ஒன்றுஞ்செய்யக்கூடாமல்,
சத்தியத்திற்கு நேராகவே செய்வோம்.—நாங்கள் ௯
பலவீனராகும்பொழுது, நீங்கள் பலமுள்ளவர்
களானாற் சந்தோஷப்படுவோம்: நீங்கள் சீர்தி
ருந்தும்படிக்கே நாங்கள் வேண்டுதல்பண்ணுகி
றோம்.-உங்கள் நாசத்திற்கல்ல, உங்களைப்பத்தி ௰
யில் வளர்க்கிறதற்குக் கர்த்தர் எனக்கருளியஅ
திகாரத்திற்கேற்க, நான் உங்களிடத்தில் வந்தி
ருக்கும்பொழுது கண்டிதம் பண்ணாதபடி,உங்க
ளுக்குத்தூரமாயிருக்கையால் இவைகளை எழுது
கிறேன்.—கடைசியாக சகோதரரே,சந்தோஷமா ௰௧
யிருங்கள். சீர்திருந்துங்கள், ஆறுதலையடையுங்
கள், ஏகசிந்தையாயிருங்கள், சமாதானமாய் வாழ்
விடுங்கள்; அப்பொழுது அன்புக்கும்,சமாதானத்
துக்குங் காரணராகிய தேவன் உங்கள்பட்சத்
திலிருப்பார்.—ஒருவரை ஒருவர் பரிசுத்தமுத்தத் ௰௨
தினால் வாழ்த்துங்கள்.—பரிசுத்தர்களெல்லாரும் ௰௩
உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள்.—கர்த்த ௰௪
ராகிய யேசுக்கிறிஸ்துவின் கிருபையும்,
தேவனுடைய அன்பும்,பரிசுத்தஆவியின் ஐக்
கமும் உங்கள் அனைவரோடும்இருக்கக்கடவன.
ஆமென்.

---

(௰௯)அதி.௫.௰௨.ரோ.௯.௧. ௧.கொரி.௰.௩௩.(௨௰)௧.கொரி.௪.௨௧.(௨௧)அதி.௨.௧,௪. அதி.௰௩.௨. ௧.கொரி.௫.௧.—(௰௩. அதி. ௧.) அதி.௰௨.௰௪. எண்.௩௫.௩௰. உபா.௰௭.௬. மத்.௰௮.௰௬. யோவா.௮.௰௭.எபி.௰.௨௮.(௨)அதி.௰.௨. அதி.௰௨.௨௧. அதி.௧.௨௩. (௩) மத்.௰.௨௰. ௧.கொரி.௫.௪. அதி.௨.௰. ௧.கொரி.௯.௨. (௪) பிலி.௨.௭,௮. ௧.பேதுரு.௩.௰௮. ரோ.௬.௪. அதி.௰.௩,௪. (௫) ௧.கொரி.௰௧.௨௮. ரோ.௮.௰. கலா.௪.௰௯. ௧.கொரி.௯.௨௭.(௭)அதி.௯.௧.(௮) ௧.கொரி.௪.௰. ௧.தெச.௩.௰. (௰) ௧.கொரி.௪.௨௧. தீத்.௧.௰௩. அதி.௰.௮. (௰௧) ரோ.௰௨.௰௬,௰௮. ௧.கொரி.௧.௰. பிலி.௨.௨. ௧.பேதுரு.௩.௮. ரோ.௰௫.௩௩. (௰௨) ரோ.௰௬.௰௬. ௧.கொரி.௰௬.௨௰. ௧.தெச.௫.௨௬. ௧.பேதுரு.௫.௰௪. (௰௪) ரோ.௰௬.௨௪. பிலி.௨.௧.

## அப்போஸ்தலனாகிய பவுல்

# கலாத்தியருக்கெழுதிய நிருபம்.

---

### ௧. அதிகாரம்.

*௧. பவுல் சுவிசேஷத்தைக் குறித்தல்: ௬. கலாத்தியர் கிறிஸ்துவின் சுவிசேஷத்தைத் தள்ளுவதினால் ஆச்சரியப்படல். அவர்கள் கொண்ட விபரீத உபதேசத்தைக் கண்டித்தல்: ௰௧. சுவிசேஷமும், அப்போஸ்தலபட்டமும் தேவனால் தனக்குக்கிடைத்ததென்று சொல்லல்.*

மனுஷரினின்றுமல்ல, மனுஷனாலுமல்ல, யே
சுக்கிறிஸ்துவினாலும், அவரை மரித்தோரிலி
ருந்துஎழுப்பின பிதாவாகிய தேவனாலும் அப்
௨ போஸ்தலனான பவுலாகிய நானும்,—என்னுட
னிருக்கிற எல்லாச்சகோதரரும்,கலாத்தியசபை
௩ களுக்கு எழுதிக்கொள்வது:-பிதாவாகிய தேவ
னாலும், நம்முடைய கர்த்தராகிய யேசுக்
கிறிஸ்துவினாலும் உங்களுக்குக் கிருபையுஞ்
௪ சமாதானமுமுண்டாகக்கடவன.—நம்முடைய
பிதாவாகிய தேவனுடைய சித்தத்தின்படி,
இம்மையிலுள்ள தீமையான பிரபஞ்சத்தினின்
று நம்மை விடுவிக்கும்பொருட்டு, நமது பாவங்
களுக்காகத் தம்மைத்தாமே ஒப்பித்தவருக்கு,—
௫ சதாகாலங்களிலும் மகிமை உண்டாவதாக.
௬ ஆமென்.—கிறிஸ்துவின் கிருபைக்குள் உங்க
ளை அழைத்தவனை நீங்கள் இவ்வளவு சீக்கிரத்தில்
விட்டு, வேறொரு சுவிசேஷத்திற்குத்திரும்பின
௭ தினால், நான் ஆச்சரியப்படுகிறேன்.—இப்படி
வேறொன்றில்லை; ஆகிலும் உங்களைக்கலக்கி, கி
றிஸ்துவின் சுவிசேஷத்தைப்புரட்ட விரும்பு
௮ கிறவர்கள் சிலருண்டு.-நாங்கள் உங்களிடத்திற்
பிரசங்கித்த சுவிசேஷத்தையன்றி, வேறொரு சு
விசேஷத்தை உங்களிடத்தில், நாங்களாகிலும்,
வானத்திலிருந்துவருகிற தூதனாகிலும் பிரசித்தப்
படுத்தினால் சபிக்கப்பட்டவர்களாயிருக்கக்கட
௯ வோம்.-நீங்கள் அங்கிகரித்த சுவிசேஷத்தையன்
றி, வேறொரு சுவிசேஷத்தை உங்களிடத்தில்
ஒருவன் பிரசங்கித்தால், அவன் சபிக்கப்பட்ட
வனாயிருப்பானாகவென்று நாங்கள் முன்சொல்
லியபிரகாரம்நான்திரும்பவுஞ்சொல்லுகிறேன்.-
௰ இப்பொழுது நான் மனுஷரையோ, தேவனை
யோ நாடுகிறேன், அல்லது மனுஷரைப் பிரி
யப்படுத்துகிறேனா; நான் மனுஷரைப்பிரியப்
படுத்தப் பார்த்தேனானால் நான் கிறிஸ்துவுக்
கு ஊழியக்காரனாயிருக்கக்கூடாது.—சகோதர ௰௧
ரே, என்னால் பிரசங்கிக்கப்பட்ட சுவிசேஷம்,
மனுஷருக்கேற்றபடியல்லவென்று நான் உங்க
ளிடத்தில் நிச்சயித்துச்சொல்லுகிறேன்.-அதை ௰௨
நான் யேசுக்கிறிஸ்துவின் வெளிப்படுத்த
லாலன்றி, எந்தமனுஷனாலும் பெற்றதும், போ
திக்கப்பட்டதுமில்லை.—நான் முன் நடந்தவி ௰௩
தமின்னதென்று நீங்கள் கேள்விப்பட்டீர்கள்,
யூத மார்க்கத்தானாயிருந்தபொழுது தேவனு
டைய சபையை மிகவுந்துன்பப்படுத்திஅதைப்
பாழாக்கி,—நான் என்முன்னோரின்பாரம்பரை ௰௪
முறைமைகளைச்சார்ந்து மிகுந்த பத்திவைராக்கி
யமுள்ளவனாகி, என்தேசத்தாரில் என்வயதுள்ள
அநேகரிலும், யூதமார்க்கத்திலுந் தேறினவனா
னேன்.—ஆனாலும் என் தாயின் கருப்பமுதல் ௰௫
என்னைப்பிரித்தெடுத்து, தமதுகிருபையினால் அ
ழைத்த தேவன்,—அந்நிய தேசத்தாரிடத்தில் ௰௬
தமதுகுமாரனைச் சுவிசேஷமாய்ப் பிரசங்கிக்கும்
பொருட்டாக,—அவரை எனக்கு வெளிப்படுத் ௰௭
தத்திருவுளங்கொண்டவேளையில், நான் மாமிச
இரத்தத்தோடே ஆலோசனைபண்ணாமலும், எ
னக்குமுன் ஏற்பட்டஅப்போஸ்தலரானவர்களி
டத்தில் யெரூஷலேமுக்குத்திரும்பாமலும் அர
பியாவுக்குப்புறப்பட்டுப்போய், பின்புதமஸ்கு
வுக்குத் திரும்பிவந்தேன்.—மூன்றுவருஷஞ்செ ௰௮
ன்றபின்பு பேதுருவைப்பார்த்தறியும்படி யெரூ
ஷலேமுக்குப்போய், அவனிடத்திற்பதினைந்து
நாள்தங்கினேன்.-கர்த்தருடைய சகோதரனா ௰௯
கிய யாக்கோபைத் தவிர,அப்போஸ்தலரில் வே
றொருவனையும் நான் காணவில்லை.-பாருங்கள், ௨௰
நான் உங்களுக்குஎழுதுகிற இந்தச்சங்கதிகளில்
ஒன்றும் பொய்யல்லவென்று தேவசமுகத்தில்
உங்களுக்குச்சொல்லுகிறேன்.—பின்பு ஸீரிய, ௨௰௧
கிலீக்கியா தேசங்களின் புறங்களில் வந்தேன்.—
அக்காலத்தில் யூதேயாதேசத்திலுள்ள கிறிஸ்து ௨௰௨
வின் சபையாருக்கு நான் அறிமுகமானவனல்
ல.—முன்னே நம்மைத் துன்பப்படுத்தினவன், ௨௰௩
தான் அழித்தவிசுவாசத்தை இப்பொழுது பிரசி
த்தப்படுத்துகிறானென்பதைமாத்திரங் கேள்விப்
பட்டார்கள்.—அதினால் அவர்கள் என்னைக்கு ௨௰௪
றித்துத் தேவனைத் துதித்தார்கள்.

---

(௧. அதி. ௧.) வச.௰௧,௰௨. அப்.௯.௬. தீத்.௧.௨. அப்.௨.௨௪. (௨) பிலி.௨.௨௨. ௧.கொரி.௰௬.௧. (௩) ரோ.௧.௭.(௪) மத்.௨௰.௨௮. ரோ.௪.௨௪. தீத்.௨.௰௪. ஏசா.௬௫.௰௭. யோவா.௰௫.௰௯. எபி.௨.௫. ௧.யோவா.௫.௰௯.(௬)அதி.௫.௮. (௭) ௨.கொரி.௰௧.௪. அப்.௰௫.௧,௨௪. அதி.௫.௰,௰௨. (௮) ௧.கொரி.௰௬.௨௨. (௯) உபா.௪.௨. நீதி.௩௰.௬. வெளி. ௨௨.௰௮.(௰)௧.தெச.௨.௪. ௧.சாமு.௨௪.௭. மத்.௨௮.௰௪. ௧.யோவா.௩.௰௯. ௧.தெச.௨.௪. யாக்.௪.௪.(௰௧)௧.கொரி. ௰௫.௧. (௰௨) ௧.கொரி.௰௫.௧,௩. எபே.௩.௩. (௰௩) அப்.௯.௧. ௧.தீமோ.௧.௰௩. அப்.௮.௩.(௰௪)அப்.௨௨.௩. பிலி.௩. ௬. எரே.௯.௰௪. மத்.௰௫.௨. மாற்.௭.௫. (௰௫) ஏசா.௪௯.௧,௫. எரே.௧.௫. அப்.௯.௰௫. ரோ.௧.௨. (௰௬) ௨.கொரி. ௪.௬. அப்.௯.௰௫. ரோ.௰௧.௰௪. எபே.௩.௮.(௰௭)மத்.௰௬.௰௭. ௧.கொரி.௰௫.௫௰. எபே.௬.௰௨.(௰௮) அப்.௯.௨௬. (௰௯) ௧.கொரி.௯.௫. மத்.௰௩.௫௫.மாற்.௬.௩. (௨௰) ரோ.௯.௧.(௨௧)அப்.௯.௩௰. (௨௨) ௧.தெச.௨.௰௪. ரோ.௰௬.௭.

# ௨. அதிகாரம்.

*௧. பவுல் யெருஷலேமுக்குப் பிரயாணம்பண்ணல். அதற்குக்காரணந்தெரிவித்தல்: ௰௧. பேதுரு கிறிஸ்துமார்க்கத்துக்கு விரோதமாய் நடப்பதைக்குறித்து அவன்மேற் குற்றஞ்சார்த்தல்.*

பின்பு பதினாலுவருஷஞ்சென்றபொழுது,நான்
தீத்துவைக் கூட்டிக்கொண்டு பர்னபாவுடனே
திரும்பவும் யெருஷலேமுக்குப் போனேன்.—
௨ நான் தேவனுடைய அறிவிப்பினால் அங்கே
சென்று, நான் ஓடுகிறதாவது, ஓடினதாவது எது
விதமும் பலனற்றதாகாதபடி, அந்நியதேசத்தா
ரிடத்தில் நான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தை
அவர்களுக்கும், விசேஷமாய் மேன்மைபெற்
றவர்களுக்கும் இரகசியமாய் விளங்கக்காட்டி
௩ னேன்.—என்னுடனேயிருந்த தீத்து கிரேக்க
னாயிருந்தும், யேசுக்கிறிஸ்துவினால் நாம்
பெற்ற விடுதலையை வேவுபார்த்து, நம்மை அடி
மைப்படுத்தும்பொருட்டு இரகசியமாய் நுழைந்
௪ த கள்ளச்சகோதரர் நிமித்தம்,—விருத்தசேதனம்
பெறுவதற்குக் கட்டாயம் பண்ணப்படவில்
௫ லை.—சுவிசேஷத்தின் சத்தியம் உங்களிடத்தில்
நிலைத்திருக்கும்படி, நாங்கள் ஒருநாழிகையாகி
௬ லும் அவர்களுக்குக் கீழ்ப்படியவில்லை.—அன்
றியும் பெரியோர்களென்றெண்ணப்பட்டவர்
கள், முன்னே அவர்களெப்படிப்பட்டவர்களா
யிருந்தாலும், எனக்குக் கவ்வையில்லை: தேவ
ன் மனுஷருடைய முகத்தைப்பார்க்கிறவரல்ல
வே: அந்தப்பெரியோர் நூதனமாக எனக்கொன்
௭ றும் போதிக்கவில்லை.—விருத்தசேதனமுள்ள
வர்களுக்கு அப்போஸ்தலனாயிருக்கும்படி பே
துருவைப் பலப்படுத்தினவர், அந்நியருக்கு அப்
போஸ்தலனாயிருக்கும்படி என்னையும் பலப்ப
௮ டுத்தினதினால்,—விருத்தசேதனமுள்ளவர்களுக்
குச் சுவிசேஷத்தைப்பிரசங்கிக்கும்படி பேதுரு
வுக்கு ஒப்பிக்கப்பட்டதுபோல, விருத்தசேதன
மில்லாதவர்களுக்கு அப்படிச்செய்ய எனக்கு
ஒப்பிக்கப்பட்டிருக்கிறதென்று அவர்கள் கண்
௯ டார்கள்.—தூண்களென்று எண்ணப்பட்ட யாக்
கோபும், கேபாவும், யோவானும் எனக்களிக்கப்
பட்ட கிருபையைஅறிந்து, தாங்கள் விருத்தசே
தனமுள்ளவர்களிடத்திலும், நாங்கள் அந்நியதே
சத்தாரிடத்திலும் போகும்படி, எனக்கும் பர்
னபாவுக்குஞ்சகாயமாக வலதுகைகொடுத்து அ
௰ னுப்பிவிட்டார்கள்.-விசேஷமாய்த்தரித்திரர்மே
லே சிந்தைவைக்கும்படி வேண்டினார்கள்;
நானும் மனப்பூருவமாய் அதைச்செய்யத்துரிதப்
பட்டேன்.-பின்பு பேதுரு அந்தியோகியநகரத் ௰௧
திற்கு வந்தபொழுது அவன் கடிந்துகொள்ளுத
லுக்குப்பாத்திரனாயிருந்தபடியினால், நான் முக
முகமாய்அவனை எதிர்த்து நின்றேன்.-யாக்கோபி ௰௨
டத்திலிருந்து சிலர் வருவதற்குமுன்னே, அவன்
அந்நியதேசத்தாருடனே போசனம்பண்ணினா
ன்: அவர்கள் வந்தபின்பு விருத்தசேதனமுள்ள
வர்களுக்கஞ்சி விலகிப்பிரிந்தான்.-மற்றயூதரும் ௰௩
அப்படியேவஞ்சகம்பண்ணினார்கள்; அவர்களு
டைய வஞ்சகத்தினால் பர்னபாவுங்கூட இழுக்
கப்பட்டான்.—அவர்கள் சுவிசேஷத்தின் சத்தி ௰௪
யத்தின்படி நேர்மையாய் நடவாமலிருப்பதைக்
கண்டு,எல்லாருக்கும்முன்பாகநான்பேதுருவை
நோக்கி, யூதனாகிய நீர் யூதர்முறைமையாகவல்
ல, அந்நியர்முறைமையின்படி நடந்துகொண்டி
ருக்க, அந்நியரை யூதர்முறைமையாக நடக்
கும்படி நீர் வலாற்காரஞ் செய்கிறதென்ன.—
எந்த மனுஷனும் நியாயப்பிரமாணத்தின் கிரி ௰௫
யைகளினாலே நீதிமானாக்கப்படுவதில்லையே.—
அந்நியரான பாவிகளல்ல, சுபாவப்படி யூதராயி ௰௬
ருக்கிற நாமும், யேசுக்கிறிஸ்துவைப்பற்
றும் விசுவாசத்தினாலேயன்றி, நியாயப்பிரமாண
த்திற்கேற்ற கிரியைகளினாலே மனுஷன் நீதிமா
னாகிறதில்லையென்றறிந்து, நியாயப்பிரமாணத்
தின் கிரியைகளினாலல்ல, கிறிஸ்துவைப்பற்
றும் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்படும்
படி, கிறிஸ்துயேசுவின்மேல் விசுவாசிக
ளானோமே.—கிறிஸ்துவினாலே நீதிமான்க ௰௭
ளென்றெண்ணப்படும்படி வகைதேடுகிறநாமும்
பாவிகளாகக்காணப்பட்டால், கிறிஸ்து பாவத்
துக்குக்காரணரா, அல்லவே.—நான் இடித்தவை ௰௮
களைத்திரும்பவுங்கட்டினால், நான் என்னை அக்
கிரமக்காரனென்று காண்பிப்பேன்.-தேவனுக் ௰௯
கென்று சீவிக்கும்படி, நான் நியாயப்பிரமாணத்
தினாலே நியாயப்பிரமாணத்திற்கு மரித்துவிட்
டேன்.—கிறிஸ்துவுடன் சிலுவையில் அறை ௨௰
யப்பட்டேன்: ஆனாலுஞ்சீவித்திருக்கிறேன்; நா
னல்ல, கிறிஸ்து எனக்குள்ளே சீவித்திருக்கி
றார்: அந்தப்படி இப்பொழுது சரீரத்தோடே சீ
வித்திருக்கிற நான்,என்னில் அன்புகூர்ந்து, என்
னிமித்தந்தம்மைத்தாமேஒப்பித்த தேவனுடை
ய குமாரனைப்பற்றும் விசுவாசத்தினாலே சீவித்
திருக்கிறேன்.—நான் தேவனுடைய கிருபை ௨௧
யை விருதாவாக்குகிறதில்லை: நீதியானது நியா
யப்பிரமாணத்தினாலே வந்தால், கிறிஸ்து மர
ணமடைந்தது விருதாவாகுமென்றேன்.

---

(௨. அதி. ௧.) அப். ௰௫.௨. (௨) அப். ௰௫.௨. பிலி. ௨.௰௬. ௧.தெச. ௩.௫. (௩) அப். ௰௫.௧,௨௪. ௨.கொரி.௰௧.௨௧. அதி.௩.௨௫. ௨.கொரி.௰௧.௨௰.(௫)வச.௰௪. அதி.௩.௧. (௬) அதி.௬.௩. அப்.௰.௩௪. ரோ.௨.௰௧. ௨.கொரி.௰௨.௰௧. (௭)அப்.௯.௰௫. ௧.கொரி.௰௫.௰.கொலோ.௧.௨௯.அதி.௩.௫.(௮)அப்.௰௩.௪௯.ரோ.௧.௫. ௧.தீமோ.௨.௭. ௨.தீமோ. ௧.௰௧. ௧.தெச.௨.௪.(௯)மத்.௰௬.௰௮. எபே.௨.௨௰.வெளி.௨௧.௰௪.ரோ.௧.௫. ௧.கொரி.௰௫.௰. எபே.௩.௮.(௰)அப். ௰௧.௩௰. ரோ.௰௫.௨௫. ௧.கொரி.௰௬.௧. ௨.கொரி.௮. ௨.கொரி.௯.(௰௧)அப்.௰௫.௩௫.(௰௨)அப்.௰.௨௮. (௰௪) வச. ௫. ௧.தீமோ.௫.௨௰. அப்.௰.௨௮. (௰௫) அப்.௰௫.௰,௰௧. மத்.௯.௰௧. எபே.௨.௩,௰௨.(௰௬)அப்.௰௩.௩௮,௩௯. ரோ.௧. ௰௭. ரோ.௩.௨௨,௨௮. எபி.௭.௰௮,௰௯. சங்.௱௪௩.௨. ரோ.௩.௨௰. அதி.௩.௰௧.(௰௭)௧.யோவா.௩.௮,௯. (௰௯)ரோ.௮. ௨. ரோ.௬.௰௪. ரோ.௬.௰௧. ௨.கொரி.௫.௰௫. ௧.தெச.௫.௰. எபி.௯.௰௪. ௧.பேதுரு.௪.௨. (௨௰) ரோ.௬.௬. அதி.௬. ௰௪. ௨.கொரி.௫.௰௫. ௧.தெச.௫.௰. ௧.பேதுரு.௪.௨. அதி.௧.௪.எபே.௫.௨. தீத்.௨.௰௪.(௨௧)அதி.௩.௨௧.எபி.௭.௰௧.

## ௩. அதிகாரம்.

௧. கலாத்தியர் கிறிஸ்துவைவிட்டுவிலகி, நியாயப்பிரமாணத்தைக்கொண்டு இரட்சிப்பைத் தேடுவதினால் பவுல் அவர்களைக்கண்டித்தல்: நியாயப்பிரமாணத்தினாலேயல்ல, கிறிஸ்துவின் நீதியினாலே நாம் நீதிமான்களென்றெண்ணப்படவேண்டுமென்று திடமாய்த் திருஷ்டாந்தப்படுத்தல்.

ஆ, புத்தியீனமுள்ள கலாத்தியரே, நீங்கள் சத்
தியத்திற்குக்கீழ்ப்படியாமலிருக்கும்படி, உங்க
ளைமயக்கினவன் யாவன். உங்களுக்குப்பிரத்தி
யட்சமாய், யேசுக்கிறிஸ்து உங்களுக்குள்ளே
சிலுவையில் அறையுண்டவராய் வெளிப்படுத்
௨ தப்பட்டாரே.—நீங்கள், நியாயப்பிரமாணத்தின்
கிரியைகளைக்கொண்டோ, விசுவாசத்துடன்செ
விகொடுக்கிறதைக்கொண்டோ ஆவியைப்பெற்
றீர்கள்; இதொன்றைமாத்திரம் உங்களிடத்தில்
௩ அறியவிரும்புகிறேன்.—ஆவியினால்ஆரம்பம்பண்
ணின நீங்கள், இப்பொழுது மாமிசத்தினால் நி
றைவேற்றம்பெற்றீர்களா; இவ்வளவுபுத்தியீனரா
௪ யிருக்கிறீர்களா;—பலன்பெறாமல் இவ்வளவு கி
லேசங்களை அனுபவித்தீர்களா; விருதாவாயிருக்
௫ கமாட்டாதே.—உங்களுக்கு ஆவியை அருளி, உங்
களுக்குள் அற்புதங்களை நடப்பிக்கிறவர், நியா
யப்பிரமாணத்தின்கிரியைகளைக்கொண்டோ, வி
சுவாசப்பிரசங்கத்தினாலோ அதைச்செய்கிறார்.—
௬ "ஆபிரகாம் தேவனை விசுவாசித்தான், அதுவே
௭ அவனுக்கு நீதியென்றெண்ணப்பட்டது."—ஆ
தலால், விசுவாசமுள்ளவர்கள் ஆபிரகாமின் சந்
ததியாராயிருக்கிறார்களென்பதைஅறிவீர்களாக—
௮ அன்றியும், அந்நியதேசத்தாரைவிசுவாசத்தினிமி
த்தந் தேவன் நீதிமான்களாக்குவாரென்று வே
தாகமம்முன்னறிந்து, "உன் மூலமாய்ச் சகலசா
திகளும் ஆசீர்வதிக்கப்படும்," என்று ஆபிரகாமி
௯ டத்தில் சுவிசேஷமாய் அறிவித்தது.—அந்தப்பி
ரகாரமாக, விசுவாசமுள்ளவர்கள் விசுவாசியாகி
ய ஆபிரகாமுடனேஆசீர்வாதம் பெற்றிருக்கிறார்
௰ கள்.—"நியாயப்பிரமாணபுத்தகத்தில் எழுதப்பட்
டவைகளையெல்லாஞ் செய்யத்தக்கதாக, அவை
களில் நிலைத்திராதவனெவனோ, அவன் சபிக்
கப்பட்டவன்," என்றெழுதியிருக்கின்றதினால்,
நியாயப்பிரமாணத்தின்கிரியைகளைச்சார்ந்திருக்
கிறயாவருஞ்சாபத்துக்குட்பட்டிருக்கிறார்கள்.—
௰௧ "நீதிமான் விசுவாசத்தினாலே சீவிப்பான்." அ
தினால் நியாயப்பிரமாணத்தினாலே தேவனு
டைய சந்நிதியில் எந்தமனுஷனும் நீதிமானாக்
கப்படானென்பது தெளிவாய்விளங்கும்:—நி ௰௨
யாயப்பிரமாணம்விசுவாசத்திற்கேற்றதல்ல, "அ
வைகளைச்செய்கிற மனுஷனே அவைகளினாற்
சீவிப்பான்."—ஆபிரகாமுக்குண்டான ஆசீர்வா ௰௩
தம் யேசுக்கிறிஸ்துவினாலே அந்நியருக்
குக்கிடைக்கவும், வாக்குத்தத்தம் பண்ணப்பட்
ட ஆவியை நாம்விசுவாசத்தினாலேபெறவுந் தக்
கதாக,—"மரத்திலே தூக்கப்பட்டவனெல்லா ௰௪
ருஞ்சபிக்கப்பட்டவன்," என்று எழுதியிருக்கிற
படி, கிறிஸ்து நமக்காகச்சாபத்திலுட்பட்டு, நி
யாயப்பிரமாணத்தின் சாபத்தினின்று நம்மை
மீட்டுக்கொண்டார்.—சகோதரரே, மனுஷர் மு ௰௫
றைமைக்கேற்கப்பேசுகிறேன்; மனுஷருக்குள்
ளும் உறுதிபண்ணப்பட்ட ஒரு உடன்படிக்
கையை ஒருவன் தள்ளவும், அதனோடு எதையா
கிலுங் கூட்டவும் மாட்டான்.—ஆபிரகாமுக் ௰௬
கும், அவனுடைய சந்ததிக்கும் வாக்குத்தத்தங்
கள் செய்யப்பட்டன. சந்ததிகளுக்கென்று அ
நேகரைக்குறித்துச்சொல்லாமல், உன் சந்ததிக்
கென்று ஒருவனைக்குறித்துச் சொல்லியிருக்கி
றார்; கிறிஸ்துவே அந்தச்சந்ததி.—ஆதலால் ௰௭
நான் இதைச்சொல்லுகிறேன், கிறிஸ்துவுக்
குள் தேவனால் முன்னுறுதிபண்ணப்பட்ட
உடன்படிக்கையை, நானூற்றுமுப்பதுவருஷத்
துக்குப்பின்பு உண்டான நியாயப்பிரமாணம்,
வாக்குத்தத்தத்தைத் தள்ளும்படி அவமாக்கமாட்
டாது.—அன்றியும், சுதந்தரம் நியாயப்பிரமா ௰௮
ணத்தினால் உண்டானால், வாக்குத்தத்தத்தினா
லுண்டாயிராதே: தேவன் ஆபிரகாமுக்கு அ
தை வாக்குத்தத்தத்தினால் அருளிச்செய்தார்.—
அப்படியானால் நியாயப்பிரமாணம் என்னத்துக் ௰௯
கு; அது வாக்குத்தத்தத்தைப்பெற்றசந்ததிவருமள
வும் அதிக்கிரமங்களினிமித்தந் தேவதூதரைக்
கொண்டு ஒரு மத்தியஸ்தன்கையில் கூட்டிவைற்
படுத்தப்பட்டது.—மத்தியஸ்தன் ஒருவனுக்கல்ல, ௨௰
தேவன் ஒருவரே இருக்கிறார்.—அப்படியானால் ௨௧
நியாயப்பிரமாணந் தேவனுடைய வாக்குத்
தத்தங்களுக்கு விரோதமா, இல்லையே: சீவனைத்
தரத்தக்க நியாயப்பிரமாணங்கொடுக்கப்பட்டிரு
ந்ததானால், நீதியானது நியாயப்பிரமாணத்தினா
லுண்டாகுமே.—யேசுக்கிறிஸ்துவைப் பற் ௨௨
றும் விசுவாசத்தினாலுண்டானவாக்குத்தத்தம் வி
சுவாசிகளுக்கு அளிக்கப்படும்படி, வேதாகமம்
எல்லாரையும் ஏகமாய்ப் பாவத்தின்கீழ் அடைத்
தது.—ஆதலால் விசுவாசம் வருவதற்குமுன்னே ௨௩
நாங்கள், வெளிப்படுவதாயிருந்த விசுவாசத்திற்

(௩. அதி. ௧.) அதி.௫.௭. அதி.௨.௰௪. (௨) அப்.௨.௩௮. எபே.௧.௰௩. எபி.௬.௪. ரோ.௰.௰௬,௰௭. (௩) அதி.௪.௯. எபி.௭.௰௬. (௪) எபி.௰.௩௫,௩௬. ௨.யோவா.௮. (௫) ௨.கொரி.௩.௮. (௬) ஆதி.௰௫.௬. ரோ.௪.௩,௯,௨௧,௨௨. யாக்.௨.௨௩. (௭) யோவா.௮.௩௯. ரோ.௪.௰௧,௰௨,௰௬. (௮) ஆதி.௰௨.௩. அப்.௩.௨௫. (௰) உபா.௨௭.௨௬. எரே.௰௧.௫. (௰௧) அதி.௨.௰௬. அபகூ.௨.௪. ரோ.௧.௰௭. எபி.௰.௩௮. (௰௨) ரோ.௪.௪,௫. லேவி.௰௮.௫. எசேக்.௨௰.௰௧. ரோ.௰.௫. (௰௩) ரோ.௪.௯.௰௬. ஏசா.௪௪.௩. எரே.௩௧.௩௩. எசேக்.௰௧.௨௰. யோவே.௨.௨௮.௨௯. சக.௰௨.௰. யோவா.௭.௩௯. அப்.௨.௩௩. (௰௪) ரோ.௮.௩. ௨.கொரி.௫.௨௧. உபா.௨௧.௨௩. (௰௫) எபி.௯.௰௭. (௰௬) ஆதி.௰௨.௩,௭. ௧.கொரி.௰௨.௰௨. (௰௭) யாத்.௰௨.௪௰,௪௧. ரோ.௪.௰௩,௰௪. (௰௮) ரோ.௮.௰௭. ரோ.௪.௰௪. (௰௯) யோவா.௰௫.௨௨. ரோ.௪.௰௫. ரோ.௫.௨௰. ரோ.௭.௮,௰௩. ௧.தீமோ.௧.௯. வச.௰௯. அப்.௭.௫௩. எபி.௨.௨. யாத்.௨௰.௰௯,௨௧,௨௨. உபா.௫.௪,௨௨,௨௩,௨௭,௩௧. யோவா.௧.௰௭. அப்.௭.௩௮. ௧.தீமோ.௨.௫. (௨௰) ரோ.௩.௨௯,௩௰. (௨௧) அதி.௨.௨௧. (௨௨) வச.௮. ரோ.௩.௯,௰௯,௨௩. ரோ.௪.௰௧,௰௨,௰௬.

கு எதுவாக அடைக்கப்பட்டவர்களாய், நியா
யப்பிரமாணத்தின் கீழாக்கப்பட்டிருந்தோம்.—
உச இவ்விதமாய் நாம் விசுவாசத்தினாலே நீதிமான்க
ளாக்கப்படுவதற்கு,நியாயப்பிரமாணம் நம்மைக்
கிறிஸ்துவினிடத்தில் வழிநடத்துகிற உ
உரு பாத்தியாயிருந்தது.-விசுவாசம் வந்தபின்பு நாங்
உசு கள் அந்த உபாத்திக்குக் கீழானவர்களல்ல.—நீங்
களெல்லாருங் கிறிஸ்துயேசுவைப் பற்றும்
விசுவாசத்தினால் தேவனுடைய பிள்ளைகளா
உஎ யிருக்கிறீர்கள்.—உங்களில் கிறிஸ்துவுக்குள்
ளாக எத்தனைபேர் ஞானஸ்நானம் பெற்றீர்க
ளோ, அத்தனைபேரும் கிறிஸ்துவைத்தரித்
உஅ துக்கொண்டீர்கள்.-இப்படியே யூதராகிலும், கி
ரேக்கராகிலும், பராதீனராகிலும், சுயாதீனராகி
லும், ஸ்திரியாகிலும், புருஷனாகிலும் நீங்களெ
ல்லாரும் வேற்றுமையின்றிக் கிறிஸ்துயேசு
உகூ வுக்குள் ஏகமாயிருக்கிறீர்கள்.-அல்லாமலும் கி
றிஸ்துவைச் சார்ந்தவர்களானால், நீங்கள் ஆபி
ரகாமின் சந்ததியாரும், வாக்குத்தத்தத்தின் சுதந்
தரருமாயிருக்கிறீர்கள்.

## ௪. அதிகாரம்.

க. சுதந்தரரைப்போல உலகத்தவர்கள் நியாயப்பிரமாணத்திற்காதீனராதல்: ௬. புத்திரரானபின்பு அடிமையின்பணிவிடைசெய்யாதொழிதல்: யஉ. கலாத்தியரின் முந்தின அன்பைப்புகழ்தல். அவர்களுடைய நன்மையை விரும்பல்: உக. நியாயப்பிரமாணத்திற்குஞ் சுவிசேஷத்திற்குமுண்டான வேற்றுமையை நிருணித்தல்.

சுதந்தரன் எல்லாவற்றிற்கும் எசமானனாயிருந்
தும், பாலகனாயிருக்குங் காலமளவும் அவனுக்
கும், அடிமையானவனுக்கும் ஒரு வித்தியாசமு
உ மில்லை.—பிதா குறித்தகாலம்வரைக்கும் அவன்
போதகருக்கும், வீட்டதிகாரிகளுக்குங் கீழ்ப்
பட்டிருக்கிறானென்று நான்சொல்லுகிறேன்.—
௩ அப்படியே நாமும் பாலகராயிருந்தகாலத்தில்,
உலகத்தின் வழிபாடுகளுக்கு அடிமைப்பட்
ச டவர்களாயிருந்தோம்.—காலம் நிறைவேறின
பொழுது தேவன் தம்முடைய குமாரனை அ
னுப்ப, அவர் நியாயப்பிரமாணத்தின் கீழானவர்
ரு களை மீட்டுக்கொண்டு,—புத்திரசுவிகாரத்தை ந
மக்கருளும்பொருட்டாக ஸ்திரியினிடத்திற் பி
சு றந்து, நியாயப்பிரமாணத்திற்குக்கீழானார்.—நீங்
கள் புத்திரராயிருக்கிறபடியினால், அப்பா பிதா
வே, என்று கூப்பிடத்தக்கதாக, தேவன் தம
து குமாரனுடைய ஆவியை உங்கள் இருதயங்க
ளில் அனுப்பினார்.—ஆதலால் நீ இனி அடிமை எ
யாயிராமற் புத்திரனாயிருக்கிறாய்;புத்திரனாயிருக்
க, கிறிஸ்து மூலமாய்த் தேவனுக்குச் சுதந்
தரனுமாயிருக்கிறாய்.—நீங்கள் தேவனை அறியா அ
மலிருந்தபொழுது,சுபாவத்தின்படி தேவர்களல்
லாதவர்களுக்குத் தொண்டுசெய்பவர்களாயிருந்
தீர்கள்.—நீங்கள் தேவனை அறிந்தபின்பு, அல் கூ
லது தேவனால் அறிந்துகொள்ளப்பட்டபின்
பு, அற்பமும் இழிவுமான வழிபாடுகளுக்கு
மறுபடியுந் திரும்புகிறதென்ன; மறுபடியுந் தி
ரும்பி அவைகளுக்கு அடிமைப்பட்டிருக்க வி
ரும்புகிறதெப்படி.—நீங்கள் தினங்களையும், மா ய
தங்களையும், காலங்களையும், வருஷங்களையும்
ஆசரிக்கிறீர்கள்.—நான் உங்கள்நிமித்தம் பட்ட யக
பிரயாசம் வீணாய்ப்போகுமென்று உங்களைக்கு
றித்து அஞ்சுகிறேன்.—சகோதரரே,நான்உங்களை யஉ
ப்போலானபடியால்,நீங்களும்என்னைப்போலா
வீர்களாகவென்று உங்களை வேண்டுகிறேன்:நீங்
கள் எனக்கு ஒரு அநியாயமுஞ்செய்யவில்லை.-
முதலாந்தரஞ் சரீரபலவீனத்தோடே உங்களிடத் ய௩
திற் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தேனென்று அ
றிந்திருக்கிறீர்கள்.-என் சரீரத்திலுள்ளபரீட்சை யச
யை நீங்கள் அலட்சியம் பண்ணாமலும், அவமதி
யாமலும், என்னைத் தேவனுடைய தூதனைப்
போலவும்,கிறிஸ்துயேசுவைப்போலவும்
ஏற்றுக்கொண்டீர்கள்.-ஆ, உங்களுக்குக்கிடைத் யரு
த ஆனந்தம் எவ்வளவு; நீங்கள் உங்கள்கண்களைத்
தோண்டி எனக்குக்கொடுக்கக்கூடுமானால்அப்ப
டியுஞ்செய்வீர்கள்,இதைக்குறித்து நானே உங்க
ளுக்குச்சாட்சி.-உங்களுக்குச்சத்தியத்தைச்சொ யசு
ன்னபடியினாலே நான் உங்களுக்குச்சத்துருவா
னேனா.-அவர்கள் உங்களுக்கு வைராக்கியபட் யஎ
சத்தைக்காண்பிக்கிறார்கள்,ஆகிலும்நன்மைக்கெ
ன்றல்ல; அல்லாமலும் அவர்கள் தங்களுக்கு நீங்
கள் வைராக்கியபட்சத்தைக் காண்பிக்கும்பொ
ருட்டாய், என்னில் நின்று உங்களை நீக்க விரும்
புகிறார்கள்.—நான் உங்களிடத்திலிருக்கிறசமயத் யஅ
தில்மாத்திரமல்ல,எப்பொழுதும் நன்மைக்கென்
று வைராக்கியபட்சமாயிருப்பது நலம்.—ஆ, என் யகூ
சிறுபிள்ளைகளே, கிறிஸ்து உங்கள் உள்ளத்தில்
உருக்கொள்ளும்வரைக்கும், திரும்பவும் பிரசவ
வேதனைப்படுகிறேன்.—உங்களைக்குறித்துச் சந் உய
தேகப்படுகிறதினால்,நான் இப்பொழுதே உங்க
ளிடத்திலிருந்து மறுவிதமாய்ப் பேசவிரும்புகி
றேன்.—நியாயப்பிரமாணத்திற்குக் கீழ்ப்பட்டி உக

(உச) மத் ரு.யஎ. ரோ.ய.ச. கொலோ.உ.யஎ. எபி.கூ.கூ,ய. அப்.ய௩.௩கூ.(உசு)யோவா.க.யஉ. ரோ.அ.யச,யரு,யசு. க.யோவா.௩.க,உ. (உஎ) ரோ.சு.௩. ரோ.ய௩.யச. (உஅ) ரோ.ய.யஉ. க.கொரி.யஉ.ய௩. கொலோ.௩.யக. யோவா. ய.யசு. எபே.உ.யச,யரு,யசு.(உகூ)ஆதி.உக.ய,யஉ. ரோ.கூ.எ. எபி.யக.யஅ.ரோ.அ.யஎ. எபே.௩.ரு.—(௪.அதி.௩) அதி.உ.ச. கொலோ.உ.அ,உய. எபி.கூ.ய. (ச) அதி.சகூ.ய. தானி.கூ.உச. மாற்.க.யரு. எபே.க.கூ. மத்.ரு.யஎ. லூக். உ.உஎ. (ரு) மத்.உய.உஅ. எபே.க.அ. தீத்.உ.யச. எபே.கூ.யஉ. க.பேதுரு.க.யஅ,யகூ. யோவா.க.யஉ. எபே.க.ரு. யோவா.க.யச. ரோ.க.௩. பிலி.உ.எ. எபி.உ.யச. ஆதி.௩.யரு. ஏசா.எ.யச. மீகா.ரு.௩. மத்.க.உஉ. (சு) ரோ.ரு.ரு. (எ) ரோ.அ.யசு,யஎ. (அ) எபே.உ.யஉ.க. தெச.ச.ரு. ரோ.க.உரு. க.கொரி.யஉ.உ. எபே.உ.யக,யஉ. க.தெச.க. கூ. (கூ) க.கொரி.அ.௩. உ.தீமோ.உ.யகூ. அதி.௩.௩. கொலோ.உ.உய. ரோ.அ.௩. எபி.எ.யஅ. வச.௩. (ய) ரோ.யச. ரு. கொலோ.உ.யசு. (யக) அதி.உ.உ. க.தெச.௩.ரு. (யஉ) உ.கொரி.உ.ரு.(ய௩)க.கொரி.உ.௩. உ.கொரி.யக.௩ய. அதி.க.சு. (யச) உ.சாமு.யகூ.உஎ. மல்.உ.எ. சக.யஉ.அ.மத்.ய.சய. க.தெச.உ.யகூ.(யசு)அதி.உ.ரு,யச.(யஎ)ரோ. ய.உ. உ.கொரி.யக.உ. (யகூ) க.கொரி.ச.யரு. பிலே.ய. யாக்.க.யஅ.

ருக்கவிரும்புகிற நீங்கள், நியாயப்பிரமாணத்
தைச் சிந்திக்கவில்லையா; எனக்குச்சொல்லுங்
௨௨ கள்.—ஒருவன் அடிமையானவளிடத்திற் பிறந்
தவனும், மற்றொருவன் சுயாதீனமுள்ளவளிடத்
திற் பிறந்தவனுமாகிய இரண்டுபுத்திரர் ஆபிரகா
௨௩ முக்குண்டென்று எழுதியிருக்கின்றது.—அடி
மையானவளிடத்திற் பிறந்தவன் மாமிசத்தின்
படி பிறந்தான்; சுயாதீனமுள்ளவளிடத்திற் பி
றந்தவனோ வாக்குத்தத்தத்தின்படி பிறந்தான்.—
௨௪ இவைகள் ஞானார்த்தமுள்ளவைகள்: இந்தஇரண்
டு ஸ்திரிகளும் இரண்டு உடன்படிக்கைகளே
யாம்; சீனாய் மலையில் இருந்து தோன்றிய ஒன்று,
அடிமைத்தனத்துக்குச் சனிப்பிக்கின்றது, அது
௨௫ வே ஆகார்.—ஆகாரென்பது அரபியாவிலுள்ளசீ
னாய்மலை,அது இப்பொழுதிருக்கிறதும், தன் பிள்
ளைகளோடே அடிமைப்பட்டிருக்கிறதுமாகிய
௨௬ யெருஷலேமுக்கு ஒப்பாயிருக்கின்றது.—மே
லுள்ள யெருஷலேமோ சுயாதீனமுள்ளவள்,
௨௭ அவள் நம்மெல்லாருக்கும் மாதா.—"பிள்ளை
பெறாதமலடியே, சந்தோஷப்படு; பிரசவவேத
னைப்படாதவளே, கெம்பீரமாய்ப்பாடி முழக்க
மிடு: விவாகஞ்செய்த ஸ்திரியைப்பார்க்கிலும் அ
நாதஸ்திரிக்கு அதிகபிள்ளைகளுண்டு," என்றெ
௨௮ ழுதப்பட்டிருக்கின்றது.-இப்பொழுது சகோதர
ரே, நாம் ஈசாக்கைப்போல வாக்குத்தத்தத்தின்
௨௯ பிள்ளைகளாயிருக்கிறோம்.—ஆனாலும் அக்காலத்
தில் மாமிசத்தின்படி பிறந்தவன் ஆவியின்படி
பிறந்தவனைத் துன்பப்படுத்தினதுபோல, இப்
௩௰ பொழுதும் நடக்கின்றது.—எப்படியும் வேதம்
என்னத்தைச்சொல்லுகின்றது; "இந்த அடிமை
யாகியஇவளையும்,இவள்மகனையும் புறம்பே தள்
ளிவிடு: இந்த அடிமையின் மகன் சுயாதீனமான
ஸ்திரியிடத்திற்பிறந்தபுத்திரனோடேஉடன்சுதந்
௩௧ தரனாயிருப்பது தகாது," என்கின்றது.—சகோதர
ரே, இப்படி நாம் அடிமையானவளுக்கல்ல, சு
யாதீனமானவளுக்கே பிள்ளைகளாயிருக்கிறோம்.

## ௫. அதிகாரம்.

௧. விருத்தசேதனத்தினால் இரட்சிப்புத் தேடுவதை விலக்கல். ஒருவரோடொருவர் அன்பாயிருப்பது கடமையென்று சொல்லல்: ௰௬. மாமிசத்தின் கிரியைகளையும், ஆவியின் கிரியைகளையுந் தெரிவித்தல்.

ஆதலால் கிறிஸ்து நமக்கேற்படுத்திய சுயாதீ
னமான நிலையில் ஸ்திரப்பட்டு நில்லுங்கள், அ
டிமைத்தனத்தின் நுகத்தில் திரும்பவும் பூட்டப்
௨ படாதிருப்பீர்களாக.—கேளுங்கள், நீங்கள் வி
ருத்தசேதனம் பண்ணிக்கொண்டால் கிறிஸ்
து உங்களுக்குப் பிரயோசனமாயிராரென்று, ப
வுலாகிய நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—
விருத்தசேதனம்பண்ணிக்கொள்ளுகிறவன் எவ ௩
னும்,நியாயப்பிரமாணமுழுவதையும்நிறைவேற்
றக்கடனாளியாயிருக்கிறானென்று திரும்பவுஞ்
சாட்சியிடுகிறேன்.—நியாயப்பிரமாணத்தினாலே ௪
நீதிமான்களாகவிரும்புகிற நீங்கள், கிறிஸ்து
வை விட்டுப்பிரிந்து, கிருபையினின்று விழுந்
தீர்கள்.—ஆவியைக்கொண்டு, விசுவாசத்தினா ௫
லே நீதி கிடைக்குமென்று நாங்கள் நம்பிக்கை
யோடே காத்திருக்கிறோம்.—யேசுக்கிறிஸ்து ௬
விளிடத்தில் விருத்தசேதனமும், விருத்தசே
தனமில்லாமையும் ஒன்றுக்கும் உதவாது; அன்
பினாற் கிரியைசெய்கிற விசுவாசமே உதவும்.-
நன்றாய் ஓடினீர்களே; நீங்கள் சத்தியத்துக்குக் ௭
கீழ்ப்படியாதிருக்கும்படி உங்களைத் தடுத்தவன்
யாவன்.—இந்தப்போதனை உங்களை அழைத்தவ ௮
னால் உண்டாகவில்லை.—சிறிது புளிப்புள்ளமாப் ௯
பிசைந்தமா முழுவதையும் உப்பப்பண்ணும்.—
நீங்கள் வேறொன்றையுஞ் சிந்திக்கமாட்டீர்க ௰
ளென்று நான் உங்களைக்குறித்துக் கர்த்தாவி
னால் நம்பிக்கையாயிருக்கிறேன்: உங்களைக் க
லக்குகிறவன் எப்படிப்பட்டவனாயிருந்தாலும்
தனக்கேற்ற தண்டனையைப் பெறுவானே.—ச ௰௧
கோதரரே, இதுவரைக்கும் நான் விருத்தசேத
னத்தைப்பிரசங்கித்தேனேயாகில்,இன்னுந்துன்
பப்படவேண்டியதென்ன, அப்படிச் செய்தே
னாகில் சிலுவையின் இடறல் ஒழிந்துபோம்.—
உங்களைக்கலங்கப்பண்ணுகிறவர்கள் சேதிக்கப் ௰௨
படுவதுநல்லது.—சகோதரரே,நீங்கள்சுயாதீனமா ௰௩
யிருக்கும்படிஅழைக்கப்பட்டீர்கள்;அந்தச்சுயா
தீனத்தை மாமிசஇச்சைக்காக அனுசரிக்காமல்,
அன்பினால் ஒருவருக்கொருவர் ஊழியஞ்செய்
யுங்கள்.—"உன்னைப்போலப் பிறனையும் நேசிப் ௰௪
பாயாக,"என்னும் இந்த ஒரேவாக்கையும் நிறை
வேற்றினால், நியாயப்பிரமாணமுழுவதும் நிறை
வேறும்.—நீங்கள் ஒருவரை ஒருவர் கடித்துப்பட் ௰௫
சித்துவருகிறபடியினால், ஒருவரால் ஒருவர் நா
சப்படாதபடி எச்சரிக்கையாயிருங்கள்.—பின் ௰௬
னும் நான் இதைச்சொல்லுகிறேன், நீங்கள் ஆ
விக்கிசைய நடந்துகொள்ளுங்கள், அபபொழு
து மாமிச இச்சையைத் திருத்திப்படுத்தமாட்டீர்
கள்.—மாமிசம் ஆவிக்குவிரோதமாகவும், ஆவி ௰௭
மாமிசத்துக்கு விரோதமாகவும் இச்சிக்கும்: இ
வைகள் ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பதி

(௨௨) ஆதி.௰௯.௰௫. ஆதி.௨௧.௨.(௨௩)ரோ.௯.௭,௮. ஆதி.௰௮.௰,௰௪. எபி.௰௧.௰௧. (௨௪) உபா.௩௩.௨. (௨௬) ஏசா.௨.௨.எபி.௰௨.௨௨. வெளி.௩.௰௨.(௨௭)ஏசா.௫௪.௧. (௨௮) அப்.௩.௨௫. ரோ.௯.௮. (௨௯) ஆதி.௨௧.௯. அதி.௫.௰௧. (௩௰) அதி.௩.௮,௨௨.ஆதி.௨௧.௰,௰௨. யோவா.௮.௩௫. (௩௧) யோவா.௮.௩௬.—(௫.அதி.௧.) யோவா.௮.௩௨. ரோ.௬.௰௮. ௧.பேதுரு.௨.௰௬. அப்.௰௫.௰. அதி.௨.௪. (௨) அப்.௰௫.௧. (௩) அதி.௩.௰. (௪) ரோ.௯.௩௧,௩௨. எபி.௰௨.௰௫. (௫) ரோ.௮.௨௪,௨௫. ௨.தீமோ.௪.௮. (௬) ௧.கொரி.௭.௰௯. அதி.௩.௨௮. கொலோ.௩.௰௧. ௧.தெச.௧.௨. யாக்.௨.௰௮,௨௰,௨௨.(௭)௧.கொரி.௯.௨௪. அதி.௩.௧. (௮) அதி.௧.௬. (௯) ௧.கொரி.௫.௬. (௰) ௨.கொரி.௨.௩. அதி.௧.௭. ௨.கொரி.௰.௬. (௰௧) அதி.௬.௰௨. ௧.கொரி.௰௫.௩௰. ௧.கொரி.௧.௨௩. (௰௨) யோசு.௭.௨௫. ௧.கொரி.௫.௰௩. அப்.௰௫.௧,௨,௨௪. (௰௩) ௧.கொரி.௮.௯. ௧.பேதுரு.௨.௰௬. ௨.பேதுரு.௨.௰௯. யூதா.௪. ௧.கொரி.௯.௰௯. (௰௪) மத்.௭.௰௨. யாக்.௨.௮. லேவி.௰௯.௰௮. மத்.௨௨.௩௯. ரோ.௰௩.௮,௯. (௰௬) ரோ.௬.௰௨. ௧.பேதுரு.௨.௰௧. (௰௭) ரோ.௭.௰௫,௰௯,௨௩.

ஞல்,நீங்கள் செய்யவேண்டுமென்றிருக்கிறவை
யஅ களைச் செய்யமாட்டீர்கள்.–ஆவியினால் நடத்தப்
படுவீர்களானால், நியாயப்பிரமாணத்துக்குக் கீ
யகூ ழானவர்களல்ல.—விபசாரம், வேசைமார்க்கம்,
உய அசுத்தம், காமவிகாரம்,–விக்கிரகாராதனை, பில்
லிசூனியம், பகை, விவாதம், வைராக்கியங்கள்,
குரோதம், கலகம், பேதகங்கள், அவமார்க்கங்
உக கள்,—பொறாமைகள், கொலைகள், வெறிகள்,
பேருணவு முதலியவைகளே மாமிசத்தின் கிரி
யைகளென்று பிரத்தியட்சமாய் விளங்கும்; இவ்
வித கிரியைகளைச் செய்பவர்கள் தேவனுடை
ய இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லையென்று
முன்னே நான் சொல்லியபிரகாரம் இப்பொழு
உஉ தும் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—ஆவியின்
கனியோ அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடி
யபொறுமை, தயை, நற்குணம், உண்மை, தாழ்ந்
தசிந்தை, இச்சையடக்கம்என்னும்இவைகளே.-
உரு இப்படிப்பட்டவைகளுக்கு விரோதமான பிர
உச மாணம் ஒன்றுமில்லை.—கிறிஸ்துவைச் சார்ந்
தவர்கள் தங்கள் சரீரத்தை அதின்பலவிதஆசைக
ளோடும்,இச்சைகளோடுஞ்சிலுவையில் அறைந்
உடு துவிட்டார்கள்.–நாம் ஆவியைக்கொண்டு சீவிக்
கிறபடியால்,ஆவிக்கிசைய நடக்கக்கடவோம்.–
உகூ வீண்புகழ்ச்சியை விரும்பாமலும்,ஒருவருக்கொ
ருவர் கோபமூட்டாமலும், ஒருவர்மேல் ஒருவர்
பொறாமைகொள்ளாமலும் இருப்போமாக.

## சு. அதிகாரம்.

க. குற்றஞ்செய்த சகோதரரை மன்னிப்பது அவசியமெனக்காட்டல்: சு. போதகரை ஆதரிப்பதுஞ் சற்கிரியை செய்வதுங் கடமையென்று சொல்லல்: யக. விருத்தசேதனத்தை மதிக்காமல், பவுல் கிறிஸ்துவையே நன்குமதித்து, அவரைக்குறித்து மேன்மைபாராட்டல்.

சகோதரரே,ஒருவன் குற்றத்தில்அகப்பட்டால்,
ஆவியைப்பெற்றிருக்கிற நீங்கள் தாழ்ந்தசிந்தை
யோடே அவனைச்சீர்பொருந்தப்பண்ணுங்கள்;
நீயுஞ்சோதிக்கப்படாதபடி உன்னையே காத்துக்
உ கொள்.–ஒருவனுடைய பாரத்தை ஒருவன் சுமந்
து, இப்படிக் கிறிஸ்துவின் நியாயப்பிரமா
ங ணத்தை நிறைவேற்றுங்கள்.—ஒன்றுமில்லாத
வன்தன்னைப்பெரியவனென்றெண்ணினால்தன்
ச னைத்தான் வஞ்சிப்பானே.–அவனவன் தன்தன்
கிரியையைச்சோதித்துப்பார்க்கக்கடவன், அப்
பொழுது பிறனாலேயல்ல, தன்னாலே சந்தோ
டு ஷப்படுவான்.–அவனவன் தன்தன் பாரத்தைச்
சுமப்பான்.–வேதஉபதேசத்தைப் பெறுகிறவன் சு
உபதேசிக்கிறவனுக்குச் சகல நன்மைகளிலும்
பங்குகொடுக்கக்கடவன்.—நீங்கள் வஞ்சிக்கப் எ
படாதிருப்பீர்களாக; தேவன் தம்மைப்பரிகா
சம் பண்ணவொட்டார்: மனுஷன் விதைக்கிற
தெதுவோ, அதையே அறுப்பான்.–தன் மாமிசத் அ
துக்கென்று விதைக்கிறவன் மாமிசத்தினின்றுஅ
ழிவை அறுப்பான்; ஆவிக்கென்று விதைக்கிற
வன் ஆவியினாலே நித்தியசீவனை அறுப்பான்.–
நற்கிரியையைச் செய்வதில் இளைப்படையாம கூ
லிருப்போமாக: நாம் தளர்ந்துபோகாதிருந்தால்
தகுந்தகாலத்தில் அறுப்போம்.—ஆதலால் நமக் ய
குக் கிடைக்குஞ் சமயத்துக்கிசைய யாவருக்
கும், விசேஷமாக விசுவாசிகளாகிய வீட்டா
ருக்கும் நன்மைசெய்யக்கடவோம்.—என் சுய யக
கையினால் உங்களுக்கு நான் இவ்வளவு ஒருபெ
ரியபத்திரத்தை எழுதினதை நீங்கள் பார்த்திருக்
கிறீர்கள்.–மாமிசத்தின்படி நற்கீர்த்தியைப்பெற யஉ
விரும்புகிறவர்கள் கிறிஸ்துவினுடைய சிலு
வையினிமித்தந் துன்பப்படாதபடிமாத்திரமே,
உங்களை விருத்தசேதனம்பண்ணுவிக்க மிகுதி
யும் பிரயத்தினம்பண்ணுகிறார்கள்.—விருத்தசே யங
தனம்பெற்றஅவர்களும்நியாயப்பிரமாணத்தைக்
கைக்கொள்ளுகிறதில்லை; ஆனாலும் அவர்கள்
உங்கள் சரீரத்தைக்குறித்து மேன்மைபாராட்டும்
படி, நீங்கள் விருத்தசேதனம்பண்ணிக்கொள்ள
வேண்டுமென்று விரும்புகிறார்கள்.–நானோ, நம் யச
முடைய கர்த்தராயிருக்கிற யேசுக்கிறி
ஸ்துவின் சிலுவையைக்குறித்தேயன்றி, வே
றொன்றையுங் குறித்து மேன்மைபாராட்டாதி
ருப்பேனாக, அவரால் உலகம் எனக்குச் சிலு
வையில் அறையுண்டிருக்கின்றது, நானும் உ
லகத்திற்கு அப்படியேயிருக்கிறேன்.–கி யடு
றிஸ்துயேசுவினிடத்தில் விருத்தசேதன
மாவது, விருத்தசேதனமில்லாமையாவது உதவா
து, புதுச்சிருஷ்டியே பிரதானம்.–இந்தப்பிரமா யசு
ணத்தின்படி நடந்துவருகிறவர்களெவர்களோ,
அவர்களுக்கும், தேவனுடைய இஸ்ரவேல
ருக்குஞ் சமாதானமும், இரக்கமுமுண்டாயிருக்
கக்கடவன.–இதுமுதல் ஒருவனும்என்னைவருத் யஎ
தப்படுத்தவேண்டாம்: நான்என்சரீரத்தில் கர்த்
தராகியயேசுவினுடையஅடையாளங்களை
த் தரித்திருக்கிறேன்.–சகோதரரே,நம்முடையக யஅ
ர்த்தராகியயேசுக்கிறிஸ்துவின்கிருபை
உங்கள்ஆவியுடன் இருக்கக்கடவது. ஆமென்.

(யஅ)ரோ.சு.யச.(யகூ)க.கொரி.ங.ங. எபே.டு.ங. கொலோ.ங.டு. யாக்.ங.யச,யடு.(உக)க.கொரி.சு.க.எபே.டு டு. கொலோ.ங.சு.வெளி.உஉ.யடு.(உஉ)க.யோவா.யடு.உ.எபே.டு.க. கொலோ.ங.யஉ. யாக்.ங.யஎ.ரோ.யடு.யச. க. கொரி.யங.எ.(உங)க.தீமோ.க.க.(உச)ரோ.சு.சு.க.பேதுரு.உ.யக.(உடு)ரோ.அ.ச,டு.(உசு)பிலி.உ.ங.—(சு.அதி. க.)ரோ.யச.க.எபி.யஉ.யங.யாக்.டு.யக.க.கொரி.உ.யடு.க.கொரி.ச.உக.உ.தெச.ங.யடு.உ.தீமோ.உ.உடு.க.கொரி. எ.டு.(உ)ரோ.யடு.க.க.தெச.டு.யச.யோவா.யங.யச,யடு,ஙச.யாக்.உ.அ.க.யோவா.ச.உக.(ங)ரோ.யஉ.ங.க.கொரி. அ.உ.உ.கொரி.ங.டு.(ச)க.கொரி.யக.உஅ.உ.கொரி.யங.டு.லூக்.யஅ.யக(டு)ரோ.உ.சு.க.கொரி.ங.அ.(சு)ரோ.யடு. உஎ.க.கொரி.கூ.யக,யச.(எ)க.கொரி.சு.கூ.யோபு.யங.கூ.லூக்.யசு.உடு.ரோ.உ.சு.உ.கொரி.கூ.கூ.(அ)யோபு.ச.அ. நீதி.யக.யஅ.ஒசி.அ.எ.ரோ.அ.யங.யாக்.ங.யஅ.(கூ)க.கொரி.யடு.டுஅ. உ.தெச.ங.யங.மத்.உச.யங.எபி.ங.சு,யச.வெளி உ.ய.(ய)யோவா.கூ.ச.க.தெச.டு,யடு.க.தீமோ.சு.யஅ.தீத்.ங.அ.எபே.உ.யகூ.எபி.ங.சு.(யஉ)அதி.உ.ச,யச.பிலி. ங.யஅ.அதி.டு.யக.(யச)பிலி.ங.ங,எ,அ.ரோ.கூ.கூ.(யடு)க.கொரி.எ.யகூ.கொலோ.ங.யக.உ.கொரி.டு.யஎ.(யசு)சங். ஙஉடு.டு.பிலி.ங.யசு.ரோ.உ.உக.பிலி.ங.ங.(யஎ)உ.கொரி.க.டு.கொலோ.க.உச.(யஅ)உ.தீமோ.ச.உஉ.பிலே.உடு.

## அப்போஸ்தலனாகிய பவுல்

# எபேசியருக்கெழுதிய நிருபம்.

### ௧. அதிகாரம்.

௧. வாழ்த்துதல்: ௩. தேவன் விசுவாசிகளைத்தெரிந்துகொள்வதைக்குறித்தல்: ௰௫. இந்தப்பரம இரகசியத்தை உணரும்படிக்குத் தேவனிடத்தில் ஞானத்தை வேண்டல்.

தேவனுடைய சித்தத்தின்படியே யேசுக்கிறி
ஸ்துவினுடைய அப்போஸ்தலனாகிய பவுல்,
எபேசிலே கிறிஸ்துயேசுவுக்குள் விசுவாசி
களாயிருக்கிற பரிசுத்தர்களுக்கெழுதிக்கொள்வ
௨ து:-நம்முடைய பிதாவாகிய தேவனாலும், கர்
த்தராகிய யேசுக்கிறிஸ்துவினாலும் உங்
களுக்குக் கிருபையும், சமாதானமுமுண்டாகக்
௩ கடவன.—யேசுக்கிறிஸ்து மூலமாய்ப் பர
மஸ்தானங்களில் பலவித ஞானவரங்களால் நம்
மை ஆசீர்வதித்த தேவனும், நமது கர்த்த
ரான யேசுக்கிறிஸ்துவின் பிதாவுமாகியஅ
௪ வருக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக:—அவர் த
மக்குமுன்பாக நாம் பரிசுத்தமுள்ளவர்களும்,
அன்பில் மாசற்றவர்களுமாகும்பொருட்டு, உல
கத்தோற்றத்துக்குமுன் யேசுக்கிறிஸ்து மூல
௫ மாய் நம்மைத்தெரிந்துகொண்டபடியே,—அன்
பராயிருக்கிறவருக்குள் தாம் நம்மேல்வைத்தரு
ளின தமது கிருபையின் மகிமைக்குப் புகழ்ச்சி
௬ யாக,–நம்மைத் தமது தயையுள்ள சித்தத்தின்படி
யேசுக்கிறிஸ்து மூலமாகத் தமக்குப் புத்திரசு
௭ விகாரத்திற்கென்று முன்குறித்திருக்கிறார்.-அவர்
சகலவித ஞானத்தோடும்,விவேகத்தோடும் நமக்
குப்பெருகும்படிசெய்தகிருபையின் ஐசுவரியத்
௮ தின்படியே—இவருடைய இரத்தத்தினால் நமக்
குப்பாவமன்னிப்பாகியமீட்புஅவருக்குள்உண்
௯ டாயிருக்கின்றது.–காலங்கள் பூரணமாகும்பொ
ழுது உண்டாகும் நியமப்படி, அவர் வானங்
களிலும் பூமியிலுமுள்ளவைகளெல்லாவற்றை
யுந் தலையாகிய கிறிஸ்துவின் கீழாகச் சேர்த்
௰ துக்கொள்ளுவாரென்று,—தமதுள்ளத்தில் நிய
மித்திருந்த பூரணசித்தத்தின் இரகசியத்தை எங்க
ளுக்குத் தெரிவித்தார்.—கிறிஸ்துவின்மேல் ௰௧
முன் நம்பிக்கைவைத்த நாங்கள் அவருடைய
மகிமைக்குப் புகழ்ச்சியாயிருக்கும்பொருட்டு,–
தமது சித்தத்தின் ஆலோசனைக்கேற்க எல்லாவற் ௰௨
றையும் நடப்பிக்கிற அவருடைய தீர்மானத்
தின்படி முன் குறிக்கப்பட்டு, அவர் மூலமாய்ச்
சுதந்தரத்தைப்பெற்றோம்.—நீங்களும் பெறும்ப ௰௩
டி உங்கள் இரட்சிப்புக்குரிய சத்தியவாக்காகிய
சுவிசேஷத்தைக்கேட்டு, அவர்மேல் விசுவாசம்
வைத்து,வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட பரிசுத்த
ஆவியானவராலே முத்திரையிடப்பட்டீர்கள்.–
அன்றியும் அவருடைய மகிமையின் புகழ்ச்சிக் ௰௪
கென்று கிரயத்தினால் கொள்ளப்பட்டவர்கள்
மீட்புப்பெறும்வரைக்கும், இவரே நம்முடைய
சுதந்தரத்திற்கு அச்சாரமாயிருக்கிறார்.–ஆனபடி ௰௫
யினாலே கர்த்தராகிய யேசுவின்மேலுள்
ள உங்கள் விசுவாசத்தையும், எல்லாப்பரிசுத்த
வான்கள்மேலுமுள்ள உங்கள் அன்பையும் நான்
கேள்விப்பட்டபின்பு,—இடைவிடாமல் உங் ௰௬
கள் நிமித்தம் ஸ்தோத்திரம்பண்ணி, என்பிரார்த்
தனைகளில்உங்களைநினைந்து,-நம்முடைய கர்த் ௰௭
தராகிய யேசுக்கிறிஸ்துவின் தேவனும்
மகிமையுள்ள பிதாவுமாயிருக்கிறவர், அவரை அ
றிந்துகொள்வதற்கான ஞானத்தையும் வெளிப்ப
டுத்தலையும் அளிக்கிறஆவியை உங்களுக்கு அரு
ளவேண்டுமென்றும்,-நம்மைஅழைத்ததினால்நம ௰௮
க்குண்டாகும் நம்பிக்கையின்னதென்றும், தமது
சுதந்தரத்திற்பரிசுத்தவான்களுக்கருளும் மகிமை
பொருந்தியசெல்வமின்னதென்றும்,–தாம் கிறி ௰௯
ஸ்துவை மரித்தோரினின்றெழுப்பி,எல்லா ஆதி
பத்தியத்திற்கும்,அதிகாரத்திற்கும்,வல்லமைக்கு
ம், கர்த்தத்துவத்திற்கும்,இம்மைமறுமைகளிலும்
பேர்பெற்றிருக்கும் எந்தெந்த நாமத்திற்கும் மே
லாய் அவருக்குக் கர்த்தத்துவத்தை அருளி,—பர ௨௰
மண்டலத்தில் தம்முடையவலப்பாரிசத்தில்வீற்
றிருக்கும்படிசெய்து,—எல்லாருக்குள்ளும் எல் ௨௰௧

---

(௧. அதி. ௧.) ௨.கொரி.௧.௧. ரோ.௧.௨. ௧.கொரி.௪.௰௭. (௨) கலா.௧.௩. (௩) ௧.பேதுரு.௧.௩. (௪) ரோ.௮.௨௮. ௨.தெச.௨.௰௩. ௨.தீமோ.௧.௯. யாக்.௨.௫. ௧.பேதுரு.௧.௧,௨௰. லூக்.௧.௭௩. கொலோ.௧.௨௨. தீத்.௨.௰௩.(௫)ரோ.௩.௨௪. மத்.௩.௰௭. யோவா.௩.௩௫. (௬) ரோ.௮.௨௯,௩௰. யோவா.௧.௰௨. ரோ.௮.௰௫. ௨.கொரி.௬.௰௮. கலா.௪.௫. ௧.யோவா.௩.௧. மத்.௰௧.௨௬. லூக்.௰௨.௩௨. ௧.கொரி.௧.௨௧. (௮) அப்.௨௰.௨௮. ரோ.௩.௨௪. கொலோ.௧.௰௪. எபி.௯.௰௨. ௧.பேதுரு.௧.௰௮,௰௯. வெளி.௫.௯. ரோ.௨.௪. பிலி.௪.௰௯. (௯) கலா.௪.௪. எபி.௧.௨. ௧.பேதுரு.௧.௨௰. ௧.கொரி.௩.௨௨,௨௩. அதி.௨.௰௪. பிலி.௨.௯. கொலோ.௧.௨௰. (௰) ரோ.௰௬.௨௫. கொலோ.௧.௨௬. அதி.௩.௰. ௨.தீமோ.௧.௯. (௰௧) ௨.தெச.௨.௰௩. யாக்.௧.௰௮. (௰௨) அப்.௨௰.௩௨. ரோ.௮.௰௭. கொலோ.௧.௰௨. தீத்.௩.௭. யாத்.௨.௫. ௧.பேதுரு.௧.௪. எசா.௪௬.௰,௰௧.(௰௩)யோவா.௧.௰௬. ௨.கொரி.௬.௭. ௨.கொரி.௧.௨௨.(௰௪)௨.கொரி.௧.௨௨. லூக்.௨௧.௨௮. ரோ.௮.௨௩. அப்.௨௰.௨௮. ௧.பேதுரு.௨.௯. (௰௫) கொலோ.௧.௩. பிலே.௪.(௰௬)ரோ.௧.௰௧. ௧.தெச.௧.௩. (௰௭) யோவா.௨௰.௰௭. கொலோ.௧.௯. கொலோ.௨.௩. (௰௮) பிலி.௨.௯,௰௧. எபி.௧.௪. ரோ.௮.௩௮. கொலோ.௧.௰௬. அப்.௨.௨௪,௩௩. (௨௰) சங்.௱௰.௧. அப்.௭.௫௫,௫௬. எபி.௧.௩. (௨௧) கொலோ.௧.௰௮. எபி.௨.௭. ரோ.௰௨.௫. ௧.கொரி.௰௨.௰௨,௨௭. அதி.௪.௰௨. அதி.௫.௨௩,௩௰. கொலோ.௧.௰௮,௨௪.கொலோ.௨.௯. ௧.கொரி.௰௨.௬. அதி.௪.௰. கொலோ.௩.௰௧.

லாவற்றையும் பூரணப்படுத்துகிற அவருடையபூ
ரணசபையாகிய அந்தச்சரீரத்திற்குத் தலையான
௨௨ முதன்மையை அவருக்கருளி,—எல்லாவற்றை
யும் அவருடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்திய
௨௩ காலத்தில்,—கிறிஸ்துவில் வெளிப்படுத்தின
தமது பராக்கிரமசத்துவத்தின் வல்லமைப்படி
யே, விசுவாசிகளாகிய நம்மிடத்தில் அவர் காட்
டுந் தம்முடைய பராக்கிரமத்தின் மகத்துவமான
வல்லமையின்னதென்றும் நீங்கள் அறியும்படி,உ
ங்கள் ஞானக்கண்களைத் தெளிவிக்கவேண்டுமெ
ன்றும் நான் வேண்டுதல்பண்ணுகிறேன்.

## ௨. அதிகாரம்.

௧. விசுவாசிகளின் சென்மசுபாவத்தையும், கிருபையினால்அவர்களுடைய தன்மையையுமின்னதென்றுகாட்டல்: ௰௧. கிறிஸ்துவினால்வரும் இரட்சிப்பை விவரித்தல்: ௰௨.விசுவாசிகளைப் பரிசுத்த ஆலயத்துக்கு ஒப்பிடல்.

கீழ்ப்படியாத சந்ததியாரில் இப்பொழுது ஆளு
கைசெய்து வருகிறதும், ஆகாயமண்டலத்திற் ப
ராக்கிரமம்பெற்ற பிரபுவுமாகிய அந்த ஆவிக்கி
௨ சைய,-முற்காலத்தில் இப்பிரபஞ்சவழக்கத்தின்
படி நடந்ததினால், அக்கிரமங்களிலும் பாவங்க
ளிலும் மரித்தவர்களாகிய உங்களை அவர் உ
௩ யிர்ப்பித்தார்.—அவர்களோடே நாங்களெல்
லாரும், முற்காலத்தில் எங்கள் மாமிசஇச்சைக
ளுக்கேற்க நடந்து, மாமிசமுஞ் சிந்தையும் இச்
சிக்கிறவைகளை நிறைவேற்றி, சுபாவத்தின்படி
மற்றவர்களைப்போலக்கோபாக்கினைக்குள்ளான
௪ வர்களாயிருந்தோம்.–இவ்விதமாய் நாம் அக்கிர
மங்களில் மரித்தவர்களாயிருந்தும், இரக்கத்தில்
ஐசுவரியமுள்ள தேவன் தாம் நம்மேல்வைத்த
௫ தமது மிகுந்த அன்பினால்,-கிறிஸ்துவோடே
நம்மை உயிர்ப்பித்தார், கிருபையினாலே நீங்கள்
௬ இரட்சிக்கப்பட்டீர்கள்.–கிறிஸ்துயேசுவுக்
குள் தாம் நம்மேல்வைத்த அனுக்கிரகமாகிய தம
து கிருபையின் மிகுந்த ஐசுவரியத்தை வருங்கா
௭ லங்களில் வெளிப்படுத்தும்பொருட்டு,–நம்மை
யுங் கிறிஸ்துயேசுவுடனே எழுப்பி, பர
மண்டலங்களிலுங் கூட இருக்கச்செய்தார்.—
௮ நீங்கள் கிருபையினால் விசுவாசத்தைக்கொண்
டு இரட்சிக்கப்பட்டீர்கள்; இது உங்களாலுண்
௯ டானதல்ல, தேவனுடைய ஈவு.—ஒருவனுகி
லும் பெருமைபாராட்டும்படி, இது கிரியைகளி
னாலுண்டாகவில்லை.-நாம்நற்கிரியைகளைச்செய் ௰
வதற்குக் கிறிஸ்துயேசுவினாற் சிருஷ்டிக்
கப்பட்டு, தேவனுடைய செய்கையாயிருக்கி
றோம், அவைகளில் நடக்கும்படி அவர் முன்
னாக ஆயத்தம்பண்ணியிருக்கிறார்.—ஆகையால் ௰௧
முற்காலத்திற் சரீரத்தின்படி அந்நியராயிருந்து,
சரீரத்திலே கையினாற்செய்யப்படுகிற விருத்த
சேதனம்பெற்றவர்களால் விருத்தசேதனமில்லா
தவர்களென்று எண்ணப்பட்ட நீங்கள்,–அக்கா ௰௨
லத்தில் கிறிஸ்துவைச் சேராதவர்களும், இஸ்
ரவேலரின் காணியாட்சிக்குப் புறம்பானவர்க
ளும், வாக்குத்தத்தத்தின் உடன்படிக்கைகளுக்
கு அந்நியரும், நம்பிக்கைஇல்லாதவர்களும்,இவ்
வுலகத்திலே தேவனற்றவர்களுமாயிருந்தீர்க
ளென்பதை நினைத்துக்கொள்ளுங்கள்.-இப்பொ ௰௩
ழுது கிறிஸ்துயேசுவுக்குள் இருக்கிற நீங்
கள், முன்னே தூரமாயிருந்தும், கிறிஸ்துவின்
இரத்தத்தினாலே சமீபமானீர்கள்.–அவரே நம்மு ௰௪
டைய சமாதான காரணராகி, இருபட்சத்தாரை
யும் ஒருமைப்படுத்தி, பிரிவுபடுத்திய இடைச்சு
வரை இடித்து,—கிரியாங்கவிதியினாலுண்டான ௰௫
பகையைத் தமது சரீரத்தினால் ஒழியப்பண்ணி,
இப்படிச்சமாதானத்தைச்செய்ததினால்,இருபட்
சத்தாரையுந் தமக்குள் ஒரு புதியமனுஷனாகச்சி
ருஷ்டிசெய்வதற்கு,—சிலுவையினாற் பகையை ௰௬
நாசப்படுத்தி, தேவனுடன் இருபட்சத்தாரை
யும் ஒரே சரீரமாக ஒப்புரவாக்கினார்.—தூரத்தி ௰௭
லிருந்த உங்களிடத்திலும், சமீபத்திலுள்ள அவர்
களிடத்திலும் வந்து, சமாதானத்தைச்சுவிசேஷ
மாய்ப்பிரசித்தப்படுத்தினார்.—இவ்விதமாக இரு ௰௮
பட்சத்தாராகிய நாம்,அவர் மூலமாய் ஒரே ஆவி
யினாற் பிதாவினிடத்திற் செல்லும் வழியை அ
டைந்தோம்.—ஆதலால் நீங்கள் இனி அந்நிய ௰௯
ரும், பரதேசிகளுமாயிராமல், பரிசுத்தவான்க
ளோடே ஒரே நகரத்தாரும், தேவனுக்குரிய
வீட்டாருமானீர்கள்.–அப்போஸ்தலரும், தீர்க்க ௨௰
தரிசிகளுமானவர்களின் அஸ்திபாரத்திலே கட்
டப்பட்டீர்கள், அதற்கு யேசுக்கிறிஸ்துத்தா
மே கோடிக்கல்.–அவர்மேல் மாளிகைமுழுவது ௨௧
ம்இசைவாய்இணைக்கப்பட்டு, கர்த்தருக்குள்
பரிசுத்தஆலயமாக எழும்புகின்றது:–அவர்மேல் ௨௨

---

(௨௨) சங்.௮.௬. மத்.௨௮.௰௮. ௧.கொரி.௰௫.௨௭. எபி.௨.௮.(௨௩)அப்.௨௬.௰௮. கொலோ.௧.௨௧.—(௨.அதி.௧.) அதி.௬.௰௨. அதி.௫.௬. கொலோ.௩.௬. (௨) யோவா.௫.௨௪. கொலோ.௨.௰௩. வச.௪. அதி.௪.௰௮. ௧.கொரி.௧. ௰௧. கொலோ.௧.௨௧. ௧.யோவா.௫.௰௯. (௩) தீத்.௩.௩. ௧.பேதுரு.௪.௩. கலா.௫.௰௬. சங்.௫௧.௫. ரோ.௫.௰௨,௰௪. (௪) ரோ.௰.௰௨. ரோ.௫.௬.௮,௰. (௫) ரோ.௬.௪,௫. கொலோ.௨.௰௨,௰௩. தீத்.௩.௫. (௬) தீத்.௩.௪. (௭) அதி.௧.௨௰. (௮) ரோ.௩.௨௪. ௨.தீமோ.௧.௯. ரோ.௪.௰௬. மத்.௰௬.௰௭. யோவா.௬.௪௪,௬௫. பிலி.௧.௨௯. (௯) ரோ.௩.௨௰,௨௭, ௨௮. ௧.கொரி.௧.௨௯,௩௰,௩௧. ௨.தீமோ.௧.௯. தீத்.௩.௫. (௰) உபா.௩௨.௬. சங்.௱.௩. ஏசா.௰௯.௨௫. யோவா.௩.௩, ௫. ௨.கொரி.௫.௫,௰௭. தீத்.௨.௰௪. அதி.௧.௪.(௰௧)௧.கொரி.௰௨.௨. கொலோ.௧.௨௧. ரோ.௨.௨௮,௨௯. கொலோ. ௨.௰௧. (௰௨) கொலோ.௧.௨௧. யோவா.௰.௰௬. ரோ.௯.௪,௮. ௧.தெச.௪.௰௩. கலா.௪.௮. ௧.தெச.௪.௫. (௰௩) கலா. ௩.௨௮. அப்.௨.௩௯. (௰௪) மீகா.௫.௫. யோவா.௰௬.௩௩. அப்.௰.௩௬. ரோ.௫.௧. கொலோ.௧.௨௰. யோவா.௰.௰௬. கலா.௩.௨௮. (௰௫) கொலோ.௨.௰௪,௨௰. கொலோ.௧.௨௨. ௨.கொரி.௫.௰௭. கலா.௬.௰௫. (௰௬) கொலோ.௧.௨௰, ௨௧,௨௨. ரோ.௬.௬. கலா.௨.௰௪. (௰௭) ஏசா.௫௭.௰௯. சக.௯.௰. அப்.௨.௩௯. சங்.௱௪௮.௰௪. (௰௮) யோவா.௰.௯. ரோ.௫.௨. எபி.௪.௰௬. ௧.பேதுரு.௩.௰௮. ௧.கொரி.௰௨.௰௩. (௰௯) பிலி.௩.௨௰. எபி.௰௨.௨௨,௨௩. கலா.௬.௰.(௨௰) ௧.கொரி.௩.௯,௰. ௧.பேதுரு.௨.௪,௫. மத்.௰௬.௰௮. ௧.கொரி.௰௨.௨௮. சங்.௱௰௮.௨௨. ஏசா.௨௮.௰௬. (௨௧) ௧.கொரி.௩.௰௭. ௨.கொரி.௬.௰௬. (௨௨) ௧.பேதுரு.௨.௫.

நீங்களும் ஆவியினால் தேவனுக்கு வாசஸ்தல
மாவதற்குக் கூட்டிக்கட்டப்பட்டிருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

௧. அந்நியதேசத்தாரிடத்திற் சுவிசேஷத்தைப்பி
ரசித்தப்படுத்துகிறதற்குப் பவுல் ஏற்படுத்தப்ப
டல். அவர்கள் நிமித்தம் அவன்பிரார்த்தித்தல்:
௨௰. தேவனை வாழ்த்தல்.

இந்தக்காரணத்தினால் அந்நியராயிருக்கிற உங்
களுக்காகக் கிறிஸ்துயேசுவினிமித்தங் கட்
௨ டுண்டவனான பவுலாகிய எனக்கு,—உங்கள்நி
மித்தங்கொடுக்கப்பட்டிருக்கிற தேவனுடை
ய கிருபையைக்காட்டிய உத்தியோகம் இன்ன
௩ தென்று நீங்கள் கேட்டிருப்பீர்களே.—சுவிசே
ஷத்தினால் அந்நியர், உடன்சுதந்தரரும், அவர்க
ளுடனே ஒரேசரீரத்திலுள்ளவர்களும், கிறிஸ்
துவினிமித்தம் தேவனுடைய வாக்குத்தத்தத்
திற்கு உடன்பங்காளிகளுமாவார்களென்கிற இந்
த இரகசியத்தை அவர் எனக்கு வெளிப்படுத்தி அ
௪ றிவித்தார்:—அதை நான் சுருக்கமாய் முன்னமே
௫ எழுதியிருக்கிறேன்.—நீங்கள் அதை வாசித்தால்
கிறிஸ்துவின் இரகசியத்தைக்குறித்து எனக்கு
ண்டான ஞானம் இவ்வளவென்று அறிந்துகொள்
௬ ளலாம்.—இது இப்பொழுது அவருடையபரிசுத்
த அப்போஸ்தலருக்கும், தீர்க்கதரிசிகளுக்கும் ஆ
வியினால் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறதுபோ
ல, பூருவகாலங்களிலுள்ள மனுபுத்திரருக்கு அறி
௭ விக்கப்படவில்லை.—இந்தச் சுவிசேஷத்துக்கு,
நான் தேவனுடைய பலத்தத்துவத்தால் எ
னக்கு அளிக்கப்பட்ட அவருடையகிருபையின்
௮ ஈவுக்கேற்க ஊழியக்காரனானேன்.—எல்லாப்ப
ரிசுத்தவான்களிலும் மிகச்சிறியவனாகிய நான்,
அந்நிய தேசத்தாருக்குள்ளே கிறிஸ்துவினு
டைய ஆராய்வுக்கெட்டாத ஐசுவரியத்தைப் பி
௯ ரசங்கிக்கவும்,—யேசுக்கிறிஸ்துவைக் கொ
ண்டு எல்லாவற்றையுஞ் சிருஷ்டித்த தேவனு
டைய உள்ளத்தில் ஆதிகாலங்கள்முதல் மறைந்
திருந்த இரகசியமாகிய ஐக்கியப்படுதலின்னதெ
ன்று எல்லாருக்கும் விளக்கவுந்தக்க அருள் என
௰ க்கு அளிக்கப்பட்டிருக்கின்றது.—நம்முடைய
கர்த்தராகிய கிறிஸ்துயேசுவுக்குள் அநாதி
முதல் அவர்கொண்ட அபிப்பிராயத்தின்படி,—
௰௧ தேவனுடைய வெகுவிதமான ஞானம் இப்
பொழுது சபையினாற் பரமஸ்தானங்களிலுள்ள
ஆதிபத்தியங்களிடத்திலும், அதிகாரங்களிடத்
திலும் அறிவிக்கப்படும்பொருட்டு,—அவரைப் ௰௨
பற்றும் விசுவாசத்தினாலே நாம் அவருக்குள்ளே
திட நம்பிக்கையுடன் தேவனிடத்திற் செல்
லத் தைரியம் பெற்றிருக்கிறோம்.—ஆகையால் ௰௩
நான் உங்களுக்காக அனுபவிக்கிற உபத்திரவங்
களினாலே நீங்கள் மனந்தளராதபடி உங்களை
வேண்டுகிறேன், அவைகள் உங்களுக்கு மகிமை
யாயிருக்கின்றனவே.—இதினிமித்தம் பரமண் ௰௪
டலத்திலும், பூமண்டலத்திலுமுள்ள சபைக்கு
டும்பத்தாரெல்லாருக்கும் நாமத்தைக்கொடுத்த—
நமது கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவி ௰௫
னுடைய பிதாவின்முன்பாக நான் முழங்காற்
படியிட்டு,—அவருடைய ஆவியினால் வலிமை ௰௬
யோடு உங்கள் அந்தரங்கபுருஷனைப் பெலப்ப
டுத்தவும்,—விசுவாசத்தினாலே கிறிஸ்து உங்கள் ௰௭
இருதயங்களில்வாசமாயிருக்கவும், நீங்கள் அன்
பில்வேரூன்றி, அஸ்திபாரப்பட்டவர்களாகி,—
சகல பரிசுத்தவான்களோடும், அகலமும், நீள ௰௮
மும், ஆழமும், உயரமுமின்னதென்றுணர்ந்து,—
அறிவுக்குமேலான கிறிஸ்துவினுடைய அன் ௰௯
பை இன்னதென்றறிந்துகொள்ள வல்லவர்களா
கவும், தேவனுடைய சகல பரிபூரணத்தினா
லும் நீங்கள் பூரணம் அடைய, அவர் தமது மகி
மையின் ஐசுவரியத்தின்படி உங்களுக்கு அருள்
செய்யவேண்டுமென்று வேண்டுதல் பண்ணுகி
றேன்.—நமக்குள்ளே பலித்துவருகிற வல்லமை ௨௰
யின்படி அளவிறந்ததாக, எங்கள் பிரார்த்தனைக்
குங் கருத்துக்குமேலாக மிகவும் அதிகமாய் அரு
ளிச்செய்யவல்லவருக்கு,—கிறிஸது யேசுமூ ௨௧
லமாய்ச் சபைக்குள்ளே தலைமுறைதோறும், ச
தாகாலங்களிலும் நித்தியமகிமை உண்டாவதாக.
ஆமென்.

## ௪. அதிகாரம்.

௧. ஐக்கத்தைக்குறித்து ஆலோசனைசொல்ல ஞா
னவரங்களின் அபிப்பிராயத்தை நிச்சயித்தல்:
௰௭. சீர்கேடானவைகளைத் தள்ளும்படி பவுல்
எபேசியரைவேண்டல்: ௨௫. நற்குணமுடைய
வர்களாய் நற்கிரியைகளைச்செய்யும்படி ஏவல்.

அழைக்கப்பட்டவர்களாகிய நீங்கள், அந்த ௧
அழைப்புக்குப் பாத்திரராய் நடந்து,—மிகவுந் ௨
தாழ்ந்தசிந்தையும், சாந்தமும், நீடியபொறுமை
யுமுள்ளவர்களாய் அன்பினால் ஒருவரை ஒருவர்
தாங்கி,—சமாதான பந்தத்தினால் ஆவியின் ஒரு ௩
மையைக் காத்துக்கொள்வதற்குப் பிரயத்தினம்

(௩. அதி. ௧.) அப்.௨௧.௩௩. கொலோ.௪.௨,௰௮. ௨.தீமோ.௧.௮. பிலே.௧,௮. கலா.௫.௰௧. (௨) ரோ.௧.௫. கொலோ.௧.௨௫. அப்.௯.௰௫. (௩) அப்.௨௨.௰௭,௨௧. கலா.௧.௰௨. ரோ.௰௬.௨௬. கொலோ.௧.௨௬,௨௭. அதி.௧.௯,௰. (௪) கலா.௩.௨௮,௨௯. அதி.௨.௰௪,௰௫. கலா.௩.௰௩. (௫) ௧.கொரி.௪.௧. (௬) அப்.௰.௨௮. ரோ.௰௬.௨௫. அதி.௨.௨௰. (௭) ரோ.௰௫.௰௬. கொலோ.௧.௨௩,௨௫. ரோ.௧.௫. ரோ.௰௫.௰௮. கொலோ.௧.௨௯. (௮) ௧.கொரி.௰௫.௯. ௧.தீமோ.௧.௰௩,௰௫. கலா.௧.௰௬. ௧.தீமோ.௨.௭. ௨.தீமோ.௧.௰௧. கொலோ.௧.௨௭. (௯) வச.௩. ரோ.௰௬.௨௫. கொலோ.௧.௨௬. யோவா.௧.௩. கொலோ.௧.௰௬. எபி.௧.௨. (௰) அதி.௧.௰. (௰௧) ௧.பேதுரு.௧.௰௨. ரோ.௮.௩௮. கொலோ.௧.௰௬. ௧.பேதுரு.௩.௨௨. ௧.கொரி.௨.௭. ௧.தீமோ.௩.௰௬. (௰௨) அதி.௨.௰௮. எபி.௪.௰௬. (௰௩) அப். ௰௪.௨௨. பிலி.௧.௰௪. ௧.தெச.௩.௩. வச.௧. ௨.கொரி.௧.௬. (௰௪) அதி.௧.௯. பிலி.௨.௯,௰,௰௧. (௰௬) கொலோ.௧. ௰௧. ரோ.௭.௨௨. ௨.கொரி.௪.௰௬. (௰௭) யோவா.௰௪.௨௩. கொலோ.௧.௨௩. (௰௮) அதி.௧.௰௮. ரோ.௰.௩,௰௧,௰௨. (௰௯) ரோ.௯.௨௩. பிலி.௪.௰௯. கொலோ.௧.௨௭. யோவா.௧.௰௭. கொலோ.௨.௯,௰. (௨௰) ரோ.௰௬.௨௯. யூதா.௨௪. ௧.கொரி.௨.௯. கொலோ.௧.௨௯. (௨௧) ரோ.௰௧.௩௬. எபி.௰௩.௨௧.—(௪. அதி. ௧.) பிலி.௧.௨௭. கொலோ.௧.௰. ௧.தெச.௨.௰௨. (௨) அப்.௨௰.௰௯. கலா.௫.௨௨. கொலோ.௩.௰௨,௰௩. (௩) கொலோ.௩.௰௪. பிலி.௨.௨.

பண்ணுங்களென்று, கர்த்தரைப் பற்றிக்கட்
டுண்டவனாகிய நான் உங்களை வேண்டிக்கொ
௪ ள்ளுகிறேன்.—உங்களுக்குண்டான அழைப்பி
னால் நீங்கள் ஒரே நம்பிக்கைக்கு அழைக்கப்
பட்டதுபோல், ஒரேசரீரமும், ஒரேஆவியுமுண்
௫ டு;—ஒரே கர்த்தரும், ஒரேவிசுவாசமும், ஒரே
௬ ஞானஸ்நானமும்,—எல்லாருக்கும் ஒரே தேவ
னும், பிதாவுமுண்டு, அவரே எல்லார்மேலும்,
எல்லாரோடும் உங்களெல்லாருக்குள்ளும் இருப்
௭ பவர்.-ஆனாலும் நம்மில் அவனவனுக்குக் கிறிஸ்
துவினுடைய ஈவின் அளவுக்கேற்கக்கிருபை
௮ கொடுத்திருக்கின்றது.—"உன்னதத்திலேறி, சி
றையாக்கினதைச் சிறையாக்கி, மனுஷருக்கு வ
ரங்களைஅருளினார்," என்று சொல்லியிருக்கின்ற
௯ து.—அவர் ஏறினாரேயாகில், அதற்குமுன்னேமிக
வுந் தாழ்ந்த பூதலத்திலிறங்கினாரென்பது விளங்
௰ கிறிற்குமல்லவா.—இறங்கிவந்தவரே, எல்லாவற்
றையும் பூரணப்படுத்தும்படி எல்லா வானங்க
௰௧ ளின்மேலும் ஏறினவருமாயிருக்கிறார்.—மேலும்
நாமனைவரும், தேவனுடைய குமாரனைப்பற்
றும் விசுவாசத்திலேயும், அறிவிலேயும் ஐக்க
முள்ளவர்களாகி, கிறிஸ்துவினுடைய நி
றைந்தவளர்த்தியின்படி தேறினபுருஷராய் அள
௰௨ வைப்பெற்றிருக்கும்வரைக்கும்,—பரிசுத்தவான்
களைச்சீர்ப்படுத்துகிறதற்கும், சுவிசேஷஊழியக்
கிரியையை நிறைவேற்றுகிறதற்கும், கிறிஸ்து
வின் சரீரமாகிய சபையாரைப்பத்தியில் ஸ்திரப்
௰௩ படுத்துகிறதற்கும்,—பதிவிருந்துமோசம்போக்கு
கிறமனுஷருடைய சூதும், மயக்குவதற்கேதுவா
னதந்திரமுமுள்ள போதகமாகிய பலவித காற்
றினாலும் இனி நாம் அடியுண்டு, அலைகிறபாலக
௰௪ ராயிராமல்,—சரீரமுழுவதற்கும் உதவியாயிருக்
கிற ஒவ்வொருகணுக்களினாலும் இசைவாய்க்
கூட்டி இணைக்கப்பட்டு, ஒவ்வொரு அவயவ
முந் தன்தன் அளவுக்குத்தக்கதாய்க்கிரியையைச்
௰௫ செய்கிறபடி,—அது அன்பிலே தன்னைஸ்திரப்
படுத்துகிறதற்கேதுவாகச் சரீரத்தை வருத்திக்கச்
செய்து, அன்பில் உண்மையுள்ளவர்களாயிருந்
து, தலையாகிய கிறிஸ்துவுக்குள்ளாய் எல்லா
௰௬ வற்றிலும் வளரும்பொருட்டாக,—அவர் சிலரை
அப்போஸ்தலராகவும், சிலரைத் தீர்க்கதரிசிக
ளாகவும், சிலரைச்சுவிசேஷகராகவும், சிலரை
மேய்ப்பராகவும், போதகராகவும்ஏற்படுத்தினார்.-
கர்த்தரைக்கொண்டு நான் உங்களுக்குச் சா ௰௭
ட்சியாகச் சொல்லுகிறேன், மற்ற அந்நியதேசத்
தார் புத்திமயக்கமாய் நடக்கிறதுபோல, நீங்கள்
இனி நடவாமலிருப்பீர்களாக.—இருதய கடினத் ௰௮
தினாற் புத்திமயங்கி, தங்களிலுள்ள அறியாமை
யினால் தேவ சீவனுக்கு அந்நியராயிருந்து,-மெய் ௰௯
யுணர்வில்லாதவர்களாய், சகலவிதமான அசுசிக்
கிரியைகளையும் ஆவலோடே செய்கிறதற்குத்தங்
களைக்காமவிகாரத்திற் கொப்பித்திருக்கிறார்கள்.-
நீங்கள் இந்தப்பிரகாரங் கிறிஸ்துவைக் கற்றுக் ௨௰
கொள்ளவில்லை.-யேசுவைப் பற்றுஞ்சத்தியத் ௨௧
தின்படி, நீங்கள் அவர்வாக்கைக்கேட்டு அவரால்
போதிக்கப்பட்டீர்களே.—ஆதலால் நீங்கள் முன் ௨௨
னேநடந்தபிரகாரமாக, வஞ்சனையுள்ள இச்சைக
ளினாற் கெடுதியான பழைய புருஷனைக் களைந்
துவிட்டு,-உங்கள்மனதிற்புதிதானஆவியுள்ளவர் ௨௩
களாகி,—நீதியிலும், சத்தியமான பரிசுத்தத்திலுந் ௨௪
தேவனுடைய சாயலின்படி சிருஷ்டிக்கப்ப
ட்டபுதியபுருஷனைத்தரித்துக்கொள்வீர்களாக.-
பொய்யைக்களைந்து, உங்களில் அவனவன் தன் ௨௫
தன் அயலானுடனே மெய்யைப்பேசக்கடவன்:
நாம் ஒருவருக்கொருவர் அவயவங்களாயிருக்கி
றோம்.—நீங்கள் கோபித்தாலும பாவஞ்செய்யாதி ௨௬
ருங்கள்: சூரியன் அஸ்தமிக்குமுன்னமே குரோ
தத்தைவிட்டுவிடுங்கள்:—பிசாசுக் கிடங்கொடா ௨௭
திருங்கள்.—திருடினவன் இனித்திருடாமல், கு ௨௮
றைவுபட்டவனுக்குக் கொடுக்கத்தக்கதாக, தன்
கைகளினால் நலமானதைச்செய்து உழைக்கக்க
டவன்.—கேட்பவர்களுக்கு நன்மையாய்ப் பத்தி ௨௯
யை ஸ்திரப்படுத்துகிறதற்குத் தகுந்தவாக்குகளை
யன்றி, உங்கள்வாயினின்று ஒருகெட்டவாக்கும்
புறப்படவேண்டாம்.—தேவனுடைய பரிசுத் ௩௰
த ஆவியைத் துக்கப்படுத்தாதிருங்கள், அவரால்
நீங்கள் மீட்கப்படும் நாளுக்கென்று முத்திரி
க்கப்பட்டீர்களே.—கசப்பு, குரோதம், கோப ௩௧
ம், கலகம், நிந்தை, துர்க்குணமுதலிய யாவற்
றையும் அகற்றிவிடுங்கள்.—கிறிஸ்துவினிமித் ௩௨
தந் தேவன் உங்களை மன்னித்துவிட்டதுபோ
ல, நீங்களும் ஒருவருக்கொருவர் தயையும், மன

(௪)ரோ.௰௨.௫. ௧.கொரி.௰௨.௪,௰௧,௰௨,௰௩. அதி.௧.௰௮.(௫)௧.கொரி.௧.௰௩. யூதா.௩. கலா.௩.௨௭,௨௮. எபி.௬.௧. (௬)மல்.௨.௰. ௧.கொரி.௮.௬. ரோ.௰௧.௩௬.(௭)ரோ.௰௨.௩,௬. ௧.கொரி.௰௨.௰௧.(௮)சங்.௬௮.௰௮. யூதா.௫,௰௨. கொலோ.௨.௰௫. (௯) யோவா.௩.௰௩. (௰) அப்.௧.௯,௰௧. ௧.தீமோ.௩.௰௬. அப்.௨.௩௩. (௰௧) கொலோ.௨.௯. ௧.கொரி. ௰௪.௨௰. கொலோ.௧.௨௮. (௰௨) ௧.கொரி.௰௨.௭. ௧.கொரி.௰௪.௨௬. அதி.௧.௨௧. கொலோ.௧.௨௪. (௰௩) ஏசா. ௨௮.௯. ௧.கொரி.௰௪.௨௰. எபி.௰௩.௯. மத்.௰௧.௭. ரோ.௰௬.௰௮. ௨.கொரி.௨.௰௭. (௰௪) கொலோ.௨.௰௯. (௰௫) சக.௮.௰௪. ௨.கொரி.௪.௨. ௧.யோவா.௩.௰௮. அதி.௧.௨௧. கொலோ.௧.௰௮.(௰௬)௧.கொரி.௰௨.௨௮. அப்.௨௧.௮. ௨.தீமோ.௪.௫. அப்.௨௰.௨௮. ரோ.௰௨.௭.(௰௭)அதி.௨.௧,௨,௩. கொலோ.௩.௭. ௧.பேதுரு.௪.௩. ரோ.௧.௨௧.(௰௮) அப்.௨௬.௰௮. கலா.௪.௮. ௧.தெச.௪.௫. ரோ.௧.௨௧. (௰௯) ௧.தீமோ.௪.௨. ரோ.௧.௨௪,௨௬. ௧.பேதுரு.௪.௩.(௨௧) அதி.௧.௰௩.(௨௨) கொலோ.௨.௰௧. ௧.பேதுரு.௨.௨. கொலோ.௩.௭. ௧.பேதுரு.௪.௩. ரோ.௬.௬. (௨௩) ரோ.௰௨. ௨. கொலோ.௩.௰. (௨௪) ரோ.௬.௪. ௨.கொரி.௫.௰௭. கலா.௬.௰௫. கொலோ.௩.௰. அதி.௨.௰. (௨௫) சக.௮.௰௬. கொலோ.௩.௯. ரோ.௰௨.௫. (௨௬) சங்.௪.௪. (௨௭) ௨.கொரி.௨.௰,௰௧. யாக்.௪.௭. ௧.பேதுரு.௫.௯. (௨௮) அப். ௨௰.௩௫. ௧.தெச.௪.௰௨. ௨.தெச.௩.௮,௰௧,௰௨. லூக்.௩.௰௧. (௨௯) மத்.௰௨.௩௬. கொலோ.௩.௮. கொலோ.௪.௬. ௧.தெச.௫.௰௧. கொலோ.௩.௰௬. (௩௰) ஏசா.௭.௰௩. எசேக்.௰௬.௪௩. ௧.தெச.௫.௰௯. அதி.௧.௰௩. லூக்.௨௧.௨௮. ரோ.௮.௨௩. (௩௧) கொலோ.௩.௮,௰௯. தீத்.௩.௨. யாக்.௪.௰௧. ௧.பேதுரு.௨.௨. தீத்.௩.௩. (௩௨) ௨.கொரி.௨.௰. கொலோ.௩.௰௨,௰௩. மத்.௬.௰௪. மாற்.௰௧.௨௫.

உருக்கமுமுள்ளவர்களாயிருந்து, ஒருவரை ஒரு
வர் மன்னியுங்கள்.

## ௫. அதிகாரம்.

௧. அவர்கள் அசுசியான கருமத்தைத்தள்ளும்படி
பவுல் அவர்களைவேண்டல்: ௰௫. சாவதான
மாய் நடக்கும்படி ஏவல்: ௨௨. ஸ்திரி புருஷ
ரின் கடமையைவருணித்தல்.

ஆதலால்,நீங்கள் பிரியமானபிள்ளைகளைப்போ
௨ லத் தேவனைப் பின்பற்றுங்கள்.—கிறிஸ்து
நமக்காகத் தம்மைத் தேவனுக்குச் சுகந்த நை
வேத்தியமாகவும், பலியாகவும் ஒப்பித்து நம்மை
நேசித்ததுபோல, நீங்களும் அன்பிலே நடவுங்
௩ கள்.-பரிசுத்தவான்களுக்கேற்றபடி வேசைமார்
க்கமும், எந்த அசுத்தமும், பொருளாசையும்,
உங்களுக்குள்ளே சொல்லப்படவும் வேண்டா
௪ ம்;—இலச்சைகெட்டவாக்கும், புத்திகேடான
பேச்சும், பரிகாசமுந் தகுந்தவைகளல்ல: ஸ்
௫ தோத்திரஞ் செய்வதே தகும்.-வேசைக்கள்ளன்,
அசுத்தன், விக்கிரகாராதனைக்காரனை பொரு
ளாசைக்காரன் ஒருவனுந் தேவனுடைய இ
ராச்சியமாகிய கிறிஸ்துவின் இராச்சியத்திலே
சுதந்தரத்தை அடைவதில்லையென்று அறிந்திருக்
௬ கிறீர்களே.—இவ்விதகிரியைகளினிமித்தம் தே
வனுடைய குரோதங் கட்டளைக்கமையாதவர்
௭ கள்மேல் வருகிறதினால்,—அவர்களுடன் நீங்
கள் பங்காளராகாதிருப்பீர்களாக. வீண்சொற்க
ளினால் ஒருவன் உங்களை வஞ்சிக்கவிடாதிருங்
௮ கள்.—முற்காலத்தில் நீங்கள் அந்தகாரமுள்ள
வர்களாயிருந்தீர்கள்,இப்பொழுதோ கர்த்தருக்
குள் ஒளியுள்ளவர்களாயிருக்கிறீர்கள்: ஒளியின்
௯ சந்ததியாராய் நடந்துகொள்ளுங்கள்.—ஆவியின்
கனி எந்தச்சற்குணத்திலும், நீதியிலும், உண்
௰ மையிலும் விளங்கும்.—கர்த்தருக்குப் பிரி
யமானது இன்னதென்று நீங்கள் பரீட்சித்துப்பா
௰௧ ருங்கள்.—அந்தகாரத்தின் பலனற்ற கிரியைக
ளுக்கு உடந்தையாயிராமல், அவைகளைக் கடிந்
௰௨ துகொள்ளுங்கள்.-அவர்கள் ஒளித்துச்செய்யுங்கி
௰௩ ரியைகளைச் சொல்வதும் இலச்சையாகும்.—க
டிந்துகொள்ளப்படத்தக்கவைகளெல்லாம் ஒளி
யினால் வெளிப்படுத்தப்படும்: வெளிப்படுத்துவ
தெதுவோ, அதுவே ஒளி.—ஆதலால் "தூங்குகிற ௰௪
நீ விழித்து, மரித்தோரைநீங்கிஉயிர்த்தெழுந்திரு,
அப்பொழுது கிறிஸ்து உனக்குஒளியைஅருளு
வார்," என்றுசொல்லியிருக்கின்றது.-நீங்கள்ஞா ௰௫
னமற்றவர்களைப்போலிராமல்,ஞானமுள்ளவர்க
ளாகச் சாவதானமாய் நடவுங்கள்.—காலந்தீமை ௰௬
யுள்ளது, ஆதலால் அதை ஆதாயப்படுத்துங்கள்.-
நீங்கள் உணர்வில்லாதவர்களாயிராமல், கர்த்த ௰௭
ருடைய சித்தம் இன்னதென்றுணர்வீர்களாக.—
சீர்கேடானவைகளுக்கேதுவாகிய மதுபானத்தா ௰௮
ல்வெறிகொள்ளாமல், ஆவியினாற் பூரணப்படுங்
கள்.-சங்கீதங்களாலும், கீர்த்தனங்களாலும், ஞா ௰௯
னப்பாட்டுகளாலும் ஒருவருக்கொருவர் புத்தி
சொல்லி, உங்கள் இருதயத்தில் கர்த்தரைப்
பாடிக் கீர்த்தனம்பண்ணுங்கள்.—நம்முடைய ௨௰
கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவின் நாமத்
தை முன்னிட்டு, எப்பொழுதும் எல்லாவற்றிற்
காகவும் பிதாவாகிய தேவனைத் துதியுங்கள்.—
தேவபயத்தோடே ஒருவருக்கொருவர் அமைந் ௨௧
துநடவுங்கள்.—ஸ்திரிகளே, நீங்கள் கர்த்தருக் ௨௨
கு அமைந்திருக்கிறதுபோல், உங்களுங்கள் புரு
ஷருக்கும் அமைந்திருங்கள்.—கிறிஸ்து,சபை ௨௩
யாகிய சரீரத்திற்குத் தலையாகி, சரீரத்திற்கு இ
ரட்சகராயிருக்கிறதுபோல், புருஷனும் ஸ்திரிக்
குத்தலையாயிருக்கிறான்.-ஆதலால் சபை கிறிஸ் ௨௪
துவுக்கு அமைந்திருக்கிறதுபோல்,ஸ்திரிகளுந்
தங்கள் தங்கள் சொந்தப்புருஷருக்கு எல்லா
வற்றிலும் அமைந்திருக்கவேண்டும்.—புருஷரே, ௨௫
வாக்கியத்தினாலும், சலத்தினாலும் சபையைச்
சுத்திகரிப்பதற்கும்,—மாசு, திரை முதலானவை ௨௬
களில் ஒன்றுமில்லாமல், பரிசுத்தமும், தோஷ
மற்றதும், மகிமையுள்ளதுமாக அதைத் தமக்கு
முன்பாக நிறுத்துகிறதற்கும்,—கிறிஸ்துத் தம் ௨௭
மைத் தாமே அதற்காக ஒப்பித்து, அதனிடத்தில்
அன்பு கூர்ந்ததுபோல், நீங்களும் உங்களுங்கள்
மனைவிகளிடத்தில் அன்புகூருங்கள்.—இவ்வி ௨௮
தமாய்ப் புருஷருந் தங்கள் தங்கள் சொந்தச்ச
ரீரங்களைப்போலத் தங்கள் தங்கள் மனைவிகளை
நேசிக்கவேண்டும்.—தன் மனைவியை நேசிக்கிற ௨௯
வன் தன்னைத்தான் நேசிக்கிறான். ஒருவனும் ஒ

(௫. அதி. ௧.) மத்.௫.௪௫,௪௮. (௨) யோவா.௰௩.௩௪. ௧.யோவா.௩.௰௧,௨௩. கலா.௧.௪. எபி.௭.௨௭. ௧.யோவா.௩.௰௬. ஆதி.௮.௨௧. ௨.கொரி.௨.௰௫. (௩) ரோ.௬.௰௩. ௧.கொரி.௬.௰௮. ௨.கொரி.௰௨.௨௧. கொலோ.௩.௫. ௧.தெச.௪.௩. ௧.கொரி.௫.௧. (௪) மத்.௰௨.௩௫. ரோ.௧.௨௮.(௫)௧.கொரி.௬.௯. கலா.௫.௰௯,௨௧. கொலோ.௩.௫. ௧.தீமோ.௬.௰௭. கலா.௫.௰௯,௨௧. கொலோ.௩.௫. ௧.தீமோ.௬.௰௭. கலா.௫.௨௧. வெளி.௨௨.௰௫. (௬) ரோ.௧.௨௰. கொலோ.௩.௬. (௭) எரே.௨௯.௮. மத்.௨௪.௪. கொலோ.௨.௪,௮,௰௮. ௨.தெச.௨.௩. (௮) அப்.௨௬.௰௮. ரோ.௧.௨௧. தீத்.௩.௩. ௧.பேதுரு.௨.௯. யோவா.௮.௰௨. ௨.கொரி.௩.௰௮. ௧.தெச.௫.௫. ௧.யோவா.௨.௯. லூக்.௰௬.௮. யோவா.௰௨.௩௬. (௯) கலா.௫.௨௨. ரோ.௰௨.௨. பிலி.௧.௰. ௧.தெச.௫.௨௧. ௧.தீமோ.௨.௩.(௰௧)௧.கொரி.௫.௯,௰௧. ௨.கொரி.௬.௰௪. ௨.தெச.௩.௬,௰௪. ரோ.௬.௨௧. கலா.௬.௮. லேவி.௰௯.௰௭. ௧.தீமோ.௫.௨௰. (௰௨) ரோ.௧.௨௪,௨௬.(௰௩) யோவா.௩.௨௰,௨௧. எபி.௪.௰௩. (௰௪) ஏசா.௬௰.௧. ரோ.௰௩.௰௧,௰௨. ௧.கொரி.௰௫.௩௪. ௧.தெச.௫.௬. யோவா.௫.௨௫. ரோ.௬.௪,௫. (௰௫) கொலோ.௪.௫. (௰௬) கலா.௬.௰. பிர.௰௨.௧. அதி.௬.௰௩. (௰௭) கொலோ.௪.௫. ரோ.௰௨.௨. ௧.தெச.௪.௩. (௰௮) நீதி.௨௰.௧. லூக்.௨௧.௩௪. (௰௯) அப்.௰௬.௨௫. ௧.கொரி.௰௪.௨௬. கொலோ.௩.௰௬. (௨௰) சங்.௩௪.௧. ஏசா.௬௩.௭. கொலோ.௩.௰௭. ௧.தெச.௫.௰௮. எபி.௰௩.௰௫. (௨௧) பிலி.௨.௩. ௧.பேதுரு.௫.௫. (௨௨) ஆதி.௩.௰௬. ௧.கொரி.௰௪.௩௪. கொலோ.௩.௰௮. தீத்.௨.௫. ௧.பேதுரு.௩.௨. அதி.௬.௫. (௨௩) ௧.கொரி.௰௧.௩. அதி.௧.௨௨. கொலோ.௧.௰௮. அதி.௧.௨௧. (௨௪) கொலோ.௩.௨௰,௨௨. (௨௫) யோவா.௩.௫. தீத்.௩.௫. எபி.௰.௨௨. ௧.யோவா.௫.௬. யோவா.௰௫.௩. (௨௬) ௨.கொரி.௰௧.௨. கொலோ.௧.௨௨. உன்.௪.௭. அதி.௧.௪.(௨௭)கொலோ.௩.௰௯. ௧.பேதுரு.௩.௭. அப்.௨௰.௨௮. கலா.௧.௪.

ருபொழுதுந் தன் சொந்தமாமிசத்தை வெறுக்க
வில்லை; அதைப்போஷித்துக் காப்பாற்றுவான்,
கர்த்தருஞ் சபைக்கு அப்படியேசெய்கிருர்.-
௩௰ நாம் அவருடைய சரீரத்தின் மாமிசமும், எலும்
௩௧ புகளும், அவயவங்களுமாயிருக்கிறேம்.—"இதி
னிமித்தம் மனுஷன் தன் பிதாவையும் மாதாவை
யும் பிரிந்து, தன் மனைவியைப்பற்றிக்கொள்ளு
௩௨ வான், இருவரும் ஏகாங்கமாயிருப்பார்கள்."—கி
றிஸ்துவையுஞ் சபையையுங்குறித்து இதைச்
௩௩ சொல்லுகிறேன்: இந்த இரகசியம்பெரிது.—எப்
படியும் உங்களிலும் அவனவன் தன் தன் மனைவி
யைத் தன்னைப்போல் நேசிக்கக்கடவன்; மனை
வியும் புருஷனைக்கனம்பண்ணவேண்டும்.

## ௬. அதிகாரம்.

*௧. பிள்ளைகள் பிதா மாதாவென்னும் இவர்களின் கடமையை நிருணித்தல்: ௫. பணிவிடைக்காரர், எசமானரென்னும் இவர்களின்கடமையைக்குறித்தல்: ௰. சருவாயுதவர்க்கத்தைத் தரித்துச் சன்னத்தராயிருக்கும்படி,பவுல் அவர்களை வேண்டல்: ௨௧. திகிக்குவை அனுப்பல், வாழ்த்துதல் சொல்லல்.*

பிள்ளைகளே, உங்களைப்பெற்றவர்களுக்குக் கர்
த்தருக்குள் கீழ்ப்படியுங்கள்: இதுவேதகுதி.—
௨ "உனக்கு நன்மை உண்டாவதற்கும், பூமியில்
௩ உன் ஆயுள் நீடித்திருப்பதற்கும்,—உன் பிதாவை
யும் மாதாவையுங் கனம்பண்ணுவாயாக," என்
பதே வாக்குத்தத்தமுள்ள முதலாங்கட்டளை.—
௪ பிதாக்களே, நீங்களும் உங்களுங்கள் பிள்ளைக
ளைக் கோபப்படுத்தாமல், கர்த்தருக்கேற்ற
கண்டிப்போடும், போதகத்தோடும் அவர்களை வ
௫ ளர்க்கக்கடவீர்கள்.—பணிவிடைக்காரரே, நீங்
கள் கிறிஸ்துவுக்கமைந்திருக்கிறதுபோல், ப
யத்தோடும், நடுக்கத்தோடும், நேர்மையான இரு
தயத்தோடும் சரீரத்தின்படி உங்களுக்கு எசமா
௬ னராயிருக்கிறவர்களுக்குக் கீழ்ப்படியுங்கள்.—ம
னுஷரைப் பிரியப்படுத்துகிறதற்கு விரும்புகிற
வர்களைப்போல, பார்வைக்கு ஊழியஞ்செய்யா
மல், கிறிஸ்துவின் பணிவிடைக்காரரைப்
போல் மனப்பூருவமாய்த் தேவனுடைய சித்
௭ தத்தை நிறைவேற்றுங்கள்.—சுயாதீனனானாலும்,
அடிமையானாலும், அவனவன்செய்யும் நற்கிரி
யைக்கேற்கக் கர்த்தரிடத்திற் பலனைப் பெ
௮ றுவானென்றறிந்து,—நீங்கள் மனுஷருக்கென்
றல்ல, கர்த்தருக்கென்றே நன்மனதோடே
பணிவிடைசெய்யுங்கள்.—எசமானரே, நீங்க ௯
ளும் அவர்களுக்கப்படியேசெய்து, உங்களுக்
கும் பாரபட்சமில்லாத எசமானன் ஒருவர் பர
மண்டலத்திலிருக்கிறாரென்றுணர்ந்து,பயமுறுத்
தலை விட்டுவிடுங்கள்.-சகோதரரே, நீங்கள் கர்த் ௰
தாவினாலும், அவருடைய வல்லபத்தினாலும்
பலவான்களாயிருங்கள்.—நீங்கள் பிசாசின் தந் ௰௧
திரங்களுக்கு எதிர்த்துநிற்கத் திராணியுள்ளவர்க
ளாகும்படி,திவ்வியசருவாயுத வருக்கத்தையுந்த
ரித்துக்கொள்ளுங்கள்.-மாமிசத்தோடும், இரத்தத் ௰௨
தோடுமல்ல, ஆகாய மண்டலத்திலுள்ள ஆதிபத்
தியங்களோடும், அதிகாரங்களோடும், இப்பிர
பஞ்சத்தின்அந்தகாரஅதிபதிகளோடும், ஆகாயத்
திலுள்ள தீமையான ஆவிகளோடும் நாம் போரா
டுகிறவர்களாயிருக்கிறபடியால்,—தீதானகாலத் ௰௩
தில் அவைகளை நீங்கள் எதிர்க்கவும், எல்லாவற்
றையுஞ்செயங்கொண்டு நிற்கவும்வல்லவராகும்
பொருட்டு, திவ்விய சருவாயுதவர்க்கத்தையும்
எடுத்துக்கொள்ளுங்கள்.—சத்தியமென்னும் இ ௰௪
டைக்கச்சை உங்கள் அரையிற்சுற்றிக்கட்டி,நீதி
யென்னும் மார்புக்கவசத்தைத்தரித்து,—சமாதா ௰௫
னத்தைத்தருஞ் சுவிசேஷத்தின் எத்தனங்களைக்
கால்களிலே தொடுத்துக்கொண்டிருப்பவர்களா
ய் நில்லுங்கள்.—தீயனானவன் எய்யும் அக்கினி ௰௬
அம்புகளையெல்லாம் நீங்கள் அவிக்கிறதற்குத் தி
ராணியுள்ளவர்களாகும்பொருட்டு, எல்லாவற்றி
ற்குமேலாக, விசுவாசமென்னுங் கேடகத்தைப்
பிடித்துக்கொள்ளுங்கள்.—அன்றியும், இரட்சிப் ௰௭
பென்னுந் தலைச்சீராவையும், தேவனுடைய
வாக்கியமாகிய ஆவியின் கட்கத்தையுந் தரித்துக்
கொண்டு,—ஆவியினாற் சகலவிதபிரார்த்தனையும் ௰௮
விண்ணப்பமும்பண்ணி, எப்பொழுதும் வேண்
டிக்கொண்டு, மிகுந்த மனவுறுதியோடும், எல்
லாப்பரிசுத்தர்களுக்காகவும்விண்ணப்பஞ்செய்
து, விழித்துக்கொண்டிருங்களென்று முடிவுரை
யாகச் சொல்லுகிறேன்.—சுவிசேஷத்தினிமித் ௰௯
தஞ் சங்கிலியினாற் கட்டப்பட்டு, தானாபதியா
கிய நான் தைரியத்துடன் அதை அறிவிக்கும்
படிக்கு,—தைரியமாய் என் வாயைத்திறந்து, சு ௨௰
விசேஷத்தின் இரகசியத்தைத் தெரிவிக்கிறதற்
கு வாக்கு எனக்கு அருளப்படும்பொருட்டு, நீங்
கள் என்னிமித்தமும் விண்ணப்பம்பண்
ணுவீர்களாக.—மேலும் எனக்குச்சம்பவித்த ௨௧

(௩௰) ஆதி.௨.௨௩. ரோ.௰௨.௫. ௧.கொரி.௬.௰௫. (௩௧) ஆதி.௨.௨௪. ௧.கொரி.௬.௰௬. (௩௩) வச.௨௫. கொலோ.௩.௰௯. ௧.பேதுரு.௩.௬.—(௬. அதி. ௧.) நீதி.௨௩.௨௨. (௩) யாத்.௨௰.௰௨. எரே.௩௫.௰௮. மல்.௧.௬. மத்.௰௫.௪. (௪) கொலோ.௩.௨௧. ஆதி.௰௮.௰௯. உபா.௬.௭,௨௰. சங்.௭௮.௪. நீதி.௰௯.௰௮. நீதி.௨௨.௬. (௫) கொலோ.௩.௨௨. ௧.பேதுரு.௨.௰௮. பிலி.௨.௰௨. ௧.நாளா.௨௯.௰௭. (௬) கொலோ.௩.௨௨,௨௪. (௭) ரோ.௨.௬. ௨.கொரி.௫.௰. கலா.௩.௨௮. கொலோ.௩.௰௧. (௯) கொலோ.௪.௧. லேவி.௨௫.௪௩. யோவா.௰௩.௰௩. ௧.கொரி.௭.௨௨. ரோ.௨.௰௧. கொலோ.௩.௨௫. (௰) கொலோ.௧,௰௧. (௰௧) ரோ.௰௩.௰௨. ௨.கொரி.௬.௭. ௧.தெச.௫.௮. (௰௨) மத்.௰௬.௰௭. ௧.கொரி.௰௫.௫௰. ரோ.௮.௩௮. கொலோ.௨.௰௫. லூக்.௨௨.௫௩. யோவா.௰௨.௩௧. கொலோ.௧.௰௩. (௰௩) ௨.கொரி.௰.௪. அதி.௫.௰௬. (௰௪) லூக்.௰௨.௩௫. ௧.பேதுரு.௧.௰௩. ஏசா.௫௯.௰௭. ௨.கொரி.௬.௭. ௧.தெச.௫.௮. (௰௫) ஏசா.௫௨.௭. ரோ.௰.௰௫. ௧.யோவா.௫.௪. (௰௭) ஏசா.௫௯.௰௭. ௧.தெச.௫.௮. எபி.௪.௰௨. வெளி.௧.௰௬. (௰௮) லூக்.௰௮.௧. ரோ.௰௨.௰௨. ௧.தெச.௫.௰௭. மத்.௨௬.௪௧. ௧.தீமோ.௨.௧. (௰௯) அப்.௪.௨௯. ௨.தெச.௩.௧. ௨.கொரி.௩.௰௨. (௨௰) ௨.கொரி.௫.௨௰. அப்.௨௬.௨௯. பிலி.௧.௭,௰௩,௰௪. ௨.தீமோ.௧.௰௬. பிலே.௰. அப்.௨௮.௩௧. பிலி.௧.௰௯. ௧.தெச.௨.௨. (௨௧) கோலோ.௪.௭. அப்.௨௰.௪.

வைகளையும், என்னுடையசெய்கைகளையும் நீங்கள் அறியும்படி, அவைகளையெல்லாம் நமக்குப் பிரியசகோதரனுமாய், கர்த்தருக்கு உண்மையுள்ள ஊழியக்காரனுமாயிருக்கிற திகிக்கு உங்
உஉ களுக்குத்தெரிவிப்பான்.—நீங்கள் எங்கள்செய்திகளை அறியும்படியாகவும், அவன் உங்கள் இருதயங்களை ஆற்றும்படியாகவும் அவனை உங்களிடத்தில் அனுப்பினேன்.—பிதாவாகிய தேவனாலும், கர்த்தராகியயேசுக்கிறிஸ்துவினாலுஞ் சகோதரருக்கு விசுவாசத்தோடே சமாதானமும், அன்பும் உண்டாகக்கடவன.—நம்மு உச
டைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவினிடத்தில் உண்மையாய் அன்புகூருகிற யாவரோடும் கிருபை இருப்பதாக. ஆமென்.

---

(உஉ) கொலோ.ச.அ. (உ௩) க.பேதுரு.ரு.யச. (உச) தீத்.உ.எ.

## அப்போஸ்தலனாகிய பவுல்

# பிலிப்பியருக்கெழுதிய நிருபம்.

### க. அதிகாரம்.

*க. வாழ்த்து: ௩. பிலிப்பியருடைய விசுவாசத்தின் பலனுக்காகப் பவுல் ஸ்தோத்திரம்பண்ணி, அவர்களுக்காகப் பிரார்த்தித்தல்: ௰உ. கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்துவதிலுண்டான துயரத்தைத் தெரிவித்தல்: உஎ. சுவிசேஷத்தின் பிரகாரம் நடக்கவும் சத்துருக்களுக்குப் பயப்படாமலிருக்கவும்வேண்டுமென்று பவுல் அவர்களுக்குணர்த்தல்.*

யேசுக்கிறிஸ்துவின் பணிவிடைக்காரரா
கிய பவுலும், தீமோத்தேயும், பிலிப்பி நகரத்தில்
கிறிஸ்துயேசுவுக்குள்ளான பரிசுத்தவான்
களனைவருக்கும், அத்தியட்சருக்கும், ஊழியக்
உ காரருக்கும் எழுதிக்கொள்வது:—நம்முடைய
பிதாவாகிய தேவனாலும், கர்த்தராகிய
யேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக்கிரு
௩ பையும், சமாதானமுமுண்டாகக்கடவன.—சுவி
சேஷம்அறிவிக்கப்பட்டநாள்முதல் இதுவரைக்
கும் நீங்கள் அதற்கு ஐக்கமானவர்களானதினால்,-
௪ நான் உங்களை நினைக்கிறபொழுதெல்லாம் என்
௫ தேவனைத் துதிக்கிறேன்.—சந்தோஷத்துடன்
ஒவ்வொருபிரார்த்தனையிலும், உங்களெல்லாருக்
காகவும் இடைவிடாமல் விண்ணப்பம்பண்ணு
௬ கிறேன்.—உங்களுள்ளத்தில் நற்கிரியைசெய்யத்
தொடங்கினவர், யேசுக்கிறிஸ்துவினுடை
ய நாள்வரைக்கும் அதை முடிய நடத்திவருவா
ரென்று நான் திடநம்பிக்கையாயிருக்கிறேன்.—
எ நான் கட்டப்பட்டு, சுவிசேஷத்தினிமித்தம் உத்
தரஞ்சொல்லி, அதைத்திடப்படுத்திவருகையில்,
நீங்களெல்லாரும் நான்பெற்ற கிருபையில் பங்
காளராயிருக்கிறவர்களென்று உங்களை நான் என்
னிருதயத்தில் தரித்திருக்கிறபடியினாலே, நான்
உங்களெல்லாரையுங்குறித்து இப்படிச் சிந்தி
அ த்துக்கொள்வது எனக்குத்தகுதி.—அன்றியும்,
யேசுக்கிறிஸ்துவின் உருக்கமான அன்பி
லே நான் உங்களெல்லார்மேலும் மிகவும் வாஞ்
சையாயிருக்கிறேனென்பதற்குத் தேவனே எ
௯ னக்குச்சாட்சி.—அறிவிலும், சகலவித உணர்வி
லும் உங்கள்அன்பு மென்மேலும் அதிகரிக்க,—
௰ நீங்கள் கிறிஸ்துவின் நாள்வரைக்கும் உண்மை
௰க யுள்ளவர்களும், இடறலில்லாதவர்களும்,—உத்
தமப்பொருளைப் பகுத்தறிந்து, தேவனுக்குத்
துதியும் புகழ்ச்சியுமுண்டாக, யேசுக்கிறிஸ்து
வினால் வருகிற நீதியாகிய கனிகளினால் நிறைந்
தவர்களுமாயிருக்கும்பொருட்டு வேண்டுதல் ப
ண்ணுகிறேன்.—சகோதரரே, எனக்கு நேரிட் ௰உ
டவைகள், சுவிசேஷம் அதிக பிரபலமாவதற்கு
ஏதுவாயிருந்தனவென்று உங்களுக்குத்தெரிவிக்
கவிரும்புகிறேன்.-கிறிஸ்துவின்நிமித்தம்நான் ௰௩
கட்டப்பட்டிருக்கிறது, இராசதானியிலெங்கு
முள்ளவர்களுக்கும், மற்றெவ்விடத்தாருக்கும்பி
ரசித்தமாயிற்று.-கர்த்தருக்குள்சகோதரரில்அ ௰௪
நேகர் என்பந்தனங்களைக்கண்டு, திடங்கொண்
டு, பயமில்லாமல் வாக்கைப் பிரசித்தப்படுத்த அ
திக தைரியமுள்ளவர்களாயிருக்கிறார்கள்.—சிலர் ௰௫
பொறாமையினாலும், விரோதத்தினாலும், சிலர்
நன்மனதினாலுங் கிறிஸ்துவைப்பிரசங்கிக்கி
றார்கள்.-இவர்கள், நான் சுவிசேஷத்துக்காகஉத் ௰௬
தரஞ்சொல்ல ஏற்படுத்தப்பட்டிருக்கிறேனென்
றறிந்து, கிறிஸ்துவின் வாக்கை அன்பினா
லே பிரசங்கிக்கிறார்கள்.—மற்றவர்களோ, என் ௰எ
பந்தனங்களின் கிலேசம் அதிகரிக்கப்பண்ண
எண்ணங்கொண்டு, உண்மையில்லாமல் விரோ
தத்தினால் அப்படிச்செய்கிறார்கள்.—அப்படியா ௰அ
னாலுமென்ன; கபடத்தோடாயினும், உண்மை
யோடாயினும், எப்படியாயினும் கிறிஸ்து அ
றிவிக்கப்படுகிறாரே; அதினாற் சந்தோஷப்படு
கிறேன், இன்னமுஞ் சந்தோஷப்படுவேன்.—
ஒன்றினாலும் இலச்சை அடையாமல், எப்பொ ௰௯
ழுதும்போல இப்பொழுதும் எல்லாத்தைரியமு
முள்ளவனாகி, சீவனாலாகிலும், மரணத்தினாலாகி
லும் கிறிஸ்து என்சரீரத்தின் வழியாய் புகழப்
படுவாரென்கிற—என்னுடைய வாஞ்சைக்கும், உ௰
நம்பிக்கைக்குந்தக்கதாய், உங்களுடையபிரார்த்
தனையினாலும், யேசுக்கிறிஸ்துவினுடைய
ஆவியின் உதவியினாலும் இது எனக்கு இரட்சிப்
பாய் முடியுமென்று நான் அறிந்திருக்கிறேன்.—
நான் சீவிப்பது கிறிஸ்து, நான் மரிப்பது இ உக
லாபம்.—நான் சரீரத்திற் சீவிப்பது பலனுள்ள உஉ
ளதென்றால் தெரிந்துகொள்ளத்தக்கது இன்ன
தென்பதை நான் நிச்சயித்தறியேன்.—அவ்வி உ௩
ரண்டினாலும் நான் நெருக்கப்படுகிறேன், பிரிந்
து கிறிஸ்துவினிடத்திலிருக்கும்படி மிகவும்
விரும்புகிறேன்; இதுவே அதிகநலம்.—அப் உ௪

(க. அதி. க.) க.கொரி.க.க. (உ) ரோ.க.எ. க.பேதுரு.க.உ.(௩)ரோ.௰உ.௰௩. உ.கொரி.அ.க. (௪) ரோ.க.அ,௰உ. எபே.க,௰௫,௰௬. (௬) யோவா.௬.உ௯. க.தெச.க.உ. வச.௰. (எ) உ.கொரி.௩.உ. எபே.௩.க. கொலோ.௪.உ,௰௮. உ.தீமோ.க.அ. வச.௰௬. அதி.௪.௰௪. (அ) ரோ.க.௰உ. கலா.க.உ௰. (௯) க.தெச.௩.௰௩. (௰) அப்.உ௪.௰௬. க.தெச.௩.௰உ. க.கொரி.க.அ. (௰க) ரோ.உ.௰அ. எபே.௫.௰. யோவா.௰௫.௪,௫. கொலோ.க.௬. யோவா.௰௫.அ. எபே.க.௰க,௰௪. (௰௩) அதி.௪.உஉ. (௰௫) அதி.உ.௩. (௰௬) வச.எ. (௰௯) ரோ.௫.௫. எபே.௯.௰க,உ௰. (உ௰) உ.கொரி.க.௰க. ரோ.அ.௯,௰௯. (உ௩) உ.கொரி.௫.அ. உ.தீமோ.௪.௬.

படியிருந்தும் நான் சரீரத்தில்தரிப்பது உங்களுக்
௨௫ கு மிகவும் அவசியம்.—இதைக்குறித்துத் திடநம்
பிக்கையாயிருந்து, திரும்பவும் நான் உங்களி
டத்தில் வரும்பொழுது என்னைப்பற்றி யேசுக்
கிறிஸ்துவில் நீங்கள் அதிகமதிகமாய்மேன்மை
௨௬ பாராட்டும்பொருட்டு,—நீங்கள் விசுவாசத்தில்
விருத்தியையும், சந்தோஷத்தையும் அதிகமாய்
அடையும்படிக்கு, நான் இன்னுஞ்சீவித்து, உங்
கள்அனைவரோடுந் தரித்துநிற்பேனென்று அறிந்
௨௭ திருக்கிறேன்.—எப்படியும் நான்வந்து உங்களைக்
கண்டாலும், உங்களுக்குத் தூரமாயிருந்தாலும்,
நீங்கள் ஒரே ஆவியில் உறுதியாய் நின்று, ஒரும
னப்பட்டு, சுவிசேஷத்தின் விசுவாசத்தினிமித்
௨௮ தங் கூடிப்போராடி,—விரோதிகளினாற் சற்றும்
பயமடையாமலிருக்கிறீர்களென்று உங்களைக்கு
றித்து நான்கேட்கும்படி, நீங்கள் கிறிஸ்துவி
னுடைய சுவிசேஷத்திற்குப் பாத்திரராய்மாத்
௨௯ திரம் நடக்கக்கடவீர்கள்.—அதுவே அவர்கள்
கெட்டுப்போவதற்கும், நீங்கள் இரட்சிக்கப்படு
வதற்கும் அடையாளமாயிருக்கின்றது, அது தே
வனாலுண்டாயிற்று; நீங்கள் கிறிஸ்துவின்
௩௰ மேல் விசுவாசிப்பதற்குமாத்திரமல்ல,—முன்னே
என்னிடத்தில் நீங்கள் கண்டதும், இப்பொ
ழுது எனக்குண்டென்று கேள்விப்படுகிறதுமா
கிய அவ்வகைப்பட்டயுத்தமே உங்களுக்குமநே
ரிட்டதினால், அவர்நிமித்தம் பாடுபடுகிறதற்கும்
நீங்கள் அருள்பெற்றீர்களே.

## ௨. அதிகாரம்.

௧. எகசிந்தையுள்ளவர்களாயிருக்கும்படி வேண்டல்: ௫. கிறிஸ்துத்தாழ்ந்தசிந்தையுடையவராயிருப்பதினாலே தாழ்மை அவசியமெனக்காட்டல்: ௰௨. பத்தியுள்ளவர்களாய் நாள்விடும்படி எவல்: ௰௭. அவர்களைப் பவுல் சேவிக்கவிரும்பல். திமோத்தேயுவையும், எப்பாபிரோதித்தை யும் அவர்களிடத்திலனுப்பல்.

ஆதலால் கிறிஸ்துவுக்குள் யாதொரு ஆறுத
லும், அன்பினால் மகிழ்ச்சியும், ஆவியின் ஐக்க
மும், மனவுருக்கமும், இரக்கங்களுமுண்டா
௨ னால்,—நீங்கள் எக சிந்தையும், எகஅன்புமாயி
ருந்து, ஒரே மனமும், ஒரே ஆலோசனையுமுள்ள
வர்களாகி, என் சந்தோஷத்தைப் பூரணப்படுத்
௩ துங்கள்.—வாதத்தினாலாகிலும், வீண்புகழ்ச்சியி
னாலாகிலும் ஒன்றையுஞ்செய்யாமல், தாழ்ந்தசிந்
தையுள்ளவர்களாய், ஒருவரைஒருவர்தங்களிலும்
மேன்மையானவர்களென்றுஎண்ணிக்கொள்வீர்
களாக.—அவனவன்தன்தன்காரியங்களைமாத்திர ௪
மல்ல, பிறருக்கானவைகளையும் நோக்குவானா
க.—கிறிஸ்து யேசுவிலிருந்தசிந்தையே உங்க ௫
ளிலும்இருக்கக்கடவது.-அவர் தேவனுடைய ௬
சாயலாயிருந்து, தாம் தேவனுக்குச்சமானமா
யிருப்பதை அபகரிக்கப்பட்டபொருளென்றெ
ண்ணாமலிருந்தார்.-ஆயினும் அவர்தம்மைத்தாமே ௭
வெறுமையாக்கி, அடிமையின் ரூபந்தரித்து, ம
னுஷசாயலாகி,—அவர் மனுஷரூபமாகக்காணப் ௮
பட்டு, மரணத்திற்குத்தம்மைத்தாழ்த்தி, சிலுவை
யின் மரணத்திற்கே கீழ்ப்பட்டவரானார்.—ஆத ௯
லால் தேவனும் அவரை மிகவும் உயர்த்தி, பரம
ண்டலத்திலும், பூமண்டலத்திலும், கீழுலகத்திலு
முள்ளயாவும்யேசுவின் நாமத்திற்குமுழங்காற்
படியிடும்படிக்கும்,-பிதாவாகிய தேவனுடை ௰
யமகிமைபிரகாசிக்க, யேசுக்கிறிஸ்துக்கர்த்
தரென்று நாவுகள்யாவும் அறிக்கையிடும்படிக்
கும்,—சகல நாமங்களுக்கும் மேலானநாமத்தை ௰௧
அவருக்குச்சூட்டினார்.-ஆதலால்என்பிரியமான ௰௨
வர்களே, நீங்கள் எப்பொழுதுங்கட்டளைக்கமை
ந்திருக்கிறபடி, நான்உங்களுக்குச்சமீபமாயிருக்
கிறபொழுதுமாத்திரமல்ல, இப்பொழுது நான்உ
ங்களுக்குத்தூரமாயிருக்கையிலும்மிகவும் அதிக
மாய்ப் பயத்தோடும், நடுக்கத்தோடும் உங்கள் இ
ரட்சிப்பைப்பெறும்படி பிரயத்தினம்பண்ணுங்
கள்.—தேவன் உங்கள் உள்ளத்தில், மனவிருப் ௰௩
பஞ் செய்கை இரண்டையுந் தமது பிரியசித்தத்
தின்படி சித்தியாக்கி வருகிறார்.-நான் ஓடினது ௰௪
ம், பிரயாசப்பட்டதும் வீணாகாமலிருப்பதினால்,
கிறிஸ்துவின் நாளில் எனக்கு மகிழ்ச்சியுண்
டாவதற்கு,-நீங்கள் சீவவாக்கியத்தைப்பிடித்துக் ௰௫
கொண்டு, குற்றமுங் கபடமுமில்லாதவர்களாய்,
கோணலும் வழுவுமுள்ள சந்ததியாருக்குள் உல
கத்திலே சுடர்களைப்போலப்பிரகாசித்து,—தே ௰௬
வனுடைய மாசில்லாத சந்ததியாராயிருக்கும்
படி, சகலத்தையும் மொறுமொறுப்பும், விவாத
முமில்லாமற் செய்யுங்கள்.—நான் உங்கள்விசு ௰௭
வாசமாகிய பலியின்மேலும், ஊழியத்தின்மே
லும் ஊற்றப்பட்டுப்போனாலும் மகிழ்ந்து, உங்
களெல்லாரோடுஞ் சந்தோஷப்படுவேன்.—இ ௰௮
தினிமித்தம் நீங்களும் என்னுடன் மகிழ்ந்து ச
ந்தோஷப்படுங்கள்.—அன்றியும் நானும் உங்கள் ௰௯
செய்திகளை அறிந்து ஆறுதலடையும்படி, சீக்

(௨௫) அதி.௨.௨௪. ௨.கொரி.௧.௰௪.(௨௭)அதி.௪.௧. ௧.கொரி ௧.௰. யூதா.௩.(௨௮)எபே.௪.௧. கொலோ.௧.௰.(௨௯) ௨.தெச.௧.௫. ரோ.௮.௰௭. ௨.திமோ.௨.௰௧. அப்.௫.௪௧. ரோ.௫.௩. எபே.௨.௮.(௩௰)கொலோ.௨.௨. அப்.௰௬.௰௯,. ௧.தெச.௨.௨.—(௨. அதி. ௧.)௨.கொரி.௰௩.௰௪. கொலோ.௩.௰௨.(௨)யோவா.௩.௨௯. ரோ.௰௨.௰௬. ௧.பேதுரு.௩. ௮.(௩)கலா.௫.௨௬.யாக்.௩.௰௪. ரோ.௰௨.௰. ௧.பேதுரு.௫.௫.(௪)௧.கொரி.௰.௨௪,௩௩.(௫)மத்.௰௧.௨௯.யோவா.௰௩. ௰௫. ௧.யோவா.௨.௬.(௬)யோவா.௧.௧,௨. ௨.கொரி.௪.௪. கொலோ.௧.௰௫. எபி.௧.௩. யோவா.௫.௰௮. யோவா.௰. ௩௩.(௭)சங்.௨௨.௬. ஏசா.௫௩.௩. தானி.௯.௨௬. மாற்.௯.௰௨. ரோ.௰௫.௩. ஏசா.௫௩.௰௧. எசேக்.௩௪.௨௩,௨௪. சக.௩. ௮. மத்.௨௰.௨௮. யோவா.௧.௰௪. ரோ.௧.௩. கலா.௪.௫. எபி.௨.௰௫,௰௭.(௮)மத்.௨௬.௩௯,௪௨. யோவா.௰.௰௮. எபி. ௫.௮.(௯)யோவா.௰௭.௨,௫. அப்.௨.௩௩.எபி.௨.௯.ஏசா.௪௫.௨௩. மத்.௨௮.௰௮.ரோ.௰௪.௰௧. வெளி.௫.௰௩.(௰)யோ வா.௰௩.௰௩. அப்.௨.௩௬. ரோ.௰௪.௯. ௧.கொரி.௮.௬.(௰௧)எபே.௧.௰௯,௨௰. எபி.௧.௪.(௰௨)எபே.௬.௫.(௰௩)௨.கொ ரி.௩.௫. எபி.௰௩.௨௧. (௰௪) ௧.கொரி.௰.௰. ௧.பேதுரு.௪.௯. ௧.பேதுரு.௨.௰௨. உபா.௩௨.௫. மத்.௫.௰௪.௰௬.எபே. ௫.௮. (௰௫) ரோ.௰௪.௧. மத்.௫.௪௫. எபே.௫.௧. (௰௬) ௨.கொரி.௧.௰௪. ௧.தெச.௨.௰௯. கலா.௨.௨. ௧.தெச.௩.௫. (௰௭) ௨.திமோ.௪.௬. ரோ.௰௫.௰௬. ௨.கொரி.௭.௪. கொலோ.௧.௨௪. (௰௯) ரோ.௰௬.௨௪. ௧.தெச.௩.௨.

கிரத்தில் தீமோத்தேயுவை உங்களிடத்தில் அ
னுப்பலாமென்று கர்த்தராகிய யேசுவை
௨௰ ப்பற்றிநம்புகிறேன்.—உங்கள் காரியங்களை மு
ழுவதும் விசாரிக்கிறதற்கு அவனைப்போலச்
சரிமனதான வேறொருவனும் என்னிடத்திலி
௨௧ ல்லை.—எல்லாரும் யேசுக்கிறிஸ்துவுக்கு
ரியவைகளையல்ல, தங்களுக்குரியவைகளையே
௨௨ தேடுகிறார்கள்.—பிதாவுடன்புத்திரன் ஊழியஞ்
செய்வதுபோல, அவன் என்னுடன் சுவிசே
ஷத்தில் ஊழியஞ்செய்துவந்தான், இதை நீங்
௨௩ கள் பரீட்சித்தறிந்திருக்கிறீர்கள்.—ஆதலால் என்
காரியங்களிப்படி நடக்குமென்று நான் அறிந்த
வுடன், அவனையே அனுப்பக்காத்திருக்கிறேன்.-
௨௪ எப்படியும் நான் உங்களிடத்தில் துரிதமாய்வரு
வேனென்பதற்கு, கர்த்தாவினால் எனக்கு
௨௫ நம்பிக்கைகிடைத்தது.—ஆயினும் என்சகோதர
னும், உடன்வேலையாளும், உடன்சேவகனும்,
உங்கள்தானுபதியும், என்குறைவுகளைநிறைவாக்
கினவனுமாகிய எப்பாபிரொதீத்து என்பவன்,-
௨௬ உங்களெல்லார்மேலும் வாஞ்சையுள்ளவனாய்,
தன்வியாதியாயிருந்ததை நீங்கள் கேள்விப்பட்
டதினிமித்தம் மிகவுந் துக்கமாயிருக்கிறபடியா
ல், அவனை உங்களிடத்தில் அனுப்பவேண்டு
௨௭ மென்றெண்ணினேன்.—அவன் மரணத்திற்குச்
சமீபமாக வியாதிப்பட்டிருந்தானே: தேவன்
அவனுக்கு இரங்கினார்; அவனுக்குமாத்திரமல்ல,
எனக்குத்துக்கத்தின்மேல் துக்கமுண்டாகாதப
௨௮ டி எனக்குமிரங்கினார்.—ஆதலால் நீங்கள் தி
ரும்பவும் அவனைக்கண்டு சந்தோஷப்படவும்,
என்துக்கங்குறையவும் உங்களிடத்தில் அதிசீக்
௨௯ கிரமாய் அவனை அனுப்பினேன்.—ஆனபடியால்
கர்த்தருக்குள் அவனை மிகுந்த சந்தோஷத்
தோடே அங்கிகரித்துக்கொள்ளுங்கள்; இப்ப
டிப்பட்டவர்களைக்கனமாயெண்ணுவீர்களாக.—
௩௰ நீங்கள் எனக்குச்செய்யவேண்டிய ஊழியத்தின்
குறைவைநிறைவாக்கும்படி அவன் தன்பிராண
னையும் எண்ணாமல், கிறிஸ்துவின் ஊழியத்
தினிமித்தம் மரணத்திற்குச் சமீபமாயிருந்தான்.

## ௩. அதிகாரம்.

௧. விருத்தசேதனம்முதலானவைகளினால்இரட்சி
ப்புப்பெறக்கூடாதென்றும், கிறிஸ்துவைப்
பற்றும்விசுவாசத்தாலேமாத்திரம்பெற்றுக்கொ
ள்ளலாமென்றுமுணர்ந்து, பவுல் கிறிஸ்து
வை ஆவலோடேசார்ந்துகொள்ளல்: ௰௭. துஷ்
டசனங்களைப்பின்செல்லாமல் தன்னைப்பின்
செல்லவேண்டல்.

மேலும் என்சகோதரரே, நீங்கள் கர்த்தருக்
குள் சந்தோஷப்படுங்கள். ஒரேவிதமான காரி
யங்களைத் திரும்பஉங்களுக்கெழுதுகிறது எனக்
குவருத்தமல்ல, உங்களுக்குத்திடமாகும்.—நாய் ௨
களைக்குறித்து எச்சரிக்கையாயிருங்கள், தீமை
யான வேலையாட்களைக்குறித்துச் சாவதானமா
யிருங்கள், சேதனக்காரரைக்குறித்து எச்சரிக்
கையாயிருங்கள்.-சரீரத்தின்மேல் நம்பிக்கையா ௩
யிராமல், ஆவியினாலே தேவனைச் சேவித்து,
கிறிஸ்துயேசுவுக்குள் மேன்மைபாராட்
டுகிற நாமே விருத்தசேதனமுள்ளவர்கள்.—ச ௪
ரீரத்தின்மேல் நம்பிக்கையாயிருப்பதற்கு எனக்
கிடமுண்டு. வேறொருவன் சரீரத்தின்மேல் நம்
பிக்கைகொள்ளநினைத்தால் அவனிலும் நான் அ
திகம்.—நான் எட்டாம்நாளில் விருத்தசேதனம் ௫
பெற்றவன், இஸரவேலின் வமிசத்தில் பென்யா
மீன் கோத்திரத்தான், எபிரேயரிற்பிறந்த எபிரே
யன்; நியாயப்பிரமாணத்தின்படி பரிசேயன்.—
பத்திவைராக்கியத்தைக்குறித்துச் சபையைத்து ௬
ன்பப்படுத்தினவன்; நியாயப்பிரமாணத்தினால்
வரும் நீதியைக்குறித்துக் குற்றமற்றவன்.—ஆகி ௭
லும் எனக்கு லாபமாயிருந்தவைகளை நான் கி
றிஸ்துவுக்காக நஷ்டமென்றெண்ணினேன்.-
நிச்சயமாகவே என் கர்த்தராகிய கிறிஸ்து ௮
யேசுவை அறிகிறஅறிவின்மேன்மைக்காகஎல்
லாவற்றையும் நஷ்டமென்றெண்ணுகிறேன்: அ
வருக்காக நான் அவைகளையெல்லாம் நஷ்ட
மாகத் தள்ளினேன், கிறிஸ்துவை நான் ஆ
தாயப்படுத்திக்கொள்வதற்கும்,—நியாயப்பிரமா ௯
ணத்தினால் வருகிற சுயநீதியையல்ல, கிறிஸ்து
வைப்பற்றும் விசுவாசத்தினாலே வருகிறதும்,
விசுவாசமூலமாய்த் தேவனால் வருகிறதுமாயி
ருக்கிற நீதியுடையவனாகி, கிறிஸ்துவுக்குள்
அங்கிகரிக்கப்பட்டவனாய்க் காணப்படும்படிக்
கும்,—இப்படி நான் அவரையும், அவர் உயிர்த் ௰
தெழுதலின் பலத்தையும், அவர்அநுபவித்தவே
தனைகளோடே ஐக்கத்தையும் அறிந்திருக்கிறது
மல்லாமல்,—எப்படியும் நானும் மரித்தோரிலி ௰௧
ருந்து உயிர்த்தெழுதலுக்குத் தகுதியாகும்படிக்
கும், அவருடைய மரணத்திற்கொப்பான மர
ணத்தைஅடையும்படிக்கும், இப்பொழுதே எல்
லாவற்றையும் குப்பையைப்போல் எண்ணியி
ருக்கிறேன்.—நான் பெற்றவனாக, அல்லது தேறி ௰௨
னவனாகச்சொல்லாமல், எதினிமித்தங் கிறிஸ்து
யேசுவினாற் பிடிக்கப்பட்டேனோ, அதையே
பிடித்துக்கொள்ளத்தொடருகிறேன்.—சகோதர ௰௩
ரே, நான் பிடித்துக்கொண்டேனென்றுஎண்ணு
கிறதில்லை: ஒன்று செய்கிறேன், பின்னானவை

(௨௧) ௧.கொரி.௰.௨௪,௩௨.(௨௨)௧.கொரி.௪.௰௭. (௨௪) அதி.௧.௨௫.(௨௫)அதி.௪.௰௮. பிலே.௨. ௨.கொரி.௮.௨௩.
௨.கொரி.௰௧.௯.(௨௬)அதி.௧.௮. (௨௯) ௧.கொரி.௰௬.௰௮.(௩௰)௧.கொரி.௰௬.௰௭.—(௩.அதி.௧.) ௨.கொரி.௰௩.௰௧.
௧.தெச.௫.௰௬.(௨)எசா.௫௬.௰. கலா.௫.௰௫.௨.கொரி.௰௧.௰௩.ரோ.௨.௨௮. கலா.௫.௨.(௩)உபா.௰.௰௬. எரே.௪.௪.
ரோ.௨.௨௯. கொலோ.௨.௰௧. யோவா.௪.௨௩,௨௪. ரோ.௭.௬. கலா.௬.௰௪.(௪)௨.கொரி.௰௧.௰௮.௨௧.(௫)அதி.௰௭.
௰௨. ௨.கொரி.௰௧.௨௨.ரோ.௰௧.௧.அப்.௨௩.௬ (௬)அப்.௨௨.௩.கலா.௧.௰௩,௰௪.அப்.௮.௩.ரோ.௰ ௫. லூக்.௧.௬.(௭)
மத்.௰௩.௪௪.(௮)எசா.௫௩.௰௧.எரே.௯.௨௩,௨௪.யோவா.௰௭.௩. ௧.கொரி.௨.௧.கொலோ.௨.௨ (௯)ரோ.௰.௩.௫.ரோ.
௧.௰௭.ரோ.௩.௨௧,௨௨.(௰)ரோ.௬.௩,௪,௫. ௨.கொரி.௪.௰,௰௧. ௨.திமோ.௨.௰௧,௰௨. ௧.பேதுரு.௪.௰௨.(௰௧)அப்.௨௬.
௭.(௰௨)௧.தீமோ.௬.௰௨.எபி.௰௨.௨௩.(௰௩)சங்.௪௫.௰.லூக்.௯.௬௨. ௨.கொரி.௫.௰௪.௧.கொரி.௯.௨௪,௨௬.எபி.௬.௨

வைகளை மறந்து, முன்னானவைகளை எட்டி நா
௰௪ டி,—கிறிஸ்துயேசுவினால் என்னை உன்ன
தத்தினின்று அழைத்தவராகிய தேவன் வைத்
த பந்தயப்பொருளாகிய இலக்கைக்கண்டு ஓடுகி
௰௫ றேன்.-ஆகையால் நம்மில் தேறினயாவரும் இவ்
வித சிந்தையுள்ளவர்களாவோமாக: எந்தக்காரி
யத்திலாயினும் நீங்கள் வேறுவிதமான எண்ணங்
கொண்டீர்களேயாகில், அதையுந் தேவன் உங்
௰௬ களுக்கு வெளிப்படுத்துவார்.—எப்படியும் நாம்
எதுவரையில் வந்திருந்தாலும்,ஏகசித்தமுள்ளவர்
களாகி, ஒரே பிரமாணத்தின்படி நடக்கக்கட
௰௭ வோம்.-சகோதரரே, நீங்கள் கூடி என்னைப் பின்
பற்றுகிறவர்களாய், நாங்கள் உங்களுக்கு வழி
காட்டுகிறபடி நடக்கிறவர்களுடைய நடையை
௰௮ ப்பாருங்கள்.—அநேகர் கிறிஸ்துவின் சிலு
வைக்குப் பகைஞராய் நடக்கிறார்கள், அவர்க
ளைக்குறித்து நான் அடிக்கடி உங்களுக்குச்சொன்
னேன், இப்பொழுது அழுகையோடும் உங்க
௰௯ ளுக்குச்சொல்லுகிறேன்.—அவர்களுடைய மு
டிவு நாசம், அவர்களுடைய தேவன் வயிறு, அ
வர்கள் மகிமை இலச்சையிலிருக்கிறது,அவர்கள்
௨௰ இப்பிரபஞ்சத்திற் சிந்தைவைக்கிறார்கள்.—நம்
முடைய சஞ்சரிப்போ பரமண்டலத்திலிருக்
கின்றது, அங்கேயிருந்து கர்த்தராகிய யே
சுக்கிறிஸ்து இரட்சகர் வருதலை எதிர்பார்த்தி
௨௧ ருக்கிறோம்.—அவர் எல்லாவற்றையுந் தமக்குக்
கீழ்ப்படுத்தும்படிக்கு மிகுந்தவல்லமையுடைய
வராகையால், நம்முடைய ஈனசரீரம் தமது மகி
மையுள்ளசரீரத்திற்கு ஒப்பாயிருக்கும்படி அதை
மறுரூபப்படுத்துவார்.

## ௪. அதிகாரம்.

௧. பவுல் சிலவிசேஷங்களை வேண்டல்: ௪. நா
னாவிதசற்கிரியைகளைக்குறித்து உபதேசித்தல்:
௰. பவுல் துதிசொல்லிச் சிலரிடத்தில் வாழ்த்து
தல் அனுப்பல்.

ஆனபடியினால் எனக்கு அன்புள்ளவர்களு
மாய், வாஞ்சிக்கப்பட்டவர்களுமாய், எனக்குச்
சந்தோஷமுங் கிரீடமுமாயிருக்கிற என் சகோ
தரரே,பிரியமானவர்களே,நீங்கள் இவ்விதமாகக்
௨ கர்த்தருக்குள் ஸ்திரமாயிருங்கள்.—கர்த்த
ரில் ஏகசித்தமுள்ளவர்களாயிருக்கும்படி யுவோ
தியாளுக்கும், சிந்திகேயாளுக்கும் புத்திசொல்
௩ லுகிறேன்.—என் உண்மையானகூட்டாளியே,
அவர்களுக்குத் துணையாய் நிற்கும்படி உன்னை
யும் வேண்டிக்கொள்ளுகிறேன், அவர்கள் கிலே
மியோடும், மற்ற என் உடன்வேலையாட்களோ
டுஞ்சுவிசேஷத்தைக்குறித்துஎன்னோடேகூடிப்
போராடினார்களே, அவர்களுடைய நாமங்கள்
ஜீவபுத்தகத்திற் பதிந்திருக்கின்றன.—கர்த் ௪
தருக்குள் எப்பொழுதுஞ் சந்தோஷப்படுங்
கள்: சந்தோஷப்படுங்களென்று திரும்பவுஞ்
சொல்லுகிறேன்.—உங்கள் அடக்கம் எல்லாருக் ௫
குந் தெரியவரக்கடவது. கர்த்தர் சமீபமாயி
ருக்கிறார்.—நீங்கள் ஒன்றையுங்குறித்துக் கவ ௬
லைப்படாமல், எல்லாவற்றிலும் உங்கள் விண்
ணப்பங்களை ஸ்தோத்திரிப்புடனே பிரார்த்தனை
யினாலும்,வேண்டுதலினாலும் தேவனிடத்திலே
தெரியப்பண்ணுங்கள்.-அப்பொழுது எந்தப்புத் ௭
திக்குமெட்டாத தேவசமாதானம், கிறிஸ்து
யேசுவினால் உங்கள் இருதயங்களையுஞ் சிந்த
னைகளையுங் காப்பாற்றும்.—சகோதரரே, சத்திய ௮
மும்,இலக்கணமும், நேர்மையும், பவித்திரமும்,
நேசமும், நற்கீர்த்தியுமானவைகளெவைகளோ,
மற்றப்புண்ணியமும், புகழ்ச்சியுமானவைகளெ
வைகளோ, அவைகளையேசிந்தித்துக்கொள்வீர்க
ளாகவென்று கடைசியாய்ச்சொல்லுகிறேன்.—
நீங்கள்என்னிடத்திற்கற்றும், அடைந்தும்,கேட் ௯
டும், கண்டுமிருப்பவைகளின்படிநடந்துகொள்
வீர்களாக: அப்பொழுதுசமாதான தேவன் உங்
களோடிருப்பார்.—நீங்கள் என்னைவிசாரிக்கும் ௰
விசாரணை இப்பொழுதுதிரும்பவுந்தழைத்ததினி
மித்தம், கர்த்தருக்குள் நான் மிகவுங் களி
கூருகிறேன். முன்னமே என்மேற் சிந்தைவைத்
தீர்களே;ஆகிலும்உதவிசெய்யச் சமயம்மாத்திரம்
உங்களுக்குக் கிடைக்கவில்லை.—நான் குறைவு ௰௧
பட்டதினால்இப்படிச்சொல்லவில்லை: எந்தநிலை
மையிலும் மனத்திருத்தியாயிருக்கக் கற்றுக்கொ
ண்டேன்.—குறைவுபட அறிவேன், நிறைவுபட ௰௨
அறிவேன்: எவ்விடத்திலும் எல்லாவற்றிலுந் தி
ருத்தியாயிருக்கவும், பசியாயிருக்கவும், நிறைவு
படவும், குறைவுபடவுங்கற்றுக்கொண்டேன்.-
என்னைப்பலப்படுத்துகிற கிறிஸ்துவினாலே ௰௩
சகலத்தையுஞ் செய்ய எனக்குத்திராணியுண்டு.-
ஆனாலும் என் உபத்திரவத்திலே நீங்கள் எனக்கு ௰௪
உதவிசெய்ததினாலே நன்றாய்ச்செய்தீர்கள்.—பி ௰௫
லிப்பியரே,சுவிசேஷத்தின் ஆரம்பத்திலே நான்
மக்கேதோனியாவிலிருந்து புறப்பட்டபொழு
து, நீங்கள் மாத்திரமேயன்றி, வேறொரு சபை
யுங் கொடுக்கல் வாங்கல் என்பதில் உடன்பட
வில்லை, இதை அறிந்துகொள்ளுங்கள்.—தெச ௰௬

(௰௪)௨.தீமோ.௪.௭,௮. எபி.௰௨.௧. எபி.௩.௧.(௰௫)௧.கொரி.௨.௬. கலா.௫.௰.(௰௬)ரோ.௰௨.௰௬. கலா.௬.௰௬.அதி.௨.௨.(௰௭)௧.கொரி.௪.௰௬. ௧.தெச.௧.௬. ௧.பேதுரு.௫.௩. (௰௮) கலா.௧.௭.(௰௯)௨.கொரி.௰௧.௰௫. ௨.பேதுரு.௨.௧. ரோ.௰௬.௰௮. ௧.தீமோ.௬.௫. தீத்.௧.௰௧. ஓசி.௪.௭. ௨.கொரி.௰௧.௰௨.ரோ.௮.௫.(௨௰)எபே.௨.௭,௰௯.கொலோ.௩.௧,௩. அப்.௧.௰௧. ௧.கொரி.௧.௭. ௧.தெச.௧.௯ தீத்.௨.௰௨.(௨௧)௧.கொரி.௰௫.௪௩,௪௮,௪௯.கொலோ.௩.௪. ௧.யோவா.௩.௨. எபே.௧.௨௩. ௧.கொரி.௰௫.௨௬,௨௭.—(௪.அதி.௧.) அதி.௧.௮. ௨.கொரி.௧.௰௪. ௧.தெச.௨.௰௯,௨௰.அதி.௧.௨௭. (௨) அதி.௨.௨.(௩)ரோ.௰௬.௩. யாத்.௩௨.௩௨. தானி.௰௨.௧. லூக்.௰.௨௰. வெளி.௨௰.௰௨. வெளி.௨௧.௨௭. (௪) ரோ.௰௨.௰௨. ௧.தெச.௫.௰௬. ௧.பேதுரு.௪.௰௩. எபி.௰.௨௫. யாக்.௫.௮,௯. ௧.பேதுரு.௪.௭. ௨.பேதுரு.௩.௮,௯. ௨.தெச.௨.௨.(௬)சங்.௫௫.௨௨. நீதி.௰௬.௩. மத்.௬.௨௫. ௧.பேதுரு.௫.௭.(௭)யோவா.௰௪.௨௭. ரோ.௫.௧. கொலோ ௩.௰௫.(௮)௧.தெச.௫.௨௨. (௯) அதி.௩.௰௭. ரோ.௰௫.௩௩. ௨.கொரி.௰௩.௰௧. ௧.தெச.௫.௨௩. எபி.௰௩.௨௰.(௰)௨.கொரி.௰௧.௯. (௰௧) ௧.தீமோ.௬.௬,௮. (௰௨) ௧.கொரி.௪.௰௧. ௨.கொரி.௬.௰. (௰௩) யோவா.௰௫.௫. ௨.கொரி.௰௨.௯. (௰௪) அதி.௧.௭. (௰௫) ௨.கொரி.௰௧.௮,௯.

லோனிக்காவில் நான் குறைவுபட்டபொழுது
நீங்கள்ஒருதரம்மாத்திரமல்ல, இரண்டுதரம் அனு
௰௭ ப்பினீர்கள்.-நன்கொடையைநான்விரும்புகிறவ
னாய்இதைச்சொல்லவில்லை: உங்களுக்கு இலாப
௰௮ மாய்முடியும் பலனையே விரும்புகிறேன்.—இப்
பொழுது எல்லாம் எனக்குக்கிடைத்தது: பரிபூர
ணமுமுண்டாயிற்று, தேவனுக்கு மிகப்பிரிய
மும், அங்கிகரிக்கப்படத்தக்கதுமான சுகந்தவா
சனைபொருந்திய பலியாகிய காணிக்கையாய், எப்பா
பிரோதீத்தின் கையில் பெற்றுக்கொண்டபடியா
௰௯ ல் நான் பூரணப்பட்டிருக்கிறேன்.-என் தேவ
ன்தமதுமகிமையுள்ள ஐசுவரியத்தின்படி கிறிஸ்
து யேசுவினால் உங்கள் குறைவுகளை எல்லாம்
நிறைவேற்றுவார்.—சதாகாலங்களிலும் நம்மு ௨௰
டைய பிதாவாகிய தேவனுக்கு மகிமையுண்
டாவதாக. ஆமென்.—கிறிஸ்து யேசுவின் ப ௨௧
ரிசுத்தவான்கள் யாவருக்கும் வாழ்த்துதல்சொல்
லுங்கள். என்னுடனிருக்கிற சகோதரர் உங்க
ளுக்கு வாழ்த்துதல் சொல்லுகிறார்கள்.—பரிசுத் ௨௨
தவான்களனைவரும், விசேஷமாக இராசாவின்
அரமனையிலுள்ளவர்களும், உங்களுக்கு வாழ்த்
துதல் சொல்லுகிறார்கள்.—நம்முடைய கர்த்த ௨௩
ராகிய யேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்க
ளனைவரோடும் இருக்கக்கடவது. ஆமென்.

(௰௭) ரோ.௰௫.௨௮. தீத்.௩.௰௪. (௰௮) அதி.௨.௨௫. எபி.௰௩.௰௬. ௨.கொரி.௯.௰௨. (௰௯) சங்.௨௩.௧. ௨.கொரி.௯.௮. எபே.௧.௮. (௨௰) ரோ.௰௬,௨௭. கலா.௧.௫. (௨௧) கலா.௧.௨. (௨௨) அதி.௧.௰௩. (௨௩) ரோ.௰௬.௨௪.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொலோசருக்கெழுதிய நிருபம்.

## ௧. அதிகாரம்.

*௧. வாழ்த்துதல்சொல்லல்: ௩. கொலோசரின் விசுவாசத்தினிமித்தம் பவுல் ஸ்தோத்திரஞ்சொல்லல்: ௯. ஞானவரங்கள் அவர்களுக்குக்கிடைக்கும்படி பவுல் பிரார்த்தித்தல். கிறிஸ்துவின் தேவத்துவத்தையும், அவருடைய அனுக்கிரகத்தையுந் தெரிவித்தல். சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்துகிறதற்குத் தனக்குண்டான அதிகாரமே அருளென்றுசொல்லல்.*

தேவனுடைய சித்தத்தினாலே யேசுக்கி
றிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பவுலும், ச
௨ கோதரனாகிய தீமோத்தேயும்,–கொலோசிலே கி
றிஸ்துவுக்குள் பரிசுத்தவான்களும் விசுவாசி
களுமாயிருக்கிற சகோதரருக்கு எழுதிக்கொள்
வது: நம்முடைய பிதாவாகிய தேவனாலும்,
கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவினாலும்
உங்களுக்குக்கிருபையுஞ் சமாதானமுமுண்டா
௩ கக்கடவன.–கிறிஸ்துயேசுவின்மேல் நீங்
கள் விசுவாசம்வைத்திருக்கிறதையும், எல்லாப்
பரிசுத்தவான்கள்மேலும் நீங்கள் அன்புகூருகி
௪ றதையும் நாங்கள் கேள்விப்பட்டு,—சத்திய சுவி
சேஷத்தின் வாக்கியத்தினாலே நீங்கள் முன்பு
௫ கேட்டபடி,-பரமண்டலத்தில் உங்கள் நிமித்தம்
வைக்கப்பட்டிருக்கிற நம்பிக்கைப் பொருளுக்
காக,நம்முடைய கர்த்தரான யேசுக்கிறிஸ்
துவின் பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்தி
ரஞ்செய்து, எப்பொழுதும் உங்களுக்காகப் பி
௬ ரார்த்தனைபண்ணிவருகிறோம்.—அந்தச் சுவிசே
ஷம் உலகத்திலெங்கும் பரம்பிப் பலனை விளை
விக்கிறதுபோல, உங்களிடத்திற் சேர்ந்து, நீங்
கள் தேவனுடைய கிருபையை உண்மை
யாய்க் கேட்டறிந்துகொண்டநாள்முதலாக உங்
களுக்குள்ளும் பலனைக்கொடுக்கிறதாயிருக்கின்
௭ றது.—அதை நீங்கள் எங்களுக்குப் பிரியமான
உடன்வேலைக்காரனும், உங்களுக்காகக் கிறிஸ்
துவின் உண்மையான ஊழியக்காரனுமாகிய
எப்பாபிராவினிடத்திற் கற்றுக்கொண்டீர்கள்.–
௮ ஆவிக்கேற்றஉங்கள் அன்பை அவனே எங்களுக்
௯ குத் தெரிவித்தான்.—நாங்கள் அதைக்கேள்விப்
பட்டநாள்முதல் நீங்கள், சம்பூரணஞானத்திலு
ம், ஆவிக்கேற்றபுத்தியிலும், அவருடையசித்தத்
தை அறியுமறிவிலும் நிறைந்தவர்களாகி, தேவ
னை அறிகிற அறிவிலே விருத்தியடைந்து, சகல
நற்கிரியைகளாகிய கனிகளைக்கொடுத்து,–கர்த் ௰
தருக்குப் பாத்திரரும், மிகுந்த பிரியருமாய்
நடக்கவும்,—அவருடைய மகிமைபொருந்திய ௰௧
வல்லமையின்படி ஆனந்தத்தோடே சம்பூரண
மான சாந்தமும், நீடிய பொறுமையுமுள்ளவர்க
ளாகும்பொருட்டு,மகிமையுள்ளவல்லமையினாற்
பலப்படுத்தப்படவும்,–ஒளியுள்ள பரிசுத்தவான் ௰௨
களுடைய சுதந்தரத்திற் பங்கடைவதற்கு நம்மை
யோக்கியராக்கின பிதாவைத்துதிசெய்து, உங்
கள் நிமித்தம் இடைவிடாமல் வேண்டுதல்பண்
ணிவருகிறோம்.—அவர் இருளின் அதிகாரத்தி ௰௩
னின்று நம்மைவிடுவித்து, தமக்கன்பானவராகி
ய குமாரனுடைய இராச்சியத்திற் பிரவேசிக்கப்
பண்ணினார்.—இவருடைய இரத்தத்தினாற்பாவ ௰௪
மன்னிப்பாகிய மீட்பைப்பெற்றிருக்கிறோம்.—
இவர், அதரிசிய தேவனுடைய சாயலுள்ளவ ௰௫
ரும், சகல சிருஷ்டிகளுக்கும் முதன்மையுமாயி
ருக்கிறார்.—அவராலே யாவுஞ் சிருஷ்டிக்கப் ௰௬
பட்டன; வானத்திலுள்ளவைகளும், பூமியிலுள்
ளவைகளுமாகிய சிங்காசனங்களும், இராசத்து
வங்களும், பிரபுத்துவங்களும், அதிகாரங்களு
மான காணப்படுகிறவைகள், காணப்படாதவை
கள் எல்லாம் அவராலும், அவர் நிமித்தமுஞ்
சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன.–அவர் எல்லா ௰௭
வற்றிற்கும் முந்தினவராயிருக்கிறார், சகலவஸ்
துக்களும் அவராலே நிலைநிற்கின்றன.—அவர், ௰௮
சபையாகிய சரீரத்துக்குத்தலையாயிருக்கிறதுமல்
லாமல், சருவத்திலும் மேன்மையுள்ளவராகும்
பொருட்டு ஆதியும், மரித்தோரை நீங்கி உயிர்த்
தெழுந்த முதற்பேறுமானவராயிருக்கிறார்.—சக ௰௯
ல சம்பூரணமும் அவருக்குள்ளேவாசமாயிருக்
கும்படிக்கும்,––அவர் சிலுவையிற் சிந்தின இ ௨௰
ரத்தத்தினால் சமாதானமாக்கி, பூமியிலும் வா
னத்திலுமுள்ள வஸ்துக்கள் யாவையும் அவ
ராலேதமக்கு ஒப்புரவாக்கும்படிக்கும், பிதா
பிரியமாயிருந்தார்.—முன்னே துர்க்கிரியைகளி ௨௧
னால் அந்நியரும், மனதிலே சத்துருக்களுமாயி
ருந்த உங்களைத் தம்முடைய சமுகத்தில்—பரி ௨௨
சுத்தமும், மாசின்மையும், குற்றஞ் சாற்றப்படா

(௧. அதி. ௧.) எபே.௧. (௨) ௧.கொரி.௪.௰௭. கலா.௧.௩. (௩) எபே.௧.௰௫. எபி.௬.௰. (௪) ௧.கொரி.௧.௪. எபே.௧.௰௬. ௨.தீமோ.௪.௮. ௧.பேதுரு.௧.௫. (௬) மத்.௨௪.௰௪. ரோ.௰.௰௮. யோவா.௰௫.௰௬. பிலி.௧.௰௧. ௨.கொரி.௯.௧. எபே.௩.௨. தீத்.௨.௰௧. ௧.பேதுரு.௫.௰௨. (௭) பிலே.௨௩. ௨.கொரி.௰௧.௨௩. ௧.தீமோ.௪.௬. (௮) ரோ.௰௫.௩௨. (௯) எபே.௧.௰௫,௰௬. ௧.கொரி.௧.௬. ரோ.௰௨.௨. எபே.௫.௰,௰௭. எபே.௧.௭. யோவா.௰௫.௰௬. ௨.கொரி.௯.௮. எபி.௰௩.௨௧. (௰) எபே.௪.௧. ௧.தெச.௨.௰௨. ௧.தெச.௪.௧. (௰௧) எபே.௩.௰௬. எபே.௪.௨. அப்.௫.௪௧. ரோ.௫.௩. (௰௨) எபே.௫.௨௰. அப்.௨௬.௰௮. எபே.௧.௰௨. (௰௩) எபே.௬.௰௨. எபி.௨.௰௪. ௧.பேதுரு.௨.௯. ௧.தெச.௨.௰௨. ௨.பேதுரு.௧.௰௧. மத்.௩.௰௭. எபே.௧.௫. (௰௪) எபே.௧.௮. (௰௫) ௨.கொரி.௪.௪. எபி.௧.௩. வெளி.௩.௰௪. (௰௬) யோவா.௧.௩. ௧.கொரி.௮.௬. எபே.௩.௯. எபி.௧.௨. ரோ.௮.௩௮. எபே.௧.௰௯. ௧.பேதுரு.௩.௨௨. ரோ.௰௧.௩௬. எபி.௨.௰.(௰௭)யோவா.௧.௧,௩. ௧.கொரி.௮.௬.(௰௮)௧.கொரி.௰௧.௩. எபே.௧.௯,௨௧. அப்.௨௬.௨௩. ௧.கொரி.௰௫.௨௰,௨௩.வெளி.௧.௫.(௰௯)யோவா.௧.௰௭.(௨௰)எபே.௨.௰௪,௰௫,௰௬. ௨.கொரி.௫.௰௮. எபே.௧.௯. (௨௧) எபே.௨.௧,௨,௰௨.௰௯. தீத்.௧.௰௫,௰௬.(௨௨)எபே.௨.௰௫,௰௬. லூக்.௧.௭௫. எபே.௧.௪. ௧.தெச.௪.௭. தீத்.௨.௰௪. யூதா.௨௪.

மையுமுள்ளவர்களாய் ஸ்தாபிக்கும்பொருட்டு,
அவர் தமதுசரீரத்தை மரணத்திற்கு ஒப்புக்கொ
௨௩ டுத்து, உங்களையும் ஒப்புரவாக்கினார்.—ஆதலால்
வானத்தின்கீழெங்குமுள்ள எல்லாச்சனங்களுக்
கும் பிரசங்கிக்கப்பட்டதும், நீங்கள் கேட்ட
துமாகிய அந்தச்சுவிசேஷத்தின் நம்பிக்கைக்கு
விலகிப்போகாமல், விசுவாசத்தில் அஸ்திபாரப்
பட்டு, உறுதியாய் நிலைகொண்டிருப்பீர்களேயா
௨௪ கில் அப்படியேயாகும்.—பவுலாகிய நான்
அதற்கு ஊழியக்காரனாக ஏற்படுத்தப்பட்டிருக்
கிறேன்; உங்கள்நிமித்தம் இப்பொழுது நான் அ
னுபவிக்கிற என் உபத்திரவங்களிற் சந்தோஷப்
பட்டு, கிறிஸ்துவின் உபத்திரவங்களின் சே
ஷத்தை என் மாமிசத்தில் அவருடைய சரீரமா
கிய சபையினிமித்தம் நிறைவேற்றுகிறேன்.—
௨௫ அதற்கு நான் தேவனுடைய நியமத்தின்படி
௨௬ ஊழியக்காரனானேன்.— ஆதிகாலந்தொடங்கித்
தலைமுறைதலைமுறையாக மறைவாயிருந்து, இப்
பொழுது அவருடையபரிசுத்தவான்களுக்கு வெ
ளியாக்கப்பட்ட மறைபொருளாகிய தேவவாக்
கை நிறைவாய்ப் பிரசங்கம்பண்ணுகிற பாரம்,
உங்கள்நிமித்தம் என்னிடத்தில் ஒப்பிக்கப்பட்
௨௭ டிருக்கின்றது.—அந்தப் பரிசுத்தவான்களுக்கு
அந்நியரைப்பற்றும் இந்தமறைபொருளின் மகி
மைபொருந்திய ஐசுவரியமின்னதென்று தெரி
யப்பண்ணத் தேவன் சித்தமாயிருந்தார்; அது
உங்களிலுள்ள மகிமையின்நம்பிக்கையாகிய கி
௨௮ றிஸ்துவே.-எந்தமனுஷனையும் கிறிஸ்துயே
சுவினாலே சீர்பொருந்தினவனாக நிறுத்தும்ப
டிக்கு அவரையே பிரசித்தப்படுத்தி, எந்தமனுஷ
னையும் உணர்த்தி, சகலவிதமான ஞானத்தோடும்
௨௯ உபதேசிக்கிறோம்.-அதற்காகஎன்னிடத்தில்வல்
லமையைஉண்டாக்குகிறஅவருடையபலத்தின்
படி நான்போராடி, பிரயாசப்பட்டுவருகிறேன்.

## ௨. அதிகாரம்.

௧. ஸ்திரமாயிருக்கும்படி பவுல் அவர்களை வேண்டல்: ௮. வீண்வித்தையைக்குறித்து எச்சரித்தல்: ௰௬. தேவதூதருக்குப் பூசைசெய்யாமல்விலக்கல்: ௨௰. இப்பிரபஞ்சமானவைகளையும், மனுஷருடைய விதிகளையும் விலக்கும்படிஏவல்.

நீங்களும், இலாவோதிக்கையா சபையாரும்,
சரீரத்தின்படி என்முகத்தைக் காணாதிருக்கிற
௨ மற்றவர்களும்,—அன்பிலிசைந்தவர்களாய் மன
ஆறுதலடைந்து, சகலசம்பூரண நிச்சயஞானமா
கிய ஐசுவரியத்தைப்பெற்று,—ஞானமும், அறி ௩
வுமாகிய பொக்கிஷங்களெல்லாம் அடங்குங் கி
றிஸ்துவுக்கும், பிதாவாகிய தேவனுக்குமு
ரிய இரகசியத்தை அறிக்கையிடும்படி, உங்கள்நி
மித்தமும், அவர்கள்நிமித்தமும்எனக்குண்டான
போராட்டமின்னதென்று நீங்கள் அறியவிரும்
புகிறேன்.—ஒருவனும் நயவாக்குகளினால் உங் ௪
களைவஞ்சியாதபடி இதைச்சொல்லுகிறேன்.—
நான் சரீரத்தின்படி உங்களோடே இல்லாதிருந் ௫
தும், ஆவியின்படி இருக்கிறேன், கிறிஸ்துவில்
உங்கள் ஒழுங்கையும், உங்கள் உறுதியானவிசு
வாசத்தையும்பார்த்துச்சந்தோஷப்படுகிறேன்.-
ஆனபடியினாலே நீங்கள் கர்த்தராகிய கி ௬
றிஸ்துயேசுவை அங்கிகரித்தபிரகாரம்,—நீங் ௭
கள்பெற்ற உபதேசத்திற்கேற்க அவருக்குள்ளே
வேரூன்றி, அவர்மேற் கட்டப்பட்டு, விசுவா
சத்திலே ஸ்திரப்பட்டு, அதிலே விருத்தியடைந்
து ஸ்தோத்திரஞ்செய்து, இப்படி அவருக்கேற்
றபடி நடவுங்கள்.—கிறிஸ்துவின்படியல்ல, ௮
மனுஷருடைய பாரம்பரை முறைமையின்படி
யேயும், உலகத்திலுள்ள சிறுமையானவழிபாடுக
ளின்படியேயுமானவீணும், வஞ்சனையுமாயிருக்
கிற கல்வியினால் ஒருவனும் உங்களை வஞ்சியா
தபடி நீங்கள் எச்சரிக்கையாயிருங்கள்.-அவருக் ௯
குள் தேவத்துவத்தின் பரிபூரணமெல்லாம் உரு
வாய்த்தங்கியிருக்கின்றது.—சகல ஆதிபத்தியங் ௰
களுக்கும், அதிகாரங்களுக்குந் தலைவராயிருக்கி
ற அவருக்குள் நீங்கள்சம்பூரணப்பட்டிருக்கிறீர்
கள்.-அவர் பண்ணுகிற விருத்தசேதனத்தினாலே ௰௧
நீங்கள் சரீரத்தின் பாவங்கள் முழுவதையும் நீக்
கி, கையாற்செய்யப்படாத விருத்தசேதனத்தை
அவருக்குள்பெற்றீர்கள்.—அவரோடே நீங்கள் ௰௨
ஞானஸ்நானத்தினால் அடக்கம்பண்ணப்பட்டு,
மரித்தோரிலிருந்து அவரை எழுப்பின தேவன்
அருளிய பராக்கிரமத்தில், விசுவாசத்தினால் அவ
ருடன் உயிர்த்தெழுந்துமிருக்கிறீர்கள்.—பாவங் ௰௩
களினாலும், உங்கள் மாமிசவிருத்தசேதனமில்
லாமையினாலும் மரித்தவர்களாகிய உங்கள் பா
வங்களெல்லாவற்றையும் அவர் உங்களுக்கு மன்
னித்து, அவருடன் உங்களை உயிர்ப்பித்தார்.—
நம்மைக்குறித்து நமக்குவிரோதமாயிருந்தகட்ட ௰௪
ளைகளின் கையெழுத்தை அழித்து, அதை நடுவி
லிராதபடி எடுத்து, தமது சிலுவையில் அறைந்
து,—ஆதிபத்தியங்களையும், அதிகாரங்களையுங் ௰௫

(௨௩) எபே.௩.௰௭.யோவா.௰௫.௬. ரோ.௰.௰௮.௯௪.௬. (௨௪) அப்.௧.௰௭. ௨.கொரி.௩.௬.எபே.௩.௭. ௧.தீமோ. ௨.௭.ரோ.௫.௩. ௨.கொரி.௭.௪. எபே.௩.௧,௰௩. ௨.கொரி.௧.௫,௬. பிலி.௩.௰. ௨.தீமோ.௧.௮. எபே.௧.௨௧. (௨௫) ௧.கொரி.௯.௰௭. கலா.௨.௮. எபே.௩.௨. (௨௬) ரோ.௰௫.௰௮.ரோ.௰௬.௨௫. ௧.கொரி.௨.௭.எபே.௩.௯.மத்.௰௯.௰௨. ௨.தீமோ.௧.௰.(௨௭)௨.கொரி.௨.௰௪.ரோ.௯.௨௩.எபே.௧.௮. ௧.தீமோ.௧.௧.(௨௮) அப்.௨௰.௨௰,௨௭,௩௧.௨.கொரி. ௰௧.௨. எபே.௫.௨௬. (௨௯) ௧.கொரி.௰௫.௰.அதி.௨.௧. எபே.௧.௨௩.—(௨.அதி.௨.) ௨.கொரி.௧.௬.அதி.௯.௰௪. (௩)பிலி.௧.௩௰. ௧.தெச.௨.௨.பிலி.௩.௮. ௧.கொரி.௧.௨௪. எபே.௧.௭. (௪) ரோ.௰௬.௰௮. ௨.கொரி.௰௧.௰௩. எபே. ௪.௰௩. (௫) ௧.கொரி.௫.௩.௧.தெச.௨ ௰௭. ௧.கொரி.௰௪.௪௰. ௧.பேதுரு.௫.௯. (௬) ௧.தெச.௪.௧.யூதா.௩. (௭)எபே. ௨.௨௧,௨௨. (௮) எரே.௨௯.௮. ரோ.௰௬.௰௭. எபே.௫.௭. எபி.௰௩.௯. மத்.௰௫.௨. கலா.௧.௰௪. கலா.௪.௩,௯. (௯) யோவா.௧.௰௪. (௰) யோவா.௧.௰௭.எபே.௧.௰௯,௨௰. ௧.பேதுரு.௩.௨௨.அதி.௧.௰௬. (௰௧) உபா.௰.௰௬. எரே.௪.௪. ரோ.௨.௨௯.பிலி.௩.௩.ரோ.௬.௬.எபே.௪.௨௨. (௰௨)ரோ.௬.௪. அதி.௩.௧. எபே.௧.௨௩. அப்.௨.௨௪.(௰௩) எபே.௨ ௨,௪,௭.௰௧. (௰௪) எபே.௨.௰௫,௰௬. (௰௫) ஆதி.௩.௰௫. சங்.௬௮.௰௮. ஏசா.௫௩.௰௨. மத்.௰௨.௨௯. யோவா.௰௨.௩௧. எபே.௪.௮. எபி.௨.௰௪. எபே.௬.௰௨.

கொள்ளையிட்டு, அவைகளின்மேல் வெற்றிசிறந்
து,அவைகளைப் பிரசித்தமாய் இலச்சைப்படுத்தி
௰௬ ஞர்.-ஆதலால் போசனபானத்தையும்,உற்சவதி
னங்களையும், அமாவாசிகளையும், ஓய்வுநாட்களை
யுங்குறித்து ஒருவனும் உங்களைக் குற்றவாளிக
௰௭ ளாக்கப்படாது.-அவைகள்வரும்விசேஷங்களு
க்குநிழலானவைகள்;பொருள் கிறிஸ்துவே.-
௰௮ சுயேச்சையின்படி தேவதூதருக்குச்செய்யும் ஆ
ராதனையின்மேலும், தாழ்மையின்மேலும் நம்பிக்
கைவைத்து, தன் மாமிசசிந்தையினுலே விருதா
வாய் இறுமாப்படைந்து,தான்காணுதவைகளைநு
௰௯ ழைந்துபார்த்து,-பொருத்துகளாலும், கட்டுகளா
லும்ஸ்திரம்பெற்றிணைக்கப்பட்டசரீரமனைத்தை
யும் தேவவிருத்தியாக வருத்திக்கப்பண்ணுகிறத
லையைப்பற்றிக்கொள்ளாதவனெவனும், உங்கள்
பந்தயப்பொருளை அபகரிக்க இடங்கொடாதி
௨௰ ருங்கள்.-நீங்கள்உலகத்திலுள்ள சிறுமையானவ
ழிபாடுகளுக்குக் கிறிஸ்துவோடே மரித்த
௨௧ வர்களானீர்களேயாகில்,- அனுபவித்தமாத்திரத்
தில் அழிந்துபோகும்பொருளைத்தொடவும்,ருசி
௨௨ பார்க்கவும், எடுக்கவும் வேண்டாமென்கிற—ம
னுஷருடைய விதிகளுக்கும்,கற்பனைகளுக்கும்,
இப்பிரபஞ்சத்தின் சனங்களைப்போல் வசப்ப
௨௩ டவேண்டியதென்ன.-இவைகள் சுயசித்த ஆரா
தனையினுலும், தாழ்மையினுலும், சரீரத்தைப்பே
ணுமல் அதை வருத்தப்படுத்துகையினுலும், ஞா
னவேஷமுள்ளவைகளாயிருக்கின்றன.

## ௩. அதிகாரம்.

க. கிறிஸ்துவின்மேல் மனம்வைக்கும்படிவேண்டல்: ரு. பாவக்குணங்களையடக்கி, நற்கிரியைகளைச் செய்யும்படி பவுல் உபதேசித்தல்: ௰௮. ஸ்திரி, புருஷர், பிள்ளைகள், பெற்றோர், பணிவிடைக்காரர் செய்யத்தக்கவைகளைக் குறித்தல்.

நீங்கள் கிறிஸ்துவுடன் எழுந்ததுண்டானு
ல், தேவனுடைய வலதுபாரிசத்தில் வீற்றி
ருக்கிற கிறிஸ்துவின் ஸ்தானத்திலுள்ள மே
௨ லானவைகளைத்தேடுங்கள்.—நீங்கள் மரித்தீர்க
ளே, உங்கள் சீவன் கிறிஸ்துவுடனே தேவ
௩ னிடத்தில் மறைந்திருக்கின்றது.-ஆதலால் பூமி
யிலுள்ளவைகளையல்ல, மேலானவைகளையேசிந்
௪ தித்துக்கொள்ளுங்கள்.—நமக்குச் சீவனுகிய கி
றிஸ்து வெளிப்படும்பொழுது, நீங்களும் அவரு
௫ டனே மகிமையோடே வெளிப்படுவீர்கள்.-ஆத
லால்பூமியிலே வேசைமார்க்கமும், அசுத்தமும்,
விரகதாபமும்,துரிச்சையும்,விக்கிரகாராதனையா
ன பொருளாசையுமாகிய உங்கள் அவயவங்களை
அடக்கக்கடவீர்கள்.-இவைகளினிமித்தந் தேவ ௬
னுடைய கோபங் கட்டளைக்கமையாத பிள்ளை
களின்மேல் வருகின்றது.—முற்காலத்தில் நீங்க ௭
ளும்இவைகளுக்கேற்கநடந்து நாள்விட்டுவந்தீர்
கள்.-இனிக்குரோதமும், கோபமும், துர்க்குண ௮
மும், தூஷணமும், முறைகெட்டபேச்சுகளுமா
கிய இவைகளையெல்லாம் உங்கள்வாயினின்றும்
அகற்றுங்கள்.-ஒருவருக்கொருவர் பொய்சொல் ௯
லாதிருங்கள்.-நீங்கள் அதின்செய்கையுடனே ப ௰
ழையபுருஷனைக்கழற்றிவிட்டு, சிருஷ்டி கர்த்
தாவின்சாயலுக்கேற்க ஞானத்தினுலேபுதிதாக்
கப்பட்ட புதிய புருஷனைத் தரித்துக்கொண்
டீர்கள்.—அதிலே கிரேக்கனும், யூதனும், விருத் ௰௧
தசேதனமுள்ளவனும், விருத்தசேதனமில்லாதவ
னும், மிலேச்சனும், ஸ்கீத்தனும், அடிமையும்,
சுயாதீனனுமில்லை: கிறிஸ்துவே சகலருக்குள்
ளுஞ் சகலமுமாயிருக்கிறார்.—ஆதலால் நீங் ௰௨
கள் தேவனுல் தெரிந்துகொள்ளப்பட்டவர்க
ளாய், பரிசுத்தமும் பிரியமுமுள்ளவர்களாகி, உ
ருக்கமான இரக்கத்தையும், தயையையும், தாழ்ந்
தசிந்தையையும், சாந்தத்தையும், நீடியபொறு
மையையுந் தரித்துக்கொண்டு,—ஒருவர்மேலொ ௰௩
ருவர் பொறுமையாயிருந்து, ஒருவருக்கொருவர்
மன்னித்து, ஒருவருக்கொருவர் குறைபாடுண்
டானுல், கிறிஸ்து உங்களுக்குமன்னித்ததுபோ
லநீங்களும்மன்னிப்பீர்களாக.-இவைகளெல்லா ௰௪
வற்றின்மேலுஞ் சீராக்கும் அன்பாகிய இடைக்
கச்சைக்கட்டுங்கள்.-தேவசமாதானம் உங்கள் ௰௫
இருதயங்களில் ஆளுகைசெய்யக்கடவது, அதற்
கு நீங்கள் ஒரே சரீரமாயிருக்கும்படி அழைக்கப்
பட்டீர்களே; நீங்கள் நன்றியறிந்தவர்களாயி
ருப்பீர்களாக.-கிறிஸ்துவினுடைய வாக்கு ௰௬
எல்லாஞானத்தோடும் உங்களுக்குள்ளே பரிபூர
ணமாக வாசம்பண்ணக்கடவது; சங்கீதங்களி
னுலும், கீர்த்தனங்களினுலும், ஞானப்பாட்டுக
ளினுலும் ஒருவருக்கொருவர் போதித்து, புத்தி
சொல்லி, பத்தியோடு மனதிலே கர்த்தருக்
கென்று பாட்டுப்பாடுங்கள்.—நீங்கள் வாக்கி ௰௭
னுலாகிலும், கிரியையினுலாகிலும் எதைச்செய்
தாலும், அதையெல்லாம் கர்த்தராகிய யேசு

(௰௬) ரோ.௰௪.௩,௰,௰௩. ரோ.௰௪.௨,௰௭. க.கொரி.௮.௮. ரோ.௰௪.ரு. கலா.௪.௰. (௰௭) எபி.௮.ரு.(௰௮)எசேக்.௰௩.௩. க.தீமோ.க.௭.(௰௯)எபே.௪.௰௪,௰ரு. வச.௪. (௨௰)ரோ.௬.௩,ரு. கலா.௨.௰௯. எபே.௨.௰ரு.வச.௮. கலா.௪.௩,௯. (௨௧) க.தீமோ.௪.௩. (௨௨) ஏசா.௨௯.௰௩. மத்.௰ரு.௮. தீத்.க.௰௩. (௨௩) க.தீமோ.௪.௮. வச.௰௮.—(௩. அதி. க.) ரோ.௬.ரு. எபே.௨.௭. ரோ.௮.௩௪. எபே.க.௨௰.(௨)ரோ.௬.௨. கலா.௨.௨௰. ௨.கொரி.ரு.௬. (௪) க.யோவா.௩.௨. யோவா.௰க.௨ரு. க.கொரி.௰ரு.௪௩. பிலி.௩.௨க.(ரு)ரோ.௮.௰௩. கலா.ரு.௨௪. ரோ.௬.௰௩. எபே.ரு.௩. க.தெச.௪.ரு. எபே.ரு.ரு. (௬) ரோ.க.௨௰. எபே.ரு.௬. வெளி.௨௨.௰ரு. எபே.௨.க.(௭) ரோ.௬.௰௯,௨௰. எபே.௨.௨. தீத்.௩.௩. (௮) எபே.௪.௨௨. எபி.௰௨.க. யாக்.க.௨க. க.பேதுரு.௨.௨. எபே.௪.௨௯. (௯) லேவி.௰௯.௰க. எபே.௪.௨ரு. (௰)எபே.௪.௨௨,௨௩,௨௪.ரோ.௰௨.௨.எபே.௨.௰ (௰க)ரோ.௰.௰௨. க.கொரி.௰௨.௰௩.கலா.௩.௨௮.எபே.௬.௮.எபே.க.௨௩. (௰௨) எபே.௪.௨௪. க.தெச.க.௪. க.பேதுரு.க.க. ௨.பேதுரு.க.௰. கலா.ரு.௨௨. எபே.௪.௨,௩௨. பிலி.௨.க. (௰௩) மாற்.௰க.௨ரு. எபே.௪.௨,௩௨. (௰௪) க.பேதுரு.௪.௮. யோவா.௰௩.௩௪.ரோ.௰௩.௮. க.கொரி.௰௩.எபே.ரு.௨. க.தெச.௪.௯. க.தீமோ.க.ரு.எபே.௪.௩.(௰ரு)ரோ.௰௪.௰௭.பிலி.௪.௭. க.கொரி.௭.௰ரு.எபே.௨.௰௬,௰௭.அதி.௨.௭. (௰௬) க.கொரி.௰௪.௨௬. எபே.ரு.௰௯. ஆதி.௪.௬.(௰௭)க.கொரி.௰.௩௧. ரோ.க.௮. எபே.ரு.௨௰. க.தெச.ரு.௰௮. எபி.௰௩.௰ரு.

வின் நாமத்தினாற்செய்து, அவர் மூலமாகப் பி
௰௮ தாவாகிய தேவனை ஸ்தோத்திரியுங்கள்.—மனை
யாட்டிகளே, கர்த்தருக்கேற்க உங்களுங்
௰௯ கள் புருஷருக்கு அமைந்திருப்பீர்களாக.—புரு
ஷரே, உங்கள்மனைவிகளை நேசியுங்கள், அவர்
௨௰ கள்மேற் கசந்துகொள்ளாதிருங்கள்.—பிள்ளைக
ளே, உங்கள் பெற்றாருக்கு எவ்விதத்திலும்
அமைந்திருங்கள், இதுவே கர்த்தருக்கு நற்பி
௨௧ ரியம்.—பிதாக்களே, உங்கள்பிள்ளைகள் திடனற்
றுப்போகும்படி அவர்களைக் கோபப்படுத்தாதி
௨௨ ருங்கள்.-பணிவிடைக்காரரே, சரீரத்தின்படி எச
மான்களானவர்களுக்கு நீங்கள் எல்லாவற்றிலுங்
கீழ்ப்படியுங்கள்; மனுஷரைப் பிரியப்படுத்துகி
றவர்களாய்ப் பார்வைக்குப் பணிவிடைசெய்யா
மல், தேவனுக்குப் பயந்து கபடமில்லாத இ
ருதயத்தோடே பணிவிடைசெய்யுங்கள்.—
௨௩ அன்றியும்; கர்த்தராயிருக்கிற கிறிஸ்து
வை நீங்கள் சேவிக்கிறபடியால், சுதந்தரமாகிய
பலனைக் கர்த்தரிடத்திற் பெறுவோமென்ற
௨௪ றிந்து,—எதைச்செய்தாலும் அதையெல்லாம் ம
னுஷருக்கென்றல்ல, கர்த்தருக்கென்றே
மனச்சந்தோஷத்தோடே செய்யக்கடவீர்கள்.—
௨௫ அநீதியைச்செய்கிறவன், தான்செய்த அநீதியின்
பிரதிபலனைப்பெறுவான்: பட்சபாதமேயில்லை.

## ௪. அதிகாரம்.

௧. எசமானரின் கடமையைக்காட்டல்: ௨. பிரார்த்தனையிலே நிலைத்துச் சாவதானமாயிருக்கும்படி உபதேசித்தல்: ௭. சகோதரரைக்குறித்துச் சிலவற்றைச்சொல்லி வாழ்த்துதலனுப்பல்.

எசமானரே, பரமண்டலத்தில் உங்களுக்கும் எ
சமானனிருக்கிறாரென்றறிந்து, நீங்கள் பணிவி
டைக்காரருக்குயதார்த்தமும், தகுதியுமாயிருப்ப
௨ தைக்கொடுங்கள்.-நீங்கள் இடைவிடாதபடி பிரா
ர்த்தனை பண்ணுகிறதற்கு ஸ்தோத்திரத்துடனே
௩ விழித்திருங்கள்;—கிறிஸ்துவின் மறைபொ
ருளினிமித்தங் கட்டப்பட்டிருக்கிற நான், பே
சவேண்டிய பிரகாரமாக அதைப் பிரசித்தப்ப
௪ டுத்துகிறதற்கு,—தேவன் எங்களுக்கு வாக்கின்
வாசலைத்திறக்கும்படி, எங்களுக்காகவும்பிரார்த்
௫ தனை பண்ணுங்கள்.—காலத்தை ஆதாயமாகக்
கொண்டு, புறம்பானவர்களுக்கு முன்பாக ஞா
௬ னத்தில் நடந்துகொள்வீர்களாக.—நீங்கள் அவ
னவனுக்குத் தகுதியான உத்தரஞ்சொல்ல வகை
யறியும்படி, எப்பொழுதும் உங்கள் வாக்குக் கி
ருபை பொருந்தினதும், உப்பினால் இரசமேற்
௭ றினதுமாயிருக்கக்கடவது.—பிரியமான சகோ
தரனும், உண்மையுள்ள பரிசாரகனும், கர்த்த
ருக்குள் என் உடன் வேலையாளுமாகிய தீகிக்
கு, என்செய்திகளையெல்லாம் உங்களுக்குத்தெரி
விப்பான்.—உங்கள் செய்திகளை அறிந்து, உங் ௮
கள் இருதயங்களைத் தேற்றும்படிக்கு,—நான் அ ௯
வனையும், உங்களிலிருந்து வந்தவனாகிய உண்
மையுள்ள பிரியசகோதரனான ஒநேசிமுவையும்,
உங்களிடத்திற்கு அனுப்புகிறேன். அவர்கள் இவ்
விடத்துச் செய்திகளையெல்லாம் உங்களுக்குத்
தெரிவிப்பார்கள்.—என்னுடன் காவலிலிருக்கி ௰
ற அரிஸ்தர்குவும், பர்னபாவுக்கு இனத்தானாகி
ய மாற்கும் உங்களை வாழ்த்துதல் செய்கிறார்
கள், மாற்கைக்குறித்து நீங்கள் கட்டளை
பெற்றீர்களே: உங்களிடத்தில் வரும்பொழுது
அவனை அங்கிகரித்துக்கொள்ளுங்கள்.—யுஸ்து ௰௧
வென்னும் யேசுவும் உங்களுக்கு வாழ்த்
துதல் செய்கிறான். இவர்கள் விருத்தசேதன
முள்ளவர்கள். இவர்கள்மாத்திரந் தேவனுடை
ய இராச்சியத்தில் என் உடன் ஊழியக்காரராய்
எனக்கு ஆறுதல் செய்துவந்தார்கள்.—உங்களில் ௰௨
ஒருவனாயிருக்கிற கிறிஸ்துவின் ஊழியக்கார
னாகிய எப்பாபிரா உங்களுக்குவாழ்த்துதல்செய்
கிறான், நீங்கள் சீர்பொருந்தினவர்களும், தேவ
னுடைய பூரணசித்தத்துக்கிசையப் பூரணப்
பட்டவர்களுமாக நிலைநிற்கும்படி, அவன் எப்
பொழுதும் உங்கள் நிமித்தம் பிரயாசத்துடன் பி
ரார்த்தனைபண்ணி வருகிறான்.—அவன் உங்கள் ௰௩
மேலும், இலாவோதிக்கையா, இயாராப்பொலி
யிலுள்ளவர்கள்மேலும், மிகவுங் கருத்துள்ளவ
னென்பதற்கு நானேசாட்சி.—பிரியமான வைத் ௰௪
தியனாகிய லூக்காவும், தேமாவும் உங்களுக்கு
வாழ்த்துதல் செய்கிறார்கள்.—இலாவோதிக்கை ௰௫
யாவிலிருக்கிற சகோதரருக்கும், நிம்பாசுக்கும்,
அவன் வீட்டின் சபையாருக்கும் வாழ்த்துதல்
சொல்லுங்கள்.—இந்த நிருபம் உங்களிடத்தில் ௰௬
வாசிக்கப்பட்டபின், இலாவோதிக்கையா சபை
யிலும் வாசிக்கப்படும்படி செய்யுங்கள்; இலா
வோதிக்கையாவிலிருந்து வரும் நிருபத்தை
நீங்களும் வாசிப்பீர்களாக.—அருக்கிப்பைநோக் ௰௭
கி, நீ கர்த்தரிடத்திற் பெற்ற ஊழியத்
தை நிறைவேற்றும்படி சாவதானமாயிருவென்
று சொல்லுங்கள்.—பவுலாகிய நான், உங்களுக் ௰௮
குச்சொல்லிய வாழ்த்துதலை என்கையினால் எழு
தினேன். நான் கட்டப்பட்டிருக்கிறதை நினைத்
துக்கொள்ளுங்கள். கிருபை உங்களுடனே இ
ருக்கக்கடவது. ஆமென்.

(௰௮) எபே.௫.௨௨. தீத்.௨.௫. ௧.பேதுரு.௩.௧. எபே.௫.௩. (௰௯) எபே.௫.௨௭,௨௮,௩௩. ௧.பேதுரு.௩.௭. எபே.௪.௩௧. (௨௰) எபே.௬.௧. எபே.௫.௨௪. தீத்.௨.௯. (௨௧) எபே.௬.௪. (௨௨) எபே.௬.௫,. ௧.தீமோ.௬.௧. ௧.பேதுரு.௨.௰௮. வச.௨௰. பிலே.௰௬. (௨௩) எபே.௬.௭. ௧.கொரி.௭.௨௨. (௨௪) எபே.௬.௬,௮. (௨௫) ரோ.௨.௰௧. எபே.௬.௮. ௧.பேதுரு.௧.௰௭.—(௪. அதி. ௧.) எபே.௬.௯. (௨) லூக்.௰௮.௧. ரோ.௰௨.௰௨. எபே.௬.௰௮. ௧.தெச.௫.௰௭,௰௮. அ. ௨.௭. (௩) மத்.௰௩.௰௧. ௧.கொரி.௪.௧. எபே.௬.௰௯,௨௰. பிலி.௧.௭. (௫) எபே.௫.௰௫. ௧.தெச.௪.௰௨. எபே.௫. (௬) பிர.௰.௰௨. மாற்.௯.௫௰. ௧.பேதுரு.௩.௰௫. (௭) எபே.௬.௨௧. (௯) எபே.௬.௨௨. பிலே.௰. (௰) அப்.௰௯.௨௯. பிலே.௨௪. அப்.௰௫.௩௭. ௨.தீமோ.௪.௰௧. (௰௨) அதி.௧.௭. பிலே.௨௩. ரோ.௰௫.௩௨. மத்.௫.௪௮. ௧.கொரி.௨.௬. பிலி.௩.௰௫. எபி.௫.௰௪. (௰௪) ௨.தீமோ.௪.௰௧. பிலே.௨௪. (௰௫) ரோ.௰௬.௫. ௧.கொரி.௰௬.௰௯. ௧.தெச.௫.௨௭. (௰௭) பிலே.௨. ௧.தீமோ.௪.௬. (௰௮) ௧.கொரி.௰௬.௨௧. ௨.தெச.௩.௰௭. எபி.௰௩.௩,௨௫.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தெசலோனிக்கேயருக்கெழுதிய

## முதலாம் நிருபம்.

---

### க. அதிகாரம்.

க. வாழ்த்து: உ. தெசலோனிக்கேயரின் விசுவாசத்தையும் நம்பிக்கையையும் அன்பையும் நடையையும் புகழ்தல்.

பவுலும், சிலுவானும், தீமோத்தேயும், பிதாவாகிய தேவனுக்குள்ளும், கர்த்தராகிய
யேசுக்கிறிஸ்துவுக்குள்ளுமிருக்கிற தெச
லோனிக்கேயரின்சபைக்கு எழுதிக்கொள்வது:
நம்முடைய பிதாவாகிய தேவனாலும், கர்த்
தராகிய யேசுக்கிறிஸ்துவினாலும் உங்
களுக்குக்கிருபையும், சமாதானமுமுண்டாகக்
உ கடவன.—பிரியமான சகோதரரே, நீங்கள் தே
வனால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களென்ற
௩ றிந்து,-நம்முடைய பிதாவாகிய தேவனுடை
ய சந்நிதானத்தில், உங்கள் விசுவாசத்தின் கிரி
யையையும், அன்பின் பிரயாசத்தையும், நம்மு
டையகர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவின்
மேலுள்ள நம்பிக்கையின் பொறுமையையும் நி
ச னைவுகூர்ந்து,—நாங்கள் நித்தமும் எங்களுடை
ய பிரார்த்தனைகளில் உங்களைக்குறித்துச்சொல்
லி, உங்களெல்லார் நிமித்தமும் இடைவிடாமல்
ரு தேவனைத் துதிக்கிறோம்.-எங்கள் சுவிசேஷம்
வாக்கோடேமாத்திரமல்ல, பலத்தோடும், பரி
சுத்த ஆவியோடும், மிகுந்த நிச்சயத்தோடும் உங்
களுக்குள்ளே பிரவேசித்தது; நாங்கள் உங்களுக்
குள் உங்கள்நிமித்தம் இப்படிப்பட்டவர்களா
சு யிருந்தோமென்று அறிவீர்கள்.—நீங்கள் மிகுந்
த கிலேசத்தில் பரிசுத்த ஆவி அருளிய சந்தோ
ஷத்தோடே வாக்கை ஏற்றுக்கொண்டு, எங்களை
எ யுங் கர்த்தரையும் பின்பற்றி,—மக்கேதோ
னியா, அகாயதேசங்களிலுள்ளவிசுவாசிகளனை
அ வருக்குந் திருஷ்டாந்தங்களானீர்கள்.-உங்களா
லே கர்த்தருடைய வாக்கியம் மக்கேதோனி
யாவிலும், அகாயவிலும் மாத்திரமல்ல, எவ்வி
டத்திலும் பிரசித்தமானதுமன்றி, நீங்கள் தேவ
னைப் பற்றின விசுவாசத்தின்செய்தியும் பரம்பி
விட்டது; இதினிமித்தம் எதையாகிலுஞ்சொல்
ல எங்களுக்கு அவசியமில்லை.-உங்களிடத்தில் ௯
நாங்கள் அடைந்தபிரவேசம் இப்படியிருந்தெ
ன்றும், சீவனுஞ்சத்தியமுமுள்ளதேவனைச்சே
விப்பதற்கும், அவர் மரித்தோரிலிருந்து எழுப்பி
னவரும், வருங்குரோதத்தினின்று நம்மை விடு
விக்கிறவருமாயிருக்கிற அவருடைய குமாரனா
கிய யேசுவை வானத்திலிருந்து வரக்காத்திருப்
பதற்கும்,-நீங்கள் இன்னபிரகாரமாக விக்கிரகங் ய
களைவிட்டுத் தேவனிடத்திற்கு மனந்திரும்
பினீர்களென்றும் அவர்கள்தாமே வெளிப்படுத்
துகிறார்கள்.

### உ. அதிகாரம்.

க. பவுல் தெசலோனிக்கேயரிடத்திற் சுவிசேஷத்தைப் பிரசித்தப்படுத்தினதை விவரித்தல்: யரு. அவர்கள் சுவிசேஷத்தை அங்கிகரித்ததை விவரித்தல்.

சகோதரரே, உங்களுக்குள் எங்கள்பிரவேசம் க
விருதாவாகவில்லையென்று உங்களுக்கே தெரி
யும்.—அன்றியும், உங்களுக்குத்தெரிந்திருக்கிற உ
படி, முன்னே பிலிப்பிநகரத்தில் நாங்கள் உபத்
திரவமும் நிந்தனையுமடைந்தும், எங்கள் தேவ
னால் தைரியம்பெற்று மிகுந்தபோராட்டத்துட
னே தேவனுடைய சுவிசேஷத்தை உங்க
ளிடத்திற் பிரசித்தப்படுத்தினோம்.—எங்கள் உப ௩
தேசம் வஞ்சகத்தினாலாயினும், அசுசியினாலா
யினும், கபடத்தினாலாயினுந் தோன்றினதல்ல.—
சுவிசேஷத்தை எங்களிடத்தில் ஒப்பிக்கத்தக்க ச
தாக நாங்கள் தேவனால் அங்கிகரிக்கப்பட்ட
படி, மனுஷரையல்ல, எங்கள் இருதயங்களைச்
சோதிக்கிற தேவனையே பிரியப்படுத்துகிற
தற்குப் பேசுகிறோம்.—உங்களுக்குத் தெரிந்தி ரு
ருக்கிறபடி, நாங்கள் ஒருபொழுதும் இச்சகமா
ன வாக்குகளை வசனிக்கவுமில்லை, பொருளா
சையை மூடிக்கொண்டு நடக்கவுமில்லை; தே
வனே சாட்சி.—நாங்கள் கிறிஸ்துவின் அப் சு

---

(க. அதி. க) உ.கொரி.க.யக. க.பேதுரு.ரு.யஉ. எபே.க.உ.(உ)அதி.உ.ய௩. யோவா.சு.உக. கலா.ரு.சு. உ.தெச.
க.௩,யஉ. யாக்.உ.யஎ. ரோ.யசு.சு.எபி.சு.ய.(௩)ரோ.க.அ. பிலே.ரு.(ச)கொலோ.௩.யஉ. உ.தெச.உ.ய௩.(ரு)மாற்.
யசு.உய. க.கொரி.உ.ரு. க.கொரி.ச.உய. உ.கொரி.சு.சு. கொலோ.உ.ரு. எபி.உ.௩. அதி.உ.க,ரு,ய,யக. உ.தெச.
௩.எ.(சு)க.கொரி.ச.யசு. க.கொரி.யக.க. பிலி.௩.யஎ. உ.தெச.௩.௯. அப்.ரு.சக. எபி.ய.௩ச.(அ)ரோ.ய.யஅ.ரோ.
க.அ. உ.தெச.க.ச. (௯) ரோ.உ.எ. பிலி.௩.உய. தீத்.உ.ய௩. உ.பேதுரு.௩.யஉ,. வெளி.க.எ. அப்.க.யக. உ.தெச.
க.சு. அப்.உ.உச. மத்.௩.எ. ரோ.ரு.௯. (ய) அதி.உ.க. க.கொரி.யஉ.உ. கலா.ச.அ.—(உ. அதி. உ.) அப்.யசு.உஉ.
அப்.யஎ.உ. பிலி.க.௩ய. கொலோ.உ.க. (௩) உ.கொரி.எ.உ. உ.பேதுரு.க.யசு. (ச) க.கொரி.எ.உரு. க.தீமோ.
க.யக,யஉ. க.கொரி.௯.யஎ. கலா.உ.அ. தீத்.க.உ. கலா.க.ய. நீதி.யஎ.௩. ரோ.அ.உஎ. (ரு) அப்.உய.௩௩. உ.கொ
ரி.உ.யஎ. உ.கொரி.உஉ.யஎ. ரோ.க.யஉ.(சு) யோவா.ரு.சக,சச. யோவா.யஉ.ச௩. க.தீமோ.ரு.யஅ. க.கொரி.௯.
ச,சு,யஉ,யஅ. உ.தெச.௩.௯. பிலே.அ,௯. உ.கொரி.யக.௯. உ.தெச.௩.அ. க.கொரி.௯.க,உ.ரு.

போஸ்தலரென்று உங்கள்மேற் பாரத்தை எற்றக்
கூடியவர்களானுலும், உங்களிடத்திலாவது, மற்
றவர்களிடத்திலாவது மனுஷரால் வருங் கனத்
௭ தை நாங்கள் தேடவுமில்லை.-தாயானவள் தன்கு
ழந்தைகளைக் காப்பாற்றுகிற பிரகாரம், நாங்கள்
௮ உங்களுக்குள்ளே சாந்தமாய் நடந்தோம்.—நாங்
கள் உங்கள்மேல் மிகவும் விருப்பமாயிருந்து,
தேவன் அருளிய சுவிசேஷத்தை மாத்திரமல்
ல, நீங்கள் எங்களுக்குப்பிரியமானவர்களானப
டியினுல், எங்கள் பிராணனையும் ஒப்பிக்கமன
௯ தாயிருந்தோம்.-சகோதரரே, நாங்கள்பட்டபிர
யாசமும், வருத்தமும் உங்களுக்கு ஞாபகமாயி
ருக்கும்: உங்களில் ஒருவன்மேலாயினும் பார
மேற்றுதபடி இரவும் பகலும் வேலைசெய்து, தே
வனுடைய சுவிசேஷத்தை உங்களிடத்திற் பி
௰ ரசங்கித்தோமே.—விசுவாசிகளாகிய உங்களுக்
குள்ளே, நாங்கள் எவ்வளவு பரிசுத்தமும், நீதி
யும்,குற்றமின்மையுமாகநடந்தோமென்றதற்குத்
௰௧ தேவன் மாத்திரமல்ல, நீங்களுஞ்சாட்சி.-பிதா
தன் பிள்ளைகளைப்போதிக்கிறபிரகாரம்,நாங்களு
ம் உங்கள்ஒவ்வொருவரையும்போதித்துத்தேற்றி
௰௨ எச்சரித்து,-தமது இராச்சியத்திற்கும், மகிமைக்
கும்உங்களை அழைத்த தேவனுக்கு நீங்கள் பா
த்திரராய் நடக்கவேண்டுமென்று கட்டளையிட்
௰௩ டோம்; இதை அறிந்திருக்கிறீர்கள்.-நீங்கள் தே
வனுடைய வாக்கியத்தை எங்களாற்கேள்விப்
பட்டு அங்கிகரித்த சமயத்தில், அதை மனுஷரு
டைய வாக்கியமென்றல்ல, தேவனுடைய
வாக்கியமென்றே அங்கிகரித்ததினுல், நாங்கள்
இடைவிடாமல் தேவனைத் துதிக்கிறேம், அந்
தவாக்கியம் மெய்யாய்த் தேவனுடைய வாக்கி
யந்தான், அது விசுவாசிகளாகிய உங்களுக்குள்
௰௪ ளே பலனுஞ்செய்கின்றது.-சகோதரரே, நீங்கள்
யூதேயா தேசத்திலே கிறிஸ்து யேசுவுக்குள்
ளான தேவசபைகளைப் பின்பற்றினவர்களா
னீர்கள்: அவர்கள் யூதராலே துன்பப்பட்டபிர
காரம், நீங்களும் உங்கள் சுயதேசத்தாரால் துன்
௰௫ பப்பட்டீர்கள்.-அந்த யூதர், கர்த்தராகிய யே
சுவையும் தங்கள் தீர்க்கதரிசிகளையுங் கொலை
செய்தவர்களும், எங்களைத் துன்பப்படுத்துகிற
வர்களும்,தேவனைப்பிரியப்படுத்தாதவர்களும்,
௰௬ எந்த மனுஷருக்கும் விரோதிகளுமாகி,—அந்
நியர் இரட்சிக்கப்படுவதற்கு அவர்களோடே
நாங்கள் பேசாதபடிக்குத் தடைபண்ணி, எப்
பொழுதுந் தங்கள்பாவங்களை நிறைவாக்குகிறார்
கள்: முடிவுண்டாகக் கோபாக்கினை அவர்கள்
மேல்வந்துவிட்டது.-சகோதரரே, நாங்கள் இரு ௰௭
தயத்தினுலேயல்ல,முகமுகமாய்ச்சொற்பகாலம்
உங்களைக்காணுமற் பிரிந்திருந்தபடியினுல், உங்
கள்முகத்தைப்பார்க்கவேண்டுமென்றுமகாவாஞ்
சையோடே அடிக்கடி பிரயத்தினம் பண்ணி
னேம்.-நாங்கள் இரண்டொருதரம் உங்களிடத் ௰௮
தில் வர மனதாயிருந்தோம், விசேஷமாகப் பவு
லாகிய நான் அப்படியிருந்தேன்; சாத்தான் எங்
களைத் தடைபண்ணினுன்.—எங்களுடைய நம் ௰௯
பிக்கையாவது, சந்தோஷமாவது, மகிழ்ச்சியுள்
ளகிரீடமாவதுயாது;நம்முடைய கர்த்தராகிய
யேசுக்கிறிஸ்து வரும்பொழுது அவருடை
ய சந்நிதானத்தில் நீஙகளல்லவா.-நீஙகளே எங் ௨௰
கள் மகிமையும், சந்தோஷமுமாயிருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

௧. தெசலோனிக்கேயரைத் தேற்றுகிறதற்குத் தீமோத்தேயுவை அனுப்பினதையும், தீமோத்தேயு திரும்பிவந்து தெரிவித்த செய்தியையுங்காட்டல்: வாழ்த்துதல் சொல்லிப் பிரார்த்தித்தல்.

ஆகையால் நாங்கள் அதிகமாய்ப் பொறுக்கக் ௧
கூடாமல், அத்தேனேநகரத்தில் தனித்துவிடப்
படுவது நலமென்றுநினைந்து,-நேரிட்ட உபத்தி ௨
ரவங்களினுல் ஒருவரும் அசைக்கப்படாதபடி
உங்கள் விசுவாசத்தைக்குறித்து உங்களை ஸ்திரப்
படுத்தவும் உங்களைத்தேற்றவும், நம்முடைய ச
கோதரனும், தேவனுடைய பரிசாரகனும் கி
றிஸ்துவின் சுவிசேஷத்தில் எங்கள் உடன்வே
லையாளுமாகிய தீமோத்தேயுவை அனுப்பினே
ம்.—இப்படிப்பட்டவைகளுக்கு நாங்கள் நிய ௩
மிக்கப்பட்டிருக்கிறேமென்று உங்களுக்குத்தெ
ரியும்.-நமக்கு உபத்திரவம் நேரிடுமென்று நாங் ௪
கள் உங்களிடத்திலிருக்கையில், உங்களுக்கு
முன்னறிவித்தோமே; அப்படியே நடந்தது, அ
தை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்.—ஆகையால் ௫
நான் இனிப்பொறுக்கமாட்டாமல், ஒருவேளை
சோதனைக்காரன் எங்கள்வேலை வீணுய்ப்போகத்
தக்கதாக, உங்களைச் சோதனைக்குட்படுத்தியி
ருப்பானென்று உங்கள் விசுவாசத்தைஅறியும்ப
டிஅவனை அனுப்பினேன்.-இப்பொழுதுதீமோத் ௬
தேயு உங்களிடத்திலிருந்து எங்களிடத்தில் வந்
து,நீங்கள்விசுவாசமும் அன்புமுள்ளவர்களாகி,
நாங்கள் உங்களைக்காண மிகுந்த ஆசையுள்ளவர்
களாயிருக்கிறதுபோல, நீங்களும் எங்களைக்கா
ண ஆசையுள்ளவர்களாய், எப்பொழுதும் எங்க
ளை நினைவிலே வைத்திருக்கிறீர்களென்னும் நற்
செய்தியைத்தெரிவித்தான்.—அதனுல் சகோதர ௭

(௭) ௧.கொரி.௨.௩. ௧.கொரி.௯.௨௨. ௨.கொரி.௰௩.௪. ௨.தீமோ.௨.௨௪. (௮) ரோ.௧.௰. ரோ.௰௫.௨௧. ௨.கொரி. ௰௨.௰௫. (௯) அப்.௨௰.௩௪. ௧.கொரி.௪.௰௨. ௨.கொரி.௰௧.௯. ௨.தெச.௩.௮. ௨.கொரி.௰௨.௰௩,௰௪. (௰) ௨.கொரி. ௭.௨. ௨.தெச.௩.௭. (௰௨) எபே.௪.௧. பிலி.௧.௨௮. கொலோ.௧.௰. ௧.கொரி.௧.௮. ௨.தெச.௨.௰௪. ௨.தீமோ.௧.௯. (௰௩) மத்.௰.௪௰. கலா.௪.௰௪. ௨.பேதுரு.௩.௧. (௰௪) கலா.௧.௨௨. அப்.௰௭.௫.௰௩. எபி.௰.௩௩,௩௪. (௰௫) அப்.௨ ௨௩. அப்.௩.௰௫. மத்.௫.௰௨. லூக்.௰௩.௩௩,௩௪. அப்.௭.௫௨. எஸ்த.௩.௮. (௰௬) லூக்.௰௧.௫௨. அப்.௰௩.௫௰. அ ௰௪.௫,௰௯. ஆதி.௰௫.௰௬. மத்.௨௩.௩௨. மத்.௨௪.௬,௰௬. (௰௭) ௧.கொரி.௫.௩. கொலோ.௨.௫. (௰௮) ரோ.௧.௰ ரோ.௰௫.௨௨. (௰௯) ௨.கொரி.௧.௰௪. பிலி.௨.௰௬. நீதி.௰௬.௩௧. ௧.கொரி.௰௫.௨௩. வெளி.௧.௭. வெளி.௨௨.௰௨— (௩. அதி. ௧.) அப்.௰௭.௰௫. (௨) ரோ.௰௬.௨௧. ௧.கொரி.௰௬.௰. ௨.கொரி.௧.௰௯. (௩) எபே.௩.௰௩. அப்.௯.௰ அப்.௨௧.௰௧. ௧.கொரி.௪.௯. ௨.தீமோ.௩.௰௨. ௧.பேதுரு.௨.௨௧. (௪) அப்.௨௰.௨௪. (௫) ௧.கொரி.௭.௫. ௨.கொரி. ௰௧.௩. கலா.௨.௨. பிலி.௨.௰௬. (௬) அப்.௰௮.௧,௫. பிலி.௧.௮. (௭) ௨.கொரி.௧.௪.

ரே, எங்களுக்கு நேரிட்ட உபத்திரவமுங்கிலேச
மு மாகிய எல்லாவற்றிலேயும், உங்கள்விசுவாசத்
௮ தினால் உங்களைக்குறித்து ஆறுதலடைந்தோம்.-நீ
ங்கள் கர்த்தரில் நிலைத்திருக்கிறதால் இப்பொ
௯ ழுது சீவிக்கிறோம்.—நாங்கள் உங்கள் நிமித்தம்
நம்முடைய தேவன் முன்னிலையாய்ப்பெற்ற
மிகுந்த சந்தோஷத்திற்காக, எவ்விதமாய்த் தே
௰ வனுக்கு ஸ்தோத்திரஞ்செலுத்துவோம்.—உங்
கள் விசுவாசத்தின் குறைவுகளை நிறைவாக்குகி
றதற்கு உங்கள்முகத்தைக் காணும்படி, இரவும்
பகலும் அதிகமாய் வேண்டுதல்பண்ணிவருகி
௰௧ றோம்.—அந்தப்படியே நம்முடைய பிதாவாகி
ய தேவனும், நம்முடைய கர்த்தராகிய
யேசுக்கிறிஸ்துவும் உங்களிடத்தில் எங்கள்
௰௨ வழியை நேராக்கக்கடவர்.—நம்முடைய கர்த்
தராகிய யேசுக்கிறிஸ்து, தமது பரிசுத்த
வான்களனைவரோடும் வரும்பொழுது, நீங்கள்,
நம்முடைய பிதாவாகிய தேவனுடைய சந்
நிதானத்தில், குற்றமற்ற பரிசுத்தமுள்ளவர்களா
கும்படி உங்கள் இருதயங்களை ஸ்திரப்படுத்தும்
௰௩ பொருட்டாக,—நாங்கள் உங்கள்மேல் வைத்தி
ருக்கிற அன்புக்கொப்பாய், நீங்களும் ஒருவர்
ஒருவரிலும் மற்றெல்லாரிலும் வைக்கும் அன்
பில் வருத்தித்துப் பெருகும்படி கர்த்தர் அரு
ளிச்செய்யக்கடவர்.

## ௪. அதிகாரம்.

க. சபையார் கட்டளைக்கமைந்ததைக்குறித்து அவர்களைப் புகழ்தல்: ௩. அசுசியான கிரியைகளை விலக்கல்: ௯. ஐக்கியஅன்புந் தயையுமுள்ளவர்களாகும்படி கட்டளையிடல்: ௰௩. மரித்தோரினிமித்தம் மிகவுந் துக்கிப்பது ஆகாதென விலக்கல். நடுத்தீர்வைத்தினத்தைக் குறித்தல்.

அன்றியும் சகோதரரே, நீங்கள் இன்ன இன்ன
பிரகாரமாக நடக்கவும், தேவனைப் பிரியப்ப
டுத்தவும் வேண்டுமென்று எங்களாலே நீங்கள்
கற்றுக்கொண்டதற்கேற்க, அதிகமதிகமாய்ப்பெ
ருகும்படிக்குக் கர்த்தராகிய யேசுவினாலே
நாங்கள் உங்களைவேண்டிப் புத்தி சொல்லுகி
௨ றோம்.—கர்த்தராகிய யேசுவினால் நாங்
கள் உங்களுக்கிட்டகட்டளைகள் இன்னவை
௩ யென்று அறிந்திருக்கிறீர்களே.—நீங்கள்பரிசுத்
தமுள்ளவர்களாவதே தேவனுடைய சித்த
மாயிருக்கின்றது: அந்தப்படி நீங்கள் வேசை
௪ மார்க்கத்திற்குவிலகி,-தேவனை அறியாத அந்நி
யரைப்போல மோக இச்சைகளுக்கு வசப்படா
மலும்,—பரிசுத்தத்தோடும், மானத்தோடும் உங் ௫
களில் ஒவ்வொருவனுந் தன்தன் பாத்திரத்தைக்
காத்துக்கொண்டு,—எவ்விதத்தினாலுந் தன்சகோ ௬
தரனுக்கு அநியாயஞ்செய்யாமலும், வஞ்சியாம
லுமிருக்கவேண்டும்: நாங்கள் உங்களுக்குமுன்
னுஞ் சொல்லிச் சாட்சியிட்டபிரகாரம், கர்த்
தர் இவையெல்லாவற்றிற்கும் பிரதிபலனளிப்
பார்.—தேவன் நம்மை அசுத்தத்திற்கல்ல, பரி ௭
சுத்தத்திற்கே அழைத்தார்.—ஆதலால் அவமதிக் ௮
கிறவன் மனுஷனையல்ல, தமது பரிசுத்த ஆவி
யை எங்களுக்கு அருளிய தேவனையே அவ
மதிக்கிறான்.-சகோதர நேசத்தைக்குறித்து நான் ௯
உங்களுக்கு எழுதவேண்டுவதில்லை: நீங்கள்தா
மே ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கும்படி தே
வனாற் போதிக்கப்பட்டிருக்கிறீர்கள்.-மக்கே ௰
தோனியாவிலெங்குமுள்ள சகோதரரெல்லாருக்
கும் அப்படியேசெய்துவருகிறீர்கள்: சகோதர
ரே, நீங்கள் மென்மேலும் அதிகரிக்கும்படி உங்
களை வேண்டுகிறோம்.-புறம்பானவர்களிடத்திற் ௰௧
சீராய்நடந்து, ஒரு குறைவையுமடையாதபடி,
நாங்கள் உங்களுக்கிட்டகட்டளைப்பிரகாரம்,—
அமைதலாயிருக்கமிகுதியும்விரும்பி, உங்கள் உ ௰௨
ங்கள்தொழிலைநடப்பித்து,உங்கள்உங்கள் கைக
ளினாலேவேலைசெய்யுங்கள்.—சகோதரரே, நம் ௰௩
பிக்கையில்லாத மற்றவர்களைப்போல,மகாநித்தி
ரை அடைந்தவர்களைக்குறித்து நீங்களுந்துக்கப்
படும்படி, நீங்கள் அறியாமையுடையவர்களாயி
ருக்கிறது என்விருப்பமல்ல.—யேசு மரித்துப் ௰௪
பின்பு உயிர்த்தெழுந்தாரென்பதை விசுவாசிக்கி
றோமே, அப்படியே யேசுவைப்பற்றி மகா
நித்திரைஅடைந்தவர்களையுந் தேவன் அவரோ
டேசேர்த்துக்கொள்வார்.—கர்த்தர் வரும்பொ ௰௫
ழுது உயிரோடேமீதியாயிருக்கும் நாம்,மகாநித்
திரை அடைந்தவர்களுக்கு முந்திக்கொள்வதில்
லையென்று கர்த்தருடைய வாக்கைக்கொண்டு
உங்களுக்குச்சொல்லுகிறோம்.—கர்த்தர் தாமே ௰௬
ஆரவாரத்தோடும், பிரதான தேவதூதனிடுஞ் சத்
தத்தோடும், தேவ எக்காளத்தோடும், வானத்திலி
ருந்திறங்கிவருவார்: அப்பொழுது கிறிஸ்து
வுக்குள் மரித்தவர்கள் முதலாவது எழும்புவார்
கள்.-பின்பு உயிரோடேமீதியானநாமும்,அவர்க ௰௭
ளோடே ஆகாயத்தில் கர்த்தரை எதிர்கொண்
டுபோக மேகங்களில் எடுத்துக்கொள்ளப்பட்டு,

(௮) பிலி.௪.௧. (௰) அப்.௨௬.௭. ௨.தீமோ.௧.௩. ரோ.௧.௰,௰௧. ௨.கொரி.௰௩.௯,௰௧. கொலோ.௪.௰௨. (௰௧) மாற்.௧.௩. (௰௨) ௧.கொரி.௧.௯. பிலி.௧.௰. ௨.தெச.௨.௰௭. ௧.யோவா.௩.௨௰,௨௧. சக.௰௪.௫. யூதா.௰௫. (௰௩) அதி.௪.௯,௰. ௨.பேதுரு.௧.௭.—(௪.அதி.௧.) பிலி.௧.௨௭. கொலோ.௨.௬. கொலோ.௧.௰. (௩) ௧.கொரி.௬.௰௫,௰௮. எபே.௫.௩. கொலோ.௩.௫.(௪)ரோ.௬.௰௯. ௧.கொரி.௰.௰௫,௰௮.(௫)ரோ.௪.௨௪,௨௬. கொலோ.௩.௫. எபே.௪.௰௭,௰௮. ௧.கொரி.௰௫.௩௪. கலா.௪.௮. எபே.௨.௰௨. ௨.தெச.௧.௮.(௬)லேவி.௰௯.௰௧,௰௩. ௧.கொரி.௬.௮. ௨.தெச.௧.௮. ரோ.௰௨.௨. எபே.௫.௰௭,௨௬. (௭) லேவி.௰௧.௪௪. ௧.கொரி.௧.௧. எபி.௰௨.௰௪. ௧.பேதுரு.௧.௰௪,௰௫. (௮) லூக்.௰.௰௫. ௧.கொரி.௨.௰. ௧.யோவா.௩.௨௪. (௯) எரே.௩௧.௩௪. யோவா.௬.௪௫. எபி.௮.௰௧. ௧.யோவா.௨.௨௰,௨௭. மத்.௨௨.௩௯. யோவா.௰௩.௩௪. எபே.௫.௨. ௧.பேதுரு.௪.௮. ௧.யோவா.௩.௰௧,௨௩. (௰௧) ரோ.௰௩.௰௩. ௨.கொரி.௮.௨௧. கொலோ.௪.௫. ௧.பேதுரு.௨.௰௨. (௰௨) ௨.தெச.௩.௰௧. ௧.பேதுரு.௪.௰௫. அப்.௨௰.௩௫. எபே.௪.௨௮. ௨.தெச.௩.௭,௮,௰௨.(௰௩)லேவி.௰௯.௨௮. ௨.பா.௰௪.௧,௨. ௨.சாமு.௰௨.௨௰. எபே.௨.௰௨. (௰௪) ௧.கொரி.௰௫.௰௩,௰௮,௨௩. (௰௫) ௧.இரா.௰௩.௰௭,௰௮. ௧.கொரி.௰௫.௫௧. (௰௬) மத்.௨௪.௩௰,௩௧. அப்.௧.௰௧. ௨.தெச.௧.௬. ௧.கொரி.௰௫.௨௩,௫௨. (௰௭) ௧.கொரி.௰௫.௫௧. அப்.௧.௯. வெளி.௰௧.௰௨. யோவா.௰௨.௨௬. யோவா.௰௪.௩. யோவா.௰௭.௨௪.

இப்படி நாம் சதாகாலமுங் கர்த்தரோடே
௰௮ இருப்போம்.-ஆதலால்இவ்வாக்குகளைக்கொண்
டு நீங்கள் ஒருவரை ஒருவர் தேற்றுங்கள்.

## ௫. அதிகாரம்.

*௧. முடிவுநாளுக்காக ஆயத்தமாயிருப்பது அவசியமெனக்காட்டல்: ௰௨. நானாவிதசற்கிரியைகளைச்செய்யக்கட்டளையிடல். நிருபத்தின் முடிவுரை.*

சகோதரரே, காலங்களையும், விசேஷசமயங்க
ளையுங்குறித்து நான் உங்களுக்கு எழுதுவது அவ
௨ சியமில்லை.—இரவில் திருடனைப்போலக் கர்த்
தருடைய நாள்வருமென்று நீங்களே நன்றாக
௩ அறிந்திருக்கிறீர்கள்.—சமாதானமும், சவுக்கியமு
முண்டென்று அவர்கள்சொல்லுஞ் சமயத்தில்,
நாசமானது, கருப்பவதியானவளுக்குப் பிரசவ
வேதனைவருவதுபோலச்சடிதியில்வரும்; அவர்
௪ கள் தப்பார்கள்.-ஆதலால் சகோதரரே, அந்தநா
ள் திருடனைப்போல் உங்களைப் பிடித்துக்கொ
ள்ளும்படி, நீங்கள் இருளிலுள்ளவர்களல்ல.—
௫ நீங்களெல்லாரும் ஒளியின் பிள்ளைகளும், பக
லின்பிள்ளைகளுமாயிருக்கிறீர்கள்: நாம் இரவுக்
௬ கும்,இருளுக்கும்உள்ளானவர்களல்ல.-ஆதலால்
மற்றவர்களைப்போல நாம் தூங்காமல் விழித்துக்
௭ கொண்டு, தெளிந்திருக்கக்கடவோம்.—நித்திரை
கொள்ளுகிறவர்கள் இரவில் நித்திரைகொள்ளு
வார்களே; வெறிகொள்ளுகிறவர்கள் இரவில்
௮ வெறிகொள்ளுவார்களே.—பகலுக்கு உள்ளான
வர்களாகிய நாம் விசுவாசம்,அன்புஎன்னும் மார்
புக்கவசத்தையும், இரட்சிப்பின்நம்பிக்கை என்
னுந்தலைச்சீராவையுந்தரித்துக்கொண்டு, தெளிந்
௯ திருக்கக்கடவோம்.-தேவன் நம்மைக்கோபாக்
கினைக்கல்ல, நம்முடைய கர்த்தராகிய யே
சுக்கிறிஸ்துமூலமாகஇரட்சிப்பைப்பெற்றுக்
௰ கொள்ளுகிறதற்கு ஏற்படுத்தினார்.—நாம் விழித்தி
ருந்தாலும், மகாநித்திரைஅடைந்தாலுந் தம்முட
னே உயிரோடிருக்கும்படி அவர் நமக்காக மரித்
௰௧ தார்.—ஆதலால் நீங்கள்செய்துவருகிறதுபோல,
ஒருவரை ஒருவர்தேற்றி, ஒருவரை ஒருவர் உறு
௰௨ திப்படுத்துங்கள்.—சகோதரரே, கர்த்தருக்
குள்ளாக உங்களுக்கு அத்தியட்சராயிருந்து,
உங்களுக்குள்ளே பிரயாசப்பட்டு, உங்களுக்
குபதேசஞ்செய்து வருகிறவர்களை நீங்கள் மதித்
து,-அவர்களுடைய கிரியையினிமித்தம் அவர் ௰௩
களை மிகவும் அன்பாய் மதிக்கும்படி, உங்களை
வேண்டிக்கொள்ளுகிறோம். ஒருவரோடொரு
வர் சமாதானமாயிருங்கள்.-சகோதரரே, மேலும் ௰௪
உங்களைவேண்டிக்கொள்ளுகிறோம், ஒழுங்கற்ற
வர்களைக்கடிந்துகொள்ளுங்கள், திடனற்றவர்க
ளைத்தேற்றுங்கள், பலவீனரைத்தாங்குங்கள்,எல்
லாரிடத்திலும் நீடியபொறுமையாயிருங்கள்.—
எவனும் மற்றொருவன்செய்யுந் தீமைக்குத்தீமை ௰௫
செய்யாமல், எப்பொழுதும் உங்களுக்குள்ளும்,
மற்றனைவருக்குள்ளும் நன்மையைப்பின்தொட
ரும்படி சாவதானமாயிருக்கக்கடவீர்கள்.—எப் ௰௬
பொழுதுஞ் சந்தோஷப்படுங்கள்.—இடைவிடா ௰௭
மற் பிரார்த்தனைபண்ணுங்கள்.—எல்லாவற்றிலே ௰௮
யும் ஸ்தோத்திரஞ்செய்யுங்கள்: உங்களைக்குறித்
து இதுவே கிறிஸ்து யேசுவுக்குள்ளே தே
வனுடைய சித்தமாயிருக்கின்றது.—ஆவியைத் ௰௯
தணிக்காதிருங்கள்.—தீர்க்கதரிசனங்களை அவ ௨௰
மதியாதிருங்கள்.—எல்லாவற்றையும் பரீட்சை ௨௧
செய்து, நலமானதைப் பற்றிக்கொள்ளுங்கள்.—
தீங்காய்த்தோன்றும் யாவற்றிற்கும் விலகுவீர்க ௨௨
ளாக.—சமாதானத்தின் தேவன் தாமே முழு ௨௩
வதும் உங்களைப்பரிசுத்தமாக்கக்கடவர்; நம்மு
டைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்து வரு
கையில் உங்கள் பூரண ஆவியும், பிராணனும்,
சரீரமுங் குற்றமற்றவைகளாயிருக்கும்படி காக்
கப்படக்கடவன.-உங்களை அழைக்கிறவர்உண் ௨௪
மையுள்ளவர், அவர் அதைச்செய்வார்.—சகோ ௨௫
தரரே, எங்களுக்காக விண்ணப்பம் பண்ணுங்
கள்.—எல்லாச்சகோதரரையும் பரிசுத்த முத்தத் ௨௬
தோடே வாழ்த்துதல்செய்யுங்கள்.-இந்த நிருபத் ௨௭
தைப் பரிசுத்தமான சகோதரர்யாவரும் வாசிக்
கும்படி செய்யவேண்டுமென்று, கர்த்தரைக்
கொண்டு உங்களை ஆணையிடுவிக்கிறேன்.-நம்மு ௨௮
டைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவின்
கிருபை உங்களோடிருக்கக்கடவது. ஆமென்.

---

(௰௮) அதி.௫.௰௧.—(௫.அதி.௧.) மத்.௨௪.௩,௩௬. அப்.௧.௭. (௨) மத்.௨௪.௪௩,௪௪. லூக்.௰௨.௩௯,௪௰. ௨.பேதுரு.௩.௰. வெளி.௩.௩. (௩) ஏசா.௰௩.௬—௯. லூக்.௰௭.௨௭,௨௮,௨௯. ௨.தெச.௧.௯. எரே.௰௩.௨௧. ஓசி.௰௩.௰௩. (௪) ரோ.௰௩.௰௨,௰௩. ௧.யோவா.௨.௮. (௫) எபே.௫.௮. (௬) மத்.௨௫.௫. மத்.௨௪.௪௨. ரோ.௰௩.௰௧,௰௨,௰௩. ௧.பேதுரு.௫.௮. (௭) லூக்.௨௧.௩௪,௩௬. ரோ.௰௩.௰௩. ௧.கொரி.௰௫.௩௪. எபே.௫.௰௪. அப்.௨.௰௫. (௮) ஏசா.௫௯.௰௭. எபே.௬.௰௪,௰௬,௰௭. (௯) ரோ.௯.௨௨. ௧.பேதுரு.௨.௮. யூதா.௪. ௨.தெச.௨.௰௩,௰௪. (௰) ரோ.௰௪.௮,௯. ௨.கொரி.௫.௰௫. (௰௨) ௧.கொரி.௰௬.௰௮. பிலி.௨.௨௯. ௧.தீமோ.௫.௰௭. எபி.௰௩.௭,௰௭. (௰௩) மாற்.௯.௫௰. (௰௪) ௨.தெச.௩.௰௧,௰௨. எபி.௰௨.௰௨. ரோ.௰௪.௧. கலா.௬.௧,௨. கலா.௫.௨௨. எபே.௪.௨. கொலோ.௩.௰௨. ௨.தீமோ.௪.௨. (௰௫) லேவி.௰௯.௰௮. நீதி.௨௰.௨௨. மத்.௫.௩௯,௪௪. ரோ.௰௨.௰௭. ௧.கொரி.௬.௭. ௧.பேதுரு.௩.௯. கலா.௬.௰. (௰௬) ௨.கொரி.௬.௰. பிலி.௪.௪. (௰௭) லூக்.௰௮.௧. ரோ.௰௨.௰௨. எபே.௬.௰௮. கொலோ.௪.௨. ௧.பேதுரு.௪.௭. (௰௮) எபே.௫.௨௰. கொலோ.௩.௰௭. (௰௯) எபே.௪.௩௰. ௧.தீமோ.௪.௰௪. ௨.தீமோ.௧.௬. (௨௰) ௧.கொரி.௰௪.௧,௩௯. (௨௧) ௧.கொரி.௨.௰௧,௰௫. ௧.யோவா.௪.௧. பிலி.௪.௮. (௨௩) பிலி.௪.௯. ௧.கொரி.௮.௯. ௨.தெச.௩.௩. (௨௫) கொலோ.௪.௩. ௨.தெச.௩.௧. (௨௬) ரோ.௰௬.௰௬. (௨௭) கொலோ.௪.௰௬. ௨.தெச.௩.௰௪. (௨௮) ரோ.௰௬.௨௰,௨௪. ௨.தெச.௩.௰௮.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தெசலோனிக்கேயருக்கெழுதிய

## இரண்டாம் நிருபம்.

---

### ௧. அதிகாரம்.

*௧. வாழ்த்து: ௩. சபையார் சன்மார்க்கத்தில் நடந்து, துக்கத்தைச் சகிப்பதினிமித்தம் அவர்களைப் புகழ்ந்து சாந்தப்படுத்தல். அவர்கள் நிமித்தம் பிரார்த்தித்தல்.*

பவுலும், சில்வானும், தீமோத்தேயும், நம்மு
டையபிதாவாகிய தேவனையும், கர்த்தராகி
ய யேசுக்கிறிஸ்துவையும் பற்றியிருக்கிற
தெசலோனிக்கா வூரிலுள்ள சபைக்கு எழுதிக்
௨ கொள்வது:—நம்முடைய பிதாவாகிய தேவ
னாலும், கர்த்தராகிய யேசுக்கிறிஸ்து
வினாலும் உங்களுக்குக் கிருபையுஞ்சமாதான
௩ முமுண்டாகக்கடவன.—சகோதரரே, உங்கள்
விசுவாசம் மிகவும் வளர்ந்துவருகிறபடியினா
லும், நீங்களெல்லாரும் ஒருவரில் ஒருவர் வைக்
கிற அன்பு பெருகுகிறபடியினாலுந் தகுதியாயி
ருக்கிறபடி நாங்கள் எப்பொழுதும் உங்களுக்கா
கத் தேவனை ஸ்தோத்திரிக்கக் கடனாளிகளாயி
௪ ருக்கிறோம்.—ஆதலால் நீங்கள் சகிக்கிற சகல
துன்பங்களிலும், உபத்திரவங்களிலும் பொறு
மையையும், விசுவாசத்தையுங்காண்பிக்கிறதினி
மித்தம், உங்களைக்குறித்து நாங்களே தேவனு
டைய சபைகளில்மேன்மைபாராட்டுகிறோம்.-
௫ நீங்கள் தேவனுடைய இராச்சியத்தினிமித்
தம் படும் உபத்திரவம், நீங்கள் அதற்குப்பாத்
திரரென்றெண்ணப்படுவதற்கும், தேவன் நீதி
யாய்த்தீர்ப்புச்செய்வாரென்பதற்கும் பிரத்தியட்
௬ சமான அத்தாட்சி.—கர்த்தராகிய யேசு தம
து வல்லமையுள்ள தூதரோடும், சுவாலிக்கிற
அக்கினியோடும் வானத்தினின்று வெளிப்பட்
௭ டு,-தேவனை அறியாதவர்களுக்கும், நம்முடை.
ய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவின்சுவி
சேஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுக்கும் நீதி
யுள்ள தண்டனையைச் செலுத்தும்பொழுது,—
௮ உங்களை உபத்திரவப்படுத்துகிறவர்களுக்குப்பி
ரதிபலனாய் உபத்திரவத்தைக் கொடுப்பதும், உ
பத்திரவப்பட்டவர்களாகிய உங்களுக்கு எங்க
ளுடன் இளைப்பாறுதலை அளிப்பதும், தேவ
௯ னுக்கு நியாயம்.—அவர்கள் கர்த்தரின் சந்நி
தியினின்றும், அவருடைய மகிமையுள்ள வல்
லமையினின்றும், நித்திய அழிவாகியதண்டனை
யைப் பெறுவார்கள்.—அத்தினத்தில் அவர், தம ௰
து பரிசுத்தவான்களினால் மகிமைப்படுத்தப்பட
வும், நீங்கள் எங்களுடைய சாட்சியை விசுவா
சித்தபடியினாற் சகலவிசுவாசிகளிடத்திலும் வி
யக்கப்படவும் வருவார்.—ஆதலால் நம்முடை ௰௧
ய தேவனுங் கர்த்தருமாயிருக்கிற யேசுக்
கிறிஸ்துவின் கிருபையின்படி, நம்முடைய
கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவின் நாமம்
உங்களிடத்திலும், நீங்கள் அவரிடத்திலும் மகி
மைப்படுத்தப்படும்பொருட்டாக,—நம்முடைய ௰௨
தேவன் உங்களை இந்த அழைப்புக்குப்பாத்
திரராக்கவும், தமது வல்லமையுடனே தமது அ
னுக்கிரகத்தின் தயையுள்ள அபிப்பிராயத்தை
யும், விசுவாசத்தின் கிரியையையும் நிறைவேற்
றவும் வேண்டுமென்று எப்பொழுதும் உங்கள்
நிமித்தம் விண்ணப்பம்பண்ணிவருகிறோம்.

### ௨. அதிகாரம்.

*௧. நிலைநிற்கும்படி பவுல்சபையாரைவேண்டல்: ௩. பாவ புருஷனை நிருணித்தல்: ௰௩. அவர்கள் தெரிந்துகொள்ளப்பட்டதினிமித்தந் தேவனைத் துதித்தல்: ௰௫. அவர்கள் நிமித்தம் பிரார்த்தித்தல்.*

சகோதரரே, நம்முடைய கர்த்தராகிய யேசு ௧
க்கிறிஸ்துவின் வரவையும், நாம் அவரிடத்திற்
சேர்க்கப்படுவதையுங்குறித்து,-கிறிஸ்து வரும் ௨
நாள் சமீபமாயிற்றென்று சொல்லுகிற ஆவியினா
லாவது, வாக்கினாலாவது, எங்களிடத்திலிருந்து
வந்த நிருபத்தினாலாவது, நீங்கள் சடிதியில்மனச்
சஞ்சலப்படாமலும், கலங்காமலும் இருப்பீர்க
ளாகவென்று நாங்கள் உங்களைவேண்டுகிறோம்.-
எவ்விதத்தினாலும் ஒருவன் உங்களை வஞ்சிக்க ௩
இடங்கொடாதிருங்கள்: விலகிப்போகுதலும்,
கேட்டின் மகனாகிய பாவபுருஷன் வெளிப்படு
தலும் முந்திவந்தாலேயல்லாமல், அந்த நாள் வ
ராது.—அவன், தேவனென்னப்பட்ட யாவருக் ௪
கும், வணங்கப்படுகிற யாவருக்கும் மேலாய்த்
தன்னைச் சிரேஷ்டனாக்கி, தேவாலயத்தில் தேவ
னைப் போல் வீற்றிருந்து, தானே தேவன் என்

---

(௧. அதி. ௧.) ௨.கொரி.௧.௰௯. ௧.தெச.௧.௧. (௨) ௧.கொரி.௧.௩. (௩) ௧.தெச.௧.௨,௩. அதி.௨.௰௩. (௪) ௨.கொரி.௭.௰௪. ௧.தெச.௨.௰௯,௨௰. ௧.தெச.௧.௨. ௧.தெச.௨.௰௪.(௫)பிலி.௧.௨௯. ௧.தெச.௨.௰௪.(௬)வெளி.௰௪.௰௩. ௧.தெச.௪.௰௬. யூதா.௰௪. (௭) வெளி.௬.௰. (௮) எபி.௰.௨௭. ௨.பேதுரு.௩.௭. வெளி.௨௧.௮. சங்.௭௯.௬. ௧.தெச.௪.௫. ரோ.௨.௮. (௯) பிலி.௩.௰௯. ௨.பேதுரு.௩.௭. உபா.௩௩.௨. ஏசா.௨.௰௯. (௰) சங்.௮௯.௭. சங்.௬௮.௩௫. (௰௧) ௧.பேதுரு.௧.௭. (௰௨) வச.௫. ௧.தெச.௧.௨.—(௨. அதி. ௧.) ௧.தெச.௪.௰௬. மத்.௨௪.௩௧. ௧.தெச.௪.௰௭. (௨) மத்.௨௪.௪. எபே.௫.௭. ௧.யோவா.௪.௧. (௩) மத்.௨௪.௪. எபே.௫.௭. ௧.தீமோ.௪.௧. தானி.௭.௨௫. ௧.யோவா.௨.௰௮. வெளி.௰௩.௰௧,. யோவா.௰௭.௰௨. (௪) ஏசா.௰௪.௰௩. தானி.௭.௨௫. தானி.௰௧.௩௬. வெளி.௰௩.௬. ௧.கொரி.௮.௫.

௫ று தன்னைக்காட்டுவான்.—நான் உங்களிடத்திலி
ருந்தபொழுது இவைகளை உங்களுக்குச்சொன்
னேனென்பது உங்களுக்கு ஞாபகமில்லையா.—
௬ அவன் தனதுகாலத்தில்தோன்றுவான், இப்பொ
ழுது அவனைத் தடுக்கிறதின்னதென்று அறிந்தி
௭ ருக்கிறீர்கள்.-அக்கிரமத்தின் இரகசியம் இப்பொ
ழுதே கிரியைசெய்கின்றது: அதற்குத்தடைசெய்
கிறவன் நீக்கப்படும்வரைக்கும் தடைசெய்
௮ வான்.—அப்பொழுது அந்த அக்கிரமக்காரனா
னவன் வெளிப்படுவான், கர்த்தரானவர் அ
வனைத் தமது வாயின் சுவாசத்தினாலே நாசப்ப
டுத்தி, தமது வரவின் பிரகாசத்தினாலே சங்கரிப்
௯ பார்.—சாத்தானுடைய நடத்தையின் விதமாய்
அவன்வருகை, பொய்யான அற்புதங்களோடும்,
அடையாளங்களோடும், மிகுந்த பராக்கிரமத்
௰ தோடும்—அவர்கள் இரட்சிக்கப்படுவதற்கேது
வான சத்தியத்தின்மேலுள்ள அன்பை அவர்கள்
௰௧ தரித்துக் கொள்ளாமலிருப்பதால்,—நாசத்திற்கு
ப்போகிறவர்களுக்குள் அநீதியினாலுண்டாகும்
௰௨ எல்லாவஞ்சகத்தோடுமிருக்கும்.—அதினால் சத்
தியத்தை விசுவாசியாமல், அநீதியிற்பிரியமான
யாவருந் தண்டனைக்குட்படும்படி, அவர்கள்
பொய்யை விசுவாசிக்கத்தக்கதாக அவர்களுக்
குக் கொடியவஞ்சகத்தைத் தேவன் அனுப்பு
௰௩ வார்.—கர்த்தரால் நேசிக்கப்பட்ட சகோ
தரரே, ஆவியின் பரிசுத்தத்தினாலும், சத்தியத்
தைப்பற்றும் விசுவாசத்தினாலும் இரட்சிப்பைப்
பெறுவதற்குத் தேவன் ஆதிமுதல் உங்களைத்
தெரிந்துகொண்டபடியினால், உங்கள் நிமித்தம்
எப்பொழுதுந் தேவனுக்கு ஸ்தோத்திரஞ் செ
௰௪ லுத்துவது எங்கள் கடமை.—நீங்கள் நம்முடை
ய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவின் ம
கிமையைப் பெற்றுக்கொள்ளும்பொருட்டாக,
நாங்கள் பிரசித்தப்படுத்துகிற சுவிசேஷத்தினால்
௰௫ அதற்கு உங்களை அழைத்தார்.—ஆதலால் சகோ
தரரே, நீங்கள் நிலைகொண்டு, எங்கள்வாக்கினா
லாவது, நிருபத்தினாலாவது, நாங்கள் உங்களுக்
கு உபதேசித்த முறைமைகளைப் பற்றிக்கொள்
௰௬ வீர்களாக.—நம்முடைய கர்த்தராகிய யே
சுக்கிறிஸ்துவும், நம்மில் அன்புவைத்து, ந
மக்கு நித்திய ஆறுதலையும், அனுக்கிரகத்தினால்
உத்தம நம்பிக்கையையும் அருளிய நம்முடைய
௰௭ பிதாவாகிய தேவனும்,—உங்கள் இருதயங்க
ளைத்தேற்றி, ஒவ்வொரு நல்லவாக்கிலும், கிரியை
யிலும் உங்களை ஸ்திரப்படுத்தக்கடவர்.

## ௩. அதிகாரம்.

௧. தனக்காகப்பிரார்த்திக்கும்படி பவுல் அவர்களைவேண்டல்: ௬. கட்டளைக்கமையாதவர்களையும் சோம்பர்களையுங் குறித்து உபதேசித்தல்: ௰௭. நிருபத்தின்முடிவுரை.

சகோதரரே, கடைசியாக, உங்களுக்குள்ளே ௧
செல்லுகிறதுபோல, கர்த்தருடைய வாக்
குப்பரந்து மகிமைப்படவும்,—நாங்கள் துர்க்கு ௨
ணராகிய தீதானமனுஷர்களினின்றுவிடுவிக்கப்
படவும், எங்கள்நிமித்தம் பிரார்த்தனைபண்ணுங்
கள்: விசுவாசம் எல்லாரிடத்திலுமில்லையே.—உ ௩
ண்மையுள்ளவராகிய கர்த்தர் உங்களைத்திடப்ப
டுத்தி, தீமைக்குவிலக்கிக்காத்துக்கொள்ளுவார்.-
நாங்கள்உங்களுக்குக்கட்டளையிடுகிறவைகளைச் ௪
செய்கிறீர்களென்றும், செய்வீர்களென்றும்உங்க
ளைக்குறித்துக் கர்த்தரிடத்தில் நம்பிக்கையா
யிருக்கிறோம்.-தேவனில் அன்புவைக்கவும், கி ௫
றிஸ்துவைப்போலப்பொறுமையுள்ளவர்களா
யிருக்கவும், கர்த்தர் உங்கள் இருதயத்தைநடத்
தக்கடவர்.—சகோதரரே, எங்களிடத்தினின்று ௬
பெற்ற உபதேசத்தின்படிநடவாமல், முறைகே
டாய் நடக்கிற எந்தச்சகோதரனையும்விட்டுவி
லகவேண்டுமென்று, நம்முடைய கர்த்தரா
கிய யேசுக்கிறிஸ்துவின் நாமத்தினால் உங்
களுக்குக் கட்டளையிடுகிறோம்.—எங்களை இன் ௭
னவிதமாய்ப் பின்பற்றவேண்டுமென்று உங்க
ளுக்கேதெரியும்: நாங்கள் உங்களுக்குள்ளே மு
றைகேடாய் நடவாமலும்,—ஒருவனுடைய ஆகா ௮
ரத்தைக்கைம்மாறின்றிப் புசிக்காமலுமிருந்து, உ
ங்களில் ஒருவனுக்கும்பாரமுண்டாகாதபடி, நா
ங்கள்இரவும்பகலும் பிரயாசப்பட்டுவேலைசெய்
தோம்.—எங்களுக்கு அதிகாரமில்லாமையாலல் ௯
ல, நீங்கள் எங்களைப்பின்பற்றும்படி உங்களி
டத்தில்எங்களைத்திருஷ்டாந்தமாகவைப்பதற்கா
கவே அப்படிச்செய்தோம்.—ஒருவன்வே ௰
லைசெய்யவிரும்பாதிருந்தால், அவன் புசிக்கவும்
படாதென்றுஉங்களிடத்திலிருந்தபொழுதுநாங்
கள் உங்களுக்குக் கட்டளையிட்டோமே.—உங் ௰௧
களிற்சிலர், வேலை ஒன்றுஞ்செய்யாமற் பிறர்கா
ரியங்களைக்கையிட்டுத்திரிகிறார்களென்று கேள்
விப்படுகிறோம்.—இப்படிப்பட்டவர்கள் அமை ௰௨
தலோடே வேலைசெய்து, தங்கள் சுய ஆகாரத்
தைப்புசிக்கவேண்டுமென்று, நம்முடைய கர்த்
தராகியயேசுக்கிறிஸ்துவினாற் கட்டளை
யிட்டு, அவர்களைவேண்டுகிறோம்.-சகோதரரே, ௰௩

(௭)௧.யோவா.௨.௰௮. ௧.யோவா.௪.௩.(௮)தானி.௭.௰,௰௧. யோபு.௪.௯. ஏசா.௰௧.௪. ஓசி.௬.௫. வெளி.௨.௰௬.வெளி.௰௯.௰௫,௨௰,௨௧. எபி.௰.௨௭. (௯) யோவா.௮.௪௧. எபே.௨.௧. வெளி.௰௮.௨௩. உபா.௰௩.௨. மத்.௨௪.௨௪. வெளி.௰௩.௰௩.(௰)௨.கொரி.௨.௰௫.(௰௧)ரோ.௧.௨௪,. எசேக்.௰௪.௯. மத்.௨௪.௫,௰௧. ௧.தீமோ.௪.௧. (௰௨) ரோ.௧.௩௨. (௰௩) ௧.தெச.௧.௪. எபே.௧.௪. லூக்.௧.௭௫. ௧.பேதுரு.௧.௧. (௰௪) யோவா.௰௭.௨௩. ௧.தெச.௨.௰௨. ௧.பேதுரு.௫.௰. (௰௫) ௧.கொரி.௰௬.௰௩. பிலி.௪.௧. ௧.கொரி.௰௧.௨.(௰௬)௧.யோவா.௪.௰. வெளி.௧.௫. ௧.பேதுரு.௧.௩.(௰௭) ௧.கொரி.௧.௯. ௧.தெச.௩.௰௩. ௧.பேதுரு.௫.௰.—(௩.அதி.௧.) எபே.௬.௨௰. ௧.தெச.௫.௨௫.(௨)ரோ.௰௫.௩௰. அப்.௨௮.௨௪. ரோ.௰.௰௬.(௩)௧.கொரி.௧.௮. ௧.தெச.௫.௨௪. யோவா.௰௭.௰௫. ௨.பேதுரு.௨.௯. (௪) ௨.கொரி.௭.௰௬. கலா.௫.௰. (௫) ௧.நாளா.௨௯.௰௮. ௧.தெச.௧.௨. (௬) ரோ.௰௬.௰௭. ௧.தீமோ.௬.௫. ௨.யோவா.௰. ௧.கொரி.௫.௰௧,௰௩. ௧.தெச.௪.௰௨. (௭) ௧ கொரி.௪.௰௬. ௧.தெச.௧.௬,௭. ௧.தெச.௨.௰.(௮)அப்.௰௮.௩. ௨.கொரி.௰௧.௯. ௧.தெச.௨.௯.(௯)௧.கொரி.௯.௬. ௧.தெச.௨.௬. (௰) ஆதி.௩.௰௯. ௧.தெச.௪.௰௧. (௰௧) ௧.தெச.௪.௰௧. ௧.தீமோ.௫.௰௩. ௧.பேதுரு.௪.௰௫. (௰௨) ௧.தெச.௪.௰௧. எபே.௪.௨௮. (௰௩) கலா.௬.௯.

நீங்களோ,நன்மையைச்செய்வதில் தளராதிருங்
௰௪ கள்.—ஒருவன் இந்தநிருபத்தின்படி எங்கள்வாக்
குக்குக்கீழ்ப்படியாமற்போனால்,அவனைக்குறித்
துக்கொண்டு, அவன்வெட்கப்படும்படி அவனு
௰௫ டனே கலவாதிருங்கள்.—ஆகிலும் அவனைச்
சத்துருவாய் எண்ணாமல், சகோதரனென்றெண்
௰௬ ணி அவனுக்குப் புத்திசொல்லவேண்டும்.—ச
மாதானத்தின் கர்த்தர் தாமே எப்பொழுதும்
எவ்விதத்திலும் உங்களுக்குச் சமாதானத்தை அ
ருளக்கடவர். கர்த்தர் உங்களனைவரோடுமிருப்
பாராக.—பவுலாகிய நான் என் கையெழுத்தோ ௰௭
டேவாழ்த்துகிறேன், எந்த நிருபத்திலும் இதுவே
அடையாளம்: இப்படியே எழுதுகிறேன்.—நம் ௰௮
முடைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்து
வின் கிருபை உங்களனைவரோடும் இருக்கக்க
டவது. ஆமென்.

(௰௪) மத்.௰௮.௰௭. ௧.கொரி.௫.௯,௰௧. (௰௫) லேவி.௰௯.௰௭. ௧.தெச.௫.௰௪. தீத்.௩.௰. (௰௬) ரோ.௰௫.௩௩. ௧.கொரி.௰௪.௩௩. ௨.கொரி.௰௩.௰௧. ௧.தெச.௫.௨௩.(௰௭)௧.கொரி.௰௬.௨௧. கொலோ.௪.௰௮. ரோ.௰௬.௨௪.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தீமோத்தேயுக்கெழுதிய

## முதலாம் நிருபம்.

---

### ௧. அதிகாரம்.

*௧. வாழ்த்து: ௩. வமிசவரலாறுகளையும், கட்டளைகளையும், சுவிசேஷத்தையும், அப்போஸ்தலபட்டத்தையுங்குறித்துப் பவுல் உபதேசித்தல்: ௰௮. ஸ்திரமாயிருக்கும்படி வேண்டல். சிலர் நன்னெறிவிட்டுத் தவறினதைக்குறித்தல்.*

நம்முடைய இரட்சகராகிய தேவனும், நம்
முடைய நம்பிக்கையின் கர்த்தருமாகியயே
சுக்கிறிஸ்து விதித்தகட்டளையின்படி, யேசுக்
கிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பவுல்,—
௨ விசுவாசமூலமாகச்சொந்தப்புத்திரனாகிய தீமோ
த்தேயுக்கு எழுதிக்கொள்வது: நம்முடைய
பிதாவாகிய தேவனாலும், நம்முடையகர்த்த
ராகிய யேசுக்கிறிஸ்துவினாலுங் கிருபை
யும், இரக்கமும், சமாதானமுமுண்டாகக்கடவ
௩ ன.—வேற்றுமையான உபதேசத்தைப்போதியாத
படிக்கும், விசுவாசத்தினாலுண்டாகுந்தேவபத்தி
யின் விருத்தியையல்ல, தருக்கங்களையே உண்
டாக்குகிற முடிவில்லாதவமிசவரலாறுகளையும்,
கட்டுக்கதைகளையும் பற்றிக்கொள்ளாமலிருக்கு
ம்படிக்கும், நீ சிலருக்குக் கட்டளையிடும்பொ
௪ ருட்டாக,—நான் மக்கேதோனியாவுக்குப் புறப்
பட்டபொழுது, எபேசு பட்டணத்தில்தரிக்கும்
௫ படி உன்னைவேண்டிக்கொண்டேன்.—சுத்தமா
ன இருதயத்தினாலும், நல்ல மனச்சாட்சியினா
லும், உண்மையான விசுவாசத்தினாலுந் தோன்
௬ றும் அன்பே கட்டளையின்தாற்பரியம்.—சிலர் அ
தைப்பாராமல் விலகி, விருதாவான வாக்குவா
௭ தங்களைச்செய்து தவறிப்போனார்கள்.—அவர்கள்
தாங்கள்சொல்லுகிறது இன்னதென்றும், தாங்கள்
நிச்சயிக்கிறது இன்னதென்றும்அறியாதிருந்தும்,
நியாயசாஸ்திரிகளாயிருக்கவிரும்புகிறார்கள்.—
௮ நியாயப்பிரமாணத்தை நியாயத்துக்கிசைய ஒரு
வன் அனுசரித்தால் நன்மையாகுமென்று அறிந்தி
௯ ருக்கிறோம்.—எங்களுக்குத்தெரிந்திருக்கிறபடி,
நியாயப்பிரமாணம் நீதிமானுக்கல்ல, அக்கிரமக்
காரருக்கும், அமையாதவர்களுக்கும், தேவபத்
தியில்லாதவர்களுக்கும், பாவிகளுக்கும், அசுத்
தருக்கும், துஷ்டருக்கும், பிதாமாதாக்களைக்கொ
லைசெய்பவர்களுக்கும், மற்றக்கொலைபாதகருக்
கும்,—வேசைமார்க்கருக்கும், ஆண்புணர்ச்சிக் ௰
காரருக்கும், மனுஷரைத்திருடுகிறவர்களுக்கும்,
பொய்யருக்கும், பொய்யாணையிடுகிறவர்களுக்
கும் விரோதமாகவும்,—துதிக்கப்படத்தக்க தே ௰௧
வன் அருளிய மகிமையுள்ள சுவிசேஷத்தின்ப
டி எனக்கு ஒப்பிக்கப்பட்ட சொஸ்தமான உப
தேசத்திற்கு விபரீதமாயிருக்கிற மற்றெந்தக்காரி
யத்திற்கும் விரோதமாகவுங்கற்பிக்கப்பட்டது.—
முன்னே தூஷணிக்கிறவனும், துன்பப்படுத்து ௰௨
கிறவனும், நிந்திக்கிறவனுமாயிருந்த என்னைப்ப
லப்படுத்துகிற நம்முடையகர்த்தராகியகிறி
ஸ்துயேசு, என்னை உண்மையுள்ளவனென்றெ
ண்ணி, இந்த ஊழியத்தில் என்னை ஏற்படுத்தின
படியால் அவரை ஸ்தோத்திரஞ்செய்கிறேன்.—
ஆனாலும் அறியாமல் அவிசுவாசமாய் அப்படிச் ௰௩
செய்ததினால் இரக்கம்பெற்றேன்.—மேலும் நம்மு ௰௪
டைய கர்த்தாவின் கிருபை, கிறிஸ்துயே
சுவின் மேலுள்ள விசுவாசத்தோடும், அன்போ
டுங்கூட எனக்குப்பரிபூரணமாய்ப்பெருகிற்று.—
பாவிகளை இரட்சிக்கும்பொருட்டுக் கிறிஸ்து ௰௫
யேசு உலகத்தில் வந்தாரென்கிறது, உண்மை
யும் எல்லா அங்கிகரிப்புக்குத்தக்கதுமான வாக்
கு; அவர்களில் நானே பிரதானி.—அப்படியிருந் ௰௬
தும் நித்தியசீவனைப் பெறும்படி இனிமேல் யே
சுக்கிறிஸ்துவினிடத்தில்விசுவாசமாயிருப்
பவர்களுக்குத்திருஷ்டாந்தமுண்டாக, முதல் அ
வர் என்னில்எல்லாநீடியபொறுமையையுங்காட்
டினார், இதினிமித்தம் நான் இரக்கம்பெற்றேன்.—
நித்தியமும், அழிவின்மையும், அதரிசனமுமுள் ௰௭
ள இராசனாய், ஒருவராகிய ஞானமுடைய கடவு
ளுக்குக் கனமும், மகிமையுஞ் சதாகாலங்களி
லும் இருக்கக்கடவன. ஆமென்.—புத்திரனாகிய ௰௮
தீமோத்தேயுவே, உன்னைக்குறித்து முன்னுண்
டான தீர்க்கதரிசனங்களுக்கேற்க விசுவாசத்தை

---

(௧. அதி.௧) அப்.௯.௰௫. கலா.௧.௧,௰௧. தீத்.௧.௨. யூதா.௨௫. கொலோ.௧.௨௭. (௨) அப்.௰௬.௧. ௧.கொரி.௪.௰௭. பிலி.௨.௰௯. ௧.தெச.௩.௨. தீத்.௧.௪. கலா.௧.௩. ௨.தீமோ.௧.௨. ௧.பேதுரு.௧.௨. (௩) கலா.௧.௬,௭. அதி.௪.௭. ௨.தீமோ.௨.௰௪,௰௬,௨௩. தீத்.௧.௰௩. (௪) அப்.௨௰.௧,௩. பிலி.௨.௨௪. (௫) ரோ.௰௩.௮,௰. கலா.௫.௰௪. ௨.தீமோ.௨.௨௨. (௬) அதி.௬.௪,௨௰. (௭) அதி.௬.௪. (௮) ரோ.௭.௰௨. (௯) கலா.௩.௰௯. (௰௧) அதி.௬.௩. ௨.தீமோ.௪.௩. தீத்.௧.௯. அதி.௬.௰௫. ௧.கொரி.௯.௰௭. கலா.௨.௮. கொலோ.௧.௨௫. ௧.தெச.௨.௪. ௨.தீமோ.௧.௰௧. தீத்.௧.௩. (௰௨) ௨.கொரி.௰௨.௯. ௧.கொரி.௭.௨௫. ௨.கொரி.௩.௫,௬. கொலோ.௧.௨௫. (௰௩) அப்.௮.௩. ௧.கொரி.௰௫.௯. பிலி.௩.௬. லூக்.௨௩.௩௪. யோவா.௯.௩௯,௪௧. அப்.௩.௰௭. (௰௪) ரோ.௫.௨௰. ௧.கொரி.௰௫.௰. ௨.தீமோ.௧.௰௩. லூக்.௭.௪௭. (௰௫) அதி.௩.௧. ௨.தீமோ.௨.௰௧. தீத்.௩.௮. மத்.௯.௰௩. லூக்.௫.௩௨. ரோ.௫.௮. ௧.யோவா.௩.௫. (௰௬) ௨.கொரி.௪.௧. அப்.௰௩.௩௯. (௰௭) சங்.௰.௰௬. தானி.௭.௰௪. ரோ.௧.௨௩. யோவா.௧.௰௮. எபி.௰௧.௨௭. ௧.யோவா.௪.௰௨. ரோ.௰௬.௨௭. யூதா.௨௫. ௧.நாளா.௨௯.௰௧. (௰௮) ௨.தீமோ.௨.௨. அதி.௪.௰௪. அதி.௬.௰௨. ௨.தீமோ.௨.௩.

யும், நன்மனச்சாட்சியையுங் காத்து, உத்தம யுத்
தத்தை நடத்துவாயாக என்னும் இந்தக்கட்டளை
௰௯ யை நான் உனக்கு ஒப்பிக்கிறேன்.-சிலர் இவை
களைத்தள்ளி, தங்கள் விசுவாசமாகிய கப்பலைச்
௨௰ சேதப்படுத்தினார்கள்.-அவர்களில் யூமெனேயும்,
அலெக்குசந்தருமிருக்கிறார்கள்; இவர்கள் தூஷ
ணியாதபடிக்குக் கற்றுக்கொள்ளும் பொருட்
டாய், இவர்களைச் சாத்தானுக்கு ஒப்பித்தேன்.

## ௨. அதிகாரம்.

*௧. சாதாரணசனங்கள் நிமித்தம் பிரார்த்தனைபண்ணும்படி பவுல் கட்டளையிடல்: ௯. ஸ்திரிகள் ஆபரணங்களை அணிந்துகொள்வதையும், சபையிலேபேசுவதையும் விலக்கல்.*

நாம் சாந்தமும், சமாதானமுமுள்ளவர்களாய்,
பூரணபத்தியோடும், நேர்மையோடும் நாள் வி
டும்படிக்கு, இராசாக்களுக்காகவும், அதிகாரிக
௨ ளுக்காகவும்,–மற்ற எல்லாச்சனங்களுக்காகவும்
விண்ணப்பங்களையும், வேண்டுதல்களையும், பி
ரார்த்தனைகளையும், ஸ்தோத்திரங்களையும் பண்
ணவேண்டுமென்று நான் பிரதானமாய்ப்புத்தி
௩ சொல்லுகிறேன்.–இப்படிச்செய்வது நம்முடை
ய இரட்சகராகிய தேவனுடைய சமுகத்
தில் நன்மையும், அங்கிகரிக்கப்படத்தக்கதுமாயி
௪ ருக்கின்றது.—எல்லாமனுஷரும் இரட்சிக்கப்ப
டுவதற்கும், சத்தியத்தை அறிகிற அறிவை அடை
௫ வதற்கும் அவர் சித்தமாயிருக்கிறார்.—தேவன்
ஒருவரே, தேவனுக்கும் மனுஷருக்கும் மத்தி
௬ யஸ்தரும் ஒருவரே;—எல்லாரையும் மீட்குங்கி
ரயமாகத் தம்மை ஒப்புக்கொடுத்தமனுஷனான கி
றிஸ்துயேசுவே அவர்;இதற்குத் தகுந்தகாலத்
௭ திற்சாட்சியுண்டாயிருக்கும்.-நான்இதைக்குறித்
து அந்நியருக்கு விசுவாசத்தையும்,சத்தியத்தையு
ம்போதிக்கிறபோதகனும்,பிரசங்கியும்,அப்போ
ஸ்தலனுமாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறேன். பொ
ய்யாயல்ல, கிறிஸ்துவை முன்னிட்டுச்சத்திய
௮ மாய்ப் பேசுகிறேன்.-மனுஷர்,கோபமும்,சந்தே
கமுமில்லாமல் சுத்தமான கைகளை உயர்த்தி,எவ்
விடங்களிலும் பிரார்த்தனை பண்ணவேண்டும்,
௯ இதுவே என் சித்தம்.—ஸ்திரிகளும் மயிர்ப்பின்
னல், பொன், முத்துகள், விலையுயர்ந்தவஸ்திரம்
இவைகளினாலேயல்ல, நாணத்தோடும், மரியா
தையோடும் கற்புக்குரிய வஸ்திரத்தைத்தரித்து,–
௰ தேவபத்தியைக் காண்பிக்கிற ஸ்திரிகளுக்கேற்ற
தாக நற்கிரியைகளாகிய அலங்காரத்தினால் தங்க
௰௧ ளை அலங்கரிக்கக்கடவர்கள்.–ஸ்திரி எல்லாவற்
றிலும் அடக்கமுடையவளாய் அமைதலோடே
கற்றுக்கொண்டு,இருக்கக்கடவள்.–உபதேசிக்க ௰௨
வும், புருஷன் மேல் அதிகாரஞ் செலுத்தவும்,
நான் ஸ்திரிக்கு உத்தரவுகொடுக்கவில்லை, அவள்
மவுனமாயிருக்கக்கடவள்.—எவாளுக்குமுன் ஆ ௰௩
தாம் சிருஷ்டிக்கப்பட்டான்.—ஆதாம் வஞ்சிக் ௰௪
கப்படவில்லை,ஸ்திரியானவளே வஞ்சிக்கப்பட்
டுக்குற்றவாளியானாள்.-ஆனாலும் மரியாதையோ ௰௫
டே விசுவாசத்திலும், அன்பிலும், பரிசுத்தத்தி
லும் நிலைகொண்டிருப்பார்களேயாகில் பிள்ளை
பெறுகிறதில் இரட்சிப்பைப்பெறுவாள்.

## ௩. அதிகாரம்.

*௧. அத்தியட்சனுடைய குணகிரியைகளைக்குறித்தல்: ௮. பரிசாரகனுடைய குணகிரியைகளைக் குறித்துத் தெரிவித்தல்: ௰௪. தீமோத்தேயுக்குத் தான் எழுதிய நிருபத்தின் நோக்கத்தைத்தெரிவித்தல்.*

அத்தியட்சனுடைய தொழிலை விரும்புகிறவ ௧
ன், நல்லகிரியையை விரும்புகிறான், இதுமெய்
யானவாக்கு.—அத்தியட்சனானவன் குற்றமற்ற ௨
வனும், ஒரேமனைவியையுடையவனும், தெளிந்
தபுத்தியுள்ளவனும், மனஅடக்கமுள்ளவனும்,
நல்லொழுக்கமுள்ளவனும், விருந்தோம்புகிறவ
னும், போதித்தலில் நிபுணனுமாயிருக்கவேண்
டும்;—மதுபானப்பிரியனும், அடிக்கிறவனும், ௩
இழிவான ஆதாயத்தை இச்சிக்கிறவனும், வி
ரோதிக்கிறவனும், கலகக்காரனும், உலோபியு
மாயிராமல்,—பொறுமையுடையவனும், முழுப் ௪
பயபத்தியோடுந் தன்பிள்ளைகளை வசப்படுத்தி,
தன் சுயகுடும்பத்தாரை நன்றாக நடத்துகிறவனு
மாயிருக்கவேண்டும்.–ஒருவன் தன் சுயகுடும்பத் ௫
தை நடத்த அறியாதிருந்தால், தேவனுடைய
சபையை எப்படி விசாரிப்பான்.—இறுமாப்ப ௬
டைந்து, பிசாசின் தண்டனைக்குட்படும்படி பு
தியவனாயிருக்கப்படாது.—மேலும் அவன் நிந்த ௭
னையிலும், பிசாசின் கண்ணியிலும் விழாதபடி,
புறம்பானவர்களுக்குள் நற்சாட்சிபெற்றவனாயு
மிருக்கவேண்டும்.–உதவிக்காரருமோ, இருநாக் ௮
குள்ளவர்களும், மதுபானப்பிரியரும், லோபிக
ளுமாயிராமல்,-யோக்கியர்களும்,விசுவாசத்தின் ௯
இரகசியத்தைச்சுத்தமானமனதிலே காத்துக்கொ
ள்பவர்களுமாயிருக்கவேண்டும்.—அன்றியும் இ ௰
வர்கள்சோதிக்கப்பட்டபின்புகுற்றமில்லாதவர்
களானால், உதவிக்காரருடைய ஊழியத்தைச்
செய்யலாம்.—அதுபோல மனைவிகளும், யோக் ௰௧
கியர்களும்,தூஷணஞ்செய்யாதவர்களும்,மனவ
டக்கமுள்ளவர்களும், எல்லாவற்றிலேயும் உண்

---

(௰௯)அதி.௩.௯. அதி.௬.௯. (௨௰)௨.தீமோ.௨.௰௭. ௨.தீமோ.௪.௰௪. ௧.கொரி.௫.௫. அப்.௰௩.௪௫.—(௨. அதி. ௧.) எஸ்றா.௬.௯. எரே.௨௯.௭. ரோ.௰௩.௧. (௩) ரோ.௰௨.௨. அதி.௧.௧. ௨.தீமோ.௧.௯. (௪) எசேக்.௰௮.௨௩. யோவா.௩.௰௬,௰௭. தீத்.௨.௰௧. ௨.பேதுரு.௩.௯. யோவா.௰௭.௩. ௨.தீமோ.௨.௨௫.(௫)ரோ.௩.௨௯,௩௰. கலா.௩.௨௰.எபி.௮.௬. (௬) மத்.௨௰.௨௮. எபே.௧.௮. தீத்.௨.௰௪. ௧.கொரி.௧.௫. ௨.தெச.௧.௰. ௨.தீமோ.௧.௮. ரோ.௫.௬. கலா.௪.௫. எபே.௧.௰. தீத்.௧.௨. (௭) எபே.௩.௭,௮. ௨.தீமோ.௧.௰௧. ரோ.௯.௧. ரோ.௰௧.௰௪. கலா.௧.௰௬.(௮) மல்.௧.௰௧. யோவா.௪.௨௧. சங்.௱௩௪.௨. எசா.௧.௰௫. (௯) ௧.பேதுரு.௩.௩. (௰) ௧.பேதுரு.௩.௪.(௰௨)௧.கொரி.௰௪.௩௪.எபே.௫.௨௪. (௰௩) ஆதி.௧.௨௭. ௧.கொரி.௰௧.௮,௯. (௰௪) ஆதி.௩.௬. ௨.கொரி.௰௧.௩.—(௩. அதி. ௧.) அப்.௨௰.௨௮. பிலி.௧.௧. எபே.௪.௰௨. (௨) தீத்.௧.௭. ௨.தீமோ.௨.௨௪. ௧.பேதுரு.௫.௨. (௩) தீத்.௧.௬. ௨.தீமோ.௨.௨௪. (௪)தீத்.௧.௬. (௬) எசா.௰௪.௰௨.(௭)அப்.௨௨.௰௨. ௧.கொரி.௫.௰௨. ௧.தெச.௪.௰௨. ௨.தீமோ.௨.௨௬.(௮)அப்.௬.௩.லேவி.௰.௰௧. எசேக்.௪௪.௨௧. (௯) அதி.௧.௰௯. (௰௧) தீத்.௨.௩.

௰௨ மையுள்ளவர்களுமாயிருக்கவேண்டும்.—உதவிக்
காரர் ஒவ்வொரு மனைவிக்கு ஒவ்வொரு புருஷர்
களும், தங்கள் தங்கள் பிள்ளைகளையுங் குடும்பத்
தையும் நன்றாய் நடத்துகிறவர்களுமாயிருக்க
௰௩ வேண்டும்.—உதவிக்காரருடைய உத்தியோகத்
தை நன்றாய் நடத்துகிறவர்கள், கிறிஸ்து யே
சுவைப் பற்றும் விசுவாசத்தில் உத்தமநிலையை
யும், மிகுந்த தைரியத்தையும் ஆதாயப்படுத்திக்
௰௪ கொள்ளுகிறார்கள்.-நான் சீக்கிரமாய் உன்னிடத்
௰௫ தில் வருவேனென்று நம்பியிருக்கிறேன்.—நான்
தாமதித்தால் சத்தியத்தைத்தாங்குகிற தூணும், ஆ
தாரமும், நித்திய தேவனுடைய சபையுமாகி
ய வீட்டிலே நீ நடக்கவேண்டியவிதத்தை அறி
௰௬ யும்படி இவைகளை உனக்கெழுதினேன்.—தே
வன் மாமிசத்தில்வெளிப்பட்டார்,ஆவியினால்நீ
தியுள்ளவரென்று விளக்கப்பட்டார்,தேவதூதரு
க்குக் காணப்பட்டார்,புறத்தேசத்தாருக்குள்ளே
பிரசங்கிக்கப்பட்டார், உலகத்தில் விசுவாசிக்
கப்பட்டார், மகிமையிலேற்றப்பட்டாரென்கிற
தேவபத்தியின் இந்த இரகசியம் பெரிதென்பதற்
குச்சந்தேகமில்லை.

## ௪. அதிகாரம்.

௧. விசுவாசக்கேடுண்டாகுமென்று முன்னுரைத்தல்: ௭. தேவபத்தியைக்குறித்து உபதேசித்தல்.

ஆவியானவர் தெளிவாய் இவ்வாக்கைச்சொல்
லுகிறார், பிற்காலங்களிற் சிலர் சூடுண்ட மனச்
சாட்சியுள்ளவர்களாய், பொய்யரின் கபடத்தி
௨ னாலே—வஞ்சிக்கிற ஆவிகளுக்கும், தேமோ
னியருடைய உபதேசங்களுக்குஞ் செவிகொ
டுத்து, விசுவாசத்தை விட்டுவிலகுவார்கள்.—
௩ இவர்கள் விவாகத்தை விலக்குவார்கள், விசு
வாசிகளாலுஞ் சத்தியத்தை அறிந்தவர்களாலும்,
ஸ்தோத்திரத்தோடே அங்கிகரிக்கப்படத்தக்க
தும் தேவன் சிருஷ்டித்ததுமாகிய உணவுப்
௪ பொருளைத் தள்ளக் கற்பிப்பார்கள்.—தே
வன் சிருஷ்டித்தயாவும் உத்தமம், ஸ்தோத்திரத்
தோடே அங்கிகரித்தால், ஒன்றுந் தள்ளத்தக்க
௫ தல்ல.—அவை தேவவாக்கினாலும், வேண்டுத
௬ லினாலும் பரிசுத்தமாக்கப்படுகின்றன.—சகோ
தரருக்கு இவைகளை உணர்த்தினாயாகில், நீ அ
றிந்து பற்றிக்கொண்டிருக்கிற போதகத்திற்கும்
விசுவாசத்திற்குமுரிய வாக்குகளில் வளர்ந்தவ
னாய், யேசுக்கிறிஸ்துவுக்கு உத்தம உதவிக்
௭ காரனாவாய்.—கிழவிகள் பேசுகிறவைகளும்,அ
வபத்திக்குரியவைகளுமாகியகட்டுக்கதைகளைத்
தள்ளி, மெய்த்தேவபத்திக்கேற்றவைகளில் மு
யற்சிபண்ணுவாயாக.—சரீரமுயற்சி சொற்பபல ௮
னைத்தரும்: இம்மைக்கும் மறுமைக்குமேற்றவாக்
குத்தத்தத்திற்குரித்தாகியதேவபத்தியோ, எல்லா
வற்றிலேயும் பலனைத்தரும்.—இவ்வாக்கு உண் ௯
மையும், மிகவும் அங்கிகரிக்கப்படத்தக்கதுமா
யிருக்கின்றது.—இதினிமித்தம் நாங்களும், எல் ௰
லாமனுஷருக்கும், விசேஷமாக விசுவாசிகளுக்
கும் இரட்சகராகிய சீவனுள்ள தேவனை நம்
புகிறதினாற்பிரயாசப்பட்டும், நிந்திக்கப்பட்டுமி
ருக்கிறோம்.—நீ இவைகளைக்கற்பித்துப் போதிப் ௰௧
பாயாக.—உன்வாலிபத்தை ஒருவரும் அவமதிக் ௰௨
காதபடிபார்; நீ வாக்கிலும், நடையிலும், அன்
பிலும், குணத்திலும், விசுவாசத்திலும், நிறை
யிலும் விசுவாசிகளுக்குத்திருஷ்டாந்தமாயிருக்
கக்கடவாய்.—நான் வருமளவும் வாசிப்பதிலும், ௰௩
புத்திசொல்வதிலும், உபதேசிப்பதிலும் நீ சாக்
கிரதையாயிரு.—முதியோர்சங்கத்தார் உன்மேற் ௰௪
கைகளை வைத்தபொழுது, தீர்க்கதரிசனத்தினால்
உனக்குக்கொடுக்கப்பட்ட வரத்தைக்குறித்து நீ
அசதியாயிராதே.—உன் தேர்ச்சி யாவருக்குந் ௰௫
தோன்றும்படி நீ இவைகளையே சிந்தித்துக்கொ
ண்டு, ஏகசிந்தையுடன் இவைகளிலே நிலைத்தி
ருக்கக்கடவாய்.—நீ உன்னையும் உபதேசத்தை ௰௬
யுங்குறித்துச் சாவதானமாயிரு; இவைகளில் நி
லைகொள்: இப்படிச்செய்தால்உன்னையும், உன்
னிடத்திற்கேட்பவர்களையும் இரட்சிப்பாய்.

## ௫. அதிகாரம்.

௧. கண்டிப்பையும் விதவைகளின் பாலனத்தையுங் குறித்து உபதேசித்தல்: ௰௭. முதியோரை ஏற்படுத்தல்: ௨௨. பவுல் தீமோத்தேயுக்கு விசேஷமாக உபதேசஞ்செய்தல்.

நீ முதிர்ந்தவனைக் கடிந்துகொள்ளாதிரு, அவ ௧
னைப்பிதாவைப்போலவும், வாலிபரைச்சகோத
ரரைப்போலவும்,—முதிர்ந்தஸ்திரிகளைமாதாக்க ௨
ளைப்போலவும், இளையஸ்திரிகளை அதிக சுத்தத்
துடன் சகோதரிகளைப்போலவும் பாவித்துநடத்
துவாயாக.—உள்ளபடி விதவையாயிருக்கிறவர் ௩
களை ஆதரித்துக்கொள்.—ஒரு விதவைக்குப்பிள் ௪
ளைகளாவது, பேரன், பேர்த்தியாவது இருந்
தால், இவர்கள் முதல் தங்கள குடும்பத்தைத்தே
வபத்தியுடனே விசாரித்து, பின்பு தங்கள் பெற்
றாருக்குப் பிரதிஉபகாரஞ்செய்யக்கற்றுக்கொள்

---

(௰௩) மத்.௨௫.௨௧. (௰௫) எபே.௨.௨௧,௨௨. ௨.தீமோ.௨.௨௰. (௰௬) யோவா.௧.௰௪. ௧.யோவா.௧.௨. மத்.௩.௰௬. யோவா.௧.௩௨,௩௩. ரோ.௧.௩. ௧.பேதுரு.௩.௰௮. ௧.யோவா.௫.௬,. மத். ௨௮.௨. லூக்.௨.௰௩. யோவா.௨௰.௰௨. எபே.௩.௰. ௧.பேதுரு.௧.௰௨. அப்.௰.௩௪. கலா.௨.௭. எபே.௩.௫,௬,௮. ரோ.௰.௰௮. கொலோ.௧.௬,௨௩,௨௭,௨௮. லூக்.௨௪.௫௧. அப்.௧.௯. ௧.பேதுரு.௩.௨௨.—(௪. அதி. ௧.) யோவா.௰௬.௰௩. ௨.தெச.௨.௪. ௨.தீமோ.௩.௧,. ௨.பேதுரு.௩.௩. ௧.யோவா.௨.௰௮. யூதா.௪,௰௮. ௧.பேதுரு.௧.௨௰. மத்.௭.௰௫. ரோ.௰௬.௰௮. ௨.பேதுரு.௨.௩. எபே.௪.௰௪. (௨) ௨.தீமோ.௩.௰௩. ௨.பேதுரு.௨.௧. வெளி.௰௬.௰௪. தானி.௰௧.௩௫,௩௭,௩௮. வெளி.௯.௨௰.(௩)௧.கொரி.௭.௨௮,௩௬,௩௮. கொலோ.௨.௨௰,௨௧. எபி.௰௩.௪. ரோ.௰௪.௩,௰௭. ௧.கொரி.௮.௮. ஆதி.௧.௨௯. ரோ.௰௪.௬. ௧.கொரி.௰.௩௰. (௪) ரோ.௰௪.௰௪,௨௰. ௧.கொரி.௰.௨௫. தீத்.௧.௰௫. (௬) ௨.தீமோ.௩.௰௪,௰௫. (௭) அதி.௧.௩. ௨.தீமோ.௨.௰௬,௨௩. தீத்.௧.௰௩. எபி.௫.௰௪. (௮)௧.கொரி.௮.௮. கொலோ.௨.௨௩. சங்.௩௭.௪. சங்.௮௪.௰௧. மத்.௬.௩௩. ரோ.௮.௨௮. (௯) ௧.கொரி.௪.௰௧,௰௨. சங்.௩௬.௬. (௰௨) ௧.கொரி.௰௬.௰௧. தீத்.௨.௰௫. தீத்.௨.௮. ௧.பேதுரு.௫.௩. (௰௪) ௨.தீமோ.௧.௬. அப்.௬.௬. ௨.தீமோ.௧.௬. (௰௬) அப்.௨௰.௨௮. எசேக்.௩௩.௯. ரோ.௰௧.௰௪. ௧.கொரி.௯.௨௨. யாக்.௫.௨௰.—(௫. அதி. ௧.) லேவி.௰௯.௩௨. (௪) மத்.௰௫.௪. எபே.௬.௧,௨.

ளக்கடவர்கள்: இதுவே தேவனுடைய சந்நி
தியில் நன்மையும், அங்கிகரிக்கத்தக்கதுமாயிருக்
௫ கின்றது.-உள்ளபடி அநாதவிதவையாயிருக்கிற
வள் தேவனிடத்தில் அடைக்கலம்புகுந்து,
இரவும்பகலும்விண்ணப்பங்களிலேயும்,பிரார்த்
௬ தனைகளிலேயும் நாள்விடுவாள்.-சிற்றின்பத்தோ
டேவாழ்ந்திருப்பவளோ,உயிரோடிருக்கையிலு
௭ ம்மரித்தவள்.-அவர்கள் குற்றமற்றவர்களாகும்ப
௮ டி இவைகளைக் கட்டளையிடுவாயாக.-தன்னைச்
சேர்ந்தவர்களையும், விசேஷமாகத் தன் குடும்பத்
தாரையும் ஆதரித்துக்கொள்ளாதவன், விசுவாசத்
தை மறுத்து, அவிசுவாசியிலுங் கெட்டவனாவா
௯ ன்.-அறுபதுவருஷத்திற்குக் கீழான வயதில்லா
தவளும், ஒரேபுருஷனுக்கு மனைவியாயிருந்தவ
௰ ளுமாகி,—பிள்ளைகளைவளர்த்து, அந்நியரை உப
சரித்து, பரிசுத்தவான்களுடைய கால்களைக்கழு
வி, உபத்திரவப்பட்டவர்களுக்கு உதவிசெய்து,
சகலவிதமான நற்கிரியைகளையுஞ் சாக்கிரதை
யாய் நடப்பித்து, இப்படி நற்கிரியைகளினிமித்
தம் நற்சாட்சியைப்பெற்றிருக்கும் விதவையான
வளைத் தொகையிலே சேர்த்துக்கொள்ளலாம்.—
௰௧ வாலிப வயதுள்ள விதவைகளை அங்கிகரிக்கப்
படாது: இவர்கள் கிறிஸ்துவுக்கு விரோதி
களாய், லௌகீக இச்சைகொண்டு, திரும்பவும்
௰௨ விவாகம்பண்ணுவார்கள்.—இவ்விதமாய்த் தங்
களுக்கு முன்னிருந்த விசுவாசத்தை இவர்கள்
௰௩ விட்டுத் தண்டனையில் அகப்படுவார்கள்.—அது
வுமன்றி, இவர்கள் வீடுதோறுந்திரிந்து, சோம்
பர்களாய்மாத்திரமல்ல, பிதற்றுகிறவர்களும், த
காதவைகளைப் பேசுகிற வீணர்களுமாயிருக்கப்
௰௪ பழகுகிறார்கள்.-இப்படிச் சிலர் இப்பொழுதுஞ்
௰௫ சாத்தானைப் பின்பற்றிப்போனார்கள்.-ஆதலால்
வாலிபவயதுள்ள விதவைகள் விவாகம்பண்ண
வும், பிள்ளைகளைப்பெறவும், குடும்பத்தை விசா
ரிக்கவும், விரோதி தூஷிக்கிறதற்கு இடமுண்
டாக்காம லிருக்கவும் வேண்டுமென்று விரும்பு
௰௬ கிறேன்.-விசுவாசியானவனிடத்திலாயினும்,வி
சுவாசியானவளிடத்திலாயினும் விதவைகளிரு
ந்தால், சபையின்மேற் பாரமேற்றாதபடிக்கும்,
உத்தம விதவைகளாயிருக்கிறவர்களுக்குத் து
ணைசெய்யும்படிக்கும் அவர்களே இவர்களைப் ப
௰௭ ரிபாலிக்கக்கடவர்கள்;—"பிணைஅடிக்கிறமாட்
டின்வாயைக்கட்டப்படாது," என்றும்,"வேலை
யாள் தன் கூலிக்குப்பாத்திரன்," என்றும் வேத
௰௮ ஞ்சொல்லி யிருக்கிறதற்கிசைய,-உத்தமமாக வி
சாரிக்கும் மூதியோர் விசேஷமாகத் தேவனு
டைய வாக்கியத்தைப் பிரசித்தப்படுத்தலிலும்,
உபதேசத்திலும்,பிரயாசப்படுகிறவர்கள், இரும
டங்கு கனம்பெறுவதற்குப் பாத்திரரென்றெண்
ணுங்கள்.—மூதியோனுக்கு விரோதமாகக்குற் ௰௯
றஞ்சாற்றுதலை இரண்டு, மூன்று சாட்சியின்றி
ஏற்றுக்கொள்ளப்படாது.-மற்றவர்களும் பயந் ௨௰
திருக்கும்படி, எல்லாருக்கும் முன்பாகப் பா
வஞ்செய்தவர்களைக்கடிந்துகொள்வாயாக.-நீ மு ௨௧
கத்தைப்பாராமலும், பட்சபாதமில்லாமலும் இ
வைகளைக்காத்து நடக்கும்படி நான் தேவனுக்
கும், கர்த்தராகிய யேசுக்கிறிஸ்துவுக்
கும், தெரிந்துகொள்ளப்பட்டதேவதூதருக்கும்
முன்பாக உனக்குக்கட்டளையிடுகிறேன்.—சடி ௨௨
தியாய் எவன்மேலுங் கைகளைவைக்கப்படாது,
பிறருடைய பாவத்திற்கு உடந்தையாயிராதே:
உன்னைமாசற்றவனாகக் காத்துக்கொள்.—உன்வ ௨௩
யிற்றுக்காகவும், அடிக்கடி உண்டாகும் உன்ப
லவீனங்களுக்காகவுஞ்சலம்மாத்திரமல்ல,சொற்
ப திராட்சரசத்தையும் பானம்பண்ணு.—சிலம ௨௪
னுஷருடைய பாவங்கள் தீர்ப்புச்செய்வதற்கு
முன்பிரசித்தமாயிருக்கும், சிலருடையவைகள்
பின்னேவிளங்கும்.—சிலருடைய நற்கிரியைக ௨௫
ளும் அதுபோல முன்னே விளங்கும், அப்படி
யிராதவைகளும் மறைந்திருப்பதில்லை.

## ௬. அதிகாரம்.

க. பணிவிடைக்காரரின் கடமைகளைத்தெரிவித்தல்: கள்ளஉபதேசத்தைத் தள்ளும்படி விதித்தல். தேவபத்தியின் பலனைக்குறித்தல்: ௰௧. பவுல் தேவபத்தியைக்குறித்துத் திமோத்தேயுக்கு விசேஷமாக உபதேசித்தல்: ௰௭. செல்வருக்கு இன்னவித புத்திசொல்வது தகுமென்று காட்டல்: ௨௰. நிருபத்தின்முடிவுரை.

தேவனுடைய நாமமும் உபதேசமும் நிந் ௧
திக்கப்படாதபடி, நுகத்திற்குக்கீழ்ப்பட்டவர்க
ளான அடிமைகள், தங்கள்தங்கள் எசமானர்கள்
சம்பூரணகனத்திற்குப் பாத்திரரென்றெண்ணிக்
கொள்ளக்கடவர்கள்.-விசுவாசிகளாகிய எசமா ௨
னருக்குக்கீழானவர்களும் அவர்கள் சகோதரரா
னதினால், அவர்களை அவமதிக்காமல், வேலை
யின்பலனைப் பெற்றுக்கொள்ளுகிறவர்கள் விசு
வாசிகளும் பிரியருமானபடியால், அவர்களி
டத்தில் அதிகமாய்ச்சேவிக்கக்கடவர்கள். இவ்
விதமாய்ப்போதித்து உபதேசிப்பாயாக.—ஒரு ௩
வன் நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறி
ஸ்துவின் ஆரோக்கியமான வாக்குகளுக்கும்,
மெய்த்தேவபத்திக்கேற்ற உபதேசத்துக்கும் இ
சையாமல்,-வேறுவிதமாய்ப்போதித்தால்,அவன் ௪
அகங்காரியும், ஒன்றும்அறியாதவனும், தருக்கங்

(௫) க.கொரி.எ.௩௨. லூக்.உ.௩எ. அப்.உ௬.எ. (௬) யாக்.௫.௫. (௮) எசா.௫௮.எ. கலா.௬.௰. உ.திமோ.௩.௫. தீத்.க.௰௬. மத்.௰௮.௰எ. (௯) லூக்.உ.௩௬. (௰) அப்.௰௬.௰௫. எபி.௰௩.உ. க.பேதுரு.௪.௯. ஆதி.௰௮.௪. லூக்.எ.௩௮,௪௪. யோவா.௰௩.௫,௰௪. (௰௩) உ.தெச.௩.௰க. (௰௫) க.கொரி.எ.௯. தீத்.உ.௮.(௰எ)உபா.உ௫.௪. க.கொரி.௯.௯. லேவி.௰௯.௰௩. மத்.௰.௰.(௰௮)ரோ.௰உ.௮. க.கொரி.௯.௰,௰௪. கலா.௬.௬. பிலி.உ.உ௯. க.தெச.௫.௰உ,௰௩. எபி.௰௩.எ,௰எ. அப்.உ௮.௰. (௰௯) உபா.௰௯.௰௫. (உ௰) கலா.உ.௰க,௰௪. தீத்.க.௰௪. உபா.௰௩.௰க. (உக) உ.திமோ.உ.௰௪. (உஉ) அப்.௬.௬. உ.திமோ.க.௬. உ.யோவா.௰க. (உ௩) சங்.௱௪.௰௫. கலா.௫.௰௯.—(௬. அதி. க.) எபே.௬.௫. கொலோ.௩.உஉ. தீத்.உ.௰. க.பேதுரு. உ.௰௮. எசா.௫உ.௫. ரோ.உ.உ௪. தீத்.உ.௪,௮. (உ) கொலோ.௪.க. (௩) உ.திமோ.க.௰௩. தீத்.க.௩,௯. (௪) க.கொரி.௮.உ. உ.திமோ.உ.உ௩. தீத்.௩.௯.

களும் வாக்குவாதங்களுமாகிய நோய்கொண்ட
வனுமாயிருக்கிறான்; அவைகளினால், பொறாமை
யும், விரோதமும், தூஷணங்களும், தீமையுள்ள
௫ சமுசயங்களும்,-கெட்டசிந்தையும், சத்தியமின்
மையுமுள்ளவர்களாய், மெய்த்தேவபத்தி ஆதா
யத்தை வருவிக்கிறதென்று எண்ணுகிறவர்களா
கிய மனுஷருடைய மாறுபாடானதருக்கங்களுந்
தோன்றுகின்றன: இப்படிப்பட்டவர்களுக்கு வி
௬ லகுவாயாக.–போதுமென்ற மனதுடன் மெய்த்
௭ தேவபத்தியே மிகுந்த ஆதாயமுள்ளது.–உலகத்
திலே நாம் ஒன்றையுங் கொண்டுவந்ததுமில்லை,
இதிலிருந்து நாம் ஒன்றையுங் கொண்டுபோவது
௮ மில்லை, இது நிச்சயம்.—அன்னவஸ்திரமுண்
டானால் அது போதுமென்று நினைக்கக்கடவோ
௯ ம்.—செல்வராயிருக்க விரும்புகிறவர்கள், சோத
னையிலும், கண்ணியிலும், நாசம் நரகமாகிய இ
வைகளிலும், மனுஷரை அழிக்கும் பலவிதமா
னபுத்தியீனமும், சேதமுமான இச்சைகளிலும்
௰ விழுகிறார்கள்.—பண ஆசை எந்தத்தீமைக்கும்
வேர்: சிலர் அதை இச்சித்து, விசுவாசமார்க்கத்
தைவிட்டு வழுவி, அநேகவேதனைகளினால் தங்க
ளைத்தாமே உருவக்குத்திக்கொள்ளுகிறார்கள்.—
௰௧ தேவனுடைய பணிவிடைக்காரனாகிய நீ
யோ, இவைகளுக்கு விலகுவாயாக; நீதியை
யும், தேவபத்தியையும், விசுவாசத்தையும், அன்
பையும், பொறுமையையும், தாழ்ந்தசிந்தையை
௰௨ யுந் தொடர்ந்துகொள்வாயாக.—விசுவாசத்தின்
நற்போராட்டம் பண்ணு, நித்தியசீவனைப்பிடித்
துக்கொள், அதற்காகவே நீ அழைக்கப்பட்டிருக்
கிறதுமன்றி, அநேகசாட்சிகளுக்குமுன்பாக உத்
௰௩ தமமாய் அறிக்கையிட்டுமிருக்கிறாய்.–நம்முடை
ய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்து பிரசன்
னமாகும்வரைக்கும் களங்கமுந் தோஷமுமில்
லாமல் இந்தக்கட்டளையைக் காத்துக்கொள்ளும்
படி,—எல்லாவற்றையும் உயிர்ப்பிக்குந்தேவ ௰௪
னுடைய சந்நிதியிலும், பொந்தியுபிலாத்துவின்
முன்னின்று உத்தமசாட்சியாக அறிக்கையிட்ட
கிறிஸ்துயேசுவின் சமுகத்திலும், உனக்குக்
கட்டளையிடுகிறேன்.–அந்தப் பிரசன்னத்தை ஆ ௰௫
னந்தமுள்ள ஏகாதிபதியுமாய், இராசாதி இராசா
வுமாய், கர்த்தாதிகர்த்தருமாய், ஒருவராய்,
அழியாமையுள்ளவருமாய், ஒருவனும் அணுகாத
ஒளியில் வசிப்பவருமாய், எந்தமனுஷனுந் தரிசி
யாமலும், தரிசிக்கக்கூடாமலும் இருக்கிறவர் தம
து காலங்களிலே காட்டுவார்.—அவருக்கே கன ௰௬
மும், வல்லமையும் என்றென்றைக்கும் உண்டா
யிருக்கக்கடவன. ஆமென்.–இப்பிரபஞ்சத்தில் ௰௭
ஐசுவரியமுள்ளவர்கள், இறுமாப்பான சிந்தை
யுள்ளவர்களாயிராமலும், நிலையில்லாத ஐசுவரி
யத்தின்மேல் நம்பிக்கையாயிராமலும், நாம் அனு
பவிக்கிறதற்குச்சகலவிதநன்மைகளையுஞ்சம்பூர
ணமாய் நமக்குக்கொடுக்கிற சீவனையுடைய தே
வன் மேல் நம்பிக்கையாயிருக்கவும்,—நன்மை ௰௮
செய்து, நற்கிரியைகளில் ஐசுவரியவான்களா
கும்படி மற்றவர்களுக்குக்கொடுக்க மனப்பூரு
வமாயிருந்து, உதாரகுணமுள்ளவர்களாயிருக்க
வும்,-நித்தியசீவனைப் பிடித்துக்கொள்ளும்படிவ ௰௯
ருங்காலத்துக்காகத்தங்களுக்கென்றுநல்ல அஸ்தி
பாரத்தைப்பொக்கிஷமாகவைக்கவும், நீ அவர்க
ளுக்குக்கட்டளையிடக்கடவாய்.–ஓ, தீமோத்தே ௨௰
யுவே, உனக்கு ஒப்பிக்கப்பட்டதை நீ காத்து,
லௌகீகமும், விருதாவுமான பேச்சுகளுக்கும்,
கல்வியென்று பொய்யாய்ச் சொல்லப்பட்டிருக்
கிற தருக்கத்துக்கும் விலகுவாயாக.—சிலர் அ ௨௧
தைப்பாராட்டி, விசுவாசத்தைவிட்டு வழுவிப்
போனார்கள். கிருபை உன்னோடே இருக்கக்
கடவது. ஆமென்.

(௫) ௧.கொரி.௰௧.௰௬. ௨.தீமோ.௩.௮. தீத்.௧.௰௧. ௨.பேதுரு.௨.௩. ரோ.௰௬.௰௭. ௨.தீமோ.௩.௫. (௬) சங்.௩௭.௰௬. நீதி.௰௫.௰௬. எபி.௰௩.௫. (௭) யோபு.௧.௨௧. சங்.௪௯.௰௭. நீதி.௨௭.௨௩. பிர.௫.௰௫. (௮) ஆதி.௨௮.௨௰. எபி.௰௩.௫. (௯) நீதி.௰௫.௨௭. மத்.௰௩.௨௨. யாத்.௫.௧. (௰) யாத்.௨௩.௮. உபா.௰௬.௰௯. ௨.தீமோ.௨.௨௨. உபா.௩௩.௧. ௨.தீமோ.௩.௰௭. (௰௨) ௧.கொரி.௯.௨௫,௨௬. ௨.தீமோ.௪.௭. பிலி.௩.௰௨,௰௪. எபி.௰௩.௨௩. (௰௩) பிலி.௧.௬.௰. ௧.தெச.௩.௰௨. (௰௪) உபா.௩௨.௩௯. ௧.சாமு.௨.௬. யோவா.௫.௨௧. மத்.௨௭.௰௧. வெளி.௧.௫. (௰௫) அதி.௧.௰௧.௰௭. வெளி.௰௭.௰௪. யாத்.௩௩.௨௰. யோவா.௬.௪௬. (௰௬) எபே.௩.௨௧. பிலி.௪.௨௰. யூதா.௨௫. வெளி.௧.௬. (௰௭) யோபு.௩௧.௨௪. சங்.௫௨.௭. மாற்.௰.௨௪. நீதி.௨௩.௫. ௧.தெச.௧.௯. அப்.௰௪.௰௭. (௰௮) லூக்.௰௨.௨௧. தீத்.௩.௮. யாக்.௨.௫. ரோ.௰௨.௰௩. கலா.௬.௬. எபி.௰௩.௰௬. (௰௯) மத்.௬.௨௰. லூக்.௰௨.௩௩. (௨௰) ௨.தீமோ.௧.௰௪. தீத்.௧.௯. வெளி.௩.௩. அதி.௧.௪,௬. ௨.தீமோ.௨.௰௪,௰௬,௨௩. தீத்.௧.௰௩. (௨௧) ௨.தீமோ.௨.௰௮.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தீமோத்தேயுக்கெழுதிய

## இரண்டாம் நிருபம்.

---

### ௧. அதிகாரம்.

௧. வாழ்த்து: ௩. சத்தியவிசுவாசத்தினிமித்தம் பவுல் தீமோத்தேயுவை நேசித்தல்: ௬. நற்கிரியை உபத்திரவம் இவைகளைக்குறித்துத் தீமோத்தேயுக்கு உபதேசித்தல்: ௰௩. பத்தியில் ஸ்திரமாயிருக்கும்படி சொல்லல்: ௰௫. சிலர் பத்திநெறியைவிட்டுவழுவினார்களென்றுகாட்டல்: ஒநேசிப்போரின் உத்தமகுணத்தைக்காட்டல்.

கிறிஸ்து யேசுவினாலுண்டாயிருக்கிற சீ
வனைக்குறித்துச்சொல்லிய வாக்குத்தத்தத்தின்ப
டியே, தேவனுடைய சித்தத்தினால் யேசுக்
கிறிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பவுல்,—
௨ பிரியமுள்ள புத்திரனாகிய தீமோத்தேயுக்கெழு
திக்கொள்வது: பிதாவாகிய தேவனாலும், நம்
முடைய கர்த்தராகிய கிறிஸ்துயேசுவி
னாலுங்கிருபையும், இரக்கமும், சமாதானமு
௩ முண்டாகக்கடவன.—இரவும் பகலும் என் பி
ரார்த்தனைகளில்இடைவிடாமல் உன்னை நினைந்
ததினால், முன்னோரின் முறைமைப்படி சுத்தம
னதோடே நான் சேவித்துவருகிற தேவனுக்
௪ கு ஸ்தோத்திரஞ் செலுத்துகிறேன்.—முற்காலத்
தில் உன்பாட்டியாகியஉலோவிசாளிடத்திலும்,
உன் தாயாகிய ஊனிகேயாளிடத்திலும், நான்
நிச்சயித்தபடி உன்னிடத்திலும் நிலைத்திருக்கிற
உன்னுடைய உண்மையான விசுவாசத்தைஎன்
௫ சிந்தையில்வைத்து,—உன்கண்ணீரை நினைந்து,
நான்சந்தோஷத்தினால்நிறைந்திருக்கும்படிஉன்
னைக்காண மிகவும் வாஞ்சையாயிருக்கிறேன்.—
௬ ஆதலால் நான் உன்மேற் கைகளைவைத்ததினால்
உனக்குக்கிடைத்த தேவவரத்தை, நீ தீபவளர்ச்
சியைப்போல வளர்க்கும்படி உனக்கு ஞாபகப்
௭ படுத்துகிறேன்.—தேவன் பயமுள்ள ஆவியை
யல்ல, பலமும் அன்புந் தெளிந்தபுத்தியுமுள்ள
௮ தையே நமக்கருளினார்.—ஆதலால் நம்முடைய
கர்த்தரைப் பற்றுஞ் சாட்சியையும், அவர்
நிமித்தங்கட்டப்பட்டிருக்கிற என்னையுங்குறித்
து இலச்சையடையாமல், தேவன் தரும்பலத்
தின்படியே சுவிசேஷத்தினிமித்தம் நீ கூட உ
பத்திரவங்களை அனுபவித்துக்கொள்வாயாக.—அ ௯
வர் நம்முடைய கிரியைகளினிமித்தமல்ல, தாம்
முன் நிருணித்ததினிமித்தமும், உலகத்திற்குமு
ன் கிறிஸ்து யேசு மூலமாக நமக்கருளப்பட்
ட அனுக்கிரகத்தினிமித்தமும் நமக்கு இரட்சிப்
பைத்தந்து, பரிசுத்தமான அழைப்பினால் நம்
மை அழைத்தார்.—அது நம்முடைய இரட்சக ௰
ராகிய யேசுக்கிறிஸ்துவின் பிரசன்னத்தி
னால் இப்பொழுது பிரத்தியட்சமாய்த்தோன்றிற்
று, அவர் மரணத்தைச்செயித்து, சுவிசேஷத்தி
னால் சீவனையுஞ் சாவாமையையும்வெளிப்படுத்
தினார்.—நான் அந்நியரிடத்தில் அதைக்கூறுகிற ௰௧
வனாகவும், அப்போஸ்தலனாகவும், போதகனாக
வும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறேன்.—அதற்காக ௰௨
நான் இந்த உபத்திரவங்களை அனுபவிக்கிறேன்:
நான் விசுவாசித்தவர் இன்னாரென்பது எனக்குத்
தெரிந்திருக்கிறதினால், வெட்கப்படேன்: அவரி
டத்தில் நான் ஒப்பித்ததை அவர்அந்நாள்வரைக்
குங் காத்துக்கொள்ள வல்லவராயிருக்கிறாரென்
று நான் நிச்சயித்திருக்கிறேன்:—நீ என்னிடத் ௰௩
திற்கேட்ட ஆரோக்கியமான வாக்கியங்களின்
கோட்பாட்டை, கிறிஸ்து யேசுவைப் பற்
றும்விசுவாசத்தோடும்அன்போடும்பற்றிக்கொள்
வாயாக.—உனக்கு ஒப்பிக்கப்பட்ட நன்மையை ௰௪
நம்மிடத்தில் வாசமாயிருக்கிற பரிசுத்தஆவியி
னாலேகாத்துக்கொள்வாயாக.—உனக்குத்தெரிந் ௰௫
திருக்கிறபடி, ஆசியாவிலே புகெல்லு, எர்மொ
கெனேயுமுதலிய யாவரும் என்னை விட்டுவில
கிப்போனார்கள்.—ஒநேசிப்போரின்குடும்பத்துக் ௰௬
குக்கர்த்தர் அனுக்கிரகஞ்செய்வாராக; அவன்,
அடிக்கடி என்னைத்தேற்றி, என்சங்கிலியைக்கு
றித்து இலச்சையடையாமல்,—அவன் உரோமை ௰௭
யில் வந்திருந்தபொழுது மிகுந்தசாக்கிரதையோ
டே என்னைத்தேடிக்கண்டான்.—அந்த நாளில் ௰௮
அவன் கர்த்தரிடத்தில் இரக்கங்கண்டடை
யும்படி, கர்த்தர் அவனுக்குஅனுக்கிரகஞ்செய்
வாராக: எபேசிலே பலவிதமாய் அவன்எனக்கு
தவிசெய்தானென்று உனக்கு நன்றாகத்தெரியும்.

---

(௧. அதி. ௧.) எபே.௩.௫. தீத்.௧.௧. எபி.௯.௰௫. (௨) ௧.தீமோ.௧.௨. (௩) ரோ.௧.௮. எபே.௧.௫. அப்.௨௨.௩. ரோ.௧.௰௨. கலா.௧.௰௪. ௧.தெச.௧.௩. (௪) ௧.தீமோ.௧.௫. அப்.௰௬.௧. (௫) அதி.௪.௯,௨௧.(௬)௧.தெச.௫.௰௯. ௧.தீமோ.௪.௰௪. (௭) ரோ.௮.௰௫. லூக்.௨௪.௪௯. அப்.௧.௮. (௮) ரோ.௧.௰௬. ௧.தீமோ.௨.௬. வெளி.௧.௨. எபே.௩.௧. பிலி.௧.௭. கொலோ.௧.௨௪. (௯) ௧.தீமோ.௧.௧. தீத்.௩.௪. ௧.தெச.௪.௭. எபி.௩.௧. ரோ.௩.௨௰. தீத்.௩.௫. ரோ.௮.௨௮. ரோ.௰௬.௨௫. எபே.௧.௩. தீத்.௧.௧. ௧.பேதுரு.௧.௨௰. ரோ.௰௬.௨௬. எபே.௧.௰. கொலோ.௧.௨௬. தீத்.௧.௨. ௧.பேதுரு.௧.௨௰. ௧.கொரி.௰௫.௫௪,௫௫. எபி.௨.௰௪. (௰௧) அப்.௯.௰௫. எபே.௩.௭,௮ ௧.தீமோ.௨.௭. (௰௨) எபே.௩.௧. ௧.பேதுரு.௪.௰௯. ௧.தீமோ.௬.௨௰. (௰௩) தீத்.௧.௯. எபி.௰.௨௩. வெளி.௨.௨௫. ரோ.௨.௨௰. ௧.தீமோ.௬.௰௧,௰௪. (௰௪) ௧.தீமோ.௬.௨௰. ரோ.௮.௰௧. (௰௫) அப்.௰௯.௰. (௰௬) மத்.௫.௭. பிலே.௭. அப்.௨௮.௨௰. எபே.௬.௰௯.(௰௮) மத்.௨௫.௩௪—௪௰. ௨.தெச.௧.௰. எபி.௬.௰.

## ௨. அதிகாரம்.

௧. சற்கிரியைகளினிமித்தஞ் சாக்கிரதையாயிருப்பதும், பொறுமையுடன் துக்கத்தை அனுபவிப்பதும் அவசியமெனக்காட்டல்: ௰௪. செய்ய வேண்டிய கடமைகளைக் குறித்துத் தீமோத்தேயுக்கு நானாவிதமான புத்திகளைச்சொல்லல்.

என் புத்திரனே, நீ கிறிஸ்து யேசுவிலுள்ள
௨ கிருபையினாற் பலங்கொள்.—வெகுசாட்சிகளி
னால் நீ என்னிடத்திற்கேட்டவைகளை, மற்றவர்
களுக்கு உபதேசிக்கத்தக்க சாமர்த்தியமும்,உண்
௩ மையுமுள்ள மனுஷருக்கு ஒப்பிப்பாயாக.—நீயும்
யேசுக்கிறிஸ்துவின் உத்தமவீரனைப்போல்
௪ உபத்திரவத்தைச் சகித்துக்கொள்.—போர்ச்சேவ
கத்தில் உட்பட்ட எவனும், தன்னைச்சேவகமெ
ழுதிக்கொண்டவனைப் பிரியப்படுத்தும்படி இப்
பிரபஞ்சத்தில் வேறெந்தத் தொழில்களிலுஞ் சி
௫ க்கிக்கொள்ளமாட்டான்.—அன்றியும், மல்லயுத்
தஞ்செய்கிறவன் முறைமைப்படி செய்யாவிட்
௬ டால் முடிசூட்டப்பெறான்.—பயிர்செய்கிறவன்
௭ பலன்பெறுமுன் பிரயாசப்படவேண்டும்.—நான்
சொல்லுகிறவைகளைச்சிந்தித்துக்கொள்வாயாக;
கர்த்தர் எல்லாவற்றிலேயும்உனக்குப்புத்திதரக்
௮ கடவர்.—என்சுவிசேஷத்தின்படி தாவீதின் சந்த
தியும், மரித்தோரிலிருந்து எழுந்திருக்கிறவருமா
ன யேசுக்கிறிஸ்துவை நினைத்துக்கொள்ளக்
௯ கடவாய்.—இதற்காகவே நான் கட்டுகள்மட்டும்
பாதகனைப்போல் உபத்திரவப்படுகிறேன்; தே
வனுடைய வாக்கோ கட்டப்படவில்லை.—
௰ ஆதலால் தெரிந்துகொள்ளப்பட்டவர்கள், கிறி
ஸ்து யேசுவினால் இரட்சிப்பை நித்தியமகி
மையோடே அடையும்படி, அவர்கள் நிமித்தம்
௰௧ நான் சகலத்தையுஞ்சகிக்கிறேன்.—நாம் அவரு
டனே மரித்தால் அவருடனே சீவிப்போம்.—
௰௨ உபத்திரவத்தைச் சகித்தோமாகில் கூட ஆண்டு
கொள்ளுவோம்: நாம் அவரை மறுதலித்தோ
௰௩ மானால் அவரும் நம்மை மறுதலிப்பார்:—நாம்
விசுவாசியாமலிருந்தாலும் அவர் உண்மையுள்ள
வர்: அவர் தம்மைத்தாம் மறுதலிக்கமாட்டார்.
௰௪ இவ்வாக்குச் சத்தியம்.—இவைகளை நீ அவர்க
ளுக்கு ஞாபகப்படுத்தி, எவ்வளவும் பலன்தரா
மல், கேட்பவர்களைப் புரட்டுகிறதற்கேதுவான
வைகளைக்குறித்து வாக்குவாதம் பண்ணாதபடி,
கர்த்தர் முன்னிலையாய் அவர்களுக்குக்கட்ட
௰௫ ளையிடுவாயாக.—நீ வெட்கப்படாத ஊழியக்கா
ரனாகி, சத்தியவாக்கை நிதானமாகப்பகுத்துப்
போதித்து, தேவசந்நிதியில் அங்கிகரிக்கப்படத்
தக்கவனாக உன்னைக்காட்டப் பிரயத்தினம்பண்
ணு.—லௌகீக வீண் அலப்பல்களுக்கு விலகு: ௰௬
அவைகள் அவபத்தியைஅதிகரிக்கப்பண்ணும்.—
அவர்களுடைய வாக்குப் பிளவையைப் போல் ௰௭
அரிக்கும்; யூமெனேயும், பிலேத்தும் அப்படிப்
பட்டவர்கள்.—அவர்கள் உயிர்த்தெழுதல் ஆயிற் ௰௮
றென்று சொல்லிச்சத்தியத்தை விட்டுவிலகி, சி
லருடைய விசுவாசத்தைப் புரட்டுகிறார்கள்.—ஆ ௰௯
யினுந் தேவனுடைய அஸ்திபாரம்ஸ்திரமாய்
நிலைத்திருக்கின்றது. கர்த்தர் தம்முடையவர்க
ளை அறிவாரென்பதும், கிறிஸ்துவின் நாமத்
தைத் தரிக்கிறவன் பாவத்தை விட்டுவிலகக்கட
வனென்பதும் அதற்குமுத்திரை.—ஒருபெரிய ௨௰
வீட்டிலே பொன் வெள்ளிப்பாத்திரங்கள் மாத்
திரமல்ல, மரப்பாண்டங்களும் மட்பாண்டங்க
ளுமுண்டு; அவைகளிற்சில கனமுள்ளவைகள்,
சில கனமற்றவைகள்.—ஆகையால் ஒருவன் இ ௨௧
வைகளைவிட்டுத்தன்னைச்சுத்திகரித்தால், அவன்
கனத்திற்கேற்றதும், பரிசுத்தமாக்கப்பட்டதும்,
எசமானனுடைய காரியத்திற்குபயோகமும்,எந்
தநற்கிரியைக்கும் ஆயத்தமானதுமாகிய ஒருபாத்
திரமாயிருப்பான்.—நீ, வாலிபவயதின் இச்சை ௨௨
களுக்கு விலகி ஓடி, சுத்தமான இருதயத்தோ
டே கர்த்தரிடத்திற் பிரார்த்தனைபண்ணுகி
றவர்களுடனே நீதியையும், விசுவாசத்தையும்,
அன்பையும், சமாதானத்தையும் பின்தொடர்ந்து
கொள்.—அஞ்ஞானமும் அறிவீனமுமான தருக் ௨௩
கங்கள், வாக்குவாதங்களைப் பிறப்பிக்கிறவைக
ளென்று நீ உணர்ந்து, அவைகளை அகற்றுவாயா
க.—கர்த்தருடைய பணிவிடைக்காரன் வாக் ௨௪
குவாதஞ் செய்யாமல் எல்லாருக்கும் மெத்தன
வும், போதகசாமர்த்தியமும், தீமையைப்பொறு
மையாய்ச்சகித்தலுமுள்ளவனாய்,-விரோதியான ௨௫
வர்களைச்சாந்தத்துடன் போதிக்கவேண்டும்.—அ ௨௬
ப்பொழுது பிசாசினுடைய இஷ்டப்படிசெய்ய
அவன்வலையில் அகப்பட்டவர்கள், சத்தியத்தை
அறிக்கையிடுகிறதற்கு மனந்திரும்பி, அந்தவலை
யினின்று விடுதலைபெற்றுப் புத்திதெளிந்தவர்க
ளாகும்படி, தேவன் அவர்களுக்கு அருள்செய்
யவுங்கூடும்.

## ௩. அதிகாரம்.

௧. பத்திநெறியில் தவறினவர்களைக் குறித்துத்தீர்க்கதரிசனஞ்சொல்லல்: ௰. பவுல் தன்நடையை வெளிப்படுத்தல்: வேதத்தைப்புகழ்தல்.

கடைசிநாட்களிற் கொடியகாலங்கள்வரும், இ ௧

---

(௨. அதி. ௧.) ௧.தீமோ.௧.௨. எபே.௬.௰. (௨) அதி.௧.௰௩. ௧.தீமோ.௧.௰௮. ௧.தீமோ.௩.௨. தீத்.௧.௯.(௩)௧.தீமோ.௧.௰௮. (௪) ௧.கொரி.௯.௨௫. (௫) ௧.கொரி.௯.௨௫,௨௬.(௬) ௧.கொரி.௯.௰.(௮)அப்.௨.௩௰. ரோ.௧.௩,௪. ௧.கொரி.௰௫.௧,௪,௨௰. ரோ.௨.௰௨.(௯)அப்.௯.௰௬. எபே.௩.௧. பிலி.௧.௭. கொலோ.௪.௨,௰௮. அப்.௨௮.௩௧. எபே.௬.௰௯,௨௰. பிலி.௧.௰௩,௰௪.(௰)எபே.௩.௰௩. கொலோ.௧.௨௪. ௨.கொரி.௧.௬.(௰௧)௧.தீமோ.௧.௰௫. ரோ.௬.௫,௮. ௨.கொரி.௪.௰.(௰௨)ரோ.௮.௰௭. ௧.பேதுரு.௪.௰௩.மத்.௰.௩௩.(௰௩)ரோ.௩.௩.எண்.௨௩.௰௯.(௰௪)௧.தீமோ.௫.௨௧. ௧.தீமோ.௧.௩. தீத்.௩.௯,௰௧. (௰௬) ௧.தீமோ.௪.௭. தீத்.௧ ௰௩. (௰௭) ௧.தீமோ.௧.௨௰. (௰௮) ௧.தீமோ.௬ ௨௧. ௧.கொரி.௰௫.௰௨.(௰௯)மத்.௨௪.௨௩. ரோ.௮.௩௫. ௧.யோவா.௨.௰௯. நாகூ.௧.௭. யோவா.௰.௰௪,௨௭.(௨௰) ௧.தீமோ.௩.௰௫.ரோ.௯.௨௧. (௨௧) தீத்.௩.௧. (௨௨) ௧.தீமோ.௬.௰௧. அப் ௯.௰௪. ௧.கொரி.௧.௨. ௧.தீமோ.௧.௫.(௨௩)௧.தீமோ.௧.௪. தீத்.௩.௯.(௨௪)தீத்.௩.௨. ௧.தீமோ. ௩.௨,௩. தீத்.௧.௯.(௨௫)கலா.௬.௧. ௧.தீமோ.௬.௰௧. ௧.பேதுரு.௩.௰௫.(௨௬)௧.தீமோ. ௨.௪. தீத்.௧.௩. ௧.தீமோ.௩.௭.—(௩. அதி. ௧.) ௧.தீமோ.௪.௧. ௨.பேதுரு.௩.௩. ௧.யோவா.௨.௰௮. யூதா.௰௮.

௨ தை நீ அறிந்துகொள்.—மனுஷர் தற்பிரியரும்,
பொருளாசைக்காரரும்,தற்புகழ்ச்சிக்காரரும்,அ
கந்தையுள்ளவர்களும், தூஷணிக்கிறவர்களும்,
பெற்ருருக்கமையாதவர்களும்,நன்றிகெட்டவர்
௩ களும், அசுத்தரும்,—சுபாவ நேசமில்லாதவர்க
ளும்,உடன்படிக்கையை மீறுகிறவர்களும்,பொ
ய்யாய்க்குற்றஞ் சார்த்துகிறவர்களும், இச்சைஅ
டக்காதவர்களும்,உக்கிரகுரோதிகளும்,நல்லோ
௪ ரைவெறுக்கிறவர்களும்,-விசுவாசகாதகரும், து
ணிவுடையவர்களும், இறுமாப்புள்ளவர்களும்,
தேவனிலும் சிற்றின்பத்தை விரும்புகிறவர்
௫ களும்,—தேவபத்தியின் வேஷத்தைத் தரித்து,
அதின் பலத்தை மறுக்கிறவர்களுமாயிருப்பார்
௬ கள்:-இப்படிப்பட்டவர்கள் அந்தந்த வீடுகளில்
நுழைந்து, பாவங்களால் நிறைந்து, பலபல இச்
௭ சைகளால் இழுப்புண்டு,-எப்பொழுதும் படித்
தாலும் ஒருக்காலுஞ்சத்தியத்தை அறியாமலிருக்
கிற மதியீன ஸ்திரிகளை வசப்படுத்துகிறார்கள்:
௮ இப்படிப்பட்டவர்களுக்கு விலகுவாயாக.—இ
யன்னேயும், இயம்பிரேயும் மோசேயை விரோ
தித்தபிரகாரம், இவர்களுந் தூர்ப்புத்தியையுடை
யவர்களும், விசுவாசத்தைக்குறித்து அங்கிகரிக்
கப்படாதவர்களுமாய், சத்தியத்தை விரோதிக்கி
௯ றார்கள்.—இவர்கள் இனிவிருத்தியடையார்கள்:
அவர்களுடைய புத்தியீனம் வெளிப்பட்டது
போல, இவர்களுடையதும் எல்லாருக்கும் வெ
௰ ளிப்படும்.—நீ என்னுடைய உபதேசத்தையும்,
நடையையும், அபிப்பிராயத்தையும், விசுவாசத்
தையும், நீடியபொறுமையையும், அன்பையும்,
௰௧ பொறுமையையும்,—அந்தியோகியவிலும், இக்
கோனியவிலும், இலுஸ்திராவிலும் எனக்குநே
ரிட்டஉபத்திரவங்களையும்,கிலேசங்களையும்நன்
றாக அறிந்திருக்கிறாய்; இவ்வித உபத்திரவங்க
ளைச் சகித்தேன்: இவையெல்லாவற்றினின்றுங்
௰௨ கர்த்தர்என்னைவிடுவித்தார்.—அன்றியும், கிறி
ஸ்துயேசுவைப்பற்றித்தேவபத்தியாய்நாள்
விடவிரும்புகிறயாவரும் உபத்திரவத்தை அனு
௰௩ பவிப்பார்கள்.—துஷ்டமனுஷரும், சூதருமான
வர்கள்வஞ்சித்து, வஞ்சிக்கப்பட்டு, மேலும்மே
௰௪ லுந் துஷ்டராவார்கள்.—நீ கற்றுக்கொண்டு நிச்
சயித்துணர்ந்தவைகளில் நிலைநிற்பாயாக; உனக்
குப் போதகஞ்செய்தவன் இன்னானென்று உ
௰௫ னக்குத்தெரிந்ததன்றி,—கிறிஸ்துயேசுவைப்
பற்றும் விசுவாசத்தினால் இரட்சிப்புக்கேற்றஞா
னத்தை உனக்குத்தருவதற்குத் தகுதியான வேத
வாக்கியங்களையும் சிறுவயதுமுதற்கொண்டு நீ
அறிந்திருக்கிறாய்.-வேதமுழுவதுந்தேவ ஆவியி ௰௬
னால் அருளப்பட்டது;அது தேவனுடையதா
சன் சற்குணனாய்,எந்த நற்கிரியையுஞ் செய்யப்
பக்குவம் பெறும்பொருட்டு,—உபதேசம், கண் ௰௭
டிப்பு, சீர்ப்படுத்தல், நீதிப்பயிற்சியென்னும் இ
வைக்கேற்றபிரயோசனமுள்ளது.

## ௪. அதிகாரம்.

௧. சுவிசேஷத்தைப்பிரசித்தப்படுத்துகிறதில்மகா
சாக்கிரதையாயிருக்கும்படி ஏவுதல்: ௬. பவுல்
தன்மரணத்தையும் வரப்போகிறமோட்சானந்
தத்தையுங்குறித்துப்பேசல: ௯. சிலவிசேஷங்
களைத்தெரிவித்தல்: ௰௯. வாழ்த்துதல்.

ஆகையால் நான் தேவனுடைய சந்நிதியி ௧
லும், தாமே தமது இராசத்துவத்திற்பிரசன்னமா
கும்பொழுது, சீவனுள்ளோருக்கும், மரித்தோ
ருக்கும் நியாயத்தீர்ப்பைக் கொடுக்குங்கர்த்த
ராகிய யேசுக்கிறிஸ்துவின் சமுகத்திலும்
உனக்கு உறுதியாய் இந்தக்கட்டளையிடுகிறே
ன்.-காலம் வாய்த்தாலும், காலம்வாய்க்காதிருந் ௨
தாலும், முயற்சியாய் நீ வாக்கைப் பிரசங்கிப்
பாயாக; எல்லாவிதமான நீடியபொறுமையோ
டும், உபதேசத்துடனுங் கடிந்துகொண்டு அதட்
டிவேண்டிக்கொள்.-அவர்கள் ஆரோக்கியமான ௩
உபதேசத்தைத் தாங்கிக்கொள்ள விரும்பாமல்,
செவிக்கின்பமானதை விரும்பி, தங்கள் சுயஇச்
சைகளுக்குத் தக்கதாகத் தங்களுக்குப் போதக
ரைக்கூட்டிவைத்து,-சத்தியத்துக்குச்செவிகொ ௪
டாமல்விலகி, கட்டுக்கதைகளைச் சார்ந்துகொள்
ளுங்காலம்வரும்.—ஆனாலும் நீ எல்லாவற்றிலே ௫
யுந் தெளிந்தபுத்தியுள்ளவனாகி, துக்கங்களைச்ச
கித்துக்கொண்டு, சுவிசேஷகனுக்கேற்ற தொழி
லைச்செய்து, திட்டமாய் உன்ஊழியத்தை நிறை
வேற்றுவாயாக.—நான் இப்பொழுது பலியாக ௬
ஊற்றப்பட ஆயத்தமாயிருக்கிறேன், நான் விட்
டுப்புறப்படுஞ்சமயஞ் சமீபித்தது.-நற்போராட் ௭
டத்தைச்செய்திருக்கிறேன், ஓட்டத்தை நிறை
வேற்றினேன், விசுவாசத்தைக் காத்துக்கொண்
டேன்.—இதுமுதல் எனக்கு நீதியின் கிரீடம் ௮
வைக்கப்பட்டிருக்கின்றது,அந்தநாளில் நீதியுள்
ள நியாயாதிபதியாகிய கர்த்தர் அதை எனக்
குக்கொடுப்பார்: எனக்குமாத்திரமல்ல, அவர்
வெளிப்படுவதை விரும்பும் யாவருக்கும் தந்த
ருளுவார்.-நீ துரிதமாய் என்னிடத்தில்வரும்ப ௯
டி எத்தினம்பண்ணுவாயாக.-தீமா, இப்பிரபஞ் ௰

(௨)பிலி.௨.௨௧. ௨.பேதுரு.௨.௩.யூதா.௰௬. ௧.தீமோ.௬.௪. ௧.தீமோ.௧.௨௰. ௨.பேதுரு.௨.௰௨.யூதா.௰. ரோ.௧.௩௰. (௩) ரோ.௧.௩௧. தீத்.௨.௩. ௨.பேதுரு.௩.௩. (௪) ௨.பேதுரு.௨.௰. பிலி.௩.௰௯. ௨.பேதுரு.௨.௰௩,. யூதா.௪,௰௯. (௫) ௧.தீமோ.௫.௮. தீத்.௧.௰௬. ௨.தெச.௩.௬. ௧.தீமோ.௬.௫. (௬) மத்.௨௩.௰௪. தீத்.௧.௰௧. (௭) ௧.தீமோ.௨.௪.(௮)யாத். ௭.௰௧. ௧.தீமோ.௬.௫. ரோ.௧.௨௮. ௨.கொரி.௰௩.௫. தீத்.௧.௰௬. (௯) யாத்.௭.௰௨. (௰) பிலி.௨.௨௨. ௧.தீமோ.௪.௬. (௰௧) அப்.௰௩.௪௫,௫௰. அப்.௰௪.௨,௫,௰௯. சங்.௩௪.௰௯. ௨.கொரி.௧.௰. (௰௨) சங்.௩௪.௰௯. யோவா.௰௭.௰௪. அப். ௰௪.௨௨. ௧.கொரி.௰௫.௰௯. ௧.தெச.௩.௩. (௰௩) ௨.தெச.௨.௰௧. ௧.தீமோ.௪.௨. (௰௫) யோவா.௫.௩௯. (௰௬)௨.பேதுரு.௧.௨௰,௨௧. (௰௭) ரோ.௰௫.௪. ௧.தீமோ.௬.௰௧.—(௪. அதி. ௧.) ௧.தீமோ.௫.௨௧. அப்.௰.௪௨. (௨) ௧.தீமொ. ௫.௨௰. தீத்.௧.௰௩. ௧.தீமோ.௪.௰௩. (௩) ௧.தீமோ.௧.௰௧. (௪) ௧.தீமோ.௧.௩. தீத்.௧.௰௩. (௫) அப்.௨௧.௮. எபே.௪. ௰௬. ரோ.௰௫.௰௯. கொலோ.௧.௨௫.(௬)பிலி.௨.௰௭. பிலி.௧.௨௩.(௭) ௧.கொரி.௯.௨௪,௨௫. பிலி.௩.௰௪. ௧.தீமோ. ௬.௰௨. எபி.௰௨.௧. (௮) ௧.கொரி.௯.௨௫. யாக்.௧.௰௨. ௧.பேதுரு.௫.௪. வெளி.௨.௰. (௰) கொலோ.௪.௰௪.பிலே. ௨௪. ௧.யோவா.௨.௰௫.

சத்தைவிரும்பி, என்னைப்பிரிந்து, தெசலோனிக்
காவுக்குப்போய்விட்டான்; கிரேஸ்கே கலாத்
தியவுக்கும், தீத்து தல்மாத்தியவுக்கும் போய்
௰௧ விட்டார்கள்.–லூக்கா மாத்திரம் என்னோடிருக்
கிறான். மாற்கு ஊழியத்தில் எனக்கு உதவியா
யிருப்பதினால் அவனை உன்னோடே கூட்டிக்
௰௨ கொண்டுவா.—தீகிக்குவை நான் எபேசுக்கு அ
௰௩ னுப்பினேன்.—துரோவஸ் நகரத்திலுள்ள கார்பு
விடத்தில் நான் வைத்துவந்த மேலங்கியையும்,
புத்தகங்களையும், விசேஷமாகத் தோற்புத்தகங்க
ளையும், நீ வருகிறபொழுது எடுத்துக்கொண்டு
௰௪ வா.—கன்னானாகிய அலெக்குசந்தர் எனக்கு மி
குந்த தீமையைச்செய்தான்: அவனுடைய கிரி
யைகளுக்குத்தக்கதாகக் கர்த்தர் அவனுக்குப்
௰௫ பிரதிபலனளிக்கக்கடவர்.–அவன் நம்முடைய
வாக்குகளுக்கு மிகவும் எதிர்த்ததினால், நீயும் அ
௰௬ வனைக்குறித்துச் சாவதானமாயிரு.–நான் முதல்
என் பிரதிஉத்தரஞ்சொன்ன சமயத்தில் ஒருவ
னும் என்பக்கத்திலில்லாமல், யாவரும் என்னை
விட்டுவிட்டார்கள்: அது அவர்கள்மேற்சுமத்தப்
படாதிருப்பதாக.—என்னாலேவாக்கியப்பிரசங் ௰௭
கஞ் சம்பூரணமாயிருக்கிறதற்கும், அந்நியர்யாவ
ரும் அதைக்கேட்கிறதற்குங் கர்த்தர் என்பக்கி
லிருந்து, என்னைப்பெலப்படுத்தினார்: இப்படி
நான் சிங்கத்தின் வாயினின்று விடுவிக்கப்பட்
டேன்.—மேலும் கர்த்தர் என்னை எந்தத்துஷ் ௰௮
டச்செய்கையினின்றும் விடுவித்து, தமதுபரம
இராச்சியத்திற் பிரவேசிக்கப்பண்ணி இரட்சிப்
பார்: சதாகாலங்களிலும் அவருக்குத் துதி உண்
டாவதாக. ஆமென்.–பிரிஸ்காளையும், அக்வீலா ௰௯
வையும், ஒநேசிப்போரின் குடும்பத்தாரையும்வா
ழ்த்துதல்செய்வாயாக.-எரஸ்து கொரிந்தில் தரித் ௨௰
துவிட்டான்: திரோப்பிமுவையோ மிலேத்துவி
ல் வியாதிப்பட்டவனாக விட்டுவந்தேன்.–மாரி ௨௧
காலத்திற்குமுன்னே நீ இங்கேவந்து சேரும்படி
எத்தனம்பண்ணு. ஊபூலுவும், புதேஞ்சும், லீ
னுவும், கிலோதியாளும், மற்றெல்லாச்சகோதர
ரும் உன்னை வாழ்த்துகிறார்கள்.-கர்த்தராகிய ௨௨
யேசுக்கிறிஸ்து உன் ஆவியுடன் இருக்கக்கட
வர். கிருபை உங்களோடிருப்பதாக. ஆமென்.

(௰௧) கொலோ.௪.௰௪. பிலே.௨௪. அப்.௰௨.௨௫. கொலோ.௪.௰. (௰௨) அப்.௨௰.௪. எபே.௬.௨௧. கொலோ.௪.௭. தீத்.௩.௰௨. (௰௪) அப்.௰௯.௩௩. ௧.தீமோ.௧.௨௰. ௨.சாமு.௩.௩௯. சங்.௨௮.௪. வெளி.௰௮.௬. (௰௬) அதி.௧.௰௫. அப்.௭.௬௰. (௰௭) மத்.௰.௰௯. அப்.௨௩.௰௧. அப்.௯.௰௫. எபே.௩.௮. சங்.௨௨.௨௧. ௨.பேதுரு.௨.௯. (௰௮) சங்.௱௨௧.௭. ரோ.௰௧.௩௬. கலா.௧.௫. எபி.௰௩.௨௧. (௰௯) அப்.௰௮.௨. ரோ.௰௬.௩. ௨.தீமோ.௧.௰௬. (௨௰) அப்.௰௯.௨௨. ரோ.௰௬.௨௩. அப்.௨௰.௪. (௨௨) கலா.௬.௰௮. பிலே.௨௫.

## அப்போஸ்தலனாகிய பவுல்

# தீத்துவுக்கெழுதிய நிருபம்.

---

### க. அதிகாரம்.

க. வாழ்த்து: ரு. தீத்துவைக் கிரேத்தேயில் தங்கவிட்ட அபிப்பிராயம் இன்னதெனக்காட்டல். உத்தம உபதேசிகளின் குணத்தையும் தீமையுள்ள உபதேசிகளின் குணத்தையும் வருணித்தல்.

பொய்சொல்லாத தேவன் லௌகீககாலங்க
ளுக்குமுன்னே நித்தியசீவனைக்குறித்து வாக்கு
உ த்தத்தம்பண்ணி,-ஏற்றகாலங்களிலே நம்முடை
ய இரட்சகராகிய தேவனிட்ட கட்டளைப்ப
டி, எனக்கு ஒப்பிக்கப்பட்ட பிரசங்கத்தினால்
௩ தமது வாக்கை வெளிப்படுத்தினார்.—அந்த நித்தி
யசீவனைக்குறித்து நம்பிக்கை உண்டாக, தேவ
னால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்கு விசு
வாசமும்,தேவபத்திக்கேதுவான சத்தியத்தை அ
றிகிறஅறிவுங்கிடைக்கும்படி, தேவனுடைய
பணிவிடைக்காரனும், யேசுக்கிறிஸ்துவின்
ச அப்போஸ்தலனுமாகிய பவுல்,—சாதாரண விசு
வாசத்தின்படி, என் உத்தமபுத்திரனாகிய தீத்து
வுக்குஎழுதிக்கொள்வது: பிதாவாகிய தேவனா
லும், நம்முடைய இரட்சகருங் கர்த்தருமாகி
ய யேசுக்கிறிஸ்துவினாலும்கிருபையும், இ
ரு ரக்கமும், சமாதானமுமுண்டாகக்கடவன.-நீ கு
றைவுகளைச்செவ்வைபண்ணி, நான் உனக்குக்
கட்டளையிட்டபடி, பட்டணங்கள்தோறும்முதி
யோரை ஏற்படுத்துவதற்காகக் கிரேத்தைத்தீவில்
சு உன்னை விட்டுவந்தேன்.—குற்றமற்றவனும், ஒ
ரே மனைவிக்குப் புருஷனும், துன்மார்க்கரென்
னுங் குற்றமில்லாமையும்,கட்டளைக்கமைதலும்,
விசுவாசமுமுள்ள பிள்ளைகளையுடையவனுமாகி
எ ய ஒருவனிருந்தால் ஏற்படுத்தலாம்.—அத்தி
யட்சனானவன் தேவனுடைய உக்கிராணக்
காரனானபடியினால் குற்றஞ்சார்த்தப்படாதவனு
ம், சுயேச்சை, சடிதியானகோபம், மதுபானப்
பிரியம், அடித்தல், இழிவானஆதாயமாகியஇவை
அ களை நீங்கினவனும்,—அந்நியரை உபசரிக்கிறவ
னும், நல்லோர்மேற் பிரியமுள்ளவனும்,தெளிந்
தபுத்தியும், நீதியும், பரிசுத்தமும், இச்சையடக்
கூ கமுமுள்ளவனும்,—ஆரோக்கியமான உபதேசத்
தினால் புத்திசொல்லி, எதிர்பேசுகிறவர்களைப்
போதித்துணர்த்த வல்லவனாயிருக்கும்படி தான்
போதிக்கப்பட்டதற்கேற்ற உண்மையான வாக்
கை நன்றாய்ப்பற்றிக்கொள்ளுகிறவனுமாயிருக்
கவேண்டும்.—அநேகர், விசேஷமாகவிருத்தசே ய
தனத்தையுடைய அநேகர், கட்டளைக்கமையாத
வர்களும், அலப்பரும், வஞ்சகருமாயிருக்கிறார்
கள்.-அவர்களுடைய வாயை அடக்கவேண்டும், யக
அவர்கள் இழிவான ஆதாயத்துக்காகத் தகாதவை
களை உபதேசித்து, முழுக்குடும்பங்களையும்புரட்
டுகிறார்கள்.—அவர்களில் ஒருவனாகிய ஒருதீர்க் யஉ
கதரிசி, கிரேத்தேதீவார் எந்நாளும்பொய்யரும்,
துஷ்டமிருகங்களும், பாரவயிறுள்ள சோம்பரு
மாயிருக்கிறார்களென்று சொல்லியிருக்கிறான்.—
இந்தச்சாட்சி மெய். ஆதலால் அவர்கள் யூதரு ய௩
டைய கட்டுக்கதைகளுக்கும், சத்தியத்தை விட்
டுவிலகுகிற மனுஷருடைய கற்பனைகளுக்குஞ்
செவிகொடாமல்,—விசுவாசத்தில் ஆரோக்கியம யச
டையும்படி, நீ அவர்களைக்கண்டிப்பாய்க் கடிந்
துகொள்வாயாக.-சுத்தருக்குச் சகலமுஞ் சுத்தம்: யரு
அசுத்தரும் அவிசுவாசமுமுள்ளவர்களுக்கோ
ஒன்றுஞ் சுத்தமாயிராது; அவர்களுடைய புத்தி
யும் மனச்சாட்சியும் அசுத்தமாயிருக்கும்.—அவர் யசு
கள் தேவனை அறிந்திருக்கிறோமென்று சொல்
லியும், கிரியைகளில் அவரைமறுதலிக்கிறார்கள்.
அவர்கள் அருவருக்கப்படத்தக்கவர்களும், கட்
டளைக்கமையாதவர்களும், எந்த நற்கிரியையை
யுஞ்செய்ய இயலாதவர்களுமாயிருக்கிறார்கள்.

### உ. அதிகாரம்.

க. விருத்தர், ஸ்திரிகள், வாலிபர், வேலைக்காரராகிய இவர்கள் செய்யவேண்டிய கடமைகளைக் குறித்தல்: யக.சுவிசேஷத்தின் தாற்பரியத்தைத் தெரிவித்தல்.

முதிர்ந்த புருஷர், தெளிந்தபுத்தியும், பத்தியும், க
விவேகமுமுள்ளவர்களாகி, விசுவாசத்திலும், அ
ன்பிலும், பொறுமையிலும் ஸ்திரப்பட்டவர்க
ளாயிருக்கவும்,-முதிர்ந்த ஸ்திரிகள், பரிசுத்தருக் உ
கேற்க நடந்து, பொய்யாய்க்குற்றஞ்சார்த்தாம
லும், அளவுக்குமிஞ்ச மதுபானம்பண்ணாமலுமி
ருக்கவும்,-தேவனுடைய வாக்கியந்தூஷணிக் ௩

---

(க. அதி. க.) உ.தீமோ.க.க. எண்.உ௩.யக. உ.தீமோ.உ.ய௩. ரோ.யசு.உசு. உ.தீமோ.க.கூ. க.பேதுரு.க.உய.(உ) உ.தீமோ.க.ய. க.தெச.உ.ச. க.தீமோ.க.க,யக. (௩) உ.தீமோ.உ.உசு. க.தீமோ.௩.யசு. (ச) உ.கொரி.உ.ய௩. கலா. உ.௩. க.தீமோ.க.உ. ரோ.க.யக. உ.கொரி.ச.ய௩. உ.பேதுரு.க.க. எபே.க.உ. (ரு) க.கொரி.யக.௩ச. அப்.யச. உ௩. உ.தீமோ.உ.உ.(சு)க.தீமோ.௩.௩,. க.தீமோ.௩.ச,யஉ.(எ)மத்.உச.சரு. க.கொரி.ச.க,உ. லேவி.ய.யக. எபே. ரு.யஅ. க.தீமோ.௩.உ,அ. க.பேதுரு.ரு.உ. (அ) க.தீமோ.௩.௩. (கூ) உ.தெச.உ.யரு. உ.தீமோ.க.ய௩. க.தீமோ.க. யரு. உ.தீமோ.உ.உ. க.தீமோ.க.யக. உ.தீமோ.ச.௩. (ய) க.தீமோ.க.சு. ரோ.யசு.யஅ. அப்.யரு.க. (யக) மத்.உ௩. யச. உ.தீமோ.௩.சு. க.தீமோ.சு.ரு. (யஉ) அப்.யஎ.உஅ. (ய௩) க.தீமோ.க.௩. உ.தீமோ.ச.ச. ஏசா.உகூ.ய௩. மத். யரு.அ. கொலோ.உ.உஉ. (யச) உ.கொரி.ய௩.ய. உ.தீமோ.ச.உ. (யரு) லூக்.யக.௩க,சய,சக. ரோ.யச.யச,உய. க.கொரி.சு.யஉ. க.தீமோ.ச.௩,ச.ரோ.யச.உ௩.(யசு)உ.தீமோ.௩.ரு.யூதா.ச.ரோ.க.உஅ.உ.தீமோ.௩.அ.—(உ.அதி. உ.)க.தீமோ.உ.கூ,ய. க.பேதுரு.௩.௩,ச. உ.தீமோ.௩.௩.(௩)க.தீமோ.ரு.யரு. ரோ.உ.உச. க.தீமோ.சு.க.

கப்படாதபடி, அவர்கள் வாலிபஸ்திரிகளை, தங்
கள் புருஷரையும் பிள்ளைகளையும் நேசிப்பவர்க
௪ ளும்,—புத்தி தெளிந்தவர்களும், கற்புள்ளவர்க
ளும், வீட்டில்தரித்திருப்பவர்களும், நல்லவர்க
ளும், தங்கள் புருஷருக்கமைந்தவர்களுமாயிருக்
௫ கும்படி உணர்த்தவும்,-நீ ஆரோக்கியமான உபதே
௬ சத்திற்கேற்றவைகளைப் போதிப்பாயாக.—அது
போலவாலிபரும் தெளிந்தபுத்தியுள்ளவர்களாயி
ருக்கும்படி அவர்களுக்குப் போதிப்பாயாக.—
௭ உபதேசத்தில்தவறின்மையையும், பத்தியையும்,
௮ உண்மையையும்,—குற்றமுள்ளதென்று தீர்க்கப்
படாத ஆரோக்கிய வாக்கியத்தையுங் காட்டி,
எவ்விதத்திலும் நற்கிரியைக்கு நீ தானே திருஷ்
டாந்தமாயிருக்கக்கடவாய்: அப்பொழுதுவிரோ
தியானவன் உங்களைக்குறித்துத் தீங்குசொல்வ
தற்கு ஒன்றுங்காணமல் இலச்சையடைவான்.—
௯ அன்றியும் வேலைக்காரர், நம்முடைய இரட்சக
ராகிய தேவனுடைய உபதேசத்தை எல்லா
௰ வற்றினலும் அலங்கரிக்கும்பொருட்டு,—தங்கள்
எசமானருக்குக் கீழ்ப்படியவும், எதிர்பேசாமல்
எல்லாவற்றிலும் பிரியமாய்நடக்கவும், திருட்
டுத்தனமாய் நடவாமல் உத்தம உண்மையைக்
காண்பிக்கவும்வேண்டுமென்று சொல்லக்க
௰௧ டவாய்.—இரட்சிப்புத்தருந் தேவகிருபை எல்
௰௨ லாமனுஷரிடத்திலும் வெளிப்பட்டது.—அது,
நாம் அவபத்தியையும், லௌகீகஇச்சைகளையும்
விட்டுவிலகி, நாம் நம்பிக்கொள்ளுகிற ஆனந்தம்
வருமென்றும், நமக்குமகத்துவமான தேவனும்
இரட்சகருமாகிய யேசுக்கிறிஸ்துவின் மகி
மை பிரசன்னமாகுமென்றும் எதிர்பார்த்து,—
௰௩ இப்பிரபஞ்சத்தில் தெளிந்த புத்தியும், நீதியும்,
தேவபத்தியுமுள்ளவர்களாய் நாள்விடுவது அ
௰௪ வசியமென்று நமக்குப் போதிக்கின்றது.—அ
வர் நம்மைச் சகல பாவங்களினின்றும் மீட்டுக்
கொண்டு, தமக்குரிய விசேஷசனங்களாய், நற்
கிரியைகளிலேபத்தி வைராக்கியமுள்ளவர்களா
கச் சுத்திகரிக்கும்படி நமக்காகத் தம்மைத்தாம்
௰௫ ஒப்பித்தார்.—இவைகளை வசனித்து, பூரண அதி
காரத்தோடே உபதேசித்து, கடிந்துகொள்வாயா
க. ஒருவனும் உன்னை அவமதியாதிருப்பானக.

## ௩. அதிகாரம்.

௧. உபதேசிக்கும் விதமின்னதென்று காட்டல்:
௰௨. பவுல் தீத்துவுக்குச் சிலவிசேஷங்களைத் தெரிவித்தல். நிருபத்தின்முடிவுரை.

ஆதிபத்தியங்களுக்கும், அதிகாரங்களுக்கும் ௧
கீழ்ப்படிந்து, அதிகாரிகளுடைய கட்டளைக்க
மைந்து, எந்த நற்கிரியைகளையுஞ்செய்ய ஆயத்த
முள்ளவர்களாகி,—ஒருவனையுந் தூஷணியாமலு ௨
ம், அலர்தூற்றமலும், தாழ்ந்த சிந்தையுள்ளவர்க
ளாய், எல்லா மனுஷரிடத்திலும், எல்லாவிதத்தி
லும்சாந்தத்தைக்காட்டும்படி அவர்களுக்கு ஞாப
கப்படுத்துவாயாக.-முற்காலத்தில்நாமும்புத்தியீ ௩
னரும், கட்டளைக்கமையாதவர்களும், நெறிதவ
றினவர்களும், நானவித இச்சைகளுக்குஞ் சிற்
றின்பங்களுக்கும்அடிமைகளுமாகி, துர்க்குணத்
தோடும், பொறாமையோடும் நாள்விட்டுக்கொண்
டு, பகைக்கப்படத்தக்கவர்களும், ஒருவரை ஒ
ருவர் பகைக்கிறவர்களுமாயிருந்தோம்.—நம்மு ௪
டைய இரட்சகராகிய தேவனுடைய தயை
யும், மனுஷர்மேலுள்ள அன்பும் பிரகாசித்தபொ
ழுது,—நாம்செய்த நீதிக்கேற்ற கிரியைகளினி ௫
மித்தமல்ல, மறுபிறப்பாகிய ஸ்நானத்தினலும்,-
நம்முடைய இரட்சகராகிய யேசுக்கிறிஸ்து ௬
மூலமாய் நம்மேற் சம்பூரணமாக அவர் வருஷி
த்த பரிசுத்தஆவிசெய்யும் புதிதாக்கப்படுதலின
லும்,—தமது இரக்கத்தின்படி நம்மை இரட்சித் ௭
தார், அப்படியே அவருடைய கிருபையினல்
நீதிமான்களாக்கப்பட்டு, நித்திய சீவனுக்குரிய
நம்பிக்கையின்படி சுதந்தரரானேம்.-இவ்வாக்கு ௮
உண்மையுள்ளது, ஆதலால் தேவனிடத்தில்
விசுவாசமானவர்கள் நற்கிரியைகளைச் செய்யச்
சாக்கிரதையாயிருக்கும்படி, நீ இவைகளைத் திட
மாகப் போதிக்கவேண்டுமென்று விரும்புகிறே
ன். இவைகளே நலமும், மனுஷருக்குப் பலன்த
ரத்தக்கவைகளுமாயிருக்கின்றன.—புத்தியீனமா ௯
னதருக்கங்களும், வமிசவரலாறுகளும், விரோ
தங்களும், நியாயப்பிரமாணத்தைப்பற்றும் வாக்
குவாதங்களுமாகிய இவைகளுக்கு விலகுவாயா
க; இவைகள் பலனற்றவைகளும் வீணனவைக
ளுமாயிருக்கின்றன.—வேதப்புரட்டனை இரண் ௰
டொருதரங் கடிந்தபின்பு, அவனைவிட்டுவிலகு
வாயாக.—அப்படிப்பட்டவன் நெறிதவறி, தன ௰௧
துள்ளத்திற் குற்றவாளியென்றுதீர்க்கப்பட்டு, பா
வஞ் செய்கிறவனென்றறிந்துகொள்வாயாக.—

(௪) ௧.கொரி.௰௪.௩௪. எபே.௫.௨௨. கொலோ.௩.௰௮. ௧.தீமோ.௨.௰௧. ௧.பேதுரு.௩.௨,௫. (௫) ௧.தீமோ.௧.௰௧. ௨.தீமோ.௧.௰௩. (௭) எபே.௬.௨௪. (௮) ௧.தீமோ.௬.௩. நிகி.௫.௯. ௧.தீமோ.௫.௰௫. ௧.பேதுரு ௨.௰௨,௰௫. ௨.தெச.௩.௰௪. ௧.தீமோ.௪.௰௨. ௧.பேதுரு.௫.௩. (௯) மத்.௫.௰௬. பிலி.௨.௰௪. (௰) எபே.௬.௫. கொலோ.௩.௨௨. ௧.தீமோ.௬.௧,௨. ௧.பேதுரு.௨.௰௮. எபே.௫.௨௪. (௰௧) ரோ.௫.௰௧. ௧.பேதுரு.௫.௰௨. லூக்.௩.௫. யோவா.௧.௯. ௧.தீமோ.௨.௪.(௰௨)லூக்.௧.௭௩. ரோ.௬.௰௯. எபே.௧.௩. கொலோ.௧.௨௨. ௧.தெச.௪.௭. ௧.பேதுரு.௪.௨. ௧.யோவா.௨.௰௬. ௧.கொரி.௧.௭. பிலி.௩.௨௰. ௨.பேதுரு.௩.௰௨. அப்.௨௪.௰௫. கொலோ.௧.௫,௨௩. கொலோ.௩.௪. ௨.தீமோ.௪.௧,௮. எபி.௯.௨௮. ௧.பேதுரு.௧.௭. ௧.யோவா.௩.௨. (௰௪) கலா.௧.௪. எபே.௫.௨. ௧.தீமோ.௨.௬. எபி.௯.௰௪. யாத்.௰௯.௰௭. உபா.௭.௬. உபா.௨௬.௰௮. ௧.பேதுரு.௨.௯. எபே.௨.௰.(௰௫)௨.தீமோ.௪.௨. ௧.தீமோ.௪.௰௨.—(௩. அதி. ௧.) ரோ.௰௩.௧. ௧.பேதுரு.௨.௰௩. கொலோ.௧.௯. ௨.தீமோ.௨.௨௧. எபி.௰௩.௨௧. (௨) எபே.௪.௩௧. ௨.தீமோ.௨.௨௪,௨௫. பிலி.௪.௫. எபே.௪.௨. கொலோ.௩.௰௨. (௩) ௧.கொரி.௬.௰௧. எபே.௨.௨. கொலோ.௧.௨௧. ௧.பேதுரு.௪.௩. (௪) ௧.தீமோ.௨.௩. (௫) ரோ.௩.௨௰. கலா.௨.௰௬. எபே.௨.௬,௮,௯. ௨.தீமோ.௧.௯. யோவா.௩.௩,௫. எபே.௫.௨௬. ௧.பேதுரு.௩.௨௧. (௬) எசேக்.௩௬.௨௫. யோவே.௨.௨௮. யோவா.௧.௰௭. அப்.௨.௩௩. ரோ.௫.௫. (௭) ரோ.௩.௨௪. கலா.௨.௰௬. ரோ.௮.௨௩,௨௪. அதி.௧.௧.(௮)௧.தீமோ.௧.௰௫. (௯) ௧.தீமோ.௧.௩. ௨.தீமோ.௨.௰௪,௨௩.(௰)௨.கொரி. ௰௩.௨. மத்.௰௮.௰௪. ரோ.௰௬.௰௭. ௨.தெச.௩.௬,௰௪. ௨.தீமோ.௩.௫. ௨.யோவா.௰. (௰௧) அப்.௰௩.௪௬.

௰௨ நான் அர்தேமாவையாவது,திகிக்குவையாவதுஉ
ன்னிடத்தில் அனுப்பும்பொழுது, நிக்கோபொ
லிக்கு என்னிடத்தில் வரப்பிரயத்தினம்பண்ணு
வாயாக: மாரிகாலத்தில் அங்கே தங்க மனதாயிரு
௰௩ க்கிறேன்.-நியாயசாஸ்திரியாகிய சேனுவும் அப்
பொல்லோவும் பிரயாணமாய் வரும்பொழுது,
அவர்கள் குறைவுபடாதபடி சாக்கிரதையாய் வி
௰௪ சாரித்து அவர்களை அனுப்பிவிடுவாயாக.—மே
லும் நம்மைச்சேர்ந்தவர்களுங் கனியற்றவர்களா
யிராமல், பிரயோசனமான நற்கிரியைகளைச்செ
ய்யக் கற்றுக்கொள்ளக்கடவர்கள்.–என்னுடனி ௰௫
ருக்கிற யாவரும் உனக்கு வாழ்த்துதல்செய்கிறூர்
கள். விசுவாசத்திலே நம்மை நேசிக்கிறவர்களுக்
கு வாழ்த்துதல்செய். கிருபை உங்களனைவரோ
டும் இருக்கக்கடவது. ஆமென்.

(௰௨) அப்.உ௰.௪. உ.தீமோ.௪.௰௨. (௰௩) அப்.௰௮.உ௪. (௰௪) எபே.௪.உ௮. ரோ.௰௫.உ௮. பிலி.௧.௰௧. கொலோ.௧.௰. உ.பேதுரு.௧.௮.

அப்போஸ்தலஞகிய பவுல்

# பிலேமோனுக்கெழுதிய நிருபம்.

---

௧. வாழ்த்து. பிலேமோனின் விசுவாசம், அன்பு இவைகளினிமித்தம் பவுல் சந்தோஷப்படல்: ௮. ஒநேசிமுவை மன்னித்து, அங்கிகரித்துக் கொள்ளும்படி பவுல்பிலேமோனைவேண்டல்.

யேசுக்கிறிஸ்துவினிமித்தங்கட்டப்பட்டி
ருக்கிறவஞகிய பவுலும்,சகோதரஞகிய தீமோத்
தேயும், எங்களுக்குப்பிரியமுள்ளவனும் உடன்
௨ வேலையாளுமாகிய பிலேமோனுக்கும்,—பிரிய
முள்ள அப்பியாளுக்கும், எங்கள் உடன் சேவக
ஞகிய அர்கிப்புக்கும், உமது வீட்டிலே கூடிவ
௩ ருகிறசபைக்கும் எழுதிக்கொள்வது:-நம்முடை
ய பிதாவாகிய தேவஞலும், கர்த்தராகிய
யேசுக்கிறிஸ்துவிஞலும் உங்களுக்குக்கி
ருபையுஞ் சமாதானமுமுண்டாகக்கடவன.—
௪ கர்த்தராகிய யேசுவின்மேலும், எல்லாப்
பரிசுத்தர்மேலும் நீர் வைத்த அன்பையும், விசு
௫ வாசத்தையும் நான் கேள்விப்பட்டு,-என் பிரார்
த்தனைகளில் உம்முடையபேரைச்சொல்லி, எப்
பொழுதும் என் தேவனுக்கு ஸ்தோத்திரஞ்
௬ செய்து,-உங்களிலுள்ள சகல நன்மைகளும் கி
றிஸ்துயேசுவின் மூலமாக உண்டாயினவெ
ன்று நீங்கள் உணர்ந்துசொல்ல, உமது விசுவா
சத்தில் விளையும் உதாரகுணஞ் சித்தியாகும்படி
௭ வேண்டுகிறேன்.—சகோதரனே, பரிசுத்தவான்
களுடைய உள்ளங்கள் உம்மால் ஆற்றப்படுவதி
ஞல், உமது அன்பிஞல் மகா சந்தோஷத்தையும்
௮ ஆறுதலையுமடைந்தோம்.—ஆதலால் விருத்தாப்
பியனும், யேசுக்கிறிஸ்துவினிமித்தம் இப்
பொழுது கட்டப்பட்டவனுமாயிருக்கிற பவுலா
௯ கிய நான்,-நீர்செய்யவேண்டியகாரியத்தைக்கட்
டளையிடும்படி, நான் கிறிஸ்துவிஞல் தைரி
யங்கொள்ளத் தகுதியாயிருந்தும், அதைச்செய்
யாமல் அன்பிஞல் உம்மை வேண்டிக்கொள்ளு
௰ கிறேன்.-நான் கட்டப்பட்டிருக்கையில், நான்
பெற்ற என் மகஞகிய ஒநேசிமுவினிமித்தம்உம்
௰௧ மை வேண்டிக்கொள்ளுகிறேன்.—முன்னே அ
வன் உமக்குப் பலனற்றவஞயிருந்தான்; இப்
பொழுதோ உமக்கும் எனக்கும் பலனுள்ளவஞ
௰௨ ஞன்.-ஆதலால் நான் அவனை உம்மிடத்தில் தி
ரும்ப அனுப்பினேன்: நீர் அவனை என் பிரா
ணனைப்போலப் பார்த்து அங்கிகரித்துக்கொள்
ளும்.-சுவிசேஷத்தினிமித்தங்கட்டப்பட்டிருக் ௰௩
கிற எனக்கு ஊழியஞ்செய்யும்படி, உமக்குப்பி
ரதியாக அவனை என்னிடத்தில் வைத்துக்கொள்
ளவிரும்பினேன்.—ஆஞலும் உம்முடைய நன் ௰௪
மையானது கட்டாயத்திஞலல்ல, இஷ்டத்தின்
படிசெய்யப்படவேண்டுமென்றுவிரும்பி,எனக்
கு உம்முடைய சம்மதியில்லாமல் ஒன்றுஞ்செய்
யமனமில்லை.-இனிமேல் அவன் அடிமையாயி ௰௫
ராமல், அடிமைக்குமேலானவனும், பிரியமான
சகோதரனும், எனறும் உமக்குரியவனுமாயிருக்
கும்படி,—அவன் சொற்பகாலம் உம்மைவிட் ௰௬
டுப் பிரிந்தானென்று தோன்றுகின்றது; எனக்
கும் அவன்பிரியமான சகோதரன், உமக்கோ ச
ரீரத்தின்படியேயும், கர்த்தரினிமித்தமாகவும்
அதிகமாய் அப்படியிருப்பானல்லவா.-ஆதலால் ௰௭
நீர் என்னை உமக்குக் கூட்டாளியென்றெண்
ணிஞல், என்னைப்போல் அவனை ஏற்றுக்கொள்
ளக்கடவீர்.—அவன் உமக்கு யாதொரு அநியா ௰௮
யஞ்செய்தது, அல்லது கடன்பட்டது உண்டா
ஞல், அதை என் கணக்கிலெழுதுவீராக.—பவு ௰௯
லாகிய நான் கையெழுத்து வைத்தேன், நான் இ
றுப்பேன்: ஆகிலும் நீர் உம்மைத்தான் எனக்குக்
கடஞகச் செலுத்தவேண்டுமென்று நான் உமக்
குச்சொல்லேன்.—ஆ, என் சகோதரனே, கர்த் ௨௰
தரினிமித்தம் உம்மால் எனக்கு இந்தச் சந்தோ
ஷமுண்டாகக்கடவது: கர்த்தரினிமித்தம்
எனதுள்ளத்தைத் தேற்றுவீராக.—நான் கேட்ட ௨௧
திலும் அதிகமாகச்செய்வீரென்று அறிந்து, நீர்
கட்டளைக்கமைந்திருப்பீரென்று நான் நம்பி,
இப்படி உமக்கெழுதினேன்.-அன்றியும், நான் ௨௨
உங்கள் பிரார்த்தனைகளிஞல் உங்களிடத்தில்
கொடுக்கப்படுவேனென்று நம்பியிருக்கிறபடியி
ஞல், நான் வாசமாயிருக்கும்படி ஒரு இடத்
தை ஆயத்தம்பண்ணுவீராக.—கிறிஸ்துயேசு ௨௩
வினிமித்தம் என்ஞேடே காவலில் வைக்கப்
பட்டிருக்கிற எப்பாபிராவும்,—என் உடன்வே ௨௪
லையாட்களாகிய மாற்கும், அரிஸ்தர்க்கும், தேமா
வும், லூக்காவும் உமக்கு வாழ்த்துதல் செய்கிருர்
கள்.—நம்முடைய கர்த்தராகிய யேசுக்கி ௨௫
றிஸ்துவின் கிருபை உங்கள் ஆவியோடிருக்
கக்கடவது. ஆமென்.

---

(௧) எபே.௩.௧. ௨.தீமோ.௧.௮. பிலி.௨.௨௫.(௨)கொலோ.௪.௰௭. பிலி.௨.௨௫. ரோ.௰௬.௫. ௧.கொரி.௰௬.௰௯.(௩) எபே.௧.௨. (௪) எபே.௧.௰௫. கொலோ.௧.௩. (௫) எபே.௧.௰௬. ௧.தெச.௧.௩. (௬) பிலி.௧.௯,௰௧. (௭) ௨.கொரி.௭.௰௩. ௨.தீமோ.௧.௰௬. (௯) ௧.தெச.௨.௬. (௰) கொலோ.௪.௯. ௧.கொரி.௪.௰௫. கலா.௪.௰௯. (௰௩) ௧.கொரி.௰௬.௰௭. பிலி.௨.௩௰. (௰௪) ௨.கொரி.௯.௭. (௰௫) மத்.௨௩.௮. ௧.தீமோ.௬.௨. (௰௬) கொலோ.௩.௨௨. ஆதி.௪௫.௫,௮. (௰௭) ௨.கொரி.௮.௨௩. (௨௧) ௨.கொரி.௭.௰௬. (௨௨) பிலி.௧.௨௫. ௨.கொரி.௧.௰௧. (௨௩) கொலோ.௧.௭. (௨௪) அப்.௰௨.௰௨,௨௫. அப்.௰௯.௨௯. கொலோ.௪.௰,௰௪. ௨.தீமோ.௪.௰௧. (௨௫) ௨.தீமோ.௪.௨௨.

அப்போஸ்தலனுகிய பவுல்

# எபிரேயருக்கெழுதிய நிருபம்.

---

## ௧. அதிகாரம்.

*௧. தேவசுதனுனவர் உலகத்தில் அவதரித்தாரென்றுகாட்டல்: குணத்திலுங் கிரியையிலுந் தேவதூதரைப்பார்க்கிலும் மாட்சிமையுள்ளவரென்று தெரிவித்தல்.*

பூருவகாலத்திலே தீர்க்கதரிசிகளினுல் பலசம
யங்களிலும் பலவிதமாக முன்னோர்களுடன்பே
௨ சின தேவன்,—இந்தக்கடைசிக்காலத்தில் தம
து குமாரன்மூலமாக நம்முடனே பேசியிருக்கி
ருர், இவரைச் சருவத்திற்குஞ்சுதந்தரராக ஏற்ப
டுத்தியிருக்கிருர், இவரைக்கொண்டு உலகங்க
௩ ளேயுஞ் சிருஷ்டித்தார்;—இவர் அவருடைய
மகிமையின்பிரகாசம், அவருடையதன்மையின்
சாயல், இவர் தமது வல்லமையாகிய வாக்கினு
லே சகலத்தையுந் தாங்கிவருகிருர், இவர்தா
மே தம்மைக்கொண்டு நம்முடைய பாவங்களை
நிவர்த்திசெய்து, உன்னதத்திலுள்ள மகத்துவமா
௪ னவரின் வலதுபாரிசத்தில் வீற்றிருக்கிருர்.—இ
வர் தேவதூதரிலும் எவ்வளவு மேன்மையான நா
மத்தைச் சுதந்தரித்தாரோ, அவ்வளவு அவர்களி
௫ லும்மேன்மையுள்ளவராயிருக்கிருர்.—"நீர் என்
புத்திரன், இன்று நான் உம்மைச்செனிப்பித்தே
ன்," என்றும், பின்னும் "நான் இவருக்குப்பிதா
வாயிருப்பேன்,இவர் எனக்குப் புத்திரனுவார்,"
என்றுந் தேவன் எந்தக்காலத்திலாகிலும்தேவ
௬ தூதரில் எவனுக்காவதுசொன்னதுண்டா.—மே
லும் அவர் தமது முதற்பேருனவரை உலகத்
திற்பிரவேசிக்கச்செய்தபொழுது, "தேவதூதர்
யாவரும் இவரைநமஸ்கரிக்கக்கடவர்கள்," என்
௭ ருர்.—தேவதூதரைக்குறித்து, "தமது தூதரைக்
காற்றுகளாகவும், தமது பணிவிடைக்காரரை அ
க்கினிச்சுவாலையாகவுஞ் செய்தார்," என்றுசொ
௮ ல்லியிருக்கிருர்.—குமாரனைக்குறித்தோ, "தே
வனே, உமது சிங்காசனம் என்றுமுள்ளது: உ
மது இராச்சியத்தின் கோல், நீதியின்கோல்.—
௯ நீர் நீதியை விரும்புகிறீர், அநீதியைவெறுக்கிறீர்;
ஆதலால் தேவன், உம்முடைய தேவனே,
உம்முடைய தோழரிலும் உமக்கானந்த தைலத்
தினுல் அபிஷேகம்பண்ணினுர்," என்றும்,—"க ௰
ர்த்தாவே, நீர்ஆதியிலே பூமியை அஸ்திபாரப்
படுத்தினீர்; வானங்கள் உமது கைகளின் கிரி
யைகள்.—அவைகள் அழிந்துபோம்; நீரோ நிலை ௰௧
நிற்பீர்; அவையெல்லாம்வஸ்திரத்தைப்போலப்
பழையவையாய்ப்போகும்;—ஒரு உத்தரீயம்போ ௰௨
ல அவைகளைச் சுருட்டுவீர், அவைகள் மாறிப்
போம்: நீரோ ஒரேதன்மையுள்ளவர், உம்முடை
ய வருஷங்கள் ஒழியாது நிற்கும்," என்றுஞ்
சொல்லியிருக்கின்றது.—"நான் உம்முடைய சத் ௰௩
துருக்களை உமது பாதபீடமாக்கும் வரைக்கும்,
நீர் என் வலதுபாரிசத்தில் வீற்றிரும்," என்று எந்
தக்காலத்திலாயினும் அவர் தேவதூதர்களில் எவ
னுக்காவது சொன்னுரா.—இரட்சிப்பைச் சுதந் ௰௪
தரிப்பவர்களுக்கு ஊழியஞ்செய்வதற்கு அவர்க
ளெல்லாரும் அனுப்பப்படுகிற பணிவிடை ஆவி
களல்லவா.

## ௨. அதிகாரம்.

*௧. கிறிஸ்து நம்மை இரட்சிக்கும்படி அவதரித்தபடியினுல் அவருக்கமைவது கடமையெனக் காட்டல்.*

ஆதலால் நாம் கேட்டவைகளை நெகிழவி ௧
டாதபடி,அவைகளை மிகுந்தசாக்கிரதையோடே
சிந்திப்பது கடமை.—தேவதூதராற் சொல்லப் ௨
பட்ட வாக்கு உறுதியாயிருப்பதினுல், எந்த மீ
றுதலுங் கீழ்ப்படியாமையும் ஏற்றபலன்பெற்றி
ருக்க,—முதற் கர்த்தாவினுற் சொல்லப்பட் ௩
டு, பின்பு அவரிடத்திற் கேட்பவர்களால்
நமக்கு உறுதியாக்கப்பட்டதும்,—அடையாளங் ௪
கள், அற்புதங்களைக்கொண்டும், பலவிதமான
பலமுள்ளகிரியைகளைக்கொண்டும், பரிசுத்த ஆ
வி தமது சித்தத்தின்படி பகிர்ந்துகொடுத்த வரங்
களைக்கொண்டுந் தேவனுற் சாட்சியிடப்பட்
டதுமாயிருக்கிற இவ்வளவு பெரிய இரட்சிப்
பை நாம் அவமதித்தோமாகில், எப்படித்தப்பிப்
போவோம்.—இனி வரும் உலகத்தைக்குறித்துப் ௫
பேசுகிறோமே, அதை அவர் தேவதூதர்களுக்கு
ஆதீனமாக்கவில்லை.—இதற்குத்திருஷ்டாந்தமா ௬

---

(க. அதி. க.) எண்.௰உ.௬,அ. (உ) உபா.௪.௩௰. கலா.௪.௪. எபே.க.௯. யோவா.க.௰௬. சங்.உ.அ. மத்.உக.௩அ. யோவா.௩.௩௫. ரோ.அ.௰எ. யோவா.க.௩. க.கொரி.அ.௬. கொலோ.க.௰௬. (௩) யோவா.க.௪,௰௪. உ.கொரி.௪.௪. கொலோ.க.௰௫,௰எ. வெளி.௪.௰க. அதி.எ.உஎ. சங்.௱௰.க. எபே.க.உ௰. க.பேதுரு.௩.உஉ. (௪) எபே.க.௰௯. பிலி.உ.௯,௰. (௫) சங்.உ.எ. அப்.௰௩.௩உ. உ.சாமு.எ.௰௪. க.நாளா.உஉ.௰. சங்.அ௯.உ௬,உஎ. (௬) ரோ.அ.உ௯. கொலோ.க.௰அ. வெளி.க.௫. உபா.௩உ.௪௩. சங்.௯எ.எ. க.பேதுரு.௩.உஉ. (எ) சங்.௱௪.௪. (அ) சங்.௪௫.௬,எ. (௯) ஏசா.௬௧.௧. அப்.௪.உஅ. (௰க) ஏசா.௩௪.௪. மத்.உ௪.௩௫. உ.பேதுரு.௩.எ,௰. வெளி.உக.க. (௰௩) சங்.௱௰.க. மத்.உஉ.௪௪. (௰௪) ஆதி.௰௯.௰௬. சங்.௯க.௰க. சங்.௱௩.உ௰,உக. தானி.௩.உஅ. மத்.௰அ.௰. லூக்.க.௰௯. அப்.௰உ. எ,. ரோ.அ.௰எ. தீத்.௩.எ. யாக்.உ.௫. க.பேதுரு.௩.எ.—(உ. அதி. உ.) உபா.௩௩.உ. சங்.௬அ.௰எ. அப்.எ.௫௩. கலா.௩.௰௯. எண்.௰௫.௩௰,௩க. உபா.௪.௩. (௩) மத்.௪.௰எ. லூக்.க.உ. (௪) மாற்.௰௬.உ௰. அப்.௰௪.௩. ரோ.௰௫.௰அ, ௰௯. க்.கொரி.உ.௫. அப்.உ.உஉ,௪௩. க.கொரி.௰உ.௪,எ,௰க. எபே.க.௬,௰. அதி.௰.உஅ,உ௯. (௫) உ.பேதுரு.௩. ௰௩. (௬) யோபு.எ.௰எ. சங்.அ.௪.

க ஒருவன் ஒருஇடத்தில், “நீர் அவனைநினைக்கி
றதற்கு மனுஷனும், நீர் அவனைச் சந்திக்கிறதற்
௭ கு மனுபுத்திரனும் எம்மாத்திரம்.–நீர் அவனைக்
கொஞ்சக்காலந் தேவதூதரிலுஞ் சற்றேசிறியவ
னாக்கி, மகிமையினாலுங் கனத்தினாலும் அவனுக்
கு முடிசூட்டினீர்,உமதுகையினாற்செய்யப்பட்
ட சிருஷ்டிகளுக்குமேலாகஅவனை அதிகாரியா
௮ கவைத்தீர்.–எல்லாவற்றையும் அவனுடையபாத
ங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர்,” என்றுசொல்லியி
ருக்கிறான். இவ்வண்ணமே சகலத்தையும் அவ
னுக்குக் கீழ்ப்படுத்துகையில், அவனுக்குக்கீழ்ப்
படுத்தப்படாத ஒருபொருளுமில்லை. இப்பொ
ழுதோ சகலமும் அவனுக்குக்கீழ்ப்பட்டிருக்கி
௯ றதை நாம் காணவில்லையே.—ஆயினுந் தேவ
னுடைய கிருபையினால், எல்லார் நிமித்தமும்
மரணத்தை உருசிபார்க்கும்பொருட்டு, கொஞ்ச
க்காலத்திற்குத் தேவதூதரிலுஞ் சிறியவராக்கப்
பட்டு, பின்பு மரணத்தைச்சகித்ததினால் மகிமை
யோடுங்கனத்தோடும் முடிசூட்டப்பட்டவராகி
௰ ய யேசுவைக் காண்கிறோம்.—தமக்கென்று,
தம்மாலே சகலத்தையுஞ் சிருஷ்டித்தவர், அநே
கஞ்சந்ததியாரைமகிமையிற்சேர்க்கிறதற்கு அவர்
களுடைய இரட்சிப்பின் அதிபதியை உபத்திர
வங்களைக்கொண்டு சம்பூரணப்படுத்துவது அவ
௰௧ ருக்குத்தகுதியாயிருந்தது.-பரிசுத்தஞ்செய்கிறவ
ரும்,பரிசுத்தஞ்செய்யப்படுகிறவர்களுமாகியயா
வரும் ஒருவரால்தோன்றினார்கள்:ஆதலால்அவர்
அவர்களைச் சகோதரரென்றழைக்க வெட்கப்ப
௰௨ டாமல்,–“உமதுநாமத்தை என் சகோதரருக்குத்
தெரிவிப்பேன்,சபையாருக்குள் உம்மைத்துதித்
௰௩ துப் பாடுவேன்,”என்றும்,–“நான் அவரிடத்தில்
நம்பிக்கையாயிருப்பேன்,” என்றும், “பாருங்
கள், நானும், கர்த்தர் எனக்குத் தந்த பிள்ளைக
௰௪ ளும்,”என்றுஞ் சொல்லியிருக்கிறார்.-பிள்ளைகள்
மாமிச இரத்தமுடையவர்களாயிருப்பதினால், ம
ரணத்தை வருவிக்கவல்லவனாகிய பிசாசானவ
௰௫ னை மரணத்தினால் அழிப்பதற்கும்,—சீவகால
மளவும் மரணத்திற்குப்பயந்து அடிமைப்பட்ட
யாவரையும் விடுதலைபண்ணுவதற்கும், அவரும்
அவர்களைப்போல மாமிச இரத்தத்தையுடையவ
௰௬ ரானார்.—அவர் தேவதூதரைப்பற்றாமல், ஆபிர
௰௭ காமின் சந்ததியாரைப் பற்றினார்.—ஆதலால் ச
னங்களுக்குப் பாவபிராயச்சித்தஞ் செய்வதற்கு
இரக்கமும், தேவனுக்குரியவைகளைக்குறித்து
உண்மையுமுள்ளமகா ஆசாரியராயிருக்கும்படி,
எவ்விதத்திலுந் தம்முடைய சகோதரரைப்போ
லிருப்பது அவருக்குத் தகுதியாயிருந்தது.-அவர் ௰௮
தாமே சோதிக்கப்பட்டு,வேதனை அனுபவித்ததி
னாலே சோதிக்கப்படுகிறவர்களுக்குச் சகாயஞ்
செய்ய வல்லவராயிருக்கிறார்.

## ௩. அதிகாரம்.

௧. மோசேயிலுங்கிறிஸ்துமேன்மையுள்ளவரென்றுகாட்டல்: ௭. இஸரவேலருக்குண்டானதிலும் இவரில் விசுவாசம் வையாதவர்களுக்கதிகதண்டனை வருமெனக்காட்டல்.

ஆதலால்பரமஅழைப்பைப்பெற்றவர்களாகிய ௧
பரிசுத்தசகோதரரே, நாம் அறிக்கையிடுகிற அப்
போஸ்தலனும்,மகாஆசாரியனுமாகிய கிறிஸ்து
யேசுவைச் சிந்தித்துப்பாருங்கள்.-அவருடை ௨
ய வீடெங்கும் மோசே உண்மையுள்ளவனா
யிருந்தபிரகாரம் இவருந் தம்மை ஏற்படுத்தினவ
ருக்குஉண்மையுள்ளவராயிருந்தார்.-வீட்டை உ ௩
ண்டாக்கினவன்வீட்டிலும்மேன்மையுள்ளவன்,
அதுபோல இவர் மோசேயிலும் அதிகமேன்மை
யுள்ளவராயிருக்கிறார்.–எந்தவீடும் ஒருவனாலுண் ௪
டாக்கப்பட்டிருக்கின்றது; சருவத்தையும் உண்
டாக்கினவர்தேவனே.–தெரிவிக்கவேண்டிய ௫
வைகளுக்குச் சாட்சியாக, மோசேபணிவிடை
க்காரனாய், அவருடையசமஸ்தமானவீட்டாருக்
குள்ளும் உண்மையுள்ளவனாயிருந்தான்.—கிறி ௬
ஸ்துவோ குமாரனானதால்,அவருடையவீட்டுக்
குமேலாயிருக்கிறார்; நம்பிக்கையினாலுண்டான
தைரியத்தையும் ஆனந்தத்தையும் முடிவுபரியந்
தம் உறுதியாய்ப்பற்றிக்கொண்டோமாகில், நா
மே அவருடையவீடாவோம்.–ஆதலால்பரிசுத்த ௭
ஆவிசொல்லுகிறபிரகாரம்,-“இன்று நீங்கள் அவ ௮
ருடைய வாக்கைக்கேட்க விரும்பினால்,—உங் ௯
கள் பிதாக்கள் நாற்பதுவருஷபரியந்தம் என் கி
ரியைகளைக்கண்டும் என்னைச்சோதித்துப் பரீட்
சைபண்ணின வனத்தின் விவாதஸ்தானத்தில்
பரீட்சைநாளில் நடந்ததுபோல உங்கள் இரு
தயங்களைக்கடினப்படுத்தாதிருங்கள்.–நான் அந் ௰
தச் சந்ததியைக்குறித்து விசனப்பட்டு, இந்தச்
சனங்கள் மனமயக்கங்கொண்டிருக்கிறார்கள்,
என்வழிகளை உணரார்களென்றேன்.—அதினி ௰௧
மித்தம் நான் கோபங்கொண்டு, என் இளைப்பா
றுதலில் அவர்களைப் பிரவேசிக்கவிடேனென்று
ஆணையிட்டேன்,” என்றார்.–ஆதலால் சகோதர ௰௨
ரே, நித்திய தேவனை விட்டுவிலகுவதற்கேது
வான அவிசுவாசமுள்ள தீமையான இருதயம்
உங்களில் ஒருவனிடத்திலுமிராதபடி, நீங்கள்
எச்சரிக்கையாயிருந்து,—உங்களில் ஒருவனாகி ௰௩

---

(௮) மத்.௨௮.௰௮. ௧.கொரி.௰௫.௨௭. எபே.௧.௨௧. ௧.கொரி.௰௫.௨௫. (௯) பிலி.௨.௭,௮,௯. அப்.௨.௩௩. யோவா. ௩.௰௬. யோவா.௰௨.௩௨. ரோ.௫.௰௮. ரோ.௮.௩௨. ௨.கொரி.௫.௰௫. ௧.தீமோ.௨.௬. ௧.யோவா.௨.௨. வெளி.௫. ௯. (௰) லூக்.௨௪.௪௬, ரோ.௰௧.௩௬. அப்.௩.௰௫. லூக்.௰௩.௩௨. (௰௧) அதி.௰.௰௪. அப்.௰௭.௨௬. மத்.௨௮.௰. யோவா.௨௰.௰௭. ரோ.௮.௨௯. (௰௨) சங்.௨௨.௨௨,௨௫. (௰௩) சங்.௰௮.௨. ஏசா.௰௨.௨. ஏசா.௮.௰௮. யோவா.௰.௨௯. (௰௪) ௧.கொரி.௰௫.௫௪,௫௫. கொலோ.௨.௰௫. ௨.தீமோ.௧.௰.(௰௫)லூக்.௧.௭௪. ரோ.௮.௰௫. ௨.தீமோ.௧.௭. யோவா.௧.௰௪. ரோ.௮.௩. பிலி.௨.௭. (௰௭) பிலி.௨.௭. (௰௮) அதி.௪.௰௫,௰௬. அதி.௫.௨. அதி.௭.௨௫.—(௩. அதி. ௧.) ரோ.௧.௨. ௧.கொரி.௧.௧. ௨.தெச.௧.௰௨. ௨.பேதுரு.௧.௰. ரோ.௰௫.௮. (௨) ௧.சாமு.௰௨.௬. எண்.௰௨.௭. (௩) சக.௬.௰௨. மத்.௰௬.௰௮. (௪) எபே.௨.௰. (௫) யாத்.௰௪.௩௧. யோசு.௧.௨. உபா.௰௮.௰௫,௰௮,௰௯. (௬) ௧.கொரி.௩.௰௬. ௨.கொரி.௬.௰௬. எபே.௨.௨௧,௨௨. ௧.தீமோ.௩.௰௫. ௧.பேதுரு.௨.௫. மத்.௰.௨௨. (௮) ௨.சாமு.௨௩.௨. அப்.௧.௰௬. சங்.௯௫.௮. (௯) மத்.௰.௨௨. ரோ.௫.௨. கொலோ.௧.௨௩.

லும் பாவத்தின் வஞ்சனையினுற் கடினப்படாத
படி, இன்றெனப்படுமளவும், ஒருவருக்கொரு
௰௪ வர் நாடோறும் போதிக்கக்கடவீர்கள்.—நாம்
முதற்கொண்ட நம்பிக்கையை முடிவுபரியந்தம்
உறுதியாய்ப்பற்றிக்கொண்டோமாகில், கிறிஸ்
௰௫ துவின் பங்காளிகளாவோமே.—"இன்று நீங்
கள் அவருடைய வாக்கைக்கேட்டால், விவாத
ஸ்தானத்தில் நடந்ததுபோல உங்கள் இருதயங்
களைக் கடினப்படுத்தாதிருங்கள்," என்று சொல்
௰௬ லியிருக்கிறதே.—கேட்டவர்களிற் சிலர் கோபம்
மூட்டினுர்கள்: மோசேயினுல் எகிப்தினின்று
புறப்பட்டயாவரும் அப்படிச்செய்யவில்லை.—
௰௭ அவர் நாற்பது வருஷபரியந்தம் ஆரோடே கோ
பங்கொண்டார்,பாவஞ்செய்தவர்களோடேயல்
லவா, அவர்களுடைய சவங்கள் வனத்திலே
௰௮ விழுந்தன.—"அவர்கள் என் இளைப்பாறுதலிற்
பிரவேசிப்பதில்லை" என்று ஆரைக்குறித்து ஆ
ணையிட்டார், அவிசுவாசிகளைக்குறித்தல்லவா.—
௰௯ அவிசுவாசத்தினிமித்தம் அவர்கள்பிரவேசிக்கக்
கூடாதிருந்ததென்று நாம் காண்கிருேம்.

## ௪. அதிகாரம்.

௧.விசுவாசத்தினுல்இளைப்பாறுதலைப்பெறலாமெனக்காட்டல்: ௰௨. தேவனுடைய வாக்கின் வல்லமையைக்காட்டல்: ௰௪. கிறிஸ்துவின் வழியாய்த் தேவனிடத்திற் பிரவேசிக்கலாமெனக்காட்டல்.

ஆனபடியினுல் அவருடைய இளைப்பாறுத
லிற் பிரவேசிப்பதற்கேதுவான வாக்குத்தத்தம்
நமக்குண்டாயிருக்க, உங்களில் எவனுகிலும்
ஒருவன் அதை அடையாமற் பின்னிடுவாஞே
௨ வென்று பயந்திருக்கக் கடவோம்.—சுவிசேஷ
ம் அவர்களுக்குப் பிரசங்கிக்கப்பட்ட பிரகா
ரம் நமக்கும் பிரசங்கிக்கப்பட்டது: ஆனுலுங்
கேட்டவர்கள் அதை விசுவாசத்துடன் ஏற்றுக்
கொள்ளாததினுல் அவர்கள் கேட்டவாக்கியம்
௩ அவர்களுக்குப் பிரயோசனமற்றிருந்தது.—விசு
வாசித்திருக்கிற நாம் இளைப்பாறுதலிற் பிரவே
சிக்கிருேம், உலகத்திற்கு அஸ்திபாரம்போட்
டகிரியைகள் முடிந்திருந்தாலும், "நான் கோ
பங்கொண்டு அவர்களை என் இளைப்பாறுதலிற்
பிரவேசிக்க விடேனென்று ஆணையிட்டேன்,"
௪ என்ருர்.—ஆதலால் ஏழாம்நாளைக்குறித்து ஒரு
இடத்தில், "தேவன் தம்முடைய கிரியைக
ளையெல்லாம் முடித்து ஏழாம் நாளில் ஓய்ந்தி
௫ ருந்தார்," என்று சொல்லியிருக்கின்றது.—மறு
படியும் மேற்சொல்லிய இடத்தில் "அவர்கள்
என் இளைப்பாறுதலிற் பிரவேசிக்க விடேன்,"
௬ என்ருர்.—ஆதலால் சிலர் அதிற் பிரவேசிப்பது
அவசியமாயிருப்பதினுலும், முதல் முதல் சுவி
சேஷத்தைக் கேட்டவர்கள் அவிசுவாசத்தினி
மித்தம் பிரவேசியாததினுலும்,—"இன்று அவ ௭
ருடைய வாக்கைக்கேட்க விரும்பினுல் உங்க
ள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள்,"
என்று வெகு காலத்துக்குப் பின்பு தாவீதைக்
கொண்டு பேசியிருக்கிறபடி,இன்றென்றுசொல்
வதினுல், விசேஷமாய் ஒரு நாளைக்குறித்திருக்
கிருர்.—யோசுவா அவர்களுக்கு இளைப்பாறுதலை ௮
அளித்ததுண்டானுல் பின்பு அவர்வேருெருநா
ளைக்குறித்துப் பேசமாட்டார்.—ஆனபடியினுல் ௯
தேவனுடைய சனங்களுக்குஇளைப்பாறுதல்
வருகிறதாயிருக்கின்றது.—அவருடைய இளைப் ௰
பாறுதலிற்பிரவேசித்தவன்,தேவன் ஓய்ந்தது
போல,தன்கிரியைகளைவிட்டுஓய்ந்திருப்பான்.—
ஆகையால் அந்தத் திருஷ்டாந்தத்துக்கேற்க ஒரு ௰௧
வனுகிலும் அவிசுவாசத்தினுலேவிழாதபடி நாம்
அந்த இளைப்பாறுதலிற் பிரவேசிக்கப் பிரயாசப்
படக்கடவோம்.—தேவவாக்குச் சீவனும் வல் ௰௨
லமையுமுள்ளது, இருபுறமுங் கூருள்ள எந்தக்
கட்கத்திலுங்கூரானது, பிராணனையும்,ஆவியை
யும், பொருத்துகளையும்,ஊனையும் பிரிக்கத்தக்க
தாக உருவக்குத்தும், இருதயத்தின் சிந்தனைகளை
யும் அபிப்பிராயங்களையுந்தீர்மானிக்கின்றது.—
அவருடைய பார்வைக்கு மறைந்திருக்கும் ஒரு ௰௩
சிருஷ்டியுமில்லை: அவருடைய திருஷ்டிக்
குச் சகலமும் நிருவாணமும் வெளிப்படையு
மாயிருக்கின்றன, அவருக்கே நாம் கணக்கு ஒப்
பிக்கவேண்டும்.—வானங்களின் வழியாய்ச்செ ௰௪
ன்ற தேவனுடைய குமாரனுகிய யேசு
வென்னும் மகத்துவம்பொருந்திய மகா ஆசா
ரியர் நமக்கு இருக்கிறபடியினுல், அவரை அறிக்
கையிடத் திடசித்தமுள்ளவர்களாயிருக்கக் கட
வோம்.—நம்முடைய பலவீனங்களைக் குறித் ௰௫
துப் பரதபிக்கமாட்டாத மகா ஆசாரியர் நமக்கி
ல்லை; பாவத்தைத்தவிர எவ்விதத்திலேயும் நம்
மைப்போலச்சோதிக்கப்பட்டாரே.—ஆதலால் ௰௬
நாம் இரக்கத்தைப்பெற்றுக்கொள்ளுகிறதற்கும்,
ஏற்ற சமயத்திற் சகாயஞ்செய்யுங் கிருபையை
அடைகிறதற்கும், பயமின்றிக் கிருபாசனத்திற்
சேரக்கடவோம்.

## ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் மகாஆசாரியத்துவம்: ௰௧. எபிரேயரின் அஞ்ஞானத்தினிமித்தம் அவர்களைக் கண்டித்தல்.

மனுஷரில் தெரிந்துகொள்ளப்பட்ட எந்தமகா ௧
ஆசாரியனும், நைவேத்தியங்களையும், பாவங்க
ளுக்காகப் பிராயச்சித்தபலிகளையுஞ் செலுத்து
கிறதற்கும், மனுஷர்நிமித்தம் தேவனுக்குரி
யவைகளை நடப்பிக்கிறதற்கும் ஏற்படுத்தப்பட்
டிருக்கிருன்.—தானும் பலவீனத்தாற் சூழப்பட் ௨

(௰௬)எண்.௰௪.௨,௪,௰௧,௨௪,௩௰.(௰௭)எண்.௰௪.௨௨,௨௯. ௧.கொரி.௰.௫. யூதா.௫.(௰௮)எண்.௰௪.௩௰.—(௪.அதி.௩.) சங்.௯௫.௰௧. (௪) ஆதி.௨.௨. யாத்.௨௰.௰௧. (௭) சங்.௯௫.௮. (௰௨) எசா.௪௯.௨. எரே.௨௩.௨௯. ௨.கொரி.௰.௪,௫. ௧.பேதுரு.௧.௨௩. நீதி.௫.௪. எபே.௬.௰௭. வெளி.௧.௰௬. ௧.கொரி.௰௪.௨௪,௨௫.(௰௩)சங்.௩௩.௰௩,௰௪. யோபு.௨௬.௬. நீதி.௰௫.௰௧.(௰௫)எசா.௫௩.௩. லூக்.௨௨.௨௮. ௨.கொரி.௫.௨௧. ௧.பேதுரு.௨.௨௨. ௧.யோவா.௩.௫.(௰௬)எபே.௨.௰௮.—(௫. அதி.)

டிருப்பதினால் அறியாமையுடையவர்களுக்கும்,
நெறிதவறினவர்களுக்கும் இரங்கத்தக்கவனாயி
௩ ருப்பான்.—அந்தக்காரணத்தினால் அவன்சனங்க
ளுக்காகமாத்திரமல்ல, தனக்காகவும் பாவங்களி
௪ னிமித்தம் பலியிடுவது அவசியம்.—ஆரோனைப்
போலத் தேவனால் அழைக்கப்பட்டாலொழி
ய, ஒருவனுந்தானாக இந்தக்கனத்தைப் பெற்றுக்
௫ கொள்ளமாட்டான்.-அவ்வண்ணமே கிறிஸ்து
வும் மகாஆசாரியத்துவத்தைத்தரித்துக்கொள்ளத்
தம்மைத்தாமேமேன்மைப்படுத்தவில்லை; "நீர் எ
ன்புத்திரன், இன்றுநான்உம்மைச்செனிப்பித்தே
௬ ன்," என்றும்,-வேறொருஇடத்தில் "மெல்கிசெ
தேக்கின் முறைமைக்கேற்க நீர் சதாகாலமும் ஆ
சாரியராயிருப்பீர்," என்றுஞ்சொன்னவரே அவ
௭ ரை உன்னதப்படுத்தினார்.-அவர் அவதரித்
திருந்த காலத்தில், மரணத்தினின்றுந்தம்மை இ
ரட்சிக்கவல்லவரைநோக்கி, மகாஒலத்தோடும் அ
ழுகையோடும் விண்ணப்பம்பண்ணி, பிரார்த்த
னைசெய்து, தமக்குண்டானபயத்தினின்று விடு
௮ விக்கப்பட்டார்.-அவர் குமாரனாயிருந்தும் வேத
னைகளைஅனுபவித்ததினால், கீழ்ப்படிதலைக்கற்று
௯ க்கொண்டார்.-இவ்விதமாய் அவர் சம்பூரணமா
னபின்பு, தமக்குக்கீழ்ப்பட்டிருக்கிறயாவரும் நி
த்தியஇரட்சிப்பை அடைவதற்குக்காரணராகி,-
௰ மெல்கிசெதேக்கின்முறைமைக்கேற்க மகாஆசா
௰௧ ரியரென்று தேவனால் நியமிக்கப்பட்டார்.—அ
வரைக்குறித்துச்சொல்ல நமக்கு அநேகவிசேஷ
ங்களுண்டு, ஆனாலும் உங்கள்செவிமந்தமாயிருப்
௰௨ பதினால் அவைகளைத் தெரிவிப்பதரிது.-நீங்கள்
போதகராவதற்கு அவ்வளவுகாலஞ்சென்றுபோ
யினும், திரும்பவுந் தேவனுடைய வாக்கியங்
களின்மூலபாடங்களை ஆராவது உங்களுக்குப்
போதிப்பது அவசியம்; கடின உணவையல்ல,
௰௩ பாலைஉண்ணத்தகுந்தவர்களானீர்கள்.-பாலுண்
ணுகிறவன் குழந்தையாயிருப்பதினால், நீதியின்
௰௪ வாக்கில் நிபுணனல்ல.—கடினஉணவு, பயிற்சியி
னால் நன்மைதீமை பகுத்தறியும் ஞானத்தையு
டையவர்களாய் வயதுபெற்றவர்களுக்கேதகும்.

## ௬. அதிகாரம்.

௧. வைதீக காரியங்களை அதிகமாய் அப்பியாசிக்கும்படி வேண்டல்: ௨. தேவபத்தியை விட்டு விலகுவது மகா பயங்கரமுள்ளதெனக்காட்டல்: ௩. பத்தியிலே திடங்கொள்ளும்படி உபதேசித்தல். தேவபத்தியின் பலனை அருளிச்செய்வதற்குத் தேவன் ஆணையிட்டு வாக்குத்தத்தஞ்செய்தல்.

ஆதலால் மரணத்திற்கேதுவான கிரியைகளை ௧
விட்டு மனந்திரும்புதல், தேவனைப் பற்றும் வி
சுவாசம்,—ஞானஸ்நானங்களின் உபதேசம், கை ௨
களை மேலேவைத்தல், மரித்தோரின் உயிர்த்தெ
ழுதல், நித்தியநியாயத்தீர்ப்பாகியஇவைகளினால்
நாம் திரும்பவும் அஸ்திபாரம் போடாதபடிக்கு,
கிறிஸ்துவின் வாக்கியத்தின் மூலபாடங்களை
விட்டு, பக்குவம்பெறும்படி முன்செல்லக் கட
வோம்.-தேவனுக்குச்சித்தமானால்அப்படியே ௩
செய்வோம்.-ஒருதரம் வெளிச்சமாக்கப்பட்டும், ௪
பரம ஈவை அனுபவித்தும், பரிசுத்த ஆவியைப்
பெற்றும்,-தேவனுடைய உத்தமவாக்கியத்தை ௫
யும், வருங்காலத்தின் அதிகாரங்களையும் உருசி
பார்த்தும் இருக்கிறவர்கள்,—வழுவிவிழுந்தபின் ௬
பு, தேவனுடைய குமாரனைத்திரும்பவுஞ்சிலு
வையில் தாங்களேஅறைந்து வெட்கப்படுத்தின
தினால், திரும்பவும்அவர்களை மனந்திருப்பிப் பு
திதாக்குவதுகூடாதகாரியம்-பூமியானதுதனக்கு ௭
அடிக்கடிபெய்கிற மழையை உட்கொண்டு, தன்
னிடத்திற் பயிரிடுகிறவர்களுக்கேற்ற பலனைமு
ளைப்பிக்கும்பொழுது, தேவனால் ஆசீர்வாதம்
பெறும்.—முட்செடிகளையும், முட்பூண்டுகளை ௮
யும் முளைப்பிக்கிறதோ, அங்கிகரிக்கப்படாதது
ம், சாபத்திற்குச் சமீபமானதுமாயிருக்கின்றதே;
தகிக்கப்படுவது அதின்முடிவு.—பிரியமானவர் ௯
களே, நாங்கள் இப்படிச்சொன்னாலும், இவை
களிலுஞ் சீரானவைகளும், இரட்சிப்புக்கேற்ற
வைகளும் உங்களிடத்திலிருக்கின்றனவென்று
நம்புகிறோம்.—நீங்கள் பரிசுத்தவான்களுக்கு ஊ ௰
ழியஞ்செய்ததினாலும், செய்துவருகிறதினாலுந்
தமது நாமத்தினிமித்தம் நீங்கள் காட்டிய உங்
கள் அன்பின்கிரியையையும், பிரயாசத்தையும் ம
றக்கிறதற்குத் தேவன் அநியாயமுள்ளவரல்ல.-
ஆதலால் நீங்கள் சோம்பேறிகளாயிராமல், விசு ௰௧
வாசத்தினாலும், பொறுமையினாலும் வாக்குத்
தத்தங்களின்பலனைச் சுதந்தரித்துக்கொள்ளுகிற
வர்களைப்பின்பற்றுகிறவர்களாய்,—நீங்கள் யா ௰௨
வரும் முடிவுபரியந்தம் பரிபூரணநம்பிக்கை அ
டையும்பொருட்டு, அந்தச்சாக்கிரதையைக் கா
ண்பிக்கவேண்டுமென்பதே எங்கள் விருப்பம்.-
ஆபிரகாமுக்குத் தேவன் வாக்குத்தத்தம்பண் ௰௩
ணினபொழுது, ஆணையிடும்படி தம்மிலும் பெ
ரியவர் ஒருவருமில்லாதபடியினால் தம்மையே
கொண்டு ஆணையிட்டு,—"நான் உன்னைமிகவும் ௰௪
ஆசீர்வதித்து, உன்னை மிகுதியாய்ப் பெருகப்
பண்ணுவேன்," என்றார்.-அந்தப்படிஅவன்பொ ௰௫

(௩)லேவி.௪.௩.(௪)௨.நாளா.௨௬.௰௮. யோவா.௩.௨௭.யாத்.௨௮.௧. எண்.௰௬.௫,௪௰. ௧.நாளா.௨௩.௰௩.(௫)யோவா. ௮.௫௪. சங்.௨.௭.(௬)சங்.௱௰.௪.(௭)மத்.௨௬.௩௯,௪௨,௪௪. சங்.௨௨.௧. மத்.௨௭.௪௬,௫௰. மத்.௨௬.௩௭,௫௩.(௮)பிலி. ௨.௮. (௰௧) யோவா.௰௬.௰௨. ௨.பேதுரு.௩.௰௬. மத்.௰௩.௰௪. (௰௨) ௧.கொரி.௩.௧,௨,௩. (௰௩) ௧.கொரி.௰௩.௰௧. எபே.௪.௰௩. ௧.பேதுரு.௨.௩. (௰௪) ௧.கொரி.௨.௬. எபே.௪.௰௧. பிலி.௩,௰௫. ஏசா.௭.௰௫. ௧.கொரி.௨.௰௪,௰௫.— (௬. அதி. ௨.) அப்.௰௯.௪,௫. அப்.௮.௰௪,௰௫,௰௬,௰௭. அப்.௰௭.௩௧,௩௨. அப்.௨௪.௨௫. ரோ.௨.௰௨. பிலி.௩.௰௨, ௰௩,௰௪. அதி.௫.௰௨. (௩) அப்.௰௮.௨௧. ௧.கொரி.௪.௰௯. (௪) யோவா.௪.௰. எபே.௨.௮. கலா.௩.௨,௫. (௬) அதி. ௰.௨௯. மத்.௰௨.௩௧,௩௨. ௨.பேதுரு.௨.௨௰,௨௧. ௧.யோவா.௫.௰௬. (௭) சங்.௬௫.௰. (௮) ஏசா.௫.௬. (௰) நீதி.௰௪. ௩௧. மத்.௰.௪௨. யோவா.௰௩.௨௰.ரோ.௩.௪. ௨.தெச.௧.௬,௭. ௧.தெச.௧,௨.ரோ.௰௫.௨௫. ௨.கொரி.௮.௪. ௨.தீமோ. ௧.௰௮. (௰௨) அதி.௩.௬,௰௪. கொலோ.௨.௧. (௰௩) ஆதி.௨௨.௰௭,௰௮. சங்.௱௫.௯. லூக்.௧.௭௪.

றுமையாய்க் காத்திருந்து, வாக்குத்தத்தத்தின் ப
௰௬ லனைப்பெற்றான்.—மனுஷர் தங்களிலும் பெ
ரியவனைக்கொண்டு ஆணையிடுவார்கள்: உறுதி
பண்ணும் ஆணையே அவர்களுக்குள் எல்லாவி
௰௭ வாதத்தையும் ஒழிக்கும்.—அவ்வண்ணமே தேவ
னும், வாக்குத்தத்தத்தின்பலனைச் சுதந்தரித்துக்
கொள்ளுகிறவர்களுக்கு, தமதுமந்திராலோசனை
யின்வேறுபடாத நிச்சயத்தைப் பரிபூரணமாகக்
காண்பிக்க விரும்பி,ஒரு ஆணையினால் ஸ்திரப்ப
௰௮ டுத்தினார்.—அதினால் நமக்கு முன்வைக்கப்பட்
ட நம்பிக்கைப்பொருளைப் பற்றிக்கொள்ளும்
பொருட்டாக, அடைக்கலமாய் ஓடி, வேறுப
டாததும் தேவன் பொய் பேசக்கூடாததுமா
கிய இரண்டுவிசேஷங்களினால் நாம் பரிபூர
௰௯ ணமான ஆறுதலையடைந்திருக்கிறோம்.—அந்த
நம்பிக்கை, ஆத்துமத்துக்கு நிலையும் உறுதியு
மான நங்கூரம்போல, திரைச்சீலைக்குட்படுகிற
௨௰ தாயிருக்கின்றது.—மெல்கிசெதேக்கின் முறை
மைக்கேற்க, நித்தியமானமகாஆசாரியராக ஏற்ப
டுத்தப்பட்டு, நமக்குமுன்சென்றவராகிய யேசு
நமக்காக அவ்விடத்திற் பிரவேசித்திருக்கிறார்.

## ௭. அதிகாரம்.

௧. கிறிஸ்துவும் மெல்கிசெதேக்கைப்போல மகா ஆசாரியரானாரெனக் காட்டல்: ௰௧. ஆரோன் வமிசத்தாராகிய மகா ஆசாரியரிலும் புது உடன்படிக்கையின் மத்தியஸ்தராகிய யேசு மேன்மையுள்ளவரென்று தெரிவித்தல்.

இந்த மெல்கிசெதேக்கென்பவன் ஷாலேமின்
இராசாவும், சருவத்திற்குமேலான தேவனைச்
சேவிக்கும் ஆசாரியனுமாயிருந்தான், இவன் ஆ
பிரகாம் இராசாக்களைச்சங்கரித்துத்திரும்பிவந்த
பொழுது, அவனைச்சந்தித்து ஆசீர்வதித்தான்; ஆ
பிரகாம் எல்லாவற்றிலும் பத்தில் ஒரு பாகத்தை
௨ இவனுக்குக் கொடுத்தான்.-கருத்தின்படி,இவன்
முதலாவது நீதியின்இராசாவென்றும்,இரண்டா
வது ஷாலேமின் இராசாவென்கிற சமாதானத்தி
௩ ன் இராசாவென்றும் பேர்பெற்றவன்.—இவன்
பிதா மாதாவும், வமிசவரலாறும் இல்லாதவன்;
நாட்களின் தொடக்கமும் சீவனின் முடிவுமற்
றவன்; ஆதலால் இவன் தேவனுடைய கு
மாரனுக்கு ஒப்பாக்கப்பட்டு, எப்பொழுதும் ஆ
௪ சாரியனாயிருக்கிறான்.—இவனுடைய மேன்மை
யைச் சிந்தித்துப்பாருங்கள், கோத்திரத் தலைவ
னாகிய ஆபிரகாம் கொள்ளைப்பொருளிற்பத்தில்
௫ ஒருபாகத்தை இவனுக்குக் கொடுத்தானே.-லே
வியின் சந்ததியார், ஆசாரியபட்டத்தைப் பெற்
றவர்களும், நியாயப்பிரமாணத்தின்படி, ஆபிர
காமின் இடுப்பிலிருந்து வந்த தங்கள் சகோதர
ராகிய சனங்களிடத்திற் பத்தில் ஒன்றை வாங்
குகிறதற்குக் கட்டளை அடைந்தவர்களுமாயிருக்
௬ கிறார்களே.—அவர்களுடைய வமிசத்தில் எண்
ணப்படாதவனாகிய இவன் பத்தில் ஒன்றை ஆபி
ரகாமினிடத்தில் வாங்கி, வாக்குத்தத்தங்களைப்
பெற்ற அவனையே ஆசீர்வதித்தான்.-சிறியவன் ௭
பெரியவனால் ஆசீர்வதிக்கப்படுவான், அதற்குச்
சந்தேகமில்லை.—இவ்விடத்திற் பத்தில் ஒன்றை ௮
வாங்கியிருக்கிறவர்கள் மரிக்கிறார்கள்; அவ்வி
டத்திற் சீவித்திருக்கிறானென்று சாட்சிபெற்ற
வன் வாங்கினான்.—மெல்கிசெதேக்கு ஆபி ௯
ரகாமைச் சந்தித்தபொழுது லேவி தன் பிதா
வின் இடுப்பிலிருந்தபடியால்,-பத்தில் ஒன்றை ௰
வாங்குகிற லேவியும் ஆபிரகாமினால் பத்தில்
ஒன்றைக் கொடுத்தானென்று சொல்லலாம்.—
சனங்களுக்கு நியாயப்பிரமாணத்தோடேகிடை ௰௧
த்த லேவிய கோத்திர ஆசாரியத்துவத்தினாற் சம்
பூரணங் கிடைத்ததுண்டானால், ஆரோனுடை
ய முறைமையின்படியல்லாமல் மெல்கிசெதே
க்கின் முறைமைக்கேற்கப் பெயர்பெற்ற வே
றொரு ஆசாரியன் தோன்றவேண்டுவதென்ன.—
ஆசாரியத்துவம் மாற்றப்பட்டிருக்குமேயாகில், ௰௨
நியாயப்பிரமாணமும் மாற்றப்படுவது அவசி
யம்.—வேதிகையின் ஊழியத்தை ஒருவனாயி ௰௩
னுஞ் செய்யாத கோத்திரத்திலே தோன்றினவ
ரைக்குறித்து, இவைகள் சொல்லப்பட்டிருக்
கின்றன.—நம்முடைய கர்த்தரானவர் யூதா ௰௪
வின் கோத்திரத்திற் பிறந்தாரென்பது பிரசித்த
மாயிருக்கின்றது; மோசே ஆசாரியத்துவத்தைக்
குறித்து அந்தக் கோத்திரத்தாரைத்தொட்டு ஒன்
றுஞ் சொல்லவில்லை.—மேலும் மெல்கிசெதேக் ௰௫
குக்கொப்பாய் வேறொரு ஆசாரியர் எழும்பி
யிருந்தால், இது மிகவும் அதிக தெளிவாயிருக்
கும்.—இவர் சரீரத்துக்கேற்ற கட்டளையாகிய நி ௰௬
யாயப்பிரமாணத்தின்படியல்ல,நீங்காத சீவனுக்
குரிய வல்லமையின்படி ஏற்படுத்தப்பட்டார்.—
அதற்குச் சாட்சியாக "மெல்கிசெதேக்கின் மு ௰௭
றைமைக்கேற்க நீர்நித்தியஆசாரியராயிருப்பீர்,"
என்றான்.—ஆதலால் முன்கொடுக்கப்பட்டகட் ௰௮
டளை, பலவீனமுள்ளதும் பயனற்றதுமாயிருந்த
தினிமித்தம் நீக்கப்பட்டது.-நியாயப்பிரமாணம் ௰௯
ஒன்றையுஞ் சம்பூரணப்படுத்தவில்லை, நாம் தே
வனிடத்திற் சேருவதற்கேதுவான அதியுத்தம
நம்பிக்கையை வருவிக்குதலோ சம்பூரணப்
படுத்துகின்றது.—அந்த ஆசாரியர்கள் ஆணை ௨௰
யில்லாமல் ஏற்படுத்தப்பட்டார்கள்: இவரோ,
"மெல்கிசெதேக்கின் முறைமைக்கேற்க நீர் ச
தாகாலமும் ஆசாரியராயிருப்பீரென்று ஆணையி
ட்டு, அதை மாற்றமாட்டார்," என்று தம்மிடத்
திற் சொன்ன கர்த்தரால் ஆணையோடே ஏற்
படுத்தப்பட்டார்.—ஆதலால் யேசு ஆணையில் ௨௧
லாமல் ஏற்படுத்தப்படாததினிமித்தம்,—அவர் ௨௨
அதிக முக்கியமான உடன்படிக்கையின் மத்
தியஸ்தரானார்.—அன்றியும் அந்த ஆசாரியர்கள் ௨௩

(௰௬) யாத்.௨௨.௰௧. (௰௭) ரோ.௰௧.௨௯. (௰௯) லேவி.௰௬.௰௫.—(௭. அதி. ௧.) ஆதி.௰௪.௰௮,. (௪) ஆதி.௰௪.௨௰. (௫) எண்.௰௮.௨௧,௨௬. (௬) ஆதி.௰௪.௰௯. ரோ.௪.௰௩. கலா.௩.௰௬. (௰௧) கலா.௨.௨௧. (௰௪) ஏசா.௰௧.௧. மத்.௧.௩. ரோ.௧.௩. வெளி.௫.௫. (௰௭) சங்.௱௰.௪. (௰௮) ரோ.௮.௩. கலா.௪.௯. (௰௯) அப்.௰௩.௩௯. ரோ.௩.௨௰,௨௨,௨௮. ரோ.௮.௩. கலா.௨.௰௬. கலா.௩.௨௪. ரோ.௫.௨. எபே.௨.௰௮. (௨௰) சங்.௱௰.௪.

மரணத்தினால் நெடுங்காலம் இராமல் அநேகரா
௨௪ யிருந்தார்கள்.—இவரோ, நித்தியராயிருப்பதினி
மித்தம் நீங்காத ஆசாரியத்துவத்தையுடையவ
௨௫ ராயிருக்கிறார்.—ஆதலால் தம்மாலே தேவனி
டத்திற் சேருகிறவர்களின்பொருட்டு விண்
ணப்பஞ்செய்கிறதற்காக நித்தமுஞ் சீவித்திருக்
கிறபடியால், அவர்களை முற்றும் இரட்சிக்க அ
௨௬ வர் வல்லவராயிருக்கிறார்.-பரிசுத்தரும், தீங்கில்
லாதவரும், அசுத்தப்படாதவரும், பாவிகளைவிட்
டுப்பிரிந்தவரும், வானங்களிலும் உயர்ந்தவரு
மாகிய இப்படிப்பட்ட ஒரு மகா ஆசாரியரே
௨௭ நமக்குவேண்டும்.—இவர் அந்த மகா ஆசாரியர்
களைப்போல முன்பு தம்முடைய பாவங்களினி
மித்தமும், பின்பு சனங்களுடைய பாவங்களி
னிமித்தமும் நாடோறும் பலியிடவேண்டுவதில்
லை: இவர் தம்மையே பலியிட்டதினால் ஒரேத
௨௮ ரம் இதைச்செய்தார்.—நியாயப்பிரமாணமான
து பலவீனத்தையுடைய மனுஷரை மகா ஆசாரி
யராக ஏற்படுத்துகின்றது; நியாயப்பிரமாணத்
திற்குப்பின்பு ஆணையோடே இருந்தவாக்கோ,
என்றைக்குஞ் சம்பூரணராகிய குமாரனை ஏற்ப
டுத்துகின்றது.

## ௮. அதிகாரம்.

கிறிஸ்துவின் மகா ஆசாரியத்துவத்தினால் ஆரோ
னின் மகா ஆசரியத்துவம் ஒழிவுபெறல். சுவி
சேஷமாகிய புதிய உடன்படிக்கையினாற் ப
ழையஉடன்படிக்கை ஒழிந்ததெனக்காட்டல்.

மேற்சொல்லியவைகளின் தொகையிது: பர
மண்டலத்தில் மகாமகிமையுள்ள சிங்காசனத்
௨ தின் வலதுபாரிசத்தில் வீற்றிருக்கிறவரும்,—ம
னுஷராலேயல்ல, கர்த்தாவினால் ஸ்தாபிக்கப்
பட்ட சத்திய ஆவாசமாகியபரிசுத்தஸ்தானத்தில்
ஆராதனைசெய்கிறவருமான மகா ஆசாரியர் ஒரு
௩ வர் நமக்குண்டு.—மகா ஆசாரியர் யாவரும் நை
வேத்தியங்களையும் பலிகளையுஞ் செலுத்துவதற்
குஏற்படுத்தப்பட்டிருக்கிறவர்களாதலால், இவ
ருஞ் சிலவற்றைப் பலியிடவேண்டியதாயிருந்
௪ தது.—நியாயப்பிரமாணத்தின்படி காணிக்கை
களைச்செலுத்துகிற ஆசாரியர்களிருக்கிறபடியி
னால், பூமியில் அவரிருந்தால் ஆசாரியராயிருக்க
௫ மாட்டார்.—அவர்கள்செய்யும் ஆராதனை, பர
மண்டலத்திலுள்ள ஆராதனையின் சாயலும் நிழ
லுமாகவேயிருக்கின்றது, இப்படியே தேவன்,
மோசே அந்த ஆவாசத்தைச்செய்ய ஆயத்தமா
னபொழுது, "நீ மலையிற்கண்டசாயலாகவே எல்
லாவற்றையுஞ்செய்யும்படி சாவதானமாயிரு,"
௬ என்று கட்டளையிட்டார்.—இவரோ, அதியுத்தம
வாக்குத்தத்தங்களின்மேல் ஸ்தாபிக்கப்பட்டிரு
க்கிற அதிகமேன்மையான உடன்படிக்கையின்
மத்தியஸ்தராயிருப்பதினால், அதிகசிரேஷ்டமா
ன ஒரு ஆராதனையின் பட்டத்தைப்பெற்றார்.—
அந்த முதலாம் உடன்படிக்கை குறைவற்றதா ௭
னால், இரண்டாவதற்கு இடந்தேடவேண்டுவ
தில்லை.—அவர் அதைக்குற்றப்படுத்தி, "பாருங் ௮
கள், நாட்கள்வருமென்று கர்த்தர் சொல்லுகி
றார், இஸ்ரவேல் வமிசத்தாரோடும், யூதாவின்
வமிசத்தாரோடும் புது உடன்படிக்கையை ஏற்
படுத்துவேன்.—அவர்களுடைய முன்னோரை ௯
எகிப்து தேசத்தினின்று புறப்படுத்துகிறதற்கு
அவர்களுடையகையைப் பிடித்தகாலத்தில், அ
வர்களோடே நான்பண்ணின உடன்படிக்கை
யைப்போலிராது; அந்த உடன்படிக்கையில் அ
வர்கள் நிலைநிற்கவில்லையே, நானும் அவர்களை
அரோசித்தேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.-
அந்தநாட்களுக்குப்பின்பு இஸ்ரவேல் வமிசத் ௰
தாரோடே இந்த உடன்படிக்கையை ஏற்படுத்
துவேன்; நான் என் நியாயப்பிரமாணத்தை அ
வர்கள் உள்ளத்திற்பதிப்பேன், அவர்களுடை
ய இருதயங்களில் அதை எழுதுவேன்: நான்
அவர்களுக்குத் தேவனாவேன், அவர்கள் எனக்
குச்சனங்களாவார்கள்.—கர்த்தாவை அறிந்து ௰௧
கொள்ளென்று அவனவன் தன் தன் அயலானுக்
கும், தன்தன் சகோதரனுக்கும் போதிக்கவேண்
டுவதில்லை: சிறியோர் பெரியோர்யாவரும் என்
னைஅறிவார்கள்.-நான் அவர்கள் அநீதிகளை மன் ௰௨
னிப்பேன், இனி நான் அவர்களுடைய பாவங்
களையும் அவர்களுடைய குற்றங்களையும் நினை
யேனென்று கர்த்தர் சொல்லுகிறார்."—அவர் பு ௰௩
திய உடன்படிக்கையென்று சொல்லுகிறதி
னால் முந்தினதைப் பழையதாக்கினார். மெலிந்
ததும்பழையதுமாகிய அது, ஒழிந்துபோவதற்குச்
சமீபமாயிருக்கின்றது.

## ௯. அதிகாரம்.

௧. நியாயப்பிரமாணத்தின்படி இடப்பட்டபலி
களை விவரித்தல்: ௰௧. இவையெல்லாவற்றிலுங்
கிறிஸ்துவின்பலி சிரேஷ்டமெனக்காட்டல்.

முதலாம் உடன்படிக்கை, தேவாராதனையின் ௧
முறைமைகளும், லௌகிக பரிசுத்தஸ்தானமுமு
டையதாயிருந்தது.-செய்யப்பட்ட ஆவாசத்தின் ௨
முற்பாகத்திற் செடிவிளக்கும், போசனபீடமு
ம், சமுகத்தப்பமுமிருந்தன; இது பரிசுத்தஸ்தா
னமென்னப்பட்டது.—இரண்டாந்திரைக்குள், ௩
ஆவாசத்தின் மிகவும் பரிசுத்தஸ்தானமென்னப்
பட்ட பிற்பாகத்தில்,—பொற்கலசமும், முழுவ ௪
தும் பொற்றகட்டால் மூடப்பட்ட உடன்படிக்
கையின் பெட்டியும், அதிலுள்ள மன்னாவையு
டைய பொற்பாத்திரமும், ஆரோனுடையதளிர்த்
தகோலும், உடன்படிக்கையின் பலகைகளுமி

---

(௨௫) ரோ.௮.௩௪. ௧.தீமோ.௨.௫. ௧.யோவா.௨.௧. (௨௬) எபே.௧.௨௰. (௨௭) லேவி.௯.௭. லேவி.௰௬.௰௫. ரோ.௬.௰.—(௮. அதி. ௧.) எபே.௧.௨௰. கொலோ.௩.௧. (௩) எபே.௫.௨. (௫) கொலோ.௨.௰௭. யாத்.௨௫.௪௰. என்.௮.௪. அப்.௭.௪௪. (௬) ௨.கொரி.௩.௬,௮,௯.(௮)எரே.௩௧.௩௧,௩௨,௩௩,௩௪. (௰) சக.௮.௮. (௰௧) ஏசா.௫௪.௰௩. யோவா.௬.௪௫. ௧.யோவா.௨.௨௭. (௰௨) ரோ.௰௧.௨௭. (௰௩) ௨.கொரி.௫.௰௭.—(௯. அதி. ௧.) யாத்.௨௫.௮.(௨)யாத்.௨௬.௧,௩௫. யாத்.௨௫.௨௩,௩௰,௩௧. லேவி.௨௪.௫,௬. (௩) யாத்.௨௬.௩௧,௩௩.(௪)யாத்.௨௫.௰. யாத்.௰௬.௩௩,௩௪. என்.௰௭.௰. யாத்.௨௫.௰௬,௨௧. ௧.இரா.௮.௯,௨௧. ௨.நாளா.௫.௰.

௫ ருந்தன.-அதற்குமேல் மகிமையுள்ள கெருபிகள்
கிருபாசயத்திற்கு நிழலிட்டிருந்தன; இவைகளை
க்குறித்து நாம் இப்பொழுது விவரஞ்சொல்லமு
௬ டியாது.—இவைகள் இவ்விதமாக ஆயத்தமாக்கப்
பட்டபின்பு, ஆசாரியர்கள் தேவாராதனையைச்
செய்யும்பொருட்டு ஆவாசத்தின் முற்பாகத்தில்
௭ நித்தமும் பிரவேசிப்பார்கள்.—பிற்பாகத்திலோ
வருஷத்துக்கு ஒருதரம் மகா ஆசாரியன்மாத்தி
ரம் பிரவேசிப்பான், தானுஞ் சனங்களும் அறி
யாமற்செய்த பாவங்களினிமித்தஞ் செலுத்துகி
றதற்கு இரத்தங்கொண்டுபோகாமற் பிரவேசி
௮ யான்.—அதினால் முதலாம் ஆவாசம் நிற்குமள
வும் மிகவும் பரிசுத்தஸ்தானத்திற் பிரவேசிக்கும்
வழி வெளிப்படவில்லையென்று பரிசுத்தஆவி
௯ யானவர் தெரிவித்திருக்கிறார்.—அது, ஆராதனை
செய்கிறவனுடைய மனச்சாட்சியைச்சம்பூரண
ப்படுத்தமாட்டாத காணிக்கைகளும் பலிகளுஞ்
செலுத்தப்பட்டுவந்த அக்காலத்துக்குரிய ஒருதி
௰ ருஷ்டாந்தமாயிருந்தது.-அவை, சீர்திருந்துங் கா
லம்வரைக்கும் போசனங்களாலும், பானங்களா
லும், பலவித ஸ்நானங்களாலும், சரீரத்திற்கேற்
ற முறைமைகளாலும் மாத்திரம் அவர்கள்மேற்
௰௧ பொறுப்பிக்கப்பட்டன.—கிறிஸ்து, இவ்வுல
கப் பொருளாயிராததும், கையினாற்செய்யப்ப
டாததுமாகிய அதிக மகத்துவம் பொருந்திய உத்
தமஆவாசத்தின்வழியாய்,வருகிற நன்மைகளைத்
௰௨ தரும்பொருட்டு,மகாஆசாரியராக வந்து,—வெள்
ளாட்டுக்கடா, இளங்காளை இவைகளுடைய இ
ரத்தத்தோடேயல்ல, தம்முடைய இரத்தத்தோ
டே ஒரேதரம் பரிசுத்தஸ்தானத்திற்பிரவேசித்
து, நமக்காக நித்தியமீட்பைப் பெற்றுக்கொ
௰௩ ண்டார்.—காளை, வெள்ளாட்டுக்கடா இவைக
ளின் இரத்தமும், கடாரியின் சாம்பலும், அசு
சிப்பட்டவன்மேல் தெளிக்கப்பட்டு, சரீர அசு
௰௪ சி நீக்கி அவனைச்சுத்திகரிக்குமேயாகில்,-நித்திய
ஆவியினாலே தம்மை மாசில்லாத பலியாகத் தே
வனுக்கு ஒப்பித்த கிறிஸ்துவினுடைய இ
ரத்தம், மரணத்திற்கேதுவான கிரியைகளை நீக்கி,
சீவனுள்ள தேவனுக்கு ஆராதனைசெய்வதற்கு
மிகவும் அதிகமாய் உங்கள்மனதைப் பரிசுத்தமாக்
௰௫ குமல்லவா.-மேலும் அவர் அழைக்கப்பட்டவர்
கள் வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட நித்திய சுதந்
தரத்தைப் பெறும்பொருட்டு, முதல்உடன்படிக்
கையின் காலத்தில் நடந்த அக்கிரமங்களை மர
ணத்தினால் நிவர்த்திசெய்யும்படி, புதிய உடன்
௰௬ படிக்கையின் மத்தியஸ்தராயிருக்கிறார்.—மரண
சாதனம் வலிபெறும்படி,அந்தச்சாதனத்தைஎழு
தினவனுக்கு மரணஞ் சம்பவிக்கவேண்டியது.—
மரணசாதனம் எழுதினவன் மரணமடையாமல் ௰௭
அவன்உயிரோடிருக்கையில்,அதுவலிபெறாது.-
ஆதலால் முதல் உடன்படிக்கையும் இரத்த ௰௮
மில்லாமல் ஸ்திரப்படுத்தப்படவில்லை.—மோ ௰௯
சே நியாயப்பிரமாணத்திற்கிசையச் சகல கட்
டளைகளையும் எல்லாச் சனங்களிடத்திலுந் தெரி
வித்தபின்பு, ஆடுமாடுகளின் இரத்தத்தை நீரோ
டும், செம்பஞ்சியோடும், ஈசோப்பென்னுஞ் செ
டியோடும் எடுத்து, வேதபுத்தகத்தின்மேலுஞ் ச
னங்களெல்லார்மேலுந் தெளித்து,—“தேவன் ௨௰
உங்களுக்குக்கட்டளையிட்ட உடன்படிக்கைக்
கேற்ற இரத்தம் இதுவே,” என்றான்.—இவ்வித ௨௧
மாக ஆவாசத்தின்மேலும்,ஆராதனைக்கேற்றபாத்
திரங்களின்மேலும் இரத்தத்தைத் தெளித்தான்.—
நியாயப்பிரமாணத்தின்படி சில தவிர மற்றெல் ௨௨
லா வஸ்துக்களும் இரத்தத்தினாற் சுசியாக்கப்ப
டுகின்றன; இரத்தஞ்சிந்துதலில்லாமற் பாவமன்
னிப்பேயில்லை.—ஆதலால் பரமண்டலத்திலுள் ௨௩
ள வஸ்துக்களுக்குத் திருஷ்டாந்தமானவைகள்
இவ்விதமாகச் சுத்தமாக்கப்பட வேண்டியிருக்
கிறபடியால், பரமண்டலத்திலுள்ள வஸ்துக்கள்
தாமே, அவைகளிலும் அதியுத்தம பலிகளினா
லே சுத்தமாக்கப்படவேண்டும்.—ஆதலால் கி ௨௪
றிஸ்து சத்தியமானவைகளின் திருஷ்டாந்தங்க
ளாய்க் கையினாற் செய்யப்பட்ட பரிசுத்தஸ்தா
னங்களிலல்ல, இப்பொழுது நமது நிமித்தமா
கத் தேவனுடைய சந்நிதானத்திலே தோன்
றும்படி, பரமண்டலத்தில் தானே பிரவேசித்தி
ருக்கிறார்.-மகா ஆசாரியன் அந்நிய இரத்தத்தை ௨௫
எடுத்து வருஷந்தோறும் பரிசுத்தஸ்தானங்களிற்
பிரவேசித்ததுபோல, அவர் தம்மை அடிக்கடி
பலியிடுவது அவசியமில்லை.—அப்படியானால் ௨௬
அவர் உலகத்தோற்றமுதற்கொண்டு அநேகந்த
ரம் மரணவேதனை அனுபவிக்கவேண்டுமே: அ
வர்தம்மைத்தாமே பலியிடுகிறதினாற் பாவங்களை
நீக்கும்பொருட்டாக இந்தக்கடைசிக்காலத்தில்
இப்பொழுது ஒரேதரம் வெளிப்பட்டார்.-மனு ௨௭
ஷர் ஒரேதரம் மரிக்கிறதும், பின்பு நியாயத்தீர்ப்
பு அடைகிறதும் நியமிக்கப்பட்டிருக்கிறதுபோ
ல,—கிறிஸ்துவும் அநேகருடைய பாவங்க ௨௮
ளைச் சுமந்துகொள்வதற்கு ஒரேதரம் பலியிடப்
பட்டார்; இரண்டாந்தரம் அவர் பாவமில்லா
மல், தம்மை அபேட்சித்திருப்பவர்களுக்கு இ
ரட்சிப்பைக் கொடுப்பதற்குத்தோன்றுவார்.

---

(௫) யாத்.௨௫.௰௮,௨௨. லேவி.௰௬.௨. ௧.இரா.௮.௬,௭. (௬) எண்.௨௮.௩. தானி.௮.௰௧. (௭) யாத்.௩௰.௰. லேவி.௰௬.௨,௰௧,௰௨,௰௫,௩௪. (௮) யோவா.௰௪.௬. (௯) கலா.௩.௨௧. (௰) லேவி.௰௧.௨. கொலோ.௨.௰௯. எண்.௰௯.௭,. எபே.௨.௰௫. கொலோ.௨.௨௰. (௰௨) அப்.௨௰.௨௮. எபே.௧.௮. கொலோ.௧.௰௪. ௧.பேதுரு.௧.௰௯. வெளி.௧.௫. வெளி.௫.௯. சக.௩.௯. தானி.௯.௨௪. (௰௩) லேவி.௰௬.௰௪,௰௯. எண்.௰௯.௨,௰௭,. (௰௪) ௧.பேதுரு.௧.௰௯. ௧.யோவா.௧.௭. வெளி.௧.௫. ரோ.௧.௩. ௧.பேதுரு.௩.௰௮. எபே.௫.௨. தீத்.௨.௰௪. லூக்.௧.௭௩. ரோ.௬.௰௩,௨௨. ௧.பேதுரு.௪.௨. (௰௫) ௧.தீமோ.௨.௫. ரோ.௩.௨௫. ௧.பேதுரு.௩.௰௮. (௰௭) கலா.௩.௰௫. (௰௮) யாத்.௨௪.௬,. (௰௯) யாத்.௨௪.௫,௬,௮. லேவி.௰௬.௰௪,௰௫,௰௮. லேவி.௰௪.௪,௬,௭,௪௯,௫௧,௫௨. (௨௰) யாத்.௨௪.௮. மத்.௨௬.௨௮.(௨௧)யாத்.௨௯.௰௨,௩௬. லேவி.௮.௰௫,௰௯. லேவி.௰௭.௰.(௨௪)ரோ.௮.௩௪. ௧.யோவா.௨.௧. (௨௬) ௧.பேதுரு.௩.௰௮. ௧.கொரி.௰.௰௧. கலா.௪.௪. எபே.௧.௯.(௨௭) ஆதி.௩.௰௯. பிர.௩.௨௰. ௨.கொரி.௫.௰. வெளி.௨௰.௰௨,௰௩.(௨௮)ரோ.௬.௰. ௧.பேதுரு.௩.௰௮. ௧.பேதுரு.௨.௨௪. ௧.யோவா.௩.௫. மத்.௨௬.௨௮. ரோ.௫.௰௫. தீத்.௨.௰௨. ௨.பேதுரு.௩.௰௨.

# ௰. அதிகாரம்.

௧. நியாயப்பிரமாணத்திற்கேற்ற பலிகளினற்பாவம்விமோசனமாகாதெனக்காட்டல்: ௫.கிறிஸ்துவின் பலியினற் பாவம் முழுவதும் விமோசனமாமெனக்காட்டல்: ௰௧. அவருடைய பலி ஒன்றென்பதையும், அதின்சம்பூரணத்தையுங் காட்டல்: ௰௯. அதினல்அவர் சனங்கள் தைரியப்படுத்தப்படல்: ௩௨. பத்தியினிமித்தந் துக்கத்தைப் பொறுமையுடன் சகித்ததினல் அவர்களைப்புகழ்தல்.

நியாயப்பிரமாணமானது,வரும் நன்மைகளின்
ரூபமாயிராமல், அவைகளின் ரூபக்குறியாய்
மாத்திரமிருப்பதினல்,இடைவிடாமல் வருஷத்
துக்கு வருஷம் இடப்பட்டுவருகிற ஒரேவிதமா
ன பலிகளாலே சேர்ந்தவர்களைச் சம்பூரணப்ப
௨ டுத்தமாட்டாது.—கூடுமாகில், ஆராதனைசெய்த
வர்கள் ஒருதரஞ்சுத்தமாக்கப்பட்டபின், பாவங்
கள் தங்களுக்குண்டென்று உணராமலிருப்பதி
௩ னற்பலிசெலுத்துகிறது நிறுத்தப்படுமே.—அப்
படியிராதபடியால், அந்தப்பலிகளினலே
வருஷந்தோறும் பாவங்களைக்குறித்து நினைவு
௪ கூருதலுண்டாயிருக்கின்றது.—மேலும் எருது,
வெள்ளாடு இவைகளின் இரத்தத்தினற் பாவம்
௫ விமோசனமாகாதே.—இதினிமித்தம் அவர் உல
கத்திற் பிரவேசித்திருந்தபொழுது,"பலியையும்
நைவேத்தியத்தையும் நீர் விரும்பவில்லை, ஒரு
௬ சரீரத்தை எனக்கு ஆயத்தப்படுத்தினீர்.—தகன
பலிகளிலும், பாவ பலிகளிலும் உமக்குப்
பிரியமில்லாதபொழுது, தேவனே, பாரும்,
வேதபுத்தகத்தில் என்னைக்குறித்து எழுதியிருக்
கிறபடி, நான் உமது சித்தத்தை நிறைவேற்று
கிறதற்கு வருகிறேனென்று சொன்னேன்,"என்
௭ ளூர்.-நியாயப்பிரமாணத்தின்படி செலுத்தப்பட்
டு வருகிறபலிகளைக்குறித்து அவர் மேற்சொல்
லியபிரகாரம் "பலியையும், நைவேத்தியத்தை
யும்,தகனபலிகளையும், பாவ பலிகளையும் நீர்
௮ விரும்பவில்லை.—அவைகளில் உமக்குப் பிரிய
மில்லை," என்று சொன்னபின்பு "தேவனே,
உமது சித்தத்தை நிறைவேற்றுகிறதற்கு இப்
பொழுது வருகிறேன்," என்றுசொன்னதால்,—
௯ பிந்தினதை ஸ்தாபிக்கும்படி முந்தினதை நீக்கி
௰ விட்டார்.—ஆதலால் யேசுக்கிறிஸ்துவினு
டைய சரீரம் ஒரேதரம்பலியிடப்பட்டதினல்,
அந்தச்சித்தத்திற்கிசைய நாம் பரிசுத்தமாக்கப்
௰௧ பட்டிருக்கிறோம்.—எந்த ஆசாரியனும் நாடோ
றும் ஆராதனைசெய்கிறவனகி, பாவங்களை ஒரு
பொழுதும் நிவர்த்திசெய்யக்கூடாத ஒரேவிதப
லிகளை அடிக்கடி செலுத்துகிறதற்கு நிற்பான்.-
இவரோ, பாவங்களை நீக்கும்படி ஒரே பலியை ௰௨
யிட்டு, என்றென்றைக்குந் தேவனுடைய வ
லதுபாரிசத்தில் வீற்றிருந்து,—அதுமுதல் தம்மு ௰௩
டைய சத்துருக்கள் தமக்குப் பாதபீடமாக்கப்
படுமளவுங் காத்துக்கொண்டிருக்கிறர்.—அவர் ௰௪
பரிசுத்தமாக்கப்பட்டவர்களை ஒரே பலியினற்
சதாகாலத்திற்குஞ் சம்பூரணப்படுத்தினர்.–பரி ௰௫
சுத்தஆவியானவரும் நமக்கு இப்படிச்சாட்சியி
டுகிறர்.—"அந்தநாட்களுக்குப் பின்பு அவர்க ௰௬
ளோடே இந்த உடன்படிக்கையை ஏற்படுத்து
வேன், நான் என்நியாயப்பிரமாணங்களை அவர்
களுடைய இருதயங்களிற் பதிப்பேன், அவர்க
ளுடைய உள்ளத்தில் அவைகளை எழுதுவேன்,
என்று கர்த்தர் சொல்லுகிறர்;—இனி நான் ௰௭
அவர்களுடைய பாவங்களையுங் குற்றங்களையும்
நினையேன்," என்ருர்.—இவைகள் மன்னிக்கப் ௰௮
பட்டதுண்டானல் பாவபலி இனிச்செலுத்து
வது அவசியமில்லை.—ஆதலால் சகோதரரே, ௰௯
யேசு தமது சரீரமாகிய திரையின் வழியாய்ப்
புதியதும், சீவனையுடையதுமான ஒரு வழியை
நமக்கு உண்டுபண்ணினதினல்,-மிகவும் பரிசுத் ௨௰
தஸ்தானத்திற் பிரவேசிக்க அவருடைய இரத்தத்
தினல் தைரியம்பெற்றேம்.–தேவனுடைய ௨௧
வீட்டின்மேல் மகா ஆசாரியர் ஒருவர் இருக்கிற
படியால்,–நாம், குற்றஞ்சார்த்தும் மனதுநீங்கத் ௨௨
தெளிக்கப்பெற்றஇருதயமும்,சுத்தசலத்தில்தோ
ய்க்கப்பட்ட சரீரமுமுள்ளவர்களாகி, உண்மை
யான சிந்தையோடும், பரிபூரண விசுவாச நிச்ச
யத்தோடுந்தேவனிடத்திற் சேரக்கடவோம்.-
வாக்குத்தத்தம்பண்ணினவர் உண்மையுள்ளவரா ௨௩
யிருக்கிறர்; ஆதலால் நமது நம்பிக்கையை அ
றிக்கையிடுதலை அசையாமற் பற்றிக்கொள்ளக்
கடவோம்.–மேலும் அன்பிலும் நற்கிரியைகளி ௨௪
லும் அதிகரிக்கும்படி, ஒருவரை ஒருவர் விசா
ரித்து எழுப்பி,-சபைகூடிவருதலைச் சிலர் விடு ௨௫
வதுபோல் நாம் செய்யாமல், அந்த நாள் எவ்வ
ளவு சமீபித்துவருவதைப் பார்க்கிறீர்களோ,அவ்
வளவு அதிகமாய்ப் புத்திசொல்லக்கடவோம்.–
சத்தியத்தை அறிந்துகொண்டபின்பு நாம் மனப் ௨௬
பூருவமாய்ப் பாவஞ்செய்தால்,அந்தப்பாவத்துக்
கு இனி ஒரு பிராயச்சித்தமுமில்லை.–விரோதிக ௨௭
ளைப்பட்சிக்குங் குரோத அக்கினியும், நியாயத்
தீர்ப்பும் வருமென்று பயத்தோடே எதிர்பார்ப்ப
துமாத்திரமுண்டு.-மோசேயின் பிரமாணத்தைத் ௨௮
தள்ளினவன்,இரண்டுமூன்று சாட்சிகளின் வாக்
கினல் இரக்கமில்லாமற் கொலைசெய்யப்பட்டா
னே.–தேவனுடைய குமாரனைக் காலின்கீழ் ௨௯
மிதித்து, தன்னைப் பரிசுத்தஞ்செய்த உடன்ப

(௰. அதி. ௧.) கொலோ.௨.௰௭.(௩)லேவி.௰௬.௨௧. மீகா.௬.௬,௭.(௫)சங்.௪௰.௬,. ஏசா.௧.௰௧. எரே.௬.௨௰. ஆமோ.௫.௨௧,௨௨. (௰) யோவா.௰௭.௰௯. (௰௧) எண்.௨௮.௩. (௰௨) கொலோ.௩.௧.(௰௩)சங்.௱௰.௧. அப்.௨.௩௪. ௧.கொரி.௰௫.௨௫. (௰௬) எரே.௩௧.௩௩,௩௪. (௰௯) ரோ.௫.௨. எபே.௨.௰௮. (௨௰) யோவா.௰.௯. (௨௧) ௧.தீமோ.௩.௰௫.(௨௨) எபே.௩.௰௨. யாக்.௧.௬. ௧.யோவா.௩.௨௧. எசேக்.௩௬.௨௫. ௨.கொரி.௭.௧. (௨௩) ௧.கொரி.௧.௮. ௧.தெச.௫.௨௪. ௨.தெச.௩.௩. (௨௫) அப்.௨.௪௨. யூதா.௰௯. ரோ.௰௩.௰௧. பிலி.௪.௫. ௨.பேதுரு.௩.௧,௰௧,௰௪. (௨௬) எண்.௰௫.௩௰. ௨.பேதுரு.௨.௨௰,௨௧. (௨௭) எசேக்.௩௬.௫. செப்.௧.௰௮. ௨.தெச.௧.௮. (௨௮) உபா.௰௭.௨,௬. மத்.௰௮.௰௬. யோவா.௮.௰௭. ௨.கொரி.௰௩.௧. ௧.கொரி.௰௧.௨௯. மத்.௰௨.௩௧,௩௨. எபே.௪.௩௰.

டிக்கையின் இரத்தத்தை அசுத்தமென்றெண்ணி,
கிருபையின் ஆவியை அவமதித்தவன் எவ்வளவு
அதிகதண்டனைக்குப் பாத்திரனாவானென்பதை
௩௰ நினையுங்கள்.—“பழிவாங்குதல் எனக்குரியது,
நான்பிரதிபலனளிப்பேனென்று கர்த்தர் சொ
ல்லுகிறார்,” என்றும், திரும்பவும் “கர்த்தர் தம்
முடைய சனங்களை நியாயந்தீர்ப்பார்,” என்றுஞ்
௩௧ சொல்லியிருக்கிறவர் இன்னாரென்றறிவோம்.—சீ
வனுள்ள தேவனுடைய கையில் அகப்படுவ
௩௨ து மகாபயங்கரம்.-நீங்கள் வெளிச்சமாக்கப்பட்
டபின் உபத்திரவங்களாகிய மிகுந்தபோராட்டத்
தைச்சகித்துக்கொண்ட நாட்களை நினையுங்கள்.-
௩௩ அப்பொழுது நீங்கள் ஒருவிதத்தால் நிந்தைகளி
னாலும், உபத்திரவங்களினாலும், பிறருக்குவே
டிக்கைப்பொருளானீர்கள், மறுவிதத்தால் அவ்
விததுன்பத்தை அனுபவித்தவர்களுக்குந்தோ
௩௪ ழரானீர்கள்.-நான்கட்டப்பட்டிருக்கையில்என்
துக்கத்தில் நீங்களுந் துக்கப்பட்டீர்கள், பரமண்
டலத்தில் அதிகமேன்மையும் நிலையுள்ளதுமான
பொருள் உங்களுக்குண்டென்றுநீங்கள்உணர்ந்
து, உங்களுங்கள் பொருள் கொள்ளையாடப்படு
௩௫ வதைச்சந்தோஷமாகச் சகித்தீர்கள்.-ஆகையால்
மிகுந்தபலனுக்கேதுவான உங்கள்தைரியத்தைத்
௩௬ தள்ளிவிடாதிருங்கள்.-நீங்கள் தேவனுடைய
சித்தத்தை நிறைவேற்றினபின்பு, வாக்குத்தத்தத்
தின்பலனைப் பெற்றுக்கொள்வதற்குப் பொறு
௩௭ மை உங்களுக்கு அவசியம்.-“வருபவர்சொற்ப
௩௮ காலத்துக்குள்ளேவருவார், தாமதியார்.-நீதிமான்
விசுவாசத்தினாலே சீவிப்பான்: பின்வாங்கிப்
போகிறவனெவனோ, அவன்மேல் எனது ஆத்து
௩௯ மா பிரியமாயிராது,” என்கிறார்.—நாம் நாசமடை
யப் பின்வாங்கிப்போகிறவர்களாயிராமல், ஆத்
துமஇரட்சிப்பைப்பெறுவதற்குவிசுவாசிப்பவர்
களுக்குள்ளிருக்கிறோம்.

## ௰௧. அதிகாரம்.

௧. விசுவாசத்தைநிருணித்தல். பலபலதிருஷ்டாந்தங்களினால் அதின்பலனைக்காட்டல்: ௩௨. விசுவாசத்தினால் இன்ன அற்புதங்கள் நடப்பிக்கப்பட்டனவென்றும் இன்ன உபத்திரவங்கள் சகிக்கப்பட்டனவென்றுந்தெரிவித்தல்.

விசுவாசமாவது, நம்பப்படுகிறவைகளின் நிச்ச
யமும், காணப்படாதவைகளை வெளிப்படுத்துகி
௨ றதுமாம்.—அதினால் முதியோர் நற்சாட்சியைப்
௩ பெற்றார்கள்.-உலகங்கள் தேவவாக்கினாற்சிருஷ்
டிக்கப்பட்டனவென்றும், இப்படிக் காணப்படு
கிறவைகள் காணப்படுகிறவஸ்துகளினால் உண்
டாக்கப்படவில்லையென்றும் விசுவாசத்தினால்
அறிந்திருக்கிறோம்.-விசுவாசத்தினால் ஆபேல் கா ௪
யீனுடையபலியிலுஞ் சிரேஷ்டமான பலியைத்
தேவனுக்குச் செலுத்தினான், அதினால் தான்
நீதிமானென்று சாட்சிபெற்றான், தேவன் அ
வனுடைய காணிக்கைகளைக்குறித்துச்சாட்சியி
ட்டார்: அவன்மரித்தும் அதினால் இதுவரைக்
கும் பேசுகிறான்.—விசுவாசத்தினால் ஏனோகு ௫
மரியாமல் எடுத்துக்கொள்ளப்பட்டான்; தே
வன் அவனை எடுத்துக்கொண்டபடியினால் அ
வன்காணப்படாமற்போனான்: அவன் எடுத்துக்
கொள்ளப்படுவதற்குமுன்னே தான் தேவனுக்
குப் பிரியமானவனென்று சாட்சிபெற்றான்.—
விசுவாசமில்லாமல் தேவனைப்பிரியப்படுத்தக் ௬
கூடாது: அவர் இருக்கிறவரென்றும், தம்மைச்சா
க்கிரதையாய்த்தேடுகிறவர்களுக்குப்பலனளிக்கி
றவரென்றும் அவரிடத்திற்சேருகிறவன், விசுவா
சிப்பதே அவசியம்.—நோவாவும் விசுவாசத்தி ௭
னாலே, வருங்காரியங்களைக்குறித்துத் தேவனா
ல் உணர்த்தப்பட்டு, பயபத்தியாகத்தன்குடும்பத்
தை இரட்சிப்பதற்குப் பேழையைச்செய்தான்;
அதினால் அவன் உலகங்குற்றமுள்ளதென்பதற்
குத்தீர்ப்புக்கொடுத்து, விசுவாசத்தினாலேவரும்
நீதிக்குச்சுதந்தரனானான்.—ஆபிரகாமுந்தான்பின் ௮
புசுதந்தரமாகப்பெறும் ஸ்தானத்திற்குப்போகப்
புறப்பட அழைக்கப்பட்டபொழுது, விசுவா
சத்தினால் அமைந்து, தான்போகும் இடமெங்
கேயென்றறியாமற் புறப்பட்டுப்போனான்.—த ௯
னக்குவாக்குத்தத்தம்பண்ணப்பட்ட அந்நியதே
சத்தில் அவன், அந்தவாக்குத்தத்தத்திற்கு உடன்
சுதந்தரராகிய ஈசாக்கோடும், யாக்கோபோடும்
விசுவாசத்தினாலே சஞ்சரித்து, கூடாரங்களிலே
குடியிருந்தான்.—தேவன் தாமே உண்டாக்கிக் ௰
கட்டிவருகிற அஸ்திபாரமுள்ள நகரத்தை எதிர்
பார்த்திருந்தான்.-சாராளும், வாக்குத்தத்தம்பண் ௰௧
ணினவர் உண்மையுள்ளவரென்றெண்ணி, விசு
வாசத்தினாலே கருப்பந்தரிக்கும்படி பெலன்
கொண்டு, வயதுசென்றவளாயிருந்தும் பிள்ளை
பெற்றாள்.—ஆதலால் மரித்தவன்போன்ற ஒருவ ௰௨
னில் வானத்திலுள்ளதிரளானநட்சத்திரங்களைப்
போலவும், கடற்கரையின் எண்ணிறந்தமணலை
ப்போலவும் மிகுந்தசனங்கள் தோன்றினார்
கள்.—வாக்குத்தத்தங்களிலுள்ள பலனைப்பெறா ௰௩
மல், அவைகளைத்தூரமாய்க்கண்டு, உறுதியாய்நம்
பித்தழுவி, பூமியிலே தாங்கள் பரதேசிகளும் யா
த்திரைக்காரருமாயிருந்தார்களென்பதை அறிக்

(௩௰) உபா.௩௨.௩௫. ரோ.௰௨.௰௯. உபா.௩௨.௩௬. சங்.௫௰.௪. (௩௧) லூக்.௰௨.௫. (௩௨) கலா.௩.௪. ௨.யோவா.௮. பிலி.௧.௨௯,௩௰. கொலோ.௨.௧. (௩௩) ௧.கொரி.௪.௯. பிலி.௧.௭. ௧.தெச.௨.௰௪. (௩௪) பிலி.௧.௭. ௨.தீமோ.௧.௰௬. மத்.௫.௰௨. அப்.௫.௪௧. யாக்.௧.௨. மத்.௬.௨௰. லூக்.௰௨.௩௩. ௧.தீமோ.௬.௰௯. (௩௫) மத்.௫.௰௨. (௩௬) லூக்.௨௧.௰௯. கலா.௬.௯. கொலோ.௩.௨௪. ௧.பேதுரு.௧.௯. (௩௭) லூக்.௰௮.௮. ௨.பேதுரு.௩.௯. அபகூ.௨.௩,௪. (௩௮) ரோ.௧.௰௭. கலா.௩.௰௧. (௩௯) ௨.பேதுரு.௨.௨௰,௨௧. அப்.௰௬.௩௰,௩௧. ௧.தெச.௫.௯. ௨.தெச.௨.௰௪.—(௰௧. அதி. ௧.) ரோ.௮.௨௪,௨௫. ௨.கொரி.௪.௰௮. (௩) ஆதி.௧.௧. சங்.௩௩.௬. யோவா.௧.௩. ௨.பேதுரு.௩.௫. (௪) ஆதி.௪.௪. ௧.யோவா.௩.௰௨. ஆதி.௪.௰. மத்.௨௩.௩௫. (௫) ஆதி.௫.௨௨,௨௪. (௭) ஆதி.௬.௰௩,௨௨. ௧.பேதுரு.௩.௨௰. ரோ.௩.௨௩. ரோ.௪.௰௩. பிலி.௩.௯. (௮) ஆதி.௰௨.௧,௪. அப்.௭.௨,௩,௪. (௯) ஆதி.௰௨.௮. (௰) வெளி.௨௧.௨,௰. (௰௧) ஆதி.௰௭.௰௯. ரோ.௪.௨௧. (௰௨) ரோ.௪.௰௯. ஆதி.௨௨.௰௭. ரோ.௪.௰௮. (௰௩) யோவா.௮.௫௬. ஆதி.௪௭.௯. ௧.நாளா.௨௯.௰௫. சங்.௩௯.௰௨. சங்.௱௰௯.௰௯.

கையிட்டு, அவர்களெல்லாரும் விசுவாசத்தோ
௰௪ டே மரணமடைந்தார்கள்.-இவ்விதமாக அறிக்
கையிடுகிறவர்கள், தங்கள் சுயதேசத்தைநாடிப்
போகிறோமென்று தெரியப்படுத்துகிறார்கள்.—
௰௫ அவர்கள் தாங்கள்விட்டுவிட்டதின்மேற் சிந்தை
வைத்தார்களானால், அதற்குத் திரும்பிப்போவ
௰௬ தற்கு இடமுண்டே.-அதையல்ல, அதிலும் மே
ன்மையான பரமண்டலத்திலுள்ளதையே அ
பேட்சித்தார்கள்: அதினிமித்தந் தேவன் அவர்
களுடைய தேவனென்று பெயர்ப்படுவதற்
கு இலச்சைப்படவில்லை: அவர்களுக்கு ஒரு ந
௰௭ கரத்தை ஆயத்தம்பண்ணினார்.—ஆபிரகாம் சோ
திக்கப்பட்டபொழுது விசுவாசத்தினால் ஈசாக்
௰௮ கைப் பலியாக ஒப்புக்கொடுத்தான்—"ஈசாக்கி
ன்வழியாய் உன் சந்ததிவிளங்கும்," என்று அ
வனுக்குச்சொல்லப்பட்டதே: இப்படிப்பட்ட
வாக்குத்தத்தங்களைப்பெற்றவன், தேவன் இ
வனை மரித்தோரினின்றும் எழுப்ப வல்லவரா
யிருக்கிறாரென்றெண்ணி, தனது ஒரேபேறான
௰௯ வனையே பலியாக ஒப்புக்கொடுத்தான்.—அப்ப
டியே அதினின்றுந் திருஷ்டாந்தமாக அவனை
௨௰ ப்பெற்றுக்கொண்டான்.—ஈசாக்கு, வருங்காரி
யங்களைக்குறித்து, விசுவாசத்தினாலே யாக்கோ
௨௧ பையும் ஏசாவையும் ஆசீர்வதித்தான்.-யாக்கோ
பு மரணகாலத்தில் விசுவாசத்தினாலே யோசேப்
பின் புத்திரர் இருவரையும் ஆசீர்வதித்து, தன்
கோலின் நுனியிற் சாய்ந்து தொழுதுகொண்
௨௨ டான்.—யோசேப்புத் தன் சீவகாலத்தின் முடி
வில் இஸ்ரவேல்சந்ததியார்புறப்படுவார்களென்
பதை விசுவாசத்தினாலேசொல்லி, தன் எலும்பு
௨௩ களைக்குறித்துக் கட்டளைகொடுத்தான்.-மோசே
பிறந்தபொழுது அவன் பெற்றார் அவனை அழ
குள்ள பிள்ளையென்று கண்டு, விசுவாசத்தினால்
இராசாவின் கட்டளைக்குப்பயப்படாமல் மூன்
௨௪ று மாதம் ஒளித்து வைத்திருந்தார்கள்.—விசுவா
சத்தினாலே மோசேயும் பெரியவனானபொழுது,
பார்வோனுடையகுமாரத்தியின் புத்திரனென்று
௨௫ பெயர்பெறுவதற்கு உடன்படாமல்,-அநித்திய
மான பாவஇன்பங்களை அனுபவிப்பதிலும்,தே
வனுடைய சனங்களோடே துன்பத்தைச் ச
கிப்பது நலமென்று தெரிந்துகொண்டான்.—
௨௬ வரும்பலனை அவன் நோக்கிப்பார்த்து, எகிப்தி
லுள்ள பொக்கிஷங்களிலும் கிறிஸ்துவினி
மித்தம் நிந்தைஅனுபவிப்பது அதிக ஐசுவரிய
௨௭ மென்றெண்ணினான்.-அதரிசியமானவரைத் தரி
சித்தாற்போலப் பொறுமையாயிருந்து, இராசா
வின் குரோதத்துக்கஞ்சாமல் விசுவாசத்தினால்
எகிப்தைவிட்டுப்போனான்.-தலைப்பிள்ளைகளைச் ௨௮
சங்கரிக்கிறவன் இஸ்ரவேலரைத்தொடாதபடி,
அவன் விசுவாசத்தினாலே பஸ்காவையும், இரத்
தந்தெளித்தலையும்ஏற்படுத்தினான்.—விசுவாசத்தி ௨௯
னால்அவர்கள்செங்கடலை உலர்ந்த தரையைப்
போலக் கடந்துபோனார்கள்: எகிப்தியர் அப்ப
டிச்செய்யத்துணிந்து, அமிழ்ந்துபோனார்கள.—
விசுவாசத்தினாலே யெரிகோவின்மதில்கள் ஏழு ௩௰
நாளளவுஞ் சூழப்பட்டு விழுந்தன.—இராகாப் ௩௧
பென்னும் வேசை விசுவாசத்தினால் வேவுகார
ரைச் சமாதானத்தோடே ஏற்றுக்கொண்டதினி
மித்தம், அவிசுவாசிகளோடே நாசப்படாதிருந்
தாள்.—மேலும் அதிகமாய் நான் என்னத்தைச் ௩௨
சொல்லுவேன்;கிதேயோன்,பாரக், ஷிம்ஷோன்,
யெப்தா, தாவீது, சாமுவேல் என்பவர்களையும்,
தீர்க்கதரிசிகளையுங் குறித்துச் சொல்லக் காலம்
போதாது.—அவர்கள்விசுவாசத்தினால் இராச்சி ௩௩
யங்களை வசப்படுத்தினார்கள், நீதியை நடப்பித்
தார்கள், வாக்குத்தத்தங்களைப்பெற்றார்கள், சிங்
கங்களின் வாய்களைக் கட்டினார்கள்,-அக்கினி ௩௪
யின்அகோரத்தைத்தணித்தார்கள், கட்கத்தின்கூ
ருக்குத் தப்பினார்கள், பலவீனத்திற் பலன்கொ
ண்டார்கள்,யுத்தத்தில் வீரர்களாய் அந்நியருடை
ய சேனைகளைக் கவிழ்த்துவிட்டார்கள்.-மேலும் ௩௫
ஸ்திரிகளும்,மரித்ததங்களுடையவர்களை உயிர்த்
தெழுந்தவர்களாகப்பெற்றார்கள்:வேறுசிலர்அதி
சிரேஷ்டமுள்ள உயிர்த்தெழுதலைப்பெறும்பொ
ருட்டு விடுதலையைப்பெறச் சம்மதியாமல் வா
திக்கப்பட்டார்கள்.—வேறு சிலர் நிந்தைகளை ௩௬
யும், அடிகளையும், சங்கிலிகளையும், காவலையுஞ்
சகித்துக்கொண்டார்கள்:-கல்லெறியப்பட்டார் ௩௭
கள்,வாளால் அறுக்கப்பட்டார்கள், சோதிக்கப்
பட்டார்கள்,கட்கத்தினால் வெட்டப்பட்டுமரித்
தார்கள்: செம்மறியாட்டுத் தோல்களையும், வெள்
ளாட்டுத்தோல்களையும்போர்த்து,குறைவையும்,
உபத்திரவத்தையும்,வேதனையையுஞ் சகித்திருந்
து,—வனங்களிலேயும், மலைகளிலேயும், குகை ௩௮
களிலேயும், பூமியின் குழிகளிலேயுஞ் சிதறுண்
டு அலைந்தார்கள்.-உலகம் இவர்களுக்குப்பாத்தி ௩௯
ரமானதல்ல: இவர்களெல்லாரும் விசுவாசதைக்
குறித்து நற்சாட்சியைப்பெற்றும் வாக்குத்தத்தத்
தின் பலனை அடையவில்லை.-தேவன் நமக்கா ௪௰
க அதிகசிரேஷ்டமானதை ஏற்படுத்தினார், ஆத
லால் நம்மையன்றி, அவர்கள் சம்பூரணப்படா
திருந்தார்கள்.

(௰௬) யாத்.௩.௬,௰௫. மத்.௨௨.௩௧. அப்.௭.௩௨. பிலி.௩.௨௰. (௰௭) ஆதி.௨௨.௧,௯. (௰௮) ஆதி.௨௧.௰௨. ரோ.௯.௭.
(௰௯) ரோ.௪.௰௭,௰௯,௨௧. யாக்.௨.௨௧. (௨௰) ஆதி.௨௭.௨௭,௩௯. (௨௧) ஆதி.௪௮.௫,௰௫,௨௰. ஆதி.௪௭.௩௧. (௨௨)
ஆதி.௫௰.௨௪,௨௫. யாத்.௰௩.௯. (௨௩) யாத்.௨.௨. அப்.௭.௨௰. யாத்.௧.௰௬,௨௨.(௨௪)யாத்.௨.௰,௰௧. (௨௫) சங்.௮௪.
௰. (௨௭) யாத்.௰.௨௮,௨௯. (௨௮) யாத்.௰௨.௨௧,. (௨௯) யாத்.௰௪.௨௨,௨௯. (௩௰) யோசு.௬.௨௰.(௩௧)யோசு.௬.௨௩.
யாக்.௨.௨௫. யோசு.௨.௧. (௩௨) நியா.௬.௰௧. நியா.௪.௬. நியா.௰௩.௨௪. நியா.௰௧.௧. ௧.சாமு.௰௬.௧,௰௩. ௧.சாமு.
௧.௨௰. (௩௩) ௨.சாமு.௭.௰௧,. நியா.௰௪.௫,௬. ௧.சாமு.௰௭.௩௪,௩௫. தானி.௬.௨௨.(௩௪)தானி.௩.௨௫. ௧.சாமு.௨௰.
௧. ௧.இரா.௰௯.௩. ௨.இரா.௬.௰௬. ௨.இரா.௨௰.௭,. யோபு.௪௨.௰. சங்.௬.௮. நியா.௰௫.௮,௰௫. ௧.சாமு.௰௪.௰௩,.
௨.சாமு.௮.௧. (௩௫) ௧.இரா.௰௭.௨௨. ௨.இரா.௪.௩௫. அப்.௨௨.௨௫.(௩௬)ஆதி.௩௯.௨௰. எரே.௨௰.௨.(௩௭)௧.இரா.
௨௧.௰௩. ௨.நாளா.௨௪.௨௧. அப்.௭.௫௮. ௨.இரா.௧.௮. மத்.௩.௪. சக.௰௩.௪.(௩௮)௧.இரா.௰௮.௪.(௪௰)வெளி.௬.௰௧.

## ௰௨. அதிகாரம்.

௧. விசுவாசத்திலும், துயரத்திலும்,பத்தியிலும் ஸ்திரமாயிருக்கும்படி வேண்டல்: ௨௨. நியாயப்பிரமாணத்தின் நன்மையிலுஞ்சுவிசேஷத்தின் நன்மை உத்தமமென்றுகாட்டல்.

ஆதலால் மேகம்போன்ற இவ்வளவுதிரளான
சாட்சிகள் நம்மைச்சூழ்ந்திருக்க, பாரமான யா
வற்றையும், நம்மைச்சுற்றிநிற்கிற பாவத்தையுந்
தள்ளிவிட்டு, நம்முடைய விசுவாசத்தின் கா
ரணரும், முற்றுவிக்கிறவருமாகிய யேசுவை
நோக்கி நமக்கு நியமிக்கப்பட்ட ஒட்டத்திற்
௨ பொறுமையுடன் ஓடக்கடவோம்.-அவர்தமக்கு
முன்வைத்திருந்த சந்தோஷத்தைப்பெறும்பொ
ருட்டு அவமானத்தை அற்பமாய் எண்ணி, சிலு
வையைச்சகித்து, தேவனுடைய சிங்காசனத்
௩ தின் வலதுபாரிசத்தில் வீற்றிருக்கிறார்.-ஆதலால்
உங்கள்உங்கள் மனஞ்சோர்ந்துபோகநீங்கள்தை
ரியமற்றவர்களாகாதபடி, பாவிகளால் இவ்வித
விபரீதத்தைச்சகித்தஅவரையேநினைத்துக்கொள்
௪ ளுங்கள்.—பாவத்துக்கு விரோதமாய்ப்போராடி,
இதுவரைக்கும் நீங்கள்இரத்தஞ்சிந்தப்படத்தக்க
௫ தாக எதிர் நிற்கவில்லையே.—அன்றியும் "என் ம
கனே, கர்த்தர்செய்யுந்தண்டனையை அலட்சி
யம்பண்ணாதே, அவரினின்றுவருந் தண்டனை
௬ யினாலே சோர்ந்துபோகாதே," என்றும்,—"கர்த்
தரால் அன்பு கூரப்பட்டவனெவனோ, அவ
னை அவர் தண்டித்து, தாம் சேர்த்துக்கொள்ளும்
எந்தமகனையுந் தண்டிப்பார்," என்றும் பிள்ளைக
ளாகிய உங்களுக்குச்சொல்லியிருக்கிற உபதே
௭ சத்தை மறந்தீர்களா.—நீங்கள் தண்டனையைச்
சகிக்கையில் தேவன் உங்களைப் பிள்ளைகளைப்
போலநடத்துகிறார்; பிதாவினால் தண்டிக்கப்ப
௮ டாத புத்திரனுண்டா.-எல்லாரும் அனுபவிக்குந்
தண்டனை உங்களுக்குக்கிடையாதிருந்தால், நீங்
கள் புத்திரராயிராமல் வேசைமக்களாயிருப்பீர்க
௯ ளே.-அன்றியும் நம்முடைய சரீரத்துக்குப்பிதாக்
களானவர்கள் நம்மைத் தண்டிக்கும்பொழுது
நாம் அவர்களுக்கு வந்தனஞ்செய்தோமாகில்,
நாம் சீவிக்கும்படி ஆவிகளுக்குப் பிதாவானவ
ருக்கு எவ்வளவுஅதிகமாய்அமைந்திருக்கவேண்
௰ டும்.—அவர்கள் சொற்பகாலந் தங்கள் சுய இஷ்ட
த்தின்படி நம்மைத் தண்டித்தார்கள்; இவரோ
நம்முடைய நன்மையினிமித்தந் தமது பரிசுத்
தத்துக்கு நாம்பங்காளராவதற்குத்தண்டிக்கிறார்.-
எந்தத்தண்டனையும் பலிக்கிறபொழுது சந்தோ ௰௧
ஷத்தைத்தராது, துக்கத்தையே தரும்: ஆனாலும்
பயிற்சிப்பட்டவர்களுக்கு, பின்பு அது நீதியின்
சமாதானபலனைத்தருகின்றது.—ஆதலால் சலித் ௰௨
தகைகளையும், உழைத்தகால்களையுஞ் செவ்வை
பண்ணுங்கள்.—முடமுள்ளது புரண்டுபோகா ௰௩
மல் சொஸ்தமாகும்படி, உங்கள் கால்களுக்குச்
சமபாதைகளைச் செவ்வைபண்ணுங்கள்.—யாவ ௰௪
ரோடும் சமாதானமாயிருக்கவும், பரிசுத்தராயி
ருக்கவுஞ் சாக்கிரதையாயிருப்பீர்களாக, பரிசுத்
தமில்லாமல் எவனுங் கர்த்தரைத்தரிசிப்ப
தில்லை:—ஒருவனுந் தேவனுடைய கிருபை ௰௫
யைவிட்டு வழுவாதபடிக்கும், அநேகர் அசுசிப்
படத்தக்கதாகக் கசப்புள்ள வேர் உங்களுக்குள்
ளே தோன்றிக் கலக்கமுண்டாக்காதபடிக்கும்,—
ஒருவரும் வேசைமார்க்கரும், ஒரேவேளைச் சா ௰௬
ப்பாட்டுக்காகத் தன் சேஷ்டபுத்திர அதிகாரத்
தைவிற்ற ஏசாவைப்போல லௌகீகசிந்தையுள்
ளவர்களுமாயிராதபடிக்கும் எச்சரிக்கையாயிரு
ப்பீர்களாக.—உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, ௰௭
அவன் பின்பு ஆசீர்வாதத்தின் சுதந்தரத்தைப்
பெற்றுக்கொள்ள விரும்பியும் அங்கிகரிக்கப்ப
டாதிருந்தான்: அவன் கண்ணீர்விட்டுக் கவலை
யோடே அதைத் தேடியும் மனந்திரும்புவதற்கு
இடங்காணாமற்போனான்.—தொடக்கூடிய மலை, ௰௮
எரிகிற அக்கினி, மந்தாரம், அந்தகாரம், பெருங்
காற்று,-எக்காளத்தொனி,வாக்கின்சத்தமாகியஇ ௰௯
வைகளிடத்தில் நீங்கள்சேரவில்லை; கேட்டவர்
கள் பின்னும் வாக்குத் தங்களுக்குச்சொல்லப்ப
டாதபடிக்குவேண்டிக்கொண்டார்கள்.-"ஒருமி ௨௰
ருகமாகிலும் மலையைத்தீண்டினால்,கல்லெறியப்
படும்,அல்லது அம்பினால் ஊடுருவப்படும்," என்
று சொல்லப்பட்ட கட்டளையை அவர்கள் சகிக்
கமாட்டாதிருந்தார்கள்.—மோசேயும், "நான்மிக ௨௧
வும்அதிகமாய்ப்பயப்பட்டுநடுங்குகிறேன்," என்
று சொல்லும்படி, அந்தத் தரிசனம் அவ்வளவு
பயங்கரமாயிருந்தது.—நீங்களோ, சீயோன் மலை ௨௨
யையும், பரமயெருஷலேமாகிய சீவனுள்ள தே
வனுடைய நகரத்தையும், ஆயிரம் பதினாயிரந்
தேவதூதர்களின் சங்கத்தையும்,—பரமண்டலத் ௨௩
திற்பெயர் எழுதியிருக்கிற முதற்பேறானவர்க
ளின்மகா சங்கத்தையும் சபையையும்,யாவருக்
கும்நியாயாதிபதியாகிய தேவனையும், சம்பூர
ணபலனைப்பெற்றவர்களாகிய நீதிமான்களின்

---

(௰௨. அதி. ௧.) கொலோ.௩.௮. ௧.பேதுரு.௨.௨. ௧.கொரி.௯.௨௪. பிலி.௩.௰௩,௰௪. ரோ.௰௨.௰௨. அதி.௰.௩௯. (௨) லூக்.௨௪.௨௬. பிலி.௨.௮,. ௧.பேதுரு.௧.௰௧. சங்.௱௰.௧. ௧.பேதுரு.௩.௨௨. (௩) மத்.௰.௨௪,௨௫. யோவா.௰௫.௨௰. கலா.௬.௯. (௪) ௧.கொரி.௰.௰௩. (௫) யோபு.௫.௰௭. நீதி.௩.௰௧. (௬) சங்.௯௪.௰௩. நீதி.௩.௰௨. யாக்.௧.௰௨. வெளி.௩.௰௯.(௭)உபா.௮.௫. ௨.சாமு.௭.௰௫. நீதி.௰௩.௨௪. (௮) சங்.௭௩.௰௫. ௧.பேதுரு.௫.௯.(௯)எண்.௰௬.௨௨. யோபு.௰௨.௰. பிர.௰௨.௭. ஏசா.௪௨.௭. சகரி.௰௨.௧. (௰) லேவி.௰௧.௪௪. ௧.பேதுரு.௧.௰௫,௰௬. யாக்.௩.௰௮.(௰௨)யோபு.௪.௩,௪. ஏசா.௩௫.௩. (௰௩) நீதி.௪.௨௬,௨௭. கலா.௬.௧. (௰௪) சங்.௩௪.௰௪. ரோ.௰௨.௰௮. ௨.தீமோ.௨.௨௨. மத்.௫.௮. ௨.கொரி.௭.௧. எபே.௫.௫. (௰௫) ௨.கொரி.௬.௧. கலா.௫.௪. உபா.௨௯.௰௮. (௰௬) எபே.௫.௩. கொலோ.௩.௫. ௧.தெச.௪.௩. ஆதி.௨௫.௩௩. (௰௭) ஆதி.௨௭.௩௪,௩௬,௩௮. (௰௮) யாத்.௰௯.௰௨,௰௮,௰௯. யாத்.௨௰.௰௮. உபா.௪.௰௧. ரோ.௬.௰௪. ௨.தீமோ.௧.௭. (௰௯) யாத்.௨௰.௰௯. உபா.௫.௪,௨௫. (௨௰) யாத்.௰௯.௰௩. (௨௧) யாத்.௰௯.௰௬. (௨௨) கலா.௪.௨௬. வெளி.௩.௰௨. பிலி.௩.௨௰. உபா.௩௩.௨. சங்.௬௮.௰௭. யூதா.௰௪. (௨௩) யாத்.௪.௨௨. யாக்.௧.௰௮. வெளி.௰௪.௪. லூக்.௰.௨௰. பிலி.௪.௩. வெளி.௰௩.௮. ஆதி.௰௮.௨௫. சங்.௯௪.௨. பிலி.௩.௰௨.

௨௪ ஆவிகளேயும்,-புதியஉடன்படிக்கையின் மத்திய
ஸ்தராகிய யேசுவையும், ஆபேலின் இரத்தத்
திலும் அதிகநன்மைகளே அறிவித்துத்தெளிக்கப்
பட்ட இரத்தத்தையுஞ் சேர்ந்திருக்கிறீர்கள்.—
௨௫ வசனித்தவரைநீங்கள் அலட்சியம்பண்ணுதபடி
சாவதானமாயிருங்கள். பூமண்டலத்தில்வசனித்
தவனே அலட்சியம்பண்ணினவர்கள்தப்பாதிருந்
தார்களாகில்,பரமண்டலத்தில்வசனிக்கிறவரிட
த்திற் பராமுகம்பண்ணினல் எப்படித்தப்பலா
௨௬ ம்.—அப்பொழுது அவருடைய சத்தத்தினுற் பூமி
அதிர்ந்தது:“இனி ஒருகாலத்திற் பூமியைமாத்திர
மல்ல,வானத்தையும்அதிரப்பண்ணுவேன்,”என்
று இப்பொழுது வாக்குத்தத்தஞ் செய்திருக்கி
௨௭ ருர்.—இனி ஒருகாலத்திலென்பது, அசைவில்
லாதவைகள் நிலைத்திருக்க, சிருஷ்டிக்கப்பட்ட
வைகளாகிய அசைவுள்ள வஸ்துக்கள் நீக்கப்ப
௨௮ டுமென்பதைக் குறிக்கின்றது.—ஆதலால் அசை
வில்லாத இராச்சியத்தை நாம்பெற்றுக்கொண்டி
ருக்க,பயத்தோடும்பத்தியோடுந்தேவனுக்குப்
பிரியமாய் ஆராதனே செய்யத்தக்க கிருபையைப்
௨௯ பற்றிக்கொள்ளக்கடவோம்.—நம்முடைய தே
வன் பட்சிக்கும் அக்கினி.

## ௰௩. அதிகாரம்.

க. சகோதர அன்பைவிவரித்தல்: ௯. பலபலபோ
தகத்தினுற் சஞ்சலப்படாதபடி எச்சரிக்கைப்
படுத்தல்: ௰௭. போதகருக்கமைந்திருப்பது க
டமையென்று காட்டல்: ௨௰. மங்கலபிரார்த்
தனையைச் சொல்லல்.

௨ சகோதர நேசம் நிலைத்திருக்கக்கடவது.—நீங்
கள் அந்நியரை உபசரிப்பதை மறவாதிருப்பீர்க
ளாக: அதினுற் சிலர் அறியாமல் தேவதூதரையு
௩ ம் உபசரித்தார்கள்.—கட்டப்பட்டிருக்கிறவர்க
ளோடே நீங்கள்கூடக்கட்டப்பட்டவர்கள்போ
ல அவர்களே நினைத்துக்கொள்ளுங்கள்; உங்களே
யுஞ்சரீரத்தோடிருக்கிறவர்களென்று அறிந்துபா
௪ டுபடுகிறவர்களே நினைத்துக்கொள்ளுங்கள்.—வி
வாகமும்சுசியானபடுக்கையும்யாவருக்குள்ளுங்
கனம்பொருந்தியவைகளென்று மதிக்கப்படக்க
டவன:வேசைமார்க்கருக்கும்விபசாரிகளுக்குந்
௫ தேவன் நியாயத்தீர்ப்புக்கொடுப்பாரே.-நீங்கள்
பொருளாசையில்லாமல்நடந்து, உங்களுக்குண்
டானவைகள் போதுமென்றெண்ணக்கடவீர்க
ள்: அவர், “நான் ஒருபொழுதும் உன்னேப்பிரி
யவும், உன்னேக்கைவிடவும் மாட்டேன்,” என்

று சொல்லியிருக்கிருர்.—ஆதலால் கர்த்தரே ௬
எனக்குத்துணே, மனுஷன் எனக்குச்செய்யக்கூ
டியதைக்குறித்து நான் பயப்படேனென்று நாம்
தைரியத்தோடு சொல்லலாம்.—தேவ வாக்கை ௭
உங்களுக்குப்போதித்து, உங்களே நடத்துகிறவர்
களே நீங்கள்நினைந்து, அவர்களுடையநடக்கை
யின்முடிவை நன்ருகச்சிந்தித்து, அவர்களுடை
ய விசுவாசத்தைப் பின்பற்றக்கடவீர்கள்.—யே ௮
சுக்கிறிஸ்து நேற்றும்,இன்றும், என்றும் ஒரே
விதமாயிருக்கிருர்.—நீங்கள் பலவித நூதன ௯
மான போதனைகளினுல் அலைவுபடாதிருப்பீர்க
ளாக. போசன பதார்த்தங்களினுலல்ல, கிருபை
யினுலே மனதுஸ்திரமாயிருப்பது உத்தமம்; அ
வைகளிற் பழகியிருக்கிறவர்கள் அவைகளினு
லே பலனடைந்ததில்லை.—நமக்குண்டான வே ௰
திகையிலுள்ளவைகளே ஆவாசத்தில் ஆராதனே
செய்கிறவர்கள் புசிக்கிறதற்கு அதிகாரமில்லை.—
மகா ஆசாரியன் பாவபிராயச்சித்தஞ் செய்வதற் ௰௧
கு மிருகங்களின் இரத்தத்தைப் பரிசுத்தஸ்தான
த்திற் கொண்டுவருகிறபொழுது, அவைகளின்
உடல்கள் பாளயத்துக்குப்புறம்பே தகிக்கப்ப
டும்.—அவ்வண்ணமே யேசுவும் தமது இரத்தத் ௰௨
தினுற் சனங்களேப் பரிசுத்தப்படுத்துவதற்கு, நக
ரவாசலுக்குப்புறம்பே வேதனைப்பட்டார்.—ஆத ௰௩
லால் நாம் அவருடனே நிந்தையைச் சகிக்கிற
வர்களாகி, அவருடன் பாளயத்துக்குப்புறம்பே
புறப்படக்கடவோம்.—நமக்கு நிலையான நக ௰௪
ரம் இங்கேயில்லை, வருவதாகிய ஒன்றைத்தே
டுகிறேம்.—மேலும்அவருடைய நாமத்தைத் து ௰௫
திக்கிற உதடுகளின் கனியாகிய ஸ்தோத்திரபலி
யை நாம் அவர் மூலமாக இடைவிடாமல் தே
வனுக்குச் செலுத்தக்கடவோம்.—நன்மையை ௰௬
யும், தானதருமத்தையுஞ்செய்ய மறவாதிருப்பீர்
களாக: இவ்விதமான பலிகள்மேல் தேவன்
மிகவும் பிரியமாயிருக்கிருர்.—உங்களே நடத்து ௰௭
கிறவர்கள் கணக்கு ஒப்பிக்கிறவர்களாய், உங்
கள் ஆத்துமங்களேக்குறித்து விழித்திருக்கிறபடி
யால், அவர்கள் துக்கமாயல்ல, சந்தோஷமாய்
அதைச்செய்யும்படிக்கு அவர்களுக்கு அமைந்
து அடங்குவீர்களாக: அவர்கள் துக்கமாய் அப்
படிச்செய்தால் உங்களுக்குப் பலன்வராது.—
மேலும் நீங்கள் எங்கள் நிமித்தம் வேண்டுதல்ப ௰௮
ண்ணுங்கள்: எல்லாவற்றிலும் நேர்மையாய் ந
டக்கவிரும்புகிற எங்களுக்கு நன்மனச்சாட்சி

(௨௪) யாத்.௨௪.௮. க.பேதுரு.க.௨. ஆதி.௪.௰. (௨௬) யாத்.௰௯.௰௮. ஆகா.௨.௬. (௨௭) சங்.௱௨.௨௬. மத்.௨௪.௩௫. ௨.பேதுரு.௩.௰.வெளி.௨க.க.(௨௯)யாத்.௨௪.௰௭.உபா.௪.௨௪.சங்.௫௰.௩.ஏசா.௬௬.௰௫. ௨.தெச.க.௮.—(௰௩.அதி. க.) ரோ.௰௨.௰. க.தெச.௪.௯. க.பேதுரு.க.௨௨. ௨.பேதுரு.க.௭. க.யோவா.௩.௰க,. (௨) மத்.௨௫.௩௫. ரோ.௰௨. ௰௩. க.தீமோ.௩.௩. க.பேதுரு.௪.௯. ஆதி.௰௮.௩. (௩) மத்.௨௫.௩௬. ரோ.௰௨.௰௫. க.கொரி.௰௨.௨௬. கொலோ.௪. ௰௮. க.பேதுரு.௩.௮. (௪) க.கொரி.௬.௯. கலா.௫.௰௯,௨க. எபே.௫.௫. கொலோ.௩.௫,௬. வெளி.௨௨.௰௫. (௫) மத்.௬.௨௫,௩௪. பிலி.௪.௰க,௰௨. க.தீமோ.௬.௬,௮. ஆதி.௨௮.௰௫. உபா.௩௧.௬,௮. யோசு.க.௫. க.நாளா.௨௮.௨௰. சங்.௩௭.௨௫.(௬)சங்.௨௭.க.(௮)யோவா.௮.௫௮. வெளி.க.௪.(௯)எபே.௪.௰௩. கொலோ.௨.௪,௮. க.யோவா.௪.க. ரோ.௰௪.௰௭. கொலோ.௨.௰௬. க.தீமோ.௪.௩.(௰)க.கொரி.௯.௰௩.(௰க)யாத்.௨௯.௰௪. லேவி.௪.௰க,௰௨,௨க. எண். ௰௯.௩.(௰௨)யோவா.௰௯.௰௭,௰௮. அப்.௭.௫௮. (௰௩) க.பேதுரு.௪.௰௪. (௰௪) மீகா.௨.௰. பிலி.௩.௨௰.(௰௫)எபே. ௫.௨௰. க.பேதுரு.௨.௫. லேவி.௭.௰௨. சங்.௫௰.௰௪,௨௩. ஓசி.௰௪.௨. (௰௬) ரோ.௰௨.௰௩. ௨.கொரி.௯.௰௨. பிலி. ௪.௰௮. (௰௭) பிலி.௨.௨௯. க.தெச.௫.௰௨. க.தீமோ.௫.௰௭. எசேக்.௩.௰௭. அப்.௨௰.௨௬,௨௮. (௰௮)ரோ.௰௫.௩௨. எபே.௬.௨௰. கொலோ.௪.௪. க.தெச.௫.௨௫. ௨.தெச.௩.௨. அப்.௨௩.க. ௨.கொரி.க.௰௨.

௰௯ யுண்டென்று நிச்சயித்திருக்கிறோம்.—எவ்விதத்
திலேயும் நான் அதிசீக்கிரமாய் உங்களுக்குத்தி
ரும்பவுங் கொடுக்கப்படும்படி வேண்டுதல் செ
ய்யவேண்டுமென்று, நான் அதிகமாய்க் கேட்
௨௰ டுக்கொள்ளுகிறேன்.—நம்முடைய கர்த்தரும்,
ஆடுகளின் மகா மேய்ப்பருமாகிய யேசுவை
நித்திய உடன்படிக்கையின் இரத்தத்தினால் ம
ரித்தோரினின்று புறப்படப்பண்ணின சமாதா
௨௧ னத்தின் தேவன்,—தமது சித்தத்தை நிறை
வேற்றுகிறதற்கேதுவாக, எவ்விதமான நற்கிரி
யைகளுக்கும் உங்களைச்சீர்பொருந்தப்பண்ணி,
யேசுக்கிறிஸ்து மூலமாகத்தமது சமுகத்தில்
அங்கிகரிக்கப்படத்தக்கவைகளை உங்களுக்குள்
ளே நடப்பிக்கக்கடவர்; சதாகாலங்களிலும் அ
வருக்கே மகிமையுண்டாகக்கடவது. ஆமென்.—
சகோதரரே, நான் சுருக்கமாய் உங்களுக்கு இந் ௨௨
தப்பத்திரத்தை எழுதினேன்: நீங்கள் இதிலுள்ள
உபதேசத்தைச்சிந்தித்துக்கொள்ளும்படி உங்க
ளைவேண்டுகிறேன்.—சகோதரனாகிய தீமோத்தே ௨௩
யு விடுதலையாக்கப்பட்டானென்று அறிவீர்களா
க; அவன் சீக்கிரமாய்வந்தால் நான் அவனுடன்
வந்து உங்களைக்காண்பேன்.—உங்களை நடத்து ௨௪
கிறவர்களனைவருக்கும்,மற்றப்பரிசுத்தவான்கள்
யாவருக்கும் வாழ்த்துதல் செய்யுங்கள். இத்தா
லியா தேசத்தார் உங்களை வாழ்த்துதல் செய்கி
றார்கள்.—கிருபை உங்களனைவரோடும் இருக் ௨௫
கக்கடவது. ஆமென்.

---

(௰௯) பிலே.௨௨. (௨௰) ரோ.௰௫.௩௩. ௧.தெச.௫.௨௩. அப்.௨.௨௪,௩௨. ரோ.௪.௨௫. ௧.கொரி.௬.௰௪. ௨.கொரி.௪.௰௪. கலா.௧.௧. கொலோ.௨.௰௨. ௧.தெச.௧.௰. ௧.பேதுரு.௧.௨௧. ஏசா.௪௰.௰௧. எசேக்.௩௪.௨௩. யோவா.௰.௰௧. ௰௪. ௧.பேதுரு.௨.௨௫. சக.௯.௰௧. (௨௧) ௨.தெச.௨.௰௭. ௧.பேதுரு.௫.௰. பிலி.௨.௰௩. கலா.௧.௫. ௨.தீமோ.௪.௰௮. வெளி.௧.௬. (௨௨) ௧.பேதுரு.௫.௰௨. (௨௩) ௧.தெச.௩.௨. ௧.தீமோ.௬.௰௨. (௨௫) தீத்.௩.௰௫.

அப்போஸ்தலனாகிய

# யாக்கோபு எழுதியசாதாரண

## நிருபம்.

### ௧. அதிகாரம்.

*௧. வாழ்த்து: ௨. துக்கத்திற்களிகூரல்: ௫. பொறுமையுடன் தேவனை நோக்கிப் பிரார்த்திக்க வேண்டுமெனல்: ௯. செல்வரின் அகங்காரத்தைக்கண்டித்தல்: ௰௨. தேவன் தீமைக்கல்ல, எல்லாநன்மைக்குங் காரணரென்று காட்டல்: ௨௧. உண்மையுள்ளவர்களாயிருப்பது அவசியமென்றுணர்த்தல்.*

தேவனுக்கும், கர்த்தராகிய யேசுக்கி
றிஸ்துவுக்கும்பணிவிடைக்காரனாகிய யாக்
கோபு, சிதறுண்டிருக்கிற பன்னிரண்டு கோத்தி
ரங்களுக்கும்வாழ்த்துதல்செய்து எழுதிக்கொள்
௨ வது.—என் சகோதரரே, நீங்கள் வெகுவிதமான
சோதனைகளில் அகப்படும்பொழுது, உங்கள் வி
சுவாசத்தைச்சோதித்தல் பொறுமையை விளை
௩ விக்குமென்றுணர்ந்து,—அதை ஒருவிசேஷமான
சந்தோஷமென்றெண்ணிக்கொள்வீர்களாக.—
௪ நீங்கள் ஒன்றிலுங் குறைவுள்ளவர்களாயிராம
ல், சம்பூரணமுள்ளவர்களும், தேறினவர்களுமா
கும்படி, பொறுமை சம்பூரணமானகிரியையை
௫ ச்செய்யக்கடவது.—உங்களில் ஒருவன் ஞானத்
திற்குறைவுடையவனாயிருந்தால், கடிந்துகொள்
ளாமல் அதைச் சம்பூரணமாக யாவருக்கும் ஈந்
தருளுந் தேவனிடத்தில் வேண்டிக்கொள்
ளக்கடவன்; அப்பொழுது அவனுக்குக்கொடுக்
௬ கப்படும்.—அவன் அற்பமாயினுஞ்சந்தேகப்ப
டாமல் விசுவாசத்தோடே வேண்டிக்கொள்ளக்
கடவன். சந்தேகப்படுகிறவன் காற்றினால் அ
டிபட்டு அலைகிற கடலின் அலைக்கொப்பாயி
௭ ருக்கிறான்.—அப்படிப்பட்டமனுஷன் கர்த்த
ரிடத்தில் எதையாகிலும் பெற்றுக்கொள்வே
௮ னென்று எண்ணாமலிருப்பானாக.—இருமனமுள்
ளவன், தன்வழிகளெல்லாவற்றிலேயும்நிலையற்
௯ றவன்.—தாழ்வுடைய சகோதரன், தனதுவாழ்வி
௰ லும்,—வாழ்வுடையவன், புல்லின் பூவைப்போ
௰௧ ல ஒழிந்துபோகிறபடியால்—தனது தாழ்விலுங்
களிகூருவாராக: சூரியன்;எரிகிற வெப்பத்தோ
டேஉதயமாகிப்புல்லைத்தீக்க, அதின்பூவும் உதி
ரும், அதின் அழகியவடிவும் அழியும்: அப்படி
யே செல்வனுந் தன் நடைகளிலே வாடிப்போ
வான்.—சோதனையைச் சகிக்கிறமனுஷன்வாழ் ௰௨
வுடையவன்: இவன் பரீட்சிக்கப்பட்டபின்பு,
கர்த்தர் தம்மில் அன்பாயிருக்கிறவர்களுக்கு
வாக்குத்தத்தம்பண்ணின சீவகிரீடத்தைப்பெறு
வான்.—தீமைக்குத் தூண்டிவிடப்படுகிறவனெ ௰௩
வனும், நான் தேவனால் தூண்டிவிடப்பட்
டேனென்று சொல்லாதிருப்பானாக: தேவன்
தீங்குகளினால் தூண்டிவிடப்படவும், எவனை
யுந் தூண்டிவிடவும் மாட்டார்.—அவனவன் ௰௪
தன் தன் சுயஇச்சையினாலே தூண்டி இழுக்கப்
பட்டுச் சோதிக்கப்படுகிறான்.—இச்சையானது ௰௫
கருப்பந்தரித்துப் பாவத்தைப் பிறப்பிக்கும்: பா
வம் முற்றி மரணத்தைப் பிறப்பிக்கும்.—என்பிரி ௰௬
ய சகோதரரே, நீங்கள் வஞ்சிக்கப்படாதிருங்
கள்.—எந்த நல்ல ஈவும், எந்தச்சம்பூரணவரமும் ௰௭
உயரத்தினின்று ஒளிகளின் பிதாவினால் வரு
கின்றன, அவரிடத்தில் மாறுதலும் வேற்றுமை
யின் நிழலுஞ் சற்றுமில்லை.—தம்முடைய சிரு ௰௮
ஷ்டிகளில் நாம் ஒருவித முதற்பலன்களாவதற்
கு அவர் தமதுசித்தத்தின்படி சத்தியவாக்கியத்தி
னால் நம்மைச்செனிப்பித்தார்.—ஆதலால் என் ௰௯
பிரியசகோதரரே, யாவரும், கேட்கிறதற்குத்தீவி
ரமும், பேசுகிறதற்குப்பொறுமையும், மனுஷ
ருடையகோபந் தேவனுக்கேற்ற நீதியை
நடப்பிக்கமாட்டாதாகையால்—கோபிக்கிறதற் ௨௰
குத்தாமதமுமாயிருக்கக்கடவர்கள்.-ஆதலால்எந் ௨௧
த அசுசிக்கிரியையையும், மிகுதியான தீங்குகளை
யும் நீங்கள் அகற்றி, பதிக்கப்பட்டதும் உங்கள்
ஆத்துமங்களை இரட்சிக்கவல்லமையுள்ளதுமான
வாக்கியத்தைச்சாந்தத்துடன் ஏற்றுக்கொள்ளுங்
கள்.—அல்லாமலும்நீங்கள் உங்களைவஞ்சியாமல் ௨௨
வாக்கியத்தைக் கேட்கிறவர்களாய் மாத்திரமல்
ல, அதின்படி நடக்கிறவர்களாயுமிருப்பீர்களா
க.—வாக்கியத்தின்படி நடவாமல் கேள்வியை ௨௩

(௧. அதி. ௧.) அப்.௰௨.௰௭. கலா.௧.௰௯. யூதா.௧. தீத்.௧.௩. அப்.௨௬.௭. உபா.௩௨.௨௬. யோவா.௭.௩௫. அப்.௨௫. ௧.பேதுரு.௧.௨. (௨) ௧.பேதுரு.௧.௬. ரோ.௫.௩. (௩) மத்.௫.௰௨. அப்.௫.௪௧. எபி.௰.௩௪. ௧.பேதுரு.௪.௰௩, ௰௬. (௫) ௧.இரா.௩.௯,௰௧,௰௨. நீதி.௨.௩. மத்.௭.௭. மாற்.௰௧.௨௪. லூக்.௰௧.௯. யோவா.௰௪.௰௩. எரே.௨௯.௰௨. ௧.யோவா.௫.௰௪,௰௫. (௬) மாற்.௰௧.௨௪. ௧.தீமோ.௨.௮.(௰)யோபு.௰௪.௨. சங்.௯௰.௫,௬. சங்.௱௩.௰௫. ஏசா.௪௰.௬. ௧.கொரி.௭.௩௧. ௧.பேதுரு.௧.௨௪. ௧.யோவா.௨.௰௭.(௰௨)யோபு.௫.௰௭. நீதி.௩.௰௧,௰௨. எபி.௰௨.௫. வெளி.௩.௰௧. ௧.கொரி.௯.௨௫. ௨.தீமோ.௪.௮. ௧.பேதுரு.௫.௪. வெளி.௨.௰. மத்.௰.௨௨. (௰௫) யோபு.௰௫.௩௫. சங்.௭.௰௪. ரோ.௬.௨௧,௨௩. (௰௭) யோவா.௩.௨௭. ௧.கொரி.௪.௭. எண்.௨௩.௰௯. ௧.சாமு.௰௫.௨௯. மல்.௩.௬. ரோ.௰௧.௨௯. (௰௮) யோவா.௧.௰௩. ௧.கொரி.௪.௰௫. ௧.பேதுரு.௧.௨௩. எபே.௧.௰௧. எரே.௨.௩. வெளி.௰௪.௪. (௰௯) பிர.௫.௧. நீதி.௰.௰௯. பிர.௫.௨. நீதி.௰௪.௰௭. பிர.௭.௯. (௨௧) கொலோ.௩.௮. ௧.பேதுரு.௨.௨. அப்.௰௩.௨௬. ரோ.௧.௰௬. ௧.கொரி.௰௫.௨. எபே.௧.௰௩. தீத்.௨.௰௧. எபி.௨.௪. ௧.பேதுரு.௧.௯. (௨௨) மத்.௭.௨௧. லூக்.௬.௪௬. ரோ.௨.௰௩. ௧.யோவா.௩.௭. (௨௩) லூக்.௬.௪௭,.

மாத்திரமுடையவனாயிருக்கிறவன், கண்ணாடி
யில் தன்சுபாவமுகத்தைப்பார்க்கிற மனுஷனுக்
௨௪ கொப்பாயிருக்கிறான்.—அவன் தன்னைத்தானே
பார்த்தும், அதைவிட்டுப்போய்த் தான் இன்
௨௫ னவிதமென்பதை மறந்துபோவான்.—விடுதலை
க்கேதுவான சம்பூரணபிரமாணத்தில் உற்றுப்
பார்த்து, அதில் நிலைத்திருக்கிறவன், மறக்கத்
தக்க கேள்வியைமாத்திரமுடையவனாயிராமற் கி
ரியையைச் செய்கிறவனாயுமிருக்கிறபடியால்,
௨௬ தன்கிரியையில் வாழ்வுடையவனாவான்.—உங்
களில் தன்னைத்தேவபத்தியுள்ளவனென்று எண்
ணுகிற ஒருவன், தன் நாவை அடக்காமல் தன்
இருதயத்தை வஞ்சித்தால், இவனுடைய பத்தி
௨௭ விருதாவாகும்.—அநாதபிள்ளைகளும் விதவைக
ளும்படுகிற உபத்திரவத்தில் அவர்களை விசாரித்
து, உலகத்தால் அசுசிப்படாமல் தன்னைக்காத்த
லே, பிதாவாகிய தேவனுடைய சமுகத்தில்
மாசில்லாத பரிசுத்தமானபத்தி.

## ௨. அதிகாரம்.

*௧. தரித்திரரை இகழ்வதுஞ் செல்வரைப்புகழ்வதுந் தகாதவைகளெனக்காட்டல்: ௰௪. கட்டளைக்கமையாமல் விசுவாசிப்பதுவிருதாவெனக் காட்டல். பலனற்றவிசுவாசமிதுவென்றும், பலனுள்ள விசுவாசமிதுவென்றுந் தெரிவித்தல்.*

என் சகோதரரே,மகிமையுள்ள நம்முடைய கர்
த்தராகிய யேசுக்கிறிஸ்துவின்மேலுள்ள
விசுவாசத்தை,முகம்பார்த்தலோடே பற்றிக்கொ
௨ ள்ளாதிருப்பீர்களாக.–பொன் மோதிரத்தையும்,
அலங்காரவஸ்திரத்தையுந்தரித்தஒருசெல்வனும்,
அழுக்கான வஸ்திரத்தை உடுத்தஒருதரித்திரனும்
௩ உங்கள் சபையிற் பிரவேசிக்கும்பொழுது,—அ
லங்காரவஸ்திரந்தரித்தவனைநோக்கி, நீர் உத்தம
மான இவ்விடத்தில் உட்காருமென்றும், தரித்தி
ரனைப்பார்த்து, நீ அங்கே நில், அல்லது இங்
கே என் பாதபீடத்தில் உட்காரென்றும் நீங்கள்
௪ சொன்னால்,—உங்களுக்குள்ளே பேதகம்பண்
ணி,துர்ச்சிந்தனையையுடைய நியாயாதிபதிகளா
௫ னீர்களல்லவா.—என் பிரிய சகோதரரே, கே
ளுங்கள், விசுவாசத்திற் செல்வராகவும், தம்மில்
அன்பாயிருக்கிறவர்களுக்குத் தாம் வாக்குத்தத்
தம்பண்ணின இராச்சியத்தைச் சுதந்தரிக்கிறவர்
களாகவுந் தேவன் இவ்வுலகத்தின் தரித்திர
௬ ரைத்தெரிந்துகொள்ளவில்லையா.—நீங்களோ த
ரித்திரரை அவமதிக்கிறீர்கள். செல்வரல்லவா
உங்களை உபத்திரவப்படுத்துகிறார்கள், அவர்க
ளல்லவா உங்களை நியாயாசனங்களுக்கு இழுக்
௭ கிறார்கள்.—நீங்கள் தரிக்கப்பெற்ற அந்த மேன்
மையான நாமத்தை அவர்களல்லவா தூஷிக்
கிறார்கள்.—வேதத்தில், "உன்னைப்போலப்பிற ௮
னையும்நேசிப்பாயாக,"என்று சொல்லுகிற இரா
சரிகபிரமாணத்தை நீங்கள் நிறைவேற்றினால்,
நன்மை செய்கிறவர்களாவீர்கள்.–பட்சபாதஞ் ௯
செய்வீர்களேயானால் பாவத்தில் உட்பட்டு, நி
யாயப்பிரமாணத்தினாற் கட்டளைமீறினவர்களா
கத்தீர்க்கப்படுவீர்கள்.—ஒருவன் நியாயப்பிரமா ௰
ணம் எல்லாவற்றையுங்காத்தும் ஒருகட்டளை
யை மீறி நடந்தால், அவன் எல்லாவற்றிலேயுங்
குற்றவாளி.—"விபசாரஞ்செய்யாயாக" என்று ௰௧
சொன்னவர், "கொலைசெய்யாயாக" என்றுஞ்
சொன்னார். ஆதலால் நீ விபசாரஞ்செய்யாமலி
ருந்துங் கொலைசெய்தாயானால் நீ கட்டளைமீ
றினவனாவாய்.—நீங்கள், விடுதலைக்கேதுவான ௰௨
பிரமாணத்தின்படி நியாயத்தீர்ப்பை அடைகிற
வர்களைப்போலப் பேசியுஞ் செய்துமிருப்பீர்க
ளாக.—இரக்கஞ்செய்யாதவனுக்கு இரக்கமில் ௰௩
லாமல் நியாயத்தீர்ப்புக்கொடுக்கப்படும், இரக்
கம் நியாயத்தீர்ப்புக்குமுன்பாக மகிழும்.–என் ௰௪
சகோதரரே, ஒருவன் தனக்கு விசுவாசமுண்
டென்றுசொல்லியுங் கிரியைகளில்லாதவனானா
ல் அவனுக்கென்ன பலன்வரும்; விசுவாசம் அ
வனை இரட்சிக்குமா.–சகோதரனாயினும், சகோ ௰௫
தரியாயினும் வஸ்திரமில்லாதவர்களும், தின ஆ
காரமில்லாதவர்களுமாயிருக்கும்பொழுது,–உங் ௰௬
களில் ஒருவன், அவர்கள் சரீரத்துக்குவேண்டிய
வைகளைக் கொடாமல்,அவர்களுடனே, நீங்கள்
சமாதானத்தோடே போய், குளிர்காய்ந்து, பசி
யாறுங்களென்று சொல்வதினால் என்னபலன்.–
இவ்வண்ணமே விசுவாசமும், அதற்குக்கிரியை ௰௭
யில்லாதிருந்தால், தனித்து மரித்ததாயிருக்கும்.–
ஒருவன் வந்து, உனக்கு விசுவாசமுண்டு, எனக் ௰௮
குக் கிரியைகளுண்டு: உன்கிரியைகளில்லாமல்
உன்விசுவாசத்தை எனக்குக்காண்பி, நான் என்
விசுவாசத்தைஎன்கிரியைகளினால் உனக்குக்கா
ண்பிக்கிறேனென்பான்.–தேவன் ஒருவருண் ௰௯
டென்று விசுவாசிக்கிறாய்; நீ நன்றாய்ச்செய்கி
றாய்:பிசாசுகளும்விசுவாசித்து நடுங்குகின்றன.-
உணர்வற்ற மனுஷனே, கிரியைகளில்லாத விசு ௨௰
வாசம் மரித்ததென்று அறிய விரும்புகிறாயா.—
நம்முடைய பிதாவாகிய ஆபிரகாம், வேதிகை ௨௧
யின்மேல் தன் புத்திரனாகிய ஈசாக்கைப்பலியிட்
டபொழுது, கிரியைகளினாலல்லவா நீதிமானா
க்கப்பட்டான்.—விசுவாசம் அவன் கிரியைக ௨௨
ளுடனேகூட முயற்சிசெய்து, அந்தக் கிரியைக
ளினாலே விசுவாசம்முடிவுபெற்றதென்று நீ கா

(௨௫) ௨.கொரி.௩.௰௮. யோவா.௰௩.௰௭. (௨௬) சங்.௩௪.௰௩. ௧.பேதுரு.௩.௰. (௨௭) ஏசா.௧.௰௬,௰௭. மத்.௨௫.௩௬. ரோ.௰௨.௨. ௧.யோவா.௫.௰௮.—(௨.அதி.௨.) ௧.கொரி.௨.௮. லேவி.௰௯.௰௫. உபா.௧.௰௭. நீதி.௨௪.௨௩. மத்.௨௨. ௰௬. யூதா.௰௬. (௫) யோவா.௭.௪௮. ௧.கொரி.௧.௨௬,௨௮. லூக்.௰௨.௨௧. ௧.தீமோ.௬.௰௮. வெளி.௨.௯. யாத்.௨௰. ௬. ௧.சாமு.௨.௩௰. நீதி.௮.௰௭. மத்.௫.௩. லூக்.௬.௨௰. ௧.கொரி.௨.௯. ௨.தீமோ.௪.௮. (௬) ௧.கொரி.௰௧.௨௨. அப். ௰௩.௫௰. (௮) லேவி.௰௯.௰௮. மத்.௨௨.௩௯. ரோ.௰௩.௮,௯. கலா.௫.௰௪. (௰) உபா.௨௭.௨௬. மத்.௫.௰௯. கலா.௩.௰. (௰௧) யாத்.௨௰.௰௩,௰௪. (௰௩) யோபு.௨௨.௬,. நீதி.௨௧.௰௩. மத்.௬.௰௫. மத்.௰௮.௩௫. மத்.௨௫.௪௧,௪௨. ௧.யோவா. ௪.௰௭,௰௮. (௰௪) மத்.௭.௨௬. (௰௫) லூக்.௩.௰௧. (௰௬) ௧.யோவா.௩.௰௮. (௰௮) மத்.௮.௨௯. மாற்.௧.௨௪. லூக்.௪. ௩௪. அப்.௰௬.௰௭. (௨௧) ஆதி.௨௨.௯,௰௨. (௨௨) எபி.௰௧.௰௭.

௨௩ ணலாகும்.—"ஆபிரகாம் தேவனை விசுவாசித்தான், அது அவனுக்குநீதியென்றெண்ணப்பட்டது," என்கிற வேதவாக்கியம் நிறைவேறலாயிற்று: அவன் தேவனுடைய சிநேகனென்
௨௪ னப்பட்டான்.—ஆதலால் ஒரு மனுஷன் விசுவாசத்தினாலேமாத்திரமல்ல, கிரியைகளினாலும் நீதிமானென்றெண்ணப்படுவதைக் கண்டிருக்கி
௨௫ றீர்கள்.—மேலும் இராகாப்பென்னும் வேசை தூதர்களை ஏற்றுக்கொண்டு,வேறுவழியாய் அவர்களை அனுப்பிவிட்டபொழுது, கிரியைகளினா
௨௬ லல்லவா நீதியுள்ளவளாக்கப்பட்டாள்.—ஆதலால்,ஆவியில்லாமல் சரீரம் சாவுக்குட்பட்டதாயிருப்பதுபோல், கிரியையில்லாமல் விசுவாசம் மரித்ததாயிருக்கின்றது.

## ௩. அதிகாரம்.

௧. பிறரைக் குற்றவாளிகளாகத் தீர்க்காமல் நாவைப் பேணுவது அவசியமெனக்காட்டல்: ௰௩. ஞானவான்கள்முன்சொல்லியதோஷமில்லாதவர்களென்று தெரிவித்தல்.

என் சகோதரரே, அதிக தண்டனை அடைவோமென்றறிந்து,உங்களில் அநேகர்போதகராயிருக்
௨ கத்தகாது.—நாம் அனைவரும் பலவிதமாக இடறுகிறோம். மொழிதவறாமலிருக்கிறவனே சம்பூரணமுள்ளவனாகி, சரீரமனைத்தையும் அடக்கிக்
௩ கொள்ளுகிறவனாயிருக்கிறான்.—குதிரைகளைப் பாருங்கள், அவைகள் நமக்குக் கீழ்ப்படியும்படி வாயிற் கலினங்களையிட்டு, அவைகளின் மு
௪ ழுச்சரீரத்தையும் நடத்துகிறோம்.—கப்பல்களையும் பாருங்கள், அவைகள் மகாபெரியவைகளாயிருந்தும், கடுங்காற்று அடித்தாலும், அவைகளை ஓட்டுகிறவன் மிகவுஞ் சிறிய சுக்கானாலே தன் இஷ்டப்படி எவ்விடத்திலுந் திருப்புவான்.—
௫ அப்படியே நாவானதும், சிறிய அவயவமாயினும், பெரிய அமளிபண்ணும். பாருங்கள்,சிறுநெருப்புஎவ்வளவுபெரிய ஒரு காட்டைக்கொளுத்
௬ தும்.—நாவே அக்கினி, அதுவே பாவம் நிறைந்த உலகம்: ஆகையால் நம்முடைய அவயவங்களுக்குள்ளிருக்கிற நாவு முழுச்சரீரத்தையுங் கறைப்படுத்திச் செனனசக்கரத்தைக் கொளுத்துகின்றது;தானே நரகத்தினாற்கொளுத்தப்படுகின்
௭ றது.-எந்தக்காட்டுமிருகங்களையும், பறவைகளையும்,ஊர்வனவற்றையும், நீரில் வாழ்வனவற்றையும்வசமாக்கலாம்,அப்படியேமனுஷரால்வசமா
௮ க்கப்பட்டன.—நாவையோ எந்த மனுஷனும் வசப்படுத்தமாட்டான்; அது அடங்காததீங்கு, சாவுக்கேற்ற விஷத்தினால் நிறைந்திருக்கின்ற
௯ து.—அதினாற் பிதாவாகிய தேவனைத் துதிக்கிறோம்; தேவசாயலாகச் சிருஷ்டிக்கப்பட்ட ம
னுஷரை அதினாற் சபிக்கிறோம்.—ஆசீர்வதித்த ௰
லுஞ் சபித்தலும் ஒரேவாயினின்று புறப்படுகின்றன. என் சகோதரரே, இப்படியிருப்பது தகா
து.—நீரூற்றின் ஒரே கண்ணிலிருந்து இனிமை ௰௧
யுங் கசப்புமுள்ள நீர் சுரக்குமா.—என் சகோத ௰௨
ரரே, அத்திமரஞ் சீதவிருட்சப்பழங்களையும், திராட்சக்கொடி அத்திப்பழங்களையுந் தருமா;அதுபோல், எந்த நீரூற்றின் கண்ணிலும் உவர்ப்பும்
இனிதுமான நீர் சுரக்கமாட்டாது.—உங்களில் உ ௰௩
ணர்வுள்ளவனும்,ஞானவானுமாயிருக்கிறவனெவனோ, அவன் ஞானத்துக்குரிய தன் கிரியைகளைச் சாந்தத்தோடே நல்லநடக்கையினாற் காட்
டக்கடவன்.—உங்கள் இருதயத்திற் கசப்பான ௰௪
வைராக்கியத்தையும், விரோதத்தையும் வைத்துக்கொண்டால்,நீங்கள்மேன்மைபாராட்டாமலும், சத்தியத்துக்கு விரோதமாய்ப் பொய்யைச்சொல்
லாமலும் இருப்பீர்களாக.—இது உயரத்தினின் ௰௫
று வந்தஞானமல்ல,இது இப்பிரபஞ்சத்துக்கும், சுகபோகத்துக்கும்,பேய்க்கும்ஏற்றதாயிருக்கின்
றது.—வைராக்கியமும் விரோதமுமெங்கேயோ, ௰௬
அங்கே கலகமும், சகலவிதமான துர்க்கிரியையுமுண்டு.-உயரத்தினின்றுவரும்ஞானமோ முத ௰௭
லாவது சுத்தமும், பின்பு சமாதானமும்,சாந்தமும், பொறுமையுமுள்ளதும், இரக்கத்தினாலும் நற்கனிகளினாலும் நிறைந்ததும், பட்சபாதமுங் கப
டமுமில்லாததுமாயிருக்கின்றது.—சமாதானத் ௰௮
தைநடப்பிக்கிறவர்களால் நீதியாகியகனியின்விதை சமாதானத்தோடே விதைக்கப்படுகின்றது.

## ௪. அதிகாரம்.

௧. யுத்தம், பொருளாசை, பகை, அகங்காரம் இவைகளைக் கடிதல்: ௰௧. புறங்கூறலைவிலக்கல்: ௰௨. வர்த்தகம்,தீர்க்காயுள் இவைகளைக்குறித்து மேன்மைபாராட்டுவது முறைமையல்லவென்று காட்டல்.

உங்களுக்குள்ளே யுத்தங்களும், கலகங்களும் ௧
எதினால் வருகின்றன; உங்கள் அவயவங்களிற்போராடுகிற சிற்றின்ப ஆசையினாலல்ல
வா.—நீங்கள்இச்சித்தும் உங்களுக்குக் கிடைக் ௨
கவில்லை: நீங்கள் கொலைசெய்து வைராக்கியமுள்ளவர்களாயிருந்தும் பெற்றுக்கொள்ளவில்லை: நீங்கள்கலகமும்,யுத்தமும்பண்ணியும்விண்ணப்பம் பண்ணாமலிருக்கிறதினால் உங்களுக்
கொன்றும் உண்டாயிருக்கவில்லை.-உங்கள் இச் ௩
சைகளுக்கேற்றதாகச் செலவழிக்கும்படி, துர்க்குணராய்விண்ணப்பம்பண்ணுகிறபடியால்,நீங்கள் விண்ணப்பம்பண்ணியும் பெற்றுக்கொள்ள

(௨௩)ஆதி.௰௫.௬. ரோ.௪.௩.கலா.௩.௬. ௨.நாளா.௨௰.௭. ஏசா.௪௧.௮.(௨௫)யோசு.௨.௧.எபி.௰௧.௩௧.—(௩.அதி.௧.) மத்.௨௩.௮,௰௪. ரோ.௨.௨௰,௨௧. ௧.பேதுரு.௫.௩. லூக்.௬.௩௭. (௨) ௧.இரா.௮.௪௬. ௨.நாளா.௬.௩௬. நீதி.௨௰.௯. பிர.௭.௨௰. ௧.யோவா.௧.௮. சங்.௩௪.௰௩. ௧.பேதுரு.௩.௰. மத்.௰௨.௩௭. (௩) சங்.௩௨.௯. (௫) நீதி.௰௨.௰௮. சங். ௰௨.௩. (௬) நீதி.௰௬.௨௭. மத்.௰௫.௰௧,௰௮,௰௯,௨௰. மாற்.௭.௰௫,௨௰,௨௩. (௮) சங்.௱௪௰.௩. (௯) ஆதி.௧.௨௬. (௰௩) கலா.௬.௪. (௰௪) ரோ.௰௩.௰௩. ரோ.௨.௰௭,௨௩. (௰௫) பிலி.௩.௰௯. யூதா.௰௯.(௰௬)௧.கொரி.௩.௩. கலா.௫.௨௰.(௰௭) ௧.கொரி.௨.௬,௭. ரோ.௰௨.௯. ௧.பேதுரு.௧.௨௨. ௧.யோவா.௩.௰௮.(௰௮)நீதி.௰௧.௰௮. ஓசி.௰.௰௨. மத்.௫.௯. பிலி. ௧.௰௧. எபி.௰௨.௰௧.—(௪. அதி. ௧.) வச.௩. ரோ.௭.௨௩. கலா.௫.௰௭. ௧.பேதுரு.௨.௰௧. (௩) யோபு.௨௭.௯. சங். ௰௮.௪௧. நீதி.௧.௨௮. ஏசா.௧.௰௫. எரே.௰௧.௰௧. மீகா.௩.௪. சக.௭.௰௩. சங்.௬௬.௰௮. ௧.யோவா.௩.௨௨.

௪ வில்லை.-ஆ, விபசாரரே, விபசாரிகளே, உலகநே
சம், தேவனை விரோதிக்கிற பகையென்று நீங்
கள் அறியீர்களா, ஆதலால் உலகநேசனாயிருக்க
விரும்புகிறவன் தேவனுக்குப் பகைஞனாகி
௫ றான்.—நம்மிடத்தில் வாசமாயிருக்கிற ஆவி பொ
றாமைக்கேதுவாக இச்சிக்கிறதென்று வேதவாக்
கியம் வீணாகச்சொல்லுகிறதென்று நினைக்கிறீர்
௬ களா.—அவர் தயையை அதிகரிக்கப்பண்ணுகிறா
ரே. ஆதலால் அவர் “அகந்தையுள்ளவர்களைத்
தேவன் விரோதித்து, தாழ்ந்த சிந்தையுள்ளவர்
களுக்குக் கிருபை அளிக்கிறார்,” என்று சொல்
௭ லியிருக்கிறார்.—ஆதலால் நீங்கள் தேவனுக்கு
அமைந்திருக்கக்கடவீர்கள். பிசாசுக்கெதிர்த்து
நில்லுங்கள், அப்பொழுது அவன் உங்களைவிட்
௮ டு ஓடிப்போவான்.—தேவனிடத்திற் சேருங்
கள், அப்பொழுது அவரும் உங்களிடத்திற்சேரு
வார். பாவிகளே, உங்கள்கைகளைச் சுத்தப்படுத்
துங்கள்; இருமனமுள்ளவர்களே, உங்கள் இரு
௯ தயங்களைச் சுத்திகரிக்கக்கடவீர்கள்.—நீங்கள் து
யரப்பட்டு, துக்கித்து, அழுங்கள்: உங்கள்நகைப்
புத் துக்கிப்பாகவும், உங்கள் சந்தோஷம் விச
௰ னமாகவும் மாறக்கடவன.—கர்த்தரின் சமு
கத்தில் தாழுங்கள், அப்பொழுது அவர் உங்களை
௰௧ உயர்த்துவார்.—சகோதரரே, ஒருவருக்கொருவர்
விரோதமாகப் பேசாதிருப்பீர்களாக. சகோதர
னுக்கு விரோதமாகப் பேசி, தன் சகோதரனைக்
குற்றப்படுத்துகிறவன், நியாயப்பிரமாணத்துக்
கு விரோதமாகப்பேசி, நியாயப்பிராமணத்தைக்
குற்றப்படுத்துகிறான்: நீ நியாயப்பிரமாணத்தைக்
குற்றப்படுத்தினால் நியாயப்பிரமாணத்தின்படி
செய்கிறவனாயிராமல் அதற்கு நியாயாதிபதியா
௰௨ யிருப்பாய்.—நியாயப்பிரமாணத்தைக்கட்டளையி
டுகிறவர்ஒருவரே: அவரேஇரட்சிக்கவும்அழிக்க
வும்வல்லமையுள்ளவர்: பிறன்மேற்குற்றஞ்சாற்
௰௩ துகிறதற்கு நீ ஆர்.-நாங்கள் இன்றைக்கு, அல்ல
து நாளைக்கு இன்ன இன்ன நகரத்துக்குப்போய்,
அங்கே ஒருவருஷந்தங்கி, வியாபாரம்பண்ணி,
ஆதாயம் பெறுவோமென்கிறவர்களே, கேளுங்
௰௪ கள்.-நாளைக்குச்சம்பவிப்பதைஅறியீர்களே.உங்
கள்சீவனென்ன; சொற்பகாலந்தோன்றிப் பின்
௰௫ பு அகன்றுபோகிறபுகை.—ஆதலால் நாங்கள்
உயிரோடிருக்க ஆண்டவருக்குச் சித்தமா
னால் இதையாகிலும் அதையாகிலுஞ் செய்வோ
௰௬ மென்று சொல்வது உங்களுக்குத்தகும்.—இப்
பொழுது நீங்கள் உங்கள் வீம்பான வாக்குகளிற்
பெருமைபாராட்டுகிறீர்கள்: இவ்விதப்பெருமை
பாராட்டலெல்லாந்தீமை.—ஆகையால் ஒருவன் ௰௭
நன்மைசெய்ய அறிந்திருந்தும் அதைச்செய்யா
விட்டால் அது அவனுக்குப் பாவமாயிருக்கும்.

## ௫. அதிகாரம்.

௧. தீமையானசெல்வரைப்பயமுறுத்துகிறது தகு தியென்று சொல்லல்: ௭. தேவபத்தர் துக்கத் தைப் பொறுமையுடன் சகிப்பதுகடமையென் றுகாட்டல்: ௰௨. எளிதில் ஆணையிடுவது உத் தமமல்லவென்று விலக்கல்: ௰௩. வருத்தமடை யுஞ்சமயத்திற் பிரார்த்திக்கும்படி கட்டளையி டல்: ௰௯. தவறின சகோதரனைச்சீர்ப்படுத்துவ து நற்கிரியையென்றுகாட்டல்.

ஐசுவரியவான்களே, கேளுங்கள், உங்களுக்கு ௧
நேரிடுகிற ஆபத்துக்களினிமித்தம் அலறி அழுங்
கள்.—உங்கள்சம்பத்து அழிந்துபோயிற்று, உங் ௨
கள் வஸ்திரங்களைப்பொட்டரித்தது.—உங்கள் ௩
பொன்வெள்ளிகளுங் கறைபிடித்தது; அவைக
ளிலுள்ள கறை உங்களுக்கு விரோதமாகச் சாட்
சியாகி, அக்கினிபோல் உங்கள் மாமிசத்தைப்
பட்சிக்கும். நீங்கள் கடைசிநாட்களிலே பொக்
கிஷத்தைச்சேர்த்தீர்கள்.—கேளுங்கள், உங்கள் வ ௪
யல்களை அறுத்த வேலையாட்களுக்குக்கொடாம
ல், நீங்கள் அநியாயமாய்வைத்துக்கொண்டகூலி
ஓலமிடுகின்றது: அறுப்புக்காரரிட்ட ஓலம் சே
னைபதியாகிய கர்த்தாவின் செவிக்கேறிற்று.—
பூமியிலே நீங்கள் சம்பிரமமும் சிற்றின்பமுமாய் ௫
ச் சீவித்தீர்கள்; சங்காரநாளுக்காக உங்கள் இருத
யங்களைப் புஷ்டியாக்கினீர்கள்.-உங்களை எதிர்க் ௬
காத நீதிமானைக் குற்றவாளியாய்த்தீர்த்துக் கொ
லைசெய்தீர்கள்.—ஆதலால் சகோதரரே, கர்த் ௭
தர் வருமளவும் நீடிய பொறுமையாயிருங்கள்.
பாருங்கள், பயிர்செய்கிறவன் பூமியின் விலை
யேறப்பெற்ற பலனை அபேட்சித்து, முன்மாரி
யும் பின்மாரியும் வருமளவும் நீடியபொறுமை
யாய்க்காத்திருக்கிறான்.—நீங்களும் பொறுமை ௮
யாயிருந்து, உங்கள் இருதயங்களை ஸ்திரப்ப
டுத்துவீர்களாக; கர்த்தரின் வருகை சமீபி
க்கின்றது.—சகோதரரே, நீங்கள் தண்டனைத் ௯
தீர்ப்புக்குட்படாதபடி, ஒருவருக்கொருவர் வி
ரோதமாய்முறையிடாதிருங்கள்: பாருங்கள், நி
யாயாதிபதி வாசற்படியிலேநிற்கிறார்.—என் ச ௰
கோதரரே, கர்த்தருடைய நாமத்திலே பே
சினதீர்க்கதரிசிகளை உபத்திரவத்துக்கும், பொ
றுமைக்குந் திருஷ்டாந்தமாக ஏற்றுக்கொள்ளுங்

(௪) சங்.௭௩.௨௭. ௧.யோவா.௨.௰௫. யோவா.௰௫.௰௯. கலா.௧.௰. (௫) ஆதி.௬.௫. எண்.௰௧.௨௯. நீதி.௨௧.௰. (௬) யோபு.௨௨.௨௯. சங்.௱௩௮.௬. நீதி.௩.௩௪. மத்.௨௩.௰௨. லூக்.௧.௫௨. லூக்.௰௪.௰௧. லூக்.௰௮.௰௪. ௧.பேதுரு.௫.௫. (௭) எபே.௪.௨௭. எபே.௬.௰௧. ௧.பேதுரு.௫.௯. (௮) ௨.நாளா.௰௫.௨. ஏசா.௧.௰௬. ௧.பேதுரு.௧.௨௨. ௧.யோவா. ௩.௩. (௯) மத்.௫.௪. (௰) யோபு.௨௨.௨௯. மத்.௨௩.௰௨. லூக்.௰௪.௰௧. ௧.பேதுரு.௫.௬. (௰௧) எபே.௪.௩௧. ௧.பேதுரு. ௨.௨. மத்.௭.௧. லூக்.௬.௩௭. ரோ.௨.௧. ௧.கொரி.௪.௫. (௰௨) மத்.௰.௨௮. ரோ.௰௪.௪.௰௩. (௰௩) நீதி.௨௭.௧. லூக். ௰௨.௰௮. (௰௪) யோபு.௭.௭. சங்.௱௨.௩. ௧.பேதுரு.௧.௨௪. ௧.யோவா.௨.௰௭. (௰௫) அப்.௰௮.௨௧. ௧.கொரி.௪.௰௯. எபி.௬.௩. (௰௬) ௧.கொரி.௫.௬. (௰௭) லூக்.௰௨.௪௭. யோவா.௯.௪௧. யோவா.௰௫.௨௨. ரோ.௧.௨௰,௨௧,௩௨. ரோ. ௨.௰௭,௰௮.௨௩.—(௫. அதி. ௧.) நீதி.௰௧.௨௮. லூக்.௬.௨௪. ௧.தீமோ.௬.௯. (௨) யோபு.௰௩.௨௮. மத்.௬.௨௰. (௩) ரோ.௨.௫. (௪) லேவி.௰௯.௰௩. யோபு.௨௪.௰,௰௧. எரே.௨௨.௰௪. மல்.௩.௫. உபா.௨௪.௰௫. (௫) யோபு.௨௧.௰௩. ஆமோ.௬.௧,௪. லூக்.௰௬.௰௯.௨௫. ௧.தீமோ.௫.௬. (௭) உபா.௰௧.௰௪. எரே.௫.௨௪. ஓசி.௬.௩. யோவே.௨.௨௩. சக. ௰.௧. (௮) பிலி.௪.௫. எபி.௰.௨௫,௩௭. ௧.பேதுரு.௪.௭. (௯) மத்.௨௪.௩௩. ௧.கொரி.௪.௫. (௰) மத்.௫.௰௨. எபி.௰௧.௩௫.

௰௧ கள்.—கேளுங்கள், பொறுமையா யிருக்கிறவர்
களை நாம் வாழ்வுடையவர்களென்கிறோம். யோ
பின் பொறுமையைக்குறித்துக் கேள்விப்பட்
டிருப்பீர்கள், கர்த்தர் மிகுந்த உருக்கமும் இ
ரக்கமுமுள்ளவரா யிருக்கிறாரென்று கர்த்தர்
௰௨ செய்த முடிவையும் அறிந்தீர்கள்.—எல்லாவற்றி
லும்விசேஷமாய் என்சகோதரரே, வானத்தைக்
கொண்டாயினும், பூமியைக்கொண்டாயினும்,
வேறெந்த ஆணையைக்கொண்டாயினும் எவ்வி
தத்திலுஞ் சத்தியம் பண்ணலாகாது: நீங்கள்தண்
டனைத் தீர்ப்புக்குட்படாதபடி உள்ளதை யுள்ள
தென்றும்,இல்லதை இல்லதென்றுஞ் சொல்லக்
௰௩ கடவீர்கள்.—உங்களில் ஒருவன் துன்பப்பட்
டால் பிரார்த்தனைபண்ணக்கடவன். ஒருவன் ம
கிழ்ச்சியாயிருந்தால் சங்கீதங்களைப் பாடக்கட
௰௪ வன்.—உங்களில் ஒருவன் வியாதிப்பட்டால்,
அவன் சபையின் மூதியோரைவரவழைப்பானாக;
அவர்கள் கர்த்தருடையநாமத்தினால் அவ
னுக்கு எண்ணெயைப்பூசி, அவன்நிமித்தம் பி
௰௫ ரார்த்தனை பண்ணக்கடவர்கள்.—அப்பொழுது
விசுவாசமுள்ள பிரார்த்தனை அவனை இரட்சிக்

கும், கர்த்தர் பிணியாளியை எழுப்புவார்; அ
வன் பாவங்கள்செய்தவனானால் அவை அவனுக்
கு மன்னிக்கப்படும்.—நீங்கள் சொஸ்தமாகும் ௰௬
படி உங்களுங்கள் குற்றங்களை ஒருவருக்கொ
ருவர் அறிக்கையிட்டு, ஒருவரினிமித்தம்ஒருவர்
பிரார்த்தனைபண்ணுவீர்களாக. நீதிமான்செய்யும்
உண்மையானபிரார்த்தனைமிகவும்சித்திபெறும்.-
இலீசா நம்மைப்போலப் பாடுஅனுபவிக்கிற ம ௰௭
னுஷனாயிருந்தும், மழைபெய்யாதபடி உறுதி
யாய்ப்பிரார்த்தனைபண்ணினான்: அப்பொழுது
மூன்றுவருஷமும் ஆறுமாதமும் பூமியின்மேல்
மழைபெய்யவில்லை.—திரும்பவும் பிரார்த்தனை ௰௮
பண்ணினான், அப்பொழுது பூமி தன்பலனைக்
கொடுக்கத்தக்கதாகவானம் மழையைத்தந்தது.-ச ௰௯
கோதரரே, உங்களில் ஒருவன் சத்தியத்தைவிட்
டுவிலகித் தவறிப்போகும்பொழுது, மற்றொருவ
ன் அவனை மனந்திருப்பினால்,—தவறிப்போயி ௨௰
ருக்கும் வழியினின்றும் பாவியானவனை மனந்
திருப்புகிறவன், ஒரு ஆத்துமாவை மரணத்துக்
குத்தப்புவித்து, மிகுந்த பாவங்களை மறைப்பா
னென்று அவன் அறியக்கடவன்.

---

(௰௧) சங்.௯௪.௰௨. மத்.௫.௰,௰௧. யோபு.௧.௨௧,௨௨. யோவா.௪௨.௰,. எண்.௰௪.௰௭. சங்.௱௩.௮. (௰௨) மத்.௫.௩௪. (௰௩) எபே.௫.௰௯. கொலோ.௩.௰௬. (௰௪) மாற்.௬.௰௩. மாற்.௰௬.௰௮. (௰௫) ஏசா.௩௩.௨௪. மத்.௯.௨. (௰௬) ஆதி. ௨௰.௰௭.எண்.௰௧.௨. ௨பா.௯.௰௮,௰௯,௨௰.யோசு.௰.௰௨. ௧.சாமு.௰௨.௰௮. ௧.இரா.௰௩.௬. ௨.இரா.௪.௩௩. ௨.இரா. ௰௯.௰௫,௨௰. ௨.இரா.௨௰.௨,௪,. சங்.௰.௰௭. சங்.௩௪.௰௫. சங்.௱௪௫.௰௮. நீதி.௰௫.௨௯. நீதி.௨௮.௯. யோவா.௯.௩௧. ௧.யோவா.௩.௨௨. (௰௭) அப்.௰௪.௰௫. ௧.இரா.௰௭.௧. லூக்.௪.௨௫. (௰௮) ௧.இரா.௰௮.௪௨,௪௫. (௰௯) மத்.௰௮.௰௫. (௨௰)ரோ.௰௧.௰௪. ௧.கொரி.௯.௨௨. ௧.தீமோ.௪.௰௬. நீதி.௰.௰௨. ௧.பேதுரு.௪.௮.

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதியசாதாரண

## முதலாம் நிருபம்.

---

### க. அதிகாரம்.

*க. வாழ்த்து: ங. கிருபையினிமித்தந் தேவனைத் துதித்தல். தீர்க்கதரிசிகள் இரட்சிப்பைக்குறித்து ஆராய்ந்தார்களென்பதைக் காட்டல்: யங. தேவனுடைய அழியாத வாக்கியத்தின்படி நடக்கிறதற்கு விசுவாசிகள் வேண்டல்.*

பிதாவாகிய தேவன் முன்னறிந்தபடி,ஆவியா
னவர்செய்யும் பரிசுத்தத்தினாலே கீழ்ப்படிதலுக்
கும், யேசுக்கிறிஸ்துவின் இரத்தந் தெளிக்
உ கப்படுவதற்குந் தெரிந்துகொள்ளப்பட்டு,—பொ
ந்து, கலாத்தியா, கப்பதோகியா, ஆசியா, பித்தி
னியா தேசங்களிற் சிதறியிருக்கிற அந்நியருக்
கு, யேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலனா
கிய பேதுரு எழுதிக்கொள்வது: கிருபையுஞ் ச
மாதானமும் உங்களுக்குப் பெருகக்கடவன.—
ங நம்முடைய கர்த்தரான யேசுக்கிறிஸ்து
வின் பிதாவாகிய தேவனுக்கு ஸ்தோத்திரம்,
அவர்,தமது பரிபூரணஇரக்கத்தின்படி யேசுக்
கிறிஸ்து மரித்தோரினின்று உயிர்த்தெழுதலைக்
ச கொண்டு,—அழியாததும், மாசற்றதும், வாடாத
துமாகிய ஒருசுதந்தரத்தைக்குறித்துச் சீவனுள்ள
நம்பிக்கைக்கு நம்மைப் புதிதாகச் செனிப்பித்
ரு தார்.—கடைசிக்காலத்தில் வெளிப்பட ஆயத்த
மாயிருக்கிற இரட்சிப்புக்கு விசுவாசத்தைக்கொ
ண்டு தேவனுடைய பலத்தினாற் காக்கப்பட்
டிருக்கிற உங்கள்நிமித்தம் அந்தச் சுதந்தரம்
பரமண்டலத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது.—
சு இதற்காகநீங்கள்இப்பொழுது,அவசியமுண்டா
னால், சொற்பகாலம் பலசோதனைகளில் துக்கப்
எ பட்டாலும்மிகவுங்களிகூருங்கள்.-இப்படி அக்
கினியினாலே புடமிடப்பட்டும், அழிந்துபோகி
ற பொன்னைப்பார்க்கிலும் அதிக அருமையான
உங்கள் விசுவாசத்தின் பரீட்சை யேசுக்கிறி
ஸ்து வெளிப்படும்பொழுது புகழும், கனமும்,
அ மகிமையுமுண்டாகக் காணப்படும்.-நீங்கள் அவ
ரைக்காணாதிருந்தும், அவரில் அன்பாயிருக்கிறீர்
கள்;இப்பொழுது அவரைத்தரிசியாமலிருந்தும்,
அவரில் விசுவாசம் வைத்து, வசனிக்கமுடியாத
தும், பூரணமகிமையுள்ளதுமாகிய சந்தோஷத்தி
னாலே களிகூர்ந்து,—உங்கள் விசுவாசத்தின் பல கூ
னாகியஆத்துமஇரட்சிப்பைஅடைகிறீர்கள்.-உங் ய
களுக்குக்கிடைத்த இந்தக் கிருபையைக்குறித்து
முன்னுரைத்தவர்களாகியதீர்க்கதரிசிகள்,தங்களி
லுள்ள கிறிஸ்துவின் ஆவியானவர்,-கிறிஸ்து யக
வின்உபத்திரவத்தையும்அவைகளின்பின்வரும்
மகிமைகளையும் முன்னறிவித்தபொழுது, எதை
யும் எவ்விதகாலத்தையுங் குறித்திருக்கிறாரென்று
உசாவி,—இந்த இரட்சிப்பைக்குறித்து மிகவும் யஉ
ஆராய்ந்துபார்த்தார்கள், அவர்கள் தங்கள் நிமித்
தமல்ல, நமது நிமித்தமாகவே இவைகளைத்தெரி
வித்தார்களென்று அவர்களுக்கு வெளியாக்கப்
பட்டது; இந்தவிசேஷங்கள், வானத்திலிருந்து
அனுப்பப்பட்ட பரிசுத்த ஆவியைக்கொண்டு
உங்களுக்குச் சுவிசேஷத்தைப்பிரசித்தப்படுத்தி
வந்தவர்களால் இப்பொழுது உங்களுக்கு அறிவி
க்கப்பட்டுவருகின்றன. தேவதூதர் இவைகளுக்
குள் குனிந்துபார்க்க மிகவும்விரும்புகிறார்கள்.—
ஆதலால் நீங்கள் உங்கள் மனதில் அரைக்கச் யங
சுக்கட்டிக்கொண்டு, தெளிந்த புத்தியுள்ளவர்க
ளாகி,யேசுக்கிறிஸ்துவெளிப்படும்பொழுது,
உங்களுக்குக் கொண்டுவரப்படுங் கிருபையின்
மேல் முடிவுபரியந்தம் பூரண நம்பிக்கையை
வைப்பீர்களாக.—அன்றியும் முற்காலத்தில் உங் யச
கள்அஞ்ஞானத்திலேநடந்ததுராசைகளுக்கொத்
தரூபத்தைக்கொண்டிராமல், உங்களை அழைத்த
வர் பரிசுத்தராயிருக்கிறதுபோல,-நீங்களுங்கட் யரு
டளைக்கமைகிற பிள்ளைகளுக்கேற்க உங்கள் ந
டைகளெல்லாவற்றிலேயும் பரிசுத்தராய் நடக்
கக்கடவீர்கள்.—"நான் பரிசுத்தர்; ஆதலால் நீங்க யசு
ளும் பரிசுத்தராயிருங்கள்," என்று எழுதியிருக்
கின்றதே.-அன்றியும் முகம்பாராமல் அவனவனு யஎ
டைய கிரியைகளின்படி நியாயத்தீர்ப்புச்செய்

---

(க. அதி. க.) எபே.க.ச. ரோ.அ.உக. உ.தெச.உ.யங. எபி.ய.உஉ. (உ) யோவா.எ.ஙரு. அப்.உ.ரு,கூ,ய. யாக்.க.க. ரோ.க.எ. உ.பேதுரு.க.உ. யூதா.உ. (ங) உ.கொரி.க.ங. எபே.க.ங. தீத்.ங.ரு. க.கொரி.யரு.உய. க.தெச.ச.யச. (ச) யோவா.ஙங,ரு. யாக்.க.யஅ. அதி.ரு.ச. (ரு) கொலோ.க.ச. உ.தீமோ.ச.அ. யோவா.ய.உஅ,உக. யூதா.க. (சு) மத்.ரு.யஉ. ரோ.யஉ.யஉ. உ.கொரி.சு.ய. உ.கொரி.ச.யஅ. யாக்.க.உ. (எ) யாக்.க.ங,யஉ. யோபு.உங.ய. சங்.சுசு.ய. நீதி.யஎ.ங. ஏசா.சஅ.ய. சக.யங.கூ. க.கொரி.ங.யங.ரோ.உ.எ,ய. க.கொரி.ச.ரு. உ.தெச.க.எ—யஉ. (அ) க.யோவா.ச.உய. யோவா.உய.உகூ. உ.கொரி.ரு.சு. எபி.யக.க,உஎ. (கூ) ரோ.சு.உஉ. (ய) உ.பேதுரு.க.உக. (யக) சங்.உஉ.சு. ஏசா.ருங.ங,. தானி.கூ.உசு.லூக்.உச.உரு,உசு,சச,சகூ. யோவா.யஉ.ஙகூ. அப்.உசு.உஉ,உங. (யஉ) ஆதி.சக.ய.தானி.உ.சச. ஆகா.உ.எ. சக.சு.யஉ. லூக்.ய.உச. தானி.கூ.உச. எபி.யக.யங,ஙக,சய. அப்.உ.ச. யாத்.உரு.உய. தானி.அ.யங. எபே.ங.யக. (யங) லூக்.யஉ.ஙரு. எபே.சு.யச. லூக்.உக.ஙச. ரோ.யங.யங. க.தெச.ரு.சு,அ. லூக்.யஎ.ஙய. க.கொரி.க.எ. உ.தெச.க.சு. (யச) ரோ.யஉ.உ. அப்.யஎ.ஙய. க.தெச.ச.ரு. (யரு) லூக்.க.எரு. உ.கொரி.எ.க. க.தெச.ச.ங,ச,எ. எபி.யஉ.யச. உ.பேதுரு.ங.யக. (யசு) லேவி.யக.சச. (யஎ) உபா.ய.யஎ. அப்.ய.ஙச. ரோ.உ.யக. உ.கொரி.எ.க. எபி.யஉ.உஅ. உ.கொரி.ரு.சு. எபி.யக.யங.

யும் பிதாவிடத்தில் நீங்கள் பிரார்த்தனைபண்ணு
கிறபடியால், நீங்கள் இங்கே தங்குமளவும் உங்
கள் காலத்தையும் பயத்தோடே கழியுங்கள்.—
யஅ நீங்கள் உங்கள்முன்னோரால் பாரம்பரையாய்ப்
பெற்ற அபத்தமான நடத்தையினின்று, அழியும்
வஸ்துக்களாகிய பொன் வெள்ளிகளினாலல்ல,—
யகூ குற்றமும்மாசுமில்லாதஆட்டுக்குட்டியைப்போ
ன்ற கிறிஸ்துவின் விலைமதிக்கிறதற்கரியஇரத்
தத்தினாலே மீட்கப்பட்டீர்களென்று அறிந்திருக்
உய கிறீர்களே.-அவர் உலகந்தோற்றுமுன் குறிக்கப்
பட்டார், தமதுமூலமாய்த் தேவனில் விசுவா
சமாயிருக்கிற உங்கள் நிமித்தம் இந்தக்கடைசிக்
உக காலங்களில் வெளிப்பட்டார்.-உங்கள் விசுவா
சமும் நம்பிக்கையுந் தேவன்மேலிருக்கும்ப
டி, தேவன்அவரைமரித்தோரினின்றுஎழுப்பி,
உஉ அவருக்கு மகிமையைக்கொடுத்தார்;—ஆதலால்
நீங்கள் கபடமில்லாதசகோதரநேசத்தை அடை
யும்படி ஆவியினாலே சத்தியத்துக்கமைந்து, உங்
கள் ஆத்துமங்களைச் சுத்தமாக்கினபடியினால்,
சுத்த இருதயத்தோடே திடமாக ஒருவரில் ஒரு
உங வர் அன்பாயிருப்பீர்களாக.—அழிவுள்ள வித்தி
னாலேயல்ல, என்றைக்கும் நிற்கிற சீவனுள்ள
தேவனுடைய வாக்காகிய அழிவில்லாத வித்
தினாலே மறுபடியுஞ் செனிப்பிக்கப்பட்டீர்க
உச ளே.—மாமிசமெல்லாம் புல்லுக்குச்சமானம், ம
னுஷருடைய மகிமையெல்லாம் புல்லின் பூவுக்
கொப்பாகும். புல் உலரும், அதின் பூவும் உதி
உரு ரும்:—கர்த்தருடைய வாக்கோ என்றைக்கும்
நிற்கும். இந்தவாக்குச் சுவிசேஷமாய் உங்களி
டத்திற் பிரசித்தமாக்கப்பட்டுவருகின்றது.

## உ. அதிகாரம்.

க. கிறிஸ்து அஸ்திபாரமென்பதையும், அவர்சன
ம்ஆலயமென்பதையும்அறிவித்தல்: யக. சிற்றின்
பத்தை நாடாதபடி விலக்கல். அதிபதிகளுக்
கமைந்துநடப்பது கடமையென்று தெரிவித்
தல்: யஅ. பணிவிடைக்காரர் தங்கள் எசமான
ருக்கமையவேண்டுமென்று கட்டளையிடல்.

ஆதலால் கர்த்தர்தயையுள்ளவரென்றுநீங்கள்
உ உருசிபார்த்திருந்தால்—சகல துர்க்குணத்தையும்,
சகலவிதவஞ்சகங்களையும், கபடத்தையும், பொ
றாமைகளையும்,எல்லாப்பழிமொழிகளையும் விட்
ங டு,—புதிதாய்ப் பிறந்தகுழந்தைகளைப்போல நீங்
கள் வளரும்படி, களங்கமில்லாதவாக்கியமாகிய
பாலின்மேற் பிரியமாயிருப்பீர்களாக.-மனுஷரா ச
ல் அவமதிக்கப்பட்டதும், தேவனால் தெரிந்து
கொள்ளப்பட்டதும், விலைமதிப்பதற்கரிய சீவ
னுள்ளகல்லுமாகிய அவரிடத்திற்சேர்ந்தவர்களா
ன-நீங்களுஞ் சீவனுள்ளகற்கள்போல் ஆவிக்கே ரு
ற்ற ஆலயமாக்கப்பட்டீர்கள், யேசுக்கிறிஸ்து
மூலமாகத் தேவனுக்குப் பிரியமான ஆவிக்
கேற்றபலிகளை இடத்தக்க பரிசுத்தஆசாரிய ரா
னீர்கள்.—“பாருங்கள், தெரிந்துகொள்ளப்பட் ௬
டதும், விலைமதிக்கிறதற்கரியதுமாகிய ஒரு கோ
டிக்கல்லைச்சீயோனில்வைக்கிறேன்: அதின்மே
ல் விசுவாசமாயிருக்கிறவன் இலச்சையடையா
ன்,”என்று வேதத்தில் எழுதியிருக்கின்றது.—ஆத எ
லால் விசுவாசிகளாகிய உங்களுக்கு அது அரு
மையாயிருக்கின்றது: கட்டளைக்கமையாமலிருக்
கிறவர்களுக்கோ, வீட்டைக்கட்டுகிறவர்களால்
அவமதிக்கப்பட்டபிரதானகோடிக்கல்லாகியஇ
ந்தக்கல்லே இடறற்கல்லாகவும், விழுவதற்கேது
வானகன்மலையாகவுமிருக்கின்றது.—அவர்கள் க அ
ட்டளைக்கமையாதவர்களாய் வாக்கியத்தில் இட
றுகிறார்கள்: அதற்கு நியமிக்கப்பட்டவர்களாயு
மிருக்கிறார்கள்.—நீங்களோ, உங்களை அந்தகாரத் கூ
தினின்றுந் தமது ஆச்சரியமான ஒளிக்கு வரவ
ழைத்தவருடைய திவ்வியலட்சணங்களைப் பிர
காசிக்கப்பண்ணும்பொருட்டுத் தெரிந்துகொள்
ளப்பட்ட வமிசத்தாரும், இராச ஆசாரியகுலத்
தாரும், பரிசுத்த சாதியும், மீட்கப்பட்ட சனங்க
ளுமானீர்கள்.—முன்னே தேவனுக்குரிய ய
சனங்களாயிருக்கவில்லை, இப்பொழுது அவருக்
குரிய சனங்களாயிருக்கிறீர்கள்: இரக்கம்பெறாம
லிருந்தீர்கள், இப்பொழுது இரக்கம்பெற்றவர்க
ளானீர்கள்.—பிரியமானவர்களே, அந்நியரும் ப யக
ரதேசிகளுமாகிய நீங்கள், ஆத்துமத்துக்குவிரோ
தமாய்ப் போர்செய்கிற மாமிச இச்சைகளுக்கு
இடங்கொடாமல்,—புறத்தேசத்தார் உங்களைத் யஉ
துராசாரரென்று விரோதமாய்ப்பேசியும், உங்
கள் நற்கிரியைகளைக்கண்டு சந்திப்பின்நாளிலே
தேவனுடையமகிமையைப்பிரகாசிக்கப்பண்
ணும்படி, அவர்களுக்குள்ளே நேர்மையோடே
நடக்கக்கடவீர்களென்று உங்களை வேண்டு
கிறேன்.—மனுஷரின் ஒவ்வொரு நியமத்திற்கும், யங

(யஅ) க.கொரி.கூ.உய. எசேக்.உய.யஅ. (யகூ) அப்.உய.உஅ. எபே.க.அ. எபி.கூ.யஉ,யச. வெளி.ரு.கூ. யாத்.யஉ.ரு. யோவா.க.உகூ,ஙகூ. (உய) ரோ.ங.உரு. எபே.ங.கூ,ய. கொலோ.க.உசா. உ.தீமோ.க.கூ,ய. வெளி.யங.அ. கலா.ச.ச. எபே.க.கூ. எபி.க.உ. (உக) அப்.உ.உச. மத்.உஅ.யஅ. அப்.உ.ஙங. எபே.க.உய. பிலி.உ.கூ. எபி.உ.கூ.(உஉ) அப்.யரு.கூ. ரோ.யஉ.கூ,ய. க.தெச.ச.கூ. க.தீமோ.க.ரு. எபி.யங.க. உ.பேதுரு.க.எ. க.யோவா.ங.யஅ.(உங)யோவா.க.யங. யாக்.க.யஅ. க.யோவா.ங.கூ. (உச) சங்.ாங.யரு. ஏசா.சய.சா. யாக்.க.ய. (உரு) சங்.ாஉ.யஉ,உசா. ஏசா.சய.அ. லூக்.யசா.யஎ. யோவா.க.க,யச. க.யோவா.க.க,ங.—(உ. அதி. க.) சங்.ஙச.அ. எபி.சா.ரு.(உ)எபி.ச.உஉ,உரு,ஙக. கொலோ.ங.அ. எபி.யஉ.க.யாக்.க.உக. (ங) மத்.யஅ.ங.ரோ.சா.ச. க.கொரி.யச.உய. க.கொரி.ங.உ. எபி.ரு.யஉ,யங. (ச) சங்.ாயஅ.உஉ. மத்.உக.சஉ. அப்.ச.யக.(ரு)எபே.உ.உக,உஉ. எபி.ங.சா. ஏசா.சாக.சா. ஓசி.யச.உ மல்.க.யக. ரோ.யஉ.க. எபி.யங.யரு,யசா. பிலி.ச.யஅ. (சா) ஏசா.உஅ.யசா. ரோ.கூ.ஙங.(எ)சங்.ாயஅ.உஉ. மத்.உக.சஉ. அப்.ச.யக. ஏசா.அ.யச. ரோ.கூ.ஙங. க.கொரி.க.உங. (அ) யாக்.கூ.யசா. ரோ.கூ.உஉ. க.தெச.ரு.கூ.(கூ)உபா.ய.யரு. யாத்.யகூ.ரு,சா. வெளி.க.சா. க.யோவா.யஎ.யக. க.கொரி.ங.யஎ. உ.தீமோ.க.கூ. உபா.ச.உய.அப்.உய.உஅ. எபே.க.யச. தீத்.உ.யச. அப்.உசா.யஅ. எபே.ரு.அ. கொலோ.யங. க.தெச.ரு.ச,ரு. (ய) ஓசி.க.கூ,ய. ரோ.கூ.உரு. (யக)க.நாளா.உகூ.யரு. சங்.ஙகூ.யஉ.எபி.யக.யங. ரோ.யங.யச.கலா.ரு.யசா. யாக்.ச.க.(யஉ)ரோ.யஉ.யஎ. உ.கொரி.அ.உக. பிலி.உ.யச,யரு. தீத்.உ.அ. மத்.ரு.யசா. லூக்.யக.சச.(யங) மத்.உஉ.உக. ரோ.யங.க. தீத்.ங.க.

கர்த்தரினிமித்தம் அமைந்திருக்கக்கடவீர்
௰௪ கள்.—பிரதான அதிகாரமுள்ள இராசாவுக்காயி
னும், தீமைசெய்கிறவர்களுக்குத் தண்டனையை
யும், நன்மைசெய்கிறவர்களுக்குப் புகழ்ச்சியை
யுங்கொடுக்கிறதற்கு அவரால் அனுப்பப்பட்ட
௰௫ அதிபதிகளுக்காயினும் அடங்குவீர்களாக.—அறி
வில்லாத மனுஷருடைய அறியாமையை நீங்கள்
நற்கிரியைசெய்வதினால் அடக்குவது தேவனு
௰௬ டைய சித்தம்:—நீங்கள் விடுதலையாயிருந்தும்,
உங்கள் விடுதலையைத் துர்க்குணத்திற்குமூடியா
கச்சேர்த்துக்கொள்ளாமல் தேவனுக்கு அடி
௰௭ மைகளாயிருப்பீர்களாக.—எல்லாரையுங் கனம்
பண்ணுங்கள். சகோதரரை நேசியுங்கள். தே
வனுக்குப் பயந்திருங்கள். இராசாவைக் க
௰௮ னம் பண்ணுங்கள்.—வேலைக்காரரே, நல்லவர்
களுஞ் சாந்தமுள்ளவர்களுமாகிய எசமானருக்
குமாத்திரமல்ல, நிஷ்டூரமானவர்களுக்கும் மி
௰௯ குந்த பயத்துடனே கீழ்ப்படிந்திருங்கள்.—ஒரு
வன் தேவனுக்கு முன்பாக மனச்சாட்சியினி
மித்தம் அநியாயமாய்த் துக்கத்தை அனுபவித்
து, கிலேசத்தைச்சகித்தால், அதுவே அங்கிகரிக்
௨௰ கத்தக்கது.—நீங்கள் குற்றஞ்செய்து அடிபடும்
பொழுது அதைப் பொறுமையோடே சகித்தால்
அதென்னபுகழ்; நீங்கள் நன்மைசெய்து, துக்கத்
தை அனுபவிக்கும்பொழுது அதைப்பொறுமை
யோடே சகித்தால் அதுவே தேவனால் அங்கி
௨௧ கரிக்கப்படுவது.—இதற்கு நீங்கள் அழைக்கப்
பட்டுமிருக்கிறீர்கள்: கிறிஸ்து எங்களுக்குப்பி
ரதியாக உபத்திரவத்தை அனுபவித்து, நீங்கள்
தம்முடைய அடிச்சுவடுகளைத் தொடர்ந்துவரும்
படி எங்களுக்கு ஒருதிருஷ்டாந்தத்தைக்காட்டி
௨௨ னார்.—அவர் பாவஞ்செய்யவில்லை, அவர் வா
௨௩ யிலே வஞ்சனைகாணப்படவுமில்லை:—அவர் நிந்
திக்கப்பட்டபொழுது பிரதிநிந்தனை செய்யவு
மில்லை; உபத்திரவத்தை அனுபவித்தபொழுது
பயமுறுத்தவுமில்லை; நியாயமாய்த் தீர்ப்புச்செய்
௨௪ பவரிடத்தில் அதை ஒப்பித்தார்.—மேலும் நாம்
பாவத்துக்கு மரித்து நீதியுள்ளவர்களாய்ச்சீவிக்
கும்படி, அவர்தாமே சிலுவையின்மேல் தமது
சரீரத்தில் நம்முடைய பாவங்களைச் சுமந்தார்:
அவருடைய காயங்களினாலே சொஸ்தம் பெற்
௨௫ றீர்கள்.—முன்னே நீங்கள் தப்பின ஆடுகளைப்
போலிருந்தீர்கள்; இப்பொழுதோ உங்கள் ஆத்
துமங்களுக்கு மேய்ப்பரும், அத்தியட்சருமான
வரிடத்தில் திரும்பிவந்தீர்கள்.

## ௩. அதிகாரம்.

௧. ஸ்திரிபுருஷரின் கடமைகள்: ௮. ஒருவரை ஒருவர் நேசிப்பது அவசியமென்றுகாட்டல். நீதியினிமித்தந்துயரப்படல். தேவன் தமதுஆவியினால் வேதத்தை அருளல்.

மனைவிகளே, புருஷரிற் சிலர் தேவவாக்கி ௧
யத்துக்குக் கீழ்ப்படியாமலிருக்கும்பொழுது,—
பயத்தோடுகூடிய உங்கள் கற்புள்ள நடக்கை ௨
யை அவர்கள் பார்த்து, வாக்கியமின்றி உங்
கள் நடக்கையினால் உடன்படுத்தப்படுகிறதற்
கு, உங்கள் சொந்தப்புருஷருக்கு அடங்குவீர்க
ளாக.—நீங்கள் உங்கள் மயிரைப்பின்னி, பொன் ௩
னாபரணங்களை அணிந்து, முக்கியமான வஸ்தி
ரங்களைத் தரித்து,—புறம்பிலேமாத்திரம் உங்களை ௪
அலங்கரியாமல், உள்ளத்தில் மறைந்த சுபாவத்
துக்கேற்றதாகத் தேவனுடைய பார்வைக்
கு மிகுந்த விலையுள்ளதும், அழியாததுமாயிருக்
கிறசாந்தமும் அமைதலுமான ஆவியினால் உங்க
ளை அலங்கரிக்கக்கடவீர்கள்.—இவ்விதமாய், பூ ௫
ருவத்தில் தேவன்மேல் நம்பிக்கையாயிருந்
த பரிசுத்தஸ்திரிகளுந் தங்களை அலங்கரித்து, தங்
கள்புருஷருக்கு அமைந்திருந்தார்கள்.—அந்தப் ௬
பிரகாரஞ் சாராள் ஆபிரகாமை நாயகனென்று
சொல்லி அவனுக்கமைந்தாள்: நீங்கள் நன்மை
செய்து எவ்வித திகிலுக்கும் அஞ்சாதவர்களாயி
ருக்கும்பொழுது, அவளுக்குப் பிள்ளைகளானீர்
கள்.—கணவரே, உங்கள் பிரார்த்தனைகளுக்குத் ௭
தடையுண்டாகாதபடி, நீங்கள் அறிவுக்கிசைய
மனைவிகளுடன் சகவாசம்பண்ணி, அவர்கள் ப
லவீனபாத்திரங்களானபடியினாலும், நித்தியசீவ
னாகிய கிருபைக்கு உடன் சுதந்தரராகையினா
லும் அவர்களைக் கனஞ்செய்வீர்களாக.—மேலும் ௮
நீங்களெல்லாரும் ஏகசிந்தையுள்ளவர்களும், ம
னவுருக்கமுள்ளவர்களும், சகோதரநேசரும், த
யாளரும், மரியாதையுள்ளவர்களுமாகி,—தீமைக் ௯
குத்தீமையையும், நிந்தைக்கு நிந்தையையுஞ்செ
ய்யாமல், அதற்குமாறாக நீங்கள் ஆசீர்வாதத்தைச்
சுதந்தரித்துக்கொள்ளுகிறதற்கு அழைக்கப்பட்
டவர்களென்றுணர்ந்து ஆசீர்வாதத்தையே செய்
யுங்கள்.—தீர்க்காயுளைவிரும்பிச் சவுக்கியநாள்க ௰
ளைக்காணப்பிரியமானவன், தீமைக்குத் தன் நா

(௰௪) ரோ.௰௩.௩,௪. (௰௫) தீத்.௨.௮. (௰௬) கலா.௫.௧,௰௩. ௧.கொரி.௭.௨௨. (௰௭) ரோ.௰௨.௰. பிலி.௨.௩. எபி.௰௩.௧. நீதி.௨௪.௨௧. மத்.௨௨.௨௧. ரோ.௰௩.௭. (௰௮) எபே.௬.௫. கொலோ.௩.௨௨. ௧.தீமோ.௬.௧. தீத்.௨.௰. லூக்.௬.௩௨. (௰௯) மத்.௫.௰. ரோ.௰௩.௫. (௨௧) மத்.௰௬.௨௪. அப்.௰௪.௨௨. ௧.தெச.௩.௩. ௨.தீமோ.௩.௰௨. அதி.௩.௰௮. யோவா.௰௩.௰௫. பிலி.௨.௫. ௧.யோவா.௨.௬. (௨௨) ஏசா.௫௩.௯. லூக்.௨௩.௪௧. யோவா.௮.௪௬. ௨.கொரி.௫.௨௧. எபி.௪.௰௫. (௨௩) ஏசா.௫௩.௭. மத்.௨௭.௩௯. யோவா.௮.௪௮,௪௯. எபி.௰௨.௩. லூக்.௨௩.௪௬. (௨௪) ஏசா.௫௨.௪,௫,௬,௰௧. மத்.௮.௰௭. எபி.௯.௨௮. ரோ.௬.௨,௰௧. ஏசா.௫௩.௫. (௨௫) ஏசா.௫௩.௬. எசேக்.௩௪.௬,௨௩. யோவா.௰.௰௧,௰௫,௰௬. எபி.௰௩.௨௰.—(௩. அதி. ௨.) ௧.கொரி.௰௪.௩௪. எபி.௫.௨௨. கொலோ.௩.௰௮. தீத்.௨.௫. ௧.கொரி.௭.௰௬. மத்.௰௮.௰௫. ௧.கொரி.௯.௰௯—௨௨. அதி.௨.௰௨. (௩) ௧.தீமோ.௨.௯. தீத்.௨.௨. (௪) சங்.௪௫.௰௩. ரோ.௨.௨௯. ௨.கொரி.௪.௰௬. (௬) ஆதி.௰௮.௰௨. (௭) ௧.கொரி.௭.௩. எபே.௫.௨௭. கொலோ.௩.௰௯. ௧.கொரி.௰௨.௨௩. ௧.தெச.௪.௪. யோபு.௪௨.௮. மத்.௫.௨௩,௨௪. (௮) ரோ.௰௨.௰௬. பிலி.௩.௰௬. ரோ.௰௨.௰. எபி.௰௩.௧. எபே.௪.௩௨. கொலோ.௩.௰௨. (௯) நீதி.௰௭.௰௩. மத்.௫.௩௯. ரோ.௰௨.௰௪,௰௭. ௧.கொரி.௪.௰௨. ௧.தெச.௫.௰௫. மத்.௨௫.௩௪. (௰) சங்.௩௪.௰௨. யாக்.௧.௨௬. வெளி.௰௪.௫.

வையும், கபடத்துக்குத் தன் உதடுகளையும் விலக்
௰௧ கி,—துராசாரத்தைவிட்டு நன்மைசெய்து, சமாதா
னத்தைத்தேடி அதைப்பின்றொடரக்கடவன்.—
௰௨ கர்த்தர் நீதிமான்கள்மேற் கண்ணோட்டமாகி,
அவர்கள் பிரார்த்தனைகளுக்குச் செவிசாய்க்கி
றார்: கர்த்தருடைய முகந் துர்க்கருமக்கார
௰௩ ருக்கு விரோதமாயிருக்கின்றது.—நீங்கள் நன்
மையைப் பின்பற்றுகிறவர்களானால் உங்களுக்
௰௪ குத் தீங்குசெய்பவன்யாவன்.—நீதியினிமித்
தம் நீங்கள் உபத்திரவத்தை அனுபவித்தால் வாழ்
வுடையவர்களாவீர்கள்: ஆதலால் அவர்களுடை
ய பயங்கரத்துக்கு நீங்கள் பயப்படவுங் கலங்க
௰௫ வும் வேண்டாம்.—கர்த்தராகிய தேவனை
உங்கள்மனதிற் பரிசுத்தமாய் மதியுங்கள்: உங்க
ளிலுள்ள நம்பிக்கையைக்குறித்து உங்களைவி
னவும் யாவருக்குஞ் சாந்தத்தோடும், வணக்கத்
தோடும் உத்தரஞ்சொல்ல எப்பொழுதும் ஆயத்
௰௬ தமாயிருங்கள்:—கிறிஸ்துவுக்கேற்ற உங்கள்
நல்லொழுக்கத்தைத் தூஷிப்பவர்கள் உங்களைத்
தீங்குசெய்பவர்களென்று சொல்லுகிறதினாலே
வெட்கப்படும்படி நல்மனச்சாட்சியைக் காத்
௰௭ துக்கொள்வீர்களாக.—தீமைசெய்து துக்கத்தை
அனுபவிப்பதிலும், தேவனுக்குச் சித்தமா
னால், நன்மைசெய்து துக்கத்தை அனுபவிப்பது
௰௮ மேன்மை.—நீதிபரராகிய கிறிஸ்துவும் நம்மை
த் தேவனிடத்திற் சேர்க்கும்பொருட்டு, அநீ
தியுள்ளவர்களுக்குப்பிரதியாய் ஒருதரம் பாவத்
தினிமித்தம் வேதனை அனுபவித்தார்; சரீரத்தில்
அவர் கொலையுண்டு ஆவியினால் உயிர்ப்பிக்கப்
௰௯ பட்டார்.—அதினாலே காவலிலுள்ள ஆவிகளி
டத்தில் அவர்போய்ப் பிரசங்கம்பண்ணினார்.—
௨௰ அவைகள் பூருவகாலத்தில் நோவா பேழையை
ஆயத்தப்படுத்தினநாட்களில் தேவன் நீடிய
பொறுமையோடே காத்திருந்தபொழுது, கட்ட
ளைக்கமையாதிருந்தவைகள்: அதில் எட்டுப்பே
ராகிய சிலர்மாத்திரஞ் சலத்தினாலே காக்கப்பட்
௨௧ டார்கள்.—இக்காலத்தில் அதற்குத்திருஷ்டாந்த
மாகியஞானஸ்நானம் சரீரஅழுக்கைப்பரிகரியா
மல், தேவனுக்கு முன்பாக நேர்மையான மன
தின்சாட்சியாய் யேசுக்கிறிஸ்துவின் உயிர்த்
தெழுதலைக்கொண்டு நம்மையும் இரட்சிக்கின்
௨௨ றது.—அவர் பரமண்டலத்துக்கு எழுந்தருளித்
தேவனுடைய வலதுபாரிசத்தில் வீற்றிருக்கி
றார்; தேவதூதரும், அதிகாரிகளும், பராக்கிரம
முள்ளவர்களும் அவர் வசமாயிருக்கிறார்கள்.

## ௪. அதிகாரம்.

க. பாவத்துக்கு மரிக்கும்படிவேண்டல். பத்தி
யாய்நடக்கும்படி ஏவல்: ௰௨. நீதியினிமித்தந்
துயரத்தைஅனுபவிப்பதைக்குறித்துத்தேற்றல்.

கிறிஸ்து நமக்காகச் சரீரத்தில் உபத்திரவத் ௧
தை அனுபவித்தபடியால், நீங்களும் அப்படிப்
பட்டசிந்தையை ஆயுதமாகத்தரித்துக்கொள்ளுங்
கள்.—சரீரத்தில் உபத்திரவத்தை அனுபவிக்கிற ௨
வன் பாவங்களைவிட்டு ஓய்ந்திருப்பானே, அதி
னால் அவன் சரீரத்தோடே இருக்குமளவும் மனு
ஷருடைய இச்சைகளின்படியல்ல, தேவனு
டைய சித்தத்தின்படியே தன் மீதியான காலம்
விட்டிருப்பான்.—நாம் விகாரமாய்த் துராசை ௩
கொண்டு, மதுபானம்பண்ணி, பெருண்வையு
ண்டு, வெறிகொண்டு, அருவருப்பான விக்கிர
க ஆராதனையைச்செய்து, அஞ்ஞானிகளுடைய
இஷ்டத்தின்படி நடந்து கழிந்த வாழ்நாட்கா
லம் நமக்குப்போதுமே.—கேட்டுக்கேதுவாகிய ௪
அந்தத் துன்மார்க்கத்தில் அவர்களோடே நீங்க
ளும்ஓடாமலிருக்கிறதினால், அவர்கள்ஆச்சரியப்
பட்டு உங்களைத்தூஷிக்கிறார்கள்.—சீவனுள்ளோ ௫
ருக்கும், மரித்தோருக்கும், நியாயத்தீர்ப்புக்கொ
டுக்க ஆயத்தமாயிருப்பவருக்கு அவர்கள் கணக்
கொப்பிப்பார்கள்.—ஆதலால் மரித்தோர் சரீரத் ௬
திலே மனுஷராலே தண்டனைத் தீர்ப்புப்பெற்
றும், ஆவியிலே தேவனால் சீவிக்கும்படியாக
அவர்களுக்குஞ்சுவிசேஷம்பிரசித்தமாக்கப்பட்
டது.—எல்லாவற்றிற்கும் முடிவு சமீபமாயிற்று: ௭
ஆதலால் சாவதானமாயிருந்து பிரார்த்தனைபண்
ணி, புத்திதெளிந்தவர்களாயிருக்கக்கடவீர்கள்.—
விசேஷமாக ஒருவரில் ஒருவர் மிகவும் அன் ௮
பாயிருங்கள்: அன்பானது திரளானபாவங்களை
மறைக்குமே.—மொறுமொறுப்பில்லாமல் ஒரு ௯
வரை ஒருவர் உபசரிப்பீர்களாக.—அவனவன் ௰
பெற்ற வரத்தின்படி, நீங்கள் தேவனுடைய
பலவிதமான கிருபைக்கு நல்ல உக்கிராணக்
காரர்போல், ஒருவருக்கொருவர் துணைசெய்யு
ங்கள்.—ஒருவன் பேசினால், தேவனுடைய ௰௧
வாக்கியங்களுக்கேற்கப் பேசக்கடவன்: ஒ

(௰௧) சங்.௩௭.௨௭. ஏசா.க.௰௬,௰௭. ௩.யோவா.௰௧. ரோ.௰௨.௰௮. எபி.௰௨.௰௪. (௰௨) யோவா.௯.௩௧. யாக்.௫.௰௬. (௰௩) நீதி.௰௬.௭. ரோ.௮.௨௮.(௰௪)மத்.௫.௰,௰௧,௰௨. யாக்.க.௰௨. ஏசா.௮.௰௨,௰௩. எரே.க.௮. யோவா.௰௪.க,௨௭. (௰௫) அப்.௪.௮. கொலோ.௪.௬. ௨.தீமோ.௨.௨௫. (௰௬) எபி.௰௩.௰௮. தீத்.௨.௮. (௰௮) ரோ.௫.௬. எபி.௯.௨௬,௨௮. ௨.கொரி.௰௩.௪. கொலோ.க.௨௧,௨௨. ரோ.க.௩. (௰௯) அதி.க.௰௨. ஏசா.௪௨.௫. (௨௰) ஆதி.௬.௩,௫. ௰௩. எபி.௰க.௭. ஆதி.௭.௭. ௨.பேதுரு.௨.௫. (௨௧) எபே.௫.௨௫. தீத்.௩.௫. ரோ.௰.௰. அதி.க.௩. (௨௨) சங்.௱௰. க. ரோ.௮.௩௪. எபே.க.௨௰. கொலோ.௩.க. எபி.க.௩.ரோ.௮.௩௮. க.கொரி.௰௫.௨௪. எபே.க.௰க.—(௪.அதி.க.) ரோ.௬.௨,௭. கலா.௫.௨௪. கொலோ.௩.௩,௫. (௨) ரோ.௰௪.௭. கலா.௨.௨௰. யோவா.க.௰௩. ரோ.௬.௰க. ௨.கொரி.௫.௰௫. யாக்.க.௰௮. (௩) எசேக்.௪௪.௬. அப்.௰௭.௩௰. எபே.௨.௨. க.தெச.௪.௫. தீத்.௩.௩. (௪) அப்.௰௩.௪௫. [illegible] அப்.௰.௪௨. ரோ.௰௪.௰,௰௨. க.கொரி.௰௫.௫க,௫௨. ௨.தீமோ.௪.க. யாக்.௫.க. (௬) அதி.௩.௰க. (௭) மத்.௨௪.௰௩. ௰௪. ரோ.௰௩.௰௨. பிலி.௪.௫. எபி.௰.௨௫. யாக்.௫.௮. ௨.பேதுரு.௩.௯,௰க. க.யோவா.௨.௰௮. மத்.௨௬.௪க. லூக். ௨க.௩௪. கொலோ.௪.௨. (௮) கொலோ.௩.௰௪. எபி.௰௩.க. நீதி.௰.௰௨. க.கொரி.௰௩.௭. யாக்.௫.௨௰. (௯) [illegible] ௰௨.௰௩. எபி.௰௩.௨. ௨.கொரி.௯.௭. பிலி.௨.௰௪. பிலே.௰௪. (௰) ரோ.௰௨.௬. க.கொரி.௪.௭. மத்.௨௪.௪௫. லூக். ௰௨.௪௨. க.கொரி.௪.க,௨. தீத்.க.௭. க.கொரி.௰௨.௪. எபே.௪.௰௬. (௰க) எரே.௨௩.௨௨. ரோ.௰௨.௬,௭,௮. க.[illegible] [illegible].௩.௰. எபே.௫.௨௰. க.தீமோ.௬.௰௬. வெளி.க.௬.

ருவன் ஊழியஞ்செய்தால்,தேவன் அருளிய சா
மர்த்தியத்திற்கேற்கச் செய்யக்கடவன்: அ
தினால் எல்லாவிதத்திலேயும் யேசுக்கிறிஸ்
துவினாலே தேவனுடைய மகிமை விளங்
கப்படும், அவருக்கே துதியும், வல்லமையுஞ் ச
தாகாலங்களிலுமுண்டாகக்கடவன. ஆமென்.—
௰௨ பிரியமானவர்களே,உங்களைப்பரீட்சிக்கும் அக்
கினி உங்களுக்குநேரிட, அபூருவமானகாரியம்
நிகழ்ந்ததென்று கருதி ஆச்சரியப்படாமல், கி
றிஸ்துவின் உபத்திரவத்திற் பங்குபெற்றதினா
௰௩ லே சந்தோஷப்படுங்கள்.—அதினால் அவர் ம
கிமை பிரகாசிக்குங்காலத்தில் நீங்கள் பரமானந்
௰௪ தத்துடன் களிகூர்ந்திருப்பீர்கள்.-கிறிஸ்துவி
ன் நாமத்தினிமித்தம் நீங்கள் நிந்திக்கப்பட்டால்
வாழ்வுடையவர்கள்; தேவனுடைய மகிமை
யுள்ள ஆவி உங்கள்மேல் தங்கும்: அவர், அவர்க
ளால் நிந்திக்கப்பட்டும், உங்களால் துதிக்கப்படு
௰௫ வார்.-உங்களில் ஒருவனுங் கொலைபாதகனாவது,
திருடனாவது, துராசாரனாவது,பிறர்காரியங்களி
ல் தலையிடுகிறவனாயாவது தண்டனைபடாதபடி
௰௬ பாருங்கள்.-ஒருவன்கிறிஸ்தவனாயிருப்பதினிமி
த்தம்உபத்திரவப்பட்டால்இலச்சைஅடை
யாமலிருந்து, தேவனை அதினிமித்தந்துதிசெய்
௰௭ யக்கடவன்.—நியாயத்தீர்ப்புத் தேவாலயத்தில்
ஆரம்பமாகிறதற்குக் காலம்வந்தது: முதலாவது
நம்மிடத்தில் அது ஆரம்பித்தால்,தேவனு
டைய சுவிசேஷத்திற்கு அமையாதவர்களின்
௰௮ முடிவு என்னவாயிருக்கும்.—நீதிமான் இரட்
சிக்கப்படுவது அரிதானால், அநீதிமானும், பாவி
௰௯ யும் எங்கே நிற்பார்கள்.—ஆகையால் தேவனு
டைய சித்தத்தின்படி துக்கத்தை அனுபவிக்கி
றவர்கள்,நன்மைசெய்கிறவர்களாய்த்தங்கள் ஆத்
துமங்களை உண்மையுள்ள சிருஷ்டி கர்த்தரி
டத்தில் ஒப்பிக்கக்கடவர்கள்.

## ௫. அதிகாரம்.

க. முதியோரின்கடமை: ரு. வாலிபர்முதலானவ
ர்களின்கடமை: ய. மங்கலப்பிரார்த்தனை: யஉ.
நிருபத்தின்முடிவோடு வாழ்த்துதல்சொல்லல்.

கிறிஸ்துவின் உபத்திரவங்களுக்குச் சாட்சி
யும்,வெளிப்படும் மகிமைக்குப் பங்காளியும், உ
டன்முதியோனுமாகியநான்,உங்களிலுள்ளமுதி
யோருக்கு வேண்டுதலாக இவ்வாக்குகளைச்சொ
௨ ல்லுகிறேன்.—உங்களுக்குள்ளேயிருக்கிற தே
வனுடைய ஆட்டுக்கூட்டத்தை நீங்கள் மேய்த்
துக்கொள்ளுங்கள், கட்டாயத்தோடல்ல, இஷ்
டமாகவும், இழிவான ஆதாயத்துக்கல்ல,சந்தோ
ஷமனதோடும்,—சுதந்தரத்துக்கு அதிகாரிகளா ௩
யிராமல், ஆட்டுக்கூட்டத்துக்குத் திருஷ்டாந்
தங் காட்டுகிறவர்களாகவும், அதை விசாரிக்
கக்கடவீர்கள்.—பிரதானமேய்ப்பர் வெளிப்ப ௪
டும்பொழுது, வாடாமகிமையுள்ள முடியைப்
பெறுவீர்கள்.—வாலிபரே, முதியோருக்கமைந் ௫
திருங்கள். நீங்களெல்லாரும் ஒருவருக்கொரு
வர் கீழ்ப்படிந்து, மனத்தாழ்மையை அணிந்து
கொள்வீர்களாக: அகங்காரிகளைத் தேவன் வி
ரோதிக்கிறார், தாழ்ந்த சிந்தையுள்ளவர்களுக்கு
க்கிருபை அருளுகிறார்.—ஆதலால் ஏற்றகாலத் ௬
திலே தேவன் உங்களை உயர்த்தும்பொருட்
டு, அவருடைய வலக்கரத்தின்கீழ் அடங்குவீர்
களாக.—அவர் உங்களை விசாரிக்கிறபடியினால், ௭
உங்கள் கவலையையெல்லாம் அவர்மேற் சுமத்
திவிடுங்கள்.—தெளிந்த புத்தியுள்ளவர்களாயிரு ௮
ங்கள், விழித்திருங்கள்; உங்கள் விரோதியாகி
ய பிசாசானவன் கருச்சிக்கிற சிங்கம்போல் எ
வனை விழுங்கலாமென்று வகைதேடிச் சுற்றித்
திரிகிறான்.—உலகத்தில் உங்கள் சகோதரரிடத் ௯
திலும் இவ்விததுக்கங்களுண்டென்றறிந்து, நீங்
கள் விசுவாசத்தில் உறுதியாயிருந்து,அவனுக்கெ
திர்த்துநில்லுங்கள்.—சகலவித கிருபைக்குங் கா ௰
ரணரும், சொற்பகாலந் துக்கப்படுகிற நம்மைக்
கிறிஸ்துயேசுவினால் தமது நித்தியமகிமை
க்கு அழைத்தவருமாகிய தேவன் தாமே உங்க
ளைச் சம்பூரணப்படுத்தி, ஸ்திரமாக்கி, திடமு
றுத்தி, அஸ்திபாரப்படுத்தக்கடவர்.—அவருக்கே ௰௧
மகிமையும், வல்லமையும், சதாகாலங்களிலும்
இருக்கக்கடவன. ஆமென்.—நீங்கள் ஸ்திரப் ௰௨
படப்பெற்றகிருபை தேவனுடைய சத்தியகி
ருபைதானென்பதைக்குறித்து நான் உங்களை எ
ச்சரித்துச்சாட்சியிடுகிறேன்,சிலுவானுஉண்மை
யுள்ள சகோதரனென்றெண்ணி, நான் சுருக்க
மாய் எழுதின பத்திரத்தை அவன் கையிலே
கொடுத்து அனுப்பினேன்.—உங்களுடன் பாபி ௰௩
லோனில் தெரிந்துகொள்ளப்பட்டிருக்கிறவர்க
ளும், என்புத்திரனாகிய மாற்கும் உங்களை வாழ்த்
துகிறார்கள்.—ஒருவரை ஒருவர் அன்பின் முத் ௰௪
தத்தினாலே வாழ்த்துதல்செய்வீர்களாக. கிறிஸ்
துயேசுவைச்சார்ந்த உங்களனைவருக்குஞ் ச
மாதானமுண்டாவதாக. ஆமென்.

---

(௰௨) ௧.கொரி.௩.௰௩. அப்.௫.௪௧. யாக்.௧.௩. ரோ.௮.௰௭. ௨.கொரி.௧.௭. பிலி.௩.௰. கொலோ.௧.௨௪. ௨.தீமோ.
௨.௰௨. வெளி.௧.௯. (௰௪) மத்.௫.௰௧. ௨.கொரி.௰௨.௰. யாக்.௧.௰௨. அதி.௨.௰௨.(௰௫)அதி.௨.௨௰. ௧.தெச.௪.௰௨.
௧.தீமோ.௫.௰௩. (௰௬) அப்.௫.௪௧. (௰௭) ஏசா.௰.௰௪. எரே.௨௫.௨௯. எசேக்.௯.௬. மல்.௩.௫. லூக்.௨௩.௩௧. லூக்.
௰.௰௧,௰௩.(௰௮)நீதி.௰௧.௩௧. லூக்.௨௩.௩௧. (௰௯) சங்.௩௧.௫. லூக்.௨௩.௪௬. ௨.தீமோ.௧.௰௨.—(௫.அதி.௧.) பிலே.
௮. லூக்.௨௪.௪௮. அப்.௧.௮,௨௨. ரோ.௮.௰௭,௰௮. வெளி.௧.௯. (௨) யோவா.௨௧.௰௫,௰௬,௰௭. அப்.௨௰.௨௮.
௧.கொரி.௯.௰௭. ௧.தீமோ.௩.௨,௮. தீத்.௧.௭. (௩) எசேக்.௩௪.௪. மத்.௨௰.௨௫,௨௬. ௧.கொரி.௩.௯. ௨.கொரி.௧.௨௪.
சங்.௩௩.௰௨. பிலி.௩.௰௭. ௨.தெச.௩.௯. ௧.தீமோ.௪.௰௨. தீத்.௨.௮. (௪) எபி.௰௩.௨௰. ௧.கொரி.௯.௨௫. ௨.தீமோ.
௪.௮. யாக்.௧.௰௨. அதி.௧.௪. (௫) ரோ.௰௨.௰. எபே.௫.௨௧. (௬) யாக்.௪.௰. (௭) சங்.௩௭.௫.மத்.௬.௨௫. லூக்.௰௨.
௰௧,௨௨. பிலி.௪.௬. எபி.௰௩.௫. (௮) லூக்.௨௧.௩௪,௩௬. ௧.தெச.௫.௬. யோபு.௧.௭. லூக்.௨௨.௩௧. வெளி.௰௨.௰௨.
(௯) எபே.௬.௰௧,௰௩. (௰) ௧.கொரி.௧.௯. ௧.தீமோ.௬.௰௨. ௨.கொரி.௪.௰௮. எபி.௰௩.௨௧ ௨.தெச.௨.௰௭. (௰௧)
அதி.௪.௰௧. வெளி.௧.௬. (௰௨) ௨.கொரி.௧.௰௯. ௨.பேதுரு.௧.௰௨. (௰௩) அப்.௰௨.௰௨,௨௫. (௰௪) ரோ.௰௬.௰௬.
௧.கொரி.௰௬.௨௰. ௨.கொரி.௰௩.௰௨. ௧.தெச.௫.௨௬. எபே.௬.௨௩.

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதிய சாதாரண

## இரண்டாம் நிருபம்.

---

### ௧. அதிகாரம்.

*௧. வாழ்த்து: ௩. கிருபையினிமித்தம் நன்றியறிந்தவர்களாய் நாநாவித நற்கிரியைகளைச் செய்ய ஏவல்: ௰௨. பேதுரு தன்மரணத்தைக்குறித்தல். கிறிஸ்து மெய்யானஇரட்சகரென்றுசாதித்தல்.*

நம்முடைய தேவனும் இரட்சகருமாகிய யே
சுக்கிறிஸ்துவின் நீதியைக்கொண்டு எங்க
ளைப்போல அருமையான விசுவாசம்பெற்றவர்
களுக்கு, யேசுக்கிறிஸ்துவின் பணிவிடைக்
காரனும், அப்போஸ்தலனுமாகிய சீமோன் பே
௨ துரு எழுதிக்கொள்வது:—தேவனையும், நம்மு
டைய கர்த்தராயிருக்கிற யேசுவையும்
அறிகிற அறிவினால், உங்களுக்குக்கிருபையுஞ்
௩ சமாதானமும் பெருகக்கடவன.—மகிமைக்கும்,
ஒழுக்கத்துக்கும் நம்மை அழைத்தவரை நாம் அ
றிகிற அறிவினால், அவருடைய திவ்வியவல்ல
மையானது சீவனுக்கும் மெய்த்தேவபத்திக்கும்
௪ ஏற்ற யாவையும் நமக்குத்தந்தது.—விசேஷமாகத்
துராசையினால்இப்பிரபஞ்சத்திலுண்டானகேட்
டினின்று நீங்கள் விடுதலைபெற்று, தேவகுணத்
திற்குப் பங்காளராகும்பொருட்டு, மகா மேன்
மையும் அருமையுமான வாக்குத்தத்தங்கள் அதி
௫ னால் நமக்கு அருளப்பட்டன.—இதுவுமல்லா
மல், நீங்கள் மிகவுஞ்சாக்கிரதையுள்ளவர்களாய்,
உங்கள் விசுவாசத்தோடே தைரியத்தையும், தை
௬ ரியத்தோடே அறிவையும்,-அறிவோடே இச்சை
யடக்கத்தையும், இச்சையடக்கத்தோடே பொ
றுமையையும், பொறுமையோடே மெய்த்தேவ
௭ பத்தியையும்,—மெய்த்தேவபத்தியோடே சகோ
தரநேசத்தையும், சகோதரநேசத்தோடே அன்
௮ பையுங்கூட்டிக்கொள்வீர்களாக.-இவைகள்உங்
கள்உள்ளத்திலிருந்துவிருத்தியடைந்தால்,இவை
கள் உங்களை நம்முடைய கர்த்தராகிய யே
சுக்கிறிஸ்துவை அறிகிற அறிவிலே வீணர்
களும் பலனற்றவர்களுமாய் இருக்க விடுவதில்
௯ லை.—இவைகளில்லாதவனெவனோ, அவன் கண்
மூடிக்குருடனாகி, தன் முந்தினபாவங்களினின்
று சுத்திகரிக்கப்பட்டானென்பதை மறந்துவிட்
டான்.-ஆகையால் சகோதரரே, உங்கள் அழைப் ௰
பையும், தெரிந்துகொள்ளப்படுதலையும் உறுதி
யாக்கும்படி, அதிக சாக்கிரதையாயிருப்பீர்களா
க: இவைகளைச்செய்தால் நீங்கள் ஒருபொழு
தும் வழுவமாட்டீர்கள்.-அன்றியும் நம்முடைய ௰௧
கர்த்தரும் இரட்சகருமாகிய யேசுக்கிறிஸ்
துவின் நித்திய இராச்சியத்திற் பிரவேசித்தல்,
பூரணமாய் உங்களுக்கு அருளப்படும்.—ஆனப ௰௨
டியால் நீங்கள் இவைகளை அறிந்து, இப்பொழு
து உங்களுக்குக்கிடைத்த சத்தியத்தில் ஸ்திரப்
பட்டிருந்தும், நான் எப்பொழுதும் இவைகளை
உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறதற்கு அசதியா
யிரேன்.-நம்முடையகர்த்தராகியயேசுக்கி ௰௩
றிஸ்து எனக்குத்தெரிவித்தபிரகாரம், நான் சீக்
கிரமாய் என் கூடாரத்தை விட்டுப்போகவேண்
டுமென்றறிந்து,—இந்தக்கூடாரத்தில் தங்குமள ௰௪
வும் ஞாபகப்படுத்துதலினால் உங்களைத்தூண்டு
வது தகுதியென்று நான் கருதுகிறேன்.—மே ௰௫
லும் நான் போனதின்பின்பும், நீங்கள் இவை
களை எப்பொழுதும் உங்கள் நினைவில் வைப்ப
தற்கேதுவாகப் பிரயத்தினம்பண்ணுகிறேன்.—
நம்முடைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ் ௰௬
துவின் வல்லமையையும் வருகையையும் உங்க
ளுக்கு அறிவித்தபொழுது, கற்பிதமான கட்டுக்
கதைகளைப்பின்பற்றாமல், அவருடைய மகிமை
யைப் பிரத்தியட்சமாகக்கண்ட சாட்சிகளாயி
ருக்கிறோம்.—"இவர் எனது அன்பான குமாரன், ௰௭
இவரிற் பிரியமாயிருக்கிறேன்," என்கிற சத்தம்
மேன்மைபொருந்திய மகிமையினின்றுந் தோன்
றினபொழுது, அவர் பிதாவாகிய தேவனால்
கனத்தையும், மகிமையையும் பெற்றார்.—அவரு ௰௮
டனே நாங்கள் பரிசுத்த மலையிலிருந்தபொழு
து, வானத்திற்பிறந்த அந்தச் சத்தத்தைக்கேட்
டோம்.—மேலும் அதிக உறுதியான தீர்க்கதரிச ௰௯
ன வாக்கியமும் நமக்குண்டு; விடிவெள்ளி உங்
கள் இருதயங்களில் உதயமாகி அருணோதயமா
குமட்டும், இருளானஸ்தானத்திற் பிரகாசிக்கிற
ஒளியைப்போல் அந்த வாக்கியத்தைப்பார்த்து,

---

(௧. அதி. ௧.) ரோ.௧.௰. ௨.கொரி.௪.௰௩. எபே.௪.௫. தீத்.௧.௪. தீத்.௨.௰௨.(௨)தானி.௪.௧. ௧.பேதுரு.௧.௨. யூதா.௨.(௩)யோவா.௰௭.௩. ௧.தெச.௨.௰௨. ௨.தெச.௨.௰௪. ௨தீமோ.௧.௯. ௧.பேதுரு.௨.௯.(௪)௨.கொரி.௭.௧. ௨.கொரி.௩.௰௮. எபே.௪.௨௪. எபி.௰௨.௰. ௧.யோவா.௩.௨. அதி.௨.௰௮,௨௰. (௫) அதி.௩.௰௮. ௧.பேதுரு.௩.௭.(௭)கலா.௬.௰. ௧.தெச.௩.௰௩. ௧.யோவா.௪.௨௧.(௮)யோவா.௰௫.௨. தீத்.௩.௰௪.(௯)௧.யோவா.௨.௯,௰௧. எபே.௫.௨௫. எபி.௯.௰௪. ௧.யோவா.௧.௭. (௰) ௧.யோவா.௩.௰௯. அதி.௩.௰௭. (௰௨) ரோ.௰௫.௰௪,௰௫. பிலி.௩.௧. ௧.யோவா.௨,௨௧. யூதா.௫. ௧.பேதுரு.௫.௰௨. (௰௩) ௨.தீமோ.௪.௬. யோவா.௨௧.௰௮,௰௯. (௰௪) ௨.கொரி.௫.௧,௪. அதி.௯.௨. (௰௬) ௧.கொரி.௧.௰௭. ௨.கொரி.௨.௰௭. மத்.௰௭.௧,௨. மாற்.௯.௨. யோவா.௧.௰௪. ௧.யோவா.௧.௧.(௰௭)மத்.௩.௰௭. மத்.௰௭.௫.(௰௮)யாத்.௩.௫.யோசு.௫.௰௫. மத்.௰௭.௬.(௰௯)சங்.௱௰௯.௱௫. யோவா.௫.௩௫. வெளி.௨.௨௮. ௨.கொரி.௪.௪,௬.

அதின்மேற் சிந்தைவைப்பது உங்களுக்கு நலம்.-
உ௰ வேதத்திலுள்ள எந்தத்தீர்க்கதரிசனவாக்கியமாவ
து சொந்தக் கருத்துக்கொள்ளாதென்று பிரதான
உக மாய்ச்சிந்தித்துக்கொள்ளுங்கள்.—தீர்க்கதரிசன
வாக்கியம் பூருவகாலத்திலே மனுஷருடைய சித்
தத்தினாலே வரவில்லையே: தேவனுடைய ப
ரிசுத்ததாசர் பரிசுத்த ஆவியினால் உணர்த்தப்பட்
டுவசனித்தார்கள்.

## உ. அதிகாரம்.

க. கள்ளத்தீர்க்கதரிசிகளைக்குறித்தல்: ச. அவர்களுடைய குற்றமும், தண்டனையும், நீதிமான்களுடைய இரட்சிப்புமாகிய இவைகளைத்தெரிவித்தல்.

கள்ளத்தீர்க்கதரிசிகளுஞ் சனங்களுக்குள்ளிருந்
தார்கள், அந்தப்பிரகாரங் கள்ளப்போதகர்கள்
உங்களுக்குள்ளுமிருப்பார்கள், அவர்கள் கேட்
டுக்கேதுவான பொய்ப்போதகங்களைத் தந்திர
மாய்நுழைத்து, தங்களைக்கொண்ட கர்த்தரை
மறுதலித்து, தங்களுக்குச்சடிதியான அழிவைவ
உ ருவிப்பார்கள்.—அவர்களுடைய கெட்டமார்க்
கங்களை அநேகர் பின்பற்றுவார்கள்; அவர்கள்நி
௩ மித்தஞ் சத்தியமார்க்கந் தூஷிக்கப்படும்.—பொ
ருளாசையுள்ளவர்களாய் அவர்கள் தந்திரமான
வாக்கியங்களினால் ஆதாயத்துக்காக உங்களை ந
டத்துவார்கள்: பூருவந்தொடங்கிச் சொல்லப்
பட்டதண்டனை அவர்களுக்கு நேரிடும், அவர்
ச களுடைய நாசம் உறங்காது.-பாவஞ்செய்ததே
வதூதரைத் தேவன் தப்பவிடாமல் அந்தகாரத்
தின் சங்கிலிகளினாலேகட்டி, பாதாளத்திலேதள்
ளி, நியாயத்தீர்ப்புக்கு வைக்கப்பட்டவர்களாய்
ரு ஒப்புக்கொடுத்ததினாலும்,—பழைய உலகத்தை
யுந் தப்பவிடாமல் நீதியைப் பிரசங்கித்தவனா
கிய நோவாமுதலான எட்டுப்பேரைமாத்திரங்
காப்பாற்றி, தேவபத்தியில்லாத உலகத்தின்மே
ற் சலப்பிரளயத்தை வரப்பண்ணினதுமன்றி,—
கூ சோதோம், கொமோராவென்னும் நகரங்களை
யுஞ் சாம்பலாக்கிக் கவிழ்த்துவிடத் தண்டனைக்
குள்ளாகத்தீர்த்து, பிற்காலத்தில் அவபத்தியாய்
நடப்பவர்களுக்குத் திருஷ்டாந்தமாக ஏற்படுத்
எ தினதினாலும்,—துராத்துமாக்களுக்குள்ளே வா
சமாயிருக்கையில் அவர்களுடைய மோகத்தால்
அ வருத்தப்பட்டு,—நாடோறும் அவர்களுடை
ய பாவக் கிரியைகளைக் கண்டு கேட்டு, நீதியுள்
ள தன்னுடைய ஆத்துமத்திலே கிலேசத்தை அ
னுபவித்த அந்த நீதிமானாகிய லோத்தைக் கர்த்
௯ தர் இரட்சித்ததினாலும்,—பத்தியுள்ளவர்களைச்
சோதனைகளினின்று விடுவிக்கவும்,—துன்மார்க் ௰
கரை, விசேஷமாக அசுத்தத்தின் இச்சையோ
டே மாமிசத்திற்கேற்க நடந்து, அரசாளுகை
யை அவமதித்தவர்களைத் தண்டனைக்காக, நியா
யத்தீர்ப்பு நாள்வரைக்கும் காவலிலடைத்துவை
க்கவும் அறிவாரென்று விளங்கும். இவர்கள்
துணிகரமுள்ளவர்கள், அகங்காரிகள், அஞ்சா
மல் மேலோரைத்தூஷிக்கிறவர்கள்.-இவர்களைப் ௰க
பார்க்கிலும் அதிக வல்லமையும் பராக்கிரமமு
முள்ளதேவதூதரும், கர்த்தருக்குமுன்பாக அ
வர்களுக்கு விரோதமாய் நிந்தனையுள்ள குற்றத்
தைச்சாற்றமாட்டார்கள்.—இவர்களே பிடியுண் ௰உ
டழிக்கப்படுவதற்குண்டானபுத்தியற்ற மிருகங்
களைப்போலத் தங்களுக்குத் தெரியாதவைகளை
நிந்தித்து, தங்கள் கேட்டினாலே முழுவதும் அ
ழிக்கப்பட்டு, துர்க்கிரியைக்குத்தக்கபலனை அ
டைவார்கள்.—இவர்கள் பகற்காலத்திலும் போ ௰௩
சனம்பண்ணிக் காலம்போக்குவது சௌக்கிய
மென்றெண்ணுகிறார்கள். தங்கள் கபடத்தினாற்
சுகபோகிகளாயிருந்து, உங்களுடனே விருந்
துண்கையில் களங்கமுந் தோஷமுமாயிருக்கி
றார்கள்.—பரஸ்திரிவசப்பட்டதும், பாவத்தை ௰ச
விட்டொழியாததுமாகிய கண்ணுள்ளவர்கள், ஸ்
திரமற்ற ஆத்துமாக்களை வஞ்சிப்பவர்கள், பொ
ருளாசைகளிற் பழகின இருதயமுள்ளவர்கள்;
சபிக்கப்பட்ட சந்ததியார்.—நன்னெறியை விட் ௰ரு
டுத்தவறி, அநியாயத்தின்கூலியைவிரும்பின பே
யோரின் புத்திரனாகிய பிலியாமின் வழியிலுட்
பட்டுப்போகிறார்கள்.—அந்தத் தீர்க்கதரிசி தன் ௰கூ
குற்றத்தினிமித்தங் கடிந்துகொள்ளப்பட்டான்:
பேச்சற்றகழுதை, மனுஷர்பேச்சைப்பேசி, அ
வன் மதிகேட்டைத்தடுத்தது,—அவர்கள் நீரற்றகி ௰எ
ணறுகள், சுழல்காற்றினால் அடிக்கப்படுகிற மே
கங்கள்; அவர்களுக்கு நித்திய அகோர அந்தகார
மிடப்பட்டிருக்கின்றது.—வஞ்சகமாய் நடக்கி ௰அ
றவர்களைவிட்டுத் தப்பினவர்களிடத்தில் அவர்
கள் மிகவும் அகந்தையான வீண்மொழிகளைப்
பேசி, மாமிசஇச்சைகளினாலும், விகாரங்களினா
லும் தந்திரமாய் வசிகரம் பண்ணுகிறார்கள்.—
தாங்களே கேட்டுக்கு அடிமைகளாயிருந்தும் அ ௰௯
வர்களுக்கு விடுதலையை வாக்குத்தத்தம் பண்
ணுகிறார்கள்: எதினால் ஒருவன் மேற்கொள்ளப்
பட்டிருக்கிறானோ, அதற்கே அடிமைப்பட்டி
ருக்கிறான்.—கர்த்தரும், இரட்சகருமாகிய யே உ௰
சுக்கிறிஸ்துவை அறிகிற அறிவினால் உல
கத்தின் அசுத்தங்களுக்குத் தப்பினவர்கள், தி

(உ௰)ரோ.௰உ.கூ.(உக)உ.தீமோ.௩.௰கூ. க.பேதுரு.க.௰. உ.சாமு.உ௩.உ. லூக்.க.கூ௯. அப்.க.௰கூ.—(உ. அதி.க.) உபா.௰௩.க. மத்.உச.௰க. அப்.உ௰.௩௰. க.கொரி.௰க.௰௯. க.தீமோ.ச.உ. உ.தீமோ.௩.க,ரு. க.யோவா.ச.க. யூதா. ச.௰அ. க.கொரி.கூ.உ௰. கலா.௩.௰ச. எபே.க.அ. எபி.௰.உ௯. க.பேதுரு.க.௰அ. வெளி.ரு.௯. பிலி.௩.௰௯.(௩)ரோ. ௰கூ.௰அ. உ.கொரி.௰உ.௰எ,௰அ. க.தீமோ.கூ.ரு. தீத்.க.௰க. உ.கொரி.உ.௰எ. உபா.௩உ.௩ரு. யூதா.ச,௰ரு.(ச)யோபு. ச.௰அ. யூதா.கூ. யோவா.அ.சச. க.யோவா.௩.அ. லூக்.அ.௩க. வெளி.உ௰.உ,௩. (ரு) ஆதி.எ.க,எ,உ௩. எபி.௰க.எ. க.பேதுரு.௩.உ௰. க.பேதுரு.௩.௰௯. அதி.௩.கூ. (கூ) ஆதி.௰௯.உச. உபா.உ௯.உ௩. யூதா.எ. எண்.உகூ.௰.(எ)ஆதி. ௰௯.௰கூ. (அ) சங்.௱௰௯.௱௩௯,௱ருஅ. எசேக்.௯.ச. (௯) சங்.௩ச.௰எ,௰௯. க.கொரி.௰.௰௩. (௰) யூதா.ச,எ,அ,௰,௰கூ. (௰க) யூதா.௯. (௰உ) எரே.௰உ.௩. யூதா.௰. (௰௩) பிலி.௩.௰௯. யூதா.௰உ. க.கொரி.௰க.உ௰,உக.(௰ச)யூதா.௰க.(௰ரு) எண்.உஉ.கூ,எ,உக,உ௩,உஅ. யூதா.௰க. (௰எ) யூதா.௰உ,௰௩. (௰அ) யூதா.௰கூ. அப்.உ.ச௰. (௰௯) கலா.ரு.௰௩. க.பேதுரு.உ.௰கூ. யோவா.அ.௩ச. ரோ.கூ.௰கூ. (உ௰) மத்.௰உ.சரு. லூக்.௰க.உகூ. எபி.கூ.ச. அதி.க.உ,ச.

ரும்பவும் அவைகளிற் சிக்கிக்கொண்டு செயிக்
கப்பட்டால், அவர்களுடைய முன்னிலைமையி
லும் பின்னிலைமை அதிககேடுள்ளதாயிருக்கும்.-
௨௧ அவர்கள் நீதியின்மார்க்கத்தை அறிந்தபின் தங்
களிடத்தில் ஒப்பிக்கப்பட்ட பரிசுத்தகட்டளை
யைவிட்டு விலகுவதிலும், அதை அறிந்துகொள்
௨௨ ளாமலிருப்பதே அவர்களுக்கு நலம்.—"நாய்,
தான் கக்கினதைத் தின்கின்றது," என்றும், "க
ழுவப்பட்ட பன்றி சேற்றிலே புரளுகின்றது,"
என்றுஞ்சொல்லுகிற மெய்யான பழமொழியின்
படி அவர்களுக்குச்சம்பவித்தது.

## ௩. அதிகாரம்.

க. கிறிஸ்துவின் வருகையையும் உலகந் தகிக்
கப்படுவதையுங்குறித்தல்: ௰க. பத்தியுள்ளவர்
களாய் நடக்கும்படி பேதுரு வேண்டல்: ௰௪.
நிருபத்தின்முடிவுரை.

பிரியமானவர்களே, இந்த இரண்டாம் நிருபத்
தை உங்களுக்கு இப்பொழுது எழுதுகிறேன்:
பரிசுத்ததீர்க்கதரிசிகளால் முன்சொல்லப்பட்ட
வாக்கியங்களையும், இரட்சகராயிருக்கிற கர்த்
தருடைய அப்போஸ்தலராகிய எங்கள் கட்ட
௨ ளைகளையும் நீங்கள் நினைக்கும்பொருட்டு,—இ
வைகள் இரண்டினாலும் உங்கள்உண்மையான
௩ மனதை ஞாபகப்படுத்தி எழுப்புகிறேன்.-கடை
சிக்காலத்தில், தங்கள் சுய இச்சைகளின்படி
நடக்கும்நிந்தனைக்காரர்தோன்றுவார்கள், விசே
ஷமாக இதையே உணர்ந்துகொள்ளுங்கள், அ
வர் வருவாரென்று சொல்லுகிற வாக்குத்தத்த
௪ மெங்கே.—பிதாக்கள் மகாநித்திரை அடைந்த
பின்பு, சகலமுஞ் சிருஷ்டிப்புத்தொடங்கி இ
௫ ருந்தவிதமாயிருக்கின்றதேயென்பார்கள்.—பூரு
வகாலத்தில் ஆகாயமண்டலங்களும், சலத்தி
னின்றுதோன்றி, சலத்திலே நிலைகொண்ட பூ
மண்டலமுந் தேவவாக்கினாற்சிருஷ்டியாயின.—
௬ அதினால் அப்பொழுது இருந்தஉலகம்வெள்ளங்
கொண்டு அழிந்துபோயிற்றே: இதை அவர்கள்
சுய இச்சையின்படிக்குக் கருதிக்கொள்ளாமலி
௭ ருக்கிறார்கள்.—இப்பொழுது இருக்கிற ஆகாய
மண்டலமும் பூமண்டலமுமோ, அந்தவாக்கினா
ல் அக்கினிக்கு இரையாகவைக்கப்பட்டு, தேவ
பத்தியில்லாதமனுஷருக்கு நியாயத்தீர்ப்பும்நாச
முமுண்டாகும் நாள்வரைக்குங்காக்கப்படுகின்
௮ றன.-பிரியமானவர்களே, கர்த்தரிடத்தில் ஒ
ருநாள் ஆயிரம்வருஷங்களைப்போலவும்,ஆயிரம்
வருஷங்கள் ஒருநாளைப்போலவுமிருக்கின்றன.
இந்த ஒரேகாரியத்தை அறியாதிருக்கவேண்டா
ம்.—தாமதித்திருக்கிறாரென்று சிலர்எண்ணுகிறபி ௯
ரகாரங் கர்த்தர் தமது வாக்குத்தத்தத்தைக்குறித்
துத்தாமதமாயிராமல், ஒருவருங்கெட்டுப்போகா
மல் எல்லாரும் மனந் திரும்பவேண்டுமென்று
விரும்பி, நம்மேல் நீடிய பொறுமையுள்ளவரா
யிருக்கிறார்.—கர்த்தருடைய நாள் இராத் ௰
திரியிலே திருடன் வருவதுபோல் வரும்; அ
தில் ஆகாயமண்டலங்கள் மகா சத்தத்தோடே
ஒழிந்துபோம், பூதியங்கள் எரிந்து கரைந்து
போம், பூமண்டலமும் அதிலுள்ள சகல கி
ரியைகளுந் தகிக்கப்படும்.—இப்படி இவையெ ௰க
ல்லாம் கரைந்து போகிறவைகளாயிருக்க, நீங்
கள் பரிசுத்தநடையிலுந் தேவபத்தியிலும் எப்
படிப்பட்டவர்களாயிருக்கவேண்டும்.—ஆகாய ௰௨
மண்டலங்கள் வெந்து கரைந்து, பூதங்கள் எரிந்
து உருகிப்போகும்.—தேவனுடைய நாள் ௰௩
வருவதைவிரும்பிக் காத்திருந்து, அவருடைய
வாக்குத்தத்தத்தின்படி, நீதி வாசமாயிருக்கும் பு
திய ஆகாயமண்டலங்களும்,புதிய பூமண்டலமு
முண்டாகுமென்று காத்திருக்கிறோம்.-ஆதலால் ௰௪
பிரியமானவர்களே, அவைகள் வரக்காத்திருக்
கிற நீங்கள், அவரால் மாசுங்குற்றமுமில்லாதவர்
களாய்ச் சமாதானத்தோடே காணப்படும்படி
சாக்கிரதையாயிருங்கள்.—நம்முடைய கர்த்த ௰௫
ரின் நீடிய பொறுமையே இரட்சிப்புக்கேதுவா
யிருக்கின்றதென்று எண்ணிக்கொள்வீர்களாக;
நமக்குப் பிரியமான சகோதரனாகிய பவுலும்
தனக்கருளப்பட்ட ஞானத்தின்படி அப்படியே
உங்களுக்கு எழுதியிருக்கிறான்.—அவன் தன ௰௬
து எல்லாநிருபங்களிலேயும் இவைகளைக்குறித்
துப் பேசியிருக்கிறான்; அவைகளிற் சிலவற்றை
அறிகிறது அருமையாயிருக்கின்றது, கல்லாத
வர்களும், ஸ்திரமில்லாதவர்களுந் தங்களுக்கு
நாசம் வருவிக்கத்தக்கதாக மற்றவேதவாக்கியங்
களைப்போல அவைகளையும் புரட்டுகிறார்கள்.—
ஆதலால் பிரியமானவர்களே, நீங்கள் இவைக ௰௭
ளை முன்னறிந்து, அந்தப்பாவிகளுடைய வஞ்
சகத்தில் இழுப்புண்டுபோகாமலும், உங்கள் ஸ்
திரத்தைவிட்டு விழாமலுஞ் சாவதானமாயிருங்
கள்.—நம்முடைய கர்த்தரும், இரட்சகருமாகி ௰௮
ய யேசுக்கிறிஸ்துவின் கிருபையிலும், அவ
ரை அறிகிற அறிவிலும் அதிகமதிகமாய் வளரு
வீர்களாக. இப்பொழுதும் எப்பொழுதும் அவ
ருக்கே மகிமை. ஆமென்.

---

(௨௧) லூக்.௰௨.௪௭,௪௮.யோவா.௬.௪௧.(௨௨)நீதி.௨௬.௰௧.—(௩. அதி. க.) யூதா.௰௭.(௨)அதி.க.௰௪.(௩)க.தீமோ.
௪.க. ௨.தீமோ.௩.க. யூதா.௰௮. அதி.௨.௰. ஏசா.௫.௰௯. எரே.௰௭.௰௫. எசேக்.௰௨.௨௨,௨௭. மத்.௨௪.௪௮. லூக்.
௰௨.௪௫. (௫) ஆதி.க.௬,௯. சங்.௩௩.௬. எபி.௰க.௩. சங்.௨௪. ௨.கொலோ.க.௰௭. (௬) ஆதி.௭.௰க,௨௧,௨௨,௨௩.(௭)
வச.௰. மத்.௨௫.௪௧. ௨.தெச.௧.௮. (௮) சங்.௯௰.௩. (௯) அப௯.௨.௩. எபி.௰.௩௭. ஏசா.௯௰.௰௮. க.பேதுரு.௩.௨௰.
எசேக்.௰௮.௨௩,௩௨. ரோ.௨.௪. க.தீமோ.௨.௪. (௰) மத்.௨௪.௪௩. க.தெச.௫.௨. வெளி.௩.௩. சங்.௱௨.௨௬. ஏசா.
௫௧.௬. மத்.௨௪.௩௫. ரோ.௮.௨௧. எபி.க.௰க. வெளி.௨௰.௰க. (௰க) க.பேதுரு.க.௰௫. (௰௨) க.கொரி.க.௭. தீத்.
௨.௰௨. சங்.௫௰.௩. ஏசா.௩௪.௪. மீகா.க.௪. (௰௩) ஏசா.௬௫.௰௭. வெளி.௨௧.௧,௨௭. (௰௪) க.கொரி.க.௮. பிலி.௧.
௰. க.தெச.௩.௰௨. (௰௫) ரோ.௨.௪. க.பேதுரு.௩.௨௰. (௰௬) ரோ.௮.௰௯. க.கொரி.௰௫.௨௪. க.தெச.௪.௰௫. (௰௭)
மாற்.௰௩.௨௩. எபே.௪.௰௩. (௰௮) எபே.௪.௰௫. க.பேதுரு.௨.௩. ௨.தீமோ.௪.௰௮. வெளி.க.௬.

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதிய சாதாரண

## முதலாம் நிருபம்.

---

### ௧. அதிகாரம்.

௧. வாக்காகிய கிறிஸ்துவை விவரித்தல்: ௫. அவருடன் ஐக்கம்பெற்றுப் பாவவிமோசனமடைதல்.

ஆதிமுதல் இருந்ததும், நாங்கள் கேட்டதும், எ
ங்கள் கண்கள் கண்டதும், நாங்கள் நோக்கிப்பா
ர்த்ததும், எங்கள் கைகளினால் பரிசித்ததுமாகிய
சீவனையுடைய வாக்கைத்தெரிவிக்கிறோம்.-
௨ அந்தச் சீவன் வெளிப்பட்டது, பிதாவினிடத்தி
லிருந்ததும், எங்களுக்கு வெளிப்பட்டதுமாகிய
அந்த நித்தியசீவனை நாங்கள் கண்டு, அதற்குச்
சாட்சியிட்டு, உங்களுக்குத் தெரிவிக்கிறோம்;—
௩ நீங்கள் எங்களோடே ஐக்கமாகும்பொருட்டு,
நாங்கள் கண்டுங் கேட்டுமிருப்பவைகளை உங்க
ளுக்குத் தெரிவிக்கிறோம்: எங்கள் ஐக்கம் பி
தாவோடும், அவருடைய குமாரனாகிய யேசுக்
௪ கிறிஸ்துவோடும் இருக்கின்றதே.-உங்களுக்
குப் பூரணசந்தோஷமுண்டாகும்படி, இவைக
௫ ளை உங்களுக்கு எழுதுகிறோம்.—தேவனே ஒ
ளி, அவரிடத்தில் இருள் சற்றுமில்லை; அவரிடத்
தில் நாங்கள் கேட்டதும், உங்களுக்குத்தெரிவிக்
௬ கிறதுமாகிய விசேஷம் இதுவே.—நாம் இருளி
லே நடக்கையில், அவரோடே ஐக்கப்பட்டவர்
களென்றோமானால், நாம் சத்தியத்துக்கிசைய ந
௭ டவாமற் பொய்சொல்லுகிறோம்:—அவர் ஒளி
யிலிருக்கிறதுபோல் நாமும் ஒளியிலே நடந்
தால், ஒருவரோடொருவர் ஐக்கப்பட்டவர்களா
வோம், அவர் குமாரனாகிய யேசுக்கிறிஸ்து
வின் இரத்தம் எல்லாப்பாவத்தையும் நீக்கி நம்
௮ மைச்சுத்திகரிக்கின்றது.—நமக்குப் பாவமில்லை
யென்றோமானால், நாமே நம்மை வஞ்சிக்கிறோ
௯ ம், சத்தியம் நமக்குள்ளே இல்லை.-நம்முடைய
பாவங்களை நாம் உணர்ந்து சொன்னோமாகில்,
அவர் பாவங்களை நமக்கு மன்னித்து, எல்லா அ
நீதியினின்றும் நம்மைச் சுத்திகரிக்கத்தக்க உண்
௰ மையும் நீதியுமுள்ளவராயிருக்கிறார்.—நாம் பா
வஞ் செய்யவில்லையென்றோமானால், நாம் அவ
ரைப் பொய்யராக்குகிறோம், அவருடைய வாக்
கு நமக்குள்ளேயிராது.

### ௨. அதிகாரம்.

௧. கிறிஸ்து நமக்குப் பாவபிராயச்சித்தமாதல்: ௩. தேவகட்டளையைக்காத்துக்கொள்வது அவரை அறியும் அறிவுக்கு அடையாளமெனச்சாதித்தல்: ௭. ஒருவரை ஒருவர் நேசிப்பதுகடமையெனக் காட்டல்: ௰௨. இப்பிரபஞ்சத்தை நேசிக்கப்படாதென விலக்கல்: ௰௮. கள்ளக்கிறிஸ்துவைக் குறித்து எச்சரித்தல். மெய்க்கிறிஸ்துவின்மேல் விசுவாசிக்கும்படி ஏவல்.

என்பிள்ளைகளே, நீங்கள் பாவஞ்செய்யாதபடி, ௧
இவைகளை உங்களுக்கு எழுதுகிறேன். ஒருவன்
பாவஞ்செய்தாலும், நீதியுள்ளவராகிய யேசுக்கி
றிஸ்துவென்னும்பரிந்துபேசுகிறவர்பிதாவினி
டத்தில்நமக்குண்டு.—அவர் நம்முடைய பாவங் ௨
களினிமித்தம்மாத்திரமல்ல, சருவலோகத்தாரு
டைய பாவங்களினிமித்தமும்பிராயச்சித்தமாயி
ருக்கிறார்.—மேலும் அவருடைய கட்டளைகளை ௩
நாம் காத்துநடந்தால், அவரை அறிந்திருக்கிறோ
மென்று அதினால் உணரலாம்.-அவருடைய கட் ௪
டளைகளைக் காத்து நடவாமல், அவரை அறிந்து
கொண்டேனென்று சொல்லுகிறவன் பொய்
யன், சத்தியம் அவனுக்குள்ளேயில்லை.—அவரு ௫
டையவாக்கைக்காத்துநடக்கிறவனிடத்தில் தே
வ அன்பு நிறைவேற்றம்பெற்றதே: நாம் அவரு
க்குள்ளிருக்கிறோமென்பதை அதினால் அறிய
லாம்.— அவரிடத்தில் நிலைத்திருக்கிறேனென் ௬
றுசொல்லுகிறவன் அவர் நடந்தபிரகாரந்தானும்
நடக்கவேண்டும்.—சகோதரரே, நான் உங்களுக் ௭
குப் புதியகட்டளையையல்ல, ஆதிமுதல் நீங்கள்
பெற்றிருக்கிற பழைய கட்டளையையே எழுது
கிறேன். ஆதிமுதல் நீங்கள் கேட்டவாக்கியமே
அந்தப்பழையகட்டளை.—அன்றியும் நான் உங் ௮
களுக்குப் புதியகட்டளையையும் எழுதுகிறேன்.
இருள்நீங்கி மெய் ஒளி இப்பொழுது பிரகாசிக்
கிறபடியால், இது அவரைக்குறித்தும் உங்களைக்

---

(௧. அதி. ௧.) யோவா.௧.௧,௰௪. ௨.பேதுரு.௧.௰௬. லூக்.௨௪.௩௯. யோவா.௨௰.௨௭. (௨) யோவா.௧.௪. யோவா. ௰௪.௬. ரோ.௰௬.௨௬. ௧.தீமோ.௩.௰௬. யோவா.௨௧.௨௪. அப்.௨.௩௨. அதி.௫.௨௰. யோவா.௧.௧,௨.(௩)அப்.௪.௨௰. யோவா.௰௭.௨௧. ௧.கொரி.௧.௯. (௪) யோவா.௰௫.௰௧. ௨.யோவா.௰௨. (௫) அதி.௩.௰௧. யோவா.௧.௯.(௬)௨.கொரி.௬.௰௪. (௭) ௧.கொரி.௬.௰௧. எபே.௧.௮. எபி.௧.௰௪. ௧.பேதுரு.௧.௰௯. வெளி.௧.௫. (௮) ௧.இரா.௮.௪௬. ௨.நாளா.௬.௩௬. யோபு.௰௫.௰௪. யோபு.௨௫.௪. நீதி.௨௰.௯. பிர.௭.௨௰. யாக்.௩.௨. அதி.௨.௪.(௯)சங்.௩௨.௫. நீதி.௨௮.௰௩.வச.௭. சங்.௫௧.௨.—(௨. அதி. ௧.) ரோ.௮.௩௪. ௧.தீமோ.௨.௫. எபி.௭.௨௫.(௨)ரோ.௩.௨௬. ௨.கொரி.௫.௰௮. யோவா.௧.௨௯. (௪) அதி.௧.௬,௮. (௫) யோவா.௰௪.௨௧,௨௩. அதி.௪.௰௨,௰௩. (௬) யோவா.௰௫.௪,௫. மத்.௰௧.௨௯. யோவா.௰௩.௰௫. ௧.பேதுரு.௨.௨௧. (௭) ௨.யோவா.௫. அதி.௩.௰௧. (௮) யோவா.௰௩.௩௪. ரோ.௰௩.௰௨. எபே.௫.௮. ௧.தெச.௫-௫,௮. யோவா.௧.௯.

௯ குறித்தும் மெய்யாயிருக்கின்றது.—தன் சகோத
ரனைப் பகைத்து ஒளியிலேயிருக்கிறேனென்று
சொல்லுகிறவன், இதுவரைக்கும் இருளிலேயி
௰ ருக்கிறான்.—தன்சகோதரனில் அன்பாயிருக்கி
றவன் ஒளியில்நிலைத்திருக்கிறான், இடறுவதற்
௰௧ குக்காரணம் அவனில் இல்லை.—தன் சகோதர
னைப்பகைக்கிறவன் இருளிலேயிருக்கிறான், இ
ருளில் நடக்கிறான், இருளானது தன் கண்களைக்
குருடாக்கினபடியால், தான்போகுமிடமின்ன
௰௨ தென்றறியான்.—பிள்ளைகளே, அவருடைய நா
மத்தினிமித்தம் உங்கள் பாவங்கள் உங்களுக்கு
மன்னிக்கப்பட்டபடியால் உங்களுக்கு எழுது
௰௩ கிறேன்.—பிதாக்களே, ஆதிமுதலிருக்கிறவரை
நீங்கள் அறிந்திருக்கிறபடியால் உங்களுக்கு எ
ழுதுகிறேன். வாலிபரே, தீயனை நீங்கள் செயித்
• ததினால் உங்களுக்குஎழுதுகிறேன். குழந்தைக
ளே, நீங்கள் பிதாவை அறிந்திருக்கிறபடியால்
௰௪ உங்களுக்கு எழுதுகிறேன்.—பிதாக்களே, ஆதி
முதலிருக்கிறவரை நீங்கள் அறிந்திருக்கிறபடி
யால் உங்களுக்குஎழுதினேன். வாலிபரே, நீங்
கள் பலவான்கள், தேவவாக்கு உங்களிடத்தில்
நிலைத்திருக்கின்றது, நீங்கள் தீயனைச்செயித்தப
௰௫ டியினால் உங்களுக்கு எழுதினேன்.—இப்பிர
பஞ்சத்திலும், இப்பிரபஞ்சத்திலுள்ளவைகளி
லும் அன்பு வைக்கவேண்டாம். இப்பிரபஞ்சத்
தில் அன்புவைக்கிறவனிடத்தில் பிதாவின் அன்
௰௬ பேயில்லை.-மாமிச இச்சையும், கண்களின் இச்
சையும், சீவனத்தின் பெருமையுமாகிய இப்பிர
பஞ்சத்திலுள்ளவைகளெல்லாம் பிதாவினாலல்
௰௭ ல, இப்பிரபஞ்சத்தினாலுண்டாயின.—இப்பிர
பஞ்சமும், அதின்இச்சையும் அகன்றுபோகின்
றன: தேவனுடைய சித்தத்தின்படி நடக்கிற
௰௮ வனோ என்றைக்கும் நிலைப்பான்.—குழந்தைக
ளே, கடைசிக்காலமாயிற்று: கிறிஸ்துவின் வி
ரோதி வருகிறானென்று நீங்கள் கேள்விப்பட்ட
படி, இப்பொழுதே கிறிஸ்துவுக்கு விரோதி
கள்அநேகருண்டு; அதினாற்கடைசிக்காலமாயிற்
௰௯ றென்று அறிவோம்.-அவர்கள் நம்மிடத்திலிருந்
து புறப்பட்டார்கள், ஆனாலும் அவர்கள் நம்மு
டைய பட்சத்தாரல்ல; நம்முடைய பட்சத்தா
ரானால் நம்முடன் தரித்திருப்பார்களே: எல்லா
ரும் நம்முடைய பட்சத்தாரல்லவென்று வெளி
௨௰ யாகும்படிக்கே புறப்பட்டார்கள்.-நீங்கள்
பரிசுத்தரால் அபிஷேகத்தைப் பெற்றுச் சகலத்
௨௧ தையும் அறிந்திருக்கிறீர்கள்.—சத்தியத்தை நீங்
கள் அறியாததினிமித்தமல்ல, அதையும்,சத்தியத்
தால் ஒருபொய்யுமுண்டாயிராதென்பதையும் அ
றிந்திருக்கிறதினிமித்தம் உங்களுக்கு எழுதினே
ன்.-யேசுவானவர், கிறிஸ்து அல்லவென் ௨௨
று மறுதலிக்கிறவனேயன்றி, வேறார்பொய்யன்;
பிதாவையுங் குமாரனையும் மறுதலிக்கிறவனே கி
றிஸ்துவுக்கு விரோதி.—குமாரனை மறுதலிக் ௨௩
கிறவன் பிதாவைப்பற்றிக்கொள்ளான்: குமார
னை அறிக்கையிடுகிறவன் பிதாவையும்
பற்றிக்கொள்ளுகிறான்.—ஆதலால் ஆதிமு ௨௪
தல் நீங்கள் கேள்விப்பட்டது உங்களில் நிலைத்
திருக்கக்கடவது. ஆதிமுதல் நீங்கள் கேள்விப்
பட்டது உங்களில் நிலைத்திருந்தால், நீங்களுங்
குமாரனிலும் பிதாவிலும் நிலைத்திருப்பீர்கள்.—
அவர் நமக்குப்பண்ணின வாக்குத்தத்தம் நித்திய ௨௫
சீவனே.—உங்களை வஞ்சிக்கத் தேடுகிறவர்களைக் ௨௬
குறித்து இவைகளை உங்களுக்கு எழுதினேன்.—
நீங்கள் அவராற்பெற்ற அபிஷேகம் உங்களுக் ௨௭
குள் நிலைத்திருந்தால் ஒருவரும் உங்களுக்குப்
போதிக்கவேண்டுவதில்லை: அந்த அபிஷேகஞ்
சகலகாரியங்களையும் உங்களுக்குப்போதிக்கின்
றது, அதுவே சத்தியம், பொய்யல்ல, ஆதலால்
அது உங்களுக்குப் போதித்தபடியே அவரில் நி
லைத்திருப்பீர்கள்.-பிள்ளைகளே, அவரில் நிலைத் ௨௮
திருங்கள்; நிலைத்திருந்தால் அவர் வெளிப்படும்
பொழுது நாம் அவரால் இலச்சை அடையாமல்
அவர் சமுகத்தில் தைரியமுள்ளவர்களாயிருப்
போம்.—அவர் நீதியுள்ளவராயிருக்கிறாரென்ப ௨௯
தை நீங்கள் அறிந்திருந்தால், நீதியைச்செய்கிற
வனெவனும், அவராலே பிறந்தானென்றறிந்தி
ருப்பீர்கள்.

## ௩. அதிகாரம்.

௧. தேவன் நம்மேல் விளக்கின தயையைக்காட்டல். அதினிமித்தம் பாவம்விட்டு விலகுவது அவசியமெனத் தெரிவித்தல். ஒருவரிலொருவர் அன்பாயிருப்பதும் நற்கிரியைகளைச் செய்வதுங் கடமையெனக்காட்டல்.

நாம் தேவனுடைய புத்திரரென்றழைக்கப் ௧
படுவதினால், பிதா நம்மேல்வைத்த மிகுந்த அன்
பை நினைத்துப்பாருங்கள்: உலகம் அவரை அறி
யாதபடியினாலே நம்மையும் அறியாது.—பிரிய ௨
மானவர்களே, இப்பொழுது தேவனுடைய
புத்திரராயிருக்கிறோம், இனி என்னவிதமாயிருப்
போமென்று இதுவரைக்கும் வெளிப்படவில்
லை: ஆயினும் அவர்வெளிப்படும்பொழுது அவர்

(௯) ௧.கொரி.௰௩.௨. ௨.பேதுரு.௧.௯. (௰) அதி.௩.௰௪. ௨.பேதுரு.௧.௰. (௰௧) யோவா.௰௨.௩௫. (௰௨) லூக்.௨௪.௪௭. அப்.௪.௰௨. (௰௩) அதி.௧.௧. (௰௪) எபே.௬.௰. (௰௫) ரோ.௰௨.௨. மத்.௬.௨௪. கலா.௧.௰. யாக்.௪.௪. (௰௬) பிர.௫.௰௧. (௰௭) ௧.கொரி.௭.௩௧. யாக்.௧.௰. ௧.பேதுரு.௧.௨௪. (௰௮) யோவா.௨௧.௫. எபி.௧.௨. ௨.தெச.௨.௩. ௨.பேதுரு.௨.௧. மத்.௨௪.௪,௨௩. ௨.யோவா.௭. ௧.தீமோ.௪.௧. ௨.தீமோ.௩.௧. (௰௯) உபா.௰௩.௰௩. சங்.௪௧.௯. அப். ௨௰.௩௰. மத்.௨௪.௨௩. யோவா.௬.௩௭. ௨.தீமோ.௨.௰௯. ௧.கொரி.௰௧.௰௯. (௨௰) ௨.கொரி.௧.௨௧. எபி.௧.௯. மாற். ௧.௨௪. அப்.௩.௰௪. யோவா.௰.௪,௫. (௨௨) அதி.௪.௩. ௨.யோவா.௭. (௨௩) யோவா.௰௫.௨௩. ௨.யோவா.௯. யோவா.௰௪.௭,௯,௰. (௨௪) ௨.யோவா.௬. யோவா.௰௪.௨௩. (௨௫) யோவா.௰௭.௩. (௨௭) வச.௨௰. எரே.௩௧.௩௩,௩௪. எபி.௮.௰,௰௧. யோவா.௰௪.௨௬. (௨௮) அதி.௩.௨. அதி.௪.௰௭. (௨௯) அப்.௨௨.௰௫. அதி.௩.௭,௰.—(௩ அதி. ௧.) யோவா.௧.௰௨. யோவா.௰௫.௰௮,௰௯. (௨) ஏசா.௫௬.௫. ரோ.௮.௰௫. கலா.௩.௨௬. ரோ.௮.௰௮. ௨.கொரி.௪.௰௮. ரோ.௮.௨௩. ௧.கொரி.௰௫.௪௯. பிலி.௩.௨௧. கொலோ.௩.௪. ௨.பேதுரு.௧.௪. யோபு.௰௯.௨௬. சங்.௰௬.௰௧. மத். ௫.௮. ௧.கொரி.௰௩.௰௨. ௨.கொரி.௫.௬.

இருக்கிற தன்மையாய் அவரைத்தரிசிப்போம்;
ஆதலால் அவருக்கொப்பாவோமென்று அறிந்தி
௩ ருக்கிறோம்.-அவர்மேல் இந்த நம்பிக்கை கொண்
டிருப்பவனெவனோ அவன், அவர் சுத்தமுள்ள
வராயிருக்கிறதுபோலத் தன்னையுஞ் சுத்திகரிக்கி
௪ றான்.-பாவஞ்செய்கிறவனெவனோ,அவன் நியா
யப்பிரமாணத்தை மீறுகிறான்: நியாயப்பிரமாண
௫ த்தைமீறுதலே பாவம்.-அவர் நம்முடையபாவங்
களை நீக்கும்படி வெளிப்பட்டாரென்று அறிந்தி
௬ ருக்கிறீர்கள்; அவரிடத்திலே பாவமில்லை.—அவ
ரிடத்தில் நிலைத்திருக்கிறவனெவனோ, அவன்
பாவஞ்செய்கிறதில்லை: பாவஞ்செய்கிறவனெவ
னோ, அவன் அவரைத்தரிசிக்கவுமில்லை, அவரை
௭ அறியவுமில்லை.-பிள்ளைகளே,ஒருவரும் உங்களை
வஞ்சிக்கவிடாதிருங்கள்: நீதியைச்செய்கிறவன்
அவர் நீதியுள்ளவராயிருக்கிறதுபோல நீதியுள்ள
௮ வனாயிருக்கிறான்.—பாவஞ் செய்கிறவன் பிசாசி
னாலுண்டாயிருக்கிறான்: பிசாசானவன் ஆதிமு
தல் பாவஞ்செய்கிறான். பிசாசின் கிரியைகளை
அழிக்கும்பொருட்டுத் தேவனுடைய குமார
௯ ன் வெளிப்பட்டார்.-தேவனிடத்திற் பிறந்த
வனெவனோ, அவனுக்குள் அவருடைய வித்துத்
தரித்திருக்கிறபடியினால் அவன் பாவஞ்செய்யா
ன்;அவன் தேவனிடத்திற் பிறந்தபடியால்பா
௰ வஞ் செய்யமாட்டான்.—இதினாலே தேவனு
டைய பிள்ளைகளும்,பிசாசின்பிள்ளைகளும்இன்
னாரென்று வெளிப்படும்: நீதியைச்செய்யாம
லும், தன் சகோதரனில்அன்பாயிராமலும் இருப்
௰௧ பவன் தேவனால் உண்டானவனல்ல.—நாம் ஒ
ருவரில் ஒருவர் அன்பாயிருக்கவேண்டுமென்ப
தே நீங்கள் ஆதிமுதல் கேள்விப்பட்ட விசேஷ
௰௨ ம்.—நீயனாலுண்டாயிருந்து, தன் சகோதரனைக்
கொலைசெய்தகாயீனைப்போலிருக்கப்படாது.அ
வன் எதினிமித்தம் அவனைக் கொலைசெய்தான்,
தன் சுயகிரியைகள் அநீதியானவைகளும், தன்
சகோதரனுடைய கிரியைகள் நீதியானவைகளு
௰௩ மானபடியால் அப்படிச்செய்தான்.—என்
சகோதரரே, உலகத்தார் உங்களைப்பகைத்தால்
௰௪ ஆச்சரியப்படவேண்டாம்.-நாம் சகோதரரில் அ
ன்பாயிருக்கிறபடியால்,மரணத்தைவிட்டுநீங்கிச்
சீவனுக்குட்பட்டோமென்றறிந்திருக்கிறோம். ச
கோதரனில் அன்பாயிராதவன் மரணத்தில் நி
௰௫ லைத்திருக்கிறான்.—தன் சகோதரனைப் பகைக்
கிற எவனுங் கொலைபாதகன்: எந்தக்கொலைபா
தகனுக்குள்ளும் நித்தியசீவன் நிலைத்திராதென்
றறிந்திருக்கிறீர்கள்.—அவர் தமது சீவனை நமக் ௰௬
காக ஒப்பித்ததினால் அன்பு இன்னதென்றறிந்
தோம்: நாமும் சகோதரர்நிமித்தஞ் சீவனைவிடக்
கடனாளிகளாயிருக்கிறோம்.— இவ்வுலகத்தின் ௰௭
பொருளையுடையவன் ஒருவன், தன்சகோதரன்
குறைவுபடக்கண்டும், தன்னிருதயத்தை அவ
னுக்கடைத்துக்கொண்டால், அவனுக்குள்ளே
தேவனுடைய அன்பு நிலைத்திருக்கிறதெப்ப
டி.—என்பிள்ளைகளே,சொல்லினாலும் நாவினாலு ௰௮
மல்ல, கிரியையினாலும் உண்மையினாலும் அன்
புகூரக்கடவோம்.—அதினாலே நம்மைச் சத்தி ௰௯
யமுள்ளவர்களென்று நாம் அறிந்து, அவருக்கு
முன்பாக நம்முடைய மனதை நிச்சயப்படுத்த
லாம்.—நமது இருதயமே நம்மைக்குற்றவாளிக ௨௰
ளாகத் தீர்க்குமானால், நம்முடைய இருதயத்தி
லுந் தேவன் பெரியவராய்ச் சகலத்தையும் அ
றிந்திருக்கிறார்.—பிரியமானவர்களே, நம்முடை ௨௧
ய இருதயம் நம்மைக்குற்றவாளிகளென்று தீர்க்
காதிருந்தால், தேவனிடத்தில் நாம் தைரியங்
கொள்வோம்.—அன்றியும், அவருடைய கட்ட ௨௨
ளைகளை நாம் காத்து, அவர் பார்வையிற் பிரியமா
னவைகளைச் செய்கிறபடியினால், நாம் வேண்
டிக்கொள்வதெதுவோ, அதைஅவரிடத்திற்பெற்
றுக்கொள்வோம்.—நாம் அவருடைய குமாரனா ௨௩
கிய யேசுக்கிறிஸ்துவின் நாமத்தின்மேல் வி
சுவாசமாயிருந்து, அவர் நமக்குக் கட்டளையிட்
டபிரகாரம் ஒருவரில் ஒருவர் அன்பாயிருப்ப
தே அவருடையகட்டளை.—அவருடைய கட் ௨௪
டளைகளைக் காத்துநடக்கிறவன் அவரிடத்தில் நி
லைத்திருக்கிறான், அவரும் இவனிடத்தில் நிலை
த்திருக்கிறார். அவர் நம்மிடத்தில் நிலைத்தி
ருக்கிறதை அவர் நமக்கு அருளிய ஆவியினால்
அறிந்திருக்கிறோம்.

## ௪. அதிகாரம்.

௧. பரீட்சிக்காமல் எந்தப்போதகரையும் அங்கி கரிக்கத்தகாதென்று விலக்கல்: ௭. ஒருவரில் ஒருவர்வைக்கிற அன்பின்பலனை நிருணித்தல்.

பிரியமானவர்களே, உலகத்தில் அநேக கள் ௧
ளத்தீர்க்கதரிசிகள் தோன்றினபடியால், நீங்கள்
ஒவ்வொரு ஆவியையும் நம்பாதிருங்கள்: அந்
த ஆவிகள் தேவனாலுண்டானவைகளோ
வென்று பரீட்சித்துப்பாருங்கள்.—யேசுக்கி ௨
றிஸ்து மாமிசத்தில் வந்தாரென்று அறிக்கையி

---

(௩) அதி.௪.௰௭. (௪) ரோ.௪.௰௫. (௫) அதி.௧.௨. ஏசா.௫௩.௫,௬,௰௧. ௧.தீமோ.௧.௰௫. எபி.௧.௩. ௧.பேதுரு.௨.௨௪. ௨.கொரி.௫.௨௧. எபி.௪.௰௫. ௧.பேதுரு.௨.௨௨. (௬) அதி.௨.௪. (௭) அதி.௨.௨௯. எசேக்.௰௮.௫—௯. ரோ.௨.௰௩. (௮) மத்.௰௩.௩௮. யோவா.௮.௪௪. ஆதி.௩.௰௫. லூக்.௰.௰௮. யோவா.௰௬.௰௧. எபி.௨.௰௪. (௯) அதி.௫.௰௮. ௧.பேதுரு.௧.௨௩.(௰)அதி.௨.௨௯. அதி.௪.௮. (௰௧) அதி.௧.௫. யோவா.௰௩.௩௪. அதி.௪.௭,௨௧. ௨.யோவா.௫.(௰௨)ஆதி.௪.௪,௮. எபி.௰௧.௪. யூதா.௰௧. (௰௩) யோவா.௰௫.௰௮,௰௯. ௨.தீமோ.௩.௰௨. (௰௪) அதி.௨.௯,௰,௰௧.(௰௫)மத்.௫.௨௧, ௨௨. கலா.௫.௨௧. வெளி.௨௧.௮. (௰௬) யோவா.௩.௰௬. ரோ.௫.௮. எபே.௫.௨,௨௫. (௰௭) உபா.௰௫.௭. லூக்.௩.௰௧. அதி.௪.௨௰. (௰௮) எசேக்.௩௩.௩௧. ரோ.௰௨.௯. எபே.௪.௰௫. யாக்.௨.௰௫,௰௬. ௧.பேதுரு.௧.௨௨. (௰௯) யோவா.௰௮.௩௭. அதி.௧.௮. (௨௰) ௧.கொரி.௪.௪. (௨௧) யோபு.௨௨.௨௬. எபி.௰.௨௨.(௨௨)சங்.௩௪.௰௫. நீதி.௰௫.௨௯. எரே.௨௯.௰௨. மத்.௭.௮. மாற்.௰௧.௨௪. யோவா.௰௪.௰௩. யாக்.௫.௰௬. யோவா.௮.௨௯. (௨௩) யோவா.௬.௨௯. மத். ௨௨.௩௯.யோவா.௰௩.௩௪. எபே.௫.௨. ௧.தெச.௪.௯. ௧.பேதுரு.௪.௮. அதி.௨.௮,௰. (௨௪) யோவா.௰௪.௨௩. யோவா.௰௭.௨௧. ரோ.௮.௯.—(௪. அதி. ௧.) எரே.௨௯.௮. மத்.௨௪.௫. ௧.கொரி.௰௪.௨௯. ௧.தெச.௫.௨௧. வெளி.௨.௨. மத்.௨௪.௪,௨௩. அப்.௨௰.௩௰. ௧.தீமோ.௪.௧. ௨.பேதுரு,௨.௧. ௨.யோவா.௭. (௨) ௧.கொரி.௰௨.௩.

டுகிற எந்த ஆவியுந்தேவனாலுண்டாயிற்று:
இதனாலே தேவனாலுண்டான ஆவி இன்
௩ னதென்று நீங்கள் அறிந்துகொள்ளலாம்.—யே
சுக்கிறிஸ்து மாமிசத்தில் வந்தாரென்று அ
றிக்கையிடாத எந்த ஆவியுந் தேவனாலுண்
டானதல்ல: அதுவே கிறிஸ்துவுக்கு விரோ
தி, அது வருகிறதென்று நீங்கள் கேள்விப்பட்
டிருக்கிறீர்கள்; இப்பொழுதும் அது உலகத்திலி
௪ ருக்கின்றது.—பிள்ளைகளே, நீங்கள் தேவனா
லுண்டானவர்கள், உலகத்திலிருக்கிறவனிலும்
உங்களிலிருக்கிறவர் பெரியவர்; ஆதலால் அ
௫ வர்களைச் செயித்தீர்கள்:—அவர்கள் உலகத்தார்:
ஆதலால் உலகத்தைக்குறித்துப்பேசுகிறார்கள்,உ
லகத்தாரும் அவர்களுக்குச் செவிகொடுக்கிறார்
௬ கள்.—நாங்களோ தேவனுக்குரியவர்கள்: தே
வனை அறிந்தவன் எங்களுக்குச் செவிகொடுக்
கிறான்; தேவனைச் சேராதவன் எங்களுக்குச்
செவிகொடான். இவ்விதமாய் நாங்கள் சத்திய
ஆவியையும், வஞ்சக ஆவியையும் அறிந்திருக்கி
௭ றோம்.—பிரியமானவர்களே, அன்பு தேவனா
லுண்டானது: ஆதலால் ஒருவரிலொருவர் அன்
பாயிருக்கக்கடவோம்; அன்புள்ளவர்கள் யாவ
ருந்தேவனிடத்திற்பிறந்து, தேவனை அறிந்
௮ திருக்கிறார்கள்.—தேவனே அன்பு; ஆதலால்
௯ அன்பில்லாதவன் தேவனை அறியான்.—தமது
ஒரேபேறான குமாரனால் நாம் சீவிக்கும்படி,
அவரை இவ்வுலகத்தில் அனுப்பினதினால், தே
வன் நம்மேல்வைத்த அன்பு வெளிப்பட்டது.—
௰ நாம் தேவனிடத்தில் அன்பாயிருந்ததினா
லேயல்ல, அவரே நம்மில் அன்புகூர்ந்து, நம்
முடைய பாவங்களுக்குப் பிராயச்சித்தமாகத் த
மது குமாரனை அனுப்பினார், இதுவே அன்பு.—
௰௧ பிரியமானவர்களே, தேவன் இவ்விதமாய் நம்
மிடத்தில் அன்பாயிருக்கிறதினால், நாமும் ஒரு
௰௨ வரில் ஒருவர் அன்பாயிருக்கவேண்டும்.—ஒரு
வனும் ஒருக்காலுந் தேவனைத் தரிசிக்கவில்
லை. நாம் ஒருவரில் ஒருவர் அன்பாயிருந்தால்,
தேவன் நமக்குள்ளே நிலைத்திருப்பார், அவரு
டைய அன்பு நம்மிடத்தில் நிறைவேற்றம்பெற்
௰௩ றிருக்கின்றது.—அவர் தமது ஆவியில் நமக்கரு
ளினதினாலே நாம் அவரிலும், அவர் நம்மிலும்
௰௪ நிலைத்திருக்கிறதை அறிந்திருக்கிறோம்.—பிதாவா
னவர் குமாரனை உலக இரட்சகராக அனுப்பின
தை நாங்கள் பார்த்து, அதற்குச்சாட்சியிடுகிறோ
௰௫ ம்.—யேசு தேவனுடைய குமாரனென்று அ
றிக்கையிடுகிறவனெவனோ, அவனிடத்தில் தே
வன் நிலைத்திருக்கிறார், தேவனிடத்தில்
அவன் நிலைத்திருக்கிறான்.—தேவன் நம் ௰௬
மேல் வைத்திருக்கிற அன்பை நாம் அறிந்து வி
சுவாசித்திருக்கிறோம். தேவனே அன்பு; அன்
பிலே நிலைத்திருக்கிறவன் தேவனிடத்தில்
நிலைத்திருக்கிறான், தேவனும் அவனிடத்தில்
நிலைத்திருக்கிறார்.—இவ்வுலகத்தில் நாம் அ ௰௭
வரைப்போல் இருப்பதினால், நியாயத்தீர்ப்பின்
நாளிலே நாம் தைரியங்கொள்ளும்படி நமக்குள்
அன்பு நிறைவேறிற்று.—அன்பிலே பயமில்லை; ௰௮
பூரணமான அன்பு பயத்தை அகற்றும்: பயத்தி
லே வேதனை உண்டு. பயப்படுகிறவனிடத்தில்
அன்பு நிறைவேற்றம் பெறவில்லை.—அவர் மு ௰௯
தல் நம்மில் அன்பு கூர்ந்தபடியால், நாமும் அ
வரில் அன்புகூருகிறோம்.—ஒருவன் தன் சகோ ௨௰
தரனைப்பகைத்து, நான் தேவனில் அன்புகூ
ருகிறேனென்றால், அவன் பொய்யன்: தான்
கண்ட தன் சகோதரனில் அன்புகூராதவன்,
தான் காணாத தேவனில் அன்பாயிருப்பதெப்
படி.—தேவனில் அன்புகூருகிறவன் தன் ச ௨௧
கோதரனிலும் அன்புகூரவேண்டுமென்னுங் க
ட்டளையை அவராலே பெற்றிருக்கிறோம்.

## ௫. அதிகாரம்.

௧. சகோதரரில் அன்புவைப்பதுந்தேவனுடை
ய கட்டளையைக் காத்துக்கொள்வதுந் தேவ
னுடைய அன்புக்கு அடையாளமெனக்காட்
டல்: ௰௪. தேவன் தமது சனங்களின் பிரார்த்
தனையைக்கேட்டு அவைகள் நிறைவேறும்படி
செய்தல்.

யேசுவே கிறிஸ்துவென்று விசுவாசிக்கிற ௧
வன் எவனும், தேவனிற் பிறந்திருக்கிறான்:
பிறப்பித்தவரில் அன்பாயிருக்கிறயாவரும், அவ
ரிற் பிறந்தவனிலும் அன்பாயிருப்பார்கள்.—நாம் ௨
தேவனில் அன்புகூர்ந்து, அவருடைய கட்ட
ளைகளைக்கைக்கொள்வதினாலே, நம்மைத் தேவ
னுடைய பிள்ளைகளில் அன்புகூருகிறவர்களெ
ன்று அறிந்திருக்கிறோம்.—நாம் தேவனுடைய ௩
கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறது அவரில் அ
ன்புகூருதலாம்: அவருடைய கட்டளைகள் கடி
னமுள்ளவைகளல்ல.—நம்முடைய விசுவாசமே, ௪
உலகத்தைச் செயிப்பதாகியசெயம், தேவனில்
பிறந்தவனெவனோ, அவன் உலகத்தைச்செயிக்
கிறான்.—யேசுவே தேவனுடைய குமாரனெ ௫
ன்றுவிசுவாசிக்கிறவனேயன்றி, உலகத்தைச்செ
யிக்கிறவன் வேறார்.—யேசுக்கிறிஸ்து வென் ௬
னுமஇவரே சலத்தினாலும் இரத்தத்தினாலும் வந்த
வர்; சலத்தினாலே மாத்திரமல்ல, சலத்தினாலும் இ
ரத்தத்தினாலுமே வந்தவர். ஆவி சத்தியமுள்ளதாத

(௩) அதி.௨.௨௨. ௨.யோவா.௭. ௨.தெச.௨.௭. (௪) அதி.௫.௪. யோவா.௰௨.௩௧. ௧.கொரி.௨.௰௨. எபே.௨.௨.(௫) யோவா.௩.௩௧. யோவா.௰௫.௰௯. (௬) யோவா.௮.௪௭. ௧.கொரி.௰௪.௩௭. ௨.கொரி.௰.௭. ஏசா.௮.௨௰. ௧.கொரி.௰௪.௰௭. (௮) வச.௰௬. (௯) யோவா.௩.௰௬. ரோ.௫.௮. ரோ.௮.௩௨. அதி.௫.௰௧. (௰) யோவா.௰௫.௰௬. ரோ.௫.௮. ௰. தீத்.௩.௪. அதி.௨.௨. (௰௧) மத்.௰௮.௩௩. யோவா.௰௫.௰௨,௰௩. (௰௨) யோவா.௧.௰௮. ௧.தீமோ.௬.௰௫. அதி.௨.௫. (௰௩) யோவா.௰௪.௨௰.(௰௪)யோவா.௧.௰௪. யோவா.௩.௰௭. (௰௫) ரோ.௰.௯. (௰௬) வச.௮,௰௨. (௰௭) யாக்.௨.௰௩ அதி.௩.௩.(௰௮)வச.௰௨. (௨௰) அதி.௨.௪. வச.௰௨.(௨௧)மத்.௨௨.௩௭,௩௯. யோவா.௰௩.௩௪.—(௫. அதி. ௧.) யோவா.௧.௰௨. அதி.௨.௨௨,௨௩. யோவா.௧.௰௩. யோவா.௰௫.௨௩.(௩)யோவா.௰௪.௰௫,௨௧,௨௩. ௨.யோவா.௬.மீகா.௬.௮. மத்.௰௧.௩௰.(௪)யோவா.௰௬.௩௩.(௫)௧.கொரி.௰௫.௫௭.(௬)யோவா.௰௯.௩௪. யோவா.௰௪.௰௭. ௧.தீமோ.௩.௰௬.

எ லால் ஆவியே சாட்சியிடுகின்றது.—பிதா,வாக்கு,
பரிசுத்த ஆவியென்னும் இம்மூவரும் பரமண்ட
லத்திலே சாட்சியிடுகிறார்: இம்மூவரும் ஒருவ
அ ரே.-ஆவி, சலம், இரத்தமென்னும் இம்மூன்றும்
பூமண்டலத்திலே சாட்சியிடுகின்றன: இம்மூன்
கூ றும் ஒன்றாய்ப்பொருந்துகின்றன.-நாம் அங்கிக
ரிக்கிற மனுஷருடைய சாட்சியிலும், தேவனு
டைய சாட்சியே சிரேஷ்டம்: தேவன் தம்
முடைய குமாரனைக்குறித்து இட்டசாட்சியிது
ய வே.-தேவனுடைய குமாரனில் விசுவாசமா
யிருக்கிறவன் தனக்குள்ளே அந்தச்சாட்சியைப்
பெற்றிருக்கிறான்: தேவனை விசுவாசியாதவன்,
தேவன் தம்முடைய குமாரனைக்குறித்து இட்
டசாட்சியை விசுவாசியாததினாலே, அவரைப்
யக பொய்யராக்குகிறான்.—தேவன் நமக்கு நித்திய
சீவனை அருளியிருக்கிறார், அந்தச்சீவன் அவரு
டைய குமாரனிலிருக்கின்றது, இதுவேசாட்சி.-
யஉ குமாரனை அங்கிகரிக்கிறவன் சீவனைப்பெற்றிரு
க்கிறான்; தேவனுடைய குமாரனை அங்கிக
யங ரியாதவன் சீவனைப்பெறான்.-தேவனுடைய
குமாரனின்நாமத்தில்விசுவாசித்திருக்கிறநீங்கள்
நித்திய சீவனையுடையவர்களென்றறிந்து, தேவ
னுடைய குமாரனின் நாமத்தில்நம்பிக்கையாயி
ருக்கும்படி இவைகளை உங்களுக்கு எழுதினே
யச ன்.—அவருடைய சித்தத்தின்படி நாம் எதையாகி
லும்வேண்டினால்,அவர் நமக்கு அருளுவாரென்
று அவர்மேல் நம்பிக்கை வைத்திருக்கிறோம்.—
யரு அன்றியும் நாம் எதைக்கேட்டாலும் அவர் நமக்
குச்செவிகொடுப்பாரென்று நாம் அறிந்திருந்தா
ல், அவரிடத்தில் நாம் பண்ணின விண்ணப்பங்
களைப் பெற்றோமென்றும் அறிந்திருக்கிறோம்.—
ஒருவன் மரணத்துக்கேதுவல்லாத பாவத்தைத் யசு
தன் சகோதரன் செய்யக்கண்டால் பிரார்த்தனை
பண்ணக்கடவன், அப்பொழுது அவனுக்கு மர
ணத்துக்கேதுவல்லாத பாவத்தைச் செய்தவர்க
ளுக்காகச் சீவனை அருளுவார். மரணத்துக்கேது
வான பாவமுமுண்டு: அவன் அதைக்குறித்துப்
பிரார்த்தனைபண்ணச் சொல்லமாட்டேன்.—அநீ யஎ
தியெல்லாம் பாவம்: மரணத்திற்கேதுவல்லாத
பாவமுமுண்டு.—தேவனிடத்திற் பிறந்தவ யஅ
னெவனோ, அவன் பாவஞ்செய்கிறதில்லை; தே
வனிற் பிறந்தவன் தன்னைக்காக்கிறான், ஆகை
யால் தீயன் அவனைத்தொடானென்று நாம் அ
றிந்திருக்கிறோம்.—நாம் தேவனாலுண்டாயிருக் யகூ
கிறோம், உலகமுழுவதுந்தீயனுக்குள் கிடக்கின்
றதென்பதையும் நாம் அறிந்திருக்கிறோம்.—மே உய
லும் நாம் சத்தியமுள்ளவரை அறிந்துகொள்ளு
ம்பொருட்டுத் தேவனுடைய குமாரன்வந்து
நமக்கு அறிவைக்கொடுத்தாரென்று அறிந்திருக்
கிறோம்: நாம் அவருடைய குமாரனாகிய யே
சுக்கிறிஸ்துவென்னுஞ் சத்தியமானவருக்கு
ள்ளிருக்கிறோம். இவரேமெய்யானதேவனும்
நித்தியசீவனுமாயிருக்கிறார்.—பிள்ளைகளே, நீங் உக
கள் விக்கிரகங்களுக்கு விலகி, உங்களைக் காத்
துக்கொள்வீர்களாக. ஆமென்.

(எ)யோவா.க.க. வெளி.யக.யங. யோவா.ய.கூய.(கூ)யோவா.அ.யஎ,யஅ. மத்.ஙு.யசு,யஎ.(ய)ரோ.அ.யசு. கலா.ச.சு.யோவா.ங.ஙங. (யக) அதி.உ.உரு. யோவா.க.ச.(யஉ)யோவா.ங.ஙசு. (யங) யோவா.உய.ஙக. அதி.க.க,உ.(யச) அதி.ங.உஉ. (யசு) யோபு.சஉ.அ. யாக்.ரு.யச,யரு. மத்.யஉ.ஙக,ஙஉ. மாற்.ங.உகூ. லூக்.யஉ.ய. எபி.சு.சு. எரே.எ.யசு. யோவா.யஎ.கூ. (யஎ) அதி.ங.ச. (யஅ) க.பேதுரு.க.உங. யாக்.க.உஎ. (யகூ) கலா.க.ச. (உய) லூக்.உச.சரு.. யோவா.யஎ.ங. ஏசா.கூ.சு. ஏசா.சச.சு.ஏசா.ருச.ரு. யோவா.உய.உஅ. அப்.உய.உஅ. ரோ.கூ.ரு. க.தீமோ.ங.யசு. தீத்.உ.யஉ. எபி.க.அ.(உக)க.கொரி.ய.யச.

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதிய இரண்டாம்

## நிருபம்.

௧. வாழ்த்து: ௪. அன்பிலும் நற்கிரியைகளிலும் நி
லைத்திருக்கும்படி வேண்டல். கள்ளப்போதக
ரைக்குறித்துச் சாவதானமாயிருக்கும்படி உ
ணர்த்தல்: ௰௨. நிருபத்தின் முடிவுரை.

நம்மிடத்திலே நிலைபெறுவதும், சதாகாலமும்
நம்மோடிருப்பதுமாகிய சத்தியத்தினிமித்தம், நா
ன்மாத்திரமல்ல, சத்தியத்தை அறிந்திருக்கிற யா
௨ வரும் உண்மையாய் நேசிக்கிறவளும்,-தெரிந்து
கொள்ளப்பட்டவளுமாகிய தலைவிக்கும், அவள்
பிள்ளைகளுக்கும், மூதியோனாகிய நான் எழுதிக்
௩ கொள்வது.—பிதாவாகிய தேவனாலும், பிதா
வின் குமாரனாயிருக்கிற கர்த்தராகிய யே
சுக்கிறிஸ்துவினாலுஞ் சத்தியத்தோடும், அன்
போடுங் கிருபையும், இரக்கமும், சமாதானமும்
௪ உங்களுக்கு உண்டாயிருக்கக்கடவன.—பிதாவி
னால் நாம்பெற்ற கட்டளைப்படி, உம்முடைய
பிள்ளைகளிற் சிலர் சத்தியத்திலே நடக்கிறார்க
ளென்பதை நான்கண்டு மிகவுஞ்சந்தோஷப்பட்
௫ டேன்.—தலைவியே, நான் உமக்குப் புதுக்கட்
டளையாகவல்ல, நாம் ஒருவரில் ஒருவர் அன்பா
யிருக்க வேண்டுமென்று ஆதிமுதல் நமக்குண்
டாயிருக்கிறதையே எழுதி உம்மை வேண்டிக்
௬ கொள்ளுகிறேன்.—நாம் அவருடைய கட்டளை
களின்படி நடப்பதே அன்பு. நீங்கள் ஆதிமு
தல் கேட்டிருக்கிறபடி அதிலே நடந்துகொள்
ளவேண்டியதே அந்தக்கட்டளை.—அநேக வஞ் ௭
சகர் உலகத்திலே தோன்றி, யேசுக்கிறிஸ்து
மனுஷாவதாரம்பண்ணினாரென்பதை அறிக்கை
யிடாமலிருக்கிறார்கள். இப்படிப்பட்டவனே
வஞ்சகனும், கிறிஸ்துவுக்கு விரோதியுமாயி
ருக்கிறான்.—நாம் முன்செய்த காரியங்கள் விரு ௮
தாவாகாமல், நாம் சம்பூரணபலனைப் பெறும்ப
டி நீங்கள் சாவதானமாயிருங்கள்.—கிறிஸ்து ௯
வின் உபதேசத்தில் நிலை நில்லாமல் அதிக்கிர
மஞ்செய்பவனெவனும் தேவனை அடைந்தவ
னல்ல, கிறிஸ்துவின் உபதேசத்தில் நிலைநிற்
கிறவனே பிதாவையுங் குமாரனையும் அடைந்தி
ருக்கிறான்.—ஒருவன் உங்களிடத்தில் வந்து இந் ௰
த உபதேசத்தைப் போதியாமற்போனால், அவ
னை உங்கள் வீட்டில் உபசரிக்கவும், அவனுக்
கு வாழ்த்துதல் சொல்லவும்படாது.—அவனுக்கு ௰௧
வாழ்த்துதல் சொல்லுகிறவன் அவனுடையதுர்க்
கிரியைகளுக்குப்பங்காளன்.—நான் அநேககா ௰௨
ரியங்களை உங்களுக்கெழுதவேண்டும், ஆயினும்
காகிதத்தினாலும், மையினாலுமல்ல. நமக்குப்பூ
ரணசந்தோஷமுண்டாகும்படி நான் உங்களி
டத்தில்வந்து, முகமுகமாய்ப் பேசலாமென்று
நம்பியிருக்கிறேன்.—தெரிந்துகொள்ளப்பட்ட ௰௩
உமது சகோதரியின் பிள்ளைகள் உமக்கு வாழ்த்
துதல்செய்கிறார்கள். ஆமென்.

---

(௧) ௧.யோவா.௩.௰௮. யோவா.௮.௩௨. ௨.தெச.௨.௰௩. ௧.தீமோ.௨.௪. எபி.௰.௨௬. (௩) ௧.தீமோ.௧.௨. வச.௧.(௪) ௩.யோவா.௩. (௫) ௧.யோவா.௨.௭,௮. யோவா.௰௩.௩௪. எபே.௫.௨. ௧.பேதுரு.௪.௮. ௧.யோவா.௩.௨௩. (௬) யோவா.௰௪.௰௫,௨௧. ௧.யோவா.௨.௫,௨௪. (௭) ௧.யோவா.௪.௧,௨,௩. ௧.யோவா.௨.௨௨. (௮) மாற்.௰௩.௯. கலா.௩.௪. எபி.௰.௩௨,௩௫. (௯) ௧.யோவா.௨.௨௩. (௰) ரோ.௰௬.௰௭. ௧.கொரி.௫.௰௧. கலா.௧.௮,௯. ௨.தீமோ.௩.௫. தீத்.௩.௰. (௰௨) ௩.யோவா.௰௩. யோவா.௰௭.௰௩. ௧.யோவா.௧.௪. (௰௩) ௧.பேதுரு ௫.௰௩.

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதிய மூன்றாம்

## நிருபம்.

௧. நன்னெறி உபசாரமென்னும் இவைகளினிமித்தம் யோவான் காயுவைப்புகழ்தல்: ௯. தியோத்திரேபைக்கண்டித்தல். தேமேத்திரியுவைப் புகழ்தல்: ௰௩. நிருபத்தின் முடிவுரை.

மூப்பராகிய நான், உண்மையாய் அன்புகூருகிறபிரியமான காயுவுக்கு எழுதிக்கொள்வது.-
௨ பிரியமானவனே, உன் ஆத்துமம் வாழ்ந்திருப்ப
துபோல,நீஎவ்விதத்திலும்வாழ்வுபெற்று ஆரோக்
௩ கியமடையும்படி வேண்டுகிறேன்.—சகோதரர்
வந்து, நீ சத்தியத்தில் இப்படி நடந்துகொள்ளு
கிறாயென்று உன்னுடைய உண்மையைக்குறித்
துச்சாட்சியிட்டபொழுது நான்மிகவுஞ்சந்தோ
௪ ஷமானேன்.-என்பிள்ளைகள்சத்தியத்திலேநடப்
பதை நான் கேள்விப்படுவதினாலுண்டாகுஞ்சந்
தோஷத்திலும் மேலானசந்தோஷம் எனக்கில்
௫ லை.-பிரியமானவனே, நீ சகோதரருக்கும் பரதே
சிகளுக்குஞ்செய்வதெல்லாம் விசுவாசத்துக்குத்
௬ தகுந்தவைகள்.—அவர்கள் உன்னுடைய அன்
பைக்குறித்துச்சபைக்குமுன்பாகச்சாட்சியிட்
டார்கள்: நீ தேவனுக்கேற்றபடி அவர்களை வ
௭ ழிவிட்டனுப்பினால் நன்மைசெய்வாய்.—அவர்
கள் அந்நியரிடத்தில் ஒன்றும் வாங்காமல், அவ
ருடைய நாமத்தினிமித்தம் புறப்பட்டார்களே.-
௮ ஆதலால் நாம் சத்தியத்துக்கு உபயோகிகளாகும்
படி, இப்படிப்பட்டவர்களை உபசரிப்பது நமக்
௯ குக்கடமை.-நான் சபைக்கு எழுதினேன்: ஆனா
லும் அவர்களுக்கு முதலாளியாயிருக்கவிரும்பு
கிற தியோத்திரேப்பு எங்களைஏற்றுக்கொள்ளுகி
றதில்லை.-அவன் எங்களுக்கு விரோதமாய்ப்பழி ௰
மொழிபேசுகிறான்: அதினாலுந் திருத்திப்படா
மல்,தான்சகோதரரைஉபசரிக்காமலிருக்கிறதும
ன்றி, அவர்களைஉபசரிக்கவிரும்புகிறவர்களையுந்
தடுத்து, சபைக்குப் புறம்பே தள்ளுகிறான்: இதி
னிமித்தம் நான்வரும்பொழுது அவன் கிரியைக
ளை அவன் நினைக்கும்படிசெய்வேன்.–பிரியமா ௰௧
னவனே, நீ தீமையையல்ல, நன்மையைப் பின்
பற்றுவாயாக. நன்மைசெய்கிறவன் தேவனாலு
ண்டாயிருக்கிறான்: தீமைசெய்கிறவனோ தேவ
னைக்கண்டறியவில்லை.-தேமேத்திரியு எல்லாரா ௰௨
லும்,சத்தியத்தாலுந்தானேசாட்சிபெற்றிருக்கிறா
ன்: நாங்களுஞ் சாட்சியிடுகிறோம்; எங்கள்சாட்
சிமெய்யென்றறிந்திருக்கிறீர்கள்.—நான் அநேக ௰௩
காரியங்களை உனக்குஎழுதவேண்டும், ஆனாலும்
மையினாலும் எழுதுகோலினாலும் எழுதமனதில்
லை.–நான் சீக்கிரமாய் உன்னைக்காணலாமென் ௰௪
று நம்பியிருக்கிறேன், அப்பொழுது முகமுக
மாய்ப்பேசுவோம். உனக்குச் சமாதானமுண்
டாயிருக்கக்கடவது. எங்கள் சிநேகிதர் உன்
னை வாழ்த்துதல் செய்கிறார்கள். உன்னிடத்தி
லுள்ள சிநேகிதர்களைப்பெயர் பெயராக வாழ்த்
துதல் செய்வாயாக, ஆமென்.

---

(௧) ௨.யோவா.௧. (௩) ௨.யோவா.௪. (௪) ௧.கொரி.௪.௰௫. பிலே.௰. (௭) ௧.கொரி.௯.௰௨,௰௫.(௰௧) சங்.௩௭.௨௭. ஏசா.௧.௰௬,௰௭. ௧.பேது௫.௩.௰௧. ௧.யோவா.௨.௨௯. (௰௨) ௧.தீமோ.௩.௭.யோவா.௨௧.௨௪.(௰௩) ௨.யோவா.௰௨,

அப்போஸ்தலனாகிய

# யூதா எழுதிய சாதாரண நிருபம்.

---

*க. வாழ்த்து: ங. பத்தியில் ஸ்திரமாயிருப்பதைக் குறித்தல். கள்ளப்போதகரின்பாவத்தைக்குறித்தல். அவர்களுக்கு வருந்தண்டனையைக்காட்டல்: உ௰. யூதா பத்தரை உணர்த்தல்: உச. பிரார்த்தித்து முடிவுரைசெய்தல்.*

யேசுக்கிறிஸ்துவின் பணிவிடைக்காரனும்,யாக்கோபின்சகோதரனுமாகிய யூதா, பிதாவாகிய தேவனாற் பரிசுத்தமாக்கப்பட்டும், யேசுக்கிறிஸ்துவினாற் காக்கப்பட்டுமிருக்கிற அழைக்கப்பட்டவர்களுக்கு எழுதிக்கொள்வது.—
உ இரக்கமும், சமாதானமும், அன்பும் உங்களுக்
ங குப் பெருகக்கடவன.—பிரியமானவர்களே, சாதாரண இரட்சிப்பைக்குறித்து உங்களுக்கு எழுதவேண்டுமென்று நான் மிகுந்த கருத்துள்ளவனாயிருக்கையில், முன்னே பரிசுத்தவான்களுக்கு ஒப்பிக்கப்பட்ட விசுவாசத்தினிமித்தம் நீங்கள் மிகுந்தஊக்கத்தோடேமுயலவேண்டுமென்றெழுதி உங்களுக்குணர்த்துவது அவசியமென்று
ச கருதிக்கொண்டேன்.—நமது தேவனுடைய கிருபையைக் காமவிகாரத்துக்கேதுவாகப்புரட்டி, ஏக சுயாதிபதியாகிய தேவனும், நம்முடையகர்த்தருமாயிருக்கிற யேசுக்கிறிஸ்துவை மறுதலிக்கிற துன்மார்க்கரான சில மனுஷர்பக்கவழியாய் நுழைந்திருக்கிறார்கள், அவர்கள் இந்தத்தண்டனைக்குமுன் எழுதப்பட்டிருந்
ரு தார்கள்.—ஆதலால், கர்த்தர் எகிப்துதேசத்தினின்று தமது சனங்களை இரட்சித்தபின்பு விசுவாசியாதவர்களை அழித்தார், இதை நீங்கள் அறிந்திருந்தும், இப்பொழுது உங்களுக்கு ஞாப
சு கப்படுத்த விரும்புகிறேன்.—தங்களுடைய ஆதி நிலையிலே நிலைத்திராமல், தங்கள் வாசஸ்தானத்தை விட்டுவிலகின தூதரையும் அவர் மகா பெரியநாளின் நியாயத்தீர்ப்புக்கு நித்திய சங்கிலிகளினாற் கட்டி, அந்தகாரத்தில் அடைத்து
எ வைத்திருக்கிறார்.—அவ்வண்ணமே சோதோம், கொமோரா நகரத்தாரும், அவைகளைச் சூழ்ந்த பட்டணத்தாரும் வேசைமார்க்கத்தில் அமிழ்ந்தினவர்களாய் அந்நிய மாமிசத்தைச் சேர்ந்ததினிமித்தம், அவர்கள் அவியாத அக்கினியாகிய தண்டனையை அனுபவிக்கும்படி திருஷ்டாந்தமாக வைக்கப்பட்டிருக்கிறார்கள்.—அந்தப்பிர அ
காரம் இந்தச்சொப்பனக்காரருஞ் சரீரத்தை அசுசிப்படுத்தி, கர்த்தத்துவத்தை அவமதித்து, மகிமையுள்ள பட்டங்களை நிந்திக்கிறார்கள்.—பிரதா கூ
ன தூதனாகிய மிகாவேலும் மோசேயின் சரீரத்தைக்குறித்துப் பிசாசுடனே வாக்குவாதம் பண்ணினபொழுது, அவனுக்கு விரோதமாய் நிந்தனையான உத்தரஞ்சொல்லத்துணியாமல், கர்த்தர் உன்னைக்கடிந்துகொள்ளக்கடவரென்றான்.-
இவர்களோ தங்களுக்குத்தெரியாதவைகளை நிந் ௰
திக்கிறார்கள்:புத்தியில்லாத மிருகங்களைப்போல் இந்திரியவழியாய்த் தாங்களுணர்ந்தவைகளால் தங்களைக்கெடுக்கிறார்கள்.—ஐயோ, அவர்களுக் ௰க
கு ஆபத்துவரும், காயீன் வழியிலே நடந்து, அவர்கள் பிலியாம் கூலிக்காகச் செய்தவஞ்சகத்திலே விரைந்தோடி, கோராவின் துரோகத்திலே கெட்டுப்போனார்கள்.—உங்களுடன் விரு ௰உ
ந்துண்ணும்பொழுது பயமில்லாமல் தங்களை மேய்த்து, உங்கள் அன்பின் விருந்துகளுக்கு மாசுகளாயிருக்கிறார்கள்: இவர்கள் காற்றுகளால் அடிபடும் நீரற்றமேகங்கள்; உலர்ந்து, கனியற்று, இரண்டுதரம் பட்டு, வேரற்றுப்போன மரங்
கள்.—தங்கள் சுயலச்சையென்னும் நுரைகளைச் ௰ங
சிந்துகிற சமுத்திரத்தின் உக்கிர அலைகள்; நெறி தப்பித்திரிகிற நட்சத்திரங்கள்; இவர்களுக்கென்று நித்திய அகோர அந்தகாரம் வைக்கப்பட்
டிருக்கின்றது.—ஆதாமின் ஏழாந் தலைமுறை ௰ச
யிலுண்டாயிருந்த ஏனோகு இவர்களைக்குறித்து, "பாருங்கள், கர்த்தர் எல்லாருக்கும் நியாயத்தீர்ப்புக்கொடுக்கிறதற்கும், அவர்களில் தேவபத்தியில்லாத யாவருந் துன்மார்க்கமாய்ச்செய்த சகலதுன்மார்க்கமான கிரியைகளினிமித்தமும்,—
தமக்கு விரோதமாய்த் தேவபத்தியில்லாத பாவி ௰ரு
கள்பேசின கடுஞ்சொற்களெல்லாவற்றினிமித்தமும், அவர்களைக்கண்டிக்கிறதற்கும், ஆயிரம்பதினாயிரந் தமது பரிசுத்தவான்களோடே வருகி
றார்," என்று தீர்க்கதரிசனஞ் சொன்னான்.-இவர் ௰சு
கள் மொறுமொறுக்கிறவர்களும், முறையிட்டுத்

---

(க)லூக்.சு௰.சு. அப்.க.௰ங. யோவா.௰எ.௰க,௰உ,௰ரு. க.பேதுரு.க.ரு. ரோ.க.உ.(உ)க.பேதுரு.க.உ. உ.பேதுரு.க.உ. (ங) தீத்.க.ச. பிலி.க.உஎ. க.தீமோ.க.௰அ. உ.தீமோ.க.௰ங. (ச) கலா.உ.ங. உ.பேதுரு.உ.க. ரோ.கூ.உக, உஉ. க.பேதுரு.உ.அ. உ.பேதுரு.உ.௰. தீத்.உ.௰க. எபி.௰உ.௰ரு. தீத்.க.௰சு. உ.பேதுரு.உ.க. க.யோவா.உ.உஉ (ரு) க.கொரி.௰.கூ. எண்.௰ச.உகூ,ஙஎ. சங்.ஈசு.உஎ. எபி.கூ.௰எ,௰கூ.(சு) யோவா.அ.சச. உ.பேதுரு.உ.ச.வெளி. உ௰.௰. (எ) ஆதி.௰கூ.உச. உபா.உகூ.உங. உ.பேதுரு.உ.சு. (அ) உ.பேதுரு.உ.௰. யாத்.உஉ.உஅ.(கூ) தானி.௰.௰ங. வெளி.௰உ.எ. உ.பேதுரு.உ.௰க. சக.ங.உ (௰) உ.பேதுரு.உ.௰உ. (௰க) ஆதி.ச.ரு. க.யோவா.ங.௰உ. எண்.உஉ. எ,உக. உ.பேதுரு.உ.௰ரு. எண்.௰சு.க,. (௰உ) உ.பேதுரு.உ.௰ங. க.கொரி.௰க.உக. நீதி.உரு.௰ச. உ.பேதுரு.உ. ௰எ. எபே.ச.௰ங. மத்.௰ரு.௰ங. (௰ங) ஏசா.ருஎ.உ௰. பிலி.ங.௰கூ. உ.பேதுரு.உ.௰எ. (௰ச) ஆதி.ரு.௰அ.(௰ரு)உபா. ஙங.உ. தானி.எ.௰. சக.௰ச.ரு.மத்.உரு.ஙக. உ.தெச.க.சு. வெளி.க.எ. க.சாமு.உ.ங.சங்.ஙக.௰அ.மல்.ங.௰ங.(௰சு) உ.பேதுரு.உ.௰அ. நீதி.உஅ.உக. யாக்.உ.க,க.

திரிகிறவர்களும், தங்கள் தங்கள் இச்சைகளுக்
கு இசைய நடக்கிறவர்களுமாயிருக்கிறார்கள்;இ
வர்களுடைய வாய் மிகவும் இறுமாப்பானவை
களைப்பேசி, இலாபத்துக்காகப்பெரியோரைப்பு
௰எ கழுகிறார்கள்.—பிரியமானவர்களே, நீங்கள் நம்
முடைய கர்த்தராகிய யேசுக்கிறிஸ்து
வின் அப்போஸ்தலரால் முன்னுரைக்கப்பட்
௰அ ட வாக்கியங்களை நினைத்துக்கொள்ளுங்கள்.—அ
வர்கள்,கடைசிக்காலத்தில்தங்கள்இச்சைகளின்
படி நடக்கிற துன்மார்க்கமான நிந்தனைக்காரர்
தோன்றுவார்களென்று உங்களுக்குச்சொன்னார்
௰கூ களே.—இவர்களே பிரிந்துபோகிறவர்கள், சுக
உ௰ போகிகள், ஆவியானவர் இல்லாதவர்கள்.—பிரிய
மானவர்களே, உங்கள் மிகுந்தபரிசுத்தமான வி
சுவாசத்தில் உங்களைஸ்திரப்படுத்தி, பரிசுத்த ஆ
உக வியைக்கொண்டு பிரார்த்தனைபண்ணி,—நித்திய
சீவனுக்கேதுவாக நம்முடைய கர்த்தராகிய
யேசுக்கிறிஸ்துவின் இரக்கத்தை அபேட்
சிப்பவர்களாய், தேவனுடைய அன்பில் உங்
களைக் காத்துக்கொள்வீர்களாக.—வகையறுக்கிற உஉ
வர்களாகச்சிலருக்குஇரங்கி,-அக்கினியினின்று உ௩
சிலரை இழுத்துக்கொண்டு,பயத்தோடே அவர்
களை இரட்சித்து,மாமிசத்தினாற்கறைப்பட்ட அ
ங்கியையும்வெறுத்துவிடுங்கள்.-நீங்கள்வழுவாத உச
படி உங்களைக்காத்துக்கொள்ளுகிறதற்கும், மா
சில்லாமல் மகாமகிழ்ச்சியோடே உங்களைத் தம
து மகிமையுள்ள சந்நிதானத்தில் நிறுத்துகிறதற்
கும்வல்லவரும்,—நம்முடைய இரட்சகருமாகிய உரு
ஒரே சருவஞ்ஞத்துவமுள்ள தேவனுக்குப்பு
கழ்ச்சியும், மகிமையும், பராக்கிரமமும், அதிகா
ரமும் இப்பொழுதும் எப்பொழுதுமுண்டாயி
ருக்கக்கடவன. ஆமென்.

---

(௰எ) உ.பேதுரு.௩.௧. (௰அ) ௧.தீமோ.௪.௧. உ.தீமோ.௩.௧. உ.பேதுரு.உ.௧.(௰கூ)நீதி.௰அ.௧. எசேக்.௰௪.எ. ஓசி.௪.௰௪. எபி.௰.உ௫. ௧.கொரி.உ.௰௪. யாக்.௩.௰௫. (உ௰) கொலோ.உ.எ. ௧.தீமோ.௧.௩. ரோ.அ.உ௬. எபே.௬.௰அ. (உ௧) தீத்.உ.௰௩. உ.பேதுரு.௩.௰உ. (உ௩) ரோ.௰௧.௰௪. ௧.தீமோ.௪.௰௬. ஆமோ.௪.௰௧. சக.௩.உ. ௧.கொரி.௩.௰௫. சக.௩.௪,௫. வெளி.௩.௪. (உ௪) ரோ.௰௬.உ௬. எபே.௩.உ௰. கொலோ.௧.உஉ.(உ௫)ரோ.௰௬.உஎ. ௧.தீமோ.௧.௰எ.

தெய்வபோதகராகிய யோவானுக்கு

# வெளிப்படுத்தப்பட்டவாக்கியம்.

## ௧. அதிகாரம்.

௧. முகவுரை: ௪. வாழ்த்து: ௭. கிறிஸ்துவின் வரு
கையைக்குறித்தல்: ௯. யோவான்காவலில்வைக்
கப்படல். அவன் கிறிஸ்துவைத் தரிசித்தல். ச
பைகளாகிய ஏழுவிளக்கைக்காண்டல்.

விரைந்துநேரிடும் விசேஷங்களைத் தமது பணி
விடைக்காரருக்குத் தெரிவிக்கும் பொருட்டுத்
தேவன் யேசுக்கிறிஸ்துவினிடத்தில் ஒ
ப்பித்ததும், இவர் தமது தூதனை அனுப்பி, அ
வனைக்கொண்டு தமது பணிவிடைக்காரனுகிய
யோவானுக்குத்தெரிவித்ததுமான தீர்க்கதரிசன
௨ வாக்கியம்:—இவன் தேவனுடைய வாக்கும்,
யேசுக்கிறிஸ்துவினுற் சாட்சியிடப்பட்ட
தும், தான் கண்டதுமாகிய யாவையும் அறிவித்
௩ திருக்கிருன்.—இந்தத் தீர்க்கதரிசன வாக்குகளை
வாசிக்கிறவனும், கேட்கிறவர்களும், இதில் எழு
தியிருக்கிறவைகளைக் காத்துக்கொள்ளுகிறவர்க
ளும் வாழ்வுடையவர்கள்: காலஞ்சமீபமாயிற்று.
௪ யோவான் ஆசியாதேசத்திலுள்ள ஏழு சபைக
ளுக்கும் எழுதிக்கொள்வது: இருககிறவரும், இ
ருந்தவரும், வருபவருமானவராலும், அவருடை
ய சிங்காசனத்துக்கு முன்னிருக்கிற ஏழு ஆவிக
௫ ளாலும்,—மெய்ச்சாட்சியும், மரித்தோரிலிருந்து
முதற்பிறந்தவரும், பூமியின் இராசாதி இராசனு
மாகிய யேசுக்கிறிஸ்துவினுலும் உங்களுக்
குக் கிருபையுஞ் சமாதானமுமுண்டாகக்கடவ
ன. நம்மில் அன்பு கூர்ந்து, நம்முடைய பாவங்
கள் நீங்கத் தமது இரத்தத்தினுலே நம்மைக்கழு
௬ வி,—நம்மை இராசாக்களும், ஆசாரியருமாகத் த
மது பிதாவாகிய தேவனிடத்தில் ஏற்படுத்தி
னவருக்கு, மகிமையும் வல்லமையுஞ் சதாகாலங்
களிலுமுண்டாயிருக்கக்கடவன. ஆமென்.
௭ பாருங்கள், மேகங்களில் வருகிருர்; எந்தக்
கண்ணும் அவரைக்காணும், அவரைக் குத்தின
வர்களும் அவரைக்காண்பார்கள்: பூமியி
லுள்ள கோத்திரத்தார் யாவரும் அவர் நிமித்தந்
துக்கித்துப்புலம்புவார்கள். அப்படியே ஆகும்,
௮ ஆமென்.—இருக்கிறவரும், இருந்தவரும், வருப
வருமாகிய சருவவல்லமையுள்ள கர்த்தர், நான்
அல்பாவும் ஒமேகாவுமாகிய ஆதியும் அந்தமுமா
யிருக்கிறேனென்கிருர்.
யேசுக்கிறிஸ்துவின் உபத்திரவத்திற்கும், ௯
இராச்சியத்திற்கும், பொறுமைக்கும் பங்காள
னும், உங்கள் சகோதரனுமாகிய யோவானென்
னும் நான், தேவவாக்கினிமித்தமும், யேசுக்கி
றிஸ்துவைக் குறித்து இட்டசாட்சியினிமித்த
மும் பத்முவென்னும் உபதீவில் இருந்தேன்.—
கர்த்தருடைய நாளில் ஆவிக்குள்ளானேன்.— ௰
அப்பொழுது, அல்பாவும் ஒமேகாவுமாகிய ஆதி ௰௧
யும் அந்தமுமாயிருக்கிறேன்: இப்பொழுது நீ
காண்பதை ஒரு புத்தகத்தில் எழுதி, எபேசு, சி
மிருனு, பெருகமு, தியத்தைரா, சருதை, பில
தெல்பியா, இலவோதிக்கையாவென்னும் ஆசி
யாவிலுள்ள ஏழுசபைகளுக்கும் அனுப்பென்று
எக்காளத்தொனிபோன்ற ஒரு மகாசத்தம் எனக்
குப்பின்னுலேசொல்லியதை நான்கேட்டேன்.—
அப்பொழுது என்னுடன் பேசின சத்தத்தை நி ௰௨
தானித்துப்பார்க்கத் திரும்பினேன். திரும்பின
பின் ஏழு பொன்விளக்குகளையும்,—அந்த ஏழு ௰௩
விளக்குகளின் மத்தியிலே நிலைஅங்கியைத்தரித்
து, மார்பிற்பொற்கச்சுக்கட்டியிருந்த மனுபுத்தி
ரனுக்கொப்பான ஒருவரையுங்கண்டேன்.—அ ௰௪
வருடைய சிரசும் மயிரும், வெண்பஞ்சையும்,
உறைந்தமழையையும்போலவெண்மையாயிருந்
தன; அவருடைய கண்கள் அக்கினிச்சுவாலைக்
குச் சமானம்.—அவருடைய பாதங்கள் உலையிற் ௰௫
காய்கிற பிரகாசமுள்ள பித்தளைபோலிருந்தன;
அவருடைய சத்தம் பெருவெள்ளத்தின் இரைச்
சலைப்போலிருந்தது.—அவர் தமது வலக்கையில் ௰௬
ஏழு நட்சத்திரங்களை ஏந்திக்கொண்டிருந்தார்:
அவர் வாயிலிருந்து இருபுறமுங்கூருள்ள கட்
கம் புறப்பட்டது: அவருடைய முகம் மத்தியா
னகாலத்திற்பிரகாசிக்கிற சூரியனைப்போலிருந்
தது.—நான் அவரைக் கண்டமாத்திரத்தில் மரித் ௰௭
தவனைப்போல அவருடைய பாதத்தில் விழுந்
தேன். அவர், தமது வலக்கையை என்மேல்வைத்
து, என்னுடன், பயப்படாதே; நான் ஆதியும்,
அந்தமும், சுயஞ்சீவியுமாயிருக்கிறேன்.—பார், ௰௮

(௧. அதி. ௧.) யோவா.௩.௩௨. அதி.௪.௧. அதி.௨௨.௰௬. (௨) ௧.கொரி.௧.௫. ௧.யோவா.௧.௧. (௩) லூக்.௰௧.௨௮. ரோ.௰௩.௰௧. யாக்.௫.௮. ௧.பேதுரு.௪.௭. (௪) யாத்.௩.௰௪. யோவா.௧.௧. சக.௩.௯. (௫) யோவா.௮.௰௪. ௧.தீமோ.௬.௰௩. ௧.கொரி.௰௫.௨௰. கொலோ.௧.௰௮. எபே.௧.௨௰. யோவா.௰௩.௩௪. கலா.௨.௨௰. எபி.௯.௰௪. ௧.யோவா.௧.௭. (௬) ௧.பேதுரு.௨.௫,௯. ௧.தீமோ.௬.௰௬. எபி.௰௩.௨௧. ௧.பேதுரு.௪.௰௧. (௭) தானி.௭.௰௩. மத்.௨௪.௩௰. அப்.௧.௰௧. சக.௰௨.௰. யோவா.௰௯.௩௭. (௮) ஏசா.௪௧.௪. (௯) பிலி.௧.௭. ௨.தீமோ.௧.௮. ரோ.௮.௰௭. ௨.தீமோ.௨.௰௨. அதி.௬.௯. (௰) அப்.௰.௰. ௨.கொரி.௰௨.௨. யோவா.௨௰.௨௬. அப்.௨௰.௭. ௧.கொரி.௰௬.௨. (௰௧) வச.௮, ௰௭. (௰௨) வச.௨௰. யாத்.௨௫.௩௭. சக.௪.௨. (௰௩) அதி.௨.௧. எசேக்.௧.௨௬. தானி.௭.௰௩. தானி.௰.௫. அதி.௰௫.௬. (௰௪) தானி.௭.௯. தானி.௰.௬. (௰௫) எசேக்.௧.௭. தானி.௰.௬. எசேக்.௪௩.௨. (௰௬) ஏசா.௪௯.௨. எபே.௬.௰௭. எபி.௪.௰௨. அப்.௨௬.௰௩. (௰௭) எசேக்.௧.௨௮. தானி.௮.௰௮. ஏசா.௪௧.௪. (௰௮) ரோ.௬.௯. அதி.௪.௯. சங்.௬௮.௨௰. வச.௰௨.

நான் மரித்தும்என்றைக்குஞ்சீவித்திருக்கிறேன்;
ஆமென், என் கையில் மரணம்,மரித்தோர்ஸ்தான
மென்பவைகளின்திறவுகோல்களிருக்கின்றன.-
௰௯ நீ கண்டவைகளையும், இருக்கிறவைகளையும், பி
உ௰ ன்சம்பவிப்பவைகளையும் எழுது.—என் வலது
கரத்தில் நீ கண்ட ஏழு நட்சத்திரங்கள், ஏழு
பொன் விளக்குகளாகிய இவைகளின் குறிப்பு,
அந்த ஏழு நட்சத்திரங்கள் சபைகளின் ஏழு தூ
தர்: ஏழுவிளக்குகள் ஏழுசபைகளேயாம்.

## உ. அதிகாரம்.

க. எபேசின் சபைக்குக் கிறிஸ்துஅனுப்பினவாக்கியம்: அ. சிமிருனாவின் சபைக்கு அனுப்பிய வாக்கியம்: ௰உ. பெருகமுவின் சபைக்கனுப்பிய வாக்கியம்: ௰அ. தியத்தைராவின் சபைக்கனுப்பியவாக்கியம்.

எபேசுவிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுத
வேண்டுவது; ஏழு நட்சத்திரங்களைத் தம்முடை
ய வலக்கரத்தில் ஏந்திக்கொண்டு, ஏழு பொன்வி
ளக்குகளின் மத்தியில் உலாவுகிறவர் இவைக
உ ளை வசனிக்கிறார்.—உன் கிரியைகளையும், பிரயா
சத்தையும், பொறுமையையும்,தீயோரை நீ சகிக்
கக்கூடாமலிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்:
அப்போஸ்தலராயிராமல் தங்களை அப்போஸ்த
லரென்று சொல்லுகிறவர்களை நீ பரீட்சித்து,
அவர்களைப் பொய்யரென்று நிச்சயித்திருக்கிறா
௩ ய்.—நீ தளர்ந்துபோகாமல் என் நாமத்தினிமித்தம்
பிரயாசப்பட்டு, பொறுமையாக நடந்துவருகி
௪ றாய்.—ஆனாலும் உன்னிடத்தில் சிறிது குறை
௫ வுண்டு, உன் முந்தின அன்பைவிட்டாய்.—ஆத
லால் நீ வழுவின நிலையை நினைந்து,மனந்திரும்
பி, ஆதியிற்செய்த கிரியைகளைச்செய்வாயாக;நீ
மனந்திரும்பாவிட்டால் நான் விரைவில் உன்
னிடத்தில்வந்து, உன் விளக்கை அதினிடத்தி
௬ னின்று அகற்றுவேன்.—நான் வெறுக்கிற நிக்
கோலாத்தியரின் கிரியைகளை நீயும் வெறுக்கி
எ றாய், இதுஉனக்குண்டு.—ஆவியானவர்சபைகளு
க்குச்சொல்லுகிறதைக்காதுள்ளவன்கேட்கக்கட
வன்; செயிக்கிறவனெவனோ, அவனுக்குத் தே
வனுடைய பரதீசியின் மத்தியிலிருக்கிற சீவ
விருட்சத்திலுள்ளதைப் புசிக்கக்கொடுப்பேன்.
அ சிமிருனாவிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எ
ழுதவேண்டுவது; மரித்து, பின்பு சீவித்திருக்கிற
ஆதியும் அந்தமுமானவர், இவ்விதமாய் வசனிக்
௯ கிறார்.-உன் கிரியைகளையும்,உபத்திரவத்தையும்,
செல்வனாகிய உனக்கிருக்கிற தரித்திரத்தையும்,
தங்களை யூதரென்றுசொல்லியும் யூதராயிராமல்
சாத்தானுடைய சபையாயிருக்கிறவர்கள் செய்
௰ கிறநிந்தையையும் அறிந்திருக்கிறேன்.-நீஅ
னுபவிக்கப்போகிற துன்பத்தைக்குறித்து எவ்வ
ளவாகிலும் பயப்படாதே: கேள், நீங்கள் சோ
திக்கப்படும்பொருட்டாகப் பிசாசானவன் உங்
களிற் சிலரைக் காவலில் ஒப்பிப்பான்; பத்து
நாள் அளவாக உங்களுக்கு உபத்திரவமிருக்கு
ம்: மரணபரியந்தம் நீ உண்மையாயிரு, அப்
பொழுது நான் சீவகிரீடத்தை உனக்குத் தருவே
ன்.—ஆவியானவர் சபைகளுக்குச்சொல்லுகிற ௰க
தைக் காதுள்ளவன் கேட்கக்கடவன்; செயங்
கொள்ளுகிறவன் இரண்டாம் மரணத்தினாலே
சேதப்படான்.
பெருகமுவிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எ ௰உ
ழுதவேண்டுவது; இருபுறமுங் கூருள்ள கட்கத்
தையுடையவர் இவ்விதமாய் வசனிக்கிறார்.-உன் ௰௩
கிரியைகளையும், சாத்தானுடைய ஆசனமிருக்கி
ற இடத்தில் நீ வாசம்பண்ணுகிறதையும், சாத்தா
ன் குடியிருக்கிற உங்களுக்குள் எனக்கு மெய்ச்
சாட்சி இட்டவனாகிய அந்திப்பா கொல்லப்ப
ட்ட நாட்களிலும் என்னைப்பற்றும் விசுவாசத்
தை மறுக்காமல் நீ என் நாமத்தைப் பற்றிக்கொ
ண்டிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.—ஆனா ௰௪
லும் உன்மேல் எனக்குச் சிறிது குறைவுண்டு,
விக்கிரகங்களுக்கு நிவேதித்ததைப் புசிக்கிறதற்
கும், வேசைமார்க்கம் பண்ணுகிறதற்கும் ஏது
வான இடறல்களை இஸரவேல் சந்ததியாருக்கு
வருவிக்கும்படி, பாலாக்குக்குப் பிலியாம்செய்
த போதகத்தைப் பற்றியிருக்கிறவர்கள் உன்னி
டத்திலுண்டு.—அன்றியும், நான் பகைக்கிறதா ௰௫
கிய நிக்கோலாத்தியருடைய போதகத்தைப் பற்
றிக்கொள்ளுகிறவர்களும் உன்னிடத்திலுண்டு.-
மனந்திரும்பு; இல்லாவிட்டால் நான் சீக்கிர ௰௬
மாய் உன்னிடத்தில் வந்து, என்வாயின் கட்கத்
தால் அவர்களோடே யுத்தஞ்செய்வேன்.—ஆவி ௰எ
யானவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் கா
துள்ளவன் கேட்கக்கடவன்; செயங்கொள்ளு
கிறவனுக்கு நான் அந்தரங்கமன்னாவைப் புசிக்
கக்கொடுத்து, ஒருவெண்கல்லையும், அந்தக்கல்
லின்மேல் பதிக்கப்பட்டதும், அடைந்தவனே
யன்றிப் பின்னொருவனும் அறியாததுமாகிய ஒ
ரு புதிய நாமத்தையுந் தருவேன்.
தியத்தைராவிலுள்ள சபையின் தூதனுக்கு நீ ௰அ
எழுதவேண்டுவது; அக்கினிச்சுவாலையைப்போ
ன்ற கண்களும், துலங்கும் பித்தளைபோன்ற பா
தங்களுமுள்ள தேவனுடைய குமாரன் இவ்
விதமாய் வசனிக்கிறார்.—உன் கிரியைகளையும், ௰௯
அன்பையும், ஊழியத்தையும், விசுவாசத்தையும்,
உன் பொறுமையையும், நீ பின்புசெய்த கிரியை
கள் முந்தின கிரியைகளிலும் அதிகமாயிருக்கிற

(௰௯)வச.௰உ,. அதி.உ.க,. அதி.௪.க,.(உ௰)வச.௰உ,௰௬. மல்.உ.எ. சக.௪.உ. மத்.௫.௰௫. பிலி.உ.௰௪.—(உ.அதி.க.) அதி.க.௰௩,௰௬,உ௰. (உ) சங்.க.௬. க.யோவா.௪.க. உ.கொரி.௰க.௰௩. உ.பேதுரு.உ.க. (௩) கலா.௬.௯. எபி.௰உ. ௩,௫. (௫) மத்.உக.௪க,௪௩. (௬) வச.௰௫. (எ) மத்.௰க.௰௫. அதி.உஉ.உ,௰௪. அதி.உ.௯.(அ)அதி.க.அ,௰எ,௰அ.(௯) வச.உ. லூக்.௰உ.உக. க.தீமோ.௬.௰அ. யாக்.உ.௫. ரோ.உ.௰எ,உஅ,உ௯. அதி.௩.௯. (௰) மத்.௰.உஉ. மத்.உ௪.௰௩. யாக்.க.௰உ. (௰க) வச.எ. அதி.௰௩.௯. அதி.உ௰.௰௪. (௰உ) அதி.க.௰௬.(௰௩)வச.உ,௯. (௰௪) எண்.உ௪.௰௪. உ.பேதுரு.உ.௰௫. யூதா.௰க. வச.உ௰. அப்.௰௫.உஅ. க.கொரி.அ.௯,௰. க.கொரி.௬.௰௩. (௰௫) வச.௬. (௰௬) ஏசா.௰௯. ௪. உ.தெச.உ.அ. (௰எ) வச.எ,௰க. அதி.௩.௰உ. (௰அ) அதி.க.௰௪,௰௫. (௰௯) வச.உ.

௨௰ தென்பதையும்அறிந்திருக்கிறேன்.-ஆயினும்உன்
மேல் எனக்குச் சிறிதுகுறைவுகளுண்டு,தன்னைத்
தீர்க்கதரிசியென்று சொல்லி வேசைமார்க்கமாய்
நடக்கிறதற்கும், விக்கிரகங்களுக்கு நிவேதித்த
தைப் புசிக்கிறதற்கும் என் பணிவிடைக்காரருக்
குப்போதித்து, அவர்களை வஞ்சிக்கிற யெசேபே
லென்னும் ஸ்திரிக்கு நீ இடங்கொடுக்கிறாய்.-
௨௧ அவள் மனந்திரும்புவதற்கு நான் சமயத்தை அரு
ளியும், அவள் தன் வேசைமார்க்கத்தைவிட்டு ம
௨௨ னந்திரும்பவில்லை.—கேள், அவளும், அவளுட
னே விபசாரஞ்செய்தவர்களுந் தங்கள்தங்கள் கி
ரியைகளைவிட்டு மனந்திரும்பாவிட்டால், நான்
அவளை ஒரு மஞ்சத்தின்மேலும், இவர்களை மி
குந்த உபத்திரவத்திலேயுந் தள்ளிவிட்டு, அவளு
௨௩ டைய பிள்ளைகளைக் கொலைசெய்வேன்.—அப்
பொழுது நான் அந்தக்கரணங்களையும், இருதயங்
களையும் ஆராய்கிறவரென்று எல்லாச்சபைகளும்
அறிந்துகொள்ளும்: உங்களில் அவனவனுடை
ய கிரியைகளின்படி யாவருக்கும் பிரதிபலன் அ
௨௪ ளிப்பேன்.-இந்தப்போதகத்தைப் பற்றிக்கொள்
ளாமலும், தாங்கள் சொல்லுகிறபடி சாத்தானு
டைய ஆழங்களை அறிந்துகொள்ளாமலுமிருக்கி
ற தியத்தைராவிலுள்ள மற்றவர்களாகிய உங்கள்
மேல் வேறொரு பாரத்தையும் ஏற்றமாட்டே
௨௫ னென்று சொல்லுகிறேன்.—உங்களுக்குண்டா
னதை நான் வருமளவும் பற்றிக்கொள்வீர்களா
௨௬ க.—செயங்கொண்டு, முடிவுபரியந்தம் என்கிரி
யைகளைக் காத்துக்கொள்ளுகிறவனெவனோ, அ
வனுக்கு என் பிதாவினிடத்தில் நான் பெற்றபி
ரகாரம், அந்நியர்மேல் அதிகாரங்கொடுப்பேன்.-
௨௭ அவன் இருப்புக்கோலினால் அவர்களை ஆளு
வான்; அவர்கள் மட்கலங்களைப்போல நொறுக்
௨௮ கப்படுவார்கள்.—விடிவெள்ளி நட்சத்திரத்தை
௨௯ அவனுக்குக் கொடுப்பேன்.-ஆவியானவர் சபை
களுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன்கேட்
கக்கடவன்.

## ௩. அதிகாரம்.

௧. சருதையின்சபைக்கு அனுப்பியவாக்கியம்: ௭. பிலதெல்பியாவின் சபைக்கு அனுப்பியவாக்கியம்: ௰௪. இலவோதிக்கையாவின் சபைக்கு அனுப்பியவாக்கியம்.

சருதையிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுத
வேண்டுவது; தேவ ஆவிகள் ஏழையும், ஏழுநட்
சத்திரங்களையுமுடையவர் இவைகளை வசனிக்
கிறார்; உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன், நீ
சீவனுள்ளோனென்று பெயர்பெற்றும் மரித்தவ
னாயிருக்கிறாய்.—உன்கிரியைகள் தேவசந்நிதியி ௨
லே குற்றமற்றவைகளல்லவென்பதைநான்கண்
டேன்: ஆதலால் நீ விழித்துக்கொண்டு, சாவப்
போகிற மீந்திருப்பவைகளை ஸ்திரப்படுத்துவா
யாக.-மேலும் நீ கேட்டுப் பெற்றுக்கொண்டவ ௩
கையைச் சிந்தித்து, பற்றிக்கொண்டு,மனந்திரும்
பு. நீ விழித்துக்கொள்ளாவிட்டால் நான் திருட
னைப்போல் உன்மேல்வருவேன்,நான்உன்மேல்
வரும் நேரத்தை அறியாதிருப்பாய்.-தங்கள் வஸ் ௪
திரங்களை அசுசிப்படுத்தாத சிலர் சருதையிலும்
உன்னோடிருக்கிறார்கள்; அவர்கள் பாத்திரரான
படியால் வெண்மையானவஸ்திரங்களைத்தரித்து
என்னுடன் நடப்பார்கள்.-செயங்கொள்ளுகிற ௫
வன்வெள்ளைவஸ்திரங்களால் உடுத்தப்படுவான்;
நான் சீவபுத்தகத்தில் அவனுடைய நாமத்தைத்து
டைக்காமல் என்பிதாவின் சந்நிதியிலும், அவரு
டைய தூதருக்குமுன்பாகவும்அவன்நாமத்தைஅ
றிக்கையிடுவேன்.-ஆவியானவர் சபைகளுக்குச் ௬
சொல்லுகிறதைக்காதுள்ளவன்கேட்கக்கடவன்.
பிலதெல்பியாவிலுள்ள சபையின் தூதனுக்கு ௭
நீ எழுதவேண்டுவது: தாவீதின் திறவுகோலையு
டையவரும், ஒருவரும் பூட்டக்கூடாதபடி தி
றக்கிறவரும், ஒருவருந் திறக்காதபடி பூட்டுகிற
வருமாகிய பரிசுத்தமுஞ் சத்தியமுமுள்ளவர் இ
வைகளைவசனிக்கிறார்.-உன்கிரியைகளை அறிந் ௮
திருக்கிறேன்: நீ அற்ப பலமுடையவனாயிருந்
தும் என் நாமத்தை மறுதலிக்காமல் என்வாக்கி
யத்தைக்காத்துக்கொண்டபடியினாலே, பார், உ
னக்குமுன்பாகக் கதவைத்திறந்துவைத்தேன், ஒ
ருவனும் அதைப்பூட்டமாட்டான்.—யூதரல்லா ௯
திருந்துந் தங்களை யூதரென்றுபொய்சொல்லுகிற
வர்களாகிய சாத்தானுடைய சபையாரிற்சிலரை
உனக்குத்தருகிறேன்.கேள்,அவர்கள்,உன்பாதங்
களுக்குமுன்பாகவந்துபணிந்து, நான்உன்மேல்
அன்பாயிருக்கிறதை அறிந்துகொள்ளும்படிசெ
ய்வேன்.—பொறுமையைக்கற்பிக்கிற என்வாக் ௰
கியத்தை நீ காத்துக்கொண்டபடியினாலே, நா
னும், பூமியின்மேல் வாசமாயிருப்பவர்களைச்
சோதிப்பதற்கு உலகமெங்கும்வருஞ்சோதனைக்
காலத்திற்குத் தப்பும்படி உன்னைப் பாதுகாப்
பேன்.-பார்,நான் சீக்கிரமாய் வருகிறேன்:ஒருவ ௰௧
னும் உன் கிரீடத்தை எடுத்துக்கொள்ளாதபடிக்
கு, உன்னிடத்திலுள்ளதைப் பலமாய்ப்பற்றிக்
கொள்வாயாக.—செயங்கொள்ளுகிறவனை என் ௰௨

---

(௨௰) ௧.இரா.௰௬.௩௧. ௨.இரா.௯.௭. யாத்.௩௪.௰௫. அப்.௰௫.௨௰,௨௯. ௧.கொரி.௰.௰௯,௨௰. (௨௧) ரோ.௨.௪. (௨௩) ௧.சாமு.௰௬.௭. ௧.நாளா.௨௮.௯. ௨.நாளா.௬.௩௰. எரே.௰௧.௨௰. யோவா.௨.௨௪,௨௫. அப்.௧.௨௪. ரோ.௮.௨௭. சங்.௬௨.௰௨. மத்.௰௬.௨௭. ரோ.௨.௭. ௨.கொரி.௫.௰. கலா.௬.௫. (௨௪) அப்.௰௫.௨௮. (௨௫) அதி.௩.௰௧. (௨௬) யோவா.௬,௨௯. ௧.யோவா.௩.௨௩. மத்.௰௯.௨௮. லூக்.௨௨.௨௯,௩௰. ௧.கொரி.௬.௩. (௨௭) சங்.௨.௮,௯. தானி.௭.௨௨. (௨௮) ௨.பேதுரு.௧.௰௯.—(௩. அதி. ௧.) அதி.௧.௪,௰௬. அதி.௨.௨. எபே.௨.௧,௫. ௧.தீமோ.௫.௬. (௩) ௧.தீமோ.௬.௨௰. ௨.தீமோ.௧.௰௩. வச.௰௧. மத்.௨௫.௰௩. ௧.தெச.௫.௨,௬. ௨.பேதுரு.௩.௰. (௪) அப்.௧.௰௫. யூதா.௨௩. அதி.௭.௯,௰௩. (௫) அதி.௰௯.௮. யாத்.௩௨.௩௨. சங்.௬௯.௨௮. பிலி.௪.௩. அதி.௨௰.௰௨. அதி.௨௧.௨௭. மத்.௰.௩௨. (௬) அதி.௨.௭. (௭) அப்.௩.௰௪. ௧.யோவா.௫.௨௰. அதி.௧.௫. எசா.௨௨.௨௨. லூக்.௧.௩௨. மத்.௰௬.௰௯. யோபு.௰௨.௰௪. (௮) வச.௧. ௧.கொரி.௰௬.௯. ௨.கொரி.௨.௰௨. (௯) அதி.௨.௯. எசா.௪௯.௨௩. (௰) ௨.பேதுரு.௨.௯. லூக்.௨.௧. எசா.௨௪.௰௭. (௰௧) பிலி.௪.௫. அதி.௨௨.௭,௰௨,௨௰. வச.௩. அதி.௨.௰,௨௫. (௰௨) ௧.இரா.௭.௨௧. கலா.௨.௯. அதி.௨.௰௭. கலா.௪.௨௬. எபி.௰௨.௨௨. அதி.௨௨.௪.

தேவனுடைய ஆலயத்தில் தூணாக்குவேன்,
அதைவிட்டு அவன் ஒருபொழுதும் நீங்கான்:
என் தேவனுடைய நாமத்தையும், என் தேவ
னிடத்தினின்று வானத்தைவிட்டிறங்குகிற புதி
ய யெருஷலேமாகிய என் தேவனுடைய நக
ரத்தின் நாமத்தையும், என்புதியநாமத்தையும் அ
௰௩ வன்மேல் எழுதுவேன்.—ஆவியானவர் சபைக
ளுக்குச் சொல்லுகிறதைக் காதுள்ளவன் கேட்
கக்கடவன்.
௰௪ இலவோதிக்கையாவிலுள்ள சபையின் தூத
னுக்கு நீ எழுதவேண்டுவது; உண்மையுஞ் சத்தி
யமுமுள்ளசாட்சியும், தேவனுடைய சிருஷ்
டிகளுக்காதியுமாயிருக்கிற ஆமென் என்பவர்
௰௫ இவைகளை வசனிக்கிறார்.—உன்கிரியைகளை அ
றிந்திருக்கிறேன், நீ குளிருமல்ல, அனலுமல்ல:
நீ குளிராய் அல்லது அனலாயிருந்தால் நலம்.—
௰௬ இவ்விதமாய் நீ குளிருமற்று அனலுமற்று வெது
வெதுப்பாயிருக்கிறபடியினால், உன்னை என்வா
௰௭ யினின்று வாந்திபண்ணுவேன்.—நீ திக்கற்றவ
னும், துக்கமுள்ளவனும், தரித்திரனும், குருட
னும், நிருவாணியுமாயிருக்கிறதை அறியாமல்,
நான்செல்வன், அதிக திரவியத்தைப்பெற்றேன்,
எனக்கு ஒருகுறைவுமில்லையென்று நீ சொல்லு
௰௮ கிறாய்.—நீ செல்வனாகும்படி நெருப்பிற் புடமி
டப்பட்ட பொன்னையும், உன் நிருவாணத்தின்
இலச்சைதோன்றாமல் நீ தரித்துக்கொள்வதற்கு
வெள்ளைவஸ்திரங்களையும் என்னிடத்தில் வாங்
கிக்கொள்வதற்கும், நீபார்வையடையும்படி உன்
கண்களுக்குக் கலிக்கம் போடுவதற்கும், உனக்
௰௯ கு ஆலோசனை சொல்லுகிறேன்.—நான் நேசிப்
பவர்களைக்கடிந்து தண்டிக்கிறேன்: ஆகையால்
நீ சாக்கிரதையாயிருந்து மனந்திரும்புவாயாக.—
௨௰ கேள், நான் வாசலருகே நின்று தட்டுகிறேன்:
ஒருவன் என் சத்தத்தைக்கேட்டுக் கதவைத்தி
றந்தால் அவனிடத்தில் நான்பிரவேசித்து, அவ
னோடே அந்திப்போசனம் பண்ணுவேன், அவ
னும் என்னோடே அந்திப்போசனம் பண்ணு
௨௧ வான்.—நான்செயம்பெற்றவனாய், என்பிதாவோ
டே அவருடைய சிங்காசனத்தில் வீற்றிருக்கிற
பிரகாரம்செயங்கொள்ளுகிறவன், என் சிங்காச
னத்தில் என்னோடே வீற்றிருக்கும்படி அருள்
௨௨ செய்வேன்.—ஆவியானவர்சபைகளுக்குச்சொல்
லுகிறதைக் காதுள்ளவன் கேட்கக்கடவனென்
று என்னுடன்சொன்னார்.

## ௪. அதிகாரம்.

௧. பரமண்டலத்தில் தேவனுடைய சிங்காச
னத்தையும், மூதியோரையும், கண்களால்நிறை
ந்த நாலுபிராணிகளையுந் தரிசித்தல்.

பாருங்கள், இவற்றிற்குப்பின்பு நான் பார்க்கை ௧
யில், வானத்தில் ஒருவாசல் திறந்திருக்கிறதைக்
கண்டேன்: அங்கிருந்து எக்காளம்போல என்
னோடே முன்பேசின அந்தச்சத்தம் என்னுட
னே, நீ இந்தஸ்தானத்தில் ஏறிவா, வருங்காலத்
திற் சம்பவிப்பவைகளை உனக்கு வெளிப்படுத்
துவேனென்று சொன்னமாத்திரத்தில்,—நான் ஆ ௨
விக்குள்ளானேன்: அப்பொழுது வானத்தில் ஒ
ருசிங்காசனம் ஸ்தாபிக்கப்பட்டிருந்தது, அந்தச்
சிங்காசனத்தின்மேல் ஒருவர் வீற்றிருந்தார்.—
வீற்றிருந்தவர் கண்ணுக்கு ரவாக்கல்லும், ப ௩
துமராக ரத்தினமும்போலத்தோன்றினார்: கண்
ணுக்கு மரகதம்போலத் தோன்றும் வானவில்
ஒன்று அந்தச் சிங்காசனத்தை வளைந்திருந்தது.—
அந்தச் சிங்காசனத்தைச்சூழ இருபத்துநாலு ஆ ௪
சனங்களிருந்தன: இருபத்துநாலு மூதியோர்,
வெள்ளை வஸ்திரங்களைத்தரித்து, தங்கள் சிரசுக
ளின்மேலே பொன்முடி சூடி, அந்தச்சிங்காச
னங்களின்மேல் வீற்றிருந்தார்கள்.—மின்னல்க ௫
ளும், இடிமுழக்கங்களும், மற்றத்தொனிகளும்
அந்தச்சிங்காசனத்தினின்று வெளிப்பட்டன:
சிங்காசனத்துக்குமுன் தேவனுடைய ஏழு
ஆவிகளாகிய அக்கினிமயமான ஏழு விளக்கு
கள் எரிந்துகொண்டிருந்தன.—அன்றியும் சிங் ௬
காசனத்துக்குமுன் பளிங்குக்கண்ணாடிபோன்
ற ஒரு சமுத்திரமிருந்தது: அந்தச்சிங்காசனத்
தின்மத்தியிலும், சிங்காசனத்தின்சுற்றிலும், முற்
புறமும் பிற்புறமுங்கண்களால்நிறைந்த நாலுபி
ராணிகளிருந்தன.—முதலாம்பிராணிசிங்கத்தைப் ௭
போலவும், இரண்டாம்பிராணி பசுவின் கன்
றைப்போலவும், மூன்றாம்பிராணி முகத்தால்ம
னுஷனைப்போலவும், நாலாம்பிராணி பறக்கிற
கழுகைப்போலவுமிருநதன.—அந்த நாலு பிரா ௮
ணிகளுள் ஒவ்வொன்றும், அவ்வாறு சிறகுள்ள
வைகளும், உள்ளேயுஞ் சுற்றிலுங்கண்களால் நி
றைந்தவைகளுமாகி, இருந்தவரும், இருக்கிறவ
ரும், வருபவருமாகியசருவவல்லமையுள்ள தே
வனான கர்த்தர் பரிசுத்தர், பரிசுத்தர், பரி
சுத்தரென்று இரவும்பகலும் ஓய்வில்லாமற்சொல்
லிக்கொண்டிருந்தன.—அந்தப்பிராணிகள் இந் ௯
தப்பிரகாரஞ்சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்கிற
வரும் சதாகாலங்களிலும் உயிரோடிருக்கிறவரு
மானவரைத்துதித்து, கனஞ்செய்து, ஸ்தோத்தி
ரிக்கும்பொழுது,—இருபத்துநாலு மூதியோரும், ௰
சிங்காசனத்தின்மேல்வீற்றிருக்கிறவருடையசந்
நிதியில் தாழ்ந்து பணிந்து, சதாகாலங்களிலும்
உயிரோடிருக்கிறவரை நமஸ்காரம்பண்ணி, தங்
கள் கிரீடங்களைச் சிங்காசனத்துக்கு முன்பாக

(௰௩) அதி.௨.௭. (௰௪) ஏசா.௬௫.௰௬. அதி.௧.௫. கொலோ.௧.௰௫. (௰௫) வச.௧. (௰௭) ஓசி.௰௨.௮. ௧.கொரி.௪.௮. (௰௮) ஏசா.௫௫.௧. மத்.௨௫.௯. ௨.கொரி.௫.௩. அதி.௭.௰௩. (௰௯) யோபு.௫.௰௭. நீதி.௩.௰௧,௰௨. எபி.௰௨.௫.௬. யாக். ௧.௰௨. (௨௰) உன்.௫.௨. லூக்.௰௨.௩௭. யோவா.௰௪.௨௩. (௨௧) மத்.௰௯.௨௮. ௧.கொரி.௬.௨. ௨.தீமோ.௩.௰௨. (௨௨) அதி.௨.௭.—(௪. அதி. ௧.) அதி.௧.௰,௰௯. அதி.௰௧.௰௨. (௨) அதி.௧.௰. ஏசா.௬.௧. எரே.௰௭.௰௨. எசேக்.௧.௨௬. தானி.௭.௯. (௩) எசேக்.௧.௭௮. (௪) அதி.௰௧.௰௬. அதி.௩.௪,௫. வச.௰. (௫) அதி.௮.௫. யாத்.௩௭.௨௩. ௨.நாளா.௪. ௨௰. எசேக்.௧.௰௩. சக.௪.௨. அதி.௧.௪. (௬) யாத்.௩௮.௮. எசேக்.௧.௫. வச.௮. (௭) எண்.௨.௨. எசேக்.௧.௰. (௮) ஏசா.௬.௨. வச.௬. ஏசா.௬.௩. அதி.௧.௪,௮. (௯) அதி.௧.௰௮. (௰) அதி.௫.௮,௰௪. வச.௪,௯.

௰௧ வைத்து,—கர்த்தாவே, நீர் மகிமையையும்,
கனத்தையும், பராக்கிரமத்தையும் பெறுவதற்குப்
பாத்திரராயிருக்கிறீர்: நீரே சகலவஸ்துக்களையுஞ்
சிருஷ்டித்தீர், உம்முடைய சித்தத்தினால் அவை
கள் தோன்றிச் சிருஷ்டியாயினவென்றார்கள்.

## ௫. அதிகாரம்.

எழு முத்திரையுடையபுத்தகத்தைக்காண்டல். அ
தைக் கிறிஸ்துத் திறத்தல். தேவதூதரும், மு
தியோரும், நான்குபிராணிகளும் அவரைத்து
தித்தல்.

அன்றியும், அந்தச்சிங்காசனத்தில் வீற்றிருந்த
வருடைய வலதுகையில் உள்ளும்புறம்பும் எழு
தப்பட்டு, எழு முத்திரைகளாலே முத்திரிக்கப்
௨ பட்டிருந்த ஒரு புத்தகத்தைக்கண்டேன்.-பின்பு
இந்தப் புத்தகத்தைத் திறக்கிறதற்கும், இதின்முத்
திரைகளை உடைக்கிறதற்கும் பாத்திரமானவன்
யாவனென்று மிகவுஞ் சத்தமிட்டுக்கூறுகிற பல
௩ முள்ள ஒரு தூதனைக்கண்டேன்.—வானத்திலாவ
து,பூமியிலாவது,பூமியின் கீழாவதுள்ள எவனும்
அந்தப்புத்தகத்தைத் திறக்கவும், அதைப்பார்க்க
௪ வுங் கூடாமற்போயிற்று.-அந்தப் புத்தகத்தைத்தி
றந்து, அதைப் பார்க்கிறதற்குப்பாத்திரனாக ஒரு
வனையுங்காணாததினால் நான் மிகவும்அழுதேன்.-
௫ அப்பொழுது முதியோரில் ஒருவன் என்னைநோ
க்கி, அழாதே: பார்,தாவீதின் அடிமுளையும்,யூதா
வமிசத்தில் தோன்றிய சிங்கமுமானவர் செயம்
பெற்று, இந்தப்புத்தகத்தைத் திறந்து, இதின் எ
ழுமுத்திரைகளையும்உடைக்கவல்லவரானாரென்
௬ றான்.-அப்பொழுது நான்பார்க்கையில்,சிங்காச
னத்துக்கும், நாலுபிராணிகளுக்கும், முதியோ
ருக்கும் மத்தியில் ஒரு ஆட்டுக்குட்டி எழு கொம்
புகளையும், பூமியெங்கும் அனுப்பப்படும் தேவ
னுடைய எழு ஆவிகளாகிய எழு கண்களையு
முடையதாய், பலியிடப்பட்டவண்ணமாயிருக்
௭ கக்கண்டேன்.—அது சேர்ந்து, சிங்காசனத்தின்
மேல் வீற்றிருந்தவருடைய வலது கரத்திலுள்ள
௮ புத்தகத்தை வாங்கிற்று.—அந்தப் புத்தகத்தை அ
து வாங்கினபொழுது அந்த நாலுபிராணிகளும்,
இருபத்துநாலு முதியோருந் தங்கள் தங்கள் சுர
மண்டலங்களையும், பரிசுத்தவான்களுடைய பி
ரார்த்தனைகளாகிய சுகந்த தூபத்தினால் நிறைந்த
பொற்பாத்திரங்களையும் ஏந்திக்கொண்டு, ஆட்
௯ டுக்குட்டிக்கு முன்பாக விழுந்து,—அடிக்கப்
பட்டு, உமது இரத்தத்தால் கோத்திரத்தார், பா
ஷைக்காரர், இராச்சியத்தார், தேசத்தாராகிய இ
வர்களனைவரிலும் நின்று எங்களைத் தேவனிட
௰ த்திற்கு மீட்டுக்கொண்டு,—எங்கள் தேவனி
டத்தில் எங்களை இராசாக்களும் ஆசாரியருமா
க ஏற்படுத்தினதினால்,இந்தப் புத்தகத்தை வாங்க
வும், இதின் முத்திரைகளை நீக்கவும் பாத்திரர்
நீரே: நாங்கள் பூமியில் அரசாளுவோமென்று
இந்தப் புதுப்பாட்டைப் பாடினார்கள்.—பின்பு ௰௧
நான் பார்க்கையில், அந்தச்சிங்காசனத்தையும்,
பிராணிகளையும், முதியோரையுஞ் சூழ்ந்திருந்த
அநேகந் தேவதூதருடைய சத்தத்தைக் கேட்
டேன்: அவர்களுடைய தொகை பதினாயிரத்திற்
குப் பதினாயிரமும், ஆயிரத்திற்கு ஆயிரங்களு
மாயிருந்தது.—அவர்கள், அடிக்கப்பட்ட ஆட் ௰௨
டுக்குட்டியானவர் பராக்கிரமத்தையும், செல்வத்
தையும், ஞானத்தையும், வல்லமையையும், கனத்
தையும், மகிமையையும், ஸ்தோத்திரத்தையும்
பெற்றுக்கொள்கிறதற்குப் பாத்திரரென்றுமிகுந்
த சத்தத்தோடே சொன்னார்கள்.—அன்றியும் வா ௰௩
னத்திலும், பூமியிலும், பூமியின்கீழும், சமுத்தி
ரத்திலுமுள்ள சமஸ்த பிராணிகளும், சிங்காச
னத்தின்மேல் வீற்றிருக்கிறவருக்கும், ஆட்டுக்கு
ட்டியானவருக்கும் ஸ்தோத்திரமும், கனமும்,
மகிமையும், பராக்கிரமமுஞ் சதாகாலங்களிலு
முண்டாயிருக்கக்கடவனவென்று சொல்லுகிற
தைக் கேட்டேன்.—அதற்கு நாலுபிராணிகளும் ௰௪
ஆமென் என்றுசொல்லின. அந்தஇருபத்துநாலு
முதியோர்களுந் தாழ்ந்து வணங்கி, சதாகாலங்
களிலுஞ் சீவிக்கிறவரை நமஸ்கரித்தார்கள்.

## ௬. அதிகாரம்.

௧. கிறிஸ்துவினால் முதலாம் முத்திரை திறக்
கப்படல்: ௩. இரண்டாம் முத்திரை திறக்கப்ப
டல்: ௫. மூன்றும் முத்திரைதிறக்கப்படல்: ௭.
நாலாம் முத்திரை திறக்கப்படல்: ௯. ஐந்தாம்
முத்திரை திறக்கப்படல்: ௰௨. ஆறும்முத்திரை
திறக்கப்படல்.

பின்பு ஆட்டுக்குட்டியானவர் முத்திரைகளில் ௧
ஒன்றைப்பேர்க்கக்கண்டேன், நாலு பிராணிக
ளில் ஒன்று நீ வந்துபாரென்று இடிமுழக்கம்
போலச் சொல்லுகிறதைக் கேட்டேன்.—நான் ௨
பார்க்கையில் வெள்ளைக்குதிரையைக் கண்டே
ன்: அதின்மேலிருந்தவன் வில்லைப் பிடித்திருந்
தான்; அவனுக்கு ஒரு கிரீடங்கொடுக்கப்பட்ட
து: அவன் செயமுள்ளவனாய் மேலும் மேலுஞ்
செயிக்கும்படி புறப்பட்டான்.

பின்பு அவர்இரண்டாம்முத்திரையைப்பேர்த் ௩
தபொழுது, இரண்டாம் பிராணி, வந்துபாரென்
று சொல்லக்கேட்டேன்.—அப்பொழுது சிவப் ௪
பான வேறொருகுதிரை புறப்பட்டது: அதின்
மேலிருந்தவனுக்குப் பூமியிலுள்ளவர்கள் ஒருவ

(௰௧) அதி.௫.௰௨. ஆதி.௧.௧. அப்.௰௭.௨௪. எபே.௩.௯. கொலோ.௧.௰௬.—(௫. அதி. ௧.) எசேக்.௨.௯,௰. ஏசா.௨௯.௰௧. தானி.௰௨.௪. (௩) வச.௰௩. (௫) ஆதி.௪௯.௯,௰. எபி.௭.௰௪. ஏசா.௰௧.௧,௰. ரோ.௰௫.௰௨. வச.௧.(௬)ஏசா.௫௩.௭. யோவா.௧.௨௯,௩௬. ௧.பேதுரு.௧.௰௯. சக.௩.௯. அதி.௪.௫. (௭) அதி.௪.௨. (௮) அதி.௪.௮,௰. அதி.௰௪.௨ அதி.௰௫.௨. சங்.௱௪௧.௨. அதி.௮.௩,௪. (௯) வச.௬. அப்.௨௰.௨௮. ரோ.௩.௨௪. ௧.கொரி.௬.௨௰. எபே.௧.௮. கொலோ.௧.௰௪. எபி.௯.௰௨. ௧.பேதுரு.௧.௰௮,௰௯. ௨.பேதுரு.௨.௧. ௧.யோவா.௧.௭. அதி.௭.௯. யாத்.௰௯.௬. ௧.பேதுரு.௨.௫,௯. (௰) சங்.௪௰.௩. அதி.௰௪.௩. அதி.௪.௰௧. (௰௧) அதி.௪.௪,௬. சங்.௬௮.௰௭. தானி.௭.௰. எபி.௰௨.௨௨. (௰௨) அதி.௪.௰௧. (௰௩) பிலி.௨.௯. ௧.நாளா.௨௯.௰௧. ரோ.௯.௫. ௧.தீமோ.௬.௰௬. ௧.பேதுரு.௪.௰௧. அதி.௯.௰௬. (௰௪) அதி.௰௯.௪. அதி.௪.௯,௰.—(௬. அதி. ௧.) அதி.௫.௫,௬,௭. அதி.௪.௭.(௨)சக.௬.௩. சங்.௪௫.௪,௫. சக.௬.௰௧. (௩) அதி.௪.௭. (௪) சக.௬.௨.

ரை ஒருவர்கொலைசெய்யும்படி சமாதானத்தைப்
பூமியினின்று அகற்றிவிடுகிறதற்கு அதிகாரங்
கொடுக்கப்பட்டது: ஒருபெரிய கட்கமும் அவ
னுக்குக் கொடுக்கப்பட்டது.
௫ அப்பால் அவர்மூன்றாம்முத்திரையைப்பேர்த்
தபொழுது, மூன்றாம் பிராணி, நீ வந்துபாரென்
று சொல்லக்கேட்டேன். பின்பு நான் பார்க்கை
யில், பாருங்கள், ஒரு கறுப்புக்குதிரையைக்கண்
டேன்; அதின்மேலிருந்தவன் ஒரு தராசைத்தன்
௬ கையிலே பிடித்திருந்தான்.—அப்பொழுது ஒரு
தேனாரியப்பணத்திற்கு ஒருசேர் கோதுமையும்,
ஒரு தேனாரியப்பணத்துக்கு மூன்றுசேர் வாற்
கோதுமையுமென்றும்,எண்ணெயையுந்திராட்ச
ரசத்தையுஞ் சேதப்படுத்தப்படாதென்றும், நாலு
பிராணிகளின் மத்தியிலிருந்துண்டான சத்தத்
தைக்கேட்டேன்.
௭ பின்பு அவர் நாலாம் முத்திரையைப்பேர்த்
தபொழுது, நாலாம் பிராணி, வந்து பாரென்று
௮ சொல்லக்கேட்டேன்.—நான் பார்க்கையில், மங்
கின நிறமுள்ள ஒரு குதிரையைக்கண்டேன்: அ
தின்மேலிருந்தவனுக்குப் பெயர் மரணம், மரித்
தோர்ஸ்தானம் அவன் பின்சென்றது. கட்கத்தி
னாலும், பஞ்சத்தினாலும், பெருவாரிக்காய்ச்சலி
னாலும், காட்டுமிருகங்களினாலும் பூமியின் காற்
பங்கிலுள்ளவர்களைக் கொலைசெய்யும்படி அதி
காரம் அவனுக்குக்கொடுக்கப்பட்டது.
௯ பின்பு அவர் ஐந்தாம் முத்திரையைப்பேர்த்த
பொழுது, தேவனுடைய வாக்கியத்தினிமித்
தமும்,தாங்களிட்டசாட்சியினிமித்தமுங்கொல்
லப்பட்டவர்களுடையஆத்துமங்களை வேதிகை
௰ யின்கீழேகண்டேன்.-அவர்கள், பரிசுத்தமுஞ்ச
த்தியமுமுள்ள கர்த்தாவே, எதுவரைக்கும் நீர்
நியாயத்தீர்ப்புக்கொடாமலும், பூமியின்மேல்வா
சமாயிருக்கிறவர்களுக்கு எங்கள் இரத்தத்தைக்
குறித்துப் பிரதி பலனளியாமலுமிருப்பீரென்று
௰௧ மிகவும் ஒலமிட்டுச் சொன்னார்கள்.—அவரவர்க
ளுக்கு வெள்ளைவஸ்திரங்கள் கொடுக்கப்பட்ட
ன; அதுவுமன்றி, அவர்கள் தங்களைப்போலக்
கொலையுண்கிறவர்களாகிய தங்கள் உடன்பணி
விடைக்காரரும், தங்களுடைய சகோதரருமா
னவர்களின் தொகை சம்பூரணமாகுமளவும்பின்
னுஞ் சொற்பகாலம் இளைப்பாறவேண்டுமென்
றும், அவர்களுக்குச் சொல்லப்பட்டது.
௰௨ அப்புறம் அவர் ஆறாம் முத்திரையைப்பேர்க்
கக்கண்டேன், அப்பொழுது பூமி மிகவும் அ
திர்ந்தது; சூரியன் உரோமரட்டுப் புடவையைப்
போலக் கருமைகொண்டது, சந்திரன் இரத்தம
௰௩ யமாயிற்று.—பெருங்காற்றினால் அசைக்கப்பட்
ட அத்திமரம் பருவமில்லாத தன் கனிகளை உ
திர்க்கும்வண்ணமாக, வானத்து நட்சத்திரங்கள்
பூமியிலே விழுந்தன.-வானமும் சுருட்டப்பட் ௰௪
ட புத்தகம்போலாகி விலகிப்போயிற்று; மலை
கள் தீவுகள் யாவுந் தங்கள் தங்கள் நிலைகள்பேர்ந்
து அகன்றுபோயின.—பூமியிலுள்ள இராசாக்க ௰௫
ளும், பிரதானிகளும், செல்வரும், சேனாபதிக
ளும்,பலவான்களும்,அடிமைகள்,சுயாதீனரானை
வரும் பருவதங்களின் குகைகளிலும், கல்மலை
களிலும் ஒளித்துக்கொண்டு,—பருவதங்களையும், ௰௬
கல்மலைகளையும் நோக்கி, எங்கள்மேல்விழுந்து,
சிங்காசனத்தின்மேல்வீற்றிருக்கிறவருடையமு
கத்துக்கும், ஆட்டுக்குட்டியின் குரோதத்துக்கும்
எங்களை மறைத்துக்கொள்ளுங்கள்.—அவருடை ௰௭
ய குரோதத்தின் மகாதினம் வந்துவிட்டது; அ
தில் நிலைநிற்கவல்லவன் யாவனென்றார்கள்.

## ௭. அதிகாரம்.

௧. தேவசனங்கள் முத்திரை தரிக்கப்படல். யூதே
யரின்தொகை. அந்நியதேசத்தார் அநேகரெனக்
காட்டல்: ௰௩. கிறிஸ்துவின் இரத்தத்தினால் அ
வர்கள் இரட்சிப்பையும் வாழ்வையுமடைதல்.

இவற்றின் பின்பு, பூமியின் நான்குதிசைகளி ௧
லும் நாலு தூதர் நின்று, எந்தக்காற்றும் பூமியின்
மேலாவது, சமுத்திரத்தின்மேலாவது, எந்தமரத்
தின்மேலாவது வீசாதபடி பூமியிலுள்ள காற்று
கள் நாலையும்பிடித்திருக்கக்கண்டேன்.-மேலுஞ் ௨
சீவனுள்ள தேவனுடைய முத்திரைக்கோலை
யுடையவேறொருதூதன், சூரியனுதிக்கிறதிசை
யினின்று ஏறிவரக்கண்டேன்: அவன், பூமியை
யுஞ் சமுத்திரத்தையுஞ் சேதப்படுத்துகிறதற்கு
அதிகாரம்பெற்ற அந்த நாலு தூதரையும் நோ
க்கி,—நாம் நம்முடைய தேவனுக்குரிய ஊ ௩
ழியக்காரரின் நெற்றிகளிலே முத்திரையிட்டுத்
தீருமளவும், பூமியையும், சமுத்திரத்தையும்,
மரங்களையுஞ் சேதப்படுத்தாதிருங்களென்றுமிக
வுஞ்சத்தமிட்டுச்சொன்னான்.-மேலும் முத்திரை ௪
யிடப்பட்டவர்களின் தொகையைச் சொல்லக்
கேட்டேன்: இஸ்ரவேல் சந்ததியாராகிய சகல
கோத்திரங்களிலும்முத்திரையிடப்பட்டவர்கள்
இலட்சத்து நாற்பத்தினாலாயிரம் பேர்.—யூதா ௫
கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்
னீராயிரம். ரூபேன்கோத்திரத்தில் முத்திரையி
டப்பட்டவர்கள்பன்னீராயிரம். காத்கோத்திரத்
தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயி
ரம்.—ஆஷேர்கோத்திரத்தில் முத்திரையிடப்பட் ௬
டவர்கள் பன்னீராயிரம். நப்தாலிகோத்திரத்தில்
முத்திரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். ம
னாஷேகோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்
கள் பன்னீராயிரம்.—ஷிமியோன்கோத்திரத்தில் ௭
முத்திரையிடப்பட்டவர்கள்பன்னீராயிரம். லே

(௫) அதி.௪.௭. சக.௬.௨. (௬) அதி.௯.௪.(௭)அதி.௪.௭. (௮) சக.௬.௩. எசேக்.௰௪.௨௧. லேவி.௨௬.௨௨. (௯) அதி.௮.௩. அதி.௨௰.௪. அதி.௧.௯. ௨.தீமோ.௧.௮.(௰)சக.௧.௰௨. அதி.௩.௭. அதி.௰௧.௰௮. (௰௧) அதி.௭.௯,௰௪. எபி.௰௧.௪௰. (௰௨) அதி.௰௬.௰௮. யோவே.௨.௰,௩௧. மத்.௨௪.௨௯. அப்.௨.௨௰. (௰௩) அதி.௮.௰. (௰௪) சங்.௱௨.௨௬. ஏசா.௩௪.௪. எபி.௧.௰௨,௰௩. எரே.௩.௨௩. அதி.௰௬.௨௰. (௰௫) ஏசா.௨.௰௯. (௰௬) ஓசி.௰.௮. லூக்.௨௩.௩௰. (௰௭) ஏசா.௰௩.௯. செப்.௧.௰௪. அதி.௰௬.௰௪. சங்.௭௬.௭.—(௭. அதி. ௧.) தானி.௭.௨. அதி.௯.௪.(௩)அதி.௬.௬. எசேக்.௯.௪. அதி.௨௨.௪. (௪) அதி.௯.௰௬. அதி.௰௪.௧.

விகோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள்
பன்னீராயிரம். ஈஷகார்கோத்திரத்தில்முத்திரை
௮ யிடப்பட்டவர்கள் பன்னீராயிரம்.-செபுலோன்
கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள் பன்
னீராயிரம். யோசேப்பின் கோத்திரத்தில் முத்தி
ரையிடப்பட்டவர்கள் பன்னீராயிரம். பேன்யா
மீன்கோத்திரத்தில் முத்திரையிடப்பட்டவர்கள்
பன்னீராயிரம்.
௯ பாருங்கள், இவற்றின்பின்பு நான் பார்க்கை
யில் சருவதேசத்தாரிலும், கோத்திரத்தாரிலும்,
இராச்சியத்தாரிலும், பாஷைக்காரரிலும் இருந்
துவந்ததும், ஒருவனும் எண்ணமுடியாததுமான
சனங்கள் வெள்ளங்கிகளைத்தரித்து, தங்கள்கை
யிற் குருத்தோலைகளைப்பிடித்தவர்களாய்ச் சிங்
காசனத்திற்கும், ஆட்டுக்குட்டிக்கும் முன்பா
௰ க நிற்கக்கண்டேன்.—அவர்கள், இரட்சிப்பின்
பொருட்டுச் சிங்காசனத்தின்மேல்வீற்றிருக்கிற
எங்கள் தேவனுக்கும், ஆட்டுக்குட்டியானவ
ருக்கும் மகிமையுண்டாவதாகவென்று மிகவுஞ்
௰௧ சத்தமிட்டுச் சொன்னார்கள்.—அல்லாமலுந் தே
வதூதர் யாவரும் சிங்காசனத்தையும், முதியோ
ரையும், நாலுபிராணிகளையுஞ் சூழநின்றார்கள்,
அவர்கள்சிங்காசனத்துக்கு முன்பாக முகங்குப்
௰௨ புறவிழுந்து,—ஆமென்: எங்கள் தேவனுக்குத்
துதியும், மகிமையும், ஞானமும், தோத்திரமும்,
கனமும், பராக்கிரமமும், வல்லமையுஞ் சதாகா
லங்களிலுமுண்டாகக்கடவன. ஆமென் என்று
சொல்லித் தேவனை நமஸ்கரித்தார்கள்.
௰௩ அப்பொழுது முதியோரில் ஒருவர் என்னை
நோக்கி, வெள்ளங்கிகளைத்தரித்திருக்கிற இவர்க
ள் யாவர், எங்கேயிருந்து வந்தார்களென்றுகேட்
௰௪ க,—நான் அவருடனே, என் ஆண்டவனே, அது
உமக்குத்தெரியுமென்றேன். அப்பொழுதுஅவர்
என்னைநோக்கி,இவர்கள்மிகுந்தஉபத்திரவத்தை
நீங்கி, தங்கள் தங்கள் அங்கிகளை ஆட்டுக்குட்டி
யானவருடைய இரத்தத்திலேதோய்த்துவெளுத்
௰௫ துவந்தார்கள்.-ஆதலால் இவர்கள் தேவனுடை
ய சிங்காசனத்திற்குமுன்பாக இருந்து,இரவும்ப
கலும் அவருடைய ஆலயத்தில் அவரைச்சேவித்
துவருகிறார்கள்: சிங்காசனத்தின்மேல் வீற்றிருக்
கிறவர் இவர்களுக்குள்ளே வாசமாயிருப்பார்.—
௰௬ இவர்கள் இனிப்பசி அடையார்கள், இனித்தாக
மடையார்கள்: வெயிலாவது உஷ்டணமாவது
௰௭ இவர்கள்மேலே படுவதில்லை.—சிங்காசனத்தின்
மத்தியிலுள்ள ஆட்டுக்குட்டியானவரே இவர்க
ளைமேய்த்து, சீவநீரூற்றின்கண்களினிடத்திற்கு
இவர்களை நடத்துவார்: இவர்களுடைய கண்
ணீர்யாவையுந்தேவனே துடைப்பாரென்றார்.

## ௮. அதிகாரம்.

௧. ஏழாம் முத்திரையைப்பேர்த்தல்: ௬ முதலாம்
எக்காளந்தொனித்தல்: ௮. இரண்டாம்எக்காளந்
தொனித்தல்: ௰. மூன்றாம் எக்காளந் தொனித்
தல்: ௰௨. நாலாம் எக்காளந்தொனித்தல்.

பின்பு அவர் ஏழாம்முத்திரையைப் பேர்த்தபொ ௧
ழுது, பரமண்டலத்தில் ஏறக்குறைய அரைமணி
நேரமளவும்அமைவுண்டாயிருந்தது.-தேவனுக் ௨
கு முன்பாகநின்ற ஏழுதூதரையுங்கண்டேன்;
அவர்களுக்கு ஏழு எக்காளங்கள்கொடுக்கப்பட்
டன.—வேறொருதூதன் தூபங்காட்டும் பொற் ௩
கலசத்தைப் பிடித்துவந்து, வேதிகையினருகே
நின்றான்; சிங்காசனத்துக்குமுன்பாக இருந்த
பொன் வேதிகையின்மேலே, எல்லாப்பரிசுத்த
வான்களுடைய பிரார்த்தனைகளோடும் இடும்
பொருட்டு, மிகுந்தசுகந்ததூபவருக்கம் அவனுக்
குக்கொடுக்கப்பட்டது.-பரிசுத்தவான்களுடை ௪
ய பிரார்த்தனைகளோடே சுகந்தவருக்கங்களின்
புகை, தூதனுடையகையினின்று தேவனுக்கு
முன்பாக எழும்பிற்று.—பின்பு அந்தத்தூதன்தூ ௫
பகலசத்தை எடுத்து, அதை வேதிகையிலுள்ள
அக்கினியினாலே நிரப்பிப்பூமியிலேவீச, சத்தங்
களும், இடிமுழக்கங்களும், மின்னல்களும், பூ
மி அதிர்தலும் உண்டாயின.
அப்பால் ஏழு எக்காளங்களையுடைய ஏழுதூ ௬
தர்கள் எக்காளத்தைஊதுகிறதற்கு ஆயத்தம்பண்
ணினார்கள்.—முதலாந்தூதன் எக்காளமூதினான், ௭
அப்பொழுது இரத்தங்கலந்தகன்மழையும் அக்
கினியுமுண்டாகித் தரையிலே வீசப்பட்டன:
அதினால் தரையின் மூன்றில் ஒருபங்குதகிக்கப்
பட்டது,மரங்களின் மூன்றில்ஒருபங்கு வெந்து
போயிற்று,பசும்புல்லெல்லாந்தகிக்கப்பட்டது.
இரண்டாந்தூதன் எக்காளமூதினான், அப் ௮
பொழுது அக்கினியால்வேகிற ஒருபெரியமலை
சமுத்திரத்திலே வீசப்பட்டது: அதினால் சமுத்
திரத்தின் மூன்றில் ஒருபங்கு இரத்தமாயிற்று.—
சமுத்திரத்திலிருந்த சீவனுள்ள சிருஷ்டிகளின் ௯
மூன்றில் ஒருபங்குமாண்டுபோயிற்று; கப்பல்க
ளில் மூன்றில் ஒருபங்குசேதமாயிற்று.
மூன்றாந்தூதன் எக்காளமூதினான், அப்பொ ௰
ழுது ஒருபெரிய நட்சத்திரம் தீவர்த்தியைப்போ
லெரிந்து, வானத்திலிருந்துவிழுந்தது, அது ஆறு
களில் மூன்றில் ஒருபங்கின்மேலும், நீரூற்றின்
கண்கள்மேலும் விழுந்தது.—அந்த நட்சத்திரத் ௰௧
தின்பெயர் எட்டி: அதினால் நீர்களில் மூன்றில்
ஒருபங்கு எட்டியைப்போலக் கசப்பாயிற்று;
நீர்கள் கசப்பாயிருந்ததினிமித்தம் அநேக மனு
ஷர்மரித்தார்கள்.

(௯) ரோ.௰௧.௨௫. அதி.௫.௯. அதி.௩.௫,௰௮. வச.௰௪. (௰) சங்.௩.௮. ஏசா.௪௩.௰௧. எரே.௩.௨௩. ஓசி.௰௩.௪. அதி.௫.௰௩. (௰௧) அதி.௪.௬. (௰௨) அதி.௫.௰௩,௰௪. (௰௩) வச.௯. (௰௪) அதி.௬.௯. ஏசா.௧.௰௮. எபி.௯.௰௪. ௧.யோவா.௧.௭. (௰௫) ஏசா.௪.௫,௬.(௰௬)ஏசா.௪௯.௰. சங்.௱௨௧.௬. (௰௭) சங்.௨௩. ௧.யோவா.௰.௰௧,௰௪. ஏசா.௨௫.௮. அதி.௨௧.௪.—(௮. அதி. ௧.) அதி.௬.௧. (௨) மத்.௰௮.௰. ௨.நாளா.௨௯.௨௫—௨௮. (௩) அதி.௫.௮. யாத்.௩௰.௧. (௪) சங்.௱௪௧.௨. லூக்.௧.௰. (௫) அதி.௰௬.௰௮. ௨.சாமு.௨௨.௮. ௧.இரா.௰௯.௰௧. அப்.௪.௩௧. (௭) எசேக்.௩௮.௨௨. அதி.௰௬.௨. ஏசா.௨.௰௩. (௮) எரே.௫௧.௨௫. ஆமோ.௭.௪. அதி.௰௬.௩. எசேக்.௰௪.௰௯. (௯) அதி.௰௬.௩. (௰) ஏசா.௰௪.௰௨. அதி.௰௬.௪. (௰௧) ரூத்.௧.௨௰. யாத்.௰௫.௨௩. எரே.௯.௰௫.

௰௨ நாலாந்தூதன் எக்காளமூதினான், அப்பொழு
து சூரியனில் மூன்றில் ஒருபங்கும், சந்திரனில்
மூன்றில் ஒருபங்கும், நட்சத்திரங்களில் மூன்
றில் ஒருபங்குஞ்சேதமாக்கப்பட்டன;அதினால்
அவைகளின் மூன்றில் ஒருபங்கு இருண்டது,
பகலிலும் மூன்றில் ஒருபங்கு பிரகாசமில்லாம
லிருந்தது, இரவிலும் அப்படியேயாயிற்று.
௰௩ பின்பு ஒருதூதன் வானத்தின்மத்தியிலே பறந்
துவரக்கண்டேன், அவன் மிகுந்த சத்தமிட்டு,
ஐயோ, ஐயோ, ஐயோ, இனி எக்காளமூதவேண்
டியமற்றமூன்றுதூதருடைய எக்காளசத்தங்களி
னால், பூமியில் வாசமாயிருக்கிறவர்களுக்கு ஆ
பத்துவருமென்று சொல்லக்கேட்டேன்.

## ௯. அதிகாரம்.

௧. ஐந்தாம் எக்காளந்தொனித்தல். நட்சத்திரம் வி
ழுதல்: பாதாளந் திறக்கப்படல்: குரூரவெட்
டுக்கிளிகள் புறப்படல்: ௰௪. ஆறும் எக்காளந்
தொனித்தல்: நாலு தூதர் விடுதலைபெறல்.

ஐந்தாந் தூதன் எக்காளமூதினான்,அப்பொழுது
வானத்திலிருந்து பூமியின்மேல் ஒரு நட்சத்திரம்
விழக் கண்டேன்: அதற்குப் பாதாளத்தின் திற
௨ வுகோல் கொடுக்கப்பட்டது.—அது பாதாளமா
ன குழியைத்திறக்க, பெருஞ்சூளையின் புகை
யைப்போல அந்தக் குழியினின்று புகை எழும்
பிற்று; அந்தக்குழியின் புகையினாற் சூரியனும்,
௩ ஆகாயமும் அந்தகாரப்பட்டன.—அந்தப்புகையி
னின்று வெட்டுக்கிளிகள் புறப்பட்டு, பூமியின்
மேல் வந்தன: அவைகளுக்குப் பூமியின் தேள்
களுக்குண்டாயிருக்கிற வலிமைக்கொப்பான வ
௪ லிமைகொடுக்கப்பட்டது.—அவைகள் பூமியின்
புல்லையும், எந்தப் பசும்பூண்டையும், எந்த மரத்
தையுமல்ல, தேவனுடைய முத்திரையைநெற்
றிகளில்தரியாதமனுஷரைமாத்திரமேவருத்தப்ப
டுத்துகிறதற்கு அவைகளுக்குக் கட்டளைகொடுக்
௫ கப்பட்டது.—அவர்களைக் கொல்லுகிறதற்கல்ல,
ஐந்து மாதமளவும் அவர்களை வருத்தப்படுத்துகிற
தற்கு அதிகாரம் அவைகளுக்குக்கொடுக்கப்பட்
டது: அவைகள் செய்யும் வேதனை, தேளானது
மனுஷரைக் கொட்டும்பொழுதுண்டாகும் வேத
௬ னையைப்போலிருக்கும்.—அந்நாட்களில் மனு
ஷர் மரணத்தைத்தேடியும், அதைக்காணாமலிருப்
பார்கள்;மரிப்பதற்கு வாஞ்சையாயிருப்பார்கள்,
௭ மரணம் அவர்களைவிட்டோடும்.—அந்தவெட்டுக்
கிளிகளின் உருவம், யுத்தத்துக்குச் சன்னத்தமாக்
கப்பட்ட குதிரைகளுக்கொப்பாயிருந்தது; அ
வைகளின் தலைகள் பொன்முடி சூடினாற்போலி
ருந்தன, அவைகளின் முகங்கள் மனுஷருடை
௮ ய முகங்களைப்போலிருந்தன.—அவைகளின் ம
யிர் ஸ்திரிகளின் மயிர்போலிருந்தது, அவைக
ளின் பற்கள் சிங்கங்களின் பற்கள்போன்றி
ருந்தன.—அவைகள், இருப்புக்கவசங்கள்போன் ௯
ற கவசங்களை மார்பிற் பூண்டிருந்தன; அவைக
ளுடைய சிறகுகளின் இரைச்சல் யுத்தத்துக்குச்
செல்லுகிற அநேகங்குதிரைகள் பூண்ட இரதங்
களின்இரைச்சலைப்போன்றிருந்தது.—அவைகள் ௰
தேள்களின் வால்களுக்கொப்பான வால்களை
யும், அந்த வால்களிற் கொடுக்குகளையுமுடைய
வைகளாயிருந்தன: அவைகள் ஐந்துமாதமளவும்,
மனுஷரை வருத்தப்படுத்துகிறதற்கு அதிகாரங்க
ளையுடையவைகளாயிருந்தன.—பாதாளத்தின் தூ ௰௧
தன் அவைகளுக்கு இராசா; அவனுக்கு எபிரே
யபாஷையில் அப்தோனென்றும், கிரேக்கு பா
ஷையில் அப்பொல்லியோனென்றும்பெயர்.—
முதலாம் ஆபத்து நீங்கிற்று; பார், இன்னும் இ ௰௨
ரண்டு ஆபத்துகள் வருகின்றன.

ஆறுந்தூதன் எக்காளமூதினான், அப்பொழுது ௰௩
தேவனுக்கு முன்பாக இருந்த பொன்வேதி
கையின் நாலுகொம்புகளிலும் நின்று ஒரு சத்
தந்தோன்றி, எக்காளம் பிடித்திருந்த ஆறுந்தூத
னிடத்தில்,—நீ பிருத்தென்னும் பெரிய ஆற்றிற் ௰௪
கட்டப்பட்டிருக்கிற நாலுதூதரையும் அவிழ்த்
துவிடென்று சொல்லக்கேட்டேன்.—மனுஷ ௰௫
ரில் மூன்றில் ஒருபங்கைக்கொலைசெய்யும்பொ
ருட்டு, ஒரு மணிநேரத்துக்கும், ஒரு நாளுக்கும்,
ஒரு மாதத்துக்கும், ஒரு வருஷத்துக்கும் ஆயத்த
மாக்கப்பட்டிருந்த நாலு தூதர்களும் அவிழ்த்து
விடப்பட்டார்கள்.—குதிரைச் சேனைகளான இ ௰௬
ராணுவங்களின்தொகை இருபதுகோடி: அவை
களின் தொகையைச் சொல்லக்கேட்டேன்.—
அந்தக் குதிரைகளையும், அவைகளின்மேலேறி ௰௭
னவர்களையுந் தரிசனையில் இவ்விதமாகக் கண்
டேன், அவர்கள் மார்பின் கவசங்கள் அக்கினி
யும், பதுமராகமும், கந்தகமுமாயிருந்தன: கு
திரைகளின் தலைகள் சிங்கங்களின் தலைகள்
போலிருந்தன; அவைகளின் வாய்களினின்று
அக்கினியும், புகையும், கந்தகமும் புறப்பட்ட
ன.—அவைகளின் வாய்களினின்று புறப்பட்ட ௰௮
அக்கினி, புகை, கந்தகமென்னும் இம்மூன்றி
னாலும் மூன்றில் ஒருபங்கு மனுஷர்கொலைசெய்
யப்பட்டார்கள்.—அந்தக்குதிரைகளின்வல்லமை ௰௯
அவைகளின் வாயிலும் வால்களிலுமிருக்கின்ற
து: அவைகளின் வால்கள் பாம்புகள்போன்றத
லைகளுள்ளவைகளாயிருக்கின்றன,அவைகளால்
அவைகள் சேதஞ்செய்கின்றன.—அந்த வாதைக ௨௰
ளாற் கொலையுண்ணாத மற்ற மனுஷர் தங்கள்
கைகளின்கிரியைகளைவிட்டு மனந்திரும்பாமல்,

(௰௨) ஏசா.௰௩.௰. ஆமோ.௮.௯. (௰௩) அதி.௰௪.௬. அதி.௯.௰௨.—(௯. அதி.௧.) லூக்.௰.௰௮. லூக்.௮.௩௧. அதி.௰௭.௮. வச.௨,௰௧. (௨) யோவே.௨.௨,௰. (௩) யாத்.௰.௪. நியா.௭.௰௨. வச.௰. (௪) அதி.௬.௬. அதி.௮.௭. அதி.௭.௩. யாத்.௰௨.௨௩. எசேக்.௯.௪. (௫) அதி.௰௧.௭. (௬) யோபு.௩.௰௧. ஏசா.௨.௰௯. எரே.௮.௩. (௭) யோவே.௨.௪. நாகூ.௩.௰௭. தானி.௭.௮. (௮) யோவே.௧.௬. (௯) யோவே.௨.௫,௬,௭. (௰) வச.௫. (௰௧) எபே.௨.௧. வச.௧. (௰௨) அதி.௮.௰௩. (௰௪) அதி.௰௬.௰௨. (௰௬) சங்.௬௮.௰௭. தானி.௭.௰. எசேக்.௩௮.௪. அதி.௭.௪. (௰௭) ௧.நாளா.௰௨.௮. ஏசா.௫.௨௮,௨௯. (௰௯) ஏசா.௯.௰௫. (௨௰) உபா.௩௧.௨௯. லேவி.௰௭.௭. உபா.௩௨.௰௭. சங்.௱௬.௩௭. ௧.கொரி.௰.௨௰. சங்.௱௰௫.௪. தானி.௫.௨௩.

பேய்களையும், பொன், வெள்ளி, பித்தளை, கல்,
மரமென்பவைகளாற் செய்யப்பட்டவைகளும்,
காணவும், கேட்கவும், நடக்கவுமாட்டாதவைக
ளுமாயிருக்கிற விக்கிரகங்களையும் பூசித்துவந்
௨௧ தார்கள்.—அல்லாமலும் அவர்கள் தங்கள் கொலை
பாதகங்களையும், தங்கள் சூனியங்களையும், தங்
கள் வேசைமார்க்கங்களையும், தங்கள் களவுகளை
யும் விட்டு மனந்திரும்பவில்லை.

## ௰. அதிகாரம்.

கையிற் புத்தகம்பிடித்த பராக்கிரமதூதனைத் தரிசித்தல்: தேவன்பேரில் ஆணையிடல்: யோவானுக்குப் புத்தகத்தைப் புசிக்கக்கொடுத்தல்.

பின்பு பலமுள்ள வேறொருதூதனை வானத்தி
னின்று இறங்கக் கண்டேன், அவன் மேகத்தி
னாற் சூழப்பட்டு, தன்சிரசில் வானவில்லைச்சூ
டினவனாயிருந்தான்; அவன்முகம் சூரியனைப்
போலவும்,அவன்பாதங்கள் அக்கினிஸ்தம்பங்க
௨ ளைப்போலவுமிருந்தன.-விரிந்த ஒரு சிறுபுத்தகத்
தை அவன் தன்கையிற் பிடித்துக்கொண்டு, தன்
வலதுகாலைக் கடலின்மேலும், இடதுகாலைத்த
௩ ரையின்மேலும் வைத்து,—சிங்கத்தின் கெர்ச்சிப்
பைப்போல முழங்கினான்: அவன் சத்தமிட்ட
௪ பொழுது ஏழு இடிகள் முழங்கின.—அவ்வே
ழு இடிகளும் முழங்கினபொழுது நான் அதின்
விபரத்தை எழுத நினைத்தேன்: அந்நேரம் வானத்
திலிருந்து ஒருசத்தம் என்னுடனே, ஏழு இடிமு
ழக்கங்களின் சத்தத்தினாலுண்டான விபரத்தை
எழுதாமல் மறைத்துவையென்று சொல்லக்கே
௫ ட்டேன்.—கடலின்மேலும், தரையின்மேலும்
நான்காண நின்ற தூதன், தன்கையை வானத்துக்
குநேராக எடுத்து, இனிக்காலதாமதம் இராது:—
௬ அவர் தம்முடைய பணிவிடைக்காரராகிய தீர்க்
கதரிசிகளுக்குச் சுவிசேஷமாய் அறிவித்த பிர
காரமாக, ஏழாந்தூதனுடைய எக்காளந்தொனிக்
கும் நாட்களில் தேவ இரகசியம் நிறைவேறு
௭ மென்று,—வானத்தையும், அதிலுள்ளவைகளை
யும், பூமியையும், அதிலுள்ளவைகளையும், சமுத்
திரத்தையும், அதிலுள்ளவைகளையுஞ் சிருஷ்டித்
தவரும் நித்திய சீவியுமாயிருக்கிறவரைக்கொண்
௮ டு ஆணையிட்டான்.-நான்கேட்கும்படி, வானத்
தினின்று என்செவிக்கேறின அந்தச்சத்தம், தி
ரும்பவும் என்னுடனே பேசி, கடலின்மேலும்,
தரையின்மேலும் நிற்கிற தூதனுடைய கையிலி
ருக்கிற விரிந்த சிறுபுத்தகத்தை நீ போய்வாங்
௯ கிக்கொள்ளென்றுசொல்ல,—நான் தூதனிடத்
திற்குப்போய், அவனுடனே, இந்தச்சிறிய புத்த
கத்தை எனக்குத்தரவேண்டுமென்றேன். அப்
பொழுது அவன் என்னைநோக்கி, நீ இதை எடுத்
து உட்கொள்; இது உன்வயிற்றைக்கசப்பாக்
கும், ஆனாலும் உன்வாய்க்குத் தேன்போல மது
ரமாயிருக்குமென்றான்.-அப்பொழுது நான் அந் ௰
தச் சிறுபுத்தகத்தைத் தூதனுடைய கையினின்
று வாங்கி உட்கொண்டேன்; அது என்வாய்க்
குத் தேன்போல் மதுரமாயிருந்தது: நான் அதை
உட்கொண்டவுடனே என் வயிறு கசப்பாயிற்
று.—அவன் என்னுடனே, நீ திரும்பவும் பல ௰௧
இராச்சியத்தாரையும், தேசத்தாரையும், பாஷை
க்காரரையும், இராசாக்களையுங் குறித்துத்தீர்க்க
தரிசனஞ் சொல்லவேண்டுமென்றான்.

## ௰௧. அதிகாரம்.

௧. தேவாலயத்தை அளத்தல்: இரண்டுசாட்சிகள் தோன்றல்: அவர்கள் கொல்லப்படல்: மூன்றரை நாளுக்குப்பின்பு உயிர்த்தெழுந்து பரமண்டலத்துக்கேறல்: ௰௫. ஏழாம் எக்காளந் தொனித்தல்: ௰௯. பரமண்டலத்திலுள்ள ஆலயந்திறக்கப்படல்.

பின்பு அளவுகோலுக்கொப்பான சுரைக் கம்பு ௧
ஒன்று என்னிடத்திற் கொடுக்கப்பட்டது: அப்
பொழுது அந்தத் தூதன் நின்று என்னுடனே,
நீ எழுந்து, தேவனுடைய ஆலயத்தையும், அ
தில் ஆராதனைசெய்பவர்களையும், வேதிகையை
யும் அளவிட்டுக்கொள்.-ஆலயத்துக்குப்புறம்பே ௨
யிருக்கிறபிராகாரம் அந்நியதேசத்தாருக்குக்கொ
டுக்கப்பட்டபடியால்,அதை அளவாமல்விடு; அ
வர்கள் பரிசுத்த நகரத்தை நாற்பத்திரண்டுமாதம
ளவும்மிதிப்பார்கள்.-என்னுடைய இரண்டுசாட் ௩
சிகளும் இரட்டுச்சேலை தரித்தவர்களாய், ஆயிரத்
திருநூற்றறுபதுநாளளவுந் தீர்க்கதரிசனஞ்சொல்
லஅவர்களுக்கு அதிகாரத்தைக்கொடுப்பேன்.-பூ ௪
மியின் கர்த்தருக்குமுன்பாகநிற்கிறஇரண்டுசீ
தவிருட்சங்களும்,இரண்டுவிளக்குகளுமாயிருப்
பவர்கள் அவர்களே.-ஒருவன் அவர்களைச்சேதப் ௫
படுத்தத்துணிந்தால் அவர்களுடைய வாயினின்
று அக்கினிபுறப்பட்டு, அவர்களுடைய சத்து
ருக்களைப்பட்சிக்கும்: அவர்களைச் சேதப்படுத்
தத் துணிகிறவனெவனோ, அவன் இவ்வண்ண
மே நாசமாக்கப்படுவான்.—அவர்கள் தீர்க்கதரி ௬
சனஞ்சொல்லிவருகிற நாட்களிலே மழைபெய்
யாதபடி வானத்தைஅடைக்கிறதற்கு அதிகாரமு
ள்ளவர்களாயிருக்கிறார்கள்: அவர்கள் நீர்களை இ
ரத்தமாக்குகிறதற்கும், எக்காலத்திலேயுந் தங்கள்
இஷ்டப்படி பூமியைச் சகலவாதைகளினாலும்
வதைக்கிறதற்கும் அதிகாரமுள்ளவர்களாயிருக்
கிறார்கள்.—அவர்கள் தங்கள் சாட்சியை நிறை ௭
வேற்றும்பொழுது, பாதாளத்திலிருந்து ஏறுகிற
மிருகம் அவர்களோடு யுத்தம்பண்ணி, அவர்க

(௨௧) அதி.௨௨.௰௫.—(௰. அதி. ௧.) எசேக்.௧.௨௮. மத்.௰௭.௨. அதி.௧.௰௫,௰௬. (௨) மத்.௨௮.௰௮. (௩) அதி.௮.௫. (௪) தானி.௮.௨௬. (௫) யாத்.௬.௮. தானி.௰௨.௭. அதி.௰௬.௰௭. (௬) அதி.௰௧.௰௫. (௭) நெகி.௯.௬. (௮) வச.௪. (௯) எரே.௰௫.௰௬. எசேக்.௨.௮. எசேக்.௩.௧,௨,௩. (௰) எசேக்.௩.௩. எசேக்.௨.௰.—(௰௧. அதி. ௧.) எசேக்.௪௰.௩. சக.௨.௧. எண்.௨௩.௰௮. (௨) எசேக்.௪௰.௰௭,௨௰. சங்.௭௯.௧. லூக்.௨௧.௨௪. தானி.௮.௰. அதி.௰௩.௫. (௩) அதி.௨௰.௪. அதி.௰௩.௰. அதி.௰௨.௬. (௪) சங்.௫௨.௮. எரே.௰௧.௰௬. சக.௪.௩,௰௧,௰௪. (௫) ௨.இரா.௧.௰,௰௨. எரே.௧.௰. எசேக்.௪௩.௩. ஓசி.௬.௫. எண்.௰௬.௨௮. (௬) ௧.இரா.௰௭.௧. யாக்.௫.௰௬,௰௭. யாத்.௭.௰௯. (௭) லூக்.௰௩.௩௨. அதி.௩.௧,௰௧. அதி.௯.௨. தானி.௭.௨௨. சக.௰௪.௨.

ளைமேற்கொண்டு, அவர்களைக்கொலைசெய்யும்.-
௮ சோதோமென்றும், எகிப்தென்றும் ஞானார்த்த
மாய்ச் சொல்லப்படுவதும், தன்னிடத்தில் அவர்
களுடைய கர்த்தர் சிலுவையில் அறையுண்ட
துமாகிய மகாநகரத்தின்வீதியில் அவர்களுடைய
௯ உடல்கள் கிடக்கும்.-இராச்சியத்தாரும், கோத்
திரத்தாரும், பாஷைக்காரரும், தேசத்தாருமாகி
ய சனங்கள் அவர்களுடைய உடல்களை மூன்
றரைநாள்வரைக்கும்பார்த்துக்கொண்டிருப்பார்
கள், அன்றியும் அவைகளைப் பிரேதவறைகளி
ல்வைக்கிறதற்கு இடங்கொடுக்கவும் மாட்டார்
௰ கள்.—அவ்விரண்டு தீர்க்கதரிசிகளும் பூமியின்
குடிகளை வேதனைப்படுத்தினபடியினால் அவர்
கள் மரித்ததினிமித்தம், பூமியின்குடிகள்சந்
தோஷப்பட்டு, களிகூர்ந்து, ஒருவருக்கொருவர்
௰௧ வெகுமதிகளை அனுப்புவார்கள்.—மூன்றரைநா
ளுக்குப்பின்பு தேவனிடத்திலிருந்து சீவ
ஆவி அவர்களிடத்திற்பிரவேசிக்க, அவர்கள் எ
ழுந்து, தங்கள்கால்களை ஊன்றிநின்றார்கள்; அப்
பொழுது அவர்களைப் பார்த்தவர்களுக்கு மிகுந்
௰௨ தபயமுண்டாயிற்று.-பின்பு இங்கே ஏறிவாருங்
களென்று வானத்திலிருந்து தங்களுடன் சொன்
ன மகா சத்தத்தை அவர்கள் கேட்டு, ஒருமேகத்
தின்மேலேறி வானத்திற்குச்சென்றார்கள்; அவர்
களுடையசத்துருக்கள்அவர்களைநோக்கிப்பார்த்
௰௩ தார்கள்.-அந்நேரம் பூமிமிகவும் அதிர்ந்தது, அந்த
நகரத்திற் பத்தில் ஒருபங்கு இடிந்துவிழுந்தது:
மனுஷர் ஏழாயிரம்பேர் பூமி அதிர்தலால் அழிந்
தார்கள்: மீந்தவர்கள் பயமடைந்து, பரமண்ட
லத்தின் தேவனுக்குத் துதிசெலுத்தினார்கள்.-
௰௪ இரண்டாம் ஆபத்துப்போயிற்று; பார், மூன்றாம்
ஆபத்துச் சீக்கிரம்வரும்.
௰௫ பின்பு ஏழாந்தூதன் எக்காளமூதினான்; அப்
பொழுது உலகத்தின் இராச்சியங்கள் நம்முடை
ய கர்த்தரையும், அவருடைய கிறிஸ்துவை
யுஞ்சேர்ந்தன; அவர் சதாகாலங்களிலும் இராச்
சியபரிபாலனம் பண்ணுவாரென்று மிகுந்தசத்
௰௬ தங்கள் பரமண்டலத்தில் உண்டாயின.—அப்
பொழுது தேவனுக்கு முன்பாகத் தங்கள் ஆச
னங்கள்மேல் வீற்றிருந்த அந்த இருபத்துநாலுமு
௰௭ தியோர்களும் சாஷ்டாங்கமாய் விழுந்து,—இ
ருக்கிறவரும், இருந்தவரும், வருபவருமாகிய சரு
வவல்லமையுள்ள கர்த்தராகிய தேவனே,
நீர் உமது மகா பராக்கிரமத்தைக்காட்டி, இராச
௰௮ ரிகம்பண்ணுகிறீர்.—தேசத்தார் குரோதங்கொண்
டார்கள், உம்முடைய குரோதந்தோன்றிற்று, ம
ரித்தோர் நியாயத்தீர்ப்புப் பெறுவதற்கும், தீர்க்க
தரிசிகளாகிய உம்முடைய பணிவிடைக்கார
ருக்கும், பரிசுத்தவான்களுக்கும், உமது நாமத்தி
ன்மேற்பயபத்தியாயிருந்த சிறியோர்பெரியோர்
யாவருக்கும் பிரதிபலனளிக்கிறதற்கும், பூமியை
க்கெடுத்தவர்களைக் கெடுக்கிறதற்குங் காலம்வந்
தது; ஆதலால் உம்மை ஸ்தோத்திரஞ்செய்கிறோ
மென்று சொல்லித் தேவனை நமஸ்கரித்தார்கள்.
பின்பு பரமண்டலத்திலே தேவனுடைய ௰௯
ஆலயந் திறக்கப்பட்டது, அவருடைய ஆலயத்
தில் அவருடைய உடன்படிக்கைப்பெட்டி கா
ணப்பட்டது: அப்பொழுது மின்னல்களும், சத்
தங்களும், இடிமுழக்கங்களும், பூமிஅதிர்தலும்,
பெருங் கன்மழையும் உண்டாயின.

## ௰௨. அதிகாரம்.

௧. ஒருஆச்சரியமானஸ்திரியைத்தரிசித்தல்: அவள் பிரசவித்துச்சருப்பத்துக்கு விலகிப்புத்திரனோடே வனத்துக்குத் தப்பி ஓடல்: ௭. மிகாவேலுஞ்சருப்பமும்பண்ணினயுத்தத்தில் சருப்பந் தோல்வியடைதல்: ௰௩. சருப்பம் அந்தஸ்திரியைத்துயரப்படுத்தல்.

அப்பால் வானத்திலே மகா ஆச்சரியமான தரிச ௧
னமுண்டாயிற்று; சூரியனை அணிந்த ஒருஸ்திரி,
தன் பாதங்களின்கீழே சந்திரனையும், சிரசிலே
பன்னிரண்டு நட்சத்திரங்கள் பொருந்திய முடி
யையுமுடையவளாய்,—கருப்பவதியாகி, பிரச ௨
வவேதனையினால் வருந்தி அலறிக்கொண்டிருந்
தாள்.-பின்னும் வேறொரு அடையாளம் வானத் ௩
திலேகாணப்பட்டது; பாருங்கள், ஏழுதலைகளை
யும், பத்துக்கொம்புகளையும், தலைகளின்மேல் ஏ
ழுமுடிகளையுமுடையசிவப்பான மகாபெரிய ச
ருப்பமுமிருந்தது.—அதின்வால் வானத்தின் நட் ௪
சத்திரங்களில் மூன்றில் ஒருபங்கை இழுத்து,
அவைகளைப் பூமியின்மேல் தள்ளிற்று: பிரச
விக்கும் ஸ்திரி பிரசவித்தவுடனே அந்த மகா ச
ருப்பம், அவள்பிள்ளையைப் பட்சிக்கிறதற்கு அ
வளுக்குமுன்பாகநின்றது.—இருப்புக்கோலால் ௫
எல்லா இராச்சியத்தாரையும் அரசாளுகிறதற்கு
ஒருபுத்திரனை அவள் பெற்றாள்: அவள் பிள்ளை
தேவனிடத்திலும், அவருடைய சிங்காச
னத்தினிடத்திலும் ஏற்றப்பட்டது.—ஸ்திரியா ௬
னவள் வனத்திற்கு ஓடிப்போனாள், அங்கே ஆ
யிரத்திருநூற்றறுபதுநாளளவும் அவளைப் போ
ஷிப்பதற்காக, தேவனால் ஆயத்தமாக்கப்பட்
ட இடம் அவளுக்குண்டாயிருந்தது.
பரமண்டலத்திலே யுத்தமுண்டாயிற்று: மிகா ௭
வேலும் அவனைச்சேர்ந்ததூதரும்வலியசருப்பத்
தோடேயுத்தம்பண்ணினார்கள்; வலியசருப்பமு
ம்அதைச்சேர்ந்ததூதரும் யுத்தம்பண்ணியுஞ் செ
யம்பெறவில்லை.—பின்பு பரமண்டலத்தில் அவர் ௮

(௮) அதி.௰௪.௮. எபி.௰௩.௰௨. (௯) அதி.௰௭.௰௫. சங்.௭௯.௨,௩. (௰) அதி.௰௨.௰௨. எஸ்த.௯.௰௯,௨௨. அதி.௰௬.௰. (௰௧) வச.௯. எசேக்.௩௭.௫,௯,௰,௰௪. (௰௨) ஏசா.௰௪.௰௩. ஏசா.௬௰.௮. அப்.௧.௯. ௨.இரா.௨.௧,௫,௭. (௰௩) அதி.௬.௰௨. அதி.௰௬.௰௯. அதி.௩.௪. யோசு.௭.௰௯. அதி.௰௪.௭. (௰௪) அதி.௮.௰௩. (௰௫) அதி.௰.௬. ஏசா.௨௭.௰௩. அதி.௰௬.௰௭. அதி.௰௨.௰. தானி.௨.௪௪. (௰௬) அதி.௪.௪. (௰௭) அதி.௧.௪,௮. அதி.௰௯.௬. (௰௮) வச.௨,௯. தானி.௭.௯,௰. அதி.௰௯.௫. அதி.௰௩.௰. (௰௯) அதி.௰௫.௫,௮. அதி.௮.௫. அதி.௰௬.௧.—(௰௨. அதி. ௨.) ஏசா.௬௬.௭. கலா.௪.௰௯. (௩) அதி.௰௭.௩,௯,௰. அதி.௰௩.௧. (௪) அதி.௯.௰,௰௯. அதி.௰௭.௰௮. தானி.௮.௰. வச.௨. யாத்.௧.௰௬. (௫) சங்.௨.௯. அதி.௨.௨௭. (௬) வச.௪. அதி.௰௧.௩. (௭) தானி.௰.௰௩,௨௧. வச.௩. அதி.௨௰.௨.

௯ களுக்கு ஒரு இடம் அகப்படவில்லை.—உலகம்
யாவையும் வஞ்சித்துவருகிறபிசாசென்றும்,சாத்
தானென்றுஞ்சொல்லப்பட்டபழையசருப்பமா
கிய மகாவலியசருப்பந் தள்ளப்பட்டது: அது பூ
மியிலேதள்ளப்பட்டது, அதைச்சேர்ந்ததூதருங்
௰ கூடத்தள்ளப்பட்டார்கள்.-நம்முடைய சகோத
ரர்மேற்குற்றஞ்சார்த்துகிறவன்தள்ளப்பட்டிருப்
பதினால்,இப்பொழுது இரட்சிப்பும், வல்லமை
யும்,நம்முடையதேவனுக்குஆளுகையும்,அவ
ருடைய கிறிஸ்துவுக்கு அதிகாரமும் உண்டா
யிருக்கின்றன: இரவும்பகலும் அவன் நம்முடை
ய தேவனுக்கு முன்பாக அவர்கள்மேற்குற்
௰௧ றஞ்சார்த்தினான்.—அவர்களோ, மரணத்திற்குத்
தப்பும்படிதங்கள்பிராணனைப்பாராமல்,ஆட்டுக்
குட்டியின் இரத்தத்தினாலுந் தங்கள் சாட்சியின்
வாக்கியத்தினாலும் அவனை மேற்கொண்டார்க
௰௨ ள்.—ஆதலால் பரமண்டலங்களே, அவைகளில்
வாசமாயிருப்பவர்களே,களிகூருங்களென்றும்,
பூமியிலுஞ் சமுத்திரத்திலும் வாசம்பண்ணுகிற
வர்களே, ஐயோ, உங்களிடத்திற் பிசாசு இறங்
கி,தனக்குச்சொற்பகாலம் மாத்திரம் உண்டென்
றறிந்து மிகவுங் குரோதங்கொண்டிருக்கிறபடி
யால், உங்களுக்கு ஆபத்துவருமென்றும் பரமண்
டலத்திலே சொல்லிய மகாசத்தத்தைக்கேட்டே
௰௩ ன்.—அந்த வலியசருப்பமானவன் தான் பூமியி
லேதள்ளப்பட்டதைஅறிந்து,அந்தப்புத்திரனைப்
௰௪ பெற்றஸ்திரியை உபத்திரவப்படுத்தினான்.-அந்
தஸ்திரி சருப்பத்தின்முகத்துக்குவிலகி, ஒருகா
லம், இரண்டுகாலம், அரைக்காலம்வரைக்கும்ஆ
தரிக்கப்படுவதற்கு வனத்திலுள்ள தன்னுடைய
ஸ்தானத்துக்குப்பறந்து போகும்படி, பெருங்க
ழுகின் இரண்டுசிறகுகள் அவளுக்குக் கொடுக்
௰௫ கப்பட்டன.—அப்பொழுது சருப்பம் அந்தஸ்தி
ரியை வெள்ளங்கொண்டு போகும்பொருட்டு,
தன் வாயினின்று ஒருநதிபோலும் நீரை அவளு
௰௬ க்குப்பின்னாக உமிழ்ந்தது.—வலியசருப்பந் தன்
வாயினின்றும் உமிழ்ந்தநதியைப்பூமி ஸ்திரிக்கு
உதவியாகத் தன்வாயைத்திறந்து விழுங்கிற்று.—
௰௭ அப்பொழுது வலியசருப்பம், ஸ்திரியின்மேல்
குரோதங்கொண்டு, தேவனுடைய கட்டளை
களைக்காத்துநடக்கிறவர்களும், யேசுக்கிறிஸ்
துவின் சாட்சியைப் பெற்றவர்களுமாகிய அ
வளுடைய சந்ததியாரான மற்றவர்களுடனே
யுத்தம்பண்ணப்புறப்பட்டது.

## ௰௩. அதிகாரம்.

௧. ஏழு தலையையும், பத்துக்கொம்பையும், பத்து முடியையுமுடைய ஒரு மிருகம் சமுத்திரத்தினின்றெழும்பல்: அதற்குச் சருப்பம் பராக்கிரமத்தைக்கொடுத்தல்: ௰௧. பூமியினின்றும் இரண்டாம் மிருகம் எழும்பல்: முந்தின முகத்துக்குப் பிரதிரூபஞ்செய்தல்:சகலசனங்களும் அதற்குப் பூசைசெய்தல்.

பின்பு நான் கடற்கரை மணலின்மேல் நிற்கை ௧
யில் சமுத்திரத்தினின்று ஒருமிருகம் எழும்பக்
கண்டேன், அதற்குப் பத்துக்கொம்புகளும், ஏ
ழு தலைகளுமிருந்தன, அதின் கொம்புகளின்
மேலே பத்துமுடிகளும், அதின் தலைகளின்மே
லே தூஷணமான நாமங்களுமிருந்தன.—நான் ௨
கண்ட மிருகஞ் சிவிங்கியைப்போலிருந்தது, அ
தின் கால்கள் கரடியின் கால்களைப்போலவும்,
அதின்வாய் சிங்கத்தின் வாயைப்போலவுமிருந்
தன: வலியசருப்பம் தன் வல்லமையையும், த
னது ஆசனத்தையும், மிகுந்த அதிகாரத்தையும்
அதற்குக்கொடுத்தது.-பின்பு அதின் தலைகளில் ௩
ஒன்று சாவடையும்படி காயப்படுத்தப்பட்டதா
கக்கண்டேன்; ஆனாலும் சாவுக்கேதுவான அ
ந்தக்காயஞ் சொஸ்தமாக்கப்பட்டது: பின்பு பூ
மியிலுள்ள சமஸ்தசனங்களும் அந்த மிருகத்
தைக்குறித்து ஆச்சரியப்பட்டு,—அந்த மிருகத் ௪
துக்கு அதிகாரத்தைக்கொடுத்தபடியினாலே வலி
யசருப்பத்தை நமஸ்கரித்தார்கள்: மிருகத்துக்
கொப்பானவன் யாவன், அதனோடே யுத்தம்
பண்ணவல்லவன் யாவனென்றுசொல்லி அதை
வணங்கினார்கள்.—பெருமையானவைகளையும், ௫
தூஷணங்களையும் பேசுகிறதற்கான வாய் அதற்
குக் கொடுக்கப்பட்டது; நாற்பத்திரண்டுமாதம்
இதைச் செய்கிறதற்கு அதிகாரம் அதற்கு அளிக்
கப்பட்டது.—அதினால் அது தேவனுடைய ௬
நாமத்தையும், அவருடைய கூடாரத்தையும், பர
மண்டலத்தில் வாசமாயிருப்பவர்களையுந் தூஷ
ணிக்கிறதற்குத் தேவனுக்கு விரோதமாகத்தன்
வாயைத்திறந்தது.—அல்லாமலும் பரிசுத்தவான் ௭
களோடே யுத்தம்பண்ணி, அவர்களைச்செயிக்கி
றதற்கும், எல்லாக்கோத்திரத்தாரையும், பாஷை
க்காரரையும், தேசத்தாரையும் மேற்கொள்ளுகிற
தற்கும் அதற்கு அதிகாரங்கொடுக்கப்பட்டது.—
உலகம் உண்டானதுமுதல் பலியாக அடிக்க ௮
ப்பட்ட ஆட்டுக்குட்டியின்சீவபுத்தகத்திலேபெ
யர் எழுதப்படாத பூலோகத்தார்யாவரும் அதை
நமஸ்கரிப்பார்கள்.—கேட்கக் காதுள்ளவனெவ ௯
னோ, அவன் கேட்கக்கடவன்.—சிறைபிடித்துக் ௰
கொண்டுபோகிறவன் சிறையாகக்கொண்டுபோ
கப்படுவான்: கட்கத்தினாலே கொலைசெய்கிற
வன் கட்கத்தினாற் கொலைசெய்யப்படவேண்
டும். இதினால் பரிசுத்தவான்களுடைய பொறு
மையும் விசுவாசமும் விளங்கும்.

(௯) லூக்.௰.௰௮. யோவா.௰௨.௩௧. ஆதி.௩.௧,௪. அதி.௨௰.௨,௩. அதி.௯.௧. (௰) அதி.௰௧.௰௫. யோபு.௧.௯. சக.௩.௧. (௰௧) ரோ.௮.௩௩,௩௪,௩௭. லூக்.௰௪.௨௬. (௰௨) சங்.௯௬.௰௧. ஏசா.௪௯.௰௩. ஆதி.௮.௰௨. அதி.௰.௫.(௰௩) வச.௫. (௰௪) யாத்.௰௯.௪. வச.௬. அதி.௰௭.௩. தானி.௭.௨௫. (௰௫) ஏசா.௫௯.௰௯.(௰௭)ஆதி.௩.௰௫. அதி.௰௧.௭. அதி.௰௪.௰௨. ௧.கொரி.௨.௨. ௧.யோவா.௫.௰.—(௰௩. அதி. ௧.) தானி.௭.௨,௭. அதி.௰௨.௩. அதி.௰௭.௩. (௨) தானி.௭.௪,௫,௬. அதி.௰௨.௪,௯. அதி.௰௬.௰. (௩) வச.௰௨,௰௪. அதி.௰௭.௮.(௪)அதி.௰௮.௰௮.(௫)தானி.௭.௮,௰௧,௨௫. அதி.௰௧.௨. (௬) யோவா.௧.௰௪. கொலோ.௨.௯. (௭) தானி.௭.௨௨. அதி.௰௧.௰௮. (௮) யாத்.௩௨.௩௨. தானி.௰௨.௧. பிலி.௪.௩. அதி.௩.௫. அதி.௰௭.௮. (௯) அதி.௨.௭. (௰) ஏசா.௩௩.௧. ஆதி.௯.௬. மத்.௨௬.௫௨. அதி.௰௪.௰௨.

௰௧ அன்றியும் ஒரு ஆட்டுக்குட்டியைப்போல், இ
ரண்டுகொம்புகளையுடையதாகிய வேறொருமிரு
கம்பூமியினின்று எழும்பக்கண்டேன்; அதுவலி
௰௨ யசருப்பத்தைப்போல் வசனித்து,-தனக்குமுன்
வந்த முந்தின மிருகத்தின் அதிகாரம்யாவையும்
நடப்பித்து, மரணத்துக்கேதுவான காயம்மாறிச்
சொஸ்தமடைந்த அந்த முந்தின மிருகத்தைப் பூ
மியும், அதில்வசிப்பவர்களும்நமஸ்கரிக்கும்படி
௰௩ செய்தது.—அதுவுமன்றி, மனுஷருக்குமுன்பாக
வானத்திலிருந்து பூமியின்மேல் அக்கினியை வ
௰௪ ருவித்து, மகா அற்புதங்களைச்செய்து,-இவ்வித
மாய் முந்தின மிருகத்தின் முன்பாகச்செய்யும்
படி தனக்கு அளிக்கப்பட்ட அற்புதங்களினால்
உலகத்தாரை வஞ்சித்து, கட்கத்தினாலே காயப்
பட்டும் சீவித்திருக்கிற மிருகத்துக்கு ஒரு சுரூ
பமுண்டாக்கவேண்டுமென்று உலகத்தாருக்குச்
௰௫ சொல்லுகின்றது.—மேலும். அந்த மிருகத்தின்
சுரூபம்பேசவும், அந்த மிருகத்தின் சுரூபத்தை
நமஸ்கரிக்காத யாவரையும் வதைக்கவுந் தக்கதா
க, அந்த மிருகத்தின்சுரூபத்துக்கு ஆவியைக்கொ
௰௬ டுக்க அது அதிகாரமுடையதாயிருந்தது.-அதுசி
றியோர், பெரியோர், செல்வர், தரித்திரர், சுயா
தீனர், அடிமைகளாகிய எல்லாருந் தங்கள் தங்
கள் வலதுகையிலாவது, நெற்றியிலாவது ஒரு
௰௭ முத்திரை பெறவேண்டுமென்றும்,-அந்த மிருகத்
தின் முத்திரையாகிய அதின்நாமத்தையாவது, அ
தினுடைய நாமத்தின் இலக்கத்தையாவது தரித்
துக்கொள்ளுகிறவனைத் தவிர, வேறொருவனுங்
கொள்ளவும் விற்கவுங் கூடாதென்றுஞ் சொல்
௰௮ லுகின்றது.—இதிலே ஞானம் விளங்கும். மிரு
கத்தின் இலக்கம், ஒரு மனுஷனுடைய இலக்
கம்; புத்திமான் அந்த இலக்கத்தைக் கணிக்கக்க
டவன்: அதின் இலக்கம் அறுநூற்றறுபத்தாறு.

## ௰௪. அதிகாரம்.

௧. சீயோன்மலையில் கிறிஸ்து, தமதுசனங்களோ
டே தரிசனமாதல்: ௬. சுவிசேஷத்தைப் பிர
சித்தப்படுத்துகிறதற்கும், பாபேலின் நாசத்தை
வெளிப்படுத்துகிறதற்கும் ஒரு தூதன் தரிசன
மாதல்: ௰௪. தேவனுடைய கோபமாகிய
விளைவை அரிதல்: கோபமாகியதிராட்சக்குலை
யைப்பறித்தல்.

பின்பு நான் பார்க்கையில், சீயோன்மலையின்
மேல் ஆட்டுக்குட்டியானவரும், அவரோடே அ
வருடையபிதாவின்நாமந் தங்கள் தங்கள் நெற்றி
களில் எழுதப்பெற்ற இலட்சத்து நாற்பத்தினலா
௨ யிரம்பேரும்நிற்கக்கண்டேன்.-அன்றியும், சலரா
சியின்இரைச்சல்போலவும், மகா இடியின்முழக்
கம்போலவும், பரமண்டலத்திலிருந்துண்டாகிய
ஒருசத்தத்தைக்கேட்டேன்: நான்கேட்டசத்தம்,
தங்கள் சுரமண்டலங்களை வாசிக்கிற சுரமண்ட
லக்காரருடைய ஓசையைப்போலிருந்தது.—அ ௩
வர்கள் அந்தச்சிங்காசனத்துக்குமுன்பாகவும், நா
லுபிராணிகளுக்கும் மூதியோருக்கும் முன்பாக
வும் ஒரு புதுப்பாட்டைப்பாடினார்கள்: அந்தப்
பாட்டு, உலகத்திலிருந்து மீட்டுக்கொள்ளப்பட்
ட அந்த இலட்சத்து நாற்பத்துநாலாயிரவரேயன்
றி வேறொருவருங்கற்றுக்கொள்ளக் கூடாததாயி
ருந்தது.—இவர்களே ஸ்திரிகளால் தங்களை அசு ௪
சிப்படுத்தாத கிறையுடையவர்கள். இவர்களே
ஆட்டுக்குட்டி எங்கேபோனாலும் அதைப்பின்
பற்றுகிறவர்கள். இவர்களே மனுஷரிலிருந்து
மீட்டுக்கொள்ளப்பட்டு, தேவனுக்கும் ஆட்
டுக்குட்டிக்கும் முதற்பலனானவர்கள்.—இவர்க ௫
ளுடையவாயிலே கபடங்காணப்படவில்லை: இ
வர்கள் தேவனுடைய சிங்காசனத்திற்கு முன்
பாக மாசில்லாதவர்களாயிருக்கிறார்கள்.

பின்பு ஆகாயத்தின் மத்தியிலே வேறொருதூ ௬
தன் பறக்கக்கண்டேன், அவன், பூமியில்வசிப்
பவர்களாகிய சகல தேசத்தாரிடத்திலும், கோத்
திரத்தாரிடத்திலும், பாஷைக்காரரிடத்திலும், இ
ராச்சியத்தாரிடத்திலும்பிரசங்கிக்கிறதற்கு நித்தி
யசுவிசேஷத்தையுடையவனாய்,-தேவனுடை ௭
ய நியாயத்தீர்ப்பின் சமயம் வந்துவிட்டது; ஆ
னபடியால் அவருக்குப்பயந்து, அவருடைய
மகிமையைப் பிரகாசிக்கப்பண்ணுங்கள்: வா
னத்தையும், பூமியையும், சமுத்திரத்தையும், நீ
ரூற்றின்கண்களையுஞ் சிருஷ்டித்தவருக்கே ஆ
ராதனை செய்யுங்களென்று மிகவுஞ் சத்தமிட்
டுச்சொன்னான்.—வேறொரு தூதன் பின்சென் ௮
று, பாபேலென்னும் மகாநகரி விழுந்தது, வி
ழுந்தது, அவள் தன்வேசைமார்க்கமாகிய உக்கி
ரபானத்தைச் சருவதேசத்தாருங் குடிக்கப்பண்
ணினாளே என்றான்.—அவர்களுக்குப் பின்னே ௯
மூன்றாந்தூதன் வந்து மிகவுஞ்சத்தமிட்டு, அந்
தமிருகத்தையும் அதின் சுரூபத்தையும் நமஸ்க
ரித்து, தன்நெற்றியிலாவது தன்கையிலாவது அ
தின் முத்திரையைத் தரித்துக்கொள்ளுகிறவனெ
வனோ,—அவன் தன் தேவன் தருந்தண்டனை ௰
யாகிய பாத்திரத்திலே கலப்பில்லாமல் வார்க்கப்
பட்ட அவருடைய உக்கிரரசத்தைக் குடித்து,
பரிசுத்ததூதர்களுக்குமுன்பாகவும், ஆட்டுக்குட்
டிக்கு முன்பாகவும் அக்கினியினாலுங் கந்தகத்
தினாலும் வேதனைப்படுவான்.-மிருகத்தையும் அ ௰௧
தின்சுரூபத்தையும் நமஸ்கரிக்கிறவர்களும், அதி
னுடைய நாமத்தின் முத்திரையைத்தரித்துக்கொ
ள்ளுகிறவர்கள் எவர்களும் படும் வேதனையின்பு

(௰௧) அதி.௰௧.௭. (௰௨) வச.௩. (௰௩) உபா.௰௩.௧,௨,௩. மத்.௨௪.௨௩. ௨.தெச.௨.௯. ௧.இரா.௰௮.௩௮. ௨.இரா.௧.
௰,௰௨.(௰௪)அதி.௰௨.௯. ௨.தெச.௨.௯,௰. ௨.இரா.௨௰.௭. (௰௫) அதி.௰௬.௨. (௰௬) அதி.௰௪.௯. (௰௭) அதி.௰௪.௰௧.
அதி.௰௫.௨. (௰௮) அதி.௰௭.௯. அதி.௰௫.௨. அதி.௨௧.௰௭.—(௰௪. அதி. ௧.) அதி.௫.௬. அதி.௭.௩,௪. (௨) அதி.௧.
௰௫. அதி.௫.௮. (௩) அதி.௫.௯. வச.௧. (௪) ௨.கொரி.௰௧.௨. அதி.௩.௪. அதி.௫.௯. யாக்.௧.௰௮. (௫) சங்.௩௨.௨.
செப்.௩.௰௩. எபே.௫.௨௬. யூதா.௨௪. (௬) அதி.௮.௰௩. எபே.௩.௯,௰,௰௧. தீத்.௧.௧. அதி.௰௩.௭. (௭) அதி.௰௧.௰௮.
நெகி.௯.௬. சங்.௩௩.௬. அப்.௰௪.௰௫. (௮) எசா.௨௧.௯. எரே.௫௧.௭,௮. அதி.௰௧.௮. (௯) அதி.௰௩.௰௪,௰௫,௰௬. (௰)
சங்.௭௫.௮. எசா.௫௧.௰௭. எரே.௨௫.௰௫. அதி.௰௮.௬. அதி.௰௬.௰௯. அதி.௨௰.௰. அதி.௰௯.௨௰. (௰௧) எசா.௩௪.௰.

கை சதாகாலங்களிலும் எழும்பும், அவர்களுக்
௰௨ கு இரவும் பகலும் இளைப்பாறுதலில்லை.—இதி
லே தேவனுடைய கட்டளைகளையும், யேசு
வைப் பற்றும் விசுவாசத்தையுங் காத்துக்கொள்
ளுகிறவர்களாகியபரிசுத்தவான்களுடைய பொ
௰௩ றுமை விளங்குமென்றான்.—பின்பு வானத்திலி
ருந்து பிறந்த ஒருசத்தம், இதுமுதல் கர்த்தருக்
குள் மரிக்கிறவர்கள் வாழ்வுடையவர்களென்
பதை எழுதென்று என்னுடனே சொல்லக்கேட்
டேன்: அவர்கள்தங்கள் பிரயாசங்களைவிட்டொ
ழிந்து இளைப்பாறுதலடைகிறார்கள்; அவர்களு
டைய கிரியைகள் அவர்களைப்பின்செல்லுகின்
றனவென்று ஆவியானவருஞ் சொல்லுகிறார்.
௰௪ பின்பு நான் பார்க்கையில், வெண்மையான
மேகத்தையும், அந்தமேகத்தின் மேல்மனுபுத்திர
னுக்கொப்பான ஒருவன் தன்னுடைய சிரசின்
மேற் பொற்கிரீடத்தையும், தன்கையிலே கூரிய
அரிவாளையுந் தரித்திருப்பதையுங் கண்டேன்.—
௰௫ அப்பொழுது வேறொருதூதன் தேவாலயத்திலி
ருந்து புறப்பட்டு, மேகத்தின்மேல்வீற்றிருக்கிற
வனைநோக்கி, மிகுந்த சத்தமிட்டு, பூமியின்வி
ளைவு முதிர்ந்தது; அரியரிகிறதற்குக் காலம் வந்த
து: ஆகையால் உன்னுடைய அரிவாளைப்பிடித்
௰௬ து, அரியென்றான்.—மேகத்தின்மேல் வீற்றிருந்
தவன் தன் அரிவாளைப்பூமியின்மேல்நீட்ட,பூமி
௰௭ யின்விளைவு அறுக்கப்பட்டது.—பின்பு வேறொ
ருதூதன் தானுங் கூரிய அரிவாளைப்பிடித்து, ப
ரமண்டலத்திலுள்ள தேவாலயத்தினின்று புறப்
௰௮ பட்டுவந்தான்.—மேலும் அக்கினியின்மேல் அதி
காரம்பெற்ற வேறொருதூதன் வேதிகையினின்
று புறப்பட்டுவந்து, கூரிய அரிவாளைப்பிடித்தி
ருக்கிறவனிடத்தில், பூமியின்திராட்சங்கள் ப
ழுத்திருக்கிறபடியால், கூரிய உன் அரிவாளைப்
பிடித்து, திராட்சக்குலைகளை அறுத்துவிடென்று
௰௯ மிகவுஞ் சத்தமிட்டுச்சொன்னான்.—அந்தப்படி
அந்தத்தூதன் தன் அரிவாளைப் பூமியிலே நீட்
டி, பூமியின்திராட்சங்களை அறுத்து, தேவனு
டைய குரோதமாகிய பெரியதிராட்சத்தொட்
௨௰ டியிலே போட்டான்.—அதுநகரத்துக்குப்புறம்
பேயுள்ள அந்தத்திராட்சத்தொட்டியிலே மிதிக்
கப்பட்டது, திராட்சத்தொட்டியிலிருந்து ஆயி
ரத்தறுநூறு ஸ்தாதிதூரத்திற்கு இரத்தம் பெருகி,
குதிரைகளுக்குக் கடிவாளமட்டாயிருந்தது.

## ௰௫. அதிகாரம்.

௧. எழுவாதைகளைச்செய்யும் எழுதூதர்தரிசனமாதல்: மிருகத்தைச்செயித்துவெற்றிப்பாட்டைப்பாடல்: ௫. தேவனுடைய கோபமாகியபாத்திரங்களைத் தூதரிடத்தில் ஒப்பித்தல்.

பின்பு வானத்திலே பெரிதும், ஆச்சரியமுமா ௧
ன வேறொரு அடையாளத்தைக்கண்டேன், க
டைசியான எழு வாதைகளைக்கொண்டிருந்த எ
ழுதூதரைக் கண்டேன்; அவர்களினாலே தே
வனுடைய குரோதம் பூரணமாயிற்று.—அன்றி ௨
யும், அக்கினியோடு கலந்த பளிங்குக்கடலையும்,
மிருகம், அதின்சுரூபம், அதின்முத்திரை, நாமம்,
அதின் நாமத்தின் இலக்கம் இவைகளைச்செயித்
து வெற்றியடைந்தவர்கள் தேவ சுரமண்டலங்
களைப்பிடித்துக்கொண்டு அந்தப் பளிங்குக்கட
லின்மேல் நிற்கிறதையுங் கண்டேன்.—அவர்கள், ௩
தேவனுடைய பணிவிடைக்காரனாகிய மோ
சேயின் பாட்டையும், ஆட்டுக்குட்டியின்பாட்
டையும் பாடி, சருவவல்லமையுள்ள தேவனா
கிய கர்த்தாவே, உம்முடைய கிரியைகள் ம
கத்துவமும் ஆச்சரியமுமானவைகள்; தேசத்தா
ரின் அரசனே, உம்முடையநெறிகள் நீதியுஞ்சத்
தியமுமானவைகள்.—கர்த்தாவே, உமக்குப் ௪
பயந்து, உமது நாமத்தைத்துதியாதவன் யாவன்;
நீர் ஒருவரே பரிசுத்தமுள்ளவர்: சருவதேசத்தா
ரும்வந்து உமது சந்நிதியில் நமஸ்காரஞ்செய்
வார்கள்; உம்முடைய தண்டனைகள் வெளிப்
பட்டனவென்றார்கள்.
மேலும் நான் பார்க்கையில், பரமண்டலத்தி ௫
லே சாட்சியின் ஆவாசமாகிய ஆலயந்திறக்கப்
பட்டது.—அவ்வாலயத்தினின்று சுத்தமும் பிர ௬
காசமுமான புடவையைத்தரித்து, மார்புகளின
ருகே பொற்கச்சுகளைக் கட்டியிருந்தவர்களாய்,
அவ்வேழு வாதைகளைக்கொண்டிருந்த எழு தூ
தர்புறப்பட்டார்கள்.—அந்த நாலுபிராணிகளில் ௭
ஒன்று, நித்திய சீவியாயிருக்கிற தேவனுடை
ய குரோதத்தால்நிறைந்த பொற்கலசங்கள் எழை
யும் அவ்வேழு தூதருக்குங்கொடுத்தது.—தேவ ௮
னுடைய மகிமை, பராக்கிரமம், இவைகளில்
தோன்றிய புகையினால் தேவாலயம் நிறைந்தது;
எழுதூதர்கொண்டிருந்த எழுவாதைகளும் முடி
யும்வரைக்கும் ஒருவராலுந் தேவாலயத்திற் பிர
வேசிக்கக்கூடாமற்போயிற்று.

## ௰௬. அதிகாரம்.

௧. பாத்திரங்களை ஊற்றல்: ௨. முதற்பாத்திரத்தை ஊற்றல்: ௪. மூன்றாம் பாத்திரத்தை ஊற்றல்: ௮. நாலாம்பாத்திரத்தைஊற்றல்: ௰. ஐந்தாம்பாத்திரத்தைஊற்றல்: ௰௨. ஆறாம்பாத்திரத்தை ஊற்றல்: ௰௭. எழாம்பாத்திரத்தை ஊற்றல்.

பின்புதேவாலயத்திலிருந்துண்டானமகாசத்தம், ௧

(௰௨) அதி.௰௩.௰. அதி.௰௨.௰௭. (௰௩) பிர.௪.௧,௨. ௧கொரி.௰௫.௰௮. ௧தெச.௪.௰௬. ௨தெச.௧.௯. எபி.௪.௯,௰. (௰௪)எசேக்.௧.௨௬. தானி.௭.௰௩. அதி.௬.௨.(௰௫)அதி.௰௬.௰௭. யோவே.௩.௰௩. மத்.௰௩.௩௯. எரே.௫௧.௩௩.(௰௮) அதி.௰௬.௮. யோவே.௩.௰௩. (௰௯) அதி.௰௯.௰௫. (௨௰) எசா.௬௩.௩. புல.௧.௰௫. எபி.௰௩.௰௨. அதி.௰௯.௰௪.—(௰௫. அதி. ௧.) அதி.௰௨.௧,௩. அதி.௰௬.௧. அதி.௰௪.௰. (௨) அதி.௪.௬. மத்.௩.௰௧. அதி.௰௩.௰௫,௰௬,௰௭. அதி.௫.௮. (௩) யாத்.௰௫.௨. உபா.௩௧.௩௰. உபா.௩௨.௪. சங்.௱௩௯.௰௪. சங்.௱௪௫.௰௭. ஓசி.௰௪.௯.(௪)யாத்.௰௫.௰௫,௰௬, ௰௭. எரே.௰.௭. எசா.௬௬.௨௩.(௫)அதி.௰௧.௰௯. எண்.௧.௫௰.(௬)வச.௧. யாத்.௨௮.௬,௮. எசேக்.௪௪.௰௭,௰௮. (௭) அதி.௪.௬. ௧தெச.௧.௯.(௮)யாத்.௪௰.௩௪. ௧இரா.௮.௰. ௨நாளா.௫.௰௪. எசா.௬.௪. ௨தெச.௧.௯.—(௰௬.அதி.௧.) அதி.௰௫.௧. அதி.௰௪.௰.

அந்த எழுதூதருடனே, நீங்கள்போய், தேவனு
டைய குரோதத்தின் கலசங்களைப் பூமியின்
மேல் ஊற்றுங்களென்று சொல்லக்கேட்டேன்.
௨ அப்பொழுது முதலாந் தூதன் போய், தரை
யின்மேல் தன்கலசத்திலுள்ளதை ஊற்றினபொ
ழுது, மிருகத்தின் அடையாளத்தையுடையவர்
களும், அதின்சுரூபத்தை நமஸ்கரிக்கிறவர்களு
மாகிய மனுஷரில் கொடியதும் வேதனைசெய்வ
துமாகிய பருத்தோன்றிற்று.
௩ பின்பு இரண்டாந்தூதன் சமுத்திரத்தின்மேல்
தன்கலசத்திலுள்ளதை ஊற்றினபொழுது, அது
மரித்தவனுடைய இரத்தம்போலாயிற்று: சமுத்
திரத்திலுள்ள சீவசெந்துக்கள்யாவும் மாண்டு
போயின.
௪ பின்புமூன்றாந்தூதன் நதிகள், நீரூற்றின்கண்
கள் இவைகளின்மேல் தன் கலசத்திலுள்ளதை
௫ ஊற்ற, இவைகள் இரத்தமாயின.—அப்பொழு
து சலத்திற்கதிபதியாகிய தூதன், இருக்கிறவரு
ம், இருந்தவரும், இருப்பவருமாகிய பரிசுத்தரே,
இப்படி நியாயத்தீர்ப்புச் செய்ததினால் நீர் நீதிப
௬ ரர்.—அவர்கள்பரிசுத்தவான்களுடைய இரத்தத்
தையும், தீர்க்கதரிசிகளின் இரத்தத்தையுஞ்சிந்தி
னபடியினால், அவர்களுக்கு இரத்தத்தையேகுடி
க்கக்கொடுத்தீர்; அவர்கள் அதற்குத்தகுந்தவர்க
௭ ளென்று சொல்லக்கேட்டேன்.-வேறொருவன்,
சருவவல்லமையுள்ள தேவனாகிய கர்த்தா
வே! மெய்யாய் உம்முடைய நியாயத்தீர்ப்புகள்
சத்தியமும், நீதியுமானவைகளென்று வேதிகை
யினின்றுசொல்லக்கேட்டேன்.
௮ பின்பு நாலாந்தூதன் சூரியன்மேல் தன் கல
சத்திலுள்ளதை ஊற்ற, தீயினால் மனுஷரைச் சு
டும்படி இவனுக்கு அதிகாரம் அளிக்கப்பட்ட
௯ து.—அப்பொழுது மனுஷர் மிகுந்த உஷ்டணத்
தால் தகிக்கப்பட்டார்கள்: தேவனைத் துதிக்க
மனந்திரும்பாமல், அந்த வாதைகளைச்செய்ய
வல்லவருடைய நாமத்தைத்தூஷித்தார்கள்.
௰ பின்பு ஐந்தாந்தூதன் மிருகத்தின் ஆசனத்தின்
மேல் தன்கலசத்திலுள்ளதைஊற்ற, அதின் இராச்
சியம்அந்தகாரமயமாயிற்று; ஆனாலும்அவர்கள்தங்
கள் கிரியைகளைவிட்டு மனந்திரும்பாமல், வேத
௰௧ னையினிமித்தந்தங்கள்நாவுகளைக்கடித்து,-தங்கள்
வேதனைகள், தங்கள் பருக்கள் இவைகளினிமித்
தம்பரமண்டலத்தின்தேவனைத்தூஷித்தார்கள்.
௰௨ பின்பு ஆறாந்தூதன் பிராத்தென்னும் மகாநதி
யின்மேல் தன் கலசத்திலுள்ளதை ஊற்ற, கீழ்த்தி
சையினின்றுவரும் இராசாக்களுக்கு வழி ஆயத்
தமாகும்படி, அந்தநதியின்சலம் வற்றிப்போயிற்
று.—பின்பு வலியசருப்பத்தின் வாயிலும், மிரு ௰௩
கத்தின்வாயிலும், கள்ளத்தீர்க்கதரிசியின் வாயி
லும் நின்று தவளைகளுக்கொப்பான மூன்று அ
சுத்த ஆவிகள் புறப்படக்கண்டேன்.-அவைகள் ௰௪
அடையாளங்களைச்செய்கிற பிசாசுகளின் ஆவி
களாயிருக்கின்றன, அவைகள் புறப்பட்டு, சரு
வவல்லமையுள்ள தேவனுடைய மகாதினத்
தில் யுத்தஞ்செய்வதற்குப் பூமியிலெங்குமுள்ள
இராசாக்களைச் சேர்க்கும்பொருட்டு, உலகமெ
ங்கும் போகின்றன.—கேளுங்கள், நான் திருட ௰௫
னைப்போல்வருகிறேன். விழித்துக்கொண்டு, தன்
இலச்சையை அவர்கள் காண நிருவாணமாய் ந
டவாதபடி, தன்வஸ்திரங்களைக்காத்துக்கொள்ளு
கிறவன் வாழ்வுடையவன்.—எபிரேயு பாஷை ௰௬
யில் அருமகெத்தோனென்னப்பட்ட ஸ்தானத்
தில் அவர்களைக் கூட்டிக்கொண்டுபோனான்.
பின்பு ஏழாந்தூதன் ஆகாயத்தில் தன் கலசத்தி ௰௭
லுள்ளதைஊற்றினான், அப்பொழுது பரமண்ட
லத்துத் தேவாலயத்திலுள்ள சிங்காசனத்தினின்
று ஆயிற்றென்றுசொல்லிய மகாசத்தம் புறப்பட்
டது.—அன்றியுஞ்சத்தங்களும், இடிமுழக்கங்க ௰௮
ளும், மின்னல்களுமுண்டாயின; பூமி மிகவும்
அதிர்ந்தது, பூமியின்மேல் மனுஷர் தோன்றிய
நாள்முதல் உண்டாயிராத மகாபெரிய அதிர்த
லுண்டாயிருந்தது.—அப்பொழுது மகா நகரம் ௰௯
மூன்றாகப்பிரிக்கப்பட்டது, அந்தந்தத்தேசத்
தாருடைய நகரங்கள்விழுந்தன: தேவனுடை
ய உக்கிரமாகிய குரோதத்தையுடைய இரசமுள்
ள பாத்திரத்தைக்கொடுக்கும்படி மகா பாபேல்
அவருக்குமுன் அவர் நினைவில் வந்தது.—தீவுக ௨௰
ளெல்லாம் அகன்றுபோயின, பருவதங்கள் கா
ணப்படாமற்போயின.-தாலந்துநிறையான பெ ௨௧
ரியகன்மழையும் வானத்திலிருந்து மனுஷர்மேல்
விழ, அந்தக்கன்மழையாகிய வாதையினிமித்தம்
மனுஷர் தேவனைத் தூஷித்தார்கள்; அந்தவா
தை மகாகொடிதாயிருந்தது.

## ௰௭. அதிகாரம்.

௧. எழுதலைகளையும், பத்துக்கொம்புகளையுமுடை
யமிருகத்தின்மேல் பாபேலென்னும் வேசை
யானவள் ஏறியிருத்தல்: எழுதலைகள் பத்துக்
கொம்புகளாகிய இவைகளின் தாற்பரியத்தை
யும், இவைகளுக்குண்டான தோல்வியையும்,
கிறிஸ்துவின்செனமத்தையுந் தெரிவித்தல்.

பின்புஎழுகலசங்களையுடையஅந்தஎழுதூதரில் ௧
ஒருவன்வந்து, என்னைநோக்கி, நீ வா;-பூமியின் ௨
இராசாக்கள் தன்னோடே வேசைமார்க்கம்பண்
ணப்பெற்று, தன்னுடைய வேசைமார்க்கமாகி

(௨) அதி.௮.௭. யாத்.௯.௯,௰,௰௧. அதி.௰௩.௰௪,௰௬,௰௭. (௩) அதி.௮.௮,௯. யாத்.௭.௰௭,௨௰. (௪) அதி.௮.௰. யாத். ௭.௨௰. (௫) அதி.௰௫.௩. அதி.௧.௪,௮. (௬) மத்.௨௩.௩௪,௩௫. அதி.௰௩.௰௫. அதி.௰௧.௰௮. ஏசா.௪௯.௨௬. (௭) அதி. ௰௫.௩. அதி.௰௩.௰. (௮) அதி.௮.௰௨. அதி.௯.௰௭,௰௮. (௯) வச.௰௧,௨௧. தானி.௫.௨௨,௨௩. அதி.௰௧.௰௩. (௰) அதி. ௰௩.௨. அதி.௯.௨. அதி.௰௧.௰. (௰௧) வச.௨,௯,௨௧. (௰௨) அதி.௯.௰௪. எரே.௫௰.௩௮. ஏசா.௪௧.௨,௨௫. (௰௩) ௧.யோவா.௪.௧,௨,௩. அதி.௰௨.௩,௯. அதி.௰௯.௨௰. (௰௪) ௧.தீமோ.௪.௨. யாக்.௩.௰௫. ௨.தெச.௨.௯. லூக்.௨.௧. அதி.௰௭. ௰௪. (௰௫) மத்.௨௪.௪௩. ௧.தெச.௫.௨. ௨.பேதுரு.௩.௰. ௨.கொரி.௫.௩. (௰௬) அதி.௰௯.௰௯. (௰௭) அதி.௨௧.௬. (௰௮) அதி.௪.௫. அதி.௰௧.௰௩. தானி.௰௨.௧. (௰௯) அதி.௰௪.௮. அதி.௰௮.௫. ஏசா.௫௧.௰௭,௨௨. எரே.௨௫.௰௫,௰௬. (௨௰) அதி.௬.௰௪. (௨௧) அதி.௰௧.௰௯. வச.௯,௰௧. யாத்.௯.௨௩,௨௪,௨௫.—(௰௭. அதி. ௧.) அதி.௨௧.௯. (௨) அதி. ௰௬.௰௯. நாகூ.௩.௪. எரே.௫௧.௰௩. அதி.௰௮.௩. எரே.௫௧.௭. அதி.௰௪.௮.

ய மதுபானத்தினாலே பூலோகத்தாரை வெறிகொ
ள்ளும்படிசெய்து, சலராசியின்மேல் உட்காந்தி
ருக்கிற அந்த மகாவேசைக்கு வருகிறதண்டனை
யை உனக்குக்காண்பிப்பேனென்று சொல்லி,—
௩ பின்பு ஆவிக்குள் என்னை வனத்துக்குக்கொண்
டுபோனான்: அப்பொழுது தூஷணநாமங்களால்
நிறைந்த ஏழுதலைகளையும், பத்துக்கொம்புகளையு
முடைய செந்நிறமான மிருகத்தின்மேலேறியி
௪ ருந்த ஒருஸ்திரியைக்கண்டேன்.—அந்தஸ்திரி,
தூமிரமும் இரத்தாம்பரமுமான வஸ்திரத்தைத்த
ரித்து, பொன்னினாலும், இரத்தினங்களினாலும்,
முத்துகளினாலும் அலங்கரிக்கப்பட்டு, தன்வே
சைமார்க்கமாகிய அருவருப்புகளாலும், அசுத்தத்
தாலும் நிறைந்தபொற்பாத்திரத்தைத் தன்கையில்
௫ ஏந்தி யிருந்தாள்.—"இரகசியமென்றும், பூமியிலு
ள்ள அருவருப்புகளுக்கும், வேசைகளுக்கும்மா
தாவாகிய மகாபாபேல்," என்றும், அவளுடைய
௬ நெற்றியில் நாமமெழுதப்பட்டிருந்தது.—அந்தஸ்
திரி பரிசுத்தவான்களின் இரத்தத்தினாலும், யே
சுவின் சாட்சிகளின் இரத்தத்தினாலும் வெறி
கொண்டிருக்கிறதைக்கண்டேன்: அவளை நான்
௭ கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டேன்.—அப்பொ
ழுது தூதன் என்னைநோக்கி, ஏன் ஆச்சரியப்ப
டுகிறாய்; இந்தஸ்திரியிலும், இவளைச்சுமக்கிற ஏ
ழுதலைகளையும்,பத்துக்கொம்புகளையுமுடைய மி
ருகத்திலும் அடங்கும் இரகசியத்தை உனக்குத்
௮ தெரிவிக்கிறேன்.—நீ கண்ட மிருகம் முன்னே
இருந்தது,இப்பொழுது இல்லை; அதுபாதாளத்
தினின்று ஏறிவந்து நாசத்துக்குப்போகின்றது:
உலகம் உண்டானதுமுதற் சீவபுத்தகத்திற்பெய
ர் எழுதப்படாத பூலோகத்தார், இருந்ததும், இரா
ததும்,இருப்பதுமாகிய மிருகத்தைப்பார்த்து ஆச்
௯ சரியப்படுவார்கள்.—இதில் ஞானமுள்ளபுத்திவி
ளங்கும். அந்த ஏழுதலைகள், ஸ்திரி உட்காந்தி
௰ ருக்கிற ஏழுமலைகளே.—ஏழு இராசாக்களுமிருக்
கிறார்கள்: ஐந்துபேர் விழுந்தார்கள், ஒருவன் இ
ருக்கிறான், மற்றவன் இதுவரையிலும் வரவில்
லை; வரும்பொழுது அவன்சொற்பகாலந்தரித்தி
௰௧ ருக்கவேண்டும்.—இருந்ததும்,இராததுமாகிய மிரு
கமே எட்டாவதும், அவ்வேழில் ஒன்றுமாயிருந்
௰௨ து நாசப்பட்டுப்போகின்றது.—நீ கண்ட பத்துக்
கொம்புகள் பத்து இராசாக்களே, அவர்கள் இது
வரையிலும் இராசத்துவம்பெறவில்லை; அவர்க
ள் மிருகத்துடன் ஒருமணிநேரமளவும் இராசாக்
கள் போல அதிகாரம் பெற்றுக்கொள்ளுகிறார்
௰௩ கள்.—அவர்கள் ஏக சிந்தையுள்ளவர்களாய், தங்
கள் பராக்கிரமத்தையும் அதிகாரத்தையும் மிரு
கத்துக்குக்கொடுக்கிறார்கள்.—அவர்கள் ஆட்டுக் ௰௪
குட்டியுடனே யுத்தம்பண்ணுவார்கள், ஆட்டுக்
குட்டி, கர்த்தாதிகர்த்தரும், இராசாதி இரா
சாவுமாயிருக்கிறதினால் அவர்களைச்செயிக்கும்:
அதனோடே இருக்கிறவர்கள் அழைக்கப்பட்
டவர்களும், தெரிந்துகொள்ளப்பட்டவர்களும்,
உண்மையுள்ளவர்களுமாயிருக்கிறார்களென்றா
ன்.—பின்னும் அவன் என்னுடனே, அந்த வே ௰௫
சை உட்காந்திருக்க நீ கண்ட சலங்கள், சனங்க
ளும், தேசத்தாரும், சாதியாரும், பாஷைக்கார
ருமாயிருக்கின்றன.—நீ கண்ட அந்த மிருகத் ௰௬
தின் பத்துக்கொம்புகள், அந்த வேசையைப்ப
கைத்து, அவளை அநாதையும், நிருவாணியுமாக்
கி, அவளுடைய மாமிசத்தைத்தின்று, அவளை
அக்கினியினால் தகிக்கும்.—தேவன், தமது வாக் ௰௭
கியங்கள் நிறைவேறுமட்டும் அவர்கள் தமது அ
பிப்பிராயத்தை நிறைவேற்றவும், ஏகசிந்தையு
டையவர்களாயிருக்கவும், தங்கள் இராசரிகத்தை
மிருகத்துக்குக்கொடுக்கவும் அவர்களுடைய இ
ருதயங்களை ஏவினார்.—நீ கண்டஸ்திரியானவள், ௰௮
பூமியின் இராசாக்களின்மேல் அரசாளுகைசெ
ய்துவருகிற மகாநகரியேயாமென்றான்.

## ௰௮. அதிகாரம்.

௧. பாபேல் விழுதல்: அதினின்று தேவனுக்குரிய சனங்கள் புறப்படல்: இராசாக்களும், வர்த்தகரும், கப்பற்காரரும் அதினிமித்தம் புலம்பல்: தேவனுக்குரிய சனங்கள் அதைக்குறித்து மகிழ்ச்சியடைதல்: ௨௧. பாபேல் விழுதலைத் திருஷ்டாந்தமாய்க்காட்டல்.

இவைகளின் பின்பு, மிகுந்த அதிகாரமுள்ள ௧
வேறொரு தூதன் வானத்திலிருந்து இறங்கக்
கண்டேன்; அவனுடைய மகிமையினாலே பூமி
பிரகாசமாக்கப்பட்டது.—அவன் மிகவுஞ் சத்த ௨
மிட்டு, பாபேல் மகா நகரி விழுந்தது, விழுந்த
து,அது பிசாசுகளுக்கு வாசஸ்தானமும்,சகலவி
த அசுத்தஆவிக்குங்காவலும், அசுத்தமும், அருவ
ருப்புமுள்ள சகலவித பறவைகளுக்குங் கூடுமா
யிற்று.—அவள் வேசைமார்க்கத்தின் உக்கிர மது ௩
வைச்சருவதேசத்தாருங்குடித்தார்கள், பூமியின்
இராசாக்கள் அவளோடே வேசைமார்க்கமாய் க
டந்தார்கள், பூமியின் வர்த்தகர் அவள்சுகபோகத்
தின் மிகுதியினாற்செல்வரானார்களென்றான்.—
பின்பு வானத்திற்பிறந்த வேறொரு சத்தம், என் ௪
சனங்களே, நீங்கள் அவளுடைய பாவங்களுக்
குப்பங்காளராகாமலும், அவளுக்கு நேரிடும்வா
தைகளில் அகப்படாமலுமிருக்கும்பொருட்டு,
அவளிடத்தினின்று புறப்படுங்கள்.—அவளு ௫

(௩) அதி.௰௨.௩,௬,௰௪. அதி.௰௩.௧. வச.௯,௰௨. (௪) அதி.௰௮.௰௧,௰௬. தானி.௰௧.௩௮. எரே.௫௧.௭. அதி.௰௪.௮. (௫) ௨.தெச.௨.௭. அதி.௰௧.௮. அதி.௰௪.௮. அதி.௰௮.௯. (௬) அதி.௰௮.௨௪. அதி.௰௩.௰௫. அதி.௬.௯,௰. (௮) அதி.௰௧.௭. அதி.௰௩.௩,௮,௰. வச.௰௧. (௯) அதி.௰௩.௧,௰௮. (௰௧) வச.௮. (௰௨) தானி.௭.௨௰. சக.௧.௰௮,௰௯,௨௧. (௰௪) அதி.௰௬.௰௪. ௨பா.௰.௰௭. ௧.தீமோ.௬.௰௫. எரே.௫௰.௪௪,௪௫. (௰௫) ஏசா.௮.௭. அதி.௰௩.௭. (௰௬) எரே.௫௰.௪௧.௪௨. எசேக்.௰௬.௩௭—௪௪. அதி.௰௮.௮. (௰௭) ௨.தெச.௨.௰௧. அதி.௰.௬. (௰௮) அதி.௰௯.௰௯. அதி.௰௨.௪.—(௰௮. அதி.௧.) அதி.௰௭.௧. எசேக்.௪௩.௨. ஏசா.௰௩.௰௯. எரே.௫௧.௮. ஏசா.௰௩.௨௧. எரே.௫௰.௩௯. ஏசா.௰௪.௨௩. மாற்.௫.௨,௩. (௩) அதி.௰௪.௮. வச.௰௧,௰௫. ஏசா.௪௭.௰௫. (௪) ஏசா.௪௮.௨௰. எரே.௫௰.௮. ௨.கொரி.௬.௰௭. (௫) ஆதி.௰௮.௨௰,௨௧. எரே.௫௧.௯. யோனா.௧.௨. அதி.௰௬.௰௯.

டைய பாவங்கள் வானத்தைத்தொடர்ந்தன, அ
வளுடைய துர்க்கருமங்கள் தேவனுடைய
௬ நினைவில் வந்தன.—அவள் உங்களுக்குப்பலன
ளித்ததுபோல, நீங்களும் அவளுக்குப்பிரதிபல
னளியுங்கள்: அவள் கிரியைகளுக்கு இருமடங்
காக அவளுக்குப்பிரதிபலனளியுங்கள்: அவள்
கலந்துகொடுத்த பாத்திரத்தில் இருமடங்காய்
௭ அவளுக்குக் கலந்துகொடுங்கள்.—அவள் தன்
னை மகிமைப்படுத்திச்சுகியாய்வாழ்ந்ததெவ்வள
வோ, அவ்வளவாக வாதையையுந்துக்கத்தையும்
அவளுக்குக்கொடுங்கள்: தான் இராசாத்தியாக
வீற்றிருப்பவளென்றும், தான் விதவையல்லவெ
ன்றும், தான் துக்கத்தைக் காண்பதில்லையென்
றும், தன் இருதயத்தில் எண்ணினபடியினால்,—
௮ ஒரேநாளில் வாதைகளாகிய மரணமும், துக்க
மும், பஞ்சமும் அவளுக்கு நேரிடும்; அவள்
அக்கினியால் தகிக்கப்படுவாள்: அவளை நியாயம்
விசாரிக்குந் தேவனாகிய கர்த்தர் வல்லமை
௯ யுள்ளவர்.—அவளுடனே வேசைமார்க்கஞ்செய்
து, சுகியாய்வாழ்ந்த பூமியின் இராசாக்களும்,
அவள் வேகிறதினாலுண்டான புகையைக்காணு
௰ ம்பொழுது,—அவளுக்குண்டான வாதையினி
மித்தம்பயந்து, தூரத்திலேநின்று, ஐயோ, ஐயோ,
மகா நகரியாகிய பாபேலே, வல்லநகரியே, ஒரு
மணிநேரத்துக்குள் உன் தண்டனைவந்ததென்று
சொல்லி, அவள் நிமித்தம் அழுது புலம்புவார்
௰௧ கள்.—பூமியின் வர்த்தகரும், தங்கள் வியாபாரப்
பொருள்களாகிய பொன் வெள்ளிகளையும், ரத்
தினங்களையும், முத்துகளையும், மெல்லிய புட
வையையும், தூமிர வஸ்திரத்தையும், பட்டை
௰௨ யும், இரத்தாம்பரத்தையும்,—சந்தனமுதலியசக
லவித வாசனைக்கட்டைகளையும், தந்தத்தினாற்
செய்திருக்கிற சகலவிதபாத்திரங்களையும், விலை
யுயர்ந்த மரத்தினாலும், பித்தளையினாலும், இரும்
பினாலும், வெண்கற்களினாலுஞ் செய்திருக்கிற
௰௩ சகலவிதபாத்திரங்களையும்,-இலவங்கப்பட்டை
யையும், சுகந்தவருக்கங்களையும், தைலத்தையும்,
தூபவருக்கத்தையும், திராட்சரசத்தையும், எண்
ணெயையும், மெல்லியமாவையும், கோதுமை
யையும், மாடுகளையும், ஆடுகளையும், குதிரைக
ளையும், இரதங்களையும், சிறைகளையும், மனுஷ
ருடைய ஆத்துமாக்களையுங் கொள்வாரில்லாதப
டியால் அவளைக்குறித்து அழுதுபுலம்புவார்கள்.-
௰௪ உன் மனம் வாஞ்சித்த பலன்கள் உன்னைவிட்டு
நீங்கின, செழிப்புஞ் சிறப்புமானவைகளெல்
லாம் உன்னைவிட்டு நீங்கின, நீ அவைகளை இ
௰௫ னிக்காணாய்.—இப்படிப்பட்டவைகளை வியா
பாரம்பண்ணி, இவளால் செல்வரானவர்கள் இ
வளுக்குண்டான வாதைக்குப் பயந்ததினிமித்
தம், தூரத்தினின்று அழுது,—ஐயோ, ஐயோ, ௰௬
மெல்லியபுடவையும், தூமிரமும், இரத்தாம்பர
முமான வஸ்திரமுந் தரித்து, பொன்னினாலும்,
இரத்தினங்களினாலும், முத்துகளினாலும் அலங்
கரிக்கப்பட்டிருந்த மகா நகரியே, ஒரே மணி
நேரத்தில் இந்தச்சமஸ்தமான சம்பத்துஞ் சிதைந்
துபோயிற்றே என்றுசொல்லிப் புலம்புவார்கள்.-
மாலுமிகள் யாவரும், கப்பல் யாத்திரைபண்ணு ௰௭
கிறவர்கள் யாவரும், கப்பற்காரரும், சமுத்தி
ரத்திலே தொழிற்செய்பவர்கள்யாவருந் தூரத்தி
லே நின்று,—அவள்வேகிறதினாலுண்டான புகை ௰௮
யைப்பார்த்து, இந்த மகா நகரியைப்போல் வே
றொன்றுண்டோவென்று சத்தமிட்டு,—தங்கள் ௰௯
தலைகளின்மேற் புழுதியையிறைத்து, அழுது, பு
லம்பி, ஐயோ, ஐயோ, சமுத்திரத்திலே கப்பல்க
ளையுடைய அனைவரையும், தன்ஐசுவரியத்தினா
லே செல்வராக்கின மகா நகரி ஒரே மணிநேரத்
திற் பாழாய்ப்போயிற்றேயென்று ஓலமிடுவார்
கள்.—வானமே, பரிசுத்தவான்களே, அப்போஸ் ௨௰
தலரே, தீர்க்கதரிசிகளே, நீங்கள் இவைகளைக்கு
றித்து ஆனந்தமுழக்கமிடுங்கள்; உங்கள்நிமித்தந்
தேவன் அவளுக்கு ஏற்றதண்டனை அளித்தா
ரென்றுசொல்லிற்று.

அப்பொழுது பராக்கிரமதூதன் ஒருவன் பெ ௨௧
ரிய எந்திரக்கல்லைப்போன்ற ஒருகல்லை எடுத்து,
சமுத்திரத்திலே வீசி, இவ்வண்ணமாகவே, மகா
நகரியாகிய பாபேல் வேகமாய்த்தள்ளுண்டு, இ
னி ஒருபொழுதுங்காணப்படாமற்போம்.—சுர ௨௨
மண்டலக்காரரும், கீதவாத்தியக்காரரும், நாயக
சுரக்காரரும், எக்காளக்காரருமானவர்களின் சத்
தம் இனி உன்னிடத்திற் கேட்கப்படுவதுமில்
லை; எந்தத்தொழிலாளியும் இனி உன்னிடத்திற்
காணப்படுவதுமில்லை; எந்திரத்தின் சத்தம் இ
னி உன்னிடத்திற் கேட்கப்படுவதுமில்லை;—வி ௨௩
ளக்கின் ஒளி இனி உன்னிடத்திற் பிரகாசிப்பது
மில்லை; மணவாளனும் மணவாட்டியுமானவர்
களுடைய சத்தம் இனி உன்னிடத்திற் கேட்
கப்படுவதுமில்லை: உன் வர்த்தகர் பூமியிற் பெரி
யவர்களாயிருந்தார்கள்; உன் மாயாவித்தையினாற்
சருவதேசத்தாரும் மயங்கினார்கள்.—தீர்க்கதரிசி ௨௪
களுடைய இரத்தமும், பரிசுத்தவான்களுடைய
இரத்தமும், பூமியின்மேற் கொல்லப்பட்ட எல்
லாருடைய இரத்தமும் அவளிடத்திற் காணப்
பட்டதென்றான்.

## ௰௯. அதிகாரம்.

௧. பாபேலென்னும் வேசைபட்டதண்டனையி
னிமித்தம் வானோர் பாட்டுப்பாடல்: கிறிஸ்து

(௬)சங்.௱௩௭.௮. எரே.௫௰.௰௫,௨௯. ௨.தீமோ.௪.௰௪. அதி.௰௪.௰. அதி.௰௬.௰௯. (௭) எசேக்.௨௮.௨. எசா.௪௭.௭,௮. செப்.௨.௰௫. (௮) எசா.௪௭.௯. அதி.௰௭.௰௬. எரே.௫௰.௩௪. (௯) எசேக்.௨௬.௰௬,௰௭. எரே.௫௰.௪௬. வச.௰௮. அதி.௰௭.௨. (௰) எசா.௨௧.௯. வச.௰௬,௰௯. (௰௧) எசேக்.௨௭.௨௭—௩௬. வச.௩. அதி.௰௭.௪. (௰௩)எசேக்.௨௭.௰௩. (௰௫)வச.௩.௰௧. (௰௬) அதி.௰௭.௪. வச.௰.(௰௭)எசா.௨௩.௰௪. எசேக்.௨௭.௨௯.(௰௮)எசேக்.௨௭.௩௰,௩௧. அதி.௰௩.௪.(௰௯)யோசு.௭.௬. ௧.சாமு.௪.௰௨. யோபு.௨.௰௨. எசேக்.௨௭.௩௰. வச.௮.(௨௰)எசா.௪௪.௨௩.எரே.௫௧.௪௮.லூக்.௰௧.௪௯,௫௰. அதி.௰௯.௨.(௨௧)எரே.௫௧.௬௪. அதி.௰௨.௮. (௨௨) எசா.௨௪.௮. எரே.௭.௩௪. எசேக்.௨௬.௰௩. (௨௩) எரே.௨௫.௰. எரே.௭.௩௪. எசா.௨௩.௮. ௨.இரா.௯.௨௨. நாகூ.௩.௪. (௨௪) அதி.௰௭.௬. எரே.௫௧.௪௯.—(௰௯.அதி.)

*வின் ஞானவிவாகம்: தூதன்தன்னைவணங்கா*
*மல் தடுத்தல்: ௰௧. வெற்றியிற் சிறந்தவர்கள் கி*
*றிஸ்துவைத் தரிசித்தல்: ௰௭. மாமிசத்தைத்தின்*
*னும்படி பறவைகள்அழைக்கப்படல்.*

இவற்றின்பின்புபரமண்டலத்திலே திரளானச
னங்களுடைய ஆரவாரம்போன்ற ஒரு மகா சத்
தமானது, அல்லேலுயா; இரட்சிப்பும், மகிமை
யும், கனமும், வல்லமையும் நம்முடைய தேவ
௨ னாகிய கர்த்தருக்கே உரியன.-அவருடைய
நியாயத்தீர்ப்புகள்சத்தியமும்நீதியுமானவைகள்:
தன் வேசைத்தனத்தினாலே பூமியைக்கெடுத்த ம
காவேசைக்குத்தண்டனைசெய்து, தம்முடையப
ணிவிடைக்காரரின்இரத்தத்தினிமித்தம்அவளுக்
குப் பிரதிபலனளித்தாரென்று தொனிக்கக்கேட்
௩ டேன்.-திரும்பவும்,அல்லேலுயா, அவளுடைய
புகை சதாகாலங்களிலும்எழும்புமென்றார்கள்.-
௪ அன்றியும் இருபத்துநாலுமுதியோரும், நாலுபி
ராணிகளுந்தாழ்ந்து வணங்கி, ஆமென்; அல்லே
லுயாவென்றுசொல்லி, ஆசனத்தின்மேல் வீற்றி
௫ ருந்த தேவனை நமஸ்கரித்தார்கள்.-மேலும்நமது
தேவனுடைய பணிவிடைக்காரரே, அவருக்
குப் பயப்படுகிற சிறியோரும் பெரியோருமான
வர்களே, நீங்களனைவரும் அவரைத் துதிப்பீர்க
ளாகவென்று ஒரு சத்தஞ் சிங்காசனத்தினின்று
௬ புறப்பட்டது.-அப்பொழுது திரளானசனங்களு
டைய சத்தம்போலவும், சலராசியின் இரைச்ச
லைப்போலவும், மகா இடிமுழக்கங்கள்போல
வும் ஒருசத்தமானது, அல்லேலுயா: சருவத்திற்
கும்வல்ல தேவனாகிய கர்த்தர் இராச்சிய
௭ பரிபாலனம் பண்ணுகிறார்.—நாம் சந்தோஷப்
பட்டுக்களிகூர்ந்து, அவருக்குத் துதிசெலுத்து
வோம், வாருங்கள்: ஆட்டுக்குட்டியானவரின்
விவாகம் வந்தது, அவருடையமனையாட்டி தன்
னைஆயத்தப்படுத்தினாளென்று தொனிக்கக்கேட்
௮ டேன்.—சுத்தமும் பிரகாசமுமான மெல்லியபு
டைவையைத் தரித்துக்கொள்ளுகிறதற்கு அவ
ளுக்கருள்கிடைத்தது: மெல்லியபுடவை பரிசுத்
௯ தவான்களின்நீதி.-பின்னும்அவன் என்னைநோக்
கி, ஆட்டுக்குட்டியின் விவாகவிருந்துக்கு அ
ழைக்கப்பட்டவர்கள் வாழ்வுடையவர்கள், இ
தை எழுதென்றான். மேலும் அவன் இவைகள்
தேவனுடைய சத்தியவாக்கியங்களென்று எ
௰ ன்னுடன் சொல்ல,—நான் அவனை நமஸ்கரிக்
கும்படி அவன் பாதத்தில் விழுந்தேன். அவன்
என்னிடத்தில்,இப்படிச்செய்யாதபடி பார்த்துக்
கொள்: உன்னோடும் யேசுவின் சாட்சியையு
டைய உன்சகோதரரோடும் நானும் ஒரு பணிவி
டைக்காரனாயிருக்கிறேன்: தேவனையே நம
ஸ்கரித்துக்கொள்: யேசுவின் சாட்சி தீர்க்கத
ரிசனத்தின் ஆவியென்றான்.

பின்புநான் வானந்திறந்திருக்கக்கண்டேன், ௰௧
ஒருவெள்ளைக்குதிரைதோன்றிற்று, அதின்மேல்
ஏறியிருப்பவருக்கு உண்மையுஞ் சத்தியமுமா
னவரென்பதுபெயர், அவர் நீதியாய்த்தீர்ப்புச்
செய்து யுத்தம்பண்ணுகிறார்.-அவருடையகண் ௰௨
கள் அக்கினிச்சுவாலைபோன்றிருந்தன, அவரு
டையசிரசின்மேல் அநேகமுடிகளிருந்தன; அ
வருக்கேயன்றி வேறொருவனுக்குந் தெரியாத
நாமம் எழுதியிருந்தது.-இரத்தத்தில் தோய்க்கப் ௰௩
பட்டவஸ்திரத்தைத் தரித்திருந்தார்: அவருடை
ய நாமந் தேவனுடைய வாக்கு.—பரமண் ௰௪
டலத்திலுள்ளசேனைகள் சுத்தமானவெள்ளைப்பு
டவையைத்தரித்தவர்களாய், வெள்ளைக்குதிரை
களின்மேல் ஏறி அவருக்குப்பின்சென்றார்கள்.-
தேசத்தாரைவெட்டும்படி அவருடைய வாயினி ௰௫
ன்று கூர்மையான கட்கம் புறப்படுகிறது; இ
ருப்புக்கோலால் அவர்களைஅரசாளுவார்: அவர்
சருவவல்லமையுள்ள தேவனுடைய உக்கிர
குரோதமாகிய திராட்சத்தொட்டியிலே மிதிக்கி
றார்.—"இராசாதி இராசாவும், கர்த்தாதிகர்த் ௰௬
தாவும்,"என்னும் நாமம், அவருடைய வஸ்
திரத்தின்மேலுந் தொடையின்மேலும் எழுதப்
பட்டிருந்தது.

பின்பு சூரியனில் ஒருதூதன் நிற்கக்கண்டே ௰௭
ன்; அவன்வானத்தின்மத்தியிற்பறக்கிற சகலப
றவைகளையும்பார்த்து,—நீங்கள் இராசாக்களின் ௰௮
மாமிசத்தையும், சேனாபதிகளின் மாமிசத்தை
யும், பராக்கிரமசாலிகளின் மாமிசத்தையும், கு
திரைகளின் மாமிசத்தையும், அவைகளின்மேல்
ஏறினவர்களின் மாமிசத்தையும், சுயாதீனர், அ
டிமைகள், சிறியோர், பெரியோராகிய அனை
வரின்மாமிசத்தையுந் தின்னும்படி, மகா தே
வனுடைய விருந்துக்குக் கூடிவாருங்களென்
று மிகவுஞ் சத்தமிட்டுச்சொன்னான்.—மேலும் ௰௯
மிருகமும், பூமியின் இராசாக்களும், அவர்க
ளுடைய சேனைகளும், அந்தக் குதிரையின்மே
ல் ஏறியிருக்கிறவரோடும், அவருடைய சேனை
யோடும்யுத்தம்பண்ணுகிறதற்குக் கூடிவரக்கண்
டேன்.—அப்பொழுது அந்த மிருகமும், அதற் ௨௰
குமுன்பாகத் தான்செய்த அற்புதங்களினால் மி
ருகத்தின் முத்திரையை அடைந்தவர்களையும்,
அதின் சுரூபத்தை நமஸ்கரித்தவர்களையும் வஞ்
சித்த கள்ளத்தீர்க்கதரிசியுமாகிய இருவரும் பி
டிக்கப்பட்டு, உயிரோடே கந்தகமெரிகிற அக்கி

(௧) அதி.௰௧.௰௫. அதி.௪.௰௧. (௨) அதி.௰௫.௩. உபா.௩௨.௪௩. அதி.௬.௰. (௩) ஏசா.௩௪.௰. அதி.௰௪.௰௧.(௪) அதி.௪.௪,௯,௰. ௧.நாளா.௰௬.௩௬. நிகி.௫.௰௩. (௫) சங்.௱௩௪.௧. அதி.௰௧.௰௮. (௬) எசேக்.௧.௨௪. அதி.௰௪.௨. அதி.௰௧.௰௫,௰௭. (௭) மத்.௨௨.௨. ௨.கொரி.௰௧.௨. எபே.௫.௩௨.(௮) சங்.௪௫.௰௩,௰௪. எசேக்.௰௬.௰. சங்.௱௩௨.௯.(௯) மத்.௨௨.௨,௩. அதி.௨௧.௫. (௰) அதி.௨௨.௮. அப்.௰.௨௬. ௧.யோவா.௫.௰. (௰௧) அதி.௰௫.௫. அதி.௬.௨. அதி.௩.௰௪. ஏசா.௰௧.௪. (௰௨) அதி.௧.௰௪. அதி.௬.௨. வச.௰௬. (௰௩) ஏசா.௬௩.௨,௩. யோவா.௧.௧. ௧.யோவா.௫.௭.(௰௪) அதி.௰௪.௨௰. மத்.௨௮.௩. (௰௫) ஏசா.௰௧.௪. ௨.தெச.௨.௮. சங்.௨.௯. அதி.௨.௨௭. ஏசா.௬௩.௩. அதி.௰௪.௰௯,௨௰. (௰௬) வச.௰௨. தானி.௨.௪௭. ௧.தீமோ.௬.௰௫. (௰௭) வச.௨௧. எசேக்.௩௯.௰௭,௰௮,௨௰. (௰௯) அதி.௰௬.௰௬.(௨௰) அதி.௰௬.௰௩,௰௪. அதி.௰௩.௰௨,௰௫. அதி.௨௰.௰. அதி.௰௪.௰.

௨௧ னிக்கடலிலே தள்ளப்பட்டார்கள்.—மீதியான
வர்கள் குதிரையின்மேல் ஏறினவருடைய வாயி
னின்று புறப்படுகிற கட்கத்தாற் கொல்லப்பட்
டார்கள்: பறவைகள்யாவும் அவர்களுடைய மா
மிசத்தினாலே திருத்தியடைந்தன.

## ௨௰. அதிகாரம்.

*௧. ஆயிரம்வருஷமளவுஞ் சாத்தான் அடைக்கப்படல்: ௪. முதலாம் உயிர்த்தெழுதல்: சாத்தான் விடுதலைபெறல்: யுத்தம்பண்ணும்படி கோகும் மாகோகுங்கூடிவரல், அவர்கள்நாசமடைதல்: ௰௧. நியாயத்தீர்ப்பின்நாளைக்குறித்தல்.*

அன்றியும் ஒருதூதன் பாதாளத்தின் திறவுகோ
லையும், பெரியசங்கிலியையுந் தன்கையில் பிடித்
துக்கொண்டு, வானத்திலிருந்து இறங்கக்கண்
௨ டேன்.—அவன், பிசாசென்றுஞ் சாத்தானென்
றுஞ் சொல்லப்பட்ட பழைய சருப்பமாகிய வ
லிய சருப்பத்தைப்பிடித்துக்கட்டி, பாதாளத்தில்
ஆயிரம் வருஷமளவுமிருக்கும்படி அதில்தள்ளி,
௩ அதின்மேல் முத்திரையிட்டான்.—அந்த ஆயிரம்
வருஷம் நிறைவேறும்வரைக்கும் அது உலகத்தா
ரை வஞ்சிக்கக்கூடாமற்போயிற்று: அவற்றிற்
குப் பின்பு சொற்பகாலத்துக்கு அது விடுதலை
பெற்றிருக்கவேண்டும்.
௪ பின்பு நான் ஆசனங்களைக்கண்டேன், அவர்
கள் அவைகளின்மேல் உட்கார்ந்தார்கள், நியா
யந்தீர்க்குதல் அவர்களுக்கு அளிக்கப்பட்டது:
யேசுவின்சாட்சியினிமித்தமுந்தேவனுடை
யவாக்கியத்தினிமித்தமுஞ்சிரச்சேதம்பண்ணப்
பட்டவர்களுடைய ஆத்துமங்களையும், மிருகத்
தையாவது, அதின் சுரூபத்தையாவது நமஸ்கரி
யாமலும், தங்கள் நெற்றிகளிலுந் தங்கள் கைக
ளிலும் அதின் அடையாளத்தைத்தரித்துக்கொள்
ளாமலுமிருந்தவர்களையுங் கண்டேன்; அவர்
கள் உயிர்த்துக்கிறிஸ்துவுடன் ஆயிரம் வரு
௫ ஷம் அரசாண்டார்கள்.—மரணமடைந்த மற்ற
வர்கள் ஆயிரம்வருஷம் நிறைவேறுமளவும் உ
யிர்த்தெழவில்லை. இது முதலாம் உயிர்த்தெழு
௬ தல்.—முதலாம் உயிர்த்தெழுதலுக்குப் பங்குள்
ளவன் வாழ்வுடையவனும், பரிசுத்தனுமாயிருக்
கிறான்: அப்படிப்பட்டவர்கள்மேல் இரண்டாம்
மரணத்துக்கு அதிகாரமில்லை, அவர்கள் தேவ
னுக்குங்கிறிஸ்துவுக்கும் முன்பாக ஆசாரி
யராகி, அவரோடே ஆயிரம்வருஷம் அரசாளு
௭ வார்கள்.—அந்த ஆயிரம் வருஷம் நிறைவேறும்
பொழுது, சாத்தான், தன் காவலினின்று விடு
௮ தலையாகி,—பூமியின் நான்கு திசைகளிலுமுள்
ள தேசத்தாராகிய கோகையும், மாகோகையும்
வஞ்சிக்கிறதற்கும், அவர்களை யுத்தத்துக்குக்கூட்
டிக்கொள்ளுகிறதற்கும் புறப்படுவான்: அவர்க
ளுடைய தொகை கடற்கரைமணலுக்குச் சமா
னம்.—அவர்கள் பூமியின் விசாலத்தின்மேல் ஏறி ௯
வந்து, பரிசுத்தவான்களுடைய பாளயத்தையும்
பிரியமான நகரத்தையும் வளைந்துகொண்டார்
கள்: அப்பொழுது தேவனால் வானத்திலிருந்
து அக்கினி இறங்கி அவர்களைப் பட்சித்தது.—
மேலும் அவர்களை வஞ்சித்த பிசாசானவன், மி ௰
ருகமும் கள்ளத்தீர்க்கதரிசியுங் கிடக்கிற அக்கி
னியுங் கந்தகமுமான கடலிலே தள்ளப்பட்
டான், அவர்கள் இரவும், பகலும், சதாகாலங்க
ளிலும் வாதிக்கப்படுவார்கள்.
பின்பு நான், மகா வெண்மையான சிங்காச ௰௧
னத்தையும், அதின்மேல் வீற்றிருந்தவரையுங்
கண்டேன்; அவருடைய சமுகத்தினின்று பூமி
யும் வானமும் அகன்றுபோயின; அவைகளுக்
கு இடங் காணப்படவில்லை.—மரித்தோராகிய ௰௨
சிறியோரையும், பெரியோரையுஞ் சிங்காசனத்
துக்குமுன்பாக நிற்கக்கண்டேன்; புத்தகங்கள்
விரிக்கப்பட்டன: சீவ புத்தகமென்னும் வே
றொரு புத்தகமும் விரிக்கப்பட்டது: அப்பொழு
து புத்தகங்களில் எழுதப்பட்ட வாக்கியங்களி
னால் மரித்தோர் தங்கள்தங்கள் கிரியைகளுக்குத்
தக்கதாக நியாயத்தீர்ப்புப் பெற்றார்கள்.—சமுத்தி ௰௩
ரந் தன்னிலுள்ள மரித்தோரை ஒப்பித்தது; மரண
மும், மரித்தோர்ஸ்தானமுந் தங்களிலுள்ள மரித்
தோரை ஒப்பித்தன: எல்லாருந் தங்கள் தங்கள்
கிரியைகளுக்குத்தக்கதாக நியாயத்தீர்ப்புப்பெற்
றார்கள்.—பின்பு மரணமும், மரித்தோர்ஸ்தான ௰௪
மும், அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டன. இ
துவே இரண்டாம் மரணம்.—சீவபுத்தகத்தில் எ ௰௫
ழுதப்பட்டவனாகக் காணப்படாதவன் எவனும்
அக்கினிக்கடலிலே தள்ளப்பட்டான்.

## ௨௧. அதிகாரம்.

*௧. புது ஆகாயமண்டலமும் பூமியுந் தரிசனமாதல்: ௨. பரமநகரியாகிய புது யெருஷலேம் தரிசனமாதல்: ௯. அதின் மகிமையும், சாயலும், செல்வமும், சௌக்கியமுமாகிய இவைகளைவருணித்தல்.*

பின்பு நான் புதியவானத்தையும் புதியபூமியை ௧
யுங் கண்டேன்: முந்தினவானமும் பூமியும் ஒ
ழிந்துபோயின; கடலுமில்லாமற்போயிற்று.
யோவானாகிய நான், கணவனுக்காக ஆயத்த ௨
மாக அலங்கரிக்கப்பட்ட ஒருமணவாட்டியைப்
போலிருந்த புதியயெருஷலேமாகிய பரிசுத்த
நகரம், தேவனினின்று வானத்தைவிட்டு இ

(௨௧) வச.௰௫,௰௭,௰௮. அதி.௰௭.௰௬.—(௨௰. அதி. ௧.) அதி.௧.௰௮. அதி.௯.௧. (௨) அதி.௰௨.௯. ௨.பேதுரு.௨.௪. யூதா.௬. தானி.௬.௰௭. (௩) அதி.௰௬.௰௪,௰௬. வச.௮. (௪) தானி.௭.௯,௨௧,௨௭. மத்.௰௯.௨௮. லூக்.௨௨.௩௰. ௧.கொரி.௬.௨,௩. அதி.௬.௯. அதி.௰௩.௰௨,௰௫,௰௬. ரோ.௮.௰௭. ௨.தீமோ.௨.௰௨. (௬) அதி.௨.௰௧. ஏசா.௬௧.௬. ௧.பேதுரு.௨.௯. அதி.௧.௬. வச.௪. (௭) வச.௨. (௮) வச.௩,௰. எசேக்.௩௮.௨. அதி.௰௬.௰௪. (௯) ஏசா.௮.௮. எசேக். ௩௮.௯,௰௬. (௰) வச.௮. அதி.௰௯.௨௰. அதி.௰௪.௰,௰௧. ௨.பேதுரு.௩.௭,௰,௰௧. தானி.௨.௩௫. (௰௨) அதி.௰௯.௬. தானி.௭.௰. சங்.௬௯.௨௮. தானி.௰௨.௧. பிலி.௪.௩. எரே.௰௭.௰. மத்.௰௬.௨௭. ரோ.௨.௭. (௰௩) அதி.௬.௮.வச.௰௨. (௰௪) ௧.கொரி.௰௫.௨௬,௫௪,௫௫. வச.௬. அதி.௨௧.௮. அதி.௰௯.௨௰.—(௨௧. அதி. ௧.) ஏசா.௬௫.௰௭. ௨.பேதுரு. ௩.௰௩. அதி.௨௰.௰௧. (௨) ஏசா.௫௨.௧. கலா.௪.௨௬. எபி.௰௧.௰. ஏசா.௫௪.௫. ௨.கொரி.௰௧.௨.

௩ றங்கக்கண்டேன்.—மேலும் பரமண்டலத்திற் பி
றந்த ஒரு கம்பீரசத்தமானது, கேளுங்கள், மனு
ஷருக்குள்ளே தேவனுடைய ஆவாசமிருக்
கின்றது, அவர்களிடத்தில் அவர் வாசமாயிருப்
பார், அவர்களும் அவருக்குரிய சனங்களாவார்
கள், தேவன் தாமே அவர்களோடிருந்து அவர்க
௪ ளுக்குத் தேவனாவார்.—அவர்களுடைய கண்
ணீர் யாவையுந் தேவன் துடைப்பார்; முந்தி
னவைகள் ஒழிந்துபோனதினால் இனி மரணமு
மில்லை, துக்கமுமில்லை, அலறுதலுமில்லை, வ
ருத்தமுமில்லை யென்று தொனிக்கக் கேட்டே
௫ ன்.—பின்பு சிங்காசனத்தின்மேல் வீற்றிருந்தவர்,
பாருங்கள், நான் சகலத்தையும் புதிதாய்ச்சிருஷ்
டிக்கிறேனென்றார். பின்னும் அவர் என்னுட
னே, இவ்வாக்கியங்கள் சத்தியமும், உண்மையு
மானவைகள்: ஆகையால் இவைகளை எழுதென்
௬ றார்.—பின்னும் அவர் என்னைநோக்கி, ஆயிற்று.
நான் அல்பாவும் ஒமேகாவுமாகிய ஆதியும் அந்
தமுமாயிருக்கிறேன். தாகமாயிருக்கிறவனுக்கு
நான் சீவநீரூற்றின்கண்ணிலுள்ளதைக் கைம்மா
௭ றின்றிக் கொடுப்பேன்.—செயங் கொள்ளுகிற
வன் இவைகளைச் சுதந்தரித்துக்கொள்ளுவான்;
நான் அவனுக்குத் தேவனாவேன், அவன் எ
௮ னக்குப் புத்திரனாவான்.—பயப்படுகிறவர்களும்,
அவிசுவாசிகளும், அருவருப்பானவைகளைச்
செய்பவர்களும், கொலைபாதகரும், வேசைமார்
க்கரும், மாயாவிகளும், விக்கிரகாராதனைக்கார
ரும், எவ்விதப்பொய்யரும், அக்கினியுங் கந்தக
முமெரிகிற கடலிலே பங்கடைவார்கள்: இது
வே இரண்டாம் மரணமென்றார்.
௯ பின்பு, எழுகடைசிவாதைகளால் நிறைந்த எ
ழுகலசங்களையுடைய அந்த எழுதூதரில் ஒரு
வன் என்னிடத்தில்வந்து, நீ இங்கே வா, ஆட்
டுக்குட்டியின் மணவாட்டியாகிய ஸ்திரியை உ
௰ னக்குக் காண்பிப்பேனென்றுசொல்லி,—பெரி
தும் உயரமுமான ஒரு பருவதத்தின்மேல் என்
னை ஆவியிலேகொண்டுபோய், தேவனிடத்தி
னின்று பரமண்டலத்தை விட்டிறங்கினதும்,
தேவனுடைய மகிமை பிரகாசிக்கப் பெற்ற
துமான யெரூஷலேமென்னும் பரிசுத்தநகரத்
௰௧ தை எனக்குக்காண்பித்தான்.—அதின் ஒளி அரு
மையான இரத்தினக்கல்லைப்போலவும் பளிங்
கொளியுள்ள ரவாக்கல்லைப்போலவுமிருந்தது.—
௰௨ அதற்குப் பெரிதும் உயரமுமான மதிலும், கி
ழக்கே மூன்றுவாசல்கள், வடக்கே மூன்றுவா
சல்கள், தெற்கே மூன்று வாசல்கள், மேற்கே
மூன்று வாசல்கள் ஆகப்பன்னிரண்டு வாசல்க
௰௩ ளுமிருந்தன.—வாசல்களின்மேல் பன்னிரண்டு
தூதர்இருந்தார்கள், அந்த வாசல்களின்மேல்
இஸரவேல் சந்ததியாரின் பன்னிரண்டுகோத்தி
ரத்தாருடைய நாமங்களும் எழுதப்பட்டிருந்
தன.—அந்த நகரத்தின் மதிலுக்குப் பன்னிரண் ௰௪
டு அஸ்திபாரங்களுண்டு, அவைகளில் ஆட்டுக்
குட்டியின் பன்னிரண்டுஅப்போஸ்தலருடைய
நாமங்களும் பதிந்திருந்தன.—என்னுடன் சம் ௰௫
பாஷித்தவன் நகரத்தையும், அதின் வாசல்களை
யும், அதின் மதிலையும் அளக்கிறதற்குப் பொன்
அளவுகோலைப் பிடித்திருந்தான்.—நகரஞ் சதுர ௰௬
மாயிருந்தது, அதின் நீளமும் அகலமும் சமா
னம்: அவன் அளவுகோலினாலே நகரத்தை அ
ளந்தான், அது பன்னீராயிரம் ஸ்தாதியாயிருந்
தது. அதின் நீளமும், அகலமும், உயரமுஞ் ச
மானம்.—அதின் மதிலை அளந்தான், அது தூத ௰௭
னுக்கிருந்த மனுஷஅளவின்படி நூற்றுநாற்பத்
துநாலு முழமாயிருந்தது.—அதின் மதில் ரவாக் ௰௮
கல்லினாற் கட்டப்பட்டிருந்தது: நகரம், சுத்
தப்பளிங்குக்கொப்பான பசும்பொன்னுக்குச்ச
மானமாயிருந்தது.—நகரமதில்களின் அஸ்திபா ௰௯
ரங்கள் சகலவித ரத்தினங்களினாலும் அலங்கரிக்
கப்பட்டிருந்தன. முதலாம் அஸ்திபாரம் ரவாக்
கல்லு; இரண்டாவது நீலக்கல்; மூன்றாவது
வைரம்; நாலாவதுமரகதம்.—ஐந்தாவது கோமே ௨௰
தகம்; ஆறாவது சுனீரம்; ஏழாவதுசந்திரகாந்தம்;
எட்டாவது படிகப்பச்சை; ஒன்பதாவது பது
மராகம்; பத்தாவது வைடூரியம்; பதினொராவது
புட்பராகம்; பன்னிரண்டாவது சுகந்திக்கல்லா
கிய இவைகளே.-பன்னிரண்டுவாசல்களும்பன் ௨௧
னிரண்டு முத்துகளாயிருந்தன; வாசல்களில் ஒவ்
வொன்று ஒவ்வொரு முத்தாயிருந்தது: வீதி தெ
ளிவான கண்ணாடியைப்போலப் பசும்பொன்
னாயிருந்தது.—நான் அதிலே தேவாலயத்தைக்கா ௨௨
ணவில்லை: சருவத்திற்கும்வல்ல தேவனாகிய
கர்த்தரும், ஆட்டுக்குட்டியும் அதற்கு ஆல
யம்.—நகரத்தைப் பிரகாசிப்பிக்கும்பொருட்டுச் ௨௩
சூரியனுஞ் சந்திரனும் வேண்டுவதில்லை: தேவ
னுடைய மகிமையே அதைப் பிரகாசிப்பித்த
து, ஆட்டுக்குட்டியே அதற்கு விளக்கு.—இரட் ௨௪
சிப்புப்பெற்ற உலகத்தவர்கள் அதின் ஒளியி
லே நடப்பார்கள்: பூமியின்இராசாக்கள் அதற்
குள்ளே தங்கள் தங்கள் மகிமையையுங் கனத்
தையுங் கொண்டுவருவார்கள்.-அதின்வாசல்கள் ௨௫
பகலில் ஒருபொழுதும் அடைக்கப்படுவதில்லை:
இராக்காலம்அங்கேயில்லை.-சனங்கள் அதற்குள் ௨௬
அந்தந்தத் தேசத்தாரின் மகிமையையும், கனத்
தையுங் கொண்டுவருவார்கள்.—ஆட்டுக்குட்டி ௨௭
யின் சீவபுத்தகத்தில் எழுதப்பட்டவர்களேயன்

(௩) லேவி.௨௬.௰௧,௰௨. எசேக்.௪௩.௭. ௨.கொரி.௬.௰௬.(௪)ஏசா.௨௫.௮. ௧.கொரி.௰௫.௨௬,௫௪. ஏசா.௬௫.௰. (௫) அதி.௪.௨,௯.ஏசா.௪௩.௰௯. ௨.கொரி.௫.௰௭.அதி.௰௧.௧.(௬)அதி.௰௬.௰௭.அதி.௧.௮. ஏசா.௰௨.௩. யோவா.௪.௰,௰௪. அதி.௨௨.௰௭.(௭)சக.௮.௮. எபி.௮.௰.(௮)௧.கொரி.௬.௯,௰. கலா.௫.௰௧,௨௰,௨௧. எபே.௫.௫. ௧.தீமோ.௧.௯. எபி.௰௨.௰௪. அதி.௨௰.௰௪,௰௫.(௯)அதி.௰௫.௧,௬,௭. அதி.௰௯.௭.(௰)அதி.௧.௰. எசேக்.௪௮. அதி.௨௨.௫.வச.௨௩. (௰௨) எசேக்.௪௮.௩௧—௩௪.(௰௩)எசேக்.௪௮.௩௧—௩௪.(௰௪)மத்.௰௬.௰௮.கலா.௨.௯.எபே.௨.௨௰.(௰௫)எசேக்.௪௰.௩.சக.௨.௧.(௰௯)ஏசா.௫௪.௰௧.(௨௧)அதி.௨௨.௨.(௨௨)யோவா.௪.௨௩.(௨௩)ஏசா.௨௪.௨௩.(௨௪)ஏசா.௬௰.௩,௫,௰௧. (௨௫) ஏசா.௬௰.௰௧,௨௰. சக.௰௪.௭. (௨௬) வச.௨௪. (௨௭) ஏசா.௩௫.௮. யோவே.௩.௰௭. பிலி.௪.௩. அதி.௨௰.௰௨.

றி, அசுத்தம், அருவருப்பு, பொய் இவைகளையு
டையதொன்றும் அதிற் பிரவேசிப்பதில்லை.

## ௨௨. அதிகாரம்.

௧. சீவநதியையும், சீவவிருட்சத்தையும், தேவ
னுக்குரிய சனங்களுடைய சௌக்கியத்தை
யுந் தரிசித்தல்: ௬ தூதன்பேசல்: ௭. கிறிஸ்துப்
பேசல்: ௮. தூதன்தன்னைவணங்காமல் யோ
வானைத் தடுத்தல்: ௰௨. கிறிஸ்து வசனித்தல்:
௰௮. இந்தப்புத்தகத்திற் சிலவற்றைக் கூட்டிக்
குறைத்தால் வருஞ் சாபமின்னதெனக் காட்
டல்: பிரார்த்தனைசெய்தல்.

பின்பு தேவனுக்கும் ஆட்டுக்குட்டிக்குமுரி
யசிங்காசனத்தினின்று புறப்பட்டு,பளிங்கைப்
போலத் தெளிவான சீவ நீருள்ள நதியை எனக்
௨ குக்காண்பித்தான்.—நதியின் இருகரையிலுமுள்
ள வீதிமத்தியில், பன்னிரண்டு வித கனிகளைத்த
ரும் சீவவிருட்சமிருந்தது, மாதந்தோறும் அது
தன்கனியைக்கொடுக்கும், அந்த விருட்சத்தின்
இலைகள் உலகத்தவர்களைச் சொஸ்தமாக்கும்.—
௩ இனி ஒருசாபமுமிராது: தேவனுக்கும் ஆட்
டுக்குட்டிக்குமுரிய சிங்காசனம் அதிலிருக்கும்;
அவருடைய பணிவிடைக்காரர் அவரைச்சேவி
௪ ப்பார்கள்.—அவருடைய முகதரிசனத்தைப் பெ
றுவார்கள்; அவருடைய நாமம் அவர்களுடைய
௫ நெற்றிகளிலிருக்கும்.-இராக்காலம் அங்கே இல்
லை; விளக்குஞ் சூரியபிரகாசமும் அவர்களுக்கு
வேண்டுவதில்லை;தேவனாகிய கர்த்தா அவர்
களுக்குப் பிரகாசத்தைக்கொடுப்பார்: அவர்கள்
சதாகாலங்களிலும் அரசாளுவார்கள்.
௬ பின்பு அவன்என்னைநோக்கி, இவ்வாக்கியங்
கள் உண்மையுஞ் சத்தியமுமானவைகள்: சீக்
கிரமாய்ச் சம்பவிக்கவேண்டியவைகளைத் தம்மு
டைய பணிவிடைக்காரருக்குக்காட்டும்பொரு
ட்டு, தீர்க்கதரிசிகளின் ஆவிகளுடைய தேவ
னாகிய கர்த்தர் தமது தூதனை அனுப்பினார்.—
௭ பாருங்கள், சீக்கிரமாய் வருகிறேன்: இந்தப்புத்
தகத்திலுள்ள தீர்க்கதரிசனவாக்கியங்களைக் காத்
துக்கொள்ளுகிறவனே வாழ்வுடையவனென்
கிறாரென்றான்.
௮ யோவானாகிய நான், இவைகளைக் கேட்டுக்
கண்டேன். நான் கேட்டுக்கண்டபொழுது இ
வைகளை எனக்குக் காண்பித்ததூதனுடைய பா
௯ தத்தில் நமஸ்கரிக்க விழுந்தேன்.—அப்பொழுது
அவன் என்னை நோக்கி, நீ இப்படிச்செய்யாத
படி பார்த்துக்கொள்:உன்னோடும், உன்சகோத
ரராகிய தீர்க்கதரிசிகளோடும், இந்தப் புத்தகத்
தின் வாக்கியங்களைக் காத்துக்கொள்பவர்களோ
டும்நானும்ஒருபணிவிடைக்காரன: தேவனுக்
கே ஆராதனைசெய்வாயாகஎன்றான்.-மேலும் அ ௰
வன் என்னுடனே, இந்தப்புத்தகத்திலுள்ள தீர்க்
கதரிசனங்களுக்கு முத்திரையிடவேண்டாம்:
காலஞ் சமீபமாயிற்று.-அநியாயமுள்ளவன் அநி ௰௧
யாயமுள்ளவனாயிருக்கக்கடவன்:அசுத்தமுள்ள
வன் அசுத்தமுள்ளவனாயிருக்கக்கடவன்: நீதிமா
னவன் நீதிமானாயிருக்கக்கடவன்:பரிசுத்தமு
ள்ளவன் பரிசுத்தமுள்ளவனாயிருக்கக்கடவன்.
பாருங்கள், சீக்கிரமாய் வருகிறேன்; அவன ௰௨
வனுடைய கிரியைக்குத்தக்கதாகப் பலனளிப்ப
தற்குப் பலன் என்னிடத்திலிருக்கின்றது.—நான் ௰௩
அல்பாவும் ஓமேகாவும், ஆதியும் அந்தமும், முந்
தினவரும் பிந்தினவருமாயிருக்கிறேன்.—சீவவி ௰௪
ருட்சத்துக்கு அதிகாரிகளாய், வாசல்களின் வ
ழியாக நகரத்திற் பிரவேசிக்கிறதற்கு அவரு
டைய கட்டளையைக் காத்து நடக்கிறவர்களே
வாழ்வுடையவர்கள்.—நாய்களும், மாயாவிகளு ௰௫
ம், வேசைமார்க்கரும், கொலைபாதகரும், விக்கி
ரகபத்திக்காரரும், பொய்யைவிரும்பி அதற்கேற்
றதைச்செய்கிறவர்கள்யாவரும் புறம்பே யிருப்
பார்கள்.—சபைகளில் இவைகளை உங்களுக் ௰௬
குத்தெரிவிக்கும்படி யேசுவாகிய நான் என்
தூதனை அனுப்பினேன். நான் தாவீதின் அடிமு
ளையும், சந்ததியும், பிரகாசமுள்ள விடிவெள்ளி
யுமாயிருக்கிறேனென்றார்.—ஆவியும் மணவாட் ௰௭
டியும் வாவென்கிறார்கள். கேட்கிறவனும் வா
வென்பானாக. தாகமாயிருக்கிறவன் வரக்கட
வன். விரும்புகிறவனெவனும் சீவநீரைக் கைம்
மாறின்றிப்பெறக்கடவன்.
இந்தப்புத்தகத்திலுள்ள தீர்க்கதரிசனவாக்கி ௰௮
யங்களைக் கேட்கிற யாவருக்கும் நான் சாட்சி
யிட்டு,ஒருவன் இவைகளோடே எதையாகிலுங்
கூட்டினால், இந்தப்புத்தகத்திலே குறித்திருக்கிற
வாதைகளைத் தேவன் அவன்மேற்கூட்டுவார்.—
ஒருவன் இந்தத் தீர்க்கதரிசனபுத்தகத்தின்வாக்கி ௰௯
யங்களில்எதையாகிலும் நீக்கினால்,இந்தப்புத்தக
த்திலே குறித்தவைகளாகிய சீவவிருட்சத்திலும்,
பரிசுத்தநகரத்திலுமுள்ள அவனுடையபங்கைத்
தேவன் நீக்குவாரென்று சொல்லுகிறேன்.—
இந்த விசேஷங்களைக் குறித்துச் சாட்சியிட்டுச் ௨௰
சொல்லுகிறவர் மெய்யாய் விரைந்து வருகிறே
னென்கிறார். ஆமென். கர்த்தராகிய யேசு
வே, அப்படியே வாரும்.—நம்முடைய கர்த் ௨௧
தராகிய யேசுக்கிறிஸ்துவின்கிருபை உங்
கள் அனைவரோடும் இருக்கக்கடவது. ஆமென்.

(௨௨. அதி. ௧.) எசேக்.௪௭.௧. சக.௰௪.௮. (௨) எசேக்.௪௭.௰௨. ஆதி.௨.௯. அதி.௨௧.௨௪. (௩) சக.௰௪.௰௧. எசேக். ௪௮.௩௫. (௪) மத்.௫.௮. ௧.கொரி.௰௩.௰௨. ௧.யோவா.௩.௨. அதி.௩.௰௨. (௫) அதி.௨௧.௨௩,௨௫. சங்.௩௬.௯. தானி. ௭.௨௭. ரோ.௫.௰௭. ௨.தீமோ.௨.௰௨. (௬) அதி.௰௯.௯. அதி.௧.௧. (௭) அதி.௩.௰௧. அதி.௧.௩. (௮) அதி.௰௯.௰. (௯) அதி.௰௯.௰. (௰) தானி.௮.௨௬. அதி.௧.௩. (௰௧) எசேக்.௩.௨௭. தானி.௰௨.௰. ௨.தீமோ.௩.௰௩. (௰௨) ஏசா.௪௰.௰. ரோ.௨.௭. (௰௩) ஏசா.௪௧.௪. அதி.௧.௮,௰௭. (௰௪) தானி.௰௨.௰௨. ௧.யோவா.௩.௨௪. வச.௨. அதி.௨௧.௨௭. (௰௫) ௧.கொரி.௬.௯,௰. கலா.௫.௰௯,௨௰,௨௧. கொலோ.௩.௬. அதி.௯.௨௰,௨௧. பிலி.௩.௨. (௰௬) அதி.௧.௧. அதி.௫.௫. எண்.௨௪.௰௭. சக.௬.௰௨. ௨.பேதுரு.௧.௰௯. (௰௭) அதி.௨௧.௨,௯. ஏசா.௫௫.௧. யோவா.௭.௩௭. (௰௮) உபா.௪.௨. நீதி.௩௰.௬. (௰௯) யாத்.௩௨.௩௩. சங்.௬௯.௨௮. அதி.௨௧.௨. (௨௰) வச.௰௨. யோவா.௨௧.௨௫. ௨.தீமோ.௪.௮. (௨௧) ரோ.௰௬.௨௰,௨௪. ௨.தெச.௩.௰௮.



முற்றிற்று.